## GLORY UNTO RAMA

GLORY unto Rama, Hari, the Home of all bliss, the Lord of Raghu's line, armed with bow and arrow. Thou art the Lion that rends in pieces the elephant of worldliness; the Ocean of perfection; the Allwise; the All- pervading; the Delight of mankind; the Destroyer of grief and fear; ever free from passion; Lord of supreme wisdom, the incarnation of infinite love and virtue. Thou takest away earth's load of sin and conferest on mankind Supreme Knowledge. Oh! Jewel of Raghu's line, Thou hast slain the wicked Dooshana and crowned the humble Vibhishana. With Thy mighty arms, Thou hast exterminated the race of the wicked giants and made the world happy; Thou art the Home of bliss and the Lord of Lakshmi; free us from pride and lust, ignorance and selfishness. Glory unto the Lord of Rama. Have mercy on Thy servant harassed by the terrors and troubles of Samsara. Glorious Lord, Sovereign of Ayodhya, Sovereign of the gods, Sovereign of Rama *(ராமா)*, have mercy on this suppliant who has fled to Thee for refuge. Thou art the Sun to disperse the thick darkness, of the night of pride, ignorance and vanity. Oh! Hari, I repeat Thy name and bow unto Thee, cure the great disease of life, pride and vanity. Oh! King of kings, grant us this one blessing — "To love Thy lotus feet for ever and for ever.........."

— TULSIDAS.

— With grateful acknowledgments to "The Bhavan's Journal" dated 31-3-1963.

SRI KANCHI KAMAKOTI PITHADHIPATHI
JAGADGURU
**SRI SANKARACHARYA SWAMIGAL MUTT**
**KANCHEEPURAM**

Camp நாமக்கல் Date 19-12-1960.

தங்கள் 21-11-1960உ கடிதம் கிடைத்தது.
ஸ்ரீ மஹா ஸந்நிதானத்தில் விக்ஞாபனம் செய்து கொள்ளப் பட்டது.

தங்கள் கம்பெனி எப்பொழுதும், பாமரமக்களும் தர்மத்தின் உண்மையறிந்து நல்வழிப்படும் வகையில் உயர்ந்த நூல்களை அச்சிட்டுத் தொண்டு செய்து வருவதையும். இப்பொழுது கீர்த்தனாசாரிய ஸ்ரீ உ.வே. C.R. ஸ்ரீனிவாஸய்யங்கார் அவர்களின் மனதிற்குத் தூய்மையையும், இன்பத்தையும் அளிக்கும் ஸ்ரீராமாயண புஸ்தகத்தை வெளியிடப் போவதையும் அறிந்து பெருமகிழ்ச்சியடைந்து இவ்வித நல்ல கார்யங்களைச் செய்துகொண்டு கம்பெனி மேன்மேலும் ஓங்கி நீடூழிகாலம் ஜனங்களுக்கு சேவை செய்து கொண்டிருக்குமாறு அனுக்ரஹித்த விவரம் தெரிவிக்க-
லான கார்யம். இத்துடன் ஸ்ரீ மஹா ஸந்நிதானம் அனுக்ரஹம் செய்த ப்ரஸாதம் அனுப்பப்பட்டிருக்கிறது.

எஸ். ஸாம்பமூர்த்தி சாஸ்திரி,
மானேஜர்.





ஸ்ரீமத் பரமஹம்ஸ பரிவ்ராஜகாசார்யவர்ய
ஸ்ரீ காஞ்சிகாமகோடி பீடாதிபதி
**ஸ்ரீமத் சந்த்ரசேகரேந்த்ர ஸரஸ்வதி ஸ்வாமிகள்**

பொழுது கலப்பையின் நுனியில் ஸீதை தோன்றினதும், ராவணனுடைய புத்திரனுக்கு இந்திரஜித்து அல்லது இந்திரசத்ருவென்று வைத்த பெயரும், ரிக்வேதத்தில் இந்திரனுக்குச் சத்ரு வென்று விருத்ராஸுரனுக்கு வைத்த பெயரும் ஒன்ருயிருப்பதும்; இந்திரனுடைய பசுக்களைத் திருடிக்கொண்டு போன பணிக்ளென்ற அஸுரர்களுடன் இந்திரன் யுத்தம் செய்து பசுக்களைத் திருப்பிக் கொண்டுவந்ததும், வாயுதேவதையின் புத்திரனை மாருதியை ராமன் ஸஹாயமாய்க் கொண்டதுபோல் இந்திரன் விருத்ராஸுர யுத்தத்தில் மருத்துகளை உதவியாகக் கொண்டதும், இந்திரனுடைய பசுக்களை அவைகளின் அடிச்சுவடுகளால் தொடர்ந்து ரஸமென்ற ஸமுத்திரத்தைத் தாண்டிச் சென்று கண்டுபிடித்து இந்திரனுக்குச் சொன்ன ஸரமை என்ற தேவலோகத்து நாயின் பெயரும், ஸீதையை அசோகவனத்தில் அடிக்கடி தேற்றின ஸரமை என்ற ராக்ஷஸியின் பெயரும் ஒன்ருயிருப்பதும் இந்தக் கொள்கைக்கு ஆதாரமாகச் சொல்லப்படுகின்றன.

(4) காசியில் வசிக்கும் பண்டிதரான கோவிந்ததாஸென்பவர், சென்ற வர்ஷத்தில் இயற்றின ஹிந்துமதமென்ற நூலில் ராமாயணத்தைப் பற்றி எழுதுகிருர்:—

(i) வரணையும் கங்கையும் காசியில் சேருமிடத்தில் 'வேதாந்திகா பாக்' என்ற ஆசிரமத்தில் கவீந்த்ராசார்ய ஸரஸ்வதி என்றவருடைய புஸ்தக சாலையில் அக்னிவேச்ய, சுக, அத்யாத்ம, மிருகண்டு, வாஸிஷ்ட, ஸங்க்ரஹ, காகபுஸுண்டி, வியாஸ, வால்மீகிக்ருத, நாடகராமாயண, விபீஷண, ப்ரஹ்ம, சிவ, அகஸ்த்ய, சேஷ, ஆகம, கர்ம, ஸ்கந்த, பௌலஸ்த்ய, அருண, பரத, தர்ம, அத்புத, காயத்ரீ யென்ற 23 ராமாயணங்கள் இருந்ததாகச் சொல்லுகிருர்.

(ii) சரித்திரமென்ற பதத்திற்குத் தற்காலத்தில் செய்யும் அர்த்தத்தின்படி ராமாயணம் சரித்திரமல்ல. கேவலம் காவியமே.

(iii தற்காலத்தில் நமக்கு கிடைத்திருக்கும் ராமாயண பாடம் வால்மீகியால் சொல்லப்பட்ட ராமாயண பாடமல்ல. அநேக மாறுதல்களும் பரஸ்பர விரோதங்களும், கதா புருஷர்களின் ஸ்வபாவத்திற்கொவ்வாத குறைகளும் காணப்படுகின்றன.

(iv) வால்மீகியின் காலத்தில் நாடு நகரம், ஏழை தனிகர், பண்டிதன் பாமரன் எல்லோரும் கேட்டனுபவிக்கக்கூடிய பொதுவான ஜனங்களின் பாஷையில் பாடப்பட்ட ராமாயணம், தற்காலத்தில் காணப்படும் ஸம்ஸ்கிருத பாஷையில் செய்யப்படவில்லை. அதற்குப் பிறகு அந்தந்த காலங்களில் வழங்கின பாஷைகளில் பலரால் மாற்றியெழுதப்பட்டிருக்கிறது. அப்பொழுது சில கதா பேதங்களும் மாற்றி கலக்கப்பட்டிருக்கின்றன.

ஸி. ஆர். ஸ்ரீ.

Released by Maran's Dog ,Toronto, Canada

## பால காண்டம்

## விஷய அட்டவணை

ஸ்ரீ :
ஸ்ரீரஸ்து
ஸ்ரீ ராமசந்த்ர பரப்ரஹ்மணே நம :

# ஸ்ரீமத் வால்மீகி ராமாயணம்

(தமிழ் வசனம் - இரண்டு பாகங்களில்)

## பாகம் 1

பால காண்டம், அயோத்யா காண்டம்,
ஆரண்ய காண்டம், கிஷ்கிந்தா காண்டம்



ஸங்கீதபீஷ்ம, ஸங்கீத விமர்சகாசார்ய,
அபிநவ த்யாகப்ரஹ்ம, கீர்த்தனாசார்ய

ஸ்ரீ உ. வே. C. R. ஸ்ரீநிவாஸய்யங்கார், B.A.

அவர்களால் ஸ்ரீமத் வால்மீகி ராமாயணத்திலிருந்து
மொழிபெயர்க்கப்பட்டது

---

பதிப்பகத்தார் :

தி லிட்டில் ப்ளவர் கம்பெனி

தியாகராயநகர்
சென்னை-600 017



நந்திகோயில் தெரு
திருச்சி-620 002

[பாகங்கள் 1 & 2 சேர்ந்து]
விலை ரூ. 250/-


Released by Maran's Dog ,Toronto, Canada
Released by Maran's Dog ,Toronto, Canada

இப்புத்தகத்தின் மூன்றும் பதிப்பிற்கு ஸ்ரீகாஞ்சி காமகோடி
பெரியவாள் மனம் உவந்து அளித்த

# ஸ்ரீ முகம்.

**Sri Kanchi Kamakoti Peetadhipathi Jagadguru**
**Sri Sankaracharya Swamigal Mutt Samasthanam,**

**KUMBAKONAM.**

*ஸ்ரீமத் பரமஹம்ஸ பரிவ்ராஜகாசார்யவர்ய*
*ஸ்ரீமத் சங்கர பகவத்பாத ப்ரதிஷ்டித*
*ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிப ஜகத்குரு*
*ஸ்ரீமத் சந்த்ரசேகரேந்த்ர ஸரஸ்வதீ ஸ்ரீ பாதை:*

**நாராயணேர்யாய க்ரியதே நாராயண ஸ்ம்ருதி:**

படிப்பவர்களுக்கும் கேட்பவர்களுக்கும் ஸகலவித நன்மைகளையும் உண்டாக்கக்கூடியதான ஸ்ரீவால்மீகி ராமாயணத்தை ஸ்ரீ C. R. ஸ்ரீநிவாஸ ஐயங்கார் தமிழில் மொழிபெயர்த்து அச்சிட்டு உதவினர். அப்புத்தக ப்ரதிகள் இப்போது கிடைக்காமல் போய்விட்டன. இதை அறிந்து அதை மறுபடியும் அச்சுப்போட்டு ஜனங்களுக்கு தொண்டு புரிய வேண்டுமென்கிற எண்ணத்துடன் ஏற்கனவே தாங்கள் மிகவும் விசேஷ மஹிமையுடன் கூடிய ஸுந்தர காண்டத்தை அச்சிட்டு வெளியிட்டிருக்கிறீர்கள்.

இப்போதும் "Hindu" பத்திராதிபர் ஸ்ரீ K. ஸ்ரீநிவாஸய்யங்கார் முதலிய ப்ரமுகர்களுடைய ஆதரவின்பேரில் பாக்கி காண்டங்களையும் தாங்கள் அச்சிட்டு வெளிப்படுத்த முன்வந்திருப்பதைக் கேட்டு சந்தோஷிக்கிறோம். ஸ்ரீ சந்த்ர மௌளீச்வரர் கிருபையால் தங்கள் முயற்சி வெற்றியடைய வேண்டுமாய் ஆசீர்வதிக்கிறோம்.

| | |
|---|---|
| *விஜய யாத்ராஸ்தானம்*<br>*ஸ்ரீ காஞ்சி க்ஷேத்ரம்*<br>*ஜய, கார்த்திக சுத்த நவமீ*<br>*4—11--1954* | **நாராயணஸ்ம்ருதி:** |

—

# FOREWORD

[*The late Sri* A. V. GOPALACHARYA, *Advocate, Tiruchirapally, was a* **Great** *and pious Scholar; he was an authority in regard to Visishtadwaita School of Philosophy. The following* **Foreword** *dated 4—12—1954 given by him to the third edition of this work will speak of the illuminative erudition and piety of our learned author.*]

Sri C. R. Srinivasa Ayyangar, popularly known as Kirtanacharya, was a well-known scholar in English, Tamil and sanskrit who had made Valmiki's Ramayana and its great commentaries by Govindaraja, Tilaka and Maheswara Thirtha his life's study, wrote a scholarly Tamil rendering of Ramayana and published it several decades ago. The book not only translates the original into lucid and chaste Tamil but also brings out the heart of the poet by explaining *Dhvani* suggestions intended by the original and has also in many places given a gist of the valuable commentaries refering to them by their names. He was a bold original thinker and his original expositions of the poet's mind are intersting and valuable. The book published long ago was very popularly read and admired.

Valmiki is well-known as the first Sanskrit poet — *adi kavi* The first kavi has for thousands of years maintained the first rank as an epic poet. All his great successors in Sanskrit poetry have unanimously paid him the highest homage and accepted him as the greatest poet. Veda Vyasa in his Mahabharatam extolled by Brahmadeva as a poem of supreme merit and sweetness like the cooing of cuckoo (evidently referring to Valmiki Kokila) shows his admiration for Valmiki's poetry by freely borrowing and echoing his poetic ideas and expressions. His profuse summaries of the Ramayanam in his great poem Mahabharatham, Sri Bhagavatham etc. are very intersting and of great value as a critical appreciation of Valmiki's poetry and of the ideal virtues of the Hero, Heroine and other great characters of the Ramayana.

The Dharmakutam which is a great and voluminous work elaborately bringing out in all detail the dharmas taught by Ramayanam with copious citations from the Vedas and Dharmasastras was published in part by the Vani Vilas press, Srirangam. It has now been taken up and its publication continued by the Saraswati Mahal which has published a further kanda of the great work. The Ramayanam, its Hero and Heroine

நான்காம் பதிப்பு - 1963
வெளியிட்டது - 1964
ஐந்தாம் பதிப்பு - 1984
ஆறாம் பதிப்பு - 1990
ஏழாம் பதிப்பு - 1996
எட்டாம் பதிப்பு - 1999





*Copies can also be had of :—*

**Messrs. HIGGINBOTHAMS LTD.,**
814, ANNA SALAI, CHENNAI-600 002,
BRANCHES & RAILWAY BOOKSTALLS

*Printed at Printers Plates, Chennai-600 014.*
Released by Maran's Dog ,Toronto, Canada

Released by Maran's Dog ,Toronto, Canada

## அகஸ்தியர் ஸ்ரீராமனுக்கு வில், அம்பறை முதலியன அளித்தல்



ராஜா ஸர்வஸ்ய லோகஸ்ய த$^4$ர்மசாரீ மஹாரத$^2$: ।
பூஜநீயஶ்ச மாந்யஶ்ச ப$^4$வாந் ப்ராப்த: ப்ரியாதிதி$^2$: ॥

இத$^3$ம் தி$^3$வ்யம் மஹச்சாபம் ஹேமவஜ்ர விபூ$^4$ஷிதம் ।
வைஷ்ணவம் புருஷவ்யாக்$^4$ர நிர்மிதம் விஶ்வ கர்மணா ॥

அமோக$^4$: ஸூர்ய ஸங்காஶோ ப்ரஹ்மத$^3$த்த: ஶரோத்தம: ।
தத்$^3$த$^4$ருஸ் தௌ ச தூணீரௌ ஶரம் க$^2$ட்$^3$க$^3$ம் ச மாநத ।

ஜயாய ப்ரதிக்$^3$ருஹ்ணீஷ்வ வஜ்ரம் வஜ்ரத$^4$ரோ யதா$^2$ ॥

— ஆர. 12 - 31, 32, 33, 37.

Released by Maran's Dog ,Toronto, Canada

have been enshrined in the hearts of the Hindu all over India for thousands of years and have been passionately loved and adored. Rama and Sita have been adored as immaculate ideals of manhood and womanhood.

Sri C. R. Srinivasa Ayyangar was a teacher for the best part of his life as professor of History in the S. P. G. College, Tiruchirapalli. He was very popular as a learned and impressive professor. He was a devout devotee of Rama and Sri Ramanuja, whose life he wrote in English and published five decades ago, which was widely read. His musical Katha Kalakshepams were widely popular. It may be interesting to draw attention to his putting in the mouth of Rama and Lakshmana who appeared before the Tanisha posing as servants of Bhoppana Ramadoss the statement that their religion was Ramanuja Darsanam in answer to the query about their faith, in one of his kalakshepams. His illuminating expositions of the Kritis of Sri Tyagaraja published in the weekly supplements of the "Swadesamitran" were very widely read.

It is very necessary that his great work of Tamil prose rendering of the whole of Ramayana which besides being a scholarly and clear translation reflecting the sprit and charm of the original contains fine expositions of Valmiki Kavi Hrudaya should be made available for the present genaration of the Tamil Nad and for the succeeding ones by reprinting it in serial parts. The "Sundarakandam" alone has been reprinted in 1952. The completion of the entire work by starting the publication from the beginning will be rendering a very great service to the Ramayanam loving public of the Tamil Nad and to the memory of the great author.

Having known Sri C. R. Srinivasa Ayyangar personally, I deem it a privilege to contribute this humble foreword to the third edition of his great work.

Trichinopoly,<br>4th Dec. 1954.

A. V. GOPALACHARYA,<br>*Advocate.*

---

# பதிப்பாசிரியரின் பணிவுரை

(Reprint from Fourth Edition—1963-1964)

**"யாவத் ஸ்தாஸ்யந்தி கிரய: ஸரிதஶ்ச மஹீதலே |**
**தாவத் ராமாயணகதா லோகேஷு ப்ரசரிஷ்யதி" ||**

"இப்பூவுலகில் மலைகளும் நதிகளும் உள்ளளவும் ஸ்ரீமத் ராமாயணக் கதையும் ப்ரஸித்தியுடன் விளங்கிவரும்" என்பது ஸ்ரீ வால்மீகி பகவானுடைய திருவாக்கு. அதாவது, "பிற்காலத்தில்—முக்கியமாகக் கலியுகத்தில்—நாஸ்திக ப்ரசாரமும் ராம நிந்தனையும் வலிவடைவதுபோலத் தோன்றும்; அவற்றினாலெல்லாம் ஸ்ரீ ராமபிரானின் பெருமையோ, ஸ்ரீமத் ராமாயணத்தின் மஹத்வமோ ஒரு சிறிதும் குன்றாது; இன்னும் ப்ராபல்யமடையவே செய்யும்; தளர்ச்சியடையாதீர்கள்." என்று ஆஸ்திக மஹாஜனங்களுக்கு அபயமளிக்கவே அந்த ஆதிகவி பால காண்டத்தில் இங்ஙனம் கூறியருளியுள்ளார் போலும்! இதற்கு, ஸமீபத்தில் நிகழ்ந்த நிகழ்ச்சிகளே சான்று கூறும். சில வருஷங்களுக்குமுன் ஸ்ரீமத் ராமாயண மஹாக்ரந்தத்தை விபரீதமான முறையில் ஆராய்ச்சி செய்து எழுதுதல், ஸ்ரீ ரகுநந்தனின் திருவுருவம் தாங்கிய சித்திரங்களை எரித்தல் போன்ற பாபச் செயல்களில் ஈடுபடச் செய்யும் ஓர் இயக்கம் சிறிது வலிவடைவது போலத் தோன்றியவுடனேயே நாட்டிலுள்ள ஸ்ரீராமபக்தர்கள் கொதித்தெழுந்து, விழிப்படைந்து, அந்த க்ஷணம் முதல் ஸ்ரீராமநாம ஸங்கீர்த்தனங்களைப் பண்ணுவதிலும், ஸ்ரீராமநவமி உத்ஸவத்தை வீதிக்கு வீதி அதிவிமரிசையாகக் கொண்டாடுவதிலும் தீவிரமாக ஈடுபட்டு, அந்த நாஸ்திக இயக்கத்தை வேரறுக்கச் செய்தது இன்று எல்லோரும் அறிந்ததே. எனவே, ஆன்மிகச் சிந்தனையும், ஸ்ரீராம பக்தியும் திநே திநே வளர்ந்து வரும் இன்றைய சூழ்நிலையில் ஸங்கீத பீஷ்ம, ஸங்கீத விமர்சகாசார்ய, அபிநவத்யாகப்ரஹ்ம, கீர்த்தநாசார்ய ஸ்ரீ உ. வே. C. R. ஸ்ரீநிவாஸ ஐயங்கார் ஸ்வாமியின் ஸ்ரீமத் வால்மீகி ராமாயணத்தின் தமிழ் மொழி பெயர்ப்பு (ஸ்ரீமத் ராமாயண ஸம்பந்தமான நோட்டுகளுடன்) நான்காவது பதிப்பாக வெளிவந்திருப்பதில் ஆச்சரியம் ஏதும் இல்லையல்லவா? எனினும், இந்தப் பதிப்பு எம்முடைய பதிப்பாக வெளிவந்ததுதான் மிகவும் ஆச்சரியமாகும்.

ஸத்யம், தர்மம், பித்ருவாக்ய பரிபாலனம், மாத்ருபக்தி, ப்ராத்ரு ஸ்நேஹமும் பதிவ்ரதாதர்மம், ஏகபத்நிவ்ரதம், ஶரணாகதரக்ஷணம் முதலிய குணவிசேஷங்களை அடிப்படையாகக்கொண்ட ஸ்ரீமத் வால்மீகி ராமாயண மஹாகாவ்யத்தின் தமிழ்மொழிபெயர்ப்பான இந்த ஸத்க்ரந்தத்தை ப்ரசுரிக்கும் புண்யம் எமது லிப்கோ ஸ்தாபனத்துக்கு ஸித்திக்கும் என்று நாங்கள் கனவிலும் கருதியவர்களல்ல. இந்த மஹத்தான பாக்யம் எமக்கு ஏற்பட்டதற்கு எமக்குத் தோன்றும் காரணங்கள் பின்வருவனவாகும்:—

முதலாவதாக, ஸ்ரீமத்வேதமார்க்க ப்ரதிஷ்டாபநாசார்ய பரமஹம்ஸ பரிவ்ராஜகாசார்ய, ஸர்வதந்த்ர ஸ்வதந்த்ரோபய வேதாந்தாசார்ய, ஸ்ரீமத் கவிகதக கண்டீரவ சரணநளிநயுகள விந்யஸ்தாத்மபரராய் மைசூர் ஸ்ரீபர

# வால்மீகி முனிவர் லவகுசர்களிடம் ஸ்ரீமத் ராமாயணத்தை அளித்தல்



Released by Maran's Dog ,Toronto, Canada

ஸ ஶிஷ்யாவப்3ரவீத் ஹ்ருஷ்டௌ யுவாம் க3த்வா ஸமாஹிதௌ ।
க்ருத்ஸ்நம் ராமாயணம் காவ்யம க3ாயேதாம் பரயா முத3ா ॥

— உத். 93-4.

### ராமாயண பலச்ருதி

குடும்ப3வ்ருத்3தி4ம் த4நத4ாந்யவ்ருத்3தி4ம்
ஸ்த்ரியஶ்ச ஸர்வா: ஸுக2முத்தமம் ச ।
ஶ்ருத்வா ஶுப4ம் காவ்யமித3ம் மஹார்த்த2ம்
ப்ராப்நோதி ஸர்வாம் பு4வி சார்த்த2ஸித்3தி4ம் ॥

— யுத். 131 - 117.

Released by Maran's Dog ,Toronto, Canada

ஸ்ரீ:

## ஸ்ரீ லக்ஷ்மீஹயக்ரீவ ஸ்துதி

தம்மை ஆராதிக்கும் ஆஸ்திகர்கட்கு இஹபர ஸுகங்களை அபரிமிதமாய் அளிப்பவர் **ஸ்ரீ லக்ஷ்மீஹயக்ரீவமூர்த்தி.** ஸ்ரீமந் நிகமாந்த மஹா தேசிகனால் ஆராதிக்கப்பெற்ற இந்த மூர்த்தி மைசூர் ஸ்ரீ பரகாலமடம், திருவஹீந்திரபுரத்தில் உள்ள ஸஞ்ஜீவி மலை, ஸ்ரீரங்கம், திருமலை, காஞ்சி முதலிய திவ்ய தேசங்களில் ஸேவை ஸாதிக்கிறார். இந்த விவரங்களை எமது ஸுந்தர காண்டம் அநுபந்தம் பக்கங்கள் அ-102 முதல் அ-108 வரை காண்க. மேற்கண்ட ஸ்தலங்கள் அல்லாமல் கும்பகோணம். ஸ்ரீ வராஹபுஷ்கரணிக் கரையிலும், ஒப்பிலியப்பன் ஸந்நிதியிலும், நாவல்பாக்கம் ஸ்ரீ அண்ணயார்ய மஹாதேசிகன் ' திருமாளிகையிலும் எழுந்தருளியுள்ளார். அஞ்ஞான இருளை அகற்றி, ஞான ஒளியைப் பரப்புகின்ற ஸ்ரீ லக்ஷ்மீ ஹயக்ரீவனை முதலில் தியானித்து ஸ்தோத்திரம் செய்வோமாக.

### ஸ்ரீ வேதாந்த தேசிக ஸ்துதி:

ஸ்ரீமாந் வேங்கடநாத2ார்ய: கவிதார்கிக கேஸரீ ।
வேத3ாந்தாசார்ய வர்யோ மே ஸந்நித4த்தாம் ஸத3ா ஹ்ருதி ॥

---

### ஸ்ரீ ஹயக்ரீவ ஸ்தோத்ரம்

ஜ்ஞாநாநந்த3மயம் தே3வம் நிர்மல ஸ்ப2டிகாக்ருதிம் ।
ஆதா4ரம் ஸர்வ வித்3யாநாம் ஹயக்3ரீவ முபாஸ்மஹே ॥

வ்யாக்2யாமுத்3ராம் கரஸரஸிஜை: புஸ்தகம் சங்க3சக்ரே
பி3ப்4ரத்3 பி4ந்நஸ்ப2டிகருசிரே புண்ட3ரீகே நிஷண்ண: ।
அம்லாநஶ்ரீ ரம்ருதவிசதை3 ரம்சுபி4: ப்லாவயந்மாம்
அவிர்பூ4யா த3நக4மஹிமா மாநஸே வாக3தீ4ச: ॥

வாக3ர்த்த2 ஸித்3தி4 ஹேதோ:
பட2த ஹயக்3ரீவ ஸம்ஸ்துதிம் ப4க்த்யா ।
கவிதார்கிக கேஸரிணா
வேங்கடநாதே2ந விரசிதாமேதாம் ॥

---

### ஸ்ரீ வேதாந்த் தேசிக ஸ்துதி:

கவிதார்கிக ஸிம்ஹாய கல்யாண கு3ண சாலிநே ।
ஸ்ரீமதே வேங்கடேசாய வேத3ாந்த கு3ரவே நம: ॥

கால மடாஸ்தான மூர்த்தாபிஷிக்தராய் எழுந்தருளியிருக்கும் ஸ்ரீமத் அபிநவரங்கநாத ப்ரஹ்மதந்த்ர பரகால யதிந்த்ர மஹாதேஶிகனுடைய பரிபூர்ண க்ருபையினுல், அந்த ஸ்வாமி ஆராதித்துவரும் ஸ்ரீலக்ஷ்மீ ஹயக்ரீவப்பெருமாளுடைய அனுக்ரஹம் எங்களுக்கு ஏற்பட்டது.

இரண்டாவதாக, மற்றுமொரு நடமாடும் தெய்வமாக விளங்கும் ஸ்ரீமத் பரமஹம்ஸ பரிவ்ராஜகாசார்யவர்ய ஸ்ரீமத் ஶங்கரபகவத்பாத ப்ரதிஷ்டித ஸ்ரீகாஞ்சி காமகோடிபீடாதிபதி ஜகத்குரு ஸ்ரீமத்சந்த்ர சேகரேந்த்ர ஸரஸ்வதி ஸ்வாமிகளுடைய திவ்ய பாததூளி ஸ்பர்சம் 30-3-1958-ல் (ஹேவிளம்பிஞு பங்குனிமீ 17-ஆந்தேதி) விப்கோ ஸ்தாபனத்துக்கு ஏற்பட்டு, அந்த ஸமயத்தில் ஸ்வாமிகள், "நீங்கள் பக்தி மார்க்கமான அனேக நூல்களை வெளியிடுவீர்களாக!" என்று ஆசீர்வதித்தருளினுர்கள்.

மூன்ருவதாக, இந்த ஸ்தாபனத்தின் உரிமையாளர்களின் சொந்த ஊராகிய (தென்னுற்காடு ஜில்லா, கடலூர் என்.டி.-க்கு அடுத்துள்ள) திருவஹீந்திரபுர க்ஷேத்ரத்தில் எழுந்தருளியுள்ள ஸ்ரீசக்ரவர்த்தித் திருமகனின் க்ருபாகடாக்ஷமும்; செங்கல்பட்டு ஜில்லாவைச் சேர்ந்த ஸ்ரீவகுளாரண்ய க்ஷேத்ரமென்னும் ஸ்ரீ மதுராந்தகம் க்ஷேத்ரத்தில் கோயில்கொண்டுள்ள ஸ்ரீ கோதண்டராமப்பெருமாளின் க்ருபாகடாக்ஷமும் எமக்கு ஸித்தித்தன.

இங்ஙனம் பகவத் பாகவதாநுக்ரஹ பூர்வகமாக ஆரம்பிக்கப்பட்ட இந்த நல்ல கார்யத்துக்கும் விக்னங்களும், சோதனைகளும் ஏற்படாமல் இல்லை. அவைகள் நிவ்ருத்தியாவதற்கு என்னென்ன விதமாக விசேஷ ப்ரார்த்தனைகள் செய்தோம் என்பது இப்புத்தகத்தில் வேறு ஒரு பகுதியில் விவரிக்கப்பட்டுள்ளது.

இப்புத்தகம் வெளிவருவதில் பல்வேறு வகைகளில் எமக்கு உதவி புரிந்தவர்கள் பலர். முக்கியமாக ஸ்ரீ அஹோபில மடம், ஸ்ரீ பரகால மடம், ஸ்ரீ உத்தர அஹோபில மடம், ஸ்ரீ காஞ்சி காமகோடி, ஸ்ரீ ச்ருங்கேரி, ஸ்ரீ பூரி சங்கர மடங்கள், உடுப்பி ஸ்ரீமத்வாசார்யாள்மடங்கள், ஸ்ரீரங்கம் ஆண்டவன் ஸந்நிதிகள், ஸ்ரீ தர்மபுரம் ஆதீனம், ஸ்ரீ திருவாவடுதுறை ஆதீனம், ஸ்ரீ திருப்பனந்தாள் ஆதீனம் போன்ற மத ஸ்தாபனங்களுக்கு நாங்கள் பெரிதும் கடமைப்பட்டுள்ளோம். ஏனெனில், இன்று நம் தேசத்தில் நாஸ்திகம் தலையெடுக்காமல், ஆஸ்திகம் நிலைத்து நிற்பதற்கு இந்த மத ஸ்தாபனங்களின் ஆதரவில் நடந்துவரும் மத ப்ரசாரமும், ஸத்கதாப்ரவசனங்களும் மட்டுமின்றி, அந்த ஸ்தாபனங்கள் அவ்வப்போது வெளியிட்டு வரும் மத ஸம்பந்தமான வெளியீடுகளும் காரணங்களாகும். இப்புத்தகத்தைப் பதிப்பித்து வெளியிடுவதில் எமக்குப் பேருதவியாக அத்தகைய நூல்கள் அமைந்துள்ளன. இதற்காக மேலே கூறப்பட்டுள்ள மதஸ்தாபனங்களுக்கு எமது க்ருதஜ்ஞதையைத் தெரிவித்துக்கொண்டு, நம் பெரியோர்களால் அருளிச்செய்யப்பட்ட புராதன நூல்கள் மறைந்துவிடாமல் இருப்பதற்காக, 'அத்தகைய நூல்கள் இன்னும் என்னென்ன மறைந்துள?' என்பதை ஆராய்ந்து, அவைகளை ஒன்றன்பின் ஒன்ருகத் தொடர்ந்து வெளியிட்டு உலகோரை உஜ்ஜீவிக்கச் செய்யவேண்டும்-என்று அந்த மடங்களின் பீடங்களை அலங்கரிக்கும் மஹான்களுடைய ஸந்நிதானங்களில் அதிவிநயத்துடன் விஜ்ஞாபித்துக்கொள்கிறோம்.



அடுத்தபடியாக, * "குமாரனும் கோசலை குமரனும்", "ராமனுடைய எளிமை," "தத்வார்த்த ராமாயணம்" என்ற விஷயங்களைத் தந்துதவி, அவைகளைத் தனி நூலாக வெளியிட அனுமதியும் அளித்த, 'திருப்புகழமிர்தம்' ஆசிரியர் ஸ்ரீ ஸரஸ்வதீ கடாக்ஷாம்ருத, அருள்மொழி அரசு திருமுருக க்ருபானந்தவாரியார் அவர்களுக்கு எமது க்ருதஜ்ஞதையைத் தெரிவித்துக்கொள்கிறோம்.

மேலும், இந்நூலை வெளிக் கொண்டுவருவதில் எமக்குப் பலவிதங்களிலும் உதவிகள் புரிந்த பின்வரும் பக்திமான்களுக்கும் எமது ஹ்ருதய பூர்ணமான க்ருதஜ்ஞதையைத் தெரிவித்துக்கொள்கிறோம் :—

ஸங்கீத பீஷ்ம, ஸங்கீத விமர்சகாசார்ய, அபிநவத்யாகப்ரஹ்ம, கீர்த்தனாசார்ய ஸ்ரீ உ. வே. C. R. ஸ்ரீநிவாஸ ஐயங்கார் ஸ்வாமியின் ஸ்ரீமத் வால்மீகி ராமாயண ஆங்கில தமிழ் மொழிபெயர்ப்புக்களின் பூர்ண பதிப்புரிமையை, அவற்றின் நோட்டுக்களுடன் எமக்குக் கொடுத்து இப் புண்ய க்ரந்தத்தை அச்சிடும் பாக்யத்தை எமக்களித்த அன்னரின் குமாரர் ஸ்ரீ உ. வே. S. ராமஸ்வாமி ஐயங்கார் ; மற்றும் அவர்தம் திருக்குமாரர்கள்;

எங்களிடம் பரம ப்ரீதியும் க்ருபையும் உடையவரும், பொதுவாகப் புத்தகப் பணியில் யாம் சிறந்து விளங்கவேண்டுமென்றும், குறிப்பாக இது போன்ற புண்ய க்ரந்தங்களை அச்சிட்டு வெளியிடுவதில் வெற்றி காண வேண்டும் என்றும் அடிக்கடி எம்மை ஆசீர்வதித்து வருபவருமான பெரியவர் ஸ்ரீமத் பாகவதரத்ந, ஸ்ரீ பாகவத ராமாயண உபந்யாஸக, ப்ரவசன மார்க்கதர்சி மாயவரம் ப்ரஹ்மஸ்ரீ தேவங்குடி சிவராமக்ருஷ்ண சாஸ்த்ரிகள் ;

ஸுந்தர காண்டம் அநுபந்தப் பகுதியில் சேர்க்கப்பட்டுள்ள "ஸ்ரீந்ருஸிம்ஹ பஞ்சாம்ருதஸ்தோத்ர"த்தைப் பரம க்ருபையுடன் எமக்கு எழுதியனுப்பியவரும், ஸ்ரீமத் வேதமார்க்க ப்ரதிஷ்டாபநாசார்ய, பரமஹம்ஸ பரிவ்ராஜகாசார்ய, ஸர்வதந்த்ர ஸ்வதந்த்ரோபய வேதாந்தாசார்ய, ஸ்ரீ பகவத் ராமாநுஜ ஸித்தாந்த நிர்த்தாரண ஸார்வபௌம, ஸ்ரீ அஹோபில மடம் 43-வது பட்டம் (தேவனுர் விளாகம்) ஸ்ரீ அழகிய சிங்கரான ஸ்ரீ லக்ஷ்மீந்ருஸிம்ஹ திவ்ய பாதுகாஸேவக ஸ்ரீவண் சடகோப ஸ்ரீ வீரராகவ சடகோப யதீந்த்ர மஹாதேசிகனுடைய பூர்வாச்ரம திருத்தம்பியாரான ஸ்ரீ உ. வே. பருத்திப்பட்டு வங்கீபுரம் ஸ்ரீநிவாஸ தேசிகாச்சாரியர் (M.A:, B.L,) ஸ்வாமி ;

* [illegible] "குமாரனும் கோசலை குமரனும்" என்ற சிறு நூல் காண்க.

# அயோத்யா காண்டம்

## விஷய அட்டவணை

நாங்கள் வெளியிடும் பக்திமார்க்கமான நூல்களைப் பரிசீலனை செய்து தக்க ஆலோசனைகளை எமக்குச் சொல்லி உதவிபுரிந்துவரும் ஒப்பிலியப்பன் ஸந்நிதி ஸ்ரீ உ. வே. "வித்யாவிசாரத" சிரோமணி, வித்வான் வங்கீபுரம் நவநீதம் ஸ்ரீராம தேசிகாசார்யர் ஸ்வாமி;

சென்னையில் அதி விமரிசையாக ஸத்க்ரந்த காலக்ஷேபங்கள் ஸாதித்துவரும் ந்யாய வேதாந்த வித்வான் ஸ்ரீ உ. வே. K. வரதாசார்யர் ஸ்வாமி;

இந்நூலைப் பதிப்பித்து அச்சிடுவதில் மிகவும் உதவி புரிந்த ஸ்ரீ உ. வே. V. S. வேங்கட ராகவாச்சாரியர், M. A., B. O. L., B. T., ஸ்வாமி;

பொதுவாக இக்கிரந்த விஷயமாகச் சில யோசனைகளும் உற்சாகமும் தந்துவரும் ஸ்ரீ உ. வே. திருமலை ஈச்சம்பாடி திருவேங்கடாச்சாரியர், B.A., L.T. ஸ்வாமி;

இந்நூல் வெளியிடுவது ஸம்பந்தமாகச் சில அரிய யோசனைகள் தந்துதவிய ஸ்ரீ மத்வசாஸ்த்ர ஸம்பந்ந லலிதகலா வல்லப, சதுர்பாஷி ஸ்ரீமான் வாதிராஜபாகவதர் அவர்கள்; அவருடைய சிஷ்யரும் ஸ்வாநுபவபூர்வகமாயும் ச்ருதி மதுரமாயும் தாஸசரிதங்களை ஹரிகதாப்ரவசனம் செய்து பக்தர்களை மகிழ்விக்கச் செய்பவருமான ஸ்ரீ மத்வசாஸ்த்ர ஸம்பந்ந ஸ்ரீமான் V. S வெங்கடரமணராவ் அவர்கள்;

ஸுந்தர காண்டம் அநுபந்தப் பகுதியில் சேர்க்கப்பட்டுள்ள ஸ்ரீமத் ராமாயண மஹாத்மாக்கள் ஸ்தோத்ரமாலை தொகுப்பதில் உதவிபுரிந்த வித்வான் திருவாடுதுறை ஆஸ்தான பண்டிதர் ஸ்ரீ உ. வே. T. A. ஸ்ரீநிவாஸாச்சாரியர் ஸ்வாமி;

எமக்குத் தேவையான சில க்ரந்தங்கள், போட்டோக்கள் இவைகளைச் சிரமம் பாராமல் தேடிக் கண்டுபிடித்து அவ்வப்போது கொடுத்தும், ஸ்தோத்ராதிகளைப் பார்வையிட்டும் எமக்குதவிய வித்வான் ஸ்ரீ உ. வே. S. N. ஸ்ரீராம தேசிகாசாரியர் அவர்கள்;

ஸ்ரீராமர், வால்மீகி, ஹநுமார் முதலிய மூர்த்திகளின் போட்டோக்களை எமக்குக் கொடுத்துதவிய ஸ்ரீ உ வே. V. D. ராமஸ்வாமி ஐயங்கார், ஸ்ரீ உ. வே. T. N. ஸ்ரீநிவாஸாச்சாரியார், M. A., ஸ்ரீ உ. வே. திருவஹீந்திரபுரம் D. ஆராவமுதாசாரியார். ஸ்ரீமான் T. M. பாஸ்கரத்தொண்டைமான், I. A. S., (Retd.) ஆகியோர்;

திருவையாறு வால்மீகி மண்டபத்தில் சலவைக்கல்லில் பொறிக்கப்பட்ட ஸ்ரீத்யாகராஜரின் கீர்த்தனைகள், ஸ்ரீவால்மீகி லவகுசர்களின் ப்ரதிமைகள் ஆகியவைகளின் போட்டோக்களையும், திருவையாறு வால்மீகி மண்டபத்தை அலங்கரிக்கவிருக்கும் ஸ்ரீ ராமாயண சரிதத்தைச் சித்தரிக்கும் ப்ரதிமைகளில் இரண்டு முக்கியமான கட்டங்களைச் சித்தரிக்கும் ப்ரதிமைகளின் போட்டோக்களையும் எமக்குத் தந்துதவிய ப்ரஹ்மஸ்ரீ ஸ்ரீரங்கம் சுந்தரமய்யர் அவர்கள்;



ஸ்ரீமுஷ்ணம் பட்டாபிஷேக ஸ்ரீராமர் போட்டோக்களைத் தந்துதவிய சிதம்பரம் டாக்டர் ப்ரஹ்மஸ்ரீ நடராஜ ஜடாவல்லபர் அவர்கள்;

எங்கள் புஸ்தக வெளியீட்டுப் பணிகள் எல்லாவற்றிலும் எவ்வித ப்ரதிப்ரயோஜனமும் எதிர்பாராமல் பரமப்ரீதியுடன் பேருதவிகள் பல புரிந்துவருபவரான பம்பாய் "பவன்ஸ் ஜர்னல்" ஆசிரியர் ப்ரஹ்மஸ்ரீ V. A. K. ஐயர் அவர்கள்;

பொதுவாக இந்நூலை வெளியிடுவதிலும், முக்கியமாக இந்நூலுடன் வழங்கப்படும் வெளியீடான "இக்ஷ்வாகு குலதனம்" என்னும் நூலைப் பதிப்பித்து வெளியிடுவதிலும் பேருதவிபுரிந்த ஸாஹித்ய சிரோமணி, தமிழ் வித்வான் ஸ்ரீ உ. வே. S. S. ராகவன் ('பாரதிமோஹன்') அவர்கள்;

ஸுந்தர காண்டம் அநுபந்தப் பகுதியில் சேர்க்கப்பட்டிருக்கும் ஸ்ரீராம கதாமாலையைத் தொகுத்தளித்துதவியவரும், பொதுவாக இந்நூலை வெளியிடுவதில் எம்முடன் ஒத்துழைத்தவருமான விழுப்புரம் தமிழ்ப் பண்டிதர் வித்வான் ஸ்ரீ. N. சுப்பிரமணியன் அவர்கள்;

இந்த ஸ்ரீமத் ராமாயணம் பால காண்டம் முதல் ஸர்க்கம் தொடங்கி, பட்டாபிஷேக ஸர்க்கம் வரையில் பாரங்கள் அச்சாகிய பிறகு இத்தகைய மஹத்தான காரியத்தின் மற்றைய பாகங்கள் பூர்த்தியாவதற்காகவும், லோக க்ஷேமத்தை முன்னிட்டும் லிப்கோ காரியாலயத்திலேயே ஒரு முறை பாராயணம் செய்யவேண்டுமென்ற எம்முடைய கோரிக்கைக்கிணங்க, பால காண்டம் தொடங்கி பட்டாபிஷேக ஸர்க்கம்வரை பாராயணம் செய்து, ஆங்காங்கு காணப்பட்ட சில பிழைகளையும் திருத்தி உதவி புரிந்த ந்யாயசிரோமணி, ஹிந்திப்ரவீண் ப்ரசாரக் ஸ்ரீ உ. வே. கூத்தப்பாக்கம் திருமலை நல்லான் சக்ரவர்த்தி லக்ஷ்மீ நரஸிம்மாச்சாரியர் ஸ்வாமி;

சீர்காழியில் ஒரு பகுதியான கைவிளாஞ்சேரி (தென்பாதி) ஸ்ரீராமர் போட்டோவும், சீர்காழியில் மற்றொரு பகுதியான தாடாளன் கோயில் எம்பெருமான் போட்டோவும் பரம ப்ரீதியுடன் தந்துதவிய ஸ்ரீ T. குற்றாலநாராயணப்பிள்ளை, அவர்களுடைய எஸ்டேட்டின் பவர் ஏஜென்ட் ஸ்ரீ V. ராஜகோபால் பிள்ளை அவர்கள்; திருவண்புருடோத்தமம் திவ்யதேசத் தெம்பெருமானுடைய போட்டோவையும், திருநாங்கூர் 11-திருப்பதிகளைப் பற்றிய விவரங்களையும் எமக்குத்தந்துதவிய: (1) திருநாங்கூர் தேவஸ்தானம் ட்ரஸ்டி ஸ்ரீ உ. வே. T. R. ராமானுஜ ஐயங்கார், B. A. அவர்கள், (2) ஸ்ரீ உ. வே. R. சேஷாத்ரி பட்டாசாரியார் அவர்கள்;

தஞ்சாவூருக்கு அடுத்த மாரியம்மன்கோயில் என்னும் ஊரில் எழுந்தருளியிருக்கும் ஸ்ரீ ராமனின் போட்டோவைத் தந்துதவிய ஸ்ரீ S. ராமஸ்வாமி ஐயங்கார், B. A., B. L., அட்வகேட், கேடல்ஸ் ரோட், தஞ்சாவூர்;

பத்ராசலம் கோயிலின் தோற்றம், திருவாபரணங்கள், திருக்கல்யாண மண்டபத்தில் உள்ள பட்டாபிஷேகச் சித்திரங்கள் ஆகியவைகளின் போட்டோக்களைத் தந்துதவிய "ஹிந்து" பத்திரிகைக் காரியாலயத்தினர் சென்னை-2 ("The HINDU", Madras-2);

ஸ்ரீமத் பரமஹம்ஸ பரிவ்ராஜகாசார்ய வர்ய, ஸ்ரீமத் ஶங்கர பகவத் பாதப்ரதிஷ்டித ஸ்ரீ காஞ்சீ காமகோடி பீடாதிபதி ஜகத்குரு ஸ்ரீமத் சந்த்ர சேகரேந்த்ர ஸரஸ்வதி ஸ்வாமிகளின் ப்ளாக்கையும், அணிலின் பக்தியைச் சித்தரிக்கும் ப்ளாக்கையும், ஸ்ரீ ஸ்வாதித் திருநாளின் "பாவயாமி ரகுராமம்" என்ற கீர்த்தனையைச் சித்தரிக்கும் ப்ளாக்குகளையும், லோக மான்ய திலகர் க்ரூப் போட்டோ ப்ளாக்கையும் எமக்குத் தந்துதவிய 'கல்கி' நிர்வாஹகர்கள்;

சில திவ்ய தேசத்து எம்பெருமான்களுடையவும் பூர்வாசார்யர்களுடையவும் ப்ளாக்குகளை எமக்குத் தந்துதவி அவைகளை இந்நூலில் சேர்த்துக்கொள்ள அனுமதியும் கொடுத்த திருவல்லிக்கேணி "பக்தன்" ஆசிரியர் ஸ்ரீ உ. வே. M. O. அழகியசிங்கராச்சாரியர், B.Sc., B.L. அவர்கள்;

தம்முடைய சொந்த மூவர்ண ப்ளாக்கை உபயோகித்து ஸ்ரீ ராம பட்டாபிஷேகப் படத்தை அச்சிட்டுக் கொடுத்த சேலம் லிடரரி ப்ரஸ் உரிமையாளர்;

ஸ்ரீ லக்ஷ்மீ ஹயக்ரீவப் பெருமாளின் மூவர்ண ப்ளாக்கை உபயோகித்து அச்சிட்டுக்கொள்ள அனுமதியளித்த (1) ஸ்ரீ உ. வே. T. N. ஸ்ரீநிவாஸாச்சாரியார், M. A. (2) "அமுதசுரபி" பத்திரிகை அதிபர்;

முக்கியமாக, "ஹிக்கின்பாதம்ஸ்" ஸ்தாபனத்தார் எமக்குத் தொடர்ந்து செய்து வரும் உதவிகள் பல; அதிலும் இந்த க்ரந்தம் நாங்கள் வெளியிடப் பெரிதும் உற்சாகம் தந்தவர்கள் அவர்களே; அவர்கட்கு எம் ப்ரத்யேக நன்றியை, பரம ஆநந்தத்துடனும் விநயத்துடனும் இதன் மூலம் செலுத்துகிறோம்.



மேலும், இத்தகைய க்ரந்தங்களை வெளியிடுவது ஸம்பந்தமாக அவ்வப்போது நேரிலும், கடிதங்கள் மூலமும் எமக்கு ஆலோசனைகள் கூறி உற்சாகமளித்த ஆஸ்திக அன்பர்களுக்கும் க்ருதஜ்ஞதா பூர்வகமாக அஞ்ஜலி ஸமர்ப்பிக்கிறோம்.

## முடிவுரை

ஸ்ரீவால்மீகி பகவான் யுத்த காண்டம் பட்டாபிஷேக ஸர்க்கத்தில் ராமராஜ்யத்தில் இருந்த ஸௌக்யங்களை மிக அழகாக வர்ணித்திருக்கிறார். அவைகளில் பின்வரும் வாக்யங்கள் முக்கியமாகக் குறிப்பிடத் தக்கனவாகும்:—

"ஸர்வம் முதிதமேவாஸீத் ஸர்வோ தர்மபரோऽபவத் |
ராமமேவாநுபஶ்யந்தோ நாப்யஹிம்ஸந் பரஸ்பரம்" ||

ப்ரஜைகள் எல்லோரும் ஸந்தோஷமாய்க் காலங்கழித்தார்கள். எல்லோரும் தர்மத்தையே நாடின மனமுடையவர்களாயிருந்தார்கள். தர்மஸ்வரூபியான ஸ்ரீராமனுடைய ஆஜ்ஞையையே ப்ரஜைகளும் அனுசரித்து ஒருவரையொருவர் ஹிம்ஸிக்காமலிருந்தார்கள்.



"நித்யமூலா நித்யபலா: தரவஸ் தத்ர புஷ்பிதா: |
காமவர்ஷீ ச பர்ஜந்ய: ஸுகஸ்பர்ஶஶ்ச மாருத:" ||

எந்த ருதுவிலும் வ்ருக்ஷங்கள் விசாலமான வேர்களுடனும், புஷ்பங்களுடனும், பழங்களுடனும் செழித்து விளங்கின. மேகங்கள் தக்க காலத்தில் வேண்டிய அளவு மழையைப் பொழிந்தன. காற்று ஸுகமாக வீசிற்று.

"ஆஸந் ப்ரஜா தர்மபரா ராமே ஶாஸதி நாந்ருதா: |
ஸர்வே லக்ஷணஸம்பந்நா: ஸர்வே தர்ம பராயணா:" ||

ஸகல ப்ரஜைகளும் தர்மத்தில் ப்ரியமுள்ளவர்களாயும், தர்மத்தில் எப்பொழுதும் நோக்கமுள்ளவர்களாயும், ஸத்யவான்களாயும், சுபலக்ஷணம் பொருந்தியவர்களாயுமிருந்தார்கள்.

மேலே விவரித்துள்ள நிலையில் நம் பாரத தேசத்து ஜனங்கள் இருப்பார்களேயானால், கவிஸார்வபௌமரான ஸ்ரீவால்மீகி மஹர்ஷியால் ஸ்ரீராமன் ராஜ்யபாரம் வகித்த காலத்தில் நிலவி வந்ததாக வர்ணிக்கப்பட்டிருக்கும் இதர சுகங்களும் தாமே ஏற்படும். அத்தகைய நிலை நம் நாட்டில் அதிசீக்கிரத்தில் ஏற்பட வேண்டுமென்றும், நம் தேசத்தைத் தற்சமயம் பீடித்துப் பயமுறுத்தும் வஞ்சகச் சத்ருக்களின் உபத்ரவம் ஒழிந்து, சாச்வதமான சாந்தி நிலவ வேண்டுமென்றும் ஸ்ரீஸீதா லக்ஷ்மண பரத சத்ருக்ந ஹநுமத் ஸமேதரான ஸ்ரீரகுநந்தனனை ப்ரார்த்தித்துக்கொண்டு, அவனுடைய திவ்ய சரிதத்தைப் பாடுபவர்களும், கேட்பவர்களும், எழுதுகிறவர்களும்,

"வினையால் அடர்ப்படார் வெந்நரகில் சேரார்
தினையேனும் தீக்கதிக்கட் செல்லார்,"

—இயற்பா 1-65

என்று உறுதி கூறி, இந்த நூலை *திருவஹீந்திரபுரக்ஷேத்ரத்தில் திவ்ய மங்கள மூர்த்தியாய் எழுந்தருளியிருந்து ஸேவை ஸாதித்துவரும் ஸ்ரீஸீதா லக்ஷ்மண ஹநுமத்ஸமேதரான சக்ரவர்த்தித் திருமகனுடைய திவ்ய சரணாரவிந்தங்களில் ஸமர்ப்பிக்கிறோம்.

இங்ஙனம்,

"பூரங்கம்",
8, ரங்கநாதன் வீதி,
தி. நகர், சென்னை-17.

கீழாத்தூர் ஸ்ரீநிவாஸாச்சாரியர், P. O. L.,
ந்யாய சிரோமணி, ஹிந்தி விசாரத்,
கௌரவப் பதிப்பாசிரியர்,
தி லிட்டில் ப்ளவர் கம்பெனி.



* திருவஹீந்திரபுர க்ஷேத்ரம் தென்னார்க்காடு ஜில்லாவைச் சேர்ந்த கடலூர் N. T. ரயில் நிலையத்திலிருந்து சுமார் 3 மைல் தூரத்தில் இருக்கிறது.

# ராமநாமஜபம் செய்யுங்கள்”

## ஸ்ரீ காஞ்சி பெரியவாளின் ஆக்ஞை

கலியுகத்தில் கண்கண்ட தெய்வமாக ஜொலிக்கும் ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதி ஜகத்குரு ஸ்ரீ சங்கராச்சார்ய சுவாமிகள் அவர்கள் ஒவ்வொருவரும் அனுசரிக்கவேண்டியதைத் தெரிவிக்கும்படி ஆக்ஞாபித்திருக்கிறார்கள்.

1. கடவுளை நம்புங்கள். கடவுளிடம் மனப்பூர்வமாக மனதார அன்பு பூண்டு, முழு ஆற்றலோடும் தொண்டு செய்யுங்கள்.

2. மானசிகமாகவாவது, பகவந்நாமாவை விடாமல் ஜபம் செய்து வாருங்கள். நேர இருக்கும் ஆபத்துக்களும், நோய்களும் அண்டாமல் சூரியனைக்கண்ட பனிபோல் தூர விலகி விடும்.

3. காலையில் எழுந்ததும், பல் துலக்கியவுடனும், ஆகாரம் அருந்தும் போதும், மருந்துண்ணும் போதும், **அச்யுத — அனந்த — கோவிந்த** என்னும் சொற்களை மூன்றுதரம் அவசியம் சொல்ல வேண்டும்.

4. **அச்யுதா — அனந்தா — கோவிந்தா** என்று பகவந் நாமங்களை உச்சரித்தலினால் எல்லா நோய்களும் நீங்குகின்றன. இது உண்மை, உண்மை.

5. பகவந் நாமம் ஆத்மஞான விருட்சம்!

**ஸ்ரீ ராம நாமம்** இனியவற்றிலும் இனியது. அது சாந்தமெனும் அவிசாகும். அதுதான் சுத்தாத்மாக்களின் உயிர். பரிசுத்தத்திற்கும், பரிசுத்தமளிக்கக்கூடியது. ‘ராம’ என்னும் பதத்திலுள்ள ‘ராம’ என்னும் இவ்விரு எழுத்துக்களும் முறையே ‘**நமோ நாராயணாய**’ ‘**நமசிவாய**’ என்ற மகா மந்திரங்களுடைய பீஜாக்ஷரங்களின் சேர்க்கையால் ஆக்கப்பெற்றவை.

‘ராம’ வென்னும் இரண்டு மனோகரமான எழுத்துக்களும் நெடுங்கணக்கிற்கே இரு நேத்திரங்கள். பக்தர்களின் பிராணநிலை. நினைவிலிருக்கச் சுலபமானவை. பல நன்மைகளைத் தருபவை.

மூலாதாரத்திலிருக்கும் அக்னியானது ‘**ர**’ பீஜத்தைக் குறிக்கிறது. சகஸ்ராரத்திலிருக்கும் பிராணன் ‘**ம**’ பீஜத்தைக் குறிக்கிறது. மூலாதாரத்திலிருக்கும் அக்னி பிராணனைச் சந்திக்க மேலெழும்பிச் சென்று அதனுடன் கலத்தல்தான் ‘**ராம**’ வென்னும் தாரக மந்திரம் பிறப்பதாகும். இதனால் ஜீவாத்மா பயமற்ற தன்மை, சாவாத் தன்மை, எல்லையற்ற ஆனந்தம், முடிவில் பகவானிடம் ஐக்கியமாக சாதகமாகிறது.

சமயம் கிடைத்த போதெல்லாம் ‘**ராம ராம**’ என்றோ அல்லது ‘**சிவ சிவ**’ என்றோ சொல்லுங்கள்.

நம்முடைய புராதன மரபுகளைக் காப்பாற்றுங்கள், எல்லோரிடமும் அன்பாயிருங்கள்.



# முகவுரை

“ஸாதுக்களை ரக்ஷிப்பதற்கும், துஷ்டர்களை நாசம் செய்வதற்கும், தர்மத்தை நிலைநிறுத்துவதற்கும், நான் ஒவ்வொரு யுகத்திலும் அவதாரம் செய்கிறேன்” என்று கீதையில் பகவான் சொன்னபடி அவதரித்த ராமசந்திர மூர்த்தியின் புண்ய சரித்திரத்தை லோகத்தில் பரவச் செய்வதற்கு யாதொரு காரணமும் வேண்டியதில்லை. ஆனாலும் ஸ்ரீமத் ராமாயணத்தை இதுவரையில் பலர் தமிழில் மொழிபெயர்த்திருப்பதால், இந்த மொழிபெயர்ப்பின் அவசியத்தைப் பற்றிச் சில விஷயங்களைத் தெரிவிப்போம்.

1. இதுவரையில் வழங்கும் மொழிபெயர்ப்புகள் மூலத்திற்குப் பிரதிபதமாய் எழுதப்பட்டவை; ராமாயணத்தின் ஆழ்ந்த அர்த்தங்களை வெளிப்படுத்தவில்லை. அந்தக் காவியம் செய்யப்பட்ட காலத்திலிருந்த ஜனங்களுக்கு ஸாதாரணமாயும் சுலபமாயும் தெரியக்கூடிய அனேக விஷயங்களும் ஆசாரங்களும் கொள்கைகளும் தற்கால ஜனங்களுக்குத் தெரிய நியாயமில்லை.

2. அவை அநேகம் மறைந்தும் அநேகம் மாறியுமிருக்கின்றன. ஒரே விஷயத்தைப் பலவிடங்களில் பலவிதமாய்ச் சொல்லியிருக்கிறது. புராணங்களும் பாரதமும் இதர ராமாயணங்களும் ராமனுடைய அவதார சரித்திரத்தை வர்ணிக்கின்றன; ஆனால், கதாபாகங்கள் வேறுபடுகின்றன: பத்ம புராணத்தில் சொல்லப்படும் கல்பாந்தர ராமாயணத்திற்கும் வால்மீகி ராமாயணத்திற்கும் பல பேதங்களுண்டு. அத்யாத்ம ராமாயணத்திலும் யோகவாஸிஷ்டத்திலும் சொல்லப்படும் சில கதைகள் வால்மீகியால் சொல்லப்படவில்லை. ராமன் அயோத்யையில் பட்டாபிஷேகம் பெற்ற பிறகு நடந்த விஷயங்களை ஆனந்த ராமாயணம் 8 காண்டங்களில் சொல்லுகிறது. வால்மீகி ராமாயணத்தை ஆதாரமாயுடைய பல காவியங்களும் நாடகங்களும் சம்புகளும் ராமகதையை வெவ்வேறு விதமாய்ச் சொல்லுகின்றன; ஆனால், ஒவ்வொன்றிற்கும் புராணம் முதலிய ஆதாரங்களுண்டு.

3. நமது பால்யத்தில் மூத்தோர்களிடத்திலிருந்து நாம் கேட்டிருக்கும் ராமாயண ஸம்பந்தமான பல கதைகள் வால்மீகியால் சொல்லப்படவில்லை.

4. மற்ற காவியங்களைப் போல் ராமாயணம் படிப்பதற்கு மாத்திரம் ஏற்பட்டதல்ல; பாடிக் கேட்கப்பட்டது. ஒவ்வொரு நாளும் 20 ஸர்க்கங்

களைப் பாடவேண்டும். ஆகையால் நடந்த விஷயங்களை வால்மீகி ஞானக் கண்ணால் பார்த்து அப்படியே வர்ணிப்பதாலும், ஒவ்வொரு நாளும் சொன்ன கதையை முடித்து, மறுநாளில் முன் கதையைச் சொல்லி ஆரம்பிப்பதாலும், பலவிடங்களில் சொன்ன விஷயங்களே மறுபடியும் சொல்லப்படுகின்றன. ஒன்றை ஆரம்பித்து முடிப்பதற்குமுன் மற்றவை சொல்லப்படுகின்றன. ஆகையால், அவைகளை அங்கங்கே ஒழுங்குபடுத்தி கிரமமாய் மொழி பெயர்த்திருக்கிறேன்.

5. ராமாயணத்தைப் பதம்பதமாய் மொழிபெயர்ப்பதால் அதன் உட்கருத்தும் ரஹஸ்யார்த்தமும், பூர்ணமாய்த் தெரியாதென்று ஏற்படுகிறது. அதுவுமன்றி விபரீதமான அர்த்தங்களும் செய்யப்படும்.

வால்மீகியின் கருத்தை அறிந்த வியாக்யானக்காரர்களுடைய நூல்களாலும், பல பாஷைகளில் வழங்கும் இதர ராமாயணங்களாலும், பாரதத்தாலும் புராணங்களாலும் சுருக்கமாய்ச் சொல்லப்பட்டிருக்கும் ராமசரித்திரத்தாலும், அதே விஷயத்தைப்பற்றி பிற்காலத்தில் செய்யப்பட்டிருக்கும் காவிய நாடக சம்பூ முதலியவைகளாலும், வால்மீகியின் ஆழ்ந்த கருத்தை வெளியிட்டு விஸ்தரித்து, பூர்வாபர விரோதங்களை ஸமாதானம் செய்து, பூர்ணமான தாத்பர்யத்தை அறிய வேண்டும்.

மேலும், திராவிட தேசத்தில் விளங்கின ஆழ்வாராதிகள் வால்மீகி ராமாயணத்தை மோக்ஷோபாயமென்றும், வேதாந்தத்தின் முக்ய பாகமென்றும், சரணாகதி கிரந்தமென்றும் எண்ணி, பல உத்தம கிரந்தங்களை அருளிச் செய்திருக்கிறார்கள். அது கேவலம் காவ்யமென்றாவது இதிஹாஸமென்றாவது அவர்கள் நினைக்கவில்லை. அது உபதேச கிரந்தமென்றும், குருவால் அனுக்ரஹிக்கப்பட்டு ரஹஸ்யார்த்தங்களுடன் சிஷ்யனுக்கு விதிப்படி உபதேசிக்கப்பட வேண்டுமென்றும் எச்சரித்திருக்கிறார்கள். அப்படி உபதேசம் பெற்றவர்களே அதைப் படித்துப் பிறர்க்கு அர்த்தம் சொல்லத் தகுந்தவர்கள்.

மேலும், கிரந்தங்களில் எழுதி வெளிப்படுத்தாத பல ரஹஸ்யமான உபதேசங்களும் ராமாயண தத்வார்த்தங்களும் குரு சிஷ்ய பரம்பரையாய் வந்துகொண்டிருக்கின்றன.

## மொழிபெயர்க்கும் முறை

ஒரு பாஷையிலுள்ள கிரந்தத்தை வேறொரு பாஷையில் எப்படி மொழிபெயர்க்க வேண்டும்? பதத்திற்குப் பதம் வைத்து ஒன்று விடாமல் அர்த்தத்தை விளக்கவேண்டுமென்றும், மூலத்தின் பாஷையை அறியாதவர்கள் மொழிபெயர்ப்பை வைத்துக்கொண்டு மூலத்தைப் பூர்ணமாய் அர்த்தம் செய்யும் சக்தியை மொழி பெயர்ப்பு கொடுக்க வேண்டுமென்றும் சிலருடைய கொள்கை. மூலபாஷையின் வியாகரணமும் நிகண்டுவும் கலந்ததே மொழிபெயர்ப்பென்று அவர்களுடைய முடிவு. உத்தமமான மொழிபெயர்ப்பின் லக்ஷணமென்னவென்றால், அது மொழி



பெயர்ப்பாகத் தோன்றவே கூடாது. ஸ்வதந்திரமாய் அந்தப் பாஷையில் செய்யப்பட்ட நூலாகவே தோன்ற வேண்டுமென்று நான் எண்ணுகிறேன். மூலத்திலுள்ள பதங்களுக்கு வேறு பாஷையில் பிரதிபதம் வைப்பதால் கவியின் கருத்தும் பாவங்களும் தத்வார்த்தங்களும் எண்ணமும் வெளிப்படாது; ஸரியான மொழிபெயர்ப்பும் பிரதிபதமும் ஒன்றிற்கொன்று ஒவ்வாது. மூலத்தின் பதங்களையும் அன்வயத்தையும் ச்லோகக் கணக்குகளையும் ஒன்றுவிடாமல் அப்படியே மொழிபெயர்ப்பில் காட்டியிருக்கிறதா என்று பார்க்கக்கூடாது. கவியின் கருத்து பூர்ணமாய் வெளிப்படுகிறதா என்றே கவனிக்க வேண்டும்.

## ராமாயணம் உண்மையா?

ராமாயண கதை சரித்திரமா? உண்மையாய் நடந்ததா? அதைச் செய்தவர்களின் வம்ச சரித்திரம் இருக்கிறதா? அது எழுதப்பட்ட வருஷம் மாதம் தேதி என்ன? அது மஹாபாரதத்திற்கு முன்பு நடந்ததா? பிற்காலத்தில் நடந்ததா? நவக்ரஹங்களின் கதிகளையும் மாறுதல்களையும் ரூபகமாய் வர்ணிக்கும் ஜ்யோதிஷ க்ரந்தமா? ஆரியர்கள் தக்ஷிண தேசத்தில் படையெடுத்துச் சென்றதைச் சொல்லும் கதையா? கலப்பையின் நுனியில் உண்டாக்கப்பட்ட பிளப்பே ஸீதையா? பயிரிடுகிறவர்களைக் குறிக்கும் அடையாளமே ராமனா? ராமாயணம் வ்யவஸாய கிரந்தமா? ரிக்வேதத்தில் இந்திரனுக்கும் விருத்ராஸுரனுக்கும் நடந்த யுத்தத்தை ஆதாரமாய் வைத்துக்கொண்டு செய்யப்பட்ட கிரந்தமா? இதைப்போன்ற பல கேள்விகளைக் கிளப்பிவிட்டு மேற்றிசை ஸம்ஸ்க்ருத வித்வான்கள் தர்க்கம் செய்து பல நூல்களை எழுதியிருக்கிறார்கள். மேற்றிசைப்படிப்பால் மாத்திரம் தங்களை ஸர்வக்ஞர்களாய் நினைத்துக் கர்வம் கொண்டு விளங்கும் நம்மவர்களில் சிலர், அந்த அபிப்பிராயங்களைப் பாடம் செய்து, புலியைப் பார்த்துப் பூனையும் சூடிக்கொண்டதுபோல் பதின்மடங்காகக்கோஷிக்கிறார்கள். எந்த கிரந்தத்தைஎடுத்தாலும், இது சரித்திர ரூபமா என்று அதைப் பொடி செய்து பரீக்ஷிக்கும் நவநாகரீகர்களான மஹான்களுக்கு நான் நன்றி செலுத்த வேண்டும். மேநாட்டு ஜனங்களின் அற்புதமான சரித்திரங்கள் எவ்வளவு எட்டினாலும் 2,000 வர்ஷங்களுக்கு மேல் செல்ல முடியவில்லை. இந்த அல்ப காலத்தைப்பற்றி எழுதப்பட்ட நூல்கள் மலைமலையாய்க் குவிந்திருக்கின்றன. அந்தக் குவியல்களில் 5,000 வர்ஷங்களுக்குப் பின் எவ்வளவு மிகுந்திருக்கும்? மேநாட்டார் சரித்திரம் எழுதும் விமர்சையைப் பார்த்திருக்கிறோமே. ஸமீபத்தில் நடந்த போயர் யுத்தம் ஜர்மன் யுத்தம் முதலியவைகளைப்பற்றி வழங்கும் சரித்திரங்கள் ஒன்றிற்கொன்று ஒவ்வாமல், ஒவ்வொன்றும் தானே நேரில் பார்த்துச் சொன்னதென்றும் மற்றவை பொய்யென்றும் ஸாதிக்கின்றன. மேலும், அந்தந்த தேசத்தார் ஒரே விஷயத்தை வெவ்வேறாகவே வர்ணிப்பார்கள்.

ஆரியர்களுடைய கொள்கை அப்படியல்ல. மனிதனுடைய ஜீவ காலத்தில் நடக்கும் வ்யவஹாரங்களில், செய்கைகளைக் காட்டிலும் வார்த்தைகளே மேலானவை; வார்த்தைகளைக் காட்டிலும் எண்ணங்களே

மேலானவை; அவைகளிலும் ஸர்வோத்தமமான நித்ய வஸ்துவைப்பற்றின எண்ணங்களே மேலானவை, 'முக்கியமானவை.' ஆதரவுடன் காப்பாற்றத் தகுந்தவை. அவைகளே சரித்திரமாகும். இது மனிதனுக்கும் தேசங் களுக்கும் லோகத்திற்கும் பொதுவான தர்மம். ஆரியர்களின் ஸர்வோத்தம மான எண்ணங்களும், கருத்துகளும் உபதேசங்களுமடங்கிய நூல்களே அனுதிகாலமாய் நாசமின்றி விளங்குகின்றன; இனிமேலும் விளங்கு மென்பதில் ஸந்தேகமில்லை. ஒரு காலத்தில் நடக்கும் செய்கைகளுக்கும் சொல்லும் வார்த்தைகளுக்கும் ஸரியான வர்ஷம் மாதம் தேதிகளடங்கிய கிரந்தம் சரித்திரமாகாது. ராமாயணம் கேவலம் ஜ்யோதிஷத்தையும் வ்யவஸாயத்தையும் ஜனங்களின் ஜயாபஜயங்களையும் ஸுக துக்கங் களையும் கல்பனைகளையும் வர்ணிக்கும் கிரந்தமாயிருந்தால், நம்மவர்கள் அதை மந்திரசாஸ்திரமாயும், அபூர்வமான பலன்களைக் கொடுக்கக் கூடிய தாயும், புண்ணிய சரித்திரமாயும், உபதேச கிரந்தமாயும், சரணாகதி சாஸ்திரமாயும், மோக்ஷோபாயமாயும், மங்களகரமான காவியமாயும் அனுதிகாலமாய்க் கொண்டாடுவார்களா? அக்ஞானத்தால் அப்படிச் செய்வதாய் ஒப்புக்கொண்டாலும், மஹா மந்திரங்களுக்கேற்பட்ட அபூர்வ மான பலன்கள் அதனால் கிடைக்குமோ? தற்காலத்தில் வழங்கும் ஜ்யோதிஷ வைத்ய வ்யவஸாய சரித்திர கிரந்தங்களைப் படித்துப் பூஜை செய்வதால் அந்தப் பலன்களையும் ஸித்திகளையும் பெறலாமே.

"என் திவ்யாவதாரத்தையும் சரித்திரத்தையும் பக்தியுடன் படித்துத் துஷ்ட நிக்ரஹத்தையும், சிஷ்ட பரிபாலனத்தையும், தர்ம ஸ்தாபனத் தையும் செய்வதற்காகவே ஒவ்வொரு யுகத்திலும் நான் அவதரிக்கிறே னென்ற தத்வத்தையும் பூர்ணமாயறிந்து நடக்கிறவன், இந்த தேகத்தி லிருந்து விடுபட்டவுடன் என்னை அடைகிறான். அவனுக்குப் புனர் ஜன்மம் கிடையாது" என்று கிருஷ்ண பரமாத்மா கீதையில் செய்திருக்கும் பிரதிக்ஞையே நமக்கு ஆதாரம்.

## இந்த மொழிபெயர்ப்பு

ராமாயணத்தை ஸரியாய் மொழிபெயர்ப்பதற்கு வேண்டிய குணங்கள் யாதொன்றும் என்னிடத்தில் இல்லையென்பதை மற்றவர் களைக் காட்டிலும் நன்றாய் நானே அறிவேன். ஸம்ஸ்கிருத பாஷையில் பயிற்சியில்லாத புருஷர்களும் ஸ்த்ரீகளும் சிறுவர்களும், வேதார்த்தங்க ளடங்கிய இந்தப் புண்ய சரித்திரத்தைத் தேச பாஷையில் படித்து, ஸ்ரீராமசந்திர மூர்த்தியிடத்தில் பக்தி மேலிட்டு, அவருடைய கருணைக்குப் பாத்திரமாகவேண்டுமென்ற உத்தேசத்துடன், வால்மீகியின் மஹா காவியத்தை ஸுலபமான தமிழ் நடையில் எழுதியிருக்கிறேன். மூலத்தின் பதங்களையும், கருத்தையும் கூடிய வரையில் ஸரியாய் மொழி பெயர்த் திருக்கிறேன். கவியின் வார்த்தைகளுக்கு ஆதாரமாயிருக்கும் பாவங்கள் படிப்பவர்களின் மனத்தில் தோன்றும்படி கூடிய வரையில் முயன்றிருக் கிறேன். மூலத்தைப் படித்துக் கேட்பவர்களின் மனத்தில் உண்டாகும் உணர்ச்சி, இந்த மொழிபெயர்ப்பைப் படித்துக் கேட்பவர்களின் மனத்தி



லுண்டாக வேண்டுமென்பதே என் உத்தேசம். கோவிந்த ராஜருடைய வியாக்யானத்தை ஒட்டியே மூலத்தை அர்த்தம் செய்திருக்கிறேன். அதிலுள்ள விசேஷ அர்த்தங்களையும், பதப் பிரயோஜனங்களையும் கூடியவரையில் மூலத்தில் சேர்த்தே எழுதியிருக்கிறேன். அதில் சேர்க்க முடியாத விஷயங்களையும், மற்ற வியாக்யானங்களிலும் ராமாயணங்களிலும் ராமாயணத்தைப்பற்றின இதர பாஷாக் கிரந்தங்களிலும் காணப்படும் அபூர்வ விஷயங்களையும் கூடிய வரையில் ராமாயண நோட்டுகளென்ற தனி பாகமாய் வெளியிட்டிருக்கிறேன்.

## வியாக்யானங்கள்

1. **கோவிந்தராஜர்:**—தன் வியாக்யானத்திற்கு "ராமாயண பூஷணம்" என்று பெயரிட்டிருக்கிறார். பாதச் சிலம்பு, பீதாம்பரம், அரைநூல்மாலை' முக்தாஹாரம், திலகம், கிரீடம், சிரோமணி என்று ஏழுகாண்ட வியாக் யானங்களுக்கும் பெயர் வைத்திருக்கிறார். கௌசிக கோத்திரத்தைச் சேர்ந்தவர்; அவருடைய ஆசாரியர் சடகோபர். திருப்பதியில் வெங்கடா சலபதி ஸந்நிதியில் ஒருநாள் நித்திரை செய்யும்பொழுது பகவான் அவருக்குப் பிரஸன்னமாய், ராமாயண வியாக்யானத்தைச் செய்யுமென்று கட்டளையிட்டார். அதை மஹா பாக்யமென்று அவர் சிரஸால் வஹித்து, ராமாயண பூஷணத்தை எழுதினார். இது வெகு விஸ்தாரமானது, விசேஷ பாண்டித்யம் வாய்ந்தது; எல்லோராலும் பிரமாணமாய் ஒப்புக்கொள்ளப் பட்டது. அருமையான ஸம்பிரதாய அர்த்தங்களும் விலையற்ற ரஹஸ் யோபதேசங்களும் அவரால் லோகத்திற்குக் கிடைத்திருக்கின்றன.

2. **மஹேசதீர்த்தர்:**—நாராயண தீர்த்தருடைய சிஷ்யர். 'ராமாயண தத்வ தீபிகை' என்ற வியாக்யானத்தைச் செய்தவர். "விராதன், கரன், வாலி, ராவணன் முதலியவர்களின் வாக்யங்களிலுள்ள பரமார்த்தத்தை எனக்குத் தெரிந்தவரையில் வெளியிட்டு, மற்றவிடங்களில் மஹான்கள் அனுக்ரஹித்த அர்த்தங்களையே சேர்த்து எழுதியிருக்கிறேன்" என்கிறார். பெரும்பாலும் கோவிந்தராஜருடைய வாக்யங்களை அப்படியே எழுதி யிருக்கிறார். டீகா சிரோமணியிலிருந்து அடிக்கடி எடுத்துச் சொல்லுகிறார். ராம பண்டிதர் இவருடைய அபிப்பிராயத்தைத் திலக வியாக்யானத்தில் கண்டிக்கிறார்.

3. **ராம பண்டிதர்:**—இவருடைய வ்யாக்யானத்திற்கு 'ராமாயண திலகம்' என்று பெயர். கல்கத்தாவிலும் பம்பாயிலும் தேவநாகரி லிபியில் அச்சிடப்பட்டது. தென் இந்தியாவைத் தவிர இதர இடங்களில் பிரஸித்தமாய்த் தெரிந்த ராமாயண வியாக்யானம் இதுவே. தீர்த்தீயம் கதகமென்ற உரைகளிலிருந்து அடிக்கடி எடுக்கிறார். கோவிந்தராஜீயத் தைப்பற்றி பிரஸ்தாபமே இல்லை. கிரந்த லிபியில் எழுதப்பட்டதால் கோவிந்தராஜீயம் ராம பண்டிதருக்கு வடதேசங்களில் கிடைத்திருக்காது. தக்ஷிண தேசத்தில் தீர்த்தர் இதைப் படித்துத் தன் உரையை நாகரி லிபியில் எழுதியிருக்கலாம். ராம பண்டிதர், ஊக்கமுள்ள அத்வைதி; தீர்த்தருடைய ரஹஸ்யார்த்தங்களை கேலி செய்கிறார்.



# ஆரண்ய காண்டம்

## விஷய அட்டவணை

கிரந்த லிபியிலுள்ள ராமாயணத்தில், உத்தர காண்டத்திற்கு கோவிந்தராஜரும் தீர்த்தரும் உரை செய்திருக்கிறார்கள். ஆனால், திலக வ்யாக்யானத்துடனிருக்கும் நாகரி பதிப்பில் தீர்த்தருடைய உரையே திலக வியாக்யானமாய், ஒரு வார்த்தையைக்கூட மாற்றாமல் எழுதப்பட்டிருக்கிறது. இதற்குக் காரணம் தெரியவில்லை. ஆனால், அத்வைத ரீதியாய் அதில் செய்யப்படும் அர்த்தங்களையும், கதக வியாக்யானத்தை அடிக்கடி கண்டிப்பதையும் யோசித்தால், பண்டிதருடைய கிரந்தமென்றே தோன்றுகிறது.

4. **கதகம்:**—இது திலக வியாக்யானத்தில் அங்கங்கே காணப்படுகிறதேயன்றிப் பூர்ணமாய் எனக்குக் கிடைக்கவில்லை.

5. **ராமானுஜீயம்:**—மூலத்தின் பாடபேதங்களின் குணதோஷங்களையே இவர் விசாரிக்கிறார். சிலவிடங்களில் எழுதப்படும் இவருடைய வியாக்யானத்தில் அதிக விசேஷமில்லை. விசிஷ்டாத்வைத மதஸ்தாபகரான ஸ்ரீமத் ராமானுஜாசார்யர் இவரல்ல.

6. **தனிச்லோகி:**—பெரியவாச்சான் பிள்ளை என்று வழங்கும் கிருஷ்ண ஸமாஹ்வயரால் எழுதப்பட்டது. மேற்சொன்னவைகளைப் போல் கிரமமான வியாக்யானமல்ல. முக்கியமான சில சுலோகங்களை எடுத்து, விஸ்தாரமாய் உபந்யாஸம் செய்கிறார். தென்னாட்டார்களுக்கு இதில் விசேஷ மதிப்பு. ராமாயண சாஸ்திரிகளுக்கு இது ஜீவனாதாரம். தமிழும் ஸம்ஸ்கிருதமும் கலந்த மணிப்ரவாளமென்ற பழைய நடையில் எழுதப்பட்டிருக்கிறது. தூரமான கல்பனைகளும் த்வன்யர்த்தங்களும் அதிகமாயுள்ளது. வைஷ்ணவ மதாபிமானத்தைக் காட்டுகிறது. இதன் பழைய பதிப்பில் பல சுலோகங்களிருந்தன. பெரியவாச்சான் பிள்ளை திவ்யப் பிரபந்தத்திற்குச் செய்த உரையில் அங்கங்கே ராமாயண சுலோகங்களை மேற்கோளாக எடுத்துக் காட்டும்பொழுது செய்த உபந்யாஸங்களையே தனிச்லோகி என்று பிற்காலத்தில் சேர்த்து அச்சிட்டார்கள். அந்தப் பதிப்பு கிடைப்பதரிதாயிற்று. சில வர்ஷங்களுக்கு முன் கும்பகோணத்தில் அபிநவ பட்டபாணரென்ற ஆர். வி. கிருஷ்ணமாசார்யர், அதையே சுருக்கிச் சில மாறுதல்களுடன் பதிப்பித்திருக்கிறார். இப்படியே பாகவத பாரத தனிச்லோகிகளும் உண்டு. வால்மீகியில் காணப்படாத பல அரிய விஷயங்களும் மதோபதேசங்களும் பரம்பரைக் கதைகளும் தனிச்லோகியில் சொல்லப்படுகின்றன.

7. **அபயப்ரதான ஸாரம்:**—விசிஷ்டாத்வைதமதப் பிரமுகரான ஸ்ரீ வேதாந்த தேசிகரால் செய்யப்பட்டது. ராமாயணம் சரணாகதி கிரந்தமென்றும், விபீஷணன் ராமனைச் சரணமடைந்ததே அதற்கு உதாஹரணமென்றும், பல பிரமாணங்களால் விஸ்தாரமாய் நிரூபிக்கிறார். இதுவும் மணிப்ரவாளத்தில் எழுதப்பட்டது.

8. **தர்மாகூதம்:**—இது வாணி விலாஸ் அச்சுக்கூடத்தில் பதிப்பிக்கப்பட்டது. சில பாகங்களே வெளியாயின. ராமாயணத்தில் பலருக்குத் தோன்றும் ஸந்தேகங்களை ஒருவாறு நீக்குவதற்கு முயல்கிறது.



## ஸ்ரீமத் ராமாயணப் பதிப்புகள்

1. கோவிந்தராஜ வியாக்யானத்துடன் கிரந்த லிபியில் வெகு காலத்திற்கு முன் தென்னிந்தியாவில் அச்சிடப்பட்ட பிரதியே கூடிய வரையில் சுத்தமானது. பிராசீன ஏட்டுப் பிரதிகளுக்கு ஒத்ததென்று பெரியோரால் ஒப்புக்கொள்ளப்பட்டது. இந்தப் பதிப்பு தற்காலத்தில் கிடைப்பதரிது.

2. பிரஹ்மஸ்ரீ ராஜா சாஸ்திரிகள் அவர்கள் கோவிந்தராஜீயம், தீர்த்தீயம், ராமானுஜீயம், டீகாசிரோமணி, தனிச்லோகி, திலகம் முதலிய வியாக்யானங்களுடன் கிரந்த லிபியில் ராமாயணத்தை 1907-ம் வர்ஷத்தில் அச்சிட்டார். இதில் பல பாட பேதங்களும் புதிய அத்யாயங்களும் காணப்படுகின்றன. இதுவும் தற்காலத்தில் கிடைப்பதரிது.

3. சில காண்டங்களை மாத்திரம் சுலோகங்களுக்குப் பதவுரை பொழிப்புரை சிறிய குறிப்புகளுடன் வெகு காலத்திற்கு முன் யாரோ ஒருவர் அச்சிட்டு வெளியிட்டார். அதுவும் இப்பொழுது கிடைப்பதரிது. இவ்விதமான ஸுந்தர காண்டத்தின் பதிப்பைப் பலர் பார்த்திருக்கலாம்.

4. வியாக்யானங்களில்லாமல் கேவலம் பாராயணத்திற்கு மாத்திரம் கிரந்த லிபியில் பல பதிப்புகளுண்டு. ஸுந்தர காண்டத்தை மாத்திரம் தமிழ் அர்த்தத்துடன் அச்சிட்டிருக்கிறார்கள்.

5. தேவநாகர லிபியில் வடதேசத்தில் அச்சிட்டிருக்கும் ப்ரதிகளை நான் பரிசோதித்துப் பார்த்த வரையில் பல பாடபேதங்களும் அதிக அத்யாயங்களும் சுலோகக் குறைவும் காணப்படுவதால் பிரமாணமாய்க் கொள்வதற்கில்லை. மேனாட்டில் வழங்கும் மொழி பெயர்ப்புகள் இவைகளையே மூலமாய்க் கொண்டவை.

6. கும்பகோணம் மத்வவிலாஸ் புத்தகசாலையைச் சேர்ந்த பண்டிதர் டி. ஆர். கிருஷ்ணாசார்யர் பல வர்ஷங்களுக்கு முன் ராமாயணத்தைப் பாராயணத்திற்காக மூலத்தையும், பிறகு மேற்சொன்ன வியாக்யானங்களுடன் விஸ்தாரமாகவும் அச்சிட்டிருக்கிறார். இதற்கும் பிராசீன கிரந்த லிபியில் அச்சிடப்பட்ட பிரதிக்கும் பல பேதங்களுண்டு.

ஸ்ரீராமசந்திரமூர்த்தியின் மஹிமையையும் கல்யாண குணங்களையும் எல்லோர்க்கும் வெளியிட வேண்டுமென்று, ஸீதா லக்ஷ்மண பரத சத்ருக்ன ஹனுமத் ஸமேத ஸ்ரீராமசந்த்ரமூர்த்தியின் பாதார விந்தங்களில் இந்தச் சொன்மாலையைப் பரமபக்தியுடன் ஸமர்ப்பிக்கிறேன். அவர்களுடைய அபாரகிருபையாலும் பகவத் பக்தர்களுடைய ஸஹாயத்தாலும் ஆதரவாலும் இந்த மொழி பெயர்ப்பை முடித்து வெளியிடப் பெற்றேன்.

ராமாயண விலாஸம்,
மைலாப்பூர். (1925).

ஸி. ஆர். ஸ்ரீநிவாஸய்யங்கார், பி. ஏ.

# ஸ்ரீமத் ராமாயண பீடிகை

## ராமாயணம்

ராமனுடைய சரித்திரத்தைச் சொல்லும் நூலென்று இந்தப் பதத்திற்கு அர்த்தம். இவ்விதமான எல்லா நூல்களுக்கும் இது பொதுவாயிருக்க வேண்டும்; ஆயினும் வால்மீகியால் செய்யப்பட்ட கிரந்தத்திற்கே இது உரியதாய் வழங்குகிறது. 'கிருஷ்ணன்' முதலிய பெயர்ச் சொற்கள் ரூடம் அல்லது இடுகுறியெனப்படும். 'தாசரதி' (தசரதனுடைய புத்திரன்) முதலிய காரணப் பெயர்கள் யோகமெனப்படும். சேற்றில் முளைத்த அல்லி முதலிய பல புஷ்பங்களுக்கும் பங்கஜமெனப் பெயர் தகும். ஆயினும் அது தாமரை மலர்க்கே உரியதாயிற்று. இதே காரண இடுகுறி (யோகரூடம்) எனப்படும். ராமாயணமென்ற பதம் இவ்விதமானதே. பலர் ப்ரஹ்ம விஷயமான ஸூத்திரங்களைச் செய்தும் வேதவ்யாஸருடைய ஸூத்திரங்களுக்கே அந்தப் பெயர் வழங்குகிறது. இப்படியே பாணினியின் வியாகரண ஸூத்திரங்களுக்குப் பதஞ்சலி செய்த உரை மஹாபாஷ்யமென்றும், கண்ணனால் அர்ஜுனனுக்கு உபதேசிக்கப்பட்ட கீதையே பகவத்கீதையென்றும், தசரதருடைய நான்கு புத்திரர்களில் ராமனுக்கே தாசரதி என்றும் பெயர்கள் வழங்குகின்றன.

## ராமாயணத்தை இயற்றியவர்

வால்மீகி மஹர்ஷியை வருணனுடைய பத்தாவது புத்திரனென்றும், பத்தாவது தலைமுறையில் பிறந்தவரென்றும், வருணனுடைய புத்திரனை ப்ருகுவின் வம்சத்தில் பிறந்தவரென்றும், ப்ருகுவின் ஸஹோதரரென்றும், ப்ரசேதஸின் புத்திரரென்றும், புராணங்களில் பலவிதமாகச் சொல்லப்படுகிறது. இவருடைய பெயர் ரிக்ஷன். இவர் இப்பொழுது இந்திரனுடைய ஸபையில் விளங்குகிறார். இவர் தவம் செய்து கொண்டிருக்கையில் புற்று வளர்ந்து இவரை மறைத்துக் கொண்டது. பிறகு கடுமையாக மழை பெய்து, அது கரைந்து இவர் வெளிப்பட்டார். இந்தக் காரணத்தால் வருணனுடைய புத்திரனென்று இவரைச் சொல்வதுமுண்டு. இவர் இந்த 24-வது சதுர் யுகத்தில் வேதவ்யாஸராயிருந்தார்.

இவருடைய சரிதம் ஆனந்த ராமாயணத்தில் விஸ்தாரமாகச் சொல்லப்படுகிறது. அத்யாத்ம ராமாயணத்தில், இவர் தன் வரலாற்றை ராமனுக்குப் பின்வருமாறு சொல்லுகிறார்.

"கிருணு என்ற மஹர்ஷி தவம் செய்து கொண்டிருக்கையில் அவருடைய கண்களிலிருந்து பெருகிய வீரியத்தை ஒரு பாம்பு புஜிக்க அதன் வயிற்றில் நான் பிறந்தேன். பால்யம் முதல் வேடர்களால் வளர்க்கப்பட்டேன். அவர்களுடைய ஆஹாரத்தையே தின்று அவர்கள் ஆசாரத்தையே அனுஷ்டித்தேன். சூத்திர ஸ்த்ரீயை மணம் செய்து பல பிள்ளைகளைப் பெற்றேன். திருடர்களுடன் சேர்ந்து பிரயாணிகளைக் கொள்ளையடித்துக் குடும்பத்தைக் காப்பாற்றினேன்.

ஒருநாள் ஸப்தர்ஷிகள் அந்தக் காட்டின் வழியாக வந்தார்கள். நான் அவர்களை வழிமறித்து, 'என் குடும்பத்தைக் காப்பாற்ற இந்தத் தொழிலைக் கைக்கொண்டேன். உங்களுடைய பொருள்களைக் கொடுத்து விட்டுப் போங்கள்'' என்று அதட்டினேன். அவர்கள் சற்றும் பயப்படாமல் 'அப்பா, நல்லது அப்படியே செய்கிறோம். அதற்குப் பதிலாக நீ ஒன்று செய்ய வேண்டும். வீட்டிற்குப் போய் பெண்டு பிள்ளைகளைப் பார்த்து, ''உங்களைக் காப்பாற்றுவதற்காக நான் செய்கிற காரியங்களின் பயனில் உங்களுக்குப் பாகமுண்டல்லவா'' என்று கேள். அவர்கள் சொல்லும் பதிலை எங்களுக்குத் தெரிவிக்கும் வரையில் நாங்கள் இங்கேயே நிற்கிறோம்' என்று பிரதிக்ஞை செய்தார்கள். நான் அதைக் கேட்டு ஆச்சரியமடைந்தேன். இதுவரையிலும் எவரும் இப்படிச் சொன்னதில்லை. வீட்டிற்குப் போய் மனைவி மக்களை அழைத்து, ரிஷிகள் சொன்னபடி கேட்டேன். அவர்கள் கைகொட்டிச் சிரித்து, 'வெகு நேர்த்தி' எங்களைக் காப்பாற்ற வேண்டியது உன் கடமை. அதற்காக நீ எதைச் செய்தால் எங்களுக்கென்ன? நீ கொண்டுவரும் பொருள்களை நாங்கள் அனுபவிப்போம். அதை ஸம்பாதிப்பதில் நீ செய்யும் பாபங்களின் பயனில் எங்களுக்கு பாகமில்லை. உனக்குப் பித்துப்பிடித்ததா?. என்றார்கள்.

அதைக் கேட்டவுடன் எனக்கு ஒரு பெரிய இருள் நீங்கிற்று. என்னைப் பிடித்திருந்த ஆசாபாசமென்ற பிசாசம் அகன்றது, காம க்ரோதமென்ற வியாதி ஒழிந்தது. ஸம்ஸாரத்தில் சொல்ல முடியாத வெறுப்புண்டாயிற்று. பிராஹ்மணனாய்ப் பிறந்து கொடிய செயல்களால் உத்தம ஜன்மத்தைக் கெடுத்தேனே! மஹாபாபங்களைச் செய்தேனே! எனக்கு என்ன கதி என்று பச்சாத்தாபம் மேலிட்டது. தலையில் நெருப்புப் பிடித்தவனைப்போல் ஓடி, எனக்கு இந்த வைராக்யத்தை உண்டுபண்ணுவதற்குக் காரணமான மஹர்ஷிகளின் பாதங்களில் விழுந்து கதறி, மஹாபாபியான என்னைக் காப்பாற்ற வேண்டும். உங்களுக்குக் கெடுதி செய்ய வந்த என்னிடத்தில் கருணை கூர்ந்து, என்னைப் பிடித்திருந்த அக்ஞானம் அழியும்படி ஹிதோபதேசம் செய்தீர்கள். என் நிஜஸ்வருபத்தைக் கண்டுகொண்டேன். இதுவரையில் நான் செய்த மஹா பாபங்களுக்குப் பரிஹாரமென்ன? தாங்கள் ஆரம்பித்த பரமோபகாரத்தைப் பூர்த்தி செய்ய வேண்டும்' என்றேன். அவர்கள் என்னை ஆசீர்வதித்து 'நீ பிராஹ்மணன்; ஆயினும் நீசன்; கெட்ட நடத்தையுள்ளவன்; ஸாதுக்களால் விலக்கக்கூடியவன். ஆனால், உன் பூர்வ ஜன்ம பாபத்தின் பயன் ஒழிந்தது. அதற்கடையாளமாக எங்களைப் பார்க்கும்படி நேர்ந்தது. எங்களுடைய சேர்க்கையை அடைந்து, எங்களுடன் ஸம்பாஷித்து, எங்களுடைய கிருபா கடாக்ஷத்திற்குப் பாத்திரமான பிறகு உனக்கு க்ஷேமமுண்டாவதில் ஸந்தேகமில்லை. அதனால், உனக்கு மோக்ஷமார்க்கத்தை உபதேசிக்கிறோம். இந்த மந்திரத்தை நாங்கள் திரும்பி வருகிற வரையில்

ஒரே மனதாய் ஜபித்துக்கொண்டிரு' என்று உன் திவ்ய நாமத்தை மாற்றி மரா என்று உபதேசித்துச் சென்றார்கள். நான் அப்படியே ஆசையை விடுத்து மனத்தை நிலைநிறுத்தி யாவற்றையும் மறந்து உன் தாரக நாமத்தை ஜபித்தேன். உன் ரூபத்தை தியானம் செய்தேன். உன் அனந்த கல்யாண குணங்களை நினைத்தேன். வெகு காலம் சென்றது. என்னைச் சுற்றிக் காடும் புதரும் புற்றும் வளர்ந்தது. ஒருநாள் அந்த மஹர்ஷிகள் அங்கே வந்து என்னை வெளியில் வரும்படி அழைத்தார்கள். நான் தியானம் கலைந்து வெளியில் வந்து அவர்களுடைய பாதங்களில் நமஸ்கரித்து நின்றேன். அவர்கள் 'ஸாதுவே! நீ, ராமதாரக மந்திரத்தை ஒரே மனத்துடன் ஜபித்து அந்த மங்களமூர்த்தியை தியானம் செய்தாய்; பாபத்தை அழித்தாய்; மஹா ஞானியானாய்; மஹர்ஷியானாய்; எங்களுக்கு ஸமமானாய்; ராமபக்தர்களில் சிரேஷ்டனானாய். முதலில் ப்ராஹ்மணனாய்ப் பிறந்தாய். இப்பொழுது புற்றிலிருந்து வெளிப் பட்டாய். இதே உனக்கு இரண்டாவது பிறப்பு. இந்தக் காரணத்தால் உனக்கு வால்மீகி என்று பெயர் வழங்கட்டும்' என்று ஆசீர்வதித்துச் சென்றார்கள்."

## ராமாயண மஹிமை

**ஸ்ரீய:**பதியாய், அவாப்த ஸமஸ்தகாமனாய் விளங்கும் ஸ்ரீமந் நாராயணன், வைகுண்டமென்ற திவ்யலோகத்தில் "ஜகத்பதியும் மனத்திற்கெட்டாத ஸ்வபாவமுள்ளவருமான மஹாவிஷ்ணு தன் கைங்கரியத்திலேயே ஆனந்தமடைந்த பக்தகோடிகளோடும் மஹாலக்ஷ்மியுடனும் திருக்கோலம் கொண்டிருக்கிறார்" என்றபடி நவரத்ன மண்டபத்தில் நவரத்ன ஸிம்ஹாஸனத்தில் ஸ்ரீதேவி பூதேவி நீளா தேவிகளுடன் கொலுவிருக்கிறார். நித்யஸூரிகளாலும் முக்தர்களாலும் எப்பொழுதும் பாத ஸேவை பண்ணப்பட்டும், அவர்களைப்போல் தன் திவ்ய சரண கைங்கரியத்திற்கு யோக்யர்களானாலும், மெழுகு உருண்டையில் தங்கப் பொடிகள் ஒட்டிக்கொள்ளுவதுபோல் மஹாப் பிரளயத்தில் மூலப் பிரகிருதியில் அடங்கியிருக்கும் அல்பஞானமுள்ள ஜீவன்களைப் பார்த்து, "இப்படித் தங்கள் பூர்வ கர்மத்தால் ஸம்ஸாரக் கடலில் மூழ்கிச் சுழன்றுகொண்டு, துக்கப்படும் ஜீவர்களிடத்தில் மஹாவிஷ்ணுவிற்கு அளவற்ற கிருபை அகாரணமாக உண்டாயிற்று" என்றபடி தயவு பிறந்தது. "கை கால் முதலிய அவயவங்களையுடைய விசித்திரமான தேகம் ஈச்வர கைங்கரியத்தில் ஈடுபடுவதற்கே உண்டாக்கப்பட்டது" என்றபடி அவர் ஜீவன்களுக்குத் தேகங்களைக் கொடுத்து அனுக்ரஹித்தார்.

ஆயினும் நதியைக் கடக்கக் கொடுத்த ஓடத்தால் வெள்ளத்தின் வழியாக ஸமுத்திரத்தில் விழுகிறவர்களைப்போல், ஜீவன்கள் அந்தத் தேகங்களால் விஷய ஸுகத்தில் ஆசை வைத்து அதிலேயே மூழ்கியிருந்தார்கள். அதைக் கண்டு அவர்களுக்கு நன்மை தீமையின் விவேகம் தெரிய, ஈச்வரன் வேதங்களால் தன் ஆக்ஞையை வெளியிட்டார்.



அப்பொழுதும் அவைகளின் அர்த்தத்தை உண்மையாக ஜீவர்கள் அறியவில்லை. வேறு விதமாயும் விபரீதமாயும் கொண்டார்கள். அவைகளை அலக்ஷ்யம் செய்தார்கள். அரசன் தன் கட்டளையை மீறின குடிகளைத் திருத்தத்தானே நேரில் போவதுபோல், மேலானவர்கள் செய்வதையே மற்றவர்கள் ஒட்டி நடப்பார்களென்றபடி, பகவான் தர்மங்களைத் தானே நடத்திக் காட்டி, ஜீவர்களையும் நடத்தச் செய்ய, ராம லக்ஷ்மண பரத சத்ருக்ன ரூபமாக அவதாரம் செய்ய நினைத்தார்.

அப்படியிருக்கையில் பிரஹ்மாவும் தேவகணங்களும் துஷ்ட ராக்ஷஸர்களால் யாவர்க்கும் நேர்ந்த துக்கத்தைத் தீர்க்கும்படி அவரைப் பிரார்த்தித்தார்கள். மேலும், தன்னையே புத்திரனாக அடைய வேண்டுமென்று முன் பிறப்பில் தவம் செய்த தசரதருடைய வேண்டுகோளைப் பூர்த்தி செய்ய விரும்பினார். ஆகையால், 'ஸாதுக்களை ரக்ஷித்து, துஷ்டர்களைச் சிக்ஷித்துத் தர்மத்தை நிலைநிறுத்த ஒவ்வொரு யுகத்திலும் அவதாரம் செய்கிறேன்' என்று திருவாக்கருளியபடி, தசரதருக்கு நான்கு குமாரர்களாக அவதரித்தார்.

ராமனாக ராவணனை ஸம்ஹரித்து, பிதிருவாக்ய பரிபாலனம் முதலிய ஸாமான்ய தர்மத்தையும்; லக்ஷ்மணனாக இந்திரஜித்தைக் கொன்று, பகவானுக்குக் கைங்கரியம் செய்வதென்ற விசேஷ தர்மத்தையும்; பரதனாக மூன்று கோடி கந்தர்வர்களை அழித்து, பகவானைத் தவிர வேறு கதியில்லையென்ற தர்மத்தையும்; சத்ருக்னனாக லவணாஸுரனை நாசம் செய்து பகவானுடைய பக்தர்களுக்குக் கீழ்ப்படிந்திருப்பதென்ற தர்மத்தையும், தானே நடத்திக் காட்டினார்.

அந்தத் தர்மங்களும், அந்தத் திவ்ய சரித்திரங்களும் லோகத்தில் எப்பொழுதும் வழங்க வேண்டுமென்று, ஸகல லோகங்களுக்கும் க்ஷேமத்தைச் செய்வதிலேயே நோக்கமுள்ள பிரஹ்மதேவர் ராமனுடைய புண்யகரமான திவ்ய சரித்திரத்தை நூறு கோடி சுலோகங்களால் செய்தார். அதை நாரதர் முதலிய பக்தர்களுக்கு உபதேசித்தார்; ராமதாரக மந்திரத்தை ஜபித்துப் பரிசுத்தமான வால்மீகி மஹர்ஷியால் பூலோகத்தில் சுருக்கமாக அதைப் பரவச்செய்ய நாரதரை அவரிடத்திற்கு அனுப்பினார்.

பிரஹ்மாவால் விஸ்தாரமாகச் செய்யப்பட்ட ராம சரிதத்தை அவருடைய உத்திரவால் நாரதர் வால்மீகிக்கு உபதேசித்தார். வால்மீகி வேத வேதாந்தங்களால் அறியக்கூடிய பரம புருஷனுடைய ஸ்வரூபத்தை அந்த உபதேசத்தால் ஸந்தேக விபரீதமின்றி அறிந்தார். தன்னிடத்தில் ஸந்தோஷமடைந்த பிரஹ்மாவால் அருளப்பட்ட திவ்ய திருஷ்டியால் ராம சரிதம் யாவையும் உள்ளங்கை நெல்லிக்கனிபோல் பார்த்தார். வேதங்களின் அர்த்தத்தையே விவரிக்கும் ராமாயணமென்ற காவிய ரத்னமாக அதைச் செய்தார்.

---

# கிஷ்கிந்தா காண்டம்

## விஷய அட்டவணை

## ராமாயணம் புருஷார்த்தங்களை உபதேசிக்கிறது

தர்மம் அர்த்தம் காமம் மோக்ஷமென்ற புருஷார்த்தங்களை உபதேசித்து, முன் நடந்த சரிதத்தை வர்ணிப்பதே இதிஹாஸத்தின் லக்ஷணம். வால்மீகி ராமாயணம், வியாஸ பாரதம், கர்க்க ஸம்ஹிதை முதலியவை இவ்விதமானவை. ராமாயணம் பூர்வம் உத்தரமென்று இரண்டு கண்டங்களுள்ளது. ராமனுடைய சரிதம் முழுவதும் பூர்வ கண்டம். வஸிஷ்டர் ராமனுக்குச் செய்த வேதாந்த உபதேசத்தை வால்மீகி பரத்வாஜருக்கு உபதேசித்ததே உத்தர கண்டம். இதுவே யோகவாஸிஷ்டம், ஞானவாஸிஷ்டம் எனப்படும். பூர்வ கண்டத்தில் தர்மம் அர்த்தம் காமமும், உத்தர கண்டத்தில் மோக்ஷமும் உபதேசிக்கப் படுகின்றன.

மனிதன் தனக்கு இயல்பாகவும் நியாயமாகவும் சாஸ்திர விரோதமில்லாதவுமான காரியங்களைச் செய்வதே தர்மம். பொருள் அல்லது பிரயோஜனத்தை ஸம்பாதிப்பதே அர்த்தம். விருப்பம் அல்லது ஆசையைப் பூர்த்தி செய்வதே காமம்.

'பிதாவின் கட்டளை நியாயமோ அநியாயமோ என்று யோசிக்காமல், அதனால் துக்கம் முதலியவை உண்டானாலும் அதை நிறைவேற்றுவது புத்திரனுடைய கடமை' என்ற தர்மத்தின்படி தசரதருடைய கட்டளைப்படி ராமன் காட்டிற்குச் சென்றார்.

ஸஹோதரர்கள் ஒருவர்க்கொருவர் காட்டவேண்டிய அன்பும் மூத்தவனிடத்தில் மற்றவர்கள் நடந்துகொள்ள வேண்டிய முறையும், தசரத புத்திரர்களின் நடத்தையால் தெரிகிறது. ஸ்த்ரீகள் புருஷனை விட்டுத் தனியே இருக்கலாகாது; அவனுக்கு எந்தத் துன்பம் நேரிட்டாலும் மனைவி அவனிடமிருந்து அதை அனுபவித்து, அவனுக்குச் சுச்ரூஷை செய்வதே ஸ்த்ரீ தர்மமென்றதை ராமன் ஸீதையைக் காட்டிற்கு அழைத்துப்போனதால் காட்டினார். ரிஷிகள் முனிவர்கள் முதலியவர்களுக்குத் துன்பம் நேரிடாமல் ரக்ஷிப்பது க்ஷத்ரியர்களுடைய தர்மமென்பதை, தாடகை, ஸுபாஹு மாரீசன் விராதன் முதலிய ராக்ஷஸர்களை ராமன் கொன்றதால் அறிவித்தார். சக்கரவர்த்தியானாலும் பெரியோர்களை வணங்கி உபசரிப்பது க்ஷத்ரிய தர்மமென்பதை ராமன் தண்டகாரண்ய ரிஷிகள், விச்வாமித்திரர், வஸிஷ்டர் முதலியவர்களிடத்தில் காட்டினார்.

ஸாதுக்களுக்கும் தர்மங்களுக்கும் கெடுதி செய்கிறவன் அளவற்ற ஸைன்யம், சக்தி, பலமுள்ளவனாயினும் நாசமடைவான் என்ற நியாயம் ராவணாதி ராக்ஷஸர்களின் வதத்தால் தெரிவிக்கப்பட்டது.

இதைப்போன்ற' எண்ணிறந்த தர்மங்கள் வால்மீகியால் இந்தக் காவியத்தில் உபதேசிக்கப்பட்டிருக்கின்றன. ராமன் ராஜ்யத்தையும் ஐசுவரியத்தையும் விட்டுக் காட்டுக்குச் சென்றதால் அர்த்தத்தைவிட தர்மமே பெரிதென்பதையும்; ஜடாயுவிற்கு ராமன் உத்தரக்கிரியைகளைச் செய்து அவருக்கு உத்தம கதியைக் கொடுத்ததாலும், ராமன் ஸீதையை



விட்டுப் பிரிந்து துக்கம் நேரிட்டு அவளைத் தேடியலையும் பொழுது அவரை ஆதரித்து ஸீதையின் ஆபரணங்களைக் கொடுத்து அவருக்குத் தைரியத்தையுண்டாக்கின ஸுக்ரீவனுக்கு ராஜ்யத்தையும் பார்யையையும் கொடுத்ததாலும், தமயனுடைய உபத்திரவத்தால் ஊரைவிட்டுத் தன்னை வந்து சரணமடைந்த விபீஷணனுக்கு ராஜ்யத்தையும் தீர்க்கமான ஆயுளையும் கொடுத்ததாலும், தனக்கு அல்ப உபகாரத்தை ஒருவன் செய்திருந்தாலும் தன்னால் கூடியவரையில் அதற்குப் பதில்செய்ய வேண்டியது கடமையென்பதையும், வால்மீகி ராமாயணத்தில் உபதேசித்திருக்கிறார்.

தசரதர் கைகேயிக்கு வசப்பட்டு மூத்த புத்திரனைக் காட்டிற்கு அனுப்பினதாலும், ஸீதையின் தூண்டுதலால் ராமன் மாரீசனைப் பின்தொடர்ந்து அவளையே பறிகொடுத்துத் தபித்ததாலும், ஸகோதரனுடைய பார்யையைக் கவர்ந்ததால் வாலி உயிரை இழந்ததாலும், ஸீதையை அபகரித்ததால் ராவணனுடைய வம்சமே அழிந்தாலும், நியாய விரோதமாயும் அக்கிரமமாயும் காமத்தை அனுஷ்டித்தால் தனக்கே நாசமுண்டாகுமென்பது உபதேசிக்கப்பட்டது.

பூர்வகண்டத்தில் சில இடங்களிலேயே மோக்ஷஸ்வரூபம் சொல்லப் படுகிறது. ஆனால் யோகம் ஞானம் பிரஹ்மஸ்வரூப லக்ஷணம் முக்தி முதலியவை பூர்ணமாக விவரிக்கப்படவில்லை. அவைகளை உத்தரகண்டத்தில் உபதேசிக்கிறார். குசலவர்களென்ற சிறுவர்களுக்குச் செய்த உபதேசமான பூர்வகண்டத்தில் ஆத்ம தத்வத்தைப் பூர்ணமாக விசாரிப்பது உசிதமல்ல. பூர்வகண்டம் ஆறு காண்டங்களாகப் பிரிக்கப்பட்டு 24,000 சுலோகங்களுள்ளது. ஆறாவது காண்டத்திலும் பூர்வகாண்டம் உத்தர காண்டமென்று இரண்டு பிரிவுகளுண்டு. அதுவே இப்பொழுது யுத்த காண்டமென்றும் உத்தர காண்டமென்றும் வழங்குகிறது.

உத்தர காண்டமாகிய ஞானவாஸிஷ்டம் 32,000 சுலோகங்களுள்ளது. இதுவும் ஆறு காண்டங்களுள்ளது. கடைசி காண்டம் பூர்வம் உத்தரமென்று இரண்டு பிரிவுகளுள்ளது. இதை உப புராணங்களில் ஒன்றாகக் கணக்கிடுவதற்குக் காரணமில்லை.

## ராமாயணம் உத்தம காவியம்

வேதத்தின் உபதேசம் அரசனுடைய ஆக்ஞையைப் போன்றது. நாம் இஷ்டப்படி அதை மாற்ற முடியாது, அர்த்தம் செய்ய முடியாது; கீழ்ப்படிந்தே தீரவேண்டும்; பலனைப்பற்றி விசாரிக்க முடியாது; செய்யாவிட்டால் கெடுதி நேரும்; செய்தால் பிரயோஜனம் கிடைக்கும்.

புராணமோ அப்படியல்ல. ஒன்றையும் விதிக்காது, விலக்காது. நண்பனைப்போல் உபதேசம் செய்யும். நன்மையைச் செய்து பலர் நன்மை அடைந்தார்கள்; தீமையைச் செய்து பலர் கெடுதி அடைந்தார்களென்றதை நம்மைப் போன்றவர்களின் சரித்திரங்களால் எடுத்துக்காட்டும். பயத்தால் நம்மை வற்புறுத்தும் வேதத்தைக் காட்டிலும் அன்புடன் செய்யும் புராண உபதேசமே மேலானது.

காவியத்தின் ரீதியோ ஸ்த்ரீகளின் உபதேசத்தைப் போன்றது. தங்களுடைய விருப்பத்தைச் சொல்லால் வெளியிடாமல் பல வகைகளால் நாயகன் அறிந்து நடக்கும்படி செய்வதுபோல், காவியமும், வெளிப்படையான வார்த்தைகளால் குறிப்பிட்ட விஷயத்தை உபதேசிக்காமல், ஆழ்ந்திருக்கும் கருத்தால் உபதேசித்து மனத்தைக் கவருகிறது. கவியின் வார்த்தைகளைக் காட்டிலும் கருத்தையே புத்திமான்கள் தேடுகிறார்கள். குணங்களும் அலங்காரங்களும் பொருந்திக் கொஞ்சமும் தோஷமில்லாத பதச்சேர்க்கையே காவியமெனப்படும்.

ராமாயணமோ எல்லா விதத்திலும் உத்தமமான லக்ஷணம் வாய்ந்த காவியமென்று அதைச் செய்த வால்மீகி மஹர்ஷியே "ஆதிகாவ்யம்; இனி லோகத்தில் வரும் கவிகளுக்கு இதே உத்தமமான ஆதாரம்; படிப்பதற்கும் பாடுவதற்கும் இதுவே மதுரமானது" என்று சொல்லியிருக்கிறார்.

அக்காலத்தில் விளங்கின மஹர்ஷிகள், அரசர்கள், பிரபுக்கள், ஸாமான்ய ஜனங்கள் இந்தக் காவியத்தைக் கேட்டு, "பாட்டின் மாதுர்யத்தை என்னவென்று சொல்வோம்! அதிருக்கட்டும்; சுலோகங்கள் எவ்வளவு இனிமையாக இருக்கின்றன! வெகு நாளைக்கு முன் நடந்த விஷயங்கள் இப்பொழுது கண்ணிற்கெதிரே நடப்பது போலிருக்கின்றன. இந்த மஹாகாவியம் மிகவும் ஆச்சரியமானது. எப்படி ஆரம்பிக்கப்பட்டிருக்கிறது" என்று கொண்டாடினார்கள்.

சதுர்முக பிரஹ்மாவே "ராம சரித்திரத்தைப்பற்றின யாவும் உமக்குப் பூர்ணமாய்த் தெரியக்கடவது. "நீர் செய்யும் காவியத்தில் ஒவ்வொரு வார்த்தையும் ஸத்தியமாயிருக்கும், பொய்யாகாது. பூமியில் மலைகள் நதிகளுள்ள வரையில் ராமாயணமும் வழங்கும். ராமாயணம் வழங்கும் வரையில் நீர் என்னுடைய லோகங்களில் இருந்து, பிறகு ஆனந்தத்தை அனுபவிப்பீர்" என்று அனுக்கிரஹித்தார்.

இதை உபதேசித்த நாரத மஹர்ஷி, "இந்த ராம சரித்திரம் ஸகல பாபங்களையும் போக்கும்; ஸகல புண்ணியத்திற்கும் ஸாதனம்; வேதங்களுக்கு ஸமானம். இதைப் படிக்கிறவன் ஸகல பாதகங்களிலிருந்தும் விடுபடுகிறான்; தீர்க்காயுளை அடைகிறான். இவ்வுலகத்தில் புத்திர மித்திர பந்து பரிவாரங்களுடன் ஸகல போகங்களையும் அனுபவிக்கிறான். இறந்த பிறகு ஸ்வர்க்கத்தில் தேவர்களால் கொண்டாடப்படுகிறான்" என்று பிரதிக்ஞை செய்திருக்கிறார்.

பரம புருஷனான ராமசந்திரமூர்த்தியே அதைப் பாடக்கேட்டு, "இந்த ஸீதா சரித்திரம் விசேஷ மஹிமையுள்ளது. எனக்கும் விசேஷமான ஆறுதலைக் கொடுக்கிறது" என்றார்.

காவியத்தின் நாயகனோ அனந்த கல்யாணகுண நிதியான பரம புருஷன். நாயகியோ ஜகன்மாதாவான மஹாலக்ஷ்மி. விஷயமோ ஸகல புருஷார்த்தங்களையும் உபதேசிப்பது. யுத்த காண்டத்தில் மந்தோதரியின் வார்த்தையால் வால்மீகி, "சுபத்தைச் செய்தவன் சுபத்தை அடைகிறான்; பாபத்தைச் செய்கிறவன் பாபத்தை அடைகிறான்" என்ற பரம தத்வத்தை உபதேசித்திருக்கிறார்.



இந்தக் காவியத்தில் நவரஸங்களும் வர்ணிக்கப்பட்டிருக்கின்றன. ராமன் ஸீதையைவிட்டுப் பிரியும் வரையில் ஸம்போக சிருங்காரமும், பிரிந்த பிறகு விப்ரலம்ப சிருங்காரமும், மந்தரை சூர்ப்பணகை மதுவனம் முதலியவைகளின் வர்ணனையால் ஹாஸ்யமும், தசரதருடைய துயரத்தால் கருணையும், லக்ஷ்மணனுடைய செயல்களால் வீரமும், ராவணாதி ராக்ஷஸர்களின் சரித்திரத்தால் ரௌத்ரமும், மாரீசன் முதலியவர்களின் கதையால் பயானகமும், கபந்தன் விராதன் ராக்ஷஸிகளுடைய கதைகளால் பீபத்ஸமும், யுத்தங்களில் நேரும் ஸம்பவங்களாலும் வார்த்தைகளாலும் மாருதி முதலிய வானரர்களின் வீரச் செயல்களாலும் அத்புதமும், சரபங்கர் சபரி முதலியவர்களின் சரித்திரத்தால் சாந்தமும் வர்ணிக்கப்படுகின்றன.

## ராமாயண ரஹஸ்யார்த்தம்

(வைஷ்ணவ ஸம்பிரதாயத்தில் கொண்டபடி இது கீழே விவரிக்கப்படுகிறது.)

வால்மீகியின் கேள்விகளால் பரம புருஷன் யாரென்று விசாரிக்கப்பட்டது. நாரதரின் பதிலால் ஸ்ரீராமனே அந்தப் பரவஸ்து வென்று உபதேசிக்கப்பட்டது. பிரஹ்மாவும் அதை ஆமோதித்தார். ராவண வதத்திற்குப் பிறகு பிரஹ்மா ருத்திரன் தேவர்களும் தங்களுடைய ஸ்தோத்திரத்தால் அதை வற்புறுத்தினார்கள். கிரந்தத்தின் நடுவிலும் இந்தத் தத்வம் அடிக்கடி ஞாபகப்படுத்தப்படுகிறது. மஹாத்மாவும் உண்மையான பராக்ரமமுள்ளவருமான ராமனுடைய நிஜஸ்வரூபத்தை நானறிவேன்; வஸிஷ்டரும் மற்ற தபஸ்விகளு மறிவார்கள்" என்று விசுவாமித்திரர் சொல்லியிருக்கிறார். "ஸாதுக்களுக்குத் தங்குமிடமாயும், ஆபத்தை அடைந்தவர்களுக்கு முக்கியமான கதியாயும், துக்கத்தால் பீடிக்கப்பட்டவர்கள் அதைப் போக்குவதற்கு அடையும் வஸ்துவாயும், கீர்த்திக்கு முக்யஸ்தானமாயும்" என்று தாரை வர்ணிக்கிறாள். ராமன் தான் கொல்ல வேண்டுமென்று குறிக்கப்பட்டவனை, 'பிரஹ்மாவும் ருத்ரனும் மஹேந்திரனும் காப்பாற்ற முடியாது' என்று மாருதி வர்ணிக்கிறார். ராவணனே, "இந்த ராகவன் அழிவற்ற நாராயணனென்று நினைக்கிறேன்" என்று ஒப்புக்கொண்டான். பிரஹ்மா உத்தர காண்டத்தில் "உன் சரித்திரத்தைச் சொல்லும் இந்தக் காவியமே உத்தமமானது. இதுவே ஆதி காவியம். காவியங்களால் கீர்த்தி அடையத் தகுந்தவன் உன்னைத் தவிர வேறொருவனுமல்ல. எல்லாம் உன்னையே ஆதாரமாகக் கொண்டது" என்று துதிக்கிறார்.

பால காண்டத்தில் மஹாவிஷ்ணுவே ஜகத்காரணமென்றும், அயோத்யா காண்டத்தில் ரக்ஷகனென்றும், ஆரண்ய காண்டத்தில் முக்தியை அளிக்கிறவரென்றும், கிஷ்கிந்தா காண்டத்தில் கல்யாணகுண பரிபூர்ணரென்றும், ஸுந்தர காண்டத்தில் யாவற்றையும் ஸம்ஹரிக்கிறவரென்றும், யுத்த காண்டத்தில் வேத வேதாந்தங்களால் அறியப்படும் பொருளென்றும் காட்டப்படுகிறது.



# ஸ்ரீமத் ராமாயண த்யாந சுலோகங்கள்

## 1. ஸ்ரீ ஸ்மார்த்த ஸம்ப்ரதாய - த்யாந சுலோகங்கள்

### ஸ்ரீவிக்4நேஶ்வர த்4யாநம்

ஶுக்லாம்ப3ரத4ரம் விஷ்ணும் ஶஶிவர்ணம் சதுர்பு4ஜம் |
ப்ரஸந்ந வத3நம் த்4யாயேத் ஸர்வ விக்4நோப ஶாந்தயே | 1

வாகீ3ஶாத்3யா: ஸுமநஸ: ஸர்வார்த2நா முபக்ரமே |
யம் நத்வா க்ருதக்ருத்யா: ஸ்யு: தம் நமாமி க3ஜாநநம் || 2

### ஸ்ரீஸரஸ்வதீ ப்ரார்த2நா

தோ3ர்பி4ர் யுக்தா சதுர்பி4: ஸ்ப2டிகமணிமயீ மக்ஷமாலாம் த3தா4நா
ஹஸ்தேநைகேந பத்3மம் ஸிதமபி ச ஶுகம் புஸ்தகம் சாபரேண |
பா4ஸா குந்தே3ந்து3 ஶங்க2 ஸ்ப2டிக மணிநிபா4 பா4ஸமாநாஸமாநா
ஸா மே வாக்3தே3வதேயம் நிவஸது வத3நே ஸர்வதா3 ஸுப்ரஸந்நா || 3

### ஸ்ரீவால்மீகி ஸ்துதி:

கூஜந்தம் ராம ராமேதி மது4ரம் மது4ராக்ஷரம் |
ஆருஹ்ய கவிதா ஶாகா2ம் வந்தே3 வால்மீகி கோகிலம் || 4

வால்மீகேர் முநிஸிம்ஹஸ்ய கவிதா வநசாரிண: |
ஶ்ருண்வந் ராமகதா2 நாத3ம் கோ ந யாதி பாரம் க3திம் || 5

ய: பிப3ந் ஸததம் ராமசரிதாம்ருத ஸாக3ரம் |
அத்ருப்தஸ் தம் முநிம் வந்தே3 ப்ராசேதஸ மகல்மஷம் || 6

### ஸ்ரீஹநுமத் ஸ்துதி:

கோ3ஷ்பதீ3க்ருத வாராஶிம் மஶகீக்ருத ராக்ஷஸம் |
ராமாயண மஹாமாலா ரத்நம் வந்தே3 நிலாத்மஜம் || 7

அஞ்ஜநாநந்த3நம் வீரம் ஜாநகீஶோகநாஶநம் |
கபீஶ மக்ஷஹந்தாரம் வந்தே3 லங்கா ப4யங்கரம் || 8

உல்லங்க்4ய ஸிந்தோ4: ஸலிலம் ஸலீலம்
ய: ஶோகவஹ்நிம் ஜநகாத்மஜாயா: |
ஆதா3ய தேநைவ த3தா3ஹ லங்காம்
நமாமி தம் ப்ராஞ்ஜலி ராஞ்ஜநேயம் || 9

ஆஞ்ஜநேய மதிபாடலாநநம்
காஞ்சநாத்3ரி கமநீய விக்3ரஹம் |
பாரிஜாத தருமூல வாஸிநம்
பா4வயாமி பவமாந நந்த3நம் || 10

யத்ர யத்ர ரகு4நாத2கீர்தநம்
தத்ர தத்ர க்ருத மஸ்தகாஞ்ஜலிம் |
பா4ஷ்பவாரி பரிபூர்ண லோசநம்
மாருதிம் நமத ராக்ஷஸாந்தகம் || 11

2. அவரை அடையும் ஸாதனமென்ன? மனோவாக்கு காயங்களால் அவரைச் சரணாகதி செய்வதே.

i. தேவர்கள் ராவணாதி ராக்ஷஸர்களின் கொடுமையைத் தாங்காமல் மஹாவிஷ்ணுவையே சரணமடைந்தார்கள். 'உங்களுடைய பயத்தைப் போக்குகிறேன்' என்று அவரும் அபயதானம் செய்தார்.

ii. சரணமடைந்தவனைக் காப்பாற்றுவது உத்தம தர்மம். கருணையும் ஞானமும் சக்தியுமுள்ளவனையே சரணமடைய வேண்டும். அது வீண் போகாதென்ற தத்வம், சுனச்சேபன் த்ரிசங்கு என்றவர்களின் சரித்திரத்தால் உபதேசிக்கப்படுகிறது.

iii. பிராட்டியைப் புருஷகாரமாய் முன்னிட்டுக்கொண்டே பகவானைச் சரணமடைய வேண்டுமென்று லக்ஷ்மணன், ஸீதையை முன்னிட்டு ராமனுடைய பாதங்களில் விழுந்து, அவருடன் காட்டிற்குப்போக அனுமதி கேட்டார்.

iv. "ராமன் அயோத்யைக்குத் திரும்பிவராவிட்டால் இங்கேயே உயிரை விடுவேன்" என்று பரதன் அவரைச் சரணமடைந்தார். ஆனால் தேவதைகளுக்குச் செய்த பிரதிக்ஞை முந்தினது. அதை நிறைவேற்றின பிறகு வருகிறேனென்று வாக்களித்து, அவனுடைய சரணாகதிக்குப் ப்ரயோஜனமாகத் தன் மரவடிகளைக் கொடுத்தனுப்பினார்.

v. தண்டகாரண்ய வாஸிகளான மஹர்ஷிகள் தங்களை ராக்ஷஸர்களிடத்திலிருந்து காப்பாற்றும்படி ராமனைச் சரணமடைந்தார்கள். அதை அவர் அங்கீகரித்து நிறைவேற்றினார்.

vi. காகாஸுரன் எங்கும் சுற்றிக் கதியற்று அவரையே சரணமடைந்தான். ராமபாணத்திற்கு இரையாகாமல் பிழைத்தான்.

vii. சொன்ன வார்த்தை தவறின ஸுக்ரீவன் தலைமேல் கைகூப்பி ராமனைப் ப்ரார்த்தித்துச் சரணமடைந்தான். அவனுடைய அபராதத்தைப் பொறுத்தார்.

viii. "ராவணா! உனக்கு க்ஷேமம் கிடைக்க வேண்டுமானால், கோரமான மரணம் விலகவேண்டுமானால், புருஷோத்தமனான ராமனைச் சரணமடை. அவர் தர்மத்தை அறிந்தவர்; தன்னை அண்டினவர்களிடத்தில் பரம ப்ரீதியுள்ளவரென்பது லோகப் ப்ரஸித்தம்" என்று ஸீதை உபதேசிக்கிறாள்.

ix. பெண்டு பிள்ளை ராஜ்யம் யாவற்றையும் விட்டு, "ஸர்வலோக சரண்யனும், மஹாத்மாவுமான ராகவனைச் சரணமடைகிறேன்" என்ற விபீஷணனுக்கு, ராமன் ஜயத்தையும் ராஜ்யத்தையும் ஸுகத்தையும் கொடுத்தார்.

x. "ராமனே ஜயிப்பான்; ராவணன் மாள்வான். ஆகையால் ராக்ஷஸிகளே! உங்களுக்கு ராமனால் பெரும் பயமுண்டு. அதிலிருந்து தப்ப வேண்டுமானால் ஸீதையைச் சரணமடையுங்கள். அதனாலேயே அவளுடைய



கிருபைக்குப் பாத்திரமாவீர்கள்" என்று திரிஜடை ஜானகியை ஹிம்ஸித்த ராக்ஷஸிகளை வற்புறுத்தினாள். அவர்களுடைய மௌனத்தையே அங்கீகாரமாக ஸீதை ஒப்புக்கொண்டு, மாருதியிடத்திலிருந்து அவர்களைக் காப்பாற்றினாள்.

xi. விபீஷணனுடைய சரணாகதியால் அவனுடன் வந்த நான்கு மந்திரிகளும் காப்பாற்றப்பட்டார்கள்.

3. சரணாகதியின் பலன் பகவானுடைய கைங்கர்யமே.

i. தேவர்கள் பகவானைச் சரணாகதி செய்ததால், அப்ஸரஸ் முதலானவர்களிடத்தில் பிறந்து வானரரூபிகளாய் ராமனுக்குக் கைங்கரியம் செய்தார்கள்.

ஸர்வ காலத்திலும் ஸர்வ தேசத்திலும் ஸர்வாவஸ்தையிலும் ராமனுக்குக் கைங்கரியம் செய்வதையே லக்ஷ்மணன் புருஷார்த்தமாகக் கொண்டார்.

iii பரதன் ராமனுடைய பாதுகைகளுக்குக் கைங்கரியம் செய்ததால் பிறகு அவருக்கு ஸாக்ஷாத் கைங்கரியத்தைச் செய்யும் பாக்யத்தைப் பெற்றான்.

iv தண்டகாரண்ய ரிஷிகளின் சரணாகதிக்கு, ராமனைப் பார்ப்பது, பேசுவது, அவரை உபசரிப்பது, தங்களுடைய தபஸின் வீரியத்தை அவருக்குக் கொடுத்து ராக்ஷஸ வதத்தை நிறைவேற்றுவதென்ற கைங்கரியமே பலமாயிற்று.

v. ராமனைச் சரணமடைந்த ஸுக்ரீவனுக்கு ஸீதையைத் தேடிக் கண்டுபிடிப்பதும், அவளுடைய விருத்தாந்தத்தை ராமனுக்குத் தெரிவிப்பதும், தன் ஸைன்யங்களால் ராக்ஷஸ வதத்தில் ராமனுக்கு உதவி செய்வதுமான கைங்கரியம் கிடைத்தது.

vi. ராமனைச் சரணமடைந்த விபீஷணன் ராவணாதி ராக்ஷஸர்களின் வதத்திற்குக் காரணமான மந்திராலோசனையைச் சொல்லி, அங்கங்கே தன்னாலியன்ற உதவி புரிந்தான். லங்கா ராஜ்யம் அவனுக்குக் கிடைப்பதற்கு முன் அந்தக் கைங்கரியமே பலனாயிற்று.

4. சரணாகதி வேறொருவரை முன்னிட்டுக் கொண்டே செய்ய வேண்டும். பகவானிடத்தில் விளங்கும் கருணை, ஜகன்மாதாவான ஸீதையிடத்தில் விசேஷமாய்க் காணப்படுகிறது.

i. தனக்கு அபராதம் செய்த காகாஸுரனுக்கு ஸீதையே சிபார்சு செய்தாள். அந்தச் சிபார்சில்லாமல் ராவணன் மாண்டான்.

ii. விபீஷணன் வானரர்களை முன்னிட்டுக்கொண்டே ராமனைச் சரணமடைந்தான். ராமனும் ஸுக்ரீவனாலேயே அவனை அழைப்பித்தார்.

மநோஜவம் மாருத துல்யவேகம்
ஜிதேந்த்3ரியம் பு3த்3தி4மதாம் வரிஷ்ட2ம் |
வாதாத்மஜம் வாநரயூத2 முக்2யம்
ஸ்ரீராமதூ3தம் ஸிரஸா நமாமி || 12

பு3த்3தி4ர் ப3லம் யஸோ தை4ர்யம் நிர்ப4யத்வ மரோக3தா |
அஜாட்3யம் வாக்படுத்வம் ச ஹநுமத் ஸ்மரணாத் ப4வேத் || 13

## ஸ்ரீ ராமாயண ஸ்துதி :

ய: கர்ணாஞ்ஜலி ஸம்புடைரஹரஹ: ஸம்யக் பிப3த்யாத3ராத்
வால்மீகேர் வத3நாரவிந்த3க3ளிதம் ராமாயணாக்2யம் மது4 |
ஜந்மவ்யாதி4 ஜராவிபத்தி மரணை: அத்யந்த ஸோபத்3ரவம்
ஸம்ஸாரம் ஸ விஹாய க3ச்ச2தி புமாந் விஷ்ணோ: பத3ம் ஸாஸ்வதம் || 14

தது3பக3த ஸமாஸ ஸந்தி4யோக3ம்
ஸமமது4ரோபநதார்த2 வாக்யப3த்3த4ம் |
ரகு4வர சரிதம் முநிப்ரணீதம்
த3ஸஸிரஸஸ்ச வத4ம் நிஸாமயத்4வம் || 15

வால்மீகி கி3ரி ஸம்பூ4தா ராமஸாக3ர கா3மிநீ |
புநாது பு4வநம் புண்யா ராமாயண மஹாநதீ3 || 16

ஸ்லோக ஸார ஸமாகீர்ணம் ஸர்க3கல்லோல ஸங்குலம் |
காண்ட3க்3ராஹ மஹாமீநம் வந்தே3 ராமாயணார்ணவம் || 17

வேத3வேத்யே பரே பும்ஸி ஜாதே த3ஸரதா2த்மஜே |
வேத3: ப்ராசேதஸா தா3ஸீத் ஸாக்ஷாத்3 ராமாயணாத்மநா || 18

## ஸ்ரீராம த்4யாநம்

வைதே3ஹீ ஸஹிதம் ஸுர த்3ருமதலே ஹைமே மஹாமண்ட3பே
மத்4யே புஷ்பகமாஸநே மணிமயே வீராஸநே ஸுஸ்தி2தம் |
அக்3ரே வாசயதி ப்ரப4ஞ்ஜநஸுதே தத்வம் முநிப்4ய: பரம்
வ்யாக்2யாந்தம் ப4ரதாதி3பி4: பரிவ்ருதம் ராமம் ப4ஜே ஸ்யாமளம் || 19

வாமே பூ4மிஸுதா புரஸ்ச ஹநுமாந் பஸ்சாத் ஸுமித்ராஸுத:
ஸத்ருக்4நோ ப4ரதஸ்ச பார்ஸ்வ த3ளயோ: வாய்வாதி3கோணேஷு ச |
ஸுக்3ரீவஸ்ச விபீ4ஷணஸ்ச யுவராட் தாராஸுதோ ஜாம்ப3வாந்
மத்4யே நீலஸரோஜ கோமளருசிம் ராமம் ப4ஜே ஸ்யாமளம் || 20

நமோஸ்து ராமாய ஸலக்ஷ்மணாய
தே3வ்யை ச தஸ்யை ஜநகாத்மஜாயை |
நமோஸ்து ருத்3ரேந்த்3ர யமாநிலேப்4யோ.
நமோஸ்து சந்த்3ரார்க மருத்3க3ணேப்4ய: || 21

## ஸ்ரீஹநுமத் த்4யாநம்

ஸர்வாரிஷ்ட நிவாரகம் ஸுப4கரம் பிங்கா3க்ஷ மக்ஷாபஹம்
ஸீதாந்வேஷண தத்பரம் கபிவரம் கோடீந்து3 ஸூர்யப்ரப4ம் |
லங்காத்3வீப ப4யங்கரம் ஸகலத3ம் ஸுக்3ரீவ ஸம்மாநிதம்
தே3வேந்த்3ராதி3 ஸமஸ்த தே3வவிநுதம் காகுத்ஸ்த2 தூ3தம் ப4ஜே || 22



## பாராயணம் முடிந்தபின்

ஸ்வஸ்தி ப்ரஜாப்4ய: பரிபாலயந்தாம்
ந்யாய்யேந மார்க3ண மஹீம் மஹீஸா: |
கோ3ப்3ராஹ்மணேப்4ய: ஸுப4மஸ்து நித்யம்
லோகா: ஸமஸ்தா: ஸுகி2நோ ப4வந்து || 1

காலே வர்ஷது பர்ஜந்ய: ப்ருதி2வீ ஸஸ்யஸாலிநீ |
தே3ஸோயம் க்ஷோப4ரஹிதோ ப்3ராஹ்மணா: ஸந்து நிர்ப4யா: || 2

அபுத்ரா: புத்ரிண: ஸந்து புத்ரிண: ஸந்து பௌத்ரிண: ||
அத4நா: ஸத4நா: ஸந்து ஜீவந்து ஸரதா3ம் ஸதம் || 3

சரிதம் ரகு4நாத2ஸ்ய ஸதகோடி ப்ரவிஸ்தரம் |
ஏகைக மக்ஷரம் ப்ரோக்தம் மஹாபாதக நாஸநம் || 4

ஸ்ருண்வந் ராமாயணம் ப4க்த்யா ய: பாத3ம் பத3மேவ வா |
ஸ யாதி ப்3ரஹ்மண: ஸ்தா2நம் ப்3ரஹ்மணா பூஜ்யதே ஸதா3 || 5

ராமாய ராமப4த்3ராய ராமசந்த்3ராய வேத4ஸே |
ரகு4நாதா2ய நாதா2ய ஸீதாயா: பதயே நம: || 6

யந் மங்க3ளம் ஸஹஸ்ராக்ஷே ஸர்வதே3வ நமஸ்க்ருதே |
வ்ருத்ரநாஸே ஸமப4வத் தத் தே ப4வது மங்க3ளம் || 7

யந்மங்க3ளம் ஸுபர்ணஸ்ய விநதா கல்பயத் புரா |
அம்ருதம் ப்ரார்த2யாநஸ்ய தத் தே ப4வது மங்க3ளம் || 8

அம்ருதோத்பாத3நே தை3த்யாந் க்4நதோ வஜ்ரத4ரஸ்ய யத் |
அதி3திர் மங்க3ளம் ப்ராதா3த் தத் தே ப4வது மங்க3ளம் || 9

த்ரீந் விக்ரமாந் ப்ரக்ரமதோ விஷ்ணோ ரமித தேஜஸ: |
யதா3ஸீந் மங்க3ளம் ராம தத் தே ப4வது மங்க3ளம் || 10

ருதவ: ஸாக3ரா த்3வீபா வேதா3 லோகா தி3ஸஸ்ச தே |
மங்க3ளாநி மஹாபா3ஹோ தி3ஸந்து தவ ஸர்வதா3 || 11

ஸ்ரீராமசந்த்3ர: ஸ்ரிதபாரிஜாத:
ஸமஸ்த கல்யாண கு3ணாபி4ராம: |
ஸீதா முகா2ம்போ4ருஹ சஞ்சரீகோ
நிரந்தரம் மங்க3ள மாதநோது || 12

காயேந வாசா மநஸேந்த்3ரியைர் வா
பு3த்4யாத்மநா வா ப்ரக்ருதே: ஸ்வபா4வாத் |
கரோமி யத்3யத் ஸகலம் பரஸ்மை
நாராயணாயேதி ஸமர்பயாமி || 13



iii. ஸுக்ரீவனும் ஹனுமாரைக் கொண்டே ராமனைச் சரணமடைந்தான்.

5. பகவானுக்கு நாம் தாஸர்களாய், சேஷர்களாயிருக்க வேண்டும்.

"நான் ராமனுடைய தம்பி; அவருடைய குணங்களால் அவருக்குத் தாஸனுனேன்" என்றும், "என்னை வேலைக்காரனுக வைத்துக்கொள்ளும். இதில் தர்ம விரோதமில்லை. நான் உமது கைங்கரியத்தால் கிருதார்த்தனுவேன். உமது உத்தேசமும் நிறைவேறும்" என்றும் லக்ஷ்மணன் சொல்லியிருக்கிருர்.

6. நான் பகவானுக்கு ஸ்வாதீனமான வஸ்து. ராமன் அடைய வேண்டிய பதவியை அவருடைய உடைமையான நான் அடையத் தகுமோ' என்று பரதன் வஸிஷ்டருடைய வார்த்தையைக் கண்டித்தார். ராமன் எவ்வளவு நல்ல வார்த்தை சொல்லியும் லக்ஷ்மணன் தனக்கு யௌவ ராஜ்யாபிஷேகம் செய்துகொள்ள ஸம்மதிக்கவில்லை. அப்பொழுது ராமனுடைய கட்டளையைத் தலையால் தாங்கிப் பரதன் ஸம்மதித்தார்.

7. பகவானைக் காட்டிலும் பாகவதர்களுக்கே நாம் அடிமை செய்ய வேண்டுமென்பதைச் சத்ருக்னர், பரதனிடத்தில் நடந்து காட்டினுர். பரதன் அம்மானுடைய வீட்டிற்குப் போகும்பொழுது சத்ருக்னரைத் தன் கை கால் வஸ்திரம் முதலிய பொருள்களைப்போல் ஸ்வாதீனமாக நினைத்து அழைத்துக்கொண்டு போனுர்.

8. பரஸ்வரூபம் ராமனுடைய சரிதத்தாலும், ஜீவஸ்வரூபம் லக்ஷ்மணனுடைய சரிதத்தாலும், உபாய ஸ்வரூபம் சரணுகதி வர்ணனையாலும், பலத்தின் ஸ்வரூபம் விபீஷணன் முதலானவர்களின் கதையாலும், விரோதி ஸ்வரூபம் ராவணுதி துஷ்டர்களின் சரிதத்தாலும், பிரஹ்மம் ஜீவன் உபாயம் பலம் விரோதி என்ற அர்த்த பஞ்சகம் ராமாயணத்தில் உபதேசிக்கப்பட்டிருக்கின்றன.

9. i. தேவதைகள் விஷ்ணுவையே சரணமடைந்ததால் பிரஹ்மாவும் பரமசிவனும் தங்களை ரக்ஷிக்க முடியவில்லையென்றும், அவர்களிடத்திலிருந்து வரங்களைப்பெற்ற ராவணனை அவர்கள் காப்பாற்ற முடியவில்லையென்றும்,

ii. தன் புத்திரர்களுக்கு நேர்ந்த கஷ்டத்தை பிதாவான தசரதர் தடுக்க முடியவில்லையென்றும்,

iii. காகாஸுரனை ராமனுடைய பாணத்திலிருந்து தாய் தகப்பன் முதலிய பந்துக்கள் தப்புவிக்க முடியவில்லையென்றும்,

iv. ராவணனுடைய ஸஹோதரர்களும் புத்திரர்களும் மித்திரர்களும் அவனைக் காப்பாற்ற முடியவில்லையென்றும் வால்மீகி எடுத்துக் காட்டி, பகவானையே சரணமடைந்த தேவதைகளும் பரதனும் ரிஷிகளும் ஸுக்ரீவனும் விபீஷணனும் பரம க்ஷேமத்தை அடைந்தார்களென்று அவரே கதி என்ற தத்வத்தை உபதேசித்திருக்கிருர்.



10. பகவானுடைய ஸ்வரூபத்தையும் லக்ஷணத்தையும் கல்யாண குணங்களையும் குருவாலேயே அறிய வேண்டுமென்று ஹனுமார் ஸீதைக்கு ராமனை வர்ணித்ததால் தெரிகிறது.

11. மோக்ஷத்திற்கு அதிகாரியும், பிராரப்தத்தால் வந்த சரீரம் போகும் வரையில் பகவானை அடையும் காலத்தை எதிர்பார்த்துக் கொண்டிருக்க வேண்டியதென்று விளக்க, "ராமன் சத்ரு ஸைன்யத்தை அழித்து இந்த லங்கையைப் பாணங்களால் கலக்கி என்னை அழைத்துப்போவது அவருக்குத் தகும்" என்று ஸீதை உபதேசிக்கிருள். எப்படியென்ருல் லங்கையே சரீரம்; ராவணனே அஹங்காரம்; கும்பகர்ணனே மமகாரம் (என்னுடையதென்பது); இந்திரஜித் முதலியவர்களே காமக்ரோதங்கள்; விபீஷணனே விவேகம். இந்தத் தேகத்தில் அடைக்கப்பட்ட ஸீதை என்ற ஜீவனுக்குப் பகவான் அனுப்பின ஆசாரியனுன மாருதியால் அவருடைய ஸ்வரூப ஞானம் கிடைத்தது. கர்மம் முடிந்தபொழுது அவர் சரீரத்தை அழித்து ஜீவனைத் தன்னுடன் சேர்த்துக் கொண்டார்.

12. நாம் ராமன் முதலிய ஸாதுக்களைப்போல் இவ்வுலகத்தில் நடக்க வேண்டும்; ராவணன் முதலியவர்களைப்போல் நடக்கக்கூடாது.

13. கோஸல தேசத்து ஜனங்களுடைய விருத்தாந்தத்தால், நமது வாழ்நாளைப் பகவானுடைய ஸந்நிதியிலேயே கழிக்க வேண்டுமென்பது.

14. ராமாயணம் த்வயமென்ற மந்திரத்தின் ரஹஸ்யத்தை உபதேசிக்கும்; ஆகையால் அதை எப்பொழுதும் பாராயணம் செய்யவேண்டும். ராமன் ஸீதையுடன் விளங்கும் பால காண்டத்தில் ஸ்ரீமத்; அவருடைய கல்யாண குணங்களை வர்ணிக்கும் அயோத்யா காண்டத்தில் நாராயணஸ்ய; அவருடைய திவ்ய மங்கள விக்ரஹத்தை வர்ணிக்கும் ஆரண்ய காண்டத்தில் சரணௌ; கிஷ்கிந்தா சுந்தர காண்டங்களில் சரணம்; யுத்த காண்டத்தில் ப்ரபத்யே; உத்தர காண்டத்தில் த்வயத்தின் இரண்டாவது பாகம் முறையே வியாக்யானம் செய்யப்படுகின்றன.

15. நாம் எப்பொழுதும் ஜபிக்க வேண்டிய மந்திரம் ராமாயணம். பகவானை ஜகத்திற்குக் காரணரென்று வேதாந்தத்தில் சொல்லியிருக்கும் ஸ்வரூபம் பால காண்டத்திலும்; அவருடைய கல்யாண குணங்கள் அயோத்யா கிஷ்கிந்தா காண்டங்களிலும்; அவருடைய தேஜோமயமான திருமேனி ஆரண்ய காண்டத்திலும்; அவருடைய திவ்ய மங்கள விக்ரஹத்தின் லக்ஷணம் சுந்தர காண்டத்திலும்; சரணுகதி தர்மம் யுத்த காண்டத்திலும்; முக்தி பலன் உத்தர காண்டத்திலும், காயத்ரீ மஹா மந்திரத்தின் உட்கருத்திற் கிணங்க உபதேசிக்கப்படுகிறது. ஜாபாலியும் லக்ஷ்மணனும் சொன்ன குதர்க்கங்களை ராமன் கண்டித்ததால் வேத விரோதமான நாஸ்திகக் கொள்கைகளை நாம் ஆதரிக்கக்கூடாதென்று தெரிகிறது. நாகாஸ்திரம் பிரஹ்மாஸ்திரம் முதலியவைகளால் ராமன் கட்டுப்பட்டது, ராஜ்யத்தை இழந்தது, காட்டில் திரிந்தது, ஸீதையைப் பறிகொடுத்தது, மிருகங்களை அண்டினது முதலிய கதைகளால்







## 2. ஸ்ரீவைஷ்ணவ ஸம்ப்ரதாய - த்யாந சுலோகங்கள்

ஸ்ரீவைஷ்ணவர்கள், அவரவர் ஆசார்யர்களின் தனியன்களை ஸேவித்த பிறகு, ''லக்ஷ்மீநாத2ஸமாரம்பா4ம்'' அல்லது ''அஸ்மத்3கு3ருஸமாரம்பா4ம்'' என்று தொடங்கி ''ப்ரணதோஸ்மி நித்யம்'' வரை ஸேவித்து, கீழ்க்கண்ட சுலோகங்களையும் ஸேவிக்கவும்.

கூஜந்தம் ராமராமேதி மது4ரம் மது4ராக்ஷரம் |
ஆருஹ்ய கவிதாஸாகா2ம் வந்தே3 வால்மீகி கோகிலம் || 1

வால்மீகேர் முநிஸிம்ஹஸ்ய கவிதா வநசாரிண: |
ஸ்ருண்வந் ராமகதா2நாத3ம் கோ ந யாதி பராம் க3திம் || 2

ய: பிப3ந் ஸததம் ராமசரிதாம்ருத ஸாக3ரம் |
அத்ருப்தஸ் தம் முநிம் வந்தே3 ப்ராசேதஸ மகல்மஷம் || 3

கோ3ஷ்பதீ3க்ருத வாராஸிம் மஸகீக்ருத ராக்ஷஸம் |
ராமாயண மஹாமாலாரத்நம் வந்தே3நிலாத்மஜம் || 4

அஞ்ஜநாநந்த3நம் வீரம் ஜாநகீ ஸோகநாஸநம் |
கபீஸ மக்ஷஹந்தாரம் வந்தே3 லங்காப4யங்கரம் || 5

மநோஜவம் மாருத துல்யவேக3ம்
ஜிதேந்த்3ரியம் பு3த்3தி4 மதாம் வரிஷ்ட2ம்
வாதாத்மஜம் வாநரயூத2 முக்2யம்
ஸ்ரீராமதூ3தம் ஸிரஸா நமாமி || 6

உல்லங்க்4ய ஸிந்தோ4: ஸலிலம் ஸலீலம்
ய: ஸோகவஹ்நிம் ஜநகாத்மஜாயா: |
ஆதா3ய தேநைவ த3தா3ஹ லங்காம்
நமாமி தம் ப்ராஞ்ஜலி ராஞ்ஜநேயம் || 7

ஆஞ்ஜநேய மதிபாடலாநநம் காஞ்சநாத்3ரி கமநீய விக்3ரஹம்
பாரிஜாத தருமூல வாஸிநம் பா4வயாமி பவமாந நந்த3நம் || 8

யத்ர யத்ர ரகு4நாத2 கீர்தநம் தத்ர தத்ர க்ருத மஸ்தகாஞ்ஜலிம் |
பா3ஷ்பவாரி பரிபூர்ண லோசநம் மாருதிம் நமத ராக்ஷஸாந்தகம் || 9

வேத3வேத்3யே பரே பும்ஸி ஜாதே த3ஸரதா2த்மஜே |
வேத3: ப்ராசேதஸா தா3ஸீத் ஸாக்ஷாத்3 ராமாயணாத்மநா || 10

தது3பக3த ஸமாஸ ஸந்தி4 யோக3ம்
ஸம மது4ரோபநதார்த2 வாக்யப3த்3த4ம் |
ரகு4வர சரிதம் முநிப்ரணீதம்
த3ஸ ஸிரஸஸ்ச வத4ம் நிஸாமயத்4வம் || 11



ஸ்ரீராக4வம த3ஸரதா2த்மஜ மப்ரமேயம்
ஸீதாபதிம் ரகு4குலாந்வய ரத்நதீ3பம் |
ஆஜாநுபா3ஹு மரவிந்த3 த3ளாயதாக்ஷம்
ராமம் நிஸாசர விநாஸகரம் நமாமி || 12

வைதே3ஹீ ஸஹிதம் ஸுரத்3ருமதலே ஹைமே மஹாமண்டபே
மத்4யே புஷ்பக மாஸநே மணிமயே வீராஸநே ஸுஸ்தி2தம் |
அக்3ரே வாசயதி ப்ரப4ஞ்ஜந ஸுதே தத்வம் முநிப்4ய: பரம்
வ்யாக்2யாந்தம் ப4ரதாதி3பி4: பரிவ்ருதம் ராமம் ப4ஜே ஸ்யாமளம் || 13

## பாராயணம் முடிந்தபின்

ஏவமேதத் புரா வ்ருத்தம் ஆக்2யாநம் ப4த்3ரமஸ்து வ: |
ப்ரவ்யாஹரத விஸ்ரப்3த4ம் ப3லம் விஷ்ணோ: ப்ரவர்த4தாம் || 1

லாப4ஸ்தேஷாம் ஜயஸ்தேஷாம் குதஸ்தேஷாம் பராப4வ: |
யேஷா மிந்தீ3வரஸ்யாமோ ஹ்ருத3யே ஸுப்ரதிஷ்டி2த: || 2

காலே வர்ஷது பர்ஜந்ய: ப்ருதி2வீ ஸஸ்யஸாலிநீ |
தே3ஸோயம் க்ஷோப4 ரஹிதோ ப்3ராஹ்மணா: ஸந்து நிர்ப4யா: || 3

காவேரீ வர்த4தாம் காலே காலே வர்ஷது வாஸவ: |
ஸ்ரீரங்க3நாதோ2 ஜயது ஸ்ரீரங்க3 ஸ்ரீஸ்ச வர்த4தாம் || 4

ஸ்வஸ்தி ப்ரஜாப்4ய: பரிபாலயந்தாம்
ந்யாய்யேந மார்கே3ண மஹீம் மஹீஸா: |
கோ3ப்3ராஹ்மணேப்4ய: ஸுப4மஸ்து நித்யம்
லோகா: ஸமஸ்தா: ஸுகி2நோ ப4வந்து || 5

மங்க3ளம் கோஸலேந்த்3ராய மஹநீய கு3ணாப்3த4யே |
சக்ரவர்தி தநூஜாய ஸார்வபௌ4மாய மங்க3ளம் || 6

வேத3 வேதா3ந்த வேத்3யாய மேக4ஸ்யாமள மூர்தயே |
பும்ஸாம் மோஹநரூபாய புண்யஸ்லோகாய மங்க3ளம் || 7

விஸ்வாமித்ராந்தரங்கா3ய மிதி2லா நக3ரீபதே: |
பா4க்3யாநாம் பரிபாகாய ப4வ்யரூபாய மங்க3ளம் || 8

பித்ருப4க்தாய ஸததம் ப்4ராத்ருபி4: ஸஹ ஸீதயா |
நந்தி3தாகி2ல லோகாய ராமப4த்3ராய மங்க3ளம் || 9

த்யக்த ஸாகேத வாஸாய சித்ரகூட விஹாரிணே |
ஸேவ்யாய ஸர்வயமிநாம் தீ4ரோதா3ராய மங்க3ளம் || 10

ஸௌமித்ரிணா ச ஜாநக்யா சாபபா3ணாஸி தா4ரிணே |
ஸம்ஸேவ்யாய ஸதா3 ப4க்த்யா ஸ்வாமிநே மம மங்க3ளம் || 11

த3ண்டகாரண்ய வாஸாய க2ண்டி3தாமர ஸத்ரவே |
க்3ருத்4ர ராஜாய ப4க்தாய முக்திதா3யாஸ்து மங்க3ளம் || 12

ஸாத3ரம் ஸப3ரீத3த்த ப2லமூலாபி4லாஷிணே |
ஸௌலப்4ய பரிபூர்ணாய ஸத்வோத்3ரிக்தாய மங்களம் || 13

ஹநுமத் ஸமவேதாய ஹரீஸாபீ4ஷ்ட தா3யிநே |
வாலி ப்ரமத2நாயாஸ்து மஹாதீ4ராய மங்க3ளம் || 14

ஸ்ரீமதே ரகு4வீராய ஸேதூல்லங்கி4த ஸிந்த4வே |
ஜிதராக்ஷஸ ராஜாய ரணதீ4ராய மங்க3ளம் || 15

ஆஸாத்3ய நக3ரீம் தி3வ்யா மபி4ஷிக்தாய ஸீதயா |
ராஜாதி4ராஜ ராஜாய ராமப4த்3ராய மங்க3ளம் || 16

மங்க3ளா ஸாஸந பரை: மதா3சார்ய புரோக3மை: |
ஸர்வைஸ்ச பூர்வைராசார்யை: ஸத்க்ருதாயாஸ்து மங்க3ளம் || 17

---

'கஷ்டங்கள் மஹான்களுக்கும் நேரும்; அவைகளால் மனம் கலங்காமல் வைராக்யத்தை அடைந்து, ஸுகதுக்கங்களை ஸமமாகப் பாவிக்க வேண்டும்' என்று போதிக்கப்படுகிறது.

16. ஸச்சிதானந்த ஸ்வரூபமான மஹாவிஷ்ணுவே ஸமுத்திரம்; பூமியின் பாரத்தைப் போக்கவேண்டுமென்று அவருக்குண்டான இச்சையே அலை; அதிலிருந்து தெறிக்கும் திவலையே ஜீவாத்மா; அயோத்யையே ஹிருதயாகாசம்; ஸத்வகுணப் பிரதானமான சுத்த அந்தக்கரணமே தசரதர்; ஸாத்விக புத்தியே கௌஸல்யை; துரீயாவஸ்தையில் விளங்கும் ஆத்மாவே ராமன்; ஜாக்ரதவஸ்தையில் விளங்கும் ஆத்மாவே லக்ஷ்மணன்; ஸ்வப்னவஸ்தையில் விளங்கும் ஆத்மாவே பரதன்; ஸுஷுப்தியவஸ்தையில் விளங்கும் ஆத்மாவே சத்ருக்னன்; இவை ஒன்றின் பேதங்களே.

துரீயாத்மா மனோவேகத்தால் இழுக்கப்படுகிறான்; ராமன் விச்வாமித்திரருடைய யாகத்தைக் காப்பாற்ற அயோத்யையை விட்டுப் போகிறார். மனத்தின் கெட்ட விருத்திகளை ஆத்மா நாசம் செய்கிறான்; ராமன் தாடகை, ஸுபாஹு முதலியவர்களைக் கொன்றார். மனோவேகத்தை ஆத்மா அடக்குகிறான்; ராமன் சிவனுடைய வில்லை முறிக்கிறார். ஜீவன் மாயையுடன் ஸம்பந்தப்படுகிறான்; ராமன் ஸீதையை விவாஹம் செய்கிறார். பூர்வஜன்ம ஸம்ஸ்காரங்களை ஆத்மா வசப்படுத்துகிறான்; ராமன் பரசுராமரை ஜயிக்கிறார். தாமஸகுணப் பிரதானமான புத்தி தூண்டும் பொழுது ஆத்மாவிற்கு ஸம்ஸாரம் நேருகிறது; கைகேயியின் உத்தரவால் ராமன தண்டகாரண்யத்தில் பிரவேசிக்கிறார். டம்பத்தை ஆத்மா அழிக்கிறான்; ராமன் விராதனைக் கொன்றார். பஞ்ச பூதங்களின் சேர்க்கையாலுண்டான நிலையற்ற தேகத்தை அடைந்து ஆத்மா சிரமபரிஹாரம் செய்துகொண்டு ஸுகமாயிருப்பதாக எண்ணுகிறான்; பஞ்சவடியில் பர்ணசாலையைக் கட்டிக்கொண்டு ராம லக்ஷ்மணர்களும் ஸீதையும் சில காலம் ஸுகமாய் வஸிக்கிறார்கள். ஜீவன் ஆசை காமம் குரோதம் லோபம் மோஹம் என்றவைகளை ஜயிக்கிறான்; சூர்ப்பணகை, கரன், தூஷணன், த்ரிசிரஸ், மாரீசனென்றவர்களே இந்தக் குணங்கள். ஜீவன் சுத்தமாயையை விட்டுப் பிரிகிறான்; ஸீதையை ஆசிரமத்தில் விட்டு ராமன் போகிறார். அந்த மாயையை அஹங்காரம் கவர்ந்துகொள்ளுகிறது; ஸீதையை ராவணன் அபகரிக்கிறான். ஆத்மாவிற்குத் துக்கம் ஒழிய ஆரம்பிக்கிறது; ராமன் பெருவயிருள்ள கபந்தனைக் கொல்லுகிறார். உத்தமமான பக்தி ஜீவனுக்குக் கிடைக்கிறது; ராமன் மாருதியைச் சந்திக்கிறார். ஜீவனுக்கு விவேகம் பிறக்கிறது; ராமன் ஸுக்ரீவனை ஸ்நேஹம் செய்கிறார். ஜீவன் அவிவேகத்தை ஒழிக்கிறான்; ராமன் வாலியை ஸம்ஹரிக்கிறார். ஜீவனுக்கு உத்ஸாஹமுண்டாகிறது; ராமனுக்கு விபீஷணனுடைய ஸஹாயம் கிடைக்கிறது. அஞ்ஞானத்தை தாண்டுவதற்கு உபாயம் ஆத்மாவிற்குக் கைகூடுகிறது. ஸமுத்திரத்தைத் தாண்டுவதற்கு அணை போடப்படுகிறது. ஸத்வரஜஸ் தமஸென்ற முக்குணங்களால் அமைக்கப்பட்ட லிங்க தேகத்தில் ஜீவன் வ்யவஹாரம் செய்கிறான்; மூன்று மலைச் சிகரங்களின்மேல் கட்டப்பட்ட லங்கையில் ராமன் பரிவாரங்களுடன் பிரவேசிக்கிறார். மதம் மாத்ஸர்யம் அஹங்காரமென்ற மூலகாரணங்களை ஜீவன் ஜயிக்கிறான்; கும்பகர்ணன் இந்திரஜித்து ராவணனென்ற ராக்ஷஸத் தலைவர்களை ராமன் ஸம்ஹரிக்கிறார். அஹங்காரத்தால் தாமஸ ஸம்பந்தமுள்ள அசுத்த மாயை அந்தத் தோஷம் நீங்கிச் சுத்தமாகிறது; ஸீதை அக்னிப் பிரவேசம் செய்கிறாள். ஜீவன் லிங்கதேகத்தை விட்டுப் பிரிகிறான்; ராமனும் ஸீதையும் லங்கையிலிருந்து திரும்புகிறார்கள். ஜீவன் மறுபடியும் ஹ்ருதயாகாசத்தில் தன் ஸ்தானத்தை அடைகிறான்; ராம லக்ஷ்மணர்களும் ஸீதையும் பரத சத்ருக்னர்களுடன் அயோத்யையில் பிரவேசிக்கிறார்கள். ஜீவன் தனக்கு இயற்கையான நித்ய நிரதிசய சுத்த ஆனந்தத்தை அனுபவிக்கிறான்; ராமன் தனக்கு முன்பே கிடைக்க வேண்டிய கோஸல ராஜ்ய அதிகாரத்தில் அபிஷேகம் செய்யப்பட்டுத் தர்மமாய் ராஜ்ய பாலனம் செய்கிறார்.



லோகாபவாதத்திற்குப் பயந்து, ஸீதையை வால்மீகியின் ஆசிரமத்திற்கருகில் விடுகிறார்; ஜீவன் ராஜஸ ஸம்பந்தமுள்ள மாயையிலிருந்து விடுபடுகிறான். வால்மீகியின் உபதேசத்தால் ஸீதையை ராமன் அங்கீகரிக்கிறார்; ஜீவன் ஸாத்விக மாயையுடன் சேருகிறது. ராம லக்ஷ்மண பரத சத்ருக்னர்கள் பரிவாரங்களுடன் ஸரயூ நதியில் பிரவேசிக்கிறார்கள்; ஜீவன் ஹ்ருதயாகாசத்தை மஹாகாசத்தில் லயப்படுத்தி ஸச்சிதானந்த ஸ்வரூபத்தை அடைந்து முக்திதசையில் விளங்குகிறது.

17. நூறு யோஜனை விஸ்தாரமுள்ள ஸமுத்திரமென்பது, 'நான் என்னுடையது' என்ற அபிமானமான ஸம்ஸார ஸமுத்திரமே. ஜீவனுடைய சரீரமே லங்கை. ஆத்மாவைத் தவிர ஸகல பிரபஞ்சமும் ஸ்த்ரீயைப் போன்றது. அசோகவனமே அவித்யை. ஜீவனுடைய சுத்த ஸத்வகுணமுள்ள புத்தியே ஹனுமான். தாமஸ ராஜஸ ஸாத்விக குணங்களே முறையே கும்பகர்ணன், ராவணன், விபீஷணன். ஜீவனுக்குத் தாரக மந்திரத்தை உபதேசிப்பதே ஹனுமான் ஸீதைக்கு முத்திரை மோதிரத்தைக் கொடுத்தது. பகவானைத் தவிர மற்ற வஸ்துக்களுக்குத் தான் அடிமையென்ற எண்ணத்தை அடியோடே தொலைப்பதே லங்கையை எரித்தது. ஜீவனுடைய சோக மோகங்களை ஈசுவரனிடத்தில் முறையிடுவதே ஜானகியின் துயரத்தை ராமனுக்கு அறிவித்தது. சரீரத்திலுள்ள ஜீவனுக்குப் பகவானுடைய ஸ்வரூப தரிசனமே ராமன் லங்கைக்கு வந்தது. ராஜஸ தாமஸ குணங்கள் அழிவதே ராவண கும்பகர்ணாதிகளின் வதம். இவைகளின் விருத்திகளே ராக்ஷஸ மந்திரி பரிவாரங்கள். ஸத்வகுணம் சரீரத்தில் மேலோங்கி நிலைநிற்பதே விபீஷண பட்டாபிஷேகம். ஜீவனை ஞான மயமாகச் செய்வதே ராமன் ஸீதையை வருவித்தது. அது விரஜா நதியில் ஸ்நானம் செய்து, ஸூக்ஷ்ம சரீர வாஸனைகளை ஒழித்ததே ஸீதையின் அக்னி ப்ரவேசம். தேவதாக்ரஹண யோக்யமான பஞ்சோபநிஷன்மய திவ்ய சரீரத்தால் மோக்ஷமடைவதே அக்னி பகவான் ஸீதையை ராமனிடத்தில் சேர்ப்பித்தது. ஜீவன் ஈசுவர



## 3. ஸ்ரீமாத்4வ ஸம்ப்ரதாய-த்யாந சுலோகங்கள்

ஶுக்லாம்ப3ரத4ரம் விஷ்ணும் ஶஶிவர்ணம் சதுர்பு4ஜம் |
ப்ரஸந்ந வத3நம் த்4யாயேத் ஸர்வவிக்4நோப ஶாந்தயே || 1
லக்ஷ்மீநாராயணம் வந்தே3 தத்3ப4க்த ப்ரவரோ ஹ்ய : |
ஸ்ரீமத3ாநந்த3 தீர்த2ாக்2யோ கு3ருஸ் தம் ச நமாம்யஹம் || 2
வேதே3 ராமாயணே சைவ புராணே பா4ரதே ததா2 |
ஆதா3வந்தே ச மத்4யே ச விஷ்ணுஃ ஸர்வத்ர கீ3யதே || 3
ஸர்வ விக்4ந ப்ரஶமநம் ஸர்வ ஸித்3தி4கரம் பரம் |
ஸர்வஜீவ ப்ரணேதாரம் வந்தே3 விஜயத3ம் ஹரிம் || 4
ஸர்வாபீ4ஷ்ட ப்ரத3ம் ராமம் ஸர்வாரிஷ்ட நிவாரகம் |
ஜாநகீஜாநி மநிஶம் வந்தே3 மத்3கு3ருவந்தி3தம் || 5
அப்4ரமம் ப4ங்க3ரஹிதம் அஜட3ம் விமலம் ஸதா3 |
ஆநந்த3 தீர்த2 மதுலம் ப4ஜே தாபத்ரயாபஹம் || 6
ப4வதி யத3நுபா4வாதே3ட3 மூகோபி வாக்3மீ
ஜட3மதிரபி ஜந்துர் ஜாயதே ப்ராஜ்ஞமௌளி : |
ஸகலவசந சேதோ தே3வதா பா4ரதீ ஸா
மம வசஸி வித4த்தாம் ஸந்நிதி4ம் மாநஸே ச || 7
மித்2யா ஸித்3தா4ந்த து3ர்த்4வாந்த வித்4வம்ஸந விசக்ஷண : |
ஜயதீர்தா2க்2ய தரணிர் பா4ஸதாம் நோ ஹ்ருத3ம்ப3ரே || 8
சித்ரை : பதை3ஶ்ச க3ம்பீ4ரை : வாக்யைர் மாநை ரக2ண்டி3தை : |
கு3ருபா4வம் வ்யஞ்ஜயந்தீ பா4தி ஸ்ரீஜயதீர்த2வாக் || 9
கூஜந்தம் ராமராமேதி மது4ரம் மது4ராக்ஷரம் |
ஆருஹ்ய கவிதாஶாகா2ம் வந்தே3 வால்மீகி கோகிலம் || 10
வால்மீகேர் முநிஸிம்ஹஸ்ய கவிதா வநசாரிண : |
ஶ்ருண்வந் ராமகதா2நாத3ம் கோ ந யாதி பராம் க3திம் || 11
ய : பிப3ந் ஸததம் ராமசரிதாம்ருத ஸாக3ரம் |
அத்ருப்தஸ் தம் முநிம் வந்தே3 ப்ராசேதஸ மகல்மஷம் || 12
கோ3ஷ்பதீ3க்ருத வாராஶிம் மஶகீக்ருத ராக்ஷஸம் |
ராமாயண மஹாமாலா ரத்நம் வந்தே3நிலாத்மஜம் || 13
அஞ்ஜநாநந்த3நம் வீரம் ஜாநகீ ஶோகநாஶநம் |
கபீஶ மக்ஷஹந்தாரம் வந்தே3 லங்கா ப4யங்கரம் || 14
மநோஜவம் மாருத துல்யவேக3ம்
ஜிதேந்த்3ரியம் பு3த்3தி4மதாம் வரிஷ்ட2ம் |
வாதாத்மஜம் வாநரயூத2 முக்2யம்
ஸ்ரீராமதூ3தம் ஶிரஸா நமாமி || 15
உல்லங்க்4ய ஸிந்தோ4 : ஸலிலம் ஸலீலம்
ய : ஶோகவஹ்நிம் ஜநகாத்மஜாயா : |
ஆதா3ய தேநைவ த3தா3ஹ லங்காம்
நமாமி தம் ப்ராஞ்ஜலி ராஞ்ஜநேயம் || 16



ஆஞ்ஜநேய மதிபாடலாநநம் காஞ்ச நாத்3ரி கமநீய விக்3ரஹம் |
பாரிஜாத தருமூல வாஸிநம் பா4வயாமி பவமாந நந்த3நம் || 17
யத்ர யத்ர ரகு4நாத2கீர்தநம் தத்ர தத்ர க்ருத மஸ்தகாஞ்ஜலிம் |
பா3ஷ்பவாரி பரிபூர்ண லோசநம் மாருதிம் நமத ராக்ஷஸாந்தகம் || 18
வேத3வேத்3யே பரே பும்ஸி ஜாதே த3ஶரதா2த்மஜே |
வேத3 : ப்ராசேதஸாதா3ஸீத் ஸாக்ஷாத்3 ராமாயணாத்மநா || 19
ஆபதா3 மபஹர்தாரம் தா3தாரம் ஸர்வ ஸம்பதா3ம் |
லோகாபி4ராமம் ஸ்ரீராமம் பூ4யோ பூ4யோ நமாம்யஹம் || 20
தது3பக3த ஸமாஸ ஸந்தி4யோக3ம்
ஸம மது4ரோபநதார்த2 வாக்யப3த்3த4ம் |
ரகு4வர சரிதம் முநிப்ரணீதம்
த3ஶ ஶிரஸஶ்ச வத4ம் நிஶாமயத்4வம் || 21
வைதே3ஹீ ஸஹிதம் ஸுரத்3ருமதலே ஹைமே மஹாமண்ட3பே
மத்4யே புஷ்பகமாஸநே மணிமயே வீராஸநே ஸுஸ்தி2தம் |
அக்3ரே வாசயதி ப்ரப4ஞ்ஜந ஸுதே தத்வம் முநிப்4ய : பரம்
வ்யாக்2யாந்தம் ப4ரதாதி3பி4 : பரிவ்ருதம் ராமம் ப4ஜே ஶ்யாமளம் || 22
வந்தே3 வந்த்3யம் விதி4ப4வ மஹேந்த்3ராதி3 ப்3ருந்தா3ரகேந்த்3ரை :
வ்யக்தம் வ்யாப்தம் ஸ்வகு3ண க3ணதோ தே3ஶத : காலதஶ்ச |
தூ4தாவத்3யம் ஸுக2சிதிமயைர் மங்க3ளைர் யுக்த மங்கை3 :
ஸாநாத்3யம் நோ வித3த4த்3தி4கம் ப்3ரஹ்ம நாராயணாக்2யம் || 23
பூ4ஷாரத்நம் பு4வந வலயஸ் யாகி2லாஶ்சர்ய ரத்நம்
லீலாரத்நம் ஜலதி4 து3ஹிதுர் தே3வதா மௌளிரத்நம் |
சிந்தாரத்நம் ஜக3தி ப4ஜதாம் ஸத்ஸரோஜ த்3யுரத்நம்
கௌஸல்யாயா லஸது மம ஹ்ருந்மண்ட3லே புத்ரரத்நம் || 24
மஹா வ்யாகரணாம்போ3தி4 மந்த2மாந ஸமந்த3ரம் |
கவயந்தம் ராமகீர்த்யா ஹநுமந்த முபாஸ்மஹே || 25
முக்2யப்ராணாய பீ4மாய நமோ யஸ்ய பு4ஜாந்தரம் |
நாநாவீர ஸுவர்ணாநாம் நிகஷாஶ்மாயிதம் ப3பௌ4 || 26
ஸ்வாந்தஸ்தா2நந்த ஶய்யாய பூர்ணஜ்ஞாந மஹார்ணஸே |
உத்துங்க3 வாக்தரங்கா3ய மத்4வ து3க்3தா4ப்3த4யே நம : || 27
வால்மீகேர் கௌ3 : புநீயாந் நோ மஹீத4ர பதா3ஶ்ரயா |
யத்3 து3க்3த4 முபஜீவந்தி கவயஸ் தர்ணகா இவ || 28
ஸூக்தி ரத்நாகரே ரம்யே மூல ராமாயணார்ணவே |
விஹரந்தோ மஹீயாம்ஸ : ப்ரீயந்தாம் கு3ரவோ மம || 29
ஹயக்3ரீவ ஹயக்3ரீவ ஹயக்3ரீவேதி யோ வதே3த் |
தஸ்ய நிஸ்ஸரதே வாணீ ஜஹ்நு கந்யா ப்ரவாஹவத் || 30

### பாராயணம் முடிந்தபின்

ஸ்வஸ்தி ப்ரஜாப்4ய : பரிபாலயந்தாம்
ந்யாய்யேந மார்கே3ண மஹீம் மஹீஶா : |
கோ3ப்3ராஹ்மணேப்4ய : ஶுப4மஸ்து நித்யம்
லோகா : ஸமஸ்தா : ஸுகி2நோ ப4வந்து || 1
காலே வர்ஷது பர்ஜந்ய : ப்ருதி2வீ ஸஸ்யஶாலிநீ |
தே3ஶோயம் க்ஷோப4ரஹிதோ ப்3ராஹ்மணா : ஸந்து நிர்ப4யா : || 2
லாபஸ் தேஷாம் ஜயஸ்தேஷாம் குதஸ்தேஷாம் பராப4வ : |
யேஷாமிந்தீ3வர ஶ்யாமோ ஹ்ருத3யே ஸுப்ரதிஷ்டி2த : || 3
மங்க3ளம் கோஸலேந்த்3ராய மஹநீய கு3ணாப்3த4யே |
சக்ரவர்த்தி தநூஜாய ஸார்வபௌ4மாய மங்க3ளம் || 4

மற்றவை ஸ்ரீவைஷ்ணவர்போல் சொல்லிக்கொள்ளவும்.

---

னோடு ஒரே ஆஸனத்திலிருப்பதே ஸீதை ராமனுடன் புஷ்பக விமானத்தில் செல்வது. ஜீவன் ப்ரஹ்ம ஸ்வரூபத்தை அடைவதே ராம பட்டாபிஷேகம். மனம் சித்தம் முதலிய அந்தக்கரணங்களே ஸுக்ரீவன் அங்கதன் முதலியவர்கள். மனத்தின் ஸங்கல்பங்களே வானரக் கூட்டங்கள்; மனத்தின் ஸந்தோஷம் உத்ஸாஹம் முதலியவைகளின் நாசமே மதுவனத்தை அழித்தது. 'நான்' 'என்னுடைய'தென்ற அபிமான ஸமுத்திரத்தைத் தாண்டுவதே ராமன் சேனைகளுடன் ஸமுத்திரத்தைத் தாண்டுவது.

18. லக்ஷ்மணன், ப்ரணவத்தின் முதலாவது அக்ஷரமான அகாரத்திலிருந்துண்டான விசுவனென்ற ஸ்தூல தேஹாபிமானி. சத்ருக்னன், உகாரத்திலிருந்து உண்டான தைஜஸனென்ற ஸூக்ஷ்ம தேகாபிமானி, பரதன், மகாரத்திலிருந்துண்டான ப்ராக்ஞனென்ற காரண தேகாபிமானி. ராமசந்திரன் அர்த்தமாத்ரையின் ரூபமான ப்ரஹ்மானந்த ஸ்வரூபி. மூலப் ப்ரக்ருதியே ஸீதை. இவள் ராமனுடைய ஸந்நிதி விசேஷத்தால் ஸகல ஜகத்தையும் உண்டாக்கி, காத்து அழிக்கிருள். பரமசிவ க்ஷேத்ரமான மணிகர்ணிகையிலும் கங்கைக் கரையிலும் மரணமடையும் பிராணிகளின் வலது காதில் மஹாதேவன் ராமதாரக மந்திரத்தை மேற்சொன்ன விதமாக உபதேசித்து, அவர்களை முக்தர்களாகச் செய்கிருர்.

19. ராமதாரக மந்திரத்தில் நாராயண மந்திரமான அஷ்டாக்ஷரமும் பரமசிவ மந்திரமான பஞ்சாக்ஷரமும் கலந்திருக்கின்றன. "ர்" என்ற மெய்யெழுத்து உபாதி ஸம்பந்தமில்லாத ப்ரஹ்மத்தையும், "அ" என்ற உயிரெழுத்து மாயையையும், இவ்விரண்டின் சேர்க்கை சுத்த தேஜோமயமான ஆத்மாவிற்கு மாயா ஸம்பந்தம் நேர்ந்ததையும் காட்டுகிறது. "ர" என்றது அக்னி பீஜம், பிரகாசமென்ற அர்த்தமுள்ளது. ஸச்சிதானந்த ஸ்வரூபியும், தேஜோமயமுமான பரமாத்வைக் குறிக்கிறது. அதை உச்சரிப்பதால் ஸகல கர்மங்களும் ஸகல வாஸனைகளும் ஸகல உபாதிகளும் அழிகின்றன. "ம" என்ற அக்ஷரம் அமிருதபீஜம். காம க்ரோத மோஹங்கள் சாம்பலாய் எரிந்து கிடக்கும் ஹ்ருதய வனத்தில் ப்ரஹ்மானந்தமென்ற அமிருத வர்ஷம் பொழிகிறது; க்ஷேமமும் முக்தியும் கிடைக்கும்.

20. மஹா வாக்யத்திலுள்ள 'தத்' என்பது, 'ர'வென்றதாலும், 'த்வம்' என்பது, 'ம' என்றதாலும், 'அஸி' யென்பது இவ்விரண்டின் சேர்க்கையாலும் உபதேசிக்கப்படுகிறது. ஆனல் இந்த மஹாவாக்யம் மோக்ஷத்தை மாத்திரம் கொடுக்கும், இதில் எல்லோர்க்கும் அதிகாரமில்லை. ராமதாரக மந்திரமோ இஹபரங்களில் உத்தம பலனைக் கொடுக்கும். எல்லோர்க்கும் அதில் அதிகாரமுண்டு. ஆகையால் மஹாவாக்யத்திற்கு மேலானது. (ராமதாபினீ உபநிஷத், ராம ரஹஸ்யோபநிஷத்.)



21. ப்ரஹ்மாவான ஜாம்பவான் அகாரத்திலிருந்துண்டானர். உபேந்திரன் உகாரத்திலிருந்துண்டானவர். பரமசிவனை ஹனுமார் மகாரத்திலிருந்து உண்டானவர். சக்ரராஜாவான பிந்துவே சத்ருக்னர். சங்கமே பரதன். கலா புருஷனை ஆதிசேஷனே லக்ஷ்மணன். கலைக்கு மேலான சித்ஸ்வரூபமுள்ளவளே ஸீதை. அதற்கும் மேலான பரமபுருஷனே ராமன் (தாரஸாரோபநிஷத்.)

22. ஸீதையே மூலப்ரக்ருதி. 'ஸ், இ, த்' என்ற மூன்று அக்ஷரங்களுக்கு மாயையே அர்த்தம். இவள் சில வேளை வ்யக்தமாவாள். அத்யயனம் செய்யும்பொழுது சப்தப் ப்ரஹ்மமாய்ப் ப்ரகாசிப்பதே இவளுடைய முதலாவது ரூபம். கலப்பையின் முனையில் தோன்றி ஸீதையாய் விளங்கினதே இரண்டாவது ரூபம். அவ்யக்தமாயிருப்பதே மூன்ருவது ரூபம்.

இவளுடைய இச்சா சக்தியே ஸ்ரீதேவி பூதேவி நீளாதேவியென்று மூவகைப்படும். இந்த ஸ்ரீதேவியே லக்ஷ்மி, பூதேவி ஏழு த்வீபங்கள், ஏழு ஸமுத்திரங்களுள்ள பதினன்கு லோகங்களுக்கும் ஆதாரம், ப்ரணவ ஸ்வரூபிணி.

ஸகலப் ப்ராணிகளையும் ஔஷதிகளையும் போஷிக்கும் மேகங்களாயும் லோகங்களுக்குக் கீழேயிருக்கும் ஜலமாயும் நீளாதேவி விளங்குகிருள்.

மஹாவிஷ்ணுவின் முகத்திலிருந்து நாதமும், அதிலிருந்து பிந்துவும், அதிலிருந்து பிரணவமும், அதிலிருந்து வேதங்களுமுண்டாகின்றன. அவைகளால் அறியப்படும் ப்ரஹ்மஸ்வரூபமே க்ரியாசக்தி. இன்னும் ஸாக்ஷாத் சக்தி, போகசக்தி, வீரசக்தி முதலியவைகளைப் பற்றின விவரங்களை ஸீதோபநிஷத்தில் காண்க.

## ராமனுடைய காலம்

"இப்போது நடக்கும் சுவேதவராஹகல்பம் வைவஸ்வத மன்வந்தரம் 28-வது சதுர்யுகத்தில், இரண்டாவதான திரேதாயுகமும் மூன்ருவதான த்வாபரயுகமும் சேரும் ஸந்தியாம்சத்தில் மஹாவிஷ்ணு தசரதருக்குப் புத்திரராய் ஸ்ரீராமனென்ற திவ்ய நாமத்துடன் அவதரித்து, லோகத்தை ரக்ஷிப்பார்" என்று பாரதம் சாந்திபர்வத்தில் சொல்லப்படுகிறது.

## ராமாயணம் வேதத்தின் வியாக்யானமே

வேதத்தின் ஸாரமே ப்ரணவம்; ப்ரணவத்தின் வியாக்யானமே காயத்ரீ, ஏழுகோடி மஹா மந்திரங்களில் அது முதன்மை வாய்ந்தது. அதன் 24 அக்ஷரங்களும் ராமாயணத்தின் 24,000 சுலோகங்களில் ஒவ்வொரு ஆயிரத்தின் ஆத்யக்ஷரங்களாக மஹர்ஷியால் அமைக்கப்பட்டிருக்கின்றன.

## சுலோகக் கணக்கு

மேற்சொன்ன 24,000 சுலோகங்கள் மூலத்தில் ஒப்புக்கொள்ளப்படுகின்றன. கோவிந்தராஜரும் அவைகளுக்கே வியாக்யானம் செய்திருக்கிறார். ஆனால்கணக்கிட்டால் இப்பொழுது சுமார் 24,253 சுலோகங்கள் காணப்படுகின்றன. காரணங்கள்:—

(1) ராமாயணம் செய்து பல காலமானதால் பாடபேதத்தாலும், எழுதுகிறவர்களின் அஜாக்ரதையாலும் சுலோகங்கள் ஏறக்குறைய மாறியிருக்கலாம்.

(2) முதலில் உத்தேசித்தது அவ்வளவே; ஆனால் செய்யும்பொழுது அதிகமாயிருக்கலாம்.

(3) 24,000 என்றதற்கு, அதற்குக் குறையாமலிருக்க வேண்டுமென்றே அர்த்தம்.

(4) குறிப்பிட்ட தொகைக்குக் கொஞ்சம் மேலானாலும் அதைக் கவனிக்கக்கூடாது.

(5) ராமாயணம் 500 ஸர்க்கங்களென்றும் 24,000 சுலோகங்களென்றும் வால்மீகியே சொல்லியிருக்கிறார். ஆனால் இப்பொழுது 647 ஸர்க்கங்களும், 24,253 ச்லோகங்களும் காணப்படுகின்றன. ஆரண்ய உத்தர காண்டங்களில் சில ஸர்க்கங்கள் ப்ரக்ஷிப்தமென்று விலக்கப்பட்டிருக்கின்றன.

## ராமாயணத்தைப் படிப்பதன் கிரமமும் பயனும்

"சூதாட்டக் கதையைக் காலையிலும், பெண்களின் கதையை மத்யாஹ்னத்திலும், திருடனுடைய கதையை ராத்ரியிலும் படித்து ஸாதுக்கள் காலங்கழிக்கிறார்கள்" என்று ஒரு பழமொழியுண்டு. பாரதம், ராமாயணம், பாகவதமென்றவைகளே இங்கு குறிப்பிடப்படுகின்றன. 20 ஸர்க்கங்களுக்கு குறையாமலும் மேற்படாமலும் ஒவ்வொரு நாளும் படிக்க வேண்டுமென்று உத்தர காண்டத்தில் வால்மீகி குசலவர்களுக்கு உத்தரவிட்டிருக்கிறார். ஸுந்தர காண்டத்தைப் பாராயணம் செய்வதாலும், படித்து அர்த்தம் சொல்வதாலும், ஸப்த ஸர்க்க பாராயணம் செய்வதாலும் ஸகல பீடைகளின் நிவிருத்தியும், ஸகல அபீஷ்டங்களின் ஸித்தியும் உண்டாகும். (ஒவ்வொரு நாளும் ஏழு ஸர்க்கங்கள் வீதம் வாசித்துக்கொண்டே போய், ஆரம்பித்த இடத்தில் முடிப்பது, இதற்கு 68 நாட்கள் செல்லும்.) அல்லது, 20 ஸர்க்கங்கள் வீதம் வாசித்து, ராமஜன்ம நக்ஷத்திரமான புனர்வஸுவில் ஆரம்பித்து 25 தினங்களில் முடித்து அடுத்த புனர்வஸுக்கு முன் பட்டாபிஷேகம் செய்வதுமுண்டு.



சிராத்த காலங்களில் பாலகாண்டம் கங்காவதரண கதையைப் படிப்பதால் பிதிருக்களுக்கு விசேஷ திருப்தி. யுத்த காண்டம் ஆதித்ய ஹ்ருதயத்தைப் பாராயணம் செய்வதால் ஸகல ரோக நிவிருத்தி. ஸம்க்ஷேப ராமாயணத்தின் பாராயணத்தால் ஸப்த காண்ட பாராயணத்தின் பயன் கிடைக்கும். யுத்த காண்டம் நாகபாச விமோசன கதையைப் பாராயணம் செய்வதால் சத்ருபாதையும் கடன்களின் உபத்திரவமும் தீரும். ராமஜனனம், ஸீதா விவாஹம், பாதுகா பட்டாபிஷேகம், ஸுக்ரீவ பட்டாபிஷேகம், அங்குலீய பிரதானம், விபீஷண பட்டாபிஷேகம், ராம பட்டாபிஷேகமென்ற பாகங்கள் மங்களகரமானவை. படிப்பவர்களுக்கும் உபந்யாஸம் செய்கிறவர்களுக்கும் விசேஷ ஸன்மானம் செய்து ஏழைகளுக்கும் ஏராளமாக போஜனம் போடவேண்டும். ராமாயணத்தின் முக்கிய பாகமான சரணாகதி தர்மத்தை விபீஷண சரணாகதி புகட்டுகிறது.

ராமாயணத்தைப் படிப்பதின் பயனைப்பற்றி விசேஷமாக முன்னுரையிலும், ஸம்க்ஷேபராமாயணத்தின் முடிவிலும், யுத்த உத்தர காண்டங்களின் முடிவிலும் சொல்லப்பட்டிருக்கிறது. பாலகாண்டம் ஸ்கந்தோபாக்யானத்திற்கு அங்கேயே விசேஷமான பல ச்ருதி சொல்லப்பட்டிருக்கிறது.

## இதர ராமாயணங்கள்

(1) ராமனுடைய காலத்திலேயே பல ரிஷிகள் அவருடைய சரிதத்தைச் செய்ததாகத்தெரிகிறது. ஆனால் ச்யவனர், போதாயனர், பரத்வாஜர் முதலியவர்கள் செய்த ராமாயணம் இப்பொழுது பூர்ணமாகக் கிடைக்கவில்லை. வால்மீகி, ராமாயணத்தை எழுதின பிறகு அவை மறைந்துவிட்டன.

(2) **சதகோடி ராமாயணம்**:—வால்மீகியால் ஆதியில் நூறுகோடி சுலோகங்களால் செய்யப்பட்டது. 9-லக்ஷம் காண்டங்களும் 400-லக்ஷம் ஸர்க்கங்களுமுண்டு. தேவர்களும் தைத்யர்களும் நாகர்களும் இதைத் தங்களுடைய லோகங்களுக்குக் கொண்டுபோக முயன்றார்கள். ஆனால் பூலோகவாஸிகள் ஸம்மதிக்கவில்லை. அந்தக் கலஹத்தை மஹாவிஷ்ணு ஸமாதானம் செய்து, ராமாயணத்தை மூன்று பங்காக்கி, ஒவ்வொரு கக்ஷிக்காரருக்கும் 33-கோடி 33-லக்ஷம் 33-ஆயிரம் 333-சுலோகங்களையும் 10-அக்ஷரங்களையும் பிரித்துக் கொடுத்தார். ஒவ்வொரு பாகத்திலுள்ள 10-அக்ஷரங்களடங்கிய மூன்று மந்த்ரங்களை லக்ஷ்மி, ஆதிசேஷன், கருடனென்பவர்களுக்கு உபதேசித்தார். அவை முறையே வைகுண்டத்தில் தேவர்களுக்கும் பாதாளத்தில் நாகர்களுக்கும், பூலோகவாஸிகளுக்கும் உபதேசிக்கப்பட்டன. முடிவில் மிகுந்த 2-அக்ஷரங்களைப் பரமசிவன் எடுத்துக்கொண்டார். அதே 'ராம' என்ற தாரக மந்திரம்.

பூலோகத்தின்பாகம் ஏழு த்வீபங்களுக்கும் பிரிக்கப்பட்டது. நான்கு சுலோகங்கள் மிகுந்தன. அவை பிரஹ்மாவால் எடுத்துக் கொள்ளப்பட்டன. அவைகளின் தாத்பரியம்:—"ஜகத் உண்டாவதற்குமுன் நான் ஒரு

வனே இருந்தேன். ஸத் அஸத் என்றவைகளுக்கு மேலாக வேறில்லை. பிறகு எது மிகுந்ததோ அதே நான். தபஸ் தேஜஸ் என்றவைகளைப்போல் ஆத்மாவிடத்தில் எது தோன்றுதோ, விஷ்ணுவை விட்டு எது வேறாகத் தோன்றுமோ அதுவே மாயை. பல சரீரங்களில் மஹாபூதங்கள் எப்படிக் கலந்திருக்கின்றனவோ, அப்படி அவைகளில் நான் கலந்திருப்பதில்லை. எது இருந்தால் பிரபஞ்சம் பிரகாசிக்குமோ, எது இல்லாவிட்டால் அது அழியுமோ அதே பரதத்வம்.'' மேற்சொன்னதே ஞானத்தின் ஸாரம். ஜம்பூ த்வீபத்திற்குக் கிடைத்த பாகத்தை அதிலுள்ள 9 வர்ஷங்களுக்குப் பிரித்தார்கள். இப்படி மிகுந்த 'ஸ்ரீ' என்ற அக்ஷரம் அவைகளுக்குப் பொதுவாக கொடுக்கப்பட்டது. பிறகு வேதவியாஸர் இந்த த்வாபர யுகத்தில் நமது பாரத வர்ஷத்திற்குப் பாகமாகக் கிடைத்த ராமாயணத்தை ஆதாரமாக்கி தான் 17 புராணங்களையும் உப புராணங்களையும் பாரதத்தையும் செய்தார். அப்படியும் அவருடைய மனம் ஸமாதானமில்லாமல் கங்கைக் கரையில் உட்கார்ந்திருக்கையில், நாரதர் அங்கே வந்து, மேற்சொன்ன நான்கு சுலோகங்களை உபதேசித்தார். அதனால் வியாஸருடைய மனம் சாந்தமாக, அந்த அர்த்தத்தையே பாகவத புராணமாகச் செய்தார். பிற்காலத்தில் வழங்கின ஸகல லௌகிக வைதிக கிரந்தங்களும் இந்தச் சதகோடி ராமாயணத்தையே ஆதாரமாகக் கொண்டவை. பாரதத்திற்கும் இப்படி விஸ்தாரமாகவும் ஸங்க்ரஹமாகவும் ரூபம் சொல்லப்படுகிறது. [ஆனந்த ராமாயணம்]

(3) **ஆனந்த ராமாயணம்:**—இதில் 9 காண்டங்களும் 109 ஸர்க்கங்களும் 12,252 சுலோகங்களுமுண்டு; வால்மீகி ராமாயணகதை ஸாரகாண்டத்திலும்; ராமனுடைய தீர்த்த யாத்திரை யாத்ரா காண்டத்திலும்; அவர் செய்த அசுவமேதம் முதலிய யாகங்கள், அவருடைய 108 நாமங்கள் யாக காண்டத்திலும்; ராமனுடைய ராஜ்யாதிகாரம், ராமஸ்தவ்ராஜம் விலாஸ காண்டத்திலும்; ராம ரக்ஷை, ஸீதையைக் காட்டிற்கனுப்பினது, குசலவர்களின் பிறப்பு, ராமன் அவர்களுடன் யுத்தம் செய்தது, ஸீதையைச் சேர்த்துக் கொண்டது ஜன்ம காண்டத்திலும்; மூலகாஸுரவதம், ராமனுடைய திக்விஜயம், அவருடைய 1008 திருநாமங்கள், வால்மீகியின் பூர்வ சரித்திரம் ராஜ்ய காண்டத்திலும்; லகுராமாயணம், ராமனுடைய பூஜை உபாஸனை முதலியவைகளின் விதி, ராமதோபத்ர சக்ரம், லக்ஷம் ராம நாமம் செய்த விரதத்தின் பூர்த்தி. ஆஞ்ஜநேய ஸீதா லக்ஷ்மண பரதசத்ருக்னர்களின் கவசம், ஹனுமத்பதாகை, ஆனந்த ராமாயண ஸங்க்ரம் மனோஹர காண்டத்திலும்; ராமனுக்கும் சந்திரவம்சத்து ராஜாக்களுக்கும் நடந்த யுத்தம் பூர்ண காண்டத்திலும் சொல்லப்படுகின்றன. இது சதகோடி ராமாயணத்தின் பாகம்.

(4) **அத்யாத்ம ராமாயணம்:**—இது பிரஹ்மாண்ட புராணத்தில் அடங்கினதென்று சொல்லப்படுகிறது. ஆனால் அந்தப் புராணமோ வாயுவால் சொல்லப்பட்டது; வால்மீகியால் செய்யப்பட்டதல்ல. பவிஷ்யத் புராணத்தில், ராமாநந்தஸ்வாமிகள் பரமசிவனுடைய வரத்தாலும், கிருஷ்ண சைதன்யரின் கட்டளையாலும் அத்யாத்ம ராமாயணத்தைச் செய்தாரென்று தெரிகிறது. இந்த ராமாயணம் பார்வதிக்குப் பரமேச்வர உபதேசிக்கப்பட்டு, வால்மீகியால் சொல்லப்படாத பல உள்ளுறைப் பொருள்களை எடுத்துச் சொல்லுகிறது.



(5) **அத்புத ராமாயணம்:**—வால்மீகியால் பரத்வாஜனென்ற சிஷ்யனுக்கு உபதேசிக்கப்பட்டது. 27 அத்யாயங்களுள்ளது. ராமன் ஸீதை என்றவர்களின் அவதாரங்களுக்குப் பல காரணங்களும், ஆஞ்சநேயருக்கு ராமன் செய்த உபதேசமும், ஸஹஸ்ரமுக ராவணனை ஸீதை ஸம்ஹாரம் செய்தது முதலிய ஆச்சரியகரமான விஷயங்களும் வர்ணிக்கப்படுகின்றன.

(6) **அக்னிவேச்ய ராமாயணம்:**—ராமாயணத்தின் முக்கியமான விஷயங்களை வருஷம் மாதம் திதிப்படி பஞ்சாங்க ரூபமாகக் குறிக்கும் சில சுலோகங்களே நமக்குக் கிடைத்திருக்கின்றன.

(7) **ஸங்க்ரஹ ராமாயணம்:**—நாராயண பண்டிதரால் செய்யப்பட்டது. வால்மீகி ராமாயணத்திற்கு அதிக பேதமில்லை.

(8) **மூல ராமாயணம்:**—இது த்வைத கிரந்தங்களில் அடிக்கடி சொல்லப்பட்டாலும், இதன் ஸ்வரூபம் இன்னதென்றே தெரியவில்லை.

(9) **யோகவாஸிஷ்ட ராமாயணம்:**—அர்ஜுனனுக்கு யுத்த ஸமயத்தில் தர்ம சந்தேகம் உண்டானதுபோல், ராமன் வித்யாப்பியாஸம் செய்து, தீர்த்தயாத்திரையிலிருந்து திரும்பிவந்தவுடன், யாவற்றிலும் வெறுப்புண்டு ஒன்றையும் கவனிக்காமல் கவலையில் ஆழ்ந்திருந்தார். அப்பொழுது விசுவாமித்திர மஹர்ஷி அவரை யாக ஸம்ரக்ஷணத்திற்காக யாசிக்க வந்தார். ராமனுடைய ஸ்திதியைப்பற்றித் தசரதர் அவரிடத்தில் முறையிட அவர் ராமனைத் தருவித்து விசாரித்தார். ராமன் தன் கொள்கையை விஸ்தாரமாக எடுத்துரைத்தார். விச்வாமித்திரர் அதைக் கேட்டு அங்கிருந்த வஸிஷ்டரைப் பார்த்து, "முன்பு நாமிருவரும் விரோதித்துக் கொண்டிருந்தபொழுது பிரஹ்மா நமக்குத் தத்வத்தை உபதேசஞ் செய்து காமக்குரோதங்களை விலக்கித் தெளிவான ஞானத்தைக் கொடுத்தாரல்லவா? அந்த அருமையான விஷயங்களை இப்பொழுது ராமனுக்கு உபதேசிக்கலாம்" என்றார். அதே யோகவாஸிஷ்டமென்றும் ஞான வாஸிஷ்ட மென்றும் வழங்குகிறது. இதுவும் வால்மீகியால் பரத்வாஜருக்குச் சொல்லப்பட்டது.

(10) **மற்ற ராமாயணங்கள்:**—பரத்வாஜமஹரிஷி, ச்யவனர், போதாயனர், பார்க்கவர், மாருதி, முதலியவர்களால் செய்யப்பட்ட ராமாயணங்களுண்டென்று கேள்விப்படுகிறோம். அவை கிடைப்பதரிது. மஹா நாடகமென்று வழங்கும் கிரந்தத்திலுள்ள சமத்காரமான சுலோகங்கள் ஆஞ்சநேயரால் செய்யப்பட்டன வென்று சொல்லப்படுகிறது.

(11) **ஸ்ரீதர ராமாயணம்:**—பாகவதத்திற்கு உரை செய்த ஸ்ரீதர ஸ்வாமிகளென்று இவரைச் சிலர் சொல்வதுண்டு. வால்மீகியால் சொல்லப்

படாததும், கர்ண பரம்பரையாகப் பால்ய முதல் நாம் பெரியோர்களிடத்தி லிருந்து கேட்டதுமான பல அரிய கதைகள், ஆனந்த ராமாயணத்திலும் இதிலும் காணப்படுகின்றன. ஸத்குரு ஸ்ரீ த்யாகராஜஸ்வாமிகளைப் போன்ற பெரியவர்களால் இவை ஒப்புக்கொள்ளப்பட்டிருப்பதே நமக்குப் போதுமான ப்ரமாணம்.

*(12)* **மந்த்ர ராமாயணம்** :–லக்ஷ்மணார்யரால் செய்யப்பட்டது. நாரதர் ராம சரிதத்தை வால்மீகிக்கு 156 ரிக்வேத மந்திரங்களால் உபதேசித்தா ரென்றும், அவைகளை எல்லோரும் படிக்க அதிகாரமில்லாததால், வால்மீகியோ அவருடைய சிஷ்யர்களோ பிறகு அவைகளை சுலோகமாகச் செய்தாரென்றும், பரம்பரைக் கதை. மேற்சொன்ன மந்திரங்களை, யாகம் ப்ரஹ்மவித்யை, ராமாயணமென்றவைகளுக்கு அனுகுணமாக வியாக் யானம் செய்திருக்கிறார். இது வெகு அருமையான கிரந்தம். கவனிக்கத் தகுந்தது.

*(13)* **புராணங்கள்** :—இவை ஒவ்வொன்றிலும் பாரதத்திலும் ராமா யணக் கதை சில சில மாறுதல்களுடன் காணப்படுகிறது. பத்ம புராணத் தில் பலபுதிய கதைகளும் சென்ற கல்பத்தில் நடந்த ராமாவதாரத்தின், சரித்திரமும் சொல்லப்படுகிறது.

*(14)* **ரகுவம்சம்** :—காளிதாஸனால் செய்யப்பட்டது. 19 ஸர்க்கங்க ளுடன் திடீரென்று முடிகிறது. ஸூரியவம்ச சக்கரவர்த்திகளில் திலீபன் முதல் அக்னிவர்ணன் வரையிலுள்ள அரசர்களின் சரித்திரங்கள் சொல்லப்படுகின்றன. இதில் பல அம்சங்கள் வால்மீகி ராமாயணத்தில் காணப்படவில்லை. முன்னிருந்த பெரியோர்களால் செய்யப்பட்ட பல சரித்திரங்களை உபயோகித்துத் தான் எழுதியிருப்பதாகக் காளிதாஸன் ஸ்பஷ்டமாகச் சொல்லுகிறான். மேலும், ராம சரிதத்தில் பல இடங்களில் வால்மீகியின் வழி மாற்றப்பட்டிருக்கிறது. தென்னாட்டில் வடமொழியைக் கற்பவர்கள் இதையே முதலில் படிப்பதுண்டு.

*(15)* **பட்டிகாவ்யம்** :—(ராவணவதம்) வலபி நகரத்தில் ஆண்டுவந்த தரஸேனனுடைய ஸதஸில் விளங்கின பட்டிகவியால் செய்யப்பட்டது. 22 ஸர்க்கங்களுள்ளது. மஹா காவ்யம். ஒவ்வொரு ஸர்க்கத்திலும் ஒவ்வொரு வியாகரணப் பிரயோகம் விளக்கப்பட்டிருக்கிறது.

*(16)* **கம்பராமாயணம்** :—தெய்வப் புலமை வாய்ந்த கம்ப நாட்டாழ் வார் பாடினது. அவர் பல புராணங்களையும் ராமசரிதங்களையும் பரிசோதித்து இதைச் செய்திருக்கிறார். வால்மீகிக்கும் அவருக்கும் பல விடங்களில் வேற்றுமை காணப்படுகிறது. வடமொழியில் வால்மீகி ராமாயணத்திற்குள்ள பெருமை தென்மொழியில் இதற்குண்டு.

*(17)* **ராமநாடகம்** :—சீர்காழி அருணாசலக் கவிராயரால் ஸுமார் 250 வருஷங்களுக்கு முன் பாடப்பட்டது. தரு, திபதை, கண்ணி, விருத்தம், தரடி, கீர்த்தனை முதலிய பலவகைகளாக கேட்பவருடைய மனத்தைக் கவரும் வண்ணம் செய்யப்பட்டிருக்கிறது, தென்னாட்டில் வெகு பிரஸித்தி பெற்றது.



*(18)* **பாஸ்கர ராமாயணம்** :—இது ஆந்த்ரபாஷையில் பாஸ்கர கவியால் செய்யப்பட்டது. அரிய கல்பனைகளும் விருத்தங்களும் பதச் சேர்க்கையும் பொருந்தினது. ஆயினும் சில விடங்களில் கடினமான பதப் பிரயோகங்களும், சிக்கலான கல்பனைகளும் காணப்படுகின்றன.

*(19)* **துளஸீதாஸ் ராமாயணம்** :—அல்லது ராமசரித்ர மானஸம். இது புஸுண்ட மஹர்ஷியால் கருடனுக்கும் யாக்ஞவல்கியருக்கும் சொல்லப்பட்டது. யாக்ஞவல்கியரிடத்திலிருந்து பரத்வாஜரும் அவருடைய சிஷ்ய பரம்பரையாய்த் துளஸிதாஸரும் இதைப் பெற்றார்கள். இவருடைய காலம் கி. பி. 1575—1624. ஹஸ்தின புரத்தில் பிறந்து காசியில் வஸித்தவர். மொகல் சக்கரவர்த்தியான ஷாஜஹானால் ஆதரிக்கப் பட்டவர். ஹிந்தி பாஷையில் இது ஏழு காண்டங்களாக எழுதப்பட்டது. பாலகாண்டம் விஸ்தாரமானது. உத்தரகாண்டத்தில் புஸுண்ட மஹர்ஷி யின் கதையும் பக்தியின் லக்ஷணமும் சொல்லப்படுகின்றன.

*(20)* **ஜைன ராமாயணம்** :—ஹேமசந்திராசார்ய ரென்ற ஜைன கவியால் எழுதப்பட்ட த்ரிஷஷ்டிசலாக புருஷ சரித்திரமென்றதில் 7-வது பாகம் 10-வது அத்யாயம். வால்மீகி ராமாயண கதைக்கும் இதற்கும் ஸம்பந்தம் ஸ்வல்பமே; இது மாகதி பாஷையில் எழுதப்பட்டது. கும்ப கோணம் பாரதாசார்யரென்ற சாமண்ணாசார்யரால் வெகுகாலத்திற்கு முன்பு ஸம்ஸ்கிருதத்தில் சுலோக ரூபமாய் மொழி பெயர்க்கப்பட்டது. அந்த ஏட்டுப் பிரதியிலிருந்து என்னால் தமிழில் எழுதப்பட்டது.

*(21)* **பௌத்த ராமாயணம்** :—கௌதம புத்த பகவானால் அருளிச் செய்யப்பட்ட தர்மபதமென்ற நீதி கிரந்தத்திற்கு புத்தகோஷர் எழுதின உரையிலும், அவர் ஸூத்திர நிபாதமென்ற வேறொரு கிரந்தத்திற்கு எழுதின உரையிலும், மஹா வம்சமென்ற சரிதத்திலும் புத்தருடைய பூர்வஜென்ம கதைகளில் ஒன்றான தசரத ஜாதகத்திலும் ராமசரிதம் வெகு விசித்திரமாகச் சொல்லப்படுகிறது. (இந்த பௌத்த, ஜைன ராமாயணங்கள் சிறு நூலாகப் பதிப்பிக்கப்பட்டிருக்கின்றன.)

*(22)* **மொல்லராமாயணம்** :—மொல்ல என்ற ஒரு ஸ்த்ரீ ஆந்திர பாஷையில் செய்த ராமாயணமும் வழங்குகிறது.

## ராமாயண ஸம்பந்தமான நூல்கள்

| நூலின் பெயர் | கர்த்தா |
|---|---|
| 1. ப்ரதிரகுவம்சம் | அதிராத்ரயஜ்வா |
| 2. ராகவபாண்டவீயம் | கவிராஜன் |

(இதிலுள்ள சுலோகங்கள் ராமனுக்கும் அர்ஜுனனுக்கும் பொருந்தும்படி சிலேஷையாய்ச் செய்யப்பட்டிருக்கிறது. ராவணார் ஜுனீயமென்ற காவியமும் இப்படியே).

| | நூலின் பெயர் | கர்த்தா |
|---|---|---|
| 3. | ராமாயண மஞ்சரி | க்ஷேமேந்திரன் |
| 4. | ராம சதகம் | ஸோமேசுவரன் |
| 5. | ரகுவீர கத்யம் | வேதாந்ததேசிகர் |
| 6. | ராமசந்திரோதயம் | வெங்கடாசார்யர் |
| 7. | மஹாவீரசரித்ரம் | பவபூதி |
| 8. | உத்தரராம சரித்ரம் | ஷை |
| 9. | பாலராமாயணம் | ராஜசேகரன் |
| 10. | அனர்க்கராகவம் | முராரி |
| 11. | ப்ரஸன்னராகவம் | ஜயதேவர் |
| 12. | உன்மத்தராகவம் | பாஸ்கரன் |
| 13. | உதாரராகவம் | ... ... |
| 14. | மஹாநாடகம் | தாமோதரமிச்ரன் |
| 15. | அபிராமமணி | ஸுந்தரமிச்ரன் |
| 16. | ஜானகீபரிணயம் | ராமபத்ரதீக்ஷிதர், சித்ரகவி, நாராயணபட்டர், ஸீதாராமன் |
| 17. | ராமபாண ஸ்தவம் | ராமபத்ர தீக்ஷிதர் |
| 18. | குசகுமுத்வதீயம் | அதிராத்ரயஜ்வா |
| 19. | அத்புததர்ப்பணம் | மஹாதேவன் |
| 20. | ஹம்ஸஸந்தேசம் | வேதாந்த தேசிகர் |
| 21. | ராகவவிலாஸம் | விச்வநாதகவிராஜர் |
| 22. | ராமாயண சம்பு | போஜராஜன் |
| 23. | ஆர்யராமாயணம் | மோரோபந்தர் |
| 24. | நிரோஷ்டராமாயணம் | வாமனபண்டிதர் |
| 25. | அபிநவராகவானந்தம் | மணிகா |
| 26. | அத்புதராகவம் | வனமாலீ |
| 27. | அஹல்யா ஸங்க்ரந்தனம் | ... ... |
| 28. | அமோகராகவம் | ... ... |
| 29. | ஆனந்தராகவம் | சூடாமணி |
| 30. | அச்வமேதம் | ஸுமதி ஜிதாமித்ரமல்லதேவர் |
| 31. | வாலிவதம் (ப்ரேங்கணம்) | ... ... |
| 32. | தூதாங்கத நாடகம் | ஸுபடன் |
| 33. | கங்காவதரணம் | ... ... |
| 34. | இந்துமதி பரிணயம் | ... ... |
| 35. | ஜாமதக்னி விஜயம் | ... ... |
| 36. | ஜானகீ கீதம் | ஹரி |
| 37. | ஜானகீராகவம் | ... ... |
| 38. | குசலவ விஜயம் | வெங்கடகிருஷ்ண தீக்ஷிதர் |
| 39. | ராகவாப்யுதயம் | பகவந்தராய், கங்காதர, ராமசந்த்ர, வெங்கடேசுவரர் |



| | | |
|---|---|---|
| 40. | ரகுநாத விலாஸம் | யக்ஞநாராயணன் |
| 41. | ரகுவிலாஸம் | ராமசந்த்ரன் |
| 42. | ராமாப்யுதயம் | ராமதேவன், யசோவர்மன் |
| 43. | ராமாபினந்தம் | ... ... |
| 44. | ராமசந்த்ரநாடகம் | ... ... |
| 45. | ராமசரிதம் | ... ... |
| 46. | ராமநாடகம் | ... ... |
| 47. | ராமாயண நாடகம் | ஸோமேச்வரதேவன் |
| 48. | ராமோதயம் | ஸ்ரீவத்ஸலாஞ்சனன் |
| 49. | ஸேதுபந்தம் | காளிதாஸன் |
| 50. | ஸீதானந்தம் | தாதார்யன் |
| 51. | ஸீதாராகவம் | ... ... |
| 52. | ஸீதாஸ்வயம்வரம் | ஹனுமான் |
| 53. | ஸீதாவிவாஹம் | ... ... |
| 54. | உதாத்தராகவம் | மயூரஜன் |
| 55. | விபீஷண நிர்பர்த்ஸனங்க | ... ... |

## ராமாயண விமரிசனம்

(1) **வீபர் பண்டிதர்:**—ஆரியர்கள் தங்களுடைய நாகரீகத்தை இந்தியாவிற்குத் தெற்கிலுள்ள பாகங்களில் பரவச்செய்த விருத்தாந்தமே ராமாயணக் கதை மூலமாகச் சொல்லப்படுகிறது. மற்றதெல்லாம் கற்பனையே. ரிக்வேதத்திலும் கிருஹ்யஸூத்திரத்திலும் வயல்களுக்கு தேவதையாக பூஜிக்கப்படும் சக்தியே ஸீதையென்று சொல்லப்படுகிறது. பயிர்த்தொழிலைத் தென் தேசங்களில் பரவச் செய்யும் நாகரீகமுள்ள ஜாதியே ராமனென்று குறிப்பிடப்படுகிறது. பலராமனுக்கு கலப்பை ஆயுதமாகச் சொல்லப்படுவதற்கு இதே காரணம். பிறகு இருவரும் வேறாகப் பிரிக்கப்பட்டார்கள். நாகரீகமற்ற ஜனங்களே குரங்குகளும் ராக்ஷஸர்களுமாகச் சொல்லப்படுகிறார்கள். தற்காலத்திலும் மனிதர்களைக் கொன்று தின்னும் ஜாதிகளிருக்கிறார்கள்.

ஸீதை பூமியிலிருந்து தோன்றிப் பூமியில் மறைந்தாளெனப்படுவதும் இந்தக் கொள்கையை வலுப்படுத்துகிறது.

(2) ரமேச சந்த்ர தத்த ரென்பவர் இந்தக் கொள்கையையே ஆதரிக்கிறார். ரிக்வேதத்தில் முக்ய தேவதையாகக் கொண்டாடப்பட்டு, பயிர்கள் செழிக்காமல் மழையைத் தடுக்கும் விருத்ரன் முதலிய அஸுரர்களை யுத்தம் செய்து கொன்ற இந்திரனே ராமனென்று இந்தக் காவியத்தில் சொல்லப்படுகிறது. வைதிக தேவதைகள் பிரஸித்தி குறைந்து பௌராணிக தேவதைகளான விஷ்ணு ருத்ராதிகள் மேலோங்கின பிறகு இந்த விஷ்ணுவையே ராமனாகச் சொல்லப்படுகிறது.

(3) **ஜாகோபி பண்டிதர்:**—மேற்சொன்ன வைதிக கதையே ராமாயணத்திற்கு ஆதாரமென்று முடிவு செய்கிறார். ஜனகர் பூமியை உழுத

பொழுது கலப்பையின் நுனியில் ஸீதை தோன்றினதும், ராவணனுடைய புத்திரனுக்கு இந்திரஜித்து அல்லது இந்திரசத்ருவென்று வைத்த பெயரும், ரிக்வேதத்தில் இந்திரனுக்குச் சத்ருவென்று விருத்ராஸுரனுக்கு வைத்த பெயரும் ஒன்ருயிருப்பதும்; இந்திரனுடைய பசுக்களைத் திருடிக்கொண்டு போன பணிக்ளென்ற அஸுரர்களுடன் இந்திரன் யுத்தம் செய்து பசுக்களைத் திருப்பிக் கொண்டுவந்ததும், வாயுதேவதையின் புத்திரனை மாருதியை ராமன் ஸஹாயமாய்க் கொண்டதுபோல் இந்திரன் விருத்ராஸுர யுத்தத்தில் மருத்துகளை உதவியாகக் கொண்டதும், இந்திரனுடைய பசுக்களை அவைகளின் அடிச்சுவடுகளால் தொடர்ந்து ரஸமென்ற ஸமுத்திரத்தைத் தாண்டிச் சென்று கண்டுபிடித்து இந்திரனுக்குச் சொன்ன ஸரமை என்ற தேவலோகத்து நாயின் பெயரும், ஸீதையை அசோகவனத்தில் அடிக்கடி தேற்றின ஸரமை என்ற ராக்ஷஸியின் பெயரும் ஒன்ருயிருப்பதும் இந்தக் கொள்கைக்கு ஆதாரமாகச் சொல்லப்படுகின்றன.

(4) காசியில் வசிக்கும் பண்டிதரான கோவிந்ததாஸென்பவர், சென்ற வர்ஷத்தில் இயற்றின ஹிந்துமதமென்ற நூலில் ராமாயணத்தைப் பற்றி எழுதுகிருர்:—

(i) வரணையும் கங்கையும் காசியில் சேருமிடத்தில் 'வேதாந்திகா பாக்' என்ற ஆசிரமத்தில் கவீந்த்ராசார்ய ஸரஸ்வதி என்றவருடைய புஸ்தகசாலையில் அக்னிவேச்ய, சுக, அத்யாத்ம, மிருகண்டு, வாஸிஷ்ட, ஸங்க்ரஹ, காகபுஸுண்டி, வியாஸ, வால்மீகிக்ருத, நாடகராமாயண, விபீஷண, ப்ரஹ்ம, சிவ, அகஸ்த்ய, சேஷ, ஆகம, கர்ம, ஸ்கந்த, பௌலஸ்த்ய, அருண, பரத, தர்ம, அத்புத, காயத்ரீ யென்ற 23 ராமாயணங்கள் இருந்ததாகச் சொல்லுகிருர்.

(ii) சரித்திரமென்ற பதத்திற்குத் தற்காலத்தில் செய்யும் அர்த்தத்தின்படி ராமாயணம் சரித்திரமல்ல. கேவலம் காவியமே.

(iii தற்காலத்தில் நமக்கு கிடைத்திருக்கும் ராமாயண பாடம் வால்மீகியால் சொல்லப்பட்ட ராமாயண பாடமல்ல. அநேக மாறுதல்களும் பரஸ்பர விரோதங்களும், கதா புருஷர்களின் ஸ்வபாவத்திற்கொவ்வாத குறைகளும் காணப்படுகின்றன.

(iv) வால்மீகியின் காலத்தில் நாடு நகரம், ஏழை தனிகர், பண்டிதன் பாமரன் எல்லோரும் கேட்டனுபவிக்கக்கூடிய பொதுவான ஜனங்களின் பாஷையில் பாடப்பட்ட ராமாயணம், தற்காலத்தில் காணப்படும் ஸம்ஸ்கிருத பாஷையில் செய்யப்படவில்லை. அதற்குப் பிறகு அந்தந்த காலங்களில் வழங்கின பாஷைகளில் பலரால் மாற்றியெழுதப்பட்டிருக்கிறது. அப்பொழுது சில கதா பேதங்களும் மாற்றி கலக்கப்பட்டிருக்கின்றன.

**ஸி. ஆர். ஸ்ரீ.**

---

# பால காண்டம்

## விஷய அட்டவணை

# ஸ்ரீமத் ராமாயண க்ரந்த பூஜை

கிழக்கு முகமாகவோ, வடக்கு முகமாகவோ சுத்தமான ஆஸனத்தில் உட்கார்ந்து, எதிரில் சிக்குப் பலகை, மணைபோன்ற உயர்ந்த இடத்தில் ஸ்ரீமத் ராமாயண க்ரந்தத்தை வைத்து,

அதற்கு எதிரில் ஹநுமாருக்கு ஒரு மணையை அமைத்து, அதன்மீது புஷ்பம், பழம், தாம்பூலம் இவைகளை ஸமர்ப்பித்து,

ஸ்ரீ ராமாயண தியான சுலோகங்களை பக்தியுடன் படித்து, பிறகு தன் நக்ஷத்திரம், ராசி, பெயர் இவைகளைச் சொல்லி, தான் கோரிய பலனைச் சொல்லிய பிறகு, "ஸ்ரீமத் ராமாயண பாராயணமஹம் கரிஷ்யே" என்று ஸங்கல்பித்து,

"தத3ங்க3ம் ஸ்ரீமத்3ராமாயண க்3ரந்தோ2பரி ஸ்ரீஸீதா லக்ஷ்மண ப4ரத ஶத்ருக்4ந ஹநுமத் ஸமேத ஸ்ரீராமசந்த்3ர ப்ரபோ4: பூஜாம் கரிஷ்யே" என்று உச்சரித்து,

பாராயணம் ஆரம்பிக்கும் தினத்தன்று,

"பாராயணஸ்ய நிர்விக்4நேந பரிஸமாப்த்யர்த2ம் ஆதௌ3 விக்4நேஶ்வர பூஜாம் கரிஷ்யே"

என்று ஸங்கல்பித்து, விஷ்வக்ஸேநருக்கு (விக்நேஶ்வரருக்கு) அர்க்ய பாத்யாதிகளை ஸமர்பித்து உத்வாஸநம் செய்யவும்,

ஸ்ரீமத் ராமாயண க்ரந்தத்தின்மீது கீழே குறிப்பிட்டபடி ஷோடஶோபசார பூஜையைச் செய்யவேண்டியது :

### பூஜாக்ரமம்

கையில் அக்ஷதையை எடுத்துக்கொண்டு, "அஸ்மிந் க்3ரந்தே3 ஸ்ரீஸீதா லக்ஷ்மண ப4ரதஶத்ருக்4ந ஹநுமத் ஸமேத ஸ்ரீராமசந்த்3ரம் த்4யாயாமி, ஆவாஹயாமி, ஆஸநம் ஸமர்பயாமி, அர்க்4யம் ஸமர்பயாமி, பாத3யோ: பாத்3யம் ஸமர்பயாமி, ஆசமநீயம் ஸமர்பயாமி, ஸ்நாநம் ஸமர்பயாமி, ஸ்நாநாநந்தரம் ஆசமநீயம் ஸமர்பயாமி, வஸ்த்ரார்த2ம் அக்ஷதாந் ஸமர்பயாமி, யஜ்ஞோபவீதார்த2ம் அக்ஷதாந் ஸமர்பயாமி, உத்தரீயார்த2ம் அக்ஷதாந் ஸமர்பயாமி, க3ந்தா4ந் தா4ரயாமி, புஷ்பாணி ஸமர்பயாமி, தூ4பமாக்4ராபயாமி, தீ3பம் த3ர்ஶயாமி, கர்பூர நீராஜநம் ஸமர்பயாமி" என்று அந்தந்த வஸ்துக்களை ஸமர்ப்பித்து,

பிறகு, துளஸி, புஷ்பம், அக்ஷதை, குங்குமம் இவைகளால் தம் சக்திக்குத் தக்கவாறு ஸ்ரீ ஹநுமாந், ஸ்ரீ ஸீதை, ஸ்ரீராமர் இவ்வரிசையில் அஷ்டோத்தர சத நாமாவளிகளால் அர்ச்சனை செய்து, நிவேதநமும் கர்ப்பூர ஹாரதியும் செய்த பிறகு,

தாம் எடுத்துக்கொண்ட பாராயண முறைப்படி பாராயணம் செய்ய வேண்டும்.

### பாராயண முடிவில்

தத்தம் ஸம்பிரதாயப்படி மங்கள சுலோகங்களைப் படித்து, நிவேதநம் செய்து, ஆரத்தி எடுத்து, ஸாஷ்டாங்கமாக நமஸ்கரித்து, பூஜை செய்த அக்ஷதை, தீர்த்தம் இவைகளை சிரஸில் புரோக்ஷித்துக்கொண்டு, பிரஸாதம் ஸ்வீகரித்து, மற்றவர்களுக்கும் விநியோகம் செய்யவும்.

---



ஸ்ரீராமஜயம்

ஸ்ரீ ராமசந்த்ர பரப்ரஹ்மணே நம :

# ஸ்ரீமத் வால்மீகி ராமாயணம்

## பால காண்டம்

### ஸர்க்கம் 1

நாரதர் வால்மீகிக்குச் சுருக்கமாகச் சொன்ன

## ஸம்க்ஷேப ராமாயணம்

தபஸ் ஸ்வாத்4யாய நிரதம் தபஸ்வீ வாக்3விதா3ம் வரம் |
நாரத3ம் பரிபப்ரச்ச2 வால்மீகிர் முநி புங்க3வம் || (1)

#### அவதாரிகை

இப்பொழுது நடக்கும் சுவேதவராஹ கல்பத்தில், வைவஸ்வத மந்வந்தரத்தில், இருபத்தெட்டாவது சதுர் யுகத்தில், திரேதா யுகத்தின் முடிவில், வால்மீகி என்ற ஒரு மஹரிஷி இருந்தார். அவர் எண்ணிறந்த வருஷங்களாகக் கடுந்தவம் செய்து, பகவானுடைய கிருபையைப் பெற்றவர். அவருடைய ஆசிரமத்திற்கு ஒரு நாள் பிரஹ்மாவின் புத்திரரான நாரதர் பகவானுடைய கட்டளையால் வந்தார்.

---

நாரதர் தவத்திலும் வேதாத்யயனத்திலும் நீங்காத் ப்ரீதியுள்ளவர்; தேவரிஷிகளுக்குள் சிரேஷ்டர்; பேசும் திறமை வாய்ந்தவர்களுக்குள் மேலானவர்; சப்தஸ்வரூபமான பிரஹ்மத்தின் தத்துவத்தை அறிந்தவர்களுக்குள் முதலானவர். அவரை வால்மீகி விதிப்படி அர்க்கிய பாத்தியங்களால் உபசரித்து, ஆஸனம் கொடுத்து, அவர் ஸுகமாய் உட்கார்ந்த பிறகு, தமக்கு வெகு காலமாய் உள்ள ஒரு ஸந்தேகத்தைக் கேட்டார்.

"இப்பொழுது இந்த லோகத்திலுள்ளவர்களுக்குள் ஸகல கல்யாண குணங்களும் பொருந்தினவர் யார்? திவ்ய அஸ்திர சஸ்திரங்களின் பலத்தால் சத்துருக்களை ஜயிக்கும் ஸாமர்த்தியம் உடையவர் யார்? ச்ருதி ஸ்மிருதிகளில் உபதேசிக்கப்பட்ட தர்மங்களின் ரஹஸ்யத்தை அறிந்தவர் யார்? பிறர் (தமக்குச் செய்த அபகாரங்களை முற்றும் மறந்து, அவர்கள்) செய்த அல்ப உபகாரத்தையே பெரியதாக நினைத்து ஸந்தோஷிப்பவர்

யார்? ஆபத்துக் காலங்களிலும் தம் வர்ணாசிரம தர்மங்களை விடாதவர் யார்? நல்ல ஆசாரமுள்ளவர் யார்? எந்த ஸமயத்திலும் தாம் கேட்டபடி, பார்த்தபடி ஸத்தியத்தையே சொல்லுகிறவர் யார்? ஸகல ஜனங்களுக்கும் இஹத்திலும் பரத்திலும் அனுகூலமான காரியத்தையே செய்கிறவரும் செய்விக்கிறவரும் யார்? ஆத்மா, அனாத்மாக்களின் உண்மையையும் பேதத்தையும் அறிந்தவர் யார்? லௌகிக வியவஹாரங்களிலும் பிரஜைகளை ஸந்தோஷப்படுத்துவதிலும் ஸமர்த்தர் யார்? ஜனங்கள் எப்பொழுதும் பார்ப்பதற்குப் பிரியப்படும் திருமேனி அமைப்புடையவர் யார்? இந்திரியங்களையும் அந்தக்கரணத்தையும் வசப்படுத்தினவர் யார்? கோபத்தை ஜயித்தவர் யார்? எல்லோரும் பார்க்க விரும்பக்கூடிய தேக காந்தியுள்ளவர் யார்? (பிறருடைய குணங்களைக் கண்டு, பொறுமையால் தோஷங்களைக் கற்பித்து, அவர்களுடைய க்ஷேமத்தை ஸஹிக்காமலிருப்பதென்ற) அஸூயையை விலக்கினவர் யார்? யுத்த ஸமயத்தில் யாருக்குக் கோபமுண்டானால் தேவாஸுரர்களும் நடுங்குகிறார்கள்?

"இந்தக் குணங்களெல்லாம் ஒருவரிடத்தில் பொருந்தியிருப்பது அரிது. ஆனால் இந்திரியங்களுக்கு எட்டாத விஷயங்களைப் பார்த்து அறியக்கூடிய ஞானதிருஷ்டி தங்களுக்கு இருப்பது பிரஸித்தமாகையால் அப்படிப்பட்ட மஹா புருஷன் இன்னாரென்று தாங்களே அறிந்து சொல்லக்கூடியவர்கள். (இதை எனக்கு உபதேசிக்கலாமென்று தோன்றினால்) கேட்க மிகுந்த ஆவல் கொண்டிருக்கிறேன்" என்றார்.

மூன்று லோகங்களிலும் நடக்கும் ஸகல விஷயங்களையும் அறிந்த நாரதர் வால்மீகியின் வார்த்தையைக் கேட்டார். அவர் ஸந்தோஷித்து, பகவானுடைய திவ்ய சரணாரவிந்தங்களை மனத்தால் தியானித்து வணங்கி, "வால்மீகியே! பிறர் சொல்லும் விஷயத்தை ஸந்தேக விபரீதமில்லாமல் கிரஹித்து ஞாபகத்தில் வைத்துக் கொள்ளக்கூடிய சக்தி உமக்குப் பூர்ணமாயிருக்கிறது. நீர் கேட்ட குணங்கள் ஒருவரிடத்தில் ஒன்று சேர்ந்திருப்பது அரிது. ஆனாலும், அவ்விதமான புருஷனை ஏதோ தெரிந்தவரையில் வர்ணிக்கிறேன். ஸாவதானமாகக் கேளும்" என்று சொல்லத் தொடங்கினார் :

"ஸூரியனை ஆதிபுருஷனாக உடைய இக்ஷ்வாகு வம்சத்தில் பிறந்த ஓர் அரசர், ராமனென்று ஜனங்களால் அறியப்பட்டு, வெகு கீர்த்தியுடன் இப்பொழுது அயோத்யையில் ஆண்டு வருகிறார். நீர் சொன்ன ஸகல கல்யாண குணங்களும் அவரிடத்தில் பொருந்தியிருக்கின்றன. இந்திரியங்களையும் மனத்தையும் வசப்படுத்தினவர்; மஹாவீரர் ; அபாரமான தேஹகாந்தியுள்ளவர்; அவருடைய சித்தம் ஆபத்திலும் ஸம்பத்திலும் ஒரேவிதமாக இருக்கும். ஒரு தடவை கேட்டதை எப்பொழுதும் மறக்காதவர்; பிரஹ்மா, சங்கரன். இந்திரன், பிருஹஸ்பதி, சுக்கிராசார்யர் முதலியவர்களால் உபதேசிக்கப்பட்ட ராஜநீதிகளைப் பூர்ணமாக அறிந்தவர். ஜனங்களின் மனத்தைக் கவரும்படி பேசும் திறமையுள்ளவர். யாவரும் ஆசைப்படக் கூடிய அழகும் பிரகாசமும் பொருந்தினவர். காமம் கோபமென்ற ஸ்வபாவமான சத்துருக்களையும், வெளியில் ஸஞ்சரிக்கும் பகைவர்களையும் அழித்தவர். தம்மை அண்டின பக்தர்களுடைய சத்துருக்களை அழிக்கிறவர்.



சதைப்பற்றுள்ள உயர்ந்த தோள்களும், முழங்கால் வரையில் நீண்டு யானைத் துதிக்கையைப்போல் பருத்த கைகளும், மூன்று ரேகைகளால் அலங்கரிக்கப்பட்டு வலம்புரிச் சங்கம் போன்ற கழுத்தும், சதைப்பற்றான கன்னங்களும், பிறர் எடுக்கமுடியாத வில்லை விளையாட்டாக எடுத்து வளைத்து நாணேற்றும் சக்தியுள்ள அகன்ற மார்பும், வெளியில் தெரியாமல் அழுந்தியிருக்கும் தோள்களின் சந்தெலும்புகளும், அர்த்த சந்திரனைப்போல் வட்டமான நெற்றியும், சிங்கம், யானை, புலி, விருஷபம் இவைபோன்ற நடையும், அதிக உயரமில்லாமலும் அதிகக் குட்டையில்லாமலும் 96-அங்குலப் பிரமாணமுள்ளவைகளாக, ஏற்றத் தாழ்வில்லாமல் ஒன்றோடொன்று சேராமலிருக்கும் அவயவங்களும், பளபளப்பான காந்தியும், சதைப்பற்றுள்ள உயர்ந்த மார்பும், மலர்ந்த செந்தாமரை இதழ்களைப்போல் நீண்டு அகன்ற கண்களும், இன்னும் ஸாமுத்ரிகா சாஸ்திரத்தில் சொன்ன ஸகல உத்தம லக்ஷணங்களும் பொருந்தினவர்.

நினைத்த மாத்திரத்தில் சத்துருக்களைக் கொல்லும் ஸாமர்த்தியமுள்ளவர். தம்மைச் சரணமடைந்தவர்களைப்பற்றி யாதொன்றையும் ஆலோசிக்காமல் ரக்ஷிப்பதென்ற தர்மத்தைப் பூர்ணமாக அறிந்து அனுஷ்டிப்பவர். தாம் செய்த பிரதிக்ஞையைத் தவறாமல் நிறைவேற்றுகிறவர். பிரஜைகளுக்கு அனுகூலத்தையே செய்கிறவர். தம்மை அண்டினவர்களை ரக்ஷித்ததாலும், ராவணாதி ராக்ஷஸர்களை அழித்ததாலும், அவருடைய கீர்த்தி ஸகல லோகங்களிலும் பரவியிருக்கிறது. காமக்குரோதமில்லாதவராகையாலும், யோகாப்யாஸத்தின் மஹிமையாலும், எப்பொழுதும் சுத்தர். பிரஹ்மத்தின் ஸ்வரூபத்தை அறிந்தவர்; தம் நிஜஸ்வரூபத்தை மறவாதவர்; பிதாவுக்கும் ஆசாரியர்களுக்கும் தேவதைகளுக்கும் கட்டுப்பட்டவர்; பிரஹ்மதேவனைப்போல் பிரஜைகளைப் பரிபாலிப்பவர். ஸகல ஐசுவரியமும் பொருந்தினவர். தகப்பன் குழந்தைகளைப் போஷிப்பதுபோல் ஸகல லோகங்களையும் ரக்ஷிப்பவர். காமக்குரோதங்களையும் தம் பக்தர்களுக்கு விரோதம் செய்பவர்களையும் அழிக்கிறவர்.

இதர அரசர்களைப் போலிராமல், பிரஜைகளின் இஷ்டத்தைப் பூர்த்தி செய்து எவ்விதத்திலும் காப்பாற்றுகிறவர். வர்ணாசிரம தர்மங்களை நிலை நிறுத்துகிறவர். தம் வர்ணத்திற்குரிய அத்யயனம், தானம், யாகம், ராஜநீதி முதலிய தர்மங்களை என்றும் கைவிடாதவர்.

அவரை அண்டினவர்களுக்குத் துக்கமில்லை; ஸகல அபீஷ்டங்களும் க்ஷேமமும் கைகூடும்; பயமற்று வாழ்வார்கள். வேத வேதாந்தங்களையும் அஸ்திர சஸ்திரங்களுடைய ரஹஸ்யத்தையும் நன்றாக அறிந்தவர். சாஸ்திரங்களின் உட்கருத்தைக் கண்டவர். புத்தியால் கிரஹித்த விஷயத்தை ஒரு பொழுதும் மறக்காதவர். லௌகிக வியவஹாரங்களில் தாம் கேட்டவையும் கேட்டிராதவையுமான விஷயங்களைப்பற்றி ஸமயோசிதமாய் மேன்மேலும் யுக்தி சொல்லக் கூடியவர். அவரைப் பார்ப்பவர்களுக்கும் தியானிப்பவர்களுக்கும் இஹத்திலும் பரத்திலும் அனுகூலமே கிடைக்கும். எந்தத் துக்கத்தாலும் கலங்காத புத்தியுள்ளவர். லௌகிக வைதிக காரியங்களில் ஸமர்த்தர், பூமியிலுள்ள நதிகளால் ஸமுத்திரம் சூழப்பட்டிருப்பதுபோல் ஹோமம், ஜபம் முதலிய காரியங்களைத் தாம் செய்யும்பொழுது வஸிஷ்டர் முதலிய ஸாதுக்களால் சூழப்பட்டவர். யாவராலும் பூஜிக்கத் தகுந்தவர். சத்துரு, மித்திரன், உதாஸீனன் முதலியவர்களிடத்தில் ஸமபுத்தியுள்ளவர். ஸுக துக்கங்களால் கர்வத்தையும் வருத்தத்தையும் அடையாதவர். பிறர் அவரை அடிக்கடி பார்த்துக் கொண்டிருந்தாலும், ஒரு நாளும் பார்க்காத வஸ்துவைப் பார்த்ததுபோல் ஆச்சரியப்படக்கூடிய ரூபமும் குணங்களும் உள்ளவர். ஸமுத்திரத்தில் கிடக்கும் வஸ்துக்களைப் பிறர் பார்க்க முடியாதது போல், அவருடைய அபிப்பிராயத்தைப் பிறர் அறிய முடியாது. என்றும் அசையாத இமய மலையைப் போல், அவருடைய தைரியம் என்றும் தளராது. பராக்கிரமத்தில் விஷ்ணுவையும், பிரியமான பார்வையில் சந்திரனையும், கோபத்தில் பிரளய காலாக்னியையும் பொறுமையில் பூமி தேவியையும், கொடுப்பதில் குபேரனையும், ஸத்தியத்தில் தர்ம தேவதையையும் போன்றவர்.

**அயோத்யா காண்டம்**

இப்படி அனந்த கல்யாண குணங்கள் பொருந்தினவரென்றும் வீணாகாத பராக்கிரமமுள்ளவரென்றும், யுவராஜாவுக்குரிய லக்ஷணங்கள் வாய்ந்தவரென்றும், அவருடைய பிதாவான தசரதர் நன்றாக அறிந்து, பிரஜைகளின் பிரார்த்தனைக்கிணங்கி, தம் மூத்த குமாரனான ராமனுக்கு யௌவராஜ்ய பட்டாபிஷேகம் செய்ய நினைத்தார். அவருடைய பத்தினிகளில் ஒருத்தியான கைகேயி, முன்பு அவர் அஸுரர்களுடன் யுத்தம் செய்தபொழுது அவருக்குப் பரமோபகாரத்தைச் செய்து, அதற்குப் பதிலாக அவரிடத்திலிருந்து இரண்டு வரங்களைப் பெற்றிருந்தாள். ராமனுடைய அபிஷேகத்திற்காக நடக்கும் ஏற்பாடுகளைக் கண்டு பொருமை கொண்டு, ராமனைக் காட்டிற்கு அனுப்ப வேண்டுமென்றும், தன் புத்திரனான பரதனை யுவராஜாவாக அபிஷேகம் செய்விக்க வேண்டுமென்றும் அரசனைக் கேட்டாள். தாங்கள் செய்த பிரதிக்ஞையை உயிரைக் கொடுத்தாவது நிறைவேற்றுவதே பரம தர்மமென்று அனுஷ்டித்துவந்த சிபி முதலிய



இக்ஷ்வாகு வம்சத்து அரசர்களின் பரம்பரையில் வந்த தசரதர், குல தர்மமென்ற பாசத்தால் கட்டப்பட்டு, தம் அருமைக் குழந்தையான ராமனைக் காட்டிற்கு அனுப்பினார். ஸகல சத்துருக்களையும் தம் ஸங்கல்பத்தால் அழிக்கக் கூடிய சக்தி ராமனுக்கு உண்டு. ஆனால், தம் தகப்பன் கைகேயியிடத்தில் செய்த பிரதிக்ஞையையும், தாம் அவளிடத்தில் செய்த பிரதிக்ஞையையும் காப்பாற்றவும், தம் தாயான அவளுடைய இஷ்டத்தைப் பூர்த்தி செய்யவும், பிதாவின் உத்தரவுப்படி வனத்திற்குச் சென்றார். ஸுமித்திரையின் புத்திரனான லக்ஷ்மணன் ராமனுக்கு உயிருக்கு உயிரானவர்; அவரிடத்தில் அளவற்ற பிரியத்தையும் பக்தியையும் வைத்தவர். அவரை வருந்திப் பிரார்த்தித்து அவருடன் சென்றார். அப்பொழுது ஸுமித்திரை, "குழந்தாய்! இனி ராமனே உனக்குப் பிதா; ஸீதையே உனக்கு மாதா; வனமே அயோத்யை; க்ஷேமமாய் ராமனுடன் சென்று, அவருக்கு ஸகல கைங்கரியங்களையும் செய்" என்றாள்..

ராமனுக்கு ப்ரிய பார்யையான ஸீதையும் அவரை நிர்ப்பந்தம் செய்து, சந்திரனை ரோஹிணி தேவி அநுஸரிப்பதுபோல், அவருடன் வனத்திற்குச் சென்றாள். பகவானுடைய மாயையே ஜனக வம்சத்தில் ஸீதையாய் அவருடைய இச்சைப்படி அவதார மெடுத்தது. அவள் ஸ்திரீகளுக்குரிய ஸகல உத்தம லக்ஷணங்களும் பொருந்தினவள்; ராமனுக்குத் தகுந்த பத்தினி. இப்படி லக்ஷ்மணனும் ஸீதையும் ராமனும் அயோத்யையை விட்டு வனத்திற்குப் போனபொழுது, நகரத்து ஜனங்களெல்லோரும் அவர்களுடன் வெகுதூரம் சென்றார்கள். புத்திர வாத்ஸல்யத்தால் அவரை விட்டுப் பிரிய மனமில்லாமல், தசரதரும் சிறிது தூரம் வந்தார்.

ராமன் கங்கைக் கரையிலுள்ள சிருங்கிபேர புரத்தில் தம் தோழனான குஹனைக் கண்டு, ஸுமந்திரரென்ற ஸாரதியை அங்கே நிறுத்தி விட்டுக் குஹனை அழைத்துக்கொண்டு, கால் நடையாக அநேக வனங்களையும் நதிகளையும் தாண்டி, பரத்வாஜருடைய ஆசிரமத்திற்கு வந்தார். அவருடைய உத்தரவால் சித்திரகூட பர்வதத்தில் அழகான ஒரு பர்ணசாலையைக் கட்டி, தேவர்களைப் போலவும் கந்தர்வர்களைப் போலவும் ராமனும் லக்ஷ்மணனும் ஸீதையும் வஸித்துக் கொண்டிருந்தார்கள்.

ராமன் சித்திரகூடத்திற்குப் போன பிறகு, அவரை விட்டுப் பிரிந்த சோகத்தால் அவரைப்பற்றியே பிரலாபித்துக்கொண்டு தசரதர் பரலோகமடைந்தார். பிறகு வஸிஷ்டர் முதலிய மஹரிஷிகள் பரதனை அபிஷேகம் செய்துகொள்ள வேண்டுமென்று பலவிதமாய் வற்புறுத்தினார்கள். அவர் அந்த ராஜ்யத்தைப் பிறருடைய ஸஹாயமில்லாமல் ஆளக்கூடியவர். தசரதரால் அது அவருக்குக் கொடுக்கப்பட்டது. ஆயினும் அதை விரும்பவில்லை. எப்படியாவது ராமனை நல்ல வார்த்தை சொல்லிக் காட்டிலிருந்து அழைத்து வரவேண்டு

மென்று சித்திரகூடத்திற்குச் சென்று, அவரை நமஸ்கரித்து வணக்கத்துடன், "அண்ணா! தாங்கள் மஹாத்மா; வீண் போகாத பராக்கிரமமுடையவர்கள்; நம் பிதா பரலோகமடைந்தார்; அவருக்குப் பிறகு தாங்களே ராஜ்யத்தை ஆளவேண்டும். அதற்குத் தகுந்தவராக, மூத்த குமாரராகத் தாங்கள் இருக்க, இளையவனை நான் ஆள்வது ராஜதர்மமன்று என்று தங்களுக்குத் தெரியாதா? தாங்களே எங்களுக்கு அரசனாக இருக்க வேண்டும்" என்று பிரார்த்தித்தார். தமக்குப் பிரியமான ஸகல வஸ்துக்களையும் கொடுத்தாவது பிறருடைய கோரிக்கையை நிறைவேற்றுவதே ராமனுடைய ஸ்வபாவம். ராஜ்யத்தில் இருப்பதைக் காட்டிலும் வனத்திலிருப்பதால் அவருடைய காந்தியும் தேஜஸும் அதிகரித்தன. பித்ருவாக்ய பரிபாலனத்தால் அளவற்ற கீர்த்தியைப் பெற்ற ரகுநாதன், பரதன் வேண்டுதலுக்குக் கொஞ்சமேனும் ஸம்மதிக்கவில்லை. அஹல்யையின் சாபத்தைப் போக்கின தம் திருவடிகளால் தொடப்பட்ட பாதுகைகளைப் பரதனுக்குக் கொடுத்து, ராஜ்யத்தைத் தர்மமாய்ப் பாலிக்கும் சக்தியை அதனால் அவனுக்கருளி, "குழந்தாய்! உன் பிரார்த்தனைக்கு இணங்கிப் பதினான்கு வருஷங்களுக்குப் பிறகு வருகிறேன்" என்று அடிக்கடி உறுதி சொல்லி அவனைத் திரும்பிப் போகச் செய்தார். தம் கோரிக்கை நிறைவேறாமல் மனம் நொந்து, பரதன் அவருடைய பாதங்களை வணங்கி, நந்திக்கிராமத்திற்கு வந்து, மரவடிகளை ஸிம்ஹாஸனத்தில் வைத்து, அவைகளை முன்னிட்டு ஸகல ராஜ்ய வியவஹாரங்களையும் நடத்தி, ராமன் எப்பொழுது வருவாரென்று வழிபார்த்துக் கொண்டு இருந்தார்.

பிறகு, "இங்கிருந்தால் பட்டணத்து ஜனங்கள் அடிக்கடி பார்க்க வருவார்கள்" என்று, ராமன் துஷ்ட மிருகங்களாலும் ராக்ஷஸர்களாலும் நிறைந்த தண்டகாரண்யத்தில் வெகு ஜாக்கிரதையாய்ப் பிரவேசித்தார். எப்படியாவது தம் பிரதிக்ஞையை நிறைவேற்ற வேண்டுமென்று உறுதியுள்ளவர்; இந்திரியங்களையும் மனத்தையும் வசப்படுத்தினவர். மஹாலக்ஷ்மியான ஸீதை தம்முடன் இருக்கையில் அவருக்குக் குறைவு உண்டோ?

**ஆரண்ய காண்டம்**

அந்தப் பெருங் காட்டில் புகுந்து, ராமன் விராதனென்ற ராக்ஷஸனுடன் யுத்தம் செய்து அவனைக் கொன்றார். தாம் அவதாரம் செய்த காரியத்தை நிறைவேற்றும் காலம் வந்ததால், அவருடைய கண்கள் ஸந்தோஷத்தால் மலர்ந்தன. பிறகு சரபங்கர், ஸுதீக்ஷ்ணர், அகஸ்தியர், அவருடைய தம்பி முதலிய மஹரிஷிகளைத் தரிசித்தார். அகஸ்தியரிடத்தில் இந்திரன் கொடுத்திருந்த வில்லையும் குறையாத இரண்டு அம்பறைகளையும் கத்தியையும் அவருடைய உத்தரவால் வெகுப் பிரீதியுடன் பெற்றுக் கொண்டார்.



ரிஷிகளின் ஆசிரமங்களில் ராமன் இருக்கையில் பல தபஸ்விகள் வந்து, "ராமா! கபந்தன் முதலிய அஸுரர்களையும் கரன் முதலிய ராக்ஷஸர்களையும் கொன்று, எங்களுடைய பயம் தீர்க்கவேண்டும்" என்று கேட்டார்கள். அக்னியைப்போல் ஜ்வலிக்கும் தேஜஸால் ஸகல சத்துருக்களையும் நாசம் செய்யக்கூடிய அந்த ரிஷிகளுக்கு, ராமன், "எக்காலத்தில் யாரைக் கொல்லக் கூடுமோ அவர்களைத் தவறாமல் கொல்லுகிறேன்" என்று வாக்களித்தார்.

அவர் பஞ்சவடியில் இருந்தபொழுது, ஜனஸ்தானத்தில் வஸிக்கும் சூர்ப்பணகை என்ற ராக்ஷஸி, அவரையும் ஸீதையையும் உபத்திரவிக்க, அவளுடைய காதுகளையும் மூக்கையும் லக்ஷ்மணன் அறுத்தார். தன் ஸஹோதரனை கரனிடத்தில் அவள் முறையிட, அவன் திரிசிரஸ், தூஷணன் முதலிய ஸேனாபதிகளோடும் பதினாலாயிரம் ராக்ஷஸர்களோடும் ராமனை எதிர்த்தான். அவர்களை அவர் ஒருவராகவே அதிசீக்கிரத்தில் கொன்றார். லங்கேசுவரனான ராவணன், தன் தங்கையை அவமானம் செய்ததையும் பந்துக்களைக் கொன்றதையும் கேட்டு அடங்காக் கோபம் கொண்டு, தனக்கு ஒத்தாசை செய்யும்படி மாரீசனை வேண்டினான். மாரீசன், "மஹாராஜா! நம்மைக் காட்டிலும் ராமன் பலவான், அவனுடன் நீ விரோதிப்பது உசிதமன்று" என்று பலவிதமாகத் தடுத்தான். ஆனால் ராவணனுக்குக் காலம் குறுகிவிட்டது. மாரீசனுடைய வார்த்தையை லக்ஷ்யம் செய்யாமல் அவனைப் பலவந்தமாக அழைத்துக்கொண்டு ராமன் இருக்கும் இடத்திற்கு வந்தான். ராம லக்ஷ்மணர்களை ஆசிரமத்திலிருந்து வெகு தூரத்திற்கப்பால் கபடத்தால் மாரீசன் அழைத்துக்கொண்டு போனான். அப்பொழுது ராவணன் ஸீதையை எடுத்துக் கொண்டு போனான். அதைத் தடுத்த ஜடாயு என்ற பக்ஷியைக் கொன்றுவிட்டு அவன் ஸீதையை லங்கையில் வைத்தான்.

ராமன் ஆசிரமத்திற்குத் திரும்பி வந்து ஸீதையைக் காணாமல், குற்றுயிராயிருந்த ஜடாயுவால் அவளுடைய வரலாற்றை அறிந்து, இந்திரியங்கள் கலங்கிப் புத்தி சிதறிப் பிரலாபித்தார். பிறகு ஒருவாறு தம் துக்கத்தைஅடக்கிக்கொண்டு, ஜடாயுவிற்குப் பிரேதக்கிரியைகளைச் செய்து, ஸீதையைத் தேடிக்கொண்டு போனார். பயங்கரமான விகார ரூபமுள்ள கபந்தன் அவர்களைத் தடுக்க, அவனைக் கொன்று, அவன் சரீரத்தை எரித்தார். அதனால் அவன் சாபம் நீங்கி முன்போல் கந்தர்வனாய், தனக்கு நற்கதியைக் கொடுத்த ராமனுக்கு உபகாரம் செய்ய விரும்பி, "இதற்கு ஸமீபத்தில் சபரி என்று ஒரு தபஸ்வினி இருக்கிறாள். தர்மங்களைப் பூர்ணமாய் அறிந்து அனுஷ்டிப்பவள். அங்கே போ" என்றான். ராமலக்ஷ்மணர்கள் அப்படியே சென்று சபரியால் பூஜிக்கப்பட்டார்கள்.

**இஷ்கிந்தா காண்டம்**

ராமன் பம்பை என்னும் ஏரிக்கரையில் வந்து, ஹனுமான் என்ற வானரனைக் கண்டு, அவனால் வானர ராஜனான ஸுக்ரீவனிடத்திற்கு அழைத்துப் போகப்பட்டார். தம் வரலாற்றை அவனிடத்தில் விஸ்தாரமாகச் சொன்னார். ஸுக்ரீவன் - தன்னைப்போல் கஷ்டப்படும் மஹாவீரன் - தனக்கு மித்திரனாய்க் கிடைத்தபடியால் ஸந்தோஷித்து, ராமனுடன் அக்னி ஸாக்ஷியாக ஸ்நேஹம் செய்து கொண்டான். "உனக்கும் உன் தமையனுக்கும் விரோதம் நேரக் காரணமென்ன?" என்று ராமன் கேட்க, ஸுக்ரீவன் மனம்நொந்து, தன் வரலாற்றைத் தெரிவித்தான். "வாலியைக் கொல்லுகிறேன்" என்று ராமன் உடனே அவனுக்கு வாக்களித்தார். "வாலியைக் கொல்லும் சக்தி இவருக்குண்டோ?" என்று ஸுக்ரீவன் ஸந்தேகப்பட்டு, அவனுடைய பலபராக்கிரமத்தை வர்ணித்து, அவனால் கொல்லப்பட்ட துந்துபியின் தேகத்தைக் காட்டி, "வாலி இதை அலக்ஷ்யமாக வீசி எறிந்தான்" என்றான். "நமது பலத்தை அறியாமல் ஸந்தேகித்து இந்த அல்ப காரியத்தால் அதைப் பரீக்ஷிக்கிறானே" என்று ராமன் ஸுக்ரீவனைப் பார்த்துச் சிரித்து, அந்த எலும்புக் கூட்டைக் காலின் பெரு விரலால் பத்து யோஜனை தூரத்திற்கு அப்பால் எறிந்தார். மேலும் அவனுக்குத் தன்னிடத்தில் நம்பிக்கை உண்டாக்க, ஒரு சிரேஷ்டமான பாணத்தால் ஏழு ஆச்சா மரங்களையும், ஸமீபத்திலுள்ள மலையையும், கீழ் லோகங்களையும் துளைத்தார். தங்க நிறமுள்ள ஸுக்ரீவன் ராமனுடைய பராக்கிரமத்தை அறிந்து, நம்பிக்கையுண்டாகி, வெகு ஸந்தோஷத்துடன் அவரைக் கிஷ்கிந்தைக்கு அழைத்துச் சென்று, ஸிம்ஹநாதம் செய்து வாலியை யுத்தத்திற்கு அழைத்தான். அதைக் கேட்டு வாலி புறப்படுகையில், தாரை, "ராமனுடைய உதவியால் ஸுக்ரீவன் உன்னைச் சண்டைக்கு அழைக்கிறான். போகக்கூடாது" என்று தடுத்தாள். வாலி அவளை ஸமாதானம் செய்து, ஸுக்ரீவனுடன் யுத்தம் செய்தான். அப்பொழுது ராமன் அவனை ஒரே பாணத்தால் கொன்று, ஸுக்ரீவனுக்கு அந்த ராஜ்யத்தைக் கொடுத்தார். அவன் வானரத் தலைவர்களை அழைத்து, ஸீதையைக் கண்டுபிடிக்கும்படி ஒவ்வொரு திக்கிலும் அனுப்பினான்.

**ஸுந்தர காண்டம்**

தெற்கே போன வானரர்களில் பலபராக்கிரமத்தால் சிறந்த மாருதி, "ராவணன் ஸீதையை லங்கையிலுள்ள அசோகவனத்தில் வைத்திருக்கிறான்" என்று ஸம்பாதி என்ற பக்ஷியிடம் கேள்விப்பட்டு, நூறு யோஜனை தூரமுள்ள ஸமுத்திரத்தைத் தாண்டினார். ராவணனுடைய ராஜதானியான லங்கைக்குப் போய், ராமனையே தியானம் செய்துகொண்டிருக்கும் ஸீதையை அசோகவனத்தில் கண்டார், ராமனுடைய வரலாற்றை அவளுக்குச் சொல்லி, அவருடைய மோதிரத்தை அடையாளமாகக் கொடுத்து, "தங்களைச் சிறைமீட்க ராமன் பெருமுயற்சி செய்கிறார். சீக்கிரத்தில் தங்களை அழைத்துப் போவார். கவலை வேண்டாம்" என்று ஸமாதானம் செய்தார்.

அந்த வனத்தின் வாசற்படியை அவர் இடிக்க, அதைக் கேட்டு யுத்தம் செய்ய வந்த ஐந்து ஸேனாபதிகளையும் ஏழு மந்திரி புத்திரர்களையும் கொன்று, ராவண குமாரனான அக்ஷனைத் தரையில் தேய்த்து, இந்திரஜித்தின் பிரஹ்மாஸ்திரத்திற்கு மாத்திரம் தானாகக் கட்டுப்பட்டார். பிரஹ்மா தனக்குக் கொடுத்த வரத்தால் ஒரு முஹூர்த்தத்திற்குப் பிறகு தான் விடுபட்டதை அறிந்தும், ராவணனைப் பார்த்துப் பேசவேண்டுமென்று, தான் கட்டுப்பட்டிருப்பதாய்க் காட்டி, தன்னை இழுத்துக்கொண்டு போன ராக்ஷஸர்கள் செய்த ஹிம்ஸையைப் பொறுத்துக்கொண்டிருந்தார். ராவணனுக்குப் பலவிதமாய் ஹிதோபதேசத்தைச் செய்து, ராக்ஷஸர்கள் தம் வாலில் வைத்த நெருப்பால் ஸீதையிருக்குமிடம் தவிர லங்கை முழுவதையும் கொளுத்தி, அந்தப் பிரிய ஸமாசாரத்தை ராமனுக்குச் சொல்லத் திரும்பி வந்து, அவரைப் பிரதக்ஷிணம் செய்து, "கண்டேன் ஸீதையை" என்று உண்மையைத் தெரிவித்தார்.

**யுத்த காண்டம்**

ராமன் வானர ஸைன்யத்துடன் ஸமுத்திரக் கரைக்கு வந்தார். தான் அழைத்தபோது ஸமுத்திரராஜன் வராததால், ஸூரியனைப் போல் ஜ்வலிக்கும் பாணங்களால் அவனைக் கலக்கினார். அந்த உபத்திரவம் தாங்காமல் அவன் பயந்து நேரில் வந்து, நளன் என்ற வானரனால் தன் மேல் அணை போடும்படி சொல்ல, ராமன் ஸேதுவைக் கட்டுவித்தார். அதன்மேல் லங்கைக்குப் போய், ராவணனையும் அவனுடைய ஸைன்யத்தையும் யுத்தத்தில் கொன்றார். ஸீதையை மீட்டு "ராக்ஷஸனுடைய வீட்டில் வெகு காலம் வஸித்தவளைச் சேர்த்துக் கொண்டான்" என்ற லோகாபவாதத்திற்குப் பயந்து வெட்கமடைந்து, எல்லோரும் கேட்டுக் கொண்டிருக்கையில் கடுமையான வார்த்தைகளால் அவளைத் தூஷித்தார். அதைப் பொறுக்காமல் அந்தப் பதிவிரதா சிரோமணி அக்னியில் இறங்கினாள். அந்த தேவதை, "ஸீதை தோஷமில்லாதவள்" என்று உறுதி சொல்லி ராமனிடத்தில் ஒப்புவிக்க, அவர் ஜானகியை அங்கீகரித்தார். இப்படி அவளுடைய பதிவிரதா தர்மத்தை வெளிப்படுத்தினதற்காகத் தேவர்களும் ரிஷிகளும் மூன்று லோகங்களிலுள்ள சராசர வஸ்துக்களும் ஸந்தோஷமடைந்தார்கள். தேவர்கள் ராமனைக் கொண்டாட, அவருடைய தேஜஸும் காந்தியும் அதிகமாயின. விபீஷணனை லங்கைக்கு ராஜாவாக அபிஷேகம் செய்வித்து, தம் பிரதிக்ஞையை நிறைவேற்றிக் கவலை தீர்ந்து ஆனந்தமடைந்தார்.

பிறகு தேவர்களிடத்திலிருந்து அபூர்வமான வரங்களைப் பெற்று, இறந்த வானரர்களைப் பிழைப்பித்து, வானர ஸைன்யத்தையும் ராக்ஷஸ சிரேஷ்டர்களையும் புஷ்பக விமானத்தில் ஏற்றிக்கொண்டு

அயோத்யைக்கு வந்தார். வழியில் பரத்வாஜருடைய ஆசிரமத்தில் தங்கி, மாருதியைப் பரதனிடம் அனுப்பினார். விசித்திரமான கதைகளைத் தம் நண்பர்களுக்குச் சொல்லிக்கொண்டு நந்திக்கிராமத்திற்கு வந்து, பரத சத்ருக்னர்களை ஸந்தித்து, தாம் தசரதருக்குச் செய்த பிரதிக்ஞையை நிறைவேற்றினபடியால் எல்லோரும் ஜடை முதலிய தபஸ்வி வேஷத்தை நீக்கினார்கள். பிறகு அயோத்யைக்கு வந்து ராமன் ஸீதையுடன் பட்டாபிஷேக மஹோத்ஸவத்தைப் பெற்றார்.

### உத்தர காண்டம் (ராம ராஜ்யம்)

ராமன் ராஜ்யத்தை ஆளும்பொழுது ஜனங்களுக்குப் புத்திரர்களும் பசுக்களும் விருத்தியடையும்; தர்மம், அர்த்தம், காமம் என்ற புருஷார்த்தங்கள் கைகூடும்; அவைகளுக்கு வேண்டிய ஸாதனங்கள் ஸுலபமாகக் கிடைக்கும்; ஏழ்மைத்தனத்தால் தேகம் இளைத்தவனும், வியாதியாலும் கவலையாலும் வருந்தினவனும் இருக்க மாட்டான். பஞ்சத்தாலும் திருடனாலும் உபத்திரவமில்லை; பிரஜைகள் தர்ம சிந்தையுள்ளவர்களாக ஸந்தோஷமாகக் காலங் கழிப்பார்கள். தனக்கு முன் புத்திரன் இறக்கும் துக்கத்தை ஒருவனும் அடைய மாட்டான். ஸ்த்ரீகள் ஸுமங்கலிகளாக இருப்பார்கள். நெருப்பாலும் வெள்ளத்தாலும் பெருங்காற்றாலும் ஜ்வரத்தாலும் பயமில்லை. ராமனுடைய ராஜ்யத்தில் ஒருவனும் பசியால் வருந்த மாட்டான். திருட பயம் இருக்காது. நாடு நகரங்கள் தன தான்யங்களால் நிறைந்திருக்கும். கிருத யுகத்தில் வாழ்ந்ததுபோல் எல்லோரும் ஸந்தோஷமாக இருப்பார்கள். அசுவமேதம், பஹுஸுவர்ணகம் முதலிய எண்ணிறந்த யாகங்களைச் செய்து, அவைகளில் பசுக்களையும் ரத்னங்களையும் தனத்தையும் பிராஹ்மணர்களுக்கு வேண்டிய வரையில் ராமன் கொடுப்பார். காமரூபம், கான்யகுப்ஜம் முதலிய ராஜ வம்சங்களை ஏற்படுத்தி விருத்தி செய்வார். நான்கு வர்ணத்தாரையும் தங்களுடைய தர்மங்களைக் குறைவற நடத்தும்படி செய்வார். இப்படி லோகத்தில் தர்மத்தை நிலை நாட்டி, பதினோராயிரம் வருஷங்கள் வரையில் ராஜ்ய பாலனம் செய்து, ஸ்ரீராமசந்திரன் தன்னடிச் சோதியாகிய ஸ்ரீவைகுண்டத்திற்கு எழுந்தருளுவார்.

### பலச்ருதி

"இந்த ராம சரிதம் ஸகல பாபங்களையும் போக்கும்; ஸகல புண்யத்திற்கும் ஸாதனம்; வேதங்களுக்கு ஸமம்; இதைப் படிக்கிறவன் ஸகல பாபங்களிலிருந்தும் விடுபடுகிறான்; தீர்க்காயுளை அடைகிறான். இந்த லோகத்தில் புத்திர மித்திர பந்து பரிவாரங்களுடன் ஸகல போக போக்யங்களை அனுபவிக்கிறான்; இறந்த பிறகு ஸ்வர்க்கத்தில் தேவர்களால் போற்றப்படுகிறான். இதைப் பக்தியுடன் படிக்கும் பிராஹ்மணன், பேசுந்திறமையில் மேலாவான்; (அருள்வாக்கை அடைவான்); வேத வேதாந்தார்த்தங்களை நன்றாக அறிவான். க்ஷத்திரியன் இதைப் படித்தால் சக்ரவர்த்தி ஆவான். வைசியன் இதைப் படித்தால் வர்த்தகத்தில் அளவற்ற லாபத்தை அடைவான். சூத்திரனும் தன் ஜாதிக்குத் தலைவனாவான்'' என்றார்.



பட$^{2}$ந் த்$^{3}$விஜோ வாக்$^{3}$ ரிஷப$^{4}$த்வ மீயாத்
ஸ்யாத் க்ஷத்ரியோ பூ$^{4}$மி பதித்வ மீயாத் |
வணிக்$^{3}$ஜந: பண்ய ப$^{2}$லத்வ மீயாத்
ஜநஸ்ச ஶூத்$^{3}$ரோபி மஹத்வ மீயாத் ‖ (100)

## ஸர்க்கம் 2

# ஸ்ரீ ராமாயணத்தின் உத்பத்தி

நாரத$^{3}$ஸ்ய து தத்$^{3}$வாக்யம் ஶ்ருத்வா வாக்ய விஶாரத$^{3}$: |
பூஜயாமாஸ த$^{4}$ர்மாத்மா ஸஹஶிஷ்யோ மஹாமுநி: ‖ (1)

**வா**ல்மீகி தர்மசிந்தையுள்ளவர்; வெகு சாதுரியமாகப் பேசக்கூடியவர்; ஆயினும், நாரதருடைய உபதேசத்தைக் கேட்டு, "தேவரிஷியே! என் கேள்விக்கு ஸரியாகப் பதில் சொன்னீர்கள். நினைக்க நினைக்க ஆச்சரியம் அதிகமாகிறது'' என்று சிஷ்யர்களுடன் அவரைக் கொண்டாடி விதிப்படி பூஜித்தார். நாரதர் அவரிடத்தில் உத்தரவு பெற்றுக்கொண்டு, ஆகாச மார்க்கமாய்த் தேவலோகத்திற்குச் சென்றார்.

வால்மீகி கொஞ்சநேரம் ஆசிரமத்தில் இருந்து, மாத்யாஹ்னிக ஸ்நானம் செய்யக் கங்கைக்கு அருகிலுள்ள தமஸாநதிக் கரைக்குப் போனார். அதன் ஜலத்தைக் கண்டு ஸமீபத்திலிருந்த தன் சிஷ்யனைப் பார்த்து, ''பரத்வாஜ! இந்த நதியைப் பார்த்தாயா? இறங்கும் துறைகளில் சேறில்லை. ஸாதுக்களின் மனம் காமக்குரோதங்களால் கலங்காமலிருப்பதுபோல், இதன் ஜலம் தெளிவாயிருக்கிறது. இந்தப் பரிசுத்தமான ஸ்தலத்தில் என் கடத்தை வைத்து நான் ஸ்நானம் செய்ய மரவுரியைக் கொடு. கங்கை இதற்கு ஸமீபத்திலிருந்தாலும் அங்கே போவதற்குள் ஸ்நான வேளை தாண்டிவிடும். தமஸையின் ஜலம் மிகவும் நன்றாயிருப்பதால் இங்கே ஸ்நானம் செய்கிறேன்'' என்றார். குரு சுச்ரூஷையில் பிரீதியுள்ள பரத்வாஜர் கொடுத்த மரவுரியை வாங்கிக்கொண்டு, வால்மீகி இந்திரியங்களையும் மனத்தையும் ஒருமைப்படுத்தி, ஸ்நான ஸந்த்யா ஜப தபங்களுக்குத் தகுந்த ஏகாந்த ஸ்தலத்தைத் தேடிக்கொண்டு கரையிலுள்ள காட்டில் சென்றார்.

சாபானுக்ரஹ சக்தியுள்ள அந்த ரிஷி, வனத்திற்கு அருகில் இரண்டு கிரௌஞ்ச பக்ஷிகள்* ஆணும் பெண்ணும் ஒன்றைவிட்டொன்று க்ஷணம்கூடப் பிரியாத தன்மையுள்ளவைகளாக, சரீர வியாதி, மனக் கவலையின்றி; மதுரமாய்க் கூவிக்கொண்டு, மெய் மறந்து கிரீடித்துக்கொண்டிருப்பதைக் கண்டார். பசு பக்ஷிகளுக்கு

ஸ்வபாவ விரோதியான ஒரு வேடன், தனக்கு யாதொரு கெடுதியும் செய்யாத அந்தப் பக்ஷிகளில் ஒன்றை, மஹரிஷியை லக்ஷ்யம் செய்யாமல், அவருக்கெதிரில் பாணத்தால் அடித்துக் கொன்றான். அந்த மஹா பாபி அவை ஸந்தோஷமாய்க் கிரீடித்துக்கொண்டிருந்ததையும் கவனிக்கவில்லை. உடனே அது ஹ்ருதயம் பிளந்து, கரகரவென்று சுழன்று பூமியில் விழுந்து புரண்டது. ரத்தம் தாரையாய்ப் பெருகிற்று. கோழியைப்போல் சிவந்த கொண்டையுடன், காமத்தால் மதம் கொண்டு, இறக்கையை விரித்துக்கொண்டிருந்த தன் கணவன், அம்பால் அடிபட்டுத் துடிப்பதைக் கண்டு, பெண்பக்ஷி அதைவிட்டு ஒரு நிமிஷம்கூடப் பிரியாததாலும், தன் நாயகன் கொல்லப்பட்டதாலும், துக்கம் தாங்காமல், கேட்போர் மனமுருகும்படி கதறிற்று.

இயற்கையாகவே ஸகல ஜந்துக்களிடத்திலும் வால்மீகிக்கு எல்லையற்ற தயை உண்டு. அவைகளுக்கு எப்பொழுதும் பரம ஹிதத்தையே செய்பவர்; மஹா தர்மாத்மா. தான் பார்த்துக்கொண்டிருக்கையில், திடீரென்று வேடனால் ஆண் பக்ஷிக்கு நேர்ந்த மரணத்தையும், பெண் பக்ஷிக்கு நேர்ந்த தீராத்துயரத்தையும் நினைத்து, அவருக்கு எல்லையற்ற இரக்கமுண்டாயிற்று. "ரதி காலத்தில் பிராணிகளை இந்த வேடன் அடித்தது பரம அதர்மம்'' என்று, கதறும் பெண் பக்ஷியைப் பார்த்துக் கருணை மீறி, வேடனிடத்தில் கோபம் கொண்டு,

**"அடே, வேடா! இந்தக் கிரௌஞ்ச பக்ஷிகள் காமத்தால் மெய்மறந்து ஆனந்தமாய்க் கிரீடித்துக்கொண்டிருந்ததையும் கவனிக்காமல், நீ ஆண் பக்ஷியைக் கொன்றதால், பல வருஷங்கள் வரையில் இருந்த இடத்தில் இல்லாமல் அலையக்கடவாய்''**

என்றார்.

உடனே "பெண் பக்ஷியின் துக்கத்தைப் பார்த்து எனக்கும் துக்கமுண்டாகி, எதையோ சொல்லிவிட்டேனே! காமக் குரோதங்களை அடக்கித் தவம் செய்யும் எனக்கு இது தகுமா? என் தவத்தைக் கெடுக்கும் கோபத்திற்கு இடம் கொடுத்தேனே! இதற்குக் காரணம் என்ன?'' என்று தனக்குள் யோசித்தார். மஹா புத்திமானாகையால் "பக்ஷிக்கு நேர்ந்த கஷ்டத்தால் வருந்தும் என் வாக்கிலிருந்து திடீரென்று உண்டான வார்த்தைகள் பார்வைக்குச் சாபத்தைப் போல் இருக்கின்றன; ஆனால், நான்கு பாதங்களும், ஒவ்வொன்றிலும் ஸமமான அக்ஷரங்கள் வாய்ந்திருக்கின்றன. தந்த்ரி வாத்யங்களுக்கும் லயத்திற்கும் ஒத்துப் பாடக் கூடியவை; சுலோக லக்ஷணங்கள் யாவும் பொருந்தி இருப்பதால் கேவலம் பதங்களின் சேர்க்கையல்ல; இது சுலோகமாகவே இருக்கக் கடவது'' என்று நிச்சயித்து, அதைச் சிஷ்யனுக்குத் தெரிவித்தார். பரத்வாஜரும் அந்த உத்தம சுலோகத்தைப் பக்தியுடன் சொன்னார்; அதனால் அவருடைய குரு மிகவும் ஸந்தோஷித்தார்.



பிறகு விதிப்படி ஸ்நானம் செய்து, ஜபதபங்களை முடித்துத் தம் ஆசிரமத்திற்குத் திரும்பினார்; ஆனால், தம் வாக்கிலிருந்து தெய்வச் செயலாய் வந்த வார்த்தைகளைப் பற்றியே யோசித்துக்கொண்டிருந்தார். மஹாவித்வானான பரத்வாஜர் கடம் நிறைய ஜலத்தை எடுத்துக்கொண்டு வெகு வணக்கத்துடன் குருவைப் பின் தொடர்ந்தார். வால்மீகி ஆசிரமத்திற்குப் போய் உட்கார்ந்து, சிஷ்யர்களுடன் பல புண்ய கதைகளைப் பேசிக் கொண்டிருந்தார். ஆனால் தர்மாத்மாவாகையால் தம் ஸ்வபாவத்திற்கும் அனுஷ்டானத்திற்கும் ஒவ்வாத அந்த வார்த்தைகளிலேயே அவருடைய மனம் நாடியிருந்தது.

வேறு உதவியின்றி சகல லோகங்களையும் ஸிருஷ்டிக்கக்கூடிய சக்தியும் எல்லையற்ற தேஜஸும் நான்கு வேதங்கள் எப்பொழுதும் பெருகிக்கொண்டிருக்கும் நான்கு முகங்களும் விளங்கும் (இந்தப் பிரஹ்மாண்டத்திற்கு அதிபதியான) பிரஹ்மதேவர், தம் லோகத்திலிருந்தே ராமாயணத்தைப் பூமியில் பரவச் செய்யும் சக்தியுள்ளவர். ஆயினும், ராம மந்திரத்தின் மஹிமையால் உத்தம பதவியை அடைந்த வால்மீகியைப் பார்த்து மகிழ்வதற்கும், அந்த ராம பக்தரால் ராம சரிதத்தை லோகத்திற்கு உபதேசிப்பதற்கும் அப்பொழுது அங்கே வந்தார். தாம் பிரார்த்திக்காமல் யாதொரு காரணமும் இன்றித் தம் ஆசிரமத்திற்கு வந்த பிரஹ்மாவைப் பார்த்து வால்மீகி அளவற்ற ஆச்சரியமடைந்தார். உடனே எழுந்து, எதிர்கொண்டழைத்துக் கைகூப்பி நமஸ்கரித்து, அர்க்ய பாத்தியங்களால் விதிப்படி உபசரித்து, க்ஷேமம் விசாரித்து, ஆஸனத்தில் உட்காரும்படி பிரார்த்தித்தார். நான்முகன் அதை அங்கீகரித்து அவரையும் உட்காரச் சொன்னார். அப்பொழுதும் வால்மீகி "தனக்கு யாதொரு கெடுதியும் செய்யாத பக்ஷிகள் மதுரமான குரலுடன் ஆனந்தமாய் அனுபவித்துக் கொண்டிருக்கையில், கொஞ்சமேனும் இரக்கமின்றித் தன் ஜாதி தர்மத்தையும் மீறி அந்தத் துஷ்ட வேடன் ஆண் பக்ஷியைக் கொன்றானல்லவா! அதைப் பார்த்து என் வாக்கிலிருந்து திடீரென்று சாபரூபமான வார்த்தைகள் வந்து என் தவத்தை குறைத்தனவல்லவா,'' என்று வருந்தி, தனக்குள் அந்த சுலோகத்தை அடிக்கடி சொல்லிக்கொண்டே இருந்தார்.

அதை பிரஹ்மா கவனித்து, "ஸரஸ்வதியை இவருடைய வாக்கிலிருக்கும்படி செய்து நான் இந்தச் சுலோகத்தைச் சொல்லுவித்தேனென்பதை இவர் அறியவில்லை'' என்று சிரித்துக்கொண்டு, "மஹரிஷியே! இன்று நடந்த விருத்தாந்தமும் அதைப் பற்றி நீர் எண்ணுவதும் எனக்கு நன்றாகத் தெரியும். நீர் சொன்ன வார்த்தைகள் சுலோகமே. அதைப்பற்றிக் கவலை வேண்டாம். அனந்த கல்யாண குண பரிபூர்ணரான பகவான் ஸ்ரீ ராமனாக அவதரித்துத் துஷ்ட ராக்ஷஸர்களை ஸம்ஹரித்து, ஸாதுக்களை ரக்ஷித்துத் தர்மத்தை நடத்திக் காட்டி நிலை நிறுத்தின புண்ய கதையான ராம சரித்தத்தை ஸகலஜனங்களும் கேட்டுப் பாபம் தீர்ந்து உத்தம கதியை

அடைய வேண்டுமென்று உம்மால் செய்விக்க நிச்சயித்தேன். என் இஷ்டப்படியே ஸரஸ்வதி உமது வாக்கிலிருந்து இந்த வாக்கியத்தைச் சொன்னாள். ஆகையால், ராம சரிதம் முழுவதையும் செய்யும். தர்மாத்மாவும் புத்திமானும் வீரசிகாமணியும் சகல கல்யாண குண ஸம்பன்னனுமான ராமனுடைய சரிதத்தை நாரதர் உமக்கு உபதேசித்தபடி சொல்லும்.

"ராமன், லக்ஷ்மணன், ஸீதை, ராக்ஷஸர்கள் முதலிய இந்தச் சரிதத்தில் ஸம்பந்தப்படுகிறவர்கள் செய்தவை யாவும், லோகத்திற்குத் தெரிந்ததும் தெரியாததும், உமக்குப் பூர்ணமாய்த் தெரியக்கடவது. நீர் செய்த காவியத்தில் ஒவ்வொரு வார்த்தையும் உண்மையாயிருக்கும்; பொய்யாகாது. பிரயத்தனமில்லாமல் வெள்ளமாய் உமது வாக்கு பெருகும். நடந்த விஷயங்களை நடந்தபடி பார்க்கும் ஞான திருஷ்டியையும் அவைகளை உள்ளபடி வருணிக்கும் அருள் வாக்கையும் உமக்குக் கொடுத்தேன். ஆகையால் ஸகல பாபங்களையும் போக்கிப் பரமானந்தத்தைக் கொடுக்கும் ராம சரிதத்தைச் சுலோகங்களால் நீர் செய்யலாம். பூமியில் மலைகளும் ஆறுகளும் உள்ளவரையில் நீர் செய்த ராமாயணக் கதையும் பூமியில் வழங்கும். இதே இந்தக் காவியத்தின் மஹிமை. நீர் செய்யும் ராமாயணக் கதை லோகத்தில் வழங்கும் வரையில், நீர் பூலோகத்தில் இருப்பீர். பிறகு என்னுடைய உத்தம லோகங்களில் ஆனந்தத்தை அனுபவிக்கக் கடவீர். இதனால் உமக்குக் கிடைக்கும் பிரயோஜனம் இதே" என்று அனுக்ரஹித்துப் பிதாமஹர் அங்கேயே மறைந்தார். அதைக் கண்டு வால்மீகியும் அவருடைய சிஷ்யர்களும் ஆச்சரியப்பட்டார்கள்.

பிறகு அவர்கள் அந்த மஹரிஷியால் செய்யப்பட்ட 'மாநிஷாத' என்ற சுலோகத்தை வெகுப் பிரீதியுடன் அடிக்கடி பாடினார்கள். நான்கு பாதங்களோடும் அவைகளில் ஸமமான அக்ஷரங்களோடும் வால்மீகியால் சொல்லப்பட்ட அந்தச் சுலோகம், அடிக்கடி பாடுவதால் எல்லோராலும் கொண்டாடத் தக்கதாயிற்று. பிறகு தம் உத்தேசம் தடையில்லாமல் நிறைவேறவேண்டிப் பகவானைப் பிரார்த்தித்து, "ராமாயணம் முழுவதையும் இப்படிப்பட்ட சுலோகங்களால் செய்யக்கடவேன்" என்று நிச்சயித்தார். விசால புத்தியுள்ள அந்த மஹரிஷி, கீர்த்தியின் அவதாரமான ராமனுடைய சரிதத்தையும் குணங்களையும் வர்ணித்து, அர்த்தம், பதம், சந்தஸ், ஸமமான அக்ஷரங்கள் பொருந்தி, கேட்பவர்களின் மனத்தைக் கவரும் பல சுலோகங்களால் அதைச் செய்து அழிவில்லாத கீர்த்தியை அடைந்தார். ரகு குலத்தில் பிறந்த அரசர்களுக்குள் சிரேஷ்டனான ராகவனுடைய சரித்திரமும், அவர் தசமுகனை ஸம்ஹாரம் செய்ததும் வால்மீகி மஹர்ஷியால் காவிய ரூபமாகச் செய்யப்பட்டதை எல்லோரும் கேளுங்கள். அதில் பதங்களின் சேர்க்கையும், அக்ஷரங்களின் சேர்க்கையும், பதங்களின் கருத்தும், சாஸ்திரத்தை ஒட்டியிருக்கின்றன; ஒன்றுக்கொன்று ஏற்றத்தாழ்வில்லாமல் ஸமமாயும் மதுரமாயும் தெளிவான அர்த்தமுள்ளதாயும் இருக்கும் வாக்கியங்களால் அமைக்கப்பட்டிருக்கிறது.



தது$^3$பக$^3$த ஸமாஸ ஸந்தி$^4$யோக$^3$ம்
ஸம மது$^4$ரோபநதார்த$^2$ வாக்யப$^3$த்$^3$த$^4$ம் |
ரகு$^4$வர சரிதம் முநி ப்ரணீதம்
த$^3$ஶ ஶிரஸஶ்ச வத$^4$ம் நிஶாமயத்$^4$வம் || (44)

## ஸர்க்கம் 3

## கதா ஸங்க்ரஹம்

ஶ்ருத்வா வஸ்து ஸமக்$^3$ரம் தத் த$^4$ர்மாத்மா த$^4$ர்ம ஸம்ஹிதம் |
வ்யக்த மந்வேஷதே பூ$^4$யோ யத்$^3$ வ்ருத்தம் தஸ்ய தீ$^4$மத: || (1)

### அவதாரிகை

இந்தக் காவியத்தில் வர்ணிக்கப்படும் விஷயம் நிர்மலமான ஞான திருஷ்டியால் பார்க்கப்பட்டது. லோகோத்தமனை நாயகனுடைய குணங்களால் அலங்கரிக்கப்பட்டது; ஆகையால் ஸர்வோத்தமமானது.

நான்கு புருஷார்த்தங்களையும் தெளிவாய் விளக்கும் ராம சரிதத்தை வால்மீகி நாரதரிடமிருந்து கேட்டார்; ஆயினும் அந்தத் தர்ம சிந்தையுள்ளவர் அதை இன்னும் நன்றாய்த் தெரிந்துகொள்ள முயன்றார். விதிப்படி ஆசமனம் செய்து, கிழக்கு நுனியாய்ப் போடப்பட்ட தர்ப்பங்களில் உட்கார்ந்து, தம் குருவை மனதால் நமஸ்கரித்துக் கைகூப்பி, பிரஹ்மாவின் அனுக்ரஹத்தால் கிடைத்த யோக பலத்தால் பின்வருமாறு யோசித்தார்: ராமன், லக்ஷ்மணன் ஸீதை, தசரதர், ராஜபத்னிகள், கோஸல ஜனங்கள் முதலியவர்களுக்கு நேர்ந்த யாவற்றையும், அவர்களின் பேச்சு, ஸம்பாஷணை, நடை உடை பாவனை, வேடிக்கை வார்த்தை, கலஹம், கோபம், துக்கம் முதலியவைகளையும், பித்ருவாக்ய பரிபாலனத்திற்காக ராம லக்ஷ்மணர்களும் ஸீதையும் வனத்தில் வஸித்தபொழுது அவர்களுக்கு நேர்ந்ததையும்; அதற்குமேல் நடக்கப்போவதையும் உள்ளங்கை நெல்லிக்கனியைப்போல் ஞானக் கண்ணால் ஸ்பஷ்டமாக பார்த்தார். ராமனுடைய கல்யாண குணங்களைப் பார்த்து அனுபவிக்கும்பொழுது அவருக்குப் பரமானந்தமுண்டாயிற்று. தேஜஸ் அதிகரித்தது. லோகரக்ஷணத்திற்காக ரகு குலத்தில் அவதரித்து ஸகல பிராணிகளின் மனதைக் கவர்ந்த ராமனுடைய சரிதத்தை, நாரதர் தனக்கு உபதேசித்தபடி, ராமாயணமென்ற மஹா காவியமாகச் செய்ய ஆரம்பித்தார்.

ஸமுத்திரத்தில் கிளிஞ்சல் முத்துச்சிப்பி சங்கு முதலிய ஸாமான்ய வஸ்துக்களும், ரத்னங்கள் முதலிய விலையுயர்ந்த பதார்த்தங்களும் கலந்திருப்பது போல், தர்மம் மோக்ஷம் என்ற புருஷார்த்தங்கள் இந்தக் காவியத்தில் பிரதானமாகவும், அர்த்தமும் காமமும் சுருக்கமாகவும் காட்டப்பட்டிருக்கின்றன. சுலோகங்கள் கேட்பதற்கு மதுரமாக, அவைகளின் அர்த்தங்கள் மனத்திற்கு விசேஷ ஆனந்தத்தைக் கொடுக்கின்றன. ஸகல வேதங்களும் எந்தப் பரம புருஷனைத் துதிக்கின்றனவோ அவருடைய கல்யாண குணங்களே இதில் வர்ணிக்கப்படுகின்றன.

**பால காண்டம்**

தசரதர் செய்த விசேஷ தவத்தால் மஹா விஷ்ணுவே அவருக்குப் புத்திரனாக அவதாரம் செய்ததும்; சிறுவயதிலேயே மாரீசன் ஸுபாஹு முதலிய கோர ராக்ஷஸர்களை ஜயிக்கும் பலம், வீரியம், எல்லோர்க்கும் அனுகூலமாக இருப்பது, எல்லோருடைய ப்ரீதிக்கும் பாத்திரமாக இருப்பது, பிறர் செய்யும் குற்றங்களைப் பொறுப்பது, எப்பொழுதும் பிரஸன்னமாக இருப்பது, புன் சிரிப்புடன் பேசுவது முதலிய உத்தம குணங்களும், ராமலக்ஷ்மணர்கள் விசுவாமித்திரருடன் போனதும் அப்பொழுது அவரால் சொல்லப்பட்ட விசித்திரக் கதைகளும், மிதிலையில் ராமன் பரமசிவனுடைய வில்லை முறித்ததும், ராம லக்ஷ்மண பரத சத்ருக்னர்கள், ஸீதை, ஊர்மிளை, மாண்டவி, சுருதகீர்த்தி என்றவர்களை மணம் புரிந்ததும், ராமனுக்கும் பரசுராமனுக்கும் ஸம்வாதமும் இந்தக் காண்டத்தில் சொல்லப்படுகின்றன.

**அயோத்யா காண்டம்**

ராமனிடத்தில் சேர்ந்திருந்த ஸகல ராஜலக்ஷணங்களும், அவரை யுவராஜாவாக அபிஷேகம் செய்யத் தசரதர் செய்த முயர்சியும், கைகேயி அதைத் தடுத்து ராமனைக் காட்டிற்கனுப்பினதும், நகரத்து ஜனங்கள் பிரலாபித்ததும், தம்முடன் வந்தவர்களை அவர் தமஸா நதிக்கரையில் விட்டுப் போனதும், கங்கைக் கரையில் குஹனைக் கண்டு ஸுமந்திரரை அங்கே நிறுத்திவிட்டதும், கங்கையைத் தாண்டிப் பரத்வாஜரைத் தரிசித்ததும், அவருடைய உத்தரவின்படி சித்திரகூட மலையில் லக்ஷ்மணனால் கட்டப்பட்ட பர்ணசாலையில் ஸீதையுடன் வஸித்ததும், புத்திர சோகம் தாங்காமல் தசரதர் உயிரைவிட்டதும், பரதன் ராமனிடத்திற்கு வந்து அயோத்யைக்கு வரும்படி ப்ரார்த்தித்ததும், ராமலக்ஷ்மணர்கள் பிதாவுக்கு உத்தரக் கிரியைகளைச் செய்ததும், ராமனுடைய மரவடிகளைப் பரதன் நந்திக் கிராமத்தில் அபிஷேகம் செய்து அவருக்காக அங்கே காத்துக் கொண்டிருந்ததும், ராமன் அத்ரியின் ஆசிரமத்திற்கு வந்ததும், அனஸூயை ஸீதைக்குச் சந்தனம் முதலியவைகளைக் கொடுத்ததும் இந்தக் காண்டத்தின் கதை.



**ஆரண்ய காண்டம்**

அவர்கள் தண்டகாரண்யத்தில் புகுந்ததும்; விராதனுடைய வதமும்; சரபங்கர் ஸுதீக்ஷ்ணர் அகஸ்தியர் ஜடாயு முதலியவர்களைத் தரிசித்ததும்; பஞ்சவடியில் வஸிக்கும்பொழுது சூர்ப்பணகை வந்து அவர்களுடன் ஸம்பாஷித்ததும்; அவளுடைய காதையும் மூக்கையும் லக்ஷ்மணன் அறுத்ததும்; அதற்காக யுத்தம் செய்ய வந்த கரன் தூஷணன் த்ரிசிரஸ் முதலிய ராக்ஷஸர்களை ராமன் கொன்றதும்; அதைக் கேட்டு ராவணன் மாரீசனுடன் அங்கே வந்து ஸீதையை எடுத்துப் போனதும்; ராமன் மாரீசனைக் கொன்றதும்; ஸீதையைக் காணாமல் ராமன் பிரலாபித்ததும், ஜடாயு உத்தமகதி யடைந்ததும்; கபந்தனுடைய வதமும்; சபரி மோக்ஷமடைந்ததும்; ராஜபுத்திரர்கள் பம்பா நதிக்குச் சென்றதும் இந்தக் காண்டத்தின் சுருக்கம்.

**கிஷ்கிந்தா காண்டம்**

ரிச்யமூக பர்வதத்தில் ராமன் ஸுக்ரீவனைக் கண்டு அக்னி ஸாக்ஷியாக அவனுடன் ஸ்நேஹம் செய்ததும்; அவனுக்கு நம்பிக்கையை உண்டாக்கினதும், ஸுக்ரீவனுடன் வாலி யுத்தம் செய்யும் பொழுது ராமன் அவனைக் கொன்றதும்; தாரையின் பிரலாபமும்; ஸுக்ரீவ பட்டாபிஷேகமும்; அவனுடைய பிரதிக்ஞையும்; ராமன் மழைக்காலத்தில் பிரஸ்ரவண கிரியில் தங்கினதும்; ஸுக்ரீவன் தாமதிக்கிறானென்று ராமன் கோபம் கொண்டதும்; வானராதிபதி ஸைன்யங்களைத் தருவித்து, பூலோகத்தை வர்ணித்து நான்கு திக்குகளிலும் ஸீதையைத் தேட அனுப்பினதும்; ராமன் தன் மோதிரத்தை மாருதியிடத்தில் கொடுத்தனுப்பினதும்; தெற்கில் போன வானரர்கள் குகையில் நுழைந்து தடுமாறினதும்; ஸமுத்திரக்கரையில் பிராயோபவேசம் செய்ததும்; ஸம்பாதியால் ஸீதையின் வரலாற்றை அறிந்ததும்; மாருதி மஹேந்திர பர்வதத்திலேறி ஸமுத்திரத்தைத் தாண்ட முயன்றதும் இந்தக் காண்டத்தில் வர்ணிக்கப்படுகின்றன.

**ஸுந்தர காண்டம்**

மைநாகபர்வதம் அவரை உபசரித்ததும்; அவர் ஸிம்ஹிகையைக் கொன்று லங்கைக்குச் சென்று மலய பர்வதத்தில் இறங்கி ராத்திரியில் நகரத்திற்குச் சென்றதும்; ஏகாந்தத்தில் ஆலோசித்ததும்; தூங்கும் ராவணனைக் கண்டதும்; பர்ணசாலையில் தேடினதும்; ராவணனுடைய ஸ்த்ரீகளைப் பார்த்ததும்; அசோகவனத்தில் ஸீதையைக் கண்டதும்; ராக்ஷஸிகள் அவளை உபத்ரவித்ததும்; ராவணன் அவளிடத்தில் பேசினதும்; அவள் தான் கண்ட ஸ்வப்னத்தை திரிஜடைக்குச் சொன்னதும்; மாருதி அவளிடத்தில் ராமனுடைய மோதிரத்தைக் கொடுத்ததும்; அவளுடைய சூடாமணியை வாங்கிக்

கொண்டு அசோகவனத்தை அழித்ததும்; அதை ராக்ஷஸிகளால் அறிந்த ராவணன் அனுப்பின கிங்கரர்களை மாருதி கொன்றதும்; பிரஹ்மாஸ்திரத்திற்குக் கட்டுப்பட்டதும்; லங்கையைக் கொளுத்திக் கர்ஜித்ததும்; மறுபடியும் ஸமுத்திரத்தைத் தாண்டி மது வனத்தை அழித்ததும்; ராமனிடத்தில் சூடாமணியைக் கொடுத்துத் தேற்றினதும் இந்தக் காண்டத்தில் வர்ணிக்கப்படுகின்றன.

**யுத்த காண்டம்**

ராம லக்ஷ்மணர்கள் வானர ஸைன்யத்துடன் ஸமுத்திரக்கரைக்குச் சென்றதும்; விபீஷணனுக்கு அபயப் பிரதானம் செய்ததும்; நளன் ஸமுத்திரத்தில் அணை போட அதன் வழியாய் லங்கைக்குச் சென்று அதை முற்றுகையிட்டு, விபீஷணன் சொன்ன உபாயங்களால் கும்பகர்ணன் இந்திரஜித்து ராவணன் முதலிய ராக்ஷஸ சிரேஷ்டர்களையும் ஸைன்யங்களையும் ஸம்ஹரித்து, ஸீதையை மீட்டதும்; விபீஷணனை லங்கையில் அபிஷேகம் செய்ததும்; எல்லோரும் புஷ்பக விமானத்திலேறி அயோத்யைக்கு வந்ததும்; பரத சத்ருக்னர்களைக் கண்டதும்; **ஸ்ரீராமன் பட்டாபிஷேக மஹோத்ஸவம் கண்டருளினதும்;** வந்திருந்தவர்களை உபசரித்து ஊருக்கனுப்பினதும்; ராஜ்யபாலனமும் இந்தக் காண்டத்தின் விஷயம்.

**உத்தர காண்டம்**

ராவணாதி ராக்ஷஸர்களின் விருத்தாந்தமும்; ராமனுடைய ராஜ்ய பரிபாலன விமரிசையும்; லோகாபவாதத்திற்குப் பயந்து அவர் ஸீதையை காட்டிற்கனுப்பினதும்; அச்வமேதமும்; இனி நடக்கும் வரலாறுகளும் வால்மீகி மஹரிஷியால் தெளிவாய் இந்தக் காண்டத்தில் சொல்லப்பட்டிருக்கின்றன

*அநாக$^{3}$தம் ச யத் கிஞ்சித் ராமஸ்ய வஸுதா$^{4}$ தலே |*
*தச் சகாரோத்தரே காவ்யே வால்மீகிர் ப$^{4}$க$^{3}$வாந் ரிஷி: || (40)*

## ஸர்க்கம் 4

# ராமாயணத்தைப் பாடினது

*ப்ராப்த ராஜ்யஸ்ய ராமஸ்ய வால்மீகிர்ப$^{4}$க$^{3}$வாந் ரிஷி: |*
*சகார சரிதம் க்ருத்ஸ்நம் விசித்ர பத$^{3}$ மாத்மவாந் || (1)*

**அவதாரிகை**

ராமாயண மென்ற கிரந்தம் ஸர்வோத்தமம் என்பது இந்த ஸர்க்கத்தில் காட்டப்படுகிறது.

---

**ஸ்ரீ**ராமன் ராஜ்யாபிஷேகம் பெற்று ஆண்டு வரும்பொழுது, பிரஹ்மாவின் கிருபையால் ஞான திருஷ்டியை அடைந்த வால்மீகி,



விசித்திரமான பதச் சேர்க்கையுள்ள சுலோகங்களால் ராம சரிதத்தைச் செய்தார். இந்த மஹா காவியத்தில் ஏழு காண்டங்களும் ஐந்நூறு ஸர்க்கங்களும் இருபத்து நாலாயிரம் (24,000) சுலோகங்களும் அடங்கியிருக்கின்றன. பட்டாபிஷேகத்திற்குப் பின்பு நடந்தவைகளையும் இனி நடக்கப் போகிறவைகளையும் வர்ணித்து, "இந்தக் காவியத்தைக் கற்று ஜனங்களுக்கு வெளிப்படுத்தக்கூடியவர்கள் யார் ?" என்று ஆலோசித்தார்.

தகுந்த சிஷ்யன் கிடைக்க வேண்டுமென்று பரமாத்மாவை வேண்ட, குசன் லவன் என்று இரண்டு சிஷ்யர்கள் அவரை நமஸ்கரித்து, ராமாயணத்தைத் தங்களுக்கு உபதேசிக்கும்படி கேட்டார்கள். அவர்கள் ராஜகுமாரர்கள், தைரியமுள்ளவர்கள், ஆரம்பித்த காரியத்தைக் கைவிடாமல் நடத்துகிறவர்கள், குரு சுச்ரூஷையின் தர்மத்தை அறிந்தவர்கள், வேத வேதாங்கங்களைப் பூர்ணமாய்க் கற்றவர்கள், வித்தைகளை அப்யஸித்துக் கீர்த்தி பெற்றவர்கள், கற்றதை மறவாமல் ஞாபகத்தில் வைத்துக் கொள்ளக் கூடிய புத்தியுள்ளவர்கள், ஸஹோதரர்கள், மதுரமான சாரீரமுள்ளவர்கள், தம் ஆசிரமத்தில் வஸிப்பதால் தமக்கு மிகவும் பிரியமானவர்கள். ஆகையால் அவர்களை அங்கீகரித்து, ஸகல வேத சாஸ்திரங்களின் அர்த்தங்களை வெளியிடும் தம் காவியத்தை அவர்களுக்கு உபதேசித்தார். அதற்கு ராமாயணமென்றும், **மஹிமையுள்ள ஸீதா சரிதமென்றும், பௌலஸ்தியவதம்** என்றும் பெயர். படிப்பதற்கும் பாடுவதற்கும் மதுரமாக, த்ருதம் மத்யம் விலம்பிதமென்று காலப் பிரமாணங்களையுடையதாக ஷட்ஜம் முதலிய ஏழு ஜாதி (ராக முறை)களால் அமைக்கப்பட்டதாக தந்த்ரீ வாத்யங்களுக்கும் லயத்திற்கும் ஒத்ததாக, சிருங்காரம் கருணை ஹாஸ்யம் வீரம் பயானகம் ரௌத்ரம் பீபத்ஸம் அத்புதம் சாந்தமென்ற நவரஸங்களால் அலங்கரிக்கப்பட்ட அந்தக் காவியத்தை அவர்கள் கற்றார்கள். ஸங்கீத சாஸ்திரத்தின் உண்மையை அறிந்தவர்கள்; வீணை முதலிய வாத்தியங்களை வாசிப்பதில் நிபுணர்கள்; மந்த்ரம் மத்யம் தாரமென்ற ஸ்வரங்களின் உத்பத்தி ஸ்தானங்களை அறிந்தவர்கள்; மனுஷ்ய வேஷம் பூண்ட கந்தர்வர்களைப் போன்றவர்கள்; நிகரற்ற அழகும் உத்தம லக்ஷணங்களும் பொருந்தினவர்கள்; நாடக லக்ஷணங்களில் நிபுணர்களானதால் பாடும்பொழுது உபயோகிக்கும் அபிநயக்கிரமங்களை நன்றாக அறிந்தவர்கள்; பேசும்பொழுதும் இனிமையான குரல் உடையவர்கள்; ராமனுடைய தேகத்தின் பிரதிபிம்பங்களைப் போன்றவர்கள்; மனோ வாக்கு காயங்களில் தோஷமற்றவர்கள்.

அவர்கள் குருவின் உபதேசப்படி ராமாயணம் முழுவதையும் மனத்தில் நிறுத்தி, ரிஷிகளும் வேதியர்களும் ஸாதுக்களும் கூடியிருக்கும் இடங்களில் அந்தத் தர்ம கதையை ஜாக்கிரதையாகப் பாடிக் கொண்டு வந்தார்கள். ராமன் செய்த அசுவமேதயாகத்தில் வைதிகக்

கிரியைகளுக்கு நடுவில் இளைப்பாறிக்கொண்டிருந்த மஹரிஷிகளிடத்திலும் பாடினார்கள். மஹா புத்திமான்களும் பாக்கியவான்களுமான அந்தச் சிறுவர்கள் பாடுவதைக் கேட்டு, ரிஷிகள் மிகவும் ஆச்சரியப்பட்டு ஆனந்தக்கண்ணீர் உகுத்து, "நல்லது, நல்லது" என்று கொண்டாடினார்கள். தர்மவான்களான அந்த முனிகள் பரம ப்ரீதியடைந்து, "பாட்டின் மாதுரியத்தை என்னென்று சொல்வோம்! அதிருக்கட்டும்; சுலோகங்கள் எவ்வளவு இனிமையாயிருக்கின்றன! வெகு நாளைக்கு முன் நடந்த விஷயங்கள் இப்பொழுது கண்ணிற்கெதிரே நடப்பவை போலிருக்கின்றனவே" என்று, ராமாயணத்தையும் வால்மீகியையும் குசலவர்களையும் புகழ்ந்தார்கள்.

மஹா தபஸ்விகளின் ஸந்தோஷத்தால் அவர்கள் உத்ஸாஹமடைந்து, ராக லக்ஷணங்களை அநுஸரித்து, ஸ்வரம் குறையாமல், கேட்பவர்களுக்கு சுலோகங்களின் கருத்து நன்றாக விளங்கும்படி, மனோஹரமாகப் பாடினார்கள். ஒரு ரிஷி மிகவும் ப்ரீதியடைந்து எழுந்து, கலசத்தை அவர்களுக்கு வெகுமதியாகக் கொடுத்தார். ஸங்கீதத்தின் குண தோஷங்களை அறிவதில் ப்ரஸித்தியுள்ள மற்றொரு ரிஷி மரவுரிகளைக் கொடுத்தார். ஒருவர் கிருஷ்ணாஜினத்தையும் ஒருவர் முஞ்சிப்புல்லால் செய்த அரை நூலையும், ஒருவர் கமண்டலுவையும், ஒருவர் யஜ்ஞோபவீதத்தையும் (பூணூல்), ஒருவர் ஜபமாலையையும், ஒருவர் தர்ப்பாஸனத்தையும், ஒருவர் கௌபீனத்தையும், ஒருவர் கோடாலியையும், ஒருவர் காஷாயத்தையும், ஒருவர் தலைமயிர் கட்டும் கயிற்றையும், ஒருவர் விறகு கட்டும் கயிற்றையும், ஒருவர் யாக பாத்திரத்தையும், ஒருவர் விறகுக் கட்டையையும், ஒருவர் அத்திப் பலகையையும் கொடுத்தார்கள். சிலர் "உங்களுக்கு மங்களம் உண்டாகட்டும்" என்றார்கள். சிலர் "நீண்டகாலம் வாழக்கடவீர்" என்றார்கள். எல்லா ரிஷிகளும் பல வரங்களைக் கொடுத்தார்கள். அவர்களுடைய சொல் வீணாகாது.

ராஜவீதிகளிலும் தெருக்களிலும் உள்ள ஸகல ஜனங்களும் "வால்மீகி முனிவரால் செய்யப்பட்ட இந்த மஹா காவியம் மிகவும் ஆச்சரியகரமானது. ஆரம்பிக்கப்பட்டபடியே முடிக்கப்பட்டிருக்கிறது. இனி வரப்போகும் கவிகளுக்கும் இதே முக்கியமான ஆதாரம். எல்லாவித கானத்திலும் நிபுணர்களான மூனி புத்திரர்களே! தீர்க்கமான ஆயுளையும் ஆரோக்யத்தையும் கொடுப்பதும், ஸகல ஸ்வரங்களும் அமைந்திருப்பதால் கேட்பவர்களுக்கு மனோஹரமாக இருப்பதுமான இந்த ராமாயணத்தை நன்றாகப் பாடினீர்கள்" என்று புகழ்ந்தார்கள்.

இப்படி எல்லோராலும் கொண்டாடப்படும் குசலவர்களைப் பற்றிச் சத்ருகுலகாலனான ராமன் கேள்விப்பட்டு, அவர்களைப் பரதனால் அழைப்பித்துப் பார்த்துத் தகுந்தபடி உபசரித்தார். அசுவமேத தீக்ஷை பெற்ற ரகுநாதன், யாதொரு கவலையுமின்றி, தம்பிகளும் பந்துக்களும் மந்திரிகளும் சூழ்ந்திருக்க, தசரதர் ஸ்வர்க்கத்திலிருந்து கொண்டுவந்த தங்க ஸிம்ஹாஸனத்தில் வீற்றிருந்தார். நிகரற்ற அழகுவாய்ந்த அவ்விரு பையன்களை உற்றுப் பார்த்து, தம்பிகளை நோக்கி "தேவதைகளைப்போல் தேஜஸ்விகளான இந்தச் சிறுவர்கள், விசித்திரமான பதங்களும் அர்த்தங்களும் அடங்கிய ஒரு சரித்திரத்தைப் பாடுகிறார்கள். அதைக் கவனித்துக் கேட்போம்" என்று, கானவித்யையில் நிகரற்ற குசலவர்களைப் பாடும்படி உத்தரவிட்டார்.



அவர்கள் சிலாக்கியமான ராகாலாபத்துடன், தந்த்ரீ வாத்யங்களுக்கும் லயத்திற்கும் ஒத்து, மதுரமாக, சுலோகத்தின் அர்த்தம் கேட்பவர்களுக்கு நன்றாக விளங்கும்படி பாடினார்கள். அந்த கானாமிருதம் கேட்பவர்களின் காதுகளில் புகுந்து மனத்தையும் அவயவங்களையும் ஆனந்தமடையச் செய்தது. அப்பொழுது ராமன் "ஜனங்களே! இந்தச் சிறுவர்கள் ரிஷிவேஷம் தரித்தாலும் உத்தம ராஜ லக்ஷணங்கள் பொருந்தினவர்கள்; பாடகர்களாகிலும் மஹா தபஸ்விகள்; இவர்கள் பாடும் ஸீதா சரித்திரமோ விசேஷ மஹிமையுள்ளது. ப்ரியநாயகியை விட்டுப் பிரிந்த எனக்கும் அதிக ஆறுதலைக் கொடுக்கிறது. ஆகையால் இதை நன்றாகக் கேளுங்கள்" என்றார். ராமனுடைய உத்தரவைப் பெற்றுக் குசலவர்கள், மார்க்கமென்ற ஸங்கீத முறைப்படி பாடினார்கள். நல்ல பதார்த்தத்தை ஒருவனே புஜிக்கக்கூடாதென்ற நியாயப்படி ராமன் 'இந்த உத்தம கானத்தை நான் மாத்திரம் கேட்டு ஆனந்திக்கக்கூடாது; எல்லோரும் கேட்க வேண்டும்' என்று நினைத்தார். உன்னதமான ஆஸனத்தில் இருந்தபடியால் தன்னை தனியே இருப்பவராக நினைத்துக்கொண்டார். ஆனால், திடீரென்று எழுந்தால் ஸபையில் இருப்பவர்களும் எழுந்திருப்பார்கள். அப்பொழுது ரஸபங்கம் நேரும். ஆகையால் ஆஸனத்திலிருந்து மெள்ள மெள்ள இறங்கி, ஸப்யோர்களுடன் உட்கார்ந்து, அந்த ஸுகத்தை அனுபவிக்க விரும்பி அதில் மனத்தைச் செலுத்தித் தம்மை மறந்தார்.

ததஸ்து தௌ ராமவச: ப்ரசோதி3தௌ,
அகா3யதாம் மார்க3 விதா4ந ஸம்பதா3 |
ஸ சாபி ராம: பரிஷத்3 க3த: ஶனை:
பு3பூ4ஷயா ஸக்தமநா ப3பூ4வ ஹ || (36)

## ஸர்க்கம் 5

## அயோத்யை

ஸர்வா பூர்வமியம் யேஷாம் ஆஸீத் க்ருத்ஸ்நா வஸுந்த4ரா |
ப்ரஜாபதி முபாதா3ய ந்ருபாணாம் ஜய ஶாலிநாம் || (1)

**அவதாரிகை**

கருணாமூர்த்தியான வால்மீகி, ராமாயண காவியத்தை ஆரம்பித்து, அது விக்னமில்லாமல் முடிவு பெற்று அழிவற்ற கீர்த்தியை

அடையும்படி மங்களம் செய்கிறூர். ஆசீர்வாதம், நமஸ்காரம், விஷயத்தைக் குறிப்பிடுவது என்ற மூன்று வகையில் இங்கே மூன்ருவது காணப்படுகிறது. கிரந்தத்தின் விஷயத்தையும் பிரயோஜனத்தையும் தெரிவித்து, இதைக் கொண்டாட வேண்டுமென்று ஸாதுக்களை வேண்டுகிறூர். இந்த ஸர்க்கத்தில் பகவானுடைய அவதாரத்திற்கு யோக்கியமான ஸ்தலம் வர்ணிக்கப்படுகிறது.

---

**ஏ**ழு த்வீபங்களால் சூழப்பட்ட இந்தப் பூமி முழுதும், வைவஸ்வத மனுவென்ற பிரஜாபதியின் காலம்முதல் ஜயசாலிகளான எந்த இக்ஷ்வாகு வம்சத்தரசரால் ஆண்டுவரப்பட்டதோ, எந்த வம்சத்தில் ஸகரனென்ற அரசன் பிறந்து, தன் அறுபதாயிரம் புத்திரர்களால் ஸாகரத்தை வெட்டுவித்தானே, அந்த மஹிமை பொருந்தின இக்ஷ்வாகு வம்சத்தில் அவதரித்த ராமனுடைய சரிதத்தைச் சொல்லும் இந்தக் காவியம் ராமாயணமென்று பிரஸித்தி பெற்றது. ஸகல புருஷார்த்தங்களையும் கொடுக்கக்கூடிய இந்த கிரந்தத்தை ஆரம்பம் முதல் முடிவுவரையில் சிரத்தையுடன், கேவலம் நம்மைப்போன்ற மனுஷ்யன் செய்ததல்லவா என்று அஸூயைப்படாமல் கேட்க வேண்டும்.

ஸரயூநதியின் இருகரையிலும் கோஸலமென்று ஒரு தேசம் உண்டு. அது வெகு விஸ்தாரமுள்ளது; அளவற்ற தனதான்யங்கள் உள்ளது; அதில் எண்ணிறந்த ஜனங்கள் எப்பொழுதும் கவலையற்று ஆனந்தமாகக் காலம் கழிக்கிறூர்கள்.

அதில் அயோத்யை என்று ஒரு நகரமுண்டு. மனுஷ்யர்களுக்கு அதிபதியான வைவஸ்வதமனுவால் அது அமைக்கப்பட்டது; ஸகல லோகங்களிலும் பிரஸித்திபெற்றது; பன்னிரண்டு யோஜனை நீளமும் மூன்று யோஜனை அகலமும் உள்ளது; மேடுபள்ளங்கள் இல்லாத ஸம பூமியில் நேர்த்தியான தான்யங்கள் ஏராளமாயும் செழிப்பாயும் வளரக்கூடிய ஸ்தலத்தில் கட்டப்பட்டது. அதிலுள்ள ஜலம் கரும்பின் சாற்றைப்போல் ருசியுள்ளது. அதிலிருந்து பல இடங்களுக்குப் போகும் சாலைகளும், நிழல் அடர்ந்த மரங்களால் இருபுறத்திலும் அலங்கரிக்கப்பட்டிருக்கின்றன. கோட்டையைச் சுற்றியிருக்கும் அகழ்கள் மிகுந்த ஆழமும் அகலமும் உள்ளவை; சத்துருக்கள் பிரவேசிக்க முடியாத அரண்களையுடையவை; கோட்டைச் சுவர்களில் சதக்னி முதலிய ஆயுதங்களும் பலவித யந்திரங்களும் வைக்கப்பட்டிருக்கின்றன. ஆயுதபாணிகளான வீரர்கள் இரவும் பகலும் கண்கொட்டாமல் அங்கே காவலிருக்கிறூர்கள்; கோட்டைக் கதவுகள் மிகவும் உறுதியானவை. எக்காலத்திலும் பழங்களும் புஷ்பங்களும் நிறைந்த மரங்களுள்ள பல சோலைகளும் தோப்புகளும் தோட்டங்களும் உண்டு. ராஜவீதிகள் கோணுமல் ஒழுங்காக நகரத்தின் எல்லை வரையில் போகின்றன. அங்கே தினர்



தோறும் ஜலம் தெளித்துப் புஷ்பங்களை இறைப்பார்கள். கடைவீதிகள் அகலமாகவும் ஜனங்களுக்கு வேண்டிய ஸகல பதார்த்தங்களால் நிறைந்தும் இருக்கின்றன. விலையற்ற ரத்தினங்கள் இழைத்த பல அரண்மனைகளும் க்ரீடா கிருஹங்களும் (விளையாட்டறைகள்) க்ரீடா பர்வதங்களும் உப்பரிகைகளும் அங்கங்கே காணப்படும். தனதான்யங்களாலும் நவரத்தினங்களாலும் ஆடையாபரணங்களாலும் நிறைந்து, அந்த நகரம் விமானங்களைப் போன்ற அழகான வீடுகளால் அலங்கரிக்கப்பட்டிருந்தது. உயரமான மேடைகளின் மேல் கட்டப்பட்ட வீடுகளின் உச்சியில் அழகுள்ள கொடிகள் பறக்கின்றன.

புண்யபுருஷர்கள் தபோ பலத்தால் அடைந்த விமானக் கூட்டங்களைப்போல் தூரத்திலிருந்து காணப்படுகிறது. சொக்கட்டான் பலகையைப்போல் நடுவில் ராஜ கிருஹங்களும், சுற்றிலும் ராஜவீதிகளும் அமைக்கப்பட்டிருக்கின்றன. சில்பிகளாலும், அரசனுடைய கீர்த்தியைப் புகழும் ஸூத மாகத வந்தி வைதாளிகர்களாலும் ஸங்கீதத்திலும் நாட்டியத்திலும் நிபுணர்களாலும், அரசனைக் காண்பதற்கும் கப்பம்கட்டுவதற்கும் பல தேசங்களிலிருந்து வந்த அரசர்களாலும், தீவுகளிலிருந்தும் மற்றத் தேசங்களிலிருந்தும் வியாபாரத்திற்காக வந்த வைசியப் பிரபுக்களாலும் அது எப்பொழுதும் நிறைந்திருக்கும். பேரீ மிருதங்கம் மத்தளம் வீணை புல்லாங்குழல் முதலியவைகளின் நாதம் எப்பொழுதும் கேட்கப்படும். உத்தம ஜாதி யானைகள், குதிரைகள், பசுக்கள் , ஒட்டகங்கள், எருதுகள், கோவேறு கழுதைகள் பலகோடி உண்டு.

அதிலுள்ள பிராம்மணர்கள் வித்யைகளிலும் கலைகளிலும் நிபுணர்கள்; அக்னிஹோத்ரம் ஔபாஸனம் வைசுவதேவம் முதலிய வைதிகக்கிரியைகளை விதிப்படி அனுஷ்டிப்பவர்கள்; வேத வேதாங்கங்களைப் பூர்ணமாய்க் கற்றவர்கள்; சமம் தமம் ஸத்தியம் முதலிய உத்தம குண ஸம்பன்னர்கள்; வஸிஷ்டர் முதலிய மஹரிஷிகளைப் போன்றவர்கள்.

அதிலுள்ள க்ஷத்திரியர்கள் மஹாரதர்கள். அஸ்திர சஸ்திர வித்யையில் ஈடில்லாதவர்கள். ஸகல உபாயங்களையும் அறிந்தவர்கள். துணையற்றவனையும் ஒரே புத்திரனையும் அடிப்பதில்லை. மறைந்திருந்து அடிப்பதுமில்லை. மதம்கொண்ட சிங்கம், புலி, யானை, பன்றி முதலியவைகளைக் கைகளாலும் கூர்மையான ஆயுதங்களாலும் கொல்வார்கள்.

இப்படி அழகு வாய்ந்து நிகரற்ற காந்தியுடன் அயோத்யை என்ற உத்தம நகரம் பூமியில் பிரஸித்தி பெற்றது.

தாமக்$^{3}$நி மத்$^{3}$பி$^{4}$ர் கு$^{3}$ணவத்$^{3}$பி$^{4}$ ராவ்ருதாம்
த்$^{3}$விஜோத்தமைர் வேத$^{3}$ ஷட$^{3}$ங்க$^{3}$ பாரகை$^{3}$: |
ஸஹஸ்ரதை$^{3}$ஸ் ஸத்ய ரதைர் மஹாத்மபி$^{4}$:
மஹர்ஷி கல்பைர் ரிஷிபி$^{4}$ஸ்ச கேவலை: ‖ (24)

## ஸர்க்கம் 6

## த ச ர த ர்

*தஸ்யாம் புர்யா ம்யோத்4யாயாம் வேத3வித் ஸர்வ ஸங்க்3ரஹ: |*
*தீ3ர்க4 த3ர்ஶீ மஹாதேஜா: பௌர ஜாநபத3 ப்ரிய: ||* (1)

**அவதாரிகை**

*இந்த ஸர்க்கத்தில் பகவான் அவதரிக்கத் தகுதி வாய்ந்த புருஷன் வர்ணிக்கப்படுகிறான்.*

---

மஹாதேஜஸுள்ள வைவஸ்வதமனு லோகத்தை ரக்ஷித்தது போல், தசரதர் அயோத்யையில் இருந்து ராஜ்யத்தை ஆண்டு வந்தார். அவர் வேதங்களைக் கற்று, அவைகளின் உட்கருத்தை நன்றாக அறிந்தவர்; சூரர்களையும் வித்வான்களையும் ஆதரித்து வெகுமதித்து வசப்படுத்தினவர்; வெகுகாலத்திற்குப் பின் வரும் விஷயங்களை யோசிப்பவர்; மஹா தேஜஸ்வி; நகரத்திலும் நாட்டிலும் உள்ள ஜனங்களுக்கு மிகவும் பிரியமானவர்; இக்ஷ்வாகு வம்சத்தரசர்களில் அதிரதர்; விதிப்படி யாகங்களைச் செய்தவர்; குளம் கிணறு வெட்டுவிப்பது, தோட்டம் போடுவது, ஆலயங்களைக் கட்டுவது முதலிய தர்ம காரியத்தில் வெகு ஆசையுள்ளவர்; தன் குடிகளை வசப்படுத்தினவர்; மஹரிஷிகளுக்கு ஏறக்குறைய ஸமமானவர்; ராஜஸ்ரேஷ்டர்; மூன்று லோகங்களிலும் பிரஸித்திபெற்றவர். எல்லையற்ற தேஹபலமுள்ளவர்; சத்துருக்களை ஜயித்தவர்; உத்தம மித்திரர்கள் உள்ளவர்; தனம் தான்யம் தங்கம் முதலிய உலோகங்கள் ரத்தினம் பட்டு வஸ்திரம் முதலிய அபூர்வ வஸ்துக்களைச் சேகரிப்பதில் இந்திரனையும் குபேரனையும் போன்றவர்; ஸத்தியத்தில் மிகுந்த பிரீதியுள்ளவர்; புருஷார்த்தங்களை ஒன்றுக்கொன்று தடைபடாமல் அனுஷ்டிப்பவர்; அவரால் ரக்ஷிக்கப்பட்ட அயோத்யை, இந்திரனால் ஆளப்பட்ட அமராவதியைப்போல் விளங்கிற்று.

நகரங்களுக்குள் மேலான அயோத்யையில் வஸிப்பவர்களெல்லோரும் ஸுகமாக வஸிப்பதால் எப்பொழுதும் ஸந்தோஷமும் தர்மசிந்தையும் வாய்ந்தவர்கள். குருமுகமாக சாஸ்திரங்களைப் பல தடவை கற்றவர்கள். தங்களுக்குக் கிடைத்ததில் திருப்தியடைந்து பிறருடைய பொருளில் கொஞ்சமேனும் ஆசையில்லாதவர்கள். உண்மை உரைப்பவர்கள். அல்பத்தனம் உள்ளவர்களும், பசு, குதிரை, தன தான்யம் இவை இல்லாதவர்களும், புருஷார்த்தங்களை அடையாத குடும்பிகளும் அதில் இல்லை. காமத்திலேயே மிகுந்த ஆசையுள்ளவனும், தானம், தர்ம காரியம், புத்திரன், பார்யை, பெற்றோர், ஸஹோதரன், பந்து முதலியவர்களை லோபத்தால் உபத்திரவிக்கும் கதர்யனும், கொடியவனும், படிப்பில்லாதவனும், நாஸ்திகனும் அதிலில்லை. எல்லா ஆண் பெண்களும் இந்திரியங்களை அடக்கி, இயற்கையாகவே நற்குணமும் ஆசாரமும் பொருந்தி, மஹரிஷிகளைப்போல் சுத்தமான மனதுள்ளவர்கள்; குண்டலம், தோள்வளை, கைவளை, தலைப்பாகை, ரத்தினமாலை இல்லாதவனும், தைல ஸ்நானம் செய்து வாஸனைத் திரவியங்கள் கலந்த சந்தனத்தை அணிந்து புஷ்பங்களைச் சூட்டிக் கொள்ளாதவனும், ஸ்வல்ப ஸுகமுள்ளவனும், மனத்தை அடக்காதவனும், அக்னிஹோத்திரங்களையும் யாகங்களையும் விதிப்படி செய்யாதவனும், பரஸ்த்ரீகளிடத்தில் ஆசையுள்ளவனும், ஸ்வல்பமான வித்தையும் செல்வமும் உள்ளவனும், போதுமான ஆஹாரம் கிடைக்காதவனும், திருடனும் அந்த நகரத்தில் இல்லை.

வேதியர்கள் இந்திரியங்களை அடக்கி, தானம் கொடுப்பது அத்யயனம் தானம் வாங்குவதென்றவைகளை, குறைகளை விலக்கி நடத்திக் கொண்டிருந்தார்கள். நாஸ்திகன், பொய்யன், சாஸ்திரமறியாதவன், அஸூயைக்காரன், இம்மை மறுமைக்கு வேண்டியவைகளை அடைய முடியாதவன், வேதவேதாங்கங்களைக் கற்காதவன், விரதங்களைச் செய்யாதவன், தானம்கொடாதவன், தீனன், மனவருத்தமுள்ளவன், நோயாளி, குரூபி, ராஜபக்தியற்றவன், அவ்வரசனுடைய காலத்தில் இல்லை. நான்கு வர்ணத்தாரும் நன்றி உள்ளவர்களாகவும், உசிதமான தானம் கொடுப்பவர்களாகவும், தேவதைகளையும் அதிதிகளையும் பூஜிப்பவர்களாகவும், சூரர்களாகவும், ஸத்தியத்தையும் தர்மத்தையும் விடாதவர்களாகவும், தீர்க்காயுஸுள்ள பெண்டுபிள்ளைகள் உடையவர்களாகவும் இருந்தார்கள், க்ஷத்திரியர்கள் வேதியர்களின் உத்தரவுப்படி நடந்தார்கள்; வைசியர்கள் க்ஷத்திரியர்களை அனுஸரித்தார்கள்; சூத்திரர்கள் மேற்குலத்தாருக்குப் பணிவிடை செய்தார்கள்.

முன் காலத்தில் மனிதர்களுக்கு நாதனான வைவஸ்வத மனுவைப்போல் தசரதர் அயோத்யையை ஆண்டார். எண்ணிறந்த யுத்த வீரர்கள் அதை ரக்ஷித்தார்கள். அவர்கள் அஸ்திரசஸ்திர வித்யையில் நிபுணர்கள். பிறர் செய்த அவமானத்தைப் பொறுக்காதவர்கள். கபடமற்றவர்கள்; எல்லையற்ற சௌரியம் உள்ளவர்கள். ஆகையால், ஸிம்ஹங்களால் நிறைந்த மலைக்குகையைப் போல், சத்துருக்கள் நெருங்க முடியாமல் அந்த நகரம் விளங்கிற்று.

காலாட்படைகளைத் தவிர காம்போஜம் பாஹ்லீகம் வனயு ஸிந்து என்ற தேசங்களில் உண்டாகி, இந்திரனுடைய உச்சைசிரவஸைப் போன்ற உத்தம ஜாதிக்குதிரைகள் கணக்கில்லாமல் அவ்வரசனுக்கு உண்டு.

விந்தியம் ஹிமாசலம் முதலிய மலைகளில் பிறந்து, ஐராவதம் மஹாபத்மம் அஞ்ஜனம் வாமனமென்ற திக்கஜங்களின் குலங்களில்

உண்டாகி, மலைகள் நடப்பதைப்போல் தோன்றி, எப்பொழுதும் மதங்கொண்ட பல யானைகளுண்டு. பத்ரம், மந்த்ரம், மிருகம், பத்ர மந்த்ரம், பத்ரமிருகம், மிருகமந்த்ரமென்று பல வகுப்புகள் அவை களில் உண்டு.

இவ்விதமான ஸைன்யங்களின் மிகுதியால் அந்நகரத்திற்கு இரண்டு யோஜனை தூரம் வரையில் சத்துருக்கள் நெருங்க முடியாது. 'அயோத்யை' (யுத்தத்தால் பிடிக்கமுடியாதது) என்ற பெயர் அதற்குத் தகும்.

உறுதியான சுவர்கள், கோட்டை வாசல்கள், தாழ்ப்பாள்கள், விசித்திரமான வீடுகள், பலவகை ஜனங்கள் முதலியன நிறைந்து, வஸிப்பதற்கு யோக்கியமாக, அயோத்யை என்று உண்மையான பெயருடன் விளங்கும் அந்நகரத்தை, மஹாதேஜஸ்வியும், சத்ருகுல காலனுமான த ச ர த ர் தேவேந்திரனைப்போல் காப்பாற்றி வந்தார்.

தாம் ஸத்ய நாமாம் த்[3]ருட[4] தோரணார்க[3]லாம்
க்[3]ருஹைர் விசித்ரை ருபஶோபி[4]தாம் ஶிவாம் |
புரீ மயோத்[4]யாம் ந்ருஸஹஸ்ர ஸங்குலாம்
ஶஶாஸ வை ஶக்ர ஸமோ மஹீபதி: || (28)

## ஸர்க்கம் 7

## மந்திரிகள்

தஸ்யா மாத்யா கு[3]ணை ராஸந் இக்ஷ்வாகோஸ்து மஹாத்மந: |
மந்த்ரஜ்ஞாஶ் சேங்கி[3]தஜ்ஞாஶ்ச நித்யம் ப்ரியஹிதே ரதா: || (1)

மஹா புத்திமானும் மஹா வீரனுமான தசரதருக்கு (1) த்ருஷ்டி, (2) ஜயந்தன், (3) விஜயன், (4) ஸித்தார்த்தன், (5) அர்த்தஸாதகன், (6) அசோகன், (7) மந்த்ரபாலன், (8) ஸுமந்திரன் என்று எட்டு மந்திரிகளுண்டு. மேலும் வஸிஷ்ட வாமதேவர்கள் எப்படி அவருக்கு மிகவும் பிரதானர்களோ, அப்படி மற்ற ரித்விக்குகள் (யாகம் செய்விப்பவர்கள்) மந்திரிகளாகவும் பிரதானர்களாகவும் இருந்தார்கள். அவர்கள் ஆலோசனையில் நிபுணர்கள், இங்கிதமறிந்தவர்கள், அரசனுக்கு அனுகூலமாயும் பிரியமாயும் இருக்கும் காரியத்தையே எப்பொழுதும் செய்கிறவர்கள், கீர்த்திமான்கள், ராஜ காரியத்தில் ஊக்கமுள்ளவர்கள், மனோ வாக்கு காயங்களில் சுத்தர்கள், யஜமானத்துரோக மற்றவர்கள் ; ஆன்வீக்ஷிகீ, தண்டம், வார்த்தா, த்ரயீ என்ற ராஜநீதி சாஸ்திரங்களில் கரைகண்டவர்கள் ; அதர்மத்தைச் செய்ய வெட்கிப்பவர்கள் ; சாஸ்திரங்களால் விலக்கப்பட்ட விஷயங்களில் இந்திரியங்களையும் மனத்தையும் செலுத்தாதவர்கள் ; ஐசுவரியம், புத்தி, தடையற்ற பராக்கிரமம் வாய்ந்தவர்



கள்; சொன்னபடி செய்கிறவர்கள்; தேஜஸும் பொறுமையும் உள்ளவர்களென்று பெயர் பெற்றவர்கள்.

எப்பொழுதும் சிரிப்புடன் பேசுகிறவர்கள் ; காமக்குரோத லோபங்களுக்கு உட்பட்டுப் பொய் சொல்லாதவர்கள்; எல்லாவிதத்திலும் பரீக்ஷிக்கப்பட்டு நம்பிக்கைக்குப் பாத்திரமானவர்கள் ; தன் ராஜ்யத்திலும் மற்ற ராஜ்யங்களிலும் நடந்ததும், நடப்பதும், நடக்கவிருப்பதுமான விஷயங்களை ஒற்றர்கள் வாயிலாக உடனே அறிகிறவர்கள் ; நன்றாக ஆலோசிக்கப்பட்டு நிச்சயம் செய்த விஷயத்தை ஸமயோசிதமாகத் தெரிவிப்பதில் நிபுணர்கள் ; தன் புத்திர மித்திர பந்துவானாலும் குற்றத்திற்குத் தகுந்தபடி தண்டிப்பவர்கள் ; பொக்கிஷத்தையும் ஸைன்யத்தையும் அடிக்கடி விருத்தி செய்வதில் நோக்கமுள்ளவர்கள் ; சத்துருக்களைத் தடுக்கும் சக்தியும் அவர்களை ஜயிப்பதில் குறைவற்ற உத்ஸாஹமும்உள்ளவர்கள்; நீதி சாஸ்திரப்படி நடப்பவர்கள் ; தங்களுடைய ராஜ்யத்தில் வஸிக்கும் ஸாதுக்களை ரக்ஷிப்பவர்கள் ; சத்ருவாயிருந்தாலும் குற்றம் செய்யாதவனை உபத்திரவிக்காதவர்கள்; குற்றமற்றவரை ஹிம்ஸிக்காமலும், குற்றவாளிகளை அவர்களுடைய குற்றத்திற்கும் சக்திக்கும் தகுந்தவாறு சிக்ஷித்தும் பொக்கிஷத்தை நிரப்புகிறவர்கள் ; ஒரே மனமுள்ளவர்கள் ; நேர்த்தியான வஸ்திர ஆபரணங்களால் எப்பொழுதும் அலங்கரிக்கப்பட்டவர்கள் ; நன்னடத்தையுடையவர்கள்; அரசனுடைய ஹிதத்தையே நாடி நீதி தவறாதவர்கள்; ஆசாரியர்களின் தோஷங்களைக் கவனிக்காமல் குணங்களையே கிரஹிப்பவர்கள். நடந்ததையும் நடக்கப் போவதையும் நிச்சயிக்கும் புத்திமான்களென்றும் பராக்கிரமசாலிகளென்றும் எல்லாத் தேசங்களிலும் பெயர்பெற்றவர்கள்; ஸந்தி, விக்ரஹம் யாநம் ஆச்ரயம் த்வைதீபாவம் ஆஸனம் என்ற குணங்களையும் ஸாம தான பேத தண்டம் ஆகிய உபாயங்களையும் ஸமயோசிதமாகவும், காலமறிந்தும் அனுஷ்டிக்கும் திறமை படைத்தவர்கள். ராஜ்ய வியவஹாரங்களை வெளியிடாதவர்கள் ; மேன்மேலும் தோன்றும் யுக்தியுடையவர்கள் ; எப்பொழுதும் பிரியமாகப் பேசுகிறவர்கள்.

இவர்கள் ராஜ்ய காரியங்களை நடத்தி வரும்பொழுது பிரஜைகள் தர்மத்திலேயே நோக்கமுள்ளவரானார்கள். இந்த உத்தம குணங்களால் அலங்கரிக்கப்பட்ட மந்திரிகளுடன் தசரதர் கவலையின்றி ஆண்டு வந்தார். அவர் ராஜ்யத்தில் நடக்கும் ஸகல விஷயங்களையும் சாரர்களால் உடனே அறிந்து, பராக்கிரமத்தால் சத்ருக்களை ஜயித்தார்; அதர்மத்தில் புத்தியைச் செலுத்தாமல் ராஜ நீதிப்படி குடிகளை ரக்ஷித்தார் ; எல்லையின்றி கொடுப்பவரென்றும், ஸத்யம் தவறாதவரென்றும் மூன்று லோகங்களிலும் பிரஸித்தியுள்ளவர். உத்தம மித்திரர்களை ஸம்பாதித்துக் குடிகளுக்கு நேரக்கூடிய எல்லா உபத்திரவங்களையும் நீக்கினார் ;அவரைப் போன்றவனோ அவருக்கு மேற்பட்டவனோ அக்காலத்தில் ஒரு அரசனுமில்லை. ஆலோ

சபையில் நிபுணர்களும், ராஜ்ய காரியங்களில் ஸமர்த்தர்களும் புத்தி சாலிகளுமான மந்திரிகளால் சூழப்பட்ட தசரதர், ஆயிரம் கிரணங்களுடன் உதிக்கும் ஸூரியனைப்போல் பிரகாசித்து, இந்திரன் ஸ்வர்க்கத்தை ரக்ஷிப்பதுபோல் பூமியை ஆண்டு வந்தார்.

தைர் மந்த்ரிபி4ர் மந்த்ரஹிதே நிவிஷ்டை:
வ்ருதோ நுரக்தை: குஶலை: ஸமர்தை2: |
ஸ பார்தி2வோ தீ3ப்தி மவாப யுக்த:
தேஜோமயைர் கோ3பி4ரிவோதி3தோர்க: || (22)

## ஸர்க்கம் 8

## தசரதர் அசுவமேதம் செய்ய நிச்சயித்தது

தஸ்ய த்வேவம் ப்ரப4ாவஸ்ய த4ர்மஜ்ஞஸ்ய மஹாத்மந: |
ஸுதார்த2ம் தப்யமாநஸ்ய நாஸீத் வம்ஶகர: ஸுத: || (1)

**அவதாரிகை**

பகவானுடைய ஆராதனமான அசுவமேதமே அவர் அவதாரம் செய்வதற்கு ஸாதனமாயிற்று.

---

தர்மாத்மாவும் இவ்விதமான மஹிமை பொருந்தினவருமான தசரதர், புத்திரபாக்கியத்தை அடைய, பல ஸாதனங்களை அனுஷ்டித்தும் பயன்படவில்லை. மனம் நொந்து இதற்கு என்ன செய்யலாமென்று யோசித்து, அதற்கு இடையூறாக இருக்கும் பாபங்களைப் போக்கக்கூடிய உபாயம் அசுவமேதமே என்று மந்திரிகளிடத்தில் சொல்ல அவர்களும் அதை அங்கீகரித்தார்கள். பிறகு அரசன் "ஸுமந்திரரே! என் புரோஹிதரையும் ஆசார்யர்களையும் சீக்கிரமாக அழைத்து வாரும்" என்றார். அவர் அதி வேகமாகச் சென்று புரோஹிதரான வஸிஷ்டரையும் வேத வேதாங்கங்களில் கரை கண்ட ஸுயக்ஞர், வாமதேவர், ஜாபாலி, காச்யபர் முதலியவர்களையும் மற்ற பிராம்மணோத்தமர்களையும் அழைத்து வந்தார். தர்மவானான தசரதர் அவர்களை விதிப்படி பூஜித்து "பிராம்மண சிரேஷ்டர்களே! என் வம்சத்தை விருத்தி செய்வதற்குப் புத்திரனில்லாமல் புலம்பும் எனக்கு இந்த ராஜ்யமும் தனமும் அதிகாரமும் இருந்து என்ன ஸுகம்? புத்திரோத்பத்தியைத் தடுக்கும் பாபங்களைப் போக்க அசுவமேதமே தகுந்த உபாயமென்று எண்ணுகிறேன். என் இஷ்டத்தை எவ்விதம் பூர்த்தி செய்து கொள்ளலாமென்று விசாரியுங்கள்" என்றார்.

இப்படித் தர்மத்தையும் அர்த்தத்தையும் ஒத்து மதுரமாக அரசன் சொன்ன வார்த்தைகளை அந்த உத்தம பிராம்மணர்கள் மிகவும் கொண்டாடி "மஹாராஜ! தர்ம காரியத்தில் தங்களுக்கு சிரத்தை உண்டானபடியால் இந்த அசுவமேதத்தால் நிச்சயமாகப் புத்திரர்களை அடைவீர்கள். யாகஸாமக்ரிகளைச் சேர்த்து, அசுவமேதக் குதிரையைப் பூமிப்பிரதக்ஷிணம் செய்ய அனுப்பலாம்" என்றார்கள்.



தசரதர் அளவற்ற ஸந்தோஷத்தால் மலர்ந்த கண்களுடன் "மந்திரிகளே! வஸிஷ்ட மஹரிஷியின் உத்தரவுப்படி யாகஸாமக்ரிகளை ஸம்பாதிக்க வேண்டும். யாகக் குதிரையைக் காப்பாற்றத் தகுந்தவர்களை ஏற்படுத்தி, பூமிப் பிரதக்ஷிணம் செய்ய உபாத்தியாயர்களுடன் அனுப்புங்கள். ஸரயூ நதியின் வடகரையில் யாக சாலை அமைக்கப்படட்டும். விக்கினங்களை விலக்கச் சாந்தி ஹோமம் முதலியவை கல்பஸூத்திரப்படி நடக்கட்டும். பல பிரஹ்மராக்ஷஸர்கள் இவ்விதமான யாகங்களைக் கெடுக்க ஸமயம் பார்த்துக் கொண்டிருப்பார்கள். யாகக்கிரியைகளில் குற்றம் நேர்ந்தால் யஜமானனுக்குக் கெடுதி. இவ்வித அபாயங்கள் நேராவிட்டால் அரசர்களெல்லோரும் இந்த யாகத்தை அடிக்கடி ஸுலபமாகச் செய்வார்களே. ஆகையால் இது விதிப்படி யாதொரு விக்கினமில்லாமல் முடியும் வழியைத் தேடுங்கள். நீங்கள் எவ்விதத்திலும் திறமையுள்ளவர்களாகையால் உங்களிடத்தில் இதை ஒப்புவிக்கிறேன்" என்றார். மந்திரிகள் "மஹாராஜ! உத்தரவுப்படி செய்கிறோம்" என்றார்கள். பிறகு பிராம்மணர்கள் அரசனை ஆசிர்வதித்து, அனுமதி பெற்றுக்கொண்டு தங்களிருப்பிடம் சென்றார்கள். அரசன் "மந்திரிகளே! ரித்விக்குகள் சொல்லுகிறபடியாக ஸாமக்ரிகளை ஸித்தம் செய்யுங்கள்" என்று உத்தரவிட்டனுப்பி ஸந்தோஷத்தால் மலர்ந்த முகத்துடன் அந்தப்புரத்திற்குப் போனார். தன் பிரிய பார்யைகளை அழைத்து, "நமக்குப் புத்திர பாக்கியம் உண்டாவதற்கு அசுவமேதம் செய்யப்போகிறேன். நீங்களும் தீக்ஷை பெறவேண்டும்" என்றார். அதைக்கேட்டு அந்த ராஜபத்தினிகளின் அழகிய முகங்கள் பனி நீங்கியவுடன் விளங்கும் தாமரைகளைப்போல் பிரகாசித்தன.

தாஸாம் தேநாதி காந்தேந வசநேந ஸுவர்சஸாம் |
முக2பத்3மாந் யஶோப4ந்த பத்3மாநீவ ஹிமாத்யயே || (24)

## ஸர்க்கம் 9

## ரிஷ்ய சிருங்கர்

ஏதச்ச்2ருத்வா ரஹஸ்ஸூதோ ராஜாந மித3 மப்3ரவீத் |
ரித்விக்3பி4 ருபதி3ஷ்டோ யம் புராவ்ருத்தோ மயா ஶ்ருத: || (1)

**அவதாரிகை**

ராமனுடைய அவதாரத்திற்குப் பூர்வாங்கமான புத்திர காமேஷ்டியைச் செய்யத்தகுந்த அதிகாரி 9, 10, 11-வது ஸர்க்கங்களில் வர்ணிக்கப்படுகிறார்.

---

தசரதருக்கு ஸாரதியும் மந்திரியுமான ஸுமந்திரர் ஒருநாள் அவரிடத்தில் ரஹஸ்யமாக வந்து "மஹாராஜ! பிராம்மண சிரேஷ்டர் தங்களிடத்தில் இப்பொழுது சொன்ன விஷயங்களை மூன்று காலங்களை அறிந்த ஸனத்குமாரர் சொல்லக் கேட்டிருக்கிறேன்.

" காச்யபருக்கு விபண்டகரென்று மஹாகீர்த்திமானை ஒரு புத்திரருண்டு. அவருக்கு ரிஷ்யசிருங்கரென்ற ஒரு குமாரன் பிறப்பான். அவன் பால்யம் முதல் காட்டிலேயே வளர்ந்ததால் தன் பிதாவிற்குப் பணிவிடை செய்வதைத் தவிர வேறொன்றையும் அறியான். அக்னி காரியங்களையே கவனித்துக்கொண்டிருக்கும் அந்த ரிஷிபுத்திரனுடைய பிரஹ்மசரிய விரதத்திற்குச் சிலகாலத்திற்குப் பின் கெடுதி நேரும்.

அந்த ஸமயத்தில் ரோமபாத மஹாராஜன் அங்க தேசத்தை ஆள்வான். மஹாபலவானும் விசேஷகீர்த்திசாலியுமான அவ்வரசனுடைய குற்றத்தால் அந்த ராஜ்யத்தில் பலவருஷங்கள் வரையில் மழை பெய்யாது. ஸகலப் பிராணிகளும் சொல்ல முடியாத கஷ்டமடைவதைப் பார்த்து ரோமபாதன் மனம் வருந்தி, வயதாலும் வித்யையாலும் பெரியோர்களான பிராம்மணர்களை வருவித்து " மஹாத்மாக்களே ! சாஸ்திரங்களைக் கற்று லோகாசாரங்களில் நிபுணர்களான நீங்கள், இதற்குத் தகுந்த பிராயச்சித்தத்தை விதியுங்கள் " என்று வேண்டிக்கொள்வான். வேதங்களைக் கரைகண்ட அந்தப் புண்ணியாத்மாக்கள் " அரசனே ! விபாண்டகருடைய புத்திரனை ரிஷ்யசிருங்கரை எப்படியாவது இங்கே தருவித்தால் உடனே மழை பெய்யும். அவரைப் பூஜித்து, உமது பெண் சாந்தையை அவருக்கு விதிப்படி கன்யாதானம் செய்யும்" என்பார்கள். அவரை அழைத்துவர பிராம்மணர்களே தகுந்தவர்கள் என்று நிச்சயித்து, தன் புரோஹிதரையும் மந்திரிகளையும் மிகவும் வேண்டி மரியாதையுடன் அனுப்புவான். அந்த பிராம்மணர்கள் " மஹாராஜ ! விபாண்டகர் எங்களைச் சபித்துவிடுவார். நாங்கள் போகமாட்டோம். தயவு செய்ய வேண்டும்" என்று பயத்தால் முகம் வாடி அரசனைப் பிரார்த்திப்பார்கள். அவர்கள் சொல்லும் உபாயப்படி வேசியரை வனத்திற்கனுப்பி, அரசன் ரிஷிபுத்திரரைத் தருவிப்பான். உடனே மழை பெய்யும். ரோமபாதன் ஸந்தோஷமடைந்து சாந்தையை அவருக்கு மணம் செய்விப்பான். அந்த ரிஷியே தசரதருக்குப் புத்திரனுண்டாகும் உபாயத்தைச் செய்வார் என்று ஸனத்குமாரர் சொன்னார். அதைத் தங்களுக்கு நான் தெரிவித்தேன்" என்றார். தசரதர் அதற்கு ஸந்தோஷித்து "ரிஷ்யசிருங்கரைக் காட்டிலிருந்து அரசன் அழைத்து வந்ததை விரிவாகச் சொல்லும்" என்றார்.

அத2 ஹ்ருஷ்டோ த3ஶரத2:ஸுமந்த்ரம் ப்ரத்யபா4ஷத |
யத2ர்ஶ்ய ஶ்ருங்க3ஸ் த்வாநீதோ விஸ்தரேண த்வயோச்யதாம் || (19)



## ஸர்க்கம் 10

### ரிஷ்ய சிருங்கர் (தொடர்ச்சி)

ஸுமந்த்ரஸ் சோதி3தோ ராஜ்ஞா ப்ரோவாசேத3ம் வசஸ் தத2ா |
யத2ர்ஶ்ய ஶ்ருங்க3ஸ் த்வாநீத: ஶ்ருணு மே மந்த்ரிபி3: ஸஹ || (1)

ஸுமந்திரர் "மஹாராஜ! புரோஹிதர்களும் மந்திரிகளும் அரசனை வணங்கி, 'நாங்கள் சொல்லுகிறபடி செய்தால் காரியம் நிச்சயமாய்க் கைகூடும். அந்த முனி காட்டிலேயே பிறந்து வளர்ந்தவர். நித்ய கர்மங்களிலும், வேதாத்யயனத்திலும் பிதாவுக்குப் பணிவிடை செய்வதிலும் ஆசை வைத்தவர். ஸ்த்ரீகளின் ஸ்வரூபத்தையும் லக்ஷணங்களையும் இந்திரிய ஸுகங்களையும் கொஞ்சமும் அறியாதவர். ருசியுள்ள பக்ஷணங்களாலும் வாஸனைத்திரவியங்களாலும், மதுரமான பாட்டாலும், அழகுள்ள ஸ்த்ரீகளாலும் .பிராணிகளின் மனத்தைக் கவரக்கூடிய இந்திரிய ஸுகங்களாலும், மிருதுவான தேக ஸ்பரிசத்தாலும் இப்படிப்பட்டவரை மயக்கி, இங்கே அழைத்து வருகிறோம். இப்படிச் செய்ய நிச்சயித்து அழகுள்ள வேசிகளுக்கு வேண்டிய வஸ்திரங்களையும் ஆபரணங்களையும் தனத்தையும் வெகுமானமாய்க் கொடுத்தனுப்புங்கள். அவர்கள் எப்படியாவது அந்த ரிஷியை அழைத்து வருவார்கள்" என்றார்கள்.

அரசன் "அவர்களுக்குத் தகுந்தபடி நீங்களே எச்சரிக்கை செய்தனுப்புங்கள்" என்றார். அந்த பிராம்மணர்கள் வேசியருடன் நேரில் பேசமாட்டோமென்று மந்திரிகளுக்கு உத்தரவிட, அவர்கள் அவ் விலைமாதரைத் தருவித்து வேண்டிய வரையில் வெகுமதி செய்து அனுப்பினார்கள்.

அந்த வேசியரும் வனத்திற்குச் சென்று, விபண்டகருடைய ஆசிரமத்திற்கருகில் மறைந்திருந்து, ரிஷி குமாரன் தனியாய் வெளியில் வருவதை எதிர்பார்த்துக் கொண்டிருந்தார்கள். அவரோ மஹாபுத்திமான்; எப்பொழுதும் ஆசிரமத்திலேயே இருப்பவர்; பிதாவின் பணிவிடையில் கவனமுள்ளவர்; பட்டணங்களையும் தேசங்களையும் அவைகளிலுள்ள பிராணிகளையும் பொருள்களையும் பிறந்தது முதல் பார்த்தவரல்ல. ஒரு நாள் தெய்வச் செயலாய் அந்தப் பெண்கள் இருக்குமிடத்திற்கு வந்தார். அவர்கள் பார்ப்பவர்களின் மனத்தைக் கவரும்படி அலங்கரித்துக்கொண்டு, மதுரமாய்ப் பாடிக்கொண்டு அவரிடத்திற்கு வந்து "மஹர்ஷே! தாங்கள் யார்? ஜன ஸஞ்சாரமில்லாத இந்தக் குரூரமான வனத்தில் ஏன் தனிமையில் வஸிக்கிறீர்" என்றார்கள். தான் அதுவரையில் பார்க்காத ரூபமுள்ள அந்தப் பெண்களை நோக்கி ரிஷ்யசிருங்கர் "நான் விபண்டகருடைய புத்திரன். என் பெயர் ரிஷ்யசிருங்கர். அழகான கண்களையுடையவர்களே! எனக்கு தவம், ஜபம், ஹோமம், வேதாத்யயனம் முதலியவைகளில் கொஞ்சம் பயிற்சியுண்டு. எங்கள் ஆசிரமம்

ஸமீபத்தில் இருக்கிறது. அங்கே வந்தால் விதிப்படி உங்களுக்குப் பூஜை செய்கிறேன்'' என்றார்.

அவர்கள் அதற்கிணங்கி அவருடன் செல்ல, அவர் அர்க்யம் பாத்யம் பழங்கள் கிழங்குகள் முதலியவைகளால் வேசியரை மிகவும் உபசரித்தார். வெகு ஆதரவுடன் அவர்கள் அதை அங்கீகரித்து, மஹரிஷி வருமுன் அங்கிருந்து போக விரும்பி ''ஸ்வாமி! நாங்கள் தங்களுக்காகக் கொண்டு வந்த பழங்களையும் கிழங்குகளையும் புஜிக்க வேண்டும்'' என்று ருசியுள்ள மோதகங்களையும் பலவித பக்ஷணங்களையும் கொடுத்தார்கள். அபூர்வமான பழங்கள் என்றெண்ணி அவரும் அவைகளைத் தின்று மிக்க ஸந்தோஷத்தையும் ஆச்சரியத்தையும் அடைந்தார். பிறகு அவர்கள் ''ஸ்வாமி! எங்களுடைய அனுஷ்டான வேளை தாண்டிவிடும்; ஆசிரமத்திற்குப் போகவேண்டும்; உத்தரவு கொடுங்கள்'' என்று அவரை இறுகத் தழுவி, அங்கிருந்து போய்விட்டார்கள். அவர்களுடைய ரூபத்தாலும், மிருதுவான தேக ஸ்பரிசத்தாலும், அதிலிருந்து வீசும் மணத்தாலும், மதுரமான தின்பண்டங்களாலும், இனிய பாட்டாலும் அந்த ரிஷி புத்திரன் மனம் கலங்கி, அவர்களை விட்டுப் பிரிந்ததைத் தாங்காமல், அவர்களையே நினைத்துக்கொண்டு இனி எப்பொழுது பார்ப்போம் என்றிருந்தார். அவர்களை முதலில் கண்ட இடத்திற்கு மறுநாள் வந்து, அந்த வழியையே பார்த்துக் கொண்டிருந்தார்.

அந்தப் பெண்களும் அங்கே வந்து அவர் இருப்பதைக் கண்டு, இவர் நமது வலையில் அகப்பட்டார் என்று மகிழ்ந்து, ''ஸ்வாமி! தாங்களும் எங்களுடைய ஆசிரமத்திற்கு வர வேண்டாமா? போவோம். தாங்கள் நேற்று புஜித்த பழங்களைப்போல் அங்கே பல உண்டு. தங்களை விசேஷமாய் உபசரிக்க விரும்புகிறோம், வாருங்கள்'' என்று அழைத்தார்கள், அவர்களுடைய வார்த்தையால் மயங்கி, ரிஷி புத்திரர் கட்டுப்பட்டவுடன் வேசியர் அவரை அங்க தேசத்திற்கு அழைத்துப் போனார்கள்.

அந்த ராஜ்யத்தில் அடி வைத்தவுடன் பெரும் மழை பெய்தது. ஸகல பிராணிகளும் ஸந்தோஷித்தன. எல்லோரும் வேண்டிய மழையைக் கொண்டுவந்த ரிஷியை ரோமபாதர் மிக்க வணக்கமாக எதிர்கொண்டு நமஸ்கரித்து, விதிப்படி பூஜித்துக் கைகூப்பி, ''ஸ்வாமி! தங்களை இப்படி ஏமாற்றி அழைத்து வந்தேன் என்று தாங்களும் மஹரிஷியும் கோபிக்காமல், என் குற்றத்தைப் பொறுக்க வேண்டும்.'' என்று பிரார்த்தித்தான்; அவரை அரண்மனைக்கு அழைத்துப்போய், சாந்தை என்ற தன் பெண்ணை அவருக்கு மணம் செய்வித்தான். ரிஷ்யசிருங்கர் அங்கே ஸகல ஸௌக்கியங்களையும் அனுபவித்துக்கொண்டு சிலகாலம் தங்கியிருந்தார்.

**ஏவம் ஸ ந்யவஸத் தத்ர ஸர்வ காமை: ஸுபூஜித: |**
**ரிஷ்ய ஶ்ருங்கோ3 மஹாதேஜா: ஶாந்தயா ஸஹ பா4ர்யயா ‖ (32)**



## ஸர்க்கம் 11

# தசரதர் ரிஷ்யசிருங்கரை அழைத்துவந்தது

**பூ4ய ஏவ ச ராஜேந்த்3ர ! ஶ்ருணு மே வசநம் ஹிதம் |**
**யதா2 ஸ தே3வ ப்ரவர: கதா2யா மேவ மப்3ரவீத் ‖ (1)**

''ராஜசிரேஷ்ட! கேளும், ஸனத்குமாரர் பின்வருவதையும் சொன்னார். 'இக்ஷ்வாகு வம்சத்தில் தசரதனென்ற தர்மாத்மாவும் ஸத்தியம் தவறாதவனுமான அரசன் உண்டாவான். அந்த ராஜாவுக்கு, அங்க ராஜனுடன் ஸ்நேகம் ஏற்படும். ரோமபாதருக்கு சாந்தை யென்ற உத்தமப் பெண் இருப்பாள். ஒரு ஸமயத்தில் தசரதன் அங்க ராஜனிடம் போய் 'தர்மபுத்தியுள்ள மித்திர! வெகு காலமாய் எனக்குப் புத்திர பாக்கியமில்லை. என் வம்சத்தை வளரச்செய்யும் குமாரன் பிறக்கும்படி ஒரு யாகத்தைச் செய்ய வேண்டும். சாந்தையின் கணவனை ரிஷ்யசிருங்கரிடத்தில் இதைச் சொல்லி, அவர்களை நீ அயோத்யைக்கு அனுப்பவேண்டும்' என்று கேட்டுக்கொள்வான். தசரதருடைய இஷ்டத்தை நிறைவேற்றக் கூடியவர் ரிஷ்யசிருங்கரே என்று அங்கராஜன் நிச்சயித்து, ஒருவருடனும் யோசிக்காமல் தன் பெண்ணையும் மருமகனையும் அயோத்யைக்கு அனுப்புவான். கீர்த்தியில் பிரியமுள்ள தசரதன் கவலையற்று மிகுந்த ஸந்தோஷத்துடன் அந்த ரிஷியை உபசரித்து ''ஸ்வாமி! நான் புத்திரனைப் பெற்றுப் புண்ய லோகங்களையடையப் புத்திர காமேஷ்டி செய்விக்க வேண்டும்'' என்று கேட்டுக்கொள்வான். அந்த ரிஷி அதற்கிணங்கி இஷ்டியைச் செய்வார். அதனால் நான்கு புத்திரர்கள் பிறப்பார்கள். அவர்கள் அளவற்ற பராக்கிரமசாலிகளாக, ஸகல லோகங்களிலும் கீர்த்திமான்களாக, ஸூரிய வம்சத்தை வளரச் செய்கிறவர்களாக விளங்குவார்கள்'' என்று, சென்றது, நிகழ்வது, வரப்போவதென்ற மூன்று காலங்களையும் அறிந்த தேவசிரேஷ்டரான ஸனத்குமாரர் சென்றகிருதயுகத்தில் சொன்னார். ஆகையால் தாங்கள் பந்துக்களையும் ஸைன்யத்தையும் அழைத்துக் கொண்டு அங்கதேசத்திற்குப் போய், அந்த மஹரிஷியை நன்றாகப் பூஜித்து, ஸகல மரியாதையுடன் அழைத்து வரவேண்டும்'' என்றார்.

தசரதர் அதை வஸிஷ்டருடன் ஆலோசித்து, அந்தப்புர ஸ்திரீகளையும் மந்திரிகளையும் அழைத்துக்கொண்டு, நாடு நகரம் வனம் மலை நதிகளைத் தாண்டி, அந்த முனிசிரேஷ்டர் வஸிக்கும் தேசத்திற்கு வந்து, ரோமபாதருடைய அரண்மனையில் ரிஷ்யசிருங்கர் அக்னியைப்போல் ஜ்வலிப்பதைக் கண்டார். ரோமபாதர் தன் பிரிய மித்திரன் வந்ததால் எல்லையற்ற மகிழ்ச்சியடைந்து, அவரை மிகவும் மரியாதையாக உபசரித்து, அவர், தனக்கும் தசரதருக்கும் உள்ள ஸ்நேகத்தையும் பூர்வீக ஸம்பந்தத்தையும் அம்முனிவருக்குத்

தெரிவித்தார். அதை யறிந்து மஹரிஷி, தன் மாமனரை விசேஷமாக உபசரித்தார்.

இப்படி ஆதரவுடன் பூஜிக்கப்பட்டு ஏழெட்டு நாட்கள் வரையில் தசரதர் அங்கிருந்து, பிறகு "மித்திர! சாந்தையையும் ரிஷ்ய சிருங்கரையும் என்னுடன் அனுப்பவேண்டும்; அவர்களால் ஒரு பெரிய காரியம் எனக்கு ஆகவேண்டியிருக்கிறது" என்றார்.

ரோமபாதர் அதற்கு ஸம்மதித்து அம்முனிவரிடத்திற்குச் சென்று "ஸ்வாமி, தாங்களும் சாந்தையும் அயோத்யைக்குப் போய், தசரதருக்கு ஒரு பெரிய உபகாரம் செய்யவேண்டும்" என்று பிரார்த்தித்தார். அந்த ரிஷிபுத்திரன் அதை ஒப்புக்கொண்டார். பிறகு அவ்வரசர்கள் ஆலிங்கனம் செய்து, பிரீதியுடன் கைகூப்பி உத்தரவு பெற்றுக்கொண்டார்கள்.

தசரதர் அதி வேகமாகச் செல்லக்கூடிய தூதர்களை அழைத்து "நீங்கள் அயோத்யைக்குப் போய் எங்களுடைய வரவைத் தெரிவித்து நகரத்தைச் சுத்தம் செய்து, ஜலம் தெளித்து, தூபங்களாலும் மாலைகளாலும் த்வஜங்களாலும் தோரணங்களாலும் அலங்கரிக்கச் சொல்லுங்கள்" என்று அனுப்பினர். அயோத்யா வாஸிகள் அப்படியே செய்ய, தசரதர் மஹரிஷியை முன்னிட்டுக் கொண்டு, சங்கம் துந்துபி பேரிகை முதலிய வாத்திய கோஷங்களுடன் பட்டணத்தில் பிரவேசித்தார். முனிசிரேஷ்டரை அழைத்து வந்த அரசனைக் கண்டு குடிகள் அளவற்ற மகிழ்ச்சியடைந்தார்கள். தசரதர் மஹரிஷிக்கு விதிப்படி பூஜை செய்து அந்தப்புரத்தில் இருத்தி, தன் குறைகள் யாவும் தீர்ந்து கோரிக்கைகள் யாவும் நிறைவேறினதாக எண்ணி ஸந்தோஷித்தார். சாந்தையைக் கண்டு, அந்தப்புர ஸ்த்ரீகள் எல்லையற்ற ஆனந்தம் கொண்டார்கள். அரசனும் ராஜபத்னிகளாலும் வெகுப் பிரியத்துடன் ஆதரிக்கப்பட்ட சாந்தையும் முனிவரும் சிலகாலம் அங்கே ஸுகமாய் வஸித்துக்கொண்டிருந்தார்கள்.

பூஜ்யமாநா ச தாபி4: ஸா ராஜ்ஞா சைவ விஶேஷத: |
உவாஸ தத்ர ஸுகி2தா கஞ்சித் காலம் ஸஹர்த்விஜா ‖ (30)

## ஸர்க்கம் 12

## அசுவமேதம்

தத: காலே ப3ஹுதிதே3 கஸ்மிம்ஶ்சித் ஸுமநோஹரே |
வஸந்தே ஸமநுப்ராப்தே ராஜ்ஞோ யஷ்டும் மநோப4வத் ‖ (1)

**வெ**குநாட்களுக்குப் பிறகு, ஸகல பிராணிகளின் மனத்தைக் கவரும் வஸந்தருது வந்தது. தசரதருக்கும் அசுவமேதம் செய்ய எண்ண



முண்டாயிற்று. தேவர்களைப்போல் பிரகாசிக்கும் ரிஷியை அவர் நமஸ்கரித்து "என் குலத்தை வளரச்செய்யும் புத்திரனுண்டாகும்படி அசுவமேதத்தை நடத்திவைத்து, அதன் முன்பாகமான ஸாங்க்ரஹணி என்ற இஷ்டியில் தாங்கள் பிரஹ்மாவாக இருக்க வேண்டும்" என்று கேட்டுக்கொண்டார். முனிவர் "அப்படியே ஆகட்டும். யாக ஸாமக்ரிகளைச் சேரும். யாகக் குதிரையைப் பூமிப் பிரதக்ஷிணம் செய்ய அனுப்பும்" என்றார். அரசன், "ஸுமந்திரரே! வேத வேதாங்கங்களில் நிபுணர்களான ஸுயக்ஞர், வாமதேவர், ஜாபாலி, காசியபர், வஸிஷ்டர் இன்னும் மற்ற பிராம்மண சிரேஷ்டர்களை இந்த யாகத்தில் ரித்விக்குகளாக வரித்து, வேத விதிப்படி வாஹனங்களில் ஏற்றி அழைத்துவாரும்" என்றார். ஸுமந்திரர் அப்படிச் செய்ய, தர்மாத்மாவான அரசன் அவர்களை நன்றாகப் பூஜித்து "பிராம்மணோத்தமர்களே! புத்திரபாக்கியமின்றி வருந்தும் எனக்கு இதர ஸுகங்களால் பிரயோஜனமென்ன? ஆகையால் அசுவமேதத்தை விதிப்படிசெய்து, இடையூறான பாபங்களைப் போக்கி, ரிஷ்யசிருங்கருடைய மஹிமையால் என் எண்ணங்களை அடையப் போகிறேன்" என்று தர்மார்த்தங்களுக்கு அனுகூலமாக மதுரமாகச் சொன்னார்.

அந்த மஹரிஷிகள் நல்லது நல்லதென்று அதைக் கொண்டாடினார்கள். ரிஷ்யசிருங்கரும் மற்றப் பிராம்மணோத்தமர்களும் "மஹாராஜ! புத்திரனை அடைவதற்கு அசுவமேதம் செய்ய வேண்டுமென்று இந்தத் தர்மமான புத்தி உமக்கு உண்டானதால் பராக்கிரமமுள்ள நான்கு புத்திரர்கள் உமக்கு நிச்சயமாகப் பிறப்பார்கள். ஆகையால் யாகஸாமக்ரிகளைச் சேர்த்து, யாகக் குதிரையைப் பூமிப் பிரதக்ஷணம் செய்யவிட்டு, மற்றக் கிரியைகளையும் நடத்தலாம்" என்றார்கள்.

அதைக் கேட்டுத் தசரதர் மிகவும் ஸந்தோஷித்து "மந்திரிகளே! வஸிஷ்ட மஹரிஷியின் கட்டளைப்படி யாக ஸாமக்ரிகளைச் சேருங்கள். தகுந்த சூரர்களோடும் உபாத்தியாயர்களோடும் யாகக் குதிரையைப் பூமிப்பிரதக்ஷிணம் செய்ய அனுப்புங்கள். ஸரயூ நதியின் வடகரையில் யாகசாலையைக் கட்டவேண்டும். விக்னங்களை விலக்கக்கூடிய சாந்தி முதலிய கிரியைகள் கல்பஸூத்திரப்படி முறை தவறாமல் நடக்கட்டும். யாகத்தின் ஸ்வரூபத்தையும் லக்ஷணங்களையும் குணதோஷங்களையும் நன்றாக அறிந்த பிரஹ்மராக்ஷஸர்கள் இவ்விதமான யாகங்களைக் கெடுக்க ஸமயம் தேடிக்கொண்டிருப்பார்கள். யாதொரு குற்றமும் நேராமல் ஸுலபமாக இந்த யாகத்தைச் செய்யக் கூடுமானால் எல்லா அரசர்களும் அடிக்கடி செய்வார்களே. ஆகையால் இந்த யாகம் யாதொரு குற்றமுமில்லாமல் சாஸ்திரப்படி நடப்பது உங்களுடைய பொறுப்பு. இந்த விஷயத்தில் உங்களுக்கு மிகுந்த திறமையிருப்பதால் இதை உங்களிடத்தில் ஒப்புவித்தேன்" என்றார். மந்திரிகள் "தங்களுடைய ஆக்ஞைப்படி

செய்யக் காத்திருக்கிறோம்'' என்றார்கள். ஸாங்க்ரஹணி இஷ்டி முதல், யாகக் குதிரையை அனுப்புவது வரையில் நடந்தன.

பிறகு பிராம்மணர்கள் ஸகல தர்மங்களையும் அறிந்த தசரதரைக் கொண்டாடி அந்த ராஜசிரேஷ்டரிடத்தில் அனுமதி பெற்றுக் கொண்டு தங்களுடைய விடுதிகளுக்குச் சென்றார்கள். அரசன் மந்திரிகளை அனுப்பிவிட்டுத் தன் அந்தப்புரத்திற்குப் போனார்.

க³தேஷ்வத² த்³விஜாக்³ர்யேஷு மந்த்ரிணஸ் தாந் நராதி⁴ப: |
விஸர்ஜயித்வா ஸ்வம் வேஶ்ம ப்ரவிவேஶ மஹாத்³யுதி: ‖ (21)

---

## ஸர்க்கம் 13

## அசுவமேதம் (தொடர்ச்சி)

---

புந: ப்ராப்தே வஸந்தே து பூர்ண: ஸம்வத்ஸரோ ப⁴வத்¹
ப்ரஸவார்த²ம் ததோ யஷ்டும் ஹயமேதே⁴ந வீர்யவாந் ‖ (1)

அடுத்த வஸந்த ருது வந்தவுடன் பௌர்ணமியில் அரசன் யாகசாலைக்குப் போக விரும்பி, வஸிஷ்டரை நமஸ்கரித்து விதிப்படி பூஜித்து மிகுந்த வணக்கத்துடன் "மஹர்ஷே! தாங்கள் எனக்கு ஆசாரியர்; மேலும் பரமமித்திரர்; ஆகையால் திரவியம் தேவதை கிரியை முதலிய யாகத்தின் அங்கங்களில் யாதொரு தோஷமும் நேராமல், ராக்ஷஸர்கள் விக்னம் செய்ய இடம் கொடாமல், சாஸ்திர விதிப்படி வெகு ஜாக்கிரதையாக இதை முடிக்கவேண்டும், இந்தப் பாரத்தைத் தாங்களே ஏற்று நடத்தவேண்டும்'' என்று கேட்டுக் கொண்டார். முனிவர் அதை அங்கீகரித்து, யாகங்களை நடத்துவதில் நிபுணர்களும் ஞானத்தாலும் வயதாலும் முதிர்ந்த பிராம்மணர்களையும், யாகத் திரவியங்களைத் தருவிப்பதற்கு அரசனால் நியமிக்கப்பட்ட அதிகாரிகளையும் மற்ற வேலைக்காரர்களையும், யாகத்தில் உபயோகப்படும் செங்கல்களைச் செய்கிறவர்களையும், யாக பாத்திரங்களைச் செய்யும் தச்சர்களையும், குளம் கிணறு வெட்டுபவர்களையும், சித்திரமெழுதுவோர்களையும், ரஸாபிநயம் பாவ அபிநயம் முதலியவைகளில் திறமையுள்ளவர்களையும், கணக்கர்களையும், யாகப் பிரயோகங்களை நன்றாயறிந்த சுத்தமான நடத்தையும் படிப்பு முள்ளவர்களையும் தருவித்து, "ரித்விக்குகளே! அரசனுடைய உத்தரவுப்படி யாகத்தின் ஒவ்வொரு பாகத்தையும் வெகு ஜாக்கிரதையாய் நடத்தவேண்டும். சில்பிகளே! யாகத்தில் உபயோகப்படும் அநேகமாயிரம் செங்கல்களைச் சீக்கிரமாய்ச் செய்யுங்கள். வேலைக்காரர்களே! அரசர்கள் வஸிக்கக்கூடிய பல விடுதிகளைக் கட்டுங்கள். அவை வெகு விசாலமாய்க் காற்று மழையைத் தாங்கக் கூடியவையாக இருக்கவேண்டும்.

அப்படியே பிராம்மணர்கள் தங்கக்கூடிய பல அழகான வீடுகளைக் கட்டி, அவைகளில் ஸகல போஜன ஸாமான்களைக் குறைவில்லாமல் வையுங்கள். பட்டணத்து ஜனங்களுக்கும் நாட்டிலுள்ள குடிகளுக்கும் ஸுகமான விடுதிகளை அமையுங்கள். அதிகாரிகளே! எல்லோரையும் வெகு அன்புடன் பூஜித்து வேண்டிய வரையில் அன்னமிட்டு, சந்தனம் புஷ்பம் தாம்பூலங்களால் உபசரியுங்கள். எதையும் அலக்ஷ்யமாய் ஆதரமின்றிச் செய்யக்கூடாது. நான்கு வர்ணத்தாரையும் தகுந்தபடி மரியாதை செய்யவேண்டும். ஸ்நேஹத்தாலாவது விரோதத்தாலாவது காமக்ரோதத்தாலாவது ஒருவரையும்அலக்ஷ்யம் செய்யக்கூடாது.யாக காரியங்களில் முன்னின்று யாவற்றையும் நடத்தும் அதிகாரிகளையும் வேலைக்காரர்களையும் சில்பிகளையும் முறை தவறாமல் விசேஷமாய் உபசரிக்கவேண்டும். திரவியத்தையும் அன்ன பானங்களையும் வேண்டியவரையில் கொடுத்து ஜனங்களைத் திருப்தி செய்யவேண்டும். என்னிடத்திலும் அரசனிடத்திலும் நீங்கள் வைத்திருக்கும் பிரீதிக்கு அடையாளமாய், நான் சொன்னவைகளில் யாதொரு குறையுமின்றி நடக்கவேண்டும்'' என்று ஆக்ஞாபித்தார். அவர்கள் "மஹர்ஷே! தாங்கள் சொன்னபடியே இதுவரையில் ஏற்பாடு செய்திருக்கிறோம். இனி நடக்க வேண்டிய காரியங்களையும் குறைவின்றி நடத்துகிறோம்''என்றார்கள்.

பிறகு வஸிஷ்டர் "ஸுமந்திரரே! ஸகல தேசங்களிலிருந்தும் தர்ம சிந்தையுள்ள அரசர்களையும் நான்கு வர்ணத்தார்களில் சிரேஷ்டர்களையும் பூஜித்து வருவிக்கவேண்டும். விதேஹாதிபதியான ஜனகர் மஹாசூரர், வேதவேதாந்தங்களில் நிபுணர், பிரஹ்மக்ஞானி, தசரதருக்கு வெகுநாளாகப் பரமமித்திரர்; அவரை நேரில் அழைக்கவேண்டும். நமது அரசனுக்கு நண்பனும் எப்பொழுதும் பிரியமாய்ப்பேசும் காசிராஜனையும், தசரதருடைய மாமனரான கேகயராஜனையும், அவருடைய புத்திரன் யுதாஜித்தையும், மஹா கீர்த்திசாலியும் மிகுந்த பாக்கியவானும் தசரதருக்கு அந்தரங்க மித்ரனுமான ரோமபாதரையும் நன்றாகப் பூஜித்து நீரே அழைத்து வரவேண்டும். மேலும், கிழக்கு தேசத்தரசர்களையும் ஸிந்து ஸௌவீரம் ஸௌராஷ்ட்ரம் முதலிய மேற்கு தேசங்களின் அரசர்களையும் தெற்கிலுள்ளவர்களையும் நம் அரசனுக்கு நண்பர்களான மற்ற பூபதிகளையும் புத்திரமித்திரபந்து வர்க்க பரிவார ஸைன்யங்களுடன் தூதர்களை அனுப்பி சீக்கிரமாய் அழைத்து வாரும்'' என்றார்.

ஸுமந்திரர் புத்திமான்களான தூதர்களை மற்ற இடங்களுக்கனுப்பி, நேரில் போய் அழைக்க வேண்டிய இடங்களுக்குத் தானே போனார். எல்லா வேலைக்காரர்களும் தங்களுக்கு நியமித்த காரியங்களைக் குறைவின்றி முடித்ததாக வஸிஷ்டரிடத்தில் தெரிவித்தார்கள். அவர் வெகு பிரியத்துடன் "அதிகாரிகளே! பிறருக்கு எதைக் கொடுத்தாலும் ஸந்தோஷமாய்க்கொடுக்கவேண்டும், அலக்ஷ்யமாய்க் கொடுத்தால் நமது யஜமானனுக்குக் கெடுதி வரும். ஆகையால் ஜாக்கிரதையாய்க் கொடுங்கள்'' என்று எச்சரித்தார்.

எல்லா அரசர்களும் ரத்தினம் முதலிய உத்தம பதார்த்தங்களைக் காணிக்கையாக எடுத்துக்கொண்டு சில தினங்களுக்குள் வந்து சேர்ந்தார்கள். வஸிஷ்டர் 'மஹாராஜ! தங்களுடைய உத்திரவுப்படி எல்லா அரசர்களும் வந்து விட்டார்கள். தகுந்த மரியாதையுடன் அவர்களை உபசரித்து விடுதிகளை ஏற்படுத்தியிருக்கிறேன். யாக பதார்த்தங்கள் யாவும் ஸித்தமாயின. யாகசாலை ஸகல பதார்த்தங்களாலும் நிறைந்து, மனத்தால் ஸிருஷ்டிக்கப்பட்டது போல் வெகு அழகாக இருக்கிறது. நேரில் பார்க்க வேண்டும். யாகம் செய்யப் புறப்படலாம்'' என்றார்.

பிறகு சுபநக்ஷத்திரம் கூடிய சுபதினத்தில் வஸிஷ்டர் ரிஷ்யசிருங்கர் முதலிய பெரியோர்களின் அனுமதி பெற்று அரசன் யாகசாலைக்குப் புறப்பட்டார். அங்கே ரிஷ்யசிருங்கரை முன்னிட்டுக் கொண்டு மற்ற ரிஷிகள் சாஸ்திரப்படி யாககாரியங்களை ஆரம்பித்தார்கள்.

*ரிஶ்யஶ்ருங்க3ம் புரஸ்க்ருத்ய யஜ்ஞகர்மா ரப4ம்ஸ் ததா3 |*
*யஜ்ஞவாட க3தா: ஸர்வே யதா2 ஶாஸ்த்ரம் யதா2 விதி4 || (37)*

---

## ஸர்க்கம் 14

## அசுவமேதம் (தொடர்ச்சி)

---

அத2 ஸம்வத்ஸரே பூர்ணே தஸ்மிந் ப்ராப்தே துரங்க3மே |
ஸரய்வாஶ் சோத்தரே தீரே ராஜ்ஞோ யஜ்ஞோ ப்4யவர்தத || (1)

**பூ**மிப்பிரதக்ஷிணம் செய்ய அனுப்பிய குதிரை, ஒரு வருஷம் ஸஞ்சரித்து இடையூறின்றித் திரும்பி வந்தது. அரசனுடைய உத்தரவுப்படி ஸரயூநதியின் வடக்குக்கரையில் கட்டப்பட்ட யாகசாலையில் வேதவேதாங்க நிபுணர்களான ரித்விக்குகள், ஸ்ரௌத ஸூத்ரத்தையும் மீமாம்ஸா நியாயத்தையும் அனுஸரித்து, ப்ரவர்க்யம் உபஸதம் முதலிய கிரியைகளைச் செய்து, இன்னும் அதிதேசத்தால் நேர்ந்த ஹோமம் முதலிய மற்ற யாகக் கிரியைகளையும் குறைவற நடத்தினார்கள். பிறகு, ஸகல யாக புருஷர்களும் வெகு ஸந்தோஷத்துடன் அந்தக் கிரியைகளுக்கு அதிஷ்டான தேவதைகளைப் பூஜித்து, காலை ஸவனத்தில் இந்திரனுக்கு யாக பாகத்தைக் கொடுத்தார்கள். பிறகு ஸகல பாபங்களையும் போக்கும் ஸோமராஜாவைத் துதித்து, மற்ற இரு ஸவனங்களையும் விதிப்படி செய்தார்கள். இந்த ஹோமங்களில் மறதியும் மாறுதலுமின்றி எல்லாம் க்ஷேமகரமாக, தகுந்த மந்திரங்களுடன் செய்யப்பட்டன.

அந்த யாகம் நடக்கும் வரையில் பசியால் வருந்துகிறவர்கள், வேலை செய்து களைத்தவர்கள், தாகத்தால் சிரமப்பட்டவர்கள் ஒருவருமில்லை. எல்லோரும் பூரண வித்வான்கள்; நூறு சிஷ்யர்களுக்குக் குறையாமல் உடையவர்கள். வேதியர்களும் தபஸ்விகளும்



திகம்பரர்களும் கிழவர்களும் நோயாளிகளும் பெண்டுகளும் சிறுவர்களும், எப்பொழுதும் இஷ்டப்படி போஜனம் செய்துகொண்டிருந்தார்கள். பதார்த்தங்களின் ருசியால், புஜித்து எழுந்தவுடன் மறுபடியும் புஜிக்க ஆசை உண்டாயிற்று; வயிற்றிலோ இடமில்லை. அன்னபானங்களையும் ஆடையாபரணங்களையும் எண்ணிறந்த ஜனங்களுக்கு இடைவிடாமல் கொடுத்துக் கொண்டிருந்தும், இன்னும் கொடுக்கவேண்டுமென்ற எண்ணம் அரசனுக்கு உண்டாகி, 'அன்னபானங்களையும் பக்ஷ்யங்களையும் வஸ்திரங்களையும் ஆபரணங்களையும் வேண்டிய வரையில் கொடுங்கள் கொடுங்கள்'' என்று உத்திரவு செய்தார்; அதிகாரிகள் அப்படியே பல இடங்களில் கொடுத்து வந்தார்கள். சமையல் விதிப்படி நன்றாய்ச் சமைக்கப்பட்ட பதார்த்தங்கள் ஒவ்வொரு நாளும் மலைமலையாய்க் குவிக்கப்பட்டன. பல தேசங்களிலிருந்தும் கூட்டம் கூட்டமாய் வந்திருந்த பெண்டுகளும் புருஷர்களும் அன்னபானங்களையும் பக்ஷ்யங்களையும் புஜித்து அளவற்ற திருப்தியடைந்தார்கள்.

குண்டலம் முதலிய ஆபரணங்களால் அலங்கரிக்கப்பட்ட பல பிராம்மணர்கள் தங்கள் இனத்தாருக்குப் பரிமாறினார்கள்; சிலர் அவர்களுக்கு உதவிசெய்தார்கள். பிராம்மணோத்தமர்கள் வேண்டியவரையில் புஜித்து "மஹாராஜ! பதார்த்தங்கள் சமைக்கப்பட்ட திறமையையும் அவைகளின் ருசியையும் குணத்தையும் சொல்லமுடியாது. பரிமாறுகிறவர்கள் எங்களுக்குச் செய்யும் உபசாரத்திற்கோ எல்லையில்லை. எங்களுடைய ஸந்தோஷத்தையும் திருப்தியையும் வர்ணிக்கமுடியாது. தங்களுக்கு ஸகல மங்களங்களும் உண்டாகட்டும்'' என்று ஆசீர்வதித்தார்கள். அரசன் மிகவும் ஸந்தோஷித்தார்.

புத்திமான்களும், வாதம் செய்வதில் ஸமர்த்தர்களுமான பிராம்மணர்கள், ஒருவரையொருவர் ஜயிக்க விரும்பி, யாகக்கிரியைகளுக்கு நடுவிலுள்ள ஓய்வு காலத்தில் பலவித பூர்வபக்ஷ ஸித்தாந்தங்களடங்கிய சாஸ்திர வாதங்களைச் செய்தார்கள். தர்ப்பங்களைப் பரப்புவதில் தேர்ந்த பிராம்மணர்கள் ஒவ்வொரு நாளும் மூன்று ஸவனங்களிலும் உமாமுதலிய தேவதைகளை அதிஷ்டானமாயுடைய காரியங்களைப் பெரியோர்களின் உத்தரவுப்படி செய்தார்கள். வைதிகக்கிரியைகளை நடத்தினவர்களில் வேதவேதாந்த நிபுணரல்லாதவர்களும், சாந்த்ராயணம் முதலிய விரதங்களை அனுஷ்டிக்காதவர்களும், பல சாஸ்திரங்களைப் படிக்காதவர்களும் ஒருவருமில்லை. அரசனுடைய ஸபையிலிருப்பவர்களோ வாதத்தில் நிபுணர்கள்.

யூபங்களை நாட்டவேண்டிய ஸமயத்தில் அக்னிவேதிக்கு அருகில் நறுவலி மரத்தால் ஒரு யூபமும், தெற்கில் தேவதாரு யூபமும், வடக்கில் மற்றொரு அவ்வித யூபமும், அம்மூன்றிக்கும் தெற்கில் மூன்று பில்வ யூபங்களும், வடக்கில் அவ்விதம் மூன்றும், அந்த ஒன்பதற்

கும் தெற்கில் மூன்று கருங்காலி யூபங்களும், வடக்கில் அவ்விதம் மூன்றும், அந்தப் பதினைந்திற்கும் தெற்கில் மூன்று பலாச யூபங்களும், வடக்கில் அவ்விதம் மூன்றும் நாட்டப்பட்டன. இந்த இருபத்தொரு யூபங்கள் ஒவ்வொன்றும் ஒரு மார்பளவு தூரத்தில் உறுதியாய்ச் சிற்பிகளால் நாட்டப்பட்டன. போரை முதலிய தோஷங்களில்லாத கெட்டியான மரத்தால், எட்டுப் பட்டைகளுடன் 504 அங்குலம் உயரமுள்ளவைகளாக, வெகு வழவழப்பாய் அவை இழைக்கப்பட்டன. யாக விதிகளையும் பிரயோகங்களையும் அறிந்த பிராம்மணர்கள் அவைகளை ஆபரணங்களாலும் வஸ்திரங்களாலும் மாலைகளாலும் சந்தனம் முதலியவைகளாலும் தங்கப் பட்டங்களாலும் அலங்கரித்து, யாகசாலையை விளங்கச் செய்தார்கள். அவை எவ்வேறாய்ப் பார்க்கப்படும் பொழுது, ஆகாசத்தில், ஸப்தரிஷி மண்டலங்களைப் போல் விளங்கின.

யூபங்களை நடுவதற்கு முன், யாக ஸூத்திரத்தில் சொல்லியபடி செய்யப்பட்ட செங்கல்களால் அக்னிவேதியைப் பிராம்மணர்கள் கட்டினார்கள். அது இறக்கைகளையும் வாலையும் விரித்துக்கொண்டு கிழக்கு முகமாகப் பூமியை நோக்கும் கருடனைப்போல் பதினெட்டு அடுக்குகளுடன் அமைக்கப்பட்டது. இறக்கைகளின் நடுவில் சிறிய தங்கப் பாளங்கள் இணைக்கப்பட்டிருந்தன.

அந்த யூபங்களில் இந்திராதி தேவதைகளை உத்தேசித்து ஸர்ப்பங்களும் பக்ஷிகளும் விதிப்படி கட்டப்பட்டன. பின்பு சாமித்ரம் என்ற கிரியையில் அச்வமேதக் குதிரையும், ஆமை முதலிய ஜல ஜந்துக்களும், ஆடு முதலிய கிராமப் பசுக்களும் உபயோகப்பட்டன. முக்கியமாய் 300 பசுக்களும், பிரதான பசுவான குதிரையும் யூபங்களில் கட்டப்பட்டன. பசுவை அறுக்கும் சாமித்ரப் பிரதேசத்தில் இறந்த அந்தக் குதிரையை அரசனுடைய மஹிஷிகள் மந்திரங்களுடன் ப்ரோக்ஷணம் முதலிய ஸம்ஸ்காரங்களைச்செய்து, இடமாகவும் வலமாகவும் சுற்றிவந்தார்கள். பட்டமஹிஷியான கௌஸல்யை அதன் வயிற்றிற்கு மேலாக மூன்று தங்க ஊசிகளால் ஆயுதம் நாட்டும் இடங்களைக் கீறினாள். பின்பு அவள் புண்யமடைய விரும்பி வெறுப்படையாமல், ஒரு ராத்திரி முழுவதும் அதன் ஸமீபத்திலிருந்தாள்.

பிறகு ஹோதா, அத்வர்யு, உத்காதா, பிரஹ்மா என்ற பிரதான ரித்விக்குகள், அரசனால் தக்ஷிணையாகக் கொடுக்கப்பட்ட மஹிஷி, வாவாதை, பாலாகலி, பரிவிருத்தியென்ற ஸ்த்ரீகளைப் பெற்று, அவர்களுக்குப் பதிலாக திரவியத்தை ஏற்றுக்கொண்டு அவர்களை அரசனிடத்தில் கொடுத்தார்கள்.

அத்வர்யு வெகு ஜாக்கிரதையாய்ப் பசுவின் வபைக்குப் பதிலாகக் குதிரையின் தேஜனியென்ற உள் அவயவத்தை எடுத்து, சுத்தமான மனஸுடன், நீர் நொச்சிலின் இலைகளால் செய்த தடுக்கில் வைத்து, விதிப்படி மந்திரங்களுடன் ஹோமம் செய்தார்.



அரசன் அந்தப் புகையை முகர்ந்து, ஸகல பாபங்களும் விலகிப் பரிசுத்தமானார். பிறகு பதினாறு ரித்விக்குகளும் அந்தப் பசுவின் அங்கங்களை விதிப்படி ஹோமம் செய்தார்கள்.

அந்த யாகத்தில் முக்கிய தினங்கள் மூன்று. முதல் நாளில் நான்கு ஸ்தோமங்களுள்ள அக்னிஷ்டோமமும், இரண்டாவதில் உக்த்யமும், மூன்றாவதில் அதிராத்ரமும், மற்ற நாள்களில் ஜ்யோதிஷ்டோமம் ஆயுஷ்டோமம் இரண்டு அதிராத்ரம் அபிஜித் விச்வஜித் அப்தோர்யாமம் என்ற ஆறு க்ரதுக்களும் சாஸ்திரப்படி மிகவும் க்ஷேமகரமாய் நடந்தன.

பிரஹ்மாவால் கண்டுபிடிக்கப்பட்ட இந்த மஹா யாகத்தை அரசன் ஸாங்கோபாங்கமாகச் செய்து, அளவற்ற ஸந்தோஷத்துடன், ஹோதா அத்வர்யு பிரஹ்மா உத்காதா என்றவர்களுக்கு முறையே கிழக்கு மேற்கு தெற்கு வடக்கு தேசங்களை தக்ஷிணையாகக் கொடுத்தார். அவர்கள் அவைகளைப் பெற்றுக்கொண்டு "மஹாராஜ! எப்பொழுதும் வேதாத்யயனத்தையும் தபஸையும் செய்துகொண்டிருக்கும் எங்களுக்கு இந்தத் தேசங்களால் பயனில்லை. அவைகளைக் காப்பாற்றவும் சக்தியில்லை. இந்தப் பூமியை ரக்ஷிக்கத் தகுந்தவர் தாங்களே. ஆகையால் ரத்தினம் தங்கம் வெள்ளி பசு முதலியவைகளில் எதையாவது இதற்குப் பதிலாகக் கொடுங்கள்" என்றார்கள். அரசன் பத்து லக்ஷம் பசுக்களையும் பத்து கோடி தங்கம், நாற்பது கோடி வெள்ளி நாணயங்களையும் அந்த தேசங்களுக்கு விலையாகக் கொடுத்தார்.

தங்களுடைய பாகங்களை நியாயமாய்ப் பிரிப்பதற்கு வஸிஷ்டரையும் ரிஷ்யசிருங்கரையும் அவர்கள் வேண்டி, வெகுஸந்தோஷத்துடன் பாகங்களைப் பெற்று "அளவற்ற திருப்தியடைந்தோம்" என்று அரசனிடத்தில் சொன்னார்கள். பிறகு அவர் ஸபையிலிருந்த பிராம்மணர்களுக்குக் கோடி கோடியாய்த் தக்ஷிணை கொடுத்தார். தன்னருகில் வந்து தன்னைக் கேட்ட ஒரு ஏழை பிராம்மணனுக்குத் தன் கையிலுள்ள ஓர் விலையற்ற ரத்னகடகத்தைக் கொடுத்தார்.

இப்படி எல்லோரும் எல்லையற்ற திருப்தியடைந்தார்கள். அரசன் ஆனந்தக் கண்ணீர் பெருக யாவரையும் ஸாஷ்டாங்கமாய் வணங்கினார். ரித்விக்குகளும் மற்ற பிராம்மணோத்தமர்களும் வேதவாக்கியங்களால் அவரை மனப்பூர்வமாய் ஆசீர்வதித்தார்கள்.

புத்திரோத்பத்திக்கு இடையூறான ஸகல பாபங்களையும் போக்கி புத்திரோத்பத்தியின் மூலமாக ஸ்வர்க்கத்தைக் கொடுக்கக் கூடியதாய் ஸாமான்ய அரசர்களால் செய்யமுடியாத அச்வமேதம் என்ற ஸர்வோத்தமமான யாகத்தை விதிப்படி செய்து தசரதர் பரமானந்தமடைந்தார்.

பிறகு அவர் ரிஷ்யசிருங்கரைக் கைகூப்பி வணங்கி, அளவற்ற திருப்தியுடன் "ஸ்வாமி! எனக்குப் புத்திரனுண்டாகும்படி அனுக்கிரகிக்க வேண்டும்" என்று பிரார்த்தித்தார். அந்த முனிவர் "அரசனே! கவலை வேண்டாம். நான்கு புத்திரர்கள் பிறந்து உமது வம்சத்தை விளங்கச் செய்வார்கள். தகுந்த உபாயம் செய்கிறேன்" என்று ஒப்புக்கொண்டார்.

ததே2தி ச ஸ ராஜாந முவாச த்3விஜ ஸத்தம: |
ப4விஷ்யந்தி ஸுதா ராஜந் சத்வாரஸ் தே குலோத்3வஹா: ‖ (57)

---

## ஸர்க்கம் 15

# தேவர்கள் மஹா விஷ்ணுவைப் பிரார்த்தித்தது

---

மேதா4வீ து ததோ த்4யாத்வா ஸ கிஞ்சிதி3த3 முத்தரம் |
லப்3த4 ஸம்ஜ்ஞஸ் ததஸ் தம் து வேத3ஜ்ஞோ ந்ருப மப்3ரவீத் ‖ (1)

**அவதாரிகை**

ராவணாதி ராக்ஷஸர்களால் தங்களுக்கு நேர்ந்த கொடுமையை நீக்கி, க்ஷேமத்தைச் செய்யத் தேவர்கள் விஷ்ணுவை வேண்டியதும், தசரதருடைய பிரார்த்தனையை வெளிக்காரணமாகக் கொண்டு ஸாதுக்களைக் காத்து, துஷ்டர்களை அழித்து, தர்மத்தை ஸ்தாபிக்கப் பகவான் பூமியில் மனிதனாகப் பிறக்க உத்தேசித்ததும் சொல்லப்படுகின்றன.

---

ஸகல வேதசாகைகளையும் தரிக்கக்கூடிய புத்தியுள்ளவரும் வேதாத்யயனம் செய்து உட்கருத்தையும் ரஹஸ்யங்களையும் நன்குயறிந்தவருமான ரிஷ்யசிருங்கர், அரசனுடைய கோரிக்கையை நிறைவேற்ற எந்த கிரியையைச் செய்யலாமென்று சற்று ஆலோசித்தார். பிறகு அதை நிச்சயித்துக்கொண்டு "பூபதே! புத்திரபாக்யத்தைக் கொடுக்கும் ஓர் இஷ்டி அதர்வ வேதத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. உமக்காக அதைச் செய்விக்கிறேன்" என்று புத்திரகாமேஷ்டியை ஆரம்பித்து, வேத விதிப்படி அக்னியில் ஓர் ஆஹுதி செய்தார்.

தசரதருடைய அசுவமேதத்தில் யாக பாகங்களைப் பெறவந்த ஸகல தேவர்களும் யாக ஸதஸில் கிரமப்படி வீற்றிருந்து தங்களுக்குத் தலைவரான பிரஹ்மாவை 'ஸ்வாமி! ராவணனென்ற ராக்ஷஸன் கடுந்தவத்தால் தங்களை ஸந்தோஷப்படுத்தி அபூர்வமான வரங்களைப் பெற்று, அந்த பலத்தால் எங்களை உபத்திரவிக்கிறான். தேவர்களால் மரணமில்லை என்று அவனுக்கு வரம் கொடுத்திருக்



ஏதஸ்மிந் நந்தரே விஷ்ணு: உபயாதோ மஹாத்3யுதி: |
ஶங்க2 சக்ர க3தா3 பாணி: பீதவாஸா ஜக3த்பதி: || —பால. 15ஸ-16ச.

அப்பொழுது ஸகல தேவர்களுக்கும் பிரபுவாய் ஸகலப் பிராணிகளிடத்தில் அந்தர்யாமியாய் விளங்கும் மஹாவிஷ்ணு அவர்களுக்குத் தரிசனம் கொடுத்தார். (பக்கம் 45 பார்க்க)

கிறீர்கள். தங்களுடைய வார்த்தைக்குக் கௌரவம் வைத்து, அவனை சிக்ஷிக்காமல் அவனுடைய அக்கிரமங்களைப் பொறுக்கிறோம். துர்ப்புத்தியுள்ள அந்த ராக்ஷஸன் மூன்று லோகத்து பிராணிகளையும் நடுங்கச் செய்கிறான். மேலும் லோக பாலர்களை எதிர்த்து, இந்திரனைத் துரத்திவிட்டு, தானே ஸ்வர்க்கத்தை ஆள நினைக்கிறான். வரங்களால் மோகமடைந்து எவரிடத்திலும் பயமற்று ரிஷிகளையும் வேதியர்களையும் யக்ஷர்களையும் கந்தர்வர்களையும் அஸுரர்களையும் மற்றவர்களையும் வாட்டுகிறான். அவனைக் கண்டவுடன் ஸூரியன் கிரணங்களைச் சுருக்கிக் கொள்ளுகிறான். அவன் குன்றுகளில் விளையாடும்பொழுது செடி கொடிகளிலுள்ள மலர்கள் உதிருமென்ற பயத்தால் வாயு இஷ்டப்படி வீசுவதில்லை. மலைபோன்ற அலைகளால் பயங்கரமாய்க் கர்ஜிக்கும் ஸமுத்திரமும் அவனைக் கண்டால் அசைவதில்லை. கோர ரூபமுள்ள ராவணனிடத்தில் நாங்கள் எப்பொழுதும் பயந்து, படும் உபத்திரவங்களைச் சொல்லமுடியாது. ஆகையால் அவனைக்கொல்ல ஏதாவது உபாயம் செய்ய வேண்டும்'' என்று வணக்கமாய் அந்தப் பெரிய காரியத்தைத் தெரிவித்துக் கொண்டார்கள்.

பிரஹ்மா "தேவர்களே! அவன் தேவ கந்தர்வ ராக்ஷஸர் முதலிய யாவராலும் மரணம் நேரக்கூடாதென்று என்னைக் கேட்டான். அப்படியே வரம் கொடுத்தேன். ஆனால் மனிதர்களை அலக்ஷ்யம் செய்து அவர்களால் மரணம் கூடாதென்று கேட்கவில்லை. ஆகையால் அவனுக்கு மனிதனாலேயே மரணம் நேரும்; கவலை வேண்டாம்'' என்று ஸமாதானம் செய்தார். அமிருத தாரையைப்போல் இனிமையான அந்த வார்த்தையால் தேவர்களும் மஹர்ஷிகளும் அளவற்ற ஸந்தோஷமடைந்தார்கள்.

அப்பொழுது ஸகல தேவர்களுக்கும் பிரபுவாய், ஸகலப் பிராணிகளிடத்தில் அந்தர்யாமியாய் விளங்கும் மஹாவிஷ்ணு அவர்களுக்குத் தரிசனம் கொடுத்தார். துஷ்டர்களை அழித்து ஸாதுக்களை ரக்ஷிக்கத் தகுந்த காலத்தை எதிர்பார்த்திருப்பவராகையால், அந்த ஸமயம் வந்ததென்று அளவற்ற ஸந்தோஷமடைந்து அபார தேஜஸுடன் விளங்கினார். அண்டினவர்களை ரக்ஷிக்க, சங்க சக்ர கதை கட்கம் சார்ங்கமென்ற திவ்யாயுதங்களை எப்பொழுதும் தரிக்கிறவரும், பீதாம்பரதாரியும், உலகத்தைக் காப்பாற்றுவதான தன் காரியத்தில் கண்ணுயிருப்பவருமான அவர் பிரஹ்மாவின் அருகில் சென்றார்.

அப்பொழுது தேவர்களும் அவரை வணங்கிக் கைகூப்பி வினயத்துடன் துதித்து "லோகநாத! ராவணனென்ற துஷ்ட ராக்ஷஸன் மூவுலகங்களையும் வருத்துகிறான். தேவர்களால் கொல்ல முடியாதவன். ஸ்வபாவத்தாலும் பிரஹ்மா கொடுத்த வரங்களாலும் வெகு கர்வம் கொண்டிருக்கிறான். தேவ கந்தர்வ யக்ஷ கின்னர மஹரிஷிகளை ஹிம்ஸிப்பதுமல்லாமல் எங்கள் நந்தவனத்தில் விளையாடிக் கொண்

டிருக்கும் அப்ஸரஸ்களைக் கதற அடிக்கிறான். அவனைக் கொல்ல வேண்டும் என்று நாங்களும் ரிஷிகளும் கந்தர்வர்களும் யக்ஷர்களும் மற்றவர்களும் தங்களைச் சரணமடைகிறோம். தேவ சத்துருக்களை அழிக்கத் தாங்களே தயவுசெய்து பூமியில் பிறக்க வேண்டும். தர்மங்களைப் பூரணமாயறிந்து, யாசகர்களுக்கு வேண்டியவரையில் கொடுக்கும் அயோத்யாதிபதியான தசரதர் மஹரிஷிகளைப் போன்றவர்; ஹ்ரீ ஸ்ரீ கீர்த்தி தேவிகளைப்போன்ற அவருடைய மூன்று பத்தினிகளிடத்தில் தாங்கள் நான்கு அம்சங்களாய் அவதரித்து, மனுஷ்ய ரூபத்துடன் துஷ்ட ராக்ஷஸர்களைக் கொல்ல வேண்டும். தங்களைத் தவிர வேறு கதி எங்களுக்கில்லை" என்றார்கள்.

ஸகலப்பிராணிகளாலும் நமஸ்கரிக்கப்பட்ட தேவதேவனை விஷ்ணு, தன்னைச் சரணமடைந்த பிரஹ்மாதி தேவர்களை நோக்கி, "நீங்கள் பயப்படவேண்டாம். உங்களுக்கு க்ஷேமமுண்டாகட்டும். நான் பூமியில் தசரத புத்திரனாகப் பிறந்து, தேவ கந்தர்வ ரிஷிகளையும் ஸகல லோகங்களையும் வாட்டும் துஷ்டனை ராவணனை, புத்திரமித்திரபந்து பரிவார ஸைன்யங்களுடன் யுத்தத்தில் கொன்று பதினோராயிர வருஷங்கள் வரையில் பூமியை ஆளுவேன்" என்று அருளிச் செய்தார்.

இப்படித் தேவர்களுக்கு அபயம் கொடுத்து, அவர்கள் வேண்டியபடி நான்கு அம்சங்களாய், தாம் தசரதருக்குப் புத்திரர்களாய்ப பூமியில் அவதரிக்க உத்தேசித்தார். அவருடைய நல்ல குணங்களை நினைத்து நினைத்து ஸந்தோஷத்தால் மலர்ந்த கண்களுடன் மஹாவிஷ்ணு, தேசகால வஸ்துக்களால் எல்லையற்றவரும், பிறப்பிறப்பற்றவரும், யாவரும் விரும்பக்கூடியவருமாக இருந்தாலும் தசரதரைப் பிதாவாக அடைய நிச்சயித்தார்.

பிறகு தேவ கந்தர்வ ருத்ர யக்ஷ அப்ஸர கணங்கள் திவ்யமான ஸ்துதிகளால் அவரைக் கொண்டாடி, "பகவானே! ராவணன் பராக்கிரமசாலி; இயற்கையாய் எல்லையற்ற கர்வமுள்ளவன்; பிரஹ்மாவின் வரத்தால் மிகுந்த கொழுப்புள்ளவன்; லோகங்களைக் கதறச் செய்கிறவன்; ஸாதுக்களையும் ரிஷிகளையும் வருத்தி, சொல்ல முடியாத பயத்தை உண்டாக்குகிறவன்; வெகுப்பிரஸித்தன்; அவனைப் பந்து பரிவார ஸைன்யங்களுடன் அழித்து, தங்களை அண்டின எங்களை ரக்ஷிக்க வேண்டும். எங்களுடைய கவலையை நீக்கினபிறகு, நாங்கள் அடைய முடியாததும் அழிவில்லாததும் காமக்குரோதங்கள் அற்றதுமான தங்களுடைய ஸ்ரீ வைகுண்டத்திற்கு மறுபடியும் எழுந்தருளவேண்டும்" என்று பிரார்த்தித்தார்கள்.

தமேவ ஹத்வா ஸப3லம் ஸபா3ந்த4வம்
விராவணம் ராவண முக்3ர பௌருஷம் |
ஸ்வர்லோக மாக3ச்ச2 க3தஜ்வரஶ்சிரம்
ஸுரேந்த்3ர கு3ப்தம் க3ததோ3ஷ கல்மஷம் ‖ (35)

Released by Maran’s Dog ,Toronto, Canada



ததோ வை யஜமாநஸ்ய பாவகா த3துலப்ரப4ம் |
ப்ராது3ர்பூ4தம் மஹத்3பூ4தம் மஹாவீர்யம் மஹாப3லம் ॥ —பால, 16ஸ-11ச.

அந்த இஷ்டியில் ரிஷ்யசிருங்கர் பிரதான ஆஹுதி செய்தவுடன், ஆஹவநீய அக்கினியிலிருந்து பூதம் போன்ற ஒரு புருஷன் ஒப்பற்ற காந்தியுடன் ஜ்வலிக்கும் பெரிய சரீரத்துடன் கிளம்பினன். (பக்கம் 43 பார்க்க)

## ஸர்க்கம் 16

## புத்திரகாமேஷ்டி

ததோ நாராயணோ விஷ்ணு: நியுக்த: ஸுரஸத்தமை: |
ஜாநந்நபி ஸுராம்ஸ் சைவம் ஸ்லக்ஷ்ணம் வசந மப்3ரவீத் ॥ (1)

**பி**றகு விஷ்ணு, மேலே செய்யவேண்டிய காரியத்தை நன்று யறிந்தும் அறியாதவரைப்போல்,"தேவர்களே! ராவணனைக் கொல்ல உபாயமென்ன? என் நிஜஸ்வரூபத்தோடு அவதாரம் செய்யவேண் டுமா? வேறு வழியுண்டா?" என்று கேட்டார். பிறப்பிறப்பற்ற பகவான் அப்படிச்சொல்லத் தேவர்கள் "லோகநாதா! அவன் வெகு காலமாய்க் கடுந்தவம் செய்து தேவசிரேஷ்டரான பிரஹ்மாவை ஸந்தோஷப்படுத்தி தனக்கு ஒருவராலும் மரணம் நேரக்கூடாதென்று வரம் கேட்டான். ஆனால் மனுஷ்யர்களை அலக்ஷ்யம் செய்து வரத்தில் சேர்த்துக் கேட்கவில்லை. ஆகையால் அவர்களைத் தவிர மற்றவர்களால் மரணமில்லையென்று வரமடைந்து வெகு கொழுப்புடன் ஸகல லோகங்களையும் வருத்தி, பரஸ்த்ரீகளை பலவந்தம் செய்கிறன். மனுஷ்யனுல் அவனுக்கு மரணமென்று விதித்திருக்கிற படியால் தாங்கள் நரரூபத்துடன் அவனை யுத்தம் செய்து கொல்லுங்கள்" என்றார்கள்.

அந்த ஸமயத்தில் புத்திரகாமேஷ்டி செய்துகொண்டிருந்த தசரதருக்குக் குமாரனுய்ப் பிறக்க நிச்சயித்து, மஹாவிஷ்ணு பிரஹ்மாவிடத்தில் சொல்லிக் கொண்டு, தேவர்கள் பூஜிக்க, அங்கேயே மறைந்தார்.

அந்த இஷ்டியில் ரிஷ்யசிருங்கர் பிரதான ஆஹுதி செய்தவுடன், ஆஹவனீய அக்கினியிலிருந்து பூதம் போன்ற ஒரு புருஷன் ஒப்பற்ற காந்தியுடன் ஜ்வலிக்கும் பெரிய சரீரத்துடன் கிளம்பினன். கறுப்பும் சிவப்பும் கலந்த நிறமுள்ள வஸ்திரத்தால் அலங்கரிக்கப்பட்டு, சிவந்த முகமும், துந்துபியைப் போன்ற கம்பீரமான த்வனியும், ஸிம்ஹத்தின் மயிரைப்போன்ற மீசை தாடியும், பர்வதத்தைப்போன்ற உருவமும், கொழுத்த புலியின் பராக்ரமமும், ஸூரிய மண்டலத்தையும் அக்னி ஜ்வாலையையும் போன்ற கூசும்படியான பிரகாசத்தையும் உடையவனுக, உத்தம லக்ஷணங்கள் பொருந்தி, திவ்யாபரணங்களால் விளங்கி, அந்த மஹா புருஷன், வெள்ளி மூடியுடன் பக்கங்களில் விசித்திர வேலைகளால் அலங்கரிக்கப்பட்டு திவ்விய பாயஸம் நிறைந்த ஒரு தங்கப் பாத்திரத்தை இருகைகளால் பார்யையைப் போல் பிரியமாய் அணைத்துக்கொண்டு, மஹாராஜ! நான் பிரஹ்மாவால் உம்மிடம் அனுப்பப்பட்ட நரனென்று அறியும்" என்றார்.

தசரதர் கைக்கூப்பி வணங்கி, "ஸ்வாமி! நல்வரவு, என்னுல் ஆகவேண்டியதென்ன?" என்றார். அந்தப் பிரஹ்ம தூதன்,

"அசுவமேதத்தாலும் புத்திரகாமேஷ்டியாலும் தேவதைகளை நீர் பூஜித்தபடியால் இந்த திவ்விய பாயஸம் உமக்குக் கிடைத்தது. பெருமையையும் ஆரோக்கியத்தையும், நீர் நெடுநாளாய் வேண்டும் புத்திர பாக்கியத்தையும் இது கொடுக்கும். ஆகையால், இதை வாங்கி உமது பத்தினிகளுக்குப் புஜிக்கக் கொடும். நீர் செய்யும் முயற்சிகளின் பயனை இதனால் அடையலாம்" என்றார்.

அரசர், "உத்தரவுப்படி செய்கிறேன்" என்று தேவர்களால் அனுப்பப்பட்ட திவ்விய பாயஸம் நிறைந்த தங்கப் பாத்திரத்தை வெகு பிரியத்துடன் வாங்கி தலைமேல் வைத்து, ஆச்சரியமான ரூபமுள்ள அந்தப் பூதத்தை நமஸ்கரித்து பிரதக்ஷிணம் செய்தார். மஹா தரித்திரனுக்கு நவநிதி கிடைத்ததுபோல் அவருக்கு அது கிடைத்தவுடன் பரமானந்தமுண்டாயிற்று. தன் காரியத்தை நிறைவேற்றி பிரஹ்மதூதனும் அக்னியில் மறைந்தார்.

தசரதர் புத்திரகாமேஷ்டியை முடித்து, அந்தப்புரத்திற்குப் போய்க் கௌஸல்யை முதலிய பார்யைகளை அழைத்து, "இந்தப் பாயஸம் தேவர்களால் அனுப்பப்பட்டது. புத்திர பாக்யத்தைக் கொடுக்கும் இதைப் புஜியுங்கள்" என்றார். சரத்கால சந்திர கிரணங்களால் ஆகாசம் விளங்குவதுபோல், சந்தோஷ ஸமாசாரத்தைக் கேட்ட ராஜஸ்த்ரீகளின் காந்தியால் அந்தப்புரம் விளங்கிற்று. மஹாராஜா, தனக்கு நான்கு புத்திரர்கள் பிறக்கவேண்டுமென்று, அந்தப் பாயஸத்தில் பாதியைக் கௌஸல்யைக்கும் நாலிலொரு பாகத்தை ஸுமித்திரைக்கும் எட்டிலொரு பாகத்தைக் கைகேயிக்கும் கொடுத்தார். மிகுந்த எட்டிலொன்றை, யோசித்து ஸுமித்திரைக்கே கொடுத்தார். இப்படி அவர் விபாகம் செய்ததை மஹிஷிகள் மெச்சி, பாயஸத்தை வெகுப் பிரீதியுடன் பெற்றுக் கொண்டு புஜித்து, அக்னியையும் சூரியனையும்போல் காந்தியுள்ள கர்ப்பங்களைத் தரித்தார்கள். அதைக் கண்டு அரசன் கவலை தீர்ந்து தேவலோகத்தில் ஸித்தர்களாலும் ரிஷிகளாலும் பூஜிக்கப்பட்ட மஹேந்திரனைப்போல் எல்லையற்ற ஆனந்தமடைந்தார்.

ததஸ்து ராஜா ப்ரஸமீக்ஷ்ய தா: ஸ்த்ரிய:
ப்ரரூட4 க3ர்பா4: ப்ரதிலப்3த4 மாநஸ: |
ப3பூ4வ ஹ்ருஷ்டஸ் த்ரிதி3வே யதா2 ஹரி:
ஸுரேந்த்3ர ஸித்3த4ர்ஷி க3ணாபி4பூஜித: ‖ (34)

## ஸர்க்கம் 17

# தேவர்களுடைய அவதாரம்

புத்ரத்வம் து க3தே விஷ்ணௌ ராஜ்ஞஸ தஸ்ய மஹாத்மந: |
உவாச தே3வதா: ஸர்வா: ஸ்வயம்பூ4ர் ப4க3வாநித3ம் ‖ (1)

இப்படி பகவான் மஹாத்மாவான தசரதருக்குப் புத்திரனாய்ப் பிறக்க நிச்சயித்த பிறகு, யாவுமறிந்த பிரஹ்மா தேவர்களை



அழைத்து, "நமக்கெல்லோருக்கும் பரம க்ஷேமத்தைச் செய்ய விரும்பிப் பகவான் பூமியில் மனுஷ்யாவதாரம் செய்யப்போகிறார். ராவணாதி ராக்ஷஸர்களுடன் அவர் யுத்தம் செய்யும்பொழுது அவருக்கு உதவி செய்ய நீங்கள் பிரதானமான அப்ஸரஸ்களாலும் கந்தர்வ ஸ்த்ரீகளாலும் புத்திரர்களை உண்டு பண்ணுங்கள். அவர்கள் நினைத்த ரூபங்களை எடுக்கக்கூடியவர்களும், ஸகல மாயைகளை அறிந்தவர்களும், வாயுவேகமுள்ளவர்களும், மஹா புத்திமான்களும், அளவற்ற பலசாலிகளும், எல்லா அஸ்திர சஸ்திரங்களின் சக்தியுள்ளவர்களும், அமிருத பானம் செய்தவர்களைப்போல் மரணமற்றவர்களும், நீதி சாஸ்திரங்களையும் உபாயங்களையும் அறிந்தவர்களும், விஷ்ணுவிற்கு சமமான பராக்ரமமுள்ளவர்களுமாக இருக்கவேண்டும். இந்தக் காரியத்தை உத்தேசித்தே வெகு காலத்திற்கு முன் என் கொட்டாவியிலிருந்து ஜாம்பவானென்ற கரடியை ஸிருஷ்டித்திருக்கிறேன். அவன் நிகரற்ற பலசாலி" என்றார்.

அவருடைய ஆக்ஞைப்படி அதுவரையில் புத்திரர்களை உண்டு பண்ணாதவர்கள், தேவ கந்தர்வ ஸித்த வித்யாதர உரக சாரண ரிஷி கணங்களிலும், மற்ற தேவர்களிலும் தங்களுடைய அம்சங்களால் வானர ரூபமுடைய புத்திரர்களைப் பெற்றார்கள்.

வானராதிபதியாக மஹேந்திர மலையைப்போல் பெரிய தேகத்தையுடைய வாலியை இந்திரனும், ஸுக்ரீவனை சூரியனும், வானர சிரேஷ்டனும் மஹா புத்திமானுமான தாரனைத் தேவகுருவும், சகல சம்பத்துகளும் பொருந்தின கந்தமாதனனைக் குபேரனும், நளனை விசுவகர்மாவும், பிதாவுக்கு ஸமானமான தேஜஸுள்ளவனும் கீர்த்தியாலும் காந்தியாலும் பராக்ரமத்தாலும் வானரர்களை மிஞ்சின நீலனை அக்னியும், மிகவும் அழகு வாய்ந்த மைந்த த்விவிதர்களை அசுவினி தேவர்களும், ஸுஷேணனை வருணனும், சரபனை மழைக்கு அபிமானி தேவதையான பர்ஜன்யனும், வேகத்தில் கருடனைப் போன்றவரும் எந்த ஆயுதங்களாலும் பிளக்க முடியாத வஜ்ர தேகம் வாய்ந்த ஆஞ்சநேயரை வாயுவும் பெற்றார்கள்.

இப்படி எல்லையற்ற பலத்துடன் மேருமந்தர மலைகளைப்போல் உயர்ந்த சரீரமும், பிதாவுக்கு ஸமமான ரூபமும் பராக்கிரமமும் பொருந்தி, நினைத்த ரூபங்களை எடுக்கக்கூடிய எண்ணிறந்த கரடிகளும் குரங்குகளும் கொண்டை முஸுருகளும் நீண்ட வாலுள்ள குரங்குகளும் ராவணாதி ராக்ஷஸர்களை அழிக்கப் பிறந்தன.

அவர்களில் சிலருக்கு கோலாங்கூலம்என்ற வானரவகையும், கரடிகளும், கின்னரஸ்த்ரீகளும் அப்ஸரஸ்களும் வித்யாதரஸ்த்ரீகளும் நாககன்யைகளும் கந்தர்வஸ்த்ரீகளும் தாய்கள். சிலருக்கு தேவர்களும் ரிஷிகளும் கந்தர்வர்களும் யக்ஷர்களும் ஸுபர்ணர்களும் நாகங்களும் ஸித்தர்களும் வித்யாதரர்களும் உரகர்களும் பிதாக்கள்.

அவர்கள் பலத்திலும் கர்வத்திலும் ஸிம்ஹத்தையும் புலியையும் போன்றவர்கள்; கல் மரம் நகம் பல் முதலியவைகளை ஆயுதமாகக் கொண்டவர்கள்; சத்ருக்களின் அஸ்திரங்களைத் தடுக்கும் உபாயமறிந்தவர்கள்; பெரிய மலைகளையும் அசைத்துப் பிடுங்குவார்கள்; உறுதியான மஹா விருக்ஷங்களையும் முறிப்பார்கள்; வேகத்தால் கடலைக் கலக்குவார்கள்; பூமியைக் காலால் உதைத்துப் பிளப்பார்கள்; ஏழு கடல்களையும் தாண்டுவார்கள்; ஆகாசத்தில் பறப்பார்கள்; மேகங்களைத் தாவிப் பிடிப்பார்கள்; மதம் கொண்டு திரியும் யானைகளை விளையாட்டாகப் பிடித்து எறிவார்கள். இவ்வித மஹிமையுள்ள பல சேனாபதிகள் எண்ணிறந்த புத்திரர்களை உண்டாக்கினார்கள். அவர்களும் பல ஸேனாபதிகளைப் படைத்தார்கள்; சிலர் ரிக்ஷவான் முதலிய மலைத் தாழ்வரைகளிலும் காடுகளிலும் நதிக்கரைகளிலும் வசித்தார்கள்.

இந்திரனுக்கும் ஸூரியனுக்கும் பிறந்த வாலி ஸுக்ரீவர்கள் ஸஹோதரர்கள், வானராதிபதிகள்; நளன் நீலன் மாருதி முதலியவர்கள் ஸேனைத்தலைவர்கள்; அவர்களின் ஆக்ஞைக்குள் வஸித்துக் கொண்டிருந்த வானரர்களையும் கரடிகளையும் கொண்டை மூஸுருக்களையும் வாலி புஜபலத்தால் காப்பாற்றிவந்தான்.

இப்படி மேகக் கூட்டங்களையும் மலைச்சிகரங்களையும் போல் பெரிய பயங்கரமான சரீரங்களுடன் பல ரூபங்களும் லக்ஷணங்களும் பொருந்தி, ராமனுக்கு உதவிசெய்யப் பூமியில் வளர்ந்து வரும் வானரர்களால், காடு மலை கடல் த்வீபம் நதி நகரங்களுள்ள இந்தப் பூமி முழுவதும் வியாபிக்கப்பட்டது.

தைர் மேக4 ப்3ருந்தா3சல கூடகல்பை:
மஹாப3லைர் வாநரயூத2 பாலை: |
ப3பூ4வ பூ4ர்பீ4ம ஶரீரரூபை:
ஸமாவ்ருதா ராம ஸஹாய ஹேதோ: ‖ (37)

---

### ஸர்க்கம் 18

## ஸ்ரீ ராம ஜனனம்

---

நிர்வ்ருத்தே து க்ரதௌ தஸ்மிந் ஹயமேதே4 மஹாத்மந: |
ப்ரதிக்3ருஹ்ய ஸுரா பா4கா3ந் ப்ரதி ஜக்3முர் யதா2க3தம் ‖ (1)

தசரத சக்கரவர்த்தி செய்த அசுவமேதம் புத்திரகாமேஷ்டியுடன் முடிந்தது. தேவர்கள் பாகங்களைப் பெற்றுக்கொண்டு ஸ்வர்க்கம் சென்றார்கள். அரசன் பாரியைகளுடன் யாகதீக்ஷை நீக்கி, வந்திருந்த அரசர்களுக்குத் தகுந்தபடி மரியாதை செய்து அனுப்பினார். அவர்கள் வஸிஷ்டர் முதலிய மஹரிஷிகளை வணங்கி விடை பெற்றுக்கொண்டு, அரசன் கொடுத்த வஸ்திராபரணங்களால் விளங்கும் ஸைன்யத்துடன் ஸந்தோஷமாய்த் தங்களுடைய தேசங்களுக்குச் சென்றார்கள். பிறகு தசரதர் ஸைன்ய பரிவார வாகனங்களோடும் பத்தினிகளோடும் வஸிஷ்டர் முதலிய பெரியோர்களை முன்னிட்டுக் கொண்டு அயோத்யைக்கு வந்தார். ரிஷ்யசிருங்கரும் சாந்தையும் ரோமபாதரும் அங்கதேசத்திற்குப் போனார்கள். இப்படி அனைவர்க்கும் விடை கொடுத்தனுப்பி, தன் எண்ணங்கள் யாவும் நிறைவேறி, தனக்குக் கிடைக்கும் புத்திரபாக்கியத்தைப் பற்றி யோசித்துக் கொண்டு சக்கரவர்த்தி அயோத்யையில் ஸுகமாய் வஸித்துவந்தார்.



இப்படி யக்ஞம் முடிந்து, ஆறு ருதுக்கள் கடந்து, பன்னிரண்டாவதான சித்திரைமாதம் நவமி திதி அதிதியை தேவதையாக உடைய புனர்வஸு நக்ஷத்திரம் கூடிய சுபதினத்தில், கடக லக்கினத்தில், கௌஸல்யா தேவி, ஸகல லோகங்களுக்கு நாதனும், ஸகல சுப லக்ஷணங்கள் பொருந்தினவரும், ஸர்வ லோகங்களால் நமஸ்கரிக்கப் படுகிறவரும், மஹாவிஷ்ணுவின் பாதி அம்சமுள்ளவரும், இக்ஷ்வாகு குலத்தைப் பெருமைப் படுத்தப் போகிறவருமான ராமனென்ற புத்திர ரத்தினத்தைப் பெற்றாள்.

## ஸ்ரீராமர் ஜாதகம்

| | | | |
|---|---|---|---|
| சுக்கிரன் | சூரியன் புதன் | | கேது |
| | ராசி சக்கரம் | | லக்னம் குரு சந்திரன் |
| செவ்வாய் | | | |
| ராகு | | சனி | |

அப்பொழுது ஸூரியனும் அங்காரகனும் குருவும் சுக்கிரனும் சனியும் முறையே தங்களுடைய உச்சஸ்தானமாகிய மேஷம் மகரம் கடகம் மீனம் துலாமென்ற ராசிகளில் இருந்தார்கள். குருவும் சந்திரனும் கூடிப் பிரகாசித்தார்கள். வஜ்ரபாணியான தேவேந்திரனைப் பெற்ற அதிதி தேவியைப் போல், கௌஸல்யையும், எல்லையற்ற தேஜஸுள்ள அந்தப் புத்திரனைப் பெற்று மிகவும் விளங்கினாள்.

புஷ்ய நக்ஷத்திரத்தில் மீன லக்கினத்தில், வீண் போகாத பராக்கிரமமுள்ளவரும் தெளிந்த புத்தியுள்ளவரும் ஸகல நற்குணங்களும்

பொருந்தினவரும் விஷ்ணுவின் எட்டிலொரு அம்சமுமான பரதன் கைகேயியிடத்தில் பிறந்தார்.

பிறகு ஆயில்ய நக்ஷத்திரத்தில் ஸூரியோதயத்திற்குப் பின், மஹா வீரர்களாய், ஸகல அஸ்திரசஸ்திர வித்யைகளில் நிபுணர்களாய் விளங்கும் லக்ஷ்மணனும் சத்ருக்னனும் ஸுமித்திரையிடத்தில் பிறந்தார்கள். விஷ்ணுவின் நாலிலொரு அம்சம் லக்ஷ்மணனிடத்திலும் எட்டிலொரு அம்சம் சத்ருக்னனிடத்திலும் விளங்கிற்று. அவர்கள் இரட்டைப் பிள்ளைகள்.

நற்குணங்கள் பொருந்தி, ஒருவர்க்கொருவர் ஸமானமாய்ப் பூரட்டாதி உத்திரட்டாதி நக்ஷத்திரங்களைப்போல் காந்தியுடைய அந்த நான்கு புத்திரர்கள் அவதாரம் செய்த பொழுது, கந்தர்வர்கள் மதுரமாய்ப் பாடினார்கள்; அப்ஸரஸ்கள் ஆடினார்கள்; தேவதுந்துபி முழங்கிற்று; ஆகாசத்திலிருந்து புஷ்பமாரி பொழிந்தது. அயோத்யாவாஸிகள் மஹோத்ஸவம் கொண்டாடினார்கள். ஜனங்களாலும் நாட்டியமாடுகிறவர்களாலும் ஆட்டுவிப்பவர்களாலும் பாட்டாலும் வாத்ய கோஷங்களாலும் ஸூத மாகத வந்திகளாலும் ராஜ வீதிகள் நிறைந்தன.

அப்பொழுது தசரதர் பிராம்மணர்களுக்குக் கணக்கில்லாமல் பசுக்களையும் திரவியங்களையும் தானம் கொடுத்தார். ஸூத மாகத வந்திகளுக்கு விசேஷ வெகுமானம் செய்தார்.

திருக்குமாரர்கள் பிறந்த பதின்மூன்றாவது நாளில், வஸிஷ்ட மஹரிஷி வெகு ஸந்தோஷத்துடன், கௌஸல்யையின் புத்திரனுக்கு ராமனென்றும், கைகேயியின் புத்திரனுக்குப் பரதனென்றும், ஸுமித்திரையின் புத்திரர்களுக்கு லக்ஷ்மணனென்றும் சத்ருக்னனென்றும் பெயர் வைத்தார். அப்பொழுது தசரதர் நகரத்திலும் நாட்டிலுமுள்ள பிராம்மணர்களுக்குத் திருப்தியாய் அன்னமிட்டு அளவற்ற ரத்தினங்களைத் தக்ஷிணையாகக் கொடுத்தார்.

அந்த ராஜ குமாரர்களுக்கு அன்னப்பிராசனம் சௌளம் உபநயனம் முதலிய ஸம்ஸ்காரங்கள் காலம் தவறாமல் விதிப்படி செய்யப்பட்டன.

அவர்களுக்குள் த்வஜத்தைப்போல் விளங்கும் மூத்தவரான ஸ்ரீராமன், தன் பிதாவுக்கு அளவற்ற ஸந்தோஷத்தை உண்டு பண்ணுகிறவராய், பிரஹ்மாவைப் போல் எல்லாப் பிராணிகளுக்கும் இஷ்டமுள்ளவராயிருந்தார். அந்தக் குமாரர்கள் வேத வேதாங்கங்களைப் பூர்ணமாகக் கற்றார்கள். சூரர்களாகவும், ஞானவான்களாகவும், ஸகல நற்குணங்களும் பொருந்தினவர்களாகவும், ஜனங்களுக்கு அனுகூலத்தைச் செய்வதிலேயே நோக்கமுள்ளவர்களாகவும் வளர்ந்தார்கள். அவர்களில் ஸ்ரீ ராமன் அபாரமான காந்தியும் வீணாகாத பராக்கிரமமுமுள்ளவர்; சந்திரனைப்போல் ஸகல லோகங்களுக்கும் பிரியமானவர்; யானை யேற்றம், குதிரை யேற்றம், ரதம் ஓட்டுதல், வில்வித்யை முதலியவைகளில் நிபுணர். பெற்றோர்களுக்குப் பணிவிடை செய்வதில் மிகவும் முயற்சியுள்ளவர்.



விசேஷ லக்ஷ்மி பொருந்திய லக்ஷ்மணன், குழந்தைப் பருவம் முதல் அனைவர்க்கும் பிரியமானவர்; தன் தமயனான ராமனிடத்தில் மனோவாக்குக் காயங்களால் அளவற்ற பிரியம் வைத்தவர். லக்ஷ்மணன் ஸமீபத்திலில்லாவிட்டால் புருஷோத்தமனான ராமனுக்குத் தூக்கம் வராது; ருசியுள்ள அன்னத்தையும் அவரின்றிப் புஜிப்பதில்லை, தன் வலது கையாகவும் வெளியில் ஸஞ்சரிக்கும் பிராணனாகவும் அவரை நினைத்திருந்தார். ராகவன் குதிரைமேலேறி வேட்டைக்குப் போகும்பொழுது, இளையாழ்வார் வில்லும் கையுமாய் அவரை ரக்ஷித்துக்கொண்டு பின்தொடர்வார்.

அவருக்குத் தம்பியான சத்ருக்னன் அப்படியே பரதனிடத்தில் எல்லையற்ற பிரியம் வைத்தான். தன் பிராணனைக் காட்டிலும் அவனிடத்தில் பரதனுக்கு அதிகப் பிரேமையுண்டு.

மிகுந்த அதிருஷ்டசாலிகளும் பிரீதி வைக்கத்தகுந்தவர்களுமான நான்கு குமாரர்களையுடைய தசரதர், தேவர்களால் சூழப்பட்ட பிரஹ்மாவைப்போல் வெகுப் பிரீதியடைந்தார். அவர்கள் சாஸ்திரங்களைக் கற்று ஞானத்தை யடைந்ததால் நற்குணங்கள் பொருந்தி, ஒரு வேளை அஜாக்கிரதையால் கெட்ட காரியங்களில் மனது சென்றாலும் அதனால் வெட்கமடைந்து, எல்லா விஷயங்களையும் அறிந்தவர்களென்ற கீர்த்தியையும், லௌகிக காரியங்களில் திறமையையும், வருங்காலத்தை அறியும் சக்தியையும், கண்ணைப் பறிக்கும் தேஜஸையும் உடையவர்களாயிருந்ததால், தசரதர் லோகாதிபதியான சதுர்முகனைப்போல் பரம ஸந்தோஷமடைந்தார். அவர்களும் மஹாராஜா தங்களிடத்தில் வைத்திருக்கும் பிரீதியைப் பார்த்து, வேதம் ஓதுவதிலும் வில்வித்தையிலும் பிதிரு சுச்ரூஷையிலும் கவலை வைத்து வெகு திறமையடைந்தார்கள்.

பிறகு தசரதர் ஒரு நாள் உபாத்தியாயரையும் பந்துக்களையும் மந்திரிகளையும் வருவித்துத் தன் புத்திரர்களுக்கு மணம் செய்ய வேண்டியதைப்பற்றி ஆலோசித்துக் கொண்டிருக்கையில், மஹா தேஜஸ்வியான விசுவாமித்திர மஹாமுனி, அவரைப் பார்க்க விரும்பி அங்கே வந்து "காதியின் புத்திரனான விசுவாமித்திரன் தங்களைப் பார்க்க வந்திருக்கிறானென்று அரசனிடத்தில் சீக்கிரமாய்த் தெரிவியுங்கள்" என்று காவலாளிகளுக்குச் சொன்னார். அவர்கள் பயபக்தியுடன் பரபரப்படைந்து அரண்மனைக்குள் ஓடி, விசுவாமித்திரர் வந்திருப்பதை ராஜாவுக்குத் தெரிவித்தார்கள். அவர் பரமானந்தமடைந்து வெகு ஜாக்கிரதையுடன் புரோஹிதரை முன்னிட்டுக் கொண்டு, இந்திரன் பிரஹ்மாவை உபசரிப்பதுபோல் மஹரிஷியை எதிர்கொண்டழைத்தார். கடுமையான விரதங்களை

அனுஷ்டிக்கும் அந்த முனிவர் தேஜஸால் ஜ்வலிப்பதைக் கண்டு முக மலர்ந்து, அரசன் புரோஹிதர் மூலம் அவருக்கு அர்க்கிய பாத்யங்களைக் கொடுத்தார்.

விதிப்படி செய்யப்பட்ட அந்தப் பூஜையைக் கௌசிகர் அங்கீகரித்து, அரசனை, நகரத்தையும் பொக்கிஷத்தையும் தேசங்களையும் பந்துக்களையும் மித்திரர்களையும் பற்றி க்ஷேமம் விசாரித்தார். மஹாராஜ! உம்மால் ஜயிக்கப்பட்டவர்கள் கீழ்ப்படிந்து நடக்கிறார்களா? யாகங்களால் தேவர்களையும், அதிதிபூஜை ராஜநீதி நான்கு வித உபாயம் முதலியவைகளால் மனிதர்களையும் நன்றாய்த் திருப்தி செய்கிறீரா?'' என்று கேட்டு, வஸிஷ்ட வாமதேவ ஜாபாலி முதலியவர்களையும் விதிப்படி உபசரித்து க்ஷேமம் விசாரித்தார். அதனால் அவர்கள் வெகு ஸந்தோஷமடைந்து, ராஜஸபைக்கு வந்து பூஜிக்கப்பட்டு உசிதமான ஆஸனங்களில் அமர்ந்தார்கள்.

பிறகு எல்லையற்ற உதார ஸ்வபாவமுள்ள தசரதர் ஸந்தோஷத்தால் தேகம் புளகித்து, கௌசிகரைத் துதித்தது "ஜனன மரணங்களால் பீடிக்கப்படும் மனிதர்களுக்கு அவைகளைப் போக்கும் அமிருதம் கிடைத்தால் எப்படியோ (அல்லது, மரண மடைந்தவன் பிழைத்து வந்தால் எப்படியோ); பல வருஷங்களாய் மழையில்லாமல் வாடின இடத்தில் மேகங்கள் ஓயாமல் மழை பெய்தால் ஜனங்களுக்கு எப்படி யிருக்குமோ; எவ்விதத்திலும் தனக்குப் பத்தினியிடத்தில் வெகுகாலமாய்ப் புத்திரன் பிறக்காமல், அந்த ஆசையை விட்டவனுக்குத் திடீரென்று அந்தப் பாக்கியம் கிடைத்தால் எப்படியோ; கெட்டுப்போன நிதிகள் தானாய்க் கிடைத்தால் எப்படியோ; பிரியமான புத்திரன் முதலியவர்களுக்கு விவாஹ மஹோத்ஸவம் நேர்ந்தால் நமக்கு எப்படியோ; அவ்விதமான ஸந்தோஷத்தை, ஒருநாளும் எதிர்பாராத தங்களுடைய வரவால் அடைந்திருக்கிறேன்.

(அமிருதத்திற்கு ஸமமான திவ்விய பாயஸம் தனக்கு எதிர்பாராமல் கிடைத்தது; தன் மித்திரனான ரோமபாதனுடைய ராஜ்யத்தில் வெகு காலம் மழை பெய்யாமல் ரிஷ்ய சிருங்கர் அடிவைத்தவுடன் பெய்தது; தனக்கும் பார்யைகளுக்கும் புத்திரோத்பத்தியின் காலம்தாண்டினபிறகும் எதிர்பாராமல் நான்கு பிள்ளைகள் உண்டாயின; இந்த ஆச்சரியங்களை நினைத்து இப்படிச் சொன்னார்.)

"க்ஷேமமாய் வந்தீர்களா? என் ஸந்தோஷத்திற்கோ எல்லையில்லை. தங்களுடைய இஷ்டத்தை எப்படி நிறைவேற்ற வேண்டும்? தங்களைவிட உத்தமமான பாத்திரம் எனக்குக் கிடைக்குமோ? என் யத்னமில்லாமல் நான் எதிர்பாராமல் என்னைத் தேடி வந்தீர்களே! என் ஜன்மம் இன்றுதான் கடைத்தேறிற்று; என் வாழ்நாள் இன்றுதான் பயனடைந்தது. தாங்கள் முதலில் அரசராய் ஸகல போகங்களையும் அனுபவித்தீர்கள். பிறகு கடுந்தவத்தால் ராஜரிஷியாகி பிரஹ்மரிஷி பதவியை அடைந்தீர்கள்; எவ்விதத்திலும் தங்களை நான் பூஜிக்க வேண்டியவன்; யாதொன்றிலும் தங்களுக்கு ஆசையில்லை. தாங்கள் இங்கே வந்ததை நினைத்து நினைத்து எனக்கு ஆச்சரியம் பொங்குகிறது. தங்களுடைய வரவால் நான் மிகவும் பரிசுத்தனானேன். தங்களைத் தரிசித்ததால் புண்ணிய க்ஷேத்திரங்களை அடைந்தவனானேன். தாங்கள் எதையும் கொடுக்கக்கூடிய பிரபுவல்லவா? என்னை உத்தேசித்து இங்கே வந்த காரியத்தைச் சொல்ல வேண்டும். தங்களுடைய ஆக்ஞையை நிறைவேற்றித் தங்களால் அனுக்கிரஹம் பெற விரும்புகிறேன். தாங்கள் எண்ணி வந்த காரியம் எதுவானாலும் யோசிக்கக் கூடாது. குறைவில்லாமல் முடிக்கிறேன். தாங்கள் எனக்குத் தெய்வமல்லவா? தங்களுடைய வரவால் எனக்கு விசேஷ க்ஷேமமும் நிகரற்ற தர்மமும் கிடைத்திருக்கின்றன'' என்றார்.

பெருந்தன்மையுள்ள தசரதர் வணக்கமாய்ச் சொன்ன வார்த்தைகள், உத்தம குணங்களால் அலங்கரிக்கப்பட்டு ஒப்பில்லாத கீர்த்தியடைந்த கௌசிகருடைய மனத்திற்கும் காதிற்கும் மிக்க ஸுகத்தைக் கொடுத்தன.

இதி ஹ்ருத$^{3}$ய ஸுக$^{2}$ம் நிஶம்ய வாக்யம்
ஶ்ருதி ஸுக$^{2}$ மாத்மவதா விநீத முக்தம் |
ப்ரதி$^{2}$த கு$^{3}$ணயஶா கு$^{3}$ணைர் விஶிஷ்ட:
பரமரிஷி: பரமம் ஜகா$^{3}$ம ஹர்ஷம் ‖ (58)

---



## ஸர்க்கம் 19

## "ராமனை அனுப்பும்"

தச் ச்$^{2}$ருத்வா ராஜஸிம்ஹஸ்ய வாக்ய மத்$^{3}$பு$^{4}$த விஸ்தரம் |
ஹ்ருஷ்டரோமா மஹாதேஜா:விஶ்வாமித்ரோ ப்$^{4}$யபா$^{4}$ஷத ‖ (1)

ராஜசிரேஷ்டரான தசரதர் சொன்ன ஆச்சரியகரமான வார்த்தைகளைக் கேட்டு எல்லையற்ற தேஜஸையுடைய விசுவாமித்திரர் ஸந்தோஷத்தால் தேகம் புளகித்து, "மஹாராஜ! இக்ஷ்வாகு வம்சத்தரசர்களின் மஹா குலத்தில் பிறந்து வஸிஷ்டரால் ஒவ்வொரு காரியத்திலும் உபதேசிக்கப்பெற்ற உமக்கே இந்த வார்த்தைகள் தகும்; வேறொருவருக்கும் தகாது. நான் எண்ணியிருப்பதை முடிப்பதாய் நிச்சயம் செய்யும். ராஜசிரேஷ்ட! பிறகு தவறக் கூடாது. சில பலன்களை உத்தேசித்து நான் ஒரு யாகம் செய்ய ஆரம்பித்தேன். அது முடியும் ஸமயத்தில் ஸுபாஹு மாரீசனென்ற இரண்டு ராக்ஷஸர்கள் அங்கேவந்து மாம்ஸத்தையும் ரத்தத்தையும் அக்னி குண்டத்தில் வர்ஷித்து யாகத்தைக் கெடுத்துவிட்டார்கள். அவர்களோ மஹா வீரர்கள்; யுத்தங்களில் தேர்ந்தவர்கள்; நினைத்த ரூபங்களை எடுக்கக் கூடியவர்கள். இப்படிப்

பலதடவை நடந்து என் சிரமமெல்லாம் வீணாகி, உத்ஸாஹம் குறைந்து அவ்விடத்தைவிட்டு வந்தேன். யாக காலத்தில் சபிக்கக் கூடாதென்று ஏற்பட்டிருப்பதால் அவர்களை நானே சிக்ஷிக்க முடியவில்லை.

மறுபடியும் யாகம் செய்யப் போகிறேன். அதை ரக்ஷிக்க உமது மூத்த புத்திரனான ராமனை என்னுடன் அனுப்பும். அவன் சிறு வயதுள்ளவனானாலும் மஹா சூரன், வீணாகாத பராக்கிரமமுடையவன். இயற்கையாயுள்ள திவ்விய தேஜஸாலும் என்னால் ரக்ஷிக்கப்படுவதாலும் அந்த ராக்ஷஸர்களைக் கொல்வானென்பதில் கொஞ்சமும் ஸந்தேகமில்லை. மேலும், மூவுலகிலும் கீர்த்தி பெறும்படி அவனுக்குப் பலவிதமான க்ஷேமத்தைச் செய்வேனென்று நிச்சயமாய் நம்பும். இந்தச் சிறுவன் கோர ராக்ஷஸர்களைக் கொல்ல முடியுமா என்று ஸந்தேகம் வேண்டாம். அவர்கள் ராமனுக்கெதிரில் க்ஷணம்கூட நிற்கமுடியுமா? ராமனைத் தவிர வேறொருவரும் அவர்களைக் கொல்லமுடியாது. அந்தப் பாபிகள் வீரியத்தால் கொழுப்படைந்தவர்கள். ஆனாலும் காலபாசம் அவர்களைக் கழுத்தில் கட்டி இழுக்கிறது. ராஜசிரேஷ்டனும் மஹாத்மாவுமான ராமனுக்குமுன் அவர்கள் எம்மாத்திரம்? 'ஐயோ! அறுபதாயிரம் வருஷங்களுக்குப் பிறகு அபூர்வமாய்ப் பிறந்த அருமைக் குழந்தையை ராக்ஷஸர்களுடைய கையில் எப்படிக் காட்டிக் கொடுப்பேன்' என்று புத்திரவாத்ஸல்யத்தால் தயங்க வேண்டாம். அந்த ராக்ஷஸர்கள் இறந்தார்களென்றே நம்பும். அப்படிப் பிரதிக்ஞை செய்கிறேன்.

ஸாமான்யமான குழந்தை என்று உலகத்தினர் ராமனை நினைத்திருக்கிறார்கள். அவனுடைய மஹிமை உமக்குத் தெரியாது. ராமன் மகாத்மா என்றும்,வீணாகாத பராக்ரமம் உள்ளவனென்றும் ஞான பலத்தால் நான் அறிவேன். என் வார்த்தையில் நம்பிக்கையில்லாவிட்டால் இதோ இருக்கும் வஸிஷ்டரைக் கேளும். உமக்குப் புரோஹிதர், மஹா தேஜஸ்வி, ஸத்யவான். ஹிதத்தையே உபதேசிக்கின்றவர். அதுவும் போதா விட்டால் இதோ இருக்கும் மற்ற ரிஷிகளைக் கேளும். இவர்கள் கடுந்தவத்திலேயே ஆயுளைப் போக்குபவர்கள். செய்தப் பிரதிக்ஞையை நிறைவேற்றுவதாலுண்டாகும் தர்மமும் கீர்த்தியும் என்றும் அழியாமலிருக்க வேண்டுமானால் ராமனை என்னுடன் அனுப்பும். உமது மந்திரிகளும் வஸிஷ்டர் முதலிய மற்றவர்களும் இப்படிச் செய்ய அனுமதித்தால் ராமனை என்னுடன் அனுப்பும். அவனிடத்தில் உமக்கு எல்லையற்ற பிரீதி உண்டென்பதையும் அறிவேன். ஆனால், அவனுக்கு யாதொன்றிலும் பற்றில்லை என்பதையும் அறிவேன். என் யாகத்திற்காகப் பத்து தினங்கள் மாத்திரம் செந்தாமரைக் கண்ணனான ராகவனை என்னுடன் அனுப்பும். அதற்கு மேல் அவனை வைத்துக் கொள்வதில்லை, யாக காலம் தாண்டுவதற்கு முன் ராமனை என்னுடன்



அனுப்பும். உமக்கு ஸகல க்ஷேமமும் உண்டாகட்டும். கவலைக்கு இடம் வேண்டாம்'' என்றார்.

தர்மாத்மாவான விசுவாமித்திரர் தர்மத்திற்கும் அர்த்தத்திற்கும் சேர இப்படிச் சொன்னார். தனக்கும் ராமனுக்கும் சுபத்தைக் கொடுக்கும் அந்த வார்த்தைகளைக் கேட்டவுடன் தசரதர் "ஐயோ! ராமனை விட்டுப் பிரிய வேண்டுமே; இல்லாவிட்டால் பிரதிக்ஞை தவறின பாபம் நேருமே; விசுவாமித்திரருடைய கொடிய சாபத்திற்கு உட்படவேண்டுமே'' என்று தீவிரமான துக்கத்தில் மூழ்கி பயந்தார். கௌசிகருடைய சொற்கள் அயோத்யாதிபதியின் ஹிருதயத்தைப் பிளந்து மனத்தைக் கலக்கிப்புண்ணாக்கின. ஆஸனத்தில் உட்கார்ந்திருந்தவர் கிடுகிடென்று நடுங்கினார்.

இதி ஹ்ருத$^{3}$ய மநோ விதா$^{3}$ரணம்
முநி வசநம் தத$^{3}$தீவ ஶுஶ்ருவாந் |
நரபதிரப$^{3}$வத் மஹாந் மஹாத்மா
வ்யதி$^{2}$தமநா: ப்ரசசால சாஸநாத் || (22)

## ஸர்க்கம் 20

## "ராமனை அனுப்பமாட்டேன்''

தச் ச்$^{2}$ருத்வா ராஜ ஶார்தூ$^{3}$லோ விஶ்வாமித்ரஸ்ய பா$^{4}$ஷிதம் |
முஹூர்தமிவ நிஸ்ஸம்ஜ்ஞ: ஸம்ஜ்ஞாவா நித$^{3}$மப்$^{3}$ரவீத் || (1)

**ரா**ஜசிரேஷ்டரான தசரதர் விசுவாமித்திரருடைய வார்த்தையைக் கேட்டு ஒரு முகூர்த்தம் வரையில் மூர்ச்சையடைந்தார். பிறகு பிரக்ஞை வந்து "மஹர்ஷே! மலர்ந்த செந்தாமரையைப் போன்ற திருக்கண்களுள்ள என் ராமனுக்கு இன்னும் பதினாறு வயது முடியவில்லையே. ராத்திரியில் கபட யுத்தம் செய்யும் ராக்ஷஸர்களுடன் யுத்தம் செய்ய இவனுக்குத் திறமை எங்கே? மிகுந்த சூரர்களும் அஸ்திர வித்யையில் நிபுணர்களும் ராக்ஷஸர்களுடன் யுத்தம் செய்யக்கூடியவர்களுமான பலர் என்னிடத்திலிருக்கிறார்கள். மேலும், என் அக்ஷௌஹிணி ஸைன்யம் தயாராக இருக்கிறது. இவைகளுடன் நானே வந்து வில்லும் கையுமாய் ராக்ஷஸர்களுடன் உயிருள்ளவரையில் யுத்தம் செய்கிறேன். தங்களுடைய யாகம் விக்னமின்றி நிறைவேறும், கவலை வேண்டாம். ராமனோ குழந்தை; அஸ்திர வித்தையைப் பூர்ணமாகஅறியாதவன். சத்துரு பலத்தையும் தனக்கும் பிறர்க்குமுள்ள பேதத்தையும் அறிய முடியாதவன். இதுவரையில் சண்டை செய்து பழக்கமில்லாதவன்; அஸ்திர பலமில்லாதவன்; கபட யுத்தம் செய்வதே ஸ்வபாவமாக உள்ள ராக்ஷஸர்களுடன் இவனை யுத்தத்திற்கு அனுப்புவது நியாயமா?

இதிருக்கட்டும், தாங்கள் கேவலம் ரிஷியல்லவே. என்னைப் போல் அரசனாயிருந்து குடும்பத்தின் கஷ்ட ஸுகங்களை

அறிந்தவரல்லவா? அறுபதாயிரம் வருஷங்கள் வரையில் புத்திர பாக்கியமின்றி மிகவும் வருந்தினேன். பல விரதங்களையும் நியமங்களையும் யாக யக்ஞங்களையும் செய்து என் ராமனைக் குழந்தையாக அடைந்தேன். நால்வரில் மூத்தவன்; தர்மமே அவனுக்குப் பிரதானம்; மற்றவர்களை விட அவனிடத்தில் எனக்கு விசேஷ பிரேமை. அவனை விட்டுப் பிரிந்தால் ஒரு முகூர்த்தமாவது என் உயிர் தங்காது. ஆகையால் ராமனை அழைத்துப்போவது உசிதமல்ல. அப்படித் தாங்கள் பிடிவாதம் செய்தால் என்னையும் ஸைன்யத்தையும் அழைத்துப் போகலாம். நான் வந்தாலும் ராமன் வந்தாலும் ராக்ஷஸர்களுடன் எப்படி யுத்தம் செய்ய வேண்டும்? அவர்கள் யாருடைய புத்திரர்கள்? பெயர் என்ன? ஸ்வரூபமும் பராக்கிரமும் எவ்விதமானது? அவர்களுக்கு யார் உதவி? ராக்ஷஸர்களென்றால் பலத்திலும் கர்வத்திலும் நிகரற்றவர்களல்லவா? அவர்களைப் பற்றி விஸ்தாரமாகச் சொல்லுங்கள்'' என்றார்.

கௌசிகர் "மஹாராஜ! ராக்ஷஸாதிபதியான ராவணன் மூவுலகத்திலுமுள்ள பிராணிகளை ஹிம்ஸிக்கிறானென்று கேட்டிருக்கலாம். புலஸ்தியப் பிரஜாபதியின் வம்சத்தில் பிறந்தவன். விச்ரவஸின் புத்திரன். குபேரனுக்குத் தம்பி, பிரஹ்மாவிடத்தில் அபூர்வமான வரங்களைப் பெற்றவன். அவன் அறியாமலாவது அலக்ஷ்யத்தாலாவது கெடுக்காத யாகங்களை ஸுபாஹு மாரீசனென்ற அவனுடைய உறவினர் உத்தரவுபெற்று அழித்து, அந்தக் காரியத்தை வெகு ஜாக்கிரதையாய் நடத்தி வருகிறார்கள்'' என்றார்.

அதைக் கேட்ட தசரதர் இடி விழுந்ததுபோல் நடுங்கி, "மஹரிஷே! அந்தத் துஷ்டனுடன் யுத்தம் செய்ய என்னால் முடியாது. ஸகல தர்மங்களையும் அறிந்த தாங்கள் என் குழந்தையிடத்தில் கிருபை செய்யவேண்டும். பாக்கியமற்ற எனக்குத் தாங்களே குரு, தாங்களே தெய்வம். தேவ தானவ கந்தர்வ யக்ஷ பதக பன்னகர்கள் அவனுக்கெதிரில் நிற்கமுடியாதே. மனுஷ்யர்களைப் பற்றிச் சொல்லவும் வேண்டுமோ? அவனை எதிர்க்கும் வீரர்களின் வீரியத்தை அபகரிக்கிறானே. அவனோடாவது அவனுடைய ஸைன்யங்களோடாவது யுத்தம் செய்ய என்னால் முடியாது. என் புத்திரர்கள் எனக்கு உதவியாயிருந்தாலும், என் ஸைன்யம் கூட இருந்தாலும் என்னால் முடியாது. ராமன் தேவர்களைப்போல் அழகும் காந்தியுமுள்ளவன்; பாலன், என் அருமைக் குழந்தை, யுத்தப்பயிற்சி யில்லாதவன்; அவனைக் கொடுக்கமாட்டேன். அவ்விரு ராக்ஷஸர்கள் ஸுந்தோப ஸுந்தர்களின் புத்திரர்களல்லவா? யக்ஷகன்யைக்குப் பிறந்த தைத்யர்களல்லவா? யுத்தத்தில் யமனை எதிர்த்தாலும் எதிர்க்கலாம், அவர்களை எதிர்க்க முடியுமோ? வீரியசாலிகள், யுத்தங்களில் நன்றாய்ப் பழகினவர்கள்; அவர்களே தங்களுடைய யக்ஞங்களைக் கெடுக்க வந்தால் ராமனைத் தங்களுடன் அனுப்பவே மாட்டேன். ஆனால், அவர்களில் ஒருவனுடன் நானும்



என் மித்திரர்களும் யுத்தம் செய்யத் தயாராக இருக்கிறோம்'' என்றார்.

அதைக் கேட்டவுடன் விசுவாமித்திரருக்கு மஹா கோபமுண்டாயிற்று. யாகத்தில் நெய்த்தாரைகளால் அக்னி வளர்ந்து பிரகாசிப்பதைப்போல் அவருடைய கோபம் ஜ்வலித்தது.

இதி நரபதி ஜல்பநாத் த்³விஜேந்த்³ரம்
குஶிக ஸுதம் ஸுமஹாந் விவேஶ மந்யு: |
ஸுஹுத இவ மகே²க்³நி ராஜ்யஸிக்த:
ஸமப⁴வ து³ஜ்வலிதோ மஹர்ஷி வஹ்நி: ॥ (28)

## ஸர்க்கம் 21

## தசரதர் ஸம்மதித்தது

தச் ச்²ருத்வா வசநம் தஸ்ய ஸ்நேஹ பர்யாகுலாக்ஷரம் |
ஸமந்யு: கௌஶிகோ வாக்யம் ப்ரத்யுவாச மஹீபதிம் ॥ (1)

இப்படிப் புத்திர ஸ்நேஹத்தால் மனந்தளர்ந்து தசரதர் பிரலாபிப்பதைக் கேட்டு விசுவாமித்திரர் கோபமடைந்து "அரசரே! நான் உம்மை ஏதாவது வலுவில் வேண்டினேனா? எதைக் கேட்டாலும் உடனே கொடுப்பதாய் அடிக்கடிப் பிரதிக்ஞைசெய்தவர் நீரே. கேட்கும்படி கட்டாயப்படுத்தி என்னைக் கேட்கச் சொன்னதும் நீரே. செய்தப் பிரதிக்ஞையை இப்பொழுது தவிர்க்கப்பார்க்கிறவரும் நீரே. ரகுகுலத்தில் பிறந்த அரசர்களுக்கு இது அழகல்ல. அந்த வம்சத்திற்கு ஏதோ அனர்த்தம் நேரிடப்போகிறது. பொய்யர்களைத் தண்டிக்கவேண்டிய நீரே பொய் சொன்னால் நான் என்ன செய்யக்கூடும்? இது உமக்கு நன்றாயிருந்தால் நான் திரும்பிப்போகிறேன். இக்ஷ்வாகு வம்சத்தில் பிறந்தவனென்று பெரிய பெயர் வைத்துக்கொண்டிருக்கிறவரே! செய்த பிரதிக்ஞையைப் பொய்யாக்கி, பந்துக்களுடன் ஸுகமாய் வஸித்துக்கொண்டிரும்'' என்று அங்கிருந்து போகப் புறப்பட்டார்.

மஹாஞானியான விசுவாமித்திரர் கோபம்கொண்டதைக்கண்டு பூமி முழுதும் நடுங்கிற்று. தேவர்களுடைய மனத்தில் பயம் குடிகொண்டது. இப்படி ஸகல ஜகத்தும் பயத்தால் தத்தளிப்பதைக் கண்ட வஸிஷ்டர், மஹா புத்திமானும் நிகரற்ற தபஸ்வியுமான தால் "மஹாராஜ! இதென்ன? நீரும் இப்படிச் செய்யலாமோ? அண்டினவர்களைக் கைவிடாமல், செய்த பிரதிக்ஞையை உயிரைக் கொடுத்தாவது நிறைவேற்றின சிபி ஹரிச்சந்திரன் முதலிய அரசர்களால் அலங்கரிக்கப்பட்ட இக்ஷ்வாகு வம்சத்தில் பிறக்கும் பாக்

இயத்தைப் பெற்றிருக்கிறீர்; தர்மமே ரூபமெடுத்து வந்ததைப்போல் விளங்குகிறீர்; மஹா தைரியசாலி; சுத்தமான ஆசாரமுள்ளவர்; ஸ்ரீமான்; குலதர்மத்தை நீரே கைவிடலாமோ? ரகுகுலத்தில் பிறந்த தசரதர் தர்மாத்மாவென்று மூவுலகிலும் பிரஸித்தியல்லவா? உமது க்ஷத்திரிய தர்மத்தை அனுஷ்டியும். அதர்மத்தில் மனத்தைச் செலுத்தலாமோ? இப்படிச் செய்கிறேனென்று ஒருவன் சொல்லி, அதை முடிக்காவிட்டால், அவன் செய்யும் தானதர்மங்களும் யாகயக்ஞங்களும் ஜபஹோம தர்ப்பணங்களும் தவமும் நாசமடையுமல்லவா. ஆகையால் ராமனை இவருடன் அனுப்பும்.

"அவனுக்கு அஸ்திரப் பயிற்சி இருந்தாலும் இல்லாவிட்டாலும் ராக்ஷஸர்களால் கொஞ்சமும் பயமில்லை. ஜ்வலிக்கும் அக்னி, தேவாமிருதத்தை ரக்ஷிப்பது போல், விசுவாமித்திரர் அவனை ரக்ஷிக்கும்பொழுது குறைவென்ன?

"இவர் ஸாதாரணமானவரா? தர்மமே உருவெடுத்து வந்ததென்று இவரைச் சொல்லலாம். வீரசிகாமணி; புத்தியில் யாவரையும் மிஞ்சினவர்; தபஸிற்கு எல்லை இவரே; மூவுலகிலுமுள்ள சராசரங்களில் பலவகையான அஸ்திரங்களை அறிந்தவர் இவரே; வேறொருவர்க்கும் தெரியாததும், தேவாஸுர யக்ஷ ராக்ஷஸ கந்தர்வ கின்னர உரக கணங்களுக்கும் தெரியாததுமான அஸ்திரங்கள் யாவும் இவருக்கு நன்றாய்த் தெரியும். முன்பு இவர் அரசனாயிருந்து ஆண்டபொழுது கிருசாச்வருடைய புத்திரர்களான ஸகல அஸ்திர தேவதைகளையும் சிவபிரானிடத்திலிருந்து பெற்றார், கிருசாச்வருக்கு ஜயையென்ற தக்ஷப்பிரஜாபதியின் புத்திரியிடத்தில் ஐந்நூறு அஸ்திர தேவதைகளும், வேறொரு பெண்ணான ஸுப்ரபையிடத்தில் ஐந்நூறு அஸ்திர தேவதைகளும் பிறந்தார்கள். அவர்கள் அஸுரர்களை அழிக்க ஸிருஷ்டிக்கப்பட்டவர்கள்; நானா ரூபமுள்ளவர்கள்; நினைத்த ரூபங்களை எடுக்கக்கூடியவர்கள்; மஹா தேஜஸ்விகள்; ஜயத்தைக்கொடுக்கக் கூடியவர்கள்; ஸுப்ரபையின் புத்திரர்களுக்கு கொடுத்த 'ஸம்ஹாரர்கள்' என்ற பெயர் தகும். எல்லையற்ற பலசாலிகள்; அவர்களை அண்டமுடியாது. அனைவரும் இவருக்கு வசப்பட்டிருக்கிறார்கள். அவைகளின் ரஹஸ்யத்தை இவரே நன்றாயறிந்தவர்; இதுவரையிலும் இல்லாத அஸ்திரங்களையும் இவர் ஸிருஷ்டிப்பார். மூன்று காலங்களையும் நன்றாயறிந்தவர்; இவருக்குத் தெரியாததில்லை. கௌசிகருடைய வீரியமும் தேஜஸும் கீர்த்தியும் இவ்விதமென்று நீர் கேட்டபிறகும் ராமனை இவருடன் அனுப்புவதில் ஸந்தேகிப்பது நியாயமல்ல. அந்தத்துஷ்ட ராக்ஷஸர்களை அழிப்பது இவருக்கு ஒரு பொருட்டல்ல; ஆனால் உமது புத்திரனுடைய விசேஷ க்ஷேமத்தையும் கீர்த்தியையும் கோரியே உம்மைத் தேடி வந்து இப்படி யாசிக்கிறார்" என்றார்.

Notes : This Blank Page has also to be counted as a another page Number.

It is intentionally left blank after Picture Sketches.!



Released by Maran's Dog ,Toronto, Canada



தத²ா வஸிஷ்டே² ப்³ருவதி ராஜா த³ஶரத²ஸ் ததா³ |
ப்ரஹ்ருஷ்ட வத³நோ ராமம் ஆஜு³ஹாவ ஸலக்ஷ்மணம் ‖ —பால. 22ஸ-1சு.

வஸிஷ்டர் இப்படிச் சொன்னவுடன் தசரதர் ஸந்தோஷத்தால் முகம் மலர்ந்து ராமலக்ஷ்மணர்களை வரவழைத்தார்.

(பக்கம் 65 பார்க்க)

வஸிஷ்டருடைய வார்த்தைகளால் அரசனுடைய சித்தம் தெளிந்தது; முகம் மலர்ந்தது; கௌசிகருடன் ராமனை அனுப்ப நிச்சயித்தார்.

இதி முநிவசநாத் ப்ரஸந்ந சித்தோ
ரகு⁴வ்ருஷப⁴ஶ்ச முமோத³ பா⁴ஸ்வ ராங்க³: |
க³மந மபி⁴ருரோச ராக⁴வஸ்ய
ப்ரதி²த யஶா: குஶிகாத்மஜாய பு³த்³த்⁴யா ‖ (22)

## ஸர்க்கம் 22

## பலை அதிபலை

ததா³ வஸிஷ்டே² ப்³ருவதி ராஜா த³ஶரத²ஸ் ததா³
ப்ரஹ்ருஷ்ட வத³நோ ராமம் ஆஜு³ஹாவ ஸலக்ஷ்மணம் ‖ (1)

**வ**ஸிஷ்டர் இப்படிச் சொன்னவுடன் தசரதர் ஸந்தோஷத்தால் முகமலர்ந்து ராமலக்ஷ்மணர்களை வரவழைத்தார். கௌஸல்யையும் தசரதரும் வஸிஷ்டரும் அவர்களுக்கு ஸகல மங்களங்களும் உண்டாகும்படி வேதமந்திரங்களை ஜபித்து ரக்ஷைகளைக் கட்டி ஆசீர்வாதம் செய்தார்கள். பிறகு தன் அருமைக் குழந்தையான ராமனைத் தசரதர் இறுகத் தழுவி, உச்சி மோந்து, ஸந்தோஷமாய் விசுவாமித்திரரிடம் ஒப்புவித்தார். செந்தாமரைக் கண்ணனை ராமன் கௌசிகருடன் புறப்பட்டுப் போனபொழுது ஆகாசத்திலிருந்து புஷ்பமாரி பொழிந்தது; தேவதுந்துபி முழங்கிற்று. நகரத்திலும் சங்கம் துந்துபி முதலிய மங்கள வாத்தியங்கள் கோஷித்தன.

கௌசிகர் முன்னே சென்றார்; வயது நிரம்பாத பாலனாலும் அபார கீர்த்தி வாய்ந்த ஸ்ரீராமன் அவருக்குப் பின் சென்றார். லக்ஷ்மணன் வில்லும் கையுமாய் அவரைப் பின் தொடர்ந்தார். மயில் தோகையால் அலங்கரிக்கப்பட்ட சிகைகளுடன் கோதண்டத்தைக்கையில் பிடித்து, பத்து திக்குகளையும் பிரகாசிக்கச் செய்துகொண்டு அந்த ராஜகுமாரர்கள், மூன்று தலைகளுள்ள இரண்டு ஸர்ப்பங்களைப்போல் மஹாமுனியைப் பின்தொடர்ந்தார்கள். கையில் வில்லும், முதுகில் அம்பறைகளும், விரல்களைக் காப்பதற்கு உடும்புத் தோலால் செய்த கூடுகளும் விளங்க, மஹா காந்தி பொருந்தி, ஒப்பற்ற ஸௌந்தரியத்துடன் ராம லக்ஷ்மணர்கள் அந்த ரிஷியுடன் போகையில், பிரஹ்மாவை அசுவினீ தேவதைகளும், பரமசிவனை ஸ்கந்தரும் விசாகரும் பின்தொடர்வதுபோல் தோன்றிற்று.

ஒன்றரை யோஜனை தூரம் சென்று ஸரயூவின் தென்கரைக்கு வந்தவுடன் கௌசிகர் "இந்த ராஜகுமாரர்கள் வெகுதூரம் நடந்து வழக்கமில்லாதவர்கள்; காலம்தவறாமல் புசிப்பவர்கள்; சிறுவர்கள்; வெகுதூரம் நடந்திருக்கிறார்கள்; போஜன வேளை நெருங்கிவிட்டது,

பசி தாகம் சிரமம் தாபம் முதலியவையில்லாமல் இவர்களைச் செய்ய வேண்டும்'' என்று இனிமையான குரலுடன், "ராம! குழந்தாய்! தர்ம சிந்தையுள்ளவனே! தாமதமில்லாமல் ஆசமனம் செய். பலை அதிபலையென்ற வித்யைகளைப் பெற்றுக்கொள். அவைகளை ஜபித்தால் பசி தாகம் தேக சிரமம் தாபம் ரூபவிகாரம் முதலிய கெடுதிகள் நேராது. அஜாக்கிரதையாக யிருந்தாலும், அசுத்தனாயிருந்தாலும், தூங்கினாலும் ராக்ஷஸர்களாலும் உபத்திரவம் நேராது. புஜபலம் ஸாமர்த்தியம் அழகு ஸௌபாக்யம் திறமை வஸ்துக்களின் உண்மையை அறிவது நிச்சயிப்பது தடையில்லாமல் பதில் சொல்வது முதலிய உத்தம குணங்களில் மூவுலகத்திலும் உனக்கு இணையானவன் இரான். இந்த வித்யைகள் பிரஹ்மாவால் ஸிருஷ்டிக்கப் பட்டவை; ஸகல ஞானமும் உண்டாகுமிடம்; அழியாத கீர்த்தியைக் கொடுக்கக்கூடியவை; தபோ பலத்தால் ஸம்பாதிக்கப் பட்டவை. இவைகளைத் தரிக்கக்கூடிய பல குணங்கள் உன்னிடத்தில் விளங்குகின்றன. உண்மையில் உன்னாலேயே உண்டாக்கப் பட்டவை, இவைகளை நீயே பெறத்தகுந்தவன்; நீ என்னிடத்திலிருந்து இவைகளைப் பெற்ற பிறகு பலவிதமாய் வளரும். ஆகையால் சீக்கிரமாய் இவைகளைப் பெற்றுக்கொள்'' என்றார்.

மஹா பராக்கிரமசாலியான ராமன் ஆசமனம் செய்து சுத்தராய் மலர்ந்த முகத்துடன், பிரஹ்ம க்ஞானியான விசுவாமித்திரரிடமிருந்து அந்த வித்யைகளை உபதேசம் பெற்று, ஆயிரம் கிரணங்களுள்ள ஸூரியன் சரத்காலத்தில் விளங்குவதுபோல் பிரகாசித்தார்.

ராஜகுமாரர்கள் மஹரிஷியை ஆசாரியராய் எண்ணி, விதிப்படி பூஜித்தார்கள். அன்றிரவில் ஸரயூநதிக் கரையில் அவர்கள் சுகமாகத் தூங்கினார்கள். இலைகளால் செய்யப்பட்ட படுக்கையில் படுத்தாலும், கௌசிகருடைய வார்த்தைகளால் அவர்களுக்கு அஸௌக்யமாவது சிரமமாவது கொஞ்சமும் தோன்றவில்லை,

த3ஶரத2 ந்ருபஸூநு ஸத்தமாப்4யாம்
த்ருண ஶயநே நுசிதே ஸஹோஷிதாப்4யாம் |
குஶிகஸுத வசோநு லாலிதாப்4யாம்
ஸுக2மிவ ஸா விப3பௌ4 விபா4வரீ ச || (23)

## ஸர்க்கம் 23

## காமாசிரமம்

ப்ரபா4தாயாம் து ஶர்வர்யாம் விஶ்வாமித்ரோ மஹாமுநி: |
அப்4யபா4ஷத காகுத்ஸ்த2ம் ஶயாநம் பர்ண ஸம்ஸ்தரே || (1)

விடியற்காலையில் கௌசிகர் எழுந்து; ராஜகுமாரர்களை எழுப்ப அவர்கள் தூங்குமிடத்திற்கு வந்தார். ஸுகமாய் நித்திரை செய்யும் ராமனுடைய திருமுகமண்டலத்தின் காந்தியைப் பார்த்து.



"இந்தப் புத்திர ரத்னத்தைப்பெற்ற கௌஸல்யை என்ன பாக்கியம் செய்தாளோ; என்ன தவம் செய்தாளோ!'' என்று பார்த்துப் பார்த்து ஆச்சரியமடைந்தார். பிறகு கௌஸல்யை பல ஜன்மங்களில் செய்த புண்ணியமே ரூபமெடுத்தது போன்ற புருஷோத்தம! ராம! காலை ஸந்த்யை நடக்கிறது. ஸூரியன் இருட்டை அழிப்பது போல் சத்ருக்களை நீ அழிக்கும் காலம் ஸமீபித்தது. அக்ஞானமென்ற இருள் நீங்கி உன் ஸ்வரூப ஞானம் எனக்குக் கிடைத்தது. உன் திவ்ய மங்கள விக்ரஹத்தைத் தரிசிக்கப் பெற்றேன். நித்திரை ஸமயத்தில் உன் ஸௌந்தரியத்தைப் பார்த்து மகிழ்ந்தேன். விழித்த பிறகு விளங்கும் லாவண்யத்தைப் பார்க்க விரும்புகிறேன். மேலும், ஸர்வேசுவரனான நீ ஸகல தர்மங்களையும் ஏற்படுத்தி, ஜீவ கோடிகளை அனுஷ்டிக்கச் செய்கிறாய். நீயும் செய்து காட்ட வேண்டுமல்லவா? அவைகளைக் காலத்தில் நீயே செய்யாவிட்டால் பிறருக்கு சிரத்தையிராது. காலை ஸந்தியாவந்தனம் முதலிய நித்திய கர்மங்களைச் செய்ய எழுந்திருக்க வேண்டும்'' என்றார்.

வெகு கம்பீரமாய் முனிவர் இப்படிச் சொல்ல, ராஜகுமாரர்கள் நித்திரை தெளிந்து ஸ்நானம் செய்து அர்க்யம் காயத்ரீ ஜபம் முதலிய காலைக்கிரியைகளை முடித்தார்கள். அளவற்ற பராக்கிரமசாலிகளானாலும் தபோநிதியான கௌசிகரைப் பக்தியுடன் நமஸ்கரித்து அப்படிப்பட்ட ஸத்குரு கிடைத்ததைப்பற்றி மிகுந்த ஸந்தோஷமடைந்து பிரயாணம் செய்யத் தயாரானார்கள்.

வெகுதூரம் சென்று, கங்கையும் ஸரயூவும் சேருமிடத்தில் ஒரு புண்ணியமான ஆசிரமத்தையும் அங்கே வெகு காலமாய்க் கடுந் தவம் செய்துகொண்டிருக்கும் மஹா தேஜஸ்விகளான ரிஷிகளையும் பார்த்து ராமன் மிகவும் ஸந்தோஷித்து, "ஸ்வாமி! இது யாருடைய ஆசிரமம்? இங்கே யார் வஸிக்கிறார்கள்? கிருபை செய்து சொல்லவேண்டும்'' என்றார்.

கௌசிகர் "ராகவ! முன் காலத்தில் சிவபிரான் இங்கே இடைவிடாமல் வெகு நியமத்துடன் கடுந்தவம் செய்துகொண்டிருந்தார். பார்வதி அவருக்குப் பணிவிடை செய்தாள். அவளிடத்தில் அவருக்கு ஆசையுண்டாகும்படி மன்மதன் முயற்சி செய்ய, அவர், அதை அறிந்து அவனைக் கோபப் பார்வையால் எரித்தார்., அது முதல் அவன் சரீரம் இன்றி அனங்கனென்று பெயர்பெற்றான். இங்கே அவனுடைய அங்கங்கள் அழிந்தபடியால் இவ்விடத்திற்கு அங்கதேசமென்று பெயர் வந்தது. ஸதாசிவன் தவம் செய்த ஸ்தலம் இதே. இவர்கள் அவருடைய சிஷ்யர்களே. பாபலேசமின்றி, தர்மஸ்வரூபிகளாய் இங்கேயே வஸிக்கிறார்கள். இந்தப் புண்ய நதிகளுக்கு நடுவிலுள்ள இந்த க்ஷேத்திரத்தில் இன்றிரவு தங்கி காலையில், கங்கையைத் தாண்டுவோம். ஸ்நானம் செய்து சுத்தர்களாய், ஜபம் ஹோமம் அக்னிஹோத்திரம் முதலிய

கிரியைகளை முடித்து, இந்தப் புண்யாசிரமத்திற்குப் போவோம்.'' என்றார்.

அதற்குள் அங்குள்ள ரிஷிகள் தபோபலத்தால் இவர்களுடைய வரவையும் இனி நடக்கும் விஷயங்களையும் அறிந்து பரமானந்தமடைந்து கௌசிகரை அர்க்கிய பாத்யங்களால் விதிப்படி பூஜித்து ராஜ குமாரர்களைத் தகுந்தபடி உபசரித்தார்கள். ஒருவர்க்கொருவர் க்ஷேமம் விசாரித்துக்கொண்டு மதுரமான வார்த்தைகளைப் பேசிக்கொண்டு எல்லோரும் ஸாயங்கால ஸந்தியாவந்தனம் ஜபம் முதலிய கிரியைகளை வெகு ஸாவதானமாகச் செய்தார்கள். பிறகு காமாசிரமத்திலிருக்கும் ரிஷிகள் கௌசிகரையும் ராஜபுத்திரர்களையும் அங்கே அழைத்துப்போனார்கள். வெகு மனோஹரமான அந்த ஆசிரமத்தைப் பற்றிய கதைகளை கௌசிகர் சொல்ல, ராம லக்ஷ்மணர்கள் கேட்டு ஸந்தோஷமடைந்து அன்றிரவை ஸுகமாகக் கழித்தார்கள்.

கதா2பி4ரபி4ராமாபி4: அபி4ராமௌ ந்ருபாத்மஜௌ |
ரமயாமாஸ த4ர்மாத்மா கௌஶிகோ முநி புங்க3வ: || (22)

## ஸர்க்கம் 24

## தாடகா வனம்

தத: ப்ரபா4தே விமலே க்ருத்வாஹ்நிக மரிந்த3மௌ |
விஶ்வாமித்ரம் புரஸ்க்ருத்ய நத்3யாஸ் தீர முபாக3தௌ || (1)

ஸூரியோதயமானவுடன் சத்ருகுல காலர்களான ராம லக்ஷ்மணர்கள் நித்திய கர்மங்களை முடித்து விசுவாமித்திரரை முன்னிட்டுக்கொண்டு கங்கைக் கரைக்கு வந்தார்கள். அதற்குள் அங்குள்ள மஹரிஷிகள் ஸகல ஸௌக்கியங்களும் பொருந்திய அழகுள்ள ஓடத்தைக் கொண்டுவந்து "மஹரிஷே! ராஜ புத்திரர்களுடன் இதில் ஏறவேண்டும்; தாமதம் செய்ய வேண்டாம்; யாதொரு கெடுதியுமின்றி ஸுகமாய்ப் போய்வாருங்கள்" என்று இனி நடக்கும் தாடகாவதம் முதலியவைகளை மனத்தில் வைத்துக்கொண்டு வழியனுப்பினார்கள். கௌசிகர் அவர்களிடத்தில் உத்தரவு பெற்றுக் கங்கையைத் தாண்டினார். ஆற்றின் நடுவில் அலைகள் ஒன்றோடொன்று மோதுவதால் அதிக சப்தமுண்டானதைக் கண்டு ராம லக்ஷ்மணர்கள், "ஸ்வாமி! இந்தப் பயங்கரமான சப்தத்தின் காரணமென்ன?" என்றார்கள். கௌசிகர் "குபேரனுக்கு இருப்பிடமான கைலாஸத்தில் மானஸமென்ற ஏரியை பிரஹ்மா மனத்தால் ஸிருஷ்டித்தார். அதிலிருந்து பெருகினதால் இதற்கு ஸரயூ என்று பெயர். இந்த நதி அயோத்யைக்கு மேற்கில் ஆரம்பித்து வடகிழக்காய் ஓடி, அங்கதேசத்தைக் கடந்து இங்கே கங்கையில் விழுகிறது. இரண்டு நதிகளின் ஜலங்கள் மோதுவதால் இந்த ஓசை உண்டாகிறது. பக்தியுடன் இந்தப் புண்ணிய நதிகளை வணங்குங்கள்'' என்றார்.

ராஜகுமாரர்கள் அப்படிச் செய்து, கங்கையைத் தாண்டி அப்புறம் போகும்பொழுது ஒரு பயங்கரமான காட்டைக் கண்டார்கள். கருங்காலி, அசுவகர்ணம், பில்வம், பாதிரி, இலந்தை முதலிய பல மரங்களடர்ந்து அது நுழையமுடியாமல் இருந்தது. பலவிதமான பக்ஷிகளும், பூமிக்குள்ளிருந்து கத்தும் புழுக்களும், யானை சிங்கம் புலி காட்டுப்பன்றி முதலிய துஷ்ட மிருகங்களும், காதுக்குக் கடுமையாகவும் மனம் நடுங்கும்படியாகவும் சத்தம் செய்தன. அதைக் கேட்டு அந்த ராஜகுமாரர்கள், "ஸ்வாமி! இது யாருடைய வனம்?" என்றார்கள்.

மஹாபராக்கிரமம் பொருந்தினவர்களான தசரத புத்திரர்கள் இப்படிக் கேட்க அபாரமான தேஜஸுள்ள கௌசிகர், "ககுத்ஸ்த குலதிலகனான ராம! குழந்தாய்! மலதம் கருஷமென்ற இவ்விரு தேசங்களும் தேவர்களால் உண்டாக்கப்பட்டு தனதான்யங்கள் நிறைந்திருந்தன. முன்பு இந்திரன் விருத்ராஸுரனைக் கொன்ற பொழுது பிரஹ்மஹத்தி தோஷமும் கோரமான பசியும் அவனைப் பீடித்தன. அந்தத் தோஷத்தைப்போக்க தேவர்கள் கங்கை முதலிய புண்ணிய ஜலங்களாலும், மந்திரங்களால் பரிசுத்தமான குடங்களிலுள்ள நீராலும் அவனை ஸ்நானம் செய்வித்தார்கள். உடனே அந்த உபத்திரவங்கள் விலகின. அப்பொழுது இந்திரன் "என் சரீரத்திலுள்ள மலத்தை இவ்விரு தேசங்களும் போக்கினபடியால் மலதமென்றும், கருஷமென்றும் விளங்கட்டும்" என்று அனுக்ரஹித்தான். தேவராஜன் சுத்தமானதைக் கண்டு தேவர்கள் மகிழ்ந்து, அவனுடைய வார்த்தையை நல்லது நல்லதென்று கொண்டாடினார்கள். அவர்களுடைய அனுக்கிரஹம் பெற்ற அந்தத் தேசங்கள் தன தான்யங்களால் நிறைந்து எண்ணிறந்த ஜனங்களால் வெகு காலம் ஸுகமாய் வஸிக்கப்பெற்றன.

பிறகு ஸுந்தன் என்ற யக்ஷன் தாடகையை விவாஹம் செய்தான். அவள் ஆயிரம் யானைகளின் பலத்தையுடையவள். அவளுடைய புத்திரனான மாரீசன் இந்திரனைப் போன்ற பலவானாய், பெரிய வாயையும் மலைபோன்ற தேகத்தையும் விகாரமான கைகளையும், நிகரற்ற பராக்கிரமத்தையும் படைத்து, இவ்விரண்டு தேசங்களிலுமுள்ள ஜனங்களைப் பயமுறுத்தி, இதை வனமாக மாற்றினான். இங்கிருந்து ஒன்றரை யோஜனை தூரத்திற்கப்பால் நாம் போகும் வழியில் அவனும் தாடகையும் வஸிக்கிறார்கள். ஆகையால் இதற்குத் 'தாடகாவனம்' என்று பெயர். ராம! உனக்கு க்ஷேமம் உண்டாகட்டும். கோரரூபியான அந்த யக்ஷஸ்த்ரீயால் அழிக்கப்பட்டு, பிறர் நெருங்க முடியாத இந்த தேசங்களுக்கு ஒருவரும்

வருவதில்லை. இந்த உபத்திரவமும் இன்னும் தீரவில்லை. ஆகையால் என் ஆக்ஞையை முன்னிட்டுக்கொண்டு இந்தக் கொடியவளை உன் பலத்தால் கொன்று, இங்கே எல்லோரும் உபத்திரவமின்றி ஸஞ்சரிக்கும்படி செய். இவ்விடம் கோரமான நாடானதை உனக்குச் சொன்னேன்'' என்றார்.

ஏதத் தே ஸர்வ மாக்$^{2}$யாதம் யதை$^{2}$தத்$^{3}$ தா$^{3}$ருணம் வநம் |
யக்ஷ்யா சோத்ஸாதி$^{3}$தம் ஸர்வம் அத்$^{3}$யாபி ந நிவர்ததே || (32)

## ஸர்க்கம் 25

### தாடகை

அத$^{2}$ தஸ்யாப்ரமேயஸ்ய முநேர் வசந முத்தமம் |
ஶ்ருத்வா புருஷஶார்தூ$^{3}$ல : ப்ரத்யுவாச ஶுபா$^{4}$ம் கி$^{3}$ரம் || (1)

எண்ணமுடியாத மஹிமையுள்ள கௌசிகர் இப்படிச் சொல்ல நரசிரேஷ்டனை ராகவன், "ஸ்வாமி! யக்ஷர்கள் அல்ப வீரியம் உள்ளவர்களென்று கேள்வி. அந்த ஜாதியில் பிறந்த ஒரு கேவல ஸ்த்ரீக்கு ஆயிரம் யானைபலம் எப்படிக் கிடைத்தது'' என்றார். மட்டில்லாத தேஜஸுள்ள ரகுவீரன் ஒன்றும் அறியாதவரைப்போல் இப்படிக் கேட்க முனிவர், "ராம! இந்த அபூர்வபலம் அவளுக்கு வரத்தால் கிடைத்தது. ஸுகேதுவென்ற யக்ஷன் வெகுகாலம் புத்திரனில்லாமல் வருந்தி, கடுந் தவத்தாலும் சுத்தமான நடத்தையாலும் பக்தியாலும் வீரியத்தாலும் பிரஹ்மாவைத் திருப்தி செய்து, அவருடைய அனுக்கிரஹத்தால் தாடகையென்ற பெண்மணியையும் அவளுக்கு ஆயிரம் யானை பலத்தையும் வரமாகப்பெற்றான். ஆனால், புத்திரனை அளிக்கவில்லை. அவளுக்கு யௌவனம் வந்து ரூபலாவண்யத்தில் நிகரற்று விளங்க, ஜம்பனுடைய மகனான ஸுந்தனுக்கு அவளைப் பாரியையாய் ஸுகேது கொடுத்தான். அவளுக்குப் பிறந்த மாரீசன் ஒருவராலும் எதிர்க்கமுடியாதவன்; பிற்காலத்தில் சாபத்தால் ராக்ஷஸத் தன்மையை அடைந்தான். அகஸ்தியருடைய சாபத்தால் ஸுந்தன் கொல்லப்பட்டபொழுது தாடகையும் மாரீசனும் பழிவாங்க விரும்பி, கர்ஜித்துக்கொண்டு அவரை விழுங்க அதிவேகமாய் ஓடி வந்தார்கள். அதைக் கண்ட அகஸ்தியர் கோபத்துடன் "நீ இந்த யக்ஷ தேகத்தை விட்டு ராக்ஷஸர்களின் விகாரமான சரீரத்தை எடுக்கக் கடவாய்; நீயும் உன் மகனும் மனுஷ்யர்களைத் தின்றுகொண்டு ராக்ஷஸர்களாவீர்கள்'' என்றார். உடனே அவர்களுக்கு அந்தப் பயங்கரமான ரூபம் கிடைத்தது. அகஸ்தியரை ஒன்றும் செய்ய முடியாமல் அவர் வஸிக்கும் தேசத்தை மாத்திரம் அழித்து, அங்குள்ள பிராணிகளிடத்தில் தன் கோபத்தைச் செலுத்துகிறான்.



இந்த யக்ஷஸ்த்ரீ வெகு கொடியவள், துஷ்டை; பலபராக்கிரமத்தால் பிறரைக் கெடுப்பதையே நோக்கமாக உள்ளவள்; பசுக்களும் பிராம்மணர்களும் க்ஷேமம் அடையவேண்டி இவளைக் கொல். சாபத்தால் ராக்ஷஸியான இவளைக்கொல்ல உன்னைத்தவிர மூவுலகத்திலும் வேறொருவரும் இல்லை. 'அஸ்திர சஸ்திரங்களைக்கற்று, தகுந்த சூரனிடத்தில் முதல் முதல் அவைகளை உபயோகிக்காமல், கேவலம் ஒரு ஸ்த்ரீயிடத்தில் உபயோகிப்பதில் என்ன கீர்த்தி? மேலும் க்ஷத்திரியன் ஸ்த்ரீயைக் கொல்வது மஹா பாபமல்லவா' என்று தயங்காதே. நான்கு வர்ணத்தார்களின் க்ஷேமத்திற்காக அரசர்கள் இவ்விதமான காரியங்களைச் செய்ய வேண்டியிருக்கும். பிரஜைகளையும் ஸாதுக்களையும் ரக்ஷிக்க அவர்கள் கொடிய காரியங்களையும் அபவாதம் வரக்கூடிய செய்கைகளையும் பாபங்களையும் செய்தே தீரவேண்டும். ராஜ்யபாரத்தை ஒப்புக்கொண்டவர்கள் இப்பழைமையான தர்மத்தையே நடத்தி வருகிறார்கள். மேலும், இவளைக் கொல்வது அதர்மமல்ல. இவளிடத்தில் தர்மமே கிடையாது. முன்பு தானவ ராஜனான விரோசனனுடைய புத்திரி மந்தரை, பூமியை அழிக்க ஆரம்பித்தாள். அதற்காக இந்திரன் அவளைக் கொல்ல வில்லையா? பிருகு மஹரிஷியின் பார்யையும் சுக்ராசாரியருடைய தாயுமான க்யாதி இந்திரனைக் கொல்ல முயன்றபொழுது, விஷ்ணு அவளைச் சக்கரத்தால் நாசம் செய்யவில்லையா? இன்னும் பல மஹா தர்மாத்மாக்களும் புருஷ சிரேஷ்டர்களுமான ராஜகுமாரர்கள், அதர்மத்தையே செய்துவந்த ஸ்த்ரீகளைக் கொன்றிருக்கிறார்கள்'' என்றார்.

அத$^{4}$ர்ம ஸஹிதா நார்யோ ஹதா: புருஷ ஸத்தமை: |
தஸ்மாதே$^{3}$நாம் க்$^{4}$ருணாம் த்யக்த்வா ஜஹி மச்ச$^{2}$ாஸநாந்ந்ருப || (24)

## ஸர்க்கம் 26

### தாடகாவதம்

முநேர் வசந மக்லீப$^{3}$ம் ஶ்ருத்வா நரவராத்மஜ: |
ராக$^{4}$வ: ப்ராஞ்ஜலிர் பூ$^{4}$த்வா ப்ரத்யுவாச த்$^{3}$ருட$^{4}$ வ்ரத: || (1)

இப்படி ஆழ்ந்த அர்த்தங்களுடன் விசேஷ தைரியத்தைக் கொடுக்கும் வார்த்தைகளைக் கௌசிகர் சொல்ல, தாசரதி அவரைக் கைகூப்பி வணங்கி "குருநாத! என்னைத் தங்களுடன் அனுப்பினபொழுது 'முனி சிரேஷ்டருடைய ஆக்ஞையைத் தடை சொல்லாமல் ஸந்தேகப்படாமல் உடனே கீழ்ப்படிய வேண்டும் என்று வஸிஷ்டர் முதலியவர்களுக்கு எதிரில் என் பிதா உத்தரவு செய்திருக்கிறார். அது எனக்குப் பிரமாணம். மேலும், குசிக வம்சத்தில் பிறந்த பிரஹ்மஞானியான தாங்கள் சொல்லும் வார்த்தையிலும் பாப ஸம்பந்தமுண்டோ? கேவலம் புண்யமாயும் ஸகல புருஷார்த்தங்

களுக்கும் ஒத்துமிருக்கும். பசுக்களுக்கும் பிராம்மணர்களுக்கும் இந்தத் தேசங்களுக்கும் பரமக்ஷேமத்தை உண்டுபண்ண வேண்டி ஸ்த்ரீவதம் செய்ய நிச்சயித்தேன்'' என்று கோதண்டத்தை வளைத்து நாணோசை செய்தார். அது பத்துத் திக்குகளிலும் பரவ எதிரொலி யுண்டாயிற்று. அவ்வனத்திலுள்ள ஜந்துக்களெல்லாம் நடுங்கின.

மஹா கோபமுடைய தாடகைக்கு அதுவரையில் கேட்டிராத அந்தச் சப்தத்தைக் கேட்டபின் கோபம்இன்னும் அதிகரித்து, இன்னது செய்வதென்று அறியாமல், ஓசை கேட்ட இடத்தை நோக்கி ஓடி வந்தாள். ராகவன் "லக்ஷ்மணா! இவளுடைய சரீரமும் முகமும் எவ்வளவு விகாரமாயும் அளவுக்கு மிஞ்சியும் இருக்கின்றன! மாயாபலத்திற்கோ எல்லையில்லை. தைரியமில்லாதவர்கள் இவளைப் பார்த்தவுடன் ஹிருதயம் வெடித்து இறப்பார்கள். இவளை ஜயிப்பது எளிதல்ல. துஷ்டையானாலும் பெண்ணானகையால் இவளைக் கொல்ல மனம் வரவில்லை. காது மூக்குகளை அறுத்து, கைகால்களை வெட்டி, ஆகாசத்தில் ஸஞ்சரிக்கும் சக்தியையும் பிறரை ஜயிக்கும் பலத்தையும் அழித்து, இங்கே வராமல் திருப்பி விடுகிறேன். இந்தத் தேசங்களுக்கு நேர்ந்த கஷ்டமும் நீங்கும்; குருவின் ஆக்ஞையும் நிறைவேறும்; ஸ்த்ரீயைக் கொன்ற தோஷமும் தொடராது. அந்தக் காரியம் சூரர்களுக்குத் தகாது'' என்றார்.

அதற்குள் தாடகை மஹா கோபத்துடன் பேரிடிபோல் கர்ஜித்துக் கைகளை உயரத் தூக்கி ராமனுக்கு எதிரில் ஓடி வந்தாள். கடுந்தவத்தால் பிரஹ்மரிஷியான கௌசிகருக்கு ராமனுடைய அபார சக்தியும் மஹிமையும் நன்றாகத் தெரியும். ஆனாலும் அவளுடைய பரபரப்பைப் பார்த்து 'ஹூம்' என்று அதட்டி, ராம லக்ஷ்மணர்களுக்கு க்ஷேமமும் ஜயமும் உண்டாகட்டுமென்று ஆசீர்வதித்தார். தாடகை அவர்கள்மேல் புழுதியை வாரியிறைத்து, மண்மாரி பெய்து, ஒரு முகூர்த்தம் வரையில் பிரமிக்கச் செய்தாள். பிறகு மாயாபலத்தால் ஆகாசத்திலிருந்து கற்களையும் பாறைகளையும் பொழிந்தாள். ராமனுக்குக் கோபமுண்டாயிற்று. சரமாரியால் கல்மாரியைத் தடுத்து, தன்னை நோக்கி ஓடிவரும் தாடகையின் கைகளை அறுத்துத் தள்ளினார். கர்ஜித்துக்கொண்டு சற்றுக் களைத்து, கைகளற்று வெகு ஸமீபத்தில் வந்த அவளுடைய காது மூக்குகளை லக்ஷ்மணன் அறுத்தார். நினைத்த ரூபங்களை எடுக்கக் கூடியவளானகையால் அவள், பலவிதமாகத் தோன்றித் திடீரென்று மறைந்து, மாயையால் அவர்களை மயக்கி, கல்மாரி பொழிந்து கோரமாய் இரைந்துகொண்டு எங்கும் ஸஞ்சரித்தாள். எப்புறத்திலும் கல்மழை பெய்யக்கண்டு, கௌசிகர் இவளைக் கொல்லத் தகுந்த காரணம் இப்பொழுதே நேர்ந்ததென்று "ராம! இந்தப் பாபியிடத்தில் நீ இரக்கம் வைத்தது போதும். இவளோ பரம துஷ்டை; யாகங்களைக் கெடுக்கிறவள்; ஸந்தியா காலத்தில் ராக்ஷஸர்களை ஜயிக்க முடியாது. இவளுடைய

Notes : This Blank Page has also to be counted as a another page Number.

It is intentionally left blank after Picture Sketches.!



Released by Maran's Dog ,Toronto, Canada



தாமாபதந்தீம் வேகே³ந விக்ராந்தா மஶநீமிவ |
ஶரேணோரஸி விவ்யாத² ஸா பபாத மமார ச ‖ —பால. 26ஸ-27 ஸு.

இடி விழுவது போல் ராஜகுமாரர்களை நோக்கி தாடகை ஓடிவந்தாள். ஒரு திவ்வியாஸ்திரத்தால் ராமன் அவளை மார்பில் துளைக்க, அவள் கீழே விழுந்து உயிரை விட்டாள். (பக்கம் 75 பார்க்க)



பலம் மாயையால் வர வர வளர்கிறது. ஸந்தியாகாலத்திற்கு முன் இவளைக் கொல்ல வேண்டும் என்று எச்சரித்தார்.

கண்ணுக்குத் தெரியாமலிருந்துகொண்டு கல் மழை பெய்யும் அவளுடைய சப்தமுண்டான இடத்தைக் குறிவைத்து ராமன் அம்புகளை எய்து அவளைத் தடுத்தார். தன் மாயாபலம் வீணானதைக் கண்டு பயங்கரமாகக் கத்திக்கொண்டு, இடி விழுவதுபோல் ராஜ குமாரர்களை நோக்கி தாடகை ஓடிவந்தாள். ஒரு திவ்யாஸ்திரத்தால் ராமன் அவளை மார்பில் துளைக்க, அவள் கீழே விழுந்து உயிரை விட்டாள். பயங்கரமான தாடகை கொல்லப்பட்டவுடன் இந்திராதி தேவர்கள், 'நல்லது நல்லது' என்று ராமனைக் கொண்டாடி, ஸந் தோஷம் தாங்காமல் "மஹரிஷே! உமக்குப் பரம மங்களமுண்டா கட்டும். ராமனை இங்கே அழைத்து வந்து, தேவ சத்துருவான தாட கையை அழித்து, எங்களுக்குச் செய்த பரமோபகாரத்தால் நாங்கள் அடைந்த திருப்திக்கு எல்லையில்லை. ராகவனிடத்தில் தங்களுடைய அன்பிற்கு அடையாளமாகத் திவ்வியாஸ்திரங்களை உபதேசியும். கிருசாச்வரென்ற பிரஜாபதியின் புத்திரர்களும், வீணாகாத பராக் கிரமமுள்ளவர்களும், நிகரற்ற தங்களுடைய தபோபலத்தால் ஸம் பாதிக்கப்பட்டவர்களுமான அந்தத் தேவதைகளைத் தரிப்பதற்குத் தகுந்தவன் ராமனே. தங்களைப் பரமகுருவாய் நினைத்துப் பணி விடை செய்வதில் அவனுக்கு வெகு திருப்தி. குருமுகமாகக் கிடைத்த வித்யையே விசேஷ வீரியமுள்ளது. தேவர்களுக்கு ஒரு பெரிய காரியம் இவனால் நடக்கவேண்டியதென்று உமக்குத் தெரியாதா" என்று சொல்லி அவரிடத்தில் உத்தரவு பெற்றுக்கொண்டு திரும்பிச் சென்றார்கள்.

ஸந்தியா காலமாயிற்று. தாடகாவதத்தில் மிகவும் ஸந்தோஷ மடைந்த விசுவாமித்திரர் ராமனை உச்சி முகந்து "குழந்தாய்! உன் னைப் பார்த்தவர்களுக்குப் பாபம் நீங்கி ஸகல மங்களங்களும் கிடைக்குமே; ஸகல தாபங்களும் தீருமே; ஆனந்த வெள்ளம் பெரு குமே; இந்த ராத்திரி இங்கே தங்கி, காலையில் என்னிடத்திற்குப் போகலாம்" என்றார். அப்படியே அவர்கள் அவ்வனத்தில் வஸித்தார்கள். அது சாபம் நீங்கி, குபேரனுடைய சைத்ர ரத மென்ற தோட்டத்தைப் போல் வெகு ரமணீயமாய் விளங்கிற்று.

யக்ஷ புத்திரியான தாடகையை ஸம்ஹரித்து, தேவகணங்க ளால் கொண்டாடப்பட்டு, ரகுவீரன் அன்று ராத்திரி விசுவாமித்திர ருடன் அங்கே வஸித்தார். காலையில் அந்த முனிவர் ராஜபுத்திரர் களை எழுப்பினார்.

நிஹத்ய தாம் யக்ஷஸுதாம் ஸ ராம :
ப்ரஶஸ்யமாந: ஸுரஸித்³த⁴ ஸங்கை⁴: |
உவாஸ தஸ்மிந் முநிநா ஸஹைவ
ப்ரபா⁴த வேலாம் ப்ரதிபோ³த்⁴யமாந: ‖ (41)

## ஸர்க்கம் 27

# அஸ்திரோபதேசம்

அத$^{2}$ தாம் ரஜனீமுஷ்ய விஸ்வாமித்ரோ மஹாயஶா : |
ப்ரஹஸ்ய ராக$^{4}$வம் வாக்யம் உவாச மது$^{4}$ராக்ஷரம் (1)

மஹா கீர்த்திமானான விசுவாமித்திரர் "என்ன ஆச்சரியம்! ஸகல லோகநாதனும் ஸகல சக்திகளுக்கும் பிறப்பிடமுமான ராமனுக்கு, அல்ப ஞானமும் அல்ப சக்தியுமுள்ள நான் குருவாகி, அஸ்திரங்களை உபதேசிப்பது என்ன பரிஹாஸம்! ஆனால், இதுவும் அவருடைய திருவுள்ளமே. அவருடைய லீலா விசித்திரத்தை யார் அறிவார்" என்று, தனக்குள் சிரித்துக்கொண்டு, ராமனை மதுரமாக அழைத்து, "தாசரதி! உன்னிடத்தில் எனக்குள்ள பிரீதிக்கு அளவில்லை. ஸகல மங்களங்களும் உண்டாகட்டும். ஒப்பற்ற கீர்த்தியை அடைவாய். எனக்குத் தெரிந்த ஸகல அஸ்திரங்களையும் வெகுப் பிரீதியுடன் மனப்பூர்வமாய் உபதேசிக்கிறேன். தேவாஸுர கந்தர்வ உரக தைத்ய கணங்களையும் ஸகல சத்துருக்களையும் எதிர்த்து வசப்படுத்தி ஜயிக்கும் திவ்யாஸ்திரங்களை ஒன்றுவிடாமல் உபதேசிக்கிறேன்.

தண்ட சக்ரம், கால சக்ரம், தர்ம சக்ரம், விஷ்ணு சக்ரம், ஐந்த்ரம், வஜ்ரம், சிவசூலம், ப்ராஹ்மம், ஐஷீகம், பிரஹ்மசிரஸ் என்ற அஸ்திரங்கள்; மோதகீ சிகரீயென்ற காந்தியுள்ள கதாயுதங்கள், தர்மபாசம், காலபாசம், வருண பாசம், வருணாஸ்திரம், ஈரிடி, நெருப்பிடி; பினாகாஸ்திரம், நாராயணாஸ்திரம், சிகரமென்ற ஆக்னேயாஸ்திரம், பாதமென்ற வாயவ்யாஸ்திரம்; ஹயசிரஸென்ற அஸ்திரம், க்ரௌஞ்சாஸ்திரம், விஷ்ணுசக்தி, ருத்ரசக்தி, கங்காளாஸ்திரம், முஸலாஸ்திரம், காபாலாஸ்திரம், கங்கணாஸ்திரம் (இவை அஸுரர்களுடையவை); நந்தனமென்ற கத்தியின் ரூபமுள்ள வித்யாதராஸ்திரம், மானவம், பிரஸ்வாபனம், பிரசமனம், கந்தர்வாஸ்திரம், ஸௌர்யாஸ்திரம், தர்ப்பணம், சோஷணம், ஸந்தாபனம், விலாபனம், மதனமென்ற மன்மதாஸ்திரங்கள், மோஹனமென்ற பைசாசாஸ்திரம், தாமஸாஸ்திரம், ஸௌமனாஸ்திரம், ஸம்வர்த்தாஸ்திரம், மௌஸலாஸ்திரம், ஸத்யாஸ்திரம், மாயாதராஸ்திரம், தேஜப்ரபம் (பிறருடைய தேஜஸை அபஹரிக்கும்) சிசிரமென்ற சந்த்ராஸ்திரம், ஸுதாமனமென்ற த்வஷ்டாவின் அஸ்திரம், சீதேஷு என்ற பகதேவதையின் அஸ்திரம், மானவாஸ்திர மென்றவைகளை என்னிடத்திலிருந்து சீக்கிரமாய்ப் பெற்றுக்கொள். மஹானுபாவ! இவை நினைத்த ரூபங்களை எடுக்கக்கூடியவை, மஹாபலமுள்ளவை, உதார ஸ்வபாவமுள்ளவை" என்றார்.



பிறகு அவர் ஆசமனம் செய்து, சுத்தராய்க் கிழக்குமுகமாக இருந்து, ராமனுக்கு ஒவ்வொரு அஸ்திரத்தின் மந்திரங்களையும் உபதேசித்தார். அவை யாவையும் தரிப்பது தேவர்களாலும் முடியாது. அவைகளைக் கொடுத்து, ஒவ்வொரு மந்திரத்தையும் உச்சரித்தவுடன், அந்தத்தேவதை ரூபமெடுத்து ராமனிடத்தில் வந்து நின்று, கைகூப்பி வணக்கமாய் ஸந்தோஷத்துடன் "ரகுவீர! நாங்கள் உன் ஆக்ஞையை நிறைவேற்றக் கடமைப்பட்டவர்கள். உன்னிடத்தில் உதாரமான புத்தியை வைத்திருக்கிறோம்" என்றன. ராமன் அவைகளின் கைங்கரியத்தை அங்கீகரித்து, ஸ்வாதீனப் படுத்திக்கொண்டதற்கு அடையாளமாக அவைகளைத் தொட்டு, "நான் நினைத்த பொழுது வரவேண்டும்" என்று உத்தரவு செய்தனுப்பினார். பிறகு ஆசாரியனான மஹரிஷியை பிரதக்ஷிண நமஸ்காரம் செய்து விதிப்படி பூஜித்து, திவ்யாஸ்திரங்களைப் பெற்றதால் அதிகமான தேஜஸ்ஸுடன், அங்கிருந்து போகப் புறப்பட்டார்.

தத: ப்ரீதமனா ராமோ விஶ்வாமித்ரம் மஹாமுநிம் |
அபி$^{4}$வாத்$^{3}$ய மஹாதேஜா: க$^{3}$மநாயோப சக்ரமே ‖ (27)

## ஸர்க்கம் 28

# உபஸம்ஹாரங்களை உபதேசித்தது

ப்ரதிக்$^{3}$ருஹ்ய ததோஸ்த்ராணி ப்ரஹ்ருஷ்ட வத$^{3}$ந: ஶுசி: |
க$^{3}$ச்ச$^{2}$ந்நேவ ச காகுத்ஸ்தோ$^{2}$ விஶ்வாமித்ர மதா$^{2}$ப்$^{3}$ரவீத் ‖ (1)

ரகுவீரன் கௌசிகரிடத்திலிருந்து அஸ்திரங்களைப் பெற்றுக்கொண்டு சுத்தராய், ஸந்தோஷத்தால் முகமலர்ந்து போய்க்கொண்டிருக்கையில் "ஸ்வாமி! தாங்கள் உபதேசித்த அஸ்திரங்களின் மஹிமையால் தேவாஸுரர்களாலும் எதிர்க்கக் கூடாதவனானேன். ஆனால், இவைகளைப் பிரயோகித்த பிறகு மறுபடியும் உபஸம்ஹாரம் செய்யும் விதத்தை உபதேசிக்க வேண்டும்" என்று பிரார்த்தித்தார். உடனே அந்த முனிவர் சுத்தராய், பிரீதியுடன் உபஸம்ஹார மந்திரங்களைத் தெரிவித்து, ஸத்தியவான், ஸத்யகீர்த்தி, திருஷ்டம், ரபஸம், பிரதிஹாரதரம், பராங்முகம், அவாங்முகம், லக்ஷாக்ஷம், விஷமம், திருடநாபம், ஸுநாபகம், ஜ்யோதிஷம், கிருசனம், நைராச்யம், விமலம், யோகந்தரம், ஹரித்ரம், தைத்யம், பிரசமனம், சுசிர்பாஹு, மஹாபாஹு, நிஷ்குலி, விருசி, ஸார்ச்சிமாலி, திருதிமாலி, விருத்திமான், ருசிரம், பித்ருஸௌமனஸம், விதூதம், மகரம், கரவீரகரம், தனம், தான்யம், காமரூபம், காமருசி, மோஹம், ஆவரணம், ஜ்ரும்பகம், ஸர்வநாபம், ஸந்தானம், வரணமென்ற தேஜஸ்விகளான கிருசாச்வ புத்திரர்களைப் பெற்றுக்கொள். காமரூபிகளான இந்த மந்திரதேவதைகளைத் தரிக்க நீயே தகுந்தவன்" என்றார்.

ராமன், அப்படியே செய்கிறேன் என்று மனம் மகிழ்ந்து, அவைகளைப் பெற்றுக்கொண்டார். அவை ராமனை அடைந்து, காந்தியுள்ள திவ்ய தேகங்களுடன் மனுஷ்யரூபம் எடுத்து, ஸுகத்தைக் கொடுக்கக் கூடியவைகளாய்த் தோன்றின. சில நெருப்புத் தணல்களைப் போலும், சில புகையைப் போலும், சில ஸூரிய சந்திரர்களைப் போலும் காணப்பட்டன, யாவும் கைகூப்பி வணக்கமாய் மதுரமான குரலுடன் "நரசிரேஷ்ட! இதோ வந்திருக்கிறோம். என்ன ஆக்ஞை? நாங்கள் என்ன செய்யவேண்டும்?" என்று தெரிவித்தன. ராகவன் "என் ஞாபகத்திலிருங்கள். நான் நினைத்த பொழுது வந்து எனக்கு உதவி செய்யுங்கள்' அதுவரையில் உங்கள் இஷ்டப்படி இருங்கள்" என்று விடைகொடுத்தனுப்பினார். அவை ராகவனை பிரதக்ஷிண நமஸ்காரம் செய்து, அப்படியே செய்கிறோமென்று அவரிடத்தில் விடைபெற்று மறைந்தன. பிறகு கௌசிகருடைய அனுமதியால் அந்த அஸ்திரங்களையும் உபஸம்ஹாரங்களையும் ராமன் லக்ஷ்மணனுக்கு உபதேசித்தார்.

இப்படி உபஸம்ஹார மந்திரங்களை மஹரிஷியிடத்திலிருந்து பெற்றுக்கொண்டு, பிரயாணம் செய்கையில், 'ராமன் "ஸத்குருவே! அந்த மலைக்கு ஸமீபத்தில் கருத்த நீருண்ட மேகம்போல் காணப்படும் மரச்சோலை காட்டைச் சேர்ந்ததா? ஆசிரமத்தைச் சேர்ந்ததா? பார்வைக்கு மிகவும் அழகாக இருக்கிறது. மான்களால் நிறைந்திருக்கிறது. நானாவிதமான பக்ஷிகள் மதுரமாய்க் கூவுகின்றன. பயங்கரமான தாடகாவனத்தைத் தாண்டி விட்டோமென்று எண்ணுகிறேன். இந்தப் பிரதேசம் வெகு அழகாயும் ஸுகமாயுமிருப்பதால் ஆசிரம பூமியாகிறது. இது யாருடைய ஆசிரமம்? பிராம்மணர்களைக் கொன்று தங்களுடைய யக்ஞத்தை நாசம் செய்யும் அந்தத் துஷ்ட ராக்ஷஸர்கள் வஸிக்குமிடத்திற்கு வந்து விட்டோமா? தங்களுடைய யாகம் நடக்கும் இடம் எது? அந்த ராக்ஷஸர்களைக் கொன்று தங்களுடைய யாகத்தை ரக்ஷிக்க வேண்டிய இடம் எது? ஸகல விஷயங்களையும் அறிந்த தாங்கள் சொல்ல வேண்டும். கேட்க ஆவலாயிருக்கிறேன்" என்றார்.

ரக்ஷிதவ்யா க்ரியா ப்3ரஹ்மந் மயா வத்4யாஸ்ச ராக்ஷஸா: |
ஏதத்ஸர்வம் முநிஸ்ரேஷ்ட2 ஸ்ரோது மிச்சா2ம்யஹம் ப்ரபோ4 ‖ (24)

## ஸர்க்கம் 29

## ஸித்தாசிரமம்

அத2 தஸ்யா ப்ரமேயஸ்ய தத்3வநம் பரிப்ருச்ச2த: |
விஸ்வாமித்ரோ மஹாதேஜா: வ்யாக்2யாது முபசக்ரமே ‖ (1)

**அவதாரிகை**

ஸித்தாசிரமத்தில் பகவான் எப்பொழுதும் விளங்குவதால் அங்கே செய்யும் தவமெல்லாம் ஸித்தி யடையுமென்றும், பகவானிருந்த திவ்விய க்ஷேத்திரத்திலேயே நாமும் வஸிக்க வேண்டுமென்றும் சொல்லப்படுகிறது.



மனுஷ்ய பாவனையால் ஒன்றும் தெரியாதவரைப்போல் தன்னைப்பற்றியே இப்படிக் கேட்ட ராமனுடைய அளவற்ற மஹிமையை அறிந்த விசுவாமித்திரர், இதுவும் ஒரு லீலையோ என்று ஆச்சரியப்பட்டு, "மஹா பராக்கிரமசாலியான ராம! தேவாதி தேவனும் லோகநாதனுமான மஹாவிஷ்ணு, ஜகத்தை ரக்ஷிக்க இங்கே பல யுகங்கள்வரையில் ஒருவராலும் பார்க்கப்படாமல் தவம் செய்து கொண்டிருந்தார். வாமன ரூபமெடுத்த மஹாவிஷ்ணு இவ்விடத்தில் தவம் செய்து ஸித்தி யடைந்ததால் இதற்கு ஸித்தாசிரமம் என்று பெயர்.

அக்காலத்தில் விரோசனனுடைய புத்திரனை பலி என்ற அஸுர ராஜன் இந்திராதி தேவர்களை ஜயித்து ஸ்வர்க்கத்தைக் கைப்பற்றி மூவுலகிலும் பிரஸித்தியுடன் ஆண்டுவந்தான். பிறகு ஒரு யாகம் செய்ய ஆரம்பித்தான். அப்பொழுது தேவதைகள் இங்கே வந்து விஷ்ணுவை நமஸ்கரித்து, "ஸ்வாமி! விரோசன புத்திரனை பலி உத்தமமான யாகத்தைச் செய்கிறான். அது முடிவதற்குள் எங்களுடைய பிரார்த்தனையைத் தாங்கள் நிறைவேற்ற வேண்டும். எப்பொழுது எதை எவர் கேட்டாலும் தடையில்லாமல் உடனே கொடுத்துவருகிறான். எங்களுடைய க்ஷேமத்தைக் கோரி, வாமனராய் மாயாரூப மெடுத்து, எங்களுக்கும் பரம மங்களத்தைச் செய்யவேண்டும்" என்று பிரார்த்தித்தார்கள்.

அதை அறிந்த காசியபர் அவரைப் புத்திரனாக அடைய விரும்பி, தன் பாரியையான அதிதியுடன் ஆயிரம் தேவ வருஷங்களாக விரதத்தை அனுஷ்டித்து அவரை பிரார்த்தித்தார். அதன் முடிவில் பகவான் பிரஸன்னராகி, வரம்கொடுக்க அங்கே வந்தார். காசியபர் அவரைப் பிரதக்ஷிண நமஸ்காரங்களால் உபசரித்து "ஸ்வாமி! என் புண்ய விசேஷத்தால் தங்களைக் காணப்பெற்றேன். புருஷோத்தம! தாங்கள் தவத்தால் ஆராதிக்கப்படுகிறீர்கள்; தவத்தின் பயனைக் கொடுக்கிறீர்கள்; ஞானஸ்வரூபி; தவமே தங்களுடைய ஸ்வபாவம்; இதரப்பிரயோஜனங்களை விரும்பாமல் தங்களை ஆராதித்ததால், தங்களுடைய தரிசனம் கிடைத்தது. ஸர்வ கர்மங்களாலும் பூஜிக்கப்படுகிறவர்; அவைகளின் பலன்களைக் கொடுப்பவர்; ஞானஸ்வரூபி; ஆகையால் பிராகிருத குணங்களுக்கு எதிரான ஸத்யம் ஞானம் ஆனந்தமென்ற கல்யாண குணங்களால் விளங்குகிறவர்; இதே எனக்குப் பரமப்பிரயோஜனம். சேதனா சேதனப் பிரபஞ்சம் யாவையும் தங்களுடைய சரீரத்தில் காண்கிறேன். உத்பத்தியற்றவரும் அளவிடக் கூடாதவருமான தங்களையே சரணமடைகிறேன்" என்றார். பாபலேச மற்ற காசியபருடைய ஸ்தோத்திரத்தால் ஹரி ஸந்தோ

ஷித்து "உமக்கு மங்கள முண்டாகட்டும். உத்தமமான வரங்களைப் பெறத் தகுந்தவராகையால் வேண்டியதைக் கேளும்" என்று அனுக்கிரஹித்தார்.

அப்பொழுது காசியபர், "ஸ்வாமி! நானும் அதிதியும் தேவர்களும் ஒரே விஷயத்தை வேண்டுகிறோம். எனக்கும் அதிதிக்கும் புத்திரனாய் இந்திரனுக்குத் தம்பியாய் அவதரித்து, சோகத்தால் வாடும் தேவர்களுக்கு அனுக்கிரஹம் செய்யவேண்டும். தங்களுடைய உத்தேசமும் என் பிரார்த்தனையும் நிறைவேறினதால், இவ்விடத்திற்கு ஸித்தாசிரம மென்று பெயருண்டாகும். எங்களை ரக்ஷிக்க அவதாரம் செய்யப் புறப்படுங்கள்" என்றார்.

அப்படியே ஹரி அதிதியிடத்தில் வாமனராகப் பிறந்து, பலி யாகம் செய்யுமிடத்திற்குப் போய், மூன்றடி நிலத்தை வேண்டிப் பெற்றார். இரண்டு அடிகளால் மூவுலகையும் அளந்து, மூன்றுவதற்கு இடமில்லாமல் அவனைச் சிறையில் வைத்து திரிலோகங்களையும் இந்திரனுடைய வசத்தில் ஒப்புவித்து, ஸகல பிராணிகளுக்கும் பரம மங்களத்தைச் செய்தார். ஸம்ஸார பாபங்களைப் போக்கும் இந்த ஆசிரமத்தில் அவர் வஸித்தார். எனக்கு அவரிடத்திலுள்ள பக்தியால் அவருடைய திருவடிகள் பட்ட இவ்விடத்தில் வஸித்து வருகிறேன். என் யாகத்தைக் கெடுக்கும் ராக்ஷஸர்கள் இங்கே வருகிறார்கள். நீ அவர்களை இங்கே கொல்லவேண்டும். இன்று ஸித்தாசிரமத்திற்குப் போவோம். என்னைப்போல் உனக்கும் அங்கே அவ்வளவு ஸ்வாதீனமுண்டு" என்று பேசிக்கொண்டே அவ்விடம் சேர்ந்தார்கள். தன் வாஸஸ்தானத்திற்கு வந்தவுடன், பனி நீங்கிப் புனர்வஸுவுடன் கூடிய சந்திரனைப் போல் கௌசிகர் விளங்கினர். அங்குள்ள தபஸ்விகள் அவரை எதிர்கொண்டழைத்து உபசரித்து விதிப்படி பூஜித்து, ராம லக்ஷ்மணர்களுக்கு அதிதிபூஜை செய்தார்கள். ராஜகுமாரர்கள் சற்று நேரம் இளைப்பாறிப் பிறகு, "மஹரிஷே! தங்களுக்கு ஸகல மங்களங்களும் உண்டாகட்டும். இன்றைக்கு யாகதிக்ஷை செய்து கொள்ளுங்கள். தங்களுடைய யாகம் விக்கினமின்றி நிறைவேறுவதால் இதற்கு ஸித்தாசிரமம் என்ற பெயர் உண்மையாயிருக்கும்" என்றார்கள். கௌசிகர் அப்படியே இந்திரியங்களை அடக்கிக்கொண்டு யாக திக்ஷை பெற்றார்.

ராஜகுமாரர்கள் அன்று ராத்திரி முழுதும் வெகு ஜாக்கிரதையாயிருந்து, அதிகாலையில் விழித்துக்கொண்டு, ஸந்தியாவந்தனம் ஜபம் முதலியவைகளை முடித்து, அக்னி ஹோத்திரம் செய்து ஸுகமாய் உட்கார்ந்திருக்கும் தங்களுடைய குருவை நமஸ்கரித்தார்கள்.

ஸ்ப்ருஷ்டோத³கௌ ஶுசீ ஜப்யம் ஸமாப்ய நியமேந ச |
ஹுதாக்³நி ஹோத்ர மாஸீநம் விஶ்வாமித்ர மவந்த³தாம் || (54)

---



## ஸர்க்கம் 30

## யாக ஸம்ரக்ஷணம்

---

அத² தௌ தே³ஶ காலஜ்ஞௌ ராஜபுத்ரா வரிந்த³மௌ |
தே³ஶே காலே ச வாக்யஜ்ஞௌ அப்³ரூதாம் கௌஶிகம் வச: || (1)

---

உசிதமான காலத்திலும் இடத்திலும் பேசும் திறமையுள்ள அந்த வீரர்கள் "முனிசிரேஷ்ட! ராக்ஷஸர்கள் எப்பொழுது வருவார்கள்? எப்பொழுது நாங்கள் ஜாக்கிரதையாய் ரக்ஷிக்க வேண்டும்? அந்தக் காலம் தாண்டக்கூடாதல்லவா" என்றார்கள். யுத்தாவேசத்தால் பரபரப்புள்ள ராஜகுமாரர்களைப் பார்த்து அங்கிருந்த ரிஷிகள் மகிழ்ந்து கொண்டாடி, "இன்று முதல் ஆறு இரவும் பகலும் நீங்கள் யாகத்தை ரக்ஷிக்கவேண்டும். உங்களுடைய குரு யாக தீக்ஷை பெற்றதால் பேசமாட்டார்" என்றார்கள். பிறகு ராம லக்ஷ்மணர்கள் வெகு ஜாக்கிரதையாய் விழித்துக்கொண்டிருந்து, அந்த ஆசிரமத்தையும் கௌசிகரையும் ரிஷிகளையும் வில்லும் கையுமாய்ப் பாதுகாத்தார்கள்.

ஆறுவது நாளில் ராமன், "தம்பி! இன்று ஸுத்யாஹஸ் என்ற முக்கியமான தினம். ராக்ஷஸர்கள் வரும் காலமாயிற்று; வெகு ஜாக்கிரதையா யிருக்க வேண்டும்" என்றார். யுத்தம் செய்ய ஆவலுள்ள ராமன் இப்படிச் சொல்லி முடிக்குமுன் அக்னிகுண்டம் ஜ்வலித்தது. ராக்ஷஸர்கள் வந்ததற்கு அதே அடையாளம். தர்ப்பம் சமஸம் ஸ்ருக் ஸ்ருவம் ஸமித்துகள் புஷ்பங்கள் முதலியவை நான்கு பக்கங்களிலும் வைக்கப்பட்டிருந்தன. யஜமானரான கௌசிகர் மற்ற ரித்விக்குகளுடன் யாகத்தை நடத்தினர். ராஜ புத்திரர்கள் ரக்ஷிக்கிறார்கள் என்ற தைரியத்தால் ரிஷிகள் பயமின்றி ஆஹுதிகளைக் கொடுத்து, ராக்ஷஸர்கள் நெருங்காமலிருக்க, ரக்ஷோக்ன மந்திரங்களை ஜபித்தார்கள். அதனால் ஸுபாஹு மாரீசர்கள் யாகசாலைக்குள் வர முடியாமல், ஆகாசத்தில் நின்று பெரிய மேகங்களைப்போல் கர்ஜித்து மாயா பலத்தால் கொழுப்படைந்து ரத்தமாரி பொழிந்தார்கள். யாகவேதி ரத்தத்தால் சிவந்தது. ராஜ புத்திரர்களின் கண்களும் கோபத்தால் சிவந்தன. ராமன் அதிவேகமாய் ஓடி வந்து பார்த்தார். ராக்ஷஸர்கள் ஆகாசத்திலிருந்து பூமிக்கு வந்துகொண்டிருந்தார்கள். "லக்ஷ்மணா! மாம்ஸத்தைத் தின்று ரத்தத்தைக் குடிக்கும் இந்தத் துஷ்டர்களின் மேல் மானவாஸ்திரத்தை விட்டுப் பெருங்காற்று மேகங்களைச் சிதற வடிப்பதுபோல் விரட்டுகிறேன் பார்" என்று வெகு பிரகாசமுள்ள மானவாஸ்திரத்தை மாரீசனுடைய மார்பை நோக்கிவிட்டார். அது அவனை நூறு யோசனைக்கப்பால் தள்ளிக் கொண்டு போய் ஸமுத்திரத்தில் அழுத்திற்று. பிரக்ஞையற்று மூச்சுத் திணறி அஸ்திரத்தால் அடிபட்டுப் பலமிழந்து அவன் தத்தளிப்

பதைக் கண்டு ராமன் "தம்பி! மானவாஸ்திரத்தின் மஹிமையைப் பார். என் எண்ணத்தை அறிந்து, இது மாரீசனைக் கொல்லாமல் மயக்கி இழுத்துக்கொண்டு போகிறது. யாகங்களை அழித்து, ரிஷிகளைக் கொன்று ரத்தத்தைக் குடிக்கும் இந்தத் துஷ்டராக்ஷஸர்கள் மாத்திரம் எஞ்சியிருக்கிறார்கள். இவர்களை உயிருடன் விடக்கூடாது" என்று ஆச்சரியமான ஆக்னேயாஸ்திரத்தை எடுத்து ஸுபாஹுவை மார்பில் அடித்தார். அவன் உடனே பூமியில் விழுந்து இறந்தான். மற்றவர்களை வாயவ்யாஸ்திரத்தால் கொன்றார். இப்படி இரண்டு சிறுவர்கள் மலைபோன்ற ராக்ஷஸர்களை வெகு சீக்கிரத்தில் அழித்ததைப் பார்த்துக்கொண்டிருந்த மஹரிஷிகள் ஆச்சரியமும் ஸந்தோஷமும் தாங்காமல், தேவராஜன் அஸுரர்களை ஜயித்த பொழுது முனிவர்கள் பூஜித்ததுபோல் அவர்களைக் கொண்டாடினார்கள்.

தமது யாகம் விக்னமின்றி முடிந்ததையும் திக்குகள் உபத்திரவமின்றி விளங்குவதையும் கண்டு கௌசிகர், உடனே "ராம! மஹா பராக்கிரமசாலியே! மஹா கீர்த்திமானே! என் எண்ணங்களை நிறைவேற்றினாய். உன் பிதாவின் உத்தரவுப்படி நடந்தாய். உன்னிடத்தில் எனக்குள்ள பிரீதிக்கு எல்லையில்லை. ஸித்தாசிரமமென்ற பெயர் இவ்விடத்திற்கு உன்னால் உறுதியாயிற்று" என்றார்.

க்ருதார்தோ²ஸ்மி மஹாபா³ஹோ க்ருதம் கு³ருவசஸ் த்வயா |
ஸித்³த⁴ாஶ்ரம மித³ம் ஸத்யம் க்ருதம் ராம மஹாயஶ: || (24)

## ஸர்க்கம் 31
## மிதிலைக்குப் பிரயாணம்

அத² தாம் ரஜநீம் தத்ர க்ருதார்தௌ² ராமலக்ஷ்மணௌ |
ஊஷதுர் முதி³தௌ வீரௌ ப்ரஹ்ருஷ்டேநாந்தராத்மநா || (1)

### அவதாரிகை

தாடகாதிராக்ஷஸர்களை ஸுலபமாகக் கொல்லும் சக்தி விசுவாமித்திரருக்குண்டு. ஆனால், ராமனுடைய மஹிமையை லோகத்திற்கு வெளிப்படுத்தவும், அந்த ராக்ஷஸர்களுக்கு நேர்ந்த சாபத்தைத் தீர்த்து உத்தம கதியைக் கொடுக்கவும், ராமனை அழைத்து வந்து யாகத்தை ரக்ஷிப்பதென்ற வெளிப்படையான காரணத்தால் அவர்களைக் கொல்லவைத்தார். மேலும், ராவணாதி ராக்ஷஸர்களைக் கொன்று பூபாரத்தைத் தீர்க்க ஸகல அஸ்திரங்களையும் ராமனுக்கு உபதேசித்தார். பராசக்தியின் சேர்க்கையின்றி துஷ்ட நிக்ரஹம் முடியாது; அவதார காரியம் நிறைவேறாது. ஜனக குமாரியாய்ப் பிறந்த லக்ஷ்மியை ராமனுடன் சேர்த்துவைக்க அவரை மிதிலைக்கு அழைத்துப் போனார். குருவால் உபதேசிக்கப்பட்ட வித்யையே பயன் பெறுமென்ற தர்மத்தை நடத்திக் காட்ட, ஸர்வக்ஞனும் ஸர்வ சக்தனுமான ராமன் கௌசிகரை குருவாயடைந்து ஸகல சுச்ருஷையும் செய்து அஸ்திரங்களைப் பெற்றார்.



---

ராமலக்ஷ்மணர்கள் தங்களுடைய காரியம் நிறைவேறினதால் ஸந்தோஷித்து, அன்றிரவில் அங்கே தங்கிக் காலையில் எழுந்து நித்திய கர்மங்களை முடித்து, கௌசிகரும் மற்ற ரிஷிகளும் இருக்குமிடத்திற்கு வந்தார்கள். கொழுந்து விட்டெரியும் அக்னியைப் போல் ஜ்வலிக்கும் அம்முனிவரை வணங்கி "ஸ்வாமி! இதோ தங்களுடைய வேலைக்காரர்கள் வந்திருக்கிறோம். வேண்டியதைச் செய்யும்படி கட்டளையிடலாம். என்ன உத்திரவு?" என்று மதுரமாயும் பெருந்தன்மையுடனும் சொன்னார்கள். ("உமது பக்திக்கு நாங்கள் அடிமைப்பட்டோம். உம்மைவிட்டு ஒரு க்ஷணமாவது பிரிந்திருக்க மனமில்லை. 'ராஜ புத்திரர்களை அடிக்கடி வேலையிடலாமா' என்று தயங்கவேண்டாம். பஞ்சகாலத்தில் கூடை நெல்லைக் கொடுத்து வாங்கின ராஜ குமாரனைப் பஞ்சம் தெளிந்த பிறகு அதே விலைக்குக் கேட்டால் கொடுப்பார்களா? வாங்கினவர்கள் எந்த வேலையைச் சொன்னாலும் தடையின்றி ஸந்தோஷத்துடன் செய்யவேண்டுமல்லவா?)

அங்குள்ள ரிஷிகள் கௌசிகருடைய அனுமதிபெற்று, "பரம தர்மவானான ஜனகர் ஒரு யாகம் செய்கிறார். பகவத் கைங்கரியமாயும் பலாபேக்ஷையின்றியும் அது செய்யப்படுவதால் பலன்களை விரும்பும் நித்தியகர்மங்களைக் காட்டிலும் மேலானது. ஆகையால் அதைப் பார்க்கப் போகிறோம். நரசிரேஷ்ட! நீயும் எங்களுடன் வந்தால் அவ்விடத்திலுள்ள அத்புதமான வில்லைப் பார்க்கலாம். ஜனகருடைய முன்னோர்களில் ஒருவருக்கு யாகத்தில் தேவர்களால் அது கொடுக்கப்பட்டது; வெகு பிரகாசமுள்ளது; அளவற்ற பலமுள்ளது. பார்க்கப் பயங்கரமானது. தேவ கந்தர்வ அஸுர ராக்ஷஸர்களும் அதை நாணேற்ற முடியவில்லை. மனுஷ்யர்களைப் பற்றிச் சொல்லவும் வேண்டுமோ? அதன் வீரியத்தை அறிய வந்த மஹா பலவான்களான ராஜ புத்திரர்களும் அதை வளைக்க முடியவில்லை. அங்கே போனால் ஜனகருடைய அத்புதமான யாகத்தையும் உத்தமமான வில்லையும் நீ பார்க்கலாம். தேவர்களால் யாகபலனைக் கொடுக்கப்பட்ட அந்த வில், கந்த புஷ்ப தூப தீப நைவேத்தியங்களால் விசேஷமாகப் பூஜிக்கப்படுகிறது" என்றார்கள்.

பிறகு கௌசிகர் ராமலக்ஷ்மணர்களையும் மற்ற ரிஷிகளையும் அழைத்துக்கொண்டு அங்கிருந்து புறப்பட்டார். அங்குள்ள வனதேவதைகளை நோக்கி "உங்களுக்கு க்ஷேமமுண்டாகட்டும். இங்கிருந்து கங்கைக்கரையிலுள்ள ஹிமயமலைச் சாரலுக்குப் போகிறேன். இங்கே வந்த காரியம் நிறைவேறிற்று" என்று அவைகளிடத்தில் உத்திரவு பெற்றுக்கொண்டு, ஸித்தாசிரமத்தை பிரதக்ஷி

ணம் செய்து வடக்கில் சென்றார். மற்ற ரிஷிகள் அக்னிஹோத்திர ஸாமான்களை வண்டியில் ஏற்றிக்கொண்டு போனார்கள். கௌசிகரிடத்திலுள்ள பக்தியால் அங்கிருந்த மிருகங்களும் பக்ஷிகளும் வெகு தூரம் அவருடன் போயின. அவர் அவைகளை நிறுத்தி, திரும்பிப்போகச் சொல்லி, அஸ்தமனம் வரையில் நடந்து சோண நதிக் கரையில் தங்கினார்கள். ஸ்நானம் ஸந்தியாவந்தனம் ஜபம் அக்னிஹோத்திரம் முதலிய நித்தியகர்மங்களை முடித்து, கௌசிகரை முன்னிட்டு நதிக்கரையில் உட்கார்ந்தார்கள். ராஜ புத்திரர்கள் அவர்களை வணங்கிக் கௌசிகருக்கு எதிரில் உட்கார்ந்தார்கள். அப்பொழுது ராமன், 'ஸ்வாமி! வனங்களால் மிகவும் செழிப்பாய் விளங்கும் இந்தத் தேசம் யாருடையதென்று அறிய ஆவல் கொண்டிருக்கிறேன்'' என்றார். அந்த மஹாதபஸ்வி மற்ற ரிஷிகள் கேட்டுக்கொண்டிருக்க அந்தத் தேசத்தின் வரலாறு முழுவதையும் சொல்ல ஆரம்பித்தார்.

சோதி³தோ ராமவாக்யேந கத²யாமாஸ ஸுவ்ரத: |
தஸ்ய தே³ஶஸ்ய நிகி²லம் ரிஷிமத்⁴யே மஹாதபா: ॥ (24)

---

## ஸர்க்கம் 32
## குச நாபர்

---

ப்³ரஹ்ம யோநிர் மஹாநாஸீத் குஶோ நாம மஹாதபா: |
அக்லிஷ்ட வ்ரத த⁴ர்மஜ்ஞ: ஸஜ்ஜந ப்ரதிபூஜக: ॥ (1)

பிரஹ்மாவின் மனத்தால் உண்டாக்கப்பட்ட புத்திரர்களில் ஒருவருக்குக் குசரென்று பெயர். மற்ற பிரஹ்ம புத்திரர்களைவிட ஞானம் சௌரியம் முதலிய நற்குணங்களில் மேலானவர். நாரதர் முதலியவர்களைப்போல் பிரஹ்மலோகத்திலிராமல், பிரஜைகளை ஆள விரும்பிப் பூமியில் வஸித்தபடியால் அவருக்குக் குசரென்று பெயர். மஹா தபஸ்வி; ஸகல நியமங்களையும் விரதங்களையும் அனுஷ்டித்தவர்; தர்ம ரஹஸ்யங்களை அறிந்தவர். விதர்ப்ப ராஜ புத்திரியை மணம் செய்து எவ்விதத்திலும் தன்னைப் போன்ற நான்கு புத்திரர்களைப்பெற்றார். குசாம்பர், குசநாபர், அஸூர்த்தரஜஸ், வஸு என்ற அவர்கள் தர்மாத்மாக்களாய், ஸத்யவான்களாய், உத்ஸாஹமுள்ளவர்களாய், தேஜஸால் ஜ்வலிப்பதைக் கண்ட பிதா, "பிரஜைகளை ரக்ஷியுங்கள், விசேஷ தர்மமுண்டாகும்'' என்றார். அவர்களில் குசாம்பர் கௌசாம்பியையும், குசநாபர் மஹோதயத்தையும், அஸூர்த்தரஜஸ் தர்மாரண்யத்தையும், வஸு என்பவர் கிரிவிரஜத்தையும் ராஜதானிகளாய் அமைத்துக்கொண்டார்கள். சோண நதிக்கரையிலுள்ள இந்தத் தேசம் வஸுவின் ராஜ்யம். அதோ தெரியும் ஐந்து மலைகளால் இந்த ராஜதானிக்கு கிரிவிரஜமென்று பெயர். மகத தேசத்திலிருந்து ஓடிவரும் அந்தச் சோண



என்ற நதம் (கிழக்கிலிருந்து மேற்கே போகும் ஆறு) மலைகளுக்கு நடுவில் மாலையைப்போல் விளங்குகிறது. இதன் இருகரைகளிலுமுள்ள நிலங்கள் மிகுந்த செழிப்புள்ளவை; புண்ணிய க்ஷேத்திரங்கள்.

குசநாபரென்ற ராஜரிஷி கிருதாசி என்ற அப்ஸரஸிடத்தில் நூறு பெண்களைப் பெற்றார். அவர்கள் நிகரற்ற ரூபலாவண்யத்துடன் யௌவனமடைந்து, வஸ்திரங்களாலும் ஆபரணங்களாலும் புஷ்பங்களாலும் பரிமளத் திரவியங்களாலும் அலங்கரித்துக் கொண்டு, மழைகாலத்து மின்னல்களைப் போல் தோட்டங்களில் சென்று, பாடியும் ஆடியும் வாத்தியங்களை வாசித்தும் ஆனந்தமாய்க் காலம் கழித்தார்கள். மேகங்களுக்கு நடுவிலுள்ள நக்ஷத்திரங்களைப் போல் பிரகாசிக்கும் அந்த ரூபவதிகளை ஒருநாள் ஸர்வ வியாபியான வாயுபகவான் கண்டு, அவர்களுடைய அழகாலும் உத்தம குணங்களாலும் வசப்பட்டு, "ராஜகுமாரிகளே! உங்களிடத்தில் ஆசை வைத்தேன். என்னை விவாஹம் செய்து கொள்ளுங்கள். மனுஷ்யத் தன்மையை விட்டு எனக்குப் பார்யைகளாய், தீர்க்காயுளை அடையுங்கள். யௌவனம் நீடித்ததல்ல. மனுஷ்யர்களுடைய யௌவனம் அதி சீக்கிரமாய்ச் சென்றுவிடும். ஆகையால் நீங்கள் தீர்க்காயுளையும் அழிவற்ற யௌவனத்தையும் அடைந்து தேவ கன்யைகளாக இருங்கள்'' என்றார்.

தங்களைக் கேட்ட வாயு பகவானுடைய மஹிமையும் பலமும் செய்கையும் வீரியமும் தடையற்றவை என்று அந்தப் பெண்களுக்குத் தெரியும். ஆனாலும், அவர் சொன்னதைக் கேட்டு, எல்லோரும் கைகொட்டிச் சிரித்து, "தேவசிரேஷ்ட! நீர் ஸகல பூதங்களுக்குள்ளும் ஸஞ்சரிக்கிறீர். உமது பிரபாவத்தை நன்றாக அறிவோம். எங்களை இப்படி அவமதிக்கலாமா? நாங்கள் ஸாதாரண ஸ்திரீகளல்ல; குசநாபருடைய புத்திரிகள். உம்மை உமது அதிகாரத்திலிருந்து நீக்கக் கூடியவர்களென்று அறியும். ஆனால், அப்படிச் செய்தால் எங்களுடைய தவம் வீணாகும் என்றிருக்கிறோம். எங்களுடைய பிதா உமக்கு மிருத்யுவாகாமல் பார்த்துக் கொள்ளும். துர்ப்புத்தி பிடித்தவரே! அவரை அவமதிக்க வேண்டாம். அவர் எங்களை யாருக்குக் கொடுக்கிறாரோ அவரே எங்களுக்கு பர்த்தா. பிதாவைத் தவிர எங்களுக்கு வேறு யஜமானனில்லை, வேறு தெய்வமில்லை'' என்றார்கள்.

அதைக் கேட்டு வாயு பகவான் பரம கோபம் கொண்டு, தன் தடையற்ற சக்தியை அவர்களிடத்தில் பிரயோகித்து, அவர்களுடைய அங்கங்களில் பிரவேசித்து, அவைகளை ஒடித்தார். உடனே அவர்களுடைய தேகங்கள் குன்றி விகாரமாயின. அவர்கள் மனம் நொந்து, கர்வமழிந்து, பயம் பிடித்து, வெட்கத்தால் தலை குனிந்து, கண்ணீர் பெருகக் குசநாபரிடத்திற்குச் சென்று,

பூமியில் விழுந்து, கோவென்று அலறினர்கள். தன் உயிர்க்குயிரான பெண்கள் இப்படிக் கூனிக் குறுகிக் கோணலாய் விகாரமடைந்து தீனமாய்ப் புலம்புவதைப் பார்த்து அரசன் மனம் பதறி, "குழந்தைகளே! இதென்ன? சொல்லுங்கள். தர்மத்தை இப்படி அவமானம் செய்தவர்கள் யார்? உங்களைப் பலாத்காரம் செய்தவர்கள் யார்? அங்கங்கள் கோணலாய் ஒன்றும் சொல்லாமல் பூமியில் விழுந்து புரளுகிறீர்களே. உங்களை இப்படி அலங்கோலப் படுத்தினவன் யார்?" என்று கேட்டு அவர்கள் பதில் சொல்வதை ஆவலுடன் எதிர்பார்த்துக் கொண்டிருந்தார்.

குப்ஜா: கேந க்ருதா: ஸர்வா: வேஷ்டந்த்யோ நாபி$^{4}$ பா‘ஷத$^{2}$ |
ஏவம் ராஜா விநிஶ்வஸ்ய ஸமாதி‘ம் ஸந்த$^{3}$தே$^{4}$ தத: || (27)

---

## ஸர்க்கம் 33
## பிரஹ்மதத்தர்

---

தஸ்ய தத்$^{3}$வசநம் ஶ்ருத்வா குஶநாப‘ஸ்ய தீ‘மத: |
ஶிரோபி$^{4}$ஶ் சரணௌ ஸ்ப்ருஷ்ட்வா கந்யாஶத மபா‘ஷத || (1)

குசநாபர் இப்படிச் சொல்ல, அந்தப் பெண்கள் அவருடைய பாதங்களில் தலையை வைத்து நமஸ்கரித்து, "ஸ்வாமி! ஸர்வ பூதங்களிலும் ஸஞ்சரிக்கும் வாயு எங்களை விவாஹம் செய்ய விரும்பிக் கேட்டார். நாங்கள் ஸம்மதிக்காததால் எங்களைப் பலாத்காரம் செய்தார். அது அதர்மமென்பதைக் கவனிக்கவில்லை. 'நாங்கள் பிதாவுக்குக் கீழ்ப்பட்டவர்கள்; இஷ்டப்படி நடக்கக்கூடாது. எங்களிடத்தில் விருப்பமிருந்தால் எங்களுடைய பிதாவைக் கேளும். அவர் உமக்கு எங்களைக் கொடுத்தால் எங்களுக்கு ஆக்ஷேபமில்லை' என்றோம். எங்களுடைய வார்த்தையைக் கொஞ்சம் கூட லக்ஷ்யம் செய்யாமல், அந்தப் பாபபுத்தியுள்ளவர் எங்களை இப்படி உபத்திரவித்தார்" என்று தெரிவித்தார்கள்.

பரம தார்மிகரான குசநாபர் அதைக் கேட்டு, "குழந்தைகளே! உங்கள் நடத்தையை மெச்சினேன். ரூப யௌவன பல பராக்கிரம ஐசுவரியங்களில் குறைவில்லாத புருஷன் ஸ்த்ரீகளை வலுவில் பிரார்த்திக்கும்பொழுது அவர்கள் உட்படாமலிருப்பது ஆச்சரியம். மேலும், தேவசிரேஷ்டனை வாயுபகவானே அப்படி பிரார்த்திக்கும் பொழுது அதற்கு உட்படாமலிருப்பது இன்னும் ஆச்சரியம். தன்னைப்போல் உங்களையும் ஜனன மரணமில்லாமல் நித்திய யௌவனமுள்ளவர்களாகச் செய்கிறேனென்று சொல்லியும் அவருக்கு உட்படாதிருந்தது இன்னும் ஆச்சரியம். நூறு பெண்கள் ஒரே மனதாய் கலஹம் பொறுமை அஸூயையின்றி அப்படிச் செய்வது இன்னும் ஆச்சரியம். பொறுக்கக்கூடாத அவமானத்தையும் கெடுதியையுமடைந்து, இந்திராதி தேவதைகளை அழிக்கும் சக்தியிருந்தும் கோபிக்காமல், குற்றவாளியைக் குரூரமாய்த் தண்டிக்காமல், எல்லோரும் பொறுத்திருப்பது இன்னும் ஆச்சரியம். அபூர்வமான காரியத்தைச் செய்தீர்கள். நமது குலதர்மத்தையும் கீர்த்தியையும் காப்பாற்றினீர்கள். ஸ்த்ரீ புருஷர்களுக்குப் பொறுமையை விட மேலான ஆபரணமில்லை. மனுஷ்யர்கள் செய்த அபராதங்களைப் பொறுக்கவே மனம் வராது. தேவர்கள் மனிதர்களுக்குக் கெடுதி செய்து தண்டிக்கக்கூடிய நிலைமையிலிருந்தால் அவர்களை மன்னிக்க மனம் வருவது மிகவும் கஷ்டம், பொறுமையே தானம்; பொறுமையே யக்ஞம்; பொறுமையே ஸத்யம்; பொறுமையே கீர்த்தி; பொறுமையே தர்மம்; பொறுமையே ஜகத்தைக் காப்பாற்றுகிறது" என்று அவர்களைப் புகழ்ந்து அனுப்பி, அவர்களுக்கு விவாஹம் செய்யத் தகுந்த தேசகாலத்தையும் பர்த்தாக்களையும் பற்றி மந்திரிகளுடன் ஆலோசித்துக் கொண்டிருந்தார்

அக்காலத்தில் சூளி என்ற மஹரிஷி பிரஹ்மசாரியாய், பலாபேக்ஷையின்றித் தவம் செய்துகொண்டிருந்தார். ஊர்மிளையின் மகளான ஸோமதை என்ற கந்தர்வஸ்த்ரீ அவருக்குப் பணிவிடை செய்துகொண்டிருந்தாள். அவர் அதற்கு உகந்து "பெண்ணே! மங்களம் உண்டாகட்டும், நான் உனக்கு என்ன செய்யவேண்டும்?" என, அவள், "ஸ்வாமி! தாங்கள் மஹா தபஸ்வி; பிரஹ்மாவுக்கு ஸமானர்; பிரஹ்ம தேஜஸால் ஜ்வலிக்கிறீர்கள்; தங்களைப் போன்ற தேஜஸ்வியான புத்திரனை அடைய விரும்புகிறேன். எனக்கு இதுவரையில் விவாஹமாக வில்லை; ஒருவருடைய பார்யையும் அல்ல" என்று பிரார்த்தித்தாள். அவர் பிரஹ்மதத்தனென்ற புத்திரனை மனத்தால் ஸிருஷ்டித்து அவளுக்குக் கொடுத்தார். அவர் தேவராஜன் ஸ்வர்க்கத்தை ஆள்வதுபோல் காம்பில்யா நகரத்தில் அரசு புரிந்தார். அவருக்குத் தன் நூறு பெண்களை கன்யாதானம் செய்வதாக தர்மவானன குசநாபர் நிச்சயித்து, அவரை உபசாரத்துடன் அழைத்து, தன் புத்திரிகளை அவருக்குப் பாரியைகளாகக் கொடுத்தார்.

பிரஹ்மதத்தர் அவர்களை விதிப்படி பாணிக்கிரஹணம் செய்தார். மஹேந்திரனை ஒத்த ஐசுவரியமுடைய அந்த ராஜசிரேஷ்டர் அவர்களைத் தொட்டவுடன் தேகவிகாரம் நீங்கி உபத்திரவமின்றி அவர்கள் அளவற்ற காந்தியுடன் விளங்கினர்கள். வாயுவால் அவர்களுக்கு நேர்ந்த பீடை நீங்கினதாலும், ஸர்வோத்தமமான வரன் தனக்குக்கிடைத்ததாலும் குசநாபர் பரமானந்த மடைந்தார். தன் உபாத்யாயர்களுடன் பிரஹ்மதத்தரையும் தன் பெண்களையும் விசேஷ மரியாதையுடன் காம்பில்யைக்கு அனுப்பினர். ஸோமதை தன் மகனுக்குத் தகுந்தவிடத்தில் விவாஹமானதையும், தன் நாட்டுப் பெண்களின் ரூபலாவண்யத்தையும் செல்வத்தையும் குணங்களையும் நினைத்து நினைத்து அளவற்ற ஸந்தோஷ மடைந்

தாள். மிக்கப்ரீதியுடன் அவர்களை ஆலிங்கனம் செய்து அடிக்கடி தடவிக்கொடுத்து அவர்களின் பிதாவான குசநாபரைக் கொண்டாடினாள்.

யதா²ந்யாயம் ச க³ந்த⁴ர்வீ ஸ்நுஷாஸ் தா: ப்ரத்யநந்த³த |
த்³ருஷ்ட்வா ஸ்ப்ருஷ்ட்வா ச தா: கந்யா: குஶநாப⁴ம் ப்ரஶஸ்ய ச (26)

## ஸர்க்கம் 34

## விசுவாமித்திர வம்சம்

க்ருதோத்³வாஹே க³தே தஸ்மிந் ப்³ரஹ்மத³த்தே ச ராக⁴வ |
அபுத்ர: புத்ரலாபா⁴ய பௌத்ரீ மிஷ்டி மகல்பயத் ‖ (1)

இப்படி பிரஹ்மதத்தருக்குத் தன் புத்திரிகளை விவாஹம் செய்து கொடுத்த பிறகு குசநாபர், புத்திரனை அடைய விரும்பி புத்திர காமேஷ்டி செய்தார். அவருடைய பிதா குசர் வந்து "எவ்விதத்திலும் உனக்கு ஸமமான புத்திரனுண்டாவான். தர்மாத்மாவான அந்த காதி என்பவனால் லோகத்தில் அழியாத கீர்த்தியடைவாய்" என்று ஆசீர்வதித்து பிரஹ்மலோகம் சென்றார். சில காலத்திற்குப் பிறகு குசநாபருக்குக் காதி என்ற புத்திரன் பிறந்தார். அந்தப் பரம தர்மாத்மாவே என் பிதா. குச வம்சத்தில் பிறந்ததால் கௌசிகனென்று எனக்குப் பெயர். ஸத்யவதி என்று எனக்குத் தமக்கையுண்டு. அவள் ரிசீகருக்குப் பார்யை. அரிய விரதங்களின் மஹிமையாலும் பர்த்தாவுக்கு அனுகூலமாகச் செய்த பணிவிடையாலும் சரீரத்துடன் ஸ்வர்க்கத்திற்குப் போனாள். பிறகு ஸகல பிராணிகளின் க்ஷேமத்தை உத்தேசித்து ஹிமயமலையில் நதியாய்த் தோன்றினாள். அதன் ஜலம் புண்ய தீர்த்தம். அவளிடத்திலுள்ள பரமப்ரீதியால் அங்கே மலைத்தாழ்வரையில் வஸித்துக் கொண்டிருக்கிறேன். மஹா புண்யவதி. ஸத்தியத்திலும் தர்மத்திலும் நாடின மனமுள்ளவள். பதிவிரதாரத்தினம்; அபார மஹிமையுள்ளவள். ஒரு விரதத்தை அனுஷ்டிக்க அந்த நதியை விட்டு ஸித்தாசிரமத்திற்கு வந்தேன். உன் வீரிய மஹிமையால் என் எண்ணம் நிறைவேறிற்று. நீ கேட்டதால் இந்தத் தேச சரித்திரத்தையும் என் வம்சத்தையும் சொன்னேன்.

"இரவில் விழித்துக்கொண்டிருக்க வேண்டிய முன்பாகத்தை இப்படிக் கதைகளால் கழித்தோம். இனி நித்திரை செய்யப் போ; ஸகல மங்களங்களும் உண்டாகட்டும். இதற்குமேல் விழித்துக் கொண்டிருந்தால் நாளை வழிநடப்பில் சிரமமுண்டாகும். அதோ பார்! மரங்கள் அசையவில்லை; மிருகங்களும் பக்ஷிகளும் தங்களிடங்களில் ஸுகமாகத் தூங்குகின்றன. இருட்டால் திக்குகள் மூடப்பட்டிருக்கின்றன. ஸந்தியா காலம் மெதுவாகப் போய் விட்டது. ஆகாசத்தில் அசுவினி முதலிய நக்ஷத்திர கணங்களும்



ஸாதாரண நக்ஷத்திரங்களும் காந்தியுள்ள நேத்திரங்களைப்போல் தோன்றுகின்றன. சந்திரன் கிரணங்களால் இருட்டைப்போக்கி, ஸகலப் பிராணிகளுடைய மனத்தையும் ஸந்தோஷிக்கச்செய்து கொண்டு உதிக்கிறான். கோட்டான் முதலிய இரவில் ஸஞ்சரிக்கும் ஜந்துக்களும், மாம்ஸத்தைப் புஜிக்கும் பயங்கரமான யக்ஷர்களும் ராக்ஷஸர்களும், ஸஞ்சரிக்கிறார்கள்" என்றார். மற்ற ரிஷிகள், "நல்லது, நல்லது; குசிக வம்சம் எப்பொழுதும் தர்மத்திலேயே நோக்கமுள்ளது. அதில் பிறந்த புருஷ சிரேஷ்டர்கள் மஹாத்மாக்கள்; பிரஹ்மாவுக்கு ஸமானர்கள். அவர்களில் விசுவாமித்திரரென்ற தாங்கள் மஹாகீர்த்திசாலி. கௌசிகி என்ற புண்ய நதி தங்களுடைய குலதீபம்" என்று பலவிதமாய்க் கொண்டாடினார்கள். பிறகு ஸூரியன் அஸ்தமிப்பதுபோல் கௌசிகர் நித்திரை செய்தார். ராஜ புத்திரர்களான ராமலக்ஷ்மணர்களும் அவரைக் கொண்டாடித் தாங்கள் கேட்ட புண்ணிய கதையால் ஆச்சரியமடைந்து தூங்கினார்கள்.

ராமோபி ஸஹஸௌமித்ரி: கிஞ்சி தா³க³த விஸ்மய: |
ப்ரஶஸ்ய முநிஶார்தூ³லம் நித்³ராம் ஸமுபஸேவதே ‖ (23)

## ஸர்க்கம் 35

## கங்கை

உபாஸ்ய ராத்ரிஶேஷம் து ஶோணாகூலே ஸமாஹித: |
நிஶாயாம் ஸுப்ரபா⁴தாயாம் விஶ்வாமித்ரோ ப்⁴யபா⁴ஷத ‖ (1)

### அவதாரிகை

தம் திருவடிகளிலிருந்து உண்டான கங்கையின் மஹிமையை ராமன் லோகத்தாருக்குத் தெரிவிக்கிறார்.

அன்றிரவில் கௌசிகர் ரிஷிகளுடன் அந்த நதிக்கரையில் தங்கி, காலையில் ராமனை அழைத்து, "ராத்திரி முடிந்தது. ஸந்தியாகாலத்தின் முன்பாகம் நடக்கிறது, எழுந்திரு. பிரயாணத்திற்கு ஸித்தமாக வேண்டும்" என்றார். உடனே ராஜ புத்திரர்கள் எழுந்து, நித்திய கர்மங்களை முடித்து, "ஸ்வாமி! இந்த நதியின் ஜலம் மிகவும் ரமணீயமாய் அதிக ஆழமின்றி மணல் திட்டுகளால் விளங்குகிறது. இதைத் தாண்ட ஓடம் வேண்டியதில்லை. எந்த வழியாகப் போக வேண்டும்?" என்றார். மஹரிஷி "அதோ ரிஷிகள் போகும் மார்க்கமே என்னால் குறிக்கப்பட்டது" என்றார். எல்லோராலும் அந்த நதியைத் தாண்டி வெகு தூரம் நடந்து, நடுப்பகலில், தபஸ்விகளால் நிறைந்த கங்கைக் கரைக்கு வந்து, புண்ய நதியைத் தரிசித்து ஸந்தோஷித்து, அந்தப் பாபநாசகமான சுப ஜலத்தில் ஸ்நானம் செய்து, தேவரிஷி பித்ரு தர்ப்பணங்களை விதிப்படி செய்து,

பஞ்ச மஹாயக்ஞத்தையும் அக்னி ஹோத்திரத்தையும் முடித்து, அமிருதத்தைப் போன்ற ஹவிஸைப் புஜித்தார்கள். அன்னம் முதலிய நீர்ப்பறவைகளால் நிறைந்த கங்கைக்கரையில் சுத்தமான இடத்தில் கௌசிகரைச் சூழ்ந்து எல்லோரும் உட்கார்ந்தார்கள். அப்பொழுது ராமன் அவரை வணங்கி, "ஸ்வாமி! இந்தக் கங்கை எப்படி உண்டாயிற்று? 'த்ரிபதகா' என்று இதற்கு எப்படிப் பெயர் கிடைத்தது? மூவுலகிலும் வியாபித்து எப்படி ஸமுத்திரத்தை அடைந்தது? கிருபை செய்து சொல்லவேண்டும்" என்றார்.

கௌசிகர் மகிழ்ந்து "ராம! பர்வதராஜனும் ஸகல தாதுக்களும் உண்டாகும் இடமுமான ஹிமவான், மேருவின் புத்திரியான மனோரமையிடத்தில் கங்கை உமை என்ற நிகரற்ற பெண்களைப் பெற்றார். அவர்கள் ரூபலாவண்யத்தாலும் நற்குணங்களாலும் யாவரையும் மிஞ்சினவர்கள். தேவர்கள் தங்களுடைய ஸ்நானபானம் ஆராதனை முதலிய காரியங்களுக்கும், தங்களுக்கு ஒரு ஸேனாபதி உண்டாவதற்கும் மூத்த பெண்ணான கங்கையைக் கொடுக்கும்படி ஹிமவானை வேண்டினார்கள். லோகங்களின் க்ஷேமத்தை உத்தேசித்தும், கேட்பவருக்கு இல்லையென்று சொல்லக்கூடாதென்ற தர்மத்தாலும் அவர், லோகங்களைப் பரிசுத்தம் செய்யக்கூடியவளும் எவ்விடத்திலும் இஷ்டப்படி போகக்கூடியவளுமான கங்கையை அவர்களுடன் அனுப்பினார். லோகோபகார காரியம் முடிந்ததென்று தேவர்கள் ஸந்தோஷித்து அவளை ஸ்வர்க்கத்திற்கு அழைத்துப் போனார்கள். இளையவள் பரமசிவனைக் கணவனாய் அடைய விரும்பி, கடுந்தவத்தால் அவரை ஸந்தோஷப்படுத்தினாள். ஹிமவான் அவளைப் புருஷோத்தமனான மஹாதேவனுக்கு விவாஹம் செய்வித்தார். அவள் ஸகல லோகங்களாலும் கொண்டாடப் பெற்றவள். சங்கரன் எந்த விதத்திலும் அவளுக்குத் தகுந்தவர். பர்வதராஜனுடைய இவ்விரண்டு குமாரிகளும் ஸகல ஜீவகோடிகளின் பூஜைக்குப் பாத்திரமானவர்கள்.

ராம! கங்கையின் உத்பத்தியையும் அவள் ஸ்வர்க்கலோகத்திற்குப் போனதையும் நீ கேட்டபடி சொன்னேன். இந்த தேவநதி, தேவலோகத்திற்குப் போய் ஸகல பாபங்களையும் போக்கிப் புண்ணியத்தை அருளினாள்" என்று சொல்லி முடித்தார்.

ஸைஷா ஸு॒ரநதீ [3]ரம்யா ஸை॒லேந்த்[3]ரஸ்ய ஸு॒தா ததா[3] |
ஸு॒ரலோகம் ஸமாரூடா[4] விபாபா ஜலவாஹிநீ ‖ (25)

---



## ஸர்க்கம் 36

# ஸ்கந்த ஜனனம்

உக்தவாக்யே முநௌ தஸ்மிந் நுபௌ[4] ராக[4]வ லக்ஷ்மணௌ |
அபிநந்த்[3]ய கதா[2]ம் வீரா வூசதுர் முநிபுங்க[3]வம் ‖ (1)

ராம லக்ஷ்மணர்கள் அந்தப் புண்ணிய சரித்திரத்தை மிகவும் கொண்டாடி, "முனிசிரேஷ்ட! தர்மத்தைக் கொடுக்கும் இந்த உபாக்யானத்தைத் தாங்கள் தயவு செய்து சொன்னீர்கள். ஆனால், பர்வதராஜனுடைய மூத்த புத்திரியின் விருத்தாந்தத்தை விஸ்தாரமாகச் சொல்லவேண்டும். த்ரிபதகா என்ற பெயர் பெற்ற கங்கை, பூலோகம் புவர்லோகம் ஸு॒வர்லோகங்களுக்குச் சென்ற காரணமென்ன? அவள் பூமிக்கு எப்படி வந்தாள்? எந்தச் செய்கையால் ஸகல நதிகளுக்கும் சிரேஷ்டமானாள்?" என்று கேட்டார்கள். அப்பொழுது கௌசிகர் அந்தச் சரித்திரம் முழுவதையும் ரிஷிகளுக்கும் ராம லக்ஷ்மணர்களுக்கும் விஸ்தாரமாகச் சொன்னார்.

முன்காலத்தில் நீலகண்டர் பார்வதியை விவாஹம் செய்து, மஹா தபஸ்வியானாலும் அவளைப் பார்த்து ஆசைகொண்டு அவளிடத்தில் புத்திரனை உண்டுபண்ண நினைத்தார். நூறு தேவ வருஷங்களாகியும் புத்திரோத்பத்திக்குக் காரண முண்டாகவில்லை. பிரஹ்மாதி தேவர்கள் அதைக் கண்டு பயந்து, "இவ்வளவு காலத்திற்குப் பிறகு பார்வதியிடத்தில் புத்திரனுண்டானால் அதை யாரால் தாங்கமுடியும்" என்று கவலைகொண்டு, சிவபிரானை நமஸ்கரித்து, "மஹாதேவ! லோகங்களுக்கு எப்பொழுதும் மங்களத்தைச் செய்வதிலேயே கவலையுள்ள சிவ! தேவர்கள் தங்களை நமஸ்கரிக்கிறோம். கிருபை செய்யவேண்டும். தங்களுடைய தேஜஸிலிருந்து உண்டாகும் புத்திரனை லோகங்கள் தாங்குமா? அவைகளுக்குப் பரம க்ஷேமத்தை விரும்பும் தாங்கள், பார்வதியுடன் வேதங்களால் கொண்டாடப்பட்ட தவத்தைச் செய்யவேண்டும். தேவியிடத்தில் புத்திரனை உண்டாக்கக்கூடாது. தங்களுடைய தேஜஸை தேஜோமயமான சரீரத்தில் அடக்கிக்கொள்ள வேண்டும். வெளியில் விட்டால் லோகங்கள் நாசமடையும். அப்படிச் செய்வது தங்களுக்குத் தர்மம்" என்று வேண்டிக் கொண்டார்கள்.

ஸதாசிவன் அவர்களுடைய பிரார்த்தனைக் கிணங்கி "அப்படியே செய்கிறேன்; நானும் உமையும் இதுவரையில் கலங்கி வெளிப்படாத தேஜஸை எங்களுடைய சரீரங்களில் தரிக்கிறோம். ஸகல லோகங்களும் க்ஷேமத்தை அடையட்டும். ஆனால், இதுவரையில் இடத்தை விட்டு நழுவின தேஜஸைத் தரிப்பதற்கு எவரை ஏற்படுத்துகிறீர்கள்?" என்றார். அதற்கு தேவர்கள், "ஸகலத்தையும் தரிக்கும் பூமியைத் தங்களுடைய தேஜஸைத் தரிக்கும்படி கேட்டுக்கொண்டிருக்கிறோம்" என்றார்கள். பிறகு

சங்கரன் தன் தேஜஸை பூமியில் விட்டார். அதனால் காடு மலை நதி ஏரி நாடு நகரங்களுள்ள பூமி வியாபிக்கப்பட்டது. தேவர்கள் அக்னியைப் பார்த்து, "தேவ! பூமி ஒருவளே இதைத் தாங்க முடியாதென்று தோன்றுகிறது; சீக்கிரத்தில் வெடித்துப் போவாள். ஆகையால் நீயும் வாயுவும் ருத்ரனுடைய தேஜஸில் பிரவேசியுங்கள்" என்று அடிக்கடி பிரார்த்தித்து, அக்னி, வாயு இவர்களின் பயத்தைத் தீர்த்து ஸம்மதிக்கச் செய்தரார்கள். அக்னியால் வியாபிக்கப்பட்ட அந்த தேஜஸ் வெண்மையான பர்வதமாயிற்று. வெகுகாலம் கழித்து அதில் ஸூரியனைப் போலவும் அக்னியைப் போலவும் காந்தியுள்ள ஓர் நாணற்காடு உண்டாயிற்று. அங்கே மஹா தேஜஸ்வியான ஸ்கந்தர் அக்னிக்கும் கிருத்திகைகளுக்கும் புத்திரனாய் அவதரித்தார்.

இப்படித் தங்களுடைய காரியம் நிறைவேறினதால் தேவர்கள் ஸந்தோஷமடைந்து, பார்வதி பரமேசுவரர்களின் எண்ணத்திற்கு விக்னம் செய்ததால் அவர்களுக்குண்டான கோபத்தைத் தணிப்பதற்காக ஸ்தோத்திரம் செய்தார்கள். பார்வதி அதனால் சாந்தமடையாமல் "நீங்கள் எனக்குப் பிரியமில்லாத காரியத்தைச் செய்தபடியால் அதன் பலனை அனுபவியுங்கள்" என்று, ஜலத்தை எடுத்துக் கடுங்கோபத்தால், கண்கள் சிவக்க, "நான் புத்திரனை அடைவதற்காகச் செய்த பிரயத்னத்தை நீங்கள் கெடுத்தபடியால், இன்று முதல் உங்களுடைய பத்தினிகளிடத்தில் புத்திரர்களை உண்டாக்க மாட்டீர்கள். இன்று முதல் உங்களுடைய பார்யைகளுக்குப் புத்திரபாக்ய மில்லாமற் போகட்டும்" என்று சபித்தாள். பிறகு பூமிதேவியைப் பார்த்து, "நீயும் இந்தக்காரியத்திற்கு ஸஹாயமாக இருந்தபடியால் அநேக ரூபங்களை அடையக் கடவாய்; அநேகர்களுக்குப் பாரியை ஆகக் கடவாய். எனக்குப் புத்திரனுண்டாவதைத் தடுத்ததால் என் கோபத்திற்குப் பாத்திரமாகி, புத்திரனாலுண்டாகும் பிரீதியை அடையாமலிருக்கக் கடவாய்" என்று சபித்தாள்.

இப்படிச் சாபத்தால் வெட்கமடைந்து வருந்தும் தேவர்களைப் பார்த்து ருத்திரன் சகிக்காமல், ஹிமயமலையின் வடமேற்கு பாகத்தில் சென்று, பார்வதியுடன் கடுமையான தவம் செய்து கொண்டிருந்தார். ராம! பர்வதராஜனுடைய இளைய புத்திரியான பார்வதியின் விருத்தாந்தத்தை விஸ்தாரமாகச் சொன்னேன். இது இனி சொல்லப்போகும் கங்கையின் மாஹாத்மிய சரித்திரத்திற்கு உபயோகமானது. அதைச் சொல்லுகிறேன் கேள்.

ஏஷ தே விஸ்தரோ ராம. சைலபுத்ர்யா நிவேதி³த: |
க³ங்கா³யா: ப்ரப⁴வம் சைவ ஶ்ருணு மே ஸஹலக்ஷ்மண: ‖ (28)

---



## ஸர்க்கம் 37

## ஸ்கந்த ஜனனம் (தொடர்ச்சி)

தப்யமாநே தபோ தே³வே தே³வா: ஸர்ஷிக³ணா: புரா |
ஸேநாபதி மபீ⁴ப்ஸந்த: பிதாமஹ முபாக³மந் ‖ (1)

இப்படிச் சங்கரன் தேவர்களுக்கு ஸேனாதிபதியாகாமல் கேவலம் தவத்தில் மனத்தைச் செலுத்தினதைக் கண்டு, இந்திராதி தேவர்கள் பிரஹ்மாவை நமஸ்கரித்து, "எங்களுக்கு ஸேனாதிபதியாக இருக்கத் தாங்கள் அருளின மஹாதேவன், எங்களைக் கவனிக்காமலும் சத்துருக்களினின்று ரக்ஷிக்காமலும் ஹிமயமலைச்சாரலில் கடும் தவம் செய்கிறார். ஆகையால் இனிச் செய்ய வேண்டியதை ஆலோசிக்க வேண்டும். அவரையாவது வேண்டி அழைத்து வாருங்கள், அல்லது வேறொருவரையாவது ஏற்படுத்துங்கள். லோகங்களுக்கு ஹிதத்தைச் செய்வதே தங்களுடைய கவலையல்லவா? எல்லாம் அறிந்த தாங்களே எங்களுக்குக் கதி" என்று பிரார்த்தித்தார்கள்.

பிரஹ்மா மதுரமான வார்த்தைகளால் தேவர்களை ஸமாதானம் செய்து, "உங்களுக்குப் பார்யைகளிடத்தில் ஸந்ததி உண்டாகாதென்று பார்வதி சபித்ததை மாற்றமுடியாது. அது அப்படியே நடக்கும். இந்த ஆகாச கங்கையிடத்தில் அக்னியாலுண்டாகும் புத்திரனே உங்களுக்கு ஸேனாதிபதியாவான். பார்வதிக்குத் தமக்கையாகையால் அவள் அந்தப் புத்திரனைத் தரித்துப் பிரியத்துடன் வளர்ப்பாள். அதற்கு உமையும் ஸந்தோஷத்துடன் ஸம்மதிப்பாள்" என்றார். தேவர்கள் பரம பிரீதியுடன் பிரஹ்மாவைப் பூஜித்து, கைலாஸ பர்வதத்திற்குப் போய் அக்னியை அழைத்து "இந்த தேவகாரியத்தை நீயே முடிக்க வேண்டும், பரமசிவனுடைய தேஜஸைத் தாங்கி கங்கையிடத்தில் விடு" என்றார்கள். அக்னி அதற்கிணங்கி, கங்கையைப் பார்த்து "நீ இந்த கர்ப்பத்தைத் தரிக்க வேண்டும். இது தேவர்களுக்குப் பிரியமான காரியம்" என்றான். அவள் ஸம்மதித்துத் திவ்யமான ஸ்த்ரீ ரூபத்தைத் தரித்தாள். அதைக் கண்ட அவன் புத்திமயங்கித் தன் ஸகல அவயவங்களிலிருந்தும் அவளுடைய ஸகல அவயவங்களிலும் ருத்திர தேஜஸை விட்டான். அதனால் கங்கையின் ஸகல உபநதிகளும் நிறைந்தன. ஆனால், அவள் அதைத் தரிக்க முடியாமல் எரிக்கப்பட்டு மிகவும் வருந்தி, "தேவ சிரேஷ்டா! தேவ புரோஹிதா! அக்னி தேவா! உன்னிடத்திலிருந்து பெற்ற தேஜஸை என்னால் தாங்க முடியாது" என்று முறையிட்டாள். "அப்படியானால் ஹிமயமலையின் அடிவாரத்தில் அந்த கர்ப்பத்தை விடுவாய்" என்று அக்னி சொன்னான். உடனே அவள் ஸகல நதிகளிலிருந்தும் அந்தக் கர்ப்பத்தை இழுத்து அக்னியால் எரிக்கப்பட்டு வெண்மையான மலையாயிருக்கும் ருத்திரனுடைய தேஜஸில் விட்டாள். அவ

ளுடைய தேகத்திலிருந்து வெளிப்பட்ட ரத்தம், உருக்கி ஓடவிட்ட ஜாம்பூநத மென்ற தங்கமாயும் வெள்ளியாயும், க்ஷாரமான பாகங்கள் கறுத்த இரும்பாயும் தாமிரமாயும், அழுக்கு வஸ்துக்கள் தகரமாயும் ஈயமாயும் பரவி லோகத்தில் பல தாதுக்களாய் வழங்கின. அது முதல் அக்னியைப் போல் ஒளியுள்ள தங்கத்திற்கு ஜாதரூபமென்று பெயர் விளங்கிற்று. மரம், செடி, கொடி, புதர், புல் பூண்டு யாவும் தங்கமாயிற்று. இப்படி அவதரித்த அந்தக் கர்ப்பத்தை இந்திராதி தேவர்கள் கண்டு மகிழ்ந்து, கிருத்திகைகளைப் பால் கொடுக்க நியமித்தார்கள். "இவன் எங்கள் புத்திரனாகக் கடவான்" என்று அவர்கள் தேவர்களிடத்தில் ஏற்பாடு செய்து கொண்டு பால்கொடுத்து வளர்த்து வந்தார்கள். அவர்கள் "இந்தக் குழந்தை உங்களால் வளர்க்கப் பட்டபடியால் கிருத்திகைகளின் புத்திரன் 'கார்த்திகேயன்' என்று லோகங்களில் போற்றப் படுவான். ஸந்தேகமில்லை" என்றார்கள். பிறகு அந்தத் தாய்கள் கர்ப்பமலங்களுடன் பிறந்த அந்தக் குழந்தைக்கு ஸ்நானம் செய்வித்தார்கள். அது அக்னியைப்போல் நிகரற்ற காந்தியுடன் விளங்கிற்று. கர்ப்பத்திலிருந்து விழுந்ததால் 'ஸ்கந்தன்' என்றும், கிருத்திகைகளால் வளர்க்கப்பட்டதால் 'கார்த்திகேயன்' என்றும் அதற்குப் பெயரிட்டார்கள். அப்பொழுது அந்த ஆறு கிருத்திகைகளுக்கும் பாலுண்டாயிற்று. அந்தக் குழந்தை ஆறு முகங்களை எடுத்துக் கொண்டு அதைக் குடித்தது. ஒரே நாளில் திவ்விய புருஷனாய் வளர்ந்து தன் வீரியத்தால் தைத்ய ஸைன்யங்களை ஜயித்தது. பிறகு அக்னி முதலிய தேவர்கள் அவரைத் தங்களுக்கு ஸேனாதிபதியாய் அபிஷேகம் செய்தார்கள்.

"ராம! நீ கேட்டபடி கங்கையின் வரலாற்றையும் ஸ்கந்தருடைய பிறப்பையும் விஸ்தாரமாகச் சொன்னேன். இந்தப் புண்ய சரித்திரத்தைப் பக்தியுடன் கேட்கிறவனும், குமாரஸ்வாமியிடத்தில் பக்தி வைப்பவனும், இவ்வுலகில் புத்திர பௌத்திரர்களுடன் சுகமாய் வெகுகாலம் வஸித்து, முடிவில் ஸ்கந்தருடைய லோகத்தை அடைவார்கள்" என்றார்.

ப4க்தஶ்ச ய: கார்திகேயே காகுத்ஸ்த2 பு4வி மாநவ: |
ஆயுஷ்மாந் புத்ரபௌத்ரைஶ்ச ஸ்கந்த3 ஸாலோக்யதாம் வ்ரஜேத் ‖ (34)

---

## ஸர்க்கம் 38

## ஸகரன்

தாம் கதா2ம் கௌஶிகோ ராமே நிவேத்3ய குஶிகாத்மஜ: |
புநரேவாபரம் வாக்யம் காகுத்ஸ்த2 மித3 மப்3ரவீத் ‖ (1)

ஆகாசத்தில் கங்கை உண்டானதைத் தெரிவித்து அவள் மனுஷ்ய லோகத்தில் வந்ததை கௌசிகர் சொல்ல ஆரம்பித்தார். 'ராம! முன் காலத்தில் ஸகரனென்ற அரசன் அயோத்யையில்



ஆண்டுவந்தான், மஹா சூரன், தர்மாத்மா, வெகுகாலம் புத்திரனில்லாமல் வருத்தமடைந்தான். விதர்ப்ப ராஜகுமாரியான கேசினி அவனுடைய மூத்த பார்யை; தர்மபுத்தியுள்ளவள்; ஸத்தியம் பேசுகிறவள். காசியபருடைய பெண்ணான ஸுமதி இளைய பாரியை; அழகில் நிகரற்றவள். ஹிமயமலைச் சாரலில் பிருகுப் பிரஸ்ரவணம் என்ற புண்ணிய ஸ்தலத்தில் ஸகரன் பார்யைகளுடன் புத்திரனுக்காகத் தவம் செய்தான். நூறு வருஷங்களுக்குப் பிறகு பிருகுமுனி அவனுடைய தவத்தை மெச்சி, "புத்திரோத்பத்திக்கு விக்கினமான பாபங்கள் விலகின. உத்தம புத்திரர்களையும் நிகரற்ற கீர்த்தியையும் அடைவாய்; உன் பார்யைகளில் ஒருத்திக்கு உன் வம்சத்தை விருத்தி செய்யும் ஒரே புத்திரன் பிறப்பான். மற்றொருத்திக்கு அறுபதாயிரம் புத்திரர்கள் பிறப்பார்கள்" என்றார். அவர் வார்த்தை பொய்யாகுமா? ராஜ குமாரிகள் அவரைப் பணிந்து கைகூப்பிப் பரமப் பிரியத்துடன் ஸ்வாமி! எங்களில் யாருக்கு ஒரே புத்திரன் பிறப்பான்? யாருக்குப் பலர் பிறப்பார்கள்? தங்களுடைய அனுக்ரஹம் நிஜமாகட்டும். அறிய விரும்புகிறோம்" என்றார்கள். பிருகு பரம தார்மிகரானதால் "உங்களிஷ்டப்படி செய்கிறேன். இதில் ஒரு நியமமும் இல்லை. வம்சத்தை விருத்தி செய்யும் ஒரே புத்திரனாவது, பலம் பராக்கிரமம், கீர்த்தி, எல்லையற்ற உத்ஸாஹம் பொருந்தின பல புத்திரர்களாவது யாருக்கு வேண்டும்" என்றார். கேசினி ஒரே புத்திரனையும், ஸுமதி பலரையும் பிரார்த்தித்தார்கள். பிறகு அரசனும் பார்யைகளும் பிருகுவைப் பிரதக்ஷிண நமஸ்காரம் செய்து, உத்தரவு பெற்று அயோத்யைக்கு வந்தார்கள். கேசினிக்கு அஸமஞ்ஜன் என்ற ஒரு புத்திரனும், ஸுமதிக்கு வட்டமான மாம்ஸபிண்டமும் பிறந்தன. அந்தப் பிண்டத்தைப் பிளந்து பார்க்கையில் அறுபதாயிரம் புத்திரர்கள் வெளியில் வந்தார்கள். தாதிகள் அவர்களை நெய்க்குடங்களில் வைத்து வளர்க்க, அவர்கள் யௌவனமடைந்து, அழகிலும் பல பராக்கிரமத்திலும் நிகரற்று விளங்கினார்கள். மூத்தவனான அஸமஞ்ஜன் நகரத்திலுள்ள குழந்தைகளைப் பிடித்து ஸரயூஜலத்தில் போட்டு அவர்கள் முழுகும் பொழுது படும் உபத்திரவங்களைப் பார்த்துச் சிரித்துக்கொண்டிருந்தான். இப்படி ஜனங்களுக்குக் கெடுதிசெய்து ஸாதுக்களை உபத்திரவிக்கும் அந்தப் பாபியை ஸகரன் ராஜ்யத்திலிருந்து துரத்திவிட்டான். (இவன் மஹா யோகி. லோக வாழ்க்கையை விலக்குவதற்காக இப்படி வேஷம் போட்டான். பிறகு காணமற்போன குழந்தைகளைப் பிழைக்கச் செய்தான்). அவனுடைய புத்திரனான அம்சுமான் எல்லோருக்கும் பிரியனும் எல்லோரிடத்திலும் பிரியமாகப் பேசுகிறவனுயும் இருந்தான். வெகு காலம் கழித்து யாகம் செய்ய விரும்பி, உபாத்தியாயர்களையும் ரித்விக்குகளையும் முன்னிட்டு அசுவமேதத்தை ஆரம்பித்தான்" என்றார்.

ஸ க்ருத்வா நிஶ்சயம் ராஜா ஸோபாத்4யாய க3ணஸ்ததா3 |
யஜ்ஞகர்மணி வேதஜ்ஞோ யஷ்டும் ஸமுப சக்ரமே ‖ (24)

## ஸர்க்கம் 39
# ஸகரனுடைய யாகம்

விச்வாமித்ர வச: ஶ்ருத்வா கதா²ந்தே ரகு⁴நந்த³ந: |
உவாச பரம ப்ரீதோ முநிம் தீ³ப்த மிவாநலம் ‖ (1)

பிரஹ்மதேஜஸால் அக்னியைப்போல் ஜ்வலிக்கும் விசுவாமித்திரர் இப்படிச் சொல்ல, ராமன் வெகு ஸந்தோஷத்துடன் "ஸ்வாமி, இதை, விஸ்தாரமாகக் கேட்க விரும்புகிறேன். என் முன்னோரான ஸகரர் யாகம் செய்த விதத்தைச் சொல்ல வேண்டும்" என்றார். "நாம் சொல்லப்போவதை இவர் எவ்வளவு ஆவலுடன் கேட்கிறார். ஒன்றும் தெரியாதவரைப்போல் காட்டுகிறாரே" என்று சிரித்துக்கொண்டு, முனிவர் "ராம! கேள். ஸகரனுடைய சரித்திரத்தை விஸ்தாரமாகச் சொல்லுகிறேன். சங்கரனுக்கு மாமனாரும் பர்வதராஜனுமான ஹிமவானும் அதற்குத் தெற்கிலுள்ள விந்தியமும் தடையின்றி ஒன்றையொன்று பார்த்துக்கொண்டிருக்கின்றன. அவைகளுக்கு நடுவிலுள்ள தேசம் யக்ஞங்களைச் செய்யத் தகுந்த புண்ய பூமி. அங்கே ஸகரன் யக்ஞம் செய்தான். அம்சுமானென்ற மஹாரதன் யாகக் குதிரையைக் காப்பாற்ற நியமிக்கப்பட்டான். உக்த்ய தினத்தில் இந்திரன் ராக்ஷஸ ரூபத்துடன் அதைக் கொண்டுபோனான். ரித்விக்குகள் "அரசனே! இந்தத் தினத்தில் யாகக் குதிரை காணுமற் போயிற்றே. அதைத் திருடினவனைக் கொன்று குதிரையைக் கொண்டுவர வேண்டும். யாகத்தில் இந்தவிதமான அபராதம் நேர்ந்தால் நம்மெல்லோர்க்கும் கெடுதியுண்டாகும்; தகுந்த ஏற்பாடு செய்யும்" என்றார்கள். ஸகரன் அறுபதாயிரம் புத்திரர்களை அழைத்து, "குழந்தைகளே! ஞானத்திலும் ஆசாரத்திலும் சக்தியிலும் மேலானவர்களே இந்த யாகத்தை நடத்துகிறார்கள். ரக்ஷோக்னம் முதலிய மந்திரங்கள் விதிப்படி ஜபிக்கப்படுவதால் ராக்ஷஸர்கள் இங்கே வர நியாயமில்லை. ஆகையால் இந்தப் பூமியில் ஓரிடம் பாக்கியின்றி தேடுங்கள். ஒவ்வொரு யோஜனையையும் ஜாக்கிரதையாய்த் தேடிப் பாருங்கள். அப்படியும் காணவிட்டால் குதிரையும் திருடனும் கிடைக்கும்வரையில் பூமியை வெட்டிப்பாருங்கள். நான் யாக தீக்ஷை பெற்றிருப்பதால் உங்களுடன் வரமுடியாது. குதிரையைக் கொண்டுவரும் வரையில் நானும் அம்சுமானும் ரித்விக்குகளும் இங்கே இருக்கிறோம். போய் வாருங்கள்" என்றார்.

அந்த ஸகர புத்திரர்கள் பிதாவின் உத்தரவுப்படி ஒவ்வொரு யோஜனையாய்ப் பூமியைத் தேடினார்கள். குதிரையைக் காணவில்லை. வஜ்ரம்போன்ற நகங்களாலும் இடிகளைப் போன்ற சூலங்களாலும் பயங்கரமான கலப்பைகளாலும் பூமியைப் பிளந்தார்கள். அப்பொழுது அவர்களால் கொல்லப்பட்ட நாகர்களும் அஸுரர்களும் ராக்ஷஸர்களும் மற்ற பிராணிகளும் பெருங்கூச்சலிட்டார்கள். இந்த ஜம்பூத்வீபத்தை இப்படி அறுபதாயிரம் யோஜனை தூரம் ரஸாதலம் வரையில் வெட்டிப் பார்த்தார்கள். தேவ கந்தர்வ அஸுர பன்னக யக்ஷகணங்கள் நடுங்கிப் பயந்து, இதென்ன விபரீதமென்று வாடின முகத்துடன் பிரஹ்மாவிடத்திற்குப் போய், "ஸ்வாமி! ஸகரபுத்திரர்கள் பூமியை வெட்டிப் பிளக்கிறார்கள். ரஸாதலத்திலுள்ள பல மஹாத்மாக்களைக் கொல்லுகிறார்கள். 'யக்ஞத்தைக் கெடுத்தவன் இவனே; குதிரையைக் கொண்டுபோனவன் இவனே' என்று எல்லா ஜந்துக்களையும் அழிக்கிறார்கள்" என்று முறையிட்டார்கள்.



அயம் யஜ்ஞஹரோ ஸ்மாகம் அநேநாஶ்வோ பநீயதே |
இதி தே ஸர்வ பூ⁴தாநி ஹிம்ஸந்தி ஸக³ராத்மஜா: ‖ (28)

## ஸர்க்கம் 40
# ஸகர புத்திரர்கள் அழிக்கப்பட்டது

தே³வ தாநாம் வச: ஶ்ருத்வா ப⁴க³வாந் வை பிதாமஹ: |
ப்ரத்யுவாச ஸுஸந்த்ரஸ்தாந் க்ருதாந்தப³ல மோஹிதாந் ‖ (1)

யமனைப்போன்ற ஸகரபுத்திரர்களின் பலத்தாலும் கோபத்தாலும் பயந்து நடுங்கும் தேவர்களை பிரஹ்மா ஸமாதானம் செய்து "இந்தப்பிரபஞ்சத்தை ஸிருஷ்டித்த வாஸுதேவனை பரமபுருஷன் கபில மஹரிஷியாக இருந்து இதை ரக்ஷித்து வருகிறார். அவருடைய கோபாக்னி ஸகர புத்திரர்களை எரிக்கும். பூமி இப்படி வெட்டப்படுவதும் ஸகர புத்திரர்கள் அல்பாயுக்களாய் அழிவதும் ஒவ்வொரு கல்பத்திலும் நடக்க வேண்டிய விஷயங்களே" என்றார். தேவர்கள் அதைக் கேட்டு ஆறுதலடைந்து திரும்பிச் சென்றார்கள்.

ஸகரபுத்திரர்கள் பூமியைப் பிளக்கும் சப்தம் இடிவிழுவது போல் கேட்கப்பட்டது. அப்படியும் யாகக் குதிரையைக் காணாமல் அவர்கள் அரசனிடத்தில் வந்து, "ஸ்வாமி! பூமியில் ஓரிடம் விடாமல் தேடினோம், வெட்டிப் பார்த்தோம். தேவ தானவ ராக்ஷஸ பிசாச உரக கின்னர கணங்கள் முதலிய மஹா பலசாலிகளை நாசம் செய்தோம். குதிரையையாவது அதைக் கொண்டுபோனவனை யாவது காணவில்லை. இனி என்ன செய்யட்டும்" என்றார்கள். ஸகரன் வெகு கோபங்கொண்டு, "இன்னும் வெட்டுங்கள், இன்னும் தேடுங்கள். குதிரையையும் அதைக் கொண்டுபோனவனையும் எப்படியாவது கண்டுபிடித்து வாருங்கள்" என்று கட்டளையிட்டான்.

அவர்கள் ரஸாதலத்திலிருந்து வெட்டிக்கொண்டே போனார்கள். அங்கே விரூபாக்ஷனென்ற திக்கஜம் பர்வதத்தைப்போல் பூமியையும் அதிலுள்ள மலை நதி முதலியவைகளையும் தாங்கிக்கொண்டிருப்பதைக் கண்டார்கள். பருவகாலங்களில் சிரமத்தைப்போக்க

அது தலையை அசைக்கும்பொழுது பூகம்பம் உண்டாகிறது. அதைப் பிரதக்ஷிணம் செய்து பூஜித்து அவர்கள் அப்பால் வெட்டிக் கொண்டே போகையில் தெற்கில் மஹா பத்மமென்ற திக்கஜம் பூமியைத் தாங்கிக்கொண்டிருப்பதைக் கண்டார்கள். அதைப் பிரதக்ஷிணம் செய்து பூஜித்து, மேற்கு திக்கில் வெட்டிக்கொண்டே போகையில் ஸௌமனஸமென்ற திக்கஜம் பெரிய மலையைப்போல் பூமியைத் தாங்கிக்கொண்டு நிற்பதைக் கண்டார்கள். அதையும் பிரதக்ஷிணம் செய்து க்ஷேமம் விசாரித்து அப்பால் வடக்கே வெட்டிக்கொண்டு போகையில் பனிக் கட்டிபோல் வெண்ணிறமான பத்ர மென்ற திக்கஜம் பூமியைத் தாங்கிக்கொண்டு நிற்பதைக் கண்டார்கள். அதையும் தடவிக்கொடுத்து, பிரதக்ஷிண நமஸ்காரம் செய்து வட கிழக்காய் வெகு ரோஷத்துடன் வெட்டிக்கொண்டு போகையில் புராண புருஷனான கபில வாஸுதேவரையும் அவருக் கருகில் யாகக்குதிரைமேய்ந்து கொண்டிருப்பதையும் கண்டார்கள். எல்லையற்ற ஆனந்த மடைந்தார்கள். அந்த மஹா பலவான்கள் யாகக் குதிரையைத் திருடினவர் அவரே என்று நிச்சயித்து, கோபத்தால் கண்கள்சிவந்து மண்வெட்டி கலப்பை பாறை மலை முதலியவைகளை எடுத்துக்கொண்டு, "துஷ்டா! நில் நில். எங்களுடைய யாகக் குதிரையைத் திருடத் துணிந்தாயல்லவா? புத்தியற்றவனே! உன்னைக் கொல்லவந்திருப்பவர்கள் யார் தெரியுமா? அயோத்யாபதியின் பராக்கிரமமுள்ள புத்திரர்கள்" என்று கர்ஜித்துக்கொண்டு ஓடி வந்தார்கள். அதைக் கேட்ட கபிலபகவான் வெகு கோபங் கொண்டு ஹுங்காரம் செய்தார். அவருடைய அளவற்ற மஹிமையால் அந்த அறுபதாயிரம் ஸகரபுத்திரர்களும் உடனே எரிக்கப் பட்டு சாம்பலானார்கள்.

ததஸ் தேநாப்ரமேயேந கபிலேந மஹாத்மநா |
ப4ஸ்ம ராஶீக்ருதா: ஸர்வே காகுத்ஸ்த2 ஸக3ராத்மஜா: ‖ (30)

## ஸர்க்கம் 41

## அம்சுமான்

புத்ராம்ஶ் சிரக3தாந் ஜ்ஞாத்வா ஸக3ரோ ரகு4நந்த3ந |
நப்தார மப்3ரவீத்3 ராஜா தீ3ப்யமாநம் ஸ்வதேஜஸா ‖ (1)

தன் புத்திரர்கள் போய் வெகுகாலமாகியும் திரும்பி வராததைக் கண்டு ஸகரன் மஹாதேஜஸ்வியான பேரனை அழைத்து, "குழந்தாய்! நீ மஹாசூரன், லௌகிக வைதிக வித்யைகளில் நிபுணன், தேஜஸில் என் முன்னோர்களைப்போன்றவன். யாகக் குதிரையைத் திருடினவனையும் உன் சிறிய தகப்பன்களையும் கண்டுபிடித்து வா. பூமிக்குள் குகைகளில் வஸிக்கும் பிராணிகள் மஹா பலசாலிகள். அவைகளை எதிர்ப்பதற்காக ஆயுதங்களுடன் போ. பூஜிக்கத்தகுந்தவர்களைப் பூஜித்து இடையூறு செய்பவர்களை நாசம் செய்து, காரியத்தை முடித்து வா. யக்ஞம் உன்னால் நிறைவேற வேண்டும்" என்றார். அவருடைய உத்தரவுப்படி அம்சுமான் ஆயுதபாணியாய் ஸகர புத்திரர்கள் வெட்டின வழியாகப் பூமிக்குள் அதிவேகமாகச் சென்றார். அங்கே தேவ தானவ ராக்ஷஸ பிசாச பதக உரக கணங்களால் பூஜிக்கப்படும் திக்கஜத்தைக் கண்டார். அதைப் பிரதக்ஷிணம்செய்து க்ஷேமம் விசாரித்து, "என் சிறிய தகப்பன்கள் எங்கே? யாகக் குதிரையை யார் கொண்டு போனார்கள்?" என்று கேட்டார். அது "அஸமஞ்ஜனின் புத்திர! உன் காரியம் நிறைவேறி யாகக் குதிரையுடன் சீக்கிரமாய்த் திரும்பி வா" என்றது. மற்ற திக்கஜங்களையும் கண்டு இப்படிக் கேட்ட பொழுது அவைகளும் "குதிரையுடன் திரும்பிப் போவாய்" என்றன. பிறகு அதிவேகமாய்ப் போய், ஓரிடத்தில் ஸகர புத்திரர்கள் எரிக்கப்பட்டு சாம்பல் மேடுகளாய்க் கிடப்பதைக் கண்டார். துக்கம் தாங்காமல் கோவென்று கதறி அழுதார். யாகக் குதிரை ஸமீபத்தில் மேய்ந்து கொண்டிருந்தது. அந்த ராஜபுத்திரர்களுக்கு ஜல தர்ப்பணம் செய்ய விரும்பிச் சுற்றிப்பார்க்கையில் ஓரிடத்திலும் ஜலத்தைக் காணவில்லை. அப்பொழுது அங்கே தன் பிதாவிற்கு மாமனும், அரிஷ்டநேமியின் புத்திரனும், வேகத்தில் வாயுவைப் போன்றவருமான கருடன் நிற்பதைக் கண்டார். அவர் "குழந்தாய்! வருத்தப்படாதே. இவர்கள் இப்படி நாசமடைந்தது ஸகல லோகங்களுக்கும் ஹிதமே. கபில பகவானுடைய கோபாக்னியால் இவர்கள் எரிக்கப்பட்டபடியால் பூலோகத்திலுள்ள ஜலத்தால் இவர்களுக்குத் தர்ப்பணம் செய்யத் தகாது. ஹிமவானுடைய மூத்த பெண்ணான கங்கையின் ஜலத்தால் தர்ப்பணம் செய். அதனால் நனைக்கப்பட்டால் இவர்கள் ஸகல பாபங்களும் நீங்கிப் புண்யாத்மாக்களாய் ஸ்வர்க்கமடைவார்கள். அந்த ஜலத்தால் சாம்பல் மேடுகளை நனைக்கவேண்டும். யாகக் குதிரையைக் கொண்டுபோ. உன் பாட்டனுடைய யாகத்தை நிறைவேற்று" என்றார்.

அப்படியே அம்சுமான் யாகக் குதிரையுடன் அதிவேகமாய் ஸகரனிடத்திற்கு வந்து, நடந்த வரலாற்றையும் கருடன் சொன்ன யோசனையையும் தெரிவித்தார். இடிவிழுந்ததைப்போன்ற அந்தத் துக்க ஸமாசாரத்தைக் கேட்டு ஸகரன் மனம் நொந்தார். ஆயினும் ஆரம்பித்த யக்ஞத்தை விதிப்படி முடித்து அயோத்யைக்குப் போனார். பிறகு முப்பதினாயிர வருஷங்கள் வரையில் அரசாண்டும், கங்கையைப் பூமிக்கு வருவிப்பதைப்பற்றிப் பலவிதமாய் யோசித்து ஒரு நிச்சயத்தையும் செய்யாமல் தேகத்தை விட்டு ஸ்வர்க்க மடைந்தார்.

அக்ருத்வா நிஶ்சயம் ராஜா காலேந மஹதா மஹாந் |
த்ரிம்ஶத்3 வர்ஷ ஸஹஸ்ராணி ராஜ்யம் க்ருத்வா தி3வம் க3த:(28)

## ஸர்க்கம் 42

## திலீபன்—பகீரதன்

காலத⁴ர்மம் க³தே ராம ஸக³ரே ப்ரக்ருதீ ஜநா: |
ராஜாநம் ரோசயாமாஸுர்: அம்ஶுமந்தம் ஸுதா⁴ர்மிகம் ‖ (1)

**ஸ**கரன் காலகதியை அடைந்த பிறகு ஜனங்கள் தர்மவானுன அம்சுமானுக்குப் பட்டாபிஷேகம் செய்தார்கள். அவனுடைய புத்திரனே திலீபன். அவனிடத்தில் ராஜ்யத்தை ஒப்புவித்து அம்சுமான், ஹிமயமலைச் சிகரத்தில் ஒரு புண்ணிய க்ஷேத்திரத்தில் முப்பத்திரண்டாயிரம் வருஷங்கள் வரையில் கடுந்தவம் செய்தும் கங்கையைப் பூமிக்குத் தருவிக்க முடியாமல் ஸ்வர்க்க மடைந்தான். தன் பாட்டனுர்கள் கோரகதியை அடைந்ததை திலீபன் கேட்டு, துக்கத்தால் மனம் வாடி, 'கங்கையைப் பூமிக்குக் கொண்டு வருவது எப்படி? அந்த ஜலத்தால் என் பாட்டனுர்களுக்குத் தர்ப்பணம் செய்வது எப்படி? அவர்களுக்கு உத்தமகதி கிடைக்கும் உபாயமென்ன?' என்று எவ்வளவு யோசித்தும் ஒரு முடிவும் ஏற்படவில்லை. அதே ஞாபகமாயிருந்த அந்தத் தர்மாத்மாவுக்கு பகீரதன் பிறந்தான் திலீபன் எண்ணிறந்த யாக யக்ஞங்களை நடத்தி முப்பதாயிரம் வருஷங்கள் வரையில் ஆண்டு, பிறகு பகீரதனுக்குப் பட்டம் கட்டி, தன் முன்னேர்களைக் கறையேற்ற வழி தெரியாமல் அதே கவலையாய்க் காலகதியடைந்து, தன் புண்ணியகர்மங்களால் ஸ்வர்க்கத்திற்குச் சென்ருன்.

பகீரதன் வெகு காலமாகப் புத்திரனில்லாமல் வருந்தி, கங்கையைப் பூமிக்கு எப்படியாவது கொண்டு வர நிச்சயித்து, மந்திரிகளிடத்தில் ராஜ்யத்தை ஒப்புவித்த பின், கோகர்ண க்ஷேத்திரத்தில் கடுந்தவம் செய்தார். பஞ்சாக்னி மத்தியில் நின்று, கைகளை உயரத் தூக்கிக் கொண்டு, இந்திரியங்களையும் மனதையும் அடக்கி, மாதத்திற்கு ஒரு தடவை சிறிது ஆஹாரம் செய்து, பல்லாயிர வருஷங்களைக் கழித்தார். அந்த கோரமான தவத்தால் பிரஹ்மா வெகு ஸந்தோஷமடைந்து தேவர்களுடன் அங்கே வந்து "பகீரத! மஹானுபாவ! உன் தவத்தால் மிகவும் ஸந்தோஷமடைந்தேன். வேண்டிய வரங்களைக்கேள்" என்ருர். அந்த ராஜரிஷி அவரை வணங்கிக் கைகூப்பி, "ஸ்வாமி! தாங்கள் என்னிடத்தில் ஸந்தோஷமடைந்தால், என் தவம் பயன் பெறுமானுல், நான் கங்கா ஜலத்தால் செய்யும் தர்ப்பணம், சாம்பல் மேடாகக் கிடக்கும் ஸகர புத்திரர்கள் அனைவரையும் நனைத்து அவர்களுக்கு உத்தம கதியைக் கொடுக்கட்டும். மேலும், இக்ஷ்வாகு குலத்திற் பிறந்த எனக்கு, வம்சத்தை விருத்தி செய்யும் ஒரு புத்திரனை அனுக்ரஹிக்க வேண்டும்" என்ருர். பிரஹ்மா, "இக்ஷ்வாகு குலதிலக! உன் எண்ணங்கள் நிறைவேறும். ஹிமவானுடைய மூத்த பெண்ணுன கங்கை அந்த மலையில் வஸிக்கிருள். அவள் பூமிக்கு வந்தால் அவளுடைய வேகத்தைத் தாங்கக்கூடியவர்



பரமசிவனே. அதற்காக அவரை பிரார்த்திக்க வேண்டும். இல்லாவிட்டால் கங்கையின் வேகத்தால் பூமி பிளந்துவிடும்" என்ருர். இப்படி அனுக்ரஹித்து, கங்கையை அழைத்து "தகுந்த காலம் வரும் பொழுது பகீரதனுடைய இஷ்டத்தைப் பூர்த்திசெய்" என்று கட்டளையிட்டுத் தேவர்களுடன் தன்னுலகிற்குப் போனுர்.

தமேவ முக்த்வா ராஜாநம் க³ங்கா³ம் சாபா⁴ஷ்ய லோககக்ருத் |
ஜக³ாம த்ரிதி³வம் தே³வ: ஸஹ தேவைர் மருத்³க³ணை: ‖ (25)

## ஸர்க்கம் 43

## கங்கை பூமிக்கு வந்தது

தே³வதே³வே க³தே தஸ்மிந் ஸோங்கு³ஷ்டா²க்³ர நிபீடி³தாம் |
க்ருத்வா வஸுமதீம் ராம ஸம்வத்ஸர முபாஸத ‖ (1)

**பி**றகு பகீரதன் கால் கட்டை விரலைப் பூமியில் ஊன்றிக் கைகளை உயரத் தூக்கிக் கொண்டு, யாதொரு பற்றுமின்றி, காற்றே உணவாகக் கட்டையைப் போல் அசையாமல் இரவும் பகலும் பரமசிவனைக் குறித்து தவம் செய்தார். பிறகு மஹாதேவன் பார்வதியுடன் அவருக்குப் பிரஸன்னமாய், "ராஜசிரேஷ்ட! உன் தவத்தால்திருப்தியடைந்தேன். உன் இஷ்டப்படி பர்வதராஜ புத்திரியான கங்கையைத் தலையில் தரிக்கிறேன்" என்ருர். அப்பொழுது ஸகல லோகங்களிலும் கொண்டாடப்பட்ட கங்கை, பெரிய ரூபத்துடனும் தாங்க முடியாத வேகத்துடனும் ஆகாசத்திலிருந்து பரமசிவனுடைய சிரஸில் விழுந்தாள். "என் வேகத்தைத் தாங்கக் கூடியவர்களுமுண்டோ? இந்தச் சங்கரனையும் அடித்துக்கொண்டு பாதாளத்திற்குப் போவேன்" என்ருள். அவளுடைய கர்வத்தை அறிந்து ருத்திரன் கோபம்கொண்டு அவளை மறைக்க நினைத்தார். அவருடைய புண்ணியமான சிரஸில் விழுந்தவுடன் ஜடாமண்டலமென்ற பெரும் வலையில் சிக்கிக்கொண்டு வெளியில்போக வழி தெரியாமல் பல வருஷங்கள் வரையில் அலைந்து திரிந்தாள். "பரமசிவனுடைய தலையில் கங்கை விழுந்ததைப் பார்த்தேன். உடனே பூமிக்கு வரவேண்டியதல்லவா? இவ்வளவு காலமாயும் ஏன் இன்னும் வெளிப்படவில்லை. ஸர்வேசுவரனுன சங்கரனையே சரணமடைய வேண்டும்" என்று மறுபடியும் அவரைக் குறித்துத் தவம் செய்தார். அதனுல் பகவான் ஸந்தோஷித்து பிரஹ்மாவால் ஸிருஷ்டிக்கப்பட்ட பிந்துஸரஸில் அவளை விட்டார். அவள் அப்பொழுது ஏழு பிரவாகங்களாய்ப் பூமியில் விழுந்தாள். அவைகளில் ஹ்லாதினி, பாவனி, நளினி என்றவை கிழக்கிலும், ஸுசக்ஷுஸ், ஸுதா, ஸிந்து என்றவை மேற்கிலும் ஓடின. ஏழாவதான பிரவாஹம் பகீரதரைப் பின் தொடர்ந்தது. அந்த ராஜசிரேஷ்டர் திவ்யமான ரதத்தில் ஏறிக்கொண்டு முன்னே போனுர். கங்கைக்கு 'த்ரிபதகா'

என்ற பெயர் வந்த விதத்தைச் சொன்னேன். அவளுடைய அற்புத மான செய்கைகளைச் சொல்லுகிறேன்.

ஆகாசத்திலிருந்து சிவனுடைய சிரஸிலும் அங்கிருந்து பூமியிலும் விழுந்ததால் அந்த ஜலம் பயங்கரமான சப்தத்துடன் வந்தது. மீன் ஆமை சிம்சுமாரம் முதலை முதலிய ஜல ஜந்துக்கள் அதில் துள்ளி விழுந்துக் கொண்டிருந்தபடியால் பூமி விளங்கிற்று. ஆகாசத்திலிருந்து கங்கை பூமிக்கு வரும் ஆச்சரியத்தைப் பார்க்கத் தேவ ரிஷி கந்தர்வ யக்ஷ ஸித்த கணங்கள் நகரங்களைப் போன்ற விமானங்களிலும் குதிரைகளிலும் யானைகளிலும் கூட்டம் கூட்டமாய் அங்கே வந்தார்கள். அவர்களின் தேக காந்தியாலும் ஆபரணங்களின் பிரகாசத்தாலும் எண்ணிறந்த ஸூரியர்கள் விளங்குவது போல் ஆகாசம் மேகங்களில்லாமல் ஜ்வலித்தது. கங்கையில் மீன் சிம்சுமாரம் முதலிய ஜல ஜந்துக்கள் அங்குமிங்கும் துள்ளுவதால் மின்னல்கள் பாய்வது போலிருந்தது. நான்கு புறங்களிலும் பல விதமாய் வாரியிறைக்கப்பட்ட நுரைகளாலும் நீர்த் திவலைகளாலும், ஹம்ஸக் கூட்டங்களுடன் கூடிய வெண்மையான சரத்கால மேகங்களால் ஆகாசம் நிறைந்தது போலிருந்தது. அந்த நதியின் ஜலம் சிலவிடங்களில் அதிவேகமாயும், சிலவிடங்களில் கோணலாயும், சிலவிடங்களில் நேராயும், பள்ளங்களில் கீழாயும், கல் முதலியவைகளால் தடுக்கப்பட்ட பொழுது மேல் முகமாயும், சிலவிடங்களில் மெதுவாயும், சிலவிடங்களில் அலைகளின் வேகத்தால் ஜலத்துடன் ஜலம் மோதிக்கொண்டு அடிக்கடி எதிர்த்து ஓடிக்கொண்டும் பூமியில் விழுந்தது. பரமசிவனுடைய தலையில் விழுந்து அங்கிருந்து பூமியில் வந்ததால் நிர்மலமாய்ப் பாபங்களைப் போக்கும் புண்ணிய தீர்த்தமாயிற்று. தேவர்களும் ரிஷிகளும் கந்தர்வர்களும் பூமியிலுள்ளவர்களும் "பரமசிவனே இதைத் தலையால் தாங்கினதால் இது மஹா பரிசுத்தமான தீர்த்தம். அவருடைய தேகத்தில் பட்டுப் பூமியில் விழுந்ததால் இதற்கு விசேஷ சுத்தியுண்டாயிற்று'' என்று அதில் ஸ்நானம் செய்தார்கள். சாபத்தால் தேவலோகத்திலிருந்து பூமிக்கு வந்தவர்களும் அதில் ஸ்நானம் செய்து பாபங்கள் நீங்கிப் புண்ணிய லோகங்களுக்குப் போனார்கள். பூமியிலுள்ளவர்கள் அதில் ஸ்நானம் செய்து பாபங்கள் விலகிப் பரமானந்தமடைந்தார்கள்.

ராஜரிஷியான பகீரதர் திவ்விய ரதத்தில் ஏறிக்கொண்டு முன்னே சென்றார். கங்கை அவரைப் பின் தொடர்ந்தாள். தேவ ரிஷி தைத்ய தானவ ராக்ஷஸ கந்தர்வ யக்ஷ கின்னர உரக அப்ஸரஸ் கணங்களும் ஜல ஜந்துக்களும் பகீரதரைப் பின் தொடரும் கங்கையைப் பின் தொடர்ந்தார்கள். அவர்கள் போகும் வழியெல்லாம் கங்கையும் போய் ஸமஸ்த பாபங்களையும் நாசம் செய்தது. வழியில் ஜன்ஹு ரிஷி யாகம் செய்துகொண்டிருந்த இடத்தில் பரவி, யாக பதார்த்தங்களை அடித்துக்கொண்டு போயிற்று. அவளுடைய கர்வத்தால் அந்த ரிஷி கோபங்கொண்டு அந்த ஜலம் முழுவதையும் குடித்து விட்டார். அந்த ஆச்சரியத்தால் தேவரிஷி கணங்கள் பிரமித்து அந்த மஹாத்மாவைப் பல விதமாய்ப் பிரார்த்தித்து, "ஸ்வாமி! கங்கையின் அபராதத்தைப் பொறுக்கவேண்டும். தங்களுடைய தேகத்திலிருந்து வெளிப்படுவதால் அவள் தங்களுக்குப் பெண்ணாகட்டும்'' என்றார்கள். அதனால் அவர் ஸந்தோஷித்து கங்காப் பிரவாஹத்தைத் தன் காதின் வழியாய் வெளியில் விட்டார். அன்றுமுதல் அவளுக்கு ஜான்ஹவி (ஜன்ஹுவின் புத்திரி) என்று பெயராயிற்று. பிறகு அவள் பகீரதரைப் பின் தொடர்ந்து ஸமுத்திரத்திற்கு வந்து அங்கிருந்து ரஸாதலத்திற்குப் போனாள். தன் முன்னோர்கள் எரிந்துகிடக்கு மிடத்திற்கு அவர் அவளை அழைத்துக் கொண்டு போய், அவர்கள் சாம்பலாயிருப்பதைக் கண்டு மிகவும் வருத்தப்பட்டார். அந்த புண்ய ஜலம் சாம்பல்மேட்டை நனைத்தவுடன் ஸகர புத்திரர்கள் பாபம் ஒழிந்து உத்தம லோகங்களை அடைந்தார்கள்.

அத2 தத்3ப4ஸ்மநாம் ராஶிம் க3ங்கா3 ஸலில முத்தமம் |
ப்லாவயத்3 தூ4தபாப்மாந: ஸ்வர்க3ம் ப்ராப்தா ரகூ4த்தம ‖ (43)

---

## ஸர்க்கம் 44

## ஸகர புத்திரர்கள் உத்தமகதியை அடைந்தது

ஸ க3த்வா ஸாக3ரம் ராஜா. கங்க3யாநுக3தஸ் ததா3 |
ப்ரவிவேஶ தலம் பூ4மே: யத்ர தே ப4ஸ்ம ஸாத்க்ருதா: ‖ (1)

அப்பொழுது ஸகல லோகங்களுக்கும் பிரபுவான பிரஹ்மா அங்கே வந்து "பகீரத! புருஷ சிரேஷ்ட! ஸகரனுடைய அறுபதாயிரம் புத்திரர்களைக் கரையேற்றினாய். அவர்கள் ஸ்வர்க்கத்தில் தேவர்களைப்போல் விளங்குகிறார்கள். ஸமுத்திரஜல முள்ளவரையில் ஸ்வர்க்கத்தில் ஆனந்தமாய் வஸிப்பார்கள். இந்தக் கங்கை உனக்கு மூத்த பெண்ணாகட்டும். 'பாகீரதி' என்ற பெயருடன் உலகத்தில் பிரஸித்தி யடைவாள். ஸ்வர்க்கம் பூமி பாதாளமென்ற மூவிடங்களில் சென்றதால் திரிபதகாவென்றும், உன்னால் கொண்டு வரப் பட்டதால் பாகீரதி என்றும், இவளுக்குப் பெயர் வந்தது. உன் முன்னோர்களுக்கு இதில் தர்ப்பணம் செய்து அவர்களைக் கரையேற்றி உன் பிரதிக்ஞையை முடி. மஹா தர்மசீலனான ஸகரனும் அபார தேஜஸுள்ள அம்சுமானும், ராஜசிரேஷ்டனும் உத்தம குணவானும் மஹரிஷிகளைப் போன்ற தேஜஸுள்ளவனும் தபஸில் என்னைப் போன்றவனுமான திலீபனும் இந்தக் கங்கையைப் பூமிக்குத் தருவிக்க எவ்வளவோ முயன்றார்கள். ஆனால், இந்தப்

புண்ய ஜலத்தில் தர்ப்பணம் செய்து ஸகர புத்திரர்களைக் கரையேற்றுவதென்றப் பிரதிக்ஞையை நிறைவேற்ற முடியவில்லை. அந்த அஸாத்யமான காரியத்தை நீ செய்தாய். லோகத்தில் அழிவற்ற கீர்த்தியடைந்தாய். ஸ்வர்க்கத்திலிருந்து கங்கையைப் பூமிக்குக் கொண்டு வந்தபடியால் தர்மத்திற்கு இருப்பிடமானாய். மற்ற நதிகளைப் போலின்றி எப்பொழுதும் ஸ்நானம் செய்யக்கூடிய இந்த நதியில் நீயும் ஸ்நானம் செய்து சுத்தனாய் விசேஷ புண்ணியத்தை அடை. உன் முன்னோர்களுக்கு இதில் தர்ப்பணம் செய், உனக்கு ஸகல மங்களங்களும் உண்டாகட்டும். நான் ஸத்யலோகத்திற்குப் போகிறேன். நீயும் பூலோகத்திற்குப் போ'' என்று அனுக்ரஹித்து தன்னுலகிற்குச் சென்றார்.

பகீரதர் விதிப்படி கங்கையின் புண்ய ஜலத்தால் ஸகர புத்திரர்களுக்குத் தர்ப்பணம் முதலிய உத்திரக்கிரியைகளைச்செய்து தன் பிரதிக்ஞை நிறைவேறினதால் அளவற்ற ஸந்தோஷமடைந்து அயோத்யைக்கு வந்து வெகுகாலம் அரசாண்டார். அவருடைய காலத்தில் ஜனங்கள் நோயின்றி, மனக்கவலையின்றி காப்பாற்றப்பட்டு ஸகல ஸௌக்கியங்களும் பொருந்தி இருந்தார்கள்.

ராம! கங்கையின் வரலாற்றை உனக்கு விஸ்தாரமாகச் சொன்னேன். உனக்கு ஸகல மங்களங்களும் உண்டாகட்டும். ஸந்தியா காலம் கிட்டினதால் இங்கே நிறுத்துவோம், கங்கை பூமிக்கு வந்த இந்தப் புண்ணிய சரித்திரத்தைக் கேட்பவன் ஸகல இஷ்டங்களையும் அடைகிறான்; ஸமஸ்த பாபங்களிலிருந்தும் விடுபடுகிறான்; ஆயுளும் கீர்த்தியும் வளர்கின்றன. புத்திர பௌத்திரர்களுடன் இவ்வுலகத்தில் ஸந்தோஷமாய் வஸித்து இறந்த பிறகு ஸ்வர்க்கத்தை அடைகிறான்: பிராம்மண க்ஷத்ரிய வைசியர்களில் இதைப் பிறர்க்குச் சொல்லுகிறவனுடைய பித்ருக்களும் தேவதைகளும் மிகுந்த பிரீதியடைகிறார்கள்'' என்றார்.

ய: ஶ்ருணோதி ச காகுத்ஸ்த2 ஸர்வாந் காமா நவாப்நுயாத் |
ஸர்வே பாபா: ப்ரணஶ்யந்தி ஆயு: கீர்திஶ்ச வர்த4தே || (22)

## ஸர்க்கம் 45

## ஸமுத்திர மதனம்

விஶ்வாமித்ர வச: ஶ்ருத்வா ராக4வ: ஸஹலக்ஷ்மண: |
விஸ்மயம் பரமம் க3த்வா விஶ்வாமித்ர மதா2ப்3 ரவீத் || (1)

ராம லக்ஷ்மணர்கள் அந்தப் புண்ணிய சரித்திரத்தைக் கேட்டு ''மஹரிஷே! தாங்கள் சொன்ன சரிதம் வெகு ஆச்சரியகரமானது. ஸகர புத்திரர்கள் ஸாகரத்தை வெட்டினதும், பகீரதர் கங்கையைப் பூமிக்குக் கொண்டுவந்ததும் வெகு அற்புதமான காரியங்கள்.''



என்று கொண்டாடி, அன்றிரவு முழுவதும் அந்தக் கதையையே நினைத்துக்கொண்டிருந்தார்கள். காலையில் எழுந்து நித்தியகர்மங்களை முடித்து உட்கார்ந்திருக்கும் கௌசிகரிடத்தில் வந்து, ''ஸ்வாமி! தாங்கள் சொன்ன கதையைப்பற்றி யோசித்துக் கொண்டிருந்த எங்களுக்கு ராத்திரி ஒரு க்ஷணம் போல் கழிந்தது. இந்தப் புண்ணிய நதியைத் தாண்டி அக்கரைக்குப் போவோம். தாங்கள் இங்கே வந்திருப்பதை அறிந்து ரிஷிகளுக்கு வேண்டிய ஸௌகரியங்களுள்ள ஓடம் தயாராயிருக்கிறது'' என்றார்கள். பிறகு கௌசிகரும் ராஜ புத்திரர்களும் ரிஷிகளும் கங்கையைத் தாண்டி அதற்கு உதவியாக வந்த ரிஷிகளை உபசரித்து அனுப்பிவிட்டு, கங்கைக் கரையில் சற்று நேரம் உட்கார்ந்தார்கள். அங்கிருந்து விசாலா நகரம் காணப்பட்டது. பிறகு அவர்கள் அதை நோக்கிப் பிரயாணம் செய்தார்கள். போகும்போது ராமன் ஸகலமும் அறிந்தும் விசுவாமித்திரரை வணங்கிக் கைகூப்பி, ''இந்த விசாலையின் மஹிமை எவ்விதமானது? இதில் எந்த ராஜவம்சம் ஆண்டு வருகிறது? அதனைக் கேட்க விரும்புகிறேன்'' என்றார்.

அப்பொழுது கௌசிகர் விசாலா சரித்திரத்தைச் சொல்ல ஆரம்பித்தார். ''இங்கே நடந்த ஒரு விருத்தாந்தத்தைச் சொல்லுகிறேன். அதற்கு ஸம்பந்தப்பட்ட இந்திரனுடைய கதையையும் சொல்லக் கேள். சென்ற கிருதயுகத்தில் திதியின் புத்திரர்களான தைத்யர்கள் மஹா பலவான்கள். அதிதியின் புத்திரர்களான தேவர்கள் வீரியவான்கள்; தார்மிகர்கள். ஒரு ஸமயத்தில் அவர்கள் பிறப்பு இறப்பு கிழத்தனம் நோய் கவலை முதலிய உபத்திரவங்களின்றி, பலத்திலும் புத்தியிலும் ஸுகத்திலும் நிகரற்றிருக்கும் வழியை யோசித்து, பாற்கடலைக் கடைந்து அமிருதத்தை எடுத்துப் புஜிக்க நிச்சயித்தார்கள். அதற்கு மந்தர மலையை மத்தாகவும் வாஸுகியென்ற நாகத்தைக் கயிறாகவும் உபயோகித்து, ஆயிரம் வருஷங்கள் கடைந்தார்கள். வாஸுகி அந்த சிரமத்தைத் தாங்க முடியாமல் குரூரமான விஷத்தைக் கக்கி மலைப்பாறைகளைக் கடித்தான். பிறகு ஹாலாஹல மென்ற மஹா விஷம் அக்னியைப் போல் ஜ்வலித்துக் கொண்டு ஸமுத்திரத்திலிருந்து வெளிப்பட்டு தேவர்களையும், மனிதர்களையும், லோகங்களையும் எரிக்க ஆரம்பித்தது. அப்பொழுது தேவர்கள் சிவபிரானைச் சரணமடைந்து, ''எங்களைரக்ஷிக்கவேண்டும்'' என்று முறையிட்டார்கள். பரம தார்மிகரான மஹாவிஷ்ணு சங்க சக்கரத்துடன் அங்கே வந்து ருத்திரனைப் பார்த்துப் புன்சிரிப்புடன் ''தேவதைகள் ஸமுத்திரத்தைக் கடைந்தபொழுது முதலில் உண்டான பதார்த்தம் உம்மைச் சேரவேண்டியது. நீர் தேவர்களில் முதல்வரல்லவா? ஆகையால் மற்றவர்கள் தங்களுக்குச் செய்யும் பூஜையென்று இதை எண்ணி இந்த விஷத்தைப் புஜிக்க வேண்டும்'' என்று சொல்லி மறைந்தார். தேவர்கள் பயந்து நடுங்குவதைக் கண்டு விஷ்ணுவின் வார்த்தையை அங்கீகரித்து,

ஹாலாஹலமென்ற கோரமான விஷத்தைப் பரமசிவன் புஜித்தார். பிறகு தேவர்கள் பாற்கடலைக் கடைந்தார்கள். மந்தரகிரி பாதாளத்தில் அமிழ்ந்து போயிற்று. தேவகணங்கள் மறுபடியும் விஷ்ணுவைச் சரணமடைந்து "ஸகல பிராணிகளுக்கும் தாங்களே கதி; தேவர்களிடத்தில் தங்களுக்கு விசேஷப் பிரீதி. இந்த மலையைத் தூக்கி நிறுத்தி, எங்களை ரக்ஷிக்க வேண்டும்" என்று பிரார்த்தித்தார்கள். அதைக் கேட்டுக் கேசவன் ஆமையின் ரூபத்தை எடுத்து, மந்தரகிரியைத் தன் முதுகில் தாங்கி ஸமுத்திரத்திலிருந்தார். அதன் நுனியை அசையாமல் கைகளால் பிடித்துக்கொண்டார். தேவர்களின் நடுவிலிருந்தும் கடைந்தார். ஆயிரம் வருஷங்களுக்குப் பிறகு, தண்ட கமண்டலத்துடன், தன்வந்திரி பகவானும் ஸௌந்தரிய நிதிகளான அப்ஸரசுகளும் அதிலிருந்து வெளிப்பட்டார்கள். (அப்ஸு) ஜலங்களிலிருந்து கடைந்தெடுக்கப்பட்ட ஸாரமான பதார்த்தமாகையால் அந்த ஸ்த்ரீகளுக்கு 'அப்ஸரஸ்கள்' என்று பெயர். அவர்கள் அறுபது கோடி. அவர்களின் வேலைக்காரிகளுக்குக் கணக்கில்லை. தேவர்களும் தானவர்களும் அவர்களை மணம் செய்யவில்லை; அவர்களும் கணவர்களைத் தேடவில்லை. ஆகையால் எல்லோருக்கும் பொது ஸ்த்ரீகளானார்கள். பிறகு வருணனுடைய பெண்ணான வாருணி உண்டானாள். தனக்கு ஒரு பர்த்தாவைத் தேடினாள். தைத்யர்கள் அவளை ஒப்புக்கொள்ளவில்லை. அதிதியின் புத்திரர்களான தேவர்கள் அவளை அங்கீகரித்தார்கள். ஸுரா என்ற அவளை ஒப்புக்கொள்ளாத தைத்யர்களுக்கு அஸுரர்களென்றும், அங்கீகரித்த தேவர்களுக்கு ஸுரர்களென்றும் பெயர் வந்தது. அவளை அடைந்ததால் தேவர்கள் மிகவும் ஸந்தோஷித்தார்கள். பிறகு உச்சைச்சிரவஸ் என்ற குதிரையும், கௌஸ்துபமென்ற மணியும், அமிருதமும் உண்டாயின. அப்பொழுது அதற்காக தேவாஸுரர்களுக்குக் கோரயுத்தம் நடந்தது. மூன்று லோகங்களும் பயத்தால் மெய்மறந்தன. இரண்டு பக்கத்திலும் எண்ணிறந்தவர்கள் அழிந்தார்கள். தைத்யர்களுக்கும் ராக்ஷஸர்களுக்கும் வரவர பலம் அதிகமாய்த் தேவர்களைக் கூட்டம் கூட்டமாகக் கொல்ல ஆரம்பித்தார்கள். அப்பொழுது மஹாவிஷ்ணு ஆச்சரியமான சக்தியால் எல்லோரையும் மோஹிக்கச் செய்து, அந்த அமிருதத்தை எடுத்துக்கொண்டு போனார். அழிவற்ற புருஷோத்தமனை எதிர்த்துச் சண்டை செய்த அஸுரர்கள் திவ்யாயுதங்களால் தூளானார்கள். அவரைச் சரணமடைந்த தேவர்கள் அவருடைய கிருபையாலும் அமிருதபானத்தாலும், பலம் வீரியம் உத்ஸாஹம் வளர்ந்து, தைத்யர்களைக் கூட்டம் கூட்டமாய்க் கொன்று, தங்களுடைய ராஜ்யத்தை அடைந்து ஸந்தோஷமாய் அரசு புரிந்தார்கள்.

*நிஹத்ய தி$^{3}$தி புத்ராம்ஸ்ச ராஜ்யம் ப்ராப்ய புரந்த$^{3}$ர: |*
*ஶஶாஸ முதி$^{3}$தோ லோகாந் ஸர்ஷி ஸங்க$^{4}$ாந் ஸசாரணாந் ||* (32)



## ஸர்க்கம் 46

# மருத்துக்களின் உத்பத்தி

*ஹதேஷு தேஷு புத்ரேஷு தி$^{3}$தி: பரமது$^{3}$:கி$^{2}$தா |*
*மாரீசம் காஸ்யபம் ராம ப$^{4}$ர்தார மித$^{3}$ மப்$^{3}$ரவீத் ||* (1)

தன் புத்திரர்கள் தேவர்களால் அழியக் கண்டு திதிதேவி மிகவும் வருந்தித் தன் பர்த்தாவான காசியபரைப் பார்த்து, "உமக்கு அதிதியிடத்தில் பிறந்த புத்திரர்கள் என் பிள்ளைகளைக் கொன்றார்கள். வெகு காலம் தவம் செய்து இந்திரனைக் கொல்லும்படியான புத்திரனைப் பெற விரும்புகிறேன். பலவானும் பராக்கிரமசாலியாயும் மஹா புத்திமானும் பிறரால் ஜயிக்கப்படாதவனும் இந்திரனைக் கொல்லக்கூடியவனும் இருக்கும் புத்திரனை எனக்கு அருள வேண்டும்" என்றார். புத்திரர்களைப் பறிகொடுத்துத் தவிக்கும் திதியிடத்தில் காசியபருக்கு இரக்க முண்டாயிற்று. "பெண்ணே! அப்படியே ஆகட்டும். நான் உனக்கு ஒரு விரதத்தை உபதேசிக்கிறேன். ஆயிரம் வருஷங்கள் வரையில் வெகு சுத்தியுடன் நீ அதை அனுஷ்டித்து வந்தால் இந்திரனைக் கொல்லக்கூடிய புத்திரனை என்னால் அடைவாய். அவன் மூன்று லோகங்களையும் "ஆள்வான்" என்று அவளைத் தடவிக்கொடுத்து அனுக்ரஹித்தார். "நீ நினைத்தபடி புத்திரனுண்டாகக்கடவது" என்று ஆசீர்வதித்துத் தபோவனத்திற்குச் சென்றார்.

திதி பரமஸந்தோஷத்துடன் குசப்பிலவனமென்ற க்ஷேத்திரத்தில் வெகு பயங்கரமான தவத்தைச் செய்ய ஆரம்பித்தாள். அப்பொழுது இந்திரன் வெகு வணக்கமாய் அவளுக்கு ஸகல பணிவிடைகளையும் செய்து வந்தான். பழம் கிழங்கு ஜலம் தர்ப்பம் விறகு நெருப்பு முதலிய யாவற்றையும் அந்தந்த ஸமயம் தவறாமல் கொண்டுவந்து கொடுத்தான், அவளுடைய எண்ணங்களைத் தெரிவிப்பதற்கு முன் நிறைவேற்றினான். இரவும் பகலும் வெகு ஜாக்கிரதையாக அலுக்காமல் அவளிடத்தில் கட்டிக்காத்து, கைகால்களைப் பிடித்து விசிறி, பலவித உபசாரங்களால் அவளுடைய மனத்தைக் கவர்ந்தான். பத்து வருஷங்கள் பாக்கியிருக்கையில் ஒரு நாள் திதி இந்திரனிடத்தில் தனக்குண்டான மிகுந்த திருப்தியால் அவன் தன் எண்ணத்திற்கு விரோதி என்பதை மறந்து, "குழந்தாய்! உன்னை ஜயிக்கும்படியான புத்திரனைக் கொடுக்கவேண்டுமென்று உன் பிதாவை பிரார்த்தித்தேன். அவர் ஓர் விரதத்தை உபதேசித்து, "இதை நீ ஆயிரம் வருஷங்கள் வரையில் சுத்தியுடன் அனுஷ்டித்தால் உன் உத்தேசம் நிறைவேறும்" என்று ஆசீர்வதித்தார். பத்து வருஷங்களுக்குப் பிறகு உனக்கு ஸஹோதரன் பிறப்பான். உன்னை ஜயிப்பதற்காக அவனை வேண்டினேன். நீ எனக்குச் செய்த பணிவிடையால் உன்னிடத்தில் விரோத புத்தி நீங்கிற்று.

உனக்கும் அவனுக்கும் சிநேகம் செய்விக்க நிச்சயித்திருக்கிறேன்'' என்றாள்.

பிறகு நடுப்பகலில் தூக்கத்தால் மெய்மறந்து தன் தலைமயிர் காலில் படும்படி தூங்கிவிழுந்தாள். அவள் அசுத்தமாக இருப்பதை அறிந்து, இந்திரன் நல்ல ஸமயமென்று மகிழ்ந்து சிரித்து, வெகு தைரியமாய் அவளுடைய தேகத்தில் புகுந்து அந்தக் கர்ப்பத்தை ஏழு துண்டுகளாக்கினான். வஜ்ரத்தால் பிளக்கப்பட்ட அந்தச் சிசு, உபத்திரவம் தாங்காமல் அலறிற்று. திதி விழித்துக்கொண்டாள். இந்திரன் 'அழாதே அழாதே' என்று சொல்லிக்கொண்டே அதை வெட்டினான். திதி, "ஐயோ! என் குழந்தையைக் கொல்லாதே, கொல்லாதே'' என்று அலறினாள். தாயின் வார்த்தைக்குக் கட்டுப்பட்டு அவன் வெளியில் வந்து வஜ்ராயுதத்துடன் கைகூப்பி வணங்கி "அம்மா! தலைமயிர் காலில் விழும்படி தூங்கியதால் அசுத்தமானீர்கள். இந்த தோஷத்தைக் காரணமாய்க் கொண்டு தங்களுடைய தேகத்தில் நான் புகுந்து, என்னைக் கொல்ல வளரும் சிசுவை வஜ்ரத்தால் வெட்டினேன். மன்னிக்க வேண்டும்.'' என்றான்.

தத3ந்தர மஹம் லப்3த்4வா ஶக்ரஹந்தார மாஹவே |
அபி4ந்த3ம் ஸப்ததா4 தே3வி தந்மே த்வம் க்ஷந்து மர்ஹஸி || (22)

---

## ஸர்க்கம் 47

## மருத்துக்களின் உத்பத்தி (தொடர்ச்சி)

ஸப்ததா4 து க்ருதே க3ர்பே4 தி3தி: பரம து3க்கி2தா |
ஸஹஸ்ராக்ஷம் து3ராத4ர்ஷம் வாக்யம் ஸாநுநயாப்3ரவீத் || (1)

தன் கர்ப்பம் ஏழு துண்டானதைக் கண்டு திதி வெகு துக்கமடைந்து, இந்திரனை ஜயிக்க முடியாதென்று நிச்சயித்து ஸமாதானம் செய்தாள். "என் பிசகால் இப்படி நேர்ந்ததே ஒழிய உன் குற்றமல்ல. ஆனால், உன்னால் வெட்டப்பட்ட துண்டுகளுக்கு ஓர் உபகாரம் செய். அவை ஏழு மருத்துக்களாய் ஏழு வாதஸ்கந்தங்களுக்குப் பாலகர்களாகட்டும். கனன் ஸத்தியலோகத்திலும், ஸ்பர்சனன் இந்திரலோகத்திலும், வாயு புவர்லோகத்திலும், அனிலன் பிராணன் பிராணேசுவரன் ஜீவனென்றவர்கள் பூமியில் நான்கு திக்குகளிலும் திவ்விய ரூபங்களுடன் "மாருதர்கள்'' என்று உன்னால் கொடுக்கப்பட்ட பெயருடன் ஸஞ்சரிக்கட்டும். அப்படிச் செய்வதால் உனக்குப் பரம க்ஷேமமுண்டாகும்'' என்றாள். இந்திரன் தன் காரியம் முடிந்ததால் அவளை நமஸ்கரித்துக் கைகூப்பி வணங்கி



"அப்படியே ஆகட்டும். தங்களுடைய புத்திரர்கள் மருத் கணங்களாய் எப்பொழுதும் விளங்கட்டும்'' என்றான். இப்படி ஏற்படுத்தி இந்திரனும் திதியும் தங்களுடைய காரியங்களை முடித்துக்கொண்டு திரும்பிப் போனார்கள். தவம் செய்து கொண்டிருந்த திதிக்கு இந்திரன் பணிவிடை செய்த இடம் இதுவே.

இக்ஷ்வாகுவுக்கு அலம்புஸா என்ற அப்ஸரஸிடத்தில் பிறந்த புத்திரன் விசாலன். அந்தப் பரமதார்மிகன் ஏற்படுத்தின நகரமே விசாலை. அவனுக்குப் பிறகு முறையே ஹேமசந்திரன், ஸுசந்திரன், தூம்ராசுவன், ஸிருஞ்ஜயன், ஸஹதேவன், குசாசுவன், ஸோமதத்தன், காகுத்ஸ்தன், ஸுமதி என்ற பரம்பரை உண்டாயிற்று. மஹாதேஜஸ்வியான ஸுமதியே இப்பொழுது விசாலாதிபதி. இக்ஷ்வாகுவின் அருளால் இந்த ராஜாக்கள் நீண்ட ஆயுளாலும் வீரியத்தாலும் தர்மத்தாலும் விளங்குகிறார்கள். இந்த ராத்திரி இங்கே ஸுகமாய் வஸித்துக் காலையில் மிதிலைக்குப் போவோம்'' என்றார். கௌசிகருடைய வரவையறிந்து ஸுமதி, பந்துக்களோடும் உபாத்தியாயர்களோடும் அங்கே வந்து கைகூப்பி நமஸ்கரித்து "ஸ்வாமி! க்ஷேமமாய் வந்தீர்களா? என் தேசத்தில் தாங்களே வந்து எனக்குத் தரிசனம் கொடுத்ததால் என்னைப் போன்ற தன்யன் இல்லை. தங்களுடைய அனுக்ரஹத்திற்குப் பாத்திரமானேன்'' என்றான்.

த4ந்யோஸ்ம் யநுக்3ருஹீதோஸ்மி யஸ்ய மே விஷயம் முநி: |
ஸம்ப்ராப்தோ த3ர்ஶநம் சைவ நாஸ்தி த4ந்யதரோ மயா || (22)

---

## ஸர்க்கம் 48

## அஹல்யை

ப்ருஷ்ட்வா து குஶலம் தத்ர பரஸ்பர ஸமாக3மே |
கதா2ந்தே ஸுமதிர் வாக்யம் வ்யாஜஹார மஹாமுநிம் || (1)

இப்படி ஒருவருக்கொருவர் க்ஷேமம் விசாரித்த பிறகு கௌசிகருக்கு அருகிலிருந்த ராஜ புத்திரர்களை ஸுமதி அடிக்கடி கவனித்துப் பார்த்து, அவர்களுடைய அழகாலும் தேஜஸாலும் வீரியத்தாலும் ஆச்சரியமடைந்து "ஸ்வாமி! தங்களுக்குப் பரமமங்களம் உண்டாகட்டும். இந்தக் குழந்தைகள் யார்? தேவதைகளைப் போல் பராக்கிரமமுள்ளவர்கள். யானையைப்போன்ற கம்பீரமான நடையையும், ஸிம்ஹத்தைப்போல் சத்துருக்களை அவமதிக்கும் நடையையும், புலியைப்போல் விரோதிகள் கண்டு நடுங்கும் நடையையும், விருஷபத்தைப்போல் கர்வமுள்ள நடையையும் உடையவர்கள். தாமரை இதழ் போன்ற விசாலமான கண்களால் பார்ப்பவரின் மனத்தைக் கவருகிறார்கள். மஹாவீரர்கள் தரிக்கும் கத்தி வில் அம்பறை முதலியவைகளை இந்தச் சிறு வயதிலும் ஸுலபமாய்த் தரிக்கிறார்கள்.

அழகில் அசுவினி தேவர்களும் இவர்களுக்கிடோ? பால்யம் நீங்கி யௌவனம் ஆரம்பிக்கிறது. தேவலோகத்தில் உள்ள தேவர்கள் பூலோக வாஸிகளிடத்தில் கிருபை வைத்து இங்கே வந்தது போலிருக்கிறது. பகலில் ஸூரியனாலும் இரவில் சந்திரனாலும் ஆகாசம் விளங்குகிறது; ஆனால், ஸூரிய சந்திரர்களைப் போன்ற இந்த ராஜ குமாரர்களால் என் தேசம் ஒரே காலத்தில் பிரகாசிக்கிறது. வெகு செல்வமாய் வளர்க்கப்பட்ட குழந்தைகள் இந்தக் காட்டு மார்க்கங்களில் எப்படி நடந்து வந்தார்கள்? எதை உத்தேசித்து வந்திருக்கிறார்கள்?

இவர்களின் திவ்விய மங்கள விக்கிரஹத்தைப் பார்த்தால், ஸகல இச்சைகளும் நிறைவேறிய மஹாபுருஷர்களென்று தோன்றுகிறது. ஆகையால் பிறருடைய க்ஷேமத்தை உத்தேசித்தே இங்கே வரவேண்டும். அவர்களைப் புத்திரர்களாக அடையும் பாக்கியத்தைப் பெற்ற மஹான்கள் யார்? அளவு உயரம் நடை உடை பார்வை பேச்சு செய்கை முதலிய லக்ஷணங்களில் இருவருக்கும் பேதம் கண்டு பிடிப்பது அரிது. ஜன ஸஞ்சாரமற்ற காடுகளின் வழியாய் சிரேஷ்டமான ஆயுதங்களைத் தரித்து இந்த ராஜ குமாரர்கள் வந்த காரணத்தை விஸ்தாரமாய்ச் சொல்லவேண்டும். அவர்களை அண்டினவர்களுடைய கஷ்டத்தையும் துக்கத்தையும் தீர்க்க வந்தவர்களென்று பொதுவாய் அறிந்தேன். ஆனாலும், இன்னும் நன்றாய் அதன் விஷயங்களை அறிய விரும்புகிறேன்'' என்றான். அப்பொழுது கௌசிகர், தாடகை ஸுபாஹு மாரீசன் முதலிய ராக்ஷஸர்களை ராமலக்ஷ்மணர்கள் கொன்று ஸித்தாசிரமத்தில் தன் யாகத்தை நிறைவேற்றினதையும், மிதிலைக்குப் போவதையும் எடுத்துச் சொன்னார். அயோத்யாபதியான தசரத சக்கரவர்த்தியின் புத்திரர்கள் தனக்கு அதிதியாய்க் கிடைத்ததைப்பற்றி ஸுமதி மிகவும் மகிழ்ந்து அந்த வீரர்களை விதிப்படி பூஜித்தான். அவர்கள் அங்கே அன்றிரவு தங்கி காலையில் மிதிலைக்கு பிரயாணம் செய்தார்கள்.

அதற்கருகில் வந்தவுடன் அம்முனிவர்கள் அதன் அழகையும் செல்வத்தையும்பார்த்து, 'நல்லது நல்லது'' என்று மெச்சினார்கள். போகும் வழியில் அந்நகரத்திற்கு ஸமீபத்தில் ஒரு ஆசிரமம் சூன்யமாயிருக்கக்கண்டு ராமன்! "ஸ்வாமி! இந்தத்தபோவனம் வெகு அழகாயும் ரம்மியமாயும்இருக்கிறதே. ரிஷிகள் வஸிக்கத் தகுந்தது. வெகு நாளாக உள்ளதாய்த் தோன்றுகிறது. ஆனால் இப்பொழுது இதில் தபஸ்விகள் ஏன் வஸிக்கவில்லை? இது யாருடையது?'' என்றார்.

அஹல்யையின் சாபம் தீரும் காலம் வந்ததென்று கௌசிகர் ஸந்தோஷித்து, "ராம! சொல்லுகிறேன், கேள். கௌதமரிஷி இங்கே வெகுகாலம் தவம் செய்தார். அவருடைய கோபத்தால் இந்தப் புண்ணிய ஸ்தலம் சபிக்கப்பட்டு, இப்படி அலங்கோலமாயிற்று. தேவர்களும் இங்கே வஸிக்க விரும்புவார்கள். ஞானத்திலும் ஆசாரத்திலும் மேலான கௌதமர், தம் பாரியை அஹல்யையுடன் இங்கே வெகு காலம் வஸித்தார். ஒருநாள் அவர் வீட்டிலில்லாத ஸமயம் பார்த்துத் தேவராஜன் அவருடைய ரூபந்தரித்து அங்கே வந்து, "அஹல்யே! ஆசைக்கு வசப்பட்டவர்கள் ஸ்த்ரீகளுக்கு ருது காலம் வரும் வரையில் எதிர் பார்க்கமுடியுமா? உன் அழகாலும் லாவண்யத்தாலும் மயங்கினேன். உன்னை அனுபவிக்க விரும்புகிறேன்'' என்றான். "கௌதமர் ஒருநாளும் இப்படிப் பேசினதும் இல்லை. இவ்விதமாய்ச் செய்ய விரும்பினதும் இல்லை. இந்திரனைத் தவிர மற்றவர் இங்கே வரமுடியாது. அவன் என்னிடத்தில் நெடு நாளாய் ஆசை வைத்திருக்கிறான் என்று கேள்விப் பட்டிருக்கிறேன். ஆகையால் கௌதம ரூபத்தைத் தரித்து வந்திருப்பவன் இந்திரனே'' என்று அறிந்தாள். அழகே ரூபமெடுத்து வந்த எண்ணிறந்த அப்ஸரசுகளுக்கு நாதனான தேவராஜன் அவர்களை அலக்ஷ்யம் செய்து தன்னை மேலாக எண்ணி ஆசைவைத்ததால், கர்வமடைந்து புத்தி மயங்கி அவனிடத்தில் ஆசை வைத்தாள். பிறகு தன்னிஷ்டம் நிறைவேறினதால் ஸந்தோஷமடைந்து இந்திரனைப் பார்த்து, "உன் சிநேகத்தால் மிகவும் ஆனந்தமடைந்தேன். மஹரிஷி வருவதற்குமுன் இங்கிருந்து புறப்பட்டுப் போ. உனக்கும் எனக்கும் இதனால் யாதொரு கெடுதியும் நேராமல் ஜாக்கிரதையாக இருக்கவேண்டும்'' என்றாள்.



முப்பத்து முக்கோடி தேவதைகளுக்கு அதிபதியும் வஜ்ரபாணியுமான எனக்கும் ஒருவரால் ஆபத்து நேருமென்று இவள் நினைத்தாளே என்று தேவராஜன் சிரித்து, "அஹல்யே! என் எண்ணம் நிறைவேறிற்று. போய் வருகிறேன்'' என்று அந்த ஆசிரமத்திலிருந்து வெளியில் வந்தான். கௌதமர் எங்கே வந்து விடுவாரோ என்று பரபரப்புடன் அதிவேகமாய்ப் போய்க் கொண்டிருக்கையில் அந்த மஹா தபஸ்வியே வரக்கண்டான். வெகு காலமாய்க் கடும் தவம் செய்து ஸம்பாதித்த மஹிமையால் தேவாஸுரர்களும் அவரை ஜயிக்க முடியாது. கங்கையில் ஸ்நானம்செய்து, தர்ப்பம் ஸமித்து முதலியவைகளை எடுத்துக்கொண்டு ஜ்வலிக்கும் அக்னியைப் போல் வந்தார். இந்திரனுக்கு நடுக்கமெடுத்தது, காந்தி குறைந்தது. தேவர்களுக்கு அரசனாயிருந்தும், மூவுலகத்தில் உள்ளவர்களுக்கும் தர்மத்தை நடத்திக் காட்டவேண்டியவனாக இருந்தும் காமத்திற்கு இடம் கொடுத்து, தன் புண்ணியாசிரமத்தில், தன் ரூபத்தைத் தரித்துத் தன் பார்யையைக் கெடுத்த தேவராஜனைக் கண்டு அந்தத் தபோநிதி அடங்காக் கோபங்கொண்டு "துர்ப்புத்தி பிடித்தவனே! என் ரூபத்தைத்தரித்து, செய்யக்கூடாத இந்தப் பாபத்தைச் செய்ததால் உனக்கு அதற்கு ஆதாரமான விருஷணங்கள் போகக் கடவது'' என்று சபித்தார். உடனே அப்படியாயிற்று.

பிறகு கௌதமர் அஹல்யையைப் பார்த்து "நீ காற்றைத் தவிர ஆஹாரமின்றி, சாம்பலில் படுத்துக்கொண்டு ஒருவருடைய கண்ணிற்கும் தெரியாமல் இங்கே பல வருஷங்கள் வரையில்

இருக்கக்கடவாய். இக்ஷ்வாகு வம்சத்தரசனான தசரத குமாரன் ஸ்ரீராமசந்திரன் இந்தக் கோரமான வனத்திற்கு வருவார். அவருக்கு அதிதி பூஜைசெய், உன் பாபங்கள் விலகும். நிஜ ரூபத்தை அடைந்து என்னுடன் சேர்வாய். லோபம் மோஹம் தீர்ந்து ஸந்தோஷத்துடன் என் பார்யையாக இருக்க யோக்கியதை பெறுவாய்' என்று கற்பிழந்தவருக்கு நியமிக்கப்பட்ட பிராயச்சித்தத்தைச் சாப ரூபமாகச் சொல்லி, அதற்குப் பரிஹாரத்தையும் தெரிவித்து, இந்த ஆசிரமத்தைவிட்டு ஸித்தசாரணர்கள் வஸிக்கும் வெகு புண்ணிய ஸ்தலமான ஹிமயமலைச் சிகரத்தில் தவம் செய்யப் போனார்.

*இமமாஶ்ரம முத்ஸ்ருஜ்ய ஸித்$^{3}$த$^{4}$ சாரண ஸேவிதே |*
*ஹிமவச்சி$^{2}$க$^{2}$ரே ரம்யே தபஸ் தேபே மஹாதபா: ||* *(36)*

---

## ஸர்க்கம் 49

# அஹல்யா சாப விமோசனம்

*அப$^{2}$லஸ்து தத: ஶக்ரோ தே$^{3}$வா நக்$^{3}$நி புரோ த$^{4}$ஸ: |*
*அப்ர$^{3}$வீத் த்ரஸ்த வத$^{3}$ந: ஸர்ஷி ஸங்கா$^{4}$ந் ஸசாரணாந் ||* *(1)*

மஹரிஷியின் சாபத்தால் இந்திரன் விருஷணமற்றுப் பயத்தால் நடுங்கி, முகம் வாடி, அக்னி முதலிய தேவதைகளிடத்திற்குச் சென்று, "கௌதமருடைய தவத்தைக் கெடுக்க அவருக்குக் கோப மூட்டிச் சபிக்கும்படி செய்யச்சொன்னீர்கள். உங்களுடைய காரியமாகவே நான் போய் அவருடைய தவத்தைக் குறைத்தேன். அதனால் விருஷணங்களை இழந்தேன். அவருடைய பாரியையான அஹல்யை கோரமான கதியை அடைந்தாள். தேவர்களே! உங்களுக்காக இவ்வளவு சிரமப்பட்டு ஆபத்தை அடைந்த என்னை விருஷண முள்ளவனாகச் செய்யவேண்டும்" என்றான்.

அக்னி முதலிய தேவர்களும் ரிஷிகளும் பித்ருக்களிடத்திற்கு வந்து, "நம் அரசன் கௌதமருடைய சாபத்தால் விருஷண மற்றான். தங்களுக்கு யாகத்தில் கொடுக்கப்படும் ஆட்டின் விருஷணங்களை அவனுக்குக் கொடுங்கள். விருஷணமில்லாத ஆடுகளால் உங்களுக்கு விசேஷ திருப்தியுண்டாகட்டும். அவைகளைக் கொடுக்கும் யஜமானர்களுக்கும் க்ஷேமம் உண்டாகட்டும்" என்றார்கள். அப்படியே பிதிரு தேவதைகள் ஆட்டின் விருஷணத்தை இந்திரனுக்குக் கொடுத்தார்கள். கௌதமருடைய தபோபலத்தால் இந்திரனுக்கு அன்று முதல் 'மேஷவிருஷணன்' என்ற பெயர் கிடைத்தது. பிதிரு தேவதைகள் விருஷணமில்லாத ஆடுகளை அங்கீகரித்து யாகம் செய்கிறவர்களுக்குப் பூர்ண பலத்தைக் கொடுத்து வருகிறார்கள். ராம! அந்தப் புண்ணியாத்மாவான கௌதமருடைய ஆசிரமத்திற்குப் போவோம், வா. கோரமான சாபத்திலிருந்து அஹல்யையை விடுவிக்கக் கடவாய்" என்றார்.

Notes : This Blank Page has also to be counted as a another page Number.

It is intentionally left blank after Picture Sketches.!



ஸா ஹி கௌ³தம வாக்யேந து³ர்நிரீக்ஷ்யா ப³பூ⁴வ ஹ |
த்ரயாணுமபி லோகாநாம் யாவத்³ ராமஸ்ய த³ர்ஶநம் ||
ஶாபஸ்யாந்த முபாக³ம்ய தேஷாம் த³ர்ஶந மாக³தா || —பால. 49ஸ-18 ஸ.

அந்த அஹல்யை கௌதமருடைய சாபத்தால் ராமன் வரும்வரையில் மூன்று லோகங்களிலும் உள்ளவர்களுக்கு காணப்படாமலிருந்தாள். ராமர் வந்தபிறகு சாபவிமோசனமடைந்து அவர்களுக்குக் காணப்பட்டாள்.
(பக்கம் 115 பார்க்க)



அப்படியே ராமலக்ஷ்மணர்கள் அந்த மஹரிஷியை முன்னிட்டுக் கொண்டு ஆசிரமத்தில் பிரவேசித்தார்கள். அஹல்யை அநேக வருஷங்களாய் அனுஷ்டித்த கடும் தவத்தால் நிகரற்ற காந்தி பொருந்தித் தேவாஸுரர்களும் பார்க்கமுடியாத திவ்விய ரூபத்துடன் விளங்கினாள். பிரஹ்மாவின் மாயாசக்தியால் வெகு சிரமப்பட்டு சிருஷ்டிக்கப்பட்டவள். பனியாலும் மேகங்களாலும் மறைக்கப்பட்ட பூர்ண சந்திரனைப்போல், மரங்களும் கொடிகளும் இலைகளும் புஷ்பங்களும் அவளை மறைத்துக்கொண்டிருந்தன. புகையால் சூழப்பட்ட அக்கினிக் கொழுந்தைப் போலும், ஜலத்தின் நடுவில் பிரதிபிம்பித்த சூரியகாந்தியைப் போலும் விளங்கினாள். அந்த அஹல்யை கௌதமருடைய சாபத்தால் ராமன் வரும் வரையில் மூன்று லோகங்களிலும் உள்ளவர்களுக்கு காணப்படாமலிருந்தாள். ராமர் வந்த பிறகு சாபவிமோசன மடைந்து அவர்களுக்கு காணப்பட்டாள். ராமலக்ஷ்மணர்கள் அவளுடைய பாதங்களில் நமஸ்கரித்தார்கள். அஹல்யையும் கௌதமருடைய வார்த்தையை ஞாபகத்தில் வைத்துக்கொண்டு, அர்க்யபாத்யம் முதலியவைகளைக் கொடுத்து அவர்களுக்கு விதிப்படி அதிதிபூஜை செய்தாள். ராமன் அதை அங்கீகரித்தார்; உடனே தேவர்கள் புஷ்பமாரி பொழிந்தார்கள்; தேவ துந்துபிகள் முழங்கின; கந்தர்வர்கள் பாடினார்கள். அப்ஸரஸ்கள் நாட்டிய மாடினார்கள். தவத்தால் சுத்தி யடைந்து கௌதமரோடு சேர்ந்த அஹல்யையைத் தேவர்கள் கொண்டாடிப் பூஜித்தார்கள். கௌதமர் ராமனுடைய வரவை ஞான திருஷ்டியால் அறிந்து, அவ்விடம் வந்து, அஹல்யையுடன் ராமனை விதிப்படி பூஜித்து, அங்கே வெகுகாலம் தவம் செய்துக்கொண்டிருந்தார். ராமன் அவர்களுடைய பூஜையைப் பெற்றுக்கொண்டு மஹரிஷிகளுடன் மிதிலையை நோக்கிச் சென்றார்.

ராமோபி பரமாம் பூஜாம் கௌ³தமஸ்ய மஹாமுநே: |
ஸகாஶாத் விதி⁴வத் ப்ராப்ய ஜகா³ம மிதி²லாம் தத: || (22)

---

## ஸர்க்கம் 50
## ஜனகர் அவர்களை உபசரித்தது

தத: ப்ராகு³த்தராம் க³த்வா ராம: ஸௌமித்ரிணா ஸஹ |
விஶ்வாமித்ரம் புரஸ்க்ருத்ய யஜ்ஞவாட முபாக³மத் || (1)

**அவதாரிகை**

ராமன் ஸகல லோகங்களையும் பரிசுத்தம் செய்யக்கூடியவர் என்பதை அஹல்யா விருத்தாந்தத்தால் உபதேசித்து, ஸ்ரீயப்பதியான மஹாவிஷ்ணு அவரே என்பதை ஸீதா விவாஹ விருத்தாந்தத்தால் வால்மீகி தெரிவிக்கிறார்.

---

பிறகு விசுவாமித்திரர் ராம லக்ஷ்மணர்களுடனும் மற்ற ரிஷிகளுடனும் அங்கிருந்து வடகிழக்காய் ஜனகருடைய யாகசாலையை நோக்கிச் செல்லும்பொழுது, ராமன், "மஹரிஷே! ஜனகர் யாகத்திற்காகச் செய்திருக்கும் ஏற்பாடுகள் வெகு சிலாக்கியமானவை. வேதாத்தியயனம் செய்த பிராம்மண சிரேஷ்டர்கள் நாநா தேசங்களிலிருந்து ஆயிரக் கணக்காய் வந்திருக்கிறார்கள். மஹரிஷிகளுடைய பர்ணசாலைகள், அநேக வண்டிகளால் சூழப்பட்டு அங்கங்கே விளங்குகின்றன. நமக்கும் வஸிப்பதற்கு ஓரிடத்தை ஏற்படுத்தவேண்டும்" என்றார். அப்படியே விசுவாமித்திரர் சுத்தமாய் ஜனக் கூட்டமில்லாமல் ஜல ஸௌகர்யமுள்ள ஓர் ஸ்தலத்தில் தங்கினார். அவர் வந்திருப்பதை அறிந்து, ஜனகர் தன் புரோஹிதரான சதாநந்தரை முன்னிட்டுக்கொண்டு, தீக்ஷை செய்துகொண்டவர்களுக்கேற்பட்ட எல்லையைத் தாண்டாமல் அந்த முனிசிரேஷ்டரை எதிர்கொண்டழைத்தார்; அவருடைய ரித்விக்குகள் சாஸ்திர விதிப்படி அர்க்ய பாத்ய மதுபர்க்கங்களால் காதிபுத்திரரைப் பூஜித்தார்கள். அவர் அதைப் பெற்றுக்கொண்டு அரசனையும் அவர் செய்யும் யாகத்தையும் அங்கு வந்த முனிவர்களையும் ரித்விக்குகளையும் புரோஹிதரையும் பற்றித் தகுந்தபடி க்ஷேமம் விசாரித்துக் கொஞ்ச நேரம் அவர்களுடன் பேசிக்கொண்டிருந்தார்.

பிறகு ஜனகர் விசுவாமித்திரரை நமஸ்கரித்துக் கைகூப்பி, "தாங்களும் இந்த மஹரிஷிகளும் உத்தமமான ஆஸனங்களில் உட்காரவேண்டும்" என்று பிரார்த்தித்தார். அவர்களும் ரித்விக்குகளும் புரோஹிதரும் ஜனகரும் மந்திரிகளும் தகுந்த ஆஸனங்களில் உட்கார்ந்த பிறகு, அவ்வரசன் அந்த மஹரிஷியைப் பார்த்து, "ஸ்வாமி! தாங்கள் மஹரிஷிகளுடன் இங்கே வந்து எனக்குத் தரிசனம் கொடுத்தபடியால், தேவதைகள் என்மேல் கிருபை செய்து என் யக்ஞத்தை இன்று பூர்த்தி செய்தார்கள்; அது இருக்கட்டும், தங்களைத் தரிசித்ததே நான் செய்யும் யக்ஞத்திற்குப் பலன் என்று எண்ணுகிறேன்; தன்யனானேன்; தங்களுடைய அனுக்கிரஹம் பெற்றேன். தாங்களும் இந்த முனிவர்களும் என் யக்ஞசாலைக்கு வந்தீர்களல்லவா? இந்த யாகம் முடிவதற்கு இன்னும் பன்னிரண்டு தினங்கள் செல்லுமென்று ரித்விக்குகள் சொல்லுகிறார்கள். பிறகு ஸுத்யாதினத்தில் தேவதைகள் தங்களுடைய பாகங்களைப் பெற்றுக்கொள்ள இங்கே வருவதைப் பார்க்கலாம். அதுவரையில் இருந்து யாகத்தை நடத்தி என்னை அனுக்ரஹிக்கவேண்டும்" என்று பிரார்த்தித்தார்கள்.

பிறகு ராம லக்ஷ்மணர்களைப் பார்த்து அளவற்ற ஆனந்தமடைந்து, மஹரிஷியை மறுபடியும் வணங்கிக் கைகூப்பி, "பகவன்! தங்களுக்கு பரம மங்களம் உண்டாகட்டும். இந்தக் குழந்தைகள் யார்? பராக்கிரமத்தில் தேவதைகளைப் போன்றவர்கள்.



கம்பீரமான நடையால் யானையையும், சத்துருக்களை அவமதிக்கக் கூடிய நடையால் ஸிம்ஹத்தையும், விரோதிகள் கண்டு நடுங்கும் நடையால் புலியையும், கர்வமுள்ள நடையால் விருஷபத்தையும் ஒத்தவர்கள். தாமரை இதழ் போன்ற விசாலமான நேத்திரங்களால் பார்க்கிறவர்களின் மனத்தை அபகரிக்கிறார்கள். இந்தச் சிறு வயதிலும் மஹா வீரர்கள் தரிக்கும் கத்தி வில் அம்புறை முதலியவைகளை சுலபமாய்த் தரிக்கிறார்கள். அழகில் அசுவினி தேவதைகளும் இவர்களுக்கு ஈடோ? பால்யம் நீங்கி யௌவனம் ஆரம்பித்திருக்கிறது. தேவலோகத்தில் வஸிக்கும் தேவர்கள் பூலோக வாஸிகளிடத்தில் கிருபை செய்து இங்கே வந்ததுபோலிருக்கிறது. ஆகாசம் பகலில் சூரியனாலும் ராத்திரியில் சந்திரனாலும் விளங்குகிறது; ஆனால் சூரிய சந்திரர்களைப் போன்ற இந்த ராஜ குமாரர்களால் இந்தத் தேசம் ஒரே காலத்தில் பிரகாசிக்கிறது. வெகு செல்வமாய் வளர்க்கப்பட்ட குழந்தைகள் இந்தக் காட்டு மார்க்கங்களில் எப்படி நடந்து வந்தார்கள்? எதைக் குறித்து வந்திருக்கிறார்கள்? இவர்களுடைய திவ்விய மங்கள விக்கிரஹத்தைப் பார்த்தால் ஸகல இச்சைகளும் நிறைவேறிய மஹா புருஷர்களென்று தோன்றுகிறது. ஆகையால் பிறருடைய க்ஷேமத்தை உத்தேசித்தே வந்திருக்கவேண்டும். இவர்களைப் புத்திரர்களாய் அடையும் பாக்கியத்தைப் பெற்ற மஹான்கள் யார்? அளவு உயரம் நடை உடை பார்வை பேச்சு செய்கை முதலிய லக்ஷணங்களில் இருவருக்கும் பேதம் கண்டு பிடிப்பது அரிது. ஜனங்கள் ஸஞ்சரிக்க முடியாத இந்த வனங்களின் வழியாய் இந்த ராஜ குமாரர்கள் சிரேஷ்டமான ஆயுதங்களைத் தரித்துக்கொண்டு வந்த காரணத்தை விஸ்தாரமாய் எனக்குச் சொல்லவேண்டும். தங்களை ஆசிரயித்தவர்களுடைய கஷ்டத்தையும் துக்கத்தையும் தீர்க்க வந்திருக்கிறார்களென்று பொதுவாய் அறிந்தேன். ஆனாலும் இன்னும் நன்றாக அந்த விஷயங்களை அறிய விரும்புகிறேன்" என்றார். அப்பொழுது விசுவாமித்திரர், அவர்கள் தசரத சக்கரவர்த்தியின் புத்திரர்களென்பதையும், தான் செய்யும் யாகத்தை ரக்ஷிப்பதற்காகத் தன்னுடன் வந்து ராக்ஷஸர்களை ஸம்ஹரித்ததையும், விசாலா நகரத்திற்கு வந்ததையும், கௌதமருடைய ஆசிரமத்தில் அஹல்யையின் சாபத்தைத் தீர்த்ததையும், கௌதமரை ஸந்தித்ததையும், மிதிலையிலுள்ள சிவ தனுஸின் ஸாரத்தைப் பரீக்ஷிப்பதற்காக அங்கே வந்ததையும் தெரிவித்தார்.

ஏதத் ஸர்வம் மஹாதேஜா ஜநகாய மஹாத்மநே |
நிவேத்[3]ய விரராமாத[2] விஶ்வாமித்ரோ மஹாமுநி: || (28)

## ஸர்க்கம் 51

# வஸிஷ்டரும் விசுவாமித்திரரும்

*தஸ்ய தத்³வசநம் ஶ்ருத்வா விஶ்வாமித்ரஸ்ய தீ⁴மத: |*
*ஹ்ருஷ்டரோமா மஹாதேஜா: ஶதாநந்தோ³ மஹாதபா: ‖ (1)*

அதைக் கேட்டுக்கொண்டிருந்த சதானந்தரென்ற மஹா தபஸ்வி, "ராம! என் தாயைக் கோரமான சாபத்திலிருந்து விடுவித்த மஹாத்மா நீயல்லவா!" என்று அளவற்ற ஆச்சரியமடைந்தார். பார்க்கப் பார்க்க ஆனந்தம் பெருகி மயிர்க் கூச்சலுண்டாயிற்று. சுகமாய் உட்கார்ந்து கொண்டிருக்கும் ராஜ குமாரர்களை மறுபடியும் கண்ணுரைப் பார்த்து அந்தக் கௌதமகுமாரர் "முனிவரா! சாம்பலில் படுத்து, வாயுபக்ஷணம் முதலிய கடுமையான பிராயச்சித்தங்களை அனுஷ்டித்துவந்த மஹாகீர்த்திசாலியான என் தாயை இவருக்குக் காட்டினீர்களா? காட்டில் கிடைக்கும் பதார்த்தங்களால் அவள் இந்த மஹா தேஜஸ்வியை விதிப்படி பூஜித்தாளா? யாவரும் பூஜிக்கத் தகுந்த இந்த மஹாபுருஷன் அதை அங்கீகரித்தாரா? முன்பு இந்திரனுல் என் தாய்க்கு நேர்ந்த கெடுதியை விஸ்தாரமாய் இவருக்குச் சொன்னீர்களா? இவரைத் தரிசித்து ஸகல பாபங்களிலிருந்தும் விடுபட்டுப் பரிசுத்தையாய் என் பிதாவுடன் சேர்ந்து ஸந்தோஷித்தாளா? இந்த மஹா தேஜஸ்வி, அவரால் விதிப்படி அதிதி பூஜையைப் பெற்று இங்கே வந்தாரா? அவர் கோபம் தணிந்து சாந்தமாயிருக்கையில் ராமன் அவரை நமஸ்கரித்தாரா?" என்றுர்.

பேசும் திறமையுள்ள கௌசிகர், "எந்தெந்தக் காலத்தில் யார் எதைச் செய்யவேண்டுமோ அதெல்லாம் நடந்தது, ஒன்றும் பிசகவில்லை. ஜமதக்னியுடன் ரேணுகை சேர்ந்ததுபோல் உமது மாதா மறுபடியும் கௌதமரை அடைந்தாள்" என்றுர்.

அதைக் கேட்டு சதானந்தர் "ராம, புருஷோத்தம! க்ஷேமமாய் வந்தீரா? ஒப்பற்ற மஹிமையுள்ள கௌசிகரை முன்னிட்டு இங்கே வந்தது உங்களுடைய பெரும் பாக்கியத்தைக் காட்டுகிறது. இந்த மஹா தேஜஸ்வி தபஸால் பிரஹ்மரிஷி பதவியை அடைந்தவர். இவருடைய செய்கை மனத்திற் கெட்டாதது. இவர் உமக்குப் பரம அனுக்கிரஹத்தைச் செய்யக்கூடியவரென்று அறியும். இந்த மஹா தபஸ்வியால் ரக்ஷிக்கப்பட்ட உம்மைக்காட்டிலும் பாக்கியவான் மூவுலகத்திலும் இல்லை. குசிக வம்சத்திற்கு ரத்தின தீபம்போல் விளங்கும் இந்த மஹானுடைய சரிதத்தையும் தவத்தையும் மஹிமையையும் எனக்குத் தெரிந்தவரையில் சொல்லுகிறேன், கேளும்.

பிரஹ்மாவிற்குக் குசரென்று ஒரு புத்திரர்; அவர் ஸகல வித்தைகளிலும் நிபுணர்; தர்ம ரஹஸ்யங்களை அறிந்து அனுஷ்டிப்பவர்; பிரஜைகளின் நன்மையையே கோரினவர்; சத்ருக்களை ஜயித்தவர். வெகு காலம் அரசாண்டார். அவருடைய புத்திரன் குசநாபரென்ற தார்மிகர். அவருடைய புத்திரன் காதியென்று பிரஸித்தியடைந்தவர். அவருடைய புத்திரன் இந்த விசுவாமித்திர மஹரிஷி. இவர் அநேக ஆயிர வருஷங்கள் வரையில் ராஜ்யத்தை ஆண்டுவந்தார். ஒருக்கால் சதுரங்க ஸைன்யத்துடன் பூமியைச் சுற்றி வந்தார். நாடு நகரம் ஆறு ஏரி மலை வனம் புண்யாசிரமம் முதலியவைகளைப் பார்த்துக் கொண்டு அக்ஷௌஹிணி ஸைன்யத்துடன் வஸிஷ்ட மஹரிஷியின் ஆசிரமத்திற்குப் போனர். அது பலவகைப் பக்ஷிகளாலும் மிருகங்களாலும் நிறைந்து ஸித்த சாரண கந்தர்வ கின்னர தானவ பிரஹ்மரிஷி தேவரிஷி மஹரிஷிகள் ஆனந்தமாய் வஸிக்கக்கூடிய ஸ்தலம். மான்கள் பயமின்றி ஸஞ்சரித்தன. கடுந்தவம் செய்து சுத்தி அடைந்த எண்ணிறந்த மஹாத்மாக்கள் அக்னியைப்போல் தேஜஸால் ஜ்வலித்துக்கொண்டு அங்கே வஸித்தார்கள். சிலர் கிழங்கு வேர் பழங்களையும், சிலர் சருகுகளையும், சிலர் ஜலத்தையும், சிலர் காற்றையும் புசிப்பவர்கள்; காமக்குரோதங்களையும் ஜயித்து ஞானேந்திரிய கர்மேந்திரியங்களை அடக்கி, நிர்மலமான அந்தக்கரணத்தை நிர்விகல்ப ஸமாதியில் நிறுத்தினவர்கள் பலர். ஜப ஹோமவிரத அனுஷ்டானங்களில் மனத்தை நாட்டினவர் பலர். பிரஹ்மாவின் தேகத்திலிருந்துண்டான வாலகில்யர்களும், வைகானஸர்களும் அங்கே இருந்தார்கள். இப்படி வஸிஷ்டருடைய புண்ணியாசிரமம் பிரஹ்மலோகத்தைப் போல்விளங்கிக் கொண்டிருப்பதை இந்த ராஜசிரேஷ்டர் பார்த்தார்.

*வஸிஷ்டா²ஸ்யாஶ்ரம பத³ம் ப்³ரஹ்ம லோக மிவாபரம் |*
*த³த³ர்ஶ ஜயதாம் ஶ்ரேஷ்டோ² விஶ்வாமித்ரோ மஹாப³ல:(28)*

## ஸர்க்கம் 52

# வஸிஷ்டர் விருந்து செய்தது

*ஸ த்³ருஷ்ட்வா பரம ப்ரீதோ விஶ்வாமித்ரோ மஹாப³ல: |*
*ப்ரணதோ விநயாத்³ வீரோ வஸிஷ்ட²ம் ஜபதாம் வரம் ‖ (1)*

மஹா பலவானை விசுவாமித்திரர் மிகுந்த ஸந்தோஷமடைந்து நிகரற்ற தபோ பலமுடைய வஸிஷ்டரை விதிப்படி நமஸ்கரித்தார். அந்த மஹாத்மா இவரை நல்வரவு விசாரித்து ஆஸனம் கொடுத்து, வேர் கிழங்கு பழங்களால் அதிதி பூஜை செய்தார். அதைப் பெற்றுக் கொண்டு இவர் வஸிஷ்டரையும் அவருடைய தவத்தையும் அக்னிஹோத்திரத்தையும் சிஷ்யர்களையும் ஆசிரமங்களையும் மிருகங்களையும் பற்றி க்ஷேமம் விசாரித்தார். "எல்லாம் ஸௌக்கியம்" என்று வஸிஷ்டர் பதில் சொல்லி, அரசன் ஸுகமாய் உட்கார்ந்த

பிறகு அந்த பிரஹ்மபுத்திரர் "மஹாராஜ! தாங்கள் க்ஷேமமா? ஜனங்களை தர்மமாய் ஆண்டு வருகிறீரா? ராஜநீதி தவறாமல் தனத்தைத் தர்மமாய் ஸம்பாதித்து விருத்தி செய்து காப்பாற்றி நல்ல பாத்திரத்தில் உபயோகித்து, ஜனங்களைத் திருப்தி செய்கிறீரா? உமது வேலைக்காரர்களை நன்றாய்ப் போஷிக்கிறீரா? அவர்கள் உமது உத்தரவுப்படி நடக்கிறார்களா? சத்துருக்களை ஜயித்தீரா? உமது ஸைன்யம் நண்பர்கள் பொக்கிஷம் புத்திர பௌத்திரர்கள் பந்து பரிவாரங்கள் குறைவின்றி க்ஷேமமாக இருக்கிறார்களா? இப்படி இருப்பதே எனக்கு மிகுந்த ஸந்தோஷத்தைக் கொடுக்கும்" என்றார். இவர் "மஹரிஷே! தங்களுடைய அனுக்கிரஹத்தால் எனக்கு யாதொரு குறையும் இல்லை" என்று வணக்கமாக பதில் சொன்னார்.

பிறகு அவ்விரு தர்மவான்களும் வெகுநேரம் புண்ணிய கதைகளைப் பேசிக்கொண்டு அளவற்ற ஸந்தோஷமடைந்தார்கள். அது முடிந்தவுடன் வஸிஷ்டர் மலர்ந்த முகத்துடன் "மஹாராஜ! நீர் உத்தம ஸ்வபாவமுள்ளவர்; வர்ணாசிரம தர்மங்களைக் குறைவற அனுஷ்டிப்பவர்; வித்யை வீரியம் நீதியால் வெகு பிரஸித்தியடைந்தவர்; எங்களை ரக்ஷித்து எங்களுடைய தர்மத்தை நடப்பிக்கும் அரசன்; என்னைத் தேடிவந்த அதிதி; எனக்குப் பிரியமான மித்திரன்; உம்மைப் பூஜிப்பதற்கு இந்தக் காரணங்களில் ஒன்றே போதும்; ஆகையால் உமக்கும் ஸைன்யங்களுக்கும் தகுந்தபடி அதிதி பூஜை செய்ய விரும்புகிறேன். அளவற்ற பலத்தையும் மனத்திற்கெட்டாத வீரியத்தையும் படைத்தவர். ஆயினும் என் எண்ணத்தை நிறைவேற்றி என்னாலியன்ற உபசாரத்தை அங்கீகரிப்பீரென்று நம்புகிறேன்" என்றார்.

கௌசிகர், "ஸ்வாமி! தாங்கள் இதுவரையில் பழம் கிழங்கு வேர்களாலும், அர்க்கியம் பாத்தியம் ஆசமனீயத்தாலும் என்னை உபசரித்ததே போதும். "உனக்கு அதிதி பூஜை செய்ய விரும்புகிறேன்" என்ற பிரியமான வார்த்தையே அந்த உபசாரத்தைப் பெறும் ஸந்தோஷத்தைக் கொடுத்தது. இது போகட்டும். ஸகல லோகங்களும் பூஜிக்கத் தகுந்த தாங்கள் என்னை ஒரு பொருட்டாக எண்ணி உபசரித்ததே போதும். மஹா புண்ணிய கர்மங்களின் பலனை தங்களுடைய தரிசனம் எனக்குக் கிடைத்ததைவிட நான் அதிகமாய் என்ன விரும்பப் போகிறேன். தங்களை நமஸ்கரிக்கிறேன். உத்தரவு கொடுத்தனுப்பவேண்டும். என்னையும் தங்களுடைய நண்பனாய் நினைத்து, கிருபாகடாக்ஷத்தால் பார்க்க வேண்டும்" என்றார். அப்பொழுது மூன்று காலங்களையும் அறிந்த வஸிஷ்டர், பிறகு நேரும் விஷயங்களைப் பார்த்து விசுவாமித்திரரைப் பல தடவை நிர்ப்பந்தித்து, தன் அதிதி பூஜையைப் பெற்றுக் கொள்ளவேண்டும்" என்றார். கௌசிகர் "ஸ்வாமி! தாங்கள் இவ்வளவு தூரம் சொல்லும்பொழுது நான் தடுப்பது உசிதமல்ல. தங்களுக்கு வீண் சிரமத்தைக் கொடுக்க வேண்டுமே என்ற கவலையைத் தவிர வேறு ஆக்ஷேபமில்லை. இஷ்டப்படியே ஆகட்டும்" என்றார். அப்பொழுது அந்த மஹா தேஜஸ்வி விசித்திரமான நிற மூட்டிய 'சபலை' என்ற பசுவைப் பார்த்து, "பெண்ணே! சீக்கிரமாய் வா. நான் சொல்வதைக் கேள். இந்த ராஜரிஷிக்கும் இவருடைய ஸைன்யத்திற்கும் தகுந்தபடி விருந்து செய்ய விரும்புகிறேன். யாருக்கு எது இஷ்டமோ அந்த அன்னம் பக்ஷ்யம் பானம் ரஸம் அறுசுவை பதார்த்தங்கள், கடித்துத் தின்னக்கூடிய முறுக்கு முதலியவை, குடிக்கக் கூடிய பானம் முதலியவை, நக்கிச் சாப்பிடக் கூடிய தேன் முதலியவை, உறிஞ்சக்கூடிய தயிர் முதலியவை, பல வகை வாஸனைத் திரவியங்கள், புஷ்பங்கள், பூச்சுகள், தாம்பூலம் யாவும் நினைத்தவுடன் குறைவின்றிப் பொழிய வேண்டும். விரும்பின யாவற்றையும் உடனே கொடுக்கும் சக்தியுள்ள காமதேனு அல்லவா? எனக்காக இவை யாவையும் வெகு சீக்கிரத்தில் ஸித்தம் செய்" என்றார்.



ரஸேநாந்நேந பாநேந லேஹ்ய சோஷ்யேண ஸம்யுதம் |
அந்நாநாம் நிசயம் ஸர்வம் ஸ்ருஜஸ்வ ஶப$^{3}$லே த்வர || (23)

---

## ஸர்க்கம் 53

## விசுவாமித்திரர் காமதேனுவை யாசித்தது

---

ஏவமுக்தா வஸிஷ்டே$^{2}$ந ஶப$^{3}$லா ஶத்ருஸூத$^{3}$ந |
வித$^{3}$தே$^{4}$ காமது$^{4}$க் காமாந் யஸ்ய யஸ்ய யதே$^{2}$ப்ஸிதம் || (1)

வஸிஷ்டரோ பிரஹ்மாவின் புத்திரர்; பாப லேசமற்றவர்; புண்ணியநிதி; தவத்தால் நிகரற்ற தேஜஸுள்ளவர்; மந்திரங்களுக்கு உத்பத்தி ஸ்தானம். அந்த மஹாத்மா உத்தரவு செய்தவுடன் யார் எதை விரும்பினார்களோ அதைச் சபலை உடனே எல்லையில்லாமல் பொழிந்தது. கரும்பு ரஸங்கள், தேன், பொரி, மைரேயமென்ற பானம், பானகம், அப்பம், வடை, மலை போன்ற உஷ்ணமான அன்னக் குவியல்கள், சித்ரான்னங்கள், பாயஸ வகைகள், நெய் வாய்க்கால்கள், தயிர் ஏரிகள், ருசியுள்ள ரஸவகைகள், வெல்லப் பக்ஷணங்கள், இன்னும் மனத்தால் நினைக்கக்கூடிய போஜன பதார்த்தங்களும் நினைத்தவுடன் கிடைத்தன. கௌசிகருடைய பெண்டு பிள்ளை, பந்து பரிவாரம், ஸைன்யம், மந்திரி புரோஹிதர் பிராம்மணர் ஸேனாபதி வேலைக்காரன் முதலிய அனைவரும், வஸிஷ்டருடைய உபசாரத்தாலும் விருந்தாலும் அளவற்ற ஸந்தோஷமடைந்து, வேண்டியவரையில் ஸகல ஸுகங்களையும் அனுபவித்தார்கள். விசுவாமித்திரர் அளவற்ற ஆனந்தமடைந்து வசிஷ்டரை நமஸ்கரித்து, "ஸ்வாமி! எல்லோரும் தங்களைப் பூஜிக்கவேண்டியிருக்க, தாங்களே என்னையும் என்னைச் சேர்ந்தவர்களையும் எல்லை

மீறிப் பூஜித்தீர்கள். என்னைப் போன்ற க்ஷத்திரியன் தங்களைப் போன்ற பிரஹ்மக்ஞானியால் இப்படி உபசரிக்கப்படுவது பூர்வ ஜன்ம புண்ணியபலமின்றி வேறல்ல. தங்களுடைய தபோ பலத்தையும் மஹிமையையும் பார்க்கையில் ஒரு பிரார்த்தனை செய்ய விரும்புகிறேன். ஞானநிதியும் பேசும் திறமையில் நிகரற்றவருமான தங்களிடத்தில் நான் என்ன சொல்லப் போகிறேன். அநேக லக்ஷம் பசுக்களைக் கொடுக்கிறேன். இந்தச் சபலையை எனக்குக் கொடுங்கள். உத்தம பதார்த்தங்கள் அரசனிடத்தில் இருக்க வேண்டுமென்பது ராஜ தர்மமல்லவா ? ஆகையால் இது என்னிடத்தில் இருப்பதே நியாயம்'' என்றார்.

அப்பொழுது வஸிஷ்டர் மஹாராஜ! பசுக்களை லக்ஷ லக்ஷமாயும் கோடி கோடியாயும் கொடுத்தாலும் சபலையைக் கொடுக்க மாட்டேன். வெள்ளியை மலை மலையாய்க் குவித்தாலும் சபலையைக் கொடுக்கமாட்டேன். பெருந்தன்மையுள்ளவனை விட்டுக் கீர்த்தி பிரிந்திருக்குமா ? அப்படி இந்தச் சபலை என்னிடத்தில் எப்பொழுதும் இருக்கும் பொருள் ஆகும். என்னை விட்டு இதைப் பிரிக்கமுடியாது. தேவதைகளுக்காகச் செய்யும் ஹவ்யங்களும், பிதிருக்களுக்காகச் செய்யும் கவ்யங்களும், காலை மாலையில் செய்யும் அக்னி ஹோத்திரமும், பிராணனைக் காப்பாற்றும் வஸ்துவும், பூதபலியும், தரிச பூர்ண மாஸங்களில் (அமாவாஸ்யை பௌர்ணிமை) செய்யும் ஹோமங்களும் இந்தச் சபலையால் நடக்க வேண்டியவை. ஸ்வாஹாகாரம், வஷட்காரமென்ற கிரியைகளும் இதனால் நடக்கின்றன. இதன் பால் தயிர் நெய் முதலியவைகளைக் குடிப்பதால் பலம், சித்த சுத்தி, புத்திக்கூர்மை, மனத்தில் சாந்தி முதலியவை உண்டாகி, வேதாங்க வித்யை கலை சாஸ்திரங்கள் ஸுலபமாய் கிடைக்கின்றன. எனக்குள்ள தனதான்யமும் செல்வமும் ஸந்தோஷ காரணமும் இதே. இந்தக் காரணங்களாலும் உமக்குச் சொல்ல முடியாத வேறு பல காரணங்களாலும் சபலையை உமக்குக் கொடுக்க மாட்டேன்'' என்றார்.

அதைக் கேட்ட விசுவாமித்திரருக்கு ஆசை அதிகரித்தது. "பதினாலாயிரம் மத யானைகளைத் தங்க அரைப்பட்டை சங்கிலி மாவட்டி அம்பாரி முதலியவைகளுடன் கொடுக்கிறேன். நான்கு வெள்ளைக் குதிரைகள் பூட்டித் தங்கச் சலங்கைகள் மதுரமாய் ஒலிக்கும் எண்ணூறு தங்க ரதங்களைக் கொடுக்கிறேன். காம்போஜம் பாஹ்லிகம் முதலிய தேசங்களிலுண்டாகி, கந்தர்வ குலத்தில் பிறந்த பதினோராயிரம் உத்தம அசுவங்களைக் கொடுக்கிறேன். நானு வர்ணங்களையுடைய நல்ல யௌவனமுள்ள கோடி பசுக்களைக் கொடுக்கிறேன். இந்த சபலையை எனக்குக் கொடுக்கவேண்டும்.'' என்று பிரார்த்தித்தார். வெகு சாதுர்யமாயும் தந்திரமாயும் கௌசிகர் சொல்ல, வஸிஷ்டர் "எவ்விதத்தாலும் சபலையைக் கொடுக்கமாட்டேன். ஸகல ரத்தினங்களும் தனமும் பிராணனும்



எனக்கு இதே. அமாவாஸ்யை பூர்ணிமை காரியங்களும் யாகயக்ஞங்களும் வைதிக லௌகிக காரியங்களும் இதனாலேயே நடக்க வேண்டும். ஏன் வீணாய் சிரமப்படுகிறீர் ? நீர் கொடுக்கக்கூடியவைகளையும் உம்மால் கொடுக்க முடியாதவைகளையும்கூட நினைத்தவுடன் எல்லையில்லாமல் பொழியும் இந்த சபலையை உமக்குக் கொடுப்பேனா'' என்றார்.

அதோ[3]மூலா: க்ரியா: ஸர்வா: மம ராஜந் ந ஸம்ஶய: |
ப[3]ஹுனா கிம் ப்ரலாபேந ந தா[3]ஸ்யே காமதோ[3]ஹிநீம் ‖ (25)

ஸர்க்கம் 54

## சபலை யுத்தம் செய்தது

காமதே[4]நும் வஸிஷ்டோ[2]பி யதா[3] ந த்யஜதே முநி: |
ததா[3]ஸ்ய ஶப[3]லாம்ராம விஶ்வாமித்ரோந்வ கர்ஷத ‖

**வ**ஸிஷ்டர் அந்தப் பசுவைக் கொடுக்கமாட்டாரென்று அறிந்து விசுவாமித்திரர் அதைப் பலவந்தமாக இழுக்க ஆரம்பித்தார். அது அழுதுகொண்டு வெகு துக்கத்துடன், "நான் இந்த மஹரிஷிக்கு யாதொரு அபராதமும் செய்யவில்லையே. அவருக்கு என்னிடத்தில் மிகுந்த பிரீதி. எனக்கும் அவரிடத்தில் எல்லையற்ற பக்தி. ஆயினும் என்னைக் கைவிட்டுப் பிறர் அபகரிக்கும்படி ஏன் பார்த்துக்கொண்டிருக்கிறார்.'' என்று அடிக்கடி பெருமூச்சு விட்டு, ராஜ ஸேவகர்களை மூலைக்கு மூலை உதறி அடித்து, வாயு வேகத்துடன் வஸிஷ்டருடைய பாதங்களில் விழுந்து, "ஸ்வாமி ! பிரஹ்மபுத்திர ! தாங்கள் என்னைக் கை விட்டீர்களோ ? தள்ளி விட்டீர்களோ ? இந்த ராஜ ஸேவகர்கள் என்னைப் பலாத்காரம் செய்கிறார்களே. உத்தரவு செய்யுங்கள்'' என்று, மஹா மேகங்களையும் துந்துபி முதலிய வாத்தியங்களையும் போல கம்பீரமாய் கோவென்றலறிப் பிரலாபித்தது. வஸிஷ்டர் தன் உடன் பிறந்தவளைப்போல் அருமையான சபலை சோகத்தால் தவிப்பதைப் பார்த்துப் பொறுக்காமல், "பெண்ணே ! உன்னைக் கைவிடவில்லை. எனக்கு நீ யாதொரு அபராதமும் செய்யவில்லை. இந்த மஹா பலவானான அரசன் பலக்கொழுப்பால் உன்னை இழுத்துக்கொண்டு போகிறார். அவருடைய அக்ஷௌஹிணி ஸைன்யமெங்கே? காட்டில் தவம் செய்யும் என் பலமெங்கே? மேலும் இவர் நம்மை ஆளும் அரசர். தபோபலத்தால் இவரைத் தண்டிப்பது நியாயமல்ல. க்ஷத்திரிய குலத்தில் பிறந்தவர் ; பூபாலர் ; விசாலமான ராஜ்யத்திற்கு அதிபதி; அஸ்திர சஸ்திரபலம் பொருந்தினவீர் ; சதுரங்க ஸைன்யமும் உதவியாயிருக்கிறது. என்னால் என்ன முடியும்?'' என்றார். சபலை அவரை வணங்கி "ஸ்வாமி! தாங்கள் பிரஹ்ம புத்திரர் ; பிரம்ம ரிஷிகளுக்குள் மேலானவர் ; தவத்தால் எல்லையற்ற தேஜஸுள்ளவர் ;

பிராம்மணருடைய தபோ பலத்திற்கு முன் க்ஷத்திரியனுடைய பலம் எம்மாத்திரம்? அதிலும் தங்களுடைய மஹிமையோ மனோ வாக்கிற் கெட்டாதது. தங்களைக் காட்டிலும் பலவான் யார்? விசுவாமித்திரர் மஹா வீரனே. தங்களுடைய தேஜஸை நெருங்க முடியுமோ? தங்களுடைய மந்திர பலத்தால் என் சக்தி வளர்ந்திருக்கிறது. என்னை அனுப்புங்கள். இந்த துஷ்டனுடைய பலத்தையும் கொழுப்பையும் ஒரு க்ஷணத்தில் அழிக்கிறேன்'' என்றது. வஸிஷ்டர், "சத்துருக்களை ஜயிக்கும் ஸைன்யத்தை உண்டாக்கு" என்று ஆக்ஞாபித்தார்.

உடனே அது "ஹூம்பா'' என்று கத்திற்று. அந்தச் சப்தத்திலிருந்து எண்ணிறந்த பப்லவர்கள் உண்டாகி, கௌசிகருடைய ஸைன்யத்தை அவருக்கெதிரிலேயே நாசம் செய்தார்கள். அவர் அடங்காக் கோபம் கொண்டு, கண் சிவந்து, ரதத்திலேறி அந்தப் பப்லவர்களை அஸ்திர சஸ்திரங்களால் கொன்றார். உடனே சபலை எண்ணிறந்த சகர்களையும் யவனர்களையும் ஸிருஷ்டித்தது. அவர்களோ மஹா பலவான்கள். தங்கத் தாமரைத் தாதுவைப் போன்ற நிறமுள்ளவர்கள். நீண்ட பட்டாக் கத்திகளுடன் தங்க நிறமுள்ள ஆடையணிந்து கொழுந்து விட்டெரியும் நெருப்பு, பஞ்சுப்பொதியில்பிடித்ததுபோல் கௌசிகருடைய ஸைன்யத்தில் விழுந்து அதை எரித்தார்கள். அவர் கோபம் கொண்டு பல அஸ்திரங்களால் யவன காம்போஜ பப்லவர்களைத் துண்டுத் துண்டாய் வெட்டித் தள்ளினர்.

*ததோஸ்த்ராணி மஹாதேஜா விஸ்வாமித்ரோ முமோச ஹ |*
*தைஸ் தைர் யவந காம்போ4ஜா: பப்லவாஸ்சாகுலீ க்ருதா: || (23)*

---

## ஸர்க்கம் 55

## விசுவாமித்திர வஸிஷ்ட யுத்தம்

*ததஸ்தாநாகுலாந் த்3ருஷ்ட்வா விஸ்வாமித்ராஸ்த்ரமோஹிதாந் |*
*வஸிஷ்ட2ஸ் சோத3யாமாஸ காமது4க் ஸ்ருஜ யோக3த: || (1)*

**வஸிஷ்டர்** "ஹே,சபலே! உன் யோக பலத்தால் இன்னும் பல ஸைன்யங்களை உண்டாக்கு" என்றார். அது ஹூம்பா என்று கத்திற்று; அதிலிருந்து காம்போஜர்களும், மடியிலிருந்து பப்லவர்களும், குறியிலிருந்து யவனர்களும், சாணத்திலிருந்து சகர்களும் மயிர்க்கால்களிலிருந்து மிலேச்சர்களும் ஹாரீதர்களும் கிராதர்களும் உண்டானார்கள். அரசனுடைய சதுரங்க பலம் 'அக்ஷௌஹிணி' முழுவதும் ஒரு க்ஷணத்தில் அழிந்தது. பிறகு அவருடைய நூறு புத்திரர்கள் ஆயுதங்களுடன் கோபத்தால் ஜ்வலித்துக்கொண்டு வஸிஷ்டரை எதிர்க்க ஓடிவந்தார்கள். மந்திர ஸ்வரூபியான அந்த மஹரிஷி அவர்களை "ஹூம்'' என்று அதட்டினார். உடனே அவர்கள் சாம்ப



லானார்கள். தன் புத்திரர்கள் ஒரு நிமிஷத்தில் மடிந்ததையும் சதுரங்க ஸைன்யம் அழிந்ததையும் கண்டு, அவ்வரசனுக்குச் சொல்ல முடியாத வெட்கமும் கவலையும் உண்டாயிற்று. அலை ஓய்ந்த கடலைப் போலும், விஷப்பற்கள் பிடுங்கப்பட்ட மஹா நாகத்தைப்போலும், ராகுவால் பிடிக்கப்பட்ட சூரியனைப் போலும் திடீரென்று காந்தியை இழந்தார். புத்திரர்களையும் ஸைன்யத்தையும் பறிகொடுத்து, கொழுப்பழிந்து உத்ஸாஹமற்று, மனந்தளர்ந்து, இறகொடிந்தபக்ஷியைப்போல்தீனரானார். மிகுந்திருந்த ஓர் புத்திரனிடத்தில் ராஜ்யத்தை ஒப்புவித்து, "குழந்தாய்! இதை ராஜநீதிப்படி ஜாக்கிரதையாய் ஆளக்கடவாய்'' என்று கட்டளையிட்டு, தேவகந்தர்வ கின்னர கணங்கள் வஸிக்கும் ஹிமயமலைச் சாரலில் வெகு காலம் சிவபிரானைக் குறித்துக் கடுந்தவம் செய்தார். தேவதேவரான உமாபதி, அவருடைய தவத்தால் மகிழ்ந்து, அவருடைய இஷ்டத்தை நிறைவேற்ற பிரஸன்னரானார். "மகாராஜ! எதை வேண்டித் தவம் செய்கிறீர்? கேட்ட வரங்களைக் கொடுக்கிறேன். என்ன வேண்டும்?'' என்றார்.

கௌசிகர் சிவபிரானை வணங்கிக் கைகூப்பி "ஸ்வாமி! தாங்கள் என் தவத்தால் திருப்தியடைந்தால், அங்கம் உபாங்கம் உபநிஷத் ரஹஸ்யம் முதலியவைகளுடன் தனுர் வேதத்தை எனக்கு அருள வேண்டும். தேவ தானவ கந்தர்வ யக்ஷ ராக்ஷஸர்களுக்கும் மஹரிஷிகளுக்கும் எந்த அஸ்திரங்கள் தெரியுமோ அவை யாவும் எனக்குத் தெரிய வேண்டும்'' என்று பிரார்த்தித்தார். அப்படியே ஆகட்டும் என்று சிவபிரான் அனுக்கிரஹித்து, கைலாஸத்திற்குப் போனார்.

விசுவாமித்திரர் க்ஷத்திரியர்; மேலும், அரசன்; மேலும் சிவபிரானிடத்திலிருந்து திவ்வியாஸ்திரங்களைப் பெற்றுவிட்டார், கர்வத்தால் மெய் மறந்தார். ஸமுத்ரம் பர்வகாலங்களில் பொங்குவதுபோல் அவருடைய வீரியம் வளர்ந்தது. வஸிஷ்டரை கொன்றுவிட்டதாகவே முடிவு செய்தார். அதிவேகத்துடன் அவருடைய ஆசிரமத்திற்குப் போய், தன் அஸ்திர பலத்தால் அதை ஒரு க்ஷணத்தில் சாம்பலாக்கினார். அவர் வருவதைக் கண்டு அங்கிருந்த முனிவர்களும் வஸிஷ்டருடைய சிஷ்யர்களும் மிருகங்களும் பக்ஷிகளும் பயத்தால் நடுங்கி மூலைக்கு மூலை சிதறி ஓடினதால், அந்தப் புண்ணிய ஸ்தலம் ஒரு க்ஷணத்தில் சப்தமின்றி பிராணி ஸஞ்சாரமில்லாமல் பாலைவனம் போலாயிற்று. "நீங்கள் சிறிதேனும் பயப்படவேண்டாம். சூரியன் பனியை நாசம் செய்வதுபோல் இந்த காதி புத்திரனை இப்பொழுதே கொல்லுகிறேன்'' என்று வசிஷ்டர் எவ்வளவு தடுத்தும் அவர்கள் நிற்கவில்லை. அந்த ரிஷிக்குக் கோபமுண்டாயிற்று. "மூடா! வெகு காலமாய் எண்ணிறந்த ஸாதுக்களுக்கு இருப்பிடமான இந்தப் புண்ணியாசிரமத்தை அழித்தாயல்லவா? உன் கெட்ட நடத்தை உன்னையேகொல்லும்'' என்று யமதண்டம்போன்றதும்புகையற்றுக்

கொழுந்து விட்டெரியும் காலாக்னியை போல் ஜ்வலிப்பதுமான தமது பிரஹ்ம தண்டத்தைக் கையிலெடுத்தார்.

இத்யுக்த்வா பரமக்ருத்$^{3}$தோ$^{4}$ தண்ட$^{3}$முத்$^{3}$யம்ய ஸத்வர: |
விதூ$^{4}$மமிவ காலாக்$^{3}$நிம் யமதண்ட$^{3}$ மிவாபரம் ‖ (29)

---

## ஸர்க்கம் 56

## விசுவாமித்திரர் தோற்றது

---

ஏவமுக்தோ வஸிஷ்டே$^{2}$ந விஶ்வாமித்ரோ மஹாப$^{3}$ல: |
ஆக்$^{3}$நேய மஸ்த்ர முத்க்ஷிப்ய திஷ்ட$^{2}$திஷ்டே$^{2}$தி சாப்$^{3}$ரவீத் ‖ (1)

அதைக்கேட்டு விசுவாமித்திரர் ஆக்னேயாஸ்திரத்தைஎடுத்து, "ஓய் வஸிஷ்டரே! ஓடாதேயும், நில்லும் நில்லும்" என்று அதட்டினார். அந்த ரிஷி பிரஹ்ம தண்டத்தை உயரத்தூக்கி வெகு கோபத்துடன் "க்ஷத்திரியப்பதரே! நான் ஓடவில்லை!இதோ நிற்கிறேன்.உன் பலத்தை ஒளிக்காமல் காட்டு. உன் கொழுப்பையும் நீ பெற்ற அஸ்திரங்களின் சக்தியையும் இதோ நாசம் செய்கிறேன். உன் க்ஷத்திரிய பலமெங்கே? மஹா தபஸால் ஸம்பாதிக்கப்பட்ட என் பிரஹ்ம பலமெங்கே? அதன் மஹிமையை இப்பொழுது நீ அறிவாய்" என்று, நீர்த்தாரைகள் நெருப்பை அணைப்பதுபோல், ஆக்னேயாஸ்திரத்தை பிரஹ்மதண்டத்தால் நாசம் செய்தார். பிறகு வாருணம் ரௌத்ரம் ஐந்திரம் பாசுபதம் ஐஷீகம் மானவம் மோஹனம் காந்தர்வம் ஸ்வாபனம் ஜ்ரும்பணம் மாதனம் ஸந்தாபனம் விலாபனம் சோஷணம் தாருணம் வஜ்ரம் பிரஹ்மபாசம்காலபாசம் வருணபாசம் பைநாகம் நீரிடி நெருப்பிடி தண்டம் பைசாசம் கிரௌஞ்சம் தர்மசக்ரம் காலசக்ரம் விஷ்ணுசக்ரம் வாயவ்யம் மதனம் ஹயசிரஸ் இரண்டு வித சக்திகள்கங்காளம் முஸலம் வைத்யாதரம் காலம் த்ரிசூலம்காபாலம் கங்கணம் முதலிய பல அஸ்திரங்களை விசுவாமித்திரர் வஸிஷ்டர் மேல் பொழிந்தார். அவை யாவையும் அந்த பிரஹ்மபுத்திரர் தன் பிரஹ்மதண்டத்தால் விழுங்கினார். அவைகளால் அவருக்கு யாதொரு கெடுதியும் நேராததைக் கண்டு ஸகல பிராணிகளும் ஆச்சரியமடைந்தன.

அவை பயனற்றதைக் கண்டு கௌசிகர் பிரஹ்மாஸ்திரத்தை பிரயோகித்தார். அக்னி முதலிய தேவர்களும் தேவரிஷிகளும் கந்தர்வர்களும் அப்ஸரஸ்களும் உரகர்களும், மூவுலகிலுள்ள ஸகல ஜந்துக்களும், "ஐயோ! பிரஹ்மாஸ்திரத்தை பிரயோகிக்கிறாரே! வஸிஷ்டருக்கு என்ன கதி நேருமோ" என்று பயந்து திகைத்தன. பிரஹ்ம வித்யையை அப்யஸித்ததாலுண்டான நிகரற்ற தேஜஸால் நிறைந்த அந்த பிரஹ்மதண்டம், விசுவாமித்திரருடைய மஹா கோரமான பிரஹ்மாஸ்திரத்தையும் விழுங்கிற்று. அப்பொழுது வஸிஷ்டருடைய ரூபத்தைப் பார்த்து மூவுலகிலுள்ள பிராணிகள் பயந்து நடுங்கின.



மயிர்க்கால்களிலிருந்து சூரிய கிரகணங்களைப் போன்ற நெருப்புப் பொறிகள் புகையின்றி சுற்றிலும் விழுந்தன. அவருடைய பிரஹ்ம தண்டம், பிரஹ்மாஸ்திரத்தின் சக்தியை விழுங்கினதால், யமதண்டத்தைப்போலும், புகையற்ற காலாக்னியைப் போலும் பிரகாசித்தது.

அப்பொழுது முனிகணங்கள் மந்த்ர தியான வஸிஷ்டரைக் கொண்டாடி, "பிரஹ்மரிஷியே! தங்களுடைய பலம் வீணாகுமோ? கௌசிகரால் விடப்பட்ட பிரஹ்மாஸ்திரத்தின் தேஜஸைத் தங்களுடைய மஹிமையால் அடக்கவேண்டும். விசுவாமித்திரர் மஹா தபஸ்வியானாலும் தங்களால் ஜயிக்கப்பட்டார். இந்த அஸ்திரங்களின் உஷ்ணத்தால் லோகங்கள் தபிக்கின்றன; கிருபை செய்யுங்கள். பிராணிகளுக்கு உபத்திரவமில்லாமல் காப்பாற்றுங்கள்" என்று வேண்டினார்கள். வஸிஷ்டரும் தன் கோபத்தைத் தணித்துக்கொண்டார். கௌசிகர் தோல்வியடைந்து வெட்கத்தாலும்வருத்தத்தாலும் பெருமூச்செறிந்து, "க்ஷத்திரிய பலத்தைச் சுடவேண்டும். பிரஹ்ம தேஜஸின் பலமே பலம். என்ன ஆச்சரியம்! வெகுகாலமாகக் கடுந் தவம் செய்து சங்கரனை ஆராதித்து அவரிடமிருந்து பெற்ற திவ்வியாஸ்திரங்களை இந்தப் பிராஹ்மணன் கேவலம் தபஸ்வி, ஓர்பிரஹ்ம தண்டத்தால் க்ஷணத்தில் அழித்து விட்டாரே! க்ஷத்திரியனுக்குரிய காமக்குரோதங்களை விட்டு கடுந்தவம் செய்து வஸிஷ்டரைப்போல் பிராஹ்மணனாகி பிரஹ்மரிஷி பதவியை அடைய வேண்டும்" என்று பிரதிக்ஞை செய்தார்.

ததே$^{3}$தத் ஸமவேக்ஷ்யாஹம் ப்ரஸந்நேந்த்$^{3}$ரிய மாநஸ: |
தபோ மஹத் ஸமாஸ்தா$^{2}$ஸ்யே யத்$^{3}$வை ப்$^{3}$ரஹ்மத்வ காரணம் ‖ (24)

---

## ஸர்க்கம் 57

## திரிசங்கு

---

தத: ஸந்தப்த ஹ்ருத$^{3}$ய: ஸ்மரந் நிக்$^{3}$ரஹ மாத்மந: |
விநிஶ்வஸ்ய விநிஶ்வஸ்ய க்ருதவைரோ மஹாத்மநா ‖ (1)

இப்படி வஸிஷ்டரால் தனக்கு நேர்ந்தஅவமானத்தைநினைத்து நினைத்து மனம்கொதித்து அடிக்கடி பெருமூச்சு விட்டு, கௌசிகர் அந்த பிரஹ்மக்ஞானியிடத்தில் எல்லையற்ற துவேஷமடைந்தார்.தன் மனைவியுடன் தெற்கே சென்று, இந்திரியங்களை அடக்கி, கிழங்கு வேர்பழங்களையே புஜித்துக்கொண்டு கடுந்தவம்செய்தார். பிறகுஅவருக்கு ஹவிஷ்யந்தன்,மதுஷ்யந்தன்,த்ருடநேத்ரன், மஹாரதனென்ற அநேக புத்திரர்கள் பிறந்தார்கள். அவர்கள் ஸத்தியத்திலும்,தர்மத்திலும் மனம் நாடினவர்கள், இப்படிக் காமக்குரோதங்களை முற்றிலும்விலக்காமல் செய்த தவம் பூர்ணமாய் பலிக்கவில்லை. ஆயிரம்வரு

ஷங்களுக்குப் பிறகு பிரஹ்மா அங்கே வந்து, "குசிகபுத்திர! உன் தவத்தால் ராஜ ரிஷிகள் அடையும் லோகங்களை ஸம்பாதித்தபடியால் உன்னை ராஜரிஷியாக அங்கீகரிக்கிறேன்" என்று மதுரமாய் அனுகரஹித்து தேவர்களுடன் பிரஹ்மலோகம் போனார்.

விசுவாமித்திரர் வெட்கத்தால் தலைகுனிந்து அளவற்ற துக்கத்தால் நொந்து தீனமாய், "நான் செய்த தவமோ வெகு கோரமானது; அப்படியும் ராஜரிஷி பதவி கிடைத்ததேயொழிய நான் விரும்பிய பிரஹ்மரிஷி பதவி கிடைக்கவில்லையே! இதுவரையில் செய்த தவம் பயனற்றதென்றே சொல்லலாம்" என்று நிச்சயித்து, முன்னைவிடக் கடும்பிரயத்னங்களைச் செய்து அதிகோரமான தவத்தை அனுஷ்டித்தார்.

அக்காலத்தில் இக்ஷ்வாகு வம்சத்தில் வந்த் திரிசங்கு அயோத்தையில் ஆண்டான். அவன் ஸத்தியம் தவருதவன்; இந்திரியங்களை அடக்கினவன்; தான் யாகம் செய்து அந்தச் சரீரத்துடன் ஸ்வர்க்கத்திற்குப் போகவேண்டுமென்ற எண்ணம் அவனுக்கு உண்டாயிற்று. தன் குல குருவான வஸிஷ்டரிடத்தில் அதைத் தெரிவிக்க, அவர் "குழந்தாய்! இதைச் செய்விக்க என்னால் முடியும். பலர் இவ்வழியால் ஸ்வர்க்கமடைந்திருக்கிறார்கள். மனித சரீரத்துடன் ஸ்வர்க்கத்திற்குப் போகிறானென்று சுருதி சொல்லுகிறது. ஆனால் சென்ற கல்பங்களில் நடந்த விருத்தாந்தத்தை ஆலோசித்துப் பார்க்கும் பொழுது இவ்விதமான கர்மபலன் உனக்குக் கிடைக்காது. ஆகையால் இதைப்பற்றி நீ முயற்சி செய்யவேண்டாம்" என்றார்.

அவ்வரசன் அதைக் கேட்டு தெற்கே சென்று வஸிஷ்ட புத்திரர்கள் அக்னியைப் போல் ஜ்வலித்துக்கொண்டு தவம் செய்யுமிடத்திற்கு வந்தான்; தன் குரு புத்திரர்களை நமஸ்கரித்துப் பூஜித்து, வஸிஷ்டரால் தான் தடுக்கப்பட்டதை நினைத்து வெட்கத்தால் சற்றுத் தலை குனிந்து அந்த மஹாத்மாக்களைக் கைகூப்பி வணங்கி, "எல்லோரும் சரணமடையத் தகுந்த தங்களைச் சரணமடைகிறேன். என்னை ரக்ஷியுங்கள். 'உங்கள் பிதா என் குருவாக இருந்தும் அவரை நான் சரணமடைந்தும் அவர் என்னை அங்கீகரிக்கவில்லை. மனுஷ்ய சரீரத்துடன் ஸ்வர்க்கம் போக ஒரு மஹா யக்ஞத்தைச் செய்ய விரும்புகிறேன். தாங்கள் அனுமதி கொடுத்து நடப்பித்து என்னை அனுக்ரஹிக்க வேண்டும். தாங்கள் பிராஹ்மணோத்தமர்கள். உத்தமமான தவம் செய்கிறவர்கள். குரு புத்திரர்கள் உங்களெல்லோரையும் அடிபணிந்து தலைவணங்கி வேண்டுகிறேன். குருவால் தடுக்கப்பட்ட எனக்குக் குரு புத்திரர்களைத் தவிர வேறு கதியில்லை. இக்ஷ்வாகு வம்சத்தரசர்களுக்கு புரோஹிதரான வஸிஷ்டரே பரகதி. அரசர்களுக்கு எவ்வித ஆபத்து நேர்ந்தாலும் தீர்த்து வைப்பார். எதைக் கோரினாலும் அதை அனுக்கிரஹிப்பார். அவர் என்னை ரக்ஷிக்காவிட்டால் அதற்கடுத்த தாங்களே எனக்குப் பரதெய்வம்" என்றான்.



புரோத$^{4}$ஸஸ்து வித்$^{3}$வாம்ஸ: தாரயந்தி ஸதா$^{3}$ ந்ருபாந் |
தஸ்மா த$^{3}$நந்தரம் ஸர்வே ப$^{4}$வந்தோ தை$^{3}$வதம் மம || (22)

---

## ஸர்க்கம் 58

## திரிசங்கு (தொடர்ச்சி)

---

ததஸ் த்ரிஶங்கோர் வசநம் ஶ்ருத்வா க்ரோத$^{4}$ ஸமந்விதம் |
ரிஷிபுத்ர ஶதம் ராம ராஜாந மித$^{3}$ மப்$^{3}$ரவீத் || (1)

அதைக் கேட்ட வஸிஷ்ட புத்திரர்கள் அடங்காக் கோபம் கொண்டு, "அடே, துர்புத்தி பிடித்தவனே! எங்கள் பிதா ஸத்தியம் தவருதவர். அவர் ஒரு விஷயத்தைச் செய்யக்கூடாதென்றால் அது எக்காலத்திலும் நடக்குமா? ஸத்தியமே அவருடைய வார்த்தையாய் விளங்குகிறது. அதற்குக் கட்டுப்படாமல் அவரைக் கைவிட்டு வேறு கிளையைப் பற்றத் துணிந்தாயோ? இக்ஷ்வாகு வம்சத்தரசர்கள் யாவர்க்கும் புரோஹிதரான வஸிஷ்டரே பரம குரு என்றும் பரகதி என்றும் நீயே சொல்லிவிட்டு, அந்த மஹாத்மாவின் வார்த்தையை மீறத்துணிந்தாயல்லவா? எவனாவது ஸ்வப்பனத்திலும் அப்படிச் செய்ய முடியுமா? பிரஹ்ம புத்திரரான வஸிஷ்ட பகவான் முடியாதென்ற பாகத்தை அவருடைய புத்திரர்களும் சிஷ்யர்களுமான நாங்கள் மாத்திரம் செய்யமுடியுமா? நீ ராஜ சிரேஷ்டனென்று பெயர்பெற்றும் ஒன்றும் தெரியாத மூடன். உன் குருவையே மறுபடியும் சரணமடை. மூவுலகத்திலுள்ள எவனுக்கும் எந்தப் பதவியும் கிடைக்கும்படி யாகம் செய்விக்க அவருக்கே திறமையுண்டு. அவருக்கு விரோதமாக இந்த யாகத்தைச் செய்வித்து அவரை அவமானம் செய்ய எங்களுக்குச் சக்தியுண்டென்று எண்ணினாயோ? அந்தக் காரியத்திற்கு எங்களைத் தவிர வேறு மனுஷ்யர்கள் கிடைக்க வில்லையோ? போ" என்றார்கள்.

இப்படி அவர்கள் கடுங்கோபத்துடன் சொல்லக்கேட்டு, திரிசங்கு, சற்றும் கலங்காமல் "என் குலகுரு என்னைக் கைவிட்டார். ரிஷிபுத்திரர்களான நீங்களும் கை விட்டீர்கள். ஆனால் இதற்காக என் எண்ணத்தை நிறைவேற்றாமல் விடுவதில்லை. வேறு யாரையாவது சரணமடைந்து என் காரியத்தை முடித்துக் கொள்ளுகிறேன். தபஸின் மஹிமையாலும் பலத்தாலும் இப்படி நீங்கள் சொல்லுவது உங்களுக்குத் தகும். போய்வருகிறேன். உங்களுக்கு ஸகல மங்களங்களும் உண்டாகட்டும்" என்று அங்கிருந்து புறப்பட்டான். வஸிஷ்ட புத்திரர்கள் அந்தக் கோரமான வார்த்தையைக் கேட்டு ஆச்சரியத்தால் மெய்மறந்தார்கள். தபோநிதியும் பிரஹ்ம புத்திர

ரும் மஹரிஷியும் ஞானத்திலும் சக்தியிலும் நிகரற்ற வருமான வஸிஷ்ட பகவானைக் குல குருவாயடைந்து, அவரை வேண்டா மென்று தள்ளிவிட்டு, வேறொருவரைச் சரண மடையப்போவதென்ற வார்த்தையே அவர்களுக்கு மஹாகோரமாய்த் தோன்றிற்று, "அடே, துஷ்டா! சண்டாளனாகக் கடவாய்" என்று கடுங்கோபத் துடன் சபித்தார்கள். "இந்தப் பாபியைப் பார்த்தாலும் நமக்குப் பயமுண்டென்று பயந்து தங்களுடைய ஆசிரமங்களில் புகுந் தார்கள்.

அன்று ராத்திரி முடிந்தவுடன் திரிசங்கு சண்டாளனானான். தங்க வர்ணமுள்ள அவனுடைய சரீர காந்தி அழிந்து கறுத்த நிறம் வந்தது. அவயவங்கள் பார்க்க விகாரமாயின ; தலைமயிர் குறுகிப் பருத்து அலங்கோலமாயிற்று. அவன் தரித்த பீதாம்பரம் சண்டாளர்கள் உடுக்கும் கறுத்த வஸ்திரமாயிற்று. பிணங்களுக்குப் போடும் மாலைகள் கழுத்தில் தொங்கின. பிணங்களை எரித்த சாம்பல் நிறமுள்ள பூச்சுகள் தேகத்தில் காணப்பட்டன. கிரீட குண்டல ஹார கேயூர மணிமகுடம் முதலிய ஆபரணங்கள் யாவும் சண்டாளர்கள் அணியும் இரும்பு ஆபரணங்களாயின. மார்பில் பிரகாசித்த யக்ஞோபவீதம் தோல் வாராயிற்று. அவனுடன் வந்த மந்திரிகளும் பரிவாரங்களும் நகரத்து ஜனங்களும் அந்தச் சண்டாள ரூபத்தைக் கண்டு ஓடிவிட்டார்கள். திரிசங்கு ஒண்டியாய் துக்கத்தால் நொந்து, வெட்கத்தால் மனம் குன்றி, ஊண் உறக்க மற்று, இரவும் பகலும் திரிந்தான் ; ஆனால் அவனுடைய மனோ தைரியம் மாத்திரம் குறையவில்லை.

முடிவில் விசுவாமித்திரர் கடுந்தவம் செய்துகொண்டிருக்கும் இடத்திற்குப் போனான். அவனைக் கண்டவுடன் அவருக்கு எல்லையற்ற இரக்கமுண்டாயிற்று. "ஐயோ! இவன் நம்மைப்போன்ற அரசனல்லவா? ராஜ்யத்தையும் ஐசுவரியத்தையும் போகபோக்கியங்களையும் இழந்தான். வர்ணாசிரமபதவியையும் தேஜஸையும் இழந்தான். இஹத்திலும் பரத்திலும் பரம மங்களத்தைக் கொடுக்கும் ஸாதனங்களையும் இழந்தான். சண்டாளனாய்க் கோர ரூபத்துடன் இப்படித் திரிகிறான்" என்று மனமுருகி, பரம தார்மிகரானதால் "ராஜபுத்திர! நீ அயோத்தியாதிபதியான திரிசங்கு வல்லவா? மஹா பலவானல்லவா? யாருடைய சாபத்தால் உனக்கு இந்தக் கோரமான சண்டாளத் தன்மை வந்தது? நீ இங்கே வந்த காரியமென்ன?" என்றார்.

திரிசங்கு அவரை நமஸ்கரித்துக் கைகூப்பி வணக்கத்துடன் வெகு சாதுரியமாய் "ஸ்வாமி! என் குல குருவான வஸிஷ்டரும் என்னைக் கைவிட்டார். அவருடைய புத்திரர்களும் என்னைக் கைவிட்டார்கள். குருக்களைத் தேடி அடைவதும் சுச்ருஷை செய்வதும் உபாஸிப்பதும் எதற்கு? நம்மை ஆபத்துக்களும் அபாயங்களும் வராமல் காப்பாற்றி நமக்கு க்ஷேமத்தைக் கொடுப்பார்களென்ற எண்ணத்தாலல்லவா? அப்படி என் குருவும் குரு புத்திரர்களும் என்னை அனுக்ரஹிக்கவில்லை. அதுவுமன்றி இந்தக் கோரமான கதியை அடையும்படி சபித்தார்கள். ஸ்வாமி! இந்த மனுஷ்ய சரீரத்துடன் ஸ்வர்க்கத்தை அடைய விரும்புகிறேன். நூறு யாகங்களைச் செய்திருக்கிறேன். அப்படியும் இந்தப் பயன் எனக்குக் கிடைக்கவில்லை. வஸிஷ்ட பகவான் என்னைக் கைவிட யாதொரு பாபத்தையும் நான் செய்யவில்லை. எண்ணிறந்த யாகங்களைச் செய்தாலும், அவை யாவும் பொய் சொன்னால் அழியுமென்று நியாயமுண்டு. அப்படி அதுவரையில் நான் ஒரு பொய்கூடச் சொல்லவில்லை ; சொல்லப் போவதுமில்லை. நான் அனுஷ்டிக்கும்க்ஷத்திரிய தர்மத்தை ஸாக்ஷியாகக் கொண்டு பிரமாணம் செய்கிறேன். இந்தக் கஷ்டத்திலும் இன்னும் அதிக கஷ்டங்கள் நேர்ந்தாலும் பொய் சொல்லமாட்டேன். யக்ஞங்கள் யாவையும் செய்திருக்கிறேன். குடிகளைத் தர்மம் தவறாமல் ஆண்டிருக்கிறேன். பணிவிடையாலும் நற்குணங்களாலும் ஆசாரத்தாலும் மஹாத்மாக்களையும் பெரியோர்களையும் குருக்களையும் ஸந்தோஷப் படுத்தியிருக்கிறேன்.

நான் தர்மத்திலேயே புத்தியைச் செலுத்தினவன். இந்த யக்ஞத்தைச் செய்யவேண்டுமென்று முயலுகிறேன். ஆனால் என் குருவுக்கு என்னிடத்தில் கிருபையில்லை. என்ன செய்வேன்? இந்த ஜன்மத்தில் செய்யும் தர்மானுஷ்டானமான புருஷப் பிரயத்தனங்கள் வீணென்றும், முன் ஜன்மங்களில் செய்த கர்மக் குவியலிலிருந்து, இப்பொழுது அனுபவிக்க எடுக்கப்பட்ட பிராரப்தமென்று சொல்லப்படும் தெய்வமே அவைகளைக் காட்டிலும் பெரிதென்றும் ஸுக துக்கங்களை நமக்குக் கொடுக்கக்கூடியதென்றும் நன்றாயறிந்தேன். தெய்வமே மற்ற எதையும் அடக்கிவிடும். தெய்வத்தைத் தவிர வேறு கதியில்லை. சொல்ல முடியாத துக்கத்தால் தவிக்கிறேன். என் யத்தினங்களைக் கெடுத்தது தெய்வமே. அதையே எனக்கு அனுகூலமாக இருக்கச்செய்ய வேண்டும். 'ஒரு வேளை வஸிஷ்டரே வந்து உன்னை அழைத்தால் என்ன செய்வாய்' என்றால், தங்களைச் சரணமடைந்த பிறகு வஸிஷ்டர் வந்து என் மனோரதங்கள் யாவையும் நிறைவேற்றுவதாய் பிரதிக்ஞை செய்து அழைத்தாலும், அவருடைய பிதாவான பிரஹ்ம தேவர் வந்து அழைத்தாலும் போகமாட்டேன். தங்களுடைய பாதங்களே எனக்குக் கதி. வேறொருவரைச் சரணமடைய மாட்டேன். தங்களுடைய கிருபா மஹிமையால் தெய்வம் எனக்கு அனுகூலமாவது நிச்சயம். தங்களுடைய புருஷப் பிரயத்தனத்தால் தெய்வ பலத்தை ஜயிக்க வேண்டும்" என்று பிரார்த்தித்தான்.

நாந்யாம் க$^{3}$திம் க$^{3}$மிஷ்யாமி நாந்ய : ஶரண மஸ்தி மே |
தை$^{3}$வம் புருஷகாரேண நிவர்தயிது மர்ஹஸி ॥ (24)

## ஸர்க்கம் 59

## திரிசங்கு (தொடர்ச்சி)

உக்த வாக்யம் து ராஜாநம் க்ருபயா குஶிகாத்மஜ: |
அப்[3]ரவீந் மது[4]ரம் வாக்யம் ஸாக்ஷாச் சண்டா[3]ல ரூபிணம் || (1)

இக்ஷ்வாகு வம்சத்தரசனான திரிசங்கு சண்டாளனாகி, தன்னைச் சரணமடைந்து பிரார்த்தித்ததைப் பார்த்துக்கௌசிகர், "என் ஸைன்யங்களையும், புத்திரர்களையும் அழித்து, பரமசிவனிடத்திலிருந்து நான் பெற்ற திவ்யாஸ்திரங்களை வீணாக்கி, எல்லோரும் பார்த்துக் கொண்டிருக்க என்னை அவமானம் செய்த அந்த வஸிஷ்டரே, என் இனத்தானான இந்த திரிசங்குவையும் சபித்து, கோரமான கதியை அடையச் செய்திருக்கிறார். இவனைக் கைவிடக்கூடாது. இவனுடைய எண்ணத்தை நிறைவேற்றி, இவனை அங்கீகரித்து ரக்ஷித்தால் அதெல்லாம் வஸிஷ்டருக்குச் செய்த கெடுதியே ஆகும். அவரால் செய்ய முடியாத யாகத்தைச்செய்து சரீரத்துடன் இவனை ஸ்வர்க்கத்திற்கு அனுப்பினால், அதைவிட அவருக்கு அவமானமென்ன? க்ஷத்திரிய பலத்தைக் காட்டிலும் பிராம்மண பலமே மேலென்று பெருமை பேசின அந்த வஸிஷ்டருடைய பலத்தைவிட க்ஷத்திரியனான என் பலமே மேலென்று காட்டுகிறேன். இதைவிட நல்ல ஸமயம் கிடைக்காது" என்று நிச்சயித்து, "ராஜசிரேஷ்டா! இக்ஷ்வாகு குல சக்கரவர்த்தியே! க்ஷேமமாய் வந்தாயா? நீ பரம தார்மிகனென்று எனக்குத் தெரியுமே. உன்னை ரக்ஷிக்கிறேன், பயப்படாதே. புண்யாத்மாக்களான ஸகலரிஷிகளையும் இங்கே வருவிக்கிறேன். நீ உத்தேசித்த யாகத்தைச் செயய அவர்கள் உதவியாக இருப்பார்கள். வஸிஷ்டருடைய சாபத்தால் ஏற்பட்ட இந்தச் சண்டாள ரூபத்தை பிரஹ்மாவும் மாற்ற முடியாது. ஆனால் நீ சண்டாளனாய்ப் பிறக்கவில்லை. என் தபோமஹிமை யாவையும் உபயோகித்து ஒரு யாகம்செய்து உன்னை இந்தச் சரீரத்துடன் ஸ்வர்க்கத்திற்கு அனுப்புகிறேன். அந்த உத்தம பதவி உன் கையில் கிடைத்ததென்றே எண்ணுகிறேன். குசிக வம்சத்தில் பிறந்த என்னை நீ சரணமடைந்ததே போதும்" என்றார்.

பிறகு பரம தர்மவான்களான தன் புத்திரர்களை அழைத்து, யாக ஸாமக்ரிகளை ஸித்தம் செய்யச் சொன்னார். "லோகத்திலுள்ள ஸகல ரிஷிகளையும் அவர்களுடைய சிஷ்யர்களையும் மித்திரர்களையும் ரித்விக்குகளையும் வேதசாஸ்திர நிபுணர்களையும் என் கட்டளையைத் தெரிவித்து அழைத்து வாருங்கள். யாராவது என் வார்த்தையை அலக்ஷ்யம் செய்து 'சண்டாளனுக்கு யாகம் செய்விக்கிறான்' என்று என்னை நிந்தித்தால் அதையும் மறைக்காமல் முழுவதும் எனக்குச் சொல்ல வேண்டும்" என்று வேலைக்காரர்களுக்கு உத்தரவிட்டார்.

அவர்கள் அப்படியே பல திக்குகளிலும் சென்று அவருடைய ஆக்ஞையைத் தெரிவித்தார்கள். பிரஹ்ம ஞானிகளும் வைதிகர்களும் பல தேசங்களிலிருந்து வந்தார்கள். கௌசிகருடைய வேலைக்காரர்கள் திரும்பி வந்து "ஸ்வாமி! தங்களுடைய உத்தரவால் பிராம்மணோத்தமர்கள் பல தேசங்களிலிருந்து வருகிறார்கள். மஹோதயரும் வஸிஷ்ட புத்திரர்களும் மாத்திரம் கோபத்தால் மனம் கலங்கி, கண்கள் சிவக்க, வார்த்தை குளற 'யாகம் செய்விக்க பிராம்மணனுக்கே அதிகாரம். க்ஷத்திரியனான கௌசிகன் யாகம் செய்விக்கப் போகிறானோ? சண்டாளர்களுக்கு யாகம் செய்ய அதிகாரமுண்டோ? வஸிஷ்ட சாபத்தால் சண்டாளனான திரிசங்கு யாகம் செய்யப் போகிறானோ? சண்டாளனுக்கு க்ஷத்திரியன் செய்விக்கும் யாகத்தில் இந்திராதி தேவதைகள் வந்து ஹவிர்ப்பாகங்களை வாங்கப் போகிறார்களோ? அந்த யாகசேஷத்தை ரிஷிகள் புஜிக்கப் போகிறார்களோ? சண்டாளனால் அசுத்தமானவைகளைப் புஜிக்கும் பிராம்மணர்கள், தவத்திலும் மஹிமையிலும் எவ்வளவு உயர்ந்தவர்களானாலும், கௌசிகன் அவர்களை எவ்வளவு ரக்ஷித்தாலும், நல்ல கதி அடைவதைப் பார்ப்போம்' என்று வெகு நிஷ்டூரமாகச் சொன்னார்கள்" என்றார்கள்.

கௌசிகர் அதைக் கேட்டுக் கோபத்தை அடக்க முடியாமல் நெருப்புப் பொறிகள் கண்களிலிருந்து பறக்க, "நான் தோஷமற்றவன்; உக்ரமாக தவம் செய்து கொண்டிருக்கிறேன். அதன் மஹிமையால் சண்டாளனுக்கு யாகம் செய்வித்த தோஷமும் அழியும் என்ற நியாயத்தை அறிந்தும், இப்படி என்னைத் தூஷித்த வஸிஷ்ட புத்திரர்கள் இப்பொழுதே காலபாசத்தால் கட்டுண்டு யமலோகம் போகட்டும்; எரிந்து சாம்பலாகட்டும். இதில் ஸந்தேகமில்லை. ஏழு நூறு ஜன்மங்கள் வரையில் பிணங்களையும் நாயின் மாம்ஸத்தையும் தின்றுகொண்டு, இரக்கமறியாமல், முஷ்டிக (தொம்ப) ஜாதியில் பிறக்கட்டும். விகாரமான பேச்சும் ரூபமும் செய்கையும் பொருந்தி, ஓரிடத்தில் தங்காமல் எங்கும் அலையட்டும். தூஷிக்கத் தகாத என்னைத் தூஷித்த மஹோதயனென்ற துர்ப்புத்தி பிடித்தவன், எல்லோராலும் தூஷிக்கப்பட்டு நிஷாதனாகட்டும். பிராணிகளைத் தயவின்றிப் பலவந்தமாகக் கொன்று தின்று வெகு காலம் வரையில் நீசனாயிருக்கட்டும்" என்று ஸகல ரிஷிகளும் கேட்டுக் கொண்டிருக்கையில் கோரமாய்ச் சபித்தார்.

ஏதாவ து[3]க்த்வா வசநம் விஶ்வாமித்ரோ மஹாதபா: |
விரராம மஹாதேஜா: ரிஷிமத்[4]யே மஹாமுநி: || (22)

## ஸர்க்கம் 60

## திரிசங்கு (தொடர்ச்சி)

தபோ ப[3]ல ஹதாந் க்ருத்வா வாஸிஷ்டா[2]ந் ஸமஹோத[3]யாந் |
ரிஷிமத்[4]யே மஹாதேஜா: விஸ்வாமித்ரோப்[4]யபா[4]ஷத || (1)

தன் தபோபலத்தால் வஸிஷ்ட புத்திரர்களையும் மஹோதயரையும் கெடுத்துக் கௌசிகர், "ரிஷிகளே! இவன் இக்ஷ்வாகு வம்சத்தரசன்; திரிசங்கு என்று பிரஸித்திபெற்றவன்; மஹா தர்மாத்மா; ஏராளமாக தானம் கொடுத்தவன்; மேலும்என்னைச் சரணமடைந்தவன். இந்தச் சரீரத்துடன் ஸ்வர்க்கம் போக ஒரு யாகத்தைச் செய்ய விரும்புகிறான். அப்படியே செய்விப்பதாய் வாக்களித்தேன். என் பிரதிக்ஞை வீணாகாமல், நாமெல்லோரும் இந்த யாகத்தைச் செய்து இவனைச் சரீரத்துடன் ஸ்வர்க்கத்திற்கு அனுப்புவோம்" என்றார். மஹரிஷிகள் ஒன்றுகூடி ஆலோசித்தார்கள். தர்மத்தை நன்றாயறிந்தவர்களாகையால், "குசிகவம்சத்தில் பிறந்த இந்த விசுவாமித்திரர் கடுங்கோபி; இவர் சொல்வதைத் தவறாமல் நாம் நடத்தவேண்டியது அவசியம். கொழுந்து விட்டெரியும் அக்னியைப் போல் தேஜஸால் ஜ்வலிக்கிறார். கோபம் கொண்டால் நம்மைச் சபிப்பார். ஆகையால் இந்த இக்ஷ்வாகு வம்சத்தரசன் கௌசிகருடைய தபோபலத்தால் மனுஷ்ய சரீரத்துடன் ஸ்வர்க்கத்தை அடைய ஒரு யாகத்தைச் செய்ய ஆரம்பிப்போம். அதில் ரித்விக்குகளாக இருக்கவேண்டிய ஒவ்வொருவரும் உங்களுடைய வேலையை வெகு ஜாக்கிரதையாகச் செய்யுங்கள்" என்று எச்சரித்துக் கொண்டார்கள்.

யாகம் விதிப்படி நடந்தது. அதில் கௌசிகர் அத்வர்யு. ரித்விக்குகள் கல்பஸூத்திரவிதி தவறாமல் மந்திரங்களைச் சொல்லி அந்தந்தக் கிரியைகளைச் செய்தார்கள். பிறகு கௌசிகர் இந்திராதி தேவதைகளை அழைத்து, ஹவிர்ப்பாகங்களைப் பெற்றுக்கொள்ளும்படி பிரார்த்தித்தார். "அதிகாரமில்லாதவன் நியாய விரோதமாய்ச் செய்யும் கிரியைகள் செய்யப்படாதவை" என்ற விதிப்படி தேவதைகள் அவருடைய வார்த்தையை லக்ஷ்யம் செய்யவில்லை; வரவில்லை. மஹாதபஸ்வியான காதிபுத்திரர் கடுங்கோபம் கொண்டு கையிலிருந்து ஸ்ருவத்தைத் தூக்கி "திரிசங்குவே! உன்னை இந்த மனுஷ்ய சரீரத்துடன் தேவதைகள் வஸிக்கும் ஸ்வர்க்கத்திற்கு அனுப்புவதற்குச் செய்த யாகம் தேவதைகளின் பிடிவாதத்தாலும் இறுமாப்பாலும் நிறைவேறவில்லை. போகட்டும். இதுவரையில் கடும் தவம் செய்து, நான் ஸம்பாதித்த வீரியத்தைப்பார். மனுஷ்ய சரீரத்துடன் ஸ்வர்க்கத்தை அடைவது வெகு கஷ்டமான காரியம். இதுவரையில் நான் ஸம்பாதித்த தவத்திற்கு பயனிருந்தால், என் தபோமஹிமையால் நீ இந்தச் சரீரத்துடன் தேவலோகம் போ" என்றார். உடனே ரிஷிகள் யாவரும் பார்த்துக் கொண்டிருக்கையில் திரிசங்கு



அந்த மனுஷ்ய சரீரத்துடன் பூமியிலிருந்து தேவ லோகத்திற்குப் போனான்.

அதைக் கண்ட தேவராஜன் தேவகணங்கள் சூழ "அடே, திரிசங்குவே! நீ ஸ்வர்க்கத்தில் வஸிக்கத் தகுந்தவனல்ல. பூமிக்குத் திரும்பிப்போ. வஸிஷ்ட மஹரிஷியின் சாபத்தால் கொளுத்தப்பட்ட மூடா! தலைகீழாகப் பூமியில் விழுவாய்" என்றான். உடனே திரிசங்கு தலைகீழாகப் பூமியை நோக்கி விழுந்தான். "விசுவாமித்திர மஹர்ஷே! தபோநிதியே! என்னைக் காப்பாற்றும்" என்று கதறினான். அந்த வார்த்தைகள் அவருடைய காதில் விழுந்தவுடன் பிரளய காலாக்னியைப்போல் அவருக்குக் கோபம் ஜ்வலித்தது. "திரிசங்குவே! விழாதே! நில் நில்" என்றார். உடனே அவ்வரசன் பூமியில் விழாமலும் ஸ்வர்க்கத்திற்குப் போகாமலும் அங்கேயே நின்றான். பிறகு அந்த மஹா முனிவர் ஆகாச வீதியில் தெற்கு திக்கில் வேறு ஸப்தரிஷி மண்டலத்தையும், வேறு இருபத்தேழு நக்ஷத்திரங்களையும் ஸிருஷ்டித்து, தான் ரிஷிகளின் நடுவிலிருந்தே "இவை யாவும் வடக்குத்திக்கில் துருவனைச் சுற்றுவதுபோல் இந்தத் திக்கில் திரிசங்குவைச் சுற்றட்டும்" என்றார். பிறகு கோபம் தாங்காமல் "என்னை எதிர்க்கத் துணிந்த இந்திரனைப்போல் வேறு இந்திரனை ஸிருஷ்டிக்கட்டுமா? அல்லது இந்திரனில்லாமல் வேறு ஸ்வர்க்கத்தை ஸிருஷ்டிக்கட்டுமா? அதில் திரிசங்குவே இந்திரனாயிருக்கட்டும்" என்று தேவகணங்களையும் ஸிருஷ்டிக்க ஆரம்பித்தார்.

அதைப்பார்த்து இந்திராதி தேவாதிகள் பயந்து நடுங்கித் தங்களுடைய லோகத்தைப் போன்ற வேறு லோகத்தையும் தங்களைப் போன்ற வேறு தேவதைகளையும் ஸிருஷ்டிக்கும் அபார சக்தியையுடைய அந்தத் தபோநிதி இன்னும் என்ன செய்வாரோ? தன் புது ஸிருஷ்டி முடிந்தவுடன் தனக்குக் கீழ்ப்படியாத இந்திராதி தேவர்களைச் சபித்து நாசம் செய்வாரோ என்று திகிலடைந்து, தேவாஸுரர்களும் ரிஷிகளும் கௌசிகரைத் துதித்து ஸமாதானம் செய்து, கோபத்தைத் தணித்தார்கள். "ஸ்வாமி! தங்களுக்குத் தெரியாத விஷயமுண்டோ? பிராம்மண க்ஷத்ரிய வைசியர்கள் பாபலேசமின்றி எண்ண முடியாத புண்ணிய கர்மத்தால் ஸ்வர்க்கத்தை அடைய வேண்டியதல்லவா? இந்த திரிசங்கு க்ஷத்திரியனாய்ப் பிறந்தவனே. ஆனால் வஸிஷ்ட மஹர்ஷியின் சாபத்தால் ஜாதியும் புண்ணியமும் தேஜஸும் அழிந்து சண்டாளனானான். இந்தச் சரீரத்துடன் ஸ்வர்க்கத்திற்கு வரத் தகாதவனல்லவா? தபோநிதியான தங்களுடைய அனுபவம் இப்படியல்லவா" என்று விநயத்துடன் தெரிவித்தார்கள்.

அப்பொழுது விசுவாமித்திரருடைய கோபம் ஒருவாறு தணிந்தது. தன்னை எதிர்க்கத் துணிந்த தேவர்கள் தன்னையேபிரார்த்தித்ததைக் கண்டு ஸந்தோஷமடைந்தார். ஆனால், தன்னை அண்டின

திரிசங்குவைக் கைவிடவும் கூடாது. தான் செய்த ப்ரதிக்ஞையும் பொய்யாகக் கூடாது. தன்னைப் பிரார்த்தித்த தேவர்களின் வார்த்தை நியாயத்திற்கும் தர்மத்திற்கும் ஒத்திருந்தபடியால் அதற்கும் விரோதம் செய்யக்கூடாது. ஆகையால் "தேவர்களே! கவலை வேண்டாம். உங்களுக்கு ஸகல மங்களமும் உண்டாகட்டும். இவ்வரசனை ஸ்வர்க்கத்திற்கு அனுப்புவதாய் ப்ரதிக்ஞை செய்திருக்கிறேன். அது பொய்யாகக்கூடாது. இவன் இருக்கும்இடமே ஸ்வர்க்கமாகட்டும். அதில் இவன் சரீரத்துடன் எந்நாளும் வஸிக்கட்டும். என்னால் ஸிருஷ்டிக்கப்பட்ட நக்ஷத்திரங்களும் ஸப்தரிஷி மண்டலமும் பூமி முதலிய லோகங்களுள்ள வரையில் அழியாமலிருக்கட்டும். இதை நீங்கள் அங்கீகரிக்க வேண்டும்" என்றார்.

தேவர்கள், "தபோ நிதியே! அப்படியே ஆகட்டும். ஆகாச வீதியில் வைச்வானர மார்க்கத்திற்கு வெளியில் தங்களால் ஸிருஷ்டிக்கப்பட்ட நக்ஷத்திரங்கள் என்றும் விளங்கட்டும், அவைகளுக்கு நடுவில் திரிசங்கு, தேஜஸால் தேவர்களைப்போல் எப்பொழுதும் பிரகாசிக்கட்டும். ஆனால் குருவிற்குச் செய்த அபராதத்திற்கு அடையாளமாய் இப்பொழுது இருப்பது போல் தலைகீழாக இருக்கட்டும். அவனைச் சுற்றி நக்ஷத்திரங்கள் ஸஞ்சரிக்கட்டும். எங்களுடைய ஸ்வர்க்கத்தில் வஸிப்பதுபோல் அவனுக்கு விசேஷகீர்த்தியும் ஆனந்தமும் உண்டாகட்டும். அவனுடைய எண்ணமும் உங்களுடைய வார்த்தையும் எங்களுடைய கோரிக்கையும் நிறைவேறட்டும்" என்றார்கள். பிறகு கௌசிகர் திரிசங்குவிற்குப் பதிலாக வேறு யஜமானனை வைத்து யாகத்தை முடித்தார். தேவதைகள் ஹவிர்ப்பாகங்களைப் பெற்றுக் கொண்டார்கள். அங்கே வந்த ரிஷிகளும் தேவகணங்களும் விசுவாமித்திரரை மிகவும் கொண்டாடித் திரும்பிப் போனார்கள்.

ததோ தே³வா மஹாத்மானோ முனயஶ்ச தபோத⁴னா: |
ஜக்³முர் யதா²க³தம் ஸர்வே யஜ்ஞஸ்யாந்தே நரோத்தம ‖ (35)

---

## ஸர்க்கம் 61

## சுனச்சேபன்

---

விஶ்வாமித்ரோ மஹாத்மாத² ப்ரஸ்தி²தாந் ப்ரேக்ஷ்ய தாந் ரிஷீந் |
அப்³ரவீந் நரஶார்தூ³ல: ஸர்வாம்ஸ் தாந் வனவாஸின: ‖ (1)

**அ**ந்த ரிஷிகள் அங்கிருந்து போனபிறகு விசுவாமித்திரர் அந்த வனத்திலிருப்பவர்களை அழைத்து, "நான் இந்த தென் திக்கில் தவம் செய்ய வந்தேன். இதற்குப் பெரிய இடையூறு நேர்ந்தது. வேறு திக்குக்குப் போவோம். மேற்கில் விசாலமான பல தபோவனங்களுண்டு. அவைகளில் புஷ்கர தீர்த்தக்கரையில் வெகு புண்ணியமான ஒரு ஸ்தலமிருக்கிறது. அங்கே போய்க் கடுமையான தவம் செய்ய



வேண்டும்" என்று தன் பரிவாரங்களுடன் சென்று, கிழங்கு பழம் வேர்களைப் புஜித்துக்கொண்டு உக்கிரமான தவம் செய்தார்.

அக்காலத்தில் அம்பரீஷனென்ற அயோத்யாதிபதி ஒரு யாகம் செய்ய ஆரம்பித்தான். அதில் இந்திரன் யாக பசுவைக் கொண்டு போய்விட்டான். ரித்விக்குகள் "மஹாராஜ! உன் அஜாக்கிரதையால் இந்தப் பசு இழக்கப்பட்டது. பிரஜைகளை அரசன் தர்மமாய் ரக்ஷிக்காவிட்டால் இவ்விதமான அபாயங்கள் நேர்ந்து நாசம் செய்யும்; இந்தப் பாபம் போக, மஹா பிராயச்சித்தம் செய்யவேண்டும். அதே பசுவையாவது அதற்குப் பதிலாக மனுஷ்யனையாவது யாக தினத்திற்குக் கொண்டுவர வேண்டும்" என்றார்கள்.

அம்பரீஷன் தேசங்களிலும் நகரங்களிலும் பட்டணங்களிலும் புண்ணியாசிரமங்களிலும் கிராமங்களிலும் வெகு ஜாக்கிரதையாகத் தேடினான். எண்ணமுடியாத பசுக்களையும் தன தான்யங்களையும் கொடுப்பதாகச் சொன்னான். நரபசு கிடைக்கவில்லை. 'பிருகு துந்தம்' என்ற ஸ்தலத்தில் ரிசீகரென்ற ரிஷி பார்யையோடும் மூன்று புத்திரர்களோடும் வஸித்துக் கொண்டிருப்பதை ஒருநாள் கண்டு, அவரை நமஸ்கரித்துக் கைகூப்பி வணக்கமாய் க்ஷேமம் விசாரித்து, "ஸ்வாமி! நான் யாகம் செய்யும்பொழுது பசுவை யாரோ கொண்டுபோய் விட்டான். அதற்குப் பதிலாக ஒரு நரபசுவைத் தேடிக்கொண்டு அலைகிறேன்; கிடைக்கவில்லை. முடிவில் தங்களையே சரணடைகிறேன். தங்களுடைய மூன்று புத்திரர்களில் ஒருவரை எனக்கு யாகப்பசுவாகக் கொடுத்து அதற்கு பதிலாக இஷ்டமான பசுக்களையும் தனத்தையும் பெற்றுக்கொள்ளுங்கள். எப்படியாவது என்னைக் கிருதார்த்தனாகச் செய்யவேண்டும். புத்திரர்களைத் தானம் கொடுப்பதும் விற்பதும் சாஸ்திர விரோதமே; ஆனால் வம்சம் அழிவதாயிருந்தால் அதை நிலைநிறுத்தப் புத்திரனைக் கொடுப்பதுபோல், இந்தத் தர்ம காரியம் நஷ்டமாகாமல் முடிய புத்திரனை விற்பது தோஷமல்ல" என்றான். மஹா தேஜஸ்வியான ரிசீகர் "மஹாராஜ! வம்சத்தை விருத்தி செய்யும் மூத்த புத்திரனை ஒரு நாளும் விற்கமாட்டேன்" என்றார். அவருடைய மனைவி "மூத்த புத்திரனை விற்கமாட்டேன் என்று என் பர்த்தா சொன்னார். இளையவனிடத்தில் எனக்குவிசேஷ பிரியம். அவனை நான் விற்கமாட்டேன். பிதாவிற்கு மூத்த புத்திரனிடத்திலும் மாதாவிற்கு இளையவனிடத்திலும் அதிக பிரியமுண்டென்று உமக்குத் தெரியாதா?" என்றாள். சுனச்சேபனென்றஇரண்டாவது புத்திரன் "மஹாராஜ! மூத்தவனை விற்கக்கூடாதென்று என் பிதாவும் இளையவனை சுனகனை விற்கக்கூடாதென்று என் மாதாவும் சொல்லிவிட்டார்கள். நடுவிலிருக்கும் என்னை விற்க அவர்கள் ஸம்மதித்ததாகத் தோன்றுகிறது. என்னை அழைத்துக்கொண்டு போகும்" என்றான். உடனே அம்பரீஷன் கணக்கில்லாத பசுக்களையும்

தனதான்யங்களையும் கொடுத்து, சுனச்சேபனை விலைக்குவாங்கி ரதத்திலேற்றி அதிவேகமாய் அயோத்யைக்கு வந்தான்.

அம்ப$^{3}$ரீஷஸ்து ராஜர்ஷி: ரத$^{2}$மாரோப்ய ஸத்வரம் |
ஶுநஶ்ஶேபம் மஹாதேஜா ஜகா$^{3}$மாஶு மஹாயஶா: || (23)

---

## ஸர்க்கம் 62

### சுனச்சேபன் (தொடர்ச்சி)

---

ஶுநஶ்ஶேபம் நரஶ்ரேஷ்ட க்$^{3}$ருஹீத்வாத$^{2}$ மஹாப$^{3}$ல: |
வ்யஶ்ராம்யத் புஷ்கரே ராஜா மத்$^{4}$யாஹ்நே ரகு$^{4}$நந்த$^{3}$ந || (1)

**போ**கும் வழியில் புஷ்கர தீர்த்தக்கரையில் தங்கி, நடுப்பகலை கழிப்போமென்று அரசன் ரதத்திலிருந்து இறங்கிச் சற்றுக் களைப்பாறினான். சுனச்சேபன் கவலைகொண்டு அங்குமிங்கும் அலைந்தான். ஓரிடத்தில் தன் மாமனான விசுவாமித்திரர் ரிஷிகளுடன் தவம்செய்து கொண்டிருப்பதைக் கண்டான். பிரயாணம் செய்த களைப்பாலும் பசிதாகத்தாலும்முகம்வாடி மனம் நொந்து கௌசிகருடைய மடியில் விழுந்து, "எனக்குத் தாயுமில்லை, தகப்பனுமில்லை, பந்துவுமில்லை, இனத்தாருமில்லை. எல்லோரும் என்னைக் கைவிட்டார்கள். மாமா! முனிசிரேஷ்டா! தபோநிதியே! தர்மத்தைஅனுசரித்து என்னை ரக்ஷியுங்கள், தங்களைச் சரணமடைந்தேன். கஷ்டமடைந்தவர்களின்கஷ்டத்தைப் போக்குகிறவர்கள் தாங்களே. அண்டினவர்களின் கவலையையும் துக்கத்தையும் தீர்த்துப் பரமக்ஷேமத்தை அருளும் மஹானுபாவர் தாங்களே. என்னை வாங்கிய அம்பரீஷனுடைய உத்தேசமும் நிறைவேற வேண்டும். நான் தீர்க்காயுளுடன் மேலான தவத்தைச் செய்து ஸ்வர்க்கத்தை அடையவும் வேண்டும். அநாதையான எனக்குத் தாங்களே நாதன். கிருபாகடாக்ஷத்தால் அனுக்ரஹிக்க வேண்டும். என்னைப் பெற்ற தகப்பனே என்னைக் கைவிட்டதால், என் தாயுடன் பிறந்த தாங்களே எனக்குப் பிதாவாக இந்தக் கோரமான ஆபத்திலிருந்து என்னை ரக்ஷிக்கவேண்டும்" என்று கதறினான்.

விசுவாமித்திரர் மனமுருகி அவனைப் பலவிதமாய்த்தேற்றி, தன் புத்திரர்களை அழைத்து "பிதாக்கள் எதைஉத்தேசித்துப் புத்திரர்களை பெறுகிறார்களோ அந்தப் பரலோக ஹிதத்தை அடையும் ஸமயம் இப்பொழுது நேர்ந்திருக்கிறது. பிதா பிழைத்திருக்கும் வரையில்அவருடைய வார்த்தையை நிறைவேற்றுவதும், இறந்தபிறகு கயாக்ஷேத்திரத்தில் அவருக்குப் பிண்டம் வைப்பதும், ஒவ்வொருவருஷத்திலும் அவருடைய மரண தினத்தில் அவரை உத்தேசித்துப் பல ஜனங்களுக்கு அன்னம் போடுவதும் புத்திரர்களின் கடமை. அவைகளில் முதலாவதாகச் செய்யும் ஸமயம் உங்களுக்கு வாய்த்திருக்கிறது. இந்தச் சிறுவன் ரிசீகருடைய புத்திரனென்று உங்களுக்குத்தெரியும். என்னைச் சரணமடைந்திருக்கிறான். இவனுக்கு பிராணபிக்ஷை கொடுங்கள். நீங்கள் எல்லோரும் புண்ணியங்களைச் செய்தவர்கள்; தர்மத்தில் மனத்தைச்செலுத்தினவர்கள். அம்பரீஷனுடைய யாகத்தில் உங்களில் ஒருவன் பசுவாயிருந்து அக்னியைத் திருப்தி செய்யட்டும். யாகமும் தடையில்லாமல் நடக்கும்; சுனச்சேபனுக்கும்ஆபத்து நீங்கும்; தேவதைகளுக்கும் திருப்தியுண்டாகும்; என் வார்த்தையும் நிறைவேறும்' என்றார். மதுஷ்யந்தன் முதலிய புத்திரர்கள் கர்வத்தால் புத்தி மயங்கிக் கைகொட்டிச் சிரித்து, "வெகு நேர்த்தி! தனக்குப் பிறந்த புத்திரனைவிட்டு வழியில்போகிறவனுக்குப்பிறந்தவனைக் காப்பாற்ற, தம் மகனை இரை கொடுக்கும் நீரல்லவா பிதா! உமக்கு நியாயா நியாயம் தெரியாமல் புத்தி பிசகினாலும் எங்களுக்கு அந்தக் கதி இன்னும் வரவில்லை. உத்தமமான அன்னத்தை எறிந்து விட்டு, நாயின் மாம்ஸத்தைப் புஜிக்க யாராவது விரும்புவார்களா?" என்றார்கள்.

தனக்குப் பிறந்த புத்திரர்களே தன் வார்த்தையை மீறி, தன்னைக் கேலி செய்வதைக் கண்டு கௌசிகருக்குக் கோபம் பொங்கிற்று; கண்கள் சிவந்தன. "துஷ்டர்களே! பெற்ற தகப்பனைத் தெய்வமாக எண்ணவேண்டும் என்றுவேதம் சொல்லுகிறது. அவருடைய வார்த்தையை மீறி எதிர்த்துப் பேசுகிறோமே என்ற பயம் உங்களுக்குக் கொஞ்சமும் இல்லையல்லவா? உயிருள்ள வரையில் பிதாவின் ஆக்ஞையை நிறைவேற்றவேண்டு மென்ற தர்மத்தையும் விட்டீர்களல்லவா? அவரிடத்தில் வைக்கவேண்டிய பக்திகொஞ்சமும் இன்றி கேட்க வெறுப்பாகி, இப்படியும் சொல்லுகிறவர்களுண்டா என்று ஆச்சரியத்தால் மயிர்க்கூச்சல் எடுக்கும்படிபேசினீர்களல்லவா? என் வார்த்தை உங்களுக்கு நாயின் மாம்ஸத்தைப் போலிருக்கிறதா? அதையே புசித்துக்கொண்டு வஸிஷ்ட புத்திரர்களைப்போல் நீங்களும் தொம்பர்களாகி ஆயிரம் வருஷங்கள் வரையில் பூமியில் அலையக் கடவீர்கள்" என்று கோரமாகச் சபித்தார்.

பிறகு தன் மருமகனை அழைத்து, "பயப்படாதே. உனக்கு யாதொரு அபாயமும் நேராமல் மணிமந்திர ஔஷதிகளால் ரக்ஷை செய்கிறேன். விஷ்ணுவைத் தேவதையாக உடைய யூபஸ்தம்பத்தில் யாகபசுவாக உன்னைத் தர்ப்பைகளால் கட்டிச் சிவப்பு மாலைகளாலும் வஸ்திரங்களாலும் சந்தனத்தாலும் அலங்கரித்துப் பலி கொடுக்கும்பொழுது, அக்னிக்கு எதிரில் நின்று, நான் உபதேசிக்கும் இந்த இரண்டு மந்திரங்களைச் சொல். இந்திரனும் உபேந்திரனும் திருப்தியடைவார்கள். உன் எண்ணமும் நிறைவேறும்" என்றார்.

சுனச்சேபன் அந்த மந்திரங்களைப் பெற்றுக்கொண்டு பரமானந்தமடைந்து, தன் மாமனை நமஸ்கரித்து உத்தரவுபெற்று, அரசனிடத்திற்கு வந்து, "ஏன் தாமதிக்கவேண்டும்? அயோத்யைக்குப் போவோம். சீக்கிரமாய் யாகதீக்ஷை பெற்று, யாகத்தை நடத்த

லாமே'' என்ருன். அம்பரீஷன் ஸந்தோஷித்து, அதிவேகமாக அயோத்யைக்கு வந்து யாகத்தை ஆரம்பித்தான். ரித்விக்குகள்விதிப்படி ஸகல கிரியைகளையும் நடத்தி, சுனச்சேபனை சிவந்த வஸ்திரங்களாலும், மாலைகளாலும் பூச்சுகளாலும் அலங்கரித்து, தர்ப்பங்களால் யூபத்தில் கட்டினர்கள். அவனைப் பலிகொடுக்கப் போகும் ஸமயத்தில் கௌசிகர் தனக்கு உபதேசித்த இரண்டு மந்திரங்களையும் அவன் உச்சரித்து, யாகபசுவைப் புஜிக்கும் இந்திரனையும், யூபத்திற்குத் தேவதையான விஷ்ணுவையும் ஸ்தோத்திரம் செய்தான். தன்னையும் தனக்கு பிரபுவான விஷ்ணுவையும்ரஹஸ்யமான பெயர்களால் இப்படித் துதித்த சுனச்சேபனிடத்தில் இந்திரன் பரம திருப்தியடைந்துஅவனுக்குத்தீர்க்காயுளைக் கொடுத்தான்.யக்ஞத்தை விதிப்படி செய்வதாலுண்டாகும் பயனைவிட பல மடங்கு பயன் அம்பரீஷனுக்குக் கிடைத்தது. தான் அதுவரையில்செய்த தவத்தின் பயன் தன் புத்திரர்களைச் சபித்ததால் அழிந்தபடியால் கௌசிகர், "நான் இனி கோபத்திற்கு இடம் கொடுப்பதில்லை'' என்று நிச்சயித்துப் புஷ்கரத்தில் மறுபடியும் ஆயிரம் வருஷங்கள் தவம் செய்தார்.

விஸ்வாமித்ரோபி த$^4$ர்மாத்மா தபஸ்தேபே மஹாதபா: |
புஷ்கரேஷு நரஶ்ரேஷ்ட$^2$ த$^3$ஶ வர்ஷ ஶதாநி ஸ: || (28)

---

## ஸர்க்கம் 63

## விசுவாமித்திரரும் மேனகையும்

பூர்ணே வர்ஷஸஹஸ்ரே துவ்ரதஸ்நாதம் மஹாமுநிம் |
அப்$^4$யாக$^3$ச்ச$^2$ந் ஸுரா: ஸர்வே தப: ப$^2$ல சிகீர்ஷவ: || (1)

இப்படிக் கடும் தவத்தை முடித்து ஸ்நானம் செய்த பிறகு பிரஹ்மாதி தேவர்கள் அங்கே வந்து "விசுவாமித்திரரே! உமது தவத்தாலும் புண்ணியங்களாலும் ரிஷியானீர். முன்பு ராஜரிஷிபதவியை அடைந்தீர். இப்பொழுது க்ஷத்திரியத் தன்மை நீங்கினதால் இந்தப் பதவியை அடைந்தீர்'' என்று சொல்லித் திரும்பிப் போனர்கள். ஆனால் தன் எண்ணம் இன்னும் நிறைவேருததால் கௌசிகர் மனம் நொந்து மறுபடியும் கடுந்தவம் செய்ய ஆரம்பித்தார்.

வெகு காலம் கழித்து ஒருநாள் அந்தப் புஷ்கர தீர்த்தத்தில் மேனகை என்ற அப்ஸரஸ் ஸ்நானம் செய்ய வந்தாள். ஒப்பில்லாத ரூபலாவண்யமுடைய அந்தப்பெண் நீருண்ட மேகத்தில் பாயும் மின்னலைப்போல், ஏரி ஜலத்தில் விளையாடுவதைக்கண்டு விசுவாமித்திரர் அவளிடத்தில் எல்லையற்ற ஆசைகொண்டு "பெண்ணே! க்ஷேமமா? இங்கே என் ஆசிரமத்தில் என்னுடன் வஸித்துக்கொண்டிரு. எனக்கு உன்னிடத்திலுள்ள ஆசைக்கு அளவில்லை. மன்மத பாணத்தால் புத்தி மயங்கி இருக்கும் என்னை அங்கீகரித்து என் தாபத்தைப் போக்குவாய்'' என்ருர். அவள் அப்படியே பத்து வருஷங்கள் வரையில் அவருடன் ஸுகமாயிருந்தாள். பிறகு ஒருநாள் திடீரென்று கௌசிகருக்கு அந்த மோகம் நீங்கிற்று. தான் யாரென்றும், எதற்காக அங்கு வந்தாரென்றும், தான் செய்த கடுந்தவம் காமத்திற்கு இடங்கொடுத்ததால் கெட்டதென்றும் உணர்ந்து நினைத்து நினைத்து வருந்தி, வெட்கத்தால் குன்றி, துக்கமும் கவலையும் பீடிக்க, "ஐயோ! என் தவத்தைக் கெடுக்க இப்படித் தேவர்கள் உபாயம் செய்தார்களோ? பத்து வருஷங்கள் ஒரு இரவுபகலைப் போல் சென்றனவே! காமத்தாலும் மோகத்தாலும் புத்திமயங்கி இந்த விக்கினத்தை நானே தேடி அழைத்துக்கொண்டேனே''என்று பச்சாத்தாபத்தால் வெந்து, அடிக்கடி பெருமூச்சு விட்டார். அவருடைய கோபத்தையும் வருத்தத்தையும் கண்ட மேனகை, 'பிரளய காலாக்னியும் இவருடைய கோபத்திற்கு ஈடல்லவே. இவர் செய்த கடும் தவத்தைக் கெடுத்த என்னை என்ன செய்வாரோ' என்று பயந்துநடு நடுங்கிக் கைகூப்பிநின்ருள். அவர் மனமிரங்கி,"பெண்ணே! உன்னிடத்தில் குற்றமென்ன? உன்னைக்கோபிக்க நியாயமில்லை, என் புத்தியை அல்லவா கண்டிக்கவேண்டும்'' என்று மதுரமான வார்த்தைகளைச் சொல்லி அவளை அனுப்பினர்.

பிறகு அங்கிருந்து ஹிமாலயத்திற்குப் போய் தன் தமக்கையான கௌசிகி நதிக்கரையில் ஒரு புண்ணியஸ்தலத்தில் கோரமாகத் தவம் செய்ய ஆரம்பித்தார். அந்த விரதம் முடியும் வரையில் இந்திரியங்களை அடக்குவதாக பிரதிக்ஞை செய்துகொண்டார். ஆயிரம்வருஷங்கள் வரையில் உக்கிரமான தவம் செய்த பிறகு தேவர்களுக்குப்பயம் உண்டாயிற்று. அவர்கள் பிரஹ்மாவிடத்திற்குச் சென்று "ஸ்வாமி, இந்த தபஸ்வி பிரஹ்மரிஷி பதவியை அடையட்டும்'' என்ருர்கள். அவர் தேவர்களையும்ரிஷிகளையும்அழைத்துக்கொண்டு கௌசிகரிடத்திற்குவந்து "குழந்தாய்! உன் உக்கிரமான தவத்தால் வெகுதிருப்தியடைந்தேன். மேனகை உன் தவத்தை கெடுத்தாள். அவளைச் சபிக்காததால்கோபத்தை ஜயித்தாய். ஆகையால்ரிஷிகளுக்குள் மஹானாய் மஹரிஷிபதவியை அடையக்கடவாய்', என்று மதுரமாய் அனுக்கிரஹித்தார், ஸர்வலோகேசுவரன் இப்படிச்சொல்ல, கௌசிகருக்கு ஸந்தோஷமுமில்லை, துக்கமுமில்லை. பிரஹ்மாவை வணங்கிக் கைகூப்பி, "ஸ்வாமி! என் தவத்தாலும் புண்ணியத்தாலும் மஹரிஷி என்ற பெயரை நான் அடையத் தகுந்தவனல் இந்திரியங்களை ஜயித்தவனென்று உங்களால் ஒப்புக்கொள்ளப் பட்டதல்லவா'' என்ருர். உடனே பிரஹ்மா "அப்படியல்ல; காமக்குரோதங்களை உண்டாக்கும் காரணங்கள் நேரும்பொழுது உன் மனம் கொஞ்சமேனும் கலங்காமல் விகாரமற்றிருந்தால் மாத்திரம் இந்திரியங்களை ஜயித்தவனென்று சொல்லலாம். அந்த ஸ்திதியை அடைய நீ இன்னும் யத்தினம் செய்யவேண்டும்'' என்று தேவர்களுடன் திரும்பிப் போனர்.

பிறகு கௌசிகர் கைகளை உயரத் தூக்கிக்கொண்டு, யாதொரு பற்றுமின்றி காற்றையே புஜித்துக்கொண்டு, கோடையில் பஞ்சாக்னி மத்தியிலும், மழை காலத்தில் கடும் மழை பெய்யுமிடங்களிலும், குளிர் காலத்தில் குளிர்ந்த ஜலத்திலும் நின்று இரவும் பகலும் ஓயாமல் கோரமான தவம்செய்து வந்தார். இப்படி ஆயிரம் வருஷங்களான பிறகு இந்திராதி தேவதைகளுக்கு மஹா பயமுண்டாயிற்று. தேவராஜன் ஸபைகூட்டி, தனக்கு ஹிதத்தையும் கௌசிகருடைய தவத்திற்குக் கெடுதியையும் உண்டாக்கும் யோசனையை ரம்பையிடத்தில் சொன்னான்.

ரம்பா4 மப்ஸரஸம் ஶக்ர: ஸஹஸர்வைர் மருத்3க3ணை: |
உவாசாத்ம ஹிதம் வாக்யம் அஹிதம் கௌஶிகஸ்ய ச || (26)

## ஸர்க்கம் 64

## விசுவாமித்திரரும்—ரம்பையும்

ஸுரகார்ய மித3ம் ரம்பே4 கர்தவ்யம் ஸுமஹத் த்வயா |
லோப4நம் கௌஶிகஸ்யேஹ காமமோஹ ஸமந்விதம் || (1)

ரம்பே! உன்னால் ஒரு பெரிய காரியம் தேவர்களுக்கு நடக்க வேண்டியிருக்கிறது. கடுந்தவம் செய்யும் கௌசிகருடைய மனத்தில் ஆசையை உண்டாக்கி, நீ அவரை மயக்கவேண்டும்." என்றான். அது தன்னால் முடியாததென்பதைஉணர்ந்து வெட்கமடைந்து கைகூப்பி, "மஹாராஜ! இந்த ரிஷி மஹாகோபஸ்வபாவமுள்ளவர். அவருடைய தவத்தைக் கெடுக்க முயன்றால் என்னை குரூரமாகச் சபிப்பார். அதை நினைக்க எனக்கு வெகு பயமுண்டாகிறது. தயவுசெய்து என்னை மன்னிக்கவேண்டும்" என்று பிரார்த்தித்தாள். தேவராஜன் அவளை ஸமாதானம் செய்து, பயந்து நடுங்கிக் கைகூப்பித் தன்னை வேண்டுகின்ற அந்தத் தேவகன்னிகையைப் பார்த்து "ரம்பே! பயப்படாதே, உனக்கு எந்த ஆபத்தும் நேராது. நான் சொல்வதைச் செய். மரங்கள் தளிர்த்துப் பூத்துக் காய்த்துப் பழுக்கும் வஸந்த ருதுவில் ஸகலப் பிராணிகளின் மனத்தைக் கவரும் குயிலாக நான் ரூபமெடுத்து மன்மதனுடன் உன் பக்கத்திலிருந்து உதவி செய்கிறேன். எல்லோரையும் மயக்கும் ரூபத்தை எடுத்து நீ அந்த ரிஷியின் தவத்தைக் கெடுக்கவேண்டும்" என்றான்.

அப்படியே அவள் கௌசிகரிடத்திற்குப்போய், அவருடைய புத்தியைத் தவத்திலிருந்து இழுத்து, தன்னிடத்தில் செலுத்தப்பலவிதமாய் முயன்றாள். மதுரமாய்ப் பாடும் குயிலின் சப்தம் அமிருததாரையைப்போல் அவருடைய காதில் விழுந்தது. புஷ்பங்களின் வாஸனையை கிரஹித்துக்கொண்டு இளந்தென்றல் காற்று மிருதுவாகவும் ஸுகமாகவும் அவர்மேல் வீசிற்று. விசுவாமித்திரருடைய



தவம் குலைந்தது. கண்களைத் திறந்து பார்த்தார். ரூபலாவண்யமே அவதரித்து வந்தது போன்ற ரம்பை எதிரில் நிற்கக்கண்டார். புன்சிரிப்பாலும், பார்வையாலும், அங்கசேஷ்டையாலும், ஒய்யாரநடையாலும் அவருடைய மனத்தைக் கவர தன் சக்தி முழுவதையும் உபயோகித்தாள். அதை விசுவாமித்திரர் நன்றாய்க் கவனித்து ஆலோசித்து, "மேனகையைப்போல் இவளும் வலுவில் என்னைத் தேடி வந்தாளா? அல்லது என் தவத்தைக் கெடுக்க இந்திரன் இவளை அனுப்பினானா" என்று ஸந்தேகப்பட்டார்.

வெகு மதுரமான பாட்டாலும் காற்றாலும் வஸந்த காலத்தாலும் அது தேவராஜனுடைய செய்கை என்றறிந்து, ரம்பையிடத்தில் அவருக்கு அடங்காக் கோபமுண்டாயிற்று. "அடி துஷ்டே! காமக்குரோதங்களை ஜயிக்க விரும்பும் என்னை இப்படி மயக்கி, என் தவத்தைக் கெடுக்க முயலும் நீ, பதினாயிர வருஷங்கள் வரையில் கல்லாகக் கடவாய். தபோநிதியாய் தேஜோராசியாய் விளங்கும் வஸிஷ்டர் உன்னை இந்தச் சாபத்திலிருந்து விடுவிப்பார்" என்று கோரமாகச் சபித்தார். பிறகு 'தன் பிரபுவின் கட்டளைக்குக் கட்டுப்பட்டு இப்படிச் செய்த வேலைக்காரியிடத்தில் நான் கோபிக்க நியாயமில்லை' என்றறிந்து அந்தச் சாபத்திற்கு விமோசனத்தையும் சொன்னார். ஆனால், தன் கோபத்தை அடக்க முடியாமல் ரம்பையைச் சபித்து தன் தவத்தைக் குறைத்ததற்காக அவருக்குச் சொல்ல முடியாத பச்சாத்தாபமுண்டாயிற்று. அதற்குள் ரம்பை கல்லானாள். கௌசிகர் கோபம் கொண்டவுடனே இந்திரனும் மன்மதனும் இருந்த இடம் தெரியாமல் ஓடிப்போனார்கள்.

கோபத்தால் தன் தவம் அழிந்ததையும் இந்திரியங்கள் தனக்கு வசப்படாததையும் நினைத்து நினைத்து, அந்த மஹாத்மாவிற்கு மேன்மேலும் துக்கமுண்டாயிற்று. மனத்தில் கவலை குடிகொண்டது. "இனிமேல் கோபத்திற்கு இடம் கொடுப்பதே இல்லை. பேசினால் அல்லவா கெடுதி. ஆகையால் வாயைத் திறந்து ஒரு வார்த்தையையும் பேசுவதில்லை. பேசுவதற்கும் மூச்சு விட வேண்டியது அவசியமல்லவா? ஆகையால் கேவல கும்பகத்தை அனுஷ்டித்து பிராணவாயுவை அடக்குவேன். எவ்வளவு வருஷங்களானாலும் மூச்சு விடுவதில்லை. இந்திரியங்களை அடக்கி, ஆஹாரமின்றி, பேச்சு மூச்சின்றி, தேகத்தை வாட்டி ஒடுக்கி, பிரஹ்மரிஷி பதவியை அடையும் வரையில் உக்கிரமான தவம் செய்வேன். ஆயிரம் பதினாயிரம் லக்ஷம் வருஷங்களானாலும் அப்படியே இருப்பேன். என் தபோமஹிமையால் என் சரீரமும் அவயவங்களும் பிராணன்களும் வீரியமும் புத்தியும் ஒன்றும் குறையாது" என்று ஆயிர வருஷங்கள் வரையில் மேற்சொன்னபடி தவம் செய்வதாக, தீக்ஷை செய்துகொண்டு லோகத்தில் அதுவரையில் ஒருவரும் செய்யாத கோர தவத்தைச்

செய்ய நிச்சயித்து, எந்த இடையூறு நேர்ந்தாலும் தவம் செய்யாமல் விடுவதில்லை என்று பிரதிக்ஞை செய்தார்.

ஏவம் வர்ஷ ஸஹஸ்ரஸ்ய தீ3க்ஷாம் ஸ முநிபுங்க3வ: |
சகாராப்ரதிமாம் லோகே ப்ரதிஜ்ஞாம் ரகு4 நந்த3ந ॥ (20)

## ஸர்க்கம் 65

## விசுவாமித்திரர் பிரஹ்மரிஷியானது

அத2 ஹைமவதீம் ராம தி3ஶம் த்யக்த்வா மஹாமுநி: |
பூர்வாம் தி3ஶமநுப்ராப்ய தபஸ் தேபே ஸுதா3ருணம் ॥

பிறகு வடக்கு திக்கை விட்டு மேற்கில் சென்று மௌன விரதத்துடன் ஆயிரம் வருஷங்கள் வரையில் கோரமான தவத்தைச் செய்தார். அதுவரையிலாவது அதற்குப் பிறகாவது ஒருவரும் அப்படிச் செய்ய முடியாது, செய்ததுமில்லை. தேகம் கட்டையாய்க் கல்லைப் போல் இந்திரியச் செய்கைகள் ஒழிந்திருந்தது. அவருடைய தவத்தைக் கலைக்கத் தேவர்கள் பலவிதமாய் முயன்றார்கள். ஆனால் அவர் காமக் குரோதங்களுக்கு இடம் கொடுக்கவே இல்லை. ஒரே உறுதியாய், கலங்காமல், ஆயிர வருஷங்கள் வரையில் தவம் செய்து முடித்து, ஸ்நாநம் செய்து சாப்பிடப்போகும் ஸமயத்தில் இந்திரன் பிராஹ்மண வேஷத்துடன் அங்கே வந்து, அந்த அன்னத்தைத் தனக்குக் கொடுக்கும்படி வேண்டினான். தன் தவம் ஸித்திப்பதற்கு தன்னை யாசித்தவனுக்கு இல்லை என்று சொல்லாமல் கேட்டதைக் கொடுக்க வேண்டுமென்று கௌசிகர் நிச்சயித்து, சமைத்த அன்னம் முழுவதையும் மனப்பூர்வமாய், பரம சந்தோஷத்துடன் அந்தப் பிராஹ்மணனுக்குக் கொடுத்தார். ஒரு வார்த்தை கூடப் பேசவில்லை. மௌன விரதத்தையே அனுஷ்டித்தார். மறுபடியும் சமையல் செய்வதற்கு வேண்டிய ஸாமக்ரிகளை ஸம்பாதித்து வைக்காததால் ஆஹாரமில்லாமலேயே முன்போல் தவம் செய்ய ஆரம்பித்தார்.

பிராண வாயுக்களை அடக்கி, மௌனமாய், ஆகாரமின்றி அவர் தவம் செய்யும்பொழுது, தலையிலிருந்து புகையும் நெருப்பும் கிளம்பின. மூன்று லோகங்களிலுள்ள பிராணிகள் யாவும் அதனால் எரிபட்டுத் தடுமாறின. அப்பொழுது தேவ கந்தர்வ பன்னக அஸுர ராக்ஷஸ கணங்கள் அவருடைய தேஜோரூபமான அக்னியால் மூர்ச்சையடைந்து காந்தி குறைந்து துக்கம் மேலிட்டு, தாங்க முடியாமல், பிரஹ்மாவை நமஸ்கரித்துக் கைகூப்பி, "ஸ்வாமி! கௌசிகரென்ற மஹா தபஸ்வியின் தவத்தைக் கெடுக்க எங்களால் கூடியவரையில் முயன்றோம். அவருடைய மனத்தில் காமக்குரோதங்களை உண்டாக்க வேண்டிய வரையில் முயன்றோம். ஆனால் எங்கள் இடையூறுகளால் அவர் செய்யும் தவம் மென்மேலும் வளர்கிறதே



தவிரக் குறையவில்லை. எங்களால் கூடியவரையில் அவரைப் பரீக்ஷித்துப் பார்த்தோம். அவரிடத்தில் கொஞ்சமாவது தோஷத்தைக் காண முடியவில்லை. அவர் விரும்புவதைக் கொடுக்காவிட்டால் மூவுலகையும் சராசரப் பொருள்களுடன் நாசம் செய்வார். பாருங்கள், திக்குகள் கலங்கித் தடுமாறுகின்றன. பதார்த்தங்கள் காந்தியை இழந்தன. கடல்கள் பொங்கிக் கரைபுரள்கின்றன. மலைகள் தூள் தூளாய்ப் பிளக்கின்றன. பூமி நடுங்குகிறது. காற்று கடுமையாய் அடிக்கிறது. இதற்கு என்ன பரிஹாரமென்று எங்களுக்குத் தோன்றவில்லை. கடவுள் ஒருவரிருந்தால் இப்படியெல்லாம் தட்டுக்கெட்டுத் தடுமாறுமா என்று ஜனங்கள் நம்பிக்கையற்று, கர்மானுஷ்டானங்களையும், தர்மங்களையும் கைவிட்டு நாஸ்திகராகிறார்கள். மூவுலகிலுள்ள பிராணிகள் பித்துப்பிடித்தது போல் சித்தஸ்வாதீனமற்றிருக்கின்றன. கௌசிகருடைய தேஜஸ் ஸூரியனுடைய காந்தியை அடக்கிவிட்டது. முன்பு பிரளய காலாக்னியால் மூன்று லோகங்களும் எரிக்கப்பட்டதுபோல், இவருடைய தேஜஸால் இப்பொழுது கொளுத்தப்படுகின்றன. இவர் பிரபஞ்சத்தை அழிக்க விரும்புவதற்குள் அவருக்கு வேண்டியதைக் கொடுத்துத் திருப்தி செய்யுங்கள். தேவராஜ்யத்தைக் கேட்டாலும் கொடுத்துவிடுங்கள்'' என்று பிரார்த்தித்தார்கள்.

பிரஹ்மா அதை ஒப்புக்கொண்டு தேவர்களுடன் கௌசிகர் தவம் செய்யுமிடத்திற்குப் போய், மதுரமான வார்த்தைகளால் அவரை அழைத்து "பிரஹ்மரிஷே! உமக்கு க்ஷேம முண்டாகட்டும். உமது தவத்தால் மிக்க ஸந்தோஷத்தை அடைந்தோம். உக்கிரமான தவத்தால் பிராம்மணத் தன்மையை அடைந்தீர். என்னைத் தரிசித்ததின் பயனை நீர் மருத் கணங்களுள்ள வரையில் ஜீவித்திருக்கக் கடவீர். ஸகல மங்களங்களையும் அடையக் கடவீர். இஷ்டமான இடத்திற்குச் செல்லலாம்'' என்றார்.

கௌசிகர் அவரையும் தேவர்களையும் நமஸ்கரித்து, தான் வெகு காலமாய்ச் செய்த உக்கிரமான தவம் தன் எண்ணப்படி பலித்ததால் பரமானந்த மடைந்து, "லோகேச்வர! பிராம்மணப் பதவியும் தீர்க்காயுளும் எனக்குக் கிடைத்தால், பிரஹ்மஞானத்திற்கு ஸாதனமான பிரணவ வித்யையும் யக்ஞங்களுக்கு ஸாதனமான வஷட்காரமும் அவைகளை உபதேசித்தும் வேத வேதாங்கங்களும் என்னை அடையட்டும். வஸிஷ்டர் முதலிய பிராஹ்மணர்கள், பிறர்க்கு அத்யயனம் செய்விக்கவும் யாகம் செய்விக்கவும் அதிகாரம் பெற்றிருப்பதுபோல் எனக்கும் அதிகாரம் வேண்டும். தாங்களும் தேவர்களும் பிராஹ்மண பதவியை எனக்கு அனுக்ரஹித்தீர்கள். ஆனால் நான் பிராஹ்மண ஜாதியில் பிறக்கவில்லை. தவத்தால் அந்த ஸ்தானத்தை அடைந்தேன். வஸிஷ்ட மஹரிஷியோ பிராஹ்மணராய்ப் பிறந்தவர். தன் பிரஹ்மதேஜஸால் என் க்ஷத்திரிய பலத்தை

அடக்கினவர். ப்ரஹ்மாவின் மானஸபுத்திரர். ப்ரஹ்மஸ்வரூபத்தை உபதேசிக்கும் உபநிஷத்துக்கள் அடங்கிய வேதங்களையும், க்ஷத்ரியர்களுக்கு வேண்டிய சாந்தி புஷ்டி சத்ருநாசம் ஜயம் முதலியவைகளைக் கொடுக்கும் தனுர் வேதத்தையும், அதர்வண வேதத்தையும் கரை கண்டவர். அவர் என்னை ப்ரஹ்மரிஷி என்று ஒப்புக்கொள்ளட்டும். என் மனத்திலுள்ள கோரிக்கை இதே. இதை நிறைவேற்றின பிறகு நீங்கள் இஷ்டப்படி போகலாம். இல்லாவிட்டால் மறுபடியும் தவம் செய்வேன்'' என்றார்.

உடனே தேவர்கள் வஸிஷ்டரை ப்ரார்த்தித்து, "ஸ்வாமி! எங்களுடைய வார்த்தையை நிஜமாக்கவேண்டும்'' என்றார்கள். அவர், "விசுவாமித்திரரே! நீர் ப்ரஹ்மரிஷியே, இதில் ஸந்தேகமில்லை. ப்ராஹ்மண ஜாதியில் பிறந்தவர்களுக்குரிய ஸம்ஸ்காரம் முதலிய ஸகல ப்ரயோஜனங்களும் உமக்குக் கிடைத்தன'' என்றார். அவருடைய வார்த்தையை தேவதைகளும் உறுதிசெய்து, அவ்விரு மஹரிஷிகளுக்கும் ஸ்நேஹம் செய்வித்துத் திரும்பிப் போனார்கள்.

இப்படி இந்த மஹாத்மா உத்தமமான ப்ராஹ்மண பதவியை அடைந்து வஸிஷ்டரைப் பார்த்து, "ஸ்வாமி! இவ்வளவுக்கும் தாங்களே காரணம். நான் எவ்வளவு தடுத்தும் எனக்கும் என் பரிவாரங்களுக்கும் விருந்து செய்வித்தீர்கள். அதற்கு ஸாதனமாயிருந்த காமதேனுவை நான் எவ்வளவு யாசித்தும் தாங்கள் கொடுக்கவில்லை. அதை பலாத்காரமாக அபகரித்தேன். அதனால் நம்மிருவருக்கும் யுத்தம் நடந்தது. என் ஸைன்யங்களும் புத்திரர்களும் கடுந்தவத்தால் பரமசிவனிடத்திலிருந்து நான் அடைந்த திவ்யாஸ்திரங்களும் தங்களுடைய ப்ரஹ்மதேஜஸால் அழிந்தன. அதைக் கண்டு தங்களைப்போல் நானும் ப்ராஹ்மணனாகி, ப்ரஹ்ம தேஜோபலத்தை அடையவேண்டுமென்று ஆசையுண்டாயிற்று. தாங்கள் யாவையும் அறிந்தவர்கள்; இப்படிப் பின்வருவதைக் கண்டே என்னை விருந்திற்கு அழைத்தீர்களென்று இப்பொழுது தெரிகிறது. ஆகையால் தங்களால் நான் பரம உபகாரம் பெற்றேன்'' என்று அவரை வெகு ப்ரியத்தோடும் பக்தியோடும் பூஜித்தார். தன் எண்ணங்கள் நிறைவேறி, மஹாதபஸ்வியாக பூமியெங்கும் இஷ்டப்படி ஸஞ்சரித்துக் கொண்டிருக்கிறார்.

"ராம! இந்த மஹாத்மா, க்ஷத்திரியராய்ப் பிறந்து நான் சொன்னவாறு ப்ராஹ்மண பதவியை அடைந்தார். அந்த முனி சிரேஷ்டர் இவரே. தவமே உருவெடுத்து வந்ததென்று இவரைச் சொல்லலாம். தர்ம மார்க்கத்திலிருந்து க்ஷணமாவது விலக மாட்டார். வீரியம் இவரிடத்திலேயே குடிகொண்டிருக்கிறது'' என்று சதானந்தர், கௌசிகருடைய பூர்வசரிதத்தையும் மஹிமையையும் விஸ்தாரமாக வர்ணித்தார்.



ராம லக்ஷ்மணர்களுக்கு எதிரில் ஜனகர், கௌசிகரைக் கை கூப்பி வணங்கி, "தாங்களும் இந்த இக்ஷ்வாகு குல ராஜபுத்திரர்களும் என் யக்ஞத்திற்கு வந்ததால் தன்யனானேன். அனுக்ரஹம் பெற்றேன். மஹர்ஷே! தங்களைத் தரிசித்ததால் பரிசுத்தனானேன். மஹானுபாவ! ப்ரஹ்ம ரிஷிகளுக்குள் சிரேஷ்டரே! தங்களைத் தரிசித்ததால் அநேக உத்தம குணங்களை அடைந்தேன். தாங்கள் செய்த மஹாதபஸையும், தங்களுடைய அனந்த கல்யாண குணங்களையும் நானும் ராம லக்ஷ்மணர்களும் இந்த ஸபையிலுள்ளவர்களும் விஸ்தாரமாகச் சொல்லக் கேட்டோம். பிதாமஹரான ப்ரஹ்மாவின் குணங்களையும் உமாபதியான சங்கரனுடைய குணங்களையும்போல் தங்களுடைய தவமும் பலமும் குணங்களும் வர்ணிக்க முடியாதவை; மனத்தால் நினைக்க முடியாதவை. ஆச்சரியகரமான தங்களுடைய சரிதங்களைக் கேட்கக் கேட்கப் போதுமென்ற எண்ணம் எனக்கு உண்டாகவில்லை. ஆனால், ஸூரியன் அஸ்தமிக்கப் போகிறான்; ஸாயங்கால கிரியைகளைச் செய்ய வேண்டும். காலையில் தாங்கள் எனக்கு மறுபடியும் தரிசனம் கொடுக்கவேண்டும். தபோநிதே! தங்களுக்குப் பரம மங்களமுண்டாகட்டும். என்னை உத்தரவு கொடுத்தனுப்பவேண்டும்'' என்றார். விசுவாமித்திரர் பரம ஸந்தோஷமடைந்து, ஜனகரைக் கொண்டாடி, போக உத்தரவு கொடுத்தார். அவ்வரசனும் சதாநந்தரும் பந்துக்களும் விசுவாமித்திரரை ப்ரதக்ஷிணம் செய்து அங்கிருந்து போனார்கள். கௌசிகரும் அங்குள்ள மஹரிஷிகளால் உபசரிக்கப்பட்டுத் தம் விடுதிக்குப் போனார்.

விச்'வாமித்ரோபி த'ர்மாத்மா ஸஹராம: ஸலக்ஷ்மண: |
ஸ்வவாடமப்4சக்ராம பூஜ்யமானோ மஹர்ஷிபி4: ‖ (38)

---

## ஸர்க்கம் 66

## ஸீதாதேவி

தத: ப்ரப'ாதே விமலே க்ருத கர்மா நராதி'ப: |
விச்'வாமித்ரம் மஹாத்மானம் ஆஜுஹாவ ஸராக4வம் ‖ (1)

காலையில் ஜனகர் நித்தியகர்மங்களையும் யாக காரியங்களையும் முடித்து, ராம லக்ஷ்மணர்களுடன் விசுவாமித்திரரை யாகசாலைக்கு அழைப்பித்து விதிப்படி பூஜித்தார். பிறகு "மஹரிஷே! நான் தங்களுடைய ஊழியன்; என்ன செய்யட்டும்? கட்டளையிடுங்கள்'' என்றார். அப்பொழுது கௌசிகர், "இதோ இருக்கும் ராம லக்ஷ்மணர்கள் தசரதருடைய புத்திரர்கள்; க்ஷத்திரிய சிரேஷ்டர்கள்; பல பராக்கிரமத்தால் ப்ரஸித்தர்கள். உம்மிடத்திலிருக்கும் சிவ தனுஸைப் பார்க்க வந்திருக்கிறார்கள். அதை இவர்களுக்குக் காட்டும். உமக்குப் பரம க்ஷேம முண்டாகட்டும். அதைப் பார்த்

துத் திருப்தி யடைந்து திரும்பிப் போகட்டும்'' என்றார். ஜனகர், "இந்த வில் எனக்குக் கிடைத்த காரணத்தையும், அது இங்கு இருப்பதற்குப் பயனையும் சொல்லுகிறேன், கேளுங்கள்.

என் வம்சத்தின் ஆதி புருஷனான நிமியிலிருந்து ஆறுவது அரசன் தேவராதர். அவரிடத்தில் தேவர்கள் இதைக் கொடுத்துக் காப்பாற்றிவரச் சொன்னார்கள். முன்பு தக்ஷ யாகத்தில் பரமசிவன் தேவர்களிடத்தில் கோபம்கொண்டு வில்லை வளைத்து நாணேற்றி "துஷ்டர்களே! இந்த யாகத்தில் நீங்கள் எனக்குப் பாகம் கொடுக்காததால் உங்களுடைய தலையை இதனால் பிளக்கிறேன்'' என்றார். தேவர்கள் பயந்து நடுங்கி மனம்தளர்ந்து, சங்கரனை நமஸ்கரித்து ஸ்தோத்திரங்களால் ஸமாதானம் செய்தார்கள். அவருடைய கோபம் தணிந்தது. தேவர்களிடத்தில் பிரீதியடைந்து தன் வில்லை அவர்களுக்குக் கொடுத்தார். அவர்கள் அதை தேவராதரிடத்தில் வைத்தார்கள். பிறகு நான் யாகம் செய்ய கலப்பையால் யாக பூமியை உழுது சுத்திசெய்து கொண்டிருக்கையில் ஒரு பெண் குழந்தை அங்கிருந்து கிடைத்தது. அவள் பூமியிலிருந்து உண்டானதால் அவளுக்கு ஸீதை என்று பெயரிட்டு என் பெண்ணாய் வளர்த்து வருகிறேன். இந்த வில்லை வளைத்து நாணேற்றுகிறவருக்கு இவளை விவாஹம் செய்விப்பதாய் பிரதிக்ஞை செய்திருக்கிறேன். ஸ்திரீ புருஷ ஸம்பந்தமில்லாமல், பிறந்த இந்தப் பெண்ணைப் பல அரசர்கள் தங்களுக்குப் பார்யையாகக் கேட்டார்கள். பரமசிவனுடைய இந்த வில்லை வளைத்து நாணேற்றுகிறவருக்கே இவளை மணம் செய்விப்பதாக பிரதிக்ஞை செய்திருக்கிறேன் என்று அவர்களுக்குச் சொல்லி அனுப்பிவிட்டேன்.

அவர்கள் மிதிலைக்கு வந்து சிவதனுஸின் வீரியத்தைப் பரீக்ஷிக்க ஆரம்பித்தார்கள். ஒருவராவது அதை எடுத்து நிறுத்தி வளைக்க முடியவில்லை. அவர்களுடைய வீரியம் அல்பமென்று அறிந்து, 'உங்களுக்கு ஸீதையை மனைவியாகக் கொடுக்கமாட்டேன்' என்றேன். அவர்கள் கோபம் கொண்டு வில்லை வளைத்து ஸீதையை மணம் செய்ய முடியாவிட்டாலும், எல்லோரும் சேர்ந்து இவனை ஜயித்து இவளை அபகரிப்போமென்று நிச்சயித்து மிதிலையை முற்றுகையிட்டார்கள். ஒரு வருஷம்வரையில் என்னால் கூடியமட்டும் எதிர்த்து யுத்தம் செய்தேன். என் கோட்டைகளும் அரண்களும் காவல்களும் யுத்த ஸாமக்ரிகளும் அழிந்தன. அப்பொழுது ஒன்றும் தோன்றாமல் துக்கமடைந்து கடுந்தவத்தால் தேவர்களைத் திருப்தி செய்தேன். அவர்கள் எனக்குச் சதுரங்க பலத்தை அனுக்ரஹித்தார்கள். அதனால் என் சத்துருக்களை ஜயித்து மூலைக்கு மூலை துரத்தினேன். அவ்வரசர்கள் வில்லை வளைக்க முடியாமல் அவமானப்பட்டு என் பட்டணத்தைப் பிடிக்கமுடியாமல், என் ஸைன்யங்களால் முறிபட்டு ஓடினார்கள். இந்த வில்லின் விருத்தாந்தம் இதே. தேஜஸால் ஜ்வலிக்கும் இந்த சிவதனுஸை ராம லக்ஷ்மணர்களுக்குக் காட்டுகிறேன். இதை ராமன் வளைத்து நாணேற்றினால் பூமியிலிருந்துண்டான ஸீதையை அவனுக்குப் பார்யையாகக் கொடுக்கிறேன்'' என்றார்.

ய$^{2}$த்யஸ்ய த$^{4}$நுஷோ ராம: குர்யா த$^{3}$ாரோபணம் முநே |
ஸுதா மயோநிஜாம் ஸீதாம் த$^{3}$த்$^{3}$யாம் த$^{3}$ாஶரதே$^{2}$ ரஹம் || (27)



## ஸர்க்கம் 67.

## ராமன் வில்லை முறித்தது

ஜநகஸ்ய வச: ஶ்ருத்வா விஶ்வாமித்ரோ மஹாமுநி: |
த$^{4}$நுர் த$^{3}$ர்ஶய ராமாய இதி ஹோவாச பார்தி$^{2}$வம் || (1)

ஜனகர் இப்படிச் சொல்ல, கௌசிகர் "மஹாராஜ! ராமனுக்கு அந்த வில்லைக் காட்டும்'' என்றார். ஜனகர் தன் ஸமீபத்திலிருந்த உத்தியோகஸ்தர்களைப் பார்த்து, "கந்தபுஷ்பங்களால் பூஜிக்கப்பட்ட அந்த வில்லைச் சீக்கிரத்தில் கொண்டுவாருங்கள்'' என்றார். அவர்கள் நகரத்திற்குப் போய் அதை எடுத்து வந்தார்கள். தீர்க்கமான தேகத்தையும் அளவற்ற பலத்தையுமுடைய ஐயாயிரம் மனுஷ்யர்கள் அதை எட்டு சக்கரங்களுள்ள வண்டியிலேற்றி வெகு சிரமத்துடன் இழுத்துக்கொண்டு வந்தார்கள். அந்த இரும்புப் பெட்டியை மந்திரிகள் ஜனகருக்கு முன் வைத்து, "எல்லா அரசர்களாலும் பூஜிக்கப்பட்ட இந்த சிரேஷ்டமான வில்லைப் பார்க்கவேண்டும் என்றீர்களே. இதோ கொண்டுவந்திருக்கிறோம்'' என்றார்கள். ஜனகர் கைகூப்பிக் கௌசிகரை நமஸ்கரித்து, அவரையும் ராம லக்ஷ்மணர்களையும் பார்த்து "மஹரிஷே! இந்தச் சிவதனுஸை ஜனக வம்சத்தரசர்கள் வெகு காலமாய்ப் பூஜித்து வருகிறார்கள். ஸீதையை விவாஹம் செய்ய விரும்பின, அரசர்களும் இதை எடுத்து வளைத்து நாணேற்ற முடியாமல், இது எல்லையற்ற வீரியமுள்ளதென்று கொண்டாடினார்கள். தேவாஸுர ராக்ஷஸ கந்தர்வ யக்ஷ கின்னர உரககணங்களும் இந்த விஷயத்தில் அசக்தர்களென்று ஒப்புக்கொண்டிருக்கிறார்கள். நம்மைப் போன்ற கேவல மனுஷ்யர்கள் இதை அசைக்கவும் முடியுமோ, தூக்க முடியுமோ, வளைக்க முடியுமோ, நாணேற்ற முடியுமோ, டங்காரம் செய்ய முடியுமோ, பாணத்தைப் பூட்ட முடியுமோ? இப்படி மஹா வீரியம் பொருந்திய இந்த வில்லை ராம லக்ஷ்மணர்கள் பார்க்கட்டும்'' என்றார்.

ஜனகர் இப்படிச் சொல்ல விசுவாமித்திரர், "குழந்தாய், ராம! இந்த வில்லைப் பார்'' என்றார். பிரஹ்மரிஷியின் உத்தரவுப்படி ராமன் பெட்டியின் மூடியைத் திறந்து வில்லைப் பார்த்து, "ஸ்வாமி! இந்த சிரேஷ்டமான தனுஸைக் கையால் தொடட்டுமா? இதை எடுத்து வளைத்து நாணேற்றலாமோ?'' என்றார். ஜனகரும் கௌசிகரும், 'அப்படியே செய்' என்றார்கள். அந்த யாக ஸதஸில்

உள்ள எண்ணிறந்த ஜனங்கள் ஆச்சரியத்துடன் பார்த்துக்கொண்டிருக்கையில், ஸ்ரீராமன் அதன் ஒரு நுனியைக்காலின் பெருவிரலால் அழுத்தினார். கழியால் தலையில் அடிக்கப்பட்ட கிருஷ்ண ஸர்ப்பத்தைப்போல் அது உடனே நிமிர்ந்து நின்றது. ஸ்ரீராமன் அதை நடுவில் பிடித்துநிறுத்திநாணேற்றி காதுவரையில் இழுத்தார். அபாரமான வீரியம் பொருந்திய அந்த பரமசிவனுடைய வில் நடுவில் ஒடிந்தது. ஆகாசத்தில் வாயுக்கள் ஒன்றோடொன்று தாக்கிப் பூமியில் விழுவது போல்ஒரு பெரும் சப்தமுண்டாயிற்று. மஹாபர்வதங்கள் பிளக்கும் பொழுது நடுங்குவதுபோல் பூமி நடுங்கிற்று. ராம லக்ஷ்மணர்களையும் விசுவாமித்திரரையும் ஜனகரையும் தவிர அங்குள்ளவர்கள் அந்த சப்தத்தால் மெய்மறந்து பூமியில் விழுந்தார்கள்.

சற்றுநேரம் கழித்துஅவர்கள் பிரக்ஞை தெளிந்தவுடன் ஜனகர் விசுவாமித்திரரை வணங்கிக் கைகூப்பி "ஸ்வாமி! தசரதபுத்திரனை ராமனுடைய வீரியத்தைக் கண்டறிந்தேன்; வெகு அத்புதமாயும் மனத்தால் நினைக்க முடியாமலுமிருக்கிறது. இதுவரையில் இப்படி ஓரிடத்திலும் பார்த்ததில்லை. தேவாஸுர கணங்களும் க்ஷத்திரிய வீரர்களும் ராஜசிரேஷ்டர்களும் நெருங்கமுடியாத வில்லை இந்தச் சிறு பையன் எடுத்து வளைத்து நாணேற்ற முடியுமோ? இல்லாவிட்டால் என் ஸீதை விவாஹமில்லாமல்போவாளே' என்று நான் கவலைகொண்டு ஸந்தேகப்பட்டதுண்டு. ஆனால், ராமனுடைய வீரியம் இவ்விதமென்று நான் ஒருபொழுதும் எண்ணியதேயில்லை. இது மனுஷ்யனால் ஸாத்தியமல்ல; லோகத்தில் எனக்கு யாதொன்றிலும் அபேக்ஷையில்லை. எனக்கு யாதொன்றும் கிடையாது. ஆகையால் என் ஐசுவரியத்திற்கு எல்லையில்லை. மிதிலை நெருப்புப் பிடித்து எரிந்தால் என்னைச் சேர்ந்த யாதொன்றும் எரிக்கப்படவில்லையே என்று வைராக்கியமடைந்த நிகரற்ற கீர்த்திசாலிகளான ஜனக வம்சத்தில் பிறந்த ஸீதை, எல்லோராலும் கொண்டாடப்பட்ட ரகுநாதனைப் பர்த்தாவாக அடைந்தாள். ஸ்த்ரீ புருஷ ஸம்பந்தமில்லாமல் பூமியிலிருந்துண்டானதால் ஸ்வபாவத்திலேயே அவள் நிகரற்ற கீர்த்திசாலி. மேலும் என்னைப் பிதாவாய் அடைந்ததால் விசேஷ கீர்த்தி பெற்றாள். அவளுக்குக் கிடைத்த பர்த்தாவோ எவ்விதத்திலும் ஒப்பற்றவர். கைநிறைந்த பொன்னிலும் கண் நிறைந்த கணவனே அதிகமென்ற பழமொழிப்படி, பெண்கள் விசேஷ ரூப லாவண்யமுள்ள புருஷர்களையே மணம் செய்ய விரும்புவார்கள்.

ராமனே மன்மதனுக்கு மன்மதன். கன்யையின் தாய் எல்லையற்ற ஐசுவரியமுள்ளவனைத் தன் பெண் மணம்புரிய வேண்டுமென்று விரும்புவாள். ராமனுடைய ஐசுவரியமோ அளவற்றது. அதிக புத்திமானும் வேத சாஸ்திரங்களில் நிபுணனும் சுத்தமான ஆசாரமுடையவனுமான புருஷனையே தன் புத்திரி மணம்செய்ய வேண்டுமென்று பிதா விரும்புவார். ராமனே புத்தி வித்யை ஞானம் ஆசாரம் வீரியம் பராக்கிரமம் முதலியவைகளில் ஒப்பற்றவன். பல

ஆரோபயித்வா த$^{4}$ர்மாத்மா ஸலீலமிவ தத்$^{3}$த$^{4}$னு: |
தத்$^{3}$ ப$^{3}$ப$^{4}$ஞ்ஜ த$^{4}$னுர்மத்$^{4}$யே நரஶ்ரேஷ்டோ$^{2}$ மஹாயஶா: ‖ —பால. 67ஸ-17 ஃ.

ஸ்ரீராமன் அதை நடுவில் பிடித்து நிறுத்தி நாணேற்றி காதுவரையில் இழுத்தார். அபாரமான வீரியம் பொருந்தின அந்த பரமசிவனுடைய வில் நடுவில் ஒடிந்தது. (பக்கம் 150 பார்க்க)

Notes : This Blank Page has also to be counted as a another page Number.

It is intentionally left blank after Picture Sketches.!

Released by Maran's Dog ,Toronto, Canada



தலைமுறைகளாகக் கீர்த்திபெற்றுச் சுத்தமான ஆசார குலத்தில் ஸம்பந்தம் செய்யவேண்டுமென்று பந்துக்கள் விரும்புவார்கள். இக்ஷ்வாகு வம்சத்திற்கு மேலான குலமுண்டோ? இவ்விதமான பெருமை வாய்ந்த ராகவனைப் பர்த்தாவாக அடைந்ததால் ஸீதையின் கீர்த்தி இன்னும் அதிகமாயிற்று. புத்திரனாயிருந்தால் ஸம்பாதித்த கீர்த்தியையே அடைவான். புத்திரியானதால் தான் பிறந்த வம்சத்திற்கும் புகுந்த வம்சத்திற்கும் மூவேழு தலைமுறைகள் வரையில் விசேஷ கீர்த்தியை ஸம்பாதிப்பாள்.

என் பிரதிக்ஞை நிறைவேறியது. வீரசிரேஷ்டனுக்கே என் பெண்ணை மணம் செய்விக்கும் பாக்கியத்தைப் பெற்றேன். என் உயிருக்குயிரான ஸீதையை ராமனுக்குப் பார்யையாகக் கொடுப்பதில் எனக்குள்ள திருப்திக்கு அளவில்லை. தாங்கள் உத்தரவு செய்தால் இப்பொழுதே என் மந்திரிகள் அயோத்யைக்கு அதிவேகமாய் ரதங்களில் போய், இங்கே நடந்த யாவற்றையும் தசரத மஹாராஜருக்குத் தெரிவிக்கட்டும். என் பிரதிக்ஞையையும் இந்த ராஜகுமாரர்கள் தங்களால் ரக்ஷிக்கப்பட்டு இங்கே வந்ததையும், ராமன் பரமசிவனுடைய வில்லை முறித்து ஸீதையை அடைந்ததையும் விஸ்தாரமாகச் சொல்லட்டும். அதி சீக்கிரத்தில் அந்த மஹாராஜாவையும் பந்து பரிவார ஸைன்யங்களையும் இங்கே அழைத்து வரட்டும்" என்றார். கௌசிகர் அதற்கு ஸம்மதிக்க, ஜனகர் மந்திரிகளை அழைத்து, விவாஹ பத்திரிகைகளைக் கொடுத்து, சொல்லவேண்டியவைகளை நன்றாக எடுத்துச் சொல்லி, தசரதரை ஸகல மரியாதைகளுடன் அழைத்துவரக் கட்டளையிட்டார்.

*அயோத்4யாம் ப்ரேஷயாமாஸ த4ர்மாத்மா க்ருதஶாஸநாந் |*
*யதா2வ்ருத்தம் ஸமாக்2யாதும் ஆநேதும் ச ந்ருபம் ததா2 || (27)*

---

## ஸர்க்கம் 68

## தசரதர் ஸமாசாரத்தை அறிந்தது

*ஜநகேந ஸமாதி3ஷ்டா: தூ3தாஸ்தே க்லாந்த வாஹநா: |*
*த்ரிராத்ரமுஷிதா மார்கே3 தே யோத்4யாம் ப்ராவிஶந்புரீம் || (1)*

ஜனகரால் அனுப்பப்பட்ட மந்திரிகள் மூன்றுநாள் இரவு பகலாய் பிரயாணம் செய்து, குதிரைகள் களைத்து, நான்காவது நாள் அயோத்யைக்கு வந்தார்கள். அரண்மனை வாசலிலுள்ள காவற்காரரிடத்தில், "மிதிலாதிபதியான ஜனக மஹாராஜாவால் அனுப்பப்பட்ட தூதர்கள் தங்களைத் தரிசிக்க விரும்புகிறார்கள்" என்று அரசருக்குத் தெரிவிக்கச் சொன்னார்கள். அவர்கள் அப்படியே செய்ய அவருடைய உத்தரவால் மந்திரிகளை உள்ளே அழைத்துப் போனார்கள்.

வயது முதிர்ந்த தேவேந்திரனைப்போல் ஸிம்ஹாஸனத்தில் வீற்றிருக்கும் தசரதரைக் கண்டு, அவர்கள் இந்திரியங்களை அடக்கிக் கொண்டு, கைகூப்பி வெகு ஜாக்கிரதையாய், மதுரமான வார்த்தைகளால், "ஸ்வாமி! மிதிலாதிபதியும் எங்கள் பிரபுவுமான ஜனகமஹாராஜா தாங்களும் தங்களுடைய அக்னி ஹோத்திரமும் உபாத்யாயரும் புரோஹிதரும் வேலைக்காரரும் க்ஷேமமா என்று அடிக்கடிவெகு பிரீதியுடன் விசாரிக்கிறார். பிறகு விசுவாமித்திர மஹரிஷியின் அனுமதி பெற்றுத் தங்களுக்குப் பின்வருமாறு தெரிவிக்கிறார். 'என்னிடத்திலிருக்கும் சிவதனுஸை நாணேற்றுகிறவனுக்கே என் புத்திரியைப் பார்யையாகக் கொடுப்பேனென்று நான் பிரதிக்ஞை செய்திருப்பது தங்களுக்குத் தெரியும். இப்படி யத்தனம்செய்து பலிக்காத அரசர்கள் ஒன்றுகூடி மிதிலையை முற்றுகையிட்டதும் அபஜயமடைந்ததும் தங்களுக்குத் தெரியும். விசுவாமித்திர மஹரிஷியுடன் என் யாகத்தைப் பார்க்கவந்த தங்களுடைய புத்திரர்களான ராமலக்ஷ்மணர்களில், ராமன் அந்த வில்லை எடுத்து வளைத்து நாணேற்றி முறித்தார். தக்ஷயாகத்தில் எதைக்கண்டுதேவர்கள் பரமசிவனிடத்தில் பயந்து நடுங்கி ஓடினார்களோ அதே வில்லை எண்ணிறந்தஜனங்கள் பார்த்துக் கொண்டிருக்க, ராமன் விளையாட்டாக வளைத்து முறித்தார். நான் செய்த பிரதிக்ஞைப்படி ஸீதையை அவருக்கு விவாஹம் செய்து கொடுக்கவேண்டும். அதற்குத் தங்கள் அனுமதியை வேண்டுகிறேன். புரோஹிதர்கள் உபாத்தியாயர்கள் மந்திரிகள் ராஜ்ய உத்யோகஸ்தர்கள் பந்து மித்திர பரிவார ஸைன்யங்களுடன் உடனே புறப்பட்டு மிதிலைக்கு வந்து, நிகரற்ற கீர்த்திசாலியான ராமலக்ஷ்மணர்களைப் பார்த்து ஸந்தோஷிக்க வேண்டும். அது எனக்குப் பரமானந்தத்தைக் கொடுக்கும்; ராமலக்ஷ்மணர்களுடைய விவாஹ மஹோத்ஸவத்தைத் தாங்கள் வந்து நடப்பித்து ஆனந்தமடையவேண்டும்' என்கிறார். விசுவாமித்திர மஹரிஷியும் சதானந்த மஹரிஷியும் இப்படிச்சொல்ல அனுமதி கொடுத்தார்கள்" என்றார்கள். தசரதருடைய பெருந்தன்மையாலும் மரியாதையாலும் பிரியத்தாலும் தைரியமாய் பரபரப்பில்லாமல் அமரிக்கையாய்த் தங்களுடைய ஸமாசாரத்தைத் தசரதருக்குத்தெரிவித்து, அவருடைய மேன்மையால் கட்டுப்பட்டு, அதிகமாய்ச் சொல்லாமல் நிறுத்திக்கொண்டார்கள்.

தூதர்களின் வார்த்தையைக் கேட்டுத் தசரதர் பரமானந்தமடைந்தார். வஸிஷ்டரையும் வாமதேவரையும் மற்றமந்திரிகளையும் பார்த்து, கௌஸல்யையின் கண்மணியான ராமசந்திரன் லக்ஷ்மணனுடன் விசுவாமித்திர மஹரிஷியால் ரக்ஷிக்கப்பட்டு மிதிலையில் இருக்கிறானாம். ஜனகர் அவனுடைய வீரியத்தைப் பரீக்ஷித்தறிந்து தன் புத்திரியை அவனுக்கு விவாஹம் செய்துகொடுக்க விரும்புகிறாராம். அது தங்களுக்கு இஷ்டமானால் தாமதமின்றி அதிசீக்கிரமாகப் புறப்பட்டு மிதிலைக்குப் போவோம்" என்றார். மந்திரிகளும் மஹரிஷிகளும் அதை 'நல்லது நல்லது' என்று கொண்டாடினார்கள். பிறகு தசரதர் ஜனகருடைய மந்திரிகளைப் பார்த்து "இங்கிருந்து நாளைய தினத்தில் புறப்பட்டுப் போவோம்" என்றார். அவர்கள் வெகு பிரீதியுடன் உபசரிக்கப்பட்டு அன்றிரவில் அங்கே தங்கினார்கள்.



*மந்த்ரிணஸ் தாம் நரேந்த்[3]ரஸ்ய ராத்ரிம் பரமஸத்க்ருதா: |*
*ஊஷுஸ்தே முதி[3]தா: ஸர்வே கு[3]ணை: ஸர்வை:ஸமந்விதா: || (19)*

---

## ஸர்க்கம் 69

## தசரதர் மிதிலைக்கு வந்தது

---

*ததோ ராத்ர்யாம் வ்யதீதாயாம் ஸோபாத்[4]யாய: ஸபா[3]ந்த[4]வ: |*
*ராஜா த[3]ஸரதோ[2] ஹ்ருஷ்ட: ஸுமந்த்ர மித[3] மப்[4]ரவீத் || (1)*

மறுநாட்காலையில் தசரதர் பந்துமித்திர உபாத்தியாய மந்திரிவர்க்கங்கள் புடைசூழ, ஸபையில் வீற்றிருந்து, ஸுமந்திரரே, நமது பொக்கிஷத் தலைவர்கள் வேண்டியவரையில் ரத்தினங்களையும் தனங்களையும் எடுத்துக்கொண்டு, விவாஹமஹோத்ஸவத்திற்குத் தகுந்த ஏற்பாடுகளுடன் முன்னே போகட்டும். சதுரங்க ஸைன்யமும் ரதம் பல்லக்கு யானை குதிரை முதலிய வாகனங்களும் என் உத்தரவானவுடன் புறப்படத் தயாராக இருக்கட்டும். வஸிஷ்டர் வாமதேவர், ஜாபாலி, காச்யபர், தீர்க்காயுளுள்ள மார்க்கண்டேயர்,காத்யாயனர் முதலிய மஹாத்மாக்கள் எனக்கு க்ஷேமமுண்டாக முன்னேசெல்லட்டும். என் ரதத்தை ஸித்தமாய் வைத்திரும். தாமதம் செய்யவேண்டாம், ஜனகருடைய தூதர்கள் சீக்கிரப்படுத்துகிறார்கள்" என்றார்.

அப்படியே மஹரிஷிகள் முந்தியும், தசரதர் நடுவிலும் ஸைன்யங்கள் பின்னுமாக அயோத்யையிலிருந்து புறப்பட்டு, நான்கு தினங்கள் பிரயாணம் செய்து விதேஹதேசத்திற்கு வந்தார்கள். அதைக் கேட்டு ஜனகர் காணிக்கைகளுடன் அவரை எதிர்கொண்டழைத்துத் தகுந்தபடி உபசரித்தார். தன் பிரதிக்ஞை நிறைவேறி உத்தம குலத்தில் தன் புத்திரிக்கு ஸம்பந்தம் கிடைத்ததால் பரமானந்தமடைந்த அவ்வரசன் "மஹாராஜ! க்ஷேமமாய் வந்தீர்களா? தாங்கள் இங்கே வரப்பெற்றது, என் அதிருஷ்ட வசமே. தங்களுடைய புத்திரர்கள் வீரியத்தால் ஸம்பாதித்த நிகரற்ற கீர்த்தியைக் கேட்டு ஆனந்தமடைவீர்கள். தேவர்களால் சூழப்பட்டுத் தேவராஜன் வருவதுபோல், தர்மாத்மாவான வஸிஷ்ட பகவானும் மற்ற பிராம்மணோத்தமர்களும் நானிருக்குமிடத்திற்கு வந்தது என் பாக்கியமே. வீரசிரேஷ்டர்களும் மஹாத்மாக்களுமான ரகு குலத்தில் எனக்கு ஸம்பந்தம் கிடைத்ததால் என் புத்திரியின் விவாகத்திற்கு நேரும் இடையூறுகளெல்லாம் நீங்கின. என் வம்சம் யாவரும்

பூஜிக்கத் தகுந்ததாயிற்று. விவாஹ நிச்சயத்தைப் பற்றின வார்த்தைகளைக் காலையில் பேசிக் கொள்ளலாம். இன்னும் மூன்று நான்கு தினங்களில் இந்த யாகம் முடியும். உடனே ரிஷிகளின் அனுமதி பெற்று ப்ராஹ்ம விவாஹத்தை நடத்துவோம்'' என்றார்.

அதற்கு தசரதர் வெகு சாதுரியமாய், "தர்மரஹஸ்யத்தை அறிந்தவர்களுக்குள் சிரேஷ்டரே! என் புத்திரர்களின் பலத்தால் ஸந்தோஷமடைந்து உமது பெண்களை அவர்களுக்கு விவாஹம் செய்துகொடுக்க நிச்சயித்திருப்பதைக் கேள்விப்பட்டேன். க்ஷத்திரியனாகையால் நான் இதுவரையில் பிறர்க்குக் கொடுத்தவனே யல்லாமல் தானம் வாங்கினதில்லை. அந்த விஷயத்தில் எனக்கு அனுபவமில்லை. ஆனாலும் கொடுப்பவர்களின் ஸமயத்தை வாங்குகிறவர்கள் அனுசரிக்க வேண்டுமென்று கேட்டிருக்கிறேன். உமது இஷ்டப்படி நடக்க ஸித்தமாயிருக்கிறேன்'' என்று தர்மத்திற்கு ஒத்து வணக்கமாயும் கீர்த்திகரமாயும் மறுமொழி சொன்னார். தன் புத்திரர்களின் வீரியத்தால் என் பெண்களை அடைந்து இஷ்டப்படி என் அனுமதியின்றி மணம் செய்து கொள்ளலாம். அப்படியிருந்தும் இவ்வளவு வினயமாகத் தன் பதவி செல்வம் வயது கீர்த்தி முதலியவற்றை லக்ஷ்யம் செய்யாமல் என்னிடத்தில் பேசினாரே என்று ஜனகருக்கு அடங்காத ஆச்சரியமுண்டாயிற்று.

அங்கே வந்திருந்த மஹரிஷிகள் ஒருவர்க்கொருவர் ஸந்தித்து பிரியத்துடன் பேசிக்கொண்டு, அன்றிரவை வெகு ஸந்தோஷமாகக் கழித்தார்கள். தசரதர் ராம லக்ஷ்மணர்களையும் விசுவாமித்திர மஹரிஷியையும் கண்டு, பரமானந்த மடைந்து, ஜனகரால் உபசரிக்கப்பட்டு அங்கே வஸித்துக் கொண்டிருந்தார். ஜனகர் யாக காரியங்களை விதிப்படி நடத்தி, தன் புத்திரிகளின் விவாஹத்திற்கு முன்பு நடக்க வேண்டிய அங்குரார்ப்பணம் முதலிய லௌகிக வைதிக காரியங்களில் கவலை செலுத்தினார்.

ஜநகோ(அ)பி மஹாதேஜா: க்ரியாம் த⁴ர்மேண தத்வவித் |
யஜ்ஞஸ்ய ச ஸு²தாப்⁴யாம் ச க்ருத்வா ராத்ரி முவாஸ ஹ || (20)

## ஸர்க்கம் 70

## இக்ஷ்வாகு வம்சம்

தத: ப்ரபா⁴தே ஜநக: க்ருதகர்மா மஹர்ஷிபி⁴: |
உவாச வாக்யம் வாக்யஜ்ஞ: ஶதாநந்த³ம் புரோஹிதம் || (1)

மறுநாட் காலையில் ஜனகர் யாகக் கிரியைகளை முடித்து ஸபா மண்டபத்தில் வந்து மஹரிஷிகளுக்கு நடுவில் வீற்றிருந்து சதானந்தரைப் பார்த்து, "ஸ்வாமி! எனக்கு அதிதார்மிகனான ஒரு தம்பி உண்டு. அந்த குசத்வஜன் மஹா தேஜஸ்வி, கீர்த்திசாலி; ஜலத்தில் கோட்டைச் சுவர்போல் நாட்டப்பட்டிருக்கும் சூலங்களால் நிறைந்த இக்ஷுமதி நதியால் சூழப்பட்டு, புஷ்பக விமானம்போல் ஸகல ஜனங்களின் கோரிக்கைகளை நிறைவேற்றும் ஸாங்காச்யமென்ற நகரத்தில் ராஜ்யபாலனம் செய்து வருகிறான். என் யாகத்திற்கு வேண்டிய பதார்த்தங்களை அனுப்பிக்கொண்டு அதைக் காப்பாற்றுகிறானென்பது தங்களுக்குத் தெரியும். என் புத்திரிகளின் விவாஹ மஹோத்ஸவத்தைப் பார்த்து அவனும் ஸந்தோஷிக்க வேண்டியதல்லவா? அவனைச் சீக்கிரமாய் அழைத்து வரும்படி உத்தரவு செய்ய வேண்டும்'' என்றார். உடனே சதானந்தர் நிபுணர்களான தூதர்களை வேகமாய்ச் செல்லும் குதிரைகளின் மேல் அனுப்பினார். மஹேந்திரனுடைய ஆக்ஞையால் அவன் தம்பியான உபேந்திரனை அழைக்கப் போவதுபோல், அவர்கள் குசத்வஜருடைய நகரத்திற்குப் போய், ஜனகருடைய கட்டளையைத் தெரிவித்தார்கள். அவரும் உடனே புறப்பட்டு மிதிலைக்கு வந்து, மஹாதார்மிகரான ஜனகரையும் சதானந்தரையும் நமஸ்கரித்து, அவர்களுடைய உத்தரவால் உத்தமமான ஸிம்ஹாஸனத்தில் உட்கார்ந்தார்.

பிறகு, அந்த ஸஹோதரர்கள் ஸுதாமா என்ற மந்திரியை அழைத்து, "சத்துருக்களால் ஜயிக்க முடியாதவரும் அளவற்ற தேஜஸுள்ளவருமான அயோத்யாபதியின் விடுதிக்குப் போய், அவரையும் அவருடைய குமாரர்களையும் மந்திரிகளையும் மஹரிஷிகளையும் தகுந்த மரியாதையுடன் அழைத்து வரவேண்டும்'' என்றார்கள். ஸுதாமா தசரதர் இருக்குமிடத்திற்குப் போய் அவரை நமஸ்கரித்துக் கைகூப்பி, "அயோத்யாதிபதே! வீரசிரேஷ்ட! தங்களுடைய மஹரிஷி புரோஹித மந்திரி பந்து பரிவாரங்களுடன் தங்களைப் பார்க்கவேண்டுமென்று ஜனகமஹாராஜா விரும்புகிறார்'' என்றார். அப்படியே தசரதரும் மஹரிஷிகளும் மந்திரி பரிவாரங்களும் பந்துக்களும் ஜனகருடைய ஸபா மண்டபத்திற்கு வந்து, அவரால் தகுந்தபடி உபசரிக்கப்பட்டார்கள். பிறகு காலதேசத்திற்கு உசிதமாகப் பேசும் திறமையுள்ள தசரதர் ஜனகரைப் பார்த்து, "எங்களுடைய இக்ஷ்வாகு வம்சத்திற்கு வஸிஷ்ட பகவான் பரமகுருவென்றும், ஸகல காரியங்களிலும் முன்னிருந்து பேசுகிறவரென்றும் உமக்குத் தெரியுமல்லவா? விவாஹம் செய்துகொள்ளும் ஸ்த்ரீ புருஷர்களின் குலம் பத்துத் தலைமுறை வரையில் சுத்தமாயும் கீர்த்திபெற்றதாயும் இருக்கவேண்டுமென்ற நியாயத்தால் இங்கிருக்கும் விசுவாமித்திரர் முதலிய மஹரிஷிகளின் அனுமதி பெற்று, அவர் என் வம்ச பரம்பரையை கிரமமாக எடுத்துச் சொல்வார்'' என்றார்.

பிறகு வஸிஷ்டர், ஜனகரையும் சதானந்தரையும் ஸபையிலுள்ளவர்களையும் பார்த்து, "மனோ வாக்கிற்கெட்டாத ஸ்வரூபத்தையுடைய மஹாவிஷ்ணுவிடத்திலிருந்து பிரஹ்மா உண்டானார்; அவர் ஒவ்வொரு கல்பத்திலும் உண்டாவதால் பிரவாஹ ரூபமாக நித்யர்; இரண்டு பரார்த்தகாலம் ஆயுளுள்ளவர்; அவரிடத்திலிருந்து முறையே மரீசி, காச்யபர், விவஸ்வானென்ற ஸூரியன், வைவஸ்

வதமனு, அயோத்யாதிபதிகளுக்கு மூல புருஷனை இக்ஷ்வாகு, குக்ஷி, விகுக்ஷி, மஹா தேஜஸ்வியும் பராக்கிரமசாலியுமான பாணன், அனரண்யன், பிருது, த்ரிசங்கு, யுவனுச்வன் (துந்துமாரன்), மாந்தாதா, ஸுஸந்தி, த்ருவஸந்தி, ப்ரஸேனஜித் என்ற ஸஹோதரர்கள், த்ருவஸந்தியின் புத்திரனை பரதன், அஸிதன் உண்டானர்கள். அவருடைய காலத்தில் ஹேஹயர்கள், தால ஜங்கர்கள், சசிபிந்துக்களென்ற அரசர்கள் அவரை யுத்தத்தில் ஜயித்து ராஜ்யத்திலிருந்து துரத்தினர்கள். அவர் தன் இரு மனைவிகளோடும், மந்திரிகளோடும் குறைவான ஸேனையுடன் ஹிமயமலைக்குப்போய், பிருகு மஹரிஷி தவம் செய்யும் புண்யஸ்தலத்தில் வஸித்தார். அவருடைய பத்தினிகளில் ஒருத்தி, மற்றொருத்தியின் கர்ப்பத்தை நாசம் செய்ய நினைத்து, அவளுக்கு விஷம் கலந்த அன்னத்தைக் கொடுத்தாள். அதைத் தெரியாமல் காளிந்தி என்ற பார்யை தின்றாள்; அவள் தனக்கு உத்தமமான புத்திரன் பிறக்கவேண்டுமென்று, அங்கே தவம் செய்து கொண்டிருந்த பிருகு வம்சத்தில் பிறந்த ச்யவன மஹரிஷிக்குப் பணிவிடை செய்து வந்தாள்.

தேவர்களைப்போல் தேஜஸ்வியான அந்த முனிசிரேஷ்டர் அவளிடத்தில் ஸந்தோஷமடைந்து, "நீ தெரியாமல் புஜித்த விஷத்தால் உன் கர்ப்பத்திலுள்ள சிசுவுக்கு யாதொரு கெடுதியும் நேராது. மஹா பாக்கியசாலியே! அது நிகரற்ற பல பராக்கிரமத்துடன் உன் வம்சத்தை விளங்கச் செய்யும்; கவலைப்படாதே" என்றார். சில காலத்திற்குப் பிறகு அஸிதன் இறந்தான். அந்தத் துக்கத்தால் காளிந்தி மனம் கலங்கியிருக்கையில் மஹா கீர்த்திமானை ஒரு புத்திரனைப் பெற்றாள். கர்ப்பத்தில் அவனுக்கு விஷ ஸம்பந்தமிருந்தபடியால் ஸகரனென்று பெயர் வந்தது. அவனுக்குப் பிறகு அஸமஞ்சன், அம்சுமான், திலீபன், பகீரதன், ககுத்ஸ்தன், ரகு, பிரவிருத்தனென்றவர்கள் முறையே பிறந்தார்கள். இவன் ஒரு ஸமயத்தில் "நீ நரமாம்ஸத்தைத் தின்னும் ராக்ஷஸனாகக் கடவாய்" என்று சபிக்கப்பட்டான். அதற்குப் பதிலாகச் சபிக்க ஜலத்தைக் கையிலெடுத்த பொழுது அது உசிதமல்லவென்று அவனுடைய பத்தினி தடுத்தாள். ஆகையால் அதைத் தன் கால்களில் விட்டவுடன் அவை நிறம் மாறின. ஆகையால் அவனுக்குக் கல்மாஷ பாதனென்று பெயருண்டாயிற்று. அவனுக்குப் பிறகு சங்கணன், ஸுதர்சனன், அக்னிவர்ணன், சீக்ரகன், மரு, ப்ரசுச்ருகன், அம்பரீஷன், நகுலன், யயாதி, நாபாகன், அஜன் முறையே பிறந்து அரசாண்டார்கள். அஜனுடைய புத்திரனே இதோ இருக்கும் தசரதர். இவருடைய புத்திரர்களே ராம லக்ஷ்மணர்கள்.

ஆதிமுதல் வீரர்களும் ஸத்யவாதிகளும் சுத்தர்களும் மஹாதர்மிஷ்டர்களுமான இக்ஷ்வாகு வம்சத் தரசர்களின் குலத்தில் பிறந்த ராம லக்ஷ்மணர்களுக்கு உமது பெண்களை விவாஹம் செய்து கொடுக்கும்படி கேட்கிறோம். இவர்கள் எவ்விதத்திலும் ஒருவர்க்கொருவர் தகுந்த வரன்கள். ஆகையால் இதை நீர் அங்கீகரிக்க வேண்டும்" என்றார்.



ராம லக்ஷ்மணயோ ரர்தே² த்வத்ஸுதே வரயே ந்ருப |
ஸத்³ருசாப்⁴யாம் நரஸ்ரேஷ்ட² ஸத்³ருசே த³ாது மர்ஹஸி || (42)

## ஸர்க்கம் 71

## நிமிவம்ச பரம்பரை

ஏவம் ப்³ருவாணம் ஜநக : ப்ரத்யுவாச க்ருதாஞ்ஜலி : |
ஸ்ரோது மர்ஹஸி ப⁴த்³ரம் தே குலம் ந : பரிகீர்திதம் || (1)

அதைக் கேட்டு ஜனகர் கைகூப்பி "மஹரிஷே! நல்ல குலத்தில் பிறந்தவன் விவாஹ காலத்தில் தன் வம்ச பரம்பரையை எடுத்துச் சொல்ல வேண்டும். அப்படியே என் குலக் கிரமத்தைச் சொல்லுகிறேன். முன் காலத்தில் தர்மானுஷ்டானத்தாலும் பலத்தாலும் நன்னடத்தையாலும் லோகங்களில் பிரஸித்திபெற்ற நிமி என்ற ஒரு அரசனிருந்தார். அவருடைய புத்திரனுக்கு மிதி என்றும் ஜனகரென்றும் பெயருண்டு. இந்த மிதிலா நகரத்தை ஏற்படுத்தினவர் அவரே. அவருடைய வம்சத்தில் முறையே உதாவஸு, நந்திவர்த்தனர், ஸுகேது, தர்மாத்மாவான தேவராதர், பிருஹத்ரதர், மஹாவீரர், ஸுதிருதி, திருஷ்டகேது, ஹர்யச்வர், மரு, ப்ரதிந்தகர், கீர்த்திரதர், தேவமீடர், விபுதர், மஹீத்ரகர், கீர்த்திராதர் மஹாரோமா, ஸுவர்ணரோமா, ஹ்ரஸ்வரோமா என்றவர்கள் பிறந்தார்கள். இவருக்கு ஸீரத்வஜனென்ற நானும் குசத்வஜனென்ற இந்த என்தம்பியும் புத்திரர்களாகப் பிறந்தோம். அவர் எனக்கு ராஜ்யாபிஷேகம் செய்வித்துத் தபோவனத்திற்குப் போனர். மிகவும் வயது சென்ற எங்கள் பிதா, உத்தம கதியடைந்த பிறகு நான் குசத்வஜனை வெகு அருமையாகப் போஷித்து, தர்மம் தவறாமல் அரசாண்டேன்.

ஸாங்காச்ய நகரத்து அரசனை ஸுதந்வா, "உம்மிடத்திலிருக்கும் சிவதனுஸையும் நிகரற்ற ரூபவதியான ஸீதையையும் எனக்கு அனுப்பும்" என்று தூதர்களால் தெரிவித்தான். நான் அதற்கு ஒப்பாததால் அவன் மிதிலையை முற்றுகை போட்டான். அவனை யுத்தத்தில் கொன்று அவனுடைய ராஜ்யத்தை என் தம்பிக்குக் கொடுத்தேன். தேவ கன்னிகையைப்போல் அழகுள்ளவளும், என்னால் வெகு ப்ரீதியுடன் வளர்க்கப்பட்டவளும் ராமனுடைய வீரியத்தால் ஜயிக்கப்பட்டவளுமான ஸீதையை ராமனுக்கும் எனக்குப் பிறந்த ஊர்மிளையை லக்ஷ்மணனுக்கும் விவாஹம் செய்து கொடுக்கிறேன். இப்படி மூன்று தடவை உறுதியாகச் சொல்லுகிறேன். இதில் ஸந்தேகமில்லை. மஹாராஜா! தங்களுடைய குமாரர்

களுக்கு பிரஹ்மசரிய விரதத்தை முடிக்கும் ஸமாவர்த்தனத்தையு விவாஹத்திற்குப் பூர்வாங்கமான நாந்தீ சிராத்தம் முதலிய வைதிகக் கிரியைகளையும் செய்யலாம். இன்று சந்திரன் மக நக்ஷத்திரத்திலிருக்கிறார். இதற்கு மூன்றாவது தினத்தில் உத்தர பல்குனி நக்ஷத்திரத்தில் தங்களுடைய புத்திரர்களின் க்ஷேமத்திற்காகக் கோதானம் பூதானம் திலதானம் ஹிரண்யதானம் முதலியவைகளைச் செய்யலாம். என் புத்திரிகளுக்குப் பரம மங்கள முண்டாவதற்கு வேண்டிய வைதிகக் கிரியைகளை நானும் செய்கிறேன்'' என்றார்.

ப$^{2}$ல்கு$^{3}$ந்யா முத்தரே ராஜந் தஸ்மிந் வைவாஹிகம் குரு |
ராமலக்ஷ்மணயோ ராஜந் த$^{3}$ாநம் கார்யம் ஸுகே$^{2}$ாத$^{3}$யம் ‖ (24)

---

## ஸர்க்கம் 72

## பரத சத்ருக்னர்களின் விவாஹ நிச்சயம்

---

தமுக்த வந்தம் வைதே$^{3}$ஹம் விஸ்வாமித்ரோ மஹாமுநி : |
உவாச வசநம் வீரம் வஸிஷ்ட$^{2}$ ஸஹிதோ ந்ருபம் ‖ (1)

பின்பு விசுவாமித்திரர் வஸிஷ்டருடன் ஆலோசித்து பராக்கிரமசாலியான ஜனகரைப் பார்த்து, "ராஜசிரேஷ்ட! இக்ஷ்வாகு நிமியென்றவர்களை மூல புருஷர்களாகவுடைய வம்சத்தின் மஹிமை நினைக்க முடியாதது; அளவற்றது; நிகரற்றது. மேலும், ராமனுக்கும் ஸீதைக்கும், லக்ஷ்மணனுக்கும் ஊர்மிளைக்கும் நடக்கும் விவாஹம் இரண்டு வம்சங்களுக்கும் தகுந்தது. ரூபம் ஐசுவரியம் முதலிய எல்லா விஷயங்களிலும் தம்பதிகள் ஒருவர்க்கொருவர் தகுந்தவர்கள். ஆனால், இதைப்பற்றி உம்மிடத்தில் ஒரு வார்த்தை சொல்ல விரும்புகிறேன். தர்மாத்மாவான குசத்வஜருக்கு இரண்டு பெண்களிருப்பதாகக் கேள்விப்படுகிறேன். ரூபலாவண்யத்தில் நிகரற்ற அந்தக் கன்யைகளைத் தசரத புத்திரர்களான பரதனுக்கும் சத்ருக்னனுக்கும் விவாஹம் செய்விக்க வேண்டுமென்று கேட்டுக் கொள்ளுகிறேன். தசரதருடைய நான்கு புத்திரர்களும், இந்திரன் யமன் வருணன் குபேரனென்ற லோகபாலர்களைப் போன்றவர்கள். பராக்கிரமத்தில் தேவர்களுக்கு ஸமானர்கள். ரூபத்தாலும் யௌவனத்தாலும் எல்லோருடைய மனத்தையும் கவருகிறவர்கள். இவ்விரு வம்சங்களும் தோஷமற்றவை. ஆகையால் பரத சத்துருக்னர்களுக்கு குசத்வஜருடைய பெண்களைப் பார்யைகளாகக் கொடுத்து அந்த ஸம்பந்தத்தை அங்கீகரிக்க வேண்டும்'' என்றார். இப்படி வஸிஷ்டரும் விசுவாமித்திரரும் சொல்ல, ஜனகர் கைகூப்பி, "முனி சிரேஷ்டர்களே! என் குலம் இக்ஷ்வாகு வம்சத்திற்கு ஸமமென்று இந்த ஸம்பந்தத்தைச் செய்யும்படி ரிஷிசிரேஷ்டர்களான தாங்கள் உத்தரவு செய்ததால் என் குலம் தன்யமாயிற்று. தங்கள் ஆக்ஞைப்படி நடக்க ஸித்தமாக இருக்கி



றேன். குசத்வஜனுடைய புத்திரிகளை பரத சத்ருக்னர்களுக்கு மணம் செய்விப்பதில் எனக்குப் பரம ஸந்தோஷம். நான்கு ராஜ குமாரர்களும் நான்கு ராஜ புத்திரிகளை ஒரே தினத்தில் பாணிக்ரஹணம் செய்யட்டும். பிரஜோத்பத்தி ஸ்தானத்திற்கு அதி தேவதையான பகன், உத்தர பல்குனி நக்ஷத்திரத்திற்கும் தேவதை. ஆகையால் அந்த தினத்தில் விவாஹத்தை நடத்துவது சிலாக்கியமென்று ஜ்யோதிஷ வித்வான்கள் சொல்லுகிறார்கள்'' என்று மதுரமாய்த் தெரிவித்தார்.

பிறகு எழுந்து வணக்கத்துடன் கைகூப்பி "மஹரிஷிகளே! சிரேஷ்டமான தர்மம் எனக்குக் கிடைக்கும்படி செய்தீர்கள். நானும் குசத்வஜனும் தசரதரும் உங்களுடைய சிஷ்யர்கள். எங்களுக்குரிய மூன்று ஸிம்ஹாஸனங்களும் தங்களுடையவை. தசரதருக்கு இந்த மிதிலை எவ்வளவு ஸ்வாதீனமோ அவ்வளவு அயோத்தையும் எனக்கு ஸ்வாதீனம். ஆகையால் தாங்களே இவ்விடத்தில் பிரபுக்கள். இந்த ஸிம்ஹாஸனங்களை அங்கீகரித்து மேல் நடக்க வேண்டிய காரியங்களை ஆக்ஞாபிக்கலாம்'' என்றார். தசரதர் ஸந்தோஷமடைந்து "ஜனகரே! நீரும் உமது தம்பியும் நிகரற்ற குணசாலிகள். அநேக மஹரிஷிகளையும் அரசர்களையும் நன்றாகப் பூஜித்திருக்கிறீர்கள். உங்களுக்கு ஸகல க்ஷேமங்களும் உண்டாகட்டும். விவாஹத்திற்குப்பூர்வாங்கமான கோதானம் நாந்தீசிராத்தம் முதலிய வைதிக் கிரியைகளைச் செய்ய அரண்மனைக்குப் போய் வருகிறேன்'' என்று அவ்விரு முனி சிரேஷ்டர்களையும் முன்னிட்டுக்கொண்டு தன் விடுதிக்குச் சென்றார்.

அங்கே அவர் விதிப்படி நாந்தீசிராத்தம் செய்து மறுநாட் காலையில் தன் குமாரர்களுக்கு விரத ஸமாவர்த்தனத்தை முடித்தார். ஏராளமாகப் பால் கொடுக்கும் பசுக்களைக் கன்றுகளுடனும், தங்கக் கட்டுகளுடைய கொம்புகளுடனும், பால் கறக்க வெண்கலப் பாத்திரங்களுடனும் ஒவ்வொரு பிராம்மணருக்கும் லக்ஷ லக்ஷமாய்த் தானம் செய்து, அளவற்ற திரவியங்களையும் கொடுத்தார். இப்படித் தன் குமாரர்களின் க்ஷேமத்தை உத்தேசித்து, வைதிக லௌகிகக் கிரியைகளைக் குறைவறச் செய்து, பரம ஸந்தோஷமடைந்து, லோகபாலர்களால் சூழப்பட்ட பிரஹ்மதேவரைப்போல் தன் குமாரர்களுக்கு நடுவில் விளங்கினார்.

ஸ ஸுதை : க்ருத கே$^{3}$ாதா$^{3}$நை : வ்ருதஸ்து ந்ருபதிஸ் தத$^{3}$ா |
லோகபாலை ரிவாபா$^{4}$தி வ்ருத : ஸௌம்ய : ப்ரஜாபதி: ‖ (25)

---

## ஸர்க்கம் 73
## ஸீதா விவாஹம்

*யஸ்மிம்ஸ் து தி³வஸே ராஜா சக்ரே கோ³தா³ந முத்தமம் |*
*தஸ்மிம்ஸ்து தி³வஸே ஶூரோ யுதா⁴ஜித் ஸமுபேயிவாந் ||* (1)

எந்தத் தினத்தில் தசரதர் தன் புத்திரர்களுக்கு விரத ஸமாவர்த்தனம் செய்தாரோ அன்று கேகய ராஜபுத்திரனும் பரதனுக்கு மாமனுமான யுதாஜித் மிதிலைக்கு வந்து தசரதரைக் கண்டு க்ஷேமம் விசாரித்து, "மஹாராஜ! தாமும், இன்னும் யாருடைய க்ஷேமத்தைக் கோருகின்றீர்களோ அவர்களும் ஸௌக்கியமென்று கேகயாதிபதி வெகுப்பிரீதியுடன் தெரிவிக்கிறார். என் ஸஹோதரியின் மகனைப் பார்க்கவிரும்பி அயோத்யைக்கு வந்தேன். நீங்களெல்லோரும் விவாஹ காரியமாய் மிதிலைக்குப் போனதாகக் கேள்விப்பட்டு இங்கே மிகவேகமாக வந்தேன்" என்றார். தனக்கு வெகு பிரியமான தன் மைத்துனனைக் கண்டு தசரதர் ஸந்தோஷித்துத் தகுந்தபடி உபசரித்தார்.

மறுநாட் காலையில் அவர் நித்திய கர்மங்களை முடித்துக் கொண்டு பந்து பரிவார மந்திரிவர்க்கங்களுடன் மஹரிஷிகளை முன்னிட்டுக்கொண்டு யாகசாலைக்கு ஸமீபத்திலுள்ள விவாஹ மண்டபத்திற்குப் போனார். அவருடைய குமாரர்கள் விவாஹத்திற்குப் பூர்வாங்கமான வைதிக லௌகிக காரியங்களை முடித்து, வஸ்திராபரணங்களால் அலங்கரிக்கப்பட்டு, வஸிஷ்டர் முதலிய மஹரிஷிகளை முன்னிட்டுத் தசரதருடைய ஸமீபத்தில் உட்கார்ந்தார்கள் பிறகு வஸிஷ்டர் ஜனகரிடத்தில் வந்து, "ராஜ சிரேஷ்ட! அயோத்யாதிபதி தன் புத்திரர்களுக்கு ஸகல விவாஹ பூர்வாங்கங்களை முடித்து, கன்யாதானம் செய்யும் உமது ஸௌகரியத்தை எதிர் பார்த்துக் கொண்டிருக்கிறார். கொடுக்கிறவரும் பெற்றுக் கொள்ளுகிறவரும் எவ்விதத்திலும் உத்தம மானவர்களாகையால், ஸகல க்ஷேமங்களுமுண்டாகும். இந்த சிலாக்யமான விவாஹத்தைச் செய்து உமது வார்த்தையை நிறைவேற்றும்" என்றார். உத்தம தர்மங்களை அறிந்தவரும், வெகு கம்பீர ஸ்வபாவமுள்ளவருமான ஜனகர் அதைக் கேட்டு "என் அரண்மனை வாசலில் தங்களைத் தடுக்கும் காவலாளர் யார்? இங்கே வருவதற்கு யாருடைய உத்தரவைக் கேட்க வேண்டும்? தங்களுடைய கிருஹத்தில் இஷ்டப்படி ஸஞ்சரிக்கத் தடையென்ன? அயோத்யை உங்களுக்கு எவ்வளவு ஸ்வாதீனமோ அவ்வளவு இந்த மிதிலையும் ஸ்வாதீன மல்லவா? விவாஹ ஸம்பந்தமான ஸகல மங்கள காரியங்களையும் என் புத்திரிகளுக்குச் செய்து முடித்தேன். கொழுந்து விட்டெரியும் அக்னி ஜ்வாலைகளைப்போல் அவர்கள் ஸகல வஸ்திராபரணங்களாலும் அலங்கரிக்கப் பட்டு, மங்கள வேஷத்துடன் அக்னி வேதிக்கு ஸமீபத்தில் உட்கார்ந்திருக்கிறார்கள். நான் ஸித்தமாக இருக்கிறேன். உங்களுடைய வரவை



இயம் ஸீதா மம ஸுதா ஸஹத[4]ர்மசரீ தவ |
ப்ரதீச்ச[2] சைநாம் ப[4]த்[3]ரம் தே பாணிம் க்[3]ருஹ்ணீஷ்வ பாணிநா || —பால. 73ஸ-27சு.

"இவள் பூமியிலிருந்து கிடைத்ததால் ஸீதை என்று பெயருள்ளவள்... இவளை நான் உனக்குப் பார்யையாகக் கொடுக்கிறேன், பெற்றுக் கொள்... உன்கையால் இவளுடைய கையைப் பிடி." (பக்கம் 165 பார்க்க

எதிர் பார்த்துக் கொண்டிருக்கிறேன். அரண்மனையின் வாசலில் ஏன் தங்கவேண்டும்? காலதாமத மில்லாமல் வந்து விவாஹத்தை நடத்த வேண்டும்'' என்றார். தசரதர் புத்திர மித்திர பந்து மந்திரி புரோஹித மஹரிஷி பரிவாரங்களுடன் விவாஹ மண்டபத்தில் பிரவேசித்தார்.

ஜனகர் அவர்களுக்குத் தகுந்தபடி மரியாதை செய்து ஆஸனம் கொடுத்து "வஸிஷ்ட மஹரிஷே! ஸகல லோகங்களுக்கும் பரமானந்தத்தைக் கொடுக்கும் ராமனுடைய விவாஹ மஹோத்ஸவத்தை தர்மஸ்வரூபியான தாங்களும் மற்ற ரிஷிகளும் நடத்தும்படி கேட்டுக் கொள்ளுகிறேன்'' என்றார். வஸிஷ்டர் அப்படியே ஆகட்டுமென்று, விசுவாமித்திரரையும் சதானந்தரையும் மற்ற மஹரிஷிகளையும் முன்னிட்டுக் கொண்டு விவாஹ மண்டபத்தின் நடுவில் விதிப்படி வேதியை அமைத்து, அதைச் சந்தனம், புஷ்பம், தங்கப் பாலிகைகள், கிண்டிகள், சங்கபாத்திரங்கள், முளைத்த விதைகளுள்ள மடக்குகள், தூபத்தால் நிறைந்த பாத்திரங்கள், ஸ்ருக், ஸ்ருவம், மஞ்சள் கலந்த அக்ஷதைகள், நெல் பொரிகளும் அர்க்கிய ஜலமும் நிறைந்த பாத்திரங்கள் முதலியவைகளால் அலங்கரித்தார். பிறகு அதன்மேல் ஒரே அளவுள்ள தர்ப்பங்களைப் பரப்பி மந்திரங்களுடன் அக்னிப் பிரதிஷ்டை செய்து தம்பதிகளின் க்ஷேமத்திற்காக ஹோமம் செய்தார்.

பிறகு ஜனக மஹாராஜா ஸர்வாபரணங்களால் அலங்கரிக்கப் பட்ட ஸீதையை அக்னிக்கு ஸமீபத்தில் ராமனுக்கெதிரில் நிறுத்தி, கௌஸல்யையின் ஆனந்தத்தை விருத்தி செய்யும் ரகுவீரனைப் பார்த்து "இவள் பூமியிலிருந்து கிடைத்ததால் ஸீதை என்று பெயருள்ளவள். நான் வெகுப் பிரீதியுடன் இவளை என் பெண்ணாக வளர்த்து, ஸகல தர்மங்களையும் உபதேசித்திருக்கிறேன். நீ எந்த தர்மத்தை அனுஷ்டிக்க விரும்புகிறாயோ அதைத் தானும் கூட இருந்து அனுஷ்டிப்பாள். இவளை நான் உனக்குப் பார்யையாகக் கொடுக்கிறேன், பெற்றுக்கொள். உனக்கு ஸகல மங்களங்களும் உண்டாகட்டும். உன் கையால் இவளுடைய கையைப் பிடி. இவள் மஹா பதிவிரதையாக இருப்பாள். மஹா பாக்கியசாலி; உன் நிழலைப்போல் உன்னைவிட்டுப் பிரியாதவள்'' என்று மந்திரங்களால் பரிசுத்தமான ஜலத்தை அவருடைய கையில் வார்த்தார். அப்பொழுது தேவர்களும் மஹரிஷிகளும் 'நல்லது, நல்லது' என்று கொண்டாடினார்கள். தேவதுந்துபி முதலிய வாத்தியங்கள் முழங்கின. ஆகாசத்திலிருந்து புஷ்பமாரி பொழிந்தது.

பிறகு ஜனகர், "லக்ஷ்மணா! என்னால் கொடுக்கப்படும் ஊர்மிளையைக் காலதாமதமில்லாமல் பாணிக்கிரஹணம் செய், உனக்கு ஸகல மங்களங்களும் உண்டாகட்டும்'' என்றார். பிறகு பரதனைப் பார்த்து ' ரகுநந்தன! மாண்டவியை பாணிக்ரஹணம் செய்'' என்றார். பிறகு சத்ருக்னனைப் பார்த்து "பராக்கிரமசாலியே! சுருதகீர்த்தியைப்

பாணிக்கிரஹணம் செய். நீங்களெல்லோரும் பிரஹ்மசரிய விரதத்தைப் பூர்ணமாய் அனுஷ்டித்தவர்கள். மதுரமான ஸ்வபாவமுள்ளவர்கள். கிருஹஸ்தாசிரமத்தை அனுஷ்டியுங்கள். காலதாமதம் வேண்டாம்'' என்றார்.

உடனே அந்த நான்கு ராஜ புத்திரர்களும் வஸிஷ்டருடைய அனுமதியால் அந்த நான்கு ராஜ புத்திரிகளைப் பாணிக்கிரஹணம் செய்தார்கள். பிறகு அவர்கள் அக்னியையும் ஜனகரையும் ரிஷிகளையும் பிரதக்ஷிணம் செய்து தங்களுடைய ஸூத்திரப்படி தனியாய் அக்னிப் பிரதிஷ்டை செய்து விவாஹ ஹோமத்தை நடத்தினார்கள். அந்த ஸமயத்தில் தேவதைகள் புஷ்பமாரி பெய்தார்கள். துந்துபி முதலிய வாத்தியங்களை முழக்கினார்கள். கந்தர்வர்களும் அப்ஸரஸ்களும் மதுரமாய் பாடினார்கள். மங்கள வாத்தியங்களை வாசித்தார்கள். ஆனந்தமாய் நர்த்தனம் செய்தார்கள். ரகுகுல சிரேஷ்டர்களான அந்த ராஜ குமாரர்களுடைய விவாஹ காலத்தில் இவ்விதமான ஆச்சரியங்கள் நடந்தன. இப்படி வாத்திய கோஷங்களுடன் ராஜபுத்திரர்கள் அக்கினியை மூன்று தடவை பிரதக்ஷிணம் செய்து விவாஹ ஹோமத்தை முடித்து, பத்னிகளுடன் தங்களுடைய அரண்மனைக்குப் போனார்கள். தசரத மஹாராஜா தன் பந்து பரிவாரங்களோடும் மஹரிஷிகளோடும் அவர்களைப் பார்த்துக்கொண்டே ஆனந்த பரவசராய்ப் பின் சென்றார்.

அதோ2 பகார்யாம் ஜக்3முஸ் தே ஸபா4ர்யா ரகு4நந்த3நா: |
ராஜாப்யநுயயௌ பஶ்யந் ஸர்ஷிஸங்க4: ஸபா3ந்த4வ: || (40)

---

## ஸர்க்கம் 74

## பரசுராமர்

அத2 ராத்ர்யாம் வ்யதீதாயாம் விஶ்வாமித்ரோ மஹாமுநி: |
ஆப்ருஷ்ட்வா தௌ ச ராஜாநௌ ஜகா3மோத்தர பர்வதம் || (1)

மறுநாட் காலையில் விசுவாமித்திர மஹரிஷி தசரதரிடத்திலும் ஜனகரிடத்திலும் சொல்லிவிட்டு ராஜகுமாரர்களை மனப்பூர்வமாய் ஆசிர்வதித்தபின் ஹிமயமலைக்குப் போனார். பிறகு தசரதர் ஜனகரிடத்தில் சொல்லிக்கொண்டு அயோத்யைக்குப் போகப் புறப்பட்டார். அப்பொழுது மிதிலாபதி தன் புத்திரிக்குக் கன்யாதானமாய் அநேக லக்ஷம் பசுக்களையும் நேர்த்தியான கம்பளங்களையும் பட்டுகளையும் வஸ்திரங்களையும் பூர்ணமாய் அலங்கரிக்கப்பட்ட யானை குதிரை ரதம் காலாட்கள் வேலைக்காரர்கள் வேலைக்காரிகள் அளவற்ற தங்கம் வெள்ளி முத்து பவழம் ரத்தினம் முதலியவைகளையும்



வெகுப்பிரியத்துடன் கொடுத்தார். தசரதருடன் வெகுதூரம் வந்து, அவர் அடிக்கடி கேட்டுக்கொண்ட பிறகு மிதிலைக்குத் திரும்பினார்.

பிறகு தசரதர் புத்திரமித்திர பந்துவர்க்க பரிவார ஸைன்யங்களுடன் மஹரிஷிகளை முன்னிட்டுக்கொண்டு அயோத்யைக்குத் திரும்பும்பொழுது காக்கை முதலிய பக்ஷிகள் கடுமையாகக் கத்தின. ஆனால், மிருகங்கள் பிரதக்ஷிணமாய்ச் சென்றன. அதைக் கண்டு தசரதர் "வஸிஷ்ட மஹரிஷே! பாருங்கள். பக்ஷிகள் பயங்கரமாகக் கத்துகின்றன. மிருகங்களோ பிரதக்ஷிணமாகச் செல்கின்றன. என் தேகம் நடுங்குகிறது. மனத்தில் கவலை குடிகொண்டிருக்கிறது. இதன் பயனென்ன?'' என்று கேட்டார். அந்த முனிசிரேஷ்டர் "ஸமீபத்தில் நமக்கு ஆபத்து நேருமென்பதைப் பக்ஷிகள் தெரிவிக்கின்றன. ஆனால் அது நிவர்த்தியாகுமென்பதை மிருகங்கள் குறிப்பிடுகின்றன. ஆகையால் கவலைப்பட நியாயமில்லை'' என்றார்.

அவர்கள் அப்படிப் பேசிக் கொண்டிருக்கையில் ஒரு பெரும் காற்றுக் கிளம்பி பூமியை நடுங்கச் செய்தது. பெரிய மரங்கள் முறிந்து விழுந்தன. ஸூரியனை இருள் மூடிற்று. திக்குகள் விளங்கவில்லை. ஸகல வஸ்துக்களும் புழுதியால் மறைந்தன. ஸகல பிராணிகளும் திகைத்து நின்றன. வஸிஷ்டர் முதலிய மஹரிஷிகளையும் தசரதரையும் ராஜகுமாரர்களையும் தவிர மற்றவர்கள் புழுதியால் மூடப்பட்டு மூர்ச்சையடைந்து அசைவற்று நின்றார்கள். இப்படி எங்கும் பயங்கரமான இருள் சூழ்ந்தபொழுது பரசுராமர், ஜடா மண்டலத்துடன் மின்னற்கொடியைப் போன்ற வில்லையும் சிரேஷ்டமான பாணத்தையும் கையில்பிடித்துக்கொண்டு தோளில் சத்ருக்களை வேரறுக்கும் கோடரியுடன் அவர்களுக்கெதிரில் தோன்றினார். பிருகு வம்சத்திலுதித்த ஜமதக்னி புத்திரரான அந்த பிராம்மணோத்தமர் பிரளய காலாக்னியைப் போல் தேஜஸால் ஜ்வலித்துக்கொண்டு, ஸாமான்ய ஜனங்கள் கண்ணெடுத்தும் பார்க்க முடியாதவராக, கைலாஸத்தைப் போல் பிறரால் ஜயிக்க முடியாதவராகத் தோன்றினார். திரிபுராஸுரர்களை ஸம்ஹரித்த பரமசிவனைப்போல் ராஜவம்சங்களைப் பலதடவை வேரறுத்தவர் அவர். பயங்கரமான ரூபத்துடன் தேஜஸால் ஜ்வலித்துக் கொண்டிருக்கும் ஜமதக்னி குமாரனைப் பார்த்து, ஜபஹோம நியமங்களால் பிரஸித்தியடைந்த வஸிஷ்டர் முதலிய மஹரிஷிகள் "இவருடைய பிதா க்ஷத்திரியனால் கொல்லப்பட்டதற்காக இவர் கோபம் கொண்டு ராஜவம்சங்களைப் பலதடவை வேரறுத்து, பழிக்குப் பழிவாங்கி, தன் பிரதிக்ஞையை நிறைவேற்றி, கோபதாபங்களை விட்டு, ஸ்வபாவமான சாந்த குணத்தைக் கைக்கொண்டாரல்லவா? இவருக்கு இன்னும் க்ஷத்திரிய வம்சத்தை அழிக்க வேண்டுமென்ற எண்ணம் இருக்க நியாயமில்லையே'' என்று ஒருவர்க்கொருவர் பேசிக் கொண்டார்கள். பிறகு அதிதி பூஜைக்கு வேண்டிய அர்க்கியபாத்தியம் முதலியவைகளை எடுத்துக்

கொண்டு அவரை மதுரமான வார்த்தைகளால் 'ராம ராம' என்று அழைத்தார்கள். அவர் அந்தப் பூஜையை அங்கீகரித்து, தசரத புத்திரனை ராமனையே லக்ஷ்யம் செய்து, இப்படிச் சொன்னார்.

ப்ரதிக்³ருஹ்ய து தாம் பூஜாம் ருஷித³த்தாம் ப்ரதாபவாந் |
ராமம் தா³ஶரதி²ம் ராமோ ஜாமத³க்³ந்யோ. ப்⁴யபா⁴ஷத || (26)

---

## ஸர்க்கம் 75

## ராமராம ஸம்வாதம்

ராம தா³ஶரதே² ராம வீர்யம் தே ஶ்ரூயதேத்³பு⁴தம் |
த⁴நுஷோ பே⁴த³நம் சைவ நிகி²லேந மயா ஶ்ருதம் || (1)

"தசரத புத்திரனை ராம! தாடகை ஸுபாஹு மாரீசன் முதலிய ராக்ஷஸர்களை நீ ஸம்ஹரித்தாயென்றும், அஹல்யையின் சாபத்தைத் தீர்த்தாயென்றும், சிவதனுஸை எடுத்து வளைத்து முறித்தாயென்றும், உன் வீரியமும் பலமும் அதிகமாகக் கொண்டாடப்படுவதைக் கேட்டேன். சிவதனுஸை முறித்தது வெகு ஆச்சரியமான காரியமே. அப்படி நடக்குமென்று மனத்தாலும் நினைக்க முடியாது. ஆகையால் அதன் உண்மையை அறிய நான் இந்த வில்லுடன் வந்திருக்கிறேன். இந்த சிரேஷ்டமான ஆயுதம் ஜமதக்னி என்ற என் பிதாவால் எனக்குக் கிடைத்தது. நீ சிவதனுஸை முறித்தது உண்மையானால், இதை எடுத்து வளைத்து நாணேற்றி, இந்த சிரேஷ்டமான பாணத்தைப் பூட்டு. அதனால் உன் பலத்தை அறிந்து உன் வீரியத்தை மெச்சி, உன்னுடன் யுத்தம் செய்வேன்" என்றார்.

ராமனுடைய ஆச்சரியமான செய்கைகளையும் பராக்கிரமத்தையும் நன்குயறிந்தும், அவரிடத்தில் தான் வைத்த பிரீதியால் தசரதர் முகம் வாடித் தீனமாகக் கைகூப்பி, "ஸ்வாமி! தாங்கள் பிராம்மணோத்தமரல்லவா? அபாரமான கருணையென்பது தங்களுக்கு ஸ்வபாவ குணமல்லவா? க்ஷத்ரிய வம்சங்களைப் பல தடவை வேரறுத்து ஒப்பற்ற கீர்த்திபெற்ற தங்களுக்கு இந்தக் குழந்தையை ஜயிப்பதால் அதிக கீர்த்தியுண்டோ? க்ஷத்ரியர்களிடத்திலுள்ள கோபத்தை விட்டீர்களல்லவா? ஒன்றும் தெரியாத இந்தச் சிறுவனுடன் தங்களுக்கு விரோதம் எதற்கு? இவர்கள் தங்களுக்கு ஒரு பொருளா? மேலும், அறுபதாயிரம் வருஷங்கள் வரையில் புத்திரனில்லாமல் எண்ணிறந்த விரதங்களையும் நியமங்களையும் அனுஷ்டானங்களையும் செய்து இவர்களை அடைந்திருக்கிறேன். இவர்களுக்கு அபயதானம் செய்ய வேண்டும். வேதாத்யயனத்திலும் விரதானுஷ்டானத்திலும் நோக்கமுள்ள பார்க்கவ குலத்தில் பிறந்து, ஸ்வபாவ குணங்களால் முன்னோர்களை மிஞ்சிய தங்களுக்கு, யுத்தம் முதலிய க்ஷத்திரிய தர்மங்கள் தகுமா? இருபத்தொரு



தடவை அரசர்களை நிர்மூலம் செய்து, இந்தப் பூமியைக் காச்யபருக்கு தானம் செய்தீர்கள். இனி நான் ஆயுதமெடுப்பதில்லை என்று இந்திரனிடத்தில் பிரதிக்ஞை செய்தீர்களல்லவா? 'இது வரையில் என் ஜாதிக்கு விரோதமான தர்மத்தைக் கைக்கொண்டு, கோபத்திற்கு இடம் கொடுத்து, மிகுந்த ஜீவஹிம்ஸை செய்தேன். இனி என் ஸ்வதர்மத்தை அனுஷ்டிக்கவேண்டும்'' என்று பச்சாத்தாப மடைந்தீர்கள். தாங்கள் செய்த ஜீவஹிம்ஸைக்கு பிராயச்சித்தமாக ஒரு பெரிய யாகத்தை நடத்தி, அதில் அத்வர்யுவான காச்யபருக்குத் தங்களால் ஜயிக்கப்பட்ட இந்தப் பூமி முழுவதையும் தக்ஷிணையாகக் கொடுத்து, மஹேந்திர பர்வதத்தில் கடுந்தவம் செய்து கொண்டிருக்கிறீர்களல்லவா? ஐயோ! என் துரதிருஷ்டத்தால் என் வம்சத்தையும் நாசம் செய்ய வந்திருக்கிறீர்களே. 'ஒரு புத்திரன் இறந்தால் எல்லாம் போய் விடுமா' என்று எண்ணம் வேண்டாம். எனக்கும் என் பந்துமித்திர பரிவாரங்களுக்கும் இந்த மஹரிஷிகளுக்கும் ராமனே ஜீவாதாரமென்பது ஸத்தியம். அவனுக்கு ஏதாவது கெடுதி நேர்ந்தால் நாங்களெல்லோரும் மடிவோம் என்பதில் ஸந்தேகமில்லை'' என்றார்.

அவருடைய வார்த்தையைக் கொஞ்சமும் லக்ஷ்யம் செய்யாமல் பரசுராமர் ராமனைப் பார்த்து, "பூர்வகாலத்தில் விச்வகர்மா உத்தமமான இரண்டு வில்லுகளைச் செய்தான். அவை தெய்வத்தன்மையுள்ளவை, ஸகல லோகங்களிலும் பிரஸித்தி பெற்றவை, வெகு உறுதியானவை, அளவற்ற பலமுடையவை, ஒப்பற்றவை, வெகு சிரமத்துடன் செய்யப்பட்டவை. திரிபுராஸுரர்களுடன் யுத்தம் செய்யச் சிவபெருமானிடத்தில் தேவதைகள் அவைகளில் ஒன்றைக் கொடுத்தார்கள். ஜனகருடைய ஸதஸில் நீ வளைத்து முறித்த வில் அதே; என் கையிலிருக்கும் வில் இரண்டாவது. இதைத் தேவர்கள் மஹாவிஷ்ணுவிடத்தில் கொடுத்தார்கள். வெகு தேஜஸுடன் விளங்கும் இந்த வில், ருத்திரனுடைய வில்லிற்கு ஸமமான பலமுடையது. 'இதை என்னிடத்தில் கொடுப்பதில் என்ன விசேஷம்' என்றால் சொல்லுகிறேன் கேள்.

திரிபுர ஸம்ஹாரமான பிறகு தேவர்களுக்கு ஒரு பெரிய ஸந்தேகமுண்டாயிற்று. அதைத் தீர்க்க அவர்கள் பிரஹ்மாவிடத்திற்குப் போய் "ஸ்வாமி! மஹாவிஷ்ணுவே விசேஷ வீரியமுள்ளவர். வராஹாவதாரமெடுத்து பாதாளத்திலிருந்து பூமியைக் கொண்டு வந்தது முதலிய பல அத்புதமான காரியங்களே இதற்கு பிரமாணமென்று தாங்கள் இதுவரையில் பல தடவை கொண்டாடக் கேட்டிருக்கிறோம். ஆனால் அப்பொழுது ருத்ரன் அந்த விஷ்ணுவையே பாணமாய் வைத்துக்கொண்டு ஒருவரும் ஜெயிக்க முடியாத திரிபுராஸுரர்களை ஜயித்திருக்கிறார். விஷ்ணுவின் வீரியம் அதிகமா, சிவனுடைய வீரியம் அதிகமா?'' என்றார்கள். பிரஹ்மா, "நான் எவ்வளவு தடவை உபதேசித்தும் இந்த விஷயம் இவர்களுடைய புத்தி

யில் படவில்லை. விஷ்ணு ருத்ரர்களின் வீரியத்தை ப்ரத்யக்ஷமாய் வெளிப்படுத்துவது நல்லது என்றெண்ணி, மஹாவிஷ்ணுவிடத்திற்குப் போய் 'ஸ்வாமி! திரிபுர ஸம்ஹார காலத்தில் நானே ப்ரதானமாக இருந்தேன். நானல்லவா வில்லாளி? இந்த விஷ்ணு கேவலம் எனக்குப் பாணமாயிருந்தாரல்லவா' என்று பரமசிவன் தங்களைப் பற்றி வெகு குறைவாகப் பேசுகிறார்'' என்றார். பிறகு மஹா தேவரிடத்திற்குப் போய், "ஸ்வாமி! திரிபுர ஸம்ஹார காலத்தில் நான் பாணத்தின் முனையாக இருந்து அவருக்கு ஒத்தாசை செய்யா விட்டால் ஜயம் கிடைத்திருக்குமா? அவ்வஸுரர்களைக் கொன்றது நானல்லவா'' என்று மஹாவிஷ்ணு தங்களைப்பற்றி வெகு இகழ்வாகப் பேசிக் கொண்டிருக்கிறார்'' என்றார். இப்படி இருவருக்கும் வெளிப்படையாக விரோதத்தை மூட்டிவிட்டார்.

அவர்களும் சதுர்முகருடைய அபிப்பிராயத்தை அறிந்து, அதை நிறைவேற்ற, ஒருவரை யொருவர் ஜயிக்கவேண்டு மென்று மஹா கோபத்துடன் ஸகல ப்ராணிகளும் பயத்தால் மயிர்க் கூச்சலடையும்படி யுத்தம் செய்தார்கள். அப்பொழுது மஹாவிஷ்ணு ஆயுதத்தை தொடாமலேயே 'ஹூம்' என்று ஒரு சப்தம் செய்தார். உடனே பரமசிவனுடைய வில் பலமிழந்தது. மூன்று நேத்திரங்களையுடைய பரமசிவனும், திரிபுரங்களை யெரித்த நெற்றிக்கண் பயன்படாமல், அந்தச் சப்தத்தால் ப்ரமித்து நின்றார். உடனே தேவர்களும் ரிஷிகளும் தேவகணங்களும் அவ்விரு மஹாபுருஷர்களையும் நமஸ்கரித்து, யுத்தத்தை நிறுத்தும்படி ப்ரார்த்திக்க, அவர்கள் அப்படியே சாந்தமடைந்தார்கள். பிறகு தேவர்களும் ரிஷிகளும் 'நமக்கு இனி ஸந்தேகமில்லை. நமது உத்தேசம் நிறைவேறிற்று. நமக்குப் பூஜ்யரான ப்ரஹ்மாவின் வார்த்தையைக் காட்டிலும் நாம் நேரில் பார்த்ததே விசேஷம். திரிபுர ஸம்ஹார காலத்தில் பரமசிவனுடைய வில்லில் மஹாவிஷ்ணுவின் வீரியம் நிறைந்திருந்ததால் ஜயம் கிடைத்தது. இப்பொழுது அது விலகினதால் அவருடைய சக்தியால்பலமிழந்தது. ஆகையால் ருத்ரனைக் காட்டிலும் விஷ்ணுவே 'மேலானவர்' என்று முடிவு செய்தார்கள்.

ருத்திரன் கோபமடங்காமல் தன் வில்லையும் பாணத்தையும் விதேஹ வம்சத்தில் பிறந்த தேவராதனென்ற ராஜரிஷிக்குக் கொடுத்தார். மஹாவிஷ்ணு தன் உத்தமமான வில்லைப் ப்ருகு வம்சத்தில் பிறந்த ரிசீகரிடத்தில் ஒப்புவித்தார். அவர் அதைத் தம் புத்திரரான ஜமதக்னிக்குக்கொடுத்தார். மஹாதேஜஸ்வியும் தபோநிதியும் ஒப்பற்ற மஹிமையுள்ளவருமான என் பிதாவை, இந்த ஆயுதமில்லாதபொழுது ஒரு நாள், கார்த்தவீர்யார்ஜுனன் ஸாதாரணமாக நினைத்து க்ரூரமாகக் கொன்றான். அதுவரையில் ஒருவரும் கேட்டிராத அந்த மஹா பாபத்தால் நான் அடங்காக் கோபம் கொண்டு க்ஷத்திரியர்களைப் பிறக்கப் பிறக்க இருபத்தொரு தடவை வேரறுத்து, பூமியை ஜயித்து, ஒரு பெரிய யாகம் செய்து அதில்



காசியப மஹரிஷிக்கு அதைத் தக்ஷிணையாகக் கொடுத்துவிட்டு, மஹேந்திர பர்வதத்தில் தவம் செய்து கொண்டிருக்கிறேன். நீ பரமசிவனுடைய வில்லை முறித்ததை அங்கே கேள்வியுற்று, உடனே அதி வேகமாய்ப் புறப்பட்டு வந்தேன். இந்த விஷ்ணு தனுசு பரம்பரையாய் என் பாட்டனிடத்திலிருந்து எனக்குக் கிடைத்திருக்கிறது. இதை எடுத்து வளைத்து நாணேற்றி இந்த சிரேஷ்டமான பாணத்தை பூட்டு. என்னால் முடியாதென்று ப்ராம்மணனைப்போல் சொல்லாதே. மஹா வீரியமுள்ள க்ஷத்திரிய வம்சத்தில் பிறந்தவனென்பதை மறக்காதே. நான் சொன்னபடி நீ செய்தாலும் உன்னை விடுவதில்லை. உன் வீரியத்தைப் பரீக்ஷிக்க உன்னுடன் யுத்தம் செய்வேன்'' என்றார்.

யோஜயஸ்வ த4நு: ஶ்ரேஷ்டே4 ஶரம் பர புரஞ்ஜயம் |
யதி3 ஶக்நோஷி காகுத்ஸ்த2 த்3வந்த்3வம் த3ாஸ்யாமி தே தத:(28)

## ஸர்க்கம் 76

## பரசுராம கர்வபங்கம்

ஶ்ருத்வா தஜ்ஜாமத3க்3ந்யஸ்ய வாக்யம் தா3ஶரதி2ஸ் தத3ா |
கௌ3ரவாத்3யந்த்ரித கத2 : பிதூ ராம மத2ாப்3ரவீத் || (1)

ராமன் தன் பிதாவிற் கெதிரில் உரக்கப் பேசக் கூடாதென்ற மரியாதையை அனுஸரித்துப் பரசுராமரைப் பார்த்து மெதுவாய், "ப்ருகு குலதிலக! தங்களுடைய வீரச் செயல்களைக் கேள்விப் பட்டிருக்கிறேன். தகப்பனைக் கொன்றவர்களைக் கொன்று பழி தீர்க்க வேண்டியது சூரனுடைய புத்திரனுடைய கடமை; அதை ஒப்புக்கொண்டேன். இது வரையில் தங்களை எதிர்த்த க்ஷத்திரியர்களைப்போல் பராக்கிரம மற்ற அசக்தனென்று என்னையும் எண்ணி அவமதிக்கிறீர்கள். பிறர் செய்யும் அவமானத்தைப் பொறுக்க மாட்டேன். பிறரை அடக்கும் சக்தி எனக்குண்டு. அதை இப்பொழுது பார்ப்பீர்கள்'' என்று அதிகக் கோபத்துடன் பரசுராமருடைய கையிலிருந்து வில்லையும் பாணத்தையும் வெகு லாகவமாக வாங்கி, வில்லை வளைத்து நாணேற்றிப் பாணத்தை பூட்டி, "தாங்கள் சொன்னபடி செய்தேன். தாங்கள் ப்ருகு வம்சத்தில் பிறந்த ப்ராம்மண சிரேஷ்டர்; என் குருவான விசுவாமித்திரருடைய ஸஹோதரி தங்களுடைய பிதாவைப் பெற்றவள். ஆகையால் தங்களுடைய உயிரை வாங்கும் இந்தப் பாணத்தை ப்ரயோகிக்க முடியாமலிருக்கிறேன். இந்தப் பாணமோ விஷ்ணுவைச் சேர்ந்தது. சத்ருவை ஜயிக்காமல் திரும்பாது. பலத்தையும் கர்வத்தையும் அழிக்கும், வீண் போகாதது. தங்களுடைய தபோ பலத்தால் ஸம்பாதித்த உத்தம லோகங்களை அடையாமல் செய்யட்டுமா? அந்தத் தவத்தின் பயனை இதற்குப் பலி

கொடுக்கிறீர்களா? அல்லது நினைத்த லோகங்களுக்குப் போகும் தங்களுடைய சக்தியை அழிக்கட்டுமா?'' என்றார்.

தன் பூர்வாவதாரமான பரசுராமரிடத்திலிருந்து தன் வில்லையும் பாணத்தையும் வாங்குவதாய் வெளிக்குக் காட்டி, ராமன் அவரிடத்தில் முன்பு வைத்த சக்தியைத் தானே மறுபடியும் தன்னிடத்தில் வருவித்துக் கொண்டார். அந்த ஆச்சரியத்தைப் பார்க்க பிரஹ்மாதி தேவர்களும் மஹரிஷி கந்தர்வ அப்ஸரஸ் ஸித்த சாரண கின்னர யக்ஷ நாக ராக்ஷஸ கணங்களும் கூட்டம் கூட்டமாக வந்தார்கள். ஸகலப் பிராணிகளும் அசைவற்று நின்றன. பரசுராமரிடத்திலிருந்த விஷ்ணு தேஜஸ் அவரை விட்டு விலகிற்று. ஒன்றும் தோன்றாமல் இதென்ன ஆச்சரியமென்று அவர் ராமனை உற்றுப் பார்த்தார்.

தன் சக்தி குறைவதற்கு அவருடைய தேஜஸே காரணமென்று உணர்ந்த பரசுராமர், மலர்ந்த செந்தாமரை இதழ்களைப் போன்ற நேத்திரங்களை உடைய ராமனை மஹாவிஷ்ணுவே என்றறிந்து மெதுவாய், "காசியபருக்கு இந்தப் பூமியை நான் தானம் செய்த பொழுது அவர் 'என் ராஜ்யத்தில் வஸிக்கக் கூடாது' என்றார். அவருடைய வார்த்தைக்குக் கட்டுப்பட்டு இந்தப் பூமியில் ஒரு ராத்திரிகூடத் தங்குவதில்லையென்று பிரதிக்ஞை செய்தேன். ஆகையால், நான், நினைத்த இடங்களுக்குப் போகும் சக்தியை அழிக்க வேண்டாம். மனோ வேகமாய் மஹேந்திர பர்வதத்திற்குப் போய் விடுகிறேன். என் தவத்தால் ஸம்பாதித்த உத்தம லோகங்களை நான் அடையாமல் செய். தாமதம் வேண்டாம். நீ தேவாதி தேவனென்றும் அழிவற்றவனென்றும் மதுகைடபர்களை ஸம்ஹரித்த மஹாவிஷ்ணுவென்றும் அறிந்தேன். இந்த வில்லை வேறொருவர் எடுத்து வளைக்க முடியுமோ? உனக்குப் பரம மங்களமுண்டாகட்டும், இதோ பார். தேவகணங்களும் பராபர வஸ்துவான உன்னை ஆச்சரியத்துடன் பார்த்துக்கொண்டிருக்கிறார்கள். லோக நாதனை உன்னால் ஜயிக்கப் படுவதில் எனக்குக் கொஞ்சமும் அவமானமில்லை. நீ பாணத்தை பிரயோகித்தவுடன் மஹேந்திர பர்வதத்திற்குப் போகிறேன்'' என்றார். ராமன் அப்படிச் செய்ய, உத்தம லோகங்களை அடைய அனுஷ்டித்த பரசுராமருடைய புண்ணிய பலம் அழிந்தது. அதைக் கண்ட பின், அந்த ஜமதக்னியின் குமாரர் அதி வேகமாய் மஹேந்திர பர்வதத்திற்குப் போய்விட்டார்.

உடனே திக்குகள் இருள் நீங்கி பிரகாசித்தன. பிரஹ்மாதி தேவகணங்களும் ரிஷிகளும் கோதண்டபாணியான ராமனைக் கொண்டாடினார்கள். இப்படிப் பரசுராமன் தசரத ராமனைப் புகழ்ந்து பிரதக்ஷிணம் செய்து தன்னிடத்திற்குச் சென்றார்.

ராமம் த³ாஶரதி²ம் ராமோ ஜாமத³க்³ந்ய: ப்ரஶஸ்ய ச |
தத: ப்ரத³க்ஷிணம் க்ருத்வா ஜகா³மாத்ம க³திம் ப்ரபு: ॥ (24)



ஜட³க்ருதே ததா³ லோகே ராமே வரத⁴நுர்த⁴ரே—
நிர்வீர்யோ ஜாமத³க்³ந்யோஸௌ ராமோ ராம முதை³க்ஷத ॥ —பால. 76ஸ-11 ஸ.
ஸகலப் பிராணிகளும் அசைவற்று நின்றன. பரசுராமரிடத்திலிருந்த விஷ்ணு தேஜஸ் அவரை விட்டு விலகிற்று. ஒன்றும் தோன்றாமல் இதென்ன ஆச்சரியமென்று அவர் ராமனை உற்றுப் பார்த்தார்.
(பக்கம் 172பார்க்க.)

## ஸர்க்கம் 77

# அயோத்யைக்கு வந்தது

*க³தே ராமே ப்ரஶாந்தாத்மா ராமோ தா³ஶரதி²ர் த⁴நு: |*
*வருணா யாப்ரமேயாய த³தௌ³ ஹஸ்தே ஸஸாயகம் ‖ (1)*

பரசுராமர் போனபிறகு ராமனுடைய கோபம் தணிந்தது. மற்றவர்களால் பார்க்கப்படாமல் நின்ற வருணனிடத்தில் தன் கையிலிருந்த விஷ்ணுவின் வில்லையும் பாணத்தையும் கொடுத்தார். பிறகு வஸிஷ்டர் முதலிய மஹரிஷிகளை நமஸ்கரித்து, துக்கத்தால் மெய்மறந்த தசரதரை நோக்கி, "ஸ்வாமி! பரசுராமர் போய்விட்டார். நாம் ஸைன்யத்துடன் அயோத்யைக்குப் போவோம். யாவரும் தங்களுடைய உத்தரவை எதிர்பார்க்கிறார்கள்" என்றார்.

தசரதர் கவலைதீர்ந்து, எல்லையற்ற ஸந்தோஷமடைந்து, தானும் தன் புத்திரர்களும் இறந்து பிழைத்ததாக நினைத்தார். ராமனை இறுகத் தழுவி உச்சி முகர்ந்து ஸைன்யங்களும் பரிவாரங்களும் செல்ல உத்தரவு கொடுத்தார். அவர்கள் வருவதை அறிந்த அயோத்யா ஜனங்கள், கொடி தோரணம் த்வஜம் முதலியவைகளால் நகரத்தை அலங்கரித்தார்கள். ராஜவீதிகளில் ஜலம் தெளித்து, சுத்தம் செய்து, மங்களகரமான கோலங்களால் அலங்கரித்து, மணமுள்ள புஷ்பங்களை இறைத்தார்கள். எல்லோரும் ஸ்நானம் செய்து வஸ்திராபரணங்களால் அலங்கரிக்கப்பட்டு, பிரஸன்னமான முகத்துடன் மங்கள வாத்தியங்களை கோஷித்துக் கொண்டு அங்கங்கே கூட்டம் கூட்டமாக நின்றார்கள். பிராம்மணர்களும் பெரியவர்களும் நகரத்திலிருந்து வெகுதூரம் சென்று, வாத்திய கோஷங்களாலும் ஆசீர்வாதங்களாலும், 'ஜய விஜயீபவ' என்ற ஸந்தோஷ சப்தங்களாலும் தசரதரை எதிர்கொண்டழைத்து வந்தார்கள். இப்படி புத்திரமித்திர பந்து பரிவார மந்திரி புரோஹிதர்களுடன் அரசன் சுப முகூர்த்தத்தில் ராஜதானியில் பிரவேசித்தார். பிரஜைகள் உபசரிக்க வீதிகள் வழியாகப் பட்டணத்தை பிரதக்ஷிணம் செய்து, தசரதர் ஹிமயமலை போன்ற தமது அரண்மனையில், ஸகல இஷ்ட போகங்களை அனுபவித்துக் கொண்டு ஆனந்தமாகக் காலம் கழித்தார்.

கௌஸல்யை ஸுமித்திரை கைகேயி என்ற ராஜமஹிஷிகளும் மற்ற ராஜ ஸ்த்ரீகளும், ஸீதை ஊர்மிளை மாண்டவி சுருதகீர்த்தி என்ற ராஜபுத்திரிகளைத் தங்கள் அரண்மனைகளுக்கு அழைத்துப் போய் உபசரிப்பதில் கவலையாக இருந்தார்கள். அந்தக் கன்யைகள் பட்டுகளால் அலங்கரிக்கப்பட்டு மங்களகரமான ஸ்தோத்திரங்களையும் பாடல்களையும் பாடிக்கொண்டு வீட்டிலுள்ள தேவாலயங்களைக் கந்தபுஷ்பங்களால் பூஜித்தார்கள். பிறகு ராஜ பத்தினிகளையும் மற்ற பெரியோர்களையும் நமஸ்கரித்துத் தங்கள் அரண்மனைகளுக்குப் போய் பிராம்மணர்களைப் பசுக்களாலும் தனங்களாலும் தான்யங்களாலும் திருப்தி செய்து, தங்கள் பர்த்தாக்களுடன் ஸுகமாக வாழ்ந்தார்கள்.



ராம லக்ஷ்மண பரத சத்ருக்னர்கள், கிருஹஸ்தாசிரமத்தை அனுஷ்டித்து, அஸ்திரசஸ்திர வித்யைகளில் பூர்ணத்திறமையை ஸம்பாதித்து, நிகரற்ற வீரியசாலிகளாக குபேரனுக்குக் கிடைக்காத ஐசுவரியத்தைப் பெற்று, பிரியமான மித்திரர்கள் சூழ, மஹாராஜாவுக்கு ஸகல பணிவிடையையும் செய்து வந்தார்கள். எல்லா நீதிகளையும் அறிந்தவர்களானதால், அந்தந்த காலங்களில் தங்களுடைய குணங்களால் பிதாவைத் திருப்தி செய்தார்கள்.

இப்படிச் சிலகாலம் சென்ற பிறகு தசரதர் "பரத! உன் மாமன் உன்னை கேகய தேசத்திற்கு அழைத்துப் போக வெகு நாளாகக் காத்துக் கொண்டிருக்கிறார். மிதிலையில் ரிஷிகளுக்கெதிரில் அப்படியே செய்வதாகச் சொல்லியிருக்கிறேன். அவருடைய இஷ்டத்தைப் பூர்த்தி செய்" என்றார். "என்னிடத்திலுள்ள பிரியத்தால் என்னைவிட்டுப் பிரிய மனமில்லாமல், 'போ' என்று நேரில் சொல்லவில்லை. தன் எண்ணத்தை இப்படி வெளியிடுகிறார்" என்று அறிந்த பரதன், தகப்பனையும் ராஜ பத்னிகளையும் ராமனையும் நமஸ்கரித்து, லக்ஷ்மணனை ஆலிங்கனம் செய்து, அவர்களிடத்தில் சொல்லிக்கொண்டு, மாமனுடன் கேகய தேசத்திற்குப் போனார். எப்பொழுதும் அவரைவிட்டுப் பிரியாத சத்ருக்னன் அவருடன் போனார்.

பிறகு ராம லக்ஷ்மணர்கள் தேவேந்திரனைப் போன்ற தங்கள் பிதாவுக்கு உசிதமான பணிவிடை செய்து ஆராதித்தார்கள்; கொஞ்சம் கூட பேத புத்தியில்லாமல் ராஜபத்தினிகளுக்கும் சுச்ரூஷை செய்தார்கள். பெரியோர்களுக்கும் குருக்களுக்கும் செய்ய வேண்டிய உபசாரங்களைக் காலம் தவறாமல் விதிப்படி செய்தார்கள். மஹாராஜாவின் உத்தரவால் குடிகளுக்கு நேரும் கெடுதிகளைப் போக்கி க்ஷேமத்தைக் கொடுக்கும் காரியங்களைச் செய்து வந்தார்கள். ஆகையால் தசரதரும் பிராம்மணர்களும் வைசியர்களும் தேசத்து ஜனங்களும் ராமனுடைய நடத்தையாலும் ஸ்வபாவத்தாலும் அளவற்ற ஸந்தோஷமடைந்தார்கள். ஸகல ஜீவகோடிகளைக் காட்டிலும் ஸ்வயம்புவான பிரஹ்மா மேலாக விளங்குவதுபோல், மற்ற தசரத புத்திரர்களைக் காட்டிலும் ராமன் கீர்த்திசாலியாய், வீண் போகாத பராக்கிரமமுடையவராக விளங்கினார்.

பிதிருசுச்ரூஷை, ராஜ்யபாலனம், தேவதாராதனம் முதலிய கடமைகளில் ராமன் மனத்தைச்செலுத்தினாலும் கிருஹஸ்ததர்மத்தை மறக்கவில்லை. ஸ்த்ரீபுருஷ ஸம்பந்தமில்லாமல் தெய்வத்தன்மை வாய்ந்து பிறந்த ஸீதையுடன் அந்தந்த ருதுக்களுக்குத் தகுந்தபடி ஸுகங்களை அனுபவித்து, அவளுடைய விருப்பத்திற்கு மேலாகவே அவளுக்கு மனமகிழ்ச்சியை அளித்து வந்தார். அவளிடத்தில்

தன்மனத்தை வைத்துஅவளுடைய ஹிருதயத்தைக்கவரும்படிநடந்து கொண்டார். தனக்குப் பூஜ்யரான பிதாவினுல் விவாஹம் செய்து வைக்கப்பட்டவளென்ற விஷயமே அவளிடத்தில் ராமனுக்கு விசேஷப்பிரீதிக்குக் காரணம். பதிசுச்ரூஷை முதலிய உத்தம குணங்களாலும், நிகரற்ற ரூபலாவண்யத்தாலும், அமானுஷ்யமான பிறப்பாலும், பிரஹ்மஞானிகளால் அலங்கரிக்கப்பட்ட ஜனக வம்சத்தை சேர்ந்ததாலும், அந்த பிரீதி வரவர எல்லையில்லாமல் வளர்ந்தது. ராமன் தன் பர்த்தாவென்ற முக்கிய காரணத்தாலும், தன் பிதாவினுல் விவாஹம் செய்விக்கப் பட்டவராகையாலும், மன்மதனைப் பழிக்கும் ரூபலாவண்ய முள்ளவராகையாலும், குலம் சீலம் செல்வம் பராக்கிரமம் கீர்த்தி வித்யை பலம் கருணை முதலிய அனந்த கல்யாண குணங்களுக்கு நிதியாகையாலும், அவரிடத்தில் ஸீதைக்குள்ள பிரேமை, ராமன் அவளிடத்தில் வைத்த பிரியத்தைக்காட்டிலும் இருமடங்காயிற்று. ஸீதையின் நடை உடை பாவனை பார்வை இங்கிதம் செயல் முதலியவைகளால் அவளுடைய ஹிருதயத்தில் உள்ள பிரீதியை ராமன் நன்ருய் அறிந்தார். அவருடைய அபிப்பிராயத்தையும் ஸீதை பூர்ணமாய்த் தெரிந்துகொண்டு அதற்குத் தகுந்தபடி நடந்தாள். மிதிலா நகரத்தில் ஜனக குலத்தில் பிறந்ததால் ஸூக்ஷ்ம புத்தியுள்ளவள்; தேவ கன்யைகளைப் போல் ஒப்பற்ற அழகுள்ளவள்; ஸாக்ஷாத் மஹா லக்ஷ்மியே அவதாரம் செய்ததுபோல் விளங்குகிறவள். ராமனுடைய மனோபாவத்தை அறிவதில் அவரைக் காட்டிலும் திறமையுள்ளவள்.

தசரத சக்ரவர்த்தியின் புத்திரனானதால் எல்லையற்ற ஸுகங்களை அநுபவிப்பதற்கு வேண்டிய ஸாதனங்களில் ராமனுக்குக் குறையில்லை, பிறருடைய மனத்தை ஸந்தோஷப் படுத்துவதில் நிகரற்ற திறமையுள்ளவர்; ஒவ்வொரு விஷயத்திலும் தனக்குமேலான ஸீதையுடன் ஆலோசித்து அவளுக்கு அபரிமிதமான ஆனந்தத்தைக் கொடுத்து, தேவாதி தேவனை மஹாவிஷ்ணு ஸ்ரீதேவியுடன் வைகுண்டத்தில் விளங்குவதுபோல், விளங்கினர்.

*தயா ஸ ராஜர்ஷி ஸுதோபி4ராமயா*
*ஸமேயிவா நுத்தம ராஜகந்யயா |*
*அதிவ ராம: ஶுஶுபே4 தி காமயா*
*விபு4: ஶ்ரியா விஷ்ணு ரிவாமரேஶ்வர: ||* (29)

---

**பால காண்டம் முற்றிற்று**

ஸ்ரீஸீதா லக்ஷ்மண பரத சத்ருக்ன ஹனுமத் ஸமேத
ஸ்ரீ ராம சந்த்ர பரப்ரஹ்மனே நம :

* * *



ஸ்ரீ ராமசந்த்ர பரப்ரஹ்மணே நம:

# அயோத்யா காண்டம்

---

## ஸர்க்கம் 1

## ஸ்ரீ ராம பட்டாபிஷேக நிச்சயம்

---

*க3ச்ச2தா மாதுலகுலம் ப4ரதேந ததா3நக4: |*
*ஶத்ருக்4நோ நித்ய ஶத்ருக்4நோ நீத: ப்ரீதி புரஸ்க்ருத: ||* (1)

சூற்றமற்றவரும் நித்திய சத்துருக்களான காமம் குரோதம் முதலியவைகளை ஜயித்தவருமான சத்துருக்னன், மாமன்வீட்டிற்குப் போகும் பரதனுல் பிரீதியுடன் அழைத்துப்போகப்பட்டார். பரதன் தன் மாமனை யுதாஜித்தால், உத்தமமான குதிரைகள் ஆபரணங்கள் போர்வைகள் போஜனம் முதலிய உபசாரங்களால் புத்திரனைப்போல் பிரீதியுடன் ஆதரிக்கப்பட்டாலும், சத்துருக்னனிடத்திலுள்ள ஸ்நேஹத்தால் மாத்திரம் அங்கே வஸித்துக்கொண்டிருந்தார்.

இப்படி இஷ்டமான வஸ்துக்களால் விசேஷப் பிரியமடைந்து ஸுகமாக அங்கே வஸிக்கும்பொழுது, சூரர்களான அவ்விருவரும், "நமது பிதா வயது சென்றவராயிற்றே; இனி ராஜ்யபாலனம் செய்ய அவரால் முடியாதே; ராமனுக்கு ஒரு வேளை பட்டாபிஷேகம் செய்வாரோ தெரியவில்லையே; இந்த ஸமயத்தில் ஸமீபத்திலிருந்து பிதாவிற்குப் பணிவிடை செய்யவேண்டியிருக்க, அந்தக் காலம் நமக்குத் தவறிப் போகிறதே" என்று தசரதரை அடிக்கடி நினைத்துக் கொள்வார்கள். உத்தமமான புத்திரர்களை அடைந்ததால் அளவற்ற தேஜஸுள்ள அவ்வரசனும், "இந்திரன் வருணன் முதலியவர்களைப் போல் குறைவில்லாத ஸ்நேஹமுள்ள பரத சத்ருக்னர்களைவிட்டுப் பிரிந்திருக்கிறேமே. பலவகையான ஸம்பத்துகள் நிறைந்திருந்தாலும் என் அருமைக் குழந்தைகள் ஸமீபத்தில் இல்லாதது ஒரு பெரிய குறையே" என்று, அவர்களை அடிக்கடி நினைப்பது வழக்கம்.

நான்கு குமாரர்களிடத்திலும் அரசனுக்குத் தன் சரீரத்திலிருந்துண்டான நான்கு கைகளிடத்திலும் போல் பிரீதி ஸமமே. ஆனாலும் பிராணிகளுக்குள் பிரஹ்மதேவர் எப்படியோ. அப்படி அந்த

நால்வருக்குள் ராமன் உத்தம குணங்களுடன் கூடியிருந்ததால் தசரதருக்கு அவரிடத்தில் அதிகப் பிரீதி.

நித்தியரான மஹாவிஷ்ணு, கர்வமடைந்த ராவணனைக் கொல்லத் தேவர்களால் வேண்டப்பட்டு, ராமனாகப் பூமியில் வந்தார். இந்திரனைப்புத்திரனாக அடைந்த அதிதியைப்போல் கௌஸல்யையும் வெகு தேஜஸுள்ள ராமனால் விளங்கினாள். இம்மாதிரியான புத்திரனை அடைந்தவர்களுள் கௌஸல்யையைத் தவிர பூமியில் வேறொருவரும் இல்லை. ராமர் மிக்க அழகுள்ளவர்; பராக்கிரமமுள்ளவர்; அஸூயையில்லாதவர்;இங்கிதம் ஸ்வபாவம் நடை முதலியவைகளில் தசரதரை ஒத்தவர். ஒருவரும் கடுமையான வார்த்தையை அவரிடத்தில் சொல்லமாட்டார்கள்; அப்படிச் சொன்னாலும் அவர் பதில் சொல்வதில்லை. பேசும்போதெல்லாம் மிருதுவாகவே பேசுவார். எப்பொழுதும் சாந்த ஸ்வபாவமுள்ளவர்; ஆகையால் ஒருவன் தனக்கு எப்பொழுதாவது எக்காரணத்தாலாவது ஸ்வல்ப உபகாரம் செய்திருந்தாலும் அதைப்பெரிதாக எண்ணி மிகவும் ஸந்தோஷிப்பார். ஆனால்.ஸகல ஜகத்திற்கும் அவரே ஆத்மாவாகையாலும் மனத்தை வசப்படுத்தினதாலும், பிறர் தனக்கு எண்ணமுடியாத அபகாரங்களைச்செய்தாலும் அவைகளை நினைப்பதே இல்லை.

ஒவ்வொரு நாளும் அஸ்திர வித்யையைக் கற்ற ஸமயம் போக மிகுந்த காலத்தில், அனுஷ்டானம் நல்லறிவு வயது இம்மூன்றிலும் முதிர்ந்து நல்லோராயிருக்கும் பெரியோர்களுடன் பேசிக்கொண்டிருப்பார். அவர் எப்பொழுதும், எல்லா ஜனங்களும் எப்படி ஸுகமாக வஸிப்பார்களென்ற யோசனையுள்ளவர்; இன்பமாகப் பேசுகிறவர்; மிகவும் தாழ்ந்தவர்களிடத்திலும் தானே முந்திப் பேசுவார். அண்டினவர்களுடைய சத்துருக்களை நாசம் செய்யும் பராக்கிரமமுள்ளவர்; அப்படியிருந்தும் கர்வமில்லாதவர். உண்மையல்லாத கதைகளை ஒரு பொழுதும் சொல்வதில்லை. பெரியோர்களை எதிர்கொண்டழைத்து நன்றாகப் பூஜிப்பார். ஸகல ஜனங்களிடத்திலும் அதிகப் பிரீதியுள்ளவர். அவர்களும் அவரிடத்தில் அப்படியே பிரீதி வைத்திருந்தார்கள். எல்லோரிடத்திலும் தயையுள்ளவர்; பிறருடைய துக்கத்தைப் பொறுக்காதவர். கோபத்தை ஜயித்தவர். வேதத்தின் உட்கருத்தை அறிந்தவர்களைப் பூஜிப்பவர். தீனர்களிடத்தில் தயையுள்ளவர். தர்மத்தைப் பொதுவாகவும் விசேஷமாகவும அறிந்தவர். எல்லாப் பிராணிகளுக்கும் அபயம் கொடுக்கிறோம் என்ற விரதமுள்ளவர். பிறருடைய பொருளை விரும்பாதவர். தன் வம்சத்திற்குத் தகுந்த தயை தாக்ஷிண்யம், அண்டினவர்களைக் காப்பாற்றுவது, துஷ்டர்களைச் சிக்ஷிப்பது முதலிய க்ஷத்திரிய தர்மத்தை அனுஷ்டிப்பதே பெரிதென்றும், அதுவே கீர்த்தியையும் ஸ்வர்க்காதி புண்ய லோகங்களையும் கொடுக்குமென்றும் நினைப்பவர். யாவற்றையும் அறிந்தவராகையால், சூது சொக்கட்டான் முதலிய வீணான விளையாட்டுகளில் காலத்தைக் கழிப்பதில்லை. தர்மவிரோத



மான வீண் பேச்சில் ஆசையற்றவர். லௌகிக வியவஹாரத்திலும் வைதிக வியவஹாரத்திலும் தடையில்லாமல் பிருஹஸ்பதியைப் போல் மேன்மேலும் கக்ஷி சொல்லக் கூடியவர். மனோ வியாதி தேக வியாதி இல்லாதவர். யௌவன புருஷன்; எல்லோரும் புகழும் பேசும் திறமையுள்ளவர்; அதிக சரீர பலமுடையவர்; அத்யயனம் செய்யும் தேச காலங்களை நன்றாயறிந்தவர். ஒரு தடவை பார்த்தவுடன் ஒருவனுடைய பலம் இவ்வளவென்று நன்றாக அறியக்கூடியவர். தனக்கு அபகாரம் செய்தவனிடத்திலும் விரோத புத்தியில்லாதவர். ஆசாரியரிடத்தில் வித்யையைக்கற்று,விரதங்களை அனுஷ்டித்து ஸமாவர்த்தனம் செய்தவர். வேதங்களின் அர்த்தத்தை விதிப்படி நன்றாகக் கற்றுணர்ந்தவர்; அஸ்திர சஸ்திர வித்யையில் தன் பிதாவைக் காட்டிலும் மிகுந்த திறமையுடையவர். இவருடைய வம்சம் மிகவும் பரிசுத்தமானது.

இவர் ஸகல க்ஷேமங்களுக்கும் இருப்பிடம். குற்றமற்றவர். வேதத்தில் சிரத்தையுள்ளவர். எந்நாளும் கலங்காத புத்தியுள்ளவர். மிகவும் கஷ்டமான நிலைமையிலும் உண்மையையே பேசுகிறவர். எண்ணமும் பேச்சும் செய்கையும் ஒத்திருப்பவர். தர்மங்களைப் பூர்ணமாக அறிந்த பெரியோர்களான பிராம்மணோத்தமர்களால் நல்ல மார்க்கத்தில் நன்றாகப் பழக்கப் பட்டவர். பகலின் முன்பாகத்தில் அனுஷ்டிக்கவேண்டிய தர்மார்த்த காமங்களை நன்றாக அறிந்தவர். அறிந்த விஷயத்தை ஒரு பொழுதும் மறக்காதவர். மேன்மேலும் தோற்றமுள்ள புத்தியுள்ளவர். லௌகிக காரியங்களில் மிகவும் ஸமர்த்தர். வணக்கமுள்ளவர். பிறரால் அறியமுடியாத எண்ணத்தையுடையவர். ஆலோசித்த காரியம் முடியும் வரையில் பிறர் அறியமுடியாதபடி மறைத்து வைத்துக்கொள்பவர். சிறந்த மந்திரிகளுடையவர். அவருடைய கோபமாவது ஸந்தோஷமாவது வீண்போகாது. நல்ல பாத்திரமறிந்து தானம் செய்வதற்கும் நியாயமாய் ஸம்பாதிப்பதற்கும் தகுந்த காலத்தை நன்றாயறிந்தவர். தேவதைகளிடத்திலும் ஆசாரியரிடத்திலும் மிகுந்த பக்தியுள்ளவர். அண்டினவர்களிடத்தில் மிகுந்த பிரீதியுள்ளவர்; கலக்கமில்லாத நிச்சயமான தத்வக்ஞானமுள்ளவர்; மூடர்களுடன் சேராதவர்; கடுமையாகப் பேசாதவர்; சோம்பலில்லாமல் எப்பொழுதும் சாஸ்திரவிசாரம் செய்துகொண்டிருப்பவர்; சாஸ்திரங்களின் உண்மையை அறிவதில் ஜாக்கிரதை யுள்ளவர்.

பிறருடைய குற்றங்களையும் தன் ராஜ்யத்திலும் சத்துருராஜ்யத்திலுமுள்ள தோஷங்களையும் நன்றாயறிந்தவர். வேதவேதாங்கங்களையும் ஸகல வித்யைகளையும் அப்யஸித்தவர். எல்லா விஷயங்களின் முடிவான கருத்தை அறிந்தவர். பார்த்தவுடன் அவரவர்களின் ஸ்வபாவ தாரதம்யத்தை நன்றாயறிந்தவர். நீதி சாஸ்திரப்படி மித்திரர்களையும் ஸாதுக்களையும் சேர்ப்பதிலும், அவர்களைக் காப்பாற்றுவதிலும் வெகு ஸாமர்த்தியமுள்ளவர். கெட்டவர்களை

சிக்ஷிக்கும் ஸமயமறிந்தவர். தேனீக்கள் புஷ்பங்களைக் கசக்காமல் எப்படி ரஸத்தை எடுக்குமோ, அப்படி ஜனங்களுக்குக்கஷ்டமில்லாமல்அவர்களிடத்திலிருத்துதனத்தை ஸம்பாதிக்கும் வகையை அறிந்தவர். தன் வரவில் பாதியையாவது, கால்பாகத்தையாவது, முக்கால்பாகத்தையாவது செலவழிக்கலாமே ஒழிய, வரவிற்கு அதிகமாகச் செலவு செய்யக்கூடாதென்ற ராஜநீதியை அறிந்தவர். பல வகையான சாஸ்திர ஆராய்ச்சியிலும் ஸம்ஸ்கிருத பிராகிருத பாஷைகளில் காவ்யம் நாடகம் முதலியவைகளிலும் மிகவும் தேர்ந்தவர். தர்மார்த்தங்களுக்கு விரோதமில்லாத காமஸுகத்தை அனுபவிப்பவர்.செய்யவேண்டிய காரியங்களில் உத்ஸாஹக்குறைவில்லாதவர். இன்பமாகக் காலம் கழிப்பதையே பிரயோஜனமாகவுடைய சித்திர வேலையிலும் ஸங்கீதத்திலும் பல வாத்தியங்களை வாசிப்பதிலும் திறமையுள்ளவர். தன் செல்வத்தை ஐந்து வகையாகப் பிரிக்க வேண்டுமென்ற நீதியை அறிந்தவர். யானை குதிரை முதலியவைகளை ஏறிப்பழக்குவதில் திறமையுள்ளவர். வில்வித்யையின் ரஹஸ்யத்தை அறிந்தவர்களுக்குள் சிறந்தவர். லோகத்திலுள்ள அதிரதர்களால் பூஜிக்கப்பட்டவர். சத்துருக்களை நோக்கித் தானே பயமில்லாமல் போய், ஸைன்யத்தின் முன் நின்று, தன் பலங்களைக் காப்பாற்றி, சத்துருக்களுடைய வ்யூஹங்களைப் பிளந்து, தன் ஸைன்யத்தை அதற்குள் செலுத்தி, பகைவர்களை முறியடிப்பதில் மிகுந்த ஸாமர்த்திய முள்ளவர். ஸைன்யங்களைப் பல வ்யூஹங்களாகப் பிரிப்பதில் நிபுணர். தேவாஸுரர்களும் அவரை ஒரு பொழுதும் ஜயிக்க முடியாது.

அஸூயையை விலக்கினவர். கோபத்தை ஜயித்தவர். கர்வமில்லாதவர். பிறர்க்குக் கிடைக்கும் லாபத்தைப்பற்றிப் பொறாமையில்லாதவர். பிராணிகளை அவமதிக்கும் ஸ்வபாவமில்லாதவர். இவ்வளவு உத்தம குணங்களால் அலங்கரிக்கப்பட்டும், பூமிதேவியைப்போல் பொறுமை வாய்ந்த ராமன், மூவுலகத்தாருக்கும் பிரியமானவர். புத்தியில் பிருஹஸ்பதியை ஒத்தவர்; பராக்கிரமத்தில் மஹேந்திரனைப் போன்றவர். இம்மாதிரி ராமன் எல்லா ஜனங்களுக்கும், தன் பிதாவான தசரதருக்கும், ஸந்தோஷத்தைக் கொடுக்கும் உத்தம குணங்களால், ஸூரியன் ஆயிரம் கிரணங்களுடன் விளங்குவதுபோல் பிரகாசித்தார். ஆகையால், அண்டினவர்களைக் காப்பாற்றுகிறதென்ற விரதத்தையும் வீண்போகாத பராக்கிரமத்தையும் உடையவரும், லோக பாலர்களைப் போன்றவருமான ராகவன், தங்களுக்கு அரசனாக வேண்டுமென்று ஜனங்கள் ஆசை கொண்டார்கள்.

அப்பொழுது தசரத சக்கரவர்த்தி, தன் புத்திரன் உத்தம குணங்களால் நிகரற்றவனென்று நினைத்து, "வயது முதிர்ந்த நமக்கு இனி ஆகவேண்டியதென்ன? நாம் உயிரோடிருக்கையில் ராமன் அரசனாகவேண்டியதே நமக்கு மிகுந்தப் பிரீதியைக் கொடுக்கும்.



ஆகையால் அவனுக்கு அபிஷேகம் செய்து, அவனை அரசனாக எப்பொழுது பார்ப்பேன்? நமது குழந்தை ராமன், தனவான்களுக்கு மேன்மேலும் ஐசுவரியம் பெருகவேண்டுமென்று விரும்புகிறவன். செல்வம் குறைந்தவர்களிடத்தில் மிகுந்த தயைவைத்து உதவி செய்கிறவன். தாபத்தைப் போக்கி ஜலத்தைப் பொழிவதால் மேகத்தினிடத்தில் ஜனங்கள் எப்படிப் பிரியம் வைக்கிறார்களோ அப்படி, நம்மைவிட ராமனிடத்தில் விசேஷப் பிரியம் வைத்திருக்கிறார்கள். மேலும், பராக்கிரமத்தில் யமனையும் இந்திரனையும், புத்தியில் பிருஹஸ்பதியையும், தைரியத்தில் ஹிமயமலையையும் ஒத்திருப்பதால் என்னைவிட மிகுந்த குணசாலி. நமது குழந்தை ராமனுக்கு அபிஷேகம் செய்து இந்த முதிர்ந்த வயதில் அதனாலுண்டாகும் ஆனந்தத்தை அனுபவித்துப் பிறகு ஸ்வர்க்க மடையவேண்டும்" என்று தன் மனத்தில் தீர்மானித்துக்கொண்டார்.

அரசர்களிடத்திலில்லாத மேற்சொன்ன அளவற்ற லோகோத்தமமான நற்குணங்கள் யாவும் ராமனிடத்தில் இருப்பதைப் பற்றித் தன் மந்திரிகளுடன் யோசித்து, ராமனுக்கு ராஜ்யத்தைக் கொடுக்க நிச்சயித்தார்.

மேலும், அரசருக்கு வரும் கெடுதியைக் காண்பிக்கும் மூன்று வகையான அபசகுனங்களையும் தனக்கு கிழத்தனத்தால் நேர்ந்திருக்கும் சக்திக் குறைவையும் ராமனுக்குச் சீக்கிரமாக அபிஷேகம் செய்ய வேண்டும் என்பதற்குக் காரணமாக மந்திரிகளிடத்தில் சொன்னார். பூர்ண சந்திரனைப்போன்ற ராமனுடைய முகத்தைப் பார்த்தவுடனே எல்லா ஜனங்களும் தானும் துக்கம் நீங்கி மிகுந்த ஸந்தோஷத்தை அடைவதால், பிரஜைகள் க்ஷேமமாயிருக்க வேண்டிய காலம் வந்துவிட்டதென்றெண்ணி ராமாபிஷேகத்தைச் சீக்கிரப்படுத்தினார். தூதர்களை அனுப்பி அநேக பட்டணங்களிலும் தேசங்களிலும் வஸிக்கும் ஜனங்களையும், முக்கியமான அரசர்களையும் சீக்கிரமாக வருவித்தார். ஆனால் கேகய தேசத்தரசனும் ஜனகரும் வெகுதூரத்திலிருந்ததால் பிறகு கேட்டு ஸந்தோஷமடையட்டுமென்று அவர்களுக்கு ஸமாசாரம் அனுப்பவில்லை. தசரதர், வந்த அரசர்களுக்குத் தகுந்த விடுதிகளை ஏற்படுத்தி, உத்தமமான போஜனம் விலையற்ற ஆபரணங்கள் முதலியவைகளால் உபசரித்தார். தான் ஸபையில் வந்திருந்து, அவர்களைப் பார்க்கத் தயாராயிருக்க, கேகயராஜனையும் ஜனகரையும் தவிர மற்ற அரசர்கள், பிரஹ்ம ஸபைக்கு வரும் தேவர்களைப்போல் அந்த ஸபாமண்டபத்தில் புகுந்து, அரசனுக்கெதிரில் வணக்கத்துடன் தகுந்த ஆஸனங்களில் உட்கார்ந்தார்கள். அப்பொழுது அவரால் வெகுமதிக்கப்பட்ட நகரவாஸிகள் அவர் என்ன சொல்லப் போகிறாரென்று, அவருடைய வார்த்தையைக் கேட்பதில் மிகுந்த ஆவலுடன் ஸமீபத்தில் நெருங்கி உட்கார்ந்தார்கள். தேவர்களால் சூழப்பட்ட

மஹா பராக்கிரமமுள்ள தேவேந்திரனைப்போல் அவர்களுக்கு நடுவில் தசரதர் பிரகாசித்தார்.

ஸ லப்3த4 மாநைர் விநயாந்விதைர் ந்ருபை:
புராலயைர் ஜாநபதை3ஶ்ச மாநவை: |
உபோபவிஷ்டைர் ந்ருபதிர் வ்ருதோ ப3பௌ4
ஸஹஸ்ர சக்ஷுர்ப4க3வாநிவாமரை: || (51)

## ஸர்க்கம் 2

## மந்த்ராலோசனை

தத: பரிஷத3ம் ஸர்வாம் ஆமந்த்ர்ய வஸுதா4தி4ப: |
ஹித முத்3த4ர்ஷணம் சைவம் உவாச ப்ரதி2தம் வச: || (1)

பின்பு ஸபையிலிருக்கும் எல்லோரையும் அழைத்து, தான் பேசுவதைக் கவனித்துக் கேட்கும்படி அவர்களைச் செய்து, எல்லோருக்கும் அனுகூலமாயும் அதிக ஸந்தோஷத்தைக் கொடுக்கக்கூடியதாயும் தெளிவாயும் பின்வருமாறு சொன்னார். அவருடைய குரல் பேரிவாத்தியத்தின் சப்தத்தைப்போல் கம்பீரமாயும், திக்குகளில் எதிரொலி உண்டாக்கக்கூடியதாயும், மேகத்தின் கர்ஜனையைப் போலும், ராஜ லக்ஷணங்கள் பொருந்தினதாயும், கேட்க மிருதுவாயும், இனிமையாகவும் இருந்தது. "அரசர்களே, ஜனங்களே! என் முன்னோர்களான ரகு முதலிய கீர்த்தி பெற்ற அரசர்கள், இந்தக் கோஸல ராஜ்யத்தைத்தங்கள் புத்திரனைப்போல் மிகுந்த அன்புடன் காப்பாற்றிவந்த விஷயம் உங்களுக்கு நன்றாகத் தெரியுமே. அந்த வம்சத்தில் பிறந்த நான், விசேஷ ஸுகத்தை அனுபவிக்கத் தகுந்த என் ராஜ்யத்திற்கு க்ஷேமத்தைச் செய்ய விரும்புகிறேன். ஏதோ என் புத்திக்கும் சக்திக்கும் தகுந்தபடி நீதிநெறி தவறாமல், சோம்பலில்லாமல், முன்னோர்களின் மார்க்கத்தை விடாமல் ஜனங்களை இவ்வளவு காலமாகக் காப்பாற்றிவந்தேன். நீங்களும் வெகு ஸந்தோஷமடைந்திருக்கிறீர்கள்.

ஆனாலும் வெண்குடையின் கீழிருந்து ஜனங்களுக்கு நன்மையையே செய்துவந்து அரசாண்ட எனக்கு வயது முதிர்ந்துவிட்டது. யயாதி முதலியவர்களைப்போல் எனக்கு விஷயசுகத்தில் ஆசையில்லை. அறுபதாயிரம் வருஷங்கள் ஜீவித்திருந்து தளர்ந்துபோன இந்தத் தேகத்திற்கு ஓய்வு வேண்டுமென்று விரும்புகிறேன். சௌரியம் முதலிய குணங்களால் நிறைந்தவர்கள் நிர்வஹிக்கக் கூடியதும், இந்திரியங்களை ஜயிக்காமல் விஷயத்தையே நாடினவர்களால் வஹிக்க முடியாததும், பலவகையான ஒத்தாசைகளை அபேக்ஷித்ததும், தர்மத்தை நிலைபெறச் செய்வதுமான இந்தப் பெரிய பாரத்தை வெகுகாலமாகத் தாங்கி வந்ததால் மிகவும் களைத்திருக்கிறேன். இப்பொழுது இங்கிருக்கும் பிராம்மண சிரேஷ்டர்கள் முதலிய எல்லோருடைய ஸம்மதமிருந்தால், என் புத்திரனை அரசனாகச் செய்து ஸுகமாயிருக்கலாமென்று நினைக்கிறேன். யுவராஜாவாக இருக்கத் தகுந்தவனென்று நான் குறிப்பிடும் என் மூத்த குமாரனான ராமன், சத்துருக்களை ஜயித்தவன்; அவர்களுடைய நகரங்களைப் பிடித்தவன்; பராக்கிரமத்தில் இந்திரனை ஒத்தவன்; எல்லா குணங்களிலும் என்னைப்போன்றவன்; தர்ம சிந்தையுள்ளவர்களுக்குள் உத்தமன்; புருஷ சிரேஷ்டன். புஷ்ய நக்ஷத்திரத்துடன் சேர்ந்த சந்திரனைப்போல் மிகுந்த தேஜஸுள்ளவன். அவனுக்குப் புஷ்ய நக்ஷத்திரம் கூடிய சுபதினத்தில் யௌவராஜ்ய பட்டாபிஷேகம் செய்ய ஆசைகொண்டிருக்கிறேன். லக்ஷ்மணனுக்கு மூத்தவனும் அளவற்ற தேஜஸுள்ளவனுமான ராமன் பூமிக்குத் தகுந்த அரசன். இவனை அரசனாக அடைந்தால் மூன்று லோகங்களும் நன்றாக ரக்ஷிக்கப்படும். ராமனை அரசனாகச் செய்து, இந்த பாரத்தை அவனிடத்தில் ஒப்புவித்து, அதனால் பூமிக்கு க்ஷேமத்தை உண்டுபண்ணி, நானும் கவலையற்றிருக்க விரும்புகிறேன். நன்றாக யோசித்து இதை ஆரம்பித்தேனென்றும் இது தகுந்த பிரயோஜனத்தைக் கொடுக்குமென்றும் உங்களுக்குத் தோன்றினால் அனுமதி கொடுக்கலாம். இது உசிதமல்லவென்றால், வேறு என்ன செய்யலாமென்று அதையும் சொல்லுங்கள். இப்படிச் செய்வதே உசிதமென்று எனக்குத் தோன்றினாலும் மத்யஸ்தர்களான உங்களுடன் நன்றாய் யோசித்துச் செய்வது இன்னும் அதிக பலத்தைக் கொடுக்கும்" என்றார்.

இதைக் கேட்டு மற்ற அரசர்கள், மழைபெய்யப் போகும் மேகத்தைப் பார்த்து மயில்கள் களிப்பதுபோல் அவரைப் புகழ்ந்தார்கள். ஜனங்களுடைய ஸந்தோஷத்தாலுண்டான பெரிய சப்தம் எதிரொலியால் அந்த ஸபையின் விமானத்தை அசைப்பது போல் பரவிற்று.

பிறகு வஸிஷ்டர் முதலிய பிராம்மணர்களும் அரசர்களும் நகரத்து ஜனங்களுடனும் நாட்டுப்புறத்து ஜனங்களுடனும் நன்றாய் ஆலோசித்து, தனக்குக் கிழத்தனம் நேர்ந்தபோது யுவராஜாவை நியமிப்பதே தர்மமென்று நினைத்திருக்கும் தசரதருடைய எண்ணத்தைத் தேசகால சேஷ்டைகளால் நன்றாக அறிந்து, தமக்குள் ஒவ்வொருவரும் யோசித்து, பிறகு எல்லோரும் ஒரே எண்ணத்துடன், "மஹாராஜ! தாங்கள் அநேக ஆயிர வருஷங்களாக இந்த ராஜ்யத்தைக் காப்பாற்றி வந்து வயது முதிர்ந்திருக்கிறீர்கள். ஆகையால் தங்களுடைய புத்திரனான ராமனை யுவராஜாவாக அபிஷேகம் செய்யுங்கள். ராஜ்யத்தைக் காப்பாற்றுவதில் தாங்கள் இந்தத் தளர்ந்த வயதிலும் வெகு ஜாக்கிரதையுடையவர்கள். ஆனாலும் மலை போன்ற பட்டத்து யானைமேல், வெண்குடையால் சற்று மறைக்கப்பட்ட முககாந்தியுடன், மஹா பலசாலியாய், முழங்

கால் வரையில் நீண்ட திருக்கைகளுடன் ரகுவீரன் பவனிவரும் காக்ஷியைப் பார்க்க ஆவல் கொண்டிருக்கிறோம். எங்களுக்கு ஆசை இருந்தாலும் அதைப் பூர்த்தி செய்வது தங்களைச் சேர்ந்தது" என்று தெரிவித்தார்கள்.

அவர்களுடைய எண்ணத்தைத் தசரதர் நன்றாக அறிந்தும் அறியாதவரைப்போல், "அரசர்களே! நான் சக்கரவர்த்தியாக உங்களைக் காப்பாற்றிக் கொண்டிருக்கும்பொழுதும், ராமனை யுவராஜாவாக அபிஷேகம் செய்து பார்க்கவேண்டுமென்று ஆசைப் படுவதற்குக் காரணம் தெரியவில்லை. உண்மையாகச் சொல்லுங்கள்" என்றார்.

அப்பொழுது அவ்வரசர்களும் பட்டணத்து ஜனங்களும், "மஹாராஜ! மற்றவர்களிடத்திலில்லாத பல உத்தம குணங்கள் தங்கள் புத்திரனான ராமனிடத்தில் இருக்கின்றன. தேவர்களைப் போன்றவரும் புத்திமானும் கேட்பவர்களுக்கும் நினைப்பவர்களுக்கும் சொல்லுகிறவர்களுக்கும் ஆனந்தத்தையும் ப்ரீதியையும் கொடுக்கக் கூடியவருமான ராகவனுடைய கல்யாண குணங்களைச் சொல்லுகிறோம், கேளுங்கள்.

ராமன் வீண்போகாத பராக்கிரமமுள்ளவர்; உத்தமகுணங்களால் மஹேந்திரனைப் போன்றவர்; இக்ஷ்வாகு வம்சத்தில் பிறந்த அரசர்களைவிட மேலானவர்; உத்தம புருஷர்; ஸத்தியத்திலும் தர்மத்திலும் நோக்கமுள்ளவர்; தர்மத்தையும் அதன் பயனாக ஸம்பத்தையும் பிறர்களை எதிர்பார்க்காமல் கொடுப்பவர்; சந்திரனைப் போல் ஜனங்களுக்கு ஸுகத்தைத் தருபவர்; பொறுமையில் பூமிதேவியைப் போன்றவர்; புத்தியில் ப்ருஹஸ்பதியையும், பராக்கிரமத்தில் இந்திராணியின் பர்த்தாவான மஹேந்திரனையும் ஒத்தவர்; ஸாமான்ய தர்மத்தையும் விசேஷ தர்மத்தையும் அறிந்தவர். அவருடைய ப்ரதிக்ஞை வீணாவதில்லை. தான் மஹானாயிருந்தும் தனக்குக் குறைந்த புத்தியுள்ளவர்களுடன் இடைவிடாமல் நெருங்கிப் பழகும் ஸ்வபாவமுள்ளவர். பிறரிடத்தில் காரணமில்லாமல் தோஷங்களை ஏற்படுத்தும் அஸூயையை விலக்கினவர்; அண்டினவர்களின் குற்றத்தைப் பொறுப்பவர்; குற்றம் செய்யாதவர்கள் கோபித்தாலும் துக்கமடைந்தாலும் அவர்களை ஸமாதானம் செய்பவர்; பிரியமாகப் பேசும் ஸ்வபாவமுள்ளவர்; பிறர் செய்த உபகாரம் கொஞ்சமானாலும் அதை அதிகமாய் நினைப்பவர்; கெட்ட விஷயங்களில் ஆசையற்றவர்; அண்டினவரை விட்டுப் பிரிய மனமில்லாதவர்; மிகவும் கஷ்டமான நிலைமையிலும் முன் ஒப்புக்கொண்ட காரியத்தை விடாமல் செய்துகொடுப்பவர்; அண்டினவர்களுக்கு வசப்பட்டவர்; பிறர் தன்னிடத்தில் அஸூயை வைத்தாலும் அதை லக்ஷியம் செய்யாதவர்; பொய்யைச் சொல்லாமல் எல்லோரிடத்திலும் பிரியமாகப் பேசுகிறவர்; ஞானம் வயது



ஆசாரம் என்றவைகளில் முதிர்ந்த பிராம்மணர்களை எப்பொழுதும் வணங்குகிறவர். ஆகையால் ஔதார்யம், பராக்கிரமம், சத்ருக்களை ஜயிக்கும் திறமை முதலிய குணங்கள் மேன்மேலும் அவரிடத்தில் வளர்கின்றன.

தேவர்கள் அஸுரர்கள் மனிதர்கள் முதலியவர்களுக்குத் தெரிந்த அஸ்திர சஸ்திரங்கள் யாவையும் அறிந்தவர். சாஸ்திரப் படி குருவிடத்தில் வேத வேதாங்கங்களைப் படித்து, விரதங்களை அனுஷ்டித்து ஸமாவர்த்தனம் செய்தவர். ஸாமகானத்திற்கு உபயோகமான ஸங்கீதத்தில் மிகுந்த தேர்ச்சி அடைந்தவர். இவருடைய குலம் மிகவும் பரிசுத்தமானது; தானும் மஹா சுத்தர். எக்காலத்திலும் கலங்காத மனமுள்ளவராகையால் சிறந்த புத்திமான். நல்ல குலத்தில் பிறந்தவர்களும், மிகுந்த படிப்பாளிகளும், வணக்கமுள்ளவர்களும், தர்மத்தின் கருத்தை நன்றாக எடுத்துச் சொல்வதில் திறமையுள்ளவர்களுமான பிராம்மண சிரேஷ்டர்களால் பழக்கப்பட்டவர். கிராமங்கள் நகரங்களைப் பற்றிச் சத்துருக்களுடன் போராட வேண்டியிருந்தால் லக்ஷ்மணனை அழைத்துக்கொண்டு, யுத்தத்திற்குப் போய், பகைவரை ஜயிக்காமல் திரும்புவதில்லை. யுத்தம் முடிந்த பிறகு, யானை ரதம் முதலிய வாஹனங்களிலேறிப் பட்டணத்திற்கு வந்து, ஜனங்களை அழைத்து, "உங்கள் குழந்தைகள் பார்யைகள் சிஷ்யர்கள் ஸௌக்கியமாக இருக்கிறார்களா? அக்னி காரியங்கள் விதிப்படி நடக்கின்றனவா? உங்கள் வேலைக்காரர்களும் சிஷ்யர்களும் உங்களுக்கு வேண்டிய பணிவிடைகளைக் காலத்தில் சோம்பலில்லாமல் செய்கிறார்களா?" என்று தகப்பன் குழந்தைகளை விசாரிப்பதுபோல் பலவிதமாக க்ஷேமம் விசாரிப்பார். தனிகனோ ஏழையோ யாராயிருந்தாலும், ஏதாவது துக்கம் நேர்ந்தால், 'ராமன் நமது ஆளுகைக் குட்பட்ட இவர் கஷ்டப்படுவதற்கு நமது தவறே காரணம்' என்றெண்ணி மிகவும் வருத்தமடைந்து, அதை மறக்கமாட்டார். அப்படியே யாருக்காவது புத்திரோத்ஸவம் முதலிய சுபங்கள் நேர்ந்தால், மகனுக்கு வாய்ந்த க்ஷேமத்தைப் பார்த்துத் தகப்பன் எப்படி ஸந்தோஷமடைவானோ அப்படி மகிழ்வார்.

மிகவும் கஷ்டமான நிலைமையிலும் பொய்சொல்லாதவர்; வில்லாளிகளில் சிரேஷ்டர்; பெரியோர்களை ஸேவிப்பவர்; இந்திரியங்களை அடக்கினவர்; புன்சிரிப்புடன் பேசுகிறவர்; எந்த ஆபத்திலும் தர்மத்தை விடாதவர்; ஜனங்களுக்கு க்ஷேமத்தை நன்றாகச் செய்கிறவர்; ஸாதுக்கள் வெறுக்கும் வீண்பேச்சில் ஆசையில்லாதவர்; மென்மேலும் யுக்தியாய்ப் பேசுவதில் தேவகுருவைப் போன்றவர். அழகான புருவங்களும், சிவந்து நீண்ட திருக்கண்களும் உடையவர். மஹாவிஷ்ணுவின் அவதாரம் போன்றவர். யுத்தத்தில் மரணம் நேருவதில் பயமற்றிருப்பது சௌரியம், தான் கலங்காமல் பிறரைப் பயந்து ஓடச்செய்வது வீரியம்,

சத்துருக்கள் எவ்வளவு பலமுள்ளவர்களாயிருந்தாலும் அவர்களுடைய ஸைன்யங்களில் புகுந்து வ்யூஹங்களைத் துளைத்து தேவாஸுரர்களையும் ஜயிக்கக்கூடிய மிகுந்த உத்ஸாஹமுள்ளவராயிருப்பது பராக்கிரமம். இம்மூன்று குணங்களால் லோகத்தில் பிரகாசிப்பவர். ஜனங்களைக் காப்பாற்றும் வழிகளை நன்றாக அறிந்தவர்; விஷய ஸுகங்களில் சபலமில்லாதவர்; மூவுலகத்தையும் ரக்ஷிப்பதில் ஸமர்த்தர். அப்படியிருக்க இந்தப் பூமியை ரக்ஷிப்பது அவருக்குப் பெரிதல்ல.

அவருடைய கோபமும் ஸந்தோஷமும் வீணாகாது. தண்டிக்க வேண்டியவர்களை தவறாமல் தண்டிப்பார். குற்றமில்லாதவரிடத்தில் கோபிக்கமாட்டார். எவனிடத்தில் ஸந்தோஷப்படுகிறாரோ அவனுடைய எண்ணங்களை நிறைவேற்றுகிறவர்; பொறுமையை முக்கியமாக உடையவைகளும், எல்லா ஜனங்களாலும் விரும்பக் கூடியவைகளும், பிரியத்தை உண்டாக்கக் கூடியவைகளுமான குணங்களால் அநேகமாயிரம் கிரணங்களால் ஸூரியன் விளங்குவதுபோல் பிரகாசிக்கிறார். அரசே! தங்களுக்கு மிகுந்த க்ஷேமத்தை உண்டாக்கும் பொருட்டு, மரீசிக்குக் காசியபர் பிறந்ததுபோல் புத்திரனுக்கு இருக்கவேண்டிய உத்தம குணங்களுடன் இவர் தெய்வானுக்ரஹத்தால் அவதரித்திருக்கிறார். தேவாஸுர கந்தர்வ உரக மஹர்ஷி கணங்களும் நகரவாஸிகளும் வேறு தேசத்து ஜனங்களும் அந்தப்புரத்திலிருப்பவர்களும் யாவரும், பிரஸித்திபெற்ற நன்னடத்தையுள்ள ராமன், மிகவும் பலவானாக வியாதியில்லாமல் வெகுகாலம் ஜீவித்திருக்க வேண்டுமென்று கடவுளை பிரார்த்திக்கிறார்கள். யௌவன மதத்தால் விவேகமற்ற சிறு பெண்களும், யௌவன ஸ்திரீகளும், வயது சென்றவர்களும், காலை மத்யாஹ்னம் மாலை யென்ற மூன்று காலங்களிலும் தவறாமல், ஸாவதானமாக, 'கீர்த்திசாலியான ராமனுக்கு யௌவராஜ்யம் கிடைக்கவேண்டும்'' என்று எல்லா தேவதைகளையும் நமஸ்கரிக்கிறார்கள். எந்த அல்ப தேவதையையாவது மறந்துவிட்டால் அது எங்கே கெடுத்துவிடுமோ என்ற பயத்தால், ஒன்றையாவது பூஜிக்காமல் விடுவதில்லை. பிரபுவே! அவர்களுடைய பிரார்த்தனையைத் தாங்கள் தயவு செய்து முடித்துக் கொடுக்கவேண்டும். கருநெய்தல் நீலோத்பல புஷ்பத்தைப்போல் கருத்த திருமேனியுள்ளவரும் சத்துருக்களை ஜயிக்கும் வல்லமையுள்ளவருமான தங்கள் புத்திர ரத்தினம், யுவராஜாவாக ஸிம்ஹாஸனத்தில் உட்காருவதைப் பார்த்து ஆனந்திக்க விரும்புகிறோம். கேட்டதைக் கொடுப்பவரே! எல்லா ஜனங்களுக்கும் அனுகூலத்தையே செய்பவரும், பெரியோர்களும் ஆசிரயிக்கத் தக்கவரும், மஹா விஷ்ணுவைப் போன்றவருமான தங்கள் புத்திரனை ராகவனுக்கு ராஜ்யாபிஷேகம் செய்து எங்களனைவருக்கும் அனுகூலத்தை அருளவேண்டும்; தாமதிக்க வேண்டாம்'' என்று கேட்டுக்கொண்டார்கள்.



தம் தே³வ தே³வோபம மாத்மஜம் தே
ஸர்வஸ்ய லோகஸ்ய ஹிதே நிவிஷ்டம் |
ஹிதாய ந: க்ஷிப்ர முதா³ர ஜுஷ்டம்
முதா³பி⁴ஷேக்தும் வரத³ த்வமர்ஹஸி || (54)

---

## ஸர்க்கம் 3

# பட்டாபிஷேகப் பிரயத்தினம்

தேஷா மஞ்ஜலி பத்³மாநி ப்ரக்³ருஹீதாநி ஸர்வஶ: |
ப்ரதிக்³ருஹ்யாப்³ரவீத்³ ராஜா தேப்⁴ய: ப்ரியஹிதம் வச: || (1)

இப்படிக் கைகளைத் தலையில் கூப்பிக்கொண்டு அரசனை வேண்டின ஜனங்களை, அவர்களுடைய யோக்யதைக்குத் தகுந்தபடி பார்ப்பது பேசுவது கைகூப்புவது முதலியவைகளால் தசரதர் உபசரித்து, "ஜனங்களே! என் மூத்த குமாரனை ராமனுக்கு அபிஷேகம் செய்து பார்க்கவேண்டுமென்று நீங்கள் விரும்புவதால் மிகவும் ஸந்தோஷமடைந்தேன். நிகரற்ற மஹிமை பெற்றேன்'' என்று இனிமையாயும் அனுகூலமாயும் பேசி அவர்களை அனுக்ரஹித்து, அவர்கள் கேட்கும்படி வஸிஷ்டரையும் வாமதேவரையும் பார்த்து, "பன்னிரண்டு மாதங்களுக்குள் இந்தச் சித்திரை மாதம் சிறந்தது. இப்பொழுது எல்லா மரங்களும் புஷ்பிக்கின்றன. இதே ராமன் பிறந்த மாதம். அவனுக்கு அபிஷேகம் செய்ய வேண்டுமென்று யோசிக்கும்போது இந்த மாதம் நேர்ந்திருக்கிறது. ஆகையால் அபிஷேகத்திற்கு வேண்டிய யாவற்றையும் ஸித்தம் செய்ய வேண்டும்'' என்றார்.

அரசன் சொல்லி முடித்தவுடன், வெகுகாலமாய் எதிர்பார்த்திருந்த ராமபட்டாபிஷேக மஹோத்ஸவம் ஸமீபித்த ஸந்தோஷத்தால் ஜனங்களுடைய உத்ஸாஹத்வனி அதிகரித்தது. பிறகு அது கொஞ்சம் கொஞ்சமாகக் குறைந்து அடங்கிற்று. ப்பொழுது அரசன் அபிஷேக ஸாமக்ரிகளைச் சேகரிக்கும்படி உத்தரவு செய்ய வஸிஷ்டரிடம் தெரிவித்துக்கொண்டார். அந்த மஹரிஷி தனக்கெதிரில் கைகூப்பி வணக்கத்துடன் நிற்கும் ஸுமந்திரர் முதலிய அதிகாரிகளை நோக்கி, "தங்கம், ரத்தினங்கள், நெல், பயறு, ஓஷதிகள், வெண்மையான புஷ்பமாலைகள், பொரி, தேன், நெய், புது வஸ்திரங்கள், ரதம், ஆயுதங்கள், சதுரங்க ஸைன்யம், உத்தம லக்ஷணமுள்ள யானைகள், வெண்சாமரங்கள், த்வஜங்கள், வெள்ளைக் குடை, அக்னியைப்போல் பிரகாசிக்கும் நூறு தங்கக் குடங்கள், தங்கத்தால் அலங்கரிக்கப்பட்ட கொம்புகளுள்ள காளை,

எல்லா அவயவங்களுமுள்ள புலித்தோல், சந்தனம் புஷ்பங்கள் முதலிய திரவியங்களைக் காலையில் அரசனுடைய அக்னிஹோத்திர சாலையில் ஸித்தம் செய்ய வேண்டும். பட்டணத்தின் கோட்டை வாசற்படிகளையும், அரசனுடைய அந்தப்புரங்கள் அரண்மனை வாசற்படிகளையும், வாஸனையுள்ள புஷ்ப மாலைகளாலும் சந்தனம் புஷ்பம் முதலியவைகளாலும் அலங்கரிக்க வேண்டும். காலையில் அநேக ஆயிரம் பிராம்மணோத்தமர்களுக்கு இஷ்டப்படி தயிர் பால் முதலிய வியஞ்ஜனங்களுடன் சிறந்த அன்னமும், நெய் தயிர் பொரி பூரணமான தக்ஷிணைகளும் வேண்டியவரையில் ஆதரவுடன் கொடுக்கப்படட்டும். ஸூர்யோதயத்தில் ஸ்வஸ்திவாசனம் நடக்க வேண்டும். பிராம்மணர்களுக்கு அதைப்பற்றி ஞாபகம் செய்து தகுந்த ஆஸனங்கள் போடப்படட்டும். வீடுகளில் த்வஜங்கள் கட்டப்பட்டு, ராஜவீதிகளில் ஜலம் தெளிக்கப்பட்டு, புஷ்பங்கள் வாரியிறைக்கப்படட்டும். தாளம் கொட்டி ஜீவிக்கும் நட்டுவர் முதலியவர்களும் வேசிகளும் நன்றாய் அலங்கரித்துக்கொண்டு அரசனுடைய அரண்மனையில் இரண்டாவது கட்டில் தயாராக இருக்கட்டும். தேவாலயங்களிலும் நாற்சந்திகளிலும் அந்தந்த தேவதைகளைப் பூஜிக்க, மாலைகள் அன்னம் மோதகம் முதலிய பக்ஷணங்களுடன் பிராம்மணர்கள் அங்கங்கே தனித்தனியாய் ஜாக்கிரதையாக இருக்கட்டும். படைச் சேவகர்கள் நல்ல உடுப்புகளைத் தரித்துக்கொண்டு நீண்ட கத்திகளுடன் அபிஷேகம் நடக்கும் அரண்மனையில் தயாராயிருக்கட்டும்'' என்றார். இவ்வாறு வெகுஸமர்த்தர்களான வஸிஷ்டரும் வாமதேவரும் ஆக்ஞாபித்து, மற்ற வேலைக்காரர்கள் வேலைக்காரிகளைத் தருவிக்கவேண்டியது முதலிய மேற்காரியங்களையும் அரசனுடைய அனுமதியால் செய்து முடித்து, மிகுந்த ஸந்தோஷத்தால் மயிர்க் கூச்சலடைந்து, தசரதரிடத்தில் வந்து, 'தங்கள் உத்தரவுப்படி எல்லாம் செய்யப்பட்டன'' என்று தெரிவித்தார்கள்.

பிறகு மஹாகாந்தி பொருந்திய அரசன் "ஸுமந்திரரே! நல்ல நடத்தையுள்ள நமது குழந்தை ராமனைச் சீக்கிரம் அழைத்து வாரும்" என்றார். ஸுமந்திரர், அப்படியே போகிறேனென்று, அரசனுடைய உத்தரவை அங்கீகரித்து ராமனை அழைத்துவரப் போனார். நான்கு திக்குகளிலுமிருந்து அந்த ஸபையில் வந்திருக்கும் அரசர்களும் மிலேச்ச தேசத்தரசர்களும், காடுகளிலும் மலைகளிலும் வஸிப்பவர்களும், தேவர்கள் இந்திரனைச் சூழ்ந்திருப்பதுபோல், த்சரதரைச் சூழ்ந்திருந்தார்கள்.

ஸார்வபௌமனான அந்தச் சக்கரவர்த்தி, மருத்துகளுக்கு நடுவிலிருக்கும் இந்திரனைப்போல், மேல்மாடியிலிருந்து வீதியைப் பார்க்கையில் தேரேறி வரும் தன் புத்திரனைக் கண்டார். அடிக்கடி பார்த்தும், போதுமென்று திருப்தியடையவில்லை. ராமன் அழகில் கந்தர்வ ராஜனைப்போன்றவர். அழகு இருந்தாலும் பராக்கிரமம்



சேர்ந்திருக்காது; ராமனோ மஹாபராக்கிரமசாலி என்று லோகத்தில் பிரஸித்தி பெற்றவர். பார்ப்பதற்கு அழகாயும் பராக்கிரமசாலியாயுமிருந்தாலும் உத்தம புருஷ லக்ஷணங்கள் பொருந்தியிருப்பதரிது; ராமனோ முழங்கால் வரையில் நீண்ட திருக்கைகளை உடையவர். இவை பொருந்தி யிருந்தும் தகுந்தபடி தேகபலம் வாய்ந்திருக்காது; ராமனோ நிகரற்ற தேகபலமும் மதயானையின் நடையும் ஆண்மையும் சக்தியுமுடையவர். இவை யாவுமிருந்தும் பார்ப்பவர்களின் மனத்திலுள்ள தாபத்தையும் துக்கத்தையும் போக்கும் தன்மை சேர்ந்திருப்பதரிது; ராமனோ சந்திரனைப்போல் பார்க்கப் பார்க்க அழகு பொருந்தியவர். பார்ப்பவர்களின் கஷ்டங்களையும் குறைகளையும் தன் அமிருத திருஷ்டியால் நீக்கி, எல்லையற்ற ஆனந்தத்தைக் கொடுப்பவர். அவரை எவ்வளவு தடவை பார்த்தாலும் போதுமென்று தோன்றாது. உத்தம லக்ஷணங்களும் அழகும் வாய்ந்த புருஷனைக் கண்டு ஸ்த்ரீகளுடைய மனம் களிக்கும். அழகு பெருந்தன்மை கல்யாணகுணங்கள் முதலியவைகளால் தன்னைப் பார்க்கும் புருஷர்களுடைய கண்களையும் மனத்தையும் ராமன் கொள்ளை கொள்ளுகிறவர்.

கோடை காலத்து வெய்யிலில் தவிப்பவர்கள் மழையைப் பெய்து குளிர்ச்சியைக் கொடுக்கும் மேகத்தை எவ்வளவு தடவை பார்த்தாலும் திருப்தி அடையாததுபோல், தன்னை நோக்கி வரும் ராமனைப் பார்த்துப் பார்த்து தசரதர் திருப்தியடையவில்லை. அதற்குள் ராமனுடைய ரதம் தசரதருடைய அரண்மனை வாசலில் வந்தது. ஸுமந்திரர் கைலாகு கொடுத்து ரகுவீரனை ரதத்திலிருந்து இறக்கினார். மஹாராஜா இருக்குமிடத்தை நோக்கி ராமன் போகும்பொழுது தானும் கைகூப்பி வணக்கமாய்ப் பின் சென்றார். கைலாஸ சிகரத்தைப் போன்ற மாடியில் ராமன் ஸாரதியுடன் ஏறிக் கைகூப்பிப் பிதாவின் ஸமீபத்திற்குப் போய், தன் பெயரைச் சொல்லி விதிப்படி நமஸ்கரித்தார். தன்னை வணங்கிக் கைகூப்பிப் பக்கத்தில் நிற்கும் தன் அருமைக் குழந்தையை, அரசன் கைகளைப் பிடித்து ஸமீபத்தில் அழைத்து இறுகத்தழுவி, ரத்னங்களிழைத்த உயர்ந்த ஆஸனத்தில் உட்காரச் சொன்னார். அப்படியே ராமன் உட்கார, உதிக்கும் ஸூரியனுடைய கிரணங்களால் தங்கமயமான மேருமலையைப் போலும், சரத் காலத்தில் உதித்த சந்திரனால் கிரஹ நக்ஷத்திரங்கள் நிறைந்த ஆகாசத்தைப் போலும், அவருடைய தேஜஸால் அந்த ஸபை மிகவும் விளங்கிற்று. தசரதரும் வஸ்திராபரணங்களால் அலங்கரிக்கப்பட்டு, கண்ணாடியில் தோன்றும் தன் சரீரத்தைப் போன்ற தன் அருகிலிருக்கும் குமாரனைப் பார்த்து மிகவும் ஸந்தோஷமடைந்தார்.

புத்திரனைப் பெற்றவர்களுக்குள் சிறந்த அவ்வரசன் புன்சிரிப்புடன், "ராமா! நீ எனக்கு எவ்விதத்திலும் ஒத்த மூத்த பத்தினியிடத்தில் வம்சத்திற்குத் தகுந்தவனாய், குணங்களால் சிறந்தவனாய்ப்

பிறந்த அருமைக் குழந்தையல்லவா? உன் நல்ல குணங்களால் ஜனங்களெல்லோரும் உன்னிடத்தில் திருப்தி அடைந்திருக்கிறார்கள். புஷ்ய நக்ஷத்திரமும் சந்திரனும் சேரும் நாளைய தினத்தில் இந்த ராஜ்யத்தை உனக்குக் கொடுக்க நிச்சயித்திருக்கிறேன். நீ ஸ்வபாவத்திலேயே உத்தம குணங்களுள்ளவன். பெரியோர்களிடத்தில் வணக்கமுள்ளவன். ஆனாலும் புத்திர ஸ்நேஹத்தால் உனக்கு அனுகூலமான விஷயத்தை உபதேசிக்க விரும்புகிறேன். முன்னைவிட அதிக வணக்கமுள்ளவனாயும் இந்திரியங்களை ஜயித்தவனாயும்இருக்க வேண்டும். காமக் குரோதங்களால் உண்டாகும் ஏழு வகையான வ்யஸனங்களை ஒழித்து, கீழ்ப்பட்ட வேலைக்காரர்களை மந்திரிகள் முதலிய மேலதிகாரிகள்மூலமாயும், மந்திரி முதலியவர்களை நேரிலும் ஆக்ஞாபிக்க வேண்டும். தூதர்களால் சத்ருக்களின் ராஜ்ய ஸமாசாரத்தை அறிவதுபோல், ஒவ்வொரு நாளும் ஸபையிலிருந்தும் நேரிலும் அறியக்கூடிய விஷயங்களை அறியவேண்டும். தன் ராஜ்யத்திற்குப் போதுமான அநேககோடி தான்யங்களையும், பலவகையான ரத்தினங்களையும் ஸைன்யங்களுக்கு வேண்டிய பலவிதமான ஆயுதத்தையும் ஏராளமாய்ச் சேர்த்து குடிகளை ஸந்தோஷப் படுத்த வேண்டும். மேற்சொன்ன வழிகளால் அவர்கள் திருப்தி அடைந்து அரசனிடத்தில் விசுவாஸம் வைப்பார்கள். அதனால் மந்திரிகளும் நண்பர்களும், தேவர்கள் அமிருதத்தை அடைந்து ஆனந்திப்பது போல், இவ்வளவு குணசாலியான அரசனை அடைந்தோமே என்று ஸந்தோஷிப்பார்கள். ஆகையால் நீயும் மனத்தை அடக்கி இம்மாதிரி நடக்கவேண்டும்'' என்று, காச்யபர் இந்திரனிடத்தில் சொல்லுவதுபோல் ஹிதத்தை உபதேசித்தார். அப்பொழுது ஸமீபத்திலிருந்து அதைக் கேட்டுக் கொண்டிருந்த ராமனுடைய மித்திரர்கள் அதிவேகமாகப் போய்க் கௌசல்யைக்கு தெரிவித்தார்கள். அந்த உத்தம பத்னி, இப்படி தனக்குப் பிரியமான விஷயங்களைச் சொன்னவர்களுக்கு தங்கம் ரத்தினங்கள் பசுக்கள் முதலியவைகளை வெகுமதியாகக் கொடுத்தாள்.

ராமன் பிதாவை நமஸ்கரித்து, உத்தரவு பெற்றுத் தேரிலேறி, வழியில் ஜனங்களால் கொண்டாடப்பட்டு வெகு காந்தியுள்ள தன் அரண்மனைக்கு வந்தார்.

பட்டணத்து ஜனங்கள் அரசனுடைய உத்தரவைக் கேட்டு, வெகுநாளாய் வேண்டிக்கொண்டிருந்த லாபம் கிடைத்ததுபோல் ஸந்தோஷித்து அவரிடத்தில் விடைபெற்றுக் கொண்டு திரும்பிப் போய், "இந்த ராம பட்டாபிஷேக மஹோத்ஸவம் இடையூறில்லாமல் முடியவேண்டும்'' என்று தங்கள் தங்கள் தெய்வங்களைப் பூஜித்து வேண்டிக் கொண்டார்கள்.

தே சாபி பௌரா ந்ருபதேர் வசஸ் தத்
ஶ்ருத்வா தத[2]ா லாப[4] மிவேஷ்ட மாஶு |
நரேந்த்[3]ர மாமந்த்ர்ய க்[3]ருஹாணி க[3]த்வா
தே[3]வாந் ஸமாநர்சு ரபி[4]ப்ரஹ்ருஷ்டா: ॥ (50)



யதஸ்த்வயா ப்ரஜாஸ்சேமா: ஸ்வகு[3]ணைரநு ரஞ்ஜிதா: |
தஸ்மாத் த்வம் புஷ்யயோகே[3]ந யௌவராஜ்ய மவாப்நுஹி ॥ —அயோ. 3ஸ-41 ஸ.
உன் நல்ல குணங்களால் ஜனங்களெல்லோரும் உன்னிடத்தில் திருப்தி அடைந்திருக்கிறார்கள். புஷ்ய நக்ஷத்திரமும் சந்திரனும் சேரும் நாளைய தினத்தில் இந்த ராஜ்யத்தை உனக்குக் கொடுக்க நிச்சயித்திருக்கிறேன். (பக்கம் 14 பார்க்க.)

Notes : This Blank Page has also to be counted as a another page Number.

It is intentionally left blank after Picture Sketches.!

Released by Maran's Dog ,Toronto, Canada

Released by Maran's Dog ,Toronto, Canada



## ஸர்க்கம் 4

## கௌஸல்யை ஸந்தோஷித்தது

க³தேஷ்வத² ந்ருபோ பூ⁴ய: பௌரேஷு ஸஹமந்த்ரிபி⁴: |
மந்த்ரயித்வா ததஶ்சக்ரே நிஶ்சயஜ்ஞ: ஸுநிஶ்சயம் || (1)

நகரத்து ஜனங்கள் வீட்டிற்குப் போனபிறகு அரசன் நன்றாக ஆலோசித்து, "செந்தாமரை இதழ்களைப்போல் சிவந்து நீண்டு அழகிய கண்களுள்ள நமது குழந்தை ராமனுக்குப் புஷ்ய நக்ஷத்திரத்தில் நாளைய தினத்தில்யௌவராஜ்ய பட்டாபிஷேகம்செய்துவிடுவேன்" என்று முடிவு செய்தார். பின்பு அங்கிருந்து உள்ளேபோய், "ஸுமந்திரரே! ராமனை மறுபடியும் இங்கே அழைத்து வாரும்" என்று கட்டளை யிட்டார்.

அப்படியே ஸுமந்திரர் ராமனுடைய அரண்மனைக்குப் போனார். அங்குள்ள காவற்காரர்கள் அவருடைய வரவை ராமனுக்குத் தெரிவிக்க, "இதென்ன! உத்தேசித்த காரியத்திற்கு ஏதாவது இடையூறு நேர்ந்ததோ" என்று அவருக்கு ஸந்தேகமுண்டாயிற்று. ஸுமந்திரரை உள்ளே வருவித்து, "நீர் மறுபடியும் வந்த காரணமென்ன? நன்றாகச் சொல்லும்" என்றார். ஸுமந்திரர், "ராமா! உமது பிதா உம்மைப் பார்க்க விரும்பி அழைத்துவரச் சொன்னார். அதைத் தெரிவித்தேன். அங்கே போவதும் போகாமலிருப்பதும் தங்களிஷ்டம்" என்றார். ஸாரதியின் வார்த்தையைக் கேட்ட ராமன் வெகு பரபரப்புடன் வேகமாக அரண்மனைக்குப் போனார்.

ராமனுடைய வரவைக காவற்காரர்கள் தசரதருக்குத் தெரிவிக்க, தன் குழந்தையிடத்தில் சிறந்தப் பிரியமான வார்த்தையைச் சொல்ல விரும்பி உள்ளே அழைத்துவரச் சொன்னார். ராமன் அங்கே போய் அரசனிருக்குமிடத்திற்குத் தூரத்திலேயே அவரை நோக்கிக் கைகூப்பி வெகு வணக்கத்துடன் நமஸ்கரித்தார். தசரதர் புத்திரனை வாரியணைத்து, அழகான ஆஸனத்தில் உட்காரச் சொல்லி, "ராமா! நான் அறிவிலும் வயதிலும் மிகவும் முதிர்ந்தவன். பலவித போகங்களை வேண்டியவரையில் அனுபவித்தேன். பல யாகங்களைப் பலமுறை விதிப்படிஅதிகமாக தக்ஷிணை, போஜனம் முதலியவைகளுடன் செய்தேன்.வேண்டிய வஸ்துக்களை இஷ்டப்படி பிறருக்குக் கொடுத்தேன். வேதங்களை அத்யயனம் செய்தேன். சூரர்களுக்குக் கிடைக்கக்கூடிய பலவித ஆனந்தங்கள் என்னால் இஷ்டப்படி அனுபவிக்கப்பட்டன. யாகயக்ஞங்களைச் செய்ததால் தேவர்களுடைய கடனையும், வேதாத்யயனத்தால் ரிஷிகளுடைய கடனையும், புத்திரர்களைப் பெற்றதால் பித்ருக்களுடைய கடனையும், தானத்தால் பிராம்மணர்களுடைய கடனையும், ஸுகங்களை அனுப

விப்பதால் ஆத்மாவின் கடனையும் தீர்த்தேன். நீ எனக்குத் தகுந்த புத்திரன். உலகத்தில் நிகரில்லாதவன். இப்பொழுது இந்த ராஜ்யத்தை உன்னிடத்தில் ஒப்புவிப்பதைத் தவிர நான் செய்யவேண்டிய காரியம் வேறொன்றுமில்லை. ஆகையால் நான் சொல்வதைத் தவறாமல் கேட்கவேண்டும், நமது தேசத்து ஜனங்களனைவரும் இப்பொழுதே நீ அரசனாக வேண்டுமென்று விரும்புகிறார்கள். அதனால் உன்னை யுவராஜாவாகப் பட்டாபிஷேகம் செய்யப்போகிறேன். மேலும், இனி வரும் கெடுதியைக் காட்டும் கெட்ட ஸ்வப்பனங்கள் எனக்கு நேருகின்றன. இடியுடன் குறைக்கொள்ளிக் கட்டைகள் முதலியவை ஆகாசத்திலிருந்து விழுகின்றன. என் நக்ஷத்திரத்தை ஸூரியன் அங்காரகன் ராஹு முதலிய குரூர க்ரஹங்கள் பீடித்துக்கொண்டிருப்பதாக ஜ்யோதிஷமறிந்தவர்கள் சொல்லுகிறார்கள். இவைகளை யோசித்தால் அரசனுக்கு மரணமாவது அதற்கு ஸமமான ஆபத்தாவது நேருமென்று தோன்றுகிறது. மனிதர்களுடைய புத்தி எப்பொழுதும் ஒரே விதமாயிராது. என் புத்தி மாறுவதற்கு முன் உனக்கு அபிஷேகம் செய்விக்கிறேன். இப்படிச் செய்யவேண்டும் என்று எனக்கு இப்பொழுது தோன்றுகிறது. சந்திரன் இன்று புனர்வஸூவில் இருப்பதாயும் புஷ்யத்திற்கு நாளைப்போவதாயும்,அபிஷேகத்திற்குஅதே தகுந்த ஸமயமென்றும் நிபுணர்கள் சொல்லுகிறார்கள். உத்தேசித்த காரியத்தை நாளைக்கே முடிக்க வேண்டும். ஆகையால் இன்று ராத்திரி நீயும் ஸீதையும்தர்ப்பம் பரப்பியதரையில் படுத்துக்கொண்டு உபவாஸமிருக்கவேண்டும். இவ்விதமான காரியங்களுக்குப் பலவகை இடையூறுகள் நேரும். உன் மித்திரர்கள் இன்று உன்னை ஜாக்கிரதையாகக் காப்பாற்றட்டும். உன் தம்பி பரதன் வெகு நல்ல எண்ணமுள்ளவனே; இந்திரியங்களை ஜயித்தவன்; தயையுள்ளவன். ஆனாலும் அவன் அம்மான்வீட்டுக்குப் போய்வெகுநாளாயிற்று.ஸாதுக்களாயும் தர்மசிந்தையுள்ளவர்களாயும் பிறரால் கலைக்க முடியாதவர்களாயும் இருப்பவர்களின் மனதும் மாறிவிடும். ஆகையால் பரதன் ஊருக்கு வருவதற்கு முன் இந்தக் காரியத்தை முடிப்பது நல்லது'' என்று சொல்லி ராமனுக்கு விடைகொடுத்தார். அவர் பிதாவுக்கு நமஸ்காரம் செய்து தன் அரண்மனைக்குப் போனார்.

பிறகு அரசனால் சொல்லப்பட்ட விஷயத்தைத் தன் தாய்க்குத் தெரிவிக்க விரும்பி, உடனே அவளுடைய அந்தப்புரத்திற்குப் போனார். அங்கே கௌஸல்யை, புஷ்யநக்ஷத்திரம் கூடிய சுபதினத்தில் ராமனுக்கு அபிஷேகம் நடக்கப்போகிறதென்று கேட்டு, பட்டாடை தரித்துக்கொண்டு சுத்தமாய்த் தன் இஷ்ட தேவதையை நினைத்து மௌனமாகக் கண்களை மூடிக்கொண்டு, ராமனுக்கு ராஜ்யலக்ஷ்மி கிடைக்க வேண்டுமென்று பிரார்த்தித்து, பிராணாயாமத்தால் மஹாவிஷ்ணுவை த்யானம் செய்துகொண்டிருந்தாள். ஸுமித்திரையும் லக்ஷ்மணனும் ஸீதையும் கூடவிருந்தார்கள்,



அப்பொழுது ராமன் அவ்வளவு நியமத்துடனிருக்கும் தன் தாயை வணங்கி "அம்மா! ஜனங்களை நான் ஆண்டு வரவேண்டுமென்றும் ராஜ்யத்தை எனக்கு நாளை கொடுக்கப் போகிறேனென்றும், ஸீதையும் நானும் இன்று ராத்திரி உபவாஸ மிருக்க வேண்டுமென்றும் ரித்விக்குகள் உபாத்யாயர்கள் மூலமாகப் பிதா செய்த கட்டளைப்படி, நாளை நடக்கும் அபிஷேகத்திற்காக வேண்டிய மங்கள காரியங்களை எனக்கும் ஸீதைக்கும் செய்வியுங்கள்'' என்றார். அப்பொழுது கௌஸல்யை வெகு காலமாய் எதிர்பார்த்திருந்த அந்த வார்த்தையைக் கேட்டு, "குழந்தாய்! ராம! சிரஞ்ஜீவியாயிரு. உன் எதிரிகள் நாசமடையட்டும். நீ ராஜ்யத்தை அடைந்து என் பந்துக்களையும் ஸுமித்திரையின் பந்துக்களையும் ஸந்தோஷப்படுத்து. உன் பிதாவான தசரதர் உன் குணங்களால் ஸந்தோஷமடைந்தார். நல்ல நக்ஷத்திரத்தில் பிறந்தாய். வெகு காலமாய் மஹாவிஷ்ணுவைக் குறித்து நான் செய்துவரும் விரதம் முதலிய தபஸே உனக்கு இக்ஷ்வாகு ராஜ்யம் கிடைக்கச் செய்தது. வெகு ஸந்தோஷமடைந்தேன்'' என்றாள்.

பிறகு ராமன் பக்கத்தில் கைகூப்பி வணக்கமாய் நிற்கும் லக்ஷ்மணனைப் பார்த்துப் புன் சிரிப்புடன் "என் இரண்டாவது பிராணனாகிற உனக்காகவே இந்த ராஜ்ய லக்ஷ்மி எனக்குக் கிடைத்திருக்கிறது. ஆகையால் ராஜ்யபாலனம் செய்வது உன் வேலை. ஸுமித்திரையின் உத்தரவுப்படி இஷ்டமான போகங்களையும் விலையற்ற ரத்னாபரணங்கள் வஸ்திரங்கள் முதலியவைகளையும் அனுபவிக்கலாம். இந்த ராஜ்யமும் நான் பிழைத்திருப்பதும் எல்லாம் உனக்காகவே'' என்றார்.

பிறகு ஸீதையும் ராமனும் பெரியோர்களை வணங்கி அனுமதி பெற்றுத் தங்கள் அரண்மனைக்குப் போனார்கள்.

இத்யுக்த்வா லக்ஷ்மணம் ராமோ மாதரா வபி4வாத்3ய ச |
அப்4யநுஜ்ஞாப்ய ஸீதாம் ச ஜக3ாம ஸ்வம் நிவேஶநம் || (45)

---

## ஸர்க்கம் 5

# வஸிஷ்டர் ராமனிடத்திற்குப் போனது

---

ஸந்தி3ஶ்ய ராமம் ந்ருபதி: ஶ்வோபா4விந் யபி4ஷேசநே |
புரோஹிதம் ஸமாஹூய வஸிஷ்ட2 மித3 மப்3ரவீத் || (1)

ராமனை வீட்டிற்கனுப்பிவிட்டு, மறுநாள் நடக்கவேண்டிய அபிஷேகத்திற்காகத் தசரதர் புரோஹிதரை நோக்கி, "மஹரிஷே! ஸம்பத்து ராஜ்யம் முதலியவை ராமனுக்குக் கிடைக்கும்படி, இன்று செய்யவேண்டிய விரதம் உபவாஸம் முதலியவைகளை அவன் தன் பத்தினியுடன் தவறாமல் அனுஷ்டிக்க வேண்டும்; அதற்காகத்

தாங்கள் அவனுடைய அரண்மனைக்குப் போய் ஏற்பாடு செய்ய ப்ரார்த்திக்கிறேன்" என்றார்.

எல்லா மந்திரங்களை அறிந்தவரும் பலவகையான விரதங்களை செய்தவருமான வஸிஷ்டர், அப்படியே செய்கிறேனென்று, பிராம்மணர்களுக்குத் தகுந்த தேரிலேறி, வெளுத்த மேகத்தைப் போல் விளங்கும் ராமனுடைய அரண்மனையில் மூன்று கட்டுகள் வரையில் ரதத்தில் போனார்.

ராமன் அவருடைய வரவை அறிந்து, அவருக்கு உபசாரம் செய்யச் சீக்கிரமாய் வெகு பரபரப்புடன் ரதத்தின் சமீபத்தில் வந்து கைலாகு கொடுத்து, முனிசிரேஷ்டரைத் தேரிலிருந்து இறக்கினார். தன்னை வணங்கி நிற்கும் ராமனை நோக்கி வஸிஷ்டர் க்ஷேமம் விசாரித்து, "உன் பிதா உன்னிடத்தில் ஸந்தோஷமடைந்து, நஹுஷன் யயாதிக்கு அபிஷேகம் செய்ததுபோல், நாளை இந்த ராஜ்யத்தை உனக்குக் கொடுக்கப்போகிறார். அதற்காக நீயும் ஸீதையும் இன்று உபவாஸமிருக்க வேண்டும்" என்று அவருக்கு பிரியமான வார்த்தைகளைச் சொல்லி, விதிப்படி மந்திரபூர்வகமாய் உபவாஸமிருக்கச் செய்தார். பிறகு ராமனால் முறைதவறாமல் உபசரிக்கப்பட்டு அவருக்கு விடைகொடுத்து அங்கிருந்து புறப்பட்டார்.

எப்பொழுதும் தனக்கு பிரியமான வார்த்தைகளைச் சொல்லும் மித்திரர்களுடன் ராமன் சிலநேரம் பேசிக்கொண்டிருந்து, அவர்களால் பூஜிக்கப்பட்டு, அவர்களுக்கு விடைகொடுத்தபின், அந்தப்புரத்திற்குப் போனார். அப்பொழுது மலர்ந்த தாமரைகளாலும், அவைகளிலுள்ள தேனைக் குடித்து மதங்கொண்ட பக்ஷிகளாலும், அழகிய தாமரையோடை விளங்குவதுபோல், ராமனுடைய அந்தப்புரம் வெகு ஸந்தோஷமடைந்த ஆண் பெண்களால் விளங்கிற்று.

பிறகு வஸிஷ்டர் அரசனுடைய அரண்மனைபோன்ற ராமனுடைய கிருஹத்திலிருந்து வெளியில் வந்து ராஜவீதியில் போகையில், அங்கே ஜனங்கள் கும்பல் கும்பலாக வெகு குதூஹலத்துடன் இடைவிடாமல் நிற்கக்கண்டார். வெகு ஸந்தோஷமாய் ஒருவரோடொருவர் பேசும் சப்தம் அலைகள் ஒன்றோடொன்று மோதியதாலுண்டாகும் த்வனியைப் போலிருந்தது. அன்று அந்த நகரத்தில் எல்லா வீடுகளிலும் த்வஜங்கள் எடுத்துக் கட்டப்பட்டன. வீதிகள் குப்பையில்லாமல் சுத்தம் செய்யப்பட்டு, ஜலம் தெளித்து அழகாயிருந்தன. மேலும், எங்கும் வாழை கமுகு முதலிய குலைகளால் அலங்கரிக்கப்பட்டிருந்தது. அந் நகரத்தில் வஸிக்கும் பெண்கள் குழந்தைகள் வயது சென்றவர்கள் முதலிய எல்லா ஜனங்களும், தங்களுக்கு அலங்காரமாயும் ஸந்தோஷத்தை விருத்தி செய்வதாயும் இருக்கும் அந்த மஹோத்ஸவத்தை அனுபவிக்க ஆசைகொண்டு, ஸூரியோதயத்தை எதிர்பார்த்திருந்தார்கள். இப்படியிருக்கும் ராஜவீதியைப் பார்த்துக்கொண்டு, அங்கே கூடியிருக்கும் ஜனங்களுக்கு நடுவில் வஸிஷ்டர் இருபக்கத்திலும் அவர்களை ஒதுக்கிக்



கும்பலாய் நிற்கச் செய்பவரைப்போல் மெள்ள மெள்ள அரசனுடைய அரண்மனைக்கு வந்தார். வெண்மையான மேகம் போன்ற மாடிமேலேறி அங்கே தேவகுரு இந்திரனைப் பார்த்தது போல் தசரதரைக் கண்டார்.

அரசன் உடனே ஸிம்ஹாஸனத்திலிருந்து எழுந்திருக்க அப்பொழுது அவருடன் ஸபையில் உட்கார்ந்திருந்த எல்லோரும் எழுந்து மஹரிஷியை உபசரித்தார்கள். அரசன் "ராமனுக்கு உபவாஸம் செய்வித்தாயிற்றா" என, "ஆயிற்று" என்று வஸிஷ்டர் பதிலுரைத்தார்.

பிறகு அரசன் புரோஹிதரிடத்தில் விடைபெற்று, அங்குள்ளவர்களை விடை கொடுத்தனுப்பிவிட்டு, ஸிம்ஹம் தன் மலைக்குகையில் புகுவதுபோல் அந்தப்புரத்தில் பிரவேசித்தார். அப்பொழுது வெகு அழகாக அலங்கரிக்கப்பட்ட பெண்களால் நிறைந்து, மஹேந்திரனுடைய கிருஹத்தைப்போன்ற அந்த அரண்மனை, பல நக்ஷத்திரங்கள் நிறைந்த ஆகாசம் சந்திரனுடைய காந்தியால் விளங்குவது போல், தசரதருடைய தேககாந்தியால் பிரகாசித்தது.

தத3க்3ர்ய வேஷ ப்ரமத3ா ஜநாகுலம்
மஹேந்த்3ர வேஶ்ம ப்ரதிமம் நிவேஶநம் |
விதீ3பயம்ஶ்சாரு விவேஶ பார்தி2வ:
ஶஶீவ தாராக3ண ஸங்குலம் நப4: || (26)

## ஸர்க்கம் 6

# ராமன் அபிஷேகத்திற்கு ஸித்தமானது

க3தே புரோஹிதே ராம: ஸ்நாதோ நியதமாநஸ: |
ஸஹ பத்ந்யா விஶாலாக்ஷ்யா நாராயண முபாக3மத் || (1)

புரோஹிதர் சொன்னபடி ராமன் ஸ்நானம் செய்து, சுத்தமான மனத்துடன் விசாலமான நேத்திரங்களையுடைய ஸீதையோடு ஸ்ரீமந் நாராயணனை உபாஸித்தார். அவரை உத்தேசித்து, ஹவிஸ் நிறைந்த பாத்திரத்தை உயரத் தூக்கி, மந்திரங்களை விதிப்படி உச்சரித்து, ஜ்வலிக்கும் அக்னியில் ஹோமம் செய்து, அதன் மிகுதியையும் தனக்கு க்ஷேமத்தை உண்டுபண்ணக்கூடியதும் மிகவும் பிரியமுமான நெய்யாகிற ஹவிஸையும் புஜித்து, ஆசமனம் செய்து தர்ப்பாஸனத்தில் ஸீதையுடன் மனத்தை அடக்கிக்கொண்டு மௌனமாக, தன் வீட்டிலிருக்கும் ஸ்ரீரங்கநாத ஸ்வாமியின் அழகான பூஜாகிருஹத்தில் தூங்கினார்.

ஸூரியோதயத்திற்கு ஒரு ஜாமம் முன்பே விழித்துக்கொண்டு, கிருஹத்தை நன்றாக அலங்கரிக்கச் செய்தார். அப்பொழுது ஸூத மாகத வந்தி முதலியவர்கள் மதுரமான வார்த்தைகளால் ராமனைத்

துதித்தார்கள், அவர் காலையில் ஸந்த்யா வந்தனம் செய்து ஒரே மனத்துடன் காயத்ரீ மஹாமந்திரத்தை ஜபித்து, சுத்தமான புது வஸ்திரம் உடுத்தி, நமஸ்காரம் ஸ்தோத்திரம் முதலியவைகளால் மஹாவிஷ்ணுவைப் பூஜித்து, பிராம்மணர்களை ஸ்வஸ்தி வாசனம் செய்யச் சொன்னார். கம்பீரமாயும் மதுரமாயுமிருந்த பிராம்மணர்களின் புண்யாஹவாசன சப்தமும் வாத்யகோஷமும் நகரமெங்கும் பரவிற்று.

எல்லா ஜனங்களும் அபிஷேகத்திற்காக ராமன் ஸீதையுடன் முதல் நாள் உபவாஸமிருப்பதைக் கேட்டு, மறுநாள் நிச்சயமாய் அபிஷேகம் நடக்குமென்று மகிழ்ந்தார்கள். மேலும், பொழுது விடிந்தவுடன் அந்த உத்ஸவத்திற்காக நகரத்தில் செய்யவேண்டிய அலங்காரங்களைச் செய்து முடித்தார்கள். வெண்மையான மேகங்களைப் போன்ற தேவாலயங்கள், நாற்சந்தி மண்டபங்கள், வீதிகள், புத்தர்களின் ஆலயங்கள், மதிள்சுவர்களின்மீது கட்டப்பட்ட நாற்கால் மண்டபங்கள், பலவகையான சிறந்த வஸ்துக்களால் நிறைந்த வியாபாரிகளின் கடைகள் விசேஷ தனவான்களான குடும்பிகளின் ஸகல ஐசுவரியம் பொருந்தின வீடுகள், மரங்கள் ஸபைகள் முதலிய உயரமான விடங்களில் வெவ்வேறு அடையாளமுள்ள த்வஜங்களும் அவையில்லாத த்வஜங்களும் எடுத்துக் கட்டப்பட்டன. அபிநயம் செய்யும் நட்டுவர்கள் அபிநயமின்றி நர்த்தனம் செய்பவர்கள், பாடகர்கள் இவர்கள் பாடும் பாட்டு காதிற்கும் மனத்திற்கும் இனிமையாக எங்கும் கேட்கப்பட்டது.

ராமனுக்கு அபிஷேககாலம் நெருங்கினபொழுது ஜனங்கள் நாற்சந்திகளிலும் ஸ்த்ரீகள் வீடுகளிலும் அதைப்பற்றிப் பேசிக் கொண்டிருந்தார்கள். வீட்டுவாசலில் கூட்டம் கூட்டமாய் விளையாடும் குழந்தைகளும் அபிஷேகக் கதையையே சொல்லிக் கொண்டு காலம் போக்கின.

ராஜவீதி, புஷ்பங்கள் தூவப்பட்டு, தூபங்கள் போடப்பட்டு நேர்த்தியான மணமுள்ளதாகவும் அழகுள்ளதாகவும் செய்யப்பட்டது' எல்லா வீதிகளிலும் பந்தல்போட்டு மேல்விரிப்புகளைக் கட்டி, வாழை தென்னை பாக்குக் குலைகள் தொங்க விடப்பட்டிருந்தன. இரவில் பிரகாசத்திற்காக தீபஸ்தம்பங்கள் அங்கங்கே நாட்டப்பட்டன. இப்படி நகரத்தில் செய்யவேண்டியவைகளைச் செய்துவிட்டு, ஜனங்கள் ராமனுடைய அபிஷேக மஹோத்ஸவத்தை எதிர்பார்த்துக்கொண்டு, வீதிகளிலும் நாற்சந்தி மண்டபங்களிலும்கூட்டம்கூடி "இக்ஷ்வாகு குலத்தில்பிறந்த தசரதமஹாராஜா தனக்குக் கிழத்தனம் வந்துவிட்டதென்று தன் புத்திரனை ராமனை ஸமயமறிந்து ராஜ்யாபிஷேகம் செய்யப்போகிறார். ராமன் நம் மெல்லோருக்கும் அரசனைகப் போகிறபடியால் நாம் தேவதைகளின் கிருபையைப் பெற்றோம். ராமன் உலகத்தில் இது உயர்ந்தது, இது தாழ்ந்ததென்று நன்குயறிந்தவர்; கர்வமற்றவர்; வித்வான்; தர்ம



ஸ்வபாவமுள்ளவர்; தன் சகோதரர்களிடத்தில் வெகு பிரீதியுள்ளவர்; ஆகையால் நம்மையும் உடன் பிறந்தவர்களைப்போல் விசுவாஸத்துடன் வெகுகாலம் வரையில் காப்பாற்றுவார். அவருடைய அபிஷேகத்தைப்பார்க்கும்படிசெய்யும் தர்மசிந்தையுள்ள தசரத மஹாராஜனை புண்ணியசாலி வெகுகாலம் ஸுகமாக வாழட்டும்." என்று அரசனைக் கொண்டாடினார்கள். அப்பொழுது அங்கே ஜனங்களின்சப்தம் பர்வகாலங்களில் பொங்கும் ஸமுத்திரத்தின் ஓசையைப் போலிருந்தது. இந்திரனுடைய கிருஹத்தைப்போல் வெகு அழகான அந்த நகரமென்ற ஸமுத்திரம், ராமாபிஷேகத்தைப் பார்க்கப் பல திசைகளிலிருந்து வந்த ஜனங்களென்ற ஜல ஜந்துக்களால் நிறைந்து அவர்கள் இப்படிப் பேசும் த்வனியால் பர்வ காலங்களில் இரைவது போல் கோஷித்துக் கோண்டிருந்தது.

ததஸ் ததி3ந்த்3ரக்ஷய ஸந்நிப4ம் புரம்
தி3த்3ருக்ஷுபி4ர் ஜாநபதை3 ருபாக3தை: |
ஸமந்தத: ஸஸ்வந மாகுலம் ப3பௌ4
ஸமுத்3ர யாதோ3பி4 ரிவார்ணவோத3கம் ‖ (28)

---

## ஸர்க்கம் 7

# மந்தரை கைகேயியைக் கலைத்தது

---

ஜ்ஞாதி தா3ஸீ யதோ ஜாதா கைகேய்யாஸ்து ஸஹோஷிதா |
ப்ராஸாத3ம் சந்த்3ர ஸங்காஶம் ஆருரோஹ யத்3ருச்ச2யா ‖ (1)

ஏதோ ஒரு தேசத்திலுண்டானவளும், தாய் தந்தை இன்னாரென்று தெரியாதவளும், கைகேயியுடன் வெகுகாலமாக வஸிப்பவளும், கேகய ராஜன் வீட்டிலிருந்து வந்த வேலைக்காரியுமான மந்தரை என்பவள், சந்திரன்போல் வெண்மையான மாடியில்தெய்வச் செயலாக ஏறி அயோத்யா நகரத்தை முழுவதும் பார்த்தாள். ராஜவீதிகள் குப்பையில்லாமல் சுத்தம் செய்து ஜலம் தெளித்து அலங்கரிக்கப்பட்டிருந்தன. சிறந்த கொடிகளும் த்வஜங்களும் எடுத்துக் கட்டப்பட்டிருந்தன. உத்ஸவ காலத்தில் ஜனக்கூட்டம் அதிகமாகையால் அவர்கள் நகரத்தில் போய்வருவதற்கு அனுகூலமாக மதிள் சுவரை இடித்து வழிகள் செய்யப்பட்டிருந்தன. ஜனங்கள் மங்கள ஸ்நானம் செய்து அழகாக அலங்கரித்துக் கொண்டிருந்தார்கள். கையில் புஷ்பமாலைகளையும் மோதகங்கள் முதலிய காணிக்கைபதார்த்தங்களையும் ராமனுக்காக வைத்துக்கொண்டுபிராம்மணர்கள்வேத பாராயணம் செய்துகொண்டிருந்தார்கள். வாத்யகோஷம் எங்கும் கேட்கப்பட்டது. ஜனங்கள் வெகு ஸந்தோஷத்துடன் கூட்டம் கூட்டமாக எங்கும் நின்று கொண்டிருந்தார்கள். யானை குதிரை பசு காளை முதலியவைகளும் ஆனந்தமாய் சப்தித்துக் கொண்டிருந்தன.

தேவாலயங்களின் வாசல்கள் வெள்ளையடிக்கப்பட்டிருந்தன. இதை பார்த்து மந்தரை மிகவும் ஆச்சரியமடைந்தாள்.

அதிக ஸந்தோஷத்தால் மலர்ந்த கண்களுடன் வெண்பட்டை அணிந்து ஸமீபத்தில் நின்ற ஒரு தாதியை மந்தரை, "அடி! கௌஸல்யை தனத்தைச் சேர்ப்பதில் அதிகபிரியமுள்ளவளாயிற்றே. மேன்மேலும் விருத்தியை உத்தேசித்து, ஜனங்களுக்கு ஏன் தனத்தைக் கொடுக்கிறாள்? அவளுக்கு இவ்வளவு ஸந்தோஷம் உண்டான காரணம் என்ன? அரசன் ஸந்தோஷமடைந்து என்ன செய்யப் போகிறார்?" என்றாள்.

அந்தத் தாதி அடங்கா மகிழ்ச்சி கொண்டு "கோபம் முதலியவைகளை ஜயித்துப் பாபமற்றவரும், பட்டாபிஷேகத்திற்குத் தகுந்த குணசாலியுமான ராமனுக்கு நாளை புஷ்ய நக்ஷத்திரத்தில் யௌவ ராஜ்யாபிஷேகம் செய்ய மஹாராஜா நிச்சயித்திருக்கிறார். ஜனங்கள் இவ்வளவு ஆனந்தமடைவதற்கு அதே காரணம்" என்றாள்.

அதைக் கேட்ட மந்தரைக்கு மிகுந்த பொறாமை பிறந்தது. கைலாஸ சிகரத்தைப் போன்ற மாடியிலிருந்து வேகமாக இறங்கி, கெட்ட எண்ணம் மேலிட்டு, கோபாக்னியால் எரிபட்டு, கைகேயி படுத்திருக்குமிடத்திற்கு வந்து, "அடி, ஒன்றும் அறியாதவளே! என்ன தூக்கம்? எழுந்திரு. உனக்கும் பெரும் பயம் வந்துவிட்டது. உன்னைப் பிடிக்கப்போகும் துக்கங்களை ஏன் தெரிந்துகொள்ளவில்லை? நீயே பாக்கியசாலியென்றும் அதனால் அரசனுக்கு வேண்டியவளென்றும் உன்னைப் புகழ்ந்துகொள்ளுகிறாய். அவனுக்கு உன்னிடத்தில் உண்மையான பிரியமில்லை என்று எனக்கு நன்றாகத் தெரியும். ஆற்றில் ஜலம் கோடையில் வற்றுவதுபோல், உன் ஸௌபாக்கியம் நிலையற்றதே" என்றாள்.

இப்படிக் கெட்ட எண்ணத்துடன் மிகவும் கோபம்கொண்டு மந்தரை கடுமையான வார்த்தைகளைச் சொல்லக்கேட்டு, கைகேயிக்கு அதிக துன்பமுண்டாயிற்று. "அடி, மந்தரே! உனக்கு க்ஷேமக் குறைவு ஏதாவது நேர்ந்ததா? உன் முகம் வாடியிருப்பதால் வெகு துக்கப்பட்டவளாகத் தோன்றுகிறது. என்ன காரணம்?" என்றாள்.

இப்படி மதுரமாய்க் கேட்ட கைகேயியைப்பார்த்து, ராமனுக்கு நடக்கும் அபிஷேகத்தைப்பற்றி அவள் விசாரிக்காததால் மந்தரைக்குக் கோபம் பொங்கிற்று. பேசும் திறமையுள்ளவளாகையால் கைகேயிக்கு ராமனிடத்திலுள்ள பிரியத்தைக் குறைத்து தன் புத்திரனுக்கு ராஜ்யம் கிடைக்காததால் அவள் துக்கமடையும்படி செய்ய அவளுடைய க்ஷேமத்தை விரும்பியவளாக, "தேவி! மஹாராஜா ராமனுக்கு யௌவராஜ்ய அபிஷேகம் செய்யப்போகிறார். ஆகையால் உனக்கு பெரிய ஆபத்து நேர்ந்துவிட்டது. இதைத் தடுப்பது இப்பொழுது ஸாத்தியமல்ல; உன்னிடத்தில் எனக்கு அந்தரங்கப் பிரியம் உண்டல்லவா; ஆழம் தெரியாத துக்கக் கடலில் மூழ்கி, நெருப்பின் நடுவில் அகப்பட்டுக் கொண்டவளைப்போல் தவித்து, உனக்கு அனுகூலம்



செய்ய உன்னிடத்தில் வந்தேன். நீ க்ஷேமமாயிருந்தால் எனக்கும் க்ஷேமம். உன் க்ஷேமம் குறைந்தால் நான் பெருந்துக்கத்தை அனுபவிக்கவேண்டும். நீ ராஜவம்சத்தில் பிறந்தவள்; அரசனுடைய மஹிஷி. ஆனால் ராஜதர்மம் வெகு கடுமை என்பது ஏன் தெரியவில்லை? நீயோ நல்ல மனமுள்ளவள். உன் புருஷனோ மஹாவஞ்சகன்; தர்ம சிந்தையுள்ளவனைப்போல் வேஷம் போடுகிறான். பிரியமாகப் பேசுகிறான்; ஆனால் குரூரமான நடத்தையுடையவன். இது எனக்குத் தெரியும். உண்மையில் உனக்குக் கெடுதியை உண்டாக்கும்வார்த்தைகளை ஹிதம்போல் ஸமயத்திற்குத் தக்கபடி பேசிக் கொண்டிருந்தானல்லவா? இப்பொழுது கௌஸல்யையின் மகனான ராமனுக்கு ராஜ்யத்தைக் கொடுத்து அபிவிருத்தி செய்யப்போகிறான்.

"வரும் கெடுதியை அறியாத முட்டாளே! அரசனுடைய கெட்ட எண்ணம் தெரிந்ததா? பரதனை உன் தகப்பன் வீட்டிற்கு அனுப்பி விட்டான். நாளை காலையில் ராமனுக்கு அபிஷேகம் செய்ய நிச்சயித்து விட்டான். அவன் உனக்குப் புருஷனென்று பெயர் மாத்திரமே. அவன் உனக்கு ஜன்ம சத்துரு. ஆகையால் அவனை நீ இதுவரையிலேயே விட்டிருக்கவேண்டும். அப்படிச் செய்யவில்லை. பாம்புக்குட்டியின் அழகைக்கண்டு ஆசைப்பட்டு, அது விஷ ஜந்து என்பதை மறந்து, அதை மடியில் வைத்துக்கொண்டு கொஞ்சி விளையாடும் பெண்ணைப்போல், நீயும் கபடமின்றி, உண்மையில் உன் சத்ருவும், வெளிப் பார்வைக்குமாத்திரம் உனக்குப் பிரியமாகவும் அனுகூலபர்த்தாவாகவும் நடிக்கும் தசரதனை முற்றிலும் நம்பி, அவனிடத்தில் எல்லையற்ற பிரீதிவைத்திருக்கிறாய். பாம்பையும் சத்ருவையும் கவனிக்காவிட்டால் அவை என்ன செய்யும்? அதே இன்றைக்கு உனக்கும் உன் புத்திரனுக்கும் தசரதனால் நேரும். கபடமற்றவளே! நீ எப்பொழுதும் ஸுகத்தை அனுபவிக்கத் தகுந்தவள். அப்படியிருக்க, உனக்கு ஹிதத்தையே தேடுகிறவனைப் போலப் பாசாங்கு செய்யும் மஹா பாபியான தசரதன், ராமனுக்கு அபிஷேகம் செய்து, உன்னையும் உன் குழந்தையையும் பந்துக்களையும் நிர்மூலம் செய்வான். செய்ய வேண்டியதை இப்பொழுதே தாமதமின்றிச் செய். இனியாவது மோசம் போகாதே. அவனை வசப்படுத்தும் சக்தி உனக்குண்டல்லவா. அதை உபயோகித்து உன் புத்திரனையும் உன்னையும் என்னையும் காப்பாற்று" என்றாள்.

படுத்துக்கொண்டிருந்த கைகேயி இதைக் கேட்டு, ராமாபிஷேக ஸமாசாரத்தால் மிகுந்த ஸந்தோஷமடைந்தாள். சரத்காலத்து சந்திரனைப்போல் அழகுள்ள முகத்துடன், ராமனுக்கு ராஜ்யம் கிடைத்தால் தனக்கு அனுகூலமென்று நினைத்துப் படுக்கையை விட்டெழுந்தாள். வெகு காலமாக எதிர்பார்த்திருந்த ஸந்தோஷகரமான காரியம் தெய்வச் செயலாக ஸமீபத்ததென்று ஆச்சரியமும் ஆனந்தமும் உண்டாயிற்று. ஒரு விலையுயர்ந்த ரத்னாபரணத்தை மந்தரைக்கு வெகுமதியாகக் கொடுத்து, "ராமனிடத்திலும் பரத

னிடத்திலும் எனக்கு பேதபுத்தி இல்லை. ஆகையால் அரசன் ராமனுக்கு அபிஷேகம் செய்வதைப் பற்றி எனக்கு வெகு ஸந்தோஷம். இதைக் காட்டிலும் எனக்குப் பிரியமான விஷயம் வேறொன்றுமில்லை. இதைச் சொன்ன உனக்கு நான் என்ன செய்யட்டும். எதைக் கேட்டாலும் கொடுக்கத் தயாராக இருக்கிறேன்'' என்றாள்.

ந மே பரம் கிஞ்சித$^{3}$தஸ் த்வயா புந:
ப்ரியம் ப்ரியார்ஹே ஸுவசம் வச: பரம் |
ததா$^{2}$ ஹ்யவோசஸ் த்வமத: ப்ரியோத்தரம்
பரம் வரம் தே ப்ரத$^{3}$தா$^{3}$மி தம் வ்ருணு ‖ (36)

---

## ஸர்க்கம் 8

## மந்தரை கைகேயியைக் கலைத்தது

---

மந்த$^{2}$ரா த்வப்$^{4}$யஸூயைநா முத்ஸ்ருஜ்யாப$^{4}$ரணம் ச தத் |
உவாசேத$^{3}$ம் ததோ வாக்யம் கோபது$^{3}$க்க$^{2}$ ஸமந்விதா ‖ (1)

அதைக் கேட்டு மந்தரைக்குக் கைகேயியிடத்தில் அஸூயை பிறந்தது. தான் அவளுக்கு ஹிதமாகச் சொன்ன வார்த்தையைக் கேட்கவில்லையென்று கோபமும், ஆபத்து நேரப் போகிறதே என்ற துக்கமும் பொங்க, "அடி! அறிவற்றவளே! துக்கக் கடலின் நடுவில் நீ தத்தளிக்கிறாயென்று உனக்குத் தெரியவில்லையே. தகாத காலத்தில் என்ன ஸந்தோஷமோ எனக்குத் தெரியவில்லை. ராமாபிஷேகமென்ற பெரிய துக்கம் நேர்ந்துவிட்டது. நீயும் துக்கப்படவேண்டும். ஸந்தோஷப்படுகிறாயே. அதைக் காணக் காண எனக்குத் துக்கம் அடங்கவில்லை. பைத்தியம் பிடித்த யஜமானனைப் பார்ப்பது போல் உன்னைப் பார்க்கும்போதெல்லாம் எனக்குச் சிரிப்பு வருகிறது. ராமன் உனக்கு சக்களத்தி பிள்ளையல்லவா? அவன் உனக்கு யமனல்லவா? அவனுக்கு உண்டாகும் பெருமையைப் பற்றி புத்தியுள்ளவள் கொஞ்சமாவது ஸந்தோஷப்படுவாளா? உனக்குப் பிடித்திருக்கும் துர்ப்புத்தியை நினைத்தால் எனக்குத் துக்கம் அதிகரிக்கிறது. என்ன ஆபத்து நேரப்போகிறதென்றால் சொல்லுகிறேன், கேள்.

"இந்த ராஜ்யம் ராமனுக்கும் பரதனுக்கும் பொதுவல்லவா? ஆகையால் பரதனால் ராமனுக்குப் பெரும் பயம் நேரும். அதை நினைக்கும்பொழுதே எனக்கு மிகுந்த துக்கமுண்டாகிறது. ராமனுக்குப் பயமானால் பரதனுக்குக் கெடுதி என்னவென்று கேட்கிறாயோ? லோகத்தில் பாம்பு புலி முதலிய துஷ்ட ஜந்துக்கள் நம்மைக் கண்டு பயந்து, அவைகளை நாம் எங்கே கொன்று விடுவோமோ என்று முந்தியே நம்மைக் கொல்லப் பார்க்கின்றன. அப்படி, பரதனிடத்தில் பயப்படும் ராமனாலேயே பரதனுக்குக் கெடுதி நேரும். லக்ஷ்மணனுக்கும் சத்ருக்னனுக்கும் இந்த ராஜ்யம் பொதுவானாலும் மஹா பராக்கிரமசாலியான லக்ஷ்மணன், ராமனை மனோ வாக்குக் காயங்களால் எப்பொழுதும் ஆசிரயித்திருக்கிறபடியால் ராமனுக்கு அவனிடத்தில் பயமில்லை. அதே காரணத்தால் பரதனுக்குச் சத்ருக்னனால் பயமில்லை. 'லக்ஷ்மணனும் சத்ருக்னனும் தங்களுடைய ஸஹோதரர்களை ஆசிரயித்திருந்தாலும் ராஜ்யத்தை ஆளவேண்டுமென்ற ஆசை எல்லோருக்கும் இருக்குமல்லவா' என்றால், ராமன் முந்திப் பிறந்தவன்; ராஜ்யம் முதலில் அவனுக்குக் கிடைக்கும்; பிறகு வரிசையாகப் பிறந்த லக்ஷ்மண சத்ருக்னர்களுக்குக் கிரமமாகக் கிடைக்கும். ஆகையால் தனக்கு அடுத்த பாத்தியமுள்ள பரதனைக் கொல்லவே ராமன் முயல்வான். ஆனால் 'ராமனுக்கு முதலில் ராஜ்யம் கிடைக்கும்பொழுது பரதனுக்கு ராஜ்யம் கிடைக்குமோ' என்ற ஸந்தேகம் ராமனுக்கு உண்டாக நியாயமில்லையோ என்றால், ராமன் விவேகி; ராஜநீதியில் நிபுணன்; செய்யவேண்டிய காரியத்தைத் தகுந்த காலத்தில் செய்கிறவன். உன் புத்திரனான பரதன் மேற்சொன்ன குணங்களில்லாதவன். ராமன் என்ன செய்வானோ என்று நடுங்குகிறேன்.

கௌஸல்யை வெகு அதிருஷ்டசாலி; நாளை புஷ்ய நக்ஷத்திரத்தில் அவளுடைய புத்திரனான ராமன் பிராம்மண சிரேஷ்டர்களால் யுவராஜாவாக அபிஷேகம் செய்யப்படுவான். கௌஸல்யை விசேஷ ஐசுவரியத்தையும் கீர்த்தியையும் அடைந்து, சத்துருக்களில்லாமல் விளங்குவாள். அப்பொழுது நீ வேலைக்காரியைப் போல் கைகூப்பி அவளுக்குப் பணிவிடை செய்வாய். ஆகையால் கௌஸல்யையால் உனக்கும் அனர்த்தம் நேரும். நீ மாத்திரமல்ல; உன்னைச் சேர்ந்த நானும் மற்றவர்களும் அவளுக்கு ஊழியம் செய்யவேண்டும். உன் புத்திரனான பரதன் ராமனுக்கு அடிமையல்லவா? பரதனுக்கு ஐசுவரியம் குறையும்பொழுது அவனுடைய வேலைக்காரிகள் (உன் நாட்டுப் பெண்கள்) துக்கப்படுவார்கள். ராமனுடைய வேலைக்காரிகள் (உத்தமமான ஸ்த்ரீகள்) அதிகமாக ஸந்தோஷப்படுவார்கள்'' என்றாள்.

இப்படிப் பிறருடைய மனத்தைக் கலக்கும்படியான யுக்திகளை மந்தரை சொல்லியும் கலங்காத புத்தியையுடைய பெருந்தன்மை வாய்ந்த கைகேயி, ராமனிடத்தில் வெகு துவேஷத்துடன் பேசும் மந்தரையைப் பார்த்து ராமனுடைய குணங்களை வர்ணிக்க ஆரம்பித்தாள். ''ராமன் நீ சொல்லுகிறபடியிருந்தால் நீ ஏற்படுத்தும் தோஷங்களும் அவனிடத்திலிருக்கும். அப்படி இல்லவேயில்லை, அவன் தர்மத்தை அறிந்தவன்; பெரியவர்களால் பழக்கப்பட்டவன்; செய்த நன்றியை மறவாதவன்; ஸத்யம் தவறாதவன்; சுத்தன், தசரதருக்கு மூத்த புத்திரன். ஆகையால் யுவராஜாவாக ஆகத் தகுந்தவன்.

நீ சொன்னபடி ராமனுக்கும் அவனுடைய ஸஹோதரர்களுக்கும் இந்த ராஜ்யம் பொதுவென்ற காரணம் பொருந்தாது.

மேலும், தீர்க்காயுஸையுடைய ராமன், தகப்பன் பிள்ளையைக் காப்பாற்றுவதுபோல் தன் ஸஹோதரர்களையும் வேலைக்காரர்களையும் ப்ரீதியுடன் காப்பாற்றுகிறான். ஆகையால் ராமனிடத்திலிருந்து பரதனுக்குக் கொஞ்சம்கூட பயம் நேராது. அப்படியிருக்க ராமனுக்குப் பட்டாபிஷேகம் நடக்கப்போகிறதென்று கேட்டவுடன் ஏன் இப்படித் தவிக்கிறாய்?

ராமன் நூறு வருஷங்கள் வரையில் ஆண்ட பிறகு முன்னோர்களின் ராஜ்யம் பரதனுக்குக் கிடைப்பது நிச்சயம். ஆகையால் தனக்குப்பின் அரசனாகும் பரதனுக்கு இப்பொழுதே யௌவராஜ்யாபிஷேகம் செய்வான். நியாயமாக நடக்க வேண்டிய ராம பட்டாபிஷேக மஹோத்ஸவம் இப்பொழுது நடக்கும். இனி பரதனுக்கும் ராஜ்யாபிஷேகம் நடக்கும். இப்படியிருக்க உனக்கு ஏன் இவ்வளவு துக்கம்?

ராமனுக்கு அபிஷேகமானால் எனக்கு அபாயம் என்கிறாய்? ராமனிடத்தில் எனக்குப் ப்ரீதி அதிகம். அவனும் தன் தாயைக் காட்டிலும் என்னிடத்தில் அதிகம் பிரியமும் வணக்கமும் வைத்துப் பணிவிடைசெய்கிறான்.

நூறு வருஷங்களுக்குப் பிறகு பரதனுக்கு ஒருவேளை ராஜ்யம் கிடைக்காவிட்டாலும் போகட்டும். ராமனுக்கு ராஜ்யம் கிடைத்தால் பரதனுக்குக் கிடைத்ததுபோலல்லவா? ராமன் தன் உடன் பிறந்தவர்களைத் தன்னைப்போல் எண்ணுகிறான்'' என்றாள்.

மந்தரை அடங்காத் துயரம்கொண்டு உஷ்ணமாகப் பெருமூச்சுவிட்டு, "அடி, கெடுதியை நன்மையென்று நினைக்கிறவளே! பரதனுக்கு நியாயமாகக் கிடைக்கவேண்டிய ராஜ்யம் கிடைக்காமலிருப்பதும், அவன் ராஜ்யத்திலிருந்து துரத்தப்படுவதுமான கரை தெரியாத ஆபத்ஸமுத்திரத்தில் நீ மூழ்கிக்கொண்டிருக்கிறாயென்று உன் புத்திக் குறைவால் அறியவில்லை. நூறு வருஷங்களுக்குப் பிறகு பரதனுக்கு ராஜ்யம் வருமென்று உனக்குச் சொன்னவர் யார்? ராமன் நாளைக்கு அரசனாவான். அவனுக்குப் பிறகு பட்டம் அவனுடைய புத்திரனுக்குக் கிடைக்கும். ஆகையால் பரதனுக்கு அது கிடைக்க ஒரு பொழுதும் நியாயமில்லை. சீக்கிரத்தில் கோபிப்பவளே! ஒரு அரசனுக்குப் பிறக்கும் பிள்ளைகளெல்லோரும் பட்டத்திற்கு வருகிறதில்லை. அதனால் பெரிய அனர்த்தம் நேரும். அரசர்கள் மூத்த புத்திரனிடத்தில் மாத்திரமே குணசாலிகளான மற்ற புத்திரர்கள் இருக்கும்பொழுதும் ராஜ்ய காரியங்களை ஒப்புவிக்கிறார்கள்.

ராஜ்யம் கிடைக்காமற் போவது மாத்திரமல்ல. நீ எண்ணுவதுபோல் ராஜ்யாதிகாரத்தின் ஸுகமும் இப்பொழுது கிடைக்காது. பரதனிடத்தில் ப்ரீதியுள்ளவளே! உன் புத்திரன் ராஜவம்சத்திலிருந்தும், ராஜ்ய ஸுகத்திலிருந்தும் முற்றிலும் நீக்கப்படுவான், மூத்தவன் இருக்கும்பொழுது இளையவனுக்கு ராஜ்யம் கிடைக்காதல்லவா! அதற்கென்ன யுக்தியென்றால் அதைச் சொல்லவே வந்தேன்.



உனக்கோ அது தெரியவில்லை, சக்களத்தியின் பெருமையை உத்தேசித்து உன் ஸந்தோஷத்திற்கு அடையாளமாக எனக்கு ஆபரணத்தைக் கொடுக்க வருகிறாய். ராமன் இந்த ராஜ்யத்தைச் சத்ருபயமின்றி அடைந்த பிறகு பரதனைத் துரத்திவிடுவான். ஒருவேளை இவ்வுலகத்திலிருந்தே நீக்கிவிடுவான். இதற்கு அனுகூலமாய் நீயும்செய்த கெடுதி என்னவென்றால், பரதனை அவனுடைய அம்மான் வீட்டிற்கு அனுப்பிவிட்டாய். மரம் செடி முதலியவைகளும் பக்கத்திலிருப்பவைகளையே பிரியமாகத் தழுவுகின்றன. பரத சத்ருக்னர்கள் ஸமீபத்திலிருந்தால் அரசனுக்கு அவர்களிடத்தில் அதிகப் ப்ரீதியுண்டாகும். அதையும் நீயே கெடுத்துவிட்டாய். லக்ஷ்மணன் ராமனை அண்டியிருப்பதுபோல், பரதனை அண்டியிருக்கும் சத்ருக்னன் இங்கேயிருந்தால், பரதனில்லாவிட்டாலும் அவன் மூலமாகப் பரதனிடத்தில் அரசனுக்கு ப்ரீதியுண்டாகும். இப்பொழுது அதுவுமில்லை. விறகு விற்றுப் பிழைக்கும் சிலர், காட்டில் விறகுக்குத் தகுந்த ஒரு விருக்ஷத்தை வெட்டப் போகையில் அதைச் சுற்றி முட்கள் அடர்ந்த புதர்களைக் கண்டு அதை வெட்டவில்லையென்று கேட்டிருக்கிறேன். ராமன் லக்ஷ்மணனைக் காப்பாற்றுவான்; அவனும் ராமனையே காப்பாற்றுவான்; அவ்விருவர்களுக்குமுள்ள ஒற்றுமை அசுவினிதேவதைகளின் ஸ்நேஹத்தைப் போன்றதென்று லோகப்ரஸித்தம். ஆகையால் லக்ஷ்மணன் ராமனுக்குத் தீங்குசெய்ய நினைக்கவே மாட்டான். ராமனோ பரதனுக்குக் கெடுதி செய்யாமலிருக்கமாட்டான். ஆகையால் பரதன் அவனுடைய மாமன் வீட்டிலிருந்தே காட்டிற்குப் போகட்டும். இங்கே வந்தால் நிச்சயமாய் இறப்பான். ராஜ்யக்கிரமத்தில் பரதன் அரசனானால் உனக்கும் உன்னைச் சேர்ந்தவர்களுக்கும் விசேஷ மேன்மை. இது எனக்கு நல்லதென்று தோன்றுகிறது. உனக்கும் ஹிதம். ராமனுக்குச் சக்களத்திப் பிள்ளையாகையால் ஸ்வபாவ சத்ருவாயிருக்கும் உன் புத்திரனோ பாலன்; தனக்குக் கிடைக்க வேண்டிய ராஜ்யமும் போய் ஸகல இஷ்டங்களும் நிறைவேறின ராமனுடைய வசத்தில் அகப்பட்டு எப்படிப் பிழைப்பான்? காட்டில் ஸிம்ஹத்தால் துரத்தப்பட்டு, அதன் கையில் அகப்பட்ட மதயானையைப் போல் ராமனுடைய வசத்தில் அகப்பட்ட பரதனைக் காப்பாற்ற இதே ஸமயம்.

"தசரதனுக்குப் பிரியமானவளென்ற கர்வத்தால் இதுவரையில் நீ அவமதித்த கௌஸல்யை, இப்பொழுது தன் மகன் அரசனாய் வந்தபிறகு தன் மனத்திலிருக்கும் வைரத்தை ஏன் தீர்த்துக்கொள்ள மாட்டாள்? அதிகமாய்ச் சொல்வதில் பயனென்ன? ஸமுத்திரங்கள் சூழ, மலைகள் நகரங்கள் நிறைந்து விளங்கும் இந்தப் பூமிக்கு ராமன் எப்பொழுது அரசனாவானோ, அப்பொழுது நீயும் பரதனும் கெடுதியையும் அவமானத்தையும் அடைவது நிச்சயம். ராமனுக்கு ராஜ்யம் கிடைத்தால் பரதனுக்கு மரணம் கிடைப்பது நிச்சயம். ஆகையால் ராஜ்யம் உன் புத்திரனுக்கே கிடைப்பதற்கும் உன் சத்ருவான

ராமன் காட்டிற்குப் போவதற்கும் ஏதாவது உபாயம் செய்" என்றாள்.

யதா$^{3}$ஹி ராம: ப்ருதி$^{2}$வீ மவாப்ஸ்யதி
த்$^{4}$ருவம் ப்ரணஷ்டோ ப$^{4}$ரதோ ப$^{4}$விஷ்யதி |
அதோ ஹி ஸஞ்சிந்தய ராஜ்ய மாத்மஜே
பரஸ்ய சைவாத்$^{3}$ய விவாஸகாரணம் || (39)

## ஸர்க்கம் 9

# கைகேயி மந்தரைக்கு வசப்பட்டது

ஏவமுக்தா து கைகேயீ க்ரோதே$^{4}$ந ஜ்வலிதாநநா |
தீ$^{3}$ர்க$^{4}$ முஷ்ணம் விநிஶ்வஸ்ய மந்த$^{2}$ரா மித$^{3}$மப்$^{3}$ரவீத் || (1)

இதைக் கேட்ட கைகேயி, ராமனுடைய உத்தம குணங்களை நன்றாய் அறிந்தும், (தேவர்கள் தங்களுடைய காரியத்தை முடித்துக் கொள்ள விரும்பி அவளுடைய மனத்தைக் கெடுத்ததால்) மந்தரையின் காரணங்களை ஒப்புக் கொண்டாள். தான் கௌஸல்யைக்கு வேலைக்காரியாக இருக்கவேண்டுமென்ற எண்ணத்தால் கோபம், முகத்தில் ஜ்வலித்தது. உஷ்ணமாகப் பெருமூச்சு விட்டு, "அடீ மந்தரே! இந்த நிமிஷத்தில் ராமனைக் காட்டிற்குத் துரத்திப் பரதனுக்குப் பட்டம் கட்டுகிறேன். நீ கூர்மையான புத்தியுடையவள் என்று எனக்குத் தெரியும். பரதன் இப்பொழுதே ராஜ்யத்தை அடையவேண்டும். ராமனுக்கு அது ஒருக்காலும் கிடைக்கக்கூடாது. அதற்குத் தகுந்த உபாயத்தை ஆலோசனை செய்" என்றாள்.

உடனே மந்தரை ராமாபிஷேகத்தைக் கெடுக்க நிச்சயித்து, கைகேயி தான் சொன்னபடி செய்ய ஒப்புக் கொண்டதால் மிகவும் ஸந்தோஷித்து, "உன் புத்திரனுக்கு ராஜ்யம் கிடைக்கும் உபாயத்தையே இதோ சொல்லுகிறேன். ஆனால் என்னைக் கேட்கிறாயே, உனக்கு ஞாபகமில்லையா? ஞாபகமிருந்தும் மறைக்கிறாயா? உனக்கு ஹிதமான விஷயத்தை என்னிடத்திலிருந்து கேட்க விரும்புகிறாயா? அப்படியானால் சொல்லுகிறேன் கேள்; கேட்டு நன்றாக ஆலோசனை செய்" என்றாள்.

அப்பொழுது கைகேயி வெகு பரபரப்புடன் எழுந்து படுக்கையில் உட்கார்ந்தவாறே "மந்தரே! பரதனுக்கு எப்படியாவது ராஜ்யம் கிடைக்கவேண்டும். ராமனுக்கு ஒரு நாளும் கிடைக்கக் கூடாது. ஏதாவது உபாயத்தைச் சொல்" என்றாள்.

அப்பொழுது மந்தரை, "முன்னொரு காலத்தில் தேவாஸுர யுத்தம் நடந்தபொழுது அபஜயமடைந்த தேவர்கள், தசரதனை உதவி செய்யும்படி வேண்டினார்கள். அப்பொழுது மஹாராஜா, தன்னைச் சேர்ந்த ராஜ ரிஷிகளையும் உன்னையும் அழைத்துக்கொண்டு தெற்கில்



தண்டகாரண்யத்தில் மீன்கொடியையுடைய சம்பரனென்ற மஹாஸுரன் அரசாளும் வைஜயந்தபுரத்தை நோக்கிச் சென்றான். அவ்வஸுரனே மஹா மாயாவி. தேவர்களால் ஜயிக்க முடியாதவன். இந்திரனுடன் அடிக்கடி யுத்தம் செய்து, பகலில் காயம் பட்டவர்களை ராத்திரியில் தூங்கும்பொழுது அஸுரர்களால் கொல்லுவிக்கிறவன்.

தசரதர் அவர்களுடன் கோர யுத்தம் செய்கையில் அஸுரர்கள் அவனை அஸ்திர சஸ்திரங்களால் மிகவும் காயப்படுத்தினார்கள். அவர் மூர்ச்சையடைந்து பிரக்ஞை தப்பினார். அப்பொழுது நீ ரதத்தை வேறிடத்திற்கு ஓட்டிக் கொண்டுபோய் சைத்யோபசாரம் செய்து பிரக்ஞையை வருவித்தாய். அஸுரர்கள் அங்கேயும் வந்து அஸ்திரங்களால் அடிக்க, அங்கிருந்து அரசனை வேறிடத்திற்குக் கொண்டு போய்க் காப்பாற்றினாய். இரண்டு தடவை தன்னுயிரை ரக்ஷித்ததற்காக அரசன் ஸந்தோஷித்து, "பெண்ணே! உனக்கு இரண்டு வரங்களைக் கொடுக்கிறேன். என் உயிரைக் காப்பாற்றினாயல்லவா, கேள்" என்றான். நீ அவைகளைப் பெற்றுக்கொண்டு, "நாதா! தாங்கள் கொடுத்த வரங்களை ஸமயம் வரும்பொழுது கேட்கிறேன்" என்றாய். அவனும் அதற்கு ஸம்மதித்தான். இதை நீயே எனக்குச் சொல்லாவிட்டால் எப்படித் தெரியும்? உன்னிடத்தில் எனக்குள்ள பிரீதியால் மறக்காமல் ஞாபகத்தில் வைத்துக்கொண்டிருக்கிறேன்.

"ராமாபிஷேகத்திற்காக நடக்கும் ஏற்பாடுகளை உன் பர்த்தாவிடத்தில் சொல்லி நிறுத்து. அவன் உனக்குக் கொடுத்திருக்கும் இரண்டு வரங்களையும் இப்பொழுது ஞாபகப்படுத்தி, ராமனைப் பதினான்கு வருஷங்கள் காட்டிற்கனுப்ப வேண்டுமென்றும் சொல். பதினான்கு வருஷங்கள் என்ன கணக்கென்றால், ராமன் காட்டிலிருக்கும் பதினான்கு வருஷங்களுக்குள் பரதன் குடிகளின் பிரீதியை ஸ்திரமாக ஸம்பாதித்துக் கொள்வான்.

"நான் சொன்ன உபாயத்தை அனுஷ்டிக்கும் வழியையும் சொல்லுகிறேன், கேள். தசரதனிடத்தில் கோபம் கொண்டவளைப் போல் இப்பொழுதே கோப அறைக்குப்போய் அழுக்கு வஸ்திரத்துடன் தரையில் படுக்கவேண்டும். அவனைப் பார்த்தவுடன் அழுது கொண்டு துக்கத்தில் மூழ்கினவளாக அவனைக் கண்ணெடுத்துப் பாராதே, பேசாதே, எழுந்திராதே. இப்படிச் செய்தால் நமது காரியம் உடனே பலிக்கும்.

"மற்றவர்களைக் காட்டிலும் உன்னிடத்தில் அவனுக்குப் பிரீதி அதிகமல்லவா. இது எனக்கு நிச்சயமாகத் தெரியும். உனக்காக அவன் நெருப்பில் விழுவான்; உனக்குக் கோபமுண்டாகும்படி செய்யத் துணியமாட்டான். நீ கோபம் கொண்டால் உன்னைக் கண்ணெடுத்துப்பார்க்கவும் அவனால்முடியாது. உன் பிரியத்தை ஸம்பாதிப்பதற்குத் தன் பிராணனை விடச்சொன்னாலும் விடுவான். உன்

சொல்லைத் தாண்டமுடியாது. அடீ சோம்பேறி! ஈசுவரனால் உனக்குக் கொடுக்கப்பட்ட அழகின் சக்தியை நன்றாகத் தெரிந்து கொள். அவன் உனக்கு முத்து தங்கம் ரத்னம் இன்னும் விலையுயர்ந்த எதைக் கொடுத்தாலும் அவைகளில் ஆசை வைக்காதே. முன்பு தேவாஸுர யுத்தத்தில் உனக்குக் கொடுத்த இரண்டு வரங்களையும் இப்பொழுது ஞாபகப்படுத்து. அவன் சொன்ன வார்த்தை தவறமாட்டான். ஆகையால் நமது எண்ணம் பலிக்கும்; நிச்சயம். அவன் உன்னைத் தூக்கியெடுத்து, உனக்கு அந்த இரண்டு வரங்களை கொடுத்தேனென்றால், அவனை அப்படியே பிரதிக்ஞை செய்யச் சொல்லி, ராமனைப் பதினான்கு வருஷங்கள் வரையில் காட்டிற்கு அனுப்பும்படியும், பரதனை இந்தப் பூமிக்கு அரசனாகச் செய்யும்படியும் சொல். ராமன் பதினான்கு வருஷங்கள் ராஜ்யத்தில் இல்லாவிட்டால் பரதன் பிரஸித்தியையும் அபிவிருத்தியையும் அடைந்து, ராஜ்யத்திலுள்ள ஐசுவரியம் ஸைன்யம் முதலியவைகளைக் கைப்பற்றிக் கொண்டு, பிறகு தான் உள்ள வரையில் ஸுகமாக அரசாளுவான். ராமனைக் காட்டிற்கு அனுப்ப வேண்டுமென்ற வரத்தை எப்படியாவது கேட்டு வாங்கு. இப்படிச் செய்தால் உன் புத்திரனுக்கு ஸகல க்ஷேமமும் உண்டாகும். ராமன் காட்டிற்குப் போய்விட்டால் பிரஜைகளுக்கு அவனிடத்தில் இப்பொழுதுள்ள பிரீதி அற்றுப்போம். அவனை ஒருவரும் ஆசிரயிக்கமாட்டார்கள். உன் பரதன் ஸகல சத்துருக்களையும் ஜயித்து மஹாராஜாவாக இருப்பான். பரதன் புத்திமானாகையால் ராமன் காட்டிலிருந்து திரும்பி வரும்பொழுது ராஜ்யத்திலுள்ளவர்களின் மனத்தைக் கவர்ந்து, தன் நண்பர்களால் ஆதரிக்கப்பட்டு அசைக்க முடியாமலிருப்பான். நமது உத்தேசத்தை முடிக்கவேண்டிய ஸமயம் வந்துவிட்டது. பயமில்லாமல் நீ அரசனை ஸ்வாதீனம் செய். ராமாபிஷேகத்திற்கு நடக்கும் ஏற்பாடுகளை நிறுத்து" என்று உபதேசித்தாள்.

இப்படித் தனக்குக் கெடுதியான விஷயத்தை மந்தரை ஹிதமென்று சொன்னதை நம்பி மிகவும் ஸந்தோஷித்து, கட்டிற்கடங்காத பெண்குதிரையைப் போல் கைகேயி ஆவேசம் கொண்டு, "மந்தரே! கூனிகளுக்கு ஸூக்ஷ்ம புத்தியிருப்பது ஸஹஜம். ஆனால் லோகத்திலுள்ள கூனிகளில் உன்னைப்போல் ஸூக்ஷ்ம புத்தியுள்ளவர்கள் கிடையாது. என்ன ஆச்சரியம்! எனக்கு இது வரையில் தெரியாமற் போயிற்றல்லவா? நீ ஒருத்தியே எனக்கு ஹிதத்தைத் தேடுகிறவள். என் க்ஷேமத்தில் எப்பொழுதும் கவலையுள்ளவள். தசரதருடைய வாஸ்தவ அபிப்பிராயம் எனக்கு இதுவரையில் தெரியவில்லை. கோணலான அங்கங்களுடன், பார்க்க விகாரமாய் வெறுப்புண்டாகும்படி லோகத்தில் பல கூனிகள் இருக்கிறார்கள். தாமரைப் புஷ்பம் காற்றால் வளைந்திருந்தால் அதன் அழகு குறையுமா? அப்படி இயற்கையான அழகுள்ள உன் தேகம் கூனலால் கொஞ்சம்



வளைந்திருந்தால் உன் அழகு குறையுமோ? உன் மார்பு தோள்களுடன் போட்டி போடுவதுபோல் வெகு உயரமாக இருக்கின்றது. அதற்குக் கீழே அழகான உன் வயிறு வெட்கங்கொண்டது போல் இருந்தவிடம் தெரியாமல் அடங்கியிருக்கிறது. உன் முகம் களங்கமில்லாமல் சந்திரனைப்போல் விளங்குகிறது. சலங்கைகள் கட்டின அரை நூல் மாலை இடுப்பில் மதுரமாகச் சப்திக்கிறது. கணுக்கால்கள் நன்றாக அமைந்திருக்கின்றன; பாதங்கள் நீண்டிருக்கின்றன; தொடைகளும் நீண்டு வெண்பட்டால் அலங்கரிக்கப் பட்டிருக்கின்றன. எனக்கு முன்பு நீ நடந்து போகும் பொழுது, பெண் அன்னம் நடப்பதுபோல் விளங்குகிறாய். அஸுர ராஜனான சம்பரனிடத்திலுள்ள எண்ணிறந்த மாயைகளும், அவனுக்குத் தெரியாத பல மாயைகளும், ராஜ நீதிகளும், விசித்திரமான கெட்ட யோசனைகளும், வருங்காரியத்தை நன்றாக அறியும் யுக்தியும் ரதத்தின் மூக்கணைப்போல் இருக்கும் உன் மார்பு முண்டில் அடங்கியிருக்கின்றன. மந்தரே! இதோ என் தங்க ஹாரத்தை உனக்குப் போடுகிறேன், வாங்கிக்கொள். ராமன் காட்டிற்குப் போய் பரதனுக்கு ராஜ்யம் கிடைத்து, என் எண்ணம் நிறைவேறி, என் மனம் ஸந்தோஷமடையும் பொழுது, உருக்கியோடவிட்ட உத்தமமான தங்கத்தால் ஒரு கவசத்தைச் செய்து, உன் மார்பிலிருக்கும் முண்டை அலங்கரிக்கிறேன். நேர்த்தியான சந்தனத்தில் கலப்பில்லாத தங்கத்தைச் சேர்த்து அரைத்து உன் தேகத்தில் பூசுகிறேன். அநேக ரத்தினங்கள் இழைத்து, திலகத்தைப் போன்ற ஆபரணத்தை உன் நெற்றியில் தொங்கவிடுகிறேன். அழகான ஆபரணங்களையும், நேர்த்தியான வஸ்திரங்களையும் தரித்துக்கொண்டு தேவதையைப் போல் ஸஞ்சரிப்பாய், ஒப்பில்லாத அழகுடன், சந்திரனைப் பழிக்கும் முகத்துடன் நம்மை த்வேஷிப்பவர்களின் கர்வத்தை அடக்கி, என் காலில் விழச் செய்வாய். நீ எனக்கு ஊழியம் செய்வது போல் எண்ணிறந்த கூனிகள், ஸகல ஆபரணங்களாலும் அலங்கரிக்கப்பட்டு உனக்கு ஊழியம் செய்வார்கள்" என்றாள்.

இப்படித் தன் யஜமானியால் துதிக்கப்பட்ட மந்தரை, அக்னி குண்டத்தில் ஜ்வலிக்கும் நெருப்பைப் போல் வெண்மையான படுக்கையில் படுத்திருக்கும் கைகேயியைப் பார்த்து, "அடீ! கண் கெட்ட பிறகு ஸூரிய நமஸ்காரம் செய்வதுண்டா? ஏரி, கரையை உடைத்த பிறகு அணை போடுவதுண்டா? எழுந்திரு, செய்யவேண்டியதைச் செய். கோப அறைக்குப் போ, அரசனுடைய வரவை எதிர்பார்த்திரு" என்றாள்.

இப்படி மந்தரையால் தூண்டப்பட்டு அவளுடன் கோப கிருஹத்திற்குப் போய்க் கைகேயி, தன்னைப் போல் அழகுள்ளவர்கள் ஒருவருமில்லையென்ற கர்வம் மேலிட்டு, அநேக ஆபரணங்களையும் ஹாரங்களையும் கழற்றி எறிந்துவிட்டு, தங்கப் பிரதிமையைப் போல், விசாலமான நேத்திரங்களுடன் மந்தரையின் கெட்ட

போதனைக்குட்பட்டு, தரையில் படுத்துக்கொண்டு "மந்தரே! ராமன் வனத்திற்குத் துரத்தப்பட்டு, பரதனுக்கு ராஜ்யம் கிடைக்க வேண்டும். அதில்லாவிடில், கைகேயி கோப அறையில் உயிரை விட்டாளென்ருவது தசரதரிடம் சொல். தங்கம் ரத்னம் ஆபரணம் எதுவும் எனக்கு வேண்டாம். ராமனுக்கு அபிஷேகம் நடந்தால் அந்த நிமிஷத்திலேயே என் உயிர் போய்விடும்" என்ருள்.

இப்படிச் சொன்ன பரதனுடைய தாயான கைகேயியை, பரதனுக்கு ஹிதமாகவும், ராமனுக்கு விரோதமாகவுமிருக்கும் மிகவும் குரூரமான வார்த்தைகளால் பிடிவாதத்தை விடாமலிருக்கும்படி மந்தரை உறுதிப்படுத்தினாள். "ராமனுக்கு ராஜ்யம் கிடைத்தால், நீயும் உன் புத்திரனும் கதியற்று அலைவீர்கள். ஆகையால் கல்யாணி! பரதனுக்கு ராஜ்யம் கிடைக்கும்படி எப்படியாவது முயற்சி செய்" என்ருள்.

மந்தரையின் வார்த்தைகளாகிய பாணங்களால் அடிக்கடி துளைக்கப்பட்ட ராஜபத்தினி, "எனக்குப் பிரியமில்லாத காரியத்தை தசரதர் செய்யத் துணிந்தாரல்லவா" என்று ஆச்சரியத்தால் ஹிருதயத்தின் மேல் கையை வைத்து, ராமாபிஷேகத்திற்கு வேண்டிய ஏற்பாடுகளைச் செய்ததைப்பற்றி அவரிடத்தில் அடங்காக் கோபம் கொண்டு, "மந்தரே! ராமன் பல வருஷங்கள்வரையில் காட்டில் வஸிப்பான். என் பரதன் ஸகல ஸுகங்களையும் அனுபவிப்பானென்ருவது, இந்தக் கோப அறையிலிருந்தே நான் யமனுடைய வீட்டிற்குப்போனேன் என்ருவது, என் தகப்பனை கேகய ராஜனிடத்தில் சொல். ராமன் இங்கிருந்து காட்டிற்குப் போகாவிட்டால் போர்வைகள் ஹாரங்கள் வாஸனை திரவியங்கள் தைலங்கள் அன்ன பானங்கள் முதலியவைகளால் எனக்கு ஆகவேண்டியதென்ன? என் உயிர் போனாலும் என்ன?" என்று குரூரமான வார்த்தைகளைச் சொல்லி, தன் ஆபரணங்கள் யாவற்றையும் கழற்றிவிட்டு, அடிபட்டு விழுந்த கின்னரி பக்ஷியைப் போல், வெறுந் தரையில் படுத்துக்கொண்டாள். வரவர அதிகரிக்கும் கோபமாகிற இருட்டால் மூடப்பட்ட முகத்துடன் ஹாரம் முதலிய ஆபரணங்களில்லாமல், சொல்லமுடியாத துக்கத்தை அடைந்து கைகேயி, இருளால் மூடப்பட்டு நக்ஷத்திரங்கள் மறைந்த ஆகாசத்தைப் போல் தோன்றினாள்.

உதீ$^{3}$ர்ண ஸம்ரம்ப$^{4}$ தமோ வ்ருதாநநா
ததா$^{2}$வமுக்தோத்தம மால்ய பூ$^{4}$ஷணா |
நரேந்த்$^{3}$ர பத்நீ விமநா ப$^{3}$பூ$^{4}$வ ஸா
தமோவ்ருதா த்$^{3}$யௌரிவ மக்$^{3}$நதாரகா ॥ (66)

---



## ஸர்க்கம் 10

## கைகேயி தசரதரை வசப்படுத்தினது

வித$^{3}$ர்ஶிதா யதா$^{3}$ தே$^{3}$வீ குப்ஜயா பாபயா ப்$^{4}$ருஶம் |
ததா$^{3}$ ஶேதே ஸ்ம ஸா பூ$^{4}$மௌ தி$^{3}$க்$^{3}$த$^{4}$ வித்$^{3}$தே$^{4}$வ கிந்நரீ ॥ (1)

பாபபுத்தியுள்ள மந்தரையால் விபரீதமாக போதிக்கப்பட்டுத் தான் செய்ய வேண்டிய காரியத்தை மனத்தில் நன்ருக நிச்சயித்துக் கைகேயி, "அடீ மந்தரே! நீ சொன்னது மிகவும் யுக்தமே. அப்படியே செய்கிறேன்" என்று நாக கன்னிகையைப் போல் உஷ்ணமாகப் பெருமூச்சு விட்டுக்கொண்டு, விஷம் தோய்ந்த பாணத்தால் அடிக்கப்பட்ட கின்னரி பக்ஷியைப் போல் பூமியில் படுத்திருந்தாள். தான் உத்தேசித்த காரியம் பலிக்குமோ பலிக்காதோ என்று ஸந்தேகமுண்டாகச் சற்று நேரம் ஆலோசனை செய்து, தனக்கு க்ஷேமம் கிடைக்கும் வழியை நிச்சயித்துக் கொண்டாள். அவளுக்குத் தோழியும்தன் எண்ணத்தை முடிக்க வேண்டுமென்ற நிச்சயமுடையவளுமான மந்தரை, தன் யஜமானியின் உறுதியைக் கேட்டு, இனி நமது காரியம் முடிந்துவிட்டதென்று ஸந்தோஷித்தாள். அப்பொழுது கைகேயி, "என் எண்ணம் நிறைவேருவிட்டால் உயிரை விடுவேன்" என்று நிச்சயித்துக் கோபத்தால் புருவங்களை நெறித்து, அழுக்குப் படிந்த ஒற்றை வஸ்திரத்துடன், ஜடையை அவிழ்த்து ஒன்ருகச் சேர்த்து முடிந்து, வெறுந்தரையில் கிடக்கும் பொழுது, அழகிய கின்னரிபக்ஷி இறந்து கிடப்பதுபோல் தோன்றிற்று.

தன் மேலிருந்த ஆபரணங்களைக் கழற்றிப் பெட்டியில் வைக்காமல், தான் அடங்காக் கோபத்துடனிருந்ததற்கு அடையாளமாக அவைகளைச் சுற்றிலும் வீசியெறிந்தாள். அந்த மாலைகளும் ஹாரங்களும் ஆபரணங்களும் ஆகாசத்தில் நக்ஷத்திரங்கள் பிரகாசிப்பது போல் பூமியை அலங்கரித்தன.

இப்படியிருக்கையில் தசரதர், அபிஷேக காரியங்களைச் செய்ய உத்தரவிட்டு, ஸபையோர்களின் அனுமதி பெற்று, கைகேயியின் அந்தப்புரத்தை நோக்கி வந்தார். "பட்டாபிஷேகம் இப்பொழுதே நிச்சயமாயிற்றல்லவா. கைகேயிக்கு இதுவரையில் தெரிந்திருக்க நியாயமில்லை. ஆகையால் என் பிரிய பார்யைக்கு இந்த ஸமாசாரத்தை நானே சொல்ல வேண்டும்" என்று வெளுத்த மேகங்களால் நிறைந்து, ராகுவென்ற குரூரக் கிரஹத்தால் வியாபிக்கப்பட்ட ஆகாசத்தில், மஹா காந்தியுடைய சந்திரன் உதிப்பது போல் அந்தப்புரத்தில் புகுந்தார்.

அங்கே கிளி, மயில் கிரௌஞ்சம் ஹம்ஸம் முதலிய பக்ஷிகள் மதுரமாகச் சப்தித்துக் கொண்டிருந்தன. வீணை வேணு மிருதங்கம் தாளம் முதலியவைகளின் நாதம் எங்கும் கேட்கப்பட்டது. கூனிகளும் குள்ளர்களும் இங்குமங்கும் அலைந்துகொண்டிருந்தார்கள்,

சம்பகம், அசோகம் முதலிய மரங்களால் நிறைந்து, பல லதா கிருஹங்களும் (கொடி வீடு), விசித்திர கட்டடங்களும் அங்கே அமைக்கப்பட்டிருந்தன. யானைத் தந்தத்தாலும் வெள்ளியாலும் தங்கத்தாலும் இழைக்கப்பட்ட பல மேடைகளும் ஆஸனங்களும் போடப்பட்டிருந்தன. விசித்திரமான எருக்களைப் போட்டுப் பயிராக்கினதால் எக்காலத்திலும் புஷ்பங்களாலும் பழங்களாலும் நிறைந்த மரங்களும், ஓடைகளும் அதை அலங்கரித்தன. பலவகை அன்னபானங்களும் பக்ஷ்யங்களும் எப்பொழுதும் ஸித்தமாயிருந்தன. விலையற்ற ஆபரணங்களை அணிந்த மஹா ஸௌந்தரியமுள்ள பெண்களால் நிறைந்து தேவலோகம் போல் விளங்கிற்று.

இப்படி ஸகல ஐசுவரியத்துடன் விளங்கும் கைகேயியின் அரண்மனைக்குள் சென்று தசரதர் பார்த்தார். வழக்கமான படுக்கையில் அவளைக் காணவில்லை. அப்பொழுது அவர் காமத்தை உண்டாக்கும் பதார்த்தங்களால் சூழப்பட்டு கிரீடிப்பதற்குத் தகுந்த காலமாகையால் மன்மதபாணங்களால் அடிக்கப்பட்டு கைகேயியைத் தேடி அவளைக் காணாமல் அங்கேயிருந்த வேலைக்காரியை "கைகேயி எங்கே?" என்று கேட்டார். "இதுவரையில் நான் அந்தப்புரத்திற்கு வருகிறேனென்று தெரிந்தவுடன் கைகேயி தன்னை அழகாய் அலங்கரித்துக்கொண்டு புன்சிரிப்புடன் என்னை எதிர்கொண்டழைப்பது வழக்கமல்லவா? ஒரு தடவையாவது தவறினதில்லை. இதுவரையில் கைகேயி இல்லாமல் இந்த அரண்மனையில் நான் வந்ததில்லையே" என்று மிகுந்த துக்கமடைந்தார். அவள் புத்திகெட்டு, தன் பிடிவாதத்தை நிறைவேற்ற முயன்றிருப்பதை அவர் அறியவில்லை. ஆகையால் முன் போல் கைகேயி எங்கே போயிருக்கிறாளென்று கேட்டார். அந்த அதிகாரி பயந்து கைகூப்பி "ஸ்வாமி! மஹாராணி எக்காரணத்தாலோ வெகு கோபத்துடன் கோப அறையை நோக்கி வேகமாகச் சென்றாள்" என்று தெரிவித்தாள். கைகேயி கோபித்துக்கொண்டு கோப அறைக்குப் போனாளென்பதைக் கேட்டவுடன், அவளைக் காணாததால் உண்டான துக்கத்தைவிட அவருக்கு அதிக வருத்தமுண்டாயிற்று. அதனால் இந்திரிய ஸ்வாதீனமின்றி மயங்கினார்.

உடனே கோப அறைக்கு ஓடிப் போய், அங்கே வெறுந்தரையில் அலங்கோலமாய் கிடக்கும் தன் பிரியமான பார்யையைக் கண்டார். அறுபட்டுக் கீழே விழுந்திருக்கும் கொடியைப்போல் மிகுந்த அழகுள்ளவளாகவும், தன் பூர்வ ஜன்ம புண்யம் குறைந்து ஸ்வர்கத்திலிருந்து பூமியில் விழுந்திருக்கும் தேவதையைப் போல் ஆச்சரியத்தையும், பிறரால் ஹிம்ஸிக்கப்பட்ட கின்னர ஸ்த்ரீயைப் போல் மிகுந்த இரக்கத்தை பார்ப்பவர்களுக்கு உண்டுபண்ணுகிறவளாகவும், ஸ்வர்க்கத்திலிருந்து கீழே தள்ளப்பட்ட அப்ஸரஸைப் போல் அதிக ஸௌந்தரியம் உள்ளவளாகவும், ஜனங்களை மோஹிப்பதற்காக அனுப்பப்பட்ட மாயையைப்போல் தேக காந்தி மங்கினவளாகவும்



காணப்பட்டு, விஷம் தோய்ந்த பாணத்தால் காட்டில் அடிபட்ட பெண் யானையைப் போல் அவள் தவித்துக்கொண்டிருந்தாள்.

கேகய ராஜபுத்திரி, தசரத சக்கரவர்த்திக்கு பிரிய பார்யை, இவளும் இப்படிக் கிடக்கத் தகுந்தவளா? தசரதரோ வயது சென்றவர்; கைகேயியோ பால்யம் வாய்ந்தவள். தசரதரோ புண்யாத்மா; கைகேயியோ மஹாபாபத்தைச் செய்யவேண்டுமென்று நிச்சயித்தவள். ஆகையால் பூமண்டல சக்கரவர்த்தியாயிருந்தும், அதிக புத்திமானாயிருந்தும் அவளிடத்தில் வைத்த பிரியத்தால் ஒன்றும் தோன்றாமல், அவள் வருத்தப்படுவதைப் பார்க்க சகிக்காமல் தவித்தார். கபடமற்றவர்; அவளுடைய அழகால் புத்தி மயங்கினவர்; ஆகையால் இவள் கௌஸல்யைக்குச் சக்களத்தியல்லவா; ராமனுக்குப் பட்டாபிஷேகம் செய்ய ஸம்மதிப்பாளா? இப்பொழுது இவளுடைய கோபத்திற்குக் காரணம் அதைத் தவிர வேறில்லை என்று அவர் தெரிந்துகொள்ள முடியவில்லை.

பாணத்தால் அடிபட்ட பெண் யானையை ஆண் யானை தன் துதிக்கையால் தடவிக்கொடுப்பதுபோல், தசரதர் கைகேயியைத் தடவிக்கொடுத்து, "இவள் எது வேண்டுமென்று என்னிடத்தில் கோபம் கொண்டிருக்கிறாளோ, என்ன செய்வாளோ, என்ன சொல்வாளோ" என்று மனத்தில் திகிலடைந்தார். தாமரை யிதழ்களைப் போன்ற அவளுடைய கண்களைப் பார்த்தவுடன் எல்லையற்ற ஆசைகொண்டு அவளுக்கு வசப்பட்டு, "என் அன்பிற்குரியவளே! என்னிடத்தில் நீ கோபம் கொள்ளக் காரணம் எதுவோ தெரியவில்லையே. உன்னை யாராவது நிந்தித்தார்களா? உன்னை யாராவது அவமானம் செய்தார்களா? நான் உனக்கு ஏதாவது அபராதம் செய்ததுண்டா? உன்னிடத்தில் அளவற்ற பிரீதி வைத்தவனல்லவா. நான் உயிரோடிருக்கப் பேய் பிடித்து சித்தஸ்வாதீனமற்றவளைப் போல் வெறுந்தரையில் புழுதிபடியப் படுத்திருக்கிறாயே. அதைப் பார்க்கையில் என் மனம் தவிக்கிறது.

"உனக்குச் சரீரத்தில் ஏதாவது அஸௌக்யமுண்டா, சொல். என்னால் விசேஷ மரியாதையையும் வெகுமானத்தையும் பெற்று, என்னிடத்தில் பிரீதியும் விசுவாஸமும் நிறைந்த பல வைத்ய சாஸ்திர நிபுணர்கள் என் ராஜ்யத்தில் உண்டு. இதோ அவர்களைத் தருவித்து உன் சரீர அஸௌக்கியத்தை ஒரு க்ஷணத்தில் போக்கச் சொல்லட்டுமா?"

"நீ கோபம் கொண்டிருந்தால் உனக்குப் பிரியமில்லாத காரியத்தைசெய்தவன் யார்? அவனுக்குத் தகுந்த சிக்ஷை செய்கிறேன். அல்லது உனக்கு யாராவது உபகாரம் செய்து, அவனுக்குத் தகுந்த பதில் உபகாரம் செய்யவில்லையே என்ற வருத்தமா? உன் இஷ்டப்படி அவனுக்கு வெகுமானம் செய்கிறேன். அழாதே. தேகத்தை வீணாகக் கெடுத்துக்கொள்ளாதே. என்ன செய்யவேண்டும், சொல்.

கொல்லத் தகாதவனைக் கொல்லட்டுமா? கொல்லவேண்டியவனை விடுதலை செய்யட்டுமா? ஏழையைக் கோடீசுவரனாகச் செய்யட்டுமா? கோடீசுவரனை ஏழையாகச் செய்யட்டுமா? நீ எதையாவது வேண்டுமென்று விரும்பினால் நானும் என்னைச் சேர்ந்த யாவரும் உனக்கு ஸ்வாதீனமல்லவா. உன் எண்ணத்திற்கு எதிராக நடக்கப் பொறுப்பேனா? என் உயிரைக், கொடுத்தாவது உன் எண்ணத்தை நிறைவேற்றுகிறேன், சொல். உன்னிடத்தில் எனக்குள்ள பிரீதிக்கு எல்லை கிடையாதென்று தெரிந்திருந்தும் உன் எண்ணத்தை நிறைவேற்றுவேனோ மாட்டேனோ என்று நீ ஸந்தேகப்படலாமா? என் அதிகாரத்தையும் சக்தியையும் பலத்தையும் பூர்ணமாக அறிந்தும் உன் விருப்பத்தை நிறைவேற்றுவதில் என்னைப்பற்றி உனக்கு ஸந்தேகமென்ன? ஸூரியனுடைய ரதம் செல்லும் வரையிலுள்ள பூமி என் ஆக்ஞைக்கு உட்பட்டது. கிழக்கிலும் தெற்கிலுமுள்ள ஸிந்து, ஸௌவீர, ஸௌராஷ்ட்ர, வங்க, அங்க, மகத, மத்ஸ்ய, காசி, கோஸலமென்ற தேசங்களிலுள்ள தங்கம் வெள்ளி முத்து ரத்னம் முதலிய தனத்தையும் தான்யத்தையும் நேர்த்தியான போர்வை முதலிய அபூர்வமான பொருள்களையும் தருவிக்கிறேன். உனக்கு எதுவேண்டுமோ அதைக் கேள். தரையில் படுத்துக்கொண்டு தேகத்தை ஏன் இப்படி வருத்துகிறாய்? எழுந்திரு, எழுந்திரு. எதற்காகப் பயப்படுகிறாய், உண்மையைச் சொல். நான் இதுவரையில் செய்திருக்கும் புண்யத்தின் மேல் ஆணை வைத்துச் சொல்லுகிறேன். ஸூரியன் பனியை நாசம் செய்வதுபோல் உன் மனத்திலுள்ள கவலையையும் பயத்தையும் நீக்கத் தவறமாட்டேன்'' என்று பிரார்த்தித்தார்.

கைகேயி அதைக் கேட்டுக் கொஞ்சம் ஸமாதானமடைந்தாள். தசரதருடைய மனத்திற்குப் பிரியமில்லாத விஷயத்தைச் சொல்ல விரும்பி, கோரமான பிரதிக்ஞை செய்யும்படி அவரை நிர்ப்பந்திக்க ஆரம்பித்தாள்.

ததோ3க்தா ஸா ஸமாச்வஸ்தா வக்துகாமா தத3ப்ரியம் |
பரிபீட3யிதும் பூ4யோ ப4ர்தார முபசக்ரமே || (40)

---

## ஸர்க்கம் 11

## கைகேயி கேட்ட வரங்கள்

---

தம் மந்மத2 ஶரைர் வித்3த4ம் காமவேக3 வஶாநுக3ம் |
உவாச ப்ருதி2வீ பாலம் கைகேயீ தா3ருணம் வச: || (1)

"உனது பர்த்தாவைக் கோரமான பிரதிக்ஞை செய்யும்படி நிர்ப்பந்தித்துப் பிறகு இந்த இரண்டு வரங்களையும் கேள்'' என்று மந்தரையால் உபதேசிக்கப்பட்டதைக் கைகேயி ஞாபகம் வைத்துக் கொண்டு, தசரதர் மன்மத பாணங்களால் அடிக்கப்பட்டு, காம விகாரத்திற்கு வசப்பட்டு, கேட்டதைக் கொடுக்கத் தயாராயிருக்கிறாரென்று அறிந்து, பூமண்டலாதிபதியான மஹாராஜாவுக்கு என் இஷ்டத்தைப் பூர்த்திசெய்ய ஸாத்யமில்லாமற் போகுமா என்ற நிச்சயத்துடன், "எனக்கு தேகத்தில் யாதொரு அஸௌக்கியமும் இல்லை. நீர் சொன்ன பொருள்கள் யாதொன்றும் வேண்டாம். எனக்கு உம்மால் ஆகவேண்டிய காரியம் ஒன்றுண்டு. கொடுப்பதற்கும் கெடுப்பதற்கும் சக்தி உம்மிடத்தில் எல்லையில்லாமல் வாய்ந்திருக்கிறது. என் காரியத்தை முடித்துத் தரவேண்டும். அப்படிச் செய்ய இஷ்டமிருந்தால் நான் சொல்லும் விதமாய் பிரதிக்ஞை செய்யும். பிறகு என் மனத்திலுள்ள விருப்பத்தைத் தெரிவிக்கிறேன்'' என்று கொடிய வார்த்தைகளைச் சொன்னாள்.

அதைக் கேட்டவுடன் தசரதர், "இவளுடைய கட்டளைப்படி நான் நடக்கத்தயாராக இருக்கையில் என்னிடத்தில் நம்பிக்கையில்லாதவனைப்போல் பிரதிக்ஞை செய்யச் சொல்லுகிறாளே. இவள் விரும்பக்கூடிய விஷயத்தை முடிப்பது எனக்கு ஒரு பொருட்டா? நான் பயந்தபடி இவளுக்குத் தேகத்தில் அஸௌக்கியமில்லாமல் போனது என் பாக்கியம்'' என்று, புன்சிரிப்புடன் அவளுடைய முகத்தை நன்றாய் ஆசைதீரப் பார்க்கவேண்டுமென்று, அவளுடைய தலையைத் தூக்கியெடுத்துத் தன் மடியில் வைத்துக்கொண்டுஅவளிடத்தில் வைத்திருக்கும் எல்லைபற்ற பிரீதியால் என்ன சொல்லுகிறோம் என்று யோசிக்காமல், "அழகில் ஈடற்றவளென்று கர்வம் கொண்டவளே! ஸ்த்ரீகளுக்குள் உன்னைக் காட்டிலும் எனக்குப் பிரியமானவர்களுமுண்டா? புருஷர்களில் நரசிரேஷ்டனை ராமனைக் காட்டிலும் எனக்குப் பிரியமானவர்களுமுண்டோ? சத்ருக்களால் ஜயிக்க முடியாதவனும், என் உயிர் நிலையும், புருஷோத்தமனும் மஹாத்மாவுமான ராமன்மேல் ஆணையிட்டுச் சொல்லுகிறேன்; உனக்கு என்ன வேண்டும்? ஒரு முகூர்த்த காலமாவது எவனைப் பார்க்காமலிருந்தால் நிச்சயமாக என் உயிர் தரிக்காதோ, அந்த ராமன்மேல் ஆணையிட்டு, உன் எண்ணத்தை நிறைவேற்றுவதாகப் பிரதிக்ஞை செய்கிறேன். என் தேகத்தையும் பிராணனையும், பரதன் முதலிய மற்றப் புத்திரர்களையும், எனக்குப் பிரியமான பந்துக்களையும், மற்றப் பிராணிகளையும் இழக்க ஸம்மதிப்பேன். ராமனை மாத்திரம் விட்டுப் பிரிய ஸம்மதிக்க மாட்டேன். உன் மனோரதத்தை நிறைவேற்றுகிறேன் என்று அந்த ராமன் மேல் ஆணையிட்டுச் சொல்லுகிறேன். உன் இஷ்டப்படி நடக்கத் தவறினால் பிழைத்திருப்பேனா? என் வார்த்தையும் எண்ணமும் ஒன்றே என்று நன்றாகத் தெரிந்துகொள். நீ வேண்டும் விஷயத்தைச் சொல்லி என்னைக் காப்பாற்று. இதற்குமேல் உனக்கு எது ஹிதமென்று தோன்றுகிறதோ அதைச் சொல். பார்ப்பவர் கண்களையும் மனத்தையும் கவரும் உன் அழகின் மஹிமையையும் என் சக்தியையும் பூர்ணமாய் நீ அறிந்தும், இப்படி என்னிடத்தில் ஸந்தேகப்படுவது நியாயமா? நீ எதை விரும்புகிறாயோ அதை முடித்துக் கொடுக்கி

றேன் என்று நான் இதுவரையில் செய்த புண்ணியத்தின் மேலும் ஆணையிடுகிறேன்'' என்றார்.

கைகேயியோ மந்தரையால் போதிக்கப்பட்டபடி, ராமனைக் காட்டிற்கனுப்பிப் பரதனுக்கு அபிஷேகம் செய்ய வேண்டுமென்ற பிடிவாதத்தை நிறைவேற்றுவதில் நோக்கமுள்ளவள். "தசரதர் நான் எண்ணியபடி பிரதிக்ஞை செய்துவிட்டார். எனக்கு வசப்பட்டார். என் எண்ணம் எதாயிருந்தாலும் அதை முடிப்பாரென்பதில் ஸந்தேகமில்லை'' என்ற நிச்சயத்தாலும், பரதனிடத்திலுள்ள எல்லையற்ற பிரியத்தாலும் மனமகிழ்ந்தாள். "உன் கோரிக்கையை எப்படியாவது நிறைவேற்றுகிறேன்'' என்று ராமன்மேல் ஆணை வைத்துச் சொன்னதால் அவளுக்கு ஸந்தேகம் தீர்ந்தது. தசரதருக்குப் பரம சத்துருக்களும் சொல்லத் துணியாத வார்த்தைகளை அவருடைய உயிரைக் கொள்ளை கொள்ள வந்த யமனைப்போன்ற மஹா கோரமான சொற்களைச் சொல்ல ஆரம்பித்தாள். ஆனால், சற்றுத் தயங்கினாள். "இவர் இப்படி பிரதிக்ஞை செய்தாலும், நான் கேட்கப் போகும் விஷயமோ வெகு கோரமானது. அதைக்கேட்டபிறகு 'இதை நான் ஒரு நாளும்எதிர்பார்க்கவில்லை, இது என்னால் முடியாது' என்று சொல்லிவிட்டால் என் எண்ணமும் கோரிக்கையும் வீணாகுமே. ஆகையால் இவர்செய்த பிரதிக்ஞையை இன்னும் உறுதிப்படுத்த வேண்டும்'' என்று லோகத்தில் மனிதர்களின் எண்ணங்களுக்கும் வார்த்தைகளுக்கும் செய்கைகளுக்கும் எப்பொழுதும் ஸாக்ஷியாக இருக்கும் தேவதைகளை அழைத்து, "மஹாராஜ! நீர் ராமன் மேலும் உமது புண்ணியத்தின் மேலும் ஆணையிட்டு நான் கேட்கும் வரங்களைக் கொடுப்பதாகச் சொன்னீர். அது வாஸ்தவமானால் அக்னி முதலிய முப்பத்து முக்கோடி தேவதைகளும், சந்திர ஸூரியர்களும், ஆகாசமும் பூமியும் நவக்ரஹங்களும், ராத்திரியும் பகலும், திக்குகளும் ஸ்வர்க்கமும், கந்தர்வர்களும், ராக்ஷஸர்களும், ராத்திரியில் வசிக்கும் ஜந்துக்களும், வீடுகளில் வசிக்கும் தேவதைகளும், மற்றப் பிராணிகளும் உமது பிரதிக்ஞையைக் கேட்கட்டும். தேவதைகளே! ஸத்தியம் தவறாதவரும் மஹா தேஜஸ்வியும் தர்ம ரஹஸ்யத்தை அறிந்தவருமான இந்தத் தசரதர், நான் கேட்கும் வரங்களைக் கொடுப்பதாக பிரதிக்ஞை செய்திருக்கிறார். நீங்களெல்லோரும் இதற்கு ஸாக்ஷிகள்'' (இதைத் தவறினால் நீங்கள் அவரை ஸர்வ விதத்திலும் தண்டிக்க வேண்டுமென்பது கருத்து) என்று உரக்கக்கூவினாள். மஹா பராக்கிரமசாலியான தசரதரைத் தன் வசப்படுத்தினாள். அவர் செய்த பிரதிக்ஞையைத் தவற முடியாமல் தர்ம பாசத்தால் அவரைக் கட்டினாள் காமத்தால் மோஹித்து, எதைக் கேட்டாலும் கொடுப்பார் என்ற நிச்சயத்தால் "மஹாராஜ! வெகு நாளைக்கு முன்பு நடந்த ஒரு விஷயத்தைச் சொல்லுகிறேன், கேளும். சம்பரனென்ற அஸுரனுடன் நீர் யுத்தம் செய்யப் போனீர். ராத்திரியில் நடந்த சண்டை



யில் அவன் உம்மை அஸ்திர சஸ்திரங்களால் காயப்படுத்தி, மூர்ச்சையடையச் செய்தான். அப்பொழுது நான் வெகு ஜாக்கிரதையாய் விழித்துக் கொண்டிருந்து உமது ரதத்தை அங்கிருந்து ஓட்டிக் கொண்டு போய், பலவித சிகித்ஸை செய்து உமது உயிரைக் காப்பாற்றினேன், ஞாபகமிருக்கிறதா? நீர் ஸந்தோஷித்து எனக்கு இரண்டு வரங்களைக் கொடுத்தீர். நான் அவைகளைப் பெற்றுக்கொள்ளாமல் உம்மிடத்திலேயே வைத்து, எனக்கு ஸமயம் வரும்பொழுது கேட்பதாகச் சொன்னேன். பூமண்டலாதிபதியே! ஸத்தியம் தவறாதவரே! அந்த இரண்டு வரங்களையும் இப்பொழுது கேட்கிறேன். அவைகளை கொடுப்பதாக முன்பு பிரதிக்ஞை செய்திருக்கிறீர். இப்பொழுதும் நான் எதைக் கேட்டாலும் கொடுக்கிறேனென்று மறுபடியும் பிரதிக்ஞை செய்திருக்கிறீர். தர்மத்தை அனுஸரித்துச் செய்த பிரமாணத்தை, நான் வரங்களைக் கேட்டபிறகு, கொடுக்க மாட்டேனென்று மறுத்தால், உம்மால் கொடிய அவமானம் செய்யப்பட்டவளாவேன். என்னுயிரை வைத்துக் கொள்ளமாட்டேன். இப்பொழுதே பலவந்தமாய் இறப்பேன்'' என்றாள்.

கைகேயியின் வார்த்தைகளால் அரசன் அவளுக்கு வசப்பட்டார். வேடனுடைய பாட்டினால் மான் இழுக்கப்பட்டு, அவன் விரித்திருக்கும் வலையில் சிக்கி, உயிரை இழப்பதுபோல், "உன் கோரிக்கை எதானாலும் நிறைவேற்றுகிறேன். அந்த இரண்டு வரங்களையும் கொடுத்தேன்; கேட்கலாம்'' என்றார்.

ஐயோ, பாவம்! தனக்குக் கொடிய துக்கமும் பிராண நாசமும் அதனால் நேரப் போகிறதென்று அவருக்குத் தெரியவில்லையே. இப்படிக் காமத்தால் மோஹித்து, கேட்ட வரங்களைக் கொடுக்கத் தயாராயிருக்கும் தன் கணவனைப் பார்த்து, கைகேயி, "நாதா! எனக்கு தாங்கள் முன்பு கொடுத்த இரண்டு வரங்களைக் கேட்கிறேன். நான் சொல்வதைக் கவனமாகக் கேளுங்கள். ராமனுக்கு அபிஷேகம் செய்வதற்காக எந்த ஸாமான்கள் சேர்க்கப்பட்டு ஸித்தமாக இருக்கின்றனவோ, அவைகளால் என் புத்திரனான பரதனுக்கு யுவராஜ பட்டாபிஷேகம் செய்விக்கவேண்டும். பூபதியே! முன்பு தேவாஸுர யுத்தத்தில் என்னிடத்தில் நீர் ஸந்தோஷித்துக் கொடுத்த வரத்தைக் கேட்க இதே ஸமயம். ராமன் ராஜ்யத்தை விட்டு, மான் தோல் மரவுரி ஜடை முதலியவைகளைத் தரித்துத் தபஸ்வியாகப் பதினான்கு வருஷங்கள் வரையில் தண்டகாரண்யத்தில் வஸிக்கவேண்டும். தாமதம் செய்யக் கூடாது. என் பரதன் யுவராஜாவாக இந்தப் பூமியை யாதொரு உபத்திரவமின்றி இப்பொழுதே அனுபவிக்கவேண்டும். என் கோரிக்கை இதே. இதைப் பூர்த்தி செய்வதாக நீர் பிரதிக்ஞை செய்திருக்கிறீர், ஞாபகமிருக்கட்டும். நீர் கொடுத்த வரத்தைக் கேட்கிறேனேயல்லாது புதிதாக ஒன்றையும் கேட்கவில்லை. அநியாயமாக உம்மை நிர்ப்பந்தம் செய்யவில்லை. நீர் பிரதிக்ஞை செய்தபடியால் மாத்திரம் கேட்கிறேன். கடன் வாங்கினவனைக் கடன் கொடுத்தவன் கேட்கும்

பொழுது அவனுக்கு வருத்தமுண்டாகும். ஆனால் அது தோஷமா? ராமன் இன்றைக்கே காட்டிற்குப்போவதை நான் பார்க்கவேண்டும். ராஜேசுவர! நீர் செய்த பிரதிக்ஞையைத் தவறாமல் நிறைவேற்றும். இப்படிச் செய்து, நீர் பிறந்த இக்ஷ்வாகு குலத்தையும், ஆதிகாலம் முதல் உமது முன்னோர்கள் அனுஷ்டித்து வந்த ஆசாரத்தையும், சொன்ன சொல்லைத் தவறாமலிருப்பதென்ற முக்கிய லக்ஷணத்தையுமுடைய உமது க்ஷத்ரிய தர்மத்தையும் காப்பாற்றிக்கொள்ளும். மனிதர்கள் உத்தம கதியை அடைவதற்கு ஸத்தியத்தைக் காப்பாற்றுவதே முக்கியமான ஸாதனமென்று மஹா தபஸ்விகள் சொல்லியிருக்கிறார்கள்'' என்றாள்.

ஸ ராஜராஜோ ப⁴வ ஸத்யஸங்க³ர:
குலம் ச ஶீலம் ச ஹி ரக்ஷ ஜந்ம ச |
பரத்ர வாஸே ஹி வத³ந்த்யநுத்தமம்
தபோத⁴நா: ஸத்யவசோ ஹிதம் ந்ருணாம் ‖ (29)

---

## ஸர்க்கம் 12

# தசரத கைகேயி ஸம்வாதம்

---

தத: ஶ்ருத்வா மஹாராஜ: கைகேய்யா தா³ருணம் வச: |
சிந்தா மபி⁴ஸமாபேதே³ முஹூர்தம் ப்ரததாப ச ‖ (1)

**கைகேயியின்** வார்த்தைகள் தசரதருடைய காதில்இடிவிழுந்ததைப்போல் தாக்கின. அவர் பிரக்ஞையற்றுத் துக்க ஸமுத்திரத்தில் முழுகினார். "ராமாபிஷேகத்திற்கு விக்னம் செய்து எனக்கு இவ்வளவு வருத்தத்தை உண்டாக்குவதுஇதுவரையிலும் நற்குணமுள்ள கைகேயிக் குலக்ஷணமல்லவே. அவள் இப்படிச்செய்யமாட்டாளே. ஆகையால் இது உண்மையல்ல. நான் ஸ்வப்னம் காண்கிறேனா? அப்படியுமல்ல. இப்பொழுது தூங்கவில்லை; விழித்துக் கொண்டேயிருக்கிறேன். அல்லது எனக்குச் சித்தப் பிரமையா? அதற்கு யாதொரு காரணமுமில்லையே. அல்லது பூர்வஜன்மத்தில் அனுபவிக்கப்பட்ட விஷயத்தின் ஞாபகமா? அப்பொழுதும் இந்த அவஸ்தை நேர நியாயமில்லையே? அல்லது, தேகத்தில் வியாதிமேலிட்டுப் பைத்தியம் பிடித்திருக்கிறதா?'' என்று பலவிதமாய் யோசித்தும் ஆறுதலடையவில்லை, பிறகு சற்று பிரக்ஞை தெளிந்து கைகேயியின் வார்த்தைகளாகிற பாணங்களால் துளைக்கப்பட்டுப் புண்ணடைந்து, புலியைக்கண்ட மானைப்போல் இந்திரிய ஸ்வாதீனமற்றவராய்க்கொடிய விஷமுள்ள ஸர்ப்பம் மந்திரவாதியினால் வட்டத்திலே அடக்கப்பட்டு, மந்திரத்தால் சக்தியற்று உஷ்ணமாகப் பெருமூச்சு விட்டுக்கொண்டு சீறுவதுபோல், தசரதர் தரையில் உட்கார்ந்து "சீ, சீ, இதென்ன பிழைப்பு" என்று சோகம் மேலிட்டு மறுபடியும் மூர்ச்சையடைந்தார்.

சிரேண து நருப: ஸம்ஜ்ஞாம் ப்ரதிலப்⁴ய ஸு³க்கி²த: |
கைகேயீ மப்³ரவீத் க்ருத்³த⁴: ப்ரத³ஹந்நிவ சக்ஷுஷா ‖ —அயோ. 12 ஸ-6 சு.

வெகு நேரத்திற்குப்பின் பிரஜ்ஞை வந்தது. மஹா கோபத்துடன் கைகேயியைப் பார்வையால் எரிக்கிறவர்போலப் பார்த்து சொன்னார். (பக்கம் 45 பார்க்க)

வெகுநேரத்திற்குப்பின் பிரக்ஞை வந்தது. மஹா கோபத்துடன் கைகேயியைப் பார்வையால் எரிக்கின்றவர்போலப் பார்த்துச் சொன்னார்: "அடி, கொடியவளே! கெட்ட எண்ணமுள்ளவளே! என் குலத்தைக் கெடுக்க வந்தவளே! மஹாபாபி! நானாவது ராமனாவது உனக்குச்செய்த பாபமென்ன? தன் தாயைப்போல் உன்னிடத்தில் விசுவாஸமும் மரியாதையும் வைத்த ராமனுக்கே இப்படிக் கெடுதியை விளைவிக்க ஏன் தொடங்கினாய்? ஐயோ! உன்னைச் சொல்வதில் பயனில்லை. இது நானேதேடிக்கொண்ட அனர்த்தம். லோகத்தில் கொடிய விஷமுள்ள பாம்பை யாராவது வீட்டில் கொண்டுவந்து வைத்துக் கொள்வார்களா? உன்னை நல்ல குலத்தில் பிறந்த நன்னடத்தையுள்ள ராஜபுத்திரியென்று மோசம்போய், தெரியாமல் என் வீட்டில் அழைத்துக்கொண்டேன்; அதே என் நாசத்திற்குக் காரணமாயிற்று.

எல்லா ஜனங்களும் ராமனுடைய கல்யாண குணங்களை ஒரே மனதாகப் புகழ்கிறார்களே! எந்தக் குற்றத்தை முன்னிட்டு என் அருமைக் குழந்தையைத் தள்ளிவிடுவேன்? கௌஸல்யையை விட்டுவிடுவேன். ஸுமித்திரையைப் போகச் சொல்வேன். என் ஐசுவரியத்தை இழப்பேன். உயிரைக் கொடுப்பேன். என்னிடத்தில் அளவற்ற பிரீதியை வைத்திருக்கும் ராமனை மாத்திரம் ஒரு பொழுதும் தள்ளிவிடமாட்டேன்.

என் மூத்த புத்திரனான ராமனைப் பார்க்க எனக்குப் பிரீதி வளர்கிறது. அவனை ஒரு நிமிஷம் பார்க்காமலிருந்தாலும் என் உயிர் போய்விடும். ஸூரியனில்லாமல் லோகங்கள் இருக்கமுடியும்; ஜலமில்லாமல் பயிர்களிருக்கமுடியும்; ராமனில்லாமல் என் தேகத்தில் பிராணன் நிற்காது.

மஹாபாபத்தைச் செய்ய வேண்டுமென்று கொடிகட்டினவளே! போதும், இத்துடன் நிறுத்து. இந்தப் பிடிவாதத்தை விடு. என் தலையால் உன் பாதங்களைத் தொட்டு பிரார்த்திக்கிறேன். தயவு செய்து இனியாவது இந்த எண்ணத்தை விடு. மஹா கோரமான இந்தப் பாபத்தை நினைக்கவும் எப்படித் துணிந்தாய்?

ஒரு வேளை பரதனிடத்தில் எனக்குப்பிரீதியிருக்கிறதா இல்லையா என்று அறிய இப்படிச் சொன்னாயோ? பரதனுக்கு அபிஷேகம் செய்யவேண்டுமென்று மாத்திரமல்லவோ அப்பொழுது கேட்க வேண்டும். ராமனைக் காட்டிற்கு அனுப்ப வேண்டுமென்று கேட்க வேண்டியதில்லையே. "தர்மத்தில் ராமன் எல்லோரைக் காட்டிலும் சிறந்தவன்; ஆகையால் அவனே எனக்கு மூத்த புத்திரன்; பரதன் அவனுக்குப் பிறகே'' என்று நீ இதற்கு முன் ராமனைப்பற்றிச் சொன்ன வார்த்தைகளுக்கும் இப்பொழுது அவனைக் காட்டிற்கு அனுப்ப வேண்டுமென்பதற்கும் விரோதம் தோன்றுகிறதே. ஆகையால் என்னை ஸந்தோஷப்படுத்தவாவது, அல்லது ராமன் உனக்குப் பணிவிடை செய்ததற்காகவாவது நீ அப்படிச் சொல்லி

யிருக்க வேண்டும். ராமனுக்கு அபிஷேகம் நடக்கப் போகிறதென்று கேட்டவுடன் நீ மிகுந்த சோகத்தை அடைந்து, என்னைக் கடுமையாக நிர்ப்பந்தித்து வருத்தப்படுத்துகிறாய். பிறருடைய போதனைக்கு உட்பட்டுக் கோப அறையில் படுத்திருக்கிறாய். இதைப் பார்த்தால் என்னைப் பரீக்ஷிப்பதற்காகச் சொன்ன வார்த்தைகள் அல்லவென்று தோன்றுகிறது.

நற்குணமுள்ளவர்களுக்குத் திடீரென்று காரணமில்லாமல் விபரீத புத்தியுண்டாவது குலத்திற்கு நாசத்தை விளைவிக்கும். இது வரையில் நீதி தவறாமலிருந்தவளே! உனக்கு இந்த துர்ப்புத்தி உண்டானதைப் பார்த்தால் என் குலத்திற்குப் பெரும் கெடுதி நேரப்போகிறதென்று எண்ணுகிறேன்.

என்னிடத்தில் உசிதமில்லாமலாவது என் மனத்திற்கு விரோதமாகவாவது இதுவரையில் நடந்ததில்லை. ஆகையால் முன்பின் யோசிக்கும்பொழுது நீ சொல்வதை நம்ப முடியவில்லை. பெண்ணே! "ராகவன் மஹாத்மாவான பரதனுக்கு ஸமமல்லவா" என்று நீ பல தடவை என்னுடன் சொல்லவில்லையா? அதற்கு உன் வார்த்தைகளே ஸாக்ஷி. ஆகையால் நீ இப்பொழுது சொல்வதை நம்பமாட்டேன்.

தர்மாத்மாவும் கீர்த்திசாலியுமான அந்த ராமனைப் பதினான்கு வருஷங்கள் வனத்திற்குப் போகச் சொல்ல உன் மனம் எப்படி ஸம்மதித்தது? அவன் தர்மத்திலேயே நாடின மனத்தையுடையவன் காட்டிற்கு அனுப்பும்படியான தோஷம் அவனிடத்தில் காணப்படவில்லை; மிகுந்த செல்வத்தில் வளர்ந்தவன்; மிருதுவான சரீரம் வாய்ந்தவன். அவனை வனத்திற்குத் துரத்த உன் மனம் எப்படித் துணிந்தது? அதர்மத்தைச் செய்ய நீ பயந்தவளல்லவா? அந்தப் பயம் இப்பொழுது எங்கே போயிற்று? கோரமான வனத்திற்கு ராமனை அனுப்ப வேண்டுமென்று பிடிவாதம் பிடிக்கிறாயே. அது இருக்கட்டும். ஸகலப் பிராணிகளுக்கும் அவன் பிரியமானவன்; அவன் காட்டிற்குப்போக அவை ஸம்மதிக்குமோ?

உனக்குப் பணிவிடை செய்வதில் ராமன் கொஞ்சமாவது தவறுவதில்லையே. பரதனைக் காட்டிலும் அவன் எப்பொழுதும் உனக்கு விசேஷ சுச்ரூஷை செய்கிறானல்லவா? அப்படியிருக்க, பரதனிடத்தில் என்ன விசேஷத்தைக் கண்டாய்? நர சிரேஷ்டனான ராமனைக்காட்டிலும் அதிகமாக உனக்கு பணிவிடை செய்கிறவர்கள் யார்? உன்னிடத்தில் அதிக மரியாதையையும் வணக்கத்தையும் வைத்து உன் சொற்படி நடக்கிறவர்கள் ராமனைத் தவிர யார்? அப்படியிருக்க, அவனைக் காட்டிற்குத் துரத்த எப்படி உன் மனம் துணிந்தது?

இந்த ராஜ்யத்தில் கோடானு கோடி பெண்களிருக்கிறார்கள். அவர்களில் யாராவது 'ராமன் செய்யத்தகாத காரியத்தைச் செய்



தான். அதனால் அவனுக்கு அபகீர்த்தி' என்று சொல்லக் கேட்டாயா? இந்தத் தேசத்தில் பல்லாயிரம் வேலைக்காரர்களுண்டு. எவனாவது அஸூயையால் காரணமின்றி ராமனுக்கு அபகீர்த்தி உண்டாகும்படி நிந்திக்கிறானா? ராமன் சுத்தமான மனத்துடன், ஸகலப் பிராணிகளையும் தன் எண்ணத்தாலும் வார்த்தையாலும் நடத்தையாலும் ஸமாதானம் செய்து, தேசத்து ஜனங்களுக்கு விரும்பினதைக் கொடுத்து வசப்படுத்திக் கொள்ளுகிறான். ஸகல ஜந்துக்களுக்கும் ஹிதத்தையே தேடுவதால் ஸ்வர்க்கம் முதல் வைகுண்டம் வரையிலுள்ள லோகங்களை ஸ்வாதீனப்படுத்துகிறான். எல்லையின்றி தானம் கொடுத்து ஏழைகளை வசப்படுத்துகிறான். பெரியோர்களுக்கு உகந்த பணிவிடை செய்து, அவர்கள் தனக்கு ஹிதோபதேசம் செய்யும்படி வசப்படுத்துகிறான். யுத்தத்தில் தன் வில்லைக் காட்டுவதாலேயே சத்ருக்களை ஜயித்து வசப்படுத்துகிறான். ஆகையால் தயை, தானம், வித்யை, பராக்கிரமம் என்றவைகளில் வீரன். உண்மை பேசுதல், பரலோகத்தைக் கொடுக்கும் தானம், சாஸ்திரங்களில் சொல்லப்பட்ட ஆஹாரநியமம் முதலிய தவம், இவ்வுலகத்தில் பிறர்க்குப் பிரியத்தை உண்டுபண்ணும் தானம், எல்லோர்க்கும் மித்திரனாயிருப்பது ஸ்நானம், ஜபம் முதலியவைகளால் சுத்தமாயிருப்பது, பிறருடைய அபிப்பிராயத்தை ஒட்டி நடப்பது, தத்வஞானம், குருசுச்ரூஷை முதலிய உத்தம குணங்கள் ராமனிடத்தில் எப்பொழுதும் குடிகொண்டிருக்கின்றன. இந்த லக்ஷணங்களுள்ளவனும், தேவதைகளைப் போன்றவனும், மஹரிஷிகளுக்கு ஸமமான தேஜஸை உடையவனும், எல்லாப் பிராணிகளுக்கும் பிரியனுமான ராமனிடத்தில் த்வேஷம் கொண்டு, அவனைக் காட்டிற்கு அனுப்பவேண்டுமென்று எப்படிக் கேட்கிறாய்?

ராமன் எல்லாப் பிராணிகளிடத்திலும் பிரியமாகப் பேசுகிறவன். அப்படியிருக்க, எனக்குப் பிரியமில்லாத விஷயத்தை என்னிடத்தில் சொல்லுவானென்று ஒரு பொழுதும் நினைக்கக்கூடக் காரணமில்லை. என் உயிரைக் காட்டிலும் பிரியமான ராமனிடத்தில் அவனுக்குப் பிரியமில்லாத விஷயத்தை, உன்னை ஸந்தோஷப்படுத்துவதற்காக எப்படிச் சொல்வேன்? பொறுமை, அடக்கம், தானம், ஸத்தியம், தர்மம், நன்றி, பிராணிகளுக்குக் கெடுதி செய்யாமலிருப்பது முதலிய உத்தம குணங்கள் விளங்கும் ராமனைத் தவிர, என்னை ரக்ஷிப்பவர்கள் யார்? அவனை எப்படித் தள்ளிவிடுவேன்?

கைகேயீ! எனக்கோ வயதாகிவிட்டது. வெகு நாள் பிழைத்திருக்கமாட்டேன். என் நிலைமையைப் பார்த்தால் யாருக்கும் இரக்கமுண்டாகும். கிழவனானதால் சொன்னதையே சொல்லிக்கொண்டிருப்பவன். ஆகையால் என்னிடத்தில் தயவு செய். ஸமுத்திரங்களால் சூழப்பட்ட இந்தப் பூமியிலிருக்கும் பதார்த்தங்கள் யாவையும் தருகிறேன். ராமனிடத்தில் கோபம் வைக்காதே. கைகேயீ! நீ எனக்கு வயதில் சிறியவள்; ஆனாலும் உன்னைக் கைகூப்பி

நமஸ்கரிக்கிறேன். உன் கால்களைத் தொட்டு வேண்டுகிறேன். ராமனுக்கு அபயதானம் கொடு. என்னை அதர்மத்திற்குஉட்படுத்தாதே. நான் ராமனுக்குச் சொன்ன வார்த்தையைத் தவறும்படி செய்யாதே'' என்று பிரார்த்தித்தார்.

இப்படி துக்கத்தால் எரிக்கப்பட்டுப் பிதற்றிக்கொண்டு மூர்ச்சையடைந்தார்; பிறகு எழுந்திருந்து, தள்ளாடிக்கொண்டு ராமனை விட்டுப் பிரியவேண்டுமே என்ற ஞாபகம் வந்தவுடன் துக்க ஸமுத்திரத்தில் மூழ்கிக் கரைகாணுமல் தவித்தார். ராமாபிஷேகத்திற்கு ஸம்மதித்தலென்ற கரையில் தன்னைச் சேர்க்கும்படி கெஞ்சிக் கேட்டுக்கொண்ட தனது பர்த்தாவைப் பார்த்துக் கைகேயி, வெகு கோபத்துடன் அதிகக் குரூரமான வார்த்தைகளைச் சொல்லத் தொடங்கினாள். "ஹே மஹாராஜரே! உம்மைப்போன்ற பல ராஜரிஷிகள் கூடின இடத்தில், வார்த்தைவரும்பொழுது'தசரதரே! உமது உயிரைக் காப்பாற்றின கைகேயிக்கு என்ன உபகாரம் செய்தீர்? என்று கேட்டால், ஸகல தர்மங்களையும் அறிந்த நீர் என்ன பதில் சொல்வீர்? நீர் தர்மம் தவருதவரென்று எப்படி நிரூபிப்பீர்? 'யாருடைய தயவால் நான் பிழைத்திருக்கிறேனே, தன்னுயிரைக் கொடுத்து யார் என்னைக் காப்பாற்றினுளோ அவளுக்கு அப்பொழுது இரண்டு வரங்களைக் கொடுத்துத் திருப்தி செய்தேன். பிறகு அவைகளைக் கேட்டாள். கொடுக்க மறுத்துவிட்டேன்'' என்று சொல்வீரோ? ராஜசிரேஷ்டரே! வரங்களை முன்பு கொடுத்துவிட்டு, இப்பொழுது அதற்கு விரோதமாக ஏன் பேசுகிறீர்?

லோகத்தில் ஒரு ஜாதியைச் சேர்ந்த ஒருவன் செய்த பிசகு அதிலுள்ள மற்றவர்களையும் பீடிக்குமல்லவா? எல்லோரும் இப்படியே என்றல்லவோ பெயர் வரும். இப்பொழுது, உலகத்திலுள்ள அரசர்களுக்கும் உம்மால் அபகீர்த்தி நேரப்போகிறது.

முன் காலத்தில் ஒரு புருவுக்கும் கழுகிற்கும் விவாதம் நேர்ந்தபொழுது, சிபி சக்கரவர்த்தி புருவின் மாம்ஸத்திற்குப் பதிலாகத் தன் மாம்ஸத்தை அறுத்துக் கொடுத்துக் கழுகைத் திருப்தி செய்யவில்லையா? கண்ணில்லாத ஒரு பிராம்மணன் அலர்க்கனென்ற ராஜரிஷியை பிரார்த்தித்தான். 'நீர் கேட்ட வரங்களைக் கொடுக்கிறேன்''என்று அந்த அரசன் பிரதிக்ஞை செய்தான். அவன்'அப்படியானுல் உன் கண்களை எனக்குக் கொடு' என்ருன். அரசன் உடனே தன் கண்களைப் பிடுங்கிக் கொடுத்து உத்தம கதியை அடையவில்லையா? ஒரு ஸமயத்தில் தேவதைகள் 'ஸமுத்திர ராஜா! நீர் எல்லையைத் தாண்ட வேண்டாம்' என்று பிரார்த்தித்தார்கள். அவர் அதற்கு ஸம்மதித்து அன்று முதல் தான் செய்த பிரதிக்ஞையைக் காப்பாற்றவில்லையா? இப்படி உமது முன்னேர்கள் நடந்திருக்க, அதை மறக்கலாமா? செய்த பிரதிக்ஞையைத் தவறலாமா?

கெட்ட எண்ணமுள்ளவரே! நீர் தர்மத்தை விட்டு, ராமனை அரசனுக்கி, கௌஸல்யையுடன் எப்பொழுதும் ஆனந்தமாகக்



காலம் கழிக்க எண்ணம் கொண்டிருக்கிறீரல்லவா? நான் கேட்ட வரங்கள் தர்மமானுலும் ஸரி, அதர்மமானுலும் ஸரி; ஸத்யமாயிருந்தாலும் ஸரி, அஸத்யமாயிருந்தாலும் ஸரி; நீர் எனக்குச் செய்த பிரதிக்ஞையை விட்டுக்கொடுக்கவே மாட்டேன். ராமனுக்கு அபிஷேகம் செய்தால் உம் எதிரிலேயே விஷத்தைக் குடித்து இப்பொழுதே இறப்பேன். கௌஸல்யையைக் காட்டிலும் உமக்கு நானே அதிக மனமகிழ்ச்சியைக் கொடுக்கிறவளல்லவா? அப்படி இருக்க, யுவராஜாவான ராமனுடைய தாயை எல்லா ஜனங்களும் கைகூப்பி வணங்குவதை நான் பார்ப்பதைக்காட்டிலும் உயிரை விடுவதே நலம். பரதன் பேரிலும் என்மேலும் ஆணையிட்டுச் சொல்லுகிறேன். நராதிபதியே! ராமனைக் காட்டிற்கு அனுப்பினுலொழிய என் மனம் திருப்தி அடையாது'' என்று சொல்லி, தசரதர் எவ்வளவு கெஞ்சியும் பதில் சொல்லவில்லை.

அவர் "ராமனை வனத்திற்கு அனுப்புவது, பரதனுக்கு அபிஷேகம் செய்வது'' என்ற வெகு கொடிய வார்த்தைகளைக் கேட்டு, ஒரு முகூர்த்தம் வரையில் இந்திரியங்கள் கலங்கி ஒன்றும் பேசாமல், தனக்கு அது வரையிலும் பிரியமாயிருந்து திடீரென்று பிரியமில்லாமல் நடக்கும் தன் பாரியையை இமை கொட்டாமல் பார்த்தபடியே இருந்தார். அவளுடைய வார்த்தைகள் வஜ்ரம்போல் அவருடைய ஹிருதயத்தைப் பிளந்து, கோரமான துக்கத்தையும் சோகத்தையும் உண்டாக்கின. தான் செய்த கோரமான பிரதிக்ஞையையும் அவளுடைய பிடிவாதத்தையும் நினைத்து "ராமா''என்று அலறிப் பெருமூச்சுவிட்டு, வெட்டப்பட்ட மரம்போல் பூமியில் விழுந்தார். கலங்கின மனத்தையுடையவனைப் போலும், பைத்தியம் பிடித்தவனைப் போலும், ஜன்னி முதலிய ரோகங்களால் ஸ்வபாவம் மாறினவனைப் போலும், வியாதிகளால் பீடிக்கப்பட்டவனைப்போலும், மந்திரத்தால் வீரியமிழந்த ஸர்ப்பத்தைப் போலும் அவரைப் பார்க்கையில் தோன்றிற்று.

பிறகு வெகு வணக்கமாய், "பெண்ணே! உனக்கு ஹிதத்தைப் போல் தோன்றும் இந்த அனர்த்தத்தைப் போதித்தது யார்? பிசாசு பிடித்தவளைப்போல் புத்தி தப்பி இம்மாதிரி வெட்கமில்லாமல் என்னிடத்தில் பேசுகிருயே. உன்னை விவாஹம் செய்த காலத்தில் நீ சிறு பெண். கெட்ட மனமுள்ளவளென்று அப்பொழுதே அறிய முடியவில்லை. இப்பொழுதோ வயதான பிறகு உன் ஸ்வபாவம் வெளிப்படுகிறது. யாரிடத்திலிருந்து பயமுண்டாகி இந்த வரங்களைக் கேட்கிருய்? பரதனுக்கும் ஸகல பிராணிகளுக்கும் உன் கணவனுக்கும் பிரியமான காரியத்தை நீ செய்ய விரும்பினுல், இந்தக் கெட்ட எண்ணத்தை விடு. முன் ஜன்மத்தில் நீ கொடிய பாபத்தைச் செய்தவள்; அதனுல் இந்த ஜன்மத்தில் அல்ப புத்தியைப் படைத்திருக்கிருய். ராமனைக் காட்டிற்கு அனுப்ப வேண்டுமென்ற பாபத்தைச் செய்ய நிச்சயித்திருக்கிருய். ஆகையால் உனக்குத் தயவு

எங்கே? என்னிடத்திலாவது ராமனிடத்திலாவது, நீ எந்தக்காரணத்தால் உனக்குத் துக்கமும் அனர்த்தமும் நேர்ந்ததென்று சொல்லக் கூடும்.

இவ்வளவு சிரமப்பட்டும், இவ்வளவு பாபத்தை ஸம்பாதித்தும் ஜனங்களுடைய கோபத்தையும் துவேஷத்தையும் சாபத்தையும் இவ்வளவு கட்டிக்கொண்டும் உன் எண்ணம் நிறைவேராது. ராமன், இந்த ராஜ்யத்திலிருந்தால் பரதனும் இருப்பான்; ராமனில்லாவிட்டால் பரதனும் இருக்கமாட்டான். ராமனைவிடப் பரதன் மஹா தார்மிகனல்லவா? ஆகையால் நான்கு புத்திரர்களுக்கும் இந்த ராஜ்யத்தை ஸமமாகப் பிரித்துக் கொடுக்கிறேன். அல்லது பரதனுக்கே அபிஷேகம் செய்விக்கிறேன். ராமன் மாத்திரம் வயது சென்ற என்னருகில் இருக்கும்படி ஒப்புக் கொள். இப்படிச் செய்யா விட்டால் உன் எண்ணம் நிறைவேறாது. என்னை வீணுக ஹிம்ஸை செய்து கொல்வதுதான் மிஞ்சும்.

காட்டிற்குப் போ என்று நான் சொன்னவுடன், ராகுவால் பிடிக்கப்பட்ட சந்திரனைப்போல் காந்தி குறைந்த ராமனுடைய சந்திரமண்டலம் போன்ற முகத்தை எப்படிப் பார்ப்பேன்? மந்திரிகள், மித்திரர்கள், தேசத்து ஜனங்கள், இதர தேசத்து ராஜாக்கள், பிராம்மணர்கள், ரிஷிகள், மற்றவர்களுடன் நன்ருக ஆலோசித்து பலவிதமாகப் பரீக்ஷித்து நிச்சயித்த இந்த அபிஷேகத்தை, சத்ரு ஸைன்யங்கள் என் ஸைன்யத்தை அழிப்பதுபோல், உன் பிடிவாதம் அழிப்பதை எப்படிப் பார்த்துக் கொண்டிருப்பேன்? பல தேசங்களிலிருந்து வந்திருக்கும் அரசர்கள் என்னைப்பற்றி என்ன சொல்வார்கள்? 'தசரதனுக்கு அறுபதாயிரம் வருஷங்களாகியும் விவேகமில்லை. ஏதோ அதிருஷ்ட வசத்தால் இது வரையில் ஆண்டு வருகிருன்' என்றல்லவா சொல்லுவார்கள்?

வயதிலும் குணங்களிலும் வித்யையிலும் சிறப்புற்ற பெரியோர்கள் நாளைக் காலையில், "ராமன் எங்கே? ஏன் அபிஷேகம் நடக்கவில்லை" என்று கேட்டால் நான் என்ன பதில் சொல்வேன்? 'முன் காலத்தில் கைகேயிக்கு இரண்டு வரங்களைக் கொடுத்தேன். அதைப் பூர்த்தி செய்ய வேண்டி, ராமனைக் காட்டிற்கனுப்பி, பரதனுக்கு அபிஷேகம் செய்யப்போகிறேன்" என்று உண்மையைச் சொன்னுல் ராமனுக்கு நாளை அபிஷேகம் செய்யப்போகிறேன்." என்று நான் இப்பொழுது செய்த பிரதிக்ஞை பொய்யாகுமல்லவா?

ராமன் காட்டிற்குப் போனபிறகு கௌஸல்யை "என் புத்திரன் உமக்கு என்ன அபராதம் செய்தான், ஸ்வாமி!' என்ருல், அவளுக்கு இந்த அநியாயத்தைச் செய்துவிட்டு, என்ன பதில் சொல்வேன்? அவளுடைய உத்தம குணங்களை அலக்ஷ்யம் செய்தேனே. எனக்குப் பணிவிடை செய்யும் பொழுது தான் பட்டமஹிஷியென்பதை மறந்து, வேலைக்காரியைப்போல் நடப்பாள், சொக்கட்டான் முதலியவைகளை ஆடும்பொழுது, தோழனைப்போல் ஸமமாகப் பழகுவாள். தர்ம காரியங்களைச் செய்யும்பொழுது தான் பட்டமஹிஷியென்று கர்வத்தால் மௌனமாயிராமல், பார்யை நடக்கவேண்டியபடி நடப்பாள். நான் மற்ற பார்யைகளை விவாஹம் செய்துகொண்ட பொழுது, அவர்களிடத்தில் ஸஹோதரிகளைப்போல் பழகுவாள். என் சரீரத்தைப் போஷிக்கும் விஷயத்தில் என் தாயைப்போல் நடப்பாள். என் இஷ்டத்தைப் பூர்த்தி செய்வதிலேயே எப்பொழுதும் நோக்கமுள்ளவள். எனக்கு அடுத்தபடியாக என் புத்திரனிடத்தில் பிரீதிவைத்தவள். எப்பொழுதும் பிரியமாகப் பேசுகிறவள், வெகுமானம் பெறத் தகுந்தவள். என் மூத்த பாரியை. உனக்குக் கோபம் உண்டாகுமோ என்ற பயத்தால் அவளைத்தகுந்தபடி இது வரையில் நான் நடத்தினதே இல்லை. நான் உனக்கு இதுவரையில் செய்த உபகாரங்களெல்லாம் எனக்கு அபகாரமாகவே முடிந்தன. வியாதியால் பீடிக்கப்பட்டவன் பத்தியமில்லாத உணவைப் புசித்தால் ரோகம் வளர்ந்து கஷ்டப்படுவதைப்போல், உன் துர்க்குணங்கள் ஸமயத்தில் வெளிப்பட்டு எனக்குக் கஷ்டத்தை விளைவிக்கின்றன. இதை நினைக்கும்பொழுது என் தேகம் எரிகிறது.

நான் ராமனைக் காட்டிற்குத் துரத்துவதை ஸுமித்திரை பார்த்தால் பயந்து "என் புத்திரர்களையும் எப்பொழுது துரத்திவிடுவாரோ" என்று நினைத்து என்னைக் கொஞ்சமாவது நம்புவாளா?

ஐயோ, பாவம்! 'நான் யமலோகம் சென்றேன்; ராமன் வனத்திற்குச் சென்ருன்' என்ற இரண்டு கோரமான வார்த்தைகளும் ஸீதையின் காதில் ஒரே காலத்தில் விழுமே. ஹிமாலயத்தின் தாழ்வரையில் வஸிக்கும் கின்னர ஸ்த்ரீ, தன் கணவனை விட்டுப் பிரிந்தால் எப்படி வருந்துவாளோ அப்படி, என்னையும் ராமனையும் பரிகொடுத்து, துக்கத்தால் ஸீதை உயிரை விடுவாளே. ராமன் காட்டிற்குப் புறப்படுவதையும், ஜானகி துக்கப்படுவதையும் பார்த்த பிறகும் என் உயிர் நிற்குமா? ராமனைக் காட்டிற்கும், என்னைப் பரலோகத்திற்கும் அனுப்பிவிட்டு நீ விதவையாய் உன் புத்திரனுடன் இந்த ராஜ்யத்தை ஆளப்போகிருய் என்பது நிச்சயம். ராமனை வனத்திற்குத் துரத்திவிட்டும் நான் பிழைத்திருப்பேனு? விஷம் கலந்த சாராயத்தின் பளபளப்பைக் கண்டு ஆசைப்பட்டு, அதைக் குடித்துப் பிறகு உபத்திரவப்படுகிறவனைப்போல், உன் அழகைக் கண்டு ஆசைப்பட்டு, நீ பதிவிரதையென்றும் நன்னடத்தையுள்ளவளென்றும் எண்ணி, உன்னை விவாஹம் செய்தேன். இப்பொழுது ஸமயம் நேர்ந்ததால் நீ கெட்டவளென்றும், பதிவிரதா தர்மமற்றவளென்றும் காட்டிக்கொண்டாய். எனக்குப் பிரியத்தைக் கொடுக்கும் பொய் வார்த்தைகளால் என்னை மயக்கி வசப்படுத்தினுய். வேடன் தன் பாட்டினுல் மானை இழுத்து வலையில் கட்டிக் கொள்வதைப் போல், என்னையும் சீக்கிரத்தில் கொல்லப் போகிருய். கள்ளைக் குடித்த பிராம்மணனை ஜனங்கள் எப்படி வெறுப்பார்

களோ, அப்படிப் புத்திரனை விற்று ஸ்திரியின் பிரியத்தை ஸம்பாதிக்கும் என்னையும் இந்தத் தேசத்திலுள்ள தர்மவான்கள் தெருத் தெருவாய் வெறுப்பார்கள். எனக்கு இதுவரையில் இந்தக் கஷ்டம் நேர்ந்ததில்லை. என்ன துக்கம்? என்ன ஸங்கடம்? பூர்வ ஜன்மத்தில் செய்த கர்ம பலன்கள் இந்த ஜன்மத்தில் தொடர்வது போல், உனக்கு வெகு காலத்திற்குமுன் நான் செய்த பிரதிக்ஞைகள் இப்பொழுது என்னை ஹிம்ஸிக்கின்றன.

மஹா பாபியான நான் வெகு காலமாய் உன்னை அக்ஞானத்தால் என் ஸௌக்கியத்திற்காக வைத்துக் காப்பாற்றி வந்தேன். நீ என்னைக் கொல்ல வந்திருக்கிறாயென்று அறியவில்லையே! தன்னைத் தூக்குப் போடும் கயிற்றை ஒருவன் வெகு ஜாக்கிரதையாகக் காப்பாற்றி வருவதுபோல், நான் என்னுடைய மிருத்யுவைத் தேடி, அழைத்துவந்து, அதனிடத்தில் விசேஷப் பிரியம் வைத்து, மற்றவர்களை அலக்ஷ்யம் செய்து, அதற்கு ஸகல உபசாந்திகளையும் செய்து வந்து, முடிவில் அதனால் நாசமடையப் போகிறேன். ஐயோ! மஹா பாபி! இவ்வளவு காலமாய் உன்னுடன் விளையாடிக் கொண்டிருந்தும் நீ எனக்கு யமனென்று அறியாமற் போனேனே. சிறு குழந்தை அறியாத்தனத்தால் கருநாகத்தைத் தொடுவதுபோல் நானும் அவிவேகத்தால் உன் கையைப் பிடித்தேன். 'தசரத மஹாராஜா கேவலம் சிறு பிள்ளையைப்போல் முட்டாளாய் விட்டான். ஆசைக்கு அடிமையானான். ஸகல நற்குணங்களும் பொருந்தின தன் மூத்த புத்திரனை, ஒரு ஸ்த்ரீயின் பிரீதியை ஸம்பாதிக்க எவனாவது காட்டிற்குத் துரத்துவானா' என்று ஸகலப் பிராணிகளும் என்னைத் தூஷிக்குமே. ஆனால் அது எனக்குத் தகும். மஹாத்மாவான என் ராமன் தகப்பனில்லாத பிள்ளையைப்போல் என்னாலேயே துரத்தப்பட்டானல்லவா?

நான் வேதத்தின் காண்ட விரதங்களாலும், ப்ரஹ்மசாரிக்குரிய தர்மங்களை அனுஷ்டித்ததாலும், குரு சுச்ரூஷை முதலியவைகளாலும் தேகத்தை ஒடுக்கி, இந்திரியங்களையும் மனத்தையும் அடக்கி, எவ்வளவோ சிரமப்பட்டேன். அப்படியும் கிருஹஸ்தாசிரமத்தை அடைந்த பிறகு, ஸ்த்ரீபோகத்தில் இச்சை வைத்து, யாவற்றையும் இழந்து கொடிய கஷ்டத்தை அனுபவிக்கிறேன்.

"நீ காட்டிற்குப் போகவேண்டும்" என்று சொன்னவுடன் ராமன் ஒரு வார்த்தைகூடப் பதில் சொல்லாமல் ஸந்தோஷமாக ஒப்புக்கொள்வான். அப்படி அவன் பதில் சொன்னால் பார்வைக்கு அது அதர்மமாகத் தோன்றினாலும், என் கட்டளையை மீறினதாகத் தோன்றினாலும் எனக்கு மிகுந்த பிரீதியை உண்டாக்கும். ஆனால், என் புத்திரன் அப்படி ஒருநாளும் செய்யமாட்டானே! சுத்தமான மனத்தையுடைய ராகவன் என் கபடமான எண்ணத்தை அறிய மாட்டான். "வனத்திற்குப் போ" என்றால், அதை உண்மையாகவே நினைத்து "அப்படியே செய்கிறேன்" என்பான்.



ரகுநாதன் காட்டிற்குச் சென்றால், ஸகல பிராணிகளும் என்னை நிந்தனை செய்யும். அதை நான் எப்படிப் பொறுப்பேன். இறந்த பிறகும் நரகத்தை அடைவேன் என்பதில் ஸந்தேகம் உண்டோ? ராமன் வனத்திற்குப் போனபிறகு எனக்கு வேண்டியவர்களிடத்தில் இன்னும் என்ன அநியாயம் செய்ய யோசித்திருக்கிறாய் நீ? ராமன் காட்டிற்குப் போனால் லக்ஷ்மணன் பின் தொடர்வான்; சத்ருக்னன் பரதனோடிருக்கிறான்; கௌஸல்யை இறப்பாள். அவளையும் என்னையும் ராமனையும் லக்ஷ்மணனையும் இழந்து அந்தத் துக்கத்தை ஸஹிக்காமல் ஸுமித்திரையும் உயிரை விடுவாள். ஆகையால் என்னையும் கௌஸல்யையும் ஸுமித்திரையும் உன் புத்திரனைத் தவிர மற்ற மூவர்களையும் துக்கமென்கிற நரகத்தில் தள்ளிவிட்டு நீ ஸுகமாயிரு. இதுவரையில் ஒருவராலும் அசைக்க முடியாமல், ஸகல உத்தம குணங்களால் அலங்கரிக்கப்பட்டு, யாதொரு தோஷமுமின்றி வெகு காலமாய் விளங்கிக்கொண்டிருக்கும் இந்த இக்ஷ்வாகு வம்சம், நானும் ராமனும் போன பிறகு அலங்கோலமாகும்.

ராமனைக் காட்டிர்கு அனுப்புவது பரதனுக்கு இஷ்டமானால், நான் இறந்த பிறகு அந்தப் பாபி என் உத்தரக்கிரியைகளைச் செய்ய வேண்டாம். அல்ப ஸ்வபாவமுள்ளவளே! ஜன்ம சத்துருவே! கேகய ராஜனுடைய பெண்ணே! இப்பொழுதாவது உன் மனம் குளிர்ந்ததா? உன் எண்ணம் நிறைவேறிற்றா? புருஷோத்தமனான ராமனைக் காட்டிற்குத் துரத்திவிட்டு, என்னையும் கொன்று, விதவையாக நீயும் உன் மகனான பரதனும் இந்த ராஜ்யத்தை ஆளுங்கள். பார்வைக்கு மாத்திரம் நீ ராஜபுத்திரி; உன்னால் எனக்கு ஒப்பில்லாத அபகீர்த்தி நேரும்; லோகத்தில் ஸகல ஜனங்களும் என்னை அவமதிப்பார்கள். பாபியைக் கண்டால் ஸகலப் பிராணிகளும் அல்ப பதார்த்தமென்று விலகுவது போல் என்னைக் கண்டு ஒதுங்குவார்கள்; அபகீர்த்தி, அவமானம் இழிந்த புத்தி என்ற இம் மூன்று தோஷங்களும் ஒரே வடிவம் எடுத்து வந்ததுபோல் நீ என் வீட்டில் வஸித்துக் கொண்டிரு.

இதுவரையில் எப்பொழுதும் யானை குதிரை ரதம் முதலிய வாஹனங்களில் மஹா ராஜாவைப்போல் செல்லும் வழக்கத்தையுடைய என் குழந்தை ராமன், கோரமான வனத்தில் கால்நடையாக எப்படி ஸஞ்சரிப்பான்? சமையற்காரர்கள் போட்டிபோட்டுக் கொண்டு, ராமனுக்குப் பிரியமான அன்னபானங்களை ஸித்தம் செய்து, குண்டலம் முதலிய ஆபரணங்களுடன் விளங்கிக்கொண்டு பரிமாறுவார்களே. அப்படிப்பட்ட ராமன், கசப்பு புளிப்பு துவர்ப்பு முதலிய ரஸங்கள் பக்குவமாகாமல் வனத்தில் கிடைக்கும் ஆஹாரங்களைப் புசித்து எப்படிப் பிழைக்கப் போகிறான்? விலையுயர்ந்த நேர்த்தியான வஸ்திரங்களைத் தரித்துக் காம்பரிந்த மல்லிகைப் புஷ்பங்கள் பரப்பின ஹம்ஸதூலிகாசயனத்தில் படுத்து, பாடகர்களும் கட்டியக்காரர்களும் கதை சொல்லுகிறவர்களும் சூழ்ந்திருக்க, ஸுகமாக

நித்திரை செய்யும் என் ராமன், இப்பொழுது காஷாயத்தையும்மரவுரியையும் மான் தோலையும் தரித்து, கற்களும் முட்களும் நிறைந்த பூமியில் படுத்து, காட்டு மிருகங்களின் பயங்கரமான சப்தம் செவியைத் தொளைக்க எப்படி நித்திரை செய்வான்?

என்ன ஆச்சரியம்! ராமன் வனத்திற்குப் போகவேண்டுமென்றும் பரதனுக்கு அபிஷேகம் நடக்க வேண்டுமென்றும் இந்த யோசனை யாருக்குத் தோன்றிற்று? ஒருவரும் நினைக்காததும், இவ்வளவு கொடியதுமான இந்தச் சூழ்ச்சியை யார் உத்பத்தி செய்தார்கள்? சீ சீ! ஸ்த்ரீகளை ஒழிக்கவேண்டும். ஐயோ! எல்லா ஸ்த்ரீகளையும் நிந்தித்தேனே. பரதனுடைய தாயான கைகேயி மாத்திரமல்லவா அதற்குப் பாத்திரம்? அடி, கெட்ட எண்ணம் படைத்தவளே! உன் இஷ்டத்தைப் பூர்த்தி செய்வதிலேயே நோக்கமுள்ளவளே! கொடிய ஸ்வபாவமுள்ளவளே! என்னிடத்திலாவது, எப்பொழுதும் எல்லோருக்கும் ஹிதத்தைச் செய்யும் ராமனிடத்திலாவது உனக்கு என்ன குற்றம் தோன்றிற்று, சொல்? அவன் கஷ்டப்படுவதைப் பார்த்தாலே பெற்றோர்கள் பிள்ளைகளைக் கைவிடுவார்கள். (அரசனைப் போல் பிரஜைகளும் நடப்பார்களல்லவா?) பார்யைகள் தங்களிடத்தில் பிரியமுள்ள பர்த்தாக்களைக் கைவிடுவார்கள். (உன்னைப் பார்த்து அவர்களும் கற்றுக்கொள்வார்கள்.) உன்னிடத்தில் ஸகல பிராணிகளுக்கும் அடக்கமுடியாத கோபமுண்டாகும். ராமன் தேவ குமாரனைப்போல் ஸ்வபாவத்திலேயே வெகு ஸௌந்தரியமுள்ளவன். அலங்காரங்களால் அது இன்னும் விருத்தியடையும். அவன் மதம் பிடித்த யானையைப்போல் கம்பீரமாக நடந்து வருவதை நான் நினைக்கும்பொழுது ஸந்தோஷப்படுவேன். அவனைப் பார்க்கும் பொழுதோ நான் ஆனந்தத்தால் யுவபுருஷனாக மாறிவிடுகிறேன். அத்தகைய ராமனை விட்டு நான் எவ்வாறு உயிர் வாழ்வேன்?

ராமன் காட்டிற்குப் போனவுடன் நான் இறப்பது ஆச்சரியமல்ல. ஸூரியன் உதிக்காமல் இவ்வுலகத்தில் பிராணிகள் பிழைக்கலாம்; இந்திரன் மழையைப் பெய்யாமல் பயிர்கள் வளரலாம்; ராமனைப் பார்த்தவர்களும் பார்க்காதவர்களும் அவன் காட்டிற்குப் போவதைப் பார்த்தவுடன், உயிரை இழக்காமல் இருக்கமாட்டார்களென்று நிச்சயமாகச் சொல்வேன்.

நான் சாக வேண்டுமென்று நீ விரும்புகிறவள்; என் ஹிதத்தை விரும்பாதவள்; என் சத்துரு; என்னைக் கொல்ல வந்த மிருத்யு; வெகு காலமாக உன்னை என் வீட்டில் வளர்த்து வந்தேனல்லவா? என்ன ஆச்சரியம்! கொடிய விஷமுள்ள நாகத்தைப் புத்தி மயங்கி மடியில் கட்டிக்கொண்டிருக்கிறேன், அது என்னைக் கடித்துக் கொல்லப் போகிறது. நீயும் பரதனும் என் பந்துக்களை அழித்துவிட்டு, என் சத்துருக்களின் க்ஷேமத்தால் ஸந்தோஷமடைந்து, ராமலக்ஷ்மணர்களும் நானுமில்லாத இந்த நகரத்தையும் இந்த ராஜ்யத்தையும் ஆளுங்கள்.



குரூரமான நடத்தையுள்ளவளே! உன் கணவனிடத்தில் வைக்க வேண்டிய மரியாதையை மறந்து இப்படிப் பேசத் துணிந்தாயல்லவா? உன் பற்கள் தூள் தூளாக உதிரவில்லையே! ராமன் ஒரு நாளும் ஒருவருக்காவது ஹிதமில்லாமல் பிரியமில்லாமல் பேசியதுண்டா? கொடிய வார்த்தைகளை அவன் அறியவே அறியான். ஸகல உத்தம குணங்களும் பொருந்தியவனென்று எல்லோரும் ஒப்புக்கொள்கிறார்கள்; எல்லோரிடத்திலும் பிரியமாகவே பேசுகிறான். அவனிடத்தில் தோஷங்களைக் கற்பிக்கிறாயே! கேகய ராஜனுடைய குலத்தைக் கெடுக்க வந்தவளே! நீ துக்கத்தால் உருகிப் போனாலும் ஸரி; நீ என்ன கோபித்தாலும் ஸரி; நீ செத்தாலும் ஸரி; நீ ஆயிரம் சுக்கல்களாய் வெடித்து மண்ணோடு மண்ணானாலும் ஸரி; எனக்கு ஹிதமில்லாத இந்தக் கொடிய காரியத்தை உன் வார்த்தையைக் கேட்டுச் செய்யவே மாட்டேன். நீ கத்தியைப் போல் கொடியவள்; தப்பான புகழுரைகளைச் செய்கிறவள்; சொல்ல முடியாத கெட்ட நடத்தையுள்ளவள்; உன் குலத்தை நாசம் செய்கிறவள்; என்னுயிரை வேரோடு அறுத்துவிட வேண்டுமென்று நிச்சயித்திருக்கிறவள்; ஆகையால் நீ பிழைத்திருப்பது எனக்கு இஷ்டமில்லை. உனக்குச் சாவு வரக் காணோமே!

நானும் உயிரோடிருக்க மாட்டேன். என் அருமைக் குழந்தையை விட்டுப் பிரிந்து எனக்கென்ன ஸுகம்? அப்படிப் பிழைத்திருந்தாலும் இது முதல் உன்னிடத்தில் வெறுப்பே யொழிய பிரியமுண்டாகுமோ? ஆகையால், நீ எனக்கு யாதொரு உபத்திரவத்தையும் செய்ய வேண்டாம். உன் கால்களைப் பிடித்துக்கொண்டு வணங்கி பிரார்த்திக்கிறேன். என்னிடத்தில் தயவு செய்'' என்று தசரதர் பூமண்டல சக்ரவர்த்தியாயிருந்தும், அவளை அடக்கத் திறமையின்றி, அவளிடத்தில் எல்லையற்ற பிரியத்தை வைத்து அதனால் அவளுக்கு வசப்பட்டு அநாதையைப் போல், "நீ உயிரோடிருப்பது எனக்கிஷ்டமில்லை. உன் பாதங்களைத் தொட்டு பிரார்த்திக்கிறேன், தயவுசெய்'' என்பது போன்ற முரணான வார்த்தைகளைப் பிதற்றினார். கொஞ்சமேனும் மரியாதையில்லாமல் காலை நீட்டிக் கொண்டு உட்கார்ந்திருக்கும் கைகேயியின் பாதங்களைப் பிடிக்க முயன்று கீழே குனிந்தார். உடனே சோகம் மேலிட்டு மூர்ச்சையடைந்து அவைகளைத் தொட முடியாமல், வேரற்ற மரம்போல் பூமியில் விழுந்தார்.

ஸ பூ4மிபாலோ விலபந்நநாத2வத்
ஸ்த்ரியா க்3ருஹீதோ ஹ்ருத3யேதிமாத்ரயா |
பபாத தே3வ்யாஶ்சரணௌ ப்ரஸாரிதௌ
உபா4 வஸம்ஸ்ப்ருஶ்ய யதா2துரஸ் ததா2 || (115)

## ஸர்க்கம் 13

# தசரத கைகேயி ஸம்வாதம் (தொடர்ச்சி)

அததா³ர்ஹம் மஹாராஜம் ஶயாநமததோ²சிதம் |
யயாதிமிவ புண்யாந்தே தே³வலோகாத் பரிச்யுதம் ‖ (1)

தசரதர் இவ்விதமான துக்கத்தை அனுபவிக்கத் தகுந்தவரா? வெறும் தரையில் கிடந்து புரளத்தகுந்தவரா? அவரைப் பார்க்கையில், முன்பு யயாதி சக்கரவர்த்தி ஸ்வர்க்கத்தை அடைந்து தன் புண்யம் அழிந்தபிறகு தேவதைகளால் அங்கிருந்து தள்ளப்பட்டு பூமியில் விழுந்து கிடப்பதைப் போல் காணப்பட்டது. பாபமே ரூபமெடுத்த கைகேயி, தன் எண்ணம் நிறைவேறாததால் லோகாபவாதத்திற்கும் தன் கணவனுக்கும் கொஞ்சமேனும் பயப்படாமல், முன்பு தனக்கு அவர் கொடுத்த வரங்களை நிறைவேற்றும்படி அவரை மறுபடியும் நிர்ப்பந்திக்க ஆரம்பித்தாள். "மஹாராஜா! 'நான் ஸத்தியத்தையே பேசுகிறவன். சொன்ன சொல்லைத் தவறாதவன்' என்று நீரே உம்மைப் புகழ்ந்து கொள்ளுகிறீர். அப்படியிருக்க, எனக்குக் கொடுத்த இரண்டு வரங்களுக்கு என்னிடத்தில் ஏன் கடன்பட விரும்புகிறீர்" என்றாள்.

அதைக் கேட்டுத் தசரதர் ஒரு முகூர்த்தம் வரையில் மூர்ச்சை அடைந்து, புத்தி சிதறி, பிறகு தெளிந்து கடுங்கோபத்துடன் சொன்னார். "நீச ஸ்வபாவமுள்ளவளே! பரமசத்துருவே! என்னையும் கொன்று, புருஷோத்தமனான ராமனையும் காட்டிற்குத் துரத்திவிட்டு, உன் எண்ணங்கள் நிறைவேறி சுகமாயிரு. தேவதைகள் ஸ்வர்க்கத்தில் என்னைப் பார்த்து 'ஓய் தசரதரே! மதிகெட்ட ஒரு பெண்ணின் வார்த்தையைக் கேட்டு, அவளுடைய பிரியத்தை ஸம்பாதிக்க விரும்பி, ஸகல கல்யாண குணங்களும் பொருந்திய உமது மூத்த புத்திரனை எப்படிக் காட்டிற்கு அனுப்பினீர்' என்று என்னைக் கேட்டால் நான் எப்படிப் பிராணனை வைத்துக்கொள்வேன்? 'முன் காலத்தில் கைகேயியிக்குச் செய்த பிரதிக்ஞையை நிறைவேற்ற ராமனைக் காட்டிற்கு அனுப்பினேன்' என்று உண்மையைச் சொன்னால், 'ராம! உன்னை யுவராஜாவாக அபிஷேகம் செய்கிறேன்' என்று அவனுக்குச் செய்த பிரதிக்ஞை பொய்யாகுமே. ஆகையால் ராமனைக் காட்டிற்கு அனுப்புவதால் எனக்கு இஹத்திலும் ஸுகமில்லை, பரத்திலும் ஸுகமில்லை.

அறுபதாயிரம் வருஷங்கள் வரையில் புத்திரனில்லாமல் நான் எண்ணிறந்த விரதங்கள் ஜபங்கள் தவங்கள் ஹோமங்கள் தானதர்மங்கள் யாக யக்ஞங்களைச் செய்து, மஹா பாக்கியசாலியான ராமனைப் புத்திரனாகப் பெற்றேன். அந்தக் குழந்தையைக் காட்டிற்குத் துரத்தச் சொல்லுகிறாயே. எப்படி ஸம்மதிப்பேன்?



ராமனோ மஹாசூரன்; ஸகல வித்யைகளிலும் கரைகண்டவன்; கோபத்தை ஜயித்தவன்; பொறுமையே அவதாரம் செய்தது போன்றவன். செந்தாமரை இதழ்களைப்போன்ற நேத்திரங்களை உடைய என் அருமைக்குழந்தையை எப்படி நான் ராஜ்யத்தைவிட்டுத் துரத்துவேன்? கருநெய்தல் புஷ்பத்தின் நிறத்தைப்போன்ற தேஹ காந்தி யுள்ளவன்; முழங்கால் வரையில் நீண்ட திருக்கைகளையுடையவன்; மஹா பலசாலி. ஸகலப் பிராணிகளுக்கும் பிரியமானவன். அப்படிப்பட்ட என் அருமைக் குழந்தையைக் 'கோரமான தண்டகாரண்யத்திற்குப் போ' என்று எப்படிச் சொல்வேன்? ஸகல ஸுகங்களையும் அனுபவிக்கத் தகுந்த மஹா புத்திமானான ராமன் துக்கத்தை அனுபவிப்பதை எப்படிப் பார்ப்பேன்? அவனுக்கு இந்த துக்கத்தை உண்டுபண்ணாமல் நான் இறந்தால் அதே எனக்கு விசேஷ ஸுகத்தைக் கொடுக்கும். அடீ. குரூரஸ்வபாவமுள்ளவளே! ஆபத்திலேயே நாடிய மனத்தையுடையவளே! வீண்போகாத பராக்கிரமசாலியான என்னருமைக் குழந்தை ராமனுக்கு, லோகத்தில் எவரும் ஸம்மதிக்காத இந்த வனவாஸத்தைச் செய்விக்க ஏன் விரும்புகிறாய்? ஐயோ! லோகத்தில் பிராணிகள் உள்ள வரையில் அபகீர்த்தியும் அவமானமும் என்னை விடாதே" என்று சித்தஸ்வாதீனமின்றித் தசரதர் புலம்பிக் கொண்டிருந்தார்.

ஸூரியன் அஸ்தமித்தான்; ராத்திரி ஆரம்பித்தது. சந்திர மண்டலத்தால் அலங்கரிக்கப்பட்ட மூன்று ஜாமங்களுள்ள அந்த இரவு, துக்கத்தால் பீடிக்கப்பட்டுப் பிரலாபிக்கும் தசரதருக்கு ஒரு யுகத்தைப்போல் தோன்றிற்று. உஷ்ணமாகப் பெருமூச்சு விட்டுக் கொண்டு, மஹாரோகத்தால் பீடிக்கப்பட்டவரைப்போல், வயது சென்ற அந்தத் தசரத மஹாராஜா ஆகாசத்திலிருந்து கண்களை எடுக்காமல், கேட்பவர்களின் மனத்திற்குத் தாங்காத துக்கமுண்டாகும்படி பிரலாபித்தார்.

"நக்ஷத்திரங்களால் அலங்கரிக்கப்பட்ட ராத்திரியே! தயவு செய்து விடியாமலிரு. உன்னைக் கைகூப்பி நமஸ்கரிக்கிறேன். அப்படியும் வேண்டாம். ராத்திரி காலத்தில் இரக்கமற்ற மஹா பாபியான இந்தக் கைகேயியைப் பார்க்காமலிருக்க முடியாது. பொழுது விடிந்தால் பிரஜைகள் என் தரிசனத்திற்கு வருவார்கள். பிறகு இவள் என் கண்ணில் படமாட்டாள். ஆகையால் ராத்திரியே! சீக்கிரமாய் விடியக்கடவாய். இவ்வளவு கஷ்டத்திற்கும் காரணமான இந்தத் துஷ்டையைப்பார்க்கஎனக்கு விருப்பமில்லை" என்று துக்கித்தார். பிறகு வேறு கதியில்லை என்று அறிந்து, கைகேயியைக் கைகூப்பி பிரார்த்தித்து, ஸமாதானம் செய்ய முயன்றார்.

பெண்ணே! இதுவரையில் நன்னடத்தை உள்ளவனென்று பெயரெடுத்துவிட்டேன்; வயது மேலிட்டுவிட்டது; வெகுகாலம் பிழைத்திருக்கமாட்டேன்; மனதோ மிகவும் நொந்திருக்கிறது;

உன்னைத் தவிர எனக்கு வேறு கதியில்லை. மேலும், நான் உன் அரசனல்லவா? நீ நல்ல ஸ்வபாவமுள்ளவளன்றோ? ராஜமஹிஷி என்ற உன்னத பதவியை என்னால் பெற்றாயல்லவா? இவைகளை யோசித்து என்னிடத்தில் தயவு செய்.

முன்பு உனக்கு வரங்களைக்கொடுத்தபொழுது வேறு யாருக்கும் தெரியாது. அவைகளை இப்பொழுது நீ வேண்டாமென்றால் உன்னைப் பரிஹாஸம் செய்கிறவர்கள் எவருமில்லை. உன்னை நிர்ப்பந்திப்பவர்கள் ஒருவருமில்லை, நீ விட்டுக் கொடுக்கலாம். ராமனிடத்தில் நான் செய்த பிரதிக்ஞையோ அவ்விதமல்ல. பிரஜைகள், ஜாதித் தலைவர்கள், பிராம்மணர்கள், ரிஷிகள், பலதேசத்து அரசர்கள் முன்பாக ராஜஸபையில், 'ராமனுக்கு நாளை யௌவராஜ்ய பட்டாபிஷேகம் செய்விக்கிறேன்" என்று பிரதிக்ஞை செய்திருக்கிறேன். அதைத் தவறினால் அவர்களெல்லோரும் என்னைப்பற்றி என்ன எண்ணுவார்கள்? நீயோ சிறு பெண்; ஒருவேளை பிறர் சொல்வதைக் கேட்டு இப்படிப் பிடிவாதம் பிடிக்கலாம். அதைப் பற்றி நான் வருந்தவில்லை; போகட்டும். இப்பொழுதாவது என் பிரார்த்தனையை ஒப்புக்கொண்டு நிறைவேற்று. நீ எனக்கு மிகவும் வேண்டியவளல்லவா? அழகிய கண்களை யுடையவளல்லவா? என்னிடத்தில் நீ கோபித்தாலும் ராமனிடத்திலாவது கிருபை செய். நான் உனக்குச் சொன்ன வார்த்தைப்படி இந்த ராஜ்யம் உன்னுடையதே. ஆனால் என்னிடத்திலும் அவனிடத்திலும் கிருபை செய்து, நீ இதை அவனுக்கு தானம் கொடு. உன் கையால் இதைப் பெற்றுக்கொண்டு அவன் க்ஷேமமாக வெகு காலம் ஆளட்டும். அப்படிச் செய்வதால் உனக்கு இவ்வுலகத்தில் அழிவற்ற கீர்த்தியும், பரலோகத்தில் மஹா புண்ணியமும் உண்டு. பருத்த துடைகளை உடையவளே! ஸுந்தரமான முகத்தையும் பார்வையையும் உள்ளவளே! இப்படிச் செய்தால் என் பிரார்த்தனையும் நிறைவேறும்; ராமனும் ஸந்தோஷிப்பான்; ஸகலப் பிராணிகளும் உன்னைக் கொண்டாடுவார்கள்; நல்லவர்கள் திருப்தி அடைவார்கள்; ஒரு வேளை பரதன் வருத்தப் படுவானோ என்று யோசிக்கிறாயா? அவன் மஹாத்மாவல்லவா? தர்மவானல்லவா? ராமனிடத்தில் அளவற்ற பிரீதி வைத்தவனல்லவா? அவன் அதைக் கேட்டு ஸந்தோஷிப்பான் என்பதற்கு ஸந்தேகமே இல்லை" என்று பலவிதமாகப் பிரார்த்தித்தார்.

அவர் சுத்தமான மனத்தை உடையவர்; கைகேயியோ கெட்ட எண்ணமுள்ளவள்; துக்கத்தாலும் தூக்கமில்லாததாலும் அவருடைய கண்கள் சிவந்திருந்தன; கோபத்தாலும் தன் எண்ணம் நிறைவேறவில்லை என்ற வருத்தத்தாலும் அவளுடைய கண்களும் சிவந்திருந்தன; ராமனை விட்டுப் பிரிவதை நினைக்கும்போதெல்லாம் அவருடைய கண்களிலிருந்து நீர் பெருகிற்று; தன் கணவனை வசப்படுத்த இன்னும் முடியவில்லையல்லவா என்று நினைக்கும்போதெல்லாம் கைகேயிக்குத் துக்கத்தால் கண்ணீர் பெருகிற்று. கேட்பவர்களின் மனம் உருகும்படி அவர் நயமாயும் பயமாயும் பேசிக் கைகேயியின் மனத்தை திருப்ப எவ்வளவோ முயன்றார்; குரூரமாயும் மிருதுவாயும் தர்மோபதேசமாயும் பேசி, அரசனுடைய மனத்தைத் திருப்பித் தன் காரியத்தை முடிக்க கைகேயியும் மஹாப்ரயத்தனம் செய்தாள். ஆனால் கடினமான மனத்தையும் கொடிய ஸ்வபாவத்தையும் உடையவளாகையால் அவருடைய பிரார்த்தனையைக் கொஞ்சமும் லக்ஷ்யம் செய்யவில்லை. அதைக்கண்டு தசரதர் மூர்ச்சை அடைந்து பிறகு தெளிந்து, "இதுவரையில் பதிவிரதையாய் நல்ல ஸ்வபாவமுள்ளவளாய், என் பிரீதிக்குப் பாத்திரமாயிருந்த கைகேயியும் இப்பொழுது என்னை எதிர்த்துப் பேசி, நான் எவ்வளவு பிரார்த்தித்தும் ஒரே பிடிவாதமாயிருப்பவளும் ஒருத்திதானோ என்று அவளை உற்றுப் பார்த்தார். உடனே, ராமனைக் காட்டிற்கு அனுப்புவதென்ற விஷயம் ஞாபகத்திற்குவந்தது. துக்கம் மேலிட்டு பிரக்ஞையற்றுப் பூமியில் விழுந்தார். இப்படி உத்தம ஸ்வபாவமுள்ள தசரதர் அன்று ராத்திரி முழுதும் வருத்தத்தால் பெருமூச்சு விட்டுக் கொண்டு காலத்தைக் கழித்தார்.

பிறகு பொழுது விடிந்தது; சங்கம் வீணை படஹம் முதலிய வாத்தியங்களுடன் ஸூதர்களும் மாகதர்களும் வந்திகளும் அவரை எழுப்ப ஆரம்பித்தார்கள்; ஆனால் அவை வேண்டாமென்று அவர்களைத் தடுத்துவிட்டார்.

இதீவ ராஜ்ஞோ வ்யதி2தஸ்ய ஸா நிஶா
ஜகா3ம கோ4ரம் ஶ்வஸதோ மநஸ்விந: |
விபோ3த்4யமாந: ப்ரதிபோத4நம் ததா3
நிவாரயாமாஸ ஸ ராஜஸத்தம: || (27)



## ஸர்க்கம் 14

## தசரதர் ராமனைக் காட்டிற்கு அனுப்ப நிச்சயித்தது

புத்ர ஶோகார்தி3தம் பாபா விஸம்ஜ்ஞம் பதிதம் பு4வி |
விவேஷ்டமாநமுத்3வீக்ஷ்ய ஸைக்ஷ்வாக மித3மப்3ரவீத் || (1)

புத்திரனை விட்டுப்பிரிய வேண்டுமே என்ற சோகத்தால் தன் கணவன் பீடிக்கப்பட்டு, பிரக்ஞையற்றுப் பூமியில் விழுந்து புரளுவதைப் பார்த்தும் அந்த மஹாபாபி, அவர் அபார கீர்த்தி பெற்ற இக்ஷ்வாகு குலத்திற் பிறந்த சக்கரவர்த்தியல்லவா என்பதையும் கொஞ்சம்கூட யோசிக்காமல், "அரசரே! கேட்ட வரங்களைக் கொடுக்கிறேனென்று நீர் பிரதிக்ஞை செய்தீர். பிறகு அதை நிறைவேற்றாமல் கொடிய பாபத்தை ஸம்பாதித்தீர். தரையில் கிடந்து எதற்காகப் புரளுகிறீர்? சொன்ன வார்த்தையைக் காப்பாற்ற வேண்டுமென்பதை மறக்கக்கூடாது. உண்மை பேசுவதே உத்தமமான தர்மமென்று தர்ம ரஹஸ்யத்தை அறிந்தவர்கள் சொல்லுகிறார்கள்.

ஸத்தியமென்ற தர்மத்தை ஒட்டியே நடக்கச் சொல்லி நானும் உம்மை வற்புறுத்துகிறேன். ஒரு கழுகுக்குப் பிரதிக்ஞை செய்து சிபி ராஜன் தன் தேகத்தை அறுத்துக் கொடுத்து உத்தம கதியை அடைந்தார். மஹா தேஜஸ்வியான அலர்க்கரென்ற ராஜரிஷி வேதங்களில் கரைகண்ட ஒரு பிராம்மணன் தம்மை யாசித்த பொழுது, தன் கண்களைப் பிடுங்கி அவனுக்கு ஸந்தோஷமாய்க் கொடுத்தார். ஸமுத்திரராஜன் தான் சொன்ன வார்த்தைக்குக் கட்டுப்பட்டு, ஒருபொழுதும் தன் எல்லையைத் தாண்டுவதில்லை. அது அவனுக்கு ஸுலபமான காரியமல்லவா? லோகத்தில் ஸகலப் பிராணிகளும் எதை முக்கியமாக அடைய விரும்புகிறார்களோ அந்த பிரஹ்மம், ஸத்யரூபமாக விளங்குகிறது. தர்மமும் ஸத்தியத்தில் வேரூன்றி இருக்கிறது. அழிவற்ற வேதங்களும் ஸத்தியத்தையே பிரதானமாக உபதேசிக்கின்றன. ஸத்தியத்தால் ஒருவன் முக்கியமான பிரயோஜனத்தை அடைகிறான். தர்மவானாயிருக்க வேண்டுமென்று நீர் விரும்பினால் ஸத்தியத்தைக் கைவிட வேண்டாம். நீர் ஸாது சிரேஷ்டரல்லவா? எதைக் கேட்டாலும் கொடுப்பவரல்லவா? ஆகையால் நான் கேட்ட வரங்கள் வீணாக வேண்டாம். உமது தர்மம் வளர்வதற்கும் உமக்குப் பிரியமான என் பிரார்த்தனையை நிறைவேற்றுவதற்கும், உமது புத்திரனான ராமனைக் காட்டிற்கு அனுப்பும். ஒரு தடவை, இரண்டு தடவை, மூன்று தடவையும் எச்சரிக்கிறேன். அப்படிச் செய்யாமல் நீர் என்னை அலக்ஷ்யம் பண்ணினால் உமக்கெதிரிலேயே பிராணனை விடுவேன்'' என்றாள்.

தன் காரியம் ஜயிக்குமென்ற நிச்சயமுள்ள கைகேயி இப்படித் தூண்ட, முன்பு உபேந்திரனாய் அவதரித்த மஹா விஷ்ணுவினால் போடப்பட்ட பாசத்திலிருந்து மஹாபலி தப்பமுடியாமல் தவித்தது போல், தசரதர் தன் பிரதிக்ஞை என்ற பாசத்திலிருந்து தப்ப முடியாமல் தவித்தார். நுகத்தடிக்கும் சக்கரங்களுக்கும் நடுவில் அகப்பட்ட எருதைப் போல் கலங்கின மனத்துடன், காந்தி குறைந்த முகத்துடன், கண்கள் பஞ்சடைந்து குருடனைப்போல் சற்று நேரம் தத்தளித்தார். பிறகு, க்ஷத்திரியனானதாலும் மஹா புத்திமானானதாலும், துக்கத்தை அடக்கி, தைரியத்தைக் கைப்பற்றி, "அடீ, பாபி! முன் காலத்தில் அக்னி ஸாக்ஷியாய் மந்திரங்களுடன் நான் உன் கையைப் பிடித்தேனல்லவா? அதையும் உன்னால் எனக்குப் பிறந்த புத்திரனையும் இத்துடன் விட்டேன். ராத்திரி முடிந்தது; ஸூரியன் உதித்தது. ரிஷிகளும் பிராம்மணர்களும் ராமனுக்கு அபிஷேகம் செய்யும்படி என்னைச் சீக்கிரப்படுத்துவார்கள். அதற்காகச் சேர்க்கப்பட்ட பதார்த்தங்களாலேயே என் பிரேதக் கிரியைகளை நடத்தலாம். இந்த அபிஷேகத்தை நீ தடுத்தால், மஹா பாபியான நீயும் உன் மகனும் எனக்குத் தர்ப்பணம் முதலிய உத்தரக்கிரியைகளைச் செய்யவேண்டாம். ராமனுக்கு அபிஷேகம் நடக்குமென்று ஸந்தோஷத்தால் மூகம் மலர்ந்த பிரஜைகளை இதுவரையிலும் பார்த்துவிட்டு,



இப்பொழுது அவர்கள் ஸந்தோஷமற்றுத் துக்கத்தால் தலை குனிந்து நிற்பதைப் பார்க்க எப்படி ஸஹிப்பேன்'' என்றார்.

தசரதர் இப்படிச் சொல்லிக்கொண்டிருக்கையில் சந்திரனும் நக்ஷத்ரங்களும் விளங்கும் ராத்திரி முடிந்து, பொழுது விடிந்தது. ஒரு விதத்தில் தசரதருக்கு விசேஷ துக்கத்தை அது கொடுத்தாலும், இடைவிடாமல் ராமனுடைய ஞாபகத்தை உண்டாக்கியதால் அது அவருக்குப் புண்ணியதினமென்றே சொல்லவேண்டும். அப்பொழுது ஸமயோசிதமாகப் பேசும் கைகேயி கோபத்தால் மெய் மறந்து அரசனை மறுபடியும் குரூரமான வார்த்தைகளால் துளைக்க ஆரம்பித்தாள். "விஷத்தைப் புஜித்ததால் உண்டாகும் ரோகத்தைப்போல் உமது வார்த்தைகள் எனக்குத் தாங்கமுடியாத வருத்தத்தை உண்டு பண்ணுகின்றன. உமது புத்திரனான ராமனை இந்த க்ஷணமே இங்கு வருவிக்கவேண்டும். இன்னும் என்னை வருத்தப்படுத்த வேண்டாம். என் புத்திரனுக்கு இந்த ராஜ்யத்தில் அபிஷேகம் செய்வித்து, ராமனைக் காட்டிற்கு அனுப்பி, எனக்குச் சத்துருவில்லாமல் செய்து உமது பிரதிக்ஞையை நிறைவேற்றும்'' என்றாள்.

கூர்மையான தார்க்குச்சியினால் குத்தப்பட்ட உத்தமமான குதிரையைப்போல் அந்த வார்த்தைகளால் தசரதர் துளைக்கப்பட்டு அதைப் பொறுக்க முடியாமல், "பிரதிக்ஞையை நிறைவேற்றுவதென்ற தர்ம பாசத்தால் கட்டுப்பட்டிருக்கிறேன். எனக்கு சித்த ஸ்வாதீனமில்லை. என்ன செய்வேன். ஆனாலும் தர்மம் தவறாத என் மூத்த புத்திரனை, என் அருமைக் குழந்தையை இன்னுமொரு தரம் பார்க்க விரும்புகிறேன்'' என்று கதறினார்.

பொழுது விடிந்தது; ஸூரியனும் உதித்தான். ராமாபிஷேகத்திற்கு ஏற்படுத்தின புண்ணிய நக்ஷத்திரமும் முகூர்த்தமும் ஸமீபித்தன. அப்பொழுது உத்தம குணங்களால் அலங்கரிக்கப்பட்ட வஸிஷ்ட மஹரிஷி, தன் சிஷ்யர்கள் பின் தொடர, அபிஷேகத்திற்கு வேண்டிய ஸாமான்களை ஸித்தம் செய்துவிட்டு நகரத்தில் பிரவேசித்தார். வீதிகள் ஜலம் தெளித்துச் சுத்தம் செய்யப்பட்டிருந்தன; அழகான கொடிகளும் தோரணங்களும் எடுத்துக் கட்டப்பட்டிருந்தன; புஷ்பங்கள் வாரி எங்கும் தூவப்பட்டிருந்தன; மாலைகள் அங்கங்கே தொங்கவிடப்பட்டிருந்தன. ஸகல வஸ்துக்களாலும் நிறைந்த கடைகள் திறக்கப்பட்டிருந்தன. ராமாபிஷேகத்தைப் பார்க்க ஆவல் கொண்ட ஸகல ஜனங்களும் அதைப் பற்றியே ஸந்தோஷமாகக் கூடிப் பேசிக் கொண்டிருந்தார்கள். சந்தனம் அகில் தூபம் முதலிய வாஸனை திரவியங்களால் எங்கும் பரிமளமாயிருந்தது. வஸிஷ்டர் நகரத்திற்கு வெளியில் ஸரயூ நதியில் ஸ்நானம் செய்து, அனுஷ்டானங்களை முடித்துக்கொண்டு, இந்திரனுடைய ராஜதானியைப் போன்ற அந்த நகரத்தின் வழியாய் அரசனுடைய அரண்மனைக்கு வந்தார். அங்கே பிராம்மணர்களும், நகரத்து ஜனங்களும், நாட்டுப்புரத்து ஜனங்களும், யாக யக்ஞங்களில்

நிபுணர்களாய் ராஜஸதஸில் வழக்கமாக இருக்கும் பிராம்மணர்களும் தசரதருடைய வரவை எதிர்பார்த்துக் கொண்டிருந்தார்கள். அவர்களைத் தாண்டி அந்தப்புரத்திற்கு ஸமீபத்தில் போகும்பொழுது ஸுமந்திரரென்ற ஸாரதி அங்கிருந்து வெளியில் வருவதைக்கண்டார். அரசனுக்கு முக்கிய நண்பரான ஸுமந்திரரைப் பார்த்து, "மஹா புத்திமானே! நான் இங்கே வந்திருப்பதாகத் தசரதருக்குத் தெரிவி. ராமாபிஷேகத்திற்காக தங்கக் குடங்களில் ஸமுத்திர ஜலமும் கங்கா ஜலமும் தருவிக்கப்பட்டிருக்கிறது. ஔதும்பர மரத்தால் செய்த பலகையும், ஸகல தான்யங்களின் விதைகளும், வாஸனைத் திரவியங்களும், ரத்தினங்களும், தேன் தயிர் நெய் பொரி, தர்ப்பம் புஷ்பம் பால், அழகுள்ள எட்டு கன்யைகள், மதம் பிடித்த யானை, நான்கு குதிரைகள் பூட்டின ரதம், உத்தமமான கத்தி, வில், பல்லக்கு முதலிய வாஹனங்கள், சந்திரனைப் போன்ற வெள்ளைக்குடை, வெண்சாமரங்கள், தங்க வட்டில், தங்க ஹாரங்களால் அலங்கரிக்கப்பட்ட வெண்ணிற ரிஷபம், நன்கு தெரிகின்ற நான்கு பற்களையுடைய ஸிம்ஹம், மஹா பலமுள்ள அசுவம் (குதிரை) புலித்தோலால் மூடப்பட்ட ஸிம்ஹாஸனம், ஹோமத்திற்காக அக்னி, வாத்தியங்கள், வேசியர்கள், புரோஹிதர்கள், பிராம்மணர்கள், பசுக்கள், புண்ணிய மிருகங்கள், பக்ஷிகள் முதலிய யாவும் ஸித்தமாயிருக்கின்றன. பட்டணத்திலும் நாட்டுப்புறத்திலும் உள்ள ஜனத்தலைவர்களும், ஒவ்வொரு தெருவிலுள்ள வியாபாரிகளும் தலைவர்களும், நானா தேசத்து அரசர்களும், இன்னும் அநேக ஜனங்களும், ராமனுக்கு ஹிதத்தையே சொல்லிக்கொண்டு மஹா ஸந்தோஷத்துடன் அபிஷேக ஸமயத்தை எதிர்பார்த்துக்கொண்டிருக்கிறார்கள். பொழுது விடிந்தது. புண்ணிய நக்ஷத்திரமும் முகூர்த்தமும் ஸமீபித்துவிட்டன. அதில் ராமனுக்கு அபிஷேகம் நடக்க வேண்டும். அதற்காக மஹாராஜாவைச் சீக்கிரப்படுத்தும்" என்றார்.

உடனே ஸுமந்திரர் தசரதரை ஸ்தோத்திரம் செய்துகொண்டு அந்தப்புரத்தில் நுழைந்தார். அவர் அரசனுக்குப் பிரியமான மித்திரர்; வயது சென்றவர்; எப்பொழுதும் தடையின்றி அந்தப்புரத்தில் பிரவேசிக்க உத்தரவு பெற்றவர். ஆகையால் அந்த ஸாரதியை அங்கிருந்த காவற்காரர்கள் தடுக்காமல், அரசனுடைய ஆக்ஞைப்படி உள்ளே போகவிட்டார்கள். தசரதர் இருக்கும் ஸ்திதியையும், அவர் அனுபவிக்கும் கஷ்டத்தையும் அறியாதவரானதால், அவருடைய ஸமீபத்தில் போய்க் கைகூப்பி அந்த ஸமயத்தில் தகுந்தபடி அவருக்கு விசேஷ ஸந்தோஷத்தை உண்டுபண்ணக் கூடிய வார்த்தைகளால் ஸ்தோத்திரம் செய்ய ஆரம்பித்தார்.

"ஸூரிய சந்திரர்கள் உதிக்கும்பொழுது மிகுந்த தேஜஸ் வாய்ந்த ஸமுத்திர ராஜன் ஸந்தோஷத்தால் பொங்குகிறான்; அப்படி நீரும் உமது தரிசனத்தால் எங்கள் மனத்தை ஸந்தோஷப்படுத்தும். இந்த ஸமயத்தில் தேவேந்திரனை மாதலியென்ற ஸாரதி, ஸ்தோத்திரம் செய்ய, அதனால் அவர் உத்ஸாகமடைந்து, அஸுரர்களை ஜயித்தார்; அதுபோல் நானும் தங்களை ஸ்தோத்திரத்தால் எழுப்புகிறேன். வேதங்களும் வேதாங்கங்களும் ஸகல வித்யைகளும் பிரம்மாவை எழுப்புவதுபோல் நானும் தங்களை எழுப்புகிறேன். ஸகலப் பிராணிகளுக்கும் ஆதாரமான பூமியை ஸூரிய சந்திரர்கள் எழுப்புவதுபோல் நான் தங்களை எழுப்புகிறேன். மஹாராஜ! எழுந்திருக்க வேண்டும். ராமாபிஷேகத்திற்கு வேண்டிய ஸகல அலங்காரங்களையும் தரித்துக்கொண்டு, மஹா காந்தியுள்ள தேகத்துடன், மேரு பர்வதத்தில் உதிக்கும் ஸூரியனைப்போல் எங்களுக்குத் தர்சனம் கொடுக்கவேண்டும். சந்திரன் ஸூரியன் சிவன் குபேரன் வருணன் அக்னி இந்திரன் முதலிய தேவதைகள் தங்களுக்கு ஜயத்தைக் கொடுக்கட்டும். ஸகலப் பிராணிகளுக்கும் ஸந்தோஷத்தை உண்டுபண்ணும் ராமாபிஷேகத்தை அழைத்துவரும் ராத்திரி முடிந்தது. அபிஷேகத்திற்காகத் தாங்கள் கட்டளையிட்டபடி ஸகல காரியங்களையும் செய்து முடித்திருக்கிறோம். மஹாராஜா! தாங்கள் எழுந்து இனிமேல் நடக்க வேண்டிய காரியத்தை உத்தரவு செய்ய வேண்டும்; ஸகல பதார்த்தங்களும் ஸித்தமாயின. பட்டணத்து ஜனங்கள் நாட்டுப்புறத்து ஜனங்கள், வியாபாரிகள், பிராம்மணர்கள் இன்னும் மற்றவர்களுடன் வஸிஷ்டபகவான் காத்துக்கொண்டிருக்கிறார். ஆகையால் ராமனுக்கு அபிஷேகம் நடக்கும்படி சீக்கிரம் உத்தரவாக வேண்டும். பாலகனில்லாத பசு மந்தையைப் போலும், தலைவனில்லாத ஸேனையைப் போலும், சந்திரனில்லாத ராத்திரியைப் போலும், நாயகனான விருஷபமில்லாத பசுக்களைப் போலும், பிரஜைகள் மஹாராஜாவைக் காணாமல் கலங்குகிறார்கள். ஆகையால் தயவு செய்து அவர்களுக்குத் தர்சனம் கொடுக்க வேண்டும்" என்று ஸுமந்திரர் மனத்துக்குத் திருப்தியாய், ஸகல மங்களங்களுக்கும் ஹேதுவாய் ஸமயோசிதமாய்த் துதித்தார். ஆனால், அது தசரதருக்கோ புண்ணில் ஈயத்தைக் காய்ச்சி ஊற்றினது போலிருந்தது. மஹா தார்மிகராய், ஸகல ஐசுவரியங்கள் பொருந்தினவராயிருந்தும், புத்திரசோகத்தால் ஸந்தோஷமற்றுத் துக்கத்தால் கண்கள் சிவந்து "ஸுமந்திரரே! சொல்ல முடியாத துக்கத்தை அனுபவித்துக் கொண்டிருக்கும் என் ஹிருதயத்தை உமது வார்த்தைகள் இன்னும் அதிகமாகப் புண்படுத்துகின்றன" என்று பரிதாபமான குரலுடன் மறுமொழி சொன்னார்.

அதைக் கேட்டு ஸுமந்திரர் திடுக்கிட்டு, துக்கத்தால் சோர்ந்திருக்கும் மஹாராஜாவை உற்றுப்பார்த்து ஒன்றும் பேசாமல் கைகூப்பிக்கொண்டு இரண்டடி பின் நகர்ந்தார். அரசன் துக்கம் மேலிட்டு ஒன்றும் சொல்ல முடியாமல் தபித்ததைக் கண்டு கைகேயி, ராஜ நீதியை அனுஸரித்துத் தன் உத்தேசத்தை முடிப்பதில் கவனமுள்ளவளாக "ஸுமந்திரரே! மஹாராஜா ராமனுக்கு நடக்கப்போகிற அபிஷேக மஹோத்ஸவத்தைப் பற்றிப் பேசிக்

கொண்டு ஸந்தோஷத்தால் தூக்கமில்லாமல் கண்விழித்துக் களைத்திருக்கிறார். இப்பொழுதுதான் சற்றுக் கண் அயர்ந்தார். மஹா கீர்த்திமானான ராமனை இப்பொழுதே போய் அழைத்து வாரும், வேறு யோசனை வேண்டாம்; சீக்கிரம்' என்றாள். தன்னை இப்படி வெகு விரைவாகப் போகும்படி அனுப்பியதால் ஏதோ ராமனுக்கு விசேஷ க்ஷேமம் நேரப்போகிறதென்று தனக்குள் மகிழ்ந்து, அந்த மாயாவியான கைகேயி செய்த உத்தரவைத் தசரதர் செய்ததென்றே எண்ணி, அதிவேகமாக ராமனுடைய அரண்மனைக்குச் சென்றார். ஸமுத்திரத்தின் மடுவைப்போன்ற அந்த அந்தப்புரத்திலிருந்து வெளியில் வரும்பொழுது, வாசலில் நானாதேசத்து அரசர்களும் பட்டணத்திலுள்ள விசேஷ தனவந்தர்களும் காணிக்கைகளை வைத்துக்கொண்டு கூட்டம் கூட்டமாக நிற்பதைக் கண்டார்.

தத: புரஸ்தாத் ஸஹஸா விநி:ஸ்ருதோ
மஹீபதீந் த்$^{3}$வாரக$^{3}$தாந் விலோகயந் |
த$^{3}$த$^{3}$ர்ஶ பௌராந் விவிதா$^{4}$ந் மஹாத$^{4}$நாந்
உபஸ்தி$^{2}$தாந் த்$^{3}$வாரமுபேத்ய நிஷ்டி$^{2}$தாந் || (69)

---

ஸர்க்கம் 15

## ஸுமந்திரர் ராமனை அழைத்துவரச் சென்றது

---

தே து தாம் ரஜநீ முஷ்ய ப்$^{3}$ராஹ்மணா வேத$^{3}$பாரகா$^{3}$: |
உபதஸ்து$^{2}$ ருபஸ்தா$^{2}$நம் ஸஹராஜபுரோஹிதா: || (1)

**அ**ப்பொழுது வேதங்களைக் கரைகண்ட பிராம்மணர்களும் ராஜ புரோகிதர்களும் மந்திரிகளும் ஸேனைத் தலைவர்களும் நகரத் தலைவர்களும் ராமனுடைய அபிஷேகத்தைப்பற்றி ஸந்தோஷத்துடன் ஸபைக்கு வந்து சேர்ந்தார்கள். ஆகாசத்தில் மேகங்களின்றி ஸூரியன் நிர்மலமாய் விளங்கினான். புஷ்ய நக்ஷத்திரத்துடன் கூடின தினம் ஆரம்பித்தது. ராமனுக்கு ஜன்மலக்னமான கர்க்கடகம் ஸமீபித்தது; அபிஷேகத்திற்காகத் தங்கக் குடங்களில் புண்ணியதீர்த்தங்கள், கங்கையும் யமுனையும் சேருமிடத்திலிருந்தும் மற்றப் புண்ணிய நதிகள், மடுக்கள், கிணறுகள், ஏரிகளிலிருந்தும், கோதாவரி காவேரியைப்போல் கிழக்கே ஓடும் நதிகளிலிருந்தும், நைமிசாரண்யத்திலுள்ள பிரஹ்மாவர்த்தம் ருத்ராவர்த்தமென்ற பூமிக்குள்ளிருந்து மேலே கிளம்பும் ஜலப்பிரவாகங்களிலிருந்தும், தெற்கிலிருந்து வடக்கே ஓடும் கண்டகி சோணா பத்ரா முதலிய நதிகளிலிருந்தும், நான்கு ஸமுத்திரங்களிலிருந்தும் கொண்டுவரப்பட்ட தீர்த்தங்கள். நன்றாக அலங்கரிக்கப்பட்ட பீடம், அழகிய புலித்தோல் பரப்பின ரதம், அரசு அத்தி இவைகளின் இலைகளால் மூடப்பட்ட பொரி நிறைந்த வெள்ளிக்குடங்கள் தங்கக் குடங்கள்; தாமரை இதழ்கள் முதலியவை கலந்த புண்ணியஜலம்; தேன் தயிர் நெய் பொரி தர்ப்பம் புஷ்பங்கள் பால், ஸகல ஆபரணங்களால் அலங்கரிக்கப்பட்ட நன்னடத்தையுள்ள வேசியர்கள், ரத்தினங்களிழைத்து, தங்கப்பிடிபோட்டுச் சந்திரகிரணங்களைப் போல் விளங்கும் சிரேஷ்டமான சாமரங்கள், சந்திரமண்டலத்தைப் போல் பிரகாசிக்கும் வெண்குடை, வெள்ளை ரிஷபம், வெள்ளைக் குதிரை, அரசர்கள் ஏறத் தகுந்த மதம்பெருகும் யானை, ஸகல ஆபரணங்களால் விளங்கும் மங்களகரமான எட்டுக் கன்னிகைகள், நான்குவித வாத்தியங்கள், வந்திகள் மாகதர்கள் முதலியவர்களையும்; இக்ஷ்வாகு வம்சத்தரசர்களுக்கு யௌவராஜ்யாபிஷேகம் செய்யும்பொழுது ஸம்பாதிக்கவேண்டிய மற்ற ஸாமான்களையும் உத்தியோகஸ்தர்கள் அரசனுடைய உத்தரவுப்படி ஸித்தம் செய்து, அரண்மனை வாசலில் வந்து கூடி, அவரைக் காணாமல், "நாங்கள் வந்திருப்பதை யார் தெரிவிப்பார்கள்? அவரைக் காணோமே. ஸூரியன் உதயமாயிற்றே. ராமாபிஷேக முகூர்த்தம் ஸமீபித்துவிட்டதே" என்று பேசிக்கொண்டிருந்தார்கள்.

அப்பொழுது ஸுமந்திரர் அங்கிருந்த ஸார்வபௌமர்களையும் சிற்றரசர்களையும் பார்த்து, "அரசனுடைய உத்தரவினால் ராமனை அழைத்துவர வேகமாகப் போகிறேன். நீங்கள் மஹாராஜாவாலும் ராமனாலும் விசேஷமாகப் பூஜிக்கத் தகுந்தவர்கள். ஆகையால் நீங்கள் விசாரித்ததாக மஹாராஜாவை க்ஷேமம் விசாரிக்கிறேன். இவ்வளவு நேரமாயும் தரிசனம் கொடுக்காததற்குக் காரணத்தையும் கேட்கிறேன்" என்று மறுபடியும் அந்தப்புரத்தை நோக்கிச் சென்றார். அரசர்களைப்பற்றிய ஸகல விஷயங்களையும் வெகுகாலமாக நன்றாக அறிந்தவர். தடையின்றித் தசரதர் இருக்குமிடத்திற்கு ஸமீபத்தில் போய் அங்கே போட்டிருந்த திரைக்கு எதிரே நின்றுகொண்டு, அந்த ஸமயத்திற்கேற்ற ஆசீர்வாத வசனங்களால் ஸ்தோத்திரம் செய்தார். "ஸூரியசந்திரர்கள், சிவன், குபேரன், வருணன், அக்னி, இந்திரன் முதலிய தேவதைகள் உமக்கு எப்பொழுதும் ஜயத்தைக் கொடுக்கட்டும். ராத்திரிப் பொழுது சென்று ஸூரியோதயமாயிற்று. உத்தரவுப்படி எல்லாம் தயாராக இருக்கின்றது. தயவு செய்து எழுந்து மேலே நடக்க வேண்டியதைக் கட்டளையிட வேண்டும். பிராம்மணர்களும் ஸேனைத்தலைவர்களும் நகரத் தலைவர்களும் தங்களுடைய தரிசனத்தை எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறார்கள். எழுந்திருக்க வேண்டும்" என்றார்.

இப்படி ராஜ நீதியை நன்றாயறிந்த ஸுமந்திரர், ஸ்தோத்திரம் செய்தது தசரதருடைய காதில் விழ, அவர் விழித்துக்கொண்டு, "ஸுமந்திரரே! ராமனை அழைத்து வரும்படி கைகேயி உம்மை அனுப்பினாளல்லவா? இன்னும் ஏன் என் கட்டளைப்படி அழைத்து வரவில்லை? தூங்குகிறேனென்று நினைக்கவேண்டாம். சீக்கிரமாகப்

போய் ராமனை அழைத்துவாரும்" என்று மறுபடியும் உத்தரவு செய்தார்.

ஸுமந்திரர் தலை வணங்கி, ராமனுக்கு ஏதோ விசேஷ க்ஷேமம் நேரிடப்போகிறதென்று ஸந்தோஷித்து அந்தப்புரத்திலிருந்து புறப்பட்டார். கொடிகள் த்வஜங்களால் அலங்கரிக்கப்பட்ட ராஜ வீதிகளின் வழியாகப் போகும்பொழுது ஸகல ஜனங்களும் ராமனுடைய அபிஷேகத்தைப் பற்றியே ஆனந்தமாகப் பேசிக்கொண்டிருந்தார்கள். பிறகு கைலாஸ சிகரத்தையும் இந்திரனுடைய அரண்மனையையும் போன்ற ராமனுடைய இருப்பிடத்திற்கு ஸமீபத்தில் வந்தார். விசித்திரமாக வேலை செய்யப்பட்ட பெரிய கதவுகளால் அது அலங்கரிக்கப்பட்டிருந்தது. அங்கங்கே தங்கப் பிரதிமைகள் காணப்பட்டன. முத்துமாலைகளும் ரத்னமாலைகளும் கட்டப்பட்ட பல மேடைகள் போடப்பட்டிருந்தன. சரத்காலத்து மேகத்தையும் மேருமலையின் குகையையும்போல் முத்துக்கள் நவரத்தினங்கள் முதலிய விலையுயர்ந்த பதார்த்தங்களால் அலங்கரிக்கப்பட்டுச் சந்தனம் அகில் முதலிய வாஸனைத் திரவியங்களால் பரிமளம் வீச, தர்துரபர்வதத்தின் சிகரத்தைப் போல் பிரகாசித்தது. அன்னங்களும் மயில்களும் சக்கரவாகங்களும் இனிமையாகக் கூவிக்கொண்டிருந்தன. வாசற் சுவர்களிலும் தூண்களிலும் செந்நாய் யாளி முதலிய மிருகங்கள் விசித்திரமாக வேலை செய்யப்பட்டிருந்தன; சுவர்களில் அபூர்வமான சித்திரங்கள் எழுதப்பட்டிருந்தன. அதன் காந்தி பார்ப்பவர்களின் மனத்தையும் கண்களையும் கவர்ந்தது. ஸூரிய சந்திரர்களின் மண்டலங்களைப்போலும், குபேரனுடைய கிருஹத்தைப்போலும், மஹேந்திரனுடைய அரண்மனையைப்போலும், மேருமலையின் கொடுமுடியைப்போலும் தோன்றிற்று. அபூர்வமான பக்ஷிகள் கூடுகளில் வளர்க்கப்பட்டன. வெளியில் இதர தேசத்து ஜனங்கள் ராமாபிஷேகத்தால் ஸந்தோஷமடைந்து காணிக்கைகளுடன் கைகட்டிக்கொண்டு, ராமன் வெளியில் வரும் ஸமயத்தை எதிர்பார்த்துக்கொண்டிருந்தார்கள். பெரிய மேகம் போன்ற அந்த அரண்மனையில் கிராத ஜாதியில் பிறந்த அல்ப சரீரமுள்ள கூனர்கள் அங்குமிங்கும் ஸஞ்சரித்துக் கொண்டிருந்தார்கள்.

இப்படி ஜனங்களால் நிறைந்த ராமனுடைய அரண்மனையைப் பார்த்துக்கொண்டே உள்ளே நுழைந்தார். அங்கே, ராமனுடைய ஆக்ஞைக்குக் கட்டுப்பட்டு அவருக்குப் பிரியமான பலர், அவருடைய அபிஷேகத்தைப்பற்றிய க்ஷேமகரமான வார்த்தைகளைப் பேசிக்கொண்டிருந்தார்கள். இப்படிப் பல கட்டுகளைத் தாண்டி, அந்தப்புரத்திற்கு அருகில் வந்தார். அதன் வாசலில் பலர் காணிக்கைகளையும் கப்பங்களையும் வைத்துக்கொண்டு நின்றார்கள். ராமனுடைய யானையான சத்ருஞ்ஜயன் மதம் பிடித்து அங்குசத்தையும் லக்ஷ்யம் செய்யாமல், கம்பீரமான தோற்றத்துடன்



பெரிய மேகங்களால் மூடப்பட்ட பர்வதத்தைப்போல் அழகுடன் நின்றது. ராமனுக்குப் பிரியமான மந்திரிகள் நன்றாக அலங்கரித்துக்கொண்டு, யானை குதிரை ரதங்களில் காத்துக்கொண்டிருந்தார்கள். அவைகளைத் தாண்டிப் பெரிய மலையின் சிகரத்தில் தங்கியிருக்கும் மேகங்களையும் உத்தமமான விமானங்களையும் போன்ற வீடுகளால் நிறைந்த ராமனுடைய அந்தப்புரத்தில், மஹாரத்தினங்கள் நிறைந்த ஸமுத்திரத்தில் மகரமீன் தடையின்றிச் செல்வதுபோல், ஸுமந்திரரென்ற ஸாரதி, ஒருவராலும் தடுக்கப்படாமல் போனார்.

த$^{3}$த$^{3}$த்$^{3}$ரி கூடாசல மேக$^{4}$ ஸந்நிப$^{4}$ம்
மஹாவிமானோத்தம வேஶ்ம ஸங்க$^{4}$வத் |
அவார்யமாண: ப்ரவிவேஶ ஸாரதி$^{2}$:
ப்ரபூ$^{4}$த ரத்நம் மகரோ யதா$^{2}$ர்ணவம் || (50)

---

## ஸர்க்கம் 16

## ராமன் தசரதரிடத்தில் வந்தது

---

ஸ தத$^{3}$ந்த: புரத்$^{3}$வாரம் ஸமதீத்ய ஜநாகுலம் |
ப்ரவிப$^{4}$க்தாம் தத: கக்ஷ்யாம் ஆஸஸாத$^{3}$ புராணவித் || (1)

வெகு காலத்திற்குமுன் நடந்த விஷயங்களை அறிந்த ஸுமந்திரர் ஜனங்களால் நிறைந்த அந்தப்புரத்தின் வாசலைத் தாண்டி, ஜனக்கூட்டமில்லாத வேறொரு கட்டில் புகுந்தார். அங்கே பல யுவ புருஷர்கள் ஆயுதபாணிகளாய், நன்றாய் அலங்கரிக்கப்பட்டு, ராமனிடத்தில் விசேஷப் பிரியம் வைத்து ஒரே மனத்துடன் ஜாக்கிரதையாகக் காவலிருந்தார்கள். மேலும், தொண்ணூற்றைந்து வயதுக்கு மேலான கிழவர்கள், கையில் பிரம்பை வைத்துக்கொண்டு, ராமன் தன் வில்லால் லோகத்தை ரக்ஷிப்பதுபோல் ராமனை ரக்ஷித்துக்கொண்டிருந்தார்கள். அவருக்கு ஸந்தோஷத்தைக் கொடுப்பதற்காக ஆடையாபரணங்களால் தங்களை நன்றாக அலங்கரித்துக்கொண்டு, தசரதரைப்போல் ரகுவீரனிடத்தில் பிரியம் வைத்து, அவர் தமது பிதாவின் அரண்மனையில் ஸ்நானபானாதிகளை முடித்துக்கொண்டு தன் அந்தப்புரத்திற்குத் திரும்பி வந்தவுடன், அவரை மடியில் வைத்துக்கொண்டு உச்சி முகர்ந்து போகச் சொல்வார்கள். அதனால் ராமனுடைய தேகத்திலிருந்த குங்குமப் பூச்சுகளாலும், கஸ்தூரி முதலிய வாஸனைத் திரவியங்களாலும் அவர்களுடைய தேகம் பூசப்பட்டிருந்தது. ராமனுடைய அலங்காரத்தைக் காட்டிலும் இது விசேஷமானது. இவர்கள் பெண்களிருக்குமிடத்திற்குத் தலைவர்களாக வாசலில் காவலிருப்பவர்கள். ஸுமந்திரர் வருவதைக் கண்டு அவர்கள், ராமனுக்குப் பிரியத்தைச் செய்ய விரும்பி, ஆஸனங்களிலிருந்து வெகு பரபரப்புடன் எழுந்தார்கள்.

ஸாரதி அவர்களை பிரதக்ஷிணம் செய்து மிகவும் வணக்கமாக "ஸுமந்திரன் வாசலில் வந்திருக்கிறானென்று ராமனுக்குச் சீக்கிரம் தெரிவியுங்கள்" என்றார். அவர்கள் உள்ளே சென்று, ஸீதையுடன் ஸுகமாக உட்கார்ந்திருக்கும் ராமனிடத்தில் அதைத் தெரிவித்தார்கள். தன் தகப்பனாருக்கு முக்கிய நண்பரான ஸுமந்திரர் வந்திருப்பதை அறிந்து, அரசருடைய பிரீதியைப் பெற விரும்பி, ராமன் ஸாரதியைத் தன்னிடத்திற்கு அழைத்து வரும்படி உத்தரவு செய்தார்.

ஸுமந்திரர் உள்ளே போய் ஜகன்னாதனான ராமனைத் தரிசித்தார். ராகவன் குபேரனைப்போல் எல்லையற்ற ஐசுவரியமுள்ளவர்; குபேரன் தன்னை அண்டினவர்களுக்கு வேண்டியதைக் கொடுப்பது போல் ராமன் தன் அருகிலிருப்பவர்களுக்குத் தன் திருமேனியின் ஸௌந்தரியத்தை அனுபவிக்கும் பாக்கியத்தைக் கொடுப்பவர். ஸீதையுடன் ஸ்ரீமந் நாராயணனை தியானம் செய்துகொண்டிருந்தபடியால் அந்த ஸமயத்திற்குத் தகுந்தபடி, திவ்யமான மாலைகளால் அலங்கரிக்கப்பட்டுக் கைகூப்பிக் கொண்டிருந்தார். மிகவும் தாழ்ந்த பதவியிலிருக்கும் ஸுமந்திரர், ஸர்வோத்தமரான ராமனைத் தரிசிக்க என்ன பாக்கியம் செய்தாரோ? பலவிதமான ரத்தினங்களால் விளங்கி, ராமனுடைய ஐசுவரியத்திற்குத் தகுந்த அபூர்வமான பொருள்களாலும் பிரதிமைகளாலும் பிரகாசிக்கும் தங்கக் கட்டிலில், மலர்ந்த புஷ்பத்தைப்போல் மிருதுவான ராமனுடைய தேகத்திற்குத் தகுந்த விரிப்புகளின் மேல், தங்கமலையில் கறுத்த மேகம் தங்கியிருப்பதுபோல் விளங்கும் ஸ்ரீராமனைக் கண்டார். கௌஷீதகி உபநிஷத்தில் பர்யங்கவித்யையில் வர்ணித்தபடி முக்தர்களாலும் நித்தியஸூரிகளாலும் அனுபவிக்கப்படும் திவ்விய ஸேவையை, ஸாரதியான் ஸுமந்திரர் அனுபவித்தார். பகவான் பக்தர்களுக்குக் கட்டுப்படுவதற்கு எல்லையும் உண்டோ? அவருடைய தேகத்தில் குங்குமம் கலந்து, பன்றியின் ரத்தம்போல் சிவந்த சந்தனம் பூசப்பட்டிருந்தது. ஸீதையின் கைகளால் பூசப்பட்டதால் விசேஷ காந்தியுடன்கூடி, அவளுடைய கைகளால் தொடப்பட்டு மிகுந்த சுத்தியையும் குளிர்ச்சியையும் அடைந்தது. இவ்விதமான ஸௌந்தரியத்தை அனுபவிப்பதைத் தடுக்கும் காரணங்களை அழிப்பவரும் அவரே. சித்திரை மாஸம் பௌர்ணமியில் சித்திரை நக்ஷத்திரம் சந்திரனுடன் கூடியிருப்பதுபோல், ஸீதை அவருடைய பக்கத்தில் சாமரம் வீசிக்கொண்டிருந்தாள். அதைப் பார்த்த ஸுமந்திரரின் கண்கள் ஸபலமாயின. அபரிமிதமான தேஜஸுடன் விளங்கும் ஸூரியனைப்போல் ஜ்வலிக்கும் அந்தப் புருஷோத்தமனை, தன் திவ்விய மங்கள ஸ்வரூபத்தின் அனுபவமென்ற வரத்தைக்கொடுக்கும் லோகநாதனை, ஸுமந்திரர் ஸாஷ்டாங்கமாகப் பணிந்து, தன் தேகத்தை ஸபலமாகச் செய்தார். பிறகு கைகூப்பித் துதித்துத் தன் வாக்கை ஸபலமாகச் செய்துகொண்டு, ஸர்வ காலங்களிலும்



ஸர்வதேசங்களிலும், ஸர்வ அவஸ்தைகளிலும் அவருடைய க்ஷேமத்தை விசாரித்து, "கௌஸல்யையின் பாக்கிய ரூபமே! தங்களுடைய பிதாவும் கைகேயியும் தங்களைப் பார்க்க விரும்புகிறார்கள்; சீக்கிரம் வரவேண்டும்" என்று தெரிவித்தார்.

மஹா தேஜஸ்வியான ராமன் அதைக் கேட்டு மிகவும் ஸந்தோஷித்து, அவருக்கு விசேஷ மரியாதை செய்து "ஸீதே! என் தகப்பனும் தாயும் என் அபிஷேகத்தைக் குறித்து ஏதோ யோசித்துக்கொண்டிருக்கிறார்களென்று நினைக்கிறேன். தான் வயது சென்றவராகையால், பரதன் வரும் வரையில் காத்திருப்பது உசிதமல்லவென்று நினைத்திருக்கும் அரசனுடைய எண்ணத்தை வெகு ஸூக்ஷ்ம புத்தியுள்ள கைகேயி தெரிந்துகொண்டு, எனக்குப் பிரியமான காரியத்தைச் செய்ய விரும்பி, என் அபிஷேகத்தைச் சீக்கிரப்படுத்தும்படி தூண்டிவிடுகிறாளென்று நினைக்கிறேன். இதை நிச்சயமென்றே நம்பு. அவள் என்னிடத்தில் அதிகப் பிரீதி வைத்திருக்கிறாள். லோகத்திற்கு ஹிதத்தைச் செய்யவேண்டுமென்கிற எண்ணம் கொண்டவள். என் க்ஷேமத்தையும் விருத்தியையும் விரும்புகின்றவள். மஹாராஜாவின் இஷ்டத்தை அனுஸரிக்கிறவள். ஆகையால் நிச்சயமாக என் அபிஷேகத்தைச் சீக்கிரப்படுத்துகிறாள். மஹாராஜாவும் அவருடைய பிரியபாரியையும் என் க்ஷேமத்தையே பிரார்த்திக்கும் ஸுமந்திரரை இங்கே அனுப்பினது நல்லகாரியமே. அந்தப்புரத்தில் மஹாராஜாவைச் சூழ்ந்திருக்கும் பரிவாரங்கள் என் க்ஷேமத்தைக் கோருவதுபோல் அவர் அனுப்பின தூதரும் என் நன்மையையே தேடுகிறவர். இன்றைக்கே என் பிதா என்னை இந்த ராஜ்யத்தில் இளவரசனாக அபிஷேகம் செய்வார். ஆகையால் அதிவேகமாக அங்கே போய் அவரைத் தரிசனம் செய்ய வேண்டும். நீ பரிவாரங்களுடன் இங்கேயிருந்துகொண்டு காலத்தை வேடிக்கையாகப் போக்கு" என்று, தன் கழுத்தில் அணிந்த முத்துஹாரத்தைக் கழற்றி அவளுடைய கழுத்தில் போட்டு, அவளுடைய பாதங்களைத் தொட்டு அவளை ஸமாதானப்படுத்தினார். (இது பட்டர் சாதித்த அர்த்தம்). ராமனைப்போல் ஸீதைக்குக் கர்ப்பவாஸ துக்கமில்லை; யாக பூமியை உழும்பொழுது கலப்பை நுனியிலிருந்து தோன்றினவள்; அவரைவிட மேலானவள்: ஆகையால் ரகுபதி அவளிடத்தில் அப்படிப் பிரீதி வைத்தது தகும். ராமன் கொடுத்த முத்துமாலைக்குப் பதிலாகத் தன் கண்களென்ற கரு நெய்தல் புஷ்பங்களால் செய்யப்பட்ட மாலையை அவருக்குச் சாற்றினாள். எப்பொழுதும் தன்னை ஹிருதயத்தில் வைத்துக்கொண்டிருக்கும் ராமனை விட்டுப் பிரிய ஸஹிக்காமல் தான் போகத் தகுந்த எல்லைவரையில் பின்சென்றாள். "இவ்வளவு ஸௌந்தரியத்திற்கும் அலங்காரத்திற்கும் திருஷ்டிதோஷம் படாமலிருக்க வேண்டுமே, குறைவு நேராமலிருக்க வேண்டுமே" என்று கவலைகொண்டு, மங்களமான ஆசீர்வாதங்களை தியானித்துக்கொண்டே போனாள்.

"பிரஹ்மா இந்திரனுக்கு ஸ்வர்க்கலோக அபிஷேகம் செய்வித்தது போல், இதுவரையில் க்ஷத்திரிய சிரேஷ்டர்களால் அனுபவிக்கப் பட்ட இந்த ராஜ்யத்தை அரசன் தங்களுக்குக் கொடுத்து, பிறகு தகுந்த காலத்தில் ராஜஸூய யாகத்தில் அபிஷேகத்தையும் செய்யட்டும். தாங்கள் யாகதீக்ஷை பெற்று, வெண்ணெய்யால் பூசப் பட்ட தேகத்துடன், மான்தோலை உடுத்து, மஹாசுத்தராய், விரதங்களை அனுஷ்டிப்பதில் நோக்கமுள்ளவராய், சொறிந்துகொள்வதற்காக மான்கொம்பைக்கையில் வைத்துக்கொண்டிருப்பதைப்பார்த்து மகிழ விரும்புகிறேன். ஏதாவது ஒரு விரதத்தை அனுஷ்டிக்கவேண்டுமென்று வஸிஷ்டமஹரிஷி தங்களுக்கு உத்தரவு செய்தால் 'நான் ஸுகமாக வளர்க்கப்பட்டவன்; என் தேகம் அதிக சிரமத்தைத் தாங்காதென்றல்லவா இப்படிச் சொல்லுகிறீர்' என்று எண்ணி அதற்கு நான்கு மடங்கு அதிகமாக உபவாஸமிருக்கிறவர்களல்லவா தாங்கள்? 'விரதத்தை அனுஷ்டிக்கும்பொழுது ஸ்த்ரீகளைத் தொடக் கூடாது. உன் தர்மபத்னியான ஸீதையைத் தொட்டால் தோஷமில்லை' என்று வஸிஷ்டர் சொன்னால் அதையும் நம்பாமல், என் வஸ்திரம் உமது தேகத்தில் பட்டாலும் ஸ்நாநம் செய்கிறவரல்லவா தாங்கள்? ஆனால் இப்பொழுது நடக்க வேண்டிய அபிஷேகத்தை நான் விரும்பாதவளல்ல. கிழக்கில் இந்திரனும், தெற்கில் யமனும் மேற்கில் வருணனும், வடக்கில் குபேரனும் தங்களைக் காப்பாற்றட்டும்' என்று தனக்குள் ஆசீர்வாத வாக்கியங்களை உச்சரித்தாள்.

ராமனும் ஸீதைக்கு அனுமதி கொடுத்து அனுப்பிவிட்டு, அபிஷேகத்திற்கு வேண்டிய மங்களகாரியங்களை முடித்துக் கொண்டு, மலைக் குகையில் வஸிக்கும் ஸிம்ஹம் வெளியில் வருவது போல், அந்தப்புரத்திலிருந்து ஸுமந்திரருடன் வரும்பொழுது, வாசலில் லக்ஷ்மணன் கைகூப்பி வணக்கத்துடன் நிற்கக்கண்டார். பிறகு நடுக்கட்டில் தன் நண்பர்களையும் தன் தரிசனத்திற்காகக் காத்துக் கொண்டிருப்பவர்களையும் கண்டு, தகுந்தபடி மரியாதை செய்து, அக்னியைப்போல் விளங்கும் தன் வெள்ளி ரதத்தில் ஏறினார். அது மேகத்தின் த்வனியைப்போன்ற சப்தத்துடன், மிக நன்றாகத் தங்கத்தாலும் ரத்தினங்களாலும் அலங்கரிக்கப் பட்டு, புலித்தோலால் மூடப்பட்ட ஆஸனங்களுடன், ஸூரியனைப் போல் ஜ்வலித்தது. கண்களைக் கூசச்செய்தது. யானைக்குட்டிகளைப்போன்ற உத்தமமான குதிரைகள் பூட்டப்பட்டிருந்தன. பச்சை நிறமுள்ள குதிரைகள் கட்டின ரதத்தில் தேவராஜன் ஏறுவதுபோல் ராமன் அதிலேறி, அதிவேகமாக அரசனுடைய அரண்மனைக்குச் சென்றார். நீருண்ட மேகம் ஆகாசத்தில் கர்ஜித்துக்கொண்டு போவது போலும், உதயகிரியிலிருந்து சந்திரன் கிளம்புவதுபோலும், ராமன் தன் அரண்மனையிலிருந்து வெளியில் போகும்பொழுது, லக்ஷ்மணன் ஒரு கையால் குடைபிடித்துக் கொண்டு, மற்றொரு கையால் சாமரம் போட்டுக்கொண்டு



ராமனுக்குப் பின்னால் ரதத்தில் நின்று அவரைக் காப்பாற்றிக் கொண்டிருந்தார்.

அங்கங்கே கூடியிருந்த எண்ணிறந்த ஜனங்கள், அவர்களைக் கண்டு ஸந்தோஷத்தால் ஆரவாரம் செய்தார்கள். உத்தமமான குதிரைகளிலும் யானைகளிலும் பலர் ஏறி ராமனைப் பின் தொடர்ந்தார்கள். அநேக வீரர்கள் ஆயுதபாணிகளாய் நேர்த்தியான ஆடையாபரணங்களுடன் ராமனுடைய க்ஷேமத்தைக்கோரி, அவருக்கு முன்பாகச் சென்றார்கள். வாத்திய கோஷமும் துதிக்கிறவர்களின் கோஷமும் சூரர்களின் ஸிம்ஹநாதமும், அந்த வீதியில் ராமன் புறப்படும்பொழுது கேட்கப்பட்டன. எண்ணிறந்த பெண்கள் அழகான அலங்காரங்களுடன், வீதியிலும் உப்பரிகையிலும் நின்றுகொண்டு, அவர் மேல் புஷ்பங்களை வாரி யிறைத்து, அவருக்கு ஸந்தோஷமுண்டாகும்படி 'கௌஸல்யைக்கு ஆனந்தத்தைப்பெருக்குகிறவரே! உமது முன்னோர்களால் ஆளப்பட்டு வந்த இந்த ராஜ்யத்தை ஒப்புக்கொள்ளப் புறப்பட்டுப்போம். உமது காரியம் ஸித்தியாகி, நீர் ஸிம்ஹாஸனத்தில் வீற்றிருப்பதைப் பார்த்து உமது தாய் மகிழ்வாளென்பதில் ஸந்தேகமுண்டோ ? உலகத்திலுள்ள பெண்களைக் காட்டிலும் ஸீதை மஹா பாக்கியவதி. முன் ஜன்மத்தில் விசேஷ தவத்தைச் செய்து, இப்பொழுது ரோஹிணிதேவி சந்திரனை அடைந்திருப்பதுபோல், உமக்குப் பிரியமான பார்யையாயிருக்கும் பாக்கியத்தைப் பெற்றிருக்கிறாள்' என்று கொண்டாடும் வார்த்தைகள், ராமனுடைய காதில் மதுரமாக விழுந்தன.

"இதோ போகும் ராமன் தசரதருடைய பிரீதியால் அகண்டமான ஐசுவரியத்தை அடையப்போகிறார். இவரே இனி நமக்கு அரசர். அப்பொழுது நமது எண்ணங்கள் யாவும் நிறைவேறும். இவர் நம்மை எப்பொழுதும் ஆண்டுவந்தால் எவனுக்கும் எந்த அஸௌக்யமும் நேராது. இந்த ராஜ்யத்திலுள்ள ஜனங்களுக்குக் கிடைக்கும் விசேஷ லாபம் இதே" என்று, வழியில் கூட்டம் கூட்டமாக நின்ற ஜனங்கள் ஸந்தோஷம் மேலிட்டுத் தங்கள் யோக்கியதைக்குத் தகுந்தபடி பேசுவதையும் ராமன் கேட்டார். நாற்சந்திகள் ஆண் யானைகளாலும் பெண் யானைகளாலும் ரதங்களாலும் நிறைந்திருப்பதையும், பொன் வெள்ளி முத்து ரத்னம் முதலிய விலையுயர்ந்த பொருள்களால் கடைகள் நிறைந்திருப்பதையும் பார்த்துக்கொண்டே, குதிரைகளும் யானைகளும் ஸந்தோஷத்தால் சப்திக்க, ஸூதர்களும் மாகதர்களும் வந்திகளும் ' ஜய விஜயீபவ ' என்று கொண்டாட, மங்கள வாத்தியங்கள் முழங்க, பிராம்மண சிரேஷ்டர்கள் ஆசீர்வதிக்க, ராஜ வீதியின் வழியாகக் குபேரனைப் போல், தன் பிதாவின் அரண்மனையை நோக்கி வந்தார்.

கரேணு மாதங்க$^3$ ரதா$^2$ச்வ ஸங்குலம்
மஹாஜநௌக$^4$ ப்ரதிபூர்ண சத்வரம் ।
ப்ரபூ$^4$த ரத்நம் ப$^3$ஹுபண்ய ஸஞ்சயம்
த$^3$த$^3$ர்ச ராமோ ருசிரம் மஹாபத$^2$ம் ॥ (48)

## ஸர்க்கம் 17

## ராமன் தசரதரிடத்தில் வந்தது (தொடர்ச்சி)

---

ஸ ராமோ ரத$^{2}$மாஸ்தா$^{2}$ய ஸம்ப்ரஹ்ருஷ்ட ஸுஹ்ருஜ்ஜந: |
பதாகாத்$^{4}$வஜ ஸம்பந்நம் மஹார்ஹாக$^{3}$ரு தூ$^{4}$பிதம் ‖ (1)

நகரமெங்கும் கொடிகளும் தோரணங்களும் கட்டப்பட்டிருந்தன ; சந்தனம், அகில், முதலிய வாசனைத் திரவியங்களின் பரிமளம் எங்கும் வீசிற்று. பிரபுக்களின் அரண்மனைகள் வெளுத்த மேகக் கூட்டங்களைப்போல் பிரகாசித்தன. விலை யுயர்ந்த பட்டுகள் வஸ்திரங்கள் போர்வைகள் துளையிடாத முத்துக்கள் ஸ்படிகங்கள் பலவிதமான பக்ஷணங்கள் நிறைந்த கடைகளாலும் ஸகல பாக்கியங்களாலும் ராஜவீதி அலங்கரிக்கப்பட்டிருந்தது. ஜனங்கள் இடைவெளியின்றி நின்றுகொண்டிருந்தார்கள். ஸ்வர்க்கத்தில் தேவதைகள் செல்லும் வழியைப்போன்ற அந்த ராஜ வீதியின் வழியாக ராமன் அவைகளைப் பார்த்துக்கொண்டே போனார். தயிர், அக்ஷதை, ஹவிஸ், பொரி, சந்தனம், அகில், தூபங்கள், மாலைகள் முதலியவைகளால் நாற்சந்திகள் விளங்கின. 'எங்களுக்கு ராஜாவாக அபிஷேகம் செய்யப்பட்டு, உமது முன்னோர்களால் அனுஷ்டிக்கப்பட்ட ஆசாரத்தை ஒட்டி, உமது பிதாவும் பூர்வ ராஜாக்களும் எங்களைக் காப்பாற்றினதுபோல், நீரும் காப்பாற்றும். எங்களுக்கு நீர் அரசரானால் மிகுந்த ஸுகத்துடன் வாழ்வோம். உமக்கு அபிஷேகமாகி, நீர் அரண்மனைக்குத் திரும்பிப் போவதைப் பார்ப்பதைவிட வேறொன்றும் எங்களுக்கு வேண்டாம். இந்த லோகத்தில் அன்னபானாதிகளால் நாங்கள் அனுபவிக்கும் ஸுகத்தாலும், ஜபம், ஹோமம் தியானம் முதலிய பரலோக ஸுகத்திற்கு ஸாதனங்களாலும் எங்களுக்கு என்னப் பிரயோஜனம்? இந்த ராஜ்யத்தில் உம்மை இளவரசனாகப் பட்டம் கட்ட வேண்டுமென்பதைத் தவிர எங்களுக்கு வேறு ஆசை கிடையாது' என்று அவருடைய நண்பர்கள் பலவிதமாய் ஆசீர்வதித்தார்கள்.

அப்படித் தன்னைத் துதிக்கும் வார்த்தைகளைக் கேட்டும் கர்வமின்றி, அவர்களுக்குத் தகுந்தபடி பார்த்து, தலையை அசைத்து, புருவத்தைத் தூக்கி, மறுமொழி சொல்லி, கைகூப்பித் தலைவணங்கி மரியாதை செய்துகொண்டே ராமன் ராஜ வீதியில் சென்றார். அவரைப் பார்த்த ஜனங்கள் அவர் போனபிறகும் அவ்விடத்திலிருந்து தங்களுடைய கண்களையும் மனத்தையும் திருப்ப முடியாமல் பார்த்த கண்கள் பார்த்த வண்ணமாய், பார்த்த விடமெல்லாம் ராமனாகவே அவர்களுக்குத் தோன்ற, அங்கேயே நின்றுகொண்டிருந்தார்கள். அவர் எதிரிலிருக்கும்பொழுது எப்படியென்று சொல்ல வேண்டுமோ ? தன்னைப் பார்த்தவுடன் பார்ப்பவர்களைக் கரையில்லாத அமிருதக் கடலில் முழுகச் செய்யும் ஸௌந்தரியத்தையுடைய ராமனைத் துதிப்பதற்கும் உபசரிப்பதற்கும் அவருடன் பேசுவதற்கும் பாக்கியம் பெருவிட்டாலும், எவனுக்குக் கேவலம் பார்ப்பதற்குக்கூடப் பிராப்தமில்லையோ, எவனை ராமன் தன் குளிர்ந்த பார்வையால் அனுக்ரஹிக்கவில்லையோ, அந்தப் பாபியைக் காலமுள்ளவரையில் ஸகலப் பிராணிகளும் நிந்திக்கும். ராமனைப் பார்க்கவேண்டுமென்று விரும்பாதவர்களில்லை. அதற்கு அவகாசம் கிடைக்காமல் பலர் இருப்பார்களென்று கவலை கொண்டே, ராமன் அடிக்கடி எல்லோரும் தன்னைப் பார்க்கும்படி வீதிகளில் ஸஞ்சரிப்பார். ஒருவன் அவரைப் பார்க்காவிட்டாலும், பார்க்க முடியாவிட்டாலும், அவருடைய எல்லையற்ற கிருபையாலும் ஞானத்தாலும் அவர் அவனைப் பார்க்காமல் இருப்பதில்லை. அதையும் தடுக்கும் மஹாபாபத்தைச் செய்தவன் எப்படிப்பட்டவன் என்பதை ஊஹித்துக் கொள்ளலாம். ஆனால், ஒருவன் எல்லோராலும் கடுமையாய்த் தூஷிக்கப்பட்டாலும் தான் செய்தது சரியென்றே எண்ணுவான். தன்னைத் தானே மெச்சாமலிருக்கமாட்டான். இவனுக்கோ அந்தத்திருப்தியுமில்லை. ராமனைப் பார்க்காததாலும் லோகத்தாரால் நிந்திக்கப்படுவதாலும் அவனது மனமும் அவனை நிந்திக்கும். ராமன் ஸகல வர்ணத்தாரிடத்திலும் பேத புத்தியின்றி அவர்களுக்குத் தகுந்தபடி கிருபைசெய்து முக்திவரையில் அவர்கள் வேண்டும் ஸுகங்களைக் கொடுக்கிறார். ஆகையால் அவரிடத்தில் அவ்வளவு பிரீதிவைத்து அவரைப் பின் தொடர்வது ஆச்சரியமா ?

நாற்சந்திகள் தேவாலயங்கள் புண்ணிய விருக்ஷங்கள் சபைகள் முதலியவைகளைப் பிரதக்ஷிணம் செய்துகொண்டு, அநேக ரத்தினங்களால் அலங்கரிக்கப்பட்டு வர்த்தமானமென்று பெயருள்ள வீடுகளால் விளங்கி, தேவேந்திரனுடைய அரண்மனையைப் போன்ற தன் பிதா இருக்குமிடத்திற்கு வந்தார். மேகக்கூட்டங்களையும் கைலாஸத்தின் சிகரத்தையும் வெண்மையான விமானங்களையும் போன்று அது கோபுரங்களால் ஆகாசத்தை மறைத்தது. வில்லாளிகளால் காக்கப்பட்ட மூன்று கட்டுகளை ரதத்துடன் தாண்டி, பிறகு நடந்து இரண்டு கட்டுகளைத் தாண்டி, தன்னுடன் வந்தவர்களை அங்கே நிறுத்தி, தாம் அந்தப்புரத்தில் சென்றார். ஸகல ஜனங்களும் "ராமனுக்கு ஏதோ விசேஷ க்ஷேமம் நேரப் போகிறது. சீக்கிரமாகத் திரும்பி வருவார். அபிஷேகம் நடக்கும்" என்று சந்திரோதயத்தை எதிர்பார்க்கும் சமுத்திரத்தைப்போல் அவர் வெளியில் வருவதை ஸந்தோஷத்துடன் எதிர்பார்த்துக் கொண்டிருந்தார்கள்.

தத: ப்ரவிஷ்டே பிதுரந்திகம் ததா$^{3}$
ஜந: ஸ ஸர்வோ முதி$^{3}$தோ ந்ருபாத்மஜே |
ப்ரதீக்ஷதே தஸ்ய புநஶ்ச நிர்க$^{3}$மம்
யதோ$^{2}$த$^{3}$யம் சந்த்$^{3}$ரமஸ: ஸரித்பதி: ‖ (22)

---

## ஸர்க்கம் 18

# கைகேயி ராமனைக் காட்டிற்கு அனுப்பியது

ஸ த³த³ர்ஶாஸநே ராமோ நிஷண்ணம் பித்ரம் ஶுபே⁴ |
கைகேயீ ஸஹிதம் தீ³நம் முகே²ந பரிஶுஷ்யதா || (1)

ராமன் உள்ளே போய், தன் பிதா வாடிய முகத்துடன் கட்டிலில் படுத்திருப்பதையும், பக்கத்தில் கைகேயி நிற்பதையும் பார்த்தார். அரசனுடைய பாதங்களில் வணங்கி, பிறகு மிகுந்த வினயத்துடன் கைகேயியின் பாதங்களைத் தொட்டு நமஸ்கரித்தார். தசரதர் "ராம" என்று ஒரு தடவை கூப்பிட்டார். அதற்குமேல் பேச முடியவில்லை; நீர் பெருகிக் கண்களை மறைத்தது; ராமனைப் பார்க்க முடியவில்லை. இவ்வளவு பயங்கரமான நிலைமையில் தன் பிதா இருந்ததை ராமன் அதுவரையில் பார்த்ததில்லை. நடந்து போகும்பொழுது ஒருவன் திடீரென்று கருநாகத்தின்மேல் அடி வைத்ததுபோல் ராமனுடைய மனம் திகிலடைந்தது. எண்ண முடியாத துக்கங்கள் நேர்ந்தாலும் அவருடைய மனம் கலங்காது. ஆனால் தசரதருக்கு அப்போது நேர்ந்த துயரத்திற்கு ஒருவேளை தாம் காரணமாயிருக்கலாமோ என்ற ஸந்தேகம் அவருக்குத் தோன்றியதால் பயந்தார். அரசனோ துக்கத்தால் இளைத்து, இந்திரிய ஸ்வாதீனமும் ஸந்தோஷமுமின்றி, புண்பட்டுக் கலங்கின மனத்துடன் பெருமூச்சு விட்டுக்கொண்டிருந்தார். அலைகள் நிறைந்து ஒருவராலும் கலக்கமுடியாத கடல் கலங்கினதுபோலும், ஸூரியனை கிரஹணம் பிடித்ததுபோலும், பொய் சொன்னதால் தன் தேஜஸ் அழிந்த ரிஷியைப்போலும் தோன்றின தன் பிதா, ஒரு நாளுமில்லாத துக்கத்தால் தவிப்பதைக் கண்டு, அது தன்னால் நேர்ந்திருக்கலாம் என்றே எண்ணி, பருவ காலங்களில் சமுத்திரம் கொந்தளிப்பதுபோல், ராகவனுடைய மனம் தத்தளித்தது. தசரதருடைய க்ஷேமத்தையே அவர் எப்பொழுதும் நாடினதால் 'என்ன ஆச்சரியம்! அரசர் என்னைக் கண்டவுடன் ஸந்தோஷிக்கவில்லையே. இதற்குமுன் நான் இல்லாதபொழுது என்னிடத்தில் கோபம் கொண்டாலும், என்னைக் கண்டவுடன் அதை மறந்து மதுரமாகப் பேசுவாரே. அப்படிப்பட்டவர் இன்றைக்கு என்னைப் பார்த்தவுடன் இவ்வளவு துக்கப்படுவதேன்?" என்று வருத்தத்தால்நொந்து, முகம் வாடினார். பிறகு கைகேயியை வணங்கி, "அஜ்ஞானத்தால் நான் ஏதாவது அபராதம் செய்து அதனால் என் பிதா என்னிடத்தில் கோபித்துக் கொண்டிருக்கிறாரா? பிரார்த்திக்கிறேன், சொல்லுங்கள். அப்படியானால் தாங்களே அவரை ஸமாதானம் செய்ய வேண்டுமல்லவா? எப்பொழுதும் என்னிடத்தில் விசேஷப் பிரீதியுடனிருப்பவர். இப்பொழுது ஸந்தோஷமின்றி, முகம்வாடி, என்னுடன் பேசாததற்குக் காரணமென்ன? புண்ய பாபங்களை அனுபவிப்பதற்கே இந்தச் சரீரம் ஏற்பட்டிருக்கிறது; எப்பொழுதும் நாம் ஸுகத்தையே அனுபவிப்பது ஸாத்தியமல்ல. ஆகையால் என் பிதாவிற்கு ஏதாவது வியாதி பீடிக்கிறதா? அல்லது மனத்தில் ஏதாவது கவலைகொண்டிருக்கிறாரா? பார்த்தவர்களுக்கு ஆனந்தத்தை உண்டாக்கும் பரதனுக்காவது, மஹாபலவானான சத்ருக்னனுக்காவது என் தாய்களுக்காவது ஏதாவது க்ஷேமக்குறைவுஉண்டா? எனக்கு அவர் அரசர்; அவரை ஸந்தோஷப்படுததுவதே என் கடமை; எனக்குப் பிதா. அவருடைய கட்டளையை நிறைவேற்றுவதே எனக்கு உத்தமமான தர்மம். இப்படியிருக்க, சாதாரண காலத்திலும் அவருடைய விருப்பத்தைச் செய்யாமல் ஒரு க்ஷணம்கூட உயிரோடிருக்க எனக்கு இஷ்டமில்லை. மஹாராஜா என்னிடத்தில் கோபம் கொண்டிருக்கிறாரென்றால் இன்னும் சொல்ல வேண்டுமோ? இந்த லோகத்தில் மனிதன் தன் தேகத்திற்குக் காரணமான பொருள் யாதென்று விசாரித்தால் தகப்பனைத்தவிர வேறில்லையென்று தெரியும். ஆகையால் அவரே பிரத்யக்ஷ தெய்வம். அவருடைய உத்தரவை நிறைவேற்றுவதே ஸகல புருஷார்த்தங்களையும் கொடுக்கும் என்பதில் என்ன ஸந்தேகம்? அல்லது, தாங்கள் பிரீதியாலோ கோபத்தாலோ ஏதாவது கடுமையாக என் தந்தையிடத்தில் பேசி அவருக்கு இந்த வருத்தமுண்டாயிருக்கிறதா? அம்மா! உண்மையைச் சொல்லவேண்டுமென்று பிரார்த்திக்கிறேன். இதுவரையிலும் நேராத துக்கம் மஹாராஜாவுக்கு நேரக் காரணமென்ன?" என்றார்.



ராகவனிடத்தில் யாதொரு குற்றமுமில்லை; அவருக்கு மிகுந்த கஷ்டத்தை உண்டாக்கி, நியாய விரோதமான வார்த்தைகளைச் சொல்லுகிறோமே என்ற பயமும் வெட்கமும் கைகேயிக்குக் கிடையாது. தனக்கும் பரதனுக்கும் க்ஷேமத்தை உண்டாக்க வேண்டுமென்ற காரணத்தால் மற்ற யாவையும் மறந்தாள். "ராம! உன்னிடத்தில் மஹாராஜாவுக்குக் கோபமுமில்லை; வேறொரு மனவருத்தமுமில்லை. ஏதோ ஒரு விஷயத்தை உன்னிடத்தில் சொல்ல விரும்புகிறார். ஒருவேளை நீ அப்படி நடக்க மாட்டாயோ என்ற பயத்தால் சொல்லத் தயங்குகிறார். உன்னிடத்தில் மிகுந்த பிரீதி வைத்திருப்பதால் உனக்கு வருத்தத்தை உண்டாக்கும் வார்த்தையைச் சொல்ல முடியாமல் தவிக்கிறார். இவர் எனக்கு முன் காலத்தில் ஒரு பிரதிக்ஞை செய்திருக்கிறார். அதை நீ நிறைவேற்ற வேண்டும். மேலும், என்னைக் கட்டாயப்படுத்தி எனக்கு வரங்களைக் கொடுத்து, இப்பொழுது அல்ப மனுஷ்யனைப்போல் பச்சாத்தாபப்படுகிறார். ஏரியின் கரை உடைந்து ஜலம் வடிந்த பிறகு அணைபோடப்போவதைப்போல், முன்பு வரங்களைக் கொடுத்துவிட்டு, இப்பொழுது அவைகளைக் கேட்டால் வருத்தப்படுவதில் பயனென்ன? தர்மமே இந்த பிரபஞ்சத்திற்கு வேரென்று பெரியோர் உபதேசிக்கிறார்கள். ஆகையால் இவர் உனக்காக என்னிடத்தில் கோபித்து ஸத்தியத்தை விடாமலிருக்கும்படி

செய்வது உன் பொறுப்பு. இவர் எனக்கு பிரதிக்ஞை செய்து கொடுத்த விஷயம் நன்மையோ தீமையோ 'அப்படியே நடக்கிறேன்' என்று நீ உறுதியாகச் சொன்னால் அவருக்குப் பதிலாக நானே அதைச் சொல்லுகிறேன். உன்னிடத்திலிருக்கும் விசேஷப் பிரீதியால் இவர் அதைத் தன் வாயால் ஒரு பொழுதும் சொல்ல மாட்டார்'' என்றாள்.

அதைக் கேட்டு ராமன், "ஆஹா, என்ன கஷ்டம்! என் பிதாவும் அரசரும் பூஜ்யருமான தசரதருடைய வார்த்தைப்படி நான் நடப்பேனோ என்று ஸந்தேகத்திற்கு ஆளானேன் அல்லவா'' என்று சொல்ல முடியாத துக்கத்தை அடைந்தார். அரசன் கேட்டுக்கொண்டிருக்கையில் "அம்மா! என் ஜன்மத்தைச் சுட வேண்டும். ஸந்தேகத்தைக் காட்டும் 'செய்தால்' என்ற வார்த்தையை என்னைப்பற்றித் தாங்கள் உபயோகிப்பது நியாயமா? இவர் எனக்குப் பூஜ்யர், பிதா, அரசர்; என் க்ஷேமத்தையே வேண்டுகின்றவரல்லவா? இவர் ஒரு வார்த்தை சொன்னால் நெருப்பில் குதிக்க மாட்டேனா? கொடிய விஷத்தையும் சாப்பிட மாட்டேனா? ஸமுத்திரத்தில் விழமாட்டேனா? ஆகையால், என் பிதாவின் மனத்திலுள்ள எண்ணத்தை இப்பொழுதே தெரிவிக்கவேண்டும். எதாயிருந்தாலும் அதை முடித்துக் கொடுக்கிறேனென்று கோரமான பிரதிக்ஞை செய்கிறேன். நான் பிரதிக்ஞை செய்ய வேண்டுமென்பது அவசியமல்லவென்று தங்களுக்குத் தெரியாதா? ராமனுடைய வார்த்தைக்கும் இரண்டுண்டோ'' என்றார்.

அப்பொழுது கபடலேசமில்லாமல் ஸத்தியம் தவறாத ராமனைப் பார்த்து, மஹா பாபியான கைகேயி, "முன்பு தேவதைகளுக்கும் அஸுரர்களுக்கும் யுத்தம் நடந்தது. அதில் உன் பிதா மிகவும் காயமடைந்து உயிரை இழக்கும் நிலைமையிலிருந்தார். நான் வெகு சிரமப்பட்டு அபாயத்திற்குட்பட்டு, அவரை இரண்டு தடவை காப்பாற்றினேன். அவர் அதற்காக என்னிடத்தில் ஸந்தோஷமடைந்து இரண்டு வரங்களைக் கொடுத்தார். இப்பொழுது ஸமயம் நேர்ந்ததால் அவைகளைப் பூர்த்தி செய்யும்படி கேட்கிறேன். உன் பிதா செய்த பிரதிக்ஞையும், நீ இப்பொழுது செய்த பிரதிக்ஞையும் பொய்யாகக் கூடாதென்று உனக்கிஷ்டமிருந்தால் நான் சொல்வதைக் கேள். உன் தந்தையின் ஆணையில் நில்! அவரது உத்தரவுப்படி நீ பதினான்கு வருஷம் காட்டில் புகவேண்டும். உன் அபிஷேகத்திற்காக ஸித்தமாக இருக்கும் பொருள்களாலேயே பரதனை இப்பொழுதே யுவராஜாவாக அபிஷேகம் செய்யவேண்டும். நீ உனக்காக ஏற்பட்டிருக்கும் அபிஷேகத்தைக் கைக்கொள்ளாமல், மான்தோல் மரவுரி ஜடை முதலியவைகளைத் தரித்து, பதினான்கு வருஷங்கள் வரையில் தண்டகாரண்யத்தில் வஸிக்க வேண்டும். என் பரதன் அயோத்யையிலிருந்து எண்ணிறந்த ரதங்களாலும் யானைகளாலும் குதிரைகளாலும் நிறைந்த இந்தப் பூமண்டலத்தை ஆளவேண்டும்.



ஸந்நிதே[3]ஶே பிதுஸ்திஷ்ட[2] யதா[2] தேந ப்ரதிஶ்ருதம் |
த்வயாரண்யம் ப்ரவேஷ்டவ்யம் நவ வர்ஷாணி பஞ்ச ச || அயோ. 18ஸ-35 சு.
உன் தந்தையின் ஆணையில் நில்! அவரது உத்திரவுப்படி நீ பதினான்கு வருஷங்கள் காட்டில் புகவேண்டும்.
(பக்கம் 76 பார்க்க)

மஹாராஜா உன்னிடத்தில் வைத்திருக்கும் பிரியத்தாலும் இரக்கத்தாலும் துக்கத்தாலும் பீடிக்கப்பட்டு முகம் வாடி, மனம் கலங்கி, உன்னைப் பார்ப்பதற்கும் இஷ்டமில்லாதவராக இருக்கிறார். சொன்ன சொல்லைத் தவறாதவர்களென்று பெயரெடுத்த ரகு குலத்தில் பிறந்தவனே! உன் பிதா செய்த பிரதிக்ஞையை நிறைவேற்று; ஸத்தியத்தைக் கைப்பற்று; கோரமான நரகத்தில் அவரை விழாமல் காப்பாற்று'' என்று கட்டளையிட்டாள்.

இந்தக் கொடிய வார்த்தைகளைக் கேட்ட தசரதர், "ஐயோ! நான் கேட்டுக்கொண்டிருக்கும் பொழுதே கைகேயி இப்படிச் சொல்லவும், அதை நான் தடுக்க முடியாமலிருக்கவும், ரகுவீரனுடைய பரம சத்ருக்களும் அவனுக்குச் செய்யத் துணியாத அநியாயத்தை, என்னுயிரைக் காட்டிலும் எனக்குப் பிரியமான என் குழந்தைக்கு நானே செய்யவும் நேர்ந்ததல்லவா'' என்று சொல்ல முடியாத துக்கத்தை அடைந்து தவித்தார். ஆனால், ராமனுக்கோ முகத்தில்.வாட்டமாவது துக்கக் குறியாவது உண்டாகவில்லை.

"என்ன கஷ்டம்! எனக்கு நியாயமாகக் கிடைக்கவேண்டியதும் பிதாவால் பிரதிக்ஞை செய்யப்பட்டதுமான இந்த ராஜ்யத்தை அபிஷேகமாகும் ஸமயத்தில் நான் இழந்து, சக்களத்தியின் பிள்ளைக்கு அபிஷேகம் செய்துவைக்க ஸம்மதித்து, போக போக்கியங்களையும் ஸுகங்களையும் அதிகாரத்தையும் விட்டு, பதினான்கு வருஷங்கள் வரையில் பயங்கரமான வனத்தில் திரியும்படி நேர்ந்ததல்லவா'' என்று மனத்திலாவது துக்கமிருந்தாலல்லவா வெளியில் தெரியும்? என்றும் அழியாமல், எல்லையின்றி, ஈடின்றி விளங்கும் கேவலமான ஆனந்தஸ்வரூபியான புருஷோத்தமனுக்கு துக்கமென்பதும் உண்டோ?

இதிவ தஸ்யாம் பருஷம் வத³ந்த்யாம்
ந சைவ ராம: ப்ரவிவேஶ ஶோகம் |
ப்ரவிவ்யதே²சாபி மஹாநுபா⁴வோ
ராஜா ஸ புத்ர வ்யஸநாபி⁴ தப்த: ‖ (41)

---

## ஸர்க்கம் 19

# ராமன் கௌஸல்யைக்குத் தெரிவிக்கச் சென்றது

---

தத³ப்ரிய மமித்ரக்⁴நோ வசநம் மரணோபமம் |
ஶ்ருத்வா ந விவ்யதே² ராம: கைகேயீம் சேத³ மப்³ரவீத் ‖ (1)

தனக்குப் பிரியமில்லாததும், மரணத்திற்கு இணையான துக்கத்தைக் கொடுப்பதுமான கைகேயியின் வார்த்தைகளைக் கேட்டுக் கொஞ்சமேனும் ராமன் வருத்த மடையாமல், "அம்மா! அப்படியே ஆகட்டும். ஜடை மான்தோல் மரவுரி முதலியவைகளைத் தரித்துக் கொண்டு காட்டில் வஸிக்கிறேன். என் பிதா செ[illegible] பிரதிக்ஞை

யைக் காப்பாற்றுவது என் கடமையல்லவா? ஆனால் என் ஸ்வபாவம் அவருக்கு நன்றாகத் தெரியும். எந்த ஆபத்தாலும் அவருடைய மனம் கலங்காது; மஹா பராக்கிரமசாலி. அப்படிப்பட்டவர் எப்பொழுதும்போல் என்னைக் கண்டவுடன் ஏன் ஸந்தோஷமடையவில்லை? இதை மாத்திரம் எனக்குத் தெரிவிக்க வேண்டும். சொன்ன வார்த்தையை நிறைவேற்றுவேனா என்று என்னைப் பற்றிக் கவலைப்பட வேண்டாம். தங்களுக் கெதிரில் இன்னும் ஒரு தடவை சொல்லுகிறேன். மான்தோல் மரவுரி ஜடை முதலியவைகளைத் தரித்துக்கொண்டு வனத்தில் வஸிக்கிறேன். மஹாராஜா என் ஹிதத்தையே தேடுகிறவர்; எனக்கு ஆசாரியர்; என் பிதா; தாங்கள் செய்த உபகாரத்தை மறக்காதவர்; என்னைக் காப்பாற்றும் அரசன். அவர் எவ்விதமாகக் கட்டளையிட்டாலும் நான் அதை விசாரிக்காமல் பிரியத்துடன் நிறைவேற்றக் கடமைப்பட்டவனல்லவா? ஒன்று மாத்திரம் என் மனத்தை புண்ணாக்குகிறது. பரதனுக்கு அபிஷேகம் செய்ய வேண்டியதைப்பற்றி மஹாராஜா என்னிடத்தில் நேரில் ஏன் உத்தரவு செய்யவில்லை? "உனக்கு வருத்தமுண்டாகுமோ என்ற காரணத்தால் நேரில் சொல்லவில்லை" என்றால், பரதன் எனக்கு உடன் பிறந்தவனல்லவா? என்னைக் காட்டிலும் அவனிடத்தில் பிரீதி வைத்தவர்கள் யார்? ஜனக மஹாராஜாவினுடைய ஸபையில் பரமசிவனுடைய வில்லை முறித்து ஸீதையை நான் அடைந்தபொழுது, அவள் தனக்கு வேண்டுமென்று பரதன் விரும்பியிருந்தால் பரம சந்தோஷத்துடன் கொடுத்திருக்க மாட்டேனா? அவனைத் திருப்தி செய்யும் விஷயத்தில் இந்த ராஜ்யமும் ஐசுவரியமும் என்னுயிரும் எனக்கு ஒரு பொருட்டா? அப்படியிருக்க, என் பிதாவும் அரசனும் ஆசாரியனுமானவர், தானே அவனுக்கு அபிஷேகம் செய்து வைக்க வேண்டுமென்று உத்தரவு செய்திருக்கிறார். அவர் தங்களுக்குச் செய்த பிரதிக்ஞையை நான் நிறைவேற்றக் கடமைப்பட்டிருக்கிறேன். தாங்களும் அப்படியே இஷ்டப்பட்டிருக்கிறீர்கள். இவ்வளவு காரணங்கள் போதாதா? ஐயோ! மஹாராஜா கண்ணீர் பெருகப் பூமியைப் பார்த்தவண்ணமே இருக்கிறாரே! எப்படியாவது அவரை ஸமாதானப்படுத்தும்படி வேண்டுகிறேன். இப்பொழுதே அவருடைய உத்தரவால் பல தூதர்கள் அதிவேகமாகச் செல்லும் குதிரைகளில் ஏறி, கேகய மஹாராஜாவின் ராஜதானிக்குப் போய் பரதனை அழைத்து வரட்டும். நான் இதோ இங்கிருந்தபடியே தண்டகாரண்யத்திற்குப் புறப்படுகிறேன். பதினான்கு வருஷங்கள் அங்கேயே வஸிக்கிறேன். என் பிதாவின் கட்டளையைப்பற்றி ஆலோசிப்பேனா" என்றார்.

ராமனோ சொன்ன சொல்லைத் தவறாதவர். ஆகையால் அவர் காட்டிற்குப் போவது நிச்சயமென்று கைகேயி மிகவும் ஸந்தோஷித்து, அவரைச் சீக்கிரப்படுத்தினாள். "நீ சொல்வது ஸரி; பரதனை அவனுடைய மாமன் வீட்டிலிருந்து அழைத்து வரத் தூதர்கள்



வேகமுள்ள குதிரைகளின்மேல் இப்பொழுதே போகட்டும். வனத்திற்குப் போகவேண்டுமென்று இவ்வளவு ஆசைப்படுகிற நீ, இங்கே தாமதிப்பது உசிதமல்ல. ஆகையால் நீ சீக்கிரமாக இங்கிருந்தே வனத்திற்குப் புறப்படு. மஹாராஜா வெட்கத்தால் உன்னுடன் நேரில் பேசவில்லையே தவிர வேறில்லை. நீ அதைப்பற்றி வருத்தப்படாதே. இந்த நகரத்தை விட்டு நீ காட்டிற்குப் புறப்பட்டுப் போனாலொழிய அவர் ஸ்நானம் செய்யமாட்டார், போஜனமும் செய்ய மாட்டார்" என்றாள்.

இந்தக் கொடிய வார்த்தைகளைக் கேட்டவுடன் தசரதர் திடுக்கிட்டுப் பயந்து, "ஐயோ! இதென்ன அநியாயம்? இந்த அபவாதத்தையும் நான் கேட்கவேண்டியிருக்கிறதே!" என்று துக்கத்தால் மூர்ச்சையடைந்து, தானிருந்த தங்கக் கட்டிலின்மேல் விழுந்தார். ராமன் பாய்ந்து ஓடி அவரைத் தூக்கியெடுத்தார். கைகேயியின் குரூரமான வார்த்தைகள் உத்தமமான குதிரையைச் சவுக்கால் அடிப்பதுபோல், அதிசீக்கிரமாக வனத்திற்குப் போகும்படி அவரைத் துரத்தின. ஆனால் அவருக்குக் கொஞ்சமேனும் வருத்தமுண்டாகவில்லை. அம்மா! ஐசுவரியத்தில் ஆசை வைத்தவனென்று என்னைப்பற்றித் தாங்கள் எண்ணுவது நியாயமா? இந்த ராஜ்யத்திலுள்ள பிரஜைகளை வசப்படுத்திக்கொண்டு அரசாளவேண்டுமென்று ஆசை எனக்கு எள்ளளவுமில்லை. 'பரதன் வரும் வரையில் நான் இங்குதங்கினால் அவனுக்கு என்னிடத்திலுள்ள பக்தியால் தனக்கு ராஜ்யம் வேண்டாமென்று ஒருவேளை எனக்கேகொடுத்துவிடலாகாதா என்ற உத்தேசத்துடன் இங்கே இருக்கிறேனென்று தாங்கள் ஸந்தேகப்படுவதுபோல் தோன்றுகிறது. தர்மத்தைஅனுஷ்டிக்க வேண்டுமென்பதைத் தவிர எனக்கு வேறு நோக்கமில்லை. வனத்திலிருக்கும் ரிஷிகளைப்போல் நான் லோக விஷயங்களில் பற்றில்லாதவன். இது தங்களுக்கு நன்றாக ஞாபகமிருக்கட்டும். மஹாராஜாவிற்குப் பிரியமான காரியத்தை நான் செய்யமுடிந்தால் என் உயிரைக் கொடுத்தாவது அதைச் செய்வேனென்று தாங்கள் நம்பவேண்டும். பிதாவிற்குச் சுச்ரூஷை செய்வதையும், அவருடைய சொற்படி நடப்பதையும் விட உத்தமமான தர்மம் வேறு உண்டோ? மஹாராஜா உத்தரவு செய்யாவிட்டாலும் என்ன? தாங்கள் ஒரு வார்த்தை சொன்னால், கோரமான வனத்தில் பதினான்கு வருஷங்கள் ஸந்தோஷமாய் வஸிக்க மாட்டேனோ? ஸகல விஷயங்களிலும் என்னை அதிகாரம் செய்யத்தங்களுக்கு ஸ்வாதீனமில்லையா? நான் தங்களுடைய ஆக்ஞையைத் தலையால் தாங்கி நடத்துகிறவனல்லவா? இந்த அல்ப விஷயத்தை மஹாராஜாவிடத்தில் தாங்கள் யாசிக்கவேண்டுமா? அதை யோசித்தால், பெருந்தன்மை ஸத்தியம் முதலிய உத்தம குணங்கள் என்னிடத்தில் இருக்கக்கூடுமென்ற எண்ணமே தங்களுக்கில்லை என்று நினைக்கிறேன். என் தாயிடத்தில் உத்தரவு பெற்றுக்கொண்டு ஸீதையை ஸமாதானம் செய்துவிட்டு, காட்டிற்குப் புறப்பட்டுப்

போகிறேன். அதுவரையில் பொறுத்துக்கொள்ள வேண்டும். இந்த ராஜ்யத்தைப் பரதன் ஆள்வதற்கும் என் பிதாவிற்குக் குறைவின்றி அவன் சுச்ரூஷை செய்வதற்கும் வேண்டிய ஏற்பாடுகளைத் தாங்கள் செய்ய வேண்டும். நம் முன்னோர்கள் அனுஷ்டித்துவந்த தர்மம் இதே" என்றார்.

அதைக் கேட்டுத் தசரதர் தாங்கமுடியாத துக்கத்தால் மோதப் பட்டுக் கண்ணீர் தாரை தாரையாகப் பெருக, வாய்விட்டு அலறினர். பிறகு சோகத்தால் பிரக்ஞையற்றிருந்த தன் பிதாவின் பாதங்களையும் பொல்லாத கைகேயியின் பாதங்களையும் ராமன் தொட்டு நமஸ்கரித்து பிரதக்ஷிணம் செய்து, அந்தப்புரத்திலிருந்து வெளியில் வந்தார். அப்பொழுது அவருடைய முகத்தின்காந்தி குறையவே இல்லை. அங்கே தன் மித்திரர்களைக் கண்டு, அவர்களையும் கூட்டிக்கொண்டு, தன் அரண்மனைக்குப் போனார். லக்ஷ்மணன் அடங்காக் கோபத்தால் சீறிக்கொண்டு, கண்ணீருடன் ராமனைப் பின்தொடர்ந்தான். உத்தமமான பதார்த்தங்கள், மங்களத்திரவியங்கள் தேவாலயங்கள் நாற்சந்திகள்யாவையையும் பிரதக்ஷிணம்செய்து போகவேண்டும் என்ற தர்மத்தின்படி, தன் அபிஷேகத்திற்காகச் சேர்க்கப்பட்டிருக்கும் பொருள்களை வலம்செய்து கண்ணெடுத்துப் பாராமல், பரதனுக்குஅப்பொழுதே அபிஷேகம்நடக்கவேண்டும்என்று அவைகளையே பிரார்த்தித்துக்கொண்டு மெள்ள மெள்ள நடந்தார். எப்பொழுதும் அழியாத காந்தியுள்ளதாய், எல்லோர்க்கும் பிரியத்தை கொடுப்பதாயுமுள்ள சந்திரனுடைய அழகை ராத்திரி எப்படிக் குறைக்காதோ, அப்படி, நித்தியமான ஆனந்த ஸ்வரூபமாயிருக்கும் லோகநாதனுடைய ஒப்பில்லாத காந்தியைப் பட்டாபிஷேகம் நடக்காமல் ராஜ்யத்தை இழத்தல் என்ற கெடுதி கொஞ்சமேனும் குறைக்கவில்லை. இந்த பூமண்டலத்திற்கு அரசனுயிருப்பதை வேண்டாமென்று தள்ளி விட்டுக் காட்டிற்குப் போகவிரும்பின ராமனுடைய மனம் ஸுகதுக்கங்கள் யாவையும் ஸமமாகப் பார்த்து, அவைகளால் கலக்கமடையாத மஹாயோகிகளின் மனத்தைப்போல் களங்கமற்றிருந்தது.வெண்குடை சாமரம்முதலிய ராஜ்யாலங்காரங்களைவேண்டாமென்று தடுத்துவிட்டு, கால்நடையாக, தன் மித்திரர்களையும், பட்டணத்து ஜனங்களையும் நிறுத்திவிட்டுப் பிறர்படும் துக்கத்தைப் பார்ப்பதால் தனக்குண்டாகும் துக்கத்தை மனத்தில் அடக்கிக்கொண்டு, இந்திரியங்களைச் சிதறவிடாமல், தன் தாய்க்கு அந்தத் துக்ககரமான விஷயத்தைத் தெரிவிக்கவேண்டி, அவளுடைய அரண்மனைக்கு வந்தார். லக்ஷ்மீ ஸமேதரும் ஸத்தியம் தவறாதவருமான ராமனுடைய முகத்திலாவது நடத்தையிலாவது யாதொரு மாறுதலையும் அவரைச் சூழ்ந்திருந்த ஜனங்கள் காண முடியவில்லை. சரத்காலத்தில் உதித்த சந்திரனுடைய தேஜஸ் எப்படிக் குறையாதோ அப்படித் தனக்கு ஸ்வபாவமாகவுள்ள ஸந்தோஷத்தை ராமன் கொஞ்சமாவது இழக்கவில்லை. ஸுக துக்கங்களால் கலங்காதவரும் மஹா கீர்த்திசாலியும் அந்தக் கஷ்ட தசையிலும் எல்லாப் பிராணிகளுக்கும் ஆனந்தத்தைக் கொடுப்பவருமான ராமன், மதுரமான வார்த்தைகளால் எல்லோருக்கும் மரியாதை செய்து, தன் தாயின் அந்தப்புரத்திற்குப் போனார்.



உத்தம குணங்களில் அவரைப் போன்றவரும் மஹாபராக்கிரம சாலியுமான லக்ஷ்மணன், தன் துக்கத்தை அடக்கிக்கொண்டு பின் தொடர்ந்தார். அங்கே தனக்கு அபிஷேகம் நடக்கப்போகிறதென்பதைப்பற்றி ஸந்தோஷித்துக்கொண்டிருந்த ஜனங்களைப் பார்த்து ராமன், "ஐயோ! இவ்வளவு ஆனந்தத்தை அனுபவித்துக் கொண்டிருக்கும் என் மித்திரர்களுக்கு மஹா துக்கத்தையும் பல கஷ்டங்களையும் உண்டாக்கும் விஷயத்தை நான் சொல்லவேண்டியிருக்கிறதே. இந்த ஸமயத்தில் நானும் என் முகத்திலாவது நடத்தையிலாவது துக்கக்குறியைக் கொஞ்சமேனும்காட்டினுல் அவர்கள் வருத்தம் தாங்காமல் இறப்பார்கள்'' என்று நினைத்து, யாதொரு விகாரத்தையும் அடையவில்லை.

ப்ரவிஶ்ய வேஶ்மாதிப்$^{4}$ருஶம் முதா$^{3}$ந்விதம்
ஸமீக்ஷ்ய தாம் சார்த$^{2}$ விபத்தி மாக$^{3}$தாம் |
நசைவ ராமோத்ர ஜக$^{3}$ாம விக்ரியாம்
ஸுஹ்ருஜ் ஜநஸ்யாத்ம விபத்தி ஶங்கயா ‖ (40)

---

## ஸர்க்கம் 20

## கௌஸல்யா ராம ஸம்வாதம்

---

தஸ்மிம்ஸ்து புருஷவ்யாக்$^{4}$ரே நிஷ்க்ராமதி க்ருதாஞ்ஜலௌ |
ஆர்தஶப்$^{3}$தோ$^{3}$ மஹாந் ஜஜ்ஞே ஸ்த்ரீணா மந்த:புரே ததா$^{3}$ ‖ (1)

கைகேயியின் அந்தப்புரத்திலிருந்து கைகூப்பி ராமன் வெளியில் வரும்பொழுது, அங்கிருந்த ஸ்திரீகள் யாவரும் பரிதாபமாகத் துக்கப்பட ஆரம்பித்தார்கள். தன் பிதா சொல்லாமலிருக்கையிலேயே அந்தப்புரத்தில் செய்யவேண்டிய ஸகல காரியங்களையும் குறைவின்றி ராமன் செய்துவந்தாரே. லோகத்தில் எல்லாப் பிராணிகளும் அடையவேண்டிய வஸ்துவாயும், அதை அடைவதற்கு ஸாதனமாயும் இருக்கும் ராமன், இன்றைக்குக் காட்டிற்குத் துரத்தப்படப் போகிறார். பிறந்தது முதல் கௌஸல்யையிடத்தில் பக்தி விசுவாஸம் மரியாதையுடன் பணிவிடை செய்வதுபோல், நம்மிடத்திலும் பணிவிடை செய்து வருகிறவரல்லவா? பிறர் தன்னைக் கடுமையாகப் பேசினுல் தான் கோபிக்கிறதில்லையே. கோபத்தை உண்டாக்கும் காரியங்களையும் செய்கிறதில்லையே. கேவலம் ஆக்ரஹத்தால் கோபிக்கிறவர்களையும் இனிமையாகப் பேசி ஸமாதானப்படுத்துவார் அல்லவா? அப்படிப்பட்ட ராமன்

இன்றைக்குக் காட்டிற்குத் துரத்தப்படுகிருர். நமது ராஜா சிறிதும் புத்தியில்லாதவர். எல்லா பிராணிகளுக்கும் ஆதாரமான ராமனேக் காட்டிற்கு அனுப்பிவிட்டு அதனுல் ஸகல லோகங்களுக்கும் நாசத்தை உண்டாக்கப் போகிருரல்லவா' என்று, அங்குள்ள ராஜஸ்த்ரீகள் யாவரும் கன்றையிழந்த பசுவைப்போல் வாய்விட்டுக் கதறி மஹாராஜாவை நிந்தித்தார்கள். அப்படி அந்தப்புரத்திலுண்டான பயங்கரமான அழுகைக்குரல் தசரதருடைய காதில் விழ, புத்திரனே விட்டுப் பிரிந்த சோகத்தால் தபித்துக்கொண்டிருந்தவர், வெட்கத்தாலும் துக்கத்தாலும் இருந்தவிடத்திலேயே மூர்ச்சையடைந்தார்.

அங்கிருந்து வெளியில் போய்க்கொண்டிருக்கும் ராமனும் அதைக்கேட்டு மிகுந்த வருத்தமடைந்து, அவர்களுடைய துக்கத்தைத் தீர்க்க வழியில்லாமல் அதைத் தான் அதிகப்படுத்தாமலாவது இருக்கவேண்டுமென்று, தன் துக்கத்தை அடக்கிக்கொண்டு, யானையைப்போல் பெருமூச்சு விட்டுக்கொண்டு, இந்திரியங்களைச் சிதறவிடாமல் லக்ஷ்மணனுடன் தன் தாயின் அந்தப்புரத்திற்கு வந்தார். அங்கே வாசலிலிருந்த காவற்காரர்களுக்குத் தலைவர் மிகுந்த வயதுசென்றவர். அவர், பலர் தம்மைக் கௌரவிக்க கையில் பிரம்புடன் உட்கார்ந்திருந்தார். அவர்கள் யாவரும் ராமனைக் கண்டவுடன் வெகு வேகமாக எழுந்து 'ஜய-விஜயீபவ!' என்று ஆசீர்வதித்தார்கள். முதலாவது கட்டைத் தாண்டி இரண்டாவது கட்டில், மஹாராஜாவினுல் கௌரவிக்கப்பட்டு, வேதங்களில் கரைகண்ட பிராம்மணர்கள் இருக்கக் கண்டார். வயது முதிர்ந்த அவர்களை நமஸ்கரித்து மூன்ருவது கட்டில் கன்யைகளும் வயதுசென்ற ஸ்த்ரீகளும் காவல் காத்துக்கொண்டிருப்பதைக் கண்டார்; அவர்கள் ராமனை ஸந்தோஷத்துடன் ஆசீர்வாதம் செய்து, உள்ளே போய் அவருடைய வரவைக் கௌஸல்யைக்குத் தெரிவித்தார்கள்.

தன் மகனுடைய க்ஷேமத்தைவேண்டி அவள் ராத்திரி முழுவதும் நியமத்துடன் இருந்து, விடிந்தவுடன் மஹாவிஷ்ணுவை விதிப்படி பிரார்த்தித்துக் கொண்டிருந்தாள். எப்பொழுதும் விரதங்களை அனுஷ்டித்துக்கொண்டிருந்த அந்த ராஜமஹிஷி, வெண்பட்டை உடுத்திக்கொண்டு, எல்லா மங்கள பதார்த்தங்களுடன் பிராம்மணர்களை முன்னிட்டு அக்னியில் மந்திரங்களுடன் ஹோமம் செய்துகொண்டிருந்தாள். தேவபூஜைக்காகத் தயிர், அக்ஷதை, நெய் மோதகங்கள், ஹவிஸ், பொரி, வெண்மையான மாலைகள், பாயஸம், எள்ளன்னம், ஸமித்துகள், பூர்ணகும்பம் முதலியவை வைக்கப்பட்டிருந்தன. தன் மகனுக்கு க்ஷேமத்தைக் கொடுக்கும்படி அவள் தேவதைகளை ஜலத்தால் மகிழ்வித்துக் கொண்டிருந்தாள். எப்பொழுதும் விரதங்களையே அனுஷ்டிப்பதால் அவளுடைய தேகம் இளைத்திருந்தாலும், சரீர காந்தியால் தேவதைகளைப் போலிருந்தாள். வெகு நேரமாகக் காணுத தன் அருமை மகன், தன் அந்தப்புரத்திற்கு வந்ததால் மகிழ்ந்து, பெண் குதிரை தன் குட்டியைக் கண்டு தாவுவதுபோல், ராமனை எதிர்கொண்டழைத்தாள். ராமன் தன் தாயை பிரதக்ஷிண நமஸ்காரம் செய்து நின்ருர். கௌஸல்யையும் தன் புத்திரனை பிரியத்தோடு கட்டியணைத்து உச்சி முகர்ந்து, அவரிடத்திலுள்ள ஆசைகளைச் சொல்ல ஆரம்பித்தாள். "வயதில் முதிர்ந்தவர்களும் தர்மவான்களும் மஹாத்மாக்களுமான உன் முன்னோர்களான ராஜரிஷிகளைப் போல் நீண்ட ஆயுளையும் ஒப்பற்ற கீர்த்தியையும் குல தர்மத்தையும் அடையக் கடவாய். உன் பிதா, செய்த பிரதிக்ஞையைத் தவருதவர். உன்னிடத்தில் சொன்னபடி, இன்றைக்கே உன்னை இளவரசனுக அபிஷேகம் செய்வார். தர்மங்கள் யாவையும் அறிந்தவரல்லவா" என்று ராமனை ஆஸனத்தில் உட்காரவித்து, "இங்கேயே நீ போஜனம் செய்ய வேண்டும்" என்ருள்.



அவர் ஸ்வபாவத்தில் வணக்கமுள்ளவர்; கௌஸல்யையிடத்தில் அவருக்குள்ள பக்திக்கு எல்லையில்லை. அவளால் கொடுக்கப்பட்ட ஆஸனத்தில் உட்காராமல் அதை அங்கீகரித்துத் தொட்டு, கைகூப்பிக் கொஞ்சம் வெட்கத்துடன், "அம்மா! தங்களுக்கும் ஸீதைக்கும் லக்ஷ்மணனுக்கும் மிகுந்த துக்கத்தைக் கொடுக்கும் ஒரு பெரிய பயம் நேர்ந்திருக்கிறது. மஹாராஜா என் அபிஷேகத்தை நிறுத்திவிட்டார்; பரதனை இளவரசனுகச் செய்யப்போகிருர். நான் பதினன்கு வருஷங்கள் வரையில் தண்டகாரண்யத்தில் வஸிக்க வேண்டுமென்று கட்டளையிட்டிருக்கிருர். இப்பொழுதே இங்கிருந்தே புறப்பட்டுப் போகிறேன். தங்களிடத்தில் உத்தரவு பெற்றுக் கொள்ள வந்திருக்கிறேன். மனுஷ்ய ஸஞ்சாரமில்லாத காட்டில், தேன் கிழங்கு பழங்கள் முதலியவைகளைத் தின்று மாம்ஸத்தை விலக்கித்தபஸ்வியாக வஸிக்கப்போகிறேன். எனக்கு ரத்னங்களால் இழைத்த இந்த ஆஸனத்தால் என்ன பிரயோஜனம்? தர்ப்பத்திலுலான வைதிக ஆஸனத்தையே நான் இப்பொழுது உபயோகிக்க வேண்டுமல்லவா" என்ருர்.

அதைக் கேட்டவுடன் காட்டிலுள்ள ஸால மரத்தின் கிளை கோடரியால் வெட்டித் தள்ளப்பட்டதுபோலும், தேவலோகத்தில் உள்ள தேவதை பூமியில் தள்ளப்பட்டது போலும் கௌஸல்யை பிரக்ஞையற்றுப் பூமியில் விழுந்தாள். ஒருநாளும் துக்கத்தை அனுபவிக்காத தன் தாய், அடியற்ற வாழைமரம்போல் வீழ்ந்ததைக் கண்டு, ராமன் ஸமீபத்தில் ஓடி தூக்கியெடுத்து, அதிகப் பாரத்தைச் சுமந்து சிரமம் தீரக் கீழே விழுந்து புரண்டு எழுந்த பெண் குதிரையைப்போல் புழுதிபடிந்த அவளுடைய தேகத்தைக் கைகளால் தடவிக் கொடுத்தார். பிறகு அவள் பிரக்ஞை தெளிந்து, அதுவரையில் ஸுகத்தையே அனுபவித்து வந்தவளாகையாலும் துக்கத்தை அனுபவிக்கத் தகாதவளாகையாலும், லக்ஷ்மணன் கேட்டுக்கொண்டிருக்க ராமனைப் பார்த்து, "குழந்தாய்! எனக்கு நீ புத்திரனுகப் பிறக்காதிருந்தால் இவ்வளவு துக்கமுண்டாகாது.

புத்திரனில்லையென்ற துக்கத்தைத்தவிர மலடிக்கு வேறு துக்கமில்லை. எனக்கோ புத்திரன் பிறந்தான்; அவனை விட்டுப் பிரிவதால் புத்திரனைப் பெற்று வளர்த்த துக்கமும், விட்டுப்பிரியும் துக்கமும், பிள்ளையில்லாத மலடி அனுபவிக்கும் துக்கமும் நேர்ந்திருக்கின்றன. மலடியின் கஷ்டம் கேவலம் தேகத்தைப் பற்றினதே; நான் அனுபவிக்கும் வருத்தமோ தேகம் இந்திரியங்கள் மனம் யாவற்றையும் பற்றியது.

நான் இந்தப் பூமண்டல சக்கரவர்த்தியான அயோத்யாதிபதியின் பட்டமகிஷி. ஆனால் அதற்குத் தகுந்த ஐசுவரியம் ஆபரணம் அதிகாரம் முதலியவை எனக்கில்லை, என் கணவரும் என்னிடத்தில் அதிகப் பிரீதி வைக்கவில்லை. நீ பிறந்த பிறகு அவருக்கு உன்னிடத்திலுள்ள பிரீதியால் நான் அவ்விரண்டு ஸௌகத்தையும் அடையலாமென்ற எண்ணத்தால் இதுவரையில் பிழைத்திருந்தேன். இனி இதைவிட அதிக துக்கத்தை அனுபவிக்க வேண்டியிருக்குமே. இயற்கையாக நான் அனுபவிக்க வேண்டிய ஸௌகம் எனக்கில்லை; அது போகட்டும், என்னைப்போல் பட்டமஹிஷிகளாக இல்லாத சக்களத்திகள் என் கணவருடைய மனத்தைக் கலைத்து, அவருக்கு என்னிடத்தில் இருக்கக்கூடிய பிரீதியைக் குறைக்கும்படியான குரூர வார்த்தைகளை இனிமேல் சொல்வார்கள். ஆனால் இதுவரையில் சொல்லவில்லையோ என்றால், ஜாடையாகச் சொல்லிக்கொண்டிருந்தவர்கள் இனிமேல் ஸ்பஷ்டமாக என்னைப் பார்த்துக் கோபத்துடன் என்னுடைய பர்த்தாவிற்கெதிரில் நிற்காதே, போ' என்பார்கள். பரிகாஸமாக "மலடிக்கு உத்ஸவங்களும் ஸந்தோஷமும் எதற்கு?' என்பார்கள். சக்கரவர்த்தி என் வீட்டிலிருக்கும்பொழுது அஸூயைகொண்டு அவரைப் பலாத்காரமாய் 'இங்கே உமக்கென்ன வேலை? என் அந்தப்புரத்திற்குப் போவோம், வாரும்' என்று இழுப்பார்கள். அவர்களுடைய பிறப்பையும் ஸ்திதியையும் யோக்கியதையையும் கவனித்தால் இந்த வார்த்தைகளை என்னைப் பார்த்துச் சொல்லத் துணிவார்களா? இப்பொழுது எனக்கு நேர்ந்த கௌரவக்குறைவையும் கஷ்டத்தையும் பார்த்தல்லவா அப்படிப் பேசத் தைரியமுண்டாகும்? ஸ்த்ரீகளுக்கு இதைவிடக் கஷ்டமுண்டோ? என் துக்கத்திற்கும் அழுகைக்கும் எல்லையே இல்லை; சொல்லவும் முடியாது. மஹா பராக்கிரமசாலியான நீ, மூத்த புத்திரன்; அடுத்தபடி மஹாராஜா ஆகவேண்டியவன். நீ இங்கிருக்கும்பொழுதே இந்தத் துக்கங்கள் எனக்கு நேர்ந்திருக்கின்றன. நீயும் இங்கிருந்து போய்விட்டால் கேட்க வேண்டுமோ ? அதைவிட நான் உயிரை விடுவது நல்லது. ஒவ்வொரு நாளும் என் கணவர் என்னை அவமதிக்கிறார். மற்றவர்களைவிட நான் கேவலமான பதவியிலிருக்க வேண்டியதாகிறது. ஆனால் இப்பொழுது கைகேயியின் வேலைக்காரிகளுக்கு ஸமமாக நடத்தப்படுகிறேன். நன்றாய் யோசித்தால் அவர்களுக்கும் கீழ்ப்பட்டவள் நான்; ஏனென்றால், அவர்கள் கைகேயியின் பிரியத்திற்கு பாத்திரர்களல்லவா? நான் அப்படியல்லவே.

இதுவரையில் எனக்குச் சுச்ரூஷை செய்து வந்தவனும் என்னிடத்தில் இனி பேசவே மாட்டான். என்னிடத்தில் பிரியமாகப் பேசிக்கொண்டிருந்தால், அவனும், கைகேயியின் புத்திரன் என்ன செய்துவிடுவானோ என்று பயப்படுவான். இனி என்னிடத்தில் எப்பொழுதும் கோபம் கொண்டு, கடுமையான வார்த்தைகள் அவளுடைய வாயில் வருமே ஒழிய வேறில்லை. இப்படிப்பட்ட கஷ்டமும் நேர்ந்துவிட்டால் சொல்லவும் வேண்டுமோ? அவளுடைய முகத்தைப் பார்க்க நான் எப்படி ஸஹிப்பேன்? நீ பிறந்த இந்தப் பதினேழு வருஷங்களாய் எவ்வளவோ கஷ்டங்களைப் பொறுமையுடன் அனுபவித்து வந்தேன். நீ சீக்கிரமாக யௌவராஜ்ய பட்டாபிஷேகம் செய்யப்படுவாய். அப்பொழுதாவது எனக்கு ஸௌகம் நேருமென்றல்லவா இருந்தேன்? இனிமேல் அந்த நம்பிக்கையற்று, சக்களத்திகளின் குரூரமான வார்த்தைகளைக் கேட்டுக்கொண்டு, தேகம் இளைத்து, அவர்கள் செய்யும் அவமானங்களை வெகு காலம் பொறுக்க முடியுமா? அந்தத் துக்கத்திற்கு முடிவும் கிடையாதல்லவா?

எனக்கோ பால்யமும் பலமும் அழகும் சென்றுவிட்டன. இனிமேல் மஹாராஜாவுக்கு என்னிடத்தில் பிரீதியுண்டாகக் காரணமில்லை. பூர்ணசந்திரனைப்போல் காந்தியுள்ள உன் முகத்தைப் பார்க்காமல் வெகு தீனமாகப் பிழைக்க என்னால் முடியாது.

வேறொன்றும் ஆச்சரியமில்லை. கணக்கில்லாத விரதங்களை அனுஷ்டித்து, தேவதைகளைப் பூஜித்து, உபவாஸங்களைச் செய்து, எவ்வளவோ கஷ்டப்பட்டு உன்னைப் பெற்று வளர்த்தேன். எல்லாம் வீணாயிற்றல்லவா? என் பாக்கியம் அவ்வளவே.

மழை காலத்தில் பெரிய ஆற்றில் திடீரென்று வெள்ளம் பெருகி வந்தால் கரைகள் உடைவதுபோல், திடீரென்று எனக்கு நேர்ந்த இந்தப் பெரும் துக்கத்தால் என் ஹிருதயம் தளராமல் கெட்டியாயிருப்பதைப் பார்த்தால் அதற்கு நாசமில்லையோ? இவ்வளவு துக்கங்களையும் பொறுக்கும் என் தேகம் இரும்பால் செய்யப்பட்டதோ? என நினைக்கவேண்டி இருக்கிறது. மனுஷ்யர்களுக்கு ஏற்பட்ட காலத்திற்கு முன்பு மரணம் நேராதென்பது நிச்சயமென்று இதனால் தோன்றுகிறது. சாவே எனக்குக் கிடையாதோ? அல்லது யமலோகத்தில் எனக்கு இடமில்லையோ! அழுதுகொண்டிருக்கும் பெண்மானை ஸிம்ஹம் கௌவிக்கொண்டு போவதுபோல், இந்த க்ஷணமே யமன் என்னைக்கொண்டு போகமாட்டானா? நமக்கு ஏற்பட்ட காலத்திற்கு முன் நமது இஷ்டப்படி மரணம் நேருமென்றிருந்தால், கன்றை விட்டுப் பிரிந்த பசுவைப்போல் உன்னைவிட்டுப் பிரிந்து பிழைத்திருப்பதை விட யமனுடைய வீட்டிற்கு இப்பொழுதே போவேன்.

ஐயோ! என் குழந்தைக்கு க்ஷேமமுண்டாக வேண்டுமென்று நான் செய்த விரதங்களும், தானங்களும், தியானங்களும், பூஜைகளும் உவர்நிலத்தில் விதைத்த தானியத்தைப்போல் வீணயிற்றல்லவா? எல்லாவற்றையும் காட்டிலும் இதே அதிக துக்கத்தை உண்டாக்குகிறது.

நீ வனத்திற்குப் போனபிறகு நான் இங்கே என்ன செய்வேன்? உன்னுடன் நானும் காட்டிற்கு வருகிறேன். தேகத்தில் பலமற்று, வயது சென்ற பசு, தான் மிக்க பிரீதி வைத்திருக்கும் கன்றின்பின் போமேயன்றி, அதைவிட்டுப் பிரிந்திருக்குமா'' என்று அந்தக் கொடிய துக்கத்தைப் பொறுக்க முடியாமல், ராமனைப் பிரிவதாலும் சக்களத்திகளால் தனக்கு இனிமேல் நேரக்கூடிய கஷ்டங்களை நினைத்தும், ஸத்தியமென்ற பாசத்தால் ராமன் கட்டுப்பட்டு மேற்சொன்ன துக்கங்களைத் தீர்க்க முடியாமலிருப்பதை யோசித்தும், பெண் கின்னர பக்ஷி, தன் குஞ்சு வேடனுடைய வலையில் கட்டுப்பட்டுத் தவிப்பதைப் பார்த்துக் கதறுவதுபோல் வாய்விட்டழுதாள்.

ப்4ருஶ மஸுக2 மமர்ஷிதா தத3ா
ப3ஹு விலலாப ஸமீக்ஷ்ய ராக4வம் |
வ்யஸந முபநிஶாம்ய ஸா மஹத்
ஸுதமிவ ப3த்3த4மவேக்ஷ்ய கிந்நரீ || (55)

---

## ஸர்க்கம் 21

# ராமன் கௌஸல்யையை ஸமாதானம் செய்தது

---

ததா2 து விலபந்தீம் தாம் கௌஸல்யாம் ராமமாதரம் |
உவாச லக்ஷ்மணோ தீ3ந: தத்கால ஸத்3ருஶம் வச: || (1)

அப்படி பிரலாபிக்கும் கௌஸல்யையைப் பார்த்து லக்ஷ்மணன் மிகுந்த வருத்தத்துடன் அந்த ஸமயத்திற்குத் தகுந்தபடி பின் வருமாறு பேசினர்.

"அம்மா! ஒரு ஸ்த்ரீயின் வார்த்தைக்குக் கட்டுப்பட்டு, தனக்கு நியாயமாகக் கிடைக்க வேண்டிய ராஜ்யத்தை விட்டு ராமன் காட்டிற்குப் போவது உசிதமென்று எனக்கும் தோன்றவில்லை. 'கைகேயியின் உத்திரவால் நான் போகவில்லை; அரசனுடைய கட்டளையாலல்லவா போகிறேன்'' என்றால், அவரோ மிகவும் வயது சென்றவர்; இந்திரிய ஸுகங்களில் ஆசையை ஒழிக்க முடியாதவர். ஆனல் 'பரிசுத்தமானவனை இந்திரியங்கள் என்ன செய்ய முடியும்' என்றால், இப்பொழுது அவர் ஒரு ஸ்த்ரீயிடத்தில் எல்லையற்ற ஆசை கொண்டிருக்கிறார். ஆகையால் அவருடைய புத்தி விபரீதமாயிருக்கிறது. இது அநியாயமென்று அவருக்குத் தெரியவில்லை. தான் மிகவும் பிரீதி வைத்த ஸ்த்ரீயை ஸந்தோஷப்படுத்துவதற்காக, எல்லையற்ற அதிகாரத்தைப் பெற்றிருக்கும் ஒரு மஹாராஜா என்ன தான் சொல்லமாட்டார்? என்னதான் செய்யமாட்டார்?



"ராமனிடத்தில் எந்தக் குற்றத்தையாவது தோஷத்தையாவது கண்டு வனத்திற்கு அனுப்பியிருக்கக்கூடாதோ'' என்றால் ராஜ துரோகம் முதலிய கொடிய குற்றங்களை ராமன் செய்தாரா? அல்லது கோரமான பாபங்களைச் செய்தாரென்றாவது சொல்ல முடியுமா? அவருக்குப் பரமசத்துருவானாலும், அல்லது ஏதாவது குற்றம் செய்து அதற்காக அவரால் தண்டிக்கப்பட்டிருந்தாலும், அவர் இல்லாதவிடத்திலும் அவரைப்பற்றித் தோஷத்தைக் கற்பிக்கக்கூடிய மனிதனை இந்த லோகத்தில் காணேன். அப்படியிருக்க அவருக்கெதிரில் எவனாவது சொல்லத் துணிவானோ?

"இது நான் ஊஹமாகச் சொல்லும் விஷயமல்ல. எல்லோருக்கும் வெளிப்படையாகத் தெரிந்ததே, ராமனோ தேவதைகளைப் போல் பரமசுத்தர்; அவருடைய மனமும் வார்த்தையும் நடத்தையும் நியாயமான வழியிலேயே எப்பொழுதும் நடக்கும்; குடிகளின் இஷ்டத்தை அனுஸரிக்கிறவர்; பெரியோரால் பழக்கப்பட்டவர்; இந்திரியங்களை அடக்கினவர்? கைகேயி முதலிய சத்துருக்களுக்கும் பிரியமானவர்; தர்மஸ்வரூபி; மேற்சொன்ன குணங்களில்லாவிட்டாலும் ஸகல தோஷங்களிருந்தாலும், மூத்த புத்திரனென்ற நியாயத்தால் ராஜ்யத்திலிருந்து விலக்கத்தகாதவர். இப்படியிருக்க, தர்மத்தை அனுஷ்டிக்கும் எந்த மனிதனாவது யாதொரு காரணமுமில்லாமல் அவரை ராஜ்யத்திலிருந்து துரத்துவானா?

"அது போகட்டும். அரசனுக்குப் பால்யம் திரும்பியிருக்கிறது; காமத்திற்கு வசப்பட்டிருக்கிறார். அப்படிப்பட்டவருடைய வார்த்தையை ராஜநீதியறிந்த எந்தப் புத்திரனாவது கவனிப்பானா? ஆகையால் அண்ணா! இந்த விஷயம் பிறர்க்குத் தெரிவதற்குள் இந்த ராஜ்யத்தை ஸ்வாதீனப்படுத்திக்கொள்ளும். நான் கையில் வில்லை எடுத்துப் பக்கத்தில் நின்றுகொண்டு தங்களைக் காப்பாற்றும் பொழுது எவனாவது நம்மை மீற முடியுமா? கொல்லவந்த யமனை ஜயித்தாலும் ஜயிக்கலாம்; நம்மை நெருங்கவும் முடியுமோ? இந்த நகரத்திலுள்ள ஜனங்கள் அனைவரும் சேர்ந்து நம்மை எதிர்த்தாலும் என் கூர்மையான பாணங்களால் இதை மனுஷ்ய ஸஞ்சாரமில்லாமல் செய்யமாட்டேனா? பரதனுக்கு நண்பர்களையும் உதவி செய்கிறவர்களையும், அவர்கள் யாராயிருந்தாலும் ஒரு நொடியில் நாசம் செய்கிறேன். கொட்டினால் தேள், கொட்டாவிட்டால் பிள்ளைப் பூச்சியல்லவா? ஏழையைக் கண்டால் மோழையும் பாயாதோ?

நமது பிதா கைகேயியால் தூண்டப்பட்டு, நமது சத்துருக்களுக்கு உதவிசெய்தால், அந்தத் துர்புத்திபிடித்தவரை ஏன் சிறையில் வைக்கக்கூடாது, ஏன் கொல்லக்கூடாது? எல்லையற்ற கர்வத்தையடைந்து, இதைச் செய்யலாம், இதைச் செய்யக்கூடாதென்ற விவேக

மின்றிக் கெட்ட வழியில் நடப்பவரை, நமக்குக் குருவானாலும் பிதாவானாலும் சிக்ஷித்து அந்த வழியிலிருந்து விலக்க வேண்டுமென்று மனு முதலிய தர்ம சாஸ்திரங்கள் சொல்லுகின்றன.

உமக்குத் தர்மமாய்க் கிடைக்கவேண்டிய இந்த ராஜ்யத்தைக் கைகேயிக்குக் கொடுக்கத் துணிந்ததற்கு என்ன காரணம்? தன் ஸைன்யங்களால் உம்மை ஜயித்துத் துரத்திவிடலாமென்றா? அல்லது, முன்பு கைகேயிக்குக் கொடுத்த வரன்களைப் பூர்த்தி செய்வதென்ற காரணத்தாலோ? அவ்விரண்டும் இங்கே செல்லாது. உம்மையும் என்னையும் விரோதித்துக்கொண்டு பரதனுக்கு இந்த ராஜ்யத்தைக் கொடுக்க இவரால் முடியுமா?

அம்மா! ராமன் என் ஸகோதரர், என்னால் பூஜிக்கத்தகுந்தவர். அவரிடத்தில் உண்மையான பிரீதியை வைத்திருக்கிறேன். நான் பேசும் ஸத்தியத்தையும் கையில் பிடித்திருக்கும் வில்லையும் கொடுத்திருக்கும் தானங்களையும் செய்திருக்கும் தேவபூஜைகளையும் ஸாக்ஷி வைத்து ஆணையிட்டுச் சொல்லுகிறேன். பயங்கரமான காட்டிற்கு ராமன் போனாலும் ஸரி; ஜ்வலிக்கும் நெருப்பில் குதித்தாலும் ஸரி; அவருக்கு முன் என்னை அங்கே பார்க்கலாம். தாயே! தாங்கள் படும் கஷ்டத்தை என் வீரியத்தால் அழிக்கிறேன். என் பராக்கிரமத்தைத் தாங்களும் அண்ணனும் இன்றல்லவா பார்க்கப் போகிறீர்கள்'' என்றார்.

அதைக் கேட்டுக் கௌஸல்யை சோகத்தால் மனம் கலங்கி அழுதுகொண்டு, "குழந்தாய்! தம்பி லக்ஷ்மணன் சொன்ன வார்த்தைகள் காதில் விழுந்தனவா? இதற்குமேல் என்ன செய்யவேண்டுமென்று உனக்குத் தோன்றுகிறதோ அப்படிச் செய். "பிதாவின் கட்டளையை எவ்வாறு மீறி நடப்பேன்'' என்று சொல்லலாம். ஆனால் இது அவர் செய்த கட்டளையல்ல; எனக்கு விரோதியான கைகேயி செய்த கட்டளை; மேலும் தர்மவிரோதமானது. அப்படியிருக்க அதைக் கேட்டு, துக்கத்தால் தவிக்கும் என்னை அநாதையாய் விட்டு நீ காட்டிற்குப் போவது நியாயமா?

நீ ஸகல தர்மங்களையும் அறிந்தவன்; உன் பிதாவின் கட்டளையை நிறைவேற்றுகிறதென்ற தர்மத்தை அனுஷ்டிக்க விரும்புகிறாய். ஆனால் அதைக் காட்டிலும் மேலான தர்மம் ஒன்றுண்டு. கேள். லோகத்திலுள்ள மற்ற யாவற்றையும் காட்டிலும் தாயே ஒருவனுக்கு மேலான வஸ்துவென்று தர்மசாஸ்திரங்கள் உபதேசிக்கின்றன. ஆகையால் நீ இங்கிருந்தே எனக்குப் பணிவிடை செய். இதைவிட சிரேஷ்டமான தர்மமில்லை. முன் காலத்தில் காசியபர் இந்திரியங்களை அடக்கி, தன் வீட்டிலிருந்தே தன் மாதாவுக்கு ஒப்பற்ற சுச்ருஷை செய்துவந்தார். அந்த சிரேஷ்டமான தவத்தால் உத்தமலோகங்களை அடைந்து பிரஜாபதிகளில் ஒருவரானார்.

உன்பிதா உனக்கெப்படியோ நானும் அப்படியல்லவா? உனக்கு அவர் எப்படிப் பூஜிக்கத் தகுந்தவரோ நானும் அப்படியல்லவா? அவருடைய கட்டளையை எப்படி நிறைவேற்ற வேண்டுமோ அப்படியே என் கட்டளையையும் நிறைவேற்ற வேண்டுமல்லவா? நீ காட்டிற்குப் போவதில் எனக்கிஷ்டமில்லை. அதற்கு அனுமதி கொடுக்க மாட்டேன். நீ இல்லாமல் எனக்கு என்ன ஸுகம்? உன்னைவிட்டு நான் பிழைத்திருக்கவும் வேண்டுமோ! உன்னுடனிருந்து நான் புல்லைத் தின்றுகொண்டிருந்தாலும் அதுவே எனக்கு நல்லது. நான் துக்கப்பட்டுக்கொண்டிருக்கும்பொழுது நீ என்னை விட்டுக் காட்டிற்குப் போனால், நான் பட்டினியிருந்து பிராணனை விடுவேன். முன் காலத்தில் ஸமுத்திர ராஜன் தன் தாய்க்கு துக்கத்தை உண்டுபண்ணின பாபத்தால் பிராம்மணனைக் கொன்றவர்கள் அடையும் நரகத்தை அடைந்தான். நீயும் நரகத்தில் என்றும் அழியாத துக்கத்தை அடைவாய்'' என்றாள்.

இப்படித் தீனமாய்த் தன் தாய் பிரலாபிப்பதைக் கேட்டு, தர்மாத்மாவான ராமன், தர்மத்தை அனுஸரித்து "நான் என் பிதாவின் ஆக்ஞையையும் நிறைவேற்றவேண்டும்; தங்களுடைய கட்டளையையும் கீழ்ப்படியவேண்டும்; ஆனால் ஒரே காலத்தில் இரண்டையும் அனுஷ்டிக்க முடியாது. மேலும், அவருடைய கட்டளையோ முந்தினது. அதையே இப்பொழுது நிறைவேற்ற வேண்டும். அதை மறக்கக்கூடாது. ஆகையால் நான் வனத்திற்குப் போகவேண்டும். தங்கள் பாதத்தில் நமஸ்கரிக்கிறேன். கிருபை செய்து அனுமதி கொடுக்க வேண்டும்.

'இப்படிச் செய்து உன் தாய்க்குத் துக்கத்தை உண்டு பண்ணலாமா' என்றால், முன் காலத்தில் ஸகல தர்மங்களையும் அறிந்த கண்டு மஹரிஷி, தன் தகப்பன் உத்தரவால் ஒரு பசுவைக் கொன்றார். அவர் தபஸ்வியல்லவா? ஞானியல்லவா? நமது குலத்தில் ஸகரரென்ற ஓர் அரசரிருந்தார். தன் அறுபதினாயிரம் புத்திரர்களை இந்தப் பூமி முழுதையும் வெட்டும்படி கட்டளையிட்டார். அதை நிறைவேற்றி அதனால் அவர்கள் சாம்பலாக எரிக்கப்பட்டார்கள். அப்படி உயிரைக் கொடுத்தாவது என் பிதாவின் கட்டளையை நிறைவேற்ற வேண்டியிருக்க, பதினான்கு வருஷங்கள் வரையில் காட்டிலிருப்பது ஒரு பெரிய கஷ்டமா? தன் பிதாவின் ஆக்ஞையால் பரசுராமர் தன் தாயான ரேணுகையைக் கோடரியால் வெட்டிக் கொன்றார். அப்படியிருக்கத் தங்களுக்குச் சில காலம் துக்கத்தை உண்டுபண்ண வேண்டுமேயென்று தயங்கலாமா? இதைப்போல் தேவதைகளுக்கு ஸமமான இன்னும் பலர் தங்கள் பிதாவின் வார்த்தையை நிறைவேற்றி இருக்கிறார்கள். நானும் அப்படியே செய்ய விரும்புகிறேன். இது நான் ஒருவன் மாத்திரம் அனுஷ்டிக்கும் தர்மமல்ல. பிறரால் அனுஷ்டிக்கப்படாததல்ல. நான் இப்பொழுது சொன்ன பெரியோர்கள் இப்படியே பிதாவின் வார்த்தையை நிறைவேற்றியிருக்கிறார்கள். நமது முன்னோர்கள் இதை ஒப்புக்கொண்டிருக்கிறார்கள். பெரியோர் நடந்த வழியிலேயே நானும் நடக்கிறேன். லோகத்தி

லுள்ள எல்லோரும் அனுஷ்டிக்கும் மேலான தர்மம் இதேயன்றி நான் ஸ்வபுத்தியால் கல்பித்ததல்ல. தங்களுக்கு வருத்தத்தை உண்டாக்க வேண்டும் என்ற எண்ணத்தால் செய்ததுமல்ல. பிதாவின் கட்டளையை நிறைவேற்றுவதால் மாதாவிற்குக் கொஞ்சம் துக்கம் நேர்ந்தாலும் அதனால் கெட்டவன் உலகத்தில் இதுவரையிலு மில்லை" என்றார்.

நன்றாகப் பேசும் திறமையுள்ளவர்களுக்குள் மேலானவரும், வில்லாளிகளுக்குள் ஒப்பில்லாதவருமான ராமன் லக்ஷ்மணனைப் பார்த்து, "லக்ஷ்மணா! உனக்கு என்னிடத்திலிருக்கும் எல்லையற்ற ப்ரீதியையும், உனது பராக்கிரமத்தையும், தைர்யத்தையும், ஒருவராலும் தாங்கமுடியாத தேஜஸையும் அறிவேன். ஸத்தியத்தின் ரஹஸ்யத்தையும், சாந்தியின் ரஹஸ்யத்தையும் அறியாமல் என் தாய் மிகவும் வருத்தப்படுகிறாள். தர்ம ரஹஸ்யத்தை அறிந்த நீயும் இப்படிச் சொல்வது ஸரியல்ல. ஸத்தியம் தர்மத்திலேயே வேரூன்றியிருக்கிறது. ஆகையால் புருஷார்த்தங்களில் ஸத்தியமே மேலானது. இப்பொழுது என் மாதாவின் வார்த்தையைக் காட்டிலும் பிதாவின் வார்த்தையை நிறைவேற்றுவதால் அந்த தர்மம் கிடைக்கும். 'தர்மத்தில் ஆசையுள்ளவன் பெற்றோர்களுக்காவது பிராம்மணர்களுக்காவது ஒரு விஷயத்தை பிரதிக்ஞை செய்துவிட்டுப் பிறகு தவறுவானா? இப்பொழுது என் பிதாவின் உத்தரவால் கைகேயி என்னை வனம் போகச் சொன்னாள். அவருடைய ஆக்ஞையை மீறி நடக்க நான் சக்தியற்றவன். ஆகையால் 'நமது தகப்பனாயிருந்தாலும் அவரைக் கொன்றுவிட்டு, இந்த ராஜ்யத்தை ஆளுவோம்' என்ற க்ஷத்திரியர்களுக்கு மாத்திரமுள்ள குரூரமான புத்தியை விடு. நாஸ்திகர்களைப்போல் தர்மத்திற்கு ஒவ்வாத நீதியை மாத்திரம் அனுஸரிக்காதே. பிறருக்கு ஹிம்ஸையை உண்டுபண்ணும் வழியில் செல்லாதே. நான் நடப்பதைப் பார்" என்று லக்ஷ்மணனிடத்திலுள்ள மிகுந்த வாத்ஸல்யத்தால் இப்படிச் சொல்லி, மறுபடியும் கௌஸல்யையை நமஸ்காரம் செய்து கைகூப்பிக்கொண்டு, "அம்மா! தாங்களும் நானும் ஸீதையும் லக்ஷ்மணனும் ஸுமித்திரையும் என் பிதாவின் ஆக்ஞைக்குக் கீழ்ப்படிய வேண்டியது புராதன தர்மம். முதலில் அவர் உத்தரவு செய்தபடியால் அப்படிப் பதினான்கு வருஷங்கள் வரையில் காட்டில் வஸித்துவிட்டுப் பிறகு தங்களுடைய கட்டளைப்படி, தங்களுடைய பக்கத்திலிருந்து சுச்ரூஷை செய்வேன். முன் காலத்தில் யயாதி ஸ்வர்க்கத்திலிருந்து பூமியில் விழுந்து, பிறகு ஸ்வர்க்கத்திற்குப் போனதுபோல், நானும் கொஞ்ச காலம் கஷ்டத்தை அனுபவித்து என் பிரதிக்ஞையை நிறைவேற்றி மறுபடியும் தங்களைத் தரிசனம் செய்கிறேன். ஆகையால் தாங்கள் துக்கத்தை அடக்கிக்கொண்டு எனக்கு உத்தரவு கொடுக்க வேண்டும். நான் க்ஷேமமாய்ப் போய் வருவதற்கு வேண்டிய மங்கள காரியங்களைச் செய்யவேண்டும். என் பிராணன் மேல் ஆணை



வைத்துக் கேட்டுக் கொள்ளுகிறேன். இப்பொழுது என் அபிஷேகத்திற்காகச் செய்திருக்கும் ஏற்பாடுகளை நிறுத்திவிட்டு, துக்கத்தை வெளியில் காட்டாமல் தர்மத்தைக் காப்பாற்றுவதற்காக நான் வனத்திற்குப் போவதை அங்கீகரிக்க வேண்டும்" என்றார்.

"ராமன் இப்படித் தர்மத்தை அனுஸரித்தும் கொஞ்சம்கூட வருத்தமில்லாமலும், உறுதியாயும் சொன்ன வார்த்தைகளைக் கேட்டுக் கௌஸல்யை துக்கத்தால் மூர்ச்சையடைந்தாள். பிறகு பிரக்ஞை தெளிந்து "குழந்தாய்! நமக்குள்ள சரீர ஸம்பந்தத்தாலும் உன்னைப் பெற்று வளர்த்ததாலும் உன் பிதாவுக்கு ஸமமாக நீ என்னைப் பூஜிக்க வேண்டும். சொல்லமுடியாத துக்கத்தை அனுபவித்துக்கொண்டிருக்கும் என்னை விட்டு நீ காட்டிற்குப் போகக் கூடாது. அதற்கு ஸம்மதிக்கமாட்டேன். நீ இல்லாமல் இந்த லோகத்தில் நான் பிழைத்திருந்தென்ன பயன்? பித்ருலோகத்திலாவது, ஸ்வர்க்கத்திலாவது, ஆனந்தத்தைக் கொடுக்கும் மேல் லோகங்களிலாவது நான் இருந்தாலும் என்ன ஸுகம்? உன்னருகில் ஒரு முகூர்த்தமிருப்பதற்கு இவையெல்லாம் ஈடாகுமா" என்றாள்.

யானையைப் பிடிக்கிறவர்கள், தீவட்டிப் பந்தங்களுடன் அது போகும் வழியில் ராத்திரியில் நின்று தடுத்தாலும், அதன் கோபம் அதிகரிக்குமேயல்லாது, தான் குறிவைத்த பாதையிலிருந்து திரும்புமோ? அப்படித் தன் தாய் வெகுதீனமாக பிரலாபிப்பதைக் கேட்டு, ராமனுடைய மனஉறுதி மறுபடியும் பலமடைந்தது. அவள் சோகத்தால் பிரக்ஞையற்றிருப்பதையும் லக்ஷ்மணன் துக்கத்தால் தவிப்பதையும் பார்த்தும், தர்மத்தில் நாடிய மனத்தையுடைய ராமன், தர்மத்தை அனுஸரித்து மறுமொழி சொன்னார். இப்படி நான்குபக்கங்களிலும் தர்மத்தால் நிர்ப்பந்திக்கப்பட்டு, அவைகளில் உத்தமமான தர்மம் எது என்று கண்டு பிடித்து, அதை ஒரே உறுதியாக அனுஷ்டித்தவர்கள் ராமனைத் தவிர இந்த் மூன்று லோகங்களிலும் வேறு ஒருவர் உண்டோ? இப்படிப் பேசத் தகுந்தவர் அவரே. "லக்ஷ்மணா! உனக்கு என்னிடத்திலுள்ள பக்தியையும் உன் பராக்கிரமத்தையும் நன்றாக அறிவேன். ஆனால் என் அபிப்பிராயத்தைப் பூரணமாக அறியாமல் நீயும் என் தாயும் எனக்கு வீண் வருத்தத்தை உண்டாக்குகிறீர்கள். தர்மத்தைப்பற்றிச் சுருக்கமாக இதுவரையில் சொன்ன வார்த்தைகளை விஸ்தாரமாகச் சொல்லுகிறேன் கேள். ஒருவனுடைய பாரியை அவனுடைய கட்டளைப்படி நடப்பதால் தர்மத்தையும், அவனுடைய ப்ரீதிக்குப் பாத்திரமாயிருப்பதால் காமத்தையும், நல்ல புத்திரனைப் பெறுவதால் அர்த்தத்தையும் ஸம்பாதிக்கிறாள். ஒரே ஸ்திரீ மூன்று புருஷார்த்தங்களையும் கிடைக்கச் செய்கிறாள். இப்படியே தர்மார்த்த காமமென்ற புருஷார்த்தங்கள், தர்மத்தால் கிடைக்கும் ஸுகத்திற்கு உபாயங்களாகச் சொல்லப்படுகின்றன. தர்மம் ஒன்றையே நன்றாக அனுஷ்டித்தால் இம் மூன்றும் கிடைக்கும். இதைப் பற்றி எனக்குக் கொஞ்சம்கூட ஸந்தேகமில்லை. மேற்சொன்ன புரு

ஷார்த்தங்கள் எதனால் கிடைக்காதோ அதை ஆரம்பிக்கக்கூடாது. எந்தக் காரியத்திலிருந்து தர்மம் விளையுமோ அதையே செய்ய வேண்டும். கேவலம் அர்த்தத்தையே நாடுகிறவனை லோகத்தார் அனைவரும் வெறுக்கிறார்கள். கேவலம் காமத்தையே நாடுவதும் அப்படியே. இப்பொழுது நான் செய்ய வேண்டிய தர்மம் என்னவென்று யோசிப்போம். தனுர்வேதம் ராஜநீதி முதலியவைகளை எனக்கு உபதேசித்ததால் மஹாராஜா எனக்கு ஆசாரியர். என்னைக் காப்பாற்றும் அரசன். என்னைப் பெற்ற பிதா. வயதால் பெரியவர். அப்படிப்பட்டவர் கோபத்தாலோ, ஸந்தோஷத்தாலோ, காமத்தாலோ ஏதாவது ஒன்றைக் கட்டளையிட்டால்,க்ரூரமான தன்மையையும் நடத்தையையும் உடையவனைத்தவிர, சொன்ன வார்த்தையை நிறைவேற்றுவதென்ற தர்மத்தை அறிந்த வேறு யாராவது அதை நிறைவேற்றாமலிருப்பானா? நான் க்ரூர ஸ்வபாவமுள்ளவனல்ல. என் பிதாசெய்த பிரதிக்ஞையை என்னால் முடிந்தவரையில் நிறைவேற்றுவேன்.

அவர் நம்மிருவருக்கும் பிரபு. என் தாய்க்கும் அப்படியே. அவளுக்கு அவரே உத்தம கதி. அவள் புண்ணியலோகங்களை அடைவதற்கு அவரே ஸாதனம். நமது முன்னோர்களைக் காட்டிலும் அவர் விசேஷமாகத் தர்மத்தை அனுஸரித்து, நெறிதவறாமல் ராஜ்யபாலனம் செய்துவரும்பொழுது,என் தாய் திக்கற்ற ஒரு ஸாதாரண ஸ்த்ரீயைப்போலவும், புருஷனை இழந்தவளைப்போலவும் என்னுடன் வனத்திற்கு வருவது உசிதமா? அம்மா! நான் வனத்திற்குப்போகிறேன். உத்தரவு கொடுங்கள். நான் திரும்பி க்ஷேமமாய் வந்து சேருவதற்கு மங்களகாரியங்களைச் செய்யுங்கள்.யயாதி மஹாராஜா ஸ்வர்க்கத்திலிருந்து தள்ளப்பட்டு ஸத்தியத்தைச் சொன்னதால் மறுபடியும் ஸ்வர்க்கத்திற்குப் போனதைப்போல், நானும் பதினான்கு வருஷங்கள் முடிந்தவுடன் திரும்பி வருகிறேன். தர்மமாகக் கிடைக்காத இந்த ராஜ்யத்தில் ஆசைப்பட்டு கீர்த்தி என்ற விசேஷப் பிரயோஜனத்தைத் தள்ளிவிட என்னால் முடியாது. நமது ஜீவகாலம் வெகு ஸ்வல்பம், மின்னல்கொடியைப் போல் நிலையற்றது. அதில் அதர்மத்தைச் 'செய்தாவது இந்த பூமியை ஆளவேண்டுமென்ற எண்ணம் எனக்கில்லை'' என்று புருஷோத்தமரான ராமன் தன் தாயை ஸமாதானப்படுத்தி கைகேயியின் சொற்படி அங்கிருந்து சீக்கிரமாகப்புறப்பட்டு வனத்திற்குப்போக நிச்சயித்து, லக்ஷ்மணனுக்குத் தன் உண்மையான அபிப்பிராயத்தைத் தெரிவித்து தன் தாயை பிரதக்ஷிணம் செய்து உத்தரவு பெற்றுக்கொள்ள உத்தேசித்தார்.

ப்ரஸாத[3]யந் நரவ்ருஷப[4]: ஸ்வமாதரம்
பராக்ரமாத் ஜிக[3]மிஷுரேவ த[3]ண்ட[3]காந் |
அதா[2]நுஜம் ப்[4]ருஶமநுஶாஸ்ய த[3]ர்ஶநம்
சகார தாம் ஹ்ருதி[3] ஜநநீம் ப்ரத[3]க்ஷிணம் ‖ (65)

---



# ஸர்க்கம் 22

## ராமன் லக்ஷ்மணனை ஸமாதானம் செய்தது

அத[2] தம் வ்யத[2]யா தீ[3]நம் ஸவிஶேஷ மமர்ஷிதம் |
ஶ்வஸந்தமிவ நாகே[3]ந்த்[3]ரம் க்ரோத[4] விஸ்ப[2]ாரிதேக்ஷணம் ‖ (1)

**ரா**மனுடைய மனம் அவருக்கு வசப்பட்டது. ஸகலப்பிராணிகளிடத்திலும் அவர் செலுத்தும் சக்தி அந்த ஸமயத்தில் அவருடைய வார்த்தைகளால் வெளிப்பட்டது. லக்ஷ்மணன் ராமனுக்கு அந்தரங்கமானவர்களில் மேலானவர்; அதிகப் பொறுமையில்லாதவர். கோபத்தால் அவருடைய கண்கள் பரந்து இருந்தன. அப்படியிருந்தும் தனக்கு மித்திரனும் தம்பியும் பிரியமானவனுமான காரணத்தால் ராமன் எல்லாவற்றையும் மறந்து, அவருக்கெதிரில் நின்றுகொண்டு, "லக்ஷ்மணா! நீ ஸ்வபாவத்தில் அதிக தைரியசாலியல்லவா? அரசனிடத்திலுள்ள கோபத்தையும் என்னைப்பற்றின வருத்தத்தையும் உனக்குள் அடக்கு. 'அபிஷேகத்திற்காக எல்லாம் தயாராயிற்றே. இப்பொழுது அது நடக்காவிட்டால் நமக்கு அவமானமல்லவா' என்றால், அது நமது பலஹீனத்தால் ஏற்படவில்லையே. மேலும் நமது பிதா செய்த பிரதிக்ஞையை நிறைவேற்றி அவர் உத்தமகதியை அடையும்படி செய்தோம் என்று மிகவும் ஸந்தோஷப்படவேண்டும். ஆகையால் என் அபிஷேகத்திற்காகச் செய்யப்பட்ட ஏற்பாடுகளை நிறுத்திவிட்டு, நமது பிதாவின் வார்த்தையை நிறைவேற்றுவதற்கு வேண்டிய காரியங்களைச் செய். எனக்கு அபிஷேகம் நடக்கவில்லையே என்று என் தாய்க்கு மிகுத்த வருத்தம். நான் திரும்பி வருவேனோ வரமாட்டேனோ என்ற பெரிய ஸந்தேகம். ராமன் பிதாவின் கட்டளையை வெகு ஸுலபமாக நிறைவேற்றி, அதிசீக்கிரத்தில் வனத்திலிருந்து திரும்பிவருவான், இதைப்பற்றி நீ கவலைப்படவேண்டாமென்று நீ அவளுக்குச் சொல்லி அவள் வருத்தப்படாமல் செய்யவேண்டும். இந்த ஸந்தேகத்தால் அவள் துக்கப்படுவதை ஒரு க்ஷணம்கூட நான் பார்க்கப் பொறுக்கமாட்டேன்.

"நான் இதுவரையில் தெரிந்தாவது தெரியாமலாவது என் தாய்களுக்கும் பிதாவுக்கும் அல்ப விஷயங்களிலும் பிரியமில்லாமல் நடந்ததில்லை. நமது பிதா எப்பொழுதும் நிஜத்தையே பேசுகிறவர் ; செய்த பிரதிக்ஞை தவறாவர்; வீணாகாத பராக்கிரமமுடையவர். இப்பொழுது தமக்கு உத்தமகதி கிடைக்காதோ என்ற பயம் அவருக்கில்லாமல் நாம் செய்ய வேண்டும். இந்த அபிஷேகம் தடுக்கப்படாமலிருந்தால் தான் கொடுத்த வரங்கள் வீணாகுமே என்று அவருடைய மனம் தவிக்கும். அதைப் பார்த்து நானும் தவிப்பேன். ஆகையால் என் அபிஷேகத்திற்குவேண்டிய ஏற்பாடுகளை நிறுத்தி இப்பொழுதே காட்டுக்குப் போகிறேன்.

"கேகய ராஜருடைய புத்திரி தன் எண்ணம் நிறைவேறித் தன் புத்திரனான பரதனை யாதொரு கவலையுமில்லாமல் அபிஷேகம் செய்யட்டும். நான் மான்தோல், மரவுரி, ஜடை முதலியவைகளைத் தரித்துக்கொண்டு வனத்திற்குப்போனால் கைகேயியின் மனம் ஸந்தோஷப்படும். ராஜ்யத்தை விட்டு வனத்திற்குச் செல்ல வேண்டுமென்ற புத்தி எனக்கு ஸ்திரமாக ஏற்பட்டிருக்கிறது.அதை மாற்றமுடியாது. ஆகையால் நீ என்னை வருத்தப்படுத்துவது யுக்தமல்ல. நான் வனத்திற்குப் போகிறேன். தாமதம் செய்யாதே.

"நான் இப்படிச் செய்வதற்குத் தர்மமே முக்கிய காரணமென்று இதுவரையில் சொன்னேன். ஆனால் அதைவிட மேலான காரணம் ஒன்றுண்டு. நான் காட்டிற்குப் போவதற்கும் பெற்ற ராஜ்யத்தை இழப்பதற்கும் காரணம் ஈசுவரனே, கைகேயி அல்ல. வீணாக அவளைத் தூஷிப்பதில் பிரயோஜனமென்ன? கைகேயிக்கு இவ்விதமான எண்ணமுண்டானதற்குக் காரணமும் ஈசுவரனே, இல்லாவிட்டால் நீ எண்ணுகிறபடி அவளுக்கு என்னை ஹிம்ஸிக்க வேண்டுமென்ற புத்தி ஏன் உண்டாக வேண்டும்? எனக்கு என் தாய்களிடத்தில் தாரதம்யமாவது, பேத புத்தியாவது கொஞ்சமேனும் இல்லை என்று உனக்குத் தெரியாதா? அப்படியே கைகேயிக்கு என்னிடத்திலும் பரதனிடத்திலும் பேத புத்தியில்லை என்று உனக்குத் தெரியுமே. அப்படியிருக்க என் அபிஷேகத்தை நிறுத்தவேண்டுமென்றும், என்னைக் காட்டிற்கனுப்ப வேண்டுமென்றும் வெகு குரூரமான கெட்ட வார்த்தைகளை அவள் சொல்வதை யோசித்தால், ஈசுவரனால் அவளுடைய புத்தி மாற்றப் பட்டிருக்கின்றதென்ற காரணத்தைத் தவிர வேறு எனக்குத் தோன்றவில்லை. அவளோ நல்ல ஸ்வபாவமுள்ளவள் உத்தமமான ராஜ குலத்தில் பிறந்தவள். அதற்குத் தகுந்த தயை பெருந்தன்மை முதலிய சிரேஷ்டமான குணங்களை உடையவள். அப்படிப்பட்ட கைகேயி கெட்ட ஸ்வபாவத்தைக் கைக்கொண்டு, தாழ்ந்த குலத்தில் பிறந்து நற்குணங்கள் ஏதுமில்லாத அல்ப ஸ்திரீயைப்போல் ஏன் நடக்கவேண்டும்? வேறு யாரிடத்திலாவது சொன்னாலும் பாதகமில்லை. தன் கணவனிடத்திலேயே ஏன் சொல்ல வேண்டும்? தோழிகளிடத்தில் சொல்லி அனுப்பினால் பாதகமில்லை. தானே ஏன் நேரில் சொல்ல வேண்டும்? அந்த க்ஷணம் வரையில் தானும் மஹாராஜாவும் எல்லையற்ற பிரீதி வைத்திருந்த எனக்கு மிகுந்த கஷ்டத்தை உண்டாக்கும் வார்த்தைகளைச் சொல்லுவாளா? ஜாடையாகச் சொல்லவுமில்லை. ஸ்பஷ்டமாகப் பல தடவை சொல்லியிருக்கிறாள். இந்த விஷயங்களை யோசித்தால் இவ்வளவும் ஈசுவரனுடைய செயலென்றே நிச்சயமாகிறது. எண்ண முடியாத சக்தியுள்ள ஈசுவரனுடைய ஸங்கல்பத்தை எந்தப் பிராணியும் தடுக்க முடியாதென்பதில் ஸந்தேகமில்லை. என் கையில் கிடைத்த ராஜ்யம் தவறிப்போனதும், என்னிடத்தில் அவளுக்கு இதுவரையிலிருந்த பிரியம் முற்றிலும் மாறினதும் இந்தக் காரணத்தாலேயே.



'ஆனால் தெய்வச் செயலை மனுஷ்ய பிரயத்னத்தால் வெல்லக் கூடாதா' என்றால், அது கொடுக்கும் பயன்களால் அதன் ஸ்வரூபத்தை அறிய வேண்டுமே தவிர, அதை நேரில் பார்த்தவர்களுண்டா? எவனாவது தெய்வத்தை எதிர்க்க முடியுமா? ஸுகம், துக்கம், சாந்தி, கோபம், லாபம், நஷ்டம், உற்பத்தி, நாசம் முதலிய காரணம் தெரியாத யாவற்றிற்கும் தெய்வமே காரணம். கடுமையான தவம் செய்துகொண்டிருந்த விசுவாமித்திரர் முதலிய ரிஷிகளும் தெய்வத்தால் பீடிக்கப்பட்டுக் காமக்குரோதங்களை அடக்க முடியாமல் ஸமாதி குலைந்து தங்களுடைய மேன்மையான பதவியிலிருந்து நழுவியிருக்கிறார்கள். நாம் ஒரு காரியத்தை ஆரம்பித்திருக்கும்பொழுது அதைத். தடுத்து, நாம் எண்ணாத வேறொரு காரியத்தை நடத்திவைப்பது தெய்வச் செயலே. இந்த நிச்சயத்தை உடையவனாய், எனக்கு எது நேர்ந்தாலும் மனம் கலங்காமலிருப்பதால் இப்பொழுது இந்த அபிஷேகம் தடைப்பட்டாலும் அதனால் எனக்குக் கொஞ்சம்கூட வருத்தம் உண்டாகவில்லை.

"நீயும் வருத்தப்படாமல் என்னைப்போல் நடந்துகொண்டு என் அபிஷேக காரியங்களை நிறுத்து. அதற்காகக் கொண்டுவந்திருக்கும் குடங்களிலுள்ள ஜலத்தால் நான் தபஸ்வியாவதற்கு முந்திச் செய்யவேண்டிய விரத ஸ்நானம் நடக்கட்டும். வேண்டாம்; ஒருவேளை நான் இந்த ராஜ்யத்திற்காக ஆசைபட்டுக் கபடமாக அபிஷேகம் செய்துகொண்டேன் என்று கைகேயிக்குத் தோன்றினாலும் தோன்றலாம். ஆகையால் அபிஷேகத்திற்காகக் கொண்டு வரப்பட்ட ராஜத்திரவியம் எனக்கு அவசியமில்லை. நானே நதியிலிருந்து ஜலத்தைக் கொண்டுவந்து விரத ஸ்நானம் செய்கிறேன்.

"லக்ஷ்மணா! நமக்கு ராஜ்யம் கிடைக்கவில்லையே, ஐசுவரியத்தை இழந்தோமே என்று கொஞ்சம்கூட வருத்தப்படாதே. ராஜ்யத்தை ஆளுவதும் காட்டிலிருப்பதும் எனக்கு ஒன்றே. அப்படியுமல்ல. யோசித்துப் பார்த்தால் ராஜ்ய பரிபாலனத்தாலுண்டான கவலையும் கஷ்டமும் பாபமும் வனவாஸத்தில் இல்லை. இதுவரையில் பார்க்காத பொருள்களைப் பார்க்கலாம். ஆகையால் அரசாக்ஷியைக் காட்டிலும் வனவாஸமே மேலானது.

"லக்ஷ்மணா! ஒரு வார்த்தை சொல்லுகிறேன் கேள். தெய்வத்தின் சக்தி எல்லையற்றதென்று உனக்குத் தெரியுமே. அந்தத் தெய்வத்தால் ஏவப்பட்டிருப்பதால் கைகேயி நமக்கு ஹிதமில்லாத வார்த்தைகளைச் சொல்லுகிறாள். அப்படியிருக்க என் அபிஷேகத்தை

அவள் தடுத்தாளென்று நாம் ஸந்தேகப்படுவது நியாயமில்லை" என்றார்.

ந லக்ஷ்மணாஸ்மிந் க$^{2}$லு கர்மவிக்‘நே
மாதா யவீயஸ் யதிஶங்கிதவ்யா |
தை$^{3}$வாபி‘பந்நா ஹி வத$^{3}$த்யநிஷ்டம்
ஜாநாஸி தை$^{3}$வம் ச ததா$^{2}$ப்ரப‘ாவம் || (30)

---

## ஸர்க்கம் 23

## லக்ஷ்மணன் ராமனைத் தடுத்தது

---

இதி ப்$^{3}$ருவதி ராமே து லக்ஷ்மணோ த‘ஶ்ஶிரா முஹு:‘ |
ஶ்ருத்வா மத்‘யம் ஜகா$^{3}$மேவ மநஸா து$^{3}$க்க$^{2}$ஹர்ஷயோ: || (1)

ராமன் இப்படிச்சொல்ல லக்ஷ்மணன், தான் அதற்கு ஸம்மதிக்காததற்கு அடையாளமாகத் தலையைக் கீழே குனிந்துகொண்டு "நமது தமயன் தர்மத்தை அனுஷ்டிப்பதில் உறுதியாயிருக்கிறாரே" என்று ஸந்தோஷத்தையும், "ராஜ்யத்தைவிட்டுப் போகிறாரே" என்று துக்கத்தையும் அடைந்தார். ஆனால் அந்த அபிப்பிராயத்தை வார்த்தையால் தெரிவிக்கவில்லை; அந்த எண்ணமும் அடுத்த க்ஷணத்தில் மாறிவிட்டது. அதிக கோபம் கொண்ட ஸிம்ஹம் புருவத்தை நெறிப்பதுபோல் தன் புருவங்களை நெறித்துப் பெட்டியில் அகப்பட்ட ஸர்ப்பத்தைப்போல் சீறிக்கொண்டு மனதிலுள்ள கோபத்திற்கு அடையாளமாகத் தலையை மேலும் கீழும் அசைத்துக்கொண்டு, யானையின் துதிக்கைபோன்ற தன் கையை ஆட்டிக்கொண்டு, குறுக்குப் பார்வையாக ராமனைப் பார்த்து, "பிதாவின் வார்த்தையை நிறைவேற்றாவிட்டால் தர்மத்திற்குக் குறைவு நேரும்; நான் தர்மத்தை அனுஷ்டிக்காவிட்டால் பிறரும் அதைக் கைவிடுவார்கள். பிதாவின் கட்டளையை நிறைவேற்றாதவன் நம்மை ரக்ஷிப்பானோ என்று ஜனங்கள் என்னிடத்தில் ஸந்தேகப்படுவார்கள்" என்று நினைத்துக் காட்டிற்குப் போவதில் தாங்கள் இவ்வளவு பரபரப்புடனிருப்பது யுக்தமல்ல. வீரியமில்லாதவர்களும், சித்தப்பிரமையுள்ளவர்களும், க்ஷத்திரியர்களில் கீழ்ப்பட்டவர்களுமே உண்மையில் சக்தியற்ற விதியை அனுஸரித்து அதற்குக் கட்டுப்படுவார்கள். தாங்கள் க்ஷத்திரிய சிரேஷ்டர்; விதியை விலக்கும் சக்தியை இயற்கையாகவே உடையவர்; கலங்காத புத்தியையுடையவர்; இப்படியிருக்க விதியை ஒருவராலும் வெல்ல முடியாதென்று அந்தக் கையாலாகாத பதார்த்தத்தை மெச்சுவது நியாயமல்ல. மனோபலமில்லாதவர்களுக்கு விதி என்பது பிழைப்புக்கு வழியென்று பிருஹஸ்பதி சொல்லியிருக்கிறார். ஆகையால்



கையாலாகாதவர்களே விதியை அனுஸரிக்கவேண்டும். புருஷப்பிரயத்னத்தை விதி வெல்லாது. அதைக் கொண்டாடலாமா?

"பிதாவின் வார்த்தையை நிறைவேற்றாமலிருந்தால் அதர்மம் நேருமென்று பயப்படுகிறீர்கள். தங்களுக்குத் துரோகம் நினைத்த அந்தப் பாபிகளான கைகேயி தசரதர் இவர்களிடத்தில் தங்களுக்கு ஏன் ஸந்தேகமுண்டாகவில்லை? அவர்கள் தர்மத்தை அனுஷ்டிக்கவில்லையா என்றால், தர்மானுஷ்டானமென்ற வேஷத்தால் தங்களுடைய துர்க்குணங்களையும் கெட்ட நடத்தைகளையும் மறைத்துக்கொள்ளும் ஸாமர்த்தியமுள்ள எவ்வளவோ ஜனங்கள் இவ்வுலகத்திலிருக்கிறார்கள். தாங்கள் தர்மாத்மாவானதால் அவர்களிடத்தில் தங்களுக்கு ஸந்தேகமுண்டாவதில்லை. அவர்களைத் தங்களைப் போல் நினைக்கிறீர்கள். தங்களுடைய அபிஷேகத்தைத் தடுக்க அவர்கள் நன்றாக யோசித்து, அவர்கள் இப்படி நடக்கிறார்களென்று தங்களுக்கு ஏன் தெரியவில்லை? வெகு காலத்திற்கு முன்பாகவே அவர்கள் இப்படிக் கலந்து யோசனை செய்யாவிட்டால், எப்பொழுதோ கொடுத்த வரங்களைக் கைகேயி இதுவரையில் மறந்து கேட்காமலிருப்பாளா? ராமன் எனக்கு மூத்த புத்திரன். இந்த ராஜ்யம் அவனுக்கு நியாயமாகக் கிடைக்க வேண்டியது. ஆனால் எனக்கு உன் புத்திரனான பரதனுக்குக் கொடுக்க வேண்டுமென்ற விருப்பம். அவன் ராமனுக்கு இளையவனானதால் அப்படிச் செய்ய ஜனங்கள் ஸம்மதிக்கமாட்டார்கள். ஆகையால் அதற்கு உபாயம் செய்வோம். ராமனுக்கு அபிஷேகம் செய்வதாக எல்லா ஜனங்களுக்கும் எதிரில் நான் பிரதிக்ஞை செய்கிறேன். பிறகு நீ முன் காலத்தில் கொடுத்த வரங்களைப் பூர்த்தி செய்யும்படி என்னைக் கட்டாயப்படுத்து. நான் அதற்கு இஷ்டமில்லாதவன்போல் நிர்ப்பந்தத்தின்மேல் ஒப்புக்கொள்வதாகக் காட்டிக்கொண்டு ஸம்மதிக்கிறேன். அப்பொழுது ராமனைப் பல வருஷங்கள் வரையில் காட்டிற்கு அனுப்பி, நமது குழந்தை பரதனுக்கு அபிஷேகம் செய்வோம்" என்று நமது பிதா கைகேயியுடன் கலந்து துரோகமாகச் செய்த யோசனை என்று தங்களுக்கு ஏன் இன்னும் தோன்றவில்லை? மூத்த புத்திரனிருக்கையில் இளையவனுக்கு அபிஷேகம் செய்வது இவ்வுலகத்தில் எவனுக்காவது இஷ்டமாகுமா? அதிலும் நான் ஸம்மதிப்பேனா? பொறுத்துக்கொண்டிருக்க மாட்டேன். தாங்கள் என்னை மன்னிக்க வேண்டும்.

"தாங்கள் மஹா புத்திமானல்லவா? தர்மானுஷ்டானமென்ற ஒரு காரணத்தால் 'அபிஷேகம் செய்துக் கொள்ளமாட்டேன்; வனத்திற்கே போவேன். அப்படிச் செய்யாவிட்டால் மஹா பாபம் நேரும்' என்று பிசகான அபிப்பிராயம் கொண்டிருக்கிறீர்கள். அந்தத் தர்மம் எனக்கு விரோதி. கைகேயியின் வார்த்தைக்குக் கட்டுப்பட்டு, தர்ம விரோதமாயும் ஸகல ஜனங்களும் நிந்திக்கும் வார்த்தைகளை நமது பிதா சொல்லவும், ஒருவராலும் தடுக்கக்கூடாத

சக்தியையுடைய தாங்கள் அவைகளை நிறைவேற்றுவதாக நிச்சயிப்பதும் எப்பொழுதாவது நேருமா? ஆகையால் தங்களுக்குச் சித்தப்பிரமை தவிர வேறில்லை. அவர்கள் கபடமாகத் தங்களுடைய அபிஷேகத்தை நிறுத்துவதற்காகச் செய்த ஏற்பாட்டை உண்மையென்றெண்ணி மோசம் போகிறீர்களென்பதை நினைக்க நினைக்க, எனக்குத் துக்கம் மேலிடுகிறது. தர்மத்தை இப்படி அனுஷ்டிப்பதில் இவ்வுலகத்தில் ஒருவருக்கும் ஸம்மதமிராது. அவர்கள் பெயருக்கு மாத்திரம் நமக்கு மாதாபிதாக்களே ஒழிய வேறல்ல. சத்துருக்களென்பதே உண்மை. நமக்குக் கெடுதியைத் தேடுகிறவர்கள், காமத்திற்கு அடிமைகள். ஆகையால் அவர்களுடைய கட்டளையை நிறைவேற்ற வேண்டுமென்று எவனாவது நினைப்பானா?

"அவர்களுக்கு இப்படிப்பட்ட புத்தி தோன்றியது விதியால் நேர்ந்தது. கைகேயியின் குற்றமல்லவே" என்று சொன்னால் அந்த ஸமாதானத்தை ஒப்புக்கொள்ளமுடியுமா? எனக்கும் ஸரியாகத் தோன்றவில்லை. பயந்தவர்களும் வீரியமில்லாதவர்களுமே தெய்வத்தைப் பின்பற்றுவார்கள். வீரர்களும் மன உறுதியுள்ளவர்களும் அதை லக்ஷ்யம் செய்யமாட்டார்கள். தன் பலத்தால் விதியை வெல்லக் கூடியவனிடத்தில் அதன் ஆட்டம் கொஞ்சமேனும் பலிக்காது. அவனுக்கு ஆகவேண்டிய காரியத்தையும் அது கெடுக்காது. விதியைக் காட்டிலும் புருஷப் பிரயத்தினம் பலமுள்ளதென்பதைக் காட்ட இன்று பிரத்யக்ஷமாக ஒரு உதாரணத்தைப் பாருங்கள். விதியின் பலமும் புருஷப்பிரயத்தினத்தின் பலமும் இன்று நன்றாக விளங்கும். அவைகளுக்குள்ள பேதத்தையும் தாரதம்யத்தையும் எல்லோரும் தெளிவாய் அறிவார்கள். விதியே தங்களுடைய அபிஷேகத்தைத் தடுத்ததென்று தாங்களும் இன்னும் பல ஜனங்களும் எண்ணிக்கொண்டிருக்கிறீர்கள். அந்தத் தெய்வம் என் பலத்தால் இன்று ஜயிக்கப்பட்டு என்ன பாடு படுமென்பதை எல்லோரும் பார்ப்பீர்கள். மதம் பிடித்து, சங்கிலிகளை அறுத்துக்கொண்டு மாவெட்டியால் குத்துவதையும் லக்ஷ்யம் செய்யாமல் தன் இஷ்டப்படி ஓடும் யானையைப்போல், தடையில்லாமல் செல்லும் தெய்வத்தை, என் புத்தி என்ற பாசத்தால் அடக்கித் திருப்பிக்கொண்டு வருகிறேன். லோகபாலர்கள் ஒன்று சேர்ந்தாலும், இந்த மூன்று லோகங்களில் உள்ளவர்கள் ஒன்று சேர்ந்தாலும் தங்களுடைய அபிஷேகத்தைத் தடுக்கமுடியாது. அப்படியிருக்க, நமது பிதா தடுக்கப்போகிறாரோ? தங்களுடைய அபிஷேகத்தைத் தடுத்து, தங்களைக் காட்டிற்கு அனுப்ப வேண்டுமென்று ரஹஸ்யமாய் யோசனை செய்தவர்களையே இந்த ராஜ்யத்திலிருந்து துரத்தி, அந்தக் காட்டில் பதினான்கு வருஷங்கள் வஸிக்கும்படி செய்கிறேன். தங்களுடைய அபிஷேகத்தை நிறுத்த வேண்டுமென்றும், அவர்களுடைய புத்திரனுக்கு அபிஷேகம் செய்ய வேண்டுமென்றும் அவர்கள் கொண்டிருக்கும் ஆசையை இன்று



நினைக்கிறேன். தெய்வத்துடன் விரோதித்துக்கொண்டு ஒருவன் தப்பினாலும் தப்பலாம்; என்னை விரோதித்துக்கொண்டு உயிரோடியிருக்க முடியுமா?

"தாங்கள் வனத்திற்கா போகவேண்டும்? போவது நிச்சயமே; ஆனால் இப்பொழுதல்ல; இந்தக் காரணத்தாலல்ல. நமது முன்னோர்களான ராஜரிஷிகள் வெகுகாலம் வரையில் ராஜ்யத்தை ஆண்டு, வயது சென்ற பிறகு வானப்பிரஸ்தாசிரமத்தைக் கைக்கொண்டு, ராஜ்யத்தைப் புத்திரர்களிடத்தில் ஒப்புவித்து, 'நமது குடிகளை உன் குழந்தையைப்போல் பரிபாலிக்கவேண்டும்' என்று கட்டளையிட்டு, வனத்திற்குப் போய்த் தவம் செய்வது வழக்கம். அப்படியே தாங்களும் அநேக ஆயிரம் வருஷங்கள்வரையில் ராஜ்யபாலனம் செய்துவிட்டுப் பிறகு வனத்திற்குப் போவீர்கள். அப்பொழுது தங்களுடைய புத்திரர்கள் ராஜ்யத்தை ஆள்வார்கள்.

"நமது பிதா ஸ்திரமான சித்தமுள்ளவர் அல்ல. ராஜ்யம் அடிக்கடி மாறுமென்று தங்களுக்கு சந்தேகமுண்டாகி, தங்களுக்கு ராஜ்யம் வேண்டாமென்றால், ஸமுத்திரத்தை அதன் கரை காப்பதுபோல் நான் இந்த ராஜ்யத்தைக் காப்பாற்றுவேன். இப்படியே பிரதிக்ஞை செய்வேன். தவறினால் வீரர்கள் அடையவேண்டிய ஸ்வர்க்கம் எனக்குக் கிடைக்காமல் போகட்டும்.

"ஆகையால் இப்பொழுது தயாராக இருக்கும் பதார்த்தங்களால் அபிஷேகம் செய்துகொள்ளும் விஷயத்தில் தங்கள் மனத்தைச் செலுத்தவேண்டும். அதைத் தடுக்கும் அரசர்களை நெருங்க விடாமல் துரத்த நான் ஒருவனே போதும். இந்தக் கைகள் வெறும் அழகுக்கோ? என் வில்லும், இடுப்பில் கட்டியிருக்கும் கத்தியும், என் அம்பறையில் நிறைந்திருக்கும் பாணங்களும் வெறும் அலங்காரத்திற்கோ? விளையாடவோ? அல்லது பெருமைக்கோ? இந்த நான்கும் நமது சத்துருக்களை வேரறுக்க ஸாதனங்களல்லவா? எனக்குச் சத்துருவென்று ஒருவன் ஏற்பட்டால் அவன் உயிரோடிருக்கப் பொறுக்கமாட்டேன். அவன் வஜ்ராயுதத்தைத் தரித்த இந்திரனாயிருந்தாலும் ஸரி, மின்னலைப்போல் பிரகாசிக்கும் என் கத்தியால் அவனுடைய பிராணனை வாங்கிவிடுவேன். பாருங்கள், இன்றைக்கு என் கையால் வெட்டப்பட்ட யானைகள், குதிரைகள், மனிதர்களுடைய கைகால்கள், தலைகள் பூமியில் விழுந்து, அடர்ந்த காட்டைப்போல் ஸஞ்சரிக்கமுடியாமல் செய்துவிடும். என் கத்தியால் வெட்டித் தள்ளப்பட்ட யானைகள், கொழுந்து விட்டெரியும் மலைகளைப் போலவும், மின்னல்களுடன் கூடின மேகங்களைப் போலவும், பூமியில் விழும். நான் கையில் வில்லையெடுத்து யுத்தம் செய்யநின்றால் இந்த லோகத்திலுள்ள புருஷர்களுக்குள் எவனாவது தன்னைச் சூரனென்றும், ஆண் பிள்ளை என்றும் சொல்லிக்கொள்ளத் துணிவானா? எல்லோரும் ஸ்த்ரீகளைப்போல் ஓடி ஒளிந்துகொள்

வார்களல்லவா? ஒரு ஸமயத்தில் ஒரே யுத்தவீரனைப் பல பாணங்களால் அடிப்பேன்; ஒரு ஸமயத்தில் ஒரே பாணத்தால் அல்ப வீரியமுள்ள பல சத்துருக்களை அடிப்பேன். இப்படி யானைகளையும் குதிரைகளையும், வீரர்களையும் மர்ம ஸ்தானங்களில் பாணங்களால் துளைப்பேன். 'நீ ஒருவனாய்ப் பலரை எப்படி ஜயிப்பாய்' என்று தங்களுக்கு ஸந்தேகம் வேண்டாம். நான் உபதேசம் பெற்ற அஸ்திரங்களின் மஹிமை இன்று வெளிப்படும். நமது பிதாவின் அதிகாரத்தை அவரிடமிருந்து பிடுங்கி தங்களுக்குக் கொடுக்கப் போகிறேன். என் இரண்டு கைகளும் சந்தனம் பூசிக்கொள்ளவும், ஆபரணங்களைத் தரிக்கவும், தானங்களைக் கொடுக்கவும் மித்திரர்களைக் காப்பாற்றவும் இதுவரையில் உபயோகப்பட்டன. அவை இன்றைக்குத் தங்களுடைய அபிஷேகத்திற்குத் தடை செய்கிறவர்களை அழிப்பதில் உபயோகப்படும். ஆகையால் தங்களுடைய விரோதியான எவனுடைய உயிரையும் கீர்த்தியையும் மித்திரர்களையும் நாசம் செய்யவேண்டும்? நான் தங்களுடைய ஊழியன். தங்களுடைய உத்தரவை எதிர் பார்த்துக் கொண்டிருக்கிறேன். இந்தப் பூமண்டலம் தங்களுடைய ஆளுகைக்குள் வருவதற்கு நான் என்ன செய்ய வேண்டும்" என்றார்.

ரகுகுலதிலகன், "குழந்தாய்! நமது பெற்றோர்கள் பிழைத்திருக்கும் வரையில் அவர்களுடைய கட்டளைப்படி நடக்கவேண்டும்; அவர்கள் இறந்த பிறகு ஒவ்வொரு வருஷத்திலும் அதே திதியில் பல ஜனங்களுக்கு அன்னம் போடவேண்டும்; கயா க்ஷேத்திரத்தில் அவர்களை உத்தேசித்துப் பிண்டம் போடவேண்டும்; இம்மூன்று காரியங்களையும் செய்வதால் ஒருவனுக்குப் புத்திரனென்று பெயர் கிடைக்கிறது. ஸ்மிருதிகள் இதையே உபதேசிக்கின்றன. ஆகையால் நமது பிதாவின் வார்த்தையை மீறமாட்டேன். எப்படியானாலும் அதை நிறைவேற்றப் போகிறேன். லோகத்தில் ஸாதுக்கள் அனுஷ்டிக்கும் மார்க்கம் இதே" என்று தான் முன்பு விஸ்தாரமாக உபதேசித்த தர்மத்தை இப்பொழுது சுருக்கமாகச் சொல்லி, லக்ஷ்மணனுடைய கண்ணீரைத் துடைத்து, அடிக்கடி ஸமாதானம் செய்தார்.

விம்ருஜ்ய பா3ஷ்பம் பரிஸாந்த்வ்ய சாஸக்ருத்
ஸ லக்ஷ்மணம் ராக4வ வம்ஶவர்த4ந : |
உவாச பித்ர்யே வசநே வ்யவஸ்தி2தம்
நிபோ3த4 மாமேவ ஹி ஸௌம்ய ஸத்பதே2|| (42)



## ஸர்க்கம் 24

# கௌஸல்யை ஸம்மதித்தது

தம் ஸமீக்ஷ்ய த்வவஹிதம் பிதுர் நிர்தே3ஶ பாலநே |
கௌஸல்யா பா3ஷ்பஸம்ருத்3தா4 வசோ த4ர்மிஷ்ட2மப்3ரவீத்(1)

'ராமன் தர்மத்திலிருந்து விலகமாட்டான். அவனுடைய பிதாவின் வார்த்தைப்படி நடப்பான் என்பதில் ஸந்தேகமில்லை' என்று கௌஸல்யை நிச்சயமாகத் தெரிந்துகொண்டு, அந்த ஸமயத்தில் கண்ணீர் விடுவது அபசகுனம் என்றெண்ணி அடக்கிக்கொண்டு "எனக்கும் தசரதருக்கும் அருமைக் குழந்தையாகப் பிறந்த நீ, இது வரையில் துக்கத்தையே அறியாதவன்; காட்டிற்குப் போய், அங்கே உதிர்ந்து கிடக்கும் நெல்லுகளை ஒவ்வொன்றாய்ப் பொறுக்கித் தின்று எப்படி பிழைப்பாய்? உன் வேலைக்காரர்களும் பரிசாரகர்களும் நேர்த்தியான அன்னத்தைப் புஜித்து ஸுகமாக இருக்கிறார்களே. அவர்களுக்கு பிரபுவான நீ, காட்டில் பழங்களையும், கிழங்குகளையும் தின்று எப்படிப் பிழைப்பாய்? 'ராமன் தசரதருக்கு மூத்த புத்திரன்; அவனிடத்தில் அவருக்கு எல்லையற்ற பிரீதி. உத்தம குணங்கள் யாவும் பொருந்தினவன். அப்படியும் அவனை அவர் ராஜ்யத்திலிருந்து துரத்திவிட்டார்' என்று ஒருவன் கேட்டால் அதை அவன் நம்புவானா? அப்படி நம்பினாலும், ராமனுக்கே ஆபத்து நேரும்பொழுது, நமது கதி என்ன ஆகுமோ என்று திகிலடைய மாட்டானா? எல்லா பிராணிகளுக்கும் ஆனந்தத்தை உண்டுபண்ணும் நீயே காட்டிற்குப் போகும்படி நேர்ந்ததை யோசித்தால், எல்லோர்க்கும் ஸுக துக்கங்களைக் கொடுக்கும் சக்தி தெய்வமே; அதைவிட மேலானது ஒன்றுமில்லை என்று தோன்றுகிறது. உன்னை விட்டுப் பிரிவதாலுண்டாகும் சோகமென்ற நெருப்பு, கோடை காலத்தில் வனத்திலிருக்கும் புல் பூண்டுகளை காட்டுத்தீ எரிப்பது போல், என்னை எரிக்கிறது. அதற்கு என் தேகமே இருப்பிடம். உன்னைப் பார்க்காமலிருப்பதென்ற காற்றால் அது வளர்கிறது. உன்னை நினைத்துப் பிரலாபித்தால் உண்டாகும் துக்கமே அதைப் போஷிக்கும் ஸமித்துகள். ஆறாகப் பெருகும் கண்ணீரே அதில் ஹோமம் செய்யப்படும் ஆஹுதிகள். உன்னைப்பற்றிய கவலையால் உண்டாகும் உஷ்ணமே அதிலிருந்து கிளம்பும் புகை. இவைகளைச் சேர்த்துவைக்கும் புருஷப் பிரயத்தினமே என் பெருமூச்சுகள்; அதை அணைக்கும் ஜலத்தைப் போன்றவனே நீ. அந்த ஜலமில்லாமல் இந்தப் பாழும் நெருப்பு வரவர வளர்ந்து என்னை நாசம் செய்யப் போகிறது. தன் கன்றையும் பசு பின்தொடர்வது ஆச்சரியமா? நீ எங்கே போகிறாயோ அங்கே நானும் வருவேன்" என்றாள்.

ராமன் "அம்மா! தாங்கள் ஒன்றை யோசிக்கவேண்டும். நானும் காட்டிற்குப் போய், தாங்களும் என்னுடன் வந்து,

கைகேயியால் வஞ்சிக்கப்பட்டு என் பிதாவைக் கைவிட்டால் அவர் பிழைக்க மாட்டாரென்பது நிச்சயம். ஸாதாரணமான ஸ்திரீகளுக்கே பர்த்தாவைக் கைவிடுவது வெகுக் க்ரூரமான செய்கை; தாங்களோ அதை மனத்தால் நினைப்பதும் பிசகு. என் பிதாவான சக்கரவர்த்தி உயிரோடிருக்கும் வரையில் தாங்கள் அவருக்குச் சுச்ரூஷை செய்யவேண்டியது. இதே நமது முன்னோர்களின் நித்தியமான தர்மம்'' என்றார்.

கௌஸல்யை மஹா தர்மசிந்தையுள்ளவள்; ஆகையால் ராமனுடைய வார்த்தைக்குக் கட்டுப்பட்டு அப்படியே செய்வதாய் ஒப்புக்கொண்டாள். பிறகு அவர் அவளுடைய மனதில் குடிகொண்ட துக்கத்தை நீக்கி, புத்தியை ஸ்திரப்படுத்துவதற்காகத் "தாங்களும் நானும் மஹாராஜாவின் ஆக்ஞைக்குக் கீழ்ப்படிய வேண்டியதல்லவா? அவர் நம்மை ஆளும் அரசன்; நம்மைப் போஷிக்கும் பிரபு; நமக்குத் தர்மத்தை உபதேசிக்கும் குரு; குணங்களால் எல்லோரைக் காட்டிலும் மேலானவர்; எல்லோருக்கும் அதிபதி; பதினான்கு வருஷங்களை ஒரு க்ஷணத்தைப்போல் காட்டில் விளையாட்டாகக் கழித்துவிட்டு, மறுபடியும் தங்களுடைய பாதங்களில் பணிவிடை செய்வேன்'' என்றார்.

கௌஸல்யை ராமனைக் காட்டிற்கு அனுப்புவதற்கும் தான் அயோத்யையில் இருப்பதற்கும் ஸம்மதித்தாள். ஆனால் அவரிடத்தில் தான் வைத்திருக்கும் பிரீதியையும், தன் சக்களத்திகளின் துஷ்ட ஸ்வபாவத்தையும் நினைத்து நினைத்துக் கண்ணீர் பெருக, "ராம! இந்தத் துஷ்ட ஸ்த்ரீகளின் நடுவில் நான் இருக்கவேமாட்டேன். காட்டிலிருக்கும் மிருகங்களைப்போல் உன்னுடன் ஆனந்தமாகக் காலம் கழிப்பேன். என்னால் உனக்குக் கொஞ்சம்கூடக் கஷ்டம் நேராது. உன் பிதாவின் உத்தரவுப்படி காட்டிற்குப் போக வேண்டுமென்று உனக்கிஷ்டமிருந்தால் என்னையும் கூட்டிக் கொண்டு போ'' என்றாள்.

பிறருக்கு ஏதாவது துக்கம் நேர்ந்தால் ராமனுடைய மனமும் துக்கத்தால் மிகவும் தபிக்கும். ஆனால் பிதாவின் கட்டளையை நிறைவேற்றுவதென்ற தர்மத்திற்கு எங்கே குறைவு வருமோ என்று பயந்து, கௌஸல்யையின் துக்கத்தைப் பார்த்துத் தானும் துக்கப்படாமல், மனோதைரியத்தால் தன் துயரத்தை அடக்கிக் கொண்டார். அப்பொழுது தன் தாய் தான் வனத்திற்குப் போக ஸம்மதித்தவுடன், அவளுடைய துக்கத்தைச் சற்று ஆற்றுவதற்காக தன் துக்கத்தை வெளியிட்டு அழுதுகொண்டு, "ஸ்த்ரீகள் பிழைத்திருக்கும் வரையில் பர்த்தாவே அவர்களுக்குத் தெய்வம்; பர்த்தாவே பிரபு. இப்பொழுது தங்களுக்கும் எனக்கும் மஹாராஜாவே பிரபு; பூமண்டலாதிபதியான அவர் நம்மை ரக்ஷிக்கும்பொழுது நாம் அநாதைகளல்ல. மேலும் சக்களத்திகள் தங்களுக்கு கொஞ்சமாவது கெடுதி செய்ய நியாயமில்லை. எனக்குப்



பதிலாக இந்த ராஜ்யத்தை ஆளப்போகிற பரதன் தர்மாத்மா; தர்மத்தை அனுஷ்டிப்பதிலேயே பிரியமுள்ளவன்; எல்லோரிடத்திலும் பிரியமாகப் பேசுகிறவன். அப்படியிருக்க, தங்களிடத்தில் விசேஷ பக்தியுடன் சுச்ரூஷை செய்வான். நான் காட்டிற்குப் போன பிறகு மஹாராஜா என்னை விட்டுப் பிரிந்த துக்கத்தால் கொஞ்சம்கூட வருத்தமடையாமல் இருக்கும்படி தாங்கள் வெகு ஜாக்கிரதையுடன் பார்த்துக் கொள்ளவேண்டும். அவரோ வயது முதிர்ந்தவர்; இந்தக் கொடிய சோகத்தால்அவர் இறந்துபோகாதபடி எப்பொழுதும் வெகு ஜாக்கிரதையாகத் தாங்கள் நடந்துகொள்ள வேண்டும். ஸ்த்ரீகள் விரதங்களையும் உபவாஸங்களையும் அனுஷ்டித்து மஹா புண்ணியங்களை ஸம்பாதித்தாலும், கணவனுக்குச் சுச்ரூஷை செய்யாவிட்டால் பாபிகளின் கதியை அடைவார்கள். தேவபூஜைகளைச் செய்யாவிட்டாலும் பெரியோர்களை நமஸ்கரிக்காமற் போனாலும் விரதங்களை அனுஷ்டிக்காமலிருந்தாலும் பர்த்தாவிற்குச் சுச்ரூஷையைச் செய்துவந்தால் அவர்களுக்கு உத்தம லோகங்கள் கிடைக்கும். தங்களுடைய கணவனுக்கு சுச்ரூஷை செய்வதே ஸ்த்ரீகளுக்கு மேலான தர்மமென்று சுருதிகளும் ஸ்மிருதிகளும் உபதேசிப்பதற்கு இதே காரணம், முன்னோர்களின் ஆசாரமும் இதுவே.

"புத்தியைச் செலுத்த வேறு விஷயமில்லாமல் தாங்கள் சும்மா இருந்தால் துக்கம் மேலிடும். ஆகையால் பிராம்மண சிரேஷ்டர்களை முன்னிட்டு நான் க்ஷேமமாய்ப் போய் வருவதற்காக சாந்திஹோமம், புஷ்டிஹோமம் இன்னும் மற்ற மங்கள காரியங்களைச் செய்வியுங்கள். சந்தனம், தாம்பூலம், புஷ்பம் முதலியவைகளால் தேவதைகளையும் பிராம்மணர்களையும் ஆராதியுங்கள். ஸ்நானம், ஜபம், உபவாஸம் முதலிய நியமங்களை அனுஷ்டித்துக் கொண்டு, சுத்தமான அன்னத்தைப் புஜித்து, தங்களுடைய நாதனுக்குப் பணிவிடை செய்வதில் கவனத்தைச் செலுத்துங்கள். நான் திரும்பிவரும் காலத்தை எதிர்பார்த்துக் கொண்டிருங்கள். இப்படிச் செய்தால் தர்மாத்மாக்களில் சிரேஷ்டரான என் பிதா பிழைத்திருப்பதையும், நான் இங்கே திரும்பி வருவதையும் பார்க்கும் பாக்கியத்தை அடைவீர்கள்'' என்றார்.

புத்திரனை விட்டுப் பிரிய வேண்டுமே என்ற துக்கத்தால் கண்ணீர் பெருகக் கௌஸல்யை, "காட்டிற்குப் போகவேண்டுமென்ற புத்தி உனக்கு உறுதியாக உண்டாயிருக்கிறது. என்னால் அதை மாற்ற முடியவில்லை. காலபலத்தை யாரால் ஜயிக்க முடியும்? குழந்தாய்! ஸாவதானமாகப் போய்வா. உனக்கு எப்பொழுதும் க்ஷேமமுண்டாகட்டும், ஜயமுண்டாகட்டும். நீ திரும்பிவந்தாலன்றி என் சோகம் தீராது. உன் பிதாவின் வார்த்தையை நிறைவேற்றி, உன் இஷ்டத்தையும் பூர்த்திசெய்து, மஹா கீர்த்தி அடைந்து நீ திரும்பி வந்த பிறகே நிகரற்ற ஸுகத்தை அனுபவிப்பேன். என் வார்த்தை

யையும் தள்ளிவிட்டுக் காட்டிற்குப் போக வேண்டுமென்று நீ ஒரே பிடிவாதமாக இருக்கும்படி உன்னைத் தூண்டிவிடும் விதியின் பலத்தை யாரால் அறியமுடியும்? மஹாபராக்கிரம சாலியே! க்ஷேமமாகப் போய் வா. சீக்கிரத்தில் திரும்பிவந்து, மதுரமான வார்த்தைகளால் என் மனத்தை ஸந்தோஷப்படுத்து. ஒரு நிமிஷம் கூட உன்னைவிட்டுப் பிரிய என் மனம் ஸஹிக்கவில்லையே. நீ காட்டிலிருந்து மான்தோல் மரவுரி ஜடைகளுடன் திரும்பிவரும் காலம்இந்த க்ஷணமாகவே இருக்கக்கூடாதா'' என்று சொல்லி துக்கித்தாள். பிறகு ராமன் காட்டிற்குப் போகத் தீர்மானித்திருக்கிறார் என்று தெரிந்து கொண்டு, மிக்க பிரீதியுடன் அவருடைய க்ஷேமத்தை உத்தேசித்து செய்யவேண்டிய மங்களகாரியங்களைச் செய்ய ஆரம்பித்தாள்.

ததா2 ஹி ராமம் வநவாஸ நிஶ்சிதம்
ஸமீக்ஷ்ய தே3வீ பரமேண சேதஸா |
உவாச ராமம் ஶுப4 லக்ஷணம் வசோ
ப3பூ4வ ச ஸ்வஸ்த்யயநாபி4 காங்க்ஷிணீ || (36)

---

## ஸர்க்கம் 25

# கௌஸல்யை ராமனுக்கு மங்களாசீர்வாதம் செய்தது

---

ஸாப்நீய தமாயாஸம் உபஸ்ப்ருஶ்ய ஜலம் ஶுசி |
சகார மாதா ராமஸ்ய மங்க3ளாநி மநஸ்விநீ || (1)

தன் துக்கத்தை அடக்கிக் கொண்டு, தான் அதுவரையில் அழுது கொண்டிருந்ததாலுண்டான அசுத்தத்தைப் போக்க ஆசமனம் செய்து சுத்தமாக இருந்துகொண்டு கௌஸல்யை, "ரகுகுலதிலக! காட்டிற்குப் போகாமல் உன்னைத் தடுக்கமுடியவில்லையே; ஆகையால் போய் வா. பதினான்கு வருஷங்களுக்குப் பிறகு திரும்பி வந்து முன்னோர்களின் ஆசாரப்படி ராஜ்யாபிஷேகம் செய்துக்கொள். எந்த தர்மத்தை நீ பிரீதியுடன் பூர்ணமாக அனுஷ்டிக்கிறாயோ அந்த தர்மமே உன்னைக்காப்பாற்றட்டும். நாற்சந்திகளிலும் தேவாலயங்களிலும் நீ நமஸ்கரிக்கும்தேவதைகளும் மஹரிஷிகளும் காட்டில்உன்னை ரக்ஷிக்கட்டும். விசுவாமித்திர மஹரிஷியால் உனக்கு உபதேசிக்கப்பட்ட அஸ்திரங்கள் யாவும் உத்தமகுணங்களுள்ள உன்னை எப்பொழுதும் காப்பாற்றட்டும். நீ பெற்றோர்களுக்குச் செய்யும் சுச்ரூஷையும் நீ பேசும் ஸத்தியமும் உன்னைக் காப்பாற்றட்டும். உனக்குத் தீர்க்காயுளைக் கொடுக்கட்டும். ஸமித்துகள், தர்ப்பங்கள், பவித்திரங்கள், அக்னி குண்டங்கள், தேவபூஜாஸ்தானங்கள், குன்றுகள், மரங்கள், செடிகள், குட்டையான மரங்கள், மடுக்கள், பக்ஷிகள், ஸர்ப்பங்கள் ஸிம்ஹங்கள் உன்னைக் காப்பாற்றட்டும். ஸாத்யர்கள் விச்வேதேவர்கள் மருத்துகள் மஹரிஷிகள் தாதா விதாதா பூஷா பகன்



அர்யமா முதலிய பனிரெண்டு ஆதித்யர்கள், இந்திரன், யமன், வருணன், குபேரன் முதலிய லோகபாலர்கள், பக்ஷங்கள், மாஸங்கள், ருதுக்கள், வருஷங்கள், பகல், ராத்திரி, முகூர்த்தங்கள் முதலியவைகளின் அதிஷ்டான தேவதைகளும் உனக்கு எப்பொழுதும் மங்களங்களைச் செய்யட்டும். தியானமும் யோகமும் வேதசாஸ்திரங்களில் சொல்லப்படும் தர்மமும் உன்னை நான்கு புறங்களிலும் காப்பாற்றட்டும். ஸனத்குமாரரும் ஸோமனும் பிருஹஸ்பதியும் ஸப்தரிஷிகளும் நாரதரும் உன்னை எப்பொழுதும் காப்பாற்றட்டும். மஹாப்பிரஸித்தியுள்ள திக்பாலர்களும் நான் செய்யும் ஸ்தோத்திரத்தால் ஸந்தோஷித்து உன்னைக் காப்பாற்றட்டும். கடற்கரையிலிருக்கும் மலைகளும் ஸமுத்திரமும், குபேரனும் வருணனும் ஸ்வர்க்கமும் ஆகாசமும், பூமியும் நதிகளும் நக்ஷத்திரங்களும் கிரஹங்களும் கிரஹதேவதைகளும் ராத்திரி பகல்களுக்கு அபிமானி தேவதைகளும் இரண்டு ஸந்தியாதேவதைகளும் உன்னைக் காப்பாற்றட்டும். ருதுக்கள் மாதங்கள் வருஷங்கள் கலைகள் காஷ்டைகளின் அதிஷ்டான தேவதைகள் உனக்கு க்ஷேமத்தைக் கொடுக்கட்டும். காட்டில் நீ தபஸ்வியாக வஸிக்கும்பொழுது ஆதித்யர்களும் ஸாத்யர்களும் உனக்கு ஸுகத்தைக் கொடுக்கட்டும். ராக்ஷஸர்களாலும், பிசாசங்களாலும், குரூர நடத்தையுள்ளவர்களாலும் மாம்ஸத்தைப் புஜிக்கும் ஜந்துக்களாலும் உனக்குப் பயமுண்டாக வேண்டாம். வானரங்கள், தேள்கள், காட்டு ஈக்கள், கொசுக்கள், ஊரும் ஜந்துக்கள், புழுக்கள் காட்டில் உனக்குக்கெடுதி செய்யாமலிருக்கட்டும். பெரிய யானைகள், ஸிம்ஹங்கள், புலிகள், கரடிகள், பன்றிகள், எருமைகள், பயங்கரமான காட்டுமாடுகள் இவை உனக்குத் தீங்குசெய்ய வேண்டாம். நர மாம்ஸத்தைத் தின்னும் மற்ற பிராணிகளும் நான் செய்யும் பூஜையால் திருப்தியடைந்து உனக்குக் கெடுதி செய்யாமலிருக்கட்டும். நீ போகும் வழிகளில் உனக்கு க்ஷேமமுண்டாகட்டும். உன் பராக்கிரமம் வீணாகாமல் நீ உத்தேசித்த பிரயோஜனத்தை அடைவாய். நீ விரும்பும் ஸகல பொருள்களும் உனக்கு வனத்தில் கிடைக்கட்டும். பூமியிலும் ஆகாசத்திலும் உனக்கு விரோதிகளாக இருக்கும் தேவதைகளும் உனக்கு க்ஷேமத்தை உண்டாக்கட்டும். பிருஹஸ்பதி, ஸோமன், ஸூரியன், குபேரன், யமன், அக்னி, வாயு, ஹோமப்புகை, ரிஷிகளிடத்திலிருந்து நீ அப்யஸித்த மந்திரங்கள் இவையெல்லாம் வனத்தில் நீ ஸ்நானம் செய்யும் காலத்தில் உன்னைக் காப்பாற்றட்டும். ஸகல லோகத்திற்கும் பிரஹ்மாவும், ஸகல பிராணிகளையும் போஷிக்கும் நாராயணனும், மற்ற ரிஷிகளும் வனத்தில் உன்னை ரக்ஷிக்கட்டும்'' என்று சொன்னபின் மாலைகளாலும் கந்தங்களாலும், அவர்களுக்குத்தகுந்த ஸ்தோத்திரங்களாலும் தேவதைகளைப் பூஜித்தாள்.

பிறகு மஹாத்மாவான ஒரு பிராம்மணனால் அக்னியை மூட்டி, ஹோமத்திற்காக நெய், ஸமித்துகள், வெள்ளைக்கடுகு, வெள்ளை

மாலைகள் முதலியவைகளை ஸம்பாதித்து, ராமனுக்கு க்ஷேமமுண்டாவதற்காக அதில் விதிப்படி ஹோமம் செய்தாள். உபாத்தியாயரும் ராமனுக்கு ஸகல உபத்திரவங்களும் நீங்கி ஆரோக்யம் உண்டாக வேண்டுமென்று ஹோமம் செய்து, மீகுந்த ஹவிஸால் ஹோமகுண்டத்திற்கு வெளியில் லோகபாலர் முதலியவர்களுக்குப் பலி வைத்தார். பிராம்மணர்களுக்குத் தேன், நெய், தயிர், அக்ஷதை முதலியவைகளைக் கொடுத்து, ராமனுக்கு வனத்தில் க்ஷேமமுண்டாகும்படி ஸ்வஸ்திவாசனம் செய்வித்தாள். பிறகு உபாத்தியாயருக்கு வேண்டியவரையில் தக்ஷிணையைக் கொடுத்துக் கௌஸல்யை, "குழந்தாய்! தேவேந்திரன் விருத்ராஸுரனைக் கொன்று ஸகல தேவதைகளாலும் வணங்கப்பட்டபொழுது, அவனுக்கு உண்டான க்ஷேமம் உனக்கும் உண்டாகட்டும். கருடன் அமிருதத்தைக் கொண்டுவரப் புறப்பட்டபொழுது அவருடைய தாயான வினதை அவருக்கு எந்த க்ஷேமத்தை பிரார்த்தித்தாளோ அது உனக்கும் உண்டாகட்டும். அமிருதத்திற்காக ஸமுத்திரத்தைக் கடையும் பொழுது தைத்தியர்களை நாசம் செய்யும் பொருட்டு இந்திரனுக்கு அதிதி எந்த க்ஷேமத்தை அனுக்ரஹித்தாளோ அது உனக்கும் உண்டாகட்டும். அளவற்ற தேஜஸுள்ள மஹாவிஷ்ணு லோகங்களை மூன்றடியால் அளக்கப்போகையில் அவருக்கு நேர்ந்த க்ஷேமம் உனக்கும் உண்டாகட்டும். ருதுக்களும் ஸமுத்திரங்களும் உனக்குப் பரம மங்களத்தைச் செய்யட்டும்" என்று அவருடைய தலையில் அக்ஷதைகளைப் போட்டு, நேர்த்தியான கந்தத்தை அவருடைய தேகத்தில் பூசி, பிரஸித்தமான வீரியத்துடன் கூடின விசல்யகரணி என்ற மூலிகையை ரக்ஷையாகக் கையிற் கட்டி அதற்குத் தகுந்த மந்திரங்களை ஜபித்தாள்.

மனத்தில் மிகுந்த துக்கமிருந்தாலும் ஸந்தோஷித்தவளைப் போல் காட்டிக்கொண்டு, ராமனைத் தன் ஸமீபத்தில் அழைத்து உச்சி முகர்ந்து ஆலிங்கனம் செய்து தழதழத்த வார்த்தைகளால் "நீ உத்தேசித்த காரியத்தை நிறைவேற்ற சௌக்கியமாகப் போய் வா. உன் எண்ணங்கள் யாவற்றையும் பூர்த்தி செய்துநோயில்லாமல் மறுபடியும் அயோத்யைக்கு வந்து, நமது முன்னோர்கள் அனுஷ்டித்த க்ஷத்திரியதர்மத்தைக் கைக்கொண்டு ஸுகமாயிருப்பதைப் பார்ப்பேன். காட்டில் என் மகனுக்கு என்ன நேருமோ என்ற கவலை தீர்ந்து, உன்னை மறுபடியும் பார்த்த ஸந்தோஷத்தால் முகம் மலர்ந்தவளாக, உதயமான பூர்ணசந்திரனைக் காண்பதுபோல்உன்னை மறுபடியும் காண்பேன்; பிதாவின் வார்த்தையை நிறைவேற்றி, காட்டிலிருந்து வந்து, ஸிம்ஹாஸனத்தில் உட்கார்ந்து அதிகாரம் செய்வதையும் பார்ப்பேன். வனவாஸம் செய்து திரும்பி வந்து உன் பதவிக்குத் தகுந்த அலங்காரங்களுடன் எனக்கும் ஸீதைக்கும் ஸகல மனோரதங்களையும் பூர்த்தி செய். என்னால் பூஜிக்கப்பட்ட தேவதைகளும் சிவன் முதலியவர்களும், மஹரிஷிகளும் பூதங்களும் அஸுரர்களும், உரகர்களும் திக்குகளும் நீ வனத்திற்குப் போகும் பொழுது உனக்கு ஸகல மங்களங்களையும் கொடுக்கட்டும்' என்று கண்களில் நீர் ததும்ப விதிப்பிரகாரம் ஆசீர்வாதம் செய்து முடித்து, ராமனுக்கு ரக்ஷையாக அவரைப் பிரதக்ஷிணம் செய்து, மிகுந்தப் பிரீதியுடன் அடிக்கடி ஆலிங்கனம் செய்து கொண்டாள்.



ராமன் ஸ்வபாவத்திலேயே மஹாதேஜஸ்வி. கௌஸல்யையின் ஆசீர்வாதத்தாலும் ரக்ஷையினாலும் அவருடைய தேஜஸ் விருத்தியாயிற்று. பிறகு எந்த ஆபத்திலும் தர்மம் தவறாமல் நடந்துகொண்டதனால் மஹாகீர்த்தியை அடைந்த ராமன், தாயின் பாதங்களில் அடிக்கடி நமஸ்கரித்து, ஸீதைக்கு அந்த ஸமாசாரத்தைத் தெரிவிக்கத் தன் அந்தப்புரத்தை நோக்கி வந்தார்.

ததா$^{2}$ து தே‘வ்யா ஸ க்ருத ப்ரத$^{3}$க்ஷிணோ
நிபீட்$^{3}$ய மாதுஶ்சரணௌ புந: புந: |
ஜகா$^{3}$ம ஸீதாநிலயம் மஹாயஶா:
ஸ ராக‘வ: ப்ரஜ்வலித: ஸ்வயா ஶ்ரியா ‖ (47)

---

## ஸர்க்கம் 26

# ஸீதா ராம ஸம்வாதம்

---

அபி$^{4}$வாத்$^{3}$ய ச கௌஸல்யாம் ராம: ஸம்ப்ரஸ்தி$^{2}$தோ வநம் |
க்ருத ஸ்வஸ்த்யயநோ மாத்ரா த$^{4}$ர்மிஷ்டே$^{2}$ வர்த்மநி ஸ்தி$^{2}$த:(1)

இப்படிக் கௌஸல்யையால் மங்களாசீர்வாதம் செய்யப்பட்டு ராமன் அவளுக்கு நமஸ்காரம் செய்து, தர்ம மார்க்கத்தை அனுஸரித்து வனத்திற்குப் போகப் புறப்பட்டார். அவர் ராஜவீதியின் வழியாக மஹாகாந்தியுடன் வரும்பொழுது அங்கிருந்த ஜனங்களின் மனத்தைத் தன் உத்தம குணங்களால் கவர்ந்தார். அப்பொழுது ஸீதையும் ராமாபிஷேகத்திற்காகச் செய்ய வேண்டிய விரதங்களையும் உபவாஸங்களையும் அனுஷ்டித்துக் கொண்டு, பட்டாபிஷேகத்திற்கு நேர்ந்த இடையூறுகளை அறியாமலிருந்தாள். ராமனுக்கு யௌவராஜ்யாபிஷேகம் நடக்கப் போகிறதென்றே அவளுக்கு நிச்சயம். தேவபூஜையை முடித்து ஸந்தோஷமான மனத்துடன், ராஜ்யாபிஷேகமானவர்களுடைய பாதங்களில் அவர்களுடைய பட்ட மஹிஷிகள் கந்த புஷ்பங்களால் அர்ச்சனை செய்ய வேண்டுமென்ற ராஜ தர்மத்தை அறிந்தவளாகையால், வெண்குடை சாமரம் பத்ராஸனம் மங்கள வாத்யங்கள் யானைகள் குதிரைகள் ரதங்கள் காலாட் படைகள் பரிவாரங்கள் இவைகளுடன் ராமன் வருவதை எதிர்பார்த்துக்கொண்டிருந்தாள்; அப்படியிருக்கையில் ராமன் தன் அந்தப்புரத்தில் பிரவேசித்தார்.

அங்கே தன் பரிவாரங்கள் அபிஷேகத்திற்காகச் செய்யும் விசேஷமான அலங்காரங்களையும் அவர்கள் கொண்டிருக்கும் ஆனந்தத்தையும் பார்த்து, வெட்கத்தால் சற்று தலை குனிந்தார். தன் கணவன் துக்கத்தால் வாடின முகத்துடன், கவலையால் இந்திரிய ஸ்வாதீனமின்றி 'வருவதைக் கண்டு, ஸீதை ஆஸனத்திலிருந்து திடீரென்று எழுந்து, 'நமது பர்த்தா எப்பொழுதும் போலில்லாமல் ஸந்தோஷமற்றுத் தலை குனிந்து ஏன் வருகிறார்?' என்று யோசித்து நடுங்கினாள். ராமனுக்கு அதுவரையில் வருத்தமென்பதே கிடையாது. தான் சொல்லப்போகும் வார்த்தையால் ஸீதைக்கு நேரும் துக்கத்தை நினைக்க அவருக்கு அடங்காத் துயரமுண்டாயிற்று. தன் மனோதைரியத்தை இழந்து, 'ஒரு நாளும் துக்கத்தை அறியாத ஸீதை நான் காட்டிற்குப் போய்விட்டால் என்ன கஷ்டப்படுவாளோ, எப்படிக் காலம் கழிப்பாளோ' என்று ஏக்கம் மேலிட்டது. முகத்தில் காந்தி குறைந்தது. 'கையில் கிடைத்த ராஜ்யத்தை இழந்தேன்; நானும் காட்டிற்குப் போகும்படி ஆயிற்று என்று இவளுக்குஎப்படி சொல்வேன்' என்ற சோகத்தால் உடம்பு வியர்த்தது. தன் மனத்திலுள்ள கிலேசத்தை அவர் அடக்க முடியாததைக் கண்டு ஸீதை, "பிராணநாதா! மிகுந்த ஆனந்தத்தை அனுபவிக்கவேண்டிய காலத்தில் தாங்கள் இப்படித் துக்கப்படுவானேன்? பிராம்மண சிரேஷ்டர்கள் பிருஹஸ்பதியை தேவதையாக உடைய புஷ்ய நக்ஷத்திரத்துடன் இன்றைக்குச் சந்திரன் கூடியிருக்கிறாரென்றும், அதில் ஏதாவது காரியத்தை ஆரம்பித்தவர்களுக்கு மங்களம் உண்டாகுமென்றும், தங்களுடைய அபிஷேகத்திற்கு அதே தகுந்த முகூர்த்தமென்றும், சொல்லியிருக்கிறார்களல்லவா? அப்படியிருக்க, தாங்கள் ஸந்தோஷிக்காமல் வருத்தப்படக் காரணமென்ன? நுரையைப் போல் வெண்மையாய் நூறு தங்கக் கம்பிகளுள்ள குடையால், மறைக்கப்படும் தங்களுடைய முகமண்டலம் பிரகாசிக்கக் காணவில்லையே. தாமரை மலர்களைப்போன்ற கண்களால் அலங்கரிக்கப்பட்ட முகத்திற்கு இரு புறத்திலும் சந்திரனையும் ஹம்ஸபக்ஷியையும்போல் பிரகாசிக்கும் சாமரங்கள் போடுவதைக் காணவில்லை. வந்தி ஸூத மாகத வைதாளிகர்கள் மங்கள வாக்கியங்களால் தங்களுடைய கீர்த்தியை இனிமையாகக் கொண்டாடும் சப்தம் மதுரமாய்க் காதில் விழவில்லையே. பட்டாபிஷேகம் பெற்ற தங்களுடைய சிரஸில் தேனும் தயிரும் கலந்த புண்ணிய ஜலத்தால், வேதங்களைக் கரைகண்ட பிராம்மணர்கள் மந்திரங்களுடன் அபிஷேகம் செய்த அடையாளத்தைக் காணவில்லையே. நாட்டுப்புறத்து ஜனங்களும், நகரத்து ஜனங்களும், வீதித் தலைவர்களும், ராஜ்ய உத்யோகஸ்தர்களும், மந்திரிகளும் அழகாக அலங்கரித்துக் கொண்டு, தங்களைப் பின்தொடரக் காணவில்லையே? நான்கு உத்தம அச்வங்கள் பூட்டித் தங்கத்தால் அலங்கரிக்கப்பட்ட புஷ்யரதம், தங்களுக்கு முன்பு ஏன் போகவில்லை? ஸகல உத்தம லக்ஷணங்கள் பொருந்திய பட்டத்து யானை, கறுத்த நீருண்ட மேகம் தங்கின மலை நடந்து வருவதைப் 



போல் தங்களுக்குமுன் ஏன் போகவில்லை? வீரர்களுக்கு முன்னால் கொண்டுபோகப்பட வேண்டிய நவரத்தினங்களிழைத்த பத்ராஸனம் தங்களுக்கு முன்னால் ஏன் கொண்டுபோகப்படவில்லை? அபிஷேகத்திற்கு வேண்டிய ஏற்பாடுகள் ஸித்தமாக இருக்கின்றனவல்லவா? தங்களுடைய முககாந்தி இப்பொழுது ஏன் குறைந்திருக்கிறது? ஸந்தோஷக்குறி கொஞ்சமாவது காணப்படவில்லையே" என்று இப்படிப் பலவிதமாய் பிரலாபித்தாள்.

அதைக் கேட்டு ராமன், "ஸீதே! மஹா பூஜ்யரான என் பிதா, என்னைக் காட்டிற் கனுப்பியிருக்கிறார்" என்று சொன்னார். ஆனால் ஐயோ! இந்தத் துக்க ஸமாசாரத்தை சொல்லிவிட்டோமே; ஸீதைக்கு என்ன ஆபத்து நேருமோ என்று பயந்து, அவளைத் தைரியப்படுத்த விரும்பி, "ஸீதே! ஸகல தர்மங்களும் அறிந்த மஹா ஞானியான ஜனகமஹாராஜாவின் புத்திரியே! ராஜ தர்மங்களையும் வர்ணாசிரம தர்மங்களையும் ஸந்தேக விபரீதமில்லாமல் பூர்ணமாக அறிந்தவளே. உத்தமமான தர்மத்தைக் குறைவற அனுஷ்டிப்பதில் நிகரற்றவளே! இது நேர்ந்த விதத்தைச் சொல்லுகிறேன் கேள். எனக்கு இன்று அபிஷேகம் செய்யவேண்டுமென்று என் பிதா ஸகல ஏற்பாடுகளையும் செய்திருந்தார். அப்பொழுது என் தாயான கைகேயி, முன்னொரு காலத்தில் தனக்கு அவரால் கொடுக்கப்பட்ட இரண்டு வரங்களை அவருக்கு ஞாபகம் செய்து, அவைகளை இப்பொழுதே கொடுக்கும்படி வேண்டினாள். அவர் அப்படியே பிரதிக்ஞை செய்தார். நான் காட்டில் பதினான்கு வருஷங்கள் வரையில் வஸிக்கவேண்டுமென்றும் பரதனை யுவராஜாவாகச் செய்யவேண்டுமென்றும் கேட்டாள். என் பிதாவோ ஸத்தியம் தவறாதவர்; தர்ம பாசத்தால் கட்டுப்பட்டவர். அப்படியே செய்ய ஒப்புக்கொண்டார். பிதாவின் வார்த்தையைப் பரிபாலனம் செய்வது எனக்கு முக்கிய தர்மம். பதினான்கு வருஷங்கள் வரையில் வனத்தில் வஸிக்கப் போகிறேன். ஆகையால் உன்னைப் பார்த்து உன்னிடத்தில் சொல்லிக்கொண்டு போக வந்தேன்.

லோகத்தில் மிகுந்த ஐசுவரியத்தை அடைந்து உயர்ந்த பதவியில் இருப்பவர்கள், தங்களுக்கெதிரில் வேறொருவனை ஸ்தோத்திரம் செய்வதைக் கேட்கப் பொறுக்கமாட்டார்கள். உன்னைப் பரதன் நமஸ்காரம் செய்ய வரும்பொழுது என் குணங்களை நீ அதிகமாகப் புகழக்கூடாது. லக்ஷ்மண சத்ருக்னர்களுடைய மனைவிகளுக்கு எவ்வித ஸௌக்கியங்களும் மரியாதைகளும் நடக்கின்றனவோ அவைகளை விட அதிகமாக உனக்கு நடக்கவேண்டுமென்று நீ எதிர்பார்க்கக் கூடாது. மற்ற பந்துக்களைப்போல் அவனிடத்தில் நீயும் எப்பொழுதும் பிரியமாயும் அனுகூலமாயும் நடக்கவேண்டும். மஹாராஜா அவனை இளவரசனாகச் செய்திருக்கிறார். அவனே நமக்கு அரசன்; ஆகையால் பிரியமுண்டாகும்படி நாம் நடக்கவேண்டும்.

என் பிதா செய்த பிரதிக்ஞையை நிறைவேற்ற நான் பதினான்கு வருஷங்கள் கோரமான வனத்தில் வசிக்கப் போகிறேன். உறுதியான மனமுடையவளே! இதுவரையிலும் நீ வைத்த பிரீதி மாறாமலிருக்கவேண்டும். நான் மஹரிஷிகள் நிறைந்த வனத்திற்குப் போன பிறகு நீ விரதங்களையும் உபவாஸங்களையும் அனுஷ்டித்துக் கொண்டு புண்யமாகக் காலத்தைக் கழிக்கவேண்டும். விடியற் காலையில் எழுந்து தேவதைகளுக்கு விதிப்படி பூஜை செய்து என் பிதாவும் நமக்கு அரசருமான மஹாராஜாவை நமஸ்கரிக்க வேண்டும். என் தாய் கௌஸல்யையோ வயது சென்றவள் ; என்னை விட்டுப் பிரிந்த துக்கத்தால் தவிப்பாள். நீ உத்தமமான தர்மத்தை அனுஷ்டிக்க விரும்பினால் அவளுக்கு விசேஷ மரியாதை செய்யவேண்டும். என்னுடைய மற்ற தாய்மார்களிடத்தில் பிரீதியையும் சிநேகபாவத்தையும் காட்டி நடக்கவேண்டும். அவர்களுக்கு யாதொரு குறைவும் நேராமல் பார்த்துக்கொள்ள வேண்டும். என்னிடத்தில் அவர்கள் எப்பொழுதும் இவ்விதமாகவே நடந்து கொண்டிருக்கிறார்கள். ஆகையால் என் மனதில் அவர்களுக்கும் என் தாயான கௌஸல்யைக்கும் யாதொரு பேதமும் இல்லை. பரதனை உன் தமயனைப்போலும், சத்ருக்னனை என் புத்திரனைப் போலும் எண்ணிக்கொள். என் உயிரைக் காட்டிலும் அவர்கள் எனக்கு இனியவர்கள்.

பரதனுக்கு இஷ்டமில்லாத விஷயத்தை நீ ஒரு பொழுதும் செய்யக்கூடாது. அவன் உங்களுடைய அரசன்; பிறர்க்குக் கீழ்ப்படிய வேண்டாதவன்; இந்தத் தேசத்திற்கு அதிபதி; இந்தக் குலத்திற்கும் தலைவன். சோம்பலில்லாமல் அரசர்களுடைய இஷ்டப்படி நாம் நடந்துகொண்டால் அவர்கள் நம்மிடத்தில் தயவு வைக்கிறார்கள்; இல்லாவிட்டால் கோபிக்கிறார்கள். தங்களுக்கே பிறந்த புத்திரர்களானாலும் தங்களுக்கு கெடுதி செய்தால் அவர்களை விலக்கிவிடுகிறார்கள். தங்களுக்கு பந்துக்களில்லாதவர்களையும் திறமையுள்ளவர்களாயிருந்தால் சேர்த்துக்கொள்ளுகிறார்கள். ஆகையால் தர்மத்தில் மனதை நாட்டு. வீணாகாத விரதங்களை அனுஷ்டித்துக்கொண்டு பரதனுக்கு அனுகூலமாக நடந்து இங்கேயே நான் வரும் வரையில் இரு. பிராணநாயகி! வனத்திற்குப் போகிறேன். நீ இங்கேயே இருக்கவேண்டும். நான் இப்பொழுது சொன்ன உபதேசத்தின்படி யாருக்கும் கெடுதியாவது மனவருத்தமாவது இல்லாமல் நீ அனுஷ்டிக்க வேண்டும்" என்று பாரியையின் தர்மத்தை உபதேசிப்பது போல் காட்டி, அவளுடைய மனத்திலிருக்கும் அந்தரங்கத்தைத் தெரிந்து கொள்ளவும் அவளுக்குக் கோபத்தை உண்டாக்கவும் இப்படிச் சொன்னார்.

அஹம் க$^{3}$மிஷ்யாமி மஹாவநம் ப்ரியே
த்வயா ஹி வஸ்தவ்ய மிஹைவ பா$^{4}$மிநி |
யதா$^{2}$ வ்யலீகம் குருஷே ந கஸ்யசித்
ததா$^{2}$ த்வயா கார்ய மித$^{3}$ம் வசோ மம ‖ (38)

---



## ஸர்க்கம் 27

## ஸீதாராம ஸம்வாதம் (தொடர்ச்சி)

---

ஏவமுக்தா து வைதே$^{3}$ஹீ ப்ரியார்ஹா ப்ரியவாதி$^{3}$நீ |
ப்ரணயாதே$^{3}$வ ஸங்க்ருத்$^{3}$தா$^{4}$ ப$^{4}$ர்தார மித$^{3}$மப்$^{3}$ரவீத் ‖ (1)

ஸீதை பிரியமில்லாமல் பேசினாலும் ராமரால் அவளிடத்தில் பிரியமாகவே பேசப்படவேண்டியவள்; அப்படியிருக்க, எப்பொழுதும் பிரியமாகவே பேசுகிறவள் என்றால் சொல்லவும் வேண்டுமோ? ஆயினும் ராமன் இப்பொழுதுஇப்படிக் குரூரமான வார்த்தைகளைச் சொன்னவுடன் அவரிடத்தில் தான் வைத்திருந்த பிரியத்தால் கோபம் கொண்டு, "ராம! இவ்வளவு அல்பமான வார்த்தைகள் உமது வாயிலிருந்து ஏன் இன்று வந்தன? நானோ ஸ்த்ரீ. அவைகளைக் கேட்க எனக்கே சிரிப்பு வருகிறது. இதுவரையில் இப்படிக் காணவில்லையே. தாங்கள் உத்தம க்ஷத்திரியனுடைய புத்திரர். என்னிடத்தில் வைத்திருக்கும் பிரீதிக்கு விரோதமான வார்த்தைகளைச் சொல்வது ஆச்சரியத்தை உண்டுபண்ணுகிறது.

நாத! லோகத்தில் கணவனுடைய பிதா மாதா உடன்பிறந்தவன் புத்திரன் நாட்டுப் பெண் இன்னும் மற்ற பந்துக்கள் பூர்வ ஜன்மத்தில் செய்த தம் தமது புண்யபாபங்களின் பலன்களை அனுபவித்துக் கொண்டு, நன்மையோ தீமையோ அவர்களுக்குத் தகுந்த காரியங்களைச் செய்கிறார்கள். ஆனால் பர்த்தாவின் சரீரத்தில் ஸமபாகமான பாரியை மாத்திரம் அவனுடைய பாக்கியத்தின் பயனை அனுபவிக்கிறாள். ஆகையால் தங்களை வனத்திற்குப் போகும்படி கட்டளையிட்டிருந்தால் என்னையும் அப்படிக் கட்டளையிட்டதற்கு சமமே. பாரியை நமது பாதி பாகமென்ற சுருதி வாக்கியத்தைக் கேட்டதில்லையா? இவ்வுலகிலும் பரலோகத்திலும் ஸ்த்ரீகளுக்குக் கதி யார்? பிதாவா மாதாவா, புத்திரனா, தேகமா, தோழிகளா? இல்லை, பர்த்தா ஒருவனே. ஆகையால் தங்களுடைய பாக்கியத்தில் எனக்கும் பாகமுண்டு: தாங்களே எனக்கு கதி; தாங்கள் பயங்கரமான வனத்திற்குப் போகப் புறப்பட்டால் தாங்கள் நடக்கும் வழியிலுள்ள கூர்மையான புற்களை மிதித்து மிருதுவாகச் செய்துகொண்டு தங்களுக்கு முன்னால் நடப்பேன்.

இவள் நம்முடன் வந்தால் மிகுந்த பாக்கியத்தை அடைவாளே என்று என்னிடத்தில் பொறாமையுண்டோ? நான் 'வேண்டாம்' என்று தடுக்க, இவள் கேவலம் ஸ்த்ரீ, 'காட்டிற்கு வருவேன்' என்று எப்படிச் சொல்வாள்? என்ற பொறாமை என்னிடத்தில் தங்களுக்கு வேண்டாம். 'நீ இங்கே ஸுகமாக இரு' என்று நான் சொன்னாலும் 'நான் தங்களுடன் வந்தே தீருவேன்' என்று பிடிவாதம் பிடிக்கிறாள் இவள்' என்று என்னிடத்தில் தாங்கள் கோபம்

கொள்ளக்கூடாது. 'என் வார்த்தையை அலக்ஷியம் செய்கிறாள்; ஸுகமாக இங்கே காலம் கழிப்பதை விட்டுப் பழம் கிழங்கு வேர் முதலியவைகளைத் தின்று பிழைக்கிறேனென்கிறாள்'' என்ற கோபம் தங்களுக்கு என்னிடத்தில் வேண்டாம். தகாததென்று சாஸ்திரத்தால் விலக்கப்பட்டிருக்கும் தீர்த்தத்தை ஒருவன் விட்டு விடுவது போல், தங்களுக்குத் தகாத அசூயையையும் ரோஷத்தையும் விலக்கி விடுங்கள்.

"நானே தனியாக இருக்கவேண்டியவன். பயங்கரமான காட்டில் இந்தப் பெண்ணை அழைத்துக்கொண்டு எப்படிப் போவேன் என்று ஸந்தேகம் உண்டாகிறதோ? தாங்கள் வீரசிகாமணி என்று எனக்குத் தெரியாதோ? ஆகையால் கவலையில்லாமல் என்னையும் அழைத்துப் போங்கள்.

தங்களைவிட்டுப் பிரிந்ததும் நான் உயிரை வைத்துக்கொள்ள வேண்டிய கொடிய பாபத்தைச் செய்யவில்லையே. தாங்கள் என்னை இங்கே விட்டுப் போகும்படியான பாபத்தையும் செய்யவில்லையே. தாங்கள் என்னை அழைத்துக்கொண்டு போனால், தங்களுக்கு ஸுகமே ஒழிய துக்கமில்லை. பாலைவனத்தில் பிரயாணம் செய்கிறவர்கள், தங்களுக்கு வேண்டிய ஜலத்தைக் குடித்துவிட்டு மிகுந்ததைக் கொட்டமாட்டார்கள். பிறகு வேண்டியிருக்கும் என்று பாத்திரங்களில் நிரப்பிக்கொண்டு போகிறார்கள். அப்படிச் செய்வதால் அவர்களுக்கு ஸுகமே அன்றி வேறல்ல. அப்படியே என்னையும் அழைத்துக்கொண்டு போகவேண்டும்.

'இந்த ராஜபோகங்களை விட்டுக் காட்டிற்கு வரவேண்டுமென்று ஏன் விரும்புகிறாய்?' என்று கேட்கிறீர்களா? ஸ்த்ரீகளின் உத்தம தர்மம் இன்னதென்று நான் அறியேனா? ஸார்வபௌம சக்கரவர்த்திகளின் அரண்மனைகளில் வஸிப்பதையும், ஸ்வர்க்கத்தில் தேவதைகளின் விமானங்களில் வஸிப்பதையும், அணிமாதி அஷ்டஸித்திகளை அடைந்த யோகிகளைப்போல் தங்கள் யோகபலத்தால் லோகங்களில் ஸஞ்சரிப்பதையும் காட்டிலும், தன் கணவனையே தெய்வமாக எண்ணி, அவன் எந்த ஸ்திதியில் இருந்தாலும் அவனுடைய பாதங்களில் பணிவிடை செய்வதே பதிவிரதைகளுக்கு உயர்ந்தது.

இதற்கு முன்பே என் பெற்றோர்கள், நான் பர்த்தாவிடத்தில் நடந்துகொள்ள வேண்டிய விதத்தை எனக்கு அடிக்கடி உபதேசித்திருக்கிறார்கள். நான்கு வர்ணத்தார்களும் நான்கு ஆசிரமத்தார்களும் உத்தமமான பலனை அடைவதற்கு இன்ன ஸாதனங்களை அனுஷ்டிக்க வேண்டும் என்று எனக்கு நன்றாகத் தெரியும். ஆகையால் இப்பொழுது அவைகளை எனக்கு உபதேசிக்க வேண்டாம்.



மனித ஸஞ்சாரமின்றி யானை, புலி, கரடி நிறைந்த காட்டில் ஸந்தோஷத்துடன் வஸிப்பேன். மூன்று லோகங்களிலுள்ள ஐசுவரியத்தையும் லக்ஷியம் செய்யாமல் வனத்திலும் என் பிதாவின் அரண்மனையிலிருப்பது போலவே எண்ணி, தங்கள் சுச்ரூஷையையே எப்பொழுதும் ஸ்மரித்துக்கொண்டு காலம் கழிப்பேன். தபஸ்விகளின் விரதங்களை அனுஷ்டித்துக்கொண்டு, இந்திரியங்களை அடக்கி, தேன்பாயும் சோலைகளுள்ள வனங்களில் தங்களுடன் அபூர்வமான காக்ஷிகளைப் பார்த்துக்கொண்டு ஆனந்தமாகக் காலங் கழிப்பேன். தங்களை வனத்தில் ஒருவன் சரணமடைந்தால், அவனுக்குத் தங்களுடன் யாதொரு ஸம்பந்தமில்லாவிட்டாலும் அவனைக் காப்பாற்றுகிறீர்கள். தங்களையே நம்பியிருக்கும் என்னைக் காப்பாற்றுவது பெரிதா? தங்களுடன் இன்றைக்கு நான் வரப்போகிறேன். நான் வருவதாக நிச்சயம் செய்த பிறகு என்னைத் தடுக்கமுடியாது. பழம், கிழங்கு, வேர் முதலியவைகளைத் தின்று ஜீவிப்பேன். என் ஆஹாரத்திற்காகத் தங்களுக்கு யாதொரு சிரமத்தையும் கொடுக்கமாட்டேன். தாங்கள் என் அருகில் இருந்தால் கொஞ்சமாவது பயமில்லாமல் நதி, மலை, குகை, காடு முதலியவைகளையும் அன்னம், நீர்க்கோழி முதலிய பறவைகளால் நிறைந்து தாமரை முதலிய மலர்களால் அலங்கரிக்கப்பட்ட ஓடைகளையும் பார்க்கவும் அவைகளின் லக்ஷணங்களையும் குணங்களையும் தாங்கள் எடுத்துச் சொல்வதைக் கேட்கவும் எனக்கு ஆசை உண்டாகியிருக்கிறது. அந்தப் புண்ய தீர்த்தங்களில் ஒவ்வொரு நாளும் தங்களுடன் ஸ்நானம் செய்து விரதங்களை அனுஷ்டித்து ஆனந்தமாய்க் காலம் கழிப்பேன். வனத்தில் அநேகம் ஆயிரம் வருஷங்கள் நான் வஸித்தாலும் தங்களுடன் இருந்தால் எனக்குக் காலம் போவதே தெரியாது. தாங்கள் இல்லாமல் நான் ஸ்வர்க்கத்தில் வஸித்தாலும் அது எனக்கு வெறுப்பையே கொடுக்கும். மான்கள் குரங்குகள் யானைகள் முதலிய மிருகங்களால் நிறைந்து மனிதர்கள் ஸஞ்சரிக்க முடியாத பயங்கரமான வனத்திற்குப்போய் அங்கே தங்களுடைய பாதங்களையே கதியாக நம்பி இந்திரியங்களை அடக்கிக் கொண்டு வஸிப்பேன். தங்களைத் தவிர வேறொரு எண்ணமும் என் மனத்திலில்லை. நான் தங்களிடத்திலேயே ப்ரீதி வைத்தவள்; தாங்கள் என்னை இங்கே விட்டுப்போனால் பிராணனை விடுவேனென்பது நிச்சயம். ஆகையால் என் பிரார்த்தனையை அங்கீகரித்து என்னையும் அழைத்துக்கொண்டு போகவேண்டும். நான் தங்களுடன் வருவதால் தங்களுக்கு விசேஷமான பாரமில்லையே'' என்று பிரார்த்தித்தாள்.

இப்படி வேண்டியும், *தர்மத்திலேயே நாடிய மனமுள்ள ராமன், ஸீதை கஷ்டப்படுவதைப் பார்த்துப் பொறுக்காமல் அவளை அழைத்துப்போக இஷ்டப்படவில்லை. ஆகையால் வனத்தில் வஸிப்பதால் நேரும் பலவிதமான கஷ்டங்களையும் ஆபத்துக்களையும்

115 எடுத்துக்காட்டி வனவாஸத்தில் அவளுடைய புத்தி செல்லாமல் இருக்க முயற்சி செய்தார்.

தத²ா ப்³ருவாணுமபி த⁴ர்மவத்ஸலோ
ந ச ஸ்ம ஸீதாம் ந்ருவரோ நிநீஷதி |
உவாச சைநாம் ப³ஹு ஸந்நிவர்தநே
வநே நிவாஸஸ்ய ச து³க்கி²தாம் ப்ரதி ‖ (23)

## ஸர்க்கம் 28

## ஸீதாராம ஸம்வாதம் (தொடர்ச்சி)

ஸ ஏவம் ப்³ருவதீம் ஸீதாம் தர்மஜ்ஞோ த⁴ர்மவத்ஸல: |
ந நேதும் குருதே பு³த்³தி⁴ம் வநே து³க்கா²நி சிந்தயந் ‖ (1)

**ஸீதை** இப்படிச் சொன்னாலும், தர்மத்தில் நாடின மனமுள்ள ராமன், வனத்தில் வஸிப்பதாலுண்டாகும் கஷ்டங்களை நினைத்து அவளை அழைத்துப்போக இஷ்டப்படவில்லை. ஸீதையின் கண்களிலிருந்து நீர் பெருகிக் கொண்டிருப்பதைப் பார்த்து அவளை ஸமாதானப்படுத்தி, வனத்திற்கு வராமல் நிறுத்துவதற்காக, "ஸீதே! நீ உத்தம குலத்தில் பிறந்தவள்; தர்மத்தை அனுஷ்டிப்பதிலேயே நோக்கமுள்ளவள். இங்கிருந்துகொண்டே உன் குலதர்மத்தின்படி நடந்து வா. உன் மனம்போனபடி எல்லாம் நடக்க உத்தேசிப்பது ஸரியல்ல. நான் சொன்னபடி செய்வது உனக்கு நலம். வனத்தில் வஸிப்பதால் நேரும் பலவிதமான கஷ்டங்களை எடுத்துச் சொல்லுகிறேன், கேள்.

வனமென்றால் என்ன தெரியுமா? துஷ்ட ஜந்துக்களாலும் கற்களாலும் முட்களாலும் அடிக்கடி ஆபத்துக்கள் நேரக்கூடியதாக மனிதர்கள் ஸஞ்சரிக்கமுடியாத இடம்தான் வனம். ஆகையால் என்னுடன் அங்கே வருவதென்ற எண்ணத்தை விடு. உன்னை அழைத்துப் போவதால் எனக்கு அதிக சிரமமுண்டாகும் என்ற காரணத்தால் இதைச் சொல்லவில்லை. உன் ஹிதத்தை உத்தேசித்தே சொல்லுகிறேன். வனத்தில் எப்பொழுதும் துக்கமே அன்றி ஸுகமே கிடையாது.

மலைக்குகைகளில் வஸிக்கும் ஸிம்ஹங்களின் கர்ஜனைகள், மலையருவிகள் விழும் ஓசையுடன் கலந்து விருத்தியாகி, கேட்க மிகவும் பயங்கரமாக இருக்கும். மனுஷ்ய ஸஞ்சாரமில்லாத விடங்களில் பயமின்றித் திரியும் ஸிம்ஹம், புலி முதலிய பெரிய மிருகங்கள் நம்மைப்போன்ற பிராணியை அதற்கு முன் பார்த்ததில்லையாகையால் உடனே பாய்ந்து நம்மைக் கொல்லப் பார்க்கும்; காட்டாறுகளில் முதலைகள் நிறைந்திருக்கும்; மிகுந்த ஆழமாகவும் சேறுள்ளவைகளாகவுமிருக்கும்; மதம் பிடித்த யானைகளும் அவைகளைத் தாண்ட முடியாது; காட்டு வழிகளில் நடக்கும்பொழுது கொடிகள் காலிலும் கழுத்திலும் மாட்டிக்கொண்டு கீழே தள்ளும்; முட்கள் தேகமெங்கும் கீறும்; காட்டிலுள்ள கோழிகள் விகாரமாகக் கூவிக்கொண்டிருக்கும்; புதிதாக அவைகளைக் கேட்பவர்களுக்கு பயமுண்டாகும்.



காடுகளில் படுப்பதற்குக் கட்டில்கள் கிடையாது; தரையிலேயே படுக்க வேண்டும்; மிருதுவான பஞ்சுமெத்தைகள் கிடையாது; மரங்களிலிருந்து தானாக உதிர்ந்து விழுந்த சருகுகளின் மேல் படுக்கவேண்டும். பகல் முழுவதும் பழம் கிழங்கு முதலிய ஆஹார பதார்த்தங்களைத் தேடுவதற்கே காலம் போதாது. இளைப்பாற அவகாசம் எங்கே கிடைக்கும்? காடுகளில் வஸிக்கும் காட்டு மனிதர்களைப்போல் நாமும் இரவில் வெறும் தரையில் படுக்கவேண்டும். காட்டிலுள்ளவர்கள் இந்திரியங்களை அடக்கிக்கொண்டு மரங்களிலிருந்து தானாக உதிர்ந்த பதார்த்தங்களை காலையிலும் மாலையிலும் புஜிப்பதுபோல் நாமும் இதர பதார்த்தங்களை விரும்பாமல் அவைகளாலேயே திருப்தி அடையவேண்டும். நமது சக்திக்குத் தகுந்தபடி அடிக்கடி உபவாஸம் இருக்க வேண்டும்; ஜடையை வளர்க்க வேண்டும்; மரவுரியை உடுக்கவேண்டும்; ஒவ்வொரு நாளும் தேவதைகளையும் பித்ருக்களையும் அதிதிகளையும் விதிப்படி பூஜிக்கவேண்டும். காலையிலும் நடுப்பகலிலும் மாலையிலும் ஒவ்வொரு நாளும் ஸ்னானம் செய்யவேண்டும்; தபஸ்விகளுக்கு ஏற்பட்ட நியமங்களை அனுஷ்டிக்க வேண்டும். ஆகையால் வனத்தில் வஸிப்பது கஷ்டமென்று தெரிகிறதா?

ஒவ்வொரு நாளும் நாமே புஷ்பங்களைப் பறித்துவந்து ரிஷிகள் ஏற்படுத்திய விதிப்படி யாகமேடையில் வைத்து தேவபூஜை செய்ய வேண்டும்; சாஸ்திர விதிப்படி ஆகார நியமத்தை அனுஷ்டித்துக் கிடைத்தவைகளால் திருப்தியடைய வேண்டும்; வனத்தில் அடிக்கடி பெருங்காற்றடிக்கும்; ராத்திரியோ மையிருட்டாக இருக்கும்; பசியோ சகிக்க முடியாது; மலைப்பாம்புகள் பருத்த சரீரங்களுடன் கொழுப்படைந்து நாம் நடக்கும் வழிகளில் படுத்துக் கிடக்கும்; நீர்ப்பாம்புகளோ ஆறுகளின் நீரோட்டத்தைப்போல் நாம் போகும் வழிகளில் கோணலாக ஊர்ந்துகொண்டு செல்லும்; விளக்குவெட்டுப்பூச்சிகளும் தேள்களும், புழுக்களும், காட்டு ஈக்களும், கொசுக்களும் இரவும் பகலும் நம்மை உபத்திரவிக்கும். தர்ப்பைகளும், நாணல்களும், முட்களும், மரங்களும் நாம் போகும் வழிகளில் நிறைந்து நம்மை ஹிம்ஸிக்கும்; காட்டில் வஸிப்பவர்களுக்குப் பலவிதமான தேகசிரமங்களும் பயங்களும் நேரும்; கோபம், லோபம், காமம் முதலியவைகளை விலக்கித் தவம் செய்வதிலேயே மனதை நிறுத்த வேண்டும். பயத்தை உண்டாக்கும் விஷயங்களைக் கண்டு நாம் பயப்படக்கூடாது. ஆகையால் காட்டில் வஸிப்பது மிகக் கஷ்டம். காட்டிற்கு வரவேண்டாம். உன்னால் வனத்தில் வஸிக்கமுடியாது.

நன்றாக யோசித்துப் பார்த்தால் நான் இதுவரையில் சொன்னவைகளைத் தவிர இன்னும் அநேக கஷ்டங்கள் தோன்றும்" என்றார்.

இப்படி ராமன் தன்னைக் காட்டிற்குக் கூட்டிக்கொண்டு போக விரும்பாததைப் பார்த்து ஸீதைக்கு மிகுந்த துக்கமுண்டாகி அவருடைய காரணங்களை ஒப்புக்கொள்ளாமல் பின்வருமாறு பதில் சொன்னாள்.

வநம் து நேதும் ந க்ருதா மதிஸ்தத$^{3}$ா
ப$^{3}$பூ'வ ராமேண தத$^{3}$ா மஹாத்மநா
ந தஸ்ய ஸீதா வசநம் சகார தத்
ததோப்$^{3}$ரவீத்$^{3}$ ராமமித$^{3}$ம் ஸுது$^{3}$:கி$^{2}$தா ॥ (26)

---

## ஸர்க்கம் 29

## ஸீதாராம ஸம்வாதம் (தொடர்ச்சி)

---

*ஏதத் து வசநம் ஶ்ருத்வா ஸீதா ராமஸ்ய து$^{3}$:கி$^{2}$தா*
*ப்ரஸக்தாஶ்ருமுகீ$^{2}$ மந்த$^{3}$மித$^{3}$ம் வசந மப்$^{3}$ரவீத் ॥* (1)

**ஸீ**தை கண்களில் நீர் தளும்ப ராமனைப் பார்த்து மிருதுவாய், "காட்டில் வஸிப்பதால் பல கஷ்டங்கள் நேருமென்றும், அவைகளை நான் பொறுக்கமுடியாதென்றும் சொன்னீர்கள். ஆனால் என் உயிருக்கு உயிரான தங்களுடன் நான் இருந்தால் அவைகளே எனக்குக் குயிலின் பாட்டைப்போலும், உத்தமமான சந்தனத்தைப் போலும், தென்றல் காற்றைப்போலும், சுகத்தையும் ஆனந்தத்தையும் கொடுக்குமே யன்றித் துக்கத்திற்கு ஒரு பொழுதும் காரணமாகாது. ஸிம்ஹம், புலி, யானை, சரபம், மான் முதலிய மிருகங்களும் பக்ஷிகளும் தங்களைக் கண்டவுடன் ஒதுங்கும். இவ்விதமான பிராணியை அவை பார்த்ததே இல்லை. பயமுண்டாகும் வஸ்துக்களைப் பார்த்துப் பயப்படாதவர்கள் யார்?

நானும் தங்களுடன் வனத்திற்குப் போகவேண்டும் என்று தங்களுடைய மாதாபிதாக்கள் உத்தரவு செய்திருப்பதாக இதுவரையில் தெரிவித்தேன். தங்களை விட்டுப்பிரிந்தால் நான் பிழைத்திருக்க மாட்டேன். மேலும், என் பிதா என்னைத் தங்களுக்கு விவாஹம் செய்துகொடுக்கும் காலத்தில் 'இதோ இருக்கும் ஸீதை தாங்கள் அனுஷ்டிக்கும் தர்மத்தைக் உடனிருந்து அனுஷ்டிப்பாள்; தங்களுடைய நிழலைப்போல் எப்பொழுதும் தங்களை விட்டுப் பிரிய மாட்டாள்' என்று சொன்னாரல்லவா? தாங்கள் இப்பொழுது ஆசிரயிக்கும் தபஸ்விகளின் தர்மத்தை நானும் கூட இருந்து அனுஷ்டிக்க வேண்டுமல்லவா? தங்களுடைய நிழல் தங்களைவிட்டுப் பிரியும் பொழுது என்னையும் இங்கே வைத்துவிட்டுப் போகலாம். நான் தங்களுடன் இருக்கையில், தேவர்களுக்கு அரசனான இந்திரனாக இருந்தாலும் என்னைக் கண்ணெடுத்துப் பார்க்கத் துணிவானா?



பர்த்தாவை விட்டுப் பிரிந்த ஸ்த்ரீ உயிரை வைத்துக்கொள்ளவும் வேண்டுமோ' என்று தாங்களே எனக்குப் பலதடவை உபதேசிக்கவில்லையா?

"இதிருக்கட்டும்; நான் தங்களை விவாஹம் செய்துகொள்வதற்குமுன் என் பிதாவின் வீட்டிலிருக்கையில் ஜ்யோதிஷ சாஸ்திர நிபுணர்களான பிராம்மணர்கள் 'இந்தப் பெண்ணிற்குக் காட்டில் வஸிக்கவேண்டிய யோகம் ஜாதக ரீதியாக ஏற்பட்டிருக்கிறது' என்று சொல்லக் கேட்டிருக்கிறேன். மேலும், ஸாமுத்ரிகா சாஸ்திரத்தில் திறமை வாய்ந்த பிராம்மணர்களும் அப்படியே சொல்வதைக் கேட்டு, காட்டில் வஸிக்கவேண்டும் என்ற உத்ஸாஹத்துடன் எப்பொழுதும் இருக்கிறேன். இப்படி அவர்கள் சாஸ்திர ரீதியாகக் குறிப்பிட்ட வனவாஸம் பூர்வகர்மத்தின் பலனே; நான் என் பிராரப்த கர்மத்தின் பலனை அனுபவிக்காமல் முடியுமா? ஆனால் தங்களுடன் வனத்திற்குச் செல்வேனன்றி நான் மாத்திரம் தனியே போகமாட்டேன். நான் வனத்தில் சில காலம் வஸிக்க வேண்டுமென்று பிராம்மணர்களும் சொல்லியிருக்கிறார்கள்; அதற்குத் தகுந்த ஸமயமும் இப்பொழுது நேர்ந்திருக்கிறது. ஆகையால் நான் தங்களுடன் வருகிறேன். பிராம்மணர்களின் வார்த்தையைப் பொய்யாக்கலாமா? காட்டில் வஸித்தால்பலகஷ்டங்களைஅனுபவிக்க வேண்டுமென்று எனக்கும் தெரியும். ஆனால், அந்த அனுபவம் நமக்கல்ல. இந்திரியங்களையும் மனத்தையும் வசப்படுத்தாதவர்களைப் பற்றியல்லவா சொல்லப்பட்டது? மேலும், நான் என் பிதாவின் வீட்டில் கன்னிகையாக வஸித்துக் கொண்டிருக்கையில் ஒரு தபஸ்வினி என் தாயைப் பார்த்து, 'தங்களுடைய பெண்ணிற்குக் காட்டில் வஸிக்கும்படியான யோகம் ஏற்பட்டிருக்கிறது' என்றாள். அவளோ மஹா ஸாது; ஸாமான்யமானவளல்ல.

இது போகட்டும்; எவ்வளவோ தடவை நான் தங்களை இதுவரையில், 'தபோவனத்திற்கு நானும் தாங்களும் வேடிக்கையாகப் போய், கங்கைக் கரையிலிருக்கும் மஹரிஷிகளின் ஆசிரமங்களைப் பார்க்கவேண்டும் என்று பிரார்த்தித்திருக்கிறேன். என்னிடத்தில் தாங்கள் தயவு புரிந்து, 'அப்படியே ஆகட்டும். தகுந்த சமயம் வரும்பொழுது உன்னை அழைத்துப் போகிறேன்' என்று சொல்லவில்லையா? அந்த ஸமயம் எப்பொழுது நேருமென்று ஒவ்வொரு நிமிஷமும் எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறேன். வீரசிகாமணி! தங்களுக்கு மங்களம் உண்டாகட்டும். தாங்களும் நானும் வனத்தில் வேடிக்கையாகக் காலத்தைக் கழிக்கவேண்டுமென்றும், அப்பொழுது நான் தங்களுக்கு ஸகல பணிவிடைகளையும் செய்யவேண்டுமென்றும் எவ்வளவோ ஆசைகொண்டிருக்கிறேன்.

அஸூயை முதலிய தோஷங்களற்றவரே! தங்களிடத்தில் எல்லையற்றப் பிரீதியை வைத்து, நானும் தங்களுடன் வனத்தில் வஸித்தால் ஸகல பாபங்களிலிருந்தும் விடுபடுவேன். 'நீ இங்கேயே இருந்து தேவதையை ஆராதித்தால் அந்தப் பயன் கிடைக்காதா'

என்பீர்கள். உண்மையே; ஆனால் ஸ்த்ரீகளுக்குக் கணவனே குல தெய்வம், வேறுதெய்வமுண்டோ? இந்த லோகத்திலும் பரலோகத்திலும் எப்பொழுதும் தங்களுடன் சேர்ந்திருப்பதே எனக்குப் பரம க்ஷேமத்தைக்கொடுக்கும். இதே விஷயத்தைப் பற்றி மஹாஞானிகளான பிராம்மணர்கள் 'இவ்வுலகத்தில் ஒரு ஸ்திரீ, குலாசாரத்தின் படி அவளுடைய பெற்றோர்களால் ஒரு புருஷனுடைய கையில் தாரைவார்த்து ஒப்புவிக்கப்பட்டு, இந்த லோகத்தில் தான் இருக்கும் வரையில் பதிவிரதா தர்மத்தைக் குறைவில்லாமல் அனுஷ்டித்து வந்தால், இறந்தபிறகும் அவள் தன் பர்த்தாவை விட்டுப்பிரியவே மாட்டாள் என்ற வேத வாக்கியத்தைச் சொல்லக் கேட்டிருக்கிறேன். அது தங்களுக்குத் தெரியாதென்று நான் உபதேசிப்பதாக எண்ணக்கூடாது. என்னை அழைத்துக் கொண்டு போவதற்கு சுருதிப் பிரமாணம் இருக்கிறதென்று தெரிவித்துக்கொண்டேன்.

இப்பொழுதும் என்னை எந்தக் காரணத்தால் வனத்திற்கு அழைத்துக்கொண்டு போகமாட்டேனென்று தாங்கள் சொல்ல முடியும்? நான் தங்களுடைய பாரியையல்லவா ? என் நடத்தையில் இது வரையில் தங்களுக்கு ஏதாவது தோஷம் தோன்றிற்றா ? நான் தங்களையே கதியென்றும் தெய்வமென்றும் நம்பி உபாஸிக்கவில்லையா ? தங்களிடத்தில் என்னைக் காட்டிலும் அதிகமான பக்தி வைத்தவர்கள் யார் ? ஸுகம் நேர்ந்தபொழுது துள்ளுவதும், கஷ்டம் நேர்ந்தபொழுது புரண்டு அழுவதும் எப்பொழுதாவது என்னிடத்திலுண்டா ? தாங்கள் அனுபவிக்கும் ஸுக துக்கங்களில் எனக்கும் ஸமமான பாகமுண்டல்லவா ? நான் படும் கஷ்டத்தைத் தாங்கள் பார்க்கவில்லையா ? இப்படியெல்லாம் இருக்க என்னை வனத்திற்கு அழைத்துக்கொண்டு போவது நியாயமென்று ஏன் தங்களுக்குத் தோன்றவில்லை ? தன்னை விட்டுப் பிரியவேண்டுமென்ற எண்ணத்தாலேயே இவ்வளவு வருத்தப்படும் என்னைத் தங்களுடன் அழைத்துப்போகாமலிருந்தால் விஷத்தைக் குடிப்பேன், நெருப்பில் விழுவேன், ஜலத்தில் குதிப்பேன். எப்படியாவது பிராணனைப் போக்கிக்கொள்வேன்'' என்று கூறிப் பலவிதமாக பிரார்த்தித்தாள்.

அப்பொழுதும் ராமன் ''மனுஷ்ய ஸஞ்சாரமில்லாத கோரமான வனத்திற்கு ஸகல ஸுகங்களையும் அனுபவித்து வழக்கப்பட்டிருக்கும் இவளை எப்படி அழைத்துக்கொண்டு போவது என்று அதற்கு ஸம்மதிக்கவில்லை. அதைக் கண்டு ஸீதையும் மிகுந்த கவலை அடைந்து, கண்ணீர் தாரைதாரையாகப் பூமியில் சொரிய, ஒன்றும் தோன்றாமல் நின்றாள். ராமன் அவளை எவ்வளவு தடுத்தாலும் எவ்வளவு ஸமாதானம் செய்தாலும் அவள் ஒன்றிற்கும் இணங்கவில்லை.

சிந்தயந்தீம் தத$^{2}$ா தாம் து
நிவர்தயிது மாத்மவான் |
தாம்ரோஷ்ட$^{2}$ம் ஸ தத$^{3}$ா ஸீதாம்
காகுத்ஸ்த்தோ ப$^{3}$ஹ்வஸாந்த்வயத் || (25)

---



## ஸர்க்கம் 30

# ராமன் ஸீதையை அழைத்துப்போக ஸம்மதித்தது

---

ஸாந்த்வ்யமானா து ராமேண மைதி$^{2}$லீ ஜனகாத்மஜா |
வனவாஸ நிமித்தாய ப$^{4}$ர்தார மித$^{3}$ மப்$^{3}$ரவீத் (1)

அப்பொழுது ஸீதை, தன்னை ராமன் எப்படியாவது காட்டிற்கு அழைத்துக்கொண்டு போகவேண்டுமென்ற உத்தேசத்துடன், 'இவர் மஹாசூரராயிருந்தாலும் நம்மைச் சேர்ந்தவரல்லவா' என்ற ஸ்நேஹத்தாலும், 'நம்மை அழைத்துப்போக ஆக்ஷேபிக்கிறாரல்லவா' என்ற கோபத்தாலும் அடியிற்கண்டபடி அவரைக் கடுமையாக நிந்தித்தாள்.

''என்னை இங்கே விட்டு நீர் மாத்திரம் காட்டிற்குப் போனதாக என்பிதாவான ஜனகமஹாராஜர் கேள்விப்பட்டால் என்ன எண்ணுவார் ? நீரோ உமது தேகத்தின் அழகாலேயே பிறரை மோஹிக்கச் செய்கிறீர். அதைத் தவிர உம்மிடத்தில் வேறு யோக்யதை இருப்பதாக எனக்குத் தெரியவில்லை.'ஜனகர் முதலியவர்கள் கர்மத்தாலேயே ஸித்தியடைந்தார்கள்' என்று சொன்னபடி, என் பிதா, கர்மானுஷ்டானத்தில் மிகுந்த ஊக்கமுள்ளவர்; ஆகையால், பாரியையை விட்டு கிருஹஸ்தன் ஒரு நிமிஷமாவது பிரியக்கூடாதென்ற கொள்கையையுடையவர். மேலும், பலதேசங்களையும் பல கோடி ஜனங்களையும் க்ஷேமமாகக்காப்பாற்றுகிறவர்; உம்மைப்போல் ராஜ்யானுபவமில்லாமல் பிறருடைய கஷ்டசுகங்களை அறியாதவரல்ல. ஒருத்தியைக் காப்பாற்றச் சக்தியில்லாமல் என்னை இங்கே விட்டுப் போனீரென்ற வார்த்தை அவருடைய காதில் விழுந்தால், 'ஐயோ, மோசம்போனேனே. அப்பொழுதே தெரியாமல் போயிற்றே. இவனை உண்மையாகப் புருஷனென்று எண்ணி என் பெண்ணை இவனுக்கு விவாஹம் செய்து கொடுத்துவிட்டேனே! இப்பொழுதல்லவா நிஜம் வெளியாயிற்று ? அவன் பார்வைக்குப் புருஷனேயொழிய உண்மையாகப் பெண்பிள்ளையே' என்று என் தந்தை எண்ணமாட்டாரா ? தெரிந்திருந்தால் என்னை உமக்கு ஒரு நாளும் விவாஹம் செய்து கொடுத்திருக்க மாட்டாரே.

ஐயோ ! உலக ஜனங்கள் என்ன மோசம் போகிறார்கள் ! 'ஆயிரம் கிரணங்களுள்ள ஸூரியனிடத்தில் நிகரற்ற தேஜஸ் விளங்குவதைப் போல ராமனிடத்தில் ஒப்பில்லாத தேஜஸும் வீர்யமும் விளங்குகின்றன என்று சொல்லுகிறார்கள். அது முற்றிலும் பொய்; அறியாமையால் அப்படிச் சொல்கின்றனர். ராமனிடத்தில் யாதொரு அபூர்வமான சக்தியும் அப்படி விளங்குவதை நான் காணேன். அது மாத்திரமல்ல. ஸாமான்ய மனுஷ்யனிடத்தில் காணப்படும் சக்தி கூட அவரிடத்தில் கிடையாது.

எண்ணிறந்த பாபங்களைச் செய்தாவது ஒருவன் தன் குடும்பத்தைக் காப்பாற்ற வேண்டுமென்று மனு சொல்லியிருக்கிறார். அப்படித் தாங்கள் யாதொரு பாபத்தையும் செய்யக்காணோமே. அப்படியிருக்க எந்த மஹாபாதகத்தைத் தாங்கள் எனக்காகச் செய்து இவ்வளவு வருத்தப்படுகிறீர்கள் ? நான் வேறு கதியற்றவள்; தங்களைத் தவிர வேறொருவரையும் சரணமடைந்ததில்லை. என்னை விட்டுத் தாங்கள் போக விரும்புவதைப் பார்த்தால், 'இவளைக் கூட்டிக் கொண்டு போனால் நம்மை யாராவது உபத்திரவிப்பார்கள்" என்று யாரைக் கண்டோ பயப்படுவது போலிருக்கிறது. தங்களுடைய கோபம் பிரளய காலாக்னியைப் போல் யாவற்றையும் கொளுத்தி விடுமல்லவா ? தங்களுக்கும் பயமுண்டாகும்படி செய்கிறவர்கள் யார் ?

த்யுமத்ஸேனனுடைய புத்திரனான ஸத்தியவானை அவனுடைய பாரியையான ஸாவித்திரி பின் தொடர்ந்தது போல், நானும் தங்களுடைய கட்டளைக்கு வசப்பட்டவளென்று அறிந்து கொள்ளுங்கள். லோகத்தில் குலத்தைக் கெடுக்கவந்த பல பெண்களுண்டு; நான் அவர்களைப் போன்றவளல்ல. தங்களைத் தவிர வேறு புருஷனை நான் மனத்தால் நினைத்ததுண்டா? நினைக்கப் போகிறதும் உண்டா ? ஆகையால் தங்களுடன் நானும் வருகிறேன். நான் பதிவிரதை. எனக்குத் தங்களைத் தவிர வேறு தெய்வமில்லை என்று எவ்வளவு தடவை நான் பிரமாணம் செய்தாலும் என்னிடத்தில் நம்பிக்கையில்லாமல், 'பரதனிடத்தில் இப்படிப் பேசவேண்டும், இப்படி நடக்கவேண்டும்' என்று போதிப்பதைப் பார்த்தால், அதி பால்யத்தில் தன்னை விவாஹம் செய்து தன்னுடன்பல வருஷங்களாக வாழ்ந்துகொண்டிருக்கும் பாரியையைத் தானே பிறரிடத்தில் ஒப்புவித்து அதனால் ஜீவனம் செய்கிறவனைப்போல் தாங்கள் என்னைப் பரதனிடத்தில் தானம் செய்ய நினைத்திருப்பதுபோலத் தோன்றுகிறது. ராம! தாங்கள் எவருக்கு ஹிதமான வார்த்தைகளைச் சொல்லிக்கொண்டு வருகிறீர்களோ, எவருக்காக என்னைக் கட்டுப்படுத்தப் பார்க்கிறீர்களோ அவருக்குத் தாங்களே வேண்டியவராக நடந்துகொள்ளுங்கள்; தாங்களே பரிசாரகனாக இருங்கள்; நான் அப்படி இருக்கவேண்டிய அவசியமில்லை. என்னை அழைத்துப் போகாமல் தாங்கள் வனத்திற்குப் போகவே கூடாது. தாங்கள் காட்டிற்குப் போனாலும் சரி; தபஸ்வியானாலும் சரி; ஸ்வர்க்கத்திற்குப் போனாலும் சரி, தங்களுடன் நானும் இருக்கவேண்டியதென்ற ஒரு விஷயம் மாத்திரம் எனக்கு நன்றாகத் தெரியும்.

இங்கே இருக்கையில் தோட்டங்களில் உலாவும்பொழுது எனக்குக் களைப்புண்டாவதுபோல் காட்டில் தங்களுடன் நடக்கும் பொழுதும் எனக்குக் கொஞ்சமாவது களைப்புண்டாகும் என்று தாங்கள் நினைக்கவே வேண்டாம். நான் தங்களுடன் இருந்தால் கூர்மையான தர்ப்பை, நாணல், முள், செடிகள், மரங்களெல்லாம் எனக்குப் பஞ்சைப்போலவும், வாழைக்குருத்தைப்போலவும் மிருதுவாகவே இருக்கும். பெருங்காற்றால் என்மேல் அடிக்கப்பட்ட புழுதி எனக்கு நேர்த்தியான சந்தனத்தைப்போலிருக்கும். காட்டில் இளம்புல் வளர்ந்திருக்கும் தரைகளில் நான் உட்கார்ந்து அனுபவிக்கும் ஸுகத்தைக் காட்டிலும் இங்கே நேர்த்தியான ஆஸனங்களிலும் கம்பளங்களிலும் உட்காருவதால் அதிக ஸுகம் கிடைக்குமோ? தங்களால் தேடிக் கொண்டுவரப்பட்ட பழம், கிழங்கு வேர் முதலியவை, கொஞ்சமாக இருந்தாலும் அதிகமாக இருந்தாலும் அமிருதத்தைப் போல் எனக்கு ருசிக்கும். அந்தந்தக் காலங்களில் உண்டாகும் புஷ்பங்களையும் பழங்களையும் அனுபவித்துக் கொண்டு, என் பெற்றோர்களையாவது வீட்டையாவது நினைக்கவே மாட்டேன்.



நான் தங்களுடன் வனத்தில் இருக்கும்பொழுது தங்களுக்கு என்னால் கொஞ்சமாவது கஷ்டம் நேராது. என்னை வைத்துக் காப்பாற்றுவதில் தங்களுக்கு கொஞ்சம்கூட சிரமம் இராது. நான் தங்களுடன் இருப்பதே எனக்கு ஸ்வர்க்கம்; தங்களைவிட்டுப் பிரிந்திருப்பதே நரகம். நான் தங்களிடத்தில் வைத்திருக்கும் பிரீதி இவ்வளவென்று இதுவரையில் தங்களுக்குத் தெரியுமே. ஆகையால் என்னையும் அழைத்துப் போகவேண்டும். தங்களுடன் வனத்திற்கு வருவதில் எனக்குச் சற்றேனும் பயமில்லை. இப்படிச் சொல்லியும் தாங்கள் என்னை அழைத்துப் போகாவிட்டால் இப்பொழுதே விஷத்தைக் குடித்து பிராணனை விடுவேனே யன்றி என்னை த்வேஷிக்கும் பரதன் முதலியவர்களுடைய வசத்தில் இருக்கவே மாட்டேன்.

தாங்கள் என்னை இங்கே விட்டுப் போனால் நிச்சயமாக இறப்பேன். அப்படியிருக்கத் தாங்கள் பார்த்துக் கொண்டிருக்கும் பொழுதே உயிரை விடுவது நல்லது. இந்தத் துக்கத்தை ஒரு நிமிஷம் கூட என்னால் பொறுக்க முடியவில்லையே. பத்து வருஷங்கள், பிறகு மூன்று வருஷங்கள், பிறகு ஒரு வருஷம், ஆகப் பதினன்கு வருஷங்கள் வரையில் பொறுக்க முடியவே முடியாது" என்று இப்படி இந்திரிய ஸ்வாதீனமற்று மனம் கலங்கித் தன் கணவனை இறுகத் தழுவிக்கொண்டு,கேட்பவரின் மனம் உருகும்படி வாய்விட்டு பிரலாபித்தாள். காட்டில் பெண்யானை விஷந்தோய்த்த பாணங்களால் துளைக்கப்பட்டதுபோல் ராமனுடைய வார்த்தைகளால் துளைக்கப்பட்டு வெகுநேரம் அடக்கிக்கொண்டிருந்த தன் கண்ணீரை, அரணி நெருப்பை வெளிவிடுவதுபோல் பெருக்கினாள். தாமரை மலர்களிலிருந்து நீர்த்துளிகள் கீழே விழுந்து சிதறுவதுபோல் அவளுடைய கண்களிலிருந்து ஜலத்துளிகள் ஸ்படிக மணிகளைப்போல் உதிர்ந்தன. நீண்ட கண்களையுடையதும் நிர்மலமான சந்திரன் போன்றதுமான ஸீதையின் முகம் நீரிலிருந்து பிடுங்கி எடுக்கப்பட்ட தாமரை மலர்போல் உஷ்ணமான கண்ணீரால் வாடியது.

துக்கத்தால் பிரக்ஞையற்ற தன் பாரியையை ராமன் மிகுந்த பிரீதியுடன் தழுவி, அவளுடைய துக்கத்தை ஆற்றுவதற்காக "ஸீதே! நீ துக்கப்பட்டுக் கொண்டிருக்கையில் எனக்கு ஸ்வர்க்கமும் ஒரு பொருட்டா? ஸ்வயம்புவான நாராயணனிடத்திலிருந்தும் எனக்குக் கொஞ்சமும் பயமில்லை. நான் உன்னை விட்டுப் பிரிந்து தனியே இருக்கப் பொறுக்கமாட்டேன். உன்னை அழைத்துப் போவதில் எனக்குப் பயமே இல்லை. உன்னைக் காப்பாற்றச் சக்தியுண்டு. அப்படியிருந்தும் உன் உண்மையான அபிப்பிராயம் எனக்குத் தெரியாததால் இதுவரையில் உன்னை வனத்திற்கு அழைத்துக்கொண்டு போக ஸம்மதிக்கவில்லை.

இதைத்தவிர வேறு காரணம் கிடையாது. என்னுடன் வனத்தில் வஸிக்கவேண்டுமென்றே நீ ஸிருஷ்டிக்கப்பட்டிருக்கிறாய். எந்த ஆபத்திலும் கலங்காத மனத்தையுடையவன் தன் கீர்த்தியைக் கைவிடுவானா? அப்படியே நானும் உன்னைக் கைவிடமாட்டேன்; கைவிடவும் முடியாது. என் முன்னோர்களான ராஜரிஷிகள் வானப்பிரஸ்தர்களாய் பாரியைகளுடன் வனத்தில் வஸித்திருக்கிறார்கள். எங்கள் குலதர்மத்தை இப்பொழுது அனுஷ்டிக்கிறேனையல்லாது வேறில்லை. ஆகையால் ஸுவர்ச்சலாதேவி ஸூரியனைப் பின் தொடர்வதுபோல் நீயும் என்னுடன் வா. என் பிதா கைகேயிக்கு பிரதிக்ஞை செய்துகொடுத்து, அதை நிறைவேற்றும்படி எனக்குக் கட்டளையிட்டிருக்கிறார். ஆகையால் நான் காட்டிற்குப் போகாமலிருக்கமுடியாது; போகவே வேண்டும். நமது பெற்றோர்களுக்குக் கீழ்ப்படிந்து அவர்களுடைய கட்டளைகளை நிறைவேற்றுவதே உத்தமமான தர்மம். அதை அனுஷ்டிக்காமல் ஒரு நிமிஷம்கூடப் பிழைத்திருக்கமாட்டேன். நல்லகதி அடைவதற்குத் தெய்வத்தை ஆராதித்துக்கொண்டு இங்கேயே இருக்கக்கூடாதா என்றால் தெய்வமோ தன்னை ஆராதிப்பவர்களுக்கு வசப்பட்டதல்ல, ஸ்வதந்திரமானது. மேலும் நம்மை நேரில் கட்டளையிடுவதுமில்லை. நமது பெற்றோர்களும் குருவும் தங்களை ஆராதிப்பவர்களுக்கு ஸ்வாதீனப்பட்டவர்கள். நம்மை நேரில் ஆக்ஞாபிக்கிறவர்கள் அவர்களை விட்டுத் தெய்வத்தை ஆராதிப்பதுஎன்ன நியாயம்? தாய் தகப்பன் குரு இம் மூவர்களையும் ஆராதித்தால் நமக்கு மூன்று லோகங்களும் கிடைக்கும். அதைப்போன்ற பரிசுத்தமான வஸ்து வேறொன்றுமில்லை. ஆகையால் மற்றவர்களைக் காட்டிலும் இம் மூவரையும் நாம் ஆராதிக்கவேண்டும். ஸத்தியத்தைப் பேசுவது, தானம்கொடுப்பது, உபசரிப்பது, ஏராளமான தக்ஷிணைகளுடன் யக்ஞங்களைச் செய்வது இவையெல்லாம், பெற்றோர்களுக்கு நாம் செய்யும் சுச்ரூஷையைப்போல் நமக்கு க்ஷேமத்தைக் கொடுக்காது. ஸ்வர்க்கவாஸம், தனம் தான்யம், வித்யை புத்திரர்கள், போகங்கள் இன்னும் நாம் விரும்பக்கூடிய எதுவும் பெற்றோர்களையும் குருவையும் பூஜிப்பதால் கிடைக்குமென்பதில் ஸந்தேகமே இல்லை. பெற்றோர்களுக்குப் பணிவிடை செய்வதில் மனத்தை நாட்டி, யாவும் அதே என்று நம்பியிருக்கும் மஹாத்மாக்கள், தேவலோகங்கள், கந்தர்வ லோகங்கள், கோலோகங்கள், பிரம்மலோகம் முதலியவைகளை ஸுலபமாக அடைகிறார்கள். என் பிதா ஸத்தியம் தவறாதவர்; தர்ம மார்க்கத்தில் நடக்கிறவர்; அவர் எனக்கு என்ன கட்டளையிடுகிறாரோ, அப்படியே நான் நடப்பேன்; இதுதான் நமது முன்னோர்களுடைய தர்மம். உன் உண்மையான அபிப்பிராயத்தை நான் அறியாததால் உன்னை என்னுடன் வனத்திற்கு அழைத்துப் போகவேண்டுமென்ற எண்ணம் உண்டாகவில்லை. இப்பொழுது என்னுடன் நீ வனத்தில் வஸிக்க நிச்சயித்திருக்கிறாயென்று எனக்குத் தெரிந்தபடியால் உன்னை அழைத்துப்போக ஸித்தமாக இருக்கிறேன். நீ என்னுடன் வனத்தில் வஸிக்கவேண்டுமென்று முன்னமே 'தெய்வத்தால் ஏற்படுத்தப்பட்டிருக்கிறது. ஆகையால் என்னுடன் வா; நான் அனுஷ்டிக்கும் தர்மத்தை நீயும் சேர்ந்து நடத்து. பர்த்தாவுடன் போகவேண்டுமென்று யத்தனம் செய்வது மிகவும் உத்தமமானது; எனக்கும் என் குலத்திற்கும் ஒத்தது. ஆகையால் நாம் வனத்திற்குப் போவதற்குமுன் செய்யவேண்டிய ஏற்பாடுகளைச் செய். நீ இல்லாமல் ஸ்வர்க்கமும் எனக்கு வெறுப்பாக இருக்கும். ரத்தினங்களை பிராம்மணர்களுக்கும் ஆஹாரங்களை ஏழைகளுக்கும் கொடு. தாமதிக்காதே, சீக்கிரப்படுத்து. விலையற்ற ஆபரணங்களையும் நேர்த்தியான வஸ்திரங்களையும் இன்னும் தங்கம் வெள்ளி முதலியவைகளால் செய்யப்பட்ட பலவகையான பிரதிமைகள் முதலிய விளையாட்டுக் கருவிகளையும் படுக்கைகளையும் வாஹனங்களையும் முதலில் பிராம்மணர்களுக்குக் கொடுத்த பிறகு அவர்களுடைய உத்தரவால் நமது வேலைக்காரர்களுக்கும் கொடு'' என்றார்.

தன் பர்த்தா தனக்கு அனுகூலமாக இருக்கிறாரென்றும் தான் அவருடன் வனத்திற்குப் போக அவர் ஸம்மதித்தாரென்றும் அறிந்து, ஸீதை மிகவும் ஸந்தோஷித்து அப்படியே செய்ய ஆரம்பித்தாள். ஸ்வபாவத்திலேயே தாராளமான மனமுடையவள்; மேலும் தன் பர்த்தா தங்களுடைய ஐசுவரியம் முழுவதையும் கேட்பவர்களுக்குக் கொடுத்துவிடும்படி கட்டளையிட்டார்; மேலும் தான் ராமனுடன் வனத்திற்குப் போகிறோம் என்ற ஆனந்தத்தால் மெய் மறந்தாள். ஆகையால் தர்மாத்மாக்களான பிராம்மணர்களுக்குத் தனம், தான்யம், ரத்தினம், வஸ்திரம், படுக்கை, வாகனம் முதலியவைகளைக் கணக்கில்லாமல் கொடுக்க ஆரம்பித்தாள்.

தத: ப்ரஹ்ருஷ்டா ப்ரதிபூர்ணமாநஸா
யஸஸ்விநீ ப$^4$ர்துரவேக்ஷ்ய பா$^4$ஷிதம் |
த$^4$நாநி ரத்நாநி ச தா$^3$து மங்க$^3$நா
ப்ரசக்ரமே த$^4$ர்மப்$^4$ருதாம் மநஸ்விநீ || (47)

## ஸர்க்கம் 31

## ராம லக்ஷ்மண ஸம்வாதம்

ஏவம் ஶ்ருத்வா து ஸம்வாத³ம் லக்ஷ்மண: பூர்வமாக³த: |
பா³ஷ்ப பர்யாகுல முக²: ஶோகம் ஸோடு⁴ மஶக்நுவந் || (1)

**கௌ**ஸல்யையின் அந்தப்புரத்திலிருந்து ராமனுடன் அங்கு முன்பே வந்திருந்த லக்ஷ்மணன், மேற்சொன்ன ஸம்பாஷணையைக் கேட்டு, "தன் சரீரத்தின் பாதியான ஸீதைக்கே வனத்திற்குப் போக உத்தரவு கிடைக்க இவ்வளவு கஷ்டப்பட்டதே! இப்படியிருக்க என் விஷயத்தைப்பற்றிக் கேட்கவேண்டியதில்லை" என்று தாங்க முடியாத துக்கத்தை அடைந்து, கண்ணீர் தாரைதாரையாகப் பெருக நின்றான். தன் தமயனுடன் தானும் வனத்திற்குப் போகவேண்டுமென்ற பிரயோஜனத்தைத் தவிர வேறொன்றையும் அவர் விரும்பவில்லை. அதை அடைய அவருக்கு வேறொரு உபாயமும் தோன்றவில்லை. ஸாக்ஷாத் பகவானும் தனக்குத் தமயனுமான அவர், தன்னைத் தள்ளமுடியுமா? அந்தத் தைரியத்தால் அவரைச் சரணமடைய நிச்சயித்தார். தான் சரணாகதி செய்வதற்கு அனுகூலமான விஷயங்களை ஸம்பாதித்து அதற்குப் பிரதிகூலமான விஷயங்களை அதற்கு முன்பே விலக்கினவர். முதலில் தனக்குப் புருஷகாரமாக (சிபார்சாக) ஸீதையைச் சரணமடைந்து அவள் மூலமாக, "என்னை மித்திரனாக வந்தடைந்தவனை ஒரு பொழுதும் நான் கைவிடமாட்டேன்; ஸகல பிராணிகளிடத்திலிருந்தும் அவனுக்குப் பயமில்லை என்று வாக்களிக்கிறேன். இதுவே நான் கொண்ட பெரிய விரதம்" என்று சொன்ன பகவானுடைய திருவடிகளை மஹாவிசுவாஸத்துடன் நமஸ்கரித்து, தான் சரணாகதி செய்வதற்கு பிரயோஜனமான கைங்கரியத்தைப் பிரார்த்தித்தார்.

"தாங்கள் வனம் போவதில் எனக்கு இஷ்டமில்லை. ஆனாலும் அப்படிப் போவதாக நிச்சயம் செய்துவிட்டால் நானும் தங்களுடன் வருகிறேன். காட்டில் துஷ்ட மிருகங்கள் ஸஞ்சரிக்கும் இடங்களில் தங்களுக்கு முன்னே வில்லும் கையுமாக ஜாக்கிரதையாகச் செல்வேன். பலவிதமான பக்ஷிகளாலும் மிருகங்களாலும் நிறைந்த வனங்களில் தாங்கள் என்னுடன் ஸஞ்சரிக்கலாம்; எவ்விடத்திலும் எக்காலத்திலும் எந்த ஸமயத்திலும் தங்களுக்கு ஸகல கைங்கரியங்களையும் நானே செய்யும்படி ஆக்ஞாபிக்க பிரார்த்திக்கிறேன். 'தாங்களில்லாமல், தேவதைகளுடைய புரம் அயோத்யை என்று சொல்லப்படும் பரமபதமும் எனக்கு வேண்டாம். கிழத்தனம், மரணம் இல்லாத கைவல்யமென்று சொல்லப்படும் பதவியும் எனக்கு வேண்டாம். பதினன்கு லோகங்களடங்கிய இந்த ப்ரஹ்மாண்டத்தின் அதிகாரமும் வேண்டாம்.



தங்களுடைய கைங்கரியமில்லாத மோக்ஷமும் எனக்கு வேண்டாம் என்று இருப்பவனுக்கு மற்ற பதவிகள் ஒரு பொருட்டா?" என்றார்.

இப்படித் தன்னுடன் வனத்திற்கு வர நிச்சயம் செய்துகொண்டிருக்கும் லக்ஷ்மணனை ராமன் பலவிதமாய் ஸமாதானம் செய்தும், தடுத்தும், அவன் அதற்கு ஒப்பவில்லை. அண்ணா! 'இன்றைக்கு என் அபிஷேகத்திற்காகச் செய்திருக்கும் ஏற்பாடுகளை நிறுத்தி அதற்குமேல் செய்ய வேண்டிய காரியங்களைச் சீக்கிரமாகச் செய்' என்றும், 'லக்ஷ்மணா, நீ என்னைப்போல் வருத்தப்படாமலிரு; அபிஷேகத்திற்காக நடக்கும் ஏற்பாடுகளை நிறுத்து' என்றும், 'ஸீதே, பரதனும் சத்ருக்னனும் என் உயிரைவிட எனக்குப் பிரியமானவர்கள். ஆகையால் அவர்களை நீ உன் தமயனைப் போலவும் புத்திரனைப் போலவும் நினைத்து மிகுந்த ஜாக்கிரதையுடன் நடக்க வேண்டும்' என்றும் தாங்கள் சொல்லவில்லையா? அதில் என்னைச் சேர்த்ததாகத் தெரியவில்லை. ஆகையால் தங்களுடன் வனத்திற்கு வரலாமென்று ஸம்மதித்ததற்கும் அதிகமென்றே தோன்றுகிறது. அப்படியிருக்க, இப்பொழுது அதை மறந்து என்னை வரவேண்டாமென்று தடுப்பதற்குக் காரணமென்ன? முதலில் உத்தரவு செய்துவிட்டீர்கள்; நானும் அதை நம்பித் தங்களுடன் புறப்படத் தயாராக இருக்கிறேன். இப்பொழுது திடீரென்று தடுப்பதைப் பார்த்தால் நான் தங்களுக்கு ஏதாவது தவறு செய்திருக்கிறேனென்றும், பால்யம் முதல் தங்களுக்குப் பரமமித்திரனும் தங்களுடைய நிழலைப் போல் தங்களையே அண்டினவனுமான என்னை எந்தக் காரணத்தால் தாங்கள் தள்ளுகிறீர்களென்றும் எனக்குப் பெரிய ஸந்தேகமுண்டாயிருக்கிறது. இதைத் தீர்க்கும்படி பிரார்த்திக்கிறேன்" என்றார்.

கைகளைக் கூப்பிக்கொண்டு, தன்னை அழைத்துப் போகவேண்டுமென்று பிரார்த்தித்துத் தனக்கு முன்பே புறப்படத் தயாராக இருக்கும் லக்ஷ்மணனைப் பார்த்து மிகுந்த தேஜஸ்வியான ராமன், 'லக்ஷ்மணா! நீ எனக்குப் பரமமித்திரன்; தர்மத்தையே நாடிய மனமுடையவன்; மஹாவீரன்; ஸாதுக்களுடைய மார்க்கத்திலேயே நடப்பவன்; என் அன்பிற்குரியவன்; என்னுயிரைப்போல் எனக்கு அருமையானவன்; எல்லா விதத்திலும் எனக்குக் கட்டுப்பட்டவன்; என்னுடன் பிறந்தவன்; எனக்குத் தோழன். ஆகையால் என் எண்ணத்தை நிறைவேற்ற எந்த உத்தம குணங்கள் வேண்டுமோ அவை உன்னிடத்தில் நிறைந்திருக்கின்றன. நீயும் என்னுடன் இன்று காட்டிற்கு வந்துவிட்டால் கௌஸல்யையையும் ஸுமித்திரையையும் காப்பாற்ற யார் இருக்கிறார்கள்? உன்னை இப்பொழுது தடுப்பதற்கு இதே காரணம்; முன்பு உனக்கு அனுமதி கொடுத்தது அந்த ஸமயத்தில் செய்ய வேண்டிய பரிஹாரமே தவிர வேறல்ல.

ஆனால் அவர்களைக் காப்பாற்ற மஹாராஜா இல்லையோ' என்றால், மேகமானது பூமியில் பெய்வது போல் இந்த ராஜ்யத்தி

லுள்ள ஸகல ஜனங்களின் விருப்பங்களைப் பூர்த்தி செய்யும் மஹாராஜா மன்மத பாசங்களால் கட்டப்பட்டு, பிறருடைய இஷ்டப்படி நடக்கிறார். அசுவபதியின் புத்திரியான கைகேயி இந்த ராஜ்யத்தை அடைந்தால், நம்மைவிட்டுப் பிரிந்த துக்கத்தால் கஷ்டப்படும் நமது தாய்களுக்கு ஹிதத்தைச் செய்யவே மாட்டாள்.

'பரதன் காப்பாற்றாமல் விடுவானா?' என்றால் அவனும் கைகேயிக்கு உட்பட்டவன்; அவளுடைய கட்டளையை மீற முடியாது; அவள் தன் சக்களத்திகளை ஹிம்ஸை செய்வதைத் தடுக்க முடியாது. ஆகையால் பரதன் இந்த ராஜ்யத்திற்கு அதிபதியானாலும் துக்கத்தால் தவிக்கும் கௌஸல்யையையும் ஸுமித்திரையையும் நினைக்கவே மாட்டான்.

'நான்தான் அவர்களை எப்படிக் காப்பாற்றுவேன்' என்றால், மஹாராஜாவின் அனுமதியைப் பெற்றாவது, அதுவும் கிடைக்காவிட்டால் உன் ஸாமர்த்தியத்தாலாவது கௌஸல்யையைக் காப்பாற்று. நான் இப்பொழுது சொன்ன விஷயத்தைக் குறைவில்லாமல் நிறைவேற்று. தடுத்துச் சொல்லாதே.

'தங்களுடைய கைங்கரியமே எனக்குப் பிரதானம்; இவைகளால் என்ன பிரயோஜனம்' என்றால், நீ என்னிடத்தில் வைத்திருக்கும் ப்ரீதிக்கு, நமது பெரியோர்களுக்கும் தாய்க்கும் நீ திருப்தியாகப் பணிவிடை செய்வதே அடையாளம். தர்மத்தை அறிந்தவனே! பெரியோர்களைப் பூஜித்தால் ஒப்பற்ற மேன்மையான தர்மம் ஸுலபமாகக் கிடைக்கும். என்னை வேண்டி இப்படிச் செய். நீயும், நானும் ஸீதையும் இல்லாவிட்டால் நமது தாய்களுக்கு என்ன ஸுகம்?

மேன்மேலும் யுக்தியாகப் பேசுவதில் பிருஹஸ்பதியைப் போன்றவரான ராமனையும், தன் பதில் சொல்லும் சாதுர்யத்தால் ஸந்தோஷிக்கச் செய்யும் திறமையுள்ளவர் லக்ஷ்மணன். ஆகையால் மதுரமான வார்த்தைகளால் ராமனுடைய ஆக்ஷேபனைகளுக்குப் பதில் கூற ஆரம்பித்தார்.

"அளவிடக்கூடாத பலபராக்கிரமங்கள் பொருந்திய ராமனுடைய தாயல்லவா கௌஸல்யை? அவளை நாம் காப்பாற்றாவிட்டால் ராமனுடைய கோபமும் மஹாபாபமும் பெரிய ஆபத்தும் நமக்கு நேரும்" என்ற பயத்தால் பரதன் நமது தாய்மார்களை நன்றாய்ப் பூஜிப்பான். இதில் கொஞ்சம்கூட ஸந்தேகமில்லை. மேலும், கௌஸல்யாதேவி என்னைப்போன்ற அநேகமாயிரம் ஜனங்களைக் காப்பாற்றுவாள். அவளை அடுத்திருக்கும் பரிஜனங்களுக்கு அநேகம் ஆயிரம் கிராமங்களைக் கொடுத்திருப்பதை நாம் பார்த்ததில்லையா? தன்னையும் என் தாயையும் என்னைப் போன்றவர்களையும் காப்பாற்றுவது அவளுக்கொரு பொருட்டல்ல. எனக்குத் தங்களுடைய சேஷ (தாஸ)னாயிருப்பதே ஸ்வரூபம். அந்தப் பதவிக்கு அடையாளமான கைங்கரியத்தைத் தங்களுக்கு ஸர்வதேச ஸர்வகால ஸர்வாவஸ்தையிலும் செய்ய அனுமதி கொடுங்கள். என்னிடத்தில் ஸேவகனுக்கு வேண்டிய குணங்கள் இருக்கின்றன. தங்களிடத்திலோ ஸ்வாமிக்குத் தகுந்த குணங்களிருக்கின்றன. ஆகையால் நான் தங்களுடன் வருவதில் சேஷ சேஷி தர்மத்திற்கு யாதொரு விரோதத்தையும் காணேன். அப்படிச் செய்வதால் தங்களுக்கு யாதொரு சிரமமும் இல்லாமல் பழம், கிழங்கு, வேர் முதலிய ஆஹார பதார்த்தங்கள் குறைவில்லாமல் கிடைக்கும். எனக்கும் தங்களுடைய கைங்கரியமென்ற பலனும் ஸித்திக்கும். வில், அம்பு, மண்வெட்டி, கூடை முதலியவைகளை எடுத்துக்கொண்டு தங்களுக்கு முன்பு வழி காட்டிக்கொண்டே போவேன். வனத்தில் கிடைக்கக்கூடிய பழம், கிழங்கு, வேர், தான்யம், தேன் முதலிய, தபஸ்விகளுக்கு யோக்கியமான, பதார்த்தங்களை ஒவ்வொரு நாளும் ஸம்பாதித்துக் கொடுப்பேன். தாங்கள் ஸீதையுடன் மலைத்தாழ்வரைகளில் ஆனந்தமாகக் காலம் கழிக்கலாம். ஸர்வசேஷியாய் பிராட்டியுடன் எழுந்தளியிருக்கும் தங்களுக்கு எந்தத் தேசத்திலும் எந்தக் காலத்திலும் எவ்விதமான கைங்கரியத்தையும் சேஷனான நானே செய்வேன்" என்று பிரார்த்தித்தார்.



ராமனும் மிகுந்த ஸந்தோஷமடைந்து, "ஜனக மஹாராஜாவின் யக்ஞத்தில் மஹாத்மாவான வருணனால் நம்மிருவர்க்கும் நேரில் கொடுக்கப்பட்ட பயங்கரமான இரண்டு வில்லுகளையும், சத்ருக்களால் பிளக்க முடியாத இரண்டு கவசங்களையும், குறையாத இரண்டு அம்பறைகளையும், தங்கத்தால் அலங்கரிக்கப்பட்டு ஸூரியனைப்போல் பிரகாசிக்கும் இரண்டு கத்திகளையும், நமது குலகுருவான வஸிஷ்டமஹரிஷியின் வீட்டிலிருந்து எடுத்து வா. அவை அங்கே பூஜை செய்வதற்காக வைக்கப்பட்டிருக்கின்றன. நீயும் உன் பந்துக்களிடத்திலும் நண்பர்களிடத்திலும் சொல்லிக்கொண்டு வனத்திற்குப் போகத் தயாராக இருக்க வேண்டும்" என்று கட்டளையிட்டார்.

லக்ஷ்மணன் அப்படியே வஸிஷ்ட மஹரிஷியின் வீட்டிற்குப் போய் அங்கே கந்த புஷ்ப தூபதீப நைவேத்தியங்களால் பூஜிக்கப்படும் சிரேஷ்டமான ஆயுதங்களை அவருடைய அனுமதியைப் பெற்று எடுத்துக்கொண்டு வந்து ராமனுக்குக் காட்டினார். ராமனும் மிகுந்த ஸந்தோஷமடைந்து, "லக்ஷ்மணா! நல்ல ஸமயத்தில் வந்து சேர்ந்தாய். என்னுடனிருந்து என் ஐசுவரியம் யாவையும் பிராம்மணர்களுக்கும் தபஸ்விகளுக்கும் தானம் செய்யவேண்டும். இந்த நகரத்தில் பலர் பெரியோர்களுக்கு ஒப்பற்ற பணிவிடை செய்து கொண்டிருக்கிறார்கள். அவர்களுக்கும் நம்மை அண்டியிருப்பவர்களுக்கும் வழக்கமாகக் கொடுப்பதைக் காட்டிலும் அதிகமாகக் கொடுக்கவேண்டும். பிராம்மணோத்தமரும் வஸிஷ்ட மஹரிஷியின் புத்திரருமான ஸுயக்ஞரைச் சீக்கிரத்தில்

அழைத்து வா. இந்த நகரத்திலுள்ள ஸகலப் பிராம்மணர்களிடத்திலும் உத்தரவு பெற்றுக்கொண்டு பிறகு வனத்திற்குப் போக விரும்புகிறேன்'' என்றார்.

> வஸிஷ்ட2புத்ரம் து ஸுயஜ்ஞ மார்யம்
> த்வமாநயாஶு ப்ரவரம் த்3விஜாநாம் |
> அபி4ப்ரயாஸ்யாமி வநம் ஸமஸ்தாந்
> அப்4யர்ச்ய ஶிஷ்டா நபராந் த்3விஜாதீந் || (35)

---

## ஸர்க்கம் 32

## யாத்ராதானம்

---

> தத: ஶாஸநமாஜ்ஞாய ப்4ராது: ஶுப4தரம் ப்ரியம் |
> க3த்வா ஸ ப்ரவிவேஶாஶு ஸுயஜ்ஞஸ்ய நிவேஶநம் || (1)

ராமன் பிராம்மணர்களுக்குத் தானம் கொடுக்கிறார் என்ற புண்ணியகரமான வார்த்தையைக் கேட்டு லக்ஷ்மணன், தன்னை அழைத்துப் போக ராமன் ஸம்மதித்ததைப் பற்றி அடங்காத ஆனந்தமடைந்தார். பிறகு அவருடைய உத்தரவுப்படி ஸுயக்ஞருடைய வீட்டிற்குப் போய் அக்னிஹோத்திர சாலையில் அவரைக் கண்டு நமஸ்காரம் செய்து, "மித்திரரே! வாரும். லோகத்தில் ஒருவரும் செய்யத் துணியாத காரியத்தைச் செய்த என் தமயனுடைய வீட்டிற்கு வந்து பாரும்'' என்று அழைத்தார். ஸுயக்ஞர் காலையில் செய்யவேண்டிய அக்னிஹோத்திரத்தை முடித்துவிட்டு ஸகல லக்ஷ்மியும் விளங்கும் ராமனுடைய அந்தப்புரத்திற்கு லக்ஷ்மணனுடன் வேகமாகப் போனார்.

மஹாஞானியான ஸுயக்ஞரைக் கண்டு ராமனும் ஸீதையும் பரபரப்புடன் எழுந்து கைகூப்பி, ஹோமாக்னியை உபசரிப்பது போல் பிரதக்ஷிணம் செய்து நமஸ்கரித்தார்கள். உத்தமமான தங்கத் தோள்வளைகளையும், தங்கச்சரட்டில் கோர்க்கப்பட்ட நவரத்னங்களையும், குண்டலங்களையும், கைவளைகளையும், புஜகீர்த்திகளையும் இன்னும் பல அபூர்வமான ரத்தினங்களையும் ராமன் ஸுயக்ஞருக்குக் கொடுத்து உபசரித்தார். பிறகு ஸீதை நினைவுபடுத்திய பின், "மித்திர! இந்த ஹாரத்தையும் தங்கக் கொடியையும் ஒட்டியாணத்தையும் தங்களுடைய பாரியைக்கு ஸீதை கொடுக்க விரும்புகிறாள்; அதை அங்கீகரிக்கும்படி பிரார்த்திக்கிறேன். மேலும், தான் வனத்திற்குப் போகும் ஸமயத்தில் விசித்திரமாய் வேலை செய்யப்பட்ட இந்தக் கேயூரங்களையும் தோள்வளைகளையும் தங்களுடைய பத்தினிக்குக் கொடுக்கும்படி பிரார்த்திக்கிறாள். பலவித ரத்தினங்களால் அலங்கரிக்கப்பட்டு விலையுயர்ந்த மேல்விரிப்புடைய இந்தக் கட்டிலைத் தாங்கள் அங்கீகரிக்க வேண்டும் என்று விரும்புகிறாள். என் மாமா எனக்குக் கொடுத்த சத்ருஞ்ஜயனென்ற யானையையும் இன்னும் ஆயிரம் யானைகளையும் தங்களுக்குக் கொடுக்கிறேன்'' என்றார். ஸுயக்ஞர் அவைகளைப் பெற்றுக்கொண்டு ராமலக்ஷ்மணர்களையும் ஸீதையையும் ஆசீர்வதித்தார்.



பிறகு பிரஹ்மா தேவராஜனைக் கட்டளையிடுவதுபோல் ராமன் மிகுந்தப் பிரியத்துடன் "லக்ஷ்மண! அகஸ்தியருடைய புத்திரரையும் விச்வாமித்திரருடைய புத்திரரையும் இங்கே வருவித்து, லோகத்தில் பயிர்களை ஜலத்தால் போஷித்து வளர்ப்பதுபோல், அந்த பிராம்மணோத்தமர்களுக்கு ரத்தினங்களைக் கொடுத்துத் திருப்தி செய். அநேகமாயிரம் பசுக்களையும், தங்கம், வெள்ளி, நவரத்தினங்களையும் வேண்டிய வரையில் கொடு.

யஜுர்வேத தைத்திரீய சாகையை அத்யயனம் செய்பவர்களுக்கு ஆசாரியரான ஒரு பிராம்மணோத்தமர் ஒவ்வொரு நாளும் என் தாயின் வீட்டிற்கு வந்து, மிகுந்த பக்தியுடன் அவளுக்கு ஆசீர்வாதம் செய்துகொண்டிருக்கிறார்; அவர் மஹாவித்வான்; வேதங்களின் ரஹஸ்யத்தை அறிந்தவர். வாஹனங்கள் பட்டுகள் போர்வைகள் வேலைக்காரர்கள் முதலியவைகளை வேண்டியவரையில் அவருக்குக் கொடு. நமது வீட்டில் வெகுநாளாகப் பழகிக்கொண்டிருக்கும் நமது மந்திரியும் ஸாரதியுமான சித்ரரதரென்பவருக்கு எண்ணிறந்த ஆடுகளையும் ஆயிரம் மாடுகளையும் ரத்தினங்களையும் வஸ்திரங்களையும் தான்யங்களையும் கொடுத்துத் திருப்தி செய். வேதத்தில் கடம் காலாபமென்ற பாகங்களை அத்யயனம் செய்துகொண்டு பலாச தண்டத்தைத் தரிக்கும் பிரம்மசாரிகள் என்னால் ஆதரிக்கப்பட்டிருக்கிறார்கள். எப்பொழுதும் வேதாத்யயனம் செய்துகொண்டிருப்பதால் ஆஹாரம் தேட அவர்களுக்குப் பொழுதில்லை; இயற்கையாகவே சுறுசுறுப்பு இல்லாதவர்கள்; ருசியான பதார்த்தங்களில் விருப்பமுள்ளவர்கள்; பெரியோர்கள் மெச்சும் நன்னடத்தை உள்ளவர்கள். ரத்தினங்களால் அலங்கரிக்கப்பட்ட எண்பது வாஹனங்களையும், தான்யங்களைச் சுமக்க ஆயிரம் எருதுகளையும், நிலங்களை உழுவதற்கு இருநூறு மாடுகளையும், பால், தயிர் இவைகளுக்காக ஆயிரம் பசுக்களையும் அவர்களுக்குக் கொடு. மேகலை யென்ற அரை நூல்மாலையைத் தரிக்கும் அநேக பிரம்மசாரிகள் தங்களுக்கு விவாஹம் செய்விக்க வேண்டுமென்று என் தாயை அண்டியிருக்கிறார்கள். அவர்களில் ஒவ்வொருவருக்கும் ஆயிரம் பசுக்களைக் கொடு. அதனால் கௌஸல்யை திருப்தியடையட்டும்'' என்று கட்டளை இட்டார். ராமனால் குறிப்பிடப்பட்ட தனம் முதலியவைகளை அந்த பிராம்மணர்களுக்கு லக்ஷ்மணன் குபேரனைப்போல் தானே கொடுத்தார்.

பிறகு தாரைதாரையாய்க் கண்ணீர் பெருக்கிக்கொண்டு நிற்கும் பரிவாரங்களில் ஒவ்வொருவருக்கும் ஸௌக்கியமாய்ப் பிழைப்பதற்குப்போதுமான தனத்தை ராமன் தானே கொடுத்து, "நாங்கள் திரும்பி வரும்வரையில் என் அரண்மனையையும் லக்ஷ்மணனுடைய

வீட்டையும் சூன்யமாய் வைக்காமல் நீங்கள் அங்கிருந்து பாது காக்க வேண்டும்'' என்றார். பிறகு தன் பொக்கிஷத் தலைவனைத் தருவித்து, "என் ஐசுவரியம் முழுவதையும் இங்கே கொண்டுவா'' என்று உத்தரவு செய்தார். அவைகளை வேலைக்காரர்கள் குப்பல் களாகக் குவித்தார்கள். பிறகு ராமலக்ஷ்மணர்கள் அவைகளை பிராம்மணச் சிறுவர்களுக்கும் கிழவர்களுக்கும் ஏழைகளுக்கும் போதுமான வரையில் கொடுத்தார்கள்.

அப்போது கர்க்கரிஷியின் வம்சத்தில் பிறந்த ஒரு பிராம் மணன் அங்கே வந்தார்; அவருக்குத் த்ரிஜடரென்று பெயர். ஏழ்மைத் தனத்தால் தேகம் முழுவதும் மஞ்சள் வர்ணம் படர்ந் திருந்தது; வயல்களில் சிந்திக்கிடக்கும் நெல்லை ஒவ்வொன்றாகப் பொறுக்கி ஜீவனம் செய்கிறவர்; மிகவும் வயது சென்றவர்; தன் மனைவி மக்களுடன் காட்டில் வஸிப்பவர்.

இளம்பெண்ணான அவருடைய பார்யை குழந்தைகளை அவருக்குக் காட்டி, "ஸ்வாமி! நாம் ஏழ்மைத்தனத்தை எவ்வளவு காலம் பொறுக்க முடியும்? தங்கள் கையிலுள்ள கோடாலி, கலப்பை, மண்வெட்டி முதலியவைகளை எறிந்துவிட்டு நான் சொல்லுகிறபடி கேளுங்கள். தங்களுக்கு ஏதாவது திரவியம் கிடைக்க வேண்டுமென்ற எண்ணமிருந்தால் தர்மமே அவதாரம் எடுத்திருக்கும் ராமனைத் தரிசனம் செய்யுங்கள்'' என்றாள். அவர் தன் பத்தினியின் வார்த்தையை ஒப்புக்கொண்டு தன் கந்தை வஸ்திரத்தை மறைத்துக்கொண்டு ராமனுடைய அந்தப்புரத்திற்குப் போகும் வழியால் அங்கே வந்து சேர்ந்தார். பிறகு அங்கிரஸ் முதலிய மஹரிஷிகளுக்கு ஸமமான தேஜஸுள்ள அந்த பிராம் மணரை ஐந்தாவது கட்டு வரையில் ஒருவரும் தடுக்கவில்லை. அவர் ராமனுக்கு அருகில் போய், "ராஜபுத்திர! இந்த உலகம் முழு வதையும் உன் கீர்த்தி வியாபித்திருக்கிறது; நான் பெரிய குடும்பி; அவர்களைப் போஷிக்க என்னிடத்தில் வேண்டிய தனமில்லை. காட்டில் உதிர்ந்த நெல்லுகளைப் பொறுக்கி ஒவ்வொரு நாளும் ஜீவனம் செய்கிறேன். ஆகையால் என்னிடத்தில் கிருபை செய்ய வேண்டும்'' என்றார்.

இந்த பிராம்மணன் பெரிய குடும்பி; மஹா தரித்திரன். இவருக் குத் தனத்தில் எவ்வளவு ஆசையிருக்கிறதென்று பரீக்ஷிக்க விரும்பி புன்சிரிப்புடன் வேடிக்கையாக "ஸ்வாமி, எண்ணிறந்த என் பசுக் களில் ஒரு ஆயிரம்கூட இன்னும் தானம் கொடுக்கப்படவில்லையே. தங்கள்கையிலிருக்கும் கழியைச் சுற்றி எறியுங்கள். அது எங்கே விழு கிறதோ அதுவரையிலிருக்கும் பசுக்கள் தங்களுடையது'' என்றார்.

உடனே அந்த பிராம்மணன் வெகு பரபரப்புடன் தன் வஸ்தி ரத்தை இடுப்பில் வரிந்து கட்டிக்கொண்டு, தன் முழுபலத்துடன் கழியைச் சுழற்றி எறிந்தார். அது ஸரயூநதிக்கு அக்கரையில் அநேக மாயிரம் பசுக்களுக்கு நடுவில் விழுந்தது. அப்பொழுது ராமன் அந்த



பிராம்மணரை மிகுந்த பிரியத்துடன் ஆலிங்கனம் செய்து, ஸரயூ நதிக்கரையிலிருந்த அந்த மாட்டு மந்தைகள் யாவற்றையும் திரிஜட ருடைய வீட்டிற்கு ஓட்டிக்கொண்டுபோய்ச் சேர்க்கும்படி இடையர் களுக்கு உத்தரவு செய்து, "ஸ்வாமி! தாங்கள் என்னிடத்தில் கோபிக்காமலிருக்க பிரார்த்திக்கிறேன். தங்களுடைய ஒப்பற்ற பலத்தை அறிய விரும்பியே கழியைச் சுழற்றி எறியும்படி தங்களைச் சொன்னேன். வேடிக்கையாகச் செய்ததே தவிர வேறல்ல. இன் னும் ஏதாவது வேண்டியிருந்தால் கேட்கும்படி பிரார்த்திக்கிறேன். தங்களுக்கு யாதொரு தடையும் வேண்டியதில்லை. பிராம்மணர்களு டைய உபயோகத்திற்காகவே என் ஐசுவரியம் முழுவதையும் ஸம்பா தித்திருக்கிறேன். தங்களைப் போன்ற மஹான்களுக்கு அது உப யோகப்பட்டால் அது எனக்கு அளவற்ற கீர்த்தியையும் ஸந்தோ ஷத்தையும் கொடுக்கும்'' என்று அவரை ஸமாதானம் செய்தார். திரிஜடரும் அவருடைய பாரியையும் அந்த மாட்டுமந்தைகளைப் பெற்றுக்கொண்டு அளவற்ற ஆனந்தமடைந்து, கீர்த்தி பலம் ப்ரீதி ஸுகம் முதலிய மங்களங்கள் குறைவில்லாமல் விருத்தியாக வேண்டுமென்று மனப்பூர்வமாய் ராமனை ஆசிர்வதித்தார்கள்.

பிறகு ராமன் தன் பராக்கிரமத்தால் தர்மமாக ஸம்பாதிக்கப் பட்ட அளவற்ற ஐசுவரியத்தைத் தன் மித்திரர்களுக்கும் பரிவாரங் களுக்கும் தகுந்த உபசாரத்துடனும் மரியாதையுடனும் கொடுத் தார். அங்கிருந்த பிராம்மணர்களும், மித்திரர்களும், வேலைக்காரர் களும், தரித்திரர்களும், பிச்சைக்காரர்களும் ஆக எல்லோரும் தங்க ளுடைய யோக்கியதைக்கும் ஆசைக்கும் தகுந்தபடி ராமனால் கொடு கப்பட்ட தானத்தால் திருப்தியடைந்தார்கள். திருப்தியடையாத வர்கள் ஒருவரும் இல்லை.

த்3விஜ: ஸுஹ்ருத் ப்4ருத்யஜநோ த2வா ததா3
த3ரித்3ர பி4க்ஷாசரணஸ்ச யோ ப4வேத் |
ந தத்ர கஸ்சிந் ந ப3பூ4வ தர்பிதோ
யதா2ர்ஹ ஸம்மாநந தா3ந ஸம்ப்4ரமை: || (45)

---

## ஸர்க்கம் 33

## அயோத்யா ஜனங்களின் துக்கம்

---

த3த்வாது ஸஹவைதே3ஹ்யா ப்3ராஹ்மணேப்4யோ த4நம் ப3ஹு |
ஜக்3மது: பிதரம் த்3ரஷ்டும் ஸீதயா ஸஹ ராக4வெள || (1)

ராம லக்ஷ்மணர்களும் ஸீதையும்பிராம்மணர்களுக்குஅளவற்ற தனத்தை மனப்பூர்வமாகக் கொடுத்து, பிறகு மஹாராஜாவிடத்தில் உத்திரவு பெற்றுக்கொள்ளப் போனார்கள். அப்பொழுது அவர்கள் தரித்த கத்தி, வில் முதலிய ஆயுதங்கள் ஸீதையால் அலங்கரிக்கப் பட்ட மாலைகளாலும் சந்தனங்களாலும் மிகவும் விளங்கின.

அவர்கள் வீதிவழியாகப் போகும்பொழுது பட்டணத்து ஜனங்கள் ஏழுடுக்கு மேடைகளிலிருந்தும் தனவான்களின் உப்பரிகைகளிலிருந்தும் அரண்மனைகளிலிருந்தும், உத்ஸாஹமும் ஸந்தோஷமுமற்று ராமனைப் பார்த்துக்கொண்டே இருந்தார்கள். ஜனங்கள் இடமில்லாமல் நெருக்கமாக வீதிகளில் நின்றுகொண்டிருந்தார்கள். குடை, சாமரம், ரதம் முதலியவைகள் இல்லாமல், பரிவாரங்கள் முதலிய ராஜ மரியாதைகளின்றி, ராமன் நடந்துபோவதைப் பார்த்து, எல்லோரும் துக்கம் தாங்காமல் பற்பலவிதமாகப் பேச ஆரம்பித்தார்கள். "ஐயோ! நமது ராமன் வெளியில் புறப்படும்பொழுது எண்ணிறந்த சதுரங்க ஸைன்யங்கள் அவருக்குப் பின்னல் போகுமே. இன்று லக்ஷ்மணனையும் ஸீதையையும் தவிர அவருடன் போவதற்கு ஒருவரும் இல்லையே. ராமன் அளவற்ற ஐசுவரியத்தை ஸம்பாதித்து அனுபவித்தவர். தன்னை அண்டினவர்களின் கோரிக்கைகளை குறைவின்றிப் பூர்த்தி செய்கிறவர். பெற்றோர்க்குப் பணிவிடை செய்வது, அவர்களுடைய சொற்படி நடப்பதென்ற தர்மத்தை அனுஷ்டிப்பதில் நோக்கமுள்ளவர்; ஆகையால் தன் பிதா செய்த பிரதிக்ஞையைப் பொய்யாக்க அவருக்கிஷ்டமில்லை. ஆகாசத்தில் ஸஞ்சரிக்கும் பிராணிகளும் ஸீதையை இதுவரையிலும் பார்க்கமுடியுமா? அவளை இன்றைக்கு வீதியில் நிற்கும் ஸகல ஜனங்களும் பார்க்கும்படி ஆயிற்றே! குங்குமம் செம்பஞ்சு சிவப்பு சந்தனம் முதலியவைகளால் அலங்கரிக்கப்பட்ட அவளுடைய தேகத்தில் மழையும் வெயிலும் பனியும் தாக்கிக் காந்தியைக் குறைத்துவிடுமே. இவர்கள் தசரதரிடத்தில் உத்தரவு பெற்றுக் கொள்ளப் போகும்பொழுது அவருக்கு ஸத்வகுணம் மேலிட்டு 'நீங்கள் காட்டிற்குப் போகக்கூடாது' என்று சொல்லத் தவறமாட்டார். தன் நான்கு புத்திரர்களில் மிகவும் அருமையான ராமனைக் காட்டிற்குத் துரத்த மனம்வருமா? யாராயிருக்கட்டும்; தன் புத்திரன் பரம துஷ்டனாயிருக்கட்டும்; அவனை வீட்டிலிருந்து துரத்துவானா? அப்படி இருக்க தன் நடத்தையால் ஸகலப்பிராணிகளுடைய மனத்தையும் கவரும் ராமனைக் காட்டிற்குப் போகச்சொல்லவும் முடியுமா? பிறருக்கு ஹிம்ஸை செய்யாமலிருப்பது, தயை, இந்திரியங்களை வசபடுத்துவது, மனத்தை அடக்குவது, வேத சாஸ்திரங்களை நன்ருகக் கற்பது, அவைகளின் விதிப்படி நடப்பதென்ற ஆறு குணங்களும் புருஷோத்தமனான ராமனை அலங்கரிக்கின்றன.

ஜலத்தாலேயே பிழைக்கும் பதார்த்தங்கள் கருங்கோடையில் ஜலமில்லாவிட்டால் எப்படித் தவிக்குமோ, அப்படி மேற்சொன்ன உத்தம குணங்கள் பொருந்தின ராமனுக்கு அஸௌக்கியத்தை உண்டாக்குவதால் குடிகளெல்லோரும் சொல்லமுடியாத உபத்திரவத்தை அனுபவிக்கிருர்கள். புஷ்பங்களாலும் பழங்களாலும் நிறைந்த மரத்தின் வேரை அறுத்துவிட்டால் அது எப்படிப் பட்டுப் போகுமோ, அப்படி ஜகந்நாதனான ராமனுக்கு உண்டாகும் உபத்திரவத்தால் உலகம் முழுவதும் பீடிக்கப்படுகிறது. மஹா தேஜஸ்வியும் தர்மஸ்வரூபியுமான ராமன் எல்லாப் பிராணிகளுக்கும் வேரைப் போன்றவன். மற்ற ஜீவகோடிகள் புஷ்பங்களும் பழங்களும் இலைகளும் கிளைகளும் ஆவார்கள். ஆகையால் நாமும் மனைவி மக்கள் பந்துக்களுடன் லக்ஷ்மணனைப்போல் ராமன் எங்கே போகிருரோ அங்கே அவருடன் போவோம். நமது தோட்டங்களையும் வயல்களையும் வீடுகளையும் விட்டு ஸுகதுக்கங்களை ஒரேவிதமாக அனுபவிக்கும் தர்மஸ்வரூபியான ராமனைப் பின்தொடர்ந்து செல்வோம். நமது வீடுகளில் புதைத்திருக்கும் தனங்களையும் அவைகளில் சேர்த்துவைத்திருக்கும் தான்யங்களையும் ஆபரணங்களையும் ஆடுமாடுகளையும் நம்முடன் கொண்டுபோய் விடுவோம். அந்த வீடுகள் கொஞ்சம் கொஞ்சமாக இடிந்துவிழுந்துவிடும். ஆஸனங்களும், படுக்கைகளுமில்லாமல் புழுதியாய் மூடப்பட்டு எங்கே பார்த்தாலும் எலிவளைகளும் பாம்புப் புற்றுகளும் நிறைந்திருக்கும். அந்த எலிகளும் பாம்புகளுமே அங்கு ஸஞ்சரிக்கும். குப்பைகளை எடுத்துச் சுத்தம் செய்து, புழுதி அடங்குவதற்காக ஜலம் தெளித்து வைப்பவர்கள் யார் இருப்பார்கள்? ஹோமங்கள் ஜபங்கள் மந்திரங்கள் பலிகள் யாகங்கள் முதலிய வைதிகக் கிரியைகள் நடக்காது. அப்பொழுதே கிருஹதேவதைகள் அவ்விடத்தை விட்டுப் போகுமென்பதில் ஸந்தேகமில்லை. பஞ்சம் கொள்ளைநோய் முதலியவைகளால் தேசம் பீடிக்கப்படும்பொழுது அங்குள்ள ஜனங்கள் கலங்கி அலங்கோலமாக வீடுவாசல்களை விட்டு வேறு தேசங்களுக்கு ஓடிப்போவதுபோல், இந்த நகரத்திலும் எங்கே பார்த்தாலும் உடைந்த பாத்திரங்கள் சிதறிக்கிடக்கட்டும். இவ்விதமான வீடுகளால் நிறைந்த அயோத்யா நகரத்தில் கைகையி க்ஷேமமாக ஆளட்டும். ராமன் எந்த வனத்தில் தங்குகிருரோ அவ்விடமே நகரமாகும்; நாம் விட்டுப்போகும் இந்த நகரமே காடாகும். நாமிருக்கும் வனத்தில் துஷ்டமிருகங்கள் குகைகளைவிட்டு ஓடிப்போகும்; மலைத்தாழ்வரைகளிலிருக்கும் மிருகங்களும்பக்ஷிகளும் நம்மைக்கண்டு பயந்து அங்கே தங்காது. சிங்கங்களும் யானைகளும் நாமிருக்கும் காட்டிலேயே தலைகாட்டாது. அவை நாம் போகும் காட்டைவிட்டு நாம் முன்னிருந்த இந்த நகரத்திற்கு வரட்டும். புல்லைத் தின்று பிழைக்கும் மான் முதலிய ஜந்துக்களும், மாம்ஸத்தைத் தின்று பிழைக்கும் புலி முதலிய மிருகங்களும், பழங்களைத் தின்று பிழைக்கும் காக்கை முதலியவைகளும் குரூரமானபிராணிகளும் பக்ஷிகளும் பயமில்லாமல் இங்கே ஸஞ்சரிக்கும். இந்தத் தேசத்தில் கைகேயி தன் புத்திரனோடும் பந்துக்களோடும் ஸுகமாக வாழட்டும். நாமெல்லோரும் ராமனுடன் ஆனந்தமாகக் காலங்கழிப்போம்" என்று இப்படிப் பலவிதமாக ஜனங்கள் சொல்லிக்கொண்டிருப்பது ராமனுடைய காதில் விழுந்தது. அப்பொழுதும் அவருடைய மனத்தில் யாதொரு கலக்கமுமில்லை. மதம்பிடித்த யானையைப்போல் கம்பீரமாக நடந்துகொண்டு கைலாஸ பர்வதத்தின் சிகரத்தைப் போன்ற தன் பிதாவின் அரண்மனையை நோக்கி வந்தார். அங்கே அநேக வீரர்கள் காவல்காத்துக் கொண்டிருந்தார்கள். அவர்களைத்

தாண்டி உள்ளே போய் ஸுமந்திரர் மிகுந்த துக்கத்துடன் ஓரிடத்தில் உட்காந்திருப்பதைப் பார்த்தார். துயரத்தில் மூழ்கியிருந்த ஸுமந்திரரை எல்லையற்ற ஆனந்த ஸ்வரூபியான ராமன் பார்த்துப் புன்சிரிப்புடன் "ஸுமந்திரரே, நான் தரிசனத்திற்காக காத்துக்கொண்டிருக்கிறேன் என்று மஹாராஜாவிற்குத் தெரியப்படுத்தும்" என்று சொல்லி, பிதாவின் பிரதிக்ஞையை நிறைவேற்றுவதற்காக வனம் போக வேண்டுமென்று நிச்சயித்து, அதற்குமுன் மஹாராஜாவிடத்தில் உத்தரவு பெற்றுக்கொள்வதற்காக ஸீதையோடும் லக்ஷ்மணனோடும் அங்கே நின்றார்.

பிதுர்நிதே3ஶேந து த4ர்மவத்ஸலோ
வநப்ரவேஶே க்ருதபு3த்3தி4 நிஶ்சய: |
ஸ ராக4வ: ப்ரேக்ஷ்ய ஸுமந்த்ர மப்3ரவீத்
நிவேத3யஸ்வாக3மநம் ந்ருபாய மே || (31)

---

## ஸர்க்கம் 34

# ராமன் உத்தரவு கேட்டது

தத: கமலபத்ராக்ஷ: ஶ்யாமோ நிருத3ரோ மஹாந் |
உவாச ராமஸ்தம் ஸூதம் பிதுராக்2யாஹி மாமிதி || (1)

எவ்விதமான விகாரமற்றவரும் தாமரையிதழ்களைப் போன்ற கண்களையுடையவரும் நீருண்ட மேகத்தைப் போன்ற தேக காந்தியுள்ளவரும் சிறுத்த இடை பொருந்தினவருமான ராமனால் ஸுமந்திரர் இப்படிச் சொல்லியனுப்பப்பட்டு, தசரதர் இருக்கும் அந்தப்புரத்தில் புகுந்து மஹாராஜாவைப் பார்த்தார். சக்கரவர்த்தியோ கிரஹண கால சூரியன் போலும், சாம்பல் மூடிய அக்னி போலும் காந்தியிழந்து நீர் வற்றிய தடாகம்போல் சோபையின்றி துக்கத்தைப் பொறுக்க முடியாமல் பெருமூச்சு விட்டுக்கொண்டு கலங்கின மனதுடையவராய், ராமனையே எப்பொழுதும் நினைத்துக்கொண்டிருந்தார். ஸுமந்திரரோ மஹாபுத்திமான்; ஆனாலும் ராமனுக்கு நேர்ந்த கஷ்டத்தால் இந்திரிய ஸ்வாதீனமற்றுக் கைகூப்பிக்கொண்டு முதலில் 'ஜய விஜயீ பவ' என்று வாழ்த்திப் பிறகு, 'இவ்வளவு துக்கத்துடனிருக்கிறவர் என்ன சொல்வாரோ' என்று பயந்தார். அதனால் தழதழத்த குரலுடன் "ஸ்வாமி! தங்களுடைய பிரிய புத்திரரான ராமன் இதோ வாசலில் வந்து, தங்களுடைய தரிசனத்திற்காகக் காத்துக்கொண்டிருக்கிறார். அவர் தங்களைப் பார்க்கும்படி அனுமதி கொடுக்கவேண்டும். ஸூரியன் கிரணங்களால் சூழப்பட்டிருப்பதுபோல் ஸகல உத்தம குணங்களாலும் அலங்கரிக்கப்பட்ட அந்த மஹாப்ராக்கிரமசாலி இப்பொழுது காட்டிற்குப் போகிறார். தாங்கள் அவரைப் பார்க்க வேண்டும்" என்று தெரிவித்தார்.



தசரதர் ஸ்வபாவத்திலேயே தர்மாத்மா; அவருடைய ஹிருதயம் ஸமுத்திரத்தைப்போல் கம்பீரமானது; ஆகாசம் சுத்தமான இடங்களிலும் அசுத்தமான ஸ்தலங்களிலும் பரவியிருந்தாலும் அவைகளின் தோஷம் எப்படி அதை அணுகாதோ அப்படி லோக விஷயங்களில் அவர் கலந்திருந்தாலும் ஒன்றிலும் பற்றில்லாதவர். அந்த ஸமயத்தில் தான் செய்த பிரதிக்ஞையைத் தவறக்கூடாதென்ற தர்மத்தை அனுஸரித்து ஸுமந்திரரைப் பார்த்து "ஸுமந்திர! இங்கே இருக்கும் என் பாரியைகளைச் சீக்கிரமாக வரும்படி சொல். தர்மத்திலேயே நாடின மனமுள்ள என் குழந்தையை நான் அவர்களால் சூழப்பட்டவனாகப் பார்க்க விரும்புகிறேன்" என்று கட்டளையிட்டார்.

உடனே ஸுமந்திரர் அந்தப்புரத்திற்குள் போய் சக்கரவர்த்தியின் பார்யைகளைப் பார்த்து, "மஹாராஜா தங்களை வரும்படி உத்தரவு செய்திருக்கிறார்; சீக்கிரமாக வரவேண்டும்" என்று தெரிவித்தார்.

அப்படியே தசரதருடைய முன்னூற்றைம்பது பார்யைகளும் கௌஸல்யையை முன்னிட்டுக்கொண்டு, ராமன் வனத்திற்குப் போகிறாரென்ற துக்கத்தால் கண்கள் கலங்கித் தங்கள் பர்த்தா இருக்குமிடத்திற்கு வந்து சேர்ந்தார்கள். தன் பாரியைகள் யாவரும் வந்திருப்பதைப் பார்த்துத் தசரதர், "ஸுமந்திர! குழந்தையை அழைத்து வா" என்றார். உடனே ஸுமந்திரர் வெளியில் போய், ராம லக்ஷ்மணர்களையும் ஸீதையையும் அரசனிருக்குமிடத்திற்கு அழைத்துப் போனார். அப்பொழுது தசரதர், தன் குழந்தை கைகூப்பிக்கொண்டு வணக்கத்துடன் வருவதைத் தூரத்திலேயே பார்த்துத் திடீரென்று தாவி எதிர்கொண்டு ஆலிங்கனம் செய்யப் போனார். அவருடைய பார்யைகளும் சோகத்தால் வாடின முகங்களுடன் அவரைப் பின்தொடர்ந்தார்கள். கண்ணீரால் கண்கள் மறைந்து, ராமன் இருக்குமிடம்வரையில் போகமுடியாமல் கொஞ்சம் தூரத்திலேயே கீழே விழுந்து மூர்ச்சையடைந்தார். உடனே ராமனும் லக்ஷ்மணனும் வேகமாகத் தாவி அவரைத்தாங்கிக் கொண்டார்கள். தங்களுடைய பர்த்தா துக்கத்தால் பிரக்ஞையற்றிருப்பதைப் பார்த்து ராஜ ஸ்த்ரீகள் "ஹா ராமா" என்று கதறினார்கள்; அவர்களுடைய அழுகைக் குரல் அவர்களுடைய ஆபரணங்களின் ஒலியுடன் கலந்து அந்தப்புரம் முழுவதும் பரவியது. ராமலக்ஷ்மணர்கள் ஸீதையுடன் சக்கரவர்த்தியைக் கைகளால் தழுவித் தாங்கிப் படுக்கையில் உட்கார வைத்தார்கள்.

பிறகு ஒரு முகூர்த்த நேரத்தில் தசரதருக்கு பிரக்ஞை வந்தது. துக்க ஸமுத்திரத்தில் தத்தளித்துக்கொண்டிருக்கும் தன் பிதாவை ராமன் பார்த்துக் கைகூப்பி மிகவும் வணக்கமாக, "மஹாராஜ! தாங்கள் எனக்கு ஈசுவரன். நான் தண்டகாரண்யத்திற்கு போக

ஸித்தமாக இருக்கிறேன். என்னை அனுக்ரஹம் செய்து உத்தரவு கொடுக்கவேண்டும். லக்ஷ்மணனையும் ஸீதையையும் என்னுடன் வரக்கூடாதென்று உண்மையான காரணங்களைச் சொல்லி எவ்வளவோ தடுத்துப் பார்த்தேன். அவர்கள் ஒரே பிடிவாதமாக என்னுடன் வர விரும்புகிறார்கள். எங்களை விட்டுப் பிரியவேண்டியிருக்கிறதென்று தாங்கள் வருத்தப்பட வேண்டாம். உத்தரவு கொடுத்தனுப்ப வேண்டும்'' என்று பிரார்த்தித்தார்.

அப்பொழுது தசரதர், பயங்கரமான வனத்திற்குப் போகத் தனக்கு உத்தரவு கொடுக்கும்படி கொஞ்சம்கூட வருத்தப்படாமல் பிரார்த்திக்கும் ராமசந்திரமூர்த்தியைப் பார்த்து, "ராமா! நான் கைகேயிக்கு வரங்களைக் கொடுத்து அவளால் ஏமாற்றப்பட்டேன். ஆகையால் நான் செய்வது ஒன்றும் நியாயமல்ல. என் புத்தி என் ஸ்வாதீனத்திலில்லை. இப்பொழுது நீ என்னை விலக்கி இந்த அயோத்யைக்கு அரசனாக இரு'' என்றார்.

மஹா புத்திமானான தசரதர் பல விஷயங்களை மனத்தில் வைத்துக்கொண்டு இப்படிச் சொன்னார். ராமனோ தர்ம ரஹஸ்யத்தை நன்றாய் அறிந்து அதை அனுஷ்டிப்பதில் சிரேஷ்டர். ஆகையால் அவர் தவறுவாரா? மோசம் போவாரா? மிகவும் வணக்கமாகக் கைகூப்பி, "ஸ்வாமி! தாங்கள் இன்னும் அநேகமாயிரம் வருஷங்கள் வரையில் இந்தப் பூமண்டலத்தை ஆண்டுகொண்டிருக்க வேண்டும். நான் காட்டில் வஸிக்கப் போகிறேன். தாங்கள் ஸத்தியம் தவறுவதற்கு நான் காரணமாகக்கூடாது. ஒன்பது வருஷங்கள், பிறகு ஐந்து வருஷங்கள் காட்டில் விளையாட்டாகக் கழிந்துவிடும். பிரதிக்ஞை நிறைவேறியவுடன் திரும்பி வந்து தங்களுடைய பாதங்களைத் தொட்டு நமஸ்காரம் செய்யும் பாக்கியத்தை அடைவேன்'' என்றார்.

தசரதர் ஒரு புறத்தில் தான் செய்த பிரதிக்ஞை என்ற பாசத்தால் கட்டுப்பட்டிருந்தார்; ஒரு பக்கத்தில் அவரைக் கைகேயி "ராமன் இன்றைக்கே காட்டிற்குப் போகவேண்டும்; அவன் இங்கே தங்கும்படி விடக்கூடாது'' என்று ரஹஸ்யமாய் நிர்ப்பந்தித்துக் கொண்டிருந்தாள்; ஒரு பக்கத்தில் தன் பிராணனைக் காட்டிலும் பிரியமான குழந்தையைக் காட்டிற்கு அனுப்பவேண்டியிருக்கிறதே என்ற துக்கத்தைத் தாங்க முடியவில்லை. கண்ணீர் சொரிய அழுகையால் வார்த்தை குளற, "ராமா! போய் வா. இப்படிச் செய்வதால் உனக்கு இந்த லோகத்திலும் பரலோகத்திலும் உத்தமமான க்ஷேமம் கிடைக்கட்டும். நீ போகும் வழியில் உனக்கு மங்களமுண்டாகட்டும். யாதொரு ஜந்துக்களாலும் உனக்குப் பயமில்லாமலிருக்கட்டும். ஆகையால் ஸாவதானமாகப் போய்த் திரும்பிவா. நீ ஸத்தியம் தவறாத ஸ்வபாவத்தை உடையவன்; தர்மத்தை நாடிய மனத்தை உடையவன்; ஒரு காரியத்தைச் செய்ய வேண்டுமென்று நீ நிச்சயித்த பிறகு உன் புத்தியை யாராவது மாற்ற



முடியுமா? ஆனால் இன்று ராத்திரி நீ புறப்பட்டுப் போவதில் எனக்குக் கொஞ்சமேனும் இஷ்டமில்லை; போகவே கூடாது. இன்று இங்கே தங்கியிருந்து என்னையும் உன் தாயையும் பார்த்துக்கொண்டிருந்து, ஸகல ஸௌக்கியங்களையும் அனுபவித்துக் காலையில் உன் இஷ்டப்படி புறப்பட்டுப் போ. உன்னை ஒரு ராத்திரி முழுவதும் பார்க்கும் பாக்கியமாவது எனக்குக் கிடைக்குமல்லவா? குழந்தாய்! நீ செய்யும் காரியத்தை எந்த விதமாக யோசித்துப் பார்த்தாலும் எனக்கு மயிர்க்கூச்சமுண்டாகிறது. எனக்குப் பரலோகத்தில் நல்ல கதி கிடைக்கவேண்டுமென்று, நீ ஸ்வாதீனமாக அனுபவிக்க வேண்டிய ஸகல ஸுகங்களையும் இந்த லோகத்தில் விட்டு, இப்பொழுது மனுஷ்ய ஸஞ்சாரமில்லாத காட்டிற்குப் போகத் துணிந்தாயே. இது நான் இஷ்டப்பட்டுச் செய்த காரியமென்று நீ எண்ணக்கூடாது. ஸத்தியத்தின்மேல் ஆணை வைத்துச் சொல்லுகிறேன். சாம்பல் மூடிய நெருப்பைப்போல் இதோ நிற்கும் கைகேயியைப் பார்த்தாயா? நான் அவளுக்கு ஸ்வாதீனமாயிருக்கிறேனென்ற காரணத்தால் மனத்தில் குரூரமான யோசனைகளை வைத்துக்கொண்டு இப்படி என்னை ஏமாற்றிவிட்டாள். இவள் நமது குலாசாரத்தைக் கெடுக்கவந்தவள். இவள் என்னை மோசம் செய்து வாங்கின வரங்களால் பரதனுக்கு அபிஷேகமாகும்படியும், நீ காட்டிற்குப் போகும்படியும் நேர்ந்திருக்கிறது. இந்தக் கைகேயி உன்னைக் கட்டளையிட்டதை நீ தலையால் தாங்கி அதைநிறைவேற்ற விரும்புகிறாய். உன் உத்தமகுணத்தை நான் மெச்சவும் முடியுமோ? அப்படிச் சொல்லவும் நியாயமில்லை. நீ எனக்கு மூத்த புத்திரன்; நான் நல்ல கதியை அடைய வேண்டுமென்று உன்னையே நம்பியிருக்கிறேன். அந்தப் பொறுப்பு உன்னுடையதல்லவா? உன் பிதா செய்த பிரதிக்ஞையைத் தவறக் கூடாதென்றும் பொய் சொல்லக் கூடாதென்றும் உனக்குக் கவலையிருப்பது ஆச்சரியமல்ல. அப்படிச் செய்வதற்கு உன்னைக் காட்டிலும் அதிகமான உரிமை எவருக்குமில்லை'' என்றார்.

இப்படித் துக்கம் மேலிட்டுப் புத்தி கலங்கி "ஒரு ராத்திரியாவது தங்கிவிட்டுப் போகலாகாதா'' என்று மனமுருகும்படி தங்களுடைய பிதா சொன்ன வார்த்தைகளை ராமலக்ஷ்மணர்கள் கேட்டவுடன், "ஐயோ! ஒரு ராத்திரிப் பொழுதாவது நமது பெற்றோர்களை ஸந்தோஷப் படுத்தும் பாக்கியத்தைச் செய்யாமற் போனோமே'' என்று வருந்தினார்கள். அப்பொழுது ராமன் தசரதரைப் பார்த்து, "ஸ்வாமி! ஸகல போகபோக்கியங்களையும் இங்கே இன்றைக்கு நான் அனுபவித்துக் கொண்டிருந்தால் நாளைக்கு வனத்தில் அந்த ஸௌக்கியங்களை யார் கொடுப்பார்கள்? இங்கிருந்து கொஞ்ச காலம் ஸுகத்தை அனுபவிப்பதைக் காட்டிலும் வனத்திற்குப் போவதே மேலென்று தோன்றுகிறது. இந்தப் பூமியிலுள்ள தேசங்களையும் அவைகளின் பிரஜைகளையும் தன தான்யங்களையும் இதோ விட்

டேன்; அவைகளைப் பரதனுக்குக் கொடுங்கள். நான் காட்டில் தங்கி யிருக்க நிச்சயம் செய்து விட்டேன் ; என் புத்தி மாறாது. எதைக் கேட்டாலும் இல்லையென்று சொல்லாமல் கொடுக்கும் ஸ்வபாவம் தங்களுக்கு வாய்ந்திருக்கிறது. கைகேயியிடத்தில் நியாயமான கார ணத்தால் ஸந்தோஷித்துச் சில வரங்களைக் கொடுத்தீர்கள். அவை களைக் குறைவில்லாமல் நிறைவேற்றுங்கள். சொன்ன சொல்லைத் தவருதவரென்ற கீர்த்தி நிலைக்கட்டும். நான் தங்களுடைய வார்த்தைகளைப் பரிபாலனம் செய்துகொண்டு, வனத்தில் பதி னுன்கு வருஷங்கள் தபஸ்விகளுடன் காலத்தைப் போக்குகிறேன்.

'என்னை விலக்கி நீ அரசனுக ஆள்வாயாக!' என்று என்னைப் பார்த்து என்ன வார்த்தை சொன்னீர்கள்! என்ன பாபம்! இந்த க்ஷணத்திலேயே கொஞ்சம்கூட யோசிக்காமல் இந்த ராஜ்யத்தைப் பரதனுக்குக் கொடுங்கள். ஏதோ ஸுகத்தை அனுபவிக்கவேண்டு மென்ற உத்தேசத்துடன் நான் இந்த ராஜ்யத்தை விரும்பினதாகத் தாங்கள் எண்ணவே கூடாது. தங்களுடைய ஆக்ஞையை நிறை வேற்றுவதாலுண்டாகும் புண்ணியமும் ஸுகமும் அதனுல் கிடைக்குமா? தாங்கள் எதற்காகத் துக்கப்படவேண்டும்? தாங்கள் கண்ணீர் விடுவது தகாது. ஸகல நதிகளுக்கும் அதிபதியான ஸமுத் திர ராஜன் எப்பொழுதாவது கலங்கினுரென்று யாராவது கேட்ட துண்டா? எனக்கு ராஜ்யம் வேண்டாம், ஸுகம் வேண்டாம், ஸீதை வேண்டாம், போக போக்கியங்கள் வேண்டாம், ஸ்வர்க்கம் வேண்டாம், உயிரும் வேண்டாம்; தாங்கள் சொன்ன வார்த்தை பொய்யாகக் கூடாதென்று ஒரு விஷயம் மாத்திரம் நிறைவேற வேண்டும். தாங்கள் எனக்கு ப்ரத்யக்ஷமான தெய்வமல் லவா? நான் ஸம்பாதித்த புண்ணியத்தின் மேலும், நான் பேசும் ஸத்தியத்தின் மேலும் தங்களுக்கெதிரில் ஆணைவைத்துச் சொல்லு கிறேன். இவ்விடத்தில் ஒரு க்ஷணம்கூட என்னுல் இருக்கமுடி யாது. இதைப்பற்றித் தாங்கள் வருத்தப்படக் கூடாது. காட்டில் வஸிப்பதாக நான் செய்த நிச்சயம் ஒரு பொழுதும் மாறாது.

தங்களுடைய கட்டளையை நிறைவேற்றுவதற்கு மாத்திரம் நான் வனம் போகவில்லை. கைகேயியிடத்தில் நான் வனத்திற்குப் போகிறேன் என்று பிரதிக்ஞை செய்திருக்கிறேன் அல்லவா? அதை நிறைவேற்ற வேண்டாமா? வனத்தில் என்ன கஷ்டங்களை நாங் கள் அனுபவிக்கப் போகிருேமோ என்று தங்களுக்கு வருத்தமே வேண்டாம். விசித்திரமான பக்ஷிகளும் மிருகங்களும் நிறைந் திருக்கும் வனத்தில் ஆனந்தமாகக் காலத்தைக் கழிப்போம். பிதா என்ருல் தேவதைகளுக்கும் தெய்வமல்லவா? ஆகையால் தங்க ளைப் பரம தெய்வமாக நினைத்துத் தங்களுடைய ஆக்ஞையை நிறை வேற்ற விரும்புகிறேன். பதினுன்கு வருஷங்களான பிறகு என்னை மறுபடியும் பார்ப்பீர்கள். ஆகையால் இப்பொழுது தாங்கள் வருத்தப்படுவது உசிதமல்ல. தாங்கள் மற்றவர்களைக் கண்ணீர் விட்டு வருத்தப்படக் கூடாதென்று தைரியம் சொல்லித் தடுக்க வேண்டியிருக்க, தாங்களே இப்படித் தவித்தால் மற்றவர்களுக்கு என்ன கதி? இந்த நகரத்தை விட்டேன்; இதைப் பரதனுக்குக் கொடுங்கள். இந்தத் தேசத்தை விட்டேன்; இதைப் பரதனுக்குக் கொடுங்கள். இந்தப் பூமியை விட்டேன்; இதைப் பரதனுக்குக் கொடுங்கள். நான் தங்களுடைய ஆக்ஞையை நிறைவேற்றிக் கொண்டு காட்டில் பல வருஷங்கள்வரையில் வஸிக்க உத்தே சித்து இப்பொழுதே இங்கிருந்து புறப்பட்டுப் போகிறேன். நான் பிரதிக்ஞை முடிகிறவரையில் திரும்பிவரமாட்டேன். மலைகள், நதிகள், நகரங்கள், தனதான்யங்கள், பிரஜைகள் நிறைந்த இப் பூமண்டலத்தை பரதன் க்ஷேமமாக ஆளட்டும். அதில் எனக்குக் கொஞ்சமேனும் ஆசையில்லை. தாங்கள் செய்த பிரதிக்ஞை பொய் யாகாமல் நிறைவேற வேண்டும். ஒப்பற்ற போக போக்கியங்களி லாவது என் ஸௌக்கியத்திலாவது நான் மனம் வைத்தவனல்ல. பெரியோர்களால் மெச்சப்பட்ட பித்ருவாக்ய பரிபாலன மென்ற தர்மத்தை அனுஷ்டிக்கவேண்டுமென்ற ஒரு விஷயத்தில் மாத்திரம் என் மனம் நாடியிருக்கிறது. ஆகையால் என்னைப் பற்றித் தாங்கள் கொஞ்சம்கூட வருத்தப்படக்கூடாது. தாங்கள் செய்த பிரதிக்ஞையைப் பொய்யாகச் செய்துவிட்டு, இந்த ராஜ்யத் தாலாவது, ஸகல போக போக்கியங்களாலாவது, ஸீதையாலாவது, என் உயிராலாவது என்ன பிரயோஜனம்? தாங்கள் செய்த பிரதிக்ஞை பொய்யாகக்கூடாது. வனத்தில் நாங்கள் கஷ்டப் படுவோமென்று தாங்கள் ஸ்வப்னத்திலும் நினைக்கக்கூடாது. பழம் கிழங்குகளைப் புஜிப்பேன்: மலைகளையும் ஆறுகளையும் ஏரிகளை யும் பார்த்து ஆனந்தப்படுவேன்; விசித்திரமான காடுகளில் ஸஞ்ச ரித்துக்கொண்டு ஸுகமாகக் காலத்தைக் கழிப்பேன்'' என்று ஸமாதானம் செய்தார்.



தசரதரும் தன் அருமைக் குழந்தையான ராமனைக் கட்டி யணைத்துத் துக்கத்தால் மனம் தளர்ந்து பிரக்ஞையற்று மூர்ச்சை யடைந்து அசைவில்லாமல் கிடந்தார். ராஜ ஸ்த்ரீகளும் துயரம் மேலிட்டு வாய் விட்டுக்கதறினுர்கள். ஸுமந்திரரும் அந்தக் கஷ்டத் தைத் தாங்க முடியாமல் அழுதுகொண்டு மூர்ச்சையடைந்தார். அந்தப்புரத்தில் எங்கே பார்த்தாலும் 'ஹா, ஹா, ஐயோ, ஐயோ' என்ற சப்தங்களைத் தவிர வேறு ஒன்றும் கேட்கப்படவில்லை. ஆனுல் கல்நெஞ்சுடைய அந்தக் கைகேயி மாத்திரம் வருத்தப்படவில்லை. அவளுடைய முகத்தில் ஸந்தோஷம் பிரகாசித்தது.

தே³வ்யஸ்தத: ஸம்ருருது³: ஸமேதா:
தாம் வர்ஜயித்வா நரதே³வ பத்நீம் |
ருத³ந் ஸுமந்த்ரோபி ஜகா³ம மூர்ச்சா²ம்
ஹாஹாக்ருதம் தத்ர ப³பூ⁴வ ஸர்வம் || (61)

## ஸர்க்கம் 35

# ஸுமந்திரர் கைகேயியைக் கண்டித்தது

ததோ நிர்தூ⁴ய ஸஹஸா ஶிரோ நிர்வஸ்ய சாஸக்ருத் |
பாணிம் பாணௌ விநிஷ்பிஷ்ய த³ந்தாந் கடகடாய்ய ச ‖ (1)

ஸுமந்திரர் அடிக்கடி பெருமூச்சு விட்டுக்கொண்டு, தலையை அசைத்துக்கொண்டு, கோபத்தால் கைகளை ஒன்றோடொன்று அறைந்து, பற்களைக் கடகடவென்று கடித்துக் கண்கள் சிவக்க, தேகத்தின் நிறம் மாற, சொல்லமுடியாத துக்கத்தை அடைந்தார். கைகேயியிடத்தில் தசரதருக்குக் கொஞ்சமாவது பிரீதியில்லை என்று நன்றாக அறிந்துகொண்டு, கூர்மையான பாணங்களுக்கு ஸமமான வார்த்தைகளால் அவளுடைய ரஹஸ்யமான கெட்ட யோசனைகளையும் துர்க்குணங்களையும் வெளிப்படுத்தினார். 'அரசியே! இதோ இருக்கும் தசரத மஹாராஜா சராசரங்கள் அடங்கிய ஸகல ஜகத்திற்கும் அதிபதி;உனக்கும் அதிபதி; மேலும் உன்னைப் பாணிக் கிரஹணம் செய்த பர்த்தா. அவரையே அலக்ஷ்யம் செய்து கைவிட்ட பிறகு நீ எந்தஅக்கிரமத்தைத்தான் செய்யமாட்டாய்? நீ உன் பர்த்தாவைக் கொன்றுவிட்டாய்; காலக்கிரமத்தில் உன் குலத்திலுள்ள எல்லோரையும் கொல்வாய் என்பதில் ஸந்தேகமில்லை. தசரத மஹாராஜா ஸாமான்யரா? மஹேந்திரனை ஜயித்தாலும் ஜயிக்கலாம், இவரை ஜயிக்கமுடியாது. ஹிமயபர்வதத்தை அசைத்தாலும் அசைக்கலாம்; இவரை அசைக்க முடியாது. ஸமுத்திரத்தைக் கலக்கினாலும் கலக்கலாம்; இவருடைய மனத்தைக் கலக்க முடியாது. இப்படிப்பட்ட தசரத சக்கரவர்த்தியை நீ உனது கொடுமையான வார்த்தைகளாலும் செய்கைகளாலும் கதற அடிக்கிறயல்லவா? இந்த ஒரு காரணம் போதாதா? இவர் இக்ஷ்வாகு குலசிகாமணி; மஹாபராக்கிரமசாலி; உன்னைக் காப்பாற்றுகிறவர்; நீ கேட்ட வரங்கள் பயங்கரமாயிருந்தாலும் அவைகளைத் தடையில்லாமல் கொடுத்திருக்கிறார்.

இதெல்லாம் போகட்டும்; உன்னை அக்னி ஸாக்ஷியாகப் பாணிக் கிரஹணம் செய்து உன் பாப புண்ணியங்களுக்குப் பாத்தியப் பட்டவரல்லவா? அப்படிப்பட்டவரை அலக்ஷ்யம் செய்யாதே. அது உன்னை வேருடன் அறுத்துவிடும். பதிவிரதை தன் புத்திரர்களை விலக்கினாலும் விலக்கலாம்; புருஷனுடைய அபிப்பிராயத்தை அனுஸரிக்காமலிருப்பது மஹா பாதகம். அநேக கோடி புத்திரர்களைக் காட்டிலும் பர்த்தா சிறந்தவரல்லவா?

இக்ஷ்வாகு குலத்தில் இதுவரையிலும் தகப்பனுக்குப் பிறகு வயதின் கிரமப்படி மூத்த புத்திரனுக்கே ராஜ்யம் கிடைத்துக் கொண்டு வருகிறது. நீயோ இப்பொழுது சக்கரவர்த்தி உயிரோடிருக்கும்பொழுதே அந்த ராஜதர்மத்தைக் கெடுக்க பார்க்கிறாய்.



உன் புத்திரனை பரதன் அரசனாகட்டும், இந்தப் பூமியை ஆளட்டும்; ராமன் போகுமிடத்திற்கு நாங்களும் போகிறோம். நீ செய்யும் அக்கிரமத்தைப் பார்த்தால் உன் ராஜ்யத்தில் பிராம்மணர் முதலிய ஸாதுக்கள் ஒரு நிமிஷம்கூடத் தங்கமாட்டார்கள். நீ இவ்வளவு அநியாயத்தைச் செய்தும், இந்தப் பொறுமையுள்ள பூமிதேவி வெடித்து, உன்னைப் பாதாளத்தில் அழுத்தவில்லையே என்று எனக்கு ஆச்சரியமாக இருக்கிறது. ராமனைக் காட்டிற்குத் துரத்துவதில் ஒரே பிடிவாதமாக இருக்கும் உனக்கு, அக்னிஜ்வாலைகளோடு கூடிய பயங்கரமான யமதண்டத்தைப்போன்ற வார்த்தைகளால் வஸிஷ்டர் முதலிய மஹாத்மாக்களான பிரம்மரிஷிகள் கேடு செய்யாமலிருப்பது என்ன ஆச்சரியம்!

மதுரமான பழங்களைத் தரும் மாமரத்தைக் கோடாலியால் வேருடன் வெட்டிவிட்டு, வேப்பமரத்திற்கு வெகு சிரமப்பட்டுப் பாத்தி கட்டி, எருப்போட்டுப் பாலூற்றி வளர்ப்பவன் எவ்வளவு புத்திமானாக இருக்கவேண்டும்! அனந்த கல்யாண குணங்களுக்கு இருப்பிடமான ராமசந்திரனை அநியாயமாகக் காட்டிற்குத் துரத்திவிட்டு மஹா துஷ்டையான உன் பிரீதியை ஸம்பாதிப்பதற்கு இவ்வளவு சிரமப்படும் இந்தத் தசரத சக்கரவர்த்தியின் புத்தியைப் பற்றிச் சொல்லவும் வேண்டுமோ?

உன்னைச் சொல்வதில் பிரயோஜனமென்ன? வேப்பமரத்திலிருந்து தேன் ஒழுகுமா? தாயைப் பார்த்தால் பெண்ணைப் பார்க்க வேண்டுமா? உன் தாயிடத்தில் இல்லாத நல்ல குணங்கள் உன்னிடத்தில் எப்படியிருக்கும்? அவளுடைய துர்க்குணங்கள் உன்னை எப்படி விடும்? உன் தாய் மஹா துஷ்டையென்பது லோக பிரஸித்தமல்லவா? முன்பு ஒரு ஸமயத்தில் ஒரு கந்தர்வன் உன் பிதாவிற்கு ஒரு வரத்தைக் கொடுத்தான். அதன் மஹிமையால் எல்லா ஜந்துக்களின் அபிப்பிராயத்தையும் ஸுலபமாய் அவர் அறிய முடியும். ஒருநாள் இரவில் அவர் கட்டிலில் உன் தாயுடன் படுத்துக்கொண்டிருக்கும்பொழுது சுவற்றிலிருந்து அதன் கீழே ஓடிக்கொண்டிருந்த எறும்புகள் பேசினதைக் கேட்டு ஆச்சரியம் தாங்காமல் அடிக்கடி சிரித்தார். அதைக் கேட்டு உன் தாய் அவர் ஏதோ தன்னைப் பார்த்தே கேலியாகச் சிரிக்கிறாரென்று கடும் கோபமடைந்து, "ஓய்! இப்பொழுது எதற்காகச் சிரித்தீர்? உண்மையைச் சொல்லும்" என்றாள். அசுவபதி "சொல்வதில் யாதொரு ஆக்ஷேபமில்லை. ஆனால் அதைச் சொன்ன நிமிஷத்திலேயே என் தலை சுக்கலாக வெடித்து இறப்பேன்" என்றார். அவள் "ஸரி; ஸரி; நீர் சிரித்ததற்குக் காரணம் எனக்குத் தெரியும். அதைச் சொல்லக் கூடாதென்றே இப்படிச் சாக்குப் போக்குச் சொல்லி என்னை ஏமாற்றப் பார்க்கிறீர். நீர் இருந்தாலும் ஸரி, இறந்தாலும் ஸரி; என்னைப் பார்த்துச் சிரித்த காரணத்தை ஒளிக்காமல் இப்பொழுதே சொல்லத்தான் வேண்டும். இல்லாவிட்டால் உமக்கெதிரில் உயிரை விடுவேன்"

என்றாள். இப்படிப் பிடிவாதம் பிடித்தவளைப் பார்த்துக் கேகய ராஜனுக்கு ஒன்றும் தோன்றவில்லை. தனக்கு வரத்தைக் கொடுத்த கந்தர்வனிடத்திற்குப் போய் நடந்த ஸங்கதியைத் தெரிவித்து "ஸ்வாமி! இதற்கு என்ன யோசனை" என்று கேட்டார். அவர், "அவள் சாகட்டும், நாசமாகட்டும். நீர் ஒருநாளும் அவளுடைய வார்த்தைக்குக் கட்டுப்பட்டு அனர்த்தத்தைத் தேடிக்கொள்ள வேண்டாம்" என்றார். பிறகு உன் பிதா கவலை தீர்ந்து, உன் தாயைத் தகுந்தபடி தண்டித்துத் தள்ளிவிட்டுக் குபேரனைப்போல் ஸந்தோஷமாக இருந்தார். நீயும் உன் தாயைப்போல் கெட்ட மார்க்கத்திலேயே திருஷ்டியுள்ளவளாய் மஹா பாபத்தைச் செய்யும்படி சக்கரவர்த்தியை நிர்ப்பந்திக்கிறாய். லோகத்தாருடைய வார்த்தை பொய்யாகுமா? 'தாயைப்போல் பெண்; தகப்பனைப்போல் பிள்ளை' என்ற வசனம் உண்மையே.

பிடிவாதம் பிடிக்காதே; உன் பர்த்தா சொல்வதைக் கேள். நாளைக்கு ராமனுக்கு அபிஷேகம் நடக்கட்டும். லோகத்திலுள்ள எல்லா பிராணிகளிடத்திலும் தயை வைத்து அவைகளைக் காப்பாற்று. மஹா பாபிகளின் வார்த்தையைக் கேட்டு, மூத்தவனிருக்கும்பொழுது அவனைத் தள்ளிவிட்டு இளையவனுக்குப் பட்டம் கட்டுவதென்ற ராஜ தர்ம விரோதமான காரியத்தைச் செய்யும்படி, மஹேந்திரனைப் போன்றவரும் ஸகல பிராணிகளை ரக்ஷிக்கிறவருமான உன் பர்த்தாவை உபத்திரவம் செய்யாதே. 'அப்படியானால் எனக்கு அவர் கொடுத்த வரங்களுக்கு என்ன கதி' என்றால், தசரத சக்கரவர்த்தியோ புண்ணியாத்மா; அளவற்ற ஐசுவரியமுடையவர்; மஹா பராக்கிரமசாலி; இந்தப் பூமண்டலத்திற்கதிபதி; எல்லையற்ற கருணை பொருந்தியவர். ஒன்றைக் கொடுப்பதாக பிரதிக்ஞை செய்துவிட்டுத் தவறுவாரா? ஆகையால் அவைகளுக்குப் பதிலாக உனக்குப் போதுமான வரையில் தங்கம், வெள்ளி, ரத்தினங்கள், ஆபரணங்கள், வாஹனங்கள், வேலைக்காரர்கள், தான்யங்கள், தேசங்கள் இன்னும் என்ன வேண்டுமோ அவை யாவற்றையும் உனக்குக் கொடுக்க ஸித்தமாக இருக்கிறார். ஆகையால் ராமனுக்கு நாளைக்கே அபிஷேகம் செய்யும்படி அனுமதிகொடு. அவர் சக்கரவர்த்திக்கு மூத்த புத்திரர்; ராஜ்ய வியவஹாரங்களில் நிகரற்ற ஸாமர்த்தியமுள்ளவர்; நன்னடத்தையுள்ளவர்; துஷ்டர்களைச் சிக்ஷித்து ஸாதுக்களை ரக்ஷிப்பதால் க்ஷத்திரிய தர்மத்தைப் பரிபாலனம் செய்கிறவர். ஸகலப் பிராணிகளுக்கும் யாதொரு அசௌகரியமும் நேராமல் தன்னுயிரைப் போல் காப்பாற்றுகிறவர். மஹா பராக்கிரமசாலி. இந்த அயோத்யை நீ அவருக்குக் கொடுத்த ராஜ்யமாக இருக்கட்டும்.

அப்படியில்லாமல் வயது சென்ற தகப்பனை விட்டு ராமன் வனத்திற்குப் போனால் லோகத்தில் மிகுந்த அபகீர்த்தி உனக்கு நேருமென்று தெரியாதா? ராமனைத் தவிர வேறொருவர் இந்த



ராஜ்யத்தில் அரசனாக இருக்க முடியுமா? அப்படியிருந்தால் எவனாவது இங்கே ஒரு நிமிஷமாவது தங்குவானா? ஆகையால் வீணாகக் கவலைப்படாதே. ராமனே இந்த ராஜ்யத்தை ஆளட்டும். அவருக்குப் பட்டாபிஷேகமானால் தசரதர் தன் முன்னோர்களின் ஆசாரத்தை அனுஸரித்துத் தவம் செய்ய வனத்திற்குப் போவார்' என்று இப்படி ஸுமந்திரர் தசரதருக்கெதிரில் நயமாயும் கடுமையாயும் பலவிதமாகக் கைகேயியின் மனத்தைத் திருப்ப எவ்வளவோ முயற்சி செய்தார். ஆனால் அவர் எவ்வளவுதான் தர்மோபதேசம் செய்யட்டும்; எவ்வளவுதான் தூஷிக்கட்டும்; எவ்வளவுதான் பிரார்த்திக்கட்டும்; அவளுக்குக் கொஞ்சம்கூட வருத்தமுண்டாகவில்லை. அவளுடைய நிச்சயம் மாறவுமில்லை. அவளுடைய முகத்தில் கோபக்குறி தணியவுமில்லை.

நைவ ஸா க்ஷுப்$^{4}$யதே தே$^{3}$வீ ந ச ஸ்ம பரிதூ$^{4}$யதே |
நசாஸ்யா முக$^{2}$வர்ணஸ்ய லக்ஷ்யதே விக்ரியா தத$^{3}$ா ‖ (35)

---

## ஸர்க்கம் 36

## ஸித்தார்த்தர் கைகேயியைக் கண்டித்தது

---

தத: ஸுமந்த்ர மைக்ஷ்வாக: பீடி$^{3}$தோத்ர ப்ரதிஜ்ஞயா |
ஸப$^{4}$ாஷ்பமதிநிர்வஸ்ய ஜக$^{3}$ாதை$^{3}$நம் புந: புந: ‖ (1)

**கைகேயி** ஸுமந்திரருடைய வார்த்தையை அலக்ஷ்யம் செய்ததைக் கண்டு, "ஐயோ! அறியாமல் முன்பு வரங்களைக் கொடுத்து இப்பொழுது கஷ்டப்படுகிறேனே" என்று துக்கித்துக் கண்களில் நீர் பெருகப் பெருமூச்சு விட்டுக்கொண்டு "ஸுமந்திரரே! நமது சதுரங்க ஸைன்யத்தை ராமனுக்குக் காவலாகப் போகும்படி ஸித்தம் செய்யும். ரூபத்தாலும், நடத்தையாலும், பேச்சாலும் பிறருடைய மனத்தை அபஹரிக்கும் சக்தியுள்ள வேசிகளும் கோடீசுவரர்களான வியாபாரிகளும் ஸைன்யத்துடன் போகட்டும். ராமனிருக்குமிடத்தில் ஸகல பதார்த்தங்களும் நிறைந்த கடைவீதிகள் ஏற்பட வேண்டும். ராமனை ஆசிரயித்துக்கொண்டிருப்பவர்களும், எவருடைய வீரியத்தைப் பரீக்ஷித்த பிறகு ராமன் பழகுகிறானோ அவர்களெல்லோரும் ஸைன்யத்துடன் அனுப்பப்படட்டும். அந்தச் சூரர்களுக்கு வேண்டியவரையில் ஐசுவர்யம் கொடுக்கப்படட்டும், முக்கியமான ஆயுதங்களும் எண்ணெய், நெய் முதலிய பதார்த்தங்கள் நிறைந்த பல வண்டிகளும், காடுகளில் வழிகாட்டுவதற்கு வேடர்களும் ராமனுடன் போகட்டும். ஸிம்ஹம், புலி, யானை முதலிய துஷ்ட மிருகங்களை வேட்டையாடிக்கொண்டு, காட்டுத் தேனைக் குடித்துக்கொண்டு, அநேக புண்ணிய தீர்த்தங்களில் ஸ்நானம் செய்துகொண்டு, ராமன் இந்த ராஜ்யத்தையே நினைக்காமலிருக்கட்டும். என் தான்யக் களஞ்சிய

மும், பொக்கிஷமும் ராமன் போகுமிடத்திற்கு அனுப்பப்படட்டும். மனுஷ்ய ஸஞ்சாரமில்லாத விடத்தில் அவன் என்ன செய்வான்? புண்ணிய ஸ்தலங்களில் யாக யக்ஞங்களைச் செய்துகொண்டு, வேண்டியவரையில் தக்ஷிணைகளைக் கொடுத்துக்கொண்டு ரிஷிகளுடன் ராமன் ஸுகமாகக் காலம் கழிக்கட்டும். மஹா பராக்கிரமசாலியான பரதன், அயோத்யையில் சிறப்புடன் ஆளட்டும்; நான் இப்பொழுது சொன்ன ஏற்பாடுகளுடன் என் குழந்தை ராமன் காட்டிற்குப் புறப்படட்டும்'' என்றார்.

அதைக்கேட்டுக் கைகேயிக்குப் பெரும் பயம் பிடித்தது; பேச முடியவில்லை, முகம் வாடிற்று; மிகுந்த வருத்தத்துடன் தசரதரைப் பார்த்து, "ஓ ஸாது புருஷரே! உத்தமமான ஸுராபானத்தின் ஸாரத்தைக் குடித்துவிட்டு அடிவண்டலைப் பிறருக்குக் கொடுப்பது போல், இந்த ராஜ்யத்திலுள்ள குடிகள் யாவரையும் தன தான்யங்களையும் ஐசுவரியங்களையும் ஸைன்யங்களையும் ராமனுடன் அனுப்பிவிட்டு, சூன்யமான தேசத்தையா பரதனுக்குக் கொடுக்கப் போகிறீர்? இந்தத் தானம் வேண்டாம்'' என்று ஸர்ப்பத்தைப்போல் சீறினாள்.

இப்படி வெட்கத்தை முற்றிலும் துறந்து, ஒருவரையும் லக்ஷ்யம் செய்யாமல் மிகவும் குரூரமான வார்த்தைகளைக் கைகேயி சொல்லத் தசரதர், "துஷ்டே! தாங்கமுடியாத பாரத்தை ஏற்றி அதை இழுக்கமுடியாமல் எருது கஷ்டப்படும்பொழுது எவனாவது அதைக் குத்துவானா? நான் உனக்கு வரங்களைக் கொடுத்து அதற்கு பிரயோஜனமாகப் பரதனுக்கு அபிஷேகம் செய்வது, ராமனைக் காட்டிற்கனுப்புவதென்ற தாங்கமுடியாத பாரத்தைச் சுமற்றிக் கொண்டேன். உன் கட்டளைப்படி ராமனைக் காட்டிற்கு அனுப்பிக்கொண்டிருக்கிறேனே; மறுபடியும் இப்படி ஹிம்ஸை செய்கிறாயே'' என்றார்.

கைகேயி "இப்பொழுது நான் உமக்குச் செய்கிற உபத்திரவம் இன்னதென்று எனக்குத் தெரியவில்லை. ஓய்! நீர் முன்னே கொடுத்த வரங்களைப் பூர்த்தி செய்யும்படி கேட்கிறேனா, அல்லது புதிதாக எதையாவது கேட்கிறேனா? சொல்லும்'' என்றாள். அதற்குத் தசரதர் 'அடீ, அல்ப ஸ்வபாவமுள்ளவளே! நீ வரங்களைக் கேட்கும் பொழுதே இதெல்லாம் உனக்கேன் தோன்றவில்லை? ஸேனையை அனுப்பக்கூடாது, திரவியத்தை அனுப்பக்கூடாதென்று உனக்கு வேண்டிய விஷயங்களை அப்பொழுதே ஏன் பிரார்த்திக்கவில்லை? அந்த ஸமயத்தில் மறந்துவிட்டு, இப்பொழுது குறுக்கே விழுந்து தடுத்தால் ஆகவேண்டிய காரியம் நிற்குமா?'' என்றார்.

தசரதர் இப்படி மஹாகோபத்துடன் சொல்வதைக்கேட்டு கைகேயிக்கும் அடங்காத கோபமுண்டாயிற்று. "ஓய்! என்னிடத்தில் வீண் பெருமை பேசிக்கொள்ளுகிறீரோ? உமது குலவிருத்தாந்தத்தை நான் அறியேனோ? உமது வம்சத்திலேயே ஸகரனென்ற ஒரு அரசன், தன் மூத்த புத்திரனை அஸமஞ்ஜனை ராஜ்யத்திலிருந்து தனியாகத் துரத்தவில்லையோ? அப்படியே ராமனையும் துரத்துவதற்குத் தடையென்ன? இது உங்கள் குலாசாரந்தானே. நான் முன்பே கேட்காமலிருந்தாலென்ன? இப்பொழுதுதான் ஏன் அப்படிச் செய்யக்கூடாது'' என்றாள். தசரதர் "ஐயோ! இப்படியும் ஒரு ஸ்த்ரீ உண்டா? அநியாயமாய் என்னை வஞ்சித்து பிரதிக்ஞை செய்யச்சொல்லி, என்னை மஹா பாபத்திற்குள்ளாக்கி, அதுவும் போதாமல் தான் முன்னே கேட்காத விஷயங்களையெல்லாம் இப்பொழுது கொடுக்கும்படி நிர்பந்திக்கிறாளே'' என்று நினைத்து, "சீ, சீ! வாயைமூடு'' என்றார். அங்கிருந்த அனைவரும் வெட்கத்தால் தலை குனிந்தார்கள். ஆனால் கைகேயி மாத்திரம் அதைக் கொஞ்சம்கூட லக்ஷ்யம் செய்யவில்லை.

அங்கிருந்தவர்களுக்குள் ஸித்தார்த்தரென்ற ஒரு பிரதானி, கைகேயியின் வார்த்தையைக் கேட்டு மிகவும் கோபம் கொண்டார். அவர் வயது சென்றவர்; கபடமற்றவர்; தசரதரால் விசேஷ மரியாதை பெற்றவர். இப்படிக் கைகேயி சொல்லும் அபவாதத்தைக்கேட்டுப் பொறுக்காமல், "அஸமஞ்சனென்ற ராஜபுத்திரன் தெருவில் விளையாடிக்கொண்டிருக்கும் பிள்ளைகளைப் பிடித்து, ஸரயூ நதியில் தள்ளி, அவர்கள் இறக்கும்பொழுது படும் அவஸ்த்தையைப் பார்த்து ஸந்தோஷப்பட்டுக் கொண்டிருந்தான். பட்டணத்து ஜனங்களெல்லோரும் அவனிடத்தில் கோபம்கொண்டு அரசனிடத்திற்குப் போய் "ஸ்வாமி! இந்த ராஜ்யம் க்ஷேமமாக இருக்கவேண்டுமென்று விரும்புகிறீரா? அப்படியானால் இரண்டில் ஒன்று செய்யும். உமது புத்திரனை அஸமஞ்சனை இந்த தேசத்திலிருந்து துரத்திவிடும். இல்லாவிட்டால் நாங்கள் இங்கிருந்து வேறு தேசத்திற்குப் போகிறோம். எங்களுக்கு உத்தரவு கொடும்'' என்றார்கள். அதைக்கேட்டு ஸகரன் 'ஏன் இப்படி பயப்படுகிறீர்கள்? என்ன விசேஷம் நடந்தது?'' என்றான். ஜனங்கள் "உமது புத்திரனுக்குப் பைத்தியம் பிடித்திருக்கிறது. தெருவில் விளையாடும் எங்களுடைய குழந்தைகளைப் பிடித்து ஸரயூ நதியில் தள்ளி, அவர்கள் முழுகும்பொழுது குமிழியிடும் சப்தத்தைக் கேட்டுக் கைகொட்டிச் சிரிக்கிறான்'' என்றார்கள். அவர்களுடைய இஷ்டப்படி ஸகரனும் தன் குமாரனை அஸமஞ்சனையும் அவனுடைய பாரியையும் பரிவாரங்களையும் வண்டிகளிலேற்றி, அவன் உயிரோடிருக்கும்வரையில் அந்த ராஜ்யத்திற்குள் வரக்கூடாதென்று கண்டிப்பாக உத்தரவு செய்து துரத்திவிட்டான். அவனும் தான் செய்த காரியத்திற்குப் பிராயச்சித்தமாக மண்வெட்டி கோடாலி கூடை முதலியவைகளுடன் காடுகளிலும் மலைகளிலும் திரிந்துகொண்டு காலத்தைக் கழித்தான். அப்படி ராமன் என்ன பாபத்தைச் செய்தான்? எதற்காக அவனைக் காட்டிற்குத் துரத்த வேண்டும்? எங்களுக்குத் தெரிந்தவரையில் ராமனிடத்தில் யாதொரு தோஷமும் இல்லை. சந்திரனிடத்தில் கல்மஷத்தைக் கண்டுபிடித்தாலும் பிடிக்கலாம்; ராமனிடத்தில் தோஷத்தைக் கண்டுபிடிப்பது

அஸாத்தியம். அதிருக்கட்டும்; ஒருவேளை எங்களுக்குத் தெரியாமல் ராமனிடத்தில் ஏதாவது தோஷமிருக்கலாம். அப்படியிருந்தால் சொல். இப்பொழுதே அவனைக் காட்டிற்குத் துரத்திவிடுவோம். ஒருவன் பிறருக்கு யாதொரு கெடுதியும் செய்யாமல் ஸாதுக்களின் மார்கத்திலேயே நடந்துகொண்டிருக்கும்பொழுது அவனைக் கைவிடுவது பெரிய ஆபத்தை உண்டாக்கும். அப்படிச் செய்வது தர்மத்திற்கு நேர்விரோதமல்லவா? தேவேந்திரனைப்போல் பலமும் பராக்கிரமும் தேஜஸும் ஒருவனுக்குப் பொருந்தியிருந்தாலும், இப்படிப்பட்ட அக்கிரமத்தைச் செய்தால் சாம்பலாக எரிக்கப்படுவான். ஆகையால், ராமனுடைய அபிஷேகத்தைத் தடுக்காதே; லோகத்திலுள்ளவர்கள் உன்னை நிந்திப்பதற்கு இடம் கொடுக்கலாமா'' என்று சொல்லி வெகு சாதுரியமாக அவளுடைய பிடிவாதத்தை மாற்றப் பார்த்தார்.

ஸித்தார்த்தருடைய வார்த்தையைக் கேட்டுத் தசரதர், இந்த நல்ல புத்தியைக் கைகேயி ஒருபொழுதும் அனுஸரிக்கமாட்டாளென்று நிச்சயித்துத் துக்கம் மேலிட்டு, குரல் ஒடுங்கி "அடீ பாபஜந்துவே! ஸித்தார்த்தருடைய வார்த்தைகள் உன் காதில் ஏறுமா? எனக்கு ஹிதயான விஷயம் இன்னதென்று உனக்குத் தெரியவில்லையே. அது போகட்டும். உனக்காவது எது ஹிதமென்று தெரிந்துகொண்டாயா? நீசமான நடத்தையையும் யோசனையையும் தவிர உனக்கென்ன தெரியும்? ஸாதுக்களுடைய நடத்தைக்கும் உனக்கும் எவ்வளவோ தூரம். நான் இந்த ராஜ்யத்தையும் ஸகல ஐசுவரியத்தையும் போகபோக்கியங்களையும் விட்டு, ராமனுடன் போகிறேன். நீயும் பரதசக்கரவர்த்தியும் இந்த ராஜ்யத்தில் உங்களுடைய இஷ்டப்படி வெகு காலம் ஸௌக்கியமாக ஆண்டு கொண்டிருங்கள்'' என்றார்.

அநுவ்ரஜிஷ்யாம்யஹமத்$^{3}$ய ராமம்
ராஜ்யம் பரித்யஜ்ய ஸுக$^{2}$ம் த$^{4}$நம் ச |
ஸஹைவ ராஜ்ஞா ப$^{4}$ரதேந ச த்வம்
யதா$^{2}$ஸுக$^{2}$ம் பு$^{4}$ங்க்ஷ்வ சிராய ராஜ்யம் || (33)

---

## ஸர்க்கம் 37

## வஸிஷ்டர் கைகேயியைக் கண்டித்தது

---

மஹாமாத்ர வச: ஶ்ருத்வா ராமோ த$^{3}$ஶரத$^{2}$ம் தத$^{3}$ா |
அப்$^{4}$ய ப$^{4}$ாஷத வாக்யம் து விநயஜ்ஞோ விநீதவத் || (1)

**ஸி**த்தார்த்தருடைய சொல்லைக் கேட்டு ராமன், தசரதரைப் பார்த்து மிகவும் வணக்கமாய் "ஸ்வாமி! நான் போகபோக்கியங்களை விட்டேன்; அவைகளில் எனக்கு ஆசை இல்லை; காட்டில் வஸிக்க வேண்டியவன்;. எனக்கு ஸைன்யத்தாலும் ஐசுவரியத்தாலும்



என்ன பிரயோஜனம்? உத்தமமான யானையை ஒருவனுக்குத் தானம் கொடுத்த பிறகு அதைக் கட்டும் கயிற்றில் ஒருவன் ஆசை வைப்பானா? யானையே போகும்பொழுது கயிறு ஒரு பொருட்டா? தாங்கள் எனக்குக் கொடுக்கிறதாக உத்தேசித்த பொருள்களை யாவையும் நான் பரதனுக்குக் கொடுத்துவிட்டேன். நான் உடுக்க வேண்டிய மரவுரியை வேலைக்காரர்கள் கொண்டுவரட்டும். பதினான்கு வருஷங்கள் வரையில் காட்டில் வஸிக்க வேண்டுமல்லவா? கூடை மண்வெட்டி கோடாலி முதலியவைகளையும் கொண்டு வரட்டும்'' என்றார்.

உடனே கைகேயி கொஞ்சமேனும் வெட்கமில்லாமல் தானே மரவுரியைக் கொண்டுவந்து "இதை உடுத்துக்கொள்'' என்றாள். ராமன் அவைகளைக் கைகேயி இடத்திலிருந்து வாங்கி, தான் உடுத்திருந்த விலையுயர்ந்த வஸ்திரங்களை அவிழ்த்துவிட்டு முனிவர்கள் தரிக்கும் மரவுரியை உடுத்தார். லக்ஷ்மணனும் அப்படியே செய்தார். இதை யாவற்றையும் தசரதர் பார்த்துக்கொண்டிருந்தார். பிறகு ஸீதை தனக்காகக் கொண்டுவரப்பட்ட மரவுரியைப் பார்த்து, விலையற்ற ஆடைகளைத் தரித்து வழக்கமுள்ளவளாகையால் வேடனுடைய வலையைக் கண்டு நடுங்கும் மானைப்போல் நடுங்கினாள்; அவைகளை உடுக்கத் தெரியாமல் கையில் வைத்துக்கொண்டு தயங்கினாள். மஹாபதிவிரதையாகையால் தன்பர்த்தா அனுஷ்டிக்கும் தர்மத்தைத் தானும் அனுஷ்டிக்க விரும்பி, கண்களில் நீர் ததும்ப, கந்தர்வ ராஜனைப்போல் அழகு பொருந்தின ராமனைப் பார்த்து "நாதா! வனத்தில் வஸிக்கும் முனிவர்கள் மரவுரிகளை எப்படி உடுத்துக் கொள்ளுகிறார்களோ தெரியவில்லையே!'' என்று ஒரு மரவுரியைக் கழுத்தில் வைத்துக் கட்டப்போய்க் கட்டத்தெரியாமல் வெட்கமடைந்து நின்றாள். உடனே ராமன் அவளுடைய கையிலிருந்து அந்த மரவுரியை வாங்கி அவள் உடுத்தியிருந்த வெண்பட்டின் மேல் அதைக் கட்டினார்.

தசரத சக்ரவர்த்தியின் குமாரனான ராமன், ஜனகமஹாராஜாவின் குமாரியான ஸீதைக்குத் தன் கைகளால் தபஸ்விகள் தரிக்கும் மரிவுரியைக் கட்டுவதைப் பார்த்து, அந்தப்புரத்திலிருந்த ஸ்த்ரீகளெல்லோரும், இந்தக் கோரத்தைப் பார்க்கும்படியும் நேர்ந்ததல்லவா என்று கதறி அழுதார்கள். "ராம! உன் பிதா இவளை வனத்திற்குப் போகும்படி கட்டளையிடவுமில்லை; இந்த கைகேயி அப்படி வரம் கேட்கவுமில்லை .ஆகையால் நீ பிதிருவாக்கிய பரிபாலனம் செய்து வனத்திலிருந்து திரும்பி வரும் வரையில் இவளையாவது நாங்கள் பார்த்துக்கொண்டிருக்கிறோம். குழந்தை லக்ஷ்மணன் உன்னுடன் வனத்திற்குப் போகட்டும். நிர்மானுஷ்யமான காட்டில் தபஸ்விகளைப்போல் இவள் வஸிக்கத் தகுந்தவளா? தர்மஸ்வரூபியே நீ இங்கேயிருந்து எங்களுடைய கண்களுக்கும் மனத்திற்கும் ஆனந்தத்தைக் கொடுக்க இஷ்டப்படாவிட்டாலும்

ஸீதையாவது இங்கிருக்கட்டும். எங்களுடைய பிரார்த்தனையை எப்படியாவது நிறைவேற்ற வேண்டும்" என்று கெஞ்சினர்கள். ஆனால் ஸீதை அதைக் கேட்டு, தன் பர்த்தாவைவிட்டுத் தான் தனியாக இருக்க ஸம்மதிக்காமல் தனக்கு மரவுரியைக் கட்டிவிடும்படி ராமனை வேண்டினாள். ராமனும் அப்படியே செய்தார்.

அப்பொழுது இக்ஷ்வாகு குலத்திற்குப் பரம்பரையாக குருவான வஸிஷ்ட பகவான், ஸீதை மரவுரியைத் தரித்ததைப் பார்த்து, அவளைத் தடுத்து, "அடி கைகேயி! மரியாதையை மீறி நடக்கத் துணிந்தாயல்லவா? துர்ப்புத்தி பிடித்தவளே! பிறந்த குலத்திற்கும் புகுந்த குலத்திற்கும் மிருத்யுவைப் போன்றவளே! சக்கரவர்த்தியை வஞ்சித்தது போதாதா? வரவரக் கட்டுக்காவலில்லாமல் உனக்குத் தோன்றியபடியெல்லாம் நடக்க ஆரம்பித்துவிட்டாய். நன்னடத்தை இன்னதென்று அறியாதவளே! ஸீதை காட்டிற்குப் போகக்கூடாது. ராமனுக்கு நியாயமாகக் கிடைக்க வேண்டிய ஸிம்ஹாஸனத்தில் அவள் இருந்து ராஜ்யத்தை ஆளட்டும். பத்தினியென்பது கணவனில் பாதியென்ற வேதவாக்கியம் கிருஹஸ்தர்களுக்காக வழங்குகிறதல்லவா? ஆகையால் ராமனைச் சேரவேண்டிய இந்தப் பூமியை இவளே ஆளவேண்டியது. ராஜ்யத்தைப் பரதனே ஆளவேண்டு மென்பதே கைகேயி பெற்ற வரமென்பதை ஏன் மறந்தார்? அப்படி இஷ்டப்படாமல் ஸீதை ராமனுடன் வனம் போக விரும்பினால் நாமும் அவர்களுடன் காட்டிற்குப்போவோம் இந்த ராஜ்யத்தின் அதிகாரிகளும் மற்ற ஜனங்களும் குடும்பங்களுடன் தாங்கள் ஸம்பாதித்த ஐசுவரியங்களையும் ஆடு மாடுகளையும் குதிரைகளையும் வேலைக்காரர்களையும் வாஹனங்களையும் எடுத்துக்கொண்டு ராகவன் போகுமிடத்திற்குப் போகட்டும். பரதனும் சத்ருக்னனும் மரவுரியைத் தரித்துக்கொண்டு தங்களுடைய தமயனுக்கு ஊழியம் செய்வார்களே யல்லாது இங்கே இருக்கமாட்டார்கள். அப்பொழுது இந்த ராஜ்யம் ஜனங்களற்றுச் சூன்யமாக இருக்கும். உன்னையும் மரங்களையும் தவிர வேறொன்றுமிராது. நீ கெட்ட நடத்தையுள்ளவள்; குடிகளை நாசம் செய்யப் புகுந்தவள். ராமனில்லாத ராஜ்யமும் ராஜ்யமாகுமா? ராமன் வஸிக்குமிடமே அயோத்யை.

பரதன் தசரதருக்குப் பிறந்தவனானால் அவரைப்போன்ற நடத்தையுள்ளவனாக இருப்பான். பிரீதியுடன் கொடுக்கப்படாத இந்த ராஜ்யத்தை அரசாள ஸம்மதிப்பானா? உன்னைத் தாயென்று அழைக்க மனம் வருமா? அவனுடைய பிதாவான உன் பர்த்தாவைக் கொன்ற உன்னுடன் வஸிக்கத் துணிவானா? மூத்தவனிருக்கையில் இளையவன் பட்டம் கட்டிக் கொள்ளக்கூடாதென்ற ராஜதர்மத்தை நன்றாக அறிந்த அவன், உன்னிடத்தில் ராஜ்யத்தைப் பெற்றுக்கொள்வானா? நீ பூமியிலிருந்து ஆகாசத்தில் தாவிக் குதித்தாலும் அவன் தர்ம விரோதமாக நடக்கமாட்டான். உன் புத்திர



னுக்கு எல்லையற்ற ஸுகத்தையும் லாபத்தையும் ஸம்பாதித்து வைக்க வேண்டுமென்ற எண்ணத்தாலல்லவா இவ்வளவு அக்கிரமங்களைச் செய்கிறாய்? பார். நீ செய்தது உன் புத்திரனுக்கு ஹிதமில்லையென்று உனக்கே தெரியும். ராமன் காட்டிற்குப் போகும்பொழுது எந்தப் பிராணியாவது அவனுடன் போகாமலிருக்குமா? பார். கைகேயி! பசுக்கள் மிருகங்கள் பக்ஷிகள் மரங்கள் யாவும் ராமன் வனத்திற்குப் போகும்பொழுது அவனையே பார்த்துக்கொண்டிருக்கும். இந்த ஆச்சரியத்தை நீயும் இன்று பார்ப்பாய். ஆகையால் ஸீதையின் கையிலிருந்து இந்த மரவுரியை வாங்கி எறிந்துவிட்டு, உத்தமமான வஸ்திரங்களையும் ஆபரணங்களையும் உன் நாட்டுப் பெண்ணுக்குக் கொடு. இவள் மரவுரியைத் தரிக்கவேண்டுமென்று என்ன விதி? கேகயராஜனுடைய புத்திரியே! ராமன் வனத்திற்குப் போகவேண்டுமென்று மாத்திரமல்லவா நீ வரம் கேட்டாய். ஸீதை எப்பொழுதும்போல் ஸகல அலங்காரங்களுடனும் உத்தமமான வாஹனங்களுடன் பரிசாரகர்களோடும் நேர்த்தியான ஆடைகளோடும் இன்னும் வேண்டிய மற்றப் பொருள்களோடும் ராமனுடன் வனத்திற்குப் போகட்டும்" என்று எல்லையற்ற மஹிமையுள்ள வஸிஷ்ட பகவான் சொன்னார். அப்பொழுதும் ஸீதை மரவுரியைத் தரிக்காமலிருக்க இஷ்டப்படவில்லை. தன் பர்த்தாவைப்போல் தானும் தபஸ்விகளுடைய வேஷத்துடன் காட்டில் வஸிக்கவேண்டுமென்பது அவளுடைய கருத்து.

தஸ்மிம்ஸ் ததா2 ஜல்பதி விப்ரமுக்2யே
கு3ரௌ ந்ருபஸ்யாப்ரதிம ப்ரபா4வே |
நைவ ஸ்ம ஸீதா விநிவ்ருத்த பா4வா
ப்ரியஸ்ய ப4ர்த்து: ப்ரதிகார காமா ‖ (67)

---

## ஸர்க்கம் 38

## தசரதர் கைகேயியைக் கண்டித்தது

தஸ்யாம் சீரம் வஸாநாயாம் நாத2வத்யா மநாத2வத் |
ப்ரசுக்ரோஶ ஜந: ஸர்வோ தி4க் த்வாம் த3ஶரத2ம் த்விதி ‖ (1)

லோகநாதனை ராமனை நாதனாக அடைந்தும் ஸீதை அனாதையைப்போல் மரவுரியை உடுப்பதைக் கண்டு அங்கிருந்த ஜனங்கள் அனைவரும், "சீ சீ, என்ன காரியம் செய்தீர்" என்று தசரதரை நிந்தித்தார்கள். அவரும் அந்தச் சப்தத்தைக் கேட்டார். அதுவரையில் குடிகளின் மனமும் கோணாமல் ஆண்டு வந்தவர்; அவர்களிடத்திலிருந்து ஸ்தோத்திரத்தைத் தவிர வேறொன்றையும் கேட்டிராதவர். ஆகையால், "இன்னும் நான் எதற்காகப் பிழைத்திருக்க வேண்டும்? தர்மத்திலாவது கீர்த்தியிலாவது இனிமேல் எனக்குக்

கொஞ்சம்கூட ஆசையில்லை. இப்படிப்பட்ட அநியாயத்திற்கு ஆளாகி, லோகத்தாரால் நிந்திக்கப்பட்ட பிறகு எதுஎப்படி போனுலென்ன" என்று நினைத்தார். பெருமூச்சு விட்டுக்கொண்டு "அடி, கைகேயி! மஹா பாபி! ஸீதை மரவுரிகளை உடுத்திக்கொண்டு காட்டிற்குப் போகக்கூடாது. அவளோ சிறு பெண்; இதுவரையில் ஸுகமாக வளர்ந்தவள்; ஸகல போக போக்யங்களையும் அனுபவித்தவள்; அதிக செல்வமாக வளர்க்கப்பட்டவள்; இவள் வனத்தில் வஸிக்கத் தகுந்தவளல்லவென்று வஸிஷ்ட பகவான் சொன்னது உண்மையே. யாதொரு பாபத்தையும் அறியாத இவள், பர்த்தாவின் தர்மத்தை அனுஸரிக்க வேண்டியதென்ற ஒரு விரதத்தைத் தவிர வேறுவிதமான தவத்தைச் செய்து வழக்கப்பட்டவளல்ல; வஞ்சனை அறியாதவள்; இவள் யாருக்கு என்ன கெடுதி செய்திருக்கிறுள்? ஜனக மஹாராஜாவுக்குப் பெண்ணுகப் பிறந்து, தபஸ்வியைப்போல் பயங்கரமான காட்டில் மான்தோல் மரவுரிகளை உடுத்துக்கொண்டு எதற்காக வஸிக்கவேண்டும்? ஆகையால் விகாரமான மரவுரியை எறிந்து விடட்டும். உனக்கு இப்படி நான் பிரதிக்ஞைசெய்து கொடுத்தேனே? அவள் காட்டிற்குப் போக விரும்பினுல், அவளுக்கு வேண்டிய வஸ்திராபரணங்களுடன் போகட்டும். எனக்கு மரணம் நெருங்கிவிட்டது. நீ கேட்டதைக் கொடுக்கிறேனென்று நான் பிரதிக்ஞை செய்ததற்கு அதே காரணம். அது இப்படிக் கோரமாக முடிந்தது போதாதா? நீ அக்ஞானத்தால் மயக்கப்பட்டு ஸீதையையும் காட்டிற்குத் துரத்தப் பார்க்கிருய். இது எப்படி முடியும் தெரியுமா? மூங்கில் தன்னிடத்திலிருந்து உண்டான புஷ்பத்தால் தானே அழிவதுபோல், என் அநியாயமே என்னைக் கொலுத்திவிடும். நீச ஸ்வபாவமுள்ளவளே! ராமன்தான் உனக்குச் சத்துரு; அவன் உனக்குத் தீங்கு செய்ததாக வைத்துக் கொள்வோம்; உன் பரதனுக்குப் பட்டம் கிடைப்பதற்கு அவன் இடையூருக இருப்பதாகவும் வைத்துக்கொள்வோம், காட்டில் பிறந்து வளர்ந்த மான்குட்டியைப்போல் மிரண்ட கண்களையுடைய ஸீதையைப் பார். அவளுக்குக் கொஞ்சமாவது கபடம் தெரியுமா? பிறர்க்கு அபராதம் செய்வதென்ற வார்த்தையைக் கேட்டவுடனே நடுங்குகிறவள்; தன் பர்த்தாவைத் தவிர வேறு தெய்வத்தை அறியாதவள்; அவனுக்குப் பணிவிடை செய்வதைத் தவிர வேறு தர்மத்தை அறியாதவள். இப்படிப்பட்டவள் உனக்கு எந்த ஸமயத்தில் எவ்விதமான அபராதத்தைச் செய்திருப்பாள்? பாப ஸ்வரூபமே! உன் ஆத்மா உள்ளவரையில் நீ நரகத்தில் கிடந்து துடிப்பதற்கு ராமனைக் காட்டிற்குப் போகச் சொன்ன ஒரு பாபம் போதாதா? லக்ஷ்மணனையும் ஸீதையையும் காட்டிற்குத் துரத்தி, அதனுல் சொல்ல முடியாத பாபங்களை ஸம்பாதிப்பதில் உன் நோக்கமென்ன? இதற்காக நீ எந்தக் கதியை அடையப் போகிருயோ! எந்த நரகங்களை அனுபவிக்கப் போகிருயோ எனக்குத் தெரியாது. நான் உனக்குச் செய்த பிரதிக்ஞை என்ன? அபி



ஷேகத்திற்கு ஸித்தமாயிருந்த ராமனை இங்கே வருவித்து நீசொன்னதென்ன? 'இப்பொழுது உனக்கு நடக்கப்போகிற அபிஷேகத்தை வேண்டாமென்று நிறுத்தி, மான்தோல் மரவுரிகளைத் தரித்துக்கொண்டு வனத்தில் பதினைன்கு வருஷங்கள் வரையில் நீ வஸிக்க வேண்டும்' என்று சொல்லவில்லையா? அதைக் கேட்டுக் கொண்டிருந்த நான், ராமன் காட்டிற்கு போவதற்கு மாத்திரம் ஸம்மதித்தேனு? மற்ற யாராவது போவதற்கும் ஸம்மதித்தேனு? ஸீதையும் மரவுரியை உடுத்துக்கொண்டு காட்டில் வஸிக்கவேண்டுமென்று விரும்புகிற நீ, நான் உனக்குச் செய்த பிரதிக்ஞையைத் தாண்டி, கோரமான நரகங்களை அடைய முயலுகிருயா?" என்று சொல்லி மஹாத்மாவான தசரதர் பிரலாபித்துக்கொண்டு துக்க ஸமுத்திரத்தின் கரையைக் காணுமல் புத்திர சோகத்தில் ஆழ்ந்து பிரக்ஞையற்றுப் பூமியில் விழுந்தார்.

பிறகு மூர்ச்சை தெளிந்து வெட்கத்தால் தலைகுனிந்து உட்கார்ந்துகொண்டிருந்தார். அப்பொழுது ராமன் வனத்திற்குப் புறப்பட ஸித்தமாகி, "மஹாராஜா! தர்மாத்மா! இதோ இருக்கும் என் தாய் கௌஸல்யாதேவி மஹா கீர்த்திசாலி; மிகவும் வயது சென்றவள்; உத்தமமான நடத்தையுள்ளவள்; ஸத்தியத்தைக் காப்பதே மேலான தர்மமென்று நன்ருக அறிந்தவள். ஆகையால் அவளுடைய எல்லையற்ற வருத்தத்தைக் காட்டிக் கொள்ளவுமில்லை; தங்களிடத்தில் கோபிக்கவுமில்லை; தங்களை நிந்திக்கவுமில்லை. தாங்கள் கேட்டவர்களுக்கு இல்லையென்று சொல்லாமல் வரங்களைக் கொடுக்கிறவரல்லவா? நானும் ஒரு வரம் கேட்கிறேன்; தயவு செய்து அங்கீகரிக்கவேண்டும். என் தாய் என்னைவிட்டுப் பிரிந்ததாலுண்டாகும் துக்கத்தைத் தாங்கமாட்டாள். அவள் இதுவரையில் இவ்விதமான கஷ்டத்தை அனுபவித்தவளல்ல. அவளை இதுவரையிலுமே தாங்கள் அதிக மரியாதையாயும் ஆதரவோடும் நடத்தி வருகிறீர்கள். இது உண்மையே? இனிமேல் நான் பிரார்த்திக்கிறதற்காக அதிக மரியாதையோடும் ஆதரவோடும் அவளை நடத்தவேண்டியது. அவள் என்னை நினைத்து நினைத்து என்னை விட்டுப் பிரிந்த துக்கத்தால் மரணமடையாமல் அவளைப் பாதுகாக்க வேண்டுமென்று தங்களைப் பிரார்த்திக்கிறேன். அவள் ஒன்றுமறியாதவள்; இனிமேல் அவளுக்குத் தங்களைத் தவிர வேறு கதியில்லை. அவளுடைய சத்துருக்களின் கையில் அவளைக் காட்டிக் கொடுக்கக்கூடாது. தங்களுடைய பிரியத்தாலும் மரியாதையாலுமே அவள் நான் திரும்பி வரும் வரையில் உயிரை வைத்துக் கொள்ளவேண்டியவள். இன்னும் ஒருதரம் பிரார்த்திக்கிறேன். என்னைப் பார்க்காமல் ஒரு முகூர்த்தமாவது இருப்பதற்கு அவள் பொறுக்கமாட்டாள். தேவேந்திரனுக்கு ஸமமான பராக்கிரமமுள்ளவரே! நான் வனத்திலிருக்கையில் என்னை நினைத்து, என்னைக் காணுமல், அந்த துக்கத்தால் அவள் உயிரை விடாமலிருக்கவேண்டும். நான் காட்டிலிருந்து திரும்பி

வந்து என் தாயை யமனுடைய பட்டணத்தில் போய்த் தேடும்படி வைக்காமலிருப்பது தங்களுடைய பொறுப்பு" என்றார்.

இமாம் மஹேந்த்3ரோபமஜாதக3ர்தி4நீம்
தத2ா வித4ாதும் ஜநநீம் மமார்ஹஸி |
யத2ா வநஸ்தே2 மயி ஶோககர்ஶிதா
ந ஜீவிதம் ந்யஸ்ய யமக்ஷயம் வ்ரஜேத் ‖ (18)

---

## ஸர்க்கம் 39

## ராமன் வனம் போக உத்தரவு பெற்றது

---

ராமஸ்ய து வச: ஶ்ருத்வா முநிவேஷத4ரம் ச தம் |
ஸமீக்ஷ்ய ஸஹப4ார்யாபி4 ராஜா விக3தசேதந: ‖ (1)

தபஸ்விகளின் வேஷத்தைத் தரித்த ராமன் இப்படிச் சொல்ல, தசரதரும் அவருடைய பாரியைகளும் அதைப் பார்க்கப் பொறுக்காமல் துக்கத்தால் பிரக்ஞையற்றார்கள். தசரதர் ராமனைப் பார்க்க முடியாமல் அவருடைய கண்ணீர் தடுத்தது. ராமனுடன் பேச முடியாமல் நெஞ்சடைத்தது. ஒரு முகூர்த்தம் வரையில் இம்மாதிரி துக்கம் மேலிட்டு அசைவற்றிருந்து மறுபடியும் தன் புத்திரனை நினைத்துப் புலம்ப ஆரம்பித்தார். "ஐயோ! முன் ஜன்மங்களில் கணக்கில்லாத பசுக்களை அவைகளின் கன்றுகளை விட்டுப் பிரித்தேனோ? யாதொரு அபராதமும் செய்யாத ஜந்துக்களைத் குரூரமாக வதைத்தேனோ? இல்லாவிட்டால் இப்படிப்பட்ட கஷ்டம் எனக்கு நேருமா? எந்தக் கர்மத்தை அனுபவிப்பதற்கு இந்தத் தேகம் எடுக்கப்பட்டதோ அந்தக் கர்மத்தை அனுபவித்த பிறகல்லவா எனக்கு மரணம் நேரும்? கைகேயியிடத்தில் இப்படி உபத்திரவப்படுவதைவிட உயிரை விடுவது நலம். ஆனால் தேகத்தை விட்டு பிராணன் அகாலத்தில் போகாதல்லவா? கொழுந்துவிட்டெரியும் அக்கினிக்கு ஸமமான தேஜஸையுடைய ராமன், விலையற்ற தன் உடைகளைக் கழற்றிவிட்டுக் காட்டில் வஸிக்கும் தபஸ்விகள் உடுக்கும் மரவுரியைத் தரிப்பதை நான் பார்த்துக்கொண்டிருந்தும் எனக்கு மரணம் வரக்காணோமே? என்ன ஆச்சரியம்! ஒரு ஸ்திரீ தன் லாபத்தைத் தேடி ஒரே பிடிவாதம் பிடிக்கிறாள்! அதனால் எவ்வளவு ஜனங்கள் சொல்லமுடியாத கஷ்டத்தை அனுபவிக்கிறார்கள்" என்று அதற்குமேல் பேச முடியாமல் கண்ணீரால் கண்கள் மறைந்து "ராமா" என்று கதறி மூர்ச்சை அடைந்தார். சில நேரம் கழித்து பிரக்ஞை வந்தது; கண்ணீர் பெருக ஸுமந்திரரைப் பார்த்து, "உத்தமமான குதிரைகள் பூட்டிய ரதத்தைச் சீக்கிரத்தில் ஸித்தம் செய்துகொண்டு வாரும். அதில் ராமனை ஏற்றி இந்த நகரத்திற்கு வெளியில் தெற்கே அழைத்துக்கொண்டு போம். ஸாதுவும் வீரனுமான ராமன், தன் மாதா பிதாக்களால் ராஜ்யத்திலிருந்து துரத்தப்படுவதைப் பார்த்தால், குணவான்கள் உத்தம



குணங்களால் அலங்கரிக்கப்பட்டிருப்பதற்கு இவ்விதமான துக்கத்தைத் தவிர வேறு பிரயோஜனமில்லை என்று தோன்றுகிறது. ஆகையால் நல்ல குணங்கள் வேண்டுமென்று ஆசைப்படுவதும் வீண் சிரமம்" என்றார்.

அதற்குள் ஸுமந்திரர் தசரதருடைய அபிப்பிராயப்படி சிரேஷ்டமான குதிரைகள் பூட்டிய ரதத்தை ஸித்தம்செய்து ராமனிடத்தில் வந்து 'ஸ்வாமி! தாங்கள் புறப்படுவதற்கு எல்லாம் ஸித்தமாயிருக்கிறது' என்று தெரிவித்தார். பிறகு தசரதர் தன் பொக்கிஷத் தலைவனை வருவித்து, "ஸர்வோத்தமமான ஆடைகளையும் ஆபரணங்களையும் ஸீதை காட்டில் வஸிக்கவேண்டிய காலத்திற்குத் தகுந்தபடி கணக்கிட்டுச் சீக்கிரமாக இங்கே கொண்டுவரவேண்டும்" என்று கட்டளையிட்டார். அந்த அதிகாரி காலதேசங்களை நன்றாக அறிந்தவர்; மனோவாக்குக் காயங்களில் சுத்தமானவர்; பொக்கிஷத்திலுள்ள ஒவ்வொரு பதார்த்தத்தின் குணங்களையும் அளவையும் நிச்சயமாகத் தெரிந்துகொண்டவர். ஆகையால் மஹாராஜாவின் உத்தரவுப்படி ஸகல வஸ்துக்களையும் ஸீதைக்கெதிரில் உடனே கொண்டுவந்து வைத்தார். ஸீதையோ மற்றவர்களைப் போல் மனுஷ்ய சம்பந்தத்தால் பிறக்காதவள்; ஸாமுத்ரிகா சாஸ்திரத்தில் சொல்லியிருக்கும் லக்ஷணப்படி அமைந்த அங்கங்களை உடையவள். அந்த விசித்திரமான ஆபரணங்களால் தன்னை அலங்கரித்துக் கொண்டபொழுது முன்னைவிட அதிகமாக விளங்கினாள். ஆயிரம் கிரணங்களையுடைய ஸூரியன் உதிக்கும்பொழுது ஆகாசம் பிரகாசிப்பதுபோல் அவளுடைய தேககாந்தியால் அந்த அந்தப்புரம் பிரகாசித்தது. பிறகு கௌஸல்யா தேவி, அவளை அதிகப் பிரீதியுடன் ஆலிங்கனம் செய்து உச்சி முகர்ந்து "குழந்தாய்! உத்தம தர்மத்தை அனுஷ்டிக்க ஆரம்பித்திருக்கிறாய். லோகத்திலுள்ள துஷ்ட ஸ்த்ரீகளின் நடத்தை எப்படியென்றால், தங்களுடைய கணவன் தனவானாயிருக்கும்பொழுது தங்களுக்கு எவ்வளவு மரியாதை செய்தாலும் ஆடையாபரணங்களைக் கொடுத்துத் தங்களை எவ்வளவு திருப்தி செய்தாலும் தங்களிடத்தில் எவ்வளவு பிரியமாயிருந்தாலும் அதே புருஷனுக்குக் கஷ்டம் நேர்ந்து, செல்வம் குறைந்து, தங்களை ஸந்தோஷப் படுத்தச் சக்தி இல்லாதபொழுது, முன் செய்த யாவற்றையும் ஒரு நிமிஷத்தில் மறந்து விடுவார்கள். அப்பொழுது அவர்கள் பர்த்தாவை இவ்வளவுதான் அலக்ஷ்யம் செய்வார்களென்பதற்கு எல்லையில்லை. முதலில் அளவற்ற ஸுகங்களை அனுபவித்திருந்தாலும், பிறகு அல்ப அஸௌக்யமாவது ஆபத்தாவது நேர்ந்தாலும் போதும்; உடனே தங்களுடைய கணவன்களைத் தூஷிப்பதும் அவர்களை விட்டு விலகுவதும் துஷ்ட ஸ்த்ரீகளின் ஸ்வபாவம். சிறு பெண்கள் பெரும்பாலும் பொய் சொல்வதிலேயே பிரீதியுள்ளவர்கள்; அடிக்கடி மாறும் தன்மையுள்ளவர்கள்; அவர்களுடைய ஹிருதயத்தை ஒருவரும் கண்டுபிடிக்க

முடியாது; பாபத்தைச் செய்வதிலேயே நோக்கமுள்ளவர்கள்; முன்னிருந்த பிரீதியை ஒரு நிமிஷத்தில் மறந்து துவேஷம் வைப்பார்கள்; அவர்கள் பதிவிரதைகள் அல்ல. அப்படிப் பட்டவர்களுக்குப் பர்த்தா, உத்தம குலத்தில் பிறந்தவனாக இருக்கட்டும்; தங்களுக்கு மிகுந்த உபகாரம் செய்தவனாக இருக்கட்டும்; ஸகல வித்யைகளிலும் நிபுணனாக இருக்கட்டும்; தங்களுடைய விருப்பப்படி ஆடை ஆபரணங்களால் தங்களைத் திருப்தி செய்தவனானால் என்ன? தங்களை அக்னி ஸாக்ஷியாக விவாஹம் செய்தவனானால் என்ன? இவையெல்லாம் அவர்களைக் கட்டுப்படுத்தாது. தனத்தைத் தவிர அவர்களுக்கு வேறு தெய்வமில்லை, வேறு பர்த்தா இல்லை. அடிக்கடி மாறும் ஸ்வபாவமுள்ளவர்களல்லவா? ஆனால் தங்களுடைய குலத்திற்கு உசிதமான ஆசாரத்தைக் கைவிடாமல், ஸத்தியமென்ற மார்க்கத்திலிருந்து விலகாமல், பெரியோர்களால் ஸன்மார்க்கம் உபதேசிக்கப்பட்டு, காமக்குரோதங்கள் அடங்கிய மனத்துடனிருக்கும் பதிவிரதைகளுக்கு, பர்த்தாவே எல்லா லோகங்களிலும் சிரேஷ்டமான பொருள் ஆவான். அவனைக் காட்டிலும் பரிசுத்தமான வஸ்து இல்லை. என் புத்திரனான ராமன் இதுவரையில் லோகோத்தமமான பதவியில் இருந்தவன்; இப்பொழுது கர்மவசத்தால் ராஜ்யத்திலிருந்து விலக்கப்பட்டிருக்கிறான். இதை ஒரு காரணமாகக்கொண்டு நீ அவனை அலக்ஷ்யம் செய்யக்கூடாது. அவன் ஏழையாயிருந்தாலும், தனவானாயிருந்தாலும் அவனை உன் தெய்வத்தைப்போல் நீ எண்ணி நடக்கவேண்டும்'' என்றாள்.

இப்படித் தனக்கு உத்தம தர்மத்தை உபதேசிக்கும் கௌஸல்யாதேவியை, ஸீதை வணக்கமாகக் கைகூப்பி நமஸ்கரித்து, ''அம்மா! தாங்கள் கட்டளையிட்டபடி கொஞ்சமும் தவறாமல் செய்கிறேன். பர்த்தாவிடத்தில் இவ்விதமாக நடந்துகொள்ள வேண்டுமென்ற தர்மத்தை நன்றாக அறிந்திருக்கிறேன். என் பெற்றோர்கள் எனக்குப் பால்யத்திலேயே அதை உபதேசித்திருக்கிறார்கள். தாங்கள் என்னைப் பதிவிரதையல்லாத கெட்ட பெண்களுடன் சேர்த்துப் பேசக்கூடாது. சந்திரனுடைய காந்தி அவனைவிட்டு எப்படி விலகாதோ அப்படி என் மனம் பதிவிரதைகளின் தர்மத்தைவிட்டு விலகாது. தந்தியில்லாத வீணை சப்தத்தைக் கொடுக்குமா? சக்கரங்களில்லாத ரதம் ஓடுமா? அப்படியே ஸ்த்ரீகளுக்கு எவ்வளவு புத்திரர்களிருந்தாலும் பர்த்தா இல்லாவிட்டால் ஸுகமுண்டா? நம்மைப் பெற்ற மாதாபிதாக்களும் நாம் பெற்ற குழந்தைகளும் நமக்கு இவ்வுலகத்தில் ஸுகத்தையும் க்ஷேமத்தையும் மாத்திரம் கொடுக்க முடியும். அது ஒரு பெரிதா? இஹபர லோகங்களில் க்ஷேமத்தைக் கொடுக்கக்கூடியவர் பர்த்தா வல்லவா? எவளாவது அவரைப் பூஜிக்காமலிருப்பாளா? நான் பதிவிரதா தர்மத்தை அனுஷ்டிக்க நிச்சயித்தவள். என் தாயைப் போன்ற மஹாபதிவிரதைகளிடத்திலிருந்து அந்தத் தர்மத்தின் லக்ஷணங்களைப் பொதுவாயும் விசேஷமாயும் கேட்டிருக்கிறேன். ஆகையால் என் பர்த்தாவை ஸ்வப்பனத்திலாவது அவமதிப்பேனா? ஸ்த்ரீகளுக்குக் கணவனே தெய்வமல்லவா'' என்றாள். இந்த வார்த்தைகள் கௌஸல்யையின் மனத்தைக் கவர்ந்தன. ஒரு புறத்தில் தன் அருமைக் குழந்தை பதினான்கு வருஷங்கள் வரையில் தன் கண்ணில் படாமல் காட்டில் கஷ்டப்படுவானே என்ற துக்கம்; மற்றொரு புறத்தில் தன் நாட்டுப் பெண் இவ்வளவு ஸாதுவாகவும் பதிவிரதைகளுக்குள் சிறந்தவளாகவும் இருப்பது என்ன பாக்கியம்! அவள் சொல்லும் வார்த்தைகள் மதுரமாகவும் தர்மத்தை அனுஸரித்தும் இருக்கின்றனவே என்று ஆனந்தம்; இவ்விரண்டாலும் கௌஸல்யைக்குக் கண்களிலிருந்து நீர் தாரை தாரையாகப் பெருகிற்று.



பிறகு ராமன் கைகூப்பி வணக்கமாக, எல்லா ஸ்த்ரீகளாலும் பூஜிக்கப்பட்ட கௌஸல்யாதேவியை பிரதக்ஷிணம்செய்து நமஸ்கரித்து, ''அம்மா! துக்கப்படவேண்டாம். என் பிதாவை ஜாக்கிரதையாகப் பாதுகாக்க வேண்டியது தங்களுடைய கடமை. நான் வனத்தில் வஸிக்கவேண்டிய பதினான்கு வருஷங்களும் பதினான்கு நிமிஷங்களாகப் பறந்து போய்விடும். தங்களுக்குத் தூங்கியெழுந்ததுபோலிருக்கும். அதிசிக்கிரத்தில் மஹாராஜாவின் பிரதிக்ஞையை நிறைவேற்றி, கைகேயியின் இஷ்டத்தையும் பூர்த்திசெய்து, மறுபடியும் என் ஸ்நேகிதர்களுடன் தங்களைத் தரிசனம் செய்வேன்'' என்றார்.

இப்படித் தன் அபிப்பிராயத்தைச் சுருக்கமாகத் தெரிவித்து, கௌஸல்யையைப்போல் துக்கப்பட்டுக்கொண்டிருக்கும் மற்ற முன்னூற்றைம்பது ராஜஸ்த்ரீகளைப் பார்த்து, ராமன் மிகுந்த மரியாதையோடு கைகூப்பிக்கொண்டு, பெரியோர்களிடத்தில் நடந்துகொள்ள வேண்டிய தர்மத்தை அனுஸரித்து, ''தேவிகளே! நானோ சிறுவன்; என் பால்யம் முதல் தங்களுடைய புத்திரனைப் போல் பிரியமாகவும் செல்வமாகவும் என்னை வளர்த்து வந்தீர்கள். நீண்டகாலம் உங்களுடன் நெருங்கிப் பழகினதாலும் அறியாததனத்தாலும் உங்களுக்கு ஏதாவது பிரியமில்லாத காரியத்தைச் செய்திருப்பேன். தயவுசெய்து அதை மன்னிக்கும்படி பிரார்த்திக்கிறேன். அப்படிச் செய்வதாகச் சொன்னாலொழிய என் மனத்திற்கு ஸமாதானம் வராது. நான் வனத்திற்குப்போக உத்திரவு கொடுக்க வேண்டும்'' என்று சொல்ல, அவருடைய முனிவேஷத்தையும் தினமான ஸ்திதியையும் பார்த்து, தசரதருடைய பார்யைகள் துக்கத்தைத் தாங்கமுடியாமல் கிரௌஞ்சபக்ஷிகளைப்போல் வாய்விட்டுக் கதறினார்கள். அதுவரையில் மேகங்கள் கர்ஜிப்பதைப்போல் பேரீ மிருதங்கம் முதலிய மங்கள வாத்தியங்களின் நாதத்தைத் தவிர வேறொன்றையும் கேட்டிராத அந்த அந்தப்புரத்தில் அப்

பொழுது எங்கே பார்த்தாலும் அழுகையும் பிரலாபமுமே கேட்கப்பட்டன.

முரஜ பணவ மேக⁴ கோ⁴ஷவத்
த³ஶரத²வேஶ்ம ப³பூ⁴வ யத் புரா |
விலபித பரிதே³வநாகுலம்
வ்யஸந க³தம் தத³பூ⁴த் ஸுது³க்கி²தம் || (41)

## ஸர்க்கம் 40
# ராமன் வனத்திற்குப் புறப்பட்டது

அத² ராமஶ்ச ஸீதாச லக்ஷ்மணஶ்ச க்ருதாஞ்ஜலி : |
உபஸங்க்³ருஹ்ய ராஜாநம் சக்ருர் தீ³நா : ப்ரதக்ஷிணம் || (1)

பிறகு ராம லக்ஷ்மணர்களும் ஸீதையும் வணக்கமாகக் கை கூப்பித் தசரதரை பிரதக்ஷிணம் செய்து, பாதங்களைத் தொட்டு நமஸ்கரித்தார்கள். ஸகல தர்மங்களையுமறிந்த ராகவனும் ஸீதையும் தசரதரிடத்தில் உத்தரவு பெற்றுக்கொண்டு, துக்கத்தால் புத்தி மயங்கியிருக்கும் கௌஸல்யா தேவியை நமஸ்கரித்தார்கள். லக்ஷ்மணனும் தன் தமயன் செய்ததைப்போல் கௌஸல்யையை நமஸ்கரித்து, தன் தாயான ஸுமித்திரா தேவியின் பாதங்களில் தன் தலையை வைத்து வணங்கினர்.

ஸுமித்திரை அழுதுகொண்டு தன் அருமைக் குழந்தையை உச்சி முகர்ந்து, அந்த மஹாவீரனுடைய க்ஷேமத்தை பிரார்த்திக்கிறவளாகையால் "குழந்தாய்! நீ மித்திரர்களிடத்தில் விசேஷப் பிரீதி வைக்கிறவன் ; ஸகல லோகங்களையும் ரக்ஷிப்பதற்குக் கௌஸல்யை எப்படி ஒரு புத்திரனைப் பெற்றாளோ, அப்படியே நானும் எவ்விடத்திலும், எந்த ஸமயத்திலும், நகரத்திலும், வனத்திலும் ஸகலவிதமான கைங்கரியங்களையும் ராமனுக்குச் செய்வதற்காகவே உன்னைப் பெற்றேன். ஆகையால் விசித்திரமான பொருள்களால் நிறைந்த வனங்களில் ராமன் ஸீதையுடன் ஸஞ்சரிக்கும் பொழுது அவருடைய அழகு, நடை, பார்வை, பேச்சு முதலியவைகளால் பிரமித்து, அவரைக் காப்பாற்றுவதில் அஜாக்கிரதையாக இராதே. ராமன் செல்வத்துடனிருந்தாலும், கஷ்டத்தை அனுபவித்தாலும் உனக்கு அவனே கதி. இளையவன் எப்பொழுதும் மூத்தவனுக்குக் கீழ்ப்படிந்து நடந்து, அவனுக்கு ஸகலவிதமான பணிவிடையையும் செய்யவேண்டும். லோகத்தில் ஸாதுக்கள் அனுஷ்டிக்கும் தர்மம் இதே. இந்த இக்ஷ்வாகு குலத்தில் பிறந்தவர்களும் ஆதிமுதல் அனுஷ்டித்துவரும் தர்மமும் இதே. கேட்பவர்களுக்கு இல்லையென்று சொல்லாமல் தானம் கொடுப்பதும், யாக தீக்ஷை செய்துகொள்ளுவதும், யுத்தத்தில் பின்வாங்காமல் உயிரை விடுவதும் க்ஷத்திரியனுக்கு அழகு. ஆகையால் உன் உயிரைக் கொடுத்தாவது

தாம் சாபி ஸமநுஜ்ஞாப்ய த⁴ர்மஜ்ஞ: ஸீதயா ஸஹ |
ராக⁴வ: ஶோகஸம்மூடா⁴ம் ஜநநீம் அப்⁴யவாத³யத் ||
—அயோ. 40ஸ - 2 ஸ்.

ஸகல தர்மங்களையும் அறிந்த ராகவனும் ஸீதையும் தசரதரிடத்தில் உத்தரவு பெற்றுக்கொண்டு துக்கத்தால் புத்தி மயங்கியிருக்கும் கௌஸல்யாதேவியை நமஸ்கரித்தார்கள்
(பக்கம் 158 பார்க்க)

ராமனை ரக்ஷிக்கவேண்டும். தாமதம் செய்யாதே; சீக்கிரமாகப் புறப்பட்டுப் போ. இனிமேல் ராமனே உனக்குப் பிதா; ஸீதையே உனக்குத் தாய்; அவர்கள் வஸிக்கும் வனமே உனக்கு அயோத்யை; ராமனுடைய உத்தரவுப்படி நடப்பதே உனக்குப் பரம ஸுகம்; க்ஷேமமாகப் போய்வா'' என்று ஹிதத்தை உபதேசித்து அனுமதி கொடுத்தனுப்பினாள்.

பிறகு மாதலி என்ற ஸாரதி தேவேந்திரனிடத்தில் தெரிவிப்பதுபோல், ஸுமந்திரர் கைகூப்பி வணக்கமாக "ராஜபுத்திர! ஒப்பற்ற கீர்த்திசாலியே! உமக்கு ஸகல மங்களங்களும் உண்டாகட்டும். ரதத்தில் ஏறலாம். எங்கே கொண்டுபோய் விடவேண்டுமென்று உத்தரவாகிறதோ அங்கே அதிசீக்கிரத்தில் கொண்டுபோய் விடுகிறேன். கைகேயியால் கட்டளையிடப்பட்ட நீங்கள் வனத்தில் வஸிக்கவேண்டிய பதினான்கு வருஷங்களில் இது முதலாவது நாள். இன்றைக்கு இங்கிருந்து புறப்பட்டுப் போகவேண்டுமென்று கைகேயி சொல்லவில்லையா'' என்று தெரிவித்தார்.

அப்பொழுது ஸீதை, வஸ்திராபரணங்களால் தன்னை அலங்கரித்துக்கொண்டு, ஸூரியனையும் அக்னியையும்போல் பிரகாசிக்கும் அந்தத் தேரில் முதலில் ஏறினாள்; ராம லக்ஷ்மணர்கள் பிறகு ஏறினார்கள். காட்டில் வஸிக்கவேண்டிய காலத்தைக் கணக்கிட்டுத் தசரதர் ஸீதைக்குக் கொடுத்த வஸ்திரங்களையும், ஆபரணங்களையும் ராம லக்ஷ்மணர்களின் ஆயுதங்களையும் கவசங்களையும், தோலால் மூடப்பட்ட கூடையையும், மண்வெட்டியையும் வேலைக்காரர்கள் தேர்த்தட்டில் வைத்தார்கள். உடனே ஸுமந்திரர் வாயுவேகத்தையுடைய உத்தமமான குதிரைகளை நடத்தினார்.

பல வருஷங்கள் வரையில் காட்டில் வஸிப்பதாக ராமன் இப்படி நகரத்தைவிட்டுப் புறப்பட்டு போகும்பொழுது அயோத்யையிலுள்ள ஆண்களும், பெண்களும், குழந்தைகளும், யானை, குதிரை முதலிய மிருகங்களும் துக்கத்தால் மூர்ச்சையடைந்தன. ஜனங்களெல்லோரும் சித்தம் கலங்கி, இந்திரிய ஸ்வாதீனமில்லாமல் தவித்தார்கள். மதம் பிடித்த யானைகள் துக்கம் மேலிட்டு வெறி கொண்டன. குதிரைகள் ஒன்றும் தோன்றாமல் அங்குமிங்கும் ஓடிக்கொண்டிருந்தன. அவைகளின்மேல் போடப்பட்டிருந்த ஆபரணங்களின் சப்தம் அந்த நகரமெங்கும் பரவிற்று. கோடை காலத்தில் உஷ்ணத்தைத் தாங்காமல் குளிர்ந்த ஜலமிருக்குமிடத்தை நோக்கி பிராணிகள் ஓடுவதுபோல், அயோத்யையிலுள்ள ஆண்களும், பெண்களும், சிறுவர்களும், கிழவர்களும் ராமனையே பின் தொடர்ந்தார்கள். ரதத்தின் இரு புறத்திலும் பின் பக்கத்திலும் ரதத்திற்கு எதிரிலும் கூட்டம் கூட்டமாக, கண்ணீர் தாரை தாரையாகப் பெருக, பெருமூச்சு விட்டுக்கொண்டு, "ஸுமந்திரரே! குதிரைகளின் கடிவாளங்களைப் பிடித்து நிறுத்தும்; ரதம் மெள்ளப் போகட்டும். ராமனுடைய முகத்தைக் கொஞ்ச காலமாவது பார்த்துக்கொண்

டிருப்போம். இனி அந்தப் பாக்கியம் எங்களுக்குக் கிடைக்குமோ கிடைக்காதோ. ராமனுடைய தாயின் ஹிருதயம் இரும்பா? தேவ குமாரன் போன்ற புத்திரன் காட்டிற்குப் போவதைப் பார்த்தும் இன்னும் வெடிக்கவில்லையே! பாக்கியசாலி என்றால் ஸீதையையே சொல்லவேண்டும். ஸூரியனுடைய பிரகாசம் மேருமலையை விட்டு நீங்காமலிருப்பதுபோல் பதிவிரதா தர்மத்தை அனுஷ்டித்து ராமனை விட்டுப் பிரியாமல் அவருடைய நிழலைப்போல் அவரைப் பின் தொடருகிறாள். லக்ஷ்மணா! நீயல்லவா கொடுத்துவைத்தவன்? செய்ய வேண்டியதைச் செய்தவன். தேவதைகளைப்போல் அளவற்ற காந்தியுள்ளவரும், எந்த ஸமயத்திலும் பிரியமாகப் பேசுகிறவருமான உன் தமையனுக்கு ஸகல கைங்கரியங்களையும் செய்யும் பாக்கியத்தைப் பெற்றாயே. இதனால் நீ அடையப்போகும் க்ஷேமம் இவ்வளவென்று சொல்லமுடியாது. நீ ராமனைப் பின்தொடர்வதே உத்தமமான லோகங்களுக்குப் போகும் வழி" என்று சொல்லிக்கொண்டு, தங்களுக்குப் பிரியமான ராகவனைப் பின்தொடர்ந்து செல்லும் ஜனங்கள், அவரை விட்டுப் பிரிந்திருக்கப் பொறுக்காமல் கண்ணீர்விட்டு அழுதார்கள்.

பிறகு தசரதரும் அவருடைய மனைவிகளும் ராமனைப் போகவிட மனமில்லாமல், "எங்கள் அருமைக் குழந்தையை இன்னும் ஒரு தடவை பார்க்காமலிருப்போமோ" என்று அந்தப்புரத்திலிருந்து வெளியில் ஓடிவந்தார்கள். யானைகளுக்குத் தலைவனான ஆண் யானை வேடர்களால் வலையில் கட்டுப்பட்டுத் தவிக்கும்பொழுது பெண் யானைகள் கதறுவதைப்போல், தசரதருடைய அந்தப்புரத்திலுள்ள ஸ்த்ரீகள் வாய்விட்டலறும் சப்தத்தை அவர் கேட்டார். ராமனுடைய பிதா; குடிகளுக்கு அரசன்; இக்ஷ்வாகு குலத்திற் பிறந்தவர்; ஸகல ஐசுவரியங்களும் பொருந்தியவர்; இப்படியிருந்தும், ஸகல ஜனங்களுக்கும் சொல்லமுடியாத துக்கம் தன்னால் நேரிட்டதைப் பார்த்து, பூர்ண சந்திரனுடைய கிரணங்கள் கிரஹண காலத்தில் எப்படி மங்குமோ அப்படி அவருடைய தேஜஸ் முற்றிலும் குறைந்தது. எல்லையற்ற தைரியத்தையுடைய ராமச்சந்திரன், தன் பிதா தன்னைப் பின்தொடர்வதைப் பார்த்து, "ஸுமந்திரரே! குதிரைகளை வேகமாக நடத்தும்" என்றார். ஸுமந்திரர் என்ன செய்வார்? ரதம் வேகமாகச் செல்லட்டும் என்ற ராமனுடைய உத்தரவைக் கவனிப்பாரா? ரதத்தை நிறுத்தும் என்று நகரத்து ஜனங்கள் கதறுவதைக் கவனிப்பாரா? ஒரே காலத்தில் இரண்டையும் செய்யமுடியாமல் தயங்கினர்.

ரதத்தால் கிளப்பப்பட்ட புழுதி, பிரலாபிக்கும் ஜனங்களின் கண்ணீரால் அடங்கிப்போயிற்று. எங்கே பார்த்தாலும் 'ஹா ஹா' என்ற சப்தமும், ஜனங்களுடைய பிரலாபமுமே கேட்கப்பட்டன. எங்கே பார்த்தாலும் ஜனங்கள் பிரமித்து ஒன்றும் தோன்றாமல் நின்றார்கள். சிலர் துக்கம் மிதமிஞ்சினதால் பேசமுடியாமல் கண்ணீர் விட்டுக்கொண்டிருந்தார்கள், தாமரை ஓடையில் மீன்கள் அங்குமிங்கும் ஓடுவதால் தாமரை மலர்களிலிருந்து நீர்த்துளிகள் விழுவதுபோல் ராமனைவிட்டுப் பிரியப் பொறுக்காத அந்த நகரத்திலுள்ள பெண்களின் கண்களிலிருந்து கண்ணீர் பெருகிற்று. இப்படிப் பட்டணத்து ஜனங்கள் அனைவரும் ஒரே ஞாபகமாகத் துக்கிப்பதைப் பார்த்துத் தசரதரும் வேரற்ற மரத்தைப்போல் கீழே விழுந்தார். அப்பொழுது சக்கரவர்த்தி துக்கத்தால் மூர்ச்சை அடைந்ததைப் பார்த்து ராமனைப் பின்தொடரும் ஜனங்கள் பயத்தால் கூச்சலிட்டார்கள். சிலர் 'ஹா ராமா' என்று கதறினார்கள். சிலர் 'ஹா கௌஸல்யாதேவி' என்று கதறினார்கள். அந்தப்புரத்து ஜனங்களில் புலம்பாதவர்களில்லை. அந்த அழுகையைக் கேட்டு ராமன் திரும்பிப்பார்த்துத் தசரதரும் கௌஸல்யையும் பைத்தியம் பிடித்தவர்கள்போல் தள்ளாடிக்கொண்டு தன்னைப் பின்தொடர்ந்து வருவதைக் கவனித்தார். கயிறுகளால் இறுக்கிக் கட்டப்பட்டுத் தப்ப முடியாத குதிரைக்குட்டி பரிதாபத்துடன் தன் தாயைப் பார்ப்பதுபோல், ராமனும் தர்மமென்ற கயிற்றால் கட்டப்பட்டு அவர்களைக் கடைக்கண்ணால் பார்த்தார். உத்தமமான வாஹனங்களில் வழக்கமாகப் போகிறவர்கள் கால்நடையாக ஓடிவருவதையும் ஸகல ஸௌக்கியங்களையும் அனுபவித்தவர்களும் துக்கமென்பதையே அறியாதவர்களும் சோகத்தால் தவிப்பதையும் பார்த்துப் பொறுக்காமல் அதை நீக்கச் சக்தியற்றவராய் "ஸுமந்திரரே! குதிரைகளை அதிவேகமாக ஓட்டும்" என்றார். கலங்காத மனத்தையுடையவரானாலும் கூர்மையான மாவெட்டியால் குத்தப்பட்ட யானையைப்போல் அந்தத் துக்கத்தைப் பொறுக்க முடியவில்லை. கன்றுக்குட்டி கட்டப்பட்டிருக்குமிடத்தை நோக்கி அதன் தாய் அதனிடத்தில் வைத்திருக்கும் பிரியத்தால் அடிக்கடி ஓடிவருவதைப்போல் கௌஸல்யை ரதத்தை நோக்கி ஓடிவந்தாள். கௌஸல்யை ரதத்தின் பின்னால் அழுதுகொண்டு 'ஹா ராமா!' 'ஹா லக்ஷ்மணா!' 'ஹா ஸீதே' என்று அலறிக்கொண்டு ஓடிவருவதை ராமன் அடிக்கடி பார்த்தார். 'ரதத்தை நிறுத்தும்' என்று தசரதர் கட்டளையிட்டார். ரதத்தின் சக்கரங்களின் நடுவில் அகப்பட்ட மனிதனைப்போல் ஸுமந்திரர் மிகுந்த ஸங்கடமடைந்தார். ராமன் அதைப் பார்த்து "ஸுமந்திரரே! நான் சொல்வதைக் கேளும். ரதத்தைச் சீக்கிரமாக ஓட்டும். மறுபடியும் மஹாராஜாவைப் பார்க்கும்பொழுது, 'நான் ரதத்தை நிறுத்தச் சொன்னதை ஏன் கவனிக்கவில்லை' என்று உம்மைக் கோபித்தால், உங்கள் வார்த்தை காதில் விழவில்லை என்று சொல்லும். அது பொய்யல்லவா என்றால், இந்தத் துக்கத்தை இனிமேல் வெகுகாலம் என்னால் பொறுக்கமுடியாது. நான் செய்த பிரதிக்ஞைக்கு அபாயம் நேரும்" என்றார்.

ஸுமந்திரரும் ராமனுடைய வார்த்தையை அனுஸரித்து, தங்களைப் பின்தொடர்ந்து வந்த ஜனங்களிடத்தில் ராமனை உத்தரவு

பெற்றுக்கொள்ளச் செய்து, அதுவரையிலும் வேகமாகவே போய்க் கொண்டிருந்த குதிரைகளை இன்னும் வேகமாக ஓட்டினர். அப்பொழுது அந்தப்புரத்து ஜனங்களும் நகரத்து ஜனங்களும் ராமனை ப்ரதக்ஷிணம்செய்து திரும்பினார்கள். ஆனால் அவர்களுடைய தேகங்கள் மாத்திரமே திரும்பின; அவர்களுடைய மனம் ராமனைப் பின் தொடர்ந்தது ; அவர்களுடைய கண்ணீர்த் தாரை நிற்கவில்லை. மந்திரிகள் ஸகல தர்மங்களையும் அறிந்தவர்களானகயால் அப்பொழுது "க்ஷேமமாகத் திரும்பி வரவேண்டுமென்று தாம் விரும்புகிறவனை வெகுதூரம் பின்தொடர்ந்து செல்லக்கூடாதென்பது பெரியோர்களின் அனுஷ்டானம்" என்று தசரதருக்குத் தெரிவித்தார்கள். அதை அங்கீகரித்து மஹாராஜா அங்கம் தளர்ந்து துக்கத்தால் மனம் குன்றித் தீனமாக ராமனைப் பார்த்தபடியே தன் பத்தினிகளுடன் அங்கே நின்றுகொண்டிருந்தார்.

தேஷாம் வச: ஸர்வ கு3ணோப பந்நம்
ப்ரஸ்விந்ந கா3த்ர: ப்ரவிஷண்ணரூப: |
நிஶம்ய ராஜா க்ருபண: ஸபா4ர்யோ
வ்யவஸ்தி2தஸ் தம் ஸுத மீக்ஷமாண: || (51)

## ஸர்க்கம் 41

## நகரத்து ஜனங்களின் ப்ரலாபம்

தஸ்மிம்ஸ்து புருஷ வ்யாக்4ரே நிர்யாதே க்ருதாஞ்ஜலௌ |
ஆர்தஶப்3தோ3ஹி ஸம்ஜஜ்ஞே ஸ்த்ரீணாமந்த: புரே மஹாந் || (1)

இப்படி லோகநாதனான ராமன், தன் மாதா பிதாக்களிடத்தில் கைகூப்பி அனுமதிபெற்றுக்கொண்டு நகரத்தைவிட்டுப் புறப்படும்பொழுது, அந்தப்புரத்து ஸ்த்ரீகள் வெகு பரிதாபமாக ப்ரலாபிக்க ஆரம்பித்தார்கள். "ஒரு கதியுமில்லாத ஏழைகளான எங்களுக்கு இதுவரையில் யாதொரு அஸௌக்கியமும் நேராமல் எல்லா இஷ்டங்களையும் பூர்த்தி செய்து காப்பாற்றி வந்த ரகுநாதன் எங்களைவிட்டுப் போகிறானே, என்ன செய்வோம்? நாங்கள் யாரை சரணமடைவோம்? எங்களுக்குக் கதி யார் ? தன்னைக் காரணமில்லாமல் பிறர் எவ்வளவு தூஷித்தாலும் அவன் கொஞ்சம்கூடக் கோபிக்கிறதில்லை. கோபத்தை உண்டுபண்ணக்கூடிய விஷயங்களை விலக்கி, கோபிக்கிறவர்களை எவ்விதத்திலும் ஸமாதானம் செய்வான். ஸுக துக்கங்களால் மாறாத ஸ்வபாவத்தையுடைய மஹாத்மா எங்கே போகிறானோ? தன் தாயான கௌஸல்யையிடத்தில் நடப்பதுபோல் எங்களிடத்திலும் பேதமில்லாமல் நடந்து வரும் அந்த மஹாத்மா எங்கே போகிறானோ? கைகேயியின் ஹிம்ஸையைப் பொறுக்காமல் மஹாராஜா, ஸர்வலோக ரக்ஷகனை ராமனைக் காட்டிற்குத் துரத்தினாரே ! அவன் எங்கே போகிறானோ?



எல்லா ப்ராணிகளுக்கும் ப்ரியமாயும் ஸத்தியம் தவறாதவனும் தர்மவானுமிருக்கும் ராமனைக் காட்டிற்கனுப்பின நமது மஹாராஜா எவ்வளவு புத்திஹீனர்" என்று அந்தப்புரஸ்த்ரீகள் எல்லோரும் கன்றை இழந்த பசுவைப்போல் துக்கம் தாங்காமல் வாய் விட்டுக் கதறினார்கள். முன்பே புத்திர சோகத்தால் தபித்துக் கொண்டிருந்த தசரதருடைய காதில் அவர்களின் ப்ரலாபம் விழுந்து மூர்ச்சையடையச் செய்தது.

அன்று அயோத்யையில் அக்னி ஹோத்திரங்கள் நடக்கவில்லை. ராமன் ஸகல ப்ராணிகளுக்கும் அந்தர்யாமியல்லவா ? அவருக்கு நேர்ந்த கஷ்டத்தைப் பார்த்து உலகம் முழுவதும் துக்கத்தால் தவித்தது. ஹோமகுண்டங்களில் அக்னிகள் மறைந்தன. ஹோமம் செய்கிறவர்கள் துக்கத்தால் மெய்மறந்தார்கள். ஔபாஸனம் பஞ்சயக்ஞம் முதலிய நித்தியகர்மங்களையும் க்ருஹஸ்தர்கள் செய்யவில்லை. நகரத்து ஜனங்கள் வழக்கமாகச் செய்யும் வேலைகளை விட்டு ஒன்றும் தோன்றாமல் ப்ரமித்தார்கள். ஸூரியனும் தேஜஸை இழந்து மறைந்தான். யானைகள் தீனியை உட்கொள்ளவில்லை. பசுக்கள் கன்றுகளுக்குப் பால் கொடுக்கவில்லை. வெகு நாளாகப் புத்திரனில்லாமல் அன்று புத்திரனை ப்ரஸவித்த ஸ்த்ரீக்கும் ஸந்தோஷம் கொஞ்சமாவதில்லை. இக்ஷ்வாகு குலத்திற்கு கூடஸ்தரான திரிசங்கு என்ற நக்ஷத்திரமும் அங்காரகனும் குருவும் புதனும் சந்திரனை வெகுக் குரூர திருஷ்டியுடன் பார்த்தார்கள். நக்ஷத்திரங்கள் கிரணங்களை இழந்தன; நவக்கிரஹங்களின் தேஜஸ் அழிந்தது. இக்ஷ்வாகு வம்சத்து அரசர்களின் குல நக்ஷத்திரமான விசாகம் புகையால் மூடப்பட்டதுபோல் ஆகாசத்தில் மங்கலாக ப்ரகாசித்தது. அலைகள் பொங்கின ஸமுத்திரத்தைப்போல் மஹா மேகங்கள் காற்றால் வேகமாக அடிக்கப்பட்டு ஆகாசத்தில் பரவின ராமன் காட்டிற்குப் போகும்பொழுது அந்த நகரமெங்கும் துக்கம் தாங்கமுடியாமல் கிடுகிடென்று நடுங்கிற்று. எல்லா திக்குகளும் இருட்டால் மூடப்பட்டு, கஷ்டத்தைப் பொறுக்க முடியாமல் வஸ்திரத்தால் முகத்தை மறைத்துக்கொண்டு அழுவதுபோலிருந்தது. அசுவினி முதலிய நக்ஷத்திரங்களும், துருவன், ஸப்த ரிஷி மண்டலம் முதலியவைகளும் கண்ணிற்குத் தெரியவேயில்லை. அந்த நகரத்திலுள்ள ஜனங்களுக்கெல்லாம் ஏதோ ஒரு சொல்ல முடியாத ஏக்கம் திடீரென்று உண்டாயிற்று. ஆஹாரம் முதலிய எந்தக் காரியத்திலும் ஒரு ப்ராணியும் ஞாபகத்தை வைக்கவில்லை. அயோத்யையிலுள்ள ஜனங்கள் யாவரும் முடிவில்லாத கஷ்டத்தை அனுபவித்துக்கொண்டு, உஷ்ணமாகப் பெருமூச்சு விட்டுக் கொண்டு, ராமனை அல்லது தசரதனைப் பற்றியே வருத்தப்பட்டுக் கொண்டிருந்தார்கள். ராஜ வீதிகளில் நடக்கும் ஜனங்கள் அழுத வண்ணமாகவே இருந்தார்கள். ஒருவருடைய முகத்திலாவது ஸந்தோஷக்குறியில்லை. எங்கே பார்த்தாலும் துக்கமயமாகவே இருந்தது.

காற்று குளிர்ச்சியுடன் அடிக்கவில்லை. சந்திரன் பார்ப்பவர்களுக்கு ஆனந்தத்தை உண்டாக்கவில்லை. ஸூரியன் பிரகாசிக்கவில்லை. பிரபஞ்சம் முழுவதும் துக்கத்தில் முழுகியிருந்தது.

'ராமன் வனத்திற்குப் போகும்பொழுது கௌஸல்யை அவரை எந்தப் பாடு பட்டாவது தடுக்கவேண்டியதல்லவா? அப்படிச் செய்யவில்லையே. லோகத்தில் பெற்ற தாய்களையும் நம்பக்கூடாது' என்று அயோத்யையிலுள்ள புத்திரர்கள் யாவரும் தங்களுடைய தாய்களைக் கைவிட்டார்கள். 'கௌஸல்யை எவ்வளவு பிரார்த்தித்தும் அதை லக்ஷ்யம் செய்யாமல் பிடிவாதமாகக் காட்டிற்குப் போனுரல்லவா? அவரே அப்படிச் செய்தபொழுது லோகத்திலுள்ள புத்திரர்கள் பெற்றதாய்களின் வார்த்தையை எப்படி லக்ஷ்யம் செய்யப்போகிறுர்கள்' என்று தாய்மார்கள் புத்திரர்களிடத்திலுள்ள ஆசையை விட்டார்கள். தன்னிடத்தில் எல்லையற்ற பிரியம் வைத்து தன் கோரிக்கைகளை யெல்லாம் கட்டளைகளாக எண்ணிப் பூர்த்தி செய்துவந்த தசரதரைக் கைகேயி இவ்வளவு உபத்திரவித்து மரணம் நேரிடும்படியான ஆபத்தில் வைத்ததைப் பார்த்து, பர்த்தாக்கள் யாவரும், 'நாம் மனைவிகளை நம்பினுல் மோசம் வரும்; உயிர் தப்ப மாட்டோம்' என்று பயந்து மனைவிகளைக் கை விட்டார்கள். மூத்த மஹிஷியாயும் லோகோத்தமரான ராமனைப் பெற்றவளாயுமிருக்கும் கௌஸல்யையை அலக்ஷ்யம் செய்து, மஹா துஷ்டையான கைகேயியின் வார்த்தைக்கு உட்பட்டு ராமனைக் காட்டிற்கனுப்பத் துணிந்த தசரதருடைய குரூர ஸ்வபாவத்தை பார்த்து 'நமது பர்த்தாக்கள் இனிமேல் பாபம் செய்வதற்குப் பயந்து இனி நம்மை நியாயமாக நடத்தமாட்டார்கள்' என்று பாரியைகள் தங்களுடைய பர்த்தாக்களிடத்தில் பிரியம் வைப்பதை ஒழித்தார்கள். ராமன் ராஜ்யத்தை இழந்து காட்டிற்குப் போவதற்கு காரணமான பரதனைப் பார்த்து உடன்பிறந்தோர் ஒருவரிடத்தில் ஒருவர் பிரியம் வைப்பதை விட்டார்கள். இப்படி ஒவ்வொருவரும் தங்களுடைய பந்துக்களிடத்தில் நம்பிக்கையற்று, நமக்கு ஸகல பந்துக்களும் ராமனே; நமக்கு என்ன மற்றவர்களால் பிரயோஜனம் என்று நினைத்தார்கள்.

ராமன் வனத்திற்குப் போக உத்தரவு கேட்கும்பொழுது சக்கரவர்த்தியும் ஸம்மதித்தார். கௌஸல்யையும் முடிவில் ஸம்மதித்து ஆசீர்வதித்தாள். ஆனுல் ராமனுடைய மித்திரர்கள் அப்படிச் செய்யவில்லை. தன் பெற்றோரிடத்தில் சொல்லாத ரஹஸ்யங்களையும் ராமன் அவர்களிடத்தில் சொல்லாமலிருக்கமாட்டார். ராமன்மேல் காற்றும் அடிக்காமல் தங்களுடைய பிராணனைக் கொடுத்தாவது அவரைக் காப்பாற்றுகிறவர்கள். ராமன் காட்டிற்குப் போகிறுரென்ற வார்த்தையைக் கேட்டவுடன் மூர்ச்சையடைந்து கீழே விழுந்தவன் எவனும் மறுபடியும் மூர்ச்சை தெளிந்து எழுந்தான் என்பது கிடையாது. ஒரு பெரிய பர்வதத்தைப்போல் சோகம் அவர்களை அழுத்தும் பொழுது எப்படி எழுந்திருக்க முடியும்? ஆகையால் சோகத்தால் புத்தி மயங்கி பிரக்ஞையற்றுக் கிடந்தார்கள். இல்லாவிட்டால் ராமனுடைய காலைப் பிடித்துக்கொண்டாவது காட்டிற்குப் போகாமற்செய்ய அவரைத் தடுத்திருக்க மாட்டார்களா? மூன்று லோகங்களுக்கும் அதிபதியான இந்திரனில்லாத பூமி பயத்தால் நடுங்குவதுபோல், தன் ரக்ஷகன் தன்னை விட்டுப் போனபொழுது, மஹாத்மாவான ராமனில்லாத அயோத்யை, பயத்தாலும் சோகத்தாலும் கிடுகிடென்று நடுங்கி, யானை, குதிரை, ஸைன்யம் முதலியவைகளின் மூலமாக வாய்விட்டலறிற்று.



ததஸ்த்வயோத்4யா ரஹிதா மஹாத்மநா
புரந்த ரேணேவ மஹீ ஸபர்வதா |
சசால கோ4ரம் ப4யஶோக பீடி3தா
ஸநாக3 யோதா4ஶ்வ க3ணு நநாத3 ச ॥ (20)

---

## ஸர்க்கம் 42

## தசரதருடைய பிரலாபம்

---

யாவத்து நிர்யதஸ் தஸ்ய ரஜோரூப மத்3ருஶ்யத |
நைவேக்ஷ்வாகு வரஸ்தாவத் ஸஞ்ஜஹாராத்ம சக்ஷுஷீ (1)

ராமன் போகும் வழியில் ரதத்தால் கிளப்பப்பட்ட புழுதி காணப்படும் வரையில் சக்கரவர்த்தி அவ்விடத்திலிருந்து தன் கண்களை எடுக்கவில்லை. 'தசரதன் இன்னும் கொஞ்ச நேரம் தன் பிரியமான புத்திரனைப் பார்க்க முயன்றபொழுது, ராமனுடன் தொடர்புள்ள என்னையாவது அவர் பார்க்கட்டும் என்று கருதியது போல் அந்தப் புழுதியும் வரவர வளர்ந்து கொண்டே வந்தது. அதுவும் அடங்கின பொழுது தசரதர் புத்திரசோகம் தாங்காமல் நின்றவிடத்திலேயே விழுந்தார். கௌஸல்யை அவருடைய புஜத்தைப் பிடித்து உடனே தூக்கி எடுத்தாள். பரதனிடத்தில் தன் பிரீதி முழுவதையும் வைத்த கைகேயி இடது பக்கத்தில் வந்து நின்றுளேயல்லாது, கௌஸல்யையைப்போல் தசரதரைத் தூக்கி எடுக்க முயற்சி செய்யவில்லை. சக்கரவர்த்தியோ ஸ்வபாவமாகவே எல்லோரிடத்திலும் வணக்கமாயும் மரியாதையாயும் நடக்கிறவர்; தர்ம மார்க்கத்தை விடாதவர்; நீதியின் வழியை அனுஸரிக்கிறவர். அப்படியும் கைகேயியினிடத்திலுள்ள துவேஷத்தால் "அடீ, துஷ்டே! என்னைத் தொடாதே; எனக்கு எதிரில்நிற்காதே; எனக்கு நீ பாரியையுமல்ல, பந்துவுமல்ல; உன்னை அண்டிப் பிழைப்பவர்களுடன் எனக்கு ஸம்பந்தம் வேண்டாம். அவர்களுக்கு நான் பிரபுவல்ல. எனக்கு அவர்கள் வேலைக்காரர்களுமல்ல. பணம் ஒன்றிலேயே நோக்குள்ள, தர்மத்தைவிட்ட உன்னை நான் விட்டு விடுகின்றேன். உன்னை அக்னி ஸாக்ஷியாக நான் விவாகம் செய்திருந்தாலும்

அதனால் எனக்கு கிடைத்திருக்கும் இஹபர ஸௌக்யங்களை இதோ விட்டேன். பரதன் இந்த ராஜ்யத்தைப்பெற்று ஸந்தோஷமடைந்தால் அந்த மஹா பாபி எனக்குச் செய்யும் உத்தரக்கிரியைகள் என்னைச் சேரவேண்டாம்" என்று கோபத்துடன் சொன்னார்.

பிறகு கௌஸல்யை புழுதிபடிந்த தேகத்தையுடைய தன் கணவரைத் தூக்கி எடுத்து மெள்ள மெள்ள அரண்மனைக்கு அழைத்துப் போனாள். தசரதர் தன் பிரியமான புத்திரன் காட்டில் வஸிக்கும் தபஸ்விகளின் வேஷத்தைத் தரித்துப் போவதை நினைத்து நினைத்து, தர்மாத்மாவானதால், பணத்திற்காக ஆசைப்பட்டு பிராம்மணனைக் கொன்றவனைப் போலவும், கொழுந்து விட்டெரியும் நெருப்பைக் கட்டி அணைப்பவனைப் போலவும் தவித்தார். போகும்பொழுது ரதத்தின் சுவடுகளை அடிக்கடி திரும்பித் திரும்பி உற்றுப் பார்த்துக்கொண்டே போகும் மஹாராஜா, ராகுவால் பீடிக்கப்பட்ட சந்திரனைப்போல் தோன்றினார். தன் புத்திரன் அப்பொழுது நகரத்திற்கு வெளியில் போயிருப்பானென்று தெரிந்துகொண்டு அவனை நினைத்து, "என் குழந்தையை இங்கிருந்து காட்டிற்குக் கொண்டுபோகும் ரதத்தின் சுவடுகள் மாத்திரம் காணப்படுகின்றன. அந்த மஹாத்மாவைக் காணோமே. நேர்த்தியான சந்தனங்களால் அலங்கரிக்கப்பட்ட தேகத்துடன் ஸுகமான தலையணைகளின்மேல் சாய்ந்துகொண்டு, அழகு வாய்ந்த வேலைக்காரிகள் விசிறி போட நித்திரை செய்தவன், இன்று ராத்திரியில் எங்கேயோ எந்த மரத்தடியிலேயோ எந்தக் கல்லையோ எந்தக் கட்டையையோ தலையணையாக வைத்துக்கொண்டு படுப்பான். மலைச்சாரலிலிருந்து யானை தூங்கி எழுந்திருப்பதுபோல், புழுதிபடிந்த தேகத்துடன் தரையிலிருந்து பரிதாபமாகப் பெருமூச்சு விட்டுக்கொண்டு எழுந்து போவான். லோகநாதனானாலும் தற்காலத்தில் அநாதையைப் போல் எழுந்து போவதைக் காட்டில் வஸிப்பவர்கள் பார்க்காமலிருப்பார்களா ? ஜனகமஹாராஜனுடைய பிரியமான பெண் ஜானகி, இன்று கல்லும் முள்ளுமுள்ள காட்டில் நடந்து கஷ்டப்படுவாள். ஸகல ஸுகங்களையும் அனுபவிக்கத் தகுந்தவளேயல்லாது கஷ்டமென்பதை ஸ்வப்னத்திலும் நினைக்கத் தகாதவள். காடுகளை இதுவரையிலும் பார்த்ததே இல்லை. மயிர்க் கூச்சலையுண்டாக்கும் மிருகங்களின் கம்பீரமான சப்தங்களைக் கேட்டுப் பயத்தால் நடுங்குவாளே ! மஹா பாபி, கைகேயி! ராமனில்லாமல் ஒரு நிமிஷமாவது என்னால் பிழைக்க முடியாது. நீ என்னைக் கொன்றுவிட்டுக் கைம்பெண்ணாய் இந்த ராஜ்யத்தில் உன்னிஷ்டப்படி அரசாண்டுகொண்டிரு" என்று இப்படி பிரலாபித்துக்கொண்டு, பிணத்தைக் கொளுத்திவிட்டு ஸ்நானம் செய்து வீட்டுக்குத் திரும்பி வருகிறவர்களைப்போல் தசரதரும் அவரைச் சூழ்ந்த ஜனங்களும் அசுபமான அந்த நகரத்தில் புகுந்தார்கள். அதுவரை மஹாராஜா வெளியில் வரும்பொழுது அவரைப் பார்க்க, வீட்டு வாசல்களிலும் நாற்சந்திகளிலும் ஜனங்கள் கூட்டம்கூட்டமாக நிற்பார்கள். இக்காலத்தில் அங்கே ஒரு பிராணியுமில்லை; கடைகளும் கோவில்களும் அடைக்கப்பட்டிருந்தன. நடக்கச் சக்தியுள்ள ஜனங்களெல்லோரும் ராமனுடன் போய்விட்டார்கள். சோகத்தால் மூர்ச்சையடைந்தவர்களும் ராமனை விட்டுப் பிரிந்ததால் பலமற்றவர்களும் ரா வீதிகளில் அங்கங்கே காணப்பட்டார்கள். மற்ற இடங்களில் ஜனஸஞ்சாரமே இல்லை. பட்டணத்தில் ஸகல பிராணிகளும் ராமனையே நினைத்துத் துக்கப்படுவதைப் பார்த்துக்கொண்டே தானும் புலம்பிக்கொண்டு தசரதர், ஸூரியன் மேகக் கூட்டத்தில் மறைவதுபோல் தன் அரண்மனையில் புகுந்தார். மஹா ஸர்ப்பங்கள் நிறைந்த ஒரு பெரிய மடுவில் எவரும் இறங்கப் பயந்துகொண்டிருக்கையில் ஒரு காலத்தில் கருடபகவான் அதிலிருக்கும் ஸர்ப்பங்களைக் கொன்று ஒருவருக்கும் பயமில்லாமல் செய்து, அதில் தாராளமாக ஸஞ்சரிக்கும்படி தூண்டியதுபோல், அதுவரையில் ராமன் இருந்ததால் சத்ருக்கள் எவரும் ஸ்வப்னத்திலும் பிரவேசிக்கத் துணியாத அந்த அயோத்யை, அப்பொழுது ராமலக்ஷ்மணர்களும் ஸீதையும் இல்லாததால் எவரும்தடையில்லாமல் பிரவேசிக்கும்படியான இடமாயிற்று.

பிறகு தசரதர் குரல் தழதழத்து வார்த்தைகள் குளற ஹீனஸ்வரத்துடன் "ராமனைப் பெற்ற பாக்கியசாலியான கௌஸல்யையின் வீட்டிற்கு என்னைச் சீக்கிரத்தில் கொண்டுபோய் விடுங்கள். அதைத் தவிர மற்றவிடங்களிலிருந்தால் என் ஹிருதயத்திலுள்ள தாபம் தணியாது" என்றார். உடனே வழி காட்டுகிறவர்கள் வெகு வணக்கமாக அவரைக் கௌஸல்யையின் அந்தப்புரத்திற்கு அழைத்துப் போய் அங்கே காவலிருந்தார்கள். அங்கே போய்க் கட்டிலில் படுத்துக்கொண்ட பிறகும் அவருக்கு ஆறுதலுண்டாகவில்லை. சந்திரனில்லாத ஆகாசத்தைப்போல் ராமலக்ஷ்மணர்களும் ஸீதையுமில்லாத அந்த அந்தப்புரம் காந்தியற்றதாயிற்று. தசரதர் நான்கு புறத்திலும் பார்த்துப் பார்த்து, மிகுந்த தைரியசாலியானாலும், கைகளைத் தூக்கிக்கொண்டு "ஹா ராமா! என்னை இப்படிப் பரிதவிக்க விட்டுப் போகின்றாயே! நீ வனத்திலிருந்து திரும்பி வரும்பொழுது உன்னைப் பார்த்து ஆலிங்கனம் செய்யும் பாக்கியத்தைச் செய்தவர்களுடைய ஜன்மமல்லவா ஜன்மம்" என்று பிரலாபித்தார்.

இப்படியிருக்க பிரளய காலத்து ராத்திரியைப் போல் கோரமான இருட்டுடன் இரவு ஆரம்பித்தது. தசரதருக்குத் துக்கம் வர வர அதிகரித்தது. நடுநிசியில் கௌஸல்யையைப் பார்த்து "என் கண்களில் பிரகாசம் அழிந்தது. நீ இருக்குமிடம் தெரியவில்லை. உன் கைகளால் என்னை நன்றாகத் தொடு. ராமனுடன் வனத்திற்குப் போன என் கண்கள் இன்னும் திரும்பி வரவில்லை. அறுபதாயிரம் வருஷங்கள்வரையில் விரதங்களையும் உபவாஸங்களையும் செய்து பெற்ற என் அருமைக் குழந்தையைப் பார்த்த கண்கள், அவனு

டைய அழகிலேயே ஈடுபட்டு அவனுடன் போயின. போனவை திரும்பி வருமா? அவனைப் பார்க்கும் பாக்கியம் எனக்கில்லாவிட்டாலும் அவனைப் பெறும் பாக்கியத்தைச் செய்த உன்னையாவது பார்க்கலாமல்லவா? அதற்கும் உபயோகப்படாமல் என் கண்கள் வீணாயின. கைகேயியின் முகத்தைப் பார்த்த மஹாபாபம் போக வேண்டுமானால் ராமனுடைய முகத்தைப் பார்க்கவேண்டும். அது கிடைக்காததால் உன் முகத்தையாவது பார்க்கவேண்டுமென்று ஆவல் கொண்ட எனக்கு அதுவும் கொடுத்து வைக்கவில்லை. இந்திரியங்கள் விஷயங்களை அறிவதே அவைகளிருப்பதற்கு அடையாளம். நீ இருப்பதைப் பார்க்க முடியாததால் எனக்குக் கண் என்ற இந்திரியம் போயிற்றென்பது நிச்சயம். இப்படியே உணர்ச்சியென்ற இந்திரியமும் இருக்கிறதா போயிற்றா என்று பார்த்துச் சொல். உன் கைகளால் என்னைத் தொட்டுப் பார். எனக்கு உணர்ச்சியிருந்தால் அந்த இந்திரிய சக்தி போகவில்லையென்று அறிந்துகொள்வேன். ராமனைப் பார்க்காமல் தவிக்கும் எனக்கு ராமனைப் பெற்ற உன்னைத் தொட்டால் அந்தத் தாபம் நீங்கும். ராமனைப் பார்க்காவிட்டாலும் ராமனுடைய மாதாவான உன்னைப் பார்த்துப் பேசித் தொடுவதால் அதற்கு ஸமமான ஸுகம் கிடைக்கும். 'முன்பு கைகேயியுடன் ரஹஸ்யமாக எதையோ ஆலோசித்து என் மகனை ராமனைக் காட்டிற்கு அனுப்பிவிட்டார். இன்றைக்கு என்னிடத்தில் ப்ரீதியுள்ளவரைப்போல் காட்டிக்கொண்டு இன்னும் என்ன கெடுதிசெய்ய நினைத்திருக்கிறாரோ' என்று ஸந்தேகப்படாதே. அறியாத்தனத்தால் ஏதோ செய்துவிட்டானென்று எண்ணி என்னை மன்னித்துக் கைகளால் ப்ரீதியுடன் தொடு" என்றார்.

இப்படி ராமனைப் பற்றிப் புலம்பும் தன் பர்த்தாவைப் பார்த்து, அவருடைய ஸமீபத்தில் உட்கார்ந்து பெருமூச்சுவிட்டுக்கொண்டு கௌஸல்யை தானும் பரிதாபமாக ப்ரலாபிக்க ஆரம்பித்தாள்.

தம் ராம மேவாநு விசிந்தயந்தம்
ஸமீக்ஷ்ய தே³வீ ஶயநே நரேந்த்³ரம் |
உபோபவிஶ்யா தி⁴க மார்தரூபா
விநிஶ்வஸந்தீ விலலாப க்ருச்ச்²ரம் || (35)

## ஸர்க்கம் 43

# கௌஸல்யையின் ப்ரலாபம்

தத : ஸமீக்ஷ்ய ஶயநே ஸந்நம் ஶோகேந பார்தி²வம் |
கௌஸல்யா புத்ரஶோகார்தா தமுவாச மஹீபதிம் || (1)

புத்திரசோகத்தினால் வருந்திய கௌஸல்யை, உடலும் மனமும் தளர்ந்து சயனத்தில் படுத்திருக்கும் தசரதரிடம் சொல்லத் தொடங்கினாள்.



சட்டையுரித்த கிருஷ்ணஸர்ப்பம், தன்னிடத்திலிருக்கும் கொடிய விஷத்தை, ஒருவனைக் கடித்துக் கக்கிவிட்டு, இன்னும் யாரைக் கடிக்கலாமென்று தேடித் திரிவதுபோல், வெகு குரூரமான கைகேயியும், கபடமென்ற விஷத்துடன் ராமனைக் கடித்துக் காட்டிற்கு அனுப்பிவிட்டு, இன்னும் யாரைக் கெடுப்போமென்று அலைகிறாள். ஒரு வீட்டிற்குள் ஸர்ப்பம் புகுந்தால் அந்த வீட்டிலிருப்பவர்களும் வெளியிலிருப்பவர்களும் அதைக் கண்டு நடுங்குவார்கள். ராமனைக் கெடுத்துவிட்டு இனிமேல் என்னை ஹிம்ஸிக்க ஆரம்பிப்பாள்.

ராமன் இந்த ராஜ்யத்தை ஆளக்கூடாது. பரதனே ஆளவேண்டுமென்று உமக்குத் தோன்றினால், பரதனுக்கு ராஜ்யாபிஷேகம் செய்யும். ஆனால் ராமனைக் காட்டிற்கு ஏன் அனுப்பவேண்டும்? 'பரதனுக்கு அவனால் கெடுதி நேருமல்லவா' என்றால், ராமனைப் பரதனுக்கு அடிமையாக இருக்கும்படி செய்கிறேன். அப்பொழுதும் ராகவனைப் போஷிக்கும் பாரம் பரதன்மேல் சுமக்குமல்லவா என்றால், நான் அந்த சிரமத்தையும் பரதனுக்கு வைக்கவில்லை. ராமன் இந்த நகரத்தில் வீடுவீடாகப் பிச்சை எடுத்துப் பிழைக்கும்படிச் சொல்லுகிறேன். எப்படியாவது அவன் என் ஸமீபத்திலிருந்தால் போதும். அக்னிஹோத்திரம் செய்கிறவர்கள் அமாவாஸ்யை பௌர்ணிமைகளில் தேவதைக்குத் தரவேண்டிய புரோடாசத்தை ராக்ஷஸர்களுக்கு தருவதுபோல் ராஜ்யத்தை ராமனுக்குத் தராமல் கைகேயிக்குக் கொடுத்தீர். யானைபோல் கம்பீரமான நடையுடைய ராமன், ஸீதை லக்ஷ்மணன் இவர்களுடன், வில்லை ஏந்தி, வனம் புகுந்து கொண்டிருப்பான் இப்பொழுது.

ஒருநாளும் காட்டில் வஸிக்கும் துக்கத்தை அறியாத குழந்தைகளைக் கைகேயியின் வார்த்தையைக் கேட்டு வனத்திற்குத் துரத்தினீரே! அங்கே அவர்கள் என்ன கஷ்டப்படுவார்களோ? அதை நினைத்தீரா? ராமனோ யௌவன புருஷன்; ஸீதையோ யௌவன ஸ்த்ரீ; சிரேஷ்டமான ஆடைகள், ஆபரணங்கள், ஆஸனங்கள், வாஹனங்கள், போஜனங்கள், பரிவாரங்களுடன் இஷ்டப்படி அவர்கள் காலத்தைக் கழிக்கவேண்டிய ஸமயம் இதல்லவா? அப்படியிருக்க, மனிதர்களின் நாட்டமில்லாத பயங்கரமான காட்டில் மேற்சொன்ன ஸாதனங்கள் யாதுமின்றி, அநாதைகளைப் போல், காய் கிழங்குகளைத் தின்றுகொண்டு, மான்தோல், மரவுரி, சடைகளை தரித்துக்கொண்டு, மரத்தடியில் படுத்துக்கொண்டு, துஷ்ட மிருகங்களாலும் ராக்ஷஸர்களாலும் எந்த ஆபத்து நேருமோ என்று எப்பொழுதும் பயந்துகொண்டிருக்கும்படி, இங்கே தங்கக்கூடாதென்று துரத்தினீரே! ராமலக்ஷ்மணர்களையும் ஸீதையையும் நான் மறுபடியும் பார்த்து என் துக்கம் தீரும் நல்ல நாள் இப்பொழுதே வந்து விடுமா? மஹாகாந்தி பொருந்தின இந்த அயோத்யையில் ராம லக்ஷ்மணர்கள் தூங்கி எழுந்தவர்களைப் போல் உத்ஸாஹத்துடன் ப்ரவேசிப்பதையும் இங்கே வஸிக்கும்

ஜனங்கள் த்வஜங்களையும், தோரணங்களையும், மாலைகளையும் ஸந்தோஷத்துடன் எடுத்துக் கட்டி, பர்வகாலங்களில் ஸமுத்திரம் கோஷிப்பதுபோல், உத்ஸவம் கொண்டாடுவதையும் நான் எப்பொழுது பார்ப்பேனோ? பசுவை முன்னிட்டுக்கொண்டு காளை வருவதுபோல், ஸீதையைத் தனக்கு முன்னே ரதத்தில் வைத்துக் கொண்டு எப்பொழுது இந்த நகரத்தில் ராமன் பிரவேசிப்பான்? அநேக கோடி ஜனங்கள் ராஜ வீதிகளில் நின்றுகொண்டு, என் குழந்தைகள் வரும் வழியில் பொரியை வாரியிறைப்பதை நான் எப்பொழுது பார்ப்பேன்? ராம லக்ஷ்மணர்கள் அழகான குண்டலங்களைத் தரித்துக்கொண்டு, உன்னதமான சிகரங்களையுடைய மலைகளைப்போல், ரதத்தில் தங்களுக்கு முன்னே ஆயுதங்களை வைத்துக் கொண்டு, அயோத்யையில் புகுவதை நான் எப்பொழுது பார்ப்பேன்? கன்யைகள் பிராம்மணர்களுக்கு புஷ்பங்களையும் பழங்களையும் கொடுத்துக்கொண்டு மங்களகரமாக இந்த நகரத்தை பிரதக்ஷிணம் செய்வதை நான் எப்பொழுது பார்ப்பேன்? தேவதைகளைப் போல் இருபத்தைந்து வயதுள்ளவனும் ஞானத்தால் முதிர்ந்தவனுமான என் ராமன், பிரதி மாதம் பெய்கின்ற மும்மாரி ஜனங்களுக்கு ஸந்தோஷத்தை உண்டுபண்ணுவதுபோல், எப்பொழுது இங்கே திரும்பிவந்து என் துக்கத்தைப் போக்குவான்? நான் முன் ஜன்மங்களில், கன்றுக்குட்டிகள் பசியுடன் பால் குடிக்கப்போகும் ஸமயத்தில் பசுக்களிடமிருந்து அவைகளைப் பிரித்தேன் போலும். இல்லாவிட்டால் மஹா வீரனை இந்தப் புத்திரனை அடைந்தும் இவ்வளவு துக்கத்தை அனுபவிப்பதற்குக் காரணமென்ன? இளங்கன்றையுடைய ஒரு பசு, தன் பிரீதிக்கு பாத்திரமான அதை ஒரு ஸிம்ஹம் கொன்றால் எப்படித் தவிக்குமோ, அப்படி என் ஒரே புத்திரனைக் கைகேயியால் பறிகொடுத்துத் தவிக்கிறேன். ஸகல சாஸ்திரங்களில் நிபுணனும் ஸகல கல்யாண குணங்களால் அலங்கரிக்கப்பட்டவனும் என் ஒரே புத்திரனுமான ராமனை விட்டுப்பிரிந்து நான் எப்படி உயிர் தரிப்பேன்? மஹா பல பராக்கிரமசாலியான என் பிள்ளையைப் பார்க்க பாக்கியமில்லாத நான் உயிரோடிருக்க வேண்டுமென்று தெய்வத்திற்கே இஷ்டமில்லை. கோடையில் ஸூரியன் தன் கிரணங்கள் யாவையும் பிரயோகித்துப் பூமியைக் கொளுத்துவதுபோல், என் குழந்தையை விட்டுப் பிரிந்ததால் உண்டாகும் துக்கத் தீ என்னைக் கொளுத்துகிறது'' என்றாள்.

அயம் ஹி மாம் தீ$^{3}$பயதே ஸமுத்தி$^{2}$த :
தநூஜ ஶோக ப்ரப$^{4}$வோ ஹுதாஶந : |
மஹீமிமாம் ரஶ்மிபி$^{4}$ருத்$^{3}$த$^{4}$த ப்ரபோ$^{4}$
யதா$^{2}$ நிதா$^{3}$கே$^{4}$ ப$^{4}$க$^{3}$வாந் தி$^{3}$வாகர : || (21)



## ஸர்க்கம் 44

## ஸுமித்திரை கௌஸல்யையைத் தேற்றினது

விலபந்தீம் ததா$^{2}$ தாம் து கௌஸல்யாம் ப்ரமதோ$^{3}$த்தமாம் |
இத$^{3}$ம் த$^{4}$ர்மேஸ்தி$^{2}$தா த$^{4}$ர்ம்யம் ஸுமித்ரா வாக்யமப்$^{3}$ரவீத் (1)

இப்படி பிரலாபிக்கும் கௌஸல்யையைப் பார்த்து எப்பொழுதும் தர்மத்திலேயே ஆழ்ந்த மனமுள்ள ஸுமித்திரை, "அம்மா! நீ ஸகல குணங்களாலும் அலங்கரிக்கப்பட்ட புருஷோத்தமனைப் புத்திரனாக அடைந்திருக்க, இப்படி ஏன் பிரலாபிக்கவேண்டும்? இப்படி அழுவது நியாயமல்ல. புருஷோத்தமனுக்கு எப்பொழுதாவது எவ்விடத்திலாவது அபாயம் நேருமா? உன் புத்திரனோ மஹா பலவான். அப்படியிருந்தும் தனக்குக் கிடைக்கவேண்டிய ராஜ்யத்தைத் தள்ளிவிட்டு, காட்டிற்குப் போயிருக்கிறான். காரணமென்ன? மஹாத்மாவும் ஸத்தியவானுமான தன் பிதாவின் வாக்கியத்தைப் பரிபாலனம் செய்யவேண்டுமென்ற தர்மத்தை அனுஷ்டிப்பதற்காகவல்லவா? அது எப்பொழுதும் பெரியோர்களால் ஆசரிக்கப்படும் உத்தமமான தர்மமல்லவா? பரலோகத்தில் அளவற்ற ஸுகத்தைக் கொடுக்கக் கூடியதல்லவா? இப்படியிருக்க இதைப்பற்றித் துக்கப்படலாமா? மஹா பரிசுத்தனும் ஸகல பூதங்களிடத்திலும் கருணை வைத்தவனுமான என் புத்திரன் லக்ஷ்மணனும் ராமனுக்கு கைங்கரியம் செய்வதென்ற உத்தமமான தர்மத்தையும் பிதாவிடத்தில் வைக்கவேண்டிய பக்தியையும் அனுஷ்டிக்கிறான். அந்த மஹாத்மாவிற்கும் இதனால் பரம லாபம் கிடைக்கும். காட்டில் இருப்பதாலுண்டான துக்கங்களை இயற்கையாயும் ராமனால் சொல்லப்பட்டும் அறிந்த ஜானகியும், எப்பொழுதும் ஸுகத்தையே அனுபவிக்கத் தகுந்தவளானாலும், தர்மாத்மாவான உன் புத்திரனுடன் வனத்திற்குப் போயிருக்கிறாள். கீர்த்தியென்ற கொடியை உலகத்தில் தூக்கி விளங்கும்படி உன் புத்திரன் செய்கிறவன்; (அவனுடைய கீர்த்தி லோகமெங்கும் பரவும்). தர்மமும் ஸத்தியமும் விரதமுமே அவனுக்கு தனம். அவனுக்குக் கிடைக்காத ஸுகம் உலகில் என்ன இருக்கிறது?

ராமன் மனோ வாக்குக் காயங்களில் மஹாசுத்தன், மஹாத்மா, மேன்மை வாய்ந்தவனென்று உண்மையாக அறிந்த ஸூரியன் தன் கிரணங்களால் ராமனைத் தொடுவதற்கும் துணியமாட்டான். வாயுபகவான் எந்தக் காலத்திலும் ராமனுக்கு ஹிதமான சீதோஷ்ணத்துடன் காட்டிலிருக்கும் ஸகல வாசனைகளையும் கிரஹித்துக் கொண்டு ஸுகமாக வீசுவார். இரவில் படுத்துக்கொண்டிருக்கும் பொழுது, பிரியத்துடன் தன் புத்திரனை ஆலிங்கனம் செய்வதுபோல், சந்திரன் தன் குளிர்ந்த கிரணங்களால் அவரை ஸந்தோஷப்படுத்துவான். முன்னொரு காலத்தில் ராமன் தண்டகாரண்யத்திற்குப்

போய் சம்பராஸுரனுடைய ராஜதானியான வைஜயந்தமென்ற நகரத்தை முற்றுகையிட்டு அவனைக் கொன்றபொழுது பிரஹ்மா சந்தோஷப்பட்டு அவனுக்குத் திவ்யமான அஸ்திரங்களைக் கொடுத்திருக்கிறார். இப்படிப்பட்ட சூரன் காட்டிலிருந்தாலும் வீட்டிலிருப்பதைப்போல் யாதொரு பயமுமில்லாமல் தன் புஜபலத்தால் தன்னையும் தன்னைச் சேர்ந்தவர்களையும் காப்பாற்றிக்கொண்டு வஸிப்பவன். ஆனால் ‘ராமன் திரும்பி வருவதற்குள் பரதனுடைய அதிகாரம் ஸ்திரப்பட்டுவிடும்; அப்பொழுது ராமனுக்கு ராஜ்யம் கிடைக்காதே, என்ன செய்கிறது’ என்றால், சத்துருக்கள் யாரானாலும் ராமனுடைய பாணங்கள் செல்லும் வழியில் நின்று பிழைத்தார்களென்று கேட்டதுண்டா? அப்படிப்பட்டவருக்கு இந்தப் பூமியை அடைவது ஒரு பொருட்டா? ஸர்வ லக்ஷணங்களும் பொருந்திய ஸௌந்தரியமும் சத்துருக்களை நாசம்செய்யும் சௌரியமும் எல்லையற்ற பலமும் வாய்ந்த ராமன், காட்டிலிருந்து திரும்பிவந்து ஒரு க்ஷணத்தில் இந்த ராஜ்யத்தை வசப்படுத்திக் கொள்வான். ராமன் மஹாத்மா; ஸகல லோகத்தையும் பிரகாசிக்கச்செய்யும் ஸூரியனையும் பிரகாசிக்கச்செய்வான் அவன்; ஸகல பதார்த்தங்களையும் எரிக்கும் அக்கினியையும் எரிக்கக்கூடியவன் அவனே; யாவற்றிற்கும் ஈசுவரனான பிரஹ்மாவுக்கும் ஈசுவரன் அவனே; ஸகல ஸம்பத்தையும் கொடுக்கும் மஹாலக்ஷ்மிக்கும் ஸம்பத்தைக் கொடுக்கிறவன் அவனே; யாவற்றிற்கும் ஆதாரமான பூமிதேவிக்கும் ஆதாரமானவன் அவனே; நாம் விரும்பும் கீர்த்தியும் விரும்பக்கூடிய பொருளும் அவனே; நாம் பூஜிக்கின்ற தேவதைகளும் பூஜிக்கும் தெய்வமும் அவனே; ஸகலப் பிராணிகளிலும் சிரேஷ்டமானவன் அவனே. இப்படி அனந்தமான கல்யாண குணங்கள் பொருந்தின ராமனுக்கு அயோத்யையிலாவது தண்டகாரண்யத்திலாவது கெடுதியைச் செய்யக்கூடிய வஸ்து ஒன்றுமில்லை. அந்தப் புருஷோத்தமன் பூதேவி ஸீதாதேவி விஜயலக்ஷ்மியென்ற மூன்று பட்டமஹிஷிகளுடன் சீக்கிரத்தில் பட்டாபிஷேக மஹோத்ஸவத்தைக் கண்டருளுவான். லக்ஷ்மியின் அவதாரமான ஸீதை ராமனுடன் போயிருக்கையில் ராஜ்யலக்ஷ்மி வேறொருவனை அடையுமா? சத்ருக்களால் ஜயிக்கமுடியாத ராமன் மரவுரியைத் தரித்துக்கொண்டு தேவதையைப்போல் இந்த நகரத்தை விட்டுப் போகும் பொழுது அயோத்யையிலுள்ள ஜனங்கள் யாவரும் அதைக் கண்டுதுக்கத்தால் கண்ணீர் விட்டு மூர்ச்சை அடைந்தார்கள். ஆனால் ராஜ்யலக்ஷ்மியான ஸீதை அவனுடன் போகும்பொழுது அவனுக்கு எதுதான் கிடைக்காது? வில்லாளிகளுள் சிரேஷ்டனான லக்ஷ்மணன் ஆயுதபாணியாக ராமனுக்குமுன் போகும்பொழுது அவனுக்குக் கிடைக்காததும் உண்டோ?

வனவாஸம் நீங்கி ரகுநாதன் திரும்பிவருவதைப் பார்ப்பாய். அவருக்காக வருத்தப்படாதே; அவரைப்பற்றின அக்ஞானத்தை



விடு. நான் சொல்வதே உண்மை. ஆகாசத்தில் சந்திரன் உதித்தது போல் உன் புத்திரன் தன் சிரஸை உன் பாதங்களில் வைத்து நமஸ்காரம் செய்வதை நீ சீக்கிரத்தில் பார்ப்பாய். அவன் இந்த நகரத்திற்கு மறுபடியும் வந்து, ஸகல வைபவங்களுடன் அபிஷேகம் செய்யப்படும் திருக்கோலத்தைக் கண்டு நீயே ஆனந்தக் கண்ணீர் விடுவாய். ராமனிடத்தில் துக்கமாவது சோகமாவது அசுபமாவதுதோன்றிற்றா? இல்லை. ஆகையால் ராமனும் லக்ஷ்மணனும் ஸீதையுடன் அதிசீக்கிரத்தில் உன்னைப் பார்ப்பார்கள்? நீ புலம்பக்கூடாது; மனதில் வருத்தப்படக்கூடாது. மற்ற யாவரையும் நீ தேற்றி ஸமாதானப்படுத்த வேண்டுமல்லவா? நீயே இப்படி வருத்தப்பட்டால் அவர்கள் என்ன செய்வார்கள்? ராமனைப் புத்திரனாக அடைந்தும் நீ துக்கப்படுவது எனக்கு ஆச்சரியமாக இருக்கிறது. ஸாதுக்களுடைய மார்க்கத்தையே அனுசரிக்கும் ராமனைவிட மேலானவர் இந்தப் பிரபஞ்சத்தில் யார் இருக்கிறார்கள்? ராமன் ஸீதையோடும் லக்ஷ்மணனோடும் வனவாஸம் செய்து திரும்பி வந்து உன்னை நமஸ்கரிக்கும் பொழுது, மேகக் கூட்டங்கள் மழைக்காலத்தில் தாரை தாரையாக மழை பெய்வது போல் நீயும் ஆனந்தக்கண்ணீர் விடுவாய். எல்லோருடைய மனோரதங்களையும் பூர்த்திசெய்விக்கும் உன் புத்திரன் வனத்திலிருந்து திரும்பிவந்து, பருத்து மிருதுவாயிருக்கும் புஜங்களால் உன் பாதங்களைப் பிடித்து நமஸ்கரிப்பதை நான் பார்ப்பேன். உன் புத்திரன் தன் மித்திரர்களுடன் உன்னை நமஸ்காரம் செய்யும் பொழுது, மலைச்சிகரங்களில் மேகக் கூட்டங்கள் தாரை தாரையாய் மழை பெய்வதுபோல், நீயும் ராமனுடைய தேகத்தை ஆனந்தக் கண்ணீரால் நனைப்பாய்” என்றாள்.

ஸமயோசிதமான வார்த்தைகளால் பிறருடைய துக்கத்தைப் போக்குவதில் ஸுமித்திரை மிகுந்த ஸாமர்த்தியமுள்ளவள். தோஷலேசமுமில்லாதவள். இப்படிப் பலவிதமாகக் கௌஸல்யையின் துக்கத்தைப் போக்க முயன்றாள். கௌஸல்யையைப்போல் ஸுமித்திரை தசரதருடைய மஹிஷி; கௌஸல்யை ராமனைக் காட்டிற்கனுப்பினதுபோல் அவளும் லக்ஷ்மணனைக் காட்டிற்கனுப்பினாள். கௌஸல்யையைப்போல் ஸுமித்திரையும் தசரதருடைய பிரீதியை அடையவில்லை. ஆனால் ராமன் தன்னை உத்தரவு கேட்கும்பொழுது கௌஸல்யை அவரைப் பலவிதமாகத் தடுத்து பிரலாபித்தாள். லக்ஷ்மணன் காட்டிற்குப் போவதற்குத் தன்னை உத்தரவு கேட்க வந்தபொழுது ஸுமித்திரையோ கொஞ்சம்கூட வருத்தப்படவில்லை; தர்மத்திற்குத்தகுந்த ஹிதோபதேசங்களைச் செய்து எல்லையற்ற க்ஷேமத்தைக் கொடுக்கும் பகவத் கைங்கர்யமென்ற பரம ரஹஸ்யமான உபாயத்தை அனுஷ்டிக்கும்படி கட்டளையிட்டு, ஸந்தோஷத்துடன் அனுப்பினாள். கைகேயி தன்னை குரூரமாக நடத்துவாளோ என்று கௌஸல்யைக்குப் பயமுண்டு; ஸுமித்திரைக்கோ அந்தப் பயம் கொஞ்சமுமில்லை. தன்னிடத்தில்

அரசன் பிரியமில்லாமல் கைகேயியிடத்தில் பிரியத்துடனிருக்கிறாரென்று கௌஸல்யைக்கு வெகு துக்கம்; ஸுகதுக்கங்களையும் மான அவமானங்களையும் சத்துருமித்திரர்களையும் ஸமமாகப் பார்க்கும் ஞானியான ஸுமித்திரைக்கு அந்த அக்ஞானரூபமான துக்கமே இல்லை. பரமாத்மாவான ராமனைப் புத்திரனாக அடைந்தும் கௌஸல்யைக்கு அவருடைய நிஜஸ்வரூபம் தெரியவில்லை. ராமன் பரமாத்மா என்பதை நன்றாக அறிந்து ஸுமித்திரை அவரை ஆராதிப்பவள். ஆகையால் அவளுடைய வார்த்தைகளைக் கேட்க கேட்க, சரத் காலத்தில் ஸ்வல்ப ஜலமுள்ள மேகங்கள் சிதறுவது போல் கௌஸல்யையின் தேகத்திலுள்ள தாபமும் மனத்திலுள்ள துக்கமும் இருந்த இடம் தெரியாமல் மறைந்தன.

நிஶம்ய தல்லக்ஷ்மண மாத்ரு வாக்யம்
ராமஸ்ய மாதுர் நரதே³வ பத்ந்யா: |
ஸத்³ய: ஶரீரே விநநாஶ ஶோக :
ஶரத்³க³தோ மேக⁴ இவால்பதோய: || (31)

## ஸர்க்கம் 45

## நகரத்து ஜனங்கள் ராமனுடன் சென்றது

அநுரக்தா மஹாத்மாநம் ராமம் ஸத்ய பராக்ரமம் |
அநுஜக்மு : ப்ரயாந்தம் தம் வநவாஸாய மாநவா: || (1)

அந்தப்புரத்து ஜனங்களும் மந்திரிகளும் தசரதரும் நின்றுவிட்ட பிறகும், பட்டணத்து ஜனங்கள் ராமனிடத்தில் வைத்த பிரீதியால் அவர் வனத்தை நோக்கிச் சென்றபொழுது அவருடைய ரதத்தைப் பின்தொடர்ந்தார்கள். மஹா பராக்கிரமசாலியான ராமன் போகுமிடத்தில் அவர்களுக்குப் பயமுண்டா ? பூர்ண சந்திரனைக் கண்டால் ஜனங்களுக்கு ஆனந்தம் எப்படி அடங்காதோ அப்படி மஹா கீர்த்திசாலியும் ஸகல கல்யாண குணங்களும் பொருந்தியவருமான ராமனைக் கண்டால் அயோத்யையிலுள்ள ஜனங்களுக்குண்டாகும் ஆனந்தத்திற்கு எல்லையில்லை. அவர்கள் 'ராமா! திரும்பு, திரும்பு' என்று அடிக்கடி பிரார்த்தித்தார்கள் ; அவரோ பிதாவின் வாக்கியத்தையே நிறைவேற்ற விரும்பி வனத்தை நோக்கிப் போய்க்கொண்டிருந்தார். அந்தத் தர்மத்தை அனுஷ்டிப்பது அவசியமானதால் அவர்கள் கோரியபடி அயோத்யைக்குத் திரும்பிப்போக முடியாது. ஆனால், அவர்களிடத்தில் தான் வைத்திருக்கும் பரம ப்ரீதியால், தன் புத்திரர்களைப்போல் அவர்களை நினைத்துச் சொல்ல முடியாத ஆசையுடன் அடிக்கடி பார்த்து, அவர்களுக்கு ஹிதமான வார்த்தைகளைச் சொல்ல விரும்பி, "என்னிடத்தில் எந்தப் பிரீதியையும் கௌரவத்தையும் நீங்கள் வைத்திருக்கிறீர்களோ, அதை இனிமேல் பரதனிடத்தில் வையுங்கள். எனக்குப்



பிரியத்தை உண்டுபண்ணும் விஷயம் அதுவே. 'பரதன் கைகேயியின் புத்திரனல்லவா? அவளுடைய துர்க்குணங்கள் இவனிடத்திலும் இருக்குமல்லவா ? எங்களுடைய பிரார்த்தனைக்கு பிரயோஜனம் எங்களை அவன் கையில் காட்டிக் கொடுப்பதுதானா?' என்றால், சுத்தமான நடத்தையுடையவன், தர்மாத்மா, உங்களுக்கு இந்த லோகத்தில் அனுபவிக்கவேண்டிய ஸகல ஸுகங்களுக்கும் பரலோகத்தில் அடைய வேண்டிய நல்ல கதிக்கும் எல்லா சாதனங்களையும் ஸம்பாதித்துக் கொடுப்பான். வயதில் சிறுவனானாலும் ஞானத்தில் முதிர்ந்தவன். சாந்தமான ஸ்வபாவத்தையும் ம்ருதுவான வீர்யத்தையும் உடையவனானாலும் மஹா வீரன். யாதொரு பயமும் உங்களுக்கு நேராமல் உங்களைக் காப்பாற்றுவான். ஸகல ராஜ லக்ஷணங்களும் பொருந்தியவன். ஆகையால் உங்களுக்கு யுவராஜாவாக அவனே இருக்கத் தகுந்தவன் என்று சக்கரவர்த்தி நியமித்திருக்கிறார். நானும் லக்ஷ்மணனும் சத்ருக்னன் முதலியவர்களும் மஹாராஜாவின் கட்டளைக்குக் கீழ்ப்படிய வேண்டியவர்கள். நான் வனத்திலிருக்கையில் அவர் என்னை நினைத்து வருத்தப்படாமலிருக்கும்படி நீங்கள் நடந்துகொள்ள வேண்டும். அதே எனக்கு ஸந்தோஷத்தை உண்டாக்கும் வழி" என்றார்.

ஆனால், பிதிருவாக்கியத்தைக் காப்பாற்றுவதென்ற தர்மத்தை அனுஷ்டிப்பதிலேயே நிச்சயமுள்ளவராய் ராமன் பேசிக்கொண்டு வருவதைப் பார்த்து ஜனங்களுக்கு மேன்மேலும் ராமனே நமக்கு ராஜாவாக இருக்கவேண்டுமென்ற ஆசை மேலிட்டு, "ராமா! முதலில் மூத்த புத்திரனை உன்னையே இந்த ராஜ்யத்தை ஆண்டு வரும்படியும் எங்களை ரக்ஷிக்கும்படியும் தசரதர் நியமித்தாரல்லவா? அந்த ஏற்பாட்டையே நிறைவேற்றுவது உன் கடமை. உன் பிதா செய்த பிரதிக்ஞை அதே. அதன்படி நடப்பதே உனக்குப் பிதிருவாக்ய பரிபாலனம்" என்று அடிக்கடி பிரார்த்தித்தார்கள். வேடன் தன் வலையில் மிருகங்களைக் கட்டி, தான் போகுமிடமெல்லாம் இழுத்துக்கொண்டு போவதுபோல் ராமலக்ஷ்மணர்கள், தங்களுடைய உத்தம குணங்கள் என்ற கயிற்றினால், கண்களில் நீர் ததும்பப் பின்தொடரும் அயோத்யா ஜனங்களைக் கட்டி தாங்கள் போகுமிடமெல்லாம் இழுத்துக்கொண்டு போனார்கள்.

ராமனைப் பின்தொடர்ந்தவர்கள் மூன்று விதம். வயதில் மூத்தவர்களும், ஞானத்தில் முதிர்ந்தவர்களும், தபோபலத்தால் முதன்மையானவர்களுமாவர். அவர்களில் வயதில் மூத்தவர்கள் வேகமாகப் போகும் ரதத்தைத் தொடர முடியாமல், அதிக வயதால் தலைகள் ஆட, வரவரத் தூரத்திலிருந்து, "எங்களுக்குப் பிரியமான ராமனை எங்களிடத்திலிருந்து வேகமாகக் கொண்டுபோகும் உத்தமமான குதிரைகளே! ரதத்தைத் திருப்புங்கள்; காட்டை நோக்கிப் போகக் கூடாது. எங்களுடைய வார்த்தை உங்களுடைய பிரபுவுக்கு ஹிதமே தவிர வேறல்ல" என்று பிரார்த்தித்தும், அவை வேகமா

கவே போய்க்கொண்டிருந்தன. அதைக்கண்டு, "கேட்கும் சக்தி ஸகலப் பிராணிகளுக்கும் உண்டல்லவா? மேலும் உங்களுடைய காதுகள் விஸ்தாரமானவை; எங்களுடைய பிரார்த்தனை அவைகளில் விழுந்த பிறகும் நீங்கள் அப்புறம் போகக்கூடாது. உங்களுடைய யஜமானன் மஹாசுத்தன், மஹா வீரன்; செய்த பிரதிக்ஞையைத் தவறாதவன். நீங்கள் தர்மத்தை அனுஸரித்து நடந்தால் அவரை அயோத்யையை நோக்கித் திருப்பிக்கொண்டு போக வேண்டுமேயல்லாது இங்கிருந்து காட்டிற்குக் கொண்டு போவது நியாயமல்ல'' என்று இப்படித் துக்கத்தால் பிரலாபிக்கும் அந்த பிராம்மணர்களைக் கண்டு, "இவர்கள் சொல்வதைக் கேட்ட பிறகும் நாம் ரதத்திலிருப்பது நியாயமல்ல'' என்று அதி சீக்கிரமாக ராமனும் லக்ஷ்மணனும் ஸீதையும் ரதத்திலிருந்து இறங்கினார்கள். பிராம்மணர்களை ஸமாதானம் செய்யாவிட்டால் தன் விரதத்திற்குக் கெடுதி நேரும் என்றெண்ணி, அவர்கள் வரும் வரையில் ராமன் மெள்ள நடந்துபோனார். தசரதரையும் அந்தப்புரத்து ஜனங்களையும் மந்திரி முதலியவர்களையும் ரதத்திலிருந்தே கைகூப்பி நிறுத்தி விட்டார். ஆனால், பிராம்மணர்களை அப்படி நிறுத்த முடியவில்லை. அவர்களிடத்தில் ராமனுக்கு மிகுந்த பிரீதி. அவருடைய உண்மையான ஸ்வரூபம் மற்றவர்களைக் காட்டிலும் அவர்களுக்கு விசேஷமாகத் தெரியும்; ஆகையால் அவர்கள் அவரிடத்தில் வைத்திருந்த பக்திக்கு எல்லையில்லை. அந்த ஸமயத்தில் அவர்கள் படும் கஷ்டத்தையும் அவர்களுடைய மனத்திலுள்ள துக்கத்தையும் பார்த்து தாங்காமல், இவர்களை ரதத்திலிருந்தே நிறுத்துவது மஹா அபசாரமென்று நினைத்து, அவர்களிடத்தில் தமக்கு இயற்கையாயுள்ள பிரீதியாலும் கருணையாலும் ரதத்திலிருந்து இறங்கினார். ஆனால், அயோத்தையை நோக்கித் திரும்பிப் போகவில்லை, வனத்தை நோக்கியே நடந்தார்.

ராமன் ரதத்திலிருந்து இறங்கியவுடன், பிராம்மணர்கள், "நமது பிரார்த்தனை பலித்தது; நம்மிடத்தில் ரகுநாதன் கருணை வைத்துக் காட்டிற்குப் போவதை நிறுத்தி அயோத்யைக்குத் திரும்பிவிட்டார்'' என்று அடங்காத ஸந்தோஷத்தை அடைந்தார்கள். ராமன் ரதத்திலிருந்து இறங்கின பிறகும் வனத்தை நோக்கியே போவதைக் கண்டு மனம் பதறிப் பயந்து, 'நமது துக்கமும் பிரலாபமும் இவனை நிறுத்த முடியவில்லையே; உன்னுடன் நாமும் வனத்திற்கு வருகிறோமென்ற பெரிய பாரத்தை இவர்மேல் வைத்தால் அப்புறம் போக முடியாது' என்று நினைத்து, "ராமா, பிராம்மணர்களுக்குரிய ஸகல மந்திர தந்திரங்களும், ஞானம், யோகம் முதலிய ஸகல தர்மங்களும், இந்தப் பிராம்மணக் கூட்டத்தின் ரூபத்தை எடுத்து, பிராம்மண சிரேஷ்டர்கள் பூஜிக்கத் தகுந்த உன்னைப் பின்தொடர்கின்றன. நாங்கள் ஹோமம் செய்யும் அக்னிகளும் அரணிகளில் அடங்கி, எங்களுடைய தோள்களின் மேலிருந்து உன்னைப் பின்தொடர்கின்றன. நாங்கள் வாஜபேய யாகங்களைச் செய்து பெற்ற வெள்ளைக் குடைகள் உனக்குப் பின்னால் கூட்டம் கூட்டமாக சரத்காலத்தில் வெளுத்த மேகக் கூட்டங்களைப்போல் வருவதைப் பார். இந்தக் கடும் வெயிலில் குடையில்லாமல் உன் தேகம் தவிக்கிறது. எங்கள் வெள்ளைக் குடைகளால் உனக்கு நிழலைக் கொடுக்கிறோம். இதுவரையில் எங்கள் புத்தியை வேத மந்திரங்களைக் கற்பதிலும் அவைகளின் ரஹஸ்யமான அர்த்தத்தை அறிவதிலும் உபயோகித்துக் கொண்டிருந்தோம். இப்பொழுது அது நீ வனத்திற்குப் போவதையே நினைத்துக்கொண்டிருக்கிறது; வேதாத்யயனம் முதலியவைகளில் போகவில்லை. ஆனால், 'பிராம்மணர்களுக்கு முக்கிய தனமாக இருக்கும் வேதாத்யயனத்தை விட்டு, உங்களையே நம்பியிருக்கும் மனைவிகளையும் பிள்ளைகளையும் விட்டு, என்னுடன் காட்டிற்கு வரலாமா' என்றால், அந்த வேதங்கள் எங்கள் ஹிருதயத்தில் எப்பொழுதும் குடியிருக்கின்றன; அத்யயனம் செய்யாததால் அவைகளுக்கு யாதொரு கெடுதியும் நேராது. பதிவிரதா தர்மங்களே எங்கள் மனைவிகளை ரக்ஷிக்கும். நீ வனத்திற்குப் போக நிச்சயிப்பது உனக்கு ஹிதமான காரியமல்ல; திரும்பி வருவதே நல்லது. பித்ருவாக்கிய பரிபாலன தர்மத்தை அனுஷ்டிக்க வேண்டுமென்பது உன் கருத்தல்லவா? நாங்கள் அனுஷ்டிக்கும் தர்மத்தை நீ இல்லாவிட்டால் எப்படி நடத்த முடியும்? ஆகையால் எங்களுடைய கர்மானுஷ்டானத்தைக் கெடுத்து விட்டு நீ தர்மத்தை ஸம்பாதிக்க உத்தேசிப்பது பிசகு. நாங்களோ பிராம்மணர்கள்; ஞானத்திலும் வயதிலும் தவத்திலும் முதிர்ந்தவர்கள்; அப்படியிருந்தும் உன்னை விட்டுப் பிரிய மனமில்லை.

"நாங்கள் இவ்வளவு சொல்லியும் திரும்பாமல் இன்னும் போய்க் கொண்டிருக்கிறாயல்லவா? தர்மத்தை அனுஷ்டிப்பதில் மாறாத புத்தியுள்ளவனென்று உனக்கு எண்ணமல்லவா? பார். அன்ன பக்ஷிகளைப்போல் வெளுத்த எங்கள் தலைமயிர்கள் புழுதியில் படும்படி ஸாஷ்டாங்கமாக உனக்கு நமஸ்காரம் செய்து நகரத்திற்குத் திரும்பும்படி பிரார்த்திக்கிறோம். இங்கிருக்கும் பலர் உன்னையே நம்பி யாகயக்ஞங்களைச் செய்ய ஆரம்பித்திருக்கிறார்கள்; நீ இல்லாவிட்டால் அவை எப்படி நடக்கும்? அவைகளைக் கெடுத்த தோஷமும் உன்னையே சேரும்.

"நாங்கள் பிரார்த்திப்பது இருக்கட்டும். மிருகங்களும் பக்ஷிகளும் அசேதனமான பொருள்களும் உன்னைத் திரும்பும்படி பிரார்த்திக்கின்றன. அவைகளுக்கு உன்னிடத்திலிருக்கும் பக்தியையும் பிரீதியையும் உத்தேசித்தாவது அவர்களுடைய பிரார்த்தனையை அங்கீகரிக்கலாகாதா? பார், 'அயோத்யையிலிருக்கும் ஜனங்கள் ராமனுடன் போகும் பாக்கியத்தை அடைந்திருக்கிறார்கள். அது நமக்கு ஏன் இல்லாமல் போகவேண்டும்' என்று இந்த மரங்களும் எங்களுடன் வரப் பார்த்தன; ஆனால், பூமியில் வேரோடியிருப்பதால் நடக்கமுடி

யாமல் அங்கேயே நின்றுவிட்டன. அவைகளின் கிளைகளில் காற்று வீசும் சப்தம் 'ஐயோ! ராமனுடன் பட்டணத்து ஜனங்களைப்போல் நாங்களும் போகமுடியவில்லையே' என்று பெருங்குரலுடன் அழுவது போலிருக்கிறது. ராம! ஸகலப்பிராணிகளுக்கும் நீ அந்தர்யாமியல்லவா? ஸகலப்பிராணிகளிடத்திலும் பரம கருணை வைத்தவனல்லவா? ஆகையால் தேகத்தில் வஸிக்கும் ஆத்மா கஷ்டப்படும்பொழுது தேகம் கஷ்டப்படுவது ஆச்சரியமா? மரத்திலிருக்கும் பக்ஷிகளைப் பார்; இரைஎடுக்கவில்லை; வெளியில் சஞ்சரிக்கவுமில்லை. மரத்தை விட்டுக் கீழே இறங்கவுமில்லை. அசைவற்று இருந்த இடத்திலேயே உட்கார்ந்திருக்கின்றன'' என்றார்கள்.

இப்படி பிராம்மணர்கள் பிரலாபித்துக்கொண்டு ராமனைப பின் தொடர்ந்து போகையில் "ராம! பிராம்மணர்களின் வார்த்தையைத் தள்ளாதே; அயோத்யைக்குத் திரும்பிப்போ'' என்று தடுப்பதைப் போல் தமஸாநதி அவர்களுக் கெதிரே தோன்றிக் குறுக்கிட்டது. அப்பொழுது ஸுமந்திரர் மிகவும் களைத்திருந்த குதிரைகளை ரதத்திலிருந்து அவிழ்த்து இளைப்பாறுவதற்காகப் பூமியில் விழுந்து புரளும்படி விட்டு, ஆற்றில் குளிப்பாட்டி நீர் குடிக்கச்செய்துதிளிபோட்டுத் தமஸா நதிக்கரையில் புல் மேயும்படி விடுத்தார்.

தத: ஸுமந்த்ரோபி ரதா2த்3 விமுச்ய
ஶ்ராந்தாந் ஹயாந் ஸம்பரிவர்த்ய ஶீக்4ரம் |
பீதோத3காம்ஸ் தோய பரிப்லுதாங்கா3ந்
அசாரயத்3 வை தமஸாவிதூ3ரே ॥ (33)

---

## ஸர்க்கம் 46

# நகரத்து ஜனங்களை ராமன் விட்டுப்போனது

---

ததஸ்து தமஸாதீரம் ரம்யமாஶ்ரித்ய ராக4வ: |
ஸீதாமுத்3வீக்ஷ்ய ஸௌமித்ரி மித3ம் வசநமப்3ரவீத் ॥ (1)

அழகிய தமஸா நதிக்கரையில் அவர்கள் உட்கார்ந்துகொண்டிருக்கையில் ராமன், "லக்ஷ்மணா! நமது வனவாஸத்தில் முதல்நாள் ராத்திரி இதே. இனிமேல் ஸீதை கால்நடையாக வனத்திற்கு எப்படிப் போய்ச் சேருவாளென்று நீ கவலைப்படக்கூடாது. பார். இந்த வனங்கள் பிரகாசமற்றிருக்கின்றன. பெரிய துக்கத்தால் பிரலாபிக்கின்றனபோலும். அதற்கேற்றபடி மிருகங்களும் பக்ஷிகளும் தங்கள் இருப்பிடங்களுக்குப் போய்த் தங்குவதற்குமுன் கூச்சலிடுவதைப் பார்த்தால் வனங்கள் வாய்விட்டழுவதுபோல்தோன்றுகிறது. இன்றைக்கு அயோத்யையிலுள்ள ஆண் பெண்கள் அனைவரும் நம்மை நினைத்து வருத்தப்படுவார்களென்பது நிச்சயம். நமது மஹாராஜா உத்தமகுணங்கள் பொருந்தியவராகையால் அவரிடத்தில் ஜனங்களுக்கு மிகுந்த பிரீதி. நம்மிடத்திலும் பரதசத்துருக்னர்களிடத்திலும் அப்படியே. அன்பு வைத்திருக்கிறார்கள். நம்மை விட்டுப் பிரிந்த துக்கத்தால் நமது பெற்றோர்கள் அடிக்கடி அழுது கண் தெரியாமல் போவார்கள். அதை நினைக்கும்பொழுதெல்லாம் எனக்கு மிகுந்த துக்கமுண்டாகிறது. ஆனால், பரதன் தர்மாத்மா; ஸமயோசிதமான வார்த்தைகளால் நமது பெற்றோர்களை ஸமாதானம் செய்வானென்பதை நினைத்து ஒருவாறு ஆறுதலுண்டாகிறது. பரதன் கைகேயியைப்போல் குரூரமான ஸ்வபாவமுடையவனாக இராமல் அதிகக் கருணையுள்ளவனென்று எனக்குத் தெரியுமாகையால் நமது பெற்றோர்களைப்பற்றி நான் அதிகமாக துக்கப்பட இடமில்லை.

ஸீதை என்னுடன் வர நிச்சயித்தபொழுது அவளுக்கு உதவிக்கு ஒருவருமில்லையே என்று வருத்தப்பட்டேன். நீ என்னுடன் வந்ததால் அத்தகைய கவலைக்கு அவசியமில்லாமல் செய்துவிட்டாய். நீ என்னுடன் வந்ததைப்பற்றி எனக்குள்ள ஸந்தோஷத்திற்கு எல்லையில்லை. நமது வனவாஸத்தில் இதுவே முதல் தினம்; மேலும் இருக்கும் இடமோ புண்ணியஸ்தலம். ஆகையால் இந்த ராத்திரி தீர்த்தத்தைக் குடித்துவிட்டு உபவாஸமிருப்பது நல்லது. காட்டில் கிடைக்கக்கூடிய ஆஹாரங்கள் இங்கேயும் வேண்டிய வரையில் கிடைக்கும். ஆனாலும் நமக்கு அவை தேவையில்லை'' என்று சொல்லி, "ஸுமந்திரரே! குதிரைகளை ஜாக்கிரதையாகப் பார்த்துக் கொள்ளும் "என்று உத்தரவு செய்தார்.

அவர் குதிரைகளைக் கட்டி அவைகளுக்கு வேண்டியவரையில் புல்லைப் போட்டார். ஸூரியன் அஸ்தமித்ததைக் கண்டு ஸந்தியாவந்தனத்தைச் செய்து, தானும் லக்ஷ்மணனும் தமஸாநதிக்கரையில் மிருதுவான இலைகளால் ராமனுக்குப்படுக்கையைப் போட்டார்கள். பிறகு ராமனும் ஸீதையும் அதன்மேல் படுத்து நித்திரை செய்தார்கள். லக்ஷ்மணனும் ஸுமந்திரரும் அன்று ராத்திரி முழுவதும் தூங்கவில்லை. ராமனுடைய கல்யாண குணங்களை லக்ஷ்மணன் வர்ணித்துக் கொண்டே இருக்கையில் ஸுமந்திரர் பக்தியுடன் கேட்டுக் கொண்டிருந்தார்; அதற்குள் ஸூரியனும் உதித்தான்.

இடைச்சேரிகளால் நிறைந்த தமஸாநதிக்கரையில் ராமனும் அயோத்யா ஜனங்களும் அந்த ராத்திரியில் தங்கி நித்திரை செய்தார்கள். விடியற்காலையில் ராமன் எழுந்திருந்து ஜனங்கள் தூங்கிக் கொண்டிருப்பதைப் பார்த்து, "லக்ஷ்மணா! இவர்கள் வீடுவாசல் மனைவி பிள்ளைகளையும் மறந்து நம்மிடத்திலேயே பிரீதிவைத்துத் தரையிலும் மரத்தடியிலும் படுத்துத் தூங்குவதைப் பார். இவர்கள் தங்களுடைய பிராணனைக் கொடுத்தாவது நம்மை அயோத்யைக்குத் திரும்பச் செய்வார்கள்; நம்மை விடப்போகிறதில்லை. இவர்கள் தூங்கிக்கொண்டிருக்கும் பொழுதே நாம் ரதத்திலேறி வெகு தூரம் போய்விடுவோம். என்னிடத்தில் இவ்வளவு பிரீதி வைத்திருக்கும் குடிகள் தரையிலும் மரத்தடியிலும் படுத்துக் கிடப்பதை இன்னு

மொருதடவை பார்க்க என்னால் முடியாது. பிரஜைகளின் துக்கத்தைத் தீர்க்கவேண்டியது அரசர்களின் கடமையல்லவா? தங்களுக்காக அவர்கள் வருத்தப்படும்படி செய்வது மஹா பாபம்'' என்றார். கேவலம் தர்மமே அவதாரமெடுத்து வந்தது போன்ற ராமமூர்த்தியைப் பார்த்து லக்ஷ்மணனும் "இப்படிச் செய்வது நல்லதென்றே எனக்கும் தோன்றுகிறது. சீக்கிரமாக ரதத்திலேறும்'' என்றார். உடனே ராமன் "ஸுமந்திரரே! நாம் இங்கிருந்து இப்பொழுதே போகவேண்டும்; ரதம் தயாராகட்டும்'' என்றார். ஸுமந்திரர் அப்படிச் செய்ய அவர்கள், சுழல்களுடன் அதிவேகமாக ஓடும் தமஸாநதியைத் தாண்டினார்கள்.

அக்கரையில் ரதத்திலிருந்து இறங்கிக் கால்நடையாக, காட்டில் வஸிக்கும் கொடிய ஜந்துக்களின் பயமில்லாத ஓர் வழியைப் பிடித்துக்கொண்டு, ஜனங்களை மயக்குவதற்காக, "ஸுமந்திரரே! ஜனங்கள் நான் அயோத்யைக்குத் திரும்பிப்போய் விட்டேனென்று எண்ணும்படி நீர் ரதத்திலேறி வடக்குமுகமாகக் கொஞ்சதூரம் ரதத்தை நடத்திக் கொண்டுபோம். பிறகு ஜனங்கள் இதைக் கண்டுபிடிக்காமலிருக்கும்படி அவ்வளவு ஜாக்கிரதையாகத் திரும்பிவரவேண்டும். நானும் ரதத்தில் வந்தால் அயோத்யைக்குத் திரும்பிப்போகக் கூடாதென்ற விரதத்திற்கு விரோதமாகும்'' என்றார். பிறகு ஸுமந்திரர் அப்படியே செய்து திரும்பிவந்தார். பிறகு ராமலக்ஷ்மணர்களும் ஸீதையும் ரதத்திலேறி நல்ல சகுனத்திற்காக அதை வடக்குமுகமாகத் திருப்பிப் பிறகு வனத்தைநோக்கி அதிவேகமாகச் சென்றார்கள்.

தத: ஸமாஸ்தா$^{4}$ய ரத$^{2}$ம் மஹாரத$^{2}$:
ஸஸாரதி$^{2}$ர் த$^{3}$ாஶரதி$^{2}$ர் வநம் யயௌ |
உத$^{3}$ங்முக$^{2}$ம் தம் து ரத$^{2}$ம் சகார ஸ:
ப்ரயாண மாங்க$^{3}$ல்ய நிமித்த த$^{3}$ர்ஶநாத் || (34)

---

## ஸர்க்கம் 47

## நகரத்து ஜனங்கள் பிரலாபித்தது

---

ப்ரபா$^{4}$தாயாம் து ஶர்வர்யாம் பௌராஸ்தே ராக$^{4}$வம விநா |
ஶோகோபஹத நிஶ்சேஷ்டா ப$^{3}$பூ$^{4}$வுர் ஹதசேதஸ: || (1)

**பொ**ழுது விடிந்தவுடன் ஜனங்கள் விழித்துக்கொண்டு ராகவனைக் காணாமல் துக்கம் மேலிட்டு மனம்கலங்கி பிரக்ஞையற்றார்கள். கண்ணீர் தாரை தாரையாகப் பெருக அங்குமிங்கும் பார்த்தும், ராமன் போகும் வழியில் ரதத்தின் தூளியைக்கூடக் காண முடியவில்லை. பிறகு அவரைப் பார்ப்போமென்ற நம்பிக்கையற்று 'இந்தப் பாழும் தூக்கம் எங்கே வந்தது? நீண்ட கைகளையும் விசாலமான மார்பையும் உடைய அந்த மஹானுபாவனைப் பார்க்க முடியாமல் நம்மை மயக்கிக் கெடுத்ததல்லவா? ராமன் ஏன் இப்படிச்



செய்தான்? அவனிடத்தில் எல்லையற்ற பிரீதி வைத்திருக்கும் நம்மைத் தள்ளிவிட்டுக் கோரமான காட்டிற்குப் போகிறானே! தந்தை மகனைக் காப்பதுபோல் நம்மைக் காக்கின்ற ராமனில்லாமல் நாம் எதற்காகப் பிழைத்திருக்க வேண்டும்? ஆகையால் இங்கேயே உபவாஸமிருந்து பிராணனை விடுவோம்; அல்லது, மரணத்தை விரும்பி வடக்கு திக்கை நோக்கி நடந்துகொண்டே போவோம். அல்லது இங்கிருக்கும் உலர்ந்த கட்டைகளாலும் இலைகளாலும் பெரிய நெருப்பை வளர்த்து நாமெல்லோரும் அதில் விழுந்து உயிரை விடுவோம். நாம் அயோத்யைக்குத் திரும்பிப்போனால் எல்லோரும் நம்மைக் கேட்பதற்கு என்ன பதில் சொல்வோம்? 'அஸூயையின்றி பிரியமாய்ப் பேசும் மஹா பராக்கிரமசாலியான ராமனை நாங்கள் வனத்திற்கு அழைத்துக்கொண்டு போனோம்' என்று சொல்ல முடியுமா? நாம் மாத்திரம் திரும்பிப் போனால் அயோத்யையிலிருக்கும் பெண்களும் குழந்தைகளும் கிழவர்களும் நம்மைப் பார்த்து ராமனைக் காணாமல் ஏக்கங்கொள்வார்கள். இந்திரியங்களை வசப்படுத்திக்கொண்ட அந்த மஹாத்மாவுடன் பட்டணத்திலிருந்து புறப்பட்டோமே; அவனில்லாமல் மறுபடியும் அந்தப் பட்டணத்தில் நாம் மாத்திரம் எப்படி பிரவேசிப்போம்'' என்றுகூறி, கன்றை இழந்த பசுக்களைப்போல் கைகளைத் தூக்கிக்கொண்டு துக்கத்தால் பிரலாபித்தார்கள். பிறகு கொஞ்ச தூரம் அவர் போன வழியிலேயே போனார்கள். அங்கே ஓரிடத்தில் புல்தரையில் ரதத்தின் சுவடுகள் மறைந்துவிட்டன. அதைக் கண்டு அவர்களுடைய துக்கம் இன்னும் அதிகமாயிற்று. "இனி நாம் என்ன செய்வோம்? தெய்வமே நமக்கு விரோதமாயிருக்கிறது'' என்று ஆசையொழிந்து திரும்பிவிட்டார்கள். தேகம் களைத்து மனம் குன்றி அவர்கள் போன வழியாகவே திரும்பி, துக்கித்துக்கொண்டிருக்கும் அந்தப் பட்டணத்தில் நுழைந்தார்கள்.

அங்கே வீடுகள் பெருக்கி மெழுகி அலங்கரிக்கப்படாமலிருந்தன. அதைக் கண்டு அவர்களுடைய கண்ணீர் தாரை தாரையாகப் பெருகிற்று. ராமனில்லாத அந்த நகரம், ஆழமான மடுக்களிலிருந்த ஸர்ப்பங்களைக் கருடன் தூக்கிக்கொண்டுபோன பிறகு பிரகாசமிழந்த நதியைப்போலும், சந்திரனில்லாத ஆகாசத்தைப் போலும், ஜலம் வற்றின ஸமுத்திரத்தைப் போலும், துக்கத்தில் முழுகியிருக்கும் அவர்களுடைய கண்களுக்குத் தோன்றிற்று. ஸகல ஐசுவரியங்களாலும் விளங்கின தங்கள் வீடுகளுக்குப் போய், அங்கே பித்துப் பிடித்தவர்களைப்போல் திகைத்து நின்றார்கள். தங்கள் பந்துக்களையாவது நண்பர்களையாவது மற்றப் பட்டணத்து ஜனங்களையாவது அவர்கள் அடையாளம் கண்டுபிடிக்க முடியவில்லை.

தே தாநி வேஶ்மாநி மஹாத$^{4}$நாநி
து$^{3}$க்கே$^{2}$ந து$^{3}$க்கோ$^{2}$பஹதா விஶந்த: |
நைவ ப்ரஜஜ்ஞு: ஸ்வஜநம் ஜநம் வா
நிரீக்ஷமாணா: ப்ரவிநஷ்ட ஹர்ஷா: || (19)

## ஸர்க்கம் 48

## நகரத்து ஸ்த்ரீகளின் பிரலாபம்

---

*தேஷா மேவம் விஷண்ணாநாம் பீடி³தாநா மதீவ ச |*
*பா³ஷ்ப விப்லுத நேத்ராணாம் ஸஶோகாநாம் முமூர்ஷயா || (1)*

**ரா**மனுடன் போய் அவரில்லாமல் திரும்பி வந்த அந்த நகரத்து ஜனங்கள் இன்னதென்று தெரியாத வியாதியால் பீடிக்கப்பட்டவர்களைப்போலும் இன்னதென்று சொல்லமுடியாத துக்கத்தால் தவிப்பவர்கள்போலும் அழுதுகொண்டு, 'நமக்குச் சாவு வரக்காணோமே' என்று புலம்பும்பொழுது, அவர்களுடைய தேகத்திலுள்ள பஞ்சப் பிராணன்களும் வெளியில் கிளம்பிப் போவதற்குத் தயாராயிருந்தன. ஒவ்வொருவரும் தன் வீட்டிற்குப் போய்த் தம் மனைவி மக்களிடம் ராமனைத் திரும்பி அழைத்துவர முடியாமற் போயிற்றே என்று வருத்தப்பட்டு அழுதார்கள். பிரியமான மித்திரர்களைக் கண்டும் அவர்களுக்கு ஸந்தோஷம் உண்டாகவில்லை ; அபூர்வமான பதார்த்தம் கிடைத்தபோதிலும் அவாகளுக்கு மகிழ்ச்சி கிடையாது. தனத்தை ஸம்பாதிப்பதிலேயே மிகுந்த நோக்கமுள்ள வியாபாரிகளும் கடைகளைத் திறக்கவில்லை. பூர்வ ஜன்மத்தில் செய்த புண்யங்களுடைய பலனாக விளங்கும் மனைவிகளும் பிள்ளைகளும் மகிழ்ச்சி அளிக்கவில்லை. ஔபாஸனம் வைசுவதேவம் அக்னிஹோத்திரம் முதலிய வைதிகக் கிரியைகளுக்காவது ஆஹாரத்திற்காவது கிருஹஸ்தர்கள் சமையல் செய்யவேயில்லை. வெகு காலத்திற்கு முன்பு காணமற்போன விலையுயர்ந்த பொருள் அப்பொழுது கிடைத்தாலும், அளவற்ற புதையல் கிடைத்தாலும் ஸந்தோஷப்படுகிறவர்கள் ஒருவருமில்லை. வெகு காலம் மலடியாயிருந்து உத்தமமான புத்திரனைப்பெற்ற தாய்க்கும் கொஞ்சமாவது ஸந்தோஷமே இல்லை.

ஒவ்வொரு வீட்டிலுள்ள ஸ்த்ரீகள் ராமனை அழைத்து வராமல் திரும்பி வந்த தங்கள் பர்த்தாக்களைப் பார்த்துத் துக்கம் தாங்காமல் அழுதுகொண்டு கூர்மையான மாவெட்டியால் யானையைக் குத்துவதுபோல், ஏற்கனவே புண்பட்ட அவர்களுடைய மனத்தைக் குரூரமான வார்த்தைகளால் துளைத்து அவர்களை நிந்தித்தார்கள். "ராமனைப் பார்க்கும் அதிருஷ்டமில்லாதவர்களுக்கு வீடுவாசல் மனைவி, பிள்ளைகள் தனதான்யங்கள் போகபோக்கியங்கள் எதற்கு ? ஸம்ஸார ஸாகரத்திலிருந்து ஸகல ஜகத்தையும் கரையேற்றுவதற்காகப் பகவான் பரம கருணையுடன் மனுஷ்ய ரூபமெடுத்து, நாமிருக்கும் தேசத்திலும் நாமிருக்கும் நகரத்திலும் அவதரித்து, அநேக வருஷங்களாக ஸேவை ஸாதித்துக்கொண்டிருந்தார். லோகநாதனிடத்தில் பக்தி வைத்து அவரை ஆராதிக்காமல் கேவலம் மனைவி மக்களிடத்தில் பிரீதிவைத்துக் காலத்தைக் கழிப்பவர்கள்



மஹாபாபிகள். ஜனனமரணமென்ற ஸம்ஸார ஸமுத்திரத்திலிருந்து அவர்கள் கரையேறுவதே இல்லை. ஸத்புருஷன் இந்த லோகத்தில் யாரென்றால் லக்ஷ்மணனே. பாருங்கள், ராமனைப் பின்தொடர்ந்து அவனுக்கு ஸமஸ்த கைங்கரியங்களையும் செய்யும்படியான பாக்கியத்தைப் பெற்றானல்லவா ? பெண்களுக்குள் ஸீதையைக் காட்டிலும் பாக்கியசாலி யார் ?

அதிருக்கட்டும். அவர்கள் பாக்கியத்தை நம்மால் வர்ணிக்க முடியாது. அறிவில்லாத நதிகள் வனங்கள் செய்த பாக்கியத்தைப் பாருங்கள். ராமன் ஸ்நானம் செய்யும் நதிகளும் ஏரிகளும் தாமரை ஓடைகளும் மஹா புண்ணியம் செய்தவை. அழகிய மரச்சோலைகளையுடைய வனங்களும் நதிகளும், ஜலம்தங்கின இடங்களும், உன்னத சிகரங்களையுடைய மலைகளும், ராமன் அவைகளில் தங்கும்பொழுது அவருடைய காந்தியை விருத்திசெய்யும். ராமனிருக்குமிடம் வனமோ மலையோ, தன்னிடத்திற்கு பிரியமான அதிதி வந்ததுபோல. அவனை உபசரிக்காமல் இருக்க முடியாது. ராமன் பரமாத்மா என்று மரங்கள் அறிந்து. புஷ்பங்களில் மொய்க்கும் வண்டுகளின் சப்தமென்ற மந்திரோச்சாரணத்துடன்,கிளைகளென்ற கைகளில் பூங்கொத்துகளை எடுத்துக்கொண்டு, ராமனை அர்ச்சனை செய்யாமலிராது. மலைகள் ராமனிடத்தில் வைத்த பிரியத்தால் அவனைக்கண்டவுடன், அகாலமானாலும், விசித்திரமான அருவிகளையும் நீர்த்தாரைகளையும் அவனுக்குக் காட்டி, நேர்த்தியான புஷ்பங்களையும். பழங்களையும்,ருசியுள்ள சுத்தமான ஜலத்தையும் கொடுக்கும். மிருதுவான புஷ்பங்களாலும், தளிர்களாலும் மரங்கள் தங்களடியில் படுக்கையை விரித்து, அங்கே வந்து உட்காரும்படி ராமனையும் ஸீதையையும் மெல்லிய காற்றால் கூப்பிட்டுத் தாபத்தைப் போக்கும்.

ராமனிருக்குமிடத்தில் பயமுண்டா, அபாயமுண்டா? அவன் சூரனல்லவா? மஹா பராக்கிரமசாலியல்லவா? தசரத சக்கரவர்த்தியின் புத்திரனென்றாலே போதாதா? ஆகையால் அவன் வெகு தூரம் போவதற்கு முன் அவனுடன் சேருவோம். அப்படிப்பட்ட மஹாத்மாவிற்குப் பாதஸேவை செய்வது உத்தம கதியை அடைய ஸாதனமாகும். நமக்கு அவனே நாதன்; அவனை விட்டால் நமக்கு வேறு கதியில்லை; அவனே நமக்கு ஆதாரம். ஸீதைக்கு ஸகல கைங்கரியங்களையும் நாங்கள் செய்கிறோம்; அப்படியே ராமனுக்கு எல்லாப் பணிவிடையையும் நீங்கள் செய்யுங்கள். ராமன் காட்டிலிருந்தாலும் உங்களுடைய கோரிக்கைகள் யாவையும் பூர்த்திசெய்து யாதொரு அபாயமுமின்றி காப்பாற்றுவான். எங்கள் காரியத்தில் ஸீதையும் அப்படியே செய்வாள்.

இந்த நகரத்தில் ஸாதுக்கள் வஸிப்பது நியாயமல்ல. இங்கே இருந்தால், ராமனைவிட்டுப் பிரிந்ததால் அழுதுகொண்டிருக்கும்

ஜனங்களின் சப்தத்தைத் தவிர எங்கே பார்த்தாலும் வேறொன்றும் கேட்காது. கொஞ்ச காலத்திற்குள் புத்தி மயங்கிப் பைத்தியம் பிடிக்கும். யாருக்காவது இங்கே இருக்க மனம் வருமா? இந்த ராஜ்யம் கைகேயியைச் சேர்ந்தால், நாதனில்லாத தேசத்தைப்போல் அதர்மத்திற்கு இடமாகும். நாமும் அதில் உயிரோடிருப்பது கஷ்டம். பிள்ளைகளையும் தனத்தையும் வைத்துக் கொண்டிருப்பதைப் பற்றிச் சொல்லவும் வேண்டுமோ? ஐசுவரியத்தை விரும்பிக் கணவனையும் பிள்ளையையும் கைவிட்ட கொடிய கைகேயி வேறு யாருக்குத் தீங்கு செய்ய மாட்டாள்? அவள் உயிரோடிருக்கும் வரையில், நமக்கு எல்லையின்றித் தானங்களைக் கொடுத்து அவளுடைய ராஜ்யத்தில் காப்பாற்றினாலும் இருக்கமாட்டோம். எங்கள் குழந்தைகளின்மேல் ஆணைவைத்து இப்படிச் சொல்லுகிறோம். சக்கரவர்த்தித்திருமகனான ராமனை இரக்கமின்றிக் காட்டிற்குத் துரத்தின அந்தத் துஷ்டையை அடுத்து ஸுகப்படுகிறவர்கள் யார்? தர்மத்தை வெறுக்கும் அந்தப் பாபியின் அன்னத்தைப் புஜித்து நல்ல கதியை அடைகிறவன் யார்? கைகேயியின் மூலமாக இந்த ராஜ்யம் நாதனில்லாமல், ஆதாரமில்லாமல், ஸகல துக்கங்களாலும் பீடிக்கப் பட்டுச்சீக்கிரத்தில் நாசமடையும். ராமனும் காட்டிற்குப் போன பிறகு சக்கரவர்த்தி உயிரோடிருக்கமாட்டார். அவரே உயிரிழந்த பிறகு நாசமென்பதைத் தவிர வேறில்லை. நீங்கள் செய்த புண்ணியங்களின் பயன் ஒழிந்துவிட்டது. உங்கள் பாபங்களின் பயனை இப்பொழுது அனுபவிக்கிறீர்கள். நீங்கள் பாக்கியமில்லர்தவர்களென்பதில் ஸந்தேகமில்லை. ராமனென்ற மஹா தனத்தைப் பறிகொடுத்த போதே இது தெரியவில்லையா? ஆகையால், ஒன்று ராமனிடத்திற்குப் போங்கள்; இல்லாவிட்டால், விஷத்தைக் குடித்து பிராணனை விடுங்கள்; அல்லது இருந்த இடம் தெரியாமல் எங்கேயாவது போய் ஒளிந்து கொள்ளுங்கள். 'பித்ருவாக்ய பரிபாலனம் செய்யவும் கைகேயியின் இஷ்டத்தைப் பூர்த்தி செய்யவுமே ராமன் காட்டிற்குப் போனானல்லவா? அதில் தோஷமென்ன?' என்றால், அந்த மஹா பாபி கைகேயி தசரதரை ஏமாற்றியல்லவா ராமனைக் காட்டிற்கு அனுப்பியிருக்கிறாள்? கசாப்புக் கடைக்காரனுடைய கையில் பசுவைக் கொடுப்பதைப்போல், தசரதர் நம்மைப் பரதன் கையில் கொடுத்துவிட்டாரல்லவா? பூர்ண சந்திரனைப்போன்ற முகத்தையும், நீருண்ட மேகத்தைப்போல் கறுத்த திருமேனியையும், பருத்த தோள்களையும், முழங்கால் வரையில் நீண்டிருக்கும் கைகளையும், தாமரை மலரைப்போன்ற கண்களையும், மதம்கொண்ட யானையைப்போன்ற நடையையுமுடைய ராமனுடைய ஸௌந்தரியத்தைக் காட்டிலுள்ளவர்களல்லவா பார்த்து ஸந்தோஷிப்பார்கள்? ராமன் எப்பொழுதும் மதுரமாகப் பேசுகிறவன்; ஆனால், ஸத்தியத்தை ஒருக்காலும் விடாதவன்; யாரிடத்திலும் தானே முதலில் பேசுவான்; எப்பொழுதும் சிரித்த முகத்துடன் விளங்குவான்; அவன் பார்ப்பவர்களுக்கு சந்திரனைப்போல், எப்போதும் ஆனந்தத்தை உண்டாக்குவான்; மஹா



சூரன். அந்தப் புருஷோத்தமனை நாம் இன்னும் ஒரு தடவை பார்ப்போமா?'' என்றார்கள்.

மரணத்தை உண்டுபண்ணும் பயம் ஒருவனுக்கு நேர்ந்தால், வெட்கத்தை விட்டு அலறுவதைப்போல், அந்த நகரத்து ஸ்த்ரீகள் துக்கத்தைப்பொறுக்கமுடியாமல் புலம்பிக்கொண்டிருக்கையில் ஸூரியனும் அஸ்தமித்தான்; ராத்திரியும் ஆரம்பித்தது. அப்போது அந்த நகரத்தில் ஹோமாக்னிகள் ஓரிடத்திலாவது பிரகாசிக்கவில்லை. வேதாத்யயனம் புராணம் யாதொன்றும் கேட்கப்படவில்லை. எங்கும் மையிருளால் மூடப்பட்டதுபோல் தோன்றிற்று. வியாபாரிகள் கடைகளைத் திறக்கவில்லை. ஸந்தோஷமென்பது அந்த நகரத்தை விட்டே ஓடிப்போயிற்று. நக்ஷத்திரங்களில்லாத ஆகாசத்தைப் போல் அது பார்க்க வெறுப்பாக இருந்தது. அதிலுள்ள பெண்களுக்குத் தங்களுடைய குழந்தைகளைவிட ராமனிடத்தில் அதிகப் பிரீதி. தாங்கள் பெற்ற பிள்ளைகளும் உடன்பிறந்தோரும் காட்டிற்குத் துரத்தப்பட்டதுபோல் மனம்வாடிப் புத்திமயங்கிப் புலம்பி அழுதார்கள். பாட்டு ஆட்டம் உத்ஸவம் யாதொன்றும் காணப்படவில்லை. நீர் வற்றின ஸமுத்திரத்தைப்போல் பார்க்க அருவருப்பாக இருந்தது.

ப்ரஶாந்த கீ3தோத்ஸவ ந்ருத்த வாத3நா
வ்யபாஸ்த ஹர்ஷா பிஹிதாபணோத3யா |
தத3ாஹ்யயோத்4யா நக3ரீ ப3பூ4வ ஸா
மஹார்ணவ : ஸம்க்ஷீபி4தோத3கோ யதா2 ‖ (37)

---

## ஸர்க்கம் 49

# ராமன் ராஜ்யத்தின் எல்லையைத் தாண்டியது

---

ராமோபி ராத்ரிஶேஷேண தேநைவ மஹத3ந்தரம் |
ஜக3ாம புருஷவ்யாக்4ர: பிதுராஜ்ஞா மநுஸ்மரந் ‖ (1)

தன் பிதாவின் கட்டளையை மனதில் வைத்துக்கொண்டு அந்த விடியற்காலை வேளையிலேயே ராமன் வெகுதூரம் சென்றார். பொழுது விடிந்த பிறகு அவர்கள் ஸந்தியாவந்தனம் செய்துவிட்டு உத்தரகோஸலத்தின் தென் எல்லையைச் சேர்ந்தார்கள். நாற்று நடுவதற்கு ஸித்தமாக உழப்பட்டிருந்த பூமிகளையுடைய கிராமங்களையும் புஷ்பங்களுடன் விளங்கும் வனங்களையும் பார்த்துக் கொண்டே வெகுதூரம் அதிவேகமாகப் போனார்கள். வழியிலுள்ள பெரிய கிராமங்களிலும் சிறிய கிராமங்களிலும் வஸிக்கும் ஜனங்கள், "நமது அரசன் விவேகமற்றவர். எவனாவது இந்தக் கிழவயதில் காமத்திற்கு அடிமையாக இந்த அக்கிரமத்தைச் செய்வானா? கைகேயியின் குரூர ஸ்வபாவத்திற்கு எல்லையும் உண்டோ?

---

மஹாபாபி; பாபத்தைச் செய்வதிலேயே நோக்கமுடையவள்; கடுமையாகப் பேசுகிறவள்; மட்டு மரியாதை இல்லாதவள்; தர்மாத்மாவும் இந்திரியங்களை ஜயித்தவரும் கருணாமூர்த்தியும் மஹாஞானியும் லோகோத்தமனுமான இந்தப் புத்திரனைக் காட்டிற்குத் துரத்தினளே! அவள் பெண்பிள்ளையா? ஜனக மஹாராஜாவின் புத்திரியான ஸீதை, ஸ்வபாவத்திலேயே மஹாபாக்கியசாலி! எப்பொழுதும் ஸுகத்தையே அனுபவிக்கத்தகுந்தவள்; எப்பொழுதும் ஸுகத்தையே அனுபவித்தவள்; அவள் இப்பொழுது எப்படி துக்கத்தை அனுபவிப்பாள்? ராமன் தனக்குப் பிறந்த பிள்ளையல்லவா? பிரஜைகளுக்கு உயிரல்லவா? அவனிடத்தில் தோஷமிருக்க நியாயமுண்டோ? ராமனைக் காட்டிற்கு அனுப்ப வேண்டுமென்ற புத்தி தசரதருக்கு எப்படிப் பிறந்தது? மனம் எப்படித்துணிந்தது?'' என்று சொல்வதைக் கேட்டுக்கொண்டு கோஸல தேசத்தைத் தாண்டிப் போனார்கள்.

அவர்கள் பிறகு வேதசுருதி என்ற புண்ணியநதியைத் தாண்டி வெகுதூரம் தெற்கே போய், ஸமுத்திரத்தில் விழும் கோமதியையும் தாண்டி, அதன் கரையில் ஜலம் தங்கியிருக்குமிடங்களில் மந்தை மந்தையாகப் பசுக்கள் மேய்வதைக் கண்டார்கள். பிறகு வெகுதூரம் பிரயாணம் செய்து மயில்களும் அன்னங்களும் நிறைந்த ஸ்யந்திகா என்னும் நதியைக் கடந்தார்கள். அங்கே ராமன் "ஸீதே! கோஸல ராஜ்யத்தின் எல்லை இதே. இதுவரையிலுள்ள தேசங்களும் அவைகளின் தனதான்யங்களும் முன்காலத்தில் வைவஸ்வத மனுவால் இக்ஷ்வாகு சக்கரவர்த்திக்குக் கொடுக்கப்பட்டன'' என்று சொல்லி, "ஸுமந்திரரே! நான் மாதாபிதாக்களுடன் இன்னும் ஒருதடவை ஸரயூநதியின் புஷ்பத் தோட்டங்களிலும் காடுகளிலும் திரிந்து எப்பொழுது வேட்டையாடுவேன்? ஆனால் வேட்டையில் மிருகயாப்பிரியமுள்ளவனென்று என்னை எண்ண வேண்டாம். காலாகாலமில்லாமல் ஒருவன் வேட்டையாடிக் கொண்டிருந்தால், ராஜ்ய பாலனமென்ற க்ஷத்திரிய தர்மம் நாசமாகுமல்லவா? ஆகையால் குரூரமான மிருகங்கள் ஜனங்களை ஹிம்ஸிக்கும்பொழுது வேட்டையாடுவது நியாயம். ராஜரிஷிகள் எப்பொழுதாவது பொழுதுபோக்காக வைத்துக்கொண்டிருந்த வேட்டை எனக்கும் ஒரு விநோதமாக இருக்கிறது'' என்று, போகும் வழியில் பல விஷயங்களைப்பற்றி மதுரமாகப் பேசிக்கொண்டு அவர்கள் வெகுதூரம் போனார்கள்.

ஸ தமத்4வாந மைக்ஷ்வாக: ஸூதம் மது4ரயா கி3ரா |
தம் தமர்த2 மபி4ப்ரேத்ய யயௌ வாக்ய முதீ3ரயந் || (18)

---



## ஸர்க்கம் 50

## சிருங்கிபேர புரம்

விஸாலாந் கோஸலாந் ரம்யாந் யாத்வா லக்ஷ்மண பூர்வஜ: |
அயோத்4யாபி4முகோ2 தீ4மாந் ப்ராஞ்ஜலிர்வாக்யமப்3ரவீத் || (1)

ராமன் நகரத்திலிருந்து புறப்படும்பொழுது முன்னோர்களின் ஆசாரத்தின்படி நகர தேவதையை நமஸ்கரித்து உத்தரவுபெற்றுக் கொள்ளவேண்டியது. வேறு காரியங்களில் மனம் நாடியிருந்தபடியால் அப்படிச் செய்ய முடியவில்லை. ஆகையால் தக்ஷிண கோஸலத்தின் எல்லைக்கு வந்தவுடன், அவர் ரதத்தை நிறுத்தி, அயோத்யா தேவதையை நமஸ்கரித்து, பதினான்கு வருஷங்கள் வரையில் வனவாஸம் செய்வதாகத் தான் ஆரம்பித்த காரியம் விக்கினமின்றி முடியும்படி அனுக்கிரகிக்க வேண்டுமென்று பிரார்த்தித்தார். "நகரங்களுக்குள் சிரேஷ்டமான அயோத்யையே! இக்ஷ்வாகு வம்சத்தரசர்களால் ஆளப்பட்ட நகரமே! உன்னிடத்தில் வஸிக்கும் தேவதைகளையும், உன்னைக் காப்பாற்றும் தேவதைகளையும், உன்னையும் நமஸ்கரித்து உத்தரவு பெற்றுக்கொள்ளுகிறேன். நான் பிதிருவாக்கிய பரிபாலனம் செய்து, மறுபடியும் இங்கே வந்து, என் பெற்றோர்களுடன் சேர்ந்து உன்னைப் பார்க்கும்படி அனுக்கிரஹிக்க வேண்டும்'' என்று சொல்லிக்கொண்டிருக்கையில், அங்கேயிருக்கும் ஜனங்கள் வாடின முகத்துடன் கண்ணீர் பெருக நிற்பதைக் கண்டார். அதைப் பார்த்து மனமுருகிக் கண்ணீர் ததும்ப மிகவும் பரிதாபமாகக் கைகளை உயரத்தூக்கி, "என்னிடத்தில் நீங்கள் வைத்திருக்கும் மரியாதையும், இரக்கமும் அளவுக்கு மிஞ்சினவை. ஆனால் என்னைப் பார்ப்பதாலுண்டாகும் துக்கத்தை அவை, விருத்தி செய்யுமேயல்லாது குறைக்காது. ஆகையால் நீங்கள் போகலாம். உங்களுடைய வேலையைக் கவனியுங்கள்'' என்றார். அவர்களும் ராமனைப் பிரதக்ஷிண நமஸ்காரம் செய்து, கோரமாகப் புலம்பிக்கொண்டு, அவரை இன்னும் பார்த்துக்கொண்டிருக்க வேண்டுமென்ற ஆசையால் மெள்ள மெள்ளப் பின்தொடர்ந்து வந்தார்கள். அவர்கள் எவ்வளவு பார்த்தும் திருப்தியடையாமல் பிரலாபித்துக்கொண்டிருக்கையில், ஸூரியன் இரவில் மறைவதுபோல், ராமன் அவர்களின் கண்ணிற்கு புலனாகாது வெகுதூரம் சென்று மறைந்தார்.

அந்தக் கோஸல ராஜ்யம் தனதான்யங்களால் நிறைந்தது. நன்னடத்தையுள்ளவர்களும் தானதர்மங்களில் நோக்கமுள்ளவர்களும் வஸிக்குமிடம். அங்கே இருப்பவர்களுக்குப் பயமென்பதே கிடையாது. பார்க்க வெகு அழகாயிருக்கும். தேவாலயங்களாலும், யாகங்கள் நடந்த இடத்தைக் காட்டும் யூபஸ்தம்பங்களாலும் அலங்கரிக்கப்பட்டது. பூந்தோட்டங்களும், மரச்சோலைகளும்,

மாட்டு மந்தைகளும் நிறைந்து ஒவ்வொரு கிராமமும் அயோத்யைக்கு ஸமமாகவே இருந்தது. மிகுந்த நீர்வளமுடையது. அதில் வஸிப்பவர்கள் தேகவியாதி மனோவியாதி இல்லாதவர்கள். பிராம்மணர்களின் வேத கோஷம் எப்பொழுதும் கேட்கப்படும். இப்படி யாதொரு குறைவுமில்லாமல், ஸகல ஐசுவரியங்களையும் அனுபவித்துக்கொண்டு, ஸந்தோஷமாகக் காலங்கழிக்கும் ஜனங்களால் நிறைந்த அந்தக் கோஸல நாட்டு வழியாக ராமன் அதிவேகமாகப் போனார். பூலோகத்தில் எவரும் ஆசைப்படக்கூடிய இந்த ராஜ்யத்தை உபயோகமற்ற துரும்புபோல் அலக்ஷ்யமாக உதறிவிட்டு வனத்திற்குப்போன ராமசந்திரனுடைய தைரியத்தை நினைக்கவும் முடியுமா?

பிறகு கோஸல ராஜ்யத்திற்குத் தெற்கில் போய்க்கொண்டிருக்கையில், கங்காநதிக்கரைக்கு வந்தார்கள். அது ஸ்வர்க்கம், பூமி, பாதாளமென்ற மூன்று லோகங்களிலும் ஓடும் நதி; அதன் ஜலம் சுத்தமாயும் பாசி இல்லாமலும் இருக்கும்; ஸகல பாபங்களையும் போக்கக்கூடியது; ரிஷிகளால் எப்பொழுதும் தேடப்பட்டது; பல அழகான ஆசிரமங்கள் அதன் கரையில் கட்டப்பட்டிருந்தன. அதன் மடுக்களில் ஜலக்கிரீடை செய்ய அப்ஸரஸ்கள் அந்தந்த காலங்களில் வருவார்கள். தேவர்கள், தானவர்கள், கந்தர்வர்கள், கின்னரர்கள், கந்தர்வ பத்தினிகள் அதிகமாக வஸிக்குமிடம் அது. தேவதைகள் விளையாடும் அழகான மலைகளையும், தோட்டங்களையுமுடையது. தேவதைகளைப் பூஜிக்க இதிலுள்ள புஷ்பங்களை ஸ்வர்க்கம் முதலிய லோகங்களுக்குக் கொண்டுபோவார்கள். அதின் ஜலம் கற்பாறைகளில் விழும் ஓசை, ஒரு அழகுள்ள பெண் கைக்கொட்டிச் சிரிப்பதுபோலிருக்கும்; அதில் மிதக்கும் நுரை அவளுடைய புன்சிரிப்பைப் போன்றது. மேடுபள்ளங்களில் ஜலம் விழுந்து ஓடும்பொழுது அது அவளுடைய கறுத்த பின்னலைப் போலிருக்கும்; அதில் நீர்ச்சுழல்கள் இருந்தன. வெகு ஆழமான இடங்களில் ஓடும்பொழுது மிருதங்கத்தின் ஓசையைப்போல் வெகு கம்பீரமாகவும், கற்பாறைகளின்மேல் ஓடும்பொழுது இடியின் சப்தத்தைப்போல பயங்கரமான ஓசையுடனும் இருந்தது. அதில் ஸ்நானம் செய்யும் தேவதைகளால் பிரகாசித்தது. மலர்ந்த கருநெய்தல் புஷ்பங்கள் சில இடங்களில் அடர்ந்திருந்தன. சில இடங்களில் விஸ்தாரமான மேடுகளும், சில இடங்களில் பளபளப்பான மணல் திட்டுகளும் இருந்தன. சில இடங்களில் அன்னங்களும் சக்கரவாகங்களும் நீர்க்காக்கைகளும் ஸந்தோஷத்தால் மதம் கொண்டு கூச்சலிட்டன. சில இடங்களில் கரையிலுள்ள மரங்கள் அதற்கு மாலை போட்டதுபோல் தோன்றின. மலர்ந்த நீலோத்பலங்களும் தாமரைகளும் ஆம்பல்களும் செங்கழுநீர்களும் சிற்சில இடங்களில் ஜலத்தை மறைத்தன. புஷ்பங்களிலுள்ள தூளிகள் பரவிச் சிலவிடங்களில் மதங்கொண்டதுபோல் சிவந்திருந்தது. சில



இடங்களில் கொஞ்சம்கூட அழுக்கின்றி ஸ்படிகத்தைப்போல் சுத்தமாக பிரகாசித்தது. அதன் பக்கத்திலுள்ள காடுகளில் திக்கஜங்களும் தேவதைகளுக்கு வாகனமான யானைகளும் மதயானைகளும் வீற்றிட்டுக்கொண்டிருந்தன. பழங்களாலும் புஷ்பங்களாலும் தளிர்களாலும் அடர்ந்த கொடிகளாலும் பக்ஷிகளாலும் பிரகாசித்தது. ஓர் உத்தம ஸ்த்ரீ தன் அழகிற்கேற்ற அலங்காரங்களைச் செய்துகொண்டு விளங்குவது போலிருந்தது. முதலைகளும் நீர்க் குரங்குகளும் பாம்புகளும் அதன் ஜலத்தில் கிடந்தன. மஹாவிஷ்ணுவின் திருவடிகளில் பிறந்து, சிவபிரானுடைய சடையினின்றும் இறங்கி ஸமுத்திரராஜனுக்குப் பார்யையாக, பாபலேசமுமின்றி, பிறருடைய பாபத்தை நாசம் செய்யும் அந்தத் தெய்வ நதியின் கரையில் சிருங்கிபேரபுரமென்ற இடத்தை நோக்கி ராமலக்ஷ்மணர்களும் ஸீதையும் போனார்கள். அந்தப் புண்ய நதியைப் பார்த்து ராமன், "ஸுமந்திரரே! ரதத்தை நிறுத்தும். இன்று இங்கே இருப்போம். அநேகம் பழங்கள் காய்கள் தளிர்கள், புஷ்பங்களுடன் கங்கைக் கரையில் ஒரு பெரிய புங்கைமரம் காணப்படுகிறதல்லவா? அதன் அடியில் தங்குவோம். தேவ தானவ கந்தர்வ மனுஷ்ய மிருக பக்ஷிகணங்களால் போற்றப்படும் இந்தப் புண்ய நதியைத் தரிசிப்போம்" என்றார். ஸுமந்திரர் அப்படியே ரதத்தை அங்கே ஓட்டிக்கொண்டுபோய் நிறுத்தி, அவர்கள் ரதத்திலிருந்து இறங்கியவுடன் குதிரைகளை அவிழ்த்துவிட்டு, மரத்தடியில் உட்கார்ந்திருக்கும் ராமனுக்கருகில் வணக்கமாய்க் கைகூப்பி நின்றார்.

அந்த தேசத்திற்கு அரசனான குகன் ராமனுக்கு உயிர்த்தோழன்; வேடர் ஜாதியில் பிறந்தவன்; மஹா பலசாலி. ராமன் தன் தேசத்திற்கு வந்திருப்பதை அறிந்து, வயதுசென்ற மந்திரிகளோடும் பந்துக்களோடும் ராமனைத் தரிசிக்க வந்தான். ராமலக்ஷ்மணர்கள் அவன் வருவதைத் தூரத்திலேயே கண்டு எழுந்து எதிர்கொண்டு உபரித்தார்கள். ராமன் தபஸ்விகளின் வேஷத்தை தரித்ததைக் கண்டு வெகு துன்பமடைந்து, எல்லையற்ற பிரியத்துடன் அவரைக் கட்டியணைத்து, "ராமா! உனக்குஅயோத்யை எவ்வளவு ஸ்வாதீனமோ அப்படி. இந்தத் தேசமும் என்று நினைக்கவேண்டும். உயர்ந்த இத்தகைய அதிதி எவனுக்குக் கிடைப்பான். நான் உன் அடிமை. கட்டளைப்படி நடக்க சித்தமாக இருக்கிறேன்" என்றுகூறி அர்க்கியபாத்தியங்களால் உபசரித்தான்; இனிய பலவித மாம்ஸங்களையும் ஆஹார பதார்த்தங்களையும் கொண்டுவந்து வைத்தான். "மஹா பலவானே! இங்கே க்ஷேமமாய் வந்து சேர்ந்தீர்களா? இந்தக் காடு முழுவதும் உங்களுடையது. நாங்கள் உங்களுடைய வேலைக்காரர்கள்; நீங்கள் எங்களைப் போஷிப்பவர்கள். இங்கு நடக்கும் ஸகலவித ஆஹாரங்களையும் வாஹனங்களையும் ஆஸனங்களையும் குதிரைகளுக்கு வேண்டிய

பதார்த்தங்களையும் என்னிடத்திலிருந்து பெற்றுக்கொண்டு, உங்களுடைய ராஜ்யத்தை ஆளவேண்டும்'' என்று பிரார்த்தித்தான்.

தன் இஷ்ட தெய்வமான ராமமூர்த்தி தங்களைத் தேடி வந்ததைக் கண்டு, குகன் பரமானந்த ஸமுத்திரத்தில் மூழ்கி, தான் தனதென்ற யாவையும் அவருக்கு அர்ப்பணம்செய்து, அவரிடத்தில் ஸகல பாரத்தையும் வைத்து, அவரைச் சரணமடைந்து, அவருடைய கைங்கரியமென்ற உத்தமபலனை யாசித்தான்.

குகன் இப்படிச் சொல்ல, ராமன் வெகு ஸந்தோஷத்துடன், யானைத் துதிக்கையைப்போல் நீண்டு பருத்த புஜங்களால் அவனை இறுகத் தழுவி, "யாதொரு குறைவுமின்றி உபசரித்தாலும் சிலர் அதனால் திருப்தி அடைகிறதில்லை. நாங்கள் அவ்விதமானவர்களல்ல. நீ கால்நடையாக எங்களைப் பார்க்க வந்ததாலும், 'இந்த ராஜ்யம் தங்களுடையது. நான் தங்கள் அடிமை' என்று கூறிய பிரியமான வார்த்தையாலும் திருப்தியடைந்தேன். இதே எல்லா வகை உபசாரத்திற்கும் மேலாயிற்று. நீயும் உன் பந்துக்களும் ரோகமில்லாமல் ஸுகமாக இருக்கிறீர்களா? உன் ராஜ்யத்தில் க்ஷேமமா? உன் மித்திரர்கள் ஸுகமாக இருக்கிறார்களா? உன் செல்வம் வளர்கிறதா? உன்னைப் பார்க்க எனக்கு வெகு ஸந்தோஷமுண்டாகிறது. இப்பொழுது நீ எனக்குச் செய்த உபசாரங்கள் யாவற்றையும் ஒப்புக்கொண்டு திருப்தி அடைந்தேன். ஆனால், இப்பொழுது பிறரிடத்தில் ஏதேனும் நான் பெற்றுக்கொள்வதும் அனுபவிப்பதும் என் விரதத்திற்கு விரோதம். நான் பிதிருவாக்கிய பரிபாலனம் செய்ய மரவுரி, மான்தோல், பவித்திரம் அரைநூல் முதலியவைகளைத் தரித்துக்கொண்டு, வனத்தில் வாஸம் செய்து, பழம் கிழங்கு வேர் முதலியவைகளைத் தின்று தவம் செய்யவேண்டும். மஹாராஜாவிற்கு இந்தக் குதிரைகளிடத்தில் வெகுப் பிரீதி; எனக்கும் அப்படியே; இவைகளுக்கு வேண்டியவைகளைக் கொடு; எங்களுக்கு வேறொன்றும் வேண்டாம். இதைச் செய்தால் எங்களுக்கு ஸகல விதமான பூஜைகளையும் செய்த திருப்தியுண்டாகும்'' என்றார்.

குகன் தன் வேலைக்காரர்களால் குதிரைகளுக்கு வேண்டியவைகளைக் கொடுப்பித்தான். பிறகு ராமன் மரவுரியை உத்தரீயமாகக் கொண்டு, மேற்குமுகமாக நின்று ஸந்தியாவந்தனம் செய்து, லக்ஷ்மணன் கொண்டுவந்த சுத்தமான கங்கா ஜலத்தைக் குடித்தார். ராமனும் ஸீதையும் பூமியில் படுத்துக்கொண்ட பிறகு லக்ஷ்மணன் அவர்களுடைய கால்களைச் சுத்தம்செய்து மரத்தடியில் வந்தார். மஹாபுத்திமானும் மஹா கீர்த்திசாலியும் மஹா தர்மாத்மாவும் ஒருநாளும் துக்கத்தை அறியாதவரும் எப்பொழுதும் ஸுகத்தையே அனுபவிக்கத் தகுந்தவருமான ரகுவீரன் ஸீதையுடன் தூங்கும் பொழுது, குகன் ராமனுடைய கல்யாண குணங்களைப்பற்றி



லக்ஷ்மணனிடத்திலும் ஸுமந்திரரிடத்திலும் பேசிக்கொண்டு வில்லும் கையுமாகப் பாதுகாத்தான்.

தத2ா ஶயாநஸ்ய ததோஸ்ய தீ4மதோ
யஶஸ்விநோ தா3ஶரதே2ர் மஹாத்மந: |
அத்3ருஷ்ட துக்க2ஸ்ய ஸுகோ3சிதஸ்ய ஸா
தத3ா வ்யதீயாய சிரேண ஶர்வரீ || (51)

## ஸர்க்கம் 51

# லக்ஷ்மணன் பிரலாபித்தது

தம் ஜாக்3ரத மத3ம்பே4ந ப்4ராதுரர்தா2ய லக்ஷ்மணம் |
கு3ஹ: ஸந்தாப ஸந்தப்தோ ராக4வம் வாக்ய மப்3ரவீத் || (1)

லக்ஷ்மணன் ராமனிடத்தில் வைத்திருந்த பரமப் பிரீதியாலும் பக்தியாலும் அவரை வெகு ஜாக்கிரதையுடன் ரக்ஷித்துக்கொண்டு விழித்திருப்பதைக் கண்டு குஹன் மிகவும் வருத்தமடைந்து, "குழந்தாய்! உனக்காக ஸுகமான படுக்கையை இதோ போட்டிருக்கிறேன். நீ இதில் படுத்து சற்று உன்னிஷ்டப்படி இளைப்பாறலாம். நானோ காட்டில் பிறந்து வளர்ந்தவன்; எனக்குக் கஷ்டங்களை அனுபவிப்பது இயற்கை. விழித்துக்கொண்டிருப்பதால் எனக்கு சிரமமில்லை. என்னுடனிருக்கும் வேடர்களுக்கும் அப்படியே. நாங்கள் விழித்துக்கொண்டு ராமனை ஜாக்கிரதையாகப் பாதுகாக்கிறோம். நீயோ ஸுகமாக வளர்க்கப்பட்டவன்; உனக்கு இந்த வேலை தகுதியல்ல. இந்த லோகத்தில் ராமனைக் காட்டிலும் பிரியமான வஸ்து எனக்கில்லை. நான் சொல்வது ஸத்தியம்; வேண்டுமென்றால் ஸத்தியதேவதையின்மேல் ஆணையிட்டுச் சொல்லுகிறேன். இவனுடைய கிருபையால் இந்த லோகத்தில் மிகுந்த கீர்த்தியையும் தர்மத்தையும் மட்டில்லாத ஐசுவரியத்தையும் அடையலாமென்று நம்பியிருக்கிறேன். என் அருமைத் தோழனான ராமனும் ஸீதையும் தூங்கிக்கொண்டிருக்கும்பொழுது நானும் என் பந்துக்களும் வில்லும் கையுமாக நான்கு புறத்திலும் காத்துக்கொண்டிருப்போம். எப்பொழுதும் இந்த வனத்தில் ஸஞ்சரித்துக்கொண்டிருக்கும் எனக்கு இங்கே தெரியாதது ஒன்றுமில்லை. எதிரிகள் சதுரங்க பலத்துடன் வந்தாலும் அவர்களைத் துரத்தி அடிப்பதற்கு நானும் பந்துக்களும் ஸைன்யங்களும் போதும்'' என்றான்.

லக்ஷ்மணன், "தர்மத்திலிருந்து விலகாத மனத்தையுடைய நீ காத்துக் கொண்டிருக்கும்பொழுது எங்களுக்குப் பயமேது? சக்கரவர்த்தி திருமகனும் பிராட்டியும் வெறும் தரையில் படுத்துத் தூங்கும்பொழுது எனக்குத் தூக்கம் வருமா? தேகஸௌக்கியத்திலாவது உயிரைக் காப்பாற்றுவதிலாவது எனக்கு ஞாபகமே இல்லை. தேவாஸுரர்கள் ஒன்று சேர்ந்து எதிர்த்தாலும் என் அண்ண

னுடைய பாணத்திற்கு முன் நிற்கமுடியுமா ? அந்த மஹா வீரன் ஸீதா தேவியுடன் தரையில் புல்லின்மேல் ஸுகமாகப் படுத்துத் தூங்கும் கோரத்தைப் பார் !

இவரைப் புத்திரனாக அடைய மஹாராஜா காயத்ரீ முதலிய மந்திரங்களைக் கோடி கோடியாக ஜபித்தார் ; இந்திரியங்களை அடக்கி, கிருச்ரம் சாந்திராயணம் முதலிய கடுமையான விரதங்களை வெகுகாலம் அனுஷ்டித்தார். வேதத்தில் சொல்லப்பட்ட யாக யக்ஞங்களை ஒன்றுவிடாமல் பலமுறை செய்தார். இவ்வளவு கஷ்டப்பட்டு, அறுபதாயிரம் வருஷங்களுக்குப் பிறகு தன்னைப் போன்ற ஒரு அருமைக் குழந்தையைப் பெற்றார். அவனையும் ராஜ்யத்தைவிட்டு வனத்திற்குத் துரத்தின பிறகு அவர் பிழைத்துமிருப்பாரா ? இந்தப் பூமிதேவியே நாதனில்லாமல் விதவையானாள் என்பதில் ஸந்தேகமில்லை. மஹாராஜாவின் அந்தப் புரத்திலிருக்கும் ஸ்திரீகள் தேகத்தில் சக்தியிருக்கும் வரையில் கதறி, சிரமத்தால் மெய்மறந்து இப்பொழுது படுத்துத் தூங்குவார்கள். இனிமேல் யாதொரு சப்தமும் இல்லாமல் ஓய்ந்திருக்கும்.

கௌஸல்யையும் என் தாயும் மற்ற ராஜபத்னிகளும் மஹாராஜாவும் இதற்குள் உயிரை விட்டிருப்பார்கள். அப்படி இல்லாவிட்டாலும் இன்று ராத்திரிக்குமேல் பிழைத்திருக்க மாட்டார்கள். ஒருவேளை சத்ருக்னனைப் பார்க்கவேண்டுமென்ற ஆசையால் என் தாய் உயிரை வைத்துக்கொண்டிருந்தாலும் இருக்கலாம். வீர சிகாமணியைப் புத்திரனாகப் பெற்ற கௌஸல்யை அப்படி உயிரை வைத்துக்கொண்டிருக்கமாட்டாளே! அதை நினைக்கும்பொழுது எனக்குத் தாங்கமுடியாத துக்கமுண்டாகிறது. லோகத்திலுள்ளவர்களுக்கு ஆனந்தத்தைக் கொடுத்துக்கொண்டிருந்த அயோத்யையிலுள்ள ஜனங்கள் யாவரும் மஹாராஜாவிடத்தில் மிகுந்த பிரீதி வைத்தவர்கள். அவருக்கு மரணம் நேர்ந்ததைக் கேட்டால் துக்கம் தாங்காமல் உயிரை விடுவார்கள். ராமன் அவருக்கு மூத்த புத்திரர் ; ஸகல உத்தம குணங்களாலும் அலங்கரிக்கப்பட்டவர் ; எங்கள் நால்வரிலும் அவருக்கு மிகவும் அருமையானவர். அவரைப் பார்க்காமல் அரசனுடைய தேகத்தில் பிராணன்கள் நிற்குமா ? அவர் இறந்தபிறகு கௌஸல்யை உயிரோடிருப்பாளா ? கௌஸல்யை இறந்தபிறகு என் தாய் பிழைத்திருக்கமாட்டாள். 'நமக்கு இவ்வளவுநாள் கழித்து ஓர் அருமைக் குழந்தை பிறந்தது ; யாதொரு அபாயமும் இன்றி வளர்ந்தது ; நல்ல குலத்தில் விவாகமாயிற்று ; இனிமேல் இந்த ராஜ்யத்தை ஒப்புக்கொள்வான் ; நாம் கவலையற்றிருக்கலாம்' என்று மேலும் மேலும் பெருகும் கோரிக்கைகளெல்லாம் வீணாகி, இனிமேல் பிழைத்திருக்க யாதொரு காரணமுமில்லாமல் அரசர் உயிரை விடுவார். இந்தப் பதினான்கு வருஷங்களுக்குப் பிறகாவது ராஜ்யத்தை ராமனிடத்தில் ஒப்புவித்து, ஸந்தோஷப்படலாமோ என்றால், அவ்வளவு காலம் அவர் புத்திர



சோகத்தைத் தாங்குவாரென்று தோன்றவில்லை. அப்பொழுது அருகிலிருந்து அவருடைய உத்தரக்கிரியைகள் யாவற்றையும் செய்பவர்களே புண்ணியாத்மாக்கள்; எங்களுக்கோ அந்தப் பாக்கியமில்லை.

ஆஹா ! அயோத்தியைப்போல் அழகான நகரம் இந்த பிரபஞ்சத்திலுண்டா ? நேர்த்தியாக அமைக்கப்பட்ட நாற்சந்திகளையும், கோணலின்றி அழகாகப் போடப்பட்ட வீதிகளையும், தனவான்களின் வீடுகளையும், அரசர்களின் அரண்மனைகளையும், நந்தவனங்களையும், பூந்தோட்டங்களையும், மரச்சோலைகளையும் நினைக்கும்பொழுது துக்கம் மேலிடுகிறது. நிகரற்ற அழகுவாய்ந்த வேசிகளால் அலங்கரிக்கப்பட்டு, உத்தமமான யானை, குதிரை, ரதங்களால் நிறைந்து, மங்கள வாத்தியங்கள் கோஷிக்க தேகவியாதி மனோவியாதியில்லாத பிரஜைகளால் விளங்கி, தேவாலயங்களில் அடிக்கடி நடக்கும் உத்ஸவங்களாலும், வீடுகளில் நேரும் மங்கள காரியங்களாலும் பிரகாசித்துக்கொண்டு, ஸகல ஸௌக்கியத்திற்கும் க்ஷேமத்திற்கும் ஸுகத்திற்கும் இருப்பிடமான அயோத்யையில் வஸிக்கப்பெற்றவர்கள் மஹாபாக்கியசாலிகளென்று சொல்லவும் வேண்டுமா ? நாங்கள் வனவாஸம்செய்து திரும்பிவரும் வரையில் மஹாராஜா பிழைத்திருப்பாரா? மஹா தர்மாத்மாவான அந்த மஹாத்மாவை நாங்கள் பார்ப்போமா ? என் தமையன் செய்த பிரதிக்ஞைப்படி வனவாஸம் யாதொரு அபாயமுமின்றி முடிந்து, அரசனுடைய பிரதிக்ஞையும் நிறைவேறி, நாங்களெல்லோரும் சேர்ந்து அயோத்யையில் பிரவேசிப்போமா!" என்று இப்படி லக்ஷ்மணன் பிரலாபித்துக்கொண்டிருக்கையில் பொழுதும் விடிந்தது. அரசனிடத்திலும், ராஜபத்னிகளிடத்திலும், ராமனிடத்திலும் லக்ஷ்மணன் வைத்த மிகுந்த பிரீதியால் இப்படி நிஜத்தைச் சொல்லி வருத்தப்படுவதைக் கேட்டுக் குஹனுக்கும் துக்கம் மேலிட்டது. தாங்கமுடியாத ஜ்வரத்தால் தவிக்கும் யானையைப்போல் கண்களில் நீர் பெருகத் துக்கித்தான் குஹன்.

ததா$^{2}$ ஹி ஸத்யம் ப்$^{3}$ருவதி ப்ரஜாஹிதே
நரேந்த்$^{3}$ர புத்ரே கு$^{3}$ருஸௌஹ்ருதா$^{3}$த்$^{3}$குஹ: |
முமோச பா$^{3}$ஷ்பம் வ்யஸநாபி$^{4}$ பீடி$^{3}$தோ
ஜ்வராதுரோ நாக$^{3}$ இவ வ்யதா$^{2}$துர: || (27)

## ஸர்க்கம் 52

## ராமன் கங்கையைத் தாண்டினது

ப்ரபா$^{4}$தாயாம் து ஶர்வர்யாம் ப்ருது$^{2}$வக்ஷா மஹாயஶா: |
உவாச ராம: ஸௌமித்ரிம் லக்ஷ்மணம் ஶுப$^{4}$லக்ஷணம் (1)

**பொ**ழுது விடிந்தவுடன் மஹா கீர்த்திசாலியும் மஹா சூரனுமான ராமன், "குழந்தாய், லக்ஷ்மணா! அருணோதய காலமாயிற்று;

ராத்திரி முடிந்தது. இதோ பார்; கருங்குயில்கள் கூவுகின்றன. காட்டிலிருக்கும் மயில்களின் சப்தம் நாம் நகரத்தில் வளர்க்கும் மயில்களின் சப்தத்தைவிட கம்பீரமாயிருப்பதைக் கவனித்தாயா? கங்கையின் வேகத்தையும், அகலத்தையும் பார்த்தால் ஓடமில்லாமல் இதைத் தாண்ட முடியாதென்று நினைக்கிறேன். ஆகையால் அதற்கு வேண்டிய ஏற்பாடுகளைச் செய்'' என்றார். லக்ஷ்மணன் ஸுமந்திரரையும், குகனையும் அழைத்துவந்து ராமனுடைய கட்டளையைத் தெரிவித்தார். அப்படியே செய்கிறேனென்று குகன் தலைவணங்கி, தன் மந்திரிகளை அழைத்து, "சீக்கிரத்தில் கங்கையைத் தாண்டக்கூடிய ஒரு நேர்த்தியான ஓடம், இறங்கும் துறையில் தயாராக இருக்கட்டும். அது உறுதியான துடுப்பு சுக்கான் முதலிய கருவிகளுள்ளதாயும் திறமையுள்ள மாலுமியால் நடத்தப் பட்டதாயும் இவர்கள் அசையாமல் ஸுகமாகப் போகக்கூடியதாயும் இருக்கட்டும்'' என்று உத்தரவிட்டான். அவர்கள் அப்படியே செய்து அவனுக்குத் தெரிவித்தார்கள். பிறகு குகன் கைகூப்பி வணக்கமாய், "ராம! தங்கள் உத்தரவுப்படி நேர்த்தியான ஓடம் ஸித்தமாக இருக்கிறது. இனிமேல் தங்களுடைய கட்டளை என்ன? இந்த வேகமான நதியை வெகு சீக்கிரத்தில் தாண்டலாம். ஓடத்தில் ஏறும்படி பிரார்த்திக்கிறேன்'' என்றான். ராமன் "நீ இவ்வளவு செய்ததே போதும். மண்வெட்டி கூடை ஆடையாபரணங்கள் ஆயுதங்கள் முதலிய ஸாமான்களை ஓடத்தில் வை'' என்றார். பிறகு ராம லக்ஷ்மணர்கள் கவசம் தரித்து அம்பறைகளையும் கத்திகளையும் கட்டி, இறங்கும் துறையை நோக்கி நடந்தார்கள்.

அப்பொழுது ராமன் ரதத்தை விரும்பாததைப்பார்த்து, ஸுமந்திரர் தலைவணங்கிக் கைகூப்பி "ஸ்வாமி! நான் என்ன செய்யலாம்? எனக்கென்ன உத்தரவு?'' என்றார். ராமன் அவரை வலது கையால் தொட்டு "ஸுமந்திரரே! அதிசீக்கிரத்தில் வெகு ஜாக்கிரதையாக மஹாராஜாவிடத்திற்குத் திரும்பிப்போம். அவருடைய உத்தரவால் நாங்கள் இதுவரையில் ரதத்தில் வந்தோம். இனிமேல் ரதத்தை விட்டுக் கால்நடையாக வனத்திற்குப் போவோம். ஆகையால் நீர் இவ்விடத்திலேயே நிற்கலாம்'' என்றார். தன்னை அயோத்யைக்குத் திரும்பிப் போகும்படி உத்தரவு கொடுத்தனுப்பினதை அறிந்து ஸுமந்திரர் வெகு துக்கத்துடன், "ஸ்வாமி! தாங்கள் ஸீதையோடும் லக்ஷ்மணனோடும் அல்ப மனுஷ்யர்களைப் போல் இப்படி வனத்தில் வஸிக்கும்படி நேர்ந்ததில் எவருக்காவது ஸம்மதமுண்டா? தங்களுக்கே இப்படிப்பட்ட கஷ்டம் நேர்ந்ததைப் பார்த்தால் பிரஹ்மசரிய விரதம் அனுஷ்டிப்பதில் வேதாத்யயனம் தயை நீதி இவைகளில் யாதொரு பிரயோஜனமும் இருப்பதாய் எனக்குத் தோன்றவில்லை. அப்படியிருந்தால் ஸகல உத்தம லக்ஷணங்களும் பொருந்திய தங்களுக்கு அந்தப் பயன் ஏன் கிடைக்கவில்லை? மஹாவிஷ்ணு மூன்று அடிகளால் மூன்று லோகங்களையும் அளந்ததுபோல், தாங்கள் லக்ஷ்



மணனோடும் ஸீதையோடும் வனத்தில் வஸிப்பதால் மூன்று லோகங்களையும் ஜயித்து நிகரற்ற கீர்த்தியை அடையப் போகிறீர்கள். தங்களுக்கு அபிஷேகம் நடந்து நாங்களெல்லோரும் ஸுகமாக வாழ்வோமென்று முதலில் நினைத்தோம்; அந்த எண்ணம் நிறைவேறாமல் கைகேயி எங்களை ஏமாற்றினாள். ஜனங்களை வனத்திற்கு அழைத்துக் கொண்டு போவதுபோல் காட்டில் தூங்கும்படி செய்து அவர்களுக்குத் தெரியாமல் வனத்திற்கு வந்து விட்டீர்கள்; அந்த விஷயத்தில் தங்களால் ஏமாற்றப்பட்டார்கள். என்னையாவது கூடவரும்படி அனுக்ரஹம் செய்வீர்களென்று நம்பியிருந்தேன்; வரக்கூடாதென்று இப்பொழுது கண்டிப்பாய் தடுத்துவிட்டீர்கள். இந்த விஷயத்திலும் தங்களால் வஞ்சிக்கப்பட்டேன். எல்லாவிதத்தாலும் நாங்கள் கெட்டோம். இதுவும் போதாதென்று மஹாபாபியான கைகேயியின் கையில் எங்களைக் கொடுக்கப் போகிறீர்கள். நாங்கள் துக்கத்தையே அனுபவிக்க வேண்டுமென்று ஏற்பட்டது'' என்றார். இப்படித் தன் உயிருக்கு ஸமமான ராமனை இனிமேல் பார்ப்பது அரிதென்று முடிவு செய்து ஸுமந்திரர் துக்கம் தாங்காமல் வெகு நேரம் வரையில் வாய்விட்டு அழுதார்.

அழுகையை நிறுத்தி ஆசமனம் செய்து சுத்தரான பிறகு, ராமன் அவரைப் பார்த்து "இக்ஷ்வாகு வம்சத்தரசர்களுக்கு உம்மைப் போன்ற மித்திரன் கிடைப்பது அரிது. மஹாராஜா என்னைப்பற்றி வருத்தப்படாமலிருக்கும்படி செய்வது உமது கடமை. சக்கரவர்த்தி மிகவும் வயது சென்றவர்; இதுவரையில் அகண்டமான ராஜ்யத்தை ஆண்டு வந்தவர்; ஸகல ஸுகங்களையும் அனுபவித்தவர்; அவருடைய மனோரதங்களெல்லாம் வியர்த்தமாயின; இந்த ஸமயத்தில் கொடிய புத்திரசோகம் நேர்ந்திருக்கிறது; ஆகையால் உம்மை இவ்வளவு எச்சரிக்கை செய்கிறேன். நமக்குப் பெரியோர்களையும் பிரபுக்களையும் நாம் அவர்கள் இஷ்டப்படியே அனுசரிக்க வேண்டியதேயொழிய, அவர்களை நம்முடைய வழியில் கட்டுப்படுத்தித் திருப்ப முடியாது. ஆகையால் சக்கரவர்த்தி கைகேயிக்கு ஸந்தோஷத்தை உண்டுபண்ணுவதற்காக எதைக் கட்டளையிட்டாலும் அதைத் தாமதிக்காமல் உடனே செய்ய வேண்டியது. 'பிரீதியாலாவது கோபத்தாலாவது அவர்கள் எந்தக் காரியத்தைச் செய்தாலும் அதை ஒருவனும் தடுக்கக்கூடாது' என்பதற்காகவே அவர்கள் அரசர்களென்றும் மற்றவர்களை ஆளுகிறார்களென்றும் ஏற்பட்டிருக்கிறது. சக்கரவர்த்திக்கு வெறுப்பு உண்டாகாமலிருக்கும்படிக்கும் துக்கத்தால் அவர் வாடாதபடிக்கும் நடந்துகொள்ளும். அவர் நம் எல்லோர்க்கும் அரசர்: மிகவும் வயது சென்றவர்; இந்திரியங்களை அடக்கினவர்; உத்தம குணங்களால் அலங்கரிக்கப்பட்டவர்; இது வரையில் துக்கத்தை அனுபவிக்காதவர். அயோத்யையில் வஸிக்க முடியவில்லையே என்றும் காட்டில் வஸிக்

கும்படி நேரிட்டதே என்றும் நானாவது லக்ஷ்மணனாவது ஸீதையாவது வருத்தப்படுகிறோமென்றும் நினைத்துத் தாங்கள் வருத்தப்படக்கூடாது. பதினான்கு வருஷங்கள் முடிந்த பிறகு நாங்கள் வெகு சீக்கிரமாகத் தங்களைத் தரிசனம் பண்ணுகிறோம்' என்று நான் நமஸ்காரம்செய்து விக்ஞாபனம் செய்துகொண்டதாக அரசரிடம் தெரிவிக்கவேண்டும். பிறகுஎன் தாயையும் அவளுடன் இருப்பவர்களையும் கைகேயியையும் நான் க்ஷேமம் விசாரித்ததாகச் சொல்லும். உத்தம புருஷனான லக்ஷ்மணனும், ஸீதையும் நானும் கௌஸல்யையின் பாதங்களில் நமஸ்கரித்ததாகச் சொல்லும். பரதனைச் சீக்கிரமாக வருவித்து அரசனுடைய இஷ்டப்படி அவனுக்கு யௌவ ராஜ்ய அபிஷேகம் செய்ய வேண்டுமென்றும், அப்படிச் செய்தால் என்னைவிட்டுப் பிரிந்த துக்கம் நீங்குமென்றும், நான் சொன்னதாக அரசனிடத்தில் மறுபடியும் சொல்லும். பரதனிடத்தில் 'நீ மஹாராஜாவை எவ்வளவு பக்தியோடும், மரியாதையோடும் நடத்துகிறாயோ அப்படியே ராஜ பத்தினிகளிடத்திலும் பேதமில்லாமல் நடக்க வேண்டும். உன் தாயான கைகேயி உனக்கு எப்படியோ அப்படியே சத்ருக்னனுடைய தாயான ஸுமித்திரையும் என் தாயான கௌஸல்யையும் உன்னுடைய மரியாதைக்கு உரியவர்கள். நமது பிதாவின் இஷ்டப்படி யுவராஜாவாக ஆண்டுவரும் நீ இந்த லோகத்திலும் பரலோகத்திலும் ஸுகத்தையும், சிரேயஸையும் ஸுலபமாக ஸம்பாதிக்கலாம்' என்று சொல்லும்'' என்றார்.

இப்படி ராமன் ஸுமந்திரரைத் திரும்பிப் போகும்படி உத்தரவு கொடுத்தார். அவர் துக்கம் மேலிட்டு ராமனிடத்தில் பால்யம் முதல் பழகின காரணத்தால் ''நான் சில விஷயங்களைத் தெரிவித்துக் கொள்ளுகிறேன்; அவை உபசாரமாகச் சொல்வதல்ல. நான் தங்களுடைய ஸேவகனென்பதை மறந்து இவ்வளவு தைரியமாகச் சொல்லத் துணிந்ததற்கு தங்களிடத்தில் நான் வைத்திருக்கும் பிரீதியும் பக்தியுமே காரணம்; இதை அறிந்து என்னை மன்னிக்க வேண்டும். ஒருவன் வெகு அருமையாக வளர்த்துவந்த ஒரே புத்திரனைப் பறிகொடுத்துத் தவிப்பதுபோல், தாங்களில்லாமல் துக்கப்படும் அயோத்யையில் நான் ஒண்டியாக எப்படிப் போவேன்? இந்த ரதத்தில் தங்களுடன் என்னைப் பார்த்த ஜனங்கள் தாங்களில்லாமல் நான் மாத்திரம் இந்த ரதத்தில் திரும்பி வருவதைப் பார்த்தால், துக்கத்தால் ஹிருதயம் வெடித்து இறப்பார்கள். யுத்தத்தில் தலைவன் இறந்து, அவனுடைய ரதத்தில் ஸாரதி மாத்திரம் இருக்கக் கண்டால் அவனுடைய ஸைன்யம் எப்படிச் சிதறிப்போகுமோ அப்படித் தாங்களில்லாத இந்த ரதத்தைப் பார்த்தால் தங்களுடைய குடிகள் ஏங்கிப்போவார்கள். தாங்கள் வெகுதூரத்திலிருந்தாலும் அவர்கள் எதிரிலிருப்பதாக நினைத்துக்கொண்டிருக்கிறார்கள். அதே எண்ணத்தால் ஊண் உறக்கத்திலும் அவர்களுக்குக் கவனமில்லை. தாங்கள் நகரத்திலிருந்து வெளியில் வரும்பொழுது அவர்கள் பட்ட பாட்டைப் பார்த்திருக்கலாமே. அவர்களுடைய துக்கத்தையும், மனக் குழப்பத்தையும் வர்ணிக்க முடியுமா? தாங்கள் புறப்படும்பொழுது ஜனங்கள் பெருங்கூச்சலிட்டதைக் கேட்கவில்லையா? இப்பொழுது தாங்களுமில்லாமல் நான் மாத்திரம் திரும்பிப்போனால் அவர்களின் அழுகை நூறு மடங்கு ஆகுமே. கௌஸல்யையிடத்தில் நான் என்ன ஸமாசாரத்தைச் சொல்வேன்? 'தங்கள் புத்திரனை அம்மான் வீட்டிற்குக் கொண்டு போய் விட்டேன்; தாங்கள் கவலைப்பட வேண்டாம்' என்றுசொல்லவா? அப்படிபிரியமான வார்த்தையைச் சொன்னால் அது பொய்யாகும்; பொய்யைச் சொல்லலாமா? அல்லது உங்களுடைய புத்திரனை நான் காட்டிற்குக் கொண்டுபோய் விட்டு வந்தேன்' என்று உண்மையைச் சொன்னால் ராஜபத்தினி துக்கத்தால் உடனே உயிரை விடுவாள். அப்பொழுது என்ன செய்வேன்? ஆகையால் ஒன்றும் சொல்லாமலிருப்பதே நலம்.



நான் திரும்பிப்போக ஸம்மதித்தாலும் இந்தக் குதிரைகள் திரும்பிப்போக ஸம்மதிக்காது. தங்களையும் ஸீதையையும் லக்ஷ்மணனையும் இதுவரையிலும் கொண்டுவந்த இந்தக் குதிரைகள் தாங்களில்லாத ரதத்தை இழுக்கவே இழுக்காது. ஆகையால் தாங்களில்லாமல் நான் அயோத்யைக்குத் திரும்பிப்போக முடியாது. என்னையும் தங்களுடன் வனத்தில் வஸிக்கும்படி உத்தரவு செய்ய வேண்டும். நான் இவ்வளவு பிரார்த்தித்தும் தாங்கள் என்னைக் கைவிட்டால் அந்த க்ஷணத்திலேயே நான் ரதத்துடன் அக்னியில் விழுந்து பிராணனை விடுவேன். வனங்களில் தங்களுடைய தவத்துக்கு விரோதம் செய்யும் ஜந்துக்களை இந்த ரதத்திலிருந்தே தடுப்பேன். பட்டாபிஷேகத்திற்குப் பின் தங்களுக்கு ரதம் செலுத்தும் கைங்கரியம் எனக்குக் கிடைக்கவேண்டுமென்ற எனது ஆசை நிறைவேறவில்லை. தாங்கள் வனத்தில் வஸிக்கும்போது தங்களுக்குக் கைங்கரியம் செய்யும் பாக்கியத்தையாவது அனுக்கிரஹிக்க வேண்டும். காட்டில் எப்பொழுதும் தங்களுக்கு ஸமீபத்தில் இருக்க விரும்புகிறேன். தாங்கள் வனத்தில் வஸிக்கும்பொழுது தங்களுக்குப் பணிவிடை செய்வதால் இந்தக் குதிரைகளுக்கும் உத்தமகதி கிடைக்கும். காட்டில் தங்களுடனிருந்து தங்களுக்கு ஸகல ஊழியத்தையும் என் தலையினால் பொறுப்பாகச் செய்கிறேன். எனக்கு அயோத்யையும் வேண்டாம். தேவலோகமும் வேண்டாம், மோக்ஷமும் வேண்டாம். பாபிகள் ஸ்வர்க்கத்தில் பிரவேசிக்க முடியாது. அப்படி மஹாபாபியான நான் தாங்களில்லாமல் அயோத்யையில் எப்படி பிரவேசிப்பேன்? தாங்கள் வனவாஸம் செய்யும் வரையில் தங்களுடனிருந்து பிறகு தங்களை இந்த ரதத்திலேயே அயோத்யைக்குக் கொண்டு போகவேண்டுமென்று நான் மிகவும் ஆசைப்படுகிறேன். தங்களுடனிருக்கும்பொழுது பதினான்கு வருஷங்களும் பதினான்கு நிமிஷங்களாகப் பறந்துவிடும். தங்களை விட்டுப் பிரிந்தால் ஒவ்வொரு க்ஷணமும் ஒரு யுகமாகும். வேலைக்காரர்

களிடத்தில் தங்களைப்போல் விசுவாஸம் வைத்தவர்களுண்டா? என் யஜமானனுடைய புத்திரனை தாங்கள் வஸிக்குமிடத்தில் நானும் இருக்க விரும்புவது நியாயமல்லவா? என்னைத் தள்ளிவிடக்கூடாதென்று பிரார்த்திக்கிறேன். தாங்கள் எங்கே யிருந்தாலும் தங்களுடன் இருக்க நிச்சயித்துவிட்டேன்" என்று பலவிதமாக ஸுமந்திரர் கெஞ்சிக் கேட்டார்.

ராமன் ஸகலப் பிராணிகளிடத்திலும் ஸ்வபாவத்திலேயே கருணையுள்ளவர்; தன்னை அண்டி தன்னைத் தவிர வேறு கதியில்லை என்ற வேலைக்காரர்களிடத்தில் விசேஷப் பிரீதியையும் கருணையையும் வைத்தவர். ஆகையால், "ஸுமந்திரரே! பிரபுக்களிடத்தில் விசுவாஸம் வைத்தவர்களில் உம்மைப்போன்றவர்களை நான் பார்த்ததில்லை. உமக்கு என்னிடத்திலுள்ள பிரீதியையும் அறிவேன். முக்கியமான காரணங்களில்லாவிட்டால் உம்மை அயோத்யைக்குத் திரும்பிப் போகச் சொல்லுவேனா? நீர் அயோத்யைக்குத் திரும்பிப் போனவுடன், 'ராமன் வனத்திற்குப் போய்விட்டார்' என்று கைகேயிக்கு நிச்சயமுண்டாகும். அதனால் மிகுந்த ஸந்தோஷத்தை அடைந்து தர்மாத்மாவான சக்கரவர்த்தியைப் பொய்யராக எண்ண மாட்டாள்; பரதனுக்கு ராஜ்யம் கிடைக்கும்; அப்பொழுது கைகேயியின் மனோரதங்கள் நிறைவேறும். இந்தக் காரியம் முதலில் முடிய வேண்டியது. ஆகையால் நீர் அயோத்யைக்குத் திரும்பிப்போம். நான் சொல்லி யனுப்பின வார்த்தைகளை அவர்களிடத்தில் சொல்லும்" என்று அவரைப் பல முறை ஸமாதானம் செய்தார்.

பிறகு குகனைப் பார்த்து, "தோழா! நான் இங்கேயே வஸிக்க வேண்டுமென்று நீ விரும்புவது ஸரியல்ல; இவ்விடத்தில் ஜனக் கூட்டம் அதிகம்; நான் ஆசிரமத்தில் அவசியம் வஸிக்கவேண்டும் என் பிதாவின் ஆக்ஞையும் அப்படியே. 'பதினான்கு வருஷங்கள் வரையில் ஜடை மரவுரி மான்தோல்களைத் தரித்துக்கொண்டு தண்டகாரண்யத்தில் வஸிக்கவேண்டும்' என்று கைகேயி சொல்லவில்லையா. காட்டில் வஸிக்கும் தபஸ்விகளுக்குச் சிறப்பைத் தருவதான நியமங்களை அனுஷ்டித்து, என் பிதாவிற்கும் ஸீதைக்கும் லக்ஷ்மணனுக்கும் எல்லையற்ற நன்மையை ஸம்பாதிக்க விரும்பியவனாக சடை தரிக்கப் போகின்றேன். சீக்கிரம் ஆலம்பாலைக் கொண்டுவா" என்றார்.

குகன் அப்படியே செய்ய, ராம லக்ஷ்மணர்கள் ஜடையைத் தரித்து வைகானஸ விதிப்படி வானப்பிரஸ்த தர்மத்தைக் கைக்கொண்டார்கள். முழங்கால்வரையில் நீண்ட திருக்கைகளுடன் ஸர்வ லக்ஷணங்களால் அலங்கரிக்கப்பட்ட ராமன் ஜடையைத் தரித்தார். என்ன கஷ்டம்! அந்த நிலையிலும் ராமலக்ஷ்மணர்கள் மஹரிஷிகளைப்போல் விசேஷ தேஜஸுடன் விளங்கினார்கள். பிறகு ராமன் குகனை அழைத்து, "தோழா! ஸைன்யம் பொக்கிஷம்

ராக⁴வோபி மஹாதேஜா: நாவமாருஹ்ய தாம் தத: |
ப்³ரஹ்மவத் க்ஷத்ரவச் சைவ ஜஜாப ஹிதமாத்மந: ||

—அயோ. 52 ஸ-78சு.

பிறகு ராமனும் ஓடத்திலேறிக்கொண்டு ஆற்றைக் கடக்கும்பொழுது யாதொரு அபாயமும் நேரிடாமலிருக்க பிராம்மணர்களும் க்ஷத்திரியர்களும் ஜபிக்கவேண்டிய மந்திரங்களை ஜபித்தார். (பக்கம் 203 பார்க்க)

கோட்டை தேசம் முதலியவைகளை ஜாக்கிரதையாகக் காப்பாற்றி வா" என்று புத்தி சொல்லி அவனுக்கு உத்தரவு கொடுத்து கங்கைக் கரைக்குப் போனார். அங்கே ஓடம் தயாராக இருப்பதைக் கண்டு "லக்ஷ்மண! பயந்த ஸ்வபாவமுடைய ஸீதையை ஓடத்தில் ஜாக்கிரதையாக ஏற்றி நீயும் ஏறு" என்றார். ராமனுடைய அபிப்பிராயத்தை அறிந்த லக்ஷ்மணனும் அப்படியே செய்தார். பிறகு ராமனும் ஓடத்தில் ஏறிக்கொண்டு, ஆற்றைக் கடக்கும் பொழுது, யாதொரு அபாயமும் நேராமலிருக்க, பிராம்மணர்களும் க்ஷத்திரியர்களும் ஜபிக்கவேண்டிய மந்திரங்களை ஜபித்தார். தானும் ஸீதையும் லக்ஷ்மணனும் அந்த நதியில் ஆசமனம் செய்து சாஸ்திரவிதிப்படி அதை பிரீதியோடும் ஸந்தோஷத்தோடும் நமஸ்கரித்தார்கள். பிறகு ஸுமந்திரருக்கும் குகனுக்கும் அவனுடைய ஸைன்யத்திற்கும் அனுமதி கொடுத்து அனுப்பிவிட்டு, ராமன் ஓடத்தில் உட்கார்ந்து அதைக் கடத்தச் சொன்னார்.

ஓடத்தை வெகு வேகமாக வேலைக்காரர்கள் கடத்திக்கொண்டு போகையில், கங்கையின் நடுவில் அது வந்தபொழுது,ஸீதை கைகூப்பி "சக்கரவர்த்தித் திருமகனான என் பர்த்தா வனத்தில் பதினான்கு வருஷங்கள் வரையில் வஸித்துத் தன் பிரதிக்ஞையை நிறைவேற்றி என்னோடும் ஸஹோதரரோடும் திரும்பி அயோத்யைக்கு வரும்படி தாங்கள் அனுக்கிரஹம் செய்யவேண்டும். அப்பொழுது என் இஷ்டப்படி நான் தங்களைப் பூஜிக்கிறேன். தாங்கள் ஸ்வர்க்கம், பூமி, பாதாளம் என்ற மூன்று லோகங்களிலும் ஸஞ்சரிக்கிறவர்கள். பிரஹ்மலோகத்தில் உண்டானவர்கள்; ஸமுத்திரராஜனுடைய பாரியை; மஹாதேவி; தங்களை நமஸ்கரித்துத் துதிக்கிறேன். என் நாதன் க்ஷேமமாகத் திரும்பிவந்து ராஜ்யத்தை அடைந்தால் அநேக லக்ஷம் பசுக்களையும், வஸ்திரங்களையும், உத்தமமான அன்னங்களையும் பிராஹ்மணர்களுக்குக் கொடுத்துத் தங்களைத் திருப்தி செய்கிறேன். நான் அயோத்யைக்குத் திரும்பி வந்தவுடன் பலவித மாம்ஸங்களாலும் பல்லாயிரம் கட் குடங்களாலும், தங்களையும் இங்கே வஸிக்கும் தேவதைகளையும், மணிகர்ணிகை முதலிய புண்ணிய தீர்த்தங்களையும், காசி முதலிய புண்ணிய க்ஷேத்திரங்களையும் பூஜிக்கிறேன். புண்ணியாத்மாக்களான என் பர்த்தாவும் அவருடைய ஸஹோதரரும் என்னுடன் வனவாஸம் செய்துவிட்டு அயோத்யைக்கு க்ஷேமமாகத் திரும்பிப் போகவேண்டும்" என்று கங்கா தேவியைப் பிரார்த்தித்தாள். அதற்குள் படகு தென்கரை சேர, உடனே அவர்கள் அதிலிருந்து இறங்கினார்கள்.

பிறகு ராமன் "இனிமேல் மனுஷ்ய ஸஞ்சாரமில்லாத வனத்தில் நாம் தனியாக இருக்கவேண்டும். ஆகையால் ஸீதையை வெகு ஜாக்கிரதையாகக் காப்பாற்றவேண்டும். நீ முன்னால் நட; ஸீதை உனக்குப் பின்னால் வரட்டும்; நான் உங்களிருவருக்கும் காவலாகக்

கடைசியில் வருகிறேன். இனிமேல் நாம் ஒருவர் ஒருவரைக் காப்பாற்ற வேண்டும். காலம் தப்பியபின் எந்தக் காரியத்தையும் எளிதில் செய்யமுடியாது. வனவாஸத்தின் கஷ்டம் இன்றைக்குத் தான் ஸீதைக்குத் தெரியும். மனுஷ்ய ஸஞ்சாரமில்லாமல், கிராமங்கள் தோட்டங்களில்லாமல், மேடுபள்ளங்களும், ஆழமான குழிகளுமுள்ள காட்டில் இன்றைக்கு பிரவேசிக்கப்போகிறோம்" என்றார்.

அதைக் கேட்ட லக்ஷ்மணன் முன்னால் நடந்தார்; பிறகு ஸீதையும் பிறகு ராமனும் வந்தார்கள். ராமன் கங்கைக்கரையைத் தாண்டி அப்புறம் நடந்துபோவதை ஸுமந்திரர் கண் கொட்டாமல் பார்த்துக்கொண்டிருந்தார். பிறகு வெகு தூரத்தில் சென்றுவிட்டதால் அவர்கள் கண்ணிற்கு மறைய, துக்கத்தை அடக்க முடியாமல் வாய்விட்டு அழுதார். ராமன் லோக பாலர்களுக்கு ஸமமான பராக்கிரமமுடையவர்; ஸகலப் பிராணிகளின் மனோரதங்களையும் பூர்த்தி செய்கிறவர்; ஆனாலும் மஹாத்மாவானதால் ஸாதாரண மனுஷ்யனைப்போல் பிறருடைய வார்த்தைக்குக் கட்டுப்பட்டு அதிக கஷ்டங்களை அனுபவித்தார். கங்கையைத் தாண்டி, தனதான்யங்களாலும் ஸந்தோஷமுள்ள குடிகளாலும் விளங்கும் மத்ஸ்ய தேசத்தில் வந்து, அங்கே காட்டுப்பன்றியையும், ரிச்யம், பிருஷதம் மஹாருரு என்ற யாகத்திற்கு உபயோகமான மான்வகைகளையும் கொன்று அவைகளின் மாம்ஸத்தை எடுத்துக்கொண்டு, ஸாயங்காலத்தில் ஒரு பெரிய மரத்தினடியில் உட்கார்ந்தார்கள்.

தௌ தத்ர ஹத்வா சதுரோ மஹாம்ருகா3ந்
வராஹ மருஸ்யம் ப்ருஷதம் மஹாருரும் |
ஆதா3ய மேத்4யம் த்வரிதம் பு3பு4க்ஷிதௌ
வாஸாய காலே யயதுர் வநஸ்பதிம் || (102)

## ஸர்க்கம் 53

## ராமன் லக்ஷ்மணனைப் பரீக்ஷித்தது

ஸ தம் வ்ருக்ஷம் ஸமாஸ்தா2ய ஸந்த்4யாமந்வாஸ்ய பஶ்சிமாம் |
ராமோ ரமயதாம் ஶ்ரேஷ்ட2 இதிஹோவாச லக்ஷ்மணம் || (1)

ஸந்தியாவந்தனம் செய்து போஜனமானவுடன் ராமன், "லக்ஷ்மண! நாம் தேசததை விட்டு வெளியில் வந்து வஸிப்பதில் இதுதான் முதலாவது ராத்திரி. இன்று ஸுமந்திரர் நம்முடனில்லை; நீ அதைப்பற்றி வருத்தப்படக்கூடாது. இன்றுமுதல் ராத்திரிகளில் நாம் விழித்துக்கொண்டிருக்க வேண்டும்; ஸீதையைக் காப்பாற்றும் பாரம் நம்முடையதாயிற்றல்லவா? நாம் கொண்டுவரும் புற்களாலும் இலைகளாலும் படுக்கையைப் போட்டு இந்த ராத்திரியை எப்படியாவது கழிப்போம்" என்றார். உத்தமமான படுக்கைகளில்



படுத்து பழக்கப்பட்ட ராமன், வெறுந்தரையில் இலைகளின்மேல் படுத்து, "குழந்தாய், லக்ஷ்மண! இப்பொழுது மஹாராஜா துக்கத்தால் தூக்கம்வராமல் மிகவும் கஷ்டப்படுவார். ஆனால் கைகேயியோ ஸகல ஆசைகளும் நிறைவேறி ஆனந்தத்தை அனுபவிப்பாள். பரதன் வந்தவுடன் ராஜ்யம் அவனுக்கு ஸ்திரமாகக் கிடைக்கவேண்டுமென ஆசையை வைத்து ஒருக்கால் நமது பிதாவைக் கொன்றாலும் கொல்வாள். அவரோ இப்பொழுது அநாதை; மிகவும் வயது சென்றவர்; காமத்திற்கு வசப்பட்டவர்; கைகேயியிடத்தில் அகப்பட்டுக்கொண்டிருக்கிறார். நானும் ஸமீபத்திலில்லை. ஐயோ! என்ன செய்வார்? எனக்கு நேர்ந்த கஷ்டத்தையும், தர்மார்த்தங்களை அலக்ஷ்யம் செய்து காமத்தையே விசேஷமாக நமது பிதா நாடியிருப்பதையும் யோசித்தால் தர்மம் அர்த்தமென்ற புருஷார்த்தங்களைக் காட்டிலும் காமமே மேலானதென்று எனக்குத் தோன்றுகிறது.

"நமது பிதா செய்ததைப் பார். ஒருவன் எவ்வளவு மூடனானாலும் ஒரு ஸ்த்ரீயை ஸந்தோஷப்படுத்த, தன்னிஷ்டப்படி நடக்கும் புத்திரனைக் காட்டிற்குத் துரத்துவானா? பரதன் தன் பார்யையுடன் தனதான்யங்களால் நிறைந்த கோஸல ராஜ்யத்தை ஸுகமாக ஏக சக்ராதிபதியாய் ஆள்வான். தசரதர் இன்னும் எவ்வளவு நாள் இருக்கப்போகிறார்? நானோ காட்டிற்கு வந்துவிட்டேன்; அப்பொழுது இந்த அகண்டமான ராஜ்யத்திற்கு அவன் ஒருவனே அதிபதி. தர்மத்தையும் அர்த்தத்தையும் கைவிட்டு எவன் காமத்தையே நாடுகிறானோ அவன் நமது பிதாவைப்போல் துக்கத்தையே அனுபவிப்பான். தசரதரைக் கொல்வதற்கும் என்னைக் காட்டிற்குத் துரத்துவதற்கும் பரதனுக்கு ராஜ்யம் கிடைப்பதற்குமே கைகேயி வந்து சேர்ந்தாளென்று எண்ணுகிறேன்.

"புதிதாக ஐசுவரியமும் அதிகாரமும் கிடைத்த கொழுப்பால் அவள் புத்திகெட்டு இப்பொழுதே கௌஸல்யையையும், ஸுமித்திரையையும் என்னைச் சேர்ந்தவர்களென்று உபத்திரவிக்க ஆரம்பிக்காமலிருப்பாளா? கௌஸல்யை எனக்குத் தாயானதால் என் மூலமாய் கஷ்டப்படுவது நியாயம். ஆனால் ஸுமித்திரை அப்படிக் கஷ்டப்பட நியாயமில்லை. ஆகையால் பொழுது விடிந்தவுடன் தாமதம் செய்யாமல் இங்கிருந்தே அயோத்யைக்குப் போ. நாம் இன்னும் வெகு தூரம் வந்துவிடவில்லை. நானும் ஸீதையும் தண்டகாரண்யத்திற்குப் போகிறோம். கௌஸல்யை நாதனில்லாமல் தவிப்பதற்கு நீயாவது அவளுடனிருந்தால் ஆதரவாக இருக்கும். கைகேயி எதைச் செய்தாலும் செய்வாள். ஹீனமான காரியமென்றாவது, லோகத்தார் வெறுப்பார்களே என்றாவது, அநியாயமென்றாவது பார்க்கமாட்டாள். தர்மவானான பரதனிடத்தில் அடைக்கலமாக நீ என் தாயை ஒப்புவிக்கவேண்டும்.

கௌஸல்யை பூர்வ ஜன்மத்தில் தாய்களையும், பிள்ளைகளையும் அதிகமாகப் பிரித்திருக்கவேண்டும். இல்லாவிட்டால் தன் புத்திரனை

விட்டுப் பிரிந்து கஷ்டப்பட நியாயமில்லை. என்னைப் புத்திரனாக அடைவதற்கு எவ்வளவோ சிரமப்பட்டாள்; எவ்வளவோ கஷ்டப்பட்டு என்னை வளர்த்தாள். மாதாபிதாக்கள் புத்திரனைப் பெறுவதின் பிரயோஜனம், தங்களுக்குத் தேகத்தில் சக்தி குறையும்பொழுது பணிவிடை செய்து தங்களைக் காப்பதற்கேயல்லவா? அப்படி சிரமப்பட்டதின் பயனை அடையவேண்டிய காலத்தில் அவளுக்கு அதுவும் கைகூடாமல் போயிற்றே. என் ஜன்மத்தைச் சுட வேண்டும்? லோகத்தில் எவளும் என்னைப்போன்ற பிள்ளையைப் பெறாமலிருக்கவேண்டும். லக்ஷ்மண! என்னைப் பெற்று வளர்த்த தாய்க்கு நான் செய்யும் உபகாரம் என்னவென்றால் முடிவில்லாத பெரும் துக்கத்தை அவளுக்கு உண்டாக்குவதுதான். இப்படிப்பட்ட புத்திரன் பிறக்காவிட்டால் என்ன நஷ்டம்? லக்ஷ்மண! நமது அரண்மனையில் கௌஸல்யை வளர்த்து வந்த பெண்கிளியைப் பார்த்திருக்கிறாயல்லவா? அது தன்னருகிலுள்ள கிளியைப்பார்த்து 'உன் ஜன்ம சத்துருவான பூனையின் காலைக்கொத்து' என்று சொல்லிக்கொண்டேயிருக்கும். அதைக் கேட்டு கௌஸல்யை மிகுந்த ஸந்தோஷத்தை அடையலாம். அறிவில்லாத அந்தப் பிராணியால் என் தாய்க்குக் கிடைக்கும் பிரீதியும் என்னால் அவளுக்குக் கிடைக்கவில்லை. கௌஸல்யையின் சத்துருக்களின் காலைக் கடி என்று அது சொல்லும். என்னை அதைவிட எவ்வளவோ கஷ்டப்பட்டு அவள் வளர்த்தாள். சத்துருக்கள் அவளை உபத்திரவிக்கும்பொழுது—அவள் மனத்திற்கு ஆறுதல் உண்டாகும்படி—அதைத் தடுக்க ஒரு வார்த்தைகூட நான் சொல்ல முடியாமற் போயிற்று.

அல்ப பாக்கியமுள்ளவளும் புத்திரனிருந்தும் இல்லாதவளும் கிலேசத்தால் வாடினவளுமான கௌஸல்யைக்கு நான் பிள்ளையாகப் பிறந்தும் என்னால் அவளுக்கு என்னப் பிரயோஜனம்? சோக ஸாகரத்தில் மூழ்கிக் கரை காணாமல் தத்தளிப்பதைத்தவிர வேறல்ல. எனக்குக் கோபம் வந்தால் நான் என் பாணங்களால் இந்த ராஜ்யத்தையோ அல்லது இந்தப் பூமியையோ ஒருவனாகவே நின்று ஜயித்து வசப்படுத்த முடியாதா? ஆனால் இப்பொழுது என் வீரியத்தை பிரயோகித்தால் அவசியம் தர்மஹானி நேரும். தர்மத்திற்கு நாசம் வரும்வகையில் பலத்தை உபயோகிப்பது கூடாது. 'ராமன் தர்மத்தைவிட்டு அதர்மத்தைக் கைக்கொண்டான்' என்ற லோகாபவாதத்திற்கும் இறந்த பிறகு பரலோகம் கிடைக்காதென்ற பயத்திற்கும் கட்டுப்பட்டல்லவா சும்மா இருக்கிறேன்? இல்லாவிட்டால் இந்த க்ஷணமே எனக்கு அபிஷேகம் நடக்காதா'' என்று பலவிதமாய் அந்த மனுஷ்ய ஸஞ்சாரமில்லாத காட்டில் ராமன் தனியாகப் பிரலாபித்துக்கொண்டு கண்ணீர் பெருக மௌனமாக இருந்தார்.

ஜ்வாலை அணைந்த நெருப்பைப்போலும் அலைகள் ஓய்ந்த ஸமுத்திரத்தைப் போலும் ராமன் பிரலாபித்து முடித்த பிறகு லக்ஷ்மணன் அவரை ஸமாதானம்செய்ய நினைத்து, "அண்ணா! ஆயுதமெடுத்தவர்களுக்குள் சிரேஷ்டரே! தாங்கள் வெளியில் வந்துவிட்ட பிறகு அயோத்யை காந்தியற்று, 'சந்திரனில்லாத ராத்திரியைப்போல் பார்க்கவிகாரமாயிருக்குமென்று சொல்லவும் வேண்டுமா? புருஷ சிரேஷ்ட! தாங்கள் இப்படித் துயரப்படுவது தகாது. இதனால் ஸீதைக்கும் எனக்கும் மிகுந்த துக்கமுண்டாகிறது. ஸகல லோகங்களுக்கும் எப்பொழுதும் ஆனந்தத்தைக் கொடுக்கிறவரென்ற பெயரையும் ஸ்வபாவத்தையும் தாங்கள் பெற்றிருக்க, தங்களுக்காகப் பிறர் துக்கப்படலாமா? ஜலத்தில் வஸிக்கும் மீனை அதற்குப் பிராணாதாரமான ஜலத்திலிருந்து வெளியில் போட்டால் பிழைக்காது. அப்படி நானும் ஸீதையும் தங்களைவிட்டு ஒரு நிமிஷம்கூடப் பிழைத்திருக்கமாட்டோம். 'விடியற்காலையில் அயோத்யைக்குத் திரும்பிப்போ' என்று தாங்கள் சொன்னதற்கு என் பதில் இதே. தாங்கள் என்னுடனில்லாவிடில், தசரதர், சத்துருக்கனன், ஸௌமித்திரை முதலியவர்களையும் ஸ்வர்க்கத்தையும் பார்ப்பதற்குக்கூட எனக்கு சிறிதேனும் இஷ்டமில்லை'' என்றான்.

பிறகு அவர்கள் அந்த ஆலமரத்தடியில் படுக்கைகளைப் போட்டுப் படுத்துக்கொண்டார்கள். லக்ஷ்மணன் இப்படி தன்னிடத்தில் எல்லையற்ற ஸ்நேகத்துடன் மனத்திலுள்ளதை ஒளிக்காமல் சொன்னதை மிகுந்த ஆதரவுடன் ராமன் கேட்டு, பதினான்கு வருஷங்களும் லக்ஷ்மணனோடு காட்டில் வசித்துக்கொண்டு தபஸ்விகளின் தர்மத்தை அனுஷ்டிப்பதாக நிச்சயம்செய்து கொண்டார். மனுஷ்ய ஸஞ்சாரமில்லாத காட்டில் ராத்திரியில் குரூரமான ஜந்துக்களின் நடுவில் அந்த மஹாபலசாலிகள் இருந்தாலும் சற்றும் பயப்படவில்லை, ஸந்தேகப்படவுமில்லை.

ததஸ்து தஸ்மிந் விஜநே வநே தத3ா
மஹாப3லௌ ராக4வ வம்ஶ வர்த4நௌ |
ந தௌ ப4யம் ஸம்ப்4ரம மப்4யுபேயது:
யதை2வ ஸிம்ஹௌ கி3ரிஸாநு கோ3சரௌ ‖ (35)

## ஸர்க்கம் 54

## ராமன் பரத்வாஜரை தரிசித்தது

தேது தஸ்மிந் மஹாவ்ருக்ஷே உஷித்வா ரஜநீம் ஶிவாம் |
விமலேப்4யுதி3தே ஸூர்யே தஸ்மாத்3 தே3ஶாத் ப்ரதஸ்தி2ரே ‖

அந்த ராத்திரி ஆலமரத்தடியில் தங்கி விடியற்காலையில் அங்கிருந்து புறப்பட்டார்கள். காட்டிற்குள் நுழைந்து, கங்கையும் யமுனையும் சேருமிடமான பிரயாகையை நோக்கிப் போய், பல தேசங்களையும் பல பூமிபாகங்களையும் அதுவரையில் பாராத பல அபூர்வ வஸ்துக்களையும் பார்த்துக்கொண்டு, அங்கே வஸிக்கும்

ஜனங்களால் உபசரிக்கப்பட்டு அஸ்தமிக்கும்வரையில் பிரயாணம் செய்தார்கள். அப்பொழுது ராமன் "லக்ஷ்மண! பிரயாகையைச் சுற்றிலும் புகை வெகு தூரம்வரையிலும் ஆகாசத்தில் பரவியிருப்பதைப் பார். அது ஹோமப் புகையாக இருக்கவேண்டும். இரண்டு பிரவாகங்கள் ஒன்றோடொன்று மோதும் பெரும் சப்தம் கேட்கப்படுகிறதல்லவா ? கங்கையும் யமுனையும் சேருமிடத்திற்கு வந்துவிட்டோமென்று எண்ணுகிறேன். காட்டு ஜனங்கள் மரங்களை விறகிற்காக உடைத்துப்போட்டிருக்கின்றனர். பரத்வாஜரின் ஆசிரம விருக்ஷங்கள் தொலைவில் தெரிவதைப் பார்" என்று சொல்லி, சிறிது நேரம் நடந்து அஸ்தமிக்கும்பொழுது இரு நதிகளும் சேருமிடத்தில் பரத்வாஜருடைய ஆசிரமத்திற்கு வந்தார்கள். ஆசிரம மிருகங்களும் பக்ஷிகளும் வேற்று மனுஷ்யர்களைக் கண்டு ஓடின. மஹரிஷியைத் தரிசிக்க விரும்பிய அவர்கள் ஸாயங்காலம் அக்னிஹோத்திர வேளையானதால் அது முடியும்வரையில் ஆசிரமத்திற்குச் சற்று தூரத்தில் நின்றார்கள். ஆசிரமத்திலிருந்து அகஸ்மாத்தாக வெளியில் வந்த ஒரு சிஷ்யனால் தங்களுடைய் வரவை அவருக்குத் தெரிவித்து அவருடைய அனுமதியால் ஆசிரமத்திற்குள் போய், பரத்வாஜர் அக்னிஹோத்திரம் செய்தபின் சிஷ்யர்களுடன் வீற்றிருக்கக் கண்டார்கள்.

கடுமையான விரதங்களை அனுஷ்டித்துக்கொண்டு எப்பொழுதும் பகவானுடைய திருவடிகளிலேயே நாடிய மனமுள்ளவராய் தபோபலத்தால் மூன்று காலங்களையும் அறிந்த அந்த மஹாத்மாவைப் பார்த்துக் கைகூப்பி நமஸ்கரித்து ராமன், "ஸ்வாமி! நாங்கள் தசரத சக்கரவர்த்தியின் புத்திரர்கள்; நான் ராமன்; இவன் லக்ஷ்மணன்; இவள் ஜனகராஜனுடைய புத்திரி; என் பார்யை; பதிவிரதை; இவளுடைய பெயர் ஸீதை; தானும் என்னுடன் வனத்தில் வஸிக்க வேண்டுமென்று மிகவும் பிரார்த்தித்து வந்திருக்கிறாள். லக்ஷ்மணன் என்னிடத்தில் மிகுந்த பிரீதி வைத்திருப்பதால், என் பிதா என்னைக் காட்டிற்குப் போகும்படி ஆக்ஞாபித்தபொழுது என்னுடனிருக்க விரும்பித் தானும் வந்திருக்கிறான்; இவன் பிரதிக்ஞை தவறாதவன். பிதாவின் கட்டளைப்படி நாங்கள் வனத்திலிருந்துகொண்டு, பழங்களையும் கிழங்குகளையும் புஜித்துக்கொண்டு, பிதிருவாக்கிய பரிபாலன தர்மத்தை அனுஷ்டிக்க உத்தேசித்திருக்கிறோம்" என்றார்.

பரத்வாஜர் அதைக் கேட்டு அர்க்யம் பாத்யம் முதலிய அதிதி பூஜைகளைச் செய்து, ஆஹாரத்திற்கு வேண்டியவைகளைக் கொடுத்து, படுக்க ஓரிடத்தையும் தந்தார். அவருடைய தபோ மஹிமையால் அங்கிருக்கும் மிருகங்களும் பக்ஷிகளும் மனிதர்களிடத்தில் பரம விசுவாஸத்துடன் பழகிக்கொண்டிருந்தன. அவைகளும் சிஷ்யர்களும் தம்மைச்சூழ அந்த மஹரிஷி, "க்ஷேமமாக வந்தீர்களா?" என்று சொல்லிவிசாரித்தார். "தங்களுடைய அனுக்ரஹத்தால் வந்தோம்"



என்று அவரால் கொடுக்கப்பட்ட ஆஸனங்களில் அவர்கள் உட்கார்ந்தார்கள். பிறகு மஹரிஷி "ராம! உன்னையே என் மனத்தில் எப்பொழுதும் நினைத்துக்கொண்டிருந்தேன். இவ்வளவு காலம் கழித்தாவது உன்னை இந்த ஆசிரமத்தில் தரிசிக்கக் கிடைத்தது. என் பாக்கியத்தை என்னென்று சொல்வேன்! உன்னை யாதொரு காரணமுமின்றித் தசரதர் காட்டிற்குத் துரத்தின ஸமாசாரம் என் காதில் விழுந்தது. கங்கையும் யமுனையும் சேரும் இவ்விடம் புண்ணிய ஸ்தலம், ஜனக்கூட்டமில்லை. பார்வைக்கு அழகாயிருக்கும். நீங்கள் இங்கேயே வஸிக்கலாம்" என்றார். ராமன் "ஸ்வாமி! நாங்கள் இங்கே இருந்தால் அயோத்யா ஜனங்கள் எங்களைப் பார்க்க விரும்பி வெகு ஸமீபத்திலிருப்பதால் அடிக்கடி இங்கே வருவார்கள். ஆகையால் எனக்கு இங்கே வஸிக்க இஷ்டமில்லை. ஸுகமாக வளர்க்கப்பட்ட இந்த ஸீதை ஸந்தோஷத்துடன் வஸிக்கத் தகுந்த வேறொரு ஆசிரமத்தைப் பார்த்துச் சொல்லவேண்டும். அங்கே மற்ற ஜனங்களுடைய வருகை இருக்கக்கூடாது" என்றார்.

பரத்வாஜர், "இங்கிருந்து பத்துகுரோச (இருபதுமைல்) தூரத்தில் சித்திரக்கூடமென்று ஒரு மலையுண்டு. அது கந்தமாதன பர்வதத்தைப் போன்றது; மஹரிஷிகள் வஸிக்குமிடம், புண்ய ஸ்தலம்; எங்கே பார்த்தாலும் அழகாயிருக்கும். வானரங்களும் கரடிகளும் அங்கே மிகவும் அதிகம். அந்த மலைச் சிகரங்கள் எதுவரையில் தெரியுமோ அதுவரையில் வஸிக்கும் பிராணிகளுக்குப் புண்ணியம் வளர்கிறது, பாபத்தில் மனம் செல்வதேயில்லை. அங்கே பல ரிஷிகள் வெகு காலம் வரையில் கடுந்தவம் செய்து அதே சரீரத்துடன் ஸ்வர்க்கத்திற்குப் போயிருக்கிறார்கள். அது ஏகாந்தமாகவும் வஸிக்கத் தகுந்ததாகவும் இருக்குமென்று எண்ணுகிறேன். இஷ்டமிருந்தால் இங்கேயும் வஸிக்கலாம்" என்று பலவித உபசாரங்களால் அவர்களை ஸந்தோஷப்படுத்தினார். அவரோ தர்மங்களை அறிந்தவர்; ராமனிடத்தில் மிகுந்த பக்தி வைத்தவர்.

புண்ணிய கதைகளைச் சொல்லிக்கொண்டு அந்த ராத்திரியை அங்கே ஸுகமாகக் கழித்து ராமன் மறுநாட்காலையில் பரத்வாஜரிடத்திற்குப் போய், "ஸ்வாமி! தங்களுடைய ஆசிரமத்தில் நேற்று ராத்திரி ஸுகமாகத் தங்கியிருந்தோம். இனிமேல் தாங்கள் குறிப்பிட்ட இடத்திற்குப் போக எங்களுக்கு உத்தரவு கொடுக்க வேண்டும்" என்றார். அதற்கு மஹரிஷி, "தேன், பழம், கிழங்குகள் நிறைந்த சித்திரகூட மலைக்குப் போ. அது நீ இருக்கத்தகுந்த இடம். அங்கே அழகான மரங்கள் நிறைந்த மரச்சோலைகளும் மயில்களும் மான்களும் யானைகளும் பார்க்கப் பார்க்க ஆனந்தத்தைக் கொடுக்கும். மலைச்சாரல் பள்ளத்தாக்கு காட்டாறுகளையும், பலவிதமாய் சப்திக்கின்ற கோகிலம் சிட்டுக்குருவி முதலியவைகளையும் பார்த்

துக்கொண்டு அந்த மலைத் தாழ்வரைகளில் ஆனந்தமாய் வஸியுங்கள்" என்றார்.

ப்ரஹ்ருஷ்ட கோயஷ்டிக கோகிலஸ்வநை:
விநாதி3தம் தம் வஸுதா4த4ரம் ஶிவம் |
ம்ருகை3ஶ்ச மத்தைர் ப3ஹுபி4ஶ்ச குஞ்ஜரை:
ஸுரம்ய மாஸாத்3ய ஸமாவஸாஶ்ரமம் ‖ (44)

## ஸர்க்கம் 55

## சித்திரகூடம்

உஷித்வா ரஜநீம் தத்ர ராஜபுத்ரா வரிந்த3மௌ |
மஹர்ஷிமபி4 வாத்3யாத2ஜக்3மதுஸ்தம் கி3ரிம் ப்ரதி ‖ (1)

பிறகு அவர்கள் பரத்வாஜரை பிரதக்ஷிண நமஸ்காரம் செய்து உத்தரவு பெற்றுக்கொண்டு, அங்கிருந்து சித்திரகூடத்தை நோக்கிப் புறப்பட்டார்கள். அந்த மஹரிஷி அவர்களைத் தன் குழந்தைகளைப் போலெண்ணி, மங்களாசீர்வாதம் செய்து, சிறிது தூரம் வரையில் கூடவந்தார். "ராம! நீங்கள் கங்கையும் யமுனையும் சேருமிடத்திற்குப் போய், அங்கிருந்து காளிந்தி நதிக்கரை வழியாக மேற்கே திரும்பி, அந்த வேகமான ஆற்றைத் தெப்பத்தால் தாண்டுங்கள். பிறகு ஒரு பெரிய ஆலமரம் தோன்றும். அதற்கு சியாமமென்று பெயர். அங்கே பல ஸித்தர்கள் வஸிக்கிறார்கள். ஸீதை அதைக் கைகூப்பி நமஸ்கரித்துத் தனக்கு வேண்டியவைகளை அங்கே பிரார்த்தித்துக் கொள்ளட்டும். அவள் அதிகமாகக் களைத்திருந்தால் அங்கேயே தங்குங்கள்; இல்லாவிட்டால் அப்புறம் போகலாம். அங்கிருந்து ஒரு குரோசதூரம் போனால் பலாசம் இலந்தை முதலிய மரங்களாலும் அழகிய மூங்கில்களாலும் நிறைந்த ஒரு கறுத்த காடு தோன்றும். சித்திரகூடத்திற்குப் போகும் வழி அதுவே. நான் பல தடவை அந்த வழியாகப் போயிருக்கிறேன். அது மிகவும் அழகான மெல்லிய மணல் படிந்திருக்கும். காட்டுத்தீயின் உபத்ரவம் இருக்காது" என்று வழி காட்டியபின் ஆசிரமத்திற்குத் திரும்பினார்.

அவரை நமஸ்கரித்து, "அப்படியே செய்கிறோம்" என்று அவரிடத்தில் உத்தரவு பெற்றுக்கொண்டு போனார்கள். கொஞ்ச நேரம் சென்றபின் ராமன் "லக்ஷ்மண! பரத்வாஜபகவான் நம்மிடத்தில் கிருபைவைத்தது நாம் செய்த மஹா புண்ணியத்தின் பயனென்றறி" என்று இப்படிப் பேசிக்கொண்டு, ஸீதையை முன்னிட்டுக் காளிந்தி நதிக்கரைக்கு நடந்து வந்தார்கள். அதன் வேகமான பிரவாகத்தைக் கண்டு, இதை எப்படித் தாண்டுவோம் என்று சற்றுத் தயங்கி யோசித்தார்கள். அப்பொழுது லக்ஷ்மணன் கட்டைகளை வெட்டி உலர்ந்த மூங்கில்களைக் குறுக்கே வைத்து, கோரைகளால் இறுகக்



கட்டி, அதில் ஸீதை ஸுகமாக உட்காருவதற்கு நீர் நொச்சில்நாவல் முதலிய மரங்களின் கிளைகளை வெட்டி ஓரிடத்தில் பரப்பினான். அந்தத் தெப்பத்தில் மஹாரூபவதியான ஸீதையை ராமன் கைலாகு கொடுத்து ஜாக்கிரதையாக ஏற்றினார். தன் கணவன் தன்னைத் தொட்டு ஏற்றும் பொழுது அவள் சற்று வெட்கமடைந்தாள். அவளுடைய பக்கத்தில் ஆடையாபரணங்களையும் ஆயுதங்களையும் கூடை மண்வெட்டி முதலியவைகளையும் வைத்து, தாங்களும் ஏறிக்கொண்டு ராஜபுத்திரர்கள் அந்த நதியைத் தாண்டினார்கள். ஆற்றின் நடுவில் போய்க்கொண்டிருக்கும் பொழுது ஸீதை, "தேவி! எங்களுக்கு க்ஷேமமுண்டாகட்டும். என் பர்த்தாவின் பிரதிக்ஞை நிறைவேறி அவர் அயோத்யைக்கு க்ஷேமமாகத் திரும்பிப்போனால் அநேகமாயிரம் பசுக்களாலும் கள்குடங்களாலும் உன்னைப் பூஜிக்கிறேன்" என்று நதி தேவதையைப் பிரார்த்தித்தாள்.

அங்கிருந்து கொஞ்சதூரம் நடந்து, கறுத்த இலைகள் நிறைந்து குளிர்ந்த நிழலைக் கொடுக்கும் சியாமமென்ற ஆலமரத்தடியில் வந்தார்கள். அப்பொழுது ஸீதை "மஹாவிருக்ஷமே! உனக்கு நமஸ்காரம். என் பர்த்தாவின் பிரதிக்ஞை நிறைவேறவேண்டும். கௌஸல்யையையும் ஸுமித்திரையையும் நான் மறுபடியும் பார்க்க வேண்டும் என்று கைகூப்பி பிரார்த்தித்து பிரதக்ஷிணம் செய்தாள். அப்படித் தனக்காக வெகு பிரேமையுடன் ஸீதை வேண்டினதைப் பார்த்து ராமன், "லக்ஷ்மண! நீ ஸீதைக்கு முன்பாக நட. நான் ஆயுதபாணியாக அவளுக்குப் பின்னால் வருகிறேன். அவள் எந்தப் பூவையாவது பழத்தையாவது வேறு எதையாவது வேண்டுமென்றால் அதை உடனே கொண்டுவந்து கொடுக்கவேண்டும்" என்றார். இரண்டு யானைகளுக்கு நடுவில் ஒரு பெண்யானை நடப்பதுபோல் ஸீதை ராம லக்ஷ்மணர்களுக்கு நடுவில் போனாள். அதுவரையிலும் வனத்தையே பார்த்தவளல்ல; ஒவ்வொரு மரத்தையும் செடியையும் கொடியையும் பூவையும் காட்டி, 'இதன் பெயரென்ன; இதன் குணமென்ன?' என்று ஸீதை ராமனைக் கேட்பாள். அழகிய நானாவித மலர்களாலும் பழங்களாலும் அலங்கரிக்கப்பட்ட மரங்களைப் பார்த்து, எது வேண்டுமென்று ஸீதை சொன்னாளோ அதை லக்ஷ்மணன் உடனே கொண்டுவந்து கொடுப்பான். விசித்திரமாக மணல் பாய்ந்திருக்கும் ஜலத்தையும், அதில் விளையாடும் அன்னம் முதலியவைகளையும் பார்த்து ஸீதை மிகவும் ஆனந்தமடைந்தாள். ராமலக்ஷ்மணர்கள் அங்கிருந்து இரண்டு குரோசதூரம் நடந்து யமுனைக் கரையிலுள்ள காடுகளில் சஞ்சரிக்கும் பல மிருகங்களைக் கொன்று, அன்று போஜனம் செய்தார்கள். பிறகு அழகிய மயில்களும் குரங்குகளும் நிறைந்த அந்த ரமணீயமான காட்டில் வேடிக்கையாகச் சற்றுநேரம் ஸஞ்சரித்து, அபூர்வமான விருக்ஷங்களையும் மிருகங்களையும் ஸீதைக்குக் காட்டிக்கொண்டு, அஸ்தமிக்கும்பொழுது யமுனைக்

கரைக்கு அருகிலுள்ள அக்காட்டில் ஸீதைக்கு இஷ்டமான ஓரிடத்தில் தங்குவதற்கான இடத்தை ஏற்படுத்திக்கொண்டனர்.

விஹ்ருத்ய தே பர்ஹிண பூக3நாதி3தே
ஶுபே4 வநே வாநரவாரணயுதே |
ஸமம் நதீ3வப்ரமுபேத்ய ஸம்மதம்
நிவாஸ மாஜக்3முரதீ3ந த3ர்ஶநா: ॥ (35)

---

## ஸர்க்கம் 56

## பர்ணசாலை

---

அத2 ராத்ர்யாம் வ்யதீதாயா மவஸுப்த மநந்தரம் |
ப்ரபோ3த4யாமாஸ ஶநைர் லக்ஷ்மணம் ரகு4நந்த3ந: ॥ (1)

மறுநாட்காலையில் ராமன் லக்ஷ்மணனை எழுப்பிக் "குழந்தாய்! இந்தவனத்திலுள்ள ஜந்துக்கள் மதுரமாய் சப்தம் செய்வதைக்கேள். நாம் பிரயாணம் செய்யும் காலம் நெருங்கிவிட்டது" என்றார். உடனே லக்ஷ்மணன் தூக்கம் தெளிந்து, வழி நடந்த இளைப்பையும் சோம்பலையும் விட்டெழுந்தார். ஸ்நானம் ஜபம் முதலிய காலைக் காரியங்களை முடித்து, பரத்வாஜர் காட்டிய வழியாகச் சித்திர கூடத்தை நோக்கி நடந்தார்கள். போகும்பொழுது ராமன் "ஸீதே! இந்த பலாச மரங்கள் வஸந்த காலத்தில் மலர்கள் நிறைந்து கொழுந்து விட்டெரிவதுபோல் நான்கு புறங்களிலும் காணப்படுகின்றன. மலர்ந்த புஷ்பங்களால் நிறைந்த பல்லாதக மரங்கள் பழங்களாலும் இலைகளாலும் பாரம் தாங்காமல் வளைந்திருக்கின்றன. இவைகளை உபயோகிப்பவர்கள் எவருமில்லை. இந்தக் காக்ஷிகளைப் பார்த்துக்கொண்டே ஸுகமாக வெகுகாலம் கழிப்பேன். தேனீக்களால் சேர்க்கப்பட்ட தேன்கூடுகள் ஒவ்வொரு மரத்திலும் இரண்டு மரக்காலளவு தேனுடையனவாகத் தொங்குவதைப் பார். லக்ஷ்மண! இதோ உதிர்ந்த புஷ்பங்களால் போடப்பட்ட மிருதுவான படுக்கைகளையுடைய அழகிய ஓர் இடத்தில் ஓர் நச்சுக்குருவி கத்துவதைப் பார். அதைக் கேட்டு மயில் எதிரொலி செய்கிறது. யானைகளின் கூட்டமுடையதும் பறவைக் கூட்டங்களின் இனிய ஒலியுடையதுமான சித்திரகூடமலையின் உன்னதமான சிகரங்கள் தெரிகின்றன. அதன் அடியிலுள்ள ஸம பூமியில் பரவியிருக்கும் காட்டில் அடர்ந்த மரங்களின் கீழே விநோதமாக ஸஞ்சரிப்போம்" என்று பேசிக்கொண்டு பலவிதமான பழங்களாலும் கிழங்குகளாலும் ருசியுள்ள ஜலத்தாலும் பக்ஷிகளாலும் மிருகங்களாலும் விளங்கும் அந்த மலைப்பிரதேசத்திற்கு வந்தார்கள் அப்பொழுது ராமன் "குழந்தாய்! இந்த மலை, பார்க்கப் பார்க்க



வெகு அழகாயிருக்கிறது. பலவித மரங்களும் கொடிகளும் கிழங்குகளும் பழங்களும் சுத்தமான ஜலமும் இங்கே கிடைக்கும். மஹாத்மாக்களான பல ரிஷிகள் இவ்விடத்தில் இருப்பார்கள். நாமும் இங்கே வஸிக்கலாம்" என்றார். பிறகு அவர்கள் வால்மீகி மஹரிஷியின் ஆசிரமத்திற்குப் போய் அவரைக் கண்டு நமஸ்கரித்தார்கள். அவர் தன்னிடத்திற்கு வந்த அதிதிகளை விதிப்படி பூஜித்து "உட்காருங்கள்; க்ஷேமமாக வந்து சேர்ந்தீர்களா?" என்று விசாரித்தார். அதற்கு ராமன் "ஸ்வாமி! நான் தசரத சக்ரவர்த்தியின் புத்திரன் ராமன்; இவன் என் தம்பி லக்ஷ்மணன்; இவள் என் பாரியை ஸீதை; நாங்கள் பிதாவின் ஆக்ஞையால் பதினான்கு வருஷங்கள் வரையில் காட்டில் வஸிக்க உத்தேசித்து வந்திருக்கிறோம்" என்றார்.

பிறகு "லக்ஷ்மண! வீடு கட்டுவதற்கு ஏற்ற உறுதியான நாவல் முதலிய மரக்கட்டைகளை வெட்டிக்கொண்டு வந்து நாம் வஸிப்பதற்கு ஒரு குடிசையைக் கட்டு. இங்கே சிலகாலம் தங்க விரும்புகிறேன்" என்றார். அப்படியே லக்ஷ்மணன் சீக்கிரமாக ஒரு பர்ணசாலையைக் கட்டினான். அது காற்றுமழைக்கு அசையாமல் கெட்டியாயும் அழுத்தமான சுவர்களோடும் நேர்த்தியான அறைகளோடும் கதவுகளுக்குப் பதிலாகப் பாய்கள் தொங்கவிடப்பட்டும் இருந்தது. இதெல்லாவற்றையும் தான் ஒருவனாகவே வெகு சாதுரியமாயும் அழகாயும் செய்து முடித்து, இன்னும் என்ன கட்டளையிடப்போகிறாரென்று இளையாழ்வார் ஆவலாக எதிர்பார்த்துக்கொண்டிருந்தார். ராமன் அதைக் கவனித்து, "குழந்தாய்! இந்தப் பர்ணசாலையின் அந்தந்த திக்குகளில் வஸிக்கும் அதிஷ்டான தேவதைகளுக்கு மானுடைய மாம்ஸத்தைக் கொண்டுவந்து யாகம் செய்யவேண்டும். நாம் தீர்க்கமான ஆயுளை விரும்பினால் ஒரு வீட்டில் பிரவேசிப்பதற்கு முன் அங்கே வஸிக்கும் தேவதைகளுக்கு திருப்தியுண்டாவதற்கு சாஸ்திரத்தில் சொல்லப்பட்ட கிருஹப் பிரவேச சாந்திகளைச் செய்யவேண்டும். அப்படிச் செய்வதால் மனிதனுக்கு வியாதியும் பயமும் பந்துக்களின் நாசமும் நேராது. நீண்ட ஆயுளையுடையவனாய் ஸ்வர்க்கத்தில் வஸிப்பதைப்போல் ஸுகத்தை அனுபவிப்பான்" என்றார்.

லக்ஷ்மணன் அப்படியே செய்ய, ராமன் "குழந்தாய்! இந்த மாம்ஸத்தை அக்னியில் சமை. இது ஸ்திரமான தினம். முகூர்த்தமும், திதியும், நக்ஷத்திரமும் அப்படியே. இங்கே வெகுகாலம் ஸுகமாக வாழ்வோம் என்று இவை குறிப்பிடுகின்றன" என்றார். அந்த மாம்ஸம் அக்னியில் சமைந்து ரத்தம் வற்றின பிறகு லக்ஷ்மணன் 'அண்ணா! ஸகல அவயவங்களுடன் கூடின இந்தக் கருத்த மானுடைய மாம்ஸம் நன்றாகப் பக்குவமாயிற்று. யக்ஞவிதிகளைப் பூர்ணமாக அறிந்த தாங்கள் தேவதைகளுக்கு ஸமமானவர்; தேவதை

களுக்குத் திருப்தி செய்யும் யக்ஞத்தை ஆரம்பிக்கலாம்'' என்றான், ராமன் ஸ்நானம் செய்து நியமத்துடன் கிருஹப்பிரவேச காலத்தில் செய்யவேண்டிய ஸகலக் கிரியைகளையும் சுருக்கமாக விதிப்படி செய்து முடித்தார்; ஸகல மந்திரங்களை அறிந்த ஸகல மந்திர ஸ்வரூபியான ராமனுக்குத் தெரியாத விஷயமும் உண்டோ? வீட்டிற்கு அதிஷ்டான தேவதைகளான அக்னி, வருணன் முதலிய நாற்பத்தைந்து தேவதைகளை, ஹோமம், நைவேத்தியம் பலி பூஜை முதலிய கிரியைகளால் ஆராதித்துப் பரிசுத்தராய் அந்தப் பர்ணசாலையில் பிரவேசித்தார். அப்பொழுது மஹாதேஜஸ்வியான ராமசந்திர மூர்த்திக்கு மிக்க ஸந்தோஷமுண்டாயிற்று. வைசுவதேவ பலிகள் வைத்து அதில் விஷ்ணு ஸம்பந்தமான யாகத்தையும், ருத்திர ஸம்பந்தமான யாகத்தையும் செய்தார். பிறகு வீட்டில் வஸிக்கும் பொழுது நேரக்கூடிய அசுபங்களைப் போக்குவதற்கு, புண்யாஹவாசனம் கிருஹசாந்தி ஜபம் முதலியவைகளைக் குறைவில்லாமல் செய்தார். ருத்ர யாகம் செய்தபடியால் தன்னை ஜலத்தால் மறுபடியும் சுத்தம் செய்துகொண்டு, ராத்ரி பகல்களில் ஸஞ்சரிக்கும் பாப கர்மங்களைச் செய்யும் குரூரமான பூதங்களை உத்தேசித்து பலியிட்டார். தபஸ்விகள் வஸிக்கும் ஆசிரமத்திற்கு உசிதமான பலி பீடங்களையும், கந்தர்வர்கள் முதலிய தேவகணங்கள் வஸிக்கும் சைத்திய ஸ்தானங்களையும், விஷ்ணு முதலிய தேவதைகள் வஸிக்கும் பூஜா கிருஹங்களையும் ஏற்படுத்தி, அந்த அந்த தேவதைகளை மந்திர பூர்வகமாக அங்கே ஸ்தாபித்தார். பிறகு காட்டில் கிடைக்கும் புஷ்பங்களாலும், பழங்களாலும், பக்குவமான மாம்ஸங்களாலும், ஜலதர்ப்பணங்களாலும் வேதத்தில் விதித்திருக்கும் ஜபங்களாலும், தர்ப்பங்களாலும் ஸமித்துக்களாலும் பூதங்களைத் திருப்திசெய்து, ராம லக்ஷ்மணர்களும் ஸீதையும் சுபமுகூர்த்தத்தில், மரக் கிளைகளாலும் இலைகளாலும் கூரை போட்டு, சாஸ்திர விதிப்படி கட்டப்பட்ட அந்தப் பர்ணசாலையில் பிரவேசித்து, ஸுகமாக வஸித்தார்கள்.

பல மிருகங்களாலும் பக்ஷிகளாலும் விசித்திரமான புஷ்பங்களுள்ள மரங்களாலும் நிறைந்து, ஸர்ப்பங்கள் யானைகள் புலிகள் கரடிகள் மான்கள் முதலிய மிருகங்களின் சப்தத்தால் விளங்கும் அந்த வனத்தில், ராமலக்ஷ்மணர்களும் ஸீதையும் இந்திரியங்களையும் மனத்தையும் அடக்கிக்கொண்டு, தங்கள் இஷ்டப்படி ஸஞ்சரித்து, புஷ்பங்களைப் பறிப்பது, ஜலக்ரீடை செய்வது முதலிய அந்தந்த காலத்திற்கேற்ற ஸுகங்களை அனுபவித்துக் கொண்டிருந்தார்கள். மிக்க ரமணீயமான அந்தச் சித்திரகூட பர்வதத்தில் மால்யவதி என்ற புண்ணியநதிக்கரையில், ஒரு கவலையும் இல்லாமல் ராமன் தபஸ்விகளின் தர்மத்தை அனுஷ்டித்துக்கொண்டு அளவற்ற ஸந்தோஷத்தை அடைந்து, அயோத்யையை விட்டுவந்த துக்கத்தை மறந்திருந்தார்.

ஸுரம்ய மாஸாத்$^{3}$ய து சித்ரகூடம்
நதீ$^{3}$ம் ச தாம் மால்யவதீம் ஸுதீர்த$^{2}$ாம் |
நநந்த$^{3}$ ஹ்ருஷ்டோ ம்ருக$^{3}$பக்ஷிஜுஷ்டாம்
ஜஹௌ ச து$^{3}$க்க$^{2}$ம் புரவிப்ரவாஸாத் ‖ (38)

---

## ஸர்க்கம் 57

# ஸுமந்திரர் அயோத்யைக்கு வந்தது

---

கத$^{2}$யித்வா ஸுது$^{3}$க்க$^{2}$ார்த: ஸுமந்த்ரேண சிரம் ஸஹ
ராமே த$^{3}$க்ஷிணகூலஸ்தே$^{2}$ ஜகா$^{3}$ம ஸ்வக்$^{3}$ருஹம் குஹ: ‖ (1)

ராமன் நதியைத் தாண்டி அக்கரை சேர்ந்த பிறகு, குகன் மிகுந்த வருத்தத்துடன் தன் கண்ணுக்கு அவர் மறையும்வரையில் அவருடைய குணங்களைப்பற்றி ஸுமந்திரருடன் பேசிக்கொண்டிருந்து, பிறகு அவரை அழைத்துக்கொண்டு வீட்டிற்குப் போனான். தூதர்களை அனுப்பி ராமலக்ஷ்மணர்கள் பரத்வாஜருடைய ஆசிரமத்திற்குப் போனதையும் பிரயாகையில் அவருடன் தங்கியிருந்ததையும் சித்திரகூடத்தை நோக்கி பிரயாணம் செய்ததையும் அறிந்து ஸுமந்திரரிடத்தில் தெரிவித்தான். பிறகு அவர் குகனிடத்தில் உத்தரவு பெற்றுக்கொண்டு வெகுகிலேசத்துடன் குதிரைகளைப் பூட்டி அயோத்யைக்குப் போனார்.

பரிமளமுள்ள காடுகளையும் ஆறுகளையும் ஏரிகளையும் கிராமங்களையும் நகரங்களையும் பார்த்துக்கொண்டு வேகமாக பிரயாணம் செய்து, மூன்றாவது நாள் ஸாயங்காலத்தில் ஸந்தோஷமற்ற அயோத்யையில் பிரவேசித்தார். பாழான நகரத்தைப்போல் ஜன ஸஞ்சாரமில்லாமல் சப்தமில்லாமலிருப்பதைப் பார்த்து மிகவும் மனம்குன்றி "இதுவரையில் யானைகளும் குதிரைகளும் ஜனங்களும் அரசர்களும் நிறைந்திருந்த இந்த அயோத்யை ராமனை விட்டுப் பிரிந்த துக்கமென்ற நெருப்பால் எரிக்கப்பட்டு,சாம்பலாயிற்று'' என்று நினைத்து, குதிரைகளை அதிவேகமாக நடத்திக் கோட்டை வாசற்படிக்கு வந்தார்.

ஸுமந்திரர் வருவதைக் கண்டு ஜனங்கள் கூட்டம் கூட்டமாக "ராமன் எங்கே, ராமன் எங்கே?'' என்று நான்குபுறத்திலும் அவரைக் கேட்க ஆரம்பித்தார்கள். "ஜனங்களே! அந்த மஹாத்மா கங்கைக்கரையில் என்னை நிறுத்திவிட்டு, 'அயோத்யைக்குத் திரும்பிப் போ' என்று உத்தரவு கொடுத்தனுப்பி விட்டார்'' என்று மறுமொழி சொன்னார். ராமலக்ஷ்மணர்கள் கங்கையைத் தாண்டிப் போய்விட்டார்களென்று தெரிந்தவுடன் ஜனங்கள் கண்ணீர்பெருகப் பெரு

மூச்சு விட்டுக்கொண்டு "என்ன ஆச்சரியம்! இப்படிப்பட்ட கஷ்டம் நமக்கு நேரும்படியான பாபத்தைச் செய்திருக்கிறோமா! என்ன ஜன்மமெடுத்தோம்! ஹா ராம! எங்களை இப்படித் தவிக்கவிட்டுப் போக உனக்கு மனம் வந்ததா?" என்று கதறினார்கள். கூட்டம் கூட்டமாக நின்றுகொண்டு, "இதே ரதத்தில் ராம லக்ஷ்மணர்களையும் ஸீதையையும் பார்த்துவிட்டு, இப்பொழுது அவர்களில்லாமல் பாழடைந்திருக்கும் இதே ரதத்தைப் பார்க்கும்படி நேர்ந்த நமது ஜன்மத்தைப் பொசுக்கவேண்டும். ஒருவன் எங்கேயாவது தானம் கொடுத்தால் ராமன் தவறாமல் அவ்விடத்தில் போயிருந்து, உரியான தேசத்திலும் காலத்திலும் தக்க மனுஷ்யர்களுக்கும் அந்தத் தானம் கொடுக்கப்படுகிறதா என்று கவனித்துக்கொண்டிருப்பான். எங்கேயாவது யாகயக்ஞங்கள் நடந்தால் ராமன் அங்கே தவறாமல் போய், அந்த யாகம் நியாயமாக ஸம்பாதிக்கப்பட்ட திரவியத்தால் நடக்கிறதா என்று கவனிப்பான். கிரியைகளில் ஸந்தேகம் ஏற்பட்டால் அதை நீக்குவான். ஏதாவது மறந்திருந்தால் அதை ஞாபகம் செய்வான். எங்கேயாவது விவாஹம் நடந்தால் ராமன் அவ்விடத்திற்குத் தவறாமல்-போய், இருதிறத்தாருடைய ஜாதிகுலம் சீலம் ஐசுவரியம் ஒத்திருக்கிறதா என்றும், மணப்பிள்ளையும் பெண்ணும் எல்லா விதத்திலும் ஒத்திருக்கிறார்களா என்றும் கவனிப்பான்; தனமில்லாததால் அந்த விவாஹம் நடக்காதென்றறிந்தால் வேண்டிய தனத்தைக் கொடுத்து நடத்துவிப்பான். வைதிகக்கிரியைகள் குறைவில்லாமல் நடக்கிறதா என்று பார்த்துக்கொண்டிருப்பான். அவ்வாறே, நீண்ட காலம் வரை நடக்க வேண்டிய யாகங்களிலும் தானே போய் அவைகளை ஒழுங்காக நடத்துவான். அந்த தர்மாத்மாவை இன்னுமொருமுறை பார்ப்போமா? இந்த நகரத்தில் ஒவ்வொருவருக்கும் எது க்ஷேமத்தை உண்டுபண்ணும். எது பிரியம், எது ஸுகத்தைக் கொடுக்கும் என்று நன்றாக விசாரித்து, அவனவனுடைய மனோரதங்களைப் பூர்த்திசெய்து, குழந்தையைத் தகப்பன் ரக்ஷிப்பதுபோல் நம்மெல்லோரையும் ரக்ஷித்துவந்த நாதன் இப்பொழுது நம்மை விட்டுப்போகும் காலம் வந்ததல்லவா" என்று அந்த நகரத்திலுள்ள ஸ்த்ரீகள் ராஜவீதிக்கு இருபுறத்திலுள்ள மெத்தைவீடுகளிலிருந்தும் கடைகளிலிருந்தும் ஜன்னல்கள் மூலம் ராமனுடைய ரதத்தைப் பார்த்து பிரலாபிப்பதைக் கேட்டுக்கொண்டே ஸுமந்திரர் அரண்மனையை நோக்கிப் போனார்.

அந்த ஜனங்களைப் பார்க்க ஸஹிக்காமல் முகத்தை மறைத்துக்கொண்டு தசரதர் இருக்குமிடத்திற்குப் போய் ரதத்தை விட்டிறங்கி ஏழு கட்டுகளைத் தாண்டினார். தசரதர் வெளியில் வராததைக் கண்டு ஜனங்கள் கூட்டம் கூட்டமாக அங்கே நின்றுகொண்டிருந்தார்கள். ராமன் திரும்பி வருவாரென்று ஆவலுடன் எதிர்பார்த்துக்கொண்டிருந்த ஸ்த்ரீகளெல்லோரும் ராமனில்லாமல் வெற்று ரதம் திரும்பிவரக் கண்டு துக்கம் தாங்காமல், 'ஹா ஹா' என்று கதறினார்கள். ஒன்றும் தோன்றாமல் பித்துப்பிடித்தவர்கள் போல் ஒருவரையொருவர் வெறித்துப் பார்த்துக் கொண்டிருந்தார்கள். ஸுமந்திரர் வந்ததை அறிந்து ராஜபத்தினிகள் தங்களுடைய விடுதிகளிலிருந்து அரசருடைய அந்தப்புரத்திற்கு வந்து ஸுமந்திரர் என்ன சொல்வாரோ என்று ஆவலுடன் எதிர்பார்த்துக்கொண்டிருந்தார்கள். "ராமனுடன் இந்த நகரத்தைவிட்டுப் போனவர் ராமனில்லாமல் திரும்பி வந்தாரே; சொல்லமுடியாத துக்கத்தை அனுபவித்துக்கொண்டிருக்கும் கௌஸல்யையிடத்தில் அவர் என்ன சொல்வாரோ, பார்ப்போம். தன் அருமைக் குழந்தையான ராமனைக் காட்டிற்குப்போகவிட்டு அவள் பிழைத்திருப்பது வெகு ஆச்சரியம். அவளைத் தவிர மற்றவர்கள் அப்படிச் செய்யமுடியாது." என்று, தசரதர் ஸமீபத்திலிருந்ததால் அவர்கள் மெதுவாகப் பேசிக்கொள்ளும் வார்த்தைகள் ஸுமந்திரருடைய காதில் விழுந்தன. அவர்கள் கூறிய உண்மையான வார்த்தையைக் கேட்கக் கேட்கத் துக்கம் வளர்ந்தது. பிறகு எட்டாவது கட்டில் நுழைந்து, அங்கே ராஜ சோபை விளங்காததையும் அரசன் புத்திரசோகத்தால் பிரக்ஞை தவறி இருப்பதையும் கண்டார். ஸமீபத்தில் போய் கைகூப்பி நமஸ்கரித்து, ராமன் சொன்ன ஸமாசாரத்தைத் தெரிவித்தார். தசரதர் அதை மௌனமாகக் கேட்டுப் புத்திரசோகம் மேலிட்டுப் புத்தி சிதறி மூர்ச்சையடைந்து பூமியில் விழுந்தார். அங்குள்ள ஜனங்களெல்லோரும் 'ஹா ஹா' என்று கதறினார்கள். கௌஸல்யையும் ஸுமித்திரையும் ஓடிவந்து அவரை வாரியெடுத்துப் படுக்கையில் வைத்தார்கள்.

அப்பொழுது கௌஸல்யை துக்கம் தாங்காமல், "மஹானுபாவ! ஒருவரும் செய்யத் துணியாத் காரியத்தைச் செய்த என் குழந்தை, காட்டிலிருந்து அனுப்பிய தூதர் வந்திருக்கிறார். ஏன் அவரிடத்தில் பேசாமலிருக்கிறீர்கள்? கைகேயிக்கு வரங்களைக் கொடுக்கும்பொழுது ஸுலபமாயும் ஸந்தோஷத்துடனும் கொடுத்துவிட்டு, பிறகு அதனால் ராமன் காட்டிற்குப்போக, இப்பொழுது அதைப்பற்றி வெட்கமும் வருத்தமும் படுவது என்ன ஆச்சரியம்! இதெல்லாம் அப்பொழுது ஞாபகமில்லையோ? எழுந்திரும்; எது போனாலும் போகட்டும்; யார் என்ன கஷ்டப்பட்டால் தங்களுக்கென்ன? ஸத்தியம் தவறாமலிருந்ததால் மிகுந்த புண்ணியத்தை ஸம்பாதித்தீர்கள். அது போதாதா? துக்கத்தை அனுபவிப்பதில் பிறர் உதவி செய்யமுடியுமா? என் துக்கத்தை நானே அனுபவிக்க வேண்டும். என்னைத் திருப்தி செய்யத் தாங்களும் துக்கப்படுவது போல் காட்டிக்கொண்டால் என் துக்கம் தணியுமா? ஆகையால் அந்த வேஷம் வேண்டாம். துக்கப்படாமலிருந்தால் யாராவது தூஷிப்பார்களே என்று பயந்து லோகாபவாதத்திற்குக் கட்டுப்பட்டு பிரலாபிக்கிறீர்களோ? அதுவும் வேண்டாம். இங்கே கைகேயி இருக்கிறாளென்று நினைத்துப் பயந்து ராமனைப்பற்றிய ஸமாசாரத்

தைக் கேட்காமலிருக்கிறீர்களோ? அந்தப் பயமும் வேண்டாம். கைகேயி இவ்விடத்திலில்லை; தைரியமாய்ப் பேசுங்கள்'' என்று சொல்லி கண்ணீர் நெஞ்சை அடைக்க, பேசமுடியாமல் தரையில் கீழே விழுந்தாள்.

கௌஸல்யை இப்படி பிரலாபிப்பதையும், தரையில் விழுந்ததையும், ஒன்றும் தோன்றாமல் தசரதர் உட்கார்ந்திருப்பதையும் கண்டு அங்கிருந்த ஸ்த்ரீகளெல்லோரும் பெருங்குரலிட்டு அழுதார்கள். அதைக் கேட்டு அங்கிருந்த மற்றவர்களும் பிரலாபிக்க, அதைக் கேட்டு வெளியிலிருந்த நகரத்து ஜனங்களும் பிரலாபிக்க, அரசனுடைய அரண்மனையிலும் நகரத்திலும் எங்கே பார்த்தாலும் அழுகைச் சப்தம் தவிர வேறொன்றும் கேட்கப்படவில்லை. ராமன் அயோத்யையை விட்டுக் காட்டுக்குப் போகும்பொழுது இருந்தது போல் அந்நகரம் அல்லோலகல்லோலமாய்த் தத்தளித்தது.

ததஸ்தமந்த: புரநாத3 முத்தி2தம்
ஸமீக்ஷ்ய வ்ருத்3தா4ஸ் தருண்யஸ்ச மாநவா: |
ஸ்த்ரியஸ்ச ஸர்வா ருருது3: ஸமந்தத:
புரம் ததா3ஸீத் புநரேவ ஸங்குலம் || (34).

## ஸர்க்கம் 58

# ராமன் தெரிவித்த ஸமாசாரம்

ப்ரத்யாஸ்வஸ்தோ யதா3 ராஜா மோஹாத் ப்ரத்யாக3த: புந: |
அதா2ஜுஹாவ தம் ஸூதம் ராமவ்ருத்தாந்த காரணாத் || (1)

சற்றுநேரம் கழித்து சக்கரவர்த்தி மூர்ச்சை தெளிந்து, ராமனுடைய வரலாற்றைக் கேட்க விரும்பி, அவரிடத்திலிருந்து வந்த ஸுமந்திரரைக் கூப்பிட, ஸாரதி வணக்கத்துடன் எதிரே வந்து நின்றார். மிகவும் வயது சென்றவராக, காட்டிலிருந்து புதிதாகப் பிடிக்கப்பட்ட மிருகத்தைப்போல் தவித்துக்கொண்டு, வியாதியால் பீடிக்கப்படும் யானையைப்போல் ராமனையே நினைத்துப் பெருமூச்சு விட்டுக்கொண்டிருந்த அரசன், அதிவேகமாய் பிரயாணம் செய்தபடியால் உடம்பெங்கும் புழுதிபடிந்து கண்களில் நீர் ததும்ப, தீனமாக எதிரில் நிற்கும் ஸாரதியைப் பார்த்து, "ஸுமந்திர! தர்மாத்மாவான என் குழந்தை எந்த மரத்தடியில் தங்கியிருக்கிறான்? வெகு ஸுகமாக வளர்க்கப்பட்டவனுக்கு வனத்தில் எந்தப் பதார்த்தம் ருசியாக இருக்கும்? துக்கத்தை அனுபவிக்கத் தகாதவனும் இந்தப் பூமண்டலத்திற்கு நாதனுமான என் புத்திரன், பூமியில் படுத்து அனாதையைப்போல் எப்படித் தூங்குவான்? வெளியில் புறப்படும்பொழுது சதுரங்க ஸைன்யங்களால் பின்தொடரப் படுகிறவன், ஜனஸஞ்சாரமில்லாத வனத்தில் தனியாக எப்படி



வஸிப்பான்? மலைப்பாம்புகளும், கருநாகங்களும், புலி முதலிய துஷ்ட மிருகங்களும் நிறைந்த காட்டில் ராமலக்ஷ்மணர்கள் ஸீதையுடன் எப்படி ஸஞ்சரிப்பார்கள்? வெகு செல்வமாக வளர்க்கப்பட்ட ஸீதையுடன் என் குழந்தைகள் ரதத்திலிருந்து இறங்கி எப்படி நடந்து பிரயாணம் செய்தார்கள்? ஸுமந்திர! அசுவினீ தேவதைகள் மந்தரபர்வதத்தில் பிரவேசிப்பதுபோல் என் குழந்தைகள் காட்டில் புகுவதைப் பார்த்தாயல்லவா? பாக்கியசாலி நீயே. ராமன் என்ன சொன்னான்? லக்ஷ்மணன் என்ன சொன்னான்? வனத்திற்குப் போனபிறகு ஸீதை என்ன சொன்னாள்? ராமன் உட்கார்ந்தது, படுத்தது, புசித்தது முதலிய செய்கைகளை ஒன்று விடாமல் சொல். முன்னொரு காலத்தில் யயாதி சக்கரவர்த்தி ஸ்வர்க்கத்திலிருந்து தள்ளப்படும்பொழுது 'ஸாதுக்கள் இருக்குமிடத்தில் நான் போகவேண்டும்' என்று இந்திரனை பிரார்த்தித்தார். அப்படியே சிபி முதலிய மஹாத்மாக்கள் இருக்குமிடத்தில் விழுந்து, அவர்களுடைய மஹிமையால் தன் துக்கம் தீர்ந்து மறுபடியும் ஸ்வர்க்கத்திற்குப் போனார். அதுபோலவே நானும் ராமனுடைய கல்யாண குணங்களையும் சரித்திரத்தையும் கேட்டு உயிரைக் காப்பாற்றிக்கொள்வேன்'' என்றார்.

ஸுமந்திரர் கண்ணீரால் வார்த்தை குளறக் கைகூப்பி "மஹாராஜ! குலதர்மத்தைப் பரிபாலனம் செய்வதிலேயே நோக்கமுள்ள ராமச்சந்திரன் கைகூப்பி நமஸ்கரித்துத் தங்களிடத்தில் பின்வருமாறு விக்ஞாபனம் செய்யச்சொன்னார். 'ஸாரதியே! மஹாஞானியும் ஸகலப் பிராணிகளும் நமஸ்கரிக்கத் தகுந்தவருமான என் பிதாவின் பாதங்களில் சிரஸை வைத்து, ஸாஷ்டாங்கமாக நான் நமஸ்காரம் செய்தேன்' என்று சொல்லும்.

'அந்தப்புரத்திலிருப்பவர்களுக்குத் தகுந்தபடி என் நமஸ்காரத்தையும் எல்லோருடைய க்ஷேமத்தை நான் விசாரித்ததையும் சொல்லும்.

'என் தாயான கௌஸல்யையை நான் அடிபணிந்து க்ஷேமம் விசாரித்தபின், 'அம்மா! தர்மத்தை அனுஷ்டிப்பதிலேயே நோக்கம் கொண்டு அக்னி காரியங்களில் தவறாமலிருக்கவேண்டும். தேவதைகளைப் பூஜிப்பதுபோல் சக்கரவர்த்தியின் பாதங்களில் ஸகலவிதமான பணிவிடையையும் செய்யவேண்டும். 'மேன்மையான குலத்தில் பிறந்தவள், மஹாராஜாவிற்குப் பட்டமஹிஷி' என்ற அபிமானத்தையும் கர்வத்தையும் விட்டு மற்ற ராஜபத்தினிகளிடத்தில் நடக்கவேண்டும். அரசரிடத்தில் நடப்பதுபோல் கைகேயியிடத்திலும் நடக்கவேண்டும். பரதனைச் சக்கரவர்த்தியாக நினைத்து உபசரிக்க வேண்டும். 'அரசர்கள் வயதால் மூத்தவர்களல்ல; செல்வத்தால் மூத்தவர்கள்' என்ற ராஜதர்மத்தை ஞாபகத்தில் வைத்துக்கொண்டு பரதன் தங்களுக்குச் சிறுவனானாலும் அவனுக்கு ஸகல மரியாதையும்

செய்யவேண்டும்' என்று கூறியதாக வெகு ஜாக்கிரதையுடன் சொல்ல வேண்டும்.

"பரதனை நான் க்ஷேமம் விசாரித்ததாகத் தெரிவித்து; 'எல்லா ராஜபத்தினிகளிடத்திலும் நீ ஒரே விதமாய் நடக்கவேண்டும். உனக்கு யௌவராஜ்யாபிஷேகம் நடந்த பிறகு சக்கரவர்த்தியை ராஜ்யத்திலேயே வைத்துக்கொண்டு ஸகல உபசாரங்களையும் குறைவில்லாமல் செய்யவேண்டும். அவர் மிகவும் வயது சென்றவர். ஆகையால் எந்த விஷயத்திலும் அவருடைய வார்த்தைக்கு எதிர் சொல்லக்கூடாது. அவருடைய உத்தரவுப்படி நடந்துகொண்டு ஸகல போகங்களையும் உசிதமாக அனுபவித்துக்கொண்டிரு' என்று பரதனிடம் சொல்லவேண்டும்" என்றார். பிறகு தன் தாய் பிறரால் உபத்திரவிக்கப் படுவாளென்பதையும் தான் ஸமீபத்திலிருந்து அவளுக்குப் பணிவிடை செய்யும் பாக்யம் கிடைக்கவில்லையே என்பதையும் நினைத்துக் கண்ணீர்விட்டு, 'பரத! என்னிடத்தில் விசேஷ ப்ரீதி வைத்திருக்கும் கௌஸல்யையை உன் தாயைப்போல் நீ உபசரிக்க வேண்டும், என்றும் சொல்லும்' எனக்கூறி துக்கத்தால் கண்கள் சிவக்கக் கலகலவென்று கண்ணீர் உதிர்த்துப் பிறகு ஒன்றும் தோன்றாமல் இருந்தார். ராமன் சொல்லியனுப்பிய ஸமாசாரம் இதே.

லக்ஷ்மணன் ராமனைப்போல் மனத்திலிருக்கும் எண்ணங்களை மறைக்கமுடியாதவர்; ஆகையால் வெகு கோபத்துடன் பெருமூச்சு விட்டுக்கொண்டு 'ராமனிடத்தில் எந்த அபராதத்தைக் கண்டுபிடித்துத் தசரதர் அவரைக் காட்டிற்கு அனுப்பினார்? அல்ப ஸ்வபாவமுள்ள கைகேயி கட்டளையிட்டதை விசேஷமாய் நினைத்துத் தலையால் தாங்கி இந்த அநியாயத்தைச் செய்து, எங்கள் எல்லோரையும் இதுவரையிலும் அனுபவிக்காத கஷ்டங்களுக்கு உட்படுத்தினாரே. பரதனுக்கு ராஜ்யம் கிடைக்கவேண்டுமென்று ஆசைப்பட்டு இப்படிச் செய்தாலும் வேறு எப்படியிருந்தாலும் இது அநியாயமே. வரங்களைக் கொடுக்கும்பொழுது ராமனைக் காட்டிற்கு அனுப்புவதென்றாவது பரதனுக்கு ராஜ்யத்தைக் கொடுப்பதென்றாவது குறிப்பிடவில்லை. ஆனால் 'உனக்கு ராஜ்யத்தைக் கொடுக்கிறேன்' என்று முதலில் எல்லா ஜனங்களுக்கெதிரில் ராமனிடத்தில் ப்ரதிக்ஞை செய்திருக்கிறார். கைகேயி கேட்கும்பொழுது 'ராஜ்யத்தை ராமனுக்குக் கொடுத்துவிட்டேன்; உன் புத்திரனுக்குக் கொடுக்கமாட்டேன்' என்று தடுத்திருக்கலாம். மூத்த புத்திரனைக் காட்டிற்கனுப்புவது எப்பொழுதும் தகாது; மூத்த புத்திரனைத் தள்ளிவிடக்கூடாது; ஒரே புத்திரனையும் தள்ளிவிடக்கூடாது' என்று ஸ்மிருதிகள் முறையிடுகின்றன. நானும் எவ்வளவோ யோசித்துப் பார்த்தேன். ராமனைக் காட்டிற்கனுப்ப ஒரு காரணத்தையாவது கண்டுபிடிக்க முடியவில்லை அதற்குத் தகுந்த தோஷம் ஏதாவது ராமனிடத்திலிருந்தால் அவரைக் காட்டிற்குப் போகச் சொல்வது சாஸ்திரத்திற்கு ஒத்த விஷயம்; அப்படி யாதொன்றுமில்லை. ஆகையால் தசரதர் தன் மனம் போனபடியே செய்திருக்கவேண்டும். அல்லது தெய்வச் செயலால் சாஸ்திரத்தை அநுஸரிக்காமல் நடந்திருக்கவேண்டும். மனம் போனபடி செய்திருந்தால் இப்பொழுது அதைப்பற்றி ஏன் வருத்தப்பட வேண்டும் என்றால், புத்தி பிசகித் தீர ஆலோசிக்காமல் ராமனைக் காட்டிற்கு அனுப்பியதால் இப்பொழுது இவ்வளவு துக்கப்படுகிறார். பெற்ற தகப்பனைத் தூஷிக்கலாமா என்றால், 'கர்வத்தால் தலைதெரியாமல் நியாயாநியாய விவேகமற்று ஸன்மார்க்கத்திலிருந்து விலகினவன், தகப்பனானாலும் ஆசாரியனானாலும் அவனைத் தள்ளவேண்டும்' என்று சாஸ்திரங்கள் சொல்லுகின்றன. ஆகையால் நான் மஹாராஜாவை என் பிதாவாக நினைக்கவில்லை. ராமனே எனக்கு ஸஹோதரன்; ராமனே என்னைப் போஷிப்பவர்; ராமனே எனக்குப் பந்து; ராமனே எனக்குப் பிதா. 'இயற்கையான பிதாவைவிட்டு முக்கியமில்லாத வேறொருவரைப் பிதாவாகக் கொள்வது நியாயமா' என்றால், ராமன் ஸகலப் பிராணிகளுக்கும் பிரியமானவர்; அவைகளின் ஹிதத்தையே தேடுகிறவர்; அப்படியிருக்க அவரைக் காட்டிற்கு அனுப்பினதால் அரசன் அவைகளுக்கு பிரியமில்லாதவராயும் அவைகளின் நாசத்தைக் கோருகின்றவராயும் ஆனார். கைகேயி பரதன் போன்றவர்களைத் தவிர மற்ற எவருக்காவது அவரிடத்தில் பிரியமிருக்குமா? தர்மவானும் குடிகள் யாவருக்கும் ஆனந்தத்தைக் கொடுப்பவருமான ராமனைக் காட்டிற்குத் துரத்தி, பிராணிகளை விரோதித்துக்கொண்ட தசரதர் 'ஸகல லோகங்களையும் ஸந்தோஷப்படுத்துகிறவர்' என்று அர்த்தமுள்ள ராஜாவாக எப்படி இருக்க முடியும் என்று தங்களிடத்தில் சொல்லச் சொன்னார்.

ராமனுக்கு நேர்ந்த கஷ்டத்தைப் பார்த்துப் பொறுக்காமல் தன் மனத்திலுள்ள எண்ணங்களை லக்ஷ்மணன் வார்த்தையால் வெளிப்படுத்தினார். ஸீதையோ அப்படிச் செய்யவில்லை. ஜனகமஹாராஜனுடைய புத்திரி; குணங்களாலும் நடத்தையாலும் விசேஷ கீர்த்திபெற்றவள்; மனத்தில் நிறைந்த சோகத்தால் பெருமூச்சு விட்டுக்கொண்டு, வெகு கம்பீரமான ஹிருதயமுடையவளாகையால் ஒருவகைப் பேய் பிடித்தவள்போல ஒன்றும் தோன்றாமல் திகைத்து நின்றாள். இப்படிப்பட்ட கஷ்டங்களை ஒருநாளும் அனுபவிக்கத் தகாதவள்; ஆகையால் ராமனுக்கு நேர்ந்த துக்கத்தைப் பார்த்துத் தாங்காமல் கண்ணீர் பெருக என்னிடத்தில் யாதொன்றையும் சொல்லவில்லை. வாடிய முகத்துடன் கண்ணீரால் மறைக்கப்பட்ட நேத்திரங்களால் ராமனையும் அயோத்யைக்குத் திரும்பிப் போகும் என்னையும் பார்த்து, 'ஐயோ! இந்தக் கோரமான காட்டில் ரதமில்லாமல் ராமன் எப்படி நடந்து போவார்' என்று நினைத்துக் கலகலவென்று கண்ணீர் உதிர்த்தாள், ராமன் கண்களில் நீர் ததும்ப கைகூப்பிக்கொண்டு நின்றார். லக்ஷ்மணன் அவருக்குப் பணிவிடை

செய்து கொண்டிருந்தார். ஸீதை தினமாக அழுதுகொண்டு ரதத்தையும் என்னையும் பார்த்துக்கொண்டே நின்றாள்.

ததை2வ ராமோஸ்ருமுக2: க்ருதாஞ்ஜலி:
ஸ்தி2தோ ப4வல்லக்ஷ்மண பா3ஹுபாலித: |
ததை2வ ஸீதா ருத3தீ தபஸ்விநீ
நிரீக்ஷதே ராஜரத2ம் ததை2வ மாம் ‖ (37)

---

## ஸர்க்கம் 59

## தசரதருடைய பச்சாத்தாபம்

---

மம த்வஸ்வா நிவ்ருத்தஸ்ய நப்ராவர்தந்த வர்த்மநி |
உஷ்ணமஸ்ரு ப்ரமுஞ்சந்தோ ராமே ஸம்ப்ரஸ்தி2தே வநம் ‖ (1)

"நான் ரதத்தை அயோத்யையை நோக்கித் திருப்பினவுடன் அதில் பூட்டின குதிரைகள் கண்ணீர் பெருக, "ஐயோ! பிரம்மா இந்திரன் முதலிய தேவர்களுக்கும் கிடைக்காத பகவானுடைய கைங்கரியம் பூர்வ ஜன்மங்களில் நாம் செய்த புண்ணியத்தால் நமக்குக் கிடைத்ததென்று எண்ணியிருந்தோமே; தெய்வம் அதைப் பொறுக்காமல் கெடுத்துவிட்டது. இனி என்ன செய்வோம்? நமது ஜன்மம் வீணாயிற்றே" என்று மிகுந்த துக்கத்தால் வாடின; கல்நெஞ்சையுடைய நான் ராமனை விட்டுப் பிரிந்து அயோத்யைக்குத் திரும்பினாலும் அவை திரும்பிவர ஸம்மதிக்கவில்லை. பலவந்தமாக அவைகளை நடத்திக்கொண்டு வந்தேன். அந்தத் துக்கத்தையும் அனுபவித்துக்கொண்டு ராமலக்ஷ்மணர்களைக் கைகூப்பி வணங்கி அயோத்யைக்குத் திரும்பிவரப் புறப்பட்டேன். ஒருவேளை ராமன் என்னை மறுபடியும் கூப்பிடுவாரோ என்ற ஆசையால் ராமனுக்கு உயிர்த்தோழனான குகனுடன் மூன்று நாட்களிருந்தேன். என் துக்கம் கொஞ்சம் தணிந்தது. கைகேயியை ஸந்தோஷப்படுத்த எண்ணித் தாங்கள் விசாரிக்காமல் செய்த காரியம் ஸகல லோகத்திற்கும் கஷ்டத்தை உண்டுபண்ணிற்று. ஸர்வபூதங்களுக்கும் ராமன் அந்தர்யாமி. தங்கள் ராஜ்யத்திலிருக்கும் மரம் கொடி பூ மொட்டு அரும்பு இலை இவைகளும் ராமனை விட்டுப்பிரிந்த துக்கத்தால் வாடி உலர்ந்ததற்கு அதே காரணம். அவைகளுக்கு ராமன் ஜீவாதாரமல்லவா? நதிகளிலும் ஏரிகளிலும் குட்டைகளிலுமுள்ள ஜலம் கொதிக்கிறது. நீர் பாய்ச்சாமல் வளரும் உறுதியான காட்டுமரங்களும் தோட்டங்களில் நீர் பாய்ச்சி வளரும் மிருதுவான மரங்களும் உலர்ந்து போயின. ஜந்துக்கள் இருந்த இடத்தைவிட்டு அசையாமல் இருக்கின்றன. எப்பொழுதும் ஸஞ்சரிக்கும் வழக்கமுள்ள குரூர மிருகங்களும் இரை எடுப்பதற்குக்கூட வெளியில் போகவில்லை. ராமனுக்கு நேர்ந்த கஷ்டத்தால் வனத்திலுள்ள பிராணிகள் யாவும் சப்தம்



செய்யாமல் பிரமைகொண்டு நிற்கின்றன. தாமரை இதழ்கள் வாடி ஜலத்தில் மூழ்கிவிட்டன. சுத்தமான ஜலம் கலங்கியிருக்கிறது. தாமரை ஓடைகளில் புஷ்பங்கள் கருகிப்போயின. மீன்களும் நீர்க்காக்கை முதலிய பறவைகளும் அசைவற்றுக்கிடக்கின்றன. ஜலத்திலும் தரையிலும் உண்டாகும் புஷ்பங்கள் மணமும் பிரகாசமும் அற்றிருக்கின்றன. ருசியுள்ள பழங்களில் ரஸமில்லை. பக்ஷிகள் கூடுகளில் மூர்ச்சையடைந்து கிடக்கின்றன. சோலைகளும் தோப்புகளும் களையற்று விகாரமாக இருக்கின்றன. நான் அயோத்யையில் புகும் பொழுது ஒருவனாவது ஸந்தோஷிக்கவில்லை. தங்கள் ரதத்தில் என்னுடன் ராமன் வராததைக் கண்டு ஜனங்கள் அடிக்கடி உஷ்ணமாகப் பெருமூச்சு விடுகிறார்கள். துக்கத்தால் கண்ணீர்பெருக ராஜவீதியில் நின்றுகொண்டிருக்கிறார்கள். ராமன் இல்லாமல்சூன்யமான ரதத்தை உப்பரிக்கைகளிலும் அரண்மனைகளிலும் உள்ள பெண்கள் பார்த்துத் திடுக்கிட்டு ஹாஹா என்று கதறி ஒருவரை ஒருவர் எறிட்டுப்பார்த்து ஒன்றும் பேசாமல் கண்ணீர்விட்டழுகிறார்கள். அயோத்யையில் தங்களுக்கு நண்பர்களும் நண்பரல்லாதவர்களும் நடுநிலையிலிருப்பவர்களும் துக்கமடைந்துள்ள நிலையில் ஒருவர்க்கொருவர் யாதொரு பேதமற்றிருக்கிறார்கள்; ராமனைவிட்டுப் பிரிந்த துக்கம் எல்லோருக்கும் ஒரேவிதமே. ஜனங்கள் ஸந்தோஷமிழந்தார்கள்; யானைகளும் குதிரைகளும் துக்கத்தால் வாடின; எங்கே பார்த்தாலும் அழுகைக்குரலும் பெருமூச்சுமே நிறைந்தது. இப்படி ராமனுக்கு நேர்ந்த கஷ்டத்தால் தவித்துக்கொண்டிருக்கும் அயோத்யையைப் பார்த்தால் இதோ இருக்கும் கௌஸல்யையைப்போல் அதுவும் லோகோத்தமமான புத்திரனை இழந்ததுபோலக் காணப்படுகிறது" என்று ஸுமந்திரர் கண்ணீர் பெருக, குரல் தழதழத்து ஸகல பிராணிகளும் படும் கஷ்டத்தைத் தீனமாக வர்ணிக்கையில், அதைக் கேட்டுக்கொண்டிருக்கும் தசரதர், "நாம் கேட்ட கேள்விகளுக்கு மறுமொழி சொல்லி, இன்னும் மற்ற விஷயங்களையும் விரிவாக உரைத்து, இதெல்லாம் உமது அநியாயத்தால் விளைந்தபிரயோஜனமே" என்று இவர் ஜாடையாகச் சொல்லுகிறார் என்றுஅறிந்து அதை ஒப்புக்கொண்டு, "ஸுமந்திர! கைகேயி என்னை வஞ்சித்து வரங்களைப் பெற்று அவைகளைக் கொடுக்கும்படி நிர்ப்பந்தித்தாள். நான் என்ன செய்வேன்? அவளோ மஹா பாபஸ்வபாவமுள்ள வம்சத்தில் பிறந்தவள். ஆகையால் ஒன்றும் தோன்றாமல் நான், புத்திமான்கள், வயதில் மூத்தவர்கள், நண்பர்கள், மந்திரிகள், நகரத்து ஜனங்கள் யாருடனும் கலந்து ஆலோசிக்காமல், திடீரென்று கேவலம் ஒரு பெண்ணின் தூண்டுதலால், அவளுடைய இஷ்டத்தைப் பூர்த்தி செய்ய, இந்த அக்கிரமத்தைச் செய்தேன். பிரத்யக்ஷமாக யாதொரு காரணமுமின்றி இந்தப் பெரும் துன்பம் நேர்ந்ததைப் பார்த்தால், இந்த இக்ஷ்வாகு குலத்திற்கு பூர்வஜன்மங்களில் செய்த மஹா பாபத்தால் நாசமடையும் காலம் ஸமீபித்ததென்று எனக்கு நிச்சயமாகத்

தோன்றுகிறது. ஸுமந்திர! நான் உனக்கு இதுவரையில் ஏதாவது உபகாரம் செய்திருந்தால் அதற்குப்பதிலாக என்னை இப்பொழுது ராமன் இருக்குமிடத்திற்குச் சீக்கிரமாகக் கொண்டுபோய் விடு. என் பிராணன் வெளியில் போகக் கிளம்பிவிடும்போலிருக்கிறது. நான் இவ்வளவு கஷ்டத்தை அடைந்து, என் அதிகாரம் செல்வது உண்மையானால், என்னை ரதத்தில் ஏற்றிக்கொண்டு ராமனிருக்குமிடத்திற்குச் சீக்கிரமாய்க் கொண்டுபோய் அவனைக் காட்டு. மல்லிகை மொட்டுகளைப்போன்ற பல்வரிசையுடைய அந்த மஹாவீரன் எங்கே? அவனைப் பார்க்கும் பாக்கியம் என்னைப்போன்ற மஹா பாபிக்குக் கிடைக்குமா? அவனையும் ஸீதையையும் ஒரு தடவை பார்த்தால் நிச்சயமாகப் பிழைப்பேன். சிவந்த கண்களையும், ரத்தின குண்டலங்கள் அணிந்த காதுகளையுமுடைய என் ராமனுடைய முகமண்டலத்தை நான் பார்க்காவிட்டால் திண்ணமாய் நான் யமலோகத்திற்கு செல்வேன். நான் இவ்வளவு கஷ்டப்படும் சமயத்திலும் இக்ஷ்வாகுகுல திலகனை ராமனைப் பாராமல் இருப்பதை விட பெருந் துக்கமென்ன? ஹா ராம! ஹா லக்ஷ்மண! ஜானகி! உங்களுக்கு என்ன கஷ்டம் நேர்ந்தது! நீங்களெல்லோரும் இருந்தும் அநாதையைப்போல் நான் உங்களைவிட்டுப் பிரிந்த துக்கத்தால் உயிரைவிடுவது உங்களுக்குத் தெரியவில்லையே" என்று உலையிலிட்ட மெழுகைப்போல் துக்கத்தால் தவித்தார். சோக ஸமுத்திரத்தில் ஆழ்ந்து, "ராமனை விட்டுப் பிரிந்த துக்கமே மஹாஸமுத்திரம்; ஸீதையைவிட்டுப் பிரிந்ததே அதற்குக் கரை; பெருமூச்சுவிடுவதே பெரும் சுழல்கள்; கண்ணீரே நுரை; கைகளை அங்குமிங்கும் புரட்டுவதே பெருமீன்கள்; அழுகையே அதின் ஓசை; அவிழ்ந்து கிடக்கும் தலைமயிரே பாசி; கைகேயியே வடவாக்னி; என் கண்ணீரால் விருத்தியடைவது இக்கடல். மந்தரையின் மந்திரோபதேசமே பெரும் முதலை. குரூரமான கைகேயிக்கு நான் கொடுத்த வரங்களே வரவரப் பெருகும் அலைகள்; ராமனைக் காட்டிற்கு அனுப்பினதே அதின் நீளம். இவ்விதமான சோக ஸமுத்திரத்தில் நான் மூழ்கி ராகவனில்லாமல் அதை எப்படித் தாண்டமுடியும்? ராமலக்ஷ்மணர்களை நான் பார்க்கவேண்டுமென்று எவ்வளவு வருந்தினாலும் பார்க்கக் கிடைக்கவில்லையே! இதைவிட துக்கம் வேறென்ன?" என்று கூறிப் பலவிதமாக பிரலாபித்துக்கொண்டு தசரதர் மூர்ச்சை அடைந்து ஆஸனத்தில் விழுந்தார். இப்படி ராமனைக் குறித்து முன்னைவிட மஹாதீனமாகக் கதறுவதைக்கேட்டு, முன்பு ராமனுக்கு என்னகஷ்டம் உண்டாகுமோ என்று பயந்த கௌஸல்யைக்கு அப்பொழுது தன் பர்த்தாவுக்கு என்ன விபத்து நேருமோ என்று பயமுண்டாயிற்று.

இதி விலபதி பார்தி2வே ப்ரநஷ்டே
கருணதரம் த்3விகு3ணம் ச ராமஹேதோ: |
வசந மநுநிசம்ய தஸ்ய தே3வீ
ப4ய மக3மத் புநரேவ ராமமாதா || (38)



## ஸர்க்கம் 60

# ஸுமந்திரர் கௌஸல்யையை ஸமாதானம் செய்தது

ததோ பூ‘தோபஸ்ருஷ்டேவ வேபமாநா புந: புந: |
த4ரண்யாம் க3தஸத்வேவ கௌஸல்யா ஸூத மப்3ரவீத் || (1)

கௌஸல்யை, பேய் பிடித்தவளைப்போல் தரையில் உட்கார்ந்து அடிக்கடி தேகம் நடுங்க, உயிரிழந்த பிராணியைப்போல் வாடி, "ஸுமந்திரரே! ரதத்தைத் திருப்பிச் சீக்கிரத்தில் ராமலக்ஷ்மணர்களும் ஸீதையும் இருக்கும் இடத்திற்கு என்னைக் கொண்டுபோய்விடும். அவர்களைவிட்டு ஒருக்ஷணம்கூட நான் பிழைத்திருக்க மாட்டேன். தண்டகாரண்யத்திற்கு என்னையும் கொண்டுபோய் விடும். அவர்களைப் பார்க்காவிட்டால் நான் யமலோகத்திற்குப் போவேன் என்பதில் ஸந்தேகமில்லை" என்று இப்படி பிரலாபிக்கும்பொழுது கண்ணீர் நெஞ்சையடைத்துப் பேசமுடியாமலிருந்தாள். அதைக் கண்டு ஸுமந்திரர் கைகூப்பி வணக்கமாக, "தேவி! ராமனை விட்டுப்பிரிந்ததாலுண்டாகும் சோகத்தையும் ராமனுக்கு என்ன கஷ்டம் நேருமோ என்ற எண்ணத்தையும் மனக்குழப்பத்தையும், 'ஐயோ! ராமன்என்ன கஷ்டப்படுவானோ' என்று நினைத்துத் தாங்கள் தவிப்பதையும் விடவேண்டும். தங்களுடைய புத்திரன் வருத்தமென்பதைக் கொஞ்சம்கூட அடையவில்லை. அயோத்யையில் இருப்பதைக் காட்டிலும் அதிக ஆனந்தத்துடன் காலம் கழித்துக்கொண்டிருக்கிறார். ஆகையால் தாங்கள் இப்படித் துக்கப்படுவது நியாயமல்ல. மஹானுபாவனான லக்ஷ்மணன் தர்ம ரஹஸ்யத்தை அறிந்தவன். ஆகையால் இந்திரியங்களை அடக்கிக்கொண்டு வெகு ஜாக்கிரதையுடன் ராமனுடைய திருவடிகளில் ஸகல கைங்கரியங்களையும்செய்து ஸமர்ப்பித்து உத்தம லோகங்களை ஸம்பாதிக்கிறான். ஜனஸஞ்சாரம் இல்லாத காட்டில் வஸித்தாலும் ஸீதை அயோத்யையில் தன் அந்தப்புரத்தில் இருப்பதுபோல், தன்மனம் பிராணன் யாவற்றையும் ராமனிடத்தில் வைத்துப் பயமின்றி ஸந்தோஷப்படுகிறாள். காட்டில் வஸிப்பதால் அவளுடைய மனதில் கிலேசம் கொஞ்சமாவது உண்டாகவில்லை. பிறந்ததுமுதல் காட்டில் வளர்ந்தவள்போலும் வனவாஸமே தனக்குத் தகுந்த பதவி போலும் நடக்கிறாள். அயோத்யையிலிருக்கும்பொழுது அழகிய தோட்டங்களுக்குப் போய் ராமனுடன் விநோதமாகக் கழித்ததுபோல், கோரமான ஜந்துக்களுள்ள காட்டிலும் ஸந்தோஷமாக ஸஞ்சரிக்கிறாள். பூர்ண சந்திரனைப் போன்ற அந்த ராஜகுமாரி தன் மனத்தையும் புத்தியையும் ஆத்மாவையும் ராமனிடத்தில் வைத்துச் சிறு குழந்தையைப்போல் முற்றிலும் கவலையற்று விளையாடுகிறாள். ஸீதையின் மனம் ராமனிடத்தில் லயித்திருக்கிறது. ஸீதையின் பிராணன்கள் ராமனிடத்தில் வேரூன்றி இருக்கின்றன. ராமன் இல்லாவிட்டால் அயோத்யா

நகரம் கோரமான வனத்தைப்போல் அவளுக்குத் தோன்றும். ராமன் தன்னுடன் இருந்தால் பயங்கரமான காடும் அயோத்யையைப்போல் அவளுக்குத் தோன்றும். போகும் வழியிலுள்ள கிராமங்களையும் நகரங்களையும் மரங்களையும் நதிகளின் ஓட்டங்களையும் பற்றின விஷயங்களை ராமனையாவது லக்ஷ்மணனையாவது கேட்டுத் தெரிந்து கொள்ளுகிறாள். இந்த வனவாஸம் அவளுக்கு அயோத்யைக்கு ஸமீபத்திலுள்ள ஒரு தோட்டத்தில் விளையாடுவதுபோலிருக்கிறது. கைகேயியைப் பற்றி அந்தக் குழந்தை ஒரு விநோதமான வார்த்தையைச் சொன்னாள்'' என்றார். உடனே, ''என்ன காரியம் செய்தேன்! அயோத்யையிலிருந்து புறப்பட்டுப் போகும்பொழுது ஸீதை கைகேயியைப்பற்றி வெகு கடுமையாகச் சொன்ன வார்த்தைகளை இப்பொழுது சொன்னால் கௌஸல்யைக்குப் பிரியமாயிருக்கும் என்று அஜ்ஞாக்கிரதையால் சொல்ல ஆரம்பித்துவிட்டேனே! ஆனால் வயது சென்ற இந்தச் சக்கரவர்த்தியும் இவருடைய பார்யையும் இதைக் கேட்டால் உயிரை விட்டாலும் விடுவார்களே. இதை எப்படியாவது மறைக்கவேண்டும்'' என்று ஆலோசித்துக்கொண்டு, ''அது வெகு சமத்காரமான வார்த்தை; சற்றுப் பொறுங்கள். ஞாபகம் செய்து கொள்ளுகிறேன். என்ன கஷ்டம்! மிகவும் வயதாயிற்றல்லவா. நீங்கள் துக்கப்படுவதைப் பார்த்து எனக்கும் அது மறந்துவிட்டது'' என்று அந்தப் பேச்சை மறைத்துக் கௌஸல்யையின் தாபத்தைப்போக்கி ஆனந்தத்தைக் கொடுக்கும்படி இனிமையான வார்த்தைகளைச்சொல்ல ஆரம்பித்தார். ''வழி நடப்பாலும் காற்றுமழை வெய்யிலாலும் துஷ்ட மிருகங்களைப் பார்ப்பதாலும் சந்திரகிரணங்களைப் போன்ற ஸீதையின் காந்தி கொஞ்சமேனும் மாறவில்லை. மலர்ந்த செந்தாமரை மலர், பூர்ண சந்திரன் இவைகளைப்போல் காந்தியையுடைய ஸீதையின் முகத்திலிருந்து அதற்கு இயற்கையான தேஜஸும் அழகும் ஒரு நிமிஷமாவது மாறாது. அவளுடைய வார்த்தையின் இனிமையை என்ன சொல்வேன்! செம்பஞ்சின் ரஸத்தால் இதுவரையில் அலங்கரிக்கப்பட்ட பாதங்கள் இப்பொழுது அது இல்லாவிட்டாலும், காட்டில் மேடு பள்ளங்களில் நடக்கும்பொழுதும் தாமரை மொட்டுக்களைப்போல் மிகுந்த காந்தி பொருந்தியிருக்கின்றன. ஆபரணங்களை அணிந்து கொள்வதில் அவளுக்கு மிகுந்த ஆசை. ஆகையால் எவ்விடத்திலும் எந்த ஸமயத்திலும் அவைகளைத் தரித்துக்கொண்டேயிருப்பாள். பாதச் சிலம்புகள் மதுரமாக ஒலிப்பதற்கு ஒத்து ஒய்யாரமாகவே நடக்கிறாள். யானையையாவது, ஸிம்ஹத்தையாவது, புலியையாவது இன்னும் மற்ற துஷ்ட மிருகங்களையாவது கண்டால் ராமனுடைய கையைப் பிடித்துக்கொண்டு போவதால் கொஞ்சமேனும் அவள் பயமடையவில்லை. நீங்கள் அவர்களைப்பற்றி வருத்தப்பட நியாயமே இல்லை. ராமன் பிதிருவாக்ய பரிபாலனம்செய்த இந்தச் சரித்திரம் ஸூரிய சந்திரர்கள் உள்ளவரையில் லோகத்தில் வழங்கும். அவர்



கள் கொஞ்சமும் வருத்தமில்லாமல் ஆனந்தமாக மஹரிஷிகள் அனுஷ்டித்த மார்க்கத்தில் மனத்தைச் செலுத்தி, காட்டில் கிடைக்கும் பழங்களையும் கிழங்குகளையும் சாப்பிட்டு, குதூகலத்துடன் சக்கரவர்த்தியின் பிரதிக்ஞையை நிறைவேற்றிக் கொண்டிருக்கிறார்கள்'' என்று சொல்லி ஸுமந்திரர் பல காரணங்களை எடுத்துக் காட்டினாலும், கௌஸல்யை துக்கம் தணியாமல் ''ஹா ராம! என் அருமைக் குழந்தாய்! ஹா ரகுகுலதிலகா!'' என்று கூறிப் புலம்புவதை நிறுத்தவில்லை.

ததா2பி ஸூதேந ஸுயுக்த வாதி3நா
நிவார்யமாணா ஸுதசோக கர்ஷிதா |
ந சைவ தே3வீ விரராம கூஜிதாத்
ப்ரியேதி புத்ரேதி ச ராக4வேதி ச ‖ (23)

## ஸர்க்கம் 61

## கௌஸல்யை தசரதரிடத்தில் கோபித்தது

வநம் க3தே த4ர்ம பரே ராமே ரமயதாம் வரே |
கௌஸல்யா ருத3தீ ஸ்வார்தா ப4ர்தார மித3மப்3ரவீத் ‖ (1)

தர்மாத்மாவும் ஸகலப் பிராணிகளுக்கும் ஆனந்தத்தை உண்டாக்குகிறவருமான ராமன் காட்டிற்குப் போனபிறகு கௌஸல்யை துக்கம் தாங்காமல், ''நாத! மிகுந்த கருணையுள்ளவர், எல்லாரிடத்திலும் பிரியமாகப் பேசுகிறவர் என்று மூன்று லோகத்திலும் நீர் கீர்த்தி பெற்றிருந்தாலும், உமது புத்திரர்களும்ஸீதையும் ஸுகமாக வளர்க்கப்பட்டு இப்பொழுது கோரமான காட்டில் எப்படி கஷ்டத்தைப் பொறுப்பார்கள்? இந்த அபகீர்த்தியைக் கொடுக்கும் காரியத்தை ஏன் செய்தீர்? கிழ வயதில் எண்ணிறந்த விரதங்களையும், உபவாஸங்களையும் அனுஷ்டித்துப் பெற்ற லோகோத்தமனான மூத்த புத்திரனை, அபிஷேகமாகும் ஸமயத்தில் காட்டிற்கு அனுப்பியாவது தன் பிரதிக்ஞையை நிறைவேற்றினார் என்ற அபார கீர்த்தி மூன்று லோகங்களிலும் பரவியிருக்கட்டும்; ராமன் கருணாநிதி; எவனுக்கும் வருத்தத்தைக் கொடுக்கும் வார்த்தையைச் சொல்ல மாட்டான். 'எனக்கு பிரஜைகளுக்கெதிரில் கொடுக்கப்பட்ட ராஜ்யத்தை விடமாட்டேன்' என்று சொல்லாமல், நீர் கேட்டவுடன் ராஜ்யத்தைக் கொடுத்துவிட்டானென்ற மிகுந்த கீர்த்தியும் அவனுக்குக் கிடைக்கட்டும். ஆனால் எனக்கு என்ன கதி? என் பிள்ளையைப் பறிகொடுத்துவிட்டு நான் எப்படிப் பொறுப்பேன்? ஸீதைக்கு யௌவனம் இப்பொழுதுதான் ஆரம்பித்திருக்கிறது; செல்வமாக வளர்க்கப்பட்டவள்; ஸுகங்களை அனுபவிக்கத் தகுந்தவள்; காட்டில் குளிர், வெயில், காற்று, மழை இவைகளை எப்படிப் பொறுப்பாள்? இதுவரையில் விசித்திரமான அன்னங்களையும், பக்ஷ்யங்

களையும், மற்றப் பதார்த்தங்களையும், சமையலில் நிபுணர்கள் ஜாக்கிரதையாகப் பக்குவம் செய்து பரிமாரப் புசித்து வழக்கப்பட்டிருக்கும் அந்த ராஜபுத்திரி, காட்டில் கிடைக்கும் பொருள்களால்எப்படித் தேகத்தைப் போஷிப்பாள்? மதுரமான வாத்தியங்களாலும் பாட்டாலும் எழுப்பப்படும் வழக்கமுள்ள அந்த ராஜகன்யை, ஸிம்ஹம், யானை, புலி முதலிய குரூர மிருகங்களின் கோரமான சப்தங்கள் நான்கு புறத்திலும் காதைத் துளைக்க எப்படித் தூங்குவாள்? இந்திர வில்லைப் போன்றவனும், முழங்கால் வரையில் நீண்ட கைகளுள்ளவனும், மஹாபராக்கிரமசாலியுமான ராமன், இரும்புக் கட்டுகளுள்ள தடியைப்போல் கடினமான தன் கையைத் தலையணையாக வைத்துக்கொண்டு எங்கே தூங்குகிறானோ? தாமரை மலரைப்போல் பிரகாசித்துத் தாமரை இதழ்களைப்போன்ற நேத்திரங்களுடன் தாமரைப்பூவின் வாஸனையையுடைய சுவாஸத்தால் அலங்கரிக்கப்பட்டு, சுருண்டு கறுத்த தலைமயிர் நெற்றியில்விழும் அழகுவாய்ந்த அந்த முகமண்டலத்தைப் பார்ப்பது எப்பொழுதோ? அவனைக் காணாமல் இன்னும் உயிரை வைத்துக்கொண்டிருக்கும் என் ஹிருதயம் ஆயிரம் துண்டுகளாகப் பிளக்காததைப் பார்த்தால் வஜ்ராயுதத்தால் செய்யப்பட்டதென்றே நிச்சயமாகத் தோன்றுகிறது. என்னைச் சேர்ந்தவர்களை நீர் நகரத்திலிருந்து துரத்திக் காட்டிற்கு ஓடும்படி செய்ததைப் பார்த்தால் இதைவிட குரூரமான காரியம் வேறொன்றிருப்பதாகத் தெரியவில்லை.

"பதினான்கு வருஷங்களுக்குப் பிறகு ராமன் அயோத்யைக்குத் திரும்பிவரும்பொழுது பரதனுக்கு ராஜ்யம் போய்விடுமோ என்று கவலைப்படவேண்டாம். பரதன், தான் அனுபவித்த ராஜ்யத்தை திருப்பிக்கொடுத்தாலும் ராமன் வாங்குவானா? லோகத்தில் சிலர் பிதிருக்களுக்கு சிரார்த்தம் செய்ய உத்தேசித்து பிராம்மணர்களை அதற்கு வரிக்கும்பொழுது, வித்தையாலும் வயதாலும் குணத்தாலும் சிரேஷ்டமான பிராம்மணர்கள் ஸுலபமாகக் கிடைத்தாலும் அவர்களை ஒதுக்கிவிட்டு, தங்களைச் சேர்ந்தவர்களுக்கே தக்ஷிணை முதலிய விசேஷப் பிரயோஜனங்கள் கிடைக்கவேண்டுமென்று, அவர்களையே பிராம்மணர்களாக வரிக்கிறார்கள். சிராத்தம் முடிந்த பிறகு முன்சொன்ன பிராம்மண சிரேஷ்டர்களை இஷ்டபந்தியில் உண்ண அழைக்கிறார்கள். அந்த அன்னம் அமிருதத்திற்கு நிகரானாலும் அவர்கள் அங்கே போக நினைப்பார்களா? 'பிராம்மணர்கள் புஜித்த சேஷந்தானே; விலக்கப்பட்டதல்லவே' என்றால், அந்தப் புத்திமான்கள் வேண்டுமென்று தங்களுக்குச் செய்த அவமானத்தைப் பொறுக்கவே மாட்டார்கள். உத்தம ஜாதியில் பிறந்த ரிஷபம் வேறொன்று தின்று மிகுந்த புல்லைத் தின்ன ஸம்மதிக்குமா? அப்படி மூத்தபுத்திரனும் குணங்களால் மேலானவனுமான' ராமன், தான் ஆளவேண்டிய ராஜ்யத்தைத் தனக்கு இளையவன் பல வருஷங்கள்வரையில் ஆண்டு, பிறகு தன்னிடத்தில் ஒப்புவித்தால், பெற்றுக்கொள்வானா? பூமண்டல சக்கரவர்த்தியான உமக்கு இந்த நியாயம் தெரியாதா? செந்நாய் நரி முதலிய அல்ப ஜந்துக்கள் கொன்று தின்ற மாம்ஸத்தின் மிகுதியைப் புலி கண்ணெடுத்துப் பார்க்குமா? அப்படிப் பிறரால் அனுபவிக்கப்பட்ட ராஜ்யத்தை ராமன் மனத்தாலும் நினைப்பானா? சரு முதலிய ஹவிஸ்களும் புரோடாசமும் குசமென்ற புல்லும் யூபஸ்தம்பங்களும் ஒருதடவை உபயோகித்த பிறகு யாகத்திற்குப் பயன்படாது. ஸுராபானத்தின் ஸாரமான பாகத்தை ஒருவன் குடித்துவிட்டு மிகுதியைக் கொடுத்தால் எவரும் வாங்க மாட்டார்கள். அப்படி யாகத்தில் ஒருவன் ஸோமபானத்தைச் செய்துவிட்டு அந்த யாகத்தை நிறைவேற்றும்படிப் பிறர்க்குக் கொடுத்தால் அவர்கள் அதனை ஏற்கமாட்டார்கள். அப்படிப் பரதனால் அடையப்பட்ட இந்தராஜ்யத்தை ராமன் அனுபவிக்க விரும்பமாட்டான். மஹா பலமுள்ள புலி தன்வாலை மற்றொரு புலி தொட்டாலும் ஸஹிக்காது. அப்படி ராமன் இந்த அவமானத்தைப் பொறுக்கமாட்டான்.

'நான் என்ன செய்வேன்? ராமன் பலசாலியாக இருந்தால் ராஜ்யத்தைப் பிறர் கைப்பற்ற விடுவானா? கையாலாகாதவன்; பயந்து ஓடிப்போய்விட்டான்' என்கிறீரோ? அப்படியல்ல. இந்தப் பதினான்கு லோகங்களிலுமுள்ள ஜீவகோடிகள் யாவும் ஒன்றுசேர்ந்து ராமனை யுத்தத்தில் எதிர்த்தாலும் அவனைக் கண்ணெடுத்துப் பார்க்க முடியுமா? ஆனால் ராஜ்யத்தைக் கைவிட்டு ஏன் ஓடிப்போனான் என்றால், தன் நடத்தையாலும் கட்டளையாலும் உபதேசத்தாலும் லோகத்திலுள்ளவர்களை ஸரியாகத் தர்மானுஷ்டானம் செய்யும்படி நடத்துகிறவன் அவன். தான் செய்த பிரதிக்ஞையை மீறி இந்த ராஜ்யத்தைப் பலத்தால் கைப்பற்ற நினைப்பானா? ராமனோ மஹாசூரன், மஹா பராக்கிரமசாலி; தங்கக் கட்டுகளால் அலங்கரிக்கப்பட்ட பாணங்களை எய்தால் ஏழு ஸமுத்திரங்களையும் எட்டு குலபர்வதங்களையும் மஹாநதிகளையும் இந்தப் பிரபஞ்சத்தையுமே எரிக்க மாட்டானா? கொழுத்த ஸிம்ஹங்களின் பலத்தையுடையவன்; விருஷபத்தின் கண்களைப்போன்ற நேத்திரங்களையுடையவன்; புருஷசிரேஷ்டன்; அவனுடைய பராக்கிரமத்தை மனத்தால் நினைக்கவும் முடியாது; வார்த்தைகளால் வர்ணிக்கவும் முடியாது.

மீன் தன் குஞ்சுகளைத் தின்கிறதுபோல் உமது மூத்தபுத்திரனை அந்த மஹாவீரனைக் கொன்றுவிட்டீரே! தர்மத்திலிருந்து நழுவாத உமது புத்திரனைக் காட்டிற்கனுப்பினது, நான்கு வர்ணத்தார்களால் அனுஷ்டிக்கப்படும் தர்மமாகவும் சாஸ்திரத்திற்கு ஒத்ததாகவும் புராதனமாகவும் இருந்தால் எவரும் ஆக்ஷேபிக்கமாட்டார்கள். ஆனால் எந்த தர்மமார்க்கத்தையும் சேர்ந்ததாகத் தோன்றவில்லையே!

ஸ்த்ரீகளுக்குக் கதி பர்த்தாவே; அவன் இல்லாவிட்டால் கதி புத்திரனே; அவனும் இல்லாவிட்டால் தகப்பன் முதலிய பந்துக்களே கதி. இவர்களைத் தவிர வேறு கதி ஏற்படவில்லை. பால்யத்தில் தகப்பன் ரக்ஷிக்கவேண்டும்; யௌவனத்தில் கணவன் ரக்ஷிக்க வேண்டும்; கிழவயதில் புத்திரன் ரக்ஷிக்கவேண்டும்; ஸ்த்ரீகள் பிறர்க்கு அடங்கியிராமல் ஒருக்காலும் ஸ்வதந்திரமாக நடக்கமுடியாதென்று சாஸ்திரம் விதிக்கிறதல்லவா? இப்பொழுது நீரோ என் சக்களத்தியான கைகேயிக்கு வசப்பட்டிருக்கிறீர்; ஆகையால் நான் உம்மை இழந்ததுபோலாயிற்று. என் குழந்தையோ உம்மால் காட்டிற்குத் துரத்தப்பட்டான்; அவனையும் இழந்ததுபோலாயிற்று. என் பந்துக்களோ வெகு தூரத்திலிருக்கிறார்கள்; கணவன் உயிரோடிருக்கும்பொழுது அங்கே எப்படிப் போகலாம்? ஆகையால் எவ்விதத்திலும் என்னைக் கெடுத்துக் கதியில்லாமல் செய்துவிட்டீர். நான்மாத்திரம் கெட்டாலும் பாதகமில்லை. இந்தக் கோஸல ராஜ்யத்தையும் நாசம் செய்தீர்; உம்மைச் சேர்ந்தவர்கள் ஆளும் ராஜ்யங்களையும் நாசம் செய்தீர்; என்னையும் என் மகனையும் நாசம்செய்தீர்; உம்மையும் நாசம் செய்துகொண்டீர்; உமது மந்திரிகளையும் நாசம் செய்தீர்; இந்த நகரத்து ஜனங்களையும் நாசம் செய்தீர். இந்த மஹாபாபத்தைச் செய்து நீர் அடைந்த பிரயோஜனம் என்ன? யாருக்குத் திருப்தி? உமது பிரியநாயகியான கைகேயிக்கும் உமது செல்வக் குழந்தையான பரதனுக்கும் மனம் குளிர்ந்ததல்லவா? அவர்கள் ஸந்தோஷப்பட்டால் அதே போதும்; யார் எப்படிப்போனால் உமக்கென்ன?" என்று வெகு குரூரமான வார்த்தைகளால் கணவனைக் கண்டிக்கும்பொழுது தசரதர் அதைப் பொறுக்கமுடியாமல் மூர்ச்சை அடைந்தார். அப்பொழுது "இவ்வளவு துக்கத்தை அனுபவிக்க நான் என்ன பாபம் செய்தேன்" என்று நினைத்தார்.

இமாம் கி3ரம் தா3ருண ஶப்3த3 ஸம்ஶ்ரிதாம்
நிஶம்ய ராஜாபி முமோஹ து3க்கி2த: |
தத: ஸ ஶோகம் ப்ரவிவேஶ பார்த்தி2வ:
ஸ்வது3ஷ்க்ருதம் சாபி புநஸ்தத3ா ஸ்மரந் ‖ (27)

## ஸர்க்கம் 62

## கௌஸல்யையின் பச்சாத்தாபம்

ஏவம் து க்ருத்3த4யா ராஜா ராமமாத்ரா ஸஶோகயா |
ஶ்ராவித: பருஷம் வாக்யம் சிந்தயாமாஸ து3க்கி2த: ‖ (1)

ராமனுடைய தாயான கௌஸல்யை இப்படி வருத்தத்துடனும் கோபத்துடனும் கடுமையான வார்த்தைகளைச் சொல்வதைக் கேட்டுத் தசரதர், "இவள் சொல்வதில் பிசகில்லை. நான் கைகேயியின் வார்த்தையைக் கேட்டு இதுவரையில் ஒருவரும் செய்திராத அக்கிரமத்தைச் செய்துவிட்டேன். இனி என்ன செய்வேன்" என்று கவலைகொண்டு துக்கம் மேலிட்டு இந்திரியஸ்வாதீனமில்லாமல் மூர்ச்சையடைந்தார். வெகு நேரம் கழித்து பிரக்ஞை தெளிந்து பெருமூச்சு விட்டுக்கொண்டு, கௌஸல்யை பக்கத்திலிருப்பதைப் பார்த்து, "புண்யபாபங்கள் மிகவும் கடுமையாகச் செய்யப்பட்டால் அவைகளின் பயனை இந்த ஜன்மத்திலேயே அனுபவிக்கிறோம் என்ற நியாயத்தால், எனக்குப் பிரியமான புத்திரனை விட்டுப் பிரிந்து மஹாதுக்கத்தை அனுபவிக்கிறேன். முன் ஜன்மங்களில் இதற்குக் காரணமாக நான் செய்திருக்கக்கூடிய பாபமென்ன?' என்று மறுபடியும் ஆலோசித்தார். அப்பொழுது தான் முன்பு அஜ்ஞானத்தால் ஒரு முனி குமாரனை சப்தவேதி என்ற பாணத்தால் கொன்றது ஞாபகத்திற்கு வர, அந்தத் துக்கமும் ராமனை விட்டுப் பிரிந்த துக்கமும் சேர்ந்து ஒரே காலத்தில் தாக்கி அவரை மறுபடியும் மூர்ச்சை அடைவித்தது.

பிறகு பயத்தால் நடுங்கி வெட்கத்தால் தலைகுனிந்து வணக்கமாகக் கைகூப்பி, "கௌஸல்யே! இதோ பார். கைகூப்பி உன்னை வேண்டுகிறேன். தயவு செய். உனக்குக் கெடுதி செய்தவர்களிடத்திலும் துவேஷம் வைக்காமல் பிரியமாக இருப்பது உன் ஸ்வபாவமல்லவா? பதிவிரதாதர்மத்தை அனுஷ்டிக்க விரும்பும் பெண்களுக்குப் பர்த்தா குணவானானாலும் இல்லாவிட்டாலும் அவனே பிரத்யக்ஷமான தெய்வம். உன் மனம் எப்பொழுதும் தர்மத்தை நாடியிருக்கும். லோகத்தில் ஜனங்களுக்குள்ள ஏற்றத் தாழ்வுகள் உனக்குத் தெரியாததல்லவே? எனக்கோ மஹா கஷ்டம் நேர்ந்திருக்கிறது. புத்திரசோகத்தால் தவித்துக்கொண்டிருக்கும் என்னைப் பார்த்து இப்படிக் கேவலமான வார்த்தைகளைச் சொல்வது உனக்கே தகுமா?" என்று அரசன் தீனமாக, கேட்பவர்களின் மனம் உருகும்படி கெஞ்சுவதைக் கேட்டு, மழைக் காலத்தில் கோமுகத்திலிருந்து மழை ஜலம் பொழிவதுபோல், கௌஸல்யையின் கண்களிலிருந்து தாரை தாரையாக நீர் பெருகிற்று.

தசரதரின் கூப்பிக்கொண்டிருந்த கைகளைப் பிடித்துத் தன் தலைமேல் வைத்துக்கொண்டு கோவென்று கதறி, "கோபத்தால் என்ன பாபம் செய்துவிட்டேன்" என்று பயந்து, வெகு பரபரப்புடன் "நாத! பூமியில் விழுந்து தங்களை ஸாஷ்டாங்கமாக அடிபணிகிறேன். நான் செய்த அபராதத்தை மன்னித்து என்னிடத்தில் தயை வைக்கவேண்டும். தாங்கள் என்னைக் கைகூப்பி பிரார்த்தித்த க்ஷணத்திலேயே நான் அழிந்தேன். இவ்விதமான வார்த்தைகளையும் சொல்லி என்னை மறுபடியும் கொல்லவேண்டுமா? மஹா புத்திமானும் எல்லோராலும் கொண்டாடப்படுபவருமான தன் பர்த்தாவால் கைகூப்பி வேண்டப்படும் பெண் இவ்வுலகத்திலும் பர

லோகத்திலும் தன் நாசத்தைத் தேடிக்கொள்ளுகிறாள். நான் தர்மம் தெரியாதவளல்ல. தாங்கள் தர்மத்தை அறிந்தவர்களென்றும் ஸத்தியம் தவறாதவர்களென்றும் எனக்குத் தெரியாதா? புத்திர சோகத்தால் புத்திஸ்வாதீனமின்றி ஏதோ பிதற்றினேன். அதை மன்னிக்க வேண்டும். சோகம் நமது தைரியத்தைக் கொள்ளை கொள்ளுகிறது; நாம் கற்றதும் கேட்டதும் சோகத்தால் வீணாகிறது சோகம் யாவற்றையும் கெடுக்கிறது; அதைப்போன்ற பரமசத்துரு நமக்கில்லை. நமது சத்துரு திடீரென்று நம்மை அடித்தால் அதைப் பொறுக்கலாம்; ஆனால் திடீரென்று நமக்குச் சோகம் நேர்ந்தால் அல்பமாக இருந்தாலும் அதைப் பொறுக்கமுடியாது. ஸந்தோஷ மற்று சோகம் மேலிட்ட எனக்கு ராமன் காட்டிற்குப் போய் இது ஐந்தாவது நாள். ஐந்து வருஷங்களைப்போல் தோன்றுகிறது. அதையே நினைத்து நினைத்து என் துக்கம் பொங்குகிறது. ஆறுகள் ஸமுத்திரத்தில் விழ விழ அது பொங்குவதைப் பார்த்ததில்லையா" என்று கௌஸல்யை சொல்லிக்கொண்டிருக்கையில் ஸூரியன் அஸ்தமித்தான்; ராத்திரியும் ஆரம்பித்தது. அவளுடைய வார்த்தைகளால் தசரதர் சற்று ஆறுதலடைந்து துக்கத்தின் வேகத்தைத் தாங்காமல் அயர்ந்து தூங்கிவிட்டார்.

அத2 ப்ரஸாதி3தோ வாக்யை: தே3வ்யா கௌஸல்யயா ந்ருப: |
ஶோகேந ச ஸமாக்ராந்தோ நித்3ராயா வஶமேயிவாந் || (20)

---

## ஸர்க்கம் 63

## தசரதர் முன் செய்த பாபம்

ப்ரதி பு3த்3தே4ா முஹூர்தேந ஶோகோபஹத சேதந: |
அத2 ராஜா த3ஶரத2: ஸ சிந்தா மப்4யபத்3யத || (1)

பிறகு ஒரு முகூர்த்தத்திற்குள் தசரதர் விழித்துக்கொண்டு அதே ஞாபகமாகத் துக்கத்தால் ஏங்கி இருந்தார். தேவேந்திரனைப் போன்ற ராமனையும் லக்ஷ்மணனையும் காட்டிற்கனுப்பியது முதல் ஸூரியனை ராகு பிடித்துக்கொண்டதுபோல் புத்திர சோகம் அவரைப் பிடித்துக்கொண்டது. ராமன் அந்த நகரத்தை விட்டுப்போன ஆறாவது நாள் நடுராத்திரியில், தான் முன்பு செய்த பாபத்தை ஞாபகப்படுத்திக்கொண்டு அதைக் கௌஸல்யைக்குச் சொல்ல நினைத்து, "கௌஸல்யே! இப்பொழுது உனக்கு என்னிடத்தில் கோபம் சற்று தணிந்திருப்பதாகத் தெரிகிறது. ஆகையால் இதைச் சொல்லத் துணிந்தேன். இந்த லோகத்தில் ஒருவன் பிறர்க்குச் செய்யும் நன்மையும் தீமையும் தவறாமல் அவனுக்குப் பயனைக் கொடுக்கின்றது. கர்மங்களை ஆரம்பிக்கையில் அவைகளின் பயன் சிறியதா பெரியதா என்றும், அவை கைகூடுமா தவறுமா என்றும் தெரிந்துகொள்ளாதவன் புத்தியற்றவன். மிகுந்த சிரமத்தால் அல்ப



பயனை யடைகிறவனும், பயனற்ற செயலைச் செய்கிறவனும் புத்தியற்றவர்கள். ஸ்வல்ப சிரமத்துடன் மிகுந்த பயனை அடைகிறவனும், பயன்பெறும் செய்கையையே செய்கிறவனும் புத்திமான்கள். கைகேயியைத் திருப்திசெய்வதென்ற அல்ப பயனை அடைய விரும்பி, ராமனைக் காட்டிற்கனுப்புவதென்ற மஹா பாபத்தைச் செய்து புத்திரசோகத்தால் தவிக்கிறேன். என்னைப்போன்ற மூடன் ஒருவனுமில்லை. ஒருவனுடைய தோட்டத்தில் ஒரு பலாசமரமும் அதைச் சுற்றிப் பல தேன்மாமரங்களும் இருந்தன. மலரும் காலத்தில் பலாசமரம் இலை தெரியாமல் அழகான புஷ்பங்களால் மறைந்திருந்தது. மாமரங்களின் மலர்களோ அழகிய நிறமுடையவை அல்ல. அதைப் பார்த்து அந்தப் புத்திமான் 'இவ்வளவு அழகான புஷ்பங்களால் மறைந்திருக்கும் மரம் பழுக்கும் காலத்தில் இன்னும் அழகான பழங்களால் நிறைந்திருக்குமல்லவா? இந்த மாமரங்களின் மலர்களுக்குத் தகுந்தபடியே பழங்களும் ருசியற்றிருக்கும். ஆகையால் இந்தப் பலாசமரத்தின் அழகைக் குறைக்கும் மாமரங்களை வளர்ப்பதில் என்னப்பிரயோஜனம்' என்று அவைகளை வெட்டி எறிந்துவிட்டு, அந்தப் பலாசமரத்தை வெகு ஜாக்கிரதையாக எருப்போட்டு ஜலம் ஊற்றி வளர்த்து வந்தான். பழுக்கும் காலம் வந்தவுடன் பலாசமரத்தில் புஷ்பங்களெல்லாம் உதிர்ந்து உபயோகமற்ற பழங்கள் மாத்திரம் நிறைந்திருந்தன. அயலானுடைய தோட்டத்திலோ மாமரங்கள் அமிருதத்தைப்போல் ருசியுள்ள பழங்களால் நிறைந்திருந்தன. அப்பொழுது அந்த மூடனுக்கு துக்கம் எவ்வளவு இருந்திருக்கும் எனச்சொல்ல முடியுமா? கர்மங்களின் பயன்களை அறியாமல் ஒருவன் ஆரம்பித்தால், பலாசமரத்தை ஜலம் ஊற்றி வளர்த்த முட்டாளைப்போல் வருத்தப்படுவான். நான் மாமரங்களை வெட்டி எறிந்து பலாசமரத்திற்கு ஜலம் வார்த்தவன்; ராமனைப் பிறந்தது முதல் வளர்த்துவந்து பயனடையும் காலத்தில் காட்டிற்குத் துரத்திவிட்டேன். இப்பொழுது வருத்தப்படுகிறேன். என்னைப்போன்ற புத்திசாலி உண்டா? ராமனுடைய அபிஷேகத்தைத் தடுத்து அவனைக் காட்டிற்கனுப்பி கைகேயியின் பிரியத்தைப் பெற முயன்றேன்.

நான் பால்யத்தில் சப்தவேதனமென்ற வித்யையில் திறமையடைந்தேன். (சப்தவேதனம்: மிருகங்கள் மறைந்திருந்தாலும் அவைகளின் சப்தத்தைக் குறியாக வைத்துப் பாணத்தால் அடிக்கும் வித்யை). எல்லோரும் என்னைக் கொண்டாடினதால் மிகவும் கர்வமடைந்து மஹாபாபத்தைச் செய்தேன். ஒரு குழந்தை அறியாமையால் விஷத்தைக் குடித்துக் கஷ்டப்படுவதுபோல் நான் அந்தப் பாபத்தின் பயனை இப்பொழுது அனுபவிக்கலாயிற்று. ஒருவனுடைய பாபபுண்யங்கள் மறுபிறப்புகளிலாவது வேறுலோகங்களிலாவது பயனைக்கொடுக்கும். என் பாபமோ மஹா கோரமானது. இப்பொழுதே பலித்துவிட்டது. லோகத்தில் புத்தியற்றவன் பலாசமலர்

களின் அழகைப் பார்த்து பிரமித்து அவைகளின் பழங்களும் அப்படியே இருக்குமென்று நம்புவதுபோல், நான் சப்தவேதன மென்ற பாணத்தைப் பெற்று, அதனுல் அடையும் கீர்த்தியால் பிரமித்துப் பிற்காலத்தில் எனக்கு நேரும் பாதகத்தையும் துக்கத்தையும் அபகீர்த்தியையும் அறியாமற்போனேன்.

உன்னை விவாஹம் செய்வதற்குமுன் நான் யுவராஜாவாக இருக்கும்பொழுது ஒரு மழைகாலம் வந்தது. அப்பொழுது ஜனங்களுக்கு மதமும் ஆசையும் வளரும். ஸூரியன் பூமியிலுள்ள ரஸங்களைக் குடித்து ஜலத்தைத் தன் கிரணங்களால் எரித்துவிட்டுத் தெற்கே சென்ருன். பிறகு உஷ்ணம் இருந்த இடமே தெரியாமற் போயிற்று. கறுத்த மேகங்கள் வெளிப்பட்டன. தவளைகளும் சாதக பக்ஷிகளும் அதைக் கண்டு மகிழ்ந்தன. பக்ஷிகள் மழையால் நனைந்து ஸ்நானம் செய்தனபோல் மழைக்காற்ருல் கஷ்டப்பட்டு மழைத் துளிகள் நிறைந்த மரத்தின் நுனிகளில் மெள்ள மெள்ளப் போய் உட்கார்ந்தன. அதுவரையிலும் பெய்த மழையாலும் இன்னும் பெய்துகொண்டிருக்கும் மழையாலும் மதயானைகள் வஸிக்கும் மலைகள் மறைக்கப்பட்டு, அசைவற்று அலை ஓய்ந்த கடலைப்போல் காணப்பட்டன. மலையருவிகள் முதலில் கொஞ்சதூரம்வரையில் தெளிந்து ஓடி, வெளுத்ததும் சிவந்ததுமான தாதுக்களையுடைய பூமியின்மேல் போகும்பொழுது வெளுத்தும் சிவந்தும், காட்டுத்தீயின் சாம்பலுடனும் பல நிறமுள்ள ஸர்ப்பங்களைப் போல் ஓடின. அக்காலத்தில் நான் வேட்டையாட நிச்சயித்து, ஆயுதபாணியாய் ரதத்தில் ஸரயூ நதியின் கரைவழியாகப் போனேன். ராத்திரியில் காட்டெருமையாவது யானையாவது வேறு மிருகமாவது நீர் குடிக்க வரும்பொழுது அவைகளைக் கொல்லலாமென்று வெகு ஜாக்கிரதையுடன் காத்துக்கொண்டிருக்கையில், யானை நீர் குடிக்கும்பொழுது செய்யும் சப்தத்தைப்போல் ஓரிடத்திலிருந்து ஒரு சப்தமுண்டாயிற்று. மையிருட்டாக இருந்ததால் ஒன்றும் தெரியவில்லை. உண்மையாக அது குடத்தில் ஜலம் மெள்ளும்பொழுது உண்டாகும் சப்தம். நான் அதைக் கேட்டு ஏதோ ஒரு யானை நீர்குடித்துக்கொண்டிருக்கிறதென்று நினைத்து அந்த பிராணியிருக்குமிடத்தைக் குறிவைத்துக் காலஸர்ப்பத்தைப்போன்ற ஒரு பாணத்தை எய்தேன். அப்பொழுது விடியற்காலம். பாணத்தால் உயிர்நிலையில் அடிபட்டு "ஐயோ, செத்தேனே" என்று அலறிக்கொண்டு ஒரு தபஸ்வி கீழே விழுந்த சப்தம் அங்கிருந்து உடனே உண்டாயிற்று.

"ஐயோ! நான் ஒரு தபஸ்வி; எவருக்கும் கெடுதி செய்ததில்லை; எனக்குச் சத்துருவே கிடையாது. ராத்திரியில் இந்த வேளையில் இங்கே ஜனஸஞ்சாரம் இருக்காதென்று ஜலமெடுக்க வந்தேன். பாணத்தால் என்னை அடித்தவன் யார்? யாருக்கு என்ன கெடுதி செய்தேன்? மனோவாக்குக் காயங்களால் பிறர்க்கு எவ்விதமான உபத்திரவத்தையும் செய்வதை ஒழித்து, இந்த வனத்தில்



பழங்களையும் கிழங்குகளையும் தின்று, தவம் செய்யும் ரிஷி நான். இப்படி ஆயுதத்தால் அடிபட்டு மரணமடையக் காரணமென்ன? மான் தோல், மரவுரி ஜடைகளைத் தரித்துக்கொண்டிருக்கும் என்னைக் கொன்று யாருக்கு என்ன ஆகவேண்டியிருக்கிறது? நான் யாருக்கு என்ன அபகாரம் செய்தேன்? யாதொரு பயனும் இல்லாமல் கேவலம் கெடுதலையே உண்டுபண்ணும் இந்தப் பாபத்தை நல்லதென்று யாராவது ஒப்புக்கொள்வானே? குருபத்னியைக் கெடுத்தவனை யாராவது மெச்சுவானே? நான் இறப்பதைப்பற்றி எனக்கு வருத்தமே இல்லை. நான் இறந்தால் என் தாய்தந்தைகள் என்ன கதி அடைவார்களோ என்றல்லவா வருத்தப்படுகிறேன்? அவர்கள் மிகவும் வயது சென்றவர்கள்; வெகு காலமாக அவர்களைக் காப்பாற்றி வந்தேன்; நான் இறந்தால் அவர்கள் எப்படிப் பிழைப்பார்கள்? ஐயோ! அவர்களுக்கு நான் ஒரே புத்திரனுயிற்றே. எங்களெல்லோரையும் ஒரே பாணத்தால் கொல்ல முயன்ற பாபி யார்? கேவலம் மூடனும் நிச்சயபுத்தியில்லாதவனுமே இந்த அக்கிரமத்தைச் செய்திருக்கவேண்டும்" என்ற வார்த்தைகள் என் காதில் விழுந்தன.

தர்மத்திலிருந்து விலகக்கூடாதென்று நோக்கமுடையவன் நான். பரிதாபமான இந்த வார்த்தைகளைக் கேட்டவுடன் என் கையிலிருந்த வில்லும் பாணங்களும் நழுவி விழுந்தன. ராத்திரியில் இப்படிமனம் உருகும்படி பிரலாபிப்பதைக் கேட்டு வருத்தமும் பயமும் மேலிட்டன. புத்தி சிதறிற்று. இந்திரிய ஸ்வாதீனமில்லாமல் மெய் மறந்தேன். இந்தச் சப்தமுண்டான இடத்தைநோக்கித் தீனமான மனத்துடன் வருத்தப்பட்டுக்கொண்டே போனேன். அங்கே ஒரு தபஸ்வி பாணத்தால் அடிக்கப்பட்டு அந்த வேதனையைப் பொறுக்காமல் கையிலிருந்த சிறிய குடத்தைத் தொலைவில் எறிந்துவிட்டு ஜடையை விரித்துக்கொண்டு பூமியில் புரளக்கண்டேன். அவனுடைய தேகம் முழுவதும் ரத்தத்தால் பூசப்பட்டு, புழுதி படிந்திருந்தது. நான் பயந்து மனம் கலங்கி நிற்பதைப் பார்த்துத் தன் தேஜஸால் என்னை எரித்துவிடுவதுபோல் குரூரமான பார்வையால் என்னை நோக்கி, "அரசனே! காட்டில் தனியாக வஸித்துக்கொண்டிருக்கும் நான் உனக்கென்ன கெடுதி செய்தேன்? என் தாய்தந்தைகளுக்காக ஜலம் கொண்டுபோக வந்தவனை ஏன் அடித்தாய்? ஏதோ விளையாட்டாக ஒரு பாணத்தால் என்னைக் கொன்ருயே; ஆனுல், வயது சென்று கண் தெரியாமல் பலஹீனர்களான என் மாதா பிதாக்களையும் இதனுல் கொன்றுவிட்டாயென்று உனக்குத் தெரியுமா? நான் சீக்கிரத்தில் ஜலம் கொண்டு வருவேன் என்று எதிர்பார்த்துக் கொண்டிருப்பார்களே. கொடுமையான தாகத்தை அவர்கள் எவ்வளவு காலம்தான் பொறுத்துக் கொண்டிருப்பார்கள்? நான் சாஸ்திரங்களைக் கற்றும் பெரியோரிடத்தில் கேட்டும் கடுந்தவம் செய்தும் என்ன பயன்? இப்படிப் பூமியில் விழுந்து நான்

புரளுவது என் பிதாவிற்குத் தெரியவில்லையே. தெரிந்தாலும் என்ன செய்வார் ? பலமற்றவர்; நடக்க முடியாதவர். ஒரு மரம் காற்றுலடிபட்டு முறிக்கப்படும்பொழுது ஸமீபத்திலிருக்கும் மரம் அதைக் காப்பாற்ற முடியுமா? தசரத! நீயே சீக்கிரமாக என் பிதாவிடத்திற்குப் போய் எனக்கு நேர்ந்ததைச் சொல். இல்லாவிட்டால் காட்டுத்தீ வனங்களை எரிப்பதுபோல் உன்னைக் கோபத்தால் சாம்பலாக்குவார். அவருடைய ஆசிரமம் ஒற்றையடிப் பாதையின் முடிவில் இருக்கிறது. அவர் உன்னைச் சபிக்காதபடி பிரார்த்தித்து ஸமாதானம் செய். இந்தக் கூர்மையான அம்பு என் மர்மஸ்தானத்தில் பாய்ந்து, ஆற்றில் ஜலம் வேகமாக ஓடும்பொழுது சிறிய மணற் குன்றுகளை அறுப்பதுபோல், பொறுக்க முடியாத துன்பத்தை உண்டாக்குகிறது. இந்தப் பாணத்தைப் பிடுங்கி எறிந்துவிட்டுப் போ'' என்றார்.

பாணத்தைப் பிடுங்காமலிருந்தால் கஷ்டப்படுகிறார்; பிடுங்கினால் உயிர் போய்விடுமே; இவர் இறந்தால் எனக்கு ப்ரஹ்மஹத்யா தோஷம் நேருமே; என்ன செய்யலாமென்று பயந்து நான் வருத்தப்படுவதைக் கண்டார். தன் மரணம் நெருங்கிவிட்டதென்றறிந்து வெகு சிரமத்துடன் என்னைத் திரும்பிப் பார்த்து, “தசரத ! வீணாக வருத்தப்படாதே. தைரியத்தை வருவித்துக்கொண்டு துக்கத்தை அடக்கு. பிரம்மஹத்யா தோஷம் நேருமென்ற பயம் உனக்கு வேண்டாம். நான் பிராம்மணனென்று நினைத்து வருத்தப்படாதே. என் தாய் நான்காம் வர்ணத்தில் பிறந்தவள்; என் பிதா வைசியர்'' என்று சொல்லி, வேதனை பொறுக்காமல் பிரக்ஞையற்றுப் பூமியில் கிடந்து புரண்டுகொண்டிருந்தார். அப்பொழுது நான் அந்தப் பாணத்தைப் பிடுங்கி எறிந்தேன். உடனே என்னைப் பார்த்துப் பயந்து அவர் பிராணனை விட்டார். இப்படி மர்மஸ்தானத்தில் அடிபட்டுப் பெருமூச்சு விட்டுக்கொண்டு, ஜலத்தாலும் ரத்தத்தாலும் நனைந்த தேகத்துடன் பூமியில் கிடந்த அந்தத் தபஸ்வியைப் பார்த்து பிரலாபித்துச் சொல்லமுடியாத கிலேசத்தை அடைந்தேன்.

ஜலார்த்3ர கா3த்ரம் து விலப்ய க்ருச்2ராத்
மர்மவ்ரணம் ஸந்தத முச்2வஸந்தம் |
தத: ஸரய்வாம் தமஹம் ஶயாநம்
ஸமீக்ஷ்ய ப4த்ரே ஸ்மி ப்4ருஶம் விஷண்ண: ‖ (54)

---



## ஸர்க்கம் 64

## தசரதருடைய மரணம்

வத4மப்ரதிரூபம் து மஹர்ஷேஸ் தஸ்ய ராக4வ: |
விலபந்நேவ த4ர்மாத்மா கௌஸல்யாம் புநரப்3ரவீத் ‖ (1)

இப்படி அறியாத்தனத்தால் மஹா பாபத்தைச்செய்து இந்திரியங்கள் கலங்கி “என்ன செய்யலாம் ? போய் சொல்லுவோமா ? சொல்லாமலிருப்போமா? எது நலம்'' என்று யோசித்தேன். பிறகு கடத்தில் ஜலத்தை எடுத்துக்கொண்டு ரிஷிகுமாரன் சொன்ன வழியாக அந்த ஆசிரமத்திற்குப் போனேன். அங்கே அவருடைய தாய் தந்தைகள் பலமற்று வயதுசென்று திக்கற்று, இறக்கை ஒடிந்த பக்ஷிகளைப்போல் இருந்த இடத்தை விட்டு ஸஞ்சரிக்க முடியாமல், தங்களைக் காப்பாற்றிக் கொள்ளச் சக்தியில்லாமல், தங்கள் குமாரனைப் பற்றியே பேசிக்கொண்டும் அவனை எதிர்பார்த்துக்கொண்டும் இருந்தார்கள். அந்த ஆசையை நான் கெடுத்துவிட்டேன் என்று அவர்களுக்குத் தெரியாது. அங்கே போனவுடன் துக்கமும் பயமும் மேலிட்டு ஒன்றும் தோன்றாமல் நின்றேன்.

என் காலடிச் சப்தத்தைக் கேட்டு அந்த முனிவர், “குழந்தாய் ! ஏன் தாமதம் செய்கிறாய்? கொண்டுவந்த ஜலத்தைக் கொடு. இவ்வளவு நேரம் ஆற்றில் விளையாடிக்கொண்டிருந்தாயோ ? உன் தாய் வெகு கவலைப் பட்டுக்கொண்டிருக்கிறாள். வெகு சீக்கிரத்தில் உள்ளே வா. அவளாவது நானாவது உனக்கு இஷ்டமில்லாத காரியத்தை இதுவரையிலும் செய்திருந்தாலும் அதை நீ மனத்தில் வைத்துக்கொள்ளாதே. நீ தபஸ்வியல்லவா? கதியற்ற எங்களுக்கு நீயே கதி; கண்ணில்லாத எங்களுக்கு நீயே கண்; உன்னிடத்தில் எங்கள் உயிரை வைத்திருக்கிறோம். அப்படியிருக்க நீ ஏன் பேசவில்லை?'' என்றார்கள். எனக்குப் பயம் மேலிட்டது; வாய் குளறிற்று. ஆனாலும் மனோபலத்தாலும் பழக்கத்தாலும் என்னைத் தைரியப்படுத்திக்கொண்டு “நான் க்ஷத்திரியன்; என் பெயர் தசரதன்; மஹாத்மாக்களான தங்கள் புத்திரனல்ல. நான் முன்ஜன்மத்தில் செய்த மஹாபாபத்தால் ஸாதுக்கள் நிந்திக்கும் ஒரு கொடிய காரியத்தைச் செய்துவிட்டேன். ஆயுதபாணியாய் ஸரயூ நதிக்கரையில் வேட்டையாட வந்து, ராத்திரியில் தண்ணீர் குடிக்க அங்கே வரும் மிருகங்களைப் பாணத்தால் அடிக்க மறைந்திருந்தேன். அப்பொழுது யானை தண்ணீர் குடிப்பதுபோல் எனக்குத் தோன்றின ஒரு சப்தம் என் காதில் விழுந்தது. அதை லக்ஷ்யம் வைத்து அம்பை எய்தேன். ஒருவர் அங்கே கடத்தில் ஜலத்தை மொள்ளும் சப்தம் அது. 'ஐயோ' என்ற ஒரு கோரமான சப்தம் அங்கிருந்து உண்டானதைக் கேட்டுப் பயந்து அங்கே ஓடிப்பார்த்தேன். ஒரு தபஸ்வி என் பாணத்தால் அடிபட்டுப் பூமியில் கிடந்து மரணாவஸ்தைப் படுவதைக் கண்டேன்.

யானை என்றெண்ணி அதின் சப்தம் கேட்ட இடத்தில் குறிவைத்து அடிக்க, உங்களுடைய புத்திரனுக்கு அது மரணத்தை உண்டுபண்ணிற்று. அங்கே போய் பரிதவித்துத் தயங்கி அவருடைய மார்பில் பாய்ந்த அம்பைப் பிடுங்கி எறிந்தேன். உடனே அவர் ஸ்வர்க்கத்திற்குப் போனார். 'ஐயோ! என் பெற்றோர்கள் கிழவர்களாயிற்றே; கண்ணில்லாதவர்களாயிற்றே; என்ன செய்வேன்' என்று உங்களைப் பற்றியே பிரலாபித்துக்கொண்டு உயிரைவிட்டார். நான் நடந்ததைச் சொல்லிவிட்டேன், அறியாத்தனத்தால் தங்களுடைய புத்திரனைக் கொன்றுவிட்டேன். என்னிடத்தில் கிருபை செய்யும்படி பிரார்த்திக்கிறேன்'' என்றேன்.

அந்த குரூரமான வார்த்தைகளைக் கேட்டு அந்த ரிஷி, கடுமையான புத்திரசோகத்தால் பீடிக்கப்பட்டு, கைகூப்பி வணக்கமாக எதிரே நிற்கும் என்னைப்பார்த்து, "இந்தக் கோரமான காரியத்தைச் செய்துவிட்டு நீ எங்களிடத்தில் வந்து சொல்லாமலிருந்தால் எங்கள் சாபத்தால் உன் தலை பதினாயிரம் சுக்கலாக வெடித்துப் போயிருக்கும். க்ஷத்திரியன் புத்தி பூர்வகமாக வானப்பிரஸ்தனைக் கொன்றால் அவன் தேவேந்திரனானாலும் அந்தப்பதவியிலிருந்து வீழ்ந்திருப்பான். பிரஹ்மஜ்ஞானி தவம் செய்து கொண்டிருக்கையில் அவனை ஒருவன் பாணத்தால் அடித்தால் அவன் தலை ஏழு சுக்கல்களாய் வெடிக்கும். ஆனால் நீ அறியாத்தனத்தால் இப்படிச் செய்தாய். உடனே பச்சாதாபப்பட்டுப் பயந்து என்னிடத்தில் நீயே வந்து சொன்னாய். ஆகையால் நீ இதுவரையிலும் பிழைத்திருக்கிறாய். நீ தெரிந்து இப்பாபத்தைச் செய்திருந்தால் இக்ஷ்வாகு வம்சமே அழிந்திருக்கும். உன் கதியைப் பற்றிச் சொல்லவேண்டுமோ? எங்களை அவ்விடத்திற்கு அழைத்துப்போ. தேகம் வஸ்திரம் மரவுரி இவைகள் ரத்தத்தால் நனைந்து பூமியில் உயிரில்லாமல் கிடைக்கும் எங்கள் அருமைக் குழந்தையை இன்னும் ஒரு தடவை பார்க்க விரும்புகிறோம்'' என்றார்கள்.

நான் அப்படியே அவர்களை அங்கே அழைத்துக்கொண்டு போனேன். அவர்கள் அந்த ரிஷிகுமாரனைத் தொட்டுத் தடவிக் கொடுத்து, துக்கம் தாங்காமல் அவன்மேல் விழுந்து அழுதார்கள். 'குழந்தாய்! எங்களுடன் பேசக்கூடாதா? நாங்கள் வந்தால் நமஸ்காரம் செய்யக்கூடாதா? பூமியில் விழுந்துகிடக்கிறாயே. எங்களிடத்தில் கோபமா? நான் உனக்குப் பிரியமானவனல்வா? இதோ உன் தாய் வந்திருக்கிறாள், பார். எழுந்து எங்களை ஆலிங்கனம் செய். அமிருததாரையைப்போன்ற உன் வார்த்தைகளை நாங்கள் கேட்கச் செய். ராத்திரியின் பின்பாகத்தில் மதுரமாக வேதங்களையும் சாஸ்திரங்களையும் நீ அத்யயனம் செய்வதை இனி நான் கேட்பேனா? ஸந்தியாவந்தனம் செய்து ஹோம காரியங்களை முடித்து புத்திர சோகம் எங்கே நேருமோ — என்று பயந்திருக்கும் எங்களுக்கருகில் வந்து உட்கார்ந்து அன்புடன் எவன் உபசரிப்பான்? கர்மானுஷ்டானங்களைச் செய்வதற்கோ எங்களுக்கு சக்தியில்லை. ஆஹாரத்தைத் தேடவும் எங்களுக்குச் சக்தியில்லை; கழியைப் பிடித்து அழைத்துக்கொண்டு போகிறவர்களுமில்லை என்றறிந்து, காட்டிலிருந்து பழங்களையும் கிழங்குகளையும் கொண்டுவந்து பிரியமான அதிதியைப் போல் எனக்கு இனி எவன் போஜனம் செய்விப்பான்? இதோ உன் தாய், மிகவும் வயதுசென்றவள்; கண் தெரியாதவள்; உன்னிடத்தில் விசேஷப்பிரீதி வைத்தவள்; துக்கத்தால் மெய்மறந்திருக்கிறாள். இவளை நான் இனி எப்படிக் காப்பாற்றுவேன். குழந்தாய்! யமனுடைய வீட்டிற்குப் போகாதே, நில். நீயும் நானும் உன் தாயும் சேர்ந்து நாளைக்கு போகலாம்; அதுவரையில் பொறு. நாங்கள் இந்த வனத்தில் அநாதைகளாய், தீனர்களாய், காப்பாற்றுகிறவர்கள் இல்லாமல் நீயும் இல்லாமல் என்ன செய்வோம்? இதோ நாங்களும் உன்னுடன் வந்துவிட்டோம். யமனைக் கண்டு 'ஸ்வாமி! என் குழந்தை தங்கள் உத்தரவுப்படி உடனே வராததற்கு மன்னிக்க வேண்டும். எங்களுக்கு இவனைத்தவிர வேறு காப்பாற்றுபவர் இல்லாததால் இவனை எங்களுக்குத் திருப்பிக்கொடுக்கவேண்டும் என்று பிரார்த்திப்பேன். தர்மாத்மாவான அந்த லோகபாலன் அநாதையான எனக்கு அபயதானம் செய்யாமல் இருக்கமாட்டான்.

"இந்த அரசனால் உனக்கு நேர்ந்த அகாலமரணம் நீ முன் பிறப்பில் செய்த பாபத்திற்கு பிராயச்சித்தமென்று நினைக்க நியாயமில்லை. யாதொரு பாவமும் செய்யாத நீ, இந்தப் பாபியால் கொல்லப்பட்டாய். நீ செய்த புண்ணியத்தின் மஹிமையாலும் நான் அனுஷ்டித்து வரும் தவத்தின் மஹிமையாலும், பின் வாங்காமல் யுத்தம் செய்து கொல்லப்படும் சுத்தவீரர்கள் அடையும் உத்தம லோகங்களை நீ அடைவாயாக! ஸகரன், சைப்யன், திலீபன், ஜனமேஜயன், நஹுஷன், துந்துமாரன் முதலிய சக்கரவர்த்திகள் அடைந்த உத்தமகதியை அடைவாய். வேதாத்யயனத்தாலும் தவத்தாலும் ஸாதுக்கள் எந்த லோகங்களை அடைவார்களோ; பூமிதானம் செய்கிறவர்கள் எவ்வுலகங்களுக்குப் போவார்களோ; இடைவிடாமல் அக்னிஹோத்திரம் செய்கிறவர்கள் எந்த லோகங்களில் விளங்குகிறார்களோ; புத்திர ஸம்பத்துள்ள தனக்கு அனுகூலமான பார்யையிடத்தில் ஏகபத்தினி விரதத்தை அனுஷ்டிப்பவன் எந்த லோகங்களை அடைவானோ; எண்ணிறந்த பசுக்களைத் தானம் செய்கிறவன் எந்த லோகங்களுக்குச் செல்வானோ; பெரியோர்களுக்குப் பணிவிடை செய்கிறவன் எந்த லோகங்களுக்குப் போவானோ; மஹாபிரஸ்தானம் முதலிய விரதங்களாலும், உத்தம லோகங்களை அடையக்கடவேன் என்று ஸங்கல்பித்துக் கங்கையும் யமுனையும் சேருமிடத்திலும் அக்னியிலும் தேகத்தை விடுகிறவர்கள் எவ்வுலகங்களை அடைவார்களோ அந்த உத்தமகதியை நீ அடைவாய். மஹா தபஸ்விகளான எங்கள் குலத்தில் பிறந்து உத்தம லோகங்களை அடையாதவர்கள் ஒருவருமில்லை. நீயோ என் புத்திரன். உன்னைக்

கொன்றவன் மஹா கோரமான கதியை அடையட்டும்'' என்று இப்படி அடிக்கடி பிரலாபித்து, தானும் தன் பாரியையும் தங்களுடைய புத்திரனுக்குச் செய்யவேண்டிய பிரேதக்கிரியைகளைச் செய்ய ஆரம்பித்தார்கள். முனிகுமாரரும் தன் புண்ணிய கர்மத்தின் மஹிமையால் தேஜோமயமான திவ்யரூபத்தை அடைந்தார். அப்பொழுது தேவேந்திரன் அங்கே வந்து ஸகல உபசாரங்களுடன் தன் விமானத்தில் அவரை ஸ்வர்க்கத்திற்கு அழைத்துப் போனான். போவதற்குமுன் வயதுசென்ற தன் பெற்றோர்களை நமஸ்கரித்துப் பலவிதமாக ஸமாதானம் செய்து, "தங்களுக்கு நான் செய்த பணிவிடையின் மஹிமையால் உத்தமகதியை அடைந்தேன். தாங்களும் அதி சீக்கிரத்தில் என்னுடன் வந்து சேருவீர்கள்'' என்று ஸ்வர்க்கத்திற்குப் போனார்.

பிறகு வயதுசென்ற அந்தத் தபஸ்வி, பிரேதக்கிரியைகளை முடித்துவிட்டு, ஸமீபத்தில் கைகூப்பிக்கொண்டு பயந்து நிற்கும் என்னைப் பார்த்து, 'அரசனே! என்னையும் இப்பொழுதே கொல். ஓரே பிள்ளையையுடைய என்னைப் பிள்ளையில்லாதவனாகச் செய்த பிறகு, இறப்பதில் எனக்கு வருத்தமே இல்லை. பாபமற்ற என் புத்திரனைக் கொன்றதற்காக உன்னைச் சாம்பலாக எரிக்கவேண்டும். நீ அறியாமையால் அவனைக் கொன்றதால் கோரமான துக்கத்தை அனுபவிக்கும்படி மாத்திரம் உன்னைச் சபிக்கிறேன். புத்திரனை இழந்த சோகத்தால் மரணமடையக்கடவாய். ஆனால் க்ஷத்திரியனான நீ அறியாது தபஸ்வியைக் கொன்றதால் மஹாபாதகம் உன்னைச் சேராது. பிராம்மணனுக்குக் கொடுக்கப்பட்ட தக்ஷிணையின் பலன் கொடுக்கிறவனை அடையும். அப்படி நான் அனுபவிக்கும் புத்திர சோகம் சீக்கிரத்தில் உன்னைத் தொடரும். நீ அதனால் மரணமடைவாய்'' என்று பலவிதமாக பிரலாபித்தார். பிறகு கட்டைகளை அடுக்கி நெருப்பை மூட்டி, அதில் வயது சென்ற அந்த இருவரும் கைகோத்துக்கொண்டு விழுந்து ஸ்வர்க்கத்திற்குப் போனார்கள்.

என் பிராணனைப் போக்கும் இந்தப் புத்திரசோகம் நேரக் காரணம் என்னவென்று யோசித்துக்கொண்டிருக்கையில், சப்தவேதி என்ற பாணத்தை எய்ததால் என் பால்யத்தில் நேர்ந்த மஹா பாபம் என் ஞாபகத்திற்கு வந்தது. வியாதியை விருத்தி செய்யும் பதார்த்தங்களுடன் அன்னத்தை நோயாளி புஜித்தால் ரோகம் மேலிட்டு இறப்பதுபோல், நான் செய்த பாப கர்மத்தின் பலன் என்னைச் சுற்றிக்கொண்டது. அந்த மஹானுடைய சொற்படி நான் இன்றைக்குப் புத்திரசோகத்தால் இறக்கப் போகிறேன். கௌஸல்யே! என் கண்களுக்கு உன்னைப் பார்க்கும் சக்தி போயிற்று; ஆகையால் என்னை நன்றாக உன் கையால் ஒரு தடவை தொடு'' என்று அழுதார். மிகவும் பயந்து, "நான் யாதொரு அபராதமும் செய்யாத ராமனைக் காட்டிற்குத் துரத்தினதும், கைகேயியின் சொல்லைக் கேட்டு நான் செய்த அக்கிரமத்தை ஸந்தோஷத்துடன்



அவன் அங்கீகரித்து காட்டிற்குப் போனதும், அந்த முனியின் சாபத்தின் பயனேயன்றி வேறல்ல. இல்லாவிட்டால் தர்மத்தில் நோக்குள்ள எனக்கு ராமனுடைய விஷயத்தில் இவ்விதமான அதர்மபுத்தி ஏன் தோன்ற வேண்டும்? இதுவரையில் ஸாதுவாயும் ராமனிடத்தில் விசேஷப்பிரீதி வைத்தவளாயுமிருந்த கைகேயிக்கு அவனிடத்தில் துவேஷ புத்தி ஏன் தோன்றவேண்டும்? தனக்கு இவ்வளவு அபகாரத்தைச் செய்த என்னிடத்தில் ராமனுக்கு அஸூயை கொஞ்சமேனும் ஏன் உண்டாகவில்லை? தன் புத்திரன் மஹா துஷ்டனானாலும், விவேகி அவனைக் காட்டிற்குத் துரத்துவானா? அப்படிச் செய்தால் அவனுக்குத் தகப்பனிடத்தில் கோபமுண்டாகாதா? ராமன் ஒரு தடவை என்னைத் தொட்டாலும் போதும். வேண்டாம், ஒரு தடவை என் கண்ணில் பட்டாலும் போதும், நான் பிழைத்திருப்பேன். யமலோகத்திற்குப் போகிறவர்கள் தங்கள் பந்துக்களைத் திரும்பவும் பார்க்கப் போகிறார்களா? நீ இருப்பது என் கண்ணிற்குத் தெரியவில்லை. எனக்கு ஞாபகம் தடுமாறுகிறது. யமதூதர்கள் என்னைப் புறப்படும்படி சீக்கிரப்படுத்துகிறார்கள். மஹா பராக்கிரமசாலியும் தர்மாத்மாவுமான ராமனை நான் மரணமடையும்பொழுது பார்க்கமுடியவில்லையே. இதைவிடப் பெரிய என்ன துக்கம் எது? ஸ்வல்ப ஜலத்தை வெய்யில் வற்றச் செய்வதுபோல் ராமனைப் பார்க்காததாலுண்டான சோகம் என் உயிரை வற்றச் செய்கிறது. குண்டலங்களால் அலங்கரிக்கப்பட்டுப் பூர்ண சந்திரனைப்போல் விளங்கும் ராமனுடைய முகத்தை இன்றைக்குப் பதினைந்தாவது வருஷத்தில் பார்ப்பவர்களை மனுஷ்யர்களென்று சொல்லலாமா? எப்பொழுதும் யௌவனத்தை அனுபவிக்கும் தேவதைகள் என்றல்லவா சொல்லவேண்டும்? மலர்ந்த செந்தாமரையைப்போன்ற கண்களையும் வில்லைப்போல் அழகிய புருவங்களையும் ஆணிமுத்துக்களைப்போன்ற பல் வரிசைகளையும் அழகான மூக்கையுமுடையதாய், சரத்காலத்துச் சந்திரனையும் மலர்ந்த செந்தாமரையையும் போன்று விளங்கி, மதுரமான வாஸனை வீசும் என் ராமனுடைய முகத்தை, அவன் வனவாஸம் செய்துவிட்டு, சுக்கிரன் தன்னிருப்பிடத்தை மறுபடியும் அடைவதுபோல், அயோத்தியைக்குத் திரும்பி வரும்பொழுது பார்க்கப்போகிறவர்கள் என்ன பாக்கியம் செய்தவர்களோ? கௌஸல்யே! துக்கம் தாங்காமல் என் ஹிருதயம் பிளக்கிறது. சப்தம் ஸ்பர்சம் முதலிய இந்திரியங்களால் பதார்த்தங்களை அறிய முடியவில்லை. தீபத்தில் தைலம் வற்றின பிறகு அதன் கிரணங்கள் அழிவதுபோல், என் அங்கங்கள் தளர்ந்து மனம் தடுமாறும்பொழுது இந்திரியங்கள் அழிவது ஆச்சரியமல்ல. ஆற்றில் ஜலப்பிரவாகம் கரைகளை அறுப்பதுபோல், இந்தச் சோகம் பிரக்ஞையற்று அநாதையான என்னுயிரை வேகமாக அறுக்கிறது. பராக்கிரமசாலியான ராகவா! என் துக்கத்தைப் போக்கக்கூடியவனே? என்

னிடத்தில் விசேஷப்பிரீதி வைத்தவனே! என் நாதா! என்னருமைக் குழந்தாய்! எங்கே போய்விட்டாய்? கௌஸல்யே! நான் பிழைக்க மாட்டேன். ஸுமித்ரே! உனக்குப் பெரிய கஷ்டம் நேர்ந்தது. கைகேயி! இக்ஷ்வாகு குலத்தைக் கெடுக்க வந்தவளே! குரூரமானவளே! யமனுடைய ரூபங்கொண்டு என்னைக் கொல்ல வந்தவளே' என்று இப்படிக் கதறிக்கொண்டு, ராமனுடைய தாயும் லக்ஷ்மணனுடைய தாயும் ஸமீபத்திலிருக்க, தன் அருமைக் குழந்தையைத் துரத்திவிட்டு, அந்தத் துக்கத்தால் தீனமாக பிரலாபிக்கும் உதாரமான பார்வையையுடைய தசரதர், பாதி ராத்திரியான பிறகு துக்கம் தாங்காமல் உயிரை விட்டார்.

யதா³து தீ³நம் கத²ஞ்ந் நராதி⁴ப:
ப்ரியஸ்ய புத்ரஸ்ய விவாஸநாதுர: |
க³தேர்த⁴ராத்ரே ப்⁴ருஶ து³க்க² பீடி³த:
ததா³ ஜஹௌ ப்ராண முதா³ரத³ர்ஶந: ‖ (79)

---

## ஸர்க்கம் 65

## அந்தப்புரத்து ஸ்த்ரீகளின் பிரலாபம்

---

அத² ராத்ர்யாம் வ்யதீதாயாம் ப்ராதரேவாபரேஹநி |
வந்தி³ந: பர்யுபாதிஷ்ட²ந் தத்பார்தி²வ நிவேஶநம் ‖ (1)

விடியற்காலையில் சாஸ்திரங்களில் நிபுணர்களான ஸ்தோத்திரம் செய்கிறவர்களும் கட்டியம் கூறுகிறவர்களும் ஸங்கீத சாஸ்திர நிபுணர்களான மங்களாசீர்வாதங்களைப் பாடுகிறவர்களும் மஹாராஜாவின் அந்தப்புரத்தில் வந்து ஒவ்வொருவரும் சக்கரவர்த்தியைப் புகழ்ந்துபாட ஆரம்பித்தார்கள். அவர்கள் வெகு கம்பீரமாகச்செய்த ஸ்தோத்திரங்களால் அந்த அந்தப்புரம் நிறைந்தது. இரு கைகளாலும் தாளத்தின் பல கதிகளை வின்யாஸப்படுத்தி வாசிக்கக்கூடிய இன்னும் சிலர், தசரதருடைய அபூர்வச் செய்கைகளை வர்ணித்து, அதற்கிணங்கக் கைகளால் தாளப்பிரஸ்தாரங்களை வாசித்தார்கள். அந்தச் சப்தத்தைக் கேட்டுக் கூடுகளிலும் மரங்களிலும் தூங்கின பக்ஷிகள் விழித்துக்கொண்டு மதுரமாகக் கூவ ஆரம்பித்தன. சில பாடகர்கள் ஹரிநாராயணா என்று பகவந் நாமங்களைப் பாடினார்கள். சில புண்ணியபுருஷர்கள் க்ஷேத்திரங்களையும் தீர்த்தங்களையும் பற்றிய கீர்த்தனங்களைப் பாடினார்கள். சிலர் வீணை முதலிய வாத்தியங்களை வாசித்தார்கள். அவரைப் பற்றிச் செய்யப்பட்ட பிரபந்தங்களையே ஆசீர்வாத சுலோகங்களாகப் பாடினார்கள். அந்த கோஷத்தால் அரண்மனை நிறைந்தது.

பிறகு அரசர்களை எழுப்பும் மரியாதைகளில் தேர்ந்த சுத்தமான நடத்தையுள்ள அந்தப்புரத்து ஸ்த்ரீகளும் நபும்ஸகர்களும் மற்ற பரிசாரகர்களும் அங்கே வந்து சேர்ந்தார்கள். அரசர்களின் ஸ்நானகாரியங்களில் நிபுணர்களான வேறு சிலர், சாஸ்திரத்திற்கும் அந்தக் காலத்திற்கும் தகுந்தபடி தங்கக்குடங்களில் ஹரிசந்தனம் முதலிய பதார்த்தங்கள் கலந்த சுத்தஜலத்தையும் மற்ற வஸ்துக்களையும் ஸித்தமாக வைத்துக்கொண்டிருந்தார்கள். இன்னும் சிலர் மங்களகரமான பூமாலைகளையும் தைலங்களையும், தொடுவதற்காகப் புண்ணியகரமான பசு முதலியவைகளையும், பல் தேய்த்த பிறகு வாயில் நல்ல வாஸனை உண்டாவதற்கு ஜலத்துடன் கலந்து கொப்பளிப்பதற்காகப் பொடிசெய்த எள் தேங்காய் ஜீரகம் முதலியவைகளையும், ஆச்சரியமான சக்தியுள்ள ஔஷதிகளையும், கங்கா தீர்த்தம் முதலிய புண்ணிய ஜலங்களையும், ஸமஸ்த பாபங்களைப் போக்கி ஸகல மங்களங்களைக் கொடுத்து ஸகல தர்மங்களையும் செய்ய அதிகாரத்தை அளிக்கும் புண்ணிய பதார்த்தமான, வம்ச பரம்பரையாய் இக்ஷ்வாகு குலத்தில் ஆராதிக்கப்பட்டுவரும் ஸ்ரீரங்கநாதனுடைய திருவடிகளில் ஸமர்ப்பித்த தீர்த்தங்களையும், துளஸியையும், கண்ணாடி வஸ்திரங்கள் ஆபரணங்கள் புஷ்பங்கள் மாலைகள் முதலிய ஸாமக்ரிகளையும் ரூபவதிகளான ஸ்த்ரீகள் ஸித்தமாக வைத்துக் கொண்டிருந்தார்கள். அரசர்களின் அரண்மனைகளில் விடியற்காலையில் அவர்களின் உபயோகத்திற்காகக் கொண்டுவர வேண்டிய ஸகல வஸ்துக்களும் ஸகல லக்ஷணங்கள் பொருந்தியவைகளாயும் உத்தம குணங்களுடையவையாயும் மேன்மேலும் லக்ஷ்மீகரமானவைகளாயும் இருந்தன. மேற்சொன்னவர்களெல்லோரும் ஸூரியோதயத்திற்கு முன்பே மஹாராஜாவைத் தரிசிக்க ஆவலுடனிருந்தார்கள். ஸூரியோதயமானபிறகும் மஹாராஜா வெளியில் வராததைக் கண்டு, சக்கரவர்த்திக்கு என்ன நேர்ந்ததோ என்று ஸந்தேகப்பட்டார்கள்.

தசரதருடைய படுக்கையறைக்கு ஸமீபத்திலிருந்த ராஜ ஸ்த்ரீகள், எழுப்பும் ஸமயத்திற்குத் தக்க வார்த்தைகளால் மிருதுவாயும் வினயமாயும் அவரை எழுப்பினார்கள். பிறகு தொட்டு அசைத்தார்கள். தூங்குவதற்கு அடையாளமான மூச்சு சூடு முதலியவைகளைக் காணவில்லை. மனிதன் தூங்கும்பொழுது இருக்கின்ற கைகால்களை அசைத்தல், ஹிருதயம் துடித்தல், மூச்சுவிடுதல் முதலிய அங்க சேஷ்டைகளை நன்குயறிந்த அந்தப் பெண்கள், தங்களுக்குத் தெரிந்தவரையில் பரீக்ஷித்துப் பார்த்தும் மேற்சொன்ன அறிகுறிகள் யாதொன்றையும் காணவில்லை. அப்பொழுது அவர்கள் பயந்து நடுங்கித் தங்கள் பர்த்தா மரணமடைந்தாரென்று ஸந்தேகித்தே, வேகமான வெள்ளத்திற் கெதிரில் நிற்கும் நீர்நொச்சில் முதலிய லேசான மரங்களைப் போலானார்கள். பிறகு அவர்கள் ஸந்தேகித்த மரணம், நேர்ந்ததென்ற நிச்சயமாயிற்று. கௌஸல்யையும் ஸுமித்திரையும் புத்திரசோகம் மேலிட்டு அயர்ந்து தூங்கி, வழக்கப்படி விழித்துக் கொள்ளவில்லை. கௌஸல்யையோ களை

யற்று நிறம் மாறி இளைத்துத் தேகம் ஒடுங்கி, உத்பாதங்கள் நேரும் பொழுது இருட்டால் நக்ஷத்திரம் மறைக்கப்படுவதுபோல், இருக்குமிடம் தெரியாமல் இருந்தாள். உயிரையிழந்த தசரதருக்கும் உயிரை இழக்காத அவ்விரு ராஜ ஸ்த்ரீகளுக்கும் யாதொரு பேதமும் காணப்படவில்லை. அந்தப்புரத்து ஸ்த்ரீகள் அதைக் கண்டு அவ்விருவரும் அரசனைப் போலவே இறந்தார்களென்றே நினைத்து காட்டில் பெண் யானைகள் ஆண் யானைகளை விட்டுப் பிரிந்து தாங்கள் இருக்குமிடத்தைவிட்டு துரத்தப்பட்டுக் கதறுவதுபோல், தீனமாகப் பெருங்குரலுடன் அழுதார்கள். அந்தச் சப்தத்தைக் கேட்டு கௌஸல்யையும் ஸுமித்திரையும் திடீரென்று விழித்துக்கொண்டு தசரதரைப் பலவிதமாக எழுப்பிப் பார்த்தும் பயனில்லை என்று அறிந்து, மரணமடைந்தார் என்று கண்டு, "ஹா, நாதா!" என்று அலறிப் பூமியில் விழுந்தார்கள். ஆகாசத்திலிருந்து விழுந்த நக்ஷத்திரத்தைப்போல், கௌஸல்யை தேகமெங்கும் புழுதிபடியப் பூமியில் கிடந்துபுரண்டுகொண்டு காந்தியற்றிருந்தாள். ராஜபத்தினிகள் சக்ரவர்த்தி இறந்ததையும் கௌஸல்யை மூர்ச்சையடைந்து விழுந்ததையும் கண்டு, காட்டில் தங்களுக்குத் தலைவனான ஆண்யானையும் அதற்கு பிரியமான பெண் யானையும் இறந்து மற்றப் பெண்யானைகள் திகைத்து நிற்பதுபோல், ஒன்றும் தோன்றாமல் பிரமித்தார்கள். அதற்குள் கைகேயி முதலிய மற்ற ராஜஸ்த்ரீகள் அங்கே வந்து தங்களுக்கு நேர்ந்த துக்கத்தை அறிந்து கதறிக்கொண்டு பூமியில் விழுந்தார்கள். முன்னிருந்த அழுகைச் சப்தம் வரவர அதிகரித்தது. ராமனைவிட்டுப் பிரிந்ததாலும் அரசனுடைய துக்கத்தாலும் அந்தப்புரத்து ஜனங்கள் அதுவரையில் மனம் கலங்கி இருந்தார்கள். சக்கரவர்த்தியும் மரணமடைய, மிகுந்த திகிலடைந்து பிரமித்துத் துக்கம் மேலிட்டு வாய்விட்டு அலறினார்கள். பரிஜனங்களும் பந்துக்களும் பரிதாபமாகக் கதறினார்கள். அவ்விடமெங்கும் ஸந்தோஷமற்றுப் பார்க்க விகாரமாக இருந்தது. மூன்று லோகங்களிலும் பிரசித்தி பெற்ற தசரத சக்கரவர்த்தி மரணமடைந்ததைப் பார்த்து, அவருடைய பாரியைகள் அவரைச் சூழ்ந்து ஒருவர்க்கொருவர் கைகளைப் பிடித்துக்கொண்டு மஹா தீனமாக அநாதைகளைப்போல் பிரலாபித்தார்கள்.

*அதீத மாஜ்ஞாய து பார்தி$^{2}$வர்ஷப$^{4}$ம்*
*யஶஸ்விநம் ஸம்பரிவார்ய பத்நய: |*
*ப்$^{4}$ருஶம் ருத$^{3}$ந்த்ய: கருணம் ஸுது$^{3}$:கி$^{2}$தா:*
*ப்ருக்$^{3}$ருஹ்ய பா$^{3}$ஹூ வ்யலபந்நநாத$^{2}$வத் ‖* **(29)**

---



## ஸர்க்கம் 66

## கௌஸல்யை பிரலாபித்தது

---

*தமக்$^{3}$நிமிவ ஸம்ஶாந்த மம்பு$^{3}$ஹீந மிவார்ணவம் |*
*ஹதப்ரப$^{4}$மிவாதி$^{3}$த்யம் ஸ்வர்க$^{3}$ஸ்த$^{2}$ம் ப்ரேக்ஷ்ய பார்தி$^{2}$வம் ‖ (1)*

அணைந்த ஹோமாக்னியைப் போலும், ஜலம் வற்றின ஸமுத்திரத்தைப் போலும், கிரணங்களற்ற ஸூரியனைப்போலும், தசரதர் உயிரை இழந்து பரலோகம் சென்றதைப் பார்த்து, கௌஸல்யை, கண்ணீர் தாரை தாரையாகப் பெருக, புத்திரசோகத்தாலும் பர்த்தாவை இழந்ததாலும் ஹிருதயம் பிளந்து, சக்கரவர்த்தியின் தலையைத் தன் மடியில் எடுத்து வைத்துக்கொண்டு அங்கே இருந்த கைகேயியைப் பார்த்து, "உன் புத்திரனுக்கு இடையூறாக இருந்த ராமனைக் காட்டிற்குத் துரத்திவிட்டாய்; தசரதரையும் கொன்றுவிட்டாய். துஷ்டே! மஹாபாபி! நீ பிடித்த பிடிவாதம் நிறைவேறிற்றா? இப்பொழுதாவது உன் மனோரதங்கள் பூர்த்தியாயிற்றா? இனிமேலாவது யாதொரு உபத்திரவமும் இன்றி இந்த ராஜ்யத்தை ஸுகமாக ஆண்டுகொண்டிரு. என் ஒரே குழந்தையான ராமன் என்னைக் கதறவிட்டுக் காட்டிற்குப் போனான். எனக்கு ஒரே கதியான என் பர்த்தாவோ என்னைவிட்டு ஸ்வர்க்கத்திற்குச் சென்றார். காட்டின் வழியாகப் பிரயாணிகள் போய்க்கொண்டிருக்கையில், அவர்களில் ஒருவன், துஷ்டமிருகங்கள் நிறைந்ததும், இருண்டு, வழி இல்லாததுமான இடத்தில் விடப்பட்டால், அவன் வெகுகாலம் உயிரோடிருக்கமாட்டான்; அப்படி நானும் வெகுகாலம் பிழைத்திருக்க மாட்டேன். ஸகல தர்மங்களையும் கைவிட்ட உன்னைப் போன்றவர்களைத் தவிர மற்ற யார் தனக்குப் பரதெய்வமாயிருக்கும் பர்த்தாவை இழந்து உயிரோடிருக்க விரும்புவார்கள்? பணப்பிசாசு பிடித்துக் காகமர்த்தமென்ற (எட்டிப் பழம்) விஷப் பழத்தைத் தின்றவனுக்கு அதனால் நேரும் அபாயம் தெரியுமா? ஒரு கூனியின் வார்த்தையைக் கேட்டு இக்ஷ்வாகு குலத்தையே வேரோடு அறுத்த மஹா புண்ணியவதி யல்லவா நீ?

"இன்னதென்று குறிப்பிடாமல் வரங்களைக் கேட்டு அவைகளைக் கொடுக்கும்படி மஹாராஜாவை நிர்ப்பந்தித்து, பிரதிக்ஞை செய்யச் சொல்லி ராமனையும் ஸீதையையும் காட்டிற்குத் துரத்தின உத்தமியே! ஜானகியின் பிதாவான ஜனக மஹாராஜா இதைக் கேட்டால் என்னைப்போல் பதைபதைப்பாரல்லவா? என் குழந்தை உயிரோடிருந்தும் இறந்தவனைப்போல் என்னைவிட்டுப் போனான். நான் புத்திரனையும் இழந்து கணவனையும் இழந்து யாதொரு கதியும் இல்லாமல் அநாதையாகச் சத்துருக்களுக்கு நடுவில் தவிப்பதை அந்தத் தர்மாத்மா அறியவில்லையே. ஐயோ! விதேஹ சக்கரவர்த்திக்குப் புத்திரியாகப் பிறந்தும் எவ்வித துக்கத்தையும் அனுபவிக்கத்

தகாதவளாக இருந்தும் ஸீதை இப்பொழுது எல்லோரும் பார்த்துப் பரிதவிக்கும்படி வனத்தில் என்ன பயப்படுகிறளோ? ராத்திரிகளில் மிருகங்களும் பக்ஷிகளும் கோரமாகச் சப்திப்பதைக்கேட்டால் பயந்து நடுங்கி ராமனிடத்தில் போய் ஒண்டிக்கொள்வாளே. ஜனகருக்குப் புத்திரனும் புத்திரியும் ஸீதையே; அவருக்கோ வயது சென்றுவிட்டது. தன்னருமைக் குழந்தைக்கு நேர்ந்த துக்கத்தை நினைத்து நினைத்து மனம்குன்றி உயிரை விடுவாரென்பதே நிச்சயம். பர்த்தா துக்கப்படும்பொழுது வருந்துகிறவளும், ஸந்தோஷப்படும்பொழுது மகிழ்கிறவளும், தன்னை விட்டுப் பிரிந்து வேறு தேசத்திற்குப் போயிருக்கும்பொழுது அந்தத் துக்கத்தால் ஏங்கி இளைத்து ஆடை ஆபரணங்களில் ஆசை வைக்காதவளும், அவர் உயிரிழந்து பர்லோகம் போனபொழுது தானும் அவருடன் போகிறவளுமான உத்தமியே பதிவிரதையென்று சொல்லப்பட்டிருக்கிறதல்லவா? நானும் அப்படி என் பர்த்தாவின் தேகத்தை ஆலிங்கனம் செய்து கொண்டு அக்கினியில் பிரவேசித்து அவருக்குக் கிடைக்கும் கதியை அடைவேன்'' என்றாள். இப்படி தீனமாக பிரலாபிக்கும் கௌஸல்யையை அந்தப்புரத்து வேலைக்காரிகள் தசரதருடைய சரீரத்தை விட்டுப் பிரித்து பலாத்காரமாக வேறோரிடத்திற்குக் கொண்டு போனார்கள்.

பிறகு வஸிஷ்டருடைய உத்தரவினால் மந்திரிகள் முதலான ராஜ ஸேவகர்கள் அந்த பிரேதத்தை எண்ணெய்க் கொப்பறையில் போட்டு அதற்குமேல் நடக்கவேண்டிய காரியங்களைச் செய்தார்கள். எல்லா தர்மங்களையும் அறிந்த அந்த உத்தியோகஸ்தர்கள் "புத்திரர்களில்லாமல் அரசனுக்கு பிரேதக் கிரியைகளைச் செய்வது உசிதமல்ல; பிரேதத்திற்கு எண்ணெயுடன் ஸம்பந்தமிருந்தால் ஸம்ஸ்காரம்செய்யாததாலுண்டான தோஷம் நேராது''என்று நிச்சயித்துப் புத்திரர்கள் வரும் வரையில் அரசனுடைய சரீரத்தைக் காப்பாற்றினார்கள். ராஜ பத்தினிகள் அந்தக் கொப்பறையைச் சூழ்ந்து கண்ணீர் பெருகக் கைகளைத் தூக்கிக்கொண்டு துக்கம் தாங்காமல் "மஹாராஜாவே! எப்பொழுதும் எங்களிடத்தில் பிரியமாய் பேசுகிறவனும் ஸத்தியம் தவறாதவனுமான ராமனும் எங்களைக் காப்பாற்ற இங்கே இல்லை என்று தங்களுக்குத் தெரியாதா? ஆனாலும் எங்களை இப்படி அநாதைகளாக விட்டுப்போக உங்களுக்கு மனம் துணிந்ததல்லவா? துஷ்டையான கைகேயி ராமனை விட்டு எங்களைப் பிரித்தாள்; இப்பொழுதோ எங்கள் பர்த்தாவையும் கொன்றாள். அந்த மஹாபாபியின் ஸமீபத்தில் எப்படி இருப்போம்? ராமன் எந்தக் காலத்திலும் எங்களுக்கு ரக்ஷகன்; தங்களுக்கும் எல்லாப் பணிவிடைகளையும் செய்து காப்பாற்றுகிறவன்; மஹா தைரியசாலி; ராஜலக்ஷ்மியை வெறுத்து மஹாலக்ஷ்மியுடன் வனத்திற்குப் போய்விட்டான். புதிதாய் அதிகாரத்தை அடைந்த கர்வத்தால் இனிமேல் கைகேயி எங்களை அலட்சியம் செய்து



துன்பப்படுத்துவாளே. தாங்களும் அந்த மஹாவீரனும் இல்லாமல் துக்கஸமுத்திரத்தில் ஆழ்ந்து நாங்கள் எப்படிப் பிழைப்போம்? தன் பர்த்தாவையும் ராமனையும் மஹாபலவானான லக்ஷ்மணனையும் ஸீதையையும் கைவிட்டவள் எங்களைக் கைவிட வெகுகாலம் செல்லுமா?'' என்று தீனமாக பிரலாபித்தார்கள்.

சந்திரனில்லாத ராத்திரிபோலும், கணவனில்லாத ஸ்த்ரீயைப்போலும், மஹாத்மாவான தசரதரில்லாமல் அயோத்யை பிரகாசத்தை இழந்தது. ஜனங்களெல்லோரும் கண்ணீர்விட்டு அழுதார்கள். குலஸ்த்ரீகள் 'ஹாஹா' என்று கதறினார்கள். நாற்சந்திகளும் வீடுகளும் முன்போல் கோலமிட்டுப் பெருக்கி மெழுகிப் பூஜை செய்யப்படாமல் சூன்யமாக இருந்தன. சக்ரவர்த்தி புத்திர சோகத்தால் பரலோகம் அடைந்தார்; அவருடைய பாரியைகள் பூமியில் விழுந்து மூர்ச்சை அடைந்தார்கள். ஸூரியனும் தன் வம்சத்தில் பிறந்த மஹா கீர்த்திமானான அரசன் இறந்த துக்கத்தால் ஒளி மழுங்கி மேற்குத்திசைக்குப் போனான். இருட்டால் கருத்த ராத்திரியும் பூமிக்கு வந்திறங்கிற்று.

அங்கே வந்த பந்துக்களில் சிலர், "மஹா பராக்கிரமசாலிகளான நான்கு பிள்ளைகளைப் பெற்றும் தெய்வ வசத்தால் ஒருவனாவது ஸமீபத்திலிருந்து உதவவில்லை. ஆனால், ஒன்றும் செய்யாமலிருப்பது பிசகு. எப்படியாவது ஸம்ஸ்காரம் செய்யவேண்டும்'' என்றார்கள். ஆனால், மந்திரிகள் "எப்படியிருந்தாலும் ஒரு புத்திரனாவது ஸமீபத்தில் இல்லாமல் பிரேதக் கிரியைகளை நடத்தக் கூடாது'' என்று தடுத்து விட்டார்கள்.

தசரதரும் ராஜபுத்திரர்களும் ஸீதையும்இல்லாமல் அயோத்யை, ஸூரியனில்லாத ஆகாசத்தைப்போலும் சந்திரனும் நக்ஷத்திரங்களும் இல்லாத ராத்திரியைப்போலும் காந்தியற்று, கண்ணீரால் நெஞ்சடைத்து திகைத்து நிற்கும் ஜனங்களால் நிறைந்த வீதிகளோடும் நாற்சந்திகளோடும் காணப்பட்டது. ஆண்களும், பெண்களும் கூட்டம் கூட்டமாக நின்றுகொண்டு கைகேயியை நிந்தித்தார்கள்; ஒருவருக்காவது முகத்தில் காந்தியில்லை; மனத்தில் ஸந்தோஷமில்லை.

நராஶ்ச நார்யஶ்ச ஸமேத்ய ஸங்க$^4$ஶோ
விக$^3$ர்ஹமாணா ப$^4$ரதஸ்ய மாதரம் |
தத$^3$ா நக$^3$ர்யாம் நரதே$^3$வ ஸம்க்ஷயே
ப$^3$பூ$^4$வு ரார்தா ந ச ஶர்ம லேபி$^4$ரே ‖ (29)

## ஸர்க்கம் 67

# அரசன் இல்லாத ராஜ்யம்

ஆக்ரந்தி[3]த நிராநந்த[3]ா ஸாஸ்ரகண்ட.[2] ஜநர்விலா |
அயோத்[4]யாயா மதிததா ஸா வ்யதீயாய ஶர்வரீ ॥ (1)

இப்படி ஜனங்கள் அல்லோலகல்லோலமாய் பிரலாபிக்க அயோத்யையில் அந்த ராத்திரி ஒரு யுகமாகக் கழிந்தது. ஸூரியன் உதித்தவுடன் ராஜ்ய உத்தியோகஸ்தர்களும், பிராம்மணர்களும் ஸபாமண்டபத்தில் கூடினார்கள். மார்க்கண்டேயர், மௌத்கல்யர், வாமதேவர், காச்யபர், காத்யாயனர், கௌதமர், மஹா கீர்த்திமானன ஜாபாலி, இன்னும் மற்ற பிராம்மணர்களும், மந்திரிகளும் ராஜ புரோஹிதரான வஸிஷ்டரைப் பார்த்து, "ஸ்வாமி! நேற்று ராத்திரிப் பொழுது பல வருஷங்களைப்போல் கழிந்தது. புத்திரசோகத்தால் தசரதர் மரணமடைந்திருக்கையில் வேறு எப்படி இருக்கும்? மஹாராஜா ஸ்வர்க்கத்திற்குப் போய்விட்டார்; ராமன் காட்டிற்குப் போய்விட்டார்; தேஜஸால் விளங்கும் லக்ஷ்மணன் அவருடன் இருக்கிறார்; பரத சத்ருக்னர்கள் கேகய நாட்டில் ராஜகிருஹமென்ற நகரத்தில் தங்கள் பாட்டனார் வீட்டில் ஸந்தோஷத்துடன் இருக்கிறார்கள். அவர்களில் எவரையாவது இப்பொழுதே அரசனாக ஏற்படுத்தவேண்டும். இந்த ராஜ்யம் அரசனில்லாமல் நாசமடையக் கூடாது.

(1) அரசனில்லாத ராஜ்யத்தில் வருணனும், இந்திரனும் கிருபைசெய்து அந்தந்தக் காலங்களில் மழைகளைப் பெய்யமாட்டார்கள். கல்மழை பெய்யும்.

(2) ஒருவரும் நிலங்களைப் பயிரிடமாட்டார்கள்.

(3) புத்திரன் தகப்பனுக்குக் கீழ்ப்படியமாட்டான்.

(4) மனைவி கணவனுக்கு வசப்படமாட்டாள்.

(5) திருட்டுப்பயத்தால் எவரிடத்திலும் தனமிராது.

(6) பந்துக்களின் உபத்திரவத்தால் எவனுடைய பாரியையும் தரித்திருக்கமாட்டாள்.

(7) இன்னும் இதைப்போன்ற மஹா பாபங்கள் எப்பொழுதும் நேரும்.

(8) கொடுக்கல் வாங்கல்களில் ஸத்தியம் இராது.

(9) ஜனங்கள் கவலைமேலிடுவதால் ஒன்றுகூடிப் பொது விஷயங்களை ஆலோசிக்கமாட்டார்கள்.

(10) கட்டுக்காவல் இல்லாததால் எவனும் தோட்டம் போடமாட்டான்.

(11) அன்னசாலைகளையாவது, மடங்களையாவது ஏற்படுத்தமாட்டான்.



(12) பிராம்மணர்கள் இந்திரியங்களை ஜயித்தவர்களாக விரதங்களை அனுஷ்டித்துக்கொண்டு யாகயக்ஞங்களைச் செய்யமாட்டார்கள்.

(13) அதிக தனமிருந்தாலும் ஏராளமான தக்ஷிணைகளைக் கொடுத்து யாகங்களைச்செய்ய பயப்படுவார்கள்; தனமிருப்பதாகத் தெரிந்தால் ராஜ்ய உத்தியோகஸ்தர்களாவது, திருடர்களாவது துன்பப்படுத்துவார்களல்லவா?

(14) நாட்டியத்திலும் அபிநயத்திலும் நிபுணர்கள், வளரமாட்டார்கள்.

(15) தேவாலயங்களில் உத்ஸவங்களும் கூட்டங்களும் மேன்மேலும் வளராது.

(16) புண்ணியதீர்த்தங்களில் ஜனங்கள் கூடமாட்டார்கள். இவ்விரண்டும் ராஜ்யத்திற்கு க்ஷேமகரமல்லவா?

(17) வர்த்தகர்கள் வியாபாரம்செய்து க்ஷேமத்தை அடையமாட்டார்கள்.

(18) இதிஹாஸ புராணக்கதைகளைச் சொல்வதில் நிபுணர்கள் ஜனங்களை ஸந்தோஷப்படுத்தமாட்டார்கள்; கவலையற்றுப் பயமில்லாமல் அவைகளைக்கேட்பதற்கு ஜனங்கள் இருந்தாலல்லவா?

(19) சாஸ்திரங்களில் நிபுணர்கள் ஸபைகளில் வாதம் செய்யமாட்டார்கள். ஸபை கூட்டுகிறவர்கள் யார்? வெகுமதியளிப்பவர்கள் யார்?

(20) ஸாயங்காலத்தில் யௌவன ஸ்த்ரீகள் ஆபரணங்களால் தங்களை அலங்கரித்துக்கொண்டு தோட்டங்களில் வேடிக்கையாகப் புஷ்பங்களைப் பறித்து ஜலக்ரீடை செய்யமாட்டார்கள்; திருடர் பயம் எப்பொழுதும் உண்டல்லவா?

(21) புருஷர்கள் தங்களுக்குப் பிரியமான ஸ்த்ரீகளுடன் அதிவேகமான வாஹனங்களிலேறி வனங்களுக்குப் போகமாட்டார்கள்; வழியில் திருடர்கள் அடித்துப் பறிப்பார்களல்லவா?

(22) பயிரிடுவதாலும் மாடு மேய்ப்பதாலும் அதிக தனத்தை ஸம்பாதித்தவர்கள் பயமில்லாமல் கதவுகளைத் திறந்துவைத்துக்கொண்டு சுகமாகத் தூங்கமாட்டார்கள்.

(23) அறுபது வயதுள்ள மதம்பிடித்த யானைகள் அழகிய தந்தங்களுடன், மணிகள் மதுரமாகச் சப்திக்க, ராஜவீதிகளில் ஸஞ்சரிக்காது.

(24) வில்வித்தையைப் பழகுகிறவர்கள் நாணை இழுத்து அம்புகளை எய்யும் சப்தம் கேட்காது.

(25) வியாபாரிகள் விலையுயர்ந்த பொருள்களை எடுத்துக்கொண்டு தூரதேசங்களுக்குப் பயமில்லாமல் போகமாட்டார்கள்.

(26) இந்திரியங்களை அடக்கி கூட்டங்களில் சேராமல், தனியாக ஸஞ்சரித்துக்கொண்டு, அந்தக்கரணத்தில் ஸ்ரீமந்நாராயணனுடைய திவ்யமங்கள விக்கிரஹத்தை தியானம்செய்து, எங்கு ஸூர்யன் அஸ்தமிக்கிறதோ அதையே வீடாகக்கொண்டு தங்கும் ஞானி ஒருவனும் இருக்கமாட்டான். இவர்களுக்கு அன்னம் போடுகிறவர்கள் யார்?

(27) அடையாத வஸ்துக்களை அடையவும் முடியாது.

(28) அடைந்த வஸ்துக்களைக் காப்பாற்றவும் முடியாது.

(29) ஸைன்யங்கள் யுத்தத்தில் சத்துருக்களை எதிர்த்து நிற்க மாட்டார்கள்.

(30) ஜனங்கள் நன்ருக அலங்கரித்துக்கொண்டு, ரதங்களிலும் குதிரைகளிலும் ஏறிக்கொண்டு. ஸந்தோஷத்துடன் வெளியில் வேடிக்கையாக ஸஞ்சரிக்கமாட்டார்கள்

(31) முனிவர்கள் வஸிக்கும் ஆசிரமங்களிலும் நகரத்தைச் சேர்ந்த தோட்டங்களிலும் சாஸ்திர நிபுணர்கள் மேலான விஷயங்களைப் பற்றி வாதம் செய்யமாட்டார்கள்.

(32) ஜனங்கள் பக்தியுடன் மாலைகள் பக்ஷணங்கள் தக்ஷிணைகள் முதலிய வஸ்துக்களை எடுத்துக்கொண்டு தேவதைகளைப் பூஜிக்க ஆலயங்களுக்குப் போகமாட்டார்கள்.

(33) வஸந்தகாலத்தில் புஷ்பங்களால் அலங்கரிக்கப்பட்ட மரங்களைப்போல்,ராஜபுத்திரர்கள் அகில் சந்தனம் முதலிய வாசனைத் திரவியங்களால் அலங்கரிக்கப்பட்டு விளங்கமாட்டார்கள்.

(34) நீர் வற்றின நதிகளைப்போலும் புல்லிலலாத காட்டைப் போலும் இடையனில்லாத பசுக்களைப்போலும் அரசனில்லாத ராஜ்யம் க்ஷேமத்தை அடையாது. ரதத்திற்கு த்வஜம் அடையாளம்; நெருப்பிற்குப் புகை அடையாளம்; எங்களுக்கு மஹாராஜா அடையாளம்; அவர் இவ்வுலகத்தை விட்டுத் தேவலோகம் போய்விட்டார்.

(35) அரசனில்லாத ராஜ்யத்தில் எவனும் ஒரு பொருளையும் தனதென்று சொல்லிக்கொள்ளமுடியாது. மீன்களைப்போல் ஒருவரை ஒருவர் தின்றுவிடுவார்கள்.

(36) தங்களுடைய ஜாதியையும் வர்ணுசிரமத்தையும் விட்டதற்காக அரசனுல் தண்டிக்கப்பட்டவர்களும் நாஸ்திகர்களும், இப்பொழுது கொஞ்சமும் பயமில்லாமல், தங்களுக்கு வேண்டாதவர்களைத் துன்பப்படுத்துவார்கள்;ஸாதுக்களென்று பெயரெடுப்பார்கள்.

(37) நேத்திரம் தேகத்திற்கு ஹிதத்தைத் தேடிக் கெடுதியை விலக்குவதுபோல், அரசன் குடிகளுக்குத் துன்பத்தை நீக்கி க்ஷேமத்தை அருள்வான். ஸத்யத்திற்கும் கர்மத்திற்கும் அவனே உத்பத்தி ஸ்தானம்; அவனே ஸத்தியம்; அவனே தர்மம். உத்தம



குலத்தில் பிறந்தவர்களுக்குக் குலாசாரத்தை நடத்திவைப்பவனும் அவனே. ஜனங்களுக்குப் பெற்றோரும் அவனே; ஹிதத்தைச் செய்கிறவனும் அவனே.

பிராணிகளைத் தண்டிப்பது மாத்திரமே யமனுடைய வேலை; செல்வத்தைக் கொடுப்பது மாத்திரமே குபேரனுடைய வேலை; காப்பாற்றுவது மாத்திரமே இந்திரனுடைய வேலை. நன்னடத்தையை அனுஷ்டிக்கும்படி செய்வது மாத்திரமே வருணனுடைய வேலை. மேற்சொன்ன ஒவ்வொருவரும் ஒரு திக்கிலுள்ள பிராணிகளை மாத்திரம் ரக்ஷிக்கிருர்கள். அரசனே இந்த நான்கு வேலைகளையும் ஒருவனாகவே பார்க்கிறான். நான்கு திக்குகளிலுமுள்ள பிராணிகளை ஒருவனாகவே காப்பாற்றுகிறான். ஆகையால் திக்பாலர்கள் அவனுக்குத் தாழ்ந்தவர்களே.

ஐயோ! ராஜ்யத்தில் அரசனிருந்து நியாயாநியாயங்களை விசாரிக்கா விட்டால் இந்த லோகத்தில் ஒன்றும் விளங்காது. ஸூரியன் இல்லாமல் இருட்டால் மூடப்படுவதுபோல், கேவலம் அக்ஞானத்தால் மூடப்பட்டிருக்கும்.

ஸமுத்திரம் கரையைத் தாண்டாததுபோல், மஹாராஜா இருக்கும்பொழுதே நாங்கள் தங்களுடைய சொல்லை வேதவாக்கியமாக நினைத்துக் கீழ்ப்படிவோம். இப்பொழுது சொல்லவும் வேண்டுமா? பிராம்மண சிரேஷ்டரே! அரசனில்லாமல் தவிக்கும் எங்களுடைய நிலைமையையும் அரசனில்லாமல் இந்த ராஜ்யம் காடானதையும் நன்ருக ஆலோசித்து ராஜபுத்திரர்களில் யோக்கியரான ஒருவரை எங்களுக்கு அரசனாக நியமிக்கவேண்டும்'' என்று பிரார்த்தித்தார்கள்.

ஸ ந: ஸமீக்ஷ்ய த்³விஜவர்ய வ்ருத்தம்
ந்ருபம் விநா ராஜ்ய மரண்ய பூ⁴தம் |
குமார மிக்ஷ்வாகுஸுதம் வத³ாந்யம்
த்வமேவ ராஜாந மிஹாபி⁴ஷிஞ்ச ‖ (38)

## ஸர்க்கம் 68

## தூதர்கள் பரதனை அழைக்கப்போனது

தேஷாம் தத்³வசநம் ஶ்ருத்வா வஸிஷ்ட²: ப்ரத்யுவாச ஹ |
மித்ராமாத்யக³ணாந் ஸர்வாந் ப்³ராஹ்மணாம்ஸ்தாநித³ம் வச:(1)

இப்படி ஸுமந்திரர் முதலிய மந்திரிகளும் மார்க்கண்டேயர் முதலிய பிராம்மணர்களும் சொல்ல, வஸிஷ்டர், "பரதன் தன் அம்மானுடைய நகரமான ராஜகிருஹத்தில் சத்ருக்னனுடன் இப்பொழுது வஸித்துக்கொண்டிருக்கிறான். வேகமாகப் போகும் தூதர்கள் குதிரைகளிலேறி அவர்களை இப்பொழுதே அழைத்துவரட்டும். சக்கரவர்த்தியே பரதனிடத்தில் ராஜ்யத்தை ஒப்புவித்திருக்கையில்

நாம் ஏன் தாமதம் செய்யவேண்டும்?'' என்ருர். மந்திரிகளும் "இப்பொழுதே தூதர்கள் போகட்டும்'' என்ருர்கள். வஸிஷ்டர் "ஸித்தார்த்த! விஜய! ஜயந்த! அசோகவர்த்தன! இங்கே வாருங்கள். செய்யவேண்டிய விஷயத்தைத் தெளிவாகச் சொல்லுகிறேன்; கவனித்துக் கேளுங்கள். அதிவேகமுள்ள குதிரைகளிலேறி ராஜகிருஹமென்ற நகரத்திற்குக் கூடிய சீக்கிரத்தில் போங்கள். மஹாராஜாவின் மரணத்தாலுண்டான துக்கக் குறிகளைக் காட்டிக்கொள்ளவேண்டாம். பரத சத்ருக்னர்களை வணங்கி, பரதனிடத்தில், ஸ்வாமி! தங்கள் புரோஹிதரான வஸிஷ்டரும் ஸகல மந்திரிகளும் தங்களுடைய க்ஷேமத்தை விசாரிக்கிருர்கள். ஏதோ ஒரு முக்கியமான காரியத்தை உத்தேசித்துத் தாங்கள் உடனே புறப்பட்டு வரவேண்டுமென்று சொன்ஞர்கள்' என்று சொல்லவேண்டும். ராமலக்ஷ்மணர்களும் ஸீதையும் காட்டிற்குப் போனதையாவது மஹாராஜா ஸ்வர்க்கத்தை அடைந்ததையாவது சொல்லவேண்டாம். நேர்த்தியான ஆடைகளையும் உத்தமமான ஆபரணங்களையும் கேகயராஜனுக்குக் காணிக்கையாக எடுத்துக்கொண்டு சீக்கிரமாகப் புறப்படுங்கள்'' என்று கட்டளையிட்டு பிரயாணத்திற்கு வேண்டிய திரவியத்தை அவர்களுக்குக் கொடுத்தனுப்பினுர்.

அவர்கள் வீட்டிற்குப் போய்த் தங்களைச் சேர்ந்தவர்களிடத்தில் சொல்லிக்கொண்டு, பிரயாணத்திற்கு வேண்டியவைகளை ஸித்தம்செய்து, வாயுவேகமுள்ள குதிரைகளிலேறி அயோத்யையிலிருந்து புறப்பட்டார்கள். முதலில் மேற்கே போய், அபரதாலம் பிரலம்பமென்ற மலைகளுக்கு நடுவில், வடக்கு முகமாக மாலினி நதிக்கரையின்மேல் பிரயாணம்செய்து, பிறகு பிரலம்ப பர்வதத்திற்கு வடக்கில் மேற்கு முகமாகத் திரும்பினுர்கள். ஹஸ்தினபுரத்திற்கு ஸமீபத்தில் கங்கையைத் தாண்டி, குருஜாங்கல தேசத்தின் வழியாகப் பாஞ்சால நாட்டிற்குப் போய், அங்கிருந்து பல விசித்திரமான ஏரிகளையும் நிறைந்த வெள்ளத்துடன் விளங்கும் ஆறுகளையும் பார்த்துக்கொண்டு மேற்கே போனுர்கள். வழியில் சரதண்டா என்ற அழகிய நதியைக் கடந்து, அதின் மேற்குக் கரையில் ஸத்யோபயாசனமென்ற ஒரு பெரிய மரத்தைக் கண்டு அதில் வஸிக்கும் தேவதைக்குப் பிரதக்ஷிண நமஸ்காரம்செய்து குலிங்க நகரத்திற்கு வந்தார்கள். பிறகு போதிபவனம் என்ற மலையைத் தாண்டி, அபிகாளமென்ற கிராமத்திற்கு வந்து, இக்ஷ்வாகு குலத்தரசர்களுக்கு வெகுகாலமாக ஸ்வாதீனமான இக்ஷுமதி என்ற நதியைக் கண்டார்கள். அங்கே வேதத்தில் கரைகண்டவர்களும் இரண்டு கையளவு ஜலத்தையே ஆஹாரமாகக்கொண்டு தவம் செய்கிறவர்களுமான பிராம்மணர்களைக் கண்டார்கள். அங்கிருந்து பாஹ்லீக தேசத்தின் வழியாக ஸுதாமா என்ற மலையை நோக்கிப் போனுர்கள். அங்கே மஹாவிஷ்ணுவின் அடிச்சுவடுகளைக் கண்டு தரிசித்து, விபாசா, சால்மலியென்ற நதிகளையும், ஓடைகளையும் குளங்களையும் குட்டைகளையும் ஏரிகளையும் தாண்டி, அநேகம் சிங்கம் புலி கரடி முதலிய மிருகங்களைப் பார்த்துக்கொண்டு தங்கள் யஜமானனுடைய உத்தரவுப்படி வெகுதூரம் சென்ருர்கள். 'பரதனைச் சீக்கிரமாக அழைத்துவந்தால் தசரதருடைய உத்தரக் கிரியைகள் முடியும்; அவர் உத்தம கதியை அடைவார்; பரதனைச் சீக்கிரமாக அழைத்துப் போய் அபிஷேகம் செய்வித்தால் யாவருக்கும் நாதனுக அவன் ஏற்படுவான்; பிதாவிற்கு உத்தரக்கிரியைகளைச் செய்யும் பாக்கியம் தனக்குக் கிடைத்ததைப்பற்றிப் பரதனுக்கு மிகுந்த ஸந்தோஷமும் கீர்த்தியும் உண்டாகும்' என்ற காரணங்களால், அந்தத் தூதர்கள் அஜாக்கிரதையின்றி அதிவேகமாகப் பிரயாணம் செய்து, களைத்துப் போன குதிரைகளுடன் ஸூரியன் அஸ்தமித்த பிறகு கிரிவ்ரஜமென்ற நகரத்தில் பிரவேசித்தார்கள்.



ப4ர்து: ப்ரியார்த2ம் குலரக்ஷணர்த2ம்
ப4ர்துஸ்ச வம்ஸஸ்ய பரிக்3ரஹார்த2ம் |
அஹேட3மாநாஸ் த்வரயா ஸ்ம தூ3தா
ராத்ர்யாம் து தே தத்புரமேவ யாதா: ‖ (22)

---

## ஸர்க்கம் 69

## பரதன் கண்ட ஸ்வப்பனம்

---

யாமேவ ராத்ரிம் தே தூ3தா: ப்ரவிஸந்திஸ்ம தாம் புரீம் |
ப4ரதேநாபி தாம் ராத்ரிம் ஸ்வப்நோ த்3ருஷ்டோய மப்ரிய: ‖ (1)

அன்று இரவு விடியுமுன் பரதன் ஒரு கெட்ட ஸ்வப்பனத்தைக் கண்டு, காலைவேளையில் கண்ட ஸ்வப்பனம் உண்மையாகுமே என்று வருத்தப்பட்டுக்கொண்டிருந்தான். அவனுடைய நண்பர்கள் அதை அறிந்து அவனுடைய வருத்தத்தைப் போக்க விரும்பி வீணை முதலிய வாத்தியங்களை வாசித்தார்கள். சிலர் நர்த்தனம் அபிநயம் முதலியவைகளைச் செய்தார்கள். சிலர் ஸம்ஸ்கிருத பிராகிருத பைசாச மாகத பாஷைகளில் செய்யப்பட்ட நாடகங்களை எடுத்துச் சொன்ஞர்கள். சிலர் சிரிப்பு உண்டாகக்கூடிய வேடிக்கையான வார்த்தைகளைச் சொன்ஞர்கள். சிலர் விசித்திரமான கதைகளைச் சொன்ஞர்கள். ஆனுல் பரதன் அவைகளில் மனத்தைச் செலுத்தாமல் ஏதோ ஏக்கம் பிடித்திருப்பதைப் பார்த்து, ஒரு பிரியமான தோழன் "இன்றைக்கு உன் முகம் ஏன் பிரஸன்னமாக இல்லை? ஏதோ ஒரு பெரும் துக்கத்தை அனுபவிப்பதுபோல் தோன்றுகிருயே. அதை எங்களிடம் சொல்லக் கூடாதா?'' என்று வேண்டினுன்.

உடனே பரதன், "தோழா! கேள்; எனக்குத் துக்கம் உண்டானதற்குக் காரணம் இதுவே. நேற்று ராத்திரி கனவில் என்பிதா தலைமயிரை விரித்துக்கொண்டு அழுக்குப்படிந்த சரீரத்தோடு ஒரு

மலையின் உச்சியிலிருந்து பசுவின் சாணத்தால் நிறைந்த மடுவில் குதித்து நீந்தி விளையாடக் கண்டேன். கைகளால் எண்ணெய்யை வாரிக்குடித்துக்கொண்டு அடிக்கடி உரக்கச் சிரித்துக்கொண்டிருந்தார். தேகமெங்கும் எண்ணெயால் பூசப்பட்டிருந்தது. எள்ளன்னத்தைத் தின்றுகொண்டு எண்ணெயால் நிறைந்த மடுவில் தலைகீழாக விழுந்து முழுகினார். கடல் வற்றிற்று ; சந்திரன் ஆகாசத்திலிருந்து பூமியில் விழுந்தான் ; லோகம் முழுவதிலும் ஒரு பெரிய இருள் மூடிற்று; பட்டத்து யானையின் கொம்பு தூளாயிற்று; கொழுந்துவிட்டெறிந்த நெருப்புகள் திடீரென்று அணைந்தன; பூமி வெடித்தது; மரங்கள் பட்டுப் போயின; மலைகளிலிருந்து புகை கிளம்பிற்று. மஹாராஜா கறுத்த ஆடையை உடுத்துக்கொண்டு, கறுத்த இரும்பால் செய்யப்பட்ட ஆஸனத்தில் உட்கார்ந்தார். கறுப்பு நிறமுள்ள பெண்களும் மஞ்சள் வர்ணமுள்ள பெண்களும் அவரைச் சுற்றி நின்றுகொண்டு கைகொட்டிச் சிரித்தார்கள். பிறகு சிவப்புச் சந்தனத்தையும் சிவந்த மாலைகளையும் தரித்துக்கொண்டு, கழுதைகள் பூட்டப்பட்ட ரதத்தில் உட்கார்ந்து அதிவேகமாகத் தெற்கே போனார். சிவப்பு வஸ்திரத்தை அணிந்த ஒரு ராக்ஷஸி, பயங்கரமான முகத்துடன் சிரித்துக்கொண்டு மஹாராஜாவைக் கட்டி இழுத்தாள். நேற்று ராத்திரியில் இந்த அசுபமான ஸ்வப்பனங்களைக் கண்டேன். நானாவது ராமனாவது மஹாராஜாவாவது லக்ஷ்மணனாவது இறப்போம்."

"ஸ்வப்பனத்தில் கழுதைகள் பூட்டப்பட்ட ரதத்தில் ஒருவன் போவதாகக் கண்டால் அவனுடைய பிணத்தின் புகையை அதி சீக்கிரமாக மயானத்தில் பார்க்கலாம். நான் கவலையோடிருப்பதற்கும் அதை நீக்க நீங்கள் செய்யும் முயற்சிகளைக் கவனிக்காமலிருப்பதற்கும் காரணம் இதே. என் நெஞ்சு உலர்ந்து போகிறது; என் மனம் ஏதோ கஷ்டப்படுகிறது. பயமுண்டாகக்கூடிய யாதொரு காரணத்தையும் காணேன். ஆனால் பயப்படுகிறேன் என்பதில் ஸந்தேகமில்லை. என் பேச்சும் வார்த்தையும் குரலும் வழக்கம் போல் கம்பீரமாக இல்லை. என் காந்தியும் தேஜஸும் குறைந்தன. எனக்கு என்னிடத்திலேயே வெறுப்புண்டாகி இருக்கிறது. ஆனால் இதற்குக் காரணம் மாத்திரம் இன்னதென்று தெரியவில்லை. இதுவரையில் இவ்விதமான ஸ்வப்பனத்தை நான் கண்டதே இல்லை. இது நிச்சயமாகப் பலிக்கும். இதையும் எவ்விதத்திலும் சிரேஷ்டரான என் பிதாவையும் நினைக்கும்பொழுது என் மனத்தில் பயம் வரவர அதிகமாகிறது" என்று கூறிக் கவலைகொண்டான்.

இமாம் ஹி து³ஸ்ஸ்வப்நக³திம் நிஶாம்ய தாம்
அநேகரூபா மவிதர்கிதாம் புரா |
ப⁴யம் மஹத் தத் ஹ்ருத³யாந் ந யாதி மே
விசிந்த்ய ராஜாந மசிந்த்ய த³ர்ஶநம் ॥ (22)



## ஸர்க்கம் 70

## பரதன் அயோத்யைக்குப் புறப்பட்டது

ப⁴ரதே ப்³ருவதி ஸ்வப்நம் தூ³தாஸ்தே க்லாந்தவாஹநா: |
ப்ரவிஶ்யாஸஹ்ய பரிக²ம் ரம்யம் ராஜக்³ருஹம் புரா ॥

இப்படித் தான் கண்ட ஸ்வப்பனத்தைப் பரதன் சொல்லிக்கொண்டிருக்கையில், அதிவேகமாக பிரயாணம் செய்ததால் களைத்த குதிரைகளுடன் கூடிய தூதர்கள், சத்துருக்கள் பிரவேசிக்க முடியாத ராஜகிருஹம் என்ற நகரத்தில் வந்தார்கள். கேகய ராஜனைத் தரிசித்து, தாங்கள் கொண்டுவந்த காணிக்கைகளை ராஜபுத்திரனை யுதாஜித்திற்கு எதிரில் வைத்து, அவர் அவைகளைப் பார்த்து வெகுமானம் செய்தவுடன், பரதனுடைய பாதங்களைத் தொட்டு வணங்கி, "ஸ்வாமி! புரோஹிதரான வஸிஷ்டபகவானும் மந்திரிகளும் தங்களுடைய க்ஷேமத்தை விசாரித்தார்கள். 'நீ வந்தபிறகு ஒரு முக்கியமான காரியம் நடக்கவேண்டியிருப்பதால் உடனே புறப்பட்டு வரவேண்டும். இந்த நேர்த்தியான ஆடைகளையும் ஆபரணங்களையும் நீ பார்த்து ஒப்புக்கொண்டு, இவைகளில் இருபது கோடி திரவியம் பெறும் வஸ்துக்களை உன் பாட்டனுக்கும், பத்து கோடி பெறும் வஸ்துக்களை உன் மாமனுக்கும் சேர்ப்பிக்க வேண்டும்' என்று தங்களிடத்தில் தெரிவிக்கச் சொன்னார்கள்" என்றார்கள்.

தன் பந்துக்களிடத்தில் மிகுந்த பிரீதியுள்ள பரதன் அவைகளைப் பெற்றுக்கொண்டு அப்படியே சேர்ப்பித்து, வந்த தூதர்களை அன்னபானம் முதலியவைகளால் நன்றாக உபசரித்து, பிறகு "என் பிதா க்ஷேமமா? மஹாத்மாக்களான ராமலக்ஷ்மணர்கள் க்ஷேமமா? மஹாஞானியான ராமனுடைய தாய் கௌஸல்யாதேவி க்ஷேமமா ? அவள் எல்லா விதத்தாலும் என்னால் பூஜிக்கத் தகுந்தவள் ; ஜனங்களுடைய குணங்களையே கவனித்துக் கெட்ட குணங்களை மறக்கிறவள். எல்லா தர்மங்களையும் அறிந்தவள்; அவைகளைப் பூர்ணமாக அனுஷ்டிக்கிறவளல்லவா? லக்ஷ்மண சத்ருக்னர்களின் மாதாவான ஸுமித்திராதேவி க்ஷேமமா? தன் நன்மையையே நாடுகிறவளும் கடுமையான பார்வையையுடையவளும் காரணமில்லாமல் கோபிப்பவளும் மிகுந்த புத்திசாலி என்று கர்வமடைபவளுமான என் தாய் கைகேயியும் க்ஷேமமா ? அவள் தன் பந்துக்களுக்கு என்ன ஸமாசாரம் சொல்லியனுப்பினாள்?" என்று கேட்டார். (தான் கண்ட ஸ்வப்பனத்தையும் தூதர்களுடைய வரவையும் ஒன்று சேர்த்து ஆலோசித்து, கைகேயி ஏதோ ஒரு கெடுதியைச் செய்திருக்கவேண்டுமென்று பரதன் ஊஹித்ததாகத் தோன்றுகிறது.)

இப்படி மஹாபுத்திமானான பரதன் அயோத்யையில் நடந்த விருத்தாந்தத்தை ஒருவாறு ஊஹித்தறிந்து கேட்டவுடன், அந்தத்

தூதர்கள், பதில் சொல்லக் கொஞ்சம் தாமதித்தாலும் பரதன் வேறு விதமாக எண்ணிக்கொள்வானென்று பயந்து, உடனே "ஸ்வாமி! எவர்களுடைய க்ஷேமத்தைத் தாங்கள் கோருகின்றீர்களோ அவர்கள் யாவரும் ஸுகமாயிருக்கிறார்கள். எல்லாவித ராஜலக்ஷ்மியும் தங்களை வந்து அடையக் காத்துக்கொண்டிருக்கிறது. ரதத்தைச் சீக்கிரத்தில் ஸித்தம் செய்யவேண்டும்'' என்று வெகு விநயமாகத் தெரிவித்தார்கள். ஒவ்வொருவரையும் பற்றி க்ஷேமம் விசாரித்ததைச் சொன்னால், பரதனுக்கு சந்தேகமுண்டாகுமென்று, பொதுவாகப் பதில் சொல்லி, அவனுக்கு ஸகல அசுபத்தை நீக்கவும் கிடைக்கப்போகிற ராஜ்யத்தைக் குறிக்கவும், 'ராஜ்யலக்ஷ்மி' என்ற சொல்லை உபயோகித்து அயோத்யையில் நடந்த வரலாற்றை முற்றிலும் மறைத்தார்கள்.

பிறகு பரதன் தன் பாட்டனிடத்திற்குப்போய்," அயோத்யையிலிருந்து வந்த தூதர்கள் என்னை உடனே புறப்படும்படி சீக்கிரப்படுத்துகிறார்கள். போய் வருகிறேன். என்னைப் பார்க்க வேண்டுமென்று எப்பொழுது நினைக்கிறீர்களோ அப்போது திரும்பி வருகிறேன்'' என்றார். அதைக் கேட்டு கேகய ராஜன் பரதனைக் கட்டியணைத்து உச்சிமுகர்ந்து, "குழந்தாய், க்ஷேமமாகப் போய் வா. உன்னைப் பெற்ற கைகேயி பாக்கியசாலி. அவளையும் தசரதரையும் வஸிஷ்ட மஹரிஷியையும் இன்னும் மற்ற பிராம்மணோத்தமர்களையும் மஹாவீரர்களான ராமலக்ஷ்மணர்களையும் நான் க்ஷேமம் விசாரித்ததாகச் சொல்'' என்று பரதனைப் பலவிதமாகக் கொண்டாடினார். உத்தமமான யானைகளையும் விசித்திரமான கம்பளங்களையும் மான்தோல்களையும் மார்பில் அணிந்துகொள்ளும் நிஷ்கமென்ற ஆபரணங்களில் (காசுமாலை) இரண்டாயிரங்களையும் ஆயிரத்தறுநூறு குதிரைகளையும் கொடுத்தார். தனக்கு மிகுந்த நம்பிக்கையுள்ளவர்களும் உத்தம குணசாலிகளுமான மந்திரிகளை அழைத்து "நீங்கள் பரதனுடன் போய் இவைகளை அயோத்யைக்குக் கொண்டுபோய்ச் சேர்க்கவேண்டும்'' என்று உத்தரவிட்டார். இராவான் இந்திர சிரஸென்ற மலைகளில் பிறந்து உத்தம லக்ஷணங்கள் பொருந்தின யானைகளையும், நன்றாகப் பழக்கப்பட்டு அதிவேகமாகப் போகும் கோவேறு கழுதைகளையும் பரதனுடைய மாமன் அவனுக்கு வெகுமானமாகக் கொடுத்தார். மேலும், உத்தம ஜாதி வேட்டை நாய்கள் பலவற்றையும் கொடுத்தார். அவை அந்தப்புரத்தில் வளர்க்கப்பட்டவை. எல்லையற்ற பலத்தையும் புலிகளின் வீரியத்தையும் பெரிய தேகங்களையுமுடையவை. பற்களே அவைகளுக்கு ஆயுதம். பரதனோ அயோத்தைக்குச் சீக்கிரமாகப் போய்ச் சேரவேண்டுமென்ற கவலையால் அரசன் கொடுத்த வெகுமதிகளால் ஸந்தோஷமடையவில்லை. தூதர்களின் பரபரப்பாலும் தான் கண்ட கனவாலும் அவனுடைய மனதில் பெருங் கவலை உண்டாயிற்று.



தன் அரண்மனையிலிருந்து ராஜவீதியில் வந்து அங்கிருந்து அரசனுடைய அந்தப்புரத்திற்குள் போய், கேகய ராஜனையும் தன் மாமனையும் நமஸ்கரித்து உத்தரவு பெற்றுக்கொண்டு, சத்ருக்னனுடன் அந்த நகரத்திலிருந்து புறப்பட்டு மிக வேகமாக பிரயாணம் செய்தான். ஒட்டகங்களும் எருதுகளும் குதிரைகளும் கோவேறு கழுதைகளும் பூட்டப்பட்ட ரதங்களில் ஸேவகர்கள் பின்தொடர்ந்தார்கள். இந்திரலோகத்திலிருந்து தேவகணங்கள் புறப்பட்டு வருவதுபோல், மஹாதைரியமுள்ள பரத சத்ருக்னர்கள் மந்திரிகளுடன் யுதாஜித்தின் ஸைன்யத்தால் சூழப்பட்டு அயோத்யையை நோக்கிப் புறப்பட்டார்கள்.

ப3லேந கு3ப்தோ ப4ரதோ மஹாத்மா
ஸஹார்யகஸ்யாத்ம ஸமைரமாத்யை: |
ஆதா3ய ஶத்ருக்4நம பேதஶத்ரு:
க்3ருஹாத்3 யயௌ ஸித்3த4 இவேந்த்3ரலோகாத் || (30)

---

## ஸர்க்கம் 71

## பரதன் அயோத்யைக்கு வந்தது

ஸ ப்ராங்முகோ ராஜக்3ருஹா த3பி4நிர்யாய ராக4வ: |
தத: ஸுதா3மாம் த்3யுதிமாந் ஸந்தீர்யாவேக்ஷ்ய தாம் நதீ3ம் || (1)

ராஜகிருஹமென்ற பட்டணத்திலிருந்து கிழக்கே சென்று, ஸுதாமா ஹ்லாதினியென்ற நதிகளைத் தாண்டி, ஏலக்காய்கள் விளையும் ஏலாதானமென்ற நகருக்கருகில் மேற்குமுகமாக ஓடும் சதத்ருவைத் தாண்டி, அபரபர்ப்படா என்ற கிராமத்தில் இளைப்பாறச் சற்று நேரம் தங்கினார்கள். பிறகு கற்பாறைகளை ஸமீபத்தில் இழுக்கும் சக்தியுள்ள சிலாவஹா நதியைக் கடந்து, அதற்கு ஆக்னேய திக்கிலுள்ள சல்யகர்த்தன நகரத்தின் வழியாகப் போய், அங்குள்ள ஜனங்களின் பயத்தைத் தீர்ப்பதாக பிரதிக்ஞைசெய்து அப்படியே நிறைவேற்றினான். சைத்ரரதமென்ற அழகிய வனத்தைப் பார்க்க விரும்பி மஹாபர்வதங்களைத் தாண்டிப் போய் ஸரஸ்வதியையும் ஸிந்துவென்ற கங்கையின் வெள்ளத்தையும் கடந்து, வீரமத்ஸ்ய தேசத்திற்கு வடக்கிலுள்ள பாருண்ட வனத்தில் புகுந்தான். பிறகு பர்வதங்கள் சூழ அதிவேகமாக ஓடும் குலிங்காவை யமுனையின் ஸமீபத்தில் தாண்டி, வெயிலால் களைத்த பரிவாரங்களை நடுப்பகலில் தங்கும்படி செய்தான். வெகுதூரம் நடந்து வந்த களைத்த குதிரைகளைக் கொஞ்சநேரம் நிழலில் படுக்கச் செய்து ஆற்றில் தேய்த்துக் குளிப்பாட்டி, தானும் ஸ்நானம் ஜபம் போஜனம் முதலியவைகளை முடித்து, போகும் வழியில் ஜலம் கிடைக்காததால் நீரை நிரப்பிக்கொண்டு அங்கிருந்து புறப்பட்டான்.

அரண்யத்தில் பிரயாணம் செய்வதில் வெகு திறமையுள்ள பத்ரமென்ற ஜாதியைச் சேர்ந்த யானைமேல் மனுஷ்யஸஞ்சாரமில்லாத அந்தப் பாலைவனத்தை, வாயுபகவான் மலைகளால் தடுக்கப்படாமல் ஆகாசத்தில் ஸஞ்சரிப்பதுபோல், அதிவேகமாகக் கடந்தான். அம்சுதான நகரத்திற்கருகில் கங்கையைத் தாண்டுவது கஷ்டமென்றறிந்து, ப்ராக்வடமென்ற இடத்திற்கு ஸமீபத்தில் அதைத் தாண்டினான். பிறகு குடிகோஷ்டிகா நதியைக்கடந்து, தர்மவர்த்தன கிராமத்திற்கு வந்தான். பிறகு தோரணமென்ற கிராமத்திற்குத் தென்புறமாகப் போய், ஜம்பூப்ரஸ்த கிராமத்தின் வழியாக வருதமென்ற ஸ்தலத்திற்குப் போனான்.

அதற்கருகிலுள்ள வனத்தில் அன்று ராத்திரி தங்கினான். காலையில் புறப்பட்டுக் கிழக்காகப் போய் உஜ்ஜிஹானா நகரத்திற்கு ஸமீபத்தில் இலுப்பைத் தோப்பில் தங்கினான். அதற்கப்பால் கோஸல ராஜ்யமானதால் தன் ஸைன்யத்தை நிறுத்திப் பயமில்லாமல் மெதுவாக வரட்டும் என்று சொல்லி, அதிவேகமுள்ள குதிரைகளை ரதத்தில் கட்டி, தான் முன்பாகப் போனான். ஸர்வதீர்த்த கிராமத்தில் ஒரு ராத்திரி தங்கினார். உத்தானிகா முதலிய ஆறுகளை மலைநாட்டில் பிறந்து வளர்ந்த குதிரைகளால் லகுவாகத் தாண்டினான். ஹஸ்திபிருஷ்ட கிராமத்திற்கு வந்து அதனருகில் குடிகா நதியைக் கடந்து அங்கிருந்து லௌஹித்ய நகரத்திற்குப் போய் அதற்கருகில் கபீவதியைத் தாண்டினான். ஏகஸாலா கிராமத்திற்கருகில் ஸ்தாணுமதியையும் விநத கிராமத்திற்கருகிலுள்ள கோமதியையும் கடந்து கலிங்க நகரத்திற்கருகிலுள்ள ஆச்சாமரச் சோலையில் இளைப்பாறி, அன்று ராத்திரியில் அந்த வனத்தைத் தாண்டி, அருணோதயத்தில் அயோத்யைக்கு வந்தான்.

ஏழுநாட்கள் இரவுபகலாகப் பிரயாணம்செய்து எட்டாவது நாட்காலையில் அயோத்யையில் பிரவேசித்தான். "ஸாரதியே! புண்ணியமான தோட்டங்களால் சூழப்பட்டு மஹாகீர்த்திபெற்ற இந்த அயோத்யை, ஏதோ ஸந்தோஷக் குறைவை அடைந்திருப்பதாகத் தோன்றுகிறது. சுவர்கள் பசுவின் சாணத்தால் பூசப்படாமல் வெளுத்திருக்கின்றன. பாரும்! இங்குள்ள பிராம்மணர்கள் வேதவேதாந்தங்களை நன்றாக அறிந்தவர்கள். சமதமாதி குணங்களால் அலங்கரிக்கப்பட்டவர்கள்; விசேஷ தனிகர்கள். விதிப்படி யாகங்களைச் செய்தவர்கள், ராஜரிஷியான தசரதரால் பரிபாலிக்கப்பட்டவர்கள். நான்குபுறத்திலும் ஸந்தோஷமாக ஸஞ்சரிக்கும் ஸ்த்ரீ புருஷர்களின் சப்தம் ஏன் கேட்கவில்லை? ஸாயங்காலத்தில் ஆண் பெண்கள் தோட்டங்களுக்குப் போய் ராத்திரி முழுவதும் ஆனந்தமாக விளையாடிக் கொண்டிருந்து அங்கிருந்து நான்கு புறங்களிலும் புறப்பட்டுப் போவார்களே; இப்பொழுது அந்த அழகும் வைபவமும் ஏன் காணப்படவில்லை? ஜனஸஞ்சாரமில்லாமல்



அயோத்யை அழுதுகொண்டிருப்பது போலத் தோன்றுகிறது. இந்த நகரம் காடாயிற்றா? முன்போல் முக்கியமான ஜனங்கள் யானைகளிலும் குதிரைகளிலும் வாஹனங்களிலும் அங்குமிங்கும் அதிவேகமாகப் போக வரக் காணவில்லையே.

பழங்கள் துளிர்கள் தேன்கள் இவைகளைப் புஜித்து, மதங்கொண்ட கிளிகள் குயில்கள் வண்டுகளோடும், பாத்திகட்டி எருப்போட்டு ஜலம்பாய்ச்சி வளர்க்கப்பட்ட அபூர்வமான மரங்களோடும்கூடி, புஷ்பங்களால் மறைக்கப்பட்ட லதாகிருகங்கள் நீரோடைகள் கிரீடாபர்வதங்களால் ரதிஸுகத்தை அனுபவிக்க அங்கே வந்து சேரும் ஸ்த்ரீ புருஷர்களுக்கு வெகு அனுகூலமாயிருக்கின்ற தோட்டங்கள் சந்தோஷமற்று நாசமடைந்தனபோல் காணப்படுகின்றன. மரங்களிலிருந்து இலைகள் உதிர்வது, கண்ணீர் விட்டழுவதுபோலிருக்கிறது. ஸூரியோதயமானாலும் மிருகங்களும் பறவைகளும் இஷ்டமான ஆஹாரத்தைப் புசித்து மதம்கொண்டு மதுரமாகக் கூவவில்லையே. சந்தனம் அகில்தூபம் முதலிய பரிமளங்களைக் கவர்ந்து, காற்று குளிர்ச்சியாகவும் ஸுகமாகவும் முன்போல் அடிக்கவில்லையே. பேரீ மிருதங்கம் வீணை முதலிய வாத்தியங்களை வாசிக்கும் சப்தம் முன்போல் நான்கு புறத்திலும் கேட்பதற்கு ஆனந்தத்தைக் கொடுக்கவில்லையே. அநேக கொடிய அபசகுனங்கள் காணப்படுகின்றன. ஏதோ ஒரு பெரிய அபாயம் நேரப்போகிறது. என் பந்துக்களில் எல்லோரும் எப்பொழுதும் ஸுகமாக இருப்பார்களென்று நம்பமுடியுமா? ஆகையால் என் மனம் கலங்கி வருந்துகிறது" என்று ஸந்தேகித்துக்கொண்டே புத்திஸ்வாதீனமின்றி ஏக்கம் பிடித்து ஒன்றும் தோன்றாமல், வைஜயந்தமென்ற கோட்டை வாசலால் உள்ளே புகுந்தான்.

அங்குள்ள காவற்காரர்கள் 'ஜயவிஜயீபவ' என்று ஆசீர்வாதம் செய்ய, அவர்களுடன் அந்தப்புரத்திற்கு வந்தான். பற்பலவிதமாக யோசனை செய்துகொண்டு வாயிலில் நிற்கும் காப்பாளர்களை உபசரித்து அங்கேயே நிறுத்திவிட்டு, "ஸாரதி! காரணமில்லாமல் இவ்வளவு வேகமாக என்னை ஏன் தருவிக்கவேண்டும்? ஏதோ கெடுதி நேர்ந்திருக்க வேண்டுமென்று ஸந்தேகமுண்டாகிறது. மனம் தளர்கிறது. அரசர்கள் மரணமடைந்தபொழுது எந்த அடையாளங்கள் இருந்ததாகச் சொல்லக் கேட்டிருக்கிறேனோ அவையெல்லாம் இப்பொழுது தோன்றுகின்றன. குடும்பிகளின் வீடுகள் பெருக்கி மெழுகிக் கோலமிடாமல், கதவு திறந்து களையற்றுத் தூபம் முதலிய பரிமள வஸ்துக்களில்லாமல் அக்னிஹோத்திரம் வைச்வதேவம் முதலிய நித்திய கர்மங்கள் நடத்தப்படாமல், வீட்டிலுள்ளவர்கள் போஜனம் செய்யாமல் இருக்கக் காரணமென்ன? தேவாலயங்கள் மாலைகளாலும் தோரணங்களாலும் விளங்காமல், பெருக்கி மெழுகி அலங்கரிக்கப்படாமல், அர்ச்சகர்களும் பரிசாரகர்களுமின்றி, என்

சூன்னியமாக இருக்கின்றன? தேவதார்ச்சனைகள் நடக்கவில்லை; யாகஸ்தலங்கள் சூன்யமாயின; புஷ்பக் கடைகளில் புஷ்பங்களையும் மாலைகளையும் காணவில்லை. வர்த்தகர்கள் வியாபாரம் செய்யாமல் கவலை மேலிட்டு உட்கார்ந்திருக்கிறார்கள். தேவாலயங்களிலும் புண்ணிய விருக்ஷங்களிலும் வஸிக்கும் பக்ஷிகள் வாடியிருக்கின்றன. ஆண்பெண்கள் அனைவரும் கண்ணீர் பெருக, அழுக்குப் படிந்த தேகத்துடன், கவலை மேலிட்டுத் திகைத்து நிற்கிறார்கள்" என்று சொல்லிக்கொண்டு, வழியில் காணப்படும் அபசகுனங்களையும் பார்த்துக்கொண்டு அரசனுடைய அரண்மனைக்குப் போனான். அங்கே நாற்சந்திகளிலும் அரண்மனையைச் சுற்றின வீதிகளிலும் ஜனஸஞ்சாரம் இல்லை. கதவுகள் சுத்தம் செய்பவர்களில்லாமல் புழுதிபடிந்து விகாரமாக இருந்தன. முன்பு தேவேந்திரனுடைய ராஜதானியைப்போல் ஸகல ஐசுவரியத்தாலும் விளங்கிக் கொண்டிருந்த அயோத்யை, இப்படிப் பாழானதைப் பார்த்து, பரதன் அது வரையில் கண்டிராத அபசகுனங்களையும் விகாரமான காக்ஷிகளையும் கவனித்துக்கொண்டே, துக்கத்தால் தலைகுனிந்து தசரதருடைய அந்தப்புரத்தில் புகுந்தான்.

ப$^{3}$ஹூநி பஶ்யந் மநஸோऽப்ரியாணி
யாந்யந்யதா$^{3}$ நாஸ்ய புரே ப$^{3}$பூ$^{4}$வு: |
அவாக்ஶி$^{2}$ரா தீ$^{3}$நமநா ந ஹ்ருஷ்ட:
பிதுர் மஹாத்மா ப்ரவிவேஶ வேஶ்ம ‖ (46)

## ஸர்க்கம் 72
## பரத கைகேயீ ஸம்வாதம்

அபஶ்யம்ஸ் து ததஸ்தத்ர பிதரம் பிதுராலயே |
ஜகா$^{3}$ம ப$^{4}$ரதோ த்$^{3}$ரஷ்டும் மாதரம் மாதுராலயே ‖ (1)

மஹாராஜாவின் அந்தப்புரத்தில் தன் பிதாவைக் காணவில்லை. தன் தாயின் அந்தப்புரத்திற்குப் போனான். வேறு தேசத்திற்குப் போயிருந்த தன் புத்திரன் வந்ததைப் பார்த்துக் கைகேயிக்கு ஸந்தோஷம் தாங்கவில்லை. தங்க ஸிம்ஹாஸனத்திலிருந்து குதித்து வந்தாள். களையற்ற அந்த அந்தப்புரத்தில் பரதன் பிரவேசித்துத் தன் தாயின் பாதங்களைத் தொட்டு நமஸ்கரித்தான். அவளும் தன் அருமைக் குழந்தையை வாரிஅணைத்து உச்சிமுகர்ந்து மடியில் உட்காரவைத்து, "உன் பாட்டனுடைய நகரத்திலிருந்து புறப்பட்டு இன்றைக்கு எவ்வளவு நாட்களாயின? அதிவேகமாக ரதத்தில் வந்ததால் உனக்கு மிகுந்த சிரமம் நேர்ந்ததோ? உன் பாட்டனும் மாமனும் க்ஷேமமாக இருக்கிறார்களா? நீ இங்கிருந்து புறப்பட்டது முதல் நடந்த யாவற்றையும் விரிவாகச் சொல்லவேண்டும். க்ஷேமமாக வந்து சேர்ந்தாயல்லவா?" என்று கேட்டாள்.



பரதன், "என் பாட்டனுடைய கிருஹத்தை விட்டுப் புறப்பட்டு இது ஏழாவது ராத்திரி. தங்களுடைய பிதாவும் என் மாமனான யுதாஜித்தும் ஸுகமாக இருக்கிறார்கள். அவர்கள் எனக்குச் செய்த ஏராளமான வெகுமானங்களை எடுத்துக்கொண்டு பரிவாரங்கள் வேகமாக பிரயாணம்செய்ய முடியவில்லை. ஆகையால் அவர்களைப் பின் வரவிட்டு நான் அதிவேகமாக வந்துசேர்ந்தேன். மஹாராஜாவின் உத்திரவினால் தூதர்கள் என்னை அதிசீக்கிரமாக அழைத்து வந்த காரணமென்ன? அவர் வழக்கமாகப் படுக்கும் இந்தத் தங்கக் கட்டிலும் ஆஸனமும் ஏன் சூன்யமாக இருக்கின்றன? அவருக்கு ஏதாவது அஸௌக்யமா, மனக்கவலையா? தங்களுடைய அந்தப்புரத்தில் அவர் விசேஷமாக இருப்பதால் அவரைத் தரிசிக்கவேண்டி இங்கே வந்தேன். அவர் எங்கே? ஒருவேளை கௌஸல்யாதேவியின் அந்தப்புரத்திலிருக்கிறாரோ? இப்பொழுதே அவரை நான் நமஸ்கரிக்கவேண்டும்" என்றான்.

கைகேயி தன் மகனுக்கு ராஜ்யம் கிடைக்க வேண்டுமென்ற பேராசையால் புத்திகெட்டு, அரசனைப்பற்றின வரலாறு யாதென்று தெரியாத பரதனைப் பார்த்து அவனுக்கு வெகுகோரமான ஸமாசாரத்தை வெகுப் பிரியமாக இருக்கும் என்றுஎண்ணி, "மஹாத்மாவும் தேஜஸ்வியும் அடிக்கடி யாகங்களைச் செய்கிறவரும் ஸாதுக்களுக்கு கதியுமான மஹாராஜா, ஸகலப்பிராணிகளும் முடிவில் அடையவேண்டிய கதியை அடைந்தார்" என்று சொன்னாள். மஹா சுத்தமான அந்தக்கரணத்தையுடையவரும் தர்மவான்களின் வம்சத்தில் பிறந்தவருமான பரதன், உடனே கைகளை உதறிக்கொண்டு, "ஐயோ! அழிந்தேன்" என்று தீனமாக அலறினான். மஹா வீரனும் தைரியசாலியுமானாலும், பிதாவை இழந்த சோகத்தைத் தாங்கமுடியவில்லை; மூர்ச்சையடைந்து பூமியில் விழுந்தான். பிறகு பிரக்ஞை தெளிந்து, "ஆகாசம் மேகங்களில்லாமல் சுத்தமான ராத்திரியில் பூரணசந்திரனால் பிரகாசிப்பதுபோல், இதோ இருக்கும் தங்கக்கட்டில், மஹாராஜா அதில் படுத்திருக்கையில் பிரகாசிக்குமே. இப்பொழுது அவர் இல்லாமல் சந்திரன் இல்லாத ஆகாசத்தைப்போலும் ஜலம்வற்றின ஸமுத்திரத்தைப்போலும் விகாரமாக இருக்கிறதே" என்று கலகலவென்று கண்ணீருதிர்த்துத் தழுதழுத்த குரலுடன் வஸ்திரத்தால் முகத்தை மறைத்துக்கொண்டு வாய்விட்டழுதான்.

பூமியில் விழுந்த ஸூரியசந்திரர்களைப் போலும், மதம் பிடித்த யானையைப்போலும், காட்டில் கோடாலியால் வெட்டித் தள்ளப்பட்ட ஆச்சாமரத்தைப்போலும், ஸ்வர்க்கத்திலிருந்து பூமியில் விழுந்த தேவதையைப்போலும் தன் புத்திரன் துக்கம் தாங்காமல் பூமியில்கிடந்து புரளக்கண்டு, கைகேயி அவனைத் தூக்கியெடுத்து 'அரசனே! மஹாகீர்த்திமானே! எழுந்திரு, எழுந்திரு. ஏன் பூமியில்

கிடக்கிருய்? உன்னைப்போன்ற ஸாதுக்களும் எல்லோராலும் கொண்டாடப்பட்டவர்களும் இப்படித் துக்கிப்பார்களா? நன்னடத்தையையும் வேதவாக்கியத்தையும் எப்பொழுதும் அனுஸரிப்பதால் தானங்களையும் யக்ஞங்களையும் செய்வதற்கு யோக்கியமான உன் புத்தி ஸூரியனுடைய கிரணம் தன்னிருப்பிடத்தில் அசையாமலிருப்பதுபோல், ஒருநாளும் கலங்காதல்லவா'' என்று ஸமாதானம் செய்தாள்.

ஆனுல் பரதன் பூமியில் கிடந்து வெகுநேரம் புரண்டு கோவென்று அலறி, பலவிதமான துக்கங்களால் புண்பட்டு, "மஹாராஜா ராமனுக்கு அபிஷேகம் செய்விப்பார். அநேக யாகயக்ஞங்களைச் செய்வாரென்று நிச்சயமாக நம்பியல்லவா அங்கிருந்து புறப்பட்டு வந்தேன்? ஐயோ! என் எண்ணம் பாழாயிற்றே. எப்பொழுதும் ஸகலப் பிராணிகளின் க்ஷேமத்திலேயே நோக்கமுள்ள சக்கரவர்த்தியைக் காணுமல் என் ஹிருதயம் பிளக்கிறது. நான் இல்லாத ஸமயத்தில் மஹாராஜா எந்த வியாதியால் உயிரை இழந்தார்? ராமலக்ஷ்மணர்கள் அவருடைய மரணகாலத்தில் ஸமீபத்திலிருந்து ஸகல சுச்ரூஷைகளையும் செய்யும் பாக்கியத்தைப் பெற்ருர்களே. நான் வந்திருப்பதை அறிய என் பிதா இல்லையே! இருந்தால் என்னை வாரிஅணைத்து உச்சிமுகர்ந்து ஸந்தோஷிப்பாரே. புண்ணியசாலியான அந்த மஹாத்மா புழுதிபடிந்த என் தேகத்தைக் கைகளால் துடைக்கும்போது உண்டாகும் ஸுகத்தைச் சொல்லிமுடியுமா? எனக்கு ஸஹோதரரும் பிதாவும் பந்துவும் பிரபுவுமான ராமசந்திரனிடத்தில் நான் வந்திருப்பதாக உடனே தெரிவிக்கவேண்டும். தர்ம மார்க்கத்தை அறிந்த விவேகிக்கு மூத்த ஸகோதரன் பிதாவல்லவா? சக்கரவர்த்தி பரலோகமடைந்த பிறகு அவரே எனக்குக் கதி. அவரே எனக்குப் பிதா. ஆகையால் அவருடைய பாதங்களில் நமஸ்கரிக்கவேண்டும். ஸகல தர்மங்களையும் அறிந்தவரும் அவைகளைப் பூர்ணமாக அனுஷ்டிப்பவரும் ஸத்தியம் தவருதவரும் செய்த பிரதிக்ஞையை நிறைவேற்றுகிறவரும் மஹா பராக்கிரமசாலியும் உத்தமகுணங்களால் அலங்கரிக்கப்பட்டவருமான என் பிதா என்ன சொன்னுர்? அவர் தன் மரணகாலத்தில் எனக்குச் செய்த ஹிதோபதேசத்தையும் ஆக்ஞையையும் கேட்க விரும்புகிறேன்'' என்ருன்.

உடனே கைகேயி, "அவருக்கு மரணகாலத்தில் உன் ஞாபகமே இல்லை. 'ஹா ராம! ஹா லக்ஷ்மண!! ஹா ஸீதே!!!' என்று உயிரை விட்டார். கயிறுகளால் கட்டப்பட்ட மஹாகஜத்தைப்போல் உன் பிதா மரணகாலத்தில் என்னைப் பார்த்து, 'ராமலக்ஷ்மணர்களும் ஸீதையும் அயோத்யைக்குத் திரும்பிவரும்பொழுது அவர்களைப் பார்க்கக் கிடைத்தவர்களே மஹாபாக்யசாலிகள்' என்றுகூறியபின்



பிரக்ஞை இழந்தார்'' என்ருள். தசரதர் இறந்த ஸமாசாரத்தைக் கேட்டதாலுண்டான துக்கத்தைவிட ராமலக்ஷ்மணர்கள் காட்டிற்குச் சென்றதைக் கேட்டவுடன் பரதனுக்கு அதிக துக்கமுண்டாயிற்று. "கௌஸல்யையின் பிரிய புத்திரனை அந்த தர்மாத்மா எங்கே? லக்ஷ்மணனும் ஸீதையும் எங்கே?'' என்று கேட்டான். உடனே கைகேயி தான் சொல்லப்போகும் ஸமாசாரம் பரதனுக்கு வெறுப்பாக இருக்குமென்று அறியாமல் பிரியமாக இருக்குமென்றெண்ணி, "ராமன் தபஸ்விகளுடைய வேஷத்தைத் தரித்து லக்ஷ்மணனேடும் ஸீதையோடும் தண்டகாரண்யத்திற்குச் சென்ருன்'' என்ருள்.

இக்ஷ்வாகுவம்சத்தரசர்கள் எப்பொழுதும் ஸன்மார்க்கத்தையே நாடினவர்களென்று பெயர் பெற்றவர்களாதலால், "ராமன் ஏதாவது குற்றம் செய்து அதற்காகத் துரத்தப்பட்டாரோ'' என்ற ஸந்தேகத்தால் பரதன் திகிலடைந்து, "எந்தப் பிராம்மணருடைய தனத்தையாவது ராமன் அபகரித்தாரோ? குற்றமில்லாத எந்தத் தரித்திரனையாவது ஹிம்சை செய்தாரோ? பரஸ்த்ரீகளைக் கைப்பற்றினுரோ? வேதங்களை அறிந்த பிராம்மணரைக் கொன்றவனைப்போல், ராமனைத் தண்டகாரண்யத்திற்கு ஏன் துரத்திவிட்டார்கள்?'' என்ருன்.

ஸ்த்ரீகளுக்கு ஸ்வபாவமாகவுள்ள சாபல்யத்தால் கைகேயி உடனே தான் செய்த காரியங்களை உள்ளபடி சொன்னுள். அவள் மிகவும் முட்டாள்; ஆனுல் தான் வெகு ஸாமர்த்தியசாலி என்று அவளுடைய நினைவு. "குழந்தாய்! ராமன் யாதொரு பிராம்மணருடைய தனத்தையும் அபகரிக்கவில்லை. பாபம் செய்யாத எந்தத் தரித்திரனையும் ஹிம்ஸை செய்யவில்லை. பரஸ்த்ரீகளைக் கண்ணெடுத்துப் பார்க்கவும் மாட்டான் ராமன். அவனுக்கு அபிஷேகம் நடக்கப்போகிறதென்று அறிந்து, உனக்கு அந்த ராஜ்யத்தைக் கொடுக்கவேண்டுமென்றும் ராமனைக் காட்டிற்கு அனுப்பவேண்டுமென்றும் உன் பிதாவைக் கேட்டேன். அவரும் அப்படியே பிரதிக்ஞை செய்து அதை நிறைவேற்றினுர். ராமலக்ஷ்மணர்களும் ஸீதையும் அதற்குக் கட்டுப்பட்டு வனத்திற்குப் போனுர்கள். தன் பிரியமான புத்திரனை விட்டுப் பிரிந்த தசரதர் துக்கம் தாங்காமல் அதே ஏக்கமாக உயிரை விட்டார். ராஜநீதியை அறிந்த நீ இப்பொழுது ராஜ்யத்தை ஒப்புக்கொள்ளவேண்டும். நான் உனக்காகவே இவை யாவையும் செய்தேனல்லவா? துக்கப்படாதே; சோகத்தைவிடு; தைரியமாக இரு. ஸகல ஸுகங்களும் பொருந்தின இந்த ராஜ்யம் உனதே. இந்த அயோத்யையும் உனதே. ஆகையால் வஸிஷ்டர் முதலிய பிராம்மணர்களால் உன் பிதாவுக்கு நடக்கவேண்டிய உத்திரக்கிரியைகளை அதி

சீக்கிரமாக நடத்தி, இந்த பூமண்டலத்திற்குச் சக்கரவர்த்தியாக உன்னை அபிஷேகம் செய்துகொள்" என்றாள்.

தத் புத்ர ஶீக்⁴ரம் விதி⁴நா விதி⁴ஜ்ஞை:
வஸிஷ்ட² முக்²யை: ஸஹிதோ த்³விஜேந்த்³ரை: |
ஸங்கால்ய ராஜாந மதீ³ந ஸத்வம்
ஆத்மாந முர்வ்யா மபி⁴ஷேசயஸ்வ ‖ (55)

---

## ஸர்க்கம் 73

## பரத கைகேயீ ஸம்வாதம் (தொடர்ச்சி)

ஶ்ருத்வா து பிதரம் வ்ருத்தம் ப்⁴ராதரௌ ச விவாஸிதௌ |
ப⁴ரதோ து³:க²ஸந்தப்த இத³ம் வசந மப்³ரவீத் ‖ (1)

தன் பிதா இறந்ததையும் ராமலக்ஷ்மணர்கள் காட்டிற்கு அனுப்பப்பட்டதையும் கேட்டுப் பரதன் அடங்காத்துயரம்கொண்டு "என் பிதாவும் இல்லாமல் அவருக்கு ஸமமான ஸஹோதரரும் இல்லாமல் பாக்கியஹீனனான நான் இந்த ராஜ்யத்தை வைத்துக் கொண்டு என்ன செய்யவேண்டும்? புண்ணில் உப்பு ஜலத்தை ஊற்றுவதுபோல் துக்கத்தின்மேல் துக்கமாக வைத்துத் தாக்கு கிறாயே. என் பிதா மரணமடைந்தது போதாதா ? ராமனும் காட்டிற்குப் போகவேண்டுமா? ஸகல பூதங்களையும் ஸம்ஹாரம்செய்யும் பிரளயகால ராத்திரியைப்போல், இக்ஷ்வாகுகுலத்தை நாசம் செய்ய எங்கிருந்து வந்தாயோ? நெருப்புத்தணலை அணைத்துக்கொண்டது போல், மஹாராஜா அறியாமையால் உன்னைத் தருவித்து வீட்டில் வைத்துக்கொண்டாரே! அவரைக் கொன்ற மஹாபாபி நீயே. குலத்தைக் கொடுத்தவளே ! இந்தக் குலத்தில் இவ்வளவு செல்வமாக இதற்காகவா வளர்க்கப்பட்டு வந்தாய் ? என் பிதா ஸத்தியம் தவறாதவர், மஹா கீர்த்திசாலி; உன்னைக் கைப்பற்றின காரணத்தால் தீவிரமான துக்கத்தை அடைந்து உயிரை இழந்தார். தர்மத்திலேயே நோக்கமுள்ள மஹாராஜாவை நீ கொன்றதின் உத்தேசமென்ன? என்ன பிரயோஜனத்தை அடையவேண்டி ராமனைக் காட்டிற்குத் துரத்தினாய் ? கௌஸல்யையும் ஸுமித்திரையும் புத்திரசோகத்தால் பீடிக்கப்பட்டு ஒருவேளை உயிரோடிருந்தாலும், நீ இருக்கும்வரை அவர்கள் உயிர் வாழ்வது மிகக் கடினமானதாகவே இருக்கும்.

தர்மாத்மாவான ராமன் கௌஸல்யையிடத்தில் நடந்துகொண்டதுபோல் உன்னிடத்திலும் நடந்துகொள்ளவில்லையா ? அவர் ஸகல தர்மங்களையும் அறிந்தவரில்லையா ? தீர்க்காலோசனையுள்ள கௌஸல்யா தேவியும், தன்னுடன் பிறந்தவளைப்போல் உன்னை நினைத்துப் பிரியமாக நடத்தவில்லையா? அந்தத் தர்மசிந்தையுள்ள பட்டமஹிஷிக்கு ராமன் மூத்த பிள்ளையல்லவா? அந்த மஹானுபாவரைத் தபஸ்விகளைப்போல் காட்டில் வஸிக்கும்படி துரத்திய பின் உனக்குக் கொஞ்சமாவது துக்கம் உண்டாகவில்லையா ?

அதிருக்கட்டும். பாபலேசமற்றவரும் மஹாசூரரும் கீர்த்திமானும் தன்னடக்கமுள்ளவருமான என் தமையனை இங்கிருந்து துரத்தியதனால் என்ன பிரயோஜனத்தை அடைய உத்தேசித்திருக்கிறாய்? ஒன்றும் தோன்றவில்லையே; உனக்குப் பேராசை பிடித்து, புத்திகெட்டிருப்பதால் எனக்கு ராமனிடத்திலுள்ள பக்தியையும் பிரியத்தையும் நீ அறியவில்லை. அறிந்திருந்தால் இந்த ராஜ்யத்தை எனக்கு ஸம்பாதித்து வைப்பதற்காக இந்த மஹாபாபத்தைச் செய்யத் துணிவாயா? ராமலக்ஷ்மணர்கள் இங்கே இல்லாமல் இந்த ராஜ்யத்தை எந்தச் சக்தியால் நான் ஆளமுடியுமென்று எண்ணினாய்? மேருமலை அதனைச் சூழ்ந்துள்ள வனத்தின் உதவியால் பிறரால் அணுக முடியாமல் இருந்ததுபோல் மஹாபலசாலியும் தர்மாத்மாவுமான தசரதர்கூட ராமனுடைய பலத்தையும் வீரியத்தையுமே ஆதாரமாகக்கொண்டல்லவா பிறரால் வெல்ல முடியாமல் இருந்தார்? மிகுந்த பலமுள்ள காளையால் சுமக்கப்பட்ட பாரத்தை இளங்கன்று சுமக்குமா? நானோ சிறுவன். மஹானுபாவரான தசரத சக்கரவர்த்தியால் ஆளப்பட்ட இந்த ராஜ்யத்தை எந்த பிரபாவத்தால் ஆளுவேன் என்று நினைத்தாய்? தசரதருடைய புத்திரனாகையால் ஸமாதான பேததண்டமென்ற உபாயங்களாலும் புத்தி பலத்தாலும் நான் இந்த ராஜ்யத்தை ஒருவேளை ஆளமுடிந்தாலும், உன் புத்திரன் லாபத்தை அடையவேண்டுமென்று இவ்வளவு கெடுதியை உண்டுபண்ணின உன் ஆசை நிறைவேறும்படி ஒருநாளும் நடக்கமாட்டேன்.

ராமன் உன்னைத் தாயென்று நினைத்துப் பக்தியுடன் இருக்கிறாரென்ற ஒரு காரணம் இல்லாவிட்டால் மஹாபாபியான உன்னை இங்கிருந்து துரத்திவிடுவேன். மூத்தவன் இருக்கும்பொழுது இளையவனுக்கு ராஜ்யத்தைக் கொடுக்கவேண்டுமென்று எப்படிக் கேட்டாய்? இது நமது முன்னோர்களின் ஆசாரமா ? என்ன வார்த்தை சொன்னேன்! ஸாதுக்களின் ஆசாரத்திற்கும் உனக்கும் வெகுதூரம். நினைக்க நினைக்க எனக்கு ஆச்சரியம் அடங்கவில்லை. இந்தப் புத்தி உனக்கு எப்படி உண்டாயிற்று? இக்ஷ்வாகு வம்சத்தில் இதுவரையில் மூத்த புத்திரனுக்கே பட்டம் கிடைத்து வருகிறது. மற்றவர்கள் அவனைப் பிதாவைப்போல் அண்டிப் பிழைத்திருக்கிறார்கள். இந்த ராஜநீதி எல்லா அரசர்களுக்கும் பொது. இக்ஷ்வாகு குலத்தரசர்கள் இதை விசேஷமாக அனுஷ்டிக்கவேண்டும். ஆனால் குரூர ஸ்வபாவமுள்ள நீ எங்கே! ராஜ நீதி எங்கே! சாசுவதமான க்ஷத்திரிய தர்மம் எங்கே ! இதுவரையில் எங்கள் வம்சத்தரசர்கள் தர்மத்தையும் சுத்தமான ஆசாரத்தையும் காப்பாற்றுவதில்

முதன்மை வாய்ந்தவர்களென்று லோகத்தில் அடைந்திருக்கும் மேன்மையை மஹாபுண்ணியவதியான நீ வந்து புகுந்து தொலைத்து விட்டாய். நீ பிறந்த கேகய வம்சத்து மன்னர்களும் மஹானுபாவர்களல்லவா? அவர்கள் இந்த ராஜ நீதியையே அனுஸரித்து வருகிறார்களல்லவா? உனக்கு மாத்திரம் இப்படிப் புத்திகெட்டு இந்த அநியாயத்தைச் செய்ய ஏன் தோன்றியது?

எது எப்படியாவது போகட்டும். மஹாபாதகியான உன் எண்ணத்தை மாத்திரம் நான் நிறைவேற்றுகிறவனில்லை. என்னைக் காரணமாக வைத்துக்கொண்டு இந்த ராஜ்யத்தை நீ ஆளவல்லவா பார்க்கிறாய்? ஸகலப் பிராணிகளுக்கும் பிரியமான ராமனைக் காட்டிலிருந்து இங்கே அழைத்து வருகிறேன். உன் கண்ணிற்கு எதிரே அவருக்கு முடிசூட்டுகிறேன். உன் வயிறு எரியும்படி அவருக்கு ஸகலவித கைங்கரியங்களையும் செய்துகொண்டு ஆனந்தமாகக் காலத்தைக் கழிப்பேன்" என்று குரூரமான வார்த்தைகளால் பரதன் கைகேயியை நிந்தித்துத் தன் மனத்திலுள்ள துக்கத்தை வெளியிட்டான். அதுவும் போதாமல் மலைக்குகையிலுள்ள ஸிம்ஹம் சத்துருவைக் கண்டு கர்ஜிப்பதுபோல், இன்னும் அதிகமாகக் கர்ஜிக்க ஆரம்பித்தான்.

> இத்யேவ முக்த்வா ப⁴ரதோ மஹாத்மா
> ப்ரியேதரைர் வாக்ய க³ணைஸ் துத³ம்ஸ்தாம் |
> ஶோகாதுரஶ்சாபி நநாத³ பூ⁴ய:
> ஸிம்ஹோ யதா² பர்வத க³ஹ்வரஸ்த²: ‖ (39)

---

## ஸர்க்கம் 74

## பரத கைகேயீ ஸம்வாதம் (தொடர்ச்சி)

> தாம் ததா² க³ர்ஹயித்வா து மாதரம் ப⁴ரதஸ்தத³ா |
> ரோஷேண மஹதாவிஷ்ட: புநரேவாப்³ரவீத்³ வச: ‖ (1)

பரதன் இப்படிப் பொதுவாகவும் மிருதுவாகவும் தன் தாயை நிந்தித்து, பிறகு அவள் செய்த அபராதத்தை நினைக்க நினைக்க, கோபம் அதிகரித்து அவளைக் குரூரமாக நிந்திக்க ஆரம்பித்தார். "கொடிய ஸ்வபாவமுள்ளவளே, கெட்டவளே! உன் தாய் செய்த அக்கிரமத்திற்காக என் பாட்டனார் அவளை ராஜ்யத்தை விட்டுத் துரத்தினதுபோல் நீயும் இந்த ராஜ்யத்தைவிட்டு ஓடிப்போ. என் பிதாவையும் கொன்று, என் ஸகோதரர்களையும் ஊரைவிட்டு நீ துரத்தின பிறகு என் பிராணன் நிற்குமா? நானும் இறந்தேன் என்று, உன் பர்த்தாவையும் புத்திரனையும் ராமலக்ஷ்மணர்களையும் ஸீதையையும் இந்த நகரத்து ஜனங்களையும் கொலைசெய்த பாபத்திற்காக உயிருள்ள வரையில் கதறு. என் பிதாவாவது ராமனாவது உன் வார்த்தையை எப்பொழுதாவது எடுத்தார்களா? என்



> தாம் ததா² க³ர்ஹயித்வா து மாதரம் ப⁴ரதஸ்தத³ா |
> ரோஷேண மஹதாவிஷ்ட: புநரேவாப்³ரவீத்³ வச: ‖ —அ. 74ஸ 1சு.

பரதன் இப்படிப் பொதுவாகவும் மிருதுவாகவும் தன் தாயை நிந்தித்து, பிறகு அவள் செய்த அபராதத்தை நினைக்க நினைக்க, கோபம் அதிகரித்து அவளைக் குரூரமாக நிந்திக்க ஆரம்பித்தான். (பக்கம் 266 பார்க்க)

அண்ணனைப்போல் தர்மாத்மா உண்டா? ஒரே காலத்தில் ஒருவரைக் கொல்லவும் மற்றொருவரைக் காட்டிற்குத் துரத்தவும் அவர்கள் உனக்குச் செய்த அபராதமென்ன? இந்த இக்ஷ்வாகு குலத்தை அழிப்பதால் ப்ரூணஹத்யா (வேதத்தின் ஸகல சாகைகளையும் அத்யயனம் செய்தபிராம்மணனைக் கொன்ற) தோஷத்தை அடைந்தாய். நரகமே உனக்கு ஸித்தம்; உன் பர்த்தா அடையும் லோகங்கள் உனக்குக் கிடைக்கவே கிடைக்காது. உன் பர்த்தாவையும் கொன்று ஸகல லோகங்களுக்கும் பிரியரான ராமனையும் காட்டிற்குத் துரத்தின உன் கோரமான பாபத்தைப் பார்த்து எனக்கும் திகில் உண்டாகிறது. என் பிதா உன்னால் உயிரைவிட்டார்; என் தமையன் உன்னால் காட்டிற்குப் போனார்; காலமுள்ளவரையில் அபகீர்த்தியை உன்னால் நான் ஸம்பாதித்துக் கொண்டேன். பரலோகத்திலும் பாபிகள் அடையும் கதியே உனக்கு ஸித்தம். ராஜ்யத்தை ஆளப் பேராசை பிடித்தவளே! தாயின் ரூபத்தை எடுத்திருக்கும் என் பரம சத்துருவல்லவா நீ? துன்மார்க்கத்தில் பெயர் பெற்றவளே! பர்த்தாவைக் கொன்ற பாதகி! என்னுடன் பேசாதே. கௌஸல்யையும் ஸுமித்திரையும் மற்ற ராஜபத்தினிகளும் உன்னால் எவ்வளவு துக்கத்தை அடைந்து தவிக்கிறார்கள், பார். நீ பிறந்த குலத்திற்கும் நல்ல கீர்த்தி ஸம்பாதித்தாய்! அசுவபதி மஹாராஜா வெகு தார்மிகர்; மஹாஞானி. நீ அவருக்குப் புத்திரியாகப் பிறக்க நியாயமே இல்லை. யாரோ ஒரு ராக்ஷஸி இந்த ரூபத்தை எடுத்து அவருடைய குலத்தை நாசம்செய்யப் பிறந்திருக்கிறாள். தர்மம் ஸத்தியம் இவைகளே அவதாரமெடுத்ததுபோலிருக்கும் ராமசந்திரனை நீ காட்டிற்குத் துரத்தினாய். அந்தத் துக்கத்தால் மஹாராஜாவைக் கொன்றாய். என்னைத் தகப்பனும் இல்லாமல் ஸகோதரர்களுமில்லாமல் இப்படிப் பறக்கவிட்டாய். எந்தக் கொடிய செயலை முக்கியமாகக் கருதி நீ செய்தனையோ அதன் பயன் தந்தை இழந்த என் தலையில் சுமந்தது. இந்த மஹாபாபியான உன்னிடத்தில் எந்த பிராணிக்காவது பிரியம் உண்டாகுமா? இரக்கம் உண்டாகுமா? தர்ம புத்தியுள்ள கௌஸல்யாதேவியைக் கிழ வயதில் அவளுடைய ஒரே புத்திரனை விட்டுப் பிரித்த உனக்கு எந்த லோகங்கள் கிடைக்கும்? ஸ்வரூபமே இல்லாமல் நாசமடைவதைத் தவிர வேறு கதி உண்டென்று எனக்குத் தோன்றவில்லை. ராமன் கௌஸல்யைக்குப் புத்திரனாக இருந்தாலும் ஸகல பந்துக்களுக்கும் ஜீவாதாரம் என்றும் தசரதருக்கு ஸகலவிதத்திலும் ஸமனென்றும் அவனை விட்டுப் பிரிந்தால் ஜனங்கள் உயிரை விடுவார்களென்றும் உனக்கு ஏன் தெரியவில்லை? இதைப்பற்றி யாருக்காவது ஸந்தேகம் உண்டாகுமா?

"தாய்தந்தையரின் முகம், கழுத்து, மார்பு, வயிறு, கைகள், கால்கள் முதலிய முக்கிய அங்கங்கள், நேத்திரம், மூக்கு, விரல்கள் முதலிய உபாங்கங்கள், ஹ்ருதயம் இவைகளின் ஸாரத்திலிருந்து மகன்

பிறக்கின்றான். 'மனிதன், தானே புத்திரனாக வந்து பிறக்கிறான்' என்ற வேத வாக்கியத்தால் தாய்க்குத் தன் ஸகோதரன் முதலிய பந்துக்களைக் காட்டிலும் தன் வயிற்றில் பிறந்த குழந்தையிடத்தில் மிகுந்த பிரீதியுண்டு. அப்படி இருக்க அந்தப் புத்திரனை விட்டுப் பிரிந்தால் தாயான கௌஸல்யைக்குத் துக்கம் தாங்கமுடியுமா ?

"முன்பு ஒரு காலத்தில் ஸகல தர்மங்களையும் அறிந்த காமதேனு, பூமியில் நடக்கும் விஷயங்களைக் கவனிக்கும்பொழுது, ஓரிடத்தில் இரண்டு எருதுகளை ஒரு குடியானவன் ஏரில் பூட்டி உழுது கொண்டிருந்தான். நடுப்பகல் வரையில் ஒரே மூச்சாய் உழுததால் அவை களைத்து மூர்ச்சையடைந்தன. தன் வம்சத்தில் பிறந்த அந்தப் பிராணிகளுக்கு நேர்ந்த துக்கத்தைப் பார்த்து ஸுரபி கண்ணீர் பெருக வாய்விட்டு அழுதது. அப்பொழுது தேவேந்திரன் ஏதோ காரியமாக அங்கே வர, அந்த நீர்த்துளிகள் திவ்வியமான மணத்துடன் அவன்மேல் விழுந்தன. அவன் நிமிர்ந்து பார்க்கையில் ஆகாசத்தில் காமதேனு துக்கம் தாங்காமல் அழுதுகொண்டிருக்கக் கண்டான். உடனே கைகூப்பி வணக்கத்துடன், 'அம்மணி ! ஏன் அழுகிறாய் ? நானாவது என்னைச் சேர்ந்தவர்களாவது உனக்கு ஏதாவது அபசாரம் செய்தோமா ? இந்தப் பிரபஞ்சத்திற்கு ஸுகத்தையே தேடும் நீயும் இப்படி ஏன் துக்கப்படுகிறாய்? ஒருவராலும் உனக்குப் பயமுண்டாக நியாயமில்லையே' என்று கேட்டான்.

"அதற்குக் காமதேனு 'எந்தப் பிராணியாலும் எனக்குப் பயமில்லை. என் வம்சத்தில் பிறந்த இந்த இரண்டு எருதுகள் இந்தக் குடியானவனால் ஏரில் பூட்டப்பட்டுக் கடும் வெயிலில் உழைத்துக் களைத்துப் பூமியில் மூர்ச்சையடைந்து கிடக்கின்றன, பார். அவை மெலிந்து எழுந்திருக்கச் சக்தியற்றிருந்தும், தயையற்ற இந்தக் குடியானவன் அவைகளை உபத்திரவிக்கிறான். அதைப் பார்த்து என் தேகம் துடிக்கிறது, என் ஹிருதயம் துடிக்கிறது. அவைகளுக்கும் எனக்கும் ரத்த ஸம்பந்தமுண்டல்லவா? புத்திரனைப்போல் பிரியமான பொருள் பூமியில் வேறுண்டோ?' என்றது.

"அப்படியும் அவை காமதேனுவின் வயிற்றில் பிறந்த புத்திரர்களல்ல. அவைகளைப்போல் கோடானு கோடி புத்திரர்கள் உலகத்தில் இருக்கிறார்கள். காமதேனுவோ தர்மானுஷ்டானத்தில் ஒப்பில்லாதது; ஸகல ஐசுவரியங்களுக்கும் உத்பத்தி ஸ்தானம்; ஸகல உத்தம குணங்களுக்கும் இருப்பிடம்; லோகத்தில் பிராணிகள் விருத்தியடைய வேண்டுமென்று பசுக்களையும் எருதுகளையும் மேன்மேலும் உண்டாக்கிக்கொண்டே இருக்கிறது. தனக்கு கோடிக் கணக்காகக் குழந்தைகள் இருந்தும் அந்த இரண்டு எருதுகளுக்கும் நேர்ந்த கஷ்டத்தைப் பார்த்துப் பொறுக்காமல் கண்ணீர் விட்டு அழுதது. அப்படியிருக்க, ராமன் கௌஸல்யையின் வயிற்றில் பிறந்த



பிள்ளை; ஒரே புத்திரன்; பலகாலம் வரையில் புத்திரனே இல்லாமல் எவ்வளவோ சிரமப்பட்டு பெற்ற குழந்தை; ஸகல உத்தம குணங்களாலும் அலங்கரிக்கப்பட்டவர்; அவளோ கேவலம் ஸ்திரீ; மிகவும் வயது சென்றவள்; மஹாராஜாவிற்குப் பிரியமான பத்தினியுமல்ல; யாவற்றிற்கும் புத்திரனையே நம்பி இருந்தவள். அப்படிப்பட்டவளை நீ புத்திரனில்லாமல் செய்து லகுவாகத் தப்பித்துக் கொள்ளலாமென்று எண்ணுகிறாயே? நீ பிழைத்திருக்கும் வரையில் இந்த லோகத்தில் உனக்குத் தீராத துக்கமும் நீங்காத அபகீர்த்தியும் நிச்சயம். இறந்த பிறகு ஸ்வரூபநாசமே கிடைக்கும் என்பதில் ஸந்தேகமில்லை.

நான் என் பிதாவுக்குச் செய்யவேண்டிய உத்தரக் கிரியைகளைப் பூர்ணமாக செய்து, காட்டிற்குப்போய் என் அண்ணனை பிரார்த்தித்து அழைத்துவந்து, அவருக்கு இந்த ராஜ்யத்தைக் கொடுத்து, நான் உன்னால் அடைந்த அபகீர்த்தியை மாற்றி, எல்லையற்ற கீர்த்தியை அடைவேன். பிறகு தபஸ்விகளின் வேஷத்தைத் தரித்து தண்டகாரண்யத்தில் வஸிப்பேன். இந்த நகரத்திலுள்ள ஜனங்கள் கண்ணும் கண்ணீருமாய் வாய் குளற, இந்தக் கோரம் தாங்காமல் துக்கிப்பதை நான் பார்த்துப் பொறுக்கமாட்டேன். நீ செய்த பாபத்தைப் பொறுத்துக் கொண்டிருக்கவும் மாட்டேன். நீ நெருப்பில் விழுந்து உயிரை விடு; அல்லது ஒருவர் கண்ணிலும் படாமல் தண்டகாரண்யத்திற்குப் போய்க் காலம்கழி; அல்லது கழுத்தில் கயிற்றைக் கட்டிக்கொண்டு உயிரை விடு. நீ செய்த பாபத்திற்கு வேறு பிராயச்சித்தமும் இல்லை; இதைத் தவிர வேறு உனக்கு கதியுமில்லை. ராமன் அயோத்யைக்குத் திரும்பி வந்து, ராஜ்யத்தை ஒப்புக்கொண்டு பட்டாபிஷேகமான பிறகே என் மனத்திலுள்ள துக்கம் தீரும். அவரைக் காட்டிற்குத் துரத்தினேன் என்ற அபகீர்த்தியும் மறையும்" என்று சொல்லி, காட்டில் மதம் பிடித்த யானை, வேடர்களால் எறிவல்லயம் மாவெட்டி முதலிய ஆயுதங்களால் அடிக்கப்பட்டு, கோபத்தால் பெருமூச்சுவிட்டுக்கொண்டு பூமியில் விழுவது போல், பரதன் கண்கள் சிவந்து ஆடை அவிழ்ந்து ஆபரணங்கள் சிதற, இந்திரோத்ஸவத்தின் முடிவில் அறுத்துப் பூமியில் தள்ளப்படும் இந்திரத்வஜத்தைப்போல் விழுந்து மூர்ச்சை யடைந்தான்.

ஸம்ரக்த நேத்ர: ஶிதி2லாம்ப3ரஸ் ததா2
விதூ4த ஸர்வாப4ரண: பரந்தப: |
ப3பூ4வ பூ4மௌ பதிதோ ந்ருபாத்மஜ:
ஶசீபதே: கேது ரிவோத்ஸவ க்ஷயே || (36)

---

## ஸர்க்கம் 75

## பரதனுடைய பிரதிக்ஞை

*தீ[3]ர்க[4] காலாத் ஸமுத்த[2]ாய ஸம்ஜ்ஞாம் லப்[3]த்[4]வா ச வீர்யவாந் |*
*நேத்ராப்[4]யாமஶ்ருபூர்ணாப்[4]யாம் தீ[3]நாமுத்[3]வீக்ஷ்ய மாதரம் ॥ (1)*

இதற்குள் ஸுமந்திரர் முதலிய மந்திரிகள் அங்கே வந்தார்கள். சற்று நேரத்திற்குள் பரதன் பிரக்ஞைதெளிந்து மந்திரிகள் சூழ்ந்து நிற்பதைப் பார்த்து, அவர்களுக்கு உண்மையை அறிவிக்க விரும்பி, தன் எண்ணங்கள் யாவும் வீணானதால் மனமொடிந்து வாடி நிற்கும் கைகேயியைப் பார்த்து, "மித்திரர்களே! இந்த ராஜ்யம் வேண்டும் என்று ஒரு க்ஷணமாவது நான் ஆசைப்பட்டவனல்ல்; அதற்காக இவளுடன் நான் ஆலோசனைசெய்தவனுமல்ல. தூர தேசத்தில் என் பாட்டனுடைய வீட்டில் வஸித்துக் கொண்டிருந்த எனக்கு, சக்கரவர்த்தி என்னை இந்த ராஜ்யத்தில் அபிஷேகம் செய்யப் போகிறார் என்றாவது, ராமனைக் காட்டிற்கு அனுப்பினார் என்றாவது, ஸீதையும் லக்ஷ்மணனும் அவருடன் போனார்கள் என்றாவது தெரியவே தெரியாது" என்று இப்படித் தீனமாகக் கதறிக்கொண்டிருக்கும் பொழுது அந்தச் சப்தம் கௌஸல்யையின் காதில் விழுந்தது. "வெகு குரூரமான நடத்தையுள்ள கைகேயியின் புத்திரனான பரதன் வந்திருக்கிறான் என்று தோன்றுகிறது. இந்த அக்கிரமத்தில் அவன் ஸம்பந்தப்பட்டிருப்பான் என்று நான் எண்ணவில்லை. ஆகையால் அவனைப் பார்க்க விரும்புகிறேன்" என்று ஸுமித்திரையிடம் கூறிய பின், இளைத்து நிறம்மாறிப் புத்திமயங்கிய கௌஸல்யை தள்ளாடிக் கொண்டு பரதன் இருக்குமிடத்திற்கு வந்தாள். அதே சமயத்தில் பரதசத்துருக்னர்கள் அவளை நமஸ்கரிப்பதற்கு அவளுடைய அந்தப்புரத்திற்குப் போய்க்கொண்டிருந்தார்கள். வழியில் அவளை ஸங்தித்து, அவள்படும் கஷ்டத்தையும் அவளுடைய அலங்கோலமான ஸ்திதியையும் கண்டு துக்கம் தாங்காமல் அவளைக் கட்டிக் கொண்டு வாய்விட்டலறினார்கள். அவளும் சற்றுநேரம் கழித்து மூர்ச்சை தெளிந்தெழுந்து, பெருந்தன்மை பொறுமை முதலிய உத்தமகுணங்கள் பொருந்தினவளானாலும் ஸ்த்ரீ ஸ்வபாவத்தாலும் புத்திர சோகத்தாலும் ரோஷமடைந்து "இந்த ராஜ்யம் கிடைக்க வேண்டுமென்று வெகுநாளாய் ஆசைகொண்டிருந்தாய். மஹாக்குரூரஸ்வபாவமுள்ள உன் தாயும் இதை உனக்கு ஸம்பாதித்து வைக்கவேண்டுமென்று எந்தெந்த அக்கிரமங்களையோ செய்தாள். உனக்கு யாதொரு போட்டியும் இல்லை. யாதொரு உபத்திரவமும் இல்லை. இவ்வளவு சிரமப்பட்டு ஸம்பாதித்த பதார்த்தத்தை இனிமேல் ஆசைதீர அனுபவிக்கலாம். அதிருக்கட்டும்; என் புத்திரனைச் சடையும் தலையுமாக மரவுரியுடன் காட்டிற்குத் துரத்திவிட்டு எந்த மஹாலாபத்தை அடைந்தாள்? இந்த ராஜ்யமெல்லாம் அவளுடைய



வசத்திலிருப்பதால் அப்படிச் செய்யாமலையே உன் எண்ணத்தை ஸுலபமாக நிறைவேற்றி இருக்கலாமே. நிகரற்ற அழகுவாய்ந்த என் புத்திரன் இருக்கும் வனத்திற்கு என்னையும் அனுப்பிவிடுவதே நலம். அதைத் தடுக்க மஹாராஜாவும் இல்லை. ராமனும் இல்லை. கைகேயி செய்த பாபத்தில் உனக்கும் ஸம்பந்தமுண்டு. மஹாராஜா செய்யும் அக்கினி ஹோத்திரத்தில் அவருடைய மூத்த பாரியைக்குப் பாத்தியமுண்டு. ஆகையால் அந்த அக்னியை எடுத்துக் கொண்டு நானும் ஸுமித்திரையும் ராமனிருக்குமிடத்திற்குச் செல்வோம். அல்லது புருஷசிரேஷ்டனான என் ராமன் தவம்செய்யுமிடத்திற்கு நீயே என்னை அழைத்துப்போகவேண்டும். இந்த விஸ்தாரமான ராஜ்யமும் இதிலுள்ள தனதான்யங்களும் யானை குதிரை பசு முதலிய வஸ்துக்களும் உன் தாய் உனக்கு ஸம்பாதித்துக் கொடுத்ததல்லவா" என்று குரூரமான வார்த்தைகளால் நிந்தித்தாள்.

தன்னைச் சத்துருவாகவும் அயலானாகவும் எண்ணிப் பேசியதைக் கேட்டுப் பரதனுக்குப் புண்ணில் ஊசியால் குத்துவதுபோல் சொல்லமுடியாத வருத்தம்உண்டாயிற்று. மனம்கலங்கி அவளுடைய பாதங்களில் விழுந்து வெகுநேரம் புலம்பினான். பிறகு பைத்தியம் பிடித்தவனைப்போல் பிரலாபிக்கும் கௌஸல்யையை நோக்கி வணக்கமாகக் கைகூப்பி, "தாயே என்னிடத்தில் யாதொருகுற்றமும் இல்லை. எனக்கு இந்த விஷயம் யாதொன்றும் தெரியாது. ராமனிடத்தில் எனக்குள்ள பரமபக்தியையும் பிரீதியையும் தாங்கள் அறிந்திருந்தும் இப்படிச் சொல்வது நியாயமா? நான் இந்தராஜ்யத்திற்கு ஆசைப்பட்டு ராமனுக்கு துரோகம் செய்தால் இதுவரையில் நான் கற்ற வேதசாஸ்திரங்களும் வித்யைகளும் குருமுகமாகக் கிடைத்த ஞானமும் பயனில்லாமற் போகட்டும். பாபிகளுக்கு ஊழியம் செய்கிறவனும், ஸூரியனுக்கெதிரில் மல மூத்திரங்களை விடுகிறவனும், தூங்கும் பசுவை உதைத்தவனும், தன் வேலைக்காரனை சிரமப்படுத்தி வேலைவாங்கி அதற்குக் கூலிகொடுக்காதவனும், பிரஜைகளைத் தன் புத்திரர்களைப்போல் ஆண்டுவரும் அரசனுக்கு துரோகம் நினைப்பவனும், குடிகளிடத்தில் ஆறில் ஒரு கடமை வாங்கியும் அவர்களைக் காப்பாற்றாதவனும், யாககாலத்தில் தபஸ்விகளுக்கு யாகதக்ஷிணையைக் கொடுப்பதாய்ச் சொல்லிப் பிறகு இல்லை என்று மிரட்டுகிறவனும், கோரமான யுத்தம் நடக்கும்பொழுது சத்துருக்களுக்குப் பயந்து ஓடுகிறவனும் சேரும் கதியில் சேருவேன். ராமனைக் காட்டிற்கு அனுப்புவதில் நான் உடந்தையாயிருப்பின் மஹாஞானியான என் குருவால் எனக்கு உபதேசிக்கப்பட்ட பரலோக ஸாதனமான ரஹஸ்யார்த்தம் அடங்கிய சாஸ்திரம் எனக்கு மறந்து போகட்டும். ஸகலவிதமான அழகும் வாய்ந்த ராமன் மறுபடியும் அயோத்யையில் மகுடாபிஷேகம் செய்துகொள்ளும் திவ்வியமான ஸேவையைப் பார்க்கும் பாக்கியம் எனக்கு

கிடைக்காமற் போகட்டும். எள்ளன்னம் பாயஸம் மது மாம்ஸம் இவைகளைத் தேவதைகளுக்கும் பிதிருக்களுக்கும் அதிகாரிகளுக்கும் நிவேதனம் செய்யாமல் தின்கிறவனும், பெரியோர்களை எதிர்கொண்டழைத்து மரியாதை செய்யாமல் அவமானப்படுத்துகிறவனும், குருக்களைத்தானே நிந்திக்கிறவனும், மித்திரத்துரோகம் செய்கிறவனும், ஒருவருக்கொருவர் நம்பிக்கையால் ரஹஸ்யமாகச் சொன்னவைகளை வெளிப்படுத்துகிறவனும், உபகாரம் செய்தவனுக்கு பிரதிஉபகாரம் செய்யாதவனும், நன்றியறிவில்லாதவனும், தற்கொலை செய்துக்கொண்டவனும், ஸாதுக்களால் விலக்கப்பட்டவனும், வெட்கமற்றவனும், தன் புத்திரர்களும் பந்துக்களும் வேலைக்காரர்களும் ஸமீபத்திலிருக்கும்பொழுது அவர்களுக்குக் கொடுக்காமல் நல்ல பதார்த்தங்களை வயிறு நிறையத் தின்கிறவனும் சேரும் கதி எனக்குக் கிடைக்கட்டும்.

எனக்கு அனுகூலமான பத்தினிகளும் அக்கினி ஹோத்திரம் முதலிய வைதிகக் கிரியைகளும் கிடைக்காமல் போகட்டும். நான் பிள்ளையில்லாத துக்கத்தை அனுபவிப்பேனாக. ராஜஸ்த்ரீகளையும் குழந்தைகளையும் கிழவர்களையும் கொன்ற பாபமும், சேவகர்களை கைவிட்டபாபமும்,செம்பஞ்சு, தேன், மாம்ஸம், இரும்பு முதலியவைகளை விற்றுத் தன் ஸேவகர்களைப் போஷிக்கும் பாபமும், பயங்கரமான யுத்தம் ஆரம்பிக்கும் ஸமயத்தில் பயந்து ஓடுகிறவனைத் துரத்திக் கொல்லும் பாபமும் என்னைச் சேரட்டும். ஒற்றை வஸ்திரத்துடன் வீடுவீடாகப் பிக்ஷை எடுத்துக் கையையே பாத்திரமாக உபயோகித்துப் பூமியெங்கும் பைத்தியக்காரனைப்போல் திரியும் கதி எனக்கு நேரட்டும். மதுபானம் ஸ்த்ரீகள் சூது இவைகளில் முழுகிக் காமக் குரோதங்களுக்கு அடிமையாகக்கடவேனாக. என் மனம் தர்மத்தில் செல்லவேண்டாம். அதர்மத்தையே நாடட்டும். கொடுக்கத்தகாதவர்களுக்கே கொடுக்கிறவன் ஆவேனாக. நான் சேர்த்து வைத்திருக்கும் ஏராளமான தனமெல்லாம் திருடர்களால் அபகரிக்கப்படுவதாக. இரண்டு ஸந்தியாகாலங்களிலும் தூங்குவதாலும், வீடுகளில் நெருப்பு வைப்பதாலும், குருபத்தினியைச் சேருவதாலும் உண்டாகும் பாபத்தை அடைவேனாக. அக்கினிஹோத்திரம் நெய் சருபுரோடாசம் முதலியவைகளால் தேவதைகளுக்கும், மரணதிதிகளிலும் கிரஹணகாலங்களிலும் பர்வகாலங்களிலும் சிரார்த்த தர்ப்பணங்களால் பிதிருக்களுக்கும், உயிரோடிருக்கையில் ஸகலவித கைங்கரியங்களைச் செய்வதால் பெற்றோர்களுக்கும் சுச்ரூஷை செய்யும் பாக்யம் கிடைக்காமல் போகட்டும். ஸாதுக்கள் அடையும் லோகங்கள் எனக்குக் கிடைக்கவேண்டாம்; ஸாதுக்கள் மெச்சும் பாக்கியம் எனக்குக் கிடைக்கவேண்டாம்; ஸாதுக்கள் அனுஷ்டிக்கும் தர்மம் என்னால் அனுஷ்டிக்கப்பட வேண்டாம். மஹாபதிதர்களுக்குக்கூட விதிக்கப்பட்டிருக்கும் மாத்ரு சுச்ரூஷையையும் விட்டு அதர்மத்திலேயே சிரத்தையுள்ளவனாகக்கடவேன். பலபிள்ளைகளைப் பெற்று ஏழ்மைத்தனத்தினால் வருந்துபவனாகவும் எப்பொழுதும் ஜ்வரம் முதலிய ரோகங்களால் பீடிக்கப்பட்டவனாகவும் மனக்கிலேசத்தை யுடையவனாகவும் இருக்கக்கடவேன். ஏழ்மைத்தனத்தால் வருந்தி என்னிடத்தில் வந்து என்னைப் பலவிதமாகப் புகழ்ந்து நான் கொடுப்பதால் தங்களுடைய கஷ்டங்களைத் தீர்த்து ஸுகமடையலாம் என்று என் முகத்தையே ஆவலுடன் பார்க்கும் ஸாதுக்களின் ஆசையைக் கெடுப்பதால் உண்டாகும் பாபம் என்னைச் சேரட்டும்.



கடுமையான வார்த்தைகளைச் சொல்லிக்கொண்டு, அசுத்தனாக எப்பொழுதும் அரசனிடத்தில் பயந்துகொண்டு, அதர்மத்திலேயே பிரியம் வைத்தவனாகப் பிறரைப்பற்றிக் கோள்சொல்லிக்கொண்டு வஞ்சனையால் வயிறு வளர்க்கும் கதி எனக்குக் கிடைக்கட்டும். பதிவிரதையான தன் பார்யை ருதுஸ்நானம் செய்து புத்திரோத்பத்திக்காக தன் ஸமீபத்தில் வந்திருக்கையில் அவளைத் தள்ளிவிடுகிறவனும், அக்னி ஸாக்ஷியாக விவாகம்செய்த பத்தினியைக் கைவிட்டுப் பிறருடைய பாரியைகளைக் கைப்பற்றும் அதர்மத்தில் பிரியமுள்ள மூடனும், பாரியைகளையும் புத்திரர்களையும் ஸரியான காலங்களில் அன்ன பானங்களால் போஷிக்காமல் மரணமடையச் செய்கிறவனும், குடிக்கும் வஸ்துக்களைக் கெடுக்கிறவனும், விஷம் வைக்கிறவனும், பிராம்மணர்களுக்கு நடக்கும் பூஜையைக் கெடுக்கிறவனும், இளங்கன்றையுடைய பசுவைக் கறக்கிறவனும், தாகமென்று கேட்டவனுக்கு வீட்டில் ஜலமிருக்கும்பொழுது,'கொடுக்கிறேன் இரு' என்று சொல்லி கொடுக்காமல் ஏமாற்றுகிறவனும், ஒரு விஷயத்தைப்பற்றி இருவர் வாதித்துக்கொண்டிருக்கையில் அவர்களுக்குள் ஒருவனிடத்திலுள்ள ஸ்நேகத்தால் அவன் ஜயிக்கும் உபாயத்தை அவனுக்கு ரஹஸ்யமாய் உபதேசிக்கிறவனும் அடையும் கோரமான கதிகளைத் தவறாமல் அடையக்கடவேன்'' என்று கோரமான பிரதிக்ஞை செய்து, பர்த்தாவையும் புத்திரனையுமிழந்த கௌஸல்யையை பரதன் ஸமாதானம் செய்தான்; துக்கம் தாங்காமல் தானும் கீழே விழுந்தான்.

கௌஸல்யை, "குழந்தாய்! கோரமான பிரமாணங்களால் உன்னைக் கட்டுப்படுத்திக்கொண்டு ஏன் உபத்திரவத்தை அனுபவிக்கிறாய்? அதைப் பார்த்தால் எனக்கும் துக்கம் வரவர அதிகமாகிறது. லக்ஷ்மணனைப்போல் நீயும் ராமனிடத்தில் மிகுந்த பக்தியுள்ளவனென்றும் முன்னோர்களின் தர்மத்திலிருந்து விலகாதவனென்றும் எனக்கு நன்றாய்த் தெரியும். நீ செய்த பிரதிக்ஞையைத் தவறாமல் நிறைவேற்றுகிறவன். ஆகையால் ஸாதுக்கள் அடைய வேண்டிய உத்தம லோகங்கள் உனக்கு நிச்சயமாகக் கிடைக்கும்'' என்று அவனைத் தேற்றி, எடுத்து மடியில் வைத்துக்கொண்டு இறுகத் தழுவி உச்சி முகர்ந்து துக்கம் மேலிட்டு அழுதாள். பரதனும் பலவிதமான கிலேசங்களால் பீடிக்கப்பட்டு மனம் கலங்கி, இந்திரிய

ஸ்வாதீனமில்லாமல் புத்தி சிதறி, அடிக்கடி மூர்ச்சையடைந்து பெருமூச்சுவிட்டுக்கொண்டு அந்த ராத்திரிப்பொழுதை ஒரு யுகமாகக் கழித்தான்.

லாலப்யமாநஸ்ய விசேதநஸ்ய
ப்ரணஷ்ட பு3த்3தே4: பதிதஸ்ய பூ4மௌ |
முஹுர் முஹுர் நிஶ்வஸதஶ்ச க4ர்மம்
ஸா தஸ்ய ஶோகேந ஜக3ாம ராத்ரி: ‖ (65)

## ஸர்க்கம் 76

## தசரதருடைய உத்தரக்கிரியைகள்

தமேவம் ஶோகஸந்தப்தம் ப4ரதம் கைகயீஸுதம் |
உவாச வத3தாம் ஶ்ரேஷ்டோ2 வஸிஷ்ட2: ஶ்ரேஷ்ட2வாக்3ரிஷி:(1)

அப்பொழுது மஹாஞானியான வஸிஷ்ட பகவான் கிலேசத்தாலும் புத்தி மோஹத்தாலும் பலவிதமாகப் பீடிக்கப்படும் பரதனைப்பார்த்து, "ராஜபுத்திர! மஹாகீர்த்திமானே! வருத்தப்பட்டது போதும். சக்கரவர்த்தி உத்தம லோகங்களை அடைவதற்கு ஸாதனமான பிரேதக்கிரியைகளைத் தாமதமில்லாமல் நடத்து" என்று ஆக்ஞாபித்தார். அதைக் கேட்டுப் பரதனும் தைரியமடைந்து ஒருவாறு துக்கம் தெளிந்து உத்திரக்கிரியைகளை நடத்த ஆரம்பித்தான்.

தசரதருடைய தேகத்தை எண்ணெய்க் கொப்பரையிலிருந்து எடுத்து தைலத்தைத் துடைப்பதற்காகப் பூமியில் வைத்தார்கள்; பலநாட்கள் வரையில் எண்ணெயில் ஊறியிருந்ததால் அவருடைய சரீரம் மஞ்சள் நிறம் படிந்து, விகாரமடையாமல் தூங்குகிறவரைப் போல் காணப்பட்டது. பிறகு ரத்தினங்களால் அலங்கரிக்கப்பட்ட உத்தமமான படுக்கையில் அந்தத் தேகத்தை வைத்துப் பரதன் வாய்விட்டுப் பிரலாபித்தான். "மஹாராஜா! நானும் சத்ருக்னனும் தூர தேசத்திற்குப் போயிருந்தோம். தர்மாத்மாவான ராமனையும் மஹா பலவானான லக்ஷ்மணனையும் காட்டிற்கு அனுப்பிவிட்டு நாங்களும் வருவதற்குமுன் தாங்கள் ஸ்வர்க்கத்திற்குப் போகும் படியான காரணம் என்ன ஏற்பட்டது? என்ன காரியம்செய்தீர்கள்! ஸகல லோகத்திற்கும் ஹிதத்தைச் செய்யும் புருஷோத்தமனான ராமனைவிட்டுப் பிரிந்து ஜனங்கள் கதறிக்கொண்டிருக்கையில் தாங்களும் அவர்களைக் கைவிட்டு எங்கே போனீர்கள்? ராமனும் காட்டிற்குப் போய் தாங்களும் ஸ்வர்க்கத்திற்குப் போனால் இந்த நகரத்திலுள்ள பிரஜைகளின் யோகக்ஷேமங்களைப் பாதுகாக்கிறவர்கள் யார் இருப்பதாக நினைத்திருந்தீர்கள்? தாங்கள் இல்லாமல் இந்தப் பூமண்டலம் பர்த்தாவையிழந்த ஸ்த்ரீயைப்போல் விகாரமாக இருக்கிறது. சந்திரனில்லாத ராத்திரியைப்போல் தாங்கள் இல்லாமல் இந்த அயோத்யை பிரகாசிக்கவில்லையே!" என்று பலவிதமாகப் புலம்பிக்கொண்டிருக்கையில் வஸிஷ்ட பகவான் அவனைத் தடுத்து, "சக்கரவர்த்திக்கு நடக்கவேண்டிய பிரேதக்கிரியைகள் தாமதமில்லாமல் பூர்ணமாக நடக்கவேண்டும். நீ துக்கத்தை அடக்கிக்கொண்டு அந்த விஷயத்தைக் கவனிப்பாய்" என்றார்.



பரதன் அதை ஒப்புக்கொண்டு ரித்விக்குகளையும் புரோஹிதர்களையும் ஆசாரியர்களையும் சீக்கிரப்படுத்தினான். அக்னிகிருஹத்தில் தசரதரால் பூஜிக்கப்பட்டுவந்த கார்ஹபத்தியம் முதலிய ஹோமாக்னிகள் திட்டுப்படாமல் வெளியில் கொண்டுபோய் வைக்கப்பட்டிருந்தன. ரித்விக்குகளும் அவர்களுக்கு உதவிசெய்தவர்களும் அவைகளை விதிப்படி எடுத்துச்சென்றார்கள். பரிசாரகர்கள் சக்கரவர்த்தியின் தேகத்தை உத்தமமான பல்லக்கில் வைத்துக் கண்ணீர் பெருகப் பேசமுடியாமல் எடுத்துப் போனார்கள். வெள்ளியாலும் தங்கத்தாலும் செய்யப்பட்ட புஷ்பங்களையும் பலவிதமான வஸ்திரங்களையும் அரசனுக்கு முன்பு வாரி இறைத்துக்கொண்டு பலர் சென்றார்கள். சந்தனம் அகில் குங்கிலியம் முதலிய பரிமளத் திரவியங்களைத் தங்கத்தால் செய்யப்பட்ட தூபபாத்திரங்களில் சிலர் போட்டுக் கொண்டே இருந்தார்கள். இன்னும் சிலர் சந்தனம் பத்மகம் தேவதாரு முதலிய பரிமள விருக்ஷங்களால் சிதையை அடுக்கினார்கள். ராஜபத்தினிகள் வயதுசென்ற பரிசாரக ஸ்த்ரீகளால் சூழப்பட்டுப் பல்லக்கு முதலிய வாகனங்களில் ஏறிக்கொண்டு நகரத்திலிருந்து புறப்பட்டுக் கூடவந்தார்கள். பிறகு ரித்விக்குகள் ஸ்மசானத்தில் பிரேதத்தைச் சிதையின் நடுவில் வைத்து, பரதனோடும் ராஜஸ்த்ரீகளோடும் பிரதக்ஷிணமாகவும் அப்பிரதக்ஷிணமாகவும் சுற்றிவந்து, மஹாராஜா செய்துவந்த அக்னிஹோத்திர அக்னியால் பரதனை மூட்டச்செய்து, ஹோதா உத்காதா அத்வர்யு பிரஹ்மா என்ற ரித்விக்குகள் பிதிருமேத விதிப்படி வேத மந்திரங்களை உச்சரித்து ஸகலக் கிரியைகளையும் குறைவில்லாமல் நடத்தினார்கள். ஸாமகானத்தில் நிபுணர்கள் ஸாமவேத மந்திரங்களை மதுரமாகப் பாடினார்கள். அநேகம் ஆயிரம் கிரௌஞ்ச பக்ஷிகளைப் போல் தீனமாக வாய்விட்டலறும் ராஜ பத்தினிகளின் குரல் ஓசை வெகுதூரம் பரவிற்று. பிறகு எல்லோரும் வாஹனங்களில் ஏறி ஸரயூ நதிக்கரைக்கு வந்து, ஜல தர்ப்பணம் முதலிய கிரியைகளைச் செய்து, ராஜஸ்த்ரீகளும் மந்திரிகளும் புரோஹிதர்களும் கண்ணீர் பெருக நகரத்தில் புகுந்தார்கள். பந்துக்கள் பத்து நாட்கள் வரையில் தரையில் படுத்துக்கொண்டு தீட்டுக்காத்தார்கள்.

க்ருத்வோத3கம் தே ப4ரதேந ஸார்த4ம்
ந்ருபாங்க3நா மந்த்ரி புரோஹிதாஶ்ச |
புரம் ப்ரவிஶ்யாஶ்ரு பரீதநேத்ரா
பூ4மௌ த3ஶாஹம் வ்யநயந்த து3க்க2ம் ‖ (23)

## ஸர்க்கம் 77

### தசரதருடைய உத்தரக் கிரியைகள் (தொடர்ச்சி)

ததோ த³ஶாஹேதிக³தே க்ருதஶௌசோ ந்ருபாத்மஜ: |
த்³வாத³ஶேஹநி ஸம்ப்ராப்தே ஶ்ராத்³த⁴கர்மாண்யகாரயத் (1)

பத்து நாட்களும் கழிந்த பிறகு பதினோராவது நாளில் புண்ணியாஹவாசனம் நவசிராத்தம் முதலிய சுத்திகளைச்செய்தார்கள். பன்னிரண்டாவது நாளில் ஷோடச சிராத்தம் மாஸிகம் ஸபிண்டீகரணம் முதலிய கிரியைகளை நடத்தினார்கள்.

மஹாராஜாவுக்குத் திருப்தியுண்டாவதற்குப் பரதன் பிராம்மணர்களுக்கு எண்ணிறந்த ரத்தினங்களையும் தனத்தையும் வஸ்திரங்களையும் ஆடு மாடுகளையும் வேலைக்காரர்களையும் வேலைக்காரிகளையும் வீடுகளையும் கொடுத்தான். பதின்மூன்றுவது நாள் காலையில் தன் பிதாவைக் குறித்து அவர் மிகவும் பிரலாபித்து, ஸஞ்சயனம் செய்வதற்காக ஸ்மசானத்திற்குப் போய் சிதைக்கு ஸமீபத்தில் நின்று, "மஹாராஜரே! தாங்கள் என்னை ராமனிடத்தில் ஒப்புவித்திருந்தீர்கள். அவரும் காட்டிற்குப் போய்விட்டார். தாங்களும் என்னை விட்டு ஸ்வர்க்கத்திற்குப் போய்விட்டீர்கள். அநாதையான கௌஸல்யைக்கு ஒரே கதியாக இருந்த ராமனும் தங்களால் காட்டிற்கு அனுப்பப்பட்டார். தாங்களும் அவளைக் கைவிட்டு எங்கே போனீர்கள்?" என்று இப்படிப் புலம்பிக்கொண்டு, தசரதருடைய தேகம் எரிக்கப்பட்டு, சிவந்த சாம்பலும் எலும்புமாகக் கிடந்தஇடத்தைப் பார்த்துப் பெருங்குரலிட்டழுது பூமியில் மூர்ச்சையடைந்து விழுந்தான். இந்திர துவஜத்தைக் கயிறுகளால் தூக்கி நிறுத்துவதுபோல், அவனுடைய பந்துக்கள் பரதனைத் தூக்கி எடுத்து, யயாதி சக்கரவர்த்தி தன் புண்ணியம் அழிந்த காலத்தில் ஸ்வர்க்கத்திலிருந்து பூமியில் விழுந்து ரிஷிகளால் சூழப்பட்டது போல், அவனைச் சூழ்ந்து நின்றார்கள். பரதன் துக்கிப்பதைப் பார்த்துச் சத்ருக்னனும் பிரக்ஞையற்றுப் பூமியில் விழுந்தான். பிறகு மூர்ச்சை தெளிந்து தன் பிதா மிகுந்த பிரீதியுடன் தன்னைச் செல்வமாக வளர்த்ததையும் அந்தக் காலங்களில் தனக்கு அவர் செய்த உபகாரங்களையும் நினைத்து நினைத்து பிரலாபித்தான். "மந்தரையிடத்திலிருந்து உண்டான வரங்களைக் கொடுப்பதென்ற சோக ஸமுத்திரம், கைகேயியென்ற பெரும் முதலையால் பீடிக்கப்பட்டு, ஆழம் அண்டாமல் எங்களை முழுகச்செய்தது. தாங்கள் எப்பொழுதும் செல்வமாக வளர்த்த பரதனை இங்கே இப்படித் தவிக்கவிட்டு எங்கே போனீர்களோ! நேர்த்தியான போஜனங்களையும் பானங்களையும் ஆடையாபரணங்களையும் எங்களுக்குக் கொடுத்து, 'இவைகளில் உங்களுக்கு இஷ்டமானவைகளை எடுத்துக்கொள்ளுங்கள்' என்று நிர்ப்பந்தம் செய்வீர்களே. இனிமேல் எங்களை இப்படி யார் ஆதரிப்பார்கள்? தர்மாத்மாவான தங்களை விட்டுப் பிரிந்து இந்தப் பூமி வெடிக்காமல் இருக்கிறதைப் பார்த்தால் பிரளயகாலத்திலும் இதற்கு நாசமில்லை என்று எண்ணுகிறேன். தாங்களும் ஸ்வர்க்கத்திற்குப்போய் ராமனும் காட்டிற்குப் போனபிறகு இங்கே எப்படிப் பிழைத்திருப்பேன்? ஆகையால் இந்த நிமிஷத்திலேயே நெருப்பில் விழுந்து பிராணனை விடுவேன். தகப்பனும்இல்லாமல் தமயனும் இல்லாமல் சூன்யமாக இருக்கும் இந்த இக்ஷ்வாகுகுல ராஜதானியான அயோத்யையில் அடிவைக்க என்னால் முடியாது. ஆகையால் நானும் காட்டிற்குப் போகிறேன்" என்று பரத சத்ருக்னர்கள் பிரலாபித்ததைக் கேட்டு அரசனுடைய பரிஜனங்களெல்லாம் தாங்கமுடியாத துக்கத்தை அடைந்தார்கள். அந்த ராஜபுத்திரர்கள் களைத்து, முகம் வாடிக் கொம்புகள் ஒடிந்த காளைகளைப் போல் பூமியில் விழுந்து புரண்டார்கள்.



அப்பொழுது உத்தம ஸ்வபாவத்தையுடையவரும் பிரஹ்மஜ்ஞானியும் இக்ஷ்வாகுகுல புரோஹிதருமான வஸிஷ்டபகவான் பரதனைத் தூக்கியெடுத்து, "குழந்தாய்! சக்ரவர்த்தி மரணமடைந்து இது பதின்மூன்றுவது நாள். மிச்சமுள்ள ஸஞ்சயனம் முதலிய கிரியைகள் இன்னும் நடத்தப்படவில்லை. ஏன் தாமதம் செய்கிறாய்? பசி தாஹம் சோகம் மோஹம் கிழத்தனம் மரணம் என்ற ஆறும் பிராணிகளுக்கு இயற்கையானவை. இவைகளை நீக்க ஒருவராலும் முடியாது. இவை நேருங்காலத்தில் நீ இப்படித் துக்கிப்பது உசிதமல்ல" என்றார். ஸுமந்திரரும் சத்ருக்னனைத் தூக்கி எடுத்து ஸகல பூதங்களின் ஜனனமரணகதியை வர்ணித்து ஸமாதானம் செய்தார். அப்பொழுது பரத சத்ருக்னர்கள், மழையாலும் வெய்யிலாலும் தாக்கப்பட்ட இந்திரத்துவஜங்களைப்போல் தோன்றினார்கள். கண்ணீரைத் துடைத்துக்கொண்டு அழுகையால் சிவந்த கண்களுடன் தீனமாய் பிரலாபிக்கும் அந்த ராஜகுமாரர்களை, மேல் நடக்க வேண்டிய கிரியைகளைப் பூர்த்தி செய்யவேண்டுமென்று பந்துக்கள் சீக்கிரப்படுத்தினார்கள்.

அஶ்ரூணி பரிம்ருத்³நந்தௌ ரக்தாக்ஷௌ தீ³நபா⁴ஷிணௌ |
அமாத்யாஸ் த்வரயந்தி ஸ்ம தநயௌ சாபரா: க்ரியா: || (26)

## ஸர்க்கம் 78

### மந்தரைக்குக் கிடைத்த வெகுமதி

அத² யாத்ராம் ஸமீஹந்தம் ஶத்ருக்⁴நோ லக்ஷ்மணாநுஜ: |
ப⁴ரதம் ஶோகஸந்தப்த மித³ம் வசந மப்³ரவீத் || (1)

மஹாராஜாவுக்குச் செய்யவேண்டிய உத்தரக்கிரியைகளை முடித்துப் பரதன் அரண்மனைக்கு வந்தவுடன் ராமன் இருக்குமிடத்திற்குப் போகப் புறப்பட்டார். அதைக்கண்டு சத்ருக்னன்

"அண்ணா! ஸகல பிராணிகளுக்கும் துக்கம் நேர்ந்தால் ராமனையே கதியாக அடைகின்றன; நமக்கும் அவரே கதி என்று சொல்லவும் வேண்டுமா? இப்படி ஸகல பூதத்தின் துக்கத்தைத் தீர்க்கும் ராமன் மஹாபலவானானாலும் கையாலாகாத ஒரு பெண்ணால் காட்டிற்குத் துரத்தப்பட்டாரென்பதை நினைக்க நினைக்க எனக்கு ஆச்சரியம் அடங்கவில்லை. இந்த விஷயத்தில் ராமன் செய்தது உசிதமல்ல என்று எனக்குத் தோன்றுகிறது. ராஜ்யத்தில் ஆசைவைத்துப் பிதாவின் வார்த்தையை மீறினான் என்று லோகாபவாதத்திற்குப் பயந்து ராமன் ஒரு வேளை ஒப்புக்கொண்டிருக்கலாம். மஹாவீரன் என்றும் மஹாபலசாலி என்றும் பெயர் வைத்துக்கொண்டிருக்கும் லக்ஷ்மணனென்று ஒருவர் இருக்கிறாரல்லவா? அவர் எதற்காக பயப்படவேண்டும்? தசரதர் செய்தது அநியாயமென்று தெரிந்திருக்க, அவரைக் கண்டித்து காட்டிற்குப் போகாமல் ராமனை ஏன் தடுக்கக்கூடாது? அதைக்காட்டிலும் இது வெகு ஆச்சரியமாக இருக்கிறது. மஹாராஜா கைகேயிக்கு உட்பட்டிருக்கிறார் என்பதை அறிந்தவுடனே, ஸன்மார்க்கத்தை விட்டு விலகின அந்தத் துராத்மாவை, நியாயாநியாயத்தை நன்றாக விசாரித்து ஏன் சிக்ஷித்திருக்கக் கூடாது" என்று பரதனிடம் கூறினான்.

அப்பொழுது மந்தரை என்ற மஹாபாபி, "பரதன் வந்து விட்டான். இனிமேல் அவனுக்கு அபிஷேகம் நடக்கும். அப்பொழுது நாம் ஸகல ஸௌக்கியங்களையும் அனுபவித்து ஸகல அதிகாரத்தையும் செலுத்தலாம்" என்ற ஆசையுடன், வஸ்திராபரணங்களால் தன்னை அலங்கரித்துக்கொண்டு அந்தப்புரத்திற்கு வந்தாள். உத்தமமான சந்தனக்குழம்பைப் பூசிக்கொண்டு, அரைநூல் மாலை, ரத்தின ஹாரங்கள் முத்துஹாரங்கள் முதலியவைகளால் தேகமெங்கும் பிரகாசிக்க கைகேயியால் கொடுக்கப்பட்ட ராஜஸ்த்ரீகளுக்குத் தகுந்த வஸ்திரங்களைத் தரித்துக்கொண்டு, கயிறுகளால் கட்டி இழுக்கப்பட்ட கிழக்குரங்கைப்போல் தோன்றினாள்.

அங்கிருந்த காவற்காரர்கள் உடனே அவளைப் பிடித்து, சத்ருக்னனிடத்தில் கொண்டுபோய் விட்டு, "ஸ்வாமி! ராமனையும் காட்டிற்குத் துரத்தி நமது மஹாராஜாவையும் கொன்ற மஹாபாபி இவளே. இந்தக் கெட்டவளை தகுந்தபடி தாங்களே சிக்ஷிக்க வேண்டும்" என்று பிரர்த்தித்தார்கள். சத்ருக்னன் அவர்களைப் பார்த்து, "மஹாராஜாவுக்கும் அவருடைய புத்திரர்களுக்கும் கொடிய துக்கத்தை உண்டுபண்ணின இந்தபாபி, அதன் பயனை அடையப் போகிறாள் பாருங்கள்" என்று கூறி அந்தப்புரத்து ஸ்த்ரீகளுக்கு நடுவிலிருந்தஅந்தக் கூனியைப் பிடித்து இழுத்துக் கீழே தள்ளினான். அவள் அதனைப் பொறுக்கமாட்டாமல் கோவென்று கதறினாள். அங்கிருந்த ஸ்த்ரீகள், "சத்ருக்னன் ஒருநாளும் கோபிக்கமாட்டாரே. அவருக்கே கோபம் வந்தால் யார் எதிரில் நிற்க முடியும்? மனிதனுடைய



நித்தியசத்துருக்களான காமக் குரோதங்களை நாசம்செய்த சத்துருக்னரையே கோபம் மூட்டிய இந்த மஹாபாபியை எது செய்தாலும் தகும். இப்பொழுது கௌஸல்யையைத் தவிர நம்மைக் காப்பாற்றக் கூடியவர்கள் வேறில்லை. அவளைச் சரணமடைவோம் வாருங்கள். அவள் கருணாநிதி, பிரியமாகப் பேசுகிறவள், தர்மங்களை அறிந்தவள், மஹா கீர்த்திசாலி" என்று சொல்லிக்கொண்டு பயந்து அங்கிருந்து ஓடிப்போனார்கள். அதற்குள் சத்ருக்னன் கோபத்தால் கண்கள் சிவக்க, அந்தக் கூனியைத் தரையில் தள்ளி அங்குமிங்கும் இழுத்தான். அவளுடைய அழுகைக் குரலால் அந்தப்புரமெங்கும் நடுங்கிற்று. அவள் அணிந்த ஆபரணங்கள் அறுந்து நான்கு புறங்களிலும் சிதறி சரத்காலத்தில் நக்ஷத்திரங்களால் நிறைந்த ஆகாசத்தைப்போல் அவ்விடத்தை பிரகாசிக்கச் செய்தது.

அப்பொழுது மந்தரையின் கூச்சலைக் கேட்டு அவளை விடுவிப்பதற்காகக் கைகேயி அங்கே வந்தாள். அவளைக் கண்டவுடன் சத்ருக்னனுக்குக் கோபம் இன்னும் அதிகமாயிற்று. மிகவும் கடுமையான வார்த்தைகளால் அவளை நிந்தித்தான். அதைக் கேட்டுக் கைகேயி துக்கமும் பயமும் மேலிட்டு, இவன் கோபாவேசத்தால் என்ன செய்வானோ என்று பரதனிடத்தில் ஓடி, கூனியை ரக்ஷிக்கவேண்டுமென்றுபிரார்த்தித்தாள்.அப்பொழுதுபரதன்,"குழந்தாய் சத்ருக்ன! ஸகலப் பிராணிகளிலும் ஸ்த்ரீகள் பலமற்றவர்கள்; எந்த அபராதத்தைச் செய்தாலும் அவர்களைக் கொல்வது மஹாபாபம். ஆகையால் இந்தத் துஷ்டையை விட்டுவிடு. இந்த மஹாபாதகியான கைகேயி என் தாயானாலும் அவளை நான் கொல்லாமல் விட்டிருப்பேனா? பெற்ற தாயைக் கொன்ற துஷ்டன் என்று ராமன் என்னிடத்தில் வெறுப்படைவார் என்றல்லவா விட்டுவிட்டேன். இந்தக் கூனியை நாம் கொன்றோமென்று ராகவனுக்குத் தெரிந்தால் நம்மிடத்தில் பேசவேமாட்டார்" என்றான்.

அதைக்கேட்டுச் சத்ருக்னன் கோபத்தைத் தணித்துக்கொண்டு மந்தரையை தள்ளி விட்டான். அவள் அந்த வேகத்தால் பிரக்ஞையற்றுக் கைகேயியின் பாதங்களில் போய் விழுந்து, கைகால்கள் ஒடிந்து, பெருமூச்சுவிட்டுக்கொண்டு, தீனமாகக் கதறினாள். கைகேயி அவளைத் தன்னால் கூடியவரையில் ஸமாதானம் செய்தாள்.

ஶத்ருக்⁴ந விக்ஷேப விமூட⁴ ஸம்ஜ்ஞாம்
ஸமீக்ஷ்ய குப்³ஜாம் ப⁴ரதஸ்ய மாதா |
ஶநை: ஸமாஶ்வாஸய தா³ர்தரூபாம்
க்ரௌஞ்சீம் விலக்³நாமிவ வீக்ஷமாணாம் || (26)

## ஸர்க்கம் 79

# "இந்த ராஜ்யம் எனக்கு வேண்டாம்"

*தத: ப்ரபா⁴த ஸமயே தி³வஸே ச சதுர்த³ஶே |*
*ஸமேத்ய ராஜகர்தாரோ ப⁴ரதம் வாக்ய மப்³ருவந் ॥* (1)

**த**சரதர் மரணமடைந்த பதினான்காவது நாள் காலையில் மந்திரிகள் ஸேனாதிபதிகள் புரோஹிதர்கள் எல்லோரும் சேர்ந்து யோசித்து, பரதனைப்பார்த்து, "நம்மெல்லோர்க்கும் பரமகுருவாக இருந்த மஹாராஜா ஸ்வர்க்கத்தில் ஆசைவைத்துப் போய்விட்டார். அவருடைய மூத்தபுத்திரனான ராமனும் மஹாபலசாலியான லக்ஷ்மணனும் கைகேயியின் வார்த்தையால் காட்டிற்கு அனுப்பப்பட்டார்கள். மனிதன் முதலில் அரசனைத்தேடி அடையவேண்டும்; பாரியையையும் தனத்தையும் பிறகு ஸம்பாதிக்கவேண்டும். பெற்றோரைவிட அரசனே நமக்கு அந்தரங்கமான ரக்ஷகனென்று பெரியோர் சொன்னபடி, இந்த ராஜ்யத்திற்கு இப்பொழுது அரசனில்லாவிட்டாலும் ஈசுவர கிருபையால் ஜனங்களுக்குள் அதிருப்தியும் கலஹமும் உண்டாகவில்லை. (மந்திரிகளும் ராஜஸேவகர்களும் சிற்றரசர்களும் மிகுந்த ஒற்றுமையுடன் இருப்பதால் இந்த ராஜ்யத்திற்கு அபாயம் நேராது). ஆகையால் தாங்கள் எங்களுக்கு அரசராக வேண்டும். வரிசைக்கிரமத்தில் தாங்கள் மஹாராஜாவின் மூத்தபுத்திரர்; எல்லா விதத்திலும் வெகு கீர்த்திபெற்றவர்; ஜனங்களும் தங்களிடத்தில் மிகுந்த பிரீதி வைத்திருக்கிறார்கள். ராஜஸேவகர்களும் வியாபாரிகளும் அபிஷேகத்திற்கு வேண்டிய ஸகல பதார்த்தங்களுடன் காத்துக்கொண்டிருக்கிறார்கள். ஆகையால் தங்களுடைய முன்னோர்களால் ஆளப்பட்ட இந்த சாசுவதமான ராஜ்யத்தைப் பெற்றுக்கொள்ளவேண்டும். பட்டாபிஷேகத்தைக் கைக்கொண்டு எங்களைக் காப்பாற்றவேண்டும்" என்று பிரார்த்தித்தார்கள்.

ஆனால், தர்மத்திலிருந்து ஒருநாளும் பிறழாத பரதன் அபிஷேக பதார்த்தங்களை பிரதக்ஷிணம் செய்து, ஜனங்களைப் பார்த்து "எங்கள் குலத்தில் மூத்த புத்திரனே ராஜ்யத்தை அடையவேண்டும் என்பது தர்மமாக இதுவரையில் அனுஷ்டிக்கப்பட்டுவருகிறது. நீங்கள் புத்திமான்களல்லவா? என்னிடத்தில் இப்படிச் சொல்வது தகுமா? ராமன் எனக்குத் தமயன். ஆகையால் ராஜாவாக இருக்கத் தகுந்தவர். நான் பதினான்கு வருஷங்கள் காட்டில் வஸிப்பதாக நிச்சயம் செய்துவிட்டேன். சதுரங்க ஸைன்யம் தயாராகட்டும். காட்டிலிருந்து என் தமயனை எப்படியாவது அழைத்துக்கொண்டு வருகிறேன். இப்பொழுது ஸித்தமாக இருக்கும் அபிஷேக பதார்த்தங்களை அங்கே எடுத்துக்கொண்டுபோய் மஹாபூஜ்யரான ராமமூர்த்திக்கு அபிஷேகம் செய்து, யாகசாலையிலிருந்து மூன்று அக்னிகளையும் அழைத்துக்கொண்டு வருவதுபோல், அந்த மஹாத்மாவைக் காட்டிலிருந்து இங்கே அழைத்துக்கொண்டு வருவேன். எனக்குத் தாயென்று பெயர் மாத்திரம் கொண்டிருக்கும் கைகேயியின் இஷ்டத்தை ஒரு நாளும் நிறைவேற்றமாட்டேன். ராமசந்திரனே இந்த ராஜ்யத்தை ஆளுவார். நான் கோரமான வனத்தில் காலங்கழிப்பேன். ஆகையால் சிற்பிகள் மேடுபள்ளங்களை ஒழுங்காக்கி ஸுகமான வழியை ஏற்படுத்தட்டும்; போகும்பொழுது அபாயமான இடங்களைத் தாண்டுவதில் உதவிசெய்யக் காவலாளிகள் நம்முடன் வரட்டும்" என்று கட்டளையிட்டான்.

இப்படி ராமனுக்கு ஹிதமான வார்த்தைகளைப் பரதன் சொல்ல, அங்கிருந்த ஜனங்களெல்லோரும் ஒன்றுசேர்ந்து, "மஹாராஜா செய்த பிரதிக்ஞைப்படி தங்களுக்குக் கிடைக்கவேண்டிய ராஜ்யத்தை மூத்த புத்திரனான ராமனுக்குக் கொடுக்கவேண்டுமென்று ஒரே மனமாக நிச்சயித்திருக்கும் தங்களுக்கு லக்ஷ்மீ கடாக்ஷம் ஒரு நாளும் குறையாமலிருக்கட்டும்" என்று ஆசீர்வதித்தார்கள். பெரியோர்களின் கண்களிலிருந்து ஆனந்தபாஷ்பம் பெருகிற்று. மந்திரிகள்முதலியோர், "அரசரே, தாங்கள் கூறியபடி வேலைக்காரர்கள் எல்லோரும் ஏவப்பட்டுள்ளனர்" என்று கூறினர்.

*ஊசுஸ்தே வசநமித³ம் நிஶம்ய ஹ்ருஷ்டா:*
*ஸாமாத்யா: ஸபரிஷதோ³ வியாத ஶோகா: |*
*பந்தா²நம் நரவர ப⁴க்திமாந் ஜநஶ்ச*
*வ்யாதி³ஷ்டாஸ் தவ வசநாச்ச ஶில்பிவர்க³:* (17)

## ஸர்க்கம் 80

# காட்டிற்கு மார்க்கம் அமைத்தது

*அத² பூ⁴மிப்ரதே³ஶஜ்ஞா: ஸூத்ர கர்ம விஶாரதா³: |*
*ஸ்வகர்மாபி⁴ரதா: ஶூரா: க²நகா யந்த்ரகாஸ் ததா² |* (1)

**பி**றகு பூமியின் ஸாரத்தை நன்றாக அறிந்தவர்களும், கிணறு வெட்டுகிறவர்களும், வாய்க்கால் சுரங்கம் இவைகளை வெட்டுகிறவர்களும், தெப்பம் படகு ஓடம் இவைகளைச்செய்கிறவர்களும், கூலிக்காரர்களும், காவல்காக்கும் சூரர்களும், கல்தச்சன்களும் ராஜ்ய உத்தியோகஸ்தர்களும், யந்திரங்களைச்செய்பவர்களும், தச்சர்களும், மரங்களை வெட்டுகிறவர்களும், மேடுபள்ளங்களை ஒழுங்குபடுத்துகிறவர்களும், சுண்ணாம்புக்காரர்களும் குறவர்களும் காட்டுவழியில் போய்ப் பழகினவர்களும் முன்னே போனார்கள். அவர்கள் ராமனைப் பார்ப்போமென்ற ஸந்தோஷத்தால் தங்களுடைய வேலைகளை வெகு சீக்கிரமாகச் செய்து முடிக்கத் தீர்மானித்து, பர்வ காலங்களில் ஸமுத்திரம் பொங்குவதைப்போல், கங்கைக்கரைக்குப்

போனார்கள். தங்கள் தங்கள் கூட்டத்தாருடன் சேர்ந்து மண் வெட்டி, கோடாலி, பாறை முதலிய ஆயுதங்களுடன் முன்னே போய் வழியிலுள்ள கிளைகளையும் செடி கொடிகளையும் மரங்களையும் அடிக்கட்டைகளையும் கற்களையும் வெட்டிஎறிந்து மார்க்கத்தை ஒழுங்கு செய்தார்கள். சிலர் மரங்களில்லாதஇடத்தில் மரங்களை வைத்தார்கள்; சிலர் கோடாலிகளாலும் உளிகளாலும் அரிவாள்களாலும் மரங்களை வெட்டினார்கள்; சிலர் ஆழமாக வேரூன்றியிருந்த இலாமிச்சைச் செடிகளை எரித்தார்கள்; சிலர் மேடுபள்ளங்களை ஸமமாகச் செய்தார்கள்; சிலர் பெரிய பள்ளங்களையும் பாழுங்கிணறுகளையும் மண்ணால் நிரப்பினார்கள்; சிலர் அவசியமானஇடங்களில் பாலங்களைப் போட்டார்கள்; சிலர் அவசியமானஇடங்களில் ஜலம் வற்ற வெட்டிவிட்டார்கள்; சிறிய கற்களுள்ள இடத்தில் சிலர் அவைகளைப் பொடிசெய்தார்கள்; ஸ்வல்ப ஜலமுள்ள இடங்களைப் படிக்கட்டுகளால் அலங்கரிக்கப்பட்ட விஸ்தாரமான குளங்களாகச் சிலர் செய்தார்கள்; சிலர் ஜலமில்லாத இடங்களில் ருசியான ஜலமுள்ள கிணறுகளையும் வாவிகளையும் ஏரிகளையும் யானைகள் குதிரைகள் காலாட்கள் இறங்கிக் குடிக்கும்படியாக வெட்டி, ஜலம் குடித்த பிறகு தரையில் இளைப்பாறுவதற்காக மேடைகளையும் கட்டினார்கள். அந்த ஸைந்யங்கள் போகும் வழி கற்களாலும் நற்சாந்தாலும் உறுதியாகக் கட்டப்பட்டுப் பக்கங்களில் புஷ்பங்களாலும் பழங்களாலும் நிறைந்த மரங்களால் அலங்கரிக்கப்பட்டிருந்தது. மதம் பிடித்த பக்ஷிகள் அவைகளிலிருந்து ஆனந்தமாகக் கூவின. தேவதைகள் போகும் வழிபோல் அது பார்ப்பவர்களின் கண்களைப் பறித்தது.

பிறகு வாஸ்துசாஸ்திரத்தில் நிபுணர்களால் நிச்சயிக்கப்பட்ட சுப முஹூர்த்தத்தில் வழியில் கூடாரம் அடிக்க நியமிக்கப்பட்டிருந்தவர்கள் ஜலஸௌக்கியம் அமைந்து மரங்கள் அடர்ந்த இடத்தில், பரதன் தங்குவதற்குக் கூடாரங்களை அடித்து விசித்திரமாக அலங்கரித்தார்கள். அவை நேர்த்தியான மெல்லிய மணல்களால் கட்டப்பட்ட மேடைகளால் சூழப்பட்டு நவரத்தினங்கள் இழைத்த மலைகளைப்போலிருந்தன. அவைகளின் நடுவில் விசாலமான வீதிகள் போடப்பட்டிருந்தன. தேவாலயங்களும் அரண்மனைகளும் பிராகாரங்களும் அமைக்கப்பட்டிருந்தன. அழகான கொடிகள் எல்லா இடங்களிலும் பறந்துகொண்டிருந்தன. ஆகாசத்தை அளாவியிருக்கும் உப்பரிகைகளுள்ள வீடுகளால் நிறைந்து, இந்திரனுடைய ராஜதானியான அமராவதியைப்போலும், தேவகணங்கள் ஸஞ்சரிக்கும் விமானக்கூட்டங்களைப்போலும் விளங்கிற்று. பலவித மீன்கள் நிறைந்து சுத்தமான குளிர்ந்த ஜலத்தையுடைய கங்கையின் கரையிலுள்ள காடுகளின் வழியாக திறமை வாய்ந்த சிற்பிகளால் போடப்பட்ட அந்த மார்க்கம், ராத்திரியில் மேகங்களற்று சுத்தமான ஆகாசம் சந்திரனாலும் நக்ஷத்திரவரிசைகளாலும் பிரகாசிப்பதுபோல் விளங்கிற்று.



ஸ சந்த்3ர தாராக3ண மண்டி3தம் யதா2
நப4: க்ஷபாயா மமலம் விராஜதே |
நரேந்த்3ர மார்க3: ஸ ததா2 வ்யராஜத
க்ரமேண ரம்ய: ஶுப4ஶில்பி நிர்மித: ‖ (22)

---

## ஸர்க்கம் 81

## ராஜஸபை

---

ததோ நாந்தீ3முகீ2ம் ராத்ரிம் ப4ரதம் ஸூதமாக3த4ா: |
துஷ்டுவுர் வாக்3விஶேஷஜ்ஞா: ஸ்தவைர் மங்க3ள ஸம்ஹிதை:(1)

பரதனுடைய அபிஷேகத்திற்குப் பூர்வாங்கமாகச் செய்ய வேண்டிய நாந்தி முதலிய மங்களக்கிரியைகளை வஸிஷ்டர் அந்த ராத்திரியில் செய்து முடித்தார். விடியற்காலத்தில் ஸூத மாகத வைதாளிக வந்திகள் ஸகல மங்களவாத்தியகோஷத்துடன் வெகு சாதுர்யமாகவும் மதுரமாகவும் பரதனைத் துதித்தார்கள். ஜாமத்தைக் குறிக்கும் துந்துபி தங்கக் கழிகளால் அடிக்கப்பட்டு கம்பீரமாகச் சப்தித்தது. சங்கம் முதலிய வாத்தியங்கள் மந்தரம் மத்யமம் தாரம் என்ற மூன்று ஸ்தாயிகளை வெகுசித்திரமாகக் காட்டிக்கொண்டு முழங்கின. ஆகாசத்தை அளாவின அந்த வாத்யகோஷம், அதுவரையிலும் சோகத்தால் பீடிக்கப்பட்ட பரதனை அதிகமாக வருத்தப்படுத்திற்று. அவன் உடனே விழித்துக்கொண்டு, "இவை எல்லாம் மஹாராஜாவுக்குச் செய்யவேண்டிய மரியாதைகள்; எனக்கு அந்த யோக்கியதையில்லை; நிறுத்துங்கள்" என்று கட்டளையிட்டு "குழந்தாய், சத்ருக்ன! கைகேயியால் விளைந்த அக்கிரமத்தைப் பார்த்தாயா? ராஜ்யத்தில் நீதி தப்பி நடக்கலாயிற்று. ஸகலவித துக்கத்திற்கும் என்னை ஆளாக்கி சக்கரவர்த்தி ஸுகமாக ஸ்வர்க்கத்தில் வஸிக்கிறார். ராஜ்யத்தில் பிரதானமான அரசனிருக்கும் பொழுதே அவருடைய மூத்தபுத்திரன் யுவராஜாவாக நியமிக்கப்பட்டு, இடையூறின்றி வந்துகொண்டிருந்த இக்ஷ்வாகு குல ராஜ்ய லக்ஷ்மி, மாலுமியில்லாத ஓடம் வெள்ளத்தில் தத்தளிப்பதுபோல், நாதனில்லாமல் தவிக்கிறாள். நம் எல்லோருக்கும் போஷகனும் ரக்ஷகனும் நாதனுமான ராமன், இக்ஷ்வாகு குல தர்மத்திற்கு விரோதமாக என் தாயால் காட்டிற்குத் துரத்தப்பட்டார். இப்பொழுது அண்டியிருப்பதற்குப் புருஷர்களில்லாமல் ராஜ்ய லக்ஷ்மி அலைந்துகொண்டிருக்கிறாள்" என்று சித்தஸ்வாதீனமற்றவனைப்போல் பிரலாபித்தான். அதைக் கேட்டு அங்கிருந்த ஸ்த்ரீசனெல்லோரும் பெருங்குரலிட்டு அழுதார்கள்.

அப்பொழுது ஸகல ராஜதர்மங்களையும் அறிந்த வஸிஷ்ட பகவான் தம் சிஷ்யர்களுடன், ரத்தினஸிம்ஹாஸனத்தால் அலங்கரிக்கப்பட்டுத் தேவேந்திரனுடைய ஸுதர்மாவைப்போல் விளங்கும் ஸபாமண்டபத்தில் வந்தார். ஸகல வேதங்களுக்கும் நிதியான அந்த மஹரிஷி, விலையற்ற போர்வையால் மூடப்பட்ட ஒரு தங்க ஆஸனத்தில் வீற்றிருந்து தூதர்களை அழைத்து, "ஒரு பெரிய ராஜ்ய காரியம் இப்பொழுது நடக்கவேண்டும். பிராம்மண க்ஷத்திரிய வைசியர்களையும் ஸேனைத் தலைவர்களையும் மந்திரிகளையும் அரசனுக்கு அந்தரங்கமான வேலைக்காரர்களையும் பரதசத்ருக்னர்களையும் பரதனுடைய ஹிதத்தில் நோக்கமுள்ள விஜயன் ஸுமந்திரன் முதலியவர்களையும் சீக்கிரத்தில் அழைத்து வாருங்கள்'' என்று ஆக்ஞாபித்தார்.

பிறகு ரதங்களிலும் குதிரைகளிலும் யானைகளிலும் ஏறி வந்துகொண்டிருந்தவர்களின் கோலாஹலத்தால் அந்த ஸபாமண்டபம் நிறைந்தது. பரதன் உள்ளே வந்தபொழுது ஜனங்களெல்லோரும், முன்பு தசரதரை எதிர்கொண்டு உபசரித்ததுபோலும், தேவதைகள் இந்திரனை எதிர்கொண்டழைப்பதுபோலும் உபசரித்து ஸந்தோஷித்தார்கள். அந்த மண்டபம், ஸமுத்திரத்திற்கு அருகிலுள்ள ஒரு பெரிய மடுவைப்போலும், வஸிஷ்டபகவான் அதிலுள்ள கம்பீரமான ஜலத்தைப்போலும், பரத சத்ருக்னர்கள் பயமில்லாமல் அதில் ஸஞ்சரிக்கும் திமிங்கிலங்களையும் யானைகளையும்போலும், மந்திரி ஸேனாபதி முதலிய ஜனங்கள் அதிலுள்ள ரத்தினங்களையும் சங்கங்களையும் பெரும் மணல்களையும் போலும், முன்பு தசரதர் ஆண்டபொழுது இருந்ததுபோல் விளங்கிற்று.

ஹ்ரத3 இவ திமிநாக3 ஸம்வ்ருத:
ஸ்திமித ஜலோ மணிஶங்க2 ஶர்கர:
த3ஶரத2 ஸுத ஶோபி4தா ஸபா4
ஸத3ஶரதே2வ ப3பௌ4 யதா2 புரா ‖ (16)

---

## ஸர்க்கம் 82

# பரதன் காட்டிற்குப்போகப் புறப்படுதல்

---

தாமார்ய க3ண ஸம்பூர்ணாம் ப4ரத: ப்ரக்3ரஹாம் ஸபா4ம் |
த3த3ர்ஶ பு3த்3தி4 ஸம்பந்ந: பூர்ணசந்த்3ரோ நிஶாமிவ ‖ (1)

பரதனுக்கு அபிஷேகம் நடக்கப்போகிறதென்று எல்லா ஜனங்களும் நன்றாக அலங்கரித்துக்கொண்டு அந்த ராஜ சபையில் தகுந்த ஆஸனங்களில் உட்கார்ந்துகொண்டிருப்பதையும், சரத் காலத்தில் பூர்ண சந்திரனால் ஆகாசம் விளங்குவதுபோல் அந்த ஸபை விளங்குவதையும் பார்த்து வஸிஷ்ட மஹரிஷி, அங்கிருந்த ராஜ்ய உத்யோகஸ்தர்களையும் மற்ற ஜனங்களையும் பார்த்தபின், "குழந்தாய், பரத! தசரதர் ஜனங்களைத் தர்மமாக ஆண்டுவந்து ஸ்வர்க்கத்தை அடைந்தார். தனதான்யங்களால் நிறைந்த இந்த விஸ்தாரமான ராஜ்யத்தை இறக்கும்பொழுது உனக்குக் கொடுத்தார். சந்திரனை விட்டு அதன் காந்தி விலகாததுபோல் பிதிரு வாக்ய பரிபாலன தர்மத்தை ஒருநாளும் விடாத ராமன் ஸத்தியஸந்தனாக ஸாதுக்களுடைய நடத்தையை அனுஸரித்து இந்த ராஜ்யத்தை உனக்குக் கொடுத்துக் காட்டிற்குப் போனார் இப்படி உன் பிதாவினாலும் தமயனாலும் மனப்பூர்வமாக உனக்குக் கொடுக்கப்பட்ட இந்த ராஜ்யத்தை யாதொரு உபத்திரவமும் இல்லாமல் நீ ஜனங்கள் சந்தோஷிக்க ஒப்புக்கொண்டு சீக்கிரத்தில் பட்டாபிஷேகம் செய்துகொள். நான்கு திக்குகளிலும் தீவுகளிலுமுள்ள அரசர்கள் கோடி கோடியாக ரத்தினங்களைக் கொண்டுவந்து உனக்குப் பாதகாணிக்கையாக வைக்கட்டும்'' என்றார்.



அதைக் கேட்டு பரதன், மூத்தவன் இருக்கையில் இளையவன் ராஜ்யத்தைக் கைக்கொள்வது தர்மவிரோதமென்ற ராஜநீதியை அறிந்தவனாகையால், அந்தத் தர்மத்தையே அனுஷ்டிக்க விரும்பித் துக்கத்துடன், ராமனை மனத்தில் நினைத்துக்கொண்டான். ராமனுடைய ஞாபகம் வந்தவுடன் அவனுக்குக் கண்ணீர் பெருகி நெஞ்சையடைத்தது. ஸகல போகங்களையும் அனுபவிக்கத் தகுந்த வயதும் சக்தியும் இருந்தும் அவைகளை வேண்டாமென்று மறுத்த மஹாத்மா ராமன். "என்ன ஆச்சரியம்! லோகத்தில் தர்ம விரோதமான காரியத்தை ஒருவனுக்கு உபதேசிக்க விரும்பினால், எவர்க்கும் தெரியாமல் ரஹஸ்யமாகச் சொல்வது வழக்கம். ஸகல தர்மங்களையும் அறிந்த வஸிஷ்ட மஹரிஷியே என்னை எவ்வளவோ அல்பனாக நினைத்தாரல்லவா? இப்படி இந்த ராஜ்யத்து ஜனங்களெல்லோரும் கூடியிருக்கையில் வெகு கொடிய அதர்மத்தைச் செய்யும்படி உபதேசிக்கிறாரல்லவா? அவருக்குச் செய்யவேண்டிய மரியாதையை நானும் நினையாமல் இந்த ஜனங்களுக்கு எதிரிலேயே அவரை நிந்திக்கவேண்டும்'' என்று நினைத்தான். "நான் இகத்திலும் பரத்திலும் வேறு கதியில்லாமல் ராமனையே சரணமடைந்திருக்கிறேன். அப்படியிருக்க அதைப் பொறுக்காமல் நீங்கள் எல்லோரும்கூடி அதைக் கெடுக்க இவ்வளவு சிரமப்படுவது நல்ல காரியம்! இது காடல்லவே. நகரத்திலேயே, இவ்வளவு ஜனக்கூட்டத்தில், நான் பிராணாதாரமாக வைத்துக்கொண்டிருக்கும் எனது ராமபக்திசெல்வத்தை அபகரிக்க நீங்கள் எல்லோரும் எங்கே வந்து சேர்ந்திருக்கிறீர்கள்?''

"இக்ஷ்வாகு குலத்திற்கு எப்பொழுதும் க்ஷேமமுண்டாக வேண்டுமென்றே இந்த வஸிஷ்ட மஹரிஷி புரோஹிதராக ஏற்படுத்தப்பட்டிருக்கிறார். அவர் மூன்று காலங்களையும் அறிந்தவர். ஆகையால் எங்களுடைய குலத்திற்கு விசேஷ க்ஷேமமுண்டாக வேண்டுமென்றே இப்படி எனக்கு உபதேசம் செய்கிறார், பார்த்தீர்களா?

இவ்விதமானவரைக் குலகுருவாக வைத்துக்கொண்டு இவ்விதமான உபதேசத்தை அனுஷ்டித்தால் என் குலம் வெகு சீக்கிரத்தில் ஸகல க்ஷேமங்களையும் ஸுலபமாக அடையும் என்பதில் ஸந்தேகம் உண்டோ?

"ராமன் விதிப்படி குருகுலவாஸம் செய்து சாஸ்திரங்களைக் கற்றவர்; அவைகளின் அர்த்தங்களை நன்றாக அறிந்தவர்; அவைகளைத் தவறாமல் அனுஷ்டிப்பவர்; அப்படிப்பட்டவருடைய ராஜ்யத்தை, அதே தர்மங்களுக்குட்பட்ட நான் அபகரிப்பது உங்களுக்கே ஸம்மதமா? ராமனை விட்டுப் பிரிந்த அடுத்த நிமிஷத்திலேயே தசரதர் உயிரை விட்டார்; அவருக்கு நான் புத்திரனாய்ப் பிறந்து ராமனுடைய ராஜ்யத்தை எப்படி அபகரிக்கத் துணிவேன்?

"என் ஸ்வரூபத்தைச் சற்று ஆலோசித்தால் இந்த ராஜ்யத்தை நான் ஆளத்தகுந்தவனல்லவென்று நன்றாகத் தெரியுமே. இது ராமனுடைய பொருள்; நானும் ராமனுடைய உடைமையே. அவருக்குச் சேஷபூதமான (உடைமையான) பதார்த்தங்களில் ஒன்று மற்றொன்றை ஆளமுடியுமா? அப்படியானால் இந்த ராஜ்யம் என்னை ஏன் ஆளக்கூடாது? லோகத்தில் சிலர் தங்களுடைய பிதாக்களை மீறித் தாங்களே ஆண்டுவருகிறார்கள். நான் அப்படிப்பட்டவனென்று ஒருக்ஷணமாவது நினைக்கக்கூடாது. ஆனால் 'லோகத்தில் ரத்தினமும் அது வைக்கப்படும் பெட்டியும் உடையவனுக்கு சேஷபூதமான பதார்த்தங்களல்லவா? அவைகளில் ஒன்றான பெட்டி மற்றொன்றான ரத்தினத்தை ரக்ஷிக்கவில்லையா' என்றால், அந்தப் பெட்டியும் திறவுகோல் முதலியவைகளால் ரத்தினத்தை ரக்ஷிக்கும்படி உடையவனால் ஏற்படுத்தப்பட்டது. அப்படி, 'நீ இந்த ராஜ்யத்தை எனக்காக ஆண்டுகொண்டிரு' என்று ராமனால் நான் கட்டளையிடப்படவில்லை. நாம் அணிந்துகொள்ளும் ஓர் ஆபரணத்தை வேண்டாதபொழுது பெட்டியில் வைப்பதுபோல், ராமன் தானே இந்த ராஜ்யத்தை ஆளவேண்டியதானாலும் நாம் நம்மால் கூடிய வரையில் பிரார்த்தித்தும் அங்கீகரிக்காமல், 'எனக்கு இப்பொழுது வேறு வேலையுண்டு; ஆகையால் எனக்கு அவகாசம் உண்டாகும் வரையில் நீ பார்த்துவா' என்று என்னிடத்தில் ஒப்புவித்தால், அவருக்கு அடிமையாகப் பெட்டியைப்போல் அவர் வரும் வரையில் இந்த ராஜ்யத்தைப் பாதுகாப்பேன். ஆகையால் அவரைத் திரும்பி அழைத்துவரும் விஷயத்தில் எல்லா முயற்சிகளையும் செய்யவேண்டும். முதலில் ராமனிடத்திற்குப் போய், கைகேயிக்குச் சக்கரவர்த்தி வரங்களைக் கொடுத்ததால் இந்த ராஜ்யம் என்னுடையதென்ற எண்ணத்தையும் மாற்றவேண்டும். மூத்த புத்திரரும் எவ்விதத்திலும் மற்றவர்களைக் காட்டிலும் சிரேஷ்டரும் தர்மாத்மாவும் ஸூரிய வம்சத்தரசர்களில் முதன்மை வாய்ந்தவருமான ராமனே தசரதருக்குப் பிறகு இந்த ராஜ்யத்தை ஆளத்தகுந்தவர். நீசர்களால் அனுஷ்டிக்கப்படுவதும் ஸ்வர்க்கத்தைக் கெடுப்பதுமான இந்த மஹா பாபத்தை நான் செய்தால் வைவஸ்வதமனு முதல் இதுவரையில் யாதொரு தோஷமுமின்றி மஹா கீர்த்தியுடன் இந்த ராஜ்யத்தை ஆண்டுவந்த ஸூரிய குலத்தரசர்களுக்கு அழிவில்லாத அபகீர்த்தியைத் தேடி வைத்தவனாவேன். கைகேயி செய்த பாபத்தில் எனக்கு யாதொரு ஸம்பந்தமுமில்லை; அது எனக்குக் கொஞ்சம் கூட இஷ்டமில்லை. அதற்குப் பிராயச்சித்த ரூபமாக நான் வனத்திலிருக்கும் ராமனை இங்கிருந்தே கைகூப்பி நமஸ்கரிக்கிறேன். அவர் எங்கே இருந்தாலும் அவரை அழைத்து வரப்போகிறேன். இந்த மூன்று லோகங்களுக்கும் அதிபதியாக இருக்கத் தகுந்தவர் அவரைத் தவிர வேறு யார்?" என்றான்.



தர்மத்தை ஒட்டின அந்த வார்த்தைகளைக் கேட்டு ஸபையிலிருந்தவர்களெல்லோரும் ராமனிடத்தில் பதிந்த மனமுள்ளவர்களாக ஆனந்தக் கண்ணீர்விட்டார்கள். பிறகு பரதன் "ராமனைக் காட்டிலிருந்து அழைத்துவர என்னால் முடியாவிட்டால், குருசுச்ரூஷையில் தவறாத மஹாத்மாவான லக்ஷ்மணனுடன் நானும் காட்டிலேயே இருப்பேன். இங்கே இருக்கிறவர்கள் எளல்லோரும் என்னுடன் வரவேண்டும். உங்களுக்கெதிரில் அவரை எந்த உபாயத்தாலாவது பலாத்காரத்தாலாவது திருப்பி அழைத்துவருகிறேன். கூலிவேலை செய்கிறவர்களும் வழியை சுத்தம் செய்ய முன்னே அனுப்பப்பட்டிருக்கிறார்கள். நானும் காட்டிற்குப் போக நிச்சயித்துவிட்டேன்" என்று கூறியபின் ஸமீபத்திலிருந்த ஸுமந்திரரைப் பார்த்து, "சதுரங்க ஸைன்யத்தை பிரயாணத்திற்கு ஸித்தமாக இருக்கச் சொல்லுங்கள்" என்று உத்தரவு செய்தான்.

பிறகு ஜனங்களும் ஸேனாதிபதிகளும், ராமனைத் திரும்பி அழைத்துவரக் காட்டிற்குப் பிரயாணம் நிச்சயமாயிற்றென்று கேட்டு ஸந்தோஷமடைந்தார்கள். அந்த யுத்த வீரர்களின் பத்தினிகளும் தங்களுடைய கணவர்களை சீக்கிரப்படுத்தினார்கள்; குதிரைகளிலும் வண்டிகளிலும் ரதங்களிலும் ஸைன்யங்களுடன் சேனைத் தலைவர்கள் பிரயாணத்திற்கு ஸித்தம் செய்தார்கள். ஸைன்யம் புறப்படத் தயாராக இருந்ததைப் பார்த்துப் பரதன் வஸிஷ்டரிடத்தில் அனுமதி பெற்றுக்கொண்டு ஸமீபத்திலிருந்த ஸுமந்திரரை, "என் ரதத்தைக் கொண்டுவாரும்" என்று ஆக்ஞாபித்தான். அவர் உத்தமமான குதிரைகளைப் பூட்டி ரதத்தைக் கொண்டுவந்து நிறுத்தினார்.

மஹா பிரதாபசாலியும் கலங்காத தைரியமுடையவனும், மஹா வீரனுமான பரதன், "என் அண்ணனைப் பிரார்த்தித்து எப்படியாவது காட்டிலிருந்து திரும்பி அழைத்து வருகிறேன். ஸுமந்திரரே! ஸகல ஜகத்திற்கும் க்ஷேமமுண்டாவதற்கு. வனத்தில் வஸிக்கும் ராகவனை அயோத்யைக்கு அழைத்துவர விரும்புகிறேன். அதற்காக ஸேனா

நாயகர்களும் ஸைன்யங்களும் என்னுடன் வரவேண்டியதென்று அவர்களுக்குச் சீக்கிரமாகத் தெரிவியும்'' என்றான்.

ஸுமந்திரர் அதிக ஸந்தோஷத்துடன் ஸகல ராஜ்ய உத்தியோகஸ்தர்களுக்கும் ஸேனாபதிகளுக்கும் நண்பர்களுக்கும் பரதனுடைய உத்தரவைத் தெரிவித்தார். அந்நகரத்திலுள்ள நான்கு வர்ணத்தாரும் வெகு உற்சாகத்துடன், ஒவ்வொரு வீட்டிலும் உத்தமமான ஒட்டகங்களையும் கோவேறு கழுதைகளையும் யானைகளையும் குதிரைகளையும் ரதங்களையும் பிரயாணத்திற்கு ஸித்தம் செய்தார்கள்.

தத: ஸமுத்தா2ய குலே குலேஸ்தே
ராஜந்ய வைஸ்யா வ்ருஷலாஸ்ச விப்ரா: |
அயூயுஜந் நுஷ்ட்ர க2ராந் ரதா2ம்ஸ்ச
நாகா3ந் ஹயாம் ஸ்சைவ குலப்ரஸூதாந் || (32)

---

## ஸர்க்கம் 83

## பரதன் கங்கைக் கரைக்கு வருதல்

---

**தத: ஸமுத்தி2த: கால்ய மாஸ்தா2ய ஸ்யந்த3நோத்தமம் |**
**ப்ரயயௌ ப4ரத: ஶீக்4ரம் ராமத3ர்ஶந காங்க்ஷயா ||** (1)

பிறகு பரதன் அதிகாலையில் எழுந்து ரதத்திலேறி ராமனைப் பார்க்க ஆசைகொண்டு வேகமாகப் பிரயாணம் செய்தான். மந்திரிகளும் புரோஹிதர்களும் ஸூரியனுடைய ரதத்திற்கு ஸமானமான ரதங்களில் முன்னே போனார்கள். விதிப்படி அலங்காரம் செய்யப்பட்ட ஒன்பதாயிரம் யானைகளிலும் அறுபதாயிரம் ரதங்களிலும் லக்ஷம் குதிரைகளிலும் பல யுத்த வீரர்கள் அவரைப் பின்தொடர்ந்தார்கள். கைகேயியும் ஸுமித்திரையும் கௌஸல்யையும் ராமனைத் திரும்பி அழைத்து வருவதென்ற ஆசையால் ஸந்தோஷமடைந்து உத்தமமான வாஹனங்களில் போனார்கள். பிராம்மண க்ஷத்திரிய வைசியர்களும் யாவரும், "கோடைகாலத்தில் வெய்யிலில் தபிக்கும் பிராணிகள் மேகத்தைத் தொலைவில் கண்டாலும் அதைவிட்டுப் போக விரும்பாது; அதைப் பார்த்தவுடனேயே ஸகல தாபமும் தீரும்; அப்படி ராமனிடத்தில் பக்தியுள்ளவர்கள் அவரைப் பார்க்காவிட்டாலும் அவரை விட்டுப் பிரிய விரும்பமாட்டார்கள். அவரைப் பார்த்தவுடனேயே எல்லாத் தாபங்களும் பறந்துபோம். யானைத் துதிக்கையைப்போல் நீண்டு பெருத்து முழங்கால்வரையில் நீண்ட திருக்கைகளையுடையவர் அவர்; அந்த ஸௌந்தரியத்தை தன் பக்தர்கள் தடையின்றி அனுபவிக்கும்படி அனுக்கிரஹிப்பவர்; தன்னை அண்டினவர்கள் தனக்குவிரோதம் செய்தாலும் மாறாத பிரீதியுள்ளவர்; பக்தர்களைக் காப்பாற்றுதில், தனக்கு மிகவும் அந்தரங்கமானவர்கள் தன்னைத் தடுத்தாலும் தான் செய்த பிரதிக்ஞையைத் தவறாதவர். கைகேயியின் கொடிய வார்த்தைகளால் நமக்கு நேர்ந்த தாபங்களையெல்லாம் அவருடைய முகத்தைப் பார்த்த உடனேயே நீங்கிப்போம். ஸகல பிராணிகளின் சோகத்தை நீக்குகிறவரிடம் போனபிறகும் நமது சோகம் அழியாமலிருக்குமா? துக்கப்படாதீர்களென்று அவர் நம்மைப் பார்த்துச் சொல்லவேண்டியதில்லை; கருணைபொழியும் பார்வையுடன் பிரியமான வார்த்தைகளை நம்மிடத்தில் பேசவேண்டியதுமில்லை. நாம் செய்யவேண்டிய முயற்சி யாதொன்றுமில்லை. ஸூரியன் உதிக்கும்பொழுதே லோகத்திலுள்ள இருட்டை அழிப்பதுபோல் தொலைவிலிருந்து அவரை நாம் தரிசித்தவுடனேயே, நமது துக்கங்களை அழிப்பார்'' என்று ராமனைப் பற்றியே ஒருவர்கொருவர் பேசிக்கொண்டு ஆனந்தம் மேலிட்டு, ஒருவரை ஒருவர் கட்டி அணைத்துக்கொண்டு வேகமாகப் போனார்கள்.



மேலும், அந்த நகரத்து ஜனங்களில் ராமனை அண்டினவர்களும் வியாபாரிகளும் ரத்தினங்களை இழைப்பவர்களும் குயவர்களும் சேணியர்களும் ஆயுதம் செய்கிறவர்களும், மயில் தோகையால் விசிறி குடை முதலியவைகளைச் செய்கிறவர்களும், வாள்காரர்களும், இழைப்பு வேலைக்காரர்களும், மரங்களையும் ரத்தினங்களையும் துளை போடுகிறவர்களும், தந்த வேலைக்காரர்களும் சாந்து பூசுகிறவர்களும், வாஸனைக்காரர்களும், தட்டான்களும், கம்பளங்களைச் சுத்தம் செய்கிறவர்களும், தைலம் தேய்க்கிறவர்களும் உடம்பு பிடிக்கிறவர்களும், தூபம் போடுகிறவர்களும், மது முதலிய பானங்களை விற்கிறவர்களும், வண்ணான்களும், தையற்காரர்களும், கிராமங்களுக்கும் இடைச்சேரிகளுக்கும் தலைவர்களும், நாட்டியக்காரர்களும், அவர்களைச் சேர்ந்த பெண்களும், செம்படவர்களும் அந்த ஸைன்யத்துடன் போனார்கள்.

வேதங்களில் திறமையுள்ள பிராம்மணர்களும் யோகிகளும் எருதுகள் பூட்டின ரதங்களில் ஆயிரக்கணக்கில் பரதனைப் பின்தொடர்ந்தார்கள். எல்லோரும் நேர்த்தியான ஆடையாபரணங்களாலும் பரிமளத் திரவியங்களாலும் தங்களை அலங்கரித்துக்கொண்டு, ராமனை அயோத்யைக்குத் திருப்பி அழைத்துவரக் காட்டிற்குப் போகும் பரதனை வெகு ஸந்தோஷத்துடன் பல வாகனங்களில் பின்தொடர்ந்தார்கள்.

வெகு தூரம் பிரயாணம் செய்து கங்கைக் கரையில் சிருங்கிபேர புரத்திற்கு வந்தார்கள். அங்கே ராமனுக்கு முக்கிய மித்திரனான குகன், தன்னைச் சேர்ந்த நிஷாத ஜாதியாருடன் வெகு தர்மமாக ராஜ்யத்தை ஆண்டுவந்தான். ராமனுக்குக் கெடுதி செய்பவர்கள் அந்த வழியாக வராமல் மிக்க ஜாக்கிரதையாக எப்பொழுதும் காத்துக்கொண்டிருந்தான். பரதன் சக்கரவாக பக்ஷிகளால் அலங்கரிக்கப்பட்ட கங்கைக்கரைக்கு வந்து "மந்திரிகளே! நமது ஸைன்யங்கள் அவைகளுக்கு இஷ்டமான இடங்களில் தங்கட்டும்.

இங்கே இளைப்பாறி நாளைக்கு இந்த நதியை தாண்டுவோம். ஸ்வர்க்கத்தையடைந்த என் பிதாவிற்குத் திருப்தியாகும் பொருட்டு இந்த புண்ணிய நதியில் ஜல தர்ப்பணங்களைச் செய்ய விரும்புகிறேன்'' என்றார். மந்திரிகள் அப்படியே ஸைன்யங்களை அவைகள் விரும்பிய இடங்களில் கூடாரமடிக்கச் செய்தார்கள். பரதனோ ராமனைத் திருப்பியழைத்து வருவதிலேயே ஞாபகமுள்ளவனாக அந்த ராத்திரி அங்கே தங்கினான்.

நிவேத்3ய க3ங்கா3மனு தாம் மஹாநதீ3ம்
சமூம் விதாநை: பரிப3ர்ஹ ஶோபி4நீம் |
உவாஸ ராமஸ்ய தத3ா மஹாத்மனோ
விசிந்தயாநோ ப4ரதோ நிவர்தநம் || (26)

## ஸர்க்கம் 84

## பரதன் குஹனைச் சந்தித்தது

ததோ நிவிஷ்டாம் த்4வஜிநீம் க3ங்கா3மன்வாஶ்ரிதாம் நதீ3ம் |
நிஷாத3ராஜோ த்3ருஷ்ட்வைவ ஜ்ஞாதீந் ஸந்த்வரிதோப்3ரவீத் (1)

பரதனுடைய ஸைன்யங்கள் கங்கைக்கரையில் வந்து கூடாரம் அடித்திருப்பதைக் குஹன் பார்த்துத் தன் பந்துக்களிடத்தில் "இந்த ஸைன்யம் கடல் புரண்டதுபோல் சிருங்கிபேர புரத்தை நோக்கி வந்துகொண்டிருக்கிறது. இதை மனத்தாலும் எண்ணுவது ஸாத்தியமல்ல. இக்ஷ்வாகுகுல மன்னர்களின் கோவிதாரக்கொடி (ஒருவகைக் கொடி)விளங்கும் மஹாரதம் அதோ தெரிகிறது. ஆகையால் பரதனென்ற துர்புத்தி, ராமனைக் காட்டிற்குத் துரத்தினது போதாதென்று, இன்னும் ஏதோ கெடுதி செய்ய நினைத்து வந்திருக்கிறான். நம்மைச் சிறை செய்வானோ கொல்வானோ தெரியவில்லை. அல்லது, ராமன் பதினான்கு வருஷங்களுக்குப் பிறகு ஒருவேளை வந்தால் தன் அதிகாரத்திற்கும் ஐசுவரியத்திற்கும் அழிவு நேருமாகையால் அவர் காட்டில் தனியாக இருக்கும் பொழுதே அவரைக் கொன்றுவிடுவது நல்லதென்று யோசித்து, ஞாதிகளுக்குள்ள துவேஷத்துடன் ராமனைத் தேடி வருகிறானோ? கெட்ட ஸ்வபாவமுள்ள கைகேயியின் புத்திரன் அல்லவா இவன்? எவ்விதத்திலும் லோகத்திற்கு நாதனாயிருக்கத் தகுந்த ராமனுடைய ஐசுவரியத்தை முற்றிலும் அபகரிக்கவல்லவா வந்திருக்கிறான்? அது ஸுலபமாகக் கிடைக்குமா? ராமனோ என் ரக்ஷகன்; என் போஷகன்; என் அருமைத தோழன்; நீங்களெல்லோரும் அவனுக்கு யாதொரு அபாயமும் நேராமல் கங்கைக் கரையில் யுத்தத்திற்கு தயாராக இருங்கள். நம்மைச் சேர்ந்த வேடர்களெல்லாம் நமது ஸைன்யங்களுடன் ஓடங்களில் மாம்ஸம் பழம் கிழங்கு முதலிய உணவுகளை ஏற்றிக் கொண்டு இறங்கும் துறைகளை ஜாக்கிரதையாகக் காக்கவேண்டும்.



செம்படவர்களில் யௌவன புருஷர்கள் ஆயுதம் பூண்டு, ஒவ்வொரு படகிலும் நூறு வீதம் நமது ஐந்நூறு படகுகளிலும் கங்கையில் பரவி நிற்கட்டும். பரதன் ராமனிடத்தில் நல்ல எண்ணத்துடன் வந்தால் இந்த சேனையை அபாயமில்லாமல் கங்கையைத் தாண்ட விடுவோம். இல்லாவிட்டால் இங்கேயே அழித்துவிடுவோம்'' என்று கூறியபின், மீன் மாம்ஸம் மரவுரி பழம் முதலியவைகளைக் காணிக்கையாக எடுத்துக்கொண்டு பரதன் இருக்குமிடத்திற்குப் போனான்.

ஸுமந்திரர் அவன் வருவதைக் கண்டு பரதனைப் பார்த்து வணக்கமாக, "ராஜகுமார! இதோ வருகிறவன் வேடர்களுக்கு அதிபதியான குஹன்; வயதுசென்றவன்; தண்டகாரண்யத்தில் பிறந்து வளர்ந்து அதைப்பற்றின யாவையும் அறிந்தவன்; தங்களுடைய தமையனுக்குப் பிரியமான தோழன்; தன் பந்துக்களுடன் உன்னைக் காண்பதற்கு வருகிறான். ராமலக்ஷ்மணர்கள் இருக்குமிடம் இவனுக்கு நன்றாகத் தெரியும். ஆகையால் இவனைப் பார்க்கலாம்'' என்று தெரிவித்தார். அந்த ஸந்தோஷ சமாசாரத்தைக் கேட்டு பரதன் "குஹனை அதிசீக்கிரத்தில் அழைத்து வாருங்கள்'' என்றான்.

பிறகு குஹன் தன் பந்துக்களுடன் பரதனுடைய ஸமீபத்தில் போய் நமஸ்கரித்து மிகுந்த வணக்கத்துடன், "இந்தத் தேசம் தங்களுடைய வீட்டைச்சேர்ந்த தோட்டம் போன்றது. ஆனால், கங்கைக் கரை வரையில் வழிபோடப்பட்டதை நான் அறிந்தும் தாங்கள் வருவதாக எனக்கு உத்திரவு செய்யாமலிருந்ததால் மோசம் போனேன். ஆகையால் எங்களுடைய இஷ்டப்படி எதிர்கொண்டு உபசரிக்க அவகாசமில்லை. நாங்கள் தங்களுடைய அடிமைகள்; தங்களுடைய பிரதேசத்தில் தங்கள் இஷ்டப்படி வஸிப்பதற்குத் தடை என்ன? என்னுடைய வேலைக்காரர்கள் பழங்களையும் கிழங்குகளையும் புதிதாக எடுத்த மாம்ஸங்களையும் உலர்ந்த மாம்ஸங்களையும் இன்னும் காட்டில் கிடைக்கக் கூடிய ஸகல தான்யங்களையும் இதோ கொண்டுவந்திருக்கிறார்கள். அவைகளை அங்கீகரித்துத் தாங்களும் தங்களுடைய ஸைன்யமும் இந்த ராத்திரியில் இங்கே தங்கியிருந்து நாளைக்குப் பிரயாணம் செய்யலாம் என்று விக்ஞாபனம் செய்துகொள்ளுகிறேன்'' என்றான்.

ஆஶம்ஸே ஸ்வாஶிதா ஸேநா வத்ஸ்யதீமாம் விபா4வரீம் |
அர்சிதோ விவிதை4:காமை: ஶ்வ: ஸஸைந்யோ க3மிஷ்யஸி || (18)

## ஸர்க்கம் 85

## பரதன் குஹனைச் சந்தித்தது (தொடர்ச்சி)

ஏவமுக்தஸ்து ப$^{4}$ரதோ நிஷாத$^{3}$ாதி$^{4}$பதிம் கு$^{3}$ஹம் |
ப்ரத்யுவாச மஹாப்ராஜ்ஞோ வாக்யம் ஹேத்வர்த$^{2}$ஸம்ஹிதம்(1)

குஹன் இப்படிச் சொல்ல, வெகு புத்திமானான பரதன் சாதுரியமாகப் பதில் அளித்தான். "என் குருவான ராமசந்திரனுக்கு அருமைத் தோழா! என் ஸைன்யமோ கணக்கில்லாதது; நீயோ தனியாள். அப்படியிருந்தும் அவர்களுக்கு விருந்து செய்ய வேண்டுமென்று நீ நினைத்ததாலேயே செய்ததுபோலாயிற்று. உன் பக்தியையும் பெருந்தன்மையையும் ஔதாரியத்தையும் பார்த்ததாலேயே, என்ஸைன்யங்களுக்கு நீ விருந்துசெய்வித்தால் எவ்வளவு திருப்தியுண்டாகுமோ அவ்வளவு திருப்தியடைந்தேன்" என்றான். வெகு கம்பீர ஸ்வபாவமுள்ளவராகையால், குஹனை ஸந்தித்ததாலும் அவன் செய்த உபசாரத்தாலும் தன் எண்ணங்கள் யாவும் நிறைவேறுவதுபோல் ஸந்தோஷித்து, "அதிருக்கட்டும், பரத்வாஜ மஹரிஷியின் ஆசிரமத்திற்குப் போகும் வழி எது? கங்கைக்கரையிலுள்ள சதுப்பு நிலங்களில் பிரயாணம் செய்வது மிகவும் கஷ்டமல்லவா" என்றான்.

காட்டிலேயே பிறந்து வளர்ந்த குஹன் அதற்கு, "நானும என் வேடர்களும் ஆயுதபாணிகளாகத் தங்களுடன் வருகிறோம். ஆகையால் போகும் வழியைப்பற்றித் தாங்கள் கவலைப்படவேண்டியதில்லை. ஆனால் இந்தப் பெரிய ஸைன்யத்தைப் பார்க்கும் பொழுது எனக்கு ஒரு ஸந்தேகமுண்டாகிறது. ராமனிடத்தில் நல்ல எண்ணத்துடன் தாங்கள் போகிறீர்களா? அல்லது விரோத புத்தியுடன் போகிறீர்களா? அவரோ ஒரு பிராணியையும் ஹிம்ஸிக்காதவர். அவரைப் பார்க்கப்போவதற்கு இந்த ஸைன்யம் வேண்டியதில்லையே" என்று கைகூப்பி வணக்கமாகத் தெரிவித்தான்.

குஹன் பரதனிடத்தில் ஸந்தேகப்பட காரணமேயில்லை. கையில் சேற்றை எடுத்துக்கொண்டு ஆகாசத்தில் விட்டெறிந்தால் அது அங்கே ஒட்டுமா? அவனுடைய கை அழுக்காகுமே தவிர வேறென்ன? அப்படி மஹாசுத்தமான அந்தக்கரணத்தையும் ராமனிடத்தில் விசேஷ பக்தியையுமுடைய பரதன் தன்னிடத்தில் குஹன் ஸந்தேகித்ததைப் பற்றிக் கொஞ்சம்கூடக் கோபிக்கவில்லை. "நீ ஸந்தேகப்படத்தக்கதும் கஷ்டம் தருவதுமான காலம் ஒரு பொழுதும் எனக்கு நேரவேண்டாம். ஸஹோதரத்ரோஹம் கலிகாலத்தில் அல்லவா நிகழும்; என்னிடத்தில் நீ ஸந்தேகப்படுவது நியாயமல்ல. ராகவன் எனக்குத் தமயன்; பிதாவைப் போன்றவர். காட்டிலிருந்து திருப்பி அயோத்யைக்கு அழைத்துப் போவதற்காக



ஸுது3ர்மநாஸ் தம் ப4ரதம் தத3ா புந: கு3ஹ: ஸமாஶ்வாஸயத3க்3ரஜம் ப்ரதி |
கு3ஹேந ஸார்த4ம் ப4ரத: ஸமாக3தோ மஹாநுபா4வ: ஸஜந: ஸமாஹித: ||
—அ 85 - ஸ. 22 சு.

பிறகு தன் பரிவாரத்துடன் குகனிருக்கும் இடத்திற்குப் போனான். பரதன் படும் துன்பத்தை பார்த்துத் தானும் துக்கமடைந்து குஹன் ராமனைப்பற்றி அவனுக்கு ஆறுதல் சொல்ல ஆரம்பித்தான். (பக்கம் 297 பார்க்க)

வந்திருக்கிறேன். வேறுவிதமாக எண்ணவேண்டாம், நான் சொல்வது ஸத்தியம்'' என்றார்.

அதற்கு குஹன் முகம் மலர்ந்து அடங்காத ஸந்தோஷமடைந்து, "ஸ்வாமி! தாங்கள், வேண்டாமலும் முயற்சி செய்யாமலுமே கிடைத்த ராஜ்யத்தை விட்டுவிட நிச்சயித்திருக்கிறீர்கள். தங்களைப் போன்றவர்கள் இந்தப் பிரபஞ்சத்தில் யார் இருக்கிறார்கள்? ஸகலவிதத்திலும் தாங்களே தன்யர்கள். வனவாஸத்தால் கஷ்டத்தை அனுபவிக்கும் ராமசந்திரனைத் தாங்கள் திரும்பி அழைத்துப்போக விரும்பினால் தங்களுடைய கீர்த்தி என்றைக்கும் ஸகல லோகங்களிலும் விளங்கும்' 'என்று இவ்வாறு பேசிக்கொண்டிருக்கையில் ஸூரியன் அஸ்தமித்தான்.

ஸைன்யத்தை அங்கே தங்கும்படி ஏற்பாடு செய்துவிட்டுப் பரத சத்ருக்னர்களும் குஹனும் அங்கே படுத்துக்கொண்டார்கள். பரதன் பிறவியிலேயே செல்வமுள்ளவன்; துக்கத்தையே அறியாதவன்; அதை அனுபவிக்கத் தகாதவன்; அதற்குக் காரணமான யாதொரு பாபத்தையும் செய்யாதவன்; ராமனிடத்தில் விசேஷ பக்தி வைத்தவன்; ஸ்வபாவத்திலேயே மஹாதீரன். அப்படியிருந்தும் சொல்வதற்கும் நினைப்பதற்கும் முடியாத ஒரு பெரிய துக்கம் அவனைப் பிடித்துக்கொண்டது. எப்பொழுதும் ராமனைப் பற்றியே நினைத்துக்கொண்டு அதே கவலையாயிருந்ததாலும், காட்டுத் தீயால் பிடிக்கப்பட்ட மரம் உள்ளே பொந்தில் எரியும் நெருப்பாலும் எரிக்கப்படுவதுபோல் ராமனுக்கு நேர்ந்த அநியாயத்தையும் கஷ்டத்தையும் நினைத்ததாலும் அவனுடைய ஹிருதயம் கொழுந்துவிட்டெரிந்தது. ஹிமயமலையில் ஸூரியகிரணங்கள் தாக்கி வெள்ளம் பெருகுவதுபோல்' அவனுடைய தேகத்திலிருந்து சோகமென்ற நெருப்பால் வியர்வை சொரிந்தது. ராமனைவிட்டுப் பிரிந்த துக்கமென்பதே ஒரு மலை; ராமனைப்பற்றின இடைவிடாத எண்ணமே அதிலுள்ள கற்பாறைகள்; பலவிதமாய் பெருமூச்சு விட்டுக்கொண்டிருப்பதே அந்தமலையிலுள்ள பொன் வெள்ளி முதலிய தாதுக்கள்; இந்திரியங்கள் தங்களுடைய தொழில்களைச் செய்ய முடியாமலிருப்பதே அசேதனமான மரங்கள்; சோகம் ஆயாஸம் முதலியவைகளே அதன்சிகரங்கள்; பிரக்ஞையற்றிருப்பதே அதில் வாஸிக்கும் துஷ்டமிருகங்கள்; தாபமே அதில் அடர்ந்த மூங்கிற் காடுகள்; தன் கூட்டத்திலிருந்து பிரிந்த யானையைப்போல் துக்கத்தால் அமுக்கப்பட்ட மனத்துடன் பெருமூச்சுவிட்டுக்கொண்டு, அடிக்கடி மூர்ச்சை அடைந்து, அடிக்கடி உயிரை இழக்கும் நிலைமையை அடைந்து, மனத்தை வாட்டும் ஜ்வரத்தால் ஆறுதலில்லாமல் பரதன் தவித்தான்.

பிறகு தன் பரிவாரத்துடன் குஹனிருக்கும் இடத்திற்குப் போனான். பரதன் படும் துக்கத்தை பார்த்துத் தானும் துக்க

மடைந்து குஹன் ராமனைப்பற்றி அவனுக்கு ஆறுதல் சொல்ல ஆரம்பித்தான்.

குஹேந ஸார்த⁴ம் ப⁴ரத: ஸமாக³தோ
மஹாநுபா⁴வ: ஸஜந: ஸமாஹித: |
ஸு²து³ர்மநாஸ் தம் ப⁴ரதம் ததா³ புந:
கு³ஹ: ஸமாஶ்வாஸய த³க்³ரஜம் ப்ரதி ‖ (22)

---

## ஸர்க்கம் 86

# ராம லக்ஷ்மணர்களைப் பற்றிக் குஹன் சொல்வது

---

ஆசசக்ஷே த³ ஸத்³பா⁴வம் லக்ஷ்மணஸ்ய மஹாத்மந: |
ப⁴ரதாயாப்ரமேயாய கு³ஹோ க³ஹந கோ³சர: ‖ (1)

பரதனுடைய ஸ்வபாவத்தைக் குஹன் நன்றாக அறிந்தபிறகு லக்ஷ்மணன் ராமனிடத்தில் வைத்த விசேஷ பக்தியையும் அவன் செய்த கைங்கரியத்தையும் அவனுடைய உத்தம குணங்களையும் பரதனுக்குச் சொல்ல ஆரம்பித்தான். [வர்ணிக்கப்படும் ராமனுடைய குணங்களோ எல்லையற்றவை; அவைகளை வர்ணிப்பது ஸமுத்திரத்தைக் கையால் தடுப்பதுபோலாகும்; கேட்டுக்கொண்டிருக்கும் பரதனோ குஹனைப்போன்றவர்களுக்கு உபதேசிக்கும் திறமையுடையவன்; சொல்லும் குஹனோ பால்யம் முதல் காட்டிலுள்ள பொருள்களையே அறிந்தவன். ஆகையால் தன் புத்திக்கும் சொல்லிற்கும் எட்டினவரையில் பகவானுடைய குணங்களை வர்ணித்தான். முற்றிலும் வர்ணிக்க யாரால் முடியும்? பகவானைப்பற்றி உபதேசிப்பதில் புதிது பழையதென்ற பேதமில்லை. உபதேசிக்கிறவர்களோ பரமகுருக்கள்; உபதேசம் பெறுகிறவர்களோ எல்லையற்ற சிரத்தையுள்ளவர்கள். ஆனால் ராமனிடத்தில் பரதனுக்குள்ள ஸ்நேகத்தையும் பக்தியையும் விருத்திசெய்ய நினைத்து, லக்ஷ்மணனுடைய கல்யாண குணங்களைக் குஹன் வர்ணிக்க ஆரம்பித்தான்.]

"லக்ஷ்மணன் ராமனிடத்திலுள்ள பரமப்பிரீதியாலும் பக்தியாலும் அவரை ரக்ஷிக்கக் காத்துக்கொண்டிருந்தான். அதைக்கண்டு நான் மிகவும் வருத்தமடைந்து, 'குழந்தாய்! இதோ உனக்காக ஒரு ஸுகமான படுக்கையை ஸித்தம்செய்து வைத்திருக்கிறேன். இதில் நீ படுத்து இஷ்டப்படி இளைப்பாறிக்கொள்ளலாம். நான் காட்டில் பிறந்து வளர்ந்தவனாகையால் கஷ்டங்களை அனுபவிப்பது எனக்கு ஸ்வபாவம். விழித்துக்கொண்டிருப்பதால் எனக்கு சிரமமேஇல்லை. என்னோடிருக்கும் இந்த வேடர்களும் அப்படியே. நாங்கள் ஜாக்கிரதையாக விழித்துக்கொண்டு ராமனைப் பாதுகாக்கிறோம். நீயோ ஸுகமாக வளர்க்கப்பட்டவன். உனக்கு இது தகாது. இந்தப் பிரபஞ்சத்தில் ராமனைக்காட்டிலும் பிரியமான வஸ்து எனக்குக் கிடையாது. நான் சொல்லுவது ஸத்தியம். வேண்டுமென்றால் ஸத்திய தேவதையின் மேல் ஆணையிட்டுச் சொல்கிறேன். இவருடைய கிருபையால் இந்த லோகத்தில் மஹாகீர்த்தியையும் தர்மத்தையும் எல்லையற்ற அர்த்தத்தையும் அடையலாமென்று நம்பியிருக்கிறேன். நானும் என் பந்துக்களும் என் அருமைத்தோழனான ராமனும் ஸீதையும் தூங்கிக்கொண்டிருக்கும்பொழுது வில்லும் கையுமாக நான்கு புறங்களிலும் காத்துக்கொண்டிருப்போம். எப்பொழுதும் இந்த வனத்தில் ஸஞ்சரித்துக்கொண்டிருக்கும் எனக்கு இங்கே தெரியாத விஷயம் ஒன்றுமில்லை. நானும் என் பந்துக்களும் ஸைன்யங்களும் எதிரிகள் சதுரங்க பலத்துடன் வந்தாலும் துரத்திவிடுவோம்'' என்று சொன்னேன்.



அதற்கு அவன், 'தர்மத்திலிருந்து விலகாத மனத்தையுடைய நீ காத்துக்கொண்டிருக்கும்பொழுது எங்களுக்குப் பயமென்ன? சக்கரவர்த்தித் திருமகனும் பிராட்டியும் வெறும் தரையில் படுத்துத் தூங்கும்பொழுது எனக்குத் தூக்கம் வருமா? அப்படியிருக்க, தேக ஸௌக்கியத்திலாவது உயிரைக் காத்துக்கொள்வதிலாவது எனக்கு ஞாபகமே இல்லை. தேவர்களும் அஸுரர்களும் சேர்ந்து எதிர்த்தாலும் என் அண்ணனுடைய பாணத்திற்குமுன் நிற்கமுடியுமா? அந்த மஹாவீரர் ஸீதாதேவியுடன் தரையில் புல்லின்மேல் சுகமாகப் படுத்துத் தூங்கும் கோரத்தைப் பார். இவரைப் புத்திரனாக அடைய, மஹாராஜா காயத்ரி முதலிய மஹாமந்திரங்களைக் கணக்கில்லாமல் ஜபித்தார். இந்திரியங்களை அடக்கி, கிருச்ரம் சாந்திராயணமென்ற விரதங்களை வெகுகாலம் அனுஷ்டித்தார். வேதத்தில் விதிக்கப்படும் யாகங்களை ஒன்றுவிடாமல் செய்தார். இவ்வளவு கஷ்டப்பட்டு அறுபதாயிரம் வருஷங்களுக்குப் பிறகு தன்னைப்போல் ஒரு அருமைக் குழந்தை பிறந்தான். அவனையும் ராஜ்யத்தைவிட்டு வனத்திற்குத் துரத்தின பிறகு அவர் பிழைத்துமிருப்பாரா? இந்தப் பூமிதேவியே நாதனில்லாமல் விதவையாயிற்றென்பதில் ஸந்தேகமில்லை. அரசனுடைய அந்தப்புர ஸ்த்ரீகள் தேகத்தில் சக்தியுள்ளவரையில் கதறி இப்பொழுது சிரமத்தால் மெய்மறந்து படுத்திருப்பார்கள். இனிமேல் அந்தப்புரத்தில் யாதொரு சப்தமும் இருக்காது. கௌஸல்யையும் என் தாயும் மற்ற ராஜபத்தினிகளும் அரசரும் இதற்குள்ளேயே உயிரை விட்டிருப்பார்கள். அப்படி இல்லாவிட்டாலும் இந்த ராத்திரிக்குமேல் பிழைத்திருக்க மாட்டார்கள். சத்துருக்னனைப் பார்க்கவேண்டுமென்ற ஆசையால் என் தாய் உயிரை வைத்துக் கொண்டிருந்தாலும் இருக்கலாம். ஆனால் வீரசிகாமணியைப் புத்திரனாகப் பெற்ற கௌஸல்யை உயிரை வைத்துக் கொண்டிருக்க மாட்டாளே. அதை நினைக்கும்பொழுது துக்கம் தாங்க முடியவில்லை. லோகத்திலுள்ளவர்களுக்கு ஆனந்தத்தைக் கொடுத்துக் கொண்டிருந்ததான அயோத்யையிலுள்ள ஜனங்கள் யாவரும் மஹாராஜாவிடத்தில் மிகுந்த பிரீதி வைத்தவர்கள். அவருக்கு மரணம் நேர்ந்ததைக் கேட்டால் துக்கம் தாங்காமல் உயிரை

விடுவார்கள். ராமன் மஹாராஜாவிற்கு மூத்த புத்திரர்; உத்தம குணங்களால் அலங்கரிக்கப்பட்டவர்; அவரைப் பார்க்காமல் அரசனுடைய தேகத்தில் பிராணன்கள் நிற்குமா? அவர் இறந்த பிறகு கௌஸல்யை உயிரோடிருப்பாளா? அவள் இறந்த பிறகு என் தாய் உயிரோடிருப்பாளா? 'நமக்கு இவ்வளவு நாள் கழித்து ஒரு அருமைக் குழந்தை பிறந்தான்; யாதொரு அபாயமும் இல்லாமல் வளர்ந்தான்; நல்ல இடத்தில் விவாஹமாயிற்று; இனிமேல் இந்த ராஜ்யத்தை ஒப்புக்கொள்வான், கவலையற்றிருக்கலாம்' என்று மேன்மேலும் பெருகும் கோரிக்கைகள் யாவும் வீணாகி, இனிமேல் பிழைத்திருக்க யாதொரு காரணமும் இல்லாமல் என் பிதா உயிரை விடுவார். இந்தப் பதினான்கு வருஷங்களுக்குப் பிறகாவது ராமனிடத்தில் ராஜ்யத்தை ஒப்புவித்து ஸந்தோஷிக்கலாமா என்றால், அவ்வளவு காலம் புத்திர சோகத்தைத் தாங்குவாரென்று எனக்குத் தோன்றவில்லை. இந்த ஸமயத்தில் ஸமீபத்திலிருந்து ஸகல உத்தரக்ரியைகளையும் செய்கிறவர்களே புண்ணியாத்மாக்கள்; எங்களுக்கோ அந்த பாக்கியமில்லை. ஆஹா! அயோத்யையைப்போல் அழகான நகரம் இந்தப் பிரபஞ்சத்தில் உண்டோ? நேர்த்தியாக அமைக்கப்பட்ட நாற்சந்திகளையும். கோணலில்லாமல் அழகாகப் போடப்பட்ட தெருக்களையும், தனவான்களுடைய வீடுகளையும், அரசர்களின் அரண்மனைகளையும், நந்தவனங்களையும் பூந்தோட்டங்களையும் மரச் சோலைகளையும் நினைக்கும்பொழுது துக்கம் மேலிடுகிறது. அதிக சுந்தரிகளான வேசியைகளால் அலங்கரிக்கப்பட்டு, உத்தமமான ரதங்களாலும் யானைகளாலும் குதிரைகளாலும் நிறைந்து, மங்கள வாத்தியங்கள் முழங்க, தேகவியாதி மனோவியாதி இல்லாத ஜனங்களுடன், தேவாலயங்களில் அடிக்கடி நடக்கும் உத்ஸவங்களாலும் ஜனங்களின் வீடுகளில் நேரும் மங்கள காரியங்களாலும் விளங்கிக் கொண்டு, ஸகல ஸௌக்கியத்திற்கும் க்ஷேமத்திற்கும் இருப்பிடமான அயோத்யையில் வஸிக்கப்பெற்றவர்கள் மஹா பாக்கியசாலிகளே என்று சொல்லவும் வேண்டுமோ?

"நாங்கள் வனவாஸத்திலிருந்து திரும்பி வரும்வரையில் எங்கள் பிதா பிழைத்திருப்பாரா? மஹா தர்மவானான அந்த மஹாத்மாவை நாங்கள் பார்ப்போமா? என் தமையனுடைய பிரதிக்ஞையும் வனவாஸமும் யாதொரு அபாயமுமில்லாமல் முடிந்து, அரசனுடைய பிரதிக்ஞை நிறைவேறி, நாங்களெல்லோரும் மறுபடியும் அயோத்யையில் பிரவேசிப்போமா?" என்று லக்ஷ்மணன் பிரலாபித்துக் கொண்டிருக்கும்பொழுது விடியற்காலமாயிற்று. பிறகு ராமலக்ஷ்மணர்கள் இங்கே தபஸ்விகளைப்போல் ஜடையைத் தரித்துக் கொண்டார்கள். என் வேலைக்காரர்கள் அவர்களை சுகமான ஓடத்திலேற்றிக் கங்கையைத் தாண்டிக் கொண்டுபோய் விட்டார்கள். அங்கிருந்து ராமலக்ஷ்மணர்கள் தபஸ்வி வேஷத்துடன் ஆயுதபாணிகளாக, நான்கு புறங்களிலும் ஜாக்கிரதையாகப் பார்த்துக் கொண்டு ஸீதையுடன் வனத்தில் புகுந்தார்கள்" என்றான்.



ஜடாத4ரௌ தௌ த்3ரும சீரவாஸஸௌ
மஹாப3லௌ குஞ்ஜர யூத2போபமௌ |
வரேஷு சாபாஸி த4ரௌ பரந்தபௌ
வ்யபேக்ஷமாணௌ ஸஹ ஸீதயா க3தௌ ‖ (25)

## ஸர்க்கம் 87

## ராமலக்ஷ்மணர்களைப் பற்றி குஹன் சொல்வது
(தொடர்ச்சி)

கு3ஹஸ்ய வசநம் ஶ்ருத்வா ப4ரதோ ப்4ருஶமப்ரியம் |
த்4யாநம் ஜகா3ம தத்ரைவ யத்ர தச்ச்2ருத மப்ரியம் ‖ (1)

அந்தத் துக்க ஸமாசாரத்தைக் கேட்டு பரதன் கவலை கொண்டு அங்கேயே உட்கார்ந்துவிட்டான். அவனோ அதிக செல்வமாக வளர்ந்தவன்; ஸ்வபாவத்திலேயே மஹா பலசாலி; ஸிம்ஹத்தைப்போல் பருத்த தோள்களையுடையவன்; முழங்கால் வரையில் நீண்ட கைகளையுடையவன்; தாமரையிதழ்களைப்போல் விசாலமான நேத்திரங்களையுடையவன்; யௌவன புருஷன்; பார்ப்பதற்கு அழகானவன்; இப்படிப்பட்ட துக்கத்தை அனுபவிக்கத் தகாதவன். ஆகையால் கொஞ்சம் ஆறுதலடைந்து, பிறகு ராமனுடைய ஞாபகம் வந்ததால், மாவெட்டியால் ஹிருதயத்தில் குத்தப்பட்ட யானையைப் போல் தரையிலே விழுந்தான். ஸமீபத்திலிருந்த சத்ருக்னன் ஓடி வந்து அவனைத் தூக்கியெடுத்துத் துக்கத்தால் வாய்விட்டழுதான். அதைக் கேட்டு ராஜபத்தினிகள் யாவரும் ஓடிவந்து, தசரதரை இழந்த துக்கத்தாலும் பட்டினியாலும் மெலிந்து இளைத்து மனம் குன்றிப் பரதன் பூமியில் விழுந்து கிடப்பதைப் பார்த்து அழுது கொண்டு அவனைச் சூழ்ந்தார்கள். புத்திர சோகத்தாலும் பர்த்தாவை இழந்ததாலும் சொல்லமுடியாத துக்கத்தை அனுபவித்துக் கொண்டிருக்கும் கௌஸல்யை, ஒரு பசு தன் கன்றைக்கண்டு பிரீதியுடன் ஓடுவதுபோல் ஓடிவந்து, பரதனை வாரியெடுத்துக் கண்களில் நீர்பெருக, "குழந்தாய்! ராமனை விட்டுப் பிரிந்ததால் உன் தேகத்தில் தாங்கமுடியாத உபத்திரவம் உண்டாயிருக்கிறதா? நீ படும் கஷ்டத்தைப் பார்த்தவுடன் ராமன் அயோத்யைக்குத் திரும்பாமலிருக்கமாட்டான். ஆனால் நீ உயிரைவிட்டாய் என்று கேள்விப்பட்டால் இந்தப் பக்கம் யாராவது திரும்பிப் பார்ப்பார்களா? ராமன் லக்ஷ்மணனுடன் காட்டிற்குப்போன பிறகு அவனைப் பார்ப்பதுபோல் உன்னைப் பார்த்துக்கொண்டு பிழைத்திருக்கிறேன். லக்ஷ்மணனைப்பற்றி ஏதாவது துக்க ஸமாசாரம் காதில் விழுந்ததோ? அல்லது எனக்கு ஒரே புத்திரனாக என்னை இங்கே அநாதையாக விட்டுத் தன் பாரியையுடன் வனத்திற்குப்போன என் ராமனுக்கு கஷ்டம் நேர்ந்ததா?" என்று கேட்டாள்.

பரதன் கொஞ்சம் ஆறுதலடைந்து கௌஸல்யையை ஸமாதானப்படுத்திக் குஹனைப்பார்த்து அழுதுகொண்டே, "என் தமயன் அந்த இரவில் எங்கே படுத்திருந்தார்? ஸீதை எங்கே படுத்திருந்தாள்? லக்ஷ்மணன் எங்கே படுத்திருந்தான்? அந்தப் படுக்கைகள் எங்கே? அவர்கள் என்ன ஆஹாரம் செய்தார்கள்?" என்று கேட்டான். அப்பொழுது குஹன் ராமனுடைய வரலாற்றைச் சொல்ல ஸமயம் கிடைத்ததைப்பற்றி ஸந்தோஷித்து, ராமன் தன்னிடத்திற்கு வந்ததையும், தான் அவரை உபசரித்ததையும் சொல்ல ஆரம்பித்தான். "பலவிதமான அன்னங்களும் பக்ஷணங்களும் மாம்ஸங்களும் பழங்களும் கிழங்குகளும் அவர்களுடைய போஜனத்திற்கு ஸித்தமாக இருந்தன. ஆனால் ராமன் 'தோழா! நாங்களோ க்ஷத்திரியர்கள்; எப்பொழுதும் பிறர்க்குக் கொடுக்கவேண்டுமே ஒழியப் பிறரிடத்திலிருந்து வாங்குதல்கூடாது. ஆகையால் இவை யாவற்றையும் கொண்டு போகலாம்' என்று எங்களை ஸமாதானம் செய்தார். லக்ஷ்மணனைக் கங்கையிலிருந்து ஜலத்தைக் கொண்டுவரச் செய்து அதைக் குடித்து மௌனமாக ஸந்தியாவந்தனம் செய்தார்கள். பிறகு லக்ஷ்மணன் தர்ப்பைகளால் படுக்கைகளைத் தயார் செய்தார். அதில் ராமனும் ஸீதையும் உட்கார்ந்தார்கள். லக்ஷ்மணன் அவர்களுடைய பாதங்களைக் கழுவி ஒதுங்கி நின்றார். இந்தப் புங்கை மரத்தடியில் அவர்கள் நித்திரை செய்தார்கள். அவர்கள் படுத்த படுக்கை இதே. லக்ஷ்மணன் அந்த ராத்திரி முழுவதும் ஆயுதபாணியாக ராமனைச் சுற்றி நான்குபுறத்திலும் காவலாக ஸஞ்சரித்துக்கொண்டிருந்தான். ராமனுடைய ஒரு ஸகோதரன் அவரை அயோத்யையிலிருந்து காட்டிற்குத் துரத்தினான்; இவன் அவர் தூங்கும்பொழுது என்ன செய்வானோ என்று ஸந்தேகித்து நானும் என் பந்துக்களும் ஆயுதபாணிகளாக ராமன் நித்திரை செய்யும்பொழுது துஷ்ட ஜந்துக்கள் ஸமீபத்தில் நெருங்காமலிருப்பதற்காக லக்ஷ்மணன் போகுமிடமெல்லாம் போய்க்கொண்டிருந்தோம். ஆனால் நாங்கள் ஸந்தேகப்படுவதற்கும் காவல் காப்பதற்கும் காரணமே இல்லை. கேவலம் மஹேந்திரனுக்கு நிகரான ராமசந்திரனை யாராவது கண்ணெடுத்துப் பார்க்க முடியுமா?" என்றான்.

ததஸ்த்வஹம் சோததய பா3ண சாபத்4ருத்
ஸ்தி2தோ ப4வம் தத்ர ஸ ய்த்ர லக்ஷ்மண: |
அதந்த்3ரிபி4ர் ஜ்ஞாதிபி4ராத்த கார்முகை:
மஹேந்த்3ர கல்பம் பரிபாலயம்ஸ் ததா3 || (23

---



## ஸர்க்கம் 88

## பரதன் பிரலாபித்தது

---

தச் ச்2ருத்வா நிபுணம் ஸர்வம் ப4ரத: ஸஹமந்த்ரிபி4: |
இங்கு3தீ3 முலமாக3ம்ய ராமஸ்2ய்யா மவேக்ஷ்ய தாம் || (1)

இதைக் கவனமாகக் கேட்டு, பரதனும் அவனுடைய மந்திரிகளும் அந்தப் புங்கமரத்தடியில் போய், ராமலக்ஷ்மணர்கள் படுத்திருந்த படுக்கையைப் பார்த்தார்கள். பரதன் ராஜபத்னிகளைப் பார்த்து, "மஹாத்மாவான ராமன் அந்த ராத்திரியில் இங்கே படுத்துக் கொண்டிருந்தார். அவருடைய அங்கங்கள் பதிந்த அடையாளங்கள் காணப்படுகின்றன. தசரத சக்கரவர்த்தியைக் காட்டிலும் மேலான குலத்தில் பிறந்தவர்களுமில்லை; அவரைக் காட்டிலும் புத்திமானுமில்லை; அவரைக் காட்டிலும் ஐசுவரியம் வாய்ந்தவர்களுமில்லை. அப்படிப்பட்டவருக்குப் புத்திரராய் பிறந்த ராமன், வெறுந்தரையில் இப்படிப் படுக்கத் தகுந்தவரா! உத்தமமான போர்வைகள் பரப்பப்பட்ட சயனங்களில் படுத்துத் தூங்கி பழக்கப்பட்டவர். வெறுந் தரையில் படுத்து எப்படித் தூங்கினாரோ! கோடையில் அரண்மனையின் மேல்மாடிகளில் தூங்குவார். குளிர் காலங்களில் பூமியின் அடியில் கட்டப்பட்ட அறைகளில் சயனிப்பார். சுவர்களும் தரைகளும் தங்கத்தாலும் வெள்ளியாலும் இழைக்கப்பட்டு பிரகாசிக்கும். நேர்த்தியான கம்பளங்கள் பூமியில் பரப்பப்பட்டிருக்கும். விசித்திரமான புஷ்பங்கள் அங்கே வளர்ந்துகொண்டிருக்கும். சந்தனம் அகில் முதலிய வாஸனைத் திரவியங்களால் எங்கும் பரிமளம் வீசும். பலவிதமான பக்ஷிகள் மதுரமாகப் பாடிக்கொண்டிருக்கும். பாடுகிறவர்களும் ஆடுகிறவர்களும் எப்பொழுதும் காத்துக்கொண்டிருப்பார்கள். தூரத்திலிருந்து பார்ப்பவர்களுக்கு மேரு மலையின் சிகரத்தைப் போலவும் விமானக் கூட்டங்களைப் போலவும் வெண்மையான மேகங்களைப் போலவும் தோன்றும். கோடையில் குளிர்ச்சியாகவும் மழைகாலத்தில் உஷ்ணமாகவும் இருக்கும். இவ்விதமான அரண்மனையில் ராமன் படுத்துத் தூங்குவார். விடியற்காலையில் பாடகர்கள் மதுரமாகப் பாடுவார்கள். வீணை மிருதங்கம் முதலிய வாத்தியங்கள் இனிமையாக முழங்கும். அப்ஸரஸ்களைப்போல் அழகு வாய்ந்த ஸ்த்ரீகள் மனோஹரமாக ஆடுவார்கள். வேலைக்காரிகள் சிரேஷ்டமான ஆபரணங்களை அணிந்துகொண்டு அங்குமிங்கும் போகும்பொழுது மதுரமான சப்தமுண்டாகும். வந்திகளும் ஸூதர்களும் மாகதர்களும் அந்தந்த ஸமயத்திற்குத் தகுந்தபடி சாதுரியமாக ராமனைப் புகழ்வார்கள். சிலர் கட்டியம் கூறுவார்கள்; சிலர் பராக் எச்சரிக்கை என்பார்கள்; சிலர் இக்ஷ்வாகு வம்சத்தரசர்களின் கீர்த்தியையும் அத்புதமான சரித்திரங்களையும் அழகான பதங்களால் வர்ணிப்பார்கள். இவ்வித

மான சப்தங்களால் எழுப்பப்பட்ட ராமன், இந்தப் பயங்கரமான காட்டில், மேடுபள்ளம்கல் முள் நிறைந்த வெறுந்தரையில் காற்று மழை குளிர் பனி முதலியவை பீடிக்க, துஷ்ட ஜந்துக்களின் சப்தங்கள் காதைத் துளைக்கத் தூங்கினுரா ?

"அது போகட்டும். ஜனக மஹாராஜாவின் புத்திரியும் தசரத சக்கரவர்த்தியின் நாட்டுப் பெண்ணும் ராமமூர்த்திக்கு பிராணனைக் காட்டிலும் பிரியமான பாரியையுமான ஸீதை பூமியில் படுத்தாளா ? எல்லாவற்றையும் நான் நேரில் பார்த்தாலும் எனக்கு உண்மை என்று தோன்றவில்லை. என் புத்தி ஏதோ மயங்கி இருக்கிறது. அல்லது இது கனவோ? தெய்வத்தைக் காட்டிலும் காலத்திற்கே அதிக சக்தியுண்டென்பது நிச்சயம். இல்லாவிட்டால் இவ்வித காரியங்கள் நடக்குமோ? என் தமயன் படுத்த படுக்கை இதுவே. தூங்கும்பொழுது அதிக சிரமத்தால் அங்குமிங்கும் புரண்ட அடையாளங்கள் இதோ காணப்படுகின்றன. அவ்விடங்களில் தர்ப்பைப் புல்லுகள் கடினமான தரையில் அழுந்தியிருக்கின்றன. வழிநடந்த சிரமத்தால் ஆபரணங்களைக் கழற்ருமலேயே ஸீதை படுத்தாளென்று தோன்றுகிறது. அவைகளிலிருந்து சிதறின தங்கப் பொடிகளைப் பாருங்கள். இங்கே ஸீதை மேல்வஸ்திரத்தை விரித்துப்போட்டதாகத் தெரிகிறது. இங்கே பட்டு நூல்கள் தர்ப்பைகளில் ஒட்டிக்கொண்டிருப்பதைப் பாருங்கள். பதிவிரதைக்குத் தன் பர்த்தா படுக்கும் படுக்கையே வெகு ஸுகமாக இருக்கும் என்று எண்ணுகிறேன். வெகு செல்வமாக வளர்க்கப்பட்டவள் ; குழந்தை; கஷ்டத்தை அறியாதவள்; மஹாராஜாவின் பெண் ; அப்படிப்பட்டவள் இந்த ஸாதாரணமான படுக்கையில் படுத்தும் ஸுகமாகத் தூங்கியிருக்கிருள். என்ன ஆச்சரியம்! ஐயோ! என்னைப்போன்ற இரக்கமற்ற பாவி யாராவது உண்டா? ராமனும் ஸீதையும் இவ்விதமான படுக்கைகளில் அநாதைகளைப்போல் படுக்க நேர்ந்தது என்னுல் அல்லவா ? ஸார்வபௌம சக்கரவர்த்தியின் குலத்தில் பிறந்தவர். லோகத்தில் எல்லோராலும் கொண்டாடப்பட்டவர். லோகத்தில் எல்லோருக்கும் பிரியமானவர்; கருநெய்தல் புஷ்பங்களைப்போல் கறுத்துச் சிவந்த நேத்திரங்களுடையவர்: அழகில் மன்மதனை ஜயித்தவர்; ஸுகமாகவே வளர்ந்தவர்; கனவிலும் கஷ்டத்தை அனுபவிக்கத் தகாதவர்;-விசாலமான ராஜ்யத்தையும் ஸகல போகபோக்யங்களையும் விட்டு இந்தக் காட்டிற்கு வந்து வெறுந்தரையில் படுக்கும்படி நேர்ந்ததல்லவா ?

"லக்ஷ்மணனுடைய பாக்கியத்தை வர்ணிக்கவும் முடியுமா? இவ்விதமான ஸங்கடங்கள் நேர்ந்த காலத்தில் ராமனுக்கும் ஸீதைக்கும் எல்லாப் பணிவிடைகளையும் செய்துகொண்டு, ஸமீபத்திலிருக்கும் பாக்யம் யாருக்குக் கிடைக்கும்? அதிருக்கட்டும். தன்னை அழைக்காமலிருக்கும்பொழுதே தானுக ராமனுடன் காட்டிற்குப்போய், அவர் அனுபவிக்கும் கஷ்டங்களைத் தானும் அனுபவிக்கத் துணிந்த ஜானகி என்ன புண்ணியம் செய்தாளோ !



"அந்த மஹாத்மா இல்லாமல் புருஷார்த்தங்களை அடைவோமென்று நான் நம்பவில்லை. தசரதரும் ஸ்வர்க்கத்திற்குப் போய் விட்டார். இந்த முக்கியமான புருஷர்களில்லாமல் லோகமே சூன்யமாகத் தோன்றுகிறது. ராமன் காட்டிலிருந்தாலும் அவருடைய புஜபலத்தால் இந்த ராஜ்யம் காப்பாற்றப்பட்டுவருகிறது. எந்த அரசனுவது இந்த ராஜ்யத்தை நாதனில்லாத நிலைமையில் தான் அடையவேண்டுமென்று கனவிலாவது ஆசைப்படுகிருனு, பாருங்கள்? கோட்டைச் சுவர்கள் பிராகாரங்கள் முதலிய அரண்களுமில்லை. யானைப் பாகர்களும் குதிரைக்காரர்களும் ராமனை விட்டுப்பிரிந்த துக்கத்தால் சோர்ந்து அவைகளைக் கட்டவில்லை. அவை அங்குமிங்கும் அலைகின்றன. கோட்டை வாசற் கதவுகள் திறந்தே இருக்கின்றன. சத்துருவைத் தடுப்பதற்கு வேண்டிய ஸாதனங்கள் ஒன்றுமில்லை. ஸைன்யங்கள் உத்ஸாஹமற்று நகரத்தைக் காக்கும் ஞாபகமே இல்லாமல் கிடக்கின்றன. நகரத்திற்கு வெளியிலும் காவலாளர்கள் ஒருவருமில்லை. இப்படிப்பட்ட கஷ்டமான நிலைமையிலும் விஷம் கலந்த பக்ஷணங்களை கண்டு ஒதுங்குவதுபோல் சத்துருக்கள் அயோத்யைக்கு ஸமீபத்தில் வர நடுங்குகிருர்கள்.

இன்று முதல் நானும் மான்தோல் மரவுரி சடை முதலியவைகளைத் தரித்துக்கொண்டு, பழங்களையும் கிழங்குகளையுமே தின்றுகொண்டு வெறுந்தரையில் படுப்பேன். இவ்வளவு அனர்த்தமும் என்னுலேயே வந்தபடியால் அந்த பாபத்தைப் போக்க நான் செய்யும் பிராயச்சித்தம் இதுவே. தசரதருடைய பிரதிக்ஞை வீணுக வேண்டாம். ராமனுக்குப் பதிலாக நானே காட்டில் பதினைந்கு வருஷங்கள் வரையில் இருக்கிறேன். எனக்குப் பதிலாக அவர் அயோத்யையை ஆளட்டும். தசரதருடைய புத்திரர்களில் அவருடைய பிரதிக்ஞையை யாராவது நிறைவேற்றினுல் போதுமல்லவா ? ராமன் செய்தாலென்ன, அவருக்காக நான் செய்தாலென்ன ? ராமனுக்காக நான் காட்டிலிருக்கும்பொழுது சத்ருக்னன் என்னுேடிருப்பான். லக்ஷ்மணன் அயோத்யையில் ராமனுக்குக் கைங்கரியம் செய்வான். பிராம்மணர்கள் ராமனை அயோத்யையில் அரசனுக அபிஷேகம் செய்யவேண்டும். தேவதைகளே ! இந்தப் பிரார்த்தனையை எப்படியாவது நீங்கள் நிறைவேற்றி வைக்க வேண்டும். நான் ராமனை ஸாஷ்டாங்கமாக அடிபணிந்து பலவிதமாக வேண்டுகிறேன். அப்படியும் ஒப்புக்கொள்ளாமல் காட்டிலேயே இருந்தால் நானும் அவருடன் இருந்துவிடுகிறேன். நான் அவருடன் பிறந்தவன் ; அவருக்குச் சிஷ்யன் ; அவருடைய

அடிமை; என்னை வேண்டாமென்று தள்ளிவிடுவாரா பார்ப்போம்'' என்றான்.

ப்ரஸாத்3யமாந: ஶிரஸா மயா ஸ்வயம்
பா3ஹுப்ரகாரம் யதி3 நாபி4பத்ஸ்யதே |
ததோநுவத்ஸ்யாமி சிராய ராக4வம்
வநே வஸந் நார்ஹதி மாமுபேக்ஷிதும் ‖ (30)

---

## ஸர்க்கம் 89

## பரதன் கங்கையைத் தாண்டியது

---

வ்யுஷ்ய ராத்ரிம் து தத்ரைவ க3ங்கா3கூலே ஸ ராக4வ: |
ப4ரத: கால்யமுத்தா2ய ஶத்ருக்4ந மித3மப்3ரவீத் ‖ (1)

அந்த ராத்திரி கங்கைக்கரையில் பரதன் தங்கினான். காலையில் விடியும் முன்னே எழுந்து பக்கத்தில் படுத்திருக்கும் சத்ருக்னனைப் பார்த்து, "குழந்தாய்! இன்னும் தூக்கமா, எழுந்திரு. குஹனைச் சீக்கிரத்தில் அழைத்து வா. நமது ஸைன்யம் கங்கையைத் தாண்ட வேண்டும்'' என்றான். சத்ருக்னன் "அண்ணா! தாங்கள் எந்த மஹானுபாவனைப்பற்றித் தியானம் செய்துகொண்டிருக்கிறீர்களோ அவரையே நானும் தியானம் செய்துகொண்டிருக்கிறேன். தூங்கவில்லை.'' என்றான். ராஜகுமாரர்கள் இப்படிப் பேசிக்கொண்டிருக்கையில் குஹன் அங்கே வந்து வணங்கி, "ஸ்வாமி! கங்கைக்கரையில் ராத்திரி ஸுகமாகப் படுத்துத் தூங்கினீர்களா? தாங்களும் ஸைன்யமும் க்ஷேமமா?'' என்று விசாரித்தான். இப்படி வெகு விசுவாஸத்துடன் சொன்ன குஹனைப் பார்த்து, ராம பக்தர்களில் சிறந்த பரதன், "உன் ஆதரவால் நானும் ஸைன்யமும் ராத்திரியில் ஸுகமாக வஸித்தோம். இப்பொழுது நாங்கள் கங்கையைத் தாண்ட வேண்டும். அதற்கும் நீயும் உன் வேலைக்காரர்களும் தகுந்த ஏற்பாடுகளைச் செய்யவேண்டும்'' என்றான்.

உடனே குஹன் தன் நகரத்திற்குப் போய், பந்துக்களை எழுப்பி "விழித்துக்கொள்ளுங்கள்; சீக்கிரமாக எழுந்து படகுகளை இழுத்து வாருங்கள்; மஹாராஜாவின் ஸைன்யம் கங்கையைத் தாண்ட வேண்டும்.'' என்றான். அவர்கள் அப்படியே அதிசீக்கிரத்தில் ஐந்நூறு படகுகளை கொண்டுவந்தார்கள். அவை சிறியவை. வேறுபல படகுகளுண்டு : ஸ்வஸ்திக வடிவத்தில் அமைக்கப்பட்டிருந்தபடியால் அவைகளுக்கு ஸ்வஸ்திகமென்று பெயர். இரண்டு படகுகளைச் சேர்த்துக் கட்டப்பட்டவை அவை. நான்கு மூலைகளிலும் பெரிய மணிகள் கட்டப்பட்டிருந்தன. தங்கத்தால் அலங்கரிக்கப்பட்டும் கொடிகளால் விளங்கிக்கொண்டுமிருந்தன மரப்பலகைகளால் வைக்கப்பட்ட சுவர்களில் அங்கங்கே ஜன்னல்கள் அமைக்கப்பட்டி



ருந்தன. ஆகையால் பெருங்காற்று மழை முதலியவைகளின் உபத்திரவமில்லாமல் ஸுகமாக எவ்வளவு காற்று வேண்டுமோ அவ்வளவே அடிக்கும். மஹாராஜர் ஏறத்தகுந்தவையானதால் இரும்பு ஆணிகளும் பட்டங்களும் அடிக்கப்பட்டிருக்கும். அவைகளில் ஸ்வஸ்திகமென்ற மேன்மை வாய்ந்த ஒரு படகைப் பரதனும் அவனைச் சேர்ந்தவர்களும் ஏறுவதற்காகக் குஹன் ஸித்தம்செய்து கொண்டு வந்தான். அதன் தரையில் வெண்மையான கம்பளம் விரிக்கப்பட்டிருந்தது. சலங்கைகள் கட்டப்பட்டு வெகு மதுரமாக ஒலித்துக்கொண்டிருந்தது.

அதில் பரதனும் சத்ருக்னனும் கௌஸல்யை ஸுமித்ரை முதலிய ராஜஸ்த்ரீகளும் ஏறினார்கள். அவர்களுக்கு முன்னே புரோஹிதர்களும் மற்ற பிராம்மணர்களும் ஏறினார்கள். அதற்குப் பிறகு வண்டிகளும் கடைகளிலிருக்கும் ஸாமான்களும் படகுகளில் ஏற்றப்பட்டன. ஸைன்யங்கள் இறங்கியிருந்த இடத்தை விட்டுப் போகும்பொழுது, தங்களுக்கு க்ஷேமமுண்டாவதற்கு அவ்விடங்களை நெருப்பு வைத்துக் கொளுத்திவிட்டுப் போவது வழக்கம். கங்கையில் ஓடத்துறைகளில் ஸைன்யங்கள் நான் நானென்று முந்திக்கொண்டு ஒருவரோடொருவர் போட்டி போட்டுக்கொண்டிருந்தார்கள். ஸாமான்களைப் படகுகளில் ஏற்றும்பொழுது 'இது என் பெட்டி, இது என் படுக்கை, இது என் மூட்டை, இது என் பாத்திரம்' என்று எல்லோரும் கூச்சலிட்டுக்கொண்டிருந்தார்கள். அந்தச் சத்தம் ஆகாயத்தை அளாவிற்று. அந்தப் படகுகளில் காற்றுத் தாக்குவதற்காகப் பாய்கள் விரிக்கப்பட்டிருந்தன. அவைகளில் ஸைன்யங்கள் ஏறினவுடன் குஹனுடைய வேலைக்காரர்கள் அவைகளை வெகு வேகமாக நடத்திக்கொண்டு போனார்கள். சில படகுகளில் ஸ்த்ரீகள் ஏறிக்கொண்டிருந்தார்கள். சில படகுகளில் குதிரைகள் ஏறியிருந்தன. சில படகுகளில் வாஹனங்களும் விலையுயர்ந்த எருதுகளும் ஏற்றப்பட்டிருந்தன. கங்கையின் அக்கரையில் ஜனங்களையும் ஸாமான்களையும் இறக்கிவிட்டுத் திரும்பிவரும்பொழுது ஓடக்காரர்கள் பாரமில்லாமல் லேசாயிருந்த அந்தப் படகுகளை ஜலத்தில் பல விசித்திரமான வகைகளில் செலுத்திக் காட்டித் திரும்பினார்கள். அம்பாரி வைத்த யானைகள் துவஜங்களுடன் நீரைக் கடந்துசென்றபொழுது இடம்விட்டு நடந்துசெல்லும் மலைகள்போல் காணப்பட்டன. சிலர் தெப்பங்களாலும், சிலர் குறுகிய வாயுள்ள குடங்களாலும், சிலர் ஸாதாரணமான ஓடங்களாலும், சிலர் நீந்துவதாலும் அந்த நதியைத் தாண்டினார்கள்.

இப்படி அந்த மஹா ஸைன்யம் முழுவதும் அதி சீக்கிரமாகக் கங்கையைத் தாண்டி, மைத்திரமென்ற முகூர்த்தத்தில் பிரயாக வனத்தை நோக்கிச் சென்றது. பிறகு பரதன் ராஜநீதியை நன்றாக அறிந்ததாலும் ஜனங்களை ரக்ஷிப்பதில் மிகுந்த கவலைகொண்டிருந்ததாலும், தான் மிகவும் களைத்திருந்தும் ஸைன்யத்திற்குள் சென்று

அங்குள்ள எல்லோரையும், "உங்களுக்கு இன்று மிகுந்த சிரமம் நேர்ந்தது" என்று ஒவ்வொருவருக்கும் உபசார வார்த்தைகளைச் சொல்லி, அவர்களை ஸௌக்கியமான இடத்தில் தங்கும்படி செய்வித்து, பிறகு வயதாலும் ஞானத்தாலும் தவத்தாலும் முதிர்ந்த பரத்வாஜ மஹரிஷியைத் தரிசிக்க உத்தேசித்து, வஸிஷ்டர் முதலிய மஹரிஷிகளையும் புரோஹிதர்களையும் முன்னிட்டுக்கொண்டு கால் நடையாகப் புறப்பட்டான். ஸகல வேதார்த்தங்களையும் அறிந்தவரும் மஹாஞானியும் தேவதைகளுக்குப் புரோஹிதருமான அந்த பிராம்மண சிரேஷ்டரின் ஆசிரமத்திற்கு வந்து, அதைச் சுற்றியிருந்த ஒரு பெரிய வனத்தையும் அதன் மரச்சோலைகளையும் அவைகளின் நடுவில் ஒரு பர்ணசாலையையும் கண்டார்கள்.

ஸ ப்³ராஹ்மணஸ்யாஶ்ரம மப்⁴யுபேத்ய
மஹாத்மநோ தே³வ புரோஹிதஸ்ய |
த³த³ர்ஶ ரம்யோடஜ வ்ருக்ஷ ஷண்ட³ம்
மஹத்³வநம் விப்ர வரஸ்ய ரம்யம் || (23)

—————

## ஸர்க்கம் 90

## பரதன் பரத்வாஜரைத் தரிசித்தது

ப⁴ரத்³வாஜாஶ்ரமம் த்³ருஷ்ட்வா க்ரோஶாதே³வ நரர்ஷப⁴: |
ப³லம் ஸர்வமவஸ்தா²ப்ய ஜகா³ம ஸஹ மந்த்ரிபி⁴: || (1)

ஒரு குரோச தூரத்திலேயே பரத்வாஜருடைய ஆசிரமத்தைப் பார்த்துப் பரதன் தன் ஸைன்யத்தை நிறுத்தி, ஆயுதங்களையும் ஆபரணங்களையும் சட்டையையும் தலைப்பாகையையும் கழற்றி வைத்துவிட்டு, உத்தரீயத்துடன் வஸிஷ்டரை முன்னிட்டுக் கொண்டு மந்திரிகள் பின்தொடரக் கால் நடையாகப் போனான். பார்க்கும் தூரத்தில் வந்தவுடன் மந்திரிகளை நிறுத்திவிட்டு, ரகுவம்சத்து ராஜாக்களின் ஆசாரத்தை நன்றாக அறிந்தவராகையால் வஸிஷ்டரை முன்னிட்டுக்கொண்டு போனான். மஹாதபஸ்வியான பரத்வாஜர் வஸிஷ்டரைப் பார்த்தவுடன் சீக்கிரமாக எழுந்து "சிஷ்யர்களே! அர்க்கியம் கொண்டுவாருங்கள்" என்று ஆக்ஞாபித்தார். வஸிஷ்டரும் பரத்வாஜரும் ஒரே வயதுள்ளவர்கள்; ஆகையால் ஒருவருக்கொருவர் நமஸ்காரம் செய்யாமல் உபசரித்தார்கள். பரதன் பரத்வாஜரை பிரதக்ஷிண நமஸ்காரம் செய்தான். வஸிஷ்டருடன் வந்ததால் இக்ஷ்வாகு வம்சத்து ராஜகுமாரனென்றும் தசரதபுத்திரனென்றும் அறிந்தார் கிரமப்படி அர்க்கியம் பாத்யம் பழங்கள் முதலிய உபசாரங்களைச் செய்வித்துப் பிறகு, அயோத்யையிலுள்ள ஜனங்களும் ஸைன்யங்களும் பொக்கிஷமும் மித்திரர்களும் மந்திரிகளும் க்ஷேமமா என்று விசாரித்தார். தசரதர் மரணமடைந்தது அவருக்குத் தெரியுமாகையால் அவரைப்பற்றிப் பேசவேயில்லை. பிறகு வஸிஷ்டரும் பரதனும், "தங்களுடைய தேகம் ஸௌக்கியமாயிருக்கிறதா? அக்னிகளும் சிஷ்யர்களும் ஆசிரம மிருகங்களும் பக்ஷிகளும் மரங்களும் க்ஷேமமா?" என்று விசாரித்தார். பரத்வாஜர் 'அப்படியே' என்று மறுமொழி சொல்லி, தனக்கு ராமனிடத்திலுள்ள பிரியத்தால் பரதனைப் பார்த்து, "நீ இப்பொழுது அயோத்யையில் ஆண்டு கொண்டிருக்கவேண்டியவன். அதைவிட்டு இங்கே வந்ததைப் பார்த்தால் உன்னிடத்தில் ஸந்தேகமுண்டாகிறது. கௌஸல்யை எல்லா லோகங்களுக்கும் ஆனந்தத்தை உண்டுபண்ணுகிறவனும் மஹா பராக்கிரமசாலியுமான ஒரு புத்திரனைப் பெற்றாள். தசரதர் ஒரு பெண்ணின் வார்த்தையைக் கேட்டு அவனைப் பதினான்கு வருஷங்கள் வரையில் காட்டில் வஸிக்கவேண்டுமென்று கட்டளையிட்டார். அப்படியே அவன் தன் தம்பியுடனும் பத்தினியுடனும் வனத்திற்குப் போனான். நியாயமாக ராமனுக்குக் கிடைக்கவேண்டிய ராஜ்யத்தை யாதொரு இடையூறும் இல்லாமல் அனுபவிக்க உத்தேசித்து, ஒரு பாபத்தையும் செய்யாத ராமனுக்கு ஏதாவது கெடுதி செய்ய நினைத்து இங்கே வந்தாயா?" என்று கேட்டார்.

உடனே பரதன் கண்ணீர் பெருக வார்த்தை குளற "ஆஹா, கெட்டேன். மூன்று காலங்களையுமறிந்த தாங்களும் இப்படி என்னைப்பற்றிச் சொல்ல ஆரம்பித்தால் எனக்குக் கதி என்ன? என்னால் எவர்க்கும் யாதொரு கெடுதியும் நேராது. தாங்கள் என்னைப் பற்றி இப்படிச் சொல்லவேண்டாமென்று பிரார்த்திக்கிறேன். 'நீ செய்தாலென்ன, உன் தாய் செய்தாலென்ன?' என்றால் நானில்லாத ஸமயத்தில் என் தாய் சொன்ன வார்த்தைகளை என் அபிப்பிராயமென்று எண்ணவேண்டாம். எனக்கு அவைகளால் கொஞ்சமும் ஸந்தோஷமில்லை. நான் அவைகளை ஒப்புக்கொள்ளவுமில்லை. புருஷோத்தமனான ராமனை நல்ல வார்த்தைசொல்லி பிரார்த்தித்து அயோத்யைக்குத் திரும்பி அழைத்துப்போகவும், எப்பொழுதும் அவருக்குப் பாதஸேவை செய்துகொண்டிருக்கவும் நிச்சயித்து இங்கே வந்திருக்கிறேன். தாங்கள் என்னிடத்தில் தயவுசெய்து ராமசந்திர மஹாராஜர் இப்பொழுது எங்கே வஸிக்கிறார் என்று தெரிவிக்கப் பிரார்த்திக்கிறேன்" என்றான்.

அப்பொழுது வஸிஷ்டர் முதலியவர்களும், "பரதனிடத்தில் கிருபை செய்யவேண்டும்" என்று பலவிதமாகப் பிரார்த்தித்த பிறகு பரத்வாஜர் திருப்தியடைந்து, பரதனைப் பார்த்து, "பெரியோர்களின் ஆசாரத்தை அனுஸரிப்பதும் இந்திரியங்களை அடக்கி ராஜ்யபோகங்களில் பற்றில்லாமலிருப்பதும், ஸாதுக்களின் ஆக்ஞைப்படி நடப்பதும் ரகுவம்சத்தில் பிறந்த உனக்குத் தகுந்ததே. உன் ஸ்வபாவமும் எண்ணமும் எனக்கு யோகபலத்தால் நன்றாகத் தெரியும். ஆனாலும் உனக்கு ராமனிடத்திலுள்ள பக்தியை உறுதிப்படுத்தவும் ராமனிடத்தில் நீ வைத்திருக்கும் விசுவாஸத்தால் உண்டான கீர்த்தியை அதிகப்படுத்தவும் உன்னை இப்படிக்கேட்டேன். ராமன் ஸீதையோடும் லக்ஷ்மணனோடும் இதற்கு ஸமீபத்திலுள்ள

சித்திரகூட மலையில் வஸிக்கிறார். நாளை அங்கே போகலாம். இன்று நீயும் உன் மந்திரிகளும் இங்கே தங்கி இருங்கள். கேட்பவர்களுக்கு இல்லையென்று சொல்லாமல் கொடுக்கும் ஸ்வபாவமுள்ளவனே! என் இஷ்டத்தைப் பூர்த்திசெய்'' என்றார்.

பரதன், "அப்படியேசெய்கிறேன்'' என்று தானும் ஸைன்யங்களும் பரிவாரங்களும் அந்த ஆசிரமத்தில் தங்குவதற்கு வேண்டிய ஏற்பாடுகளைச் செய்தான்.

ததஸ்ததே2த்யேவ முதா3ர த3ர்ஶந :
ப்ரதீதரூபோ ப4ரதோப்3ரவீத்3 வச: |
சகார பு3த்3தி4ம் ச தத3ா தத3ாஶ்ரமே
நிஶாநிவாஸாய நராதி4பாத்மஜ: ‖ (24)

---

## ஸர்க்கம் 91

## பரத்வாஜர் செய்த விருந்து

---

க்ருத பு3த்3தி4ம் நிவாஸாய தத்ரைவ ஸ முநிஸ்ததா3 |
ப4ரதம் கைகயீபுத்ர மாதித்2யேந ந்யமந்த்ரயத் ‖ (1)

பரதன் அந்த ஆசிரமத்தில் தங்கியிருக்க ஒப்புக்கொண்ட பிறகு பரத்வாஜர், "குழந்தாய்! நீயும் உன்னைச் சேர்ந்தவர்களும் இங்கேயே போஜனம் செய்யவேண்டும்" என்றார். பரதன் "ஸ்வாமி! இங்கே கிடைக்கும் பதார்த்தங்களால் தாங்கள் எனக்குச் செய்த அர்க்கியம் பாத்தியம் ஆசமனீயம் முதலிய அதிதிபூஜையால் போஜனம் செய்ததுபோல் மிகுந்த திருப்தியடைந்தேன்" என்றான். பரத்வாஜர் "அப்படியா! காட்டில் வஸிக்கும் ஒரு ரிஷி இதைக்காட்டிலும் நமக்கென்ன செய்யமுடியும்? இவரை சிரமப்படுத்துவது நியாயமல்ல என்றல்லவா நம்மை நினைக்கிறான். நமது மஹிமை தெரியாதவன்" என்று சிரித்துக்கொண்டு "நீ என்னிடத்தில் விசேஷ பக்தி வைத்திருக்கிறாயென்றும் நான் செய்யும் உபசாரத்தால் ஸந்தோஷப்படுவாயென்றும் தெரியும். உனக்கும் உன் பரிவாரங்களுக்கும் விருந்து செய்ய விரும்புகிறேன். நான் பிரீதியுடன் செய்வதை நீ ஸந்தோஷமாக ஒப்புக்கொள்ளவேண்டும். உன் ஸைன்யங்களை இங்கே அழைத்துவராமல் நீ மாத்திரம் இங்கே வந்த காரணமென்ன?" என்றார். பரதன், "அரசனாவது ராஜகுமாரனாவது பரிவாரங்களோடும் ஸைன்யங்களோடும் மஹரிஷிகள் வஸிக்கும் ஆசிரமங்களுக்கு ஸமீபத்தில் போகக்கூடாது. அவர்களுடைய கர்மானுஷ்டானங்களுக்குத் தடையாகும். ஆகையால் தாங்கள் கோபிப்பீர்களென்று பயந்து நான் மாத்திரம் வந்தேன். மதயானைகளும் குதிரைகளும் ரதங்களும் காலாட்களும் பரிவாரங்களும் கணக்கின்றி வெகு தூரம் பரவிவருகிறார்கள். அவர்களால் ஆசிரமங்களுக்கும் நீர்த் துறைகளுக்கும் பர்ண சாலைகளுக்கும் புண்ணிய ஸ்தலங்களுக்கும் மிருகங்களுக்கும் பக்ஷிகளுக்கும் ஹிம்ஸையுண்டாகும். ஆகையால் அவர்களைத் தூரத்திலேயே நிறுத்திவிட்டேன்." என்று தெரிவித்தான். பரத்வாஜர், "நீ அதைப்பற்றிக் கவலைப்படவேண்டாம். அவர்கள் யாவரையும் இங்கே அழைத்து வா" என்று கட்டளையிட்டார். பரதன் மந்திரிகளை அழைத்து பரிவாரங்களையும் ஸைன்யங்களையும் ஆசிரமத்திற்கு ஸமீபத்தில் தருவித்தான்.



அதற்குள் பரத்வாஜ மஹரிஷி, தேவதைகள் வஸிக்கும் ஸ்தலமான அக்னிஹோத்ரசாலைக்குப் போய் மூன்றுதரம் ஆசமனம் செய்து இரண்டுதரம் வாயைத் துடைத்துக்கொண்டு, தலை கண் மூக்கு காது ஹிருதயம் முதலிய அங்கங்களை ஒரு தடவை தொட்டு, பரதனுக்கு விருந்துசெய்ய விசுவகர்மாவை அழைத்தார். "தேவதைகளுக்குச் சில்பியான விசுவகர்மாவையும் அஸுரர்களுக்குச் சில்பியான மயனையும் அழைக்கிறேன். பரதனுக்கும் அவனுடன் வந்திருக்கும் ஸைன்யத்திற்கும் என் இஷ்டப்படி விருந்து செய்ய விரும்புகிறேன். அதற்கு வேண்டிய ஏற்பாடுகளைச் செய்யுங்கள். அன்னபானங்களை ரக்ஷிப்பதற்காக இந்திரன் யமன் வருணன் குபேரனென்ற லோகபாலர்களையும் அக்னிமுதலிய தேவர்களையும் அழைக்கிறேன். பரதனுக்கு அதிதிபூஜை செய்ய விரும்புகிறேன். நீங்கள் வந்திருந்து அதை நடப்பிக்கவேண்டும். மூன்று லோகங்களிலும் கிழக்கே ஓடும் நதிகளுக்கும் மேற்கே ஓடும் நதிகளுக்கும் தேவதைகள் இங்கே வரட்டும். அவைகளில் சிலவற்றில் மைரேயமென்ற பானம் ஓடட்டும். சிலவற்றில் ஸுரா என்ற பானம் ஓடட்டும். சிலவற்றில் கரும்பின் ரஸத்தைப்போல் ருசியுள்ள குளிர்ந்த ஜலம் ஓடட்டும். ஹாஹா, ஹூஹூ, விச்வாவஸு முதலிய தேவகந்தர்வர்களையும், தேவ ஜாதியில் பிறந்த அப்ஸரஸ்களையும், கந்தர்வ ஜாதியில் பிறந்த அப்ஸரஸ்களையும், கிருதாசி, விச்வாசி, மிச்ரகேசி, அலம்புஸா, நாகதந்தா, ஹேமா, மஹேந்த்ர பர்வதத்தின் குஹையில் மயனால் கட்டப்பட்ட கிருஹத்தில் வஸிக்கும் ஸ்வயம்பிரபா என்ற அப்ஸரஸ்களையும் அழைக்கிறேன். இந்திரனுக்கு ஊழியம் செய்யும் ரம்பை ஊர்வசி மேனகை முதலியவர்களையும், பிரஹ்மலோகத்திலிருக்கும் அப்ஸரஸ்களையும், இவர்களுக்கு ஸங்கீதத்தை உபதேசிக்கும் தும்புருவையும், பாட்டு ஆட்டம் முதலியவற்றின் ஸாதனங்களுடன் வரும்படி அழைக்கிறேன். உத்தரகுரு தேசத்திலுள்ள சைத்ரரதமென்ற வனம், தேவதைகளுக்குத் தகுந்த வஸ்திரங்களும் ஆபரணங்களுமே இலைகளாக, தேவஸ்த்ரீகளே பழங்களாக ரூபமெடுத்து இங்கே வரும்படி வடக்கு திக்பாலகனை குபேரனை அழைக்கிறேன். அறுசுவைப்பதார்த்தங்களுடன் நேர்த்தியான அன்னத்தையும் மரங்களிலிருந்து புதிதாக உதிர்ந்த விசித்திரமான மாலைகளையும் பலவித பானங்களையும் மாம்ஸங்களையும் ஓஷதிகளுக்கு ராஜாவான சந்திரன் ஏராளமாக ஸித்தம் செய்யட்டும்" என்று, அளவற்ற யோகமஹிமையும் ஞானமும் தேஜஸும்

வாய்ந்த பரத்வாஜர், மேற்சொன்ன தேவதைகளை அழைக்கும் மந்திரங்களை தகுந்த ஸ்வரங்களோடும் பிரயோகங்களோடும் ஜபித்தார்.

இப்படிக் கைகூப்பிக் கிழக்குமுகமாக நின்று மனத்தால் நினைத்தவுடன் ஸகல தேவதைகளும் தனித்தனியாக வந்தார்கள். சந்தன மரங்களுக்கு உத்பத்திஸ்தானமான மலயம் தர்துரம் என்ற மலைகளிலுள்ள வாஸனையைக் கவர்ந்து ஸுகமாக குளிர்ந்த காற்று அங்கே வீசியது. அது தேகத்திலுள்ள வெப்பத்தையும் வியர்வையையும் தாபத்தையும் போக்கி ஸுகத்தைக் கொடுத்தது. தேவலோகத்திலிருந்து புஷ்பமாரி பெய்தது. தேவதுந்துபி முதலிய வாத்தியங்கள் நான்கு திக்குகளிலும் முழங்கின. தேவகந்தர்வர்கள் பாடினார்கள். வீணை முதலிய வாத்தியங்களை வாசித்தார்கள். அப்ஸரஸ்கள் ஆடினார்கள். சுருதிக்கும் லயத்திற்கும் ஒத்திருக்கும் அந்த கானம் மூன்று லோகங்களிலுமுள்ள பிராணிகளின் செவிக்கு இன்னதெனச் சொல்லமுடியாத ஆனந்தத்தைக் கொடுத்தது. அந்தச் சப்தம் ஓய்ந்தவுடன், பரதனுடைய ஸைன்யங்கள் விச்வகர்மாவின் அபூர்வ சக்தியைக் கண்டார்கள். ஐந்து யோஜனை தூரம் வரையில் பூமி மேடு பள்ளமில்லாமல் ஸமமாகச் செய்யப்பட்டு, இந்திரநீலம் வைடூரியம் முதலிய ரத்தினங்களால் இழைக்கப்பட்டது போல் மிருதுவான இளம் புற்களால் மூடப்பட்டிருந்தது. அங்கே பில்வம் பலா மா நெல்லி முதலிய மரங்களும் தோன்றின. உத்தர குருதேசத்திலிருந்து தேவதைகள் அனுபவிக்கத்தகுந்த பதார்த்தங்களுடன் சைத்ரரதமென்ற வனம் வந்தது. கரையில் அழகான மரங்களுடன் நதிகள் வந்தன. நான்கு பக்கத்திலும் தாழ்வாரம் போட்டு நடுவில் திறந்த இடமுள்ள வீடுகளும் யானை குதிரைகளைக் கட்டுமிடங்களும், ஸகல அலங்காரங்களுமுள்ள உப்பரிகைகளும் வீடுகளும் அரண்மனைகளும் வெளுத்த மேகங்களைப்போல் ராஜ கிருஹமும் உண்டாயின. அது தோரணங்களாலும் நேர்த்தியான மாலைகளாலும் திவ்யமான பரிமளங்களாலும் படுக்கைகள் கட்டில்கள் ஆஸனங்கள் சிரேஷ்டமான விரிப்புகளாலும் அலங்கரிக்கப்பட்டிருந்தன. உத்தமமான வஸ்திரங்களும் அன்னபானங்களும் பக்ஷணங்களும் பலவித ரஸங்களும் விசித்திரமான பதார்த்தங்களும் ஸித்தமாயிருந்தன.

விலையற்ற ரத்தினங்களால் அலங்கரிக்கப்பட்ட அந்த கிருஹத்தில் மஹரிஷியின் அனுமதியால் பரதன் பிரவேசித்தான். மந்திரிகளும் புரோஹிதர்களும் பரிவாரங்களும் அவருடன் போய் அங்குள்ள அத்புதமான காக்ஷிகளைக் கண்டு திகைத்து நின்றார்கள். ஓரிடத்தில் இந்திரனுடைய ஆஸனம் போன்ற ஒரு திவ்ய ஸிம்ஹாஸனம் போடப்பட்டு அதன் பக்கத்தில் வெண்குடையும் சாமரங்களும் வைக்கப்பட்டிருந்தன. ராமமூர்த்தி அதில் வீற்றிருப்பதைப்போல் பரதன் நினைத்து மந்திரிகளுடன்கைகூப்பி நமஸ்கரித்துப் பிரதக்ஷிணம் செய்தான். மனத்தால் ராமனை ஸகல உபசாரங்களாலும் பூஜித்து நமஸ்கரித்து, தான் அவருக்கு அடிமை என்று காட்டுவதற்காக சாமரத்தைக் கையில் எடுத்துக்கொண்டு பக்கத்தில் மந்திரிகளுக்காகப் போடப்பட்டிருந்த ஆஸனத்தில் உட்கார்ந்தான். புரோஹிதர்களும் மந்திரிகளும் அதிகாரத்திற்கும் யோக்யதைக்கும் தகுந்த ஆஸனங்களில் உட்கார்ந்தார்கள். அவர்களுக்குப் பின் ஸேனாபதியும் அவருக்குப் பின் தளகர்த்தர்களும் உட்கார்ந்தார்கள். பாயஸம் நிறைந்த நதிகள் பிறகு பரத்வாஜருடைய கட்டளையால் பரதனுக்கு ஸமீபத்தில் பெருகத்தொடங்கின. கரைகளில் நற்சாந்து பூசப்பட்ட விசித்திரமான வீடுகள் அமைக்கப்பட்டிருந்தன.



பிறகு பிரஹ்மாவால் அனுப்பப்பட்ட இருபதாயிரம் அப்ஸரஸ்கள் திவ்ய அலங்காரங்களுடன் அங்கே தோன்றினார்கள். தங்கம் முத்து பவழம் ரத்தினம் முதலியவைகளால் அலங்கரிக்கப்பட்ட இருபதாயிரம் அப்ஸரஸ்கள் குபேரனால் அனுப்பப்பட்டு அங்கே வந்தார்கள். இந்தக் கந்தர்வலோகத்து அப்ஸரஸ்களின் வசத்தில் ஒருவன் அகப்பட்டால் பைத்தியம் பிடித்தவனைப்போல் ஆவானென்று வேதம் சொல்லுகிறது. இந்திரனுடைய நந்தவனமென்ற தோட்டத்திலிருக்கும் இருபதாயிரம் அப்ஸரஸ்கள் வந்தார்கள். நாரதர் தும்புரு கோபனென்ற மஹா தேஜஸ்விகளான கந்தர்வ ராஜாக்கள் வந்தார்கள். அலம்புஸா மிச்ரகேசி புண்டரீகா வாமனா முதலிய அப்ஸரஸ்கள் பரத்வாஜருடைய உத்தரவால் பரதனுக்கெதிரில் ஆடினார்கள். தேவலோகத்திலும் சைத்ரரதமென்ற வனத்திலுமுள்ள ஸகல பதார்த்தங்களும் பரத்வாஜருடைய மஹிமையால் பிரயாகையில் வந்து தோன்றின. பில்வமரங்கள் மிருதங்கம் வாசித்தன; தானி மரங்கள் தாளம் போட்டன; அரசமரங்கள் ஆடின; ஸரளம் மஞ்சாடி பனை புங்கை என்ற மரங்கள் கூனர்களாயும் குள்ளர்களாயும் ரூபமெடுத்தன. சிம்சுபா நெல்லி நாவல் முதலிய காட்டு மரங்களும் ஜாதி மல்லிகை முதலிய காட்டுக் கொடிகளும் பெண்களின் ரூபமெடுத்து, "இஷ்டப்படி எங்களை அனுபவியுங்கள். மதுபானத்தில் பிரியமுள்ளவர்களே! இந்தத் திவ்யமான பானங்களைக் குடியுங்கள். பசியால் வருந்துகிறவர்களே! இந்தப் பாயஸத்தையும் சுத்தமான மாம்ஸத்தையும் புஜியுங்கள்" என்றன.

ஒவ்வொரு புருஷனையும் ஏழெட்டுப் பெண்கள் கைப்பற்றித் தைலங்களைத் தேய்த்து நதிகளில் நீராட்டித் திவ்யமான வஸ்திராபரணங்களால் அலங்கரித்துக் கால்களைப் பிடித்துவிட்டு தனிமையில் ஸுரா முதலிய பானங்களைக் குடிக்கச் செய்தார்கள். வாஹனங்களை ரக்ஷிப்பதற்காக ரிஷியால் ஏற்படுத்தப்பட்டவர்கள், யானைகளையும் குதிரைகளையும் எருதுகளையும் ஒட்டகங்களையும் கோவேறு கழுதைகளையும், கரும்பு, தேன் கலந்த பொரிமுதலிய அவைகளுக்குப் பிரியமான பதார்த்தங்களால் வேண்டியவரையில் திருப்திசெய்தார்கள். பரதனுடன் வந்த யானைக்காரர்களும் குதிரைக்காரர்களும் மற்றவர்களும் அளவுக்கு மிஞ்சிக் குடித்துப் புத்திமயங்கி, தங்க

ளுடைய குதிரை முதலியன போனவிடம் தெரியாமலும் அவைகளைக் கண்டுபிடிக்க முடியாமலும் இருந்தார்கள். உத்தமமான அன்னம் பானம் வஸ்திரங்கள், ஆபரணங்கள், பூச்சுகள், பரிமளங்கள், மாலைகள் இன்னும் அவர்களுக்குத் தேவையான பதார்த்தங்களை, பரதனுடைய ஸைன்யங்கள் வேண்டியவரையில் அனுபவித்து, அப்ஸரஸ்களால் வெகு பிரியத்துடன் உபசரிக்கப்பட்டு, இந்திரிய ஸ்வாதீனமில்லாமல் ஆனந்தம் மேலிட்டு, "நாங்கள் அயோத்யைக்குப் போகமாட்டோம். தண்டகாவனத்திற்கும் செல்லப் போவதில்லை. பரதனுக்கு ஸகல மங்களங்களும் உண்டாகட்டும். ராமன் க்ஷேமமாக இருக்கட்டும்" என்று காலாட்களும் யானைக்காரர்களும் குதிரைக்காரர்களும் தலைவர்களுக்குக் கட்டுப்படாமல் அங்கே நடந்த வைபவங்களால் தலைதெரியாமல் கூச்சலிட்டார்கள்; சிலர் இதைத் தவிர ஸ்வர்க்கமென்பது வேறில்லை என்றார்கள்; சிலர் காரணமில்லாமல் சிரித்துக்கொண்டே இருந்தார்கள். சிலர் பாடினார்கள்; சிலர் கூத்தாடினார்கள்; சிலர் மாலைகளைத் தரித்துக்கொண்டு அங்குமிங்கும் ஓடினார்கள். அந்த உத்தமமான அன்னங்களையும் பானங்களையும் பக்ஷயங்களையும் பார்த்து மறுபடியும் அவைகளைப் புஜிக்க வேண்டுமென்று அவர்களுக்கு ஆசையுண்டாயிற்று. பரிசாரகர்களும் வேலைக்காரர்களும் யுத்த வீரர்களின் பாரியைகளும் ஸைன்யங்களைப் பின்தொடர்ந்தவர்களும் புதிய வஸ்திரங்களைத் தரித்துக்கொண்டு அடங்காமகிழ்ச்சியடைந்தார்கள். யானைகளும் கோவேறு கழுதைகளும் ஒட்டகங்களும் குதிரைகளும் விளையாடுவதற்காக ஸைன்யங்களால் கொண்டுவரப்பட்ட மிருகங்களும் பக்ஷிகளும் எல்லையற்ற திருப்தியடைந்து ரிஷியால் கொடுக்கப்பட்ட ஆஹாரத்தைத் தவிர வேறொன்றையும் விரும்பவில்லை. வெளுப்பு வஸ்திரமில்லாதவனும் பசித்தவனும் வாடினவனும் புழுதிபடிந்த தலைமயிரையுடையவனும் அங்கே ஒருவனுமில்லை. எண்ணிறந்த மாலைகளால் அலங்கரிக்கப்பட்ட வெண்மையான அன்னக்குவியல்களும் பல வகை மாம்ஸங்களும் சிரேஷ்டமான வியஞ்ஜனங்களும் (ஊறுகாய்கள்) சர்க்கரையிலும் தேன்களிலும் பக்குவம் செய்யப்பட்ட பழங்களும் விசித்திரமாகச் சமைக்கப்பட்ட துவரை உளுந்து கடலை பயறு முதலிய பருப்புகளும், வாஸனையுள்ள அநேக ரஸங்களும் வைக்கப்பட்டிருந்ததைப் பார்த்து எல்லோரும் ஆச்சரியமடைந்தார்கள். அந்த வனத்தின் பக்கங்களில் பாயஸத்தால் நிரம்பிய பல கிணறுகள் இருந்தன. அங்கிருந்த பசுக்கள் வேண்டியவரையில் பாலைக் கொடுத்தன. மரங்களிலிருந்து தேன் வெள்ளமாக ஓடிற்று.

ஓடைகள் மைரேயமென்ற பானத்தால் ததும்பின. கரைகளில் விசித்திரமாகப் பக்குவம் செய்யப்பட்ட மான் மயில் கோழி முதலியவற்றின் மாம்ஸங்கள் பானைகளில் உஷ்ணமாகக் குன்றுகளைப் போல் வைக்கப்பட்டிருந்தன. அன்ன பாத்திரங்களும் வியஞ்ஜன



பாத்திரங்களும் போஜன பாத்திரங்களும் தங்கத்தால் செய்யப்பட்டுக் கணக்கில்லாமல் கிடந்தன. கோடி கோடி ஸ்தாலிகளும் குடங்களும் கிண்டிகளும் தயிரால் நிறைந்திருந்தன. கடைந்து ஒரு ஜாமமானதும் விளாம்பழத்தின் வாஸனையோடு கூடினதுமான மோரில், சுக்கு திப்பிலி மிளகு ஏலக்காய் லவங்கம் தக்கோலம் சம்பகப்பூ சர்க்கரை இஞ்சி முதலியவைகளைக் கலந்து விசித்திரமாய் பக்குவம் செய்த ரஸாலமென்ற பதார்த்தத்தால் பல மடுக்கள் நிறைந்திருந்தன. பல மடுக்கள் தயிரால் நிறைந்திருந்தன; பல மடுக்கள் பாயஸத்தால் நிறைந்திருந்தன; பல மடுக்கள் கடைந்த மோரால் நிறைந்திருந்தன; அவைகளுக்குச் ஸமீபத்தில் சர்க்கரை கலந்த கோதுமை பயறு முதலியவைகளால் செய்யப்பட்ட அப்பங்கள் வியஞ்ஜனத்திற்காக வைக்கப்பட்டிருந்தன. நெல்லிக்காய் விழுதும் வாஸனைப்பொடிகளும் கஷாயங்களும் தைலங்களும் பெரிய அண்டாக்களில் வெந்நீரும், ஸ்நானம் செய்வதற்காக ஆறுகளின் துறைகளில் வைக்கப்பட்டிருந்தன. பல் தேய்ப்பதற்காக சுத்தமான குச்சிகளும், ஸ்நானம் செய்த பிறகு அலங்கரித்துக்கொள்வதற்காக ஸம்புடங்களில் சந்தனக் குழம்பும், பிரகாசமுள்ள கண்ணாடியும், விலையற்ற உடுப்புகளும் பாதக் குறடுகளும் செருப்புகளும் ஜோடுகளும் மைச்சிமிழ்களும், தலைமயிர் மீசை தாடிகளை வாருவதற்குச் சீப்புகளும், யுத்த வீரர்கள் அலங்காரமாய்த் தரிக்கும் ஆயுதங்களும் வில்லுகளும் கவசங்களும் படுக்கைகளும் ஆஸனங்களும் கணக்கில்லாமல் வைக்கப்பட்டிருந்தன. யானை குதிரை முதலிய மிருகங்கள் தின்னும்பொழுது தாகம் தீர்த்துக்கொள்வதற்குச் சுத்த ஜலத்தால் நிறைந்த பல மடுக்கள் சுலபமாக இறங்கும்படி கட்டப்பட்ட துறைகளுடன் காணப்பட்டன. தாமரை ஓடைகளும் செங்கழுநீர் ஓடைகளும் ஆகாசத்தைப்போல்தெளிவாக ருசியுள்ள ஜலத்தால் நிறைந்து, சுகமாக ஸ்நானம் செய்யக்கூடியவைகளாக இருந்தன. மிருகங்களின் தீனிக்காக வைடூரியங்களைப்போல் பிரகாசிக்கும் மிருதுவாயும் ருசியாயுமுள்ள இளம்புல் தரைகள் அங்கங்கே ஏற்பட்டிருந்தன.

கனவில் கண்ட பொருள்களைப்போல் அத்புதமாயும் ஆச்சரியகரமாயும் மனத்தால் நினைக்க முடியாததாயும் அவரவர்களுடைய இஷ்டத்திற்குத் தகுந்தபடியும் அமைக்கப்பட்ட இந்த அபூர்வ பொருள்கள் பரதனுக்கு விருந்து செய்வதற்காகப் பரத்வாஜருடைய அளவற்ற தபோமஹிமையால் ஒரு க்ஷணத்தில் ஸம்பாதிக்கப்பட்டதைப் பார்த்து எல்லோரும் சொல்லமுடியாத ஆச்சரியத்தை அடைந்தார்கள். நந்தனமென்ற இந்திரனுடைய தோட்டத்தில் தேவதைகள் விளையாடுவதுபோல் பரதனுடைய பரிவாரங்களும் ஸைன்யங்களும் பரத்வாஜருடைய ஆசிரமத்தில் இப்படி அந்த ராத்திரியைக் கழித்தார்கள். பிறகு கந்தர்வர்களும் அப்ஸரஸ்களும் நதிதேவதைகளும் பரத்வாஜரிடத்தில் அனுமதிபெற்றுக்கொண்டு

தங்களுடைய லோகங்களுக்குப் போனார்கள். ஆனால் இந்த விருந்து இந்திரஜாலவித்தையால் உண்டாக்கப்பட்ட வஸ்துக்களைப்போல் பிறகு மறைந்துபோகவில்லை. அன்னபானங்களால் திருப்தியடைந்தவர்களும் மயங்கினவர்களும், திவ்ய சந்தனங்களாலும் வாஸனைகளாலும் பூசப்பட்டவர்களும் உத்தமமான மாலைகளால் அலங்கரிக்கப்பட்டவர்களும் அந்த ஸுகங்களை அனுபவிக்கும் காலத்தில் உண்டான ஆனந்தத்தை விருந்து முடிந்த பிறகும் அனுபவித்தார்கள். எங்கே பார்த்தாலும் புஷ்பங்களும் மாலைகளும் ஜனங்களால் அனுபவிக்கப்பட்டுச் சிதறிக் கிடந்தன.

ததை$^{2}$வ மத்தா மதி$^{3}$ரோத்கடா நரா:
ததை$^{2}$வ தி$^{3}$வ்யாக$^{3}$ரு சந்த$^{3}$நோக்ஷிதா: |
ததை$^{2}$வ தி$^{3}$வ்யா விவிதா$^{4}$: ஸ்ரகு$^{3}$த்தமா:
ப்ருத$^{2}$க் ப்ரகீர்ணா மநுஜை: ப்ரமர்தி$^{3}$தா: ‖ (84)

---

## ஸர்க்கம் 92

## பரதன் சித்திரகூடத்திற்குப் போனது

ததஸ்தாம் ரஜநீம் வ்யுஷ்ய ப$^{4}$ரத: ஸபரிச்ச$^{2}$த$^{3}$: |
க்ருதாதித்$^{3}$யோ ப$^{4}$ரத்$^{3}$வாஜம் காமாத$^{3}$பி$^{4}$ஜகா$^{3}$ம ஹ ‖ (1)

அந்த ராத்திரியில் பரதனும் பரிவாரங்களும் பரத்வாஜரால் உபசரிக்கப்பட்டு சுகமாகக் காலத்தைக் கழித்தார்கள். மறுநாட் காலையில் பரதன் எழுந்து ராமனைப் பார்க்கவேண்டுமென்ற ஆசையால் அவர் இருக்குமிடத்தைத் தெரிந்துகொள்ள மஹரிஷியின் ஆசிரமத்திற்குப் போனான். அதற்குள் பரத்வாஜர் நித்தியகர்மங்களை முடித்துவிட்டுக் கௌஸல்யை முதலிய ஸகல ஜனங்களையும் பார்க்க விரும்பி ஆசிரமத்திலிருந்து புறப்பட்டார். அவரைக் கண்டு பரதன் நமஸ்கரித்துக் கைகூப்பி நின்றான். "பரதன் என்னால் செய்யப்பட்ட உபசாரங்களில் ஆசை வைத்தானா? அல்லது அவனுடைய மனம் ராமனிடத்திலேயே நாடியிருக்கிறதா?" என்று பரத்வாஜர் பரீக்ஷித்துப் பார்த்து, தோஷமில்லாதவனென்று அறிந்து வெகு திருப்தியுடன், "குழந்தாய்! நீயும் உன்னைச் சேர்ந்தவர்களும் என் ஆசிரமத்தில் நேற்று ராத்திரி ஸுகமாக வஸித்தீர்களா? ஏதோ நான் காட்டில் வஸிக்கும் ரிஷி. எனக்குச் சக்தியுள்ளவரையில் செய்த உபசாரத்தை எந்தக் குறைகளிருந்தாலும் ஒப்புக்கொள்ளவேண்டும்" என்றார்.

அதற்குப் பரதன் "ஸ்வாமி! நானும் என் ஸைன்யங்களும் பரிவாரங்களும் யோக்கியதைக்கு அதிகமாகவே தங்களால் உபசரிக்கப்பட்டோம். நாங்கள் விரும்பக்கூடிய ஸகல ஸௌக்கியங்களும் ஸித்தமாயிருந்தன. விமானங்களைப் போன்ற கிருஹங்களில் தேவதைகளுக்கு நடக்கும் ஸகல உபசாரங்களையும் ஆனந்தங்களையும் அனுபவித்து, தேக சிரமமும் மனக்கவலையும் தீர்ந்து பரம திருப்தியடைந்திருக்கிறோம். ராமனிடத்திற்குப் போக எனக்கு அனுமதி கொடுத்தனுப்பவேண்டும். எப்பொழுதும் என்னிடத்தில் கிருபை வைத்துக் காப்பாற்றும்படி வேண்டுகிறேன். அவருடைய ஆசிரமம் எங்கே? இங்கிருந்து எவ்வளவு தூரம்? எந்த வழியாகப் போகவேண்டும்?" என்றான்.

இந்த விஷயங்களைத் தெரிந்த குஹன் முதலியவர்கள் இருந்தாலும் தபோமஹிமையால் யாவற்றையும் அறியும் சக்தியுள்ளவரென்று அறிந்து, தன்னை மஹா பக்தியுடன் கேட்ட பரதனைப் பார்த்து அந்தமஹரிஷி, "குழந்தாய்! இங்கிருந்து ஒன்றரையோஜனை தூரத்தில் சித்திர கூடமென்ற ஒரு மலையும் அதைச் சுற்றிலும் ஜனஸஞ்சாரமில்லாத பெரிய வனமும் இருக்கின்றன. அதற்கு வடக்கில் மந்தாகினி யென்ற நதி ஓடுகிறது. கரைகளில் அழகுள்ள புஷ்பங்களால் நிறைந்த மரங்கள் அடர்ந்த காடுகளிருக்கின்றன. அதற்கும் சித்திரகூடத்திற்கும் நடுவில் ஒரு பர்ணசாலையில் ராமன் வஸிக்கிறார். யோகபலத்தால் இது எனக்கு நிச்சயமாகத் தெரிந்த விஷயம். இங்கிருந்து தெற்கில் போகும் வழியாகக் கொஞ்சதூரம் நடந்து, பிறகு தென் மேற்காக அங்கிருந்து பிரியும் ஒரு கிளை வழியில் நீயும் உன் ஸைன்யங்களும் பிரயாணம் செய்யவேண்டும். அந்த மார்க்கமாகப் போய் ராமனைத் தரிசிப்பாய்" என்றார்.

பரதன் பிரயாணத்திற்கு ஸித்தமானதைக் கேட்டுத் தசரதருடைய பத்தினிகள் வாஹனங்களிலிருந்து இறங்கி, பிரஹ்மஞானியான பரத்வாஜரைச் சுற்றி நின்றார்கள். கௌஸல்யையும் ஸுமித்திரையும் ராமலக்ஷ்மணர்களைவிட்டுப் பிரிந்ததால் இளைத்து, அதிக வயதானதாலும் ரிஷியைப் பார்த்துப் பயத்தாலும் தேகம் நடுங்க பரத்வாஜரின் பாதங்களைத் தொட்டு நமஸ்கரித்தார்கள்.

பிறகு கைகேயி தன் கோரிக்கைகள் நிறைவேறாமல் யாவராலும் நிந்திக்கப்பட்டு, ராமனைக் காட்டிற்கனுப்ப தானே காரணமாக இருந்ததைப்பற்றி வெட்கப்பட்டு, அந்த மஹரிஷியை பிரதக்ஷிண நமஸ்காரம் செய்து மற்றவர்களைப்போல் அவருக்கெதிரில் நிற்க மனம்கொள்ளாமல் பரதனுக்கு ஸமீபத்தில் போய் நின்றாள். பிறகு பரத்வாஜர் யாவற்றையும் அறிந்திருந்தும் கைகேயியைத் தண்டிக்க வேண்டுமென்ற எண்ணத்துடன், "குழந்தாய்! தசரதருடைய பத்தினிகளை எனக்குக் குறிப்பிட்டுக் காட்டவேண்டும்" என்றார். ராஜபத்தினிகளின் ஸ்வபாவத்தைத்தன் வார்த்தைகளால் எல்லோருக்கும் வெளிப்படுத்த வேண்டுமென்ற மஹரிஷியின் எண்ணத்தைப் பரதன் அறிந்து, ஸத்தியம் தவறாதவனானதால் கைகூப்பி வணக்கமாக, "ஸ்வாமி! சோகத்தாலும் பட்டினியாலும் இளைத்து, தர்ம தேவதையைப்போல் காணப்படும் இந்த ராஜஸ்த்ரீ என் பிதாவிற்குப் பட்டமஹிஷியான கௌஸல்யாதேவி; மஹாவிஷ்ணுவை அதிதிதேவி பெற்றதுபோல், மதம்கொண்ட ஸிம்ஹத்தின் நடையை

யுடைய புருஷ சிரேஷ்டரான ராமனைப் பெற்றவள். அவளுடைய இடதுகையைத் தாங்கிச்கொண்டு, காட்டில் வெயிலால் வாடின புஷ்பங்களையுடைய கொங்குமரத்தின் கிளையைப்போல், பலவித துக்கத்தால் ஏங்கி நிற்பவள் ஸுமித்திராதேவிஎன்ற இரண்டாவது ராஜ பத்தினி. அழகில் அசுவினிதேவதைகளைப் போன்றவர்களும் வீரர்களும் வீணாகாத பராக்கிரமமுள்ளவர்களுமான லக்ஷ்மணனும் சத்ருக்னனும் இவளுடைய புத்திரர்கள். ராமலக்ஷ்மணர்களை ராக்ஷஸர்கள் நிறைந்த தண்டகாரண்யத்திற்கு அனுப்பி உயிரை இழக்கும் படியான ஆபத்தை உண்டுபண்ணினவளும், தசரத சக்கரவர்த்தி புத்திர சோகத்தால் மரணமடையும் வழிதேடினவளும், இதோ நிற்கும் கைகேயியே. இவள் கடுங்கோபமுள்ளவள்; சாஸ்திர விசாரத்தாலும் ஸாதுக்களின் சேர்க்கையாலும் சுத்தமான புத்தியுடையவளல்ல. வெகு கர்வமுடையவள். அழகில் தன்னைப்போன்றவள் வேறொருவருமில்லை என்பது இவளுடைய எண்ணம். ஸகல துர்க்குணங்களும் பொருந்தினவள்; பார்வைக்கு ஸகல உத்தம குணங்களும் பொருந்தினவளைப்போலிருப்பாள்; ஐசுவரியமும் அதிகாரமும் வேண்டுமென்று பேராசைகொண்டவள்; குரூரமான ஸ்வபாவமுடையவள்; பாபத்தைச் செய்வதில் அஞ்சாதவள்; நான் அனுபவிக்கும் துக்கமெல்லாம் இவளுடைய அனுக்கிரஹமே! நான் பூர்வ ஜன்மங்களில் செய்த பாபங்களுடைய பயன் ஒன்று சேர்ந்து இவள் எனக்குத் தாயென்று நான்சொல்லும்படி நேர்ந்தது.'' என்று கூறி கண்ணீரால் நெஞ்சடைத்துக் கண்கள் சிவக்க, கோபம் கொண்ட யானையைப்போல் பெருமூச்சுவிட்டான்.

பரத்வாஜர், "குழந்தாய்! கைகேயியைக் குற்றம் சொல்வது நியாயமல்ல. அவளுக்கு இந்தப் புத்தி, தெய்வச்செயலால் தோன்றிற்று. தேவ தானவ ரிஷி கணங்களுக்கும் ஸாதுக்களுக்கும் பரம ஹிதத்தைச் செய்யவே ராமன் காட்டிற்கு அனுப்பப்பட்டார். ஆகையால் நீ வருத்தப்படுவதற்கும் கைகேயியைத் தூஷிப்பதற்கும், நியாயமேயில்லை'' என்றார் (இங்கே ராமனுடைய அவதார ரஹஸ்யம் வெளிப்படுகிறது. இது வெகு முக்கியமான விஷயம்).

பிறகு பரதன் அந்த மஹரிஷியை பிரதக்ஷிண நமஸ்காரம் செய்து அவரால் ஆசீர்வதிக்கப்பட்டுத் தன் பரிவாரங்களைப் புறப்படும்படி கட்டளையிட்டான். சிலர் தங்கத்தால் அலங்கரிக்கப்பட்டு உத்தமமான குதிரைகள் பூட்டின ரதங்களில் பிரயாணம் செய்தார்கள்; சிலர் தங்கச் சங்கிலிகளாலும் கொடிகளாலும் மதுரமாக ஒலிக்கும் மணிகளாலும் அலங்கரிக்கப்பட்டு கோடைகாலத்தின் முடிவில் ஆகாசத்தில் தோன்றும் மேகங்களைப்போன்ற யானைகளின் மேலும் யானைக்குட்டிகளின் மேலும் பிரயாணம் செய்தார்கள். சிலர் விசித்திரமான பல்லக்கு முதலிய வாகனங்களில் சென்றார்கள். காலாட்கள் நடந்துபோனார்கள். கௌஸல்யை முதலிய ராஜஸ்த்ரீகள் ராமனைப் பார்க்க ஆசைகொண்டு அவர்களுக்குத் தகுந்த வாகனங்களில் அதிக வேகமாக பிரயாணம் செய்தார்கள். வஸிஷ்டருடைய அனுமதியால் பரதன் தன் பரிவாரங்களுடன் ஸூரிய சந்திரர்களைப்போல் பிரகாசிக்கும் ஒரு பல்லக்கில் போனான். அந்த ஸைன்யம் தென்திசையாகப் பிரயாணம்செய்து, கங்கைக்குத் தெற்கிலுள்ள வனங்களையும் மலைகளையும் நதிகளையும் தாண்டி, அங்குள்ள மிருகங்களையும் பக்ஷிகளையும் ஜனங்களையும் பயத்தால் மிரளச் செய்துகொண்டு, ஒரு பெரிய மேகம் ஆகாசத்தில் வரவரப் பரவுவதுபோல், ராமன் இருக்குமிடத்திற்குப் போயிற்று.



ஸா ஸம்ப்ரஹ்ருஷ்ட த்3விஜ வாஜியோதா4
வித்ராஸயந்தீ ம்ருக3பக்ஷி ஸங்கா4ந் |
மஹத்3வநம் தத் ப்ரதி கா3ஹமாநா
ரராஜ ஸேநா ப4ரதஸ்ய தத்ர || (40)

---

## ஸர்க்கம் 93

# பரதன் ராமனிருக்குமிடத்தைத் தேடியது

---

தயா மஹத்யா யாயிந்யா த்4வஜிந்யா வநவாஸிந: |
அர்தி3தா யூத2பா மத்தா: ஸயூதா2: ஸம்ப்ரது3த்3ருவு: || (1)

**வ**ழியிலுள்ள மிருகங்கள் அந்த உபத்திரவத்தைத் தாங்கமுடியாமல் கூட்டம் கூட்டமாகத் தங்களுடைய தலைவர்களுடன் வேறு வனங்களுக்கு ஓடிவிட்டன. கரடிகளும் கலைமான்களும் கறுப்புச் சாரலையுடைய கலைமான்களும் ஆற்றங்கரையிலுள்ள மலைகளிலும் காடுகளிலும் மந்தை மந்தைகளாகக் காணப்பட்டன. அலைகளால் கொந்தளிக்கும் ஸமுத்திரத்தைப்போலும் மழைகாலத்து மேகங்களைப்போலும் பரதனுடைய ஸைன்யம் யானை குதிரை ரதம் காலாட்கள் வாஹனங்கள் இவைகளால் பூமியை மறைத்தது. இப்படிப் பரதன் வெகு ஆவலுடன் பிரயாணம் செய்து, வாகனங்கள் கூட்டத்தைப் பார்த்து வஸிஷ்ட பகவானை நோக்கி, "ஸ்வாமி! பரத்வாஜ மஹரிஷி சொன்னஇடம் இதே என்று தோன்றுகிறது. இதோ சித்திரகூடமலை தெரிகிறது. இதோ மந்தாகினி நதி. இதோ தூரத்தில் கறுத்த மேகம் போன்ற காடு காணப்படுகிறது. மலைத் தாழ்வரைகளில் மலைகளைப்போன்ற நமது யானைகள் சிரமமில்லாமல் ஏறிக்கொண்டிருப்பதைப் பாருங்கள். மேகங்கள் மழையைப் பொழிவதைப்போல், மரங்கள் ஸைன்யங்களால் அசைக்கப்பட்டு மலர்களை உதிர்ப்பதைப் பாருங்கள். சுறு மீன்கள் ஸமுத்திரத்தில் துள்ளி விளையாடுவதைப்போல், இந்த மலையில் மான்கள் நான்கு புறத்திலும் துள்ளி விளையாடுவதைப் பாருங்கள். சத்ருக்னா! இது கின்னரர்கள் வஸிக்குமிடம். சரத்காலத்தில் காற்றிற்கு முன்னே ஓடும் வெளுத்த மேகங்களைப்போல் மான்கள் நமது ஸைன்யங்களால் துரத்தப்பட்டு ஓடுவதைப் பார். நமது யுத்த வீரர்கள்

மேகங்களைப்போல் கறுத்த கேடயங்களுடன் தென்னாட்டில் வஸிக்கும் ஜனங்களைப்போல் தலைமயிரைத் தூக்கி முடிந்து அவைகளைப் புஷ்பங்களால் அலங்கரித்துக்கொள்ளுகிறார்கள். இதுவரையில் கோரமாயும் ஜனஸஞ்சாரமில்லாமலும் சப்தமற்றும் இருந்த இந்த வனம் இப்பொழுது அயோத்யையைப்போல் ஸகல ஸைன்யங்களால் விளங்குகிறது. மிருகங்களின் குளம்புகளால் கிளப்பப்பட்ட புழுதி ஆகாசத்தை மறைக்கிறது. ‘இவன் ராமனுடைய ஆசிரமத்தைக் கண்டுபிடிக்க வேண்டுமென்று தூரதேசத்திலிருந்து மிகவும் சிரமப்பட்டு வந்திருக்கிறான். நாம் கூடியவரையில் இவனுக்கு உதவி செய்யவேண்டும்’ என்ற எண்ணத்துடன் காற்று அதை உடனே அடித்துக்கொண்டுபோகிறது. ஸாரதிகள் உத்தமமான குதிரைகள் பூட்டிய ரதங்களை இந்த வனத்தில் வேகமாக ஓட்டுவதைப் பார். தபஸ்விகள் வஸிக்கத் தகுந்த இந்த ஸ்தலம் ஸ்வர்க்கம்போல் வெகு ரமணீயமாக இருக்கிறது. புள்ளிமான்கள் ஆணும் பெண்ணுமாகப் புஷ்பங்களால் அலங்கரிக்கப்பட்டன போல் காடுகளில் ஓடும் அழகைப் பார். நமது ஸைன்யம், அந்த மஹா புருஷர்களிருக்குமிடம் தெரியும் வரையில் இந்த வனத்தில் தேடட்டும்'' என்றான்.

அவருடைய உத்திரவுப்படி சில வீரர்கள் ஆயுதபாணிகளாக அந்த வனத்தில் புகுந்து தேடிக்கொண்டிருக்கையில் ஓரிடத்தில் புகை கிளம்புவதைக் கண்டார்கள். உடனே பரதனிடத்திற்கு ஓடி வந்து, ‘‘ஸ்வாமி! மனுஷ்யர்களில்லாத இடத்தில் புகை உண்டாக நியாயமில்லை. ராமலக்ஷ்மணர்கள் அவ்விடத்தில் வஸிக்கிறார்களென்று தோன்றுகிறது. அப்படியில்லாவிட்டாலும் வேறு யாராவது தபஸ்விகளிருப்பார்கள். அவர்களைக் கேட்டாவது தெரிந்து கொள்ளலாம்'' என்று தெரிவித்தார்கள். உடனே பரதன் ‘‘நமது ஸைன்யம் இங்கேயே நிற்கட்டும். நான் சொல்லி அனுப்பின உடன் புறப்படத்தயாராக இருக்கவேண்டும். நானும் ஸுமந்திரரும் வஸிஷ்ட மஹரிஷியும் முன்னே போகிறோம்'' என்று கட்டளையிட்டு அந்தப் புகையைக்கண்ட இடத்தை நோக்கிப் போனான். ஸைன்யங்களும் அவ்விடத்தையே பார்த்துக்கொண்டு, ‘‘ராமன் இருக்குமிடத்தை அதி சீக்கிரத்தில் பரதன் கண்டுபிடிப்பான்; நாம் ரகுநாதனைத் தரிசனம் செய்து நமது துக்கத்தைப் போக்கிக்கொள்ளலாம்'' என்று ஆனந்தப்பட்டுக் கொண்டிருந்தார்கள்.

வ்யவஸ்தி$^2$தா யா ப‘ரதேந ஸா சமூ :
நிரீக்ஷமாணாபி ச தூ$^4$மமக்$^3$ரத: |
ப$^3$பூ$^4$வ ஹ்ருஷ்டா ந சிரேண ஜாநதீ
ப்ரியஸ்ய ராமஸ்ய ஸமாக$^3$மம் தத$^3$ா ‖ (27)

---



## ஸர்க்கம் 94

## சித்திரகூடத்தின் அழகு

தீ$^3$ர்க‘ காலோஷிதஸ் தஸ்மிந் கி$^3$ரௌ கி$^3$ரிவநப்ரிய: |
வைதே$^3$ஹ்யா: ப்ரியமாகாங்க்ஷந் ஸ்வம்ச சித்தம் விலோப‘யந் (1)

இப்படியிருக்கையில் ராமலக்ஷ்மணர்களும் ஸீதையும் சித்திரகூட மலையில் ஒருமாதம் வரையில் ஸுகமாக வஸித்தார்கள். பிறகு ஒரு நாள் ராமன் ஜானகியை ஸந்தோஷப்படுத்தவும் அதைப் பார்த்துத் தான் ஸந்தோஷப்படவும் சித்திரகூடத்தின் அழகையும் விசேஷங்களையும் அவளுக்குக் காட்டினார். அங்கே அவர்கள் பல தினங்கள் வரையில் வஸித்தும் அப்பொழுதுதான் பார்த்ததுபோல் ஆச்சரியமும் ஸந்தோஷமும் உண்டாயிற்று. தேவதைகளுக்கு நாதனான ராமனுக்கு எங்கேயாவது பயமுண்டா? தேவேந்திரன் இந்திராணியுடன் தேவலோகத்தில் வனங்களிலும் தோட்டங்களிலும் வேடிக்கையாக ஸஞ்சரிப்பதுபோல், ராமன் ஸீதையுடன் அந்த மலைகளிலும் தாழ்வரைகளிலும் வனங்களிலும் ஸஞ்சரித்துக் கொண்டிருந்தார். ‘‘ஸீதே! இந்த அழகான மலையில் வஸிக்க ஆரம்பித்த பிறகு நாம் ராஜ்யத்தை விட்டு வந்தோமென்பதும் பந்துக்களையும் மித்திரர்களையும் பார்க்க முடியவில்லையே என்பதும் எனக்குக் கொஞ்சமும் துக்கமில்லை. பிராணப்ரியே! இந்தச் சித்திரகூடத்தின் அழகைப்பார். பல பக்ஷிகளால் முற்றிலும் நிறைந்துள்ளது. சிகரங்கள் ஆகாசத்தை அளாவுகின்றன. பல தாதுக்களால் நிறைந்து அளவற்ற ஐசுவரியத்துடன் விளங்குகிறது. சில இடங்கள் வெள்ளியைப்போல் வெளுத்திருக்கின்றன. சில இடங்கள் ரத்தத்தைப் போல் சிவந்திருக்கின்றன. சில இடங்கள் இந்திரநீலம் புஷ்பராகம் ஸ்படிகம் பாதரஸம் இவைகளின் நிறத்தைப்போலும், சில இடங்கள் வெளுப்பும் கறுப்பும் கலந்த நிறத்துடனும் காணப்படுகின்றன. பலவகை மான்களும் புலி கரடி சிறுத்தை முதலிய துஷ்ட மிருகங்களும், பலவகைப் பக்ஷிகளும் மஹரிஷிகள் இங்கே வஸிப்பதால் தங்கள் குரூரஸ்வபாவத்தை விட்டு, சாந்தமாக ஸஞ்சரிக்கின்றன. மா, நாவல், வேங்கை, வெள்ளலொத்தி, முரளை, பலா, தவம், அழுஞ்சில், பவ்யம், தினிசி, பில்வம், பச்சிலை, மூங்கில், கொம்மட்டி, வேம்பு, மாவலிங்கை, இலுப்பை, மஞ்சாடி, இலந்தை, கடம்பு, பிரம்பு, மருதை, மாதுளை முதலிய மரங்கள் நேர்த்தியான புஷ்பங்களோடும் பழங்களோடும் குளிர்ந்த நிழலைக்கொடுத்துக் கொண்டு இந்த மலையை அலங்கரிக்கின்றன. தாழ்வரைகளில் கின்னரர்கள் ஆணும் பெண்ணுமாக வெகுப் பிரீதியுடன் விளையாடிக்கொண்டிருப்பதைப் பார்க்கும்பொழுதே நமக்கும் மயிர்க்கூச்சல் உண்டாகிறது. அதோ பார்; வித்தியாதரீகள் விளையாடும் இடங்களில் புருஷர்களின் ஆயுதங்களும் ஸ்த்ரீகளின் ஆடைகளும் மரங்களில் கட்டித் தொங்கவிடப் பட்டிருக்கின்றன. இந்த மலை, ஊற்று

களாலும் அருவிகளாலும், மதம் பெருகும் ஒரு பெரிய யானையைப் போல் தோன்றுகிறது. பலவித புஷ்பங்களின் மணத்தைக் கவர்ந்து கொண்டு குகைகளிலிருந்து அடிக்கும் காற்று யாருக்குத்தான் ஆனந்தத்தை உண்டாக்காது.

இங்கே உன்னோடும் லக்ஷ்மணனோடும் பல வருஷங்களிருந்தாலும் துக்கமென்பதே எனக்குத் தோன்றாது. பலவித புஷ்பங்களாலும் பழங்களாலும் மிருகங்களாலும் பக்ஷிகளாலும் மரங்களாலும் கொடிகளாலும் மறைந்த இந்த மலையில் இருக்க இருக்க எனக்கு ஆனந்தம் அதிகமாகிறது. நான் வனவாஸம் செய்வதால் இரண்டு வகைப் பிரயோஜனம் ஏற்படுகிறது. என் மனத்திற்கு மிகுந்த ஸுகமும் பிதிரு வாக்ய பரிபாலனம் செய்த திருப்தியும், பரதனுக்கு மிகுந்த ஸந்தோஷமும் கிடைக்கின்றன. ஸீதே! இந்தச் சித்திரகூட மலையில் என்னுடன் இருந்துகொண்டு, மனம் வார்த்தை தேகம் இம்மூன்றையும் அடக்கிக்கொண்டு, தென்றல் காற்று கோகிலத்தின் த்வனி, வண்டுகளின் ரீங்காரம், புஷ்பங்களின் மலர்ச்சி முதலிய விநோதங்களை அனுபவித்து ஸந்தோஷப்படுகிறாயா? இப்படி வனத்தில் வானப்பிரஸ்தர்களின் தர்மத்தை அனுஸரிப்பது கேவலம் இவ்வுலகத்தில் மாத்திரம் ஸந்தோஷத்தைக் கொடுக்கக் கூடியதல்ல. வனவாஸமென்பது ஸ்வர்க்கம் மோக்ஷம் முதலிய உத்தமபலன்களைக் கொடுக்குமென்று இக்ஷ்வாகு வம்சத்து ராஜரிஷிகள் சொல்லி இருக்கிறார்கள். இந்த மலையில் நாற்புறத்திலும் கணக்கில்லாத கற்பாறைகள் விசாலமாகவும் கறுப்பு வெளுப்பு மஞ்சள் முதலிய வர்ணங்களோடு கூடியும் காணப்படுகின்றன. இங்கே உண்டாகும் மஹிமையுள்ள ஒஷதிகள், ராத்திரி காலங்களில் அவைகளிலிருந்து கிளம்பும் பிரகாசத்தால் நெருப்புக் கொழுந்துகளைப் போல் ஜ்வலிக்கின்றன. சில இடங்கள் அனேக குகைகளால் நிறைந்திருப்பதால் வீடுகளைப் போலும், சில இடங்கள் மரங்களாலும் கொடிகளாலும் நிறைந்திருப்பதால் தோட்டங்களைப் போலும், சில இடங்கள் ஒரே கற்பாறையாகவும் இருக்கின்றன. இந்த மலை பூமியைப் பிளந்துகொண்டு ஆகாசத்தில் தாவுவது போலிருக்கிறது. இதன் சிகரம், நாற்புறங்களிலும் வெகு தூரத்திலிருந்து தெரிகிறது. கிமாநெல்லி, சரப்புன்னை, ஸ்தகரம், பூர்ஜபத்ரம் இவைகளின் இலைகளால் மறைக்கப்பட்டுத் தாமரை இதழ்கள் பரப்பப்பட்ட படுக்கைகள் ஸ்வபாவமாகவே அமைந்திருப்பதைப் பார். இங்கே விளையாடிக் கொண்டிருந்த ஆண்பெண்களால் புஷ்பமாலைகளும் பழங்களும் அனுபவிக்கப்பட்டு நாற்புறங்களிலும் சிதறிக்கிடக்கின்றன. இந்த மலை இந்திரனுடைய ராஜதானியையும் மானஸமென்ற ஏரியையும் விட அதிக ரமணீயமாயும் அழகாயும் இருக்கிறது. உன்னோடும் லக்ஷ்மணனோடும் சிரேஷ்டமான நியமங்களை அனுஷ்டித்துக் கொண்டு, என் முன்னோர்களான ராஜரிஷிகளைப்போல் இந்த வனத்தில் இருந்தால், அயோத்யையிலிருந்து இந்தப் பூமியை



ஆளுவதாலுண்டான ஸகல ஸுகங்களையும் அனுபவித்ததுபோன்ற திருப்தியை அடைவேன்" என்றார்.

இமம் து காலம் வநிதே விஜஹ்ரிவாந்
த்வயா ச ஸீதே ஸஹ லக்ஷ்மணேந ச |
ரதிம் ப்ரபத்ஸ்யே குலத4ர்ம வர்தி4நீம்
ஸதாம் பதி2 ஸ்வைர் நியமை: பரை: ஸ்தி2தே: ‖ (27)

## ஸர்க்கம் 95

## மந்தாகினீ நதி

அத2 ஶைலாத்3 விநிஷ்க்ரம்ய மைதி2லீம் கோஸலேஶ்வர: |
அத3ர்ஶயச் சு2ப4ஜலாம் ரம்யாம் மந்தா3கிநீம் நதீ3ம் ‖ (1)

பிறகு அந்த மலையிலிருந்து இறங்கி ஸ்படிகத்தைப்போல் சுத்தமான ஜலத்தையுடைய மந்தாகினீ என்ற புண்ணியநதியை ராமன் ஸீதைக்குக் காட்டி, மலைகள் வனங்கள் மரங்கள் பறவைகள் மிருகங்கள் முதலிய விசித்திரமான பொருள்களைப் பார்த்ததாலுண்டான ஸந்தோஷத்தால், மலர்ந்த செந்தாமரைப் புஷ்பத்தைப் போல் அவளுடைய முகம் விளங்குவதைக் கண்டு, ராமர், "ஸீதே! இதோ மந்தாகினீ நதியைப் பார்த்தாயா! இந்த மணற்குன்றுகள் எவ்வளவு விசித்திரமாக இருக்கின்றன! அன்னங்களும் வண்டாழ்வான்குருவிகளும் தாமரைகளுக்கு நடுவில் ஆனந்தத்துடன் விளையாடுகின்றன. புஷ்பங்களாலும் பழங்களாலும் நிறைந்த கரையிலுள்ள பலவித மரங்களால் குபேரன் ஜலக்ரீடை செய்யும் தடாகமான நளினீ என்பதையும் பழிக்கின்றது. காட்டுமிருகங்கள் கூட்டம் கூட்டமாக இறங்கி ஜலம் குடிப்பதால் கலங்கிக் குங்குமப் பூச்சைப்போன்ற இந்த ஜலம் இங்கே ஸ்நானம் செய்யவேண்டும் என்ற ஆசையை உண்டாக்குகிறது.

அதோ பார்! ரிஷிகள் ஜடை மான்தோல் முதலியவைகளைத தரித்துக்கொண்டு நியமகாலங்களில் இந்தப் புண்ணிய நதியில் நீராடுகிறார்கள். அதோ வேறு சில ரிஷிகள் கைகளை உயரத்தூக்கிக் கொண்டு கடுமையான நியமத்துடன் ஸூரியனை உபாஸிப்பதைப் பார். ஆடுகிறவர்கள் கைகளை ஆட்டிக்கொண்டு மலர்களை வாரி யிறைப்பதுபோல், அந்த மலையின் உச்சியிலுள்ள மரங்களின் கிளைகள் காற்றால் அசைக்கப்பட்டு, மலர்களையும் இலைகளையும் ஆற்று நீரில் நாற்புறங்களிலும் வாரி யிறைப்பதைப் பார். சில இடங்களில் ஜலம் சிரேஷ்டமான முத்துக்களைப்போல் சுத்தமாகஇருக்கிறது. சிலஇடங்களில் மணல் திட்டுகள் மேலே தெரிகின்றன. சில இடங்களில் ஸித்தர்கள் ஆனந்தமாக ஜலத்தில் விளையாடுவதைப் பார். சில இடங்களில் காற்று புஷ்பக்கொத்துக்களை அடித்துக் கரையில் ஒதுக்கிஇருக்கிறது. சிலஇடங்களில் புஷ்பக்கொத்துக்கள்

நடு ஜலத்தில் மிதந்து போகின்றன. அம்மலர்க்குவியலில் அமர்ந்து சக்கரவாகபக்ஷிகள் இனிமையான குரலுடன் தங்கள் பேடுகளை விளையாடுவதற்காக அழைப்பதைப் பார்.

கபடமற்றவளே! நகரத்தில் வஸிப்பதைவிட இந்தச் சித்திர கூட மலையைப் பார்ப்பது இன்பமல்லவா? பட்டணத்திலிருப்பதைவிட நாம் ஏகாந்தமாக அனுபவிக்கக்கூடிய இந்தச் சித்திரகூட மலையில் வஸிப்பது மிகுந்த ஸுகத்தைக் கொடுக்கிறதல்லவா? உன்னைப் பார்ப்பதைவிட இந்த மந்தாகினி நதியைப் பார்ப்பது எனக்கு ஆசையை விருத்தி செய்கிறது. இந்திரியங்களையும் அந்தக் கரணத்தையும் அடக்கிக் கடுமையான தவத்தைச் செய்யும் பாப மற்ற ஸித்தர்களும் ஒவ்வொருநாளும் இங்கே நீராடுகிறார்கள். அவர்களின் பாததூளியால் இது மிகவும் பரிசுத்தமாகிறது. இங்கே நாம் இருவரும் இறங்கி நீராடுவோம். அதற்கு வேண்டிய பொருள்கள் ஸித்தமாக இருக்கின்றன. பயத்தையும் வெட்கத்தையும் விட்டு, உன் தோழிகளுடன் விளையாடுவதுபோல் என்னுடன் இந்நதியில் விளையாடு. உன்னால் உண்டாகும் அலைகள் இந்த ஆற்றில் அடர்ந்திருக்கும் செந்தாமரை வெண்தாமரை மலர்களை ஜலத்தில் மறையச்செய்வதைப் பார்ப்பாய். நீ இதுவரையில் அயோத்யையிலிருக்கும் ஜனங்களிடத்தில் வைத்த ப்ரீதியை இங்கே ஸஞ்சரிக்கும் மிருகங்களிடத்தில் வை. இந்த மலையே அயோத்யை என்று நினை. இந்த மந்தாகினியே ஸரயூநதி என்று எண்ணு.

தர்மாத்மாவான லக்ஷ்மணன் என் இஷ்டப்படி நடப்பவன்; நீயும் எனக்கு அனுகூலமாகஇருப்பவள். பிரியமான தம்பியையும் அனுகூலமான மனைவியையுமுடைய ஒருவனுக்கு இந்த லோகத்தில் வேறு ஸுகம் வேண்டுமா? மூன்று காலங்களிலும் புண்ணியதீர்த்தங்களில் நீராடிக்கொண்டு தேன் பழங்கள் கிழங்குகளை உண்டு. உன்னுடன் காடுகளிலிருக்கும்வரையில் அயோத்யையையும் நினைக்க மாட்டேன்; ராஜ்யத்தையும் நினைக்கமாட்டேன். இந்த மந்தாகினியின் கரையில் மிருகங்கள் கூட்டம் கூட்டமாக நடமாடுவதையும், யானைகளும் சிங்கங்களும் குரங்குகளும் மஹரிஷிகளின் தபோபலத்தால் தங்களுக்கு ஸ்வபாவமான விரோதத்தையும் மறந்து ஒரே துறையில் நீர் குடிப்பதையும், அதன் கரையில் புஷ்பங்களாலும் பழங்களாலும் அலங்கரிக்கப்பட்ட மரங்களையும் பார்த்து, ஸகல சிரமும் தீர்ந்து எவன்தான் ஆனந்தத்தை அடையமாட்டான்'' என்று மந்தாகினியைப் பலவிதமாக வர்ணித்துச் சித்திரகூடத்தின் தாழ்வரைகளில், மைபோல் கறுத்த காடுகளில் ஸீதையுடன் ஸஞ்சரித்தார்.

இதீவ ராமோ ப³ஹு ஸங்க³தம் வச:
ப்ரியாஸஹாய: ஸரிதம் ப்ரதி ப்³ருவந் |
சசார ரம்யம் நயநாஞ்ஜந ப்ரப⁴ம்
ஸசித்ரகூடம் ரகு⁴வம்ஶ வர்த⁴ந: ‖ (19)



## ஸர்க்கம் 96
## பரதனுடைய சேனையைக் கண்டு லக்ஷ்மணன் கோபித்தது

தாம் ததா² த³ர்ஶயித்வா து மைதி²லீம் கி³ரி நிம்நகா³ம் |
நிஷஸாத³ கி³ரிப்ரஸ்தே² ஸீதாம் மாம்ஸேந ச²ந்த³யந் ‖ (1)

இப்படி மந்தாகினியின் விசித்திரங்களை ஸீதைக்குக் காட்டி பிறகு ராமன் அந்த மலைச்சாரலில் ஓரிடத்தில் உட்கார்ந்து, "ஸீதே! இதோ ருசியுள்ள உணவுப்பண்டம் இருக்கிறது பார். இதை உண்பாயாக'' என்றுகூறி தான் முதலில் ருசிபார்த்த அந்தபண்டங்களை ஸீதைக்குக் கொடுத்து அவளை ஸந்தோஷப்படுத்தினார்.

அவர்கள் அங்கே உட்கார்ந்துகொண்டிருக்கும்பொழுது பரதனுடைய ஸைன்யம் அவ்விடத்திற்கு வந்து, அதனாலுண்டான புழுதியும் சப்தமும் ஆகாசத்தை அளாவிற்று. அந்தப் பெருந்த சப்தத்தால் காட்டிலிருக்கும் மிருகங்கள் பயந்து கூட்டம் கூட்டமாக நான்கு மூலைகளிலும் ஓட ஆரம்பித்தன. அந்த ஸைன்யத்தால் உண்டான பெரிய ஓசை ராமனுடைய காதில் விழுந்தது. மிருகங்கள் மிரண்டு ஓடுவதையும் பார்த்தார். உடனே ஸமீபத்திலிருக்கும் மஹாவீரனை லக்ஷ்மணனை நோக்கி, "குழந்தாய்! பார்த்தாயா? மேகங்களின் ஓசையைப்போல் கம்பீரமான ஒரு சப்தம் கேட்கப்படுகிறது. மிகவும் பயங்கரமாக இருக்கிறதல்லவா? அடர்ந்த காடுகளிலுள்ள யானைகளும் எருமைகளும் சிங்கங்களால் துரத்தப்பட்டு இப்படி நான்கு திக்குகளிலும் ஓடுகின்றனவா? பார். அரசனோ அவனைப் போன்றவனோ வேட்டையாடுகிறானா? புலி முதலிய துஷ்ட ஜந்துக்கள் மற்ற மிருகங்களை வேட்டையாடிக்கொல்கின்றனவா? இந்தப் பர்வதத்தில் இப்பொழுது பக்ஷிகளும் பறக்க முடியாதபடி குழப்பம் உண்டாகி இருக்கிறது. இதைப் பற்றின விஷயங்கள் யாவற்றையும் சீக்கிரமாகத் தெரிந்து கொண்டுவா'' என்றார்.

உடனே லக்ஷ்மணன் புஷ்பங்கள் நிறைந்த ஒரு ஆச்சாமரத்தில் ஏறி அங்கிருந்து நான்கு திக்குகளிலும் பார்க்கையில், வடக்கில் ரத கஜ துரக பதாதிகளுடன் ஒரு பெரிய ஸைன்யம் வருவதைக் கண்டு, "ஸ்வாமி! நெருப்பை அணைத்துவிடுங்கள்; நாமிருக்கும் இடத்தைப் புகையால் கண்டுபிடிப்பார்கள். ஸீதையைக் குகைக்கு அழைத்துப் போங்கள். சீக்கிரமாக ஆயுதங்களைத் தரித்துக் கொள்ளுங்கள்'', என்று எச்சரித்தார்.

ராமன், "குழந்தாய்! இது யாருடைய ஸைன்யமென்று உனக்குத்தோன்றுகிறது?'' என்றார். லக்ஷ்மணன் கோபம் கொண்டு நெருப்பைப்போல் அந்த ஸைன்யத்தைப் பார்வையால் எரித்துக்

கொண்டு, "கைகேயியின் மகனுன பரதன் அவளுடைய இஷ்டப்படி ராஜ்யத்தைப் பெற்றிருக்கிறுன். நாம் இருவரும் அதற்குப் பாகஸ்தர்கள். நாம்இருக்கும்வரையில் அபாயம்நேருமென்று நினைத்து நம்மைக் கொன்றுவிட்டுக் கவலையில்லாமல் ராஜ்யத்தை அனுபவிக்கலாமென்று இங்கே வருகிருனென்று நினைக்கிறேன். பாருங்கள்; விஸ்தாரமான கிளைகளோடு கூடின கோவிதாரமரம் எழுதப்பட்ட கொடி அந்த ரதத்தின் மேல் பிரகாசிக்கிறது. சிலர் வேகமான குதிரைகளில் ஏறிக்கொண்டும், சிலர் மலைகளைப் போன்ற யானைகளில் ஏறிக்கொண்டும் ஸந்தோஷத்தோடு இவ்விடத்தை நோக்கி வந்துகொண்டிருக்கிறுர்கள். நாம் மலையிலிருந்தே அவர்களுடன் யுத்தம் செய்வோமா? அல்லது இங்கேயே ஆயுதபாணிகளாக நிற்போமா? அந்தக் கோவிதாரக் கொடியை இன்றைக்கு யுத்தத்தில் நாம் பிடுங்கிக்கொள்ளவேண்டும். நம் எல்லோருக்கும் இவ்வளவு கஷ்டத்தை உண்டுபண்ணிய பரதன் இன்றுதான் என் கண்ணில் பட்டான். தங்களுக்குச் சாசுவதமாகக் கிடைக்கவேண்டிய ராஜ்யத்திலிருந்து எவனுக்காகத் தாங்கள் துரத்தப்பட்டீர்களோ அந்தப் பரமசத்துரு இதோ வருகிறுன். இன்றைக்கு நான் அவனைக் கொல்லாமல் விடுவதில்லை. முன்னமேயே அவன் நமக்குப் பெரும் அபகாரத்தைச் செய்தவன். அவனைக் கொல்வது அதர்மமல்ல. அவனைக் கொன்றுல் தோஷமுமில்லை. தர்மத்திற்கு விரோதமாக நடந்த பெரும் பாபி. அவனைக் கொன்றுல் உபத்திரவமில்லாமல் இந்தப் பூமி முழுவதையும் தாங்கள் ஆளலாம். கைகேயி தன் மகனுக்கு இந்த ராஜ்யம் கிடைக்கவேண்டுமென்று விரும்பி இவ்வளவு அக்கிரமம் செய்தாளல்லவா? இருக்கட்டும். மதம் பிடித்த யானை மரத்தை ஒடித்துத் தள்ளுவதுபோல், இன்று அவளுடைய மகனை அவள் கண்ணுக்கெதிரில் கொன்று அவளைக் கதறஅடிக்கிறேன். இது மாத்திரமா? அவளையும் அவளுடைய பந்துக்களையும் மந்தரை முதலிய அவளுடைய பரிவாரங்களையும் உயிரோடு வைக்கிறதில்லை. இந்தப் பெரும் பாபம் பூமியிலிருந்து விலகட்டும். என் மனத்திலுள்ள கோபத்தையும் வெறுப்பையும் இதுவரையில் அடக்கி வைத்துக்கொண்டிருந்தேன். உலர்ந்த புல்தரைகளில் காட்டுத்தீ பாய்வதுபோல், பரதனுடைய ஸைன்யத்தின்மேல் என் கோபாக்னியைப் பாணங்களின் ரூபமாக விடுகிறேன். சத்துருஸைன்யத்தை என் பாணங்களால் பிளந்து, இந்தச் சித்திரக்கூடத்திலுள்ள காடுகளில் ரத்தவெள்ளம் ஓடச் செய்கிறேன். என் பாணங்களால் சிதைக்கப்பட்டுக் கிடக்கும் யானைகளையும் குதிரைகளையும் மனிதர்களையும் இங்கிருக்கும் காட்டு மிருகங்கள் ஸந்தோஷமாக இழுத்துக் கொண்டுபோய்த் தின்னும். தாங்கள் என் மனத்தைக் கெடுக்கக் கூடாது. என் சக்தியையும் பராக்கிரமத்தையும் தாங்கள் இதுவரையில் பார்த்ததில்லையா? நான் எப்பொழுதாவது யுத்தத்திற்குப் போய் ஜயமில்லாமல் திரும்பினதுண்டா? என் பாணங்களுக்கு



சத்துரு ஸைன்யத்தை இரையாகக் கொடுக்காமல் என் வில்லிடத்திலும் அம்புகளிடத்திலும் எப்பொழுதாவது நான் கடன்பட்டதுண்டா? இதுவரையிலுமில்லாமல் இன்று நடக்கும் யுத்தத்தில் கடன்படுவேனு? எனக்கு அனுமதி கொடுங்கள். பரதனையும் அவனுடைய ஸைன்யத்தையும் இருந்த இடம் தெரியாமல் அடிக்கிறேன்'' என்றுன்.

*ஶராணும் த'நுஷஶ்சாஹ மந்ருணேஸ்மி மஹாம்ருதே' |*
*ஸஸைந்யம் ப'ரதம் ஹத்வா ப'விஷ்யாமி ந ஸம்ஶய : ॥ (31)*

---

## ஸர்க்கம் 97

# ராமன் லக்ஷ்மணனை அடக்கினது

---

*ஸுஸம்ரப்3த4ம் து ஸௌமித்ரிம் லக்ஷ்மணம் க்ரோத4மூர்ச்சி2தம் |*
*ராமஸ்து பரிஸாந்த்வ்யாத2 வசநம் சேத3 மப்3ரவீத் ॥ (1)*

**கோ**பத்தால் மெய்மறந்து யுத்தம் செய்ய ஆவலாயிருக்கும் லக்ஷ்மணனை ஸமாதானம் செய்ய விரும்பி ராமன், "குழந்தாய், லக்ஷ்மணு! பரதனே மஹா புத்திமான்; மஹாவீரன். நம்முடன் யுத்தம் செய்ய உத்தேசித்து வேறொருவரை அனுப்பாமல் அவனே நேரில் வரும்பொழுது ஆயுதங்களால் என்ன பிரயோஜனம்? 'தசரதர் பரதனுக்கு பிரியமாக ராஜ்யத்தைக் கொடுத்தார். ராமன் தனக்கு ராஜ்யம் கிடைக்கவில்லை என்ற ஆத்திரத்தால் பரதனைக் கொன்றுவிட்டு அந்த ராஜ்யத்தைக் கைப்பற்றிக் கொண்டான்' என்ற லோகாபவாதமும் எனக்கு வேண்டுமா? 'பரதனுக்கு இந்த ராஜ்யத்தைக் கொடுக்கிறேன், ராமனைக் காட்டிற்கு அனுப்புகிறேன்' என்று தசரதர் கைகேயிக்குக் கொடுத்த வரங்களை நிறைவேற்றி என் பிதாவை ஸத்தியம் தவருதவராகச் செய்வேன்' என்று பிரதிக்ஞை செய்திருக்கிறேன். இப்பொழுது பரதனை யுத்தத்தில் கொன்றுல் அந்த ராஜ்யத்தை வைத்துக்கொண்டு நான் என்ன செய்யட்டும்? என் பந்துக்களையாவது மித்திரர்களையாவது கொன்று அதனுல் கிடைக்கும் திரவியம் எனக்கு வேண்டாம். விஷம்கலந்து செய்யப்பட்ட பக்ஷ்யங்களை எவனுவது கண்ணெடுத்துப் பார்ப்பானு? தர்மார்த்த காமமென்ற புருஷார்த்தங்களையும் இந்தப் பூமியையும் என்னுடன் பிறந்த உங்களுக்காகவே தேடுகிறேன். இது ஸத்தியம். நீங்கள் அளவற்ற ஐசுவரியத்தை அடைந்து ஸகல ஸௌக்கியங்களையும் அனுபவிக்க வேண்டுமென்ற காரணத்தால் இந்த ராஜ்யம் வேண்டுமென்று விரும்புவேனே தவிர வேறல்ல. நான் வைத்திருக்கும் ஆயுதங்களைத் தொட்டு பிரமாணம் செய்கிறேன். இந்த பூமி எனக்குக் கிடைக்காதென்பதில்லை. ஆனுல் அதர்மத்தைச் செய்து இந்தப் பதவி எனக்குக் கிடைக்கிறதாயிருந்தால் வேண்டாம். பரதனையும் உன்னையும் சத்ருக்னனையும் விலக்கி நான்

மாத்திரம் ஏதாவது ஸுகத்தை அனுபவிக்கவேண்டுமென்று விரும்பினுல் அந்த ஸுகம் சாம்பலாகட்டும்.

இதிருக்கட்டும். பரதன் இப்பொழுது இங்கே வரும் காரணம் இப்படியிருக்கலாம். தன் அம்மான் வீட்டிலிருந்து அயோத்யைக்கு வந்து அங்கே நடந்தவைகளைக் கேள்விப்பட்டு, நாமெல்லோரும் தபஸ்விகளாய் இந்தக்காட்டில் வஸிக்கிறோமென்று ஸுமித்திரையால் தெரிந்து கொண்டிருக்கலாம். பரதன் என்னிடத்தில் மிகுந்த பிரீதியுள்ளவன். அவனிடத்தில் எனக்கு என்னுயிரைக் காட்டிலும் மிக்க பிரீதியுண்டு. நமது குலத்தில் மூத்தவனுக்கே ராஜ்யம் கிடைத்துவருகிறதென்று அவனுக்கு நன்ருகத் தெரியும். நான் காட்டில் கஷ்டப்படுகிறேனென்று கேட்கப் பொறுக்கமாட்டான். ஆகையால் அவன் நம்மை அயோத்யைக்கு அழைத்துப்போக வருகிருனே தவிர, நம்மிடத்தில் விரோதபுத்தியுடன் வருவதாகத் தோன்றவில்லை. கைகேயியிடத்தில் மிகவும் கோபித்துக்கொண்டு கடுமையான வார்த்தைகளைச் சொல்லியிருப்பான். நமது பிதாவை எப்படியாவது பிரார்த்தித்து ஸம்மதிக்கச்செய்து இந்த ராஜ்யத்தை எனக்குக் கொடுக்க இங்கே வருகிருன்.

பரதன் நம்மைப் பார்க்க விரும்புவது இந்த ஸமயத்திற்கு உசிதமானதே. நமக்குக் கெடுதியைக் கனவிலும் நினைக்கமாட்டான். பரதனிடத்தில் நீ ஸந்தேகப்படுகிருயே. இதுவரையில் அவன் உனக்கு ஏதாவது கெடுதி செய்ததுண்டா? அல்லது நீ இப்பொழுது சொன்னபடி உனக்கு பயமுண்டாகும் வார்த்தைகளைச் சொன்னதுண்டா? பரதனைப்பற்றி இப்படி வெறுப்பாயும் குரூரமாயும் பேசாதே. பரதனைச் சொன்னல்,என்னைச் சொன்னதுபோல் ஆகும். இதற்கு முன் தசரதரைக் கொன்றுவிடுகிறேன் என்று கிளம்பினுய் இப்பொழுது பரதனைக் கொன்றுவிடுகிறேன் என்கிருய். இனிமேல் சும்மா இருந்தால் பெரிய அனர்த்தம் விளையும். இந்த குரூரபுத்தியை எப்படியாவது அடக்கவேண்டும். ஒருவனுக்கு எந்த ஆபத்துத்தான் நேரட்டும், பெற்ற தகப்பனைக் கொல்வானு? தன்னைக் காட்டிலும் வேறல்லாத உடன் பிறந்தவனைக் கொல்வானு?

உனக்கு இந்த ராஜ்யம் வேண்டுமென்று இப்படிச் சொல்கிருயா என்ன? பரதன் வரட்டும். 'இந்த ராஜ்யத்தை லக்ஷ்மணனுக்குக் கொடு என்று சொல்லி வாங்கித்தருகிறேன். 'பரத! நீ இந்த ராஜ்யத்தை லக்ஷ்மணனுக்குக் கொடுத்துவிடு என்று விளையாட்டாகச்சொன்னுலும் அதை நிஜமாகவே செய்துவிடுவான். மறுபடியும் அதைப்பற்றி நினைக்கவே மாட்டான்'' என்று பலவிதமாகச் சொல்லி லக்ஷ்மணனுடைய கோபத்தைத் தணித்தார்.

லக்ஷ்மணன் தர்மாத்மாவான ராமனுடைய வார்த்தையைக் கேட்டு வெட்கத்தால் அவயவங்கள் குன்றி அடங்கினுர். ஆனுல் தன் லாபத்தை உத்தேசித்து இப்படிச் சொன்னவரல்ல. ராமனுடைய நன்மையை உத்தேசித்தே, அவருக்கு யாதொரு அபாயமும் நேரக்கூடாதென்றே, காரணமில்லாமலிருந்தும் பரதனிடத்தில் பயந்தார். (ஒருவனிடத்தில் நாம் அளவற்ற பிரீதி வைத்து விட்டால் அவனுக்கு யாரால் கெடுதி நேருமோ என்று எல்லோரிடத்திலும் ஸந்தேகப்படுவது மனுஷ்யஸ்வபாவம்). உலகத்தில் ஒருவன் சொன்ன வார்த்தை பயனில்லாமல் போனுல் அதை மாற்றுவது போல், லக்ஷ்மணன் வெட்கப்பட்டு, "நமது பிதாவே தங்களை அழைத்துப்போக வருவதாய்த் தோன்றுகிறது'' என்று அந்த பிரஸ்தாபத்தை மாற்றப் பார்த்தார். பிறருடைய நோக்கத்தை அறிந்து நடப்பவர்களில் சிரேஷ்டரான ராமன் அதை அறிந்து, லக்ஷ்மணனுடைய வெட்கம் தணியட்டுமென்றே அவர் சொன்னதை ஒப்புக்கொண்டு, "ஆம், சக்கரவர்த்தியே நம்மைப் பார்க்க இங்கே வருகிறுரென்று நினைக்கிறேன். அல்லது 'நமது குழந்தைகள் செல்வமாக வளர்க்கப்பட்டவர்களல்லவா? கஷ்டத்தை அனுபவிக்கத் தகுந்தவர்களா' என்று காட்டில் நமக்கு நேரக்கூடிய துன்பங்களை நினைத்து நம்மை அழைத்துப்போக வரலாம். அல்லது, பிறந்தது முதல் மிகவும் செல்வமாகவும் ஸுகமாகவும் வளர்ந்த ஸீதை ஏன் காரணமில்லாமல் காட்டில் கஷ்டப்பட வேண்டுமென்று பச்சாத்தாபப்பட்டு அவளை அயோத்யைக்கு அழைத்துப்போக வரலாம். சக்கரவர்த்தியின் ரதத்தில் வழக்கமாகப் பூட்டப்படும் இரண்டு உத்தம ஜாதிக் குதிரைகள் வாயுவேகத்துடன் இதோ வருகின்றன. ஸைன்யங்களுக்கு முன் நமது பிதாவின் பட்டத்து யானை சத்ருஞ்ஜயன் மதத்தால் தேகத்தை ஆட்டிக்கொண்டு மலையைப்போல் இதோ நடந்துவருகிறது பார். ஆனுல் ஒன்று மாத்திரம் எனக்கு ஸந்தேகத்தை உண்டாக்குகிறது. லோகத்தாரால் விசேஷமாகப் பூஜிக்கப்பட்ட நமது பிதாவின் வெள்ளைக்குடையைக் காணேன். மரத்திலிருந்து இறங்கி வா. பரதனிடத்தில் நான் சொன்னபடி நடந்துகொள்'' என்று ராமன் எச்சரித்தார். லக்ஷ்மணனும் கைகூப்பி வணக்கமாக அவருடைய பக்கத்தில் வந்து நின்ருர்.

இதற்குள் பரதன் ராமனுடைய ஆசிரமத்திற்குத் தன் ஸைன்யத்தால் யாதொரு உபத்திரவமும் நேரக்கூடாதென்று அதை அரை யோஜனைக்கப்பால் சித்திரகூட மலையைச் சுற்றி இருபுறத்திலும் தங்கச் செய்தார். மஹாநீதிமானான பரதனுல் நடத்தப்பட்ட அந்த ஸைன்யம் கர்வத்தை விலக்கித் தர்மத்தை மறக்காமல், ராகவனுக்கு ஸந்தோஷத்தை உண்டுபண்ணுவதற்காகச் சித்திரகூட மலைச் சாரலில் தங்கியிருந்தது.

ஸா சித்ரகூடே ப⁴ரதேந ஸேநா
த⁴ர்மம் புரஸ்க்ருத்ய விதூ⁴ய த³ர்பம் ।
ப்ரஸாத³நார்த²ம் ரகு⁴நந்த³நஸ்ய
விராஜதே நீதிமதா ப்ரணீதா ॥ (31)

## ஸர்க்கம் 98

## பரதன் ராமனுடைய ஆசிரமத்தைத் தேடியது

நிவேஶ்ய ஸேநாம் து விபு4: பத்3ப்4யாம் பாத3வதாம் வர: |
அபி4க3ந்தும் ஸ காகுத்ஸ்த2 மியேஷ கு3ருவர்தகம் || (1)

இப்படி ஸைன்யத்திற்கு இடங்களை அமைத்து, தான் கால் நடையாக ராமனைப் பார்க்க ஆசைகொண்டு பரதன், "சத்ருக்னா! நீயும் இந்த வேடர்களும் நமது பரிவாரங்களும் இந்தக் காட்டில் ஓரிடம் பாக்கியில்லாமல் ஜாக்கிரதையாக இப்பொழுதே தேடப் புறப்படுங்கள். குகனும் அவனுடைய பந்துக்களும் ஆயுதபாணிகளாக ராமலக்ஷ்மணர்களிருக்கும் இடத்தைத் தேடிக் கண்டுபிடிக்கட்டும். மந்திரிகள் நகரத்து ஜனங்கள் புரோஹிதர்கள் பிராம்மணர்களுடன் நானும் கால்நடையாக இந்த வனம் முழுவதையும் தேடுகிறேன். ராமனையும் மஹாபலவானான லக்ஷ்மணனையும் மஹா பாக்கியசாலியான ஸீதையையும் பார்க்கும் வரையில் என் துக்கம் தீராது. பூர்ணசந்திரனைப் போல் அழகான என் அண்ணனுடைய முகமண்டலத்தையும் தாமரை இதழ்களைப்போல் விசாலமான நேத்திரங்களையும் நான் பார்க்கும் வரையில் என் துக்கம் தீராது. வஜ்ராயுதம் த்வஜம் தாமரை மாவெட்டி அமிருதகடம் முதலிய சக்கரவர்த்தி லக்ஷணங்களைக் காட்டும் ரேகைகளால் அலங்கரிக்கப்பட்ட என் அண்ணனுடைய திருவடிகளை என் தலையால் தாங்கும் வரையில் என் துக்கம் தீராது. என் தமயன் தனக்கு உசிதமான ஸிம்ஹாஸனத்தில் வீற்றிருந்து, சக்கரவர்த்திகளின் கிரீடத்தைத் தலையில் தரித்து, எனக்குத் தகுந்த கிரீடமான தன் திருவடிகளை என் தலையில் வைக்கும் வரையில் என் துக்கம் தீராது. நமது முன்னோர்களுடைய காலம் முதல் பரம்பரையாக வந்து கொண்டிருக்கும் இந்த ராஜ்யத்தில் என் தமயன் மஹாராஜாவாகப் புண்ணிய தீர்த்தங்களால் அபிஷேகம் செய்யப்படுவதைப் பார்த்தாலொழிய என் துக்கம் தீராது. விசாலமான நேத்திரங்களுடன் பூர்ணசந்திரனைப் போல் மஹா காந்தியுடன் விளங்கும் ராமனுடைய முகத்தை எப்பொழுதும் பார்க்கும்படியான பாக்கியத்தை லக்ஷ்மணன் செய்தானல்லவா? லோகநாதனான ராமமூர்த்தியைப் பின்தொடரும் பாக்கியம் ஸீதைக்குக் கிடைத்ததல்லவா? நந்தவனத்தில் குபேரன் வசிப்பதுபோல் சக்கரவர்த்தித்திருமகன் தன் தேசத்தைவிட்டுப் பழக்கமில்லாத தேசத்தில் வந்து வஸிக்கும்படி இந்தச் சித்திர கூடமலை என்ன பாக்கியம் செய்ததோ? ஹிமயமலையைக் காட்டிலும் இது சிரேஷ்டமாயிற்று. துஷ்ட ஜந்துக்களால் நிறைந்து மனுஷ்யஸஞ்சாரம் இல்லாத இந்தக் காடும் மஹாபுண்ணியத்தைச் செய்தது. இல்லாவிட்டால் எல்லையற்ற தேஜஸும் ஐசுவரியமும் வாய்ந்த ராமன் இங்கே வஸிப்பாரா?" என்று கூறி அதிகமா



நடந்து பழகாத பரதன், பெருங்காட்டில் புகுந்து கால் நடையாக மலைத்தாழ்வரைகளில், புஷ்பங்களோடும் பழங்களோடும் ஆகாசத்தை அளாவி வளர்ந்திருக்கும் மரங்களின் நடுவில் சென்றான்.

ராமனிடத்தில் சொல்லவேண்டிய விஷயத்தை, போகும் பொழுதே ஆலோசித்துக்கொண்டிருந்தான். சித்திரகூடமலையின் உச்சியில் அழகிய புஷ்பங்கள் நிறைந்த ஒரு ஆச்சாமரத்தின் அடியில் நின்று பார்க்கும்பொழுது ராமனுடைய ஆசிரமத்திலிருந்து கிளம்பும் புகை காணப்பட்டது. ராமன் இங்கே வஸிக்கிறாரென்று அங்குள்ள ஜனங்களால் பரதனும் அவருடைய பந்துக்களும் அறிந்து ஸமுத்திரத்தில் திசைதெரியாமல் வெகுகாலமாக அலைந்து கொண்டிருந்தவர்கள் கரையைக் கண்டதுபோல் ஆனந்தத்தால் மூர்ச்சை அடைந்தார்கள். பிறகு ஸைன்யத்தை அங்கேயே நிறுத்திவிட்டு, ஸாதுக்களால் நிறைந்த ராமனுடைய ஆசிரமத்தை நோக்கிப் பரதனும் குகனும் பரிவாரங்களுடன் போனார்கள்.

ஸ சித்ரகூடே து கி3ரௌ நிஶம்ய
ராமாஶ்ரமம் புண்யஜநோபபந்நம் |
கு3ஹேந ஸார்த4ம் த்வரிதோ ஜகா3ம
புநர் நிவேஶ்யைவ சமூம் மஹாத்மா || (18)

## ஸர்க்கம் 99

## பரதன் ராமனைத் தரிசித்தது

நிவிஷ்டாயாம் து ஸேநாயா முத்ஸுகோ ப4ரதஸ்ததா: |
ஜகா3ம ப்4ராதரம் த்3ரஷ்டும் ஶத்ருக்4ந மநுத3ர்ஶயந் || (1)

ஸைன்யங்கள் அங்கே தங்கியபின் பரதன் ராமனைத் தரிசிக்க வேண்டுமென்று ஆசைமேலிட்டு வஸிஷ்டரைப் பார்த்து, "ஸ்வாமி! ராஜபத்தினிகளைச் சீக்கிரமாக அழைத்து வாருங்கள்" என்று பிரார்த்தித்துவிட்டு, அவன் அதிவேகமாக முன்னே போனான். ராமனுடைய ஆசிரமம் ஸமீபத்திலிருப்பதற்குத் தகுந்த பல அடையாளங்களைப் போகும்பொழுது சத்ருக்னனுக்குக் காட்டிக் கொண்டே போனான். பரதனைப்போல் ஸுமந்திரரும் ராமனைத் தரிசிக்க ஆவலுள்ளவர்; ஆகையால் சத்ருக்னனுக்குப் பின்னே போனார். கொஞ்ச நேரம் கழித்துத் தபஸ்விகளின் ஆசிரமங்களுக்கு நடுவில் ராமனுடைய ஆசிரமம் காணப்பட்டது. அக்னிகாரியங்களுக்காக ஒரு பர்ணசாலையும், தன்னைப் பார்க்கவருபவர்கள் ஸுகமாக உட்கார்ந்து பேசுவதற்காக ஒரு பர்ணசாலையும் கட்டப்பட்டிருந்தன. ராத்திரியில் வெளிச்சத்தைக் கொடுக்க, விறகுகள் அதற்கு வெளியில் அடுக்கப்பட்டிருந்தன. பூஜைக்காகப் புஷ்பங்கள் பறித்து

வைக்கப்பட்டிருந்தன. தண்ணீர்த் துறைகளிலிருந்து ராமலக்ஷ்மணர்கள் ஆசிரமத்திற்கு வரும்பொழுது மார்க்கம் தெரிவதற்காகச் சிலவிடங்களில் தர்ப்பையாலும் மரவுரியாலும் மரங்களில் அடையாளம் செய்யப்பட்டிருந்தது. பனிக்காலத்தில் குளிர் காய்வதற்கு மான் எருமை முதலியவைகளின் சாணம் குப்பல்களாக அங்கங்கே சேர்த்து வைக்கப்பட்டிருந்தது.

அவைகளைப் பார்த்தவுடன் பரதனுடைய முகத்தில் மிகுந்த காந்தி விளங்கிற்று; மனத்தில் ஸந்தோஷம் பொங்கிற்று. சத்ருக்னனையும் தன் மந்திரிகளையும் பார்த்து, "பரத்வாஜமஹரிஷி குறிப்பிட்ட இடத்திற்கு வந்தோமென்று நினைக்கிறேன். மந்தாகினி நதி ஸமீபத்தில் இருக்கவேண்டும். ராத்திரியில் பழம் கிழங்கு ஜலம் முதலியவைகளைக் கொண்டுவர வெளியில் லக்ஷ்மணன் போய்வருவதற்கு எளிதாகஇருக்கும்படி இந்த வழியில் மரவுரிகளை மரங்களில் தூக்கிக் கட்டி வைத்திருக்கிறான். நாமும் இந்த வழியாகவே போகவேண்டும். மலையடிகளில் மதயானைகள் கர்ஜித்துக்கொண்டு திரியும் வழிஇதோ. ஆகையால் காலடிகள் மறைந்து வழி தெரியாதென்று லக்ஷ்மணன் அடையாளம் செய்துகொண்டிருக்கிறான். தபஸ்விகள் காலையிலும் மாலையிலும் ஹோமத்திற்காக எந்த அக்னியை எப்பொழுதும் காப்பாற்றிக்கொண்டுவருகிறார்களோ அந்த அக்னியிலிருந்து அடர்ந்த புகை கிளம்புவதைப் பாருங்கள். மந்திரோபதேசம் முதலிய மஹாஸம்ஸ்காரங்களை எனக்குச் செய்தவரும், மஹரிஷிகளைப் போன்றவரும், ஸகல உத்தம குணங்கள் பொருந்தினவரும் புருஷோத்தமனுமான ராமனை இவ்விடத்தில் காண்பேன்" என்று சொல்லி, பிறகு சித்திரகூட மலையைச் சேர்ந்த மந்தாகினீ நதிக்கரைக்கு வந்தான். தன்னுடன் இருப்பவர்களைப் பார்த்து, "புருஷசிரேஷ்டரான என் தமயன் மனுஷ்யஸஞ்சாரம் இல்லாத இந்தக் காட்டில் வெறும்தரையில் வீராஸனத்தில் உட்கார்ந்திருக்கிறார். மஹா தேஜஸ்வியான லோகநாதன் என்னால் ஸகல போக போக்யங்களையும் விட்டு மிகுந்த கஷ்டத்தை அனுபவித்துக்கொண்டு காட்டில் வஸிக்கிறாரென்ற லோகாபவாதத்திற்கு ஆளானேன். நான் பிறந்தென்ன, பிழைத்திருந்தென்ன? ஆகையால் ராமனுடைய பாதங்களைப் பிடித்துக்கொண்டு ஸமாதானம் செய்து அயோத்யைக்கு அழைத்துப் போகிறேன். கைகேயியால் செய்யப்பட்ட அபகாரத்தை என்மேல் சாட்டி, "அண்ணா! இவனிடத்தில் இரக்கம் வைக்கக்கூடாது' என்று லக்ஷ்மணன் அப்பொழுது தடுத்தால் அவன் எனக்கு இளையவனானாலும், ஆகவேண்டிய காரியம் பெரிதானதால் அவனுடைய பாதங்களைப் பிடித்துக்கொண்டாவது அவனை ஸமாதானப்படுத்துகிறேன். அப்படியும் பயன்படாவிட்டால் ஸகல லோகங்களுக்கும் புருஷகாரமான (உதவியான) ஸீதையின் பாதங்களில் நமஸ்கரித்து ராமனிடத்தில் சிபார்சு செய்யும்படி வேண்டுகிறேன்" என்று இப்படிப் புலம்பிக்கொண்டு



போகும்பொழுது ராமனுடைய அழகான புண்ணியாசிரமம் தோன்றிற்று.

மிகவும் விசாலமான ஆச்சாமரம் பனை முதலிய மரங்களின் இலைகளால் அவ்வாசிரமம் நன்கு புலப்படாமல் இருந்தது. யாகத்தில் அக்னிபீடத்தில் தர்ப்பைகள் பரப்பியிருப்பதைப்போல் தரையில் மிருதுவான தர்ப்பங்கள் பரப்பப்பட்டிருந்தன. தங்கக்கட்டுகளால் அலங்கரிக்கப்பட்டு மஹாபலமுள்ளவைகளும் சத்துருக்களை அழிப்பவைகளும் அஸாத்தியமான காரியங்களை ஸாதிக்கிறவைகளும் வஜ்ராயுதத்தைப் போன்றவையுமான வில்லுகளாலும், போகவதி என்ற நாகலோகத்தின் ராஜதானியில் மஹாஸர்ப்பங்கள் ஜ்வலிப்பதுபோல் கொழுந்துவிட்டெரியும் முகங்களுடன் அம்பறைகளிலிருந்து ஸூரிய கிரணங்களைப்போல் ஜ்வலித்துக்கொண்டிருக்கும் பயங்கரமான பாணங்களாலும், உத்தமமான தங்கத்தால் செய்யப்பட்ட உறைகளில் மின்னலைப்போல் மின்னும் கத்திகளாலும், தங்கத்தால் அழகாக வேலைசெய்யப்பட்ட கேடயங்களாலும், உடும்புத் தோலால் விசித்திரமாக வேலைசெய்யப்பட்டுத் தங்கத்தால் அலங்கரிக்கப்பட்ட விரல்காப்புகளாலும் அந்தப் பர்ணசாலை விளங்கிற்று. ஸிம்ஹத்தின் குகையை மான்கள் நெருங்கமுடியாதது போல் சத்துருக்களால் கண்ணெடுத்தும் பார்க்கமுடியாமலிருந்தது. அதில் வடமேற்கில் தாழ்ந்த ஒரு மேடையும் அதன்மேல் ஒரு விசாலமான அக்னிபீடமும் போடப்பட்டிருந்தன. அதன் நடுவில் ஹோமாக்னி காணப்பட்டது. பிறகு உற்றுப் பார்க்கும்பொழுது, ஜடா மண்டலம் மான்தோல் மரவுரி இவைகளைத் தரித்துக்கொண்டு ஒரு மஹாபுருஷன் அந்தப் பர்ணசாலையில் அக்னியைப்போல் உட்கார்ந்திருக்கக் கண்டான். அவருடைய எல்லையற்ற தேஜஸால் அவர் தன் தமயனென்றே பரதன் க்ண்டுகொண்டான். முழங்கால் வரையில் நீண்ட திருக்கைகளும், ஸிம்ஹத்தின் தோள்களைப்போல் பருத்த தோள்களும் செந்தாமரையிதழ்களைப்போல் விசாலமான நேத்திரங்களும் வாய்ந்து விளங்கும் லோகநாதனை ராமன், பித்ருவாக்கியபரிபாலன தர்மத்தை அனுஷ்டிக்க விரும்பி, ஸீதையோடும் லக்ஷ்மணனோடும் நித்தியரான பிரஹ்மதேவரைப்போல் தர்ப்பாஸனத்தில் வீற்றிருந்தார்.

அவரைப் பார்த்தவுடனேயே பரதனுக்குத் துக்கமும் சோகமும் மேலிட்டது. அவர் இருக்குமிடத்திற்கு ஓடினான். தைரியத்தை இழந்து கண்களில் நீர் பெருக வார்த்தைகள் குளற, "அயோத்யையில் ராஜஸபையில் பிரஜைகள் யாவரும் பாதஸேவை செய்யத் தகுந்த என் தமயனை இப்பொழுது இந்தக் காட்டு மிருகங்கள் உபசரிக்க நேர்ந்ததே! கோடிகோடி திரவியம் விலையுள்ள வஸ்திரங்களைத் தரிக்கும் ஸ்ரீமான், தர்மத்திற்குக் கட்டுப்பட்டு இப்பொழுது

மான் தோலைத் தரிக்க நேர்ந்ததே! விசித்திரமான புஷ்பங்களைத் தரிக்கும் சிரஸில் அழுக்கடைந்த ஜடையை இப்பொழுது தரிக்கும்படி நேர்ந்ததே! சாஸ்திர விதிப்படியாக யக்ஞங்களால் தர்மத்தை ஸம்பாதிப்பதைவிட்டு அகாலத்தில் தேஹேந்திரியங்களை வாட்டித் தர்மத்தை ஸம்பாதிக்க நேர்ந்ததே! உத்தம சந்தனங்களால் பூசப்பட்ட திருமேனியில் அழுக்குப் படிந்திருப்பதைக் காண நேர்ந்ததே! ஸகல ஸுகங்களையும் அனுபவிக்கத் தகுந்த ராமன் இவ்வளவு கஷ்டத்தையும் என்னால் அடைந்திருக்கிறார். லோகத்தாரால் சீ, சீ என்று நிந்திக்கப்பட்ட இந்த ஜன்மத்தை எடுத்துப் பயனென்ன? இந்த உயிரை விட்டாலென்ன?'' என்றான்.

இப்படி மனம் பதைக்கக் கதறிக்கொண்டு கண்தெரியாமல் ராமனுடைய பாதாரவிந்தங்களைப் பிடிக்கத் தேடியும் தொடமுடியாமல் பூமியில் விழுந்தான். கண்ணீர் கண்களை மறைக்க, பரதன், 'அண்ணா!' என்று ஒருதரம் அலறி மேலே பேசமுடியாமல்தவித்தான். சத்ருக்னன் கோ என்றலறிக்கொண்டு ராமனுடைய பாதங்களைத் தொட்டுநமஸ்கரித்தான். ராமன் அவர்களை வாரியெடுத்து அணைத்துத் தானும் துக்கத்தை அடக்க முடியாமல் கண்ணீர் விட்டார்.

ஆகாசத்தில் ஸூரிய சந்திரர்களுடன் சுக்கிரனும் குருவும் சேர்ந்தது போல், ராமலக்ஷ்மணர்கள் ஸுமந்திரரையும் குகனையும் ஸந்தித்தார்கள். உத்தமமான மதயானைகளைப் போன்ற அந்த ராஜபுத்திரர்கள் நிர்மானுஷ்யமான காட்டில் இப்படி ஸந்தித்துத் துக்கப்படுவதைக் கண்டு அந்த வனத்தில் வஸிப்பவர்களும் ஸந்தோஷமற்றுக் கண்ணீர் விட்டார்கள்.

தாந் பார்தி2வாந் வாரண யூத2பாபா4ந் |
ஸமாக3தாம்ஸ் தத்ர மஹத்யரண்யே |
வநௌகஸஸ் தேபி4ஸமீக்ஷ்ய ஸர்வே
த்வஶ்ரூண் யமுஞ்சந் ப்ரவிஹாய ஹர்ஷம் ॥ (42)



பா3ஷ்பாபி4ஹித கண்ட2ஶ்ச ப்ரேக்ஷ்ய ராமம் யஶஸ்விநம் |
ஆர்யேத்யேவாத3 ஸங்க்ருஶ்ய வ்யாஹர்தும் நாஶகத் தத: ॥ —அ. 99ஸ-39சு.

கண்ணீர் கண்களை மறைக்க, பரதன் 'அண்ணா!' என்று ஒருதரம் அலறி, மேலே பேசமுடியாமல் தவித்தான். (பக்கம் 334 பார்க்க)

Released by Maran's Dog ,Toronto, Canada



## ஸர்க்கம் 100

# ராமன் பரதனுக்கு ராஜநீதியை உபதேசித்தது

*ஜடிலம் சீரவஸநம் ப்ராஞ்ஜலிம் பதிதம் பு$^{4}$வி |*
*த$^{3}$த$^{3}$ர்ஶ ராமோ து$^{3}$ர்த$^{3}$ர்ஶம் யுகா$^{3}$ந்தே பா$^{4}$ஸ்கரம் யதா$^{2}$ || (1)*

**பா**ர்த்தவுடனேயே பரதன் ராஜ்யத்தை ஆளுகிருனென்று எண்ணிக்கொண்டு, கேள்விகளைக் கேட்பதுபோல் ராஜ்யபாலனத்திற்கு வேண்டிய நீதிகளை ராமன் உபதேசித்தார். தசரதர் மரணமடைந்தாரென்றும், பரதன் அது முதல் ராஜ்யத்தை விலக்கித் தபஸ்வி தர்மத்தையும் விரதத்தையும் அனுஷ்டித்துவருகிருரென்றும் கேள்விப்பட்ட பிறகு அந்த உபதேசத்தைச் செய்ய ஸமயம் வாய்க்காதல்லவா?

"தசரதர் எப்பொழுதாவது உத்தமமான புஷ்பங்களைப் பார்த்தால், 'குழந்தை பரதனுடைய தலையில் இதை வைத்தாலல்லவா அழகாயிருக்கும்!' என்று சொல்வார். அந்தப் பரதன் ஜடையும் தலையுமாய் வந்திருக்கிருனே! நேர்த்தியான வஸ்திரங்களைக் கண்டால் 'நமது குழந்தை பரதன் இவைகளைத் தரித்தாலல்லவா அழகாயிருக்கும்' என்று சொல்வார்; அப்படிப்பட்ட பரதன் இப்பொழுது மான்தோல் மரவுரிகளைத் தரித்துக்கொண்டிருக்கிருனே! ஒரு பதார்த்தத்தை வாங்கிக்கொள் என்று தசரதர் வேண்டினுலும் பரதன் வாங்கிக்கொள்வது அரிது. இப்பொழுது அவனே தனக்கு வேண்டிய காரியத்தைத் தானே கைகூப்பி நமஸ்கரித்துப் பிறரை பிரார்த்திக்கும்படி நேர்ந்ததே! மிருதுவான புஷ்பசயனத்தில் உட்கார்ந்தாலும் பரதனுடைய தேகம் தாங்காதென்று தசரதர் எப்பொழுதும் இவனைத் தன் மடியிலேயே வைத்துக்கொண்டிருப்பார். அப்படிப்பட்டவன் இப்பொழுது வெறும் தரையில் கிடந்து புரளும்படி நேர்ந்ததே!" என்று ராமன் ஆச்சரியப்பட்டார். எண்ணிறந்த கிரணங்களால் பிரபஞ்சத்தை விளங்கச் செய்துகொண்டிருக்கும் ஸூரியன் பிரம்மதினத்தின் முடிவில் ஸகல தேஜஸுடனும் குறைந்து பூமியில் விழுந்துகிடப்பதைப்போல், மஹாதேஜஸ்வியான பரதன் அவ்வளவு தேஜஸுடனும் குன்றிப் பூமியில் விழுந்து கிடப்பதைக் கண்டு, ராமனும் அங்கிருந்தவர்கள் எல்லோரும் மிக்க துக்கத்தை அடைந்தார்கள். தேகம் மெலிந்து நிறம் மாறி, பரதன் இவனே என்று அடையாளம் கண்டுபிடிக்கமுடியவில்லை. தன்னுடன் பிறந்தவனுகையால் ராமன் அவனை வாரி எடுத்து பிரியத்துடன் அணைத்து உச்சிமுகர்ந்து, தன் துக்கத்தை அடக்கிக்கொண்டு பரதனை ஸமாதானம் செய்ய, "குழந்தாய்! நீ இந்தக்காட்டிற்கு எப்படி வந்தாய்? நமது பிதாவுக்கு ஸமீபத்திலிருந்து ஸகல பணிவிடையும் நீயே செய்யவேண்டியதல்லவா? அவர் எங்கே போய்விட்டார்?

அவர் உன்னைவிட்டுப் பிரியப் பொறுக்கமாட்டாரே. அவர் உயிரோடிருந்தால் நீ இந்தக் காட்டிற்கு வர நியாயமில்லையே. கேகய ராஜ்யத்திலிருந்து இவ்வளவு தூரம் நீ வந்ததைப் பார்க்க எனக்கு ஆச்சரியமாகஇருக்கிறது. தேகம் இளைத்து நிறம்மாறி அடையாளம் தெரியாமல் இருப்பதேன்? இந்தக் கோரமான காட்டிற்கு நீ வந்த காரணமென்ன? மஹாராஜா பிழைத்திருக்கிறாரா? அப்படியிருந்தால் நீ அவருடைய அனுமதியைப் பெற்று இங்கே என்னைப் பார்க்க வந்திருக்கவேண்டும். உன்னை விட்டு அவர் ஒரு நிமிஷம் கூடப் பிரிந்திருக்கமாட்டாரே. ஆகையால் துக்கம் மேலிட்டு ஸ்வர்க்கத்தை அடைந்தாரா? அந்தக் கஷ்டம் நேர்ந்து, பாலனான உன்னிடத்திலிருந்து பலசாலிகளான சத்ருக்கள் இதே ஸமயம் பார்த்து ராஜ்யத்தைப் பிடுங்கிக்கொண்டார்களா? அல்லது பிரஜைகளுக்கு உன்னிடத்தில் விசுவாஸம் குறைந்து, கைகேயி என்னைக் காட்டிற்குப் போகச் சொன்னதற்காக உன்னை நகரத்திலிருந்து துரத்திவிட்டார்களா? ஆதிமுதல் இதுவரையில் இந்த ராஜ்யம் நமது வசத்திலேயே இருந்துவந்ததல்லவா? அல்லது பிதாவிற்குப் பணிவிடைசெய்வதில் உனக்கு அசிரத்தை பிறந்து மஹாபராக்கிரமசாலியான அவரை விட்டு வந்திருக்கிறாயா?

(1) சிரேஷ்டமான குலத்தில் பிறந்தவரும் ஸத்தியம் தவறாதவரும் எண்ணிறந்த அசுவமேதங்களையும் ராஜஸூயங்களையும் செய்தவரும் தர்மத்திலிருந்து விலகாதவருமான தசரத சக்கரவர்த்தி ஸுகமாக இருக்கிறாரா? தன் பிரதிக்ஞையைத் தவறமுடியாததால் நேர்ந்த கஷ்டங்களைப் பார்த்து பச்சாத்தாபமடைந்து அவருக்கு ஏதாவது வியாதி உண்டாயிற்றா? அதை எனக்குத் தெரிவிக்க வந்திருக்கிறாயா?

(2) கொடிய துக்கங்களை அனுபவித்த என் தாய் கௌஸல்யை இப்பொழுது ஸுகமாக இருக்கிறாளா? அவளைக் காட்டிலும் என் பக்திக்கும் பிரியத்திற்கும் பாத்திரமான உன் தாய் கைகேயி, தன் எண்ணப்படி காரியம் முடிந்து ஸுகமாக இருக்கிறாளா?

(3) பிரஹ்மஞானியும் ஸகல வித்தைகளிலும் நிபுணரும் ஞானத்திற்கொத்த தர்மானுஷ்டானமுள்ளவரும் அதனால் அபார தேஜஸை அடைந்தவரும் இக்ஷ்வாகுகுல மன்னர்களுக்குக் குலகுருவுமான வஸிஷ்டபகவானை நமது முன்னோர்கள் பூஜித்தபடி நீயும் பூஜித்து வருகிறாயா? அக்னிஹோத்திரம் முதல் அசுவமேதம் வரையிலுள்ள யாகவிதிகள் யாவையும் நன்றாய் அறிந்தவரும் அக்னி காரியங்களில் வெகு ஜாக்கிரதையுள்ளவரும் மஹாபுத்திமானும் இஹபரலோக தர்மங்களை ஒரே விதமாக அனுஷ்டிப்பவருமான உன் புரோஹிதர் அந்தந்தக் காலங்களில் ஹோமம் செய்ததையும் செய்யவேண்டியதையும் உனக்கு ஞாபகப்படுத்திக்கொண்டிருக்கிறாரா?



(4) தேவதைகளை யாகயக்ஞாதிகளாலும், மாதாபிதாக்களை அவர்களுடைய சொற்படி நடந்து அவர்களுக்குச் சுச்ரூஷை செய்வதாலும், குருக்களைப் பூஜித்து அவர்களுடைய கட்டளையை நிறைவேற்றுவதாலும், ஞாதிகளை அவர்களுக்கு வேண்டிய செல்வத்தைக் கொடுப்பதாலும், வயதாலும் ஞானத்தாலும் ஆசாரத்தாலும் பெரியோர்களை நமஸ்காரம் செய்வதாலும், வித்வான்களையும் பிராம்மணர்களையும் வெகுமானம் செய்வதாலும் திருப்தி செய்கிறாயா?

(5) தனுர் வேதத்திலும் ராஜநீதியிலும் நிபுணரான ஸுதன்வா என்ற நமது உபாத்தியாயரைப் பூஜித்துவருகிறாயா?

(6) உன்மந்திரிகள் புத்திமான்களாகவும் நீதிசாஸ்திரநிபுணர்களாகவும் உத்தம குலத்தில் பிறந்தவர்களாகவும் பிறருடைய எண்ணங்களை ஸூக்ஷ்மமாகத் தெரிந்துகொள்கிறவர்களாகவும், உன்னைப்போல் நம்பத்தகுந்தவர்களாகவும் இருக்கிறார்களா? நீதி சாஸ்திரத்தில் கரைகண்ட மந்திரிகளால் நன்றாக ஆலோசிக்கப்பட்டு ஜாக்கிரதையாகக் காப்பாற்றப்படும் மந்திராலோசனை அரசர்களுக்கு ஜயத்தைக் கொடுக்கும்.

(7) தகுந்த காலத்தில் படுக்கிறாயா? தகுந்த காலத்தில் விழிக்கிறாயா?

(8) விடியற்காலத்தில் ஐசுவரியத்தை ஸம்பாதிக்கும் வழிகளை ஆலோசிக்கிறாயா?

(9) ஒருவனாகவாவது பலருடனாவது ராஜ்ய காரியங்களை ஆலோசிக்காமல் இருக்கிறாயா? ஒருவனாக யோசித்தால் தனக்கு அந்த விஷயத்திலுள்ள விருப்பத்தாலோ வெறுப்பாலோ அதன் குணதோஷங்களைப் பக்ஷபாதமில்லாமல் அறிய முடியாது. பலருடன் யோசித்தால் ஒருமை ஏற்படாது. அந்த யோசனை சீக்கிரம் வெளியாகிவிடும்.

(10) நீ செய்யும் ஆலோசனை அந்தக் காரியம் முடிவதற்குமுன் ராஜ்யத்தில் தெரியாமலிருக்கிறதா?

(11) ஸுலபமான ஸாதனங்களால் விசேஷப் பயன் கிடைக்கக்கூடிய காரியத்தை நன்றாக ஆலோசித்துத் தாமதமில்லாமல் செய்து முடிக்கிறாயா? சீக்கிரத்தில் செய்து முடிக்காத காரியத்தின் பயனைக் காலம் கொள்ளையிடுகிறது.

(12) நீ செய்யும் ஆலோசனைகள் அந்தக் காரியம் முடிந்துகொண்டிருக்கும்பொழுதாவது ஆரம்பத்திற்கு முந்தியாவது உன் சிற்றரசர்களுக்குத் தெரியாமல் முடிந்த பிறகு மாத்திரம் தெரிகின்றனவா?

(13) நீயும் மந்திரிகளும் ஆலோசனை செய்யாத காரியங்களைப் பிறர் ஊஹத்தாலாவது அனுமானத்தாலாவது இங்கிதங்களாலாவது அறியமுடியாமல் ஜாக்கிரதையாகக் காப்பாற்றி வருகிறாயா?

(14) அநேக ஆயிரம் மூர்க்கர்கள் இருந்தாலும் அவர்களை விட்டு, நன்றாகப் பரிசோதித்து காரியத்தைச் செய்யும் புத்திமானைச் சேர்க்கிறாயா? ராஜ்ய காரியங்களில் ஸங்கடம் நேரும்பொழுது அந்த வித்வான் அரசர்களுக்கு மிகுந்த கீர்த்தியையும் மேன்மையையும் உண்டாக்கும் உபாயங்களை உபதேசிப்பார். மூர்க்கர்களை ஆயிரக் கணக்காயும் கோடி கோடியாயும் அரசன் சேர்த்துக்கொண்டாலும் காரியங்களை ஆலோசிக்கும்பொழுது அவர்கள் கொஞ்சமாவது உபயோகப்படுவார்களா? பிறர் ஆரம்பித்த காரியத்தை உடனே அறியும் சக்தியுடையவனும் ஸ்திரமான புத்தியுடையவனும் காரியங்களை விசாரித்துச் செய்கிறவனும் நீதி சாஸ்திரங்களில் நிபுணனுமான ஒரு மந்திரியிருந்தாலும் அவன் அந்த அரசனுக்கும் சிற்றரசர்களுக்கும் மிகுந்த கீர்த்தியை ஸம்பாதிப்பான்.

(15) முக்கியமான ஸேவகர்கள், சமையல் பரிமாறுதல் முதலிய காரியங்களில் மாத்திரமும்; ஜாதி முதலியவைகளால் நடுத்திறத்தார்கள், படுக்கை ஆஸனம் வாஹனம் முதலியவைகளைக் கொண்டுவருவது முதலிய காரியங்களில் மாத்திரமும்; கீழ்த்தரமான ஸேவகர்கள், கால்கழுவுவது மரவடிகளைக் கொண்டுவருவது கால் பிடிப்பது முதலிய வேலைகளில் மாத்திரமும் உபயோகிக்கப்படுகிறார்களா? இல்லாவிட்டால் அதிகப் பொறாமையும் மனஸ்தாபமும் உண்டாகும்.

(16) உத்தமமான வஸ்திரங்கள் ஆபரணங்கள் வாகனங்கள் முதலியவைகளை மந்திரிகளிடத்தில் வேறு மனுஷ்யர்களால் ரஹஸ்யமாக அனுப்பி, அரசனுடைய அந்தப்புரத்திலிருந்து உங்களுக்கு அனுப்பப்பட்டதென்றும் இதர அரசர்களிடத்திலிருந்து அனுப்பப்பட்டதென்றும் சொல்லி, அவர்கள் ஆசையுடன் அவைகளைப் பெற்றுக் கொள்ளுகிறார்களா என்று பரீக்ஷிப்பது அரசர்களுக்கு வழக்கம். அந்தப் பரீக்ஷையில் தேறினவர்களும் பல தலைமுறைகளாக வேலை பார்க்கிறவர்களும் மனோவாக்குக் காயங்களில் சுத்தர்களுமான உத்தம மந்திரிகளைப் பெரிய காரியங்களிலேயே உபயோகித்து வருகிறாயா?

(17) கைகேயி புத்திர! வெகு கடுமையாக பிரஜைகளைத் தண்டித்து அதனால் அவர்கள் கஷ்டப்பட்டு மந்திரிகளிடத்தில் முறையிட்டு அவர்கள் உன்னைத்தடுக்கும்படி வைத்துக்கொள்ளாமல் இருக்கிறாயா? கெட்ட தானங்களை வாங்கி அளவற்ற திரவியத்தைச் சேர்த்து அதனால் யாகம் செய்ய விரும்புகிறவனை ரித்விக்குகள் எப்படி அவமதிப்பார்களோ; தங்களை பலாத்காரம் செய்து ஸ்வாதீனப்படுத்திக்கொள்ள விரும்பும் ஸ்த்ரீகள் புருஷனை எப்படி அவமதிப்பார்களோ; அப்படித் தண்டிக்கத் தகாதவர்களைக் கடுமையாகத் தண்டித்து அவர்களிடத்திலிருந்து தனத்தைப் பறித்து ஹிம்ஸை செய்வதால் பிரஜைகள் உன்னை அவமதிக்காமல் இருக்கிறார்களா?



(18) ஸாம தான பேத தண்டமென்ற உபாயங்களை பிரயோகிப்பதில் நிபுணனும், மஹரிஷிகளால் உபதேசிக்கப்பட்ட பிறரை வஞ்சிக்கும் நீதிகளை நன்றாகக் கற்றவனும், அரசனுக்கு அந்தரங்கமான ஸேவகர்களின் மேல் தோஷங்களை ஏற்படுத்தி அவர்களைக் கலைக்கிறவனும், அரசனை ஹிம்ஸை செய்வதில் பயமற்றவனும், காலக்கிரமத்தில் அரசனுடைய ஐசுவரியத்தைக் கைப்பற்றிக் கொள்ளுகிறவனுமான புருஷனை எந்த அரசன் கொல்லாமல் விடுகிறானோ, அவனால் ராஜ்யத்தை விட்டு அவ்வரசன் துரத்தப்படுவான்; அல்லது கொல்லப்படுவான். இவ்விதமானவனை வைத்துக் கொள்ளாமல் இருக்கிறாயா?

(19) அரசன் செய்யும் மரியாதையால் ஸந்தோஷிக்கிறவனும், பிறரை ஜயிக்கும் சக்தியுடையவனும், அந்தந்த ஸமயத்திற்குத் தகுந்தபடி தன் ஸைன்யங்களை அணிவகுப்பதிலும் சத்ருவின் அணி வகுப்பைப் பிளப்பதிலும் ஸைன்யத்தை நடத்துவதிலும் நுட்பமான புத்தியுள்ளவனும், ஆபத்காலத்தில் கலங்காத தைரியமுடையவனும், யஜமானனிடத்தில் விசுவாஸமுள்ளவனும் உள்ளும் புறமும் சுத்தமாக இருப்பவனும் உத்தம குலத்தில் பிறந்தவனும் காரியங்களை நடத்துவதில் திறமையுள்ளவனுமான மனிதனை ஸேனாபதியாக நியமித்திருக்கிறாயா?

(20) மஹா பலசாலிகளும் உத்தமகுணங்கள் பொருந்தினவர்களும் யுத்தத்தில் ஸமர்த்தர்களும் சூரர்களுமான யுத்தவீரர்களை அவர்களுடைய பூர்வ வரலாற்றையும் தைரியத்தையும் நன்றாகப் பரீக்ஷித்து விசேஷமான வெகுமதிகளைச் செய்து மேன்மைபடுத்தியிருக்கிறாயா?

(21) ஸைன்யங்களுக்கு அந்தந்தக் காலத்தில் கொடுக்க வேண்டிய சம்பளத்தையும் ஆகாரத்தையும் அவர்கள் செய்யும் வேலைக்குத் தகுந்தபடி தாமதமில்லாமல் கொடுத்துவருகிறாயா? இல்லாவிட்டால் சம்பளக்காரர்கள் யஜமானனிடத்தில் கோபித்து விசுவாஸமற்றுப் போவார்கள். அது பெரிய அனர்த்தத்தை விளைவிக்கும்.

(22) க்ஷத்திரிய குலத்தில் பிறந்த முக்கியமானவர்களெல்லோரும் உன்னிடத்தில் மிகுந்த பிரீதிவைத்து, எந்த ஸமயத்திலும் உனக்காக உயிரைவிடத் தயாராக இருக்கிறார்களா?

(23) உன் தூதர்கள் உன் தேசத்தில் பிறந்தவர்களாகவும், பிறருடைய எண்ணங்களை அறியக்கூடியவர்களாகவும், காரியங்களை

நடத்துவதில் ஸமர்த்தர்களாகவும், ஸமயோசிதமாகவும், தயங்காமலும் பதில் சொல்லுகிறவர்களாகவும், நீ சொல்லி அனுப்பிய ஸமாசாரத்தையும் பதிலையும் பிசகாமல் சொல்லுகிறவர்களாகவும், காரியத்தை முடிப்பதில் பல முக்கியமான விஷயங்களைப் பேசிக் கொண்டிருந்தாலும் யஜமானனுடைய கட்டளையை மறக்காமலே வியவஹாரத்தை நடத்துகிறவர்களாகவும், விஷயங்களைப் பகுத்தறியும் சக்தியுள்ளவர்களாகவும் இருக்கிறார்களா?

(24) மந்திரி புரோஹிதன் யுவராஜா ஸேனாபதி வாசல்காப்பவர்களுக்குத் தலைவன், அந்தப்புரத்தின் காரியங்களுக்குத் தலைவன், சிறைச்சாலைத் தலைவன், தனத்தை வசூல் செய்கிறவர்களுக்குத் தலைவன், அரசனது உத்தரவை பலர் அறியும்படி வெளியிடுபவர்கள், நியாயாதிபதிகள், ஸைன்யங்களுக்கு சம்பளத்தையும் உணவையும் கொடுப்பவன், ராத்திரியில் நகர சோதனை செய்து கோட்டை வாசல்கள் பிராகாரம் முதலியவைகளை ரக்ஷிப்பவர்களுக்குத்தலைவன், அரசனிடத்திலிருந்து ஒரே தடவையாக திரவியத்தை வாங்கிக் கொண்டுக் கூலிக்காக வேலை செய்யும் மற்றவர்களுக்குப் பிரித்துக் கொடுப்பவன், ஒவ்வொரு நாளும் ராஜ ஸபையை அலங்கரிப்பது, அரசன் மந்திரி முதலியவர்களுக்குத் தகுந்த ஆஸனங்களை அவர்களுக்காக ஏற்பட்ட இடங்களில் போடுவது, ஸபைக்கு வரவேண்டியவர்களை அழைத்துவந்து அவர்களுடைய அந்தஸ்திற்குத் தகுந்தபடி ஏற்பட்ட ஆஸனங்களில் உட்காரச்செய்வது, ஸபையில் வரத்தகாதவர்களை விலக்குவது, ஸபையில் சப்தமில்லாமல் பார்த்துக்கொள்வது, ஸபையைப் பாதுகாப்பது முதலிய வேலைகளைச் செய்பவர்களுக்குத் தலைவன், பிறருடைய திரவியங்களைத் திருடுவது முதலிய குற்றங்களைச் செய்தவர்களை அரசனுடைய உத்தரவுப்படி தண்டிக்கிறவர்களுக்குத் தலைவன், கோட்டைகளை ரக்ஷிப்பவர்களுக்குத் தலைவன், ராஜ்யத்தின் எல்லைகளில் நான்கு திக்குகளிலும் அன்னிய அரசர்கள் வராமல் பாதுகாப்பவர்களுக்குத் தலைவன், இந்தப் பதினெட்டு மனிதர்களில் தன் ராஜ்யத்தில் மந்திரியையும் புரோஹிதரையும் யுவராஜாவையும் அரசன் பரீக்ஷிக்கவேண்டியதில்லை, அவர்கள் எப்பொழுதும் தன் ஸமீபத்திலிருப்பதால் அவர்களுடைய ஸ்வபாவத்தைத் தானே நேரில் தெரிந்துகொள்ளலாம். தன் ராஜ்யத்தில் மற்றப் பதினைந்து பேர்களையும் சத்ருபக்ஷத்தில் முன் சொன்ன பதினெட்டுப் பேர்களையும் மாறுவேஷம் பூண்ட தூதர்களை ஒவ்வொருவருக்கு மும்மூவர் வீதம் ஏற்படுத்தி, ஒருவர்க்கொருவர் தெரியாமல், மேற்சொன்னவர்கள் தங்களுடைய வேலைகளை ஒழுங்காகச் செய்கிறார்களா இல்லையா என்று பரிசோதித்து வருகிறாயா?

(25) உன் ராஜ்யத்திலிருந்து துரத்தப்பட்டுத் திரும்பிவந்திருக்கும் சத்ருக்களைப் பலமற்றவர்களென்று அலக்ஷ்யம் செய்யாமலிருக்கிறாயா? ஏதாவது ஆதாரமில்லாமல் அவர்கள் திரும்பி வர



மாட்டார்களல்லவா? அவர்களை ஜாக்கிரதையுடன் கவனித்துக் கொண்டிருக்க வேண்டும்.

(26) பௌத்தன் சார்வாகன் முதலிய நாஸ்திக பிராம்மணர்களுடன் பழகாமலிருக்கிறாயா? சாஸ்திரங்களுக்கு விபரீதமான அர்த்தங்களை உபதேசிப்பதில் இவர்களுக்கு அதிகத் திறமையுண்டு. உண்மையான ஞானத்திற்கு விரோதமான ஞானத்தை உடையவர்கள்; பாலர்களைப்போல் ஒன்றும் தெரியாதவர்கள்; ஆனால் தங்களைப் பெரிய பண்டிதர்களென்று எண்ணுகிறவர்கள்; வேதமார்க்கத்திற்கு விபரீதமான புத்தியையுடையவர்கள்; தாமஸ ஸ்மிருதிகளையும் தாமஸ புராணங்களையும் நீக்கி மஹரிஷிகளால் செய்யப்பட்டு ஸாதுக்களால் ஒப்புக் கொள்ளப்பட்ட புராணங்களையும் தர்மசாஸ்திரங்களையும் பெரியோர்களுடைய ஸம்பிரதாய பரம்பரைப்படி அர்த்தம் செய்யாமல், கேவல தர்க்கத்தை பிரயோகித்து, அவை இஹத்திலும் பரத்திலும் பயனற்றவை என்று வாதிப்பவர்கள்.

(27) நமது ராஜதானியான அயோத்யை மஹாவீரர்கள் இருக்குமிடம்; நமது முன்னோர்களால் ஆதிகாலம் முதல் ஆளப்பட்டுவருகிறது. அதிலுள்ள நான்கு வர்ணத்தார் வர்ணாசிரம தர்மங்களைக் குறைவின்றி நடத்திவருகிறார்கள்; இந்திரியங்களை அடக்கினவர்கள்; அதிக உத்ஸாஹமுள்ளவர்கள். உத்தம குணங்களால் அலங்கரிக்கப்பட்டவர்கள்; மேலும் அந்த நகரம் எல்லா வித்யைகளிலும் தேர்ந்தவர்கள் பிரியத்துடன் வஸிக்கும் ஸ்தலம். அதிலுள்ள ஜனங்கள் யாதொரு குறையுமில்லாமல் ஆனந்தமாக இருக்கிறார்கள். ஸகல ஸௌக்கியங்களும் பொருந்தி, சத்ருக்கள் நெருங்க முடியாத அரண்களுடன், விசித்திரமான ஆலயங்களாலும் அரண்மனைகளாலும் உப்பரிக்கைகளாலும் அலங்கரிக்கப்பட்டு, உத்தமமான யானைகள் குதிரைகள் ஒட்டகங்கள் இவைகளால் நிறைந்து, பிறரால் ஜயிக்க முடியாததென்ற பெயருக்குத் தகுந்த யோக்கியதை வாய்ந்திருக்கிறது. இவ்விதமான நமது ராஜதானியை ஜாக்கிரதையாக ரக்ஷித்துவருகிறாயா?

(28) நமது ராஜ்யத்திலுள்ள நாடுகளில் அசுவமேதம், சயனம் முதலிய மஹா யாகங்கள் செய்யப்படும் சாலைகள் பல உண்டு. அங்கே வஸிக்கும் ஜனங்கள், தங்களுக்குத் தகுந்த அரசன் கிடைத்திருப்பதால், காலத்தில் மழைபெய்து நீர்வளம் நிலவளம் முதலியவை பொருந்திய தேசத்திலேயே வஸிக்க விரும்புகிறார்கள். இதர தேசங்களுக்குப் போக மனம் வராது. நமது தேசத்தில் நேர்த்தியான தேவாலயங்களும் அழகான சாலைகளும் அவைகளின் பக்கத்தில் அமைக்கப்பட்டிருக்கும் ஓடைகளும் தண்ணீர்ப் பந்தல்களும் பயிரிடுவதற்காக வெட்டப்பட்ட பெரிய ஏரிகளும் விளங்குகின்றன. உழுது பயிரிடப்படாத பாகம் நமது தேசத்தில் அதிகமாகக் கிடை

யாது. ஆடுமாடுகளுக்கோ கணக்கில்லை. அதிகமழை பெய்வது, மழை பெய்யாமலிருப்பது எலிகள் வெட்டுப் பூச்சிகள் பக்ஷிகள் அரசர்கள் ஸமீபத்தில் வஸிப்பதென்ற ஆறு உபத்திரவங்களில்லை. மானம் பார்த்த நிலமுடையதல்ல. எங்கும் ஆற்றுப்பாய்ச்சலுள்ளது. சோலைகளும் தோப்புகளும் எங்கும் நிறைந்து பார்க்க அழகாக இருக்கும். புலி முதலிய துஷ்ட மிருகங்களின் ஸஞ்சாரமில்லை. திருட்டுப் பயமில்லை. ரத்தினம் பொன் வெள்ளி முதலியவை கிடைக்கும் சுரங்கங்கள் பல உண்டு. பாபிகள் நமது ராஜ்யத்தில் வஸிக்கமாட்டார்கள். அங்குள்ள ஸ்த்ரீ புருஷர்கள் எப்பொழுதும் ஆனந்தத்துடன் காலம்கழிக்கிறார்கள். ஆறு குளம் முதலியவைகளில் கரையிலுள்ள வனங்களில் ஸகல பண்டங்களையும் விற்க ஏற்பாடுசெய்யப்பட்டு, எல்லோருக்கும் தெரியும்படி குறிப்பிட்ட நாட்களில் வர்த்தகர்கள் கூடும் சந்தைகள் பலஉண்டு. இவ்விதமான நமது ராஜ்யத்திலுள்ள தேசங்கள் ஸுகத்தை அடைந்திருக்கின்றனவா?

(29) பயிரிடுகிறவர்களும் பசுக்களை மேய்க்கிறவர்களும் உன் ஆளுகையில் எல்லையற்ற ஐசுவரியத்தை அடைந்து, உன்னிடத்தில் பிரீதி வைத்திருக்கிறார்களா? கொடுக்கல் வாங்கல் ஏற்றுமதி இறக்குமதி முதலிய வியாபாரங்களைச் செய்து வர்த்தகர்கள் உன்னை அண்டி ஸுகமாகப் பிழைக்கிறார்களா? அரசன் தன் ராஜ்யத்தில் வஸிக்கும் ஜனங்களெல்லோரையும் தர்மமாக ஆளவேண்டும். ஆகையால் மேற்சொன்னவர்களுக்கு வேண்டிய ஸௌகரியங்களைச் செய்து அஸௌகரியங்களை விலக்கிக் காப்பாற்றிவருகிறாயா?

(30) உன்னைச் சேர்ந்த ஸ்த்ரீகளிடத்தில் அனுகூலமாக நடந்துவருகிறாயா?

(31) அவர்கள் பிற புருஷர்களுடன் கலந்துபேசாமல் இருக்கும்படி ஜாக்கிரதையாகப் பாதுகாக்கிறாயா ?

(32) அவர்கள் சொல்வதை நிஜமென்று நம்பாமலிருக்கிறாயா?

(33) மிகவும் சஞ்சலமான தன்மையுள்ளவர்களாகையால் அவர்கள் ரஹஸ்யங்களைக் காப்பாற்றமுடியாதவர்கள். ஆகையால் அவர்களிடத்தில் ரஹஸ்யங்களைச் சொல்லாமலிருக்கிறாயா?

(34) உன் ராஜ்யத்தில் யானைகள் உண்டாகுமிடத்தைப் பிறர் அறியாமல் மறைத்துவைத்திருக்கிறாயா? இல்லாவிட்டால் பிறர் அவைகளைப் பிடித்துக்கொண்டுபோவார்கள்.

(35) ஆண் யானைகளைப் பிடிப்பதில் உபயோகப்படும் பெண் யானைகள் விருத்தியாகின்றனவா?

(36) குதிரைகளையும் ஆண் யானைகளையும் பெண் யானைகளையும் மேன்மேலும் ஸம்பாதிக்கிறாயா?

(37) ஒவ்வொரு நாளும் காலையில் நன்றாக அலங்கரித்துக் கொண்டு ராஜ ஸபையில் வந்து பிரஜைகளுக்குத் தரிசனம் கொடுக்கிறாயா? இல்லாவிட்டால் அரசனுக்குத் தேகஸௌக்கியமில்லை என்றும் ஏதோ அபாயம் நேர்ந்ததென்றும் ஸந்தேகப்படுவார்கள்.



(38) உன் வேலைக்காரர்கள் எந்த சமயத்திலும் உன்னை ஸுலபமாகப் பார்க்கும்படி இடம் கொடுக்கக்கூடாது; கர்வமடைந்து உன்னிடத்தில் மரியாதை வைக்கமாட்டார்கள். எப்பொழுதும் உன்னைப் பார்க்காமலும் வைத்துக்கொள்ளக்கூடாது; அவர்களுக்கு வேண்டியவைகளைத் தெரிந்துகொள்ள முடியாமற் போய்விடும். இவனால் நமக்கென்ன பிரயோஜனமென்று கோபமுண்டாகும். அதனால் ராஜ்யத்திற்கும் கெடுதி நேரும். ஆகையால் எல்லோருக்கும் எப்பொழுதும் தரிசனம்கொடுக்கவும் கூடாது; கொடுக்காமலிருக்கவும் கூடாது. நடுநிலைமையாக நடந்துகொள்ளவேண்டும்.

(39) உன் கோட்டைகளில் தனங்களும் தான்யங்களும் ஆயுதங்களும் யந்திரங்களும் வேண்டியவரையில் இருக்கின்றனவா? சில்பிகளும் வில்லாளிகளும் நிறைந்திருக்கிறார்களா? ஜலத்தட்டு இல்லையல்லவா?

(40) உன் வரவு அதிகமாகவும், செலவு குறைவாகவும் இருக்கிறதா? நட்டுவன் விடன் பாடகன் கூத்தாடி முதலிய தகாதவர்களுக்கு உன் திரவியத்தை ஏராளமாகக் கொடுக்காமலிருக்கிறாயா?

(41) பிராம்மணர்கள் தேவதைகள் யாசகர்கள் வீரர்கள் மித்திரர்கள் இவர்களுக்கு உன் ஐசுவரியத்தை அதிகமாக செலவு செய்கிறாயா?

(42) உன் ராஜ்யத்தில் சுத்தமான ஸ்வபாவமுள்ளவனும் மனோ வாக்கு காயம் ஒத்தவனுமான ஸாது, எவனாவது பிறரால் திடீரென்று திருட்டுக்குற்றம் சாட்டப்பட்டு, சாஸ்திரங்களில் நிபுணர்களால் விசாரிக்கப்படாமல் அவனுடைய தனத்திற்காக ஆசைப்பட்டுக் கொல்லப்படாமலிருக்கிறானா?

(43) எந்தத் திருடனாவது, திருடும்பொழுது தடையத்துடன் கண்டுபிடிக்கப்பட்டு, நன்றாக விசாரித்தபின், அவன் திருடின சொத்தைக் கொடுத்துவிட ஒப்புக்கொண்டால், அதை அநியாயமாக வாங்கிக்கொண்டு தண்டனை இல்லாமல் விடப்பட்டிருக்கிறானா?

(44) தனவான்களுக்கும் ஏழைகளுக்கும் வியாஜ்யம் நேர்ந்தால் உன் நியாயாதிகாரிகள் தனவானிடத்திலிருந்து லாபத்தை அடைய உத்தேசிக்காமல் தீர்ப்பு செய்கிறார்களா? அரசன் தன் ராஜ்யத்தில் நடக்கும் நியாயாநியாயங்களை விசாரிக்காமல் கேவலம் தன் ஸௌக்கியத்தையே நாடி ஆண்டுவந்தால், சரியாக விசாரிக்காமல் குற்றம் சாட்டப்பட்டவர்கள் கண்ணீர் விட்டால் அது அவனுடைய மனைவி மக்களையும் பசுக்களையும் நாசம் செய்யும்.

(45) வயது சென்றவர்களையும் பாலர்களையும் உத்தமமான வைத்தியர்களையும் வெகுமானங்களாலும் ஸ்நேஹத்தாலும் இனிமையான வார்த்தைகளாலும் வசப்படுத்துகிறாயா?

(46) தேவதைகள் வஸிக்கும் பெரிய மரங்களையும், யோக மஹிமையால் இவ்வுலகத்து ஸுகங்களில் ஆசையில்லாதவர்களையும், குருமார்களையும், பெரியோர்களையும், தபஸ்விகளையும், தேவதைகளையும், அதிதிகளையும், பிராம்மணர்களையும் வணங்குகிறாயா?

(47) முற்பகலில் தர்மத்தை ஸம்பாதிக்க வேண்டும். அப்படிச் செய்யாமல் அந்தவேளையில் அர்த்தத்தை ஸம்பாதித்தும், பிற்பகலில் அர்த்தத்தை ஸம்பாதிக்க வேண்டியிருக்க அப்படிச் செய்யாமல் தர்மத்தை ஸம்பாதித்தும், ஸாயங்காலத்தில் காமத்தை அனுஷ்டிக்கவேண்டியிருக்க அப்படிச் செய்யாமல் தர்மத்தையும் அர்த்தத்தையும் அனுஷ்டித்தும், இம்மூன்று புருஷார்த்தங்களையும் கெடுக்காமலிருக்கிறாயா? (தர்மத்தைவிட்டுத் தனத்தை மாத்திரம் ஸம்பாதிக்காமலிருக்கிறாயா? குடும்ப போஷணத்திற்கு வேண்டிய தனத்தை ஸம்பாதிப்பதை விட்டுத் தர்மத்தைமாத்திரம் ஸம்பாதிக்காமலிருக்கிறாயா? தர்மத்தையும் அர்த்தத்தையும் விட்டு வேசிகளிடத்தில் அகப்பட்டு இம்மூன்றையும் கெடுத்துக்கொள்ளாமலிருக்கிறாயா? காலையில் தானம் முதலிய தர்மங்களையும், பிறகு ராஜ்யகாரியங்களையும், ராத்திரியில் காமத்தையும் ஒன்றிற்கொன்று விரோதமில்லாமல் பிரித்து அனுஷ்டிக்கிறாயா? அவைகளை அளவுக்கு மிஞ்சாமல் தடுக்கும் சக்தி உனக்கு இருக்கிறதல்லவா?)

(48) உன் ராஜ்யத்திலுள்ள ஸர்வ சாஸ்திரநிபுணர்களான பிராம்மணர்களும் பட்டணத்து ஜனங்களும் நாட்டுப்புறத்தாரும், நீ ஸௌக்கியமாக இருக்கவேண்டுமென்று எப்பொழுதும் பிரார்த்திக்கிறார்களா?

(49) பரலோகமில்லை என்று வாதிப்பது, பொய் சொல்வது, பெற்றோர்கள் ஆசிரியர்கள் பிராம்மணர்கள் பலஹீனர்கள் குற்றம் செய்தாலும் அவர்களிடத்தில் கோபிப்பது, அஜாக்கிரதை, காரியங்களை நிதானமாகச் செய்வது, எல்லா மேன்மைக்கும் காரணமான ஸாதுக்களைத் தரிசிக்காமலிருப்பது, சோம்பல் இந்திரியங்களை அடக்காமலிருப்பது, மந்திரிகளின் உதவியில்லாமல், ராஜ்ய காரியங்களைத் தானே ஆலோசிப்பது, விபரீதமான அர்த்தங்களைச் சொல்லுகிறவர்களுடன் ஆலோசிப்பது, நிச்சயித்த காரியங்களை ஆரம்பிக்காமலிருப்பது, தன் ஆலோசனைகளை முன்னடியாகவே வெளியிடுவது, காலையில் எழுந்தவுடன் கண்ணாடி முதலியவைகளைப் பார்ப்பதென்ற மங்கள காரியங்களை அனுஷ்டிக்காமலிருப்பது, யாரைப் பார்த்தாலும் எழுந்து மரியாதை செய்வது என்ற, இந்தப்



பதினான்கும் அரசன் விலக்கவேண்டிய தோஷங்களில் முக்கியமானவை. நீ அவைகளை விலக்குகிறாயா?

(50) வேட்டை, சூதாட்டம், பகலில் தூங்குவது, பிறரைத் தூஷிப்பது, பெண்களுடனே காலம் கழிப்பது, மதுபானம், பாட்டு, கூத்து, வாத்திய மென்றவைகளில் காலத்தைக் கழிப்பது, காரியமில்லாமல் அலைவதென்ற இந்தப் பத்தையும் விலக்கி வருகிறாயா?

(51) நீர் அரண், மலையரண், மரவரண், பாலையரண், படையரண் என்ற இவ்வைந்தையும்; ஸாமம் தானம் பேதம் தண்டமென்ற இந்த நான்கையும்; அரசன் மந்திரி ராஜ்யம் கோட்டை பொக்கிஷம் ஸைன்யம் மித்திரர்களென்ற இவ்வேழு ராஜ்யத்தின் அங்கங்களையும்; பயிர்த்தொழில், வியாபாரம், கோட்டை, அணைகள், யானைபிடிப்பது, சுரங்கம் வெட்டுவது, கப்பம் வாங்குவது, தரிசு நிலத்தைப் பயிரிடுவது இந்த எட்டையும்; தர்மம் அர்த்தம் காமமென்ற இந்த மூன்றையும்; த்ரயீ வார்த்தா தண்டநீதி என்ற இம்மூன்று வித்யைகளையும்; இந்திரியங்களை ஜயிக்கும் உபாயத்தையும் ஸந்தி விக்ரஹம் யானம் ஆஸனம் த்வைதீபாவம் ஸமாச்ரயமென்ற இந்த ஆறு உபாயங்களையும்; நெருப்பு ஜலம் வியாதி பஞ்சம் மரணம் என தெய்வ கோபத்தால் வரும் ஐந்து கஷ்டங்களையும்; அதிகாரி, திருடன், சத்ரு, அரசனுக்கு பிரியமானவன், அரசனுடைய பேராசை என மனிதனால் நேரும் ஐந்து கஷ்டங்களையும்; சத்ருவினால் கோபிக்கப்பட்டாவது, பயமுறுத்தப்பட்டாவது, அவமதிக்கப்பட்டாவது ஸரியாகச் சம்பளம் கொடுக்கப்படாமலாவது இருக்கும் மனிதனை அவன் விரும்புவதைக் கொடுத்து அவனுடைய யஜமானனைவிட்டுப் பிரிப்பது; பாலன், வயது சென்றவன், தீரா நோயுள்ளவன், பந்துக்களால் ஒதுக்கப்பட்டவன், பயந்தவன், பயந்த ஜனங்களையுடையவன், பேராசையுடையவன், பேராசையுள்ள ஜனங்களை ஆளுகிறவன், குடிகளின் பிரீதியை இழந்தவன், இந்திரிய ஸுகங்களில் மிகுந்த ஆசையை வைத்தவன், பலருடன் ஆலோசிக்கிறவன், தேவர்களையும் பிராம்மணர்களையும் நிந்திக்கிறவன், மஹரிஷிகளின் சாபம் கோபம் முதலியவைகளால் பீடிக்கப்பட்டவன், தெய்வமே யாவற்றையும் செய்யுமென்று சும்மா இருக்கிறவன், ஸைன்யம் நஷ்டமாவதால் துக்கப்படுகிறவன், ராஜ்யத்திலேயே வஸிக்காதவன், க்ரூரமான கிரஹங்கள் க்ரூரமான தசைகள் இவைகளால் பீடிக்கப்பட்டவன், பஞ்சம் முதலிய கஷ்டங்களை அனுபவிக்கிறவன், பல சத்துருக்களை உடையவன், ஸத்தியமும் தர்மமும் அற்றவன், என வகுக்கப்பட்டு, ஒருபொழுதும் ஸ்நேஹம் செய்யத்தகாத இந்த இருபது விதமான அரசர்களையும்; மந்திரி ராஜ்யம் கோட்டை பொக்கிஷம் தண்டனை என்ற ஐந்து பிரகிருதிகளையும் (அங்கங்கள்); நடுவில் விஜிகீஷு என்ற அரசன், அவனுக்கு முன் புறத்திலுள்ள அவனுடைய சத்ரு, அவனுடைய மித்திரன், அந்தச் சத்துருவின்

மித்திரன், அந்த மித்திரனுடைய மித்திரன், சத்துருவின் மித்திரனுக்கு மித்திரன், விஜிகீஷுவுக்குப் பின் பக்கத்திலுள்ள பார்ஷ்ணிக்ராஹன், ஆக்ரந்தன், பார்ஷ்ணிக்ராஹஸாரன், ஆக்ரந்தஸாரன், பக்கத்தில் மத்யமன், இவர்களுக்கு வெளியில் உதாஸீனனென்ற பன்னிரண்டு அரசர்கள் அடங்கிய ராஜமண்டலத்தையும்; படை எடுப்பது ஸைன்யங்களை அணிவகுப்பது படை எடுத்துச் செல்வது ஸைன்யங்களுடன் தங்குவதென்ற யுத்தமுறையையும்; கலப்பது பிறரை அண்டுவதென்ற ஸமாதானத்தையும் பரீக்ஷித்தறிந்து, இவைகளில் விலக்கவேண்டியவைகளை விலக்கி, கொள்ளவேண்டியவைகளை ஏற்றுக்கொண்டுவருகிருயா?

(52) சாஸ்திரங்களில் சொல்லப்படும் லக்ஷணங்கள் பொருந்திய நான்கு அல்லது மூன்று மந்திரிகளுடன் முதலில் கலந்து யோசித்துப் பிறகு அவர்களுடன் தனித்தனியாக ஆலோசிக்கிருயா?

(53) நீ அத்யயனம் செய்யும் வேதங்களும் அக்னிஹோத்திரம் முதலியவைகளும், தம்மை அனுஷ்டிப்பதால் பயனைக் கொடுக்கின்றனவா?

(54) நீ ஸம்பாதித்த தனம், அதைப் பிறருக்குக் கொடுப்பதாலும் நீ அனுபவிப்பதாலும் பயன்பெருகின்றதா?

(55) உன் பாரியை உனக்கு அனுகூலமாக இருக்கிருளா?

(56) நீ சாஸ்திரங்களைக் கேட்டதற்கு அடையாளமாக நல்ல ஆசாரமுள்ளவனுகவும் நல்ல நடத்தையுள்ளவனுகவும் இருக்கிருயா?

(57) நான் இதுவரையிலும் சொல்லிவந்த நீதி தீர்க்காயுஸையும் கீர்த்தியையும் தர்மம் காமம் அர்த்தமென்ற புருஷார்த்தங்களையும் கொடுக்கக்கூடியது. உன் புத்தி அந்த வழியில் செல்கின்றதா?

(58) ஸன்மார்க்கத்தை அனுஸரித்துப் பெரியோர்களால் நிந்திக்கப்படாத இந்த ஆசாரம் நமது பிதாவால் அனுஷ்டிக்கப்படுகிறது. நமது பிரபிதாமஹர் முதலிய முன்னோர்கள் இதையே அனுஷ்டித்து வந்தார்கள். நீயும் இதையே அனுஷ்டித்து வருகிருயா?

(59) மதுரமாகப் பக்குவம் செய்யப்பட்ட ஆகாரத்தைப் பிறருக்குக் கொடுக்காமல் நீ மாத்திரம் புஜிக்காமலிருக்கிருயா?

(60) உன்னிடத்திலிருந்து உதவியை எதிர்பார்க்கும் நண்பர்களுக்கு உதவி செய்கிருயா?

மேற்சொன்ன நீதிகளை அறிந்து உசிதமாகத் தண்டித்து நமது முன்னோர்களைப்போலக் குடிகளைத் தர்மமாக ஆண்டு வந்தால் நீ இவ்வுலகத்தில் பூமண்டலாதிபதியாக இருப்பாய். உன் பிராரப்த கர்மம் முடியும்பொழுது இந்த தேகத்தை விட்டு ஞானியாக



உத்தம லோகங்களை அடைவாய்'' என்று ஸகல ராஜதர்மங்களின் ரஹஸ்யத்தை ராமன் உபதேசித்தார்.

ராஜா து த'ர்மேண ஹி பாலயித்வா
மஹாமதிர் த3ண்டத4ர: ப்ரஜாநாம் |
அவாப்ய க்ருத்ஸ்நாம் வஸுத4ாம் யதா2வத்
இதஶ்ச்யுத: ஸ்வர்க3 முபைதி வித்3வாந் || (76)

---

## ஸர்க்கம் 101

## தசரதருடைய மரணத்தை ராமன் அறிவது

---

ராமஸ்ய வசநம் ஶ்ருத்வா ப'ரத: ப்ரத்யுவாச ஹ |
கிம் மே த'ர்மாத்2 விஹீநஸ்ய ராஜத'ர்ம: கரிஷ்யதி || (1)

**ரா**மன் சொன்னதைக் கேட்டுப் பரதன், ''ஸ்வாமி, தங்களுடைய கைங்கரியமென்ற உத்தம தர்மமும் எனக்குக் கிடைக்கவில்லை. தாங்கள் உபதேசித்த நிஜமான தர்மானுஷ்டானத்திற்குக் காரணமாகும் ராஜ்ய பதவியும் எனக்கில்லை. ஆகையால் தாங்கள் அனுக்ரஹித்த ராஜநீதியால் நான் அடையவேண்டிய பயன் ஒன்றுமில்லை. நமது முன்னோர்களுக்குள் மூத்தவன் இருக்கும் பொழுது இளையவன் அரசனுகக் கூடாதென்று ராஜநீதி வழங்கிவருகிறது. ஆகையால் ஸகல பாக்கியங்களும் நிறைந்த அயோத்யைக்குத் தாங்கள் என்னுடன் வந்து பட்டாபிஷேக மஹோத்ஸவத்தைக் கண்டருளி இக்ஷ்வாகு குலத்திற்கும் எங்களுக்கும் ஸகல மங்களங்களையும் அனுக்ரஹிக்கவேண்டும். தெரியாத ஜனங்கள் அரசன் நம்மைப்போல் ஒரு மனிதன்தானே என்று சொல்வது வழக்கம். ஆனல், ஸகல புருஷார்த்தங்களுக்கும் விரோதமில்லாமல் மனிதனுல் நடத்த முடியாத காரியங்களை நடத்திக் கொண்டிருப்பதைப் பார்த்தால் அரசன் கேவலம் தெய்வமென்றே சொல்ல வேண்டும்.

ஸகல குணங்களும் பொருந்தி யாகயக்ஞங்களைச் செய்வதிலேயே சிரத்தை வைத்து ஸாதுக்கள் யாவராலும் கொண்டாடப்பட்ட மஹாராஜா, நான் கேகயதேசத்திலிருக்கும் பொழுதே ஸ்வர்க்கத்தை அடைந்தார். அந்த ஸமயத்தில் தாங்கள் காட்டிற்கு வந்துவிட்டீர்கள். தங்களைப் பிரிந்து அவர் பல நாட்கள் உயிரோடிருந்ததாக எண்ணவேண்டாம். தாங்களும் ஸீதையும் லக்ஷ்மணனும் நகரத்தை விட்டுப் புறப்பட்டவுடனே துக்கத்தாலும் சோகத்தாலும் அடிபட்டுப் பூலோகத்தை விட்டுப் போனர். புருஷோத்தம! தாங்கள் அதிகமாக வருத்தத்திற்கு இடம் கொடுக்கக்கூடாது. எழுந்திருக்கவேண்டும். நமது பிதாவிற்குச் செய்ய வேண்டிய தர்ப்பணம் முதலிய உத்தரகிரியைகளைச்செய்யவேண்டும். நானும் சத்ருக்னனும்

அவைகளை இதுவரையில் செய்தாயிற்று. ஆனால், 'நீங்கள் செய்ததே போதாதா?' என்றால், பிரியமான புத்திரனால் ஒருவனுக்குக் கொடுக்கப்பட்ட அன்னபிண்டமும் ஜலமும் பித்ருலோகங்களில் அழிவற்ற ப்ரீதியைத் தருகின்றன என்று பெரியோர் சொல்லுகிறார்கள். மற்றப் புத்திரர்களைக் காட்டிலும் தங்களிடத்தில் மஹாராஜாவுக்கு மிகுந்த ப்ரீதி உண்டென்பது ப்ரஸித்தமல்லவா? தங்களைக் குறித்தே ப்ரலாபித்துக் கொண்டிருந்தார்; தங்களைப் பார்க்க வேண்டுமென்றே ஆசை கொண்டிருந்தார். தங்களிடத்தில் நாடின புத்தியைத் திருப்ப முடியவில்லை. தங்களைப் பார்க்காமல் தங்களை விட்டுப் பிரிந்த துக்கத்தைத் தாங்கமுடியாமல், தங்களுடைய ஞாபகத்துடனேயே மஹாராஜா உயிரைவிட்டார்" என்று தெரிவித்தான்.

த்வாமேவ ஶோசம்ஸ்தவ த³ர்ஶநேப்ஸு:
த்வய்யேவ ஸக்தா மநிவர்த்ய பு³த்³தி⁴ம் |
த்வயா விஹீநஸ்தவ ஶோகருக்³ண:
த்வாம் ஸம்ஸ்மரந் நஸ்தமித: பிதா தே || (9)

---

## ஸர்க்கம் 102

## ராமலக்ஷ்மணர்கள் உத்தரக்கிரியைகளைச் செய்தது

---

தாம் ஶ்ருத்வா கருணாம் வாசம் பிதுர்மரண ஸம்ஹிதாம் |
ராக⁴வோ ப⁴ரதேநோக்தாம் ப³பூ⁴வ க³தசேதந: || (1)

தன் பிதா மரணமடைந்தாரென்ற குரூரமான வார்த்தையை ராமன் கேட்டு தேவேந்திரனால் விடப்பட்ட வஜ்ராயுதத்தைப் போல் பரதனால் சொல்லப்பட்ட வார்த்தை என்ற வஜ்ரத்தால் உயிர் நிலையில் அடிபட்டு, ப்ரக்ஞையற்று, கையோடு கையை பிசைந்துகொண்டு காட்டில் மலர்கள் பழங்கள் காய்கள் இலைகளுடன் கூடின மஹா வ்ருக்ஷம் கோடாலியால்வெட்டித் தள்ளப்பட்டதுபோல் பூமியில் விழுந்தார். மதயானை ஆற்றில் கரைகளை இடித்து விளையாடிக் களைத்துப் படுத்துத் தூங்குவதுபோல், பூமியில் விழுந்து கிடக்கும் லோகநாதனை, லக்ஷ்மண பரத சத்ருக்னர்களும் ஸீதையும் கோ என்று கதறிக்கொண்டு வாரியெடுத்து ஜலத்தைத் தெளித்தார்கள். பிறகு ப்ரக்ஞை வந்தது. கண்களிலிருந்து நீர் தாரை தாரையாகப் பெருகிற்று. ராகவன் பரிதாபமாக ப்ரலாபிக்க ஆரம்பித்தார்.

"ராஜசிரேஷ்டரான தசரதசக்கரவர்த்தி காலகதிக்கு உட்பட்டு மரணமடைந்த பிறகு அயோத்யையில் எனக்கு என்ன வேலை? இனிமேல் அயோத்யையை யார் ஆளுவார்கள்? என்னைப் பெற்று அவர் என்ன ப்ரயோஜனத்தை அடைந்தார்? எனக்காகத் துக்கப்பட்டே உயிரை விட்டார். சாகும்பொழுது அவருடைய ஸமீபத்திலிருந்து அவருக்குப் பணிவிடை செய்யவுமில்லை. இறந்த பிறகு அவருக்கு உத்தரக்கிரியைகளைச் செய்யவுமில்லை. பரதனும் சத்ருக்னனும் பாக்கியசாலிகள். ப்ரேதக்கிரியைகள் யாவையும் ஸமீபத்திலிருந்து செய்யும் பாக்கியம் அவர்களுக்குக் கிடைத்ததல்லவா? சக்கரவர்த்தியுமில்லாமல், பலருடைய அதிகாரத்திற்குட்பட்டுத் தலைவனில்லாத அயோத்யைக்கு என் வனவாஸம் முடிந்த பிறகும் திரும்பிப் போக மாட்டேன். இப்படிப் போனால் என் பிதா இறந்த பிறகு எனக்கு நல்ல புத்தி சொல்லி ஸரியான வழியில் நடத்த யார் இருக்கிறார்கள்? முன்பு எப்பொழுதாவது நான் நல்ல காரியத்தைச் செய்தபொழுது என் பிதா ஸந்தோஷப்பட்டு மதுரமான வார்த்தைகளால் என்னைப் புகழ்வார். அவைகளை இனிமேல் யார் சொல்லிக் கேட்பேன்!" என்று ப்ரலாபித்தார்.

பிறகு "ஸீதே! தனக்குப் பெண் குழந்தையில்லை என்று உன்னைப் பெற்றவர்களைக் காட்டிலும் உன்னிடத்தில் அதிகமான ப்ரீதியை வைத்துச் செல்வமாக வளர்த்த உன் மாமனார் பரலோகமடைந்தார். நான் கோபித்துக்கொண்டாலும் உனக்கு என்னால் ஏதாவது காரியம் ஆகவேண்டியிருந்தாலும் நீ அவரிடத்தில் சொல்லிக்கொள்வது வழக்கம். உன்னை அவ்வளவு அருமையாக வளர்த்த தசரதர் இறந்துவிட்டார். என்னைவிட உனக்கே அதிகத் துக்கம் என்பதில் ஸந்தேகமில்லை; இனிமேல் நீ யாரிடத்தில் சொல்லிக் கொள்வாய்!" என்று மிகுந்த வருத்தத்துடன் அவளை ஸமாதானம் செய்தார்.

பிறகு "லக்ஷ்மண! உனக்குத் தாயும் தமயன்களும் தம்பியுமிருந்தும் தகப்பனில்லாத பிள்ளையானாயே! இந்தக் கோரமான செய்தியைச் சொல்லப் பரதன் வந்திருக்கிறான்!" என்று அழுதார். மற்றவர்களும் கண்ணீர் விட்டுக் கதற ஆரம்பித்தார்கள்.

பிறகு லோகரக்ஷகனை ராமனை அவருடைய ஸஹோதரர்கள் மிகவும் ஸமாதானம் செய்து, "அண்ணா! நமது பிதாவைக் குறித்துத் தர்ப்பணம் செய்யவேண்டும்; எழுந்திருங்கள்" என்றார்கள். தன் மாமனார் ஸ்வர்க்கத்தை அடைந்தாரென்ற செய்தியை ஸீதை கேட்டவுடன் துக்கத்தால் கண்ணீர் பெருகத் தன் பர்த்தாவைப் பார்க்க முடியவில்லை. ராமன் அவளை ஸமாதானம் செய்து அழுகையை நிறுத்தி, "லக்ஷ்மண! மஹாத்மாவான நமது பிதாவுக்குத் தர்ப்பணம் செய்யப்போகிறேன். மரவுரி புங்கைபிண்ணாக்கு இன்னும் வேண்டிய மற்றப் பதார்த்தங்களையும் கொண்டுவா. ஸீதை முன்னே போகட்டும்; பிறகு நீ போ. நான் உனக்குப் பின் வருகிறேன். இவ்விதமான துக்க ஸமயங்களில் போகவேண்டிய முறை இதுவே" என்றார். குலக்கிரமமாக வரும் ஸேவகரும், ஆத்ம ஸ்வரூபத்தை அறிந்தவரும் மஹாபுத்திமானும் இந்திரியங்களையும் மனத்தையும் அடக்கினவரும்

மிருதுவான ஸ்வபாவமுள்ளவரும் ராமனிடத்தில் மாறாத பக்தியுள்ளவருமான ஸுமந்திரர், அந்த ராஜகுமாரர்களுடன் சென்று ராகவனை ஸமாதானம் செய்து ஆற்றில் இறங்கி நீராட அழைத்துக் கொண்டு போனார்.

எப்பொழுதும் அழகான புஷ்பங்களால் நிறைந்த காடுகளில் அதிவேகமாக ஓடும் அந்த நதிக்கு வந்து, சேறில்லாத ஒரு துறையில் இறங்கி ஸ்நானம் செய்து, அந்தப் புண்ணிய ஜலத்தை கையிலெடுத்து;"பிதாவே! நாங்கள் கொடுக்கும் இந்த ஜலம் தங்களைச் சேர்ந்து திருப்தி செய்யட்டும்" என்று தர்ப்பணம் செய்தார்கள். ராமன் கையில் ஜலத்தை எடுத்துக்கொண்டு "ராஜ சிரேஷ்டரே! இதோ நான் பிரீதியுடனும் பக்தியுடனும் தங்களுக்குக் கொடுக்கும் சுத்தமான புண்ணிய ஜலம் பிதிருலோகத்திலிருக்கும் தங்களைச் சேர்ந்து அழியாத திருப்தியைக் கொடுக்கட்டும்" என்று தென் திசையை நோக்கி அழுதுகொண்டே கூறினார். பிறகு ஸஹோதரர்களுடன் வேறிடத்திற்குப் போய், தேஜஸ் வாய்ந்த ராமன், தன் பிதாவிற்கு ஸபிண்டீகரண சிராத்தம் செய்தார். புங்கை இலந்தை கலந்த பிண்ணாக்கைத் தர்ப்பங்களின் மேல் வைத்து ராமன் அழுதுகொண்டே, "நாங்கள் பிரியமாகப் புஜிக்கும் இந்த ஆகாரத்தைத் தாங்களும் புஜித்துத் திருப்தியடையவேண்டும். மனிதன் எந்த அன்னத்தை உண்கிறானோ அதையே அவனுடைய தேவதைகளும் உண்கிறார்கள்" என்று சொல்லி, தான் சென்ற வழியாகவேதிரும்பிச் சித்திரகூட மலைக்கு வந்தார்கள். பிறகு பர்ணசாலையின் வாசலில் நின்று பரத லக்ஷ்மணர்களைக் கையால் பிடித்துக்கொண்டு ராமன் ஸிம்ஹம் கர்ஜிப்பதுபோல் மலையிலிருந்து எதிரொலி உண்டாகும்படி ஸீதையுடன் பிரலாபித்தார்.

அந்த மஹா பலசாலிகள் தசரதருக்கு ஜலதர்ப்பணம் செய்து பிரலாபிக்கும் பெரிய ஓசையைக் கேட்டுப் பரதனுடைய ஸைன்யங்கள் பயந்து, "ஓஹோ! பரதன் ராமசந்திரனை சந்தித்துவிட்டார் போல் தோன்றுகிறது. சக்கரவர்த்தி பரலோகத்தை அடைந்ததைப் பற்றி அவர்கள் பிரலாபிக்கும் சப்தம் கேட்கப்படுகின்றது" என்று ஒவ்வொருவரும் வஸ்திரங்களை எறிந்துவிட்டு, ஓசைகேட்ட இடத்தை நோக்கி ஒரே மனதாக வெகுவேகத்துடன் ஓடினார்கள். செல்வமாக வளர்க்கப்பட்ட சிலர் குதிரைகளின்மேலும் சிலர் யானைகளின் மேலும் சிலர் அழகாக அலங்கரிக்கப்பட்ட ரதங்களிலும் மற்றவர்கள் கால்நடையாகவும், ராமன் தங்களைவிட்டுப் பிரிந்து ஸ்வல்பகாலமானாலும் வெகுகாலம் ஆனதுபோல் எல்லோரும் அவரைக் காண ஆசைகொண்டு, அந்த ஸஹோதரர்கள் சந்திப்பதைப் பார்ப்பதற்கு ஆசிரமத்தை நோக்கி ஓடினார்கள். ஆகாசத்தில் மேகங்கள் ஒன்றுக்கொன்று தாக்குவதுபோல், பூமியிலிருந்து ஒரு பெரிய சப்தம் குதிரைக் குளம்புகளாலும் ரத சக்கரங்களாலும் அடிக்கப்படும்பொழுது உண்டாயிற்று. அதைக் கேட்டுப் பயந்து ஆண்யானைகளும் பெண்யானைகளும் அங்கிருந்து வேறொரு காட்டிற்கு ஓடின. அவைகளுடைய மத ஜலத்தால் நான்குபுறத்திலும் வாஸனை வீசிற்று. காட்டுப்பன்றிகளும் செந்நாய்களும் காட்டெருமைகளும் ஸர்ப்பங்களும் குரங்குகளும் புலிகளும் கலைமான்களும் பயந்து ஓடின. சக்ரவாகங்களும் நத்யூஹங்களும் அன்னங்களும் நீர்க்கோழிகளும் பெரும் நாரைகளும் குயில்களும் கிரௌஞ்சங்களும் பிரக்ஞையற்று நான்குபுறத்திலும் ஓடின. அந்தப் பறவைகளால் மறைக்கப்பட்ட ஆகாசம், பரதனுடைய ஸைன்யத்தால் மறைக்கப்பட்ட பூமி என இவ்விரண்டும் ஒரே வகையில் விளங்கின.



பிறகு அந்த மஹாபராக்ரமசாலியும் மஹாகீர்த்திமானும் புருஷோத்தமனுமான ராமன் ஆசிரமத்தில் தரையில் உட்கார்ந்திருப்பதைக் கண்டார்கள். ஜனங்களெல்லோரும் அவரைப் பார்த்தவுடன் கண்ணீர் பெருகக் கைகேயியையும் மந்தரையையும் எல்லையில்லாமல் நிந்திக்க ஆரம்பித்தார்கள். அப்படித் துக்கப்படும் அந்த ஜனங்களில் ராமன் சிலரை வணங்கினார்;சிலரைக்கட்டி அணைத்தார்; பெற்றோரைப்போல் சிலரை ஆசீர்வதித்தார். இப்படி நண்பர்களையும் பந்துக்களையும் மற்றவர்களையும் தகுந்தபடி உபசரித்தார். அந்த மஹாத்மாக்கள் பிரலாபிக்கும் சப்தம், பூமி, ஆகாசம் மலைக் குகைகள் திக்குகள் எல்லா இடங்களிலும் எதிரொலியை உண்டாக்கி மிருதங்கத்தின் சப்தத்தைப்போல் கேட்கப்பட்டது.

ஸ தத்ர தேஷாம் ருத$^{3}$தாம் மஹாத்மநாம்
பு$^{4}$வம் ச க$^{2}$ம் சாநுநிநாத$^{3}$யந் ஸ்வந: |
கு$^{3}$ஹா கி$^{3}$ரீணும் ச தி$^{3}$ஶஶ்ச ஸந்ததம்
ம்ருத$^{3}$ங்க$^{3}$ கோ$^{4}$ஷ ப்ரதிம: ப்ரஶுஶ்ருவே ‖ (49)

---

## ஸர்க்கம் 103

## ஜனங்கள் ராமனைத் தரிசித்தது

---

வஸிஷ்ட$^{2}$: புரத: க்ருத்வா தா$^{3}$ராந் த$^{3}$ஶரத$^{2}$ஸ்ய ச |
அபி$^{4}$சக்ராம தம் தே$^{3}$ஶம் ராமத$^{3}$ர்ஶந தர்ஷித: ‖ (1)

அப்படியிருக்கையில் வஸிஷ்டபகவான் ராமனைப் பார்க்க ஆசைகொண்டு ராஜபத்தினிகளை முன்னிட்டுக்கொண்டு அங்கே வந்தார். ராஜஸ்த்ரீகள் வழியில் மந்தாகினீ நதிக்கரையில் வந்து அங்கே ராமலக்ஷ்மணர்கள் ஸ்நானம் செய்யுமிடத்தைக் கண்டார்கள். கௌஸல்யை வாடின முகத்துடன் கண்ணீர் பெருக, ஸுமித்திரையையும் மற்ற ராஜஸ்த்ரீகளையும் பார்த்துத் தீனமாக, "ராஜ்யத்திலிருந்து துரத்தப்பட்டு அநாதைகளாகக் காட்டிற்கு வந்த என் அருமைக் குழந்தைகள் இறங்கும் துறை இதுவே என்று நிச்சயிக்

கிறேன். ஸுமித்ரே! இதோ பார், உன் மகன் சோம்பலில்லாமல் என் மகனுக்காக எப்பொழுதும் ஜலம் எடுத்துப்போகும் துறையும் இதுவே. இந்த வேலை ஹீனமானாலும் அவைகளால் உன் குழந்தைக்கு யாதொரு இழிவும் ஏற்படாது. மூத்தவன் பிதாவிற்கு ஸமனென்ற நியாயத்தால் அவனுக்குச் செய்யும் பணிவிடையாவும் தகப்பனுக்குச் செய்யும் சுச்ருஷையைப்போல் உத்தமமானது. இன்றைக்குப் பரதன் ராமனை பிரார்த்தித்து அயோத்யைக்கு அழைத்து வருவான். கஷ்டத்தை அனுபவிக்கத் தகாத உன் புத்திரன் செய்யும் இந்த இழிவான வேலையும் படும் சிரமமும் இன்றைக்கே தீர்ந்துவிடும்'' என்று சொன்னாள். பிறகு தசரதரை உத்தேசித்துப் பூமியில் தெற்கு நுனியாகப் போடப்பட்ட தர்ப்பங்களின்மேல் ராமன் துக்கத்துடன் வைத்த புங்கைப்பிண்ணாக்குப் பிண்டங்களைப் பார்த்து, "இக்ஷ்வாகு வம்சத்தரசரும் ரகுகுல திலகரும் மஹாத்மாவுமான நமது பர்த்தாவுக்கு ராமன் விதிப்படி வைத்த பிண்டத்தைப் பாருங்கள். தவதைகளுக்கு நிகரானவரும் பூமண்டலாதிபதியும் ஸகல போகங்களையும் அனுபவிக்கத் தகுந்தவருமான நமது பர்த்தாவுக்கு இந்த ஆஹாரமா கிடைத்தது! மஹேந்திரனுக்கு ஸமமான பராக்கிரமமுள்ளவர். ஒருநாளும் கண்டறியாத இந்தப் புங்கைப்பிண்ணாக்கை எப்படி புஜிப்பார்? ஸகல ராஜபோகங்களுக்குத் தகுந்தவனான ராமன், தன் பிதாவுக்குப் புங்கைப் பிண்ணாக்கைப் போட்டான் என்றதைக் காட்டிலும் துக்ககரமான விஷயம் லோகத்தில் வேறொன்றுமுண்டோ? இந்தக் கோரத்தைப் பார்த்தும் என் ஹிருதயம் துக்கத்தால் ஆயிரம் சுக்கல்களாக ஏன் வெடிக்கவில்லை! மனுஷ்யனுடைய ஆகாரமே அவனுடைய தேவதைகளுக்கும் ஆகாரம் என்ற உலகமறிந்த வேத வார்த்தை உண்மையென்றே தோன்றுகிறது'' என்று பிரலாபித்த கௌஸல்யையை மற்ற ராஜபத்தினிகள் தேற்றி அழைத்துக்கொண்டு போனார்கள்.

பிறகு தேவதை பூமியில் விழுந்து கிடப்பதைப் போல் ராமன் ஸகல போகங்களையும் விட்டு ஆசிரமத்தில் வெறும் தரையில் உட்கார்ந்திருப்பதைக் கண்டு, எல்லோரும் துக்கம் தாங்காமல் கண்ணீர் விட்டுக் கதற ஆரம்பித்தார்கள். அவர்கள் வருவதைப் பார்த்து ஸத்தியம் தவறாத அந்த நரோத்தமன் எழுந்து எதிர்கொண்டு அவர்களுடைய பாதங்களைத் தொட்டு வணங்கினார். ராமனுடைய முதுகில் படிந்திருந்த மண்ணைத் தங்களுடைய மிருதுவான விரல்களால் அவர்கள் துடைத்தார்கள். பிறகு லக்ஷ்மணன் மிகுந்த துக்கத்துடன் அவர்கள் ஒவ்வொருவரையும் நமஸ்கரித்து அபிவாதனம் செய்தார். (தன் பெயர் கோத்ரம் முதலியவைகளைத் தெரிவித்தார்) அந்த ஸ்த்ரீகள் ஸகல சுப லக்ஷணங்களும் பொருந்தின லக்ஷ்மணனிடத்தில் ராமனைப்போல் எண்ணி நடந்தவர்கள். பிறகு ஸீதை வெகு கிலேசத்துடன் தன் மாமியார்களின் பாதங்களில் பணிந்து கண்களில் நீர் ததும்ப எதிரில் நின்றாள்.



அப்பொழுது கௌஸல்யை, பெற்ற தாய் தன் பெண்ணைப் பிரியத்துடன் வாரி அணைப்பதுபோல், காட்டில் வஸித்ததால் இளைத்துப் பரிதாபப்படும்படி துக்கித்துக் கொண்டிருக்கும் ஸீதையை இறுகத்தழுவி, "நீயோ விதேஹ ராஜனுடைய பெண்; தசரத சக்கரவர்த்தியின் நாட்டுப்பெண்; ராமசந்திரனுடைய மனைவி. இப்படியிருக்க மனுஷ்ய ஸஞ்சாரமில்லாத காட்டில் பலவிதமான கஷ்டங்களை அனுபவிக்கும்படி நேர்ந்ததற்குக் காரணம் தெரியவில்லை. கோடை வெய்யிலால் எரிக்கப்பட்ட தாமரையைப்போலும், வாடின கருநெய்தல் புஷ்பத்தைப்போலும், புழுதிபடிந்த தங்கப்பிரதிமையைப் போலும் மேகங்களால் மறைக்கப்பட்ட சந்திரனைப்போலுமிருக்கும் உன் முகத்தைப் பார்க்கும்பொழுது நெருப்பு விறகை எரிப்பதுபோல் துக்கமென்ற அரணியில் உண்டான சோகம் என் மனத்தை எரிக்கிறது'' என்று பிரலாபித்தாள்.

அதற்குள் ராமன் கொழுந்துவிட்டெரியும் அக்னியைப் போன்ற தேஜஸையுடைய வஸிஷ்ட மஹரிஷியின் பாதங்களில், தேவேந்திரன் பிருஹஸ்பதியை வந்தனம் செய்வதுபோல் நமஸ்கரித்து அவருடன் உட்கார்ந்தார். அவர்களுக்குப் பின் மந்திரிகள் நகரத்தலைவர்கள் ஸேனாபதிகள் இன்னும் மற்ற தர்மவான்கள் உட்கார்ந்தார்கள். பரதன், தபஸ்விவேஷம் பூண்டு தேஜஸால் ஜ்வலிக்கும் தன் அண்ணனுக்கு அருகில், தேவேந்திரன் பிரஹ்மாவின் முன்னிலையில் அடக்கமாக உட்காருவதுபோல் கைகூப்பி வணக்கமாக உட்கார்ந்தார். அப்பொழுது அங்கிருந்த ஜனங்கள், "பரதன் ராமனை நமஸ்கரித்து உபசரித்து எந்த வார்த்தைகளைச் சொல்லி அவருடைய மனத்தை திருப்புவார்'' என்று வெகு ஆவலுடன் அவர்களையே பார்த்துக் கொண்டிருந்தார்கள். ஸத்தியமும் தைரியமும் பொருந்தின ராமனும் மஹானுபாவனான லக்ஷ்மணனும் தர்மாத்மாவான பரதனும் நண்பர்களால் சூழப்பட்டு அங்கே உட்கார்ந்திருக்கையில், யாகசாலையில் ஸதஸ்யர்களால் சூழப்பட்ட மூன்று அக்னிகளைப் போல் விளங்கினார்கள்.

ஸ ராக$^{4}$வ: ஸத்யத்$^{4}$ருதிஶ்ச லக்ஷ்மணஶ்ச
மஹாநுபா$^{4}$வோ ப$^{4}$ரதஶ்ச தா$^{4}$ர்மிக: |
வ்ருதா: ஸுஹ்ருத்$^{3}$பி$^{4}$ஸ் து விரேஜு ரத்$^{4}$வரே
யதா$^{2}$ ஸத$^{3}$ஸ்யை: ஸஹிதாஸ் த்ரயோக்$^{3}$நய: || (32)

## ஸர்க்கம் 104

# பரதன் சரணாகதி செய்தது

*தம் து ராம: ஸமாஶ்வாஸ்ய ப்⁴ராதரம் கு³ருவத்ஸலம் |*
*லக்ஷ்மணேந ஸஹ ப்⁴ராத்ரா ப்ரஷ்டும் ஸமுபசக்ரமே ‖* (1)

“என்னிடத்தில் பரதன் மிகுந்த பக்தி வைத்தவன். ஆகையால் கையில் கிடைத்த ராஜ்யத்தைவிட்டு மான்தோல் மரவுரி சடைகளைத் தரித்துக்கொண்டு இங்கே வந்திருக்கிறான்” என்று ராமன் அறிந்து, லக்ஷ்மணனுக்கு எதிரில் “பரத! மரவுரி கிருஷ்ணாஜினங்களுடன் நீ இந்தக் காட்டிற்கு வந்த காரணத்தைக் கேட்க விரும்புகிறேன்” என்றார். பரதன் பதில் சொல்லவில்லை. ராமன் மறுபடியும் “கையில் கிடைத்த ராஜ்யத்தை விட்டுத் தபஸ்வி வேஷம் பூண்டு நீ இங்கே வந்த காரணமென்ன?” என்றார். அப்பொழுதும், பரதன் மௌனமாக இருந்தார். ராமன் அவரை ஸமீபத்தில் அழைத்து இறுகத் தழுவி, “குழந்தாய்! கண்களில் நீர் பெருகத் தேகம் இளைத்து முகம் வாடி மனம்குன்றி அலங்கோலமாக உன் பந்துக்கள் பரிவாரங்களுடன் இப்படி ஏன் என்னைத் தேடிவந்தாய்? சொல்ல வேண்டும்” என்று நிர்ப்பந்தித்தார்.

அதைக் கேட்டுப் பரதன் கைகூப்பி வினயத்துடன், “அண்ணா! நமது பிதா கைகேயியின் வார்த்தையைக் கேட்டு மூத்த புத்திரனான தங்களுக்கு நியாயமாகக் கிடைக்கவேண்டிய ராஜ்யத்தை இளையவனான எனக்குக் கொடுத்துவிட்டுப் புருஷோத்தமனான தங்களைக் காட்டிற்கனுப்பினார். ஒருவரும் செய்யத் துணியாத காரியத்தை இப்படிச் செய்து, பிரியமான புத்திரனை விட்டுப்பிரிந்த சோகத்தால் பீடிக்கப்பட்டு அந்த மஹானுபாவர் ஸ்வர்க்கத்திற்குப் போய் விட்டார். என் தாயான கைகேயியால் ஏவப்பட்டுத் தமது கீர்த்தியை அழித்த இந்த மஹாபாபத்தைக் கட்டிக்கொண்டார். இந்த பாதகத்தைச் செய்யும்படி தூண்டிவிட்ட அந்த ஸ்த்ரீ-என் தாய்- தான் ஆசைவைத்த ராஜ்யத்தையும் அடையவில்லை. தன் கணவனையும் கொன்று விதவையானாள். தன் எண்ணங்கள் யாவும் வீணாகி, லோகத்தில் அழியாத அபகீர்த்தியையும் பாபத்தையும் ஸம்பாதித்தோமே என்ற துக்கம் அவளை வாட்டுகிறது. இனி மஹா கோரமான நரகத்தில் தள்ளப்படுவாள். கைகேயியின் வயிற்றில் பிறந்ததால் அவளுக்கு நேர்ந்த அபவாதத்திற்கு நானும் ஆளானேன். இப்படி மஹாபாபியின் வயிற்றில் பிறந்து நியாயமாக என் அண்ணனுக்குக் கிடைக்க வேண்டிய ராஜ்யத்தையும் கிடைக்காமல் செய்து அவரைக் கோரமான காட்டிற்குத் துரத்தி, அவருடைய ராஜ்யத்திற்கு ஆசைப்பட்டேனென்று லோகத்தாரால் நிந்திக்கப்பட்டு, என் பிதாவின் மரணத்திற்கும் காரணமான நான் எல்லாவிதத்தாலும் கெட்டேன். தங்களைத்தவிர எனக்கு வேறுகதியில்லை. தங்களையே சரணமடைந்தேன். தாங்களே என்னைக் காப்பாற்றவேண்டும். தேவேந்திரன் தன் அமராவதியில் அபிஷேகம் செய்யப்படுவதுபோல் தாங்களும் அயோத்யைக்குத் திரும்பிவந்து தடைபட்ட அபிஷேகத்தைப் பூர்த்தி செய்து, தங்களுடைய ராஜ்யத்தைக் கைக்கொண்டு எங்களெல்லோரையும் க்ஷேமமாகப் பரிபாலனம் செய்து என்னையும் கடைத்தேறும்படி செய்ய வேண்டும். இதோ இருக்கும் பிரஜைகளும் கணவனையிழந்து அநாதைகளாய் பரிதபிக்கும் ராஜஸ்த்ரீகளும் தங்களைப் பிரார்த்திக்க வந்திருக்கிறார்கள் அனுக்கிரஹம் செய்யவேண்டும். நம் வம்சத்தில் இதுவரையில் அனுஷ்டிக்கப்பட்டு வரும் தர்மம் இதே. என்னை எல்லாவிதத்திலும் காப்பாற்றத் தாங்கள் ஸமர்த்தர். ராஜ்யத்தை ஒப்புக்கொள்ள வேண்டும். தங்களுடைய க்ஷேமத்தையே பிரார்த்திக்கும் எங்கள் மனோரதங்களை நிறைவேற்றவேண்டும். இந்தப் பூமி விதவையாகாமல் தங்களைக் கணவனாக அடைந்து, சரத்காலத்தில் இரவில் ஆகாசம் களங்கமற்ற சந்திரனால் பிரகாசிப்பதுபோல் விளங்கட்டும். ‘நான் ஒருவன் கண்ணீர் விடுவதைத் தாங்கள் பார்க்கப் பொறுக்க மாட்டீர்களே! இவ்வளவு ஜனங்களும் கண்ணீர் விடுவதைத் தாங்கள் ஒருகணமும் பார்க்கப் பொறுக்க மாட்டீர்கள்’ என்று எண்ணி, சதுரங்க ஸைன்யத்துடன் வந்திருக்கிறேன். நான் பிரார்த்திப்பதை நீங்கள் ஒரு வேளை அலக்ஷ்யம் செய்யலாம். இந்த மந்திரிகள் ஞானத்தாலும் வயதாலும் ஆசாரத்தாலும் மூத்தவர்கள். தங்களுடைய க்ஷேமத்தையே கோருகிறவர்கள். பரம்பரையாக நமது வம்சத்திலேயே ஊழியம் செய்கிறவர்கள். நமது ராஜ்யத்தை க்ஷேமமாகப் பரிபாலனம் செய்கிறவர்கள். இவர்களுடைய பிரார்த்தனையைத் தாங்கள் அலக்ஷ்யம் செய்யக்கூடாது. தங்களிடத்தில் எனக்கு எந்தக் காரியமாவது ஆகவேண்டியிருந்தால் தங்களுக்கெதிரில் வந்து நின்றவுடனேயே அதை முடித்துக் கொடுப்பீர்களே. தங்களைப் பிரார்ததிக்கும்பக்ஷத்தில்அதைப்பற்றிஸந்தேகம் உண்டா? தலைவணங்கி நம்மை வேண்டினபிறகும் இவனுடைய காரியத்தை முடித்துக்கொடுக்காமலிருக்கிறோமே என்று தங்களுடைய மனம் தவிக்காதா? இதுவரையில் தாங்கள் என்னை நிர்ப்பந்தித்துச் சொல்லக் கேட்டு என் எண்ணங்களை அறிந்து அவைகளை வலுவிலேயே பூர்த்தி செய்து வந்தீர்கள். இப்பொழுது நானே தங்களை யாசிக்கிறேன். நான் தங்களுடன் பிறந்தவனல்லவா? தங்களை யாசிக்கவும் வேண்டுமா? தங்களுடைய ஸஹோதரன் என்றதால் இந்த ராஜ்யத்தில் ஒரு பாகத்தைக் கொடுங்களென்று கேட்கப்போகிறேனா? இல்லை. தங்களிடத்தில் மந்திரோபதேசம் பெற்ற சிஷ்யனல்லவா? சிஷ்யனானாலும் என்னை விற்கவும் வாங்கவும் ஸ்வாதீனமிருக்காது. ஆகையால் நான் தங்களுடைய அடிமை. இந்தக் காரணங்களுக்குத் தாங்கள் பதில் சொல்ல முடியாது. ஆகையால் என்னிடத்தில் கிருபை செய்து என் பிரார்த்தனையை அங்கீகரிக்கவேண்டும். இதோ

இருக்கும் மந்திரிகள் பிரதானிகள் மற்றுமுள்ள தலைவர்கள் பிரஜைகள் செய்யும் பிரார்த்தனையைத் தாங்கள் தள்ளிவிட முடியுமா?" என்று கண்களில் நீர் பெருகப் பரதன் பிரார்த்தித்து ராமனுடைய திருவடிகளில் தன் தலையை வைத்து நமஸ்கரித்தான்.

மதம்பிடித்த யானையைப்போல் அடிக்கடி பெருமூச்சு விட்டுக்கொண்டு பூமியில் கிடக்கும் பரதனை ராமன் தூக்கி எடுத்து அணைத்து, "நீ மஹா குலத்தில் பிறந்தவன்; ஸாத்விக குணங்களால் அலங்கரிக்கப்பட்டவன்; தேஜஸுள்ளவன்; விரதங்களை அனுஷ்டித்தவன். உன்னைப்போன்றவன் ராஜ்யத்திற்கு ஆசைப்பட்டுக் கனவிலாவது அண்ணனுக்கு துரோஹம் செய்வானா? பராக்கிரமசாலியான உன்னிடத்தில் தோஷம் கொஞ்சமேனும் இருப்பதாக எனக்குத் தோன்றவில்லை. உன்னைப்பெற்ற தாயை அறியாமையால் நீ நிந்திப்பதும் ஸரியல்ல. மூத்தோர் தங்களுக்கு இஷ்டமான மனைவிகளிடத்திலும் மகன்களிடத்திலும் அன்பு வைக்கிறார்கள். நாம் அதைத் தடுக்க முடியாது. பாரியைகள் கணவன்களுக்குக் கட்டுப்பட்டிருப்பதுபோல் புத்திரர்களும் சிஷ்யர்களும் கட்டுப்பட்டவர்களென்றே பெரியோர்களின் கருத்து. நீயும் அதை ஒப்புக்கொள்ளவேண்டும். ராஜ்யத்தில் ஸகல ஸுகங்களை அனுபவிக்கும்படி என்னைச் செய்யவோ, காட்டில் மான் தோல் மரவுரியுடன் இருக்கச்செய்யவோ நமது பிதாவுக்கு அதிகாரமுண்டு. பிதாவிடத்தில் புத்திரன் எவ்வளவு பக்தியையும் மதிப்பையும் வைக்கவேண்டுமோ அப்படியே தன் தாயிடத்திலும் வைக்கவேண்டும். தர்மாத்மாக்களான பெற்றோர் சேர்ந்து, 'நீ வனத்திற்குப் போயிரு' என்று என்னைக் கட்டளையிட்டிருக்க, அதை எப்படி மீறுவேன்? நீ ராஜ்யத்தை ஒப்புக்கொண்டு அயோத்யையில் ஆளவேண்டும்; 'நான் காட்டில் பதினான்கு வருஷங்கள் வரையில் முனி வேஷத்துடன் வஸிக்கவேண்டுமென்று நமது பிதா நம்மெல்லோர்க்கும் முன்னேற்பாடு செய்து அப்படியே நம்மையும் கட்டளையிட்டுப் பரலோகம் போனார். அந்தத் தர்மாத்மா உனக்கும் பிரமாணம்; உன்னை ஆளும் அரசர்; லோகத்திற்கும் உனக்கும் குரு; ஆகையால் நமது பிதா பிரித்துக்கொடுத்த பாகத்தை நீ பெற்றுக்கொண்டு அனுபவிக்கவேண்டும். நானும் எனக்குக் கொடுக்கப்பட்ட பாகத்தை இந்தத் தண்டகாரண்யத்தில் பதினான்கு வருஷங்கள் வரையில் அனுபவிப்பேன். எல்லோராலும் பூஜிக்கப்பட்டவரும் தேவேந்திரனைப் போன்றவரும் நமக்குப் பிதாவுமான தசரதர் எனக்குச் செய்த உத்தரவே இவ்வுலகிலும் மேல் உலகிலும் எனக்கு மிகுந்த க்ஷேமத்தை உண்டாக்கும். என் பிதாவின் உத்தரவின்றி லோகங்கள் யாவற்றிற்கும் அதிபதியாயிருப்பதையும் விரும்பமாட்டேன்" என்றார்.

யத$^{3}$ப்ரவீந் மாம் நரலோக ஸத்க்ருத:
பிதா மஹாத்மா விபு$^{3}$தா$^{4}$தி$^{4}$போபம: |
ததே$^{3}$வ மந்யே பரமாத்மநோ ஹிதம்
ந ஸர்வலோகேஸ்வர பா$^{4}$வமப்யஹம் ‖ (27)



## ஸர்க்கம் 105

## ராமன் பரதனுக்கு தர்மத்தை உபதேசித்தது

தத: புருஷஸிம்ஹாநாம் வ்ருதாநாம் தை: ஸுஹ்ருத்$^{3}$கணை: |
ஶோசதாமேவ ரஜநீ து$^{3}$க்கே$^{2}$ந வ்யத்யவர்தத ‖ (1)

இப்படி அந்தப் புருஷ சிரேஷ்டர்கள் தங்களுடைய நண்பர்களுடன் வருத்தப்பட்டுக் கொண்டிருக்கையில் மிகுந்த சிரமத்துடன் ராத்திரிப் பொழுது சென்றது. விடியற்காலமாயிற்று. பிறகு அவர்கள் மந்தாகினீ நதிக்கரையில் நித்தியகர்மங்களை முடித்துக்கொண்டு ராமனிடத்திற்கு வந்தார்கள். எல்லோரும் அவரவர்களுக்குத் தகுந்த இடத்தில் உட்கார்ந்த பிறகு பர்தன் எழுந்து, "அண்ணா! 'சக்கரவர்த்தி உனக்காக இந்த ராஜ்யத்தை கைகேயிக்கு தானம் கொடுத்திருக்கிறார். அதை உன்னால் மாற்ற முடியாது' என்று தாங்கள் ஆக்ஷேபிக்கலாம். அது எனக்கும் தோன்றிற்று; 'கைகேயீ நமக்கு விரோதமாயிருந்தால் நம்மெண்ணம் நிறைவேறாது' என்று அவளைப் பலவிதமாக ஸமாதானம் செய்தேன். 'உனக்குக் கொடுக்கப்பட்ட பொருளை நீ வேறு விதமாக உபயோகிப்பது பிசகு' என்று சொல்வீர்கள். ஆனால், நான் தங்களுடைய அடிமையல்லவா? அடிமைக்கு யாதொரு பொருளும் ஸ்வாதீனமில்லை என்று சாஸ்திரமல்லவா? தங்களுடைய அடிமையின் ராஜ்யம் தங்களைச் சேரவேண்டும். ஆகையால் தங்களுடைய ராஜ்யத்தை யாதொரு தடையின்றி கைக்கொண்டு ஆளுங்கள். 'நீயே ஆளக்கூடாதா?' என்று சொல்லலாம். மழைக்காலத்தில் வெள்ளம் பெருகி உடைந்த கரையை அடைக்க முடியாததுபோல் தங்களைத்தவிர வேறு எவரும் இந்த ராஜ்யத்தை நிர்வகித்து நடத்த முடியாது. வாயுவேகமுள்ள குதிரைக்கும் கழுதைக்கும் எவ்வளவு தூரம்! கருடனுக்கும் சிட்டுக் குருவிக்கும் எவ்வளவு பேதம்! தங்களுடைய சக்தியில் கோடியில் ஒரு அம்சம் என்னிடத்தில் உண்டா? மற்றவர்கள் தன்னை அண்டிப் பிழைக்கும்படியான பெருமை பெற்றவனே பாக்கியசாலி. அவனது வாழ்க்கையே போற்றத் தகுந்தது. பிறரை அண்டிப் பிழைப்பவனுடைய பிறப்பு ஒரு பிறப்பா?

ஒருவன் செழிப்பான இடத்தில் ஒரு விதையை விதைத்து அதை ஒவ்வொருநாளும் பாதுகாத்து வளர்த்தான். அது நாளடைவில் செடியாகி மரமாகி ஆகாசத்தை அளாவிக் கண்ணுக்கெட்டிய வரையில் பரவிய கிளைகளுடன் விளங்கிற்று. குள்ளனும் பலஹீனனும் தைரியமில்லாதவனும் அதில் ஏறத்துணியமாட்டான். அது புஷ்பங்களால் நிறைந்தபிறகு பழத்தைக் கொடுக்காவிட்டால் ஆசையுடன் அதை வைத்துப் பயிர்செய்து அதன் பழத்தைத் தின்ன எண்ணியிருந்தவனுக்கு பிரயோஜனப்படாமல் கேவலம்

துக்கத்தையே உண்டாக்குமல்லவா? அண்ணா! இந்த உபமானம் தங்களுக்காகச் சொல்லப்பட்டது. தாங்களோ மஹாபுத்திமான். என் கருத்தை எளிதில் அறியலாம். (வளர்த்தவர் மஹாராஜா. மரம் தாங்கள், அதன் புஷ்பமே தங்களுடைய அபிஷேகத்திற்கு வைத்த முகூர்த்தம். தாங்கள் ஆளுவதே பழம்). எங்களுக்குப் பிரபுவும் ரக்ஷகனுமான தாங்களே வேலைக்காரர்களைக் காப்பாற்றாமல் இருக்கலாமா? நமது நகரத்து ஜனங்களும் தலைவர்களும் தாங்கள் அபிஷேகம் செய்துகொண்டு ஆயிரம் கிரணங்களுடன் பிரகாசிக்கும் ஸூரியனைப்போல் ஸிம்மாஸனத்தில் வீற்றிருந்து ஆளுவதைக் கண்ணாரப் பார்த்துக் களிக்கட்டும். மதயானைகள் தங்களுக்குப் பின்னால் வீறிட்டுக்கொண்டு போகட்டும். அந்தப்புர ஸ்த்ரீகள் ஸகல பதார்த்தங்களையும் ஸித்தம் செய்து வைத்துக்கொண்டு தங்களை உபசரிக்கட்டும்" என்று கூறி ராமனை இப்படி வேண்டும் பொழுது நகரத்து ஜனங்கள் யாவரும், 'நல்லது' 'நல்லது' என்று பரதனைக் கொண்டாடினார்கள்.

இவ்வாறு மஹா கீர்த்திமானான பரதன் பிரலாபிப்பதை பார்த்து, அந்தக்கரணங்களையும் இந்திரியங்களையும் அடக்கின ராமன், "நாம் இவனுடைய வேண்டுகோளை ஒப்புக்கொள்ளவில்லை என்று பரதன் மிகவும் வருந்துகிறான். நாம் காட்டிற்குத் துரத்தப் பட்டதற்கும் சக்கரவர்த்தி மரணமடைந்ததற்கும் தானே காரணமென்று தன்னை நிந்திக்கிறான். ஆகையால் இவனை ஸமாதானம் செய்து அவனுடைய துக்கத்தைப் போக்கவேண்டும்" என்று நிச்சயித்தார். "குழந்தாய்! கைகேயியால் தூண்டப்பட்டு நமது பிதா என்னைக் காட்டிற்குத் துரத்தினாரென்று நினைக்கிறாய். அதற்கு அவளும் காரணமல்ல, நீயும் காரணம ல; தெய்வமே காரணம். எவனும் தன்இஷ்டப்படி நடக்கமுடியாது. தெய்வமே, ஸ்வதந்திரமில்லாத ஜீவனை பலஇடங்களுக்கும் இழுக்கிறது. பதார்த்தங்களின் ஸ்வபாவத்தை யோசித்தால் நாம் தடுக்கக்கூடியது ஒன்றுமில்லை. ஆகையால் நமது பிதா மரணமடைந்ததைப் பற்றி நாம் துக்கப்படுவது நல்லதல்ல. செல்வத்தை எல்லையில்லாமல் குவித்து வைத்தாலும் அது என்றைக்காவது அழிய வேண்டியதே. திருடனாவது ஸ்த்ரீயாவது அரசனாவது அதற்கு நாசகாரணமாகிறார்கள். வெகு உன்னதமான அதிகாரத்திலிருக்கும் பிரஹ்மா இந்திரன் முதலியவர்களும் அந்த அதிகாரகாலம் முடிந்துவிட்டால் அந்தப் பதவியிலிருந்து நீக்கப்படுகிறார்கள். பெண்டு பிள்ளை நண்பர்களுடன் சேர்ந்திருப்பதும் எப்பொழுதாவது அவர்களை விட்டுப் பிரிவதற்கு வழியே யன்றி வேறல்ல. எவ்வளவு உத்தமமான ஜீவனமும் மரணத்தால் முடிவை அடையவேண்டும். ஆகையால் நமது பிதா காலகதியால் மரணமடைந்தார். அதை யாரால் தடுக்க முடியும்? நீ அதற்காக வருந்திப் பயனென்ன?

தெய்வச்செயலால் காட்டிற்கு அனுப்பப்பட்டேனென்றும் காலகதியால் தசரதர் இறந்தாரென்றும் நான் முதலில் சொன்னேனல்லவா? இவ்விரண்டையும் பற்றித் துக்கப்படுவது பிசகு. பழுத்த பழங்களுக்கு மரத்திலிருந்து விழுவதைத் தவிர வேறு பயமில்லை. அப்படியே, பிறந்த மனிதனுக்கும் மரணத்தைத் தவிர வேறொன்றிலும் பயமில்லை. ஒரு கட்டிடம் ஆதியில் கெட்டியான சுவர்களோடும் அழுத்தமான தூண்களோடும் வெகுகாலம் வரையில் உபயோகப்பட்டுப் பிறகு வர வர இடிந்துவிழுவதுபோல், மனிதர்கள் கிழத்தனம் சாவு முதலியவைகளால் பீடிக்கப்பட்டு அழிகிறார்கள். சென்ற இரவு திரும்பி வருமா? யமுனையின் வெள்ளம் கடலில் விழுந்தபிறகு திரும்பிவருமா? எல்லா பிராணிகளுக்கும் இரவு பகல் மாறி மாறி வருகின்றன. கோடைகாலத்தில் ஸூரியகிரணங்கள் ஜலத்துளிகளைவற்றச் செய்வதுபோல், செல்லும் நாட்கள் வாழ்நாளைக் குறைக்கின்றன. நீ நின்றாலும் நடந்தாலும் உன் ஆயுள் குறையாமலிருக்குமா? ஆகையால் உன்னைப்பற்றியே நீ கவலைப்படவேண்டியிருக்கப் பிறரைப்பற்றி நீ வருத்தப்பட நியாயமென்ன? மிருத்யுவை நாம் விலக்கமுடியுமா? அது நம்முடன் நடந்து வருகிறது. நம் முன் உட்காருகிறது. நம்முடன் வெகுதூரம் பிரயாணம் செய்து திரும்புகிறது. வயதோ சென்றுகொண்டிருக்கிறது. ரத்தம் குறைந்து வருகிறது. உடலில் தோல் சுருங்கி மடிப்பு விழுகிறது. மயிர் நரைக்கிறது. கிழத்தனத்தால் நாம் வர வர அழிகிறோம். இவ்வாறு உள்ள மனிதன் எதைச் செய்தால் இந்த கஷ்டங்களிலிருந்து தப்பி அவைகளுக்கு உட்படாமல் பலம் பெறுவான்? ஸூர்யன் உதிக்கும் பொழுது அதைப் பார்த்து, செல்வத்தை ஸம்பாதிக்கும் காலம் வந்து விட்டதென்று மகிழ்கிறோம். ஸூரியன் அஸ்தமிக்கும்பொழுது அதைப் பார்த்துக் காம ஸுகங்களை அனுபவிக்கக் காலம் வந்து விட்டதென்று மகிழ்கிறோம். ஆனால் ஓட்டைக் குடத்தில் வைத்த ஜலம் கண்ணுக்குத் தெரியாமல் ஒழுகிப்போவதுபோல் நமது ஆயுளில் ஒருநாள் குறைந்ததை நாம் கவனிப்பதில்லை.

ஆகையால் பால்யத்திலேயே ஆத்ம ஞானத்தை ஸம்பாதிக்க வேண்டும். ஆனாலும் அவிவேகத்தால் அப்படிச் செய்யத் தவறுகிறோம். நமக்குப் பரலோகத்தில் க்ஷேமத்தைக் கொடுக்கும் ஸாதனங்களை நாம் பிழைத்திருக்கும் பொழுதே தேடுவதில்லை. ஒவ்வொரு ருதுவும் வரும்பொழுது அந்தக் காலத்தில் அனுபவிக்கக் கூடிய ஸுகங்களை நினைத்து மகிழ்கிறோம். ஆனால் அந்த ருதுவால் நமது ஆயுள் குறைவதைக் கவனிப்பதில்லை. சேர்ந்தவர்கள் பிரிய வேண்டியது அவசியமல்லவா? நியாயமல்லவா? கடலில் இரண்டு மரத்துண்டுகள் வெவ்வேறு பக்கத்திலிருந்து அலைகளால் அடித்துக் கொண்டு வரப்பட்டுக் கொஞ்சநேரம் சேர்ந்திருக்கின்றன. பிறகு அதே அலைகள் அவைகளைப் பிரித்து வெகுதூரத்தில் கொண்டு போய்த் தள்ளுகின்றன. பிறகு ஒருபொழுதும் சேருவதில்லை.

இப்படி மனைவிகளும் பிள்ளைகளும் பந்துக்களும் செல்வமும் நம்முடன் கொஞ்சகாலம் சேர்ந்திருந்து பிறகு பிரிந்துபோவது சகஜம். இவை நாசமடைய வேண்டியவைகளே. இந்த லோகத்தில் எந்தப் பிராணியும் தன் பந்துக்களுடன் இஷ்டப்படி இருக்கமுடியாது. ஆகையால் இறப்பவர்களுக்காகத் துக்கப்படுகிறவன் அதைத் தடுக்க முடியுமா? பலர் சேர்ந்து ஓரிடத்திற்குப் போகிறார்கள். வழியில் ஒருவன், 'நானும் உங்களுடன் வருகிறேன்' என்று பின்தொடர்கிறான். அதைப்போல் நமது தகப்பன் பாட்டன் முன்னோர்கள் சென்ற வழியில் நாமும் போகவேண்டும். அதைவிட்டு நாம் தப்ப முடியாது. இதைப்பற்றித் துக்கப்பட்டுப் பயனென்ன? ஆற்றில் ஜலம் ஒவ்வொரு துளியாக விழுந்து கண்ணுக்குத் தெரியாமல் போகிறது. அப்படி நமது ஆயுள் ஒவ்வொரு க்ஷணமாகப் போய்க்கொண்டிருக்கிறது. அது திரும்பி வராததென்று நன்றாகத் தெரியும். அப்பொழுது நாம் செய்யவேண்டியதென்ன? அழியாமலும் அதற்கு ஈடில்லாமலுமிருக்கும் ஸுகத்தைக் கொடுக்கும் தர்மத்தை ஸம்பாதிக்க வழி தேடவேண்டுமல்லவா? தர்மத்தால் அடையக்கூடிய ஸுகம்தான் மக்களுக்கு ஸுகம் என்பது நமக்குத் தெரியுமல்லவா?

நமது பிதாவான தசரத சக்கரவர்த்தி தர்மாத்மா; அளவற்ற தனத்தைச் செலவழித்து ஏராளமாகத் தக்ஷிணைகளைக்கொடுத்து எல்லா யாகங்களையும் செய்தார். பாபங்களிலிருந்து விடுபட்டு இப்பொழுது ஸ்வர்க்கத்திலிருக்கிறார். ஸேவகர்களைப் போஷித்ததாலும், ஜனங்களைத் தர்மமாக ஆண்டதாலும் தர்ம விரோதமில்லாமல் குடிகளிடத்திலிருந்து தனங்களை வாங்கினதாலும் நமது பிதா ஸ்வர்க்கத்தை அடைந்தார். தனக்கும் பிரஜைகளுக்கும் இஷ்டமான காரியங்களாலும் சாலைகள் குளங்கள் ஆலயங்கள் தோட்டங்கள் இவைகளை உண்டாக்கினதாலும் நமது பிதா ஸ்வர்க்கத்தை அடைந்தார். எல்லா போகங்களையும் குறைவில்லாமல் அனுபவித்து வெகுதீர்க்கமான ஆயுளை அடைந்து நமது பிதா ஸ்வர்க்கத்திலிருக்கிறார். அப்படியிருக்க இந்த லோகத்தில் இனி அவருக்குப் பூர்த்தியாகவேண்டிய ஆசை யாதொன்றுமில்லாமல் காலகதியால் பரலோகத்தை அடைந்திருக்கும் நமது பிதாவைப் பற்றி வருத்தப்பட கொஞ்சம்கூட நியாயமில்லை. அவர் பழுதடைந்த மனுஷ்ய தேகத்தை நீக்கி தேவலோகத்து ஸம்பத்துக்களான திவ்ய தேகம் பலம் ஞானம் காந்தி முதலியவைகளை அடைந்து ஆனந்தத்தில் மூழ்கியிருக்கிறார். இப்படிப்பட்டவரைக் குறித்து எ.. புத்திமானாவது துக்கப்படுவானா? நீ மஹா புத்திமானும், சாஸ்திரங்களைப் படித்தும், பெரியோர்களிடத்தில் கேட்டும் இருக்கிறாய். நீ கிலேசப்படுவது கொஞ்சம்கூடத் தகாது. நமது பிதாவின் மரணம், நான் காட்டிற்கு வந்தது முதலிய விஷயங்களைப்பற்றி அநேகவிதமாய் பிரலாபிப்பதும் அழுவதும் புத்திமானுக்குத் தகாது. ஆகையால் கவலைப்படாதே; துக்கத்தை விடு;



அயோத்யைக்குத் திரும்பிப்போ; ராஜ்யத்தை ஒப்புக்கொண்டு பரிபாலனம் செய்; நீ பேசும் திறமை உள்ளவனானதால் அநேக காரணங்களைச் சொல்வாய். இருந்தாலும், நமது பிதா உன்னைக் கட்டளையிட்டபடி நடக்கவேண்டியது உன் கடமை. அவர் இந்திரிய ஸ்வாதீனமற்று அக்ஞானத்தால் அப்படிச் செய்தாரென்று ஒருநாளும் எண்ணவேண்டாம். நானும் அந்தப் புண்யாத்மாவின் கட்டளையை மீறாமல் என்னால் கூடியவரையில் நிறைவேற்றுவேன். அவர் நமது பந்து, நமது பிதா, நமது குரு; அவருடைய கட்டளையை நாம் அலக்ஷ்யம் செய்வது நியாயமா? தர்மாத்மாவான அவருடைய வார்த்தையை அனுசரித்து இந்த வனத்தில் வஸித்துக்கொண்டிருக்கிறேன். ஒருவனுக்குப் பரலோகத்தில் நல்ல கதி கிடைக்க வேண்டுமென்றும், இவ்வுலகத்தில் பெரியோர்களின் நடத்தையை அனுசரிக்க வேண்டுமென்றும், தர்மத்தை ஸம்பாதிக்க வேண்டுமென்றும், ஸகல பிராணிகளிடத்திலும் தயவுடன் நடக்கவேண்டுமென்றும் விருப்பமிருந்தால் இதைத் தவிர வேறு வழியில்லை. நமது பிதாவின் நடத்தையை நன்றாகக் கவனித்து ஆலோசித்துப் பிறகு உன்னிடத்தில் ஒப்புவித்த ராஜ்யத்தை ஆளக்கடவாய்" என்று, ராமன் பல அர்த்தங்கள் அடங்கிய வாக்கியங்களால் பிதிரு வாக்கிய பரிபாலன தர்மத்தை உபதேசித்து அப்படியே நடக்கவேண்டுமென்று பரதனை எச்சரித்து ஒரு முகூர்த்தம் வரையில் மௌனமாக இருந்தார்.

இத்யேவ முக்த்வா வசநம் மஹாத்மா
பிதுர் நிதே$^{3}$ஶ ப்ரதிபாலநார்த$^{2}$ம் |
யவீயஸம் ப்$^{4}$ராதர மர்த$^{2}$வச்ச
ப்ரபு$^{4}$ர் முஹூர்தாத்$^{3}$ விரராம ராம: ‖ (46)

---

## ஸர்க்கம் 106

## பரதன் ராமனை மறுபடியும் பிரார்த்தித்தது

ஏவமுக்த்வா து விரதே ராமே வசந மர்த$^{2}$வத் |
ததோ மந்தா$^{3}$கிநீ தீரே ராமம் ப்ரக்ருதி வத்ஸலம் ‖ (1)

அப்பொழுது பரதன், "அண்ணா! இவ்வுலகத்தில் மஹாவீரரான தங்களைப்போல் ஒருவருமில்லை. கஷ்டம் நேர்ந்தால் தாங்கள் ஒருநாளும் வருத்தப்படுவதில்லை. ஸுகம் நேர்ந்தால் ஒருநாளும் மகிழ்வதும் இல்லை. யாவற்றையும் அறிந்தவரானதால் தங்களை பெரியோர்கள் கொண்டாடுகிறார்கள். அப்படியிருந்தும் தங்களுடைய ஸந்தேகத்தைத் தீர்க்கும்படி ஒவ்வொரு ஸமயத்தில் அவர்களைக் கேட்கின்றீர்கள். இறந்தவனிடத்தில் ஆசையையும் துவேஷத்தையும் எவனாவது வைப்பானா? அப்படி உயிரோடிருப்பவனிடத்திலும் நடக்க வேண்டும். இல்லாத பொருளை விரும்பவும் வெறுக்கவும்

முடியுமா? இருக்கும் வஸ்துவையும் அப்படியே நினைக்கவேண்டும். இப்படி நடக்கிறவன் ஸுக துக்கங்களால் கஷ்டப்படமாட்டான். 'நீ இதை அறிந்திருக்கும்பொழுது ஏன் பிரலாபிக்கிறாய்' என்றால், தாங்கள் படும் கஷ்டத்தைப் பார்த்துப் பொறுக்காமல் அப்படிச் சொன்னேன். ஜீவாத்ம பரமாத்மாக்களின் ஸ்வரூபத்தை அறிந்தவன் இவ்விதமான கஷ்டங்களால் வருந்தமாட்டான். தாங்களோ அவ்விதமான மஹாத்மா. ஆனாலும், தாங்கள் ராஜ்யத்தை இழந்து காட்டிலிருப்பதையும் நான் தங்களை விட்டுப் பிரிந்திருப்பதையும் நினைக்கும்பொழுது எனக்கு எல்லையற்ற துக்கமுண்டாகிறது. வீரியத்தில் தாங்கள் தேவேந்திரனைப் போன்றவர்கள்; மஹாத்மா; ஸத்வகுணம் பொருந்தினவர்கள்; தங்களை அண்டினவர்களுக்குத் தத்வோபதேசம் செய்து ரக்ஷிக்கிறவர்கள்; மஹா தைரியசாலி; செய்த பிரதிக்ஞை தவறாதவர்கள்; நடந்தது, நடக்கின்றது நடக்கப போகிறது இம்மூன்றையும் அறிந்தவர்கள்; புத்திமான்; எல்லா வித்யைகளிலும் நிபுணர்; பிராணிகளின் பிறப்பையும் இறப்பையும் பற்றின ரஹஸ்யங்கள் யாவையும் அறிந்தவர்கள். இந்த உத்தம குணங்களால் விளங்கும் தங்களுக்கு இவ்வளவு கோரமான துக்கம் வரக்கூடாது. நானில்லாத வேளையில் வெகு அல்ப புத்தியுள்ள என் தாய் என்னை உத்தேசித்துச் செய்த பாபம் எனக்குக் கெடுதியைத் தேடிவைத்தது. தாங்கள் அந்த அபராதத்தை மன்னிக்க வேண்டும். தர்ம பாசத்தால் கட்டுப்பட்டிருக்கிறேன். இல்லாவிட்டால் மஹாபாபியும் குரூரமான தண்டனைக்குத் தகுந்தவளுமான என் தாயைத் தண்டிக்காமலிருப்பேனோ? நான் சுத்தமான குலத்தில் பிறந்து பாபத்தையே அறியாத தசரதருக்குப் புத்திரன்; தர்மரஹஸ்யத்தை நன்றாக அறிந்தவன்; எல்லோரும் நிந்திக்கும்படியான அதர்மத்தைச் செய்வேனா?

"தசரதர் நம்மால் பூஜிக்கத் தகுந்தவர்; புண்ணியாத்மா; மிகவும் வயது சென்றவர்; நமக்கு அரசர்; நமது பிதா; தெய்வத்தைப் போன்றவர். அவரை இறந்த பிறகு தூஷிப்பது நியாயமல்ல. அதனால்தான், பலர் முன்னிலையில் அவரைப்பற்றி கூற விரும்பவில்லை. தர்மத்தையும் அதர்மத்தையும் நன்றாக அறிந்த யாராவது கேவலம் காமத்தால் தூண்டப்பட்டு ஒரு ஸ்த்ரீயைத் திருப்தி செய்ய இந்தக் கோரமான பாபத்தைச் செய்வார்களா? பிராணிகளுக்கு விநாசகாலத்தில் விபரீத புத்தி உண்டாகிறதென்று லோகத்தில் சொல்வதுண்டு. தசரதர் மரண காலத்தில் செய்த காரியத்தை யோசித்தால் அது ஸரியென்றே தோன்றுகிறது. கைகேயியின் கோபத்திற்குப் பயந்தோ, அவளிடத்தில் வைத்த ஆசையால் மயங்கியோ, அவளுடைய பிடிவாதத்தால் முன்பின் யோசிக்காமலோ நமது பிதா இந்த அதர்மத்தைச் செய்துவிட்டார். தாங்கள் எல்லோர்க்கும் க்ஷேமத்தை உண்டாக்க உத்தேசித்து அதற்கு ஏதாவது பரிஹாரம் செய்யவேண்டும். பிதா தவறி நடந்தாலும்



அதைப் புத்திரன் நல்ல வழியில் திருப்பிக்கொண்டு வந்தால் அவனையே புத்திரனென்று சொல்லவேண்டும். தாங்கள் அவ்விதமான புத்திரனாக இருக்கவேண்டும். லோகவிரோதமாயும் தர்மவிரோதமாயும் புத்திமான்கள் நிந்திப்பதாயுமிருக்கும் பாபத்தை நமது பிதா செய்வதும், தாங்கள் அதை ஒப்புக்கொள்வதும் உசிதமல்ல. கைகேயியையும் என்னையும் நமது பிதாவையும் நண்பர்களையும் பந்துக்களையும் இந்த ராஜ்யத்திலுள்ள ஜனங்களையும் தாங்களே காப்பாற்றவேண்டும். வனமெங்கே? க்ஷத்திரிய தர்மமெங்கே? ஜடை யெங்கே? ராஜ்ய பாலனமெங்கே? இதுவரையில் ஓரிடத்திலும் ஒருவரும் செய்யாத காரியத்தைத் தாங்கள் செய்வது உசிதமல்ல. 'க்ஷத்திரியர்கள் தபஸ்விகளின் தர்மத்தை அனுஷ்டிக்க வில்லையா' என்றால் ராஜ்யத்தில் பட்டாபிஷேகம் செய்து கொள்வது தான் அரசர்களுக்கு முதல் கடமையாகும். அதன் மூலம்தான் அவர்கள் ஜனங்களைக் காக்கமுடியும். தாங்களோ ப்ரத்யக்ஷமாக ஸகல போகபோக்யங்களுக்கும் அதிகாரத்திற்கும் இருப்பிடமும் பரலோகத்தில் எல்லையற்ற க்ஷேமத்தைக் கொடுப்பதுமான பிரஜா பாலன தர்மத்தை விட்டு, ப்ரத்யக்ஷமில்லாத தபஸ்வி தர்மத்தை அனுஷ்டிக்கிறீர்கள். அதில், ஒருபாகம் எங்கேயாவது குறைந்தாலும் பலனைக் கொடுப்பதில் ஸந்தேகமுண்டு. மேலும் அது எக்காலத்திலோ பலனைக் கொடுக்கும். க்ஷத்திரியன் இதையே முதலில் அனுஷ்டிக்க வேண்டுமென்று இதற்கு யாதொரு பிரமாணமும் இல்லை. இப்படி யாராவது செய்வார்களா? மேலும், தாங்கள் அனுஷ்டிக்க விரும்பும் தர்மமோ வெகு கஷ்டமானது. நான்கு வர்ணத்தார்களையும் தர்மமாகக் காப்பாற்றுவதில் அந்தக் கஷ்டத்தை அனுபவிக்கக்கூடாதா? நான்கு ஆசிரமங்களிலும் கிருஹஸ்தாசிரமமே மேலானதென்று தர்மரஹஸ்யத்தை அறிந்தவர்கள் ஒப்புக்கொள்ளுகிறார்கள். தங்களுக்குத் தெரியாத தர்மம் ஒன்றுமில்லையே. அப்படியிருக்க அந்த ஆசிரமத்தைத் தாங்கள் ஏன் கைவிடவேண்டும்?

நான் தங்களுக்கு இளையவன்; வயதில் சிறியவன்; வித்யையில் தங்களுக்குத் தாழ்ந்தவன்; க்ஷத்திரிய தர்மத்தின்படி தங்களுக்குப் பிறகே எனக்கு ராஜ்யம் கிடைக்கும். எல்லாவிதத்தாலும் என்னை விட சிரேஷ்டமான தாங்கள் இருக்கையில் இந்த லோகத்தை நான் ஆளுவது நியாயமா? ஆளமுடியுமா? தாங்கள் இல்லாமல் நான் உயிரை வைத்துக்கொள்ள முடியாது. தர்மஸ்வரூபியான தங்களுக்கு என்ன சொல்வேன்? நமது பிதாவால் ஆளப்பட்டுவந்த இந்தப் பெரிய ராஜ்யத்திற்கு யாதொரு உபத்திரவமும் இல்லை. அதை ஒப்புக்கொண்டு எல்லா பந்துக்களையும் ஜனங்களையும் தாங்களே ரக்ஷிக்கவேண்டும். வஸிஷ்டர் முதலிய மஹரிஷிகளும் ராஜ்ய உத்யோகஸ்தர்களும் ஜனங்களும் இங்கேயே அபிஷேகம் நடக்கவேண்டுமென்று விரும்புகிறார்கள். இந்திரன் ஸகல லோகங்களையும்

ஜயித்து மருத்கணங்களுடன் ராஜதானிக்குத் திரும்பிவருவதுபோல், தாங்களும் இங்கே அபிஷேகம் செய்துகொண்டு அயோத்யைக்குப் போய் ஜனங்களை ஆளுங்கள். மூன்று கடன்களையும் தீர்த்துவிட்டு, சத்ருக்களை அழித்து, மித்திரர்களின் எண்ணங்கள் யாவையும் நிறைவேற்றி, தாங்களே எப்பொழுதும் எங்களை ஆளவேண்டும். தங்களுடைய மித்திரர்கள் தங்களுடைய அபிஷேக மஹோத்ஸவத்தைக் கண்டு இன்றைக்கு ஸந்தோஷிக்கட்டும். தங்களுடைய சத்துருக்கள் அதைக்கேட்டு நான்கு திக்குகளிலும் ஓடி ஒளியட்டும். என் தாய் செய்த அக்கிரமத்தைத் தாங்கள் மறைத்து நமது பிதாவைப் பாபத்திலிருந்து கரையேற்றவேண்டும். தங்களுடைய பாதங்களில் என் தலையை வைத்துப் பணிந்து வேண்டுகிறேன். என்னிடத்திலும் நமது பந்துக்களிடத்திலும் ஸகல பிராணிகளிடத்திலும் மஹா விஷ்ணுவைப்போல் தாங்கள் இரக்கம் வைக்க வேண்டும். ஆனால், நான் சொல்வதைத் தள்ளிவிட்டுத் தாங்கள் இங்கிருந்து வனம் போக நிச்சயித்தால் நானும் தங்களுடன் வருகிறேன்'' என்றான்.

இப்படிப் பரதன் பலவிதமாக ராமனை ஸமாதானம் செய்தாலும் அவரோ பிதிருவாக்கிய பரிபாலன தர்மத்தையே மேலாக எண்ணி அயோத்யைக்குத் திரும்பி வருவதைப்பற்றி நினைக்கவேயில்லை. ராகவனிடத்தில் இந்த அத்புதமான உறுதியைப் பார்த்து ஜனங்களுக்கு ஓரே காலத்தில் துக்கமும் ஸந்தோஷமும் உண்டாயின. அயோத்யைக்குத் திரும்பி வரமாட்டேனென்கிறாரே என்று வருத்தப்பட்டார்கள். செய்தப் பிரதிக்ஞையைக் கைவிடாமலிருக்கிறாரே என்று ஸந்தோஷப்பட்டார்கள். ரித்விக்குகளும் நகரத்துத் தலைவர்களும் ராஜஸ்த்ரீகளும் கண்களில் நீர் ததும்ப பிரக்ஞையற்று பரதனைக் கொண்டாடி ராமனை வணங்கித் தங்களுடன் திரும்பி வரும்படி வேண்டினார்கள்.

தம் ரித்விஜோ நைக$^{3}$ம யூத$^{2}$வல்லபா$^{4}$:
ததா$^{2}$ விஸம்ஜ்ஞாஶ்ரு கலாஶ்ச மாதர: |
ததா$^{2}$ ப்$^{3}$ருவாணம் ப$^{4}$ரதம் ச துஷ்டுவு:
ப்ரணம்ய ராமம் ச யயாசிரே ஸஹ ‖ (35)

## ஸர்க்கம் 107

## ராமன் பரதனை ஸமாதானம் செய்தது

புநரேவம் ப்$^{3}$ருவாணம் தம் ப$^{4}$ரதம் லக்ஷ்மணாக்$^{3}$ரஜ: |
ப்ரத்யுவாச தத: ஶ்ரீமாந் ஜ்ஞாதிமத்$^{4}$யே பி$^{4}$ஸத்க்ருத: ‖ (1)

இப்படிப் பரதனால் அதிகமாகப் புகழப்பட்டும் ராமன், "குழந்தாய்! ராஜ சிரேஷ்டரான தசரதருக்கும் கைகேயிக்கும் புத்திரனான நீ இப்படிச் சொல்வது யுக்தமே. நமது பிதா கைகேயி



யிடத்தில் மிகுந்த ஆசைவைத்து இவ்விதமான அநியாயத்தைச் செய்தாரென்று நீ அவரை நிந்திப்பது ஸரியல்ல. இந்த விஷயத்தில் அவர் புத்தி பிசகி எதையும் செய்யவில்லை. முன்பு நமது பிதா உன் தாயான கைகேயியை விவாஹம் செய்யும்பொழுது கேகய மஹாராஜாவிடத்தில், 'உமது பெண்ணிற்குப் புத்திரன் பிறந்தால் அவனுக்கே என் ராஜ்யத்தைக் கொடுக்கிறேன்' என்று பிரதிக்ஞை செய்திருக்கிறார். தேவதைகளுக்கும் அஸுரர்களுக்கும் யுத்தம் நடந்தபொழுது கைகேயி தனக்குச் செய்த பெரும் உபகாரத்திற்காக மஹாராஜா அவளிடத்தில் ஸந்தோஷித்து இரண்டு வரங்களைக் கொடுத்தார். அவள் அப்படியே அவரை பிரதிக்ஞை செய்யச் சொல்லி, உனக்கு ராஜ்யம் கிடைக்கவும் என்னைக் காட்டிற்கு அனுப்பவும் கேட்டுக்கொண்டாள். ஆனால், 'தசரதர் தான் விவாஹ காலத்தில் கைகேயிக்குச் செய்த பிரதிக்ஞையை மறந்து ராஜ்யத்தை உனக்குக் கொடுப்பதாக எப்படிப்பிரதிக்ஞை செய்தார்' என்றால், விவாஹகாலத்திலும் ரதிஸமயத்திலும் உயிரை இழக்கும் தருணத்திலும் மித்திரனைக் காப்பாற்றவும் பொய்யைச்சொல்லலாம்; அதனால் பாபமில்லை என்ற நியாயத்தை அனுஸரித்து அப்படிச் செய்தார். கேகய மஹாராஜாவும் என்னிடத்தில் வைத்த பிரீதியால் உனக்கு ராஜ்யம் வேண்டுமென்று தசரதரை ஞாபகப்படுத்தவில்லை. இந்த ரஹஸ்யத்தை ஸுமந்திரர் முதலியவர்களால் அறிந்திருக்கிறேன். இந்தக் காரணத்தாலேயே அவர்களும் ஸம்மதித்தார்கள். அந்த ஏற்பாட்டின்படி பதினான்கு வருஷங்கள் வரையில் காட்டில் வஸிக்க வேண்டுமென்று அரசர் என்னைக் கட்டளையிட்டார். நானும் லக்ஷ்மணனும் ஸீதையும் மனுஷ்ய ஸஞ்சாரமில்லாத இந்த வனத்தில் பிதிருவாக்கிய பரிபாலனத்திற்காக வஸித்துக்கொண்டிருக்கிறோம்.

"என்னைத் தடுப்பதில் பிரயோஜனமே இல்லை. நீயும் அப்படியே அயோத்யைக்குத் திரும்பிப்போய் அபிஷேகம் செய்து கொண்டு நமது பிதா செய்த பிரதிக்ஞையை நிறைவேற்றவேண்டும். மஹாராஜா கைகேயியிடத்தில் பட்டிருக்கும் கடனை எனக்காகவாவது தீர்க்கவேண்டும். அப்படிச் செய்வதால் நமது பெற்றோர்களை ஸந்தோஷப்படுத்திய புண்ணியமும் கீர்த்தியும் உனக்குக் கிடைக்கும். முன்காலத்தில் கயமென்ற தேசத்தில் யாகம் செய்துகொண்டிருந்த கயமஹாராஜா பிதிருக்களைப் பற்றிச் சொன்னதை நீ கேட்டிருக்கலாமே.

"தகப்பனை 'புத்' என்ற நரகத்திலிருந்து கரையேற்றுவதால் புத்ரனென்ற பெயர் வந்தது. பெற்றோர்களைக் குறித்துத் தான தர்மங்களைச் செய்து அவர்களை ஸ்வர்க்கம் முதலிய உத்தம லோகங்களை அடையச்செய்து காப்பாற்றுவதாலும் புத்திரன் எனும் பெயர் வந்தது. குணவான்களும் வேதசாஸ்திர நிபுணர்களுமான பல புத்

திரர்கள் பிறக்கவேண்டுமென்று மனிதன் விரும்ப வேண்டும். ஏனெனில் அவர்களில் ஒருவனாவது கயை என்ற புண்யஸ்தலத்தில் பித்ருக்களுக்கு சிராத்தம் செய்வான்'' என்று அவர் சொல்லியிருக்கிறார்.

நமது முன்னோர்களான ராஜரிஷிகளும் இப்படியே உபதேசித்திருக்கிறார்கள். ஆகையால் நமது பிதாவை நரகத்திலிருந்து காப்பாற்று. சத்ருக்னனையும் உன்னுடன் வந்த பிராம்மணர்கள் முதலியவர்களையும் அழைத்துக்கொண்டு அயோத்யைக்குத் திரும்பிப் போய் நமது குடிகளைத் தர்மமாக ஆண்டு வா. நானும் என்னைச் சேர்ந்தவர்களுடன் தாமதமில்லாமல் தண்டகாரண்யத்திற்குப்போகிறேன். நீ மனிதர்களுக்கு அரசனாயிரு; வனத்திலிருக்கும் பிராணிகளுக்கு நான் அரசனாயிருக்கிறேன். நீ ஸந்தோஷமாக அயோத்யைக்குத் திரும்பிப்போ; நானும் ஸந்தோஷமாகத் தண்டகாரண்யத்திற்குப் போகிறேன். அரசர்களுக்குரிய வெள்ளைக் குடை, ஸூரிய கிரணங்கள் உன் தலையில் படாமல் தடுத்துக் குளிர்ச்சியை உண்டாக்கட்டும். நானும் இந்த வனத்திலுள்ள மரங்களின் அடியில் உட்கார்ந்து ஸூரியகிரணங்கள் என்மேல் படாமல் செய்துகொள்வேன். கூர்மையான புத்தியுள்ள சத்ருக்னன் உனக்கு உதவியாக இருப்பான்; லக்ஷ்மணன் எனக்கு உதவியாக இருப்பான். இப்படி நாம் நான்கு புத்திரர்களும் நமது பிதாவை ஸத்தியம் தவறாதவராகச் செய்வோம். வருத்தப்படாதே'' என்று ஸமாதானம் செய்தார்.

ஶத்ருக்⁴ந: குஶலமதிஸ்து தே ஸஹாய:
ஸௌமித்ரிர் மம விதி³த: ப்ரதா⁴ந மித்ரம் |
சத்வாரஸ் தநயவரா வயம் நரேந்த்³ரம்
ஸத்யஸ்த²ம் ப⁴ரத சராம மா விஷாத³ம் ॥ (19)

## ஸர்க்கம் 108

## ஜாபாலி மஹர்ஷியின் உபதேசம்

ஆஶ்வாஸயந்தம் ப⁴ரதம் ஜாபா³லிர் ப்³ராஹ்மணோத்தம: |
உவாச ராமம் த⁴ர்மஜ்ஞம் த⁴ர்மாபேத மித³ம் வச: ॥ (1)

பரதன் ஒன்றும் பதில் சொல்லாமலிருக்க, அங்கிருந்த புரோஹிதர்களில் ஒருவரான ஜாபாலி மஹரிஷி, உண்மையாகவே ராமனுக்கு ஹிதத்தைச் செய்யவேண்டுமென்று, வெளிக்கு மாத்திரம் சார்வாகர்களுடைய மதத்தை உபதேசித்தார். ''ராம! நீ பெருந்தன்மையான மனத்தையுடையவன்; உத்தமமான புத்தியுள்ளவன். ஸாதாரண மனுஷ்யனைப்போல் பயனில்லாத வார்த்தைகளைச் சொல்வது உன் புத்திக்கு அழகல்ல. யார் யாருக்குப் பந்து? எவனுக்கு எந்த ஸாதனத்தால் என்ன கிடைக்க வேண்டியிருக்கிறது? யோசித்துப்பார்த்தால் ஒன்றுமில்லை. ஒவ்வொரு பிராணியும் தனியாகவே பிறக்கிறான்; தனியாகவே இறக்கிறான். ஆகையால் தாயென்றும் தகப்பனென்றும் நம்மைப் பெற்றவர்களென்றும் அவர்களிடத்தில் ஆசைவைக்கிறவன் பித்தனே. ஒருவனுக்கு மற்றொருவனால் என்ன பயன்? ஒருவன் அயலூருக்குப்போக நினைத்து ஓரிடத்தில் தங்கி அவ்விடத்தைவிட்டு மறுநாள் வேறோரிடத்திற்குப் போவதுபோல், மனுஷ்யர்களுக்கும் தாய் தகப்பன் வீடுவாசல் என்பவை, வழியில் தங்குமிடங்களைப் போன்றவையே. புத்திமான்கள் அவைகளில் ஆசை வைக்கமாட்டார்கள். வழியிலுள்ள சத்திரத்தில் இளைப்பாறக் கொஞ்சநேரம் தங்கி அதை விட்டுப் போகிறவனுக்கு அந்தக் கட்டிடத்தைப்பற்றி ஏதாவது கவலையுண்டோ? அப்படி நமது பெற்றோர் உயிரோடிருக்கும் வரையிலும் நாம் அவர்களுடன் சேர்ந்திருக்கும் வரையிலும் அவர்களைப்பற்றிய ஞாபகம் நமக்கு இருக்கவேண்டும். அவர்களை விட்டுப் பிரிந்த பிறகும் அவர்களைப் பற்றி நினைப்பது வீண். அவர்களுக்கு ஸந்தோஷத்தை உண்டுபண்ண எவனாவது பாடுபடுவானா?



உன் பிதாவின் ராஜ்யம் உனக்குக் கிடைக்கவேண்டியது. அதை வேண்டாமென்று தள்ளிவிட்டு, உன் யௌவனத்திற்குத் தகாததும் அநேக துக்கங்களுக்கிடமானதும் சாஸ்திர விரோதமுள்ளதுமான வானப்பிரஸ்தாசிரமத்தை எவனாவது கைக்கொள்வானா? ஒரு ஸ்த்ரீ தன் பிரிய நாயகன் தேசாந்திரத்திற்குப் போயிருக்கையில் தன்னை அலங்கரித்துக்கொள்ளாமல் ஸந்தோஷமற்று ஸகல துக்கக் குறிகளுடனிருப்பதுபோல், ஸகல ஸம்பத்துக்களுடன் விளங்கிய அயோத்யா நகரம் சொல்ல முடியாத துக்கத்தை அனுபவித்துக்கொண்டு, நீ எப்பொழுது வருவாயென்று எதிர் பார்த்துக்கொண்டிருக்கிறது. ஆகையால், அதிசீக்கிரத்தில் நீ அயோத்யைக்குத் திரும்பிப் போய் அபிஷேகம் செய்துகொள். அரசர்கள் அனுபவிக்கத் தகுந்த ஸகலபோகங்களையும் அனுபவித்துக்கொண்டு, ஸ்வர்க்கத்தில் தேவேந்திரன் ஸௌக்கியமாக இருப்பதுபோல் கோஸல ராஜ்யத்தைப் பாலனம் செய். தசரதர் உனக்கு யார்? நீ அவருக்கு யார்? என் தகப்பனென்று சொல்லக் காரணமென்ன? அவர் வேறு; நீ வேறு. ஆகையால் நான் சொல்வதைச் செய். பிதா பிராணிகளின் உத்பத்திக்குக் காரணமென்று சொல்வது முற்றிலும் பிசகு. ருதுகாலத்தில் ஸம்பந்தப்படும் ஸ்த்ரீ புருஷர்களின் தேகங்களிலிருந்து உண்டாகும் சுக்ல சோணிதங்களே மூல காரணமென்று சொல்லலாம். தசரதரென்ற ரூபம் அதற்கேற்பட்ட தர்மத்தை அனுசரித்து ஐந்து மஹாபூதங்களில் போய்க் கலந்துவிட்டது. ஸகல பிராணிகளின் கதியும் இப்படியே. ஏதோ உனக்கும் தசரதருக்கும் ஸம்பந்தமிருக்கிறதென்று அஞ்ஞானத்தால் வீணாக வருந்துகிறாய்.

பிரத்யக்ஷமான ஸுகங்களை அனுபவிக்க முயற்சி செய்வதைவிட்டுத் தனத்தைச் சேர்த்துவைக்க வேண்டுமென்றும், தர்மத்தை

ஸம்பாதித்துப் பரலோகத்தை அடையவேண்டுமென்றும் பாடுபடுகிறவர்களைப் பார்க்கும்பொழுது எனக்கு உண்டாகும் வருத்தத்தைச் சொல்லமுடியாது. அவர்களுக்கு இவ்வுலகத்தில் எப்பொழுதும் கஷ்டமே; இதைவிட்டுப் போனபிறகும் கஷ்டமே. தர்மத்தை ஸம்பாதிக்க முயலுவது வீண்என்பதற்கு ஒரு உதாரணம் சொல்லுகிறேன். அஷ்டகா சிராத்தமென்றும் ஸம்வத்ஸர சிராத்தமென்றும் லோகத்தில் ஜனங்கள் செய்கிறார்களே; அதில் உபயோகப்படும் அன்னம் முழுவதும் வீணல்லவா? இறந்தவன் அவைகளைத் தின்பதை யாராவது பார்த்ததுண்டா? ஒருவன் சாப்பிட்ட அன்னம் மற்றொருவனுடைய உடலில் புகுந்து அவனுக்குத் திருப்தி செய்யுமானால், நம்மைச் சேர்ந்தவர்கள் அயலூருக்குப் போயிருக்கும்பொழுது நாம் அவர்களுக்காக இங்கே சிராத்தம் செய்தால், பசிதாகங்கள் அடங்கி அவர்கள் திருப்தி அடையவேண்டுமே! 'யாகங்களைச் செய், தானங்களைக் கொடு, இந்திரியங்களை அடக்கித் தவம் செய், தேவதைகளுக்குப் பூஜை செய். குடும்பம் தனம் முதலிய விஷயங்களில் ஆசை வைக்காதே' என்று உபதேசிக்கும் சாஸ்திரங்களைச் செய்தவர்கள் யார்? கூர்மையான புத்தியுள்ள சிலர் பிறரை ஏமாற்றி அவர்களுடைய தனத்தைக் கொள்ளையடிக்க இந்த விதிகளை ஏற்படுத்தி அவைகளை நம்பும் மூடர்களைத் தங்களுடைய வலையில் இழுத்துக் கொள்ளுகிறார்கள்.

மஹா புத்திமானான நீ, பரலோகம் உண்டென்று நம்புவது ஆச்சரியமே. பரலோகமே கிடையாது. பிதுருவாக்கிய பரிபாலனம் செய்தால் பரலோகத்தில் உனக்கும் தசரதருக்கும் விசேஷமான க்ஷேமம் கிடைக்குமென்பது எப்படிப் பொருந்தும்? நமது இந்திரியங்களுக்கு எது இலக்கோ அதுவே உண்மை; அதையே நம்பு; இந்த ராஜ்யமும் அதனால் கிடைக்கும் போகங்களும் அதிகாரமும் ஸௌக்யமுமே பிரத்யக்ஷம்; அவைகளையே கைப்பற்று. பிரத்யக்ஷமில்லாத ஸ்வர்க்க நரகங்களையும் பாபபுண்ணியங்களையும் திரும்பிப் பாராதே. நான்சொல்லும் நீதி, லோகத்தில் யாவருக்கும் ஸம்மதமாக இருக்கும். நீயும் அதை அங்கீகரித்துப் பரதனுடைய பிரார்த்தனைக்கு இணங்கி ராஜ்யத்தை ஒப்புக்கொள்'' என்று நாஸ்திக மதத்தை உபதேசித்தார்.

ஸ தாம் பு3த்3தி4ம் புரஸ்க்ருத்ய ஸர்வலோக நித3ர்ஶினீம் |
ராஜ்யம் த்வம் ப்ரதிக்3ருஹ்ணீஷ்வ ப4ரதேந ப்ரஸாதி3த: || (18)



## ஸர்க்கம் 109

# ராமன் ஜாபாலியைக் கண்டித்தது

ஜாபா3லேஸ்து வச: ஶ்ருத்வா ராம: ஸத்யாத்மநாம் வர: |
உவாச பரயா ப4க்த்யா ஸ்வபு3த்3த்4யா சாவிபந்நயா || (1)

ராமன் ஸத்தியபுத்தியுள்ளவர்களுக்குள் சிரேஷ்டர்; வைதிக கர்மங்களில் மிகுந்த சிரத்தையுள்ளவர்; ஜாபாலி சொன்ன காரணங்களால் அவருடைய புத்தி கொஞ்சம்கூட மாறவில்லை.

“எனக்கு பிரியமான விஷயத்தை நான் அடையவேண்டுமென்று இப்படிச் சொன்னீர். ஆனால், அவை நியாயம் போலும் எனக்கு ஹிதத்தைக் கொடுக்கக்கூடியவைபோலும் தோன்றினாலும் உண்மையாக அநியாயமே. எனக்கு மிகக் கெடுதியைச் செய்யக்கூடியது. நீர் வேதவிரோதமான மதத்தை உபதேசிக்கிறீர்; நீர் பாபமான நடத்தையுள்ளவர்; யாதொரு கட்டுப்பாடுமில்லாதவர்; ஸாதுக்கள் உம்மைப் பூஜிக்கமாட்டார்கள்; எல்லோரும் நிந்திப்பார்கள். ஒவ்வொருவனுடைய நடத்தையிலிருந்து அவன் உத்தம குலத்தில் பிறந்தவனென்றும் அல்லனென்றும் மஹா வீரனென்றும் பயந்தவனென்றும் சுத்தனென்றும் அசுத்தனென்றும் கண்டு பிடிக்கலாம். சிரேஷ்ட குணங்களில்லாவிட்டாலும் அவைகளை உடையவனைப்போலும், அசுத்தனானாலும் சுத்தனைப்போலும், ஸாதுக்களின் லக்ஷணங்கள் இல்லாவிட்டாலும் அவைகளை உடையவன்போலும், சீலம் இல்லாதவனானாலும் சீலமுள்ளவனைப் போலும் உலகத்திற்குக் காட்டிக்கொண்டு ஸகல மங்களங்களுக்கும் ஸாதனமான வைதிக தர்மத்தை விட்டு, லோகத்தில் ஸகலஜாதிகளையும் ஒன்றாக்கக் கலந்து, வைதிகக் கிரியைகளும் வேதவிதிகளும் இல்லாத-உம்மால் சொல்லப்பட்ட-அதர்மத்தைத் தர்மமாக நான் அனுஷ்டித்தால், எந்த புத்திமானாவது காரியாகாரிய விவேகமுள்ளவனாவது என்னை மதிப்பானா? துஷ்டனென்றும் லோகத்தைக் கெடுக்கிறவனென்றும் என்னை நிந்திக்கமாட்டானா?

இது போனாலும் போகட்டும். எனக்கு எப்படிப் பரலோகம் கிடைக்கும்? வனவாஸம் செய்கிறேன் என்ற பிரதிக்ஞையையும் பொய்யாக்கி உமது உபதேசத்தை அனுஷ்டித்தால் நான் யாருக்கு அதை, இவ்வழியே நல்லதென உபதேசிப்பேன்? எந்த ஸாதனத்தால் ஸ்வர்க்கத்தை அடைவேன்? உமது உபதேசத்தால் இவ்வுலகத்தில் யாவரும் பரலோகமடையாமல் போவார்கள். அரசர்களின் நடத்தையையே பிரஜைகளும் அனுஸரிக்கிறார்கள். நான் காமத்தையே புருஷார்த்தமாக நினைத்து அதற்கு ஒத்து நடந்தால் குடிகளும் தங்கள் இஷ்டப்படி நடப்பார்கள். யாதொரு கட்டுப்பாடுமில்லாமல் எல்லோரும் அதி சீக்கிரத்தில் அழிவார்கள்.

முன்காலம் முதல் வழங்கிவரும் ராஜதர்மம் ஸத்தியத்தாலும் கருணையாலும் நிறைந்தது; ஸத்தியத்தையே பிரதானமாக உடையது; இந்த லோகமே ஸத்தியத்தை ஆதாரமாக உடையது; ரிஷிகளும் தேவதைகளும் ஸத்தியத்தையே சிரேஷ்டமாக எண்ணுகிறார்கள். இந்த லோகத்தில் ஸத்தியம் தவறாதவன் பரமபதத்தை அடைகிறான். பாம்பைக் கண்டு ஜனங்கள் நடுங்குவதுபோல் பொய்யனைக் கண்டு நடுங்குகிறார்கள். உத்தம தர்மம் ஸத்தியமே; ஸ்வர்க்கத்திற்கு மூலம் ஸத்தியமே; ஈசுவரனும் ஸத்தியமே; ஸகல ஐசுவரியமும் அதையே பொறுத்திருக்கிறது; யாவும் ஸத்தியத்திலேயே வேரூன்றி இருக்கின்றன; ஸத்தியத்தைக் காட்டிலும் மேலான பதவி வேறொன்றில்லை; தானங்களும் யாகங்களும் ஹோமங்களும் தவமும் வேதங்களும் ஸத்தியத்தை ஆதாரமாகக் கொண்டவை; ஆகையால் நாம் ஸத்தியத்தையே அனுஷ்டிக்க வேண்டும். அப்படிச் செய்கிறவன் இந்த லோகத்தைத் தர்மமாக ஆண்டு இறந்த பிறகு பரலோகத்தை அடைகிறான். ஸத்தியத்தை விட்டவன் இவ்வுலகத்தில் தன் குடும்பத்தை மாத்திரம் காப்பாற்றுகிறான்; ஆனால், இறந்த பிறகு கோரமான நரகத்தையே அடைகிறான்.

நான் ஸத்தியத்தை அனுஷ்டிக்கிறவன். ராஜ்யத்தை விட்டுக் காட்டில் வஸிக்கிறேன் என்று கைகேயியிடத்தில் பிரதிக்ஞை செய்திருக்கிறேன். என் பிதாவின் ஆக்ஞையை நான் ஏன் நிறைவேற்றக்கூடாது? ராஜ்யத்திற்கு ஆசைகொண்டாவது மோசமான வார்த்தைகளைக் கேட்டு மயங்கியாவது அறியாத்தனத்தாலாவது தமோகுணம் மேலிட்டு, செய்த பிரதிக்ஞையைத் தவற மாட்டேன். ஸத்தியத்தைக் கைவிட்ட ஸ்திர புத்தியில்லாதவனுடைய ஹவிஸ் முதலியவற்றை தேவதைகளும் பிதிருக்களும் ஏற்றுக்கொள்வதில்லை என்று கேட்டிருக்கிறேன். ஸத்தியமென்ற தர்மம் ஆத்மாவிற்கு ஸ்வபாவமான லக்ஷணமென்று எனக்கு அனுபவத்தால் தெரியும். ஸாதுக்களால் அனுஷ்டிக்கப்பட்ட தபஸ்வி தர்மம் அந்த உத்தம பிரயோஜனத்தை உத்தேசித்து எனக்கும் பிரியமாயிருக்கிறது. அதர்மம் மேலிட்டுக் கொஞ்சம் தர்ம ஸம்பந்தமுள்ள இவ்விதமான க்ஷத்திரிய தர்மத்தை ஒப்புக்கொள்ளமாட்டேன். அல்ப ஸ்வபாவமுள்ளவர்களும் பாபிகளும் குரூரமானவர்களும் பேராசை கொண்டவர்களும் செய்யும் காரியமல்லவா அது? பொய்யைச் சொல்லும் பொழுது மனமும் சொல்லும் தேகமும் அதில் ஸம்பந்தப்பட்டிருக்கின்றன. ஆகையால் அது மூவகைப் பாபத்தின் தொகுதியாகும். மனத்தால் நன்றாக ஆலோசித்து, வாக்கால் பேசி, தேகத்தால் செய்து முடிக்கிறோம். ராஜ்யாதிகாரமும் கீர்த்தியும் செல்வமும் மதிப்பும் ஸத்தியம் தவறாதவனையே பிரார்த்திக்கின்றன; ஸத்தியத்தால் ஸ்வர்க்கத்தை அடைந்தவனையே அனுஸரிக்கின்றன. ஆகையால் ஸத்தியத்தையே காப்பாற்றவேண்டும்.



'இது உத்தம மார்க்கம் இது உனக்கு க்ஷேமத்தை உண்டு பண்ணும்; இதைச் செய்' என்று பல யுக்திகளால் காட்டி எனக்கு தாங்கள் உபதேசித்த தர்மம் பெரியோர் ஒப்புக்கொள்ளத் தகுந்த தர்மமன்று. பூஜிக்கத் தகுந்த என் பிதாவிடத்தில், 'காட்டில் வஸிக்கிறேன்; என்று பிரதிக்ஞை செய்து இப்பொழுது அதை மீறிப் பரதனுடைய வார்த்தைக்குக் கட்டுப்பட்டு ராஜ்யத்தை எப்படி ஒப்புக்கொள்வேன்? நான் செய்த பிரதிக்ஞையை மீற மாட்டேனென்ற நம்பிக்கையால் அல்லவா கைகேயி அவ்வளவு ஸந்தோஷப்பட்டாள்? சுத்தனாய் சாஸ்திரப்படி ஆசார நியமத்தை அனுஷ்டித்து, வனத்தில் கிடைக்கும் பழங்கள் கிழங்குகள் புஷ்பங்களால் தேவதைகளையும் பிதிருக்களையும் திருப்திசெய்து, பஞ்சேந்திரியங்களைப் பாபத்தைச் செய்யவொட்டாமல் தடுத்து, இந்த அரண்யத்தில் பிதிருவாக்கிய பரிபாலனம் செய்துகொண்டிருப்பேன். காரியாகாரியங்களைப் பகுத்தறிந்து ஸகலக் கிரியைகளையும் சிரத்தையுடன் அனுஷ்டித்துக் கபடமில்லாமல் காலத்தைக் கழிப்பேன்.

அக்னி வாயு ஸோமன் முதலிய தேவதைகள் இதற்கு முன்னால் இந்தக் கர்ம பூமியை அடைந்து, புண்ணிய கர்மங்களைச் செய்து, அவைகளின் பலனாக உத்தம பதவிகளை அனுபவிக்கிறார்கள். இப்பொழுது தேவேந்திரனாயிருப்பவன் நூறு யாகங்களைச் செய்து, அந்த ஸ்திதியை அடைந்திருக்கிறான். மஹரிஷிகள் கடுமையான தவத்தைச் செய்து உத்தம லோகங்களை அடைந்திருக்கிறார்கள். ஸத்தியமும் தர்மமும் பராக்கிரமும் பிராணிகளிடத்தில் தயையும் பிரியமாக பேசுவதும், பிராம்மணர்கள் தேவதைகள் அதிதிகள் முதலியவர்களைப் பூஜிப்பதும் ஸ்வர்க்கத்திற்குப் போகும் வழிகளென்று பெரியோர்கள் சொல்லியிருக்கிறார்கள். ஆகையால், பிராம்மணர்கள் இந்த அர்த்தத்தை உள்ளபடி அறிந்து, எல்லோரும் ஒரே அபிப்பிராயத்துடன் தங்கள் வர்ணாசிரமதர்மங்களை ஸாவதானமாக அனுஷ்டித்துக்கொண்டு, இறந்த பிறகு ஸ்வர்க்கம் முதலிய உத்தமலோகங்கள் கிடைப்பதை எதிர்பார்த்துக்கொண்டிருக்கிறார்கள்.

நீர் வைதிக மார்க்கத்திற்கு விரோதமான புத்தியையுடையவர்; இந்த நாஸ்திக தர்மத்தையே பிறருக்கு உபதேசித்து வருகிறீர். வைதிகரைப்போல் வேஷம் தரித்துச் சார்வாகனுடைய நடத்தையையுடையவர்; இப்படி எல்லாவிதத்திலும் நமது ராஜ்யத்திற்கு அபாயத்தை உண்டுபண்ணும் உம்மை என் பிதா இந்தப் பதவியில் நியமித்ததைப் பற்றி மிகவும் துக்கிக்கிறேன். வைதிக கர்மங்களிலிருந்து இந்த க்ஷணம் முதல் உம்மை விலக்கிவிட்டேன். பிரத்யக்ஷ பிரமாணத்தையே நம்புகிறவன் இந்த ராஜ்யத்தில் ஒருவனும் இருக்கக்கூடாது. திருடன் போல் நாஸ்திகன் கருதப்படுகிறான். திருடனை விலக்குவதுபோல் நாஸ்திகனையும் விலக்க வேண்டும். திருட்டு

போன்றதே நாஸ்திகமும். திருடனுக்கும் நாஸ்திகனுக்கும் பேதமில்லை. ஆகையால், வைதிக தர்மத்தை அனுஸரிக்கிறவனல்லவென்று எவனிடத்தில் ஸந்தேகமுண்டாகிறதோ, அந்த நாஸ்திகனுடன் புத்திமான் ஒரு நிமிஷமாவது சேர்ந்திருக்கக்கூடாது.

தர்மம் இஹத்திலும் பரத்திலும் பயனைக் கொடுக்குமென்பதற்குப் பெரியோர்களுடைய ஆசாரமே பிரமாணம். உமக்கு முன்னிலிருந்த மஹாஞானிகள் உம்மைவிட உயர்ந்தவர்கள். அநேக சுபகர்மங்களைச் செய்து இந்த லோகத்திலும் பரலோகத்திலும் ஸகல க்ஷேமங்களையும் அடைந்த கிரஹங்களின் ரூபமாயும் நக்ஷத்திரங்களின் ரூபமாயும் அழியாமலிருக்கிறார்கள். கர்மானுஷ்டானம் இஹத்திலும் பரத்திலும் ஸகல பலன்களையும் அடைவதற்கு ஸாதனமாக இருப்பதால், பிராம்மணர்கள் மங்கள காரியங்களையும் யாகயக்ஞங்களையும் தவம், தானம் முதலியவைகளையும் செய்கிறார்கள். ஆகையால் லோகத்தில் ரிஷிகள் தர்மத்திலேயே நாடிய மனமுள்ளவர்களாகவும், ஸாதுக்களுடைய சேர்க்கையையே விரும்புகிறவர்களாகவும். தேஜஸ்விகளாகவும், தானம் முதலிய உத்தம குணங்களுள்ளவர்களாகவும், பிறர்க்குக் கெடுதி செய்யாதவர்களாகவும், தோஷமற்றவர்களாகவும், பூஜ்யர்களாகவும், சிரேஷ்டர்களாகவும் இருக்கிறார்கள்'' என்று, வைதிக தர்மத்தை ஸ்தாபிக்க அவதாரம் செய்த ராமசந்திரன், ஜாபாலியின் வேத விரோதமான நாஸ்திக வாக்கியங்களைக் கேட்க சகிக்காமல் மஹாகோபத்துடன் மறுமொழி சொன்னார்.

அதைக் கேட்டு ஜாபாலி அவரை ஸமாதானம் செய்து மறுபடியும் ஸத்தியமாகவும் தர்மமாகவும் இருக்கும் வாக்கியங்களைச் சொன்னார். "தர்ம ஸங்கடம் நேரும்பொழுது, எல்லா மதங்களையும் அறிந்த வித்வான், ஏதாவது ஒரு தர்மத்தைக் கைப்பற்றி அந்தக் கெடுதியை நீக்கவேண்டும்' என்ற விதிப்படி, இப்பொழுது இந்த ராஜ்யம் அரசனில்லாமல் வெகு அபாயகரமான ஸ்திதியிலிருப்பதால் உன் மனத்தை எப்படியாவது திருப்பி, ராஜ்யத்தை ஒப்புக்கொள்ளும்படி செய்தால் அந்த ஸங்கடம் தீரும். நான் நாஸ்திக மதத்தை வாதித்ததின் காரணம் அதுவே. உண்மையாக நான் நாஸ்திகனல்ல. நாஸ்திகர்களுடைய கொள்கையை உபதேசிக்கிறவனுமல்ல. பரலோகம் முதலியவை இல்லை என்று சொல்லுகிறவனுமல்ல. பல ஸமயங்களில் எதிரிகள் நாஸ்திக மதத்தைப்பற்றிக் குதர்க்கமாக வாதம் செய்யும்பொழுது நான் அதே மதத்தை ஆதாரமாக வைத்துக்கொண்டு பல யுக்திகளால் அதைச் சின்னாபின்னமாகக் கண்டித்திருக்கிறேன். ஸமயம் நேர்ந்தால் நாஸ்திக மதத்தையும் ஒப்புக்கொண்டு பேசுவேன். அந்த ஸமயம் இப்பொழுது நேர்ந்தது. ஆகையால் நாஸ்திகனைப்போல் பேசினேன். வேத மார்க்கத்தில் வேறூன்றி இருக்கிறாய் என்பதை இப்பொழுது யாவர்க்கும் தெரிவிக்கவேண்டியது. பரதன் மிகவும் துக்கப்படுவதைப் பார்த்து எனக்கும் துக்கமுண்டாயிற்று. அவனுக்குக் கொஞ்சமாவது ஸந்தோஷமுண்டாகும்படி செய்யவேண்டியது' அவசியமாகையால் பரம வைதிகனை நான் இப்படிப் பேசவேண்டியிருந்தது'' என்றார்.

ஸ சாபி காலோய முபாக$^{3}$த: ஶநை:
யத$^{2}$ா மயா நாஸ்திக வாகு$^{3}$தீ$^{3}$ரிதா |
நிவர்தநார்த$^{2}$ம் தவ ராம காரணாத்
ப்ரஸாத$^{3}$நார்த$^{2}$ம் து மயைத தீ$^{3}$ரிதம் ‖ (39)

---

## ஸர்க்கம் 110

# வஸிஷ்டர் ஸூரியவம்சத்தை வர்ணித்தது

---

க்ருத்$^{3}$த மாஜ்ஞாய ராமம் து வஸிஷ்ட$^{2}$: ப்ரத்யுவாச ஹ |
ஜாபா$^{3}$லிரபி ஜாநீதே லோகஸ்யாஸ்ய க$^{3}$தாக$^{3}$திம் ‖ (1)

ராமன் கோபம் கொண்டிருப்பதை அறிந்து வஸிஷ்டர், "ராம! ஜாபாலி நாஸ்திகரல்ல. பிராணிகளுக்குப் புனர் ஜன்மம் பரலோகம் முதலியவை உண்டென்று அவருக்கு நேரில் தெரியும். உன்னை அயோத்யைக்குத் திரும்பிப்போகச் செய்யவேண்டுமென்று இப்படிப் பேசினார். லோகநாத! உனக்குத் தெரியாதது ஒன்றுமில்லை. ஆனாலும் இந்த லோகத்தின் உத்பத்தியைக் கொஞ்சம் எடுத்துச் சொல்லுகிறேன். தயவு செய்து கவனிக்கவேண்டும்.

ஆதியில் எல்லாம் ஜலமயமாக இருந்தது. பிறகு அதிலிருந்து பிருதிவி உண்டாயிற்று. பிறகு ஸ்வயம்புவான பிரஹ்மாவும் தேவதைகளும் உண்டானார்கள். பிறகு நாராயணன் வராஹரூபியாக அந்த ஜலத்திலிருந்து பூமியை வெளியில் எடுத்து மஹாத்மாக்களான தன் புத்திரர்களுடன் பிரபஞ்சம் யாவையும் ஸிருஷ்டித்தார். ஆகாசமென்ற பரப்ரஹ்மத்திலிருந்து சதுர்முக பிரஹ்மா உண்டானார்.

அவருடைய மானஸபுத்ரன் மரீசி. அவரது புத்ரர் கச்யபர், அவரிடத்திலிருந்து விவஸ்வான் (ஸூர்யன்) பிறந்தார். விவஸ்வானது புத்திரர் மனு. அவர்தான் முதல் பிரஜாபதி. இவருடைய மகன் இக்ஷ்வாகு.

இக்ஷ்வாகு மகன் குக்ஷி; குக்ஷிமகன் விகுக்ஷி; விகுக்ஷிமகன் பாணன். அவனுடைய புத்திரன் அனரண்யன். இவனுடைய ராஜ்யத்தில் பஞ்சம் இல்லை, திருட்டும் இல்லை. அனரண்யன் மகன் ப்ருது. அவனது புத்திரன் திரிசங்கு. இவன் ஸத்தியம் பேசியது காரணமாக உடலுடன் ஸ்வர்க்கம் சென்றான். திரிசங்குவின் மகன் பெரும் புகழ்பெற்ற துந்துமாரன். அவனுடைய புத்திரன் யுவனாச்வன். யுவனாச்வன் மகனான மாந்தாதாவிற்கு ஸுஸந்தி என்பவன்

மகன். த்ருவஸந்தி ப்ரஸேனன் என்பவர்கள் ஸுஸந்தியின் புத்திரர்கள். த்ருவ ஸந்தியின் பிள்ளை பரதன். பரதன் மகன் அஸிதன். இவனுடைய சத்ருக்களான ஹைஹயர்களும் தாலஜங்கர்களும் சசிபிந்துக்களும் இவனை ஜயித்துத் துரத்திவிட்டார்கள். கர்ப்பிணிகளான தன் இரண்டு பார்யைகளுடன் இவன் ஒரு மலையில் தவம் செய்து கொண்டிருந்தான். இரு மனைவியரில் காளிந்தி என்பவள் அங்கே கடுந் தவம் செய்துகொண்டிருந்த ச்யவனரென்ற ப்ருகுவின் புத்திரரை அண்டிப் பணிவிடை செய்துகொண்டிருந்தாள். உத்தமான புத்திரன் தனக்குப் பிறக்கவேண்டுமென்று அவள் ஆசை கொண்டதை அறிந்து அந்த மஹரிஷி, 'குழந்தாய்! தர்மவானும் மஹாத்மாவும் நன்னடத்தையுள்ளவனும் மஹாபராக்கிரமசாலியும் உன் குலத்தை விளங்கச் செய்கிறவனுமான ஒரு புத்திரன் அதிசீக்கிரத்தில் உனக்குப் பிறப்பான்' என்று அனுக்ரஹித்தார். அவள் அவரைப் பூஜித்து நமஸ்கரித்துத் திரும்பிப் போனாள். சில காலத்திற்குப் பிறகு அவளுக்குத் தேஜஸாலும் அழகாலும் நிகரற்ற ஓர் புத்திரன் பிறந்தான். அவளுடைய கர்ப்பத்தை அழிக்க அவள் சக்களத்தி கொடுத்த விஷத்துடன் அந்தக் குழந்தை பிறந்தபடியால் அவனுக்கு ஸகரனென்று பெயர் வந்தது. இப்பொழுது பர்வகாலங்களில் பொங்கி ஜனங்களுக்குப் பயத்தை உண்டு பண்ணும் ஸமுத்திரத்தை வெட்டுவித்தவர் அவரே. ஸகரன் மகன் அஸமஞ்சன். அவன் செய்த பாபத்திற்காக அவனை அரசன் ராஜ்யத்திலிருந்து துரத்திவிட்டான். அம்சுமான், திலீபன், பகீரதன், ககுத்ஸ்தன், ரகு, ப்ரவிருத்தன் (இவனுக்குக் கல்மாஷபாதனென்றும் ஸௌதாஸனென்றும் பெயருண்டு. இவன் சில காலம் வரையில் சாபத்தால் மனுஷ்யர்களைத் தின்றான்.) சங்கணன், (மேற் சொன்ன கல்மாஷபாதன் இவனையும் இவனுடைய ஸைன்யத்தையும் ராக்ஷஸ வேஷம் பூண்டு கொன்றான்). ஸுதர்சனன், அக்னிவர்ணன், சீக்ரகன், மரு, (இவர் யோகபலத்தால் இப்பொழுதும் ஹிமயமலைச் சாரலில் கலாபக்ராமத்தில் வஸிக்கிறார். அவதரிக்கப்போகும் கல்கி பகவானுக்கு ஸேனாபதியாவார்). பிரசுச்ருகன் அம்பரீஷன் நஹுஷன் நாபாகன் என்ற இவ்வரசர்கள் வம்சபரம்பரையில் ஒருவர் பின் ஒருவராகத் தோன்றினர். நாபாகனுக்கு அஜன் ஸுவ்ரதன் என இருவர் புத்திரர்கள்; அஜனுடைய புத்திரர் தசரதர். அவருடைய மூத்தபுத்திரன் ராமனென்று பெயர் பெற்ற நீதான்.

ஆகையால் உனக்கு நியாயமாகக் கிடைக்கவேண்டிய ராஜ்யத்தைப் பெற்றுக்கொண்டு உன் குடிகளைக் காப்பாற்று. இக்ஷ்வாகு வம்சத்தில் இதுவரையில் மூத்தபுத்திரனே ஆண்டுவருகிறான். மூத்தவன் இருக்கும்பொழுது இளையவனுக்கு ராஜ்யாபிஷேகம் கிடைக்காது. ரகுவம்சத்து மன்னர்களின் குலதர்மம் இதுவே. இதை நீ இன்றைக்குக் கெடுக்கப் பார்ப்பது நியாயமல்ல. தன தான்யம் ரத்னம் முதலிய சிரேஷ்டமான பொருள்களாலும் பல ராஜ்யங்களாலும் விளங்கும் இந்தப் பூமியை உன்னைத்தவிர வேறொருவர் ஆளமுடியாது. தசரதருக்குப் பிறகு நீயே ஆளவேண்டும்'' என்றார்.

ஸ ராக‘வாணாம் குலத‘ர்ம மாத்மந:
ஸநாதநம் நாத்$^{3}$ய விஹந்து மர்ஹஸி |
ப்ரபூ‘த ரத்நாமநுஶாதி‘ மேதி$^{3}$நீம்
ப்ரபூ‘த ராஷ்ட்ராம் பித்ருவந் மஹாயஶ: ‖ (36)



## ஸர்க்கம் 111

# ராமனைத் திருப்ப முடியாமை

வஸிஷ்ட$^{2}$ஸ்து ததா$^{3}$ ராமமுக்த்வா ராஜ புரோஹித: |
அப்ரவீத்$^{3}$ த‘ர்மஸம்யுக்தம் புநரேவா பரம் வச: ‖ (1)

இப்படிக் குலதர்மத்தை எடுத்துக்காட்டிய பிறகும், "நமது பிதாவின் ஆக்ஞையைவிட இது மேலல்ல'' என்று ராமன் மௌனமாக இருந்தார். வஸிஷ்டர் அதையறிந்து, "ராமா! ஒவ்வொரு மனிதனுக்கும் ஆசாரியன் பிதா மாதா என்று மூன்று குருமார்களுண்டு. மாதாபிதாக்கள் இவனுடைய தேகத்தைக் கொடுக்கிறார்கள். ஆசாரியர் ஞானத்தைக் கொடுக்கிறார். ஆகையால் பெற்றோரை விட அவர் மேலானவர். நான் உன் முன்னோர்களுக்கும் ஆசாரியன். உனக்கும் அப்படியே. என் வார்த்தையை அங்கீகரித்து நடந்தால் ஸாதுக்களின் அனுஷ்டானத்தை மீறாதவன் ஆவாய். இதோ இருக்கும் பிராஹ்மணர்களையும் நகரத்து ஜனங்களையும் க்ஷத்திரிய வைசியர்களையும் மற்றக் குடிகளையும் நீ தர்மம் தவறாமல் ஆண்டால் உன் முன்னோர்களின் நடத்தையைக் கைவிடாமலிருக்கலாம். பிதாவைக் காட்டிலும் தாய் பல மடங்கு மேலானவளென்று சொல்லியிருப்பதால் வயதுசென்ற தர்மாத்மாவான உன் தாய்க்குப் பணிவிடை செய்யாமலிருப்பது உசிதமல்ல. அவளுடைய சொற்படி நடந்தால் ஸாதுக்களின் வழியில் நடந்ததாகும். உன்னைக் கெஞ்சிக் கேட்டுக்கொள்ளும் பரதன் உன் பிராணனைப் போன்றவனல்லவா? அவனுடைய சொல்லைத் தட்டலாமா? உன்னை அண்டினவர்களைக் கைவிடுகிறதில்லை என்ற தர்மம் உன்னுடன் பிறந்தல்லவா? ஸத்தியத்தைக் கைவிடுவதில்லை; தர்மத்தைக் கைவிடுவதில்லை என்று பிரதிக்ஞை செய்திருப்பதுபோல், அண்டினவர்களையும் கைவிடுவதில்லை என்று நீ பிரதிக்ஞை செய்யவில்லையா '' என்று மதுரமான வார்த்தைகளால் ராஜநீதியை உபதேசித்தார்.

புருஷோத்தமனான ராமன், "ஸ்வாமி! தர்மத்தை அனுஷ்டிக்கும் மனிதனுடைய தேகம் இருக்கும் வரையில் தர்மங்கள் நடக்கும் என்ற நியாயத்தால், ஸகல தர்மங்களையும் ஸம்பாதிக்க ஆதாரமான தேகத்தை நமக்குக் கொடுப்பதாலும் பூர்ணஞானம்

கிடைத்த பிறகும் எவ்வகையாலும் நம்மை ரக்ஷித்துப் பல உபகாரங்களைச் செய்வதாலும் ஆசாரியனுடைய வார்த்தையை விடப் பிதாவின் வார்த்தை மேலானது. அதை நிறைவேற்ற வேண்டியது அவசியம். 'ஆகையால் மாதாவை தெய்வமாக நினை, ஆசார்யரை உன் தெய்வமாக நினை' என்று சொன்ன வேதவாக்கியங்களில் ஆசாரியனை மாதா பிதாக்களுக்குப் பிறகு சொல்லி இருப்பதாலும் தங்களுக்குப் புத்திரன் பிறப்பதற்காகப் பெற்றோர்கள் விரதங்களையும் உபவாஸங்களையும் தீர்த்தயாத்திரைகளையும் தேவபூஜைகளையும் கணக்கில்லாமல் செய்வதாலும் பிறந்த பிறகு தங்களால் கூடியவரையில் பால்கொடுத்து அன்னமிட்டு நீராட்டி ஆடையாபரணம் கொடுத்து வெகு பிரியத்துடன் பேசி, மிகுந்த கவலையுடன் ஒவ்வொரு நாளும் புத்திரனை வளர்ப்பதாலும் அவர்கள் செய்யும் உபகாரத்திற்குப் புத்திரன் எவ்வளவு ஜன்மங்களெடுத்தாலும் பதில் உபகாரம் செய்வது ஸாத்தியமல்ல. (மேற்சொன்ன வேத வாக்கியத்தில் மாதாவைப்பிதாவிற்கு மேலாகச் சொல்லியிருப்பதைக் கவனிக்கவும். அல்லது அந்த வரிசையை வேறு விதமாகவும் கொள்ளலாம். தாய் தேகத்தை மாத்திரம் கொடுப்பவள். பிதா தேகத்தையும் வைதிக ஸம்ஸ்காரங்களையும் கொடுக்கிறார். இந்த வரிசை பாகவதம் 10 வது ஸ்கந்தத்தில் குசேல உபாக்கியானத்தில் கிருஷ்ணனால் ஆசார்யமஹிமையை உபதேசிப்பதற்காகச் சொல்லப்படுகிறது.)

இப்படியிருக்கச் சக்கரவர்த்தி எனக்குப் பிதா; எனக்கு தேகத்தைக் கொடுத்தவர்; அவருடைய கட்டளை யாவற்றிற்கும் முந்தினது. அவரிடத்தில் நான் செய்த பிரதிக்ஞையும் யாவற்றிற்கும் முந்தினது. என் தாயின் கட்டளையும் பரதனுடைய பிரார்த்தனையும் பிந்தினது. ஆகையால் என் பிதாவின் வார்த்தை பொய்யாகும்படி விடுவேனோ'' என்றார். அப்பொழுது மஹாத்மாவான பரதன் தான் மஹாபாபியான கைகேயியை பிரார்த்தித்து ராஜ்யத்தை வாங்கி ராமனுக்குக் கொடுத்ததும் பிரயோஜனமில்லாமற் போயிற்றே என்று மிகுந்த வருத்தமடைந்து, ஸமீபத்திலிருந்த ஸுமந்திரரைப் பார்த்து "தர்ப்பங்களை இங்கே சீக்கிரமாகப் பரப்பும். என் அண்ணன் என்னிடத்தில் அனுக்கிரகம் செய்யும் வரையில் உபவாஸமிருப்பேன். லோகத்தில் கடன் வாங்கினவன் அதைத் திருப்பிக் கொடுக்காவிட்டால், கடன் கொடுத்த பிராம்மணன் ஆகாரமில்லாமல் முகத்தை மறைத்துக்கொண்டு கடன் வாங்கினவனுடைய வாசற்படியில் தன் கடனைக் கொடுக்கும்வரையில் படுத்திருப்பதுபோல், நானும் என் அண்ணன் அயோத்யைக்குத் திரும்பி வரும் வரையில் அவருடைய பர்ணசாலையின் வாசலில் படுத்திருப்பேன்'' என்றான். 'இப்படிச் செய்யட்டுமா' என்று ஸுமந்திரர் ராமனுடைய முகத்தைப் பார்த்துக்கொண்டு தயங்கி நிற்பதைக் கண்டு பரதன் மிகவும் வருத்தமடைந்து, தானே தர்ப்பங்களைக் கொண்டுவந்து பரப்பி அவைகளின்மேல் படுத்துக்கொண்டான்.



அதைப் பார்த்து ராஜரிஷிகளுக்குள் சிரேஷ்டரான ராமன் "குழந்தாய்! பரத! இப்படிக் கோரமான காரியத்தைச் செய்து என்னை நிர்ப்பந்திக்க நான் உனக்கு என்ன அபகாரம் செய்தேன்? பிராம்மணன் தன்னிடத்தில் கடன்வாங்கித் திருப்பிக் கொடுக்காதவனை நிர்ப்பந்திக்க ஒருபக்கமாகப் படுத்துக்கொண்டு இப்படிச்செய்யலாம். அந்தத் தர்மம் க்ஷத்திரியர்களுக்கு விதிக்கப்படவில்லை. புருஷ சிரேஷ்டா! இந்தக் கோரமான தர்மத்தை விடு. அயோத்யைக்கு சீக்கிரமாகத் திரும்பிப் போ'' என்றார்.

அப்பொழுது பரதன் உட்கார்ந்துகொண்டே பிரஜைகளைப் பார்த்து, "நீங்கள் ராமனை ஏன் கெஞ்சிக் கேட்காமலிருக்கிறீர்கள்'' என்றான். அவர்கள், "ராமனே ஸத்தியம் தவறாதவரென்று எங்களுக்கு நன்றாகத் தெரியும். அவர் சொல்வது நியாயமென்று எங்களுக்குத் தோன்றுகிறது. அவர் பிதாவின் ஆக்ஞைக்குக் கட்டுப்பட்டு அதை அனுஷ்டிக்க நிச்சயித்திருக்கிறார். ஆகையால் அவரைத் திருப்புவது அஸாத்தியம்'' என்றார்கள். ராமன், "பரத! தர்மபுத்தியுள்ளவர்களும் உன் ஹிதத்தையே தேடுகிறவர்களுமான இவர்களுடைய வார்த்தையைக் கேள். இதையும் நான் சொன்னதையும் நன்றாக யோசித்து எழுந்திரு. க்ஷத்திரியனுக்கு விதிக்கப்படாத இந்த விரதத்தை அனுஷ்டித்ததற்கு பிராயச்சித்தமாகச் சுத்தஜலத்தில் ஆசமனம் செய்து என்னையும் தொடு. வஸிஷ்டர் முதலிய மஹரிஷிகள் இருக்கும்பொழுது என்னை ஏன் தொடவேண்டும் என்றால், இனிமேல் இப்படிச் செய்வதில்லை என்று பிரதிக்ஞை செய்யவேண்டும்'' என்றார்.

பரதன் எழுந்து ஆசமனம் செய்து "பிராம்மணர்களே! மந்திரிகளே! நகரத்தலைவர்களே! மற்ற ஜனங்களே! நான்சொல்வதைக் கவனமாகக் கேளுங்கள். இந்தராஜ்யத்தை நான் கனவிலும் விரும்பவில்லை. 'இப்படிச் செய்' என்று கைகேயியை நான் ஒருபொழுதும் சொன்னதில்லை. பரம தார்மிகரும் பூஜ்யருமான ராமன் காட்டிற்குப் போகவேண்டுமென்று நான் சொல்லவில்லை. சக்கரவர்த்தியின் வார்த்தைப்படி நடக்கவேண்டியதும் காட்டில் வஸிக்கவேண்டியதும் அவசியமானால், ராமனுக்கு பதிலாக நானே பதினான்கு வருஷங்கள் வரையில் காட்டில் வஸிக்கிறேன். எனக்குப் பதிலாக ராமன் அயோத்யையை ஆளட்டும். அப்படிச் செய்வதால் நாங்கள் இருவரும் பிதாவின் வார்த்தையை நிறைவேற்றினவர்களாவோம்'' என்றான்.

அதைக் கேட்டு ராமன் ஆச்சரியமடைந்து ஜனங்களைப் பார்த்து, "சக்கரவர்த்தி ஒரு பொருளை வாங்கினாலும் விற்றாலும் அடகு வைத்தாலும் நானும் பரதனும் அதை மாற்ற முடியாது. வனவாஸத்தை எனக்குக் கொடுத்து, எனக்குக்கிடைக்கவேண்டிய ராஜ்யத்தை அதற்குப் பதிலாக என்னிடத்திலிருந்து தசரதர்

வாங்கிக்கொண்டார். அதை நம்மால் மாற்றமுடியுமா? காட்டில் வஸிப்பதற்கு எனக்குப் பதிலாக வேறொருவனைத் தேடுவது எனக்கு என்றும் அழியாத அபகீர்த்தியை உண்டாக்கும். குளிர்ந்த ஜலத்தில் ஸ்நானம் செய்ய சக்தியில்லாதவனுக்கு மாத்திரம் மந்த்ர ஸ்நானம் விதிக்கப்படுகிறது. அப்படி வனத்தில் வஸிக்க எனக்குச் சக்தியில்லாவிட்டால் அல்லவா வேறொருவனைத் தேடவேண்டும்? சக்தியிருக்கும் பொழுது அப்படிச் செய்தால் என் பிதாவின் வார்த்தை பொய்யாகும். கைகேயி சொன்னது உசிதமே. சக்கரவர்த்தி செய்த காரியமும் உத்தமமே. பரதன் பொறுமையுள்ளவனென்றும் 'மூத்தோருக்குப் பக்தியுடன் பணிவிடை செய்கிறவனென்றும் எனக்கு நன்றாகத் தெரியும். ஸத்திய ஸந்தன்; மஹாத்மா. அவன் செய்யும் காரியங்கள் யாவும் க்ஷேமத்தையே உண்டாக்கும். தர்மாத்மாவான லக்ஷ்மணனுடன் நான் வனவாஸத்தைச் செய்து முடித்து அயோத்யைக்குத் திரும்பி வந்து ராஜ்யத்தை ஆளுகிறேன். கைகேயி சக்கரவர்த்தியை பிரார்த்தித்து வரங்களைப் பெற்றாள். நான் அவளுடைய வார்த்தைப்படி நடக்கிறேன். நீயும் என் வார்த்தைப்படி நடந்து நமது பிதாவை ஸத்தியஸந்தராகச் செய்'' என்றார்.

வ்ருதோ ராஜா ஹி கைகேய்யா மயா தத்[3] வசநம் க்ருதம் |
அந்ருதாந் மோசயாநேந பிதரம் தம் மஹீபதிம் ‖ (32)

---

## ஸர்க்கம் 112

## ராமன் பரதனுக்குத் தம் பாதுகைகளைக் கொடுத்தது

---

தமப்ரதிம தேஜோப்[4]யாம் ப்[4]ராத்ருப்[4]யாம் ரோமஹர்ஷணம் |
விஸ்மிதா: ஸங்க[3]மம் ப்ரேக்ஷ்ய ஸமவேதா மஹர்ஷய: ‖ (1)

நிகரற்ற தேஜஸ் பொருந்திய அந்த ஸஹோதரர்கள் இப்படி வெகு பிரீதியுடன் கலந்துபேசுவதைக் கேட்டு அங்கிருந்த மஹரிஷிகள் மயிர்க்கூச்சமடைந்து ஆச்சரியப்பட்டார்கள். மறைந்துநின்ற ராஜரிஷிகளும் தேவரிஷிகளும் ஸித்தர்களும் கந்தர்வர்களும் மஹாத்மாக்களான அந்த ஸஹோதரர்களைப் பார்த்து, "தர்மத்தை அனுஷ்டிப்பதில் சூரர்களும் தர்மத்தை அறிந்தவர்களுமான இந்த ராஜபுத்திரர்கள் எவருடைய குமாரர்களோ அவரே புண்யாத்மா. இவர்களுடைய ஸம்பாஷணையை மேன்மேலும் கேட்கவேண்டுமென்று ஆசை உண்டாகிறது'' என்று கொண்டாடினார்கள்.

பிறகு ரிஷிகள் ராவணவதம் சீக்கிரமாக நடக்கவேண்டுமென்பதை விரும்பியவர்களாக ஒன்றுசேர்ந்து பரதனைப் பார்த்து, "குழந்தாய்! உத்தம குலத்தில் பிறந்தவனே! மஹாபுத்திமானே! சுத்தமான நடத்தையுள்ளவனே! எல்லையற்ற கீர்த்திசாலியே! உன் பிதாவிற்கு ஸௌக்கியம் கிடைக்கவேண்டுமென்று உனக்கு எண்ணமிருந்தால் ராமனுடைய வார்த்தைப்படி நட. கைகேயியிடத்தில் கடன் வைத்துக்கொள்ளாமலிருந்ததால் தசரதர் ஸ்வர்க்கத்தை அடைந்தார். அப்படியே ராமனும் தசரதரிடத்தில் கடன் வைத்துக் கொள்ளக் கூடாதென்று விரும்புகிறோம்'' என்று சொல்லிவிட்டுத் தங்களிடத்திற்குப் போனார்கள். அந்தச் சுபமான வார்த்தையைக் கேட்டு ராமனும் ஸந்தோஷத்தால் முகம் மலர்ந்து அவர்களைத் தகுந்தபடி பூஜித்தார்.



தன் பிரார்த்தனை எவ்விதத்திலும் நிறைவேறவில்லை என்று பரதன் தேகம் நடுங்கி வார்த்தை குளறக் கைகூப்பி, "அண்ணா! ராஜ்யபாலன தர்மத்தையும் நமது வம்சத்தில் இதுவரையில் நடந்து வந்த ஆசாரத்தையும் நன்றாக ஆலோசித்து என் பிரார்த்தனையையும் என் தாயின் வேண்டுகோளையும் அங்கீகரிக்கவேண்டும். இந்தப் பெரிய ராஜ்யத்தை நான் ஒருவனாக ஆளமுடியாது. தங்களிடத்தில் பிரீதிவைத்திருக்கும் ஜனங்களை ஸந்தோஷப்படுத்தவும் முடியாது. பயிரிடுகிறவர்கள் மழையை பிரார்த்திப்பதுபோல் நமது பந்துக்களும் ஸைன்யங்களும் மித்திரர்களும் தங்களையே விரும்புகிறார்கள் இந்த ராஜ்யத்தை ஒப்புக்கொண்டு நிலைநிறுத்தவேண்டும். இந்த லோகத்தை ஆளுவது தங்களுக்குப் பெரிய காரியமல்ல'' என்றான்.

தன் புத்தியும் சக்தியும் எட்டியவரையில் உபாயங்களைச் செய்து அவை யெல்லாம் பலிக்காததைக் கண்டு பரதன் வேறு கதியில்லாமல் ராமனையே சரணமாக அடைந்து அவருடைய பாதங்களில் விழுந்து வணங்கி பிரார்த்தித்தான். (ராமனைச் சரணாகதி செய்தால் அது வீண் போகாதல்லவா? ஆனால், அதற்குமுன் தேவதைகள் தன்னைச் சரணாகதி செய்ததற்கு பிரயோஜனமாக ராவணவதம் செய்யவேண்டியிருந்தது. அதற்கு அனுகூலமாகப் பிதிருவாக்கிய பரிபாலனமென்ற காரணத்தால் வனவாஸமும் நேர்ந்தது. ஆகையால் தேவகாரியம் முடிந்தவுடன் பரதன் செய்த சரணாகதிக்குப் பயனைக் கொடுக்கவேண்டும். அவனோ அதுவரையில் பொறுக்கமுடியாதவன். ஆகையால் அவனை ஸமாதானம் செய்யவேண்டும்.) எனவே ராமர் அவனை மடியில் உட்காரவைத்துக் கொண்டார். ராமனுடைய திவ்விய தேகம் பட்டவுடனேயே பரதனுக்கு ஸகல சிரமும் ஸகல துக்கமும் நீங்கின. நீருண்ட மேகம்போல் கறுத்த திருமேனியோடும் தாமரை இதழ்கள் போன்ற திருக்கண்களோடும் மதங்கொண்ட அன்னங்களின் குரலைப்போன்ற த்வனியோடும் விளங்கினான் பரதன். ராமன் "குழந்தாய்! இவ்விதமான நல்ல புத்தி உனக்கு ஸ்வபாவமாக ஏற்பட்டுப் பெரியோர்களின் உபதேசத்தால் உறுதியாக இருக்கிறது. ஆகையால் இந்தப் பூமண்டலத்தையும் ஆள உனக்குத் திறமையுண்டு. மந்திரி பிரதானி மித்திரன் புத்திமான் இவர்களோடும் எல்லா காரியங்களையும் நன்றாக ஆலோசித்து நடத்து'' என்றார். தானும் தேவரிஷி கணங்களும் எவ்வளவு சொன்னாலும் தன்னை மறுபடியும் அயோத்யைக்கு

அழைத்துப்போவதென்ற பிடிவாதத்தைப் பரதன் விடுவதாகத் தோன்றவில்லை என்பதை அறிந்து, அந்த விருப்பத்தை வேருடன் அழிக்கவேண்டுமென்று விரும்பி ராமன் "சந்திரனுடைய காந்தி அவனை விட்டு விலகினாலும் விலகும்: ஹிமாலயத்தின் பனி அதை விட்டு விலகினாலும் விலகும்; ஸமுத்திரம் கரை புரண்டாலும் புரளும். நான் என் பிதாவிடத்தில் செய்த பிரதிக்ஞையைத் தவற மாட்டேன். உன் தாய், உன்னிடத்தில் வைத்த பிரியத்தாலோ, அல்லது உன்னை வைத்துக்கொண்டு தானே ராஜ்யத்தை ஆள வேண்டுமென்ற ஆசையாலோ இந்தக் காரியத்தைச் செய்துவிட்டாள். நீ அதை மனதில் வைத்துக்கொண்டு வருத்தப்படக்கூடாது. மாதாவுக்குச் செய்யவேண்டிய பணிவிடை யாவையும் அவளுக்குச் செய்யவேண்டும்'' என்று கட்டளையிட்டார்.

ஒளிமிக்க ஸூரியனைப்போல் ஜ்வலிப்பவர் ராமன். செய்த பிரதிக்ஞையை நிறைவேற்றுவதில் சுக்லபக்ஷ பிரதமையில் உள்ள சந்திரனைப்போல் யாவராலும் பார்க்க விரும்பப்படுபவர்; முறையே ராஜ்யம் வந்து மேன்மை அடையப்போகின்றவர்; ஸகல பிராணிகளாலும் பூஜிக்கத்தகுந்தவர்; ராஜ்யத்தை க்ஷேமமாக ஆளக்கூடியவர் என்பதை நன்றாக அறிந்த பரதன், தனக்கும் ராமனுக்கும் எப்பொழுதும் ஹிதத்தையே விரும்பும் வஸிஷ்ட மஹரிஷியின் கட்டளையை அனுசரித்து, ராமனைப் பார்த்து, "அண்ணா! தங்கத்தால் அலங்கரிக்கப்பட்ட இந்த மரவடிகளில் தாங்கள் ஏறவேண்டும். இவை ஸகல லோகங்களுக்கும் மங்களத்தை உண்டுபண்ணப் போகின்றன.'' என்று பிரார்த்தித்தான். அப்பொழுது ராகவன் தான் செய்த பிரதிக்ஞையையும் பரதன் செய்த சரணாகதியையும் பூர்த்தி செய்ய விரும்பி அப்படியே அந்தப் பாதுகைகளில் தன் திருவடிகளை வைத்து அவைகளைப் பரதனுக்குக் கொடுத்தார். (பரம குருக்கள் தங்களுடைய திருவடிகளை உத்தம சிஷ்யர்களின் தலையில் வைத்து அனுக்ரஹம் செய்வது ஸம்ப்ரதாயம். தங்களுடைய ஞானம் சக்தி யாவும் அவர்களிடத்தில் குடிகொள்ளும். இதற்குத் **'திருவடி தீக்ஷை'** என்று பெயர். இப்பொழுதும் ஆசாரியனுடைய திருவடி ஸம்பந்தம் பெற்ற பாதுகைகளைப் பூஜையில் வைப்பதும் அவைகளை அலம்பின தீர்த்தத்தை ப்ரோக்ஷித்துக்கொள்வதும் பெரியோர்களின் ஆசாரம். மஹாபலியின் தலையில் மஹாவிஷ்ணு தன் திருவடியை வைத்ததற்கு ரஹஸ்யார்த்தம் இதுவே.) அந்தராஜகுமாரன் அவைகளுக்கு பிரதக்ஷிண நமஸ்காரம் செய்து, "இந்தப் பதினான்கு வருஷங்கள் வரையில் பழங்களையும் கிழங்குகளையும் வேர்களையும் உண்டு, நகரத்திற்கு வெளியிலிருந்து தங்களுடைய வரவை எதிர்பார்த்துக்கொண்டிருப்பேன். ராஜ்யாதிகாரம் யாவற்றையும் தங்களுடைய திருவடிகளில் ஒப்புவிப்பேன். பதினான்கு வருஷங்கள் முடிந்து பதினைந்தாவது வருஷம் முதலாவது நாளில் தங்களை நான்

Notes : This Blank Page has also to be counted as a another page Number.

It is intentionally left blank after Picture Sketches.!

Released by Maran's Dog ,Toronto, Canada



தத: ஶிரஸி க்ருத்வா து பாது³கே ப⁴ரதஸ் ததா³ |
ஆருரோஹ ரத²ம் ஹ்ருஷ்ட: ஶத்ருக்⁴நேந ஸமந்வித: || —அயோ. 113 ஸ - 1 ஸ.

பிறகு பரதன் அந்தப் பாதுகைகளைத் தன் தலையில் பக்தியுடன் வைத்துக்கொண்டு சத்ருக்னனுடன் ஸந்தோஷமாக ரதத்தில் ஏறினான். (பக்கம் 385 பார்க்க)

தரிசிக்காவிட்டால் நெருப்பில் விழுவேன்'' என்று கோர பிரதிக்ஞை செய்தான். அதைக்கேட்டு ராமன், அப்படியே செய்கிறேன் என்று பரதனையும் சத்ருக்னனையும் பிரியத்துடன் தழுவி, "பரத! உன் தாயான கைகேயியை ஜாக்கிரதையாகக் காப்பாற்று. அவளிடத்தில் கோபிக்காதே. என்மேலும் ஸீதைமேலும் ஆணை'' என்று சொல்லிக் கண்ணீர் ததும்ப அவர்களுக்கு விடைகொடுத்தார்.

பரதன் அந்த பாதுகைகளை நன்றாக அலங்கரித்து விதிப்படி பூஜித்து, ராமனை பிரதக்ஷிண நமஸ்காரம் செய்து, மரவடிகளைப் பட்டத்து யானையின் தலையில் வைத்தான். தன் தர்மத்தை அனுஷ்டிப்பதில் ஹிமாலயத்தைப்போல் அசையாத ராமன், ரிஷிகளையும் பிராம்மணர்களையும் மந்திரிகளையும் பிரதானிகளையும் மற்ற ஜனங்களையும் பரதசத்ருக்னர்களையும் தகுந்தபடி மரியாதைசெய்து அனுப்பினர். ராஜஸ்த்ரீகள் கண்ணீர் பெருக துக்கத்தால் பேசமுடியாமையால் அவரிடத்தில் சொல்லிக்கொள்ளமுடியவில்லை. ரகுநாதனும் அவர்களனைவரையும் கிரமப்படி நமஸ்கரித்துத் துக்கம் தாங்காமல் அழுதுகொண்டு பர்ணசாலைக்குள் போனார்.

தம் மாதரோ பா³ஷ்ப க்³ருஹீத கண்ட்²யோ
து³க்கே²ந நாமந்த்ரயிதும் ஹி ஶேகு: |
ஸத்வேவ மாத்ரூ ரபி⁴வாத்³ய ஸர்வா:
ருத³ந் குடீம் ஸ்வாம் ப்ரவிவேஶ ராம: | (31)

## ஸர்க்கம் 113

## பரதன் அயோத்யைக்கு வருதல்

தத: ஶிரஸி க்ருத்வா து பாது³கே ப⁴ரதஸ் ததா³ |
ஆருரோஹ ரத²ம் ஹ்ருஷ்ட: ஶத்ருக்⁴நேந ஸமந்வித: || (1)

பிறகு பரதன் அந்தப் பாதுகைகளைத் தன் தலையில் பக்தியுடன் வைத்துக்கொண்டு சத்ருக்னனுடன் ஸந்தோஷமாக ரதத்தில் ஏறினன். வஸிஷ்டர் வாமதேவர் ஜாபாலி முதலிய முக்கிய மந்திரிகள் முன்னே போனார்கள். ராமனும் ஸீதையும் ஜலக்ரீடைகள் செய்த புண்ணிய தீர்த்தமான மந்தாகினியையும் ராமனுடைய இருப்பிடமானதால் மஹிமை பொருந்தின சித்திரகூடத்தையும் பிரதக்ஷிணம் செய்து கிழக்கில் பிரயாணம் செய்தார்கள். வழியில் பலவிதமான காக்ஷிகளையும் அழகான பொருள்களையும் பார்த்துக் கொண்டு அந்த மலையோரமாகக் கொஞ்ச தூரம் போய்ப் பரத்வாஜ மஹரிஷியின் ஆசிரமத்தைக் கண்டார்கள்.

அங்கே வந்து பரதன் ரதத்திலிருந்து இறங்கி, அந்த மஹரிஷியின் பாதங்களில் பணிந்தார். அவர் பரதனை ஆசீர்வாதம் செய்து "குழந்தாய்! ராமனைப் பார்த்தாயா? நீ உத்தேசித்த காரியம் நிறைவேறிற்று?'' என்றார். பரதன் "ஸ்வாமி! நானும் வஸிஷ்ட பகவானும்

பலவிதமாக ராமனை பிரார்த்தித்தோம். அதற்கு ஸம்மதிக்காமல் அவர் வஸிஷ்டபகவானைப் பார்த்து, 'என் பிதாவிடத்தில் செய்த பிரதிக்ஞையைத் தவறமாட்டேன். அதன்படி பதினான்கு வருஷங்கள் வரையில் காட்டில் வஸிப்பேன்' என்று வெகு ஸந்தோஷத்துடன் மறுமொழி சொன்னார். அப்பொழுது மஹாஞானி வஸிஷ்டர், 'ராமா! இதோ இருக்கும் உன் மரவடிகளைப் பூர்ணமாக அனுக்கிரஹம் செய்து பரதனுக்குக் கொடு. இவை இந்த ராஜ்யத்தை யாதொரு குறைவுமின்றி க்ஷேமமாகக் காப்பாற்றும்' என்றார். மஹரிஷியோ பேசும் திறமையுள்ளவர்களுக்குள் சிரேஷ்டர். ராமனும் அப்படியே. ஆகையால் அவருடைய வார்த்தையை அங்கீகரித்து, ராகவன் கிழக்குமுகமாக நின்று பாதுகைகளில் தன் திருவடிகளை வைத்து, ராஜ்யத்தை ஆளும் ஸாமர்த்தியம் எனக்கு உண்டாகும்படி அனுக்கிரஹம் செய்து கொடுத்து என்னை அயோத்யைக்குப் போகும்படி உத்தரவு செய்தார். ஸகல மங்களங்களுக்கும் ஆதாரமான அந்தப் பாதுகைகளை நான் பெற்று அப்படியே அயோத்யைக்குப் போகிறேன்" என்றான். அந்த ஸந்தோஷ ஸமாசாரத்தைக் கேட்ட பரத்வாஜர், "புருஷசிரேஷ்டா! சீலத்திலும் ஆசாரத்திலும் சிறந்தவனே! பள்ளங்கண்ட இடத்தில் தண்ணீர் தங்குவது ஆச்சரியமா? பெரியோர்களை அனுஸரித்து அவர்களுடைய ஆக்ஞைப்படி நடக்கும் தர்மம் உன்னிடத்திலிருப்பது ஆச்சரியமா? தர்மரஹஸ்யத்தை அறிந்தவனும் தர்மத்தை அனுஷ்டிப்பதில் பிரியமுள்ளவனுமான புத்திரனை அடைந்த தசரத சக்கரவர்த்தி இறந்தாரென்று சொல்வது நியாயமல்ல. உத்தமமான புத்திரர்களின் ரூபமாக எப்பொழுதும் பிதா ஜீவித்திருக்கிறானென்ற வேதவாக்கியத்தால் அவர் சாசுவதமாகவே இருக்கிறாரென்று சொல்ல வேண்டும்" என்று புகழ்ந்தார். பிறகு பரதன் அவருடைய பாதங்களில் அடிக்கடி வணங்கி பிரதக்ஷிணம் செய்து உத்தரவு பெற்றுக் கொண்டு அயோத்யைக்குப் போகப் புறப்பட்டான்.

அவனுடன் வந்த யானைகளும் குதிரைகளும் வாகனங்களும் வண்டிகளும் ஸைன்யங்களும் உத்யோகஸ்தர்களும் பிரஜைகளும் யமுனையைத் தாண்டிக் கங்கைக்கு வந்து அந்தப் புண்ணிய நதியைக் கடந்து, சிருங்கிபேர புரத்திற்கு வந்தார்கள். அங்கிருந்து புறப்பட்டு அயோத்யைக்கு ஸமீபத்தில் வந்தார்கள். தன் அண்ணனும் பிதாவும் இல்லாமல் அது சூன்யமாக இருப்பதைப் பார்த்துத் துக்கம் மேலிட்டு, "ஸுமந்திரரே! பாரும். காந்தி குறைந்து ஸந்தோஷமற்றுத் தீனமாகப் பேச்சுவார்த்தை இல்லாமல் பாழானதுபோல் இந்த நகரம் காணப்படுகிறது" என்று பரதன் வருத்தப் பட்டுக் கூறினான்.

ஸாரதே$^{2}$ பஸ்ய வித்$^{4}$வஸ்தா ஸாயோத்$^{4}$யா ந ப்ரகாஸதே |
நிராகாரா நிராநந்தா$^{3}$ தீ$^{3}$நா ப்ரதிஹத ஸ்வரா || (25)

---



## ஸர்க்கம் 114

# அரசன் இல்லாத நகரத்தின் நிலை

ஸ்நிக்$^{3}$த$^{4}$ க$^{3}$ம்பீ$^{4}$ர கோ$^{4}$ஷேண ஸ்யந்த$^{3}$நேநோபயாந் ப்ரபு$^{4}$: |
அயோத்$^{4}$யாம் ப$^{4}$ரத: க்ஷிப்ரம் ப்ரவிவேஸ மஹாயஸா: || (1)

அப்படிப் பேசிக்கொண்டு கம்பீரமான ரதகோஷத்துடன் பரதன் அந்நகரத்தில் பிரவேசித்தான். பூனைகளும் கோட்டான்களும் அங்குமிங்கும் ஓடிக்கொண்டிருந்தன. மனிதர்களும் யானைகளும் துக்கத்தால் சோர்ந்து கிடந்தனர். கிருஷ்ணபக்ஷத்தில் பிரகாசமில்லாமல் இருண்ட ராத்திரியைப் போலவும்; சந்திரனுக்குப் பிரிய பாரியையாகி அபாரகாந்தியுடன் பிரகாசிக்கும் ரோஹிணீதேவி க்ரூரக் கிரஹத்தால் பீடிக்கப்பட்டதுபோலவும்; கோடைகாலத்தில் மலையருவி ஜலம் வற்றிக்கலங்கி, அதிலிருக்கும் மீன்களும் முதலைகளும் மெலிந்து, அதன் கரையிலிருக்கும் பக்ஷிகள் வெயிலால் வாடித்தவிப்பதுபோலவும்; யாகத்தில் அக்னிஜ்வாலையானது முதலில் புகையில்லாமல் தங்கவர்ணமாகக் கொழுந்துவிட்டெரிந்து, பிறகு தயிர் முதலிய ஹவிசுகளால் மூடப்பட்டு முடிவில் அணைந்து போவது போலவும்; பெரிய யுத்தத்தில் ஒரு ஸைன்யம் சத்துருவால் முறியடிக்கப்பட்டு, யானைகளும் குதிரைகளும் வீரர்களும் காயப்பட்டு, கவசங்கள் பிளந்து, ரதங்களும் வாகனங்களும் பொடிப் பொடியாய்த் தவிப்பதுபோலும்; ஸமுத்திரத்தில் அலைகள் நுரையுடன் பொங்கி ஒன்றுக்கொன்று மோதிப் பெரிய சப்தத்துடன் கோஷித்துக்கொண்டிருந்து, பிறகு காற்றடங்கி அலை ஓய்ந்து சப்தமின்றி அசைந்து கொண்டிருப்பதுபோலும்;யாகசாலையில் ஸோமபானம் முடிந்தபிறகு ரித்விக்குகளும் ஸதஸ்யர்களும் வெளியில் சென்றபின் யாக பதார்த்தங்கள் யாதொன்றுமில்லாமல் சப்தமற்றிருக்கும் யாக மேடை போலும்; பசுமந்தையில் ஓர் பசு தனக்குப் பிரியமான ரிஷபத்தை விட்டுப் பிரிந்து வருத்தப்பட்டுக் கொண்டு புதிய புல்லைத் தின்ன மனமில்லாமல் தவிப்பதுபோலும்; மஹாபிரகாசமுள்ள பத்ம ராகம் முதலிய ரத்தினங்களால் அலங்கரிக்கப்பட்ட முத்துமாலை அவைகளில்லாமல் அழகு குறைந்திருப்பது போலும்;ஒரு நக்ஷத்திரம் தான் செய்த புண்ணியம் குறைந்து, அதனால் அடைந்த பதவியிலிருந்து பெயர்ந்து காந்தியை இழந்து பூமியில் விழுந்ததுபோலும்; வஸந்த காலத்தில் புஷ்பங்களால் அலங்கரிக்கப்பட்டு மதங்கொண்ட வண்டுகள் மொய்க்க விளங்கும் கொடி, காட்டுத்தீயால் எரிக்கப்பட்டுக் கிடப்பதுபோலும்; ராத்திரியில் கறுத்த மேகங்கள் சந்திரனையும் நக்ஷத்திரங்களையும் மறைத்தது போலும்; மேலே கூறையில்லாமல் பாத்திரங்கள் உடைந்து சிதறி, குடிப்பவர்கள் இறந்து கிடக்கின்ற மதுபானக் கடைபோலும்; தரை பாளம் பாளமாக வெடித்து, பாத்திரங்கள் உடைந்து நீர்த் தொட்டியின் கரை இடிந்து

நீர் தாரையாகப் பெருகிக் குடிப்பவர்களில்லாமல் கிடப்பது போலும்; சிரேஷ்டமான வில்லில் பூட்டப்பட்ட நாண் கயிறு, சத்ருவின் பாணங்களால் துண்டுதுண்டாக அறுபட்டுப் பூமியில் கிடப்பதுபோலும்; மஹாபராக்கிரமமுள்ள யுத்தவீரனால் அதிவேகமாக நடத்தப்பட்ட உத்தமஜாதிக் குதிரை, சத்ருவால் அடிக்கப்பட்டு யுத்தத்திற்குப் போகத் தகுதியில்லாமல் ஆபரணங்கள் நான்கு புறங்களிலும் சிதறிப் பூமியில் கிடப்பதுபோலும்; பெரிய மீன்களும் ஆமைகளும் ஆனந்தமாக விளையாடும் நீரோடை, ஜலம் வற்றிக் கரைகள் இடிந்து புஷ்பங்கள் வாடிக்கிடப்பது போலும்; ஸந்தோஷமற்ற புருஷனுடைய தேகம் ஆபரணங்களில்லாமல் சந்தனப் பூச்சால் அலங்கரிக்கப்படாமல் சோகத்தால் வாட்டப்படுவதுபோலும்; மழைக்காலத்தில் கறுத்தமேகங்களால் மறைக்கப்பட்ட காந்தியுடைய ஸூரியனைப்போலும்; அந்த அயோத்யை, வீதிகளில் ஜன ஸஞ்சாரமில்லாமல் எங்கும் சப்தமற்றுக் கடைகள் மூடப்பட்டுத் தோன்றிற்று.

அதைப் பார்த்துப் பரதன் ரதத்திலிருந்தபடியே "ஸுமந்திரரே, இந்த நகரத்தில் எப்பொழுதும்போல் கீதவாத்தியங்களின் சப்தம் கம்பீரமாகக் கேட்கப்படவில்லையே. என்ன கஷ்டம்! உத்தமமான பானங்களின் வாஸனையும் அகில் சந்தனம் முதலிய பரிமளத் திரவியங்களின் வாஸனையும் காற்றில் வீசக்காணவில்லையே. ராமன் காட்டிற்குப்போனபிறகு அயோத்யையில் மதயானைகள் குதிரைகள் ரதம் முதலிய வாகனங்கள் இவைகளின் சப்தம் கேட்கப்படவில்லையே. யௌவன புருஷர்கள் துக்கம் மேலிட்டு முன்போல் பரிமள வஸ்துக்களையும் மாலைகளையும் உபயோகிக்கவில்லையே. அழகாக அலங்கரித்துக்கொண்டு வெளியில் வேடிக்கையாகப் போகவில்லையே. உத்ஸவங்கள் ஒன்றையும் காணோமே. ராமனுக்கு நேர்ந்த கஷ்டத்தால் இந்த நகரம் முழுவதும் கிலேசப்படுகிறதோ? அயோத்யையின் அழகும் காந்தியும், என் அண்ணனுடன் போய்விட்டதோ? கடும் மழை பெய்யும்பொழுது சுக்லபக்ஷத்து ராத்திரி பிரகாசிக்காததுபோல் இந்த அயோத்யை விளங்கவில்லையே! பெரிய உத்ஸவத்தைப்போல் என் அண்ணன் இந்த அயோத்யைக்குத் திரும்பிவந்து, கடுங்கோடையில் மேகம் ஸகல பிராணிகளுக்கும் ஆனந்தத்தைக் கொடுப்பதுபோல், நம்மெல்லோர்க்கும் ஸந்தோஷத்தை எப்பொழுது உண்டாக்குவார்? ராஜ வீதிகளில் யௌவனபுருஷர்கள் அழகாக அலங்கரித்துக் கொண்டு மதயானைகளைப்போல், கர்வமாக நடக்கும் ஒய்யாரத்தை எப்பொழுது பார்ப்போம்?" என்று பலவிதமாக பிரலாபித்துக்கொண்டு தசரதருடைய அரண்மனையில் பிரவேசித்தான்.

மலையில் ஸிம்ஹம் வஸிக்கும் பெரிய குஹை, அந்த ஸிம்ஹம் இறக்க சூன்யமாக இருப்பதுபோல், தசரதர் இல்லாமல் அந்த க்ருஹம் பார்க்க விகாரமாக இருந்தது. முன்காலத்தில் தேவாஸுர யுத்தத்தில் அஸுரர்கள் தேவதைகளை ஜயித்தார்கள். ராகுவினால் ஸூரியன் வீழ்த்தப்பட, அத்ரி முனிவர் ஸூரியனாக இருந்து ஏழு நாட்கள் வரையில் ஜகத்தை ரக்ஷித்தார். அப்பொழுது ஸூரியனில்லாத காலத்தில் லோகம் இருண்டு காந்தியற்றுக் கோரமாக இருந்ததுபோல், அந்த அந்தப்புரம் ஜன ஸஞ்சாரமில்லாமல் பார்க்கப் பயங்கரமாக இருந்ததைப் பரதன் கண்டு, மஹாதைரியசாலியானாலும் தன் துக்கத்தை அடக்க முடியாமல் கண்ணீர் விட்டான்.

*ததா3 த்த3ந்த:புர முஜ்ஜி4த ப்ரப4ம்*
*ஸூரைரிவோத்ஸ்ருஷ்ட மபா4ஸ்கரம் தி3நம் |*
*நிரீக்ஷ்ய ஸர்வம் து விவிக்த மாத்மவாந்*
*முமோச பா3ஷ்பம் ப4ரத: ஸுது3க்கி2த: ||* (32)

---

## ஸர்க்கம் 115

## பாதுகா பட்டாபிஷேகம்

*ததோ நிக்ஷிப்ய மாத்ரூ: ஸ அயோத்4யாயாம் த்3ருட4வ்ரத: |*
*ப4ரத: ஶோகஸந்தப்தோ கு3ருநித3 மதா2ப்3ரவீத் ||* (1)

பிறகு ராஜபத்தினிகளை அயோத்யையில் வைத்துவிட்டுப் பரதன், தான் செய்த பிரதிக்ஞையைத் தவறாதவராக, மிகுந்த வருத்தத்துடன் தன் குருமார்களைப் பார்த்து, "நான் இன்றைக்கு நந்திக்கிராமத்திற்குப் போகிறேன். உங்களிடத்தில் உத்திரவு பெற்றுக்கொள்ளுகிறேன். இங்கே இருந்தால் எனக்குத் துக்கம் வளர்கிறது. ஆகையால் அங்கே போய் இதை எப்படியாவது பொறுத்துக்கொண்டிருப்பேன். சக்கரவர்த்தி ஸ்வர்க்கத்திற்குப் போய்விட்டார். பூஜிக்கத் தகுந்த என் தமயனும் காட்டிற்குப் போய்விட்டார். மஹாகீர்த்திமானான ராமனே இந்த ராஜ்யத்தில் அரசாளத் தகுந்தவர். அவர் திரும்பி வந்து நம்மை ஆளும்வரையில் அவரை எதிர்பார்த்துக்கொண்டு அங்கே இருக்கப்போகிறேன்" என்றான்.

அதைக்கேட்டு வஸிஷ்டரும் மற்ற மந்திரிகளும், "நீ சொல்வது மிகவும் கொண்டாடத்தக்கதாகும். உன் அண்ணனிடத்தில் நீ வைத்திருக்கும் பிரீதிக்கும் உன் பெருந்தன்மைக்கும் தகும். நீ எப்பொழுதும் பந்துக்களை அன்புடன் போஷிப்பவன்; உடன் பிறந்தவரிடத்தில் மிகுந்த பிரீதிவைத்தவன்; ஸாதுக்களுடைய தர்மத்தை அனுஷ்டிப்பவன். உன் வார்த்தையை ஒப்புக்கொள்ளாதவர்கள் யார்?" என்றார்கள்.

தன் இஷ்டப்படி அவர்களும் சொன்னதால் பரதன், "ஸுமந்திரரே! என் ரதத்தைக் கொண்டுவாரும்" என்று ஆக்ஞாபித்து, மலர்ந்த முகத்துடன் ராஜபத்தினிகளை வணங்கிச் சத்ருக்னனோடு

ரதத்தில் ஏறினன். வஸிஷ்டர் முதலிய மஹரிஷிகளும் பிராம்மண சிரேஷ்டர்களும் புரோகிதர்களும் முன்னே போனர்கள். மந்திரிகளும் உத்தியோகஸ்தர்களும் பக்கத்தில் வந்தார்கள். சதுரங்க ஸைன்யமும் அயோத்யா ஜனங்கள் அனைவரும் அழைக்கப்படாவிட்டாலும் பரதனைப் பின்தொடர்ந்தார்கள். எல்லோரும் கிழக்கு முகமாக நந்திக்கிராமத்தை நோக்கிப்போனர்கள். யானை, குதிரை, ரதம் முதலியன நிறைந்த ஸேனையும் நகரவாஸிகளும் அழைக்கப்படாவிடினும் பரதனுடன் நந்திக்கிராமம் சென்றார்கள். ராமனுடைய பாதுகைகளைப் பரதன் தலையில் வைத்துக்கொண்டு நந்திக்கிராமத்திற்கு வந்து ரதத்திலிருந்து இறங்கி, வஸிஷ்டர் முதலியவர்களைப் பார்த்து, 'கைகேயி வரங்களைக் கேட்டபதென்ற வியாஜத்தால் பரதனுக்கு ராஜ்யத்தை ஸம்பாதித்துக்கொடுத்தாள்; தசரதரும் அதற்கு ஸம்மதித்தார்; பரதனும் அப்படியே ராஜ்யத்தை ஆள ஒப்புக்கொண்டான்' என்ற அபவாதம் எனக்கு வேண்டாம். இந்த ராஜ்யத்தை என் அண்ணன் என்னிடத்தில் ஒப்புவித்துப் போயிருக்கிறார். இதைக் குறைவில்லாமல் காப்பாற்றி அவரிடத்தில் நான் மறுபடியும் கொடுக்கவேண்டும். இதை ரக்ஷிக்கும் சக்தியும் ஸ்வதந்திரமும் எனக்கில்லை. இதோ இருக்கும் பாதுகைகள் அவருடைய திருவடிகளால் அலங்கரிக்கப்பட்டவை. இந்த ராஜ்யத்தை க்ஷேமமாகக் காப்பாற்றி மேன்மேலும் விருத்திக்குக் கொண்டுவருவதில் அவைகளுக்குள்ள சக்தி மற்ற எதற்கும் இல்லை'' என்று அந்த பாதுகைகளை நமஸ்கரித்து, ராஜ்யபாரம் யாவற்றையும் அவைகளிடத்தில் ஒப்புவித்து ராமனுக்குப் பதிலாக அவைகளை வைத்தான். பிறகு, "மந்திரிகளே! பிரஜைகளே! லோகநாதனும் எல்லோராலும் பூஜிக்கத் தகுந்தவருமான ராமமூர்த்தியின் திருவடிகள் இவையே. அவரே இங்கே விளங்குகிறார். வெண்குடை சாமரம் முதலிய ராஜோபசாரங்கள் இங்கே அவைகளுக்கு நடக்க வேண்டும். என் குருவான ராகவனுடைய பாதங்களின் மஹிமையால் இந்த ராஜ்யத்தில் தர்மம் செழிக்கும். என்னிடத்திலுள்ள பிரீதியால் இந்த ராஜ்யத்தை என்னிடத்தில் ஒப்புவித்துத் தனக்குப் பதிலாக இந்தப் பாதுகைகளைக் கொடுத்திருக்கிறார். ஆகையால், அவர் வரும் வரையில் இவைகளை என் பிராணனைப்போல் காப்பாற்றுவேன். அவர் சீக்கிரத்தில் திரும்பி வருவார். அப்பொழுது இவைகளை அவருடைய திருவடிகளில் நானே சேர்த்து அந்த மஹோத்ஸவத்தைப் பார்ப்பேன். அப்பொழுது இந்தப் பாரத்தை அவரிடத்தில் மறுபடியும் ஒப்புவித்து, இந்த ராஜ்யத்தை அவருக்கு மறுபடியும் கொடுத்து அவருடைய ஸமீபத்தில் எப்பொழுதும் இருந்து அவருக்கு ஸகல பணிவிடையையும் ஸந்தோஷத்துடன் செய்வேன். நான் செய்த ஸகல பாபங்களிலிருந்தும் அப்பொழுது விடுபட்டவனாவேன். ராமசந்திரனுக்குப் பட்டாபிஷேக மஹோத்ஸவம் நடந்து, ஜனங்கள் ஆனந்தத்தால் மெய்மறந்திருக்கும்



பொழுது, இந்த ராஜ்யத்தை நானே அடைந்து அனுபவிப்பதாலுண்டாகும் ஸந்தோஷத்தையும் கீர்த்தியையும்விட அளவற்ற ஸந்தோஷத்தையும் கீர்த்தியையும் அடைவேன்'' என்று இப்படி அநேக விதமாக பிரலாபித்துக்கொண்டு ஹிருதயத்தில் துக்கம் பொங்க நந்திக்கிராமத்தில் மந்திரிகளுடன் ராஜ்யகாரியங்களை நடத்தி வந்தான்.

மான்தோல் மரவுரி சடை முதலியவைகளுடன் முனிவேஷத்தைத் தரித்து ராமனுடைய ஆக்ஞையைத் தவறாமல் அவருடைய பாதுகைகளுக்குப் பக்தியுடன் பட்டாபிஷேகம் செய்து, அவர் வரும் காலத்தை எதிர்பார்த்திருந்தான். ராமனிடத்தில் அளவற்ற பிரீதி வைத்தவன்; செய்த பிரதிக்ஞையைத் தவறாதவன். ஒவ்வொரு நாளும் நடந்த ராஜ்யகாரியங்களை அந்தப் பாதுகைகளிடத்தில் ஒப்புவித்து வந்தான். எதைச் செய்தாலும் அவைகளிடத்தில் தெரிவிக்காமல் செய்வதில்லை. தனக்கு எந்த உத்தமமான வஸ்து கிடைத்தாலும் முதலில் அவைகளுக்கு அர்ப்பணம் செய்யாமல் இருக்கிறதில்லை. இப்படி அந்த மஹாத்மா ராமசந்திரனுடைய பாதுகைகளுக்குத் தான் அடிமையாகி, அவைகளின் பலத்தால் ராஜ்யத்தை ஆண்டுவந்தான்.

தத$^{3}$ா ஹி யத்கார்ய முபைதி கிஞ்சி
து$^{3}$பாயநம் சோபஹ்ருதம் மஹார்ஹம் |
ஸ பாது$^{3}$காப்$^{4}$யாம் ப்ரத$^{2}$மம் நிவேத்$^{3}$ய
சகார பஶ்சாத் ப$^{4}$ரதோ யத$^{2}$ாவத் || (27)

---

## ஸர்க்கம் 116

# ரிஷிகள் சித்திரகூடத்தை விட்டுச் சென்றது

ப்ரதியாதே து ப$^{4}$ரதே வஸந் ராமஸ் தபோவநே |
லக்ஷயாமாஸ ஸோத்$^{3}$வேக$^{3}$ மதௌ$^{2}$த்ஸுக்யம் தபஸ்விநாம் || (1)

சித்திரகூடத்திலிருக்கும் ஆசிரமங்களிலுள்ள தபஸ்விகள் அதுவரையில் ராமனை அண்டிக் கவலையற்றிருந்தார்கள். பரதன் அயோத்யைக்குத் திரும்பிப் போனபிறகு தங்களுடைய ஆசிரமங்களை விட்டு வேறிடத்திற்குப் போகவேண்டுமென்று அவர்கள் ஆவல் கொண்டிருப்பதையும், எதையோ கண்டு பயப்படுவதையும் அவர்களுடைய வார்த்தைகளாலும் ஜாடைகளாலும் ராமன் கண்டுகொண்டார். கடைக்கண் பார்வையாலும் புருவத்தாலும் ராமனைக் காட்டி அவர்கள் தங்களுக்குள் ரஹஸ்யமாகப் பேசிக்கொண்டார்கள். ராமனிடத்தில் ஏதோ ஸந்தேகப்படுவதாகத் தோன்றிற்று. அதற்குக் காரணத்தை ராமன் அறியமுடியாமல் ரிஷிகளின் தலைவரிடத்திற்குப் போய் வணங்கிக் கைகூப்பி, "ஸ்வாமி! இங்கிருக்கும்

தபஸ்விகள் என்னிடத்தில் இதுவரையில் இருந்ததுபோல் இப்பொழுது என்னிடத்திலில்லை. அதற்கென்ன காரணம்? என் நடத்தையில் ஏதாவது மாறுதல் அவர்களுக்குத் தோன்றிற்றா? அல்லது லக்ஷ்மணன் அஜாக்கிரதையால் உசிதமில்லாத காரியத்தைச் செய்தானா? அல்லது ஸீதை எனக்குப் பணிவிடை செய்வதில் கவனம்வைத்து உங்களுக்குப் பணிவிடை செய்வதில் தவறுதலாக ஏதாவது நடந்துகொண்டாளா?" என்றார்.

அந்தக் குலபதி மிகவும் வயது சென்றவர். வயதாலும் கடுமையான தவத்தாலும் மிகவும் இளைத்தவர். பலஹீனத்தால் அங்கங்கள் நடுங்கிக்கொண்டிருந்தன. ஸகல பிராணிகளிடத்திலும் கருணை பொருந்திய ராமனைப் பார்த்து, "எப்பொழுதும் பிறர்க்கு க்ஷேமத்தைச் செய்வதே ஸீதையின் ஸ்வபாவம்; அதில் அவளுக்கு விசேஷ ப்ரீதியுண்டு. ஜனக மஹாராஜாவின் புத்திரி; ஸாதுக்களுடைய ஆசாரத்திலிருந்து எப்பொழுதாவது தவறுவாளா? மேலும் தபஸ்விகளிடத்தில் அபசாரத்திற்கு இடம் கொடுப்பார்களா? இங்கிருக்கும் தபஸ்விகளுக்கு உன்னைப்பற்றி ராக்ஷஸர்களிடத்திலிருந்து பயமுண்டாயிருக்கிறது. அதைக் குறித்தே ஒருவர்க்கொருவர் கவலையுடன் பேசிக்கொள்ளுகிறார்கள். இவ்விடத்திற்கு ஸமீபத்தில் ஜனஸ்தானமென்ற நகரமுண்டு. அதில் கரனென்ற ராக்ஷஸன் வசிக்கிறான். அவன் ராவணேசுவரனுடைய தம்பி; மிகுந்த கர்வம் கொண்டவன்; பல யுத்தங்களில் ஜயித்தவன்; இரக்கமற்றவன்; மனுஷ்யர்களைக் கொன்று தின்கிறவன்; கொழுப்படைந்தவன்; மஹாபாபி. அவனுக்கு உன்னிடத்தில் எல்லையற்ற துவேஷமுண்டு. நீ இந்த ஆசிரமத்திற்கு வந்ததுமுதல் ராக்ஷஸர்கள் தபஸ்விகளை உபத்திரவித்துக்கொண்டே இருக்கிறார்கள். வெறுப்பாகவும் பயங்கரமாகவும் குரூரமாகவுமிருக்கும் பல ரூபங்களை எடுத்தும், விகாரமான தேகங்களாலும் பார்வைகளாலும் தபஸ்விகளைப் பயமுறுத்துகிறார்கள். அசுபமும் அசுத்தமுமான வஸ்துக்களைத் தபஸ்விகளின் மேல் எறிகிறார்கள். இன்னும் மற்றவர்களைத் திடீரென்று ஸந்தித்துக் கொன்றுவிடுகிறார்கள். சில ஸமயங்களில் அந்தந்த ஆசிரமங்களில் ஒருவருக்கும் தெரியாமல் ஒளிந்திருந்து அங்குள்ள தபஸ்விகளை நாசம் செய்கிறார்கள். ஹோம காலத்தில் யாக பாத்திரங்களை வாரி எறிந்து விடுகிறார்கள். ஹோமாக்னிகளை நீர்த்தாரைகளால் அணைக்கிறார்கள். மந்திர ஜலம் நிறைந்த கடங்களை உடைக்கிறார்கள். அந்தத் துராத்மாக்கள் உபத்திரவிக்கும் இந்தத் தேசத்தை விட்டு வேறிடத்திற்குப் போகவேண்டுமென்று ரிஷிகள் என்னை இப்பொழுது நிர்ப்பந்தம் செய்கிறார்கள். இங்குள்ள தபஸ்விகளுக்கு அந்த துஷ்டர்களால் சரீர உபத்திரவம் நேரும் முன்பே நாங்கள் இந்த ஆசிரமத்தைவிட்டுப் போகவேண்டும். இதற்கு ஸமீபத்தில் ஒரு ஆசிரமம் வெகுகாலமாக இருக்கிறது. அங்கே சுத்த ஜலம் பழம் கிழங்கு முதலிய தபஸ்விகளுக்கு



வேண்டிய பதார்த்தங்கள் குறைவில்லாமல் கிடைக்கும். அங்கே போக நிச்சயித்திருக்கிறோம். கரன் உன்னை நேரில் உபத்திரவிப்பதற்கு முன்பே நீயும் இஷ்டமிருந்தால் எங்களுடன் வரலாம். ஸாதுவாகவும் ஸமர்த்தனாகவும் இருந்தாலும், நீ பத்தினியுடன் இங்கே வந்திருப்பதால் எப்பொழுதும் அபாயம் நேருமென்ற ஸந்தேகமுண்டு. ஆகையால் நீ இங்கே வஸிப்பது கஷ்டம்" என்றார். இப்படித் தகுந்த காரணங்களை எடுத்துச் சொல்லி வேறு இடத்திற்குப் போகவேண்டுமென்று ஆவல்கொண்ட அந்த ரிஷியினிடம் ராமன், "நான் இருக்கும்பொழுது உங்களுக்குப் பயமென்ன? உங்களை எவ்விதத்திலும் காப்பாற்றுகிறேன்" என்று எவ்வளவு உறுதி சொன்னாலும் அவரையும் மற்றவர்களையும் நிறுத்தமுடியவில்லை. அவர்கள் ராமனை ஸமாதானம் செய்து உபசரித்து அவரிடத்தில் சொல்லிக்கொண்டு குலபதியுடன் அந்த ஆசிரமத்திலிருந்து வேறு இடத்திற்குப் போனார்கள்.

ராமன் அவர்களை வெகுதூரம் வரையில் பின்தொடர்ந்தார். மேலே நடக்கவேண்டிய காரியங்களை அவர்கள் ராமனுக்கு உபதேசித்துத் திரும்பிப் போகும்படி ப்ரீதியுடன் அனுமதி கொடுத்தார்கள். ராமன் அவர்களை வந்தனம் செய்து புண்ணியமான தமது ஆசிரமத்திற்குத் திரும்பினார். அவர் மஹரிஷிகளின் ஆசாரத்தையுடையவர். அங்கிருந்த ரிஷிகள் அவருடைய சேர்க்கையால் பல உத்தம குணங்களை அடைந்து அவரைவிட்டுப் பிரியாமலிருந்தார்கள். ஆகையால், அவர்கள் அந்த ஆசிரமத்தை விட்டுப்போனாலும் ராமன் அவர்களிடத்தில் வைத்த அன்பால் ஒரு நிமிஷமாவது அதை விட்டுப் போகவில்லை.

ஆஸ்ரமம் த்வ்ரிஷி விரஹிதம் ப்ரபு4:
க்ஷணமபி ந விஜஹௌ ஸ ராக4வ: |
ராக4வம் ஹி ஸததமநுக3தா:
தாபஸாஸ்சார்ஷ சரித த்4ருதகு3ணா: ‖ (26)

---

## ஸர்க்கம் 117

# ராமன் அத்திரி மஹரிஷியைத் தரிசித்தது

---

ராக4வஸ் த்வபயாதேஷு தபஸ்விஷு விசிந்தயந் |
ந தத்ராரோசயத்3 வாஸம் காரணைர் ப3ஹுபி4ஸ் ததா3 ‖ (1)

அந்த தபஸ்விகள் அங்கிருந்து போனபிறகு ராமன் நன்றாக ஆலோசித்துப் பல காரணங்களால் அங்கிருக்க விரும்பவில்லை. "இங்கே பரதனும் ராஜஸ்த்ரீகளும் நகரத்தாரும் வந்து என்னைப் பார்த்த ஞாபகம் என்னைத் துன்பப்படுத்தும். மேலும் பரதன் ஸைன்யங்களுடன் இங்கே தங்கியிருந்ததால் மிருகங்களின் சாணத்தால் நான்குபுறங்களும் வெகு அசுத்தமாயின. வேறிடத்திற்குப்

போய் வஸிக்கவேண்டும்'' என்று லக்ஷ்மணனையும் ஸீதையையும் அழைத்துக்கொண்டு அத்ரி மஹரிஷியின் ஆசிரமத்திற்குப் போய், அவரை நமஸ்கரித்தார். அந்த மஹரிஷி அவரைத் தன் புத்திரனைப் போல் மிகுந்த பிரியத்துடன் ஆதரித்து, தானே அவருக்கு விசேஷ உபசாரத்தைச் செய்து, ஸீதையையும் லக்ஷ்மணனையும் பலவகையாக ஸமாதானம் செய்தார். அப்பொழுது பதிவிரதாசிரோமணியும் மிகவும் வயது சென்றவளுமான அவர் பத்தினி அனுஸூயை அங்கே வந்தாள். அவளை அழைத்து, "நமது குழந்தை ஜானகியை ஜாக்கிரதையாகப் பார்த்துக்கொள்'' என்று அவளிடத்தில் ஒப்புவித்தார். பிறகு, ராமனைப் பார்த்து, "இவள் தர்மத்தை அனுஷ்டிப்பதில் மிகுந்த நோக்கமுள்ளவள். மஹா தபோபலமுடையவள். முன்பு ஒரு ஸமயத்தில் பத்து வருஷங்கள் வரையில் மழைபெய்யாமல் புல் பூண்டு செடி கொடி மரங்கள் பட்டுப்போயின. அப்பொழுது இவள் தன் தபோமஹிமையால் அவைகளை ஸிருஷ்டித்துக் கொண்டிருந்தாள். கங்கையின் பிரவாகம் குறையாமல் ஓடும்படி செய்தாள். வேறொரு ஸமயத்தில் தேவர்களுக்கு அநுகூலத்தைச் செய்ய விரும்பி, பத்து நாட்களை ஒரே ராத்திரியாகச் செய்தாள். அநேக ஆயிர வருஷங்கள் வரையில் கோரமான தவம் செய்து, கிருச்ரம் சாந்திராயணம் முதலிய விரதங்களைப் பூர்ணமாக அனுஷ்டித்து, இடையில் நேரிட்ட பல விக்னங்களையும் ஜயித்து பிரஸித்திபெற்றவள். இவளை உன் தாயைப்போல் நீ கருத வேண்டும். ஸகல பிராணிகளும் பூஜிக்கத் தகுந்த மஹிமையுள்ளவள்; மஹா கீர்த்திசாலி; மிகவும் வயது சென்றவள்; கோபமென்பதே அவளுக்கு ஒருநாளும் தெரியாது. லோகத்தின் க்ஷேமத்திற்காக, பிறரால் அனுஷ்டிக்க முடியாத கடினமான விரதங்களையும் தவங்களையும் செய்தாலும் பர்த்தாவிற்குப் பணிவிடை செய்வதிலும் பதிவிரதா தர்மத்தை அனுஷ்டிப்பதிலும் ஒப்பில்லாதவளாகையாலும், பிறர் அஸூயை வைக்கமுடியாத அவ்வளவு மேன்மையுள்ளவளாகையாலும் அவளுக்கு அனஸூயை என்று பெயர் கிடைத்தது. ஸீதை அவளிடத்தில் இருக்கட்டும்'' என்றார்.

ராகவன், 'அப்படியே செய்யட்டும்' என்று ஸம்மதித்து, ஸகல தர்மங்களையும் அறிந்த ஸீதையைப் பார்த்து, "மஹாஞானியான ஜனகராஜனுடைய பெண்ணே! நமக்கு விசேஷ க்ஷேமமுண்டாவதற்கு மஹரிஷி சொன்னதைக் கேட்டாயா? சீக்கிரமாக அனஸூயையிடத்திற்குப் போ'' என்றார். எப்பொழுதும் தன் ஹிதத்தையே கோரும் ராமனுடைய வார்த்தையைக் கேட்டு, ஸீதை அனஸூயை இருக்குமிடத்திற்குப் போய் நமஸ்கரித்துத் தன் பெயரைச் சொன்னாள்.

அனஸூயை மிகவும் வயது சென்றவள்; தேகம் தளர்ந்து தோல் சுருங்கி, தலைமயிர் வெளுத்துப் பெருங்காற்றில் வாழை நடுங்குவதுபோல் நடுங்கிக்கொண்டிருந்தாள். அந்த மஹாபதிவிரதையை ஸீதை விதிப்படி பூஜித்துக் கைகூப்பி ஸந்தோஷத்துடன் வணக்கமாக க்ஷேமம் விசாரித்தாள். அனஸூயை வெகு பிரீதியுடன் அவளை வாரியணைத்து உச்சிமுகர்ந்து ஆசீர்வதித்து, "குழந்தாய்! பதிவிரதா தர்மத்தை நன்றாக அனுஷ்டித்து வருகிறாயா? பதினான்கு வருஷங்கள் வரையில் காட்டில் வஸிக்கவேண்டுமென்று பிதாவால் கட்டளையிடப்பட்ட உன் பதியை அண்டிப் பந்துக்களையும் ஐசுவரியத்தையும் அஹங்காரத்தையும் விட்டு இங்கே வந்திருக்கிறாய். பர்த்தா நகரத்திலிருந்தாலும் வனத்திலிருந்தாலும் பாபியானாலும் புண்ணியாத்மாவானாலும் பத்தினி அவனுக்கு பிரீதியோடும் பக்தியோடும் பணிவிடை செய்துவந்தால் உத்தம லோகங்களை அடைவாள். பர்த்தா கெட்ட நடத்தையுள்ளவனானாலும் காமத்திற்கு அடிமையானாலும் செல்வமற்றவனானாலும் உத்தம ஸ்த்ரீகளுக்குப் பர்த்தாவே தெய்வம். எந்த ஸ்திதியிலும் தன் பத்தினியை ரக்ஷிக்கும் ஸாமர்த்தியமுள்ள பர்த்தாவைக்காட்டிலும் மேலான பந்து, பாரியைக்குக் கிடையாது. அழிவில்லாத பயனைக் கொடுக்கும் தபஸைப் போன்றவன். ஆனால், துஷ்ட ஸ்த்ரீகள் குணதோஷங்களை ஆலோசிக்கிறதில்லை. தங்கள் இஷ்டத்தையே நிறைவேற்றிக்கொள்வதில் நோக்கமுள்ளவர்கள். பர்த்தா அவர்களுக்கு நாதனென்பதற்குப் பதிலாக பர்த்தாவுக்கு அவர்கள் நாதனென்று சொல்லும்படி நடந்துகொள்ளுகிறார்கள். அவர்களுடைய மனம் பிறபுருஷர்களிடத்திலேயே செல்லும். அவர்கள் எப்பொழுதும் கெட்ட நடத்தையுள்ளவர்கள். தர்மமார்க்கத்திலிருந்து விலகி அழியாத அபகீர்த்தியை அடைவார்கள். ஆனால், உன்னைப் போன்றவர்கள் லோகத்தில் உயர்த் தாழ்வுகளை நன்றாக அறிந்து, உத்தம குணங்களால் அலங்கரிக்கப்பட்டு, தர்மாத்மாக்கள் அடையும் மேலான லோகங்களில் பிரகாசிக்கிறார்கள். ஆகையால் நீ பதிவிரதைகளின் ஆசாரத்தை அனுசரித்து உன் பர்த்தாவின் தர்மத்தையும் விரதங்களையும் அனுஷ்டிக்க வேண்டும். இப்படிச் செய்வதால் உனக்கு அழிவில்லாத கீர்த்தியுண்டாகும். எல்லோராலும் கொண்டாடப்பட்டு முடிவில் அந்தப் புண்ணிய பலத்தால் ஸர்வோத்தமமான பதவியையும் ஸுகத்தையும் பெறுவாய்'' என்று சிலாக்கியமான பதிவிரதா தர்மத்தை உபதேசித்தாள்.

ததே²வ மேநம் த்வமநுவ்ரதா ஸதீ
பதிவ்ரதாநாம் ஸமயாநுவர்த்திநீ |
ப⁴வ ஸ்வப⁴ர்த்து: ஸஹ த⁴ர்மசாரிணீ
யஶஶ்ச த⁴ர்மம் ச தத: ஸமாப்ஸ்யஸி || (28)

## ஸர்க்கம் 118

# ஸீதை தன் வரலாற்றை அனஸூயைக்குக் கூறியது

ஸா த்வேவமுக்தா வைதே³ஹீ ஹ்யநஸூயா நஸூயயா |
ப்ரதிபூஜ்ய வசோ மந்த³ம் ப்ரவக்து முபசக்ரமே ‖ (1)

**ஸீ**தை கொஞ்சம்கூட அஸூயையில்லாமல் அனஸூயையின் வார்த்தையைக் கேட்டு, "அம்மா! தங்களுடைய உபதேசத்தை நான் குணமாகப் பெற்றுக்கொண்டேன். தாங்கள் இப்படிச் சொல்வது ஆச்சரியமல்ல. லோகத்திலுள்ள ஸ்த்ரீகளுக்குப் பர்த்தாவே குரு என்ற தர்மம் எனக்குத் தெரியும். என் பர்த்தாவிடத்தில் உத்தமகுணங்கள் ஒன்றுமில்லாவிட்டாலும் நான் அவரைப் பேதபுத்தியில்லாமல் உபசரிக்கவேண்டும். அப்படியிருக்க, அவர் ஸகல கல்யாணகுணங்களும் பொருந்தியவர்; கருணாநிதி; இந்திரியங்களை ஜயித்தவர்; வைத்த பிரீதி மாருதவர்; தர்மாத்மா; என் தாயைப்போல் என்னிடத்தில் அன்புள்ளவர்; என் பிதாவைப்போல் எனக்குப் பரம க்ஷேமத்தைச் செய்கிறவர். அவரிடத்தில் நான் எப்படி நடக்கவேண்டுமென்பதைச் சொல்லவேண்டுமோ? மஹாபராக்கிரமசாலியான ராமன், கௌஸல்யாதேவியிடத்தில் நடப்பதுபோல் மற்ற ராஜபத்னிகளிடத்திலும் பேதபுத்தியில்லாமல் நடக்கிறார். ஒரு ஸ்த்ரீயைத் தசரதர் ஒரே தடவை பார்த்திருந்தாலும் போதும். ராமன் தன் பிதாவிடத்தில் மிகுந்த பிரீதிவைத்ததாலும் தர்மங்களை அறிந்ததாலும், கர்வத்தையும் அஹங்காரத்தையும் விட்டு, அவளைப் பெற்ற தாயைப்போல் உபசரிக்கிறார். மனுஷ்ய ஸஞ்சாரமில்லாத இந்தப் பயங்கரமான காட்டிற்கு நான் வரும்பொழுது கௌஸல்யாதேவி எனக்குச் செய்த உபதேசத்தையும், என் விவாஹ காலத்தில் அக்னிக்கு முன்பாக என் தாய் செய்த உபதேசத்தையும் நான் மறக்கவில்லை. அவை யாவும் தங்களுடைய உபதேசத்தால் உறுதியாயின. பர்த்தாவுக்குப் பணிவிடை செய்வதைக் காட்டிலும் மேலான தவம் வேறொன்றும் ஸ்திரீகளுக்குக் கிடையாது. தன் கணவனுக்குப் பணிவிடை செய்ததால் ஸாவித்திரி உத்தம லோகங்களை அடைந்தாள். தாங்களும் அப்படியே அடைந்திருக்கிறீர்கள். பெண்களுக்குள் உத்தமியாக ஆகாசத்தில் தேவதையாக விளங்கும் ரோஹிணி, சந்திரனை விட்டு ஒரு நிமிஷம்கூடப் பிரிவதில்லை. இப்படி அநேக பதிவிரதைகள் பர்த்தாவுக்குப் பணிவிடை செய்து அந்தப் புண்ணியத்தால் உத்தம லோகங்களை அடைந்திருக்கிறார்கள்" என்றாள்.

பிறகு அனஸூயை ஸீதையின் வார்த்தையால் வெகு ஸந்தோஷமடைந்து அவளை உச்சி முகர்ந்து, "குழந்தாய்! கடுமையாகத் தவம் செய்து அபூர்வமான மஹிமையைப் பெற்றிருக்கிறேன். அந்தப் பலத்தால் உனக்கு வேண்டிய வரங்களைக் கொடுக்க ஸித்தமாக இருக்கிறேன். நீ சொன்ன வார்த்தைகள் உசிதமாகவும் மதுரமாகவும் இருக்கின்றன. அவைகளைக் கேட்டு எனக்கு மிக்க ஸந்தோஷமுண்டாகிறது. உன் இஷ்டத்தை நிறைவேற்ற ஸித்தமாக இருக்கிறேன், கேள்" என்றாள். ஸீதை வெகு ஆச்சரியமடைந்து புன்சிரிப்புடன் விசேஷ தபோபலத்தையுடைய அனஸூயையைப் பார்த்து, 'தங்களைத் தரிசித்ததாலும் தங்களுடைய சேர்க்கையாலும் அனுக்கிரஹத்தாலும் என் கோரிக்கைகள் யாவும் நிறைவேறின" என்றாள். அதைக்கேட்டு அனஸூயை ஸகல தர்மங்களையும் அறிந்தவளாகையால் ஸீதையின் வணக்கத்தையும் பக்தியையும் பார்த்து இன்னும் அதிகப் பிரீதியடைந்து, "குழந்தாய்! என் ஸந்தோஷம் பயனில்லாமல் போகக்கூடாது. அதோ பார்; இந்த உத்தமமான மாலையும் ஆடையும் ஆபரணங்களும் பரிமளத்திரவியங்கள் கலந்த சந்தனமும் உனக்குத் தகுந்தவை. இவைகளை நீ தரித்தால் உன் அழகிற்கு எல்லையே இராது. அவைகளை என்னிடத்திலிருந்து பெற்றுக்கொள். இவைகளின் சக்தியும் பரிமளமும் அழகும் ஒரு நாளும் குறையாது. நாராயணனுடைய தேஜஸ்ஸையும் அழகையும் மஹாலக்ஷ்மி தன் காந்தியால் விருத்தி செய்வதுபோல் இந்தச் சந்தனத்தைப் பூசிக்கொண்டபின் உன் பர்த்தாவை விசேஷமாகப் பிரகாசிக்கச் செய்வாய்" என்று அவைகளை ஸீதைக்குக் கொடுத்தாள். ஜானகி, அனஸூயை பிரீதியுடன் கொடுத்த அந்த மாலையையும் ஆபரணங்களையும் வஸ்திரங்களையும் சந்தனங்களையும் பெற்றுக்கொண்டு அந்த ரிஷிபத்னியின் ஸமீபத்தில் கைகூப்பி வணக்கமாக உட்கார்ந்தாள். அப்பொழுது அனஸூயை ஏதோ தனக்கு பிரியமான ஒரு விஷயத்தைக் கேட்க விரும்பி, "குழந்தாய்! ராகவன் ஸ்வயம்வரத்தால் உன்னை விவாஹம் செய்தாரென்று கேள்விப்பட்டிருக்கிறேன். அதை நடந்தபடி விஸ்தாரமாக நீ சொல்லக் கேட்க விரும்புகிறேன்" என்றாள்.

ஸீதை, "ஜனகரென்ற ராஜரிஷி மிதிலையில் தர்மமாக ஆண்டு வருகிறார். அவர் மஹாவீரர்; பரமதார்மிகர்; க்ஷத்திரிய தர்மத்தைக் குறைவில்லாமல் அனுஷ்டிப்பவர்; நியாயமாக ஜனங்களை ஆளுகிறவர். ஒரு ஸமயத்தில் அவர் யாகபூமியைக் கலப்பையால் உழும்பொழுது நான் பூமியைப் பிளந்துகொண்டு அவருக்குப் புத்திரியாகப் பிறந்தேன். யாக விதிப்படி அங்குள்ள ஓஷதிகளைப் பிடிப்பிடியாகப் பிடுங்கி எறிந்துகொண்டிருந்த அந்த மஹாத்மா, புழுதிபடிந்த தேகத்துடனிருந்த என்னைப்பார்த்து மிகுந்த ஆச்சரியமடைந்தார். ஸகல பூதங்களிடத்திலும் பிரீதியுள்ளவராகையாலும் வெகுகாலமாகக் குழந்தையில்லாததாலும் என்னை மடியில் வைத்துக்கொண்டு, இவள் என் பெண்ணென்று, என்னிடத்தில் அளவற்ற பிரீதி வைத்தார். அப்பொழுது 'அரசனே! இவள் உனக்குத் தர்மபுத்திரி' என்று ஆகாசத்திலிருந்து அசரீரிவாக்குண்டாயிற்று. அதைக் கேட்டு ஜனகர், எல்லையற்ற செல்வத்தை அடைந்தவரைப்போல் என்னை

அடைந்ததால் மகிழ்ந்து, தன் பிரியமான பாரியையிடத்தில் என்னைக் கொடுத்தார். எப்பொழுதும் யாகங்களைச் செய்வதிலேயே நோக்கமுள்ள ஜனகரும் அவருடைய பிரிய பாரியையும் பெற்றதாயைப் போல் என்னை அன்புடன் வளர்த்து வந்தார்கள்.

“பிறகு எனக்கு விவாஹகாலம் ஸமீபித்ததைப் பார்த்து தரித்ரன் தனக்கிருந்த அல்பதனத்தையும் இழந்து வருந்துவதுபோல் என் பிதாவிற்கு கவலை மேலிட்டது. லோகத்தில் ஒருவன் தேவேந்திரனைப் போன்றவனானாலும் தன் பெண்ணிற்கு விவாஹம் செய்ய வேண்டிய காலம் நெருங்கினபொழுது அப்படிச் செய்யாமல், வைத்துக்கொண்டிருந்தால், அவனைப் போன்றவர்களும் தாழ்ந்தவர்களும் அவனை அலக்ஷ்யம் செய்வார்கள். அந்த அவமானம் தனக்கு நெருங்கியதைக் கண்டு, ஓடமில்லாமல் ஸமுத்திரத்தின் நடுவில் தத்தளிப்பவன் கரை காணமுடியாதது போல் அவர் எல்லையற்ற கவலைகொண்டார். நான் மற்றவர்களைப்போல் ஸ்த்ரீயின் வயிற்றிலிருந்து பிறக்காததால், எல்லாவிதத்திலும் எனக்குத் தகுந்த கணவனை எவ்வளவு சிரமப்பட்டுத் தேடியும் கிடைக்கவில்லை. பிறகு ஒரு யுக்தி தோன்றியது. முன்பு ஒரு ஸமயத்தில் அவர் மஹாயாகம் செய்து கொண்டிருக்கையில் வருணன் அவரிடத்தில் ஸந்தோஷித்து உத்தமமான வில்லையும் குறையாத பாணங்கள் நிறைந்த இரண்டு அம்பறைகளையும் அவருக்குக் கொடுத்தார். அது மனிதர்களால் அசைக்க முடியாதது. பூலோகத்திலுள்ள அரசர்கள் என்ன பாடுபட்டும் கனவிலும் அதை வளைக்க முடியவில்லை. பிறகு ஸத்தியவானான என் பிதா அரசர்களைத் தருவித்து ‘ராஜசிரேஷ்டர்களே! இந்த வில்லை எடுத்து வளைத்து நாணேற்றுகிறவருக்கு என் புத்திரியைப் பாரியையாகக் கொடுக்கிறேன், இது ஸத்தியம்’ என்றார். மஹா பர்வதத்தைப் போன்ற அந்த வில்லைப் பார்த்து அங்கே வந்திருந்த அரசர்கள் அனைவரும் அதை அசைக்கவும் முடியாமல் நமஸ்கரித்துப் போனார்கள்.

வெகு காலத்திற்குப் பிறகு மஹாதேஜஸ்வியான இந்த ராகவனும் லக்ஷ்மணனும் விசுவாமித்திரருடன் என் பிதா செய்யும் யாகத்தைப் பார்க்க வந்தார்கள். அந்த மஹரிஷியை என் பிதா விதிப்படி பூஜித்தார். பிறகு விசுவாமித்திரர் என் தகப்பனாரைப் பார்த்து “இதோ இருக்கும் ராமலக்ஷ்மணர்கள் தசரத சக்கரவர்த்தியின் குமாரர்கள். உம்மிடத்திலிருக்கும் சிரேஷ்டமான வில்லைப் பார்க்க வந்திருக்கிறார்கள். தேவதைகள் உமக்குக் கொடுத்த அந்த வில்லை ராமனுக்குக் காட்டவேண்டும்” என்றார். அந்த வில் ராஜ ஸபைக்குக் கொண்டுவரப்பட்டது. அந்த மஹாவீரர் அதை ஒரு க்ஷணத்தில் எடுத்து வளைத்து நாணேற்றி இழுத்தார். அந்த வேகத்தில் அது நடுவில் ஒடிந்து இடிவிழுந்தது போன்ற சப்தத்தை உண்டாக்கிற்று. பிறகு என் பிதா தான்செய்த பிரதிக்ஞைப்படி ஜலத்தை எடுத்து வந்து ராமருக்கு என்னைப் பாரியையாகக் கொடுக்கப்



போனார். அப்பொழுது ராமர் அயோத்தியாதிபதியான தம் பிதாவுக்கு தெரிவித்து அவருடைய அனுமதியைப் பெறும் வரையில் அதற்கு உடன்படவில்லை. உடனே ஜனகர் தசரத சக்கரவர்த்திக்கு மந்திரிகள் மூலம் தெரிவித்து அவரை அழைத்துவந்து மஹாஞானியான ராமருக்கு என்னை விவாகம் செய்து கொடுத்தார். என் தங்கை ஊர்மிளையை லக்ஷ்மணன் பாணிக்கிரஹணம் செய்தார். இப்படி அந்த ஸ்வயம்வர காலத்தில் நான் ராமருக்குக் கொடுக்கப்பட்டேன். வீர சிகாமணியான பர்த்தாவிடத்தில் எனக்குப் பிரேமை ஒவ்வொரு க்ஷணத்திலும் வளர்கின்றது” என்றாள்.

ஏவம் த³த்தாஸ்மி ராமாய ததா³ தத்ர ஸ்வயம்வரே |
அநுரக்தாஸ்மி த⁴ர்மேண பதிம் வீர்யவதாம் வரம் || (54)

## ஸர்க்கம் 119

## ராமன் தண்டகாரண்யத்தில் பிரவேசித்தது

அநஸூயா து த⁴ர்மஜ்ஞா ஶ்ருத்வா தாம் மஹதீம் கதா²ம் |
பர்யஷ்வஜத பா³ஹுப்⁴யாம் ஶிரஸ்யாக்⁴ராய மைதி²லீம் || (1)

ஸகல தர்மங்களையும் அறிந்த அனஸூயை இந்த உத்தம சரித்திரத்தைக் கேட்டு ஸீதையை உச்சிமுகர்ந்து பிரியத்துடன் தழுவினாள். “தெளிவான அக்ஷரங்களோடும் பதங்களோடும் நீ மதுரமாக வர்ணித்த உன் ஸ்வயம்வர விருத்தாந்தத்தை இதுவரையிலும் கேட்டிருக்கிறேன். ஆனாலும் நீயே சொல்லக் கேட்டு, அதிகமாக ஸந்தோஷித்தேன். இப்பொழுது ஸூரியன் அஸ்தமித்தான். அவன் ஸஞ்சரித்த இடத்தில் ராத்திரியை வருவித்திருக்கிறான். பக்ஷிகள் பகல் முழுவதும் ஆஹாரம் தேட வெளியில் போயிருந்து அஸ்தமய ஸமயத்தில் திரும்பி வந்து கூடுகளில் படுத்துத் தூங்கும் பொழுது செய்யும் சப்தத்தைப்பார். இதோ ரிஷிகள் சாயங்காலத்தில் ஸ்நானம் செய்து, மரவுரிகளிலிருந்து ஜலம் சொட்ட, கடங்களில் ஜலத்தை நிறப்பித் தோளில் வைத்துக்கொண்டு திரும்பி வருவதைப் பார். இதோ சில ரிஷிகள் அக்கினி ஹோத்திரத்திற்காக அக்கினியை மூட்ட அதிலிருந்து புறாவின் நிறத்தைப் போன்ற புகை காற்றால் அடிக்கப்படுவதைப் பார். திசைகள் பிரகாசமில்லாமல் போனதால் தூரத்திலிருக்கும் இலை அடர்ந்திராத மரங்களின் இலைகளின் நடுவில் இடைவெளி தெரியவில்லை. ராத்திரியில் ஸஞ்சரிக்கும் மிருகங்கள் வெளியில் புறப்பட்டு விட்டன. ஆசிரமங்களில் வசிக்கும் மான் முதலியவை அக்னிஹோத்திர மேடையின் படிகளில் படுத்திருப்பதைப் பார். நக்ஷத்திரங்களாகிற ஆபரணங்களால் அலங்கரிக்கப்பட்ட ராத்திரி நெருங்கிவிட்டது. ஆகாசத்தில் சந்திரன் நிலாவைப் போர்த்துக் கொண்டு புறப்படுகிறான். நீயும் புறப்பட்டு

ராமனிடத்திற்குப் போ. நீ சொன்ன மதுரமான கதைகளைக்கேட்டு மிகவும் ஸந்தோஷித்தேன். எனக்கு எதிரில் அலங்கரித்துக் கொள்வதை நான் பார்த்து ஆனந்தமடைய வேண்டும்'' என்றாள். ஸீதையும் அவ்வாறே தன்னை அலங்காரம் செய்து கொண்டபின் அனஸூயையை நமஸ்கரித்து ராமனிடத்திற்குப் போனாள்.

மஹா தபஸ்வியான அனஸூயை பிரீதியுடன் கொடுத்த ஆடையாபரணங்களால் அலங்கரிக்கப்பட்டு ஸீதை வருவதை ராமன் தொலைவிலேயே பார்த்து ஆனந்தமடைந்தார். பிறகு அனஸூயை வஸ்திரங்களையும் ஆபரணங்களையும் மாலைகளையும் விசேஷ பிரீதியுடன் தனக்குக் கொடுத்ததை ஸீதை அவரிடத்தில் சொன்னாள். மனுஷ்யர்களுக்குக் கிடைப்பதற்கரிய ஆபரணங்களையும் அலங்காரத்தையும் பார்த்து ராமலக்ஷ்மணர்கள் அதிக ஸந்தோஷத்தை அடைந்தார்கள். அந்த ராத்திரியில் அவர்கள் அத்திரிமஹரிஷியின் ஆசிரமத்தில் தங்கி, மறுநாட்காலையில், அங்கிருந்த மஹரிஷிகள் ஸ்நானம் செய்து நித்தியகர்மங்களை முடித்துக் கொண்ட பிறகு அவர்களிடத்திற்குப்போய்,"எங்களுக்கு உத்தரவுகொடுக்கவேண்டும்' என்று கேட்டார்கள். அப்பொழுது அந்தத் தர்மாத்மாக்கள் "ராம! நாங்கள் வேர்களையும் கிழங்குகளையும் பழங்களையும் ஸம்பாதிக்க வெளியில் போக முடியவில்லை. இந்த வனத்தில் ராக்ஷஸர்களின் உபத்திரவம் அதிகம். அவர்கள் நினைத்த ரூபத்தை எடுக்கக் கூடியவர்கள். மனிதர்களின் மாம்ஸத்தைத் தின்கிறவர்கள். வெகு கொடியவர்கள். அவர்களைப் போன்ற காட்டு மிருகங்களும் பல உண்டு. அஜாக்கிரதையாகவும் அசுத்தமாகவும் இருக்கும் தபஸ்விகளைத் தின்கிறார்கள். அந்தத் துஷ்ட ஜந்துக்களை இங்கிருந்து துரத்தவேண்டும். மஹரிஷிகள் காட்டில் ஆகாரத்தை ஸம்பாதிக்க ஏற்படுத்தியிருக்கும் வழி இதோ தெரிகிறது பார். இப்படியே போனால் அடர்ந்த காட்டிற்குள் சீக்கிரமாகப் போகலாம்'' என்று அந்தத் தபஸ்விகள் ராமலக்ஷ்மணர்களையும் ஸீதையையும் கைகூப்பிக்கொண்டு பிரீதியுடன் ஆசீர்வாதம் செய்தார்கள். பிறகு ராமன், லக்ஷ்மணனுடனும் ஸீதையுடனும், மேகக்கூட்டத்தில் ஸூரியன் புகுவதுபோல், அந்த இருண்ட காட்டில் நுழைந்தார்.

இதீவ தை: ப்ராஞ்ஜலிபி'ஸ் தபஸ்விபி':
த்'விஜை: க்ருதஸ்வஸ்த்யயந: பரந்தப: |
வநம் ஸபா'ர்ய: ப்ரவிவேஶ ராக'வ:
ஸலக்ஷ்மண: ஸூர்ய இவாப்'ரமண்டலம் || (21)

---

அயோத்யா காண்டம் முற்றிற்று.

ஸ்ரீஸீதா லக்ஷ்மண பரத சத்ருக்ன ஹனுமத் ஸமேத
ஸ்ரீ ராம சந்த்ர பரப்ரஹ்மணே நம:



ப்ரவிஶ்ய து மஹாரண்யம் த³ண்ட³காரண்ய மாத்மவாந் |
த³த³ர்ஶ ராமோ து³ர்த³ர்ஷ: தாபஸாஶ்ரம மண்ட³லம் ‖
தண்டகாரண்யத்தின் மற்றொரு பாகத்தில் பிறகு ராமன் புகுந்தார்...சிறிது தூரம் பிரயாணம் செய்து தபஸ்விகளின் ஆசிரமக் கூட்டங்களைக் கண்டார்.
—ஆ. 1ஸ - 1 சு.
(பக்கம் 3 பார்க்க)

ஸ்ரீ ராமசந்த்ர பரப்ரஹ்மணே நம:

# ஸ்ரீமத் வால்மீகி ராமாயணம்

## ஆரண்ய காண்டம்

### ஸர்க்கம் 1

### ராமன் ஆசிரமங்களுக்குச் சென்றது

ப்ரவிஶ்ய து மஹாரண்யம் த³ண்ட³காரண்ய மாத்மவாந் |
த³த³ர்ஶ ராமோ து³ர்த³ர்ஷ: தாபஸாஶ்ரம மண்ட³லம் ‖ (1)

**அவதாரிகை**

முன் காண்டத்தில் பிரபஞ்சத்திற்குக் காரணமாகவும் வேதாந்தத்தால் அறியக்கூடியதாகவும் இருக்கும் பரப்பிரஹ்மத்திற்கு அவித்யையின் ஸம்பந்தமில்லாமை, ஸகலத்திற்கும் அந்தர்யாமியாயிருத்தல், ஒப்பில்லாத தேஜஸ், தர்மத்தை ஸ்தாபித்தல் முதலிய அனந்த கல்யாண குணங்கள் உண்டு என்பது வர்ணிக்கப்பட்டது. இங்கே ஸாதுக்களை ரக்ஷிப்பதென்ற தர்மம் விசேஷமாக வர்ணிக்கப்படுகின்றது. முன் காண்டத்தில் பித்ருவாக்கிய பரிபாலனமென்ற தர்மம் ஸாதுக்களால் அனுஷ்டிக்கப்படவேண்டுமென்ற முக்கியமான உபதேசமும், இங்கே ஸாதுக்களை ரக்ஷிப்பதே முக்கியமென்ற உபதேசமும் செய்யப்படுகின்றன.

---

சுக்ராசாரியருடைய சாபத்தால் காடான தண்டகாரண்யத்தின் (தண்டகனென்ற அரசனுடைய ராஜ்யத்தின்) மற்றொரு பாகத்தில் பிறகு ராமன் புகுந்தார். அந்த கோரமான வனத்தில் ஸஞ்சரிப்பதில் அவருக்கு பயம் எள்ளளவும் இல்லை. ஸகலத்திற்கும் ஆதாரமானவரை அசைக்கும் வஸ்துவும் உண்டோ? சிறிது தூரம் பிரயாணம் செய்து தபஸ்விகளின் ஆசிரமக்கூட்டங்களைக் கண்டார். யாகத்திற்காகக் கொண்டுபோய் வைக்கப்பட்ட தர்ப்பங்கள் அங்கே நாற்புறமும் கட்டுகளாகக் கிடந்தன. மரவுரிகள் அங்கங்கே வெய்யிலில் உலர்த்தப்பட்டிருந்தன. வேதாத்யயனத்தாலும் வைதிக கர்மத்தை அனுஷ்டிப்பதாலும் உண்டாகும் அழகும் காந்தியும் எங்கும் பரவி இருந்தன. ஸூரியன் உதிக்கும்பொழுதும் அஸ்தமிக்கும்பொழுதும் மந்தேஹர்களென்ற ராக்ஷஸர்கள் அவனை எதிர்க்கிறார்கள். நடுப்பகலில் அவர்கள் நெருங்குவதில்லை. அப்பொழுது ஆகாசத்தில் பூர்ண

தேஜஸ்ஸுடன் விளங்கும் ஸூரிய மண்டலத்தைப் பார்க்க முடியாது. அப்படி ராக்ஷஸர்கள் அங்கே நெருங்க முடியவில்லை. இயற்கையாகவே சத்ருக்களான பிராணிகளுக்கும் அந்தப் புத்தி நீங்கி வெகு ப்ரீதியுடன் அங்கே அவை ஸஞ்சரிக்கும். ஆகையால் ராக்ஷஸர்களின் உபத்திரவத்திற்குப் பயந்து ஸகல ஜந்துக்களும் அங்கே சரணமடைந்தன. உள்ளும் வெளியும் யாதொரு குப்பை செத்தை இல்லாமல் சுத்தம் செய்யப்பட்டிருந்தது. பலவிதமான மிருகங்களும் பக்ஷிகளும் அங்கே ஆனந்தமாக வஸித்துக் கொண்டிருந்தன. மிகவும் மனத்தைக் கவரும் இடமானதாலும், தேவதைகள் ப்ரியத்துடன் வஸிக்குமிடமானதாலும், அப்ஸரஸ்கள் அந்தப் புண்ணிய பூமியைப் பூஜித்து அங்கே அடிக்கடி வந்து நர்த்தனம் செய்வார்கள். விசாலமான அக்னிஹோத்திரசாலைகளாலும் யாக பாத்திரங்களாலும் மான் தோல்களாலும் பூமியில் பரப்புவதற்காகக் கொண்டுவரப்பட்ட தர்ப்பங்களாலும் ஸமித்துகளாலும் ஜலபாத்திரங்களாலும் பழம் கிழங்கு வேர் முதலியவைகளாலும் விளங்கின. காட்டிலுண்டாகும் பல புண்ணியவிருக்ஷங்கள் ருசியுள்ள பழங்களால் நிறைந்து அவைகளைச் சுற்றியிருந்தன. பூதபலி வைசுவதேவம் முதலிய கிரியைகளால் பரிசுத்தமாக இருந்தன. வேதகோஷத்தால் நிறைந்திருந்தன. தேவபூஜைக்காகக் கொண்டுவரப்பட்ட புஷ்பங்களால் அலங்கரிக்கப்பட்டிருந்தன. தாமரை ஓடைகளால் விளங்கின.

பழம் கிழங்கு முதலியவைகளைப் புஜிக்கும் பல முனிவர்கள் மரவுரி மான்தோல் முதலியவைகளால் அலங்கரிக்கப்பட்டு அங்கே வஸித்துக்கொண்டிருந்தார்கள். அந்த வயது சென்றவர்களில் சிலர் ஸூரியனைப்போலும் சிலர் அக்னியைப்போலும் பிரகாசித்தார்கள். அங்கே வேறு சில மஹரிஷிகளும் உண்டு. மஹா புண்ணியவான்கள்; ஆகாரநியமமுள்ளவர்கள்; மேற்சொன்ன முனிவர்களால் பூஜிக்கப்பட்டவர்கள். கர்ம காலங்களில் உச்சரிக்கப்படும் வேதமந்திரங்களால் பிரஹ்மலோகத்தைப் போன்ற அந்த இடம் ஓசையுடன் கூடியிருந்தது. மஹாபாக்கியசாலிகளும் பரப்ரஹ்மஞானிகளுமான பிராம்மணர்கள் அவ்விடத்தைத் தங்களுடைய தேஜஸால் பிரகாசிக்கச் செய்தார்கள்.

ராமன் அந்த ஆசிரமக் கூட்டங்களைப் பார்த்து, அங்கிருந்த மிருகங்களுக்கும் பக்ஷிகளுக்கும் பயத்தை உண்டாக்கக்கூடாதென்று தன் வில்லின் நாணைத் தளர்த்திவிட்டு அந்தப் பர்ணசாலைகளை நோக்கிப் போனார். மூன்று காலங்களையும் அறிந்த அந்த மஹரிஷிகள் மஹாவிஷ்ணுவே ராவணனை வதம்செய்ய ராமனாக அவதரித்திருக்கிறார்; மஹாலக்ஷ்மியே ஸீதையாக வந்திருக்கிறாள். லக்ஷ்மணன் அவருடைய அம்சம். ஸம்ஸார ஸமுத்திரத்திலிருந்து கரையேற்றும் ஸாதனமான பிரஹ்மம் அவரே என்ற ரகஸ்யத்தை அறிந்து, மஹாப்ரீதியோடு அவர்களை எதிர்கொண்டழைத்தார்கள். இருட்டைப் போக்க உதித்த சந்திரனைப்போல் பூபாரத்தைத் தீர்க்க அவதரித்தவரும், பௌர்ணிமா சந்திரனைப்போல் ஸகல தாபத்தைப் போக்குகிறவரும், இருண்ட காடுகளின் வழியாக வரும்பொழுது கறுத்தமேகங்களிலிருந்து உதிக்கும் சந்திரனைப்போல் காணப்படுகிறவருமான ஸ்ரீராமசந்திரமூர்த்தியை, தாங்கள் அனுஷ்டிக்கும் தவம் பூஜை ஹோமம் உபாஸனை அத்யயனம் முதலியவைகளால் அடையப்படும் பரம்பொருளாக அறிந்தார்கள். அதுவரையில் ஞானக் கண்ணால் பார்த்து வந்த பரவாஸுதேவனை அப்பொழுது வெளிக் கண்ணால் பார்த்து, "இவ்விதமான ரூபலக்ஷண காந்தியுடைய மஹாத்மாக்கள் ராக்ஷஸர்கள் நிறைந்த இந்தக் காடுகளில் என்ன கஷ்டப்படுவார்களோ'' என்று அவர்களைப்பற்றி மனம் பதறி, பகவானுடைய விரோதிகளை நாசம் செய்வதற்கு, "உங்களுக்கு ஸர்வமங்களங்களும் உண்டாகட்டும்'' என்று ஆசீர்வதித்தார்கள். பகவானே தங்களுக்கு ரக்ஷகனென்ற நியமம் தவறாதவர்களானதால் மஹா பக்தியுடன் அவரைப் பூஜித்தார்கள்.



அந்த மஹரிஷிகள் காட்டில் கடுந்தவம் செய்து கொண்டு ஒருபொழுதும் கலங்காத சித்தமுடையவர்கள். ஆனாலும் ராமனுடைய அங்கங்கள் ஏற்றத்தாழ்வில்லாமல் உத்தமலக்ஷணத்தின்படி அமைந்திருப்பதையும், தேகமெங்கும் பரவியிருக்கும் காந்தி கண்ணைப்பறிப்பதையும், மலர்ந்த புஷ்பத்தைப்போல் மிகவும் மிருதுவாக இருப்பதையும்,சிரேஷ்டமான முத்துக்களில் நிழல் ஆடும்பொழுதுள்ள பளபளப்பு அவருடைய அங்கங்கள் யாவற்றிலும் பரவியிருப்பதையும் கண்களால் எவ்வளவு பானம் செய்தும் அவர்கள் திருப்தி அடையவில்லை. அந்தக் காட்டிலுள்ள யாவரும் அதுவரையில் பார்த்திராத ஸௌந்தரியம் வாய்ந்த ராமலக்ஷ்மணர்களையும் ஸீதையையும் கண்டு அடங்காத ஆச்சரியம் கொண்டனர். பிரஹ்மா முதலிய தேவதைகளுக்கும் எட்டாத பகவான், ஸீதா லக்ஷ்மணர்களுடன், முடவனிருக்குமிடத்தில் கங்காப்பிரவாகம் வந்ததுபோல், நாமிருக்குமிடத்தைத் தேடிவந்து நமக்குத் தரிசனம் கொடுக்கிறார் என்று, அவருடைய ஜகன்மோஹனமான திவ்விய திருமேனியைத் தரிசித்ததாலுண்டான ஆனந்தத்தை இடைவிடாமல் அனுபவிக்க விரும்பி, அவர்களைக் கண்கொட்டாமல் பார்த்துக்கொண்டிருந்தனர். மஹாபாக்கியசாலிகளான அந்த ரிஷிகள் ஸகல பூதங்களுக்கும் ஹிதத்தையே தேடும் ராமனைத் தங்களுடைய பர்ணசாலையில் பூஜிக்கத்தகுந்த அதிதியாக வஸிக்கச் செய்தார்கள்.

பிறகு அவர்களின் க்ஷேமத்தை விசாரித்து அர்க்கியபாத்தியம் முதலியவைகளால் உபசரித்தார்கள். ஜ்வலிக்கும் அக்னியைப் போன்ற அந்த ரிஷிகள் தங்களுக்குத் தெய்வமான ராமமூர்த்திக்குச் செய்த உபசாரம், அவர்களின் தர்மானுஷ்டானத்திற்குப் பயனேயன்றி வேறல்ல. முன் பிறப்புகளில் என்ன புண்ணியம் செய்தார்களோ! அவர்கள் "ராம! பரமபுருஷனை உன்னைத் தரிசித்ததால்

தன்யர்களானேம். எங்களுடைய பாக்கியத்தை வர்ணிக்க முடியுமா'' என்று கூறித் துதித்தார்கள். வனத்தில் கிடைக்கும் உணவுகளைக் கொண்டுவந்து கொடுத்தார்கள். ஸர்வசேஷியான (பிரபு) பகவானிடத்தில் சேஷர்களாயிருக்கும்(ஸேவகர்கள்)தாங்கள் அனுஷ்டிக்க வேண்டிய தர்மத்தை நன்ருக அறிந்தவர்கள்; இவரே ஆதி புருஷனென்ற உறுதியாலுண்டான பக்தி மேலிட்டு ஸாஷ்டாங்கமாகப் பணிந்து கைகூப்பி, “ராம, நீ வர்ணுசிரம தர்மங்களைக் குறைவில்லாமல் காப்பாற்றுகிறவன்; கஷ்டப்படும் எங்களைப் போன்ற முனிவர்களாலே சரணமடையத்தக்கவன்; பரம தெய்வமாகையால் பூஜிக்கத்தகுந்தவன்; அரசனுகையால் மரியாதை செய்யத் தகுந்தவன்; தண்டிக்கும் அதிகாரத்தையுடையவன்; ஹிதத்தையே உபதேசிப்பதால் குரு. பூலோகத்தில் அரசன் இந்திராதி லோகபாலர்களுடைய நாலில் ஒரு அம்சமாக ஜனங்களை ரக்ஷிக்கிருன் ஆகையால் அரசர்கள் லோகத்தாரால் நமஸ்கரிக்கப்பட்டு சிரேஷ்டமான போகங்களை அனுபவிக்கிருர்கள். நான்கு திக்பாலர்களின் அம்சங்களிலும் நாலில் ஒரு ஒரு பாகம் சேர்ந்து அரசனிடத்தில் விளங்குகிறது. அந்த திக்பாலர்கள் உன் அடிமைகள். அரசர்களுக்கே இவ்வளவு மஹிமை இருந்தால் ஸகல ஜகத்தையும் ரக்ஷிக்க அவதரித்த ஸர்வேசுவரனுன உனக்குத் தர்மரக்ஷகன் சரண்யன் என்ற லக்ஷணங்கள் பொருந்தியிருப்பது ஆச்சரியமா? நாங்கள் மிகவும் கஷ்டப்படுகிருேம்.கஷ்டப்படுகிறவர்களை ரக்ஷிப்பதே விரதமாகஉடைய நீயே எங்களை ரக்ஷிக்கவேண்டும். என்னை உபாஸித்த பலத்தால் இப்படிச் சொல்லுகின்றீர்களோ என்ருல், அல்ல. உபாஸனையில் தவறு ஏற்பட்டால் கெடுதி நேரும். ஆகையால் உன் ராஜ்யத்தில் வஸிக்கிருேம் என்ற காரணத்தினுலேயே நீ எங்களை ரக்ஷிக்கவேண்டும். இந்த உபாயத்தில் தவறு ஏற்பட நியாயமில்லை. 'அப்படியே செய்கிறேன்; ஆனுல் வனவாஸம் முடிந்து அயோத்யைக்குத் திரும்பிப்போன பிறகு ரக்ஷிக்க முடியும்' என்ருல், நீ ஸிம்ஹாஸனத்திலிருந்தாலும் காட்டிலிருந்தாலும் நீயே எங்களுக்கு அரசன்; ரக்ஷகன். நீ ஸர்வசக்திகளும் பொருந்தியவன் என்றும், கால தேச வஸ்துக்களென்ற ஸகல எல்லைகளுக்கும் மேற்பட்டவன் என்றும், ஸர்வசேஷி என்றும், இந்தக் குணங்கள் உனக்கு இயற்கையே என்றும் லோகப்பிரஸித்தமல்லவா? அந்த கல்யாண குணங்களுக்கும் ஒரே இருப்பிடமானவனே! ஜகத்தை மோஹிக்கச் செய்யும் உன் திவ்ய திருமேனியை தியானம் செய்வதாலுண்டான ஆனந்தத்தைக் கெடுக்கும் ராக்ஷஸர்களை நீயே தடுக்க வேண்டும். மற்ற அரசர்கள் புத்தி பலத்தாலும் ஸைன்ய பலத்தாலும், தங்கள் குடிகளை மாத்திரம் காக்கக் கூடியவர்கள். ஸகல லோக ரக்ஷகனும் அஸஹாய சூரனுமான உனக்கு அயோத்யையில் இருந்தால் பலம் அதிகமென்றும் காட்டிலிருந்தால் பலம் குறைவென்றும் உண்டோ? 'நீங்களோ உங்கள் தபோமஹிமையால் இந்தக் காரியத்தைச் செய்ய முடியுமல்லவா



என்ருல், நாங்கள் தபஸ்விகள்; அதைக் கெடுக்கும் கோபத்தை ஜயித்தவர்கள்; இந்திரியங்களை ஜயித்தவர்கள். ஆகையால் இந்த ராக்ஷஸர்களை சபிக்க முடியாமலிருக்கிருேம். மேலும் எங்களுடைய ஸ்வரூபத்தை யோசித்தால் இதே நியாயமென்று தோன்றும். சேஷர்களான நாங்கள் சக்தியிருந்தும் எங்களை ரக்ஷிக்க யத்னம் செய்யக் கூடாது. உன்னையே ரக்ஷகனுக அடையவேண்டும். நாங்களும் உன் குடிகளல்லவா? நீயே கதி. ஆனுல், 'உங்களை நான் ரக்ஷிக்க நீங்கள் என்ன ஸாதனத்தை அனுஷ்டித்தீர்கள்' என்ருல் நாங்கள் சரணுகதி செய்வதையே தனமாக உடையவர்கள். அதையே காரணமாக வைத்துக்கொண்டு எங்களை ரக்ஷிக்கவேண்டும்'' என்று பிரார்த்தித்தார்கள். (சரபங்கருடைய ஆசிரமத்திலுள்ள ரிஷிகள் கரன் முதலிய ராக்ஷஸர்களிடத்திலிருந்து தங்களை ரக்ஷிக்கவேண்டுமென்று கேட்டுக் கொண்டபடியால் இந்த ரிஷிகள் விரும்பினது மோக்ஷமே என்று வியாக்யானம் செய்யப்படுகிறது.)

பிறகு பழங்களாலும் கிழங்குகளாலும் புஷ்பங்களாலும் வனத்தில்கிடைக்கும்மற்ற உணவுகளாலும் ராமலக்ஷ்மணர்களையும் ஸீதையையும் அந்த ரிஷிகள் உபசரித்தார்கள்; சரணுகதி செய்பவர்களுக்கு ஏற்பட்ட கைங்கர்யம்அதுவே. வேறு சிலர் ஸகல ஸாதனங்களையும் அனுஷ்டித்து ஸித்தியடைந்தவர்கள்; ஆஹார நியமத்தையுடையவர்கள்; தங்களுடைய ஸ்வரூபத்திற்கொத்த கைங்கர்யத்தைச் செய்கிறவர்கள்; ஸ்வரூபத்திற்குவிரோதமாயும் விலக்கப்பட்டதாயுமிருக்கும் பலாபேக்ஷையுள்ள கர்மங்களில் ஆசையற்றவர்கள். இவர்கள் மேற்சொன்ன கைங்கர்யத்தைச் செய்ய தேகத்தில் சக்தியில்லாதவர்களாக, ஸர்வ சேஷியான ராமனை விதிப்படி ஸ்தோத்திரம் நமஸ்காரம் முதலியவைகளால் உபசரித்தார்கள்.

தத$^{2}$ாந்யே தாபஸா: ஸித்$^{3}$தா$^{4}$: ராமம் வைஶ்வாநரோபமா: |
ந்யாயவ்ருத்தா யதா$^{2}$ந்யாயம் தர்பயாமாஸு$^{-}$ ரீஶ்வரம் ‖ (23)

## ஸர்க்கம் 2

## விராதன் ஸீதையை எடுத்துச் சென்றது

க்ருதாதித்$^{2}$யோத$^{3}$ ராமஸ்து ஸூர்யஸ்யோத$^{3}$யநம் ப்ரதி |
ஆமந்த்ர்ய ஸ முநீந் ஸர்வாந் வநமேவாந்வ கா$^{3}$ஹத ‖ (1)

இப்படி வேறு பிரயோஜனத்தை எதிர்பாராமல் அந்த முனிவர்கள் தனக்குச் செய்த பூஜையைப் பகவான் வெகு பிரியத்துடன் அங்கீகரித்து, மறுநாள் ஸூரியன் உதித்தவுடன் நித்திய கர்மங்களை முடித்துக்கொண்டு அவர்களிடத்தில் அனுமதி பெற்று, வனத்தில் புகுந்தார். பலவிதமான மான்களும் புலிகளும் சிறுத்தைகளும் அங்கே பயமில்லாமல் ஸஞ்சரித்தன. கற்பாறையைப் போன்ற விராதனுடைய தேகத்தால் அரைபட்டு அங்கிருந்த மரங்களும் கொடிகளும்

குளங்களும் அழிந்தன. பக்ஷிகள் அவனிடத்தில் பயந்து உயரப் பறந்தாலும் கூவுகிறதில்லை. சுவர்க்கோழிகள் மாத்திரம் கண்ணுக்குத் தெரியாமல் எப்பொழுதும் கத்திக்கொண்டிருந்தன.

இப்படிக் கொடிய மிருகங்களால் நிறைந்த காட்டின் நடுவில் ராமலக்ஷ்மணர்களும் ஸீதையும் போகையில் மனிதர்களைக்கொன்று தின்னும் ஒரு ராக்ஷஸனைக் கண்டார்கள். அவன் மலையைப்போல் பருத்த தேகமுடையவன்; சகல பிராணிகளும் நடுங்கும்படி கோரமாகக் கத்துகிறவன்; பெரிய கண்களையுடையவன்; எப்பொழுதும் திறந்த விசாலமான வாயையுடையவன்; மேடும் பள்ளமுமான வயிற்றையுடையவன்; பார்க்கப் பயங்கரமானவன்; ஏற்றத் தாழ்வுள்ள அங்கங்களோடும் மிகவும் நெட்டையாக, விகாரமான வேஷத்துடன், ரத்தத்தாலும் தசையாலும் பூசப்பட்ட புலித்தோலைப் போர்த்துக்கொண்டு, பிராணிகளைக் கொல்லவிரும்பி யமன் ஓடி வருவதுபோல், வாயைத் திறந்துகொண்டு சகல ஜந்துக்களும் பயந்து நடுங்கும்படி ஓடிவந்தான். அவனுடைய தோளிலிருந்த இரும்பு சூலத்தில் மூன்று சிங்கங்களும் நான்கு புலிகளும் இரண்டு செந்நாய்களும் பத்து கலைமான்களும் கொம்புடன் ஒரு பெரிய யானைத்தலையும் கோக்கப்பட்டிருந்தன.

ராமலக்ஷ்மணர்களையும் ஸீதையையும் பார்த்தவுடன் அவன் வெகு கோபம் கொண்டு, பிரளய காலத்தில் யமன் பிராணிகளைக் கொல்ல வருவதுபோல் கோரமாகக் கத்திக்கொண்டு பூமி நடுங்கும்படி ஓடிவந்து, ஸீதையை எடுத்து இடுப்பில் வைத்துக்கொண்டு "சடை மரவுரி முதலிய முனிவேஷத்தைத் தரித்துக்கொண்டிருக்கும் நீங்கள், வில் கத்தி முதலிய ஆயுதங்களையும் ஏன் தரிக்கிறீர்கள்? தபஸ்விகள் ஸ்திரீயுடனிருப்பது என்ன நியாயம்? போகட்டும். நீங்கள் இருவரும் ஒரே ஸ்திரீயைப் பாரியையாக வைத்துக்கொண்டிருக்கலாமா? இப்படி முனிவேஷத்துடன் முனிகளின் தர்மத்தை தூஷிக்கும் மஹாபாவிகளான நீங்கள் என் கண்ணில் பட்டபிறகும் பிழைத்திருக்க முடியுமா? இந்தத் தண்டகாரண்யத்தில் வந்தவர்களும் இங்கிருந்து தப்பிப் போக முடியுமா? இந்தக்காடு என் ராஜ்யம்; என் பெயர் விராதன்; ஆயுதபாணியாக ஒவ்வொருநாளும் இங்கே திரிந்து ரிஷிகளின் மாம்ஸங்களைத் தின்கிறேன். அழகுள்ள இந்தப் பெண்ணை என் மனைவியாக வைத்துக்கொள்கிறேன். உங்களுடன் சண்டை செய்து உங்கள் ரத்தத்தைப் பிரியத்துடன் குடிப்பேன். உங்களைப்போன்ற பாபிகள் இதுவரையில் என் கண்ணில் பட்டதில்லை" என்றான்.

இப்படி அந்தத் துஷ்டன் கர்வத்துடன் கர்ஜித்ததைக் கேட்டு ஸீதை பயந்து, பெருங்காற்றில் நடுங்கும் இளம் வாழையைப்போல் நடுங்கினாள். விராதனுடைய இடுப்பில் மஹாபாக்கியசாலியான ஸீதை இருக்கக் கண்டு ராமன் கோபத்தால் முகம் சுருங்கி, "லக்ஷ்மணா! பார்த்தாயா ஸீதையின் கதியை? ஜனகராஜரின் புத்திரி; என் பத்தினி; சுத்தமான ஆசாரத்தையுடையவள்; வெகு செல்வமாய் வளர்க்கப்பட்டவள்; ராஜகுமாரி; மஹாகீர்த்திசாலி; இந்த நீசனுடைய இடுப்பில் வைக்கப்பட்டிருக்கிறாள். தசரதரை வஞ்சித்து கைகேயி எந்த உத்தேசத்துடன் வரங்களைக் கேட்டாளோ அந்த எண்ணம் இன்றைக்கு நிறைவேறிற்றல்லவா? பின் வரும் விஷயத்தை முன்னால் யோசித்து அவள் நடப்பாள். தன் புத்திரனுக்கு ராஜ்யம் கிடைக்கவேண்டுமென்று மாத்திரம் கேட்கக்கூடாதா? ஸகல பூதங்களுக்கும் ஹிதமான என்னைக்காட்டிற்கு அனுப்பினாலொழிய அவளுக்குத் திருப்தியில்லையே. நான் காட்டிற்குப்போனால் ஸீதை என்னோடு வருவாள். எந்த ராக்ஷஸனாவது அவளைக்கொண்டு போவான். அப்பொழுது எனக்கும் பெரிய ஆபத்து நேரும். பிறகு பரதனுக்கு இந்த ராஜ்யம் நிலைக்குமென்ற அவளுடைய எண்ணம் இன்றைக்குப் பூர்த்தியாயிற்றல்லவா? நமது பிதா மரணமடைந்ததும் நான் ராஜ்யத்தை இழந்ததும் கைகேயியாலேயே. என் பார்யையைப் பரபுருஷன் தொட்டெடுத்த பொழுது உண்டாகின்ற துக்கம் தசரதர் மரணம், நான் ராஜ்யம் இழந்தது என்ற இவை இரண்டினாலும்கூட எனக்கு உண்டாகவில்லை" என்று கண்களில் நீர் பெருக ராமன் பிரலாபித்தார்.



உடனே லக்ஷ்மணன் தன் அண்ணன் படும் கஷ்டத்தைப் பார்த்துப் பொறுக்காமல், மந்திரத்தால் கட்டப்பட்ட ஸர்ப்பத்தைப்போல் சீறிக்கொண்டு, "அண்ணா! தேவேந்திரனைப்போல் ஸகல பிராணிகளுக்கும் நாதனான தாங்கள், அடிமையான நான் ஸமீபத்திலிருக்கையில் அநாதையைப்போல் இப்படி துக்கப்படுவது நியாயமா? இந்த ராக்ஷஸன் என் கோபத்திற்கும் பாணத்திற்கும் ஒரு க்ஷணத்தில் இரையாவான். இவனுடைய ரத்தத்தை இந்த வறண்ட பூமி திருப்தியுடன் குடிக்கும். ராஜ்யத்தில் ஆசைவைத்த பரதனிடத்தில் எனக்குண்டான கோபத்தை, தேவேந்திரன் பர்வதங்களிடத்தில் வஜ்ராயுதத்தைப் பிரயோகித்ததுபோல், இந்த விராதனிடத்தில் விடுகிறேன். என் புஜபலத்தால் இழுத்துவிடப்பட்ட பாணம் இவனுடைய பெரிய தலையைக் கீழே அறுத்துத் தள்ளட்டும். இவனுடைய தேகத்திலிருந்து உயிர் வெளிப்படட்டும். அந்த சவம் சுழன்று பூமியில் விழட்டும்" என்றார்.

மம பு4ஜப3லவேக3 வேகி3த:
பதது ஶரோஸ்ய மஹாந் மஹோரஸி |
வ்யபநயது தநோஸ் ச ஜீவிதம்
பதது தத: ஸ மஹீம் விகூ4ர்ணித: ‖ (25)

---

## ஸர்க்கம் 3

## விராதனுடன் ஸம்வாதம்

அதோ2வாச புநர்வாக்யம் விராத4: பூரயந் வநம் |
ஆத்மாநம் ப்ருச்ச2தே ப்3ரூதம் கௌ யுவாம் க்வ க3மிஷ்யத2: ॥ (1)

பிறகு விராதன் வனங்கள் நடுங்கும்படி, "உங்களுடைய வரலாற்றைக் கேட்கிறேன். நீங்கள் யார்? எங்கே போகிறீர்கள்?" என்றான். ஜ்வலிக்கும் முகத்துடன் இப்படிக் கேட்ட விராதனைப் பார்த்து ராமன், "நாங்கள் தசரத சக்கரவர்த்தியின் புத்திரர்கள். அவருடைய உத்தரவால் இந்த வனத்தில் ஸஞ்சரிக்கிறோம். நாங்கள் க்ஷத்திரியர்கள். குல தர்மம் தவறாதவர்கள். இப்பொழுது ரிஷிகளின் நியமத்தை அனுஸரிக்கிறோம். நீ யார்? இந்த வனத்தில் தனியாக ஏன் ஸஞ்சரிக்கிறாய்?' என்று கேட்டார். விராதன், "நான் ஜயனுக்கும் சதஹ்ரதைக்கும் புத்திரன். லோகத்திலுள்ள ராக்ஷஸர்கள் எனக்கு விராதனென்று பெயரிட்டார்கள். கடுந்தவம் செய்து பிரஹ்மாவைத் திருப்திசெய்தேன். எந்த ஆயுதத்தாலும் பிளக்கப்படாமலும் வெட்டப்படாமலும் கொல்லப்படாமலும் இருக்கவேண்டுமென்ற வரத்தை அவர் எனக்குக் கொடுத்தார். இந்தப் பெண்ணை என்னிடத்தில் விட்டு வேகமாக ஓடிப்போங்கள். இவளை எனக்குக் கொடுத்ததற்காக உங்களைக் கொல்லாமல் விடுகிறேன். இங்கே நீங்கள் இருந்தால் என் எண்ணம் ஒரு வேளை மாறலாம்" என்றான். ராமன் கோபத்தால் கண்கள் சிவக்க "நீச! உன் ஜன்மத்தைச் சுடவேண்டும். மஹா உத்தமியான இந்தப் பெண்ணை நீ விரும்பின அந்த க்ஷணத்திலேயே உன் சாவை வேண்டி வருவித்துக்கொண்டாய். உன் சிரமம் வீணாகாது. என்னை எதிர்த்து நின்று உயிரோடிருக்கலாமென்ற எண்ணமா? ஓடாதே நில்" என்று வில்லை நாணேற்றிக் கூர்மையான பல பாணங்களை அவன் மேல் எய்தார்.

அவை கருடனையும் வாயுவையும் போல் எல்லையற்ற வேகத்தை உடையவை. தங்கக் கட்டுகளுடன் மயில் தோகைகளால் அலங்கரிக்கப்பட்டவை. அவை விராதனுடைய தேகத்தில் பாய்ந்து ரத்தத்தால் பூசப்பட்டு வெளியில் வந்து பூமியில் விழுந்து பக்கத்திலிருந்த புல் பூண்டுகளை எரித்தன. அவன் அந்தவேதனையைத் தாங்கமுடியாமல் ஸீதையைக் கீழே வைத்துவிட்டுச் சூலத்தைத் தூக்கிக்கொண்டு மஹா வேகத்துடன் ராம லக்ஷ்மணர்களை நோக்கி ஓடிவந்தான். இந்திரத் துவஜத்தைப் போன்ற சூலத்துடன் அவன் கர்ஜித்துக் கொண்டு ஓடிவரும்பொழுது, பிரபஞ்சத்தை ஸம்ஹாரம் செய்ய வாயைத் திறந்து ஓடிவரும் யமனைப்போல் தோன்றினான். ஸீதை அவனுடைய இடுப்பில் இல்லாததால் ராமலக்ஷ்மணர்கள் மஹா பிரளயகாலத்தில் பிராணிகளை அழிக்க வரும் யமனைப் போன்ற அந்த விராதன்மேல் பாணங்களை சரமாரி பொழிந்தார்கள். அவன் இடிபோலச் சிரித்துக்கொண்டு ஒரு தடவை கை கால்களை நெட்டி முறித்தான். உடனே அம்புகள் பலபலவென்று உதிர்ந்துவிட்டன. பிறகு பிரஹ்மாவின் வரத்தால் தன் பிராணவாயுக்களை ஹிருதயத்தில் அடக்கி அவன் சூலத்துடன் ராமலக்ஷ்மணர்களின்மேல் பாய்ந்தான். நெருப்புக் கொழுந்துபோல் ஆகாசத்தில் பிரகாசிக்கும் அந்தச் சூலத்தை ராமன் இரண்டு பாணங்களால் துண்டித்தார். அது மேரு மலையின் சிகரம் வஜ்ரத்தால் அடிபட்டு விழுந்ததுபோல் அவன் கையிலிருந்து விழுந்தது. பிறகு, அந்த ராஜபுத்திரர்கள் கருநாகங்களைப் போன்ற கத்திகளை உருவிக்கொண்டு அவன் மேல் பாய்ந்தார்கள். விராதன் அவர்களால் மிகவும் துன்பமடைந்து அவர்களைத் தூக்கிப்போக எண்ணினான். அந்தப் புருஷோத்தமர்களை அசைக்கவும் முடியுமா? ராமன் அவனுடைய எண்ணத்தை அறிந்து "லக்ஷ்மணா! இவன் இஷ்டப்படி நம்மைக் கொண்டுபோகட்டும். நாம் போக நினைத்த வழியும் இதுவே" என்றார். பிறகு, விராதன் தன வீரியத்தால் அந்த மஹாபலசாலிகளைத் தூக்கிக் குழந்தைகளைப்போல் தோளில் வைத்துக்கொண்டு வனத்தில் புகுந்தான். ஆகாசத்தை அளாவியிருக்கும் பல மரங்களாலும் பலவித பக்ஷிகளாலும் நரிகளாலும் துஷ்டமிருகங்களாலும் நிறைந்த அந்த இருண்ட வனத்தில், பெரிய மேகத்தில் சந்திர ஸூரியர்கள் மறைவதுபோல் அவர்கள் மறைந்தார்கள்.

வநம் மஹாமேக4 நிப4ம் ப்ரவிஷ்டோ
த்3ருமைர் மஹத்3பி4ர் விவிதை4ருபேதம் |
நாநாவிதை4: பக்ஷிஶதைர் விசித்ரம்
ஶிவாயுதம் வ்யாலம்ருகை3ர் விகீர்ணம் ॥ (27)

## ஸர்க்கம் 4

## விராத வதம்

ஹ்ரியமாணௌ துதௌ த்3ருஷ்ட்வா வைதே3ஹீ ராமலக்ஷ்மணௌ |
உச்சை: ஸ்வரேண சுக்ரோஶ ப்ரக்3ருஹ்ய ஸுபு4ஜா பு4ஜௌ ॥ (1)

இப்படி விராதன் ராமலக்ஷ்மணர்களை எடுத்துப் போவதைப் பார்த்த ஸீதை கைகளைத் தூக்கிக்கொண்டு பெருங்குரலுடன் அழுதாள். "தசரத சக்கரவர்த்தியின் குமாரனான ராமன் ஸத்தியம் தவறாதவர்; உத்தமமான ஆசாரமுடையவர்; கபடமற்றவர்; அவரும் லக்ஷ்மணனும் கோரமான இந்த ராக்ஷஸனால் கொண்டுபோகப் படுகிறார்களே" என்று தெய்வத்தை நிந்தித்தாள். "ராக்ஷஸ சிரேஷ்ட! உனக்கு நமஸ்காரம். இந்தக் காட்டிலுள்ள சிறுத்தை

களும், புலிகளும், செந்நாய்களும் என்னைத் தின்றுவிடும். இவர்களை விட்டு என்னை எடுத்துப்போ" என்று பிரார்த்தித்தாள். அதைக் கேட்டு ராமலக்ஷ்மணர்கள் அந்த ராக்ஷஸனைக் கொல்ல விரும்பி, கத்திகளால் ஒரு க்ஷணத்தில் அவனுடைய புஜங்களை வெட்டித் தள்ளினார்கள். கைகள் போய் பயம் மிகுந்து, விராதன் பெரிய மேகத்தையும் வஜ்ரத்தாலடிபட்ட மலையையும் போல் பூமியில் விழுந்தான். அந்த ராஜ புத்திரர்கள் அவனைக் கைகளாலும் கால்களாலும் முகங்களாலும் இடித்து உதைத்து, தூக்கிப் பூமியில் எறிந்து தேய்த்தார்கள். அம்புகளால் பிளக்கப்பட்டும் கத்திகளால் வெட்டப்பட்டும் பல தடவை பூமியில் தேய்க்கப்பட்டும் அவன் சாகவில்லை. பயம்நேரும் ஸமயங்களில் அபயம் கொடுக்கும் லக்ஷ்மீ ஸமேதரான பகவான் அதைக் கண்டு, "லக்ஷ்மணா! இவனுடைய தபோமஹிமையால் ஆயுதங்கள் இவனைக் கொல்லாது. இவனைப் புதைப்போம்" என்றார்.

பகவானுடைய திருவடிகள் பட்டமாத்திரத்தில் அக்ஞானம் நீங்கி, விராதன் லோகநாதனுடைய நிஜஸ்வரூபத்தை அறிந்தான். "இதுவரையில் அக்ஞானத்தால் மூடப்பட்டிருந்தேன். நீ புருஷோத்தமனென்றும் பூபாரத்தைத் தீர்க்கவந்த மஹாவிஷ்ணுவென்றும் அறியாமற் போனேன். பரம புருஷ! தேவேந்திரனுக்கு ஸமமான பராக்கிரமமுள்ள உன்னால் கொல்லப்பட்டேன். கௌஸல்யையின் பாக்கியமே! ஸகல லோகங்களுக்கும் பிதாவே! ஜகன்மாதாவான மஹாலக்ஷ்மியே இதோ இருக்கும் ஜானகி. உன் கைங்கர்யத்தால் மஹாகீர்த்திபெற்ற இந்த லக்ஷ்மணன் உன் அம்சமல்லவா? கோரமான இந்த ராக்ஷஸ சரீரம் சாபத்தால் எனக்குக் கிடைத்தது. நான் தும்புருவென்ற கந்தர்வன். ஒரு ஸமயத்தில் ரம்பையுடன் விளையாடிக்கொண்டிருக்கும்பொழுது எங்கள் அரசனை குபேரன் வருவதைப் பார்க்காமல், எழுந்து உபசரிக்காமல் உட்கார்ந்திருந்தேன். அவர் கோபம்கொண்டு, ராக்ஷஸனாவாய் என்று சபித்தார். நான் மிகவும் பயந்து மன்னிப்புக் கேட்டேன் பிறகு, அவருடைய கோபம் தணிந்து, 'தசரத புத்திரரான ராமன் உன்னை யுத்தத்தில் கொல்லும்பொழுது உனக்கு நிஜரூபம் கிடைக்கும். ஸ்வர்க்கத்திற்கு வருவாய்' என்று அனுக்ரஹம் செய்தார். ராம! மஹாவீர! உனக்கு ஸகல மங்களங்களும் உண்டாகட்டும். இங்கிருந்து ஒன்றரை யோஜனை தூரத்தில் ஸூரியனைப் போன்ற தேஜஸ்ஸுடைய சரபங்க மஹரிஷி வஸிக்கிறார். அவர் தர்மாத்மா; மிகுந்த கீர்த்தி பெற்றவர். அவர் அக்னியில் தேகத்தை விடுவதற்குமுன் நீ அவரிடத்திற்குப் போகவேண்டும். அவர் உனக்கு விசேஷமான நன்மையைச் செய்வார். ராக்ஷஸர்கள் இறந்த பிறகு புதைக்கப்பட்டால் உத்தம லோகங்களை அடைவார்கள். ஆகையால் என்னை ஒரு குழியில் புதைத்துவிட்டுப் போ" என்றான்.



பிறகு ராமன், "லக்ஷ்மணா! மஹா கஜத்தைப்போன்ற இவனுடைய தேகத்தைப் புதைக்க ஒரு பெரும் குழியை வெட்டு" என்று சொல்லி அதுவரை விராதனுடைய கழுத்தில் காலால் அழுத்திக் கொண்டிருந்தார். அவனுக்கு ஸமீபத்தில் லக்ஷ்மணன் ஒரு பெரிய பள்ளத்தை வெட்டினார். கழுத்திலிருந்து காலை எடுத்தவுடன் அவன் கோரமாகச் சப்தித்துக்கொண்டிருந்தான். மறுபடியும் அவனைப் பூமியில் தேய்த்து அந்தக் குழியில் தள்ளினார்கள்.

இப்படி ராமலக்ஷ்மணர்கள் விராதனை யுத்தத்தில் ஜயித்துப் பயங்கரமாகக் கர்ஜித்துக்கொண்டிருந்த அந்தத் தேகத்தை வெகு ஸந்தோஷத்துடன் ஒரு பள்ளத்தில் தள்ளினார்கள். கூர்மையான ஆயுதங்களால் அவனுக்குச் சண்டையில் மரணம் வரவில்லை என்று கண்டு அந்த மஹா ஞானிகள் அவனைப் பள்ளத்தில் தள்ளிக் கொன்றார்கள். ராமனுடைய கையால் இறக்கவேண்டுமென்றே விரும்பியவன். அதற்காகவே அவர்களைப் பலாத்காரம் செய்தான். 'எனக்கு ஆயுதங்களால் மரணமில்லை' என்று வலுவில் அவன் தெரிவித்ததைக் கேட்டு ராமன் அவனைப் புதைக்க நிச்சயித்தார். அப்படிச் செய்யும்பொழுது அந்த வனம் நடுங்கிற்று. அவன்மேல் பெரிய பாறைகளைப் பரப்பிவிட்டு, ஆகாசத்தில் ஸூரிய சந்திரர்கள் ஸஞ்சரிப்பதுபோல் ஸீதையுடன் அந்த ராஜபுத்திரர்கள் ஸந்தோஷமாக அந்த வனத்தில் ஸஞ்சரித்தார்கள்.

ததஸ்து தௌ காஞ்சந சித்ர கார்முகௌ
நிஹத்ய ரக்ஷ: பரிக்3ருஹ்ய மைதி2லீம் |
விஜஹ்ரதுஸ் தௌ முதி3தௌ மஹாவநே
தி3வி ஸ்தி2தௌ சந்த்3ர தி3வாகராவிவ || (32)

## ஸர்க்கம் 5
## சரபங்க மஹரிஷி

ஹத்வா து தம் பீ4மப3லம் விராத4ம் ராக்ஷஸம் வநே |
தத: ஸீதாம் பரிஷ்வஜ்ய ஸமாச்வாஸ்ய ச வீர்யவாந் || (1)

**அவதாரிகை**

விராதவனத்தில் வஸிக்கும் முமுக்ஷுக்களான முனிவர்கள் செய்த சரணாகதிக்குக் கைகண்ட பயனாக விராதவதம் சொல்லப்பட்டது. சரபங்கருடைய ஆசிரமத்தில் வஸித்த ரிஷிகள் செய்த சரணாகதிக்குப் பயனாக கரன் முதலியவர்களுடைய வதத்தை வர்ணிக்க உத்தேசித்து, அதற்குத் தகுந்த ஸௌலப்யம் (ஸகலப் பிராணிகளும் ஸுலபமாகப் பழகக் கூடிய தன்மை) என்ற லக்ஷணம் பகவானிடத்தில் பொருந்தியிருக்கிறதென்று காட்ட, சரபங்கருடைய ஆசிரமத்திற்குச் சென்றதைக் கவி வர்ணிக்கிறார்.

மஹா பலசாலியான விராதனைக் கொன்ற பிறகு, அவன் பலாத்காரம் செய்ததாலுண்டான பயத்தையும் துக்கத்தையும் வெட்கத்தையும் போக்க, ராமன் ஜானகியை ஆலிங்கனம் செய்து தேற்றி, மஹா தேஜஸ்வியான லக்ஷ்மணனைப் பார்த்து, "குழந்தாய்! இந்த வனத்தில் வஸிப்பது மஹா கஷ்டம்; அநேக ஆபத்துகள் நேரும். ஆகையால் சரபங்கருடைய ஆசிரமத்திற்குச் சீக்கிரமாகப் போவோம்" என்று அங்கே சென்றார். தேவதைகளைப் போன்ற மஹிமையுள்ளவரும் தபஸால் பரப்பிரஹ்மத்தை நேரில் அறிந்தவருமான அந்த மஹரிஷியின் ஸமீபத்தில் ஒரு பெரிய ஆச்சரியத்தைக் கண்டார்கள். ஸூரியன் வைச்வானரர்கள் முதலியவர்களின் தேஜஸ்கள் ஒன்றுசேர்ந்தது போல் ஜ்வலிக்கும் தேகத்துடன் யாரோ ஒரு மஹா புருஷன், திவ்விய ரதத்திலிருந்து இறங்கிப் பூமியைத் தொடாமல் நின்றார். பிரகாசிக்கும் ஆபரணங்களாலும் நிர்மலமான வஸ்திரங்களாலும் அவர் அலங்கரிக்கப்பட்டிருந்தார். அவரைப்போன்ற ரூபமுள்ள அநேக மஹாத்மாக்கள் அவரைச் சூழ்ந்து உபசரித்துக் கொண்டிருந்தார்கள். கறுத்த குதிரைகள் பூட்டப்பட்ட அவருடைய ரதம், உதிக்கும் ஸூரியனைப் போல் ஆகாசத்தில் நின்றது. அவருக்கு ஸமீபத்தில் வெளுத்த மேகத்தைப்போலும் சந்திர மண்டலத்தைப்போலும் விசித்திரமான மாலைகளால் அலங்கரிக்கப்பட்ட வெண்குடை பிரகாசித்தது; பக்கத்தில் தேவஸ்த்ரீகள் தங்கப்பிடிகளுள்ள சாமரங்களை வீசிக் கொண்டிருந்தார்கள். கந்தர்வர்களும் தேவ கணங்களும் ஸித்தர்களும் மஹரிஷிகளும் அவரை ஸ்தோத்திரம் செய்துகொண்டிருந்தார்கள்.

இப்படித் தேவேந்திரன் சரபங்கருடன் பேசிக்கொண்டிருந்ததை ராமன் கண்டு, "லக்ஷ்மணா! அந்த ரதத்தைப் பார். விசேஷ தேஜஸுடனும் காந்தியுடனும் மத்தியான்ன காலத்து ஸூரியனைப் போல் ஆகாசத்தில் விளங்குகிறது. இந்தக் குதிரைகள் இந்திரனுடைய ரதத்தில் பூட்டப்பட்டவைகளின் லக்ஷணங்களையுடையவை. அவரைச் சுற்றி நிற்கும் புருஷர்களைப் பார். எட்டுத் திக்கிலும் கூட்டம் கூட்டமாய் ஆயுதபாணிகளாய்க் குண்டலங்களாலும் அக்னியைப்போன்ற ஹாரங்களாலும் ரக்தவர்ணமான வஸ்திரங்களாலும் அலங்கரிக்கப்பட்டிருக்கிறார்கள். விசாலமான பார்வையுடையவர்களாயும் புலியைப்போன்ற பராக்கிரமமுள்ளவர்களாயும் இருபத்தைந்து வயதுள்ள யௌவன புருஷர்களாயும் இருக்கிறார்கள். தேவதைகளுக்கு எப்பொழுதும் இதற்கு மேற்பட்ட வயது இல்லை. இதோ அந்த மஹா புருஷன் மறுபடியும் ரதத்தில் ஏறிவிட்டார். நீ ஸீதையுடன் இங்கே இரு. அந்த தேஜஸ்வி யாரென்று அறிந்து வருகிறேன்" என்று ஆக்ஞாபித்துச் சென்றார். லக்ஷ்மணன் அவரை விட்டுப் பிரிய மனமில்லாமல் பின்தொடர, ராமன் "க்ஷணத்திற்குள் வருகிறேன், இங்கே இரு" என்று ஆசிரமத்தை நோக்கி நடந்தார்.



தேவேந்திரனும் ராமன் வருவதைப் பார்த்து, சரபங்கரிடத்தில் ரஹஸ்யமாக, "ராமன் இங்கே வருகிறார். பிரதிக்ஞை முடிந்த பிறகு அவர் என்னைப் பார்த்துப் பேசவேண்டும். இப்பொழுது அவருடன் பேசினால் அவருடைய தெய்வத்தன்மை வெளிப்படும். பிறரால் முடியாத ஒரு பெரிய காரியம் இவரால் மனுஷ்ய வேஷத்துடன் ஆகவேண்டும். ராவணனைக்கொன்று தேவர்களின் உத்தேசம் நிறைவேறின பிறகே நான் அவரைப் பார்க்கலாம்" என்று மஹரிஷியிடத்தில் உத்திரவுபெற்று அவருக்கு மரியாதைசெய்து விமானத்திலேறி ஸ்வர்க்கம் போனான்.

பிறகு ராமலக்ஷ்மணர்களும் ஸீதையும் அக்னி ஹோத்திரசாலையிலிருந்த சரபங்க மஹரிஷியிடத்திற்குப் போய் அவரை நமஸ்கரித்தார்கள். அவர் அவர்களை உபசரித்துத் தகுந்த ஆஸனங்களில் உட்காரச் சொன்னார். இந்திரன் வந்த காரியத்தைப்பற்றி ராமன் அவரை விசாரிக்க அவர், "ராம! ஸகலப் பிராணிகளுக்கும் இஷ்டமான வரங்களைக் கொடுக்கும் இந்திரன் பிரஹ்மாவின் ஆக்ஞையால் என்னை பிரஹ்மலோகத்திற்கு அழைத்துப்போக வந்தான். நான் ஏன் போகவில்லை என்றால், எப்பொழுதும் என் ஹிருதயத்தில் குடியிருக்கும் நீ என் பாக்கியத்தால் இப்பொழுது இங்கே வந்திருக்கிறாய். இவ்வளவு பிரியமான அதிதியைப் பார்க்காமல், உன் திவ்விய மங்களரூபத்தைப் பார்ப்பதாலுண்டாகும் ஆனந்தத்தை அனுபவிக்காமல் பிரஹ்மலோகத்திற்குப் போவேனோ? 'எந்த ஸாதனத்தால் எந்த லோகத்தை அடையப் போகிறீர்' என்றால், தர்மஸ்வரூபியும் உண்மையான ஸங்கல்பமுடையவனுமான உன் கிருபைக்குப் பாத்திரமான பிறகு நித்திய ஸூரிகளால் ஸேவிக்கப்பட்டு பிரஹ்மலோகத்திற்கு மேலாக த்ரிபாத் விபூதியாகி விளங்கும் வைகுண்டத்தையே அடைவேன். 'அது கிரமமாகக் கிடைக்கட்டும். நீ செய்த புண்ணியங்களின் பலனை இப்பொழுது அனுபவி' என்றால், ஸ்வர்க்கத்திலும் பிரஹ்ம லோகத்திலும் இதுவரை ஸம்பாதித்த போகபூமிகளை நான் கொடுக்கப் பெற்றுக்கொள்" என்றார். ("நான் பலனை விரும்பாமல் உனக்கே அர்ப்பணமாக ஸகல கர்மங்களையும் செய்ததால் அவைகளை நீயே பெற்றுக்கொள்ள வேண்டும். அவைகளால் உனக்கு அதிதிபூஜை செய்கிறேன்" என்றார்.)

ஸகல ஞானத்திற்கும் ஆதாரமான ராகவன், "மஹரிஷியே! நான் க்ஷத்திரியன்; தானம் வாங்கமாட்டேன். அந்த லோகங்களை நானே ஸம்பாதித்துக்கொள்வேன். இந்த வனத்தில் நாங்கள் வஸிக்கத் தகுந்த ஓரிடத்தைக் காட்டவேண்டும்" என்றார். (ராமன் அந்தப் புண்யகர்மங்களின் பயனை அங்கீகரித்து அதற்குப்பதிலாக மஹரிஷிக்கு ஒரு கைங்கரியத்தை நியமித்தார். இது முதல் அந்தந்த ரிஷிகளின் ஆசிரமங்களில் ராமன் போய்த் தங்கி, அவர்களின் புண்ணிய கர்மதானத்தையும் ஆசீர்வாதத்தையும் பெற்றார்.

அதாவது அவர்கள் ராவணாதி ராக்ஷஸ வதத்தால் லோகத்திற்குப் பரம க்ஷேமம் உண்டாகவேண்டுமென்று தங்களுடைய சக்திகளைப் பகவானிடத்தில் சேர்ப்பித்தார்கள். அவைகளின் பலத்தால் ராமனுடைய அவதார காரியம் ஸுலபமாக நடந்தது. அந்தப் புண்ணிய கர்மங்களும் பயன்பெற்றன. மஹரிஷிகள் தவம் செய்வதும் த்ரிமூர்த்திகள் தவம் செய்வதும் கேவலம் லோகத்தின் க்ஷேமத்திற்காகவே என்பதை நாம் மறக்கக்கூடாது. தாங்கள் செய்த கர்மங்களைப் பகவானுடைய கைங்கரியத்தில் அர்ப்பணம் செய்வதே யாகம், யக்ஞம்.)

மூன்று காலங்களையுமறிந்த சரபங்கர், பிறகு நடக்கவேண்டிய மாரீசனுடைய வதத்தை உத்தேசித்து, "ராம! இதற்கு ஸமீபத்தில் ஸுதீக்ஷ்ணரென்ற ஒரு தர்மாத்மா இருக்கிறார். அவரிடத்திற்குப் போ. அவர் உனக்கு வேண்டிய உதவிகளைச் செய்து சுத்தமாயும் ரமணீயமாயும் இருக்கும் ஓர் இடத்தைக் காட்டுவார். புஷ்பங்கள் தெப்பம்போல் மிதக்கும் இந்த மந்தாகினி நதிக்கரை வழியாக மேற்கே போனால் அவ்விடத்திற்குக் கொண்டுபோய் விடும்" என்று அந்த வழியைச் சுட்டிக்காட்டி, "ஸகல லோகங்களுக்கும் ஆதாரமே! பாம்பு பழைய சட்டையை உரிப்பதுபோல் என் தேகத்தை விடப் போகிறேன். அதுவரையில் உன் கிருபாகடாக்ஷத்தால் என்னை அனுக்கிரஹம் செய்யவேண்டும்" என்று பிரார்த்தித்தார். பிறகு அக்னியை மூட்டி விதிப்படி பிரஹ்மமேத மந்திரங்களைச் சொல்லி நெய்யால் ஆஹுதி செய்து, மஹா தேஜஸுடன் விளங்கும் அந்த மஹரிஷி அக்னியில் பிரவேசித்தார். அவருடைய தோல் எலும்பு மாம்ஸம் ரத்தம் மயிர் முதலியவை நெருப்பில் எரிக்கப்பட்டன. அந்த மஹாத்மா அக்னி குண்டத்திலிருந்து கிளம்பி, அக்னி பகவானைப்போல் ஜ்வலிக்கும் முப்பது வயதுள்ள புருஷனுடைய ரூபத்தை எடுத்தார். அதைக்கண்டு ராமலக்ஷ்மணர்களும் ஸீதையும் ஆச்சரியப்பட்டார்கள். பிறகு அக்னியிலிருந்து பகல் சுக்லபக்ஷம் உத்தராயணம் ஸம்வத்ஸரம் ஆதித்யன் சந்திரன் மின்னல் இவைகளின் தேவதைகளால் ஆளப்படும் லோகங்களைத் தாண்டி, தன் புண்ணியகர்மத்தால் உத்தம லோகத்தை அடைந்து, அங்கே சங்க சக்ர கதாதரராக, லக்ஷ்மியுடன் நித்திய ஸூரிகளால் ஸேவிக்கப்படும் ஸ்ரீமந்நாராயணனைத் தரிசித்தார். பகவான் அவரை மஹா பிரேமையுடன் உபசரித்து நல்வரவு விசாரித்தார்.

ஸ புண்ய கர்மா ப4வநே த்3விஜர்ஷப4:
பிதாமஹம் ஸாநுசரம் த3த3ர்ஶ ஹ |
பிதாமஹஶ்சாபி ஸமீக்ஷ்ய தம் த்3விஜம்
நநந்த3 ஸுஸ்வாக3த மித்யுவாச ஹ ॥ (44)



## ஸர்க்கம் 6

## முனிவர்கள் சரணாகதி செய்தது

ஶரப4ங்கே3 தி3வம் யாதே முநிஸங்கா4: ஸமாக3தா: |
அப்4யக3ச்ச2ந்த காகுத்ஸ்த2ம் ராமம் ஜ்வலித தேஜஸம் ॥ (1)

சரபங்கர் உத்தமகதி யடைந்த பிறகு அங்குள்ள மஹரிஷிகள் "தன் ஜோதியால் விளங்கும் பரப்பிரஹ்மமே இக்ஷ்வாகு வம்சத்தில் அவதரித்து நமது பாக்கியத்தால் நம்மைத் தேடி வந்திருக்கிறது. நாம் செய்த தவம், தானம் முதலிய புண்ணியகர்மங்கள் இன்றைக்குப் பலித்தன. அவரைத் தரிசனம் செய்து கிருதார்த்தர்களாவோம் என்று, நித்திய தரித்திரனுக்கு நவநிதி கிடைத்தது போல் அடங்காத ஆனந்தமடைந்து பல திக்குகளிலிருந்தும் வந்தார்கள். பிரஹ்மத்தின் நகத்திலிருந்துண்டான வைகானஸர்களும், வாலிலிருந்துண்டான வாலகில்யர்களும், எப்பொழுதும் ஜலத்தால் தேகத்தைச் சுத்தி செய்யும் ஸம்பிரக்ஷாலகர்களும், ஸூரிய சந்திர கிரணங்களையே எப்பொழுதும் குடிக்கும் மரீசிபர்களும், கற்களால் சரீரத்தை மோதிக் கொள்ளும் அச்மகுட்டர்களும், இலைகளைத் தின்கிறவர்களும், பற்களையே உலக்கையாக வைத்துக்கொண்டு தான்யங்களைப் புஜிக்கிறவர்களும், கழுத்தளவு ஜலத்தில் எப்பொழுதும் நிற்கிறவர்களும், மார்பிலாவது முதுகிலாவது தோள்களிலாவது தலையை வைத்துக் கொண்டு தூங்குகிறவர்களும், தூங்காமல் தேகம் வளையாமல் நிற்பவர்களும், ஜலத்தையே உணவாக உடையவர்களும், காற்றைப் புஜிப்பவர்களும், மரங்களின் நுனியில் உட்கார்ந்திருப்பவர்களும், பூமியில் தர்ப்பங்களின்மேல் படுப்பவர்களும், விரதங்களை எப்பொழுதும் அனுஷ்டித்து ஆகாரமே இல்லாதவர்களும், ஈர வஸ்திரத்தையே எப்பொழுதும் உடுப்பவர்களும், எப்பொழுதும் ஜபம் செய்துகொண்டிருப்பவர்களும், எப்பொழுதும் வேதமோதுகிறவர்களும், கோடையில் பஞ்சாக்னி நடுவில் தவம் செய்பவர்களும் அங்கே வந்தார்கள். அவர்கள் பிரஹ்மவித்யையை அறிந்து அனுஷ்டித்ததாலுண்டான பிரஹ்மதேஜஸால் ஜ்வலிப்பவர்கள்; அஷ்டாங்க யோகத்தில் முதிர்ந்தவர்கள்; யோகாப்பியாஸத்தால் மனத்தை ஒரே நிலையில் நிறுத்துகிறவர்கள்.

அந்த ரிஷிகள் சகல தர்மங்களையும் அறிந்து அவைகளை அனுஷ்டிப்பதில் சிரேஷ்டரான ராமனிடத்தில் வந்தார்கள். ராக்ஷஸர்களால் பீடிக்கப்பட்ட தங்களுக்கு வேறு கதியில்லை என்பதையும் லோகத்தை ரக்ஷிக்க அவதரித்த ஸ்ரீராமசந்திரன் எல்லோராலும் சரணமடையத் தகுந்தவரென்பதையும் நன்றாக அறிந்தவர்கள். தங்களை ரக்ஷிப்பதற்கு வேண்டிய தயை அவருக்கு உண்டாகும்படி பலவகையாக விக்ஞாபனம் செய்துகொண்டார்கள். "ராம! மஹாவீர! இந்திரன் தேவதைகளுக்கு நாதன். நீயும் இக்ஷ்வாகுகுல

சிரேஷ்டனை ரகுபதியல்லவா? இந்தப் பூமிக்கு நாதனல்லவா? இது மாத்திரமல்ல, ஜகத்தைத் தாங்குகிறவனும் போஷிக்கிறவனும் நீயே. விராதனைக் கொன்றதாலும் சரபங்கருக்கு முக்தியைக் கொடுத்ததாலும் நிகரற்ற கீர்த்தியும் பராக்கிரமும் வாய்ந்தவனென்று மூவுலகங்களிலும் பெயர் பெற்றிருக்கிறாய். ஸகல லோக நாதனானாலும் க்ஷத்திரிய ரூபம் எடுத்ததால் தர்மங்களை நடத்திக் காட்டுகிறாய். உன் பிதா உனக்குக் கொடுத்த ராஜ்யத்தை வேண்டாமென்றதால் பிதிரு பக்தியையும், பரதன் எவ்வளவு பிரார்த்தித்தும் தன் பிரதிக்ஞையைத் தவறாததால் ஸத்தியத்தையும், சரபங்கருக்கு மோக்ஷம் கொடுத்ததால் பக்த பரிபாலன தர்மத்தையும், உன்னிடத்தில் குடிகொண்டிருப்பதாகக் காட்டினாய். நீயோ தர்மாத்மா; சரணமடைந்தவர்களை ரக்ஷிப்பதென்ற தர்மத்தை நன்றாக அறிந்தவன். அதைப் பூர்ணமாக அனுஷ்டிக்கிறவன். ஸகலப் பிராணிகளாலும் விரும்பத் தகுந்தவனே! நாங்கள் உன்னிடத்தில் ஒன்றை யாசிக்க வந்திருக்கிறோம். எங்கள் புத்திக்கு எட்டியவரையில் தெரிவித்துக்கொள்ளுகிறோம். அந்த அபராதத்தை மன்னிக்கவேண்டும். யாசகர்கள் மஹான்களுக்கு எதிரில் போய் நிற்பதே போதுமென்ற நியாயத்தால் உன்னைச் சரணமடைவதே எங்களுடைய காரியத்தை முடித்துக்கொடுக்கும். ஜீவன்கள் இந்த உபாயத்தையே கைப்பற்றவேண்டும். பிரார்த்திக்கக்கூடாதென்ற நியாயம் எங்களுக்குத் தெரியும். ஜகத்தைக் காக்கவந்த நீ எங்களையும் காப்பாற்றுவாயென்று தெரியும். ஆனால் நாங்கள் படும் துன்பத்தைப் பொறுக்க முடியாமல் லோகரீதியாகத் தெரிவித்துக்கொள்வதை மன்னிக்க வேண்டும்.

உன் ராஜ்யத்தில் வஸிக்கும் பிராணிகளை ரக்ஷிப்பது உனக்கு இயற்கையான தர்மம். எந்த அரசன் குடிகளிடத்தில் ஆறிலொரு கடமை வாங்கிக்கொண்டு அவர்களைத் தன் புத்திரர்களைப்போல் காப்பாற்றவில்லையோ அவனுக்குப் பெரிய அதர்மம் நேரும். எவன் சோம்பலில்லாமல் வெகு ஜாக்கிரதையாகத் தன் உயிரைப்போலும் உயிரைக் காட்டிலும் பிரியமான குழந்தைகளைப்போலும் தன் குடிகளை ரக்ஷிக்கிறானோ அவன் காலமுள்ளவரையில் எல்லையற்ற கீர்த்தியை அடைகிறான். இறந்த பிறகு பிரஹ்மலோகத்திற்குப் போய் பிரஹ்மாவால் பூஜிக்கப்படுகிறான். ஆனால் வரி செலுத்த முடியாத முனிவரை ரக்ஷிப்பதால் என்ன பிரயோஜனமென்றால், பழம் கிழங்குகளைப் புஜித்துக்கொண்டு முனிவர்கள் ஸம்பாதிக்கும் சிரேஷ்டமான தர்மத்தில் நாலில் ஒரு பங்கை, பிரஜைகளை நீதி தவறாமல் ரக்ஷிக்கும் அரசன் அடைகிறான். நீயோ பிரயோஜனத்தை விரும்பாமல் பிரஜைகளை ரக்ஷிப்பவன். உன்னைச் சரணமடைவதே அதற்குப் பொருத்தமான காரணம்.

இங்குள்ள வானப்பிரஸ்தர்கள் பெரும்பாலும் பிராம்மணர்கள். அவர்களுக்கு நீயே நாதன். அப்படியிருந்தும் அநாதைகளைப்போல்



ராக்ஷஸர்களால் கொல்லப்படுகிறார்கள். பக்தர்களை ரக்ஷிப்பதில் உனக்கு அஜாக்கிரதை தகுமா? உன்னையே தியானம் செய்து கொண்டு ஸமாதியிலிருக்கும் ரிஷிகளின் சரீரங்களைப் பார். வெட்டிப் பிளந்து கடித்து எரித்துக் கொன்ற சாதுக்களின் எலும்புகள் குவிந்திருப்பதைப் பார். பம்பா நதிக்கரையிலும் மந்தாகினி நதிக்கரையிலும் சித்திரகூடத்திற்கு ஸமீபத்திலும் வஸிக்கும் ரிஷிகள் படும் கஷ்டம் சொல்லமுடியாது. சரீரத்தை லக்ஷ்யம் செய்யாமல் தவம்செய்ய முடியாதா என்றால், இது எங்களுடைய சரீரத்திற்கு நேரும் கஷ்டங்களைப்பற்றிச் சொன்ன வார்த்தையல்ல. மஹான்களுக்குச் செய்யும் அபராதத்தையும் ஹிம்ஸையையும் நாங்கள் பார்த்துக்கொண்டிருப்பது நியாயமா? ஸகல லோகங்களையும் ரக்ஷிக்கத் திறமையுள்ள உன்னைச் சரணமடைகிறோம். ராக்ஷஸர்களால் கொல்லப்படும் நாங்கள் நீ எப்பொழுது அவதரிப்பாயென்று உன்னையே எதிர்பார்த்துக்கொண்டிருக்கிறோம். எங்களை ரக்ஷிக்கவேண்டும். ஸகல லோகங்களிலும் உன்னைத் தவிர எங்களுக்கு வேறு கதியில்லை. இகத்திலும் பரத்திலும் உன்னைத் தவிர எங்களுக்கு வேறு தெய்வம் கிடையாது'' என்று பிரார்த்தித்தார்கள்.

ராமன், "நீங்கள் இப்படிச் சொல்லத்தகுமா? என்னைச் சரணமடைவதையே நான் உங்கள் ஆக்ஞையாக எண்ணிக்கொண்டேன். காப்பாற்றென்று சொல்வது அனாவசியம், உசிதமல்ல. ராக்ஷஸர்களால் உங்களுக்கு நேரும் உபத்திரவத்தை நீக்கவே இந்த வனத்திற்கு வந்தேன். பிதுருவாக்கிய பரிபாலனத்திற்காக இங்கே வந்ததேனென்பது தெய்வகதியால் நேர்ந்த காரியம். ஆகையால் இந்த வனவாஸம் எனக்கு உத்தம பலனைக் கொடுக்கும். உங்களுடைய சத்துருக்களை யுத்தத்தில் கொல்ல நிச்சயித்திருக்கிறேன். என் வீரத்தையும் லக்ஷ்மணனுடைய பராக்கிரமத்தையும் பாருங்கள்'' என்று தைரியம் சொன்னார்.

இப்படி மஹரிஷிகளுக்கு அபயமளித்து, அவர்களும் பூஜிக்கத் தகுந்த ஆசாரத்தையுடைய ராகவன், தர்மத்திலேயே நாடிய மனத்துடன் லக்ஷ்மணனையும் ஸீதையையும் அழைத்துக்கொண்டு ஸுதீக்ஷ்ணருடைய ஆசிரமத்திற்குப் போனார். அந்த மஹரிஷிகளும் அவரைப் பின் தொடர்ந்தார்கள்.

த³த்வாப⁴யம் சாபி தபோத⁴நாநாம்
த⁴ர்மே த்⁴ருதாத்மா ஸஹ லக்ஷ்மணேந |
தபோத⁴நைஸ் சாபி ஸபா⁴ஜ்ய வ்ருத்த:
ஸுதீக்ஷ்ண மேவாபி⁴ ஜகா³ம வீர: ॥ (26)

## ஸர்க்கம் 7

## ஸுதீக்ஷ்ணர்

ராமஸ்து ஸஹிதோ ப்4ராத்ரா ஸீதயா ச பரந்தப: |
ஸுதீக்ஷ்ணஸ்யாச்ரம பத3ம் ஜகா3ம ஸஹ தைர் த்3விஜை: ॥ (1)

வெகு தூரம் நடந்து பல இடங்களில் மந்தாகினியைத் தாண்டி, பெரிய மேகத்தைப்போல் ஆகாசத்தை அளாவி நின்ற ஒரு மலையைக் கண்டார்கள். அதைச் சூழ்ந்திருந்த இருண்ட காட்டில் நுழைந்து, பழங்களாலும் புஷ்பங்களாலும் விளங்கும் மரங்களின் நடுவில் ஒரு ஆசிரமத்தைப் பார்த்தார்கள். அதைச் சுற்றி மரவுரிகள் காற்றில் உலர்ந்துகொண்டிருந்தன. அதில் ஒரு தபஸ்வி அழுக்கடைந்த ஜடையுடன் தியானம் செய்துகொண்டிருந்ததைக் கண்டு அவரே ஸுதீக்ஷ்ணரென்றறிந்து, அவருடைய பாதங்களில் நமஸ்கரித்து, "ஸ்வாமி! நான் ராமன், தங்களுக்கு அபிவாதனம் செய்கிறேன். தங்களைத் தரிசிக்க வந்திருக்கிறேன். தர்மங்களை அறிந்தவரே! மஹரிஷியே! ஒப்பற்ற தபோமஹிமையுடையவரே! என்னை ஆசீர்வதிக்கவேண்டும்" என்று தெரிவித்தார்.

ஸுதீக்ஷ்ணர் கண்ணைத் திறந்து பார்த்து, ராமனை மிக பிரியத்துடன் கட்டியணைத்து "ராம! அண்டினவர்களைக் காப்பாற்றும் தர்மத்தில் சிறந்தவனே! நீ எப்பொழுதும் இந்த ஆசிரமத்தில் குடிகொண்டிருந்தாலும், பாமரர்களின் திருஷ்டிக்கு இவ்விடம் இப்பொழுதுதான் இது நாதனுள்ளதாகத் தோன்றுகிறது. க்ஷேமமாய் வந்து சேர்ந்தாயா? இந்தத் தேகத்தைவிட்டுத் தெய்வலோகத்திற்குப் போகாமல் உன் வரவை எதிர்பார்த்துக்கொண்டிருக்கிறேன். ஸ்வர்க்கானுபவம் மோக்ஷத்திற்கு விரோதியல்லவா! நீ ராஜ்யத்திலிருந்து காட்டிற்கு அனுப்பப்பட்டுச் சித்திரகூடத்தில் வஸிக்கிறுயென்று கேள்விப்பட்டேன். பரம புருஷார்த்தமான உன் தரிசனம் எனக்குக் கிடைக்காதென்று ஸ்வர்க்கத்திற்குப் போகாமலிருக்கிறேன்; கொஞ்சகாலத்திற்கு முன் தேவேந்திரன் இங்கே வந்து, 'உமது புண்யத்தால் ஸகல லோகங்களையும் அடைந்தீர்' என்றான். ராம, நீயும் லக்ஷ்மணனும் ஸீதையும் அவைகளில் இஷ்டப்படி ஸஞ்சரிக்கலாம். அவைகளை நான் உனக்குத் தருகிறேன்." என்றார். இப்படித் தாம் செய்த புண்ய கர்மங்களின் பயனைப் பகவானிடத்தில் ஸமர்ப்பித்த அந்த மஹரிஷியைப் பார்த்து ராமன், "ஸ்வாமி, இவைகளை நானே ஸம்பாதித்துக் கொள்ளுகிறேன். இந்த வனத்தில் நாங்கள் வஸிக்கத் தகுந்த ஓரிடத்தைக் காட்டவேண்டும். தாங்கள் எல்லா விஷயங்களிலும் ஸமர்த்தரென்றும் எல்லோருக்கும் ஹிதத்தையே கோருகிறவரென்றும் கௌதம வம்சத்தில் பிறந்த சரபங்கர் எனக்குச் சொல்லியிருக்கிறார்" என்றார்.



பிரஹ்மா காசியபரைப் பார்த்துச் சொல்வதுபோல் ராமன், ஸத்திய ஸந்தரும் கடுமையான தவம் செய்தவருமான ஸுதீக்ஷ்ணரிடம் இவ்வாறு சொன்னார். அவர், தமக்கு மோக்ஷத்தை அருளினதால் பரமானந்தமடைந்து, "ராம! இந்த ஆசிரமம் ஸகல உத்தம லக்ஷணங்களால் விளங்குகிறது. பழங்களும் கிழங்குகளும் வேண்டிய வரையில் கிடைக்கும். ரிஷிகணங்கள் வஸிக்குமிடம் இது. இங்கே அநேக மிருகங்கள் பயமில்லாமல் ஸஞ்சரித்துக்கொண்டு விசித்திரமான வேஷங்களை எடுத்து ரிஷிகளின் ஸமாதியைக் கலைக்கின்றன. அதைத் தவிர இங்கே வேறு குறையில்லை" என்றார். மிருக ரூபத்தைத் தரித்த ராக்ஷஸர்களே இப்படி ரிஷிகளைத் தொந்தரவு செய்கிறார்களென்று ஸுதீக்ஷ்ணர் சொன்னதை ராமன் ஜாடையாக அறிந்து வெகு உத்ஸாஹத்துடன் நாணேற்றிப் பாணத்தைப் பூட்டி "ஸ்வாமி! இங்கே வரும் மிருகக் கூட்டங்களைக் கூர்மையான அம்புகளால் கொல்வேன்; ஆனால், தங்களுடைய எதிரில் அவைகளைக் கொன்றால் பெரிய அபராதம் செய்தவனாவேன். தங்களுக்கு வருத்தத்தை உண்டாக்குவதைக் காட்டிலும் வேறு கஷ்டம் எனக்கில்லை. அவை வருகிறவரையில் நான் இங்கிருந்தால் அவைகளால் நேரும் உபத்திரவத்தை நீக்காமல் பார்த்துக்கொண்டிருக்க வேண்டும். ஆகையால், வேறிடத்தில் அவைகளைக் கொல்வேன்" என்றார். ஸுதீக்ஷ்ணர் அதை அங்கீகரித்தார். பிறகு, ராமன் ஏரிக்குப்போய் ஸந்தியாவந்தன ஜபங்களை முடித்து அன்று ராத்திரி அந்த ஆசிரமத்தில் தங்கினார். அவர்களுக்கு வேண்டிய ஆகாரத்தை ஸுதீக்ஷ்ணர் மஹா பக்தியுடன் தானே கொண்டுவந்து கொடுத்து, விதிப்படி உபசரித்தார்.

தத: ஶுப4ம் தாபஸ போ4ஜ்ய மந்நம்
ஸ்வயம் ஸுதீக்ஷ்ண: புருஷர்ஷப4ாப்4யாம் |
தாப்4யாம் ஸுஸத்க்ருத்ய த3தௌ3 மஹாத்மா
ஸந்த்4யா நிவ்ருத்தௌ ரஜநீ மவேக்ஷ்ய ॥ (24)

## ஸர்க்கம் 8

## ஆசிரம யாத்திரை செய்ய உத்தேசித்தது

ராமஸ்து ஸஹ ஸௌமித்ரி: ஸுதீக்ஷ்ணேநாபி4 பூஜித: |
பரிணம்ய நிஶாம் தத்ர ப்ரபா4தே ப்ரத்யபு3த்4யத ॥ (1)

மறுநாட்காலையில் அவர்கள் எழுந்து நீலோத்பலங்களால் விளங்கும் அந்த ஏரியில் ஸ்நானம் செய்து, அக்னிஹோத்திரம் தேவ பூஜை முதலியவைகளை முடித்து, உதிக்கும் ஸூரியனை உபாஸித்தார்கள். (இதனால் இவர்கள் காத்தியாயன ஸூத்திரத்தைச் சேர்ந்த சுக்ில யஜுர்வேதிகளென்று தெரிகிறது.) பிறகு, ஸுதீக்ஷ்ணரிடத்தில் வந்து, "ஸ்வாமி! எல்லோரும் பூஜிக்கும் தங்களால்

நன்றாகப் பூஜிக்கப்பட்டோம். எங்களுக்கு உத்திரவு கொடுத்து அனுப்பவேண்டும். என்னுடன் வந்திருக்கும் ரிஷிகள் சீக்கிரப்படுத்துகிறார்கள். இந்த அரண்யத்தில் வஸிக்கும் புண்ணியாத்மாக்களான ரிஷிகளின் ஆசிரமங்களைத் தரிசனம் செய்யவிரும்புகிறோம். எப்பொழுதும் தர்ம சீலர்களும் தவத்தால் இந்திரியங்களை ஜயித்தவர்களும் கொழுந்தில்லாமல் எரியும் அக்கினியைப்போல் ஜ்வலிக்கிறவர்களுமான இந்த ரிஷிகளும் நாங்களும், அநியாயமாகத் தனத்தை ஸம்பாதித்து ஸாதுக்களின் சேர்க்கையில்லாத துஷ்ட பிரபுவைப்போல், ஸூரியன் தாங்கமுடியாத உஷ்ணத்துடன் எரிப்பதற்கு முன்பே பிரயாணம் செய்ய விரும்புகிறோம்” என்று ஸுதீக்ஷ்ணருடைய பாதங்களில் அவர்கள் நமஸ்கரித்தார்கள்.

அந்த மஹரிஷி அவர்களை பிரியத்துடன் ஆலிங்கனம் செய்து “க்ஷேமமாகப் போய் வாருங்கள்; உன் நிழலைப் போல் உன்னைப் பின் தொடரும் ஸீதைக்கும் லக்ஷ்மணனுக்கும் எல்லா மங்களங்களும் உண்டாகட்டும். தண்டகாரண்யத்தில் வஸிக்கும் மஹா தபஸ்விகளின் ஆசிரமங்களைப் பார்த்து வா. பல மிருகங்களையும் பக்ஷிகளையும் பழங்களையும் புஷ்பித்த வனங்களையும் மலர்ந்த தாமரைகளால் விளங்கி, நீர்க்கோழிகள் ஆனந்தமாய் விளையாடும் தெளிந்த ஜலத்தையுடைய குளங்களையும் ஏரிகளையும் மலைகளையும் தாழ்வரைகளையும் அவைகளைச் சூழ்ந்த வனங்களையும் அவைகளில் மயில்கள் அழகாகக் கூவுவதையும் பார். லக்ஷ்மணா! போய் வா. ராமா! நீயும் போய் வா. இந்த ஆசிரமத்திற்குத் திரும்பி வர வேண்டும்” என்று விடை கொடுத்தார். அந்த ராஜபுத்திரர்களும் ஸீதையும் “அப்படியே செய்கிறோம்” என்று மஹரிஷியை பிரதக்ஷிணம் செய்து புறப்பட்டார்கள். அம்பறைகளையும் வில்லுகளையும் கத்திகளையும் ஸீதை கொண்டுவந்து கொடுக்க, அவைகளைத் தரித்துக் கொண்டு, அதிரூபவான்களும் தேஜஸால் ஸகல திசைகளையும் விளங்கச் செய்கிறவர்களுமான அந்த ராஜபுத்திரர்கள் அங்கிருந்து புறப்பட்டார்கள்.

ஸ்ரீமந்தௌ ரூபஸம்பந்நௌ தீ$^{3}$ப்யமாநௌ ஸ்வதேஜஸா |
ப்ரஸ்தி$^{2}$தௌ த்$^{4}$ருத சாபௌ தௌ ஸீதயா ஸஹ ராக$^{4}$வௌ ॥ (20)

## ஸர்க்கம் 9

## ஸீதை ஹிதத்தைத் தெரிவித்தது

ஸுதீக்ஷ்ணேநா ப்$^{4}$யநுஜ்ஞாதம் ப்ரஸ்தி$^{2}$தம் ரகு$^{4}$நந்த$^{3}$நம் |
ஹ்ருத்$^{3}$யயா ஸ்நிக்$^{3}$த$^{4}$யா வாசா ப$^{4}$ர்தார மித$^{3}$ மப்$^{3}$ரவீத் ॥ (1)

இப்படி ராவண வதத்தை உத்தேசித்து ஸுதீக்ஷ்ணர் விடை கொடுக்க, ராமன் புறப்பட்டுப் போகையில் ஸீதை, “இவர் ரிஷிகளிடத்தில் செய்த பிரதிக்ஞையைத் தவறமாட்டார் என்று எனக்கு



நிச்சயமாகத் தெரியும். ஆனால், ராக்ஷஸர்களுடன் யுத்தம் நேர்ந்தால் என்னைவிட்டுப் பிரிந்து, மிகுந்த துக்கத்தை அனுபவிப்பாரே” என்று ராமனிடத்தில் வைத்த அன்பால் வெகு சாதுரியமாகப் பின்வருமாறு சொன்னாள்.

“பிராணநாத! ஆசையாலுண்டாகும் மூன்று தோஷங்களை ஜயித்தவனுக்கே சிரேஷ்டமான தர்மம் கிடைக்கும். அந்த வழியோ வெகு நுட்பமானது. பொய் சொல்வது அவைகளில் ஒன்று. பரஸ்த்ரீகளைச் சேர்வது, விரோதமில்லாதவர்களை ஹிம்ஸிப்பது என்ற இவை முன்கூறியதைக் காட்டிலும் மிகவும் தீங்களிப்பவை. பொய்சொல்லுதல் தங்களுக்கு இதுவரை இல்லை. இப்பொழுதும் இல்லை; இனியும் இல்லை. இப்படியிருக்க, பரஸ்த்ரீகளிடத்தில் விருப்பமேயில்லாத தங்களுக்கு அவர்களுடைய ஸம்பந்தம் ஒருநாளுமிருக்காது. தர்ம பத்தினியிடத்திலேயே பிரீதி வைத்த தாங்கள் பரஸ்த்ரீகளை நினைப்பதுமில்லை. தாங்கள் தர்மாத்மா. ஆகையால், செய்த பிரதிக்ஞையைத் தவறாதவர்கள். பிதிருவாக்கிய பரிபாலனத்தாலேயே இது நன்றாக வெளிப்படும். எல்லையற்ற ஐசுவரிய முள்ளவரே! வைராக்கியத்தில் லக்ஷ்மணனுக்கும் மேலானவரே! ஸத்தியமும் தர்மமும் ஐசுவரியமும் வைராக்கியமும் மற்ற குணங்களும் தங்களிடத்தில் குடி கொண்டிருக்கின்றன. இந்திரியங்களை ஜயித்தவர்களுக்கு இவை எளிது. தாங்களோ இந்திரியங்களை ஜயித்தவர்களென்று எனக்கு நன்றாகத் தெரியும். விரோதமில்லாதவர்களிடத்தில் துவேஷம் பிறந்து, அவர்களை ஹிம்ஸித்தலென்ற மூன்றாவது தோஷம் பாமர ஜனங்களுக்கு இயற்கை. அது இப்பொழுது தங்களுக்கும் நேர்ந்திருக்கிறது. தண்டகாரண்யத்தில் வஸிக்கும் ராக்ஷஸர்களை யுத்தத்தில் கொன்று இந்த மஹரிஷிகளைக் காப்பாற்றுவதாக பிரதிக்ஞை செய்திருக்கிறீர்கள். இதற்காகவே ஆயுதபாணியாகத் தண்டகாரண்யத்திற்கு வந்திருக்கிறேனென்றும் தாங்களே சொல்லக் கேட்டேன். ராக்ஷஸர்களை வதம் செய்யப் புறப்பட்ட தங்களைப் பார்த்தும், தாங்கள் ஸத்தியம் தவறாதவர், ஏகபத்தினி விரதரென்பதை யோசித்தும், தங்களுக்கு நித்தியமான ஸுகத்தைக் கொடுக்கும் ஸாதனத்தை ஆலோசித்தேன். அப்பொழுது எனக்குப் பெரிய கவலையுண்டாயிற்று. ராமன் ஸத்தியவான்; ரிஷிகளிடத்தில் பிரதிக்ஞை செய்தபடி ராக்ஷஸர்களைக் கொல்லாமல் விடமாட்டார். விரோதமில்லாதவர்களை ஹிம்ஸிக்கமாட்டார். எவருடனாவது விரோதம் நேர்ந்தால் அதற்கு நானே காரணமாக வேண்டும். அப்பொழுது என்னைப் பிரியும்படி நேரும்; ஏகபத்தினி விரதனான அவர் அந்தத் துன்பத்தைத் தாங்கமாட்டார். இதற்கு என்ன செய்யலாமென்று யோசித்தேன்; ஒரே உபாயம் எனக்குத் தோன்றுகிறது. தாங்கள் தண்டகாரண்யத்திற்குப் போவதில் எனக்கு இஷ்டமில்லை. தாங்களும் லக்ஷ்மணனும் ஆயுதபாணிகளாகக் காட்டில் போனால் அதிலுள்ள பிராணிகளைக் கண்டு ஒருவேளை

அம்புகளால் அடிக்கும்படியிருக்கும். கொழுந்துவிட்டெரியும் நெருப்பிற்கு அருகில் உலர்ந்த கட்டைகளிருந்தால் எப்படியோ அப்படியே க்ஷத்திரியர்களுக்குக் கையிலிருக்கும் வில் தேஜஸையும் பலத்தையும் அதிகப்படுத்துகிறது.

இதைப்பற்றின ஒரு கதையைச் சொல்லுகிறேன், கேளுங்கள். முன்பு ஒரு காலத்தில் ஸத்தியவானும் சுத்தருமான ஒரு தபஸ்வி ஒரு அழகான ஆசிரமத்தில் வஸித்துக்கொண்டிருந்தார். இந்திரன் அவருடைய தவத்தைக் கெடுக்க நினைத்துத் தன் கையிலிருந்த சிரேஷ்டமான கத்தியை அந்த ரிஷியினிடத்தில் அடைக்கலமாக வைத்துப் போனான். அவர் அந்த வனத்தில் தான் போகும் இடமெல்லாம் அதை எடுத்துக்கொண்டே போவார். அடைக்கலம் வைத்த பதார்த்தத்தை ஜாக்கிரதையாகக் காப்பாற்றி, வைத்தவனிடத்தில் ஒப்புவிக்க வேண்டுமல்லா? எப்பொழுதும் அந்தக் கத்தியைக் கையில் பிடித்துக்கொண்டிருந்ததால் அவருடைய சாந்தஸ்வபாவம் முற்றிலும் மாறி, தவம் குலைந்து குரூரபுத்தி உண்டாயிற்று. வரவர பிராணிகளையும் தொந்திரவு செய்ய ஆரம்பித்தார். கொழுப்படைந்து தர்மத்தை விட்டு அந்தக் கத்தியின் சேர்க்கையால் முடிவில் கோரமான நரகத்தில் விழுந்தார். தனக்கு அருகிலுள்ள பொருள்களை அக்னி எரிப்பதுபோல் ஆயுதங்கள் தங்களுக்கருகிலிருக்கும் ஜந்துக்களின் நல்ல புத்தியை அழிக்கும். நான் தங்களிடத்தில் வைத்திருக்கும் பிரியத்தாலும் தாங்கள் என்னிடத்தில் வைத்திருக்கும் மதிப்பாலும் தங்களுக்குத் தெரிந்த விஷயத்தையே ஞாபகம் செய்தேன். தங்களுக்குத் தெரியாத விஷயத்தை நான் அறிந்து தங்களுக்கு உபதேசித்ததாக எண்ணக்கூடாது. ராக்ஷஸர்களை விரோதமில்லாமல் தாங்கள் ஒருக்காலும் கொல்லக்கூடாது. அது தங்களுடைய ஸ்வபாவத்திற்குத் தகாது. எனக்கும் இஷ்டமில்லை. இந்தப் புத்தி வரவர முற்றி எந்த பிராணியையும் ஹிம்ஸிக்கும்படி செய்யும். ஆனால் ஆயுதங்களைத் தரிப்பது க்ஷத்திரிய தர்மமல்லவா என்றால், க்ஷத்திரிய வீரர்கள் வனத்திலுள்ள ஸாதுக்களுக்கு நேரும் கஷ்டங்களை நீக்கவே ஆயுதம் தரிக்கவேண்டும். அதற்காவது ஆயுதங்கள் வேண்டாமா என்றால், இந்த ஸமயத்தில் அவைகளைத் தரிப்பது உசிதமல்ல. ராஜ்யத்தை ஆளும்பொழுது மாத்திரம் தரிக்க வேண்டிய ஆயுதங்களெங்கே? ராஜ்யத்தை விட்டு நாம் இப்பொழுது வந்திருக்கும் வனமெங்கே? க்ஷத்திரிய தர்மமான பிராணிஹிம்ஸை எங்கே? ஸகல லோகத்திற்கும் ஹிதத்தையே தேடும் தவமெங்கே? இவை ஒன்றிற்கொன்று விரோதம். நாம் இப்பொழுது வஸிக்கும் வனத்தில் அனுஷ்டிக்கப்படும் தர்மத்தையே கைக்கொள்ளுவோம். ஆயுதங்களை வைத்துவிட்டுத் தவம் செய்வோம். இவைகளால் நம்முடைய புத்தி கெடுகிறது. வனவாஸம் முடிந்து அயோத்யைக்குப் போன பிறகு க்ஷத்திரிய தர்மத்தை அனுஸரிப்போம். இப்படிச் செய்தால் தசரதருக்கும் கைகேயியிக்கும் எல்லையற்ற பிரீதியுண்



டாகும். தர்மத்தால் அர்த்தமும் ஸுகமும் ஞானமும் அதன் வழியாக முக்தியும் கிடைக்கின்றன. இந்த பிரபஞ்சத்திற்குத் தர்மமே ஸாரம். விரதங்களாலும் உபவாஸங்களாலும் தேகத்தை ஒடுக்கிக் கஷ்டப்பட்டு இந்தத் தர்மத்தை ஸம்பாதிக்கவேண்டுமே தவிர தேஹேந்திரியங்களை ஸுகமாக வளர்ப்பதால் நித்தியஸுகம்கிடைக்குமா? ஆகையால் எப்பொழுதும் சுத்தமான மனத்துடன் வனத்தில் தவம் செய்வது நல்லது. ஸகல புருஷார்த்தங்களும் அவைகளுக்கு ஸாதனங்களும் தங்களுக்குத் தெரியாதவைகளா? ஸ்த்ரீகளுக்கு ஸ்வபாவமான சாபல்யத்தால் இவ்வாறு சொன்னேனே தவிர, தங்களுக்குத் தர்மத்தை உபதேசிக்க யாரால் முடியும்? தாங்கள் நன்றாக யோசித்து, லக்ஷ்மணனுடன் கலந்து எது யுக்தமாகத் தோன்றுகிறதோ அதைச் செய்யுங்கள். தாமதம் செய்யவேண்டாம்" என்றாள்.

ஸ்த்ரீசாபலா தே$^{3}$த து$^{8}$த$^{3}$ாஹ்ருதம் மே
த$^{4}$ர்மம் ச வக்தும் தவ க: ஸமர்த$^{2}$: |
விசார்ய பு$^{8}$த்$^{3}$த்$^{4}$யா து ஸஹாநுஜேந
யத்$^{3}$ரோசதே தத் குரு மா சிரேண ‖ (33)

## ஸர்க்கம் 10

## ரிஷிகளுக்கு அபயதானம்

வாக்ய மேதத்து வைதே$^{3}$ஹ்யா வ்யாஹ்ருதம் ப$^{4}$ர்த்ரு ப$^{4}$க்தயா |
ஶ்ருத்வா த$^{4}$ர்மே ஸ்தி$^{2}$தோ ராம: ப்ரத்யுவாசாத$^{2}$ மைதி$^{2}$லீம் ‖ (1)

இப்படி கஷ்டத்தை அனுபவித்தாவது தன் பிரதிக்ஞையைக் காப்பாற்றவேண்டும்; தன்னை அண்டியவர்களை ரக்ஷிக்க வேண்டும் என்ற தர்மத்தில் நாடிய மனத்தையுடைய ராமன், தன்னிடத்தில் வைத்த பக்தியால் ஸீதை இப்படிச் சொன்னதைப் பார்த்து "நீ என்னிடத்தில் வைத்திருக்கும் அன்பிற்கும் நீ பிறந்த உத்தம குலத்திற்கும் தகுந்தபடி எனக்கு ஹிதமான விஷயத்தைச் சொன்னாய். தர்மங்களை நன்றாக அறிந்தவளல்லவா? பிரஹ்ம ஞானியான ஜனகருடைய புத்திரியல்லவா? ஜனங்கள் கஷ்டப்படும் சத்தம் அரசர்களின் காதில் விழாமல் செய்யவே அவர்கள் ஆயுதங்களைத் தரிக்கிறார்களென்று சொன்னாய்; அது உண்மையே. ஆனால் என்னைச் சரணமடைந்த முனிவர்களுக்கு அபயம் கொடுத்திருக்கிறேன். இந்த வனத்திலுள்ள ரிஷிகள் ராக்ஷஸர்களின் ஹிம்ஸையைப் பொறுக்காமல் தாங்களே வந்து என்னைச் சரணமடைந்ததைப் பார்த்தாய் அல்லவா? அபராதம் செய்யாதவர்களைக் கொல்லக்கூடாது; ஸாதுக்களுடைய விரோதிகளைக் கொன்று அவர்களைக் காப்பாற்றவேண்டுமென்று சொன்னாயல்லவா? இவர்கள் என்னைச் சரணமடைந்த பொழுதே எனக்கு உயிரானார்கள்; அவர்களுக்குச் செய்த கெடுதி

எனக்குச் செய்ததல்லவா? அவர்கள் பழங்களையும் கிழங்குகளையும் தின்றுகொண்டு தவம் செய்கிறவர்கள்; ராக்ஷஸர்களால் குரூரமாக ஹிம்ஸிக்கப்படுகிறார்கள். விரதங்களையும் நியமங்களையும் உபவாஸங்களையும் அந்தந்தக் காலங்களில் செய்து கொண்டிருக்கையில் நர மாம்ஸத்தைத் தின்னும் ராக்ஷஸர்கள் அநியாயமாக அவர்களைக் கொல்லுகிறார்கள்.

அந்த ரிஷிகள் என்னைச் சரணமடைந்து 'எங்களை அனுக்கிரகிக்க வேண்டும்' என்று பிரார்த்தித்தார்கள். நானும் அவர்களை நமஸ்கரித்து, 'நான் செய்த அபராதத்தைப் பொறுக்கவேண்டும். தங்களைத் தேடி நான் வரவேண்டியிருக்க தாங்கள் என்னைத் தேடி வந்ததை நினைத்தால் எனக்கு எல்லையற்ற வெட்கமுண்டாகிறது. தங்களுடைய கட்டளையைத் தெரிவிக்கவேண்டும்' என்று பிரார்த்தித்தேன். அப்பொழுது அவர்களெல்லோரும், 'ராம! இந்த வனத்தில் ராக்ஷஸர்கள் இஷ்டமான ரூபங்களை எடுத்துக்கொண்டு எங்களை ஹிம்ஸிக்கிறார்கள். எங்களை அவர்களிடத்திலிருந்து காப்பாற்று. அக்னிஹோத்திரங்களையும் பர்வகாலங்களில் இஷ்டிகளையும் நாங்கள் செய்யும்பொழுது அந்த மஹா பாபிகள் ஓடிவந்து அவைகளைக் கெடுக்கிறார்கள். (நீயோ யக்ஞமூர்த்தி; யக்ஞங்களைக் கெடுக்கிறவர்கள் உனக்கே அபராதம் செய்தவர்களல்லவா?) இப்படிக் கஷ்டப்படும் எங்களுக்கு நீயே கதி. எங்களுடைய தபோ மஹிமையால் இவர்களைக் கொல்வது எங்களுக்கு ஸுலபம். ஆனால் வெகு காலமாகக் கஷ்டப்பட்டு ஸம்பாதித்த தவத்தை வீணாக்க மனம்வரவில்லை. தவம் செய்வதோ அஸாத்தியம். நேரும் இடையூறுகளுக்கோ கணக்கில்லை. ஆகையால் இவர்கள் எங்களைக் கொன்றாலும் இன்னும் எங்களால் சபிக்கப்படாமல் பிழைத்திருக்கிறார்கள். நீயும் உன் தம்பியும் எங்களைக் காப்பாற்றுங்கள். நீயே எங்களுக்கு நாதன்' என்றார்கள்.

"என்னை அண்டியவர்களை ஹிம்ஸித்து என் ஆகாரத்தை அபகரிக்கும் ராக்ஷஸர்களான விரோதிகளைக் கொல்வதாக பிரதிக்ஞை செய்தேன். என் உயிரை இழந்தாலும் அதை நிறைவேற்றாமலிருக்க மாட்டேன். உன்னை விட்டுப பிரிவது மஹா கஷ்டமே. பாரியை நமது ஆத்மாவில் பாதி என்று வேதம் சொல்கிறது. உடன் பிறந்தவன் நமது ஆத்மாவைத் தவிர வேறல்ல. ஆபத்துக் காலங்களில் நம்மைக் காப்பாற்ற தனத்தை ஸம்பாதிக்கவேண்டும். அந்தத் தனத்தைக் கொடுத்தாவது நமது பாரியையைக் காப்பாற்ற வேண்டும். தனத்தையும் பாரியையும் கொடுத்தாவது தன்னுயிரைக் காப்பாற்றவேண்டும் என்று பெரியோர்கள் சொல்லுகிறார்கள். ஆனாலும், உன்னையும் லக்ஷ்மணனையும் என் உயிரையும் கொடுப்பேன். செய்த பிரதிக்ஞையை மாத்திரம் தவறமாட்டேன்.



மேலும் பிரஹ்மஞானிகள் எனக்குத் தெய்வமல்லவா? ஸத்தியத்தைவிட மேலான பொருள் எனக்கில்லை. ஆகையால் ரிஷிகள் என்னைக் கேட்காமலிருந்தாலும் அவர்களை நான் அவசியமாகக் காப்பாற்றவேண்டும். இப்படி பிரதிக்ஞை செய்தபிறகும் தவறுவேனா! என்னிடத்தில் உனக்குள்ள அன்பையும் என்னைப் பிரியும் துக்கத்தையும் நினைத்து இப்படிச் சொன்னாயென்று எனக்குத் தெரியும். நமது க்ஷேமத்தைக் கோருகிறவனே நமக்கு ஹிதத்தை உபதேசிப்பான். கர்மங்களைப் பூர்ணமாக பலாபேக்ஷையில்லாமல் அனுஷ்டிப்பதாலேயே மேலான ஸித்தியை அடைந்த ஜனகருடைய புத்திரியல்லவா? அபராதிகளையும் அபராதிகள் அல்ல என்று சொல்வது உன் ஸ்வபாவமல்லவா? (இங்கே ஸீதை லோக மாதா என்பதைக் குறிக்கிறார்.) ஆகையால் நீ சொல்வது உசிதமே. ஆயினும், என் உயிரைக் காட்டிலும் எனக்கு பிரியமானவள். நான் அனுஷ்டிக்கும் தர்மத்தை நீயும் அனுஷ்டிப்பது நலம்" என்று ஸீதையை ஸமாதானம் செய்தார். பிறகு மஹா தைரியசாலியான ராமன் ஆயுதபாணியாக லக்ஷ்மணனுடன் புண்ணியமான ஆசிரமங்களைப் பார்க்கப் போனார்.

இத்யேவ முக்த்வா வசநம் மஹாத்மா
ஸீதாம் ப்ரியாம் மைதி$^{2}$ல ராஜபுத்ரீம் |
ராமோ த$^{4}$நுஷ்மாந் ஸஹ லக்ஷ்மணேந
ஜகா$^{3}$ம ரம்யாணி தபோவநாநி ‖ (23)

---

## ஸர்க்கம் 11

## ஆசிரம யாத்திரை

---

அக்$^{3}$ரத: ப்ரயயௌ ராம: ஸீதா மத்$^{4}$யே ஸுமத்$^{4}$யமா |
ப்ருஷ்ட$^{2}$தஸ்து த$^{4}$நுஷ்பாணி: லக்ஷ்மணோநு ஜக$^{3}$ாம ஹ ‖ (1)

ராமன் முன்னே நடந்தார்; ஸீதை நடுவில் வந்தாள், லக்ஷ்மணன் வில்லும் கையுமாகப் பின்னால் சென்றார். பல மலைகளையும் வனங்களையும் அழகான நதிகளையும் அவைகளில் மணல் திட்டுகளில் விளையாடும் வண்டாழ்வான் குருவிகளையும் சக்கரவாகங்களையும் நீர்ப்பறவைகளால் விளங்கும் தாமரை ஓடைகளையும் புள்ளிமான்களின் மந்தைகளையும் மதம்கொண்ட காட்டு மான்களையும் மரங்களை அழிக்கும் காட்டுப் பன்றிகளையும் யானைகளையும் பார்த்துக் கொண்டே போனார்கள். அஸ்தமிக்கும்பொழுது ஒரு யோஜனை நீளமும் அகலமும் உள்ள அழகான ஒரு குளத்தங்கரையில் வந்தார்கள். அது மலர்ந்த செந்தாமரைகளாலும் வெண்தாமரைகளாலும் அலங்கரிக்கப்பட்டிருந்தது. யானைக்கூட்டங்கள் ஜலத்தில் விளையாடிக்கொண்டிருந்தன. வண்டாழ்வான் குருவிகள் ராஜஹம்ஸங்கள் கலஹம்ஸங்கள் முதலிய நீர்ப்பறவைகள் அங்குமிங்கும் நடன

மாடின. ஸ்படிகம்போலத் தெளிந்த அந்த ஜலத்திலிருந்து பாட்டு, வாத்தியம், நர்த்தனம் இவைகளின் ஓசை கேட்கப்பட்டது. ஆனால், ஒருவரும் கண்ணிற்குத் தோன்றவில்லை. ராமலக்ஷ்மணர்கள் ஆச்சரியமடைந்து தங்களுடன் வரும் தர்மப்ருத் என்ற முனிவரைப் பார்த்து "ஸ்வாமி! இந்த அத்புதமான காக்ஷி எங்களுக்கு மிகுந்த ஆச்சரியத்தை உண்டாக்குகிறது. இதைப்பற்றிய வரலாற்றைச் சொல்லக்கூடுமானால் கேட்க ஆவலாயிருக்கிறோம்" என்றார்கள்.

அந்த முனிவர், "இந்தத் தடாகத்திற்குப் 'பஞ்சாப் ஸரஸ்' என்று பெயர் எந்நாளுமுள்ளது. மாண்டகர்ணியென்ற மஹரிஷியின் தபோபலத்தால் உண்டாக்கப்பட்டது. அவர் இந்த ஜலத்தில் நின்றுகொண்டு அநேக ஆயிர வருஷங்களாகக் கடுந்தவம் செய்தார். காற்றையே புஜித்தார். தேவதைகள் அதைக்கண்டு பயந்து ஒன்றுகூடி, 'இவர் நமது பதவிகளில் எதையோ அடைய விரும்புகிறார். இவருடைய தவத்தைக் கெடுக்கவேண்டும்' என்று நிச்சயித்து, அப்ஸரஸ்களில் முக்கியமான மின்னல்கொடிகளைப் போன்ற ஐந்து ஸ்த்ரீகளை அனுப்பினார்கள். அந்த ரிஷி ப்ரஹ்மஸ்வரூபத்தை நன்றாயறிந்தவர். ஆனாலும் தேவதைகளின் காரியம் நிறைவேற வேண்டுமென்று ஆசைக்குக் கட்டுபட்டவர் போலானார். அந்த ஸ்திரீகள் இவருக்குப் பாரியைகளானார்கள். இந்தத் தடாகத்தில் தன் தபோபலத்தால் ஒரு விசித்திரமான வாஸஸ்தலத்தை அமைத்து, யோகபலத்தால் எப்பொழுதும் யௌவன புருஷனாக அவர்களுடன் ஆனந்தமாகக் காலம் கழிக்கிறார். அவர்களுடைய திவ்ய ஆபரணங்களின் ஓசையும் பாட்டும் வாத்திய கோஷமும் நர்த்தன த்வனியும் கலந்து மதுரமாகக் கேட்கிறது" என்றார். "மிகவும் ஆச்சரியமாக இருக்கிறது" என்று ராகவன் சொல்லிக் கொஞ்ச தூரம் போய் ஆசிரமக் கூட்டங்களைக் கண்டார்.

அவை பிராம்மணர்களால் நிறைந்து தர்ப்பங்களாலும் மரவுரிகளாலும் விளங்கின. அவைகளில் ராமலக்ஷ்மணர்களும் ஸீதையும் சிலகாலம் வரையில் வஸித்தார்கள். அங்குள்ள ஸாதுக்கள் வெகு பிரேமையுடன் அவர்களை உபசரிக்க, அவர்கள் ஒவ்வொரு ஆசிரமத்திலும் தங்கி மறுபடியும் வரிசையாக அவைகளில் வஸித்தார்கள். சிலவிடங்களில் பதின்மூன்று மாதங்களும், சில விடங்களில் ஒரு வருஷமும், சிலவிடங்களில் நான்கு மாதங்களும், சிலவிடங்களில் ஐந்து மாதங்களும், சிலவிடங்களில் ஆறு மாதங்களும், சிலவிடங்களில் ஏழு மாதங்களும், சிலவிடங்களில் எட்டு மாதங்களும், சில விடங்களில் முக்கால் மாதமும், சிலவிடங்களில் ஒன்றேகால் மாதமும், சிலவிடங்களில் மூன்று மாதங்களும், வஸித்துக்கொண்டு இப்படிப் பத்து வருஷங்களைக் கழித்தார்கள். பிறகு ஸுதீக்ஷ்ணருடைய ஆசிரமத்திற்கு வந்து அங்கே சிலகாலமிருந்தார்கள்.

ஒருநாள் ராமன் அந்த மஹரிஷியைப் பார்த்து வணக்கமாக "ஸ்வாமி! இந்த வனத்தில் அகஸ்திய மஹரிஷி வஸிக்கிறாரென்று



தபஸ்விகள் சொல்லக்கேட்டேன். இந்தப் பெரிய காட்டில் அவருடைய ஆசிரமத்தைக் கண்டுபிடிக்க முடியவில்லை. அது எங்கே? தங்களுடைய கிருபையால் அங்கே போய் அந்த மஹரிஷியைத் தரிசித்துச் சிலகாலம் அவருக்குச் சுச்ரூஷை செய்ய மிகவும் ஆசை கொண்டிருக்கிறேன்" என்று பிரார்த்தித்தார். ஸுதீக்ஷ்ணர் ஸந்தோஷமடைந்து "குழந்தாய்! நானும் உனக்கு இதைச் சொல்ல வேண்டுமென்று நினைத்திருந்தேன். நீயே இன்று தெரிவித்தாய். இந்த ஆசிரமத்திலிருந்து தெற்கே நான்குயோஜனை தூரத்தில் அகஸ்தியருடைய தம்பி வஸிக்கிறார். அங்கே திப்பிலி மரங்கள் அடர்ந்த காடுகள் உண்டு. பழங்களாலும் புஷ்பங்களாலும் விளங்கிக் கிளிக் கூட்டங்கள் மதுரமாகச் சப்திக்க, தெளிந்த ஜலத்தால் நிறைந்து, ஹம்ஸங்கள் நீர்க்கோழிகள் சக்ரவாகங்கள் முதலிய நீர்ப்பறவைகள் விளையாடும் புண்ணியமான தாமரை ஓடைகளால் அலங்கரிக்கப்பட்டிருக்கிறது. அங்கே ஒரு ராத்திரி தங்கு. காலையில் அந்த மரச்சோலைக்குத் தெற்கே போனால் ஒரு யோஜனைக்கப்பால் அகஸ்தியருடைய ஆசிரமம் தோன்றும். அங்குள்ள விசித்திரமான மிருகங்களையும் பக்ஷிகளையும் மரங்களையும் பார்த்து மிகுந்த ஸந்தோஷமடைவீர்கள். போவதாக இருந்தால் இன்றைக்கே புறப்படலாம்" என்றார்.

அவர்கள் அப்படியே அங்கிருந்து பிரயாணம் செய்து, அழகான வனங்களையும் மேகங்களைப் போன்ற மலைகளையும் ஏரிகளையும் ஆறுகளையும் பார்த்துக்கொண்டு ஸுதீக்ஷ்ணர் காட்டிய வழியாகப் போனார்கள். அப்பொழுது ராமன், "லக்ஷ்மணா! அகஸ்தியருடைய ஸஹோதரர் வஸிக்கும் ஆசிரமம் இதே என்று தோன்றுகிறது. வனத்தில் ஸஞ்சரிப்பதால் இதிலுள்ள வழியிலிருக்கும் மரங்களும் பழங்களும் புஷ்பங்களும் எனக்கு நன்றாகத் தெரியும். பழுத்த திப்பிலிகளின் கடுமையான வாஸனையை இழுத்துக்கொண்டு காற்று அடிப்பதைப் பார். அங்கங்கே கட்டைகள் வெட்டி அடுக்கப்பட்டிருக்கின்றன. வழிகளில் வைடூரியத்தைப் போன்ற தர்ப்பைகள் அறுக்கப்பட்டிருப்பதைப்பார். இந்தக் காட்டின் நடுவிலிருந்து கிளம்பும் ஹோமப் புகை கறுத்த மேகத்தைப்போல் கவிழ்ந்திருப்பதைப் பார். பிராம்மணர்கள் புண்ணிய தீர்த்தங்களில் ஸ்நானம் செய்து பூஜைக்கு வேண்டிய பூக்களைத் தாங்களே பறிப்பதைப் பார். ஸுதீக்ஷ்ணர் சொன்னபடி அகஸ்திய ஸஹோதரரின் ஆசிரமம் இதே. இவருடைய அண்ணனான அகஸ்தியர் லோகத்திற்கு ஹிதம்செய்ய விரும்பி இந்தத் தெற்குத் திக்கில் வந்து மிருத்யுவைப் போன்ற அஸுரர்களை அழித்தார்.

முன்பு வாதாபி இல்வலனென்ற இருவர் இங்கே இருந்தார்கள். ஸஹோதரர்கள், ஆஸுரர்கள், மிகவும் கொடியவர்கள்; பிராம்மணர்களை தின்கிறவர்கள். அவர்கள் செய்யும் சிரார்த்தங்களில் புஜிக்கும்படி இல்வலன் பிராம்மணவேஷத்துடன் ஸம்ஸ்

கிருத பாஷையால் வேதியர்களை வெகு மரியாதையுடன் அழைப்பான். பிறகு, வாதாபியை ஆடாகச் செய்து அவனுடைய மாம்ஸத்தைச் சமைத்து, சிராத்த விதிப்படி அவர்களுக்குப் பரிமாறுவான். அவர்கள் தின்றவுடன் 'வாதாபி! வெளியில் வா' என்று கூவுவான். உடனே அந்தப் பாபி வயிற்றிலிருந்து ஆட்டைப்போல் கத்திக்கொண்டு அவர்களின் தேகத்தைக் கிழித்து வெளியில் வருவான். பிறகு, இருவரும் அந்த பிராம்மணர்களைத் தின்பார்கள். இப்படி வெகுகாலம் நடந்தது. பல வேதியர்கள் மடிந்தார்கள். பிறகு தேவதைகள் வேண்டியதால் அகஸ்தியர் இங்கே வந்து இல்வலனுடைய சிராத்தத்தில் வழக்கப்படி புஜித்தார். 'ஸ்வாமி! தாங்கள் திருப்தி அடைந்தீர்களா?' என்று இல்வலன் கேட்டான். 'ஆம், திருப்தியடைந்தேன்' என்றார். பிறகு இல்வலன் வழக்கப்படி அவருடைய கையில் ஜலத்தை வார்த்து, 'வாதாபி! வெளியில் வா' என்றான். அகஸ்தியர் சிரித்து 'அவன் என்னால் ஜீர்ணம் செய்யப்பட்டு யமலோகத்திலிருக்கிறான். இங்கே வருவானா? இல்லாவிட்டால் நான் திருப்தியடைந்தேனென்று எப்படிச் சொல்வேன்' என்றார். இல்வலன் கோபங்கொண்டு பழிதீர்க்க நினைத்து அகஸ்தியரின்மேல் பாய்ந்தான். அவருடைய கோபப்பார்வை கொழுந்துவிட்டெரியும் நெருப்பைப் போல் அவனைச் சாம்பலாக்கிற்று. பிராம்மணரிடத்தில் வைத்த கிருபையால் இந்த அஸாத்யமான காரியத்தைச் செய்தவரான அகஸ்தியருடைய தம்பி (இத்மவாஹர்) வஸிக்குமிடம், தடாகங்களாலும் காடுகளாலும் விளங்கும் இந்த ஆசிரமமே'' என்றார். ஸூரியனும் அஸ்தமித்தான். (மூலாதார சக்கரத்தில் அதிதேவதையாக விளங்கும் கணபதியை அகஸ்தியர் பிரார்த்தித்து அதனால் கிளம்பிய ஜாடராக்னியால் வாதாபியைக் கொன்றார். ஆகையால், விநாயகரின் அந்த மூர்த்திக்கு 'வாதாபி கணபதி' என்று பெயர்.)

ராமலக்ஷ்மணர்கள் ஸந்தியாவந்தனம் செய்து அந்த ஆசிரமத்தில் புகுந்தார்கள். அந்த மஹரிஷி அவர்களை மிக்க பிரீதியுடன் உபசரிக்க அந்த ராத்திரியில் அங்கே தங்கினார்கள். காலையில் ராமன் அவரை நமஸ்கரித்து, "ஸ்வாமி! தங்களால் நன்றாக உபசரிக்கப்பட்டு இங்கே ஸுகமாக வஸித்தோம். அகஸ்திய பகவானைத் தரிசிக்கப் போகிறோம்; உத்தரவு கொடுக்கவேண்டும்'' என்று பிரார்த்தித்தார். "போய்வாருங்கள்'' என்று அவர் அனுக்கிரஹிக்க, ஸுதீக்ஷ்ணர் குறிப்பிட்ட வழியாகப் போனார்கள். அங்கேயே நீர்க்கடம்பு பலா பனை தினிசி அசோகம் தவம் புங்கை இலுப்பை பில்வம் தும்பை முதலிய காட்டு மரங்களும் செடிகளும் புஷ்பங்களால் அலங்கரிக்கப்பட்ட கொடிகளால் சூழப்பட்டிருப்பதையும், யானைகளால் முறிக்கப்பட்டிருப்பதையும், அவைகளில் பலவிதமான பக்ஷிகளும் குரங்குகளும் கத்துவதையும் கண்டு ராமன், "லக்ஷ்மணா! இந்த மரங்களின் இலைகள் ஆசிரம ஜனங்களால் சேழித்திருக்கின்றன. இங்குள்ள மிருகங்களும் பக்ஷிகளும் வெகு அடக்கமாக இருக்கின்றன. ஆகையால் மஹரிஷியின் ஆசிரமம் நெருங்கிற்றென்று எண்ணுகிறேன். சிரமப்படுகிறவர்களுக்கு இங்கே ஸகல கஷ்டமும் தீரும். ஹோமப் புகையால் சூழப்பட்டு மரவுரிகளால் அலங்கரிக்கப்பட்டு, பக்ஷிகளும் மிருகங்களும் சாந்தமாக நடமாடிக்கொண்டிருப்பதைப் பார். ராக்ஷஸர்கள் விரோதத்தைவிட்டு சாந்தமாக இருக்கிறார்கள். ஆகையால் இது அகஸ்திய திக்கென்று பெயர் பெற்றது. கொடியவர்கள் இதைக் கண்ணெடுத்துப் பார்க்கமாட்டார்கள்.



ஒரு ஸமயத்தில் விந்தியமலை ஸூரியனுடைய வழியைத் தடுக்க நினைத்து வளர்ந்துகொண்டே இருந்தது. ஆனால், அகஸ்தியருடைய கட்டளைக்குக் கட்டுப்பட்டு நின்றுவிட்டது. இவர் நீண்ட ஆயுளையுடையவர். மஹா கீர்த்திசாலி, ஸகலப் பிராணிகளாலும் பூஜிக்கப்பட்டவர். ஸாதுக்களுடைய நன்மையையே தேடுகிறவர். இவரிடத்தில் போனால் நமக்கு விசேஷ நன்மையைச் செய்வார். இவரைப் பூஜித்து, வனவாஸத்தில் மிகுந்திருக்கும் காலத்தை இங்கே கழிப்போம். இங்கே தேவதைகளும் கந்தர்வர்களும் ஸித்தர்களும் மஹரிஷிகளும் மஹா தபஸ்வியான அகஸ்தியரை எப்பொழுதும் உபாஸிக்கிறார்கள். பொய்யன் கொடியவன் ரகசியமாகப் பாபம் செய்கிறவன் கொலைகாரன் இரக்கமற்றவன் இஷ்டப்படி நடக்கிறவன் இங்கே வஸிக்கமுடியாது. தேவதைகளும் யக்ஷர்களும் நாகர்களும் கருடன் முதலியவர்களும் இங்கே விரதங்களை அனுஷ்டித்துக் கொண்டு தர்மத்தை ஸம்பாதிக்கிறார்கள். இங்கே அநேக மஹரிஷிகள் தவத்தில் ஸித்தியடைந்து தேகத்தை விட்டு ஸூரியனைப் போன்ற விமானங்களில் திவ்விய தேகங்களுடன் ஸ்வர்க்கமடைந்தார்கள். இங்கே தேவதைகள் ஸாதுக்களால் ஆதரிக்கப்பட்டு, யக்ஷபதவியையும் இந்த லோகத்தில் ராஜ்யங்களையும் கொடுக்கிறார்கள். ஆசிரமத்திற்கு வந்துவிட்டோம், லக்ஷ்மணா! மஹரிஷியின் தரிசனத்திற்கு நானும் ஸீதையும் காத்துக்கொண்டிருப்பதாகச் சீக்கிரம் தெரிவி'' என்று ஆக்ஞாபித்தார்.

ஆக$^{3}$தா: ஸ்மாஶ்ரம பத$^{3}$ம் ஸௌமித்ரே ப்ரவிஶாக்ர$^{3}$த: |
நிவேத$^{3}$யேஹ மாம் ப்ராப்தம் ரிஷயே ஸீதயா ஸஹ ‖ (95)

## ஸர்க்கம் 12

## அகஸ்தியர்

ஸ ப்ரவிஶ்யாஶ்ரம பத$^{3}$ம் லக்ஷ்மணோ ராக$^{4}$வாநுஜ: |
அகஸ்த்ய ஶிஷ்ய மாஸாத்$^{3}$ய வாக்யமேத து$^{3}$வாச ஹ ‖ (1)

பிறகு லக்ஷ்மணன் அகஸ்தியருடைய சிஷ்யனிடத்திற்குப் போய், "அயோத்யாதிபதியான தசரத சக்கரவர்த்தியின் புத்திரன் ராமசந்திர மூர்த்தியும் அவருடைய பத்தினியான ஸீதாதேவியும்

மஹரிஷியைத் தரிசிக்க வந்திருக்கிறார்கள். நான் அவருடைய தம்பி லக்ஷ்மணன். அவரிடத்தில் மிகுந்த பக்தியும் பிரியமும் வைத்தவன். இது உங்களுக்குத் தெரிந்திருக்கலாமே. பிதாவின் கட்டளையால் வனவாஸம் செய்கிறோம். எங்களுடைய வரவை மஹரிஷிக்குத் தெரிவிக்கவேண்டும்'' என்றார். "அப்படியே செய்கிறேன்'' என்று அந்தச் சிஷ்யன் அக்னிஹோத்திர சாலையில் போய் நமஸ்கரித்து, 'ஸ்வாமி! தசரத புத்திரர்களான ராமலக்ஷ்மணர்களும் ஸீதையும் தங்களை தரிசித்துப் பணிவிடை செய்ய வந்திருக்கிறார்கள். என்ன ஆக்ஞை'' என்றான். தன் குலதெய்வமான ராமனும் ஸீதாலக்ஷ்மணர்களும் தன்னைத் தேடி வந்திருப்பதைக் கேட்டு ஆனந்தபரவசராய் அகஸ்தியர் "வெகு காலமாக அவருடைய வரவை எதிர்பார்த்துக் கொண்டிருந்தேன். இன்று வந்தாரா? மெத்த ஸந்தோஷம். அவர்களை உபசரித்து இங்கே அழைத்துவா. இதுவரையில் ஏன் அழைத்துவரவில்லை?'' என்றார். "அப்படியே செய்கிறேன்'' என்று சிஷ்யன் வெளியில் வந்து, தாமதம் செய்ததற்காகப் பயந்து லக்ஷ்மணனைப் பார்த்து, "ராமனென்பவர் யார்? மஹரிஷியைத் தரிசிக்கலாம்'' என்றான். லக்ஷ்மணன் அவனை வாசற்படியில் அழைத்துப் போய் ராமனையும் ஸீதையையும் காட்டினார். அகஸ்தியர் சொன்ன வார்த்தையை ராமனிடத்தில் வெகு வணக்கத்துடன் அந்த சிஷ்யன், தெரிவித்து, ஸகல உபசாரத்துடன் அவர்களை அழைத்துப்போனான். போகும் வழியில் மான்கள் சாந்தமாக ஸஞ்சரித்துக்கொண்டிருப்பதையும், பிரஹ்மா அக்னி விஷ்ணு இந்திரன் ஸூரியன் சந்திரன் பகன் குபேரன் தாதா விதாதா வாயு அனந்தன் காயத்ரீ வஸுக்கள் வருணன் கார்த்திகேயன் தர்மன் முதலிய தேவதைகளுக்கு ஏற்பட்ட பூஜாகிருஹங்களையும் பார்த்தார். ('யோவை ஸப்ததசம்' என்ற மந்திரத்தின் பதினேழு அக்ஷரங்களுக்கு இவர்கள் அதி தேவதைகள்).

அதற்குள் அகஸ்தியர் சிஷ்யர்களுடன் எதிர்கொண்டு வருவதைப் பார்த்து, ராமன் "லக்ஷ்மணா! பார். ஜ்வலிக்கும் தேஜஸால் விளங்கும் ரிஷிகளுக்கு முன் அதோ வருகிற மஹாத்மாவே அகஸ்தியர்: எல்லையற்ற காந்தியாலும் மஹிமையாலும் அவரே என்று தெரியவில்லையா?'' என்று சொல்லி அந்த மஹா வீரனும் லக்ஷ்மணனும் ஸீதையும் அகஸ்தியருடைய பாதங்களைத் தொட்டு வணங்கிக் கை கூப்பி நின்றார்கள். அகஸ்தியர் அவர்களுக்கு விதிப்படி அதிதிபூஜை செய்து க்ஷேமம் விசாரித்து உட்காரச் சொன்னார். பிறகு வைசுவதேவம் செய்து அதிதிகளுக்கு அர்க்கிய பாத்தியங்களால் பூஜை செய்து, வானப்பிரஸ்தர்கள் புஜிக்கும் கந்த மூலபலங்களைக் கொடுத்தார். தான் ஸுகமாக உட்கார்ந்து அவர்களையும் உட்காரச் செய்து, "ராம! தபஸ்விகள் அக்னியில் ஹோமம்செய்து அதிதிகளைப் பூஜிக்கவேண்டும். இல்லாவிட்டால் இறந்தபின் நரகத்தில் விழுந்து,



அபி$^{4}$வாத்$^{3}$ய து த$^{4}$ர்மாத்மா தஸ்தௌ$^{2}$ ராம: க்ருதாஞ்ஜலி: |
ஸீதயா ஸஹ வைதே$^{3}$ஹ்யா ததா$^{2}$ ராம: ஸலக்ஷ்மண: || —ஆ. 12 ஸ - 25 சு.

அந்த மஹா வீரனும், லக்ஷ்மணனும், ஸீதையும் அகஸ்தியருடைய பாதங்களைத் தொட்டு வணங்கிக் கைகூப்பி நின்றார்கள். (பக்கம் 32 பார்க்க)

Notes : This Blank Page has also to be counted as a another page Number.

It is intentionally left blank after Picture Sketches.!

Released by Maran's Dog ,Toronto, Canada



போய் ஸாக்ஷி சொன்னவனைப்போல் தன் மாம்ஸத்தையே தின்கிறான். நீயோ ஸாதாரணமான அதிதியல்ல. ஸகல லோகத்திற்கும் அரசன். தர்மங்களை நடத்திக் காட்டுகிறவன்; மஹாரதன் (மஹா வீரன்); பூஜிக்கத் தகுந்தவன்; மரியாதை செய்யத் தகுந்தவன்; எனக்குப் பிரியமான அதிதி. ஆகையால் எவ்விதத்தாலும் நான் உன்னை உபசரிக்கவேண்டும். இதோ பார். முன் காலத்தில் இந்த உத்தமமான வில் விசுவகர்மாவால் மஹா விஷ்ணுவிற்காகச் செய்யப்பட்டது. இந்த அஸ்திரம் பிரம்மாவினால் தரப்பட்டது. எப்பொழுதும் குறையாத பாணங்கள் நிறைந்த இந்த இரண்டு அம்பறைகளும் இந்திரனால் கொடுக்கப்பட்டவை. அக்னிக் கொழுந்தைப்போல் ஜ்வலிக்கும் இந்தப் பாணங்களையும் தங்க உறையிலிருக்கும் இ ந் த க் கத்தியையும் பார். ரத்னங்களாலும் தங்கத்தாலும் விசித்திரமாக வேலைசெய்யப்பட்ட இந்தக் கத்தியையும் வில்லையும் பாணத்தையும் அம்பறைகளையும் பெற்றுக்கொள். பூர்வகாலத்தில் மஹாவிஷ்ணு இவைகளால் அஸுரர்களைக் கொன்று தேவதைகளுக்கு விசேஷ க்ஷேமத்தைச் செய்தார். இந்திரன் வஜ்ராயுதத்தால் விளங்குவதுபோல் இந்த ஆயுதங்களைப் பெற்று உன் சத்துருக்களை ஜயித்து லோகங்களுக்கு க்ஷேமத்தைச் செய்'' என்று மஹாதேஜஸ்வியான அகஸ்தியர் அவைகளை ராமனிடத்தில் ஒப்படைத்தார். (பரசுராமனுடைய வில்லை ராமன் வாங்கி வருணனிடத்தில் வைத்திருந்தார். அவன் இந்திரன் மூலமாக அதை அகஸ்தியரிடத்தில் கொடுத்தான். கரதூஷண ராக்ஷஸர்களின் வதத்திற்கு அது வேண்டியிருந்தது.)

*ஏவமுக்த்வா மஹாதேஜா: ஸமஸ்தம் தத்[3] வராயுத[4]ம் |*
*த[3]த்வா ராமாய ப[4]க[3]வா நக[3]ஸ்த்ய: புநரப்[3]ரவீத் ‖ (38)*

---

## ஸர்க்கம் 13
## பஞ்சவடி பிரயாணம்

---

*ராம ப்ரீதோஸ்மி ப[4]த்ரம் தே பரிதுஷ்டோஸ்மி லக்ஷ்மண |*
*அபி[4]வாத[3]யிதும் யந் மாம் ப்ராப்தௌ ஸ்த[2]: ஸஹஸீதயா ‖ (1)*

**பி**றகு அகஸ்தியர் ராமனைப் பார்த்து, "குழந்தாய்! நீயும் லக்ஷ்மணனும் ஸீதையும் என்னை தரிசித்து நமஸ்கரிப்பதற்காக இங்கே வந்ததைப்பற்றி மிகவும் ஸந்தோஷித்தேன். நடந்து வந்த களைப்பால் தேகத்தில் வியர்வை சொரிகிறது. செல்வமாக வளர்க்கப் பட்ட ஜனகபுத்திரி உங்களைக்காட்டிலும் மிகவும் களைத்து, இளைப்பாற விரும்புகிறாளென்று நன்றாகத் தெரிகிறது. இவள், துக்கத்தை அனுபவித்து வழக்கப்படாதவள். மிகுந்த கஷ்டங்கள் நேரும் இந்த வனத்தில் ஸஞ்சரித்தாலும் பர்த்தாவினிடத்திலுள்ள பிரியத்தால் அவைகளை லக்ஷ்யம் செய்யவில்லை. இவள் உன்னுடன் வனத்திற்கு

வந்தது வெகு துணிவான காரியம். இவள் அதிக கஷ்டத்தை அனுபவிக்காமல் ஸுகமாகக் காலம் கழிக்கும்படி செய்வது உன் கடமை. பர்த்தா ஸௌக்யமாக இருக்கும் பொழுது அவனை ஸந்தோஷப் படுத்துவதும் கஷ்டப்படும்பொழுது அவனைக் கைவிடுவதும் ஸ்த்ரீகளுடைய ஸ்வபாவம். அவர்களுடைய தன்மை மின்னலைப்போல் அடிக்கடி மாறும். அவர்களுடைய மனம் ஆயுதங்களைப்போல் கொடியது. நெடுநாளாகச் செய்த ஸ்நேஹத்தையும் ஒரு நிமிஷத்தில் மறப்பார்கள். விசாரிக்காமல் காரியங்களைச் செய்வதில் இவர்களுக்குள்ள வேகம் வாயுவிற்கும் கருடனுக்கும் கிடையாது. ஆனால் இந்தத் தோஷங்கள் ஒன்றும் ஸீதையிடத்தில் இல்லை; மேலும் ஸாதுக்களால் கொண்டாடத் தகுந்தவள். அருந்ததியைப்போல் பதிவிரதைகளுக்குள் முதன்மை வாய்ந்தவள். நீங்கள் மூவரும் வஸிக்கப்பெற்ற இந்த ஆசிரமம் மிகவும் விளங்குகிறது'' என்றார்,

ராகவன் கைகூப்பி வணக்கமாக, "ஸ்வாமி! தங்களுடைய அனுக்கிரஹம் பெற்றேன். நானே தன்யன். அண்டினவர்களின் இஷ்டங்களைப் பூர்த்திசெய்யும் தாங்கள் எங்களுடைய குணங்களால் திருப்தியடைவது நாங்கள் செய்த பாக்கியமல்லவா? ஆயினும் ஏகாந்தமாகவும் ஸுகமாகவும் வஸிக்கத்தகுந்த ஓரிடத்தை எங்களுக்குக் காட்டவேண்டும். அது மரங்கள் அடர்ந்ததாகவும் ஜல ஸௌக்கியமுள்ளதாகவும் இருக்கவேண்டும்'' என்று பிரார்த்தித்தார். பிறகு நடக்கவேண்டிய காரியங்களை உத்தேசித்து மஹரிஷி அதற்குத் தகுந்த ஓர் இடத்தை ஆலோசித்து நிச்சயித்து, "ராம! இங்கிருந்து இரண்டு யோஜனை தூரத்தில் பஞ்சவடி என்று ஒரு ஸ்தலமுண்டு. அங்கே பழங்களும் கிழங்குகளும் வேண்டியவரையில் கிடைக்கும். பல மிருகங்கள் பயமில்லாமல் ஸஞ்சரிக்கும். அங்கே ஆசிரமத்தை ஏற்படுத்திக்கொண்டு நீங்கள் ஸுகமாக வஸிக்கலாம். தசரதரிடத்தில் நீங்கள் பிரதிக்ஞைசெய்த வனவாஸ காலத்தில் பெரும்பாகம் சென்றுவிட்டது. பிரதிக்ஞை முடிந்து அயோத்யைக்குப் போய் ஸுகமாக இருப்பாய். யயாதிசக்கரவர்த்தி தன் மூத்த புத்திரனால் கரையேறினதுபோல் உன்னைப் பெற்ற தசரதரும் உன்னால் கரையேறித் தன்யரானார். இதுவரையில் நடந்த யாவற்றையும் என் தபோமஹிமையாலும் தசரதரிடத்தில் எனக்குள்ள ஸ்நேஹத்தாலும் அறிந்தேன். என்னுடன் இங்கே வஸிக்கும்படி உங்களை நான் கேட்டேன். ஏகாந்தமாக நாங்கள் வஸிக்கத்தகுந்த ஓரிடத்தைக் காட்டவேண்டுமென்று பதில் சொன்னாய். அதனால் உன் கருத்தை ஆலோசித்துத் தெரிந்துகொண்டேன். (கர தூஷண வதத்தை இங்கே குறிப்பிடுகிறார்.) நீ பஞ்சவடிக்குப் போகலாம். அது அழகான இடம். கோதாவரிக்கு மிகவும் ஸமீபம்; இவ்விடத்திற்கும் மிகவும் ஸமீபம்; விசித்திரமான மிருகங்களாலும் பக்ஷிகளாலும் நிறைந்து, பலவித பொருள்களும் வேண்டியவரையில் கிடைக்கக் கூடியதாக எவ்விதத்திலும் மேலானது. ஸீதை அங்கே ஸந்தோஷமாக வஸிப்பாள். நீயும் உன் பாரியையும் அங்கே ஏகாந்தமாக இருக்கலாம். அங்கிருக்கும் தபஸ்விகளை ஆபத்துகளிலிருந்து காப்பாற்றுவாய். அதோ அந்தப் பெரிய இலுப்பைத் தோப்பைப் பார். அதற்கு வலதுபுரமாகப் போகும் வழியாகச் சென்றால் ஒரு ஆலமரமும், அங்கிருந்து ஒரு பெரிய மேட்டின் மேல் ஏறிப்போனால் ஒரு மலையும் தோன்றும். பஞ்சவடி அதற்கு ஸமீபத்திலிருக்கிறது. எப்பொழுதும் புஷ்பங்களால் நிறைந்த வனத்தையே அதற்கடையாளமாகக் கொள்ளலாம்'' என்றார். பிறகு அவர்கள் அந்த மஹரிஷியைப் பூஜித்து பிரதக்ஷிண நமஸ்காரம் செய்து உத்தரவு பெற்றுக்கொண்டு, முதுகில் அம்பறைகளும் கையில் வில்லுமாக அந்த மஹாவீரர்களான ராஜபுத்திரர்கள் ஸீதையுடன் அகஸ்தியர் சொன்ன வழியாக பஞ்சவடிக்குப் போனார்கள்.

க்[3]ருஹீதசாபௌ து நராதி[4]பாத்மஜௌ
விஷக்த தூணௌ ஸமரேஷ்வகாதரௌ |
யதோ[3]பதி[3]ஷ்டேந பதா[2] மஹர்ஷிணா
ப்ரஜக்[3]மது: பஞ்சவடீம் ஸமாஹிதௌ ‖ (28)

## ஸர்க்கம் 14

## ஜடாயு வம்சம்

அத[2] பஞ்சவடீம் க[3]ச்ச[3]ந்நந்தரா ரகு[4]நந்த[3]ந: |
ஆஸஸாத[3] மஹாகாயம் க்[3]ருத்[4]ரம் பீ[4]மபராக்ரமம் ‖ (1)

பருத்த சரீரத்துடன் பார்க்கப் பயங்கரமாக ஒரு கழுகு, போகும் வழியில் ஆலமரத்தில் உட்கார்ந்திருப்பதைப் பார்த்து, ராக்ஷஸன் என்றெண்ணி ராம லக்ஷ்மணர்கள், "நீயார்?" என்றார்கள். அது மிகுந்த பிரியத்துடன் மதுரமாக, "குழந்தாய்! நான் உங்கள் பிதாவிற்கு மித்திரன்" என்றது. ராமன் அதை வணங்கி மரியாதை செய்து அதன் குலத்தையும் பெயரையும் கேட்டார். அந்தப் பக்ஷி ஸகல பூதங்களின் உத்பத்தியையும் தன் குலக்கிரமத்தையும் சொல்ல ஆரம்பித்தது. "முன்காலத்தில் கர்த்தமர் விச்ருதர் சேஷர் ஸம்ச்ரயர் ஸ்தாணு மரீசி அத்ரி க்ரது புலஸ்த்யர் அங்கிரஸ் ப்ரசேதஸ் புலஹர் தக்ஷர் விவஸ்வான் காச்யபரென்ற பிரஜாபதிகள் இருந்தார்கள். தக்ஷருக்கு அறுபது பெண்கள். அவர்களில் அதிதி திதி தனு காளிகை தாம்ரை குரோதவசை மனு அனிலை என்ற எட்டுப் பெண்களைக் காசியபர் மணம் புரிந்து, 'மூன்று லோகங்களுக்கும் பாலகர்களான புத்திரர்களைப் பெறுங்கள்' என்று உத்தரவு செய்தார். அவர்களில் அதிதி திதி மனு காளிகை அதற்கு ஸம்மதித்தார்கள். மற்றவர்கள் ஸம்மதிக்கவில்லை. பன்னிரண்டு ஆதித்தியர்களும் எட்டு வஸுக்களும் பதினொரு ருத்திரர்களும் இரண்டு அசுவினி தேவர்களும் அதிதிக்குப் பிறந்தார்கள். திதிக்குத் தைத்

தியர்கள் பிறந்தார்கள். அந்தக் கீர்த்திசாலிகள் ஆதிகாலத்தில் இந்தப் பூமியை ஆண்டார்கள். தனுவிற்கு அசுவ க்ரீவனென்ற தானவன் பிறந்தான். நரகனும் காலகனும் காளிகைக்குப் பிறந்தார்கள். கிரௌஞ்சீ, பாஸி, ச்யேனீ, திருதராஷ்ட்ரீ, சுகி என்ற ஐந்து பெண்கள் தாம்ரைக்குப் பிறந்தார்கள். கிரௌஞ்சியிடத்தில் கோட்டான்களும், பாஸியிடத்தில் கோழிகளும், சியேனியிடத்தில் கழுகுகளும், பருந்துகளும், திருதராஷ்ட்ரியிடத்தில் ஹம்ஸங்களும் கலஹம்ஸங்களும், சக்கர வாகங்களும், சுகியிடத்தில் நதையும் அலனுக்கு விநதையும் பிறந்தார்கள். மிருகி மிருகமந்தா ஹரி பத்ரமாதா மாதங்கி சார்தூலீ சுவேதா ஸுரபி ஸுரஸா கத்ருகா என்ற பெண்கள் குரோதவசைக்குப் பிறந்தார்கள். மிருகியிடத்தில் மான்களும், மிருகமந்தையிடத்தில் கரடிகளும், கவரிமான்களும், சாமர மிருகங்களும், ஹரியிடத்தில் ஸிம்ஹங்களும் வானரங்களும், பத்ரையிடத்தில் இராவதியும் பிறந்தார்கள். அவளுடைய புத்திரன் லோகபிரஸித்தனை ஐராவதமென்னும் மஹாகஜம். மாதங்கியிடத்தில் யானைகளும், சார்தூலியிடத்தில் புலிகளும் நீண்ட வாலுள்ள குரங்குகளும், சுவேதையிடத்தில் திக்கஜங்களும், ஸுரபியிடத்தில் ரோஹிணியும் கந்தர்வியும், ரோஹிணியிடத்தில் பசுக்களும், கந்தர்வியிடத்தில் குதிரைகளும், ஸுரஸையிடத்தில் அநேக படங்களுள்ள ஸர்ப்பங்களும், கத்ருவிடத்தில் ஸாதாரண ஸர்ப்பங்களும், மனுவிடத்தில் பிராம்மண க்ஷத்திரிய வைசிய சூத்திரர்களான மனுஷ்யர்களும் அனலையிடத்தில் ருசியுள்ள பழங்களையுடைய மரங்களும், கத்ருவிடத்தில் ஆயிரம் தலைகளுடன் பூமியைத் தரிக்கும் ஆதிசேஷனும், வினதையிடத்தில் கருடனும் அருணனும் பிறந்தார்கள். அருணனுக்கு சியேனியிடத்தில் ஸம்பாதியும் ஜடாயுவென்ற நானும் பிறந்தோம். (மேற்சொன்ன சியேனி இவளல்ல). இந்த வனத்தில் துஷ்டமிருகங்களும் ராக்ஷஸர்களும் அதிகம். ஆகையால் நீங்கள் வேட்டையாடப் போனால் நான் ஸீதைக்குத் துணையாக இருப்பேன்'' என்றது ஜடாயு.

அதைக் கேட்டு ராமன் ஜடாயுவை வெகு பிரியத்துடன் ஆலிங்கனம் செய்து, தங்கள் பிதாவின் மித்திரனைதால் அதற்கு விசேஷ மரியாதை செய்தார். பிறகு அந்த பலவானை பக்ஷியிடத்தில் ஸீதையைப் பாதுகாக்க வேண்டிக்கொண்டு விளக்கு வெட்டுப் பூச்சிகளை நெருப்பு எரிப்பதுபோல், ராமலக்ஷ்மணர்கள் சத்ருக்களை நாசம் செய்ய விரும்பிப் பஞ்சவடியை நோக்கிப் போனார்கள்.

ஸ தத்ர ஸீதாம் பரிதா³ய மைதி²லீம்
ஸஹைவ தேநாதிப³லேந பக்ஷிணா |
ஜகா³ம தாம் பஞ்சவடீம் ஸலக்ஷ்மணோ
ரிபூந் தி³த⁴க்ஷந் ஶலபா⁴நிவாநல: ‖ (35)



ஜடாயுஷம் து ப்ரதிபூஜ்ய ராக⁴வோ முத³ா பரிஷ்வஜ்ய ச ஸந்நதோ ப⁴வத் |
பிதுர்ஹி ஶுஶ்ராவ ஸகி²த்வ மாத்மவாந் ஜடாயுஷா ஸங்கதி²தம் புந: புந: ‖ —ஆ. 14 ஸ - 36 சு.
அதைக் கேட்டு ராமன் ஜடாயுவை வெகு பிரியத்துடன் ஆலிங்கனம் செய்து, தங்கள் பிதாவின் மித்திரனைதால் அதற்கு விசேஷ மரியாதை செய்தார். (பக்கம் 38 பார்க்க)

Notes : This Blank Page has also to be counted as a another page Number.

It is intentionally left blank after Picture Sketches.!

Released by Maran's Dog ,Toronto, Canada



## ஸர்க்கம் 15

# பர்ணசாலை கட்டினது

தத: பஞ்சவடீம் க$^3$த்வா நாநாவ்யாள ம்ருக$^3$ாயுதாம் |
உவாச ப்$^4$ராதரம் ராம: ஸௌமித்ரிம் தீ$^3$ப்த தேஜஸம் || (1)

பஞ்சவடிக்கு வந்த பிறகு, ராமன் தனக்குக் கைங்கரியம் செய்யவே ஸுமித்திரையால் கொடுக்கப்பட்டு, அதற்குத் தகுந்த பக்தியும் சக்தியும் நிறைந்து, அதற்கேற்ற காலமும் தேசமும் நேர்ந்ததைப்பற்றி ஸந்தோஷித்த மஹாவீரனை லக்ஷ்மணனைப் பார்த்து, "மஹரிஷி குறிப்பிட்ட தேசம் இதுவே. புஷ்பங்கள் நிறைந்த மரங்கள் எங்குமுள்ள பஞ்சவடி இதுவே. வனங்களில் அதிகமாக ஸஞ்சரித்தவனானதால் எந்த இடத்தில் ஆசிரமத்தை ஏற்படுத்தலாமென்று நான்கு புறங்களிலும் பார். ஸீதைக்குப் புஷ்பங்களிடத்தில் மிகுந்த பிரீதி; ஆகையால் அவ்விதமான மரங்கள் நிறைந்திருக்க வேண்டும். ஸுகமாகப் படுக்கக்கூடிய இடம் எனக்கு வேண்டும். ஆகையால் மேடுபள்ளமில்லாமலும் மிருதுவான மணல் பாய்ந்ததுமான ஸ்தலமாக இருக்கவேண்டும். ஸமித்து புஷ்பங்கள் தர்ப்பம் ஜலம் முதலியவை ஸமீபத்திலிருக்க வேண்டும். எல்லா சுச்ரூஷையையும் நீயல்லவா செய்யவேண்டும்? ஆகையால், நம்மெல்லோருக்கும் அனுகூலமான ஓரிடத்தைப் பார்" என்றார்.

இப்படித் தன் ஸௌக்கியத்தையும் ஆலோசித்துச் சொன்ன வார்த்தையைப் பொறுக்காமல், லக்ஷ்மணன் ஸீதையைப் புருஷகாரமாகக் (சிபார்சாகக்) கொண்டு "ஸ்வாமி! தாங்கள் பிரபு. நானோ தங்களுடைய தாஸன். தங்களுடைய ஸ்வரூபம் வேறு. அடிமையாக வேலைசெய்வதே என் ஸ்வரூபம்.இது தாங்கள் வைகுண்டத்தில் எழுந்தருளியிருக்கும்போது மாத்திரமல்ல ;அவதாரகாலத்திலும் எப்பொழுதும் உண்டு. தங்களுக்கும் ஸீதைக்கும் ஸுகமான இடத்தைப் பாரென்று தாங்கள் கட்டளையிடுவது எனக்கு அழகே தவிர, என் ஸௌக்கியத்தையும் ஆலோசிப்பது தகாது. ஆகையால் தாங்களே தங்களுக்கு அனுகூலமான இடத்தைத் தேடி எனக்கு உத்தரவு செய்யவேண்டும்" என்று பிரார்த்தித்தார். ராமன் அதைக் கேட்டு மிகுந்த ஸந்தோஷமடைந்து நன்றாக யோசித்து ஓரிடத்தைக் குறிப்பிட்டு, மிகுந்த பிரீதியால் லக்ஷ்மணனுடைய கையைப் பிடித்துக்கொண்டு, "குழந்தாய்! இவ்விடம் மேடுபள்ளமில்லாமல், பார்ப்பதற்கு அழகாகப் புஷ்பமுள்ள மரங்களால் நிறைந்திருக்கிறது. ஆசிரமத்தை இங்கே ஏற்படுத்து. நல்ல வாஸனையுள்ள மலர்ந்த தாமரைகள் விளங்கும் ஓடைகள் ஸமீபத்திலிருக்கின்றன. மஹாஞானியான அகஸ்தியர் சொன்னபடி கோதாவரியின் ஸமீபத்திலிருக்கிறது. கரைகளில் புஷ்பவிருக்ஷங்

கள் நிறைந்திருக்கின்றன. ஹம்ஸம் நீர்க்கோழி சக்ரவாகம் முதலிய பக்ஷிகளால் அலங்கரிக்கப்பட்டிருக்கிறது. மலைகள் அதிக தூரத்திலும் அதிக ஸமீபத்திலுமில்லை; மான்கள் கூட்டம் கூட்டமாக நடமாடுகின்றன. மயில்கள் இனிமையாகக் கூவுகின்றன. பக்கங்களில் அழகிய குகைகளிருக்கின்றன. புஷ்ப விருக்ஷங்களால் மறைந்திருக்கின்றன. அங்கங்கே வெள்ளி தங்கம் தாமிரம் முதலிய தாதுக்களால் நிறைந்து ஜன்னல்களைப்போன்ற பலவர்ணங்களால் அலங்கரிக்கப்பட்ட யானைகளை ஒத்திருக்கின்றன. ஆச்சா பனை பச்சிலை பேரீச்சை பலா மா நீர்க்கடம்பு தினிசி புன்னாகம் தேன்மா அசோகம் மஞ்சாடி சம்பகம் தாழை சந்தனம் ஸ்பந்தம் நிலைக்கடம்பு கறுப்புக்கஞ்சாங்கோரை எலுமிச்சை தவம் கருங்காலி பலாசு பாதிரி வன்னி முதலிய மரங்கள் செழித்து வளர்கின்றன. இது புண்ணியஸ்தலம். இது பரிசுத்தமான இடம். மிருகங்களாலும் பக்ஷிகளாலும் நிறைந்திருக்கிறது. இங்கே ஜடாயுவுடன் ஸௌக்கியமாக வஸிப்போம்'' என்றார்.

பிறகு லக்ஷ்மணன் அதிவிரைவாக ஒரு விஸ்தாரமான ஆசிரமத்தைக் கட்டினார். மண்ணால் சுவர் வைத்து மூங்கில்களால் தூண்களை நாட்டி மேலே விட்டங்களைப் போட்டு, வன்னிமரக் கிளைகளை அவைகளின்மேல் அடர்த்தியாகப் பரப்பி, மரவுரிகளால் செய்த கயிறுகளைப் போட்டு இறுக்கிக் கட்டினார். அதற்குமேல் நாணல் தர்ப்பை கோரை இலைகள் முதலியவைகளைப் பரப்பி, தரையை மேடு பள்ளமில்லாமல் ஒழுங்குபடுத்தினார். பிறகு, கோதாவரியில் நீராடிப் புஷ்பங்களையும் பழங்களையும் கொண்டு வந்து வாஸ்துபூஜை முதலிய கிருஹசாந்திகளை விதிப்படி செய்து ராமனை அழைத்து வந்து காட்டினார். அவரும் ஸீதையும் அதைப் பார்த்து மிகுந்த ஸந்தோஷமடைந்தார்கள். ராமன், "குழந்தாய்! இந்தப் பர்ணசாலை வெகு அழகாகவும் ஆச்சரியப்படக்கூடியதாகவும் கட்டப்பட்டிருக்கிறது. உன்னிடத்தில் எனக்குள்ள ஸந்தோஷத்திற்கு எல்லையில்லை. அதற்குத் தகுந்தபடி வெகுமதி செய்ய இப்பொழுது ஸௌகரியமில்லை. ஆகையால் அதற்குப் பதிலாக உன்னை மிக்க பிரேமையுடன் அணைத்துக்கொள்ளுகிறேன். ஸீதையுடன் தனியாக இருக்க ஓர் இடம் வேண்டுமென்று நான் நினைத்தேனே ஒழிய உன்னிடத்தில் சொல்லவில்லை. என் அபிப்பிராயத்தை எப்படியோ அறிந்து என்னிஷ்டப்படி செய்தாய். தசரதருக்கு வெகுகாலம் வரையில் புத்திரனில்லாமல் பிறகு நாம் பிறந்தோம். ஆகையால் நாம் க்ஷேமமாக வஸிக்கவேண்டுமென்று சந்திரபலம் நக்ஷத்திரபலம் முதலியவைகளை யோசித்து தசரதர் நமக்கு வீடு அமைத்ததுபோல், இந்த ஆசிரமத்தைக்கட்டினாய். நீ ராஜகுமாரனாயிருந்தும் உன் ஸௌகரியத்தைக் கொஞ்சம்கூட யோசிக்காமல் என் ஸௌகரியத்தையே கவனித்து இந்தப் பர்ணசாலையைக் கட்டினாய். என் ஸந்தோஷத்தையே உனக்கு மேலான



பிரயோஜனமாகக் கொண்டாய். புத்தென்ற நரகத்திலிருந்து பிதாவைக் கரையேற்றுகிறவனே புத்திரன். என் இஷ்டத்தைப் பூர்த்தி செய்யாமலிருப்பதே நமது பிதாவிற்கு நரகத்தைப் போன்றது. நீ என் இஷ்டப்படி நடப்பதால் அந்த நரகத்திலிருந்து அவரைக் கரையேற்றினாய். தான் உள்ளவரையிலும் அவர் என் இஷ்டங்களைப் பூர்த்திசெய்தார். தான் இறக்கும்போது அதே காரியத்தில் உன்னை நியமித்திருக்கிறார். ஆகையால் என் பிதா மரணமடையவில்லை. நீயே எனக்குப் பிதா. உன் ரூபமாக என் ஸகல மனோரதங்களையும் அவர் பூர்த்தி செய்து கொண்டிருக்கிறார்'' என்று சொன்னார். அவ்விடத்தில் அவர்கள் சிலகாலம் ஸுகமாக வஸித்துக்கொண்டிருந்தார்கள். ஸீதையாலும் லக்ஷ்மணனாலும் ஸகல பணிவிடைகளையும் செய்யப் பெற்று ராகவன், தேவலோகத்தில் இந்திரன் விளங்குவதுபோல் அங்கே காலம் கழித்தார்.

கஞ்சித் காலம் ஸ த⁴ர்மாத்மா ஸீதயா லக்ஷ்மணேந ச |
அந்வாஸ்யமானோ ந்யவஸத் ஸ்வர்க³லோகே யதா²மர: ‖ (31)

---

## ஸர்க்கம் 16

## ஹேமந்த ருது

வஸதஸ் தஸ்ய து ஸுக²ம் ராக⁴வஸ்ய மஹாத்மந: |
ஶரத்³வ்யபாயே ஹேமந்த ரிதுரிஷ்ட: ப்ரவர்ததே ‖ (1)

அவர்கள் அங்கே தங்கியிருக்கையில் சரத் ருது கழிந்து ஹேமந்த ருது ஆரம்பித்தது. அது தபஸ்விகளுக்கு வெகு அனுகூலமான காலம். கரதூஷணர்களுடைய வதத்திற்கு மூலமான சூர்ப்பணகையின் வரவிற்குக் காரணமானதால் ராமனுடைய உத்தேசத்திற்கும் அனுகூலமான காலம்.

ஒருநாள் காலையில் அவர்கள் மூவரும் கோதாவரியில் நீராடப் போனார்கள். அப்பொழுது லக்ஷ்மணன், 'அண்ணா! தங்களுக்குப் பிரியமான ஹேமந்த ருது ஆரம்பித்துவிட்டது. இதனால் ஸம்வத்ஸரம் சுபமாகவும் அலங்காரத்தோடும் விளங்குகிறது. இந்தக் காலத்தில் ஜனங்களுடைய தேகம் பனியால் மிருதுவாக இராது. பூமியில் பயிர்கள் செழித்து வளர்கின்றன. ஜலத்தைத் தொடமுடியாது. நெருப்பு மிகவும் பிரியமாக இருக்கும். கிருஹஸ்தர்கள் ஒவ்வொரு வருஷத்திலும் புதிய தான்யத்தை வீட்டில் கொண்டுவந்தவுடன் ஆக்ரயணமென்ற பாகயக்ஞத்தைச்செய்து பிதிருதேவதைகளை மகிழ்வித்துப் பாபங்களிலிருந்து விடுபடுகிறார்கள். வெளிதேசங்களில் வஸிப்பவர்களுக்கு ஆசை அதிகமாக வளரும். பால் தயிர் முதலியவை வேண்டியவரையில் கிடைக்கும். அரசர்கள் சத்துருக்களை

ஜயிக்கப் படையெடுத்துச் செல்வார்கள். ஸூரியன் தென்திசையில் அதிகமாக இருப்பதால் வடதிசை, நெற்றியில் திலகமில்லாத பெண்ணைப்போல் பிரகாசிக்கவில்லை. இயற்கையாகவே பனிக்கட்டிகளால் நிறைந்த ஹிமயமலை இப்பொழுது பனியால் அதிகமாக மூடப்பட்டு, ஹிமாலயம் (பனிக்கு இருப்பிடம்) என்ற பெயரை உண்மையாகப் பெற்றிருக்கிறது. ஸூரியன் நடுப்பகலில் ஸுகமான உஷ்ணத்தைக் கொடுக்கிறான். இந்தக் காலத்தில் அவனை ஸுலபமாகப் பார்க்கலாம். நிழலும் ஜலமும் வெறுப்பை உண்டாக்குகின்றன. ஸூரியன் கடுமையாக எரிக்கிறதில்லை. குளிர் வெகு அதிகம். மரங்களில் இலைகள் இல்லாததால் வனத்தில் நடமாடும் பிராணிகள் குளிரால் வருந்தி வெளியில் போகமுடியாமல் மறைந்திருக்கின்றன. ஜனங்கள் குளிருக்குப் பயந்து தேகத்தை முடக்கிக் கொண்டிருக்கிறார்கள். ராத்திரிகளில் ஜனங்கள் திறந்த இடங்களில் படுக்கமாட்டார்கள். புஷ்ய மாதம் நெருங்கிவிட்டது. பனி விழுந்து எங்கும் மங்கலாகத் தோன்றுகிறது. ராத்திரிகளில் குளிர்காற்று அதிகம். பகல் கொஞ்சம், ராத்திரிகாலம் அதிகம். சந்திரன் தன் அழகையும் அதிகாரத்தையும் ஸூரியனுக்குக் கொடுத்துவிட்டுப் பனியால் மறைக்கப்பட்டு, மூச்சுக்காற்றால் மங்கின கண்ணாடியைப் போல பிரகாசிக்கவில்லை. பௌர்ணிமா தினத்தில் பனியால் ராத்திரி பிரகாசம் குறைந்து, வெயிலால் கறுத்து வாடிய ஸீதையைப்போல் தோன்றுகிறது. ஆனால், ஸீதையின் காந்தி அதற்கில்லை. மேற்குக் காற்று ஸ்வபாவமாகவே குளிர்ச்சியுள்ளது. இப்பொழுது பனியும் சேர்ந்து அது அதிகமாயிற்று. காடுகளில் யவை கோதுமை முதலிய தான்யக் கதிர்கள் ஸூரியோதய காலத்தில் நீர்த்துளிகளால் நிறைந்து, கிரௌஞ்சம் வண்டாழ்வான்குருவி முதலிய பக்ஷிகள் அவைகளின் நடுவிலிருந்து கூவும்பொழுது, வனங்கள் கண்ணீர் விட்டுக் கதறுவதுபோல் தோன்றுகின்றன. தங்க நிறமுள்ள சம்பாப் பயிர்கள் கதிர் முதிர்ந்து தலைவணங்கிப் பேரீச்சம் புஷ்பங்களைப் போன்ற நுனிகளுடன் விளங்குகின்றன. ஸூரியன் ஆகாசத்தில் வெகுதூரம் போனாலும் பனியால் மறைக்கப்பட்ட கிரணங்களுடன் சந்திரனைப்போல் தோன்றுகிறான். முற்பகலில் ஸூரியனுடைய உஷ்ணம் கொஞ்சம் தெரிகிறது; நடுப்பகலில் ஸுகமாக இருக்கிறது; சிவப்பு நிறமுள்ள வெயிலும் கொஞ்சம் வெளுத்துப் பூமியில் அடிக்கிறது. எப்பொழுதும் பனி விழுவதால் இளம்புற்கள் நனைந்து, காட்டுத்தரைகள் இளம்வெயிலில் பிரகாசிக்கின்றன. காட்டுயானைகள் மிகவும் தாகமெடுத்து ஜலம் குடிக்கத் துதிக்கையை நீட்டி, மிகுந்த குளிர்ச்சியாயிருப்பதால் துதிக்கையை மடக்கிக்கொள்கிறது. யுத்தப்பயிற்சி இல்லாதவர்கள் சண்டையில் போக அஞ்சுவதைப் போல், நீர்ப்பறவைகள் ஜலத்தில் இறங்காமல் உட்கார்ந்திருக்கின்றன. காட்டுவழிகள் பனியால் மறைக்கப்பட்டு புஷ்பங்களின்றித் தூங்குவதுபோல் காணப்படுகின்றன. ஆறுகளிலும்



ஜலம் பனியால் மூடப்பட்டிருக்கிறது. வண்டாழ்வான் குருவிகளிருக்குமிடத்தை அவைகளின் குரலாலேயே கண்டுபிடிக்க வேண்டியிருக்கிறது. கரையிலுள்ள மணல் பனியால் நனைந்திருக்கிறது. மலையின் உச்சியிலுள்ள ஜலமும் பனி விழுவதாலும் ஸூரிய கிரணம் மந்தமாக இருப்பதாலும் ருசியாக இருக்கிறது. தாமரைகள் பனியால் கருகி இதழ்கள் உதிர்ந்து தண்டுகள் மாத்திரம் மிகுந்திருக்கும் தாமரை ஓடைகள் விளங்கவில்லை.

இந்தக் காலத்தில் புருஷோத்தமனான பரதன் தங்களிடத்திலுள்ள பக்தியால் தர்மத்தை நாடி நந்திக்கிராமத்தில் அதிக துக்கத்துடன் தவம் செய்கிறார். ராஜ்யத்தையும் போகங்களையும் அதிகாரத்தையும் விட்டு ஆகாரநியமத்துடன் வெறும் தரையில் படுத்திருக்கிறார். இந்த வேளையில் அவர் ராஜ்ய உத்யோகஸ்தர்களால் சூழப்பட்டு ஸரயூநதியில் நீராடப்போவார். வெகு ஸுகமாக வளர்க்கப்பட்டவர்; ஸுகத்தையே அனுபவிக்கத் தகுந்தவர். மிருதுவான சரீரத்தையுடையவர்; விடியுமுன் அந்தக் குளிர்ந்த ஜலத்தில் எப்படி ஸ்நானம் செய்வார்? தர்மங்களை அறிந்தவர்; ஸத்தியவான்; இந்திரியங்களை ஜயித்தவர்; கெட்ட காரியங்களைச் செய்யாமல் வெட்கத்தால் தடுக்கப்படுகிறவர்; மஹாவீரன்; தாமரை இதழ்களைப் போன்ற நேத்திரங்களுடையவர்; நீலமேகவர்ணர்; படிந்த வயிற்றையுடையவர்; முழங்கால் வரையில் நீண்ட கைகளை உடையவர்; எல்லோரிடத்திலும் பிரியமாகப் பேசுகிறவர்; மஹா பாக்கியசாலி. இப்படியிருந்தும் பலவிதமான போகங்களை விட்டு எல்லோரும் பூஜிக்கத்தகுந்த தங்களையே எவ்விதத்திலும் அண்டியிருக்கிறார். தாங்கள் வனத்திலிருந்தாலும் தாங்கள் அனுஷ்டிக்கும் தபஸ்வி தர்மத்தையே அந்த மஹாத்மா அனுஷ்டிக்கிறார். ஆகையால் அவருக்கும் உத்தம லோகங்கள் நிச்சயமாகக் கிடைக்கும். 'மனிதர்கள் தங்களுடைய தகப்பனைப்போலிருப்பதில்லை; தாயின் ஸ்வபாவத்தையே அடைகிறார்கள்' என்ற லோகவசனம் அவரால் பொய்யாக்கப்பட்டது. தசரதரைக் கணவனாகவும் ஸாதுவான பரதனைப் பிள்ளையாகவுமுடைய கைகேயிக்கு இந்த குரூரஸ்வபாவம் எங்கிருந்து வந்தது?'' என்று மிகவும் தர்மவானான லக்ஷ்மணன் பரதனிடத்திலுள்ள ஸ்நேகத்தால் கைகேயியை நிந்தித்தார்.

ராமன் அதைப் பொறுக்காமல், "உன் தாயான கைகேயியை ஒருநாளும் நிந்திக்கக்கூடாது. புருஷசிரேஷ்டனான பரதனுடைய குணங்களைப்பற்றியே சொல். வனவாஸம் செய்வதில் என் மனம் உறுதியாக இருந்தாலும், பரதனிடத்திலுள்ள ஸ்நேகத்தால் அவனை இப்பொழுதே பார்க்கவேண்டுமென்று ஆசையுண்டாகிறது. பிரியமாகவும் மதுரமாகவும் ஹிதமாகவும் அமிருதத்தைப்போலவும் மனத்திற்கு ஆனந்தத்தைக் கொடுப்பதாகவுமிருக்கும் பரதனுடைய

வார்த்தைகள் எனக்கு அடிக்கடி ஞாபகத்திற்கு வருகின்றன. நானும் நீயும் பரதனும் சத்துருக்னனும் சேர்ந்து எப்பொழுது ஸுகப்படுவோமோ?" என்று பிரலாபித்துக்கொண்டு, அவர்கள் நதியில் நீராடிப் பிதிருக்களுக்கும் தேவதைகளுக்கும் ஜலதர்ப்பணம் செய்து, ஸூரியனையும் தேவதைகளையும் ஸ்தோத்திரம் செய்தார்கள். ராமன் ஸ்நானம் செய்து ஸீதையுடனும் லக்ஷ்மணனுடனும் திரும்பி வரும்பொழுது, ருத்திரன் ஸ்நானம்செய்து பார்வதியோடும் நந்தியோடும் இருப்பதுபோல் விளங்கினர்.

க்ருதாபி⁴ஷேக: ஸ ரராஜ ராம:
ஸீதாத்³விதீய: ஸஹலக்ஷ்மணேந |
க்ருதாபி⁴ஷேகோ கி³ரி ராஜபுத்ர்யா
ருத்³ர: ஸநந்தீ³ ப⁴க³வாநிவேஶ: || (43)

## ஸர்க்கம் 17

## சூர்ப்பணகையின் வருகை

க்ருதாபி⁴ஷேகோ ராமஸ்து ஸீதா ஸௌமித்ரிரேவ ச |
தஸ்மாத் கோ³தா³வரீ தீராத் ததோ ஜக்³மு: ஸ்வமாஶ்ரமம் || (1)

பிறகு ஆசிரமத்திற்கு வந்து முன்பகலில் செய்யவேண்டிய நித்திய கர்மங்களைச் செய்து, பர்ணசாலையில் போய் மஹரிஷிகளால் பூஜிக்கப்பட்டு பல விஷயங்களைப்பற்றிப் பேசிக்கொண்டிருந்தார். இப்படி சித்திரா நக்ஷத்திரத்துடன் கூடின சந்திரனைப்போல் ஸீதையுடன் விளங்கும் ராமனிருக்கும் இடத்திற்கு ஒரு ராக்ஷஸி தானாக வந்தாள். அவள் ராவணனுடைய தங்கை; சூர்ப்பணகையென்ற பெயருடையவள். ஸிம்ஹத்தின் மார்பையும் முழங்கால்வரையில் நீண்ட கைகளையும் மதயானையின் நடையையும் தாமரைமலர் போன்ற கண்களையும் கருநெய்தல்களைப்போன்ற தேககாந்தியையும் உடையவராக ஜடாமண்டலத்தைத் தரித்துக்கொண்டு ராஜ லக்ஷணங்கள் விளங்க உட்கார்ந்திருக்கும் ராமமூர்த்தியைப் பார்த்து, மன்மதனைப் பழிக்கும் அவருடைய அழகிற்கும் கோடிஸூரியர்களைப் பழிக்கும் தேஜஸிற்கும் சந்திரனைப் பழிக்கும் முககாந்திக்கும் இந்திரனாலும் நினைக்கமுடியாத பராக்கிரமத்திற்கும் அடிமையாகி ஆசைக்குத் தன் மனத்தை இழந்தாள்.

ஸகல உத்தம லக்ஷணங்களும் பொருந்திய முகத்தையுடையவர் ராமன்; பார்க்க பயங்கரமான முகத்தையுடையவள் சூர்ப்பணகை. ஸிம்ஹத்தைப் போன்ற சிறுத்த இடையையுடையவர் ராகவன்; பேரியைப்போல் பருத்த வயிற்றையுடையவள் அந்த ராக்ஷஸி. தாமரையிதழ்களைப்போல் விசாலமாக செவ்வரிபரந்த நேத்திரங்களையுடையவர் ரகுவீரன்; பார்க்கப் பயங்கரமான நேத்திரங்களை உடையவள் சூர்ப்பணகை. கறுத்து அடர்ந்த சுருண்ட மயிரையுடையவர் ராமன்; நெருப்புக்கொழுந்தைப்போல் சிவந்து விரித்த குறுகிய தலைமயிரையுடையவள் சூர்ப்பணகை. ராமனுடைய ரூபத்தைப் பார்ப்பவர்களுக்கு அவரிடத்தில் எல்லையற்ற பிரீதியுண்டாகும்; சூர்ப்பணகையைப் பார்ப்பவர்களுக்குச் சொல்ல முடியாத வெறுப்பு அவளிடத்திலுண்டாகும். ராமன் பேசும்பொழுது இனிய வாத்தியத்தின் நாதத்தைப் போலிருக்கும்; சூர்ப்பணகையின் குரல் கேட்பவர்களை மூர்ச்சையடையச் செய்யும். ராமன் அழகிய யௌவன புருஷன்; சூர்ப்பணகை மிகவும் வயது சென்றவள். ராமன் மிருதுவாகவும் சாதுர்யமாகவும் பேசுகிறவர்; சூர்ப்பணகை கபடமாகப் பேசுகிறவள். ராமன் நியாயமாக நடப்பவர்; சூர்ப்பணகை கெட்ட நடத்தையுள்ளவள். ரூபம் வாய்ந்தவர்களுக்குள் ராமன் முதலானவர்; சூர்ப்பணகை குரூபிகளுக்குள் முதலானவள்.

ஆகையால், அவள் கண்தெரியாமல் மயங்கி, "ஜடை முதலிய தபஸ்வி வேஷத்தைத் தரித்து, பாரியையுடன் வில்லும் கையுமாக நீ இங்கே வரவேண்டிய காரணமென்ன? இது ராக்ஷஸர்கள் வஸிக்கும் தேசமென்று தெரியாதா?" என்றாள்.

ராமன் மஹா பராக்கிரமசாலி; தர்மபுத்தியுடையவர்; பொய் சொல்வது ஒருநாளும் அவருக்கு இஷ்டமில்லை. மேலும் தபஸ்வி தர்மத்தை அனுஷ்டிக்கும்பொழுது அதற்கு ஒப்புவாரா? மேலும் ஸ்த்ரீயிடத்தில் பொய்சொல்ல விரும்புவாரா? ஆகையால் சூர்ப்பணகையைப் பார்த்து, "தேவேந்திரனைப்போன்ற பராக்கிரமத்தை யுடையவராக தசரதரென்று ஒரு சக்கரவர்த்தியிருந்தார். அவருடைய மூத்த புத்திரனை ராமன் நான். இவன் என் தம்பி லக்ஷ்மணன். இந்த வனத்திற்கு என்னுடன் வந்திருக்கிறான். இவள் என் பாரியை ஸீதை. விதேஹராஜனுடைய புத்திரி. எங்கள் பெற்றோர்களின் கட்டளையால் பிதிருவாக்கிய பரிபாலனம் செய்துகொண்டு தர்மத்தை ஸம்பாதிக்க விரும்பி வனத்தில் வஸிக்கிறோம். நீ யார்? யாரைச் சேர்ந்தவள்? உன் விகாரமான ரூபத்தைப் பார்த்தால் ராக்ஷஸி என்று தோன்றுகிறது. நீ இங்கே வந்த காரணமென்ன? நிஜத்தைச் சொல்" என்றார். சூர்ப்பணகை ஆசை மீறி, "நான் சூர்ப்பணகையென்ற ராக்ஷஸி; நினைத்த ரூபங்களை எடுப்பேன்; இந்த வனத்தில் தனியாகத் திரிகிறேன். ஸகலப் பிராணிகளும் என்னைக் கண்டால் நடுங்கும். என் எண்ணத்தைத் தடுக்கும் இடையூறுகளை அழிக்க எனக்குத் திறமையுண்டு. ராக்ஷஸாதிபதியான ராவணேசுவரனென்ற பலவான் என் அண்ணன். அவன் விச்ரவஸின் புத்திரனை மஹாவீரனென்று நீ கேட்டதில்லையா? வெகுகாலம் தூங்கும் மஹாபலமுள்ள கும்பகர்ணனும், ராக்ஷஸ குலத்தில் பிறந்தும் ராக்ஷஸ ஆசாரத்தை அனுஷ்டிக்காத தர்மாத்மாவான விபீஷணனும் என்னுடன் பிறந்தவர்கள். யுத்தத்தில் மிகவும் பெயர்பெற்ற கரதூஷணர்களும் அப்படியே.

ஆனால், நான் அவர்களுடைய வார்த்தைக்குக் கட்டுப்பட்டவளல்ல. என் இஷ்டப்படி நடக்கிறவள். உன்னைக் கண்டதுமுதல் உன்னையே கணவனாக அடையவேண்டுமென்றெண்ணி வந்திருக்கிறேன். நான் அபூர்வமான சக்தியுள்ளவள். என்னை ஒருவரும் தடுக்க முடியாது. நான் உன்னைக் கணவனாகப் பெற்று வெகு காலம் ஸுகமாக இருப்பேன். இந்த ஸீதையால் உனக்கு என்ன பிரயோஜனம்? விகாரமான சரீரத்துடன் பலபராக்கிரமமில்லாத இந்த அல்ப ஜந்துவை வைத்துக்கொண்டு என்ன செய்வாய்? நானே உனக்குத் தகுந்த பாரியை. இவளுடைய அல்ப சரீரத்தையும் மேருமலையைப் போன்ற என் தேகத்தையும் பார். ஸகல பிராணிகளையும் கண்டு இவள் நடுங்குகிறாள்; ஸகல பிராணிகளும் என்னைக் கண்டு நடுங்குகின்றன. ஒட்டின வயிறுள்ள இவள், பேரியைப் போன்ற இடையுள்ள எனக்கு அழகில் ஈடா? என்னை நன்றாக உற்றுப்பார். நான் உனக்குத் தகுந்தவளா, அல்லது ஸீதை தகுந்தவளா? நமக்கு இடையூறாக இருக்கும் இவளையும் உன் தம்பியான அந்தப் பையனையும் இப்பொழுதே தின்றுவிடுகிறேன். பிறகு, மலைச்சிகரங்களையும் பல வனங்களையும் வேடிக்கையாகப் பார்த்துக்கொண்டு வெகு ஸந்தோஷமாக ஸஞ்சரிப்போம்'' என்றாள்.

இத்யேவமுக்த: காகுத்ஸ்த2: ப்ரஹஸ்ய மதி3ரேக்ஷணாம் |
இத3ம் வசநமாரேபே4 வக்தும் வாக்யவிஶாரத3: || (31)

---

## ஸர்க்கம் 18

## சூர்ப்பணகையின் கர்வபங்கம்

---

தாம் து ஶூர்பணகா3ம் ராம: காமபாஶாவ பாஶிதாம் |
ஸ்வச்ச2யா ஶ்லக்ஷ்ணயா வாசா ஸ்மிதபூர்வ மதா2ப்3ரவீத் || (1)

**ம**திரா என்ற சாராயத்தைப்போல் சிவந்த கண்களையுடைய சூர்ப்பணகை ஆசையென்ற கயிற்றால் கட்டப்பட்டு இப்படிச் சொல்ல, ராமன் புன்சிரிப்புடன் மிருதுவாகவும் தெளிவாகவும் சாதுர்யமாகவும் பதில் சொன்னார். "எனக்கோ விவாஹமாயிற்று; என் பாரியையிடத்தில் எனக்கு மிகுந்த பிரியம். அவளைத் தள்ள முடியாது. உன்னையும் வைத்துக்கொள்ள முடியாது. உன்னைப் போன்ற ஸ்த்ரீகள் சக்களத்திகளின் உபத்திரவத்தைப் பொறுக்க மாட்டார்கள். இதோ இருக்கும் என் தம்பியோ நன்னடத்தையுள்ளவன்; வெகு அழகானவன். அவன் பார்யையைத் தன்னுடன் அழைத்து வரவில்லை. மஹாவீரன்; வெகு காலமாகப் பாரியையின் ஸுகத்தை அறியாதவன்; பார்யை அவனுக்கு அவசியம். யௌவன புருஷன்; உன் ரூபத்திற்குத் தகுந்த நாயகன். இவனைப் புருஷனாக அடைந்தால் மேருமலையில் சூரியப் பிரகாசத்தைப்போல்



போட்டியில்லாமல் வாழலாம்'' என்றார். இப்படித் தன்னிடத்தில் ஆசைகொண்டு வந்தவளைத் திடீரென்று மறுத்தால் வருத்தப்படுவாளென்று இரங்கி பரிகாச வார்த்தைகளைச் சொல்லி விலக்கினார். ஆனால், ஆசைப்பிசாசு பிடித்த அந்த ராக்ஷஸி அந்த வேடிக்கையை அறியாமல் உண்மையென்று நம்பி, லக்ஷ்மணனிடத்தில் போய், "உன் ரூபத்திற்கும் அழகிற்கும் தகுந்த பார்யை நானே. நாம் ஸுகமாக இந்த தண்டகாரண்யத்தில் எல்லா இடங்களிலும் ஸஞ்சரிப்போம்'' என்றாள். லக்ஷ்மணன் பேசும் திறமையில் ஸாமான்யரா? புன்சிரிப்புடன் அந்தச் சூர்ப்பணகையைப் பார்த்து, 'சற்று ஆலோசித்துப் பார். நான் என் அண்ணனுக்கு அடிமை; உன்னத பதவியிலிருக்கும் நீ அடிமைக்கு அடிமையாக இருக்கத் தகுந்தவளா? நான் அவருக்கு ஊழியம் செய்வதுபோல் நீயும் ஸீதைக்கல்லவா ஊழியம் செய்யவேண்டியிருக்கும்? ஸகல பாக்கியங்களாலும் நிறைந்த ராமனுக்கு நீ பாரியையானால் உன் எண்ணங்களெல்லாம் நிறைவேறும். ஆகையால், அவருக்கு இளைய மனைவியாகி ஸுகமாக வாழ். ஸீதையிருக்கும்பொழுது என்னை எப்படி அங்கீகரிப்பாரென்றால், இந்த உத்தமமான ரூபத்தைப் பார்த்த பிறகு, கேவலம் ஒரு மனுஷ்யஸ்த்ரீயைக் கண்ணெடுத்துப் பார்க்க எந்த புத்திமானுக்காவது தோன்றுமா? ஸீதையோ குரூபி, துஷ்டை, வயிறு ஒட்டினவள்; அவளுடைய பெயர் யாருக்காவது தெரியுமா? அவளைத் துரத்திவிட்டு உன்னைத் தவிர மற்றொருத்தியைப் பார்க்க மாட்டார்'' என்றார்.

இதைப் பரிகாஸமென்றறியாமல் அவள், ஸீதையுடன் பர்ணசாலையில் உட்கார்ந்திருக்கும் மஹாவீரனிடத்தில் போய், "இவள் குரூபி, பிரஸித்தியற்றவள், துஷ்டை, கிழவி, வயிறொட்டினவள். இந்தப்பீடையைத் துலைத்து முழுகாமல் இன்னும் கட்டிக்கொண்டு அழுகிறாய். என்னைத் திரும்பிப் பார்க்காததற்கு அதே காரணம். இந்தத் தடையுள்ளவரையில் இந்த எண்ணம் நிறைவேறாது. உன் எதிரில் இவளைத் தின்றுவிட்டு, சக்களத்தியின் தொந்திரவு இல்லாமல் உன்னுடன் ஸுகமாக வஸிப்பேன்'' என்று கொள்ளிக் கட்டையைப்போன்ற கண்களுடன், ரோஹிணியை நோக்கி தூமகேது ஓடிவருவதுபோல், மருண்ட மான்குட்டியைப்போன்ற கண்களையுடைய ஸீதையை நோக்கிக் கோபத்துடன் பாய்ந்து ஓடி வந்தாள். இப்படிக் காலபாசத்தைப்போல் ஓடிவரும் அந்த ராக்ஷஸியைப் பார்த்து மஹாபலவானான ராமன் அவளை 'ஹூம்' என்று அதட்டிக் கோபத்துடன் "லக்ஷ்மணா! குரூரமான அற்பர்களுடன் பரிகாசம் செய்வது பிசகு. சூர்ப்பணகையின் கொடிய ஸ்வபாவத்தைக் கண்டு ஸீதை பயத்தால் உயிரை விடுவாளென்று தோன்றுகிறது. இந்த விகாரி ரூபமுள்ள துஷ்ட ராக்ஷஸியை அங்கஹீனம் செய்'' என்று கட்டளையிட்டார். உடனே லக்ஷ்மணனுக்குக் கோபமுண்டாயிற்று. "இதுவரையில் இவள் யாதொரு

அபராதமும் செய்யவில்லை'' என்று ராமன் பரிகாசமாகப் பேசிக் கொண்டிருந்தார். இப்பொழுது ஸீதையைக்கொல்ல வந்ததால் தண்டிக்கும்படி உத்தரவிடுகிறார்'' என்று நினைத்து லக்ஷ்மணன் கத்தியை உருவி சூர்ப்பணகையின் மூக்கையும் காதுகளையும் அறுத்தார். அவள் கோரமாகக் கத்திக்கொண்டு வந்த வழியாகவே காட்டில் ஓடினாள். இயற்கையாகவே விகார ரூபமுடையவள்; பார்க்கப் பயங்கரமானவள். ரத்தம் பெருகி ஓட, மழை காலத்தில் மேகங்கள் கர்ஜிப்பதுபோல் கோரமாக அலறினாள். ஜனஸ்தானத்திற்கு ஓடிப் போய், ராக்ஷஸர்களால் சூழப்பட்டு உட்கார்ந்திருக்கும் கொடிய வனான தன் அண்ணன் கரனிடத்திற்கு வந்து, இடிவிழுவதுபோல் அவனுக்கெதிரில் பூமியில் விழுந்தாள். பயத்தாலும் மயக்கத்தாலும் மூர்ச்சையடைந்து ரத்தம் தாரை தாரையாகப் பெருக, ராமலக்ஷ்மணர்கள் ஸீதையுடன் வனத்திற்கு வந்திருப்பதையும் தன்னை அங்கஹீனம் செய்ததையும் அவனிடத்தில் சொன்னாள்.

தத: ஸபா⁴ர்யம் ப⁴யமோஹ மூர்ச்சி²தா
ஸலக்ஷ்மணம் ராக⁴வ மாக³தம் வநம் |
விரூபணம் சாத்மநி ஶோணிதோக்ஷிதா
ஶஶம்ஸ ஸர்வம் ப⁴கி³நீ க²ரஸ்ய ஸா || (26)

---

ஸர்க்கம் 19

## சூர்ப்பணகை கரனைத் தூண்டுதல்

---

தாம் ததா² பதிதாம் த்³ருஷ்ட்வா விரூபாம் ஶோணிதோக்ஷிதாம் |
ப⁴கி³நீம் க்ரோத⁴ஸந்தப்த: க²ர: பப்ரச்ச² ராக்ஷஸ: || (1)

இப்படித் தன் சகோதரி காதும் மூக்கும் அறுபட்டு ரத்தம் பெருக பூமியில் கிடப்பதைக்கண்டு கரன் அடங்காத கோபம் கொண்டு, "எழுந்திரு; புத்தியை ஸ்வாதீனப்படுத்திக்கொள். உன்னை இப்படி அலங்கோலம் செய்தவன் யார்? தெளிவாகச் சொல். கொடிய விஷமுள்ள கருநாகம் யாரையும் தொந்திரவு செய்யாமல் எதிரில் படுத்துக்கொண்டிருக்கும்பொழுது, அதன் சக்தியை அறியாமல் அதைச்சுண்டுவிரல் நுனியால் குத்திக்கிளப்பிய புத்திமான் யார்? யமபாசத்தைக் கழுத்தில் மாட்டிக்கொண்டு அடுத்த நிமிஷத்தில் மரணம் நேருவதை அறியாத மடையன் யார்? காலகூட விஷத்தை அமிருதமென்று குடித்தவனைப்போல், உன்னை இப்படி ஹிம்ஸித்த நிர்பாக்கியன் யார்? உன் பலபராக்கிரமம் ஸாமான்யமா? நினைத்தவிடத்திற்குப் போகக்கூடியவள்; யமனைப் போன்றவள்; நினைத்த ரூபமெடுக்கக்கூடியவள். உன்னை இப்படிச் செய்தவன் யார்? தேவர்கள் கந்தர்வர்கள் மஹாத்மாக்களான ரிஷிகள் இவர்களுக்குள் எந்த மஹாவீரன் உன்னை இப்படி அங்கஹீனம் செய்தான்? ஆயிரம் கண்களையுடைய இந்திரன் ஒருவனைத்தவிர



இத்யுக்தோ லக்ஷ்மணஸ்தஸ்யா: க்ருத்³தோ⁴ ராமஸ்ய பஶ்யத: |
உத்³த்⁴ருத்ய க²ட்³க³ம் சிச்சே²த³ கர்ணநாஸம் மஹாப³ல: ||
—ஆ. 18 ஸ - 21 ச.
(பக்கம் 50 பார்க்க)
லக்ஷ்மணன் கத்தியை உருவி சூர்ப்பணகையின் மூக்கையும் காதுகளையும் அறுத்தார்.

ஸகல லோகங்களிலும் எனக்கு இஷ்டமில்லாத காரியத்தைச் செய்யத்துணிகிறவன் ஒருவனுமில்லை. நீருடன் கலந்த பாலை ஹம்ஸம் குடிப்பதுபோல், இப்பொழுதே என் கொடிய பாணங்களால் அவனுடைய மர்மஸ்தானங்களைப் பிளந்து அவன் ப்ராணனைக் கொள்ளை கொண்டு, அவன் ரத்தத்தை நுரையுடன் பூமி குடிக்கும்படி செய்கிறேன். என்றால் சண்டையில், மடிந்த யாருடைய மாம்ஸத்தைப் பக்ஷிகள் பிடுங்கித் தின்னப்போகின்றனவோ? தேவர்கள் கந்தர்வர்கள் பிசாசர்கள் யக்ஷர்கள் யாராக இருந்தாலும் ஸரி, என்னுடன் யுத்தத்திற்கு வந்த நிர்பாக்கியனைத் தப்பவைக்க முடியாது? உன்னை என் வனத்தில் இப்படி உபத்திரவித்து அவமானம் செய்த துஷ்டன் யார்? புத்தியை ஸ்வாதீனம் செய்து கொண்டு சொல்" என்று மஹா கோபத்துடன் கரன் கர்ஜித்ததைக் கேட்டுச் சூர்ப்பணகை கண்ணீர் பெருகப் பின்வருமாறு சொல்ல ஆரம்பித்தாள்.

"நல்ல யௌவன புருஷர்கள்; வயதில் ஸமமானாலும் ரூபத்தில் பேதமுண்டோ என்றால், இல்லை. மஹாஸுந்தர புருஷர்கள்; யௌவனமிருந்தாலும் அழகு இராது; இவர்கள் அப்படியல்ல. மன்மதன் முதலியவர்களும் இவர்களிடத்தில் பிச்சை வாங்கவேண்டும். இவர்களுடைய அழகு என்றும் அழியாது. வயதும் ரூபமுமிருந்தும் சரீரம் கடினமோ என்றால், ஐயோ கற்பாறையைப் போன்ற உங்களுடைய சரீரத்தைப்போலா? மலர்ந்த புஷ்பத்தைப்போல் வெகு மிருதுவான சரீரமுடையவர்கள். லக்ஷ்மணன் என் காதையும் மூக்கையும் அறுக்கும்பொழுது அவனுடைய கை என் மேல் பட்டதாலுண்டான ஸுகத்தை நினைத்து நினைத்து என்மனம் உருகுகிறது. என் தேகத்தைத் துண்டுதுண்டாக அறுத்தாலும் அவனுடைய கை இன்னுமொரு தரம் என்மேல் பட்டால் போதுமே. இதனால் அவர்கள் பலஹீனர்களோ? ஸ்த்ரீகளைத் திருப்திசெய்ய முடியாதவர்களோ? மஹாபலவான்கள். பொதுவாக அழகு மிகுந்திருக்கலாம். அவயவங்கள் லக்ஷணப்படி இருக்குமோ என்றால், அவர்கள் கண் அழகை மாத்திரம் கொஞ்சம் சொல்லுகிறேன். கேள். ரத்தத்தையும் நெருப்பையும் போன்ற உங்களுடைய கண்களெங்கே? தமோ குணத்தைக் காட்டும் தூக்கக்கலக்கமும்; ரஜோ குணத்தைக் காட்டும் சிவப்புநிறமும் அற்று, கேவலம் ஸத்வ குணத்தின் அதிசயத்தைக் காட்டும் வெண்தாமரை இதழ்களைப் போன்ற விசாலமான அவர்களுடைய நேத்திரங்களெங்கே? அவர்களுடைய அழகு இருக்கட்டும். அவர்கள் அணிந்த மரவுரியும் மான்தோலுமல்லவா அவர்களுடைய தேகத்தில் பட்டதால் விளங்குகின்றன? கந்தமூலபலங்களைப் புஜித்துக் கொண்டு இந்திரியங்களை ஜயித்துத் தபஸ்வி வேஷத்துடன் தர்மத்தை அனுஷ்டிக்கிறார்கள். தசரதராஜனுடைய புத்திரர்களான ராமலக்ஷ்மணர்கள் என்றார்கள். ஆனால் அவர்களுடைய பராக்கிரமத்தைக் கவனித்தால் கந்தர்வ ராஜர்களைப்போலிருக்கிறார்கள். ஆனால் ராஜலக்ஷணங்கள் பூர்ண

மாக விளங்குகின்றன. ஆகையால் அவர்கள் மனுஷ்யர்களா தேவர்களா என்று எனக்குத் தெரியவில்லை. அவர்களுக்கு நடுவில் ஒரு யௌவன ஸ்த்ரீ ஸகல ஆபரணங்களாலும் அலங்கரிக்கப்பட்டு வர்ணிக்கமுடியாத அழகுடன் விளங்குகிருள். அவளுக்காகவே இருவரும் சேர்ந்து என்னை அநாதையாகவும் துஷ்டையாகவும் எண்ணி இந்தக் கோலம் செய்தார்கள். யுத்தத்தில் அவர்களைக் கொன்று அவர்களுடைய ரத்தத்தை நுரையுடன் குடிக்க ஆசைகொண்டிருக்கிறேன். முதலில் நீ இதைப் பூர்த்தி செய்யவேண்டும்'' என்ருள்.

கரன் அதைக் கேட்டு கோபம் கொண்டு, யமன்களைப் போன்ற தன் பதினுலாயிர ராக்ஷஸர்களின் தலைவர்கள் பதினன்கு பேரைப் பார்த்து, ''இரண்டு மனிதர்கள் மான்தோல் மரவுரிகளை அணிந்துகொண்டு ஆயுதபாணிகளாக ஒரு ஸ்த்ரீயுடன் நமது கோரமான தண்டகாரண்யத்தில் வந்திருக்கிருர்களாம். அவர்களைக்கொன்று அவர்களுடைய தேகங்களையும் அந்தப்பெண்ணையும் இங்கே கொண்டு வாருங்கள். என் உடன்பிறந்தாள் அவர்களுடைய ரத்தத்தை குடிக்க ஆசைப் படுகிருள். சீக்கிரமாகக் காரியத்தை முடித்து வாருங்கள்'' என்று கட்டளையிட்டான். உடனே அந்தப் பதினன்கு ஸேனபதிகளும் சூர்ப்பணகையுடன் சண்டமாருதத்தைப் போல் அங்கே வந்தார்கள். அவர்களைக் கண்டு ராமன் எதிர்த்து வந்தார். ஆனல் யானைகள் காட்டுத் தீயை எப்படி நெருங்கமுடியாதோ, அப்படி மஹா தேஜஸ்வியான ரகுவீரனை அந்த ராக்ஷஸ வீரர்கள் நெருங்கமுடியவில்லை.

ததஸ்து தே தம் ஸமுத3க்3ர தேஜஸம்
ததா3பிதீக்ஷ்ண ப்ரத3ரா நிஶாசரா: |
ந ஶேகு ரேநம் ஸஹஸா ப்ரமர்தி3தும்
வநத்3விபா தீ3ப்தமிவாக்3நி முத்3த4தம் ‖ (28)

---

## ஸர்க்கம் 20

## ஸேனதிபதிகளின் வதம்

தத: ஶூர்பணகா2 கோ4ரா ராக4வாஶ்ரம மாக3தா |
ரக்ஷஸா மாசசக்ஷே தௌ ப்4ராதரௌ ஸஹ ஸீதயா ‖ (1)

சூர்ப்பணகை ராமனுடைய ஆசிரமத்திற்கு வந்து, தன்னுடனிருந்த ராக்ஷஸர்களுக்கு ராமலக்ஷ்மணர்களைக் காட்ட, மஹா பலவானன ராமன் லக்ஷ்மணனுடனும் ஸீதையுடனும் பர்ணசாலையில் உட்கார்ந்திருக்கக் கண்டார்கள். ரகுவீரன் அந்த ராக்ஷஸர்களையும் சூர்ப்பணகையையும் பார்த்து, கோபத்தால் நெருப்புக் கொழுந்தைப்போல் ஜ்வலிக்கும் லக்ஷ்மணனை அழைத்து, ''கொஞ்ச நேரம் வரையில் ஸீதையை ஜாக்கிரதையாகப் பார்த்துக் கொள். இந்த ராக்ஷஸியின் பின்னே வந்தவர்களை யமலோகத்திற்கு அனுப்புகிறேன்'' என்ருர். ராமானுஜன் அப்படியே செய்கிறேன் என



ரகுநாதன் தங்கக்கட்டுகளால் அலங்கரிக்கப்பட்ட தன் பெரிய வில்லில் நாண் பூட்டி, தர்மயுத்தம் செய்கிறவராகையால் அந்த ராக்ஷஸர்களைப் பார்த்து, ''நாங்கள் தசரத ராஜ புத்திரர்களான ராமலக்ஷ்மணர்கள். இதோ இருக்கும் ஸீதையுடன் இந்தக் காட்டில் வஸிக்க வந்திருக்கிருேம். கந்தமூலபலங்களைப் புஜித்துக்கொண்டு தபஸ்விகளாகத் தர்மத்தை அனுஷ்டிக்கும் எங்களை ஏன் தொந்தரவு செய்கிறீர்கள்? மஹா துஷ்டர்களான உங்களைக் கொல்லவேண்டுமென்று இங்குள்ள ரிஷிகள் கட்டளையிட்டதால் ஆயுதங்களுடன் இங்கே வந்திருக்கிறேன். இப்பொழுதே ஸமயம் நேர்ந்தது. ஸந்தோஷமாக அங்கேயே நில்லுங்கள், ஓடக்கூடாது. ஆனல் பிழைக்க ஆசையிருந்தால் ஓடிப்போங்கள்'' என்ருர்.

பிராம்மணர்களைக் கொல்லும் அந்தப் பாபிகள் அதைக்கேட்டு சூலங்களைத் தூக்கிக்கொண்டு கோபத்துடன், 'எங்கள் மஹாராஜாவான கரனுடைய கோபத்திற்குப் பாத்திரமாகி இன்னும் பிழைத்திருக்கவா? இதோ ஒரு நிமிஷத்தில் உன்னைக் கொல்லுகிருேம். அல்ப மனுஷ்யனன நீ எங்களைப்போன்ற மஹாவீரர்களை யுத்தத்தில் எதிர்க்க முடியுமா? யுத்தம் செய்வதிருக்கட்டும், வா. எங்களுடைய கத்திகளுக்கும் கதாயுதங்களுக்கும் இரையாகி உன் வில்லும் தைரியமும் உயிரும் ஒரே காலத்தில் அழியும்'' என்று ரகுவீரன் பேரில் சூலங்களை எறிந்தார்கள். ராமன் அவைகளை ஒவ்வொரு பாணத்தால் துண்டித்தார். மலைகளையும் துளைக்கும் கூர்மையுடன் ஸூரியனைப்போல் ஜ்வலிக்கும் பதினன்கு நாராச பாணங்களை உடனே எடுத்து வில்லில் பூட்டி இந்திரன் வஜ்ராயுதத்தை பிரயோகிப்பதுபோல் அந்த ராக்ஷஸர்களின்மேல் விட்டார். அவை அந்தப் பாபிகளின் மார்பைப் பிளந்து ஊடுருவி ரத்தத்தால் பூசப்பட்டு இடிவிழுந்ததுபோல் பூமியில் விழுந்தன. அந்தத் துஷ்டர்கள் ஹிருதயம் பிளந்து உயிரிழந்து ரத்தம் பெருக வேரற்ற மரம்போல் பூமியில் சாய்ந்தார்கள். சூர்ப்பணகை அதைக்கண்டு பயந்து கோரமாகக் கர்ஜித்தாள். பிறகு அங்கிருந்து கரனிடத்திற்கு ஓடிப்போய், கண்ணீர் பெருகக் கோவென்று பெருங்குரலிட்டழுது, வெட்டின பனைமரத்திலிருந்து ரஸம் பெருகுவதுபோல், தன் காயங்களிலிருந்து பெருகும் ரத்தம் கொஞ்சம் உலர அவனுக்கெதிரில் விழுந்தாள்.

இப்படித் தன்னுடன் வந்த ஸகல ராக்ஷஸர்களும் மடிந்ததைக் கண்டு சூர்ப்பணகை கரனிடத்திற்குப் போய் நடந்த வரலாற்றைச் சொன்னுள்.

நிபாதிதாந் த்3ருஶ்ய ரணே து ராக்ஷஸாந்
ப்ரதா4விதா ஶூர்பணகா2 புநஸ்தத: |
வத4ம் ச தேஷாம் நிகி2லேந ரக்ஷஸாம்
ஶஶம்ஸ ஸர்வம் ப4கி3நீ க2ரஸ்ய ஸா ‖ (25)

---

## ஸர்க்கம் 21

# கரனைத் தூண்டிவிட்டது

---

ஸ புந: பதிதாம் த்3ருஷ்ட்வா க்ரோதா4ச் சூ2ர்பணகா2ம் க2ர: |
உவாச வ்யக்தயா வாசா தாமநர்தா2ர்த2 மாக3தாம் || (1)

ராக்ஷஸகுலத்தை நாசம்செய்ய வந்த சூர்ப்பணகை, வாடின முகத்துடன் தரையில் கிடந்து புரளுவதைக் கண்டு கரன் கோபம் கொண்டு, "யமனைப்போன்ற மஹாவீரர்களை நீ கேட்டபடி அனுப்பினேன்அல்லவா? மறுபடியும் ஏன் அழுகிறாய்? அவர்கள் என்னிடத்தில் பக்தி வைத்தவர்கள். மிகுந்த பிரீதியுள்ளவர்கள். என் ஹிதத்தையே தேடுகிறவர்கள். என் கட்டளையை மீறுவார்களா? பிறரைக் கொல்வார்களெயொழிய கொல்லப்படமாட்டார்கள். இப்படியிருக்க ஹா! நாதா! என்று கதறிக்கொண்டு பூமியில் கிடந்து அடிபட்ட ஸர்ப்பத்தைப்போல் புரளக் காரணமென்ன? உன்னைக் காப்பாற்ற நானிருக்கத் திக்கற்றவளைப்போல் நீ கதறலாமா? எழுந்திரு; பயப்படாதே; கவலையை விடு" என்று ஸமாதானம் செய்தான்.

பிறகு ஒருவாறு தைரியமடைந்து அவள் கண்ணீரைத் துடைத்துக்கொண்டு "என் மூக்கும் காதும் அறுபட்டு ரத்தம்பெருக இங்கே ஓடிவந்தேன். நீ என்னைத்தேற்றி ஸந்தோஷப்படுத்துவதற்கு ராமலக்ஷ்மணர்களைக் கொன்று வரும்படி மஹாசூரர்களான பதினான்கு ராக்ஷஸர்களை அனுப்பினாய். ராமனோ தன் கூர்மையான பாணங்களால் அவர்களின் மர்மஸ்தானங்களைப் பிளந்து யமலோகத்திற்கு அனுப்பினான். அவர்கள் பிணமாகக் கீழே விழுவதையும் ராமனுடைய அத்புதமான வீரியத்தையும் பார்த்து நடுங்கினேன். எனக்கு பயமும் துக்கமும் தாங்க முடியவில்லை. எங்கே திரும்பினாலும் ராமனாகவே தோன்றுகிறது. ஆகையால் உன்னையே சரணமடைந்தேன். துக்கமென்ற முதலைகளால் நிறைந்து பயமென்ற அலைகள் மோதும் சோக ஸமுத்திரத்தில் மூழ்கித் தத்தளிக்கும் என்னை ஏன் காப்பாற்றாமலிருக்கிறாய்? நீ அனுப்பிய மஹாவீரர்களை ராமன் பாணங்களுக்கு இரைகொடுத்தான். அவர்களிடத்திலும் என்னிடத்திலும் உனக்கு இரக்கமிருந்தால், உனக்குத் தேஜஸிருந்தால், ராமனுடன் யுத்தம் செய்ய உனக்குத் திறமை இருந்தால், இந்தத் தண்டகாரண்யத்திற்கு வந்து ராக்ஷஸகுலத்தை அழிக்கக் கங்கணம் கட்டிக்கொண்டிருக்கும் ராமனை ஜயி. இல்லாவிட்டால் உனக்கெதிரில் பிராணனை விடுவேன். வெட்கப்படமாட்டேன். இவ்வளவு சொல்லியும் உனக்கு ரோஷமில்லாததைப் பார்த்தால் நீயும் உன் ஸைன்யங்களும் யுத்தத்தில் ராமனுக்கெதிரில் நிற்கமாட்டீர்களென்று எனக்கு நன்றாகத் தோன்றுகிறது. மஹாசூரனென்று நீ உன்னை எண்ணிக்கொண்டிருப்பதைத் தவிர, நீயும் ஒரு சூரனா? எப்படியோ சூரனென்ற பெயரை ஸம்பாதித்துவிட்டாய். அது முழுப்பொய். இரண்டு மனுஷ்யப் பூச்சிகளைத் தேய்க்க சக்தியில்லாத நீயல்லவா வீரன்! ராக்ஷஸக் குலத்தைக் கெடுக்க வந்த நீசா! உனக்கு ரோஷமிருந்தால், ராமனை எதிர்க்க உனக்குத் திறமையிருந்தால், உன் ராஜ்யத்தில் வந்து அட்டஹாஸம் செய்யும் சத்துருவை ஜயி. இல்லாவிட்டால் நீயும் உன் பந்துக்களும் இந்த தண்டகாரண்யத்தை விட்டு எங்கேயாவது ஓடிப்போங்கள். கையாலாகாத பரதைகளுக்குச் சுத்த வீரர்களிருக்குமிடத்தில் என்ன வேலை? விளக்குவெட்டுப் பூச்சியைப் போல் ராமனுடைய தேஜஸில் விழுந்து சாம்பலாகப் போகிறாய். அந்தத் தசரத புத்திரனான ராமனல்லவா தேஜஸ்வி, மஹாவீரன்? என்னை அலங்கோலம் செய்த லக்ஷ்மணனைப் போன்ற சூரனும் உண்டோ" என்று புலம்பி, வயிற்றில் அடித்துக் கொண்டு, துக்கத்தால் வாய்விட்டு அலறினாள்.

ஏவம் விலப்ய ப3ஹுஶோ ராக்ஷஸீ விததோத3ரீ |
கராப்4யா முத3ரம் ஹத்வா ருரோத3 ப்4ருஶ து3க்கி2தா (22)

---



## ஸர்க்கம் 22

# கரன் யுத்தம் செய்யப் புறப்பட்டது

---

ஏவ மாத4ர்ஷித: ஶூர: ஶூர்பணக்2யா க2ரஸ்ததா3 |
உவாச ரக்ஷஸாம் மத்4யே க2ர: க2ரதரம் வச: || (1)

இப்படி ராக்ஷஸர்களுக்கு எதிரே தன்னை அவமானம் செய்வதைக் கரன் பொறுக்காமல் கடும் கோபத்துடன், "உன்னை அவமானம் செய்ததால் எனக்குண்டான கோபத்திற்கு எல்லையில்லை. பருவகாலத்தில் பொங்கும் ஸமுத்திரத்தின் அலைகளைப்போல் அடக்கமுடியவில்லை. ஒரு க்ஷணத்தில் இறக்கப்போகிற ராமனை வீரனென்றும் நினைப்பேனா? அவன் செய்த துடுக்குக்காக இன்று என்னால் மாளப்போகிறான். கண்ணீரை நிறுத்து; பரபரப்பை அடக்கு. இன்னும் சற்று நேரத்திற்குள் ராமலக்ஷ்மணர்களை யமலோகத்திற்கு அனுப்பிவிடுகிறேன். அந்த அல்ப ஜந்துவை என் கோடாலியால் துண்டித்து, அவனுடைய உஷ்ணமான ரத்தத்தை நீ குடிக்கும்படி செய்கிறேன்" என்றான். சூர்ப்பணகைக்கு வெகு ஸந்தோஷமுண்டாயிற்று. கரனை முன்பு எவ்வளவு திட்டினாளோ அவ்வளவு மறுபடியும் மெச்சினாள். மதிகெட்ட பெண்ணல்லவா? கரன் உடனே தூஷணனென்ற தன் ஸேனாதிபதியைப்பார்த்து, "நமது ஸைன்யங்களுக்குள் பதினாலாயிரம் ராக்ஷஸர்களை யுத்தத்திற்குப் புறப்படச்சொல். அவர்கள் என் இஷ்டப்படி நடப்பவர்கள்; பயங்கரமான வேகமுள்ளவர்கள்; யுத்தத்தில் பின்வாங்காதவர்கள்; நீண்ட மேகம்போல் கறுத்தவர்கள்; தேஜஸால் ஜ்வலிப்

பவர்கள்; குரூரமான நடத்தையுடையவர்கள்; பிராணிகளை ஹிம்ஸிப்பதையே விளையாட்டாக உடையவர்கள்; மஹாபலவான்கள்; புலியைப்போல் கொழுப்புடையவர்கள்; அகலமான வாயையும் எல்லையற்ற ஆண்மையையும் உடையவர்கள்; எல்லா வாகனங்களிலும் ஆயுதங்களிலும் பழகினவர்கள். ஆகையால் அதி சீக்கிரத்தில் யுத்தத்திற்குப் போகட்டும். என் ரதமும் வில்லும் பாணங்களும் கத்தி ஈட்டி முதலிய ஆயுதங்களும் தயாராகட்டும். யுத்தங்களில் கைகண்ட என் ராக்ஷஸர்களுக்கு முன்னேசென்று ராமனென்ற துஷ்டனைச் சித்திரவதை செய்கிறேன்'' என்று கட்டளையிட்டான். தூஷணன் ரதத்தைக் கொண்டுவந்து நிறுத்தினன். அதன் காந்தி ஸூரியனைப் போல் கண்ணைப்பறித்தது. விசித்திர வர்ணமுள்ள குதிரைகள் அதில் கட்டப்பட்டிருந்தன. மேருவைப்போல் அது ஆகாசத்தையளாவிற்று. வெகு விசாலமானது. உருக்கி ஓடவிட்ட தங்க ஆபரணங்களால் அலங்கரிக்கப்பட்டது. தங்கச் சக்கரங்களையும் வைடூரியத்தால் விளங்கும் ஏர்க்கால்களையும் உடையது. மீன்களும் மலர்களும் மரங்களும் மலைகளும் ஸூரிய சந்திரர்களும் சுபமான பக்ஷிகளும் தங்கத்தால் விசித்திரமாக வேலை செய்யப்பட்டிருந்தன. தங்கச் சலங்கைகளாலும் கொடிகளாலும் விளங்கி ஸகல ஆயுதங்களாலும் நிறைந்திருந்தது. கரன் கோபத்துடன் அதில் ஏறினதைப் பார்த்து ராக்ஷஸர்களெல்லோரும் அவனையும் தூஷணனையும் சூழ்ந்து நின்றார்கள். வஜ்ர கவசங்களாலும் கோரமான ஆயுதங்களாலும் விளங்கி நேர்த்தியான ரதங்களிலிருக்கும் தன் ஸேனைத்தலைவர்களைப் பார்த்து, 'புறப்படுங்கள்' என்று கரன் உத்திரவு செய்தான். இருப்புலக்கைகள் பட்டாக்கத்திகள் வல்லயங்கள் சூலங்கள் கோடாரிகள் கத்திகள் சக்கரங்கள் ஈட்டிகள் குண்டாந்தடிகள் வஜ்ராயுதம்போன்ற பெரிய வில்லுகள் கதைகள் முதலிய கோரமான ஆயுதங்களுடன் ராக்ஷஸ ஸைன்யம் பெரிய கோஷத்துடன், ஜனஸ்தானத்திலிருந்து பூமி நடுங்கும்படி உடனே புறப்படுவதைக் கண்டு கரன் ஸந்தோஷமடைந்து தன் ரதத்தை மெள்ள நடத்தச் சொன்னன். இப்படிக் கோபாவேசத்துடன் பயங்கரமாகக் கர்ஜித்துக்கொண்டு, சத்துருக்களை நிர்மூலம் செய்ய எண்ணிக் காலனைப்போல், பார்ப்பவர்கள் நடுங்கும்படி அட்டஹாஸம் பண்ணி, கல்மாரி பொழியும் மேகத்தை காற்று மழை தாக்கி ஓட்டுவதுபோல் கரன் ஸாரதியை ஏவ, எல்லா திக்குகளும் கிடுகிடென்று அதிரும்படி அந்த மஹாரதம் அதிவேகமாகப் பஞ்சவடியை நோக்கி வந்தது.

ப்ரவ்ருத்3த4 மந்யுஸ்து க2ர: க2ரஸ்வநோ
ரிபோர் வத4ார்த3ம் த்வரிதோ யதா2ந்தக: |
அசூசுத3த் ஸாரதி2 முந்நத3ந் க4நம்
மஹா ப3லோ மேக4 இவாஶ்ம வர்ஷவாந் || (26)

---



## ஸர்க்கம் 23

## அபசகுனங்கள்

தஸ்மிந் யாதே ஜநஸ்தா2நா த3ஶிவம் ஶோணிதோத3கம் |
அப்4யவர்ஷந் மஹாமேக4ஸ் துமுலோ க3ர்த3பா4ருண: || (1)

அந்த ராக்ஷஸ ஸைன்யம் மஹா உத்ஸாஹத்துடன் யுத்தத்திற்குப் போகும்பொழுது, கழுதையைப்போல் சாம்பல் நிறமுள்ள மேகங்கள் ரத்தமழை பெய்தன. கரனுடைய ரதத்திலுள்ள குதிரைகள் ராஜமார்க்கத்தில் மேடுபள்ளமில்லாமல் புஷ்பங்களால் நிறைந்த இடத்தில் திடீரென்று கீழே விழுந்தன. கொள்ளிக் கட்டையைச் சுழற்றுவதுபோல் ஸூரிய மண்டலத்தைச் சுற்றிக் கருத்து ஓரத்தில் கொஞ்சம் சிவந்த ஒரு வட்டம் காணப்பட்டது. தங்கக் கழியில் கட்டப்பட்ட துவஜத்தின்மேல் பருத்த சரீரமுள்ள ஒரு கழுகு உட்கார்ந்து பயங்கரமாகக் கூவிற்று. மாம்ஸத்தைத் தின்னும் மிருகங்களும் பக்ஷிகளும் ஜனஸ்தானத்திற்கு ஸமீபத்தில் வந்து விகாரமாகக் கத்தின. ஸூரியன் இருந்த திக்கில் நரிகள் கூட்டம் கூட்டமாக நின்று பயங்கரமாக ஊளையிட்டு ராக்ஷஸர்களுக்கு நேரும் நாசத்தைக் காட்டின. வஜ்ராயுதத்தால் வெட்டப்பட்ட இறகுகளையுடைய மலைகளைப்போன்ற மேகங்கள் ரத்தமழையால் நிறைந்து ஆகாசத்தை மறைத்தன. மயிர்க்கூச்சலெடுக்கும் ஓர் இருட்டு எங்கும் பரவித் திக்குதிசை தெரியாமல் மறைத்தது. ரத்தத்தில் நனைந்த வஸ்திரத்தைப்போல் ஸந்தியாகாலம் வேளைக்கு முன்பே காணப்பட்டது. கழுகு பருந்து நரி முதலிய அசுபமான ஜந்துக்கள் பின்வரும் கெடுதியைத் தெரிவித்து, கரனுடைய ரதத்திற்கெதிரில் கூவின; யுத்தத்தில் அபஜயத்தையும் நாசத்தையும் காட்டும் நரிகள், வாயிலிருந்து நெருப்பு ஜ்வாலைகள் கிளம்ப ஸைன்யத்திற்கெதிரில் நின்று ஊளையிட்டன. குண்டாந்தடியைப்போல் ஒரு தலையில்லாத முண்டம் ஸூரியனுக்கு ஸமீபத்தில் காணப்பட்டது. பர்வகாலமில்லாதபொழுதே ஸூரியனை ராகு பிடித்துக் கொண்டது. எதிர் காற்று வேகமாக அடித்தது. ஸூரியன் காந்தியை இழந்தான். ராத்திரியில்லாவிட்டாலும் ஆகாசத்திலிருந்து மின்மினிப்பூச்சிகளைப்போல் நக்ஷத்திரங்கள் உதிர்ந்தன. ஓடைகளில் தாமரைகள் வாடின; மீன்கள் மறைந்தன. சிவந்த மேகத்தைப் போன்ற செந்தூள் காற்றில்லாமலேயே கிளம்பிற்று. நாகணவாய்க்குருவிகள் கீசி கூசி என்று கத்தின. ஆகாசத்திலிருந்து கொள்ளிக்கட்டைகள் பேரிடிபோன்ற முழக்கத்துடன் விழுந்தன. மலைகளும் காடுகளும் பூமி முழுவதும் நடுங்கிற்று. ரதத்தில் கர்ஜித்துக்கொண்டு உட்கார்ந்திருக்கும் கரனுடைய இடது கை துடித்தது; குரல் தழதழத்தது; கண்ணீர் பெருகிற்று; நெற்றியில் வலி உண்டாயிற்று.

இப்படி அநேக அபசகுனங்கள் நேர்ந்தாலும் பிடிவாதத்தாலும் அக்ஞானத்தாலும் அவன் திரும்பவில்லை. மயிர்க்கூச்சமுண்டாகும் அந்த அபசகுனங்களைக் கண்டும் அவன் கலங்கவில்லை. கடகடவென்று சிரித்துக்கொண்டு ராக்ஷஸர்களைப் பார்த்து, "பலசாலி பலஹீனர்களை அலக்ஷ்யம் செய்வதுபோல் இந்தக் கோரமான அபசகுனங்களெல்லாம் எனக்கொரு பொருட்டல்லவென்று அலக்ஷ்யம் செய்கிறேன். என் கூர்மையான பாணங்களால் ஆகாசத்திலிருந்து நக்ஷத்திரங்களைப் பலபலவென்று உதிர்ப்பேன். நான் கோபங்கொண்டால் ஸகலப் பிராணிகளையும் அழிக்கும் யமனையும் கொல்வேன். மதம்கொண்ட இந்த ராம லக்ஷ்மணர்களை அழிக்காமல் திரும்பமாட்டேன். அவர்களுடைய ரத்தத்தை என் உடன் பிறந்தவள் வேண்டியவரையில் குடிக்கட்டும். அவர்களுக்கு நாசகாரணம் அவளே. நான் இதுவரையில் யுத்தத்தில் தோற்றதில்லை. அது உங்களுக்கு நன்றாகத் தெரியும். நான் சொல்வது பொய்யல்ல. வஜ்ரத்தை எடுத்து மதம்கொண்ட ஐராவதத்தின் மேலேறிவரும் இந்திரனையும் விளையாட்டாகக் கொல்வேன். இந்த மனுஷ்யப் பூச்சிகளைப்பற்றி விசாரமென்ன?" என்று திக்குகள் நடுங்கும்படி கர்ஜித்தான். அதைக்கேட்டு அந்த மஹாஸைன்யம் அடங்கா மகிழ்ச்சிகொண்டு ஆரவாரித்தது.

தேவ ரிஷி கந்தர்வ ஸித்த சாரண கணங்கள் அந்த யுத்தத்தைப் பார்க்க வந்து, "பசுக்களுக்கும் பிராம்மணர்களுக்கும் பிராணிகளுக்கு ஹிதத்தைக் கோருகின்றவர்களுக்கும் மங்களமுண்டாகட்டும். முன்காலத்தில் மஹாவிஷ்ணு அஸுரர்களைச் சக்கரத்தால் நாசம் செய்ததுபோல் ரகுவீரன் இந்த ராக்ஷஸர்களை நாசம் செய்யட்டும்" என்று பலவிதமாக ஒருவர்க்கொருவர் பேசிக்கொண்டு, யமனுக்கு இரையான அந்த மஹாஸைன்யத்தை விமானங்களிலிருந்து ஆவலுடன் பார்த்துக்கொண்டிருந்தார்கள். கரன் அதிவேகமாகப் போனதைக் கண்டு அவனுடைய மந்திரிகளான சியேனகாமி பிருதுக்ரீவன் யக்ஞசத்துரு விஹங்கமன் துர்ஜயன் கரவீராக்ஷன் பருஷன் காலகார்முகன் மேகமாலி மஹாமாலி ஸர்ப்பாஸ்யன் ருதிராசனன் என்ற பன்னிருவர் அவனைச் சூழ்ந்து சென்றார்கள். மஹாகபாலன் ஸ்தூலாக்ஷன் பிரமாதி திரிசிரஸென்ற நான்கு ஸேனாபதிகள் தூஷணனைப் பின்தொடர்ந்தார்கள். மஹா பலசாலிகளான அந்த ராக்ஷஸ வீரர்கள் யுத்தம்செய்ய ஆவல்கொண்டு குரூரக்கிரஹங்கள் ஒன்று சேர்ந்து ஸூரிய சந்திரர்களை எதிர்த்தது போல் அந்த ராஜபுத்திரர்கள் இருக்குமிடத்தை நோக்கி ஸைன்யங்களுடன் கடும் வேகமாக ஓடிவந்தார்கள்.

ஸா பீ4மவேகா3 ஸமராபி4காமா
மஹாப3லா ராக்ஷஸ வீரஸேநா |
தௌ ராஜபுத்ரௌ ஸஹஸாப்4யு பேதா
மாலா க்3ரஹாணுமிவ சந்த்3ர ஸூர்யௌ ‖ (34)



## ஸர்க்கம் 24

## ராமன் யுத்தத்திற்குப் புறப்பட்டது

ஆஶ்ரமம் ப்ரதியாதே து க2ரே க2ர பராக்ரமே |
தாநேவௌத்பாதிகாந் ராம: ஸஹ ப்4ராத்ரா த3த3ர்ஶ ஹ ‖ (1)

ராக்ஷஸர்களுக்கு நேர்ந்த அபசகுனங்களைக் கண்டு ராமன், "லக்ஷ்மணா! இவை ஜனங்களுக்குக் கஷ்டத்தையும் ஸகல பிராணிகளுக்குப் பயத்தையும் ராக்ஷஸர்களுக்கு நாசத்தையும் காட்டுகின்றன. ஆகாசத்தில் கழுதையைப்போல் சாம்பல் நிறமுள்ள மேகங்கள் ரத்தவர்ஷத்துடனும் இடி மின்னல்களுடனும் பயங்கரமாகச் சுழன்றுகொண்டிருப்பதைப் பார். நமக்கு நேரும் ஜயத்தைக் காட்டுகிற நல்ல சகுனங்களையும் கவனித்தாயா? என்னைப்போல் யுத்தத்தில் ஆவல்கொண்டு, தங்கப்பட்டங்களால் அலங்கரிக்கப்பட்ட என் வில் யுத்தம் செய்யத் துடிக்கிறது. பாணங்களிலிருந்து புகை கிளம்புகிறது. இந்தப் பக்ஷிகளின் சப்தமும் அதி சீக்கிரத்தில் நமக்குப் பெரும் பயமும் உயிருக்கு ஆபத்தும் நேருமென்று தெரிவிக்கின்றது. என் வலது புஜம் அடிக்கடி துடிப்பதால் கோர யுத்தம் ஸமீபத்தில் நடக்குமென்று நினைக்கிறேன். அதில் நமக்கு ஜயமும் சத்ருக்களுக்குத் தோல்வியும் நிச்சயம். உன் முகம் காந்தியால் ஜ்வலிக்கிறது. இது வெற்றிக்கு அடையாளம். யுத்தத்திற்குப் புறப்படுகிறவர்களின் முகங்களில் காந்தி குறைந்தால் ஆயுளும் குறையும். ராக்ஷஸர்களின் அட்டஹாஸங்களும் ஸிம்ஹநாதங்களும் பேரி முதலிய வாத்திய சப்தங்களும் ஸமீபத்தில் வந்துவிட்டன. அடையாளங்களால் அபாயம் வருவதை அறிந்து அதை விலக்க விரும்புகிறவர்கள் தகுந்த ஏற்பாடு செய்யவேண்டும். அவனே புத்திமான். ஆகையால், நீ ஆயுதம்பூண்டு மரங்களால் மறைக்கப்பட்ட இந்த மலைக்குகையில் ஸீதையை ஜாக்கிரதையாகக் காப்பாற்றிக்கொண்டிரு. இந்த ராக்ஷஸர்களுடன் யுத்தம் செய்ய நீ ஆவல் கொண்டிருக்கிறாயென்று எனக்கு நன்றாகத் தெரியும். நீ மஹாசூரன், மஹாபலசாலி. இவர்களோ நிச்சயமாகக் கொல்லப்பட வேண்டியவர்கள். ஆனாலும் நானே இவர்களைக் கொல்லுகிறேன் என்று மஹரிஷிகளிடத்தில் பிரதிக்ஞை செய்திருக்கிறபடியால் என் வார்த்தையைத் தடுத்துச்சொல்லாதே. என் பாதங்களின் மேல் ஆணையிட்டேன். சீக்கிரமாகப் போ" என்று ஆக்ஞாபித்தார்.

உடனே லக்ஷ்மணன் ஆயுதபாணியாக ஸீதையை அழைத்துக்கொண்டு மலைக்குகைக்குப் போனார். ராமன், "நான் சொன்னபடி இவன் செய்தான்" என்று ஸந்தோஷமடைந்து கவசத்தைத் தரித்தார். அக்னியைப்போன்ற அந்தத் திவ்விய கவசத்தால், இருண்ட ராத்திரியில் புகையற்ற நெருப்புக்கொழுந்தைப்போல் ரகுவீரன் பிரகாசித்தார். வில்லையும் பாணங்களையும் ஸித்தம் செய்து, திக்குகள்

நடுங்கும்படி நாணோசை காட்டி ராக்ஷஸர்களுடைய வரவை எதிர் பார்த்திருந்தார். பிறகு தேவ கந்தர்வ ஸித்த சாரணகணங்களும் மூன்று லோகங்களிலுமுள்ள தேவரிஷிகளும் பிரஹ்மரிஷிகளும் அந்தக் கோரமான யுத்தத்தைப் பார்க்க அங்கே வந்து நின்று, "பசுக்களுக்கும் பிராம்மணர்களுக்கும், பிராணிகளுக்கு . ஹிதத்தையே விரும்பும் புண்ணியாத்மாக்களுக்கும் மங்களமுண்டாகட்டும். முன்பு மஹாவிஷ்ணு சக்கரத்தால் அஸுரர்களை அழித்ததுபோல் ரகுவீரனும் இந்த ராக்ஷஸர்களை அழிக்கட்டும் என்று பேசிக்கொண்டு ராமன் ஜயிக்க வேண்டுமென்று பிரார்த்தித்தார்கள். "பதினாலாயிரம் ராக்ஷஸர்கள் பயங்கரமான செயல் உடையவர்கள் வந்துள்ளனர்; தர்மாத்மா ராமன் ஒருவன்; இந்த யுத்தம் எப்படி நடக்குமோ" என மனங் கலங்கிக் கூறினர். காலாந்தகனைப்போல் தேஜஸால் ஜ்வலித்துக்கொண்டு யுத்தகளத்தில் நிற்கும் ராமனைப் பார்த்து ஸகலப் பிராணிகளும் நடுங்கின. ஸகல ஜகத்தையும் அழிக்கப் புறப்பட்ட பிரளயகால ருத்திரனைப்போல் அப்பொழுது ஒப்பில்லாத தேஜஸுடன் விளங்கும் ரகுநாதனை ஒருவரும் பார்க்க முடியவில்லை.

இதற்குள் ராக்ஷஸ ஸைன்யம் ஸமீபித்தது. அது கோரமான கவசங்களாலும் ஆயுதங்களாலும் துவஜங்களாலும் வாத்ய த்வனியாலும் பருவகாலத்தில் கரைகடந்து பொங்கும் ஸமுத்திரத்தைப் போல் பார்க்கப் பயங்கரமாக இருந்தது. சில ராக்ஷஸர்கள் ஸிம்ஹநாதம் செய்தார்கள். சிலர் மற்றவர்களை நோக்கி, "நானே ராமலக்ஷ்மணர்களைக் கொல்வேன்" என்ற வீரவாதம் செய்தார்கள். சிலர் வில்லை வளைத்து நாணேற்றி திக்குகள் நடுங்கும்படி டங்காரம் செய்தார்கள். சிலர் கொழுப்பால் அங்கங்களை நீட்டி நெட்டிமுறித்தார்கள். சிலர் கும்மென்று கத்தினார்கள். பேரி முதலிய வாத்தியங்களைச் சிலர் அடித்தார்கள். இவை யாவும் சேர்ந்து அந்தக் காட்டில் ஒரே ஓசையாகப் பரவி அங்கிருந்த மிருகங்களும் பக்ஷிகளும் சிதறி ஓடும்படி செய்தது. அவை பார்க்காமல் அந்தக் கோரமான சப்தம் எட்டாத இடத்தைத் தேடி ஓடின. இப்படிக் கடல் புரண்டு வருவதைப்போல் கரனுடைய ஸைன்யம் அதிவேகமாகத் தன்னை நோக்கி வருவதைப் பார்த்து, ரண தீரனான ரகுவீரன் நான்கு புறத்திலும் திரும்பிப் பார்த்தார். கோதண்டத்தைக் கையில் பிடித்து அம்பறையிலிருந்து பாணங்களை எடுத்தார். கருணாமூர்த்தியானாலும் தன் பக்தர்களுக்குக் கெடுதி செய்கிறவர்களை அழிக்கவேண்டி மஹா கோபத்தை வருவித்துக்கொண்டார். பிரளய காலாக்னியைப்போல் கோபத்தால் ஜ்வலிக்கும் ரகுவீரனைக் கண்ணெடுத்துப் பார்க்க முடியாமல் அங்கிருந்த வனதேவதைகள் பயந்து ஓடின. கோபாவேசம் கொண்ட ராமனுடைய ரூபம் தக்ஷயாகத்தை நாசம் செய்யப் புறப்பட்ட ருத்திரனுடைய ரூபத்தைப்போல் இருந்தது.



பல ஆயுதங்களாலும் நெருப்பைப்போல் ஜ்வலிக்கும் கவசங்களாலும் ஆபரணங்களாலும் துவஜங்களாலும் விளங்கி அந்த ராக்ஷஸ ஸைன்யம் ராமனுக்கெதிரில் நிற்கும்பொழுது உதிக்கும் ஸூரியனுக்கெதிரில் கறுத்துத் திரண்டு பரவியிருக்கும் மேகக் கூட்டம்போல் காணப்பட்டது.

தத்கார்முகை ராப‘ரணைர் த்‘வஜைஶ்ச
தைர் வர்மபி‘ஶ்சாக்3நி ஸமாநவர்ணை: |
ப3பூ‘வ ஸைந்யம் பிஶிதாஶநாநாம்
ஸூர்யோத3யே நீலமிவாப்‘ர ப்3ருந்தம் || (37)

---

## ஸர்க்கம் 25

## ராமனுக்கும் ராக்ஷஸர்களுக்கும் யுத்தம்

---

அவஷ்டப்3த‘ த‘நும் ராமம் க்ருத்3த‘ம் ச ரிபுகா‘திநம் |
த3த3ர்ஶாஶ்ரம மாக3ம்ய க2ர: ஸஹ புரஸ்ஸரை: || (1)

கரனும் அவனுடைய ஸைன்யங்களும் அந்த ஆசிரமத்திற்கு வந்து வில்லும் கையுமாக நிற்கும் ராமமூர்த்தியையும் சத்துருக்களை நாசம் செய்ய விளங்கும் அவருடைய கோபாவேசத்தையும் கண்டார்கள். கரன் வெகு ஸுலபமாக அவரை ஜயிக்க நினைத்து, "அவனை நோக்கி ரதத்தைச்செலுத்து" என்று ஸாரதிக்குக்கட்டளையிட்டான். ரகுவீரன் தனியாக, வில்லை அசைத்துக்கொண்டு நிற்குமிடத்திற்கு ஸமீபத்தில் அந்த ரதத்தை ஸாரதி கொண்டு போய் நிறுத்தினான். உடனே அவனுடைய மந்திரிகளும் ஸைன்யங்களும் கோரமாக ஆரவாரம்செய்துகொண்டு அவனைச் சூழ்ந்திருக்க, நக்ஷத்திரங்களுக்கு நடுவில் அங்காரகனைப்போல் தோன்றினான். பிறகு பல பாணங்களால் ராகவனை உபத்திரவித்தான். ராக்ஷஸர்கள் கோபத்தால் மெய்மறந்து யமபாசத்தைப்போன்ற வில்லால் தங்களை யமலோகத்திற்கு இழுக்கும் ராமமூர்த்தியின்மேல் பெரிய கதாயுதங்களையும் பட்டயங்களையும் சூலங்களையும் ஈட்டிகளையும் கத்திகளையும் கண்ட்ர கோடாரிகளையும் கணக்கில்லாமல் பிரயோகித்தார்கள். மலைகளைப்போன்ற யானைகளின் மேலும் குதிரைகளின் மேலும் ரதங்களின் மேலும் இருந்துகொண்டு மஹா மேகங்கள் இடிமின்னல்களுடன் ஸூரியனை நோக்கி வருவதுபோல் ராமனை நாசம் செய்ய நினைத்து சரமாரி பொழிந்தார்கள். மழைத்துளிகள் மலையின் மேல், விழுந்து தெறிப்பதைப்போல் அவை ராமனை நெருங்கவில்லை. ராக்ஷஸர்கள் சுற்றிலும் நிற்கும்பொழுது ராமன், பிரமத கணங்களால் சூழப்பட்ட சிவபிரான்போல் காணப்பட்டார். ஆற்று வெள்ளத்தை ஸமுத்திரம் தடுப்பதுபோல் ராமன் கூர்மையான அம்புகளால் அவர்களுடைய சரமாரியைத் தடுத்து இருந்த இடம் தெரியாமல் அழித்தார். கொழுந்து விட்டெரியும் வஜ்ராயுதத்தால்

பிளக்கப்படும் பெரிய மலையைப்போல் அந்த ஆயுதங்களால் எல்லா அவயவங்களிலும் பிளக்கப்பட்டும் அவர் கொஞ்சம் கூட வருத்தமடையவில்லை. தேகமெங்கும் காயமடைந்து ரத்தம்பெருக, ஸந்தியா காலத்தில் மேகங்களால் சூழப்பட்ட ஸூரியனைப்போல் விளங்கும் ரகுநந்தனன் பல்லாயிரம் ராக்ஷஸர்களால் சூழப்பட்டிருப்பதைப் பார்த்து தேவ ரிஷி கணங்கள் கவலையடைந்தார்கள்.

பிறகு ராமன் கோபம் கொண்டு, கோதண்டத்தை வட்டமாக வளைத்துப் பல்லாயிரம் பாணங்களை எய்தார். (இறகுகளால் அலங்கரிக்கப்படாத அம்புகளே பாணங்கள்) அவை தடுக்கமுடியாதவை; தாங்க முடியாதவை; யமதண்டத்தைப்போல் ராக்ஷஸர்களின்மேல் விழுந்து அந்தப் பாபிகளின் உயிர்களைக் காலபாசத்தைப்போல் கட்டியிழுத்து யமலோகத்திற்குக் கொண்டுபோயின. அவர்களுடைய தேகங்களைப் பிளந்து ரத்தத்தால் பூசப்பட்டு ஆகாசத்தில் போய் நெருப்புக் கொழுந்துகளைப்போல் பிரகாசித்தன. அவை கோதண்டத்திலிருந்து கணக்கில்லாமல் கிளம்பி, நெருப்பு ஜ்வாலைகளைக் கக்கிக் கொண்டு, ராக்ஷஸர்களின் உயிரென்ற நெய்யால் வளர்க்கப்பட்டு, வில்லுகளையும் கொடிகளையும் கவசங்களையும் தலைகளையும், ஆபரணங்களால் அலங்கரிக்கப்பட்டு யானைத் துதிக்கைகளைப்போல் விளங்கும் புஜங்களையும், துடைகளையும், தங்க ஆபரணங்களால் அலங்கரிக்கப்பட்டு ரதங்களில் கட்டியிருக்கும் குதிரைகளையும், ஸாரதிகளையும், ரதங்களையும், யானைகளையும், யானைப்பாகர்களையும், குதிரைகளையும், குதிரைப்பாகர்களையும், காலாட்களையும், அதி சீக்கிரத்தில் யமலோகத்திற்கு அனுப்பின. நாளீகங்களாலும் நாராசங்களாலும் விகர்ணிகளாலும் சித்திரவதை செய்யப்பட்டு ராக்ஷஸ ஸைன்யம் பயங்கரமாகக் கத்திற்று. (நாளீகம்-முனையில் மாத்திரம் இரும்புள்ளது.நாராசம்-இரும்பாலேயே செய்யப்பட்டது. விகர்ணி-முனையில் வளைவுடன் வெளியில் இழுக்கும்பொழுது குடலைப் பிடுங்கிக் கொண்டுவரும் பாணங்கள்.) இப்படிக் கூர்மையான அம்புகளால் உயிர்நிலைகளில் அடிபட்டு அந்த ராக்ஷஸ ஸைன்யம் காய்ந்த காட்டில் தீப்பிடித்ததுபோல் தவித்தது,

பயங்கரமான பலசாலிகளான சில ராக்ஷஸவீரர்கள் ராமனுக்கு எதிரில் நின்று சூலம் கத்தி கண்ட்ர கோடாலி முதலிய பல ஆயுதங்களை அவர் மேல் எறிந்தார்கள். ரகுநாதன் அவைகளை அம்புகளால் துண்டித்து அவர்களுடைய தலைகளை அறுத்தார். அவர்கள் வில்லொடிந்து கவசம் பிளந்து, தலையறுந்து, கருடனுடைய இறக்கைகளின் வேகத்தால் மரங்கள் வேரற்று விழுவது போல் பூமியில் விழக்கண்டு மற்றவர்கள் பயந்து கரனிடத்திற்குப் போய்ச் சரணமடைந்தார்கள். அப்பொழுது தூஷணன் அவர்களை ஸமாதானம் செய்து திருப்பி, யமன் பரமசிவனை நோக்கி ஓடிவந்ததுபோல், ராமசந்திரனை நோக்கி ஓடிவந்தான். தூஷணனால் தைரியமடைந்து



பயமற்று அந்த ராக்ஷஸர்கள் பனை ஆச்சா முதலிய மரங்களையும் அம்புகளையும் சூலம் உலக்கை முதலிய ஆயுதங்களையும் எடுத்துக் கொண்டு ஓடிவந்து ராமன்மேல் மரங்களையும் பாறைகளையும் ஆயுதங்களையும் அம்புகளையும் பொழிந்தார்கள். தனியாக நின்ற ராமனுக்கும் கணக்கில்லாமல் அவரைச் சூழ்ந்து நின்ற ராக்ஷஸர்களுக்கும் நடந்த அந்த யுத்தம் பயத்தையும் ஆச்சரியத்தையும் உண்டாக்கிற்று. அவர்கள் கோபத்தால் நெருப்புப் பொறிகள் பறக்கும் கண்களுடன் நான்கு புறத்திலிருந்து ஆயுதங்களையும் அம்புகளையும் பிரயோகித்துக் கிட்ட நெருங்குவதைக் கண்டு ராமமூர்த்தி லோகங்கள் நடுங்கும்படி ஒரு ஸிம்ஹநாதம் செய்து அவர்களைக் கொல்ல நினைத்து, ஸூரியனைப்போல் ஜ்வலிக்கும் ஒரு கந்தர்வாஸ்திரத்தைத் தொடுத்தார்.

உடனே கோதண்ட மண்டலத்திலிருந்து பாணக்கூட்டங்கள் கணக்கில்லாமல் ஒரே காலத்தில் கிளம்பி திசைகளை மறைத்தன. ராக்ஷஸர்கள் அவைகளால் பிளக்கப்பட்டு, ராமன் பாணங்களை எடுப்பதையும் தொடுப்பதையும் காணமுடியவில்லை. அவை கிளம்புமிடத்திலிருந்து உண்டாகும் பிரகாசத்தால் ராமன் மாத்திரம் தோன்றினர். அவை வந்து விழுவதற்கும் உயிரைப் போக்குவதற்கும் பிணங்கள் கீழே விழுவதற்கும் கொஞ்சமாவது இடைவெளி காணப்படவில்லை. ஒரே காலத்தில் சகல ராக்ஷஸர்களும் அடிபட்டு உயிரற்றுப் பூமியில் விழுந்தார்கள். சிலர் காயமடைந்தார்கள். சிலர் இடிவிழுந்ததுபோல் பூமியில் விழுந்தார்கள். சிலர் குற்றுயிராக விழுந்தார்கள். சிலர் இரண்டாக வெட்டப் பட்டார்கள். சிலர் துண்டு துண்டாக வெட்டப்பட்டார்கள். சிலர் கிழிக்கப் பட்டார்கள். இப்படி அங்கங்கே பல இடங்களில் தலைப்பாகைகளுள்ள தலைகளும் வெறுந்தலைகளும் ஆபரணங்களால் அலங்கரிக்கப்பட்டவைகளும் துடைகளும் கால்களும் யானைகளும் குதிரைகளும் ரதங்கள் சாமரங்கள் குடைகள் விசிறிகள் கொடிகள் சூலங்கள் பட்டசங்கள் கத்திகள் ஈட்டிகள் கோடாலிகள் பாறைகள் அம்புகள் முதலியவைகளும் ராகவனுடைய சரமாரியால் கண்ட துண்டமாகி அந்தப் போர்க்களத்தில் பயங்கரமாகச் சிதறிக்கிடந்தன. ராமமூர்த்தியின் பாணத்தின் மஹிமையை வர்ணிக்கவும் முடியுமா?

சூர்ணிதாபி$^{4}$: ஶிலாபி$^{4}$ஶ்ச ஶரைஶ் சித்ரை ரநேகஶ: |
விச்சி$^{2}$ந்நை: ஸமரே பூ$^{4}$மி: விகீர்ணாபூ$^{4}$த் ப$^{4}$யங்கரா || (46)

## ஸர்க்கம் 26

## தூஷண வதம்

தூ$^{3}$ஷணஸ்து ஸ்வகம் ஸைந்யம் ஹந்யமாநம் நிரீக்ஷ்ய ஸ: |
ஸந்தி$^{3}$தே$^{3}$ஶ மஹாபா$^{3}$ஹு: பீ$^{4}$மவேகா$^{3}$ந் து$^{3}$ராஸதா$^{3}$ந் || (1)

இப்படித் தன் ஸைன்யம் மடிந்ததைப் பார்த்து தூஷணன், யுத்தத்தில் திரும்பாதவர்களும் மஹா வேகமுள்ளவர்களும் எதிர்க்க முடியாதவர்களுமான ஐயாயிரம் ராக்ஷஸர்களை அனுப்பினான். அவர்கள் சூலம் பட்டசம் கத்தி பாறை அம்பு மரம் முதலியவைகளை இடைவிடாமல் நான்கு புறங்களிலிருந்தும் ராமன்மேல் பொழிந்தார்கள். அதைக்கண்டு ராகவன் கூர்மையான பாணங்களால் அவைகளைத் தடுத்து, கொழுத்த விருஷபத்தைப் போல் மதத்தால் கண்களை மூடிக்கொண்டு கொஞ்சமும் லக்ஷ்யம் செய்யாமல், ஸகல ராக்ஷஸர்களையும் கொல்ல நினைத்து, கோபம் கொண்டு, கண்களிலிருந்து நெருப்புப் பொறி பறக்க, நான்கு புறங்களிலிருந்து குரூரமான பாணங்களைப் பொழிந்து, தூஷணனையும் அவனுடைய ராக்ஷஸர்களையும் சிதற அடித்தார். உடனே அவன் இடியைப்போன்ற பல அம்புகளால் ராமனைத் துளைக்க, ரகுநாதன் இவனுடன் எவ்வளவு நேரம் சண்டை செய்கிறதென்று, ஒரு பாணத்தால் அவனுடைய வில்லையும் நான்கு பாணங்களால் ரதத்தில் கட்டின நான்கு குதிரைகளையும், ஒரு அர்த்த சந்திர பாணத்தால் ஸாரதியின் தலையையும் அறுத்து, மூன்று பாணங்களால் தூஷணனுடைய மார்பில் அடித்தார். உடனே அவன் வில் இழந்து, குதிரைகள் இறந்து, ரதம் ஒடிந்து, ஸாரதியில்லாமல் கீழே குதித்து மலையைப்போல் பயங்கரமான ஒரு குண்டாந்தடியை எடுத்துக்கொண்டு ராமன்மேல் பாய்ந்தான். அது தங்கக்கட்டுகளால் அலங்கரிக்கப்பட்டுக் கூர்மையான இரும்பு முளைகள் பதிக்கப்பட்டு, சத்ருக்களுடைய ஹிருதயத்தின் மாம்ஸத்தால் பூசப்பட்டிருந்தது. தேவ ஸைன்யங்கள் அதைக் கண்டால் நடுங்குவார்கள். பகைவர்களின் பட்டணங்களையும் கோபுரங்களையும் தூளாக்கும். கால ஸர்ப்பத்தையும் வஜ்ரத்தையும் போல் பயங்கரமான அந்த ஆயுதத்தை எடுத்துக்கொண்டு ஓடிவரும் தூஷணனைப் பார்த்து இரண்டு பாணங்களால் அவனுடைய புஜங்களை வெட்டித் தள்ளினார். அவன் பெரிய இந்திரத்துவஜத்தைப்போலும் கொம்பொடிந்த மஹாகஜத்தைப்போலும் புஜங்கள் அறுந்து உடனே பூமியில் விழுந்து இறந்தான்.

ஸகல பிராணிகளும் ராமனைக் கொண்டாடினார்கள். இதற்குள் மஹாகபாலன் பெரிய சூலத்தையும் ஸ்தூலாக்ஷன் பட்டயத்தையும் பிரமாதி கோடாலியையும் தூக்கிக்கொண்டு கோபாவேசத்துடன் காலபாசத்தால் கட்டியிழுக்கப்பட்டவர்களைப்போல் ராமன் மேல் பாய்ந்தார்கள். ராகவன் சிரேஷ்டமான அதிதிகளை வரவேற்பது போல் அவர்களை நோக்கிச் சென்று கூரான அம்புகளால் மஹாகபாலனுடைய தலைகளை அறுத்தார். பல பாணங்களால் பிரமாதியைத் துளைத்து, விசாலமான கிளைகளுள்ள பெரிய மரத்தைப் போல் அவனை அடித்துத்தள்ளினார். ஸ்தூலாக்ஷனுடைய கண்களை அம்புகளால் துளைத்தார். தூஷணனுடன் வந்த ஐயாயிரம் ராக்ஷஸர்களை ஐயாயிரம் பாணங்களால் யமலோகத்திற்கு அனுப்பினார்.

இப்படி தூஷணனும் அவனுடன் போனவர்களும் மடிந்ததைக் கண்டு கரன் கோபம்கொண்டு, ஸேனைத்தலைவர்களைப் பார்த்து "தூஷணனும் இறந்தான். அவனுடைய ஸைன்யமும் ராமனால் நாசம் செய்யப்பட்டன. ஆகையால் நீங்கள் பெரிய ஸைன்யத்துடன் போய் பல ஆயுதங்களால் அந்த அல்ப மனுஷ்யனைக் கொல்லுங்கள்" என்று ஆக்ஞாபித்து, ராமனை நோக்கி ஓடி வந்தான். பிறகு சியேனகாமி பிருதுக்ரீவன் யக்ஞசத்துரு விஹங்கமன் துர்ஜயன் கரவீராக்ஷன் பருஷன் காலகார்முகன் மேகமாலி மஹாமாலி ஸர்ப்பாஸ்யன் ருதிரானனென்ற பன்னிரண்டு ஸேனைத் தலைவர்கள் ஸைன்யங்களுடன் ராமனை எதிர்த்துச் சரமாரி பொழிந்தார்கள். புகையால் சூழப்பட்டு நெருப்புக்கொழுந்துகளை கக்கும் தங்கக் கட்டுகளுள்ள ராமனது உத்தமமான பாணங்கள், வஜ்ராயுதம் பெரியமரங்களைப் பிளப்பதுபோல் அசுரர்களைப் பிளந்தன. அவர்கள் கவசம் பிளந்து வில்லொடிந்து கிரீடம் சிதறித் தலைமயிர் விரிந்து ரத்தம் பெருகியோட, யாகமேடை தர்ப்பைகளால் பரப்பப்படுவதுபோல் பூமியில் எங்கும் விழுந்தார்கள். அந்த விசாலமான வனம் ஒரு க்ஷணத்தில் ஓசை யில்லாமல் ராக்ஷஸப் பிணங்களால் நிறைந்து ரத்தவெள்ளமெடுத்து மஹா நரகத்தைப் போல் தோன்றியது.

தனியாக நிற்கும் ராமனை மஹாபயங்கரமான பதினாலாயிரம் ராக்ஷஸர்கள் பல வாகனங்களில் ஏறிக்கொண்டு பல ஆயுதங்களுடன் வில்லும் கையுமாக எதிர்த்துவந்தார்கள். அவர்களை ஒரு மனுஷ்யன் பூமியில் நின்றுகொண்டு தன் பாணங்களால் ஒரு நொடியில் யமலோகத்திற்கு அனுப்பினான். அந்த மஹாஸைன்யத்தின் தலைவர்களில் கரனும் திரிசிரஸும் மிகுந்தார்கள். ராக்ஷஸகுல காலனான ராமனுக்கோ அபாயமில்லை. மஹா பராக்கிரமசாலிகளான மற்றவர்கள் ராமனுடைய தேஜஸால் எரிக்கப்பட்டார்கள். இப்படித் தன் பெரும் ஸைன்யத்தை அந்த மஹாவீரன் வெகு சீக்கிரத்தில் நாசம் செய்ததைப் பார்த்துக் கரன், இனிமேல் நாம் அலக்ஷ்யமாக இருக்கக் கூடாதென்று நிச்சயித்து, இந்திரன் வஜ்ராயுதத்துடன் ஓடி வருவதுபோல் தன் ரதத்தை ராமன் இருக்கும் இடத்திற்கு ஓட்டினான்.

ததஸ்து தத்$^{3}$பீ$^{4}$மப$^{3}$லம் மஹாஹவே
ஸமீக்ஷ்ய ராமேண ஹதம் ப$^{3}$லீயஸா |
ரதே$^{2}$ந ராமம் மஹதா க$^{2}$ரஸ் தத:
ஸமாஸஸாதே$^{3}$ந்த்$^{3}$ர இவோத்$^{3}$யதாஶநி: (38)

## ஸர்க்கம் 27

# திரிசிரஸின் வதம்

*க[3]ரம் து ராமாபி[4]முக[2]ம் ப்ரயாந்தம் வாஹிநீபதிம் |*
*ராக்ஷஸஸ் த்ரிஶிரா நாம ஸந்நிபத்யேத[3] மப்[3]ரவீத் ‖ (1)*

அதைக்கண்டு திரிசிரஸென்ற சேனாபதி ஓடிவந்து வணங்கி "ஸ்வாமி! இந்தப் பிடிவாதம் வேண்டாம். நானிருக்கும்பொழுது தங்களுக்குக் கவலையென்ன? என்னை அனுப்புங்கள். இந்த ராமனை ஒரு க்ஷணத்தில் ஹதம் செய்கிறேன். நான் ராமனுக்கு மிருத்யுவா? அல்லது அவன் எனக்கு மிருத்யுவா என்று தீரும் வரையில் நான் திரும்பேன். என் ஆயுதத்தைத் தொட்டு இப்படி பிரமாணம் செய்கிறேன். சற்று நேரம் சும்மா இருந்து மத்தியஸ்தராக வேடிக்கை பாருங்கள். ராமன் இறந்தால் ஸந்தோஷமாக ஜனஸ்தானத்திற்குத் திரும்பிப் போங்கள். நான் இறந்தால் ராமனுடன் யுத்தம் செய்யுங்கள்" என்று, காலம் குறுகிவிட்டதால் தன் மரணத்தைத் தானே வேண்டினான் திரிசிரஸ். "அப்படியே யுத்தம் செய்து ஜயித்து வா" என்று கரன் அவனை அனுப்பினான். அவன் மூன்று சிகரங்களுள்ள மலையைப்போல் தன் மஹாரதத்தில் பூமி நடுங்கும்படி ஓடி வருவதையும் மஹா மேகங்களைப்போலும் ஜலத்தால் நனைந்த பேரியைப்போலும் கர்ஜிப்பதையும் சரமாரி பொழிவதையும் கண்டு ராமன் அதைத் தடுத்தார்.

பிறகு ராமனுக்கும் திரிசிரஸிற்கும் மிகவும் கோரமான யுத்தம் நடந்தது. இருவரும் பலசாலிகள்; மஹாகஜத்தையும் ஸிம்ஹத்தையும் போன்றவர்கள்; திரிசிரஸ் ராமனை மூன்று பாணங்களால் நெற்றியில் அடித்தான். அவர் மஹாகோபம்கொண்டு, "ராக்ஷஸ வீரனே உன் பலம் இவ்வளவுதானா? புஷ்பங்களைப்போன்ற மூன்று அம்புகளால் எனக்கு அர்ச்சனை செய்தாயோ? இதோ நான் விடும் பாணங்களைப் பார்" என்று அச்சுறுத்தி, காலஸர்ப்பங்களைப் போன்ற பதினான்கு பாணங்களால் அவனுடைய மார்பைத் துளைத்து, நான்கு பாணங்களால் நான்கு குதிரைகளையும் எட்டு பாணங்களால் ஸாரதியையும் ஒரு பாணத்தால் கொடியையும் அழித்தார். உடனே திரிசிரஸ் ரதத்திலிருந்து குதித்தான். ராமன் மறுபடியும் கூரான அம்புகளால் அவனுடைய மார்பைத் துளைத்தார்; அவன் மதிமயங்கி நின்றான். மூன்று பாணங்களால் அவன் தலைகளை அறுத்துத் தள்ளினார். அவன் ரத்தத்தைக் கக்கிக்கொண்டு உயிரற்றுப் பூமியில் விழுந்தான். அவனுடன் வந்த மற்ற ராக்ஷஸர்கள் புலியைக் கண்ட மான்களைப்போல் இருந்த இடம் தெரியாமல் ஓடினார்கள். அதைப் பார்த்து கரன் கோபித்து அவர்களைத் திருப்பி, சந்திரன்மேல் ராகு பாய்வதுபோல் ராமனை நோக்கி ஓடிவந்தான்.

*தாந் க[2]ரோ த்[3]ரவதோ த்[3]ருஷ்ட்வா நிவர்த்ய ருஷித: ஸ்வயம் |*
*ராமமேவாபி[4] து[3]த்[3]ராவ ராஹுஶ் சந்த்ரமஸம் யத[2]ா ‖ (20)*



## ஸர்க்கம் 28

# கர ராம யுத்தம்

*நிஹதம் தூ[3]ஷணம் த்[3]ருஷ்ட்வா ரணே த்ரிஶிரஸா ஸஹ |*
*க[2]ரஸ்யாப்யப[4]வத் த்ராஸோ த்[3]ருஷ்ட்வா ராமஸ்ய விக்ரமம் ‖ (1)*

பராக்கிரமசாலியான ரகுவீரன் தூஷணனையும் திரிசிரஸையும் ராக்ஷஸ ஸைன்யங்களையும் அழித்ததைப் பார்த்து கரனுக்கும் பயமுண்டாயிற்று. தன்னுடன் வந்த பதினாலாயிரம் ராக்ஷஸர்களில் சிலரே மிகுந்திருக்கக் கண்டான்; கர்வம் அழிந்தது. நமுசி என்ற அஸுரன் இந்திரனை எதிர்த்ததுபோல் ராமனை எதிர்த்து, மஹா விஷமுள்ள காலஸர்ப்பங்களைப்போன்ற நாராச பாணங்களால் ராமனை அடித்தான். யுத்தசாஸ்திரத்தில் நிபுணனானதால் அடிக்கடி நாணோசை செய்து பல அஸ்திரங்களைப் பிரயோகித்து ஸகல திசைகளையும் மறைத்து விசித்திரமாக யுத்தம் செய்தான். ராமன் உடனே நெருப்புப் பொறிகளைக் கக்கும் பாணங்களைக் கோதண்டத்தில் பூட்டி ஆகாசத்தை மறைத்தார். இப்படி ஒருவரையொருவர் கொல்ல நினைத்து மழைகாலத்தில் மேகங்கள் பொழிவதுபோல் கூரான பாணங்களால் ஆகாசம் பூமி தெரியாமல் மறைத்தார்கள்; சூரியன் பிரகாசிக்கவில்லை. பிறகு நாளீகம் நாராசம் விகர்ணி முதலிய பாணங்களால், மஹா கஜத்தை மாவெட்டிகள் துளைப்பதுபோல், கரன் ராமனை அடித்தான். கையில் பாசத்துடன் பிராணிகளைக் கொல்ல வரும் யமனைப்போல், வில்லெடுத்து ரதத்தில் நிற்கும் அந்த ராக்ஷஸனைப் பார்த்த ஜந்துக்கள் நடுங்கின. எல்லையற்ற பராக்கிரமத்தையுடைய ராமன் ராக்ஷஸஸைன்யம் முழுவதையும் கொல்ல நிச்சயித்து வில்லின்மேல் வேடிக்கையாகச் சாய்ந்து நிற்பதைக் கண்டு, அவர் பலம் குறைந்து களைத்திருக்கிறாரென்று நினைத்து, மதம்கொண்ட ஸிம்ஹத்தைப்போல் கர்ஜித்து ஓடிவந்தான். அவனை ராமன் சிறிதும் லக்ஷ்யம் செய்யவில்லை, விளக்குவெட்டுப் பூச்சி நெருப்பில் விழுவதைப்போல் கரன் ராமனைக் கிட்டி, அவர் பிடித்திருந்த கோதண்டத்தைக் கைபிடிக்கு ஸமீபத்தில் துண்டித்து, தன் ஸாமர்த்தியத்தைக் காட்டினான். மறுபடியும் இடிபோன்ற ஏழு பாணங்களால் ராமனுடைய கவசத்தை அறுத்துத் தள்ளினான். அப்பொழுது ராமன் கவசமின்றி கோடிஸூரியனைப்போல் விளங்கினார். பிறகு பல்லாயிரக்கணக்கான பாணங்களால் ராமனை எல்லா அங்கங்களிலும் துளைத்து ஸிம்ஹநாதம் செய்தான். ராமன் அப்பொழுது புகையில்லாத நெருப்பு ஜ்வாலையைப்போல் பிரகாசித்து அவனைக் கொல்ல நினைத்து, அதற்காக அகஸ்திய மஹரிஷியால் கொடுக்கப்பட்ட வில்லை எடுத்து நாணேற்றி வளைத்து, நிமிர்ந்த கணுக்களுள்ள பல பாணங்களைத் தொடுத்து, தங்கத்தாலும் ரத்தினங்களாலும் அலங்கரிக்கப்பட்டு மலைச்சிகரம்போல் விளங்கும் கரனுடைய கொடியை அறுத்துத்

தள்ளினர். ஸூரியன் தேவதைகளின் சாபத்தால் பூமியில் விழுவது போல், அது பெரிய ஓசையுடன் பூமியில் விழுந்தது. உடனே கரன் கோபவெறிகொண்டு, மதயானையை எறிவல்லயங்கள் துளைப்பது போல் நான்கு சிரேஷ்டமான பாணங்களால் ராமனை உயிர்நிலைகளில் அடித்தான். அவருடைய எல்லா அவயவங்களிலிருந்தும் ரத்தம் பெருகிற்று. பிறகு ராமன் அடங்காத கோபம்கொண்டு கோதண்டத்தை எடுத்து, தலையில் ஒரு பாணத்தாலும் கைகளில் இரண்டு பாணங்களாலும் மார்பில் மூன்று அர்த்த சந்திரபாணங்களாலும் கரனை அடித்தார். அவனைக் கொல்லும் காலம் ஸமீபித்தபடியால், உடனே பதின்மூன்று நாராசங்களை எடுத்து, ஒன்றால் நுகத்தடியையும் நான்கால் குதிரைகளையும் ஒன்றால் ஸாரதியையும் மூன்றால் ஏர்க்காலையும் இரண்டால் இருசையும் ஒன்றால் வில்லையும் துண்டித்து, பிறகு ஒருபாணத்தால் கரனைத் துளைத்து ஸிம்ஹநாதம் செய்தார். கரன் வில்லொடிய, குதிரைகள் இறக்க, ஸாரதி மடிய, ரதத்திலிருந்து குதித்து, மலைச்சிகரத்தைப்போன்ற ஒரு பெரும் கதாயுதத்துடன் ராமன்மேல் பாய்ந்தான். அப்பொழுது ஆகாசத்தில் விமானங்களிலிருந்த தேவர்களும் மஹரிஷிகளும் ஸந்தோஷமடைந்து ராமனைக் கைகூப்பி வணங்கிக் கொண்டாடினர்கள்.

தத் கர்ம ராமஸ்ய மஹாரத2ஸ்ய |
ஸமேத்ய தே3வாஶ்ச மஹர்ஷயஶ் ச |
அபூஜயந் ப்ராஞ்ஜலய: ப்ரஹ்ருஷ்டா:
ததா3 விமாநாக்3ரக3தா: ஸமேதா: ॥ (33)

---

## ஸர்க்கம் 29

## கர ராம ஸம்வாதம்

க2ரம் து விரத2ம் ராமோ க3தா3பாணி மவஸ்தி2தம் |
ம்ருது3பூர்வம் மஹாதேஜா: பருஷம் வாக்ய மப்3ரவீத் ॥ (1)

இப்படி ரதமிழந்து கதையும் கையுமாக நிற்கும் கரனைப் பார்த்து ராமன், "ஐயோ! ஸகல உபாயங்களையும் செய்து பார்த்துப் பயனில்லாமல் போனபிறகும் இவனுக்கு நல்ல புத்தி வரவில்லையே? இவனை பரீக்ஷித்துப் பார்ப்போம்" என்று எண்ணி, நியாயமான சில வார்த்தைகளைச் சொல்ல ஆரம்பித்தார். "நீ ஸகல ஐசுவரியத்தையும் அனுபவித்துக்கொண்டு ஸகல ஸைன்யங்களால் சூழப்பட்டிருக்கையில் எல்லோரும் வெறுக்கும் கொடிய செயல்களைச் செய்தாய். ஒருவன் மூவுலகத்திற்கும் அரசனானாலும் கொடியவனாக, பாபியாக, பிராணிகளை நடுங்கச் செய்கிறவனாக இருந்தால் ஒரு நிமிஷம்கூடப் பிழைத்திருக்கமாட்டான். பாம்பைக் கண்ட இடத்தில் அடிப்பதுபோல், லோகவிரோதமான செயல்களைச் செய்கிறவர்களை ஜனங்கள் கொல்வார்கள். அடையாத பொருளை அடையவேண்டியாவது, அடைந்த பொருளை இழக்க மனமில்லாமலாவது பாபத்தைச் செய்து பச்சாத்தாபமடையாமல் எவன் இருக்கிறானோ, அவன், தனக்கு மரணம் வருமென்று தெரியாமல் ஆலங்கட்டியைத் தின்று இறக்கும் செய்யானைப்போல் தன் பாபங்களின் பயனை அனுபவிக்கிறான்; தன் ஐசுவரியத்தை இழக்கிறான். தண்டகாரண்யத்தில் வஸிக்கும் தர்மாத்மாக்களான ரிஷிகளைக் கொன்ற நீ நல்ல கதி அடைவாயா? பாபச்செயல்களை மாத்திரம்செய்கிறவர்கள் ஜன்மாந்தரங்களில் அவைகளின் பயனை அனுபவிக்கிறார்கள். கொடிய செயல்களைச் செய்கிறவர்களோ முன்பிறப்பில் செய்த ஸ்வல்ப புண்யத்தால் ஐசுவரியத்தை அடைந்தும் அதை நெடுங்காலம் அனுபவிக்கமாட்டார்கள்; அதிசீக்கிரமாக அழிவார்கள். மரங்கள் அந்தந்த ருதுக்களில் புஷ்பங்களையும் பழங்களையும் கொடுப்பதுபோல், பாபிகள் பயனை அனுபவிக்கும் காலம் வரும்பொழுது கர்மபலன்களை அடைகிறார்கள். விஷம் கலந்த அன்னத்தைத் தின்கிறவன் விரைவில் இறப்பதைப்போல், கொடிய பாபங்கள் விரைவில் பலனைக் கொடுக்கின்றன. லோகத்தில் பிராணிகளுக்குத் தொந்திரவு செய்து ஸகல ஜந்துக்களையும் ஹிம்ஸிக்கும் பாபிகளையும் அழிப்பதற்கே சக்கரவர்த்தி என்னை இங்கே அனுப்பியிருக்கிறார். பாம்புப் புற்றுகளை மஹாநாகங்கள் துளைப்பது போல், என் கோதண்டத்திலிருந்து புறப்படும் அம்புகள் உன் மார்பைப் பிளந்து உயிரைக் கொள்ளைகொள்ளும். இந்த தண்டகாரண்யத்தில் உன்னால் கொல்லப்பட்ட தர்மாத்மாக்கள் போன வழியில் நீயும் உன் ஸைன்யங்களும் என்னால் அனுப்பப்படுவீர்கள். உன்னால் முன்பு ஹிம்ஸிக்கப்பட்ட மஹரிஷிகள் இதோ விமானங்களில் வந்திருக்கிறார்கள். அவர்கள் பார்த்துக்கொண்டிருக்கையில் உன்னை என் பாணங்களால் பிளந்து நரகவேதனைக்கு ஸமமான ஹிம்ஸையை அனுபவிக்கச் செய்கிறேன். உனக்குத் தெரிந்த உபாயங்களைச் செய்; கூடியவரையில் யுத்தம்செய். பனங்காய்களை அறுத்துத் தள்ளுவதுபோல், உன் தலையை விளையாட்டாக அறுத்துத் தள்ளுகிறேன்" என்றார்.



இப்படி ராமன் கொடிய வார்த்தைகளால் தன்னைத் துளைக்க, கரன் கோபத்தால் கண் சிவந்து மெய்மறந்து இடிபோல் சிரித்து, "அடே மனிதப்பதரே! ஸாமான்ய ராக்ஷஸர்களை யுத்தத்தில் கொன்றதால் உனக்குப் பெருமையோ? கையாலாகாத உன்னை நீயே மெச்சிக்கொள்வது வெகு அழகு. பலபராக்கிரமமுள்ள நரச்சிரேஷ்டர்கள் தங்கள் ஆண்மையால் கர்வம்கொண்டு தங்களை மெச்சிக் கொள்வார்களா? உன்னைப்போல் அல்ப ஸ்வபாவமுள்ளவர்களும் தைரியமற்றவர்களும் க்ஷத்திரியர்களில் அதமர்களுமே வீண் பெருமை பேசிக்கொள்வார்கள். எந்த மஹா வீரனாவது யுத்த ஸமயத்தில் மரணம் அடுத்து நிற்கும் பொழுது

தான் பிறந்த உத்தம குலத்தைப்பற்றிப் பெருமை பேசிக்கொள்வானா? புல்லில் பிடித்த நெருப்பு தங்கத்தைப்போல் காணப்படுமேயன்றி எதையாவது சுடமுடியுமா? அப்படியே வீண் பெருமை பேசிக்கொள்ளுகிறவன் அந்த ஸமயத்தில் வீரனைப் போல் காணப்பட்டாலும் அவனுடைய அல்ப ஸ்வபாவம் உடனே வெளிப்படாதா? அவனுடைய பெருமையான வார்த்தைகளுக்குத் தகுந்த காரியத்தைச் செய்ய முடியுமா? நீயும் அவர்களைப் போன்றவன்; பல வகையான தாதுக்களால் நிறைந்து ஒருவராலும் அசைக்கமுடியாத மலையைப்போல் கதாயுதத்தைக் கையிலேந்தி நிற்கும் என்னைப் பார்க்கவில்லையோ? உன் பிராணனை வாங்க நான் போதாதோ? மூவுலகிலுமுள்ள பிராணிகளின் உயிரைக் கொள்ளை கொள்ள காலபாசத்துடன் வரும் யமனைப்போல் உன் உயிரைக் கொள்ளைகொள்ளமாட்டேனோ! நீ ஒரு பொருட்டா! தன்னைப் புகழும் பேதையான உன்னை இன்னும் பலவிதமாக நிந்திக்க வேண்டும். ஆனால், ஸூரியன் அஸ்தமிக்கும் வேளையாயிற்று, யுத்தத்தை நிறுத்தவேண்டும். ஆகையால் அதிகமாகச் சொல்லவில்லை. ராத்திரியில் ராக்ஷஸர்களுக்குப் பலம் அதிகம். மனிதர்களுக்குப் பலம் குறைவு. அப்பொழுது உன்னை எளிதாகக் கொல்லலாம். அப்படிச் செய்தால் என் கீர்த்திக்குக் குறைவு வருமென்று விட்டேன். இன்று உன்னைக் கொன்று இதோ இறந்து கிடக்கும் ராக்ஷஸர்களுக்காகப் பழிதீர்ப்பேன். அவர்களுடைய பந்துக்களின் கண்ணீரைத் துடைப்பேன்" என்று,கையிலிருந்த கதையைக் கரகரவென்று சுழற்றி ராமனைக் கொல்ல உத்தேசித்து எறிந்தான். அந்த உத்தமமான ஆயுதம் கொழுந்து விட்டெரியும் நெருப்பைப்போல் ஜ்வலித்துக் கொண்டு பக்கத்திலிருந்த மரங்களையும் செடிகளையும் எரித்துச் சாம்பலாக்கி இடிபோல் ஆகாசத்திலிருந்து வரக்கண்ட ராமன் அதைப் பலபாணங்களால் துண்டித்தார். காலபாசம் போன்ற அந்தக் கதை ராமபாணங்களால் பிளக்கப்பட்டு, மந்திரத்தாலும் ஔஷத பலத்தாலும் கட்டப்பட்டு உயிரிழந்த மஹா ஸர்ப்பத்தைப் போல், தரையில் விழுந்தது.

ஸா விகீர்ணா ஶரைர் ப4க்3னா பபாத த4ரணீதலே |
க3தா3 மந்த்ரௌஷதி4 ப3லைர் வ்யாலீவ விநிபாதிதா || (28)

---

## ஸர்க்கம் 30
## கர வதம்

---

பி4த்வா து தாம் க3தா3ம் பா3ணை ராக4வோ த4ர்மவத்ஸல: |
ஸ்மயமாந: க2ரம் வாக்யம் ஸம்ரப்3த4 மித3 மப்3ரவீத் || (1)

இப்படிக் கரன் ஆயுதமில்லாமல் நிற்க, அவனைக் கொல்வது அதர்மமென்றெண்ணி நிற்கும் அவனைப் பார்த்து, புத்தி மயங்கி நிற்கும் அவனை ராமன் புன்சிரிப்புடன், "ராக்ஷஸப்பதரே! உன் பலம் இவ்வளவுதானா? கையாலாகாதவனுக்கு வீண் பெருமை என்ன? இதோ பார். உன் கதையைஅம்புகளால் பிளந்து பூமியில் தள்ளிவிட்டேன். நீபேச்சால் பிழைக்கிறவன்; காரியத்தில்ஒன்றுமில்லை. என்றால் கொல்லப்பட்ட ராக்ஷஸர்களுடைய பந்துக்கள் கண்களில் சொரியும் கண்ணீரைத் துடைப்பதாக பிரதிக்ஞைசெய்தாயே. அதுவும் வீணாயிற்றல்லவா? கருடன் அமிருதத்தை அபஹரித்ததுபோல், அல்பனும் வாயாடியுமான உன் பிராணனை அபஹரித்து, நுரையோடு குமிழியெடுத்து உன் உடம்பிலிருந்து பெருகும் ரத்தத்தை பூமி குடிக்கும்படி செய்கிறேன். தேகமெங்கும் புழுதிபடிந்து கைகளைவிரித்துக்கொண்டு, பிரியமான பார்யையை அணைத்துக்கொள்வதுபோல், பூமியைத் தழுவிக்கொண்டு கிடப்பாய். நீங்காத துக்கத்தில் நீ மயங்கிக் கிடக்கையில், இதுவரையில் கதியற்ற ரிஷிகள் இந்தத் தண்டகாரண்யத்தில் பயமின்றி வஸிப்பார்கள். என் அம்புகளால் ராக்ஷஸ ஸைன்யங்களை வேரறுத்து, முனிவர்கள் பயமில்லாமல் ஜனஸ்தானத்தில் வஸிக்கும்படி செய்கிறேன். இதுவரையில் பிறரைப் பயமுறுத்திக் கொண்டிருந்த உங்களுடைய ஸ்த்ரீகள் பந்துக்களை இழந்து கண்ணீர் பெருகப் புலம்பிக்கொண்டு பயந்து ஓடிப்போவார்கள். உன் பாரியைகளும் இதுவரையில் துக்கமென்பதை அறியாமல், உன்னைப்போல் கெட்ட நடத்தையுள்ளவர்களாகப் பிறரை வருத்திக் கொண்டிருந்தார்கள். இப்பொழுது துக்கம் இப்படியிருக்குமென்று நன்றாக அறிந்து,லோகத்திலுள்ளவர்கள் அனுபவிக்கும் ஸுகம் யாதொன்றுமின்றித் தவிப்பார்கள். கொடியவனே, அல்பனே, நீசனே, ரிஷிகளின் சத்துருவே! ரிஷிகள் உனக்குப் பயந்தல்லவா நடுங்கிக்கொண்டு அக்னியில் ஹோமம் செய்துவருகிறார்கள்" என்ற வார்த்தைகளாகிற பாணங்களால் அவனைத் துளைத்தார்.

கரன் அதைப் பொறுக்காமல் கோபத்தால் இடிபோல் சிரித்து "உனக்குக் கொழுப்பேறிக் கர்வம் தலைகொண்டிருக்கிறது. பயம் உன் பிடரியில் உட்கார்ந்திருக்கையில் நீ அதை அறியவில்லை. மரணம் கிட்டியதால் விவேகமின்றிப் பிதற்றுகிறாய். காலபாசம் கழுத்தில் விழுந்தவுடன் ஜனங்கள் இந்திரிய ஸ்வாதீனமற்று மனம் கலங்கிக் கார்யாகாரியங்களை அறிவதில்லை" என்று கூறி ராமனை அதட்டிப் புருவங்களை நெறித்து, பக்கத்திலிருந்த பெரிய ஆச்சா மரத்தை வேருடன் பிடுங்கி உதட்டைக் கடித்துக்கொண்டு "நீ செத்தாய்" என்று ராமன்மேல் எறிந்தான்.

அந்தப் பெரிய விருக்ஷத்தை ராமன் பாணங்களால் பிளந்து "இவனுடன் எவ்வளவு நேரம் யுத்தம் செய்கிறது" என்று அலுத்து அவனைக் கொல்ல நிச்சயித்தார். "யாதொரு கதியுமில்லாதவனுக்குக் கொஞ்சமாவது துக்கம் பச்சாத்தாபம் நல்ல புத்தி ஒன்றாவது தோன்றவில்லையே" என்று கடுங்கோபம் கொண்டு, கண்கள் சிவந்து,

தேகம் வியர்த்து. பல பாணங்களால் அவனுடைய உடலைப் பிளந்தார். பெரிய மலையிலிருந்து நீர்த்தாரைகள் பெருகுவதுபோல் ரத்த வெள்ளம் ஓடிற்று. பிறகு அவன் கொஞ்ச நேரம் திகைத்து நின்று ரத்தவெறியால் கண்தெரியாமல் ராமனை நோக்கி ஓடி வந்தான். வில்லை வளைத்துப் பாணங்களைத் தொடுக்க முடியாமல் அவ்வளவு ஸமீபத்தில் அவன் நெருங்க, ராமன் அதிவேகமாகக் கொஞ்சம் பின் வாங்கினர். மேலும் அவனுடைய உடலிலிருந்து பெருகும் ரத்தப்பிரவாஹம் ராமன்மேல் அடித்ததாலும் பாணங்களை பிரயோகிக்க இடமில்லை.

பிறகு அவனுடைய உயிரைப்போக்க நிச்சயித்து, முனபு இந்திரன் தனக்குக் கொடுத்த பாணத்தை பிரயோகித்தார்*. அது நெருப்பைப்போலும் பிரஹ்மதண்டத்தைப் போலும் பிரகாசித்து, பேரிடிபோல் இரைந்துக்கொண்டு கரனுடைய மார்பில் விழுந்தது. அவன் அந்தப் பாணுக்னியால் கொளுத்தப்பட்டுத் தரையில் விழுந்தான். காவேரியும் ஸமுத்திரமும் சேருமிடத்திற்கு ஸமீபத்திலுள்ள சுவேதாரண்ய க்ஷேத்திரத்தில் முன்பு ருத்திரனுடைய நேத்ராக்னியால் யமன் கொளுத்தப்பட்டது போலிருந்தது அது. வஜ்ரத்தால் அடிபட்ட விருத்ராஸுரனைப்போல், குறிதவறுத ராமபாணத்தால் அவன் உயிரிழந்தான். நுரையால் அடிபட்ட நமுசியைப்போல் விளையாட்டாகக் கொல்லப்பட்டான். மஹாகர்வம் கொண்டு இந்திரனை எதிர்த்த வலாஸுரனைப்போல் மாண்டான்.

பிறகு அங்கே கூடியிருந்த ராஜரிஷிகளும் பிரஹ்மரிஷிகளும் ஸந்தோஷமடைந்து ராமனைப் பூஜித்துக்கொண்டாடினர்கள். "ரகுகுலோத்தம! சரபங்கருடைய ஆசிரமத்திற்கு இந்திரன் வந்தது இதற்காகவே. ஜனஸ்தானத்திற்கு ஸமீபத்திலிருக்கும்படி சரபங்கர் உன்னை ஸுதீக்ஷ்ணருடைய ஆசிரமத்திற்கு அனுப்பினர். அவர் அகஸ்தியருடைய ஆசிரமத்திற்கு அனுப்பினர். அவர் பஞ்சவடிக்கு அனுப்பினர். ரிஷிகள் தங்களுடைய ஆசிரமங்களுக்கு உன்னை வருவித்ததும் கரனுடைய ஸமீபந்தில் கொண்டு போவதற்கே. அகஸ்தியரிடத்தில் ஆயுதங்களைக் கொடுத்ததும் இதற்கே. இதை ரிஷிகளுக்குச் சொல்லி ஏற்பாடு செய்யவே இந்திரன் தண்டகாரண்யத்திற்கு வந்தான். நாங்கள் உன்னை பிரார்த்தித்த காரியத்தை நிறைவேற்றினய். இந்தக் கொடிய பாபிகளை அழித்தாய். இனிமேல் ரிஷிகள் இந்த வனத்தில் பயமின்றி தர்மத்தை அனுஷ்டிப்பார்கள்'' என்று சொல்லிக் கொண்டிருக்கையில் தேவகணங்கள் அங்கே வந்து தேவதுந்துபிகளை முழக்கி ராமன் மேல் மலர் மாரி பொழிந்து,''மூன்று நாழிகைக்குள் பயங்கரமான பதினலாயிரம் ராக்ஷஸ வீரர்களையும் கரன் தூஷணன் திரிசிரஸ் முதலிய மஹாசூரர்களையும் தனியாக வாகனமின்றித்



ஸ தம் த$^{3}$த்தம் மக$^{4}$வதா ஸுரராஜேந தீ$^{4}$மதா |
ஸந்த$^{3}$தே$^{4}$ சாபி த$^{4}$ர்மாத்மா முமோச சக$^{2}$ரம் ப்ரதி ‖ —ஆ. 30 ஸ - 25 சு.

பிறகு அவனுடைய உயிரைப் போக்க நிச்சயித்து, முன்பு இந்திரன் தனக்குக் கொடுத்த பாணத்தை பிரயோகித்தார். (பக்கம் 74 பார்க்க)

Notes : This Blank Page has also to be counted as a another page Number.

It is intentionally left blank after Picture Sketches.!

Released by Maran's Dog ,Toronto, Canada



தரையில் நின்று கொண்டு கூர்மையான பாணங்களால் நாசம் செய்த ராமமூர்த்தியின் மஹிமையை யார் அறிவார்? என்ன வீரியம்! என்ன ஸாமர்த்தியம்! சக்கரபாணியான மஹாவிஷ்ணுவிடத்தில் அல்லவா இதைக் கண்டோம்" என்று கொண்டாடி அவர்கள் தம் தம் இருப்பிடம் சென்றார்கள்.

இதற்குள் லக்ஷ்மணன் ஸீதையுடன் மலைக் குகையிலிருந்து வெளியில் வந்து ராமனுடைய பராக்கிரமத்தை பார்த்து ஸந்தோஷித்தார். பிறகு ராமசந்திரன் ஜயசாலியாக மஹரிஷிகள் பூஜிக்க லக்ஷ்மணனால் உபசரிக்கப்பட்டு ஆசிரமத்தில் புகுந்தார்.

பதினாலாயிரம் கோரராக்ஷஸர்களுடன் ஒருவர் எப்படிக் கோர யுத்தம் செய்வாரென்று ஸீதை கவலை கொண்டாள். அவர்களை ராமன் ஒரு முகூர்த்தத்தில் அழித்ததைப் பார்த்து, மஹாவீரர்களுடைய தாரதம்யத்தை அறியக்கூடிய க்ஷத்திரிய குலத்தில் பிறந்தவளாகையால், அவருடைய பராக்கிரமத்தை மெச்சி வெகுமதியாக எல்லையற்ற பிரியத்துடன் அவரைத் தழுவிக்கொண்டாள். அதுவரையில் தன் நாயகனை ஸீதை யுத்த களத்தில் பார்த்ததில்லை. யுத்தம் செய்யும் பொழுதும் பார்க்க முடியவில்லை. ஆகையால் யுத்தம் முடிந்த பிறகு ஜயலக்ஷ்மியுடன் விளங்கும் லோக நாதனுடைய சௌந்தரியத்தைக் கண்ணாரக்கண்டு அனுபவித்தாள். பாறைகள் பாணங்கள் மரங்கள் ஆயுதங்கள் முதலியவைகளால்தேகமெங்கும் காயம் பட்டிருந்தது ரத்தம் தாரை தாரையாகப் பெருகிற்று. மயிர்க்கால்களில் வியர்வைத்துளிகள் விளங்கின. கவசத்தை எடுத்துவிட்டு களைப்பாறுவதற்காக கோதண்டத்தில் சற்றுச் சாய்ந்து நின்றார். அந்த லோகரக்ஷகனுடைய திருமேனியின் அழகைப் பார்க்கத் தகுந்தவர்கள் ஸீதையைக் காட்டிலும் வேறுண்டோ? கொடிகளால் கட்டப்பட்ட ஜடாமண்டலத்தோடும் முதுகில் தொங்குகின்ற குறையாத அம்பறைகளோடும் ராக்ஷஸர்களை எரித்த கோபாக்கினி அணைந்து தெளிவான முகத்தோடும், அவர் ஸீதையும் லக்ஷ்மணனும் வரும் வழியை உற்றுப் பார்த்துக் கொண்டிருந்தார்.ஓடின ராக்ஷஸர்களாவது மற்றவர்களாவது திரும்பி வருகிறார்களோ என்று அடிக்கடி கடைக்கண்ணால் கவனித்துப் பார்த்துக் கொண்டிருந்தார். இப்படித் திருக்கோலம் கொண்ட ரகுநாதனை ஸேவிக்கக் கிடைத்தவர்கள் ஸீதையையும் லக்ஷ்மணனையும் தவிர வேறுண்டோ? ராமன் மஹாவீரனென்று பிறர் சொல்லிக்கேட்டதேயொழிய ஸீதை நேரில் பார்த்ததே இல்லை. வீரச்செயல்களைச் செய்து அந்தக் களைப்புடன் திரும்பி வரும் ராகவனைப் பார்க்க என்ன பாக்கியம் செய்தாளோ? ராமன் யுத்தம் செய்யும் பொழுது அவருடைய அம்புகள் கண்ணிற்குத் தெரியுமேயொழிய சத்ருக்கள் இருப்பதாக அவர்களுடைய பிணத்தால் மாத்திரம் தெரியும். சத்ருருக்கள் உயிரற்றுப் பூமியில்

விழுவதை மாத்திரம் பார்க்க முடியும்; ராமன் பாணங்களை எடுப்பதும் தொடுப்பதும் விடுவதும் ஒருவருக்கும் தெரியாது. சத்துருக்களான ராக்ஷஸர்களும் யுத்தத்தைப் பார்க்க வந்த தேவர்களும் ரிஷிகளும் கூட்டமாய் நின்றாலும் அந்தப் பாணங்கள் ராக்ஷஸர்களை மாத்திரமே கொல்லும். மஹரிஷிகளுக்கு சக்தியில்லையா? தபோமஹிமையால் ஒரு நொடியில் ஸகல ராக்ஷஸர்களையும் சாம்பலாக்க முடியாதா? ஆனால் ஸகலலோக ரக்ஷகனென்ற பகவானுடைய ஸ்வரூபத்திற்குக் குறைவு வருமென்று பயந்து ராமன் செய்த பிரதிக்ஞையையும் சரணமடைந்தவர்களை காப்பதென்ற அவருடைய தர்மத்தையுமே நம்பிக்கொண்டிருந்தார்கள். 'தண்டகாரண்யத்தில் ராக்ஷஸர்களால் பலவகையாக ஹிம்ஸிக்கப்பட்ட ரிஷிகளின் தேகங்களைப் பார்' என்று ராமனிடத்தில் அவர்கள் முறையிட்ட துக்கம் தீர அந்தப் பாபிகளை வேரறுத்து ரிஷிகளுக்குப் பரம மங்களத்தைச் செய்த கருணா மூர்த்தியல்லவா ராமன்? அவர் தனியாக இருந்தாலும், பகைவர்களின் நாதங்களும் கோஷங்களுமே கேட்கப்பட்டதாலும், ஸீதை அதுவரையில் பயந்து கவலைகொண்டு உயிரற்றவளைப் போலிருந்தாள். ராமனைக்கண்டு ஸகல ஜயத்திற்கும் பிராணாதாரமான அவருடைய பார்வையால் உயிர் பெற்றாள். பாரியை புருஷனுடைய ஆத்மாவில் பாதியென்று வேதம் சொல்லுகின்றது. ராமனுடைய ஸந்நிதியில் ஸீதைக்குப் பூர்ணமான பிராணனும் சக்தியுமுண்டு. அவரை விட்டுப் பிரிந்திருக்கும் பொழுது அவை இல்லாதது போலவே இருப்பாள். ஜயசாலியாக ரணரங்கத்திலிருந்து திரும்பி வரும் தன் பர்த்தாவைப் பார்க்க ஆவலுடன் பரப்பரப்பாக குகையிலிருந்து ஓடிவந்து, அடங்கா மகிழ்ச்சியால் மயிர்க் கூச்சமடைந்தாள். மஹாவீரனான மிதிலா சக்கரவர்த்தியின் புத்திரி, யுத்த வீரனுடைய சௌரியத்தைக் கண்டு ஆனந்தமடைந்தது ஆச்சரியமா?

அப்பொழுது ஆசைமீறி, என்ன செய்கிறோமென்று தெரியாமல், தானே ராமனை வலுவில் அணைந்துகொண்டாள். ஸகல லோகங்களுக்கும் தான் மாதா. தான் செய்யவேண்டிய ஜகத்தைக் காப்பதென்ற கடமையை ராமன் ஒப்புக்கொண்டு நிறைவேற்றினதற்காக அவருக்கு வெகுமானம் செய்ய நினைத்துத் தழுவிக் கொண்டாளோ? ஸகல லோகங்களுக்கும் தன் கடைக் கண் பார்வையால் எல்லாத் துக்கங்களையும் போக்கி ஸகல ஸுகங்களையும் கொடுக்கும் ஜகன்மாதா. எல்லா அவயவங்களிலும் பாய்ந்து ஊடுருவின பாணங்களாலும் ஆயுதங்களாலும் உண்டான காயங்களின் வேதனையை நீக்க, மலர்ந்த புஷ்பங்களைப் போல் மிருதுவான தன் சரீரத்தால் ரகுநாதனுடைய தேகத்தை நான்கு புறங்களிலும் கட்டித்தழுவினாளோ?

யுத்தத்தில் வந்த ராக்ஷஸர்கள் ஒவ்வொருவருக்கும் ராமன் தனித் தனியாகக் காணப்பட்டார். யுத்தம் முடிந்த பிறகு அந்தத் திருக்கோலத்தைமாற்றி ஸாமான்ய மனுஷ்யரூபத்தைத்தரித்ததைப் பார்த்து ஸீதை ஆச்சரியம் கொண்டு அணைந்தாளோ? இந்திரன் முதலிய தேவர்களால் ஒன்று சேர்ந்தும் எதிர்க்கமுடியாத பதினாலாயிரம் ராக்ஷஸர்களைத் தனியாக, வாகனமின்றி, ஒன்றரை முகூர்த்தத்தில் தனக்கு யாதொரு அபாயமுமின்றி விளையாட்டாக அழித்து தனக்கெதிரில் வந்து நிற்கும் ரணதீரனை, முன்னொரு காலத்தில் அறியாமையால், 'உன்னைப் புருஷனென்று மோசம்போய் என் பிதா என்னை உனக்கு பாரியையாகக் கொடுத்துவிட்டாரே. நீ ஆண்மையற்ற பேடியென்று அவர் அறியவில்லையே, ஐயோ கெட்டேன்'என்று சொல்லிவிட்டோமே. அந்த அபசாரத்திற்கு ஒருவாறு பரிகாரம் செய்வோமா" என்று ஸ்திரீகளுக்குள்ள வெட்கத்தையும் அடக்கத்தையும் விட்டு தானே வலுவில் வந்தணைந்தாளோ? ஸாதுக்களைக் காப்பாற்றவும் துஷ்டர்களை அழிக்கவும், தர்மத்தை நிலைநிறுத்தவும், ஒவ்வொரு யுகத்திலும் அவதாரம் செய்கிறேனென்ற பிரதிக்ஞையை, இந்தத் துஷ்ட ராக்ஷஸர்களை வேரறுத்து ரிஷிகணங்களுக்குத் தன் திவ்ய மங்கள மூர்த்தியின் தரிசனத்தால் பரமானந்தத்தை அருளி நிறைவேற்றினவர் ராமர். அசக்தர்களான தமது குழந்தைகளின் பிரார்த்தனைக் கிணங்கி, 'ராக்ஷஸ குலத்தை அழித்து லோகங்களுக்கு ஸுகத்தைக் கொடுக்கிறேன்' என்ற வார்த்தையைக் கேவலம் குழந்தைகளின் அழுகையை நிறுத்தி ஸமாதானம் செய்யும் வார்த்தையாகச் செய்யாமல் உண்மையாகச் செய்தீரே! ஸர்வேசுவரனான தங்களுக்கு அவர்கள் செய்யும் பிரதியுபகாரம் வேறொன்றுமில்லை. லக்ஷ்மணன் பஞ்சவடியில் தங்களிஷ்டப்படி பர்ண சாலையைக் கட்டினதற்கு ஸந்தோஷித்து, வேறு விதமாக வெகுமதி செய்யத் தோன்றாமல், தங்களுடைய ஆலிங்கனத்தையே பரமபுருஷார்த்தங்களனைத்தையும் கொடுக்கும் சாதனமாக அருளவில்லையா? அப்படியே நானும் என் குழந்தைகளுக்குப் பதிலாகத் தங்களுடைய அபாரமான பலத்திற்குச் செய்யும் வெகுமானம் இதுவே" என்று அணைந்து கொண்டாளோ? ராக்ஷஸக் கூட்டங்கள் மடிந்து ரத்த வெள்ளத்தில் மிதப்பதையும் ராமன் அபாயமின்றிப் புன் சிரிப்புடன் நிற்பதையும் பார்த்து ஸீதை பரமானந்த மடைந்தாள். ராக்ஷஸர்களுடைய உபத்திரவம் தீர்ந்த மஹரிஷிகள். ராமனைக் கொண்டாடக் கண்டு பூர்ண சந்திரனைப் போல் முகமலர்ந்து தன் மனத்திலுள்ள பிரேமையை அடக்க முடியாமல் மறுபடியும் தழுவிக் கொண்டாள். 'நான் ஜனகருக்குப் பெண்ணாகப் பிறந்திராவிட்டால் இந்த பாக்கியத்தை அடைவேனா? விதேஹ குலத்தில் பிறந்திரா விட்டால் ரகுநாதன் என்னை மணம் செய்வாரா? இந்தக் கோதண்டத்தைப் பிடிக்கும் திருக்கையால் என் கையையும் பிடித்தருளி ஜயலக்ஷ்மியுடன் என்னையும் ஸமமாக அணைத்துக் கொள்வாரா? ராமன் பரமசிவனுடைய வில்லை முறித்தபொழுது, என்னையும் தன்

னையும் தன் வம்சத்தையும் ஜகந்நாதனுக்கு அடிமையாகச் செய்த என் பிதா இந்த லீலா விபூதியின் அழகைக் கண்டனுபவிக்கப் பாக்கியம் செய்யவில்லையே'' என்று ஸீதை நினைத்தாள்.

ததஸ்து தம் ராக்ஷஸ ஸங்க$^4$ மர்த$^3$நம்
ஸபா$^4$ஜ்யமாநம் முதி$^3$தைர் மஹர்ஷிபி$^4$:
புந: பரிஷ்வஜ்ய ஶஶி ப்ரபா$^4$நநா
ப$^3$பூ$^4$வ ஹ்ருஷ்டா ஜநகாத்மஜா ததா$^3$ ॥ (42)

---

## ஸர்க்கம் 31

## ராவணன் ராக்ஷஸர்களின் வதத்தை அறிந்தது

---

த்வரமாணஸ் ததோ க$^3$த்வா ஜநஸ்தா$^2$நா த$^3$கம்பந: |
ப்ரவிஶ்ய லங்காம் வேகே$^3$ந ராவணம் வாக்ய மப்$^3$ரவீத் ॥ (1)

### அவதாரிகை

சரணுகதி மந்த்ரமான த்வயத்தின் வியாக்கியானமே ஸ்ரீமத் ராமாயணம். பூர்வகண்டத்தின் அர்த்தத்தை முதலிலும், உத்தர கண்டத்தின் அர்த்தத்தை அதன் பொருளை அறியும்பொழுதும் பெரியோர்கள் உபதேசிப்பார்கள். ஒரு பொருளின் பயன் அறிந்த பிறகே அதில் ஆசையுண்டாகுமல்லவா? ஆகையால் இதுவரையில் உத்தரகண்டத்தின் அர்த்தம் விவரிக்கப்பட்டது. உத்தர கண்டத்தின் முதலாவது பதத்தின் பொருளான ஸகல லோக புருஷகாரமான பிராட்டியின் சேர்க்கை பாலகாண்டத்திலும், இரண்டாவது பதத்தின் பொருளான பகவானுடைய அனந்த கல்யாண குணங்கள் அயோத்யாகாண்டத்திலும், அந்தப் பதத்தின் நான்காம் வேற்றுமையின் பொருளான பகவானுடைய கைங்கரியம் ஆரண்யகாண்டத்தில் சூர்ப்பணகையின் கதை வரையிலும், மந்திரத்தின் முடிவான பதத்தின் பொருளான விரோதி நாசம், கரவதம் வரையிலும் உபதேசிக்கப்பட்டன. அந்த மந்த்ரத்தின் முதலாவது கண்டத்தின் பொருள் இதற்குமேல் உபதேசிக்கப்படுகிறது. விபீஷணருக்குப் புருஷகாரமான பிராட்டியின் ஸேவை இந்தக் காண்டத்தின் முடிவு வரையிலும், இரண்டாவது பதத்தின் அர்த்தமான பக்த வாத்ஸல்யம் கிஷ்கிந்தா காண்டத்திலும், மூன்றுவது பதத்தின் அர்த்தமான பகவானுடைய திவ்யமான திருமேனியின் விசேஷம் ஸுந்தர காண்டத்திலும், நான்காவது பதத்தின் பொருளான சரணுகதிதத்வம் யுத்த காண்டத்திலும், சரணமடைந்தவன் அனுஷ்டிக்கவேண்டிய ஆசாரம் உத்தர காண்டத்திலும் உபதேசிக்கப்படும். தேவதைகள் செய்த சரணுகதிக்குப் பயனை ராவண வதத்திற்குமுன், ரிஷிகள் செய்த சரணுகதிக்குப் பயனை தண்டகாரண்ய ராக்ஷஸர்களுடைய வதம் சொல்லப்பட்டது. இது இடையில் வந்த விஷயம்,



ராவண வதத்திற்குக் காரணமான ஸீதாஹரணம் இனி சொல்லப்படும்.

---

பிறகு அகம்பனனென்ற ராக்ஷஸன் அந்த யுத்தத்திலிருந்து தப்பி லங்கைக்கு அதிவேகமாகப் போய் ராவணனை வணக்கமாகப் பணிந்து, "ஸ்வாமி! ஜனஸ்தானத்திலிருந்த மஹாவீரர்களான கர தூஷண திரிசிரஸ் உள்பட ஸகல ராக்ஷஸர்களும் யுத்தத்தில் கொல்லப்பட்டார்கள். நான் ஒருவனே (ஸ்திரீவேஷம் தரித்து) ராம பாணத்திற்குத் தப்பிவந்தேன்'' என்று அலறினன். அதைக் கேட்டு ராவணன் நெருப்புப்பொறி போன்ற கண்கள் கோபத்தால் மேலும் சிவக்க, கொடிய பார்வையால் உலகத்தைக் கொளுத்துபவன்போல் பார்த்து, "என் அழகான ஜனஸ்தானத்தை நாசம் செய்தவன் எவன்? ஸகல பிராணிகளிடத்திலும் சரணடைய முடியாமல் என் கோபாக்னியில் விழுந்து மடிகிறவன் எவன்? எனக்கு பிரியமில்லாத காரியத்தைச் செய்து தேவேந்திரனும் குபேரனும் யமனும் விஷ்ணுவும் ஸுகமடைவானு? நான் காலனுக்கும் காலன்; அக்னிக்கும் அக்னி; மிருத்யுவுக்கும் மிருத்யு; கோபம் கொண்டால் ஸூரியனும் அக்னியும் ஒன்று சேர்ந்தாலும் அவர்களைக் கொளுத்துவேன்; வாயுவின் வேகத்தையும் தடுப்பேன்'' என்றுன்.

இப்படிக் கோபாவேசம் கொண்ட ராவணனைப் பார்த்து அகம்பனன் நடுங்கிப் பயந்து தழுதழுத்த குரலுடன் கைகூப்பி, "ஸ்வாமி! தாங்கள் எனக்கு அபயம் கொடுத்தால் உண்மையைச் சொல்கிறேன்'' என்றுன். ராவணன் அப்படியே செய்ய, அகம்பனன் தைரியமடைந்து, "மஹாராஜரே! தசரத சக்கரவர்த்திக்கு ராமனென்ற ஒரு புத்திரனுண்டு. அவன் ஸகல அவயவங்களிலும் நிகரற்ற அழகு வாய்ந்தவன்; யௌவன புருஷன்; கொழுத்த காளையினுடைய தோள்களைப்போன்ற தோள்களை உடையவன்; நீண்டு பருத்த புஜங்களையுடையவன்; மஹாவீரன்; மஹாகீர்த்திசாலி; ஸகல ஐசுவரியமும் பொருந்தினவன்; ஒப்பற்ற பல பராக்கிரமமுடையவன். கரதூஷணர்களையும் ஜனஸ்தானத்திலுள்ள மற்ற ராக்ஷஸர்களையும் நாசம் செய்தவன் அவனே'' என்று தெரிவித்தான்.

அதைக் கேட்ட ராவணன் மஹாஸர்ப்பத்தைப்போல் சீறி, "அகம்பனு! இந்திராதி தேவர்களால் ஒத்தாசை பெற்று ராமன் ஜனஸ்தானத்திற்கு வந்திருக்கின்றுனு?'' என்றுன். அப்பொழுது அகம்பனன் ராமனுடைய பல பராக்கிரமங்களை வர்ணிக்க ஆரம்பித்து, "ஸ்வாமி! ராமனே எல்லையற்ற தேஜஸுள்ளவன்; வில்லாளிகளில் சிரேஷ்டன்; திவ்விய அஸ்திரங்களைக் கற்று விசேஷ மஹிமை வாய்ந்தவன்; யுத்தத்தில் தேவேந்திரனும் அவனுக்கு ஈடில்லை. அவனுக்கு ஒரு தம்பியுண்டு. பலபராக்கிரமத்தில் அவனைப்

போன்றவன்; சிவந்த கடைக் கண்களையும் பேரியைப் போன்ற குரலையும் சந்திரனைப்போன்ற முகமண்டலத்தையும் உடையவன். அக்னியும் பெரும்காற்றும்போல் அவ்விருவரும் சேர்ந்திருக்கிறார்கள். அந்த ராமன் ஜனஸ்தானத்தைப் பாழாக்கினான். வேறொருவருடைய உதவி அவனுக்கு வேண்டியதில்லை. தேவர்கள் உதவி செய்தார்களென்று எண்ண வேண்டாம். ராமனுடைய கோதண்டத்திலிருந்து புறப்படும் பாணங்கள் தங்கக் கட்டுகளால் பிரகாசித்து, மஹா ஸர்ப்பங்களைப்போல் ராக்ஷஸர்களின் உயிர்களை விளையாட்டாக விழுங்கின. ராக்ஷஸர்கள் பயந்து எந்த வழியில் சென்றாலும் ஆங்காங்கு ராமனையே கண்டார்கள். எந்தப் பொருளில் போய் ஒளிந்தாலும் ராமன் அவர்களுக்கு முன்பே அங்கு இருந்தான். மஹாராஜ! ஜனஸ்தானம் அழிந்த விதத்தைத் தெரிவித்தேன்" என்று சொல்லி முடித்தான். ராவணன் "இப்பொழுதே ஜனஸ்தானத்திற்குப் போய் ராம லக்ஷ்மணர்களைக் கொல்வேன்" என்று புறப்பட்டான்.

அப்பொழுது அகம்பனன், "ஸ்வாமி! என் விக்ஞாபனத்தைச் சற்று அங்கீகரிக்க வேண்டும். ராமனுடைய பலத்தையும் பராக்கிரமத்தையும் அபூர்வமான செயல்களையும் தெரிந்தவரையில் சொல்லுகிறேன். அவன் கோபித்தால் பிரஹ்மா இந்திரன் முதலியவர்களும் அவனை எதிர்க்கமுடியாது. மஹாவீரனென்று ஸகல லோகங்களிலும் கீர்த்திபெற்றவன். பூர்ணமான வெள்ளத்தையுடைய நதியின் வேகத்தைப் பாணங்களால் தடுப்பான். கிரஹங்களையும் நக்ஷத்திரங்களையும் மற்ற மண்டலங்களையும் சிதற அடிப்பான். பிரஹ்மாண்டத்தையும் பிளப்பான். ஸமுத்திரத்தில் முழுகிப் போகும் பூமியை மேலே கொண்டு வருவான். ஸமுத்திரத்தின் கரைகளை உடைத்து லோகங்களைப் பிரளயத்தில் முழுகச் செய்வான். ஸமுத்திரத்தின் வேகத்தை அம்புகளால் அடக்குவான். பஞ்சபூதங்களையும் ஒன்றிலொன்று லயிக்கச் செய்து பிரளயத்தை வருவிப்பான். இப்படி எல்லையற்ற சக்தியுள்ளவனும் ஸகல ஐசுவரியத்திற்கும் இருப்பிடமான பரம்பொருள் ராமன். நினைத்த உடனே ஸகல லோகங்களையும் முந்தின கல்பங்களில்போல் அழித்து உண்டாக்குவான். (அகம்பனனுடைய வார்த்தைகள் விஷ்ணுவின் தசாவதாரங்களையும் கல்யாண குணங்களையும் ராமன் இனி செய்யப் போகும் வீரகாரியங்களையும் குறிப்பிடுகின்றன என்று வியாக்யானக்காரர்கள் எழுதியிருக்கிறார்கள்). தங்களுக்குப் பத்துத் தலைகளிருக்கின்றனவென்றும் பிறர்க்கு இல்லையென்றும் தாங்கள் மிகுந்த பெருமை கொண்டிருக்கிறீர்களல்லவா? பரம புருஷன் ராமன் எண்ணிறந்த கைகள் தலை கண் முதலியவைகளைத் தரித்து, பிரபஞ்சத்திற்கு உள்ளும் புறமும் ஊடுருவி நிற்கிறான். மஹாமேருவிற்கு கொசு ஈடாகுமா? அல்ப சக்தியுள்ள தாங்கள் அனந்த சக்தியுள்ள ராமனை ஜயிக்கவா? நமுசி ஹிரண்யகசிபு மஹாபலி சம்பரன் ஹிரண்யாக்ஷன் மாலி ஸுமாலி மால்யவான் முதலியவர்கள் இதுவரையில் முறிபட்டோடினதைக் கேட்டதில்லையா? 'எல்லோரும் ஒன்றுசேர்ந்தால் அவனை வெல்ல முடியாதா' என்றால் பாபிகள் எல்லோரும் ஒன்று சேர்ந்தால் ஸ்வர்க்கத்தை அடைய முடியுமா? கோடி கோடி குருடர்கள் சேர்ந்தாலும் கண்ணுள்ளவர்களை ஜயிப்பார்களோ? 'இந்திரஜித்தால் ஜயிக்கப்பட்ட தேவர்களெல்லோரும் எனக்கு உதவி புரிவார்களல்லவா' என்றால், தேவாஸுரர்கள் ஒன்று சேர்ந்தாலும் அவனைக் கொல்லமுடியாதென்று எனக்குத்தெரியும்." (முன் செய்த பாபத்தால் ராக்ஷஸனாகப் பிறந்தாலும் பூர்வ புண்ணியத்தின் பலத்தால் ராமனுடைய ஸ்வரூபத்தை அறிந்து ராவணனுக்கு ஹிதத்தை உபதேசித்தானென்றும், அல்லது அகம்பனனுடைய மூலமாக ராமனே பரதெய்வமென்று வால்மீகி வெளியிடுகிறாரென்றும் உரைகாரர்கள் வியாக்யானம் செய்கிறார்கள்.)

"ஆனாலும் அதற்கொரு உபாயம் சொல்லுகிறேன். ஸாவதானமாகக் கேளுங்கள். அவனுக்கு ஸீதை என்று பாரியை உண்டு; அவள் யௌவனம் வாய்ந்தவள்; உத்தம லக்ஷணப்படி அமைந்த அங்கங்களையுடையவள்; ஸ்த்ரீரத்தினம்; ஸகல ஆடை ஆபரணங்களாலும் அலங்கரிக்கப்பட்டவள்; தேவ தானவ கந்தர்வ அப்ஸரஸ் லோகங்களிலும் அவளுக்கு ஈடான ஸ்த்ரீ கிடையாது. மனிதர்களைப்பற்றிப் பேச்சென்ன? எந்த உபாயத்தாலாவது ராமனை மயக்கி மோசம் செய்து அவளை எடுத்து வாருங்கள். ரகுவீரன் அவளையே உயிராகக் கொண்டதால் அவளை விட்டுப் பிரிந்து உயிரை இழப்பான்" என்றான். ராவணன் அந்த உபாயத்தை ஒப்புக்கொண்டு ராமனை விட்டு ஸீதையை எப்படிப் பிரித்துக் கொண்டு போவதென்று நெடுநேரம் யோசித்து, "அகம்பனா! நான் மாத்திரம் விடியற்காலையில் புறப்பட்டுப்போய் எப்படியாவது ஜானகியை எடுத்துவருகிறேன்" என்றான்.

பிறகு ராவணன் கோவேறு கழுதைகள் பூட்டி ஸூரியனைப் போல் பிரகாசிக்கும் ரதத்தில், மேகங்களுக்கு நடுவில் சந்திரன் போவதைப்போல் ஆகாசமார்க்கத்தில் அதிவேகமாகப் போய், தாடகையின் மகனான மாரீசனுடைய ஆசிரமத்திற்கு வந்தான். மாரீசன் அவனை அபூர்வமான பொருள்களால் உபசரித்து ஆஸனத்தில் உட்காரச்செய்து, க்ஷேமம் விசாரித்து, "ராக்ஷஸேச்வர! தங்களால் ஆளப்பட்ட குடிகள் ஸௌக்கியமாக இருக்கிறார்களா? தாங்கள் ஏதோ பெரிய காரணமில்லாமல் தனியாக இவ்வளவு வேகமாக இங்கு வரமாட்டீர்களே. ஆகையால் ஏதாவது சுகக்குறைவு நேர்ந்திருக்கவேண்டும். இன்னதென்று தெளிவாகத் தெரியவில்லை" என்றான். ராவணன் "மாரீச! ஜனஸ்தானத்தில் எல்லைக்காவலாய் வைத்திருந்த கரனையும், அவனுடைய ஸைன்யங்களையும் ராமனென்ற ஒருவன் யுத்தத்தில் கொன்று விட்டான். ஆகையால்

அதற்குப்பதிலாக அவனுடைய பாரியையை எடுத்துவர உபாயம் சொல்" என்றான்.

மாரீசன், "ஐயோ! உனக்கு நண்பனென்று பெயர் வைத்துக் கொண்டு உனக்குப் பரமசத்துருவாயிருக்கும் எவன் ஸீதையை எடுத்துவரும்படி உன்னைத் தூண்டிவிட்டான்? உன்னால் எப்பொழுதாவது ஒருவன் அலக்ஷ்யம் செய்யப்பட்டு உன் செல்வத்தையும் அதிகாரத்தையும் பார்த்துப் பொறுக்காமல் உனக்கு இந்த யோசனை சொன்னானா? ராக்ஷஸகுலத்தின் கொம்பை (பெருமையை) அழிக்க நினைத்தவன் யார்? 'ஸீதையை எடுத்து வா' என்று உனக்குப் புத்தி சொன்னவன் உனக்குப் பகைவன் என்பதில் ஸந்தேகமா? மஹா விஷமுள்ள ஸர்ப்பத்தின் வாயில் கையைவிட்டு விஷப்பல்லைப் பிடுங்கும்படி உன்னைத் தூண்டினவன் யார்? உன்னை இப்படிக் கெட்டவழியில் தள்ளி வேராறுக்கிறவன் யார்? ஸுகமாகத் தூங்கிக் கொண்டிருந்த உன் தலையில் அடித்து உன்னை வீணாகத்துன்பப்படுத்தினவன் யார்? கந்தஹஸ்தி என்ற யானையின் வாஸனையைக் கண்டால் மற்ற யானைகள் ஓடிப்போம். ராமன் அந்த யானையைப் போன்றவன்; சிரேஷ்டமான இக்ஷ்வாகு குலத்தில் பிறப்பே அதன் துதிக்கை; தேஜஸே மதஜலம்; அழகான புஜங்களே தந்தங்கள்; நீ அவனை யுத்தத்தில் கண்ணெடுத்துப் பார்க்க முடியுமா? மனிதர்களுக்குள் ராமன் ஸிம்ஹம். யுத்தத்தில் மஹா மேருவைப் போல் அசையாமல் நிற்பதே அதனுடைய மயிர் அடர்ந்த வால்; சூரர்களான ராக்ஷஸர்களே அதனால் கொல்லப்பட்ட மான்கள்; பாணங்களே அதன் அங்கங்கள்; கூர்மையான கத்தியே அதன் பற்கள்; அது பிறரைத் துன்பப்படுத்தாமல் தூங்கிக் கொண்டிருக்கும்பொழுது அதை எழுப்பாதே. ஸிம்ஹத்தை எதிர்த்தாலும் தெய்வச் செயலாலாவது பார்வையின் பலத்தாலாவது பிழைத்துத் திரும்பிவரலாம். ராமனுடன் யுத்தத்திற்குப் போனால் அந்த ஆசையும் இல்லை. ராமன் மஹாபாதாளத்தைப் போன்றவன்; அவனுடைய கோதண்டமே அதில் நடமாடும் பயங்கரமான முதலை; பாணங்களை எய்வதில் அவனுக்குள்ள கைவேகமே ஆழமான சேறு; அதில் சிக்கியவர்கள் வெளியில் வருவதில்லை. பாணங்களே ஓயாமல் வரும் அலைகள்; அவை எவனையும் அழித்துவிடும். யுத்தமே கடல் நீர்; அதைத் தாண்டினவர்களில்லை. எவனாவது, அந்த மஹாபாதாளத்தில் போய் விழுவானா? லங்கேசுவர! ராக்ஷஸ குலதிலக! தயவு செய்; கோபத்தை விடு; லங்கைக்குத் திரும்பிப்போ. உன் பார்யைகளுடன் ஸுகமாக இரு. ராமன் அவனுடைய பாரியையுடன் காடுகளில் சுகமாக இருக்கட்டும்" என்றான். இப்படி அவனிடத்திலுள்ள பிரியத்தால் ஹிதத்தை உபதேசிக்க, ராவணனும் அதை ஒப்புக்கொண்டு மாரீசனிடத்தில் உத்தரவு பெற்று லங்கைக்குத் திரும்பிப் போனான்.

ஏவமுக்தோ த3ஶக்3ரீவோ மாரீசேந ஸ ராவண: |
ந்யவர்தத புரீம் லங்காம் விவேஶ ச க்3ருஹோத்தமம் ‖ (50)

---



## ஸர்க்கம் 32

# சூர்ப்பணகை ராவணனிடம் சென்றது

தத: ஶூர்பணகீ2 த்3ருஷ்ட்வா ஸஹஸ்ராணி சதுர்த3ஶ |
ஹதாந்யேகேந ராமேண ரக்ஷஸாம் பீ4மகர்மணாம் ‖

கரதூஷணர்களும் மற்ற ஸேனாபதிகளும் பதினாலாயிரம் ராக்ஷஸ ஸைன்யங்களும் ராமனால் வெகு சீக்கிரத்தில் நாசம் செய்யப்பட்டதைக் கண்டு சூர்ப்பணகை கோபத்தால் கர்ஜித்தாள். பிறரால் செய்யமுடியாத அந்த ஆச்சரியகரமான செய்கையைக் கண்டு பயந்து துக்கம் மேலிட்டு ராவணனுடைய ராஜதானியான லங்கைக்குப் போனாள். அங்கே புஷ்பகவிமானத்தில் ஸூரியனைப்போல்விளங்கும் ரத்ன ஸிம்ஹாஸனத்தில், மருத்துக்களால் சூழப்பட்ட இந்திரனைப் போல், மந்திரிகளால் சூழப்பட்டு, தங்கத்தால் செய்யப்பட்ட அக்னி பீடத்தில், ஆஹுதிகளால் கொழுந்துவிட்டெரியும் அக்னியைப் போல் தன் தேஜஸால் ஜ்வலித்துக்கொண்டு ராவணன் உட்கார்ந்திருக்கக் கண்டாள்.

அவன் தேவ கந்தர்வ ரிஷிகணங்களாலும் மற்றப் பிராணிகளாலும் யுத்தத்தில் ஜயிக்கமுடியாதவன்; ஜீவகோடிகளை அழிக்க வாயைத் திறந்துகொண்டு ஓடிவரும் யமனைப் போன்றவன். தேவாஸுர யுத்தங்களில் வஜ்ராயுதம் இடி முதலிய தேவாயுதங்களாலும் விஷ்ணுவின் சக்கரத்தாலும் தேகமெங்கும் காயம்பட்டவன். (இதனால் ராவணன் விஷ்ணுவுடன் பலதடவை யுத்தம் செய்து அவருடைய சக்ராயுதத்திற்குத் தப்பினானென்று தெரிகிறது. இது ஸுந்தரகாண்டத்திலும் காணப்படுகிறது.) திக்கஜங்களின் தந்தங்களால் கிழிக்கப்பட்ட மார்பையுடையவன். அந்த வடுக்கள் பதினாறு கலைகளுடன் கூடின பதினாறு சந்திரர்களைப்போல் மார்பில் பிரகாசித்தன. பத்துத் தலைகளையும் இருபது கைகளையும் விசாலமான மார்பையும் நீண்ட பருத்த புஜங்களையும் வெளுத்த பற்களையும் பாதாள குகையைப்போன்ற வாயையும் உடையவன். ஸகல ராஜலக்ஷணங்களும் பொருந்தினவன். ஸூரிய சந்திரர்களைப்போல் பிரகாசிக்கும் குண்டலங்களையுடையவன். சிரேஷ்டமான வெண்குடைகளாலும் சாமரங்களாலும் ஆலவட்டங்களாலும் வேலைக்காரர்கள் உபசரிக்க, பெரியமலையைப்போல் விளங்கினான். எவரும் கலக்கமுடியாத கடலைக் கலக்குகிறவன். எதையும் நினைத்தவுடன் முடிக்கிறவன். பெரிய மலைகளைப்பிடுங்கிப் பந்தாடுபவன். தேவர்களைத் துன்பப்படுத்துகிறவன். தர்மங்களை அழிக்கிறவன். பரஸ்த்ரீகளைப் பலவந்தம் செய்கிறவன். எல்லா திவ்வியாஸ்திரங்களின் சக்தியை உடையவன். எப்பொழுதும் யாகங்களைக் கெடுப்பவன். போகவதி என்ற நாகலோக ராஜதானிக்குப் போய் வாஸுகியை ஜயித்து, தக்ஷகனுடைய பிரியமான பாரி

யையை எடுத்து வந்தவன். கைலாஸ மலைக்குப்போய், குபேரனை ஜயித்து நினைத்த இடத்திற்குப் போகும் புஷ்பகவிமானத்தைக் கைப்பற்றியவன். ஒரு ஸமயத்தில் கோபம்கொண்டு குபேரனுடைய சைத்திர ரதமென்ற தோட்டத்தையும் தாமரையோடையையும் நந்தனமென்ற இந்திரனுடைய தோட்டத்தையும் அழித்தவன். உதிக்கும் சந்திர ஸூரியர்களைக் கைகளால் தடுப்பவன். மேருவின் சிகரத்தைப்போன்றவன். ஒரு ஸமயத்தில் பதினாயிரம் வருஷங்கள் வரையில் கோரமான தவம்செய்து தன் தலைகளை அறுத்து ஹோமம் செய்து பிரஹ்மாவை ஸந்தோஷப்படுத்தினவன். மனிதர்களைத் தவிர மற்ற தேவதானவ கந்தர்வ பிசாச உரக பதக கணங்களாலும் நாசமில்லை என்ற வரத்தைப் பெற்றவன். பிராம்மணர்கள் வேத மந்திரங்களால் யாகங்களைச் செய்து ஸோமரஸத்தைக் குடிக்கும் ஸமயத்தில் அவர்களை அழிப்பவன். யாகங்களை முடித்து தக்ஷிணை கொடுக்கும் ஸமயத்தில் அவைகளைக் கெடுப்பவன். வெகுகொடியவன்; துஷ்டன்; பிராம்மணர்களைக் கொல்லுகிறவன்: கடினசித்தமுள்ளவன்; தயாதாக்ஷிண்யமில்லாதவன்; எல்லாப்பிராணிகளையும் கதறச் செய்கிறவன்; ஸகல லோகங்களுக்கும் கெடுதியையே தேடுகிறவன்; ஸகலப் பிராணிகளையும் நடுங்கச் செய்கிறவன்; புலஸ்தியக் குலத்தை விளங்கச் செய்தவன்; மஹாபாக்கியசாலி; காலனுக்கும் காலன்; மஹா பலவான்; நெருப்புக் கொழுந்துகளைப் போல் ஜ்வலிக்கும் விசாலமான நேத்திரங்களை யுடையவன்; சத்துருக்களுக்கு மிருத்யு.

திவ்விய வஸ்திரங்களாலும் ஆடையாபரணங்களாலும் அலங்கரிக்கப்பட்டு மந்திரிகளுக்கும் பரிஜனங்களுக்கும் நடுவில் கர்வத்துடன் அட்டஹாஸம் செய்துகொண்டு, வீராஸனத்தில் உட்கார்ந்திருக்கும் பிரதாப லங்கேசுவரனை தன் அண்ணனிடத்திற்குப் போய், சூர்ப்பணகை ராமனாலுண்டான பயத்தால் புத்தி மயங்கி, தனக்கு நேர்ந்த அலங்கோலத்தையும் அவமானத்தையும் அவனுக்குக் காட்டினாள். ஸகல லோகங்களிலும் பயமும் தடையுமின்றித் திரியும் சக்தியுள்ள அந்த ராக்ஷஸி, ராவணனைக் கொடிய வார்த்தைகளால் நிந்திக்க ஆரம்பித்தாள்.

தமப்3ரவீத்3 தீ3ப்த விஶால லோசநம்
ப்ரத3ர்ஶயித்வா ப4ய மோஹ மூர்ச்சி2தா |
ஸுதா3ருணம் வாக்ய மபீ4த சாரிணீ |
மஹாத்மநா ஶூர்பணகா2 விரூபிதா ॥ (25)

---



## ஸர்க்கம் 33

## சூர்ப்பணகை ராவணனை நிந்தித்தது

தத: ஶூர்பணகா2 தீ3நா ராவணம் லோகராவணம் |
அமாத்யமத்4யே ஸங்க்ருத்3தா4 பருஷம் வாக்ய மப்3ரவீத் ॥ (1)

ராமலக்ஷ்மணர்களால் தனக்கு நேர்ந்த அவமானத்தால் மனம் குன்றி, தன் கஷ்டத்தைப் பார்த்தும் ராவணன் கவனிக்காததால் சூர்ப்பணகைகோபம்கொண்டுசொன்னாள்:"காமபோகங்களில்மூழ்கி மயங்கிக் கட்டுக்காவலில்லாமல் இஷ்டப்படி நடந்துகொண்டு, வரும் கெடுதியை முன்பே அறியவேண்டியிருக்க, வந்தபிறகும் அறியாமலிருக்கிறாய். அல்பமான விஷய ஸுகங்களில் மனதைப் பறிகொடுத்து இஷ்டப்படி நடக்கும் லோபகுணமுள்ள அரசனைப் பார்த்துக் குடிகள், ச்மசானத்திலுள்ள நெருப்பைப்போல் விலகுவார்கள். எவன் அந்தந்த காலத்தில்செய்யவேண்டிய ராஜகாரியங்களை நேரில் கவனிக்கவில்லையோ அவனும் அந்த ராஜ்யமும் அந்தக் காரியங்களும் அழியும். ஆழமான சேறுள்ள ஆற்றை யானைகள் நெருங்காது. அப்படித் தூதர்களை ஸரியாக உபயோகிக்காதவனும் குறிப்பிட்ட வேளைகளில் குடிகளுக்கு ஸபையில் தரிசனம் கொடுக்காதவனும் பிறருடைய போதனைக்கு உட்பட்டவனுமான அரசனைக் கண்டு ஜனங்கள் ஒதுங்குவார்கள் ஸ்வாதீனமற்றவர்களாகத் தங்களுடைய ராஜ்யத்தை நன்றாக ஆளாத அரசர்கள், கடலில் மூழ்கிய மலைகளைப்போல, வரவர விருத்தியடைந்தும் பிரகாசிக்கிறதில்லை.

தேவ கந்தர்வ தானவர்களைப் பகைத்து, உன்னைக் கெடுக்க அவர்கள் எப்பொழுதும் வேளை பார்த்துக்கொண்டிருக்கிறார்களென்று அறிந்தும், உன் தூதர்களை ஸரியாக உபயோகிக்காமல், விஷய ஸுகங்களில் புத்தியை சிதறவிட்டுத் திரியும் நீயும் அரசனா? தூதர்கள், ஐசுவரியம், நீதி இவைகளை ஸ்வாதீனப் படுத்திக் கொள்ளாத அரசர்களுக்கும் ஸாமான்ய ஜனங்களுக்கும் பேதமென்ன? தங்கள் ராஜ்யத்திலும் மற்ற ராஜ்யங்களிலும் நடக்கும் எல்லா விஷயங்களையும் தூதர்களால் அறிவதால் அரசர்களைத் தூரதிருஷ்டியுள்ளவர்களென்று சொல்லுகிறார்கள். நீ தூதர்களை நன்றாக உபயோகிக்கவில்லை. உன்னைச் சூழ்ந்த மந்திரிகளெல்லோரும் ஞானமற்ற ஸாமான்ய ஜனங்களே. உன் பந்துக்களும் குடிகளும் உன் ராஜ்யமான ஜனஸ்தானத்தில் அழிந்துபோயும் உனக்குத் தெரியவில்லையே. வெகு கொடியவர்களான பதினாலாயிரம் ராக்ஷஸர்களும் கர தூஷண திரிசிரஸ் முதலியவர்களும் ராமனென்ற ஒரு அல்ப மனிதனால் அதிசீக்கிரத்தில் கொல்லப்பட்டார்கள். உனக்கு இன்னும் வெட்கமில்லையா?

இது போகட்டும். தண்டகாரண்ய ரிஷிகளுக்கு ராமன் அபயம் கொடுத்திருக்கிறான். ஜனஸ்தானம் பாழாயிற்று. தண்டகாரண்யம் பயமின்றிச் செழிக்கிறது. இதைக் கேட்டும் உனக்கு ரோஷமில்

லையா? நீ தூதர்களை நன்றாக வெகுமானம் செய்யாத லோபி; மதம் கொண்டவன்; பிறருக்கு அடிமைப்பட்டவன்; உன் ராஜ்யத்தில் உனக்கு நேர்ந்த மஹா பாதகத்தை அறியாததாலேயே இது தெரியவில்லையா? கொடியவனும் ரஹஸ்யமாகக் கெடுக்கிறவனும் திருப்தியாக வெகுமானம் செய்யாதவனும் கர்வம் கொண்டவனுமான அரசனைக் குடிகள் ஆபத்துக் காலத்தில் காக்க ஓடிவருவார்களென்று நினைத்தாயே? அஹங்காரம் பிடித்தவனும், நல்லோர்க்குக் கட்டுப்படாதவனும், தன்னைத் தானே மெச்சிக்கொள்ளுகிறவனும், ஸமயம் தெரியாமல் கோபிக்கிறவனுமான அரசனை, ஆபத்துக் காலத்தில் அவனைச் சேர்ந்தவர்களே கொல்வார்கள். செய்யவேண்டியவைகளில் பயப்படாமலும் பயப்படவேண்டியவைகளில் பயப்படாமலுமிருக்கும் அரசன், ராஜ்யத்திலிருந்து துரத்தப்பட்டுப் புல்லிற்கு ஸமமாகிறான். உலர்ந்த கட்டைகளாலும் கற்களாலும் புழுதியாலும் எப்பொழுதாவது பயனுண்டு. ராஜ்யத்திலிருந்து துரத்தப்பட்ட அரசனால் அதுவுமில்லை. கட்டின துணியையும் சூடிய மாலையையும் போல் ராஜ்யத்திலிருந்து துரத்தப்பட்ட அரசன் ஸமர்த்தனானாலும் பயனற்றவனே.

ஜாக்கிரதையுள்ளவனும் எல்லா விஷயங்களையும் அறிந்தவனும் இந்திரியங்களை ஜயித்தவனும் நன்றியுள்ளவனும் தர்மத்தைக் கைவிடாதவனுமான அரசனே நீண்டகாலம் ஆளுவான். தான் தூங்கினாலும் நீதியென்ற கண்களால் எப்பொழுதும் விழித்துக் கொண்டிருப்பவனும், தன் கோபத்தையும் அருளையும் வீணாக்காதவனுமான அரசனே ஜனங்களால் பூஜிக்கப்படுகிறான். ராவணா! நீ துர்புத்தியுள்ளவன். இந்த உத்தம குணங்கள் உன்னிடத்தில் இல்லை. உன் ராஜ்யத்தில் உன் ஜனங்களுக்கு நேர்ந்த கஷ்டத்தை நீ அறியாததைவிட வேறு என்ன ஸாக்ஷி? பிறரை அவமதிப்பதும் சத்ருக்களை அலக்ஷியம் செய்வதும் சிற்றின்பத்தில் மூழ்கியிருப்பதும் தேசகாலங்களுக்குத் தகுந்தபடி நடக்கத் தெரியாமலிருப்பதும் குணதோஷங்களை அறிவதில் பழகாத புத்தியையுள்ளவனாக இருப்பதும் உனக்கு ஸகஜம்; ஆகையால் ராஜ்யத்தை இழந்து சீக்கிரத்தில் நாசமடைவாய்'' என்று தன் தோஷங்களை எடுத்துச் சொன்ன சூர்ப்பணகையின் வார்த்தையைக் கேட்டு, ஐசுவரியத்தாலும் கர்வத்தாலும் பலத்தாலும் எல்லோருக்கும் மேலானவனானாலும், "ராமனுடன் யுத்தம் செய்யாதே என்று மாரீசனோ நம்மைத்தடுக்கிறான்; இவளோ யுத்தம் செய் என்று தூண்டுகிறாள், என்ன செய்யலாம்'' என்று நெடுநேரம் யோசித்தான்.

இதி ஸ்வதோ3ஷாந் பரிகீர்திதாம்ஸ் தயா
ஸமீக்ஷ்ய பு3த்3த்4யா க்ஷணதா3சரேஶ்வர: |
த4நேந த3ர்பேண ப3லேந சாந்விதோ
விசிந்தயாமாஸ சிரம் ஸ ராவண: ‖ (24)

---



தத: ஶூர்பணகா2ம் க்ருத்3தா4ம் ப்3ருவந்தீம் பருஷம் வச: |
அமாத்யமத்4யே ஸங்க்ருத்3த4: பரிபப்ரச்ச2 ராவண: ‖ —ஆ. 34 ஸ-1க.

மந்திரிகளுக்கெதிரில் தன்னை இப்படிக் கடுமையாகப் பேசி அவமதித்த சூர்ப்பணகையின் வார்த்தையால் ரோஷமடைந்து, ராமனிடத்தில் கோபம் கொண்டு, ராவணன் கேட்டான். (பக்கம் 91 பார்க்க)

## ஸர்க்கம் 34

# சூர்ப்பணகை செய்த உபதேசம்

தத: ஶூர்பணகா2ம் க்ருத்3தா4ம் ப்3ருவந்தீம் பருஷம் வச: |
அமாத்யமத்4யே ஸங்க்ருத்3த4: பரிபப்ரச்ச2 ராவண: ‖ (1)

மந்திரிகளுக்கெதிரில் தன்னை இப்படிக் கடுமையாகப் பேசி அவமதித்த சூர்பணகையின் வார்த்தையால் ரோஷமடைந்து, ராமனிடத்தில் கோபம்கொண்டு ராவணன் கேட்டான். "ராமன் யார்? அவனுடைய வீரியமும் பராக்கிரமும் எவ்விதமானவை? அவனுடைய ரூபம் எத்தகையது? ஸாமான்ய ஜனங்களால் வரமுடியாத தண்டகாரண்யத்தில் ஏன் வந்தான்? கரனையும் தூஷணனையும் திரிசிரஸையும் எந்த ஆயுதங்களால் கொன்றான்?" என்றான்.

சூர்ப்பணகை கோபம் கொண்டு ராமனை உள்ளபடி வர்ணிக்க ஆரம்பித்தாள். லக்ஷ்மணனிடத்தில் தீராத ஆசைகொண்டவளானாலும் ஸகலப்பிராணிகளையும் மயக்கும் ராமனுடைய லாவண்யத்தை சுருக்கமாக வர்ணிக்கிருள். "ராமன் முழங்கால் வரையில் நீண்ட கைகளையுடையவன்; விசாலமான கண்களை உடையவன்; மரவுரி மான்தோலையே ஆடையாக உடையவன்; மன்மதனைப் போல் அழகுவாய்ந்தவன்; அவனுடைய பராக்கிரமத்திற்கோ எல்லையில்லை. ஆனாலும் கருணை பொழியும் கண்களையுடையவன்; தபஸ்வி வேஷம் தரித்து அண்டினவர்களின் கஷ்டங்களைப் போக்கி மோக்ஷத்தை அளிப்பதற்கே வனத்திற்கு வந்தவன். தங்கக் கட்டுகளுடன் இந்திரனுடைய வில்லைப்போன்ற கோதண்டத்தைக் கையில் பிடித்து வளைத்து நாணேற்றிக் காலஸர்ப்பங்களைப் போன்ற பாணங்களை எய்கிறான். அவன் சரங்களை எடுப்பதும் தொடுப்பதும் இழுப்பதும் விடுவதும் ஒருவருக்கும் தெரியாது. நேர்த்தியான பயிர்களை இந்திரன் ஆலங்கட்டி மழையால் அழிப்பதைப்போல், அவனுடைய பாணங்களால் அடிப்பட்டு சத்துருக்கள் கீழே விழுவது மாத்திரம் காணப்படுகிறது. அவன் தனியாகப் பூமியில் நின்றுகொண்டு பதினாலாயிரம் கோர ராக்ஷஸர்களை அதிவிரைவாக மடித்தான். கரதூஷணர்களைக் கொன்றான். ரிஷிகளுக்கு அபயம் கொடுத்தான். தண்டகாரண்யத்திற்கு க்ஷேமத்தை அருளினான். நான் பெண், துணையில்லாதவள். ஆகையால் என்னைக் கொல்வது அதர்மமென்று தப்ப விட்டான்.

அவனுக்கு லக்ஷ்மணனென்ற தம்பி ஒருவனுண்டு மஹா தேஜஸ்வி; குணங்களிலும் பராக்கிரமத்திலும் அண்ணனைப்போன்றவன்; மஹாவீரன்; ராமனிடத்தில் எல்லையற்ற அன்பும் பக்தியும்

வைத்தவன்; பகைவர்களால் ஜயிக்கமுடியாதவன்; வெகு ரோஷமுள்ளவன்; புத்திமான்; பலசாலி; வெளியில் ஸஞ்சரிக்கும் பிராணன்களைப்போல் ராமனுக்குப் பிரியமானவன். வலது கையைப்போல் அவனுக்கு எல்லாப் பணிவிடைகளையும் செய்கிறவன்.

ராமனுக்கு ஸீதையென்ற ஒரு பாரியையுண்டு. விசாலமான கண்களை உடையவள்; பூர்ண சந்திரனைப் பழிக்கும் முகத்தையுடையவள்; அவன் அனுஷ்டிக்கும் தர்மத்தையே அனுஷ்டிப்பவள். அவனுக்கு அவளிடத்தில் எல்லையற்ற அன்பு; அவளும் அவனிடத்தில் அவ்வளவு அன்பு வைத்திருக்கிறாள்; அழகான கேசத்தையும் நன்கமைந்த மூக்கையும் உடையவள்; அழகில் நிகரற்றவள்; இந்தக் காரணங்களால் வெகு கீர்த்தி பெற்றவள்; வனதேவதையையும் லக்ஷ்மியையும் போல் விளங்குகிறாள். உருக்கி ஓடவிட்ட தங்கத்தைப்போன்ற நிறத்தையும் சற்று உயர்ந்த சிவந்த நகங்களையும் சிறுத்த இடையையுமுடையவள். தேவ கந்தர்வ யக்ஷ கின்னர மனுஷ்ய லோகங்களிலாவது மற்ற லோகங்களிலாவது இந்த ரூபம் படைத்தவளை நான் பார்த்ததில்லை. ஸீதை எவனுக்குப் பாரியையோ அவன் எல்லோருக்கும் மேலானவன். அவள் ஒருவனை பிரியமாக அணையாவிட்டாலும், கேவலம் மனைவியாகப் பக்கத்திலிருந்தாலும் போதும். லோகோத்தமமான ஸௌகம் கிடைக்கும். மனைவியாக இல்லாவிட்டாலும் ஒரு தடவையாவது பிரியத்துடன் தழுவிக்கொண்டாலும் அவன் இந்திரனைவிட மேலான போகங்களை அனுபவிப்பான். நன்னடத்தையுள்ளவள், ஒப்பற்ற ரூபம் வாய்ந்தவள்; உனக்கேற்ற பாரியை; நீயும் அவளுக்குத் தகுந்த நாயகன். ஸர்வாங்க ஸௌந்தரியான அந்தப் பெண்ணை உனக்குப் பாரியையாக எடுத்துவர நான் முயன்றேன். கொடியவனான லக்ஷ்மணனால் இப்படி அலங்கோலம் செய்யப்பட்டேன். பூர்ண சந்திரனைப் பழிக்கும் முகத்தையுடைய அந்தப் பெண்மணியை நீ பார்த்துவிட்டால் மன்மத பாணங்களுக்கு இரையாவாய். அவளை மனைவியாக அடையவேண்டுமென்று உனக்கு ஆசையிருந்தால் இப்பொழுதே புறப்படு. ஜயத்திற்கு அடையாளமாக வலதுகாலை முன்னே வை. கேவலம் தபஸ்வியான ராமனால் கொல்லப்பட்ட அந்த ராக்ஷஸர்களுக்கு இறந்த பிறகாவது திருப்தி செய். கூரான உன் அம்புகளால் ராமலக்ஷ்மணர்களை அழித்து, அநாதையான ஸீதையை இஷ்டப்படி அனுபவி. என் வார்த்தை உனக்கு உசிதமாகத் தோன்றினால் அப்படியே செய்; சந்தேகப்படாதே. உன் சக்தியையும் நன்றாக அறிந்து ஸகல லோக ஸௌந்தரியான ஸீதையை உன் மனைவியாகும்படி பலவந்தமாக எடுத்து வா. கரனும் தூஷணனும் ஜனஸ்தானத்திலுள்ள ராக்ஷஸர்களும் ராமனுடைய பாணங்களால் மடிந்தார்களென்பதை



நன்றாக நினைத்துக்கொள்; பிறகு எது உசிதமோ அதைச் செய்'' என்றாள்.

நிஶம்ய ராமேண ஶரை ரஜிஹ்மகை3:
ஹதாந் ஜநஸ்தா2ந க3தாந் நிஶாசராந் |
க2ரம் ச பு3த்4வா நிஹதம ச தூ3ஷணம்
த்வமத்ர க்ருத்யம் ப்ரதிபத்து மர்ஹஸி ‖ (28)

---

## ஸர்க்கம் 35

## ராவணன் மாரீசனிடத்திற்குச் சென்றது

---

தத: ஶூர்பணகா2 வாக்யம் தச்ச்2ருத்வா ரோமஹர்ஷணம் |
ஸசிவா நப்4யநுஜ்ஞாய கார்யம் பு3த்4வா ஜகா3ம ஸ: ‖ (1)

சூர்ப்பணகையின் பயங்கரமான வார்த்தைகளைக் கேட்டு ராவணன் மந்திரிகளுடன் ஆலோசிக்காமல் அவர்களை அனுப்பிவிட்டு அந்தப்புரத்திற்குப் போனான். பிறகு தனக்குள் நன்றாக யோசித்து, செய்யப்போவதை நிச்சயித்து, மறுபடியும் அதிலுள்ள குணதோஷங்களையும் பலாபலத்தையும் சோதித்தான். "ராமலக்ஷ்மணர்களை எதிர்த்து சண்டைசெய்து ஸீதையை எடுத்து வருவது நலமா? அல்லது அவர்களுக்குத் தெரியாமல் எடுத்து வருவது நலமா? கரதூஷணர்களைக் கொன்றதை யோசித்தால் ராமனை எதிர்ப்பது அஸாத்தியமென்று தோன்றுகிறது. ஆகையால் எந்த உபாயத்திலாவது ராமனுக்குத் தெரியாமல் அவளை எடுத்து வருவதே நலம். ஸீதையை இழந்து துக்க ஸமுத்திரத்தில் முழுகியிருக்கும் ராமனால் நமக்குப் பயமென்ன?'' என்று, தான் அனுஷ்டிக்கும் மார்க்கத்தை நிச்சயிக்கும் ஸ்திரபுத்தியுடன் குதிரைச் சாலைக்குப் போய் "யாருக்கும் தெரியாமல் ரதத்தைக் கொண்டு வா'' என்று ஸாரதியை ஆக்ஞாபித்தான்.

ஸாரதி அப்படியே செய்ய, தங்கத்தால் அமைக்கப்பட்டு ரத்தினங்களால் இழைக்கப்பட்டு, உத்தமமான ஆபரணங்களை அணிந்த பிசாச முகங்களையுடைய கோவேறு கழுதைகள் பூட்டி, மஹாமேகங்களைப்போல் ஒலிக்கும் அந்த சிரேஷ்டமான ரதத்திலேறி, ஆகாசமார்க்கமாக ஸமுத்திரத்தைத் தாண்டினான். வெண்குடை சாமரம் ஆலவட்டம் முதலிய ராஜோபசாரங்களுடன், பத்து சிகரங்களையுடைய வைடூரிய மலையைப்போல் பத்து தலைகளோடும் இருபது கைகளோடும் ராவணேசுவரன் அப்பொழுது விளங்கினான்.

மின்னலுடன் ஜ்வலிக்கும் நீருண்டமேகம் ஆகாசத்தில் வெண்மையான கொக்குகளால் சூழப்படுவதைப்போல், ஆபரணங்களால் விளங்கும் தேகத்துடன் அந்தத் தங்க ரதத்தில் உட்

கார்ந்து, தேவர்களுக்கும் மனிதர்களுக்கும் நித்திய சத்துருவாகிய லங்கேசுவரன், மலைகளால் நிறைந்து பலவகைப் புஷ்பங்களாலும் பழங்களாலும் அலங்கரிக்கப்பட்ட கடற்பக்கத்திலுள்ள நிலங்களையும்; குளிர்ந்த புண்ணிய தீர்த்தங்களால் நிறைந்த தாமரை யோடைகளையும்; அக்கினிகுண்டங்களால் விளங்கும் விசாலமான ஆசிரமங்களையும்; வாழை பலா தென்னை பனை ஆச்சா பச்சிலை முதலிய மரங்கள் மலர்ந்த புஷ்பங்களாலும் பழங்களாலும் மறைக்கப்பட்டிருப்பதையும் கண்டான். நாக கந்தர்வ கின்னர கருட கணங்களும், வைகானஸ வாலகில்ய மாஷ மரீசப முதலிய ஆஹார நியமுள்ள மஹரிஷிகளும் காமக்குரோதங்களை ஜயித்த ஸித்தர்களும் சாரணர்களும், திவ்வியாபரண ஹாரங்களால், அலங்கரிக்கப்பட்டு, திவ்விய ரூபங்களுடன் ஆனந்தமாக விளையாடும் அப்ஸரஸ் கூட்டங்களும், ஸகல ஐசுவரியங்களும் பொருந்திய தேவஸ்த்ரீகளும், தேவர்களும் தானவர்களும் வனங்களில் ஸஞ்சரிப்பதையும் பார்த்தான். அன்னம் கிரௌஞ்சம் நீர்க்கோழி வெண்ணுரை முதலிய பக்ஷிகள் மதுரமாகக் கூவுவதையும்; வைடூர்யங்களால் பிரகாசிக்கும் மலைகளையும், தவத்தால் உத்தமலோகங்களை அடைந்த கந்தர்வர்களும் அப்ஸரஸ்களும் திவ்விய அலங்காரங்களாலும் கீதாவாத்தியங்களாலும் விளங்கி வெண்மையான விசாலமுள்ள விமானங்களில் நினைத்தவிடங்களுக்குப் போவதையும் கண்டு மகிழ்ந்தான். பெருங்காயமென்ற ரஸம் பெருகும் மூலகமென்ற ஓஷதியையும், மதுரமான வாசனையுள்ள சந்தனக்காடுகளையும் அகில் காடுகளையும் தக்கோலக்காடுகளையும் ஜாதிக்காய்க் காடுகளையும், தாமரைபுஷ்ப்பங்களையும் மிளகுச்செடிகளையும், ஸமுத்திரக் கரையில் அலைகளால் அடித்து ஒதுக்கப்பட்ட முத்துக்களையும் சங்குகளையும் பவழங்களையும், பொன் வெள்ளி முதலிய தாதுக்கள் விளையும் மலைகளையும் மலையருவிகளையும் மடுக்களையும், தனதான்யங்களால் செழித்து உத்தம ஸ்த்ரீகளால் விளங்கிச் சதுரங்க பலத்தால் நிறைந்திருக்கும் நகரங்களையும் பார்த்துக்கொண்டே போனான். மேடு பள்ளமின்றி ஸுகமான மந்தமாருதத்துடன் எங்கும் ரமணீயமாக விளங்கும் ஸமுத்திரக்கரை ஸ்வர்க்கம்போல் தோன்றிற்று.

அங்கே மஹா மேகம்போன்ற ஒரு ஆலமரம் நான்கு புறத்திலும் பல யோஜனை நீளமுள்ள கிளைகளுடன் காணப்பட்டது. அதனடியில் பல மஹரிஷிகள் முன்பு தவம் செய்துகொண்டிருந்தார்கள். அப்பொழுது கருடன் மலையைப்போன்ற யானையையும் ஆமையையும் நகங்களால் தூக்கிக்கொண்டு அவைகளைப் புஜிக்க அந்த ஆல்மரத்தில் உட்கார்ந்தார். அந்தப் பாரம் தாங்காமல் அந்தக் கிளை முறிந்து விழ, அதனடியிலிருந்த மஹரிஷிகள் நாசமடைவார்களோ என்று கருடன் பயந்தார். ஆகையால் அந்தக் கிளையையும் தூக்கிக் கொண்டு வெகுதூரம் பறந்துபோய், ஆமையையும் யானையையும் தின்று, அந்தக் கிளையை ஒரு வேடச்சேரியில் எறிந்து, அதனால் அங்கிருந்த துஷ்டர்களைக் கொன்றார். அந்தப் பாபிகளால் துன்பப்படுத்தப்பட்ட அங்கிருந்த முனிவர்களுடைய கஷ்டத்தைத் தீர்த்து வெகு ஸந்தோஷமடைந்து அந்த இரண்டு மஹா ஜந்துக்களைத் தின்றதால் இருமடங்கான பலத்துடன், அமிருதத்தைக் கொண்டுவர தேவலோகத்திற்குப் போனார். இரும்பால் செய்யப்பட்ட வலைகளையும் யந்திரங்களையும் முறித்து, ரத்தினத்தால் அமைக்கப்பட்ட கோட்டையை இடித்து, அதற்குள் வைத்திருந்த அமிருதத்தை தேவர்களிடத்திலிருந்து எடுத்து வந்தார். இப்படி மஹரிஷிகளால் அதனடியில் தவம் செய்யப்பெற்றுக் கருடனால் முறிக்கப்பட்ட அந்தக் கிளையையுடைய ஸுபத்ரம் என்று ஆலமரத்தை ராவணன் பார்த்தான்.



வெகு தூரம் போய் ஸமுத்திரத்தின் மறுகரைக்கு வந்து, ஒரு பரிசுத்தமான வனத்தில் தனிமையான ஆசிரமத்தில் முனிவேஷத்துடன் ஆகார நியமத்துடன் மாரீசன் தவம் செய்வதைப் பார்த்தான். தனக்குப் பந்துவாகவும் அரசனாகவும் இருக்கும் ராவணனைக் கண்டு மாரீசன் விசேஷ மரியாதை செய்து உத்தமமான அன்ன பானங்களால் உபசரித்தான். பிறகு ராவணன் ஸுகமாக ஆஸனத்தில் உட்கார்ந்திருக்கையில் மாரீசன் மிகுந்த வணக்கத்துடன் தசமுகனைப் பார்த்து, "மஹாராஜ! லங்கையில் தங்கள் ஜனங்களும் பந்துக்களும் க்ஷேமமா? தாங்கள் தனியாக இவ்வளவு சீக்கிரம் வந்த காரணமென்ன?" என்றான். (விசுவாமித்திர யாககாலத்தில் ராமன் அவனை அடித்துத் தள்ளியது முதல் மாரீசன் வைராக்கியமடைந்து தபஸ்வியானான்.)

ஏவமுக்தோ மஹாதேஜா மாரீசேந ஸ ராவண: |
தம் து பஶ்சாதி³த³ம் வாக்ய மப்³ரவீத்³ வாக்யகோவித³: ‖ (42)

## ஸர்க்கம் 36

# ராவணன் மாரீசனை வேண்டியது

மாரீச ஶ்ரூயதாம் தாத வசநம் மம பா⁴ஷத: |
ஆர்தோஸ்மி மம சார்தஸ்ய ப⁴வாந் ஹி பரமா க³தி: ‖ (1)

ராவணன், "மாரீச! பெரிய கவலை கொண்டிருக்கிறேன். அதைத் தீர்க்க உன்னைத்தவிர வேறொருவனும் இல்லை. ஜனஸ்தானத்திலிருந்த என் தம்பிகளான கரதூஷண திரிசிரஸ் என்றவர்களும் என்னுடன் பிறந்த சூர்ப்பணகையும் இன்னும் பல ராக்ஷஸர்களும் என் கட்டளையால் அங்கே வஸித்துக் கொண்டிருந்தார்களென்று உனக்குத் தெரியும். அவர்கள் அங்குள்ள ரிஷிகளின் தவத்தையும் தர்மங்களையும் கெடுத்துக்கொண்டு மஹா வீரர்களாக ஸுகமாகக்

காலம்கழித்தார்கள். யுத்தத்தில் உத்ஸாஹமுள்ள அந்தப்பதினுலாயிரம் ராக்ஷஸர்களும் எல்லா ஆயுதங்களுடனும் ராமனை யுத்தத்தில் எதிர்த்தார்கள். அவன் கோபம்கொண்டு கடுமையான வார்த்தை ஒன்றும் சொல்லாமல் அவர்களை அதிசீக்கிரத்தில் பாணங்களால் கொன்ருன். பூமியில் நின்றுகொண்டு யுத்தம்செய்த ஒரு மனிதனுல் கரனும் தூஷணனும் திரிசிரஸும் மாண்டது என்ன ஆச்சரியம்! தண்டகாரண்யத்தில் பிராணிகள் பயமில்லாமல் நடமாடுகின்றனவாம்! அவனுடைய தகப்பன், கோபம் கொண்டு அவனைக் காட்டிற்குத் துரத்தினுன். மனைவியுடன் இந்தக் கோரமான வனத்தில் வஸிப்பவன், எவ்வளவு காலம் பிழைத்திருப்பான்? அவன் க்ஷத்திரியகுலத்தைக் கெடுத்தவன், நீசன், தயையில்லாதவன், முட்டாள், குரூரன், பேராசைகொண்டவன், இந்திரியஸ்வாதீனமற்றவன், தர்மத்தை விட்டவன், பிராணிகளுக்குக் கெடுதியைத் தேடுகிறவன், யாதொரு விரோதகாரணமும் இன்றிக் கேவலம் பலக்கொழுப்பால் என் தங்கை சூர்ப்பணகையின் காது மூக்குகளை அநியாயமாக அறுத்தான். ஆகையால் தேவஸ்த்ரீகளைப்போன்ற அவனுடைய மனைவியை ஜனஸ்தானத்திலிருந்து எடுத்துக்கொண்டு வருகிறேன். நீயும் என் தம்பிகளும் இருக்கையில் தேவர்கள் ஒன்று சேர்ந்து எதிர்த்தாலும் லக்ஷ்யம் செய்யமாட்டேன். ஆகையால் எனக்கு உதவிசெய். வீரியத்திலும் கொழுப்பிலும் யுத்தத்திலும் உனக்கு ஈடில்லை. நீயோ மஹாசூரன், ஸகலமாயைகளையும் அறிந்தவன், ஸகல உபாயங்களையும் அறிந்தவன். இதற்காகவே உன்னிடத்தில் வந்தேன்.

"வெள்ளிப் புள்ளிகளுள்ள தங்கமானுக நீ ரூபமெடுத்து, ஸீதை பார்க்கும்படி அவர்களுடைய ஆசிரமத்திற்கருகில் நீ அலைந்து கொண்டிரு. அவள் ஸந்தேஹமின்றி உன்னை மானென்றே எண்ணிப் பிடித்துத்தரச்சொல்லி ராஜபுத்திரர்களை வேண்டுவாள். நீ அவர்களை வெகு தூரம் அழைத்துக்கொண்டுபோன பிறகு ராகு சந்திரனைப் பிடிப்பதுபோல் ஸீதையை ஸுலபமாக எடுத்து வருவேன். ராமன் ஸீதையை விட்டுப் பிரிந்து மனம் குன்றி வெகு ஸுலபமாக என்னுல் கொல்லப்படுவான். அப்போழுது என் எண்ணங்கள் நிறைவேறும்" என்ருன்.

ராமனுடைய பெயரைச் சொன்னவுடனேயே மாரீசனுடைய முகம் பயத்தால் சுண்டிற்று. கைகால்கள் நடுங்கின; வாய் உலர்ந்தது. ஒருதரம் உதடுகளை நக்கிக்கொண்டு கண் கொட்டாமல் சவத்தைப்போல் ராவணனை வெறிக்கப் பார்த்தான். இப்படிப் பயத்தாலும் துக்கத்தாலும் மனமொடுங்கி, தண்டகாரண்யத்தில் ராமனுடைய பராக்கிரமத்தை அறிந்தவனுதலால் கைகூப்பி வணக்கத்துடன், தனக்கும் ராவணனுக்கும் ஹிதத்தைச்செய்யும்வார்த்தைகளையும் ராமனுடைய உண்மையான ஸ்வரூபத்தையும் எடுத்துரைத்தான்.



ஸ ராவணம் த்ரஸ்த விஷண்ண சேதா:
மஹாவநே ராம பராக்ரமஜ்ஞ: |
க்ருதாஞ்ஜலிஸ் தத்வ முவாச வாக்யம்
ஹிதம் ச தஸ்மை ஹிதமாத்மநஸ்ச ‖ (24)

## ஸர்க்கம் 37

## மாரீசனுடைய உபதேசம்

தச் ச்ருத்வா ராக்ஷஸேந்த்ரஸ்ய வாக்யம் வாக்யவிஶாரத:
ப்ரத்யுவாச மஹாப்ராஜ்ஞோ மாரீசோ ராக்ஷஸேஶ்வரம் ‖ (1)

"மஹாராஜ! யஜமானனுடைய க்ஷேமத்தையும் கெடுதியையும் ஆபத்துக் காலத்திலும் யோசிக்காமல், கேவலம் தங்களுடைய லாபத்தையே மேலாக எண்ணி இச்சகம் பேசுகிறவர்கள் அரசனிடத்தில் பலருண்டு. ஆனுல் பிரபுவின் ஹிதத்தைக் கவனித்து, அப்பொழுது கடுமையாகத் தோன்றினுலும் கெடுதியைப்போல் காணப்பட்டாலும் முடிவில் நன்மையையும் ஸுகத்தையும் கொடுக்கும் புத்திமதியை, பிரபுவின் கோபத்திற்குப் பயப்படாமல் தன் கடமையையும் தர்மத்தையுமே பெரிதாக எண்ணி அடிக்கடி தைரியத்துடன் சொல்லுகிறவன் லோகத்தில் கிடைப்பதரிது. அப்படிச் சொன்னுலும், காமத்தாலும் கோபத்தாலும் புத்தி மயங்கி, பக்ஷபாதத்திற்கு இடங்கொடாமல், பிரியமில்லாத அந்த வார்த்தைகளைக் கேட்கும் பிரபு கிடைப்பது அதைவிட அரிது. ராமனைப்பற்றித் தங்களுடைய தூதர்கள் யாதொன்றும் தெரிவிக்கவில்லை என்று எண்ணுகிறேன். மஹாவீரனென்றும் லோகபாலர்களுக்கு மேலானவனென்றும் உத்தம குணங்கள் வாய்ந்தவனென்றும் தங்களுக்குத் தெரிந்திராது. அல்லது பல விஷயங்களில் புத்தியைச் செலுத்துவதால் கவனித்திருக்கமாட்டீர்கள். குழந்தாய்! உனக்கு எவ்வளவோ ஹிதத்தைச் சொல்லி இப்பொழுதே உன்னை அனுப்பினேன். இவ்வளவு சீக்கிரத்தில் நீ திரும்பி வந்ததைப் பார்த்தால் பிறருடைய போதனை மேலிட்டு, என் ஹிதோபதேசம் பலிக்கவில்லை என்று தெரிகிறது. ஐயோ! லோகத்திலுள்ள ராக்ஷஸர்கள் யாவரும் க்ஷேமமாக இருக்கவேண்டுமே! ராமன் கோபம் கொண்டு ராக்ஷஸப் பூண்டே லோகத்திலிராமல் வேரறுப்பானே தெரியவில்லையே? உன்னை அழிக்கவே ஸீதை பிறந்திருக்கிருளோ? என் நாசத்திற்கும் அவளே காரணமாவாளோ? ஸாதுக்களின் ஹிதோபதேசத்தைக் கேளாமல் இஷ்டப்படி நடக்கும் உன்னை அரசனுக அடைந்து லங்கையும் ராக்ஷஸ குலமும் அழியுமோ? துர்புத்தியுள்ள மந்திரிகளால் சூழப்பட்டு கெட்ட நடத்தையுள்

ளவனைக் கட்டுப்பாடில்லாமல் நடக்கும் உன்னைப்போன்ற அரசன் தன்னையும் அண்டினவர்களையும் ராஜ்யத்தையும் நாசம் செய்வான்.

ராமன் தகப்பனால் காட்டிற்குத் துரத்தப்படவில்லை; தர்மத்திற்கு கட்டுபடாதவனல்ல; பேராசை பிடித்தவனல்ல; கெட்ட நடத்தையுள்ளவனல்ல; கொடியவனல்ல; பிராணிகளுக்குக் கெடுதியைச் செய்கிறவனல்ல; எல்லா உத்தம குணங்களாலும் அலங்கரிக்கப்பட்டு கௌஸல்யையின் பாக்கியரூபமாய் அவதரித்தவனல்லவா? ஸத்தியம்தவறாத தன் பிதா, கைகேயியால் ஏமாற்றப்பட்டதால், ஸகல தர்மங்களையும் அறிந்த ராமன் தகப்பன் செய்த பிரதிக்ஞையை நிறைவேற்றக் காட்டிற்குப் போக இணங்கினான். கைகேயியையும் தசரதரையும் ஸந்தோஷப்படுத்த விரும்பித் தனக்கு நியாயமாகக் கிடைக்கவேண்டிய ராஜ்யத்தையும் போகங்களையும் விட்டு வனத்திற்கு வந்தான்.

ராமன் கடின சித்தமுடையவனல்ல, ஞானமற்றவனல்ல, இந்திரியங்களை ஜயிக்காதவனல்ல. பிறர் விபரீதமாகச் சொன்னதை நீயும் விசாரிக்காமல் சொல்லலாமா? தர்மதேவதையின் அவதாரமே ராமன். அவனிடத்தில் எள்ளளவாவது தோஷமிருக்கமுடியுமா? பரம ஸாது. அவனுடைய பராக்கிரமம் வீணாகாது. இந்திரன் தேவர்களுக்கு எப்படி நாயகனோ அப்படி ராமன் லோகங்களுக்கு நாதன். அவனுடைய மனைவியும் மஹா ஞானியான ஜனகருடைய புத்திரியுமான ஸீதை, தன் பதிவிரதாதர்மத்தாலேயே காக்கப்பட்டிருக்கிறாள். ஸூரியனை விட்டுத் தேஜஸ் எப்படி பிரியாதோ அப்படி ராமனைவிட்டு அவள் பிரியாள். (ஸூரியனுடைய காந்தியை திருட முயல்வது எப்படி முடியாதோ அப்படி ஸீதையை எடுத்து வருவதும் அஸாத்தியம். ஸூரியனுடைய தேஜஸைத் திருட முயன்றவன் அதனால் மடிவதுபோல் ஸீதையைத் திருட முயன்றவனும் அவளால் மடிவான்.) ராமன் காலாக்னியைப் போன்றவன்; கிட்டி நெருங்கமுடியாது. வில்லும் கத்தியும் அதை வளர்க்கும் விறகு; பாணங்களே அதன் ஜ்வாலை. அந்த நெருப்பில் வலுவில் போய் விழாதே. ராமன் காலனைப் போன்றவன்; அவனுடைய பாணங்களே தேஜஸ். சத்துரு ஸைன்யங்களை அழிக்கும் கோதண்டமே காலபாசம். அவனை நெருங்கி எதிர்த்தால் உன் ராஜ்யமும் உயிரும் ஸுகமும் எண்ணங்களும் பாழாகும், அழிவாய். அப்படிச் செய்யாதே. ஜனகருடைய பெண் எவனைச் சேர்ந்தவளோ அவன் நிகரற்ற தேஜஸுடையவன்; அவர்கள் வனத்திற்கு வந்திருப்பதால் அவளை ராமன் வெகு ஜாக்கிரதையாகக் காப்பாற்றுவான். மஹா ஞானியான ஜனகருக்குப் பிறகு ராமனுடைய கோதண்டத்தால் ரக்ஷிக்கப்படுகிறவளை நீ எடுத்துவர முடியுமா? ராமன் மனிதர்களுக்குள் ஸிம்ஹத்தைப்போன்றவன். ஸிம்ஹத்தின் மார்பைப்போல் பருத்து விசாலமான மார்பையுடையவன். அவனுடைய மனைவி அவனுடைய தர்மங்களைக் குறைவின்றி நடத்து



கிறவள். உயிரைக்காட்டிலும் அவனுக்குப் பிரியமானவள். கொழுந்து விட்டெரியும் நெருப்பு ஜ்வாலையைப்போன்ற ஸீதையை எவனாவது திருட நினைப்பானா? மஹா பராக்கிரமசாலியான ராமனுடைய பத்தினியைப் பலவந்தம் செய்ய எவனாவது துணிவானா? இந்த வீண் முயற்சியை ஏன் செய்கிறாய்? அவனை யுத்தகோலத்துடன் கண்டவுடனேயே உன் உயிர் போகும். ராஜ்யமும் ஸுகமும் உயிரும் மனிதனுக்குக் கிடைப்பது அரிது. வெகுகாலம் இவைகளை அனுபவிக்க எண்ணமிருந்தால் ராமனுக்குக் கோபம் மூட்டாதே. விபீஷணன் முதலிய தர்மாத்மாக்களான ஸகல மந்திரிகளுடன் ஆலோசித்து குண தோஷங்களுடைய பலாபலத்தையும் உன் சக்தியையும் நீ நன்றாக விசாரித்து, ராமனுடைய சக்தியையும் பூரணமாகவும் உண்மையாகவும் தெரிந்துகொண்டு, உனக்கு ஹிதத்தையும் கெடுதியையும் நிச்சயித்து, பிறகு எது உசிதமோ அப்படிச் செய்யவேண்டும். ராமனுடன் நீ யுத்தம் செய்தால் தோற்று மடிவாயென்று எனக்குத் தோன்றுகிறது. என் வார்த்தைகள் மேலாகவும் ஹிதமாகவும் யுக்திக்கு ஒத்தும் இருக்கும். கவனித்துக் கேள்.

அஹம் து மந்யே தவ ந க்ஷமம் ரணே
ஸமாக$^{3}$மம் கோஸலராஜ ஸூநுநா |
இத$^{3}$ம் ஹி பூ$^{4}$ய: ஶ்ருணு வாக்ய முத்தமம்
க்ஷமம் ச யுக்தம் ச நிஶாசரேஶ்வர ‖ (25)

## ஸர்க்கம் 38

## மாரீசனுடைய உபதேசம் (தொடர்ச்சி)

கதா$^{3}$சித$^{3}$ப்யஹம் வீர்யாத் பர்யடந் ப்ருதி$^{2}$வீ மிமாம் |
ப$^{3}$லம் நாக$^{3}$ ஸஹஸ்ரஸ்ய தா$^{4}$ரயந் பர்வதோபம: ‖ (1)

ராவண! நான் இதுவரையில் சொன்ன வார்த்தைகள் கற்பனையல்ல. ராமனுக்குப் பயந்து உனக்கு ஒத்தாசை செய்ய இஷ்டமில்லாமல் சாக்குச்சொல்வதல்ல. நான் நேரே பார்த்து அனுபவித்துச் சொல்லுகிறேன், கேள். ஒரு சமயம் நான் பதினாயிரம் யானைகளின் பலம் கொண்டவனென்று கொழுப்படைந்து மஹா வீரனென்று நினைத்து மலையைப்போல் பருத்து, நீருண்ட மேகத்தைப் போல் கறுத்து, பயங்கரமான ரூபத்துடன் தங்கக் குண்டலங்களாலும் கிரீடங்களாலும் அலங்கரிக்கப்பட்டு, எல்லா பிராணிகளையும் நடுங்கச் செய்துகொண்டு ரிஷிகளைக் கொன்று தின்று தண்டகாரண்யத்தில் திரிந்தேன். அப்பொழுது விசுவாமித்திரர் யாகம் செய்துகொண்டிருக்கையில் நான் அதை அழித்து அவரை பயப்படச் செய்தேன். அவர் தசரதரிடத்திற்குப்போய் மஹாராஜ! நான் யாகம் செய்கையில் மாரீசனென்ற ராக்ஷஸன்

அதை அழித்து என்னுடனிருக்கும் ரிஷிகளைப் பயமுறுத்தித் துன்பப்படுத்துகிருன். ஆகையால் ராமனென்ற உமது புத்திரனை என்னுடன் அனுப்ப வேண்டும்" என்று, பிரார்த்தித்தார். அவ்வரசன், "மஹரிஷே! ராகவன் சிறு குழந்தை. பன்னிரண்டு வயதே நிறைந்தவன். அஸ்திர வித்தையில் பயிற்சி முடியவில்லை. சத்துருக்களின் பலாபலங்களை அறியாதவன். என் சதுரங்க ஸைன்யத்துடன் நானே தங்களுடன் வந்து அந்த துஷ்ட ராக்ஷஸர்களை நாசம் செய்கிறேன்" என்ருர். விசுவாமித்திரர், "நீர் முன் காலத்தில் தேவதைகளுக்காக அஸுரர்களுடன் யுத்தம் செய்து அவர்களை ஜயித்து வெகு கீர்த்தி பெற்றீர். அது இவ்வுலகத்திலும் பரவியிருக்கிறது. உமது ஸைன்யம் இங்கேயே இருக்கட்டும். இந்த ராக்ஷஸனை ஜயிக்க ராமனைத்தவிர வேருெருவராலும் முடியாது. இவன் 'சிறுவனுனலும் அந்தத் துஷ்டனை அடக்கப் போதும். ஆகையால் ராமனை அழைத்துப் போகிறேன்; உமக்கு ஸகல மங்களமுண்டாகட்டும்" என்று ராமனைக் கூட்டிக்கொண்டு வெகு சந்தோஷத்துடன் தன் ஆசிரமத்திற்கு வந்தார். பிறகு யாகம் செய்ய ஆரம்பித்து நடத்துகையில் குழந்தையான ராமன் வில்லும் கையுமாக ஸமீபத்திலிருந்து அதைக் காப்பாற்றி வந்தான். பாலன், யௌவனத்திற்குள்ள அடையாளங்கள் உண்டாகவில்லை. பிரம்மசாரியானதால் ஒற்றை வஸ்திரத்தை உடுத்திக்கொண்டிருந்தான். க்ஷத்திரியர்களுக்கு ஏற்பட்ட சிகையுடனும் தங்கமாலையுடனும் விளங்கிஞன். பூர்ண சந்திரன் உதித்ததுபோல் அந்த தண்டகாரண்யத்தை தன் தேஜஸால் பிரகாசிக்கச் செய்தான். அப்பொழுது நான் கருத்த பெருமேகத்தைப் போன்ற சரீரத்துடன், மின்னலைப்போல் பிரகாசிக்கும் தங்கக் குண்டலங்களால் அலங்கரிக்கப்பட்டு, என் பலத்தாலும் நான் அடைந்த வரத்தாலும் கர்வம்கொண்டு, அலக்ஷ்யமாக அங்கே போய், பயங்கரமான இரும்புக்கட்டுத் தடியைச் சுழற்றிக்கொண்டு அவன்மேல் பாய்ந்தேன். ராமன் பயப்படாமல், கலங்காமல் என் தலையைக் கண்டவுடனே கோதண்டத்தை எடுத்து வளைத்து நாணேற்றித் திக்குகள் நடுங்கும்படி டங்காரம் செய்தான். அந்த ஓசையால் என் புத்தி சிதறிற்று. ஆனுலும், இந்தச் சிறு பிள்ளையால் என்ன செய்யமுடியுமென்று அவனை அலக்ஷ்யம் செய்து, விசுவாமித்திரரின் யாகமேடையை நோக்கி ஓடினேன். உடனே ராகவன் ஒரு கூரான பாணத்தை விடுத்தான். அது என்னை அடித்துத் தள்ளி நூறுயோஜனைக்கு அப்பாலுள்ள கடலில் அழுத்திற்று. என்னைக் கொல்ல அவனுக்குத் திறமையிருந்தும் என் உயிரைவாங்காமல் விட்டதற்கு காரணம் தெரியவில்லை. ராம பாணத்தின் வேகத்தால் துரத்தப்பட்டு பிரக்ஞை போயிற்று. மெள்ள மெள்ளத் தெளிந்து, வெகு நேரம் வரையில் ஸமுத்திரத்தில் கிடந்த பிறகு லங்கைக்குப் போனேன். சிறு குழந்தை; அஸ்திர வித்தையை பூர்ணமாக அறிந்தவன்; ஒருக்காலும் பிறர்க்கு



ஹிம்ஸை செய்யாதவன். ஒரு பாணத்தால் என்னை அந்தப் பாடுபடுத்தினுன். என்னுடன் வந்தவர்கள் அவனுடைய அம்புகளுக்கு இரையானுர்கள்.

ஆகையால் அவனுடன் யுத்தம் செய்யாதே என்று உன்னைத் தடுக்கிறேன். அவனுடன் பகைக்காதே என்று வேண்டுகிறேன். அப்படியும் கேட்காவிட்டால் வெகு சீக்கிரத்தில் கொடிய ஆபத்து நேரிடும். உன் குடிகள் வேடிக்கையிலும் விளையாட்டிலும் ஸ்த்ரீ ஸுகத்திலும் காலம்கழித்துக்கொண்டு ஆனந்தமாக இருக்கிருர்கள். அவர்களுக்குக் கஷ்டத்தையும் நாசத்தையும் ஏன் வருவிக்கிருய்? உப்பரிகைகள் அரண்மனைகள் தோட்டங்கள் விளையாட்டு வீடுகள் விளையாட்டு மலைகள் தாமரையோடைகள் முதலியவைகளாலும் பலவித ரத்தினங்களாலும் விளங்கும் லங்கை ஸீதைகாரணமாக அழிவதைப் பார்ப்பாய். உன் கெட்ட நடத்தையால் உன்னைச் சேர்ந்த குற்றமற்ற ராக்ஷஸர்களும் அழிவார்கள். லோகத்தில் சுத்தமான நடத்தையுள்ள புண்ணியவான்களும் பாபிகளுடன் சேர்ந்தால், ஸர்ப்பங்கள் நிறைந்த மடுவிலுள்ள மீன்களும் அவைகளுடன் மடிவதைப்போல, துஷ்டர்கள் செய்யும் பாபங்களால் மடிகிருர்கள். திவ்யமான சந்தனங்களாலும் ஆபரணங்களாலும் அலங்கரிக்கப்பட்டு ஸுகமாக வஸிக்கும் ராக்ஷஸர்களெல்லாம் உன் கெட்ட நடத்தையால் உயிரிழந்து பூமியில் கிடப்பார்கள். யுத்தத்தில் மடியாதவர்கள்,வேறு கதியற்றுக் காப்பாற்றுவாரின்றி, மனைவி மக்களை விட்டுப் பத்துத் திக்குகளிலும் ஓடி ஒளிவார்கள். லங்கை பாணவர்ஷங்களால் நாசமடைந்து எரிக்கப்பட்டு, வீடுகளும் அரண்மனைகளும் ஆலயங்களும் இடிந்து சாம்பலாவதைப் பார்ப்பாய் என்பது நிச்சயம். பர ஸ்த்ரீகளை எடுத்து வருவதைக்காட்டிலும் கொடிய பாபமுண்டோ? எண்ணிறந்த உத்தமஸ்த்ரீகள் உன் அந்தப்புரத்திலில்லையா? அவர்களுடன் ஸுகமாகக் காலத்தைக்கழி. உன் குலத்தை அழிக்காதே. மனைவி மக்கள் பந்துக்கள் நண்பர்கள் மேன்மை ஐசுவரியம் ராஜ்யம், இவற்றைக் காட்டிலும் பிரியமான உயிர் முதலியவைகளுடன் நீண்டகாலம் வாழ நீ விரும்பினுல் ராமனுடன் பகைக்காதே. நான் உனக்குப் பந்து; மித்திரன்; உன் ஹிதத்தையே தேடுகிறவன். உன்னை எவ்வளவோ சொல்லித் தடுக்கிறேன். அப்படியும் கேட்காமல் ஸீதையை பலவந்தமாக எடுத்து வந்தால் நீயும் உன் பந்துக்களும் பலமிழந்து ராமனுடைய சரங்களுக்கு இரையாவீர்கள்.

நிவார்யமாண: ஸுஹ்ருதா$^{3}$ மயா ப்$^{4}$ருஶம்
ப்ரஸஹ்ய ஸீதாம் யதி$^{3}$ த$^{4}$ர்ஷயிஷ்யஸி |
க$^{3}$மிஷ்யஸி க்ஷீணப$^{3}$ல: ஸபா$^{3}$ந்த$^{4}$வோ
யமக்ஷயம் ராமஶராத்த ஜீவித: || (34)

## ஸர்க்கம் 39

## மாரீசனுடைய உபதேசம் (தொடர்ச்சி)

ஏவமஸ்மி ததா[3] முக்த: கத[2]ஞ்சித் தேந ஸம்யுகே[3] |
இதா[3]நீமபி யத்[3] வ்ருத்தம் தச் ச்[3]ருணுஷ்வ நிருத்தரம் || (1)

"ராவணா! கேள். ராமன் சிறுவனாயிருந்தபொழுது நடந்ததையும் அக்காலத்தில் அவனுடைய பலபராக்கிரமத்தையும் இது வரையில் வர்ணித்து, அவன் வயது முதிர்ந்து அஸ்திர வித்தையைக் கரைகடந்து பூர்ணசக்தியுடன் விளங்கும்பொழுது நடந்ததைச் சொல்லுகிறேன். என்னைத் தடுக்காமல் கவனத்துடன் கேள், முன்னொரு தரம் அவனுடைய பாணததால் உயிர் போகும்படி இருந்தது. அவனுடைய கிருபையால் தப்பினேன்; ஆயினும் புத்தி வராமல் பயமடையாமல் அவன் ஸஞ்சரிக்கும் தண்டகாரண்யத்தில் நானும் இரண்டு ராக்ஷஸர்களும் மான்களைப்போல் நடமாடினோம். மலைபோன்ற தேகத்தையும் கூர்மையான பற்களையும் நெருப்புக் கொழுந்துபோன்ற நாக்கையும் தரித்துக்கொண்டு அக்னி ஹோத்திர சாலைகளிலும் புண்ணிய க்ஷேத்திரங்களிலும் தேவதைகள் வஸிக்கும் மரச்சோலைகளிலும் பயமில்லாமல் போனோம். தர்மாத்மாக்களான தபஸ்விகளையும் முனிகளையும் ரிஷிகளையும் பயமுறுத்தி, பலவந்தம் செய்து, கொன்று தின்றேன். காடுகளிலுள்ள ஸகலப் பிராணிகளையும் நடுங்கச் செய்துகொண்டிருந்தேன். ரிஷிகளின் ரத்தத்தால் வெறிகொண்டு, தர்ம காரியங்களை அழித்துக்கொண்டு, ராம லக்ஷ்மணர்கள் தபஸ்விவேஷம் பூண்டு ஜானகியுடனிருக்கும் ஆசிரமத்திற்குப் போனேன். ஜடை மரவுரியுடன் ஆஹார நியமத்துடன் ஸகல பிராணிகளுக்கும் ஹிதத்தையே நாடிக்கொண்டிருக்கும் ராமனைப் பார்த்து, "இவன் முனிவேடம் தரித்திருக்கிறான். பிராணிகளை அடக்கமாட்டான்" என்று அந்த மஹாபலசாலியை அலக்ஷ்யம் செய்து, முன்பு அவனால் நான் அனுபவித்த கஷ்டத்தை நினைத்து அதற்குப் பழிவாங்க இதே ஸமயமென்று மகிழ்ந்து கூரான கொம்புகளால் அவனைக் குத்திக்கொல்லத் திடீரென்று அவன்மேல் பாய்ந்தேன். ஒருதடவை அவன் கையால் பட்ட கஷ்டத்தை மறந்து, "இவன் தபஸ்வி வேஷம் பூண்டிருந்தும், ஆயுதத்தைத் தரிக்கிறானே; நம்மைக் கொல்லமாட்டானென்று எண்ணக்கூடாது. இவனுடைய ஸமீபத்தில் போகக்கூடாது" என்ற புத்தியில்லாத என்னையல்லவா கொண்டாடவேண்டும்! உடனே ரகுநாதன் கோதண்டத்தை வளைத்துக் கருடனைப்போலும் நெருப்பைப்போலும் கர்ஜிக்கும் மூன்று பாணங்களைவிட்டான். அவை நிமிர்ந்த கணுக்களுடன் சத்துருக்களின் ரத்தத்தைக் குடிக்க ஆவல்கொண்டு வஜ்ராயுதத்தைப்போல் ஒரே காலத்தில் கிளம்பிவந்தன. நான் ராமனுடைய பராக்ரமத்தை அறிந்தவன்; அவைகளால் உண்டாகும் பயத்தையும் துன்பத்தையும் அனுபவித்தவன்; ஆகையால் புத்தி சிதறி ஓடி ஒளிந்து தப்பினேன். யுத்தத்தில் பயந்து ஓடுகிறவனை அவன் பாணங்கள் தொடர்வதில்லை. அதை அறியாத மற்ற இரண்டு ராக்ஷஸர்களும் கொல்லப்பட்டார்கள்.

இப்படி ராமபாணத்தின் கிருபையால் அதிருஷ்டவசத்தால் என் உயிர் போகவில்லை. அப்பொழுது முதல் மனத்தையும் இந்திரியங்களையும் அடக்கி ஆகார நியமத்துடன் ஸாதுக்களின் ஆசாரத்தைக் கைக்கொண்டு, கெட்ட வழியை விட்டு இந்தக் காட்டில் தவம் செய்துகொண்டிருக்கிறேன். மரவுரி மான்தோல் ஜடைகளுடன், காலபாசத்தைக் கையில்பிடித்து, ஒவ்வொரு மரத்தடியிலும் ராமன் நிற்பதாகப் பார்க்கிறேன். ஒரு ராமனல்ல; பயந்த என் கண்களுக்கு ஆயிரம் பதினாயிரம் ராமன்கள் தோன்றுகின்றனர். சோகத்தாலாவது ஆசையாலாவது பயத்தாலாவது ஒரே விஷயத்தை நினைத்துக் கொண்டிருப்பவனுக்கு அது எதிரில் நிற்பது போலிருக்குமல்லவா? ராமன் ஒருவனே ஒவ்வொரு மரத்தடியிலும் போய் நின்றுகொண்டு என்னை இப்படி மயக்குகிறானென்று எண்ணுகிறாயா? மரங்களிருக்கட்டும். இந்த வன முழுவதும் எங்கே பார்த்தாலும் ராமரூபமே எனக்குக் காணப்படுகிறது. இது ராமன் செய்த மாயையல்ல; அவனில்லாத இடத்திலும் அவனுடைய ரூபமே காணப்படுகிறது. இது விழித்துக்கொண்டிருக்கும்பொழுது மாத்திரமல்ல; கனவிலும் ராமனையே கண்டு பயந்து பிதற்றுகிறேன். வரவர அதைபற்றிக் கேட்டாலும் அதே பயம் பிடித்துக்கொள்ளுகிறது. ராமனைக் கண்டு நடுங்கும் எனக்கு 'ரா' என்னும் எழுத்தில் ஆரம்பிக்கும் வார்த்தைகளை (ரதம் ரத்தினம் முதலியன) கேட்டால் பயமுண்டாகிறது. பின்வரும் எழுத்துக்கள் 'ம' என்றிராவிட்டால் அந்தப் பயம் மெள்ள மெள்ளத் தெளிகிறது.

ராவணா! நான் அவனுடைய திறமையையும் உன் திறமையையும் நன்றாக அறிந்தவன்; என் வார்த்தையைக் கேள். அவனுடன் உன்னால் சண்டை செய்ய முடியாது. மஹாபலியையும் நமுசியையும் அவன் விளையாட்டாகக் கொல்வான். கரதூஷணர்களுடைய வதத்திற்குப் பழிவாங்கவேண்டுமென்றிருந்தால் ராமனுடன் யுத்தம் செய். முடியாவிட்டால் பொறுத்துக்கொள். ஸீதையை மாத்திரம் திருட்டுத்தனமாக எடுத்து வராதே. ஒரே வார்த்தை சொல்லுகிறேன். என்னை மறுபடியும் உயிருடன் பார்க்க உனக்கு எண்ணமிருந்தால் அவனுடைய பேச்சை எடுக்காதே. லோகத்தில் மனத்தை அடக்கி நல்ல வழியில் நடந்துகொண்டிருப்பவன்; உன்னுடன் சேர்ந்தால் நீ செய்யும் அக்கிரமத்தின் பயனை அனுபவித்து உன்னுடன் நசிப்பேன். ஆகையால் உன்னிஷ்டப்படி செய். என்னை நிர்ப்பந்தம் பண்ணாதே. உன்னுடன் வரமாட்டேன். வந்தால் சாவது நிச்சயம். ராமன் மஹாதேஜஸ்வி, மஹாபலவான், மஹா பராக்கிரமசாலி; அவன் ராக்ஷஸ குலத்துக்குக் காலனாகாமல்

பார்த்துக்கொள்; உன் பிடிவாதத்தைப் பார்த்தால் அப்படியே நேருமென்பதில் ஸந்தேகமில்லை.

இதிருக்கட்டும். ராமனுக்கு நீ என் அபகாரம் செய்கிறாய்? சூர்ப்பணகை காரணமாக கரதூஷணாதி ராக்ஷஸர்களைக் கொன்றதற்காகவா? அவனுடன் யுத்தத்திற்குப் போய் அவனைக் கொல்லப் பார்த்தால் விட்டுவிடுவானா? சூர்ப்பணகையை அலங்கோலம் செய்ததற்காகவா? அவள் ஸீதையைத் தின்ன ஓடிவந்ததைத் தடுத்து அவளைக் கொல்லாமல் அங்கஹீனம் செய்தது பிசகா? சூர்ப்பணகையின் அதிருஷ்டமும் ராமனுடைய கிருபையுமல்லவா அவளைக் காப்பாற்றியது? இப்பொழுது ராமனிடத்தில் ஏதாவது குற்றமிருந்தால் எடுத்துச்சொல். நீ எனக்கு பந்து, நண்பன், அரசன்; ஆகையால் உனக்கு ஹிதத்தை அடிக்கடி சொல்கிறேன். நீ அதை அலக்ஷ்யம் பண்ணி ஒரே பிடிவாதமாக உன் கெட்ட எண்ணத்தை நிறைவேற்ற முயன்றால், ராமனுடைய பாணங்களுக்கு நீயும் உன் பந்துக்களும் இரையாவீர்களென்பதில் ஸந்தேகமில்லை" என்று சொல்லித் தடுத்தான்.

இத3ம் வசோ ப3ந்து4ஹிதார்தி2நா மயா
யதோ2ச்யமாநம் யதி3 நாபி4பத்ஸ்யஸே |
ஸபா3ந்த4வஸ் த்யக்ஷ்யஸி ஜீவிதம் ரணே
ஹதோ3த்3ய ராமேண ஶரை ரஜிஹ்மகை3: || (25)

---

## ஸர்க்கம் 40

# ராவணன் மாரீசனை நிர்பந்தித்தது

---

மாரீசேந து தத்3வாக்யம் க்ஷமம் யுக்தம் நிஶாசர: |
உக்தோ ந ப்ரதிஜக்3ராஹ மர்துகாம இவௌஷத4ம் || (1)

இப்படி மாரீசன் அபாயமின்றி ஸுகத்தைக் கொடுக்கக் கூடியதாக உண்மைக்கும் யுக்திக்கும் ஒத்த வார்த்தைகளைச் சொன்னான். தன் மரணம் நெருங்கினவன் மருந்தை விட்டெறிவது போல் ராவணன் அவைகளை ஒப்புக்கொள்ளவில்லை. காலனால் தூண்டப்பட்டு, கடுமையாகத் தகாத வார்த்தைகளைச் சொன்னான். "மாரீச! உன் ஆலோசனை கொஞ்சம்கூடப் பயன்படாது. மனப்போக்கை அறிந்து அதை ஒத்துச் சொல்லப்படாத சொல் உவர் நிலத்தில் விதைத்த விதையைப்போல் வீணாகும். ராமன் கேவலம் ஒரு மனிதன்; மூர்க்கன்; மஹாபாபி; அவனுடன் நான் யுத்தம் செய்வது என் கீர்த்திக்கும் மேன்மைக்கும் தகாது. ஸீதையை எடுத்து வருவதே அவனுக்குத் தகுந்த சிக்ஷை. அதை விட்டு அவனுடன் யுத்தம்செய்ய வேண்டுமென்று நீ எவ்வளவு முயன்றாலும் பலிக்காது. ஒரு அல்ப ஸ்த்ரீயான கைகேயியின் வார்த்தையைக் கேட்டு, அடுத்த க்ஷணத்தில் பெற்றோரையும்



நண்பர்களையும் ராஜ்யத்தையும் விட்டுக் காட்டிற்கு வந்த முட்டாளுடன் நான் யுத்தம் செய்வது எனக்கழகா? கரதூஷணர்களை யுத்தத்தில் கொன்ற அந்தத் துஷ்டனுக்கு பிராணனைக்காட்டிலும் பிரியமான ஸீதையை உனக்கெதிரில் எடுத்து வருகிறேன். அவனுடைய உயிரை வாங்குவதைவிட இதுவே அவனுக்குக் கடுமையான தண்டனை. இப்படிச் செய்ய நிச்சயித்துவிட்டேன். தேவாஸுரர்கள் ஒன்று கூடித் தடுத்தாலும் நிற்க மாட்டேன்.

"உன்னைக் கேட்காமலிருக்கையில் நீ புத்தி சொல்வது தகுமா? ஒரு காரியத்தை நிச்சயிக்கும்பொழுது அதிலுள்ள குணதோஷங்களென்ன? அதை முடிக்க உபாயமென்ன? அதில் நேரும் அபாயமென்னவென்று கேட்டால் நீ பதில் சொல்லவேண்டும். நான் அதைப்பற்றித் தெரிந்துகொள்ள உன்னிடத்தில் வரவில்லை. ஆகையால் நீ சொன்னதெல்லாம் யுக்தமல்ல. அரசர்களிடத்தில் விஷயங்களைத் தெரிவிக்கும் முறையையும் ஒழுங்கையும் நீ அறியாதவன். அரசர்களிடத்தில் வேலைசெய்யும் சேவகர்கள் தங்கள் க்ஷேமத்தையும் செல்வத்தையும் விரும்பினால், யஜமான் கேட்டபிறகு வணக்கமாகக் கைகூப்பி விஷயத்தைத் தெரிவிக்கவேண்டும். மேலும் ஹிதமான உபதேசத்தையும் உபசாரத்துடன் மரியாதையுடன் மிருதுவாகத் தெரிவிக்கவேண்டும். அது மதுரமாகவும் சுலபமாகவும் பிரபுக்களின் மனப்போக்கை ஒத்தும் இருக்கவேண்டும். ஹிதமானாலும் அலக்ஷ்யமாக மரியாதையில்லாமல் சொன்னால், ஜனங்களால் பூஜிக்கத் தகுந்த அரசர்கள் அதை ஒப்புக்கொள்வார்களா? அரசன் நெருப்பைப்போல் கொடுமையையும், இந்திரனைப்போல் பராக்கிரமத்தையும், சந்திரனைப்போல் பிரியத்தையும், வருணனைப்போல் தண்டிக்கும் சக்தியையும் தர்மராஜனைப்போல் மனத்தெளிவையும் உடையவன். ஆகையால் இந்த ஐந்து தேவதைகளின் ஸ்வரூபத்தைத் தரித்து எல்லையற்ற தேஜஸுடன் விளங்குகிறான். எக்காலத்திலும் எவ்விடத்திலும் அவனை மனத்தாலும் சொல்லாலும் பூஜித்து மரியாதை செய்யவேண்டும்.

"நீ ராஜ தர்மத்தை அறிந்தவன், கேவலம் அஜ்ஞானத்தால் மூடப்பட்ட புத்தியுடையவன். உன் அரசனாயும் பந்துவாயும் நண்பனுமிருக்கும் நான் உன்னைத்தேடிவந்து உன் உதவியை வேண்டும்பொழுது என்னைத் தடுத்து நிந்தித்துக் கடுமையான வார்த்தைகளால் அவமானம் செய்தாய். நான் உத்தேசித்த காரியத்தின் குணதோஷங்களையாவது என் க்ஷேமத்தையாவது என் சக்தியையாவது உன்னிடத்தில் தெரிந்துகொள்ள வந்தேனா? நான் சொல்வது இதுவே. இந்தக்காரியத்தில் நீஎனக்கு உதவிசெய்ய வேண்டும். பராக்கிரமத்தில் எல்லையற்ற நீ முடியாதென்று சொல்வது வீண் பேச்சு. நான் உன்னிடத்தில் விரும்பும் உதவியையும் தெளிவாகச் சொல்லுகிறேன். விசித்திரமான வெள்ளிப்

புள்ளிகளையுடைய தங்க நிறமுள்ள மானாக நீ ராமனுடைய ஆசிரமத்திற்கு அருகில் போய் ஸீதைக்கெதிரே நடமாடவேண்டும். அவளை ஏமாற்றி ராம லக்ஷ்மணர்களைத் தொலைவில் இழுத்துக் கொண்டுபோய் என் காரியத்தை முடித்துப் பிறகு இஷ்டப்படி போகலாம். தங்க நிறமுள்ள மானைப் பார்த்து ஸீதை ஆச்சரியப்பட்டு அதைப் பிடித்துத் தர ராமனை நிச்சயமாகக் கேட்பாள். பிறகு அவனை அழைத்துக்கொண்டு நீ வெகுதூரம் போய் ராமனுடைய குரலுடன் "ஹா ஸீதே, ஹா லக்ஷ்மண" என்று கத்தவேண்டும். அதைக் கேட்டு ஸீதை ராமனைத்தேட லக்ஷ்மணனை அனுப்புவாள். ராமனிடத்திலுள்ள பிரியத்தால் அவனும் நிச்சயமாகத் தேடப் போவான். இப்படி அவ்விருவரும் ஆசிரமத்திலில்லாத காலத்தில் இந்திரன் இந்திராணியை எடுத்துப் போவதுபோல் நான் ஸீதையை எடுத்து வருவேன். என் இஷ்டத்தை நிறைவேற்றிய பிறகு நீ உனக்கிஷ்டமான இடத்திற்குப் போகலாம். இந்த உபகாரத்திற்காக உனக்கு என் ராஜ்யத்தில் பாதி தருகிறேன். ஆகையால் கண்ணைப் பறிக்கும் அழகுள்ள மான்ரூபத்தை எடு. என் எண்ணம் சீக்கிரத்தில் முடியவேண்டும். உன்னுடன் நானும் இந்த ரதத்தில் தண்டகாரண்யத்திற்கு வருகிறேன். ராமனுடன் யுத்தம் செய்யாமல் அவனை ஏமாற்றி ஸீதையை எடுத்துவந்து என் மனோரதம் நிறைவேறின பிறகு நாம் லங்கைக்குப் போவோம். இப்படிச் செய்யாமல் இன்னும் என்வார்த்தையைத் தடுத்துப் பேசினால் உன்னை இப்பொழுதே கொல்வேன். நீ விரும்பினாலும் இல்லாவிட்டாலும் இதைச் செய்தே தீரவேண்டும். அரசர்களுடைய எண்ணத்திற்கு விரோதமாக நடப்பவர்கள் ஒருபோதும் சுகப்படமாட்டார்கள். மானைப்போல் ராமனிடத்தில் போனால் ஒருவேளை உன் அதிருஷ்டத்தால் உயிர் தப்பலாம். என்னைப் பகைத்தால் இப்பொழுதே உனக்கு மரணம் நிச்சயம். இந்த விஷயத்திலுள்ள குணதோஷங்களையும் லாப நஷ்டங்களையும் தெளிவாக எடுத்துச் சொன்னேன். உனக்கு எது ஹிதமென்று தோன்றினாலும் அதைச் செய்" என்றான்.

ஆஸாத்3ய தம் ஜீவித ஸம்ஶயஸ்தே
ம்ருத்யுர் த்4ருவோ ஹ்யத்3ய மயா விருத்4ய ।
ஏதத்3 யதா2வத் பரிக்3ருஹ்ய பு3த்4யா
யத3த்ர பத்2யம் குரு தத் ததா2 த்வம் ॥ (27)

---

## ஸர்க்கம் 41

# மாரீசன் மறுபடியும் தடுத்தது

ஆஜ்ஞப்தோ ராஜவத்3 வாக்யம் ப்ரதிகூலம் நிஶாசர: ।
அப்3ரவீத் பருஷம் வாக்யம் மாரீசோ ராக்ஷஸாதி4பம் ॥ (1)

இப்படி ராவணன் அரசனென்ற முறையால் அதிகாரத்துடன் கட்டளையிட்ட பிறகும், மாரீசன் கொஞ்சமும் பயப்படாமல் அவனுடைய ஹிதத்தையே நாடி கடுமையாகப் பதில் சொன்னான். 'ராவண! நீயும் உன் புத்திரர்களும் மந்திரிகளும் ராஜ்யமும் வேரில்லாமல் அழியவேண்டுமென்று எந்தப் பாபி உனக்கு இந்த யோசனையைச் சொன்னான்? உன் க்ஷேமத்தையும் செல்வத்தையும் அதிகாரத்தையும் கீர்த்தியையும் பார்த்துப் பொறுக்காமல், எந்த துஷ்டன் யமனுடைய வீட்டிற்குச் சீக்கிரமாகப் போகும் வழியை உனக்குக் காட்டினான்? பலவானான ராமனால் ஜயிக்கப்பட்டு நீ இறக்கும்படி விரும்பும் வீரியமற்ற ராக்ஷஸர்கள் உன் பரம சத்துருக்களே. நீ செய்த அநியாயத்தாலேயே நீ அழியவேண்டுமென்று, அல்பனும் கெடுதியை உபதேசிப்பவனுமான எந்த துரோகி உனக்கு இதைச் சொன்னான்? நல்ல வழியை விட்டு விலகின உன்னைத் தடுக்காத உன் மந்திரிகள் கொல்லப்படவேண்டியவர்கள்; இன்னும் கொல்லப்படவில்லையே. அரசன் தன்னிஷ்டப்படி நடந்து கெட்ட வழியில் இறங்கினால் அவனை ஸாதுக்களான மந்திரிகள் தடுக்க வேண்டும். அப்படித் தடுக்கப்படவேண்டிய உன்னை எவரும் தடுக்கவில்லையே! அரசன் க்ஷேமமாயிருந்தால் ஸேவகர்கள் தர்மம் அர்த்தம் காமம் கீர்த்தி என்றவைகளை அடைவார்கள். அரசன் துஷ்டனாகவும் கெட்ட நடத்தையுள்ளவனாகவும் இருந்தால் இவையெல்லாம் வீணாகும். மற்ற ஜனங்களும் அழிவார்கள். ராஜ்யத்தில் தர்மமும் ஜயமும் அரசனை பொறுத்திருக்கின்றன. ஆகையால் எப்பொழுதும் எந்தக் கஷ்டம் நேர்ந்தாலும் அரசர்கள் நல்ல வழியிலிருந்து விலகாதபடி மந்திரிகள் ஜாக்கிரதையாகப் பார்த்துக்கொள்ள வேண்டும். ஜனங்களை குரூரமாகத் தண்டிப்பவனும் அவர்களுக்குக் கெடுதி செய்பவனும் இந்திரியஸ்வாதீனமற்றவனுமான அரசன் ராஜ்யத்தை ஆளச் சக்தியற்றவன். குடிகளை குரூரமாகத் தண்டிக்கும்படி அரசனைத் தூண்டிவிடும் மந்திரிகள் அவனுடன் அழிகிறார்கள். ரதத்தில் பூட்டிய குதிரைகள் மிரண்டு கட்டுப்படாமல் மேடு பள்ளமுள்ளவிடத்தில் ஓடும்பொழுது, திறமையில்லாத தேரோட்டி அவைகளை அடக்கமுடியாமல் தன்னையும் ரதத்தையும் குதிரைகளையும் நாசமாக்குவானல்லவா? லோகத்தில் எவ்வளவோ ஸாதுக்கள் தர்ம மார்க்கத்தை விட்டு விலகாமலிருந்தும், துஷ்டர்களுடன் சேர்ந்து அவர்கள் செய்யும் பாப கர்மங்களால் தங்களுடைய பரிவாரங்களுடன் மடிகிறார்கள். குடிகளுக்கு விரோதியும் அவர்களை கொடுமையாகத் தண்டிப்பவனுமான அரசன் அவர்களைக் காப்பாற்றுவது, ஆட்டுமந்தையை நரி பாதுகாப்பது போலல்லவா ஆகும்? கடினசித்தமும் கெட்ட புத்தியும் வாய்ந்து இந்திரிய ஸ்வாதீனமற்ற உன்னை அரசனாக அடைந்த ராக்ஷஸர்களெல்லாம் நாசமடைவதில் ஸந்தேகமுண்டோ?

காக்கை உட்காரப் பனம்பழம் விழுந்ததுபோல் எனக்கு இந்தக் கெடுதி நேர்ந்திருக்கிறது. என்னைப்பற்றி எனக்கு வருத்தமே இல்லை. நீயும் ஸைன்யமும் பந்துக்களும் பெண்டு பிள்ளைகளும்

நிர்மூலமாவீர்களே என்று வருந்துகிறேன். என்னைக் கண்டவுடனே ராமன் என் உயிரை வாங்கிவிடுவான். பிறகு உனக்கு மரணம் நேர வெகுகாலம் செல்லுமென்று எண்ணாதே. ராமன் எனக்குச் சத்துருவாக நேர்ந்து அவன் கையால் நான் மரணமடைந்தால் எனக்கு எல்லா க்ஷேமமும் உண்டாகும். விசுவாமித்திர யாகத்தைக் காக்க வந்தது முதல் கரதூஷணவதம் வரையில் நடந்த அத்புதமான காரியங்களை நினைத்து நினைத்து, ராமன் ஸாதாரண மனுஷ்யனல்ல, கேவலம் பரம புருஷனே என்று அறிந்தேன். இது நிச்சயம். ஆகையால் அவனுடைய கையால் இறந்தால் பரம புருஷார்த்தம் கிடைக்கும். அப்படியில்லாவிட்டாலும் உன் கையால் இறப்பதைவிட சத்ரு கையால் இறந்தால் ஸ்வர்க்கத்தை அடைவேன். ராவணா! இன்னும் ஒருதரம் சொல்லுகிறேன். ராமனைக் கண்ட அந்த க்ஷணத்திலேயே இறந்தேனென்று நிச்சயமாக நம்பு. ஸீதையை எடுத்து வந்தால், நான், நீ, லங்கை, உன் பந்துக்கள், குடிகள் எல்லோரும் பிறகு ஒரு நிமிஷமாவது உயிரோடிருப்போம் என்று நினைக்காதே. உன் க்ஷேமத்தை விரும்பி உன்னை இப்படி அடிக்கடி தடுக்கிறேன். என் வார்த்தை உனக்கு ஹிதமாகத் தோன்றவில்லை. ஆயுள் குறைந்து சாவு நெருங்கின நிர்ப்பாக்கியர்கள், ஸாதுக்களுடைய உபதேசத்தை ஒப்புக்கொள்ள மாட்டார்கள்" என்றான்.

நிவார்யமாணஸ்து மயா ஹிதைஷிணா
ந ம்ருஷ்யஸே வாக்யமித3ம் நிஶாசர |
பரேதகல்பா ஹி க3தாயுஷோ நரா:
ஹிதம் ந க்3ருஹ்ணந்தி ஸுஹ்ருத்3பி4 ரீரிதம் ‖ (20)

---

## ஸர்க்கம் 42

## மாரீசன் மானாக மாறியது

ஏவமுக்த்வா து வசநம் மாரீசோ ராவணம் தத: |
க3ச்சா2வேத்யப்3ரவீத்3 தீ3நோ ப4யாத்3 ராத்ரிஞ்சர ப்ரபோ4: (1)

**போ**காவிட்டால் ராவணன் இப்பொழுதே கொல்வான் என்று மாரீசன் பயந்து, "கோதண்டபாணியான ராமனுடைய கண்ணில் நான் மறுபடியும் பட்டால் அடுத்த க்ஷணம் உயிரோடு இருக்கமாட்டேன்; ராமனை எதிர்த்து எவனாவது பிழைத்ததுண்டா? காலதண்டத்தைக் கையிலேந்தி, நம்மிருவரையும் அழிக்கும் யமனே ராமரூபமாக வந்திருக்கிறானல்லவா? நீயோ வெகு பொல்லாதவன்; பிடிவாதக்காரன்; கூடியவரையில் உன்னைத் தடுத்துப் பார்த்தேன்; இனி நான் என்ன செய்வேன்? புறப்படு, போவோம். உனக்கு மங்களம் உண்டாகட்டும்" என்றான். அதைக்கேட்ட ராவணன் அடங்கா மகிழ்ச்சி கொண்டு, மாரீசனை வெகு ப்ரியத்துடன் ஆலிங்கனம் செய்து, "மாரீச! இதுவரையிலும் ஏதோ பிதற்றிக்கொண்டிருந்தாய். இப்பொழுது சொன்ன பேச்சல்லவா பேச்சு? என் இஷ்டத்தை ஒத்து உன் வீரியத்திற்கு தகுந்தபடி பேசினாய். மாரீசன் இறந்து வேறு யாரோ ராக்ஷஸன் என்னுடன் இதுவரையில் பேசிக்கொண்டிருந்தான். பழைய மாரீசனை இப்பொழுதுதான் கண்டேன். பலம், பராக்கிரமம், தைரியம் இவைகளால் லோகத்தில் கீர்த்திபெற்ற மாரீசனுக்குத் தகுந்த நடத்தை இதல்லவா! இதே உன் உண்மையான தன்மை. இதைவிட்டுக் கையாலாகாத ராக்ஷஸப் பதரைப்போல் பேசினாய். இந்தத் திவ்விய ரதத்தில் சீக்கிரமாக ஏறு. பிசாசமுகங்களையுடைய இந்தக் கோவேறு கழுதைகள் நம்மை ஒரு க்ஷணத்தில் அந்த ஆசிரமத்திற்குக் கொண்டுபோய்விடும். ஸீதையை ஏமாற்றின பிறகு உன் இஷ்டப்படி போ. ராமலக்ஷ்மணர்களில்லாமல் தனியாக இருக்கும் ஜானகியை அபகரித்து லங்கையில் கொண்டுபோய் வைக்கிறேன்" என்றான். •



பிறகு அவர்கள் விமானம் போன்ற அந்த ரதத்திலேறி, வழியில் காடு மலை நதி நாடு நகரம் பட்டணம் ராஜ்யம் முதலியவைகளைப் பார்த்துக்கொண்டுி ராமனுடைய ஆசிரமத்திற்கு ஸமீபத்தில் அதிவேகமாக வந்தார்கள். ரதத்திலிருந்து இறங்கி ராவணன் மாரீசனுடைய கையைப் பிடித்துக்கொண்டு, "மாரீச! இதோ வாழைத் தோட்டத்தின் நடுவிலிருக்கும் ஆசிரமமே ராமனுடையது. வந்த காரியத்தைச் சீக்கிரமாக முடி" என்றான்.

பிறகு மாரீசன் ஆச்சரியமான மான் ரூபத்தை எடுத்து ராமனுடைய ஆசிரமத்திற்கு ஸமீபத்தில் திரிந்துகொண்டிருந்தான். கொம்புகளின் முனைகள் இந்திர நீலக்கற்களைப்போல் பிரகாசித்தன. முகம் ஓரிடத்தில் வெளுத்தும் ஓரிடத்தில் கறுத்தும் விசித்திரமாக விளங்கிற்று. மலர்ந்த செந்தாமரையைப் போன்ற வாயும், நீலோத்பலத்தையும் இந்திர நீலத்தையும் போன்ற காதுகளும், இந்திர நீலம்போன்ற கழுத்தும், மல்லிகைப் பூவையும் சந்திரனையும் வஜ்ரத்தையும் போன்ற வயிறும், இலுப்பைப் பூவைப் போன்ற பக்கங்களும், தாமரைத் தாதுக்களையும் வைடூரியத்தையும் போன்ற குளம்புகளும், மெல்லிய முழங்கால்களும், நன்றாக அமைக்கப்பட்ட அவயவங்களும் பொருந்தி, இந்திர வில்லைப்போன்ற நானா வர்ணங்களுள்ள வாலை உயரத் தூக்கிக்கொண்டு, இதுவரையில் ஒருவரும் பார்த்திராத மான் ரூபத்தை மாரீசன் மாயா பலத்தால் ஒரு நிமிஷத்தில் எடுத்தான். ஸீதையை ஏமாற்ற மனத்தைக் கவரும் அழகுவாய்ந்த மான்ரூபத்தைத் தரித்து, அந்த ஆசிரமத்தையும் வனங்களையும் தன் தேகக்காந்தியால் விளங்கச் செய்துகொண்டு, சற்று நேரம் இளம்புற்களை மேய்ந்து சற்று நேரம் மரங்களின் தளிர்களை முறித்துத் தின்று, சற்று நேரம் வாழைத் தோட்டத்திற்குப் போய் அங்கிருந்து கொங்கு மரங்களின் அடியில்

தங்கித் தங்கி, ஸீதை தன்னைப் பார்க்கும்படி செய்தான். மலை களின் தாதுக்கள் மின்னுவதுபோல் தேகத்தில் பல நிறங்களும் விளங்க, நக்ஷத்திரங்களைப்போன்ற விசித்திரமான புள்ளிகளால் நிறைந்து, தாமரையைப்போன்ற விசித்திரமான முதுகுடன் வந்த அந்தத் தங்க மான் ராமனிருக்கும் ஆசிரமத்திற்கு ஸமீபத்தில் நடமாடிற்று. சிறிது தூரம் போவதும், மறுபடி திரும்புவதும், சிறிதுநேரம் வரையில் கண்ணில் படாமலிருப்பதும், பிறகு திடீரென்று அதி வேகமாக ஓடிவருவதும், கொஞ்ச நேரம் துள்ளிக் குதித்து விளையாடுவதும், கொஞ்ச நேரம் களைத்துப் படுத்திருப்பது போல் காட்டுவதுமாகத் தன் மாய வித்தைகள் எல்லாவற்றையும் வெளிப்படுத்தினுன்; மான் கூட்டங்களோடு கலந்து ஆசிரமத்து வாசலுக்கு ஸமீபத்தில் போவான். பிறகு அவைகளோடு மறு படியும் அந்த வழியாகவே வருவான்.

இப்படி ஸீதை தன்னைப் பார்க்கவேண்டுமென்ற எண்ணத் துடன் அந்த ராக்ஷஸ மிருகம் விசித்திரமாகச் சுழன்றுகொண்டு அங்கும் மிங்கும் உலாவித் திரியும்பொழுது, மற்ற மான்கள் அதன் ஸமீபத்தில் வந்து, முதலில் தங்களைப்போன்ற ஒரு மானென்றே எண்ணியிருந்தன. பிறகு அவனை முகர்ந்து பார்த்து ராக்ஷஸ னென்று அறிந்து பயந்து மறைந்தோடின.

அவை தன்னருகில் இருக்கும்பொழுது அவைகளைக் கொன்று தின்னவேண்டுமென்று மாரீசனுக்கு ஆசை மேலிட்டு வாயில் ஜலம் ஊறிற்று. ஆனுல் தானெடுத்த வேஷத்திற்கும், உத்தேசித்து வந்த காரியத்திற்கும் கெடுதி நேருமென்று அவைகளைத் தொட்டுப் பார்த்துக் கொல்லாமல் போக விட்டான்.

அந்த ஸமயத்தில் ஸீதை கோங்கு, அசோகம், தேன், மா முதலிய மரங்கள் அடர்ந்த சோலைக்குப் போய் மிகுந்த ஸந்தோஷத்துடன் அங்குமிங்கும் பார்த்துக்கொண்டு புஷ்பங்களைப் பறித்தாள். அதுவரையில் காட்டில் வஸித்தறியாதவள்; அந்தக் கஷ்டத்தை அனுபவிக்கத் தகாதவள்; ஆகையால் ரத்தினங்களால் அலங்கரிக்கப் பட்ட தங்க மானைப்போல் விளங்கும் அந்த மாய மிருகத்தைப் பார்த்து ஆச்சரியமடைந்து மிகப் பிரியமாகப் பார்த்துக்கொண்டே இருந்தாள். ஸீதை தன்னைப் பார்ப்பதை அறிந்து மாரீசன் முன்னைவிட அதிக விசித்திரமாக அங்குமிங்கும் அலைந்துகொண்டு, தன் காந்தியால் அந்த வனம் முழுவதையும் பிரகாசிக்கச் செய் தான். தான் அதுவரையிலும் பார்த்திராத விசித்திரமான நிறமுள்ள அந்த மானைக்கண்டு ஜானகி ஆச்சரியம் மேலிட்டுக் கண் கொட்டாமல் அதைப் பார்த்துக்கொண்டே நின்ருள்.

அத்³ருஷ்டபூர்வம் தம் த்³ருஷ்ட்வா நாநாரத்நமயம் ம்ருக³ம் |
விஸ்மயம் பரமம் ஸீதா ஜகா³ம ஜநகாத்மஜா ‖ (35)



ஆர்ய புத்ராபி⁴ராமோஸௌ ம்ருகோ³ ஹரதி மே மந: |
ஆநயைநம் மஹாபாஹோ க்ரீடா³ர்த²ம் நோ ப⁴விஷ்யதி ॥ —ஆ. 43 ஸ - 9 சு.

"நாத! இந்த மான் பார்க்க வெகு அழகாக இருக்கிறது. என் மனத்தைக் கவர்ந்து விட்டது. எனக்கு விளையாட இதைப் பிடித்துத் தரவேண்டும்." (பக்கம்113 பார்க்க)

## ஸர்க்கம் 43

## மானைப் பிடித்துத்தர ஸீதை பிரார்த்தித்தது

ஸா தம் ஸம்ப்ரேக்ஷ்ய ஸுஶ்ரோணீ குஸுமாந்யபசிந்வதீ |
ஹைமராஜதவர்ணாப்⁴யாம் பார்ஶ்வாப்⁴யாமுபஶோபி⁴தம் ॥ (1)

ஒரு புறம் தங்கவர்ணமும் ஒரு புறம் வெள்ளி நிறமும் விளங்கும் அந்த அபூர்வமான மிருகத்தைப் பார்த்து ஸீதை மிகவும் ஸந்தோஷித்து ராமலக்ஷ்மணர்களைக் கூவி அழைத்தாள். அவர்கள் வெளியில் வந்து சுற்றிப்பார்த்து, அங்கே ஓரிடத்தில் மேய்ந்து கொண்டு விளையாடும் மாய மிருகத்தைக் கண்டார்கள். எப்போதும் ராக்ஷஸர்களிடத்தில் ஸந்தேகமுள்ளவரும் எப்பொழுதும் ஜாக்கிரதையாக இருப்பவருமான லக்ஷ்மணன் அதைக் கவனித்துப் பார்த்து, "அண்ணா! நாம் முன்பு இரக்கத்தால் கொல்லாமல் விட்ட அந்த மாரீசனே இப்படி மான்ரூபத்தை எடுத்து வந்திருக்கிறான். இந்த பாபி, நினைத்த ரூபங்களை எடுத்துக்கொண்டு இந்தக் காட்டில் வேட்டையாட வரும் அரசர்களுக்கெதிரில் மானைப்போல் தோன்றி அவர்களை மயக்கி, அடர்ந்த காடுகளில் இழுத்துக் கொண்டுபோய்க் கொடுமையாகக் கொல்லுகிறான். இவன் மஹா மாயாவி; கந்தர்வ நகரத்தைப்போன்ற இந்த விசித்திரமான மான்ரூபத்தை எடுப்பது இவனுக்குப் பெரியகாரியமல்ல. ரத்தினங்கள் பதித்த தங்கமானைப்போல் விளங்கும் இது உலகத்திலுள்ள மான்கள் போன்றதல்ல. இது மாயையே. ஸந்தேகமில்லை" என்று சொன்னான். ஸீதையோ அந்த மாயா மிருகத்தின் தோலைப் பார்த்து மயங்கி அவரைத் தடுத்து, "நாதா! இந்த மான் பார்க்க வெகு அழகாக இருக்கிறது. என் மனத்தைக் கவர்ந்துவிட்டது. எனக்கு விளையாட இதைப் பிடித்துத் தரவேண்டும். இந்த ஆசிரமத்திற்குப் பக்கத்தில் கரடிகளும் குரங்குகளும் பலவித மான்களும் கின்னர மிருகங்களும் திரிகின்றன. அவை ஆச்சரியகரமாகவும், பார்க்க அழகாகவுமிருக்கின்றன என்பது உண்மையே. ஆனால் இதைப் போல் நான் இதுவரையிலும் எந்த மிருகத்தையும் பார்த்ததில்லை. பல வர்ணங்களால் அலங்கரிக்கப்பட்டிருக்கும் விசித்திரமான அங்கங்களோடும், நிறத்தாலும், மெதுவான நடையாலும், தேகத்தின் காந்தியாலும் இந்த வனத்தில் பூர்ணசந்திரன் உதித்ததுபோல் மிகுந்த காந்தியுடன் பிரகாசிக்கிறது. என்ன ரூபம்! என்ன குரல்! என்ன காந்தி! விசித்திரமான அங்கங்களையுடைய இந்த மான் என் மனத்தைக் கொள்ளைகொண்டது. இதை உயிருடன் பிடித்து வந்தால் பார்ப்பவர்களுக்கு அடங்காத ஆச்சரியத்தையும் ஆனந்தத்தையும் கொடுக்கும். வனவாஸம் தீர்ந்து நாம் அயோத்யைக்குப் போகும்பொழுது இதைக் கொண்டுபோனால் பரதனும் ராஜபத்தினிகளும் அந்தப்புரஜனங்களும் இதைப் பார்த்து ஆச்

சரியமடைவார்கள். அந்தப்புரத்திற்கே இது அணியாக இருக்கும். ஒருவேளை இது உயிருடன் கிடைக்காவிட்டாலும் இதைக் கொன்று இதன் விசித்திரமான தோலை தர்ப்பாஸனத்தின்மேல் விரித்து உட்காரலாம். நான் என் இஷ்டத்தை அனுசரித்து இந்தக் காரியத்தில் தங்களை ஏவினேன் என்று கோபிக்கக்கூடாது. இது ஸ்த்ரீகளுக்குத் தகாத வார்த்தையே. கேட்டால் எல்லோரும் வெறுப்பார்கள். ஆனாலும் இந்த மிருகத்தின் விசித்திரமான அழகைப் பார்த்து என்மனம் மயங்கியிருக்கிறது. இதைப்பிடித்துத் தாருங்கள் என்று நான் தங்களைச் சொல்வது தகாது. நான் சொன்னதை மன்னிக்கவேண்டும். இதுவரையிலும் பார்த்திராத விசித்திரமான மிருகமென்று தங்களுக்குத்தோன்றினால் இதைப் பிடித்துத் தாருங்கள்'' என்று பிரார்த்தித்தாள்.

தங்க நிறமுள்ள மயிரையும் நீலரத்தினத்தைப்போன்ற கொம்பையும் உடைய அந்த மாயமிருகம், உதிக்கும் ஸூரியனையும் ஆகாசத்தையும்போல் விளங்குவதைப் பார்த்து ராமனும் ஆச்சரியமடைந்தார். அந்த மானின் அபூர்வ ரூபத்தாலும் ஸீதையின் வேண்டுகோளாலும் அதைப் பிடிக்க விரும்பி, "லக்ஷ்மண! குழந்தாய். பார். ஸீதை இந்த மிருகத்தினிடத்தில் அதிக ஆசை வைத்திருக்கிறாள். எந்தக் காடுகளிலும் நந்தனம் சைத்திர ரத மென்ற தேவத் தோட்டங்களிலும் இதைப்போல் விசித்திரமான மான் இருக்குமென்று நான் எண்ணவில்லை. நேராகவும் எதிராகவும் வளரும் இதன் மயிர் முழுவதும் தங்க நிறமுள்ள புள்ளிகளால் அலங்கரிக்கப்பட்டிருக்கின்றது.

இது கொட்டாவி விடும்பொழுது கொழுந்துவிட்டெரியும் அக்னியையும் மேகத்தில் பாயும் மின்னலையும்போல் இதன் வாயிலிருந்து நாக்கு தெரிவதைப் பார். இதன் முகம் இந்திர நீலக் கல்லால் செய்யப்பட்ட கிண்ணியைப்போல் விளங்குகின்றது. சங்கையும் ஆணிமுத்துக்களையும்போல் இதன் வயிறு வெளுத்திருக்கின்றது. இதைப்பார்த்து மயங்காதவர்கள் யார்? அரசர்கள் விளையாட்டுக்காகவும் மாம்ஸத்திற்காகவும் மிருகங்களை வேட்டையாடுகிறார்கள். அப்படியிருக்க, தங்கத்தில் நவரத்தினங்கள் இழைத்ததுபோல் விளங்கும் இந்த மானைப் பிடிப்பதற்கு கேட்கவும் வேண்டுமா? தங்கம் வெள்ளி நவரத்தினங்கள் முதலியவற்றைக் கொடுக்கும் தாதுக்கள் காடுகளில் அதிகமாகக் கிடைக்கும். யானையின் தலையில் உத்தமமான முத்துக்களுண்டு. அரசர்கள் அவைகளை வெகு கஷ்டத்துடன் தேடவேண்டும். சுக்கிரன் முதலிய தேவர்கள் மனத்தால் நினைத்த பதார்த்தங்களை எப்படி அடைகிறார்களோ அப்படியே அரசர்களும் நாட்டுப் பொருள்களைக்காட்டிலும் இயற்கையாயுள்ள காட்டுப் பொருள்களையே மேலானவை என்று அடைந்து தேடி வருவித்துப் பொக்கிஷத்தில் வைக்க வேண்டும். ஆனால் இதை நன்றாக விசாரித்துச் செய்யலாமென்பாய். ஒருவன் ஒரு



பொருளை அடைய விரும்பி அதற்குச் செய்யவேண்டிய உபாயங்களைப்பற்றிக் கொஞ்சமும் விசாரிக்காமல் முயன்றால் மாத்திரமே அது அர்த்தமென்று சொல்லப்படுமென்பது அர்த்த சாஸ்திர நிபுணர்களின் கருத்து. இந்த அபூர்வமான மிருகத்தின் சிறந்த தோலின்மேல் என்னுடன் உட்கார ஸீதை வெகு ஆசைகொண்டிருக்கிறாள். கதளி, பிரியகி, பிரவேணி ஆவிகி முதலியவற்றின் தோல்களும் இதைப்போல் அவ்வளவு மிருதுவாக இராதென்று எண்ணுகிறேன். இதோ நமக்கெதிரிலிருக்கும் இந்தப் பொன் மானும் ஆகாசத்தில் நக்ஷத்திரங்களுக்குள் ஒன்றான மிருகசீர்ஷமென்ற மானும் லோகத்தில் சிறந்தவை.

"இதுவரையில் ஸீதை சொன்ன காரணங்களை ஒட்டி இதை அவசியம் பிடிக்க வேண்டுமென்று காட்டினேன். நீ சொன்னபடி ராக்ஷஸனுடைய மாயையாக இருந்தாலும் இதைக் கொல்ல வேண்டியது அவசியமே. இந்தக் கொடிய மாரீசன் கெட்ட தன்மையுள்ளவன்; நல்லோர்களைத் துன்பப் படுத்துகிறவன். இவனால் இதுவரையில் பல மஹரிஷிகள் கொல்லப்பட்டிருக்கிறார்கள். இவன் மான்வேஷமெடுத்து, இங்கே வேட்டையாட வரும் அரசர்களுடைய கண்ணில் தோன்றி அவர்களை வெகுதூரம் அலைக்கழித்துக்கொண்டிருக்கிறான். ஆகையால் இவனை அவசியம் கொல்லவேண்டும். முன்பு இங்கே வாதாபி என்ற ஒரு அஸுரன் தபஸ்விகளை உபத்திரவித்துக்கொண்டிருந்தான். பிராம்மணர்களை சிராத்தத்திற்குத் தருவித்து, தான் ஆட்டின் ரூபத்தை எடுத்து, அவர்களால் தின்னப்படுவான். பிறகு அவர்கள் வயிற்றைக் கிழித்துக்கொண்டு வெளியில் வருவான். ஒருநாள் அகஸ்தியர் அங்கே வந்தார். அவரையும் அப்படிக் கொல்லப் பார்த்தான். வயிற்றிலிருந்து தன் நிஜ ரூபத்துடன் வாதாபி வெளியில் வர முயன்றான். அகஸ்தியர் அதைக் கண்டு புன்சிரிப்புடன், "துஷ்டா! சற்றும் யோசிக்காமல் இதுவரையில் பல ஸாதுக்களை இப்படி ஏமாற்றிக் கொண்டிருக்கிறாயல்லவா? கோவேறு கழுதை தன் வயிற்றில் பிறக்கும் சிசுவால் மடிவதுபோல் அவர்களுடைய வயிற்றிலிருந்தே அவர்களைக் கொன்றுவந்தாயல்லவா? ஆகையால் என் வயிற்றிலுள்ள நெருப்பால் கொளுத்தப்பட்டு அங்கேயே ஜீர்ணமாகக் கடவாய்'' என்றார். இந்திரியங்களை ஜயித்துத் தர்மத்தையே நாடும் என்னை எதிர்த்து இந்த மாரீசனும் வாதாபியின் கதியை அடைவான்.

"ஆகையால் ஆயுதபாணியாக வேறுவிஷயங்களில் மனத்தைச் செலுத்தாமல் ஸீதையைக் காப்பாற்றிக்கொண்டு இங்கேயே இரு. நாம் செய்யவேண்டிய ஸகல காரியங்களும் இவளையே பொறுத்திருக்கின்றனவல்லவா! இந்த மானைப் பிடித்துக்கொண்டாவது, முடியாவிட்டால் தோலை எடுத்துக்கொண்டாவது வருகிறேன். ஸீதைக்கு இவனிடத்தில் மிகுந்த ஆசை உண்டாகியிருக்கிறதென்று தெரியவில்லையா? இதன் தோல் நமக்கு முக்கியமாகையால் இது

பிழைக்காதென்று என்னுகிறேன். ஒரே பாணத்தால் இதைக் கொன்றுவிட்டு இதன் தோலை எடுத்துக்கொண்டு அதிசீக்கிரத்தில் வருகிறேன். அதுவரையில் இந்த ஆசிரமத்திலிருந்துகொண்டு வெகு ஜாக்கிரதையாக ஸீதையைக் காப்பாற்றவேண்டும். நமது நண்பனுன ஜடாயு ஸமர்த்தர்; மஹாபலவான்; புத்திமான்; உனக்கு உதவி செய்வார். நான்கு புறங்களையும் ஒவ்வொரு க்ஷணத்திலும் நன்ருகக் கவனித்துப் பார்த்துக்கொண்டு எங்கிருந்து அபாயம் நேருமோ என்று ஸந்தேகத்துடன் சிறிதும் ஜாக்கிரதைக் குறைவின்றி ஜானகியை ரக்ஷித்துக்கொண்டிரு" என்று கட்டளையிட்டார்.

ப்ரத3க்ஷிணேநாதி ப3லேந பக்ஷிணு
ஜடாயுஷா பு3த்3தி4மதா ச லக்ஷ்மண |
ப4வாப்ரமத்த: பரிக்3ருஹ்ய மைதி2லீம்
ப்ரதிக்ஷணம் ஸர்வத ஏவ ஶங்கித: ‖ (50)

## ஸர்க்கம் 44

## மாரீச வதம்

ததா2 து தம் ஸமாதி3ஶ்ய ப்4ராதரம் ரகு4நந்த3ந: |
ப3ப3ந்தா4ஸிம் மஹாதேஜா ஜாம்பூ3நத3மய த்ஸரும் ‖ (1)

பிறகு ராமன் அம்பறைகளை முதுகில் கட்டிக்கொண்டு தங்கப் பிடியுள்ள கத்தியை இடுப்பில் சொருகிக்கொண்டு, மூன்று வளைவுள்ள கோதண்டத்தைக் கையிலேந்தி மானைத் துரத்திக்கொண்டு போனுர். அவனும் ராமனை ஏமாற்ற நினைத்து, அவர் யமனைப்போல் தன்னை நோக்கி வருவதைக் கண்டு பயந்து நடுங்கினுன்; சற்று மறைவான்; சற்றுத் தோன்றுவான்; மின்னல் கொடிபோல் ராகவனுக்கெதிரில் ஒருவேளை விளங்குவான்; ஒருவேளை அம்பு பாயும் தூரத்திற்கப்புறம் பயந்து ஓடுவான்; ஒருவேளை கையில் பிடிக்கப்படுவதுபோல் காட்டுவான்; ஒருவேளை ஆகாசத்தில் துள்ளிக்குதிப்பான்; ஆயுதபாணிகளைக் கண்டு ஸந்தேகித்து ஓடும் மற்ற மிருகங்களைப் போன்றவனல்ல; ஒருவேளை தோன்றியும் தோன்ருமலும் இருப்பான். சரத் காலத்தில் சிறு மேகங்களுக்கு நடுவில் புகுந்து புறப்படும் சந்திரமண்டலத்தைப்போல், ரகுநாதனை ஆசைகாட்டி மயக்கி ஆசிரமத்தினின்றும் வெகுதூரம், அலையச் செய்தான். பக்கத்தில் வந்து நிற்பான்; பாணத்தை எடுத்து விடும்பொழுது வெகு தூரத்திற்கப்பால் தோன்றுவான். ரகுவீரனும் இப்படித் தன்னை வஞ்சித்து அலைக்கழிக்கும் மாரீசனிடத்தில் கோபம்கொண்டு மெய்மறந்து, இளம்புல் தரையில் மரத்து நிழலில் சற்றுநேரம் தங்கி, அந்தப் பொன்மான் சற்றுத்தூரத்தில் ஸஞ்சரிப்பதைப்பார்த்து, அதைப் பிடிக்க மறுபடியும் ஆசை



கொண்டார். உடனே அந்த ராக்ஷஸன் பயந்து ஓடி மறைந்தான். பிறகு ஒரு மரச்சோலையிலிருந்து அவன் வெளிக்கிளம்பக் கண்டு ராமன், 'இனிமேல் இவன் வதம் செய்வது நல்லது' என்றெண்ணி, ஸூரியகிரணத்தைபோல் ஜ்வலித்து, கால ஸர்ப்பத்தைப்போல் சீறிக்கொண்டிருக்கும் ஒரு சரத்தை எடுத்துக் கோதண்டத்தில் தொடுத்து பிரஹ்மாஸ்திரத்தை அதில் மந்திரித்து மாரீசன் மேல் எய்தார்.

இந்திரனுடைய வஜ்ராயுதத்தைப்போல் அது மாரீசனுடைய தேகத்தில் விழுந்தது; அவனுடைய ஹிருதயத்தைப் பிளந்தது. உடனே அவன் கோரமாகக் கர்ஜித்துக்கொண்டு ஒரு பனைமர உயரம் துள்ளிக் குதித்து குற்றுயிருடன் தரையில் விழுந்தான். மரண ஸமயத்தில் "எந்த உபாயம் செய்தால் ஸீதை லக்ஷ்மணனை இங்கே அனுப்புவாள். எந்த உபாயம் செய்தால் ராவணன் அவளைத் தனிமையில் எடுத்துப் போவான்" என்று ஆலோசித்து, ராகவனுடைய குரலை அமைத்துக்கொண்டு, "ஹா ஸீதே! ஹா லக்ஷ்மணு" என்று கதறினுன். உயிர்நிலையில் பாணத்தால் அடிக்கப்பட்டு மான் ரூபத்தை விட்டுத் தன் ராக்ஷஸ ரூபத்தை எடுத்தான். விசித்திரமான கேயூரம் முதலிய தங்க ஆபரணங்களால் அலங்கரிக்கப்பட்டு, வஜ்ரம் போன்ற பற்களுடன், மலைபோன்ற தேகத்தை எடுத்துக்கொண்டு ரத்தம் பெருகப் பூமியில் மாரீசன் விழுந்து புரளக்கண்டு ராமன், லக்ஷ்மணனுடைய சொல்லை ஞாபகப்படுத்திக்கொண்டு ஸீதையை நினைத்து, "ஐயோ! இது மாரீசனுடைய மாயையே; லக்ஷ்மணன் சொன்னது உண்மையே. இவன் சாகும்பொழுது என் குரலுடன் 'ஹா ஸீதே' ஹா லக்ஷ்மண!' என்று பெருங் குரலிட்டதை ஸீதையும் லக்ஷ்மணனும் கேட்டு என்ன செய்வார்களோ?" என்று கவலை கொண்டார். பயத்தாலும் துக்கத்தாலும் மயிர்க்கூச்சலெடுத்து, பிறகு வேருெரு மானை அடித்து அதன் மாம்ஸத்தை எடுத்துக்கொண்டு ஆசிரமத்தை நோக்கி வேகமாக வந்தார்.

நிஹத்ய ப்ருஷதம் சாந்யம் மாம்ஸமாதா3ய ராக4வ: |
த்வரமாணே ஜநஸ்தா2நம் ஸஸாராபி4முக2ஸ் தத3ா ‖ (26)

## ஸர்க்கம் 45

## ஸீதை லக்ஷ்மணனைக் கோபித்தது

ஆர்தஸ்வரம் து தம் ப4ர்து: விஜ்ஞாய ஸத்3ருஶம் வநே |
உவாச லக்ஷ்மணம் ஸீதா க3ச்ச2 ஜாநீஹி ராக4வம் ‖ (1)

இப்படித் தன் கணவன் தீனஸ்வரத்துடன் கதறினதுபோல் உண்டான சப்தத்தைக் கேட்டு ஸீதை, "லக்ஷ்மண! ராமன் ராக்ஷஸர்களுடைய வசத்தில் அகப்பட்டு, ஸிம்ஹங்களால் பீடிக்கப்பட்ட விருஷபத்தைப்போல், காப்பாற்றுவாரில்லாமல் தவிக்கிருர். இப்படி

அவர் பரிதாபமாகக் கதறுவதைக் கேட்டு என் மனமும் பிராணனும் தரிக்கவில்லை; மயக்கம் வருகிறது. காட்டில் தனியாகத் தவிக்கும் உன் அண்ணனிடத்திற்கு அதி சீக்கிரமாகப் போ. உன் உயிரைக் கொடுத்தாவது அவரைக் காப்பாற்று" என்று கூறினாள்.

லக்ஷ்மணனோ ராமன் தனக்கு இட்ட கட்டளையை நினைத்து அங்கிருந்து அசையவில்லை. அதைக்கண்டு ஸீதை கடுங்கோபம் கொண்டு, மித்திரனைப்போல் அவரைப் பின்தொடர்ந்து வந்த பரம சத்ருவே! உன்னுடன் பிறந்தவர் இப்படிப்பட்ட ஆபத்திலிருந்தும் உனக்கு அவரைக் காப்பாற்ற மனமில்லையல்லவா? என்னைக் கைப்பற்ற விரும்பி அவருடைய மரணத்தைக் கோரியிருக்கிறாயோ? அதனால்தான் இங்கிருந்து போகமாட்டேன் என்கிறாய். ராமனுக்கு நேரும் அபாயம் உனக்கு மிகுந்த ஸந்தோஷத்தைக் கொடுக்கிறதல்லவா? உன் அண்ணனிடத்தில் உனக்கு எள்ளளவும் ஸ்நேஹமில்லை என்று இப்பொழுதல்லவா தெரிகிறது! இந்தக் கெட்ட எண்ணம் கொண்டு இங்கே நிற்கிறாயோ? என்னைக் காப்பாற்ற இங்கிருக்கிறேன் என்று சொல்வது வஞ்சக வார்த்தை. நீயும் நானும் யாரை அண்டி வந்தோமோ அவர் மரணாவஸ்தையிலிருக்கும் பொழுது நான் இங்கிருந்து என்ன செய்வேன்? ஐயோ! மோசம் போனேனே" என்று அலறினாள்.

இப்படி மிரண்ட மானைப்போல் கண்ணீருடன் ஸீதை கதறுவதைப் பார்த்து, லக்ஷ்மணன் "தாயே! தேவாஸுர கந்தர்வ பன்னக மனுஷ்ய ராக்ஷஸர்கள் யாவரும் ஒன்றுசேர்ந்து வந்தாலும் ராமனை ஜெயிக்க முடியாதென்பது தங்களுக்குத் தெரியாதா? தேவேந்திரனைப்போல் மஹா பராக்கிரமசாலியான ராமனை யுத்தத்தில் எதிர்க்கக் கூடியவனுமுண்டோ? ராமன் சண்டையில் தோல்வியடைந்து இறக்கின்றவரல்ல. தாங்கள் இப்படிச் சொல்வது தகாது. ராமனுமின்றி நானுமின்றித் தங்களை இந்த வனத்தில் தனியாய் விட்டுப் போக எனக்கு மனம் வரவில்லை. மஹாபலசாலிகளுடைய பலங்களெல்லாம் ஒன்று சேர்ந்தாலும் அவருடைய பலத்திற்கு ஈடோ? ஸகல லோகங்களும் லோகபாலர்களும் ராமனுடைய கோபமென்ற நெருப்பில் விட்டில் பூச்சிகளைப்போல் விழுந்து சாம்பலாவார்களே! துக்கப்பட வேண்டாம்; கவலையை விடுங்கள். அந்த மானைக் கொன்றுவிட்டு அவர் அதி சீக்கிரத்தில் வருவார். இது அவருடைய குரலன்று; கந்தர்வ நகரத்தைப்போல் எவனோ இந்த மாயையை பிரயோகித்திருக்கிறான். ஸந்தேகமென்ன? அந்த மாரீசனுடைய இந்திரஜாலமே. இது அவனுடைய குரலே. ராமன் தங்களை என்னிடத்தில் ஒப்புவித்துப் போயிருக்கிறார். நான் தங்களை விட்டுப் போவது நியாயமல்ல. கரதூஷணர்களை ஜனஸ்தானத்தில் ராமன் கொன்றது முதல் ராக்ஷஸர்கள் அவரிடத்தில் துவேஷம் கொண்டு அவருக்குக் கெடுதிசெய்ய ஸமயம் பார்த்துக் கொண்டிருக்கிறார்கள். பிறரை ஹிம்ஸை செய்வதே அவர்களுக்கு ஆனந்தம், அவர்கள் அதைப்போல் இன்னும் பலவிதமாகப் பேசக்கூடியவர்கள். அதைப் பற்றித் தாங்கள் கவலைகொள்ளக் கூடாது" என்று ஸமாதானம் செய்தார்.



அதைக் கேட்டு ஸீதை கோபத்தால் கண் சிவந்து உண்மையையே பேசும் லக்ஷ்மணனைக் கடுமையான வார்த்தைகளால் தூஷித்தாள். "துஷ்ட! இரக்கமற்றவனே! குரூர ஸ்வபாவமுள்ளவனே! இக்ஷ்வாகு குலத்தைக் கெடுக்கவந்த த்ரோஹி! கெட்ட மனத்துடன் ராமனுக்கு இந்த அபாயம் எப்பொழுது நேரப்போகிறதென்று எதிர்பார்த்துக் கொண்டிருந்தாய் போலும்? இல்லாவிட்டால் அவர் இப்படித் தவிக்கும்பொழுது இந்த வார்த்தைகளைச் சொல்வாயா? உன்னைப் போன்ற சக்களத்தி மகன்கள் இப்படிச் சொல்வது ஆச்சரியமா? நீங்கள் கொடியவர்கள், துஷ்டர்கள், ஸ்வபாவத்தை மறைத்து நடப்பவர்கள்; எந்தப் பாபத்தையும் செய்வீர்கள். மஹாயோக்கியனைப்போல் எங்களுடன் வனத்திற்கு எதற்காக வந்தாய்? என்னைக் கைப்பற்ற எண்ணி வந்தாயோ? அல்லது பரதன் உன்னை அனுப்பினானோ? உங்களுடைய எண்ணம் பலிக்காது. மஹாபுருஷனான ராமனைக் கணவனாக அடைந்து பிறரை மனத்தாலும் நினைப்பேனோ? நீ பார்த்துக் கொண்டிருக்கும் பொழுதே உயிரை விடுவேன். ராமனை விட்டு ஒரு க்ஷணமாவது பிழைத்திருக்க மாட்டேன்" என்றாள்.

மயிர்க்கூச்சமுண்டாக்கும் இந்தக் கோரமான வார்த்தைகளை ஸீதை இப்படிச் சொன்னாலும், லக்ஷ்மணன் இந்திரிய ஸ்வாதீனமுள்ள மஹானுபாவனானதால் கோபம் கொள்ளாமல் கைகூப்பி வணக்கத்துடன் சாந்தமாக 'தாயே!" தாங்கள் எனக்கு தெய்வத்தைப் போன்றவர்கள்; தங்கள் வார்த்தைக்கு எதிர்த்துச் சொல்ல என்னால் முடியாது. முற்றிலும் உசிதமில்லாத வார்த்தைகளை ஸ்திரீகள் சொல்வது ஆச்சரியமல்ல. அவர்களுடைய ஸ்வபாவம் எப்பொழுதும் இப்படியே உள்ளதுதான். அடக்கம் பொறுமை வினயம் முதலிய நற்குணங்களில்லாமல் சபல சித்தத்துடன் கூரான வார்த்தைகளால் புருஷர்களுடைய ஹிருதயங்களைப் பிளப்பதும், பரம ஸ்நேகமுள்ளவர்களை விரோதிகளாக்குவதும் அவர்களுடைய தொழில். ஆனாலும் தங்களுடைய கொடிய வார்த்தைகளைக் கேட்டு என் மனம் பதறுகிறது. இந்த வார்த்தைகள் பழுக்கக் காய்ந்த பாணங்களைப் போல் என் காதில் புகுந்து ஹிருதயத்தைப் பிளக்கின்றன. நியாய மார்க்கத்தை விட்டு விலகாத என்னைப்பார்த்து இந்த குரூரமான வார்த்தைகளைச் சொன்னீர்களல்லவா? இந்த வனத்திலுள்ள ஸகல பூதங்களும் இதற்கு ஸாக்ஷிகள். என்னிடத்திலும் ஸந்தேகித்து இப்படிப்பட்ட கோரமான பாபத்தை என் தலையில் சுமத்தின தங்களை நிந்திக்க வேண்டும்; தாங்கள் எப்படியானாலும் சரிதான். ஸ்திரீகளுக்கே துஷ்டத்தனம் ஸ்வபாவம் போலும்! பிதாவைப் போன்ற ராமனுடைய ஆக்ஞைக்குக் கட்டுப்பட்டு நடக்கிற என்னையும் பார்த்து

இந்த வார்த்தைகளைச் சொல்லுகிறீர்களே! நல்லது. ராமன் இருக்குமிடத்திற்குப் போகிறேன்" என்று புறப்பட்டான். ராமனுடைய ஞாபகம் வந்தவுடன், "ஐயோ! நானும் கோபத்திற்கு இடங்கொடுத்து எல்லாவிதத்திலும் எனக்குத் தாயான ஜானகியைக் கடுமையாகப் பேசிவிட்டேனே" என்று பரிதபித்து, "தங்களுக்கு ஸகல மங்களங்களும் உண்டாகட்டும். யாதொரு ஆபத்தும் நேரவேண்டாம். ராமன் தங்களை என்னிடத்தில் ஒப்புவித்தார். நானும் தங்களை இங்கிருக்கும் வனதேவதைகளிடத்தில் ஒப்புவித்துப் போகிறேன். இப்பொழுது காணப்படும் அபசகுனங்களைப்போல் பார்த்தால் நானும் ராமனும் இனித் தங்களைப் பார்ப்போமா என்று ஸந்தேகப்படுகிறேன்" என்று தயங்கினன். அதைக் கண்டு ஸீதை தாரைதாரையாகக் கண்ணீர் பெருக கோவென்று அலறிக்கொண்டு, "லக்ஷ்மணா! நீ போய் ராமனை அழைத்து வரா விட்டால் இதோ பார். கோதாவரியில் குதிப்பேன். தூக்கு போட்டுக்கொண்டு உயிரை விடுவேன். உயரமான இடத்திலிருந்து விழுந்து பிராணனைத் துறப்பேன்; அல்லது விஷத்தைத் தின்பேன்; நெருப்பில் விழுவேன். என் ரகுநாதனைத் தவிர மற்றொருவரைக் காலாலும் தொடுவேனே" என்று லக்ஷ்மணனைக் கடிந்து, மகா துக்கத்துடன் இரண்டு கைகளாலும் வயிற்றில் அடித்துக்கொண்டு அழுதாள்.

இப்படிச் சீறிப் பெருங்குரலிட்டழும் ஸீதையை லக்ஷ்மணன் தன்னால் கூடியவரையில் ஸமாதானம் செய்தும் அவள் கடுங்கோபம் கொண்டு அவனிடத்தில் பேசவில்லை. பிறகு லக்ஷ்மணன் அவளை நமஸ்கரித்து அபிவாதனம் செய்து கைகூப்பி வணக்கமாக அனுமதி பெற்று அவளைத் திரும்பப் பார்த்துக்கொண்டே, "இந்தக் கோரமான வனத்தில் இவளை இப்படி அனாதையாக விட்டுப் போகின்றோமே" என்று கவலைகொண்டு ராமன் இருக்குமிடத்திற்குப் போனன்.

ததஸ்து ஸீதா மபி$^4$வாத்$^3$ய லக்ஷ்மண:
க்ருதாஞ்ஜலி: கிஞ்சி த$^3$பி$^4$ப்ரணம்ய ச |
அந்வீக்ஷமாணோ ப$^3$ஹுமஶ்ச மைதி$^2$லீம்
ஜகா$^3$ம ராமஸ்ய ஸமீப மாத்மவாந் || (40)

---

## ஸர்க்கம் 46

## ராவண ஸந்யாஸி

---

தயா பருஷமுக்தஸ்து குபிதோ ராக$^4$வாநுஜ: |
ஸ விகாங்க்ஷந் ப்$^4$ருஶம் ராமம் ப்ரதஸ்தே$^2$ ந சிராதி$^3$வ || (1)

இப்படிக் கொஞ்சம்கூட இஷ்டமில்லாமல், ஸீதையின் குரூர வார்த்தைகளான பாணங்களால் துளைக்கப்பட்டு, லக்ஷ்மணன் வேகமாக அந்தக் காட்டிற்குப் புறப்பட்டான். இந்த ஸமயம்

Notes : This Blank Page has also to be counted as a another page Number.

It is intentionally left blank after Picture Sketches.!

Released by Maran's Dog ,Toronto, Canada



தத$^3$ாஸாத்$^3$ய த$^3$ஶக்$^3$ரீவ: க்ஷிப்ரமந்தர மாஸ்தி$^2$த: |
அபி$^4$ச்க்ராம வைதே$^3$ஹீம் பரிவ்ராஜக ரூபத்$^4$ருத் ‖ —ஆ. 46ஸ-2 சு

இந்த ஸமயம் எங்கே நேரப் போகிற தென்று காத்துக் கொண்டிருந்த ராவணேசுவரன்... ஸந்யாஸி வேஷத்துடன் ஸீதை இருக்கும்ஆசிரமத்தை நோக்கி வந்தான்.- (பக்கம் 123 பார்க்க)

எங்கே நேரப்போகிறதென்று காத்துக்கொண்டிருந்த ராவணே சுவரன், அழகான காஷாயம் சிகை யக்ஞோபவீதத்துடன், கையில் குடைபிடித்துக் காலில் பாதக்குறடுகளை மாட்டி, தண்டம் கமண்டலு இவைகளை இடதுதோளில் வைத்துக்கொண்டு ஸந்யாஸி வேஷத்துடன் ஸீதை இருக்கும் ஆசிரமத்தை நோக்கி வந்தான். ராமலக்ஷ்மணர்களில்லாமல் தனியாக இருக்கும் ஸீதையை அவன் எடுத்துப்போக வருவது, சந்திர ஸூரியர்களில்லாத ஸந்தியா காலத்தைப் பெரிய இருட்டு விழுங்க வருவதுபோல் தோன்றிற்று. சந்திரனை விட்டுப் பிரிந்த ரோஹிணி தேவியை சனியென்ற குரூரக் கிரஹம் பார்ப்பதுபோல், ராமனை விட்டுப்பிரிந்த ஜானகியை மஹா குரூரனை ராவணன் பார்த்தான். ஸகல லோகங்களும் நடுங்கும் படியான தேஜஸையும் நடத்தையையும் உடைய அந்த ராக்ஷஸனைக் கண்டு, ஜனஸ்தானத்திலுள்ள மரங்களெல்லாம் பயத்தால் அசைவற்றிருந்தன. காற்றடிக்கவில்லை. நெருப்புப்பொறி போன்ற கண்களுடன் அவன் அங்குமிங்கும் பார்த்துக்கொண்டு போகையில் அதிக வேகமாக ஓடும் கோதாவரி நதியும், "நமது வேகத்தைக் கண்டு என்ன கோபிக்கிருனே" என்று மெள்ள ஓட ஆரம்பித்தது. ராமன் எப்பொழுது அப்புறம் போவானென்று காத்திருந்த ராவணன், தன் துஷ்ட ஸ்வபாவத்தை ஸாதுக்களின் வேஷத்தால் மறைத்து, ராமனைக் குறித்துத் தவித்துக்கொண்டிருக்கும் ஸீதை யிருக்குமிடத்திற்குச் சித்ரா நக்ஷத்திரத்தைப் பிடிக்க வரும் சனியைப் போல் வந்தான். புல்லால் மூடப்பட்ட பாழுங் கிணற்றைப்போல் ஸந்யாஸி வேஷத்தால் ராக்ஷஸ ரூபத்தை மறைத்துக்கொண்டு, விதேஹராஜபுத்திரியும் ராமனுடைய பத்தினியுமான ஸீதையைப் பார்த்துக்கொண்டே நின்றான். அழகான உதடுகளையும் பல்வரிசை யையும் மலர்ந்த செந்தாமரையைப்போன்ற நேத்திரங்களையும் பூர்ணசந்திரனைப்போன்ற முகத்தையும் உடைய ஸீதை, மஞ்சள் நிறப் பட்டைத் தரித்துக்கொண்டு, ராமனுக்கு நேர்ந்த ஆபத்தை நினைத்துக் கண்ணீர் தாரைதாரையாகப் பெருக, ஆசிரமத்தில் உட்கார்ந்திருக்கக் கண்டான். கெட்ட எண்ணத்துடன் காமத்தால் மெய்மறந்து, வெளிக்கு வேதவாக்கியங்களைச் சொல்லிக்கொண்டு ஸீதையின் ஸமீபத்தில் வந்து, அவளுடைய தேககாந்தியையும் உத்தம லக்ஷணங்களையும் பார்த்து, "ஸகல லோகங்களிலும் இப் படிப்பட்ட ஸ்த்ரீயை நான் பார்த்ததே இல்லை. கமலாஸனத்தில் வீற்றிருக்கும் ஸ்ரீதேவியே கமலத்தைவிட்டுப் பூலோகத்தில் வந்திருக்கிறாளோ?" என்று பிரமித்து வினயமாகப் புகழ்ந்து பேசத் தொடங்கினான்:

"உருக்கி ஓடவிட்ட ஆயிரத்தெட்டு மாற்றுத் தங்கத்தைப் போன்ற தேககாந்தியுடன், மலர்ந்த தாமரைகளால் விளங்கும் ஓடையைப்போல் மஞ்சள் நிறப்பட்டினால் அலங்கரிக்கப்பட்டு விளங்கும் நீயார்? பூதேவியோ, கீர்த்தி தேவியோ, மஹாலக்ஷ்மியோ,

ஸ்ரீதேவியோ, அப்ஸரஸோ, பாக்கியதேவதையோ? ரதியோ? இஷ்டப்படி ஸஞ்சரிக்கும் நீ யார்? உன் பற்கள் ஏற்றத்தாழ் வில்லாமலும் நுனியுள்ளவைகளாகவும் வெண்மையாகவும் அழகு பொருந்தியும் இருக்கின்றன. உன் கண்கள் விசாலமாகத் தெளிந்து செவ்வரி படர்ந்து கறுத்திருக்கின்றன. துடைகள் யானைத் துதிக் கைகளைப்போல் உருண்டுதிரண்டிருப்பவை. மார்பகம் அதிக மனோ கரமாகத் தங்க ஹாரங்களால் அலங்கரிக்கப்பட்டிருக்கின்றது. மனத்தைக் கவரும் புன்சிரிப்பையும் பல்வரிசையையும் நேத்திரங் களையும் விலாஸத்தையுமுடையவளே! வேகமான நதியின் பிரவாகம் கரைகளைக் கவர்வதுபோல் உன் லீலைகள் என் மனத்தைக் கவர்கின்றன. கைப்பிடியில் அடங்கும் உன் இடையையும் தாமரைப் புஷ்பத்தில் மொய்க்கும் வண்டுகளைப்போலிருக்கும் உன் தலைமயிரை யும் கண்டு மயங்காதவர்கள் யார்? தேவஸ்த்ரீகளையும் கந்தர்வஸ்த்ரீ களையும் யக்ஷ ஸ்த்ரீகளையும் கின்னரஸ்த்ரீகளையும் மனுஷ்யஸ்த்ரீ களையும் பார்த்திருக்கின்றேன். இவ்விதமான ரூபத்தையும் லாவண் யத்தையும் பால்யத்தையும் அங்கங்களின் மேன்மையையும் பருவத்தையும் யோசித்தால், இந்தக் காட்டில் நீ தனியாக இருப் பதையும் யோசித்தால் நீ இங்கே வந்த காரணம் என்னவென்று நிச்சயிக்கமுடியவில்லை. கோரமான ராக்ஷஸர்கள் நடமாடும் இந்தக் காட்டில் வஸிக்கத்தகுந்தவளல்ல. ஆகையால் இங்கே இருக்காதே. ராக்ஷஸர்கள் இஷ்டமான ரூபங்களை எடுப்பார்கள். மஹா மாயாவிகள்; பலவிதமாக உன்னை வஞ்சிப்பார்கள். அழகிய உப்பரிகை களிலும் நகரத்தைச் சேர்ந்த தோட்டங்களிலும் ஸகல பரிமள வஸ்துக்களாலும் நேத்திரத்திற்கு ஆனந்தத்தைக் கொடுக்கும் பொருள்களாலும் சூழப்பட்டல்லவா நீ வஸிக்கவேண்டும்? சிரேஷ்டமான மாலைகளும் உத்தமமான ஆகாரங்களும் நேர்த்தியான ஆடைகளும் லோகோத்தரமான கணவனுமல்லவா உனக்குக் கிடைக்கவேண்டும்? நீ யார்? தேவஸ்த்ரீயென்று எண்ணுகிறேன். ருத்திரன் மருத் வஸு முதலிய தேவகணங்களைச் சேர்ந்தவர்களில் நீ யாருடைய மனைவி? இங்கே தேவ கந்தர்வ கின்னர கணங்கள் வருவது வழக்கமில்லையே. ராக்ஷஸர்களல்லவா இங்கே ஸஞ்சரிக் கிறார்கள்? நீ இங்கே வரக் காரணமென்ன? இங்கே உன்னைச் சுற்றியிருக்கும் குரங்கு ஸிம்ஹம் சிறுத்தைப் புலி பெரும்புலி மான் கரடி கழுகு முதலியவைகளைக்கண்டு நீ எப்படிப் பயப்படாமலிருக் கிறாய்? மஹாபலமுள்ள யானை மதங்கொண்டு திரியும் இந்தக்காட் டில் நீ தனியாகப் பயப்படாமல் ஸஞ்சரிப்பதெப்படி? நீ யார்? யாரைச் சேர்ந்தவள்? எங்கிருந்து வந்தாய்? ஏன் வந்தாய்? கோர மான ராக்ஷஸர்கள் நிறைந்த இந்தத் தண்டகாரண்யத்தில் என்ன செய்கிறாய்?'' என்று துராத்மாவான ராவணன் பிராம்மண ஸந்யாஸி வேஷத்துடன் ஸீதையைப் புகழ்ந்தான்.



அவள் அவனை விதிப்படி உபசரித்துப் பூஜித்து ஆஸனம் அர்க்யம் பாத்யம் முதலியவைகளைக் கொடுத்து, ஆகாரம் ஸித்தமா யிருக்கிறதென்று தெரிவித்தாள். காஷாயம் தண்டம் முதலிய பிராம்மண ஸந்யாஸி வேஷத்துடன் வந்திருந்தாலும் ஸீதையை எடுத்துப்போக உபாயத்தைத்தேடிக் கொண்டிருந்தவனே தவிர அவள் செய்த அதிதி பூஜையைப் பெற்றுக்கொள்ளவாவது புஜிக்க வாவது அங்கே வந்தவனா அவன்? மஹா ஞானியான ஜனகருடைய வீட்டில் பழகின ஸீதைக்கு ஸந்யாஸிகளின் தர்மமும் ஆசாரமும் நன்றாகத் தெரியும். ஆகையால் அவன் கபட ஸந்யாஸி என்றறிந்தும் அவனுடைய வேஷத்திற்காவது மரியாதை செய்ய விரும்பி அவனிடத்தில் துவேஷம் வைக்க முடியாமல், உண்மையான பிராம்மண ஸந்யாஸியைப் பூஜிப்பதுபோல், "ஸ்வாமி! இந்த ஆஸனத்தில் உட்காருங்கள். இந்த ஜலத்தால் கால்களை அலம்பிக் கொள்ளுங்கள். இந்தக் காட்டில் கிடைக்கும் ஆகாரம் தங்களுக்காக ஸித்தமாக இருக்கிறது. இஷ்டப்படி சுகமாகப் புஜிக்கலாம்'' என்றாள்.

இப்படி ராமசந்திர மஹாராஜாவின் பாரியையான ஜானகி தனக்கு உத்தமமான அதிதிபூஜை செய்வதைப் பார்த்து அந்தப் பாபி அவளை எப்படிப் பலாத்காரமாக எடுத்துப் போகலாமென்று ஆலோசித்துக் கொண்டிருந்தான். அந்த க்ஷணத்திலேயே தன் சாவையும் தேடிக்கொண்டான். ஆயுதபாணிகளாக மான் வேட்டைக்குப்போன ராமனையும் அவரைத் தேடிப்போன லக்ஷ் மணனையும் ஸீதை ஒவ்வொரு நிமிஷமும் எதிர்பார்த்துக்கொண்டு மரங்கள் அடர்ந்து, இருண்ட அந்த வனத்தில் நான்கு புறத்திலும் பயத்துடன் பார்த்தும் அந்த யுத்த வீரர்களைக் காணவில்லை.

தத: ஸுவேஷம் ம்ருக3யா க3தம் பதிம்
ப்ரதீக்ஷமாணா ஸஹலக்ஷ்மணம் தத3ா |
விவீக்ஷமாணா ஹரிதம் த3த3ர்ஶ தத்
மஹத்3 வனம் நைவ து ராமலக்ஷ்மணௌ ‖ (38)

---

## ஸர்க்கம் 47

## ஸீதா ராவண ஸம்வாதம்

---

ராவணேந து வைதே3ஹீ ததா3 ப்ருஷ்டா ஜிஹீர்ஷதா |
பரிவ்ராஜக லிங்கே3ந ஶஶம்ஸாத்மாந மங்க3நா ‖ (1)

ஸந்யாஸி வேஷம் பூண்ட ராவணன் இப்படித் தகாத வார்த்தைகளைச் சொல்ல ஸீதை, "இவன் பிராம்மணன். அதிதி. கபட வேஷம் தரித்தாலும் இவன் கேட்டதற்கு நான் பதில்

சொல்லாவிட்டால் ஒரு வேளை சபிப்பான்" என்று கொஞ்ச நேரம் ஆலோசித்து, "ஸ்வாமி! மிதிலா நகரத்து அதிபதியான ஜனக சக்கரவர்த்திக்கு நான் புத்திரி. ஸீதை என்று எனக்குப் பெயர். கோஸலாதிபதியான தசரத மஹாராஜாவின் மூத்த புத்திரனான ராமசந்திரனே என் பர்த்தா. எனக்கு விவாஹமான பிறகு பன்னிரண்டு வருஷங்கள் வரையில் இக்ஷ்வாகு வம்சத்தரசர்களுடைய வீட்டில் ஸகல இஷ்டங்களும் நிறைவேற, ஸகல போகங்களையும் அனுபவித்துக்கொண்டிருந்தேன். பதின்மூன்றாவது வருஷத்தில் தசரதர் மந்திரிகளுடன் ஆலோசித்து ராமனுக்கு யௌவராஜ்யாபிஷேகம் செய்ய நிச்சயித்தார். அப்பொழுது அபிஷேகத்திற்கு வேண்டிய ஸகல ஏற்பாடுகளும் நடந்துகொண்டிருக்கும்பொழுது, சக்கரவர்த்தியின் மனைவிகளில் ஒருத்தியான கைகேயி, மகாராஜாவைத் தான் கேட்ட வரங்களைக் கொடுக்கும்படி அவர் செய்த புண்ணியத்தின் மேல் பிரதிக்ஞை செய்வித்து, என் பர்த்தா வனத்தில் பதினான்கு வருஷங்கள் வரையில் வஸிக்கவேண்டுமென்றும், அவளுடைய புத்திரனான பரதன் ராஜ்யத்தைஆளவேண்டுமென்றும் இரண்டு வரங்களைக் கேட்டாள். ஸத்தியம் தவறாத சக்கரவர்த்தியைப் பார்த்து, "நீர் ராமனுக்கு அபிஷேகம் செய்தால் அன்னபானங்களைத் தொடமாட்டேன், தூங்கமாட்டேன்; எப்படியாவது உயிரை விடுவேன்" என்றாள். அவள் முன்பு தனக்குச் செய்த உபகாரத்தால் தசரதர் கட்டுப்பட்டு, மிகுந்த மானியாகையால் பலவிதமாக நயத்தாலும் பயத்தாலும் சிரேஷ்டமான பொருள்களையும் அபூர்வமான வஸ்துக்களையும் கொடுக்கிறேனென்று சொல்லி அவளை ஸமாதானம் செய்து பார்த்தார். அவள் ஒப்புக்கொள்ளவில்லை. என் கணவரோ ஸகல போகங்களையும் அனுபவிக்கத் தகுந்த வயதிலிருப்பவர்; சக்கரவர்த்தி லக்ஷணங்கள் யாவும் பொருந்தியவர்; மஹா தேஜஸ்வி: காட்டிற்குப் போகும்பொழுது அவருக்கு இருபத்தைந்து வயது. எனக்குப் பதினெட்டு வயது.

ஸகல கல்யாண குணங்களும் பொருந்தியவரென்றும், ஸத்தியமே பேசுகிறவரென்றும், சுத்தரென்றும் ஸகல லோகங்களிலும் ராமன் கீர்த்தி பெற்றவர்; விசாலமான நேத்திரங்களையும் முழங்கால் வரையில் நீண்டு யானைத் துதிக்கையைப் போல் பருத்த புஜங்களையும் உடையவர். ஸகல பிராணிகளுக்கும் ஹிதத்தையே தேடுகிறவர். பிதாவான தசரத சக்கரவர்த்தி மஹாதேஜஸ்வியானாலும், ஆசைக்கு அடிமையாகி, கைகேயியின் இஷ்டத்தைப் பூர்த்தி செய்ய விரும்பி ராமனுக்கு அபிஷேகம் செய்யவில்லை. அதற்காகத் தகப்பனாரிடத்திற்குப் போன என் பர்த்தாவைப் பார்த்துக் கைகேயி வெகு துணிவுடன், "ராமா! உன் பிதா உன்னிடத்தில் இந்த வார்த்தைகளைச் சொல்லும்படி என்னைக்கேட்டுக்கொண்டிருக்கிறார். இந்த ராஜ்யத்தை யாதொரு அபாயமுமில்லாமல் பரதனுக்குக் கொடுக்கவேண்டும். நீ காட்டில் பதினான்கு வருஷங்கள் வரையில்



வஸிக்கவேண்டும். இப்படிச் செய்யாவிட்டால் உன் பிதாவைப் பொய் சொன்ன பாபத்திற்கு உட்படுத்துவாய்" என்றாள்.

ராமனோ செய்த பிரதிக்ஞையைத் தவறாதவர். பிறருக்குக் கொடுப்பவரே தவிர ஒருவரிடத்திலிருந்தும் வாங்கமாட்டார். எப்பொழுதும் ஸத்தியத்தையே பேசுவார். பொய்யென்பதையே ஒரு நாளும் அறியார். ராமன் அனுஷ்டிக்கும் விரதம் இதுவே.

தசரதருடைய இரண்டாவது பத்தினியான ஸௌமித்திரைக்கு ஒரு மகனுண்டு. அந்த லக்ஷ்மணன் மஹாவீரன்; சத்துருக்களுக்குக் காலன். ராமனை விட்டுப் பிரியாதவன். ராம லக்ஷ்மணர்களும் நானும் மஹாராஜாவின் வார்த்தையைக் காப்பாற்ற இந்தக் காட்டிற்கு வந்திருக்கிறோம். அவர்கள் தபஸ்வி வேஷத்துடன் இந்திரியங்களை அடக்கி, தர்மத்தில் மனத்தை நாட்டி ஆயுதபாணிகளாக இங்கே வஸித்துக் கொண்டிருக்கிறார்கள். இப்படிக் கைகேயியின் மூலமாக ராஜ்யத்திலிருந்து துரத்தப்பட்டு இந்தக் காட்டிற்கு வந்து, எங்கள் தர்மத்தால் காப்பாற்றப்படுகிறோம். இந்த ஆசிரமம் வெகு பரிசுத்தமானது. ஆகையால் இவ்விடத்தில் தாங்கள் சற்று நேரம் இளைப்பாறலாம். இந்தக் காட்டில் கிடைக்கக்கூடிய ஆஹார பதார்த்தங்களை எடுத்துக்கொண்டு என் பர்த்தா சீக்கிரத்தில் வந்துவிடுவார். தங்களுடைய பெயரையும் குலத்தையும்கோத்திரத்தையும் எனக்குச் சொல்லவேண்டும். இந்த தண்டகாரண்யத்தில் தனியாக ஏன் ஸஞ்சரிக்கிறீர்கள்?" என்றாள்.

தன் குலத்தையும் பராக்கிரமத்தையும் சொல்லிக்கொள்ள சமயம் கிடைத்ததைப்பற்றி மிகவும் ஸந்தோஷமடைந்து, ராவணன் உடனே, "ஸீதே! நான் ராக்ஷஸாதிபதி. லங்கேசுவரன். ஸகல லோகங்களையும், ஸகல பிராணிகளையும் நடுங்கச் செய்கிறவன். என்னை ராவணனென்று சொல்வார்கள். சிரேஷ்டமான தங்கத்தைப்போன்ற தேககாந்தியுடன் பட்டினால் அலங்கரிக்கப்பட்டிருக்கும் உன்னைப் பார்த்த பிறகு என் பத்தினிகளிடத்தில் மனம் செல்லவில்லை. பல லோகங்களிலிருந்து பல ஸமயங்களில் பல ஸ்த்ரீ ரத்தினங்களைக் கொண்டுவந்து வைத்திருக்கிறேன். அவர்கள் யாவருக்கும் தலைவியாக இரு. ஸமுத்திரத்தின் நடுவில் திரிகூடமென்று ஒரு மலையுண்டு. அங்கே என் ராஜதானி லங்கை மயனால் அமைக்கப்பட்டிருக்கிறது. பல மனோகரமான மலைத்தாழ்வரைகளிலும் தோட்டங்களிலும் என்னுடன் ஸுகமாகக் காலத்தைக் கழிக்கலாம். அப்பொழுது இந்தக் காட்டில் வஸிக்கவேண்டும் என்ற ஆசையே உனக்கு வராது. நீ எனக்குப் பாரியையானால் ஸகல ஆபரணங்களால் அலங்கரிக்கப்பட்டு, ஐயாயிரம் வேலைக்காரர்கள் உனக்குப் பணிவிடை செய்வார்கள்" என்றான்.

ஸீதை அதைக் கேட்டுக் கோபம் கொண்டு அந்த ராக்ஷஸனைச் சிறிதும் லக்ஷ்யம் செய்யாமல், "துஷ்டா! யாரைப் பார்த்து என்ன

சொன்னாய்? என் பர்த்தா மேருமலையைப்போல் அசைக்க முடியாத வர். மஹா ஸமுத்திரத்தைப் போல் கலக்கமுடியாதவர். மஹேந் திரனைப்போல் நிகரற்ற பலமுடையவர்; பராக்கிரமமுடையவர். அவர் அனுஷ்டிக்கும் தர்மத்தை நானும் நடத்துகிறேன். ஸகல உத்தம லக்ஷணங்களும் பொருந்தியவர்; விசாலமான கிளைகளுள்ள ஆலமரத்தைப்போல் ஸகல ஜனங்களாலும் அணுகத் தகுந்தவர்; ஸத்தியம் தவறாதவர்; மஹாத்மா. நான் அவரை அனுஸரிக்கிறவள். நீண்டபருத்த புஜங்களையும்விசாலமான மார்பையும் மதம்கொண்ட ஸிம்ஹத்தின் நடையையும் பலத்தையும் தைரியத்தையும் பராக்கிர மத்தையும் கொண்ட புருஷ ஸிம்ஹம். பூர்ணசந்திரனைப் போன்ற முகத்தையுடையவர். இந்திரியங்களை ஜயித்தவர்;மஹாகீர்த்திமான். நானோ அவரை அனுஸரிக்கிறவள்.

பெண் ஸிம்ஹத்தைப் போன்ற என்னை, நரியைப்போன்ற நீ அடைய விரும்புவது தகுமா? சூரியனை விட்டுக் காந்தியைப் பிரிக்கவும் முடியுமா? அப்படியே ராமனைவிட்டு என்னைப் பிரிக்க முடியுமா? உனக்கு மரணகாலம் நெருங்கிவிட்டது. தங்க நிறமுள்ள மரங்களைப் பார்க்கிறாயென்று எண்ணுகிறேன். இல்லாவிட்டால் ராமனுக்குப் பிரியபாரியையான என்னை விரும்புவாயா? காட்டி லுள்ள மிருகங்களுக்குக் காலனான மஹாஸிம்ஹம் பசித்திருக்கும் பொழுது அதன் பல்லைப் பிடுங்க முயல்கிறாய். கொடிய விஷத்தை யுடைய காலஸர்ப்பத்தின் வாயில் கையை விட்டு விஷப் பல்லைப் பிடுங்கப் போகிறாய். மந்திர பருவதத்தைக் கையிலெடுத்து விளை யாடப் பார்க்கிறாய். காலகூட விஷத்தைக் குடித்துவிட்டு ஸுகமாய் இருக்கப் பார்க்கிறாய். கூர்மையான ஊசியால் கண்ணைச் சொறியப் பார்க்கிறாய். கருக்குள்ள கத்தியை நாக்கால் தடவப் பார்க்கிறாய். கழுத்தில் பெரிய பாறையைக் கட்டிக்கொண்டு ஸமுத்திரத்தை நீந்திக் கடக்கப்பார்க்கிறாய். ஸூரிய சந்திரர்களைக் கைகளால் தாவிப் பிடிக்கப்பார்க்கிறாய். கொழுந்து விட்டெரியும் நெருப்பைத் துணியில் சுருட்டப் பார்க்கிறாய். கூர்மையான முனைகளுள்ள இரும்புச் சூலங்கள் மேல் நடக்கப் பார்க்கிறாய். இல்லாவிடில் அவ்வாறு ராமனுக்கு பிரிய பாரியையாகி சுத்தமான நடத்தை யுடைய என்னை விரும்பத் துணிவாயா?

ராமன் ஸிம்ஹம், நீ அல்பமான நரி; ராமன் மகா ஸமுத்திரம், நீ அல்பமான கால்வாய்; ராமன் உத்தமமான மத்யபானம், நீ புளித்த காடிக் கழுநீர்; ராமன் உருக்கி ஓடவிட்ட ஆயிரத் தெட்டு மாற்றுத் தங்கம், நீயோ ஈயம். ராமன் சிரேஷ்டமான சந்தனக் குழம்பு, நீயோ நாற்றமுள்ள சேறு; ராமன் மதம்பிடித்த யானை, நீயோ பூனை; ராமன் பக்ஷிகளுக்கெல்லாம் அரசனான கருடன், நீயோ காக்கை; ராமன் மயில், நீ நீர்க் காக்கை; ராமன் கலஹம்ஸம், நீயோ விகாரமான கழுகு. உனக்கும் அவருக்கும் எவ்வளவு தூரம்!! மஹா ரத்தினத்தை அரிசி என்று எண்ணி விழுங் கினால் அதை ஜரிக்க முடியுமா? பராக்கிரமத்தில் தேவேந்திரனுக்கு ஸமமான ராமன் கோதண்டபாணியாக என்னை ரக்ஷிக்கும் பொழுது நீ என்னை எடுத்துப் போனாலும் வைத்துக் கொண்டிருக்க முடியுமா? என்றால் உன் உயிர் போகுமே தவிர வேறல்ல'' என்றாள்.



இப்படி மஹா ஸாதுவும் பரிசுத்தமானவளும் ஜனகராஜ புத்திரி யுமான ஸீதை, ராவணனைப் பார்த்து தைரியமாக அதட்டினாலும், மனத்திலிருக்கும் பயத்தால் காற்றில் அடிபட்ட வாழையைப் போல் நடுங்கினாள். ராவணன் அதைப் பார்த்து, 'இவளை இன்னும் அதிக மாகப் பயமுறுத்தினால் நமக்கு வசப்படுவாள்' என்று எண்ணினான். காலனைப்போன்ற பராக்கிரமமுள்ள அந்தப் பாபி தன் குலத்தையும் பலத்தையும் பெயரையும் கோரமான செய்கைகளையும் வர்ணிக்க ஆரம்பித்தான்.

தாம் வேபமாநா முபலக்ஷ்ய ஸீதாம்
ஸ ராவணோ ம்ருத்யுஸம ப்ரபா⁴வ : |
குலம் ப³லம் நாம ச கர்ம ச ஸ்வம்
ஸமாசசக்ஷே ப⁴யகாரணார்த²ம் ‖ (49)

## ஸர்க்கம் 48

## ஸீதா ராவண ஸம்வாதம் (தொடர்ச்சி)

ஏவம் ப்³ருவந்த்யாம் ஸீதாயாம் ஸம்ரப்³த⁴ம் பருஷம் வச : |
லலாடே ப்⁴ருகுடீம் க்ருத்வா ராவண : ப்ரத்யுவாச ஹ ‖ (1)

அதைக் கேட்டு ராவணன் கோபத்தால் புருவத்தை நெறித்து மிகவும் கொடிய வார்த்தைகளைச் சொல்ல ஆரம்பித்தான். "மின்னல் கொடியைப் போன்ற பெண்ணரசே! குபேரனும் நானும் ஒரே பிதாவுக்கு வேறு வேறு பாரியைகளிடத்தில் பிறந்தோம். ராவணனென்றும் தசக்ரீவனென்றும் லோகங்களில் பிரஸித்தி பெற் றிருக்கிறேன். ஸகல பிராணிகளும் மிருத்யுவைக் கண்டு நடுங்கி ஓடுவது போல், என்னைக் கண்டு தேவ தானவ கந்தர்வ பிசாச பதக உரக தைத்ய கணங்கள் நடுங்கி ஓடும். ஏதோ ஒரு காரணத் தால் குபேரனுடன் யுத்தம் செய்து அவனை ஜெயித்து கதற அடித் தேன். அவன் பயந்து ஸகல ஸம்பத்துக்களும் நிறைந்த தன் ராஜ தானியான லங்கையை விட்டு ஓடிக் கைலாஸத்தில் வஸிக்கிறான். ஆகாசத்தில் நினைத்த இடத்திற்குப் போகக் கூடிய அவனுடைய புஷ்பக விமானத்தையும் கைப்பற்றினேன். நான் கோபித்தால் என் முகத்தைக் கண்டு இந்திராதி தேவதைகள் பயந்து நடுங்கி ஓடி ஒளிந்து கொள்வார்கள். காற்றும் நானிருக்குமிடத்தில் பயந்தே அடிக்கும். ஸூரியன் தன் கிரணங்களை ஒளித்துச் சந்தி ரனைப் போல் குளிர்ச்சியைக் கொடுப்பான். மரங்களில் இலைகள் அசையாது. ஆறுகளில் நீர் ஓடாமல் நிற்கும். நான் எங்கிருந் தாலும் எங்கே ஸஞ்சரித்தாலும் எங்கே பார்த்தாலும் இப்படியே.

இந்திரனுக்கு அமராவதி என்ற ராஜதானியைப்போல் எனக்கும் லங்கை என்ற ராஜதானி உண்டு. ஸமுத்திரத்தால் சூழப்பட்டு கோரமான ராக்ஷஸர்களால் நிறைந்து, வெள்ளியால் செய்யப்பட்ட கோட்டைச்சுவர்களையும் தங்கத்தால் செய்யப்பட்ட வீட்டுச்சுவர்களையும் வைடூரியம் முதலிய நவரத்தினங்களால் இழைக்கப்பட்ட வாசற்படிகளையும் உடையது. பலத்திலும் பராக்கிரமத்திலும் தைரியத்திலும் நிகரற்ற ஸைன்யத்தால் காக்கப்பட்டது. பாட்டு ஆட்டம் வாத்தியம் முதலியவைகளின் கோஷம் எப்பொழுதும் மதுரமாகக் கேட்கப்படும். தோட்டங்களில் அபூர்வ மரங்கள் எக்காலத்திலும் பழங்களாலும் புஷ்பங்களாலும் நிறைந்திருக்கும். அங்கே நீ என்னுடன் சந்தோஷமாகக் காலம் கழித்துக்கொண்டு மனுஷ்ய ஸ்திரீகளையும் அவர்கள் அனுபவிக்கும் போகங்களையும் நினைக்கவே மாட்டாய்.

“ராமன் தசரதருடைய மூத்த புத்திரன் ; ராஜ்யத்தை அடைய வேண்டியவன். அப்படியிருக்க, ஒரு ஸ்த்ரீ தன் மகனுக்கு அந்த ராஜ்யத்தைக் கொடுத்து பலமற்ற ராமனைக் காட்டிற்கு துரத்திவிட்டாள். ராமனுடைய வீரியம் எவ்வளவு? அவனுடைய ஆயுள் எவ்வளவு ? அவன் கேவலம் ஒரு மனுஷ்யன் ; அவனைப் பற்றி நினைக்கப்போகிறாயா ? பலமற்று தேஜஸ் குறைந்து புத்திமயங்கி கையாலாகாதவனாக தபஸ்வி வேஷத்தைத் தரித்த பேதையால் உனக்கென்ன பிரயோஜனம்? ஸகல லோகங்களிலுள்ள ராக்ஷஸர்களுக்கெல்லாம் நாதன் நான். உன்னிடத்தில் ஆசை வைத்து நானே உன்னைத்தேடி வந்திருக்கிறேன். என்னை அலக்ஷ்யம் செய்வது உனக்குத் தகாது. முன்காலத்தில் புரூரவஸ் சக்கரவர்த்தியை ஊர்வசி அலக்ஷ்யம் செய்து காலால் உதைத்துத் தள்ளி பிறகு பச்சாத்தாபம் மேலிட்டு அவனைத் தேடிப்போனதுபோல், நீயும் என்னை அலக்ஷ்யம் செய்தால் பிறகு மிகவும் வருத்தப் படுவாய். யுத்தத்தில் ராமன் என் சுண்டுவிரலுக்குக் காணுவானா ? கேவலம் மனுஷ்யனல்லவா? உன் அதிருஷ்டவசத்தால் உன்னைத் தேடி வந்திருக்கிற என்னை அடைந்து சுகமாக இரு” என்று பலவிதமாக கூறப்பட்டும் ஸீதை கோபத்தால் கண்கள் சிவந்து, அந்த ராக்ஷஸனைக் கடுமையாகக் கோபித்துக் கூறினாள்.

(கேவலம் ஒரு மனுஷ்ய ஸ்த்ரீ. கோரமான வனத்தில் தனியாகக் காப்பாற்றுவாரின்றித் தவிப்பவள். ஸகல பிராணிகளும் நடுங்கும்படியான ராவணேசுவரன் தன் பலத்தையும் வீரியத்தையும் கீர்த்தியையும் ஐசுவரியத்தையும் கொடிய ஸ்வபாவத்தையும் மறந்து அதுவரையிலும் ஒருவருக்கும் வணங்காத தன் தலையை ஸீதைக்கு வணங்கி, தன் ராஜ்யத்தையும் ஐசுவரியங்களையும் அவளுடைய பாதங்களில் ஸமர்ப்பணம் செய்து, தன்னை அங்கிகரிக்கவேண்டுமென்று கெஞ்சிக் கேட்டான். அவனை அலக்ஷ்யம் செய்து, ஒருதுரும்பாக நினைத்து நிந்தித்த ஜானகியின் பதிவிரதா தர்மத்தின் மகிமையை வர்ணிக்க முடியுமா?)

“துஷ்ட! உன் உடன் பிறந்தவனான குபேரன் மஹாத்மா. ஸகல லோகங்களிலும் பூஜிக்கப்பட்டவன். அவனுக்குத் தம்பியாக இருந்தும் எப்படி இந்தக்கெட்ட எண்ணம் கொண்டாய்? கடின சித்தத்தையும் கெட்ட புத்தியையும் கொண்டு, இந்திரியங்களை ஜயிக்காமல் ஸாதுக்களை ஹிம்ஸிக்கும் உன்னை ராஜாவாக அடைந்த ஸகல ராக்ஷஸர்களும் மடிவார்களென்பதில் ஸந்தேகமுண்டா ? நிகரற்ற ரூபவதியான இந்திராணியை இந்திரனுடைய கையிலிருந்து பலவந்தமாக அபகரித்துப் பிழைத்தாலும் பிழைக்கலாம். ராகவனுக்குப் பிரியமான என்னை அபகரித்த நீ அமிருதபானம் செய்து மரணமற்றவனாக இருந்தாலும் உயிர் தப்புவாயா?” என்று நிந்தித்தாள்.

ஜீவேச்சிரம் வஜ்ரத4ரஸ்ய ஹஸ்தாத்
ஶசீம் ப்ரத4ருஷ்யாப்ரதி ரூபரூபாம்
ந மாத்3ருஶீம் ராக்ஷஸ தூ4ஷயித்வா
பீதாம்ருதஸ்யாபி தவாஸ்தி மோக்ஷ: ॥ (24)

## ஸர்க்கம் 49

## ஸீதாஹரணம்

ஸீதாயா வசனம் ஶ்ருத்வா த3ஶக்3ரீவ: ப்ரதாபவாந் |
ஹஸ்தே ஹஸ்தம் ஸமாஹத்ய சகார ஸுமஹத்3 வபு: ॥ (1)

ஸீதை இப்படிச் சொல்லக்கேட்டு, மஹா பிரதாபசாலியான தசமுகன் கோபாவேசத்தால் கையோடு கையை அறைந்து, மலையைப்போன்ற ரூபத்தை எடுத்து, “பெண்ணே! என் பல பராக்ரமங்களை நீ கேட்டதில்லை என்று எண்ணுகிறேன். இப்பொழுது நான் அவைகளை விஸ்தாரமாக எடுத்துச் சொன்னாலும் நீ என்னை அலக்ஷ்யம் செய்வதைப் பார்த்தால் உனக்குச் சித்த ஸ்வாதீனமில்லாமல் பைத்தியம் பிடித்திருக்கிறதென்று எண்ணுகிறேன். ஆகாசத்தில் நின்றுகொண்டு பூமியைக் கைகளால் தூக்குவேன். ஸமுத்திரத்தை அள்ளிக்குடிப்பேன். காலனுடன் யுத்தம் செய்து அவனுக்கும் காலனாவேன். கூர்மையான பாணங்களால் ஸூரியனைத் தடுப்பேன். ஸகல லோகங்களையும் பிளப்பேன். நினைத்த ரூபங்களை எடுப்பேன். உனக்கு வேண்டிய வரங்களைக் கொடுப்பேன். இப்படிப்பட்ட நான் உன்மேல் கிருபைசெய்து உன்னை அங்கீகரிக்க, நீ என்னைக் கொஞ்சமாவது லக்ஷ்யம் செய்யாமல் என்னிடத்தில் கடுமையாகப் பேசுவதைப் பார்த்தால் உனக்குப் புத்தி ஒழுங்காக இல்லை என்று தோன்றுகிறது. இதோ பார்” என்று சொல்லி தன் நிஜ ரூபத்தை எடுத்தான், தேஜஸால் ஸூரியனுக்கும், உஷ்ணத்தால் அக்கினிக்கும் ஸமமான அவனுடைய நேத்திரங்கள் சிவந்து

ஓரத்தில் மஞ்சள் படர்ந்திருந்தன. உத்தமமான ஆபரணங்களா
20 லும், வஸ்திரங்களாலும் அலங்கரிக்கப்பட்டு ஸகல ஆயுதங்களோ
டும் மஹா மேகங்களைப்போல் விளங்கினான். தான் முன் எடுத்து
வந்த சாந்தமான ஸந்யாஸி வேஷத்தை விட்டு, காலாந்தகனுடைய
ரூபத்தைப்போல் கோரமான ரூபத்தை எடுத்துக் கோபாவேசம்
கொண்டு, அதி ரூபலாவண்யத்துடன் விளங்கும் ஸீதைக்கு எதிரில்
25 நின்று, அவளை வெறித்துப் பார்த்து, "ஸகல லோகங்களிலும்
சிரேஷ்டமான புருஷனைப் பர்த்தாவாக அடையவேண்டுமென்று
நீ விரும்பினால் என்னை அங்கீகரிப்பாய். நான் உனக்குத் தகுந்த
புருஷன். என்னை அடைந்து வெகுகாலம் ஸுகத்தை அனுபவிக்கலாம்.
நான் எல்லாவிதத்திலும் சிரேஷ்டன். உன்னிடத்தில் பிரீதி வைத்
30 தவன். உன் இஷ்டத்திற்கு விரோதமாக நான் நடக்கமாட்டேன்.
அல்ப மனுஷ்யனிடத்தில் வைத்திருக்கும் ஆசையை விட்டு
என்னிடத்தில் கிருபை செய். முட்டாளே! எல்லாம் தெரிந்தவளைப்
போல் எண்ணுகிறவளே! ராஜ்யத்திலிருந்து துரத்தப்பட்டு
எல்லோராலும் அலக்ஷ்யம் செய்யப்பட்ட ராமனிடத்தில் எந்த
35 குணங்களைக்கண்டு ஆசை கொள்ளுகிறாய்? எந்த புத்திஹீனனாவது
ஒரு ஸ்த்ரீயின் வார்த்தைக்குக் கட்டுப்பட்டு ராஜ்யத்தையும் ஸுகங்
களையும் மித்திரர்களையும் விட்டு துஷ்ட மிருகங்கள் ஸஞ்சரிக்கும்
இந்த வனத்தில் வஸிப்பானா?" என்று பரிகாசம் செய்தான்.

தனக்கு எவ்வளவோ மரியாதை செய்து, உபசரித்து பிரிய
40 மாகப் பேசிய ஸீதையிடத்தில் எவ்வளவோ மரியாதையையும் ப்ரீதி
யையும் பக்தியையும் வைக்கவேண்டியிருக்க, கெட்ட ஸ்வபாவ
முள்ளவனாகையால் எல்லாவற்றையும் மறந்து, ஆசை மேலிட்டு
புதன் ரோஹிணியைப் பிடிப்பதுபோல், இடது கையால் ஸீதையின்
தலை மயிரையும் வலது கையால் துடைகளையும் சேர்த்துப் பிடித்து
45 எடுத்தான்.

பெரிய மலையைப் போன்ற சரீரத்துடனும் இருபது புஜங்க
ளுடனும் காலாந்தகனைப்போல் கோபத்தால் ஜ்வலிக்கும் அந்த
ராக்ஷஸேசுவரனைப் பார்த்து, அங்கிருந்த வனதேவதைகள் பயந்து
ஓடின. கோவேறு கழுதைகள் பூட்டி, தங்கத்தாலும் ரத்தினங்க
50 ளாலும் அலங்கரிக்கப்பட்டு, மஹா மேகங்களைப்போல் சப்தம்
செய்யும் ராவணனுடைய மாயாமயமான ரதம் உடனே தோன்
றிற்று. பிறகு கொடிய வார்த்தைகளால் அவளைப் பயமுறுத்தி,
தூக்கி ரதத்தில் வைத்தான். மஹா கீர்த்திசாலியான ஸீதை,
ராவணனால் இப்படிக் கவரப்பட்டபொழுது துக்கம் தாங்காமல்
55 கோரமான வனத்திலிருக்கும் தன் பர்த்தாவை நினைத்து, "ஹா
ராம!" என்று கதறினாள். தன்னிடத்தில் பிரியமில்லாத ஸீதையிடத்
தில் தான் எல்லையற்ற ஆசை வைத்து, நாகேந்திரனுடைய பத்தி
னியை அல்ப ஜந்து அபகரிப்பதுபோல், ரதத்தில் கிடந்து புரளும்
ஸீதையை எடுத்துக் கொண்டு தேரை ஆகாயத்தில் செலுத்தினான்.



துக்கத்தாலும் அவன் ஆகாச மார்க்கத்தில் போகும்பொழுது 60
உண்டான பயத்தாலும் ஸீதை மனம் கலங்கி புத்திமயங்கிப் புலம்பி
னாள். "லக்ஷ்மண, மஹா பராக்கிரமசாலியே! பெரியோர்களுக்குப் பணி
விடை செய்வதில் ஓய்பில்லாதவனே! கரதூஷணர்களுடைய வதத்திற்
காக பழிவாங்க நினைத்து, என்னைப் பலவந்தமாகக் கொண்டுபோகும்
இந்த ராவணனைப் பார்க்கமாட்டாயா? தன் உயிரையும் ஸுகங்களை 65
யும் ஐசுவரியங்களையும் கொஞ்சமாவது லக்ஷ்யம் செய்யாமல் தன்னை
அண்டினவர்களை ரக்ஷிக்கும் ரகுநந்தன! இந்த நீசன் இப்படி என்னை
அதர்மமாக அபகரிப்பதைப் பார்க்கவில்லையோ? துஷ்டர்களை
ஸம்ஹரித்து ஸாதுக்களை ரக்ஷிப்பதற்காக அவதரித்த மஹானுபாவ!
இந்த மஹாபாபியான ராவணனை மாத்திரம் ஏன் ஸம்ஹரிக்க 70
வில்லை? ஒரு வேளை பாபிகள் செய்த பாபம் அப்பொழுதே பலிக்
காது. பயிர்கள் வளர்வதற்குப் பல அனுகூலங்கள் ஒத்திருக்க
வேண்டும். கர்மங்கள் பலிப்பதற்குக் காலமும் முக்கியமான
விஷயம். ராவண, மரணம் நெருங்கினதால் நீ புத்தி கெட்டு இந்த
மஹாபாபத்தைச் செய்திருக்கிறாய். ஆகையால் ராமன் உனக்கு 75
மிருத்யுவும் ஆவார். தர்மத்தை விட்டு விலகாத மஹா கீர்த்திமானான
ராமனுடைய பாரியை ராக்ஷஸனால் எடுத்துப் போகப்பட்டதைக்
கேட்டு கைகேயியும் அவளைச் சேர்ந்தவர்களும் இப்பொழுதாவது
ஸந்தோஷமடைவார்களா? 'ராமன் காட்டிற்குப் போனால் ஸீதை
அவனுடன் போகாமலிருக்கமாட்டாள். அங்கிருக்கும் ராக்ஷஸர்கள் 80
அவளை எடுத்துப் போவது நிச்சயம். அதனால் ராமன் உயிரை
விடுவான். லக்ஷ்மணனும் பிழைத்திருக்க மாட்டான். ராஜ்யம்
போட்டி இல்லாமல் பரதனுக்கு கிடைக்கும்' என்ற அவளுடைய
கெட்ட யோசனை எனக்குத் தெரியாதா?

ஜனஸ்தானத்திலுள்ள கோங்கு மரங்களே! ராவணன் என்னை 85
எடுத்துப் போகிறானென்று ராமனுக்குச் சீக்கிரமாகத் தெரிவியுங்
கள். மால்யவானென்ற மலையே! ராவணன் ஸீதையை எடுத்துப்
போகிறானென்று ராமனுக்குச் சீக்கிரமாகத் தெரிவியுங்கள். ஹம்ஸம்
நீர்க்கோழி முதலிய பக்ஷிகளால் விளங்கும் கோதாவரி நதி தேவ
தையே! உன்னை வணங்குகின்றேன்; ராவணன் ஸீதையை எடுத் 90
துப் போகிறானென்று ராமனுக்குச் சீக்கிரமாகச் சொல். இங்குள்ள
ஸகல விருக்ஷ தேவதைகளையும் வணங்குகிறேன்; எனக்கு நேர்ந்த
கஷ்டத்தை ராமனிடத்தில் சீக்கிரமாகத் தெரிவியுங்கள். இந்த
வனத்திலிருக்கும் ஸகல ஜந்துக்களையும் சரணமடைகிறேன்; ராம
னுக்குப் பிராணனைக் காட்டிலும் பிரியமான நான் ராவணனால் 95
அநாதையைப்போல் எடுத்துப் போகப்படுகிறேன் என்று ராமனுக்கு
சீக்கிரமாகத் தெரிவியுங்கள். ராவணனுக்குப் பயப்படவேண்
டாம். இவன் என்னை எந்த லோகங்களில் கொண்டுபோய் வைத்
தாலும் யமனிடத்தில் ஒப்புவித்தாலும், அது ரகுவீரனுக்குத் தெரிந்

தால் தன் பராக்கிரமத்தால் என்னை மீட்டு வருவார். ஆகையால் தவறாமல் சொல்லுங்கள்" என்று தீனமாகப் புலம்பிக் கொண்டு போகையில் ஓரிடத்தில் ஜடாயு படுத்திருப்பதைக் கண்டாள்.

உடனே ராவணனுடைய வசத்திலிருந்ததாலும், துக்கத்தாலும், பயத்தாலும் வார்த்தைகள் குளற, "என் பர்த்தாவிற்குப் பரம மித்திரரே! பாரும். இந்த மஹாபாபியான ராவணன் என்னை அநாதையைப்போல் எடுத்துப் போகிறான். தாங்கள் இவனைத் தடுத்து பிரயோஜனமில்லை. பல யுத்தங்களில் ஜயித்தவன்; கபட யுத்தம் செய்பவன்; ஆயுதபாணி; மஹாமாயாவி. ஆகையால் ராம லக்ஷ்மணர்களுக்கு இந்த விஷயத்தைப் பூர்ணமாகத் தெரிவிக்கும்படி பிரார்த்திக்கிறேன்" என்றாள்.

ராமாய து யதா2தத்வம் ஜடாயோ ஹரணம் மம |
லக்ஷ்மணாய ச தத் ஸர்வ மாக்2யாதவ்ய மஶேஷத: ॥ (41)

## ஸர்க்கம் 50

## ஜடாயு ராவணனைத் தடுத்தது

தம் ஶப்3த3 மவஸுப்தஸ்து ஜடாயுரத2 ஶுஶ்ருவே |
நிரீக்ஷ்ய ராவணம் க்ஷிப்ரம் வைதே3ஹீம் ச த3த3ர்ஶ ஸ: ॥ (1)

ஶ்ரம பரிஹாரத்திற்காகச் சற்று தூங்கிக்கொண்டிருந்த ஜடாயுவின் காதில் இந்த வார்த்தைகள் விழ, உடனே அவர் விழித்துக் கொண்டு பார்க்கையில், ராவணன் ஸீதையைத் தன் ரதத்தில் எடுத்துப் போவதைக் கண்டார். அவர் மலைச்சிகரத்தைப்போன்ற தேகத்தையுடையவர். கூர்மையான மூக்கையும் நகங்களையும் ஆயுதங்களாயுடையவர். பக்ஷிகளுக்கெல்லாம் ராஜா. பகவானுக்குக் கைங்கரியம் செய்யும் பாக்கியத்தைப் பெற்றவர்களுக்குள் ஶ்ரேஷ்டர். அவர் மரத்திலிருந்தபடியே ராவணனுக்கு ஹிதமான வார்த்தைகளைச் சொன்னார். "தசமுக! ஆதிகாலம் முதல் ஸாதுக்களால் அனுஷ்டிக்கப்படும் பகவானுடைய கைங்கரியத்தையே கதியாக நம்பியிருக்கிறேன். ஸத்தியம் ஞானம் ஆனந்தம் முதலிய குணங்களால் விளங்கும் பரமாத்மாவே எனக்குப் பற்று; அவரை அடையும் உபாயமும் அவரே. நான் கழுகுகளுக்கெல்லாம் ராஜா; மஹா பலவான். என் பெயர் ஜடாயு. ஸேவகனான என் ஸ்வரூபம் இதே.

இனி என் பிரபுவின் ஸ்வரூபத்தைத் தெரிவிக்கிறேன். தசரத சக்ரவர்த்தியின் புத்திரனான ஸ்ரீராமன் ஸகல லோகங்களுக்கும் நாயகன். இந்திரன் வருணன் முதலிய திக்பாலர்களுக்கு ஸமானன். ஸகலப் பிராணிகளின் ஹிதத்தையே நாடிய மனத்தை உடையவன். ஆகையால் அவன் உனக்கும் ராஜா என்பது நிச்சயம்.



நீ இப்பொழுது எடுத்துப்போக விரும்பும் ஸீதையோ அந்த லோக நாதனுடைய பிரிய பாரியை. அவன் அனுஷ்டிக்கும் தர்மத்தையே அனுஷ்டிப்பவள்; ரூபத்தாலும் குணத்தாலும் மிகுந்த கீர்த்தி பெற்றவள். ராமன் உனக்கு பிரபுவென்று நீ ஒப்புக்கொள்ள வேண்டாம். அவனை மனிதனாகப் பாவித்துப் பேசலாம். அப்படியும் நீ செய்வது அதர்மம். நீயும் ராஜ தர்மத்தைப் பரிபாலிக்க வேண்டியவன். பரஸ்த்ரீகளை எடுத்து வரலாமா? மேலும், உன்னைப் போன்ற அரசர்களின் மனைவிகளை ரக்ஷிக்கவேண்டியது உன் கடமையல்லவா? ராமன் அரசனென்று நீ எண்ணாவிட்டாலும் பரஸ்த்ரீகளை எடுத்துப் போவது அல்பமான செய்கை என்று உனக்குத் தெரியாதா? புத்திமான் பிறர் நிந்திக்கக்கூடிய காரியத்தைச் செய்வானா? ஒருவன் தன் மனைவிகளை எப்படி ரக்ஷிப்பானோ அப்படியே மற்றவர்களுடைய மனைவிகளையும் ரக்ஷிக்கவேண்டும்.

"சீலமுள்ள அரசர்கள் சாஸ்திரங்களில் விதிக்கப்படாத தர்மார்த்த காமங்களை விரும்பமாட்டார்கள். இந்த விஷயத்தில் ஸாதாரண ஜனங்கள் எப்படி நடந்துகொண்டாலும், அரசனான உனக்கு இது முற்றிலும் தகாது. உனக்காக இல்லாவிட்டாலும் லோக ஜனங்களுடைய க்ஷேமத்தை உத்தேசித்தாவது நீ தர்மத்திலிருந்து விலகலாமா? தர்மார்த்த காமங்களுக்கு ராஜா இருப்பிடம். தர்மா தர்மங்களை அரசன் அனுஷ்டிக்கிறபடியே பிரஜைகளும் அனுஷ்டிப்பார்கள். ஆகையால் அரசன் எப்பொழுதும் பாபத்தை விலக்கி தர்மத்தையே நடத்திக் காட்டவேண்டும். பாபத்தைச் செய்யும் ஸ்வபாவமுள்ளவனாகவும் விஷயஸுகங்களில் முழுகினவனாகவும் இருக்கும் நீ, பாபி தேவவிமானம் பெற்றதுபோல் எப்படி எல்லையற்ற ஐசுவரியத்தை அடைந்தாய்? பரஸ்த்ரீகளை அபகரிப்பது ஐசுவரியத்தை நாசம் செய்யும். நான் உனக்கு எவ்வளவு தூரம் ஹிதோபதேசம் செய்தும் நீ ஸீதையை விடவில்லை. உனக்குத் தேகத்துடன் பிறந்த ஸ்வபாவத்தை ஒழிக்க முடியுமா? ஆகையால் கெட்டவனான உனக்குச் செய்த நல்ல உபதேசம் உன் மனத்தில் படாது. சத்துருவின் மனைவியை அபகரிப்பது உன் ஸ்வபாவமென்றால், மஹாபலவானும் தர்மாத்மாவுமான ராமன் உன் ராஜ்யத்திலாவது ராஜதானியிலாவது எவனுக்கு என்ன அபகாரம் செய்தான்? ஒன்றுமில்லை. அப்படியிருக்க, அவனுக்கு ஏன் கெடுதி செய்ய நினைக்கிறாய்? 'கரனைக் கொன்றது எனக்குச் செய்த கெடுதியல்லவா' என்றால் சூர்ப்பணகைக்காகக் கரன் ராமனிடத்தில் சண்டைக்குப் போனான். எல்லை மீறி நடந்தபடியால், பிறர்க்கு ஹிம்ஸை செய்வதை அறியாத ராமனே அவனைக் கொன்றான். நன்றாக யோசித்துப் பார். ராமன் உனக்குச் செய்த கெடுதி என்ன? உண்மையைச் சொல். லோக

நாதனான ராமனுடைய மனைவியை நீ எடுத்து வர ஏதாவது நியாயமுண்டா?

"ஸீதையை இப்பொழுதே விடு; இல்லாவிட்டால் முன்பு இந்திரன் வஜ்ராயுதத்தால் விருத்திரனைக் கொன்றதுபோல், உன்னை ராமன் கோபப் பார்வையாலேயே எரித்துவிடுவான். மஹாகொடிய விஷமுள்ள ஸர்ப்பத்தை வஸ்திரத்தின் நுனியில் முடிந்து தோளில் போட்டுக்கொண்டு கவலையற்றிருக்கிறாயே! கழுத்தில் யமபாசம் விழுந்திருக்கையில் உனக்குக் கொஞ்சமாவது பயமில்லையே! ஒருவன் தான் தூக்கக்கூடிய பாரத்தையல்லவா தூக்கவேண்டும்? தனக்கு கெடுதி செய்யாமல் ஜீர்ணமாகக்கூடிய அன்னத்தையல்லவா தின்ன வேண்டும்? தர்மமாவது கீர்த்தியாவது ஸுகமாவது கிடைக்காமல், தேகப்பிரயாஸமும் சாவும் மாத்திரம் நிச்சயமாகக் கிடைக்கும் காரியத்தை எந்தப் புத்திமானாவது செய்வானா?

"நான் வயதுசென்றவனென்று என்னை அலக்ஷ்யம் செய்யாதே. நான் பிறந்து அறுபதாயிரம் வருஷங்களாயின. அவ்வளவு காலம் என் பிரஜைகளை ஜாக்கிரதையாகக் காப்பாற்றினதால் தேகத்தில் சிரமம் மேலிட்டிருக்கிறது. எனக்கு ஆயுதங்களில்லை. நீயோ யௌவன புருஷன்; வில் அம்பு கவசம் ரதம் முதலிய யுத்த ஸாமான்களுடன் இருக்கிறாய். ஆனாலும் ஸீதையை எடுத்துக் கொண்டு அபாயமில்லாமல் போகலாமென்று எண்ணாதே. வேத வாக்கியங்கள் இயற்கையாகவே பிரமாணம். அவைகளைத் தர்க்க சாஸ்திரத்திலுள்ள அனுமானங்களால் விபரீதமான அர்த்தங்களைக் கொடுக்கும்படி ஒருவன் வியாக்யானம் செய்வதை, வேதங்களையும் அவைகளின் கருத்தையும் பூர்ணமாக அறிந்தவன் பார்த்துக்கொண்டு சும்மா இருப்பானா? அப்படி வேத வாக்கியங்களைத் தூஷிக்கிறவன் தானே அழிவான். அவைகளுக்கு ஏதாவது குறைவுண்டோ? ஸீதை அந்த வேத சுருதியைப் போன்றவள்; நான் அவளுடைய மஹிமையைப் பூரணமாக அறிந்தவன். உன்னைப்போன்ற அயோக்கியன் அபகரிப்பதைப்பார்த்துக் கொண்டு சும்மா இருப்பேனா? (இங்கே ராமாயணத்தின் தத்வார்த்தம் வெகு ஸூக்ஷ்மமாகக் குறிக்கப்படுகிறது.) ஸீதையால் உனக்கு நாசமே தவிர உன்னால் அவளுக்கு யாதொரு குறையும் நேராது. நீ சூரனானால் சற்று நேரம் பொறுத்திரு. ராமன் வருவார். அவருடன் யுத்தம் செய். உன் பந்துவான கரன் அவரை எதிர்த்து மடிந்ததைப் போல் நீயும் பிணமாகப் பூமியில் கிடப்பாய். அதற்குத் தைரியமில்லாவிட்டால் என்னுடன் யுத்தம் செய். இதுவரையில் தேவ தானவ தைத்தியர்களைப் பல தடவை யுத்தத்தில் ஜயித்துத் துன்பப் படுத்தியிருக்கிறாயல்லவா? அவர்களுக்கு நாதனான ராமன் உன்னை அதற்காகவும் தண்டிக்க நியாயமுண்டு. மரவுரியையும் மான்தோலையும் தரித்த அந்த ராமசந்திரனே உன்னை யுத்தத்தில் கொல்வார்.



அந்த ராஜபுத்திரர்கள் இப்பொழுது வெகு தூரத்திலிருக்கிறார்களே. அவர்களை எப்படி அழைத்துவரமுடியும்? அவர்களுக்குப் பயந்தே நீ ஒளிந்து ஓடுகிறாயென்று எனக்கு நன்றாகத் தெரிகிறது. அது இருக்கட்டும். ரகுவீரனுக்கு பிரியமான மனைவியும் ஸகல லோகங்களிலும் நிகரற்ற ரூபவதியுமான ஸீதையை நான் உயிரோடிருக்கும்பொழுது நீ எடுத்துப்போக முடியுமா? என் மித்திரனான தசரதரை நினைத்தும் மஹாத்மாவான ராமனுக்காகவும் என்னுயிரைக் கொடுத்தாவது அவர்களுக்கு அபாயம் நேராமல் காக்கவேண்டும். ஓடாதே, நில். பத்துத் தலைகளும் இருபது கைகளுமிருக்கின்றன என்ற தைரியமா? நீ எனக்கு பிரியமான அதிதியல்லவா? உன்னுடன் யுத்தம் செய்வதே உனக்கு நான் என் சக்திக்குத்தக்கவாறு செய்யும் அதிதிபூஜை. என் உயிர் உள்ளவரையில் உன்னை விடுவதில்லை. உன் பத்துத் தலைகளையும் காம்பிலிருந்து பழத்தை உதிர்ப்பதுபோல், அறுத்துத் தள்ளுகிறேன், பார்" என்றார்.

யுத்[3]தா'தித்[2]யம் ப்ரதா[3]ஸ்யாமி யதா[2]ப்ராணம் நிஶாசர |
வ்ருந்தாதி[3]வ ப[2]லம் த்வாம் து பாதயேயம் ரதோ[2]த்தமாத் || (28)

---

## ஸர்க்கம் 51

## ஜடாயு ராவண யுத்தம்

---

இத்யுக்தஸ்ய யதா[2]ந்யாயம் ராவணஸ்ய ஜடாயுஷா |
க்ருத்[3]த[4]ஸ்யாக்[3]நிநிபா[4]: ஸர்வா ரேஜுர் விம்ஶதித்[3]ருஷ்டய: || (1)

நியாயமான வார்த்தைகளை ஜடாயு இப்படிச் சொல்ல, ராவணனுடைய இருபது கண்களும் கோபத்தால் நெருப்புக் கொழுந்தைப்போல் ஜ்வலித்தன. அந்த வார்த்தைகளைப் பொறுக்காமல் ஜடாயுவின்மேல் பாய்ந்தான். எதிர்காற்றால் அடிக்கப்பட்ட இரண்டு மஹா மேகங்கள் தாக்கினதுபோலும் மால்யவானென்ற மலைகள் ஒன்றோடொன்று மோதினதுபோலும் ராவணனும் ஜடாயுவும் அந்த வனத்தில் கோரமான யுத்தம் செய்தார்கள். (தண்டகாரண்யத்திலும் கிஷ்கிந்தைக்குப் பக்கத்திலும் மால்யவானென்ற பெயருள்ள இரண்டு மலைகளுண்டு) பிறகு அந்த ராக்ஷஸன் நாளீகம் நாராசம் விகர்ணி முதலிய கூர்மையான பாணங்களை ஜடாயுவின்மேல் பொழிந்தான். அவர் அவைகளை இறக்கைகளால் அடித்துத் தள்ளி, தன் கூர்மையான நகங்களாலும் கால்களாலும் ராவணனுடைய தேகத்தைக் கீறிப் பிளந்தார். ராவணன் அவரைக் கொல்ல நினைத்து, காலதண்டம் போன்ற கூர்மையான பத்துப் பாணங்களால் அவரைப் பிளந்தான். ஸீதை கண்ணும் கண்ணீருமாய் ரதத்தில் தவிப்பதை அவர் கண்டு, அந்த பாணங்களைக் கொஞ்சம்கூட லக்ஷ்யம் செய்யாமல் ராவணன்மேல் பாய்ந்து, அவனுடைய வில்லையும் பாணத்தையும் கால்களால் அடித்து முறித்தார். உடனே

ராவணன் கடுங்கோபம் கொண்டு வேறொரு வில்லை எடுத்து ஆயிரம் பதினாயிரம் பாணங்களைப் பொழிந்தான். கூடு கட்டியது போல் அவை அவரை மறைத்தன. அவர் அவைகளை இறக்கைகளால் அடித்துத் தள்ளி அந்த வில்லையும் காலால் முறித்தார். அக்னியைப் போல் ஜ்வலிக்கும் அந்த ராக்ஷஸனுடைய திவ்விய கவசத்தை இறக்கைக் காற்றால் பிளந்து தள்ளினார். தங்கக் கவசங்களணிந்து பிசாசமுகங்களுடன் ரதத்தில் பூட்டியிருக்கும் அதிவேகமான கோவேறு கழுதைகளைக் கொன்று, அந்த ரதத்தையும் தூளாக்கி, குடைகளையும் சாமரங்களையும் அவைகளைப் பிடித்திருந்த ராக்ஷஸர்களையும் கொன்று, ஸாரதியின் தலையைக் கடித்தெறிந்தார். வில்லொடிந்து குதிரைகள் இறந்து ஸாரதி மடிந்து ரதமின்றி, ராவணன் ஸீதையைத் தூக்கிக்கொண்டு கீழே குதித்தான்: அப்பொழுது ஸகல பிராணிகளும் ஜடாயுவைக் கொண்டாடின. அவர் வயதாலும் சிரமத்தாலும் இளைத்திருப்பதை ராவணன் அறிந்து ஸந்தோஷமடைந்தான் உடனே ஸீதையைத் தூக்கிக்கொண்டு ஆகாசத்தில் கிளம்பினான்.

அதைப்பார்த்து அந்த பக்ஷிராஜன் பறந்து அவனை வழிமறித்து, "மூடா! வஜ்ரத்தைப் போன்ற பாணங்களை விடும் ரகுவீரனுடைய மனைவியை எடுத்துப் போகப் பார்க்கிறாயோ? ராக்ஷஸ குலத்திற்கு நாசகாலம் நெருங்கியது போலிருக்கிறது. தாகமெடுத்தவன் பானகத்தை அளவில்லாமல் குடிப்பதுபோல், நீயும் உன் மித்திரர்களும் பந்துக்களும் மந்திரிகளும் ஸைன்யங்களும் பரிவாரங்களும் விஷம் கலந்த பானத்தை அளவில்லாமல் குடிக்கிறீர்கள். காரியங்களின் பயனை அறியாமல் நினைத்தபடி செய்கிறவர்கள் அதிசீக்கிரத்தில் அழிவார்கள். அதற்கு நீயே திருஷ்டாந்தம். தூண்டில்முள்ளை விழுங்கின மீன் பிழைக்குமா? காலபாசத்தால் கட்டுப்பட்ட நீ ராமனிடத்திலிருந்து தப்ப முடியுயா? ராம லக்ஷ்மணர்கள் இல்லாதபொழுது அவர்களின் ஆசிரமத்திலிருந்து நீ ஸீதையை எடுத்துப்போனதை அந்த வீரர்கள் மன்னிப்பார்களென்று எண்ணினாயோ? திருட்டுப் பயலைப்போல் பயந்து ஒளிந்து எல்லோரும் நிந்திக்கத்தக்க காரியத்தைச் செய்தாயே. இது வீரனுக்கு அழகா? சற்றுநேரம் பொறு. ராமன் வருவார். திறமையிருந்தால் அவருடன் யுத்தம் செய். உன்னுடன் பிறந்த கரனைப்போல் நீயும் உயிரற்றுப் பூமியில் கிடப்பாய். ஒருவனுக்கு ஆயுள் குறுகி அதற்குத் தகுந்த எந்தப் பாபத்தைச் செய்வானோ அதை நீ இப்பொழுது செய்திருக்கிறாய். லோகங்களுக்கு அதிபதியும் ஸ்வயம்புவுமான பகவானும் பாப பலனைக் கொடுக்கக் கூடிய கர்மத்தைச் செய்யத் துணிவாரா" என்று இப்படிப் பரம ஹிதமான வார்த்தைகளைச் சொல்லிக் கொண்டிருக்கையில், ராவணன் ஓடுவதைக் கண்டு, ஜடாயு அவனைப் பின்தொடர்ந்து, அவன் முதுகில் குத்தி, மதம் பிடித்து ஓடும் யானையைப் பாகன் அங்குசத்தால் குத்தித் திருப்புவதுபோல், தன் கூர்மையான நகங்களால் தேகமெங்கும் கீறிப் பிளந்தார். அவனுடைய தலைமயிரைப் பிடுங்கி



தஸ்ய வ்யாயச்²சமாநஸ்ய ராமஸ்யார்தே² த்³ ராவண: |
பக்ஷௌ பார்ச்²வௌ ச பாதௌ³ ச க²ட்³க³முத்³த்⁴ருத்ய ஸோச்சி²நத் ॥ —ஆ. 51ஸ. 42 ஸ்.
ராவணன் ஸமயம் பார்த்து, ரகுவீரனுக்காக யுத்தம் செய்யும் ஜடாயுவின் இறக்கைகளையும் சிறகுகளையும் கால்களையும் கூர்மையான கத்தியால் வெட்டித்தள்ளினான்.
(பக்கம் 141 பார்க்க)

முதுகில் கூர்மையான மூக்கைப் பதித்து மாம்ஸங்களைக் கடித்திழுத்தார். அந்த வேதனையைப் பொறுக்க முடியாமல் ராவணன் உதடு துடிக்க, கோபத்தால் தேகம் நடுங்க, அவருடன் யுத்தம் செய்யத் திரும்பி, ஒரு கையால் ஸீதையைப் பிடித்துக்கொண்டு மற்றொரு கையால் ஜடாயுவை அறைந்தான். அவர் திரும்பி அவனைப் பிடித்து, இடது கைகள் பத்தையும் கடித்தெறிந்தார். புற்றிலிருந்து மஹாஸர்ப்பங்கள் விஷ ஜ்வாலையுடன் கிளம்புவதுபோல், அறுபட்ட கைகள் முளைத்தன. பிறகு அந்த ராக்ஷஸன் ஸீதையை விட்டு முஷ்டிகளாலும் கால்களாலும் ஜடாயுவை அடித்து உதைத்தான். அப்பொழுது ராக்ஷஸ ராஜனுக்கும் பக்ஷி ராஜனுக்கும் ஒரு முகூர்த்தம் வரையில் கோரமான யுத்தம் நடந்தது. அதன் முடிவில் ராவணன் ஸமயம் பார்த்து, ரகுவீரனுக்காக யுத்தம் செய்யும் ஜடாயுவின் இறக்கைகளையும் சிறகுகளையும் கால்களையும் கூர்மையான கத்தியால் வெட்டித் தள்ளினான். ஜடாயு குற்றுயிருடன் பூமியில் விழுந்தார். வெளுத்த மார்புடன் கறுத்த மேகத்தைப் போலும், அணைந்த காட்டுத் தீயைப்போலும் அந்த மஹாவீரன் அடிபட்டுக் கிடப்பதைப் பார்த்து ராவணன் ஸந்தோஷித்தான், ஸீதையோ தன் பந்துக்களெல்லாம் இறந்ததுபோல் துக்கமடைந்தாள். ராவணனுடைய புஜபலத்தால் கொல்லப்பட்டுத் தாரை தாரையாய் ரத்தத்தைப் பெருக்கிக் கொண்டு ஜடாயு விழுந்து கிடக்கும் இடத்திற்கு ஓடி அவரை இறுகத் தழுவிக்கொண்டு கோவென்று அலறினாள்.

ததஸ்து தம் பத்ரரத²ம் மஹீதலே
நிபாதிதம் ராவண வேக³ மர்தி³தம் |
புந: பரிஷ்வஜ்ய ஶஶிப்ரப⁴ாநநா
ருரோத³ ஸீதா ஜநகாத்மஜா ததா³ ॥ (46)

## ஸர்க்கம் 52

## ஸீதாஹரணம்

தமல்பஜீவிதம் க்³ருத்⁴ரம் ஸ்பு²ரந்தம் ராக்ஷஸாதி⁴ப: |
த³த³ர்ஶ பூ⁴மௌ பதிதம் ஸமீபே ராக⁴வாஸ்ரமாத் ॥ (1)

ராமனுடைய ஆசிரமத்திற்கருகில் தரையில் கிடந்து குற்றுயிருடன் துடிக்கும் ஜடாயுவை ராவணன் கண்டான். கண் துடிப்பது முதலிய குறிகளும், காக்கை முதலிய பறவைகள் கத்துவதும், இன்னும் மற்றச் சகுனங்களும் அபசகுனங்களும் மனிதருக்கு நேரும் ஸுக துக்கங்களைக் குறிக்கின்றனவல்லவா? ராம! எனக்கு நேர்ந்த கஷ்டத்தைத் தெரிவிக்க மிருகங்களும் பக்ஷிகளும் நீர் இருக்குமிடத்தை நோக்கி ஓடுகின்றனவே. ஆகையால் அதிவேகமாக வந்து என்னைக் காப்பாற்றும். இந்தத் துஷ்டனிடத்திலிருந்து என்னை மீட்க உமது மித்திரனை பக்ஷிராஜன் தன்னால் இயன்ற மட்டும் அவனுடன் யுத்தம் செய்து அடிபட்டுப் பூமியில் கிடக்கிறார்.

ஹா ராம! ஹா லக்ஷ்மண! ஓடிவந்து என்னை ரக்ஷியுங்கள்'' என்று பயத்தால் நடுங்கி, அவர்கள் வெகுதூரத்தில் இருப்பதை மறந்து ஸமீபத்தில் இருப்பதுபோல் நினைத்துக் கூவினாள்.

வஸ்திரங்களும், ஆபரணங்களும், அலங்கோலமாகச் சிதற, ஜடாயுவைக் கட்டிக்கொண்டு பிரலாபிக்கும் ஸீதையை நோக்கி ராவணன் ஓடிவந்து, அவள் வேரற்ற கொடியைப்போல் பூமியில்விழுந்து புரளுவதையும், பெரிய மரங்களை இறுகப்பிடித்துக் கொள்வதையும் பார்த்து, 'அவைகளை விடு, விடு' என்று பல தடவை அதட்டினான். அவள் அவனைக் கவனிக்காமல் மனித ஸஞ்சாரமில்லாத அந்தவனத்தில் 'ராம ராம' என்று கதறிக்கொண்டிருக்கையில், யமன் பிராணிகளைப் பாசத்தால் இழுப்பதுபோல், அவளுடைய தலைமயிரைப் பிடித்து இழுத்தான். அதன் மூலம் தன் ஆயுளையும் ஐசுவரியத்தையும் கீர்த்தியையும் அதிகாரத்தையும் குலத்தையும் வேரறுத்தான்.

இப்படி ஸீதையைப் பலவந்தம் செய்வதைக் கண்டு ஸகலப் பிராணிகளும், ஸகல வஸ்துக்களும், தங்கள் தங்கள் ஸ்வபாவத்தையும், ஸ்வரூபத்தையும் இழந்தன. அக்ஞானமென்ற இருள் லோகமெங்கும் பரவிற்று. காற்றடிக்கவில்லை. ஸூரிய பிரகாசம் மறைந்தது. ஸீதையை ராவணன் இப்படிப் பலவந்தம் செய்து ஹிம்ஸிப்பதை, பிரம்மா ஞானதிருஷ்டியால் பார்த்து ஸந்தோஷப்பட்டு, "பகவான் பிரதிக்ஞை செய்த காரியம் முடிந்தது'' என்றார். தண்டகாரண்யத்தில் வஸிக்கும் மஹரிஷிகள் ஸீதை அப்பொழுது படும் துக்கத்தைப் பார்த்துப் பரிதபித்தார்கள். ராவணன் தானாகவே தன் நாசத்தைத் தேடிக்கொண்டதைப் பற்றி ஸந்தோஷித்தார்கள்.

'ஹா ராம! ஹா லக்ஷ்மண' என்று அவள் கதறிக்கொண்டிருக்கையில் அந்த ராக்ஷஸன் அவளைத் தூக்கி எடுத்து ஆகாசமார்க்கமாகக் கொண்டு போனான். மை மலையைப்போல் கறுத்த சரீரத்தையுடைய ராவணன், சுத்தமான தங்கத்தைப்போன்ற தேக காந்தியுடன் விளங்கி, மஞ்சள் பட்டால் அலங்கரிக்கப்பட்ட ஸீதையை எடுத்துப் போகும்பொழுது, ஆகாசத்தில் கறுத்த மேகத்தில் பாயும் மின்னலைப்போல் தோன்றினாள். அவளுடைய மஞ்சள் பட்டு காற்றால் அடிக்கப்பட்டு ராவணன்மேல் பறந்தபொழுது நெருப்புக் கொழுந்துகளால் சூழப்பட்ட மலைச்சிகரத்தைப்போல் அதிகமாக விளங்கினான். அவள் அணிந்த தாமரை மலர்களிலிருந்து இதழ்கள் உதிர்ந்து, "இப்படியே உன் ஐசுவரியம் சிதறும்'' என்று காட்டுவதுபோல் ராவணனுடைய மடியில் விழுந்தன. தங்கத்தைப்போல் பிரகாசிக்கும் அவனுடைய மேலாடை, நடுப் பகலில் ஸூரியப் பிரகாசத்தில் தாமிர நிறமாகக் காணப்படும் மேகங்களைப் போலிருந்தது. ஸீதை ராவணனுடைய மடியில் உட்கார்ந்திருக்கையில் அவளுடைய முகம் காம்பறுந்த தாமரை மலரைப்போல் சோபையற்றிருந்தது. ஸூரியனுக்கு ஸமமான தேஜஸும் பராக்கிரமமும்



வாய்ந்த ராமனுடைய கடாக்ஷமிருந்தாலல்லவா, அவளுடைய முகமான தாமரை மலரும், அழகிய நெற்றியும் தலைமயிரும் பொருந்தி கமலத்தைப்போன்ற நிறத்துடன் வெண்மையாக பிரகாசிக்கும்? நிர்மலமான பல் வரிசையால் அலங்கரிக்கப்பட்ட ஸீதையின் முக மண்டலம் ராவணனுடைய ஸமீபத்தில் இருக்கையில், கறுத்த மேகங்களில் புகுந்து வெளிப்படும் சந்திரனைப்போல் காணப்பட்டது. உத்தம லக்ஷணங்கள் பொருந்திய ஸீதையின் முகம் தாரைதாரையாகச் சொரியும் கண்ணீரைத் துடைக்காமல் அழுக்கடைந்து, ராமன் ஸமீபத்திலில்லாமல் ராவணனுடன் காணப்படும் பொழுது, பகலில் உதித்த சந்திரனைப்போல் தோன்றிற்று. கறுத்த சரீரத்தையுடைய ராக்ஷஸனால் கொண்டுபோகப்படும் தங்கவர்ணமுள்ள ஸீதை, நீலரத்தினங்கள் கோத்த தங்க சரட்டைப்போலும், மேகங்களுக்கு நடுவில் பிரகாசிக்கும் மின்னலைப்போலும், யானைக்குக் கட்டிய தங்கச் சங்கிலியைப்போலும் தோன்றினாள். ஸீதையின் ஆபரணங்கள் சப்திக்கும்பொழுது ராவணன் நீருண்ட மேகம் கர்ஜிப்பதுபோல் காணப்பட்டான். அவளுடைய தலையில் அணிந்திருக்கும் புஷ்பங்கள் சிதறிப் பூமியில் நான்கு புறத்திலும் விழுந்தன. ராவணன் போகும் வேகத்தாலுண்டான காற்று அந்தப் புஷ்பங்களை அவனிடத்தில் இழுக்கையில், நிர்மலமான நக்ஷத்திர மாலைகளால் சூழப்பட்ட மேரு மலையைப்போல் விளங்கினான். ஸீதையின் காலில் போடப்பட்ட ரத்தினங்களிழைத்த தண்டைச் சலங்கைகள் அங்கிருந்து கழன்று மதுரமான சப்தத்துடன் மின்னலைப்போல் பூமியில் விழுந்தன. தன் தேஜஸால் ஜ்வலிக்கும் ஸீதையை ராவணன் ஆகாசமார்க்கத்தில் எடுத்துக்கொண்டு போகையில், அரசர்களுக்குப் பெரிய அனர்த்தத்தைத் தெரிவிக்கும் குறைக்கொள்ளி ஆகாசத்தில் தோன்றியதுபோலிருந்தது. நெருப்புப் பொறியைப்போன்ற ஸீதையின் ஆபரணங்கள் கழன்று பூமியில் விழுகையில், நக்ஷத்திரங்கள் பெரிய ஓசையுடன் பூமியில் உதிர்வது போலிருந்தது. அவள் மார்பில் தரித்த சந்திரனைப்போல் பிரகாசிக்கும் ஹாரம் நழுவிப் பூமியில் விழுந்தபொழுது கங்கை ஆகாசத்திலிருந்து பூமியில் விழுவதுபோல் தோன்றிற்று.

ராவணனுடைய வேகத்தாலுண்டான காற்று, மரங்களில் அடித்து அவைகளின் கிளைகளை அங்குமிங்கும் அசைத்து அவைகளிலிருந்த பக்ஷிகள் பயத்தால் கூவும்பொழுது, அந்த மரங்கள் பயப்படாதே என்று தலையை அசைத்துக்கொண்டு ஸீதைக்குத் தைரியம் சொல்பவைபோல் காணப்பட்டன. ஓடைகளில் தாமரைகள் காந்தியற்று மீன் முதலிய ஜலஜந்துக்கள் பயந்திருப்பதைப் பார்க்கும்பொழுது, துக்கத்தால் மூர்ச்சையடைந்திருக்கும் தங்கள் அருமைத் தோழியான ஸீதைக்கு நேர்ந்த கஷ்டத்தால் வருந்துவது போலிருந்தன. ஸிம்ஹம் புலி மான் பக்ஷிகள் முதலியவைகளும் நான்கு பக்கங்களிலிருந்தும் ஓடிவந்து ராவணனுடைய நிழலைப்

பார்த்துக் கோபம் கொண்டு அவனைப் பிடிக்கத் தாவிக் குதித்துப் பின்தொடர்ந்தன. காட்டாறுகள் பெருகும் உன்னதமான சிகரங்களுள்ள மலைகள், ராவணன் ஸீதையை எடுத்துப் போவதையும் பார்த்து, தாரை தாரையாகக் கண்ணீர் பெருகக் கைகளைத் தூக்கிக் கோவென்று அலறுவதுபோல் காணப்பட்டன. ஸூரியனும் அந்த அக்கிரமத்தைப் பார்த்துப் பொறுக்காமல் வெளுத்துக் காந்தியிழந்தான். "லோகத்தில் தர்மமும் ஸத்தியமும் நேர்மையும் இரக்கமும் அழிந்தன. இல்லாவிட்டால் ராமனுடைய பிரிய பாரியையும் விதேஹ ராஜபுத்திரியுமான ஸீதையை ராவணன் எடுத்துப் போவானா?" என்று ஸகலப் பிராணிகளும் கூட்டம் கூட்டமாகப் பிரலாபித்தன. மான்குட்டிகள் பயந்து தீனமாகக் கதறி ஸீதையைப் பார்த்துப் பார்த்துக் கண்ணீருதிர்த்தன. ஸீதை துக்கம் தாங்காமல் அலறுவதைப் பார்த்த வனதேவதைகளுக்கும் நடுக்கமுண்டாயிற்று. தலைமயிர் அவிழ்ந்து திலகம் அழிந்து பூமியில் நான்கு புறத்திலும் பார்த்துக்கொண்டு, 'ஹா ராமா! ஹா லக்ஷ்மணா!' என்று ஸீதைக் கதறிக்கொண்டிருக்கையில், ராவணன் அதைக் கொஞ்சம்கூடக் கவனிக்காமல், தன் மிருத்யுவைத் தேடி அழைத்துக் கொண்டு போவதைப்போல், அவளை எடுத்துப் போனான். அப்பொழுது தன் பந்துக்களும் நண்பர்களுமில்லாமல் ராமலக்ஷ்மணர்களையும் காணாமல் ஸீதை பயந்து முகம் வெளுத்து தைரியத்தை இழந்தாள்.

ததஸ்து ஸா சாருத³தீ ஶுசிஸ்மிதா
விநாக்ருதா ப³ந்து⁴ஜநேந மைதி²லீ |
அபஶ்யதீ ராக⁴வலக்ஷ்மணௌ வுபௌ⁴ள
விவர்ண வக்த்ரா ப⁴ய பா⁴ர பீடி³தா || (46)

---

## ஸர்க்கம் 53

## ஸீதை ராவணனை நிந்தித்தது

---

க²முத்பதந்தம் தம் த்³ருஷ்ட்வா மைதி²லீ ஜநகாத்மஜா |
து³க்கி²தா பரமோத்³விக்³நா ப⁴யே மஹதி வர்திநீ || (1)

**கோ**பத்தாலும் அழுகையாலும் கண்கள் சிவந்து துக்கம் மேலிட்டு பயத்தால் நடுங்கிக்கொண்டு, ஸீதை ராவணனைப் பார்த்து, "ராமலக்ஷ்மணர்கள் இல்லாத ஸமயத்தைத் தேடித் திருட்டுத்தனமாக என்னை எடுத்துக்கொண்டு ஓடுகிறாயே. நீச! உனக்கு வெட்கமில்லையா? என்னை எடுத்துப் போகவேண்டுமென்று ஆசை கொண்டாயல்லவா? அவர்கள் இருக்கும்பொழுது ஸமீபத்தில் வரத் துணிந்தாயா? நீயே மாயையால் அந்தப் பொன் மானை உண்டாக்கி ராமலக்ஷ்மணர்களை அப்புறப்படுத்தினாயென்று எனக்கு நன்றாகத் தெரியும். என் மாமனாருக்கு வெகு காலமாக பிரிய



மித்திரனான ஜடாயுவும் என்னைக் காப்பாற்றத் தன்னால் கூடியவரையில் முயன்றும் அடித்துக் கொல்லப்பட்டார். உன் பெயரையும் குலத்தையும் கோத்திரத்தையும் கீர்த்தியையும் என்னிடத்தில் பெருமையாகச் சொல்லிக்கொண்டாயே! என்னுடன் யுத்தம் செய்து ஜெயித்த நீயல்லவா வீரன்! உன் பராக்கிரமத்தை என்னென்று சொல்வேன்! பரஸ்த்ரீயை அவளைச் சேர்ந்தவர்கள் இல்லாத வேளையில் திருட்டுத்தனமாக எடுத்துப்போயும் கொஞ்சமாவது உனக்கு வெட்கமில்லையே! மிகுந்த பல பராக்கிரமமுள்ளவனென்று இந்த இழிவான காரியத்தைச் செய்த உன்னை ஜனங்கள் என்றைக்கும் துஷ்டனென்றும் குரூரனென்றும் பாபியென்றும் சொல்வார்கள். என்னை எடுத்து வருவதற்கு முன் 'பூமியைத் தூக்குவேன்; ஸமுத்திரத்தைக் குடிப்பேன்; சந்திர ஸூரியர்களைத் தடுப்பேன்' என்று பலவிதமாகச் சொல்லிக்கொண்ட வீண் பெருமையெல்லாம் இப்பொழுது எங்கே போயிற்று? சீ! சீ! நீயும் ஒரு பிராணியா? ராக்ஷஸ குலத்திற்கே நீங்காத அவமானத்தை உண்டு பண்ணிய உன் நடத்தையை என்னென்று சொல்வேன்! சீ சீ! இப்படி வேகமாக நீ ஓடினால் உன்னை என்ன செய்ய முடியும்? ஒரு முகூர்த்தம் இங்கே நில். நீ உயிருடன் இருப்பதைப் பார்க்கிறேன். ராமலக்ஷ்மணர்களின் கண்ணில் பட்ட பிறகு நீயும் உன் ஸைன்யமும் உன் பந்துக்களும் ஒரு முகூர்த்தம்கூடப் பிழைத்திருக்க மாட்டார்கள். அவர்களுடைய பாண வேகத்தை உன்னால் தடுக்க முடியுமா? காட்டுத்தீ கோரமாக எரியும்பொழுது சிறு பக்ஷிகள் அதில் விழுந்து தப்புமா? உனக்கு க்ஷேமத்தை விரும்பினால் என்னை விட்டுவிடு. யோசித்துப் பார்த்தால் நான் சொல்லுவது உனக்கு ஹிதமென்றே தெரியும். நீ என்னை விடாவிட்டால் என் கணவனும் அவருடைய தம்பியும் கோபம் கொண்டு உன்னைக் கொல்வார்கள். நீச! இவ்வளவு சிரமப்பட்டு என்னைப் பலவந்தம் செய்யப் பார்க்கிறாயே! உன் முயற்சியெல்லாம் வீணாகுமே தவிர வேறல்ல. தேவர்களைப் போன்ற ரூபத்தையும் பராக்கிரமத்தையும் படைத்த ரகுவீரனை விட்டுப் பிழைத்திருப்பேனா? அவருக்குச் சத்துருவான உன்னிடத்தில் கட்டுப்பட்டிருப்பேனா? ஒருவனுக்கு ஆயுள் குறைந்தபொழுது பத்தியமில்லாத அபாயகரமானவைகளைத் தின்று எப்படி மரணமடைவானோ, அப்படி உனக்கு எது ஹிதமென்றும் கீர்த்தியைக் கொடுக்குமென்றும் நீ அறியாமலிருக்கிறாய். காலம் குறுகினவர்களுக்கு ஹிதமான விஷயங்களில் வெறுப்புண்டாகும். பார்க்கையிலேயே பயமுண்டாகவேண்டிய விஷயத்தில் உனக்குப் பயமில்லாததைப்பார்த்தால் உன் கழுத்தில் காலபாசம் விழுந்துவிட்டதென்று சொல்லவும் வேண்டுமா? தங்கநிறமுள்ள மரங்களும் ரத்த வெள்ளம் ஓடும் கோரமான வைதரணீ நதியும் பயங்கரமான அஸிபத்திரமென்ற வனமும் உன் கண்ணிற்குத் தோன்றுகின்றன

என்று எண்ணுகிறேன். கூர்மையான இரும்பு ஆணிகளுடன் பழுக்கக் காய்ச்சப்பட்ட தங்கபுஷ்பங்களோடும் வைடூரிய இலைகளோடும் கூடிபிறர் மனைவியை விரும்பியவன்நரகத்தில் தழுவவேண்டிய சால்மலிமரம் உனக்குத் தெரிகிறதா? பிறகு வருவதைப் பார்த்துக்கொள்வோம்;இப்பொழுது கிடைக்கும் சுகமே பெரிதென்று நினைக்கிறாயே? மஹாத்மாவான ராகவனுடைய கோபத்திற்கு ஆளாகி எவ்வளவு காலம் பிழைத்திருப்பாய்? கொடிய விஷத்தைக் குடித்து ஒருவன் வெகு காலம் பிழைத்திருப்பதைப் பார்த்ததுண்டா? என் பர்த்தா உன்னைக் காலபாசத்தால் கட்டிவிட்டார். அதிலிருந்து உன்னை மீட்பவரில்லை. எங்கே போய் நீ க்ஷேமப்படுவாய்? ஜனஸ்தானத்தில் பதினாயிரம் ராக்ஷஸர்களும் கர தூஷணர்களும் என் ராமனுடைய பாணங்களுக்கு இரையானதைப் பார்க்கவில்லையா? அவருக்கு எவ்வளவு நேரம் பிடித்தது? எந்த வாகனத்தில் ஏறியிருந்தார்? லக்ஷ்மணன் ஒத்தாசை செய்தாரா? அப்படியிருக்க அவருக்கு உயிருக்குயிரான பத்தினியை எடுத்துப்போனால் உன்னை அந்த மஹா வீரன் தன்கூர்மையான பாணங்களுக்கு இரையாக்கமாட்டாரா? அவருக்குத் தெரியாத அஸ்திரங்களும் உண்டா? அவருடைய பலபராக்கிரமத்தை அளவிட முடியுமா?'' என்று கடுமையாகவும் தீனமாகவும் கண்டித்து பிரலாபித்தாள்.

அவையெல்லாம் ஸமுத்திரக் கரையில் செய்த சத்தத்தைப் போல் அந்த மஹாபாபியின் காதில் நுழையவில்லை. இப்படிக் கேட்பவர்களின் மனம் உருகும்படி வாசாமகோசரமாக அவள் சொன்னாலும் அந்தத் துஷ்டனுடைய மனம் உருகவில்லை. ஸீதை பயத்தால் நடுங்கி அவனிடத்திலிருந்து தப்புவதற்கு பலவிதமாக முயற்சி செய்தும் பலிக்கவில்லை. அவள் சொல்லமுடியாத துக்கத்தால் பீடிக்கப்படுவதை ராவணன் கொஞ்சம்கூட லக்ஷ்யம் செய்யாமல் அதிவேகமாக அவளை எடுத்துப் போனான்.

ததா$^{2}$ ப்$^{4}$ருஶார்தாம் ப$^{3}$ஹு சைவ பா$^{4}$ஷிணீம்
விலாப பூர்வம் கருணம் ச பா$^{4}$மிநீம் |
ஜஹார பாப: கருணம் விசேஷ்டதீம்
ந்ருபாத்மஜா மாக$^{3}$த கா$^{3}$த்ர வேபது$^{2}$ம் ‖ (26)

---

## ஸர்க்கம் 54

## ஸீதையை லங்கையில் வைத்தது

---

ஹ்ரியமாணா து வைதே$^{3}$ஹீ கஞ்சிந்நாத$^{2}$ மபஶ்யதி |
த$^{3}$த$^{3}$ர்ஶ கி$^{3}$ரிஶ்ருங்க$^{3}$ஸ்தா$^{2}$ந் பஞ்ச வாநரபுங்க$^{3}$வாந் ‖ (1)

இப்படி அநாதையாக ராவணனால் கொண்டுபோகப்படுகையில் வழியிலுள்ள ஒருமலைச் சிகரத்தில் ஐந்து வானர சிரேஷ்டர்கள் உட்கார்ந்திருப்பதை ஸீதை பார்த்து, "எனக்கு நேர்ந்த கஷ்டத்தை இவர்கள் ராமனுக்கு ஒருவேளை தெரிவிக்கமாட்டார்களா'' என்றெண்ணி, தன் ஆபரணங்களில் சிலவற்றைக் கழற்றி உத்தரீயத்தில் முடிந்து அவர்களுக்கு நடுவில் போட்டாள். ராவணன் பரபரப்பால் அதைக் கவனிக்கவில்லை. மஞ்சள் நிறமுள்ள கண்களையுடைய அந்த வானரசிரேஷ்டர்கள் தாமரை இதழைப் போல் விசாலமான நேத்திரங்களையுடைய ஸீதை கதறிக்கொண்டு போவதைக் கண்கொட்டாமல் பார்த்துக்கொண்டிருந்தார்கள்.



பம்பை என்னும் ஏரியைத் தாண்டும் வரையில் "ராம லக்ஷ்மணர்கள் என்னைத் தொடர்கிறார்களோ'' என்று ராவணன் ஆசிரமத்தையே பார்த்துக்கொண்டிருந்து, அவர்கள் வராததால் ஸந்தோஷமும், தைரியமும் உண்டாகி, லங்கையை நோக்கி அதிவேகமாகப் போனான். கொடிய விஷமுள்ள மஹாஸர்ப்பத்தை மடியில் கட்டிக்கொண்டு போவதைப்போல், தனக்கு மிருத்யுவான ஸீதையைப் பலவந்தமாக தன் வீட்டிற்கழைத்துப் போனான். வனங்களையும் ஆறுகளையும் ஏரிகளையும் மலைகளையும் தாண்டி, வில்லிலிருந்து விடுபட்ட பாணத்தைப்போல் அதிவேகமாகப் போய், திமிங்கலம் முதலை முதலிய ஜந்துக்கள் நிறைந்த ஸமுத்திரத்தைக் கடந்தான். ராவணன் ஸீதையை எடுத்துப் போவதைப் பார்த்து ஸகல நதிகளுக்கும் ஆதாரமான ஸமுத்திரமும் பயந்து அலைகளை அடக்கிக்கொண்டது.மீன்களும் ஸர்ப்பங்களும் மறைந்தன. ஆகாசத்தில் ஸஞ்சரித்துக்கொண்டிருந்த ஸித்த சாரண தேவ கணங்கள், "ராவண! உன் ஆயுளுக்கு இதே முடிவு'' என்றார்கள். தன் மிருத்யுவே ரூபமெடுத்து வந்ததைப் போன்ற ஸீதையைத் தூக்கிக்கொண்டு தசமுகன் லங்கையில் புகுந்தான். விசாலமான வீதிகளையும் ஜனங்கள் நிறைந்த கட்டுகளையும் தாண்டி ராவணன் தன் அந்தப்புரத்திற்குப் போய், முன்பு மயனென்ற அஸுரன் தன் மாயையால் ஸிருஷ்டித்த ஒரு குகையில் ஸ்வயம்பிரபை என்ற அப்ஸரஸை வைத்ததுபோல், பயத்தாலும் சோகத்தாலும் மூர்ச்சையடைந்த ஸீதையைத் தன் அரண்மனையில் வைத்தான்.

பிறகு பிசாச முகங்களுள்ள ராக்ஷஸிகளை அழைத்து, "இவளை உங்கள் வசத்தில் ஒப்புவித்திருக்கிறேன். ஆணாவது பெண்ணாவது என் உத்தரவில்லாமல் இவளைப் பார்க்கக்கூடாது. எனக்கு நடக்கும் உபசாரம் மரியாதை பணிவிடை யாவும் இவளுக்கும் நடக்கவேண்டும். தங்கம் ரத்தினங்கள் ஆடையாபரணங்கள் இன்னும் வேறு எவைகளை விரும்பினாலும் கேட்டவுடனே கொடுக்கப்பட வேண்டும். தெரிந்தாவது தெரியாமலாவது இவளுக்குப் பிரியமில்லாத காரியத்தை நீங்கள் செய்தால் அந்த நிமிஷத்தில் உங்களைக் கொல்வேன்'' என்று கடுமையாக உத்தரவிட்டான்.

பிறகு அந்தப்புரத்திலிருந்து வெளியில் வந்து இன்னும் செய்ய வேண்டிய காரியம் என்ன பாக்கி யிருக்கிறதென்று யோசித்துக்

கொண்டிருக்கையில், மஹா வீரர்களும் குரூரர்களும் ஒன்றிற்கும் அஞ்சாதவர்களுமான எட்டு ராக்ஷஸர்கள் எதிரில் நிற்கக் கண்டான். பிரஹ்மா தனக்குக் கொடுத்த வரங்களால் மதம் கொண்டு, அவர்களுடைய பலத்தையும் வீரத்தையும் புகழ்ந்து, "நீங்கள் ஆயுதபாணிகளாக இங்கிருந்து ஜனஸ்தானத்திற்குச் சீக்கிரமாகப் போங்கள். கர தூஷணர்கள் அங்கே இருந்தது உங்களுக்குத் தெரியுமல்லவா? அவர்களும் அங்கிருந்த ராக்ஷஸ ஸைன்யங்களும் ராமனால் கொல்லப்பட்டார்கள். ராமனிடத்தில் எனக்கு எல்லையற்ற கோபம் பொங்குகிறது. பழிக்குப்பழி வாங்க ஸமயம் தேடிக்கொண்டிருக்கிறேன். யுத்தத்தில் அவனைக் கொல்லாமல் எனக்குத் தூக்கம் வராது. கரதூஷணர்களைக் கொன்ற அந்த மஹா பாபியைக் கொன்று, தரித்திரன் புதையலை அடைந்ததைப் போல் ஸந்தோஷிப்பேன். நீங்கள் அங்கே போய் இருங்கள். பயப்படவேண்டாம். உங்கள் பலமும் யுக்தியுமே போதும். ராமன் என்ன செய்து வருகிறானென்று அடிக்கடி ஸமாசாரம் தெரிவிக்க வேண்டும். ஜாக்கிரதையாக இருங்கள். மோசம் போகவேண்டாம். ராமனைக்கொல்ல எப்பொழுதும் ஸமயம் பார்த்துக்கொண்டிருங்கள். கரதூஷணர்கள் நாசமடைந்த இடத்தில் நாங்கள் என்ன செய்வோம் என்று கவலைப்படவேண்டாம். பல யுத்தங்களில் உங்களுடைய பலத்தையும் தைரியத்தையும் பராக்கிரமத்தையும் பார்த்திருக்கிறேன். ஆகையால் ஜனஸ்தானத்தில் போய் அந்த காரியத்தை முடிக்கக் கூடியவர்களென்று நம்பி உங்களை அனுப்புகிறேன்" என்றான். அந்த எட்டு ராக்ஷஸர்களும் அரசன் தங்களைப் புகழ்வதைக் கேட்டு மகிழ்ந்து, தங்கள் மாயையால் ஒருவருக்கும் தெரியாமல் ஜனஸ்தானத்திற்குப் போனார்கள்.

இப்படி ராவணன் ராமனுடைய ஆசிரமத்திலிருந்து ஜானகியைத் திருட்டுத்தனமாக எடுத்துவந்து ஆசையால் புத்தி மயங்கி ராமனைப் பகைத்துக்கொண்ட பிறகும் விசாரமற்று ஸந்தோஷித்தான்.

ததஸ்து ஸீதா முபலப்4ய ராவண:
ஸுஸம்ப்ரஹ்ருஷ்ட: பரிக்3ருஹ்ய மைதி2லீம் |
ப்ரஸஜ்ய ராமேண ச வைரமுத்தமம்
ப3பூ4வ மோஹாந் முதி3த: ஸ ராக்ஷஸ: || (30)

---



## ஸர்க்கம் 55

## ராவணன் ஸீதையை பிரார்த்தித்தது

ஸந்தி3ஶ்ய ராக்ஷஸாந கோ4ராந் ராவணோஷ்டௌ மஹாப3லாந் |
ஆத்மாநம் பு3த்3தி4 வைக்லப்3யாத் க்ருதக்ருத்ய மமந்யத || (1)

அந்த ராக்ஷஸர்களை அனுப்பிவிட்டு ராவணன் ஸகல புருஷார்த்தங்களையும் அடைந்ததுபோல் மகிழ்ந்தான். அல்ப புத்தியுள்ளவனல்லவா? பிறகு ஸீதையிடத்தில் ஆசை மிகுந்து அவளையே நினைத்துக்கொண்டு அவளைப் பார்க்க விரும்பி, அதிவேகமாக அந்தப் புரத்திற்குப் போனான். அங்கே ராக்ஷஸிகளுக்கு நடுவில் ஸீதை கண்ணீர் தாரைதாரையாகப் பெருக, சோகத்தால் வாடி, ஸமுத்திரத்தில் பெருங்காற்றால் அடிபட்டு முழுகும் படகைப்போல் உட்கார்ந்திருக்கக் கண்டான். பெண்மான் தன் இனத்தை விட்டுப் பிரிந்து வேட்டை நாய்களால் சூழப்பட்டதைப்போல், ஸீதை அந்த ராக்ஷஸர்களின் வசத்தில் அகப்பட்டுக் குனிந்த தலை நிமிராமல் பூமியைப் பார்த்தபடியே இருப்பதைக் கவனித்தான். "ஆஹா! புத்தி மோசம் போனேனே! ஜனஸ்தானத்தில் என் பலத்தையும் பராக்கிரமத்தையும் ஐசுவரியத்தையும் விசேஷமாக வர்ணித்தேன். இப்பொழுது என் செல்வத்தையும் அதிகாரத்தையும் அவள் நேரில் பார்த்தாலும் நிச்சயமாக மலைத்து எனக்கு உட்படுவாள்" என்று எண்ணினான். அவளைப் பலவந்தமாக அழைத்துப்போய் ஒப்பில்லாத தன் அரண்மனையையும் அதிலுள்ள ஆச்சரியங்களையும் காட்டினான். மேடைகளும் உப்பரிகைகளும் மேல்மாடிகளும் விசித்திரமாக அமைக்கப்பட்டிருந்தன. எங்கே பார்த்தாலும் அழகிய ஸ்த்ரீகள் மின்னல்கொடிகளைப்போல் ஸஞ்சரித்துக் கொண்டிருந்தார்கள். அபூர்வமான பக்ஷிகள் அழகான கூடுகளில் மதுரமாகச் சப்தித்துக் கொண்டிருந்தன. தங்கத்தாலும் வெள்ளியாலும் ஸ்படிகத்தாலும் செய்யப்பட்ட தூண்கள் வஜ்ர வைடூரியங்களால் அலங்கரிக்கப்பட்டு எவ்விடத்திலும் காணப்பட்டன. விசித்திரமாக அமைக்கப்பட்ட தங்கப் படிக்கட்டுகளில் ராவணன் ஸீதையுடன் ஏறும்பொழுது துந்துபி அடிப்பதுபோல் சப்த முண்டாயிற்று. அழகிய ஜன்னல்கள் தந்தத்தாலும் தங்கத்தாலும் வெள்ளியாலும் அமைக்கப்பட்டு, தங்க வலைகளால் மறைக்கப்பட்டிருந்தன. தரைகளில் நவரத்தினங்களால் விசித்திர ரூபங்கள் ஏற்படுத்தப்பட்டிருந்தன. ஓடைகளும் நடவாவிகளும் அபூர்வமான புஷ்பங்களால் அலங்கரிக்கப்பட்டு, பல வகை மரங்களால் விளங்கின. ஸீதை யாதொன்றையும் கவனிக்காமல் துக்கத்தில் மூழ்கியிருந்தும் ராவணன் தன் அரண்மனையையும் அதிலுள்ள ஐசுவரியங்களையும் அவளுக்குக் காட்டினால், அவைகளில் ஆசை வைத்துத் தன்னை அடைவாளென்று எண்ணினான்.

"மஹா பலசாலிகளும் குரூரர்களுமான முப்பத்திரண்டு கோடி ராக்ஷஸர்களுக்கு நான் பிரபு. வயது சென்றவர்களையும் சிறுவர்

களையும் பெண்டுகளையும் கணக்கிடவில்லை. ஒவ்வொரு வேலைக்கும் ஆயிரம் ராக்ஷஸர்கள் நியமிக்கப் பட்டிருக்கிறார்கள். இந்த ராஜ்யத்தையும் இதிலுள்ள ஸகல காரியங்களையும் உன்னிடத்தில் ஒப்புவித்தேன். என் உயிரையும் உன்னிடத்தில் ஒப்புவித்தேன்; என் உயிரைக் காட்டிலும் நீ பிரியமானவளல்லவா? நான் பல லோகங்களிலிருந்தும் கொண்டுவந்த எண்ணிறந்த ஸ்த்ரீகளுக்கு நீ அரசியாக இரு. என்னைப் பர்த்தாவாக அடை. வேறு யோசனை ஏன் செய்கிறாய்? உனக்கு ஹிதத்தையே சொல்லும் என் வார்த்தையைத் தட்டாதே. உன்னிடத்தில் ஆசை வைத்த என்மேல் தயவுசெய்து என் இஷ்டத்தை நிறைவேற்று. அநேக யோஜனை விஸ்தீர்ணமுள்ள இந்த லங்கையை எண்ணிறந்த ராக்ஷஸர்கள் இரவும் பகலும் காத்து வருகிறார்கள். தேவாஸுரர்கள் ஒன்று சேர்ந்தாலும் இதை எதிர்த்து நெருங்க முடியாது. தேவ யக்ஷ கந்தர்வ பன்னகர்கள் இன்னும் ஸகல லோகங்களிலும் உள்ள பிராணிகள் எவரும் என் எதிரில் நிற்கமாட்டார்கள். ராஜ்யத்திலிருந்து அடித்துத் துரத்தப்பட்டுத் தபஸ்வி வேஷம் தரித்து, ஆயுளும் தேஜஸும் அழிந்து பரதையாகத் தபிக்கும் அல்ப மனிதனான ராமனால் உனக்கு என்ன பிரயோஜனம்? என்னை அடை. நான் உனக்குத் தகுந்த கணவன். ஜனங்களுக்கு யௌவனம் சீக்கிரத்தில் அழியும். ஆகையால் இங்கே என்னுடன் ஆனந்தமாகக் காலம் கழி. இனி ராமனைப் பார்ப்போமென்ற எண்ணத்தை விடு. அவன் கனவிலாவது இங்கே வரத் துணிவானா? மஹா வேகமுள்ள காற்றைக் கயிற்றால் கட்ட முடியுமா? ஜ்வலிக்கும் நெருப்புக் கொழுந்தைப் பிடிக்க முடியுமா? நீ என் காவலிலிருக்கும்பொழுது என்னிடத்திலிருந்து உன்னைக் கொண்டு போகக் கூடியவன் எந்த லோகத்திலும் இல்லை. எல்லையற்ற இந்த லங்காராஜ்யம் உனதே. நானும் தேவர்களும் ஸகலப் பிராணிகளும் உன் அடிமைகள். என் பட்டமஹிஷியாக அபிஷேகம் செய்யப்பட்டு என்னுடன் ஸகல போகங்களையும் அனுபவி.

நீ செய்த பாபங்களுக்குப் பயனாக வனவாஸத்தை அடைந்தாய்; அது கழிந்தது. இனி நீ செய்த புண்ணியத்தின் பலத்தால் என்னுடன் இந்த லங்கா ராஜ்யத்தை ஆளப் போகிறாய். இந்தத் திவ்வியாபரணங்களையும் பரிமளங்களையும் ஹாரங்களையும் இன்னும் மனத்தால் நினைக்கக்கூடிய ஸகல போகங்களையும் அனுபவிப்போம். என் தமயனான குபேரனை ஒரு நிமிஷத்தில் ஜயித்து, அவனுடைய புஷ்பக விமானத்தை எடுத்துக் கொண்டேன். அந்த உத்தமமான விமானம் விசாலமாகவும் ஸகல போக பதார்த்தங்களால் நிறைந்ததாகவும், ஸூரியனைப்போல் பிரகாசமுள்ளதாகவும் இருக்கிறது. அதில் நாமிருவரும் இஷ்டப்படி சஞ்சரிப்போம். தாமரையைப் போன்ற உன் அழகான முகம் துக்கத்தை அனுபவிக்க ஏற்பட்டதா?'' என்று ராவணன் பலவிதமாகப் பிதற்றினான்.



அதைக் கேட்டு ஸீதை பூர்ண சந்திரனைப் போன்ற தன் முகத்தை வஸ்திரத்தால் மறைத்துக்கொண்டு பலபலவென்று கண்ணீர் உதிர்த்தாள்.

இப்படிச் சோகத்தால் வாடிக் கவலைகொண்டு ராமனையே தியானித்துக் கொண்டிருக்கும் ஸீதையைப் பார்த்து ராவணன், 'ஸீதே! அக்னி ஸாக்ஷியாக உன் கையைப் பிடித்த கணவனைக் கைவிடுவது அதர்மமென்றெண்ணி வெட்கப்படுகிறாயோ? நம் இருவருக்கும் நேர்ந்த ஸம்பந்தம் தெய்வகதியால் ஏற்பட்டது. இது ரிஷிகளால் ஒப்புக்கொள்ளப்பட்டது; அதர்மமல்ல. உன் பாதங்களை என் தலையில் வைத்துக் கொள்ளுகிறேன். என்னிடத்தில் கிருபை செய். நான் உன் அடிமை; உன் வசப்பட்டவன். ராவணன் ஒரு பெண்ணைத் தலை வணங்கி வேண்டினான் என்பது கிடையாது. அப்படியிருக்க, ஆசைமீறி இந்தக் குறைவான வார்த்தைகள் என் வாயில் வந்தது எனக்கே ஆச்சரியமாக இருக்கிறது'' என்று சொல்லி ஸீதை தனக்கு வசப்பட்டாளென்று எண்ணினான். காலம் குறுகிவிட்டதல்லவா?

ஏவமுக்த்வா த[3]ஶக்[3]ரீவோ மைதி[2]லீம் ஜநகாத்மஜாம் |
க்ருதாந்த வஶமாபந்நோ மமேயமிதி மந்யதே ‖ (34)

---

## ஸர்க்கம் 56

## ஸீதை ராவணனை நிந்தித்தது

ஸா ததோ[2]க்தா து வைதே[3]ஹீ நிர்ப[4]யா ஶோககர்ஶிதா |
த்ருணமந்தரத: க்ருத்வா ராவணம் ப்ரத்யபா[4]ஷத ‖ (1)

இந்த வார்த்தைகளைக் கேட்டு ஸீதை கொஞ்சமாவது பயப்படவில்லை. பரபுருஷனுடன் நேரில் பேசுவது பதிவிரதைகளுக்குத் தகாதென்று, நடுவில் ஒரு புல்லைப் போட்டுத் தன் மனத்திலிருந்த துக்கத்தையும் சோகத்தையும் வெளியிட்டாள். "தசரதனென்று ஒரு அரசனிருந்தார். அவர் ஸத்தியஸந்தர். தர்மத்தை நிலைநிறுத்துகிறவர். அவருக்கு ராமனென்ற புத்திரனுண்டு. அவர் ஸகல லோகங்களிலும் பிரஸித்தி பெற்றவர். விசாலமான நேத்திரங்களை உடையவர். முழங்கால் வரையில் நீண்ட கைகளையுடையவர். ஸிம்ஹத்தைப் போன்ற தோள்களையுடையவர். மஹா தேஜஸ்வி. தர்மாத்மா. அவரே ஸகல லோகங்களுக்கும் தெய்வம். அவரே எனக்கும் பர்த்தா. இப்படிப்பட்ட சுத்தமான குலத்தில் புகுந்து, இப்படிப்பட்ட லோக சிரேஷ்டரான பர்த்தாவை அடைந்து நான் அதர்மத்தைச் செய்வேனோ? அவரும் அவருடைய தம்பி லக்ஷ்மணனும் உன்னைக் கொல்லவே இக்ஷ்வாகு குலத்தில் பிறந்திருக்கிறார்கள். ஆகையால் எனக்கு உன்னிடத்தில் கொஞ்சம்கூடப் பயமில்லை. இப்பொழுது ஏன் சும்மா இருக்கிறாரென்றால், அவருக்கு எதிரில் என்னை நீ எடுத்து வந்திருந்தால், ஜனஸ்தானத்தில் கரன் உயிரிழந்ததுபோல்

நீயும் யுத்தத்தில் கொல்லப்பட்டுத் தரையில் கிடப்பாய். கோர ரூபங்களையுடைய மஹாபலவான்களான உன் ராக்ஷஸர்களெல்லாம் கருடனைக் கண்ட பாம்புகளைப்போல் ராகவனிடத்தில் நடுங்குவார்கள். கங்கையின் கரைகளை அலைகள் இடித்துத் தள்ளுவதுபோல் தங்கக் கட்டுகளால் பிரகாசிக்கும் அவருடைய கூர்மையான பாணங்கள் உன் உடலைத் துளைக்கும். நீ இதுவரையில் தேவாஸுரர்களாலும் கொல்லப்படாமலிருக்கிறாய்; ராமனுடன் பகைத்துக்கொண்டு உயிர் தப்பமாட்டாய். யூபஸ்தம்பத்தில் கட்டிய ஆடு பிழைக்குமா? மஹாபலசாலியான ராமன் உன் 'உயிரைக் கொண்டுபோக வந்த காலன். அவர் கோப திருஷ்டியால் உன்னை ஒரு தரம் பார்த்தால் அந்த க்ஷணமே நீ எரிந்து சாம்பலாவாயே! சந்திர ஸூரியர்களை ஆகாசத்திலிருந்து அடித்துத் தள்ளுவார்; அழித்தாலும் அழிப்பார். ஸமுத்திரத்தை வற்றச் செய்தாலும் செய்வார். ஸீதையை உன்னிடத்திலிருந்து விடுவிக்காமல் இருப்பாரா? உன் ஆயுளும் ஐசுவரியமும் பலமும் பாராக்கிரமும் அழிந்தன. உன்னால் லங்கை நாதனற்று விதவையாயிற்று.

என் பர்த்தாவுடன் வஸித்துக்கொண்டிருந்த என்னைப் பலவந்தமாக எடுத்துக்கொண்டு வந்தாயே. இந்தப் பாவம் உனக்கு சுகத்தைக் கொடுக்குமென்று எண்ணினாயா? காட்டிற்கு ஓடி வந்த அந்தப் பரதை என்னை என்ன செய்ய முடியும் என்று கேட்டாயல்லவா? அவர் தெய்வ பலத்தையுடையவர்; மஹாதேஜஸ்வி; பாபமற்றவர்; இல்லாவிட்டால் துஷ்ட ஜந்துக்களாலும் ராக்ஷஸர்களாலும் நிறைந்த இந்த தண்டகாரண்யத்தில் தனியாக வஸிப்பாரா? அவருடைய சரமாரியால் உன் கர்வமும் பலமும் வீரியமும் கொழுப்பும் துஷ்டத்தனமும் அழியும். பிராணிகள் ஆயுள் குறுகி மரணமடையும்பொழுது விபரீத காரியங்களைச் செய்கின்றார்கள். நீயும் உன் ராக்ஷஸர்களும் உன்னைச் சேர்ந்தவர்களும் அழியும் காலம் வந்ததால் என்னைப் பலவந்தமாக எடுத்து வரவேண்டுமென்று உனக்குப் புத்தியுண்டாயிற்று. யாகசாலையில் தர்ப்பங்களாலும் யாக பாத்திரங்களாலும் ஹோமகுண்டம் அலங்கரிக்கப்பட்டு, வேத மந்திரங்களால் அந்த ஸ்தலம் சுத்தி செய்யப்பட்டு அதில் ஹோமங்கள் நடக்கும்பொழுது, சண்டாளன் அதை நெருங்க முடியுமா? தர்மத்திலிருந்து ஒருபொழுதும் விலகாத ராமன் அந்த யக்ஞபுருஷனைப்போன்றவர்; அவருடைய பிரியத்தால் அலங்கரிக்கப்பட்டு பராக்கிரமத்தால் ரக்ஷிக்கப்படும் நான் அந்த அக்னி குண்டத்தைப் போன்றவள். சண்டாளனான நீ என்னை நெருங்க முடியுமா? ராஜ ஹம்ஸத்துடன் தாமரையோடைகளில் எப்பொழுதும் ஆனந்தமாக விளையாடும் பெண் ஹம்ஸம், நாணற் காட்டிலிருக்கும் நீர்க்காக்கையைக் கண்ணெடுத்துப் பார்க்குமா? பிரக்ஞையற்ற இந்தத் தேகத்தை நீ கயிற்றால் கட்டு; வெட்டு; கடித்துத் தின்றுவிடு. இந்த சரீரத்தையாவது பிராணனையாவது காப்பாற்றவேண்டு



இதி ப்ரதிஸமாதிஷ்டா ராக்ஷஸ்யோ ராவணேந தா: | அஶோக வநிகாம் ஜக்³மு: மைதிலீம் ப்ரதிக்³ருஹ்ய து || —ஆ.56ஸ.33 ஶ

கோர ரூபமுள்ள அந்த ராக்ஷஸிகள் ஸீதையை அசோகவனத்தில் கொண்டு போய் வைத்தார்கள். (பக்கம் 155 பார்க்க)

Released by Maran's Dog ,Toronto, Canada



மென்று எனக்குக் கவலையில்லை. அழிவற்ற அபகீர்த்தியை ஒரு பொழுதும் ஸம்பாதித்துக்கொள்ளமாட்டேன்'' என்று கோபித்துக் கடுமையாகப் பேசி அவனை லக்ஷ்யம் செய்யாமல் மௌனமாக இருந்தாள்.

ராவணன் அதைக் கேட்டுக் கோபம் மேலிட்டு அவளுக்கு மிகுந்த பயத்தை உண்டுபண்ண விரும்பி, "ஸீதே! ஒரே வார்த்தை சொல்லுகிறேன், கேள். இன்றுமுதல் பன்னிரண்டு மாதங்களுக்குள் நீ என்னைக் கணவனாக அடையவேண்டும். இல்லாவிட்டால், என் காலைவேளை ஆகாரத்திற்காகச் சமையற்காரர்கள் உன்னைத் துண்டித்துப் பக்குவம் செய்வார்கள்'' என்று அதட்டினான். பிறகு ராக்ஷஸிகளைப் பார்த்துக் கோபத்துடன், "இவளுடைய கர்வத்தை அழித்து அதிசீக்கிரத்தில் இவளை எனக்கு உட்படுத்தவேண்டும். ஒருவருக்கும் தெரியாமல் அசோகவனத்தில் இவளை வைத்துக் காப்பாற்றுங்கள். நயத்தாலும் பயத்தாலும் காட்டில் யானையை வசப்படுத்துவதுபோல் இவளை எப்படியாவது எனக்கு வசப்படுத்த வேண்டும்'' என்று கடுமையாக உத்தரவு செய்து, மஹா கோபத்துடன் பூமியைப் பிளப்பவன் போல் தரையைக் காலால் உதைத்து விட்டு அங்கிருந்து போனான். கோரரூபமுள்ளஅந்த ராக்ஷஸிகள் ஸீதையை அசோகவனத்தில் கொண்டுபோய் வைத்தார்கள்.

அது எல்லா காலத்திலும் புஷ்பங்களாலும் பழங்களாலும் மதம்கொண்ட பக்ஷிகளாலும் விளங்கிற்று. ஆனால், ஸீதையோ பெண் புலிகளிடத்தில் அகப்பட்ட மானைப்போல் அந்த ராக்ஷஸிகளிடத்தில் அகப்பட்டுப் பயந்து ஏக்கம் பிடித்து, அவர்களுடைய கோர ரூபங்களைப் பார்த்து ஒன்றும் தோன்றாமல், தன் பிரிய நாயகனும் இஷ்ட தெய்வமுமான ராமனையே எப்பொழுதும் தியானித்துக் கொண்டிருந்தாள்.

ந விந்த³தே தத்ரது ஶர்ம மைதி²லீ
விரூப நேத்ராபி⁴ ரதீவ தர்ஜிதா |
பதிம் ஸ்மரந்தீ த³யிதம் ச தை³வதம்
விசேதநாபூ⁴த் ப⁴ய ஶோக பீடி³தா || (36)

---

## ஸர்க்கம் 57

## லக்ஷ்மணன் ராமனிடத்திற்குப் போனது

ராக்ஷஸம் ம்ருக³ரூபேண சரந்தம் காமரூபிணம் |
நிஹத்ய ராமோ மாரீசம் தூர்ணம் பதி² நிவர்ததே || (1)

மான் ரூபமெடுத்து வந்த மஹாமாயாவியான மாரீசனைக் கொன்று ராமன் ஸீதையைப் பார்க்க விரும்பி, அதி வேகமாகத் திரும்பி வரும்பொழுது அவருக்குப் பின்புறத்தில் ஒரு நரி கோரமாக ஊளையிட்டது. அதைக்கேட்டு ராமனுக்குப் பயத்தால் மயிர்க்கூச்சம்

உண்டாயிற்று. "ஐயோ! நரி இப்படி ஊளையிடுவது அபசகுனமாயிற்றே. ஸீதை ராக்ஷஸர்களால் கொல்லப்படாமல் க்ஷேமமாக இருக்கவேண்டுமே. மாரீசன் இறக்கும்பொழுது நான் கத்தினது போல் ஸீதையையும் லக்ஷ்மணனையும் கூப்பிட்டது வீணாகாதே. அதைக் கேட்டு லக்ஷ்மணன் என்னிடத்தில் ஓடி வருவானென்றும், ஸீதையை விடுவானென்றும், அவள் அதைக்கேட்டால் நானிருக்குமிடத்திற்கு உடனே லக்ஷ்மணனை அனுப்புவாளென்றும், அப்பொழுது ராக்ஷஸர்கள் ஒன்றுசேர்ந்து, ஸீதையைக் கொல்லலாமென்றுமல்லவா அவன் இப்படிச் செய்தான். பொன்மானைப் போல் ரூபமெடுத்து என்னை ஆசிரமத்திலிருந்து வெகு தூரத்திற்கப்பால் அழைத்துப்போய், என் பாணத்தால் அடிபட்டு இறக்கையில், 'ஹா லக்ஷ்மணா! ஹா ஸீதே' என்று கத்தினது இதற்காகவல்லவா? இந்தப் பெரும் காட்டில் தனியாக இருக்கும் லக்ஷ்மணனும் ஸீதையும் க்ஷேமமாக இருக்கவேண்டுமே. ஜனஸ்தானத்தில் ராக்ஷஸர்களை நான் கொன்றதுமுதல் அவர்கள் எனக்குக் கெடுதி செய்ய ஸமயம் தேடிக் கொண்டிருக்கிறார்கள். கோரமான பல அபசகுனங்கள் காணப்படுகின்றனவே" என்று நரியின் ஊளையைக் கேட்டதாலும், மாரீசன் மான் ரூபத்துடன் தன்னை ஆசிரமத்திலிருந்து வெகுதூரம் இழுத்துக்கொண்டு போனதாலும் என்ன கெடுதி நேர்ந்ததோ என்று ஸந்தேகித்து ஜனஸ்தானத்தை நோக்கி விரைவாகச் சென்றார். அப்பொழுது மிருகங்களும் பக்ஷிகளும் கோரமாகக் கூவிக்கொண்டு அவருக்கு இடமாகப் போயின. அந்த அபசகுனங்களையும் பார்த்துக்கொண்டு இன்னும் அதிவேகமாக ஆசிரமத்தை நோக்கி ஓடி வருகையில், லக்ஷ்மணன் காந்தியற்ற முகத்துடன் எதிரில் வந்தான்.

ராமன் அவனிடத்திற்குப் போய், தன்னைப்போல் அவனுக்கும் முகம் வாடித் துக்கம் மேலிட்டிருப்பதைப்பார்த்து, ராக்ஷஸர்கள் நிறைந்த வனத்தில் ஸீதையைத் தனியாகவிட்டு வந்ததைப்பற்றிக் கடுமையாகக் கோபித்தார். அவனுடைய இடது கையைப் பிடித்துக் கொண்டு கோபமும் துக்கமும் தாங்காமல், "அடே லக்ஷ்மணா! ஸீதையைத் தனியே விட்டு இங்கே வந்தாயே. என்ன காரியம் செய்தாய்? நீ செய்தது மிகவும் பிசகு. அவள் அபாயமில்லாமல் க்ஷேமமாக இருக்கவேண்டுமே. அதைப்பற்றி ஸந்தேகமென்ன? எந்தத் துஷ்டமிருகங்களால் கொல்லப்பட்டாளோ? ராக்ஷஸர்களால் தின்னப்பட்டாளோ? மஹா ஸாதுவான ஜனகமஹாராஜனுடைய புத்திரியை நம்முடன் அழைத்து வந்தது இதற்காகவா? அவளை ஆபத்திலிருந்து காப்பாற்ற முடியாத நமது வீரியத்தைச் சுடவேண்டும். நம்மை நம்பி வந்த ஒரு பெண்ணைக் காப்பாற்ற முடியாத நமக்கு ஆயுதங்களால் என்ன பிரயோஜனம்? என் பயத்திற்குத் தகுந்தபடி பல அபசகுனங்கள் காணப்படுகின்றன. லக்ஷ்மணா! ஸீதையை க்ஷேமமாக உயிருடன் காண்போமா? ஜனகருடைய பெண்ணல்லவா? அவரிடத்தில் அவளை ஜாக்கிரதையாக ஒப்புவிக்கவேண்டாமா? காக்கை முதலிய பக்ஷிகளும் நரி மான் முதலிய மிருகங்களும் ஸூரியனைப் பார்த்துக் கத்துகின்றன. ஜானகி க்ஷேமமாக இருப்பாளா? இந்த மஹாபாபியான மாரீசன் மான்ரூபம் தரித்து என்னை ஆசிரமத்திலிருந்து வெகுதூரம் இழுத்துக்கொண்டு போனான். எவ்வளவோ சிரமப்பட்டு அவனைக் கொன்றேன். சாகும்பொழுது அவன் நிஜரூபத்தை எடுத்து ஸீதையையும் உன்னையும் ஏமாற்றினான். யாதொருகாரணமும் இல்லாமல் என் மனம் ஸந்தோஷமற்றுக் குன்றியிருக்கிறது. இடது கண் துடிக்கிறது. ஸீதை ஆசிரமத்தில் இருக்கமாட்டாள். எவனால் கொண்டுபோகப்பட்டாளோ? இறந்தாளோ அல்லது நடுவழியில் இழுக்கப்படுகிறாளோ? ஸீதையை இனி நாம் ஆசிரமத்தில் பார்க்கப் போகிறதில்லை என்பது நிச்சயம்."

மநஶ்ச மே தீ³ந மிஹாப்ரஹ்ருஷ்டம்
சக்ஷுஶ்ச ஸவ்யம் குருதே விகாரம் |
அஸம்ஶயம் லக்ஷ்மண நாஸ்தி ஸீதா
ஹ்ருதா ம்ருதா வா பதி² வர்ததே வா ‖ (25)

## ஸர்க்கம் 58

## ராமன் பிரலாபித்தது

ஸ த்³ருஷ்ட்வா லக்ஷ்மணம் தீ³நம் ஶூந்யே த³ஶரதா²த்மஜ: |
பர்யப்ருச்ச²த த⁴ர்மாத்மா வைதே³ஹீ மாக³தம் விநா ‖ (1)

**ஸீ**தையைத் தனியாகக் காட்டில் விட்டு வந்த லக்ஷ்மணனைப் பார்த்து ராமன் கேட்டார். "லக்ஷ்மணா! நான் தண்டகாரண்யத்திற்குப் போகப் புறப்படும்பொழுது, என்னுடன் வருவேன் என்று பிடிவாதம் பிடித்த ஸீதையை எங்கே விட்டுவந்தாய்? ராஜ்யத்தை இழந்து தீனனாக காட்டிற்கு ஓடும் என்னைக் கைவிடாமல் என்னுடன் ஸகல கஷ்டங்களையும் அனுபவித்த ஜானகி எங்கே? தேவஸ்த்ரீகளைப் போல் அழகி அவள். என்னுயிரைக் காட்டிலும் எனக்கு அருமையானவள். அந்த ஸீதை எங்கே? அவளில்லாமல் ஒரு முஹூர்த்தமாவது என் உயிர் தரிக்குமா? தங்கத்தின் காந்தியையுடைய அந்த ராஜ புத்திரி இல்லாமல் ஸகல லோகங்களுக்கும் அதிபதியாக இருப்பதையும் நான் வேண்டேன். என் உயிர்த் தோழியான ஜானகியை உயிரோடு காண்போமா? நான் பதினான்கு வருஷங்கள் வனவாஸம் செய்கிறேன் என்று செய்த பிரதிக்ஞை பொய்யாகாமல் நிறைவேறுமா? அவளைப் பிரிந்த துக்கத்தால் நானும் இறந்து நீயும் அயோத்யைக்குத் திரும்பிப்போன பிறகாவது, புண்ணியவதியான கைகேயி ஸுகப்படுவாளா? அப்பொழுதாவது அவளுடைய எண்ணங்கள் நிறை

வேறுமா? தன் புத்திரன் ராஜ்யத்தை ஆளும்பொழுது, அவள் கர்வத்தால் தலைதெரியாமல், என்னைப்பெற்ற கௌஸல்யையும் தனக்கு மரியாதை செய்யவேண்டுமென்று நிர்ப்பந்திப்பாளே. புருஷனையும் இழந்து, பிள்ளையையும் பறிகொடுத்து, சக்களத்திக்கும் அடிமைப்படவேண்டுமா? ஜானகி பிழைத்திருந்தால் ஆசிரமத்திற்குப் போவேன். வேறு விதமாக நேர்ந்தால் இப்பொழுதே உயிரை விடுவேன். நான் ஆசிரமத்திற்குப் போனவுடன் ஸீதை சிரித்த முகத்துடன் என்னை எதிர்கொண்டு வந்து பேசாவிட்டால் அப்பொழுதே உயிரை விடுவேன். லக்ஷ்மணா! ஜானகி பிழைத்திருக்கிறாளா, இல்லையா? சொல். அல்லது நீ அவளை விட்டு வந்தபிறகு ராக்ஷஸர்களால் கொல்லப்பட்டாளோ? செல்வமாக வளர்க்கப்பட்டவள். ஒரு நாளும் துக்கத்தை அறியாதவள். சிறுபெண். என்னை விட்டுப் பிரிந்து ஏக்கம் கொண்டு தவிக்கிறாளோ? அந்தத் துஷ்ட ராக்ஷஸன், 'ஹா! லக்ஷ்மணா' என்று கபடமாகக் கத்தினதைக் கேட்டு நீயும் பயந்தாயென்று நினைக்கிறேன். அதை என் குரலென்று எண்ணி ஸீதையும் பயந்து, என்னைத் தேடிவர உன்னை அனுப்பி இருக்கிறாள். ஆகையால் இவ்வளவு சீக்கிரமாக வந்திருக்கிறாய். எப்படியிருந்தாலும் ஸீதையை அந்தக் காட்டில் தனியாக விட்டு வந்தது பெரும் கஷ்டம். ராக்ஷஸர்களுக்கு நம்மைப் பழிவாங்க ஸமயம் கிடைத்ததல்லவா? கரதூஷணர்கள் மடிந்தது முதல் அவனைச் சேர்ந்தவர்கள் ரோஷம் கொண்டு நமக்குக் கெடுதி செய்யக் காத்துக்கொண்டிருக்கிறார்கள். நர மாம்ஸத்தில் அதிகப் பிரீதியுள்ள அந்தத் துஷ்டர்கள் ஸீதையைக் கொன்று தின்றிருப்பார்களென்று எண்ணுகிறேன். இது நிச்சயம். ஐயோ இவ்விதமான கஷ்டத்தில் அகப்பட்டு என்ன செய்வேன்! இதுவும் நான் அனுபவிக்கவேண்டிய கர்மபலனே" என்று ஸீதையையே நினைத்துப் புலம்பிக்கொண்டு ராமன் லக்ஷ்மணனுடன் ஜனஸ்தானத்தை நோக்கி வந்தார்.

இப்படி லக்ஷ்மணனைக் கோபித்து, பசிதாகத்தாலும் வெகு தூரம் ஓடிவந்த சிரமத்தாலும் முகம் வாடிக் கறுத்து உஷ்ணமாகப் பெருமூச்சுவிட்டுக்கொண்டு ஆசிரமத்திற்கருகில் வந்தார். அங்கே ஸீதையைக் காணவில்லை. ஆசிரமத்திற்குள் போய் பார்த்தார். அங்கும் காணவில்லை. அவ்விடத்தைப் பார்த்தவுடன் தானும் அவளும் அங்கே விளையாடி ஆனந்தமாகக் காலம் கழித்த இடங்களில் தேடியும் அவளைக் காணாமல் சொல்ல முடியாத துக்கத்தை அடைந்தார்.

ஸ்வமாஶ்ரமம் ஸம்ப்ரவிகா$^{3}$ஹ்ய வீரோ
விஹார தே$^{3}$ஶா நநுஸ்ருத்ய காம்ஶ்சித் |
ஏதத் ததி$^{3}$த்யேவ நிவாஸ பூ$^{4}$மௌ
ப்ரஹருஷ்டரோமா வ்யதி$^{2}$தோ ப$^{3}$பூ$^{4}$வ ‖ (20)

---



## ஸர்க்கம் 59

## ராமன் பிரலாபித்தது (தொடர்ச்சி)

---

அதா$^{2}$ஶ்ரமா து$^{3}$பாவ்ருத்த மந்தரா ரகு$^{4}$நந்த$^{3}$ந: |
பரிபப்ரச்ச$^{2}$ ஸௌமித்ரிம் ராமோ து$^{3}$க்கா$^{2}$ர்தி$^{3}$தம் புந: ‖ (1)

ஆசிரமத்திலிருந்து திரும்பிவரும் லக்ஷ்மணனை ராமன் நடுவழியில் ஸந்தித்து அவன் துக்கப்படுவதைக் கண்டு, "நீ இருக்கிறாயென்று உன்னை நம்பி ஜானகியை உன் வசத்தில் ஒப்புவித்து விட்டு வந்தேனே. அவளைத் தனியாக விட்டு இங்கே ஏன் வந்தாய்? உன்னைப் பார்த்தவுடன் ஸீதைக்கு ஏதோ பெரிய கெடுதி நேர்ந்திருக்கிறதென்று எனக்கு நிச்சயமாகத் தோன்றுகிறது. ஸீதை இல்லாமல் நீ மாத்திரம் தனியாக வருவதைத் தூரத்தில் கண்டவுடன் என் இடது கண்ணும் இடது கையும் மார்பும் துடித்தன" என்றார்.

ஸீதையின் குரூரமான வார்த்தைகளால் புண்ணுயிருந்த லக்ஷ்மணனுடைய மனதில் ராமனுடைய வார்த்தைகள் நாராசம்போல் துளைத்தன. ஆனாலும் தன் துக்கத்தையும் கோபத்தையும் அடக்கிக்கொண்டு, "அண்ணா! வேண்டுமென்று காரணமில்லாமல் ஸீதையை விட்டு நான் இங்கே வரவில்லை. வெகு குரூரமான வார்த்தைகளால் அவள் என்னைக் கோபித்து இங்கே அனுப்பினாள். இல்லாவிட்டால் நான் தங்களுடைய கட்டளையை மீறுவேனா? 'ஹா லக்ஷ்மணா, ஹா ஸீதே, என்னைக் காப்பாற்றுங்கள்' என்று தாங்கள் கதறினதுபோல் எங்கள் காதில் விழுந்தது. ஸீதை அதைக் கேட்டுப் பயந்து அழுதுகொண்டு, தங்களிடத்தில் வைத்த ஸ்நேஹத்தால் தனக்கு நேரும் ஆபத்தையும் மறந்து, "லக்ஷ்மணா! ஓடு, ஓடு. இங்கே நிற்காதே" என்றாள். இப்படிப் பல தடவை என்னைக் கட்டளையிட்டாள். தங்களுடைய மஹிமையை நான் அறிந்ததால் அதற்கு உட்படாமல், "ரகுவீரனுக்கு பயத்தை உண்டாக்கக்கூடிய ராக்ஷஸர்களை எந்த லோகத்திலும் காணேன். இது அவருடைய குரல் அல்ல. வேறு எவனோ நம்மை மோசம் செய்ய இப்படிக் கத்துகிறான். தாங்கள் கவலைப்படவேண்டாம். ஸகல லோகங்களையும் ஸகலப் பிராணிகளையும் ரக்ஷிக்கும் சக்தியுள்ள ரகுநாதன் எவ்விதத்திலும் அவருக்குத் தாழ்ந்த என்னையும் ஸ்த்ரீயான தங்களையும் பார்த்து, என்னைக் காப்பாற்றென்று அல்பமான வார்த்தைகளைச் சொல்லுவாரா? புருஷோத்தமனான அந்த மஹா வீரனுக்கு இது தகுமா? எந்த ராக்ஷஸனோ, எந்தக் காரணத்தாலோ ராமனுடைய குரலைப்போல், காப்பாற்று காப்பாற்றென்று அலறியிருக்கிறான். மேலும் 'லக்ஷ்மணா! என்னைக் காப்பாற்று' என்று சொன்ன வார்த்தைகள் நிச்சயமாக ராமனுடைய குரல் அல்ல. அதற்கும் இதற்கும் வெகு பேதமுண்டு. தாங்கள் இதைப்பற்றிக் கவலைப்படக்கூடாது. தாங்கள் மற்ற ஸ்த்ரீகளைப்போல் ஏன் விசாரப்படுகிறீர்கள்? என்னை அங்கே அனுப்ப

வேண்டாம். இதுவரையில் பிறந்தவனாவது இனி பிறப்பவனாவது யுத்தத்தில் ராமனை எதிர்த்து நிற்பவன் எவ்வுலகத்திலும் கிடையாது. ஸகல தேவர்களும் ஒன்று சேர்ந்தாலும் ராமனை யுத்தத்தில் கண்ணெடுத்துப் பார்க்க முடியுமா?'' என்று எவ்வளவோ சொன்னேன். ஆனால் ஸீதை புத்தி மயங்கி நான் சொல்வதைக் கவனிக்கவில்லை. தாரை தாரையாகக் கண்ணீரைப் பெருக்கிக்கொண்டு யாதொரு பாபத்தையும் அறியாத என்னைப் பார்த்து, 'அடே துஷ்டா! நீ என்னிடத்தில் மிகுந்த ஆசை கொண்டு என் பர்த்தா இறக்கும் ஸமயம் பார்த்து என்னைக் கைப்பற்றவல்லவா நினைக்கிறாய்? உன் எண்ணம் நிறைவேறாது. நீயும் பரதனும் ஒன்றுகூடி யோசனைசெய்து, அதிசீக்கிரத்தில் ஸமயம் வாய்த்தவுடன் ராமனைக் கொல்வேன் என்று அவனிடத்தில் உறுதிசொல்லி வந்திருக்கிறாய். இல்லாவிட்டால் அவரிடத்தில் எல்லையற்ற பக்திவைத்து அவரைப் பின் தொடர்ந்து வந்தாயோ? அவருக்கு மஹா ஆபத்து நேர்ந்து உயிரை இழக்கும் ஸமயத்தில் கவலையற்றிருப்பது போதாதா? கவலைப்படும் என்னையும் வஞ்சக வார்த்தைகளால் ஏமாற்றுகிறாயா? நீ ராமனுக்குப் பரமசத்துரு. அவரைக் கொல்ல ஸமயம் பார்த்துக் கொண்டிருப்பவன், மஹாகபடன். எனக்காகவே அவருடன் வந்திருக்கிறாய். இல்லாவிட்டால் அவர் காப்பாற்றுவாரில்லாமல் தவிக்கும்பொழுது கவலையற்று, சும்மா இருப்பாயா?'' என்று ஒரு நாளும் சொல்லாத கொடிய வார்த்தைகளைச் சொன்னாள். அதைக்கேட்டு எனக்குக் கோபம் பிறந்தது, கண்கள் சிவந்து உதடுகள் துடித்தன. அதைப் பொறுக்க முடியாமல் அங்கிருந்து புறப்பட்டு வந்தேன்'' என்றார்.

ஆனால் ராமன் ஜானகியை விட்டுப் பிரிந்த துக்கத்தால் புத்தி கலங்கி, "எப்படியிருந்தாலும் அவளை விட்டு நீ இங்கே வந்தது முற்றிலும் பிசகு. பெரிய கெடுதிக்கு இடமாயிற்று. ராக்ஷஸர்கள் எனக்கு ஒரு பொருட்டல்லவென்று உனக்குத் தெரியாதா? ஸீதை கடிந்து சொன்ன வார்த்தைகளைப் பொறுக்கமுடியாமல் நீ வந்தது பிசகு. ஸ்திரீகளுக்கு விவேகமில்லாமலிருப்பது ஸஹஜம். அதிலும் ஸீதை கோபத்தால் புத்தி மயங்கியிருப்பவள். விவேகியான புருஷன் அதை லக்ஷ்யம் செய்வானா? நீ கோபத்திற்கு இடம் கொடுத்து என் கட்டளையை மீறினது நல்லதல்ல. அவள் உன்னால் பூஜிக்கத்தகுந்தவள்; ஸ்திரீ; கோபத்தால் புத்தி சிதறியிருப்பவள்; நானோ உன்னைக் கட்டளையிட்டிருக்கிறேன். ஸீதை எதைச் சொன்னாலும் நீ கோபிக்கக்கூடாது. அப்படி அவளுடைய வார்த்தைகளைப் பொறுக்க முடியாவிட்டாலும் வேறு எங்கேயாவது மறைந்திருந்து அவளைக் காப்பாற்றவேண்டும். மான்ரூபம் தரித்து என்னை வெகுதூரம் ஆசிரமத்திலிருந்து அலையச்செய்த மாரீசன், நான் விளையாட்டாக பிரயோகித்த பாணத்தால் அடிபட்டு மடிந்தான். சாகும்பொழுது மான் ரூபத்தை விட்டு உண்மையான ராக்ஷஸ ரூபத்தை எடுத்து, 'ஹா லக்ஷ்மணா! ஹா ஸீதே! என்னைக் காப்பாற்றுங்கள்' என்று என் குரலைப்போல் தீனமாகக் கதறினான். அதைக்கேட்டு நீயும் ஜானகியை விட்டு இங்கே வந்தாய்.''



ஶராஹதேநைவ ததா³ர்தயா கி³ரா
ஸ்வரம் மமாலம்ப்³ய விதூ³ர ஸம்ஶ்ரவம் |
உதா³ஹ்ருதம் தத்³வசநம் ஸுதா³ருணம்
த்வமாக³தோ யேந விஹாய மைதி²லீம் || (27)

## ஸர்க்கம் 60

## ராமன் பிரலாபித்தது (தொடர்ச்சி)

ப்⁴ருஶமாவ்ரஜமாநஸ்ய தஸ்யாதோ⁴ வாமலோசநம் |
ப்ராஸ்பு²ரச் சாஸ்க²லத்³ ராமோ வேபது²ஶ்சாப்யஜாயத || (1)

ராமன் அதிவேகமாக ஆசிரமத்தை நோக்கி வரும்பொழுது இடது கண்களின் கீழ் இமை துடித்தது; கால் இடறிற்று; தேகம் நடுங்கிற்று. இந்த அபசகுனங்கள் அடிக்கடி நேர்ந்ததைப் பார்த்து, "ஸீதை க்ஷேமமாக இருக்க வேண்டுமே'' என்று சொல்லிக்கொண்டு, அவளைப் பார்க்கவேண்டுமென்று ஆசையுடன் ஆசிரமத்தில் புகுந்தார். அது சூன்யமாக இருந்தது. அவருக்கு ஒன்றும் தோன்றவில்லை. வேகத்தால் தாவிச் சென்று கைகால்களை உதறிக்கொண்டு, ஸீதை வழக்கமாக இருக்குமிடங்களை ஒவ்வொன்றாகத் தேடினார். ஹேமந்தருதுவில் தாமரை ஓடைகள் புஷ்பங்களற்றுக் காந்தி குறைந்திருப்பது போல் அந்தப் பர்ணசாலை ஸீதையில்லாமல், காந்தியற்றிருந்தது. மரங்களில் இலைகளும் மலர்களும் வாடி வண்டுகள் மெதுவாகச் சப்தம் செய்துகொண்டிருந்ததைப் பார்த்தால், மரங்கள் ஸீதையை விட்டுப் பிரிந்த துக்கத்தால் தேம்பித் தேம்பி அழுவது போல் தோன்றிற்று. பக்ஷிகளும் மிருகங்களும் ஸந்தோஷமற்றிருந்தன. வனதேவதைகள் அங்கங்கிருந்து ஓடிப்போயின. ஆசிரமத்தில் மான்தோல்களும் தர்ப்பைகளும் தர்ப்பாஸனங்களும் வழக்கமான இடங்களில் இல்லாமல் சிதறிக்கிடந்தன. ஸீதையில்லாத அந்த ஆசிரமம் ஒரே சூன்யமாக இருக்கக் கண்டு ராமன் துக்கம் தாங்காமல் அடிக்கடி பிரலாபித்தார்.

"ஸீதையை எவன் எடுத்துப்போனானோ? எவன் கொன்றானோ? எங்கே வழி தப்பித் திரிகிறாளோ? ராக்ஷஸர்களால் தின்னப்பட்டாளோ? விளையாட்டாக ஒளிந்துகொண்டிருக்கிறாளோ? அல்லது இந்தக் காட்டில் பயந்து மறைந்து கொண்டிருக்கிறாளோ? புஷ்பங்களைப் பறிக்கப் போயிருக்கிறாளோ? தாமரை ஓடைகளில் ஸ்நானம் செய்யப் போனாளோ? கோதாவரிக்குப் போனாளோ?'' என்று புலம்பிக்கொண்டு வெகு ஜாக்கிரதையாக அவளைத் தேடியும் காணவில்லை. சோகத்தால் கண்கள் சிவந்து, பித்துப் பிடித்தவரைப் போல் ஒரு மரத்திலிருந்து மற்றொரு மரத்திற்கும், மலையிலிருந்து மலைக்கும், நதி

யிலிருந்து நதிக்கும் ஓடி அலைந்தார். ஒரு கடம்பை மரத்தைப் பார்த்து, "ஸீதைக்கு உன்னிடத்தில் விசேஷ பிரீதியல்லவா? அவளைக் கண்டாயா? தெரிந்தால் சொல். சொல்லமாட்டாயோ? பில்வமரமே! ஸீதை உன் இளந்தளிர்போல் அழகிய நிறத்தையுடையவள். பீதாம்பரத்தை உடுத்தியிருப்பாள். உன் பழங்களைப் போன்ற ஸ்தனங்களையுடையவள். உன் தோழியை எங்கேயாவது பார்த்தாயா? நீயும் சொல்லமாட்டாயோ? வெண்பாலை மரமே! உன்னிடத்தில் மிகுந்த அன்புவைத்த ஜானகி பிழைத்திருக்கிறாளோ இல்லையோ? நீயும் சொல்லமாட்டாயோ? மருத மரமே! உன்னைப்போன்ற துடைகளையுடைய என் நாயகியைக் கண்டாயோ? நீயும் சொல்லமாட்டாயோ? மஞ்சாடிமரமே! நீ தளிர்த்துப் பூத்து வண்டுகளின் மதுரமான சப்தத்துடன் விளங்குகிறபடியால் ஏதோ ஸந்தோஷ ஸமாசாரத்தைச் சொல்லப் போகிறாய். ஸீதை இருக்குமிடம் உனக்குத் தெரியுமா? நீயும் சொல்லமாட்டாயோ? அசோக மரமே! உன்னைப்பார்ப்பவர்களின் சோகத்தைப் போக்குவதாக உனக்கு இந்தப் பெயர் கிடைத்தது. அதற்குத் தகுந்தபடி என் பிரிய நாயகி இருக்குமிடத்தைக் காட்டி, சோகத்தால் தவிக்கும் என்னைச் சோகமற்றவனாகச் செய். நீயும் சொல்லமாட்டாயோ? பனைமரமே! உன் பழங்களைப் போன்ற ஸ்தனங்களையுடைய என் பாரியை எங்கே? என்னைப் பார்த்தும் உனக்கு இரக்கமில்லையா? நீயும் சொல்ல மாட்டாயோ? நாவல் மரமே, உன் பழம்போல் பளபளப்பான சரீரம் வாய்ந்த ஸீதை இருக்குமிடத்தை அறிந்தால் சொல். கோங்கு மரமே! புஷ்பங்களால் நிறைந்த உன்னைப் பார்க்கையில் மிகுந்த ஸந்தோஷமுண்டாகிறது. ஸீதை உன் புஷ்பங்களைக் கண்டால் மிகுந்த பிரீதியடைவாள். அவளை எங்கேயாவது பார்த்தாயா?" என்று இப்படி மா கடம்பு ஆச்சா பலா மருதாணி மாதுளை வேங்கை முதலிய செடிகளையும் மல்லிகை சிறு மல்லிகை சம்பகம் தாழை முதலிய செடிகளையும் ஒவ்வொன்றுக் கேட்டுக் கொண்டே பித்துப் பிடித்தவரைப்போல் அந்த வனமெங்கும் திரிந்தார்.

அவைகள் பதில் சொல்லாததால் தன்னிடத்தில் அன்பு இல்லை என்றெண்ணி, ஒருவேளை மிருகங்களாவது சொல்லாதா என்று, "மானே! உன்னைப்போன்ற கண்களையுடைய ஸீதையைக் கண்டாயோ? நீ சொல்லமாட்டாய். யானையே! உன் துதிக்கையைப் போன்ற துடைகளையுடைய ஸீதையை நீ பார்த்திருப்பாய். எங்கே போனாள்? நீயும் சொல்லமாட்டாய். புலியே! அந்த யானையும் மானும் எவனிடத்திலோ பயந்து ஒன்றும் சொல்லவில்லை. நீயோ மஹாசூரன் ஒன்றிற்கும் அஞ்சமாட்டாய். தைரியமாகச் சொல். உன்னைப்போல் அழகாக நடக்கும் ஸீதையைப் பார்த்தாயல்லவா? நீங்கள் ஒருவரும் சொல்லமாட்டீர்கள்.

"ஹா ஸீதே! உன்னைக் கண்டுபிடித்து விட்டேன்; ஏன் ஓடுகிறாய்? என்னிடத்திலிருந்து தப்ப முடியுமா? மரங்களின் மறைவில் ஏன் நிற்கிறாய்? ஓடாதே! நான் இவ்வளவு வேண்டியும் ஏன் பதில் சொல்லவில்லை? நில், நில். என்னிடத்தில் தயவில்லையா? எல்லை மீறிப் பரிஹாஸம் செய்வது உன் வழக்கமல்லவே. அப்படியிருக்க என்னிடத்தில் ஏன் இவ்வளவு அலக்ஷியம்? இதோ உனது மஞ்சள் பட்டாடை தெரிகிறது. நீ ஓடும்பொழுது கண்டுவிட்டேன். ஓடாதே நில். ஒருவேளை அவள் உயிரோடில்லையோ? இருந்தால் இவ்வளவு கஷ்டப்படும் என்னைப் பார்த்துப் பொறுக்கமாட்டாளே! ஆகையால் யாரால் ஹிம்ஸிக்கப்பட்டாளோ? நரமாம்ஸத்தில் பிரியமுள்ள ராக்ஷஸர்கள் நான் இல்லாத வேளையில் அவளைக்கொன்று அங்கங்களை வெட்டித் தின்றுவிட்டார்களோ? அழகிய பல் வரிசையையும் உதடுகளையும் மூக்கையும் குண்டலங்களையுமுடையதாகப் பூரண சந்திரனைப்போன்ற அவளுடைய முகம் இப்பொழுது களையற்றிருக்கும் என்று எண்ணுகிறேன். நானில்லாமல் பயந்து கதறிக்கொண்டிருக்கும்பொழுது ராக்ஷஸர்கள் வந்து, சம்பக மலரின் நிறம் வாய்ந்து ஹாரம் முதலிய ஆபரணங்களால் அலங்கரிக்கப்பட்ட ஸீதையின் கழுத்தைக் கடித்து ரத்தத்தைக் குடித்தார்களோ? வளை சங்கிலி முதலிய பூஷணங்களால் விளங்கி, தளிர்களைப்போல் மிருதுவான அவளுடைய கைகளை அந்தக் கொடியவர்கள் கடித்துத் தின்றார்களோ? அப்பொழுது அவள் எப்படிப் பரிதவித்தாளோ? அங்கங்கள் எப்படித் துடித்தனவோ? நடுக்காட்டில் பிரயாணிகள் கூட்டமாகப் போகும்பொழுது தங்களுடன் வந்த பெண்ணைத் துஷ்ட மிருகங்கள் தின்னும்படி விட்டுப்போவதைப் போல், உனக்கு ஸகல பந்துக்கள் இருந்தும் ராக்ஷஸர்கள் உன்னைக் கொன்று தின்னும்படி அநாதையாக விட்டேனே. லக்ஷ்மண! நீ மஹா புத்திசாலியல்லவா? ஸீதை எங்கேயாவது உன் கண்ணில் பட்டாளா? ஹா ஸீதே! என்னை விட்டு எங்கே போனாய்?" என்று அடிக்கடி கதறிக்கொண்டு காட்டிலிருந்து காட்டிற்கு ஓடினார். சிலவிடங்களில் வேகத்தால் சுழன்றார். சிலவிடங்களில் கொடிகளைக் கண்டு ஸீதையைப் பார்த்தது போலெண்ணித் திகைத்து நின்றார். சிலவிடங்களில் ஸீதையைத் தேடிக்கொண்டு பித்துப் பிடித்தவனைப் போல் அலைந்தார்.

இப்படிக் காடுகளிலும் மலைத் தாழ்வரைகளிலும் அலைந்து அலைந்து எவ்விடத்திலும் தேடிக் காணாமல், ஆசைவிடாமல், இன்னும் மறுபடியும் தேடவேண்டுமென்று எண்ணமுண்டாகி அலைய ஆரம்பித்தார்.

ததா$^2$ ஸ க$^3$த்வா விபுலம் மஹத்$^3$ வநம்
பரீத்ய ஸர்வம் த்வத$^2$ மைதி$^2$லீம் ப்ரதி |
அநிஷ்டி$^2$தாஶ: ஸ சகார மார்க$^3$ணே
புந: ப்ரியாயா: பரமம் பரிஸ்ரமம் ‖ (38)

## ஸர்க்கம் 61

## ராமன் பிரலாபித்தது (தொடர்ச்சி)

த்³ருஷ்ட்வாஶ்ரம பத³ம் ஶூந்யம் ராமோ த³ஶரதா²த்மஜ: ।
ரஹிதாம் பர்ணஶாலாம் ச வித்⁴வஸ்தா ந்யாஸநாநி ச ॥ (1)

**ஆ**ஸிரமத்திலுள்ள பர்ணசாலையில் ஸீதையைக் காணாமல் ஆஸனம் முதலியவை நான்கு புறங்களிலும் சிதறியிருக்கக் கண்டு, அந்தக் காடுகளில் தேடியும் காணாமல் ராமன் கைகளை உயரத் தூக்கிக்கொண்டு, "லக்ஷ்மணா! ஸீதை எங்கேயிருக்கிறாள்? எங்கே போயிருப்பாள்? எவன் எடுத்துப் போயிருப்பான்? எவனாவது கொன்று தின்றிருப்பானோ? ஸீதே! விளையாட்டாக மரங்களில் மறைந்திருந்தால் பரிஹாஸம் செய்தது போதும், ஓடிவா. நான் துக்கப்படுவதைப் பார்க்கவில்லையா? நீ பிரியத்துடன் விளையாடும் மான்குட்டிகள் உன்னைக் காணாமல் நினைத்து நினைத்துக் கண்ணீர் விடுகின்றன. லக்ஷ்மணா, ஸீதை அகப்படாவிட்டால் நான் பிழைத்திருக்கமாட்டேன். ஐயோ! நான் இறந்து பரலோகத்திற்குப் போனால் அங்கே மஹாராஜாவைக் காண்பேனே. அவர் 'பதினான்கு வருஷங்கள் வரையில் வனத்தில் வஸிக்கிறேன்' என்று என்னிடத்தில் நீ பிரதிக்ஞை செய்ததால் உன்னை வனத்திற்கு அனுப்பினேன். அந்தக் காலம் முடிவதற்கு முன் இங்கே ஏன் வந்தாய்? நீ துஷ்டன், கட்டுப்பாடில்லாதவன், ஸத்தியமற்றவன், சீ, சீ' என்றால் நான் என்ன பதில் சொல்வேன்? பிரக்ஞையற்று தீனனாக, எண்ணங்கள் யாவும் வீணாக, பிறர் பரிதவிக்கும்படி சோகத்தால் தவித்துக் கொண்டிருக்கும் என்னை, ஸீதே! பொய் சொல்லுகிறவனைக் கீர்த்தி கைவிடுவதுபோல், சீக்கிரத்தில் கைவிட்டு எங்கே போனாய்? லக்ஷணங்கள் யாவும் பொருந்திய உத்தமஸ்த்ரீ இப்படிச் செய்வது நியாயமா? நான் உன்னைப் பார்க்காவிட்டால் நிச்சயமாக உயிரை விடுவேன்" என்று எவ்வளவு புலம்பியும் அவளைக் காணவில்லை ஆழமான சேற்றில் அகப்பட்ட யானையைப்போல் ராமன் பிரமிப்பதைப் பார்த்து, எப்பொழுதும் அவருடைய ஹிதத்தையே கோரும் லக்ஷ்மணன், "மஹானுபாவ! வருந்தவேண்டாம். நாம் தேடுவோம். இந்த வனத்தில் பல குகைகளுண்டு. காடுகளில் ஸஞ்சரிப்பதில் ஜானகிக்கு மிகுந்த பிரியமுண்டு. ஆகையால் இந்தக் காட்டில் வேடிக்கையாக எங்கேயாவது ஸஞ்சரித்துக்கொண்டிருப்பாள். அல்லது, தாமரையோடையிலோ மீனும் நொச்சிலும் நிறைந்த நதியிலோ ஸ்நானம் செய்யப் போயிருக்கிறாளோ? அல்லது, முன்போல் மறைந்திருந்து வேடிக்கையாக நம்மை அலையச் செய்ய எண்ணி இப்போது எங்கேயாவது ஒளிந்திருக்கிறாளோ? அல்லது நாம் பயப்படவேண்டுமென்று இந்தக் காட்டில் எங்கேயாவது மறைந்திருக்கிறாளோ? நாம் தன்னைத் தேடிக் கண்டுபிடிக்கட்டும் என்று நமக்குத் தெரியாத இடங்களில் பதுங்கியிருக்கிறாளோ? தங்களுக்குப் பாரியையை விட்டுப் பிரிவது எப்பொழுதாவது நேருமா? அவளைத் தேடிக் கண்டுபிடிப்போம். இந்த வனத்தில் ஒவ்வோரிடத்திலும் ஜாக்கிரதையாகப் பார்ப்போம். இதைப்பற்றிக் கவலை வேண்டாம்" என்று ஸமாதானம் செய்தார்.



இப்படி ஸ்நேகத்தாலும் பிரியத்தாலும் லக்ஷ்மணன் சொன்ன வார்த்தைகளைக்கேட்டு ராமன் கொஞ்சம் ஆறுதலடைந்து, தைரியப்படுத்திக்கொண்டு ஸீதையை மறுபடியும் தேட ஆரம்பித்தார். புஷ்பங்களைப் பறிக்க எங்கே போயிருக்கிறாளோ என்று காடுகளில் தேடினார். விசித்திரமான தாதுக்களைத் தேடுவதற்காக எங்கே போயிருக்கிறாளோ என்று மலைகளில் தேடினார். அன்னங்களும் நீர்க்கோழிகளும் மணல் திட்டுகளில் உட்கார்ந்திருக்கும் அழகைப் பார்க்க ஆசைகொண்டவளாகையால் ஒருவேளை எங்கே போயிருக்கிறாளோ என்று ஆறுகளில் தேடினார். மலர்ந்த தாமரைப் புஷ்பங்களால் விளங்கும் ஓடைகளில் ஸ்நானம் செய்வதில் பிரியமுள்ளவளாகையால் அங்கே தேடினார்.

இப்படி மலைத்தாழ்வரைகளிலும் குகைகளிலும் சிகரங்களிலும் அந்த மலையின் நான்கு புறங்களிலும் தேடியும் ஸீதையைக் காணவில்லை. அப்பொழுது ராமன், "லக்ஷ்மணா! எல்லாவிடங்களிலும் தேடிப் பார்த்தோமே! ஐயோ! ஸீதையைக் காணவில்லையே! என்ன செய்வேன்?" என்று கதறினார். மஹாதேஜஸ்வியான தன் அண்ணன் தண்டகாரண்யத்தில் அநாதையைப்போல் பிரலாபிப்பதைப் பார்த்து, லக்ஷ்மணன் துக்கம் மேலிட்டு, 'முன் காலத்தில் மஹாவிஷ்ணு பலிசக்கரவர்த்தியை ஜயித்துக் கட்டி மூன்று லோகங்களையும் மீட்டார். ஸீதையை எடுத்துப்போன அந்தப் பாபியைத் தாங்களும் அப்படியே கண்டு பிடித்துக் கொன்று, அவளை மீட்டு வருவீர்கள்" என்று அதிகப்பிரியத்துடன் தேற்றினார். அதைக் கேட்ட ராமன் துக்கம் தணியாமல், இந்தக் காட்டையும் ஓடைகளையும் இந்தமலையையும் அருவிகளையும் குகைகளையும் வெகு ஜாக்கிரதையாகத் தேடினேனே! என் பிராணநாயகியைக் காணவில்லையே. என்ன செய்வேன்?" என்று புலம்பி ஸீதையை விட்டுப்பிரிந்த சோகம் தாங்காமல் ஒரு முகூர்த்தம் வரையில் மூர்ச்சையடைந்து, பிரக்ஞையற்று, தேகம் மெலிந்து அசைவற்று உஷ்ணமாகப் பெருமூச்சு விட்டுக்கொண்டிருந்தார். பிறகு, "ஹா ப்ரியே" என்று அடிக்கடி அலறிக் கலகலவென்று கண்ணீர் உதிர்த்தார். அப்பொழுது அவருக்குப் பரம மித்திரனான லக்ஷ்மணன் எல்லா தர்மங்களையும் அறிந்தவரானதால், வணக்கமாகக் கை கூப்பிக்கொண்டு பலவிதமாக ஸமாதானம் சொன்னார். ராமனோ

அதைக் கொஞ்சமும் லக்ஷ்யம் செய்யாமல் ஸீதையைக் காணுத துக்கத்தால் அடிக்கடி புலம்பினர்.

அநாத்3ருத்ய து தத்3 வாக்யம் லக்ஷ்மணேஷ்ட2புடாச் ச்யுதம் |
அபஶ்யம்ஸ் தாம் ப்ரியாம் ஸீதாம் ப்ராக்ரோஶத் ஸ புந:புந: ‖ (33)

---

## ஸர்க்கம் 62

## ராமன் பிரலாபித்தது (தொடர்ச்சி)

ஸீதா மபஶ்யந் த4ர்மாத்மா காமோபஹத சேதந: |
விலலாப மஹாபா3ஹூ ராம: கமல லோசந: | (1)

**த**ர்மாத்மாவும், தர்மத்திற்கு விரோதமில்லாத ஆசையை அனுஷ்டிப்பவருமான ராமன் ஸீதையைப் பறிகொடுத்துக் கைகளைத் தூக்கிக்கொண்டு கண்ணீர் தாரைதாரையாகப் பெருகச் சோகத்தால் புத்திமயங்கி, ஸீதை ஸமீபத்திலில்லாவிட்டாலும் ஆசைக்கு வசப்பட்டு அவள் எதிரில் நிற்பதுபோல் எண்ணி பிரலாபித்தார். அதை நம்மால் வர்ணிக்கவும் முடியுமா? "ஸீதே! உனக்கு அசோக புஷ்பங்களிடத்தில் மிகுந்த பிரீதியுண்டு. ஆகையால் அதன் கிளைகளால் உன் தேகத்தை மறைத்துக் கொள்ளுகிருய். என்ன பயன்? உன்னை நான் பார்த்துவிட்டேன். என் சோகத்தை அதிகப்படுத்துவதைத் தவிர உனக்கென்ன லாபம்? இளம் வாழை மரங்களைப்போன்ற உன் துடைகளை இளம் வாழைகளால் ஏன் மறைத்துக்கொள்ளுகிருய்? நான் உன்னைப் பார்த்துவிட்டேன். விளையாட்டாகக் கோங்குமரங்களடர்ந்த வனத்தில் போய் ஒளிந்து கொள்கிருயே. பரிஹாஸம் செய்தது போதும். என் துக்கம் தாங்க முடியவில்லை. மிகவும் களைத்திருக்கிறேன். இதற்குமுன் இந்தப் பரிஹாஸமே எனக்குப் பிரியமாக இருந்தது. இப்பொழுது வெறுப்பை உண்டாக்குகிறது. மேலும் இந்த ஆசிரமத்தில் இப்படிச் செய்வது தகாது. பரிஹாஸத்தில் உனக்கு மிகுந்த பிரீதியென்று எனக்குத் தெரியும். விசாலமான கண்களை உடையவளே! சீக்கிரம் வா. நீ இல்லாமல் இந்த ஆசிரமம் சூன்யமாக இருக்கிறது. லக்ஷ்மண! ராக்ஷஸர்கள் ஸீதையை எடுத்துப் போய் கொன்று தின்ருவது இருக்கவேண்டுமென்பது நிச்சயம். நான் இப்படி பிரலாபிக்கும்பொழுது அவள் என்னை அலக்ஷ்யம் செய்யமாட்டாள். இந்த மான்கூட்டங்கள் கண்ணீர்விடுவதைப் பார்த்தால் ஸீதை ராக்ஷஸர்களால் தின்னப்பட்டாளென்று சொல்வது போலிருக்கிறது. உத்தம குணங்களால் அலங்கரிக்கப்பட்டவளே! பதிவிரதா சிரோமணியே! அழகில் ஒப்பில்லாதவளே! எங்கே போய் விட்டாய்? நீ இவ்விதமாகக் கொடிய கதியை அடைந்தது கைகேயியின் எண்ணப்படி ஆயிற்றல்லவா? ஸீதையுடன் அயோத்யையிலிருந்து புறப்பட்டு வந்து ஸீதையில்லாமல் என் அந்தப் புரத்தில் எப்படிப் புகுவேன்? வீரியமற்றவனென்று லோகத்திலுள்ளவர்களெல்லாம் என்னை நிந்திப்பார்களே! பிராணனை வைத்துக்கொள்ள எனக்கு சக்தியில்லை என்பது ஸீதை என்னை விட்டுப் போனபிறகே தெரிகிறது. வனவாசம் முடிந்து நான் அயோத்யைக்குப் போனபிறகு ஜனக சக்கரவர்த்தி என்னைக் கண்டு, "ராம! க்ஷேமமாய் வந்து சேர்ந்தாயா? குழந்தை ஸீதை க்ஷேமமாயிருக்கிருளா?" என்று விசாரித்தால், அவருடைய முகத்தை எப்படிப் பார்க்கத் துணிவேன்? அவருக்கு ஜானகியிடத்தில் மிகுந்தபிரீதி. அவளை இழந்து நான்மாத்திரம் வருவதைக் கண்டால் துக்கத்தால் மூர்ச்சையடைவார் என்றே எண்ணுகிறேன். அயோத்யைக்குத்தான் ஏன் திரும்பிப்போகவேண்டும்? பரதனுல் ஆளப்பட்டுச் செழித்திருந்தாலும் எனக்கு அங்கே ஆகவேண்டியதென்ன? ஸீதையில்லாமல் ஸ்வர்க்கமும் எனக்குச் சூன்யமாகவே தோன்றும். லக்ஷ்மண! என்னை இந்த வனத்தில் விட்டு அயோத்யைக்குத் திரும்பிப்போ. ஸீதையை இழந்தும் நான் உயிரோடிருப்பேனு! பரதனை மார்போடணைத்து, "இந்தப் பூமியை ஆண்டு வரும்படி ராமன் உனக்கு அனுமதி கொடுத்தார்" என்று சொல். கௌஸல்யையையும் ஸுமித்திரையையும் கைகேயியையும் விதிப்படி வணங்கி, அவர்களுடைய சொல்லைத் தவருமல் எந்தப் பாடுபட்டாவது அவர்களை ரக்ஷிக்கவேண்டும். இது என் கட்டளை. ஸீதை காணுமற் போனதையும் சோகத்தால் நான் மரணமடைந்ததையும் என் தாய்களிடத்தில் விஸ்தாரமாகச் சொல்லவேண்டும்" என்று, சொல்லி ஸீதையில்லாமல் சூன்யமான அந்தக் காட்டில் ராகவன் அலைந்து தீனமாகப் புலம்புகையில் லக்ஷ்மணனும் பயந்து முகம் வாடி மனம் குன்றி ஏங்கினர்.

இதி விலபதி ராக4வே ஸுதீ3நே
வநமுபக3ம்ய தயா விநா ஸுகேஶ்யா |
ப4ய விகல முக2ஸ்து லக்ஷ்மணோபி
வ்யதி2தமநா ப்4ருஶமாதுரோ ப3பூ4வ ‖ (21)

---



## ஸர்க்கம் 63

## ராமன் பிரலாபித்தது (தொடர்ச்சி)

ஸ ராஜபுத்ர: ப்ரியயா விஹீந:
காமேந ஶோகேந ச பீட்3யமாந: |
விஷாத3யந் ப்4ராதர மார்தரூபோ
பூ4யோ விஷாத3ம் ப்ரவிவேஶ தீவ்ரம் ‖ (1)

**ரா**மன் ஸீதையை விட்டுப் பிரிந்து அவளையே நினைத்துக்கொண்டிருப்பதாலுண்டான ஆசையாலும் அவளை விட்டுப் பிரிந்த துக்கத்தாலும் வாட்டப்பட்டு, அதைப் பார்த்த லக்ஷ்மணனும் துக்கத்தால் தவிக்க; மறுபடியும் சோகக் கடலில் மூழ்கினர். **கண்ணீர்**

பெருக, உஷ்ணமாகப் பெருமூச்சு விட்டுக்கொண்டு ஸீதையைக் காணாமல் மிகுந்த துக்கமடைந்தார். லக்ஷ்மணன் வருந்துவதைக் கண்டு அந்தத் துக்கம் இன்னும் அதிகமாகி, அந்த ஸமயத்திற்குத் தகுந்தபடி பிரலாபிக்க ஆரம்பித்தார். "இந்த லோகத்தில் என்னைப் போன்ற பாபி இருப்பானென்று எண்ணவில்லை. கடலில் அலைகளைப் போல் வரும் சோகங்கள் ஒன்றின்பின் ஒன்றாக என் மனத்தையும் ஹ்ருதயத்தையும் பிளக்கின்றன. பூர்வ ஜன்மத்தில் நான் வேண்டிய வரையில் பாபங்களைச் செய்திருக்கவேண்டும். இப்படி துக்கத்தின் மேல் துக்கம் நேருவது அதன் பயனேயன்றி வேறல்ல. நன்றாக யோசித்துப் பார்த்தால் நான் ராஜ்யத்தை இழந்ததும் பந்துக்களை விட்டுப் பிரிந்ததும் என் தாயை விட்டுப் பிரிந்ததும் என் பிதா இறந்ததும் ஒன்றோடொன்று சேர்ந்து, துக்கமென்ற வெள்ளத்தைப் பெருக்குகின்றன. நான் இந்தச் சூன்யமான வனத்திற்கு வந்தபிறகு தேகசிரமத்தால் அதெல்லாம் அடங்கியிருந்தன. அணைந்த நெருப்பு விறகுகளால் மறுபடியும் பற்றி எரிவதுபோல், ஸீதையை விட்டுப் பிரிந்த துக்கத்தால் இப்பொழுது அவை அதிகமாக என்னை வருத்துகின்றன. என் பிரிய நாயகியான ஸீதை சிறுபெண்; மிகவும் பயந்தவள்; மேன்மையான தன்மையை உடையவள்; ராக்ஷஸர்கள் அவளை எடுத்து ஆகாச மார்க்கத்தில் போகும்பொழுது பயத்தால் அடிக்கடி கதறியிருப்பாளல்லவா? லோஹிதமென்ற உத்தமமான சிவப்புச் சந்தனம் பூசத்தகுந்த அவளுடைய அழகிய ஸ்தனங்கள் ரத்தத்தால் பூசப்பட்டுப் பார்க்க விகாரமாக இருக்குமே. மதுரமாகவும் மிருதுவாகவும் ஸ்பஷ்டமாகவும் பேசும் ஸீதையின் முகம், சுருண்டு கறுத்த முன்னுச்சி மயிர்களால் சூழப்பட்டிருக்கும் அழகை நினைக்க நினைக்க எனக்குத் துக்கம் தாங்கவில்லையே. ராகுவிடத்தில் அகப்பட்ட சந்திரனைப்போல் அந்த முகம் ராக்ஷஸர்களிடத்தில் அகப்பட்டு என்ன பாடுபடுகிறதோ? என்னிடத்தில் நீங்காத பிரீதியுள்ள ஸீதையின் கழுத்தில் உத்தமமான ஹாரங்களும் மாலைகளும் பிரகாசிக்குமே! ஐயோ! அவள் தனியாக இருந்த ஸமயத்தில் ராக்ஷஸர்கள் அவளைப் பிடித்து கழுத்தைக் கடித்து ரத்தத்தைக் குடித்தார்களோ? நானும் இல்லாமல் அந்தப் பெரிய காட்டில் தனியாக இருக்கையில் ராக்ஷஸர்கள் வந்து பிடித்திழுக்கும்பொழுது பயந்து நடுங்கி நான்கு புறங்களிலும் மிரண்டு பார்த்து நம்மைக் காணாமல், அன்றில் பக்ஷியைப் போல் எப்படிக் கதறினாளோ? லக்ஷ்மணா! கோதாவரிக் கரையில் இந்த இடத்திலேயே நானும் ஸீதையும் யாவற்றையும் மறந்து வர்ணிக்க முடியாத ஸுகங்களை அனுபவித்திருக்கிறோம். அவையெல்லாம் எனக்கு ஞாபகத்திற்கு வருகின்றன. இப்பொழுது இவ்விடத்தைப் பார்த்தால் சூன்யமாக வெறுப்பை உண்டாக்குகிறது. அந்தக் காலத்தில் இவ்விடமே எனக்கு எவ்வளவு ஸந்தோஷத்தைக் கொடுத்ததென்று சொல்லமுடியுமா? நான் ஸீதையிடத்தில் வைத்திருந்த அன்பைப்போல் லோகத்தில் ஒருவனும் ஒரு ஸ்த்ரீயிடத்தில் வைத்திருக்கமாட்டானென்றும், ரதி கேளிகளில் நான் மஹா நிபுணனென்றும் கர்வமடைந்திருந்தேன். இந்த இரண்டு விஷயங்களிலும் ஸீதை என் கர்வத்தைக் கெடுத்தாள். முன்பு அயோத்யையிலிருக்கும்பொழுது என் பெற்றோர்களுடன் வஸித்தபடியால், ஸங்கோசமில்லாமல் இஷ்டப்படி என்னுடன் அனுபவிக்க முடியவில்லை. வனத்திற்கு வந்த பிறகு யாருடைய நிர்ப்பந்தமும் இல்லை. எங்கள் மனம் போனபடியெல்லாம் அனுபவித்தோம்.

ஒரு நாள் கோதாவரியில் அவளும் நானும் வெகுநேரம் ஜலக்ரீடை செய்துகொண்டிருந்தோம். எனக்குக் களைப்பு மேலிட்டுக் கரையேற வழிபார்த்தேன். ஸுலபமாக ஏறக்கூடிய துறைகள் ஒன்றும் காணப்படவில்லை. முடிவில் ஒரு கற்பாறை தென்பட்டது. அந்த வழியாய் ஏறிப்போகலாமென்று உத்தேசித்தேன். என் பார்வையால் ஸீதை என் எண்ணத்தை அறிந்து, இன்னும் அதிகமாக என்னை சிரமப்படுத்த ஆசைகொண்டு, தான் அந்தக் கற்பாறையில் முந்தி ஏறிக்கொண்டாள். நான் பிறகு அங்கே போய், எந்த மூலையைப் பிடித்து ஏறப்போனாலும் அதை மறைத்துக் கொண்டு என் முகத்தில் ஜலத்தை வாரி இறைத்து நான் ஏறமுடியாமல் தோற்றுப் போனதைப் பார்த்துக் கைகொட்டிச் சிரித்தாள். அதுவரையில் தோல்வி இன்னதென்றே அறியாதவனாகையால் வெட்கத்தால் தலை குனிந்து நின்றேன். நீ என்னைப்பற்றி அடிக்கடி மெச்சிக்கொண்டிருக்கிறாய் என்பது அவளுக்குத் தெரியும். என்னை விட்டு உன்னிடத்தில் வந்து, 'நீங்கள் மஹா பராக்கிரமசாலிகள்; நினைத்த காரியங்களை உடனே முடிக்கும் சக்தியுள்ளவர்கள்; புருஷசிரேஷ்டர்கள்; நானோ கேவலம் ஒரு பெண்பிள்ளை. நீங்கள் வேட்டையாடுவதற்கும் யுத்தத்திற்கும் அடிக்கடி வெளியில் போகிறவர்கள். எங்களுக்கு வீட்டைவிட்டுக் கிளம்ப யோக்கியதை எங்கே? நீங்கள் ஒரு காரியத்தை நினைத்தால் அது முடியாமலிருக்குமா? உன் அண்ணன் இன்று என்னால் ஜயிக்கப்பட்டார். அதற்குக் காரணம் இன்னதென்று தெரியவில்லை' என்று இப்படி இன்னும் பலவிதமாக உன்னிடத்தில் பரிஹாஸம் செய்தது உனக்கு ஞாபகமில்லையா?

"நதிகளுக்குள் சிரேஷ்டமான இந்தக் கோதாவரியிடத்தில் என் பிராணநாயகியான ஸீதைக்கு மிகுந்த பிரீதி. ஒரு வேளை இங்கே வந்திருப்பாளோ? ஆனால் என்னைவிட்டுத் தனியாக ஒரு பொழுதும் இங்கே வருவதில்லை.

தாமரையைப் போன்ற முகத்தையும் தாமரை இதழ்களைப் போன்ற கண்களையுமுடைய ஸீதை அந்தப் புஷ்பங்களைப் பறிக்க ஒரு வேளை எங்கேயாவது போனாளோ? ஆனால் நானில்லாமல் தாமரை புஷ்பங்களைப் பறிக்க அவள் போகமாட்டாளே. புஷ்பங்களால் நிறைந்த மரச்சோலையில் பல பக்ஷிகள் மதுரமாக சப்திக்

கின்றனவே. ஒரு வேளை இங்கிருப்பாளோ? அப்படியும் இராது. தனியாக இங்கே வரப் பயப்படுவாளே! ஹே ஸூரிய! இந்த லோகத்தில் பிராணிகள் செய்யும் பாப புண்யங்களையும், சொல்லும் பொய்யையும் உண்மையையும் பார்த்துக்கொண்டிருக்கிறாயல்லவா! என் பிரிய நாயகி எங்கே போனாள்? அல்லது யாராவது எடுத்துப் போனார்களா? சோகத்தால் தபிக்கிறேன். என்னிடத்தில் உண்மையைச் சொல். காற்றே! ஸகல லோகங்களிலும் உனக்குத் தெரியாத விஷயம் ஒன்றுமில்லையே. என் மனைவி யாராலாவது எடுத்துப் போகப் பட்டாளா? இறந்தாளா? வழி தப்பி அலைகிறாளா? உண்மையைச் சொல்" என்று சோகத்திற்கு வசப்பட்டுத் தேகம் இளைத்து பிரக்ஞையற்றுப் புலம்பினார். அதைக் கண்டு லக்ஷ்மணனுக்கும் அடங்காத துக்கமுண்டாயிற்று. ஆனாலும் அந்த ஸமயத்தில் அவர், தானும் துக்கத்திற்கு இடம் கொடுக்கக்கூடாதென்று மனத்தை தைரியப்படுத்திக்கொண்டு, "அண்ணா! தங்களுக்கு இயற்கையான உத்தம குணங்களெல்லாம்இப்பொழுது எங்கே போயின? துக்கப்பட்டது போதும். அதைரியப்படவேண்டாம். மறுபடியும் இந்த வனமெங்கும் தேடுவோம். உத்ஸாஹமுடையவர்கள் எவ்விதமான கஷ்டம் நேர்ந்தாலும் தைரியத்தை விடுவதில்லை" என்று மஹா தைரியசாலியான இளையபெருமாள் சொன்னார். அதை ராமன் கொஞ்சம்கூட லக்ஷ்யம் செய்யாமல் தைரியத்தைவிட்டு துக்கத்திற்கு இடம் கொடுத்து மறுபடியும் பிரலாபிக்க ஆரம்பித்தார்.

இதிவ் ஸௌமித்ரி முத³க்ர பௌருஷம்
ஶ்ருவந்த மார்தோ ரகு⁴வம்ஶ வர்த⁴ந: |
ந சிந்தயாமாஸ த்⁴ருதிம் விமுக்தவாந்
புநஶ்ச து³க்க²ம் மஹத³ப்⁴யுபாக³மத் ॥ (20)

## ஸர்க்கம் 64

# ராமன் ஸீதையைத் தேடினது

ஸ தீ³நோ தீ³நயா வாசா லக்ஷ்மணம் வாக்யமப்³ரவீத் |
ஶீக்⁴ரம் லக்ஷ்மண ஜாநீஹி க³த்வா கோ³தா³வரீம் நதீ³ம் ॥ (1)

ரகுநாதன் லக்ஷ்மணனைப் பார்த்து மிகவும் தீனமாக, "நீ அதி வேகமாக கோதாவரிக்குப் போய் ஸீதை புஷ்பங்களைப் பறிக்க அங்கே போனாளா என்று அறிந்து வா" என்றார். லக்ஷ்மணன் அப்படியே போய்த் தேடிப் பார்த்தும் ஸீதையைக் காணாமல், "அண்ணா! எல்லாத் துறைகளிலும் தேடிப் பார்த்தேன். பல தடவை உரக்கக் கூப்பிட்டும் ஒருவரும் பதில் சொல்லவில்லை. அவள் எவ்விடத்திற்குப் போயிருக்கிறாள் என்று என்னால் கண்டு பிடிக்க முடியவில்லை," என்றார். அதைக் கேட்டு ராமர் மிகவும் கிலேசமடைந்து, தானே கோதாவரிக்குப் போய் "அம்மா கோதாவரி! ஸீதை எங்கே இருக்கிறாள்? சொல்" என்று கேட்டார். அங்கிருந்த ஸகல பதார்த்தங்களும் கோதாவரியும் ராவணனிடத்தில் பயப்பட்டு, ஸீதைக்கு நேர்ந்த ஆபத்தைத் தெரிவிக்கவில்லை. அவைகளெல்லாம் கோதாவரியைப் பார்த்து. "ராமன் இவ்வளவு துக்கப்படுகையில் ஸீதையின் விருத்தாந்தத்தைச் சொல்லாமலிருப்பது பிசகு; அவசியம் சொல்லவேண்டும்" என்று பிரார்த்தித்தும் கோதாவரி ராவணனுடைய கோரரூபத்தையும் க்ரூரக்ருத்யங்களையும் நினைத்துப் பயந்து ஒன்றும் சொல்லாமலிருந்தாள். ஸீதையைப் பார்க்கும் விஷயத்தில் அந்த நதீ தேவதை உதவி செய்வாளென்று நம்பியிருந்த ராகவன் ஆசையற்று, "லக்ஷ்மணா! இந்தக் கோதாவரியும் ஒன்றும் பதில் சொல்லவில்லையே. நான் ஸீதையின் மாதா பிதாக்களிடத்தில் இந்தக் கோரமான ஸமாசாரத்தை எப்படித் தெரிவிப்பேன்? ராஜ்யத்தை இழந்து வனத்தில் கிடைக்கும் பதார்த்தங்களால் எப்படியோ பிழைத்துக் கொண்டிருந்த எனக்கு, அந்த துக்கங்கள் யாதொன்றும் தோன்றாமல் தைரியம் சொல்லி ஸந்தோஷப்படுத்தி வந்த ஜானகி போய்விட்டாளே. பந்துக்களும் மித்திரர்களும், பார்யையுமில்லாமல், ஒருக்ஷணம் ஒரு யுகமாய் இருக்குமே. ஸீதையைக் காணும் வரையில் மந்தாகினீ, ஜனஸ்தானம், பிரஸ்ரவணம் முதலிய எல்லா இடங்களிலும் தேடுவேன். மஹா வீரியமுள்ள இந்த மிருகங்களும் என்னை அடிக்கடி பார்த்து ஏதோ ஸமாசாரத்தை அடையாளங்களால் தெரிவிக்க யத்னம் செய்கின்றன என்று நினைக்கிறேன்" என்றார்.

பிறகு அந்த மிருகங்களை நோக்கிக் கண்ணீர் கண்களை மறைக்க "ஸ்நேகிதர்களே! ஸீதையைக் கண்டீர்களோ?" என்று கேட்டார். உடனே அவைகள் எழுந்து ஆகாசத்தைப் பார்த்துக்கொண்டு தென்திசையைநோக்கி ஓடி, அடிக்கடி ராமலக்ஷ்மணர்களைத் திரும்பிப் பார்த்தன. லக்ஷ்மணன் அந்த அடையாளங்களால் நடந்த விருத்தாந்தங்களைத் தெரிந்து கொண்டு, ராமனைப் பார்த்து, "அண்ணா! தாங்கள், 'ஸீதை எங்கே?' என்று கேட்டவுடன் இந்த மிருகங்கள் எழுந்திருந்து பூமியையும் தென்திசையையும் ஆகாசத்தையும் காட்டிக்கொண்டு ஓடுகின்றன. ஸீதையை எவனோ அபஹரித்துக் கொண்டு ஆகாசமார்க்கமாகத் தெற்கே சென்றிருக்கிறானென்று வெளிப்படுகின்றது. ஆகையால், ராக்ஷஸர்கள் வஸிக்கும் தென்மேற்குத் திசையில் தேடிக்கொண்டு போவோம். ஸீதையையாவது பார்க்கலாம்; அல்லது அவளைக் கண்டுபிடிக்க உபாயமாவது ஏற்படும்" என்றார். ராமனும் அதை அங்கீகரித்து லக்ஷ்மணனுடன் அங்கிருந்து புறப்பட்டுத் தென்திசையில் ஸீதையைத் தேடிக்கொண்டு போனார்.

அவர்கள் அவளைப்பற்றி பேசிக்கொண்டு போகையில், வழியில் அவளுடைய தலையில் இருந்து புஷ்பங்கள் பூமியில் உதிர்ந்து கிடப்பதைக் கண்டு, ராமன் துக்கம் மேலிட்டு, "லக்ஷ்மணா!

பார்த்தாயா? நான் காட்டிலிருந்து பறித்து வந்து அதிகப் பிரியத்துடன் ஸீதைக்குக் கொடுத்த புஷ்பங்கள் இவைகளே; ஸந்தேகமில்லை. இனிமேல் அவளைக் கண்டுபிடிக்க ஒரு உபாயம் கிடைத்திருக்கிறது. எப்படியாவது அவளை மீட்டு வராமல் விடுகிறதில்லை. என்னிடத்திலுள்ள வீரியத்தால் ஸூரியன் இவைகளை வாடாமல் காப்பாற்றிவருகிறான்; காற்றும் கவர்ந்து செல்லவில்லை. பூமி தேவியும் இவற்றைத் தாங்கிக் காத்துவருகிறாள்" என்று ஸந்தோஷித்தார்.

பிறகு மலையருவிகளால் விளங்கும் பிரஸ்ரவணகிரியைப் பார்த்து "பர்வத சிரேஷ்டா! அழகில் ஒப்பில்லாத என் பிராணநாயகியைக் கண்டாயா?" என்று கேட்டார். தன் வார்த்தைகளே அந்த மலையிலிருந்து பிரதித்வனியாக வந்தன. அதைக் கேட்டு ராமன் தனக்கு அது பதில் சொல்லாமலிருப்பதுமன்றித் தான் படும் கஷ்டத்தைப் பார்த்துப் பரிகாசம் செய்ததாக நினைத்துக் கடுங்கோபமடைந்தார். உடனே ஸிம்ஹம் அல்ப மிருகத்தை பார்ப்பதுபோல் அதை உக்கிரமாய் வெறித்துப் பார்த்து "தங்கப் ப்ரதிமையைப் போன்ற ஸீதையை இந்த க்ஷணத்தில் கொண்டுவா, இல்லாவிட்டால் உன்னைத் தூள் தூளாகப் பிளப்பேன்" என்று கர்ஜித்தார். ப்ரதித்வனி செய்ததால் தான் ஸீதையை பார்த்ததாகச் சொன்னது போலிருந்தும், ராவணனிடத்திலிருந்த பயத்தால் ஸீதை இருக்குமிடத்தை அது தெரிவிக்கவில்லை. அதைப் பார்த்து ராமன் கோபத்தை அடக்க முடியாமல், "அடே துஷ்டா! என் பாணங்களால் உன்னை எரித்துச் சாம்பலாக்குகிறேன். இங்கே புல் செடி மரம் ஒன்றுமில்லாமல் எவரும் ஸஞ்சரிக்க முடியாமல் செய்கிறேன். லக்ஷ்மணா! ஸீதை போன இடத்தை அறிந்தும் இந்த நதி சொல்லவில்லையல்லவா? இருக்கட்டும். அவள் இருக்குமிடத்தை இந்த க்ஷணமே தெரிவிக்காவிட்டால் சொட்டு ஜலமில்லாமல் இதை வற்றச் செய்கிறேன் பார்" என்று, கண்களில் நெருப்புப் பொறி பறக்க நான்கு புறத்திலும் பார்த்தார். ஒரு பெரிய காலடியும் அதன் பக்கத்தில் சிறிய காலடிகளும் பூமியில் காணப்பட்டன.

ஸீதை ராவணனைக் கண்டு பயந்து ஆசிரமத்தை நோக்கி ஓடும் பொழுது அந்த ராக்ஷஸன் துரத்த, அவள் அங்குமிங்கும் ஓடித் தப்ப முயன்றாளென்று தெரிந்தது. அதற்கு சமீபத்தில் வில்லும் அம்பறைகளும் ரதமும் சின்ன பின்னமாகக் கிடந்தன. அதைக்கண்டு ராமன் பயந்து, "லக்ஷ்மணா! ஸீதை தரித்திருந்த ஆபரணங்களிலிருந்து உதிர்ந்த பொன் தகடுகளையும் பல மாலைகளையும் பார். பூமியில் நான்கு புறத்திலும் தங்கப் பொடிகளைப்போல் ரத்தத் துளிகள் சிந்தி இருக்கின்றன. ஆகையால் பல ராக்ஷஸர்கள் சேர்ந்து ஸீதையை துண்டு துண்டாக வெட்டிப் பங்கிட்டுத் தின்றார்களென்று நினைக்கிறேன். அவளுக்காக இரண்டு ராக்ஷஸர்கள் இங்கே கோர யுத்தம் செய்திருக்கிறார்கள். தங்கத்தாலும் முத்து மாலைகளாலும் அலங்கரிக்கப்பட்ட இந்த பெரிய வில் முறிந்து கிடக்கிறதே; இது யாருடையது? வைடூரிய மணிகள் இழைந்து பாலஸூர்யனைப்போல் பிரகாசிக்கும் இந்தத் தங்கக் கவசம் பிளந்து கிடக்கிறதே; இது யாருடையது? முத்து மாலைகளால் அலங்கரிக்கப்பட்டு நூறு கம்பிகளையுடைய இந்த வெண்குடை முறிந்து கிடப்பதைப் பார்; இது யாருடையது? பிசாச முகங்களையுடைய இந்தக் கோவேறு கழுதைகள் தங்கக் கவசங்களால் அலங்கரிக்கப்பட்டு பயங்கரமான ரூபத்துடன் மலைகளைப்போல் இறந்து கிடப்பதைப்பார்; இவை யாருடையவை? ஜ்வலிக்கும் நெருப்பைப்போல் பிரகாசிக்கும் இந்த யுத்த ரதம் பொடிப் பொடியாகக் கிடப்பதைப் பார். இதில் கட்டியிருக்கும் கொடியைப் பார்த்தால் இது சேனைத் தலைவனுடைய ரதமென்று தெரிகிறது. ரதத்தின் அச்சைப்போல் நீண்டு பருத்த இந்தப் பாணங்கள் தங்கக் கட்டுகளுடன் முனைகளில்லாமல் ஒடிந்து கிடக்கிறதைப் பார். இவைகளை எய்தவன் யார்? பாணங்களால் நிறைந்த அம்பறைகள் பிளந்து கிடப்பதைப் பார். கையில் சவுக்கையும் கடிவாளங்களையும் பிடித்துக் கொண்டு உயிரற்றுக் கிடக்கும் இந்த ஸாரதி எந்த அரசனைச் சேர்ந்தவன்? இந்த இரண்டு ராக்ஷஸர்கள் தலைப்பாகை குண்டலம் முதலியவைகளால் அலங்கரிக்கப்பட்டு கையில் சாமரங்களை பிடித்துக் கொண்டு இறந்து கிடப்பதைப் பார். இவர்கள் யாரைச் சேர்ந்தவர்கள்? இந்தக் காலடி பின் பாகம் அழுந்தியில்லை, புருஷனுடையதே. மேலும் கோணலாயிருக்கிறது, ராக்ஷஸனுடையதே. அவர்களுக்கும் எனக்கும் த்வேஷம் முன்னை விடக் கோடி மடங்கு அதிகமாயிற்று. அவர்களை வேரறுக்காமல் விடுவதில்லை. அந்தக் கொடிய ராக்ஷஸர்களே ஸீதையை எடுத்துப் போயிருப்பார்கள்; அல்லது கொன்றிருப்பார்கள்; அல்லது தின்றிருப்பார்கள்.

"இந்தப் பெரும் காட்டில் அவளை ராக்ஷஸர்கள் எடுத்துப் போகையில் தர்ம தேவதையும் அவளைக் காப்பாற்றவில்லையல்லவா? லோகபாலர்களும் எனக்கு பிரியமில்லாத காரியத்தைச் செய்யத் துணியமாட்டார்களே! அப்படியிருக்க அவளை ஏன் காப்பாற்றவில்லை? லக்ஷ்மணா! இதற்கு காரணம் தெரியுமா? ஸகல லோகங்களையும் உண்டாக்கி அழிக்கும் சக்தி ஒருவனுக்கு இருந்தாலும் அவன் இரக்கத்திற்கு இடம் கொடுத்து மிருதுவாக இருந்தால் ஸகல பிராணிகளும் அவனுடைய மஹிமையை அறியாமல், அவனை அலக்ஷ்யம் செய்யும். இது லோக ஸ்வபாவம். லோகங்களுடைய ஹிதத்தை வேண்டி இந்திரியங்களை அடக்கி மிருதுவான ஸ்வபாவமுள்ளவனாக இருக்கிறபடியால் என்னை வீரியமற்றவனென்றும் கையாலாகாதவனென்றும் இப்படி அவமதிக்கிறார்கள். இரக்கம் உத்தம குணமென்று சொல்லப்படுகிறது. அதுவே என்

னிடத்தில் தோஷமாயிற்று. தேவதைகள் என்னை அவமதிக்கும்படியும் ஸீதையைப் பிறர் எடுத்துப்போகும்படியும் நேர்ந்ததல்லவா? இந்தக் குணத்தால் பயனென்ன? ராக்ஷஸர்கள் அனைவரையும் அழிக்கவே இரக்கமென்ற குணத்தைக் கோபமென்ற தோஷமாக மாற்றிக் கொண்டேன். குளிர்ந்த சந்திர கிரணங்களை அடக்கி ஸூரியன் அதிக பிரகாசத்துடன் உதிக்கிறதுபோல், நானும் அடக்கம் இரக்கம் முதலிய குணங்களை மறைத்தும் என் தேஜஸை வெளிப்படுத்துகிறேன். யக்ஷ கந்தர்வ பிசாச கின்னர ராக்ஷஸ மனுஷ்ய கணங்களில் யாவரும் ஸுகமாக வாழப்போவதில்லை. என் பாணங்களால் ஆகாசத்தை மறைத்து மூன்று லோகத்திலுள்ளவர்களையும் ஸஞ்சரிக்க முடியாமல் செய்கிறேன். கிரஹங்களும் சந்திரனும் அக்கினியையும் வாயுவையும் ஸூரியனையும் அசையாமல் தடுத்து அவர்களின் தேஜஸை வாங்கிக்கொண்டு அவைகளை அழிக்கிறேன். மலைகளைப் பிளக்கிறேன். ஆறுகளையும் ஏரிகளையும் மூன்று லோகங்களையும் நாசம் செய்கிறேன். ஸீதையை அபாயமில்லாமல் இந்த நிமிஷத்தில் லோக பாலர்கள் க்ஷேமமாகக் கொண்டு வந்து கொடுக்காவிட்டால் என் பராக்கிரமம் இவ்விதமென அறிவார்கள். இனி ஒரு பிராணியாவது ஆகாசத்தில் பறக்குமா? இந்த ஜகத்திலுள்ள சகல பிராணிகளையும் என் பாணங்களால் வதைத்து, மிருகங்களை வேரறுத்து, பொருள்களின் ஸ்வரூபத்தையே மாற்றி, பிரபஞ்சத்தையே கதற அடிக்கிறேன். பிசாசாவது ராக்ஷஸனாவது மருந்துக்குக்கூடக் கிடைக்காமல் செய்கிறேன். நான் கோபத்துடன் விடும் பாணங்களை தேவ தைத்ய பிசாச ராக்ஷஸ யக்ஷ கணங்களில் யாராவது தடுக்க முடியுமா? எல்லோரையும் துண்டு துண்டாக வெட்டிப் பிணக்காடாக அடிக்கிறேன். ஸீதை எடுத்துப் போகப்பட்டிருந்தாலும் இறந்தாலும் ஸரி; அவளை லோகபாலர்கள் இப்பொழுதே கொண்டு வராவிட்டால் இந்த லோகங்களை இருந்தவிடம் தெரியாமல் செய்கிறேன். நான் அவளை விட்டுப் பிரிந்த காலத்தில் எப்படி இருந்தாளோ அப்படியே என்னிடத்தில் ஒப்புவிக்காவிட்டால், ஸகல லோகங்களையும் அவைகளிலுள்ள பிராணிகளையும் ஸ்வரூபமே இல்லாமல் செய்து விடுவேன்'' என்று முகத்தில் கோபாக்னி ஜ்வலிக்க, கண்கள் நெருப்பு ஜ்வாலைகளைக் கக்க கோதண்டத்தைக் கையிலெடுத்து, காலதண்டத்தைப் போலும் மஹாஸர்ப்பத்தைப் போலும் ஜ்வலிக்கும் திவ்யமான பாணத்தை அதில் பூட்டி, பிரளயகாலத்தில் பிரபஞ்சத்தை அழிக்கும் காலாக்னியைப்போல் கோபாவேசம் கொண்டு, "லக்ஷ்மண! கிழத்தனம் மரணம் காலம் விதி இவை தடுக்கப் பட்டனவென்று யாராவது கேட்டதுண்டோ? அப்படியே என் கோபத்தையும் தடுக்கக்கூடியவர்கள் இல்லை என்று அறி. இந்த மானை எனக்குப் பிடித்து தரவேண்டுமென்று எந்த புன்சிரிப்புடன் ஸீதை



எனக்குச் சொன்னாளோ, அதே புன்சிரிப்புடன் அவளை என்னிடத்தில் ஒப்புவிக்க வேண்டும். இல்லாவிட்டால் ஸகல ஜகத்தையும் அழிப்பேன். இது பிசகென்று எவரும் சொல்ல மாட்டார்கள். ஸீதை மற்றவர்களைப்போல் மனுஷ்ய கர்ப்பத்தில் வஸிக்காதவளானதால் எனக்கும் மேலானவள். வீரசிரேஷ்டரான ஜனகருடைய பெண்ணானதால் எனக்கு ஸமமானவள். அப்படிப்பட்டவளை இழந்து நான் தவிக்கையில் யார் எப்படிப் போனாலென்ன?'' என்றார்.

புரேவ மே சாருத3தீ மநிந்தி3தாம்
தி3ஶந்தி ஸீதாம் யதி3 நாத்3ய மைதி2லீம் |
ஸதே3வ கந்த4ர்வ மநுஷ்ய பந்நக3ம்
ஜகத் ஸஶைலம் பரிவர்தயாம்யஹம் || (76)

---

## ஸர்க்கம் 65

## லக்ஷ்மணன் ராமனை ஸமாதானம் செய்தது

---

தப்யமாநம் ததா2 ராமம் ஸீதாஹரண கர்ஶிதம் |
லோகாநா மஹிதே யுக்தம் ஸம்வர்தக மிவாநலம் || (1)

**ஸ**ம்வர்த்தகமென்ற அக்னியைப் போலும் பிரளய காலத்து ருத்ரனைப் போலும் ராமன் ஸகல ஜகத்தையும் அழிக்க முயன்று, வில்லை எடுத்து நாணேற்றிப் பாணத்தைப் பூட்டி அடிக்கடி பெருமூச்சு விட்டுக்கொண்டு, 'இதை விடுவோமா வேண்டாமா' என்று பார்த்துக் கொண்டிருப்பதை லக்ஷ்மணன் கண்டு, "ஐயோ! இதுவரையில் ராமன் இப்படிக் கோபிக்கக் காணேனே. ஸகல லோகங்களும் அழியும் போலிருக்கிறதே. என்ன செய்வேன்'' என்று முகம் வாடி கைகூப்பி வணக்கத்துடன், "அண்ணா! இதுவரையில் மிருதுவாகவும் அடக்கத்துடனும் ஸகல பிராணிகளுக்கும் ஹிதத்தையே செய்து கொண்டிருந்தீர்கள். இப்பொழுது அந்த ஸ்வபாவத்தை மாற்றிக் கோபத்திற்கு இடம் கொடுப்பது தங்களுக்குத் தகாது. சந்திரனிடத்தில் பிரகாசமும் ஸூரியனிடத்தில் தேஜஸும் வாயுவிடத்தில் அசைவும் பூமியிடத்தில் பொறுமையும் எப்படி இயற்கையோ அப்படி மேற்சொன்ன குணங்களெல்லாம் தங்களுக்கு ஸ்வபாவம். மேலும் உத்தமமான கீர்த்தியும் தங்களிடத்தில் குடிகொண்டிருக்கிறது. 'நான் இதுவரையில் அடங்கி யிருந்தபடியால் இப்படி நேர்ந்தது. இப்பொழுதும் நான் கோபிக்காவிட்டால் ஸீதையை அடைவதெப்படி? நம்மைக் கண்டு யார் பயப்படுவார்கள்?' என்று சொல்ல வேண்டாம். இங்கே ஒரே ரதமும் ஒருவனுடைய காலடியுமே காணப்படுகிறது. ஆகையால் தங்களுக்கு அபராதம் செய்தவன் ஒருவனே. அப்படியிருக்க, தாங்கள் ஸகல ஜகத்தையும் நாசம்

செய்வது நியாயமா? இதோ ஒடிந்துகிடக்கும் ரதம் எவனுடையதென்று தெரியவில்லை. இங்கே கோவேறு கழுதைகளின் குளம்புகளும் சக்கரங்களும் பதிந்து கிடக்கின்றன. ரத்தத் துளிகள் சிந்தியிருக்கின்றன. இங்கே கோர யுத்தம் செய்தவன் யார்? யாரைக் குறித்தோ இங்கே ஒருவனே யுத்தம் செய்திருக்கவேண்டும். பலர் இங்கே வந்திருந்ததாக யாதொரு அடையாளமும் இல்லை. ஆகையால் ஒருவனுக்காக ஸகல லோகங்களையும் அழிப்பது நியாயமா? அரசர்கள் உசிதமாகத் தண்டிக்கவேண்டும். மிருதுவாகவும் அடக்கமாகவும் இருக்கவேண்டும். மேலும் ஸகல பிராணிகளுக்கும் தாங்களே கதி; தங்களையே சரணமடைந்திருக்கின்றன. தேவதைகள் தங்களுக்கு அபராதம் செய்திருப்பார்களென்று எண்ணவேண்டாம். தாங்கள் ஸீதையை விட்டுப் பிரிந்து தவிப்பதை நல்லதென்று யாராவது எண்ணுவார்களா? ஆறுகளும் மலைகளும் கடல்களும் தேவ கந்தர்வ தானவர்களும் தங்களுக்குப் பிரியமில்லாத காரியத்தைச் செய்யத் துணிவார்களா? யாகதீக்ஷை செய்துகொண்டவனுக்கு ரித்விக்குகள் கெடுதி செய்ய முடியுமா? நாம் ஆயுதபாணிகளாக மஹரிஷிகளின் உதவியால், ஸமுத்திரங்கள் மலைகள் காடுகள் கோரமான குஹைகள் ஆறுகள் தாமரை ஓடைகள் தேவ கந்தர்வ லோகங்கள் இவைகளில் ஸீதையை ஜாக்கிரதையாகத் தேடுவோம். லோகபாலர்கள் ஸீதையை ஸாதாரணமாகக் கொண்டு வந்து ஒப்புவிக்காவிட்டால் பிறகு அவர்களைத் தண்டிக்கலாம். நல்ல வார்த்தைகளாலும், விநயத்தாலும், நியாயத்தாலும் ஸீதையை அடைய முயல்வோம். அவை பலிக்காவிட்டால் தங்கக் கட்டுகளுள்ள பாணங்களால் உலகை அழிக்கலாம்'' என்றார்.

ஶீலேந ஸாம்நா விநயேந ஸீதாம்
நயேந ந ப்ராப்ஸ்யஸி சேந் நரேந்த்3ர |
தத: ஸமுத்பாத3ய ஹேமபுங்கை2:
மஹேந்த்3ர வஜ்ர ப்ரதிமை; ஶரௌகை4: ॥ (16)

---

## ஸர்க்கம் 66

## லக்ஷ்மணன் ராமனை ஸமாதானம் செய்தது

---

தம் ததா2 ஶோகஸந்தப்தம் விலபந்த மநாத2வத் |
மோஹேந மஹதாவிஷ்டம் பரித்3யூந மசேதநம் ॥ (1)

**தா**ன் இவ்வளவு சொன்ன போதிலும் சோகம் தீராமல் கதியற்றவனைப்போல் ராமன் பிரலாபிப்பதையும், மஹா மோஹத்தில் ஆழ்ந்து கிடப்பதையும், பிரக்ஞையற்றவரைப்போல் நடப்பதையும் கண்டு, லக்ஷ்மணன் அவரை நமஸ்கரித்து அவருடைய பாதங்களைப் பிடித்துக்கொண்டு வணக்கமாகத் தெரிவித்துக் கொண்டார். "முன் காலத்தில் தேவதைகள் யாவரும் சேர்ந்து பாற்கடலைக் கடைந்து அமிருதத்தை எடுத்தார்கள். அப்படியே தசரத சக்கரவர்த்தி, உபவாஸங்களாலும் விரதங்களாலும் தானதர்மங்களாலும் அசுவமேதம் புத்திரகாமேஷ்டி முதலிய யாக யஜ்ஞங்களாலும் தங்களை அடைந்தார். தேவதைகள் எல்லோரும் செய்த பிரயத்தனத்தை அவர் ஒருவரே செய்தார். மந்த்ரம் திரவ்யம் கிரியை முதலியவைகளில் லோபமில்லாமல் ஸகல உபாயங்களையும் அனுஷ்டித்தார். அமிருதத்தால் ஸகல லோகங்களும் க்ஷேமமடைந்ததைப்போல், தங்களுடைய அவதாரத்தால் ஸகல பிராணிகளும் க்ஷேமமடைந்தன. அவர் தங்களுடைய உத்தம குணங்களில் ஈடுபட்டுத் தங்களை விட்டுப் பிரிந்த துக்கத்தைப் பொறுக்காமல் ஸ்வர்க்கத்தை அடைந்தாரென்று பரதன் சொல்லியிருக்கிறார். இக்ஷ்வாகு வம்சத்தில் பிறந்த தங்களுக்குத் தைரியம் இயற்கையல்லவா? இப்படிப்பட்ட கஷ்டங்களைத் தாங்களே பொறுக்காவிட்டால் ஸாதாரணமான அல்ப மனுஷ்யர்கள் எப்படிப் பொறுப்பார்கள்? துக்கம் மேலிட்டு தாங்கள் லோகங்களை எரிக்க ஆரம்பித்தால் பிராணிகள் யாரைச் சரணடையும்? ஜனங்களுக்கு மஹா கஷ்டங்கள் நேருவது உலகத்தின் இயல்பே.

நஹுஷ சக்கரவர்த்தி ஒரு ஸமயத்தில் இந்திர பதவியை அடைந்தான். இந்திராணியை அனுபவிக்க விரும்பி ஸப்தரிஷிகளையும் தன் பல்லக்கைச் சுமக்கச் செய்து காமபரவசனாகி அவளுடைய அந்தப்புரத்திற்குப் போகையில், அகஸ்தியரை வேகமாகப் போகும்படி காலால் உதைத்தான்; அவர், 'நீ ஸர்ப்பமாகக் கடவாய்' என்று அவனைச் சபிக்க, அப்படியே வெகுகாலம் அந்தக் கஷ்டத்தை அனுபவித்தான். அவனுடைய புத்திரனான யயாதி, தான் செய்த புண்ணியத்தால் ஸ்வர்க்கத்தை அடைந்தான். இந்திரன் அவனிடத்தில் அஸூயை கொண்டு 'தங்களுடைய ராஜ்யத்தில் சிரேஷ்டமானவர் யார்?' என்று கேட்டான். யயாதி உண்மையையே சொல்லுகிறவனானதால் 'நானே' என்றான். 'உன்னையே நீ மெச்சிக்கொண்டதால் நீ இங்கே இருக்கத் தகாது' என்று இந்திரன் அவனைத் தலை கீழாகத் தள்ளிவிட்டான். நமது குலகுருவான வஸிஷ்ட மஹரிஷியின் நூறு புத்திரர்கள் ஒரே நிமிஷத்தில் விசுவாமித்திரருடைய கோபாக்னியால் எரிக்கப்பட்டார்கள்; மஹா விஷ்ணுவின் பத்தினியும் ஜகத்திற்கு மாதாவுமான பூமிதேவியே அடிக்கடி நடுங்குகிறாளென்று தாங்களே எனக்குச் சொல்லியிருக்கிறீர்கள். ஸகல தர்மங்களுக்கு ஸாக்ஷிகளும், காலப் பிரமாணத்தைக் காட்டுகிறபடியால் ஜகத்தை நடத்துகிறவர்களும் ஸகல ஜனங்களுக்கு ஆயுளையும் ஞானத்தையும் கொடுக்கிறவர்களும் மஹா பலசாலிகளுமான சந்திரஸூரியர்களும் ராஹு கேதுக்களால் பீடிக்கப்படுகிறார்கள். மாந்தாதா நளன் முதலிய மஹா புருஷர்களும் ஸகல பூதங்களுக்கு அந்தர்யாமியான பரமாத்மாவின் ஸங்கல்பத்தைத் தாண்ட முடியாது. இந்திரன் முதலிய தேவர்கள் பாப புண்ணியங்களைச் செய்

கிறார்களென்றும் ஸுகதுக்கங்களை அனுபவிக்கிறார்களென்றும் கேட்டிருக்கிறோம்;அப்படி யிருக்கத் தாங்கள் வருத்தப்படுவது உசிதமல்ல. ஸீதை பிறரால் எடுத்துப் போகப்பட்டாலும் இறந்தாலும் மஹா வீரனான தாங்கள் ஸாதாரண மனிதனைப்போல் வருந்தலாமா? விஷயங்களின் உண்மையை அறிந்த தங்களைப் போன்ற மஹானுபாவர்கள் கொடிய கஷ்டங்கள் நேரும்பொழுதும் விவேகத்தை இழக்காமல் நிர்மலமான அந்தக்கரணத்துடன் இருப்பார்கள். சோகத்தால் மயங்காத புத்தியுடன் நமக்கு நேரும் ஸுக துக்கங்களை யோசித்துப் பார்க்கவேண்டும். மஹா புத்திமான்கள் அப்படிச் செய்து, வரும் ஸுக துக்கங்களையும் அவைகளின் தத்துவத்தையும் அறிகிறார்கள். நாம் முன் ஜன்மங்களில் செய்த கர்மங்களின் ஸ்வரூபம் நமக்குத் தெரியாது. அவைகளின் குணதோஷங்களை நேரில் பார்க்க முடியாது. ஆனால் நாம் அவைகளைச் செய்திருந்தாலொழிய இப்பொழுது அவைகளின் பயனை அனுபவிக்க முடியாது. தாங்கள் இப்பொழுது படும் துக்கம் பூர்வகர்மங்களின் பயனாக இருக்க, அதைப் பற்றி பிரலாபிப்பது நியாயமா? தாங்களே இப்படி எனக்கு உபதேசிக்கவில்லையா ? பிருஹஸ்பதியாகவே ஒருவன் இருந்தாலும் தங்களுக்குப் புத்தி சொல்ல முடியுமா? தங்களுடைய புத்தியின் எல்லையைக் கண்டுபிடிக்க தேவர்களாலும் முடியுமா? ஸீதையைப் பிரிந்த சோகத்தால் தங்களுடைய ஞானம் மயங்கிற்றென்று தெரிவித்தேனே தவிர, வேறல்ல. கந்தர்வ யக்ஷ கின்னரர்கள் முதலிய தேவகணங்கள் ஸாத்விக ஸ்ருஷ்டியானதால் அவர்களைக் கொல்வது நியாயமல்ல. பூலோகத்தில் ப்ரஹ்மக்ஞானிகளான பிராம்மணர்களும் மஹரிஷிகளும் இருக்கிறபடியால் அதை அழிப்பது தகாது. ஆனால் தாங்கள் ஸகல லோகங்களையும் நினைத்தவுடனேயே நாசம் செய்யக் கூடியவர்கள். தாங்கள் இக்ஷ்வாகு வம்சத்தில் அவதரித்த காரணத்தை ஞாபகத்தில் வைத்துக் கொண்டு நமது சத்துருவைக் கொல்வதில் பூர்ணமாக முயற்சி செய்யவேண்டும். தங்களுக்கு ஒருவன் அபராதம் செய்திருக்கையில் லோகங்கள் யாவையும் நாசம் செய்தால் லாபமென்ன? அந்த மஹா பாபியை எப்படியாவது கண்டுபிடித்துக் கொல்வதே உசிதம்'' என்று வணக்கமாகத் தெரிவித்தார்.

கிம் தே ஸர்வ விநாஶேந க்ருதேந புருஷர்ஷப⁴ |
தமேவ த்வம் ரிபும் பாபம் விஜ்ஞாயோத்³த⁴ர்து மர்ஹஸி ‖ (20)

---



## ஸர்க்கம் 67
## ராமன் ஜடாயுவைக் கண்டது

பூர்வஜோப்யுக்த மாத்ரஸ்து லக்ஷ்மணேந ஸுபா⁴ஷிதம் |
ஸாரக்³ராஹீ மஹாஸாரம் ப்ரதிஜக்³ராஹ ராக⁴வ: ‖ (1)

**ரா**மன் லக்ஷ்மணனுக்கு மூத்தவர்; எல்லோருக்கும் உபதேசிக்கத் தகுந்தவர்; ஆனாலும் லக்ஷ்மணன் சொன்னது யுக்திக்கு ஒத்தும் மிகுந்த ஸாரத்துடனும் விளங்கிற்று. ராமன் ஸாரத்தை கிரஹிப்பவர்; ஆகையால் அவைகளை ஒப்புக்கொண்டு தனக்குள் பொங்கும் கோபத்தை அடக்கி, கோதண்டத்தின்மேல் சாய்ந்துகொண்டு, "லக்ஷ்மண! இப்பொழுது என்ன செய்வோம்? எங்கே போவோம்? எந்த உபாயத்தால் ஸீதையைக் கண்டுபிடிப்போம்?'' என்றார். லக்ஷ்மணன் "அண்ணா! இந்த ஜனஸ்தானத்திலேயே வெகு ஜாக்கிரதையாகத் தேடவேண்டும். ராக்ஷஸர்கள் இங்கே அதிகமாக ஸஞ்சரிக்கிறார்கள். மரச் சோலைகளும் கொடிகளும் குகைகளும் பிளவுகளும் பள்ளத்தாக்குகளும் கின்னரர்கள் கந்தர்வர்கள் வஸிக்குமிடங்களும் இன்னும் ரஹஸ்யமான பல இடங்களும் இங்கே இருக்கின்றன. அங்கெல்லாம் நாமிருவரும் ஜாக்கிரதையாகத் தேடுவோம். பெரிய மலைகள் பெருங்காற்றிலும் அசையாததுபோல் தங்களைப் போன்ற மஹாபுத்திசாலிகள் எந்த ஆபத்து நேர்ந்தாலும் கலங்கமாட்டார்கள்'' என்று வணக்கமாகத் தெரிவித்தார்.

பிறகு அவர்கள் அந்த வனம் முழுவதிலும் ஜாக்கிரதையாகப் பரிசோதித்துக்கொண்டு போகையில், அந்த யுத்தகளத்திற்குக் கொஞ்சம் தெற்கில் மலைச் சிகரத்தைப்போல் ஒரு பக்ஷி, ரத்தம் பெருகப் பூமியில் கிடப்பதைக் கண்டார்கள். உடனே ராமன் "லக்ஷ்மண! இந்த ராக்ஷஸப் பதர் ஸீதையைக் கொன்று தின்றுவிட்டு எழுந்திருக்க முடியாமல் கிடக்கிறான். நம்மைக் கண்டவுடன் கழுகைப்போல் ரூபமெடுத்திருக்கிறான். ஜ்வலிக்கும் என் பாணங்களுக்கு இவனை இப்பொழுதே இரையாக்குகிறேன்''என்று வில்வில் கூர்மையான பாணத்தைப் பூட்டிக் கோபத்தால் பூமி முழுவதையும் நடுங்கச் செய்துகொண்டு அந்தப் பக்ஷியின்மேல் பாய்ந்தார். அப்பொழுது அந்தக் கழுகு நுரையுடன் ரத்தத்தைக் கக்கிக்கொண்டு தீனமாக ராமனைப் பார்த்து, "நீங்கள் இந்த வனத்தில் உயர்ந்த ஔஷதியைப்போல் எவளைத் தேடுகிறீர்களோ அவளையும் என் உயிரையும் ராவணனென்ற துஷ்ட ராக்ஷஸன் கொள்ளைகொண்டு போய்விட்டான். நீயும் லக்ஷ்மணனும் இல்லாத ஸமயத்தில் ராவணன் அவளை எடுத்துப் போனதைப் பார்த்தேன். உடனே நான் அவனை மறித்து அவனுடைய வில்லையும் பாணங்களையும் ரதத்தையும் ஸாரதியையும் நாசம் செய்தேன். நான் சற்றுக் களைத்திருக்கும் ஸமயம் பார்த்து அந்தப்பாபி என் இறகுகளைக் கத்தியால் வெட்டித்

தள்ளி ஸீதையை எடுத்துக்கொண்டு ஆகாச மார்க்கமாகப்போனுன். இதுவரையிலேயே ராவணனுல் கொல்லப்பட்டிருக்கிறேன்; நீயும் என்னைக் கொல்லவேண்டாம்'' என்று பிரார்த்தித்தார்.

ராமன் அதைக் கேட்டு முன்னிருந்த துக்கம் அதிகமாகி, கோதண்டத்தை விட்டெறிந்து லக்ஷ்மணனுடன் ஜடாயுவைக் கட்டிக்கொண்டு பூமியில் விழுந்து புரண்டு அழுதார். அந்த வழியாக ஒருவரும் பிரயாணம் செய்வதில்லை; அதற்கப்புறம் போக வழியுமில்லை; ஒருவனுக்குமேல் போகமுடியாது. அவ்விதமான இடத்தில் உதவி செய்பவர்களின்றி, கோரமாகக் காயம்பட்டு அநாதையாகக் கிடக்கும் ஜடாயுவைப் பார்த்து, "லக்ஷ்மண ! கையில் கிடைத்த ராஜ்யத்தையும் திடீரென்று இழந்தேன் ; ராஜ்யத்தில் பிச்சையெடுத்துக்கொண்டாவது பிழைக்கக் கூடாதா? அப்படியும் இல்லை; காட்டிற்குத் துரத்தப்பட்டேன். அங்கும் எனக்கு வேண்டியவர்கள் கிட்டவிருந்தால் துக்கங்கள் யாவும் ஒருவாறு மறைந்திருக்கும்; அப்படியும் இல்லை. ஸீதையையும் பறிகொடுத்தேன். பந்துக்களாவது மித்திரர்களாவது கிட்டவிருந்தால் அவர்களைப் பார்த்து துக்கத்தை மறக்கலாம்; அப்படியும் இல்லை. ஜடாயுவும் கொல்லப்பட்டார். இப்படி ஒன்றிற்கொன்று அதிகமான கஷ்டங்கள் ஸமுத்திரத்தின் அலைகளைப்போல் ஓயாமல் என்னைத் தாக்குவதைப் பார்த்தால் ஸகல வஸ்துக்களையும் எரிக்கும் அக்னியில் நான் போய் விழுந்தாலும் என் துரதிருஷ்டம் அதையும் எரித்து விடுமென்று எண்ணுகிறேன். என்னைவிட்டு ஒருநாளும் பிரியாத உன்னையும் பிரித்துவிடுமோ தெரியவில்லை. என் துக்கத்தைத் தணிக்க ஸமுத்திரத்தில் விழுந்தாலும் அதுவும் வற்றிப்போகும். என்னைப்போன்ற பாக்கிய ஹீனன் ஸகல லோகங்களிலும் ஒருவனும் கிடையாது. கவலையென்ற வலையில் என்னைப்போல் கட்டுப்பட்டுத் தவிப்பவர்கள் வேறுண்டோ ? இதோ பார்! இந்த ஜடாயு நமது பிதாவிற்கு உயிர்த்தோழன்; பிதாவைப்போல் நம்மால் பூஜிக்கத் தகுந்தவர் ; மிகுந்த வயது சென்றவர்; எப்பொழுதும் நம்மைப் பாதுகாப்பவர்; என்னுடன் சேர்ந்து என் துரதிருஷ்டத்தால் கோரமான மரணத்தை அடைந்திருக்கிறுர்'' என்று இப்படிப் பலவிதமாகப் புலம்பிக்கொண்டு ராகவன் ஜடாயுவைத் தடவிக் கொடுத்தார். ராமனுக்குத் தசரதரிடத்தில் எவ்வளவு பிரீதியோ அதைவிட ஜடாயுவிடத்தில் இன்னும் அதிகம். ஆகையால் சிறகு அறுக்கப்பட்டு ரத்தத்தில் தோய்ந்து கிடந்த ஜடாயுவைக் கட்டிக்கொண்டு, 'என் பிராண நாயகியான ஸீதை எங்கே?' என்று கதறி மூர்ச்சையடைந்து பூமியில் விழுந்தார்.

நிக்ருத்த பக்ஷம் ருதி⁴ராவஸிக்தம்
ஸ க்³ருத்⁴ர ராஜம் பரிரப்⁴ய ராம: |
க்வ மைதி²லீ ப்ராணஸமா மமேதி
விமுச்ய வாசம் நிபபாத பூ⁴மௌ ‖ (29)



க்³ருத்⁴ரராஜம பரிஷ்வஜ்ய பரித்யஜ்ய மஹத்³த⁴நு: |
நிபபாதாவஶோ பூ⁴மௌ ருரோத³ ஸஹலக்ஷ்மண: ‖ —ஆ. 67 ஸ-22சு.

ராமன் அதைக் கேட்டு முன்னிருந்த துக்கம் அதிகமாகி, கோதண்டத்தை விட்டெறிந்து, லக்ஷ்மணனுடன் ஜடாயுவைக் கட்டிக் கொண்டு பூமியில் விழுந்து புரண்டு அழுதார். (பக்கம் 180 பார்க்க)

Notes : This Blank Page has also to be counted as a another page Number.

It is intentionally left blank after Picture Sketches.!

Released by Maran's Dog ,Toronto, Canada



## ஸர்க்கம் 68

# ராமன் ஜடாயுவுக்கு மோக்ஷம் கொடுத்தது

ராம: ஸம்ப்ரேக்ஷ்ய தம் க்³ருத்⁴ரம் பு⁴வி ரௌத்³ரேண பாதிதம் |
ஸௌமித்ரிம் மித்ரஸம்பந்ந மித³ம் வசந மப்³ரவீத் || (1)

பிறகு பிரக்ஞை தெளிந்து எழுந்து தனக்கு பிரிய மித்திரனான லக்ஷ்மணனை பார்த்து, "குழந்தாய்! இந்தப் பக்ஷி என் பாரியையை ரக்ஷிப்பதற்காக ராவணனுடன் யுத்தம் செய்து உயிரை விடப் போகிறார். இவருடைய தேகத்தில் பிராணன் ஊசலாடிக் கொண்டிருக்கிறது; ஆனாலும் குரல் வரவர பலஹீனமாகிறது. மரணாவஸ்தை ஸமீபித்துவிட்டது. "ஜடாயோ! உங்களுக்குப் பேச சக்தியிருந்தால் ஸீதையின் வரலாற்றையும் தங்களுக்கு நேர்ந்த கஷ்டத்தையும் விஸ்தாரமாகச் சொல்லப் பிரார்த்திக்கின்றேன். ராவணன் ஸீதையை அபகரிக்கக் காரணமென்ன? நான் அவனுக்கு என்ன அபராதம் செய்தேன் ? அப்பொழுது ஸீதையின் முகம் எப்படி இருந்தது? அப்பொழுது ஸீதை என்ன சொன்னாள்? அந்த ராக்ஷஸனுடைய தைரியமும் ரூபமும் செய்கைகளும் எப்படிப் பட்டவை? அவன் இருக்குமிடம் எங்கே?" என்றார். அப்பொழுது ஜடாயு மிகவும் மெலிந்த குரலுடன் தீனமாக, "ராம! அந்த ராக்ஷஸேசுவரன் தன் மாயையால் பெரிய காற்றையும் மேகத்தையும் உண்டாக்கி, ஸீதையை அதில் மறைத்து, ஆகாச மார்க்கமாகக் கொண்டு போனான். நான் யுத்தம் செய்து களைத்திருக்கும்பொழுது என் இறக்கைகளை வெட்டிவிட்டு ஸீதையை எடுத்துக்கொண்டு தெற்கே போனான். மரணாவஸ்தையால் எனக்குப் பிராணவாயுக்கள் நெஞ்சில் வந்தடைக்கின்றன; கண்கள் சுழலுகின்றன; மரங்கள் தங்கமயமாகவும் விளாமிச்ச வேரைப் போன்ற தலைமயிர்களை உடையவைகளாகவும் தோன்றுகின்றன. விந்தமென்ற முகூர்த்தத்தில் ராவணன் ஸீதையை எடுத்துப் போனான். அதன் மஹிமையால் நஷ்டமான பொருள் மறுபடியும் உடையவனுக்குச் சீக்கிரமாகக் கிடைக்கும். இது ராவணனுக்குத் தெரியவில்லை. உன் பாரியையான ஜானகியை எடுத்துப் போய் அந்த ராக்ஷஸன் தூண்டில் முள்ளை விழுங்கின மீனைப்போல் நிச்சயமாக இறப்பான். ஸீதைக்காக வருந்தாதே. ராவணனைக் கொன்று ஸீதையுடன் வெகுகாலம் ஸுகமாக இருப்பாய்" என்று தெளிவாகப் பேசிக்கொண்டிருந்த ஜடாயுவின் வாயிலிருந்து ரத்தமும் மாம்ஸமும் விழுந்தன. மரணம் ஸமீபித்ததால் இன்னும் எதையோ சொல்ல வேண்டுமென்று விரும்பின ஜடாயு, "விச்ரவஸின் புத்திரன், குபேரனுடைய தம்பி" என்று சொல்லிக்கொண்டே பிராணனை விட்டார். 'சொல்லும், சொல்லும்' என்று ராமன் கைகூப்பிப் பலதடவை பிரார்த்தித்தும் அந்தப் பக்ஷியின் பிராணன் தேகத்தை விட்டுக் கிளம்பிப் போயிற்று.

என்ன கஷ்டம்! கால்களைப் பரப்பிக்கொண்டு தலையைத் தரையில் போட்டு ஜடாயு மரணமடைந்தார். தலைகீழாக விழுந்ததால் கண்கள் சிவந்து மலைச் சிகரத்தைப்போல் கிடக்கும் ஜடாயுவைப் பார்த்து ராமன், "லக்ஷ்மண! கோரமான ராக்ஷஸர்கள் வஸிக்கும் இந்த தண்டகாரண்யத்தில் இவர் அநேக ஆயிர வருஷங்களாகப் பயமில்லாமல் ஸுகமாக வஸித்து வந்தார். இங்கேயே ராக்ஷஸனால் மரணமடைந்தார். இவர் வெகுகாலம் பிழைத்திருந்து இப்பொழுது இறக்கும்படி நேர்ந்தது. ஐயோ! காலகதியை யாரால் தடுக்க முடியும்? பார், லக்ஷ்மண! ராவணன் ஸீதையை எடுத்துப்போகும் பொழுது அவளை மீட்பதற்காக இந்தப் பக்ஷி அந்த துஷ்டனுடன் தன் உயிருள்ளவரையில் யுத்தம் செய்தார். எனக்கு இவர் செய்த உபகாரத்திற்கு எல்லையுண்டோ? எனக்குக் கிடைக்கவேண்டிய ராஜ்யத்தை என் பிதாவின் உத்தரவால் கைவிட்டேன். இவரோ தான் நெடுங்காலம் ஆண்டுவந்த ராஜ்யத்தைத் தானாகவே விட்டுப் போனார். என் கோஸல ராஜ்யம் இவருடைய ராஜ்யத்திற்கு ஈடல்ல. என் அதிகாரத்திற்குப் பங்காளிகள் பலருண்டு. இவர் போட்டியில்லாமல் ராஜ்யத்தை ஆண்டவர். பக்ஷிகளுக்கெல்லாம் அரசனாகப் பல தலைமுறையாகக் கிடைத்த ராஜ்யத்தை ஆண்டு வந்து எனக்காக பிராணனை விட்டார். என் பிதா இறந்தபிறகு இவரை அடைந்து எல்லா துக்கங்களையும் மறந்து ஸுகத்தை அனுபவிக்கலாமென்று எண்ணினேன். இவரும் என்னைக் கைவிட்டுப் போனார். ஸகல பிராணிகளிலும் ஸாதுக்களும் தர்மாத்மாக்களும் உபகாரிகளும் இருக்கிறார்கள். ஸீதையை இழந்ததாலுண்டான துக்கமும் இதற்கு ஈடல்ல. நமது பிதா நமக்கு எப்படிப் பூஜிக்கத் தகுந்தவரோ, மரியாதை செய்யத் தகுந்தவரோ, இந்தப் பக்ஷி ராஜனும் அப்படியே. ஆகையால் அவருக்குச் செய்யவேண்டிய ஸகல பிரேதக்கிரியைகளை இவருக்கும் செய்யவேண்டும். சீக்கிரம் கட்டைகளை அடுக்கு. எனக்கு உயிரைக் கொடுத்த இந்த ஜடாயுவை அக்னியைக் கடைந்தெடுத்துத் தகனம் செய்ய விரும்புகிறேன்" என்றார்.

லக்ஷ்மணனும் அப்படியே கட்டைகளை அடுக்க, ராமன் ஜடாயுவைப் பார்த்து, "மஹாபலவானான பக்ஷிராஜ! யாகயக்ஞங்களை எப்பொழுதும் செய்யும் கிருஹஸ்தர்களும், பஞ்சாக்னி நடுவில் தவம் செய்யும் வானப்பிரஸ்தர்களும், நிவிருத்தி மார்க்கத்திலிருந்து திரும்பாத ஸந்யாஸிகளும், ஸம்ஸார போகங்களைவிட்ட நைஷ்டிக பிரஹ்மசாரிகளும் அடையும் லோகங்களை, என்னால் ஸம்ஸ்காரம் செய்யப்பட்ட மஹிமையால் அடையக்கடவீர். என் அனுமதியால் ஸர்வ சிரேஷ்டமான விஷ்ணுலோகங்களையும் அடையக்கடவீர்" என்று, அவருடைய தேகத்தைச் சிதையில் ஏற்றி அக்னியை மூட்டி, தன் பந்துக்களை ஸம்ஸ்காரம் செய்வதுபோல், மந்திரங்களுடன் தகனம் செய்து, இறந்தவர்கள் ஸ்வர்க்கத்தை அடைவதற்காகப் பிதிருதேவதைகளைக் குறித்து ஜபிக்கவேண்டிய யாம்யஸூக்தம் முதலிய மந்திரங்களை ஜபித்தார். பிறகு வெகு துக்கத்துடன் ராமலக்ஷ்மணர்கள் காட்டிற்குள் போய், பெரிய மான்களை அடித்துக் கொண்டுவந்து, கோதாவரியில் ஸ்நானம் செய்து, அந்தப் பக்ஷிராஜனுக்கு ஜல தர்ப்பணம் செய்தார்கள். பிறகு தர்ப்பைகளைப் பரப்பி மாம்ஸத்தைப் பிண்டங்களாகப் பிடித்து இளம்புல் தரையில் விதிப்படி வைத்தார்கள். அந்தப் பக்ஷிராஜன் ஸீதையைக் காப்பாற்ற ராவணனுடன் யுத்தம்செய்து உயிரைக் கொடுத்தார். மஹரிஷிகளுக்கு ஸமமான ராமனால் ஸம்ஸ்காரம் செய்யப்பட்டு அந்த க்ஷணத்திலேயே தான் செய்த புண்ணியங்களுக்குப் பலனாக ஸர்வோத்தமமான கதியை அடைந்தார். இப்படி ஜடாயுவுக்கு ஸகல பிரேதக்கிரியைகளையும் விசேஷ சிரத்தையுடன் செய்து முடித்து, "ஸீதையை அடைவாய்" என்ற அவருடைய வார்த்தையில் பூர்ண நம்பிக்கை வைத்து, அவளைத் தேடிக் கண்டுபிடிப்பதில் ஸகல பிரயத்தனமும் செய்ய நிச்சயித்து, ராம லக்ஷ்மணர்கள் மஹாவிஷ்ணுவையும் இந்திரனையும் போல் அந்த வனத்தில் பிரவேசித்தார்கள்.

க்ருதோத3கௌ தாவபி பக்ஷிஸத்தமே
ஸ்தி2ராம் ச பு3த்3தி4ம் ப்ரணிதா4ய ஜக்3மது: |
ப்ரவேஶ்ய ஸீதாதி4க3மே ததோ மநோ
வநம் ஸுரேந்த்3ராவிவ விஷ்ணுவாஸவௌ ‖ (38)

---

## ஸர்க்கம் 69

## கபந்தன்

க்ருத்வைவ முத3கம் தஸ்மை ப்ரஸ்தி2தௌ ராமலக்ஷ்மணௌ
அவேக்ஷந்தௌ வநே ஸீதாம் பஶ்சிமாம் ஜக்3மதுர் தி3ஶம் ‖ (1)

**ஸீ**தையைத் தேடிக்கொண்டே தென்மேற்கு முகமாய்ப் போகையில், ஜனஸஞ்சாரமில்லாமல், மரம் செடி கொடி புதர்கள் அடர்ந்து, பார்க்க பயங்கரமாய் நடப்பதற்கு கஷ்டமான ஒரு வழி தோன்றிற்று. அந்த ராஜகுமாரர்கள் புலி கரடி ஸிம்ஹம் முதலிய துஷ்ட மிருகங்களால் நிறைந்த அந்த தண்டகாரண்யத்தை அதிவேகமாகத் தாண்டி, ஜனஸ்தானத்திலிருந்து ஒரு காதவழியிலுள்ள கிரௌஞ்சாரண்யத்தில் புகுந்தார்கள். அது பலவர்ணமுள்ள நீருண்ட மேகங்களைப்போல் தூரத்திலிருந்து காணப்பட்டது. எங்கே பார்த்தாலும் மலர்ந்த புஷ்பங்களால் அந்த வனம் ஸந்தோஷம் தாளாமல் சிரிப்பதுபோலிருந்தது. பல பக்ஷிகளும் மிருகங்களும் கூட்டம் கூட்டமாகப் பயமில்லாமல் ஸஞ்சரித்தன. ராமலக்ஷ்மணர்கள் அங்கே மரத்தடியில் இளைப்பாறுவதற்கு தங்கித் தங்கி ஸீதையை வெகு ஜாக்கிரதையாகத் தேடிக்

கொண்டு போனார்கள். அங்கிருந்து கிழக்கே காதவழி தூரம் போய் அந்த கிரௌஞ்சாரண்யத்தையும் தாண்டி அதற்கும் மதங்காசிரமத்திற்கும் நடுவில் ஒருபெரிய காட்டை கண்டார்கள். உயரமுள்ள மரங்களாலும் துஷ்ட மிருகங்களாலும் பக்ஷிகளாலும் நிறைந்து பிரயாணம் செய்ய மிகவும் கஷ்டமாயிருந்த அந்தக் காட்டின் வழியாகப் போகையில் பாதாளம் வரையில் ஆழமுள்ள ஒரு பெரிய குகை காணப்பட்டது. அதில் எப்பொழுதும் இருளே நிறைந்திருந்தது. ராமலக்ஷ்மணர்கள் அதன் ஸமீபத்தில் கோரரூபத்தையுடைய ஒரு ராக்ஷஸியைப் பார்த்தார்கள். அவள் மலையைப் போன்ற தேகத்தையும் பருத்த வயிற்றையும் கூர்மையான பற்களையும் கடினமான தோலையும் உடையவள். தலை மயிரை விரித்துக் கொண்டு பயங்கரமான வாயைத் திறந்துகொண்டு, அந்த வனத்திலுள்ள துஷ்ட மிருகங்களை வெகுஸுலபமாகக் கொன்று தின்று வந்தாள். அவள் ராமலக்ஷ்மணர்களைப் பார்த்துக் கோரமாகக் கர்ஜித்துக் கொண்டு ஓடிவந்து, ராமனுக்கு முன்னே போன லக்ஷ்மணனைப் பிடித்துத் தழுவி, "வா, நாமிருவரும் இந்தக் காட்டில் ஆனந்தமாகக் காலங்கழிப்போம். என் பெயர் அயோமுகி. நான் உனக்குக் கிடைத்தது உன் அதிருஷ்டமே என்று அறி. எனக்கு உன்னிடத்தில் மிகுந்த பிரீதியுண்டாயிருக்கிறது. மலைச்சிகரங்களிலும் ஆற்றுமணல் திட்டுகளிலும் நாம் உயிரோடிருக்கும் வரையில் வேடிக்கையாக ஸஞ்சரிப்போம்" என்றாள். அதைக் கேட்டு லக்ஷ்மணன் கடுங்கோபம் கொண்டு, கத்தியை உருவி அவளுடைய காதுகளையும் மூக்கையும் ஸ்தனங்களையும் அறுத்தார். உடனே அவள் கோரமாகக் கதறிக்கொண்டு வந்த வழியாக் ஓடிப் போனாள்.

பிறகு ராமலக்ஷ்மணர்கள் அந்த இருண்ட காட்டில போகும்பொழுது மஹாபலசாலியும் தெளிவான மனத்தையும் சுத்தமான தோற்றத்தையும் நல்ல நடத்தையையும் உடைய லக்ஷ்மணன், ராமனைப் பார்த்து மஹா பக்தியுடன் கைகூப்பி நமஸ்கரித்து, "அண்ணா! என் இடது தோள் அடிக்கடி துடிக்கிறது. மனம் நடுங்குகிறது. ஸமீபத்தில் நமக்கு ஏதோ கேடு நேருமென்பதைக் காட்டும் இன்னும் பல அபசகுனங்களும் தோன்றுகின்றன. ஆகையால் தாங்கள் வெகு ஜாக்கிரதையாகப் போகவேண்டும். மஞ்சுளமென்ற பக்ஷி மிகவும் கடுமையாகக் கத்துவதால் நாம் சத்துருக்களை அதிசீக்கிரத்தில் ஜெயிப்போமென்று தெரிவிக்கிறது" என்றார்.

இப்படி இருவரும் பேசிக்கொண்டு அந்தக் காட்டில் தேடுகையில், அந்த வனத்தை யாரோ அதிவேகமாக முறிப்பதைப் போன்ற ஒரு பெரும் சப்தமுண்டாயிற்று; பிரளயகால வாயுவைப்போல் ஒரு பெருங்காற்றுக் கிளம்பிற்று. அந்தச் சப்தத்தால் பூமியும் ஆகாசமும் கிடுகிடுத்தன. அது எங்கிருந்து வந்த



தென்று ராமலக்ஷ்மணர்கள் கவனித்துப் பார்க்கையில், நெடுந்தூரத்திலுள்ள ஒரு புதரில் மலையைப்போன்ற ஒரு ராக்ஷஸன் நிற்கக் கண்டார்கள். அவனுடைய பருத்த வயிறும் கோரமான ரூபமுமே முதலில் காணப்பட்டன. பிறகு கிட்டப் போய்ப் பார்க்கையில் அவனுக்குத் தலையில்லை. வயிற்றில் வாயையுடையவன். கூர்மையான அடர்ந்த மயிரையுடையவன். கறுத்த மேகத்தைப்பேர்ன்ற தேகத்தை உடையவன். மேகங்களின் கர்ஜனையைப் போன்ற குரலையுடையவன். மஞ்சள் வர்ணமுள்ள ஒரு விசாலமான கண் அக்னிஜ்வாலையைப்போல் அவனுடைய மார்பில் எரிந்து கொண்டிருந்தது. நீண்டு கூர்மையான பற்களுடன் அடிக்கடி உதடுகளை நக்கிக் கொண்டு, எப்பொழுதும் கரடி சிங்கம் மான் யானை புலி பக்ஷிகள் முதலியவற்றைத் தின்று கொண்டே இருந்தான். இவனுடைய கைகள் ஒரு யோஜனை நீளமுள்ளவை. அவைகளை நீட்டி நடுவில் அகப்பட்ட மிருகங்களையும் பக்ஷிகளையும் சேர்த்து அணைத்து, தன் வயிற்றிலுள்ள வாயில் தள்ளிக்கொண்டே இருந்தான்.

இப்படித் தங்களுடைய வழியை மறைத்துக்கொண்டிருந்த அந்த ராக்ஷஸனை ஒரு குரோச தூரத்திலேயே ராமலக்ஷ்மணர்கள் கண்டார்கள். அப்பொழுது அந்தத் தலையில்லாத முண்டமான கபந்தன், தன் கைகளின் நடுவில் அகப்பட்ட மிருகங்களுடன் ராமலக்ஷ்மணர்களையும் சேர்த்துப் பிடித்து இழுத்தான். கத்தி வில் முதலிய ஆயுதங்களை தரித்து உக்கிரமான தேஜஸுடன் மஹாபலவான்களான ராமலக்ஷ்மணர்களும் அவனுடைய பலத்திற்குட்பட்டார்கள். ராமன் மூத்தவர்; சூரர்; மஹா தைரியமுள்ளவர்; ஆகையால் கொஞ்சம் கூட பயப்படவில்லை. லக்ஷ்மணன் அவ்வளவு பக்குவமான புத்தியும் தைரியமும் இல்லாதவரானதால் அதிக வருத்தமடைந்தார். ஸகல பிராணிகளுக்கும் ஆதாரமான ரகுநாதனே கபந்தனுடைய வசத்தில் அகப்பட்டதைப் பார்த்து அவருக்கு மிகவும் அதைரியமுண்டாயிற்று. அப்பொழுது மிகுந்த வருத்தத்துடன் ராமனைப் பார்த்து, "அண்ணா! நான் இந்த ராக்ஷஸனுடைய கையில் அகப்பட்டு விட்டேன். என்னை இவனிடத்தில் விட்டுத் தாங்கள் தப்பித்துக் கொள்ளுங்கள். என்னை இவனுக்குப் பூதபலியாகக் கொடுத்துத் தாங்கள் தப்பி ஓடுங்கள். சீக்கிரத்தில் சீதையை கண்டு பிடிப்பீர்களென்று எண்ணுகிறேன். வம்ச பரம்பரையாக வந்துகொண்டிருக்கும் ராஜ்யத்தை அடைந்து தாங்கள் ஸந்தோஷமாக இருக்கும் ஸமயத்தில் என்னையும் அடிக்கடி நினைத்துக்கொள்ளும்படி பிரார்த்திக்கிறேன்." என்றார். ராமன், "குழந்தாய்! பயப்படாதே. நீ வீரனல்லவா? உன்னைப் போன்றவர்கள் இவ்விதமான கஷ்டங்கள் நேர்ந்தும் மனம் தளர்வார்களா?" என்று அவரைத் தேற்றிக் கொண்டிருந்தார். அப்பொழுது அந்தக் கொடிய ராக்ஷஸன் ராமலக்ஷ்மணர்களைப்

பார்த்து, "நீங்கள் யார்? கொழுத்த காளைகளைப்போன்ற தோள்களுடன் ஆயுதபாணிகளாக இந்தக் கோரமான தேசத்தில் எனக்கு ஆகாரமாகும்படி எங்கே வந்து சேர்ந்தீர்கள்? இங்கே உங்களுக்கு என்ன வேலை? மிகுந்த பசியுடன் இங்கே காத்துக்கொண்டிருக்கும் என் வாயில் விழுந்த பிறகு உங்களுடைய உயிரில் ஆசையை விடுங்கள்'' என்றான். ராமன் வருத்தத்தால் முகம் வாடியிருக்கும் லக்ஷ்மணனைப் பார்த்து, "ராஜ்யத்தை இழந்தது, காட்டிற்கு அனுப்பப்பட்டது, ஸீதையைப் பறிகொடுத்தது, அவளைக் காணாமல் தவிப்பது இவ்வளவு துக்கங்களும் போதாதா? அவைகளைக் காட்டிலும் இது பெரிய துக்கமாக இருக்கிறது. உயிருக்கே மோசம் வருமென்று எண்ணுகிறேன். நம்மைப் போன்றவர்களே துன்பங்களால் புத்தி மயங்கி இருக்கிறோமல்லவா? காலத்தின் மகிமை எல்லையற்றது. அதை வெல்ல ஒருவராலும் முடியாது. ஸகல பிராணிகளிடத்திலும் அது செய்யக்கூடாத காரியம் ஒன்றுமில்லை. சூரர்களும் பலவான்களும் அஸ்திர வித்தையிலும் யுத்தத்திலும் நிபுணர்களும் காலத்தின் வசத்தில் அகப்பட்டு, ஆற்று ஜலத்தால் கரைக்கப்பட்ட மணல் பாலங்களைப்போல் அழிகிறார்கள்'' என்று வருத்தமடைந்தார்.

மஹா பிரதாபசாலியும் மஹா கீர்த்திமானும் வீண்போகாத பராக்கிரமம் உடையவருமான ராமன், தன் வார்த்தைகளைக் கேட்டு லக்ஷ்மணன் தைரியமடையாததைப் பார்த்து, தனக்கு ஸ்வபாவமான தைரியத்தையும் புத்தியையும் யுக்தியையும் ஸ்திரப்படுத்திக் கொண்டார்.

இதி ப்3ருவாணோ த்3ருட4 ஸத்ய விக்ரமோ<br>
மஹாயஶா த்3ாஶரதி2: ப்ரதாபவாந் |<br>
அவேக்ஷ்ய ஸௌமித்ரி முத3க்3ர பௌருஷம்<br>
ஸ்தி2ராம் தத்3ா ஸ்வாம் மதிமாத்மநா கரோத் ॥ (51)

---

## ஸர்க்கம் 70.
## கபந்த வதம்

---

தௌது தத்ர ஸ்தி2தௌ த்3ருஷ்ட்வா ப்4ராதரௌ ராமலக்ஷ்மணௌ |<br>
பா3ஹு பாஶ பரிக்ஷிப்தௌ கப3ந்தோ4 வாக்ய மப்3ரவீத் ॥ (1)

அப்பொழுது ராமலக்ஷ்மணர்கள் தன் கைக்குள் அகப்பட்டு பயத்தால் தவிப்பவர்களைப்போல் நிற்பதைக் கண்டு கபந்தன், "நான் பசியால் வாடித் தவிப்பதைப் பார்த்து, தெய்வமே உங்களை எனக்கு ஆகாரமாக அனுப்பியிருக்க, பித்துப்பிடித்தவர்களைப்போல் ஏன் என்னைப் பார்த்துக்கொண்டு நிற்கிறீர்கள்? உங்களைக் கவனித்தால் ராஜபுத்திரர்களைப்போல் தோன்றுகிறதே'' என்று கர்ஜித்தான். அதைக்கேட்டு லக்ஷ்மணன் வருத்தமடைந்து ராமனைப் பார்த்து ஸமயோசிதமாகவும் ஹிதமாகவும், "அண்ணா! இந்த ராக்ஷஸன் நம் இருவரையும் விழுங்குவதற்குமுன் கத்திகளால் இவனுடைய புஜங்களை வெட்டித் தள்ளுவோம். கோர ரூபத்தையும் மலை போன்ற சரீரத்தையும் உடைய இவன் தன் புஜங்களின் பலத்தால் கொழுப்படைந்து, ஸகல பிராணிகளையும் ஜயித்து ஹிம்ஸித்துக் கொண்டிருக்கிறான். முடிவில் நம்மையும் கொல்லப்பார்க்கிறான். அசுவமேதம்முதலிய யாகங்களில் காட்டு மிருகங்களை பர்யக்னிகரணம் (தர்ப்பத்தைக் கொளுத்தி அவைகளின் தலைமீது சுற்றுதல்) செய்து விட்டுவிடுவதுபோல் இருந்த இடத்தை விட்டு அசையமுடியாமல் தன்னைக் காப்பாற்றச் சக்தியில்லாத இவனைக்கொல்வது நியாயமல்ல. ஆகையால் இவனுடைய புஜங்களை மாத்திரம் வெட்டித் தள்ளுவோம்'' என்றார்.



இப்படி இவர்கள் பேசிக்கொண்டிருப்பதைக் கேட்டு அந்த ராக்ஷஸன் கோபம் கொண்டு பயங்கரமாக வாயைத் திறந்து அவர்களை விழுங்க ஆரம்பித்தான். உடனே ராம லக்ஷ்மணர்கள் கத்திகளை உருவி அவனுடைய புஜங்களை அடியோடு அறுத்துத் தள்ளினார்கள். ராமன் வலது கையையும் லக்ஷ்மணன் இடது கையையும் அறுத்தவுடன், ஆகாசம் பூமி திக்குகள் நடுங்கும்படி அவன் மஹா மேகங்களைப்போல் கர்ஜித்துக்கொண்டு பூமியில் விழுந்தான். தனக்கு பிராணாதாரமான கைகள் அறுபட்டுச் சக்தியற்று ரத்த வெள்ளத்தால் நனைந்து பயத்தால் நடுங்கி மிகவும் தீனமாக, "நீங்கள் யார்?'' என்றான். லக்ஷ்மணன் "இவர் இக்ஷ்வாகு குலத்தில் பிறந்த ராஜபுத்திரன்; ராமனென்று பிரஸித்தி பெற்றவர். நான் அவருக்குத் தம்பி; என் பெயர் லக்ஷ்மணன். நாங்கள் ஜன ஸஞ்சாரமில்லாத இந்தக் காட்டில் தனியாக வஸித்துக்கொண்டிருக்கும் பொழுது, தேவதைகளைப்போல் பாராக்கிரமமுடைய இந்த ரகுநாதனுடைய பாரியையை எவனோ ஒரு ராக்ஷஸன் எடுத்துக் கொண்டு போய்விட்டான். அவனைத் தேடிக்கொண்டு இங்கே வந்தோம். நீ யார்? கபந்தத்தைப்போல் மார்பில் வாயுடன் இங்கே ஏன் திரிகிறாய்? கணுக்கால் முறிந்து பூமியில் ஏன் விழுந்து புரளுகிறாய்?'' என்றார். இந்திரன் முன்பு தனக்குச் சொன்ன வார்த்தைகள் கபந்தனுடைய ஞாபகத்திற்கு வந்தன. அவனுக்கு மிகுந்த ஸந்தோஷமுண்டாகி, "புருஷோத்தமர்களே! தங்களுக்கு நமஸ்காரம். க்ஷேமமாக வந்தீர்களா? தங்களைப் பார்த்து நான் தன்யனானேன். விலங்குகளைப்போல் என்னைத் துன்பப்படுத்திக் கொண்டிருந்த இந்தக் கைகள் தங்களால் வெட்டப்பட்டது எனக்குப் பெரிய அனுக்கிரஹம். இந்த விகாரமான ரூபம் எனக்குக்கிடைத்த காரணத்தைத் தெரிவிக்கிறேன், கேளுங்கள்'' என்றான்.

விரூபம் யச்ச மே ரூபம் ப்ராப்தம் ஹ்யவிநயாத்3 யதா2 |<br>
தந்மே ஶ்ருணு நரவ்யாக்4ரீ தத்வத: ஶம்ஸதஸ் தவ ॥ (20)

---

## ஸர்க்கம் 71

# கபந்தனுடைய பூர்வ ஜன்மம்

புரா ராம மஹாபா³ஹோ மஹாப³ல பராக்ரம |
ரூபமாஸீந் மமாசிந்த்யம் த்ரிஷு லோகேஷு விஶ்ருதம் || (1)

முன்னொரு காலத்தில் சந்திரனையும் ஸூரியனையும் இந்திரனையும் போல் அழகும் பராக்கிரமமும் பொருந்திய ரூபம் எனக்கு இருந்தது. இது மூன்று லோகங்களிலும் பிரஸித்தமான விஷயம். ஆனால் அதை மாற்றிப் பயங்கரமான ரூபத்தை எடுத்து ரிஷிகளையும் தபஸ்விகளையும் பயமுறுத்திக் கொண்டிருந்தேன். ஒரு நாள் ஸ்தூல சிரஸென்ற மஹரிஷி காட்டில் ஆகாரத்தைத் தேடிக் கொண்டிருக்கையில் நான் திடீரென்று போய் அவரைப் பயமுறுத்தி, அவருடைய கையிலிருந்த பொருள்களைப் பிடுங்கிக் கொண்டேன். அவர் கோபம் கொண்டு "நீ இப்பொழுது தரித்திருக்கும் கோர ரூபமே எப்பொழுதும் நிலைபெறட்டும். இந்தக் கொடிய ரூபத்தைப் பார்த்து பிராணிகள் யாவும் உன்னை நிந்திக்கட்டும்" என்றார். உடனே நான் பயந்து அவரை மிகவும் வணக்கமாகப் பிரார்த்தித்து, "ஸ்வாமி! என் அபராதத்தை மன்னியுங்கள். என்னிடத்தில் கிருபை செய்து இந்தச் சாபத்திற்கு ஒரு முடிவை ஏற்படுத்தவேண்டும்" என்று பிரார்த்தித்தேன். அதற்கு அவர், "ரகுநாதன் எப்பொழுது உன் புஜங்களை வெட்டி ஜனஸஞ்சாரமில்லாத காட்டில் உன்னைக்கொளுத்துவாரோ அப்பொழுது உனக்குச் சாபம் தீர்ந்து, பூர்வ ரூபமும் அளவற்ற க்ஷேமமும் கிடைக்கும்" என்று அருளினார். ஸகல ஐசுவரியங்களும் பொருந்திய நான் தனுவென்பவனுடைய புத்திரன். பிறகு நான் கடுந் தவத்தால் பிரஹ்மாவை ஸந்தோஷப்படுத்தி நீண்ட ஆயுளையும் அதிக பலத்தையும் பெற்றேன். 'இந்திரன் என்னை என்ன செய்ய முடியும்' என்று எனக்கு அடங்காத கர்வமுண்டாயிற்று. என் குலத்திற்குச் சத்துருவான தேவராஜனை ஜயிக்க நினைத்து அவரை யுத்தத்திற்கழைத்தேன். ஆயிரம் முனைகளுள்ள வஜ்ராயுதத்தை அவர் என் மேல் பிரயோகிக்க, அது என் தலையை மார்பிலும் கால்களை வயிற்றிலும் அழுத்திவிட்டது. "என் பிராணனைக் காப்பாற்ற வேண்டும்" என்று அவரைக் கெஞ்சிக் கேட்டேன். அவர் என்னிடத்தில் இரக்கம் வைத்து "பிரஹ்மாவின் வரம் பொய்யாகக் கூடாது. ஆகையால் நீ தப்பினாய்" என்று என்னைக் கொல்லாமல் விட்டார். ஸ்வாமி! வஜ்ராயுதத்தால் அடிபட்டுக் கழுத்தும் கால்களும் ஒடிந்து, ஆகாரமின்றி, வெகுகாலம் எப்படிப் பிழைத்திருப்பேன்" என்று பிரார்த்தித்தேன். அப்பொழுது இந்திரன் எனக்கு வயிற்றில் வாயையும் கூர்மையான பற்களையும் ஒரு யோஜனை நீளமுள்ள கைகளையும் ஏற்படுத்தி, "ராமலக்ஷ்மணர்கள் எப்பொழுது உன் புஜங்களை வெட்டித் தள்ளுவார்களோ அப்பொழுது ஸ்வர்க்கத்திற்கு வருவாய்" என்றார்.



அது முதல் இந்தக் காட்டிலுள்ள எல்லா மிருகங்களையும் என் கைகளால் இழுத்து நசுக்கித் தின்றுகொண்டிருக்கிறேன். எந்தப் பிராணி அகப்பட்டாலும் விடுவதில்லை. மஹரிஷியின் வார்த்தையில் எனக்குள்ள நம்பிக்கையால் ராமன் என்னிடத்தில் எப்படியாவது அகப்படுவாரென்ற எண்ணத்துடன் இந்த விகாரமான தேகத்தை எப்பொழுது விடுவேனோ என்று காத்துக் கொண்டிருக்கிறேன். "உன்னைக் கொல்ல வேறு எவராலும் முடியாது" என்று அந்த மஹரிஷி சொல்லியிருக்கிறபடியால், தாங்களே ராமனென்பதில் ஸந்தேகமில்லை. ஜானகியைக் கண்டு பிடிக்க ஒரு உபாயம் சொல்லுகிறேன். அதற்குத் தகுந்த மித்திரனைக் காட்டுகிறேன். ஆனால் என்னை நீங்கள் கொளுத்தினாலொழிய அது என்னால் முடியாது" என்றான்.

ராமன் அவனைப்பார்த்து, "நானும் என் தம்பியும் ஜனஸ்தானத்தில் வஸித்துக்கொண்டிருந்தோம். ஒரு நாள் வெளியில் போயிருக்கும்பொழுது ராவணனென்ற ராக்ஷஸன் என் பாரியையை அபஹரித்தான். அவனுடைய பெயர் மாத்திரம் எங்களுக்குத் தெரியுமே தவிர அவனுடைய ரூபமாவது இருப்பிடமாவது பராக்கிரமமாவது தெரியாது. சோகத்தால் பீடிக்கப்பட்டு அநாதைகளாக இப்படித் திரியும் ஜனங்களுக்குப் பரோபகாரம் செய்வது உன்னைப் போன்றவர்களுக்குத் தகும். பெரிய குழியை வெட்டி, யானைகளால் இந்தக் காட்டில் முறித்துத் தள்ளப்பட்ட உலர்ந்த கட்டைகளை அதில் அடுக்கி, உன்னை எரிக்கிறோம். பிறகு நீ உனக்குத் தெரிந்த வரையில் ஸீதையை எவன் அபகரித்தான்? எவ்விடத்தில் வைத்திருக்கிறான் என்பதைச் சொல்லவேண்டும்" என்றார்.

அப்பொழுது தனு வெகுசாதுரியமாக "இந்தக் தேகம் எரிந்து முன் தேகம் கிடைத்தவுடன் ஸீதையின் வரலாற்றை அறிந்தவனைக் கண்டுபிடித்துச் சொல்லுகிறேன். ஆனால் அதை நேரில் அறியக்கூடிய திவ்யஞானம் எனக்கில்லை. இந்த ஞானமும் சாபத்தால் வந்த இந்த தேகம் அழிந்த பிறகே உண்டாகும். இப்பொழுது சாபத்தால் என் ஞானம் மறைந்திருக்கிறது. நான் செய்த பாபத்தால் லோகத்தார் நிந்திக்கும் இந்த விகார ரூபம் எனக்குக் கிடைத்தது. ஸூரியன் அஸ்தமிக்கும் முன்பு என் தேகத்தைக் குழியில் தள்ளிக் கொளுத்த வேண்டும். அந்த ராக்ஷஸனை அறியக்கூடியவனைப் பிறகு தெரிந்து சொல்லுகிறேன். அந்த ஸாதுவுடன் நீங்கள் ஸ்நேஹம் செய்ய வேண்டும். அந்த மஹாபராக்கிரமசாலி தங்களுக்குப் பூர்ணமாக உதவி செய்வான். அவனுக்கு மூன்று லோகங்களிலும் தெரியாத விஷயம் கிடையாது. முன்பு ஒரு ஸமயத்தில் ஏதோ காரணத்தால் அவன் ஸகல லோகங்களையும் சுற்றித் திரிந்திருக்கிறான்" என்றான்.

ந ஹி தஸ்யாஸ்த்யவிஜ்ஞாதம் த்ரிஷு லோகேஷு ராக⁴வ |
ஸர்வாந் பரிஸ்ருதோ லோகாந் புராஸௌ காரணாந்தரே || (33)

## ஸர்க்கம் 72

# கபந்த சாபவிமோசனம்

ஏவமுக்தௌ து தௌ வீரௌ கப³ந்தே⁴ந நரேஸ்வரௌ |
கி³ரி ப்ரத³ர மாஸாத்³ய பாவகம் விஸஸர்ஜது: ‖ (1)

பிறகு ராமலக்ஷ்மணர்கள் ஒரு பெரிய குழியை வெட்டி, பெரிய கட்டைகளை அடுக்கி, அவைகளில் கபந்தனுடைய சரீரத்தைத் தள்ளினார்கள். லக்ஷ்மணன் கொள்ளிக்கட்டைகளால் நான்கு புறத்திலும் தீ மூட்டினார். கொழுப்பாலும் தசையாலும் மாம்ஸத்தாலும் நிறைந்த அந்த தேகம் நெய்யால் செய்யப்பட்ட மலையைப்போல் மெள்ள மெள்ள எரிந்தது. அப்பொழுது புகையில்லாத அக்னியைப்போல் அந்தச் சிதையிலிருந்து கபந்தன் எழுந்து, திவ்விய வஸ்திராபரணங்களாலும் மாலைகளாலும் அலங்கரிக்கப்பட்டு, ஹம்ஸங்களால் இழுக்கப்பட்ட விமானத்திலேறி, தன் தேஜஸால் எல்லா திக்குகளும் பிரகாசிக்க, ஆகாசத்திலிருந்தே, "ராம! ஸீதையைக் கண்டுபிடிக்கும் உபாயத்தைச் சொல்லுகிறேன். ஸந்தி விக்கிரஹம் யானம் ஆஸனம் துவைதீபாவம்ஸமாச்ரயமென்று ஆறுஉபாயங்கள் லோகத்தில் வழங்குகின்றன. அவைகளை நன்றாக அறிந்து, தகுந்த ஸமயங்களில் உபயோகிப்பதால் அரசர்களுக்கு ஜயமும் க்ஷேமமும் கிடைக்கின்றன. கஷ்ட தசையை அடைந்தவன் தன்னைப்போல் கஷ்டப்படும் ஒருவனுடன் சேர்ந்தே காரியத்தை முடித்துக்கொள்ள வேண்டும். உங்களுக்கு நேர்ந்த கஷ்டங்களால் நீங்கள் இப்பொழுது தாழ்ந்த நிலைமையை அடைந்தவர்களென்று எளிதில் தெரிந்துகொள்ளலாம். ஆகையால் தகுந்த மித்திரனுடைய உதவியை நீங்கள் ஸம்பாதிக்கவேண்டும். நான் எவ்வளவு யோசித்துப் பார்த்தும், உங்களைப்போல் கஷ்டப்பட்டு உங்களுடைய ஒத்தாசையை விரும்பும் மித்திரனை நீங்கள் சேர்த்துக்கொள்ளாவிட்டால் உங்கள் காரியம் கைகூடாதென்று தோன்றுகிறது. பம்பை என்ற ஏரிக்கு ஸமீபத்திலுள்ள ரிசியமூகபர்வதத்தில் ஸுக்ரீவனென்று ஒரு வானரராஜன் இருக்கிறான். இந்திரனுடைய புத்திரனான வாலி என்ற அவனுடைய அண்ணன் அவனிடத்தில் கோபம் கொண்டு அவனை ராஜ்யத்திலிருந்து துரத்தி விட்டான். இப்பொழுது அவன் தன்னிடத்தில் மிகுந்த பக்தியுள்ள நான்கு வானர வீரர்களுடன் தனியாக வஸித்துக்கொண்டிருக்கிறான். அவன் உங்களைப்போல் உத்தம குணங்கள் பொருந்தினவன்; நிகரற்ற தேஜஸும் வீரியமும் காந்தியும் வாய்ந்தவன்; ஸத்தியம் தவறாதவன்; ஸாதுக்களால் பழக்கப்பட்டவன்; மஹா தைரியசாலி; மஹாபுத்திமான்; ஸமர்த்தன்; மேன்மேலும் தோன்றும் யுக்தியை உடையவன். எல்லையற்ற பல பராக்கிரமமுடையவன்; உங்களைப்போல் மிகுந்த கஷ்டங்களை அனுபவித்தவன். அவனுடைய அண்ணன் அவனிடத்திலிருந்து ராஜ்யத்தைப் பிடுங்கிக்கொண்டு அடித்துத் துரத்திவிட்டான். ஸீதையைத் தேடிக்கொண்டு வருவதில் உங்களுக்கு ஸகல உதவியையும் செய்யக் கூடியவன் இவனே. இதைப்பற்றிக் கொஞ்சம் கூடக் கவலைப்பட வேண்டாம். கர்மகதியின்படி நடக்கவேண்டிய காரியங்கள் நடந்தே தீரும்; அவைகளை மாற்ற முடியாது. காலத்தை ஜயித்தவர்கள் உண்டோ?

இப்பொழுதே இங்கிருந்து போய் அந்த ஸுக்ரீவனைக் கண்டுபிடித்து, ஒருவருக்கொருவர் துரோகமின்றி உதவி செய்யும் பொருட்டு அக்னியை ஸாக்ஷியாக வைத்துக்கொண்டு ஸ்நேஹம் செய்யுங்கள். இந்தக் குரங்கு நமக்கு என்ன உதவி செய்யுமென்று அவனை அலக்ஷ்யம் செய்யவேண்டாம். அவன் ஸகல வானரர்களுக்கும் அதிபதி, நன்றியுள்ளவன், மஹாவீரன்; நினைத்த ரூபங்களை எடுக்கக்கூடியவன், உங்களுடைய உதவியை வேண்டினவன், நீங்களும் அவனுக்கு ஆகவேண்டியவைகளை முடிக்கக்கூடியவர்கள். அப்படிச் செய்யாவிட்டாலும் உங்கள் காரியத்தை முடித்துக் கொடுப்பான். அவன் ரிக்ஷராஜனின் புத்திரன்; ஸூரியனுக்குப் பிறந்தவன். இப்பொழுது வாலிக்குப் பயந்து பம்பைக் கரையில் மறைந்திருக்கிறான். நீங்கள் அவனைக் கண்டுபிடித்து அக்னியையும் ஆயுதங்களையும் ஸாக்ஷியாக வைத்துக்கொண்டு என்றும் அழியாத ஸ்நேஹத்தைச் செய்யுங்கள். இந்த லோகத்தில் ராக்ஷஸர்கள் வஸிக்கும் ஸகல இடங்களையும் அவன் அறிவான். ஸூரியனுடைய பிரகாசம் எட்டும் வரையிலுள்ள பிரதேசங்களில், மலைகளையும் ஆறுகளையும் குகைகளையும் ஏரிகளையும் வனங்களையும்ஸமுத்திரங்களையும் த்வீபங்களையும் தன்னைச் சேர்ந்த வானரர்கள் மூலம் கண்டு, எப்படியாவது ஸீதையிருக்குமிடத்தைக் கண்டுபிடிக்க, பெரிய மலைகளைப்போன்ற சரீரங்களுள்ள வானர வீரர்களை எல்லா திக்குகளிலும் அனுப்புவான். தங்களைவிட்டுப் பிரிந்து துக்கத்தால் தவிக்கும் ஸீதை ராவணனுடைய ராஜதானியான லங்கையிலிருந்தாலும் மேருமலைச் சிகரத்திலிருந்தாலும் பாதாளத்திலிருந்தாலும் இன்னும் எவ்விடத்திலிருந்தாலும் அவளைத் தேடிக் கண்டுபிடித்து ராக்ஷஸர்களை நாசம் செய்து, ஸீதையைக் கொண்டுவந்து தங்களிடத்தில் ஒப்புவிப்பான்" என்றான்.

ஸ மேரு ஶ்ருங்கா³க்³ர க³தா மநிந்தி³தாம்
ப்ரவிஶ்ய பாதால தலேபி வா ஶ்ரிதாம் |
ப்லவங்க³மாநாம் ப்ரவரஸ் தவ ப்ரியாம்
நிஹத்ய ரக்ஷாம்ஸி புந: ப்ரதா³ஸ்யதி ‖ (26)

## ஸர்க்கம் 73

# கபந்த மோக்ஷம்

*நித³ர்ஶயித்வா ராமாய ஸீதாயா: ப்ரதிபாத³நே |*
*வாக்ய மந்வர்த²மர்த²ஜ்ஞ: கப³ந்த⁴: புநரப்³ரவீத் ||* (1)

இப்படி கபந்தன் ஸீதையை அடையும் உபாயத்தை ராமனுக்குத் தெரிவித்து, "இதோ மேற்கே போகிற வழி ரிச்யமூக பர்வதத்திற்கு உங்களைக் கொண்டுபோய்விடும். நாவல் மூரளஞ்செடி பலா இச்சிலிஆல் தும்பை அரசுமலைக் கோங்கு மா தவம் நாககேஸரம்மஞ்சாடி புங்கை கருத்த அசோகம் கடம்பு அலரி அசோகம் சிவப்புச் சந்தனம் வேம்பு முதலிய அநேக விருக்ஷங்கள் பழங்களால் நிறைந்திருப்பதைப் பாரும். அவைகளிலிருக்கும் பழங்களைப் பறித்தாவது அடித்தாவது தின்றுகொண்டு பிரயாணம் செய்யவேண்டும். அதைத் தாண்டிப் போனால் நந்தனமென்ற ஸ்வர்க்க லோகத்துத் தோட்டத்தைப் போலும், உத்தரகுரு தேசத்திலுள்ள வனங்களைப்போலும் அழகிய ஒரு காடு தோன்றும். சைத்ரரதமென்ற தோட்டத்தைப்போல் அங்கே எப்பொழுதும் எல்லா ருதுக்களிலும் உண்டாகும் புஷ்பங்களும் பழங்களும் வளரும். மரங்களிலிருந்து தேன் வெள்ளமாக ஓடும். மரங்கள் பழங்களால் வணங்கி விசாலமான கிளைகளுடன் மேகங்களையும் மலைகளையும்போல் விளங்கும். அவைகளிலுள்ள அமிருதத்தைப்போன்ற பழங்களை அடித்தாவது ஏறிப்பறித்தாவது லக்ஷ்மணன் தங்களுக்குக் கொடுப்பார். அங்கிருந்து காடுகளையும் மலைகளையும் பல இடங்களையும் தாண்டிப் பம்பைக் கரைக்கு வருவீர்கள்.

கால்களில் குத்தும்படியான சிறிய கற்கள் அங்கே இல்லை; கரைகள் இடிந்திராது; இறங்கும் துறைகள் அதிக ஆழமில்லை; பாசி படர்ந்திராது; பொடி மணல் படிந்திருக்கும்; தாமரை செங்குவளை வெண் குவளை முதலிய புஷ்பங்கள் அழகாக மலர்ந்திருக்கும்; அன்னங்கள் கிரௌஞ்சங்கள் நீர்க்காக்கைகள் மதுரமாகக் கத்தும்; மனிதர்களால் தங்களுக்குக் கெடுதி நேருமென்று அவையறியாததால் உங்களைக் கண்டு பயப்படாது. நெய்க்கட்டிகளைப் போன்ற அந்த கொழுத்த பக்ஷிகளையும், செங்கயல் அயிரை முதலிய பலவித மான்களையும் லக்ஷ்மணன் பாணங்களால் அடித்து, தோலையும் இறகுகளையும் நீக்கி, நெருப்பில் வாட்டிப் பக்குவம் செய்து தங்களுக்குக் கொடுப்பார். தாங்கள் அதைப் புஜித்துத் தாமரை இலையில் கொண்டுவந்து கொடுக்கப்பட்ட சுத்தமான ஜலத்தைக் குடியுங்கள். அது தாமரைகளின் வாஸனையுடன் கூடிக் குளிர்ந்து வெள்ளியைப் போலும் ஸ்படிகத்தைப்போலும் தெளிந்து, தேகத்திற்கு மிகுந்த ஆரோக்கியத்தைக் கொடுக்கும். அங்குள்ள மலைக் குகைகளிலிருந்து பல பெரும் பன்றிகள் விசித்திரமான ரூபங்களுடன் விருஷபங்களைப்போல் கத்திக்கொண்டு அந்த ஏரியில் ஜலம் குடிக்கவரும். ஸாயங்காலத்தில் அங்கே உலாவும்பொழுது புஷ்பங்களால் நிறைந்த மரங்களையும் மலர்ந்த தாமரை கருநெய்தல் குவளை ஆம்பல் முதலிய புஷ்பங்களால் அலங்கரிக்கப்பட்டிருக்கும் பம்பையின் குளிர்ந்த ஜலத்தையும் பார்த்து, தங்களுடைய துக்கத்தை மறப்பீர்கள். அந்த வனம் மிகவும் விஸ்தாரமானதாலும் புஷ்பங்கள் அதிகமானதாலும் மதங்கரிஷியின் சிஷ்யர்கள் சபிப்பார்களென்ற பயத்தாலும் அவைகளை ஒருவரும் பறிப்பதில்லை; அவை வாடுவதில்லை; உதிர்வதுமில்லை. அந்த மஹரிஷிகள் அங்கே தவம் செய்துகொண்டிருக்கையில் ஆகாரம் தேட அடிக்கடி அந்த வனத்தில் ஸஞ்சரிப்பார்கள். பழங்களையும் கிழங்குகளையும் புஷ்பங்களையும் விறகுகளையும் பெரும் சுமைகளாக, தங்கள் குருவின் ஆசிரமத்திற்குக் கொண்டுவரும்பொழுது அவர்களுடைய தேகத்திலிருந்து விழுந்த வியர்வைத் துளிகள் காற்றால் மரங்களின்மேல் அடிக்கப்பட்டு புஷ்பமாலைகளாக மாறின. அந்த ரிஷிகளுடைய தபோமஹிமையால் அவை அழிவதில்லை.

சபரி என்ற ஒரு பெண் ஸந்யாஸி வெகுகாலமாக அவர்களுக்குப் பணிவிடை செய்துவருகிறாள். அவள் மிகவும் வயது சென்றவள். தேவர்களுக்கு ஸமமாகவும் ஸகல பிராணிகளாலும் பூஜிக்கப்பட்டவராகவுமிருக்கும் தங்களைத் தரிசித்த பிறகே தேகத்தைவிட வேண்டுமென்று காத்துக்கொண்டிருக்கிறாள். பம்பைக்கு மேற்குக் கரையில் அந்த ரிஷிகளின் ஆசிரமம் ஒரு ரஹஸ்யமான இடத்தில் இருக்கிறது. அந்த வனத்திலும் ரிசியமூக பர்வதத்திலும் பல யானைகளுண்டு. ஆனால், மதங்கரிஷியின் கட்டளையால் அவை அந்த ஆசிரமத்திற்கு ஸமீபத்தில் வருவதில்லை. நந்தனமென்ற இந்திரனுடைய தோட்டத்தைப்போல் அழகிய அந்த வனத்தில் வெகு ஸந்தோஷத்துடன் எல்லாத் துக்கங்களையும் மறந்து வஸிப்பீர்கள்.

ரிசியமூகபர்வதம் பம்பைக்குக் கீழ்க்கரையிலிருக்கிறது. முன் காலத்தில் பிரஹ்மா அதற்கு ஒரு மஹிமையை ஏற்படுத்தினார். அதன் உச்சியில் ஒருவன் படுத்துத் தூங்கினால் கனவில் எந்த ஐசுவரியத்தைக் காண்கிறானோ அதை விழித்துக்கொண்டவுடன் அடைகிறான். துஷ்டர்களும் பாபிகளும் அதில் ஏறத் துணிவதில்லை. ஏறினால் தூங்கும்பொழுது ராக்ஷஸர்கள் அவர்களைத் தூக்கிக் கொண்டு போய் அடித்துவிடுகிறார்கள். புஷ்பங்களால் மறைந்த அந்த மலையிலும் அதைச் சுற்றின காடுகளிலும் யானைக் குட்டிகள் அதிகமானதால் அதில் ஏறுவது ஸாத்தியமல்ல. அவை பம்பைக் கரையில் விளையாடும்பொழுது வீறிடும் பெரிய சப்தம் வெகுதூரம் கேட்கப்படும். யானைகள் ஒன்றோடொன்று சண்டையிட்டு ரத்தம் பெருகக் கறுத்த மேகங்களைப்போல் அங்குமிங்கும் ஓடிக் கொண்டிருக்கும். அவை பம்பையின் குளிர்ந்த ஜலத்தைக் குடித்து ஸந்தோஷமாக

அதையடுத்த காடுகளில் கூட்டம்கூட்டமாகத் திரிகின்றன. அங்கே கரடிகளையும் சிறுத்தைகளையும் செந்நாய்களையும் மான்களையும் இன்னும் விசித்திரமான பல மிருகங்களையும் கண்டு ஸந்தோஷிப்பீர்கள்.

அந்த மலையில் ஒருபெரிய குகை உண்டு. அது கற்பாறையால் மூடப்பட்டிருக்கிறது. அதற்குக் கிழக்கில் குளிர்ந்த ஜலத்தால் நிறைந்த ஒரு பெரிய மடு உண்டு. அங்கே பழம் கிழங்கு முதலிய பொருள்கள் வேண்டியவரையில் கிடைக்கும். பல வகைப் பக்ஷிகளாலும் மிருகங்களாலும் நிறைந்திருக்கும். ஸுக்ரீவன் நான்கு வானர வீரர்களுடன் அங்கே வஸித்துக் கொண்டிருக்கிறான். ஒருவேளை அந்த மலையின் உச்சியிலும் இருப்பான்'' என்று மேல் நடக்க வேண்டிய காரியங்களை ராம லக்ஷ்மணர்களுக்கு உபதேசித்து, அவர்களிடத்தில் உத்திரவு பெற்றுக் கொள்ளக் காத்திருந்தான். அவர்கள் அவனுக்கு ஸமீபத்தில் போய் வெகு ப்ரீதியுடன், "நீ உத்தம லோகங்களை அடையக் கடவாய். போய் வா'' என்று அனுமதி கொடுத்தார்கள். அவன், "நீங்கள் உத்தேசித்த காரியம் கைகூடும். போய் வாருங்கள்'' என்று விமானத்தில் ஏறிப் போனான்.

இப்படிக் கபந்தன் பூர்வ ரூபத்தை அடைந்து ஸூரியனைப் போல் ஜ்வலிக்கும் தேகத்துடன், "ராம! ஸுக்ரீவனுடைய ஸ்நேஹத்தை ஸம்பாதித்துக் கொள்'' என்று அவருக்கு உபாயத்தைச் சொல்லி ஸ்வர்க்கத்திற்குப் போனான்.

ஸ தத் கப3ந்த4: ப்ரதிபத்3ய ரூபம்
வ்ருத: ஶ்ரியா பா4ஸ்கர துல்ய தே3ஹ: |
நித3ர்ஶயந் ராமமவேக்ஷ்ய க2ஸ்த2:
ஸக்2யம் குருஷ்வேதி தத3ாப்4யுவாச || (45)

---

## ஸர்க்கம் 74

## சபரீ மோக்ஷம்

---

தௌ கப3ந்தே4ந தம் மார்க3ம் பம்பாயா த3ர்ஶிதம் வநே |
ப்ரதஸ்த2துர் தி3ஶம் க்3ருஹ்ய ப்ரதீசீம் ந்ருவராத்மஜௌ || (1)

கபந்தன் காட்டிய வழியாக ராமலக்ஷ்மணர்கள் மேற்கு முகமாகப் பிரயாணம் செய்து, மதுரமான பழங்கள் நிறைந்த பல மரங்களைப் பார்த்துக்கொண்டே போனார்கள். அன்று ராத்திரியில் அந்த மலையில் தங்கி மறுநாள் பம்பையின் மேற்குக் கரையிலுள்ள சபரியின் ஆசிரமத்திற்குப் போனார்கள். வயது சென்ற சபரி அவர்கள் வருவதைக் கண்டு எழுந்து கைக்கூப்பி ராம லக்ஷ்மணர்களை ப்ரதக்ஷிணம் செய்து நமஸ்கரித்து, அர்க்யம்



மயா து விவிதம் வந்யம் ஸஞ்சிதம் புருஷர்ஷப |
தவார்தே புருஷவ்யாக்ர பம்பாயாஸ்தீர ஸம்பவம் ॥

—ஆ. 74 ஸ - 17 ச.

தாங்கள் இந்த வனத்தில் பிரவேசித்து சித்திர கூடத்தில் வந்தது முதல் இங்கே கிடைக்கும் பலவித ஆகார பதார்த்தங்களைத் தங்களுக்காக ஸம்பாதித்து வைத்திருக்கிறேன்.

(பக்கம் 199 பார்க்க)

பாத்யம் ஆசமனீயம் முதலியவைகளால் விதிப்படிப் பூஜித்தாள். அப்பொழுது ராமன் மஹாதபஸ்வியான சபரியைப் பார்த்து "அம்மா! உன் தவம் விக்கினமில்லாமல் வளர்கிறதா? கோபத்தை ஜயித்தாயா? ஆகார நியமத்தை அனுஷ்டிக்கிருயா? விரதங்களை விதிப்படி நடத்தி வருகிருயா? சாந்தியும் ஸந்தோஷமும் மனத்தில் நிறைந்திருக்கின்றனவா? நீ செய்த குருசுச்ருஷை பயன் பெற்றதா?" என்று க்ஷேமம் விசாரித்தார்.

அதைக் கேட்டுச் சபரி எழுந்து கைகூப்பி வணக்கமாக, "ஸ்வாமி! இன்று தங்கள் தரிசனம் கிடைத்தபடியால் என் தவம் ஸித்தியடைந்தது. நான் செய்து வந்த தவமும் குருசுச்ருஷையும் இன்றுதான் பயன் பெற்றன. ஸகலதேவர்களுக்கும் நாதனை தங்களை தரிசித்த பிறகு நான் பரமபதத்தை அடைவேன் என்பதில் ஸந்தேகமுண்டா? யாதொரு காரணமும் இல்லாமல் பெருகும் தங்களுடைய கிருபாகடாக்ஷ வெள்ளத்தால் நான் இது வரையில் செய்த பாபங்களிலிருந்து விடுபட்டேன். பக்தர்களுக்கு நேரும் எல்லா இடையூறுகளையும் நாசம் செய்பவரே! என் பிராரப்த கர்மத்தால் இனி நேரும் பாபங்களிலிருந்தும் விடுபட்டேன். ஆசாரிய கிருபையை முன்னிட்ட தங்களுடைய அனுக்கிரஹத்தால் நித்தியமான வைகுண்டத்தை அடைவேன். 'ஆனால் உன் ஆசாரியர்களுடன் நீயும் ஏன் போகவில்லை?' என்றால், தாங்கள் சித்திரகூடத்திலிருக்கும்பொழுது ஆசாரியர்கள் இங்கிருந்து திவ்விய விமானங்களில் ஏறிப் பரமபதத்திற்குப் போனார்கள். மூன்று காலங்களையும் அறிந்த அந்த மஹாத்மாக்கள், யோகம் முதலிய ஸாதனங்களால் பகவானை அடைய எனக்கு அதிகாரமில்லை என்றும் ஆசாரியனுடைய கிருபையால் எனக்குப் பகவானுடைய கிருபை கிடைக்க வேண்டுமென்றும் அறிந்து, என்னைப்பார்த்து, "ராமன் இந்தப் புண்யாசிரமத்திற்கு வருவார். அவரையும் லக்ஷ்மணனையும் நீ மஹாபக்தியுடன் உபசரிக்க வேண்டும். அவரைத் தரிசித்த மஹிமையால் அழிவற்ற பரமபதத்தை அடைவாய்" என்று அனுக்ரஹித்தார்கள். தாங்கள் இந்த வனத்தில் பிரவேசித்துச் சித்திர கூடத்தில் வந்தது முதல் இங்கே கிடைக்கும் பலவித ஆகார பதார்த்தங்களைத் தங்களுக்காக ஸம்பாதித்து வைத்திருக்கிறேன். நான் வெகு ஜாக்கிரதையாக இவைகளைப் பரீக்ஷித்துப் பார்த்து மதுரமான வஸ்துக்களென்று கண்டிருக்கிறேன். தாங்கள் இதை அங்கீகரிக்கும்படி பிரார்த்திக்கிறேன்" என்று தெரிவித்துக்கொண்டாள்.

ஜாதியில் தாழ்ந்தவளானாலும் ஆசாரியனுடைய கிருபையால் பிரஹ்மக்ஞானியான அந்தச் சபரி, பகவானுக்கு மிகவும் அந்தரங்கமானவள். ஆகையால் ராமன், "அம்மா! தனு என்பவன் மஹாத்மாக்களான உன் ஆசாரியர்களின் மஹிமையை விசேஷமாக எனக்கு எடுத்துச் சொல்லியிருக்கிறான். அதை

எனக்குக் காட்ட இஷ்டமிருந்தால் நேரில் பார்க்க விரும்புகிறேன்'' என்றார்.

அதைக் கேட்டு சபரி அதிக ஆனந்தமடைந்து ராமலக்ஷ்மணர்களுக்கு அந்த வனத்திலுள்ள விசேஷங்களைக் காட்டி, "மிருகங்களாலும் பக்ஷிகளாலும் நிறைந்து மேகக்கூட்டங்களைப்போல் விளங்கும் இந்தப் பெரிய மதங்க வனத்தைப் பாருங்கள்; இவ்விடத்தில் மஹாஞானிகளான என் குருக்கள் மந்திர பலத்தால் வருவித்த கங்கை முதலிய புண்ணிய தீர்த்தங்களைப் பாருங்கள். விஷ்ணுவிற்காக மேற்கு முகமாக ஏற்படுத்தப்பட்ட பூஜாஸ்தானங்களைப் பாருங்கள். என் ஆசாரியர்கள் வயதாலும் உபவாஸங்களாலும் மெலிந்து கை நடுங்க ஒவ்வொரு நாளும் புஷ்பங்களால் அர்ச்சித்து வந்தார்கள். அவர்களுடைய தபோமஹிமையால் இந்தப் பூஜா ஸ்தலங்கள் இப்பொழுதும் மஹாகாந்தியுடன் ஸகல திக்குகளையும் பிரகாசிக்கச் செய்கின்றன. விரதங்களாலும் உபவாஸங்களாலும் நடக்கச் சக்தியில்லாமல், நினைத்த மாத்திரத்திலேயே, ஏழு ஸமுத்திரங்களையும் இங்கே வருவித்து ஸ்நானம் செய்து வந்தார்கள். இந்த மரங்களில் அவர்கள் உலரவைத்த மரவுரிகள் அவர்களுடைய தேகத்தில் பட்ட மஹிமையால் இன்னும் உலரவில்லை. அவர்கள் மஹாபக்தியுடன் தேவதைகளுக்கு ஸமர்ப்பித்த மாலைகள் இப்பொழுதும் வாடவில்லை. இந்த வனத்திலுள்ள ஆச்சரியங்களைத் தங்களுக்குக் காட்டி எனக்குத் தெரிந்தவரையில் சொன்னேன். இப்பொழுது தங்களுடைய உத்தரவால் இந்தத் தேகத்தை விட விரும்புகிறேன். நான் இவ்வளவு காலமாக பக்தியுடன் பணிவிடை செய்துவந்த அந்த மஹாத்மாக்களுடைய ஸமீபத்தில் போய் அவர்களுக்குக் கைங்கரியம் செய்ய விரும்புகிறேன்'' என்று பிரார்த்தித்தாள்.

இப்படித் தன் ஆசாரியர்களிடத்தில் மிக்க பிரேமையுடன் அவர்களுடைய மஹிமையை வர்ணித்த சபரியால் ராமலக்ஷ்மணர்கள் மிகவும் ஸந்தோஷமடைந்து, "இன்று இந்த அத்புதங்களைப் பார்க்க நமக்குக் கிடைத்தது'' என்றார்கள். பிறகு ராமன், "அம்மா! நீ எனக்கென்று வெகுநாளாகச் சேர்த்துவைத்த இந்தப் பதார்த்தங்களால் மிக்க ஸந்தோஷமடைந்தேன். உனக்குக் குருக்களிடத்திலுள்ள பக்தியையும் நீ அவர்களுக்குச் செய்த பணிவிடையையும் பார்த்து, என்னை ஸகல உபசாரங்களாலும் பூஜித்ததுபோல் திருப்தியடைந்தேன். உனக்கு இஷ்டமான லோகங்களை அடைவாய்'' என்றார்.

உடனே சபரி அக்னியை மூட்டி அதில் தன் ஜீர்ணமான தேகத்தைப் போட்டு, அதிலிருந்து மஹாப்பிரகாசமுள்ள திவ்விய தேகத்துடன் கிளம்பினாள். திவ்யாபரணங்களாலும் மாலைகளாலும் சந்தனத்தாலும் வஸ்திரங்களாலும் அலங்கரிக்கப்பட்டு மின்னற் கொடிபோல் எங்கும் விளங்கச் செய்து, தன் ஆசாரியர்களான மஹரிஷிகள் அடைந்த அழிவில்லாத புண்ணியலோகத்தை (பரமபதத்தை) தானும் ஆத்மயோகத்தால் அடைந்தாள்.



யத்ர தே ஸுக்ருதாத்மானோ விஹரந்தி மஹர்ஷய: |
தத் புண்யம் ஶப³ரீ ஸ்தா²நம் ஜகா³மாத்ம ஸமாதி⁴நா || (35)

## ஸர்க்கம் 75

## ராம லக்ஷ்மணர்கள் பம்பைக் கரைக்கு வந்தது

தி³வம் து தஸ்யாம் யாதாயாம் ஶப³ர்யாம் ஸ்வேந தேஜஸா |
லக்ஷ்மணேந ஸஹ ப்⁴ராத்ரா சிந்தயாமாஸ ராக⁴வ: || (1)

தன் மஹிமையால் சபரி வைகுண்டத்தை அடைந்த பிறகு ராமலக்ஷ்மணர்கள், அந்த மஹாத்மாக்களின் விருத்தாந்தத்தை நினைத்துக்கொண்டு சற்று நேரம் அங்கே இருந்தார்கள். பிறகு ராமன் தன் கைங்கரியத்திலேயே நாடிய மனத்தையுடைய லக்ஷ்மணனைப் பார்த்து, "குழந்தாய்! இந்த புண்ணியமான ஆசிரமத்தையும் இதிலுள்ள ஆச்சரியங்களையும் பார்க்கும்படி இன்று நமக்குக் கிடைத்தது. இங்கே வஸிக்கும் மான்களும் புலிகளும் பக்ஷிகளும் ஒன்றிற்கொன்று ஹிம்ஸை செய்யாமல் ஸுகமாக வாழ்கின்றன. இந்த ஏழு ஸமுத்திரங்களிலும் ஸ்நானம் செய்து பிதிருக்களுக்கு விதிப்படி தர்ப்பணம் செய்தோம். நம்மைப் பிடித்திருந்த அசுபங்கள் தொலைந்தன. க்ஷேமம் பிறந்ததென்ற நம்பிக்கையால் என் மனத்தில் மிகவும் ஸந்தோஷமுண்டாகி இருக்கிறது. நமக்கு ஸமீபத்தில் மங்களமுண்டாகும். புறப்படு, பம்பைக்கு போவோம். ரிசியமூகபர்வதம் அதோ தெரிகிறது பார். அங்கே ஸூரிய புத்திரனை சுக்ரீவன் வாலியிடத்தில் பயந்து நான்கு வானர சிரேஷ்டர்களுடன் வஸித்துக் கொண்டிருக்கிறான். அந்தத் தர்மாத்மாவைப் பார்க்க ஆவல் கொண்டிருக்கிறேன். ஸீதையைத் தேடிக் கண்டு பிடித்துக் கொண்டுவரும் விஷயம் அவனைப் பொறுத்திருக்கிறது'' என்றார். ராமன் துக்கங்களை மறந்து தைரியமடைந்ததைப் பார்த்து லக்ஷ்மணன் ஸந்தோஷித்து, "சீக்கிரமாகப் போவோம். நானும் அவனைப் பார்க்கவேண்டுமென்ற பரபரப்புடன் இருக்கிறேன்'' என்றான்.

பிறகு அவர்கள் அந்த ஆசிரமத்திலிருந்து புறப்பட்டு, வழியில் மதங்கஸரஸ் என்ற புண்ணிய தீர்த்தத்தில் ஸ்நானம் செய்து, காட்டு மார்க்கமாய்ப் பம்பைக் கரைக்குப் போனார்கள். அது நான்கு புறங்களிலும் மரங்களாலும் கொடிகளாலும் சூழப்பட்டிருந்தது. தாமரைகளாலும் செங்கழுநீர்களாலும் சிலவிடங்களில் சிவப்பாகவும், ஆம்பல்களால் சிலவிடங்களில் வெளுப்பாகவும், நெய்தல்களால் சிலவிடங்களில் கறுத்தும், அநேக வர்ணங்களுள்ள

கம்பளம் விரித்ததுபோல் தூரத்தில் காணப்பட்டது. அதைச் சூழ்ந்த காடுகளில் மா மஞ்சாடி மாதுளை தவம் மருதை அலரி ஸுரபுன்னை மல்லிகை குறுக்கத்தி ஆல் நொச்சில் அசோகம் ஏழிலைப்பாலை தாழை தினிசி முதலிய அநேக மரங்கள் புஷ்பங்களாலும் பழங்களாலும் நிறைந்து, ஆடையாபரணங்களால் அலங்கரிக்கப்பட்ட ஸ்த்ரீகளைப்போல் தோன்றின. மயில்களும் சிட்டுக்குருவிகளும் கிளிகளும் மரங்கொத்திகளும் இன்னும் பல பக்ஷிகளும் மதுரமாகக் கூவிக்கொண்டிருந்தன. அந்த வனத்திலுள்ள விசித்திரங்களைப் பார்த்துக்கொண்டு பம்பையென்ற ஏரியின்கரைக்கு வந்தார்கள்.

நிர்மலமான அந்தக் குளிர்ந்த ஜலத்தையும் அதன் கரையில் பொடி மணல் மிருதுவாகப் படிந்திருப்பதையும் பக்ஷிகள் ஸந்தோஷமாகக் கூவுவதையும் மலர்ந்து பரிமளம் வீசும் புஷ்பங்களையும் பழங்களாலும் மலர்களாலும் எங்கும் நிறைந்த பல மரங்களுள்ள காடுகளையும் அவைகளில் வண்டுகள் தேனைக் குடித்து மதங்கொண்டு மதுரமாகப் பாடுவதையும் அடிக்கடிப் பார்த்து,ராமனுக்கு ஸீதையின் ஞாபகம் வந்தது. அப்பொழுது லக்ஷ்மணனைப் பார்த்து, "குழந்தாய்! கபந்தன் சொன்னபடி ரிசியமூக பர்வதம் புஷ்பங்களால் நிறைந்த மரங்களுடன், பொன் வெள்ளி முதலிய தாதுக்களால் பிரகாசித்துக்கொண்டு இதோ தெரிகிறது பார். ரிக்ஷ ரஜஸின் புத்திரனை ஸுக்ரீவனென்ற மஹாத்மா இங்கே வஸிக்கிறானென்று கேள்விப்பட்டோமல்லவா? ஆகையால் நீ அவனிடத்திற்குப் போ" என்றார். மறுபடியும், "லக்ஷ்மண! ராஜ்யத்தையும் இழந்து தீனனாக அந்த துக்கத்தையெல்லாம் ஸீதையினிடத்தில் வைத்த பிரீதியால் மறந்திருந்தேன். இப்பொழுது அவளில்லாமல் எப்படிப் பிழைத்திருப்பேன்?" என்று பிரலாபித்து, அந்த ஏரியில் ஸ்நானம் செய்ய இறங்கினார்.

இப்படி ராமலக்ஷ்மணர்கள் அநேக வனங்களையும் நதிகளையும் மலைகளையும் பாலைவனங்களையும் தாண்டி, பல கஷ்டங்களை அனுபவித்து, நானாவிதமான மரங்களாலும் மிருகங்களாலும் பக்ஷிகளாலும் விளங்கும் பம்பை என்னும ஏரியைக் கண்டார்கள்.

ததோ மஹத்³ வர்த்ம ஸுதூ³ரஸங்க்ரம:
க்ரமேண க³த்வா ப்ரதிகூல த⁴ந்வநம் |
த³த³ர்ஶ பம்பாம் ஶுப⁴ த³ர்ஶ காநநாம்
அநேக நாநாவித⁴ பக்ஷி ஜாலகாம் ‖ (30)

ஆரண்ய காண்டம் முற்றிற்று.

ஸ்ரீஸீதா லக்ஷ்மண பரத சத்ருக்ன ஹனுமத் ஸமேத
ஸ்ரீராமசந்த்ர பரப்ரஹ்மணே நம:
* * *



ஸ்ரீராம சந்த்ர பரப்ரஹ்மணே நம:

# ஸ்ரீமத் வால்மீகி ராமாயணம்

## கிஷ்கிந்தா காண்டம்

### ஸர்க்கம் 1

### வஸந்த ருது வர்ணனை

ஸ தாம் புஷ்கரிணீம் க³த்வா பத்மோத்பல ஜ²ஷாகுலாம் |
ராம: ஸௌமித்ரி ஸஹிதோ விலலாபாகுலேந்த்³ரிய: ‖ (1)

**அவதாரிகை**

முன் காண்டத்தில் ராமன் தீன ஜனங்களைக் காப்பாற்றுவதென்ற தர்மத்தை நடத்திக் காட்டினார். இந்தக் காண்டத்தில் மித்ரர்களைக் காப்பாற்றுவதென்ற தர்மத்தை நடத்திக் காட்டுகிறார். மோக்ஷத்தைக் கொடுக்கும் குணம் அடையாளமாக முன் காண்டத்தில் சொல்லப்பட்டது. ராமன் பரதெய்வமென்பதற்கு அனந்த கல்யாண குணங்கள் பொருந்தியிருப்பதே அடையாளமென்று இந்தக் காண்டத்தில் சொல்லப்படுகிறது. சரணாகதி மந்திரமான த்வயத்தின் பின் பகுதியில் முதல் பதத்தின் கருத்து ஸீதா விவாஹத்தை பிரதானமாகவுடைய பாலகாண்டத்திலும்; இரண்டாவது பதத்தின் அர்த்தம், ஸகல ஜனங்களையும் தமது உத்தம குணங்களால் மோஹிக்கச் செய்தாரென்று வர்ணிக்கும் அயோத்யா காண்டத்திலும்; நான்காம் வேற்றுமையின் (நாராயணாய) பொருள், முனிவர்களால் பகவத் கைங்கரியம் செய்யப்பட்டதென்று ஆரண்ய காண்டத்தில் பஞ்சவடி வாஸம் வரை கூறியுள்ள கதையாலும்; நம: என்ற பதத்தின் அர்த்தம் கான் முதலியவர்களின் கதையாலும்; மாரீசனைப் பார்த்தது முதல் நடந்த வரலாற்றால் ஜீவன் கடைத்தேற உபயோகமான மார்க்கமும்; மாரீசனைப் பார்த்த கதையால் பகவானால் நிரந்தரமாக அனுபவிக்கத் தகுந்த ஜீவன்களும் ஒருவேளை அதை மறந்து காமபோகங்களில் உழல்வார்களென்றும், அதனால் ராவணனென்ற மஹாமோகம் பிடித்துக்கொள்ளுமென்றும்; கேவல* கர்மத்தால் ஸம்ஸாரமும் அக்ஞானமும் விலகாதென்றதை ஜடாயுவின் கதையாலும்; ஸம்ஸார

தசையில் ஜீவனுக்குச் சரீரத்தில் பிரவேசம் உண்டாயிற்றென்பதை லங்கையில் கொண்டுபோய் ஸீதையை வைத்த கதையாலும்; ஜீவன் தாப த்ரயத்தால் பீடிக்கப்படுகிறானென்பதை ராக்ஷஸிகள் ஸீதையை உபத்திரவித்தார்களென்றதாலும்; ஜீவன் கரையேறும் மார்க்கத்தைப் பகவானே தேடுகிறாரென்பதை ராமன் ஸீதையைத் தேடினார் என்றதாலும் ஆரண்ய காண்டத்தில் உபதேசிக்கப் பட்டன.

ஜீவனுக்குத் தன்னிடத்தில் பக்தியை ஆசாரியன் மூலமாக உண்டாக்குகிறான் பகவான் என்பது கிஷ்கிந்தா காண்டத்தில் உபதேசிக்கப்படுகிறது. அதில் முதலாவது ஸர்க்கத்தில், வைகுண்டநாதன் தனக்கு நித்திய கைங்கரியம் செய்யும் நித்திய ஸூரிகளைக் கண்டு, "ஐயோ! ஜீவகோடிகள் இதைப்போன்ற சக்தியையும் ஞானத்தையும் ஆனந்தத்தையும் அனுபவிக்கவேண்டியிருக்க, நம்மை அடைந்து அவைகளை அனுபவிக்காமல் ஸம்ஸாரத்தில் சுழல்கிறார்களே" என்று பரிதவிப்பது காட்டப்படுகிறது. ஆசாரிய லக்ஷணமும் சிஷ்யலக்ஷணமும் வர்ணாசிரம தர்மங்கள் முக்தியடையும் வரையில் அனுஷ்டிக்கப்பட வேண்டுமென்றும், ஞானிகளும் பக்தர்களும் உயிருள்ளவரையில் நடக்கவேண்டிய வகையும், நித்திய விபூதியிலும் லீலாவிபூதியிலும் அவர்களுடையஆசாரமும், மற்றும் பல தத்வங்களும் வஸந்தருதுவின் வர்ணனையில் அங்கங்கே காட்டப்பட்டிருக்கின்றன.

---

பிறகு ராமன் தாமரைகளாலும் நீல உத்பலங்களாலும் மீன்களாலும் நிறைந்த பம்பையென்னும் அந்த ஓடையைக் கண்டு, தாமரைகள் ஸீதையின் முகத்தையும், நீலோத்பலங்கள் அவளுடைய கண்களையும், மீன்கள் அவளுடைய சஞ்சலமான பார்வையையும் ஞாபகப்படுத்தியதால், மஹாதைரியசாலியானாலும், தன்னைத் தேற்றுவதற்கு அந்தரங்க மித்திரனான லக்ஷ்மணன் ஸமீபத்திலிருந்தாலும், விரகதாபம் மேலிட்டு, இந்திரிய ஸ்வாதீனமற்று பிரலாபித்தார். அந்த ஏரியைப் பார்த்தவுடனேயே அவருடைய இந்திரியங்கள் ஸந்தோஷத்தால் நடுங்கின.

அப்பொழுது ரகுவீரன் லக்ஷ்மணனை நோக்கி, "குழந்தாய்! வைடூரியத்தைப்போல் தெளிவான ஜலத்தாலும் மலர்ந்த தாமரை உத்பலம் முதலிய புஷ்பங்களாலும் அநேக விருக்ஷங்களாலும் இந்தப் பம்பை விளங்குகிறது. இதற்கு ஸமீபத்திலுள்ள காடுகளில் பெரிய மரங்கள் புஷ்பங்களாலும் பழங்களாலும் நிறைந்து, உன்னதமான சிகரங்களையுடைய மலைகளைப்போல் தோன்றுகின்றன. பரதன் என்னைப்பலவிதமாக வேண்டியும் நான் அதற்கிணங்கவில்லை; ஆகையால் நான் வரும் வரையில் நந்திக்கிராமத்தில் தபஸ்வி வேஷத்துடன் விரதங்களையும் உபவாஸங்களையும் அனுஷ்டித்துக்



கொண்டிருக்கிறான்; என் பிராணதாரமான ஜானகியும் எடுத்துப் போகப்பட்டாள். இந்த ஸ்திதியில் சோகத்தால் தவிக்கும் என்னை வஸந்தகாலம் இன்னும் அதிகமாகத் துன்பப்படுத்துகிறது. துக்கப்படுகிறவனுக்கு எதைக் கண்டாலும் வெறுப்பாக இருக்குமல்லவா? அப்படிப்பட்ட என் மனத்தையும் இந்தப் பம்பையின் அழகு கவர்கிறது. தாமரை முதலிய புஷ்பங்களால் அதன் குளிர்ந்த ஜலம் மறைக்கப்பட்டிருக்கிறது. மலைப்பாம்புகளும் ஸர்ப்பங்களும் அங்குமிங்கும் ஓடுகின்றன. துஷ்ட ஜந்துக்கள் அதிகமாக இருந்தாலும் புஷ்பங்களால் நிறைந்திருப்பதால் இது மிகவும் அழகாகக் காணப்படுகிறது. பச்சையும் மஞ்சளுமாய் பிரகாசிக்கும் இளம்புல் தரைகளில் மரங்களிலிருந்து உதிர்ந்த பலவித புஷ்பங்கள், விசித்திர வர்ணமுள்ள நூல்களால் செய்யப்பட்ட கம்பளங்களைப்போல் தோன்றுகின்றன. மலர்ந்த புஷ்பங்களால் நிறைந்த மரங்களின் நுனிகளும் மலர்ந்த புஷ்பங்கள் நிறைந்த கொடிகளால் மறைக்கப்பட்டிருக்கின்றன; இது வஸந்தகாலம்; மரங்கள் மலர்களாலும் பழங்களாலும் நிறைந்திருக்கின்றன; எங்கும் பரிமளம் வீசுகிறது; அவைகளைக் கிரஹித்துக்கொண்டு சுகமாக அடிக்கும் காற்று ஆசையை வளரச்செய்கிறது. காடுகளில் புஷ்பங்களால் நிறைந்த மரங்கள் அவைகளை உதிர்ப்பது நீருண்ட மேகங்கள் மழை பொழிவதுபோல் இருப்பதைப் பார். கற்பாறைகள் நிறைந்த பூமிகளில் பல காட்டு மரங்கள் காற்றின் வேகத்தால் அடிக்கப்பட்டுப் புஷ்பங்களைச் சொரிவதைப் பார். உதிர்ந்தனவும் உதிர்வனவும் மரத்தில் இருப்பனவுமான புஷ்பங்களைக் காற்று நான்கு புறங்களிலும் வாரி யிறைப்பது அவற்றுடன் விளையாடுவதைப் போல் இருக்கிறது. மலர்களால் நிறைந்த மரக்கிளைகளை அங்குமிங்கும் அசைக்கும் காற்றை, அந்தப் புஷ்பங்களிலிருந்து துரத்தப்பட்ட வண்டுகள் இனிய கீதத்துடன் பின் தொடர்கின்றன. மலைக் குகைகளிலிருந்து காற்று சப்தத்துடன் வெளிப்பட்டு மரங்களை ஆட்டுவதும், மதம்கொண்ட குயில்கள் மதுரமாகப் பாடுவதும், நாடகத்தில் பிரதான வேஷதாரி திரையிலிருந்து வெளிப்பட்டுப் பாடிக் கொண்டிருக்கும்பொழுது, மற்றவர்கள் அதற்கு ஒத்து ஆடுவதையும், இன்னும் சிலர் வீணை புல்லாங்குழல் முதலிய வாத்தியங்களைப் பாட்டிற்கு ஒட்டி வாசிப்பதையும் போலிருக்கிறது. காற்றால் அடிக்கப்பட்ட மரங்களின் நுனிகள் ஒன்றையொன்று தொடுவதால் அம்மரங்கள் ஒன்று சேர்ந்து தொடுக்கப்பட்ட பெரிய மாலைபோல் தோன்றுகின்றன.

மலய பர்வதத்திலுள்ள சந்தன மரங்களின் மணத்தை எடுத்துக் கொண்டு ஸுகமாகவும் குளிர்ச்சியாகவும் வீசும் இந்தத் தென்றல் காற்று சிரமம் முழுவதையும் போக்குகின்றது. ஸுகமான வாசனை வீசும் வனங்களிலுள்ள மரங்களில்காற்றடிக்கும் சப்தமும், அவைகளில் தங்கும் வண்டுகள் மதுரமாகப்பாடும் சப்தமும் கலந்து

கேட்க மிகவும் இன்பமாக இருக்கிறது. மலைச் சிகரங்களில் வளரும் உன்னதமான மரங்கள், அழகுள்ள புஷ்பங்களால் மறைந்து, தூரத்திலிருந்து பார்க்கும் பொழுது ஒரே புஷ்பக் கூட்டத்தைப் போல் தோன்றுகிறது. இதோ இருக்கும் மரங்கள் புஷ்பங்களால் மறைக்கப்பட்ட நுனிகளுடன் காற்றால் அங்குமிங்கும் அசைக்கப்பட்டு, கறுத்த வண்டுகளால் சப்தம் செய்வதைப் பார்த்தால், ஆடுகிறவர்கள் பல வர்ணமுள்ள புஷ்பங்களைச் சூட்டிக்கொண்டு அதன்மேல் கறுத்த தலைப் பாகையுடன் மதுரமாகப்பாடிக்கொண்டே ஆடுவது போலிருக்கிறது. இதோ நான்கு புறத்திலுமுள்ள கோங்கு மரங்கள், புஷ்பங்கள் அடர்ந்த நுனிகளுடன், தங்க ஆபரணங்களால் அலங்கரிக்கப்பட்டு, பீதாம்பரத்தை உடுத்திய முனிவர்களைப்போல் தோன்றுகின்றன.

நாம் நகரத்தைவிட்டு வந்து பதின்மூன்று வருஷங்களாகின்றன. ஸீதையை விட்டுப்பிரிந்து தவிக்கும் என்னைப் பலவித பக்ஷிகளும் மிருகங்களும் சப்திக்கும் இவ் வஸந்த காலம் அதிகமாக வாட்டுகிறது. சோகத்தால் பீடிக்கப்படும் என்னை மன்மதன் அதிகமாகப் பீடிக்கிறான். குயில் ஸந்தோஷமாகக் கூவிக்கொண்டு என்னைப் போட்டிக்கு அழைப்பதுபோல் தோன்றுகிறது. அழகான மலையருவியிலிருந்து இந்த வான் கோழி ஸந்தோஷமாக என்னைப் பார்த்துக் கூவுவது, தாபத்தால் பீடிக்கப்பட்ட என்னை மிகவும் வருத்தப்படுத்துகிறது. 'ஆனால் இதன் சப்தத்தைக் கேட்டு வருத்தப்படுவது எனக்கு வழக்கமோ' என்றால், இல்லை. முன்னொரு ஸமயத்தில் ஸீதை ஆசிரமத்திலிருக்கும்பொழுது இந்தப் பக்ஷியின் சப்தத்தைக் கேட்டு ஆசை மிகுந்து என்னை அழைத்துப் பலவிதமான இன்பங்களை அனுபவித்தாள். ஆகையால் அவளை விட்டுப் பிரிந்த பிறகே இது இவ்வளவு துக்கத்தைத் தருகிறது.

இப்படிப் பலவகையாகக் கூவும் விசித்திரமான பக்ஷிகள் மரங்களிலும் புதர்களிலுமிருந்து நான்கு பக்கங்களிலும் பறந்து போவதைப் பார். இந்தப் பெண் பக்ஷிகள் தங்களுடைய புருஷர்களோடு கூடி, உனக்குத் தகுந்த நாயகன் கிடைத்தானென்று மற்றப் பறவைகள் மெச்ச, வண்டுகள் மதுரமாகக் கத்துவதைக் கேட்டு ஆசை மேலிட்டு அன்புடன் கூடிக் களிப்பதைப் பார். வான்கோழிகளின் சப்தத்தாலும் குயில்கள் கூவுவதாலும் இந்த மரங்கள் இனிமையான நாதத்தோடு எனக்கு ஆசையை விருத்தி செய்கின்றன. அக்னியே அந்த வஸந்த ருதுவின் மூலமாக என்னை எரிக்கிறான்; அசோக புஷ்பக் கொத்துகளே தணல்கள்; இளந்துளிர்களே நெருப்புக் கொழுந்துகள்; வண்டுகளின் ரீங்காரமே நெருப்பு எரியும் பொழுது உண்டாகும் சப்தம்.

மெல்லிய இமைகளையும் நீண்டு சுருண்டு கறுத்து அடர்ந்த கேசங்களையுமுடைய ஸீதையைக் காணாமல் நான் பிழைத்திருந்தென்ன? என் உயிர்த் தோழியான ஸீதை, இந்த வஸந்த காலத்தையும், இந்த அழகிய காட்டையும், கோகிலங்களின் சப்தத்தால் நிறைந்த திசைகளையும் பார்த்து மிக்க ஆனந்தமடைவாள். சோகமாகிற நெருப்பு மன்மத தாபத்தால் உண்டாகி வஸந்தருதுவின் அழகால் வளர்ந்து, அதி சீக்கிரத்தில் என்னைக் கொளுத்திவிடும். ஆனந்தமாகக் கிரீடை செய்வதாலுண்டான வியர்வையைப் போக்கும் குளிர்ந்த மிருதுவான தென்றல் காற்றையும் புஷ்பங்களையும் உருவமாக உடைய வஸந்தருது, எதிரிலிருந்தே என்னைத் துன்பப்படுத்துகிறது. ஸீதையோ கண்ணிற்படாமலிருந்தும் என்னைத் துன்பப்படுத்துகிறாள். மிரண்ட மான்குட்டிகளைப் போன்ற கண்களையுடைய ஜானகியை நினைத்து நினைத்து உருகும் என்னை, வஸந்தருதுவில் மலர்ந்து செழிக்கும் மரங்களின் வழியாக வீசுகிற இந்தக் கொடிய காற்று எரிக்கிறது.

இந்த மயில்கள் காற்றால் சிதறிய தோகைகளுடன் நான்கு பக்கங்களிலும் ஆனந்தமாக ஆடுவதைப்பார். ஸ்படிகத்தால் செய்யப்பட்ட ஜன்னல்களைப்போல் தோகைகள் தூரத்திலிருந்து காணப்படுகின்றன. பெண் மயில்களால் சூழப்பட்டு ஆசையால் மயங்கியிருக்கும் இவை, மன்மதனால் பீடிக்கப்படும் எனக்கு இன்னும் ஆசையை வளர்க்கின்றன. லக்ஷ்மண! அந்த ஆண் மயில் மலைச் சாரல்களில் ஸந்தோஷத்தால் ஆடிக்கொண்டிருக்கிறது. அதன் நாயகி ஆசை மேலிட்டு தன் நாயகனை இழுத்துக்கொண்டு வருவதற்குத் தானும் ஆடிக்கொண்டே அதன் பக்கத்தில் போகிறது. அதைப் பார்த்து ஆண் மயிலும் ஆசைமேலிட்டுத தன் நாயகியின் அருகில் போக விரும்பித் தோகையை விரித்துக் கொண்டு மதுரமாகக் கூவுகிறது. 'இந்த வஸந்த காலத்தில் உன் நாயகியை விட்டுப் பிரிந்தாயே; நான் என் பாரியையுடன் ஆனந்தமாக விளையாடப் போகிறேன் பார்' என்று கேலி செய்வது போலிருக்கிறது. நாம் நகரத்திலிருக்கும் பொழுது ராவணன் ஸீதையை எடுத்துப் போகாமல், ஏகாந்தத்தில் பரம ஸுகங்களை அனுபவிக்கத் தகுந்த இந்தக் காட்டில் வந்திருக்கும் பொழுது எடுத்துப்போனானே! இந்த மயில் தன் அதிர்ஷ்டத்தால் அந்தக் கஷ்டத்திற்கு உட்படவில்லை. இதன் பாரியையை ராக்ஷஸர்கள் எடுத்துப்போகவில்லை. ஆகையால் தன் நாயகியுடன் காடுகளில் ஆனந்தமாக ஆடிக்கொண்டிருக்கிறது. இப்படிப்பட்ட அழகிய தேசங்களிலும் காலங்களிலும் பிரிய நாயகியுடன் இஷ்ட போகங்களை அனுபவிப்பவர்களே பாக்கிய சாலிகள்.

லக்ஷ்மண! மிருகங்களும் பக்ஷிகளும் ஒன்றிற்கொன்று மிக்க பிரியம் வைத்திருப்பதைப் பார்த்தாயா? லோகத்தில் புருஷன் ஸ்த்ரீயை அனுசரித்து ஸந்தோஷப்படுத்துவது வழக்கம். இந்தப் பெண் மயிலோ ஆசை மிகுந்து தன் புருஷனை அனுசரித்துப் பக்கத்தில் போய் வேண்டி அதனுடன் விளையாடுகிறது. வஸந்த

ருதுவின் மகிமையைப் பார்த்தாயா ? என்னைப் பார்ப்பதாலுண்
185 டாகும் ஆனந்தத்தால் மலர்ந்த கண்களுடன் ஸீதையும் இப்படியே
என்னைச் சேர்ந்து ஸுகத்தை கொடுப்பாளல்லவா? ஐயோ!
அந்த துஷ்ட ராக்ஷஸன் அவளை எடுத்துக்கொண்டு போய் விட்
டானே! வஸந்த காலத்தில் புஷ்பங்களும் பழங்களும் நிறைந்
திருப்பதால் பாரம் தாங்காமல் வளைந்திருக்கும் மரங்களையுடைய
190 இந்தக் காடுகள் எனக்கு ஸந்தோஷத்தைக் கொடுக்கவே இல்லை.
மரங்களில் மிக அழகாக விளங்கும் மலர்கள் தேனீக்களால்
சூழப்பட்டிருந்தும், எனக்கு அவைகளை அனுபவிக்க மனமில்லாத
தால் தரையில் உதிர்ந்து வீணாகின்றன. பக்ஷிகள் ஸந்தோஷம்
மேலிட்டு விளையாடுவதற்கு ஒன்றையொன்று கூப்பிடுவதைப்
195 பார்த்தால் எனக்கு ஆசையை வளர்ப்பதற்கே இப்படிச்
செய்கின்றனவென்று எண்ணுகிறேன்.

ஜானகி இருக்குமிடத்தில் வஸந்த காலம் உண்டானால் அவ
ளும் பிறர்க்கு வசப்பட்டு என்னைப் போல் துக்கப்படுவாளல்லவா?
அவளைக் கொண்டுபோய் வைத்திருக்குமிடத்தில் ஒரு வேளை
200 வஸந்த ருது உண்டாகாது ; ஆனால் என்னை விட்டுப் பிரிந்து
எப்படி உயிர்தரிப்பாள்? அவளிருக்குமிடத்தில் வஸந்த ருது உண்
டென்றே ஒப்புக்கொண்டாலும், பிறர்களால் பயமுறுத்தப்பட்டுத்
துன்பப் படுகையில் அவள் என்ன சுகத்தை அனுபவிப்பாள் ?
ஸகல போகங்களையும் அனுபவிக்கத் தகுந்த யௌவனம் வாய்ந்த
205 வள் ; செந்தாமரை இதழ்களைப் போன்ற கண்களையுடையவள் ;
எவரிடத்திலும் மிருதுவாகத் தானே முந்திப்பேசுகிறவள் ; இந்த
வஸந்த காலத்தில் உயிரோடிருப்பாளென்று தோன்றவில்லை.
என்னை விட்டுப் பிரிந்து ஸீதை உயிர் தரிக்கமாட்டாளென்று
எனக்கு நிச்சயமாகத் தெரியும். ஸீதையின் மனமும் பிராணன்
210 களும் எண்ணங்கள் யாவும் என்னிடத்திலேயே வேரூன்றி
இருக்கின்றன. நான் அவளிடத்தில் வைத்திருக்கும் பிரீதியும்
அப்படியே. புஷ்பங்களின் மணத்தை எடுத்துக்கொண்டு ஸுகமாக
வும் குளிர்ச்சியாகவும் வீசும் இந்தக்காற்று, ஸீதையைப் பிரிந்த
தால் தவிக்கும் எனக்கு நெருப்புத் தணலைப் போலிருக்கிறது.
215 ஸீதையுடன் சேர்ந்திருக்கும்பொழுது எனக்கு மிகுந்த ஸுகத்தை
யும் ஆனந்தத்தையும் கொடுத்தது இந்தக் காற்றேயல்லவா? ஸீதை
யில்லாத பொழுது அதுவே எனக்கு ஏன் துக்கத்தை வளர்க்கிறது?
நான் அவளை விட்டுப் பிரியும் பொழுது இந்தப் பறவை ஆகாசத்தி
லிருந்து வெறுப்பாகக் கத்திற்று ; இப்பொழுது மரத்திலிருந்து
220 ஸந்தோஷமாகக் கூவுகிறது. ஸீதை சீக்கிரத்தில் என்னை வந்து சேரு
வாளென்பதற்கு இது சகுனமென்று எண்ணுகிறேன். எங்களைப்
பிரித்து வைத்த இந்தப் பறவையே மறுபடியும் எங்களைச் சேர்த்து
வைக்கும்.



புஷ்பங்களால் நிறைந்த விருக்ஷங்களில் பக்ஷிகள் உட்கார்ந்து
சப்திப்பதைப் பார் ; இதைக் கேட்டு யாருக்குத்தான் ஆசை 225
விருத்தியாகாது ? அந்தத் திலக விருக்ஷத்தின் பூங்கொத்துகள்
காற்றால் அசைக்கப்படுவதைக் கண்டு, இந்த வண்டு, மதத்தால்
மயங்குகிற நாயகியை அடைவது போல் அதைப்போய் அடைகின்
றது பார். அந்த அசோக விருக்ஷம் ஸ்வபாவத்திலேயே மஹா துஷ்
டன் ; விரஹ தாபத்தால் வருந்துவோர்களை இன்னும் அதிகமாக 230
வருத்தப்படுத்தும். அதன் இலைகளும் பூங்கொத்துகளும் காற்றால்
அசைக்கப்படுவதைப் பார்க்கும்பொழுது, "உன்னைக் கொல்வதற்
காகவே மன்மதன் இந்தப் பழுக்கக் காய்ச்சின பாணங்களைத்
தயார் செய்திருக்கிறான்" என்று என்னைப் பயமுறுத்துவது
போலிருக்கிறது. லக்ஷ்மண! புஷ்பங்களால் அலங்கரிக்கப்பட்ட 235
இந்த மா மரங்கள், களிப்படைந்த மனிதர்கள் ஸந்தோஷத்துடன்
சந்தனத்தைப் பூசிக்கொண்டிருப்பதுபோலத் தோன்றுகின்றன.

இந்தப் பம்பையின் நான்கு பக்கங்களிலும் உள்ள விசித்திர
மான காடுகளில் கின்னரர்கள் உலாவுகின்றனர். ஸுகமான வாஸனை
யுள்ள இந்தச் செந்தாமரைகளும் ஜலத்தில் பிரதிபலித்த பாலஸூரி 240
யனைப் போலிருக்கின்றன. இந்த ஏரியின் ஜலம் தெளிவாகவும்
தாமரை கருநெய்தல் செங்கழுநீர் முதலிய புஷ்பங்களால் அலங்
கரிக்கப்பட்டும், ஹம்ஸம் முதலிய நீர்ப்பறவைகளின் சத்தத்
துடனும் இருக்கிறது. சக்ரவாகங்கள் நான்கு புறங்களிலும் ஸஞ்
சரிக்கின்றன. கரையில் விசித்திரமான வனங்கள் காணப்படுகின் 245
றன. யானை மான் முதலியவைகள் அங்கங்கே இறங்கி நீர்
குடிக்கின்றன. தெளிந்த ஜலத்தில் காற்றால் அலைகள் கிளம்பித்
தாமரைகளை அங்குமிங்கும் அசைப்பது வெகு அழகாக இருக்
கிறது. தாமரை இதழ்களைப்போன்ற விசாலமான கண்களையுடைய
ஸீதைக்கு இந்தத் தாமரைகளிடத்தில் மிகுந்த பிரீதி. அவளைப் 250
பார்க்காமல் எனக்கு உயிரை வைத்துக்கொள்ள இஷ்டமில்லை.
ஐயோ! ஆசையின் கொடுமையை என்ன சொல்வேன் ? ஸீதை
எங்கே யிருக்கிறாளென்று எனக்குத் தெரியாது. நான் அவளை
அடைவதே ஸாத்தியமாகத் தோன்றவில்லை. அப்படியிருந்தும்,
மானைப் பிடித்துக் கொடு என்று அவள் சொன்ன மதுரமான 255
வார்த்தைகள் என் மனத்தை விட்டு நீங்கவே இல்லை. புஷ்பங்
களாலும் பழங்களாலும் விளங்கும் இந்த வஸந்த காலம் என்னை
இவ்வளவு துன்பப்படுத்தாமலிருந்தால் ஸீதையிடத்தில் எனக்குள்ள
அளவற்ற ஆசையைத் தாங்க முடியும். அவள் என்னுடனிருக்கும்
பொழுது எனக்கு எவை ஸந்தோஷத்தைக் கொடுத்தனவோ அவை 260
களே இப்பொழுது அவளில்லாததால் எனக்கு துக்கத்தைக் கொடுக்
கின்றன. இந்தத் தாமரை இதழ்கள் ஸீதையின் கண்களைப்
போலிருக்கின்றன. தாமரைகளின் மணத்தை எடுத்துக்கொண்டு

மரங்களின் வழியாக வீசும் இந்தக் காற்று, ஸீதையின் மூச்சுக் காற்றைப்போல் வீசுகிறது.

லக்ஷ்மண! பம்பையின் தெற்குக் கரையிலுள்ள மலைத் தாழ்வரை மேல் அதோ ஒரு கோங்குமரத்தின் கிளை புஷ்பங்களால் விளங்குவதைப் பார். அங்கே தாதுக்களால் விளங்கும் ரிச்யமூக பர்வதம் காற்றால் மோதப்பட்டு பல நிறமுள்ள தூளிகளை உதிர்க்கிறது. மலைத் தாழ்வரைகளில் இலை உதிர்ந்து புஷ்பங்களால் நிறைந்த பலாசமரங்கள், நெருப்புக் கொழுந்துகளைப்போல் எங்கும் பிரகாசிக்கின்றன. பம்பைக் கரையில் ஜாதிமல்லிகை அரளி தாழை நொச்சி சிறுமல்லிகை பெருமல்லிகை குருக்கத்தி முதலிய செடிகளும், புங்கை இலுப்பை வஞ்சுளம் வகுளம் சம்பகம் திலகம் புன்னை கடம்பு பேரீச்சை மாவலிங்கை அசோகம் ஆனைவணக்கி அழிஞ்சில் முதலிய பலவகை மரங்களும் புஷ்பங்களால் குலுங்குகின்றன. கிளைகள் காற்றால் அங்குமிங்கும் ஆடும்பொழுது கொடிகளும் அவைகளுடன் ஆடுவதைப்பார்த்தால், மதுபானம் செய்த புருஷர்களை ஸ்த்ரீகள் அனுஸரிப்பது போலிருக்கிறது.

இந்தக் காற்று, மரத்திலிருந்து மரத்திற்கும் மலையிலிருந்து மலைக்கும் காட்டிலிருந்து காட்டிற்கும் அடித்துக்கொண்டு, பலவித ரஸங்களைக் குடித்து மதங்கொண்டு திரிகிறது போலிருக்கிறது. சில மரங்கள் புஷ்பங்களால் நிறைந்து தேன் மணம் வீசுகின்றன. சில மரங்கள் மொட்டுகளால் நிறைந்து, கறுத்த மேகங்களைப்போலிருக்கின்றன. இந்த வண்டு, 'இந்தப் புஷ்பம் அழகாக இருக்கிறது ; இது ருசியாக இருக்கிறது ; மலர்ந்திருக்கிறது' என்று ஒவ்வொரு மலரையும் ருசிபார்த்துக்கொண்டு, அங்கங்கே சற்று நேரம் உட்கார்ந்து, பேராசை கொண்டு வேறொரு பூவிற்குப் பறந்து போகிறது. இங்கே தானாக உதிர்ந்த புஷ்பங்கள் விசித்திர நிறமுள்ள விரிப்புகள் விரித்திருப்பது போல் காணப்படுகின்றன. சில கற்பாறைகளில் சண்பகப் புஷ்பங்கள் உதிர்ந்து தங்கத்தால் செய்யப்பட்ட கட்டில்களைப்போலும், சிலவிடங்களில் அரளிப் புஷ்பங்கள் உதிர்ந்து பட்டுக்கரை வஸ்திரங்களை விரித்திருப்பது போலும், இப்படி இன்னும் பலவர்ணமுள்ள படுக்கைகளைப் போலும் தோன்றுகின்றன.

லக்ஷ்மண! எங்கே பார்த்தாலும் இந்த வஸந்த காலத்தில் மரங்கள் மலர்ந்த புஷ்பங்களால் நிறைந்து, வண்டுகள் மதுரமாகச் சப்திக்கும் பொழுது ஒன்றிற்கொன்று, 'நான் எவ்வளவு அழகானவன், பார்த்தாயா? நீ எனக்கு ஈடல்ல' என்று பெருமை பேசிக் கொள்வது போலிருக்கிறது. இந்த நீர்க்காக்கை தெளிவான ஜலத்தில் மூழ்கித் தன் நாயகியுடன் ஸந்தோஷமாக விளையாடுகிறது. அதைப் பார்க்கையில் எனக்கு விரஹதாபம் அதிகரிக்கிறது. இந்தப் பம்பை எவ்வளவு அழகாக இருக்கிறதோ, மந்தா



கினியும் அவ்வளவு அழகாக இருக்கிறது. ஆகையால் லோகத்தில் விசேஷ ப்ரசித்தி பெற்றிருக்கிறது. ஸீதை மறுபடியும் நமக்குக் கிடைத்து, இவ்விடத்தில் நாம் வஸித்துக் கொண்டிருந்தால் இந்திர லோகத்தையாவது அயோத்யையையாவது விரும்பமாட்டேன். இந்த அழகான இளம்புல் தரைகளில் ஸீதையுடன் ஆனந்தமாகக் காலம் கழித்துக்கொண்டிருந்தால் எனக்கு ராஜ்யம் போனதையும் மற்ற துக்கங்களையும் ஒருபொழுதும் நினைக்கவே மாட்டேன். இந்த மரங்கள் அழகிய இலைகளாலும் பலவகை புஷ்பங்களாலும் விளங்குவதைப் பார்த்தால் ஸீதையை விட்டுப்பிரிந்த எனக்கு புத்தி சிதறுகிறது. இந்த ஏரியின் குளிர்ந்த ஜலத்தில் தாமரை முதலிய மலர்கள் மலர்ந்திருப்பதையும் அவைகளில் சக்ரவாகம் நீர்க்கோழி நீர்க்காக்கை கிரௌஞ்சம் முதலிய பறவைகள் உட்கார்ந்து இனிமையாகக் கூவுவதையும், பன்றி மான் முதலியவை நீரில் இறங்கி விளையாடுவதையும் பார்க்கப் பார்க்க, அவை ஒப்பில்லாத அழகுள்ள ஜானகியைப் பற்றி அடிக்கடி நினைவுண்டாக்கி எனக்கு அவளிடத்திலுள்ள ஆசையை வளர்க்கின்றன.

லக்ஷ்மண! இந்த மலைச்சாரல்களில் மிருகங்கள் ஆனந்தமாக விளையாடுவதையும் மான் குட்டிகளைப்போல் நேத்திரங்களையுடைய ஸீதையை விட்டுப் பிரிந்து நான் தவிப்பதையும் பார். மதம் கொண்ட பக்ஷிகளால் நிறைந்த இந்த மலையில் அங்குமிங்கும் திரிவதால் எனக்கு வருத்தம் அதிகமாகிறது. அவளைப் பார்த்தாலொழிய எனக்கு ஆறுதலுண்டாகாது. இந்தப் பம்பையிலிருந்து அடிக்கும் ஸுகமான காற்றை ஸீதையும் என்னுடனிருந்து அனுபவித்தாலொழிய நான் பிழைக்க மாட்டேன். தாமரை செங்கழுநீர் முதலிய பூக்களின் மணத்தால் நிறைந்து பிரிய நாயகிகளுடன் சேர்ந்திருப்பவர்களின் சோகத்தைப் போக்கி, பம்பைக் கரையிலுள்ள மரச்சோலைகளிலிருந்து ஸுகமாக வீசும் இந்தக் குளிர்ந்த காற்றை அனுபவிப்பவர்கள் பாக்கியசாலிகளே. ஸீதை ஸகல ஸுகங்களையும் அனுபவிக்கத் தகுந்த யௌவனத்தையுடையவள்; ஒப்பில்லாத அழகு வாய்ந்தவள்; ஸகல ஐசுவரியங்களும் பொருந்திய ஜனக சக்கரவர்த்தியின் வீட்டில் வளர்ந்தவள்; என்னை விட்டுப் பிரிந்து சத்துருக்களின் வசத்தில் அகப்பட்டு எப்படிப் பிழைத்திருப்பாள்? நான் அயோத்யைக்குப் போனபிறகு ஜனகர் ஜனங்களுக்கு முன் என்னை ஸீதையின் க்ஷேமத்தைப் பற்றி விசாரிக்கும் பொழுது, ஸகல தர்மங்களையும் அறிந்த அந்த மஹாத்மாவுக்கு என்ன பதில் சொல்வேன்? ஐயோ! ஸீதை துக்கம் தாங்காமல் பிராணனை விடப்பார்த்தாலும் சத்துருக்கள் இடம் கொடுக்க மாட்டார்களே. ராஜ்யத்தை இழந்து பிதாவால் காட்டிற்குத் துரத்தப்பட்ட பாக்கியமற்ற என்னைப் பதிவிரதா தர்மத்தை அனுசரித்துப் பின் தொடர்ந்து ஸகலகஷ்டங்களையும் பொறுத்துக் கொண்டு என்னை ஸந்தோஷப் படுத்திய ஜானகி எங்கே

இருக்கிருளோ? அவளைவிட்டுப் பிரிந்து நான் - எப்படி உயிர் தரிப்பேன்? அழகான இமைகளுடன் ஒரு தோஷமுமின்றி, மதுரமான வாஸனை வீசும் அவளுடைய முகாரவிந்தத்தைப் பார்க்காமல் மனம் தவிக்கிறதே! எப்பொழுதும் ஸந்தோஷமாகச் சிரித்துக் கொண்டு வெகு சாமர்த்தியமாகவும் மதுரமாகவும் ஹிதமாகவும் பேசும் அவளுடைய சொற்களை எப்பொழுது கேட்பேன்? இக்காட்டில் சொல்ல முடியாத துக்கங்களை அனுபவித்துக்கொண்டிருந்தும் அவைகளை காட்டிக்கொள்ளாமல் எப்பொழுதும் ஸந்தோஷமாக இருந்த அந்தப் பதிவிரதாசிரோமணி, ஆசையால் வருந்தும் என் தாபத்தைத் தன் அழகாலும் அமிருத வெள்ளத்தைப்போன்ற வார்த்தைகளாலும் எப்பொழுது நீக்குவாள்?

லக்ஷ்மண! நான் அயோத்யைக்குத் திரும்பிப்போன பிறகு கௌஸல்யை என்னைப் பார்த்து, "குழந்தாய், என் நாட்டுப் பெண் எங்கே?" என்று கேட்டால் என்ன பதில் சொல்வேன்? உண்மையைச் சொன்னால் ஸீதையிடத்தில் அவள் வைத்த அதிகப்பிரியத்தால் உடனே இறப்பாளே. லக்ஷ்மண! நீ அயோத்யைக்குத் திரும்பிப் போய் பரதனுடன் ஸுகமாக இரு. அவளில்லாமல் பிழைத்திருப்பேனு?" என்று இப்படிப் பலவிதமாகக் கூறி அநாதையைப்போல் அந்த மகாத்மா ஸீதையை நினைத்துப் பிரலாபித்தார்.

அதைக் கேட்டு லக்ஷ்மணன் "அண்ணு! தாங்கள் புருஷோத்தமரல்லவா? தைரியத்தைக் கைவிடலாமா? இப்படித் துக்கப்படலாமா? தங்களுக்கு ஸகல மங்களங்களும் உண்டாகட்டும். ஒப்பற்ற தைரியத்தையுடைய தாங்களே புத்தியை இப்படிச் சிதறவிடலாமா? நாம் யாரிடத்தில் பிரீதியை வைக்கிருேமோ, அவர்களை விட்டுப்பிரிவதால் அதிக துக்கமுண்டாகிறது என்று லோகத்தில் பார்க்கிருேமல்லவா? ஆகையால் அந்தக் கிலேசத்திற்குக் காரணமான அதிகப்பிரீதியை விலக்கவேண்டும். எண்ணெயில் அதிகம் தோய்ந்து ஈரமானதுபோல் இருப்பினும் திரி எண்ணெயின் சேர்க்கை காரணமாக நெருப்பால் எரிக்கப் படுகிறது. (ஸ்நேகத்தினுல் மிருதுவான மனம் விரஹதாபத்தால் அதிகம் வருந்தும். அன்பு எண்ணெய் என்ற இரண்டு பொருள்களுடையது ஸ்நேகம் என்ற பதம்.) ராவணன் பாதாளத்திற்குப் போனலும் இன்னும் ரஹஸ்யமான இடத்திற்குப் போனலும் உயிர் தப்புவானு? அவன் இப்பொழுது இருக்குமிடத்தைக் கண்டுபிடிப்போம். ஸீதையை நம்மிடத்தில் ஒப்புவிக்க வேண்டும், அல்லது அழியவேண்டும். அதிதியின் கர்ப்பத்தில் அவளைக் கொண்டுபோய் வைத்திருந்தாலும் இப்பொழுதே அவளைக் கொண்டுவந்து ஒப்புவிக்காவிட்டால் நிச்சயமாக அவனைக் கொல்லுகிறேன். இந்தக் கவலையை விடுங்கள். தைரியமாக இருங்கள். தான் உத்தேசித்த காரியத்தை ஒருவன் அடையாவிட்டால் மறுபடியும் முயன்ருலொழிய அது கிடைக்குமா? மனுஷ்யனுக்கு விடா முயற்சியைப் போல் வேறென்றும் பயனைக் கொடுக்காது.



விடாமுயற்சியுள்ளவனுக்குக் கிடைக்காதது ஒன்றுமில்லை. அப்படிப் பட்டவர்கள், காரியங்களைச் செய்வதில் அதைரியப் படுவதில்லை. நாம் உத்ஸாஹத்தை மாத்திரம் கைக்கொண்டால் ஸீதையை நிச்சயமாக அடைவோம். காமத்தாலும் சோகத்தாலும் புத்தியைக் கெடுத்துக் கொள்ளாமல் தாங்கள் மஹா தைரியசாலி என்பதையும் நன்ருகப் பழக்கப்பட்ட மனத்தையுடையவர்கள் என்பதையும் ஞாபகப் படுத்திக் கொள்ளுங்கள்" என்று விநயமாகவும் உசிதமாகவும் ஹிதமாகவும் தெரிவித்துக்கொண்ட வார்த்தைகளைக்கேட்டு ராமன், சோக ஸமுத்திரத்திலிருந்து கரையேறித் துக்கத்தையும் புத்தி மயக்கத்தையும் நீக்கித் தைரியமடைந்தார்.

பிறகு அளவற்ற பராக்கிரமத்தையுடைய ரகுவீரனும் லக்ஷ்மணனும் அந்தப் பம்பாநதியைத் தாண்டினுர்கள். இப்படி ராமன் ஸீதையைவிட்டுப் பிரிந்த துக்கத்தால் பீடிக்கப்பட்டும் லக்ஷ்மணனுடன் காடு மலை குகை முதலியவைகளில் ஜாக்கிரதையாகத் தேடிக்கொண்டு அங்கிருந்து புறப்பட்டார். மதம் பிடித்த யானையைப்போல் அழகாக நடந்து போகும் ரகுவீரனை லக்ஷ்மணன் வெகு ஜாக்கிரதையாக ரக்ஷித்து வந்தார்.

(அவர் ராமனிடத்தில் கலங்காத பக்திவைத்தவர்; மஹாதைரியசாலி; அவருக்குக் கைங்கரியம்செய்யும் பாக்கியத்தைப் பெற்றவர். ராமன் தன் அழகிய நடையால் ஸகலப்பிராணிகளின் மனத்தைக் கவர்ந்தாலும், லக்ஷ்மணன் அவருடைய அழகில் தன் புத்தியை நாட்டிச் சிதறவிடாமல் மனோவாக்குக் காயங்களை அடக்கிப் பணிவிடை செய்து வந்தார். உட்கார்ந்திருக்கும்பொழுது ஆஸனமாகவும் நிற்கும்பொழுது குடையாகவும் நடக்கும்பொழுது மரவடியாகவும் நித்தியகைங்கரியம் செய்யும் பாக்கியம் பெற்ற ஆதிசேஷனல்லவா? இதை அறிந்தே ஸுமித்திரை, "குழந்தாய்! ராமன் வனத்தில் போகையில் அவருடைய நடை அழகைக் கண்டு மயங்கிக் கைங்கரியத்தில் மோசம் போகாதே" என்று லக்ஷ்மணனுக்கு ஹிதோபதேசம் செய்தாள். ஸமயோசிதமாக லோக நீதிகளையும் ராஜ நீதிகளையும் தெரிவிப்பார்; சத்துருவை அலக்ஷ்யமாகக் கொல்லுகிறனென்று தைரியம் சொல்வார்.)

இப்படிப் பலவிதமாக அவரைத் தேற்றிக்கொண்டு அங்கிருந்து ரிச்யமுக பர்வதத்தின் அடியில் வந்தார். அங்கே வானரர்களுடன் தங்கியிருந்த ஸுக்ரீவன் இவர்களுடைய ரூபத்தையும் பராக்கிரமத்தையும் பார்த்து ஆச்சரியமடைந்தான். தான் மிகுந்த பலவானுனலும் ஒருவேளை வாலி நம்மைக் கொல்ல இவர்களை அனுப்பியிருப்பானே என்று பயந்து அசைவற்று நின்ருன். அவர்கள் அங்குமிங்கும் தேடிக்கொண்டு ஜாக்கிரதையாக ஸஞ்சரிப்பதைப் பார்த்து ஸுக்ரீவனுடைய பயம் அதிகமாயிற்று. அவனுடனிருந்த வானரர்களும் அந்த மஹாதேஜஸ்விகளைக் கண்டு

தாங்கள் பயமில்லாமல் தங்கியிருந்த மதங்க ரிஷியின் புண்யாசிரமத்தில் ஓடி ஒளிந்துகொண்டார்கள்.

தமாஶ்ரமம் புண்யஸுக2ம் ஶரண்யம்
ஸதை3வ ஶாகா2ம்ருக3 ஸேவிதாந்தம் |
த்ரஸ்தாஶ்ச த்3ருஷ்ட்வா ஹரயோபி4ஜக்3மு:
மஹௌஜஸௌ ராக4வலக்ஷ்மணௌ தௌ || (132)

---

## ஸர்க்கம் 2

## ஸுக்ரீவன் ஆஞ்ஜநேயரை அனுப்பியது

---

தௌ து த்3ருஷ்ட்வா மஹாத்மாநௌ ப்4ராதரௌ ராமலக்ஷ்மணௌ |
வராயுத4 த4ரௌ வீரௌ ஸுக்3ரீவ: ஶங்கிதோப4வத் || (1)

உத்தமமான ஆயுதங்களைத் தரித்து மஹாவீரர்களாக நிகரற்ற தேஜஸுடன் விளங்கும் ராமலக்ஷ்மணர்களைப் பார்த்து ஸுக்ரீவன், ஓரிடத்தில் நிலைகொள்ளாமல் நான்கு திக்குகளையும் பார்த்துக் கொண்டிருந்தான். ராஜ தர்மங்களில் நிபுணனான அந்த வானராதி பதி மிகுந்த வருத்தமடைந்து, "இங்கே இருப்பது நலமா, ஓடிப் போவது நலமா?'' என்று மந்திரிகளுடன் ஆலோசித்தான். அவனுடைய மனம் ஒன்றிலும் பற்றாமல் அலைந்துகொண்டே இருந்தது. பிறகு ராமலக்ஷ்மணர்களை மறுபடியும் கவனித்துப் பார்த்துத் தன் மந்திரிகளை அழைத்து, "தோழர்களே! எவரும் பிரவேசிக்க முடியாத இந்த வனத்தில் இவர்கள் எப்படி வந்தார்கள்? நமது சத்துருவான வாலியால் அனுப்பப்பட்டு, தபஸ்வி வேஷம் பூண்டு நம்மைக் கொல்ல வந்திருக்கிறார்கள்'' என்றான்.

அவர்களும் அவன் சொல்வதை உண்மையென்று நிச்சயித்து வேறொரு மலைச்சிகரத்துக்குப் போய், அங்கே எல்லோரும் ஸுக்ரீவனை சூழ்ந்து ஒன்றும் தோன்றாமல் நின்றார்கள். அங்கும் பயமுண்டாகி மலைக்கு மலை தாவ ஆரம்பித்தார்கள். அந்த வேகத்தால் மலைச்சிகரங்கள் நடுங்கின; புஷ்ப விருக்ஷங்கள் முறிந்தன. மான் பூனை புலி முதலிய மிருகங்கள் பயந்தோடின. பிறகு வேறெண்ணம்கொண்டு எல்லோரும் ரிசியமூகத்திற்கே வந்தார்கள். ஸுக்ரீவன் வாலியினிடத்திலிருந்த பயத்தால் அவனே இப்படி வேஷங்கொண்டு வந்திருக்கவேண்டுமென்று ஸந்தேகித்துக் குழம்புவதைப் பார்த்த ஹனுமான், "ஸ்வாமி! தாங்களும் நமது மித்திரர்களும் இது வாலியால் செய்யப்பட்ட உபாயமென்று எண்ணிப் பயப்படவேண்டாம். இது ரிசியமூக பர்வதம்; வாலி இங்கே வரமாட்டான். நாம் கண்ட இடங்களுக்கு ஓடுவதில் என்ன லாபம்? தாங்கள் பயப்படவேண்டியது வாலியிடத்தில் அல்லவா? இதோ வருகிறவர்கள் வாலியல்ல. ஆகையால் தங்களுக்குப் பயமென்ன?



புத்தியைச் சிதறவிட்டுப் பல பல யோசனை செய்து, பொறுத்து ஆலோசிக்காமல், தவிக்கிறீர்கள். குரங்கின் ஸ்வபாவமான சஞ்சல சித்தம் தெளிவாக வெளிப்பட்டதே! ஸாமான்ய ஞானமும் விசேஷ ஞானமும் குடிகொண்டிருக்கும் தாங்கள் பிறருடைய நடை உடை பேச்சு சேஷ்டை முதலியவைகளால் அவர்களின் அபிப்பிராயங்களைத் தெரிந்துகொண்டு காரியங்களை நடத்தவேண்டும். புத்தி ஸ்வாதீனமில்லாத அரசன் குடிகளை எப்படி ஆளுவான்'' என்று வணக்கமாகத் தெரிவித்தார்.

இந்தச் சுபமான வார்த்தைகளைக் கேட்டு ஸுக்ரீவன் தைரியமடைந்து ஆஞ்ஜநேயரைப் பார்த்து, "இவர்கள் தேவ குமாரர்களைப் போலிருக்கிறார்கள்; முழங்கால்வரையில் நீண்ட கைகளையும் விசாலமான கண்களையும் உடையவர்கள்; உத்தமமான ஆயுதங்களைத் தரித்தவர்கள். இப்படிப்பட்டவர்களைக் கண்டு யாருக்குத்தான் பயமுண்டாகாது? இந்தப் புருஷோத்தமர்கள் வாலியால் அனுப்பப்பட்டிருக்க வேண்டுமென்றே ஸந்தேகப்படுகிறேன். வாலியே நேரில் வந்திருக்கிறானென்று நான் பயப்படவில்லை. ராஜாக்களுக்கு அநேக மித்திரர்களுண்டு. அவர்களை நம்பக்கூடாது. சத்துருக்களுள்ளவன் மாறுவேஷம் பூண்டவர்களைத் தனக்கு விரோதி என்றே எண்ண வேண்டும். நாம் அவர்களை நம்பினாலும் அவர்கள் நம்மை நம்புவதில்லை. நாம் எப்பொழுது அஜாக்கிரதையாக இருப்போமென்று ஸமயம் பார்த்துக்கொண்டிருந்து எப்பொழுதாவது நம்மைக் கொல்லாமல் விடுவதில்லை. வாலியோ ராஜ்ய காரியங்களில் தீர்க்காலோசனையுள்ளவன். அரசர்கள் ரஹஸ்யமாகவே பல உபாயங்களை உபயோகித்துச் சத்துருக்களைக் கொல்வார்கள். ஸாதாரண ஜனங்களைப்போல் வேஷம் பூண்ட தூதர்களை அனுப்பி அவர்களைக் கண்டுகொள்ள வேண்டும். ஆஞ்ஜநேய! அல்ப மனுஷனைப்போல் வேஷமெடுத்து நீயே போய் அவர்களைப் பரீக்ஷித்து வரவேண்டும். மனத்திலுள்ள அபிப்பிராயத்தை வெளிப்படுத்தும் தேக சேஷ்டையாலும் ரூபத்தாலும் பேச்சாலும் மற்ற உபாயங்களாலும் அவர்கள் சுத்தமான மனமுள்ளவர்களா என்று தெரிந்து கொள். அப்படியிருந்தால் ஸமயோசிதமான வார்த்தைகளாலும் அதற்குத் தகுந்த இங்கிதங்களாலும் நீ அவர்களை நம்பச் செய்து, எனக்கு அனுகூலமாக இருக்கும்படி மாற்றி, 'ஆயுதபாணிகளாக நீங்கள் இந்த வனத்தில் வந்த காரணமென்ன?' என்று கேட்டு, அவர்களுடைய உண்மையான அபிப்பிராயத்தைத் தெரிந்துகொள்ள வேண்டும். அவர்கள் ஸாதுக்களா துஷ்டர்களா என்று பேச்சாலேயே அறிய வேண்டும்'' என்றான்.

இப்படி ஸுக்ரீவனால் ஆக்ஞாபிக்கப்பட்டு ஹனுமான் அவனுடைய வார்த்தையை உசிதமென்று ஒப்புக்கொண்டு ராமலக்ஷ்மணர்கள் இருக்குமிடத்திற்குப் போக நிச்சயித்தார். நினைத்த

ரூபங்களை எடுக்கக்கூடிய அந்த மஹாவீரன் ராஜநீதியில் நிபுணனை ஸுக்ரீவனை மெச்சி, மஹாபலசாலிகளான ராமலக்ஷ்மணர்கள் இருக்குமிடத்தை நோக்கிப் போனார்.

தேதே²தி ஸம்பூஜ்ய வசஸ்து தஸ்ய தத்
கபே: ஸுபீ⁴மஸ்ய து³ராஸத³ஸ்ய |
மஹாநுபா⁴வோ ஹநுமாந் யயௌ ததா³
ஸ யத்ர ராமோதி ப³லஶ்ச லக்ஷ்மண: || (29)

---

## ஸர்க்கம் 3

## ஆஞ்ஜநேயர் ராமலக்ஷ்மணர்களை ஸந்தித்தது

---

வசோ விஜ்ஞாய ஹநுமாந் ஸுக்³ரீவஸ்ய மஹாத்மந: |
பர்வதாத்³ ருஶ்யமூகாத் து புப்லுவே யத்ர ராக⁴வௌ || (1)

**ஸு**க்ரீவனுடைய அபிப்ராயத்தைப் பூர்ணமாக அறிந்த ஹனுமான் ரிச்யமூக பர்வதத்திலிருந்து குதித்துத் தன் வானர ரூபத்தை விட்டுச் சத்ருக்களை ஏமாற்றுவதற்கான ஸந்யாஸி ரூபத்தை எடுத்தார். வாயு புத்திரனை ஆஞ்ஜநேயருக்கு இது ஒரு பொருட்டா? பிறகு அவர் ராமலக்ஷ்மணர்களைக் கண்டு ஸமீபத்தில் வந்து விநயமாக நமஸ்கரித்து மதுரமான அர்த்தத்தையும் சப்தத்தையுமுடைய வார்த்தைகளால் அவர்களுடைய வரலாற்றை விசாரிக்க ஆரம்பித்து, அவர்களுடைய பரமார்த்த ஸ்வரூபத்தை ஸ்தோத்திரம் செய்தார்.

இப்படி ஆஞ்ஜநேயர் பக்தியுடன் அவர்களைப் பூஜித்துப் பிறகு மிருதுவாக விசாரித்தார். "நீங்கள் வீண்போகாத பராக்கிரமமுள்ளவர்கள்; மனத்தைக் கவரும் ரூபத்தைத் தரித்திருக்கிறீர்கள். ஆகையால் ராஜரிஷிகளையும் தேவர்களையும் போன்றவர்கள். கடுமையான விரதங்களை அனுஷ்டிப்பவர்களைப்போலிருக்கிறீர்கள். அதனால் தபஸ்விகளென்று தோன்றுகிறது. இந்த வனத்திலுள்ள ஜந்துக்கள் உங்களைக் கண்டு பயப்படுகின்றன. பம்பைக் கரையிலுள்ள மரங்களை உற்றுப் பார்த்துக்கொண்டு வருகிறீர்கள். ஸஞ்சரிப்பதற்குக் கஷ்டமான இந்த வனத்தில் எப்படி வந்தீர்கள்? இந்தப் பம்பா நதி உங்களுடைய தேஜஸால் விளங்குகிறது. உங்களுடைய தேககாந்தி தங்கத்தைப்போல் பிரகாசிக்கிறது. காட்டில் வெகுநேரம் நடந்து வந்ததால் களைத்துப் பெருமூச்சு விடுகிறீர்கள். அழகிய புஜங்களை உடையவர்கள்; இந்த வனத்திலுள்ள பக்ஷிகள் மான்கள் முதலிய ஸகல ஜந்துக்களும் தங்களைப் போன்றவர்களை இதுவரையில் பார்த்ததில்லை. ஆகையால் பயந்து ஓடுகின்றன. ஸிம்ஹத்தைப் போல் மிகவும் கம்பீரமான பார்வையுடையவர்கள்; ஸிம்ஹத்தைக் காட்டிலும் அதிகமான பலபராக்கிரமமுடையவர்கள்; இந்திர



ஸம்பூஜ்ய விதி⁴வத்³வீரோ ஹநுமாந் மாருதாத்மஜ: |
உவாச காமதோ வாக்யம் ம்ருது³ ஸத்யபராக்ரமௌ || —கி. 3ஸ - 4 ஸ்.

இப்படி ஆஞ்ஜநேயர் பக்தியுடன் அவர்களைப் பூஜித்து, பிறகு மிருதுவாய் விசாரித்தார்.

Notes : This Blank Page has also to be counted as a another page Number.

It is intentionally left blank after Picture Sketches.!

Released by Maran's Dog ,Toronto, Canada



தனுசுகளைப் போன்ற வில்லுகளை விளையாட்டாகக் கையில் பிடித்துக் கொண்டிருக்கிறீர்கள்; சத்துருக்களை வேரறுக்கும் வீரியத்தையுடையவர்கள்; எல்லையற்ற காந்தியுடையவர்கள்; ஒப்பில்லாத ஸௌந்தரியம் வாய்ந்தவர்கள்; உத்தமமான காளையைப்போல் அழகாகவும் கம்பீரமாகவும் நடப்பவர்கள்; மஹா தேஜஸ்விகள்; யானைத் துதிக்கைகளைப்போல் நீண்ட புஜங்களையுடையவர்கள். இப்படிப்பட்ட நரசிரேஷ்டர்களான நீங்கள் யார்?

இந்த ரிசியமூக பர்வதம் உங்களுடைய காந்தியால் விளங்குகிறது. பெரிய ராஜ்யங்களை ஆளத் தகுந்தவர்கள்; தேவதைகளுக்கு ஸமமான பராக்கிரமமுள்ளவர்கள்; இங்கே எப்படி வந்தீர்கள்? உங்களுடைய நேத்திரங்கள் தாமரை இதழ்களைப்போல் சிவந்து விசாலமாக இருக்கின்றன. மஹாவீரர்களான நீங்கள் ஜடையைத் தரித்திருப்பதேன்? உங்களிருவருக்கும் பேதமேயில்லை. தேவலோகத்திலிருந்து வேடிக்கையாகப் பூலோகத்திற்கு வந்த ஸூரிய சந்திரர்களைப் போலிருக்கிறீர்கள். ஸகல ராஜலக்ஷணங்களும் பொருந்திய நீங்கள் ராஜ்யத்தை ஆளவேண்டியிருக்க, அவைகளை விட்டுத் தபஸ்வி வேஷம் தரித்து இந்த வனத்தில் ஸஞ்சரிப்பது உசிதமல்லவே. உங்கள் விசாலமான மார்புகளையும், ஸிம்ஹத்தைப்போன்ற தோள்களையும், மதம் பிடித்த யானையையும் காளையையும்போல் நடப்பதையும், நீண்டு திரண்டு இரும்புலக்கைகளைப்போல் கடினமாக இருக்கும் புஜங்களையும் பார்த்தால், ஸகல ஆபரணங்களாலும் அலங்கரிப்பட வேண்டிய உங்களுடைய அங்கங்கள் ஏன் சூன்யமாக இருக்கின்றனவென்று ஸந்தேகமுண்டாகிறது. விந்தியம் மேரு என்ற பர்வதங்களால் அழகு பெற்றிருக்கும் பூமியை நீங்கள் ரக்ஷிக்கத் திறமையுள்ளவர்கள். உங்களுடைய வில்லுகள் வெகு அழகாக இருக்கின்றன. இவைகளைப் போன்றவை லோகத்தில் கிடையாது. விசித்திரமான பூச்சுகளால் விளங்குகின்றன; தங்கக் கட்டுகளுடன் இந்திரனுடைய வஜ்ராயுதத்தைப்போல் பிரகாசிக்கின்றன. சீறுகின்ற மஹாஸர்ப்பங்களைப் போலும் கோரமான காலதண்டங்களைப் போலும் இருக்கும் கூர்மையான பாணங்களால் உங்களுடைய அம்பறைகள் நிறைந்திருக்கின்றன. உங்களுடைய கத்திகள் அதிக நீளமாகவும் அகலமாகவும் இருக்கின்றன. தங்கத்தால் அலங்கரிக்கப்பட்டுச் சட்டையுரித்த காலஸர்ப்பங்களைப் போலும் ஜ்வலிக்கின்றன.

நான் இவ்வளவு சொல்லியும் எனக்குப் பதில் சொல்லாமலிருப்பதேன்? இங்கே ஸுக்ரீவனென்ற ஒரு வானர ராஜா இருக்கிறார். அவர் மஹா வீரன். அண்ணனால் வஞ்சிக்கப்பட்டுத் துக்கமடைந்து திரிகிறார். அந்த மஹாத்மா என்னைத் தங்களிடத்தில் அனுப்பினார். ஸுக்ரீவன் உங்கள் இருவருடைய நட்பையும் விரும்புகின்றார். என் பெயர் ஹனுமான்; நான் வாயுவின் புத்திரன்;

அரசனுக்கு முக்கிய மந்திரி; அவருடைய இஷ்டப்படி ஸந்யாஸி ரூபத்தைத் தரித்து ரிச்யமூகபர்வதத்திலிருந்து இங்கே வந்தேன். நான் நினைத்த ரூபங்களை எடுக்கக் கூடியவன்? நினைத்த இடங்களுக்குப் போகக் கூடியவன்'' என்று கூறியபின், சாதுர்யமாகப் பேசுகிறவர்களுக்குள் சிரேஷ்டரான மாருதி, தான் வந்த காரியத்தைத் தெரிவித்து, அவர்களுடைய பதிலைக் கேட்க விரும்பி மௌனமாக இருந்தார்.

அப்பொழுது ராமன் ஸந்தோஷத்தால் முகம் மலர்ந்து, பக்கத்திலிருந்த லக்ஷ்மணனைப் பார்த்து, "குழந்தாய்! இவன் மஹாத்மாவான ஸுக்ரீவனுடைய முக்கிய மந்திரி. நாம் அவனையே தேடிக் கொண்டிருக்க நம்மைத் தேடி இவன் வந்திருக்கிறான். ஸுக்ரீவனே தூதன் மூலமாக நம்மிடத்தில் வந்ததாக நினைத்தேன். யஜமானன் தூதர்களிடத்தில் தானே பேசுவது உசிதமல்ல என்ற ராஜநீதிப்படி, நீ என்னிடத்திலும் ஸுக்ரீவனிடத்திலும் வைத்திருக்கும் பிரீதியை அனுசரித்து, மதுரமான வாக்கியங்களால் இந்த மஹா புத்திமானுக்குப் பதில் சொல். ரிக் வேதத்தை கிரமப்படி அறியாவிட்டால் இவன் இப்படிப் பேசமுடியாது. யஜுர்வேதத்தைப் பூர்ணமாக அறிந்து மனத்தில் தரிக்காவிட்டால் இப்படிப் பேசமாட்டான். ஸாமவேதத்தின் ரஹஸ்யத்தை அறியாதவன் இப்படிப் பேசமாட்டான். இவன் ஸகல வியாகரணங்களையும் பூர்ணமாகப் பலமுறை கற்றிருக்கிறானென்பது நிச்சயம். அநேக வாக்கியங்களைப் பேசினாலும் ஒரு பிசகான சப்தத்தையும் காணேன். முகத்திலாவது நெற்றியிலாவது புருவங்களிலாவது மற்ற அவயவங்களிலாவது யாதொரு தோஷமும் பேசும்பொழுது காணப்படவில்லை. மிகவும் விஸ்தாரமில்லாமலும் ஸந்தேகமில்லாமலும் தாமதிக்காமலும் அதிக வேகமில்லாமலும் வாக்கியங்கள் ஹ்ருதயத்தில் தோன்றி, கழுத்தில் ஒலித்து, மத்யம ஸ்வரத்தில் உச்சரிக்கப்படுகின்றன. அதிக மெதுவாகவில்லாமலும், அதிக வேகமாக இல்லாமலும், யாதொரு பிழையுமில்லாமல் மனோஹரமாகவும் ஸுகமாகவும் வியாகரண சாஸ்திரப்படி வாக்கியங்களை உச்சரிக்கிறான். மார்பு கழுத்து தலை என்ற மூன்று இடங்களிலிருந்து உண்டாகும் உதாத்த அனுதாத்த ஸ்வரித சப்தங்களுடன் பேசும் இவனுடைய ஆச்சரியகரமான வார்த்தையைக் கேட்டு, இவனைக் கொல்லவெண்ணிக் கத்தியை உருவிக்கொண்டு பாயும் சத்துருவும் கோபம் தணிந்து ஸந்தோஷம் மேலிட்டு இவனுக்கு வசப்படுவான்.

இவ்விதமான தூதனை அடையாத அரசனுக்கு ராஜ காரியங்கள் எப்படிக் கைகூடும்? இந்த உத்தம குணங்களையுடைய தூதர்கள் எந்த அரசனிடத்தில் இருக்கிறார்களோ அவர்களுடைய ஸகல காரியங்களும் தூதர்களால் ஸித்திக்கும்'' என்றார்.

பிறகு மஹாபுத்திமானான லக்ஷ்மணன் அனுமானைப் பார்த்து, "மஹாத்மாவான ஸுக்ரீவனுடைய குணங்கள் எங்களுக்குத் தெரியும். அந்த வானர ராஜனையே தேடிக் கொண்டிருக்கிறோம். மஹாபுத்திமானே! ஸுக்ரீவனுடைய அபிப்பிராயப்படி நீ எதைச் சொல்லுகிறாயோ அதை அப்படியே செய்கிறோம்'' என்றார். அந்த சாதுரியமான வார்த்தையைக் கேட்டு ஆஞ்ஜநேயர் மிகவும் ஸந்தோஷித்து, வாலியை ஜயிப்பதில் ஸந்தேகமில்லை என்று நிச்சயித்து, ஸுக்ரீவனுக்கும் ராமலக்ஷ்மணர்களுக்கும் ஸ்நேஹம் செய்விக்க விரும்பினார்.

தத் தஸ்ய வாக்யம் நிபுணம் நிஶம்ய
ப்ரஹ்ருஷ்டரூப: பவநாத்மஜ: கபி: |
மந: ஸமாதா⁴ய ஜயோப பத்தௌ
ஸக்²யம் ததா³ கர்துமியேஷ தாப்⁴யாம் || (40)



## ஸர்க்கம் 4

## ஸுக்ரீவனிடத்திற்குப் போனது

தத: ப்ரஹ்ருஷ்டோ ஹனுமாந் க்ருத்யவாநிதி தத்³ வச: |
ஶ்ருத்வா மது⁴ர ஸம்பா⁴ஷம் ஸுக்³ரீவம் மநஸா க³த: || (1)

அந்த மதுரமான வார்த்தைகளைக் கேட்டு ஹனுமான், இவர் நமது காரியத்தை ஸாதிக்கக் கூடியவரென்று ஸந்தோஷித்து, "மஹாத்மாவான ஸுக்ரீவ மஹாராஜாவுக்கு ராஜ்யம் கிடைக்கும். இந்த மஹானுபாவன் அவருக்கு வாய்த்தபடியால் அந்தக் காரியம் அதி சீக்கிரத்தில் முடியும்'' என்று நிச்சயித்தார். பிறகு ராமனைப் பார்த்து வெகு வணக்கமாக, "ஸ்வாமி! இந்தப் பம்பா நதிக்கரையிலுள்ள கோரமான வனத்திற்குத் தாங்களும் தங்கள் தம்பியும் வந்த காரணமென்ன? இது துஷ்ட மிருகங்கள் ஸஞ்சரிக்கும் இடமல்லவா?'' என்றார்.

அதற்கு லக்ஷ்மணன் ராமனுடைய ஆக்ஞையால் தங்கள் வரலாற்றைத் தெரிவித்தார். "தசரதரென்று ஓர் அரசர் இருந்தார். மஹா காந்தியுள்ளவர். தர்மத்தில் விசேஷப் பிரீதியுள்ளவர். நான்கு வர்ணத்தவர்களையும் தர்மம் தவறாமல் ஆண்டுவந்தார். அவருக்கு விரோதிகளில்லை. அவருக்கும் ஒருவரிடத்திலும் துவேஷமில்லை. ஸகல பூதங்களுக்கும் பிரஹ்மா எப்படியோ அப்படி மேன்மை பெற்று விளங்கினார். அக்னிஷ்டோமம் முதலிய யாகங்களை விதிப்படி பலதடவை செய்தார். இதோ இருக்கும் மஹாத்மா அவருடைய மூத்த புத்திரர்; இவருக்கு ராமனென்று பெயர்; ஸகல பிராணிகளுக்கும் இவரே கதி; பிதாவின் கட்டளையை நிறைவேற்றுகிறவர்; மஹாவீரன்; தசரதபுத்திரர்களுக்குள் உத்தம குணசாலி. ராஜலக்ஷணங்களும் ஐசுவரியங்களும் பூர்ணமாகப் பொருந்தினவர். இவர் ராஜ்யத்திலிருந்து வனத்தில் வஸிக்கும்படி அனுப்பப்பட்டு என்னுடன் இங்கே வந்தார். ஸூரியன் அஸ்தமிக்கும் பொழுதும் அவருடைய தேஜஸ் விலகாதது போல்,

இவருடைய பாரியையான ஸீதை இவரைக் கஷ்ட தசையில் கைவிடாமல் வெகு பக்தியோடும் வெகு பிரேமையோடும் பின் தொடர்ந்தாள். இவர் மஹாதேஜஸ்வி. இந்திரியங்களை ஜயித்தவர். இவருடன் பிறந்ததால் நான் இவருக்குத் தம்பி என்று சொல்லப் படுகிறேன். ஆனால் இவருடைய அனந்த கல்யாண குணங்களுக்கு ஈடுபட்டு இவருக்கு நான் அடிமையானேன். நான் இயற்கையிலே இவருக்கு அடிமையானாலும் இவருடைய மஹிமையால் அந்த நிலைமை உறுதிப்பட்டது. எங்கும் எப்பொழுதும் எந்த ஸமயத்திலும் இவருக்கு எல்லா ஊழியங்களையும் செய்யும் பாக்கியத்தைப் பெற்றேன். அந்த ஊழியமும் என் பிரயோஜனத்தை உத்தேசித்தல்ல. இவருடைய பிரீதியை அடைவதற்கே. பிறர் அல்ப உபகாரம் செய்தாலும் அதை விசேஷமாகக் கொண்டாடுவது இவருடைய தன்மை. எனக்கு லக்ஷ்மணனென்று பெயர். (ஊழியமென்ற லக்ஷ்மியை (செல்வத்தை) அடைந்தவனென்று அதன் கருத்து) இவர் ஸகல ஸுகங்களையும் ஸகல ஐசுவரியங்களையும் அனுபவிக்கத் தகுந்தவர். ஸகலப் பிராணிகளின் ஹிதத்தையே எப்பொழுதும் தேடுகிறவர். இப்பொழுது ஸகல ஐசுவரியத்தையும் இழந்து காட்டிலிருக்கையில், ஒருநாள் நாங்கள் இல்லாத வேளையில் யாரோ ஒரு ராக்ஷஸன் இவருடைய பாரியையை எடுத்துப்போனான் அவன் இன்னானென்று தெரியவில்லை. தனுவின் வம்சத்தில் பிறந்து சாபத்தால் ராக்ஷஸ ரூபமடைந்த ஒரு தைத்யன், உங்கள் அரசனான ஸுக்ரீவன் அந்த ராக்ஷஸனிருக்குமிடத்தை அறிவானென்று எங்களுக்குச் சொல்லித் திவ்விய ரூபத்தை அடைந்து ஸ்வர்க்கத்திற்குப் போனான். இதுவே எங்கள் வரலாறு. நீ கேட்டதற்கு பதில் சொல்லிவிட்டேன்.

"நானும் ராமனும் ஸுக்ரீவனைச் சரணமடைந்திருக்கிறோம். இவர் அளவற்ற ஐசுவரியங்களை பிறர்க்குக் கொடுத்திருக்கிறார். நிகரற்ற கீர்த்தியை அடைந்திருக்கிறார். இதற்கு முன் லோகநாதனாக இருந்து இப்பொழுது ஸுக்ரீவனை நாதனாக அடைய விரும்புகிறார். இவருடைய பிதா ஸகலப் பிராணிகளையும் காப்பாற்றினார். தர்மத்திலேயே விசேஷ பிரீதியுள்ளவர். அப்படிப் பட்டவருக்கு புத்திரனான ராமனும் ஸகலபிராணிகளையும் ரக்ஷிக்கக்கூடியவர். இவரே ஸுக்ரீவனை சரணமடைகிறார். இதற்கு முன் ஸகல லோகங்களும், இந்த மஹாத்மாவான ராகவனையே சரணமடைந்திருந்தன. ஆனால் இப்பொழுது என தமயன் ஸுக்ரீவனுடைய உதவியை விரும்புகிறார். எவருடைய கிருபையை பெற்று குடிகள் யாவரும் புருஷார்த்தங்கள் யாவையும் அடைந்து ஸந்தோஷித்தார்களோ அந்த ராமர் ஸுக்ரீவனுடைய கிருபையை இப்பொழுது வேண்டுகிறார்.

"இந்த பூமியிலுள்ள ஸகல ராஜாக்களும் தசரத சக்கரவர்த்தியால் ஸகல உபசாரங்களுடன் வெகுமானிக்கப் பட்டார்கள். அவருடைய மூத்த புத்திரனான இந்த மஹானுபாவன் ஸகலலோகங்களிலும் பிரசித்தி பெற்றவர். அவர் ஸுக்ரீவனுடைய தயவை வேண்டுகிறார். இவர் சோகத்தால் பீடிக்கப்பட்டு புத்தி சிதறி இருக்கிறார். உன் அரசனான ஸுக்ரீவன் தன்னைச் சரணமடைந்த இவரிடத்தில் கிருபை செய்ய வேண்டும்" என்றார். இப்படி ராமன் துக்கப்படுவதைப் பார்த்துத் தானும் துக்கமடைந்து கண்களில் நீர் ததும்ப பரிதாபமாக பிரார்த்திக்கும் லக்ஷ்மணனுடைய வார்த்தைகளைக் கேட்டு ஹனுமான் இப்படிப்பட்ட புத்திமான்களும், கோபத்தையும் இந்திரியத்தையும் ஜயித்தவர்களுமான உங்களைத் தேடியாவது ஸுக்ரீவன் ஸ்நேகம் செய்து கொள்ள வேண்டும். அப்படியிருக்க நீங்களே இங்கே வந்தது அவருக்கு மிகுந்த க்ஷேமத்தை உண்டு பண்ணும். அவர் வாலியுடன் பகைத்துக்கொண்டு ராஜ்யத்திலிருந்து துரத்தப்பட்டு இங்கே வந்திருக்கிறார். வாலி அவரை ஏமாற்றி அவருடைய பாரியையை எடுத்துக்கொண்டான். அவரும் நாங்களும் ஸீதையைத் தேடிக் கண்டுபிடிப்பதில் வேண்டிய உதவியைச்செய்வோம்" என்று சாதுரியமாகவும் மதுரமாகவும் பதில் சொல்லி, "ஸுக்ரீவன் இருக்குமிடத்திற்கு போவோம் வாருங்கள்" என்று அழைத்தார்.

அதைக்கேட்டு லக்ஷ்மணன் அவரைத் தகுந்தபடி உபசரித்து ராமனைப் பார்த்து, "இவர் மிகுந்த ஸந்தோஷத்துடன் சொல்லுகிற வார்த்தைகள் மிகவும் உண்மையாகத் தோன்றுகின்றன. தங்களுடைய காரியத்தை முடித்துக் கொடுக்கும் திறமையுள்ள ஸுக்ரீவனும் நேர்ந்திருக்கிறான். ஆகையால் தங்கள் எண்ணங்கள் நிறைவேறுமென்று நினைக்கிறேன். இவன் பேசும் பொழுது முகத்தில் ஸந்தோஷமும் தெளிவும் விளங்குகின்றன ; வார்த்தைகள் தெளிவாக இருக்கின்றன. வாயு புத்திரனான இந்த மஹாவீரன் பொய் சொல்லமாட்டான்" என்றார்.

பிறகு ஹனுமான் வானர ரூபத்தை எடுத்து ராமலக்ஷ்மணர்களைத் தோளிலேற்றிக்கொண்டு ஸுக்ரீவனிருக்குமிடத்திற்குப் போனார். ஸகல தேவதைகளுக்கும் நாதனான பகவானுடைய கிருபையை அடைந்ததால் மிகுந்த கீர்த்திபெற்று ஸுக்ரீவனையும் அடக்கத் திறமையுள்ள அந்த மஹா புத்திமானான வாயு புத்திரன் தான் உத்தேசித்த காரியங்களெல்லாம் கைக்கூடினது போல் ஸந்தோஷித்து, ராம லக்ஷ்மணர்களுடன் ரிசியமூக பர்வதத்தில் ஏறினார்.

ஸ து விபுலயஶா: கபிப்ரவீர:
பவநஸுத: க்ருத க்ருத்யவத் ப்ரஹ்ருஷ்ட: |
கி³ரிவர முருவிக்ரம: ப்ரயாத:
ஸ ஶுப⁴மதி: ஸஹ ராமலக்ஷ்மணாப்⁴யாம் ‖ (37)

---

## ஸர்க்கம் 5

## ஸுக்ரீவனுடன் நட்பு

*ரிஶ்யமூகாத் து ஹநுமாந் க$^{3}$த்வா து மலயம் கி$^{3}$ரிம் |*
*ஆசசக்ஷே ததா$^{3}$ வீரௌ கபிராஜாய ராக$^{4}$வௌ ||* (1)

ராமலக்ஷ்மணர்களைக் கண்டு பயந்து ஸுக்ரீவன் ரிச்யமூக பர்வதத்திலிருந்து மலயமென்ற மலையில் பிறர் நெருங்கக்கூடாத ஓரிடத்தில் ஒளிந்து கொண்டிருந்தான். ஹனுமான் ராமலக்ஷ்மணர்களை ரிச்ய மூகத்தில் விட்டு, மலயத்திற்கு போய் ஸுக்ரீவனைக் கண்டுபிடித்து, "ஸ்வாமி! ராமலக்ஷ்மணர்கள் ரிச்யமூகத்தில் வந்திருக்கிறார்கள்; ராமன் மஹாபுத்திமான்; அளவற்ற பராக்கிரமமுடையவர்; தங்களுடைய சத்துருக்களை அழிக்கக் கூடியவர்; இக்ஷ்வாகுகுலத்தில் பிறந்தவர் ; தசரத சக்கரவர்த்தியின் புத்திரர்; தர்மானுஷ்டானத்தில் விசேஷ பிரசித்தி பெற்றவர்; பிதிருவாக்கிய பரிபாலனம் செய்பவர். இவர்கள் தபஸ்வி வேஷத்துடன் தண்டகாரண்யத்தில் வசித்துக் கொண்டிருக்கும் பொழுது ராவணன் ராமனுடைய பாரியையை எடுத்துப்போனான். அவர் தங்கள் உதவியை விரும்புகிறார். ராஜஸூயம், அசுவமேதம் முதலிய யாகங்களைக் கணக்கில்லாமல் செய்து, பசுக்களையும் திரவியங்களையும் அபரிமிதமாகத் தக்ஷிணையாகக்கொடுத்து இந்திரியங்களை அடக்கி ஸத்தியம் தவறாமல் தசரதர் ராஜ்ய பரிபாலனம் செய்து வந்தார். அவருடைய புத்திரனான ராமன் ஒரு பெண்ணைப் பற்றித் தங்களைச் சரணமடைகிறார். அவர்கள் தங்களுடன் ஸ்நேஹம் செய்துகொள்ள விரும்புகிறார்கள். அவர்களை உபசரித்து தகுந்தபடி பூஜியுங்கள். அவர்களைக் காட்டிலும் பூஜிக்கத் தகுந்தவர்கள் நமக்குக் கிடைக்க மாட்டார்கள்" என்றார்.

அதைக்கேட்டு ஸுக்ரீவன் ஸந்தோஷமடைந்து ராமனிடத்தில் உண்டான பயம் தீர்ந்து கவலையற்றான். பிறகு மனுஷ்ய ரூபத்துடன் ராமனிருக்குமிடத்திற்கு வந்து அவரைப் பக்தியுடன் நமஸ்கரித்து, "ஸ்வாமி, தாங்கள் தர்மத்தில் நன்றாய்ப் பழக்கப்பட்டவர்கள். பராக்கிரமசாலி, ஸகலப் பிராணிகளிடத்திலும் இரக்கமுள்ளவரென்று ஹனுமான் தங்களுடைய உத்தம குணங்களை எனக்குச் சொல்லியிருக்கிறார். கேவலம் ஒரு அல்ப வானரனான என்னுடன் தாங்கள் ஸ்நேஹம் செய்ய விரும்புவது எனக்குப் பெரிய லாபம். பெரிய அனுக்கிரஹம். அப்படித் தங்களுக்கு இஷ்டமிருந்தால் இதோ கையை நீட்டுகிறேன். தாங்கள் இதன்மேல் கைபோட்டுப் பிடித்துக் கொள்ளுங்கள். உசிதமான நிபந்தனைகளை ஏற்படுத்திக் கொள்வோம்" என்று கையை நீட்டினான். அதைப் பார்த்து ராமன் மிகவும் ஸந்தோஷித்து அவனுடைய கையைப் பிடித்து பிரீதியுடன் இறுகத்தழுவினார். பிறகு ஹனுமார் நிஜரூபத்தை எடுத்துக்கொண்டு இரண்டு கட்டைகளைச் சேர்த்து, நெருப்பு மூட்டினார். ஜ்வலிக்கும் அக்னியைப் புஷ்பங்களால் பூஜித்து ராமனுக்கும் ஸுக்ரீவனுக்கும் நடுவில் வைத்தார். அவர்கள் கைகளைப் பிடித்துக்கொண்டு அக்னியைப் பிரதக்ஷிணம் செய்து அதை ஸாக்ஷியாக வைத்துக்கொண்டு, எப்பொழுதும் அழியாத ஸ்நேஹத்தை ஏற்படுத்திக்கொண்டார்கள். பிறகு வெகு திருப்தியையும் ஸந்தோஷத்தையும் அடைந்து ஒருவரையொருவர் கண் கொட்டாமல் பார்த்துக்கொண்டே இருந்தார்கள். அப்பொழுது ஸுக்ரீவன், "ஸ்வாமி! தாங்கள் எனக்கு உயிர்த்தோழர். நம் இருவருக்கும் ஸுகதுக்கங்கள் பொது" என்றான். பிறகு அவன் புஷ்பங்களால் நிறைந்த ஒரு பெரிய ஆச்சா மரக்கிளையை முறித்துத் தரையில் போட்டு அதன்மேல் ராமனுடன் உட்கார்ந்தான். இப்படியே மாருதியும் லக்ஷ்மணன் உட்காருவதற்காக ஒரு சந்தன மரக்கிளையை முறித்துப் போட்டார்.

பிறகு ஸுக்ரீவன் ராமனைப் பார்த்து, "ஸ்வாமி! என் அண்ணனான வாலி என்னை ஏமாற்றி, என் பாரியையை எடுத்துக் கொண்டு என்னை ராஜ்யத்திலிருந்து துரத்திவிட்டான். நான் அவனிடத்தில் பயந்து, துக்கத்தால் ஏங்கி, இந்த கோரமான வனத்தில் தனியாக ஸஞ்சரித்துக்கொண்டிருக்கிறேன். தாங்கள் அந்த பயத்தைத் தீர்க்க வேண்டும்" என்று தெளிவாகவும் மதுரமாகவும் பிரார்த்தித்தான்.

அதைக் கேட்டு மஹாதேஜஸ்வியும் தன்னைச் சரணமடைந்தவர்களை ரக்ஷிக்கும் தர்மரஹஸ்யத்தை அறிந்தவரும் அந்தத் தர்மத்தைப் பூரணமாக நடத்துகிறவருமான ராமன், "இதை ஒரு பெரிய காரியமாக எண்ணி, இவன் நம்மை அடிக்கடி பிரார்த்திக்கிறான்" என்று புன்சிரிப்புடன், "வானரோத்தம! ஸ்நேஹத்திற்குப் பலன் உபகாரமே. இந்த உண்மையை நான் அறிந்துள்ளேன். உன் பாரியையை எடுத்துப்போன வாலியைக் கொல்லுகிறேன். இதோ என் கையிலிருக்கும் பாணங்கள் கூர்மையானவை; கழுகின் இறகுகளால் அலங்கரிக்கப்பட்டவை; கோணல் இன்றி நிமிர்ந்த கணுக்கள் உள்ளவை; ஸூரியனைப்போலும் வஜ்ராயுதத்தைப் போலும், ரோஷத்தால் சீறும் காலஸர்ப்பங்களைப்போலும் இவை துஷ்டனான வாலியின் மார்பில் தாக்கி, அவனுடைய உயிரை இப்பொழுதே கொள்ளைகொண்டு, பெரிய மலையை வேருடன் பிடுங்கித் தள்ளுவது போல் அவனைப் பூமியில் தள்ளும்" என்று ஸுக்ரீவனுக்கு அபய தானம் செய்தார்.

இப்படித் தனக்குப் பரம ஹிதத்தைக் கொடுக்கும் ராமனுடைய மங்களகரமான வார்த்தையைக் கேட்டு ஸுக்ரீவன் அதிகப் பிரீதியடைந்து "புருஷோத்தம! தங்கள் பராக்கிரமத்தால் ராஜ்யத்தையும் பாரியையையும் நிச்சயமாக அடைவேன். என் சத்துருவான வாலியை இப்பொழுதே கொல்வதற்கு வேண்டிய ஏற்பாடுகளைச் செய்ய வேண்டுகிறேன்" என்று தெரிவித்துக்கொண்டான்.

இப்படி ஸுக்ரீவனும் ராமனும் ஸ்நேஹம் செய்துகொண்ட முகூர்த்தத்தில் செந்தாமரைப் புஷ்பத்தைப்போன்ற ஸீதையின் இடது கண்ணும் தங்கவர்ணமுள்ள வாலியின் இடது கண்ணும் நெருப்புப் பொறிபோன்ற ராவணனுடைய இடது கண்களும் துடித்தன.

ஸீதா கபீந்த்3ர க்ஷணதா3 சராணும்
ராஜீவ ஹேம ஜ்வலநோபமாநி |
ஸுக்3ரீவ ராம ப்ரணய ப்ரஸங்கே3
வாமாநி நேத்ராணி ஸமம் ஸ்பு2ரந்தி || (33)

---

## ஸர்க்கம் 6

# ராமன் ஸீதையின் ஆபரணங்களைக் கண்டது

புநரேவாப்3ரவீத் ப்ரீதோ ராக4வம் ரகு4நந்த3நம் |
அயமாக்2யாதி மே ராம ஸசிவோ மந்த்ரி ஸத்தம: || (1)

**ஸு**க்ரீவன் மறுபடியும் ராமனைப் பார்த்து, "ஸ்வாமி! என் மந்திரியான ஹனுமான் தாங்கள் இந்த வனத்திற்கு வந்த காரணத்தைத் தெரிவித்தான். தாங்களும் லக்ஷ்மணனும் காட்டில் தங்கியிருக்கையில் ஒரு ராக்ஷஸன் தங்கள் பாரியையை எடுத்துப் போனான். நீங்கள் இல்லாத ஸமயத்தில் ஜடாயு தடுக்க, அவரையும் வழியில் கொன்றான். பாரியையை விட்டுப் பிரிந்த துக்கத்தைத் தாங்கள் வெகுகாலம் அனுபவிக்கும்படி விடமாட்டேன். மதுகைடபர்களால் எடுத்துப் பாதாளத்தில் கொண்டுபோய் வைக்கப்பட்ட வேதத்தைப் பகவான் மத்ஸ்யாவதாரமெடுத்து திருப்பிக்கொண்டுவந்ததுபோல், ஸீதையைப் பாதாளத்தில் வைத்திருந்தாலும் ஸ்வர்க்காதி லோகங்களில் ஒளித்திருந்தாலும் இன்னும் எங்கே வைத்திருந்தாலும் எப்படியாவது கொண்டுவந்து தங்களிடத்தில் ஒப்புவிக்கிறேன். நான் சொல்லுவதை ஸத்தியமென்று அங்கீகரிக்கவேண்டும். விஷம்கலந்த பக்ஷணத்தை ஒருவன் தின்று ஜீரணிக்க முடியாதது போல ஸீதையை எடுத்துப்போய் வைத்திருப்பதற்கு இந்திராதி தேவதைகளுக்கும் அஸுரர்களுக்கும் முடியாது; துக்கப்பட வேண்டாம். தங்களுடைய பாரியையைக் கொண்டு வருவேன் என்பதில் ஸந்தேகமில்லை. அந்தக் கொடிய ராக்ஷஸன் அவளை ஆகாச மார்க்கமாக எடுத்துப் போகையில், "ஹா ராம! ஹா லக்ஷ்மண!" என்று தீனமாகக் கதறிக்கொண்டு, நாகேந்திரனுடைய பார்யையைப்போல் ராவணனுடைய பிடிப்பில் இருந்த ஒரு பெண்ணைப் பார்த்தேன். பல அடையாளங்களால் அவள் ஸீதையாக இருக்கவேண்டுமென்று நிச்சயிக்கிறேன். நானும் இந்த நான்கு வானரர்களும் மலையில் உட்கார்ந்திருப்பதைப் பார்த்து, அவள் தன் உத்தரீயத்தில் ஆபரணங்களை முடிந்து கீழே எறிந்தாள். அவைகளை ஜாக்கிரதையாகக் காப்



நாஹம் ஜாநாமி கேயூரே நாஹம் ஜாநாமி குண்டலே |
நூபுரே த்வபி⁴ஜாநாமி நித்யம் பாதா³பி⁴வந்த³நாத் || —கி. 6 ஸ - 22க

''அண்ணா! இந்த வங்கிகளை அறியேன்; குண்டலங்களையும் அறியேன்; இந்தப் பாதச்சிலம்புகள் ஸீதை தரித்திருந்தவை என்று எனக்கு நன்றாகத் தெரியும். ஒவ்வொரு நாளும் நான் அவள் பாதங்களில் பணியும்பொழுது அவைகளைப் பார்த்திருக்கிறேன்.''

(பக்கம் 27 பார்க்க)

பாற்றி வைத்திருக்கிறேன். தாங்கள் அவைகளைப் பார்த்து, ஜானகியின் ஆபரணங்களா என்று சொல்ல வேண்டும்'' என்றான்.

அதைக் கேட்டு ராகவன், "தோழா! ஏன் தாமதிக்கிறாய்? இப்பொழுதே அவைகளைக் கொண்டு வா'' என்றதும் குகையில் புகுந்து ஆபரணங்களை எடுத்துவந்து ராமனுக்குக் காட்டினான். ராமன் உத்தரீயத்தையும் ஆபரணங்களையும் வாங்கி, சந்திரன் பனியால் மூடப்படுவதுபோல் கண்கள் நீரால் மறைய, ஸீதையின் ஞாபகத்தால் சோகம் மேலிட்டு, "ஹா பிரியநாயகி'' என்று அலறித் தைரியமிழந்து பூமியில் விழுந்தார். அவைகளை அடிக்கடி மார்போடணைத்து, மஹாஸர்ப்பம் புற்றிலிருந்து கோபத்தால் சீறுவதுபோல் பெருமூச்சு விட்டார். கண்ணீர் தாரை தாரையாகப் பெருக, பக்கத்தில் நின்ற லக்ஷ்மணனைப் பார்த்துத் தீனமாக பிரலாபித்தார். "குழந்தாய்! ஸீதையை ராவணன் எடுத்துப் போகும்பொழுது, அவள் விட்டெறிந்த உத்தரீயத்தையும் ஆபரணங்களையும் பார்த்தாயா? இவை பசும்புல் தரையில் விழுந்ததால் சேதமில்லாமலிருக்கின்றன. இவை ஸீதையின் ஆபரணங்களா? பார்த்துச் சொல். கண்ணீர் வெள்ளத்தால் என் கண்கள் மறைந்து பார்க்க முடியவில்லை'' என்றார்.

அப்பொழுது லக்ஷ்மணன், "அண்ணா! இந்த வங்கிகளை அறியேன்; குண்டலங்களையும் அறியேன். இந்த பாதச் சிலம்புகள் ஸீதை தரித்திருந்தவை என்பது எனக்கு நன்றாகத் தெரியும். ஒவ்வொரு நாளும் நான் அவள் பாதங்களில் பணியும் பொழுது அவைகளைப் பார்த்திருக்கிறேன்'' என்றார்.

பிறகு ராமன் ஸுக்ரீவனைப் பார்த்து, "ராவணன் ஸீதையை எடுத்துக்கொண்டு எந்த திக்கில் போனான்? எனக்கு இவ்வளவு துக்கத்தைக் கொடுத்த அந்தத் துஷ்ட ராக்ஷஸன் எங்கே இருக்கிறான்? அவனுக்காக நான் அந்த வம்சத்தையே வேரறுக்கப் போகிறேன். என் பிரிய நாயகியான ஸீதையை எடுத்துப்போய் எனக்குக் கோபத்தை உண்டாக்கி, யமலோகத்திற்குப் போகும் வழியைத் திறந்து கொண்டானல்லவா? என் பிராணனைக் காட்டிலும் பிரியமான ஸீதையை நான் இல்லாத வேளையில் திருட்டுத்தனமாக எடுத்துப் போன என் சத்துரு இன்னானென்று சொல். இப்பொழுதே அவனை யமலோகத்திற்கு அனுப்புகிறேன்'' என்றார்.

மம த³யிததரா ஹ்ருதா வநாந்தாத்
ரஜநிசரேண விமத்²ய யேந ஸா |
கத²ய மம ரிபும் த்வமத்³ய வை
ப்லவக³பதே யமஸாத³நம் நயாமி (27)

## ஸர்க்கம் 7

# ஸுக்ரீவன் பிரதிக்ஞை செய்தது

ஏவமுக்தஸ்து ஸுக்3ரீவோ ராமேணார்தேந வாநர: |
அப்3ரவீத் ப்ராஞ்ஜலிர்வாக்யம் ஸபா3ஷ்பம் பா3ஷ்பக3த்3க3த3: (1)

ராமன் இப்படித் துக்கப்படுவதைப் பார்த்து ஸுக்ரீவனுக்கும் கண்ணீர் தாரை தாரையாகப் பெருகிற்று. 'நம் இருவர்க்கும் ஸுக துக்கங்கள் பொது' என்று சொல்லியிருக்கிறனல்லவா? குரல் தழதழத்துக் கைகூப்பி வணக்கமாக, "அந்தப் பாபியான ராவணன் இருக்குமிடத்தையும் அவனுடைய ஸாமர்த்தியத்தையும் பராக்கிரமத்தையும் நான் கொஞ்சம்கூட அறியேன். நீசகுலத்தில் பிறந்த அவனுடைய குலத்தையும் அறியேன். ஆனல் நான் தங்களுக்கு ஒரு பிரதிக்ஞை செய்கிறேன். தாங்கள் ஜானகியைத் திரும்பி அடையும்படி கூடிய முயற்சியனைத்தையும் செய்கிறேன். ராவணனையும் அவனுடைய குலத்தாரையும் அழித்துத் தங்களுக்கு ஸந்தோஷ முண்டாகும்படி என்னல் கூடியவரையில் யத்தனம் செய்கிறேன். என் பராக்கிரமத்தைப் பாருங்கள். சோகத்தை விடுங்கள். ஏன் இப்படித் தீனமாகப் புலம்பவேண்டும்? தங்களுக்கு இயற்கையான தைரியத்தை ஏன் மறந்தீர்கள்? தங்களைப் போன்றவர்கள் இப்படித் தீனமாக இருப்பது தகுமா? நானும் பார்யையைப் பறி கொடுத்தவனே. ஆனல் நான் இப்படித் துக்கப்படவில்லை. தைரியத்தைக் கைவிடவில்லை. நான் கேவலம் ஒரு அல்ப வானரன். என் பார்யையைக் குறித்து இப்படித் துக்கப்படுகிறேனா? மஹாத்மாவும் பெரியோரால் பழக்கப்பட்டவரும் தைரியசாலியுமான தாங்களே இப்படிச் சோகத்திற்கு இடம் கொடுக்கலாமா? தைரியத்தைக் கைபிடித்துக் கண்ணீரை நிறுத்துங்கள். திறமையையும் தைரியத்தையும் ஆபரணமாக உள்ளவர்களுக்கு எல்லையான ஆண்மையைக் கைவிடக்கூடாது. துன்பம் நேர்ந்தாலும் ஐசுவரியம் அழிந்தாலும் மஹாபயமுண்டானாலும் உயிரை இழக்கும்படி இருந்தாலும் விஷயங்களைத் தன் புத்தியால் நன்றாகப் பார்த்து ஆராயும் புத்திமான் வருந்த மாட்டான். புத்தியற்று எப்பொழுதும் மனம் தளர்கிறவன், அதிகப் பாரத்தையுடைய கப்பல் கடலில் முழுகிப்போவதுபோல் இந்திரிய ஸ்வாதீனமற்றுச் சோக ஸமுத்திரத்தில் மூழ்கிப் போவான்.

"நம் இருவருக்குமுள்ள ஸ்நேகத்தால் தங்களைக் கைகூப்பி வேண்டுகிறேன். ஆண்மையைக் கைவிடக்கூடாது; சோகத்திற்கு இடம் கொடுக்கக்கூடாது. சோகத்தின் வசத்தில் அகப்படுகிறவர்கள் ஸுகமடையார்கள். தேஜஸும் வர வரக் குறையும். ஆகையால் தாங்கள் வருந்தக்கூடாது. சோகம் மேலிட்டால் உயிருக்கே அபாயம் வரும். ஆகையால் சோகத்தை விடுங்கள்; தைரியத்தைக் கைப் பற்றுங்கள்; தாங்கள் என்க்குத் தோழனானதால் தங்களுக்கு



ஹிதத்தைத் தெரிவித்தேனேயல்லாது தெரியாத விஷயத்தை உபதேசித்ததாக எண்ணக்கூடாது. நான் தங்களுக்குத் தோழன் என்பதற்காகவாவது என் வார்த்தையை அங்கீகரித்து துக்கத்தை விடவேண்டும்" என்று மதுரமான வார்த்தைகளால் ஸமாதானம் செய்தான்.

கண்ணீரால் நனைந்த தமது முகத்தை ராமன் வஸ்திரத்தின் முனையால் துடைத்துக்கொண்டு தைரியமடைந்து, ஸுக்ரீவனை இறுகத் தழுவி, "நமது ஹிதத்தையே தேடும் பிராணமித்திரன் செய்யவேண்டிய உபதேசத்தை யுக்தமாகவும் ஸமயோசிதமாகவும் நீ செய்ததைப்பற்றி ஸந்தோஷமடைந்தேன். உன் வார்த்தைகளால் ஆறுதலுண்டாயிற்று. எனக்கு இயற்கையான தைரியத்தைக் கைக்கொண்டேன். இவ்விதமான ஸமயத்தில் எனக்குப் பந்துக்களும் மித்திரர்களும் இல்லாதபொழுது உன்னைப்போன்ற மித்திரன் கிடைப்பதரிது. ஆனல், ஸீதையைத் தேடும் விஷயத்தில் வேண்டிய முயற்சியைச்செய். அந்தத் துஷ்டனான ராவணன் இருக்குமிடத்தைக் கண்டு பிடி. நான் உனக்காகச் செய்யவேண்டியதையும் தங்குதடையின்றிச் சொல். நல்ல நிலத்தில் மழைக்காலத்தில் விதைத்த தான்யங்களைப்போல் நீ என்னிடத்தில் சொன்ன வார்த்தைகள் உத்தமமான பயனை அடையும். உன்னிடத்தில் அபிமானத்தாலாவது என் பராக்கிரமத்தை மெச்சியாவது இப்படிச் சொல்லவில்லை. என் வார்த்தை ஸத்தியமென்று அறிந்துகொள். நான் இதுவரையில் பொய் சொன்னதில்லை. இனி சொல்லப் போவதுமில்லை. நான் சொன்ன காரியத்தைச் செய்து முடிப்பதாகப் பிரதிக்ஞை செய்கிறேன். ஸத்தியத்தின் மேலும் ஆணையிடுகிறேன்" என்றார்.

அதைக் கேட்டு ஸுக்ரீவனும் அவனுடைய மந்திரிகளும் அளவற்ற ஆனந்தமடைந்தார்கள். இப்படி ராமனும் ஸுக்ரீவனும் ஏகாந்தமாகத் தங்கள் ஸுகதுக்கங்களைக் குறித்துக் கலந்து பேசிக்கொண்டார்கள். புருஷோத்தமனான ராமமூர்த்தியின் பிரதிக்ஞையைக் கேட்டு ஸுக்ரீவன் தன் எண்ணங்கள் நிறைவேறின வென்று ஸந்தோஷித்தான்.

மஹாநுபா4வஸ்ய வசோ நிசம்ய
ஹரிர் நராணாம் ருஷப4ஸ்ய தஸ்ய |
க்ருதம் ஸ மேநே ஹரிவீரமுக்2ய:
ததா3 ஸ்வகார்யம் ஹ்ருத3யேந வித்3வாந் || (25)

## ஸர்க்கம் 8

# ஸுக்ரீவனுடைய துக்கத்திற்குக் காரணம்

பரிதுஷ்டஸ்து ஸுக்ரீவஸ் தேந வாக்யேந வாநர: |
லக்ஷ்மணஸ்யாக்ரதோ ராம மிதம் வசந மப்ரவீத் ‖ (1)

அதைக் கேட்ட ஸுக்ரீவன் ஸந்தோஷமடைந்து ராமனைப் பார்த்து, "ஸ்வாமி! அரசர்களுக்குத் தகுந்த சௌரியம் வீரியம் முதலிய கல்யாணகுணங்கள் பொருந்திய தாங்கள் எனக்கு மித்திரனாகக் கிடைத்ததைப்பார்த்தால், தேவதைகள் என்னிடத்தில் கிருபை செய்திருக்கிறார்களென்பதில் ஸந்தேகமில்லை. தங்களுடைய ஸஹாயமிருந்தால் தேவேந்திரனுடைய ராஜ்யமும் எனக்குக் கிடைக்கும் எனில், என் அல்பமான இந்த வானர ராஜ்யத்தைப் பற்றிச் சொல்லவும் வேண்டுமோ? உத்தம வம்சத்தில் பிறந்த தாங்கள் எனக்கு அக்னி ஸாக்ஷியாகத் தோழனான பிறகு என் பந்துக்களும் மித்திரர்களும் என்னைக் கொண்டாடுவார்கள். நானும் தங்களுக்குத் தகுந்த தோழனென்பதைத் தாங்கள் காலக்கிரமத்தில் அறிவீர்கள். நானே என் குணங்களைச் சொல்லிக்கொள்ள வெட்கப்படுகிறேன். ஆத்மக்ஞானிகளுக்குத் தைரியம் எப்படி ஒரு நாளும் அழியாதோ, அப்படித் தங்களைப்போன்ற மஹாத்மாக்களுடைய பிரீதியும் ஒரு நாளும் மாறாது. மித்திரர்களுக்குள் தங்கம் வெள்ளி வஸ்திரங்கள் ஆபரணங்கள் முதலிய யாவும் பொது வென்று பெரியோர்கள் சொல்லுகிறார்கள். தோழன் செல்வனாக இருந்தாலும் தரித்திரனாயிருந்தாலும், துக்கத்தை அனுபவித்தாலும் ஸுகத்தை அனுபவித்தாலும், தோஷமுள்ளவனானாலும் தோஷமற்றிருந்தாலும், அவனே நண்பனுக்குப் புகலிடமாவான். தனக்குத் தகுந்த மித்திரனுக்காக ஐசுவரியம் ஸுகம் தேகம் பிராணன் முதலியவைகளை இழப்பது நலம். நாமிருவரும் இப்படியிருக்க வேண்டும்" என்று விக்ஞாபித்தான்.

ராமனும் "நீ சொல்வது உண்மையே" என்று ஒப்புக்கொண்டார். மஹாபுத்திமானும் தேவராஜனைப்போல் காந்தியுள்ளவருமான லக்ஷ்மணனும் அதை அங்கீகரித்தார். ஸீதையின் ஆபரணங்களை வாங்கிக்கொண்டது முதல் ராமலக்ஷ்மணர்கள் நின்றுகொண்டிருந்ததைக் கண்டு ஸுக்ரீவன், அவர்கள் உட்காருவதற்குத் தகுந்த ஆஸனத்தை ஸம்பாதிப்பதற்காக நான்கு புறங்களிலும் சுற்றிப் பார்த்து, ஸமீபத்தில் ஒரு ஆச்சாமரம் புஷ்பங்களாலும் தளிர்களாலும் நிறைந்து வண்டுகள் மதுரமாய்ச் சப்திப்பதைப் பார்த்து, அதிலிருந்து ஒரு பெரிய கிளையை முறித்துப் போட்டு, ராமனுடன் அதில் உட்கார்ந்தான். அதைக்கண்டு ஹனுமான், லக்ஷ்மணன் அதே ஆஸனத்தில் உட்காரமாட்டாரென்று அறிந்து மற்றொரு கிளையை முறித்து அவருக்கு ஆஸனமாகப் போட்டார். இப்படி அந்தப் பர்வதத்தில் ராமன் கலக்கமற்றுத் தெளிந்த ஸமுத்திரத்தைப்போல் கம்பீரமாய் உட்கார்ந்திருக்க, ஸுக்ரீவன் அவரிடத்தில் வைத்த பிரேமையாலும் தன் மனத்திலுள்ள அடங்கா மகிழ்ச்சியாலும் குரல் தழதழக்க மதுரமாய், "ஸ்வாமி! நான் தமயனால் துரத்தப்பட்டுப் பயந்து, பாரியையை இழந்து புத்திமயங்கி துக்கத்துடன் இந்த மலையில் வஸித்துக் கொண்டிருக்கிறேன். ஸகல லோகங்களும் கண்டு நடுங்கும்படியான பராக்கிரமத்தையுடையவரே! வாலியுடன் பகைத்து அநாதையாய்ப் பயந்துகொண்டிருக்கும் என்னையும் தாங்கள் கிருபாகடாக்ஷத்தால் நோக்க வேண்டும்" என்று பிரார்த்தித்தான்.



அதைக்கேட்டு, தர்மங்களை அறிந்தவரும் தர்மத்திலேயே நாடிய மனமுள்ளவரும் மஹாதேஜஸ்வியுமான ராகவன், "நாம் ஒரு தடவை பிரதிக்ஞை செய்த பிறகும் சபலபுத்தியால் மறுபடியும் இவன் பிரார்த்திக்கின்றான். நமது ஸ்வபாவத்தைப் பூர்ணமாய் அறியாதவன்" என்று புன்சிரிப்புடன், "உபகாரம் செய்வது மித்திரனுடைய லக்ஷணம். அபகாரம் செய்வது சத்துருவின் லக்ஷணம். உன் பாரியையை அபகரித்த அந்தப் பாபியை இன்றைக்கே வதம்செய்கிறேன். இதோ என்பாணங்களைப் பார்த்தாயா? இவை மஹா வேகமுள்ளவை, கழுகின் இறகுகளால் அலங்கரிக்கப்பட்டவை, தீக்ஷ்ணமான தேஜஸையுடையவை, தங்கக் கட்டுள்ளவை, தேவேந்திரனுடைய வஜ்ராயுதத்தைப் போன்றவை, உறுதியான கணுக்களுள்ளவை, கூர்மையானவை, கோபத்தால் சீறும் காலஸர்ப்பங்களைப்போல் சத்துருக்களின் உயிரை வாங்கக் கூடியவை. உனக்கு அபராதம் செய்த உன் அண்ணனென்ற சத்துருவை, தேவேந்திரன் மலைகளைப் பிளப்பதுபோல், இந்தப் பாணங்களால் அடித்துத் தள்ளுவதைப் பார்" என்றார். அதைக் கேட்டு அந்தவானர அரசன் அளவற்ற ஸந்தோஷமடைந்து, "நல்லது நல்லது" எனக்கூறி ரகுநாதனைக் கொண்டாடினான்.

"ராம! நான் மஹாதீனன்; தாங்களோ தீனரக்ஷகன். எனக்குத் தாங்கள் தோழனானதால் தங்களிடத்தில் முறையிட்டு அழுகிறேன். அக்னி ஸாக்ஷியாக எனக்குக் கை கொடுத்திருப்பதால் தாங்கள் என் மித்திரனல்லவா? என் உயிரைக் காட்டிலும் தாங்கள் எனக்கு அருமையானவர். ஸத்தியத்தின்மேல் ஆணையிட்டுச் சொல்கிறேன். நான் இதுவரையில் என் மனத்தில் அடக்கிக் கொண்டிருந்த துக்கத்தை தோழனென்ற உரிமையால் வெளியிட்டுச் சொல்லுகிறேன். அது என் ஹிருதயத்தைப் பிளந்து கொண்டிருக்கிறது" என்று சொல்லிக் கண்ணீர் பெருக, வேறொன்றும் பேசமுடியாமல் தத்தளித்தான். "எனக்கு இவன் எவ்வளவோ தைரியத்தை உபதேசித்த பின், இப்பொழுது தன் துக்கத்தை அடக்க முடியாமலிருக்கிறான் என்று ராமன் எண்ணுவாரோ" என்று நினைத்து வெட்கப்பட்டு, வேகமாக ஓடும் வெள்ளத்தைப் போன்ற கண்ணீரைத்

தைரியத்தால் அடக்கிக் கண்களைத் துடைத்துக்கொண்டு பெருமூச்சு விட்டு, ராமனைப் பார்த்து, "பலவானான வாலி என்னை ராஜ்யத்திலிருந்து துரத்திக் கடுமையான வார்த்தைகளால் நிந்தித்தான். பிராணனைக்காட்டிலும் பிரியமான என் பாரியையையும் எடுத்துக் கொண்டான்; என் நண்பர்களையும் சிறையிலடைத்தான். என்னைக் கொல்ல வேண்டுமென்று வழிதேடிக் கொண்டிருக்கிறான். அதற்காக அவனால் அனுப்பப்பட்ட பல வானரர்களைக் கொன்றேன். அந்த ஸந்தேகத்தால் தங்களைக் கண்டபொழுதும் வெளியில் வரப் பயந்து ஒளிந்திருந்தேன். அருண்டவன் கண்ணிற்கு இருண்டதெல்லாம் பேயல்லவா? இதோ இருக்கும் ஹனுமான் முதலியவர்களே எனக்குத் துணை. இவ்வளவு கஷ்டமடைந்தும் நான் பிழைத்திருப்பது இவர்களாலேயே. இந்த மித்திரர்கள் எப்பொழுதும் என்னோடிருந்து நான் போகுமிடமெல்லாம் கூடவந்து என்னை வெகு ஜாக்கிரதையுடன் காப்பாற்றுகிறார்கள். என் வரலாறு இதுவே. சுருக்கிச் சொன்னேன். வளர்த்துவதில் என்ன பிரயோஜனம்? என் அண்ணனான வாலி எனக்குச் சத்துரு. மஹாபராக்கிரமசாலியென்று பெயர் பெற்றவன். என் உயிரும் ஸுகமும் அவன் அழிவைப் பொறுத்திருக்கிறது. அவனைக் கொன்றால் என் துக்கம் தீரும். சுகமாக வாழ்வேன். ஸுகத்திலும் துக்கத்திலும் தோழனைத் தவிர வேறு கதியில்லை" என்று தெரிவித்தான்.

ராமன், "உங்களுக்கு விரோதமுண்டான காரணத்தை முற்றிலும் சொல்; அதைக் கேட்டுப் பலாபலங்களை விசாரித்து, நீ ஸ்வல்ப அபராதம் செய்து அதற்காக அவன் உன்னைக் கடுமையாகத் தண்டித்திருந்தால் அவனை இப்பொழுதே கொல்லுகிறேன்; அல்லது நீ பெரிய அபராதம்செய்து அதற்காக அவன் ஸ்வல்பமாக தண்டித்திருந்தால், உங்களுக்குள் ஸமாதானம் செய்விக்கிறேன். எப்படியாவது உனக்கு க்ஷேமத்தைச் செய்வது என் கடமை. அவன் உன்னை இப்படி அவமானம் செய்ததைப்பற்றி எனக்கு கோபம் பொங்குகிறது. மழைக் காலத்தில் ஆற்றின் வேகத்தைப் போல் அதனை என்னால் அடக்க முடியவில்லை. ஆகையால் நான் கோதண்டத்தை வளைத்து நாணேற்றுவதற்குள் உண்மையைச் சொல். வாலியைக் கொன்ற பிறகு நீ துக்கப்படுவதில் பிரயோஜனமில்லை. நான் பாணத்தை பிரயோகித்த மறுநிமிஷத்திலேயே அவன் இறந்தானென்று அறி," என்றார்.

அதைக் கேட்டு ஸுக்ரீவனும் அவனுடனிருந்த நான்கு வானரர்களும் அளவற்ற ஸந்தோஷமடைந்தார்கள். பிறகு அந்த வானரராஜன் தனக்கும் வாலிக்கும் விரோதமுண்டான காரணத்தை உண்மையாகச் சொல்ல ஆரம்பித்தான்.

ததः ப்ரஹ்ருஷ்ட வத[3]ந: ஸுக்[3]ரீவோ லக்ஷ்மணாக்[3]ரஜே |
வைரஸ்ய காரணம் தத்வ மாக்[2]யாது முபசக்ரமே || (46)

---



## ஸர்க்கம் 9

# வாலி மாயாவியைக் கொன்றது

---

ஶ்ரூயதாம் ராம யத்[3] வ்ருத்த மாதி[3]த: ப்ரப்[4]ருதி த்வயா |
யதா[2] வைரம் ஸமுத்[3]பூ[4]தம் யதா[2] சாஹம் நிராக்ருத: || (1)

"ராம! என் அண்ணனான வாலி மஹாபலவான். என் பிதாவிற்கு அவனிடத்தில் வெகுபிரீதி. எனக்கும் முதலில் அப்படியேதான் இருந்தது. என் பிதா இறந்த பிறகு மந்திரிகள் மூத்தவனாதலால் அவனை வானரர்களுக்கு அரசனாக அபிஷேகம் செய்தார்கள். அது எல்லோருக்கும் இஷ்டமே. எங்கள் பூர்வீக ராஜ்யத்தை வாலி ஆண்டு வருகையில் நான் எப்பொழுதும் அவனிடத்தில் வணக்கமாகவும் வேலைக்காரனைப் போலும் நடந்து வந்தேன்.

"ஒரு ஸமயத்தில் மயனுடைய புத்திரனும் துந்துபிக்கு மூத்தவனுமான மாயாவி என்பவனுக்கும் வாலிக்கும் ஒரு பெண்ணைப் பற்றி விரோதமுண்டாயிற்று. ஒருநாள் இரவில் கிஷ்கிந்தையில் எல்லோரும் தூங்கிக்கொண்டிருக்கும்பொழுது அந்த துஷ்டன் கோட்டை வாசலில் வந்து கர்ஜித்து வாலியை யுத்தத்திற்கு அழைத்தான். ஸுகமாகத் தூங்கிக்கொண்டிருந்த வாலி அதைக் கேட்டுப் பொறுக்காமல் அவனைக்கொல்ல அதிவேகமாக வெளியில் வந்தான். அவனுடைய பாரியைகளும் நானும் வெகு வணக்கமாக அவனைத் தடுத்தும் அவன் எங்களை உதறிவிட்டு மஹாகோபத்துடன் யுத்தத்திற்குப் போனான். அப்பொழுது நான் அவனிடத்திலுள்ள பிரியத்தால் அவனைப் பின்தொடர்ந்தேன். வாலியும் நானும் வருவதை மாயாவி தூரத்திலேயே கண்டு பயந்து ஓடினான். அப்பொழுது சந்திரோதயமாகி பிரகாசமாக இருந்ததால் அவனைத் துரத்திக் கொண்டு போனோம். பிறகு அந்த அஸுரன் புல்லால் மூடப்பட்ட ஒரு பெரிய குகையில் திடீரென்று பாய்ந்து மறைந்தான். அதைக் கண்டு கோபம்கொண்டு வாலி என்னைப் பார்த்து, "ஸுக்ரீவ! நான் அந்தத் துஷ்டனை வெகு சீக்கிரத்தில் கொன்றுவிட்டு வருகிறேன். அதுவரையில் இங்கேயே இரு" என்றான். நானும் வருகிறேனென்று பிரார்த்தித்தேன். வாலி அதற்குச் சம்மதிக்காமல் என்னை அவ்விடத்திலேயே இருக்கும்படி தன் பாதங்களைத் தொட்டு பிரமாணம் செய்யச்சொல்லி அந்த குகையில் புகுந்தான். நானும் அங்கே ஒரு வருஷம் வரையில் காத்துக் கொண்டிருந்தேன். அப்பொழுதும் அவன் திரும்பி வராததால் அவனுக்கு என்ன அபாயம் நேர்ந்ததோ என்று வருந்தி அவன் இறந்தானென்றே நினைத்தேன். அந்தக் குகையிலிருந்து ரத்த வெள்ளம் நுரையுடன் ஓடிவந்தது. அஸுரர்களின் கர்ஜனையும் கேட்டது. வாலி அஸுரர்களால் கொல்லப்பட்டானென்றே நினைத்தேன். பிறகு மலையைப் போன்ற ஒரு

கற்பாறையால் அந்தக் குகையின் வாசலை மூடிவிட்டு, வெகு துக்கத்துடன் அவனுக்குத் தர்ப்பணம் முதலிய உத்தரக்கிரியைகளைச் செய்து முடித்துவிட்டு, கிஷ்கிந்தைக்குத் திரும்பி வந்தேன். வாலி இறந்ததை ஒருவரும் அறியாமல் வெகு ஜாக்கிரதையாக மறைத்து வைத்தேன். மந்திரிகள் அதை எப்படியோ அறிந்து, நான் விரும்பாவிட்டாலும் என்னை அரசனாக இருக்கும்படி நிர்ப்பந்தித்தார்கள். அப்படியே நான் நியாயமாக அரசாண்டு வருகையில் வாலி அந்த அஸுரர்களைக் கொன்றுவிட்டுக் கிஷ்கிந்தைக்கு வந்தான். தன் ஸ்தானத்தில் நான் இருப்பதைக் கண்டு கோபத்தால் கண் சிவந்து என் மந்திரிகளைச் சிறையில் போட்டு, என்னையும் கடுமையாகக் கோபித்தான். 'அறியாமையால் செய்துவிட்டேன்' என்று நான் எவ்வளவு பிரார்த்தித்தும் என்னைத் தள்ளிவிட்டான். குடிகள் எனக்கு அனுகூலமாக இருந்தபடியால் நான் அந்தப் பாபியைத் தண்டிக்க முடியும். ஆனாலும் அவன் என் அண்ணன், அப்படிச் செய்ய இஷ்டமில்லை. நகரத்தில் அவன் வந்த பிறகும் நான் அவனுக்கு ஸகல மரியாதைகளையும் செய்து நமஸ்கரித்து, அவனுடைய பாதங்களில் என் தலையை வைத்து மன்னிப்புக் கேட்டுக்கொண்டேன். அவனுக்குக் கோபம் தணியவுமில்லை, ஸந்தோஷமாக என்னை ஆசீர்வதிக்கவுமில்லை.

நத்வா பாதா$^{3}$வஹம் தஸ்ய மகுடேநாஸ்ப்ருஶம் ப்ரபோ$^{4}$ |
அபி வாலீ மம க்ரோதா$^{4}$ந் ந ப்ரஸாத$^{3}$ம்' சகார ஸ: ‖ (27)

---

## ஸர்க்கம் 10

# ராமன் ஸுக்ரீவனுக்கு அபயம் கொடுத்தது

தத: க்ரோத$^{4}$ ஸமாவிஷ்டம் ஸம்ரப்$^{3}$த$^{4}$ம் தமுபாக$^{3}$தம் |
அஹம் ப்ராஸத$^{3}$யாம் சக்ரே ப்$^{4}$ராதரம் ப்ரிய காம்யயா ‖ (1)

**பி**றகு என்னால் கூடியவரையில் அவனை ஸமாதானம் செய்தேன். "அண்ணா! தாங்கள் சத்துருவைக் கொன்றுவிட்டு க்ஷேமமாக வந்து சேர்ந்தது என் பாக்கியம். அநாதையான எனக்குத் தாங்களே நாதன். வெண்குடை, சாமரம் முதலிய ராஜோபசாரங்களை நான் தங்களுக்குச் செய்யும்படி உத்தரவு கொடுக்கவேண்டும். ஒரு வருஷம் வரையில் அந்தக் குகை வாசலில் கவலையுடன் காத்துக்கொண்டிருந்தேன். பிறகு அதிலிருந்து ரத்த வெள்ளம் வருவதைக் கண்டு பயந்து தங்களுக்கு ஏதோ நேர்ந்ததென்று மிகவும் துக்கமடைந்து ஒரு மலைச் சிகரத்தால் அந்த வழியை மூடிவிட்டுக் கிஷ்கிந்தைக்குத் திரும்பி வந்தேன். தங்களுக்கு நேர்ந்த கஷ்டத்தால் நான் வருத்தப்பட்டுக் கொண்டிருக்கையில் மந்திரிகளும் பட்டணத்து ஜனங்களும் என்னைப் பலவந்தம் செய்து அரசனாக நியமித்தார்கள். அந்த அபராதத்தை மன்னிக்கவேண்டும்.



அரசனாக இருக்கத் தகுந்தவர்கள் தாங்களே. நான் முன்போல் யுவராஜாவாக இருக்கிறேன். தாங்கள் இல்லாததால் தங்களுடைய அதிகாரத்தை நடத்தி வந்தேன். என்னிடத்தில் ஒப்புவித்த ராஜ்யத்தை யாதொரு அபாயமின்றித் தங்களிடத்தில் மறுபடியும் ஒப்புவித்துவிட்டேன். மஹாபராக்கிரமமுள்ள தாங்கள் என்னிடத்தில் கோபிக்கக்கூடாது. தயவு செய்யவேண்டும். கைகூப்பித் தங்கள் பாதங்களில் நமஸ்கரிக்கிறேன். அரசனில்லாமல் ராஜ்யம் அழிந்து போகுமென்று மந்திரிகளும் நகரத்து ஜனங்களும் என்னை நிர்ப்பந்தித்து ஸிம்ஹாஸனத்தில் வைத்தார்கள்" என்று விநயமாகத் தெரிவித்தேன்.

அவன் என்னைக் கோபத்துடன் அதட்டி, "சீசீ" என்று சொல்லககூடாத வார்த்தைகளைச் சொல்லித் தூஷித்தான். பிறகு மந்திரிகளையும் பிரஜைகளையும் தருவித்து அவர்களுக்கெதிரில் என்னைப் பார்த்து, "ஒரு நாள் ராத்திரியில் மாயாவியென்ற அஸுரன் காலம் குறுகி என்னைச் சண்டைக்கு அழைத்தானென்று உங்களுக்குத் தெரியுமே. அதைக் கேட்டு அவனுடன் யுத்தம் செய்ய இங்கிருந்து புறப்பட்டேன். இந்தத் துரோகி அப்பொழுது என்னுடன் வந்தான். மாயாவி நாங்கள் வரக்கண்டு பயந்தோடினான். நாங்களும் அவனைத் துரத்திக்கொண்டு போனோம். திடீரென்று அவன் ஒரு குகையில் மறைவதைக் கண்டு, 'நான் கிஷ்கிந்தைக்குத் திரும்பிப் போனால் என் கீர்த்திக்குக் குறைவு வரும். ஆகையால் நான் இந்தக் குகைக்குள் போய் அவனை அதி சீக்கிரத்தில் கொன்றுவிட்டு வருகிறேன். அது வரையில் நீ இங்கே இரு' என்று கட்டளையிட்டேன். இவன் அங்கேயே இருப்பானென்று நம்பி, அந்தப் பயங்கரமான குகையில் பிரவேசித்து, ஒரு வருஷம் வரையில் அவனைத் தேடினேன். முடிவில் அவனைக் கண்டுபிடித்து, அவனுடைய பந்துக்களுடன் கொன்றேன். அவன் கோரமாய்க் கர்ஜித்துக்கொண்டு இறக்கும் ஸமயத்தில் அவனுடைய வாயிலிருந்து பெருகின ரத்தத்தால் அந்தக் குகை நிறைந்தது. இப்படித் துந்துபியின் புத்திரனான மாயாவியைக் கொன்றுவிட்டு அந்தக் குகையிலிருந்து வெளியில் வருகையில், வாசல் அடைபட்டு வழி தெரியாமலிருந்தது. 'ஸுக்ரீவா!' என்று பல தடவை கூப்பிட்டும் யாதொரு பதிலுமில்லை. நான் வருத்தமடைந்து பல தடவை கால்களால் அந்தக் கல்லை இடித்துத் தள்ளி, அந்த வழியால் நகரத்திற்குத் திரும்பி வந்தேன். இந்தக் குரூரன் என் ராஜ்யத்தில் ஆசைவைத்து ஸஹோதரனிடத்தில் வைக்கவேண்டிய மரியாதையையும் மறந்து என் ஸ்தானத்தைக் கைப்பற்றிக்கொண்டான்" என்று சொல்லி, கொஞ்சம்கூட இரக்கமில்லாமல் என்னை ஒற்றை வஸ்திரத்துடன் அங்கிருந்து அடித்துத் துரத்தினான். நான் ராஜ்யத்தையும் பார்யையையும் இழந்து, அவனுக்குப் பயந்து இந்தப் பூமி முழுவதும் ஓடித் திரிந்தேன். இந்த ரிசியமூக பர்வதத்தில் வாலி வர

மாட்டானென்று தெரிந்து இங்கே வந்து ஒளிந்துகொண்டேன். யாதொரு அபராதமும் செய்யாத எனக்கு இவ்வளவு கஷ்டங்கள் நேர்ந்த வகையையும் வாலிக்கும் எனக்கும் உண்டான விரோத காரணத்தையும் தெரிவித்தேன். ஸகலப்பிராணிகளும் தங்களுடைய பராக்கிரமத்தைக் கண்டு நடுங்குகின்றன. ஒரு குற்றமுமின்றி வாலியிடத்தில் பயந்திருக்கின்ற என்மேல் கிருபை செய்து அவனைக் கொல்லவேண்டும்'' என்றான்.

அதைக் கேட்டுத் தர்மாத்மாவான ராமன் புன்சிரிப்புடன் "ஸுக்ரீவ! இதோ என்னிடத்திலிருக்கும் பாணங்கள் ஸூரியனைப் போல் ஜ்வலிக்கின்றன. வீண்போகாத இந்தக் கூர்மையான சரங்கள் அதிவேகமாய் வாலியின் மார்பைத் துளைக்கும். உன் பாரியையை அபஹரித்த அந்த துராத்மா என் கண்ணில் படும் வரையில் ஸுகமாக ஜீவிக்கட்டும். நானும் உன்னைப்போல் கஷ்டப்படுபவன்; அந்த வருத்தத்தைப் பூர்ணமாய் அறிவேன். உன்னைத் துக்க ஸமுத்திரத்திலிருந்து கரையேற்றி உன் இஷ்டத்தைப்பூர்த்தி செய்கிறேன்'' என்று தர்மத்திற்கு ஒத்த வார்த்தைகளைச் சொன்னவுடன், ஸுக்ரீவன் மிகவும் ஸந்தோஷித்துத் தனக்கு ஸகல காரியங்களும் கைகூடியதாக எண்ணினான்.

*தஸ்ய தத்[3] வசநம் ஶ்ருத்வா ராக[4]வஸ்யாத்மநோ ஹிதம் |*
*ஸுக்[3]ரீவ: பரமப்ரீத: ஸுமஹத்[3] வாக்ய மப்[5]ரவீத் ‖ (35)*

---

## ஸர்க்கம் 11

# வாலியின் பராக்கிரமம்

---

*ராமஸ்ய வசநம் ஶ்ருத்வா ஹர்ஷ பௌருஷ வர்த[4]நம் |*
*ஸுக்[3]ரீவ: பூஜயாம் சக்ரே ராக[4]வம் ப்ரஶஶம்ஸ ச ‖ (1)*

**ரா**மனுடைய வார்த்தையைக் கேட்டு ஸுக்ரீவனுக்கு ஆனந்தமும் பராக்கிரமமும் அதிகரித்தன. ராமனைக் கைகூப்பி நமஸ்கரித்து ஸ்தோத்திரம் செய்தான். "ஸ்வாமி! பிரளய காலத்தில் ஸூரியன் ஜ்வலித்து ஸகல லோகங்களையும் எரிப்பதுபோல் தாங்கள் கோபம் கொண்டால் தங்களுடைய ஜ்வலிக்கும் தீக்ஷ்ணமான பாணங்களால் பிரபஞ்சம் முழுவதையும் நாசம் செய்வீர்களென்பதில் ஸந்தேகமுண்டோ? வாலியின் ஆண்மையையும் வீரியத்தையும் தைரியத்தையும் எனக்குத் தெரிந்தவரையில் சொல்லுகிறேன். தாங்கள் கவனத்துடன் கேட்டு உசிதமான காரியத்தைச் செய்ய வேண்டும்.

வாலி பிராஹ்ம முஹூர்த்தத்தில் எழுந்து, ஸந்தியா வந்தனம் செய்வதற்கு நான்கு ஸமுத்திரங்களுக்கும் ஸூரியோதயமாகுமுன் போய் வருவான்; அதனால் அவனுக்குக் கொஞ்சமாவது சிரமமிருக்காது. மஹாபர்வதங்களின் உச்சியில் ஏறி, அவைகளின் பெரிய



சிகரங்களை ஆகாசத்தில் விட்டெறிந்து பந்தாடுவான். வனங்களிலுள்ள மஹா விருக்ஷங்களை ஒரு நிமிஷத்தில் வேருடன் பிடுங்கித் துண்டு துண்டாக ஒடித்துத் தன் பலத்தைக் காட்டுவான்.

துந்துபி என்ற அஸுரன் கைலாஸ மலையின் சிகரத்தைப் போல் பருத்து, எருமையின் ரூபத்தைத் தரித்து, தனக்கு ஆயிரம் யானை பலமிருக்கவேண்டுமென்று பெற்ற வரத்தால் மதம் கொண்டு கொழுப்படங்காமல், யாருடன் யுத்தம் செய்வோமென்று ஆலோசித்து, முடிவில் ஸமுத்திரராஜனிடத்தில் வந்தான். "என்னுடன் யுத்தம் செய்ய வா'' என்று மஹா கர்வத்துடன் அந்த அஸுரன் கர்ஜித்ததைக் கேட்டு, ஸமுத்திர ராஜன் விசேஷ பலசாலியாயிருந்தும் தர்மாத்மாவானதால், துந்துபியின் கர்மகதியை ஆலோசித்து அவனுக்கு மரணம் ஸமீபித்ததை அறிந்து, "அஸுர சிரேஷ்ட! உன்னைப்போன்ற மஹா வீரனுடன் யுத்தம் செய்ய என்னால் ஆகுமா? உனக்குத் தகுந்த எதிரியைக் காட்டுகிறேன். வடக்கில் ஹிமவானென்று ஒரு பர்வதராஜன் இருக்கிறான். அங்கே தபஸ்விகள் ஆனந்தமாய் வஸிக்கிறார்கள். அநேக சிகரங்களாலும் குகைகளாலும் நதிகளாலும் விருக்ஷங்களாலும் பள்ளங்களாலும் விளங்குகிறான். அவன் பரமசிவனுக்கு மாமனார். உன்னுடன் யுத்தம் செய்து உனக்கு ஸந்தோஷத்தை உண்டாக்கக்கூடியவன் அவன் ஒருவனே'' என்றார்.

ஸமுத்திரராஜன் தன்னிடத்தில் பயந்து இப்படிச் சொல்கிறான் என்றெண்ணி அவனை அலக்ஷ்யம் செய்து, வில்லிலிருந்து விடப்பட்ட பாணத்தைப்போல் அதிவேகமாக ஹிமாலயத்திற்கு வந்து மஹாகஜங்களைப்போன்ற பெரும் பாறைகளை அந்தப் பர்வதத்திலிருந்து தன் கொம்பால் இடித்துத் தள்ளிக் கர்ஜித்து அட்டஹாஸம் செய்தான். அப்பொழுது அந்தப் பர்வதராஜன் வெளுத்த மேகத்தைப்போல் திவ்யரூபத்தைத் தரித்து வெளியில் வந்து, 'துந்துபி! ஸகல தர்மங்களையும் அறிந்த நீ இப்படி என்னை உபத்திரவிப்பது உசிதமா? நான் யுத்தப் பயிற்சி இல்லாதவன். கேவலம் ஸாதுக்களான தபஸ்விகளுடன் காலம் கழிக்கிறவன்' என்றார். மஹா புத்திமானான பர்வதராஜனுடைய வார்த்தைகளைக் கேட்டுத் துந்துபியின் நேத்திரங்கள் கோபத்தால் சிவந்தன. "உன்னை ஒரு பொருட்டாக எண்ணி உன்னிடத்தில் யுத்தத்திற்கு வந்த என் புத்தியையல்லவா நிந்திக்கவேண்டும்? போகட்டும். உனக்கு யுத்தத்தில் பழக்கமில்லை என்று ஒப்புக்கொள்ளுகிறேன். அல்லது என்னைக் கண்டு பயந்து யுத்தம் செய்ய இஷ்டமில்லை என்றாவது ஒப்புக்கொள்ளுகிறேன். எனக்கு ஸமமாக யுத்தம் செய்பவனையாவது காட்டு'' என்று அந்த அஸுரன் கர்ஜிக்க, ஹிமவானுக்குக் கோபமுண்டாயிற்று. தன்னை அதுவரையில் ஒருவனும் அப்படி அவமானம் செய்ததில்லை; ஆனாலும் மேல் நடக்கவேண்டிய காரியத்தை உத்தேசித்துத் தன் கோபத்தை அடக்கிக்கொண்டு, "அஸுரோத்

தம! கிஷ்கிந்தையில் வாலி என்ற வானர ராஜனிருக்கிறான். அவன் மஹா புத்திமான். இந்திரனுக்கு ஸமமான பலசாலி; யுத்தத்தில் நிபுணன்; உனக்கு யுத்தம் செய்ய விருப்பமிருந்தால் அவனிடத்தில் போ. இதுவரையிலும் அவனை எதிர்த்து ஜயித்தவர்களில்லை. 'தேவேந்திரனும் நமுசியும் கோரயுத்தம் செய்ததைப்போல், உன் இஷ்டப்படி உனக்குத் திருப்தியாகும் வரையில் யுத்தம்செய்வான்'' என்றார்.

உடனே துந்துபி இரண்டு இடங்களிலும் தன் எண்ணம் நிறைவேறாததால் கோபமடைந்து, அதிசீக்கிரத்தில் கிஷ்கிந்தைக்கு வந்து, கோட்டை வாசலில் நின்றுகொண்டு, பூமியும் ஆகாசமும் நடுங்கும்படி துந்துபி அடித்ததுபோல் கர்ஜித்தான். கூர்மையான கொம்புகளுள்ள எருமை ரூபத்துடன், மழைக் காலத்தில் நீருண்ட மேகமானது ஆகாசத்தில் ஸஞ்சரிப்பதுபோல், அங்குமிங்கும் பாய்ந்து ஸமீபத்திலிருந்த விருக்ஷங்களை ஒடித்துப் பூமியைக் குளம்புகளால் பிளந்து, கோட்டை வாசலின் கதவுகளை மஹா கஜத்தைப்போல் கொம்புகளால் உடைத்தான்.

அப்பொழுது அந்தப்புரத்தில் தூங்கிக்கொண்டிருந்த வாலி, அவனுடைய கர்ஜனையைக் கேட்டு, நக்ஷத்திரங்களால் சூழப்பட்ட சந்திரனைப்போல், ஸ்திரீகளுடன் வெளியில் வந்தான். அங்கே துந்துபியின் சேஷ்டைகளைப் பார்த்துக் கோபம் கொண்டு, தெளிவாகத் துந்துபியின் மனத்தில் நன்றாகப் படும்படி, "பாதி ராத்திரியில் இங்கே வந்து கோட்டை வாசலை அடைத்துக்கொண்டு ஏன் கூச்சல் போடுகிறாய்? நீ மஹாபலசாலியென்று எனக்குத்தெரியும். உன்னை மன்னித்தேன். உன் உயிரைக் காப்பாற்றிக்கொண்டு இவ்விடம் விட்டுப் போ'' என்றான். அதைக் கேட்டுத் துந்துபி கோபத்தால் கண்கள் சிவந்து, ''நீ வீரனென்று கேட்டு இங்கே வந்தேன். உன் ஸ்த்ரீகளுக்கு முன் இப்படி வீண்பெருமை பேசிக் கொள்வாயென்று நான் நினைக்கவில்லை. இப்பொழுதே என்னுடன் யுத்தம் செய். எங்கே உன் பலத்தைப் பார்ப்போம். அப்படி உனக்குத் தைரியமில்லாவிட்டால்,பொழுது விடியும் வரையில் என் கோபத்தை அடக்கிக் கொள்ளுகிறேன். உனக்கு இஷ்டமான ஸுகங்களை அனுபவி. உன் பந்துக்களை வருவித்து "நான் போய் வருகிறேன்'' என்று அவர்களிடத்தில் உத்தரவு பெற்றுக்கொண்டு அவர்களை ஆலிங்கனம் செய்து மரணகாலத்தில் அவர்களுக்குச் செய்யவேண்டிய தானங்களைச் செய். மித்திரர்களுடன் ஸந்தோஷமாகக் காலம்போக்கு. கிஷ்கிந்தையை நன்றாய்ச் சுற்றிப்பார். உனக்கு ஸமானனை அரசனாக அபிஷேகம் செய். ஸ்த்ரீகளுடன் ஸகல போகங்களையும் அனுபவி. பிறகு அவர்களைப் பார்க்கமுடியாது. உன் கர்வத்தையும் உயிரையும் அழிக்க நான் வந்திருக்கிறேனென்றறி. மதுபானம் செய்து மயங்கியிருப்பவனையும் தூங்குகிறவனையும் ஆயுதமில்லாதவனையும் உன்னைப் போல் ஸ்த்ரீகளின் நடுவிலிருப்பவனையும் கொல்லுகிறவன், கர்ப்பத்திலிருக்கும் சிசுவைக் கொன்ற பாபத்தை அடைவான்'' என்றான்.



தாரை முதலிய ஸ்த்ரீகளை அனுப்பிவிட்டு, வாலி, முன்னே வந்து, அந்த அஸுரனைப் பார்த்துக் கோபத்தால் மெதுவாய்ச் சிரித்து, "அடே மூட! என்னுடன் யுத்தம் செய்யவேண்டுமோ? அப்படி இஷ்டமிருந்தால் இதோ ஸித்தமாயிருக்கிறேன். நான் மயங்கியிருக்கிறேனென்று எண்ணாதே. அப்படியிருந்தாலும் வீரர்கள் யுத்தத்திற்குச் செல்லும் ஸமயத்தில் உத்ஸாஹத்தை வளர்க்கக் குடிக்கும் பானமென்று இதை அறி'' என்று கூறி தன் பிதாவான தேவேந்திரனால் கொடுக்கப்பட்ட தங்கமாலையைக் கழுத்தில் போட்டுக்கொண்டு யுத்தம் செய்ய ஆரம்பித்தான். மலையைப்போன்ற துந்துபியின் கொம்புகளைப் பிடித்துக் கிறுகிறென்று சுழற்றிப் பூமியில் அடித்துக் கர்ஜித்தான். அதனால் அந்த அஸுரனுடைய காதுகளிலிருந்து ரத்தம் பெருகிற்று. இப்படி இருவரும் ஒருவரையொருவர் ஜயிக்கவேண்டுமென்று ஆசைகொண்டு நெடுநேரம் கோரயுத்தம் செய்தார்கள். இந்திரனுக்கு ஸமமான பராக்கிரமத்தையுடைய வாலி, கைகளாலும் முழங்கால்களாலும் பாறைகளாலும் மரங்களாலும் துந்துபியை அடித்தான். இப்படி அந்த அஸுரனும் வாலியும் யுத்தம் செய்யும்பொழுது துந்துபியின் பலம் வரவரக் குறைந்தது; வாலியின் பலம் வரவர அதிகமாயிற்று. நெடுநேரம் யுத்தம் செய்ததாலும் பலம் குறைந்ததாலும் களைத்த துந்துபியை வாலி உயரத்தில் தூக்கிப் பூமியில் அடித்தான். அப்படிப் பூமியில் அடித்துத் தேய்க்கப்பட்ட அந்தச் சரீரத்தை வாலி தூக்கி, ஒரு யோஜனை தூரத்திற்கப்பால் வீசி எறிந்தான்.

வேகத்தால் எறியப்பட்ட துந்துபியின் வாயிலிருந்து பெருகின ரத்தம் காற்றாலடிக்கப்பட்டு மதங்கரிஷியின் ஆசிரமத்தில் விழுந்தது. அந்த மஹாத்மா அதைப் பார்த்துக் கோபம் கொண்டு, "இப்படி ரத்த மழையால் என்னை அசுத்தம் செய்த துஷ்டன் யார்? இந்திரிய ஸ்வாதீனமின்றி கேவலம் மூர்க்கனைப்போல் இப்படி என்னை அவமானம் செய்தவன் யாரென்று யோசித்தார். பிறகு வெளியில் வந்து பார்க்கையில் மலைச்சிகரத்தைப் போல் துந்துபியின் உடல் அங்கே கிடக்கக்கண்டார். ஞானதிருஷ்டியால் அது வாலியின் காரியமென்றறிந்து, "நான் இருக்கும் ஆசிரமத்தை ரத்த வெள்ளத்தால் அசுத்தம் செய்தவன் இங்கே வந்தால் இறக்கக் கடவன். இந்த ஆசிரமத்திற்கு நான்கு புறத்திலும் ஒரு காத தூரத்திற்குள் அவன் வந்தால் நிச்சயமாகச் சாகக்கடவன். துந்துபியின் உடலை இப்படி விட்டெறிந்து ஆசிரம மரங்களை அழித்தான். இங்கே இருக்கும் அவனுடைய மந்திரிகள் இனி இங்கே தங்கக்கூடாது. இங்கிருந்து போக வேண்டும். இருந்தால் அவர்களையும் சபிப்பேன். என் பிள்ளையைப்போல் எப்பொழுதும் நான் பாதுகாத்துவரும் இந்த வனத்திலுள்ள பழம் கிழங்கு

புஷ்பம் முதலியவைகளை அவர்கள் உபயோகித்தல் கூடாது. நாளைக் காலையில் அந்தக் குரங்குகளை இங்கே நான் கண்டால் அநேக ஆயிரம் வருஷங்கள் வரையில் அவை கல்லாகும்'' என்றார். இதைக் கேட்டு அங்குள்ள குரங்குகளெல்லாம் பயந்து ஓடிப்போயின. வாலி அவர்களைப் பார்த்து "மதங்காசிரமத்திலிருந்த நீங்கள் ஏன் இங்கே வந்தீர்கள்'' என்றான். அவர்கள் நடந்ததைத் தெரிவித்தார்கள். உடனே வாலி அந்த மகரிஷியிடத்திற்குப் போய் கைகூப்பி வணங்கி நமஸ்கரித்தான். அவனைத் திரும்பிப்பாராமல் அவர் ஆசிரமத்திற்குப் போய் விட்டார். தன்னைச் சபிப்பாரென்று பயந்து மிகவும் மனம் வருந்தி அவன் அங்கிருந்து வந்துவிட்டான். அதுமுதல் ரிசியமூக பர்வதத்திற்கு அவன் வருவதில்லை. அதைப் பார்ப்பதற்கும் விரும்புவதில்லை. அவனும் அவனைச் சேர்ந்தவர்களும் இங்கேவரமாட்டார்கள் என்ற நம்பிக்கையால் நானும் என் மந்திரிகளும் இங்கே வந்து பயமில்லாமல் வஸிக்கிறோம்.

துந்துபியின் எலும்புக்கூடு மலைச்சிகரத்தைப் போல் அதோ கிடக்கிறது. வாலி பலக் கொழுப்பால் அதை விளையாட்டாக வீசி எறிந்தான். இதோ ஒன்றோடொன்று இணைந்து இருக்கும் ஏழு ஆச்சா மரங்களைப் பாருங்கள். அவைகள் விஸ்தாரமான கிளைகளால் நிறைந்திருக்கின்றன. வாலி அவைகளில் ஒருமரத்தைப் பிடித்து அசைப்பான்; எல்லாவற்றிலுமுள்ள இலைகள் உதிர்ந்து மொட்டையாய்விடும். வாலியின் பலத்திற்கோ எல்லை யில்லை. அப்படிப் பட்டவனை யுத்தத்தில் எவ்வாறு கொல்லப்போகிறீர்கள்?'' என்றான்.

அதைக் கேட்டு லக்ஷ்மணன் சிரித்து, "ராமன் வாலியைக் கொல்லக்கூடியவரென்று உனக்கு நம்பிக்கையுண்டாக எதைச்செய்ய வேண்டும்? நான்கு ஸமுத்திரங்களையும் ஒரு க்ஷணத்தில் சுற்றி வர வேண்டுமா? மலைச்சிகரங்களை ஆகாசத்தில் விட்டெறிந்து பந்தாட வேண்டுமா? துந்துபியின் உடலை வீசி எறிய வேண்டுமா? சொல்'' என்றார். ஸுக்ரீவன் "வாலி இந்த ஏழு ஆச்சா மரங்களில் ஒவ்வொன்றையும் வில்லின் உதவியின்றிக் கையினால் அம்பை எறிந்தே துளைத்திருக்கிறான். இவ்வாறு பலமுறை செய்திருக்கிறான். ராமன் இவைகளிலொன்றை ஓரே பாணத்தால் துளைக்க முடிந்தால் அவருடைய பராக்கிரமத்தைப் பார்த்து வாலி இறந்தானென்று நம்புவேன். அல்லது இறந்த துந்துபியின் உடலை எண்ணூறு முழத்திற்கப்பால் ஒற்றைக் காலால் தூக்கி எரிந்தால் போதும்'' என்றான்.

பிறகு "இப்படி நம்பிக்கைக் குறைவான வார்த்தைகளைச் சொன்னால் ஒருவேளை ராமன் வருத்தப்படுவாரோ'' என்று கொஞ்சநேரம் யோசித்து, அவருக்கு ஸந்தோஷமுண்டாகும்படி, "வாலியோ சூரன்; சூரர்களைக் கொன்றவன் ; பல பராக்கிரமத்தில் பெயர் பெற்றவன். மஹாபலசாலி; இதுவரையில் அவனை ஜயித்தவர்களில்லை. தேவர்களுக்கும் ஸாத்தியமில்லாத அவனுடைய ஆச்சரியச் செயல்களைப் பார்த்திருக்கிறேன். அவனை நினைக்க நினைக்க பயம் மேலிட்டு ரிச்யமூகப் பர்வதத்தில் வந்து ஒளிந்திருக்கிறேன். அவன் ஒருவராலும் ஜயிக்க முடியாதவனென்றும் எதிர்க்க முடியாதவனென்றும் மஹாகோபி என்றும் நினைக்கும்பொழுது இந்த ரிச்யமூகப் பர்வதத்தை விட்டுப்போக நான் துணியவில்லை. எப்பொழுதும் பயந்துகொண்டு எவரிடத்திலும் ஸந்தேகப் பட்டுக் கொண்டு இந்த வனத்தில் காலம் கழிக்கிறேன். என்னிடத்தில் விசுவாசம் வைத்து என்னைக் காப்பாற்றும் இந்த மந்திரிகளே எனக்குத் துணை. என் அதிருஷ்டத்தால் புருஷோத்தமனான தாங்கள் எனக்கு உத்தம மித்திரனாக கிடைத்திருக்கிறீர்கள். ஹிமாலயத்தை அடுத்ததுபோல் தங்களை அண்டிச் சரணமடைந்தேன். ஆனாலும் வாலியின் பலத்தை நான் நேரில் பார்த்தவன்; யுத்தத்தில் தங்கள் வீரியத்தையும் பராக்கிரமத்தையும் நான் பார்த்தவனல்ல. தங்களைப் பரீக்ஷிக்கிறேன் என்றாவது அவமதிக்கிறேன் என்றாவது பயமுறுத்துகிறேன் என்றாவது தாங்கள் ஒருபொழுதும் நினைக்கக்கூடாது. அவனுடைய பயங்கரமான செய்கைகளால் எனக்கு அதைரியமுண்டாகிறது. தங்களுடைய பொய்யாகாத சொல்லும், புத்தியும், கலங்காத தைரியமும் ரூபமுமே, நீறு பூத்த நெருப்புப்போல் அளவற்ற தேஜஸ் தங்களிடத்தில் குடிகொண்டிருப்பதைக் காட்டுகின்றன'' என்றான்.

அதைக் கேட்டு ராமன், நமது பராக்கிரமத்தை அறியாதவனாகையால் இப்படி ஸந்தேகிக்கிறானென்று எண்ணி புன் சிரிப்புடன், "தோழா! நான் யுத்தத்தில் வாலியைக் கொல்வேன் என்று நம்பிக்கை இல்லாவிட்டால் உன் ஸந்தேகத்தைத் தீர்க்கிறேன்'' என்றார். நமது தோழனிடத்தில் இப்படி நம்பிக்கைக் குறைவான வார்த்தைகளைச் சொல்லி விட்டோமே என்று ஸுக்ரீவன் வருத்தப்படுவதைக் கண்டு அவனை ஸமாதானம் செய்து, துந்துபியின் உடலைக் கால் கட்டை விரலால் விளையாட்டாகத் தூக்கி எறிந்தார். அது பத்து யோசனைக் கப்பால் போய் விழுந்தது. ஸுக்ரீவன் அதைப்பார்த்து, "ஸ்வாமி! இதை வாலி விட்டெறியும் பொழுது ரத்தமும் மாம்ஸமும் நிறைந்து இந்த உடல் மிகக் கனமாக இருந்தது. கொஞ்சம் உயிருடனிருந்தது. இப்பொழுதோ ரத்தமும் மாம்ஸமுமின்றி வெறும் எலும்புக்கூடாக புல்லைப்போல் கனமின்றி இருக்கிறது. மேலும் இதை விட்டெறிந்தபொழுது வாலி மதுபானம் செய்து மயங்கி இருந்தான். துந்துபியுடன் வெகுநேரம் யுத்தம் செய்து களைத்திருந்தான். தாங்களோ இப்பொழுது பூர்ண பலத்துடன் இதை விட்டெறிந்தீர்கள். ஆகையால் இதைக்கொண்டு அதிக பலசாலி வாலியா தாங்களா என்று நிச்சயிக்க முடியாது. எலும்புக் கூட்டிற்கும் உயிருள்ள தேகத்திற்கும் மிக பேதமுண்டு. ஆகையால் இந்த ஆச்சாமரத்தைப் பிளந்தால் அந்த ஸந்தேகம் தீரும். கோதண்டத்தை வளைத்துப் பாணத்தை விடுங்கள். அது அந்த

மரத்தைத் துளைக்குமென்பதில் ஸந்தேகமில்லை. மறுபடியும் அவ நம்பிக்கையுண்டாக்க வேண்டுமென்ற அவசியம் என்னவென்று ஆலோசிக்கக் கூடாது. அதைப் பார்ப்பதில் எனக்குள்ள ஸந்தோஷத்தால் இப்படி வேண்டுகிறேனே யொழிய, தங்களுடைய பலத்தை பரீக்ஷிப்பதற்காகவல்ல; பிரமாணமாகச் சொல்லுகிறேன். தேஜஸுள்ள பொருள்களில் ஸூரியன் சிரேஷ்டன்; மலைகளுக்குள் ஹிமாலயம் சிரேஷ்டம்; நாற்கால் பிராணிகளுக்குள் ஸிம்ஹம் சிரேஷ்டம்; அப்படியே பராக்கிரம சாலிகளுக்குள் தாங்களே சிரேஷ்டர்'' என்று தெரிவித்துக் கொண்டான்.

யத$^{2}$ா ஹி தேஜஸ்ஸு வர: ஸத$^{3}$ா ரவி:
யத$^{2}$ா ஹி ஶைலோ ஹிமவாந் மஹாத்$^{3}$ரிஷு |
யத$^{2}$ா சதுஷ்பாத்ஸு ச கேஸரீ வர:
தத$^{2}$ா நராணாமஸி விக்ரமே வர: ‖ (97)

---

## ஸர்க்கம் 12

## ஆச்சா மரங்களைப் பிளந்தது

---

ஏதச் ச வசநம் ஶ்ருத்வா ஸுக்$^{3}$ரீவேண ஸுபா$^{4}$ஷிதம் |
ப்ரத்யயார்த$^{2}$ம் மஹாதேஜா ராமோ ஜக்$^{3}$ராஹ கார்முகம் ‖ (1)

பிறகு ராமன் ஸுக்ரீவனுக்கு நம்பிக்கை உண்டாக்க விரும்பிக் கோதண்டத்தைக் கையிலெடுத்து ஸகல திக்குகளும் நடுங்கும்படி நாணேசை செய்து ஒரு கூர்மையான பாணத்தை எய்தார். அது அந்த ஏழு ஆச்சா மரங்களையும் அப்பாலிருந்த மலையையும் பிளந்து பூமியில் புகுந்து கீழ் ஏழு லோகங்களையும் துளைத்து, சிறிது நேரத்திற்கெல்லாம் பூமியிலிருந்து கிளம்பி அதிவேகமாக ராமனுடைய அம்பறையில் வந்து சேர்ந்தது.

தான் ஒரு மரத்தைத் துளைக்கச் சொன்னதற்கு ஏழு மரங்களும் ஒரே க்ஷணத்தில் துளைக்கப்பட்டதைக் கண்ட ஸுக்ரீவன் ராமபாண வேகத்தால் திகைத்து நின்றான். பிறகு எல்லையற்ற ஸந்தோஷமடைந்து ராமனுடைய் பாதங்களில் தன் தலையை வைத்துக்கொண்டு கைகூப்பி நமஸ்கரித்து பயபக்தியுடன், "ஸ்வாமி! எல்லா லோகங்களிலுமுள்ள வில்லாளிகளுக்குள் தாங்களே சிரேஷ்டர்; அஸ்திர வித்தையில் தங்களுக்கு நிகரில்லை; இந்திரனையும் ஸகல தேவர்களையும் பாணங்களால் விளையாட்டாகக் கொல்வீர்கள். வாலி தங்களுக்கு ஒரு பொருட்டா? ஒரே பாணத்தால் ஏழு மஹாவிருக்ஷங்களையும் மலையையும் பிளந்தீர்கள். யுத்தத்தில் தங்களை எதிர்த்து நிற்பவர்கள் யார்? மஹேந்திரனைப் போலும் வருணனைப் போலும் பராக்கிரமத்தையுடைய இவ்விதமான உத்தம மித்திரனை அடைந்து என் சோகத்தை விட்டேன்; அடங்காத



ஸ விஸ்ருஷ்டோ ப$^{3}$லவதா ப$^{3}$ாண: ஸ்வர்ண பரிஷ்க்ருத :
பி$^{4}$த்வா ஸாலாந் கி$^{3}$ரிப்ரஸ்தே$^{2}$ ஸப்த பூமிம் விவேஶ ஹ ‖ —கி.12ஸ-3சு,
அது அந்த ஏழு ஆச்சாமரங்களையும் அப்பாலிருந்த மலையையும் பிளந்து, பூமியில் புகுந்து, கீழ் ஏழு லோகங்களையும் துளைத்து...அம்பறையில் வந்து சேர்ந்தது. (பக்கம் 42 பார்க்க)

மகிழ்ச்சியடைந்தேன். என் தமயனென்று பெயர் பெற்ற பரம சத்துருவை இப்பொழுதே கொன்று என் துக்கத்தைப் போக்கி, அளவற்ற ஆனந்தத்தைக் கொடுக்கும்படி கைகூப்பி பிரார்த்திக்கிறேன்'' என்றான். ராமன் அவனை ஆலிங்கனம் செய்து லக்ஷ்மணனுடைய எண்ணப்படி, "ஸுக்ரீவ! கிஷ்கிந்தைக்குப் போவோம். நீ எங்களுக்குச் சற்று முன்னே போய் உன் உடன் பிறந்தவனென்று சொல்லும் வாலியை யுத்தத்திற்கு அழை'' என்றார்.

பிறகு அவர்கள் அங்கிருந்து வாலியின் ராஜதானிக்குப் போய் அடர்ந்து இருண்ட மரங்களுக்குப் பின் மறைந்து நின்றார்கள். ஸுக்ரீவன் சற்று முன்னே சென்று ஆகாயமும் பூமியும் நடுங்கும்படி ஸிம்ஹநாதம் செய்து வாலியை யுத்தத்திற்கு அழைத்தான். அதைக் கேட்டு மஹாபலசாலியான வாலி கோபம்கொண்டு ஸூரியன் அஸ்தகிரியிலிருந்து இறங்குவதுபோல் நகரத்திலிருந்து வெளியில் வந்தான்.

பிறகு ஆகாசத்தில் புதன் அங்காரகனை எதிர்த்ததுபோல், வாலியும் ஸுக்ரீவனும் கோரமாக யுத்தம் செய்தார்கள். இடி விழுந்ததைப்போல் கைகளால் அறைந்தார்கள். வஜ்ராயுதத்தைப் போல் கடினமான முஷ்டிகளால் குத்தினார்கள். அப்பொழுது ராமன் கோதண்டத்தை வளைத்துப் பாணத்தைப் பூட்டி விடப் போகையில், வாலி ஸுக்ரீவர்கள் அசுவினி தேவர்களைப்போல் பார்வைக்கு ஒரே மாதிரியாய் இருந்தபடியால், வாலி இவன், ஸுக்ரீவன் இவனென்று கண்டுபிடிக்க முடியவில்லை. ஆகையால் வாலியின் உயிரை வாங்கும் பாணத்தை விடாமல் நின்றார். இதற்குள் ஸுக்ரீவன் வாலியால் ஜயிக்கப்பட்டுத் திரும்பிப் பார்த்து ராமனைக் காணாமல் பயந்து ரிசியமூக பர்வதத்தை நோக்கி ஓடினான். எலும்புகள் நொறுங்கி ரத்த தாரை பெருக மிகவும் களைத்து வாலியால் துரத்தப்பட்டு மதங்க வனத்தில் ஓடி ஒளிந்துகொண்டான். வாலி அதைப் பார்த்து ரிஷியின் சாபத்திற்குப் பயந்து, "இன்று உன்னை விட்டேன்'' என்று கிஷ்கிந்தைக்குத் திரும்பிப் போனான்.

பிறகு ராமலக்ஷ்மணர்களும் மாருதியும் ஸுக்ரீவன் இருந்த இடத்திற்கு வந்தார்கள். அவன் ராமலக்ஷ்மணர்களைப் பார்த்து வெட்கத்தால் தலை குனிந்து தீனமாக, "ஸ்வாமி! வாலியை யுத்தத்திற்கு அழைக்கச் சொன்னீர்கள்; ஆச்சாமரத்தைப் பிளந்து பராக்கிரமத்தைக் காட்டினீர்கள்; முடிவில் என்னைச் சாகும் நிலையையில் வைத்தீர்கள். இது தங்களுக்கு அழகா? நான் வாலியைக் கொல்ல மாட்டேன் என்று அப்பொழுதே சொல்லியிருந்தால் நான் இந்த இடத்தை விட்டுப் போயிருப்பேனே'' என்றான்.

அதைக் கேட்டு ராமன் மனமிரங்கி, 'ஸுக்ரீவ! நான் சொல்லும் காரணங்களை கேட்டுப் பிறகு கோபிக்கலாம். இந்த பாணத்தை வாலியின்மேல் நான் விடாமலிருந்ததற்குக் காரணம்

தெரியுமா? ரூபம் நடை உயரம் குரல் காந்தி பராக்கிரமம் பார்வை பேச்சு அலங்காரங்கள் முதலியவைகளில் வாலிக்கும் உனக்கும் சிறிதும் பேதம் தெரியவில்லை. ஒரு வேளை தவறி உன்னைக் கொன்று விடுவேனோ என்ற பயத்தால் மஹா வேகமுள்ள இந்த பாணத்தை விடவில்லை. தெரியாமலாவது அஜாக்கிரதையாலாவது நான் உன்னைக் கொன்றால் நமது காரியத்தை வேரறுத்தவனாவேன். மூர்க்கனென்றும் புத்திஹீனனென்றும் லோகத்தில் பெயரெடுப்பேன். ஒருவனுக்கு அபயம் கொடுத்துவிட்டு அவனைக் கொல்வதை போல் வேறு பாபமில்லை என்று சொல்லப்படுகிறது. நானும் லக்ஷ்மணனும் ஸீதையும் உன்னையே நம்பியிருக்கிறோம். இந்த வனத்தில் உன்னைத் தவிர எங்களுக்கு வேறு யார் கதி? ஆகையால் நீ மறுபடியும் யுத்தம் செய். முன்போல் நான் அலக்ஷ்யம் செய்வேனென்று ஸந்தேகப்படாதே. வாலி என் பாணத்தால் பிளக்கப்பட்டுத் தரையில் புரளுவதை இந்த க்ஷணத்திலேயே பார்ப்பாய். நீங்கள் யுத்தம் செய்யும்பொழுது நான் உன்னைக் கண்டு பிடிக்கும்படி ஒரு அடையாளத்தைச் செய்துகொள். லக்ஷ்மண! 'கஜபுஷ்பி' என்ற புஷ்பங்கள் நிறைந்த இந்தக் கொடியை ஸுக்ரீவனுடைய கழுத்தில் கட்டு, என்றார். லக்ஷ்மணனும் அப்படிச் செய்ய, நக்ஷத்திரங்களால் சூழப்பட்ட ஸூரியனைப்போலும் ஸந்தியா காலத்தில் கொக்குகளால் சூழப்பட்ட மேகத்தைப்போலும் ஸுக்ரீவன் விளங்கினான். பிறகு ராமனுடைய வார்த்தையால் தைரியமடைந்து மறுபடியும் அவர்களை அழைத்துக்கொண்டு கிஷ்கிந்தைக்குப் போனான்.

*விப்⁴ராஜமானோ வபுஷா ராமவாக்ய ஸமாஹித:*
*ஜகா³ம ஸஹ ராமேண கிஷ்கிந்தா⁴ம் வாலிபாலிதாம் ॥ (41)*

---

ஸர்க்கம் 13

## ஸப்தஜனர்களின் சரித்திரம்

---

*ரிஶ்யமூகாத் து த⁴ர்மாத்மா கிஷ்கிந்தா⁴ம் லக்ஷ்மணாக்³ரஜ: |*
*ஜகா³ம ஸஹஸுக்³ரீவோ வாலிவிக்ரம பாலிதாம் ॥ (1)*

பிறகு தர்மாத்மாவான ராமன் வில்லை வளைத்து நாணேற்றி, ஸூரியனைப்போல் பிரகாசிக்கும் பாணங்களை ஸித்தம் செய்து, ஸுக்ரீவனுடன் கிஷ்கிந்தைக்குப் போகப் புறப்பட்டார். லக்ஷ்மணனும் ஸுக்ரீவனும் அவருக்கு முன்னே சென்றார்கள். ஆஞ்ஜநேயரும் நளனும் நீலனும் தாரனும் பின்னே வந்தார்கள். அவர்கள் போகும் வழியில் மலர்களாலும் பழங்களாலும் வளைந்திருக்கும் மரங்களையும், தெளிந்த ஜலத்தால் நிறைந்த ஆறுகளையும், மலைக் குகைகளையும், மலைப்பிளப்புகளையும், பொந்துகளையும் முக்கியமான மலைச்சிகரங்களையும், வைடூரியத்தைப்போல் பிரகாசிக்கும் இலைகளாலும் சிறிதே மலர்ந்த தாமரைகளாலும் விளங்கும் ஏரிகளையும்; அவைகளில் நீர்க்காக்கை அன்னம் நீர்க்கோழி சக்கரவாகம் முதலிய பறவைகள் கூவுவதையும், இளம்புல்களை மேய்ந்துகொண்டு பயமில்லாமல் நான்கு புறங்களிலும் மிரண்டு பார்த்துக்கொண்டு நடமாடும் மான் கூட்டங்களையும், குளங்களைக் கலக்கும் பெரிய யானைகள், வெளுத்த தந்தங்களுடன் தனியாகத் திரிவதையும், வேறு சில யானைகள் ஆற்றங்கரைகளை இடிப்பதையும், வேறு சில யானைகள் நீர்த்தாரைகளால் விளங்கும் மலைகள் நடந்து வருவதைப்போலும் நீருண்ட மேகங்கள் ஆகாசத்தில் ஸஞ்சரிப்பது போலும், மதஜலம் பெருகப் புழுதியால் பூசப்பட்டு மலைச் சாரல்களை இடித்துத் தள்ளுவதையும், இன்னும் மற்ற மிருகங்களையும் பக்ஷிகளையும் விநோதமாகப் பார்த்துக்கொண்டே போனார்கள்.

ஓரிடத்தில் அடர்ந்த சோலை ஒன்றைக் கண்டு ராமன், "ஸுக்ரீவ! ஆகாசத்தில் மேகக்கூட்டங்களைப்போல் இதோ தெரியும் மரச் சோலையைப் பார்த்தாயா? வாழை மரங்களால் சூழப்பட்டு எவ்வளவு அழகு வாய்ந்திருக்கிறது! இதைப்பற்றிய விசேஷமென்ன?" என்றார். ஸுக்ரீவன் நடந்துகொண்டே கூறினான். "ஸ்வாமி! இது ஒரு புண்ணியாசிரமம். பழங்கள் கிழங்குகள் புஷ்பங்கள் இங்கே வேண்டிய வரையில் கிடைக்கும். ஸப்தஜனர்களென்ற ஏழு ரிஷிகள் இங்கே வஸித்தார்கள். அவர்கள் ஏழு நாட்களுக்கு ஒரு தரம் காற்றை உண்டு ஜலத்தில் தலை கீழாக நின்று ஏழுநூறு வருஷங்கள் கடுந்தவம் செய்து, மனித தேகத்துடன் ஸ்வர்க்கத்திற்குப் போனார்கள். அவர்களின் மஹிமையால் தேவர்களும் அந்த ஆசிரமத்தை அணுகமாட்டார்கள். பக்ஷிகள் மிருகங்கள் மற்ற ஜந்துக்கள் இதற்கு வெகு தூரத்தில் ஒதுங்கி நடமாடும். அஜாக்கிரதையால் எவனாவது இங்கே புகுந்தால் அவனை மறுபடியும் காண முடியாது. இங்கே இனிமையான பாட்டும் வாத்யமும் ஆட்டமும் கேட்கப்படும். திவ்விய மணங்கள் வீசும். ஹோமாக்னிகள் பிரகாசிக்கும். அவைகளிலிருந்து எழும்பும் புகை புறாவின் உடலைப்போல் சிவந்து, மரங்களின் நுனிகளில் கவிந்திருக்கும். இம்மரங்கள் மேகக் கூட்டங்களால் மறைந்திருக்கும் வைடூரிய மலைகளைப்போல் காணப்படுகின்றன. ஸ்வாமி! தாங்களும் லக்ஷ்மணனும் இந்திரியங்களை அடக்கிக் கைகூப்பி அந்த மஹரிஷிகளை எண்ணிப் பக்தியுடன் வணங்குங்கள். தேகத்தில் யாதொரு அஸௌகரியமும் நேராது" என்றான்.

ராமலக்ஷ்மணர்கள் அப்படியே வணங்கி, அங்கிருந்து ஸுக்ரீவனுடன் வெகுதூரம் போனார்கள். முடிவில் வாலியென்ற மஹா வீரனால் ரக்ஷிக்கப்பட்ட கிஷ்கிந்தைக்கு அருகில் வந்து, அவனைக்

கொல்ல நிச்சயித்து, ஆயுதபாணிகளாக அங்கேயே காத்துக் கொண்டிருந்தார்கள்.

ததஸ்து ராமாநுஜ ராம வாநரா:
ப்ரக்$^{3}$ருஹ்ய ஶஸ்த்ரா ண்யுதி$^{3}$தாக்$^{3}$ர்ய தேஜஸ: |
புரீம் ஸுரேஶாத்மஜ வீர்ய பாலிதாம்
வதா$^{4}$ய ஶத்ரோ: புநராக$^{3}$தா: ஸஹ || (30)

---

## ஸர்க்கம் 14

# ராமன் ஸுக்ரீவனை தைரியப்படுத்தினது

ஸர்வே தே த்வரிதம் க$^{3}$த்வா கிஷ்கிந்தா$^{4}$ம் வாலிபாலிதாம் |
வ்ருக்ஷை ராத்மாந மாவ்ருத்ய வ்யதிஷ்ட$^{2}$ந் க$^{3}$ஹநே வநே || (1)

அந்த இருண்ட காட்டில் மரங்களின் மறைவில் அவர்கள் நின்று கொண்டிருக்கையில், ஸுக்ரீவன் நான்கு புறங்களிலும் சுற்றிப்பார்த்துக் கடுங்கோபம் கொண்டு, கோரமாகக் கர்ஜித்து வாலியை யுத்தத்திற்கு அழைத்தான். பெரிய மேகம் பெருங்காற்றலடிக்கப்பட்டுக் குமுறுவதுபோல் அந்த ஓசை ஆகாசத்தைப் பிளந்தது. பாலஸூரியனைப்போன்ற பிரகாசத்தையும் ஸிம்ஹத்தைப் போன்ற நடையையும் உடைய ஸுக்ரீவன் மஹா தைரியசாலி; ஆயினும் வாலியை நினைத்துப் பயந்து தன் மனோரதங்களை நிறைவேற்றக்கூடிய ரகுவீரனைப் பார்த்து, "ஸ்வாமி! கிஷ்கிந்தைக்கு வந்துவிட்டோம். வனத்தில் மிருகங்கள் வேடனுடைய வலையில் கட்டப்பட்டிருப்பதைப்போல், வானரர்கள் இதை எக்காலத்திலும் ஜாக்கிரதையாகக் காப்பாற்றி வருகிறார்கள். தங்கத்தோரணங்களாலும் கொடிகளாலும் அலங்கரிக்கப்பட்டு, கோட்டைச்சுவர்கள் பயங்கரமான யந்திரங்களால் காக்கப்பட்டிருக்கின்றன. வாலி தன் புஜபலத்தால் இதை ரக்ஷிக்கிறான். உரிய பருவகாலம் பூவுடன் கூடிய கொடிக்குப் பழத்தை அளிப்பதுபோல், தங்களுடைய பிரதிக்ஞையையும் இச்சமயம் ஸபலமாக (பயனுடையதாக)ச் செய்யுங்கள்" என்றான்.

ரகுநாதன், "முன் தடவை உன்னை அடையாளம் கண்டு பிடிக்க முடியாததால் நான் வாலியைக் கொல்ல முடியவில்லை. லக்ஷ்மணன் உன் கழுத்தில் போட்டிருக்கும் ஹாரத்தால் இப்பொழுது அந்த ஸந்தேகத்திற்கு இடமில்லை. இந்த மாலை உன் காந்தியையும் அழகையும் அதிகப்படுத்துகிறது. நக்ஷத்திரங்களால் சூழப்பட்ட ஸூரியனைப்போல் பிரகாசிக்கிறாய். என் கையிலுள்ள இந்தப் பாணத்தால் உனக்கும் வாலிக்குமுள்ள விரோதத்தையும் அவனால் உனக்கு நேரும் பயத்தையும் ஒழிக்கிறேன். அவன் எங்கே? எனக்குக் காட்டு. அவன் என் பாணத்தால் ஹிருதயம் பிளந்து புழுதியில் விழுந்து புரளும்படி செய்யப்படுவதை அதி சீக்கிரத்தில் பார்ப்பாய். வாலி என் கண்ணில் பட்டு உயிருடன் கிஷ்கிந்தைக்குத் திரும்பிப்போனால் என்னைத் தோஷமுள்ளவனென்றும் திறமை இல்லாதவனென்றும் நீ வேண்டியவரையில் தூஷிக்கலாம். உன் எதிரிலேயே அந்த ஏழு ஆச்சாமரங்களையும் நான் துளைக்கவில்லையா? அதே பாணத்தால் வாலியை இன்று கொல்வேன் என்று அறி. எனக்கு எவ்வித ஆபத்து நேர்ந்தாலும் நான் பொய் சொன்னதில்லை. இனி ஒருக்காலும் சொல்லப் போவதுமில்லை. எப்பொழுதாவது தர்மத்தைக் கைவிட விரும்புவேனா? என் பிரதிக்ஞையை நிறைவேற்றுகிறேன். கவலைப்படாதே. உத்தமமான நிலத்தில் தகுந்த காலத்தில் விதைத்த விதையை நல்ல மழை மூலம் இந்திரன் பலிக்கச் செய்வதுபோல், நான் சொன்ன பிரதிக்ஞையைப் பயனுடையதாகச் செய்கிறேன். ஆகையால் வாலி உன்னுடன் யுத்தம் செய்வதற்கு வரும்படி ஸிம்ஹநாதம் செய். ஜயசீலனான வாலி உன்னால் முன்னொருதடவை சண்டைக்கு அழைக்கப்பட்டிருக்கிறான். தான் பலசாலி என்று கர்வம் கொண்டிருப்பதாலும் யுத்தத்தில் எப்பொழுதும் ஆசையுள்ளவனானதாலும் உடனே வெளியில் வருவான். சத்துருக்கள் தங்களைச் சண்டைக்கு அழைப்பதை சூரர்கள் பொறுக்கமாட்டார்கள். வாலி தன் வீரியத்தை நன்றாக அறிந்தவன்; மேலும் ஸ்த்ரீகளுக்கு எதிரில் சண்டைக்குப் பின்வாங்க மாட்டான்" என்றார்.

ஸுக்ரீவன் பிறகு ஆகாசம் பிளக்கும்படி கர்ஜித்தான். ராஜ்யத்தில் அரசனின்றிக் குழப்பமாக இருக்கையில் குலஸ்த்ரீகள் புருஷர்களால் பலவந்தம் செய்து இழுக்கப்பட்டு மிரண்டு தவிப்பது போல் அந்த சப்தத்தைக் கேட்டு, பசுக்கள் பயந்து முகம் வெளுத்து ஓடிப்போயின. யுத்தத்தில் அடிபட்ட குதிரைகளைப்போல் மான்கள் நான்கு மூலைகளிலும் ஓடி ஒளிந்தன. புண்ணியமிழந்து ஆகாசத்திலிருந்து தலைகீழாக விழும் நக்ஷத்திரங்களைப் போல் பறவைகள் பிரக்ஞை தப்பி விழுந்தன.

பிறகு ஸுக்ரீவன் சௌரியத்தால் தேஜஸ் அதிகரிக்க, பெருங்காற்றால் மோதும் அலைகளையுடைய ஸமுத்திரத்தைப்போலும் மழைக் காலத்தில் இருண்ட மஹாமேகங்களைப்போலும் பயங்கரமாகக் கர்ஜித்தான்.

தத: ஸ ஜீமூத க$^{3}$ண ப்ரணாதோ
நாத$^{3}$ம் ஹ்யமுஞ்சத் த்வரயா ப்ரதீத: |
ஸூர்யாத்மஜ: ஶௌர்ய விவ்ருத்$^{3}$த$^{4}$ தேஜா:
ஸரித்பதிர் வாநில சஞ்சலோர்மி: || (22)

---

## ஸர்க்கம் 15

# தாரை வாலியைத் தடுத்தது

அத² தஸ்ய நிநாத³ம் தம் ஸுக்³ரீவஸ்ய மஹாத்மந: |
ஶுஶ்ராவாந்த:புர க³தோ வாலீ ப்⁴ராது ரமர்ஷண: ‖ (1)

ஸகலப் பிராணிகளும் கேட்டு நடுங்கும்படி ஸுக்ரீவன் செய்த கர்ஜனை அந்தப்புரத்தில் ஸ்திரீகளுடனிருந்த வாலியின் காதில் விழுந்தது. உடனே மயக்கம்தெளிந்து, கோபமும் ரோஷமும் பொங்கின. ஸந்தியாகாலத்தில் ஸூரியனைப்போல் தேகம் சிவந்து, ராகுவால் பிடிக்கப்பட்ட ஸூரியனைப்போல் திடீரென்று காந்தியை இழந்தான். பயங்கரமான பற்களுடன் நெருப்புக்கொழுந்தைப் போல் கோபத்தால் ஜ்வலித்துக்கொண்டு, சிவந்து தண்ணீருக்குமேல் வளர்ந்துள்ள செந்தாமரை மலர்களையுடைய மடுவைப்போல் காணப்பட்டான். பிறகு சுக்ரீவனுடைய கர்ஜனையைக் கேட்டுப் பொறுக்காமல் அதிவேகமாக வெளியில் ஓடிவந்தான். அவன் நடக்கும்போது பூமி பிளந்தது; தாரை அதைக் கண்டு பயந்து திகைத்து, அவனிடத்திலுள்ள ஸ்நேஹத்தால் இறுகத் தழுவி ஹிதத்தைச் சொல்ல ஆரம்பித்தாள். "ஆற்று வெள்ளத்தைப்போல் பொங்கும் தங்கள் கோபத்தை, தூங்கியெழுந்தவன் ராத்திரியில் அணிந்த மாலையைக் கழற்றி எறிவதுபோல் விலக்குங்கள். இப்பொழுது ராத்திரி நெருங்கினதால் சத்துருக்களின் பலாபலத்தைக் கண்டு பிடிப்பது கஷ்டம். விடியற்காலையில் ஸுக்ரீவனுடன் சண்டை செய்யலாம். தாங்கள் இப்படித் திடீரென்று புறப்பட்டுப் போவது எனக்கு இஷ்டமில்லை. நான் தங்களைத் தடுப்பதற்குக் காரணத்தைச் சொல்லக் கேளுங்கள்.

இவன் முன்னொரு தடவை தங்களைச் சண்டைக்கழைத்தான். அப்பொழுது தாங்கள் கடுங்கோபத்துடன் புறப்பட்டுப் போய் அவனை அடித்துத் துரத்தினீர்கள். மறுபடியும் இவ்வளவு சீக்கிரமாக அவன் தங்களை யுத்தத்திற்கழைப்பதைப் பார்த்தால் ஸந்தேகப்படுகிறேன். அவனுடைய கர்ஜனையால் வெளிப்படும் கர்வத்தையும் தைரியத்தையும் உற்சாகத்தையும் யோசித்தால் இதற்கு ஏதோ பெரிய காரணமிருக்க வேண்டுமென்று தோன்றுகிறது. பிறருடைய உதவியின்றி அவன் இங்கே வரமாட்டானென்று எண்ணுகிறேன். எந்த வீரனையோ அண்டி அவனுடைய உதவியால் தங்களை இப்படி யுத்தத்திற்கு அழைக்கிறான். ஸுக்ரீவன் இயற்கையாகவே நிபுணன், புத்திமான்; ஒருவனுடைய வீரியத்தையும் நன்றாகப் பரீக்ஷிக்காமல் அழைத்து வரமாட்டான்.

"நமது குழந்தை அங்கதன் வனத்தில் திரியும்பொழுது தூதர்களால் இதை அறிந்தான். அயோத்யாதிபதியின் புத்திரர்களான ராமலக்ஷ்மணர்கள் ஸுக்ரீவனுக்கு உதவியாகச் சேர்ந்திருக்கிறார்களாம். அவர்கள் சூரர்கள், யுத்தத்தில் தோற்காதவர்கள்; இக்ஷ்வாகு குலத்தினர் மஹா கீர்த்திசாலிகள். ராமனோ யுத்தத்தில் நிபுணன்; பிரளய காலாக்னியைப்போல் தன் தேஜஸால் சத்ருக்களை எரிப்பவன். 'ஸுக்ரீவனுக்கு உதவுவதைப்போல் எனக்கும் ஏன் உதவக்கூடாது' என்றால் ஒரு பெரிய மரம் தன் நிழலை அண்டினவனுடைய தாபத்தைப் போக்கி, மலர்களாலும் பழங்களாலும் ஸகல இந்திரியங்களைத் திருப்தி செய்வதுபோல், ராமன் தன்னை அண்டின ஸாதுக்களின் தாபத்திரயங்களைப் போக்கி, ஸகல மங்களங்களையும் அருளுகிறான். ஸுக்ரீவனுக்கு நாம் துரோகம் செய்ததால் ராமன் நம்மை ஸாதுவென்று ஒப்புக்கொள்ளவும் மாட்டான் ; ரக்ஷிக்கவும் மாட்டான். தன்னை அண்டினவர்களுடைய யோகக்ஷேமங்கள் யாவையும் தானே வகித்து, உபாயம் முதல் பலன் அடையும் வரையிலுள்ள காரியங்கள் யாவையும் தானே செய்கிறவன். அவர்களில் துக்கத்தால் பீடிக்கப்படுகிறவர்களுக்கு இவனைத் தவிர வேறு துணையில்லை. எனக்கும் இப்படி வேறொருவன் கிடைக்க மாட்டானோ என்றால் இப்படிப்பட்ட ரக்ஷகன் இந்தப் பிரபஞ்சத்தில் வேறொருவரும் இல்லை. அண்டினவர்களைக் காப்பாற்றுவதாலுண்டான கீர்த்தியில் அவன் நிகரற்றவன். தன்னைச் சரணடைந்தவர்களுக்கு ஸகல க்ஷேமங்களையும் கொடுக்கவேண்டிய லௌகிக ஞானத்தையும் சாஸ்திர ஞானத்தையும் உடையவன். ஸகல தர்மங்களையும் பூர்ணமாக அனுஷ்டிப்பவனென்று பிதிருவாக்கிய பரிபாலனத்தால் தெரிகிறது. அடியார்க்கு எளியவன். பெரிய மலை ஸகல தாதுக்களாலும் நிறைந்திருப்பது போல் அனந்த கல்யாண குணங்களால் நிறைந்தவன். அவைகளால் விளங்கும் அந்த மஹா புருஷனுடைய மஹிமை அவைகளைவிட மேலானது. அவருடைய ஸ்வரூபத்தால் அவைகளுக்கு விசேஷ மேன்மை ஏற்படுகிறது. எந்த ஸமயத்திலும் கலங்காத மனத்தையுடையவன். நீ அந்த மஹாத்மாவைப் பகைப்பது உசிதமல்ல. அளவற்ற பராக்கிரமமுடையவன். யுத்தத்தில் ஜயிக்க முடியாதவன் ; ஆனால், 'தன்னைக் காப்பாற்றிக்கொள்ள முடியாதவன் பிறரை எப்படிக் காப்பாற்றுவான் ? தனக்குக் கிடைக்கவேண்டிய ராஜ்யத்திலிருந்து துரத்தப்பட்டவன் ஸுக்ரீவனுக்கு ராஜ்யத்தை எப்படி ஸம்பாதித்துக் கொடுப்பான் ? மேலும் பலவானான என்னுடன் ஸ்நேஹம் செய்யாமல் பலஹீனனான ஸுக்ரீவனுடன் ஸ்நேஹம் செய்வானா?'' என்று நினைத்து அலக்ஷ்யம் செய்யக்கூடாது. தாங்கள் மஹாசூரரென்று எனக்குத் தெரியும். தங்களிடத்தில் தோஷத்தைக் கற்பிப்பதாக எண்ணக்கூடாது. தங்கள் ஹிதத்தையே உத்தேசித்து, நான் சொல்லும் யோசனையைக் கேட்டு அப்படியே செய்யவேண்டும் ஸுக்ரீவனை வருவித்து அவனுக்கு யௌவராஜ்யாபிஷேகம் செய்வியுங்கள். பலவானான தங்கள் ஸகோதரனுடன் பகைக்கவேண்டாம். ராமனுடன் ஸ்நே

ஹம் செய்வது தங்களுக்கு நலமென்று தோன்றுகிறது. ஸுக்ரீவனிடத்தில் பிரீதி வையுங்கள். அவனிடத்திலுள்ள விரோத புத்தியை நீக்குங்கள். உங்களுடைய தம்பியை நீங்களே போஷித்து ஸௌக்கியமாக ரக்ஷிக்க வேண்டாமா ? காட்டிலிருந்தாலும் நகரத்திலிருந்தாலும் அவன் தங்களுடைய பந்துவல்லவா ? அவனைப்போன்ற பந்து தங்களுக்கு வேறொருவன் இருப்பானென்று எண்ணவில்லை. அவனைக் கௌரவித்து அவனுக்கு வேண்டிய வெகுமதிகளைக் கொடுத்து ஆதரித்து எப்பொழுதும் தங்களுடைய ஸமீபத்தில் வைத்துக்கொள்ள வேண்டும். எல்லாவற்றையும் மறந்து தங்களுடன் சேர்ந்து வாழ்வான். நீங்கள் எப்படியிருந்தாலும் அவன் உங்களுடைய பந்துவென்றே ஜனங்கள் சொல்வார்கள். அவனுடன் ஸ்நேஹம் செய்வதைத் தவிர உங்களுக்கு வேறு வழியில்லை. நான் தங்களுடைய ஹிதத்தைத் தேடுகிறவளென்று தங்களுக்குத் தோன்றினால், எனக்குப் பிரியமான காரியத்தைச்செய்யத் தங்களுக்கு இஷ்டமிருந்தால், என் பிரார்த்தனையை அங்கீகரித்து அப்படியே நடக்க வேண்டும். என்னிடத்தில் கிருபை செய்து என் வார்த்தையை தங்களுக்கு ஹிதமாக மதிக்கவேண்டும். என்னிடத்தில் கோபிக்கக் கூடாது. மஹேந்திரனுக்கு ஸமமான பராக்கிரமமுள்ள ராமனுடன் தாங்கள் விரோதிப்பது எனக்கு இஷ்டமில்லை'' என்று தாரை சொன்ன ஹிதோபதேசம் வாலிக்கு மிகவும் வெறுப்பாக இருந்தது. காலபாசத்தால் கட்டப்பட்டு மரணம் ஸமீபித்தவனுக்கு விபரீத புத்தி தோன்றுவது ஆச்சரியமா ?

ததா$^{3}$ ஹி தாரா ஹிதமேவ வாக்யம்
தம் வாலிநம் பத்$^{2}$ய மிதம் ப$^{3}$பா$^{4}$ஷே |
ந ரோசதே தத்$^{3}$ வசநம் ஹி தஸ்ய
காலாபி$^{4}$பந்நஸ்ய விநாஶகாலே ॥ (31)

## ஸர்க்கம் 16

## வாலி வதம்

தாமேவம் ப்$^{3}$ருவதீம் தாராம் தாராதி$^{4}$ப நிபா$^{4}$நநாம் |
வாலீ நிர்ப$^{4}$ர்த்ஸயாமாஸ வசநம் சேத$^{3}$ மப்$^{3}$ரவீத் ॥ (1)

**பூ**ர்ண சந்திரனைப்போல் அழகான முகத்தையுடைய தாரை இப்படிச் சொல்லக் கேட்டு, வாலி அவளை அதட்டி, "பிரிய நாயகி ! இந்த ஸுக்ரீவன் என் தம்பி ; இப்பொழுது எனக்குச் சத்துரு ; மிக்க கர்வத்துடன் அவன் கர்ஜிப்பதை நான் எப்படிப் பொறுப்பேன்? யுத்தத்தில் பின்வாங்காத சூரர்களைச் சத்துரு வீரவாதம் செய்து யுத்தத்திற்கழைத்தால், அதைப் பொறுத்துக் கொண்டிருப்பதைவிட உயிரை இழக்கலாம். நீ ஸ்த்ரீயானதால் பயந்தவள். உனக்கு இந்த விஷயம் தெரியாது. ஸுக்ரீவன் என்னுடன் யுத்தம் செய்ய விரும்பி, என்னை யுத்தத்திற்கழைக்க கர்ஜிப்பதை நான் பொறுக்க மாட்டேன். அவனுக்கு சுக்ரீவனென்ற பெயரே தவிர வாஸ்தவமாய் கழுத்தே இல்லாதவன்.

"என்னை ராகவன் என்ன செய்வாரோ என்று நீ துக்கப்பட வேண்டாம். ரக்ஷிக்கத் தகுந்தவனை ரக்ஷிப்பதென்ற தர்மத்தை அறிந்தவர். பரம அயோக்கியனான ஸுக்ரீவன் அவருடைய கிருபைக்குப் பாத்திரமல்ல. ஒருவன் செய்த குற்றத்தை அறிந்து, தக்கபடி சிக்ஷிப்பவர்; அப்படி நான் யாதொரு குற்றமும் செய்யவில்லை. அவருக்கு யாதொரு அபராதமும் செய்யாத என்னைக் கொன்று அதனால் வரும் பாபத்தை ஸம்பாதித்துக்கொள்வாரா ? இங்கிருக்கும் ஸ்த்ரீகளை அழைத்துக்கொண்டு நீ திரும்பிப் போ. நான் இவ்வளவு தைரியம் சொல்லியும் என்னைப் பின்தொடர்கிறாயே. பரம மித்திரர்கள் இந்த ஸமயங்களில் செய்யவேண்டிய ஹிதோபதேசத்தைச் செய்தாய். என்னிடத்தில் நீ வைத்திருக்கும் பக்தியையும் வெளியிட்டாய். ஸுக்ரீவனிடம் யுத்தம் செய்யப் போகிறேன். கவலைப்படாதே. அவனுடைய கொழுப்பை மாத்திரம் அடக்குவேனேயொழிய அவனைக் கொல்லமாட்டேன். அவனுக்குப் போதுமான வரையில் யுத்தம் செய்கிறேன். விருக்ஷங்களாலும் கைக்குத்துகளாலும் பீடிக்கப்பட்டு அதி சீக்கிரத்தில் ஓடிப் போவான். என் கர்வத்தையும் முயற்சியையும் அவன் தாங்க மாட்டான். நீ உன் புத்திசாலித்தனத்தால் எனக்கு உதவி செய்ததைப்பற்றியும் என்னிடத்தில் வைத்த அன்பைப்பற்றியும் ஸந்தோஷித்தேன். என்னுடைய பிராணன்மேல் ஆணையிட்டு உன்னைத் தடுக்கிறேன். நான் ஜயமடைய வேண்டுமென்று பிரார்த்தனை செய்துவிட்டுத் திரும்பிப் போ : நானும் ஸுக்ரீவனை யுத்தத்தில் ஜயித்துத் திரும்பி வருகிறேன்'' என்றான்.

அப்பொழுது தாரை அவனைப் பிரியத்துடன் ஆலிங்கனம் செய்து, துக்கத்தைத் தாங்கமுடியாமல் அழுதுகொண்டு, வாலியை மெள்ள பிரதக்ஷிணம் செய்தாள். பிறகு அவனுக்கு ஜயம் கிடைக்க வேண்டியதற்காக மந்திரங்களால் ஸ்வஸ்த்யயனம் முதலியவைகளைச் செய்துவிட்டு, சோகத்தால் மயங்கி ஸ்த்ரீகளுடன் அந்தப்புரத்திற்குள் சென்றாள்.

அப்பொழுது வாலியும் மஹாஸர்ப்பத்தைப்போல் கோபத்தால் சீறிக்கொண்டு நகரத்திலிருந்து வெளியில் கிளம்பி, சத்துருவைத் தேடி நான்கு புறங்களிலும் பார்த்தான். தங்க நிறமுள்ள ஸுக்ரீவன் வஸ்திரத்தை இறுகக் கட்டிக்கொண்டு ஜ்வலிக்கும் அக்னியைப் போல் வந்து நிற்பதைக் கண்டு வாலி அடங்காக் கோபம்கொண்டு, தானும் வஸ்திரத்தை இறுகக் கட்டிக்கொண்டு விரல்களை மடக்கிக் கைகளை உயரத் தூக்கிக்கொண்டு ஸுக்ரீவன்மேல் பாய்ந்தான். அதைக் கண்டு ஸுக்ரீவனும் விரல்களை மடக்கிக்கொண்டு மஹா

கோபத்துடன் வாலியை நோக்கி ஓடிவந்தான். உடனே வாலி அவனைப் பார்த்து கண்கள் சிவந்து, "இதோ பார், என் விரல்களை இறுக மடக்கிக்கொண்டு என் முஷ்டியால் உன்னைக் குத்துவேன். அது உன் உயிரை வாங்கும்" என்றான். அதற்கு ஸுக்ரீவனும், "இந்தக் குத்து உன் தலையில் விழுந்து உன் உயிரைக் கொள்ளை கொள்ளும்" என்றான். பிறகு வாலி மஹா ரோஷத்துடன் ஸுக்ரீவனைக் குத்தினான். அதனால் ஸுக்ரீவனுடைய தேகத்திலிருந்து ரத்த பிரவாஹம் மலையருவிகளைப்போல் பெருகிற்று. உடனே அவன் ஒரு ஆச்சாமரத்தை வேருடன் பிடுங்கி வாலியை அடிக்க, அவனும் வஜ்ராயுதத்தால் அடிபட்ட மஹாபர்வதத்தைப்போல் அந்த அடியைப் பொறுக்கமாட்டாமல், அதிக பாரத்தை ஏற்றின கப்பல் ஸமுத்திரத்தில் அலைகளால் மோதப்படுவதுபோல் தத்தளித்தான். அவர்கள் பயங்கரமான பலத்தையும், பராக்கிரமத்தையும் உடையவர்கள். பூர்ணிமையில் விளங்கும் சந்திர ஸூரியர்களைப் போன்றவர்கள்; கோரமான சரீரத்தையுடையவர்கள்; கருடனுக்கு ஸமமான வேகத்தையுடையவர்கள்; பரம சத்துருக்கள்; ஒவ்வொருவரும் எதிரி அஜாக்கிரதையாக இருக்கும் ஸமயத்தைப் பார்த்துக் கொண்டிருப்பவர்கள், அப்பொழுது வாலியின் பலமும் வீரியமும் அதிகரித்தன. ஸுக்ரீவனுடைய வீரியமும் பலமும் குறைந்தன. வாலியால் தன் கொழுப்பழிந்து பராக்கிரமம் குறைவதைக் கண்டு, ஸுக்ரீவன் கோபமடைந்து, வாலியிடத்தில் தன் ஸாமர்த்தியத்தையும் சாதுரியத்தையும் பலவிதமாகக் காட்டினான். விருக்ஷங்களாலும் கற்பாறைகளாலும் வஜ்ராயுதத்தைப் போன்ற நகங்களாலும் பர்வத சிகரங்களாலும் முஷ்டிகளாலும் முழங்கால்களாலும் ஒருவர்க்கொருவர் சளைக்காமல் யுத்தம் செய்தார்கள். இந்திரனும் விருத்ராஸுரனும் எதிர்த்ததுபோல் அது பார்க்கப் பயங்கரமாக இருந்தது. இரண்டு மஹா மேகங்கள் ஒன்றையொன்று தாக்கிக் கர்ஜிப்பதைப்போல் வனத்தில் ஸஞ்சரிக்கும் அந்த வானர வீரர்கள் தேகமெங்கும் ரத்தம் பெருக ஒருவரையொருவர் அடித்துக் கிழித்து அதட்டினார்கள்.

ஸுக்ரீவன் வரவர பலம் குறைந்து, அடிக்கடி திக்குகளை ஆவலுடன் பார்ப்பதை ராகவன் கவனித்து, அவன் துக்கப்படுவதை ஸஹிக்காமல், வாலியை வதம் செய்து,அவனைக் காப்பாற்ற வேண்டுமென்று, அதற்கேற்ற பாணத்தைத் தேடினார். அதை எடுத்து நாணில் வைத்துக் காதுவரையில் இழுத்து, யமனுடைய கால சக்கரம்போல் கோதண்டத்தை மண்டலமாய் வளைத்தார். பிரளய காலத்தில் காளமேகங்கள் கர்ஜித்து அண்டங்கள் பிளப்பதுபோன்ற அந்த நாணோசையால் அங்கிருந்த பக்ஷிகளும் மிருகங்களும் நடுங்கிப் பயந்து ஓடின. ராகவனால் விடப்பட்ட பாணமானது வஜ்ராயுதம் போல் சப்தித்துக்கொண்டு மின்னலைப்போல் அதிவேகமாய் வாலியின் மார்பில் பாய்ந்தது. வாலியோ மஹாதேஜஸ்வீ; மஹா வீரன்;



ததோ ராமோ மஹாதேஜா ஆர்தம் த்³ருஷ்ட்வா ஹரீஶ்வரம் |
ஶரம் ச வீக்ஷதே வீரோ வாலிநோ வத⁴காரணாத் ‖ —கி. 16ஸ-32சு.

ஸுக்ரீவன் வரவர பலம் குறைந்து அடிக்கடி திக்குகளை ஆவலுடன் பார்ப்பதை ராகவன் கவனித்து, அவன் துக்கப்படுவதை ஸஹிக்காமல் வாலியை வதம் செய்து அவனைக் காப்பாற்ற வேண்டுமென்று அதற்கேற்ற பாணத்தைத் தேடினார். (பக்கம் 54 பார்க்க)

மட்டில்லாத கர்வம் கொண்டவன்; ஆனாலும் காந்தியற்று பிரக்ஞை இழந்து, ஐப்பசி மாதத்தில் பூர்ணிமா திதியில் தூக்கிக் கட்டப்பட்ட இந்திரத்வஜம் சாய்ந்ததுபோல் தரையில் விழுந்தான்.

இப்படிப் புருஷ சிரேஷ்டனான ராமன் தங்கக் கட்டுகளால் அலங்கரிக்கப்பட்டு அக்னிக் கொழுந்துபோல் ஜ்வலித்துக்கொண்டு சத்துருக்களின் உயிரை வாங்கும் சிரேஷ்டமான பாணத்தைப் பிரயோகித்தார். பிரளய காலத்தில் வெளிப்படும் யமனைப் போலும், பரமசிவனுடைய முகத்திலிருந்து புகையுடன் கிளம்பிய அக்னியைப் போலும் அது இந்திர குமாரனான வாலியின் மார்பில் விழுந்தது. மலர்ந்த அசோக விருக்ஷம் நெருப்பால் எரிக்கப்பட்டது போலவும், இந்திரத்வஜம் சாய்க்கப்பட்டதுபோலவும், வாலி ரத்தம் பெருக பிரக்ஞையற்று தரையில் விழுந்தான்.

அதோ³க்ஷித: ஶோணித தோய விஸ்ரவை:
ஸுபுஷ்பிதாஶோக இவாநலோத்³த⁴த: |
விசேதநோ வாஸவ ஸூநு ராஹவே
விப்⁴ரம்ஶிதேந்த்³ர த்⁴வஜவத் க்ஷிதிம் க³த: ‖ (38)

---

## ஸர்க்கம் 17

## வாலி ராமனைக் குற்றம் சாட்டியது

---

தத: ஶரேணாபி⁴ஹதோ ராமேண ரணகர்கஶ: |
பபாத ஸஹஸா வாலீ நிக்ருத்த இவ பாத³ப: ‖ (1)

யுத்தத்தில் நிபுணனான வாலி, ராம பாணத்தால் அடிபட்டு, உத்தமமான ஆபரணங்களால் அலங்கரிக்கப்பட்ட ஸகல அவயவங்களும் பூமியில் படும்படி, வெட்டின மரம்போலும், கயிறு தளர்ந்த இந்திர த்வஜம்போலும் விழுந்து கிடந்தான். சந்திரனில்லாத ஆகாசத்தைப்போல் அவனில்லாமல் பூலோகம் பிரகாசிக்கவில்லை. அதன் அடிபட்டுத் தரையில் விழுந்திருக்கையிலும் அந்த மஹாத்மாவின் காந்தியாவது பல பராக்கிரமங்களாவது பிரதாபமாவது குறையவில்லை; உயிரும் போகவில்லை. தேவேந்திரனால் கொடுக்கப்பட்ட ரத்தினங்களிழைத்த தங்க மாலையானது அவனுடைய பிராணன்களையும் பிரதாபத்தையும் காந்தியையும் காப்பாற்றிற்று. ஸந்தியா காலத்தில் ஓரங்களில் சிவப்பு வர்ணத்தால் சூழப்பட்ட மேகத்தைப்போல் அந்த ஹாரத்தால் வாலி விளங்கினான். அவனுடைய காந்தி அந்த மாலையிலும் தேகத்திலும் அவன் உயிரை வாங்கிய பாணத்திலும் மூன்று வகையாகப் பிரிந்ததுபோல் பிரகாசித்தது. ராமனுடைய கோதண்டத்திலிருந்து பிரயோகிக்கப்பட்ட அந்த பாணம் அவனுக்கு வீரஸ்வர்க்கத்தையும் முடிவில் உத்தமமான முக்தியையும் அவனுக்கு அளித்தது. "இந்தப் பாணத்தை பிரயோ

இத்தவனல்லவோ மஹாவீரன்'' என்று சத்துருவை மெச்சி, தேகத்திலுள்ள வேதனையால் மெள்ள மெள்ள அவன் எங்கே இருக்கிறானென்று ஸகல திக்குகளிலும் பார்த்துக் கொண்டிருந்தான்.

ஜ்வாலை அடங்கிய நெருப்புப்போலும், தன் புண்ணியம் க்ஷீணித்தபொழுது தேவலோகத்திலிருந்து பூமியில் விழுந்த யயாதி சக்கரவர்த்தியைப் போலும், பிரளய காலத்தில் தெய்வகதியால் ஆகாசத்திலிருந்து பூமியில் தள்ளப்பட்ட ஸூரியனைப் போலும் ஒருவராலும் எதிர்க்க முடியாத மஹேந்திரனைப் போலும், மஹேந்திர புத்திரனை வாலி தங்க ஹாரத்தோடு அலங்கரிக்கப்பட்டு, ஸிம்ஹத்தைப்போன்ற மார்பையும் நீண்டு பருத்த புஜங்களையும் தங்க நிறமுள்ள தேகங்களையும் காந்தியால் ஜ்வலிக்கும் முகத்தையும் உடையவனைத் தரையில் கிடப்பதை ராமலக்ஷ்மணர்கள் பார்த்து ஸமீபத்தில் வந்தார்கள். அப்பொழுது வாலி, ராகவனையும் மஹாபலவானை லக்ஷ்மணனையும் பார்த்து, மதுரமாகவும் கடுமையாகவும் தர்மத்தை அனுஸரித்திருக்கும் வார்த்தைகளைச் சொல்ல ஆரம்பித்தான்.

“நீ தசரத சக்கரவர்த்தியின் புத்திரன்; மஹா கீர்த்திசாலி; தர்மத்தை அனுஷ்டிப்பதில் பிரியமுள்ளவன்; உத்தம குலத்தில் பிறந்தவன். ஸத்வ குணத்தை பிரதானமாக உடையவன்; மஹா தேஜஸ்வி; விரதங்களை அனுஷ்டித்தவன். நான் வேறொருவருடன் யுத்தம் செய்துகொண்டிருந்தேன் ; நீ இருப்பதை அறியவில்லை; என்னைக் கொன்றதால் நீ என்ன பெருமை அடைந்தாய் ? ஸுக்ரீவனுடன் நான் யுத்தம் செய்துகொண்டிருக்கும்பொழுது உன் பாணத்தால் என்னை மார்பில் அடித்தாயே. ராமன் கருணையின் ஸ்வரூபத்தை முற்றிலும் அறிந்தவனென்றும், ஸகல பூதங்களுக்கும் ஹிதத்தையே செய்கிறவனென்றும், தயாமூர்த்தியென்றும், தன்னை மீறி வரும் உத்ஸாஹத்தை ஜயித்தவனென்றும், பெரியோர்களின் ஆசாரத்தை அறிந்தவனென்றும், செய்த பிரதிக்ஞையைத் தவறாதவனென்றும், ஸகலப் பிராணிகளும் உன் கீர்த்தியைக் கொண்டாடுகின்றன. இந்திரியங்களை அடக்குவது, சாந்தி, பொறுமை, தர்மபுத்தி, மனஉறுதி, ஸத்தியம், பராக்கிரமம், அபராதம் செய்தவர்களைத் தண்டிப்பது, இவை அரசர்களுக்குரிய உத்தமகுணங்களென்று சொல்லப்பட்டிருக்கிறது. நீ அரசனானதால் உனக்கு நன்றாகத் தெரியும். மேற்சொன்ன குணங்களையும் தர்மாத்மாக்களான இக்ஷ்வாகு வம்சத்தில் நீ பிறந்தவனென்பதையும் ஆலோசித்து உன்னை நம்பினேன். தாரை எவ்வளவோ தடுத்தும் லக்ஷ்யம் செய்யாமல் ஸுக்ரீவனுடன் யுத்தம் செய்ய வந்தேன். வந்து பார்க்கையில் உன்னைக் காணவில்லை. நான் வேறொருவனுடன் யுத்தம் செய்துகொண்டு பரவசமாக இருக்கும்பொழுது நீ என்னுடன் யுத்தம் செய்யமாட்டாயென்று நிச்சயித்தேன். ஆனால் நீ இவ்வளவு துர்புத்தியுடையவனென்றும் தர்மாத்மாவைப்போல்



வேஷம் தரித்தவனென்றும், அதற்கு முற்றிலும் விரோதமான ஸ்வபாவத்தை யுடையவனென்றும், பாபமான ஆசாரத்தை உடையவனென்றும், ஸாதுக்களின் வேஷத்தைத் தரித்த பாபி என்றும், நீறு பூத்த நெருப்பைப் போன்றவனென்றும், தர்மத்தைக் காரணமாக வைத்துக்கொண்டு பிழைப்பவனென்றும் அறியாமற்போனேனே.

“உன் தேசத்திலாவது நகரத்திலாவது நான் வந்து செய்த அபகாரமென்ன? உனக்காவது செய்த அவமானமென்ன? குற்றமில்லாத என்னை ஏன் கொன்றாய்? நானோ காய் கிழங்கு பழங்களைத் தின்று வனத்தில் ஸஞ்சரிக்கும் குரங்கு; உன்னுடன் யுத்தம் செய்ய வந்தேனா? வேறொருவனுடன் சண்டைபோட்டுக் கொண்டிருக்கையில் என்னை அடித்தாய். அதர்மத்தின் அடையாளங்கள் உன்னிடத்தில் காணப்படுகின்றன, நன்றாக விளங்குகின்றன. க்ஷத்திரிய குலத்தில் பிறந்து, பெரியோர்களிடத்தில் சாஸ்திரங்கள் யாவையும் கற்று, ஸந்தேகமின்றி தர்மவானுக்குரிய அடையாளங்களைத் தரித்து இவ்விதமான கொடிய காரியத்தை எவனாவது செய்வானா? ஸகல ஜந்துக்களுக்கும் அளவற்ற ஆனந்தத்தைக் கொடுக்கின்றவனென்ற பெயரை (ராம) உனக்கு வைத்தவன் யார்? நீதிசாலியான அரசர்களின் வம்சத்தில் பிறந்து, தர்மவானென்று பிரஸித்திபெற்று, மஹா க்ரூர ஸ்வபாவமுடைய நீ அழகான ரூபத்துடன் பூமியில் ஏன் நடமாடுகிறாய்? பிறரை மதுரமான வார்த்தைகளால் ஸமாதானம் செய்வது, கேட்பவர்களுக்கு இல்லையென்று சொல்லாமல் கொடுப்பது, பிறர்செய்யும் அபராதங்களைப் பொறுப்பது, அண்டினவர்களைக் காப்பாற்றுவது, எந்த ஆபத்திலும் ஸத்தியத்தைக் கைவிடாதது, எந்தக் கஷ்டங்கள் நேர்ந்தாலும் மனம் கலங்காமலிருப்பது, தன்னை எதிர்த்தவர்களை நாசம் செய்யும் பராக்கிரமம், தர்மத்திற்கு விரோதமாய் நடப்பவர்களைத் தண்டிப்பது என்ற இவை அரசர்களின் ஸ்வபாவ குணங்களல்லவா? அப்படி நான் என்ன அபராதம் செய்தேன்? நானோ காட்டிலிருப்பவன்; நீயோ நாட்டிலிருப்பவன். நானோ வானரன்; நீயோ நரன். நானோ கிழங்கு காய் பழம் முதலியவைகளைத் தின்பவன்; நீயோ அரசர்களுக்குரிய பக்குவமான உணவு முதலியவைகளைப் புசிப்பவன். நீயோ சக்கரவர்த்தியின் புத்திரன்; நானோ பிறப்பால் உனக்கு ஸமனல்ல. உனக்கும் எனக்கும் விரோதத்திற்குக் காரணமென்ன?

“பூமி தங்கம் வெள்ளி முதலிய ஐசுவரியங்களே பகைக்குக் காரணமென்று சொல்வார்கள். இக்காட்டிலும் என்னிடத்தில் உள்ள காய் பழம் முதலிய வஸ்துக்களிலும் நீ ஆசை வைத்து இப்படிச் செய்தாயா? நீதியும் அனுக்கிரஹமும் உத்தம அரசர்களின் தர்மம்; அநியாயமும் ஹிம்ஸிப்பதும் அல்ப அரசர்களின் தர்மம். இவ்விரண்டிற்கும் ஸம்பந்தமில்லை. அரசர்கள் இந்தத் தர்மங்களை மனம்

போனபடி அனுஷ்டிக்கக்கூடாது. நீ காமத்தையே முக்கியமாக உடையவன்; மஹா கோபி; கட்டுப்பாடில்லாதவன்; மேற் சொன்ன இருவித தர்மங்களையும் கலந்து நடத்துகிறவன். ஒருவனைக் கொல்லவேண்டுமென்று உனக்குத் தோன்றிய உடனேயே யோசிக்காமல் அவனைக் கொல்கிறவன். தர்மத்தில் உனக்கு சிரத்தை இல்லை. பிறருடைய பொருளைக் கைப்பற்றுவதில் ஆசையுள்ளவன். இந்திரியங்களை அடக்காமல்அவை போகிறவழியிலேயே விடுகிறவன். யாதொரு அபராதமும் செய்யாத என்னைக் கொன்று லோகத்தார் வெறுக்கும் காரியத்தைச் செய்து, ஸாதுக்களின் நடுவில் என்ன சொல்வாய்? அரசனைக் கொல்கிறவன், பிராம்மணனைக் கொல்லுகிறவன், பசுவைக் கொல்லுகிறவன், திருடன், பிராணிகளைக் காரணமில்லாமல் கொல்வதில் பிரீதியுள்ளவன், ஈசுவரனே இல்லை என்று எண்ணுகிறவன், தமயனுக்கு விவாகமாகாதபொழுது தான் விவாஹம் செய்துகொள்ளுகிறவன், கோள் சொல்லுகிறவன், செல்வமிருந்தும் கொடுக்காத லோபி, மித்திரர்களுக்கு துரோகம் செய்கிறவன், குருவின் பார்யையைக் கெடுப்பவன் இவர்கள் மஹா பாபிகள் அடையும் நரகங்களுக்குப் போகிறார்கள்; இதில் ஸந்தேகம் இல்லை.

'க்ஷத்திரியர்களுக்கு வேட்டையாடுவது தர்மமல்லவா? காட்டு மிருகங்களில் ஒன்றான உன்னைக் கொல்வதில் தோஷமென்ன' என்கிறாயோ? மான் புலி முதலியவைகளின் தோலைப்போல் என் தோல் ஆஸனத்திற்கு உபயோகமல்ல. பட்டுப்பூச்சியின் நூலைப் போல் என் மயிர் போர்வைகளுக்கு உபயோகமல்ல. யானையின் தந்தங்களையும் எலும்புகளையும்போல் என் பற்களும் எலும்புகளும் ஒன்றுக்கும் பிரயோஜனப்படாது. உன்னைப்போல் தபஸ்வி தர்மத்தை அனுஷ்டிப்பவர்கள், என் மாம்ஸத்தைத் தொட மாட்டார்கள். எதற்காக என்னைக் கொன்றாய்? ஐந்து நகங்களை யுடைய பிராணிகளுக்குள் சல்யமென்ற முள்ளம் பன்றியும் நாயைக் கொல்லும் பன்றியும், முயலும் ஆமையும் உடும்பும் பிராம்மண க்ஷத்திரிய வைசியர்கள் புஜிக்கத் தக்கவை. தர்மத்தை அறிந்தவர்கள் என் தோலையாவது எலும்புகளையாவது தொடக்கூட மாட்டார்கள். என் மாம்ஸத்தையும் புஜிக்கமாட்டார்கள். ஒன்றிற்கும் உதவாத ஐந்து நகங்களுள்ள என்னை ஏன் கொன்றாய்?

"ஸகலமும் தெரிந்த தாரை எனக்கு ஹிதத்தையும் நிஜத்தையும் சொன்னாள். புத்தி மயங்கி அவளை மீறி வந்தேன்; உயிரை இழந்தேன். சிரேஷ்டமான நடத்தையுள்ள பதிவிரதைக்குச் சபல சித்தமுள்ள புருஷன் வாய்த்ததுபோல் இந்த பூமிக்குத் தகுந்த நாதன் நீயல்ல. ரகசியமாகப் பிறருக்குக் கெடுதி செய்பவனும் பிறர்க்கு அபகாரம் செய்வதாலேயே பிழைப்பவனும், ஹீனமான காரியங்களைச் செய்கிறவனும், சாந்தத்தையுடையவன்போல்வேஷம் தரிப்பவனும் பாபியுமான நீ, மஹாத்மாவான தசரதருக்குப் புத்திரனாக எப்படிப் பிறந்தாய்? ராமனென்ற மத யானை நன்னடத்தையென்ற கட்டுத்தறியை அறுத்துக்கொண்டு, ஸாதுக்களின் தர்மமென்ற எல்லையைத் தாண்டி, தர்மமென்ற மாவெட்டியை மீறி வந்து என்னைக் கொன்றது. உனக்கு க்ஷேமத்தைக் கொடுக்காததும் தகாததும் ஸாதுக்களால் தூஷிக்கப்பட்டதுமான இந்தக் காரியத்தைச் செய்தால், ஸாதுக்கள் உன்னை நிந்திப்பார்களென்று ஏன் அறியவில்லை? உனக்கு உபகாரமாவது அபகாரமாவது செய்யாமலிருந்த என்னிடத்தில் பயனின்றிக் காட்டிய பராக்கிரமத்தை உன் மனைவியை எடுத்துப்போன ராவணனிடத்தில் காட்டவில்லையே! எனக்கு எதிரில் நின்று என்னிடத்தில் யுத்தம் செய்திருந்தால் உன்னை அப்பொழுதே கொன்று யமனைத் தரிசனம் செய்ய அனுப்பியிருப்பேன். ஒருவன் மதுபானம் செய்து மயங்கித் தூங்கும் பொழுது பாம்பு கடித்ததுபோல், ஒருவராலும் எதிர்க்க முடியாத என்னை மறைந்திருந்து கொன்றாயே?

ஸீதையைக் கொண்டுவந்து கொடுக்கவேண்டுமென்று முன்பே எனக்குச் சொல்லியிருந்தால் ஒரே நாளில் செய்திருக்கமாட்டேனா? ராவணனைக் கொல்வதற்கல்லவா ஸுக்ரீவனுடன் ஸ்நேகம் செய்து அவன் இஷ்டப்படி என்னைக் கொன்றாய்? அதே ராவணனை யுத்தத்தில் கொன்று, கழுத்தில் கயிற்றைக்கட்டி உன்னிடத்தில் இழுத்துவரமாட்டேனா? அவன் ஸீதையை ஸமுத்திரத்தின் அடியில் வைத்திருந்தாலும் பாதாளத்தில் மறைத்திருந்தாலும் நீ எனக்கு ஒரு வார்த்தை சொன்னால், முன் காலத்தில் மதுகைடபர்களால் எடுத்துப் போய்ப் பாதாளத்தில் வைக்கப்பட்ட சுவேதாச்வதரி என்ற சுருதியை ஹயக்ரீவர் அவர்களைக் கொன்று மறுபடியும் பூலோகத்திற்குக் கொண்டு வந்ததுபோல், அவளை உன்னிடத்தில் கொண்டு வரமாட்டேனா?

ஸுக்ரீவன் நான் இறந்த பிறகு ராஜ்யத்தை அடைய வேண்டியது நியாயம். தர்ம விரோதமாக நீ என்னைச் சண்டையில் கொன்றது அநியாயம். பிறந்தவன் என்றைக்காவது இறக்க வேண்டியது ஸஹஜம். நீ மறைந்திருந்து என்னைக் கொன்றது நியாயமானால் தகுந்த பதிலை யோசித்துச் சொல்'' என்று அந்த மஹாத்மாவான வாலி, பாணத்தின் வேதனையாலும் நெடுநேரம் பேசினதாலும் வாய் உலர்ந்து, ஸூரியனைப்போல் பிரகாசிக்கும் ராமனைப் பார்த்துக்கொண்டே பேசாமலிருந்தான்.

இத்யேவ முக்த்வா பரிஶுஷ்க வக்த்ர:
ஶராபி4கா4தாத்3 வ்யதி2தோ மஹாத்மா |
ஸமீக்ஷ்ய ராமம் ரவி ஸந்திகாஶம்
தூஷ்ணீம் ப3பூ4வாமர ராஜ ஸூநு: || (54)

## ஸர்க்கம் 18

## ராமனுடைய பதில்

இத்யுக்த: ப்ரஸ்ரிதம் வாக்யம் த⁴ர்மார்த²ஸஹிதம் ஹிதம் |
பருஷம் வாலிநா ராமோ நிஹதேந விசேதஸா ‖ (1)

இப்படி மதுரமாயும் புருஷார்த்தங்களுக்கு ஒத்தும் கடுமையாகவும் வாலி ராமனை தூஷித்தான். பாணத்தின் வேதனை பொறுக்காமல் பேசினானேயொழிய வேறில்லை. காந்தியை இழந்த ஸூரியனைப் போலும், மழை பெய்த மேகத்தைப் போலும், அணைந்த நெருப்பைப்போலும், சக்தியற்றுத் தரையில் கிடக்கும் வாலியைப் பார்த்து, "அக்ஞானத்தால் தர்மம், அர்த்தம், காமம், லோகாசாரம் முதலியவைகளை அறியாமல் இப்படி நிந்திப்பது ஸரியல்ல. மஹா புத்திமான்களையும் வயது சென்றவர்களையும் பெரியோர்களால் ஒப்புக்கொள்ளப்பட்டவர்களையும் கேட்டுத் தர்மத்தை அறியாமல், வானரர்களுக்கு ஸ்வபாவமான சபல புத்தியால் இப்படிச் சொல்லலாமா? உன் ஸ்வரூபத்திற்கு தகுந்தபடி உனக்குப் புத்தி ஏற்படவில்லையே.

"லோகத்தில் சில அரசர்கள் தங்கள் ஆளுகைக்குட்படாத மலைகளையும் காடுகளையும் அபகரித்துக்கொண்டு அவைகளிலுள்ள ஜந்துக்களையும் பிடிக்கிறார்கள். ஆனால் இந்த ஜம்பூ த்வீபமும் அதிலுள்ள பர்வதங்களும் அரண்யங்களும் இக்ஷ்வாகு வம்சத்தரசர்களுக்கு உட்பட்டவை. அவைகளிலுள்ள மிருகங்களையும் பக்ஷிகளையும் மனுஷ்யர்களையும் காப்பதும் தண்டிப்பதும் அந்த அரசர்களுக்கே ஏற்பட்டது. இப்பொழுது அந்த ராஜ்யத்தை ஆண்டுவரும் பரதன் தர்மாத்மா; ஸத்தியம் தவறாதவன்; நேரான நடத்தையுள்ளவன், தர்மார்த்த காம மோக்ஷமென்ற புருஷார்த்தங்களின் உண்மையை அறிந்தவன்; குடிகளை நியாயமாகக் காப்பதிலும் தண்டிப்பதிலும் நோக்கமுள்ளவன். அவனிடத்தில் நீதியும் பெரியோர்களோடு பழகும் தன்மையும் ஸத்தியமும் குடிகொண்டிருக்கின்றன. சாஸ்திர விரோதமில்லாமல் சத்துருக்களிடத்தில் பராக்கிரமத்தை உபயோகிப்பவன். தேச காலங்களை அறிந்து நடப்பவன். ராஜதர்மத்தை அனுசரித்து அவனுடைய ஆக்ஞைப்படி நாங்களும் மற்ற அரசர்களும் லோகத்தில் தர்மத்தை நிலைநிறுத்த பூமியெங்கும் ஸஞ்சரிக்கிறோம். தர்மத்தில் நாடிய மனத்தையுடைய அந்த ராஜசிரேஷ்டன் லோகத்தை ஆளும்பொழுது தர்மத்திற்கு விரோதமாக எவன் நடக்கத் துணிவான்? நாங்களும் உத்தம தர்மங்களை அனுஸரித்து, அவனுடைய ஆக்ஞையைக் கைகொண்டு தர்மத்திலிருந்து விலகினவர்களை விதிப்படி சிக்ஷித்து வருகிறோம். நீயோ அதர்மமாக நடப்பவன். பிறர் நிந்திக்கும்படியான காரியத்தைச் செய்கிறவன் கட்டுப்பாடில்லாதவன; ராஜ



தர்மத்தை அனுஸரிக்காதவன். தர்ம மார்க்கத்தில் நடப்பவனுக்குத் தமையனும் தகப்பனும் வித்தையை உபதேசிக்கிறவனும் பிதாவிற்கு ஸமம். தன் தம்பியும் புத்திரனும் குணசாலியான சிஷ்யனும் புத்திரனுக்கு ஸமம். இது தர்மம்; இதன் ரஹஸ்யம் சுலபமாக அறியக்கூடாததால், ஸாதுக்களும் அதில் மயங்குகிறார்கள். உன்னைப் போன்றவர்களைப் பற்றிச் சொல்லவேண்டுமா? ஸகலப் பிராணிகளின் ஹிருதயத்தில் வஸிக்கும் ஸர்வாந்தர்யாமியான பரமாத்மாவிற்கே தர்மாதர்மம் சுபாசுபம் முதலியவைகளின் ரஹஸ்யம் தெரியும். நீயோ சபல புத்தியுள்ள வானரன். நீ உன்னைப்போன்ற அக்ஞானிகளான வானரர்களுடன் பிறவிக் குருடர்கள் பிறவிக் குருடர்களுடன் பழகுவதைப்போல் காலம் கழித்துக் கொண்டிருக்கிறாய். அதை நீ அறிவாயா? நான் சொன்ன வார்த்தையின் தாத்பரியத்தைத் தெளிவாகச் சொல்லுகிறேன். கேவலம் கோபத்தால் புத்திமயங்கி என்னைத் தூஷிக்காதே.

"பெரியோர்களின் தர்மத்தைக் கைவிட்டு உன் தம்பியான ஸுக்ரீவனுடைய பாரியையை அனுபவிக்கிறாய். கேவலம் காமத்திற்கு உட்பட்டு, அவன் பிழைத்திருக்கையில் உனக்கு நாட்டுப் பெண்ணாகுமை என்பவளைக் கைப்பற்றினாய். அது பாவமல்லவா? இப்படித் தர்மத்தைத் துறந்து, காமத்திற்குட்பட்டு, தம்பியின் பார்யையை அனுபவிக்கும் உன்னைத் தண்டிக்கவேண்டியது நியாயம். தர்ம விரோதியாகவும் லோகாசாரத்திலிருந்து விலகினவனாகவும் இருக்கும் உன்னைத் தண்டிப்பதைவிட வேறு சிக்ஷை எனக்குத் தோன்றவில்லை. நான் க்ஷத்திரியன்; உத்தம குலத்தில் பிறந்தவன். தன் பெண்ணையும் ஸஹோதரியையும் தம்பியின் மனைவியையும் ஆசையால் சேருகிறவனைக் கொல்வதைத் தவிர வேறு தண்டனை விதிக்கப்படவில்லை.

பரதன் இந்தப்பூமியை ஆண்டுவரும் சக்கரவர்த்தி; நாங்கள் அவனுடைய ஆக்ஞையை நடத்துகிறவர்கள். அவன் துஷ்டர்களையும் கட்டுப்பாடில்லாமல் நடப்பவர்களையும் சிக்ஷித்து, தர்மமாக ராஜ்யத்தை ஆண்டுவருகிறான். நாங்கள் அவனுடைய கட்டளையை ஒட்டி உன்னைப்போல் எல்லை மீறி நடப்பவர்களைச் சிக்ஷிக்க ஏற்பட்டிருக்கிறோம். உன்னையும் நீ செய்த அபராதத்தையும் கவனிக்காமலிருக்கலாமா?

"லக்ஷ்மணனுக்கும் எனக்கும் உள்ள உறவைப்போல் ஸுக்ரீவனுக்கும் எனக்கும் ஏற்பட்டிருக்கிறது. அதனால் அவனுக்கு ராஜ்யமும் பாரியையும் கிடைக்கவேண்டும். அவன் என் க்ஷேமத்தைக் கோருகிறவன். தவிர, வானரர்கள் முன்னிலையில் செய்த பிரதிக்ஞையை எவ்வாறு மீறுவேன்? நான் இதுவரையில் சொல்லிய காரணங்கள் தர்மத்தை அனுஸரித்தவை. பெரியோர்களால் ஒப்புக்கொள்ளப்பட்டவை. அவைகளைக்கொண்டே உன்னைக்கொன்றேன்.

அது சாஸ்திர விரோதமல்லவென்றுநீயும் ஒப்புக்கொள்ளவேண்டும். எப்படி யோசித்தாலும் உன்னைக் கொன்றது தர்மமே.

"மேலும், ராஜ தர்மப்படி எனக்குத்தோழனான ஸுக்ரீவனுக்கு நீ சத்துரு. அப்பொழுது எனக்கும் சத்துருவே. நீயும் அந்தத் தர்மத்தை அனுசரித்து யோசித்தால் உன்னைக் கொன்றது நீ செய்த பாபத்திற்குப் பிராயச்சித்தமென்றும் தெரியும். முன்காலத்தில் மனு இரண்டு சுலோகங்களைச் சொல்லியிருக்கிறார். நாம் அனுஷ்டிக்கவேண்டிய ஆசாரத்தையே அவை உபதேசிக்கின்றன. தர்ம ரஹஸ்யத்தை அறிந்தவர்களால் ஒப்புக்கொள்ளப்படுகின்றன. அவைகளில் சொன்னபடியே நடந்தேன். "பாபம் செய்தவர்கள் அரசர்களால் சிக்ஷிக்கப்பட்டுப் பாபம் தீர்ந்து, ஸாதுக்களாகப் புண்யாத்மாக்கள் அடையும் உத்தமலோகங்களுக்குப் போகிறார்கள். திருடர்கள் அரசர்களால் தண்டிக்கப்பட்டாலும், திருடன் என்று அறிந்தபின்விடப்பட்டாலும்பாபம் நீங்கி நல்ல கதி அடைகிறார்கள். பாபிகளைத்தண்டிக்காத அரசன் அந்தப் பாபத்தை அடைகிறான்." பூர்வத்தில் ஒரு பௌத்த ஸந்யாஸி உன்னைப்போல் கொடிய பாபத்தைச் செய்ய, அதற்காக மாந்தாதா சக்கரவர்த்தியால் கடின தண்டனை விதிக்கப்பட்டான். இப்படி இன்னும் பல அரசர்கள் பாபிகளை அஜாக்கிரதையாக விட்டுவிட்டுப் பிறகு அதைப்பற்றி யோசிக்கையில் பாபிகளுக்கேற்பட்ட பிராயச்சித்தத்தைச் செய்து, அந்தத் தோஷத்திலிருந்து விடுபட்டிருக்கிறார்கள். ஆனால் நீ வருத்தப்பட நியாயமில்லை. உன்னை வதம் செய்தது தர்மத்தை அனுஸரித்த விஷயமே. நாங்கள் சாஸ்திர நீதிகளுக்குக் கட்டுப்பட்டவர்களேயன்றி இஷ்டப்படி நடக்கமுடியாது.

"மேலும் சில காரணங்களைச் சொல்கிறேன். அவைகளைக் கேட்டு நீ கோபத்தை விடுவாயென்று நம்புகிறேன். "என்னுடன் எதிரில் நின்று யுத்தம் செய்தால் உன்னை யமலோகத்திற்கு அனுப்புவேன்" என்றாய். அதனால் எனக்குக் கோபமில்லை. ஒரு வானரன் சொல்வதை நான் லக்ஷ்யம் செய்வது ஸரியல்ல. வலைகளாலும் கயிறுகளாலும் இன்னும் பல கபட உபாயங்களாலும் மனிதர்கள் மறைந்திருந்தும் நேரிலும் பல மிருகங்களைப் பிடிக்கிறார்கள். அவை ஓடிக்கொண்டிருந்தாலும் பயந்திருந்தாலும் ஓரிடத்தில் நின்றுகொண்டிருந்தாலும் பயமற்று நம்பியிருந்தாலும் ஜாக்கிரதையாயிருந்தாலும் இல்லாவிட்டாலும், வேட்டையாடுகிறவர்களைப் பார்க்காமலிருந்தாலும் அவைகளின் மாம்ஸத்திற்காக மிருகங்களைக் கொல்வதுண்டு. அப்படிச் செய்வதால் அவர்களுக்குத் தோஷமில்லை. தர்மத்தை நன்றாக அறிந்த அநேக ராஜரிஷிகளும் இங்கே வேட்டையாட வருகிறார்கள். ஆகையால் நானும் உன்னை யுத்தம் செய்துகொண்டிருக்கையில் பாணத்தால் அடித்தேன். நீ வானரனானதால் என்னுடன் எதிர்த்துப் போர் செய்தாலும்



செய்யாவிட்டாலும் உன்னைக் கொல்வது குற்றமாகாது. இப்படிப் பிறர்க்கு உபத்திரவத்தை உண்டாக்கும் ராஜதர்மம் பயனற்றதென்று நீ ஸந்தேகப்படலாம். ஆனால் ரணவைத்தியன் வியாதியால் பீடிக்கப்படுகிறவனுக்கு அக்காலத்தில் ஹிம்ஸையைச் செய்தாலும் முடிவில் ஸௌக்கியத்தையும் ஆரோக்கியத்தையும் கொடுக்கிறானல்லவா? அப்படியே ராஜாக்களும் ஸாதாரணமாகக் கிடைக்காத தர்மத்தையும் ஸுகமான வாழ்வையும் க்ஷேமத்தையும் குடிகளுக்குக் கொடுக்கிறார்களென்பதில் ஸந்தேகமுண்டோ? ஆகையால் அவர்களைப் பீடிப்பதும், அவர்கள் கெடுதி செய்கிறவர்களென்று எண்ணுவதும் நிந்திப்பதும், தடுத்துப் பேசுவதும், பிரியமில்லாத வார்த்தைகளைச்சொல்வதும் ஸரியல்ல. எட்டு லோகபாலர்கள் தம் அம்சங்களை ஒன்றுசேர்த்து அரசர்களாக மனுஷ்ய சரீரத்துடன் பூலோகத்தில் ஸஞ்சரிக்கிறார்கள். நீயோ தர்மத்தை அறியாமல், எப்பொழுதும் தர்மத்தையே நாடும் என்னைக் கேவலம் கோபாவேசத்தால் நிந்திக்கிறாய். நான் அனுஷ்டிக்கும் தர்மம் என் முன்னோர்களால் அனுஷ்டிக்கப்பட்டதே தவிர வேறல்ல" என்றார் ராமர்.

வாலி அதைக் கேட்டு, தர்மத்தின் ஸ்வரூபத்தையும் ரஹஸ்யத்தையும் நிச்சயமாக அறிந்து, ராமனிடத்தில் யாதொரு தோஷத்தையும் காணாமல், 'அநியாயமாக இவரை நிந்தித்தோமே' என்று மிகவும் வருத்தமடைந்தான். பிறகு கைகூப்பி வணக்கமாய் ராமனைப் பார்த்து, "தாங்கள் சொன்னது தர்மமே. அதில் யாதொரு ஸந்தேகமுமில்லை. ஸகலமும் தெரிந்த தாங்கள் சொல்லும் காரணங்களுக்கு ஒன்றும் தெரியாத நான் பதில் சொல்ல முடியுமா? நான் அக்ஞானத்தால் அயுக்தமாகவும் கடுமையாகவும் தங்களைத் தூஷித்தேன். தாங்கள் அதைத் தோஷமாக எண்ணாமலிருக்க வேண்டுமென்று பிரார்த்திக்கிறேன். தாங்கள் புருஷார்த்தங்களையும் தத்துவங்களையும் பூர்ணமாக அறிந்தவர்கள்; பிரஜைகளுக்கு க்ஷேமத்தைச் செய்வதிலேயே நோக்கமுள்ளவர்கள். காரணமான பாபங்களையும் அவைகளுக்குப் பயனான தண்டனையையும் பூர்ணமாகவும் தவறில்லாமலும் தெளிவாகவும் அறிந்திருக்கிறீர்கள். நான் தர்மத்தைக் கைவிட்டு அதர்மத்தைக் கைக்கொண்டேன். ஸகல தர்மங்களையும் அறிந்த தாங்கள் என்னிடத்தில் கிருபைசெய்து, 'நீ செய்த அபராதத்தை மன்னித்தேன்' என்று அனுக்ரஹித்து என்னைக் காப்பாற்றவேண்டும்.

"நான் இறக்கிறேன் என்றாவது, எனக்குப் பிரியமான தாரை என்ன கதி அடைவாளோ என்றாவது என்பந்துக்கள் நானில்லாமல் கஷ்டப்படுவார்களோ என்றாவது எனக்கு விசாரமில்லை. தாங்கள் எனக்கு உத்தம கதியை அருளினீர்கள். ஸுக்ரீவன் தாரையையும் மற்றப் பந்துக்களையும் காப்பாற்றுவான். ஆனால், 'தானே புத்திரனாய்ப் பிறக்கிறான்' என்ற வேதவாக்கியத்தின்படி என்னை

விட வேறல்லாத புத்திரனான அங்கதனையும், அவன் எனக்குப் பணிவிடை செய்ததையும், மற்ற உத்தம குணங்களையும் அவனுடைய அழகையும் நினைக்க நினைக்க எனக்குத் துக்கம் தாங்கவில்லை. பிறந்ததுமுதல் அவனை வெகு செல்வமாக வளர்த்து வந்தேன். ஜலம் வற்றின குளத்தைப்போல் என்னைக் காணாமல் உலர்ந்து வாடுவானே! ஒன்றும் தெரியாத குழந்தை. பெரியோர்களால் நன்றாகப் பழக்கப்பட்ட ஸ்திர புத்தியை அடையாதவன். எனக்கும் வேறு குழந்தையில்லை. அவனிடத்தில் நான் வைத்திருக்கும் பிரீதிக்கோ எல்லையில்லை. என் பாரியைகளுக்குள் எனக்கு மிகவும் பிரியமான தாரைக்குப் பிறந்தவன், அவளுக்கு ஸமமான புத்தியையும் யுக்தியையும் உடையவன். எனக்கு ஸமமான அளவற்ற பலமும் வாய்ந்தவன். தாங்கள் அவனைக் காப்பாற்றவேண்டும். தாங்கள் எல்லோரையும் பாதுகாத்து ஆளுகின்றவர்கள். தர்மாதர்மங்களின் ஸ்வரூபத்தை நன்றாக அறிந்து நடப்பவர்கள். பரதனிடத்திலும் லக்ஷ்மணனிடத்திலும் ஸுக்ரீவனிடத்திலும் தங்களுக்கு எந்த பிரீதியோ அந்த பிரீதியை அங்கதனிடத்தில் வைக்க வேண்டும். நான் ஸுக்ரீவனுக்குச் செய்த கெடுதிகளைத் தாரையின் போதனையால் செய்தேனென்று அவன் ஒரு வேளை நினைத்து, என்னிடத்திலுள்ள கோபத்தையும் துவேஷத்தையும் அவளிடத்தில் காட்டி, அவளை அவமானம் செய்து, அங்கதனை ராஜ்யத்திலிருந்து துரத்திவிடாமல் தாங்கள் காப்பாற்றவேண்டும்.

"நான் தங்களுடைய ஆக்ஞைப்படி நடந்து தங்களுடைய கிருபைக்குப் பாத்திரமாக இருந்தால் இந்த ராஜ்யத்தை ஸுகமாக ஆண்டு கொண்டிருக்கலாம். இது மாத்திரமல்ல. இந்தப்பூமண்டலம் முழுவதையும் ஆளலாம். இது மாத்திரமல்ல. ஸ்வர்க்கத்தையும் ஸம்பாதிக்கலாம். ஆனால் அவைகளை அல்பமாக நினைத்து தங்களுடைய கையால் மரணமடைந்து உத்தம கதியைப் பெறவேண்டுமென்ற ஆசையால், தாரை அநேக காரணங்களைச் சொல்லி என்னைத் தடுத்தும் கேளாமல், ஸுக்ரீவனுடன் யுத்தம் செய்யப் புறப்பட்டு வந்தேன்" என்று சொல்லி மௌனமாக இருந்தான்.

அவன் தெளிந்த ஞானத்தை அடைந்ததைக் கண்டு ஸ்ரீராமன், தர்மங்களின் ரஹஸ்யார்த்தத்தைக் காட்டுகின்ற வார்த்தைகளால் அவனை ஸமாதானம் செய்தார். "அங்கதனைப்பற்றிக் கவலைப்படாதே. நான் அதர்மத்தைச் செய்தேனென்று எண்ணக்கூடாது. ஸகல பாபமும் தீர்ந்து நீ உத்தம கதியை அடையப் போகிறபடியால் உன்னைப்பற்றியும் விசாரப்பட நியாயமில்லை. நீ செய்த அக்கிரமத்திற்காகப் பிராயச்சித்த ரூபமாக உன்னைக்கொல்வதே தர்மமென்று நான் நிச்சயமாக அறிந்தவன். தண்டிக்கத் தகுந்தவனைத் தண்டிக்கிறவனும் அப்படித் தண்டனை அடைகிறவனும் அதனால் மிக்க பிரயோஜனத்தை அடைவார்களே யொழிய தோஷமடையமாட்டார்கள். தர்மசாஸ்திரத்தில் விதித்தபடி என்னால் தண்டிக்கப்பட்டு, நீ பாபமற்று, தர்மானுஷ்டானத்திற்குப் பயனான சுத்த ஸ்வரூபத்தை அடைந்தாய். உன் மனத்திலுள்ள சோகத்தையும் மோஹத்தையும் பயத்தையும் விடு. பிராரப்த கர்மத்தை உன்னால் விலக்கமுடியுமா? உன்னிடத்தில் அங்கதன் எவ்வளவு பிரீதியும் பக்தியும் வைத்திருந்தானோ அப்படியே ஸுக்ரீவனிடத்திலும் என்னிடத்திலும் நடந்துகொள்வானென்பதில் ஸந்தேகப்படாதே" என்று தர்ம மார்க்கத்திற்குத் தீபம் போன்ற மஹாத்மாவான ராமன் மதுரமாகவும் யுக்தமாகவும் சொல்வதைக் கேட்டு, வாலி மனக்கவலை தீர்ந்து ஸந்தோஷமடைந்து, "ஸ்வாமி! நான் ஒன்றும் தெரியாத வானரன்; தங்களுடைய மஹிமையை அளவிடக்கூடாதவன். பாணத்தால் அடிபட்டு புத்தி சிதறி, தாங்கமுடியாத உபத்திரவமடைந்து, தகாத வார்த்தைகளைச் சொல்லி தங்களைத் தூஷித்தேன். என் பிதாவான மஹேந்திரனைப் போன்ற வீரரான தங்களை நான் செய்த அபராதத்தை மன்னிக்கும்படிக் கேட்டுக்கொள்ளுகிறேன். புருஷோத்தம! எல்லையற்ற பராக்கிரமசாலியே! என் பாபத்திற்கு யாதொரு பிராயச்சித்தத்தையும் செய்ய முடியாதவன் நான். தாங்கள் என்னைக் காப்பாற்ற வேண்டும்" என்றான்.

ஶராபி4தப்தேந விசேதஸா மயா
ப்ரது3ஷிதஸ் த்வம் யத3ஜாநதா ப்ரபோ4 |
இ3தம் மஹேந்த்3ரோபம பீ4ம விக்ரம
ப்ரஸாதி3தஸ் த்வம் க்ஷம மே நரேஶ்வர || (70)

---

## ஸர்க்கம் 19

## தாரை வாலியைக் கண்டது

---

ஸ வாநர மஹாராஜ: ஶயாந: ஶர விக்ஷத: |
ப்ரத்யுக்தோ ஹேதுமத்3வாக்யை: நோத்தரம் ப்ரத்யபத்3யத || (1)

**ரா**மன் யுக்திக்கு ஒத்த வார்த்தைகளைச் சொன்னதால் வாலி அவைகளுக்கு மேலும் பதில் சொல்ல முடியவில்லை. பாறைகளால் சரீரம் பிளவுபட, மரங்களால் தேகமெங்கும் காயமடைந்து, ராம பாணத்தால் அடிபட்டு, மரணகாலம் நெருங்கி மூர்ச்சையடைந்தான்.

ஸுக்ரீவனுடன் யுத்தம் செய்துகொண்டிருக்கையில் ராமனுடைய பாணத்தால் வாலி கொல்லப்பட்டானென்று கேள்விப்பட்டுப் பயந்து, தாரை அங்கதனுடன் குகையிலிருந்து ஓடிவந்தாள். அங்கதனுடைய பரிவாரங்களான வானர வீரர்கள் கோதண்ட பாணியான ராமனைக் கண்டு நடுங்கி, தலைவன்

கொல்லப்பட்டுப் பயந்து ஓடும் மான் கூட்டங்களைப்போல், நான்கு திசைகளிலும் ஓடி ஒளிந்துகொண்டார்கள். தாரை அதைப்பார்த்து அவர்கள் ராம பாணங்களால் அடிபட்டவர்களைப்போல் பயந்து துக்கப்படுவதைக் கவனித்துத் தானும் துக்கமடைந்து, "வானரர்களே! ராஜ ஸிம்ஹமான வாலிக்கு முன்னே செல்லும் நீங்கள் அவரைவிட்டுப் பயந்து கதியற்றவர்களைப்போல் ஏன் ஓடுகிறீர்கள்? ஸுக்ரீவன் ராஜ்யத்திற்காக ஆசைப்பட்டு ராமனைக்கொண்டு உங்கள் அரசனைப் பாணத்தால் அடித்துக் கொல்வித்தால் உங்களுக்கு என்ன பயம்? ராமபாணம் குறி தப்பாதென்றும், தடுக்கமுடியாததென்றும் எனக்குத் தெரியாதா?" என்றாள். அதைக் கேட்டு இஷ்டமான ரூபத்தை எடுக்கச் சக்திவாய்ந்த அந்த வானரர்கள் தாரையைப்பார்த்து,"யமன் ராமன் வடிவத்தில் தோன்றி வாலியைக் கொன்றான். புத்திரனில்லாத ஸ்த்ரீகள் பர்த்தாவுடன் மரணமடைய வேண்டும். நீயோ அப்படிச் செய்ய நியாயமில்லை. அங்கதனுக்காகப் பிழைத்திருந்து அவனைப் பாதுகாக்கவேண்டும். ஸுக்ரீவனால் எறியப்பட்ட பாறைகளையும் மரங்களையும் வாலி தடுத்து முடிவில் வஜ்ராயுதம் போன்ற ராமபாணத்தால் அடிபட்டு இறந்தார். கிஷ்கிந்தையிலிருந்து வாலியுடன் வந்த வீரர்கள் இந்திரனுக்கு ஸமமான பராக்கிரமமுள்ள தங்கள் அரசன் அடிபட்டதைக் கண்டு, நான்கு மூலைகளிலும் சிதறிக் கிஷ்கிந்தையை நோக்கி ஓடுகிறார்கள். கோட்டை வாசல்களைக் காப்பாற்ற வேண்டும். அங்கதனுக்கும் அபிஷேகம் செய்ய வேண்டும். எல்லா வானரர்களும் அவனையே பின்தொடர்வார்கள். தாங்களும் இங்கேயே இருப்பது எங்களுக்குஇஷ்டமில்லை. நமது சத்துருக்களான வானரர்கள் கிஷ்கிந்தையிலுள்ள மற்றக் கோட்டைகளைப் பிடித்துக்கொள்ளுகிறார்கள். அவைகளில் பாரியைகளை விட்டுப் பிரிந்தவர் பலர்; ஸாதாரணமான பாரியைகளை உடையவர் பலர். அவர்கள் இதுவரையில் காடுகளில் திரிந்துகொண்டு எல்லாக் கஷ்டங்களையும் அனுபவித்து வந்தார்கள். இப்பொழுது அவர்களும் ஸுக்ரீவன் முதலிய தங்கள் பந்துக்களும் நமக்கு மிகுந்த கெடுதியைச் செய்வார்கள்." என்றார்கள். தாரையோ பெருந்தன்மையும் கூர்மையான புத்தியும் வாய்ந்தவள். "புருஷ ஸிம்ஹமான அந்த மஹானுபாவன் இறந்த பிறகு புத்திரனும் ராஜ்யமும் உயிரும் எனக்கு ஒருபொருட்டா? ராமபாணத்தால் அடிபட்ட அந்த மஹாத்மாவின் காலடியில் அல்லவா நானிருக்க வேண்டும்" என்று சோகம் தாங்காமல் வாய்விட்டலறி தலையிலும் மார்பிலும் அடித்துக்கொண்டு யுத்த பூமிக்கு ஓடிவந்தாள்.

அங்கே தன் பர்த்தா அடிபட்டுப் பூமியில் கிடப்பதைக் கண்ட பின், மாயாவி முதலிய அஸுர வீரர்களை அவன் அலக்ஷ்யமாகக் கொன்றவன்; இந்திரனுடைய வஜ்ராயுதத்தைப் போன்ற பெரிய மலைகளைப் பெயர்த்தெறிந்தவன்; பெருங்காற்றால் அடிக்கப்பட்ட பெரிய மேகங்களைப்போல் கர்ஜிப்பவன்; பராக்கிரமத்தில்



இந்திரனைப்போன்றவன். ரோஷத்தால் கர்ஜிக்கும் சத்துருக்களுக்கு நடுவில் பயங்கரமாகக் கர்ஜிப்பவன். ஒரு புலி மாம்ஸத்திற்காக ஆசைப்பட்டு, சிங்கத்தைக் கொன்றதுபோல் மஹாசூரனான ராமனால் கொல்லப்பட்டு, மழைபெய்து ஓய்ந்த மேகத்தைப் போலும், அழகிய கொடிகளால் அலங்கரிக்கப்பட்டு இளைப்பாறுவதற்காகப் போடப்பட்ட மேடைகளையுடைய தோரண வாசல், அதிலிருந்த நாகத்தைப் பிடிக்க வந்த கருடனால் இடித்துத் தள்ளப்பட்டதுபோலும், அவன் உயிரிழந்து கிடப்பதையும் ஸமீபத்தில் ராமன் கோதண்டத்தின்மேல் சாய்ந்துகொண்டு நிற்பதையும் பக்கத்தில் லக்ஷ்மணனும் ஸுக்ரீவனும் நிற்பதையும் கண்டாள். (ரகுவீரனிடத்தில் சத்துருவென்ற புத்தியை விலக்கி, "இந்த விஷயத்தில் ராமனிடத்தில் யாதொரு குற்றமுமில்லை; வாலியே குற்றவாளி; ஸகலப் பிராணிகளும் தாகம் தீர்த்துக்கொள்வதற்காக ஒருவன் குளத்தை வெட்டியிருக்க, அதில் ஒரு மூடன் கழுத்தில் ஒரு பெரிய பாறையைக் கட்டிக்கொண்டு விழுந்து இறந்தால் அது யாருடைய தோஷம்? இவனும் ராமனுக்கு அனுகூலமாக நடந்திருந்தால், இவனை ரகுநாதன் ரக்ஷிக்காமலிருப்பாரா? தன் பிராணனுக்கு ஸமமான ஸுக்ரீவன் தன்னை வந்தடைந்தான்; அவனுக்குக் கெடுதி செய்வதைப் பொறுப்பாரா? வாலி ஸுக்ரீவர்கள் முதல்தடவை யுத்தம் செய்தபொழுது ராமன் வாலியைக் கொல்லவில்லையே. வாலி தன் பக்தனை ஹிம்ஸித்ததை நேரில் பார்த்தபிறகே கொன்றார்" என்று நினைத்தாள்.) அவர்களைத் தாண்டி வாலியிருக்குமிடத்திற்கு வந்து, துக்கத்தால் மூர்ச்சையடைந்தாள். பிறகு தூங்கி எழுந்தவளைப்போல் பிரக்ஞை தெளிந்து, "ஹா நாதா!" என்று கதறி, கால பாசத்தால் கட்டி இழுக்கப்பட்ட தன் பிரிய நாயகனைப் பார்த்து வாய்விட்டலறினாள். தாரை இப்படி அன்றில்போல் தீனமாய்ப் புலம்புவதையும் அங்கதன் அங்கே வந்ததையும் பார்த்து, ஸுக்ரீவன் சொல்லமுடியாத துக்கத்தை அடைந்தான்.

தாமவேக்ஷ்ய து ஸுக்$^3$ரீவ: க்ரோஶந்தீம் குரரீமிவ |
விஷாத$^3$ மக$^3$மத்கஷ்டம் த்$^3$ருஷ்ட்வா சாங்க$^3$த$^3$ மாக$^3$தம் || (29)

---

## ஸர்க்கம் 20

## தாரையின் பிரலாபம்

ராமசாப விஸ்ருஷ்டேந ஶரேணாந்த கரேண தம் |
த்ருஷ்ட்வா விநிஹதம் பூ மௌ தாரா தாராதி'பாநநா || (1)

இப்படி ராமனுடைய கோதண்டத்திலிருந்து விடப்பட்ட பாணம் வாலியின் உயிரை வாங்கி அவனைப் பூமியில் தள்ளிற்று. மதம் பிடித்த உத்தம கஜத்தைப்போலும், மஹேந்திர பர்வதத்தைப் போலும், அந்த வானர ராஜன் பூமியில் விழுந்து கிடப்பதைத்

தாரை பார்த்து ஸமீபத்தில் ஓடிவந்து, அவனை இறுகத் தழுவி அவனுடைய குணங்களை நினைத்து நினைத்து அடங்காத் துயரம் கொண்டு வாய்விட்டுக் கதறினாள். "யுத்தத்தில் பயங்கரமானவரே! மஹாவீரரே! வானர சிகாமணியே! தங்களுக்கு யாதொரு அபராதமும் செய்யாத நான் இப்படித் தீனமாகத் தவிப்பதைப் பார்த்தும் என்னுடன் பேசக்கூடாதா? எழுந்திருங்கள். தங்களைப்போன்ற ராஜ சிரேஷ்டர்கள் இப்படி வெறும் தரையில் படுத்தல் தகுமா? உத்தமமான படுக்கை தங்களுக்கு இல்லையா? என்னைக் காட்டிலும் பூமி என்றவளிடத்தில் தங்களுக்கு மிகுந்த பிரீதியென்று இப்பொழுதுதான் அறிந்தேன். உயிரிழந்து பிரக்ஞை போனபிறகும் அவளைப் பிரியமாக ஆலிங்கனம் செய்துகொண்டு படுத்திருக்கிறீர்களல்லவா? என்னைத் திரும்பிக்கூடப் பார்க்கவில்லையே. தாங்கள் தர்ம யுத்தத்தாலடையும் வீரஸ்வர்க்கத்திற்குப் போகும் வழியில், தங்களுக்கு மிகுந்த பிரீதியைக் கொடுக்கும் இந்தக் கிஷ்கிந்தையைப்போல் வேறொரு நகரத்தைக் கட்டி வைத்திருக்கிறீர்களென்று எனக்கு நன்றாகத் தெரிகிறது. இல்லாவிட்டால் இந்த யுத்த பூமியில் ஏன் படுத்திருக்க வேண்டும்?

"தங்களுடைய பிரியமான பார்யைகளான எங்களுடன் தேன் மணமுள்ள வனங்களில் தாங்கள் ஆனந்தமாக விளையாடின விளையாட்டுக்கள் எல்லாம் இன்று அழிக்கப்பட்டன. எனக்கு இனி ஆனந்தமேது? எப்பொழுதாவது ஆனந்தமடையலாம் என்ற ஆசையும் இல்லை. வானராதிபதியான தாங்களே மரணமடைந்த பிறகு சோகஸமுத்திரத்தில் ஆழ்ந்து பிரக்ஞையற்றேன். என் உயிருக்குயிரான பிரியநாயகன் பாணத்தால் அடிபட் க் கிடப்பதைக் கண்டு என் ஹிருதயம் துக்கம் தாங்காமல் தூள் தூளாக வெடிக்க வேண்டியதல்லவா? அப்படிக் காணவில்லையே.

"ஸுக்ரீவனுடைய பாரியையை அபஹரித்து அவனை ராஜ்யத்திலிருந்து துரத்தினீர்கள். அந்த அநியாயத்தின் பலன் இதோ கைமேல் கிடைத்தது. தங்களுடைய ஹிதத்தையும் கீர்த்தியையும் எப்பொழுதும் நாடும் நான், எவ்வளவோ சொல்லித் தடுத்தேன். தாங்கள் புத்தி மயங்கி என் சொல்லை அலக்ஷ்யம் செய்தீர்கள்.

"ஸ்வர்க்கத்திலுள்ள அப்ஸரஸ்கள் அழிவற்ற யௌவனத்தையுடையவர்கள். அழகில் நிகரற்றவர்கள். காமசாஸ்திரங்களில் மஹா நிபுணர்கள். அவர்களும் தங்களைக் கண்டு மயங்குவார்கள்.

"இது வரையிலும் ஒருவர்க்கும் கட்டுப்படாத தாங்கள், எவ்விதத்திலும் தங்களுக்கு தாழ்ந்தவனான ஸுக்ரீவனுடைய வசத்தில் அகப்பட்டதைப் பார்த்தால், யமனே வேண்டுமென்று தங்களுடைய ஆயுளைக் குறுக்கினான் என்பதில் ஸந்தேகமில்லை. இது வரையில் யாதொரு துக்கத்தையும் அறியேன். இப்பொழுது பர்த்தாவை இழந்து திக்கற்றவளைப்போல் எப்பொழுதும் துக்கத்தை அனுபவித்துக் கொண்டே காலத்தைக் கழிக்கலாயிற்று.

"என் விஷயமிருக்கட்டும். இதோ வந்து நிற்கும் தங்கள் அருமைக் குழந்தை அங்கதனைக் கண்ணெடுத்துப் பார்க்கக் கூடாதா? நிகரற்ற ரூபலாவண்யத்தை உடையவன்; ஸகல ஸுகங்களையும் அனுபவிக்கத் தகுந்தவன்; பிறந்தது முதல் செல்வமாக வளர்க்கப்பட்டவன். சிறிய தகப்பனுடைய வசத்தில் அகப்பட்டு இவன் என்ன கதியடைவானோ? தாங்கள் அவனுக்குச் செய்த தீங்குகளையெல்லாம் நினைத்து நினைத்து ஸுக்ரீவன் அந்தக் கோபத்தை அங்கதனிடத்தில் தாக்குவானே. அங்கதா! தர்மாத்மாவான உன் பிதாவை நன்றாகப் பார். இனி அவரை ஒருநாளும் பார்க்க முடியாது. நாதா! தாங்கள் எப்பொழுது வெளியில் போனாலும் குழந்தையை அணைத்து உச்சி மோந்து ஸமாதானம் செய்யாமல் போவதில்லையே. இப்பொழுது தாங்கள் போகிற பிரயாணத்திலிருந்து ஒரு நாளும் திரும்பி வரமாட்டீர்களே. குழந்தையை அழைத்துத் தேற்றி நல்ல புத்திமதிகளைச் சொல்லக்கூடாதா? ராமனே தங்களைக் கொன்று ஒருவராலும் அடையமுடியாத கீர்த்தியைப் பெற்றார். ஸுக்ரீவனுக்குச் செய்த பிரதிக்ஞையை நிறைவேற்றிக் கடன் தீர்த்தார்.

"ஸுக்ரீவ! உன் எண்ணங்கள் நிறைவேறினவா? ருமையை அடையப் போகிறாயல்லவா? யாதொரு உபத்திரவமுமில்லாமல் இந்த ராஜ்யத்தை அனுபவிக்கலாம். உனக்கு விரோதியும் தமையனுமான வாலி இறந்து விட்டாரல்லவா? மஹாராஜரே, தங்களிடத்திலுள்ள பிரேமையால் இப்படிப் புலம்பும் என்னைப் பார்த்து ஒரு வார்த்தை பதில் சொல்லக் கூடாதா? தங்களுக்கு அருமையான பாரியைகள் எல்லோரும் இதோ வந்து நிற்கிறார்களே! அவர்களையாவது கண்ணெடுத்துப் பார்க்கக் கூடாதா" என்று தாரை தீனமாகக் கதறுவதைக் கேட்டு அந்த வானர ஸ்த்ரீகள் அங்கதனைக் கட்டிக் கொண்டு பரிதாபமாகப் புலம்ப ஆரம்பித்தார்கள். பிறகு தாரை, "நாதா! வீரசிகாமணியே! ஸகல உத்தம குணங்களும் பொருந்திய அங்கதனிடத்தில் தங்களுக்கு எல்லையற்ற பிரீதியல்லவா? அவனை அநாதையாக விட்டு, திரும்பி வராத பிரயாணம் போக நிச்சயிக்கலாமா? நானாவது குழந்தையாவது தங்களுக்கு யாதொரு அபராதமும் செய்யவில்லையே. ஒருவேளை அக்ஞானத்தால் நான் செய்திருந்தாலும் அதை மன்னிக்கவேண்டும். அப்படித் தங்களுடைய பாதங்களில் என் தலையை வைத்து பிரார்த்திக்கிறேன்" என்று மற்ற வானர ஸ்த்ரீகளுடன் தீனமாகப் புலம்பி

வாலி விழுந்து கிடக்குமிடத்தில் பட்டினி கிடந்து உயிரை விட நிச்சயித்தாள்.

ததா$^{2}$து தாரா கருணம் ருத$^{3}$ந்தீ |
ப$^{4}$ர்து: ஸமீபே ஸஹ வாநரீபி$^{4}$: |
வ்யவஸ்யத ப்ராய முபோப வேஷ்டும்
அநிந்த்$^{3}$ய வர்ணா பு$^{4}$வி யத்ர வாலீ ॥ (26)

---

## ஸர்க்கம் 21

# ஹனுமான் தாரையைத் தேற்றியது

ததோ நிபதிதாம் தாராம் ச்யுதாம் தாரா மிவாம்ப$^{3}$ராத் |
ஶனை ராஶ்வாஸயாமாஸ ஹநுமாந் ஹரி யூத$^{2}$ப: ॥ (1)

ஆகாசத்திலிருந்து நட்சத்திரம் விழுந்து கிடப்பதைப்போல் தாரை பூமியில் விழுந்து கிடப்பதைக் கண்டு, மாருதி அவளைப் பல விதமாக ஸமாதானம் செய்தார். "ஒவ்வொரு ஜந்துவும் தெரிந்தும் தெரியாமலும் செய்யும் பாப புண்ணியங்களின் பயனை இங்கிருந்து மற்ற லோகங்களுக்கு போனபின் ஸுகமாகவோ துக்கமாகவோ அனுபவிக்கின்றது. ஸுக்ரீவனால் பிறர் உதவியாலே வாலி கொல்லப்பட்டானென்று எண்ணுவது பிசகு. ஸுக்ரீவன் வெளிப்படையான காரணமேயொழிய வாலியின் பூர்வ கர்மமே உண்மையான காரணம். தன் கர்மத்தின் பயனை அனுபவித்த வாலியைப் பற்றி இப்படி வருந்துகிறாயல்லவா? சற்று யோசித்துப் பார்த்தால் 'நான் செய்த கர்மங்களுக்கு என்ன கிடைக்குமோ' என்று உன்னைப் பற்றியல்லவா நீ துக்கப்பட வேண்டும். வாலியைப் பார்த்து நீ இரக்கப்படுகிறாயே. உன்னைப் பற்றியல்லவா இரக்கப்பட வேண்டும். நீர் மேல் குமிழிபோன்றதேகம்அநித்தியம்;நித்தியமானதேகத்தையுடையவர்களல்லவா அப்படியில்லாதவர்களைப் பற்றிக் கலைப்பட வேண்டும். ஜீவகோடிகளில் ஒருவன் மற்றொருவனைப் பற்றித் துக்கப்படக் காரணமென்ன? அங்கதனென்ற உத்தமமான புத்திரன் உனக்கு கிடைத்திருக்க அவனைப் பாதுகாத்து இனி அவன் க்ஷேமம் அடைவதற்குச் செய்யவேண்டிய காரியங்களை ஆலோசிக்க வேண்டியது உன் கடமையல்லவா? பிராணிகளின் பிறப்பும் இறப்பும் நிலையற்றவை என்று உனக்குத் தெரியாதா? ஆகையால் இறந்த வாலியைக் குறித்து லோக வழக்கப்படி நீ பிரலாபிக்கக் கூடாது. அவர் நல்ல கதி அடையும் பொருட்டு உத்திரக்கிரியைகளை ஜாக்கிரதையாக நடத்த வேண்டும். நீ விவேகியல்லவா? மஹாராஜா உயிரோடிருக்கையில் எண்ணிறந்த வானரர்களுக்கு ஸகல ஸௌக்கியங்களையும் அருளி, இப்பொழுது அவருக்கேற்பட்ட நல்லகதியை அடைந்து தன் புண்ணிய பலனை அனுபவிக்கப் போகிறார். அவருக்காக எவனாவது துக்கிப்பானா? இவர் ராஜ தர்மப்படி, நான்கு உபாயங்களையும் நன்றாக அனுஷ்டித்து நியாயமாகப் பிரஜைகளைக் காப்பாற்றி சாஸ்திரப் பயிற்சியால் தத்துவங்களை பூரணமாக அறிந்திருந்ததால் தர்மாத்மாக்கள் அடையும் உத்தம லோகங்களை அடைவார். அதைப் பற்றி நீ ஏன் கவலைப்படுகிறாய்? உன் புத்திரனான அங்கதனுக்கும் இந்த ராஜ்யத்திற்கும் இதிலுள்ள வானரர்களுக்கும் நீயே கதி. ஆகையால் சோகத்தையும் அதனாலுண்டாகும் தாபத்தையும் நீ வர வர ஒழிக்க வேண்டும். அங்கதன் உன்னால் காக்கப்பட்டு இந்த ராஜ்யத்தை ஆளட்டும். எந்த பிரயோஜனத்திற்காக புத்திரர்களைப் பெறுகிறார்களோ; எந்தக் காரியம் இப்பொழுது செய்யப்பட வேண்டுமோ அதற்கு இதுவே ஸமயம். வாலிக்குச் செய்யவேண்டிய உத்தரக்கிரியைகளை அங்கதனால் நடத்து. முதலில் வாலிக்குத் தஹன ஸம்ஸ்காரங்களைச் செய்து பிறகு, அங்கதனுக்கு ராஜ்யாபிஷேகம் செய். உன் புத்திரன் ஸிம்ஹாஸனத்தில் உட்கார்ந்து ராஜ்யபாலனம் செய்வதைப் பார்த்தால் நீ துக்கத்தை மறந்து ஸந்தோஷிப்பாய்" என்று ஆஞ்சநேயர் தேற்றினார்.



அதைக் கேட்டும் தாரை துக்கம் தீராமல் மாருதியைப் பார்த்து, "அங்கதனைப்போல் எண்ணிறந்த புத்திரர்களை ஒரே காலத்தில் பார்ப்பதை விட வீரசிகாமணியான என் பிராணநாயகனுடைய தேகத்தை ஒரு தடவை தழுவுவதே எனக்கு மிகுந்த ஆனந்தத்தையும் பெருமையையும் கொடுக்கும். என் பர்த்தாவுக்கு உத்திரக்கிரியைகளை செய்யவாவது அங்கதனுக்கு அபிஷேகம் செய்யவாவது எனக்குச் சக்தியில்லை. அவனுடைய சிறிய தகப்பனான ஸுக்ரீவனே இனிமேல் நடக்கவேண்டிய யாவற்றையும் கவனிப்பான். தகப்பனில்லாத குழந்தைக்குச் சிறிய தகப்பனே ஆதரவு. தாய் என்ன செய்ய முடியும்? ஆகையால் அங்கதனைப்பற்றி இப்படி ஆலோசிக்கத் தகாது. என் பிராணநாதனுடன் சேர்ந்திருப்பதைக் காட்டிலும் இவ்வுலகத்திலாவது வேறு உலகத்திலாவது எனக்கு வேறொன்றுமில்லை. ஆகையால் சத்துருக்களை எதிர்த்து பின்வாங்காமல் யுத்தம் செய்து வீரஸ்வர்க்கத்தை அடைந்த அந்த மஹானுபாவன் படுத்திருக்குமிடத்திலேயே நானும் உயிரை விடுவது நலம்" என்றாள்.

ந ஹி மம ஹரிராஜ ஸம்ஶ்ரயாத்
க்ஷமதர மஸ்தி பரதர சேஹ வா |
அபி$^{4}$முக$^{2}$ ஹதவீர ஸேவிதம்
ஶயநமித$^{3}$ம் மம ஸேவிதும் க்ஷமம் ॥ (16)

---

## ஸர்க்கம் 22

# வாலி தன்னைச் சேர்ந்தவர்களுக்கு நல்வார்த்தை கூறியது

வீக்ஷமாணஸ்து மந்தா³ஸு: ஸர்வதே மந்த³ முச்ச்²வஸந் |
ஆதா³வேவ து ஸுக்ரீவம் த³த³ர்ஶா நுஜ மக்³ரத: ‖ (1)

ராம பாணத்தால் அடிபட்டு பிரக்ஞையற்ற வாலியை இறந்தானென்று நிச்சயித்து, ஹனுமான் அவனுக்கு உத்தரக்கிரியைகளைச் சீக்கிரம் நடத்தவேண்டுமென்று சொல்லிக்கொண்டிருக்கையில் தெய்வ வசத்தால் அந்த வானரராஜன் மூர்ச்சை தெளிந்து, குற்றுயிருடன் மெதுவாய் மூச்சுவிட்டுக்கொண்டு நான்கு புறங்களிலும் மெள்ள மெள்ளப் பார்த்து, தனக்கு ஸமீபத்தில் ஸுக்ரீவனும் அவனுக்குப் பின் அங்கதனும் நிற்பதைக் கண்டு, ஜயசாலியான ஸுக்ரீவனை அழைத்து அதிக பிரியத்துடன், தெளிவாக பின் வருமாறு உபதேசித்தான். "தம்பி, ஸுக்ரீவ! நான் உன்னை ராஜ்யத்திலிருந்து துரத்தி உன் பாரியையையும் அபகரித்தேன். என் கர்மவசத்தால் புத்தி மயங்கி அப்படிச் செய்யும்படியாயிற்று. தலை விதி எவனையும் தன் வழியில் இழுக்குமல்லவா? ஆகையால் என்னைப் பாபியென்றும் கெட்டவனென்றும் எண்ணாதே. நாமிருவரும் ஒற்றுமையுடன் வாழ்ந்து இந்த ராஜ்யத்தை ஆள வேண்டுமென்று தெய்வத்தால் விதிக்கப்படவில்லை. அது மாறுமா? நான் அதி சீக்கிரத்தில் இறப்பேன். நீ ஸகல வானரர்களுக்கும் அரசனாய் இந்த ராஜ்யத்தை ஆளக்கடவாய். உயிரையும் ராஜ்யத்தையும் எல்லையற்ற ஐசுவரியத்தையும், வாலி ஒருவராலும் ஜயிக்கப்படாதவன் என்ற களங்கமற்ற கீர்த்தியையும் ஒரு க்ஷணத்தில் விட்டுப் போகிறேன். வானராதிபதியே! இந்த ஸமயத்தில் நான் உனக்குச் சொல்லும் வார்த்தைகளை நன்றாய்க் கவனித்து எப்படியாவது நிறைவேற்ற வேண்டும். இதோ பார் ; என் குழந்தை ஸகல சுகங்களையும் அனுபவிக்கத் தகுந்தவன் ; ஸுகமாய் வளர்க்கப் பட்டவன் ; பாலன்; ஆனாலும் பெரியோர்களுக்குரிய புத்தியையும் யோசனையையுமுடையவன் ; என் பிராணனைக் காட்டிலும் எனக்குப் பிரியமானவன். கண்ணும் கண்ணீருமாய்ப் பூமியில் கிடந்து தவிக்கிறதைப் பார்த்தாயா? நான் இல்லை என்ற குறையைக் காட்டாமல் ஸகல விதத்திலும் அவனைக் காப்பாற்றி, உன் புத்திரனைப்போல் பாவித்து, அவனுடைய இஷ்டங்களைப் பூர்த்தி செய். அவனுக்கு வேண்டிய ஸகல பதார்த்தங்களையும் கொடுக்க வேண்டியவன் நீயே. சத்துருக்களிடத்திலிருந்து காப்பாற்ற வேண்டியவனும் நீயே. 'நான் சத்துருவின் புத்திரனாகையால் என்னைக் கொன்று விடுவானோ' என்று அவன் பயப்படுவதற்குக் காரணமில்லாமல் நீ நடந்து கொள்ள வேண்டியது. நான் அவனிடத்தில் வைத்திருந்த பிரீதியை ஞாபகப்படுத்திக்கொண்டு, நான் இல்லாத காரணத்தால் அதைவிட ஆயிரம் மடங்கு பிரீதியுடன் அவனை நடத்த வேண்டும். இவன் தாரைக்குப் பிறந்தவன்; ஸகல ஐசுவரியங்களும் பொருந்தினவன்; பராக்கிரமத்தில் உனக்கு ஸமமானவன்; நீ ராக்ஷஸர்களுடன் யுத்தம் செய்கையில் உனக்கு முன்னின்று அவர்களை வதம் செய்வான். என் புத்திரன் என்பதற்குத் தகுந்தபடி இவன் யுத்த களத்தில் ஆச்சரியகரமான வீரகாரியங்களைச் செய்வான்.



இதோ இருக்கும் ஸுஷேண புத்திரியான தாரை, ஸூக்ஷ்மமான விஷயங்களை அறிந்து நிச்சயிப்பதில் மிகுந்த திறமையுள்ளவள். வரும் காரியங்களை அறியக்கூடிய சகுன சாஸ்திரத்தில் நன்றாகத் தேர்ந்தவள். இவள் ஆலோசித்து, 'செய்யலாம்' என்று சொன்னதை ஸந்தேகப்படாமல் உடனே செய்ய வேண்டும். தாரையின் வார்த்தை ஒருநாளும் பழுதாகாது. ராகவனுக்கு நீ பிரதிக்ஞை செய்தபடி அவருடைய காரியத்தைச் சீக்கிரமாக வஞ்சனை இல்லாமல் செய்து முடிக்க வேண்டியது. செய்யாவிட்டால் அதர்மத்திற்கு ஆளாவாய். ராமன் உன்னை அழித்து விடுவார். இதோ என் கழுத்திலிருக்கும் தங்க ஹாரத்தைப் பெற்றுக் கொள். தேவேந்திரனுடைய அருளால் இதில் அடங்கியிருக்கும் காந்தியும் சக்தியும் நான் இறந்து விட்டால் இதிலிருந்து விலகிவிடும். ஆகையால் நான் உயிருடனிருக்கும் பொழுதே இதைப் பெற்றுக் கொள்" என்று வாலி மஹா பிரீதியுடன் சொன்னதைக் கேட்டு, ஸுக்ரீவன் ஸந்தோஷமற்று, ராகுவால் பீடிக்கப்பட்ட சந்திரனைப் போல் மறுபடியும் துக்கத்திற்கு ஆளானான். சோக ஸாகரத்தில் மூழ்கினான். வாலியின் உபதேசத்தை மனத்தில் வாங்கிக்கொண்டு யுக்தமென்று நிச்சயித்துக் கோபம் தணிந்து, அவன் கொடுத்த தங்க ஹாரத்தைப் பெற்றுக் கொண்டான். வாலியும் அதைப் பார்த்து ஸந்தோஷித்தான்.

பிறகு தான் தேகத்தை விட்டுப்போவதற்கு ஸித்தமாகி, அங்கதன் ஸமீபத்தில் நிற்பதைப் பார்த்து, அவனை அழைத்து பிரியத்துடன், "நான் இறந்த பிறகு எக்காலத்தில் எவ்விடத்தில் எது செய்ய வேண்டியதோ எது செய்யத்தகாததோ அதை நன்றாக அறி. யஜமானன் பிரீதியுடன் சொல்லும் வார்த்தைகளைக் கேட்டு ஸந்தோஷிப்பது போல் கடுமையான வார்த்தைகளையும் பொறுத்துக் கொள். ஸுகதுக்கங்கள் நேரும் பொழுது மனம் கலங்காமல் அவைகளை அனுபவி. எப்பொழுதும் சுக்ரீவனுக்கு உட்பட்டு நட. நான் உன்னை மிகவும் செல்வமாக வளர்த்து வந்தேன். நீயும் இதுவரையில் நடந்தபடி இனிமேலும் நடந்து வந்தால் சுக்ரீவன் ஒப்புக் கொள்ள மாட்டான். அவனுடைய சத்ருக்களோடும் அவர்களுடைய மித்திரர்களோடும் சேராதே. இந்திரியங்களை அடக்கிக் கொண்டு யஜமானனுடைய க்ஷேமத்தையே நாடினவனாகி, சுக்ரீ

வனுக்குக் கீழ்ப்பட்டு நட. எவனுடனும் அதிகமாகப் பழகுவதும் தவறு. பழகாமல் தனித்திருப்பதும் தவறு. ஆகையால் இரண்டிலும் மிதமாக இரு" என்று ஹிதத்தை உபதேசித்து, பாணத்தின் வேதனை பொறுக்க முடியாமல் கண்கள் சுழல, பற்கள் பயங்கரமாக வெளியில் புலப்பட, வாலி அந்த தேகத்தை விட்டு உத்தம கதி அடைந்தான்.

அதைக் கண்டு வானரர்களும் வானரத் தலைவர்களும் வாய்விட்டலறினர்கள். "வானர சிரேஷ்டரான வாலி இன்று ஸ்வர்க்கத்திற்குப் போனதால் கிஷ்கிந்தையும் அதைச்சுற்றி யிருக்கும் தோட்டங்களும் மலைகளும் சூன்யமாயின. ஸகல வானரர்களும் காந்தியற்றுர்கள். அவருடைய பராக்கிரமத்திற்குப் பயந்து காடுகளும் ஓடைகளும் எப்பொழுதும் புஷ்பித்துக் கொண்டிருந்தன. இனி அப்படி எவன் செய்யப் போகிருன்? முன்னொரு காலத்தில் கோலபனென்ற கந்தர்வன் இங்கே வந்து வாலியை யுத்தத்திற்கு அழைத்தான். அந்த மஹா வீரனுடன் இரவு பகல் ஒரு நிமிஷம் கூட ஓயாமல் வாலி பதினைந்து வருஷங்கள் வரையில் கோர யுத்தம் செய்து பதினைவது வருஷத்தில் அந்தத் துஷ்டனைக் கொன்ருர். எங்களுக்கு ஒருவரிடத்திலிருந்தும் பயமில்லாமல் காப்பாற்றி வந்த மஹா வீரன் ஐயோ, எப்படிக் கொல்லப்பட்டார்?" என்று கதறிக்கொண்டு காட்டிலுள்ள பசுக்கள் தங்கள் தலைவன் ஸிம்ஹத்தால் கொல்லப்பட்டால் எப்படித் தவிக்குமோ அப்படிச் சக்தியற்றுத்தவித்தார்கள். உயிரிழந்த கணவனுடைய முகத்தைத் தாரை நெடுநேரம் உற்றுப் பார்த்து, துக்க ஸமுத்திரத்தில் ஆழ்ந்து வனத்திலுள்ள பெரிய மரத்தைத் தழுவிய இளங்கொடி விழுவது போல் வாலியை அணைத்துக்கொண்டு பூமியில் சாய்ந்தாள்.

ததஸ்து தாரா வ்யஸநார்ணவாப்லுதா
ம்ருதஸ்ய ப⁴ர்துர் வத³நம் ஸமீக்ஷ்ய ஸா |
ஜக³ாம பூ⁴மிம் பரிரப்⁴ய வாலிநம்
மஹாத்³ருமம் சி²ந்ந_மிவாச்ரிதா லதா ॥ (31)

## ஸர்க்கம் 23

## தாரையின் பிரலாபம்

தத: ஸமுபஜிக்⁴ரந்தி கபிராஜஸ்ய தந்முக²ம் |
பதிம் லோகாத் ச்யுதம் தாரா ம்ருதம் வசந மப்³ரவீத் ॥ (1)

மரணமடைந்த தன் பர்த்தாவின் முகத்தை முத்தமிட்டுத் தாரை மிக்கப் பிரேமையுடன் அவனைப்பார்த்து, "நாதா! என் வார்த்தையைக் கேளாமல் தாங்கள் கல்லும் புழுதியும் நிறைந்த இந்த வெறுந்தரையில் விழுந்து கிடக்கும்படி நேர்ந்ததே. என்னை விட இந்தப் பூமியே தங்களுக்கு பிரிய நாயகி என்று தெரிகிறது.



எனக்கு எதிரில் அவளை அணைத்துக் கொண்டு என்னுடன் பேசாமலிருப்பது நியாயமா? மஹாவீர! பிறர் நினைப்பதற்கரிய காரியங்களைச் செய்யத் துணியும் பராக்கிரமசாலியே! தங்களால் பல தடவை அடித்துத் துரத்தப்பட்டு உயிர் தப்புவதற்குப் பயந்தோடிய சுக்ரீவனுடைய கையால் தாங்கள் அபஜயமடைய வேண்டுமென்று விதித்திருந்ததோ? அந்த சுக்ரீவனே இப்பொழுது மஹா பராக்கிரமசாலியென்று கொண்டாடப்படுகிருன். என்ன ஆச்சரியம்! மஹா பலசாலிகளான வானர வீரர்கள் எல்லோரும் தங்களைச் சூழ்ந்து நிற்கிருர்கள்.

அவர்களும், தங்களுடைய அருமைக்குழந்தையான அங்கதனும் நானும் தீனமாகக் கதறுவது தங்களுடைய காதில் விழவில்லையோ? இது வரையில் தங்களை எதிர்த்து வந்த ஸகல சத்ருக்களையும் ஜயித்த இதே இடத்திலேயே தாங்கள் அபஜயமடைந்து இறக்க வேண்டுமென்று தங்களுக்கு விதி இருந்ததோ? யுத்தத்தில் பிரியமுள்ள தங்களுக்கு யுத்தத்தாலேயே மரணம் நேர்ந்தது. தர்ம யுத்தம் செய்யும் மஹானுபாவா! உத்தம குலத்தில் பிறந்தவரே! யுத்தத்தில் விசேஷப் பிரிதியுள்ளவரே! என் உயிரைவிட எனக்குப் பிரியமானவரே! தாங்களும் இதுவரையில் என்னைப் பெருமையாக வைத்துக் காப்பாற்றி இப்பொழுது அனுதையாக விட்டுப்போக மனம் வந்ததோ? விவேகியானவன் தன் பெண்ணைச் சூரனுக்கு மனைவியாகக் கொடுக்கக்கூடாது. சூரனை தங்களுக்கு நான் மனைவியாகி,இந்தக் கதியை அடைந்து விதவையாகி, ஸகல விதத்திலும் கேடுற்றதைப் பார்த்தால் இது தெரியாதா?என் மானமும் அழிந்தது; நல்ல கதியும் ஸுகமும் நாசமாயின; துக்க ஸமுத்திரத்தில் மூழ்கினேன். என் கணவன் மரணமடைந்து கிடப்பதைக் கண்டும் என் ஹிருதயம் வெடிக்கவில்லையே! அது பாறையால் செய்யப்பட்டதோ என்று தோன்றுகிறது. தாங்கள் என்னைக் கைப்பிடித்த கணவன், ரக்ஷகர், மித்திரர், என் அன்பிற் குரியவர், சூரர், யுத்தத்தில் புகழ்பெற்றவர். தாங்கள் இறந்தும் நான் உயிரோடிருப்பது என்ன கொடுமை! ஒரு ஸ்த்ரீ பல புத்திரர்களைப் பெற்றுலும், தனதான்யம் முதலிய ஸகல ஸௌகரியங்கள் வாய்ந்திருந்தாலும் கணவனை இழந்தால் விதவை என்று ஜனங்களால் நிந்திக்கப்படுவாளல்லவா? இந்திரகோபத்தைப் போல் சிவந்த பட்டால் மூடப்பட்ட சயனத்தில் ஸுகமாகப் படுத்திருப்பதைப்போல், தங்கள் தேகத்திலிருந்து பெருகும் ரத்தத்தில்கிடந்து புரளுகிறீர்களே! தங்களுடைய சரீரம் முழுவதும் ரத்தத்தாலும் புழுதியாலும் பூசப்பட்டிருப்பதால் என் இஷ்டப்படித் தங்களை ஆலிங்கனம்செய்ய முடியவில்லையே. ராமன் ஒரே பாணத்தால் ஸுக்ரீவனுடைய பயத்தை நீக்கினன். அவனுக்கும் தங்களுக்குமுள்ள கொடிய பகை தீர்ந்தது. அவனுடைய மனோரதம் நிறைவேறிற்றல்லவா? தாங்கள் இறந்தபின் தங்களைப்பார்த்துக்

கொண்டிருப்பதைத் தவிர, அணைத்துக்கொள்ள முடியாதபடி தங்கள் ஹிருதயத்தில் பாய்ந்திருக்கும் ராமபாணம். என்னைத் தடுக்கிறதே" என்று புலம்பினாள்.

அதைக் கேட்டு நீலன் மலைக்குகையிலிருக்கும் மஹா ஸர்ப்பத்தை வெளியில் இழுப்பதுபோல், வாலியின் மார்பைத் தைத்த ராமபாணத்தைப் பிடுங்கி எடுத்தான். அஸ்தகிரியில் ஸாயங்காலத்தில் ஸூரியன் பிரகாசிப்பதுபோல், அந்தப் பாணம் தேஜஸால் ஜ்வலித்தது. மலையிலிருந்து காவிபடிந்த நீர்த்தாரைகள் பெருகுவதுபோல் வாலியின் தேகத்திலிருந்த காயங்களிலிருந்து ரத்த வெள்ளம் தாரை தாரையாக விழுந்தது. பிறகு தாரை வாலியின் தேகத்தில் படிந்திருந்த புழுதியையும் ரத்தத்தையும் தன் கண்ணீர் வெள்ளத்தால் நனைத்துக் கழுவினாள். ஸகலப் பிராணிகளும் நடுங்கும் பராக்கிரமமுள்ள தன் பர்த்தா தேகமெங்கும் காயம் பட்டு ரத்தம் பெருகக் கிடப்பதைக் கண்டு தாரை, ஸமீபத்தில் நின்ற அங்கதனைப் பார்த்து, "குழந்தாய்! உன் பிதா அனுபவிக்கும் கோரமான மரணாவஸ்தையைக் கவனித்துப் பார். அவருக்கும் ஸுக்ரீவனுக்குமுள்ள தீராப் பகை என்ற பாபம் இப்பொழுது பயனைக் கொடுத்தது. பால ஸூரியனைப்போல் பிரகாசிக்கும் தேகத்தையுடைய உன் பிதா இதுவரையில் இந்த ராஜ்யத்தில் மிகுந்த கீர்த்தியுடன் ஆண்டு வந்து, நம்மெல்லோரையும் குறைவின்றி ரக்ஷித்து இப்பொழுது யமலோகத்திற்குப் போகிறார். அவரை நமஸ்காரம் செய்" என்றாள்.

உடனே அங்கதன் எழுந்து தன் அழகான கைகளால் வாலியின் பாதங்களைத் தொட்டு நமஸ்கரித்து, "நான் அங்கதன், அபிவாதனம் செய்கிறேன்" என்றான். அப்பொழுது தாரை வாலியைப் பார்த்து, "பிராண நாயகா! தங்கள் குழந்தை அபிவாதனம் செய்வதைப் பார்க்கவில்லையா? 'தீர்க்காயுளையுடையவனாக இரு' என்று எப்பொழுதும் போல் அவனை ஆசீர்வதிக்கக்கூடாதா? காட்டில் சிங்கத்தால் அடிபட்ட காளையைச் சார்ந்த பசுவும் கன்றும் கதறுவதுபோல் நானும் அங்கதனும் தங்களைச் சேர்ந்து கதறுகிறோம். யுத்த பூமி என்ற யாகசாலையில். யுத்தமென்ற யாகத்தைச் செய்து முடித்து, ராமபாணமென்ற தீர்த்தத்தில் அவபிருதஸ்நானம் செய்கின்றீரே. யாகம் செய்பவர்கள் பத்தினியை விட்டுத் தனியாக அப்படி ஸ்நானம் செய்ய எந்த சாஸ்திரத்தில் விதித்திருக்கிறது? யுத்தத்தில் தங்களுடைய பராக்கிரமத்தை மெச்சித் தேவேந்திரன் தங்களுக்குக் கொடுத்த தங்க ஹாரத்தை கழுத்தில் காணவில்லையே. ஸூரியன் மறைந்துவிட்டாலும் அவருடைய பிரகாசம் மேரு மலையைவிட்டு விலகாததுபோல் தாங்கள் உயிரை இழந்தும் ராஜலக்ஷ்மி தங்களைவிட்டு விலகவில்லையே. நான் தங்களுக்குச் செய்த ஹிதோபதேசத்தைத் தாங்கள் கைக்கொள்ளாமற் போனீர்கள். தங்களைத் தடுக்க என்னால் முடியவில்லையே. தாங்கள் யுத்தத்தில்



இறந்தவுடன் நானும் என் புத்திரனும் தங்களுடன் இறந்தோம். என் அழகும் காந்தியும் ஒழிந்து நிற்கின்றேன்" என்று கதறினாள்.

ந மே வச: பத்$^{2}$ய மித$^{3}$ம் த்வயா க்ருதம்
ந சாஸ்மி ஶக்தா விநிவாரணே தவ |
ஹதா ஸபுத்ராஸ்மி ஹதேந ஸம்யுகே$^{8}$
ஸஹ த்வயா ஶ்ரீர் விஜஹாதி மாமிஹ || (30)

---

## ஸர்க்கம் 24

## ஸுக்ரீவன் துக்கித்தது

(ராம தாரா ஸம்வாதம்)

---

தாம் சாஶ்ருவேகே$^{3}$ந து$^{3}$ராஸதே$^{3}$ந
த்வபி$^{4}$ப்லுதாம் ஶோக மஹார்ணவேந |
பஶ்யம்ஸ் ததா$^{8}$ வால்யநுஜஸ் தரஸ்வீ
ப்$^{4}$ராதுர் வதே$^{4}$நாப்ரதிமேந தேபே || (1)

இப்படிக் கண்ணீர் தாரைதாரையாகப் பெருக, தாரை சோக ஸமுத்திரத்தில் ஆழ்ந்திருப்பதை ஸுக்ரீவன் கண்டு, தன் தமையன் மரணமடைந்ததைப்பற்றிச் சொல்லமுடியாத துக்கத்தை அடைந்தான். கண்ணீர் பெருகத் தன் மந்திரிகளுடன் ராமனுடைய ஸமீபத்தில் சென்று, அவர் கோதண்டத்தின்மேல் சாய்ந்திருப்பதையும், மஹா ஸர்ப்பங்கள் போன்ற பாணங்கள் அவருடைய முதுகில் கட்டியிருக்கும் அம்பறையிலிருந்து ஜ்வலிப்பதையும், ஸகல உத்தம லக்ஷணங்களாலும் கீர்த்தியாலும் அவர் விளங்குவதையும் கண்டு, "ஸ்வாமி! தங்களுடைய பிரதிக்ஞையை நிறைவேற்றினீர்கள். தங்களுடைய மஹிமையால் எனக்கு ராஜ்யம் கிடைத்தது. எனக்கு உயிரோடிருப்பதிலும் போகங்களை அனுபவிப்பதிலும் சொல்ல முடியாத வெறுப்புண்டாகி இருக்கிறது. ராஜமஹிஷியான தாரை துக்கத்தால் தவிக்கிறாள்; நகரத்து ஜனங்கள் வாய்விட்டு அலறுகிறார்கள்; அங்கதன் பிழைப்பானோ மரணமடைவானோ என்று தெரியவில்லை. என் உடன்பிறந்தவனும் இறந்தான். இனி இந்த ராஜ்யத்தால் எனக்கென்ன பிரயோஜனம்? என்னைக் காரணமில்லாமல் ராஜ்யத்திலிருந்து துரத்தினதாலுண்டான கோபத்தாலும், அவனுடைய கடுமையான வார்த்தைகளைப் பொறுக்காததாலும், அவன் என் பாரியையை அபகரித்ததாலும் அவனைக்கொல்லும்படி தங்களை பிரார்த்தித்தேன். அவன் கொல்லப்பட்ட பிறகு என் மனம் தீவிரமான துக்கத்தை அடைகிறது. இவனைக் கொன்று மூன்று லோகங்களையும் அடைவதைக்காட்டிலும் ரிசியமூகப் பருவதத்தில் கஷ்டங்களை அனுபவித்துக்கொண்டு வஸிப்பது சிரேஷ்டமென்று தோன்றுகிறது. இந்த மஹாத்மாவான வாலி ஸகல காரியங்களையும் யோசித்துச் செய்வதில் விவேகியானதால், 'ஸுக்ரீவ! உன்னைக்

கொல்ல இஷ்டமில்லை. உன்னை உயிருடன் விட்டேன். உன் கொழுப்பை மாத்திரம் அடக்கினேன். உனக்கு இஷ்டமான இடத்திற்குப் போ'' என்று கூறிய வார்த்தைகள் அவனுடைய புத்திக்கும் நடத்தைக்கும் தகும். அப்படிப்பட்டவனை நான் இரக்கமில்லாமல் கொன்றது என் குரங்கு ஸ்வபாவத்திற்குத் தகும். இவனைக் கொன்றதால்அடையும் ராஜ்யத்திற்கும்அதனாலுண்டாகும் பச்சாத்தாபத்திற்கும் உள்ள வித்தியாஸத்தை ஆலோசிக்காமல், காமத்திற்குட்பட்டு, மஹா குணவானை ஸஹோதரனை எவன் கொல்லத் துணிவான்? இவன் மஹாத்மாவானதால் அதற்குத் தகுந்தபடி என்னைக்கொல்ல இஷ்டப்படவில்லை; நான் துராத்மாவானதால் இவனைக் கொல்ல உடன்பட்டேன். யுத்தத்தில் விருக்ஷங்களாலும் பாறைகளாலும் நான் அடிபட்டுக் கதறுகையில் என்னை ஸமாதானம் செய்து, 'இனிமேல் என்னை எதிர்க்காதே' என்று சொல்லிப் போகவிட்டான். அவனுக்குள்ள ஸஹோதர விசுவாஸத்தையும் உத்தம ஸ்வபாவத்தையும் ராஜதர்மத்தையும் காப்பாற்றிக் கொண்டான். நான் அவனைக் கொன்று எனக்குள்ள கோபத்தையும் பேராசையையும் குரங்கின் ஸ்வபாவத்தையும் வெளிப்படுத்திக் கொண்டேன். முன்காலத்தில் த்வஷ்டாவின் புத்திரனை விசுவரூபனை இந்திரன் கொன்று மஹாபாபத்தை ஸம்பாதித்ததுபோல், நானும் என் ஸஹோதரனைக் கொன்று மஹாபாபத்தை ஸம்பாதித்தேன். இதற்கு எல்லையில்லை. ஸாதுக்கள் இதை மனத்தாலும் நினைக்கமாட்டார்கள். இப்படிப்பட்ட செய்கையில் எவனுக்காவது விருப்பமுண்டாகுமா? இதை வெறுக்காதவனுண்டா? மஹாபாபிகள்கூட இப்படிச் செய்ய நினையார்கள்; பயந்து விலகுவார்கள்; இதனால் வரும் லாபத்தையடைய விரும்பார்கள். இந்திரன் தான் செய்த பாபத்தை நான்கு பாகங்களாகப் பிரித்துப் பூமி, ஜலம், விருக்ஷங்கள், ஸ்த்ரீகளுக்கு முறையே கொடுத்தான். அவர்களும் தங்களுக்கு வேண்டிய வரங்களை அவனிடத்திலிருந்து பெற்றுக் கொண்டு அதை ஒப்புக்கொண்டார்கள். கேவலம் குரங்கான என் பாபத்தை யார் ஒப்புக்கொள்வார்கள்? நான் யாருக்கு எந்த வரங்களைக் கொடுக்கமுடியும்? வாலி இறந்தபின் தாரை அங்கதன் முதலியவர்கள் பிழைத்திருக்கமாட்டார்கள். இப்படிக் குலத்தை அழித்த மஹா பாபியான எனக்கு இந்தப் பிரஜைகள் செய்யும் மரியாதை முற்றிலும் தகாது; யுவராஜாவாக இருப்பதற்குக்கூட யோக்கியதையில்லை; இந்த ராஜ்யத்திற்கு அரசனாயிருப்பதைப்பற்றிச் சொல்லவும் வேண்டுமா? நான் செய்த பாபம் எல்லோரும் நிந்திக்கத்தக்கது; மிக்க கேவலமானது; ஸகல ஜனங்களாலும் விலக்கப்பட்டது. இந்தக் கோரகிருத்தியத்தைச் செய்தபிறகு, பெரு மழையால் ஜலம் பள்ளத்தாக்கில் தங்கிப் பெருகுவதுபோல், சோகம் வரவரப் பெருகி என்னை அழுத்துகின்றது. ஸஹோதரக் கொலை என்ற வாலையும், துக்கம் என்ற துதிக்கை, கண், தலை, தந்தங்களையுமுடைய பாபமென்ற மதயானை, ஆற்றங்கரையை யானை இடித்துத் தள்ளுவதைப்போல், என்னை இடித்துத் தள்ளுகிறது. அக்னியில் உருக்கப்பட்ட தங்கத்தைக் களிம்பு விட்டு அகல்வதுபோல், என் மனத்திலுள்ள விவேகம் நான் செய்த பாபத்தைப் பொறுக்காமல் என்னை விட்டு அகலுகின்றது. என்னுடைய க்ரூர கிருத்தியத்தாலும் அங்கதன் படும் துக்கத்தாலும் வானரர்களெல்லோரும் உயிரிழந்தவர்களைப் போல் காணப்படுகிறார்கள். உத்தம குணங்களையும் ஆசாரத்தையுமுடைய புத்திரர்கள் உலகத்தில் கிடைப்பது ஸுலபமாயிருக்கலாம். ஆனால் இந்த அங்கதனைப்போன்ற புத்திரன் கிடைப்பதரிது. அருமையான ஸஹோதரன் கிடைக்கும் தேசமுண்டோ? அங்கதன் பிழைத்திருந்தால் அவனைக் காப்பாற்றுவதற்காகத் தாரையும்பிழைத்திருப்பாள்; அவன் இறந்தால் தாரையும் துக்கத்தால் இறப்பாள். இது எனக்கு நன்றாகத் தெரியும். ஆகையால் நான் நெருப்பில் விழுந்து என் தமயனையும் புத்திரனையும் சேருவேன். இந்த வானர வீரர்கள் தங்களுடைய ஆக்ஞைப்படி ஸீதையைத் தேடிக்கொண்டு வருவார்கள். நான் இருந்தாலும் இல்லாவிட்டாலும் தங்களுடைய காரியம் நிறைவேறும். நானோ மஹாபாபி; குலத்தை அழித்தவன்; பிழைத்திருக்கத் தகுந்தவனல்ல. ஆகையால் நான் நெருப்பில் விழும்படி அனுமதி கொடுக்கவேண்டும்'' என்று தீனமாகப் பிரார்த்தித்தான் சுக்ரீவன்.

தன்னை அண்டினவர்களின் காரியத்தைத் தவிர ராமனுக்கு வேறு காரியமுண்டா? 'வாலி எனக்கு சத்துரு' என்று ஸுக்ரீவன் சொன்னவுடன் வாலியைத் தன் சத்துருவாக எண்ணி உடனே கொன்றார். அப்படியே அவன் துக்கம் தாங்காமல் கண்ணும் கண்ணீருமாகத் தவிப்பதைக் கண்டு, தான் இக்ஷ்வாகு வம்சத்தில் பிறந்த ராஜசிரேஷ்டனானாலும் அவன் கேவலம் குரங்கானாலும், தானும் கண்ணீர்விட்டுச் சற்று நேரம் மனம் கலங்கினார். அப்பொழுது தாரை துக்கம் மிகுந்து அழுதுகொண்டு தன்னை அடிக்கடி பார்ப்பதைக்கண்டு, பொறுமையில் பூமிதேவிக்கு ஸமானரும் ஸகல லோகரக்ஷகருமான ரகுநாதன் அவளுடைய சோகத்தை நீக்க அவளருகில் போனார். அவர் வருவதைக் கண்டு பிரதான மந்திரிகள், வாலியை அணைத்துக்கொண்டு படுத்திருக்கும் தாரையை வானர ஸ்த்ரீகளால் எழுந்திருக்கச் செய்தார்கள். அவள் திரும்பிப் பார்த்து ராகவன் கோதண்டபாணியாகக் கோடி ஸூரியனைப்போல் தன் தேஜஸால் ஜ்வலிப்பதையும், ஸகல உத்தம லக்ஷணங்களால் நிறைந்து விளங்குவதையும் கண்டாள். பிரண்ட மான் குட்டியைப் போல் கண்களையுடைய தாரை, செந்தாமரைக் கண்ணனை அந்தப் புருஷோத்தமனை அதுவரையிலும் பார்த்திராவிட்டாலும், இக்ஷ்வாகு குலதிலகரான ராமன் இவரே என்றும், அங்கதனால் வர்ணிக்கப்பட்ட மஹா புருஷன் இவரே என்றும், ஸகல கல்யாண குணங்களும் பொருந்தின மஹானுபாவனென்று எல்லோராலும் கொண்

டாடப்பட்டவர் இவரேயென்றும் அறிந்தாள். வித்வானே வித்வானை அறிவான். அதுபோல் அழகிய கண்களையுடைய தாரை ராமனுடைய கண்களை முதலில் கவனித்தாள். சோகத்தால் தேகம் நடுங்க, மிகவும் வருந்தி அவள், பராக்கிரமத்தில் மஹேந்திரனை ஒத்தவரும், ஒருவராலும் நெருங்க முடியாதவரும் மஹானுபாவருமான ராமனுடைய ஸமீபத்தில் போனாள். ஓரே பாணத்தால் தன் பர்த்தாவைக் கொன்ற ரணதீரனை வாயார வையவேண்டுமென்று தேகமுழுவதும் கோபத்தால் துடித்தது. ஆனால் அவருடைய எதிரில் நிற்கும் மஹிமையால் கோபமும் வரவர நீங்கிற்று. சுத்த ஸ்வபாவம் மேலிட்டது. நிந்திக்கப் புகுந்த வாயால் ஸ்தோத்திரம் செய்ய ஆரம்பித்தாள்.

"நான் மேலே சொல்லும் கல்யாண குணங்களுக்குத் தகுந்த இருப்பிடம் நீயே. 'இந்த மஹா புருஷனை நான்அறிவேன்' என்று சொல்லத் தொடங்கின வேதம், 'யார் அறிவார்' என்று முடித்தபடி, நீ வேத புருஷனாலும் அளவிடக்கூடாதவன். 'நீயே உன்னை அறியலாம்; ஒருவேளை நீயும் அறியாமலிருக்கலாம்' என்ற வேதவாக்கியத்தின்படி உன்னாலும் அறியக்கூடாத ஸ்வபாவத்தையுடையவன். நாங்கள் ப்ரத்யக்ஷமாக உன்னைப் பார்த்தாலும் உன் சக்தியும் மஹிமையும் மனதால் அளவிடக்கூடாதவை. வில்லும் கையுமாக இப்பொழுது காணப்பட்டாலும் நீ சங்க சக்கரங்களைத் தரித்தவன் ஜீவகோடிகளால் ஸுலபமாக அடையப்படும் நிலைமையிலும் உன் ஸ்வரூபத்தை அளவிட முடியாது. தனியாக இருந்தும் ஸகல ஸாதனங்களும் ஸகல பரிவாரங்களும் கூடியிருப்பதுபோல், மனத்திற் கெட்டாத ஆச்சரியச் செயல்களைச் செய்கிறாய். உன் குணங்களோ எல்லையற்றவை; எண்ண முடியாதவை. அவையெல்லாம் உன் சிறிய திருமேனியில் அடங்கியிருக்கும் ஆச்சரியத்தை என்ன சொல்வேன்! பரம ஸாதுவாக, சாந்தமூர்த்தியாக, ஒன்றும் அறியாதவனைப்போல் நிற்கும் உன்னைப்பார்த்து, ராவணன் துந்துபி மாயாவி கோலபன் முதலிய வீரர்களை மடித்த வாலியை ஒரே பாணத்தால் கொன்ற மஹாவீரன் நீயே என்று சொல்ல முடியுமா? ப்ரமைக்கு விஷயம் பிரமேயம்; நீயோ அப்பிரமேயன். எப்படியென்றால் பிரத்யக்ஷம் அனுமானம் ஆகமம் முதலியவைகளால் நன்றாக அனுபவித்துக் கிடைத்த ஞானமே ப்ரமை. நீயோ இம்மூன்றிற்கும் விஷயமாகாதவன். நித்தியனாகையால் உன்னைக் காலத்தால் அளக்க முடியாது. எல்லா வஸ்துக்களும் உனக்குச் சரீரமாகையால் வஸ்துவால் அளவிட முடியாது. உன் நித்ய விபூதியில் வைகுண்டத்தில் உன்னை அடைய முடியவில்லையென்று ஜீவகோடிகள் பிரார்த்தித்தார்கள். நீ அவதாரம் செய்து லீலாவிபூதியில் எழுந்தருளியிருக்கும் பொழுதும் உன் ஸௌலப்யம் அளவிடக்கூடாததாயிருக்கிறது. (அடியார்க்கெளியவன் என்றபடி). பிதிரு வாக்ய பரிபாலனம் செய்யத் தபஸ்வி வேஷம் பூண்டு வனத்திற்கு



வந்தாய். வந்த இடத்தில் விராதன், கபந்தன், வாலி முதலியவர்களைக் கொன்றாய். உன் எண்ணமும் செய்கையும் ஒருவராலும் அறியக்கூடாதவை.

"இது போகட்டும். மனத்திற்கும் புத்திக்கும் எட்டாமலிருந்தாலும் இந்திரியங்களால் அணுக முடியுமோவெனில், அதுவும் முடியாது. மனத்திற்கெட்டாதது தேகத்திற்கு எட்டுமா? ஸன்மார்க்கத்தில் நடக்காமல் துன்மார்க்கத்தில் நடப்பவர்களால் நீ அடைய முடியாதவன். வாலியைக் கொன்றதால் உன்னைச் சிக்ஷிக்கவேண்டுமென்று வந்தவர்களாலும் உன்னை அணுக முடியவில்லை. குயுக்திகளாலும் கேவல தர்க்கங்களாலும் உன் மஹிமையை அசைக்கவும் முடியுமோ?

"அளவிட முடியாமை, அணுக முடியாமை என்னும் இவ்விரண்டு உத்தம குணங்களால் கர்வமடைந்து, வாலியின் ராஜ்யத்தையும் ஸ்த்ரீகளையும் அடைய விரும்பி அவனைக் கொன்றாய் என்று எண்ணினேன். ஆனால் ஸுக்ரீவனுக்கு இந்த ராஜ்யத்தைக் கொடுத்தபடியால் நீ ஆசையற்றவன்; இந்திரியங்களை ஜயித்தவனென்று அறிந்தேன். லோகத்தில் ஒரு புருஷன் ஒரு ஸ்த்ரீயை ஸந்தித்தால் அவளைப் பார்க்காமலிருக்கமாட்டான். இவ்வளவு நேரம் இங்கிருந்து உன்னுடன் பேசிக்கொண்டிருந்தும் என்னைக் கண்ணெடுத்தும் பாராத விரக்தன் நீயே.இந்திரியங்களைக் கண்டபடி சிதறவிடாமல் தனக்குப் பரம மங்களத்தைக் கொடுக்கும் வழியிலேயே போகும்படி பழக்கினவன் நீயே. 'கண்ணில்லாமல் பார்க்கிறான், காதில்லாமல் கேட்கிறான், காலில்லாமல் அதிவேகமாக நடக்கிறான், கையில்லாமல் பிடிக்கிறான்' என்ற வேதத்தின்படி இந்திரியங்களின் உதவியின்றியே எங்கும் எக்காலத்திலும் நீ எட்ட முடியாதவன். உன்னைத் தவிர மற்ற எல்லோரும் இந்திரியங்களுக்கு வசப்பட்டவர்கள். இந்திரியங்களை வசப்படுத்தினவன் நீ ஒருவனே.

"ஆனால் இப்படி வைராக்கியமடைந்தவன் நமக்குக் கெடுதி செய்தானே. தர்மத்திற்குக் கட்டுப்படாதவனோ என்று எண்ணினேன். உன்னை அண்டினவர்களை ரக்ஷிக்க இப்படிச் செய்தாயென்று அறிந்தேன்.

"நீ உத்தமமான தர்மத்தை அனுஷ்டிப்பவன்.லோகத்தில் தான் லாபமடையும் பொருட்டு ஒரு காரியத்தைச் செய்பவன் தார்மிகர்களில் அதமன்; தனக்கும் பிறர்க்கும் லாபகரமான காரியத்தைச் செய்கிறவன் மத்யமன்; பிறருடைய லாபத்தை உத்தேசித்து காரியங்களைச் செய்கிறவன் உத்தம தார்மிகன். வர்ணாசிரம தர்மங்களை ஸரியாய் நடத்துவதால் பிரீதியடைகிறவன் தார்மிகன்; பக்தி மார்க்கத்தால் அடையக்கூடியவன் உத்தம தார்மிகன். தன்னைச் சரணமடைந்தவர்களை ரக்ஷிக்கும் அந்த மஹானுபாவன் நீயே.

"குருவே உபாயம்; அவரால் அனுக்ரஹிக்கப்பட்டு ப்ரஹ்ம லோகத்தை அடைகிறான்" என்ற தர்மத்தையுடையவன் நீயே. பிறர்க்கு ஹிம்ஸை செய்யாமலிருப்பதே மேலான தர்மமென்ற குணம் பொருந்தினவன் தார்மிகன். ஆனால் தன்னை அண்டினவர்களுக்கு ஆபத்துகள் நேரும்பொழுது, தான் முன்னின்று காப்பாற்றும் உத்தம தார்மிகன் நீயே. ஸுக்ரீவனை ரக்ஷித்ததால் நீ தார்மிகன்; பாபத்தைச் செய்த வாலியைக் கொன்று அவனைப் பரிசுத்தனாகச் செய்து உத்தமகதி அடைவித்ததால் நீ உத்தம தார்மிகன்.

"உனக்கு யாதொரு அபராதமும் செய்யாத வாலியை நீ மறைந்து கொன்றதால் நீ உத்தம தார்மிகனென்று சொல்லத் தகுமா என்று ஸந்தேகித்தேன். ஆனால் வாலி உன் பக்தனான ஸுக்ரீவனுக்குக் கெடுதி செய்தான். மேலும் குரங்கானதால் வேட்டையாடுவதில் மறைந்து கொன்றது தோஷமல்ல. அரசர்கள் மிருகங்களுடன் எதிர்த்துச் சண்டை போடுவது மரியாதைக் குறைவென்று சொல்லப்படுகிறது. ஆகையால் உன் கீர்த்திக்கு யாதொரு குறைவுமில்லை. தூரதிருஷ்டியுள்ளவனாகையால் நீ யுக்தாயுக்தங்களை விசாரித்து எதையும் செய்கிறவன். ஆகையால் உனக்கெதிரில் ஸுக்ரீவனுக்கு வாலி யாதொரு அபராதமும் செய்யாததால் ஒரு தடவை வாலியால் ஸுக்ரீவன் அபஜெயமடையும்படிச் செய்தாய். அவ்விருவர்க்கும் பேதம் தெரிவதற்கு ஸுக்ரீவனுடைய கழுத்தில் புஷ்ப மாலையைப் போட்டாய்.

உனக்குச் சத்ருவான வாலியைக் கொன்ற பிறகு அவனுடைய பிள்ளை மனைவி மந்திரி தலைவர்கள் பந்துக்கள் இன்னும் மற்றவர்களைக் கொல்வாயென்று எண்ணினேன். ஆனால் நீ அங்கதனிடத்தில் காட்டின பொறுமையையும் பிரியத்தையும் பார்த்தால் பூமிதேவியும் உனக்கு ஈடல்லவென்று தோன்றுகிறது. ஐம்பது கோடி யோஜனை விஸ்தாரமுள்ள பூமிக்கு எவ்வளவு பொறுமையிருக்குமோ அவ்வளவும் ஒருவனான உன்னிடத்தில் இருக்கிறது. வாலியிடத்தில் வைத்த கோபத்தால் உன் கண்கள் இன்னும் சிவந்திருக்கின்றன. ஆனாலும் அவனைச் சேர்ந்தவர்களிடத்தில் நீ காட்டின பொறுமையும் ஆச்சரியகரமாயிருக்கிறது. இந்தச் சிவப்பு நிறம், ஸீதையை விட்டுப்பிரிந்த துக்கத்தாலோ ஸுக்ரீவனிடத்திலுள்ள பிரியத்தாலோ தெரியவில்லை.

"நீ துஷ்டர்களை ஸம்ஹரித்து ஸாதுக்களை ரக்ஷிப்பதற்காகக் கோதண்டத்தையும் பாணங்களையும் தரித்தவன். மஹா பராக்கிரமசாலி; திவ்வியமான ஸௌந்தரியமுள்ள அங்கங்களையுடையவன். விளையாட்டாக மனுஷ்யாவதாரம் செய்திருந்தாலும் அதைவிட்டு நினைத்த மாத்திரத்தில் உன் நித்தியமான சுத்த ஸத்வத்தால் அமைக்கப்பட்ட திவ்விய மங்கள ரூபத்தை எடுக்கக்கூடியவன்.



"எந்த பாணத்தால் என் பர்த்தாவைக் கொன்றாயோ அதே பாணத்தால் என்னையும் கொல். நானும் வாலியிருக்குமிடத்திற்குப் போகிறேன். என்னைவிட்டுப் பிரிந்து அவர் தனியாக இருக்க மாட்டார். செந்தாமரைக் கண்ணான என் நாயகன் ஸ்வர்க்கத்திற்குப் போய் அங்கே எல்லாவிடத்திலும் என்னைத் தேடிப் பார்ப்பார். என்னைக் காணாமல் விசித்திரமான அலங்காரங்களுடன் விளங்கும் அப்ஸரஸ்களைக் கண்டும் அவர்களிடத்தில் கொஞ்சமாவது பிரியம் வைக்கமாட்டார். உன் பிரியநாயகியான ஸீதையைப் பிரிந்து ரிசியமூக பர்வதத்தில் நீ தனியாக இருந்து தவிப்பதுபோல் வாலியும் ஸ்வர்க்கத்தில் என்னைவிட்டுப் பிரிந்து அனுபவிக்கும் கஷ்டம் உனக்கு நன்றாகத் தெரியும். ஆகையால் என்னையும் கொல். என்னைக் காணாமல் வாலி துக்கப்படும்படி வைக்காதே.

"என்னைக் கொன்றால் உனக்கு ஸ்த்ரீஹத்யா தோஷம் நேருமென்று பயப்படாதே. இவள் வாலியின் ஆத்மா என்றெண்ணி என்னைக் கொல். அப்பொழுது உனக்குத் தோஷமில்லை. 'பர்த்தாவிற்கு பார்யை பாதி ஆத்மா. பர்த்தாவைக் காட்டிலும் பார்யை வேறல்ல' என்ற வேத வாக்கியத்தின்படி யாகம் முதலிய வைதிகக் கிரியைகளில் அனுஷ்டானமும் விளங்குகிறது.

மேலும் இப்படிச் செய்வதால் உனக்கு விசேஷ புண்ணியமும் உண்டு. ஒருவனுக்குப் பாரியாதானம் செய்வதைக் காட்டிலும் மேலான புண்ணியமில்லை என்று ஞானிகள் சொல்லியிருக்கிறார்கள்.

"மேலும் நீ உத்தம தார்மிகன். மஹாவீரனான வாலியைக் கொன்றதற்காக ஸுக்ரீவன் படும் வருத்தத்தை நீயும் அனுபவிக்கிறாய். நான் சொல்லும் தானத்தைச் செய்தால் வீரனைக்கொன்ற அதர்மத்திற்குப் பிராயச்சித்தமாகும்; ("என்னை வாலியை விட்டுப் பிரித்த பாபம் தீர மறுபடியும் அவருடன் சேர்த்து வைக்காவிட்டால் உன் பார்யையை நீ மறுபடி அடைந்தாலும் வெகு காலம் அவள் உன்னுடன் இருக்கக்கூடாதென்று சபிப்பேன்". இந்த வாக்யம் சில மூலங்களில் காணப்படுகிறது.) வாலி என்னைக் கொன்று அந்தக் கஷ்டத்தைத் தீர்ப்பது உனக்குத் தர்மமல்லவா? "மஹா புத்திமானும் ஒப்பற்ற ஸௌந்தரியத்தையும் ஒருவராலும் எதிர்க்க முடியாத பராக்கிரமத்தையுமுடைய வாலியை விட்டு நான் எப்படிப் பிழைத்திருக்க முடியும்" என்று சொல்லி அநேக விதமாய்ப் புலம்பினாள்.

லோகநாதனான அந்த மஹாபுருஷனும் அதைக் கேட்டுத் தாரையை ஸமாதானம் செய்து அவளுக்கு ஹிதத்தை உபதேசித்தார். "வீர சிகாமணியான வாலியின் பாரியையே! நீ இப்படி எண்ணுவது பிசகு. ஸகல லோகங்களும் தெய்வத்தால் ஸிருஷ்டிக்கப்பட்டு அதன் ஸங்கல்பப்படி நடக்கின்றனவல்லவா? ஸுக துக்கங்கள் சேருவதும் அதன் செயலே என்று லோகத்தார்

சொல்லுகிறார்களல்லவா? மூன்று லோகத்திலுள்ள பிராணிகளும் அதில் வசப்பட்டிருக்கிறார்கள். அதை மீறி நடப்பவர்கள் ஒருவருமில்லை. வாலியால் உனக்குக் கிடைத்த ஸுகத்திற்கு இனி ஒரு பொழுதும் குறைவு நேராது; உன் புத்திரனும் யுவராஜாவாக அபிஷேகம் செய்யப்படுவான். இதுவரையில் நடந்த விஷயங்கள் தெய்வத்தால் ஏற்பட்டவையே. சூரனுடைய பத்தினியான நீ, தெய்வ ஸங்கல்பத்தைப் பற்றி துக்கப்படலாமா?'' என்றார்.

அங்கதனுக்கு யுவராஜ்யாபிஷேகம் செய்வித்து, அவனுடைய சத்துருக்களை நாசம் செய்து, அவனுக்கு ஸகல மங்களத்தையும் கொடுக்கக்கூடியவரென்று ராமனை அறிந்து, தாரை அவருடைய வார்த்தைகளால் ஸமாதானமடைந்து துக்கத்தை மறந்தாள்.

ஆஶ்வாஸிதா தேந து ராக‘வேண
    ப்ரபா‘வ யுக்தேந பரந்தபேந |
ஸா வீரபத்நீ த்‘வநதா முகே2ந
    ஸுவேஷரூபா விரராம தாரா ‖ (44)

## ஸர்க்கம் 25

# வாலியின் உத்தரக்கிரியைகள்

ஸுக்3ரீவம் சைவ தாராம் ச ஸாங்க3த3ம் ஸஹலக்ஷ்மண: |
ஸமாநஶோக: காகுத்ஸ்த2: ஸாந்த்வயந்நித3 மப்3ரவீத் ‖ (1)

பிறகு ராமலக்ஷ்மணர்கள் ஸுக்ரீவன் முதலிய வானரர்கள் படும் சோகத்தால் தாங்களும் வருந்தினார்கள். ராமன், "நீங்கள் இப்படித் துக்கிப்பதால், மரணமடைந்த வாலிக்கு யாதொரு நன்மையும் உண்டாகாது. ஆகையால் மேல் நடக்கவேண்டிய காரியங்களைக் கவனியுங்கள். லோக வழக்கத்தின்படி நீங்கள் அவனுக்காகக் கண்ணீர் விட்டீர்கள். தெய்வ ஸங்கல்பத்திற்கு விரோதமாக எவரும் எதையும் செய்ய முடியாது. ஸகல லோகங்களுக்கும் அவரே கர்த்தா. லோகத்தில் நடக்கும் ஸகல தர்மங்களுக்கும் ஈசுவரனே காரணமும் ஸாதனமும் ஆகிறார். ஸகல பிராணிகளும் அவருடைய ஸங்கல்பப்படியே கர்மங்களைச் செய்கிறார்கள். எவனும் எந்தக் காரியத்தையும் செய்வதற்கும், மற்றொருவன் அப்படிச் செய்யும்படி ஏவுவதற்கும் சக்தியற்றவன். எல்லோரும் ஈசுவரனுக்கு வசப்பட்டிருக்கிறார்கள். யாவற்றிற்கும் ஈசுவரனே கதி. அவர் நம்மைப் போல் பிறர்க்கு உட்பட்டு நடக்கிறதில்லை; தன்னை மீறி நடக்க மாட்டார்; அவரே தான் ஏற்படுத்திய எல்லையை மீறி நடக்காமலிருக்க, பரதந்திரனான ஜீவன் அவருக்கு உட்பட்டிருப்பது ஆச்சரிமா? ஈசுவரனுக்கு ஒருவன் பந்து என்பது கிடையாது. பக்ஷபாதமற்றவர். அவருடைய கிருபையைத் தவிர அவரை வசப்படுத்தும் உபாயம் வேறில்லை. பராக்கிரமத்தால் அவரை ஜயிக்கவும் முடியாது. அவருக்கு மித்திரனென்பதும் ஞாதியென்பதும் கிடையாது. ஆகையால் எல்லாவற்றிற்கும் காரணமான ஈசுவரன் ஜீவனுக்கு வசப்படுவாரா? அவனுடைய கர்மத்திற்குத் தகுந்தபடி ஈசுவரன் ஸகலத்தையும் நடத்துகிறார். இந்த ரஹஸ்யத்தை விவேகி அறிந்து நமக்கு ஈசுவரன் எப்பொழுதும் ஹிதத்தையே செய்கிறானென்று நினைக்க வேண்டும். அவருடைய ஸங்கல்பப்படி ஸகல புருஷார்த்தங்களும் அந்தந்தக் காலத்தில் நமக்குக் கிடைக்கின்றன. ஆகையால் அதைப் பற்றிக் கொஞ்சமாவது துக்கப்படக்கூடாது.



வாலியும் தான் செய்த பாவங்களுக்குப் பிராயச்சித்த ரூபமாக என் பாணத்தால் மரணமடைந்து சுத்தமான ஸ்வரூபத்துடன், இதுவரையில் தான் சாஸ்திர விதிப்படி அனுஷ்டித்து வந்த புருஷார்த்தங்களின் பயனாக ஸ்வர்க்கத்தை அனுபவிக்கப் போகிறான். வாலி அடைந்த கதி மிகவும் மேலானது. அவனைப்பற்றி விசாரப்படுவது பிசகு. இப்பொழுது செய்யவேண்டியதைக் கவனியுங்கள்'' என்றார்.

பிறகு லக்ஷ்மணன் ஸுக்ரீவனைப் பார்த்து, "மித்திர! துக்கத்தை விடு; உத்தரக்கிரியைகளைத் தாரை அங்கதர்களைக் கொண்டு செய்வி. சந்தனம் அகில் முதலிய வாஸனைக் கட்டைகள் தயாராகட்டும். மனம் நொந்திருக்கும் அங்கதனைத் தேற்று. புத்தியைக் கலங்கவிடாதே. இந்த ராஜ்யம் முழுவதும் உன்னைப் பொறுத்திருக்கிறதல்லவா? பலவித மாலைகளையும் வஸ்திரங்களையும் நெய் எண்ணெய் வாஸனைத்திரவியங்கள் முதலிய பதார்த்தங்களையும் அங்கதன் கொண்டு வரட்டும். இப்படிப்பட்ட ஸமயத்தில் காரியங்களைச் சீக்கிரமாகச் செய்வது மிகவும் நலம். பல்லக்கைச் சுமப்பதற்கு பலவான்களாயும் ஸாமர்த்தியமுள்ளவர்களாயும் பழக்கப்பட்டவர்களாயுமிருக்கும் வானரர்களை வருவிக்க வேண்டும்'' என்று ஸுக்ரீவனுக்கு உத்தரவு செய்து ராமனுடைய ஸமீபத்தில் வந்து நின்றார்.

உடனே தாரன் கிஷ்கிந்தைக்கு விரைந்து சென்று, சூரர்களும் தகுந்தவர்களுமான வானரர்களால் பல்லக்கைக் கொண்டு வந்தான். அது, அரசர்களுக்குரிய ஸிம்ஹாஸனம் போடப்பட்டு விசாலமான ரதத்தைப்போல் அமைக்கப்பட்டிருந்தது. அநேக பக்ஷிகளும் விருக்ஷங்களும் சித்திரங்களும் விசித்திரமாகச் செய்து வைக்கப்பட்டிருந்தன. ஸித்த கணங்கள் ஆகாசத்தில் ஸஞ்சரிக்கும் திவ்விய விமானங்களைப்போல் ஜன்னல்களும் காற்றுப்போக்கிகளும் அங்கே வைக்கப்பட்டிருந்தன. சிரேஷ்டமான ஹாரங்களாலும் மாலைகளாலும் சிவப்புச் சந்தனத்தாலும் செந்தாமரை முதலிய புஷ்பங்களாலும் விளங்கிற்று. அதில் சித்திரவடிவில் குகைகளும் காடுகளும் அமைக்கப்பட்டிருந்தன. விசாலமான மரத்தால் செய்யப்பட்ட கிரீடா பர்வதம் ஓரிடத்தில் பிரகாசித்தது.

இப்படி விசுவகர்மாவால் செய்யப்பட்ட அந்தப் பல்லக்கை வானர வீரர்கள் சுமந்து வருவதைக் கண்டு ராமன் லக்ஷ்மணனைப் பார்த்து, "வாலியை சீக்கிரத்தில் எடுத்து, மேல் நடக்கவேண்டிய பிரேத காரியங்களைக் கவனி'' என்றார். உடனே ஸுக்ரீவனும் அங்கதனும் வாய்விட்டலறிக்கொண்டு அந்தப் பிரேதத்தைப் பல்லக்கிலேற்றிப் பலவித மாலைகளாலும் வஸ்திரங்களாலும் ஆபரணங்களாலும் அலங்கரித்தார்கள். பிறகு ஸுக்ரீவன், "என் தமயனுக்கு நடக்க வேண்டிய உத்தரக்கிரியைகள் வெகு சிறப்பாய் யாதொரு குறைவு மில்லாமல் நடக்கட்டும். ரத்தினங்கள் பொன் வெள்ளி முதலிய வஸ்துக்களை போகும் வழியில் பல்லக்கிற்கு நான்கு புறங்களிலும் வாரி இறையுங்கள்'' என்றான்.

அளவற்ற ஐசுவரியமுள்ள அரசர்களுக்கு நடக்கிறபடி வாலியினுடைய பிரேதக்கிரியைகள் சிறப்பாய் நடந்தன. தாரன் முதலியவர்கள் அங்கதனைப் பிடித்துக்கொண்டு, தங்களுடைய ஸகல பந்துக்களும் இறந்ததுபோல் அழுதுகொண்டு போனார்கள். தாரை முதலிய ராஜபத்தினிகளும் மற்ற ஸ்த்ரீகளும் வாலியின் உத்தம குணங்களை வர்ணித்துப் புலம்பிக்கொண்டே போனார்கள். வனங்களிலும் பர்வதங்களிலும் பிரதி த்வனி உண்டாகி அவைகளும் அழுவது போலிருந்தன. பிறகு காட்டாற்றில் ஒரு விசாலமான மணல்திட்டில் பரிசுத்தமான ஸ்தலத்தில் சிதையை அடுக்கினார்கள். பல்லக்கைச் சுமந்தவர்கள் அதை அவ்விடத்தில் இறக்கித் தனியே நின்றார்கள். தாரை வாலியின் தலையைத் தன் மடியில் வைத்துக்கொண்டு, "வானர சக்கரவர்த்தியே! பிராணநாதா! மஹானுபாவா! ஸகல உத்தம வஸ்துக்களையும் அனுபவிக்கத் தகுந்த தாங்கள் அவைகளை விட்டுப் போவதேன்? என்னிடத்தில் தங்களுக்கு அளவற்ற பிரீதியல்லவா? என்னை ஒருதரம் பார்க்கக் கூடாதா? சோகத்தால் தவிக்கும் இவ்வளவு ஜனங்களும் தங்களுக்குக் கண்ணில் படவில்லையா? உயிரிழந்தும் தங்களுடைய முகத்திலுள்ள ஸந்தோஷம் குறையவில்லையே? உயிருடனிருக்கும்பொழுது பிரகாசிப்பதுபோல் அஸ்தகிரியில் விளங்கும் ஸூரியனுக்கு ஸமமா யிருக்கிறதே. யமன் ராமனுடைய ரூபம் கொண்டு தங்களை இழுத்துப் போகிறானோ? எங்கிருந்தோ இந்தப் பாழும் காட்டைத் தேடிவந்து ஓரேபாணத்தால் எங்களெல்லோரையும் ராமன் விதவைகளாகச் செய்தானே. தங்களுக்குப் பிரியமான பாரியைகள் கால் நடையாய் இந்த வனத்தில் இவ்வளவு தூரம் சிரமப்பட்டு வந்திருப்பதைக் கண்டு தங்களுக்கு இரக்கம் பிறந்து, அவர்களைத் தேற்றக்கூடாதா? அவர்களிடத்தில் தங்களுக்குள்ள பிரீதி நிஜமல்லவா? தங்களுடைய தம்பி ஸுக்ரீவன் இதோ வந்திருக்கிறான். தாரன் முதலிய மந்திரிகளும் பிரதானிகளும் அதோ வந்திருக்கிறார்கள்; நகரத்து ஜனங்கள் எல்லோரும் தங்களைச் சூழ்ந்து நிற்கிறார்கள். அவர்களுக்குத் தகுந்தபடி பதில் சொல்லி அனுப்புங்கள். பிறகு நாம் ஆனந்தமாய் இந்த வனங்களில் விளையாடுவோம்'' என்று பர்த்தாவை இழந்த துக்கத்தில் பித்துப்பிடித்தவள்போல் புலம்பினாள். அப்பொழுது வானர ஸ்த்ரீகள் அவளை எடுத்துப் பிடித்து வேறிடத்திற்குக் கொண்டு போனார்கள். பிறகு அங்கதன் ஸுக்ரீவனுடன் வாலியின் தேகத்தை அழுதுகொண்டே சிதையிலேற்றி, அதில் அக்னியை மூட்டித் திரும்பி வராத மார்க்கத்தில் பிரயாணம் போகும் தன் பிதாவை இடமாக வந்து அப்ரதக்ஷிணம் செய்தான். சாஸ்திர விதியை அனுசரித்து வாலிக்குத் தகனஸம்ஸ்காரம் முதலியவைகளைச் செய்து ஆற்றிலிறங்கி, ஸுக்ரீவன் தாரை முதலியவர்கள், அங்கதனை முன்னிட்டுக்கொண்டு ஜலதர்ப்பணம் செய்தார்கள். ராமலக்ஷ்மணர்கள் கூடவிருந்து பிரேத காரியங்களை ஸுக்ரீவனைக்கொண்டு குறைவில்லாமல் நடத்தி வைத்தார்கள்.



இப்படி ராமபாணத்தால் அடிபட்டிறந்த மஹாதேஜஸ்வியும் பராக்கிரமசாலியுமான வாலிக்குச் செய்யவேண்டிய ஸகல கிருத்யங்களையும் செய்து, ஸுக்ரீவன் ராமனுடைய ஸமீபத்தில் வந்து நின்றான். மற்ற வானரர்கள் கிஷ்கிந்தைக்குச் சென்றார்கள்.

ததஸ்து தம் வாலிநமக்$^{3}$ர்ய பௌருஷம்
ப்ரகாஶ மிக்ஷ்வாகு வரேஷுணா ஹதம் |
ப்ரதீ$^{3}$ப்ய தீ$^{3}$ப்தாக்$^{3}$நி ஸமௌஜஸம் ததா$^{3}$
ஸலக்ஷ்மணம் ராம முபேயிவாந் ஹரி: || (52)

---

## ஸர்க்கம் 26

## ஸுக்ரீவ பட்டாபிஷேகம்

---

தத: ஶோகாபி$^{4}$ஸந்தப்தம் ஸுக்$^{3}$ரீவம் க்லிந்ந வாஸஸம் |
ஶாகா$^{2}$ம்ருக$^{3}$ மஹாமாத்ரா: பரிவார்யோப தஸ்தி$^{2}$ரே || (1)

நனைந்த வஸ்திரத்துடன் சோகத்தால் வாடி நிற்கும் ஸுக்ரீவனை வானர மந்திரிகளும் பிரதானிகளும் சூழ்ந்து நின்றார்கள். பிறகு அவர்களெல்லோரும் மஹா பராக்கிரமசாலியும் ஸகல பிராணிகளுக்கும் மங்களங்களைச் செய்கிறவருமான ராமனிடத்தில் வந்து, மஹரிஷிகள் பிரஹ்மாவை நமஸ்கரிப்பதுபோல், கைகூப்பி வணக்கமாய் வந்தனம் செய்தார்கள். அப்பொழுது பாலசூரியனைப் போன்ற முகத்தையும் தங்க மலையைப்போன்ற தேக காந்தியையும் உடைய ஹனுமான் ராமனைப் பார்த்து, "ஸ்வாமி! தங்களுடைய அனுக்கிரஹத்தால் ஸுக்ரீவன் தன் முன்னோர்களுடைய ராஜ்யத்தை அடைந்தார். தாங்கள் உத்தரவு செய்தால் இவர் கிஷ்கிந்தையில் பிரவேசித்து மித்திரர்களுடன் மேலே நடக்கவேண்டிய காரியங்களைச் செய்வார். மங்கள ஸ்நானம் செய்து, நானா கந்தங்களாலும் ஔஷதங்களாலும் ரத்தினங்களாலும் மாலைகளாலும் விதிப்படி தங்களைப் பூஜிப்பார். தாங்கள் இங்கிருந்து ரம்யமான

கிஷ்கிந்தைக்கு எழுந்தருளி, அவரை வானரர்களுக்கு அரசனாகச் செய்து அவர்களை ஸந்தோஷப்படுத்தவேண்டும்'' என்றார்.

அந்த விக்ஞாபனத்தைக் கேட்டு, மஹா புத்திமானான ராகவன், குழந்தாய்! நான் பிதிருவாக்கிய பரிபாலனம் செய்வதற்காகப் பதினான்கு வருஷங்கள் வரையில் வனத்தில் வஸிக்கவேண்டியது. கிராமத்திலாவது நகரத்திலாவது பிரவேசிக்கக் கூடாது. ஸுக்ரீவன் கிஷ்கிந்தைக்குச் சென்று அபிஷேக மஹோத்ஸவத்தை அனுபவிக்கட்டும்'' என்று ஆக்ஞாபித்தார்.

பிறகு ஸகல ஆசாரங்களையும் அறிந்த ரகுவீரன், உதாரபுத்தி பலம் பராக்கிரமம் சீலம் முதலிய உத்தம குணங்களால் விளங்கும் ஸுக்ரீவனைப் பார்த்து, "மித்திர! அங்கதன் உன் தமயனுடைய புத்திரன் ; உத்தம குணசாலி; பராக்கிரமத்தில் உனக்கு ஸமமானவன் ; யுவராஜாவாக இருக்கத்தகுந்தவன். ஆகையால் அவனுக்கு யௌவராஜ்யாபிஷேகம் செய்விக்க வேண்டியது. வர்ஷ ருதுவிற்கு முந்தின ஆஷாட மாஸம் இப்பொழுது நடக்கின்றது. இது முதல் நான்கு மாதங்கள் வரையில் மழையின் உபத்திரவத்தால் ஸீதையைத் தேடி ராவணனுடன் யுத்தம் செய்வதற்கு ஸௌகரியப்படாது. ஆகையால் நீ அதுவரையில் கிஷ்கிந்தையில் இரு. நானும் லக்ஷ்மணனும் இந்த மலைக் குகையில் வஸிக்கிறோம். இது அழகாகவும் விசாலமாகவும் போதுமான காற்றுள்ளதாகவும் ஜல ஸௌகர்யமுள்ளதாகவும் நேர்த்தியான புஷ்பங்களால் சூழப்பட்டதாகவும் இருக்கிறது. கார்த்திகை மாதம் பிறந்தவுடன் உன் ஸைன்யங்களைச் சேர்த்து ஸீதையைத் தேட முயற்சி செய். நாமிருவரும் இப்படி ஏற்பாடு செய்து கொள்வோம். நீயும் கிஷ்கிந்தைக்குப் போய் அபிஷேகம் செய்துகொண்டு, உன் நண்பர்களுக்கு ஸந்தோஷத்தையும் அருளக் கடவாய்'' என்றார்.

ஸுக்ரீவனும் அவருடைய ஆக்ஞையைத் தலையால் தாங்கிக் கிஷ்கிந்தைக்குப் போக, அங்குள்ள வானரர்கள் அவனைக் கை கூப்பி நமஸ்கரித்து உபசரித்தார்கள். மந்திரிகளும் பிரதானிகளும் அடிபணிந்து பாதங்களைத் தொட்டுக் கைகட்டி வாய் பொத்தி அவனுடைய ஆக்ஞையை எதிர்பார்த்துக் கொண்டிருந்தார்கள். ஸுக்ரீவன் அவர்களை எழுந்திருக்கச் சொல்லி, பிரியமாகப் பேசி, தகுந்தபடி மரியாதை செய்து, வாலியின் அந்தப்புரத்தில் புகுந்தான். அங்கே தாரை முதலிய ஸ்த்ரீகளைப் பலவகையாக ஸமாதானம் செய்தான். பிறகு தேவதைகள் இந்திரனுக்குத் தேவராஜ்ய பட்டாபிஷேகம் செய்து வைப்பதுபோல், ஸுக்ரீவனுடைய நண்பர்கள் அவனுக்கு அபிஷேகம் செய்வித்தார்கள். தங்கத்தால் அலங்கரிக்கப்பட்ட வெள்ளைக் குடையை அவனுக்குமேல் பிடித்து, தங்கப்பிடிகளுள்ள வெண்சாமரங்களை இருபுறத்திலும் வீசினார்கள். பிறகு பலவகை ரத்தினங்கள், விதைகள், ஔஷதிகள், பாலுள்ள மரங்களின் முளைகள், மலர்கள், வெள்ளை வஸ்திரங்கள், கற்பூரம், வாசனையுள்ள மாலைகள், நிலத்தாமரை, நேர்த்தியான சந்தனங்கள், அகில் முதலிய வாஸனைத் திரவியங்கள், மஞ்சள் கலந்த அக்ஷதை, ஸ்வர்ணம், யவமென்ற தான்யம், தேன், நெய், தயிர், புலித்தோல், பன்றித் தோலால் செய்யப்பட்ட பாதரக்ஷைகள், பூக்கள், கோரோசனை, மனச்சிலை முதலிய பதார்த்தங்களைக் கொண்டுவந்தார்கள். உத்தமமான பதினாறு கன்யைகளும் ஸித்தமாயிருந்தார்கள். பிறகு பிராம்மணர்களுக்கு ரத்தினங்கள் வஸ்திரங்கள் பக்ஷ்யங்கள் இவைகளைக் கொடுத்துத் திருப்தி செய்தார்கள். தர்ப்பைகளைப் பரப்பி அக்னிகளை வளர்த்து விதிப்படி அதில் ஹோமம் செய்தார்கள். அரண்மனையின் மேல்மாடியில் விசித்திரமான மாலைகளால் அலங்கரித்து, தங்கத்தால் கால்களுள்ள ஸிம்ஹாஸனத்தைக் கிழக்கு முகமாக விதிப்படி மந்திரங்களைச் சொல்லி அமைத்து, உத்தமமான விரிப்புகளால் அலங்கரித்தார்கள். புண்ணிய நதிகள், புண்ணிய தீர்த்தங்கள், ஸமுத்திரங்கள், இவைகளிலிருந்து ஜலத்தை எடுத்துக்கொண்டு வந்து தங்கக் குடங்களில் வைத்து, கஜன், கவாக்ஷகன், கவயன், சரபன், கந்தமாதனன், மைந்தன், த்விவிதன், ஹனுமான், ஜாம்பவான், நளன் முதலிய வானர சிரேஷ்டர்கள், மஹரிஷிகள் ஏற்படுத்திய ராஜ்யாபிஷேக கல்பத்தின்படி, லக்ஷணங்கள் பொருந்திய மாட்டுக் கொம்புகளாலும் தங்கப் பாத்திரங்களாலும் ஸுக்ரீவனுக்கு அபிஷேகம் செய்தார்கள். தேவேந்திரனுக்கு தேவகணங்கள் பட்டாபிஷேகம் செய்வதுபோல் சிறப்பாக உத்ஸவம் கொண்டாடி, வானரர்கள் அனைவரும் ஆனந்தத்தால் ஆரவாரம் செய்தார்கள். ராமனுடைய உத்திரவுப்படி ஸுக்ரீவன் அங்கதனை பிரீதியுடன் ஆலிங்கனம் செய்து, யுவராஜாவாக அபிஷேகம் செய்தான். அதைப் பார்த்து ஸகல வானரர்களும் அங்கதனிடத்தில் இரக்கம்கொண்டு ஸுக்ரீவனை மிகவும் கொண்டாடி உபசரித்து, மஹாத்மாவான ராமனையும் லக்ஷ்மணனையும் அடிக்கடி புகழ்ந்தார்கள். கிஷ்கிந்தை எங்கும் கொடிகளாலும் தோரணங்களாலும் அலங்கரிக்கப்பட்டு, ஸந்தோஷத்தால் பரவசமடைந்த வானரர்களால் நிறைந்து விளங்கிற்று. அபிஷேக மஹோத்ஸவம் நடந்த விதத்தை ஸுக்ரீவன் ராமனுக்குத் தெரிவித்து, தேவேந்திரனைப் போல், தான் இழந்த ராஜ்யத்தையும் ருமை என்ற பாரியையையும் மறுபடியும் அடைந்தான்.

நிவேத்³ய ராமாய ததா³ மஹாத்மநே
மஹாபி⁴ஷேகம் கபிவாஹிநீபதி: |
ருமாம் ச பா⁴ர்யாம் ப்ரதிலப்⁴ய வீர்யவாந்
அவாப ராஜ்யம் த்ரித³ஶாதி⁴போ யதா² ‖ (41)

---

## ஸர்க்கம் 27

# ராமன் ஸீதைக்காக துக்கித்தது

*அபி4ஷிக்தே து ஸுக்3ரீவே ப்ரவிஷ்டே வாநரே கு3ஹாம் |*
*ஆஜகா3ம ஸஹப்4ராத்ரா ராம: ப்ரஸ்ரவணம் கி3ரிம் ||* (1)

**ஸு**க்ரீவன் வானர ஸைன்யங்களுடன் கிஷ்கிந்தைக்குப் போனபிறகு ராமலக்ஷ்மணர்கள் பிரஸ்ரவணகிரிக்கு வந்தார்கள். மான், புலி, கரடி, ஸிம்ஹம், குரங்கு, பூனை முதலிய மிருகங்களால் சூழப்பட்டும், மரம் செடி புதர்கள் காடுகள் அடர்ந்தும், எப்பொழுதும் ஸ்படிகம்போல் தெளிந்த ஜலத்தால் அது நிறைந்தும் இருந்தது. மேகக்கூட்டங்கள் போன்ற அந்த மலையின் சிகரத்தில் விஸ்தாரமான ஒரு குகையைப் பார்த்து, மழைக்காலத்தில் அங்கே வஸிக்க நிச்சயித்தார்கள். ஸுக்ரீவனுடன் ஒருவிதமான ஏற்பாடு செய்துகொண்டு, ராமன் தனக்கு எப்பொழுதும் பிரியனாகவும் மஹா புத்திமானாகவும் இருக்கும் லக்ஷ்மணனைப் பார்த்து, அந்த ஸமயத்திற்குத் தகுந்தபடி சொல்ல ஆரம்பித்தார். "இந்தக் குகை அழகாகவும் விசாலமாகவும் போதுமான காற்றுள்ளதாகவும் இருக்கிறது. மழைக் காலத்தை இங்கே கழிப்போம். உன்னதமான இந்த மலைச் சிகரம் நானா வர்ணங்களுள்ள கற்பாறைகளாலும் பலவித தாதுக்களாலும், குகைகளாலும், புதர்களாலும், சோலைகளாலும், கொடிகளாலும், மயில் முதலிய பக்ஷிகளின் சப்தங்களாலும் பல பூஞ்செடிகளாலும் விளங்குகிறது. இதற்குப் பக்கத்தில் ஒரு அழகிய தாமரை ஓடை காணப்படுகிறது. இந்தக் குகை, மலையின் வடகிழக்குப் புறத்தில் தென்மேற்கு முகமாக வாசலையுடையதாகவும் பின்புறத்தில் உயர்ந்தும் இருப்பதால் அதிகக் காற்றடிக்காமல் ஸுகமாக இருக்கும்; குகை வாசலில் ஓர் விஸ்தாரமான கற்பாறை வழவழப்பாக மைக்குவியலைப்போல் அமைந்திருக்கிறது. இதற்கு வடக்கில் தோன்றும் சிகரம் மைக்குவியலைப்போலும் நீருண்ட மேகம் போலும் கருத்து உயர்ந்திருக்கிறது. தெற்கிலுள்ள சிகரம் கைலாஸ மலையைப்போல் வெண்மையாகப் பல தாதுக்களால் விளங்குவதைப் பார். சித்திரகூடத்திலிருந்து மந்தாகினி ஓடுவதுபோல் கிழக்கில் ஒரு நதி கிழக்கு முகமாக ஓடுவதைப் பார். வஸந்தகாலத்தில் அழகாக அலங்கரித்துக்கொண்டிருக்கும் யௌவன ஸ்த்ரீயைப் போல் இந்த நதி, கரைகளில் பலவித மரங்களுடன் விளங்குகிறது. அவைகளில் பலவித பக்ஷிகள் இனிமையாகக் கூவுகின்றன. மணல் திட்டுகளில் சக்ரவாகம் முதலிய பறவைகள் ஆனந்தமாக விளையாடுவதைப் பார்த்தால் இந்த நதி ஸந்தோஷம் மேலிட்டுச் சிரிப்பது போல் காணப்படுகிறது. சிலவிடங்களில் கருநெய்தலாலும், சிலவிடங்களில் செங்கழுநீராலும் சிலவிடங்களில் வெண்தாமரை குமுதங்களாலும் மறைக்கப்பட்டிருக்கிறது. அநேக ரிஷிகள்



மனத்தைக் கவரும் இந்த நதியில் ஸ்நானம் செய்ய வருகிறார்கள். சந்தன மரங்களும் மருத மரங்களும் மனத்தால் ஸிருஷ்டிக்கப்பட்டதுபோல் வரிசை வரிசையாக அமைந்திருப்பதைப் பார். இவ்விடம் மிகவும் அழகாக இருக்கிறது. இங்கே வஸித்தால் நமக்கு அளவற்ற ஸந்தோஷமும் திருப்தியும் உண்டாகும். இதற்கு ஸமீபத்தில் விசித்திரமான காடுகளின் நடுவில் ஸுக்ரீவன் வஸிக்கும் கிஷ்கிந்தையும் இருக்கிறது. அங்கே வானரர்கள் ஸந்தோஷத்துடன் உத்ஸவம் கொண்டாடுகிறார்கள். பாட்டும், ஆட்டமும், வாத்யங்களின் சப்தமும், வானரர்களின் ஆரவாரமும் மதுரமாகக் கேட்கப்படுகின்றன. பாரியையையும் ராஜ்யத்தையும் அளவற்ற ஐசுவரியத்தையும் ஸுக்ரீவன் அடைந்து, மித்திரர்களால் சூழப்பட்டு ஸந்தோஷத்தை அனுபவிக்கிறான் என்பது நிச்சயம்" என்று சொல்லி அந்தக் குகையில் லக்ஷ்மணனுடன் வஸித்தார்.

ஆனால் அவருக்குக் கொஞ்சமாவது ஸந்தோஷமுண்டாகவில்லை. அந்த மலையின் அழகும் காந்தியும் அவருடைய சோகத்தைப் பெருக்கின. பிராணனைக் காட்டிலும் தனக்குப் பிரியமான ஸீதை ராவணனால் கொண்டு போகப்பட்டதை நினைத்து, இரவில் அவருக்குத் தூக்கம் பிடிக்கவில்லை. சந்திரன் உதிக்கும் பொழுதெல்லாம் அவருடைய தாபம் அதிகமாயிற்று. இப்படி ஒவ்வொரு நாளும் கண்ணும் கண்ணீருமாக மனம் குன்றிப் புத்தி மயங்கிப் பரிதவிப்பதை லக்ஷ்மணன் பார்த்து, தானும் அதைவிட துக்கத்தை அடைந்து, கூடியவரையில் ஸமாதானம் செய்தார். "வீரசிரேஷ்டா! தாங்கள் இப்படி மனம் நொந்து வருத்தப்படலாமா? எப்பொழுதும் வருத்தப்படுகிறவனுக்கு எந்தக் காரியமும் கைகூடாதென்று தங்களுக்குத் தெரியாதா? இந்த லோகத்தில் காரியம் ஸித்திப்பதற்குக் காரணமான ஸாதனங்கள் உடையவர்கள் தாங்களே. தெய்வ பலமும் அதற்கு உதவிபுரிய வேண்டுமென்றும், ஈசுவரன் பரலோகம் முதலியவை உண்டென்றும் தங்களைவிட யாருக்குத் தெரியும்? தர்மானுஷ்டானமும் விடாமுயற்சியும் தங்களை அண்டியிருக்கின்றனவல்லவா? நமது சத்துருவோ ராக்ஷஸன்; கபடயுத்தம் செய்பவன். தாங்கள் இந்த அதைரியத்தை வேரறுத்து, விடாமுயற்சியை ஸ்திரமாகக் கைக்கொள்ளுங்கள். அடுத்த நிமிஷத்தில் இந்தப் பூமியை மலைகளோடும் ஸமுத்திரங்களோடும் தலை கீழாக மாற்றுவீர்கள். ராவணனையும் அவனைச் சேர்ந்த அல்ப ராக்ஷஸர்களையும் பற்றிச் சொல்ல வேண்டுமோ? இந்த மழைக்காலம்போய் சரத்காலம் வரட்டும். அப்பொழுது அந்த ராவணனையும் அவனுடைய பரிவாரங்களையும் ராஜ்யத்தையும் ஒரு நொடியில் அழிப்பீர்கள். நீறுபூத்த நெருப்பைத் தகுந்த ஸமயத்தில் ஆஹுதிகளால் ஜ்வலிக்கச் செய்வதுபோல் சோகத்தால் அடங்கியிருக்கும் தங்கள் வீரியத்தை என் வார்த்தைகளால் பிரகாசிக்கச் செய்கிறேனே தவிர வேறல்ல" என்று தனக்குப் பரம மித்திரனான லக்ஷ்மணன் ஹிதமாக

வும் சுபமாகவும் சொன்ன வாக்கியங்களை ராமன் கேட்டு மகிழ்ந்து கொண்டாடி, "லக்ஷ்மணா! என்னிடத்தில் எல்லையற்ற பிரீதியும் பக்தியும் ஸத்தியமும் பராக்கிரமமுள்ள மித்திரனை நீ என் ஹிதத்தை நாடிச் சொல்லவேண்டிய வார்த்தைகளைச் சொன்னதால் மிகவும் ஸந்தோஷமடைந்தேன். எந்தக் காரியத்தையும் கெடுக்கும் சோகத்தை ஒழித்தேன். தடையற்ற சக்தியுள்ள தேஜஸை மேற்கொண்டேன். உன் வார்த்தைக்குக் கட்டுப்பட்டு, ஸுக்ரீவனும் ஆறுகளும் நமக்கு அனுகூலம் செய்யும் ஸமயத்தை எதிர்பார்த்துக்கொண்டு, சரத்காலம் வரும்வரையில் பொறுத்திருக்கிறேன். வீரனுக்கு நாம் உபகாரம் செய்தால் அவன் பதில் உபகாரம் செய்வானென்பது நிச்சயம். நன்றியற்று அப்படிச் செய்யத் தவறுகிறவனை ஸாதுக்கள் நிந்திப்பார்கள். அதற்காகப் பயந்து ஸுக்ரீவன் நமக்கு பிரத்யுபகாரம் செய்வான்" என்றார்.

அதைக் கேட்டு லக்ஷ்மணன் துக்கம் தீர்ந்து, கைகூப்பிக் கொண்டாடி, மேல் நடக்கவேண்டிய காரியத்தை யோசித்து, "அண்ணா! தாங்கள் சொன்னபடி ஸுக்ரீவன் சீக்கிரத்தில் நடந்து கொள்வான். ஸீதையைப் பிரிந்த தாபத்தைத் தாங்கள் எப்படியாவது பொறுத்துக்கொண்டு சத்ருவை நாசம்செய்யும் தைரியத்தை விடாமல் இந்த மழைக் காலத்தைக் கழித்துச் சரத்காலத்தை எதிர்பார்த்திருங்கள். ஸுக்ரீவன் உபகாரம் செய்தாலும் செய்யாவிட்டாலும் இப்பொழுதே சத்துருவைக் கொல்வேனென்று தாங்கள் கோபிப்பது தகாது. கோபத்தையும் துக்கத்தையும் நான்கு மாதங்கள் வரையில் அடக்கிக்கொண்டிருங்கள். ஸகல ஸௌகரியங்களும் நிறைந்த இந்த மலைக் குகையில் வஸிப்போம். நானும் கூடியவரையில் தங்கள் துக்கத்தைத் தணிக்க முயலுகிறேன். சத்துருவைக் கொல்வதற்கு வேண்டிய பிரயத்தனங்களைச் செய்து கொண்டிருப்போம்" என்று தெரிவித்துத் தன் ஸ்வபாவமான நல்ல புத்தியை வெளிப்படுத்தினர்.

நியம்ய கோபம் ப்ரதி பால்யதாம் ஶரத்
க்ஷமஸ்வ மாஸாம்ஸ் சதுரோ மயா ஸஹ |
வஸாசலேஸ்மிந் ம்ருக³ராஜ ஸேவிதே
ஸம்வர்த⁴யந் ஶத்ருவதே⁴ ஸமுத்³யமம் || (47)

## ஸர்க்கம் 28

## மழைக் காலம்

ஸ தத³ா வாலிநம் ஹத்வா ஸுக்³ரீவ மபி⁴ஷிச்ய ச |
வஸந் மால்யவத: ப்ருஷ்டே² ராமோ லக்ஷ்மண மப்³ரவீத் || (1)

**வா**லியைக் கொன்று ஸுக்ரீவனுக்கு ராஜ்யத்தைக் கொடுத்து, பிரஸ்ரவணகிரியில் ராமன் வஸித்துக் கொண்டிருக்கையில் ஒருநாள்



மழைக் காலத்தின் அழகை வர்ணிக்க ஆரம்பித்தார். "குழந்தாய்! ஸுக்ரீவனால் சொல்லப்பட்ட மழைக்காலம் இப்பொழுது ஆரம்பித்திருக்கிறது. பெரிய மலைகளைப்போன்ற மேகங்கள் ஆகாசத்தை மறைக்கின்றன. ஸூரியனுடைய கிரணங்களால் ஆகாசம் ஸமுத்திர ஜலத்தைக் குடித்து, கார்த்திகை மாதம் முதல் ஆடி மாதம் வரையில் பலவித ரஸங்களுக்குக் காரணமான ஜலமென்ற கர்ப்பத்தைத் தரித்து இப்பொழுது பிரஸவிக்கிறது. படிக்கட்டுகளைப்போன்ற மேகங்களின் வழியாக ஏறி, புஷ்ப மாலைகளால் ஸூரியனை அலங்கரிக்க முடியுமென்று எண்ணுகிறேன். ஓரங்களில் மிகவும் வெளுத்தும் நடுவில் ஸந்தியாவர்ணத்தால் சிவந்தும் ஜலம் நிறைந்தும் இருக்கிற மேகங்களால், ஆகாசம், தேகமெங்கும் காயம்பட்டு அதை ஆற்றுவதற்கு மருந்துடன் வெள்ளை வஸ்திரங்களால் கட்டப்பட்டிருப்பதுபோலும், அவைகளின் நடுவில் ரத்தம் கசிந்திருப்பது போலும் காணப்படுகிறது. தன் விரஹ தாபத்தைப் போக்க ஆகாசம் ஸந்தியாகால வர்ணமென்ற சிவப்புச் சந்தனத்தைப் பூசிக்கொண்டு, துக்கம் தாங்காமல் தென்றல் என்ற பெருமூச்சை விட்டுக்கொண்டு, கொஞ்சம் வெளுத்த மேகங்களால் வெளுத்த தேகத்துடனிருக்கும் ஆசை மிகுந்த புருஷனைப்போல் காணப்படுகிறது. ஸீதை என்னைப் பிரிந்த துக்கத்தால் கண்ணீர் விடுவதுபோல், அவளைப் பெற்ற இந்தப் பூமிதேவியும் கோடை வெய்யிலால் தவித்து, மழைத்தாரைகள் விழுந்தவுடன் நீராவியை விடுகிறாள். இப்பொழுது அடிக்கும் காற்றுகள் மேகங்களின் நடுவிலிருந்து புறப்படுவதால் மெதுவாகவும், செங்கழுநீர்களின் ஸம்பந்தத்தால் ஸுகமான குளிர்ச்சியோடும், தாழைப் புஷ்பங்களின் வழியாக வருவதால் பரிமளமுள்ளதாகவும் வீசுகின்றது. இதைக் கைகளால் வாரிக் குடிக்கலாமென்று தோன்றுகிறது.

"இந்த மலை கோடை காலத்தின் உஷ்ணம் நீங்கி, தாழை முதலிய புஷ்பங்களின் மணம் வீச, மலர்ந்த புஷ்பங்களால் எங்கும் நிறைந்து மழைத்தாரைகளால் நனைக்கப்படுவதைப் பார்த்தால், தன் சத்துருவான வாலி அழிந்து சந்தனம் முதலிய பரிமளத் திரவியங்களைப் பூசிக்கொண்டு, மாலைகளால் அலங்கரிக்கப்பட்டு புண்ய ஜலங்களால் அபிஷேகம் செய்யப்படும் ஸுக்ரீவனைப்போல் தோன்றுகிறது. கறுத்த மேகங்களென்ற கறுப்பு மான்தோலையும் சுத்தமான மழைத் தாரைகளென்ற வெளுத்த பூணூலையும் இந்த மலைகள் அணிந்துகொண்டு, காற்றால் நிறைந்து சப்திக்கும் குகைகளால் வேதமோதும் பிரம்மசாரிகளைப்போல் இருக்கின்றன. தங்கச் சவுக்குகள் போன்ற மின்னல்களால் தாக்கப்பட்டு ஒலியுடன் இருக்கும் ஆகாசம், சாட்டையால் அடிக்கப்பட்டு சத்தமிடுவதும் வலியுடனிருப்பதுமான மிருகம்போல் காணப்படுகிறது. கறுத்த மேகங்களிலிருந்து பிரகாசிக்கும் மின்னல் ராவணனுடைய மடியில் பலாத்காரமாக வைக்கப்பட்டிருக்கும் ஸீதையைப்போல் காணப்

படுகிறது. ஸகல திக்குகளும் கருத்த மேகங்களால் பூசப்பட்டு, சந்திரன் முதலிய கிரஹங்களும் நக்ஷத்திரங்களும் மறைந்து, கிழக்கு மேற்குத் தெரியாமலிருக்கிறது. பிரிய நாயகிகளுடன் கூடியிருப்பவர்களுக்கு இது மிகவும் அனுகூலமான காலமாக இருக்கிறது; அவர்களை விட்டுப் பிரிந்தவர்களுக்கு மிகுந்த துக்கத்தை உண்டாக்கும். இந்த மலைச்சாரல்களில் குடைமல்லிகைப் புஷ்பங்கள் மழைத் துளிகளால் நனைக்கப்பட்டு மழைகாலத்தின் வரவினால் ஸந்தோஷமடைந்து புஷ்பித்திருப்பதைப் பார். தங்களுடைய பிரிய நாயகியைப் பிரிந்து, மழைக்காலத்தில் அவர்களைச் சேருவோமென்று எதிர்பார்த்திருந்து, அவர்களைக் கண்டவுடன் ஆனந்தக் கண்ணீர் விட்டு, ஸந்தோஷத்தால் சிரிக்கும் காமிகளைப் போலிருக்கவில்லையா? இதைப் பார்க்கையில் எனக்கு விரஹதாபம் அதிகரிக்கிறது.

“இப்பொழுது புழுதி அடங்கிற்று; குளிர்காற்று வீசுகிறது. கோடைக்குரிய உஷ்ணம் வியர்வை முதலிய அசௌக்கியங்கள் ஒழிந்தன; அரசர்கள் சத்துருக்களின்மேல் படை எடுத்துப் போவதை நிறுத்திவிட்டார்கள்; தூரதேசங்களுக்குப் போன பிரயாணிகள் திரும்பி வருகிறார்கள். அன்னங்கள் மழைக்குப் பயந்து மானஸம் என்ற ஏரியை நோக்கிப் பறந்து போகின்றன. சக்கரவாகங்கள் ஆசை மிகத் தங்கள் பேடுகளுடன் சேருகின்றன. எப்பொழுதும் மழை பொழிவதால் வழிகளில் வாஹனங்கள் போக முடியவில்லை. ஆகாசத்தில் மேகங்கள் பரவி, சிலவிடங்களில் பிரகாசமாகவும் சிலவிடங்களில் பிரகாசமற்றும் இருப்பதைப் பார். மலைகளால் தடுக்கப்பட்டுச் சிலவிடங்களில் அலையற்ற ஸமுத்திரத்தைப் போலிருக்கிறது. மலையருவிகளின் ஜலம் புஷ்பங்களால் மறைந்தும் பல தாதுக்கள் கலந்தும் மயில்களின் ஸந்தோஷக் கூச்சல்களுடன் வெகு வேகமாக ஓடுகிறது. வண்டுகளைப்போல் கறுத்த மதுரமான நாவல் பழங்களைப் பறவைகளும் பிறவும் வேண்டிய வரையில் சாப்பிடுகின்றன. பல வர்ணமுள்ள மாம்பழங்கள் காற்றாலடிக்கப்பட்டுத் தரையில் விழுகின்றன. யுத்த பூமியில் நிற்கும் மதயானைகளைப்போல் மேகங்கள், மின்னலென்ற கொடிகளையும் நாரைகளின் வரிசைகளென்ற மாலைகளையும், மலைச் சிகரங்களைப் போன்ற தேகங்களையும் உடையவைகளாகக் கர்ஜிக்கின்றன. மழை ஜலத்தால் செழிக்கும் இளம்புல்லுகளாலும் தோகைகளை விரித்தாடும் மயில்களாலும், மழையைப் பொழிந்த மேகங்களாலும் இந்த வனங்கள் பின்பகலில் அதிக அழகுடன் விளங்குகின்றன. அளவற்ற ஜலத்தைச் சுமந்துகொண்டு மேகங்கள் மலைச்சிகரங்களில் தங்கித் தங்கி உறுமிக்கொண்டு போவதைப் பார். நாரைக் கூட்டங்கள் கர்ப்பம் தரிப்பதற்கு ஸந்தோஷத்துடன் மேகத்தை நோக்கிப் பறந்து போகும்பொழுது, காற்றால் அசைக்கப்படும் வெண்தாமரை மாலை தொங்கி இருக்கும்படி ஆகாயத்தில் அமைக்கப்



பட்டது போலிருக்கிறது. செம்பஞ்சு ரஸத்தின் புள்ளிகளால் அலங்கரிக்கப்பட்டுக் கிளியின் நிறமுள்ள போர்வையைத் தரித்திருக்கும் சிறு பெண்ணைப்போல் பூமி, இளம்புல்லுகளுக்கு நடுவில் பிரகாசிக்கும் இந்திரகோபப் பூச்சிகளால் விளங்குகிறது.

ஸ்ரீமந் நாராயணன் ஆடி மாதத்தில் யோகநித்திரை செய்ய ஆரம்பித்து ஆவணி மாதத்தில் ஆழ்ந்து தூங்குகிறார்; ஆறுகள் விரைவாக ஸமுத்திரத்தில் விழுகின்றன; நாரைகள் ஸந்தோஷமாக மேகத்தை நோக்கிப் போகின்றன; ஸ்த்ரீகளும் ஆசைகொண்டு நாயகர்களை அடைகிறார்கள்; மயில்கள் வனங்களில் ஆடுகின்றன; கடம்ப மரங்கள் புஷ்பங்களால் விளங்குகின்றன; காளைகள் ஆசை கொண்ட பசுக்களுடன் கூடுகின்றன; பூமியெங்கும் பயிரால் செழித்து விளங்குகிறது; ஆறுகளில் ஜலம் பெருகுகிறது; மேகங்கள் பொழிகின்றன; மதங்கொண்ட யானைகள் வீறிடுகின்றன; காடுகள் செழித்து விளங்குகின்றன; பிரிய நாயகிகளை விட்டுப் பிரிந்தவர்கள் ஏங்குகிறார்கள்; மயில்கள் ஆடுகின்றன; குரங்குகள் ஒரே இடத்தில் ஆஹாரம் கிடைப்பதால் மகிழ்கின்றன. உத்தம கஜங்கள் தாழை மடலின் வாஸனையை நுகர்ந்து ஸந்தோஷித்து, மலை யருவிகள் தாழ்வரைகளில் விழுகின்ற த்வனியைக் கேட்டு மிரண்டு மயில்களுடன் கத்துகின்றன; வண்டுகள் மழைத் தாரைகளால் மடங்கின தாமரைத் தாதுக்களை விட்டு மரக்கிளைகளில் தொங்கிக் கொண்டு, தேனைக் குடித்த மயக்கம் நீங்கித் தெளிகின்றன. கரிப்பொடிகளால் செய்யப்பட்டவை போன்ற பழங்களையுடைய நாவல் மரம் வண்டுகளால் மொய்க்கப்பட்டது போல் காண்கிறது. மலைக் காடுகளில் தன் இஷ்டப்படி ஸஞ்சரித்துக் கொண்டிருக்கும் மதயானை மேகத்வனியைக் கேட்டு, அதனைத் தனக்குச் சத்துருவான யானை என்று எண்ணி அதனுடன் யுத்தம் செய்யப் போகிறது. காடுகள் சில இடங்கள் வண்டுகளின் சப்தத்தால் பாடுவதுபோலும், மயில்களின் ஆட்டத்தால் சிலவிடங்களில் ஆடுவதுபோலும், உத்தம கஜங்களால் சில விடங்களில் மதங்கொண்டதுபோலும் விளங்குகின்றன. வனமெங்கும் புஷ்பங்களும் தளிர்களும் நிறைந்து, புதிதாகப் பெய்த மழைகள் அங்கங்கே தேங்கி, மதங்கொண்ட மயில்கள் ஆட, புஷ்பங்களால் அலங்கரிக்கப்பட்டிருப்பதைப் பார். இவ்வனம் மதுபானங்கள் நிறைந்த பாத்திரங்களாலும், ஸந்தோஷக் கூத்தாடும் ஜனங்களாலும் விளங்கும் மதுபானம் செய்யும் இடம் போலிருக்கிறது.

நானாவர்ணமுள்ள சாதக பக்ஷிகள் இலைகளில் விழுந்து முத்துக்களைப்போல் பிரகாசிக்கும் நீர்த்துளிகளைக் குடித்து ஸந்தோஷிக்கின்றன. வண்டுகள் மதுரமாக ரீங்காரம் செய்வது வீணைமுதலிய வாத்தியங்களைப்போலும், தவளைகள் கத்துவது தாளத்தின் சொல் கட்டுகளை வாயால் தொனிப்பதுபோலும், மேகங்களின் ஓசை

மிருதங்க நாதம்போலும் இருந்துகொண்டு, காடுகளில் பாட்டுக் கச்சேரி நடப்பதுபோல் காண்கிறது. அப்பொழுது சில மயில்கள் ஆடுகின்றன, சில பாடுகின்றன, சில மரங்களில் உட்கார்ந்து தோகையை விரித்துக்கொண்டு அனுபவிக்கின்றன. வெகு காலமாகத் தூங்கிக்கொண்டிருந்த தவளைகள் மேக கர்ஜனையால் விழித்துக்கொண்டு மழைத் தாரைகளால் அடிக்கப்பட்டுப் பல விதமாகக் கத்துகின்றன. ஆற்றுஜலம் இடிந்து விழும் கரைகளில் மோதிக்கொண்டு, பலவிதப் பூக்களையும் பழங்களையும், வெள்ளத்தையும் அடித்துக்கொண்டு, சக்கரவாகப் பக்ஷிகளுடன் கடலை நோக்கி விரைவாக ஓடுகின்றது பார். நேர்த்தியான பூக்களையும் பழங்களையும். பக்ஷ்யங்களையும் வாஸனைத் திரவியங்களையும் தாம்பூலங்களையும் எடுத்துக்கொண்டு, தங்கள் நாயகனைச் சேருவதற்கு வேகமாகப் போகையில் வஸ்திரம் நழுவிப்போவதையும் கவனிக்காத ஸ்திரீகளைப்போல் நதிகள் காணப்படுகின்றன. காட்டுத் தீயால் எரிக்கப்பட்ட கறுத்த மலைகளின்மேல் அவ்விதமான வேறு மலைகள் வளர்ந்திருப்பதுபோல், கறுத்த நீருண்ட மேகங்களின்மேல் அவ்வகையான வேறு மேகங்கள் தங்கியிருப்பதைப் பார். ஸங்தோஷத்தால் கூவும் மயில்களாலும் இந்திரகோபப் பூச்சிகளுடன் கூடின இளம்புற்களாலும், மலர்களின் வாசனைகளாலும் விளங்கும் காடுகளில் மதயானைகள் இஷ்டப்படி ஸஞ்சரிக்கின்றன.

"தாமரை மலர்களில் உட்கார்ந்து, தேனைக்குடித்துக் கொண்டிருந்த வண்டுகள், மழைத் தாரைகளால் அங்கிருந்து ஓடி, அப்பொழுதே மலர்ந்த கடம்ப மலர்களில் போய்த் தங்குகின்றன. யானைகள் மதங்கொண்டன; காளைகள் மகிழ்கின்றன; காடுகளில் சிங்கங்கள் இளைப்பாறுகின்றன; மலர்ந்தப் பூக்களாலும் தளிர்களாலும் மலைகள் அழகுபெறுகின்றன. அரசர்கள் யுத்தச்செயலை ஒழித்திருக்கிறார்கள்; இந்திரன் மேகங்களுடன் விளையாடுகிறான். மேகங்கள் நீருண்டு ஆகாசத்தில் தங்கி, ஸமுத்திரத்தைப்போல் கர்ஜித்து, ஆறு, குளம், ஏரி, கிணறு முதலியவைகளை நிரப்பிப் பெருகச்செய்கின்றன; மழைத் தாரைகள் யானைத் துதிக்கைகளைப் போல் ஓயாமல் விழுகின்றன; காற்று பெரும் சப்தத்துடன் அடிக்கிறது; ஆறுகள் கரைகளை இடித்துக்கொண்டு வேகமாக வழிகடந்து ஓடுகின்றன.

"ஜனங்கள் கூடி அரசனுக்கு அபிஷேகம் செய்யும்பொழுது அவனுக்கு ஸந்தோஷமும் அழகும் காந்தியும் வளர்வதுபோல் இந்திரனால் கொடுக்கப்பட்ட புண்ணிய தீர்த்தத்தைக் காற்றுகள் மேகங்களென்ற குடங்களில் எடுத்துவந்து மலைகளுக்கு அபிஷேகம் செய்ய, அவை புஷ்பங்களாலும் பழங்களாலும் காந்தி மிகுந்து விளங்குகின்றன. நக்ஷத்திரங்களுடன் கூடின ஆகாசம் மேகங்களால் மறைக்கப்பட்டிருக்கிறது. ஸூரியன் காணப்படவில்லை. புது ஜலத்தால் பூமி திருப்தியடைந்திருக்கிறது. திக்குகள் இருள் மூடி பிரகாசமற்றிருக்கின்றன. மலைகளில் மேகங்கள் இடைவிடாமல் பொழிந்து தாழ்வரைகளில் அருவிகள் வெள்ளம் கொண்டு ஓட, நீண்ட முத்து மாலைகள் கழுத்திலிருந்து தொங்குவது போலிருக்கிறது. மலைப்பாறைகளில் மழைத் தாரைகள் விழுந்து சிதறி மயில்களின் ஓசையால் நிறைந்த குகைகளில் தேங்கும்பொழுது ஹாரத்திலிருந்து மலர்கள் நான்கு புறத்திலும் உதிர்வது போலிருக்கிறது. மழைத் தாரைகள் காற்றாலடிபட்டு எங்கும் விழுவதைப் பார்த்தால், தேவஸ்த்ரீகளின் ரதிகேளியில் ஹாரங்கள் அறுந்து அவைகளிலுள்ள முத்துக்கள் சிதறுவது போலிருக்கின்றன. பக்ஷிகள் கூடுகளில் போய்த் தங்குவதாலும், தாமரைகள் மூடுவதாலும், மல்லிகை புஷ்பங்கள் மலர்வதாலும், ஸூரியன் அஸ்தமித்தானென்று தெரிகிறது. அரசர்கள் யுத்தங்களை ஒழித்திருப்பதால் வெளியில் போன ஸைன்யங்கள் திரும்பி வருகின்றன.



"மழை ஜலத்தால் வழிகளில் நடக்கமுடியவில்லை; அரசர்களின் பகை அடங்கிற்று; ஸாமவேதிகளுக்கு அத்யயன காலமான புரட்டாசி மாதம் வந்திருக்கிறது; பரதன் இப்பொழுது ராஜ்ய காரியங்கள் யாவற்றையும் நிறுத்திவிட்டு வேண்டிய பொருள்களை ஸம்பாதித்து வைத்துக்கொண்டு, சாதுர்மாஸ்ய விரதத்தை அனுஷ்டிக்க ஆரம்பிப்பான். (ஆடி மாதம் சுக்லபக்ஷ ஏகாதசியில் உபவாஸமிருந்து சாதுர்மாஸ்ய விரதத்தை அனுஷ்டிக்க ஸங்கல்பம் செய்ய வேண்டியது. மழைக்காலத்து நான்கு மாதங்களுக்குள் ஏதாவது ஒரு விரதத்தை அனுஷ்டித்து முடிக்கவேண்டும்). நான் அயோத்யையிலிருந்து காட்டிற்கு வரும்பொழுது நகரத்து ஜனங்கள் பிரலாபிக்கும் ஓசையைப்போல், இப்பொழுது ஸரயூ நதியில் பெருகும் வெள்ளமும் சப்திக்கும். ஸுக்ரீவன் சத்துருவில்லாத விசாலமான ராஜ்யத்தையும் பாரியையையும் அடைந்து இந்த மழைக் காலத்தில் ஸுகமாக வஸிக்கிறான். நானோ ராஜ்யத்தையும் இழந்து பாரியையும் பறிகொடுத்து. சத்துருவை ஜயிக்காமல், ஆற்றின் கரையைப் போல் கரைந்து கரைந்து வருந்துகிறேன். இந்த மழைக்காலம் வளர்கிறது. ராவணனோ ஸாமான்ய சத்துருவல்ல. என் துக்கத்திற்கோ எல்லையில்லை. வழிகள் ஜலத்தால் நடக்க முடியாமலிருப்பதாலும், அரசர்கள் இந்த மாதங்களில் படையெடுப்பது வழக்கமில்லாததாலும் ஸுக்ரீவன் ஸீதையைத் தேடப் புறப்படுகிறேனென்று வேண்டியபொழுதும் நான் ஒப்பவில்லை. அவன் இதுவரையில் வெகு நாளாகப் பல கஷ்டங்களை அனுபவித்தவன்; பாரியைகளை விட்டுப் பிரிந்து நெடுங்காலமாயிற்று. அவர்களைப் பார்க்கும்படி இப்பொழுதே நேர்ந்துள்ளது. என்காரியமோ அதி சீக்கிரத்தில் ஸ்வல்ப பிரயத்தனத்தால் முடியக் கூடியதல்ல. அதைப் பெரிதாக எண்ணி, அவனை இப்பொழுதே கஷ்டப்படுத்த எனக்கு மனமில்லை. கொஞ்சம் இளைப்பாறிவிட்டு, சரத் காலம் வந்தவுடன் தன் பிரதிக்ஞையை நிறைவேற்றுவானென்பதில்

ஸந்தேகமில்லை. ஆகையால் ஆறுகளில் ஜலமும் வற்றி, ஸுக்ரீவனுக்கும் மனம் வரும் காலத்தை எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறேன். வீரனுக்கு உபகாரம் செய்தால் அவன் அதற்குப் பதில் செய்யாமலிருக்கமாட்டான். நன்றி மறந்து அப்படிச் செய்யாவிட்டால் ஸாதுக்களால் நிந்திக்கப்படுவான்'' என்று ராமன் சொல்ல, லக்ஷ்மணன் அதைக் கொண்டாடிக் கைகூப்பி, "ஸ்வாமி! ஸுக்ரீவன் தங்கள் இஷ்டப்படி நடந்துகொள்வான். சத்துருவை நாசம் செய்வதற்குவேண்டிய ஏற்பாடுகளைச் செய்துகொண்டு, மழை ஓய்ந்து சரத் காலம் வருவதை எதிர்பார்த்திருக்கும்படி வேண்டுகிறேன்'' என்று தன் சுபமான கருத்தை வெளியிட்டான்.

யதோ³க்த மேதத் தவ ஸர்வ மீப்ஸிதம்
நரேந்த்³ர கர்தா ந சிராத்³த⁴ரீஸ்வர: |
ஶரத் ப்ரதீக்ஷ: க்ஷமதா மிமம் ப⁴வாந்
ஜலப்ரபாதம் ரிபுநிக்³ரஹே த்⁴ருத: ‖ (66)

## ஸர்க்கம் 29

## ஸுக்ரீவன் ஸைன்யங்களைச் சேர்த்தது

ஸமீக்ஷ்ய விமலம் வ்யோம க³தவித்யுத்³ வலாஹகம் |
ஸாரஸாரவ ஸங்கு⁴ஷ்டம் ரம்யஜ்யோத்ஸ்நா நுலேபநம் ‖ (1)

ஆகாசம் மேகங்களும் மின்னலுமில்லாமல் சுத்தமாயிற்று. அன்னங்கள் ஓசை செய்ய ஆரம்பித்தன. அழகான நிலவு சந்தனப் பூச்சைப்போல் விளங்கிற்று. ஸுக்ரீவனும் சத்துருவழிந்து, தான் விரும்பிய ராஜ்யத்தையும் ஸகல போகங்களையும் அடைந்தான். தன் எண்ணங்கள் நிறைவேறின. தன் காரியம் முடிந்தது. கவலை ஒழிந்தது. மந்திரிகளிடத்தில் ராஜ்ய காரியங்களை ஒப்புவித்து, அவர்களை விசாரிக்காமல், ராஜ்ய விருத்தாந்தங்களை ஒன்றுமறியாமல், ஆசைக்கு வசப்பட்டு, மதுபானம் செய்து, மெய்மறந்து, ருமை தாரை முதலிய ஸ்த்ரீகளுடன் இரவு பகலாகக் களித்துக் கொண்டு அந்தப்புரத்தை விட்டு வெளியில் வராமலிருந்தான். ராமனுக்கு பிரதிக்ஞை செய்த சரத்காலம் கிட்டினதையும், ஸுக்ரீவன் அந்த ஞாபகமே இல்லாமல் இருப்பதையும் ஆஞ்ஜநேயர் பார்த்து, வெகு வருத்தமடைந்தார். ராமபக்தர்களில் முதன்மை வாய்ந்தவர் ஆயினும் அரசனுடைய உத்தரவில்லாமல் ராமனுக்குக் கைங்கரியம் செய்ய முடியவில்லை. தான் இருந்த இடத்திலேயே அவரை தியானம் செய்து கொண்டிருந்தார். அவர் புருஷார்த்தங்களின் ரஹஸ்யத்தையும், காலங்களில் செய்யவேண்டிய தர்மங்களையும், ஸமயத்திற்குத் தகுந்தபடி பேசவேண்டிய வார்த்தைகளையும் நன்றாக அறிந்தவராகையால், அப்பொழுது செய்ய வேண்டிய காரியத்தை நிச்சயித்துக்கொண்டு ஸுக்ரீவனிடத்தில்



போய், ஹிதமாகவும், உண்மையாகவும், பிரியமாகவும் ஸாமம், தர்மம், அர்த்தம் நீதி முதலிய குணங்கள் பொருந்தின வார்த்தைகளைச் சொன்னார். ஸுக்ரீவனுக்கு அவரிடத்தில் பிரீதி அதிகம். அவன் இவரை அந்தரங்க மித்திரனாக நினைத்து இவருடைய வார்த்தைகளில் எல்லையற்ற நம்பிக்கை வைத்திருந்தான்.

" தாங்கள் முன்னோர்களின் ராஜ்யத்தையும் எல்லையற்ற கீர்த்தியையும் அடைந்தீர்கள். குலக்கிரமமாக வந்த ஐசுவரியம் விருத்தியாயிற்று. தங்கள் மித்திரர்களுக்குச் செய்யவேண்டிய காரியங்களைச் செய்து அவர்களை வசப்படுத்துவதே பாக்கி. எவன் மித்திரர்களிடத்தில் காலத்தை அறிந்து, அதற்குத் தகுந்தபடி நடந்து கொள்கிறானோ, அவனுக்கே ராஜ்யமும் கீர்த்தியும் பராக்கிரமமும் விருத்தியாக, அவன் க்ஷேமமடைவான். அப்படி நடக்கத் தவறினால், ஸகல அனர்த்தங்களையும் அடைவான். எவனுக்குப் பொக்கிஷம், சேனை மித்திரர்கள் அதிகாரம் குறைவில்லையோ அவனே எல்லையற்ற ராஜ்யத்தை ஆள்வான். தாங்களும் ஸாதுக்களின் ஆசாரத்தைப் பின்பற்றி, உத்தம குணங்களால் அலங்கரிக்கப் பட்டிருக்கிறீர்கள். ஆகையால் தாங்கள் பிரதிக்ஞை செய்தபடி மித்திரர்களின் காரியத்தை முடித்துக்கொடுக்கவேண்டும். எவன் தன் காரியங்களையும் சௌக்யத்தையும் கவனிக்காமல், மித்திரர்களுடைய காரியங்களை முடித்துக் கொடுப்பதில் ஆதரவையும் உத்ஸாஹத்தையும் வெளிப்படுத்துகிறானோ, அவனுக்கு ஒருபோதும் கஷ்டங்கள் நேராது. காலம் தப்பின பிறகு மித்திரர்களின் காரியங்களை முடிப்பதில் முயல்கிறவன் ஸகல காரியங்களையும் ஸாதித்துக் கொடுத்தாலும் உதவி செய்தவனென்று சொல்லமுடியாது. தங்களுடைய மித்திரனான ரகுவீரனுக்கு ஆகவேண்டிய காரியத்தை முடித்துக்கொடுப்பதாக பிரதிக்ஞை செய்து கொடுத்திருக்கிறீர்கள். ஆகையால் இப்பொழுது ஸீதையைத் தேட ஆரம்பிக்கவேண்டும். அதிசீக்கிரமாக இந்தக் காரியத்தை நடத்த வேண்டுமென்று ராமனுக்கு கவலையிருப்பினும், மஹாபுத்திமானும் தங்கள் ஸஹாயத்தை எதிர் பார்ப்பவருமானதால் குறிப்பிட்ட காலத்தை அறிந்தும் அது சென்றுவிட்டதென்று தங்களுக்குத் தெரிவிக்கமாட்டார்; தங்களுடைய குலம் செழிப்பதற்குக் காரணம் அவரே. தங்களிடத்தில் மாருத பிரீதியுடையவர்; எல்லையற்ற சக்தியுடையவர். தாங்களும் நிகரற்ற உத்தம குணங்களால் அலங்கரிக்கப்பட்டவர்கள். தங்களுடைய காரியத்தை அவர் முடித்துக்கொடுத்திருக்கிறார். தாங்களும் அவருடைய காரியத்தை முடிக்கவேண்டும். வானர ஸேனைகளை வரும்படி உத்திரவிடவேண்டும். தாங்கள் ஏற்படுத்தின காலம் செல்லும் வரையில் அவர் தங்களை ஏவமாட்டார்; ஏவினால் குறிப்பிட்ட காலம் தாண்டிவிட்டதென்பது நிச்சயம். தங்களுக்கு உபகாரம் செய்யாதவர்களுக்கும் தாங்கள் உபகாரம் செய்கிறவர்கள். ராஜ்யத்தையும் ஐசுவரியத்தையும் தங்களுக்குக் கொடுத்த

ராமனைப்பற்றிச் சொல்லவும் வேண்டுமோ? எண்ண முடியாத வானர ஸைன்யங்களுக்கு அதிபதியான தாங்கள் ராமனுடைய காரியத்தை முடித்துக் கொடுக்கக்கூடிய சக்தியும் பராக்கிரமமும் வாய்ந்திருந்தும், அப்படி உத்திரவு செய்ய ஏன் தாமதிக்கிறீர்கள்? ராமனுக்குத் தன் பாணங்களால் ஸகல லோகங்களிலுள்ள பிராணிகளையும் வசப்படுத்தும் சக்தியிருந்தும் தங்களுடைய உதவியை விரும்புகிறார். தன் உயிரையும் லக்ஷ்யம் செய்யாமல் தங்களுடைய காரியத்தையும் முடித்தார். ஸீதையைத் தேடிக் கண்டு பிடிக்கிறேன் என்று தாங்கள் உறுதி சொன்னதால் தங்களுடைய உதவியை எதிர்பார்க்கிறார். ஆகையால் பூமியிலும் ஆகாசத்திலும் தேடி ஸீதையைக்கண்டு பிடிப்போம். தேவ யக்ஷ கந்தர்வ அஸுர கணங்களால் அவருக்குப்பயமுண்டோ? ராக்ஷஸர்களைப்பற்றிச் சொல்லவேண்டியதென்ன? தங்களுடைய ஒத்தாசை இல்லாமலேயே ஸகல காரியங்களையும் முடிக்கக்கூடியவர். பிறர் செய்ய முடியாத உபகாரத்தைத் தங்களுக்கு முதலில் செய்தவர். ஆகையால் அவருடைய காரியத்தை எப்படியாவது முடித்துக் கொடுக்கவேண்டும். தாங்கள் உத்தரவிட்டால் எங்களில் எவனுக்கும் பாதாளம், பூமி, ஜலம், மேல் லோகங்கள் எங்கும் போகமுடியாத இடமில்லை. கோடானுகோடி வானர வீரர்கள் தங்களுடைய கட்டளையை எதிர்பார்த்துக்கொண்டிருக்கிறார்கள். அவர்களில் எவன் எந்த வேலை செய்யவேண்டும்? உத்தரவிடுங்கள்'' என்று வணக்கமாகத் தெரிவித்தார். அதைக் கேட்டு ஸுக்ரீவன் மனம் தெளிந்து, மேல் நடக்கவேண்டிய காரியத்தை நிச்சயித்துக் கொண்டு, "தகுந்த காலத்தில் தகுந்தபடி தெரிவித்தாய்'' என்று ஆஞ்ஜநேயரைக் கொண்டாடினான். பிறகு தனக்குப் பிரிய மந்திரியான நீலனை அழைத்து, "ஸகலவிடங்களிலுள்ள வானரர்களெல்லோரும் இங்கே வந்து சேரவேண்டும். ஸேனைக் காவலர்களும் அதிவேகமாய்ச் சென்று என் உத்தரவைத் தெரிவித்து ஸகல ஸைன்யங்களையும் இங்கே அழைத்து வரவேண்டும். பிறகு நீயே அவர்களைப் பரிசோதித்து எண்ணிப்பார்க்கவேண்டும். பதினைந்து நாட்களுக்குள் இங்கே வராதவனைக் கொல்வேன். சிறிதும் ஸந்தேகமில்லை. ஆகையால் நீயும் அங்கதனும் ஜாம்பவான் முதலிய தலைவர்களுக்கு என் கட்டளையைத் தெரிவியுங்கள்'' என்று ஏற்பாடு செய்துவிட்டு அந்தப்புரத்திற்குப் போனான்.

ஹரீம்ஶ்ச வ்ருத்$^3$த$^4$ா நுபயாது ஸாங்க$^3$தே$^3$ா
ப$^4$வாந் மமாஜ்ஞா மதி$^4$க்ருத்ய நிஶ்சிதாம் |
இதி வ்யவஸ்தா$^2$ம் ஹரி புங்க$^3$வேஶ்வரோ
விதா$^4$ய வேஶ்ம ப்ரவிவேஶ வீர்யவாந் ‖ (34)

---



## ஸர்க்கம் 30

# ராமன் ஸுக்ரீவனைக் கோபித்தது

கு$^3$ஹாம் ப்ரவிஷ்டே ஸுக்$^3$ரீவே விமுக்தே க$^3$க$^3$நே க$^4$நை: |
வர்ஷ ராத்ரோஷிதோ ராம: காமஶோகாபி$^4$ பீடி$^3$த: ‖ (1)

மழைக் காலத்தில் ஆசையாலும் சோகத்தாலும் ராமன் பீடிக்கப்பட்டு அந்த நான்கு மாதங்களையும் எப்படியோ கழித்தார். ஸுக்ரீவன் கிஷ்கிந்தையிலிருந்து வெளிக்கிளம்பவில்லை. மேகங்கள் மறைந்து ஆகாசம் வெளுத்தது; சந்திர மண்டலம் களங்கமற்று விளங்கிற்று. சரத்காலத்து ராத்திரியும் நிலவு என்ற வெள்ளைச் சந்தனத்தால் பூசப்பட்டது போலிருந்தது. ஸுக்ரீவன் காம பரவசனாக முயற்சி செய்யாமலிருந்தான். ஸீதையோ ராவணனால் கொண்டு போகப்பட்டு எங்கே இருக்கிறாளென்று தெரியவில்லை. ஸுக்ரீவன் சொன்ன காலம் தாண்டிவிட்டது. அந்த நம்பிக்கையால் இதுவரையில் எப்படியோ கஷ்டப்பட்டுப் பொறுத்துவந்த ராமன், இப்பொழுது அந்த ஆசையும் இல்லாமல் துக்கம் மேலிட்டு மூர்ச்சை அடைந்தார். ஆனாலும் மஹாபுத்திமானாகையால் கொஞ்ச நேரத்தில் பிரக்ஞை தெளிந்து, எப்பொழுதும் தன் மனத்தை விட்டு அகலாத ஸீதையைக் குறித்து பிரலாபிக்க ஆரம்பித்தார். ஸகல தாதுக்களாலும் அலங்கரிக்கப்பட்ட ப்ரஸ்ரவண பர்வதத்தில் உட்கார்ந்து, சரத்காலத்துச் சந்திரனால் விளங்கும் ஆகாசத்தைப் பார்க்கையில் ஸீதையின் ஞாபகம் வந்தது. மேகங்களும் மின்னலும் இல்லாமல் நிர்மலமானதும் அன்னங்களின் ஓசை நிரம்பியதுமான ஆகாயத்தைக் கண்டு விரஹ தாபம் மேலிட்டு, தீனமாக பிரலாபித்தார்.

"ஆசிரமத்தில் ஸாரஸபக்ஷிகளின் ஓசையைக் கேட்டு அவைகளைப்போல் சப்திக்கும் என் ஸீதை இப்பொழுது ராக்ஷஸர்களின் கையில் அகப்பட்டு என்ன துக்கப்படுகிறாளோ? தங்கத்தால் செய்யப்பட்ட பூக்களையுடையவைபோல விளங்கும் வேங்கை மரங்களை என்னுடன் பார்த்து ஸந்தோஷித்த ஸீதை, இப்பொழுது அவைகளைப் பார்த்து என்னைக் காணாமல் எப்படித் தவிக்கிறாளோ? கலஹம்ஸங்கள் கூவுவதால், தூக்கத்திலிருந்து எழுப்பப்பட்ட ஸீதை இப்பொழுது எங்கே தூங்கி எப்படி விழித்துக் கொள்ளுகிறாளோ? தன்னுடன் விளையாடும் சக்கரவாக பக்ஷிகளின் சப்தத்தைக் கேட்டு விரஹம் தாங்காமல் நான் வரும் வழியை ஆவலுடன் எதிர்பார்த்துக்கொண்டிருக்கும் ஸீதை இப்பொழுது என்னை விட்டுப் பிரிந்து எப்படிப் பிழைத்திருப்பாள்? ஆறுகள், ஏரிகள், ஓடைகள், காடுகள், சோலைகள், மலைகள் முதலியவைகளில் நான் எவ்வளவு காலம் ஸஞ்சரித்தாலும் அவளில்லாமல் எனக்கு ஸுகமுண்டாகவில்லை. சரத்காலத்துக் குணங்களால் நிறைந்த மன்மதன்

என்னைப் பிரிந்து வருந்தும் ஸீதையை உயிரோடு வைப்பானா?'' என்று ராமன், சாதகபக்ஷி தாகம் மேலிட்டு நீரை விரும்பி இந்திரனை நோக்கிக் கூறுவது போல் புலம்பி வருந்தினர்.

அப்பொழுது காய்கனிகள் கொண்டுவர மலைத் தாழ்வரைக்குப் போயிருந்த லக்ஷ்மணன் அங்கே வந்தார். ரகுவீரன் தனியாக உட்கார்ந்து தீராக்கவலை கொண்டு மனம் நொந்து, பிரக்ஞை தப்பி இருப்பதைப் பார்த்து, தானும் சொல்லமுடியாத கிலேசத்தை அடைந்து, "ஸ்வாமி! தாங்கள் இப்பொழுது ஆசைக்கு வசப்பட்டுத் தங்களுக்குரிய ஆண்மையை இழந்து ஸீதையைத் தேடும் விஷயத்தில் முயற்சி செய்யாமலிருப்பதால் என்ன பிரயோஜனம்? மனத்தைச் சிதறவிடாமல் தைரியத்தை மேற்கொண்டு எல்லா முயற்சிகளையும் செய்யவேண்டிய காலம் இதல்லவா? காரியத்தில் முயற்சியையும், தெளிந்த மனத்தையும், தைரியமும், உபாயமும் கைகூடும் காலம் வந்ததையும், தங்களுக்கு உதவி செய்வதில் ஸுக்ரீவனுக்குள்ள சக்தியையும், தங்களுடைய தேவதோபாஸனை முதலிய புண்ணிய கர்மத்தால் கிடைத்த பிரயோஜனத்தையும், இப்பொழுது தங்களுடைய காரியத்தை முடித்துக் கொள்வதில் ஸாதனமாக உபயோகிக்க வேண்டும். எப்பொழுதும் தங்களுடன் கூடியிருக்கும் ஸீதையை வேறொருவன் மனத்தாலும் நினைக்க முடியுமா? அக்னி ஜ்வாலையை ஒருவன் தழுவ முயன்றால் எரிக்கப்படாமலிருப்பானா?'' என்று ஹிதமாயும் மதுரமாயும் உண்மையாயும் லக்ஷ்மணன் தெரிவித்தார்.

ரகுநாதன் அதைக் கேட்டு மனம் தேறி, "நீ சொன்னபடி ஸீதையைத் தேடுவதற்கு வேண்டிய முயற்சிகளைச் செய்ய வேண்டும். சத்துருவுடன் யுத்தம் செய்து ஜயிப்பதற்கு வேண்டிய உத்ஸாஹம் சக்தி முதலிய ஸாதனங்களை மேற்கொள்ள வேண்டும். செய்யவேண்டிய காரியமோ மிகவும் கஷ்டமானது. அடையும் பயனோ எல்லாவற்றிற்கும் மேலானது. ஆகையால் நமது எண்ணம் கூடும்படியான உபாயங்களை ஆலோசிக்கவேண்டும்'' என்றுகூறி, ஸீதையின் ஞாபகம் வந்து முகம் வாடிச் சரத்காலத்தை மறுபடியும் வர்ணிக்க ஆரம்பித்தார். "தேவேந்திரன் மேகங்களால் பூமியெங்கும் வர்ஷித்துப் பயிர்களை விருத்தி செய்து தன் வேலையை முடித்துவிட்டான். நீலோத்பலங்களின் இதழ்களைப்போலக் கருத்துத் திக்குத்திசை தெரியாமல் பரவின மேகங்கள், மலைகளின் மரங்களுக்கு மேலும் சென்று மழை பொழிந்த பின், மதம் நீங்கி வேகம் அடங்கிய யானைகளைப்போல் களைத்திருக்கின்றன. மழைக்காற்று காட்டு மலர்களின் பரிமளத்தை வாங்கிக்கொண்டு ஜலத் துளிகளால் குளிர்ந்து வேகமாக அடித்த பின் இப்பொழுது ஓய்ந்தது. மேகங்களும் யானைகளும் மயில்களும் மலையருவிகளும் சப்தமற்றிருக்கின்றன.

"மலைகள் பெரிய மேகங்களின் மழையால் சுத்தமாகி, தாதுக்களின் காந்தியால் விசித்திரமான சந்தனப் பூச்சுகளுடன் விளங்கு



வது போலிருக்கின்றன. யௌவன ஸ்த்ரீகள் தங்கள் பிரிய நாயகர்களுடன் புதிதாகச் சேரும்பொழுது வெட்கத்தால் அங்கங்களை சிறிதேபுலப்படுத்துவதுபோல் (மணல் திட்டுகளை சரத்கால நதிகள், ஜலம் வற்றியபின், சிறிது சிறிதாகப் புலப்படுத்துகின்றன) இப்பொழுது சரத்காலம் தன் அழகை ஏழிலைப் பாலை மரங்களிலும் சந்திர ஸூரிய நக்ஷத்திரங்களின் காந்தியிலும், உத்தம கஜங்களின் விளையாட்டிலும் பிரித்துக் காட்டுகிறது. இப்படி அநேக பதார்த்தங்களில் விளங்கும் சரத்காலத்தின் அழகு, இப்பொழுது ஸூரிய கிரணங்களால் எழுப்பப் பட்டு மலர்ந்த தாமரை ஓடைகளில் அதிகமாக விளங்குகிறது.

ஏழிலைப் பாலைமலர்களின் மணத்தை வாங்கிக்கொண்டு வண்டுக் கூட்டங்களின் ஓசையுடன் கலந்து வீசும் காற்று, யானைகளின் மதத்தை வளர்க்கின்றது. அன்னங்களும் சக்ரவாகங்களும் மழைக்காலத்தில் பல இடங்களுக்குப் போய் இப்பொழுது திரும்பி வந்து, ஸந்தோஷத்தால் இறக்கைகளை விரித்துக்கொண்டு தாமரைத் தூளிகள் படிந்து ஆற்றின் மணல் திட்டுகளில் விளையாடுகின்றன. மதங்கொண்ட யானைகளிடத்திலும் கொழுப்படைந்த காளைகளிடத்திலும் தெளிந்த ஜலமுள்ள ஆறுகளிடத்திலும் சரத்கால அழகு நன்கு காணப்படுகிறது. மயில்கள் மேகங்களற்ற ஆகாசத்தைப் பார்த்து, தங்களுக்கு ஆபரணமான தோகைகளை உதிர்த்து, அழகற்று பெண் மயில்களிடத்தில் ஆசையொழித்து கவலைகொண்டிருக்கின்றன. இனிய வாஸனையுடன் புஷ்பங்களின் பாரத்தால் தலைவணங்கிய தங்கவர்ணமுள்ள வேங்கை மரங்களால் வனமெங்கும் பிரகாசிக்கிறது. தாமரைகளில் ஆசைவைத்து ஏழிலைப்பாலை மலர்களின் வாஸனையால் மதங்கொண்டு பெண்யானைகளுடன் காடுகளில் ஆனந்தமாக ஸஞ்சரித்துக் கொண்டிருந்த யானைகளின் நடை மெதுவாக இருக்கிறது. ஆகாசம் மேகங்களற்றுத் தீட்டின ஆயுதம்போல் பிரகாசிக்கிறது. ஆறுகளில் ஜலம் வற்றி மெதுவாக ஓடுகிறது. செங்கழுநீர் மலர்களின் வழியாகக் காற்று குளிர்ச்சியுடன் அடிக்கிறது. திக்குகள் இருள் நீங்கி விளங்குகின்றன. பூமியிலுள்ள சேறுகள் ஸூரிய கிரணங்களால் உலர்ந்து புழுதி கிளம்புகிறது. அரசர்கள் பகையும் பொறுமையும் மேலிட்டு யுத்தம் தொடங்குகிறார்கள். சரத்கால குணங்களால் தேககாந்தி மிகுந்து, மகிழ்ந்து புழுதிபடிந்த தேகங்களுடன் காளைகள் கொழுப்படைந்து, ஒன்றிற்கொன்று சண்டையிட விரும்பிப் பசுக்களுக்கு நடுவில் கத்துகின்றன. ஆசை மேலிட்டு மெள்ள மெள்ளக் காடுகளில் ஸஞ்சரிக்கும் மதயானையைப் பெண்யானைகள் ஆசையுடன் சூழ்ந்து செல்லுகின்றன. மயில்கள் தங்களுக்கு ஆபரணமான தோகைகளை உதிர்த்துவிட்டு ஆற்றங்கரைக்குப் போய் அன்னங்களால் துரத்தப்பட்டவைபோல் கொழுப்பு அடங்கி தீனமாக நடக்கின்றன. நீர்ப் பறவைகள் பயந்தோடும்படி யானைகள் கர்ஜித்துக்கொண்டு

தாமரைகளால் விளங்கும் ஓடைகளின் ஜலத்தைக் கலக்கிக் கலக்கிக் குடிக்கின்றன.

ஆறுகளில் ஜலம் சேறில்லாமல் தெளிவாக ஓடுகிறது. மணல் திட்டுகள் நடுவில் தெரிகின்றன. பசுக்கூட்டங்கள் கரைகளில் மேய்கின்றன; ஸாரஸ பக்ஷிகள் மதுரமாக ஒலிக்கின்றன. அன்னங்கள் ஆசையுடன் இங்கே வந்து தங்குகின்றன. ஆறுகளிலும் மேகங்களிலும் மலையருவிகளிலும் பெருங் காற்றிலும், மயில் கூட்டங்களும் தவளைகளும் இருக்குமிடங்களிலும் இப்பொழுது சத்தம் ஓய்ந்துவிட்டது. பலவர்ணமுள்ள ஸர்ப்பங்கள் மழைக் காலத்தில் புற்றில் ஆகாரமின்றி படுத்திருந்தன. இப்பொழுது தேகம் மெலிந்து பசி மிகுந்து கோபத்தால் சீறிக்கொண்டு கோரமான விஷத்துடன் புற்றிலிருந்து கிளம்பி இரை தேடுகின்றன. ஸந்தியை என்ற ஸ்த்ரீ தன் நாயகனுன சந்திரனுடைய கிரணங்களாகிய கைகள் தன் தேகத்தில் பட்டவுடன் ஆனந்தம் மேலிட்டு நக்ஷத்திரங்களென்ற கண்கள் மலர்ந்து, ஆசை மிகுந்து தானே அம்பரத்தை (ஆகாசத்தை அல்லது வஸ்திரத்தை) விடுகிருள். ராத்திரி என்ற ஸ்த்ரீ சந்திரனென்ற அழகிய முகத்தையும் நக்ஷத்திரங்களென்ற நேத்திரங்களையும் நிலவு என்ற வெண்பட்டையும் உடையவளாகி விளங்குகிருள். முதிர்ந்த நெல் கதிர்களை அன்னங்கள் மூக்கில் எடுத்துக்கொண்டு அதிவேகமாக ஆகாசத்தில் பறந்து போகும் பொழுது, காற்றுல் அசைக்கப்பட்ட பூமாலையைப்போல் விளங்குகின்றன. மேகங்களற்று நக்ஷத்திரங்கள் நிறைந்து பூரண சந்திரனுடன் விளங்கும் ஆகாயத்தைப்போல் பெரிய மடுவிலுள்ள ஜலம், தூங்குகின்ற ஒரு அன்னத்தினுலும் மலர்ந்த குமுத புஷ்பங்களாலும் விளங்குகிறது. ஆபரணங்களால் அலங்கரிக்கப்பட்ட யௌவன ஸ்த்ரீகளைப் போல், ஓடைகள் அன்னங்களென்ற அரைநூல் மாலையாலும் மலர்ந்த தாமரை குமுதம் கல்ஹாரம் முதலிய புஷ்பங்களாலும் சோபிக்கின்றன. தயிர் கடையும் சத்தம், கன்றுகளுக்காகப் பசுக்கள் செய்யும் ஒலி, ஆசை மிகுந்த காளைகளின் கர்ஜனை, விடியற்காலையில் இடையர்களின் புல்லாங்குழல் ஓசை என்ற இவையாவும் காலைக்காற்றினுல் ஒன்று சேர்ந்து ஒலிக்கின்றன. ஆற்றங்கரைகளில் வெளுத்த நாணல் புஷ்பங்கள் காற்றுல் மெதுவாக அசைக்கப்படும்பொழுது, அவை வெண்பட்டு அணிந்த ஸ்த்ரீகளின் உடல்போல் விளங்குகின்றன. வனங்களிலுள்ள வண்டுகள் தேனைக்குடித்து மகிழ்ந்து மதங்கொண்டு, தம் மனைவியருடன், காற்றைப் பின்தொடர்ந்து, தாமரை வேங்கை இம்மலர்களின் தூளிகள் படிந்து பறந்து போகின்றன. ஜலம் தெளிந்திருக்கிறது; ஆம்பல்கள் மலர்ந்தன; நெற்பயிர்கள் கதிர் பழுத்திருக்கின்றன; கிரௌஞ்ச பக்ஷிகள் கூவுகின்றன; காற்று மிருதுவாக அடிக்கிறது. சந்திரன் நிர்மலமாக இருக்கிருன். இந்த அடையாளங்களால் மழைக்காலம் சென்று சரத்காலம் ஆரம்பித்து விட்டதென்று தெரிகிறது. நாயகர்களுடன் கூடிக் கலந்து விடியற்காலையில் களைப்பால் மெதுவாக நடந்துபோகும் வேசியா ஸ்த்ரீகளைப்போல், நதிகள் என்ற பெண்கள் மீன்களென்ற அரைநூல் மாலைகளுடன் மெதுவாக ஓடுகின்றன.



“நதிகளின் முகங்கள் சக்கரவாகங்களென்ற கோரோசனைத் திலகத்தாலும் வேலம்பாசி என்ற மகரிகா பத்திரத்தாலும், நாணல் புஷ்பங்களென்ற வெண்பட்டாலும், அலங்காரம் செய்துகொண்ட ஸ்த்ரீகளைப் போலிருக்கின்றன. (ஸ்த்ரீகள் முகத்தில் மீனைப் போலும் இலைகளைப்போலும் வரிகளை எழுதி அலங்கரித்துக் கொள்வது வழக்கம். இதனை மகரிகா பத்ரம் என்பர்). மலர்ந்த புஷ்பங்களாலும் வண்டுகளின் சப்தத்தாலும் விளங்கும் காட்டில் மன்மதன் வில்லையும் பாணங்களையும் தரித்துக்கொண்டு வெகு உக்கிரமாக ஸஞ்சரிக்கிருன். மேகங்கள் மழையால் பூமியை ஸந்தோஷப்படுத்தி ஆறுகளையும் ஏரிகளையும் நிரப்பி, பயிர்களைச் செழிக்கச்செய்து வானத்திலிருந்து மறைந்தன. தெளிந்த நதியின் ஜலம் சக்கரவாகங்கள் நிறைந்து அன்றில் பக்ஷிகளின் கூட்டங்களால் சப்திக்கிறது. மலைத்தாழ்வரைகளில் ஏழிலைப்பாலை, வேங்கை முதலிய மரங்களும் செம்பருத்தி முதலிய செடிகளும் மலர்ந்த புஷ்பங்களால் விளங்குகின்றன. ஆற்றில் மணல் திட்டுகள் அன்னம் சக்கரவாகம் முதலிய பக்ஷிகளால் மறைந்திருக்கின்றன. அரசர்கள் ஒருவர்க்கொருவர் பகை மேலிட்டுப் படையெடுத்துச் செல்லும் காலம் வந்துவிட்டது.

“இப்படியிருக்க, ஸுக்ரீவனும் வரவில்லை; எனக்காக அவன் செய்த முயற்சியும் தெரியவில்லை. சக்கரவாகப் பக்ஷி தன் நாயகனை பிரியத்துடன் பின்தொடர்வதைப்போல், கோரமான தண்டகாரண்யத்தைப் பூந்தோட்டம்போல் நினைத்து நான் எவ்வளவு தடுத்தும் கேட்காமல் என்னுடன் வந்த ஸீதையைக் காணுமல் சோகத்தால் தவிக்கும் எனக்கு, இந்த நான்கு மழைக்காலத்து மாதங்களும் பல நூறு வருஷங்களைப்போல் கழிந்தன. ராஜ்யத்திலிருந்து துரத்தப்பட்டு பிரியநாயகியை விட்டுப் பிரிந்த துக்கத்தால் வாடும் என்னிடத்தில் ஸுக்ரீவ மஹாராஜாவுக்கு தயவு பிறக்கவில்லை. 'இவன் ராஜ்யத்தை இழந்தவன், கதியற்றவன், தீனன், ஸீதையிடத்தில் மிகுந்த ஆசை வைத்திருந்தவன்; ராவணனுடன் பகைத்திருக்கிருன்; அயோத்யையைவிட்டு வெகு தூரத்தில் இருக்கிருன்; என்னையே சரணமடைந்திருக்கிருன்'' என்று நினைத்துத் துராத்மாவான இந்த வானரராஜன் என்னை அவமானம் செய்கிருன். 'ஸீதையைத் தேடிக் கண்டுபிடிக்கிறேன்' என்று என்னிடத்தில் பிரதிக்ஞை செய்து, தன் காரியத்தை முடித்துக்கொண்டு குறிப்பிட்ட ஸமயம் கடந்ததை அறியாமலிருக்கிருன். நீ கிஷ்கிந்தைக்குப்போய், அல்ப ஸுகங்களில் மூழ்கியிருக்கும்

அந்த மூடனிடத்தில் நான் இப்படிச் சொன்னதாகத் தெரிவி. 'முன்பு உபகாரம் செய்தவர்கள் ஆபத்திற்குள்ளாகி ஒத்தாசை செய் என்று பிரார்த்திக்கும்பொழுது அப்படியே செய்கிறேன் என்று அவர்களுக்குப் பிரதிக்ஞை செய்து ஆசைகாட்டி, பிறகு அப்படிச் செய்யாமல் அவர்களுடைய மனத்தை வருத்தப்படுத்துகிறவன் மிக இழிந்தவனாவான். பாபமோ புண்ணியமோ தான் சொன்ன வார்த்தையை நிறைவேற்றுகிறவன் மனிதர்களில் சிறந்தவன். தங்களுக்கு உபகாரம் செய்த மித்திரர்களுக்கு பிரதி உபகாரம் செய்யாத நன்றியற்றவர்களை, இறந்தபிறகு கழுகு நரி முதலிய அசுத்த ஜந்துக்களும் தொடாது" என்று சொல் யுத்தத்தில் கோபங்கொண்டு தங்கத்தால் அலங்கரிக்கப்பட்ட கோதண்டத்தை வளைத்துப் பேரிடிபோல் நான் நாணோசை செய்வதை மறுபடியும் பார்க்க அவனுக்கு ஆசையுண்டோ? என் பராக்கிரமம் நன்றாக அவனுக்குத் தெரிந்திருக்கும். நீ எனக்கு உதவி செய்பவன் என்பதையும் மறந்து, கொஞ்சமாவது அவன் விசாரமற்றிருப்பது என்ன ஆச்சரியம்! நான் அவனுடன் ஸ்நேஹம் செய்ததும் வாலியைக் கொன்றதும் ஸீதையைத் தேடுவதில் அவன் ஒத்தாசை செய்வதற்கே என்பதை இப்பொழுது முற்றிலும் மறந்துவிட்டான். அவனுடைய காரியம் முடிந்து விட்டதல்லவா? மழைக்காலம் முடிந்தவுடன் ஸீதையைத் தேடுகிறேனென்று பிரதிக்ஞை செய்து, இப்பொழுது காம போகங்களில் மூழ்கி, அந்த நான்கு மாதங்களும் சென்றதை அறியவில்லையல்லவா? மந்திரிகளோடும் பந்துக்களோடும் ஆனந்தமாக மதுபானம் செய்துகொண்டிருக்கிறான். சோகத்தால் வாடும் நம்மிடத்தில் அவனுக்குத் தயை பிறக்கவில்லை.

"குழந்தாய்! ஸுக்ரீவனிடத்திற்குப் போய் என் கோபத்தையும் ஸ்வரூபத்தையும் பிரயோஜனத்தையும் நன்றாய்த் தெரிவித்து, "என் பாணத்தால் அடிபட்டு யமலோகத்திற்கு வாலி போன வழி இன்னும் திறந்தே இருக்கிறது. ஸுக்ரீவ! செய்த பிரதிக்ஞையை நிறைவேற்று. வாலிபோன வழியில் நீயும் போகாதே. முன்பு வாலி ஒருவனையே ஒரு பாணத்தால் கொன்றேன். நீ செய்த பிரதிக்ஞையைத் தவறினால் உன்னையும் உன் பந்துக்களையும் வேரறுப்பேன்" என்று சொல். மேலும் இந்த ஸமயத்தில் எது ஹிதமோ அதையும் சொல். காலம் செல்கிறது. சீக்கிரமாகப் போ. 'வானராதிபதியே! அழியாத தர்மத்தை மனத்தில் வைத்துக்கொண்டு எனக்குச் செய்த பிரதிக்ஞையை நிறைவேற்று. என் பாணங்களுக்கு இரையாகி யமலோகத்திற்குப் போய் வாலியைப் பார்க்காதே' என்று அந்த மூடனுக்கு நான் சொன்னதாகச் சொல்" என்றார்.

இப்படித் தன் அண்ணன் வர வரக் கோபம் மிகுந்து தீனமாகப் பிரலாபிப்பதைக் கேட்டு, பயங்கரமான தேஜஸையுடைய லக்ஷ்மணன் ஸுக்ரீவனைக் கடுமையாகச் சிக்ஷிக்கவேண்டுமென்று நிச்சயித்தார்.



ஸ பூர்வஜம் தீவ்ர விவ்ருத்$^3$த$^4$ கோபம்
லாலப்யமாநம் ப்ரஸமீக்ஷ்ய தீ$^3$நம் |
சகார தீவ்ராம் மதி மு$^3$க்ரதேஜா:
ஹரீஸ்வரே மாநவ வம்ஶநாத$^2$: ‖ (58)

---

## ஸர்க்கம் 31

## லக்ஷ்மணன் வருவதை ஸுக்ரீவன் அறிந்தது

ஸ காமிநம் தீ$^3$ந மதீ$^3$நஸத்வம்
ஶோகாபி$^4$பந்நம் ஸமுதீ$^3$ர்ண கோபம் |
நரேந்த்$^3$ர ஸூநுர் நரதே$^3$வ புத்ரம்
ராமாநுஜ: பூர்வஜ மித்யுவாச ‖ (1)

இப்படி ராமன் விரஹதாபத்தால் மெலிந்து கோபங்கொண்டு உத்தரவு செய்ததைக் கேட்டு, லக்ஷ்மணன், "ஸ்வாமி, ஸுக்ரீவனோ குரங்கு. ஸன்மார்க்கத்தில் நடக்கவேண்டுமென்ற ஸ்திர புத்தியற்றவன். இதைச் செய்தால் இது விளையுமென்று அறிய முடியாதவன். அக்னி ஸாக்ஷியாக உம்முடன் செய்துகொண்ட ஸ்நேகத்தால் பாரியையும் வானர ராஜ்யமும் கிடைத்தன என்று அறியாதவன். இந்த ஐசுவரியத்தை நெடுங்காலம் அனுபவிக்க மாட்டான். நமது காரியத்தில் இவனுக்கு எப்பொழுதாவது கவலையுண்டாகவில்லை யல்லவா? புத்தியில்லாதவனாகையால் அல்ப ஸுகங்களில் முழுகியிருக்கிறான். தங்களுடைய கிருபையால் ராஜ்யமும் ஸகல ஐசுவரியங்களும் தனக்குக் கிடைத்ததென்றும், தான் அதற்குப் பதில் உபகாரம் செய்ய வேண்டுமென்றும் இவனுக்கு இன்னும் தெரியவில்லையே. ஆகையால் இவனைக் கொன்று வாலியைச் சேரும்படி அனுப்புங்கள். இந்தத் துராத்மாவிற்கு ராஜ்யம் கொடுத்தது பிசகு. எனக்குக் கோபம் பொங்குகிறது. அடக்கமுடியவில்லை. ஸத்தியம் தவறின அந்தப் பாபியை இப்பொழுதே கொல்வேன். தாரையும் அங்கதனும் வானரர்களைக் கொண்டு ஸீதையைத் தேடட்டும்" என்று கூறி ஆயுதபாணியாக மஹா கோபத்துடன் லக்ஷ்மணன் புறப்பட்டதைப் பார்த்து ராமன், ஐயோ! என் வார்த்தைகளை உண்மையென்று எண்ணி, இவன் ஸுக்ரீவனை இப்பொழுதே கொன்றுவிடுவானே" என்று பயந்து வருத்தப்பட்டு தன் எண்ணத்தைத் தெளிவாகவும் சாந்தமாகவும் தெரிவித்தார். (தன் பக்தர்களுக்கு விரோதிகளை அழிக்கப் பகவான் அவதாரம் செய்தாரே அல்லது தன்னை அண்டியவர்களைக் கொல்லவா?) "லக்ஷ்மணா! இந்த லோகத்தில் உன்னைப்போல் இப்படிக் கோபத்திற்கு இடம் கொடுத்து கோரமான பாபத்தைச்

செய்யத் துணிகிறவன் உண்டோ? மித்திரனைக் கொல்வதென்ற பாபத்திலிருந்து எவன் தெளிவான விவேகத்தால் விலகுகிறானோ அவனே புருஷோத்தமன். அவனே நிஜமான வீரன். ஸுக்ரீவனைக் கொல்வது நன்மை என்று எண்ணாதே. முன்பு அவனிடத்தில் நாம் செய்த ஸ்நேஹத்தையும் விசுவாஸத்தையும் நினைத்து பிரீதியுடன் நடக்கவேண்டும். கடுமையான வார்த்தைகளை விட்டு மிருதுவாக 'ஸுக்ரீவா! நீ குறிப்பிட்ட காலம் சென்றுவிட்டதல்லவா' என்று ஸமாதானமாகச் சொல்'' என்று சொல்லி போக உத்தரவு கொடுத்தார். லக்ஷ்மணனும் சொல்ல வேண்டிய விஷயங்களை நன்றாகத் தெரிந்துகொண்டு கிஷ்கிந்தையை நோக்கிப் புறப்பட்டார். மஹாபுத்திமான்; சுபமான யோசனையையுடையவர். அண்ணனுடைய க்ஷேமத்தையே எப்பொழுதும் கோரினவர்; ராமனுடைய ஆக்ஞையைத் தவறாமல் நடத்துகிறவர். அவருடைய கோபத்தால் தானும் கோபமடைந்து, இந்திர தனுஸைப் போன்றும் மலைச் சிகரம் போன்றும் இருந்த கோதண்டத்தைக் கையில் பிடித்துக் காலாந்தகனைப்போலும் உன்னதமான சிகரங்களுள்ள மந்தரகிரியைப்போலும் விளங்கினார். தான் சொல்லவேண்டிய வார்த்தைகளையும், ஸுக்ரீவன் சொல்லும் ஸமாதானத்தையும், தான் அதற்குச் சொல்லவேண்டிய பதிலையும் யோசித்துக் கொண்டே போனார். புத்தியில் பிருஹஸ்பதியைப் போன்றவரல்லவா? வழியிலிருக்கும் மஹாவிருக்ஷங்களைப் பெருங் காற்றைப்போல் முறித்தும், மலைச்சிகரங்களைப் பெயர்த்தும் கற்பாறைகளைப் பொடி செய்துகொண்டும் கடும் வேகமாக மதயானையைப்போல் நடந்து போனார்.

கொஞ்ச நேரத்திற்குள் மலைகளுக்கு நடுவில் வானர சேனைகளால் காக்கப்பட்டு சத்துருக்கள் நெருங்கமுடியாத கிஷ்கிந்தையைக் கண்டார். ஸுக்ரீவனிடத்திலுள்ள கோபத்தால் உதடுகள் துடிதுடிக்க, பயங்கரமான வானரர்கள் கிஷ்கிந்தைக்கு வெளியில் நடமாடுவதை இளையபெருமாள் பார்த்தார். அவர்கள் கடுமையான கோபத்துடன் லக்ஷ்மணன் வருவதைக் கண்டு ஸுக்ரீவனுடன் அவர் யுத்தம் செய்ய வருகிறாரென்று நினைத்து, மலைச் சிகரங்களையும் பெரிய மரங்களையும் எடுத்துக்கொண்டு யுத்தம் செய்யப் புறப்பட்டார்கள். அதைப்பார்த்து உலர்ந்த விறகுகளால் வளர்க்கப்பட்ட அக்னியைப்போல் லக்ஷ்மணனுக்குக் கோபம் அதிகரித்தது. கால மிருத்யுவைப்போல் கோபத்தால் ஜ்வலிக்கும் அந்த மஹாவீரனைப் பார்க்க முடியாமல் அந்தக் குரங்குகள் பயந்து நடுங்கி மூலைக்குமூலை ஓடி ஒளிந்துகொண்டன. சிலர் அதிவேகமாக ஸுக்ரீவனுடைய அரண்மனைக்குப் போய் லக்ஷ்மணன் மஹாகோபத்துடன் வருவதைத் தெரிவித்தார்கள். ஆனால் அந்த வானரராஜன் தாரையுடன் தனிமையில் விளையாடிக்கொண்டிருந்ததால் அவர்கள் சொன்ன வார்த்தையைக் கவனிக்கவில்லை. பிறகு மந்திரிகள் வானர வீரர்களை நகரத்திற்கு வெளியில் அனுப்பிக் கோட்டையைக் காக்கும்படி உத்தரவு செய்தார்கள். அவாகள் பார்க்கப் பயங்கரமானவர்கள்; மதயானையையும் மஹா மேகங்களையும் பெரிய மலைகளையும் போன்றவர்கள்; நகங்களாலும் பற்களாலும் யுத்தம் செய்கிறவர்கள்; குரூரமான பார்வையை உடையவர்கள்; ஸிம்ஹம் புலி முதலிய துஷ்ட மிருகங்களின் கொழுப்பையுடையவர்கள்; பத்து நூறு ஆயிரம் யானைகளின் பலத்தை முறையே உடையவர்கள். இப்படி மஹாபலசாலிகளான வானரர்கள் பெரிய மரங்களுடன் நகரத்தைச் சூழ்ந்து நிற்பதையும் ஸுக்ரீவன் அலக்ஷ்யமாக இருப்பதையும் ராமன் சோகப்படுவதையும் நினைத்து, லக்ஷ்மணன் கோபத்தால் மெய் மறந்து கண்கள் சிவக்க உஷ்ணமாகப் பெருமூச்சு விட்டுக்கொண்டு, புகையும் நெருப்பைப்போல் பார்க்கப் பயங்கரமானார். பாணங்களின் முனைகளை நாக்காகவும் கோதண்டத்தை உடலாகவும், தேஜஸைக் கொடிய விஷமாகவும் உடைய ஐந்து தலை நாகம்போல் விளங்கி, அதிவேகமாக நகரத்திற்கருகில் வந்தார்.

காலாக்னியைப்போல் ஜ்வலித்துக்கொண்டும், நாகேந்திரனைப் போல் சீறிக்கொண்டும் வரும் லக்ஷ்மணனை அங்கதன் பார்த்து, 'ஐயோ! இவர் வரும் ஸமயத்திலா ஸுக்ரீவன் மெய்மறந்திருக்க வேண்டும்! இப்பொழுது இருக்கும் ஸ்திதியில் இளையபெருமாளை இன்னாரென்று அறியாமல் அலக்ஷ்யம் செய்வாரே'' என்று மிகுந்த துக்கத்தை அடைந்தான். அப்பொழுது லக்ஷ்மணன் அங்கதனை அழைத்து, "குழந்தாய்! ரகுவீரனுடைய தம்பி லக்ஷ்மணன் உன்னைப் பார்க்க வந்திருக்கிறான். தமயன் படும் வருத்தத்தால் தவித்துக் கொண்டு கோட்டை வாசலில் நிற்கிறான். அவருடைய வார்த்தையில் உனக்கு ஏதாவது சிரத்தையிருந்தால் நீ அவரையாவது இங்கே அழைத்து வா. அல்லது நீயாவது அங்கே போ. என்று ஸுக்ரீவனிடம் சொல்: சொல்லியபின் இங்கே வா'' என்று கூறினான். அதைக் கேட்டு அங்கதனும் சோகமடைந்துவிரைவாக அந்தப்புரத்தில் புகுந்து, ஸுக்ரீவனையும் தாரையையும் ருமையையும் நமஸ்கரித்து முகம் வாடிப் பரபரப்புடன் நடந்ததைத் தெரிவித்தான். ஸுக்ரீவனோ மதுபானத்தாலும் ஆசையாலும் தூக்கத்தாலும் மெய்மறந்து அங்கதன் சொல்வதை அறிய முடியவில்லை. அங்கதன் சீக்கிரமாகத் திரும்பிவராததால் லக்ஷ்மணன் கடுங்கோபங்கொண்டு கோட்டைக்குள் நுழையப்போவதைக்கண்டு, அங்குள்ள வானரர்கள் பயந்து நடுங்கி, நல்ல வார்த்தைகளைச் சொல்லி ஸமாதானம் செய்தார்கள். என்ன செய்வாரோ என்று சிலர் கூச்சலிட்டார்கள். இடிபோல் கர்ஜித்துப் பெரும் வெள்ளத்தைப்போல் வேகமாக வரும் லக்ஷ்மணனைப் பார்த்துச் சிலர் ஸிம்ஹநாதம் செய்தார்கள்.

அந்தப் பெரும் சப்தத்தால் ஸுக்ரீவன் விழித்துக்கொண்டு, மாலைகளும் ஹாரங்களும் நழுவ, மயக்கத்தால் கண்கள் சுழலப் படுக்கையைவிட்டு மெள்ள எழுந்தான். அங்கதன் அப்பொழுது

ஓடி, அரசனுக்கு மிகவும் பிரியமுள்ள மந்திரிகளான ப்லக்ஷன் ப்ரபாவனென்றவர்களை அழைத்து வந்தான். அவர்கள் அந்தப்புரத்து ஸ்த்ரீகளைப் பார்க்கக் கூடியவர்கள். எல்லா விஷயங்களிலும் அரசனுக்கு ஹிதத்தையே உபதேசிக்கிறவர்கள். அவர்கள் உள்ளே போய், "ஏதோ ஒரு விஷயத்தைப் பேச விரும்பி லக்ஷ்மணன் வந்திருக்கிறார்" என்று ஸுக்ரீவனுக்குத் தெரிவித்தார்கள். பிறகு, தேவேந்திர போகங்களை அனுபவிக்கும் அந்த வானர ராஜனைப் பலவிதமாகப் புகழ்ந்து தேற்றி, "ராம லக்ஷ்மணர்களென்ற ராஜகுமாரர்கள் தங்களுடன் ஸ்நேஹம் செய்திருக்கிறார்களென்பது ஞாபகத்திலிருக்கலாமே. அவர்கள் ஸத்தியம் தவறாதவர்கள்; மஹானுபாவர்கள்; இந்த பூமண்டலத்தை ஆளத் தகுந்தவர்கள்; தங்களுக்குச் சத்துருவான வாலியைக் கொன்று, வானர ராஜ்யத்தைத் தங்களுக்குக் கொடுத்தார்கள். அவர்களில் ஒருவரான லக்ஷ்மணன் கோட்டை வாசலில் வந்திருக்கிறார். அவரைக் கண்டு பயந்து நமது வானரர்கள் கூச்சலிடுகிறார்கள். ராமனுடைய உத்தரவால் அவருடைய அபிப்பிராயத்தைத் தங்களுக்குத் தெரிவிக்க அவர் இங்கே வந்திருக்கிறார். அவர் சத்துருக்களை வேரறுத்துத் தன் காரியத்தை முடித்துக்கொள்ளக்கூடியவர் தாரா புத்திரனான அங்கதனைத் தங்களிடத்திற்கு அதிவேகமாய் அனுப்பினவர் அவரே. அந்த மஹாவீரன் கோபத்தால் கண்கள் சிவந்து, வானரர்களைத் தன் பார்வையால் எரித்துக்கொண்டு, கோட்டை வாசலில் நிற்கிறார். ஆகையால் தங்கள் புத்திர மித்திர பந்துக்களுடன் உடனே அவரிடத்திற்குப் போய் ஸாஷ்டாங்கமாக நமஸ்காரம் செய்து அவருடைய கோபத்தைத் தணியச் செய்யுங்கள். மஹாராஜா! தாங்கள் செய்த பிரதிக்ஞை தவறலாமா? முன் செய்த ஏற்பாட்டின் படி நடவுங்கள். ராமனுடைய ஆக்ஞையை எப்படியாவது ஸாவதானமாக நிறைவேற்றவேண்டும்" என்று பிரார்த்தித்தார்கள்.

*யதா3ஹ ராமோ த4ர்மாத்மா தத் குருஷ்வ ஸமாஹித: |*
*ராஜம்ஸ் திஷ்ட2 ஸ்வஸமயே ப4வ ஸத்ய ப்ரதிஶ்ரவ: ||* (56)

---

## ஸர்க்கம் 32

# மாருதி ஸுக்ரீவனுக்கு ஹிதத்தை உபதேசித்தது

*அங்க3த3ஸ்ய வச: ஶ்ருத்வா ஸுக்3ரீவ: ஸசிவை: ஸஹ |*
*லக்ஷ்மணம் குபிதம் ஶ்ருத்வா முமோசாஸந மாத்மவாந் ||* (1)

லக்ஷ்மணன் கோபித்துக் கொண்டிருக்கிறாரென்று அங்கதனும் மந்திரிகளும் சொல்லக் கேட்டு, ஸுக்ரீவன் மிகவும் பயந்து, பரபரப்புடன் ஆஸனத்தை விட்டெழுந்து, ராமானுஜனை எப்படி ஸமாதானம் செய்கிறதென்று யோசித்து, ஆலோசனையில் மிகவும் ஸமர்த்தர்களான மந்திரிகளைப் பார்த்து, "நான் அவர்கள் விஷயத்தில் அயுக்தமாய்ப் பேசவுமில்லை, நடந்துகொள்ளவுமில்லை. அப்படியிருக்க, லக்ஷ்மணன் என்னிடத்தில் கோபம்கொள்வதற்குக் காரணமென்ன என்று கவலைப்படுகிறேன். ஒரு வேளை என் சத்துருக்கள் எனக்குக் கெடுதி செய்ய எண்ணி, என்னிடத்தில் இல்லாத தோஷங்களைக் கல்பித்து, லக்ஷ்மணனுக்குக் கோபமுண்டாகும்படி செய்திருக்கிறார்களோ? இந்த விஷயத்தில் நீங்களெல்லோரும் கிரமப்படி உங்களுடைய புத்திக்கு எட்டியவரையில் அவர் கோபிப்பதற்குக் காரணத்தை அறிந்து சீக்கிரமாகச் சொல்லவேண்டும். ராமனிடத்திலாவது லக்ஷ்மணனிடத்திலாவது நான் பயப்படுவதற்கு யாதொரு காரணமும் இல்லை. ஆனால் எனக்குப் பரம மித்திரனான ராகவன் காரணமில்லாமல் கோபித்ததைப் பற்றிக் கவலையாக இருக்கிறது. மித்திரர்களை ஸம்பாதிப்பது சுலபம்; பிறகு அந்த ஸ்நேஹம் அழியாமல் காப்பாற்றுவது ஸுலபமல்ல. மனிதர்களின் சித்தம் அடிக்கடி மாறும்; அல்ப விஷயத்திலும் ஸ்நேஹம் அழியும். ராமன் எனக்குச் செய்த ஒப்பற்ற உபகாரத்திற்குப் பதில் செய்ய முடியவில்லையே என்பதற்கு வருந்துகிறேன்" என்று தன் எண்ணத்தை வெளியிட்டான்.

அப்பொழுது ஹனுமான் அவன் சொன்ன விஷயத்தை நன்றாக ஆலோசித்து, "ஸ்வாமி! மித்திரன் செய்த உபகாரத்தைத் தாங்கள் மறக்காதிருப்பது ஆச்சரியமல்ல. அது தங்களுக்கு ஸ்வபாவமே. மஹா வீரரான ராமன் தங்களுடைய பிரார்த்தனைக்கிணங்கி இந்திரனுடைய பராக்கிரமத்தையுடைய வாலியைப் பயமில்லாமல் கொன்றார். எப்படி யோசித்தாலும் அவர் தங்களிடத்தில் வைத்த ஸ்நேஹத்தால் கோபிக்கிறாரே அல்லாது துவேஷத்தால் அல்ல என்று தெரிகிறது. இப்பொழுது மழைக்காலம் சென்று சரத்காலம் நடக்கிறது. ஏழிலைப்பாலை மரங்கள் மலர்ந்த புஷ்பங்களால் விளங்குகின்றன. ஆகாசத்தில் மேகங்கள் மறைந்து கிரஹங்களும் நக்ஷத்திரங்களும் தெளிவாக விளங்குகின்றன. திக்குகளும் ஆறுகளும் ஏரிகளும் நிர்மலமாக இருக்கின்றன. சத்ருக்களின்மேல் படையெடுத்துச் செல்லவேண்டிய காலம் வந்துவிட்டதைத் தாங்கள் அறியவில்லை. இப்படி அஜாக்கிரதையாய் இருப்பதைத் தெரிவிக்க லக்ஷ்மணன் வந்ததாக எண்ணுகிறேன். அந்த மஹாத்மாவான ராமன், ராஜ்யத்தை இழந்து பாரியையைவிட்டுப் பிரிந்த சோகத்தால் வாடியிருக்கிறார். லக்ஷ்மணனும் அவரைப் பார்த்து வருந்தி, அவர் சொன்ன கடுமையான வார்த்தைகளை இன்னும் கடுமையாகக் கோபத்துடன் தங்களுக்குச் சொல்வார். தாங்கள் அதைப் பொறுக்கவேண்டும். தாங்கள் ராமனுக்கு அபராதம் செய்திருக்கிறீர்கள்; ராமானுஜனைக் கைகூப்பி பிரார்த்திப்பதைத் தவிர வேறு தகுந்த பரிஹாரம் எனக்குத் தெரியவில்லை. "என்னைப் பார்த்து இப்படிக் கௌரவக் குறைவான ஆலோசனையைச் சொல்லத் துணிந்தா

"யல்லவா" என்று தாங்கள் என்னிடத்தில் கோபிக்கக்கூடாது. மந்திரிகள் அரசனுக்கு எப்பொழுதும் ஹிதத்தையே உபதேசிக்க வேண்டும். ஆகையால் பயமில்லாமல் தங்களிடத்தில் இப்படித் தெரிவித்தேன். ராகவன் கோபம் கொண்டு கோதண்டத்தை எடுத்து நின்றால்,ஜகம் முழுவதையும் வசப்படுத்தக்கூடியவரல்லவா? இப்பொழுது அவருக்குக் கோபம் உண்டாக்குவது தகாது. மறுபடியும் அவரை ஸமாதானம் செய்ய வேண்டியிருக்கும். அவர் தங்களுக்குச் செய்த உபகாரத்தை மறவாமல், நன்றியுள்ள தாங்கள் அப்படிச் செய்வது இன்னும் அவசியம். ஆகையால் தாங்கள் புத்திர மித்திர பந்துக்களுடன் அவரை ஸாஷ்டாங்கமாக நமஸ்கரித்து, பாரியை பர்த்தாவுக்கு வசப்பட்டு நடப்பதுபோல் ராமனுக்குச் செய்த பிரதிக்ஞையை நிறைவேற்றுங்கள்.மஹேந்திரனுக்கு நிகரான பல பராக்கிரமமுள்ள ரகுவீரனுடைய ஸ்வபாவமான சக்தியே எல்லையற்றதென்று தங்களுடைய மனத்திற்குத் தெரியுமே; லக்ஷ்மணனும் அவருக்கு உதவி செய்கிறார். ஆகையால் அவர்களுடைய கட்டளையைத் தாங்கள் கனவிலும் மீறுவது தவறு" என்று வணக்கமாகத் தெரிவித்தார்.

ந ராம ராமாநுஜ ஶாஸநம் த்வயா
கபீந்த்³ர யுக்தம் மநஸாப்யபோஹிதும் |
மநோ ஹி தே ஜ்ஞாஸ்யதி மாநுஷம் ப³லம்
ஸ ராக⁴வஸ்யாஸ்ய ஸுரேந்த்³ர வர்சஸ: || (22)

## ஸர்க்கம் 33

## தாரை லக்ஷ்மணனை ஸமாதானம் செய்தது

அத² ப்ரதி ஸமாதி³ஷ்டோ லக்ஷ்மண: பரவீரஹா |
ப்ரவிவேஶ ஶுபா⁴ம் கோ⁴ராம் கிஷ்கிந்தா⁴ம் ராமஶாஸநாத் || (1)

பிறகு ஸுக்ரீவன் லக்ஷ்மணனை அந்தப்புரத்திற்கு அழைத்து வரும்படி அங்கதனுக்கு உத்தரவிட, அவர் ராமனுடைய ஆக்ஞைப்படி கிஷ்கிந்தைக்குள் வந்தார். கோட்டை வாசலில் காவலாக இருந்த வானரர்கள் பருத்த தேகமும் எல்லையற்ற பலமும் உள்ளவர்கள்; காலஸர்ப்பத்தைப்போல் கோபத்தால் சீறிக்கொண்டிருக்கும் லக்ஷ்மணனைப் பார்த்து பயந்து, கைகூப்பி, அவரைத் தடுக்கவில்லை. மலர்ந்த காடுகளாலும், சோலைகளாலும், மாடமாளிகை கோபுரங்களாலும், ஸகலப் பொருள்களும் நிறைந்த கடைகளாலும் தேவையான பழங்கள் நிறைந்து விளங்கும் மரங்களாலும் கிஷ்கிந்தை பிரகாசிப்பதையும், தேவ கந்தர்வ அப்ஸரஸ் முதலியவர்களின் அம்சங்களுக்குப் பிறந்த வானரர்கள் நினைத்த ரூபங்களை எடுக்கக்கூடியவர்களாக திவ்யமான மாலைகளாலும் ஆடையாபரணங்களாலும் பிரகாசிப்பதையும், சந்தனம்,அகில் முதலிய வஸ்துக்களின்



பரிமளம் எங்கும் வீசுவதையும், உத்தமமான பானங்களினால் ராஜவீதிகள் மணப்பதையும், தெளிந்த மலையருவிகளையும் பார்த்துக் கொண்டே போனார்.

பிறகு அங்கதன், மைந்தன், த்விவிதன், கவயன், கவாக்ஷன் கஜன், சரபன், வித்யுன்மாலி, ஸம்பாதி, ஸூர்யாக்ஷன், ஹனுமான், வீரபாஹு, நளன், குமுதன், ஸுஷேணன், தாரன், ஜாம்பவான், ததிவக்த்ரன், நீலன், ஸுபாடலன், ஸுநேத்ரன் முதலிய வானர சிரேஷ்டர்களின் வீடுகள் ராஜவீதியில் வெளுத்த மேகங்களைப்போல் உறுதியாக அமைக்கப்பட்டிருப்பதைக் கண்டார். அவை அழகான மாலைகளாலும் தன தான்யங்களாலும் உத்தம ஸ்த்ரீகளாலும் நிறைந்து வெகு ரமணீயமாக இருந்தன. பிறகு வானர சக்ரவர்த்தியான ஸுக்ரீவனுடைய அரண்மனைக்கு வந்தார். அது வெளுத்த மதிலால் சூழப்பட்டிருந்தது. உப்பரிகைகள் கைலாஸத்தின் சிகரங்களைப்போல் வெளுத்து ஆகாசத்தை அளாவி இருந்தன. எக்காலத்திலும் வேண்டிய பழங்களையும் புஷ்பங்களையும் கொடுக்கும் பூலோகத்து மரங்களாலும், மேகங்களைப்போல் விசாலமாக, புஷ்பங்களாலும் பழங்களாலும் நிறைந்து குளிர்ந்த நிழலுள்ள மந்தாரம் முதலிய,தேவேந்திரனால் கொடுக்கப்பட்ட தேவலோகத்து மரங்களாலும் அலங்கரிக்கப்பட்டிருந்தது. பலமுள்ள வானர வீரர்கள் ஆயுதபாணிகளாக கோட்டை வாசல்களில் காவலிருந்தார்கள். சிரேஷ்டமான மாலைகள் எங்கும் கட்டப்பட்டிருந்தன. வாசற்படிகள் உருக்கியோடவிட்ட தங்கத்தால் அமைக்கப்பட்டு விசித்திரமாக வேலை செய்யப்பட்டிருந்தன. லக்ஷ்மணன் இப்படிப்பட்ட ஸுக்ரீவனுடைய அரண்மனைக்குள், பெரிய மேகத்தில் ஸூரியன் புகுவதுபோல் சென்றார். பல ஜனங்களால் நிறைந்த ஏழு கட்டுகளை யாராலும் தடுக்கப்படாமல் தாண்டி, மஹாராஜாவின் அந்தப்புரத்திற்கு வந்தார். அங்கே தங்கத்தாலும் வெள்ளியாலும் செய்யப்பட்ட பல கட்டில்களும் விசித்திரமான ஆஸனங்களும், விலையற்ற விரிப்புகளால் அலங்கரிக்கப் பட்டிருந்தன. வீணை முதலிய வாத்தியங்களுக்கு ஒத்து, சிலர் மதுரமாகப் பாடிக்கொண்டிருந்தார்கள். ரூபம், யௌவனம், உத்தமகுலம் முதலியவைகளால் பெருமை கொண்ட பல ஸ்த்ரீகள் விசித்திரமான மாலைகளாலும் ஆடையாபரணங்களாலும் அலங்கரிக்கப்பட்டுப் புஷ்ப ஹாரங்களைத் தொடுத்துக்கொண்டிருந்தார்கள். அங்கிருந்து வேலைக்காரர்களில் திருப்தி இல்லாதவனாவது ஜாக்கிரதை இல்லாதவனாவது உத்தமமான வஸ்திராபரணங்கள் இல்லாதவனாவது கிடையாது. பாதச்சிலம்புகளும் அரைநூல் மாலைகளும் சப்திப்பதைக் கேட்டு,அங்குள்ளவர்கள் ஆனந்தமாக விளையாடிக் கொண்டிருக்கிறார்களென்று அறிந்து, லக்ஷ்மணன் வெட்கமடைந்து, கோபம் கொண்டு, தான் அங்கிருப்பதை ஸுக்ரீவனுக்குத் தெரிவிக்கவும் அந்தப் பெண்கள் அங்கிருந்து போகவும் திக்குகள் நடுங்கும்படி நாணோசை செய்தார்.

நல்லொழுக்க முள்ளவராகையால் பரஸ்த்ரீகளைப் பார்த்ததாலும் அவர்களுடைய ஆபரண சப்தங்களைக் கேட்டதாலும் கொஞ்சமேனும் கலங்காமல் அலக்ஷ்யமாக ஓரிடத்தில் தனியாக உட்கார்ந்து ராமன் படும் துக்கத்தை நினைத்து வருத்தப்பட்டுக் கொண்டிருந்தார். ஸுக்ரீவன் அந்த நாணோசையைக் கேட்டு, லக்ஷ்மணன் அந்தப்புரத்திற்கு வந்துவிட்டார் என்றறிந்து பயந்து ஒன்றும்தோன்றாமல் ஆஸனத்தை விட்டு எழுந்து, அங்கதன் கூறியபடி லக்ஷ்மணன் வந்திருக்கிறார் என்பதை அறிந்து மனம் வாடி ஸமீபத்திலிருந்த தாரையைப் பார்த்து, "இயற்கையாகச் சாந்தகுணமுள்ள லக்ஷ்மணன் இப்பொழுது கோபம் கொண்டவரைப்போல் வந்திருப்பதேன்? காரணமில்லாமல் ஒருநாளும் கோபிக்கமாட்டாரே. ஆகையால் நாம் இவருக்கு ஏதாவது அபராதம் செய்திருக்கிறோமா என்று நன்றாக யோசித்துச் சொல். அல்லது நீயே அவருடன் பேசி எப்படியாவது ஸமாதானம் செய். உன்னைப் பார்த்தவுடன் அவருடைய கோபம் தணிந்துவிடும். பெருந்தன்மையுள்ளவர்கள் ஸ்த்ரீகளிடத்தில் கோபம் கொண்டு குரூரமாக ஒருபொழுதும் நடக்கமாட்டார்கள். உன்னுடன் பேசிக் கோபம் தணிந்து தெளிந்திருக்கும்பொழுது நான் அவரைத் தரிசனம் செய்கிறேன்" என்றான்.

"அப்படியே செய்கிறேன்" என்று தாரை சொல்லி, ஸம்போக சுகத்தை விருத்தி செய்யக் குடித்த மதுவின் மயக்கத்தால் கண்கள் சுழல, சிரமத்தால் தள்ளாடி அடிமேல் அடிவைத்து நடந்துகொண்டு வஸ்திரங்கள் தளர்ந்து அரைநூல் மாலை அவிழ்ந்து தொங்க, படுக்கையிலிருந்த வேஷத்துடன் ஸம்போகக் குறிகள் ஸ்பஷ்டமாக விளங்க, ஸ்தனபாரத்தால் சற்று வளைந்த தேகத்துடன் லக்ஷ்மணன் இருக்குமிடத்திற்கு வந்தாள். லக்ஷ்மணன் அவளைப் பார்த்து, பரஸ்த்ரீ தரிசனம் தர்ம விரோதமென்று தலை குனிந்தார். அவளுடைய அழகும் விலாஸங்களும் அவருடைய மனத்தில் யாதொரு விகாரத்தையும் உண்டாக்கவில்லை. ஆனால் ஸ்த்ரீகள் இருக்கும்பொழுது கோபிப்பது உசிதமல்லவென்று அலக்ஷ்யமாக இருந்தார். அவருடைய கோபம் தணிந்ததென்று பார்வையால் அறிந்த தாரை, மதுபானத்தால் வெட்கத்தை மறந்து ஸ்நேகத்தை முன்னிட்டுத் தைரியமடைந்து அவரை ஸமாதானம் செய்தாள்.

"ராஜகுமார! நீ ஏன் கோபம் கொண்டிருக்கிறாய்? எவனாவது உன் கட்டளையை மீறிநடந்தானோ? உலர்ந்த விருக்ஷங்களால் பற்றி எரியும் காட்டுத் தீயில் எவனாவது பயமில்லாமல் போய் விழுவானோ?" என்று மிருதுவாகவும் மதுரமாகவும் கேட்டாள்.

அதனால் லக்ஷ்மணன் கோபம் தணிந்து ஸ்நேஹத்தை முன்னிட்டு, "கணவனுடைய ஹிதத்தையே நாடும் நீ, ஸுக்ரீவன் ஆசைக்கு அடிமையாகத்தர்மத்தைவிட்டு ராஜ்யகாரியங்களைமறந்து, ராமனுக்குச் செய்த பிரதிக்ஞையை நினைக்கவில்லை என்று அறி



யாயோ? அனுபவிக்கும் ராஜ்யம் ராகவனால் கிடைத்தது; அவர் சோகத்தால் வாடியிருக்கிறார். அவனையே நம்பியிருக்கிறாரென்பது அவனுக்குக் கொஞ்சமேனும் ஞாபகமிருக்கிறதா? மந்திரி, மித்திர பந்து கணங்களுடன் எப்பொழுதும் மதுபானம்செய்து மயங்கியிருக்கிறான். நான்கு மாதங்கள் ஆன பிறகு ஸீதையைத் தேடும் விஷயத்தில் வேண்டிய முயற்சி செய்கிறேனென்று ரகுவீரனுக்கு வாக்களித்து, அந்தக் காலம் கடந்துவிட்டது என்பதைக் கவனியாமல் மதுபானத்திலும் ஸ்த்ரீகளிடத்திலும் காலம் போக்குகின்றான். புருஷார்த்தங்களை அடைய விரும்புகிறவனுக்கு மதுபானம் முக்கிய ஸாதனமாக விதிக்கப்பட்டிருக்கிறதோ? அந்த உத்தம பிரயோஜனங்களை ஒரு க்ஷணத்தில் அழிக்க இது ஒன்றே போதாதோ? தனக்கு உபகாரம் செய்தவனுக்குப் பதில் செய்யாமலிருப்பது மிக அதர்மமல்லவா? உத்தமகுணவானான மித்திரனுடைய ஸ்நேஹத்தை இழப்பதால் ஐசுவரியமும் அழியும். ஸத்தியத்திற்கும் தர்மத்திற்கும் இருப்பிடமான மித்திரன், அர்த்தம் காமம் என்ற இவ்விரண்டு புருஷார்த்தங்களுக்குக் காரணமல்லவா? ஸுக்ரீவன் மித்திரனை மறந்ததால் அவைகளை இழந்தான். இந்த நிலைமையில் நாங்கள் செய்யவேண்டியதைக் கூர்மையான புத்தியுள்ள நீயே நன்றாக யோசித்துச் சொல்" என்றார்.

தாரை அதைக் கேட்டு, தர்மத்திற்கும் அர்த்தத்திற்கும் அது ஒத்திருப்பதைக் கவனித்து, ராமனுடைய காரியம் முடிவதில் லக்ஷ்மணனுக்கு நம்பிக்கை உண்டாவதற்காக, "ராஜபுத்திர! ஸுக்ரீவன் காம பரவசனாய் இருக்கிறான். நீ கோபிப்பது தகாது. ஸாதுக்கள் தங்களை அண்டினவர்களைக் கடுமையாகக் கோபிப்பார்களோ? உங்கள் க்ஷேமத்தையே கோரும் ஸுக்ரீவன் அபராதம் செய்தால் பொறுக்கவேண்டாமா? உத்தம வீரியமென்ற குணத்தால் விளங்கும் ராஜபுத்திரனான நீ, அல்ப வீரியமுள்ள ஸுக்ரீவனிடத்தில் கோபிக்கலாமா? விடாமுயற்சியுள்ளவனும் சாந்தரூபமான தபஸுக்கு உத்பத்தி ஸ்தானமுமான நீ கோபத்திற்கு ஆளாகலாமா? ஸுக்ரீவனுக்குப் பரம மித்திரனான ராமன் கோபம் கொண்டிருப்பதும் எனக்குத் தெரியும். அது வீண் போகாது. சத்துருவின்மேல் படையெடுத்துச் செல்லும் காலம் கடந்து விட்டதென்பதும் எனக்குத் தெரியும். நீங்கள் எங்களுக்குச் செய்த பரம உபகாரமும் எனக்குத் தெரியும். இந்த விஷயத்தில் நாங்கள் செய்யவேண்டியதும் எனக்குத் தெரியும். காமத்தின் பலம் தடுக்கமுடியாதென்பதும் எனக்குத் தெரியும். ஸுக்ரீவன் எவளிடத்தில் ஆசைகொண்டு யாவற்றையும் மறந்திருக்கிறானோ அவளையும் எனக்குத் தெரியும்.

"நீ இப்பொழுது கோபத்திற்கு உட்பட்டிருப்பதால் உன்புத்தி காம விஷயங்களில் செல்லாது. காமத்தைப் பற்றி நீஅறிந்திருப்பின் காம பரவசனானவன் தேசகால தர்மார்த்தங்களை அறியமாட்டானென்று நீயேஒப்புக் கொள்வாய். அவனிடத்தில் கோபிக்கமாட்டாய்.

ஸுக்ரீவன் என்னை விட்டுப் பிரியாமல் ஆசைக்கு அடிமையாகி வெட்கமற்றிருக்கிறார். ராமனுக்குத் தோழன்; உனக்கும் மித்திரன்; அவருடைய பிழையை நீ பொறுக்கவேண்டும். இது ஒரு ஆச்சரியமா? உதிர்ந்த இலைகளையும் நீரையும் காற்றையும் புஜித்து இந்திரியங்களை அடக்கி, ஸுகதுக்கங்களைப் பொறுத்து, தர்மத்திலும் தவத்திலும் மனத்தைச் செலுத்தின மஹரிஷிகளும் காமத்திற்கு அடிமையாய், ஸ்த்ரீ மோஹத்தால் மயங்குகிறார்கள். ஸுக்ரீவனோ வானரன்; சாபல்யமென்பது அவனுக்கு இயற்கை; ஸகல ஐசுவரியங்களும் பொருந்திய மஹாராஜா; இவன் ஆசைக்கு அடிமையாக இருப்பது ஆச்சரியமல்ல'' என்று மதத்தால் மிருதுவாகவும் வேடிக்கையாகவும் ஸுக்ரீவனுக்கு ஹிதமான வார்த்தைகளைச் சொன்னாள்.

"ராஜகுமார! ஸுக்ரீவன் காமபரவசனாக இருந்தும் உங்கள் காரியத்தை முடிப்பதில் சிரத்தையுள்ளவனாக ஸேனைகளைச் சேர்க்கும்படி முன்பே உத்திரவு செய்திருக்கிறான். பல மலைகளில் வஸிக்கும் வானரவீரர்களும் கோடி கோடியாக வந்திருக்கிறார்கள். அந்தப்புரத்து ஸ்த்ரீகளைப் பார்க்கக்கூடாதென்று நீ வெளியிலிருந்ததால் உன் நன்னடத்தை விளங்கிற்று. ஸாதுக்கள் தங்களுடைய மித்திரர்களின் பார்யைகளைப் பார்ப்பதில் தோஷமில்லை. ஆகையால் உள்ளே வரலாம்'' என்றாள்.

தாரையின் பிரார்த்தனையாலும், சீக்கிரத்தில் தன் காரியம் முடியவேண்டுமென்ற கவலையாலும், லக்ஷ்மணன் அந்தப்புரத்தில் பிரவேசித்தார். அங்கே ஸுக்ரீவன், சிறந்த விரிப்புகளால் அலங்கரிக்கப்பட்ட ஸிம்ஹாஸனத்தில் உத்தமமான ஆபரணங்களாலும், மாலைகளாலும், வஸ்திரங்களாலும் அலங்கரிக்கப்பட்டு, ஸூரியனைப் போல் காந்தி பெற்று, உட்கார்ந்திருப்பதைக் கண்டார். ரூபலாவண்யமுள்ள அநேக ஸ்த்ரீகள் மஹா கீர்த்திசாலியான அந்த வீரசிரேஷ்டனைச் சூழ்ந்து நின்றார்கள். அதைக் கண்டு லக்ஷ்மணன் கண்கள் சிவந்து காலாந்தகனைப்போல் கோபம் கொண்டார். ஸுக்ரீவனும் ருமையைத் தழுவிக்கொண்டு அளவற்ற பராக்கிரமசாலியான லக்ஷ்மணன் ரோஷத்தால் விசாலமான நேத்திரங்களுடன் வருவதை ஆச்சரியத்தாலும் பயத்தாலும் அகன்ற தன் நேத்திரங்களால் பார்த்துக் கொண்டிருந்தான்.

ருமாம் து வீர: பரிரப்⁴ய கா³ட⁴ம்
வராஸநஸ்தோ² வரஹேமவர்ண: |
த³த³ர்ஶ ஸௌமித்ரி மதீ³நஸத்வம்
விஶால நேத்ர: ஸுவிஶால நேத்ரம் ‖ (66)

---



ஸர்க்கம் 34

## ஸுக்ரீவன் ராமனுடைய கட்டளையை அறிந்தது

தமப்ரதிஹதம் க்ருத்³த⁴ம் ரவிஷ்டம் புருஷர்ஷப⁴ம் |
ஸுக்³ரீவோ லக்ஷ்மணம் த்³ருஷ்ட்வா ப³பூ⁴வ வ்யதி²தேந்த்³ரிய: ‖ (1)

இப்படிக் கோப பரவசராய், ஒருவராலும் தடுக்கப்படாமல், லக்ஷ்மணன் அந்தப்புரத்திற்கு வருவதைப்பார்த்து, "நாம் இவரை ஸமாதானம் செய்யத் தாரையை அனுப்பினோமே. அப்படியும் கோபம் அடங்காமல் இவர் இங்கே வருவதற்குக் காரணமென்ன?'' என்று ஸுக்ரீவன் கவலை கொண்டான். ரோஷத்தால் பெருமூச்சு விட்டுக்கொண்டு, ராமன் படும்துக்கத்தை நினைத்து நினைத்துத் தன் தேஜஸால் ஸகல வஸ்துக்களையும் எரிப்பவர்போல், ராமானுஜன் தன்னை நோக்கி வருவதைக் கண்டு, புஷ்பங்களால் அலங்கரிக்கப்பட்ட இந்திரத்வஜத்தைப்போல் வானர ராஜன் ஸிம்ஹாஸனத்திலிருந்து திடீரென்று எழுந்திருந்தான். உடனே ருமை முதலிய அந்தப்புர ஸ்த்ரீகளும் சந்திரனைத் தொடரும் நக்ஷத்திரங்களைப் போல் எழுந்து நின்றார்கள். பயத்தால் கண்கள் சிவந்து, கை கூப்பித் தள்ளாடிக்கொண்டு, கல்பக விருக்ஷத்தைப்போல் லக்ஷ்மணனை வந்தனம் செய்தான்.

இப்படி ருமை முதலிய ஸ்த்ரீகளால் சூழப்பட்டுநிற்கும் வானரபதியைப் பார்த்து இளையபெருமாள், "ஸுக்ரீவ! ஸத்வகுணத்தை பிரதானமாக உடையவனும், உத்தம குலத்தில் பிறந்தவனும், கருணையுள்ளவனும், இந்திரியங்களை ஜயித்தவனும், நன்றி மறவாதவனும், ஸத்தியம் தவறாதவனுமான அரசனே லோகத்தில் கொண்டாடப்படுகிறான். அதர்மத்தைக் கைக்கொண்டு, தனக்கு உபகாரம் செய்த மித்திரர்களிடத்தில் எவன் பொய்ப்பிரதிக்ஞை செய்கிறானோ அவனைக் காட்டிலும் குரூரனானவன் லோகத்தில் உண்டோ? குதிரையைப் பற்றிப் பொய் சொன்னவன் நூறு குதிரைகளைக் கொன்ற பாவமடைகிறான்; பசுவைப்பற்றிப் பொய் சொன்னவன் ஆயிரம் பசுக்களைக் கொன்ற பாபம் அடைகின்றான். மஹாபுருஷன் விஷயத்தில் பொய் சொல்கிறவர் தன்னையும் தன்னைச் சேர்ந்தவர்களையும் கொன்ற பாபத்தை அடைகிறான். மித்திரர்களிடத்தில் உபகாரத்தைப் பெற்றுப் பதில் செய்யாத நன்றியற்றவனை எல்லோரும் கொல்லவேண்டும். ஸகல லோகங்களாலும் பூஜிக்கப்பட்ட ஸ்வாயம்புவ மனு ஒரு ஸமயத்தில் நன்றியற்றவனைப் பார்த்துக் கோபம் கொண்டு, 'பிரம்மஹத்ய செய்தவனுக்கும் ஸுராபானம், திருட்டு, விரதங்களை அனுஷ்டிப்பதில் தவறு, இவைகளைச் செய்தவனுக்கும் ஸாதுக்கள் பிராயச்சித்தங்களை விதித்திருக்கிறார்கள். நன்றியற்றவனுக்கோ விதிக்கக்கூடிய பிராயச்சித்தம் ஒன்றுமில்லை'' என்று சொன்னார். நீ நல்லொழுக்கமில்லாதவன், நன்றி மறந்தவன்,

ஸத்தியம் தவறினவன்; ராமனால் உபகாரத்தை அடைந்து அவருக்குப் பதில் செய்யவேண்டுமென்ற எண்ணமே உனக்கில்லை. நீ நன்றி உள்ளவனாக அவர் செய்த உபகாரத்தை நினைத்தால் இதுவரையிலேயே ஸீதையைத் தேட முயற்சி செய்யமாட்டாயா? அல்பமான விஷய ஸுகங்களில் ஆசை கொண்டவனென்றும் பொய் பிரதிக்ஞை செய்கிறவனென்றும் தவளையைப் பிடிக்க அதைப்போல் கத்தும் பாம்பைப் போன்றவனென்றும் ராமன் உன்னை அறியவில்லையே. அந்த மஹாத்மா உன்னிடத்தில் இரக்கம் வைத்து, நீ துஷ்டனென்றும் பாபியென்றும் அறியாமல் வானர ராஜ்யத்தை உனக்குக் கொடுத்தார். அவர் ஸகல பிராணிகளுக்கும் க்ஷேமத்தையே செய்கிறவர். ஆனால்,இனிமேலும் நீ நன்றி மறந்திருந்தால் கூர்மையான பாணங்கள் உன்னைக் கொன்று வாலியைச் சேர அனுப்புவார். வாலி ராமபாணத்தால் கொல்லப்பட்டு யமலோகததிற்குப் போன வழி இன்னும் அடைபடவில்லை. ஸுக்ரீவ! செய்த பிரதிக்ஞையை நிறைவேற்று. வாலி போன வழியில் போக ஆசைப்படாதே. ரகு வீரனுடைய பிரசண்ட கோதண்டத்திலிருந்து வஜ்ரங்களைப்போல் பாணங்கள் ஓயாமல் கிளம்பியதை நீ இதுவரை கண்டதில்லை. அதனால்தான் (அச்சமின்றி) இப்படி அல்பவிஷய ஸுகங்களில் இரவு பகலாக முழுகி, ராமகாரியத்தை மனத்தாலும் நினைக்காமல் இருக்கிறாய்" என்றார்.

ந நூந மிக்ஷ்வாகு வரஸ்ய கார்முக
ச்யுதாந் ஶராந் பஶ்யஸி வஜ்ர ஸந்நிபா$^{4}$ந் |
தத: ஸுக$^{2}$ம் நாம நிஷேவஸே ஸுகீ$^{2}$
ந ராமகார்யம் மநஸாப்யவேக்ஷஸே ॥ (19)

---

## ஸர்க்கம் 35

## தாரை லக்ஷ்மணன் ஸமாதானம் செய்தது

ததா$^{3}$ ப்$^{3}$ருவாணம் ஸௌமித்ரிம் ப்ரதீ$^{3}$ப்தமிவ தேஜஸா |
அப்$^{3}$ரவீத் லக்ஷ்மணம் தாரா தாராதி$^{4}$ப நிபா$^{4}$நநா ॥ (1)

இப்படி லக்ஷ்மணன் தேஜஸால் ஜ்வலித்துக்கொண்டு சொன்ன கடும் சொற்களைக் கேட்டு, சந்திரனைப்போல் அழகான முக காந்தியுள்ள தாரை, மறுபடியும் அவருடைய கோபத்தைத் தணிக்க விரும்பிப் பேசினாள்.

"லக்ஷ்மண! நீ இப்படி சொல்லக்கூடாது. இந்த வானராதிபதி இவ்விதமான கடும் சொற்களைக் கேட்கத் தகுந்தவரல்ல. மேலும் அவைகளை நீ சொல்வதும் அவர் கேட்பதும் முற்றிலும் தகாது. இவர் நன்றியற்றவர், ரஹஸ்யமாய்க் கெடுதி செய்பவர், க்ரூரர், பொய் சொல்லுகிறவர், கபடமுள்ளவரென்று நீ எண்ணுவது தவறு. பிறரால் செய்ய முடியாத காரியத்தை ராமன் செய்தார். வாலியைக் கொன்றார். தனக்குப் பரம உபகாரத்தைச் செய்தாரென்பதை இவர் மறக்கவில்லை. கீர்த்தியையும், வானர ராஜ்யத்தையும், ருமையையும், என்னையும் ராமனுடைய கிருபையால் இவர் அடைந்தார். இதுவரையில் ஸுகமான ஆஹாரமும் தூக்கமுமின்றி கஷ்டப்பட்டு வந்த இவர் இப்பொழுது ராஜ்ய போகங்களை அடைந்தவுடன் தன்னை மறந்து காரியங்களைச் செய்யும் காலத்தை அறியவில்லை. அபார சக்தியுள்ள விசுவாமித்திர மஹரிஷி மேனகையுடன் பத்து வருஷங்கள் வரையில் ஆனந்தமாகக் காலங்கழித்து அவைகளை ஒரு பகலென்று எண்ணவில்லையா? அந்த மஹா ஞானியே காரியங்களையும் அவைகளைச் செய்யவேண்டிய காலங்களையும் மறந்திருக்க, மற்றவர்களைப்பற்றிச் சொல்லவும் வேண்டுமா? இவர் மிகவும் களைத்தவர்; ஆஹாரம் நித்திரை முதலிய தேக தர்மங்களுக்குக் கட்டுப்பட்டாரே தவிர மனத்தில் விகாரம் யாதுமில்லை. போகங்களை அனுபவித்துத் திருப்தியடையவும் இல்லை. ஆகையால் இவருடைய பிழையைப் பொறுப்பது நியாயமே.

"லோக தர்மத்தை ஆராய்ந்துஅறியாமல் ஸாதாரண மனுஷ்யனைப்போல் நீ கோபத்திற்கு இடம் கொடுக்கத் தகுமா? உன்னைப் போன்ற ஸத்வகுணமுள்ள ஸாதுக்கள், விஷயங்களைப் பரீக்ஷித்துப் பார்க்காமல் சீக்கிரமாகக் கோபத்திற்கு இடம் கொடுக்கமாட்டார்கள். ஸுக்ரீவனுக்காக நான் உன்னை வேண்டிக் கொள்கிறேன். இந்தக் கடுங்கோபத்தை விடு. ராமன் உத்தரவு செய்தால் ருமை, நான், வானர ராஜ்யம், தனதான்யம், ஐசுவரியம் யாவற்றையும் ஸுக்ரீவன் விடத் தயாராயிருக்கிறானென்று எனக்குத் தெரியும். சந்திரனை ரோஹிணியுடன் சேர்த்துவைப்பது போல் ராவணனைக் கொன்று ராமனை ஸீதையுடன் சேர்த்து வைப்பார். இப்பொழுதே அவனைக் கொல்லக் கூடாதா என்றால், லங்கையிலுள்ள ராக்ஷஸர்களுக்குக் கணக்கில்லை. காமரூபிகளும் மஹாபலபராக்கிரமசாலிகளுமான அவர்களைக் கொல்லாமல் ராவணனைக் கொல்ல முடியாது. அவனைக் கொல்லாமல் ஸீதையைக் கொண்டு வர முடியாது. பிறருடைய உதவியின்றி ஸுக்ரீவன் அந்தத் துஷ்டனை ஜயிக்க முடியாது. ஸுக்ரீவனுடன் வாலி யுத்தம் செய்யப் புறப்படும் பொழுது, "தசரத சக்கரவர்த்தியின் புத்திரர்களான ராமலக்ஷ்மணர்கள் ஸுக்ரீவனுக்கு உதவியாக வந்திருக்கிறார்கள். அந்த மஹாவீரர்களால் தங்களுக்குக் கெடுதி நேரும், போகவேண்டாம்'' என்று தடுத்தேன். அப்பொழுது ராவணனுடைய பலபராக்கிரமத்தையும் ஸைன்யங்களையும் வாலி எடுத்துச் சொல்லி, பலஹீனனான ஸுக்ரீவனால் ராவணனை ஜயிக்க முடியாது. ராமன் அவனுடைய உதவியை விரும்பமாட்டார்" என்றார். ராவணனுடைய வரலாற்றை அவர் சொல்லிக் கேட்டதே தவிர நான் நேரில் பார்த்ததில்லை. ஸகல வானரர்களையும் அழைத்து வரும்படி பல நாட்களுக்கு முன்பே தூதர்கள் அனுப்பப்பட்டிருக்கிறார்கள். அவர்களின் வரவை எதிர்

பார்த்துக் கொண்டிருப்பதால் ராம காரியத்திற்காக மஹாராஜா வெளியில் புறப்படவில்லை. பதினைந்து நாட்களுக்குள் எல்லோரும் வந்து சேரவேண்டுமென்று உத்தரவு செய்திருக்கிறார். அந்தக் கெடு இன்றுடன் முடிகிறது. வானரர்களும் கரடிகளும் இன்று வருவார்கள். கோபத்தை விடு. இங்குள்ளவரையில் ஸ்த்ரீகள் உன் முகம் கோபத்தால் ஜ்வலித்துக் கண்கள் சிவந்திருப்பதைப்பார்த்து, முன்பு ராமன் வாலியைக் கொன்றதை நினைத்து, இப்பொழுது ஸுக்ரீவனுக்கும் அபாயம் நேருமோ என்று பயப்படுகிறார்கள்'' என்றாள்.

தவ ஹி முக$^{2}$மித$^{3}$ம் நிரீக்ஷ்ய கோபாத்
க்ஷதஜநிபே$^{4}$ நயநே நிரீக்ஷமாணா: |
ஹரிவர வனிதா ந யாந்தி ஶாந்திம்
ப்ரத$^{2}$ம ப$^{4}$யஸ்ய ஹி ஶங்கிதா: ஸ்ம ஸர்வா: || (23)

## ஸர்க்கம் 36

## ஸுக்ரீவன் லக்ஷ்மணனை ஸமாதானம் செய்தது

இத்யுக்தஸ் தாரயா வாக்யம் ப்ரஶ்ரிதம் த$^{4}$ர்ம ஸம்ஹிதம் |
ம்ருது$^{3}$ ஸ்வப$^{4}$ாவ: ஸௌமித்ரி: ப்ரதிஜக்$^{3}$ராஹ தத்$^{3}$வச: || (1)

தாரையின் வார்த்தைகள் விநயமாகவும் தர்மத்திற்கு ஒத்தும் இருந்தன. லக்ஷ்மணன் அவற்றைக் கேட்டு ஆலோசித்தார். இயற்கையாகவே இரக்க முள்ளவர். அவைகளை அவர் ஏற்றுக்கொண்டவுடன், நனைந்த ஆடையை அவிழ்த்து எறிவதுபோல் லக்ஷ்மணனிடத்திலுண்டான பயத்தை ஸுக்ரீவன் விட்டான். பிறகு மதுபானத்தாலுண்டான மயக்கம் தீர்ந்து மாலைகளையும்ஹாரங்களையும் அறுத்தெறிந்து, "ஐசுவரியத்தையும் கீர்த்தியையும் வானர ராஜ்யத்தையும் முன்பு இழந்தேன்; ராமனுடைய கிருபையால் இப்பொழுது அவைகளை மறுபடியும் அடைந்தேன். ஸகல லோகங்களிலும் கீர்த்தி பெற்ற அந்த ரகுவீரனுக்குப் பதில் செய்ய முடியாதவனாக இருக்கிறேன். அவர் என்னைப் பெயருக்கு மாத்திரம் உதவியாக வைத்துக்கொண்டு ராவணனைக் கொன்று ஸீதையை அழைத்து வருவார். ஏழு ஸால மரங்களையும் மலையையும் பூமியையும் ஒரே பாணத்தால் துளைத்த அந்த மஹாவீரனுக்குப் பிறருடைய உதவியும் வேண்டுமா? நாணொசையால் மலைகளையும் பூமியையும் நடுங்கச் செய்கிறவனுக்குப் பிறரால் ஆகவேண்டியதென்ன? ரகுவீரன் ராவணனைக் கொல்வதற்காகப் பரிவாரத்துடன் போகும்போது நானும் போவேன். விசுவாஸத்தாலும், ஸ்நேஹத்தாலும் ஏதாவது நான் தவறியிருந்தால் ஸேவகனை என்னிடத்தில் கிருபைசெய்து மன்னிக்க வேண்டும். லோகத்தில் அபராதமே செய்யாதவன் எவனுமில்லை'' என்று ஸுக்ரீவன் விநயமாக லக்ஷ்மணனிடம் கூறினான்.



அதைக் கேட்டு லக்ஷ்மணனுக்கு ஸந்தோஷமும் அவனிடத்தில் பிரியமும் உண்டாகி, "நீ இப்படி வணக்கமாகவும் விசுவாஸத்துடனும் இருக்கிறபடியால் ரகுநாதனுக்கு எவ்விதத்திலும் உதவிக்குக் குறைவில்லை. நேர்மை நன்னடத்தை பராக்கிரமம் இவைகளால் வானர ராஜ்யத்தை அடைந்து உத்தம ஸுகங்களை அனுபவிக்க நீ தகுந்தவன். உன் ஸஹாயத்தால் ராகவன் ஸகல சத்துருக்களையும் நாசம் செய்து விசேஷ கீர்த்தி அடைவார். மனுஷ்யர்களின் செயல்களையும் அதற்குத் தகுந்தபடி நடக்க வேண்டிய தர்மத்தையும் நீ நன்றாக அறிந்தவன்; யுத்தத்தில் பின் வாங்காதவன். நீ இப்படிச் சொல்வது தகுந்ததே. தங்களிடத்தில் தோஷத்தை ஏற்படுத்துகிறவர்களை நாசம் செய்யும் திறமையுள்ளவர்கள் தங்களுடைய தோஷங்களை மறைப்பார்களேயொழிய வெளிப்படுத்த மாட்டார்கள். நீயோ எல்லையற்ற சக்தியுள்ளவனானாலும் உன் தோஷத்தை ஒப்புக்கொண்டு அதை மன்னிக்கும்படி என்னை வேண்டுகிறாய். உன்னையும் என் அண்ணனையும் தவிர இவ்விதமானவர்கள் வேறு உண்டோ? பலத்தாலும், பராக்கிரமத்தாலும் ராமனுக்குத் தகுந்த மித்திரனாக நீ ஏற்பட்டது தெய்வஸங்கல்பத்தால் அல்லவா? ஆனால் நீ என்னுடன் ப்ரஸ்ரவணத்திற்கு வந்து பாரியையை விட்டுப் பிரிந்து வருந்தும் ராமசந்திரனைத் தேற்று. சோகம் மேலிட்டு அவர் சொன்ன வார்த்தைகளைக் கேட்டு நான் கோபப்பட்டுக் கடும் வார்த்தைகளைச் சொன்னேன். அதை மன்னிக்கவேண்டும்'' என்றார்.

யச்ச ஶோகாபி$^{4}$பூ$^{4}$தஸ்ய ஶ்ருத்வா ராமஸ்ய ப$^{4}$ாஷிதம் |
மயா த்வம் பருஷாண்யுக்தஸ் தச்ச த்வம் க்ஷந்து மர்ஹஸி || (20)

## ஸர்க்கம் 37

## வானர ஸேனைகளை வருவித்தது

ஏவமுக்தஸ்து ஸுக்$^{3}$ரீவோ லக்ஷ்மணேந மஹாத்மநா |
ஹநுமந்தம் ஸ்தி$^{2}$தம் பார்ஶ்வே ஸசிவம் த்வித$^{3}$ மப்$^{3}$ரவீத் || (1)

அதைக் கேட்டு அந்த வானரேசுவரன், பக்கத்தில் நின்ற ஆஞ்சனேயரைப் பார்த்து, "மஹேந்திரம், ஹிமாலயம், விந்தியம், கைலாஸம், மந்தரம் முதலிய பர்வத சிகரங்களிலும், மேற்கு ஸமுத்திரக் கரையில் பால ஸூரியர்களைப் போல் பிரகாசிக்கும் பர்வதங்களிலும், கிழக்கில் உதய பர்வதத்தில் அடர்ந்த காடுகளிலும், அஞ்ஜன பர்வதத்தையும் மேகத்தையும் யானைகளையும் போன்ற ரூபங்களுடன் அஞ்ஜனகிரியிலும், மனச்சிலை குஹைகளிலும், மேரு, தூம்ரகிரி, மஹாருணம் என்ற பர்வதங்களிலும், அழகான வனங்களிலும், முனிகளின் ஆசிரமங்களிலும் வஸிப்பவர்களையும், இன்னும் இந்தப் பூமியிலுள்ள ஸகல வானரர்களையும் ஸாமம்

தானம் முதலிய உபாயங்களால் இப்பொழுதே அழைத்து வர வேண்டும். இதற்கு முன்பே அவர்களை அழைப்பதற்கு அனுப்பிய தூதர்களை துரிதப்படுத்துவதற்காக மற்றும் சிலரை அனுப்பு. காம போகங்களில் மயங்கியவர்களையும் தாமதிப்பவர்களையும் சீக்கிரம் என்னிடத்தில் கொண்டு வா. என் கட்டளையின்படி பத்துத் தினங்களுக்குள் இங்கே வந்து சேராதவர்கள், ராஜாக்ஞையை மீறின குற்றத்திற்காக உடனே கொல்லப்படவேண்டும். ஆகையால் இங்கிருந்து வானரர்கள் கோடிக்கணக்காகக் கிளம்பி, ஆகாசமார்க்கமாய் இந்தப் பூமி முழுவதிலும் ஸஞ்சரித்து, ஸகல வானரர்களையும் இப்பொழுதே அழைத்து வரட்டும்'' என்று ஆக்ஞாபித்தான்.

ஹனுமானும் அப்படியே செய்ய, அந்த வானர வீரர்களும் ஆகாசத்தில் பறவைகள் செல்லும் வழியிலும் நக்ஷத்திர மார்க்கங்களிலும் சென்று, ஸமுத்திரங்களிலும் பர்வதங்களிலும் வனங்களிலும் ஏரிகளிலுமுள்ள வானரர்களை ராமகாரியத்திற்காகச் சீக்கிரமாய் அழைத்து வந்தார்கள். ஸுக்ரீவனுடைய ஆக்ஞையை யமதண்டனைக்கு ஸமமாய் நினைத்து, ஸகல வானரர்களும் பயந்து, அதிவேகமாய் வந்து சேர்ந்தார்கள். அவர்களில் அஞ்ஜன கிரியில் மைமலைகளைப் போல ஸஞ்சரிப்பவர்கள் மூன்று கோடி; அஸ்தகிரியில் வஸிக்கும் தங்கநிறமுள்ளவர்கள் பத்து கோடி; கைலாஸ பர்வதத்தில் ஸிம்ஹத்தின் பிடரி மயிர் போன்ற தேக காந்தியுடன் ஸஞ்சரிப்பவர்கள் அநேகமாயிரம் கோடிகள்; ஹிமய மலைத் தாழ்வரைகளில் காய், கிழங்கு, பழங்களைத் தின்றுகொண்டு வஸிப்பவர்கள் அநேகம் கோடிகள்; அங்காரகனைப்போல் பயங்கரமான ரூபத்தையும் க்ரூர கிருத்யங்களையும் உடையவர்களாய் விந்திய பர்வதத்திலிருந்து வந்தவர்கள் அநேகம் கோடிகள்; க்ஷீர ஸமுத்திரத்தின் கரையிலுள்ள பச்சிலைக் காடுகளில் வஸித்துக் கொண்டு தேங்காய்களைப் புஜிப்பவர்களுக்கோ கணக்கில்லை.

இப்படி வனங்களிலிருந்தும், குகைகளிலிருந்தும், ஆறுகளிலிருந்தும் மஹாவேகத்துடன் வானர ஸேனை ஆகாசத்தை மறைத்துக் கொண்டு வந்து சேர்ந்தது. அப்பொழுது முன்பு நீலனால் அனுப்பப்பட்ட தூதர்கள் ஹிமயமலைக்கு வந்து, அங்கே ஒரு பெரிய மரத்தைக் கண்டார்கள். முன்னொரு காலத்தில் ஸகல தேவதைகளும் மகிழும்படி அங்கே ஒரு மஹேசுவர யக்ஞம் நடந்தது. அதில் சிந்தின ஹோமத் திரவியங்களால் உண்டான அம்ருதம் போன்ற கிழங்குகளும்,பழங்களும்,அவற்றைச் சாப்பிடுகிறவர்களுக்கு ஒரு மாத காலம் வரையில் பசி, தாகம், இளைப்பு, துக்கம் முதலியவை இல்லாமல் செய்யும். வானர தூதர்கள் அவைகளைப் புஜித்து, அங்குள்ள அபூர்வ மருந்துகளையும், வேர்களையும், பழங்களையும் புஷ்பங்களையும் ஸுக்ரீவனுக்குக் காணிக்கையாகக் கொண்டு வந்தார்கள். அவர்கள் பூமியிலுள்ள ஸகல வானரர்களையும் வெகு சீக்கிரமாக வந்து சேரும்படி எச்சரித்து, அவர்களுக்கு முன்பே



ஸுக்ரீவனிடத்தில் வந்து காணிக்கைகளை ஸமர்ப்பித்து வணங்கி, "ஸ்வாமி! பூமியிலுள்ள எல்லா மலைகளுக்கும், ஸமுத்திரங்களுக்கும், காடுகளுக்கும் போய் மஹாராஜாவின் உத்தரவை அங்குள்ள வானரர்களுக்குத் தெரிவித்தோம். அவர்கள் அதிவேகமாக வந்து கொண்டிருக்கிறார்கள்'' என்று சொன்னார்கள். அதைக்கேட்டு ஸுக்ரீவன் மனம் மகிழ்ந்து, அவர்கள் கொண்டுவந்த பொருள்களைப் பெற்றுக்கொண்டான்.

• ஏவம் ஶ்ருத்வா ததோ ஹ்ருஷ்ட: ஸுக்ரீவ: ப்லவகாதிப: |
ப்ரதிஜக்ராஹ தத் ப்ரீத: தேஷாம் ஸர்வ முபாயநம் || (37)

## ஸர்க்கம் 38

## ஸுக்ரீவன் ராமனைப் பார்த்தது

ப்ரதிக்ருஹ்ய து தத் ஸர்வ முபாயந முபாஹ்ருதம் |
வாநராந் ஸாந்த்வயித்வா ச ஸர்வாநேவ வ்யஸர்ஜயத் || (1)

பிறகு ஸுக்ரீவன் வந்த வானரர்களைப் பிரியமான வார்த்தைகளால் ஸந்தோஷப்படுத்தி உத்தரவு கொடுத்தனுப்பி, தன் எண்ணங்களும் ராமனுடைய காரியமும் முடியுமென்ற நம்பிக்கை உண்டாகி ஸந்தோஷித்தான். அப்போது லக்ஷ்மணன், "ஸுக்ரீவ! இங்கிருந்து இப்பொழுது புறப்பட்டுப் போவது உசிதமென்று உனக்குத் தோன்றினால் அப்படியே செய்வோம்'' என்றார். வானர ராஜன், "தங்கள் உத்தரவுப்படியே செய்கிறேன்'' என்று தாரை முதலிய வானர ஸ்த்ரீகளை அனுப்பிவிட்டு, அந்தப்புரத்தில் ஸஞ்சரிக்கும் வானரர்களை அழைத்து "என் பல்லக்கைச் சீக்கிரமாகக் கொண்டுவரச் சொல்லுங்கள்'' என்றான். அவர்கள் அப்படிச் செய்ய, தானும் லக்ஷ்மணனும் அதில் ஏறி வெண்குடை, வெண் சாமரம், சங்கம், பேரி முதலிய ஸகல உபசாரங்களுடன் அங்கிருந்து புறப்பட்டான்.

இப்படி வானர ஸைன்யங்கள் ஆயுதபாணிகளாகச் சூழ்ந்துவர, ராமன் இருக்குமிடத்திற்கு வந்து, ஸுக்ரீவனும் லக்ஷ்மணனும் பல்லக்கை விட்டிறங்கி, ராமனுக்கருகில் வந்து கைகூப்பி நின்றார்கள். வானர ஸைன்யங்களும் அடிபணிந்து கைகூப்பி நின்றன. தாமரை மொட்டுகளால் அலங்கரிக்கப்பட்ட தடாகத்தைப்போல் விளங்கும் அந்த வானரப் படையை ராமன் பார்த்து ஸுக்ரீவனிடத்தில் பிரீதியடைந்தார். தன் பாதங்களில் நமஸ்கரித்த அந்த வானராதிபதியைத் தூக்கியெடுத்து, பிரீதியுடன் அணைத்து, பக்கத்தில் உட்காரவைத்து, "ஸுக்ரீவ! எவன் தர்மார்த்த காமங்களைக் காலத்திற்குத் தகுந்தபடி பிரித்து அனுபவிக்கிறானோ அவனே அரசன். இப்படிச் செய்யாமல் எவன் காமத்தையே முக்கியமாகக் கொண்டாடுகிறானோ அவன், மரத்து நுனியில் உட்கார்ந்து தூங்கி

யவன் கீழே விழுந்தபின் விழித்துக்கொள்வதைப்போல், தன் நிலைமையிலிருந்து தவறியபின்தான் தன் நிலையை அறிவான. சத்துருக்களை ஜயித்து, மித்திரர்களைச் சேர்ப்பதில் நோக்கம் கொண்டு, தர்மார்த்த காமங்களை விதிப்படி அனுபவிப்பவனே தர்மவான். நாம் சத்துருவின்மேல் படையெடுத்துச் செல்லும் காலம் வந்துவிட்டது. ஆகையால் உன் மந்திரிகளுடன் அதற்கு வேண்டிய ஏற்பாடுகளை ஆலோசித்துச் செய்" என்றார்.

ஸுக்ரீவன், "பூர்வத்தில் ஐசுவரியத்தையும், கீர்த்தியையும், வானர ராஜ்யத்தையும் இழந்தேன். பிறகு அவைகளைத் தங்களுடைய அருளால் அடைந்தேன். தனக்கு உபகாரம் செய்தவனுக்குப் பதில் செய்யாதவன் எல்லா ஜந்துக்களாலும் நிந்திக்கப் படுவான். இந்த வானரர்கள் பூமி யெங்கும் திரிந்து என் ஸைன்யங்கள் யாவற்றையும் அழைத்து வந்தார்கள். மலை, காடு, ஏரி, ஆறு, கடல் முதலியவைகளிலிருந்து குரங்குகளும், கரடிகளும், தலைவர்களுடன் வந்துகொண்டிருக்கிறார்கள். நூறு, ஆயிரம் பதினாயிரம், லக்ஷம், பத்து லக்ஷம், கோடி, அற்புதம், பிருந்தம், கர்வம், நிகர்வம், மஹா கர்வம், ஸரோஜம், சங்கு, ஸமுத்திரம், அந்தம், மத்யம், பரார்த்தமென்று ஒன்றிற்கொன்று பத்து மடங்கு அதிகமுடைய கணக்கிற்கும் எட்டாதவர்கள். மேரு, மந்தரம் முதலிய மலைகளைப்போன்ற தேகமுடையவர்கள். இந்திரனுக்கு ஸமமான பராக்கிரமமுடையவர்கள். விந்தியம் மேரு முதலிய மலைகளில் வஸிப்பவர்கள். இந்த வானரர்கள் ராவணனையும், அவனுடைய படைகளையும் அலக்ஷ்யமாகக் கொன்று ஸீதையைக் கொண்டுவந்து சேர்ப்பார்கள்" என்றான்.

ஸுக்ரீவன் தன் ஆக்ஞைக்கு உட்பட்டுப் படையெடுத்துச் செல்வதற்கு வேண்டிய முயற்சிகளைச் செய்துவருவதைப் பார்த்து, ராமன் ஸந்தோஷப்பட்டு, மலர்ந்த நீலோத்பலங்களைப் போன்ற தேக காந்தியுடன் விளங்கினார்.

ததஸ்தமுத்3யோக3 மவேக்ஷ்ய பு3த்3தி4மாந்
ஹரிப்ரவீரஸ்ய நிதே3ஶவர்திந: |
ப3பூ4வ ஹர்ஷாத்3 வஸுதா4தி4பாத்மஜ:
ப்ரபு3த்3த4 நீலோத்பல துல்ய த3ர்ஶந: ‖ (32)

## ஸர்க்கம் 39

## வானர ஸைன்யம்

இதி ப்3ருவாணம் ஸுக்3ரீவம் ராமோ த4ர்மப்4ருதாம் வர: |
பா3ஹுப்4யாம் ஸம்பரிஷ்வஜ்ய ப்ரத்யுவாச க்ருதாஞ்ஜலிம் ‖ (1)

இப்படிச் சொன்ன ஸுக்ரீவனை ராமன் பிரியத்துடன் அணைத்து, "இந்திரன் மழை பெய்யச் செய்வதும், ஸூரியன் இருட்டைப் போக்குவதும் சந்திரன் கிரணங்களாலே பிராணிகளை ஸந்தோஷப்படுத்துவதும் ஆச்சரியமா? உன்னைப்போன்ற ஸாதுக்கள் மித்திரர்களுக்குப் பதில் உபகாரம் செய்வதும் ஆச்சரியமில்லை. நீ எப்பொழுதும் பிரியமாகப் பேசுகிறவனென்று அறிவேன். உன் உதவியால் சத்துருக்கள் அனைவரையும் ஜயிப்பேன். நீயே எனக்கு நண்பன், நீயே எனக்குத் தோழன், நீயே எனக்கு உதவி செய்ய வேண்டியவன். முன்பு புலோமனென்ற அஸுரனுடைய பெண்ணை பௌலோமியை அனுஹ்லாதனென்ற தைத்தியனும், இந்திரனும் மணம் புரிய விரும்பினார்கள். அனுஹ்லாதன் அவளை வஞ்சகமாக எடுத்துப் போகும்படி புலோமன் ஸம்மதித்தான். அதைக் கண்டு இந்திரன் அந்தத் துரோகியைக் கொன்று, அவளை மீட்டுவந்து மனைவியாகக் கொண்டான். அப்படி ராவணனும் ஸீதையை எடுத்துப் போனான். உன் உதவியால் அவனைக் கொல்வது நிச்சயம். புலோமன் இந்திரனால் அடைந்த கதியை இவனும் என் பாணங்களால் அடையட்டும்" என்று சொல்லிக் கொண்டிருக்கையில், உக்கிரமாக ஜ்வலித்துக்கொண்டிருந்த ஸூரியனுடைய கிரணங்களை மறைத்துக்கொண்டு, ஆகாசத்தில் புழுதி கிளம்பிற்று. திக்குகள் தெரியவில்லை. காடுகளும், மலைகளும், பூமியும் நடுங்கின. பிறகு வானர வீரர்கள் பெரிய மலைகளைப்போன்ற ரூபத்துடன் கூர்மையான பற்களையே ஆயுதங்களாகக்கொண்டு, எண்ணிற் கடங்காமல் வந்து, பூமி மறையும்படி நின்றார்கள். கண்மூடிக் கண் திறப்பதற்குள் வானர ஸேனைத் தலைவர்கள் பலகோடி வானரர்களால் சூழப்பட்டு வந்து நின்றார்கள். சிலர் நதிகளிலும், சிலர் மலைகளிலும், சிலர் கடல்களிலும், சிலர் காடுகளிலும் வஸிப்பவர்கள்; சிலர் பாலஸூரியனைப்போன்றவர்கள்; சிலர் சந்திரனை ஒத்தவர்கள்; சிலர் தாமரைத் தாதுகளுக்கு ஸமானர்கள்; சிலர் வெண்மை வர்ணமுள்ளவர்கள்: சிலர் மேருமலையில் வஸிப்பவர்கள்.

அவர்களுக்குள் சதபலி என்ற ஸேனாபதி பதினாயிரம் கோடி குரங்குகளுடனும், தாரையின் தகப்பனான ஸுஷேணன் பல பதினாயிரம்கோடியுடனும்; ருமையின் பிதாவான தாரன் ஆயிரம் கோடியுடனும்; தாமரைத் தாதுவைப்போன்ற தேகத்தையும்,பாலஸூரியனைப் போன்ற முகத்தையுடையவனும்,எல்லா வானரர்களுக்கும் மேலானவனுமான கேஸரி பல்லாயிரம் வானரர்களுடனும்;கவாக்ஷன் ஆயிரங் கோடி வானரர்களுடனும் தூம்ரன் இரண்டாயிரம் கோடி கரடிகளுடனும்; பனஸன் மூன்றுகோடி பயங்கரமான குரங்குகளுடனும்; நீலன் பத்துக்கோடி ஸைன்யங்களுடனும்; தங்கமலையைப்போன்ற கவயன் ஐந்துகோடி ஸேனைகளுடனும்; தரீமுகன் ஆயிரம் கோடி குரங்குகளுடனும்;அச்வினி புத்திரர்களான மைந்தனும் த்விவிதனும் ஆயிரம்கோடி ஸைன்யங்களுடனும்; கஜன் மூன்று கோடியுடனும் கரடிக்களுக்கரசனான ஜாம்பவான் பத்து கோடியுடனும்; ருமண்

வான் நூறு கோடியுடனும்; கந்தமாதனன் பத்து லக்ஷம் கோடியுடனும்; யுவராஜாவான அங்கதன் பதினாயிரம் லக்ஷம் கோடியுடனும்; தாரன் ஐந்து கோடியுடனும், இந்திரஜானு பதினோரு கோடியுடனும், ரம்பன் பதினோராயிரத்தறுநூறு கோடியுடனும்; துர்முகன் இரண்டு கோடியுடனும், ஹனுமான் ஆயிரம் கோடியுடனும், நளன் நூறாயிரம், கோடியுடனும், ததிமுகன் (ஸுக்ரீவனுடைய மாமன்) சரபன், குமுதன், வஹ்னி ரம்ஹன் என்றவர்கள் ஒவ்வொருவரும் பத்து பத்துக் கோடியுடனும்; மற்றும் சேனைத்தலைவர்கள் அநேக மாயிரம் கோடி ஸேனைகளுடனும் வந்தார்கள். அவர்களை எண்ணுவது ஸாத்தியமில்லை.

லோகத்திலுள்ள ஸகல வானரர்களும் நினைத்த ரூபங்களை எடுத்துக்கொண்டு தாவிக் குதித்துக் கர்ஜித்துக்கொண்டு, மேகங்கள் ஸூரிய மண்டலத்தைச் சூழ்வதுபோல் ஸுக்ரீவனைச் சூழ்ந்து ஆகாசத்தையும் பூமியையும் மறைத்து நின்றார்கள். பிறகு அவர்கள் வஸ்திரங்களை அரையில் கட்டிக்கொண்டு கைகூப்பி வணங்கி ஸுக்ரீவனுக்குத் தங்களுடைய பெயர்களைத் தெரிவித்தார்கள். சிலர் அவனுடைய ஸமீபத்தில் வந்து நின்றார்கள். பிறகு ஸுக்ரீவன் அந்த வானரசிரேஷ்டர்களை ராமனுக்கு வணக்கத்துடன் தெரிவித்து தன் ஸேனாதிபதிகளை நோக்கி, ''ஸைன்யங்களை மலைகளிலும் காட்டாறுகளிலும் ஸுகமாக வஸிக்கும்படி செய்யுங்கள். நன்றாகத் தெரிந்தவன் எல்லா ஸைன்யங்களிலும் எவர் வந்திருக்கிறார்களென்றும் எவர் வரவில்லை என்றும் பரிசோதித்து எனக்குத் தெரிவிக்கட்டும்'' என்று ஆக்ஞாபித்தான்.

யதா2ஸுக2ம் பர்வத நிர்ஜ4ரேஷு
வநேஷு ஸர்வேஷு ச வாநரேந்த்3ரா: |
நிவேஶயித்வா விதி4வத்3 ப3லாநி
ப3லா ப3லஜ்ஞ: ப்ரதிபத்து மீஷ்டே || (44)

---

## ஸர்க்கம் 40

# கிழக்கில் தேட அனுப்பினது

அத2 ராஜா ஸம்ருத்3தா4ர்த2: ஸுக்3ரீவ: ப்லவகே3ஶ்வர: |
உவாச நரஶார்தூ3லம் ராமம் பரப3லார்த3நம் || (1)

பிறகு ஸுக்ரீவன் தன் எண்ணங்கள் நிறைவேறினதால் ஸந்தோஷமடைந்து, ராமனைப் பார்த்து, "ஸ்வாமி! என் அதிகாரத்திற்குட்பட்ட ஸகல வானரர்களும் வந்துவிட்டார்கள். அவர்களைத் தகுந்த இடங்களில் இறக்கியிருக்கிறேன். அவர்கள் வீரியத்தில் தைத்யர்களுக்கும், தானவர்களுக்கும் ஸமமானவர்கள்; கீர்த்தி பெற்றவர்கள்; சிரமத்தை அறியாதவர்கள்; விடாமுயற்சியுள்ளவர்கள்; பூமி, ஆகாசம், வனங்கள், பர்வதங்கள், ஸமுத்திரங்கள்



முதலியவைகளில் தடையில்லாமல் ஸஞ்சரிக்கக் கூடியவர்கள். எல்லோரும் தங்களுடைய ஆக்ஞையை எதிர்பார்த்து இருப்பவர்கள். எல்லோரும் தங்களுடைய ஹிதத்தையே பிரார்த்திக்கிறவர்கள். தங்களுடைய உத்தேசத்தை நிறைவேற்றக்கூடியவர்கள். இவர்களைக்கொண்டு இந்தக் காலத்தில் எதைச் செய்வது உசிதமென்று தங்களுக்குத் தோன்றுகிறதோ அதை உத்தரவு செய்யப் பிரார்த்திக்கிறேன். இவர்கள் செய்யவேண்டியது இன்னது என்று எனக்குத் தெரியும். ஆனால் இவர்களெல்லோரும் தங்களைச் சேர்ந்தவர்கள்; தங்களுடைய ஆக்ஞைக்குக் கட்டுப்பட்டவர்கள்; எங்களுக்கெல்லாம் பிரபுவான தாங்களே உத்தரவு செய்யவேண்டும்'' என்றான்.

அதைக் கேட்டு ராமன் அவனை அதிகப் பிரீதியுடன் ஆலிங்கனம் செய்து, "ஸீதை பிழைத்திருக்கிறாளா இல்லையா என்பதையும் ராவணன் எங்கிருக்கிறான் என்பதையும் இவர்கள் அறிந்து வர வேண்டும். பிறகு நாமிருவரும் ஆலோசித்து மேலே நடக்க வேண்டிய காரியங்களைச் செய்வோம். இந்த விஷயத்தில் நானாவது லக்ஷ்மணனாவது யாதொன்றையும் கட்டளையிட முடியாது. இந்தக் காரியம் உன்னாலேயே நடக்க வேண்டியது. நீயே இதற்குத் தலைவன்; நீயே வானரர்களுக்குப் பிரபு; இந்த விஷயத்தில் செய்ய வேண்டியதை நீயே கட்டளையிடு; அது உனக்கே நன்றாய்த் தெரியும். நீ எனக்குத் தோழன்; பெரியோர்களால் நன்றாய்ப் பழக்கப்பட்டவன்; பராக்கிரமசாலி; புத்திமான்; கால தேசங்களை அறிந்தவன்; எங்களுடைய க்ஷேமத்தைக் கோரினவன்; இதுவரையில் அநேக முக்கிய காரியங்களைச் செய்து முடித்தவன்; புருஷார்த்தங்களை உன்னைப்போல் அறிந்தவர்கள் ஒருவரும் இல்லை'' என்றார்.

பிறகு ஸுக்ரீவன் விநதனென்ற ஸேனாபதியை அழைத்து "சந்திர ஸூரியர்களுடைய அம்சமான வானரர்களுடன் நீ கிழக்கு திக்கில் தேடவேண்டும். கால தேசங்களுக்குத் தகுந்தபடி நடந்துகொண்டு அங்குள்ள பர்வதங்களிலும், வனங்களிலும், நதிகளிலும் ஸீதையையும் ராவணன் இருக்குமிடத்தையும் தேடிக் கண்டுபிடியுங்கள். பாகீரதி, ஸரயு, கௌசிகி, காளிந்தி, யமுனா என்ற நதிகளிலும் யாமுனமென்ற மலையிலும்; ஸரஸ்வதி, சிந்து, சோணா என்ற நதிகளிலும்; மஹீ, காலமஹீ பிரஹ்மமாலம், விதேஹம், மாளவம், காசி, கோஸலம், மாகதம், புண்ட்ரம், வங்கம் முதலிய தேசங்களிலும், கோசகாரர்களென்ற அரசர்களின் பட்டணத்திலும், வெள்ளி உண்டாகும் தேசங்களிலும் தேடவேண்டியது.

"பிறகு கிழக்கு ஸமுத்திரத்தைச் சேர்ந்து அதிலுள்ள மலைகளிலும், பட்டணங்களிலும், மந்திர பர்வதத்தின் சிகரங்களிலும் தேடுங்கள். அவ்விடங்களில் மூடிய காதுடையவர்களும் உதட்டிலே காதையுடையவர்களும், இரும்பைப்போல் கறுத்துக் கெட்டியான

முகத்தையுடையவர்களும், ஒற்றைக் காலுடன் அதிவேகமாகச் செல்லுகிறவர்களும், பலசாலிகளும், அழியாத வம்சத்தையுடையவர்களும், நரமாம்ஸத்தை புஜிக்கிறவர்களுமான கிராதர்களும், தங்க நிறமுள்ள அழகான தேகங்களையும் காதில் நீண்ட மயிர்களையும் உடையவர்களாய் மீனைப் பச்சையாய்ப் புசிக்கும் கிராதர்களும் புலியின் முகத்தையும் மனுஷ்ய சரீரத்தையும் உடையவர்களாய் ஜலத்தில் ஸஞ்சரிக்கும் கோரமான ஜந்துக்களும் அங்கே உண்டு. இவைகளில் சில தீவுகளுக்கு மலைகளின் வழியாகப் போகவேண்டும். சில தீவுகளுக்கு ஆகாச மார்க்கமாகப் போகவேண்டும். சில இடங்களுக்குத் தெப்பங்களில் போகவேண்டும். எங்கும் ஜாக்கிரதையாகத் தேடுங்கள். அநேக ரத்தினங்கள் நிறைந்த யவமென்ற த்வீபம் ஒன்றுண்டு. அது ஏழு ராஜ்யங்களாகப் பிரிக்கப்பட்டிருக்கின்றது. அதற்குப் பக்கத்திலுள்ள ஸுவர்ண ரூப்யகமென்ற தீவில் தங்கச் சுரங்கங்களுண்டு. (தற்காலத்தில் ஜாவா ஸுபர்ணரேகா என்று பூகோளப் படங்களில் காணப்படும் தீவுகளுக்கும் இவைகளுக்கும் ஸம்பந்தமுண்டோ?) யவத்வீபத்திற்கப்பால் சிசிரமென்ற ஒரு மலை ஆகாசத்தை அளாவிக்கொண்டு தேவதானவர்களால் கொண்டாடப்படுகிறது.

"இப்படி ஜம்பூத்வீபத்தையும் அதைச் சூழ்ந்த உப்புக் கடலையும் தாண்டி பிலக்ஷ த்வீபத்திற்குப் போகவேண்டும்.அங்கே ஸமுத்திரக் கரையில் சோணு என்ற ஒரு ஆறு காணப்படும். அதன் ஜலம் சிவந்து ஆழமாகவும் வெகு வேகமாகவும் ஓடும். அதில் இறங்கும் துறைகளிலும் பக்கத்திலுள்ள காடுகளிலும் ராவணனையும் ஸீதையையும் தேடுங்கள். அங்கே மலைகளிலிருந்து ஓடும் பல அழகிய ஆறுகளும் கரைகளில் தோட்டங்களும் உண்டு. அங்கே மலைப் பிளப்புகளிலும் காடுகளிலும் தாழ்வரைகளிலும் ஜாக்கிரதையாகத் தேடுங்கள்.

"அதற்கப்பால் இக்ஷு ஸமுத்திரத்தில் பல பயங்கரமான தீவுகளுண்டு. அந்தக் கடலில் எப்பொழுதும் பெருங்காற்றால் அலைகள் கொந்தளித்துக் கொண்டிருக்கும். அங்கே பல அஸுரர்கள் வெகு காலம் ஆஹாரமின்றிப் பசி மிகுந்து,பிராணிகளை நிழலால் பிடித்துத் தின்கிறார்கள். இது பிரஹ்மாவின் கட்டளை. மஹா நாகங்களால் நிறைந்து கருத்த மேகத்தைப் போலிருக்கும் அந்தப் பெருங்கடலை, நிழலைப் பிடிக்கிறவர்களிடத்தில் அகப்படாமல் நீங்கள் உபாயத்தால் தாண்டுங்கள்.

பிறகு "சால்மலி த்வீபத்திற்குச் செல்லுங்கள். அங்கே ஒரு இலவ மரம் ஆகாசத்தை அளாவிக் கொண்டிருக்கிறது. அதனால் அந்த த்வீபத்திற்குச் சால்மலி என்று பெயர். கைலாஸ சிகரத்தைப்போன்ற ஒரு பெரிய மாளிகை அங்கே விசுவகர்மாவால் கருடனுக்குஅமைக்கப்பட்டிருக்கிறது. அதற்கப்பால் சிவந்த ஜலத்தையுடைய லோஹிதமென்ற பயங்கரமான கடலுண்டு. இதையே ஸுரா ஸமுத்திரமென்றும் சொல்வதுண்டு. அங்கே மலைகளைப் போன்ற தேகத்துடன் மலைகளிலிருந்து தொங்கிக்கொண்டு, மந்தேஹரென்ற பயங்கரமான ராக்ஷஸர்கள் வஸிக்கிறார்கள். ஸூர்யோதயத்தில் அவர்கள் ஸூரியனுடன் யுத்தம் செய்கிறார்கள்; அப்பொழுது பிரஹ்ம ஞானிகள் காயத்ரீ மந்திரத்தால் ஜபித்துக்கொடுக்கும் அர்க்யங்களால் அவர்கள் அடிபட்டு, ஜலத்தில் விழுந்து ஸூரிய கிரணங்களால் அவர்கள் கொளுத்தப்படுகிறார்கள். அஸ்தமித்த பிறகு வரவரப் பலம் அதிகரித்து மறுபடியும் மலைகளில் ஏறித் தொங்குகிறார்கள்.



"பிறகு நெய் ஸமுத்திரத்தையும், குசத்வீபத்தையும், தயிர் ஸமுத்திரத்தையும், கிரௌஞ்ச த்வீபத்தையும் ஜாக்கிரதையாய்த் தேடி அப்பால் வெளுத்த மேகத்தைப்போன்ற பாற்கடலைக் காண்பீர்கள். அதில் முத்துமாலைகளைப் போன்ற அலைகள் பெரும் சப்தத்துடன் ஒருவரையும் போகவொட்டாது. அதன் நடுவில் ரிஷபமென்ற ஒரு மலை திவ்விய பரிமளங்களாலும் வெள்ளியைப் போன்ற புஷ்பங்களாலும் விளங்குகிறது. அதில் ஸுதரிசனமென்று ஓர் ஏரி தங்கத் தாதுக்களுள்ள வெள்ளித் தாமரைகளுடன் காணப்படும். தேவ, யக்ஷ, கின்னர, சாரண கணங்கள் அப்ஸரஸ்களுடன் விளையாட வருவார்கள்.

"அதற்கப்பாலுள்ள புஷ்கர த்வீபத்தைத் தாண்டி சுத்தஜல ஸமுத்திரத்தைக் காண்பீர்கள். அங்கே ஔர்வ மஹரிஷியின் கோரமான தேஜஸ், குதிரைமுகத்துடன் விளங்குகிறது. அந்தப் படவா முகாக்னியால் பிரளயத்தால் ஸகல ஜலமும் எரிக்கப்படுகிறது. அந்த ஸமுத்திரத்திலுள்ள ஜந்துக்கள் மஹா பலமுள்ளவைகளானாலும் அந்த அக்னியைக்கண்டு பயந்து கூச்சலிடுகின்றன.

"அந்த ஸமுத்திரத்திற்கு அக்கரையில் பதின்மூன்று யோஜனைகளுக்கப்பால் ஜாதரூபசிலமென்ற தங்கமலை உண்டு. அதன்மேல் இந்தப் பூமியைத் தாங்கும் அனந்தனென்ற மஹாநாகம் ஆயிரம் தலைகளுடன் காணப்படுவார். அவர் சந்திரனைப்போன்ற தேக காந்தியையும், தாமரையைப்போன்ற நேத்திரங்களையும் உடையவராய், நீல வஸ்திரத்தால் அலங்கரிக்கப்பட்டு விளங்குகிறார். ஸகலப் பிராணிகளும் அந்த ஆதிசேஷ பகவானைக் கொண்டாடுகிறார்கள். அந்த மலையின் உச்சியில் அவருடைய தங்கப் பனைமரக் கொடி மூன்று கிளைகளுடன் அழகிய மேடையில் பிரகாசிக்கிறது. அது கிழக்குத் திசைக்கு எல்லையாகத் தேவதைகளால் ஏற்படுத்தப்பட்டது. அதற்கப்பால் தங்கமயமான உதயகிரி காணப்படும். அதன் சிகரம் நூறு யோஜனை உயரமுள்ளதாக அழகிய மேடைகளுடன் ஸூரியனைப்போல் பிரகாசித்துக்கொண்டு அநேக தங்க மரங்களால்

அலங்கரிக்கப்பட்டுத் தங்கமயமாக விளங்குகிறது. அங்கே ஒரு யோஜனை அகலமும் பத்து யோஜனை உயரமுமுள்ள ஸௌமனஸமென்ற தங்கச் சிகரமுண்டு. முன்பு மஹாவிஷ்ணு த்ரிவிக்ரமாவதாரமெடுத்தபொழுது பூமிக்குக் கிழக்கெல்லையாக இந்தச் சிகரத்தில் ஒரு அடியையும் மேற்கெல்லையாக ஸாவர்ணிமேரு என்ற மலைச் சிகரத்தில் ஓர் அடியையும் வைத்தார். ஸூரியன் ஒவ்வொரு நாளும் ஜம்பூ த்வீபத்தின் வடபுறத்தைச் சுற்றி வரும்பொழுது ஸௌமனஸமென்ற சிகரத்தில் தங்கி, அப்பொழுது மேருவிற்குத் தெற்கிலுள்ளவர்களால் காணப்படுகிறார். அங்கே வைகானஸரென்றும் வாலகில்யரென்றும் சில மஹரிஷிகள் ஸூரியனைப் போன்ற காந்தியுடன் எப்பொழுதும் தவம் செய்துகொண்டிருக்கிறார்கள். உதயகிரியின் பக்கத்தில் ஸுதரிசனமென்ற த்வீபமுண்டு. எவனுடைய தேஜஸால் ஸகல பிராணிகளுக்கும் பதார்த்தங்களைப் பார்க்கும் சக்தியுண்டாகிறதோ அந்த ஸூரியனுடைய தேஜஸ் இந்த த்வீபத்தில் விசேஷமாகப் பிரகாசிக்கிறது. அங்குள்ள மலைகளிலும், வனங்களிலும், காடுகளிலும், குகைகளிலும், ஆறுகளிலும், ராவணனையும், ஸீதையையும் தேடுங்கள். ஸூரியகிரணமும் உதயகிரியின் காந்தியும் சேர்ந்து கிழக்கில் சிவப்பாகத் தோன்றுகிறபடியால், காலை ஸந்தியை என்று சொல்லப்படுகிறது. இந்த உதயகிரி பூமிக்கும் பிரபஞ்சத்திற்கும் த்வாரமாகவும், ஸூரியனுடைய ஸஞ்சாரத்திற்கு ஆரம்ப ஸ்தானமாகவும் பிரஹ்மாவால் முன்பு ஏற்படுத்தப்பட்டபடியால் கிழக்குத்திசை என்று பெயருள்ளதாகவும் ஆயிற்று. இதுவரையிலும் சொல்லிவந்த இடங்களில் ஒவ்வொன்றிலும் ராவணனையும் ஸீதையையும் வெகு ஜாக்கிரதையாகத் தேடுங்கள். வானரர்கள் செல்லக்கூடிய எல்லை இதே. இதற்கப்பால் தேவதைகள் ஸஞ்சரிக்குமிடம் ஆரம்பமாகிறது. அங்கே ஸூரிய சந்திரர்களின் பிரகாசமில்லை; கிராமம் நகரம் தேசமென்ற பிரிவுகளின்றி ஒரே இருட்டால் மூடப்பட்டிருக்கும். அதைப்பற்றி எனக்கு ஒன்றும் தெரியாது. நீங்கள் உதயகிரி வரையில் போய் ஸீதையையும் ராவணன் இருக்குமிடத்தையும் தேடிக் கண்டுபிடித்து ஒரு மாதத்திற்குள் இங்கேவந்து சேரவேண்டும். தவறினால் விசாரணை இல்லாமல் கொல்வேன்.

இந்திரனுக்குப் பிரியமான காடுகள் நிறைந்த திசையில் நான் சொன்ன இடங்களிலும் மற்றவைகளிலும் நன்றாகத் தேடிக் காரியத்தை முடித்துக்கொண்டு வந்து சேருங்கள். பிறகு நீங்கள் உள்ளவரையில் ஸகலஸுகங்களையும் அனுபவிக்கலாம்'' என்று கட்டளையிட்டான்.

மஹேந்த்$^{3}$ர காந்தாம் வநஷண்ட$^{3}$ மண்டி$^{3}$தாம்
தி$^{3}$ஶம் சரித்வா நிபுணேந வாநரா: |
அவாப்ய ஸீதாம் ரகு$^{4}$வம்ஶஜ ப்ரியாம்
ததோ நிவ்ருத்தா: ஸுகி$^{2}$நோ ப$^{4}$விஷ்யத$^{2}$ ‖ (69)

---



## ஸர்க்கம் 41

# தெற்கில் தேட அனுப்பினது

தத: ப்ரஸ்தா$^{2}$ப்ய ஸுக்$^{3}$ரீவ: தந் மஹத்$^{3}$ வாநரம் ப$^{3}$லம் |
த$^{3}$க்ஷிணாம் ப்ரேஷயாமாஸ வாநரா நபி$^{4}$லக்ஷிதாந் ‖ (1)

பிறகு அக்னி குமாரனான நீலனையும் வாயுபுத்திரனான ஹனுமானையும் பிரஹ்மபுத்திரனான ஜாம்பவானையும், ஸுஹோத்ரன், சராரி, சரகுல்மன், கஜன், கவாக்ஷன், கவயன், ஸுஷேணன், (தாரையின் தகப்பனல்ல.) ரிஷபன், மைந்தன், த்விவிதன், விஜயன், கந்தமாதனன், உல்காமுகன், அஸங்கன் (அக்னிபுத்திரர்கள்) அங்கதன் முதலிய வானர வீரர்களையும் பார்த்து ஸுக்ரீவன், "நீங்கள் வெகு வேகமாகச் செல்லும் பெரிய ஸைன்யத்துடன் தெற்குத் திசையில் போய்த் தேடுங்கள். பல சிகரங்களுடனும் காடு, செடி புதர்களுடனும் விளங்கும் விந்தியமலையையும், கொடிய கருநாகங்கள் நிறைந்த நர்மதை என்ற ஆழமான நதியையும், கோதாவரி, கிருஷ்ணவேணி, வரதா, மேகலை, உத்கலையென்ற நதிகளையும், தசார்ண தேசத்திலுள்ள நகரங்களையும், அச்வவந்தி, அவந்தி, விதர்ப்பம், ரிஷிகம், மாஹிஷகம், வங்கம், களிங்கம் கௌசிகம், தண்டகாரண்யம், ஆந்த்ரம், புண்ட்ரம், சோழநாடு பாண்ட்யம், கேரளம் முதலிய தேசங்களையும் வெகு ஜாக்கிரதையாகத் தேடுங்கள். பிறகு அயோமுகமென்று ஒரு மலை தோன்றும். அது பல தாதுக்களாலும் விசித்திரமான சிகரங்களாலும், சந்தனக் காடுகளாலும் விளங்குகிறது. பிறகு தெளிந்த ஜலத்துடன் விளங்கும் காவேரி என்ற புண்ணியநதி காணப்படும். அங்கே அப்ஸரஸ்கள் எப்பொழுதும் ஸஞ்சரிப்பார்கள். மலய பர்வதத்தின் சிகரத்தில் தேஜஸால் ஸூரியனைப்போல் ஜ்வலிக்கும் அகஸ்திய மஹரிஷியைக் காண்பீர்கள். பிறகு அவரை நமஸ்கரித்து உத்தரவு பெற்றுக்கொண்டு முதலைகள் நிறைந்த தாமிரபர்ணி நதியைத் தாண்டவேண்டும். விசித்திரமான பரிமளங்களைப் பூசிக்கொண்டு தன் நாயகனைச் சேரப்போகும் யௌவன ஸ்த்ரீயைப்போல் இந்த நதிக்கரைகளில் சந்தனக் காடுகளால் பரிமளம் நிறைந்து ஸமுத்திர ராஜனைச் சேருகிறது. பிறகு முத்து நவரத்தினங்கள் முதலிய விலையுயர்ந்த பதார்த்தங்களுக்கு இருப்பிடமான பாண்டிய ராஜாக்களின் தங்கமயமான ராஜதானியான கபாடபுரம் தோன்றும். பிறகு ஸமுத்திரக்கரை சேர்ந்து, மஹேந்திர மலையைக் காண்பீர்கள். அகஸ்திய மஹரிஷி பின்வரும் காரியங்களை உத்தேசித்து அதை ஸமுத்திரத்தில் வைத்தார். அது பல காடுகளுடன் தங்கமயமாகத் தேவ, யக்ஷ, ஸித்த, சாரண, அப்ஸரஸ், ரிஷிகணங்களால் எப்பொழுதும் நிறைந்திருக்கும். பர்வகாலங்களில் ஸமுத்திர ஸ்நானம் செய்யத் தேவேந்திரன் அந்தப் புண்யத்தீர்த்தத்திற்கு வருவான்.

"அதற்கு நூறு யோஜனைக்கப்பால் மனுஷ்யர்கள் போக முடியாத லங்கைத் தீவு காணப்படும். அங்கே ஸீதையை வெகு ஜாக்கிரதையாகத் தேடவேண்டியது. துராத்மாவான ராவணனென்ற நமது சத்துருவின் ராஜதானி அதுதான். அவன் தேவேந்திரனுக்கு ஸமமான காந்தியுடன் ராக்ஷஸாதிபதியாய் அங்கே விளங்குகிறான். அந்த தெற்கு ஸமுத்திரத்தில் அங்காரகா என்ற ஒரு ராக்ஷஸி யிருக்கிறாள். அவள் பிராணிகளின் நிழலைப் பிடித்து அவர்களைக் கொன்று தின்கிறாள். ஆகையால் அங்கே ஜாக்கிரதையாகச் செல்லுங்கள். இவ்விடங்களைப்பற்றி எனக்குள்ள ஸந்தேகங்கள் நீங்கும்படி அவைகளை நன்றாய்த் தேடுங்கள்.

"அதற்குத் தெற்கில் நூறு யோஜனை தூரத்தில் புஷ்பிதகமென்ற ஒரு மலை உண்டு. அது தேவகணங்கள் ஸஞ்சரிக்கும் இடம். பல சிகரங்களுடன் ஆகாசத்தை அளாவிக்கொண்டு சந்திர ஸூரியர்களைப்போல பிரகாசிக்கிறது. அதில் தங்கமயமான ஒரு சிகரம் ஸூரியனுக்குத் தங்குமிடம். வெள்ளி மயமான மற்றொரு சிகரம் சந்திரனுக்குத் தங்குமிடம். நன்றியற்றவர்களும் கொடியவர்களும் நாஸ்திகர்களும் அதைக் காணமுடியாது. அதை நமஸ்கரித்துப் பூஜித்து உள்ளே ஜாக்கிரதையாகத் தேடுங்கள். அதற்கப்பால் பதினான்கு யோசனை தூரத்தில் ஸூரியவான் என்ற மலை தோன்றும். அங்கே போகும் வழி வெகு கஷ்டமானது. அதற்கப்பால் வைத்யுதமென்ற மலை எக்காலத்திலும் எவ்வித புஷ்பங்களாலும் பழங்களாலும் விளங்குகிறது. அங்குள்ள உத்தமமான வேர்களையும் கிழங்குகளையும் பழங்களையும் தின்று, அமிருதம் போன்ற தேனைக் குடித்து, அப்புறம் போனால் குஞ்சரமென்ற அழகான மலை தோன்றும். அங்கே ஒரு யோசனை அகலமும் பத்துயோசனை நீளமும் உள்ள ஒரு ஆசிரமத்தை அகஸ்திய மஹரிஷிக்கு விசுவகர்மா அமைத்திருக்கிறான். அது தங்கமயமாய்ப் பல ரத்தினங்களால் விளங்குகிறது. இந்த மலையில் மஹா நாகங்களுடைய போகவதி என்ற ராஜதானி விளங்குகிறது. அது விசாலமான அரண்களாலும், கூர்மையான பற்களையும் கொடிய விஷத்தையுமுடைய கோரமான ஸர்ப்பங்களாலும் காக்கப்படுகிறது. அங்கே வாஸுகி என்ற ஸர்ப்பராஜன் வஸிக்கிறார். அதற்கு ஸமீபத்திலுள்ள பல தேசங்கள் ரஹஸ்யமாக இருக்கின்றன. அங்கே ஜாக்கிரதையுடன் தேடுங்கள்.

"அதற்கப்பால் ரிஷபமென்ற மலை காளையின் ரூபத்துடன் தோன்றும். அதில் பல ரத்தினங்களும், கோரோசனை, தாமரை இதழ், குங்குமம், பச்சிலை மரத்திலை, அக்னி முதலியவைகளின் நிறத்தையுடைய பலவித சந்தனங்களும் உண்டாகின்றன. நீங்கள் அவைகளைப் பார்த்து ஆசைகொண்டு தொடக்கூடாது. ரோஹிதர்களென்ற கோரமான கந்தர்வர்கள் அவைகளுக்குக் காவல். சைலூஷன், க்ராமணி, சிக்ரு, சுப்ரன், பப்ரு என்று ஸூரிய தேஜஸுள்ள



ஐந்து தலைவர்கள் அவர்களுக்குண்டு. மஹா புண்ணியவான்களும் ஸூரிய சந்திர அக்கினிகளைப்போன்ற தேஜஸுடன் அங்கே வஸிக்கிறார்கள். ஸ்வர்க்கத்தை அடைந்தவர்களும் அங்கே இருப்பதுண்டு.

" அதற்கப்பால் உங்களால் போக முடியாது. பயங்கரமான பிதிருலோகமும் கோரமான இருளால் சூழப்பட்ட யமனுடைய ராஜதானியும் இருக்கின்றன. நீங்கள் அதுவரையில் போய்த் தேட முடியும். இதுவரையில் நான் சொன்ன இடங்களையும் இன்னும் அங்கே காணப்படும் மற்ற இடங்களையும் ஜாக்கிரதையாய்த் தேடி ஜானகியைக் கண்டுபிடிக்க வேண்டும். எவன் ஒரு மாதத்திற்குள் ஸீதையைக் கண்டேனென்ற ஸமாசாரத்தை என்னிடத்தில் வந்து சொல்லுகிறானோ அவன் எனக்கு ஸமமான போகங்களையும், ஐசுவரியங்களையும் அனுபவித்துக்கொண்டு ஸுகமாகக் காலம் கழிப்பான். அவன், உயிரைக் காட்டிலும் எனக்குப் பிரியமானவன். அவனை விட எனக்குப் பிரியமானவன் இல்லை. அவன் எவ்வளவு குற்றங்களைச் செய்தாலும் அருமையான பந்துவைப்போல் நடத்துவேன். நீங்கள் அளவற்ற பராக்ரமமுள்ளவர்கள். உத்தம குணங்களால் அலங்கரிக்கப்பட்ட குலங்களில் பிறந்தவர்கள். ஆகையால் ஜானகியைத் தேடிக் கண்டு பிடிக்க ஸகலப் பிரயத்தனங்களையும் குறைவில்லாமல் செய்ய வேண்டும்" என்று கட்டளையிட்டான்.

அமித ப³லபராக்ரமா ப⁴வந்தோ
விபுலகு³ணேஷு குலேஷு ச ப்ரஸூதா: |
மநுஜபதி ஸுதாம் யதா² லப⁴த்⁴வம்
தத³தி⁴ கு³ணம் புருஷார்த²மாரப⁴த்⁴வம் || (50)

## ஸர்க்கம் 42

# மேற்கில் தேட அனுப்பினது

அத² ப்ரஸ்தா²ப்ய ஸுக்³ரீவ: தாந் ஹரீந் த³க்ஷிணாம் தி³ஶம் |
அப்³ரவீந் மேக⁴ஸங்காஶம் ஸுஷேணம் நாம யூத²பம் || (1)

பிறகு தாரையின் தகப்பனும் தன் மாமனுமான ஸுஷேணனை வணங்கிக் கைகூப்பி, "மாரிசி புத்திரரான வானர சிரேஷ்டா! இந்திரனைப்போலும் கருடனைப் போலும் நீர் தேஜஸை உடையவர். உத்தம புத்தியாலும் பராக்கிரமத்தாலும் அலங்கரிக்கப்பட்டவர். மற்ற மாரிசி புத்திரர்களுடனும் ரிஷி குமாரர்களான வானரர்களுடனும் புறப்பட்டு இரண்டு லக்ஷம் ஸைன்யங்களுடனும் மேற்கில் ஸீதையைத் தேட வேண்டும். ஸுராஷ்ட்ரம், பாஹ்லிகம், சூரம், பீமம் முதலிய தேசங்களையும், ஜனங்கள் நிறைந்த விசாலமான நகரங்களையும், நாட்டுப்புறங்களையும், தாழை முதலிய அபூர்வ புஷ்பங்களால் வாஸனை வீசும் காடுகளையும் பார்ப்பீர்கள். மேலும் மேற்கில் ஓடும் புண்ணிய நதிகளையும்; ஜலம், மரம், செடி

கொடிகள் இல்லாத பாலைவனத்தையும்; உயர்ந்த தனிப்பாறைகளையும்; மலைகளால் சூழப்பட்டுப் போகமுடியாத பிரதேசங்களையும் நன்றாகப் பரிசோதித்துப் பாருங்கள். அதற்கப்பால் பயங்கரமான ஜந்துக்களாலும் மலைபோன்ற அலைகளாலும் விளங்கும் மேற்குக் கடல் காணப்படும். அங்கே தாழைக் காடுகளிலும் பச்சிலைக் காடுகளிலும் தென்னந்தோப்புகளிலும் ஸந்தோஷமாகத் திரிந்து ஸீதையையும் ராவணனையும் தேடுங்கள். ஸமுத்திரக் கரையிலுள்ள மலைகளிலும் காடுகளிலும், முரசீபட்டணம், ஜடீபுரம், அவந்திபுரம், அங்கலோபை என்ற நகரங்களிலும் அடர்ந்த மரங்களுள்ள அலக்ஷிதமென்ற வனத்திலும் இன்னும் பற்பல ராஜ்யங்களிலும் விசாலமான பட்டினங்களிலும் தேடுங்கள். ஸிந்து நதி ஸமுத்திரத்தில் விழும் இடத்தில் ஹேமகிரியென்ற மலை பல சிகரங்களுடன் விளங்குகிறது. இறக்கைகளையுடைய ஸிம்ஹங்கள் அங்கே வஸிக்கின்றன. அவை திமிங்கலம், யானை முதலிய பெரிய ஜந்துக்களையும் எடுத்துக்கொண்டு பெரிய மலைகளிலுள்ள தங்களுடைய கூடுகளுக்குப் போகின்றன. ஜனங்கள் நிறைந்த அந்த விசாலமான தேசத்திலுள்ள யானைகள் மதத்தால் மேகங்களைப்போல் கர்ஜித்துக்கொண்டு மலைச் சிகரத்திலுள்ள அந்த ஸிம்ஹங்களின் குகைக்கு ஸமீபத்தில் பயமில்லாமல் திரிகின்றன. நீங்கள் ஸூக்ஷ்மமான ரூபங்களுடன் தங்க மயமான அந்த உன்னத சிகரத்தில் ஜாக்கிரதையாகத் தேட வேண்டும். அதற்கப்பால் பாரியாத்ரமென்ற மஹா பர்வதத்தின் தங்கச்சிகரம் நூறு யோசனை விஸ்தீரணமுள்ளதாகக் காணப்படும். அங்கே இருபத்து நான்கு கோடி கந்தர்வர்கள், நினைத்த ரூபங்களைத் தரிக்கக்கூடியவர்களாக வஸிக்கிறார்கள். அந்த மஹா பலசாலிகள் அவைகளை வெகு ஜாக்கிரதையாகக் காக்கிறபடியால் அங்கிருக்கும் பழங்களையாவது மற்றப் பொருள்களையாவது நீங்கள் தொடக்கூடாது. அவர்கள் விவேகமுள்ளவர்கள். அக்னியின் காந்தியுள்ளவர்கள்; ஆனாலும் நீங்கள் அவர்களைக் கண்டு பயப்படாமல் ஸீதையைத் தேடுங்கள்.

"அதற்கப்பால் வைடூரியமென்ற ஒரு மலை நூறு யோசனை விஸ்தாரத்துடன் தோன்றும். அங்குள்ள குகைகளில் நன்றாகத் தேடவேண்டும். பிறகு ஸமுத்திரத்தின் நான்காவது பாகத்தில் சக்ரவானென்ற மலை தோன்றும். ஆயிரம் முனைகளையுடைய சக்கரத்தை விசுவகர்மா அங்கே ஸிருஷ்டித்து விஷ்ணுவிற்குக் கொடுத்தான். அவர் முன்பு ஒரு காலத்தில் தேவாஸுர யுத்தத்தில் புருஷோத்தமனென்ற பெயருடன் அவதரித்தார். ஹயக்ரீவனென்ற தானவனைக் கொன்று அவனால் ரக்ஷிக்கப்பட்ட சக்கரத்தையும், பஞ்சஜனன் என்ற அஸுரனைக் கொன்று அவனுடைய எலும்பால் செய்யப்பட்ட பாஞ்சஜன்யமென்ற சங்கத்தையும் எடுத்துக்கொண்டு வந்தார். அந்த மலையின் குகைகளிலும் தாழ்வரை



களிலும் ஸீதையையும் ராவணனையும் ஜாக்கிரதையாகத் தேடுங்கள். அதற்கு அறுபதாயிரம் யோசனைகளுக்கப்பால் தங்கச் சிகரங்களுள்ள வராஹபர்வதம் தோன்றும். அங்கே ப்ராக்ஜ்யோதிஷமென்ற நகரத்தில் நரகனென்ற கொடிய அஸுரன் வஸிக்கிறான். அங்கேயும் நன்றாகத் தேடுங்கள். அதற்கப்பால் தங்கக் குகைகளுள்ள மேகவானென்ற மலையுண்டு. அந்தத் தங்கமலையில் வஸிக்கும் கரடி புலி முதலிய மிருகங்கள் தங்கள் கர்ஜனையால் மலைகளிலிருந்து எதிரொலி உண்டாவதைக் கேட்டுக் கொழுப்படைந்து அதிகமாகக் கர்ஜிக்கின்றன. தேவதைகள் இந்திரனைத் தங்களுக்கு அரசனாக அங்கே அபிஷேகம் செய்தார்கள். அதற்கப்பால் அறுபதாயிரம் தங்க மலைகளைக் காண்பீர்கள். அவை பாலஸூரியனைப்போல் தங்க மரங்களாலும் புஷ்பங்களாலும் பிரகாசிக்கும்.

அந்தச் சிகரங்களுக்கு நடுவில் ஸாவர்ணிமேரு என்ற ஒரு மலை மற்றவைகளுக்கு அரசனைப்போல் விளங்குகின்றது. அது ஸூரியனைக் குறித்து கடுந்தவம் செய்து, "உன்மேல் ஒரு பகலும் இரவும் வஸிக்கும் ஜந்துக்களெல்லாம் தங்கமயமாவார்கள்" என்ற வரத்தை அடைந்தது. மேலும் தேவகணங்களும் மருத்துக்களும் வஸுக்களும் ஸாயங்காலத்தில் அந்த மலைக்கு வந்து, ஸூரியனை உபாஸிக்கிறார்கள். ஆதித்யன் அவர்களால் பூஜிக்கப்பட்டு பிராணிகளுடைய கண்களுக்குத் தெரியாமல் அஸ்தகிரியை அடைகிறார். அஸ்தகிரி அங்கிருந்து பதினாயிரம் யோஜனை தூரத்திலிருந்தாலும் ஸூரியன் அதை அரை முஹூர்த்தத்தில் தாண்டிச் செல்லுகிறார். அந்த மலையின் சிகரத்தில் உள்ள ஒரு பொன்மயமான பட்டணம், பொன்மயமான பசு, பக்ஷி முதலியவைகளையுடையதாய் நானா விருக்ஷங்களுடன் விசுவகர்மாவால் அமைக்கப்பட்டிருக்கிறது. அது பாசத்தைத் தரிக்கும் வருணனென்ற திக்பாலனுடைய ராஜதானி. ஸாவர்ணி மேருவுக்கும் அஸ்தகிரிக்கும் நடுவில் ஓர் தங்கமயமான பனைமரம், பத்துக் கிளைகளுடன் விசித்திரமான மேடையால் சூழப்பட்டு வெகு உன்னதமாய் விளங்குகிறது. அங்குள்ள ஏரிகளிலும், ஆறுகளிலும், குகைகளிலும் ஜாக்கிரதையாகத் தேடுங்கள். அந்த மலையில் மேருஸவர்ணியென்ற மஹாத்மா வஸிக்கிறார். இனி வரும் மன்வந்தரத்தில் அவர் மனுவாக இருப்பார். பிரஹ்மாவிற்கு ஸமமானவர்; தேஜஸால் ஸூரியனைப்போல் விளங்குகிறார். அவரை ஸாஷ்டாங்கமாய் நமஸ்கரித்து ஸீதையின் விருத்தாந்தத்தைக் கேட்க வேண்டும். இதுவரையிலுமே ஸூரியன் ஒவ்வொரு தினமும் தன் கிரணங்களால் இருளைப் போக்கி வெளிச்சத்தைக் கொடுத்து அஸ்தகிரியில் மறைகிறான். இதற்கப்பால் வானரர்கள் செல்ல முடியாது. அங்கே ஸூரியப் பிரகாசமில்லை;

நாடு நகரமென்ற பிரிவுகளில்லை. இதுவரையில்தான் எனக்குத் தெரியும்.

நீங்கள் அஸ்தகிரிவரையில் சென்று, ஸீதையையும் ராவணன் இருக்குமிடத்தையும் கண்டுபிடித்து, ஒரு மாதத்திற்குள் வந்து சேர வேண்டியது; தவறினால் கொல்லப்படுவீர்கள். எனக்கு மாமனும் மஹாவீரனுமான ஸுஷேணரை உங்களுடன் அனுப்பியிருக்கிறேன். நீங்கள் அவருடைய ஆக்ஞைப்படி நடக்கவேண்டியது. அவர் என்னால் பூஜிக்கப்படுகிறவர்; மஹா பலவான்; மஹானுபாவர்; நீங்களும் பராக்கிரமசாலிகள். இவரை முன்னிட்டுக்கொண்டு மேற்குத் திக்கில் ஒவ்வோரிடத்திலும் ஜாக்கிரதையாய்த் தேடுங்கள். நீங்கள் ஜானகியைத் தேடிக் கண்டுபிடித்து வந்தால், ரகுநாதன் நமக்குச் செய்த பரம உபகாரத்திற்கு ஒருவாறு பதில் செய்தவர்களாவோம். அதைவிட நாம் செய்யும் காரியம் வேறில்லை; அதைப்போன்ற பாக்கியம் நமக்குக் கிடைப்பதரிது; பிறகு நாம் செய்ய வேண்டியது ஒன்றுமில்லை. நான் உங்களுக்குச் சொன்ன விஷயங்களைத் தவிர, தேச காலங்களுக்குத் தகுந்தபடி யோசித்து நடக்கவேண்டியது'' என்று ஆக்ஞாபித்தான்.

பிறகு ஸுஷேணனும் அவனைச் சேர்ந்த வானரர்களும் ஸுக்ரீவனுக்கு நமஸ்கரித்து அவனிடத்தில் உத்தரவு பெற்றுக்கொண்டு மேற்குத் திக்கில் தேடப் புறப்பட்டார்கள்.

தத: ஸுஷேண ப்ரமுகா³: ப்லவங்கா³:
ஸுக்³ரீவ வாக்யம் நிபுணம் நிஶம்ய |
ஆமந்த்ர்ய ஸர்வே ப்லவகா³தி⁴பம் தே
ஜக்³முர் தி³ஶம் தாம் வருணாபி⁴கு³ப்தாம் || (66)

---

## ஸர்க்கம் 43

# வடக்கில் தேட அனுப்பினது

---

தத: ஸந்தி³ஶ்ய ஸுக்³ரீவ: ஶ்வஶுரம் பஶ்சிமாம் தி³ஶம் |
வீரம் ஶதப³லிம் நாம வாநரம் வாநரர்ஷப⁴: || (1)

பிறகு ஸுக்ரீவன் சதபலியென்ற வானரவீரனை அழைத்துத் தனக்கும் ராமனுக்கும் ஹிதமான வார்த்தைகளைச் சொல்ல ஆரம்பித்தான். "நீ உன்னைப் போன்ற அநேகமாயிரம் வானரஸேனைகளுடனும், யமனுடைய குமாரர்களுடனும், மந்திரிகளோடும் இங்கிருந்து புறப்பட்டு ஹிமாலய மலையை அலங்காரமாக உடைய வடக்குத் திசையில் தேடவேண்டும். நாம் இந்தக் காரியத்தை முடித்து ரகுநாதனுக்குத் திருப்தி செய்தால் அவரிடத்தில் நாம் பெற்ற உபகாரமென்ற கடனைத் தீர்த்துப் புண்ணியசாலிகளாவோம். ரகுநாதன் நமக்கு அளவற்ற உபகாரம் செய்திருக்கிறாரல்லவா? நாம் அதற்கு பிரத்யுபகாரம் செய்தால் மாத்திரமே நமது



ஜன்மம் கடைத்தேறும். தனக்கு உபகாரம் செய்யாத ஒருவன் தன்னை பிரார்த்தித்தவுடன் அவனுடைய காரியத்தை முடித்துக் கொடுக்கும் புண்ணியாத்மாவின் ஜன்மமே ஜன்மம். நாம் முதலில் உபகாரம் பெற்றதால் அப்படிச் செய்யவேண்டியதைப் பற்றிச் சொல்லவும் வேண்டுமா? நீங்கள் என் ஹிதத்தைக் கோறுகிறவர்களானால் இப்பொழுது நான் சொன்ன விஷயத்தை மனத்தில் வைத்துக்கொண்டு ஸீதையைக் கண்டுபிடிக்கும் வழியைத் தேடுங்கள். ராமன் ஸகலப் பிராணிகளாலும் பூஜிக்கத் தகுந்தவர், புருஷோத்தமர், சத்ருக்களை நாசம் செய்யும் அபார சக்தி படைத்தவர், நம்மிடத்தில் விசேஷ பிரீதி வைத்தவர். ஆகையால் நீங்கள் ஸகல வனங்களிலும், மலைகளிலும், ஆறுகளிலும் வெகு ஜாக்கிரதையாகத் தேடுங்கள்.

"இங்கிருந்து புறப்பட்டு மிலேச்சம், புளிந்தம், ஆரஸேனம், ப்ரஸ்தலம், பரதம் (இந்திரபிரஸ்தம் ஹஸ்தினபுரம் முதலியவை) தக்ஷிண குரு, மத்ரகம், காம்போஜம், யவனம், சகம், ஆரட்டகம், ப்ராஹ்லீகம், ரிஷிகம், பௌரவம், டங்கணம், சீனம், பரமசீனம், நீஹாரம், தரதம் முதலிய தேசங்களையும், ஹிமாலய பர்வதத்தையும், அதிலுள்ள ஏரிகளையும், தேவதாரு வனங்களையும் ஜாக்கிரதையாகத் தேடுங்கள். பிறகு ஸோமனுடைய ஆசிரமத்தைத் தாண்டி, தேவதைகளாலும், கந்தர்வர்களாலும் கொண்டாடப்பட்ட காலம் என்ற பர்வதத்தைக் காண்பீர்கள். அங்கேயும் நன்றாகத் தேட வேண்டியது; அங்கிருந்து ஸுதரிசனம் தேவஸகா என்ற அழகான பர்வதங்களிலும் தேடுங்கள். அதற்கப்பால் நூறு யோசனையில் ஆறு, ஏரி, வனம், பசு, பக்ஷிகள் ஒன்றுமில்லாத பாலைவனம் தோன்றும். அதி சீக்கிரத்தில் அதை ஆகாசமார்க்கமாகத் தாண்டிக் கைலாஸமென்ற மஹாபர்வதத்தைக் காண்பீர்கள். அதில் வெளுத்த மேகத்தைப் போல் அழகான ஒரு நகரம் விசுவகர்மாவால் குபேரனுக்கு வாஸஸ்தானமாய் ஸிருஷ்டிக்கப்பட்டிருக்கிறது. அங்கே மானஸமென்ற ஏரி, தாமரைகளாலும், ஹம்ஸம் முதலிய நீர்ப்பறவைகளாலும் நிறைந்து, அப்ஸரஸ்களால் கொண்டாடப்படுகிறது. அங்கே யக்ஷராஜாவான குபேரன், குஹ்யகர்களென்ற தேவகணங்களுடன் ஸகல ஐசுவரியங்களுக்கும் அதிபதியாய் வஸித்துக் கொண்டிருக்கிறான். சந்திரனைப்போல் வெளுத்த அந்தப் பர்வதத்தின் ஒவ்வொரு பாகத்திலும் தேடுங்கள். பிறகு கிரௌஞ்ச பர்வதத்தைச் சேர்ந்து அங்கே ஸ்கந்தருடைய சக்தி ஆயுதத்தால் பிளக்கப்பட்ட ஓர் குகையில் பிரவேசித்துத் தேடுங்கள். அது ஒருவராலும் பிரவேசிக்க முடியாதென்று சொல்லுகிறார்கள். அந்தக் குகையில் ஸூரியனைப்போல் காந்தியுள்ள சில மஹரிஷிகள் வஸிக்கிறார்கள். அவர்கள் தேவர்களாலும் பூஜிக்கப்படுகிறவர்கள்; தேவதைகளின் ரூபத்தைத் தரித்தவர்கள். கிரௌஞ்சகிரியின் குகைகளையும், சிகரங்களையும், தாழ்வரைகளையும், பிளப்பு

களையும், அடிவாரங்களையும் நன்றாய்த் தேடுங்கள். பிறகு மன்மதன் தவம் செய்த விருக்ஷங்களற்ற காமசைலம் என்ற மலையையும் மானஸமென்ற மலையையும் பரிசோதிக்க வேண்டியது. அந்த மானஸபர்வதத்தில் தேவ, தானவ, ராக்ஷஸர் முதலியவர்கள் ஸஞ்சரிக்கக் கூடாது. அங்கே ஒவ்வோரிடத்திலும் ஜாக்கிரதையாய்த் தேடவேண்டியது.

"அதற்கப்பால் மைநாக பர்வதத்தில், மயனென்ற அஸுரன் தனக்கு அழகான வாஸஸ்தானத்தை ஸிருஷ்டித்திருக்கிறான். அங்கே கிம்புருஷஸ்த்ரீகள் வஸிக்கிறார்கள். அதற்கப்பால் ஸித்தர்கள், வைகானஸர்கள் முதலிய மஹா யோகிகளின் ஆசிரமங்கள் காணப்படும். அவர்கள் தவம் ஸித்தி அடைந்து ஸகல பாபங்கள் அற்றவர்களாக ஜ்வலிக்கிறார்கள். அவர்களை நமஸ்கரித்து, ஸீதையின் வரலாற்றையும் வணக்கமாக விசாரியுங்கள். அங்கே வைகானஸமென்ற ஒரு ஏரி தங்கத் தாமரைகளாலும், பால ஸூரியனைப் போன்ற ஹம்ஸங்களாலும் விளங்குகிறது. குபேரனுக்கு வாஹனமான ஸார்வபௌமமென்ற திக்கஜம் பெண்யானைகளுடன் அங்கே ஸஞ்சரிக்கும். அதற்கப்பால் ஸூரிய சந்திர நக்ஷத்திரங்களும் மேகங்களுமில்லாமல் எல்லையற்ற ஓர் தேசம் அங்குள்ள மஹா யோகிகளின் தேஜஸால் எப்பொழுதும் பகல்போல் பிரகாசிக்கிறது. அதற்கப்பால் சைலோதை என்ற நதி தோன்றும். அதன் கரைகளில் அடர்ந்த மூங்கிற் காடுகளுண்டு. அவை ஒன்றோடொன்று பின்னிக்கொண்டு ரிஷிகள் அந்த நதியை ஸுலபமாகத் தாண்டும் பாலமாக இருக்கின்றன.

அதற்கப்பால் புண்ணியாத்மாக்கள் வஸிக்கும் உத்தர குரு என்ற தேசமுண்டு. அங்கே தங்கத் தாமரைகளுள்ள ஓடைகளும் இந்திரநீல வைடூர்ய மயமான இலைகளையுடைய நானு புஷ்பங்களால் நிறைந்த பல ஆறுகளுமுண்டு. அங்குள்ள ஏரிகள் செங்கழுநீர் முதலிய தங்கமயமான புஷ்பங்களால் விளங்குகின்றன. ரத்தினமயமான இலைகளையும் பொன்மயமான தாதுக்களையுமுடைய கருநெய்தல் புஷ்பங்களும், முத்துக்களால் நிறைந்து நவமணிகள் கலந்த மணற் குன்றுகளும், எப்பொழுதும் தளிர்த்துப் பூத்துக் காய்க்கும் ரத்தினமயமான மரங்களும், அபூர்வமான பக்ஷிகளும் காணப்படும். சில மரங்களிலிருந்து திவ்யமான கந்தங்களும் ரஸங்களும், இன்னும் வேண்டியவைகளும் பெருகும். சில விருக்ஷங்கள் விசித்திரமான ஆடைகளையும் ஸ்திரீ புருஷர்களுக்குத் தகுந்த சிரேஷ்டமான ஆபரணங்களையும் கொடுக்கும். சில மரங்கள் ருசியுள்ள பழங்களையும், பானங்களையும் கொடுக்கும். அங்கே மஹா தேஜஸுள்ள கந்தர்வர்களும், கின்னரர்களும், ஸித்தர்களும் நாகர்களும், வித்யாதரர்களும் தங்கள் நாயகிகளுடன் விளையாடுகிறார்கள். எல்லோரும் புண்ணியசாலிகள்: எப்பொழுதும் ஸுகத்தையே அனுபவிக்கிறவர்கள். ஸகல ஆசைகளையும் பூர்த்தி செய்தவர்கள்; எப்பொழுதும் நாயகிகளை விட்டுப் பிரியாதவர்கள். அங்கே எக்காலத்திலும் பாட்டும், வாத்தியங்களும், சிரிப்பும் கேட்கும். அங்கே ஸந்தோஷமில்லாதவனாவது நாயகி இல்லாதவனாவது கிடையாது. அவ்விடத்தில் வஸிப்பவர்களுடைய ஸுகம் முதலிய உத்தம குணங்கள் நாளுக்கு நாள் வளரும். (ராக்ஷஸர்கள் மேருமலையில் வஸிக்க முடியாததால் அங்கே தேடச் சொல்லவில்லை.)

"அதற்கப்பால் வடக்கு லவண ஸமுத்திரம் தோன்றும். அங்கே ஸோமகிரி என்ற மலையுண்டு. இந்திர லோகத்திற்கும் பிரஹ்ம லோகத்திற்கும் போகிறவர்கள் அந்த வழியாகப் போகவேண்டியதால் அதைப் பார்த்துக்கொண்டே போவார்கள். அங்கே ராத்திரியில் ஸூரிய காந்தி இல்லாவிட்டாலும் அந்த மலையின் காந்தியால் பகல்போல் பிரகாசிக்கும். அங்கே ஸகல பிரபஞ்சத்தையும் சரீரமாக உடையவரும் அனந்த கல்யாண குணங்களால் அலங்கரிக்கப்பட்டவரும் வாஸுதேவனும் ஏகாதச ருத்திரர்களின் மூர்த்தியான பரமசிவனும் தேவதைகளுக்கு அதிபதியான பிரஹ்மாவும் ரிஷிகளால் சூழப்பட்டு வஸிக்கிறார்கள். அதற்கப்பால் நீங்கள் போக முடியாது. தேவதைகளும் மற்ற யாவரும் ஸோமகிரிக்குப் போவது கஷ்டம். ஆகையால் அந்த மலையைத் தரிசித்துத் திரும்பிவிடுங்கள். அதுவரையில் மனுஷ்யர்கள் போகத் தகும். அதற்கப்பாலுள்ள ஸமுத்திரங்களும், த்வீபங்களும், ஸூரிய கிரணமற்றும், நாடு நகரம் முதலிய பிரிவுகளற்றும் ஒரே இருளாகவிருக்கும். அவ்விடங்களை நான் பார்த்ததுமில்லை; அவைகளைப்பற்றிக் கேட்டதுமில்லை. நான் சொன்னவிடங்களையும் மற்றவிடங்களையும் வெகு ஜாக்கிரதையாகத் தேடி, ஸீதையையும் ராவணன் இருக்குமிடத்தையும் கண்டுபிடித்து வாருங்கள். அப்படிச் செய்தால் எனக்கும் ரகுவீரனுக்கும் அளவற்ற திருப்தியுண்டாகும். பிறகு நீங்களும் உங்கள் மித்திரர்களும் உங்கள் பந்துக்களும், யாதொரு கவலையுமற்று என்னால் மிகுந்த மரியாதை பெற்று ஸகல ஸௌக்கியங்களையும் அனுபவித்துக்கொண்டு வாழ்வீர்கள்'' என்று கட்டளையிட்டான்.

தத: க்ருதார்தா2: ஸஹிதா: ஸபா3ந்த4வா:
மயார்சிதா: ஸர்வகு3ணைர் மநோரமை: |
சரிஷ்யதோ2ர்வீம் ப்ரதிஶாந்த ஶத்ரவ:
ஸஹப்ரியா பூ4தத4ரா: ப்லவங்க3மா: || (65)

## ஸர்க்கம் 44

# ராமன் ஆஞ்ஜநேயரிடத்தில் மோதிரத்தைக் கொடுத்தது

விஶேஷேண து ஸுக்ரீவோ ஹநூமத்யர்த²முக்தவாந் |
ஸ ஹி தஸ்மித் ஹரிஸ்ரேஷ்டே² நிஸ்சிதார்தே²ரர்த² ஸாத⁴நே | *(1)*

பிறகு ஹனுமான் வானர சிரேஷ்டரென்றும் காரியத்தை முடிக்கக்கூடியவரென்றும் மஹா பராக்கிரமசாலி என்றும் ஸுக்ரீவன் நிச்சயித்து, அவரைத் தனியாக அழைத்து, "பூமி, ஆகாசம், ஸ்வர்க்கம், புவர்லோகம் முதலிய எவ்விடங்களிலும் உனக்குத் தடையில்லை என்று எனக்குத் தெரியும். அஸுரர்கள், கந்தர்வர்கள், நாகர்கள், தேவதைகள், மனுஷ்யர்கள் முதலிய பிராணிகளிலும் எல்லா லோகங்களிலும், ஸமுத்திரங்களிலும், மலைகளிலும், உனக்குத் தெரியாதது யாதொன்றுமில்லை. நடை, வேகம், காந்தி, சுறுசுறுப்பு முதலிய குணங்களில் நீ உன் பிதாவான வாயுவிற்கு ஸமமல்லவா? தேஜஸில் உன்னைப்போன்றவர் வேறு யாருமில்லை. ஆகையால் ஸீதையைக் கண்டுபிடிக்க உன்னையே நம்பியிருக்கிறேன். பலம், புத்தி, பராக்கிரமம், தேச காலங்களுக்குத் தகுந்தபடி நடந்துகொள்வது, உபாயம், முதலிய உத்தம குணங்கள் உன்னிடத்திலேயே விளங்குகின்றன" என்று மெச்சினான்.

ராமனும், "இவன் நமது காரியத்தை முடிப்பதில் ஆவலோடு இருக்கிறான். ஸுக்ரீவன் எல்லாப் பொறுப்பையும் இவனிடத்திலேயே வைத்திருக்கிறான். இவன் இந்தக் காரியத்தை முடிக்கக் கூடியவனென்று எனக்கும் தோன்றுகிறது. இதற்கு வேண்டிய உபாயங்களையும், ஸாதனங்களையும், இதில் நேரும் இடையூறுகளையும், அவைகளுக்குப் பரிஹாரங்களையும் நன்றாக அறிந்திருக்கிறான். இவன் இதுவரையிலும் செய்த அபூர்வச் செயல்களாலும், யஜமானனுக்கு இவனிடத்திலுள்ள நம்பிக்கையாலும் நமது உத்தேசத்தை இவன் முடிப்பானென்பதில் ஸந்தேகமில்லை" என்று எண்ணி, ஹனுமான் புறப்படத் தயாராக இருப்பதைக் கண்டு தன் எண்ணங்கள் நிறைவேறினதுபோல் ஆனந்தமடைந்தார். பிறகு தன் பெயரால் அலங்கரிக்கப்பட்ட முத்திரை மோதிரத்தை ஸீதைக்கு அடையாளமாகக் காட்டும்படி அவரிடத்தில் கொடுத்து, "இந்த அடையாளத்தால் நீ என்னால் அனுப்பப்பட்டவனென்று ஸீதை நிச்சயமடைந்து ஸந்தேகப்படாமல் உன்னிடத்தில் ஸமாசாரத்தைச் சொல்லியனுப்புவாள். உன் முயற்சியையும், பலத்தையும், பராக்கிரமத்தையும், ஸுக்ரீவனுக்கு உன்னிடத்திலுள்ள நம்பிக்கையையும் பார்க்கும்பொழுது, என் காரியம் நிறைவேறிற்றென்றே எண்ணுகிறேன்" என்றார்.

ஆஞ்ஜநேயரும் அதை மஹா பக்தியுடன் பெற்றுக்கொண்டு, தலைமேல் கைகூப்பி ரகுநாதனை வணங்கிப் புறப்பட ஸித்தமானார். மேகங்களற்று நிர்மலமாக பிரகாசிக்கும் ஆகாசத்தில் சந்திரன் நக்ஷத்திரங்களுடன் விளங்குவதைப்போல், ஹனுமான் அந்த வானர ஸைன்யத்தை அழைத்துக்கொண்டு புறப்படும்பொழுது, ராமன், "ஆஞ்ஜநேயா! அளவற்ற பராக்கிரமசாலியே! வாயு புத்திரா! நிகரற்ற உன் வீரியத்தையும் பலத்தையுமே நம்பியிருக்கிறேன். எப்படியாவது நான் ஸீதையை அடையும்படி செய்யவேண்டியது உன் பொறுப்பு" என்றார்.



அதிப³ல ப³லமாஶ்ரிதஸ் தவாஹம்
ஹரிவர விக்ரம விக்ரமை ரநல்பை: |
பவநஸுத யதா² பி⁴க³ம்யதே ஸா
ஜநகஸுதா ஹநுமம்ஸ் தத²ா குருஷ்வ || *(17)*

## ஸர்க்கம் 45

# வானரர்கள் புறப்பட்டது

ஸர்வாம்ஶ் சாஹூய ஸுக்³ரீவ: ப்லவகாந் ப்லவகர்ஷப⁴: |
ஸமஸ்தா நப்³ரவீத் பூ⁴யோ ராமகார்யார்த² ஸித்³த⁴யே || *(1)*

பிறகு ஸுக்ரீவன் ஸகல வானரர்களையும் பார்த்து, "நான் உங்களுக்கு விஸ்தாரமாகச் சொன்னபடி நீங்கள் இந்த பூமண்டலத்தில் ஒவ்வொரு பாகத்தையும் அதி ஜாக்கிரதையாகத் தேடவேண்டும்" என்று கட்டளையிட்டான். அவர்கள் மஹாராஜாவின் உத்தரவைத் தலையால் தாங்கி, கொஞ்சமாவது தவறினால் கடும் தண்டனை விதிக்கப்படுமென்று நன்றாக அறிந்து, வெட்டுப்பூச்சிகளைப்போல் ஆகாசத்தையும் பூமியையும் மறைத்துக்கொண்டு புறப்பட்டார்கள். பிறகு ராமலக்ஷ்மணர்கள் பிரஸ்ரவண பர்வதத்தில் வஸித்துக்கொண்டு கெடுவைத்த காலத்தின் முடிவை எதிர் பார்த்துக் கொண்டிருந்தார்கள். சதவலி வடக்கிலும், வினதன் கிழக்கிலும், ஹனுமான் அங்கதன் தாரன் இவர்களுடன் தெற்கிலும், அங்கதன் ஸுஷேணன் மேற்கிலும் தேடிக்கொண்டு போனார்கள். இப்படி நான்கு திசைகளிலும் முக்கியமான ஸேனைத் தலைவர்களை அனுப்பி விட்டு ஸுக்ரீவன் ஸந்தோஷமடைந்தான். வானரர்கள் ஸுக்ரீவனுடைய வார்த்தைகளை ஞாபகத்தில் நன்றாக வைத்துக்கொண்டு, "எப்படியாவது ஸீதையைக் கொண்டுவருவோம். ராவணனை நாசம் செய்வோம்" என்று வீரவாதம் பேசிக்கொண்டும், ஸிம்ஹநாதம் செய்துகொண்டும், கர்ஜித்துக்கொண்டும், தங்களுடைய பலபராக்கிரமங்களைச் சொல்லிக்கொண்டும் போனார்கள். "நான் ஒருவனே ராவணனை யுத்தத்தில் மடிப்பேன்." "அவனை ஒரு நிமிஷத்தில் தேய்த்து ஸீதையைக் கொண்டுவருவேன்." "நீங்கள் இங்கே இருங்கள். நான் ஒருவனே போய்க் காரியத்தை முடித்து வருகிறேன்." "ராவணன் ஸீதையைப் பாதாளத்தில் வைத்திருந்தாலும்

நான் ஒருவனே போய்க் கொண்டு வருவேன்." "மரங்களை ஒடிப்பேன்." "மலைகளைப் பெயர்த்தெறிவேன்." "பூமியைப் பிளப்பேன்." "நூறு யோஜனை தூரம் தாண்டுவேன்." "நூறு யோஜனைக்கதிகமாகத் தாண்டுவேன்." "பூமி, ஸமுத்திரம், மலைகள், வனங்கள், பாதாளத்தின் நடுவு இவைகளில் எங்கேயும் எனக்குத் தடையில்லை" என்று இப்படி வானர்கள் பலத்தால் கர்வமடைந்து, ஸுக்ரீவனுக்கெதிரில் ஒருவருக்கொருவர் பெருமை பேசிக்கொண்டு புறப்பட்டார்கள்.

*இத்யேகைகம் ததா3 தத்ர வாநரா ப3ல த3ர்பிதா: |*
*ஊசுஶ்ச வசநம் தஸ்மிந் ஹரிராஜஸ்ய ஸந்நிதௌ4 ||* (15)

## ஸர்க்கம் 46

## ஸுக்ரீவன் பூமண்டலத்தைச் சுற்றினது

*க3தேஷு வாநரேந்த்3ரேஷு ராம: ஸுக்3ரீவ மப்3ரவீத் |*
*கத2ம் ப4வாந் விஜாநீதே ஸர்வம் வை மண்ட3லம் பு4வ:* (1)

**அ**வர்கள் போன பிறகு ராமன் ஸுக்ரீவனைப் பார்த்து, "இப்பூமண்டலத்தின் வரலாறு உனக்கு எப்படித் தெரியும்?" என்றார். ஸுக்ரீவன் "ஸ்வாமி! முன்பு எருமையின் ரூபம் தரித்துவந்த துந்துபி என்ற அஸுரனை வாலி ஜயித்து மலைய பர்வதத்தை நோக்கித் துரத்திக்கொண்டு போகையில் அவன் அந்த மலைக் குகையில் புகுந்தான். உடனே வாலியும் அவனைக் கொல்லநினைத்துத் தொடர்ந்தான். குகைத் துவாரத்தில் காத்துக்கொண்டிருக்கும்படி வாலி எனக்குக் கட்டளையிட்டான். ஒரு வருஷமாகியும் வாலி வெளியில் வரவில்லை; மேலும் அந்தக் குகையிலிருந்து ரக்தப் பிரவாகம் ஓடி வந்தது. ஆகையால் என் தமையன் இறந்தானென்று நிச்சயித்து மிகவும் துக்கமடைந்தேன். அந்த அஸுரன் வெளியில் வராமல் அங்கேயே மடியவேண்டுமென்று ஒரு பெரிய பாறையால் குகையின் வாசலை மூடினேன். பிறகு கிஷ்கிந்தைக்கு வந்து வானர ராஜ்யத்தையும், தாரையையும், ருமையையும் அடைந்து மித்திரர்களுடன் கவலையற்று வஸித்துவந்தேன். இப்படியிருக்க வாலி அந்த அஸுர சிரேஷ்டனைக் கொன்றுவிட்டு கிஷ்கிந்தைக்கு வந்தான். நான் அவனைக்கண்டு பயந்து ராஜ்யத்தை அவனிடத்தில் ஒப்புவித்தேன். ஆனால் அவன் என்னைக் கொல்ல எண்ணிக் கோபபரவசனாகி என்னையும் என் மந்திரிகளையும் துரத்தினான்.

"அப்படி ஓடிக்கொண்டிருக்கையில் பல நதிகளையும் வனங்களையும் நகரங்களையும் பார்த்தேன். அப்பொழுது இந்த பூமி கண்ணாடியில் பார்க்கும் படங்களைப்போலும், வேகமாய்ச் சுழற்றப்பட்ட கொள்ளிக்கட்டையைப் போலும், ஒரு குளப்படியைப் போலும் எனக்குக் காணப்பட்டது. முதலில் கிழக்கேபோய், பல



மரங்கள், ஏரிகள், ஆறுகள், மலைகள், தாதுக்கள் நிறைந்த உதயகிரி, அப்ஸரசுகளுக்கு பிரியமான பாற்கடல், இவைகளை ஓடும்பொழுதே பார்த்தேன். பிறகு திரும்பிவந்து தெற்கில் ஓடி விந்திய மலையையும் சந்தனம் முதலிய அபூர்வ மரங்களையும் பார்த்துக்கொண்டு அந்தத் திக்கின் எல்லை வரையில் போனேன். அங்கும் வாலியால் துரத்தப்பட்டு மேற்கில் ஓட ஆரம்பித்தேன். அங்கே பல தேசங்களையும் அஸ்தகிரியையும் கண்டு, அங்கிருந்து வடக்கில் ஓடினேன். அங்கே ஹிமயம், மேரு முதலிய மலைகளையும் வடக்கு ஸமுத்திரத்தையும் கண்டேன். எல்லாவிடங்களிலும் வாலி என்னைத் துரத்தினதால் ஒன்றும் தோன்றாமல் திகைத்தேன். அப்பொழுது மஹா புத்திமானான ஹனுமான், 'ஸ்வாமி! மதங்க மஹரிஷி தம் ஆசிரமத்தின் எல்லைக்குள் வாலி அடிவைத்தால் அவனுடைய தலை ஆயிரம் சுக்கலாக வெடிக்க வேண்டுமென்று சபித்திருக்கிறார். ஆகையால் அங்கே வரத் துணியமாட்டான். நாம் கொஞ்சம்கூடப் பயமில்லாமல் அங்கே வஸிக்கலாம்'' என்றான். அதன்படி ரிச்யமூக பர்வதத்தில் நீங்கள் வரும் வரையில் இருந்தோம். மதங்கரிஷியின் சாபத்திற்குப் பயந்து வாலி அங்கே வரவில்லை. இப்படி பூமண்டலம் முழுவதையும் நான் நேரில் பார்த்துவிட்டு இந்தக் குகையில் வந்து வஸிக்க ஆரம்பித்தேன்'' என்றான்.

*ஏவம் மயா ததா2 ராஜந் ப்ரத்யக்ஷ முபலக்ஷிதம் |*
***ப்ருதி2வீ மண்ட3லம் க்ருத்ஸ்நம் கு3ஹா மஸ்யாக3தஸ் ததா: || (24)***

## ஸர்க்கம் 47

## மூன்று திக்குகளில் போன வானரர்கள் திரும்பி வந்தது

*த3ர்ஶநார்த2ம் து வைதே3ஹ்யா: ஸர்வத: கபியூத2பா: |*
*வ்யாதி3ஷ்டா: கபிராஜேந யதோ2க்தம் ஜக்3மு ரஞ்ஜஸா ||* (1)

**ஸு**க்ரீவனுடைய கட்டளைப்படி ஸீதையைத் தேடப் புறப்பட்ட வானரர்கள் ஏரி, ஆறு, புதர், பாலைவனம், நகரம், நதிகளைத் தாண்டிச் செல்லமுடியாத இடங்கள், மலை இவைகளைத் தேடிக்கொண்டு வேகமாகப் போனார்கள். பகல் முழுதும் வனங்களிலும் மலைகளிலும் ஸீதையைத் தேடி இரவில் எல்லோரும் பூமியில் வந்து சேருவார்கள். பகலில் ஆகார நித்திரையில்லாமல் அந்தந்த இடங்களில் ஒரு மாதம் வரையில்தேடிக் களைத்து, ஸீதையைக் காணாமல் ஆசையற்று ஸுக்ரீவனிடத்தில் வந்து வரலாற்றைத் தெரிவித்தார்கள். வினதனும் அவனுடன் போன ஸைன்யங்களும் கிழக்கில் ஸீதையைத் தேடிக் காணாமல் திரும்பி வந்தார்கள். சதபலி வடக்கில் ஒவ்வோரிடத்திலும் ஜாக்கிரதையாகத் தேடியும் ஸீதையைக் காணாமல் திரும்பி வந்தான். அப்படியே ஸுஷேணனும் மேற்கில் தேடிப் பார்த்து ஸீதையைக் காணாமல் திரும்பி வந்தான். எல்லோரும்

பிரஸ்ரவண கிரியில் ராமனுடன் உட்கார்ந்திருக்கும் ஸுக்ரீவனிடத்திற்கு வந்து, "ஸ்வாமி! மலை, காடு, குகை, ஆறு, கடல், நகரம், புதர் முதலியவைகளையும் தாங்கள் சொன்ன இடங்களிலும் மற்ற இடங்களிலும் வெகு ஜாக்கிரதையாகத் தேடினோம். மஹா வீரியமுள்ள பல பிராணிகளை ராவணனாக இருக்கலாமென்ற எண்ணத்துடன் கொன்றோம். ஸீதையைக் காணவில்லை. ஸீதை கொண்டு போகப் பட்டதாகத் தெரியும் திக்கிலேயே வாயுபுத்திரனான ஹனுமானும் தேடப் போயிருக்கிறார். நல்ல தைரியமும், நற்குடிப் பிறப்பும் கொண்ட அவர் நிச்சயமாக ஸீதையைக் காண்பார்" என்று தெரிவித்தார்கள்.

உதா$^{3}$ர ஸத்வாபி$^{4}$ஜநோ மஹாத்மா
ஸ மைதி$^{2}$லீம் த்$^{3}$ரக்ஷ்யதி வாநரேந்த்$^{3}$ர: |
தி$^{3}$ஶம் து யாமேவ க$^{3}$தா து ஸீதா
தாமாஸ்தி$^{2}$தோ வாயுஸுதோ ஹநூமாந் ‖ (14)

---

## ஸர்க்கம் 48

## தெற்கில் தேடினது

ஸஹ தாராங்க$^{3}$தா$^{3}$ப்$^{4}$யாம் து க$^{3}$த்வா ஸ ஹநுமாந் கபி: |
ஸுக்$^{3}$ரீவேண யதோ$^{2}$த்$^{3}$தி$^{3}$ஷ்டம் தம் தே$^{3}$ஶமுபசக்ரமே ‖ (1)

ஹனுமான், அங்கதன் தாரன் முதலியவர்களுடன் ஸுக்ரீவன் கட்டளைப்படி வெகு தூரம் சென்று, விந்தியபர்வதத்தின் சிகரங்களையும், குகைகளையும், அனேக வனங்களையும், அவைகளைச் சூழ்ந்த மலைகளையும், ஆறுகளையும், குளங்களையும், மரங்கள் அடர்ந்த காடுகளையும், காடுகளால் மூடப்பட்ட குன்றுகளையும் தேடிக்கொண்டு போகையில், ஸீதையைக் காணாமல் கவலை கொண்டார்கள். அங்கங்கே கிடைக்கும் காய் கனிகளையும், கிழங்குகளையும் புஜித்துக்கொண்டு தேடிச் செல்லும்பொழுது அநேக குகைகளுள்ள ஒரு பிரதேசத்தைக் கண்டார்கள். அது நீர், நிழல், பசு பக்ஷி, மிருகம் முதலிய பதார்த்தங்கள் இல்லாமல் பார்க்கப் பயங்கரமாக இருந்தது. அவ்விடத்தைவிட்டு அப்புறம் சென்று, அப்படிப்பட்ட அநேக அரண்யங்களையும் கண்டு, அவைகளில் ஜாக்கிரதையாய்த் தேடிக் களைத்தார்கள்.

பிறகு மற்றொரு தேசத்தைச் சேர்ந்து பார்க்கையில், மரங்களில் பழங்களும், புஷ்பங்களும், இலைகளும் இல்லை; ஆறுகளில் ஜலமில்லை; வேர்கள் கிழங்குகள் கிடைக்கவில்லை; எருமை, மான், யானை, புலி, பக்ஷிகள் முதலிய ஜந்துக்களின் ஸஞ்சாரமே கிடையாது; மரங்கள், ஓஷதிகள், கொடிகள், செடிகள் காணப்படவில்லை; தாமரையோடைகள் புஷ்பங்களற்று நீர் வற்றி, வண்டுகளின் சப்தமில்லாமல் பாழடைந்திருந்தன. அந்த வனத்தில் கண்டு என்ற மஹரிஷி வஸித்துக்கொண்டிருந்தார். அவர் ஸத்தியவான்; மஹா தபஸ்வி; நியமங்களைப் பூர்ணமாக அனுஷ்டித்தவர்; ஒருவராலும் நெருங்கமுடியாத தேஜஸுள்ளவர். அவருக்குப் பதினாறு வயதுள்ள ஒரு புத்திரனுண்டு. அவன் ஒருநாள் அந்தக் காட்டில் வழி தப்பி உயிரிழந்தான். அதனால் கண்டுமஹரிஷி அந்த அரண்யத்தின்மேல் கோபம்கொண்டு, ஸகல ஜந்துக்களும் அற்றுக் கோரமான வனமாகும்படி அதைச் சபித்தார். அங்குள்ள பர்வதங்களையும், குகைகளையும், நதிகளின் உற்பத்தி ஸ்தானங்களையும் வானரர்கள் ஜாக்கிரதையாகத் தேடிப் பார்த்தும் ஸீதையையாவது அவளை அபஹரித்த ராவணனையாவது காணவில்லை.

அதற்கப்பால் தேடிச் செல்லுகையில் கோரரூபமுள்ள ஒரு அஸுரனைக் கண்டார்கள். அவன் மஹாக்ரூரன்; தேவர்களுக்கும் அஞ்சாதவன்; மஹாபர்வதத்தைப்போல் அவன் வழிமறித்து நிற்பதைக் கண்டு வானரர்கள் அவனுடன் யுத்தம் செய்ய ஸித்தமானார்கள். அவனும் வானர ஸைன்யங்களைக் கண்டு, "நீங்களெல்லோரும் என் கையிலகப்பட்டு, இந்த க்ஷணத்தில் நாசமடையப் போகிறீர்கள்" என்று கர்ஜித்துக்கொண்டு, வஜ்ரம்போன்ற முஷ்டிகளை உயரத் தூக்கிக்கொண்டு, அவர்களை நோக்கி ஓடிவந்தான். அப்பொழுது அங்கதன், அவனை ராவணன் என்றெண்ணி, அவன் மேல் பாய்ந்து கையாலறைந்தான். உடனே பெருங்காற்றால் சாய்க்கப்பட்ட பர்வதத்தைப்போல், அவன் பூமியில் விழுந்து ரத்தத்தைக் கக்கிக்கொண்டு உயிரை விட்டான். வானரர்கள் அவனைக் கொன்றதால் மிகவும் ஸந்தோஷமடைந்து, அவனே ராவணனென்ற எண்ணத்தால் அங்கிருந்த காடுகளில் ஸீதையை வெகு காலம் தேடிக் கொண்டிருந்தார்கள். அங்கும் அவளைக் காணாமல் மற்றோர் காட்டிற்குச் சென்று, அங்கேயும் தேடி அலுத்து மனம் குன்றி, ஒரு மரத்தடியில் எல்லோரும் உட்கார்ந்தார்கள்.

தே விசித்ய புந: கி$^{2}$ந்நா விநிஷ்பத்ய ஸமாக$^{3}$தா: |
ஏகாந்தே வ்ருக்ஷமூலே து நிஷேது$^{3}$ர் தீ$^{3}$நமாநஸா: ‖ (23)

---

## ஸர்க்கம் 49

## வானரர்கள் துக்கித்தது

அத$^{2}$ாங்க$^{3}$த$^{3}$ஸ் தத$^{3}$ா ஸர்வாந் வாநராநித$^{3}$மப்$^{3}$ரவீத் |
பரிஶ்ராந்தோ மஹா ப்ராஜ்ஞ: ஸமாஶ்வாஸ்ய ஶநைர் வச: ‖ (1)

அப்பொழுது அங்கதன் வெகு சிரமத்துடனிருந்தாலும், மஹா புத்திமானானதால், மற்ற வானரர்களைத் தேற்றி, "நாம் காடுகள், மலைகள், நதிகள், பிளப்புகள், குகைகள், முதலிய எல்லாவிடங்களி

லும் தேடிப் பார்த்தோம். ஜானகியையாவது அவளை அபகரித்த ராக்ஷஸனையாவது காணவில்லை. வெகு காலம் சென்றுவிட்டது; மஹாராஜாவின் ஆஜ்ஞையோ மிகவும் கடுமையானது. ஆகையால் நீங்களெல்லோரும் சோம்பலையும், தூக்கத்தையும், சோகத்தையும் விட்டு ஸீதையை மறுபடியும் தேடுங்கள்; ஸீதையைக் காணும்வரையில் தேடிக்கொண்டே இருக்கவேண்டும்; ஒருவனிடத்தில் மனந் தளராமை, உத்ஸாஹம், கலங்காத தைரியமென்ற குணங்கள் பொருந்தியிருந்தால், அவனுக்கு ஸகல காரியங்களும் கைகூடும். ஆகையால் மறுபடியும் இந்த வனத்தை மஹா ஜாக்கிரதையாகத் தேடுங்கள். கவலைப்படவேண்டாம். நாம் ஒரு காரியத்தை மனப்பூர்வமாய், ஊக்கத்துடன் செய்தால் அது பலனைக் கொடுக்காமல் போகாது. இதுவரையில் வெறுப்படைந்தது போதும். இப்பொழுது கூடக் கண்ணை மூடிக்கொண்டு உட்கார்ந்திருந்தால் நமது காரியம் எப்படி முடியும்? ஸுக்ரீவன் அதி சீக்கிரத்தில் கோபிக்கிறவர்; கடும் தண்டனை விதிக்கிறவர். அவரிடத்திலும் ரகுவீரனிடத்திலும் நாம் பயப்பட வேண்டியதல்லவா? உங்களுடைய ஹிதத்தை உத்தேசித்து இப்படிச் சொன்னேன். பின்பு உங்கள் இஷ்டப்படி செய்யுங்கள். அல்லது நாம் இப்பொழுது செய்ய வேண்டியதை யாவது சொல்லுங்கள்'' என்றார்.

அதைக் கேட்டு கந்தமாதனன், தாகத்தாலும் சிரமத்தாலும் வார்த்தைகள் குளற, "அங்கதனுடைய வார்த்தைகள் உங்களுக்கு ஹிதமாயும் அனுகூலமாயும் இருக்கும்; அதன்படியே செய்யுங்கள். மலைகளிலும், காடுகளிலும், குகைகளிலும், தாழ்வரைகளிலும் மஹாராஜா சொன்னபடி மறுபடியும் ஜாக்கிரதையாகத் தேடுவோம்'' என்றான். அதைக் கேட்டு மற்ற வானரர்கள் தைரியம் கொண்டு விந்திய பர்வதம் முதல் தேடிக்கொண்டே சென்றார்கள். ஓரிடத்தில் சரத்கால மேகம்போன்ற ஒரு வெள்ளி மலையைக் கண்டு, அங்குள்ள குகைகளிலும் சிகரங்களிலும் ஏழிலைப்பாலைக் காடுகளிலும் தேடினார்கள். அங்கும் ஸீதையைக் காணாமல் களைத்து, அம் மலையின் அடிவாரத்தில் இறங்கி ஒரு மரத்தடியில் சற்று நேரம் இளைப்பாறத் தங்கினார்கள். பிறகு கொஞ்சம் களை தீர்ந்து, விந்தியம் முதற்கொண்டு தெற்குத் திசை முழுவதையும் தேட முயற்சி செய்தார்கள்.

ஹநுமத் ப்ரமுகா[2]ஸ் தேது ப்ரஸ்தி[2]தா: ப்லவக[3]ர்ஷபா[4]: |
விந்த்[4]யமேவாதி[3]தஸ் தாவத் [3]விசேருஸ்தே ததஸ் தத: || (22)

---



## ஸர்க்கம் 50

## ரிக்ஷபிலத்தில் புகுந்தது

ஸஹ தாராங்க[3]தா[3]ப்[4]யாம் து ஸங்க[3]ம்ய ஹநுமாந் கபி: |
விசிநோதிஸ்ம விந்த்[4]யஸ்ய குஹாஶ்ச க[3]ஹநாநி ச || (1)

ஹனுமானும், தாரனும், அங்கதனும் விந்தியபர்வதத்தின் குகைகளிலும் அதைச் சேர்ந்த காடுகளிலும் ஸிம்ஹம் புலி முதலிய துஷ்ட மிருகங்களுள்ள புதர்களிலும், ஆறுகளிலும், மலைகளின் மேடு பள்ளங்களிலும், மலையருவிகளிலும் தேடினார்கள். அதற்குள் ஸுக்ரீவன் கெடுவாக வைத்த ஒரு மாத காலம் சென்றுவிட்டது. அங்குள்ள குகைகள் முதலிய ஒவ்வொரு இடங்களிலும் ஹனுமான் வெகு ஜாக்கிரதையாகத் தேடினார். கஜன், கவாக்ஷன், கவயன், சரபன், கந்தமாதனன், மைந்தன், த்விவிதன், ஸுஷேணன், ஜாம்பவான், நளன், அங்கதன், தாரன் முதலியவர்கள் மலைப் பிரதேசங்களை ஒவ்வொன்றாகத் தேடி வருகையில், மயனென்ற தானவனால் ஸிருஷ்டிக்கப்பட்ட ரிக்ஷபிலமென்ற ஒரு விஸ்தாரமான குகையைக் கண்டார்கள். வானரர்கள் பசி தாகம் மேலிட்டுக் களைத்து அங்கே வந்து, கொடிகளாலும் விருக்ஷங்களாலும் அது மூடப்பட்டிருப்பதையும், அங்கிருந்து கிரௌஞ்சம், ஹம்ஸம் முதலிய பக்ஷிகள் ஜலத்தால் நனைந்து தாமரைத் தாதுக்களால் சிவந்து பறந்து வருவதையும், குளிர்ந்த காற்று புஷ்பங்களின் வாஸனையை கிரஹித்துக்கொண்டு அதிலிருந்து வீசுவதையும் கண்டு, அதற்குள் ஒரு தாமரையோடை இருக்கவேண்டுமென்று ஸந்தேகித்து, அதில் பயமில்லாமல் பிரவேசித்தார்கள்.

அது நானா ஜந்துக்களால் நிறைந்து, பார்க்கப் பயங்கரமாய் நுழைவதற்கு முடியாமல், பாதாளத்தைப்போல் ஆழமுற்றிருந்தது. அப்பொழுது பர்வத சிகரத்தைப்போன்ற தேகத்துடன் விளங்கும் ஹனுமான் மற்ற வானரர்களைப் பார்த்து, நாமெல்லோரும் மலைப் பிரதேசங்களிலும் காடுகளிலும் ஸீதையை மிகவும் ஜாக்கிரதையாகத் தேடிப் பார்த்தும் காணவில்லை. களைப்பு மேலிடுகின்றது. இந்தக் குகையிலிருந்து ஹம்ஸம், கிரௌஞ்சம், சக்ரவாகம் முதலிய நீர்ப் பறவைகள் ஜலத்தால் நனைந்து பறந்து வருகின்றன. ஆகையால் இதில் ஓர் பெரிய கிணறாவது, மடுவாவது இருக்கவேண்டும். இதன் துவாரத்தில் அழகான மரங்கள் செழித்து வளருவதைக் கண்டீர்களா?'' என்றார். பிறகு வானரர்கள் அதில் நுழைந்து பார்க்கையில், ஸூரிய சந்திரர்களுடைய வெளிச்சமும் இல்லை; எங்கும் இருள் மூடிப் பயங்கரமாக இருந்தது; அதிலிருந்து ஸிம்ஹம் முதலிய மிருகங்களும் வருவதைக் கண்டார்கள். பிறகு அவர்கள் அடர்ந்த இருட்டுள்ள ஒரு பிரதேசத்தில் நுழைந்து வாயு வேகமாகச் சென்றார்கள். அவர்களுடைய பார்வைக்கும் பிரபாவத்திற்கும் பராக்கிரமத்திற்கும் யாதொரு குறைவும் இல்லை. ஆனால் அங்

கிருந்த பதார்த்தங்கள் இருட்டால் கண்ணில் படவில்லை. பிறகு ஒருவர்க்கொருவர் கைகளைப் பிடித்துக்கொண்டும் கட்டிக்கொண்டும் சென்றார்கள். அதற்குள் அவர்கள் சிரமம் மேலிட்டு பிரக்ஞையற்றுத் தாகமெடுத்து, ஜலம் ஜலமென்று கூச்சலிட்டார்கள். இப்படி வெகு தூரம் நடந்து இளைத்து முகம் வாடி, "இனி பிழைக்கமாட்டோம், நிச்சயமாய் இறப்போம்" என்று எண்ணம் கொண்டார்கள்.

பிறகு பிரகாசமுள்ள ஒரு அழகான பிரதேசத்தைச் சேர்ந்து, அங்கே அநேக விருக்ஷங்கள் செழித்து வளர்வதைக் கண்டார்கள். கொழுந்துவிட்டெரியும் அக்னி ஜ்வாலைகளைப்போல் பலவகையான விருக்ஷங்கள், பொன், வெள்ளி, நவமணிகள் முதலியவைகளால் அமைக்கப்பட்ட புஷ்பங்களுடனும், இளந்தளிர்களுடனும் தங்க ஆபரணங்கள் அணிந்ததுபோல் படர்ந்திருந்த கொடிகளுடனும் விளங்கின. தங்க மயமான விருக்ஷங்கள் வைடூரியங்களுடன் பாலஸூரியர்களைப்போல் பிரகாசித்தன. ஓடைகள் இந்திர நீல வைடூரியங்களைப்போல் தெளிந்த ஜலத்தால் நிறைந்து, தங்கமயமான மீன்களும், ஆமைகளும் அதில் ஸஞ்சரிக்க, பால ஸூரியர்களைப்போன்ற தங்கத் தாமரைகளுடனும் அநேக பக்ஷிகளால் சூழப்பட்டுப் பார்ப்பவர்களுடைய ஸகல சிரமத்தையும் போக்கின. தங்கம், வெள்ளிகளால் செய்த விமானங்களும், முத்து ஹாரங்கள் தொங்கவிட்ட பொன்மயமான ஜன்னல்களும், தங்கம் வெள்ளி ரத்தினங்களால் அலங்கரிக்கப்பட்ட அநேக மேடைகளுடன் அநேக கிருஹங்களும் காணப்பட்டன. அங்கே பவழத்தைப்போலும் ரத்னங்களைப்போலும் பிரகாசிக்கும் புஷ்பங்களுடனும், பழங்களுடனும் விளங்கும் விருக்ஷங்களிலிருந்து பெருகும் தேனைத் தங்கமயமான வண்டுகள் எப்பொழுதும் குடித்துக் கொண்டிருந்தன. தங்கத்தாலும் ரத்தினங்களாலும் விசித்திரமாக வேலை செய்யப்பட்ட ஆஸனங்களும் படுக்கைகளும் வாஹனங்களும், தங்கம், வெள்ளி, வெண்கலம் முதலிய பதார்த்தங்களால் செய்யப்பட்ட அநேக பாத்திரங்களும், அகில் முதலிய பரிமளத் திரவியங்களும், சுத்தமான பழங்களும் கிழங்குகளும், வேர்களும் உத்தமமான பானங்களும், விலையுயர்ந்த வஸ்திரங்களும், கம்பளங்களும், தோல்களும் அங்கங்கே நெருப்பு மலைகளைப்போல் குவிக்கப்பட்டிருக்கும் தங்கமும் காணப்பட்டன.

பிறகு அங்கங்கே தேடிக்கொண்டு போகையில் ஓரிடத்தில் ஒரு ஸ்த்ரீயைக் கண்டார்கள். அவள் தபஸ்வி வேஷம் தரித்து ஆகார நியமத்துடன் விரதங்களை அனுஷ்டித்து தேஜஸால் ஜ்வலித்துக் கொண்டிருந்தாள். வானரர்கள் அவளைப் பயத்துடனும் ஆச்சரியத்துடனும் பார்த்துக்கொண்டே நின்றார்கள். ஆஞ்ஜநேயர் அந்த வயது சென்றவளை நமஸ்கரித்து கைகூப்பி, "அம்மணி! தாங்கள் யார்? இந்தக் குகையும் இதிலுள்ள ஐசுவரியங்களும் யாருடையது?" என்று கேட்டார்.

ததோ ஹநூமாந் கி3ரி ஸந்நிகாஶ:
க்ருதாஞ்ஜலிஸ் தாமபி4வாத்3ய வ்ருத்3தா4ம் |
பப்ரச்ச2 கா த்வம் ப4வநம் பி3லம் ச
ரத்நாநி ஹேமாநி வத3ஸ்வ கஸ்ய || (41)



## ஸர்க்கம் 51
## ரிக்ஷபிலத்தின் விருத்தாந்தம்

**இத்யுக்த்வா ஹநுமாம்ஸ் தத்ர புந: க்ருஷ்ணாஜிநாம்ப3ராம் |**
**அப்3ரவீத் தாம் மஹாபா4கா3ம் தாபஸீம் த4ர்மசாரிணீம் || (1)**

**பி**றகு ஹனுமார் அவளைப் பார்த்து, "இருள் சூழ்ந்த இந்தக் குகையில் நாங்கள் ஆவலுடன் பிரவேசித்தோம். பசி, தாகம் மேலிட்டுக் களைத்திருக்கிறோம். இங்கே ஜலம் கிடைக்குமென்று நம்பி வந்தோம். இங்குள்ள ஆச்சரியங்களைக் கண்டு எங்களுக்குப் பயமும் ஸந்தேகமும் உண்டாகின்றன. பால ஸூரியர்களைப் போன்ற இந்தத் தங்கமயமான விருக்ஷங்களும், சுத்தமான காய் கனிகளும், வேர்களும், கிழங்குகளும், தங்கம், வெள்ளி, ரத்தினங்களால் அமைக்கப்பட்ட விமானங்களும், கிருஹங்களும், முத்து ஹாரங்களால் அலங்கரிக்கப்பட்ட காற்றுப் போக்கிகளும், அழகான புஷ்பங்களாலும், பழங்களாலும், பரிமளத்தாலும் விளங்கும் இந்தத் தங்கமயமான விருக்ஷங்களும், ஓடைகளில் சுத்தமான ஜலத்தில் பிரகாசிக்கும் தங்கத் தாமரைகளும், பொன் மீன்களும், யாருடையன? தாங்கள் யார்? தங்களுடைய தபோபலம் எப்படிப் பட்டது? இந்த அதபுதமான ஸ்தலம் யாருடைய தபோ மஹிமையால் ஸிருஷ்டிக்கப்பட்டது? எங்களுக்கு யாதொன்றும் தெரியாமையால் எங்களுடைய ஸந்தேகத்தைத் தீர்க்க வேண்டும்" என்று பிரார்த்தித்தார். அப்பொழுது பரம த்யாகமூர்த்தியான அந்தத் தாபஸி, ஆஞ்ஜநேயரைப் பார்த்து, "மஹா தேஜஸ்வியும் மாய வித்தையில் நிகரற்றவனுமான மயனென்ற தானவனைப் பற்றி நீங்கள் கேட்டிருக்கலாம். இந்தத் தங்கமயமான வனத்தை அவன் மாயா சக்தியால் நியமித்தான். பூர்வத்தில் அவன் தானவர்களுக்குச் சிற்பியாக இருந்தான். இந்தக் கிருஹங்களையும் வனங்களையும் ஸிருஷ்டித்தவன் அவனே. அவன் பிரஹ்மாவைக் குறித்து நெடுங்காலம் தவம் செய்து, சுக்கிராசாரியரால் உபதேசிக்கப்பட்ட சிற்ப சாஸ்திர ஞானத்தை ஸம்பூர்ணமாய்ப் பெற்றான். அவன் இங்கே கொஞ்ச காலம் ஸுகமாய் வஸித்திருந்தான். பிறகு தன் புத்திரியான மந்தோதரியை ராவணனுக்கு விவாஹம் செய்து கொடுத்ததாலும், ஹேமை என்ற அப்ஸரஸிடத்தில், ரஹஸ்யமாய் விசேஷ

பிரீதி வைத்திருந்ததாலும் இந்திரன் வஜ்ரத்தால் அவனை அடித்துக் கொன்றான். அவன் இறந்த பிறகு இந்த வனத்தை ப்ரஹ்மா ஹேமைக்குக் கொடுத்தார். நான் மேருஸாவர்ணியின் புத்திரி. என் பெயர் ஸ்வயம்பிரபை. ஹேமை என் அருமைத் தோழி. கீத நாட்டியங்களில் திறமையுள்ளவள். இப்பொழுது பிரஹ்ம லோகத்திற்குப் போயிருக்கிறாள். இங்கே பிறர் வராமல் அவளுடைய சக்தியால் இதை வெகு ஜாக்கிரதையாகக் காத்து வருகிறேன். உங்களுக்கு இங்கே என்ன வேலை? யாருக்காக இப்படி வனங்களில் திரிகிறீர்கள்? ஒருவருக்கும் தெரியாத இந்தக் குகை வாசலை எப்படிக் கண்டு பிடித்தீர்கள்? இந்த சிரேஷ்டமான காய்கனிகளையும் கிழங்குகளையும் வேர்களையும் புஜித்து நேர்த்தியான பானங்களைக் குடித்து சிரமந்தீர்ந்த பிறகு உங்களுடைய விருத்தாந்தத்தை சொல்லுங்கள்" என்றாள். (விச்வகர்மா, மயன் என்ற பெயர்கள் கணங்களைக் குறிக்கும். ஆகையால் அந்த வேலையைப் பார்ப்பவர்கள் பலர். அவர்களில் ஒருவனை இந்திரன் கொன்றிருக்கலாம். அந்த வேலை பார்ப்பவனுக்கே அழிவற்றவனென்று சொல்லப் படும்.)

இமாந் யப்4வஹார்யாணி மூலாநி ச ப2லாநி ச |
பு4க்த்வா பீத்வா ச பாநீயம் ஸர்வம் மே வக்துமர்ஹத2 || (19)

## ஸர்க்கம் 52

# வானரர்களின் வரலாறு

அத2 தாநப்3ரவீத் ஸர்வாந் விக்ராந்தாந் ஹரிபுங்க3வாந் |
இத3ம் வசநமேகாக்3ரா தாபஸீ த4ர்மசாரிணீ || (1)

**பி**றகு அந்தத் தாபஸி, "வானரர்களே! உங்களுக்குப் பசி, தாகம், களைப்பு முதலியவை தீர்ந்து நான் கேட்ட விஷயத்திற்குப் பதில் சொல்லலாமென்று தோன்றினால் அதைக் கேட்க விரும்புகிறேன்" என்றாள். அப்பொழுது ஹனுமான் நடந்த வரலாற்றைச் சொல்ல ஆரம்பித்தார்.

"தசரதனென்ற அயோத்யா சக்கரவர்த்திக்கு ராமனென்ற ஓர் புத்திரனுண்டு. அவர் மஹேந்திரனுக்கும் இந்திரனுக்கும் ஸமானர். ஸகல லோகங்களுக்கும் அரசன். சில காரணங்களால் அவரும் அவருடைய மனைவி ஜானகியும் தம்பி லக்ஷ்மணனும் தண்டகாரண்யத்தில் ஸஞ்சரித்துக் கொண்டிருந்தார்கள். அப்பொழுது ராக்ஷஸாதிபதியான ராவணன் ஜனஸ்தானத்திலிருந்து ஸீதையைப் பலவந்தமாக எடுத்துப் போனான். ராமனுக்கு ஸுக்ரீவனென்ற ஒரு தோழனுண்டு. அவர் மஹா வீரன்; வானராதிபதி; எங்களை அனுப்பியவர் அவரே. அகஸ்தியருடைய இருப்பிடமாக, யமனால் ரக்ஷிக்கப் படும் தெற்குத் திக்கில் இந்த வானர ஸைன்யத்துடன் போய் ராவணனையும் ஸீதையையும் தேடிக் கண்டுபிடியுங்கள்' என்று எங்களுக்கு அவர் உத்திரவு செய்தார். அப்படி நாங்கள் எல்லாவிடங்களிலும் தேடிப் பார்த்துப் பசி தாகம் மேலிட்டு ஒரு மரத்தடியில் உட்கார்ந்தோம். எல்லோரும் முகம் வாடிக் கவலைகொண்டு ஒன்றும் தோன்றாமல் திகைத்தோம். பிறகு நான்கு திக்குகளிலும் பார்க்கும்பொழுது இந்தக் குகையிலிருந்து நீர்ப் பறவைகள் ஜலத்தில் நனைந்து பறந்து வருவதையும், குகையின் வாசலில் மரம் செடி கொடிகள் செழித்திருப்பதையும் பார்த்தோம்.



"பிறகு இதில் போய்ப் பார்ப்போம் என்றேன். இவர்கள் இங்கே, ஆறு, குளம், ஏரி ஏதாவது இருக்க வேண்டுமென்று ஊஹித்து, பிரபுவின் காரியத்தைச் சீக்கிரம் முடிக்க வேண்டுமென்ற ஆவலால் ஸம்மதித்தார்கள். பிறகு நாங்கள் ஒருவருக்கொருவர் கைகளைக் கெட்டியாகப் பிடித்துக்கொண்டு, இருள் சூழ்ந்த இந்தக் குகையில் புகுந்தோம். இதே எங்களுடைய விருப்பம். இதற்காகவே இங்கே வந்தோம். பசி தாஹத்தால் பீடிக்கப்பட்டு மெலிந்து தங்களைச் சரணமடைந்தோம். தாங்கள் விசேஷ உபசாரத்துடன் எங்களுக்குக் கொடுத்த பழங்களாலும் கிழங்குகளாலும் திருப்தியடைந்தோம். பசியால் இறக்கும் நிலைமையிலிருந்த எங்களைக் காப்பாற்றி பிராண தானம் செய்த தங்களுக்கு நாங்கள் என்ன பதில் உபகாரம் செய்ய வேண்டும்?" என்று அவளைப் பிரார்த்தித்தார்.

அதற்கு ஸ்வயம்பிரபை, "நீங்கள், நான் செய்த அதிதிபூஜையைப் பெற்றுக்கொண்டு, எனக்குப் பதில் உபகாரம் செய்ய வேண்டுமென்று விரும்பினதே எனக்கு மிகுந்த திருப்தியைக் கொடுக்கின்றது. உத்தமமான தர்மத்தை அனுஷ்டித்து வரும் எனக்குப் பிறரால் ஆகவேண்டியது ஒன்றுமில்லை" என்றாள்.

ஸர்வேஷாம் பரிதுஷ்டாஸ்மி வாநராணாம் தரஸ்விநாம் |
சரந்த்யா மம த4ர்மேண ந கார்யமிஹ கேநசித் || (20)

## ஸர்க்கம் 53

# வானரர்கள் துக்கித்தது

ஏவமுக்த: ஶுப4ம் வாக்யம் தாபஸ்யா த4ர்மஸம்ஹிதம் |
உவாச ஹநுமாந் வாக்யம் தாமநிந்தி3த சேஷ்டிதாம் || (1)

**அ**தைக் கேட்டு ஆஞ்ஜநேயர், "ஸகல தர்மங்களையும் அறிந்த தங்களையே சரணமடைந்தோம். ஸுக்ரீவ மஹாராஜா எங்களுக்குக் கெடுவாகத் தந்த ஒரு மாதகாலமும் இந்தப் பிலத்திலேயே சென்று விட்டது. இந்தக் கோரமான ஸ்தானத்திலிருந்து எங்களை வெளியில் கொண்டுபோய்ச் சேர்க்க வேண்டியது தங்களுடைய பொறுப்பு. மஹாராஜாவின் ஆக்ஞையை மீறினபடியால் உயிரை

இழந்தோம். எங்களைக் காப்பாற்ற வேண்டும். எங்களால் ஒரு முக்கியமான காரியம் நடக்க வேண்டியிருக்கிறது. இந்தக் குகையில் வழி தவறித் திரிந்துகொண்டு அதையும் செய்யவில்லை" என்று வேண்டினர்.

அதற்கு அந்தத் தாபஸி, "இதில் வந்தவர்கள் இங்கிருந்து உயிருடன் வெளியில் போக முடியாது. ஆனால் நான் செய்த கடும் தவத்தின் மஹிமையால் உங்களை வெளியில் கொண்டுபோய் விடுகிறேன். கண்களை மூடிக் கொள்ளுங்கள். கண்களைத் திறந்து கொண்டு இங்கிருந்து வெளியில் போக முடியாது" என்றாள். அவர்கள் அப்படியே செய்தார்கள். உடனே வெளியில் கொண்டு வரப்பட்டார்கள். பிறகு அந்த யோகினி, "கவலைப்பட வேண்டாம். விந்திய பர்வதம் இதோ தெரிகிறது. ப்ரஸ்ரவணகிரி இதுவே. இதோ தெரிகிறது ஸமுத்திரம். போய் வருகிறேன். உங்களுக்கு ஸகல க்ஷேமமும் உண்டாகட்டும்" என்று ஆசிர்வதித்துக் குகைக்குள் திரும்பிப் போனாள். (கிஷ்கிந்தைக்கு ஸமீபத்தில் ராமன் வஸித்த மலை இதல்ல.) பிறகு வானரர்கள் கோரமான தெற்கு ஸமுத்திரத்தையும் அதில் எப்பொழுதும் பெருங்காற்றால் அலைகள் கொந்தளித்துக் கொண்டிருப்பதையும் பார்த்து, விந்திய பர்வதத்தின் தென்மேற்கு மூலையின் அடிவாரத்தில் கவலையுடன் உட்கார்ந்தார்கள். அங்கே வஸந்த காலத்திலுண்டாகும் புஷ்பங்களையும் பழங்களையும் பார்த்து ஸுக்ரீவன் குறிப்பிட்ட ஒரு மாதமும் ரிக்ஷபிலத்தில் தேடிக் கொண்டிருக்கையில் தாண்டி விட்டதென்று அறிந்து, அவர்களுக்குப் பயம் அதிகமாயிற்று. (கிஷ்கிந்தைக்கு வடக்கிலிருக்கும் விந்திய மலையின் தொடர்ச்சியே ஸஹ்யம் மலயம் என்ற பெயரில்தெற்கு ஸமுத்திரக்கரை வரையில் எட்டியிருக்கின்றன—பேஷஜகல்பம்) வஸந்த ருது ஸமீபித்து விட்டதென்றும், மஹா ராஜாவின் உத்திரவின்படி திரும்பிப் போகவேண்டிய காலம் தாண்டி விட்டதென்றும் அறிந்து, அவர்கள் பயந்து பூமியில் விழுந்தார்கள். அப்பொழுது புத்திமானும் மஹா வீரனுமான அங்கதன், வயதாலும் ஆசாரத்தாலும், ஞானத்தாலும் மூத்தவர்களான அந்த வானரர்களைப் பார்த்து மதுரமாக, "வானராதிபதியின் ஆக்ஞையால் இங்கே வந்தோம். நாம் ரிக்ஷபிலத்திலிருக்கும்பொழுதே அவர் கெடுவிட்ட ஒரு மாதமும் தாண்டி விட்டதென்று உங்களுக்குத் தெரியாதா? நாம் பதினைந்து தினங்களுக்குள் வரவேண்டியதென்று ஐப்பசி மாதத்தில் மஹாராஜா ஹனுமானுடைய யோசனையைக் கேட்டு நமக்கு உத்தரவு செய்தார். பிறகு மார்கழி மாதத்தில் லக்ஷ்மணனால் தூண்டப்பட்டுப் பத்து நாள்களுக்குள் வந்து சேர வேண்டுமென்று கட்டளையிட்டார். பிறகு ஸீதையைத் தேடுவதற்குத் தை மாதம் முடிவு வரையில் கெடுவிட்டு அனுப்பினார். இப்படி ஐப்பசி முதல் இந்த விஷயத்தைப்பற்றி காலத்தைக் கவனித்துக்கொண்டு வருகிற நாம் இப்படி மறந்திருப்பது நியாயமா?



நீங்களெல்லோரும் மஹாராஜாவிடத்தில் மிகுந்த விசுவாஸமுள்ளவர்கள்; நீதி மார்க்கத்தில் நிபுணர்கள்; பிரபுவின் க்ஷேமத்தையே கோருகிறவர்கள்; எல்லாக் காரியங்களிலும் ஸமர்த்தர்கள்; காரியங்களைச் செய்து முடிப்பதில் ஒப்பற்றவர்கள்: மஹாராஜாவின் கட்டளையின்படி என்னை முன்னிட்டுக்கொண்டு வந்தீர்கள். அவருடைய ஆக்ஞையை மீறி எவன் ஸௌகரியப்படுவான்? நாம் கொல்லப்படுவோமென்பது நிச்சயம். கெடுவிட்ட காலம் தாண்டினபடியால் நாம் இங்கேயே உபவாஸம் செய்து உயிரை விடுவோம். சுக்ரீவன் கடுமையான ஸ்வபாவத்தை உடையவர்; மேலும் இப்பொழுது நமக்கு மஹாராஜா. அபராதிகளான நம்மை மன்னிப்பாரா? ஸீதையின் வரலாற்றைத் தெரிந்துகொண்டு போனாலும் ஒருவேளை மன்னிப்பார். காலம் சென்று விட்டாலும் பாதகமில்லை. இப்பொழுது நாம் காரியத்தையும் முடிக்காமல் காலம் சென்று விட்ட பிறகும் போய்ச் சேர்ந்தால் நம்மைக் கொல்வதில் தடையென்ன? ஆகையால் மனைவி, பிள்ளை, தனம், தான்யம் முதலியவைகளைவிட்டு இங்கேயே உபவாஸத்தால் பிராணனை விடுவது நலம். திரும்பிப் போனால் எல்லோரும் சாவோம். அங்கே போய் மடிவதைவிட இங்கே உபவாஸத்தால் இறப்பது மேலல்லவா? நாம் அபராதிகளானதால் நாம் செய்த குற்றத்திற்கு வேறு பரிகாரமில்லை. 'உன்னை யுவராஜாவாகச் செய்த ஸுக்ரீவன் இப்பொழுது கொல்வானா?' என்றால், என்னிடத்திலுள்ள பிரீதியால் எனக்குப் பட்டம் கட்டினாரோ? மஹா தர்மாத்மாவான ரகுவீரனுடைய ஆக்ஞைக்குக் கட்டுப்பட்டல்லவா அப்படிச் செய்தார். இப்பொழுது நான் செய்த குற்றத்தைக் காரணமாக வைத்துக்கொண்டு என்னிடத்தில் அவருக்கு முன்னமே உள்ள பகையை அவர் தீர்த்துக் கொள்வார். இதில் ஸந்தேகமில்லை. என் மித்திரர்களான உங்களுக்கு நான் மரணமடைவதைப் பார்ப்பதில் விசேஷ துக்கத்தைத் தவிர வேறென்ன? ஆகையால் புண்ய ஸ்தலமான இந்த ஸமுத்திரக் கரையில் படுத்துப் பட்டினியிருந்து உயிரை விடுவோம்" என்றான்.

அதைக் கேட்டு எல்லோரும், "ஸுக்ரீவன் குரூர ஸ்வபாவமுள்ளவர். ராமனோ ஸீதையிடத்தில் விசேஷ பிரீதி வைத்தவர். ஸீதையின் வரலாற்றை அறியாமல் நாம் அங்கே போனால் ராமனுடைய கோபத்தைத் தணித்து அவரைத் திருப்திசெய்ய விரும்பி, சிறிதும் யோசிக்காமல் ஸுக்ரீவன் நம்மெல்லோரையும் கொல்வார். குற்றம் செய்தவர்கள் யஜமானனுடைய கண்ணில் படலாமா? ஆகையால் இங்கேயிருந்தே ஸீதையைத் தேடிக் கண்டு பிடித்துப் பிறகு ஸுக்ரீவனிடத்திற்குப் போவோம். முடியாவிட்டால் யமலோகத்திற்குப் போவோம்" என்று பயத்தால் தீனமாகக் கூச்சலிட்டார்கள்.

அப்பொழுது தாரன், "உங்களுக்கு இஷ்டமிருந்தால் நாம் ரிக்ஷபிலத்தில் புகுந்து ஸுகமாக வஸிப்போம். நாம் விரும்பக்

கூடிய ஸகல பதார்த்தங்களும் அங்கே வேண்டிய வரையில் கிடைக்கும். மாயையால் அது அமைக்கப்பட்டதால் இந்திரனும் ராமனும் ஸுக்ரீவனும் நம்மை என்ன செய்ய முடியும்?" என்றான். வானரர்களெல்லோரும் அங்கதனுடைய யோசனையைவிட இது நலமென்று கண்டு, "எப்படியாவது நாங்கள் யாதொரு உபத்திரவமும் இல்லாமல் ஸுகமாக வஸிக்கும் வழியைத் தேடுங்கள்" என்று பிரார்த்தித்தார்கள்.

**ஶ்**ருத்வாங்க$^{3}$த$^{3}$ஸ்யாபி வசோநுகூலம்
ஊசுஶ்ச ஸர்வே ஹரய: ப்ரதீதா: |
யதா$^{2}$ ந ஹிம்ஸ்யேம ததா$^{2}$ விதா$^{4}$நம்
அஸக்த மத்$^{3}$யைவ விதீ$^{4}$யதாம் ந: ‖ (42)

---

## ஸர்க்கம் 54

## ஹநுமார் ஆக்ஷேபித்தது

---

ததா$^{2}$ ப்$^{3}$ருவதி தாரே து தாராதி$^{4}$பதி வர்சஸி |
அத$^{2}$ மேநே ஹ்ருதம் ராஜ்யம் ஹநுமாநங்க$^{3}$தே$^{3}$ந தத் ‖ (1)

**தா**ரன் சொன்னதைத் தடுக்காததால் அங்கதன் அதை ஒப்புக்கொண்டதாக ஹனுமான் நினைத்து வானர ராஜ்யத்தை ஆளும் திறமை அவனுக்குப் பூர்ணமாக இருக்கிறதென்று அறிந்தார். அது ஸுக்ரீவனுக்குக் கிடைக்காதென்று நிச்சயித்தார். பிறர் சொல்வதைச் சீக்கிரத்தில் கிரஹிப்பது, அதைப் புத்தியில் நிலை நிறுத்துவது, மறவாதிருப்பது, அதைப் பிறர்க்கு எடுத்துச் சொல்லும் திறமை, யுக்தியாகப் பேசுவது, பிறருடைய யுக்திகளைக் கண்டிப்பது, பிறர் சொல்லும் வார்த்தைகளின் உண்மையான அர்த்தத்தை அறிவது, விஷயங்களின் உண்மையான கருத்தைக் கண்டுபிடிப்பதென்ற புத்தியின் எட்டு உத்தம குணங்களும்; தேகபலம், தைரியம், உபாயம், பந்துபலமென்ற நான்குவித பலங்களும்; தேச கால ஞானம், மனவுறுதி, துக்கங்களைப் பொறுப்பது, விஷயங்களை அறிவது, திறமை, பலம், தன் ஆலோசனை வெளிப்படாமல் காப்பது, முன்பின் விரோதமில்லாமல் நடப்பது, உத்ஸாஹம், பிறருடைய திறமையை அறிவது, நன்றி, சரணமடைந்தவர்களிடத்தில் கிருபை, பொறுமை,கோபமின்மை,சபலமற்றிருப்பதென்ற பதினான்கு உத்தம புருஷ லக்ஷணங்களும் அவனிடத்தில் பொருந்தியிருப்பதையும்; சுக்ல பக்ஷத்துச் சந்திரனுடைய தேஜஸும் அழகும் வரவர வளர்வதுபோல் அவனுடைய தேஜஸ், பலம், பராக்கிரமம் முதலியவை வரவர வளர்கின்றனவென்றும்; புத்தியில் தேவகுருவையும், பராக்கிரமத்தில் வாலியையும் போன்றவனென்றும் தெரிந்துகொண்டார். அவன் ஸகல சாஸ்திர நீதிகளை அறிந்தவன்; பிரபுவின் விஷயத்தில் மிகவும் உழைத்தவன்; ஆனாலும் பிரஹஸ்



பதியின் ஆலோசனையைத் தேவேந்திரன் சிரத்தையோடும் பக்தியோடும் கேட்பதுபோல் தாரனுடைய யோசனையை அப்பொழுது அங்கதன் கேட்பதைக் கண்டு ஹனுமான், ஸாம, தான, பேத, தண்டமென்ற நான்கு உபாயங்களில் மூன்றாவதான பேதோபாயத்தால் வானரர்களுடைய புத்தியைத் திருப்பித் தனக்கு அனுகூலமாகச் செய்ய முயன்றார். அவர்கள் ஒற்றுமையில்லாமல் பல பல யோசனைகளைக் கூறும்படி அவர்களின் புத்தியைக் கலைத்துப் பிறகு அங்கதனுக்குப் பயமுண்டாகும் வார்த்தைகளைச் சொன்னார்.

"யுத்தத்தில் வாலியைக் காட்டிலும் நீ திறமை யுள்ளவன். புத்தியில் தாரைக்கு ஸமானன்; வாலியைப்போல் இந்த வானர ராஜ்யத்தைத் திறமையுடன் ஆளக்கூடியவன். ஆனால் நீ கிஷ்கிந்தையிலிருந்தாலும், ரிக்ஷபிலத்திலிருந்தாலும் வானரர்கள் உனக்குக் கட்டுப்படுவார்களென்பது நிச்சயமில்லை. குரங்குகள் ஸ்வபாவமாக சபல சித்தமுள்ளவர்களென்பது உனக்குத் தெரியாதா? மேலும் மனைவி மக்களையும் தனதான்யங்களையும் ஸுக்ரீவனுடைய வசத்தில் விட்டு, உன்னுடன் ரிக்ஷபிலத்தில் வஸிப்பார்களா? உன்னைக் காட்டிலும் அதிக பலசாலிகளானதால் உன் ஆக்ஞைக்கு உட்படமாட்டார்கள். ஜாம்பவான், நீலன், ஸுஹோத்திரன் முதலியவர்களையும் என்னையும் ஸுக்ரீவனிடத்திலிருந்து எந்த உபாயத்தாலும் இழுக்கமுடியாது. இதை எல்லோருடைய முன்னிலையிலேயே சொல்லுகிறேன். 'நீங்களெல்லோரும் போங்கள்; நான் ஒருவனே இங்கிருக்கிறேன்' என்பாயோ? பலசாலி பலஹீனனுடன் பகைத்து ஸௌகரியமடையலாம். பலஹீனன், பலசாலியுடன் பகைப்பது நியாயமல்ல. ஆகையால் பலமில்லாதவன் தன் நன்மையைக் கோரினால் பலவானுடன் ஒருபொழுதும் பகைக்கக் கூடாது. 'நான் பலஹீனனாக இருந்தாலும் கோட்டையின் பலமிருந்தால் என்னை வெல்லமுடியாதென்பாயோ? ரிக்ஷபிலத்தில் ஒருவரும் வரமுடியாதென்பாயோ?' லக்ஷ்மணன் இதை ஒரு பாணத்தால் விளையாட்டாகப் பிளந்துவிடுவார். ராமனைப்பற்றிச் சொல்லவும் வேண்டுமா? முன்பு இந்திரன் வஜ்ராயுதத்தால் இந்தக் குகைத்துவாரத்தை ஏற்படுத்தினான். லக்ஷ்மணனோ கூர்மையான பாணங்களால் இந்தக் குகையை உலர்ந்த சருகைப்போல் துளைப்பார். இவ்வகையான பாணங்கள் அவரிடத்தில் பல உண்டு. அவை வஜ்ராயுதத்தைப்போல் மலைகளைப் பொடியாக்கும். நீ இந்தக் குகையில் வஸிக்க நிச்சயித்த அடுத்த க்ஷணத்திலேயே இந்த வானரர்கள் உன்னை விட்டு ஓடிப்போவார்கள். இதில் ஸந்தேகமில்லை. பெண்டுபிள்ளைகளை எப்பொழுதும் நினைத்துக்கொண்டு, ராமலக்ஷ்மணர்களிடத்திலும் ஸுக்ரீவனிடத்திலும் எப்பொழுதும் பயந்துகொண்டு, ஸகல ஸுகங்களையும் எப்பொழுதும் அனுபவிப்போமென்று ஏக்கம் கொண்டு, உன்னுடனிருந்து அனுபவிக்க வேண்டிய துக்கங்களை நினைத்து, உன்னைவிட்டு ஓடிப்போவார்கள்.

பிறகு நீ மித்திரர்களுமில்லாமல் உன் ஹிதத்தைத் தேடும் பந்துக்களுமில்லாமல், புல் அசைந்தாலும் அதைக்கண்டு சத்துரு வந்துவிட்டானோ என்று ஒவ்வொரு க்ஷணத்திலும் நடுங்குவாய். மஹா வேகமுள்ள லக்ஷ்மணனுடைய பாணங்கள் உன்மேல்விழுந்து உன்னைக்கொல்லாதிருக்கவேண்டுமே. ஆனால் நீ எங்களுடைய மஹா ராஜாவிடத்திற்குப் போய் வினயமாக நடந்துகொண்டால் குலக்கிரமமாக உன்னை ராஜ்யத்தில் அபிஷேகம் செய்வார். தர்மத்தை அனுஷ்டிப்பதில் அவர் நோக்கமுள்ளவர். உன் தகப்பனுடன் பிறந்தவர்; உன் இஷ்டத்தைப் பூர்த்தி செய்வதில் கவலை கொண்டவர்; சொன்ன வார்த்தை தவறாதவர்; சுத்தமான நடத்தையுள்ளவர்; கபடமில்லாதவர்; உன் தாய்க்குப் பிரியமான விஷயத்தையே செய்கிறவர். அதற்காகவே பிழைத்திருக்கிறவர்; ஆகையால் உன்னைக் கொல்லமாட்டார். அவருக்கு வேறு புத்திரனுமில்லை. நீ பயமில்லாமல் எங்களுடன் வரலாம்'' என்றார்.

ப்ரியகாமஶ்ச தே மாது: தத3ர்த2ம் சாஸ்ய ஜீவிதம் |
தஸ்யாபத்யம் ச நாஸ்த்யந்யத் தஸ்மாத3ங்க3த3 க3ம்யதாம் ‖ (22)

## ஸர்க்கம் 55

# வானரர்கள் பிராயோபவேசம் செய்தது

ஶ்ருத்வா ஹநுமதோ வாக்யம் ப்ரஶ்ரிதம் த4ர்மஸம்ஹிதம் |
ஸ்வாமி ஸத்கார ஸம்யுக்தம் அங்க3தோ3 வாக்ய மப்3ரவீத் ‖ (1)

இப்படி ஹனுமான் மதுரமாயும் தர்மமாயும் ஸுக்ரீவனைப் புகழ்ந்து சொன்னதைக் கேட்டு அங்கதன், "ஆஞ்ஜநேய! ஸ்திர புத்தி, சுத்தமான மனம், குரூரமில்லாமை, ஆத்ம சுத்தி, கபடமின்மை, பராக்கிரமம், தைரியம் முதலியகுணங்கள் ஸுக்ரீவனிடத்திலில்லை. தமயனுடைய பாரியை தனக்குத் தாயல்லவா? அவன் பிழைத்திருக்கும்பொழுதே அவனுக்குப் பிரியமான பாரியைக் கைப்பற்றுகிறவனுக்கு ஆத்ம சுத்தியாவது மனச் சுத்தியாவது இருக்குமா? என் பிதா மாயாவியுடன் குகையில் யுத்தம் செய்யும்பொழுது அதன் வாசலை மூடினவன் குரூரஸ்வபாவமல்லாதவனென்று எப்படிச் சொல்லமுடியும்? அக்னிஸாக்ஷியாய் ராமனுக்குக் கையடித்துக் கொடுத்து, அவரிடத்தில் ஒப்பில்லாத உபகாரத்தைப் பெற்று, அவர் விஷயமாய்ச் செய்த பிரதிக்ஞையை மறந்தவன். செய்த உபகாரத்தை அவன் நினைக்கப்போகிறானா? அவனிடத்தில் கபடமென்ற தோஷம் நன்றாக விளங்கவில்லையா? ஸைன்யங்களை வரவழைத்து ஸீதையைத் தேட அனுப்பினது அதர்மத்திற்குப் பயந்து செய்ததல்லவே! லக்ஷ்மணனுடைய பாணங்களுக்குப் பயந்து செய்ததல்லவா? இது ஒரு தர்மமா?.



"அவன் பாபி, நன்றியற்றவன், சஞ்சல ஸ்வபாவமுடையவன், மறதியுள்ளவன்; இப்படிப்பட்டவனிடத்தில் மேன்மையான ஸ்வபாவமுள்ள எவனாவது நம்பிக்கை வைப்பானா? நான் அவனுக்குத் தாயாதி; அவனுக்குப் பிறகு பட்டத்தை அடைய வேண்டியவன். எனக்குப் பிழைக்க ஆசையிருந்தால் அவனை நம்பலாமா? 'உன்னை யுவராஜாவாக அபிஷேகம் செய்யவில்லையா' என்றால், அரசர்கள் தனக்குப் பிறந்த புத்திரனுக்குப் பட்டம் கட்டுவார்கள். அவன் குணசாலியாயிருந்தாலும், குணங்களில்லாதவனாக இருந்தாலும் கவனிக்க மாட்டார்கள். சத்துரு குலத்தில் பிறந்த என்னை உயிரோடு வைப்பானா? நான் அவனுக்கு அபகாரம் செய்தவன், பலஹீனன், அநாதை, அவனுக்கு விரோதியென்பதைப் பிறர்க்குத் தெரியும்படி சொல்லியும் விட்டேன். உங்களுடன் நான் கிஷ்கிந்தைக்கு வந்து உயிர் தப்புவேனா? ஸுக்ரீவன் குரூரன்; இரக்கமற்றவன்; ரஹஸ்யமாகக் கெடுதி செய்பவன்; ராஜ்யத்தை ஆளுவதற்கு நான் இடையூறாகஇருக்கிறேன் என்றுஎன்னைக்காவலில் போடுவான். அதைக் காட்டிலும் இங்கேயே பிராயோபவேசத்தால் உயிரை விடுவது நலமல்லவா? நீங்களெல்லோரும் திரும்பிப் போங்கள். நான் உங்களுடன் கிஷ்கிந்தைக்கு வருவதில்லை. இது ஸத்தியம்.

"இங்கேயே பிராயோபவேசம் செய்வேன். நான் மரணமடைவதே எனக்கு க்ஷேமம். ராமலக்ஷ்மணர்களையும் என் சிறிய தகப்பனான ஸுக்ரீவனையும் நான் நமஸ்கரித்து க்ஷேமம் விசாரித்ததாகச் சொல்லுங்கள். என் தாயையும் ருமையையும் நான் ஆரோக்கியத்தையும் க்ஷேமத்தையும் விசாரித்ததாகச் சொல்லுங்கள். என் தாய் எனக்காக வருந்தாதபடி தேற்றுங்கள். என்னிடத்தில் விசேஷ பிரீதியுள்ளவள்; இரக்கமுள்ளவள்; பர்த்தாவை இழந்து மிகுந்த கஷ்டங்களை அனுபவித்தவள்; நான் இங்கே மரணமடைந்ததைக் கேட்டு நிச்சயமாக உயிரை விடுவாள்'' என்று சொல்லி ஜாம்பவான் முதலிய பெரியோர்களுக்கு நமஸ்காரம் செய்து பூமியில் தர்ப்பங்களைப் பரப்பி அழுதுகொண்டே அவைகளின் மேல் படுத்தான்.

அதைக் கண்டு, ஸகல வானரர்களும் கண்ணீர் பெருக, வாய்விட்டலறி, ஸுக்ரீவனைத் தூஷித்து, வாலியைப் புகழ்ந்து, அங்கதனைச் சுற்றி, தாங்களும் பிராயோபவேசம் செய்ய யத்தனித்தார்கள். இப்படி அங்கதன் பிராணனை விட நிச்சயித்ததைப் பார்த்து, வானர சிரேஷ்டர்களும் கைகால்களைக் கழுவி ஆசமனம் செய்து, "நமது யஜமானனான அங்கதன் இறக்கும்பொழுது அவரைவிட்டு நாம் கிஷ்கிந்தைக்குச் செல்வது நியாயமா? நாமும் அவருடன் இறப்பது நலம்'' என்று ஸங்கல்பம் செய்து, ஸமுத்திரத்தின் வடகரையில் தெற்கு நுனியாகப் போடப்பட்ட தர்ப்பங்களில் கிழக்கு முகமாய் உட்கார்ந்தார்கள். பிறகு ராமன் தண்ட-

காரண்யத்திற்கு வந்ததையும் தசரதர் மரணமடைந்ததையும். ஜனஸ்தானத்தில் கரதூஷணர்கள் மடிந்ததையும், ஜடாயு முக்தியடைந்ததையும், ஸீதை அபகரிக்கப்பட்டதையும், வாலி உத்தம கதி பெற்றதையும், ராமன் ஸுக்ரீவனிடத்தில் கோபித்ததையும் சொல்லித் துக்கித்தார்கள். மஹா பர்வத சிகரங்களைப் போன்ற அந்த மலையிலுள்ள குகைகளிலிருந்து பயங்கரமாய் ப்ரதித்வனி உண்டாயிற்று; அது அவர்களுக்கு விசேஷ பயத்தை உண்டாக்குவதற்கு ஒரு காரணமாயிற்று.

ஸ ஸம்விஶத்3பி4ர் ப3ஹுபி4ர் மஹீத4ரோ
மஹாத்3ரி கூட ப்ரதிமை: ப்லவங்க3மை: |
ப3பூ4வ ஸந்நாதி3த நிர்த3ராந்தரோ
ப்4ருஶம் நத3த்3பி4ர் ஜலதை3 ரிவோல்ப3ணை: || (23)

---

## ஸர்க்கம் 56

## ஸம்பாதி

உபவிஷ்டாஸ்து தே ஸர்வே யஸ்மிந் ப்ராயம் கி3ரிஸ்த2லே |
ஹரயோ க்3ருத்4ர ராஜஶ்ச தம் தே3ஶ முபசக்ரமே || (1)

**வா**னரர்கள் எந்த மலைச் சாரலில் பிராயோபவேசம் செய்ய உட்கார்ந்தார்களோ அங்கே ஸம்பாதி என்ற ஒரு கழுகு வந்தது. அவன் சிரஞ்சீவி; கழுகுகளுக்கெல்லாம் அரசன்; ஜடாயுவிற்குத் தமயன்; பல பராக்கிரமங்களால் கீர்த்தி பெற்றவன்; அவன் விந்திய பர்வதத்தின் ஒரு குகையிலிருந்து வெளிக் கிளம்பி, வானரக் கூட்டங்கள் உட்கார்ந்திருப்பதைக் கண்டு ஸந்தோஷமடைந்து, "என்ன ஆச்சரியம்! வெகு நாள் ஆகாரமில்லாமல் வருந்தும் எனக்கு இன்றைக்குப் பூர்ணமான போஜனம் வலுவில் வந்திருக்கிறது. தெய்வம் ஜீவன்களுடைய யோக க்ஷேமத்தை அவைகளுக்குத் தகுந்தபடி ஸம்பாதித்து வைக்கிறது. இந்த வானரர்கள் ஒவ்வொருவரும் ஆகாரத்திற்குத் தகுந்தவர்களே. ஆனாலும், இவர்களுக்குள், "சிரேஷ்டமானவர்களை ஒவ்வொருவராய்க் கொன்று தின்பேன்'' என்றான்.

அதைக் கேட்டு அங்கதன் மிகவும் வருத்தமடைந்து ஹனுமாரைப் பார்த்து, யமன் இந்தக் கழுகின் ரூபத்தைத் தரித்து வானரர்களைக் கொல்வதற்காக இங்கே வந்திருக்கிறான். ராமனுடைய காரியம் முடியவில்லை. ஸுக்ரீவனுடைய ஆக்ஞையும் நிறைவேறவில்லை. நமக்குத் திடீரென்று இந்த ஆபத்து எப்படியோ நேர்ந்ததே. ஸீதையை ராவணனிடத்திலிருந்து தப்புவிப்பதற்காகக் கழுகுகளுக்கு அரசனான ஜடாயு செய்த காரியத்தை நீங்கள் கேட்டிருக்கலாமே. ராமனிடத்தில் விளங்கும் ஸ்நேஹத்தாலும் கருணையாலும் கட்டுப்பட்டு, ஸகலப் பிராணிகளும் பசு, பக்ஷிகளாயிருந்தாலும் நம்மைப்போல் பிராணனைக் கொடுத்தாவது ராமனுக்குப் பிரியத்தைச் செய்கின்றன. தர்மங்களை அறிந்த ஜடாயு ராமனுக்கு உபகாரம் செய்வதற்காகத் தன் உயிரைக் கொடுத்து, அவருக்குத் திருப்தி செய்தார். நாமும் அவருடைய காரியத்தை முடிப்பதற்காக இந்தக் காடுகளிலும் மலைகளிலும் ஸீதையைத் தேடிக் களைத்தோம். ஜானகியைக் காணவில்லை. இப்பொழுது உயிரை விடப்போகிறோம். ராவணனால் மரணமடைந்த ஜடாயு பாக்கியசாலி; அவருக்கு ஸுக்ரீவனால் யாதொரு பயமும் இல்லை. (ஸுக்ரீவன் வனத்தில் வஸிக்கும் பிராணிகளுக்கெல்லாம் அரசன்.) அவர் உத்தமமான கதியையும் அடைந்தார். ஜடாயு இறக்காவிட்டால் ஸீதை அபகரிக்கப்படுவாளா? ஒரு முகூர்த்தம் ராவணனை நிறுத்தி வைத்திருந்தால் ராமன் வந்திருப்பார். அப்பொழுது ராவணன் தப்புவானா? தசரதர் அவ்வளவு சீக்கிரமாய் இறக்காமல் இன்னும் சில தினங்கள் பிழைத்திருந்தால் ராமனை வனத்திலிருந்து அழைத்து வந்திருப்பார். ஜடாயு மரணமடைந்ததாலும், தசரதர் இறந்ததாலும், ஸீதை அபகரிக்கப்பட்டதாலும், நாம் பிராணனை இழக்கும்படி நேர்ந்தது. ராமலக்ஷ்மணர்களும், ஸீதையும் வனத்தில் வஸிக்கும்படி நேர்ந்ததும், ராமனுடைய கோபத்தால் கரதூஷணாதி ராக்ஷஸர்கள் நாசமடைந்ததும், கைகேயிக்குத் தசரதர் வரம் கொடுத்ததாலுண்டானதே தவிர வேறல்ல'' என்று அங்கதன் சொல்வதைக் கேட்டும், வானரர்கள் பூமியில் படுத்து பிராயோபவேசம் செய்ததைப் பார்த்தும், ஸம்பாதி மனம் நொந்து, தீனஸ்வரத்துடன். "என் பிராணனைக் காட்டிலும் எனக்குப் பிரியமான தம்பி ஜடாயு இறந்தானென்று சொல்லி, என் மனத்தை நடுங்கச் செய்கிறவன் யார்? ஜனஸ்தானத்தில் ராவணனுக்கும் ஜடாயுவிற்கும் யுத்தம் நடந்த காரணமென்ன? என் தம்பியின் பெயரைக் கேட்டு வெகு நாளாயிற்று. என்னை இந்த மலையிலிருந்து இறக்கிவிடுங்கள். சிரஞ்ஜீவியான என் தம்பி பல பராக்கிரமத்தால் கீர்த்தி பெற்றவன்; மஹா குணசாலி; இவ்வளவு காலம் கழித்து அவனுடைய விருத்தாந்தத்தைக் கேட்டு ஸந்தோஷமடைந்தேன். ஜனஸ்தானத்தில் வஸித்துவந்த அவன் மரணமடைந்த விஷயத்தைக் கேட்க விரும்புகிறேன். பெரியோர்களிடத்தில் பக்தியுள்ள ராமன் தசரதருக்கு மூத்த புத்திரனல்லவா? அவர் ஜடாயுவிற்கு எப்படித் தோழரானார்? என் இறக்கைகள் ஸூரிய கிரணங்களால் கொளுத்தப்பட்டதால் நான் பறக்கச் சக்தியற்றவனாகஇருக்கிறேன். ஆகையால் என்னை இங்கிருந்து இறக்கிவிடுங்கள்'' என்றான்.

ஸூர்யாம்ஶு த3க்3த பக்ஷத்வாத் ந ஶக்நோம் யுபஸர்பிதும் |
இச்சே2யம் பர்வதா த3ஸ்மா த3வதர்து மரிந்த3மா: || (24)

---

## ஸர்க்கம் 57

# அங்கதன் பதில் சொன்னது

ஶோகாத்3 ப்4ரஷ்டஸ்வரமபி ஶ்ருத்வா தே ஹரியூத2பா: |
ஶ்ரத்3த3து4ர் நைவ தத்3வாக்யம் கர்மணா தஸ்ய ஶங்கிதா: || (1)

**சோ**கத்தால் தழுதழுத்தக் குரலுடன் ஸம்பாதி இப்படிச் சொல்வதை வானரர்கள் கேட்டும், "ஒவ்வொருவராய்க் கொன்று தின்பேன்" என்ற வார்த்தையால் அவனிடத்தில் ஸந்தேகம் கொண்டு, "நம்மெல்லோரையும் இவன் நிச்சயமாகக் கொல்வான். நாம் பிராயோபவேசம் செய்யும்பொழுது இவனால் மரணமடைந்தால் நமக்கு நஷ்டமென்ன? சீக்கிரத்தில் நமது உத்தேசம் நிறைவேறும்" என்று முடிவு செய்தார்கள்

அப்பொழுது அங்கதன் ஸம்பாதியைப் பர்வத சிகரத்திலிருந்து இறக்கி, "முன்பு ரிக்ஷரஜஸென்ற வானராதிபதி ஒருவர் இருந்தார். அவர் மஹாகீர்த்திசாலி; தர்மவான்; எனக்குப் பாட்டனார். அவருக்கு வாலி ஸுக்ரீவன் என்று இரண்டு புத்திரர்கள் அளவற்ற பலசாலிகளாய்ப் பிறந்தார்கள். என் பிதாவான வாலி, பலத்திலும் பராக்கிரமத்திலும் லோகத்தில் விசேஷ பிரஸித்தியடைந்தார். ஒரு ஸமயத்தில் ஸகல லோகநாதனான ராமன் இக்ஷ்வாகு குலத்தில் தசரத சக்கரவர்த்திக்குக் குமாரனாய்ப் பிறந்து அளவற்ற ஐசுவரியத்தாலும் வீரியத்தாலும் புருஷோத்தமனாய் விளங்கினார். அவர் பெரியோர்களுடைய தர்மத்தை அனுஸரித்துப் பிதிருவாக்ய பரிபாலனம் செய்வதற்காக லக்ஷ்மணனோடும் ஸீதையோடும் தண்டகாரண்யத்தில் ஸஞ்சரித்தார். அவர்கள் ஜனஸ்தானத்தில் வஸித்துக்கொண்டிருக்கையில் ராக்ஷஸேசுவரனான ராவணன் ஸீதையைப் பலாத்காரமாய் அபகரித்தான். தசரதருக்குப் பரம மித்திரனான ஜடாயு, அந்த ராக்ஷஸன் அவளை ஆகாச மார்க்கமாய்க் கொண்டுபோவதைக் கண்டு, அவனுடன் யுத்தம் செய்து, அவனுடைய ரதத்தையும், கவசத்தையும், ஆயுதங்களையும் ஒடித்து, ஸீதையைத் தப்புவிக்க முயன்றார். ஆனால் வயது சென்றவரானதாலும் யுத்தம் செய்து களைத்ததாலும் ராவணன் அவரை வெட்டிக் கொன்றான். பிறகு ராமன் அங்கே வந்து அவருக்கு ஸகல ஸம்ஸ்காரங்களையும் செய்து, உத்தம கதியை அனுக்கிரஹித்தார். பிறகு, ராமன் என் சிறிய தகப்பனான ஸுக்ரீவனுடன் ஸ்நேகம் செய்து வாலியைக் கொன்றார். ஸுக்ரீவனும் அவருடைய மந்திரிகளும் என் பிதாவிற்கு விரோதிகள். பிறகு ஸுக்ரீவனை வானர ராஜாவாய் நியமித்தார். அவரும் ஸீதையைத் தேடும்படி ஸகல வானரர்களையும் அனுப்பினார். ராமனுடைய ஆக்ஞைப்படி ஸீதையை அங்கே நாங்கள் தேடியும், ராத்திரியில் ஸூரிய பிரகாசத்தைக் காண முடியாததுபோல், அவளைக் கண்டுபிடிக்கவில்லை. தண்டகாரண்யம் முழுவதையும் வெகு ஜாக்கிரதையாகத் தேடி, வழி தப்பி, மயனால் ஸிருஷ்டிக்கப்பட்ட ஓர் குகையில் பிரவேசித்தோம். அங்கே ஒரு மாதம் வரையில் தேடித் திரிந்ததால் மஹாராஜா எங்களுக்குக் கெடுவிட்ட காலம் சென்றுவிட்டது. இனிமேல் நாங்கள் கிஷ்கிந்தைக்குச் சென்றால் ராமலக்ஷ்மணர்களுடைய கோபத்திற்கும், ஸுக்ரீவனுடைய குரூரமான தண்டனைக்கும் பாத்திரமாய்க் கொல்லப்படுவோம். ஆகையால் இங்கேயே உயிரை விடுவது நலமென்றெண்ணி பிராயோபவேசம் செய்துகொண்டிருக்கிறோம்" என்றான்.

க்ருத்3தே4 தஸ்மிம்ஸ்து காகுத்ஸ்தே2 ஸுக்3ரீவே ச ஸலக்ஷ்மணே |
க3தாநாமபி ஸர்வேஷாம் தத்ர நோ நாஸ்தி ஜீவிதம் || (19)

## ஸர்க்கம் 58

# ஸம்பாதி ஸீதை இருக்குமிடத்தைத் தெரிவித்தது

இத்யுக்த: கருணம் வாக்யம் வாநரைஸ் த்யக்த ஜீவிதை: |
ஸபா3ஷ்போ வாநராந் க்3ருத்4ர: ப்ரத்யுவாச மஹாஸ்வந: || (1)

**இ**ப்படி வானரர்கள் உயிரில் ஆசையைவிட்டுத் தீனமாய்ச் சொன்ன வார்த்தைகளைக் கேட்டு, ஸம்பாதி கண்ணீர் பெருக்கி, அவர்களை நோக்கி, "பலவானான ராவணனால் கொல்லப்பட்டானென்று நீங்கள் சொல்லும் ஜடாயு என்பவன் எனக்குத் தம்பி. நானோ வயதுசென்றவன்; எனக்கு இறக்கைகள் இல்லை; ஆகையால் ராவணனை இதற்காகப் பழிவாங்க இப்பொழுது எனக்குச் சக்தி இல்லை; பொறுமையோடு கேட்டுக்கொண்டிருப்பதைத் தவிர வேறு என்ன செய்வேன்? முன் காலத்தில் இந்திரன் விருத்ராஸுரனைக் கொன்றபொழுது நானும் ஜடாயுவும் நல்ல யௌவன தசையில் இருந்தோம். ஒரு நாள் எங்களில் யார் உயரமாகப் பறக்கக்கூடுமென்று பந்தயம் போட்டுக்கொண்டு ஒருவரை ஒருவர் ஜயிக்க வேண்டுமென்ற எண்ணத்துடன் ஜ்வலிக்கும் ஸூரியனைச் சுற்றி அதிவேகமாகப் பறந்தோம். அவர் ஆகாசத்தின் மத்தியில் வந்தபொழுது, ஜடாயு உஷ்ணம் தாங்காமல் தவிப்பதைக்கண்டு, நான் அவனிடத்தில் வைத்த ஸ்நேகத்தால் என் இறக்கைகளைக் கொண்டு அவனை மூடினேன். உடனே ஸூரிய தேஜஸால் அவை கொளுத்தப்பட்டு அங்கிருந்து விந்திய மலையில் விழுந்தேன். அது முதல் இங்கே வஸித்துக்கொண்டிருக்கிறேன். பிறகு ஜடாயுவின் விருத்தாந்தம் எனக்குத் தெரியாது" என்றான்.

அதைக் கேட்டு அங்கதன், "நீர் ஜடாயுவின் தமயனென்பது வாஸ்தவமானால் அவரைக் கொன்ற ராவணனைக் கொல்ல வேண்டாமா? அதற்கு இப்பொழுது சக்தியற்றிருந்தாலும்,

அவனிருக்குமிடத்தையாவது உமக்குத் தெரிந்தால் சொல்லும். வரும் கெடுதியை அறியாத அந்த மூடன் ஸமீபத்தில் வஸிக்கிருனு? அல்லது நெடுந்தூரத்திலிருக்கிருனு?'' என்று கேட்டான்.

அதற்கு ஸம்பாதியும், "வானரர்களே! வயது சென்று இறக்கைகளற்ற நான் வீரியமற்றவன். ஆகையால் ராமனுடைய காரியத்தில் கூடியவரையில் வாக்குஸஹாயம் செய்கிறேன். இந்த பிரஹ்மாண்டத்திலுள்ள பதினன்கு லோகங்களும் எனக்கு நன்ருகத் தெரியும். தேவாஸுர யுத்தங்களையும், அமிருதத்திற்காகப் பாற்கடலைக் கடைந்ததையும் பார்த்தேன். ஒருநாள் ராவணன் ஸகல ஆபரணங்களாலும் அலங்கரிக்கப்பட்ட அதிரூபவதியான ஒரு யௌவன ஸ்த்ரீயை எடுத்துக்கொண்டு ஆகாசத்தில்போவதைக் கண்டேன். அவள் "ராமா! லக்ஷ்மணு! என்று கதறிக்கொண்டும் ஆபரணங்களைக் கழற்றி எறிந்துகொண்டும் கால்களை உதறிக்கொண்டும் இருந்தாள். கறுத்தமலையில் அடிக்கும் ஸூரிய கிரணங்களைப் போலும், நீருண்ட மேகத்தில் பாயும் மின்னலைப்போலும் அந்த துஷ்டனுடைய கறுத்த சரீரத்தில் அந்த ஸ்த்ரீயின் வெண்பட்டு விளங்கிற்று. அவள் ராமனைக் கூப்பிட்டுக்கொண்டிருந்ததால் ஸீதையாக இருக்குமென்று எண்ணுகிறேன். அந்த ராக்ஷஸன் இருக்குமிடத்தைச் சொல்லுகிறேன். கேளுங்கள். அவன் விச்ரவஸின் புத்திரன்; குபேரனுக்குத் தம்பி; லங்காத்வீபத்திலிருக்கிருன். அது இங்கிருந்து நூறு யோஜனைக்கப்பால் தெரிகிறது. பாருங்கள்; விசுவ கர்மாவால் ஸிருஷ்டிக்கப்பட்டது; தங்க வாசற்படிகளும் விசித்திரமாக வேலை செய்யப்பட்ட தங்கமேடைகளும் ஸூரியனைப் போல் ஜ்வலிக்கும் தங்கப் பிராகாரங்களும் கண்ணைப் பறிக்கின்றன. அங்கே ஸீதை ராவணனுடைய அந்தப்புரத்தில் ராக்ஷஸிகளால் காக்கப்பட்டு தீனமாக உட்கார்ந்திருக்கிருள். நான்குபக்கங்களிலும் ஸமுத்திரத்தால் நன்ருகக் காக்கப்பட்ட அந்த லங்கைக்குப் போனுல் ஜனக புத்திரியான ஸீதையைக் காண்பீர்கள். இங்கிருந்து ஸமுத்திரத்தில் நூறு யோஜனை தூரம் போய் தெற்குக் கரையைச் சேர்ந்தால் ராவணனைக் காணலாம். அதைப்பற்றிய ஸகல யத்தனங்களையும் சீக்கிரமாகச் செய்யுங்கள். நான் தேவகுலத்தில் பிறந்தவன்; நீங்கள் ஸீதையைக் கண்டு திரும்புவீர்களென்று என் திவ்விய ஞானத்தால் நிச்சயமாக அறிகிறேன். தான்யங்களைத் தின்னும் குலிங்கம் புரு முதலிய பக்ஷிகள் தூரத்திலிருக்கும் பொருள்களைப் பார்ப்பதில் திறமையுள்ளவை. காக்கைகளும் காய்கனிகளைத் தின்னும் கிளி முதலிய பறவைகளும் அதற்கு இரண்டு மடங்கு சக்தி வாய்ந்தவை. கிரௌஞ்சம், அன்றில், நீர்காக்கை முதலியவைகளும் மூன்று மடங்கு; பருந்துகளுக்கு நான்கு மடங்கு; கழுகுகளுக்கு ஐந்து மடங்கு; ரூபயௌவன பல வீரியங்களால் விளங்கும் அன்னங்களுக்கு ஆறு மடங்கு; கருடன் அருணனென்ற வினதையின் புத்திரர்களின் சக்தி இவைகளைக் காட்டிலும் மிகவும் மேலானது. நானும் ஜடாயுவும் அருணனுடைய புத்திரர்கள். ஆகையால் ஸகல பக்ஷிகளின் சக்தியைக் காட்டிலும் எங்களுடைய சக்தி மிகவும் மேலானது. இங்கிருந்தே ராவணனையும் ஜானகியையும் நான் பார்க்க முடியும். வினதையின் புத்திரர்களுக்குள்ள திவ்விய ஞானமும் பலமும் எங்களுக்குண்டு. என் ஸ்வபாவத்தாலும் நான் புஜிக்கும் ஆகார பலத்தாலும் நூறு யோஜனைக்கு அப்பாலிருக்கும் லங்கையில் நடப்பவைகளை ஒவ்வொரு நிமிஷமும் பார்க்கிறேன்.

வெகு தூரத்திலுள்ள ஜனங்களைக் கொன்று தின்பது எங்களுக்கு இயற்கையாக ஏற்பட்ட காரியம். காலடியில் இருப்பவைகளையே பார்த்துக் கோழிகள் தின்னும். என் தம்பியை அவன் கொன்றதற்காக அந்த துஷ்ட ராக்ஷஸனை நான் கொல்வது முறை. ஆனல் எனக்கு வயது அதிகமானதால் பலம் குறைந்தது. பிராண வாயுக்கள் தடுமாறுகின்றன. இந்த ஸமுத்திரத்தைத் தாண்ட ஏதாவது உபாயத்தைக் கண்டுபிடியுங்கள். லங்கைக்குப் போய் ஸீதையையும் பார்த்து உங்களுடைய காரியத்தை முடித்துக்கொண்டு வாருங்கள். உத்தம கதியடைந்த ஜடாயுவுக்குத் தர்ப்பணம் செய்யவேண்டும். என்னை ஸமுத்திரத்திற்குக் கொண்டுபோய் விடுங்கள்'' என்ருன்.

வானரர்கள் அப்படியே செய்து, அங்கிருந்து அது முன் இருந்த இடத்திற்கு மறுபடியும் கொண்டுவந்து விட்டார்கள். ஸீதையைப் பற்றி நிச்சயமான ஸமாசாரம் தெரிந்ததால் அவர்களுக்கு உண்டான ஆனந்தத்திற்கு எல்லையில்லை.

புந: ப்ரத்யாநயித்வா ச தம் தே3ஶம் பதகே3ஶ்வரம் |
ப3பூ4வுர் வாநரா ஹ்ருஷ்டா: ப்ரவ்ருத்தி முபலப்4ய தே || (36)

---

## ஸர்க்கம் 59

# ஸம்பாதி ஸீதையின் வரலாற்றைச் சொன்னது

ததஸ் தத3ம்ருதாஸ்வாத3ம் க்3ருத்4ர ராஜேந பா4ஷிதம் |
நிஶம்ய முதி3தா ஹ்ருஷ்டாஸ் தே வச: ப்லவக3ர்ஷபா4: || (1)

அமிருத தாரையைப்போல் மதுரமான ஸம்பாதியின் வார்த்தைகளைக் கேட்டு, வானரர்கள் ஸந்தோஷத்தால் மயிர்கூச்சமடைந்தார்கள். அப்பொழுது ஜாம்பவானும் மற்ற வானரர்களும் குதித்தெழுந்து ஸம்பாதியைப் பார்த்து, "ஸீதை எங்கிருக்கிருள்? அவளை எவன் பார்த்தான்? யார் அவளை அபகரித்துக் கொண்டு போனுன்? இதை எங்களுக்கு விஸ்தாரமாகச் சொல்லவேண்டும். தங்களைவிட வேறு கதி எங்களுக்குண்டோ? வஜ்ராயுதங்களைப்போல் அதிவேகமாய் வந்து விழும் ராமலக்ஷ்மணர்

களுடைய பாணங்களின் வீரியத்தை அறியாத மூடன் யார்?" என்று கேட்டார்கள். அதைக்கேட்டு ஸம்பாதி, ஸீதையின் விருத்தாந்தத்தை அறிந்துகொள்வதில் மிகவும் ஆவலுள்ள அந்த வானரர்களைத் தேற்றி, மஹாப்ரீதியுடன் அவர்களைப் பார்த்து,

"ஸீதையை அபகரித்ததை நான் கேள்விப்பட்ட விதத்தையும் அவளைப் பார்த்தவனையும் அந்த இடத்தையும் சொல்லுகிறேன் கேளுங்கள். நான் லங்கையில் ஸீதையிருப்பதைக் காண்கிறேன் என்று சொன்னதற்கு என்னைத்தவிர வேறு ஸாக்ஷியும் உண்டு. நான் இந்த மலையில் ப்ரவேசிக்க முடியாத ஓரிடத்தில் இறக்கையற்று விழுந்தேன். வயது சென்றதாலும் பல பராக்கிரமங்கள் குறைந்ததாலும் ஸுபார்சுவனென்ற என் புத்திரன் அந்தந்தக் காலத்தில் எனக்கு வேண்டிய ஆகாரத்தைக் கொண்டு வந்து கொடுத்து என்னை ரக்ஷிக்கிறான். 'கந்தர்வர்கள் ஸ்த்ரீகளிடத்தில் ஆசை வைத்தவர்கள்' என்ற சுருதிப்படி, அவர்களுக்குக் காமம் அதிதீவிரமானது. ஸர்ப்பங்களுக்குக் கோபம் அதிகம்; மான்களுக்குப் பயம் அதிகம்; எங்களுக்குப் பசி அதிகம். ஒரு நாள் என் புத்திரன் எனக்கு ஆகாரம் தேடப் போய் அஸ்தமித்த பிறகு ஒன்றும் கிடைக்காமல் வந்தான். அதைக் கண்டு நான் பசி தாகத்தைத் தாங்கமுடியாததாலும் வயது சென்றதாலும் அவனைக் கடுமையாகக் கோபித்தேன். அவனும் அதைப் பொறுத்துக்கொண்டு என்னை இவ்விதம் ஸமாதானம் செய்தான்.

'அப்பா! நான் வழக்கப்படி ஆகாரம் தேடுவதற்காகப் பறந்து போய் மஹேந்திர பர்வதத்தின் துவாரத்தை மறைத்துக்கொண்டு, ஸமுத்திரத்தில் ஸஞ்சரிக்கும் அநேக ஜந்துக்களையும் கொல்வதற்காக அவைகள் வரும் வழியையும் தடுத்துக்கொண்டு நின்றேன். அப்பொழுது மைமலையைப்போன்ற தேகத்தையுடைய ஒருவன் பாலஸூரியனைப்போல் காந்திபெற்ற ஒரு ஸ்த்ரீயை எடுத்துக்கொண்டு வருவதைக் கண்டேன். அவர்களைக் கொன்று தங்களிடத்தில் கொண்டுவரவேண்டுமென்று நிச்சயித்து நிற்கையில், அவன் விநயமாகவும் மதுரமாகவும் என்னை வழிவிடும்படி வேண்டினான். நீச குலத்தில் பிறந்த எவனாலும் அப்படி ப்ரார்த்திப்பவர்களை உபத்திரவிப்பானா? என்னைப்போன்றவன் அந்தப் பாபத்தை நினைக்கவே மாட்டான். பிறகு, அவன் தேஜஸால் நான்கு திக்குகளையும் பிரகாசிக்கச் செய்துகொண்டு அதிவேகமாகச் சென்றான். உடனே ஆகாசத்தில் ஸஞ்சரிக்கும் ஸித்த சாரணர் முதலிய கணங்கள் என்னைப் பூஜித்து, 'குழந்தாய்! இவனும் இவனுடனிருந்த ஸ்த்ரீயும் உன்னிடத்திலிருந்து அபாயமில்லாமல் சென்றது பெரிய காரியம். நிச்சயமாய் உனக்கு மங்களமுண்டாகும்' என்றார்கள். அவன் ராக்ஷஸேசுவரனை ராவணனென்றும், தசரத புத்திரனை ராமனுடைய பாரியை ஸீதையை அபகரித்துப் போகிறானென்றும் அவர்களால் அறிந்தேன். அவள் தலைமயிர் அவிழ்ந்து,



வஸ்திரம் நழுவி ஆபரணங்கள் கழன்று, ராமலக்ஷ்மணர்களைக் கூப்பிட்டுக்கொண்டே போனாள். இப்படிச் சோகத்தால் தவிக்கும் அந்த ஸீதையைப் பார்த்துக்கொண்டே நின்றதால் தாமதமாயிற்று" என்றான்.

"முன்பு நான் ஸாமான்யமாகப் பார்த்ததைக் காட்டிலும் இப்பொழுது ஸுபார்சுவனால் அந்தப் புருஷன் ராவணனென்றும் அபகரிக்கப்பட்ட ஸ்த்ரீ ராம பத்தினி என்றும் நன்றாக அறிந்தும் அந்த ராக்ஷஸனைத் தண்டிக்கவேண்டுமென்ற எண்ணம் எனக்கு உண்டாகவில்லை. நானோ பக்ஷி; இறக்கைகளற்றுப் பலஹீனனாயிருக்கும்பொழுது என்ன செய்ய முடியும்? ஆகையால் புத்தியாலும் வார்த்தையாலும் என்னால் கூடியவரையில் உங்களுக்கு உபகாரம் செய்கிறேன். ராமனுடைய காரியம் என்னுடையதல்லவா? அதனால் எனக்கும் பிரயோஜனமுண்டு. நீங்கள் மஹா புத்திமான்கள்; பலசாலிகள்; பெருந்தன்மையுடையவர்கள்; தேவதைகளும் உங்களைக் கண்ணெடுத்துப் பார்க்க முடியாது. ஆகையால் வானரேசுவரன் உங்களை இந்தக் காரியத்தில் நியமித்திருக்கிறார். ராமலக்ஷ்மணர்களுடைய பாணங்கள் கழுகிறகுகளால் அலங்கரிக்கப்பட்டு அதிதீக்ஷ்ணமானவை; மூன்று லோகங்களையும் காப்பாற்றுவதற்கும் நாசம் செய்வதற்கும் திறமையுள்ளவை; ராவணன் தேஜஸாலும் பலத்தாலும் விசேஷப் பிரஸித்தி பெற்றவன்; ஆனாலும், உங்களுக்கு ராமலக்ஷ்மணர்களுடைய ஸஹாயமிருக்கையில் அஸாத்தியமான விஷயம் ஒன்றுண்டோ? நீங்கள் உங்களுடைய காரியத்தை முடித்து விடுவீர்களென்று நிச்சயமாய் எனக்குத் தெரியுமாகையால், தாமதிக்காமல் வேண்டிய ஏற்பாடுகளைச் செய்யுங்கள். உங்களைப்போல் புத்திமான்கள் எந்தக் காரியங்களைச் செய்வதிலும் தாமதம் செய்யமாட்டார்கள்" என்றான்.

தத³லம் காலஸங்கே³ந க்ரியதாம் பு³த்³தி⁴ நிஸ்சய: |
ந ஹி கர்மஸு ஸஜ்ஜந்தே பு³த்³தி⁴மந்தோ ப⁴வத்³விதா⁴: || (29)

---

## ஸர்க்கம் 60

# ஸம்பாதியின் விருத்தாந்தம்

தத: க்ருதோத³கம் ஸ்நாதம் தம் க்³ருத்⁴ரம் ஹரியூத²பா: |
உபவிஷ்டா கி³ரௌ து³ர்கே³ பரிவார்ய ஸமந்தத: || (1)

பிறகு ஸம்பாதி ஜடாயுவிற்குத் தர்ப்பணம் செய்து, ஸ்நானம் முதலிய காரியங்களை முடித்துக்கொண்டு பர்வதத்தில் வந்து உட்கார்ந்தான். அப்பொழுது வானரர்கள் அவனைச் சூழ்ந்து உட்கார்ந்தார்கள். அவனுக்கு நிசாகர முனி சொல்லியிருந்தபடி ராம

தூதர்களான வானரர்கள் வந்ததாலும், தனக்கு இறக்கைகள் மறுபடியும் முளைத்ததாலும் அவருடைய வார்த்தையில் நம்பிக்கை பிறந்து, ஸந்தோஷமடைந்து, வானரர்களைப் பார்த்து, "மித்திரர்களே! ஒருவரும் சப்தம் செய்யாமல் நான் சொல்வதைக் கவனமாய்க் கேளுங்கள். நான் ஸீதையைப் பார்த்தேனென்ற வார்த்தையை வாஸ்தவமென்று உங்களுக்குப் படும்படி சொல்லுகிறேன். ஸூரிய கிரணங்களால் தேகமெங்கும் வெந்து இறக்கையற்று இந்த மலையில் விழுந்தேனென்று சொன்னேனல்லவா? ஆறு தினங்கள் கழித்து பிரக்ஞை வந்தது. தேக ஸ்வாதீனமில்லாமல் சொல்ல முடியாத உபத்திரவத்தையடைந்து எந்தப் புறத்தில் பார்த்தாலும் ஒன்றும் தெரியவில்லை. பிறகு ஸமுத்திரம் மலை ஆறுகள் ஓடைகள் வனங்கள் ஸமுத்திரக்கரை முதலியவைகளைப் பார்த்துப் பார்த்து ஞாபகம் வந்தது. தெற்கு ஸமுத்திரக்கரையில் அநேக குகைகளுடனும் பசு பக்ஷிகளுடனும் விளங்கும் விந்திய பர்வதம் இதுதானென்று நிச்சயம் கொண்டேன். இங்கே நிசாகரரென்ற மஹா தேஜஸ்வியான ஒரு மஹரிஷி தவம் செய்த ஆசிரமம் ஒன்றுண்டு. அவர் உத்தம லோகங்களை அடைந்த பிறகும் நான் இவ்விடத்தில் எண்ணாயிரம் வருஷங்களாய் வஸித்துக் கொண்டிருக்கிறேன். துக்கம் தாங்காமல் இந்த மலையின் உச்சியிலிருந்து வெகு கஷ்டத்துடன் இறங்கிக் கூர்மையான தர்ப்பங்களால் நிறைந்த பூமியில்வந்து, அவரைப் பார்க்கவேண்டுமென்று எண்ணிக்கொண்டு, அவருடைய ஆசிரமத்திற்குச் சென்றேன். நானும் ஜடாயுவும் இவ்விடத்தில் அவரை அநேகம் தடவை தரிசித்திருக்கிறோம். அவருடைய ஆசிரமத்திற்கு ஸமீபத்தில் காற்று ஸுகமாயும் பரிமளமாயும் வீசும்; விருக்ஷங்கள் புஷ்பங்களாலும் பழங்களாலும் விளங்கும். நான் இங்கே வந்து அவருடைய வரவை எதிர்பார்த்துக்கொண்டு ஒரு மரத்தடியில் உட்கார்ந்தேன். கொஞ்ச நேரத்திற்குப் பிறகு அவர் ஸமுத்திரத்தில் ஸ்நானம் செய்து, தேஜஸால் ஜ்வலித்துக்கொண்டு திரும்பி வருவதைக் கண்டேன். கரடி, புலி, ஸிம்மம், யானை, ஸர்ப்பம் முதலிய ஜந்துக்களும் தங்களை வளர்ப்பவனைக்கண்டு ஓடிவருவதுபோல் அவரைக் கண்டவுடன் பிரியத்துடன் பின் தொடரும். அரசன் சபையில் உட்கார்ந்தவுடன் மந்திரிகளும் பரிவாரங்களும் வந்து கூடுவதுபோல், அவரைக் கண்டவுடன் ஸகல ஜந்துக்களும் ஓடிவந்தன. அந்த மஹரிஷி என்னைப் பார்த்து ஸந்தோஷமடைந்து, ஆசிரமத்தில் நுழைந்து ஒரு முகூர்த்த காலம் கழித்து வெளியில் வந்து இவ்விதம் சொன்னார்.

'குழந்தாய்! உன் இறக்கைகள் எரிந்துவிட்டபடியால் உன்னை அடையாளம் கண்டுபிடிக்க முடியவில்லை. தேகமெங்கும் புண்ணாகி இருக்கிறது; இறக்கைகள் பொசுங்கிப் போயின' சரீரம் இளைத்து பிராணனும் பல பராக்கிரமங்களும் ஒடுங்கிவிட்டன. முன்பு இரண்டு கழுகுகளை இவ்விடத்தில் பார்த்திருக்கிறேன். அவை



வேகத்தில் வாயுவைப் போன்றவை; கழுகுகளுக்கெல்லாம் தலைவர்கள்; இஷ்டமான ரூபத்தை எடுக்கக் கூடியவர்கள்; ஸஹோதரர்கள். மூத்தவனை நீயும் உன் தம்பி ஜடாயுவும் மனுஷ்ய ரூபத்துடன் என்னை நமஸ்கரித்துக்கொண்டிருந்தீர்களல்லவா? ஏதாவது வியாதியால் பீடிக்கப்பட்டாயா? இறக்கைகள் உதிர்ந்த காரணமென்ன? அல்லது எவனாவது இப்படி உன்னைத் தண்டித்தானா?" என்று கேட்டார்.

கிம் தே வ்யாதி$^{4}$ஸமுத்தா$^{2}$நம் பக்ஷயோ: பதநம் கத$^{2}$ம் |
த$^{3}$ண்டோ வாயம் க்ருத: கேந ஸர்வ மாக்$^{2}$யாஹி ப்ருச்ச$^{2}$த: (21)

---

## ஸர்க்கம் 61

## ஸம்பாதியின் விருத்தாந்தம் (தொடர்ச்சி)

ததஸ் தத்$^{3}$தா$^{3}$ருணம் கர்ம து$^{3}$ஷ்கரம் ஸாஹஸாத் க்ருதம் |
ஆசசக்ஷே முநே: ஸர்வம் ஸூர்யாநுக$^{3}$மநம் ததா$^{3}$ ॥ (1)

**யௌ**வனத்தாலும் பலக்கொழுப்பாலும் நாங்கள் செய்த பயங்கரமான காரியத்தையும் ஸூரியனைப் பின்தொடர்ந்ததையும் அவருக்குச் சொன்னேன். "ஸ்வாமி! எனக்குத் தேகமெங்கும் புண்ணாயிருக்கின்றது; வெட்கத்தால் புத்தி சிதறியிருக்கின்றது; மிகவும் களைத்திருக்கின்றேன். ஆகையால் தகுந்தபடி தங்களுக்குப் பதில் சொல்லச் சக்தியற்றவனாயிருக்கிறேன். நானும் என் தம்பி ஜடாயுவும் விசேஷ பலசாலிகளென்று கர்வத்தால் புத்தி பிசகி எங்களில் யார் அதிகமாகப் பறக்க முடியுமென்று அறிவதற்காகப் பந்தயம் வைத்துக்கொண்டு பறந்தோம். கைலாஸ சிகரத்தில் வஸிக்கும் முனிகளுக்கெதிரே, 'ஸூரியோதயம் முதல் அஸ்தமனம் வரையில் அவருடன் செல்வோம்' என்று பிரதிக்ஞை செய்து ஆகாசத்தில் கிளம்பினோம். அங்கிருந்து பார்க்கையில் பூமியிலுள்ள நகரங்கள் ரதசக்கரங்கள்போல் காணப்பட்டன; சில இடங்களில் வேத கோஷங்களும் சில இடங்களில் ஸ்த்ரீகள் சிவப்பு வஸ்திரங்களுடன் பாடிக்கொண்டிருப்பதும் கேட்கப்பட்டன. பிறகு அதி வேகமாகப் பறந்து ஸூரியனுடைய மார்க்கத்தில் சென்று கீழே பார்க்கும்பொழுது, பூமியிலுள்ள காடுகள் இளம் புல்லுகளைப் போலும், உன்னதமான பர்வதங்கள் சிறிய கற்களைப்போலும், மஹா நதிகள் மெல்லிய நூல்களைப்போலும், ஹிமாலயம், விந்தியம், மேரு முதலிய மலைகள் மடுவில் நீந்தும் யானையைப்போலும் காணப்பட்டன. இப்படிச் சென்றுகொண்டிருக்கையில் ஸூரியன் ஆகாசத்தின் மத்தியில் வந்தான். அப்பொழுது எங்களுக்கு வியர்வையும் சோகமும் பயமும் அதிகமாயின. புத்தி மயங்கிற்று. மனமும் இந்திரியங்களும் கலங்கின; பிரக்ஞை தப்பிற்று; கிழக்கு,

தெற்கு, மேற்கு, வடக்கு ஒன்றும் தெரியவில்லை. லோகம் முழுவதும் பிரளயத்தில் ஸங்கர்ஷணாக்னியால் எரிக்கப்படுவதுபோல் காணப் பட்டது. அப்பொழுது சிதறின என் மனத்தைக் கண்ணில் நாட்டி, மிக்க பிரயாஸையுடன் தைரியமாய் ஸூரியனை நிமிர்ந்து பார்த்தேன். எங்களுடைய கண்ணிற்கு அந்த மண்டலம் ஜம்பூ த்வீபத்தைப்போல் அவ்வளவு பெரிதாய்த் தோன்றிற்று. பிறகு ஜடாயு மயக்கம் கொண்டு, என்னிடத்தில் சொல்லாமல் திடீரென்று கீழே விழுந்தான். அதைக் கண்டு நான் ஸூரியனுடைய ஸமீபத் திலிருந்து அதி வேகமாக இறங்கி, என் இறக்கைகளை விரித்து, ஸூரிய கிரணங்கள் அவன்மேல் தாக்காமல் அவனை மூடினேன். ஆகையால் அவன் எரிக்கப்படவில்லை. நானோ அஜாக்கிரதையாய் ஜடாயுவைக் காப்பாற்றுவதில் புத்தியை நாட்டி, இறகுகளை விரித்துக்கொண்டிருந்ததால் அவை எரிந்து அங்கிருந்து விழுந்தேன். அவன் ஜனஸ்தானத்தில் விழுந்திருக்க வேண்டுமென்று ஊஹிக் கிறேன். நான் பிரக்ஞையற்று மூர்ச்சையடைந்து விந்திய பர்வதத் தில் விழுந்தேன். ராஜ்யத்தையும், உடன்பிறந்தவனையும், இறக்கை களையும், பலத்தையும் ஒரே காலத்தில் இழந்து, இனி இறப்பதே நலமென்றெண்ணி, இந்தப் பர்வத சிகரத்திலிருந்து விழ நிச்சயித் திருக்கிறேன்" என்றேன்.

ராஜ்யேந ஹீநோ ப்$^{4}$ராத்ரா ச பக்ஷாப்$^{4}$யாம் விக்ரமேண ச |
ஸர்வதா$^{2}$ மர்துமேவேச்ச$^{2}$ந் பதிஷ்யே ஶிக$^{2}$ராத்$^{3}$ கி$^{3}$ரே: || (71)

---

ஸர்க்கம் 62

## ஸம்பாதியின் விருத்தாந்தம் (தொடர்ச்சி)

ஏவமுக்த்வா முநிஶ்ரேஷ்ட$^{2}$ மருத$^{3}$ம் து$^{3}$க்கி$^{3}$தோ ப்$^{4}$ருஶம் |
அத$^{2}$ த்$^{4}$யாத்வா முஹூர்த்தம் து ப்$^{4}$க$^{3}$வா நித$^{3}$மப்$^{3}$ரவீத் || (1)

இப்படி நடந்த விருத்தாந்தத்தை அந்த மஹரிஷியிடத்தில் தெரிவித்துத் துக்கம் தாங்காமல் அழுதேன். அவர் கொஞ்ச நேரம் யோசித்து, "ஸம்பாதே! வருத்தப்படாதே. உன் இறக்கைகளும் நேத்திரங்களும், பிராணன்களும், வீரியமும், பராக்கிரமும் முன் போல் ஒப்பற்றதாயிருக்கும். நாரதாதி மஹரிஷிகள் இனி வரும் ராமாவதாரத்தைப் பற்றி சொல்லும் ஸமயத்தில் ஏதோ ஒரு பெரிய காரியம் ஸமீபத்தில் நடக்கப்போகிறதென்று சொல்லக் கேட்டிருக்கிறேன். தபோபலத்தால் அது நிஜமென்றும் கண்டறிந் தேன். இக்ஷ்வாகு வம்சத்தில் தசரதரென்ற ஒரு ராஜா பிறப்பார். அவருக்கு மஹா தேஜஸ்வியான ராமனென்ற ஒரு புத்திரனுண் டாவான். அவனும் அவனுடைய தம்பி லக்ஷ்மணனும் பிதாவின் ஆக்ஞையால் வனத்தில் ஸஞ்சரிப்பார்கள். அப்பொழுது ராவண னென்ற ஒரு ராக்ஷஸன் ராமனுடைய பத்தினியை ஜனஸ்தானத் திலிருந்து பலாத்காரமாய் எடுத்துக்கொண்டு போவான். அவன் ராக்ஷஸாதிபதி; தேவர்களாலும் தானவர்களாலும் கொல்ல முடியாதவன்; அவன் பக்ஷ்யங்கள், ஆபரணங்கள் இன்னும் அவள் அபேக்ஷிக்கக்கூடிய ஸகல பதார்த்தங்களாலும் ஸீதையை மயக்கித் தன்னிடத்தில் ஆசைகொள்ளும்படி செய்ய யத்தனிப்பான். அவளோ மஹா பதிவிரதை; பர்த்தாவை விட்டுப் பிரிந்த துக்கத்தால் தவித்துக்கொண்டு, கொஞ்சம்கூட இணங்கமாட்டாள். அவள் ஆகாரமில்லாமலிருப்பதை அறிந்து, தேவேந்திரன் ஒரு பரமான்னத்தைத் தன் ஸேவகனிடத்தில் கொடுத்தனுப்புவான்.



தேவதைகளாலும் அடையக்கூடாத அந்த அமிருதத்திற்கு ஸமமான அன்னத்தை ஸீதை பெற்றுக்கொண்டு அதைக்கொண்டு வந்தவன் இமை கொட்டாததாலும் பூமியைத்தொடாததாலும் ராவணனுடைய ஸேவகனல்ல. இந்திரனுடைய ஸேவகனே என்று கண்டுகொள்வாள். மேலும், 'ராமமூர்த்தி இங்கே வந்து அந்தத் துஷ்டனைக் கொன்று தங்களை அழைத்துக்கொண்டு போவார். தேவதைகளுடைய காரியம் ஸித்திக்கும்பொருட்டு தாங்கள் மனுஷ்யாவதார மெடுத்திருக்கிறபடியால், ஆகாரத்தால் தேகத்தில் பிராணன்களை நிலை நிறுத்தவேண்டும். தேவதைகளும் மனுஷ்ய ரூபமெடுத்தால் ஆகாரமில்லாமல் ஜீவிக்க முடியாது. இந்தப் பரமான்னம் ஒரு வருஷம் வரையில் பசி, தாகம், களைப்பு முதலியவைகளை நீக்குமென்று தேவதூதன் சொல்வதைக் கேட்டு, அதில் ஒரு பாகத்தை எடுத்து, 'என் பர்த்தாவும் அவருடைய தம்பியும் உயிரோடிருந்தாலும், அல்லது உயிரிழந்து தெய்வத் தன்மையை அடைந்தாலும், இந்த அன்னம் அவர்களுக்குத் திருப்தியை உண்டாக்கக் கடவது' என்று பூமியில் கொஞ்சம் வைத்துவிட்டு மிகுந்ததைப் புஜிப்பாள்.

பிறகு ராமனால் அனுப்பப்பட்ட வானரர்கள் ஸீதையைத் தேடிக்கொண்டு இங்கே வருவார்கள். அவர்களுக்கு ஸீதையின் விருத்தாந்தத்தை நீ விஸ்தாரமாகச் சொல்லவேண்டியது. நீ இவ் விடத்திலிருந்து ஒருபொழுதும் போகக்கூடாது. பலஹீனமான ஸ்திதியில் எங்கே போவாய்? கொஞ்சகாலம் பொறுத்திரு. மறு படி இறக்கைகளை முளைக்கச் செய்வேன். இப்பொழுதே உனக்கு அந்த உபகாரத்தைச் செய்யலாம். ஆனால் பக்ஷிகளுக்குள்ள சபல ஸ்வபாவத்தால் நீ இங்கே இருக்கமாட்டாய். தேவதைகளுக்கும் பிராம்மணர்களுக்கும், மஹரிஷிகளுக்கும், தேவேந்திரனுக்கும், ஸகல லோகங்களுக்கும் உன்னால் ஒரு பெரிய காரியம் நிறைவேற வேண்டியிருக்கிறது. நீ தேவ யோனியில் பிறந்தவனாகையால் அது உனக்கும் க்ஷேமத்தைக் கொடுக்கும். அந்த ராஜபுத்திரர்களுக்கும் உபகாரமாயிருக்கும். ஆகையால் ஸீதை இருக்குமிடத்தை ராம தூதர்களுக்கு நீயே தெரிவிக்கவேண்டியது. ராமலக்ஷ்மணர்களைப்

பார்க்கவேண்டுமென்று எனக்கும் மிகுந்த ஆவலுண்டு. ஆனால் வயதால் மெலிந்த சரீரத்தை நெடுங்காலம் தரிக்க எனக்கு இஷ்டமில்லே. ஆகையால் சீக்கிரத்தில் உத்தம லோகங்களுக்குச் செல்வேன். நீ இங்கே ஜாக்கிரதையாக இருக்கவேண்டியது'' என்று, பதார்த்தங்களின் தத்வ ஸ்வரூபத்தை அறிந்த அந்த மஹரிஷி என்னைப் பார்த்துச் சொன்னர்'' என்ருன்.

நேச்சே சிரம் தா4ரயிதும் ப்ராணும்ஸ் த்யக்ஷ்யே களேப3ரம் |
மஹர்ஷிஸ் த்வப்3ரவீதே3வம் த்3ருஷ்ட தத்வார்த2 த3ர்ஶந: ‖ (15)

---

ஸர்க்கம் 63

## வானரர்கள் ஸமுத்திரக்கரை சேர்ந்தது

---

ஏதை ரந்யைர்ச ப3ஹுபி4ர் வாக்யைர் வாக்ய விஶாரத3: |
மாம் ப்ரஶஸ்யாப்4யநுஜ்ஞாப்ய ப்ரவிஷ்ட: ஸ.ஸ்வமாஶ்ரமம் ‖ (1)

இப்படிப்பட்ட அநேக வார்த்தைகளால் அந்த மஹரிஷி என்னைப் புகழ்ந்து உத்தரவு கொடுத்து, தன் ஆசிரமத்திற்குள் பிரவேசித்தார். பிறகு நான் அந்தக் குகையிலிருந்து புறப்பட்டு மெள்ள மெள்ள இந்த மலேயின் சிகரத்திலேறி, உங்கள் வரவையே எதிர்பார்த்துக்கொண்டிருந்தேன். அந்த மஹரிஷி என்னிடத்தில் இந்த விஷயத்தைச்சொல்லி எண்ணுயிரம் வருஷங்களாகின்றன. அவருடைய வார்த்தைகளே மனதில் வைத்துக்கொண்டு தேச காலத்தை எதிர்பார்த்தேன். அவர் மஹாப் பிரஸ்தானம் செய்து உத்தம லோகத்தை அடைந்த பிறகு, என் திக்கற்ற நிலேமையையும் கஷ்டங்களேயும் நினேத்து நினேத்து நீங்காத் துயரமடைந்தேன். பல தடவை உயிரை விட நிச்சயித்தேன். ஆனல் மஹரிஷியின் வாக்கியம் என்னேத் தடுத்தது. ஜ்வலிக்கும் அக்னி இருளே அழிப்பதுபோல், அவர் போகும்போது எனக்குச் செய்த உபதேசம் என் துக்கத்தை நீக்கி என் உயிரைக் காப்பாற்றிற்று. ராவணன் என் புத்திரனுக்கெதிரே யுத்தத்தில் நிற்க முடியாதென்று எனக்குத் தெரியுமாகையால், நீ அந்த ஸ்த்ரீயை ஏன் அவனிடத்திலிருந்து ரக்ஷிக்கவில்லே? ஹா ராம! ஹா லக்ஷ்மணு! என்று அவள் கூவினதால் ராமனுடைய பத்தினி என்றும் அவர்கள் இவளில்லாமல் வருத்தப்படுகிருர்களென்றும் உனக்குத் தெரிந்திருக்க நீ ஏன் அவளே விட்டாய்? தசரதருக்கும் எனக்கும் உள்ள ஸ்நேகத்திற்குத் தகுந்தபடி நீ நடந்துகொள்ளவில்லே' என்று அவனேக் கண்டித்தேன்'' என்ருன்.

ஸம்பாதி இப்படிச் சொல்லிக் கொண்டிருக்கையில் மூன்பு எரிந்துபோன இறக்கைகள் வானரர்களுக்கெதிரே மறுபடியும் மூளேத்தன. ஸம்பாதியும் தன். தேகத்தில் சிவந்த இறகுகள் வளர்வதைக் கண்டு, வானரர்களேப் பார்த்து அளவற்ற ஸந்தோஷத்



துடன், "முன்பு ஸூரிய கிரணங்களால் எரிக்கப்பட்ட என் இறக்கைகள் நிசாகர மஹரிஷியின் அனுக்கிரகத்தாலும் தபோமஹிமையாலும் மறுபடியும் உண்டாவதைப் பாருங்கள். என் யௌவன தசையில் எனக்குள்ள பலம், பராக்கிரமம் ஆண்மை இவை யாவும் இப்பொழுது வந்திருக்கின்றன. ஆகையால் ஸகல பிரயத்தனங்களேயும் குறைவில்லாமல் செய்யுங்கள். ஸீதையைக் கண்டுபிடிப்பீர்கள். எனக்கு இறகுகள் மறுபடியும் முளேத்ததைக் கொண்டு உங்களுடைய காரியமும் ஸித்திக்குமென்பது நிச்சயம்'' என்று அந்தப் பக்ஷிராஜன் தனக்குப் புதிதாக உண்டான சக்தியைப் பரீக்ஷிப்பதற்கு அந்த மலேச் சிகரத்திலிருந்து பறந்துபோனுன்.

அவனுடைய வார்த்தைகளால் அந்த வானர சிரேஷ்டர்களுக்கு ஸந்தோஷம் மேலிட்டு, ஸீதையைத் தேடுவதில் விசேஷ ஆவலுண்டாயிற்று. ஸ்வபாவமாகவே வாயுவிற்கு ஸமமான பராக்கிரமசாலிகள்; ஸம்பாதி சொன்ன வார்த்தைகளால் அவர்களுடைய ஆண்மை அதிகரித்தது. பிறகு அபிஜித் என்ற முகூர்த்தத்தில் ஸீதையைத் தேடுவதற்காகப் புறப்பட்டு ஸமுத்திரக் கரைக்குச் சென்ருர்கள்.

அத2 பவநஸமாந விக்ரமா:
ப்லவக3வரா: ப்ரதிலப்3த4 பௌருஷா: |
அபி4ஜித3பி4முகா2 தி3ஶம் யயு:
ஜநகஸுதா பரிமார்க3ணேந்முகா2: ‖ (15)

---

ஸர்க்கம் 64

## அங்கதன் வானரர்களேப் பரீக்ஷித்தது

---

ஆக்2யாதா க்3ருத்4ர ராஜேந ஸமுத்பத்ய ப்லவங்க3மா: |
ஸங்க3ம்ய ப்ரீதிஸம்யுக்தா விநேது3: ஸிம்ஹவிக்ரமா: ‖ (1)

ஸம்பாதியின் வார்த்தைகளேக் கேட்டு வானரர்கள் ஸந்தோஷத்தால் குதித்து ஆரவாரித்தார்கள். பிறகு ஸீதையைப் பார்க்க ஆசைகொண்டவர்களாய் ராவணனுக்கு இருப்பிடமான லங்கை இருக்கும் ஸமுத்திரக்கரைக்கு வந்தார்கள். அது லோகத்திலுள்ள ஸகல உத்தம பதார்த்தங்களும் நிறைந்து விளங்கிற்று. தெற்கு ஸமுத்திரத்தின் வடக்குக் கரையில் வானர ஸைன்யங்கள் இறங்கி, அநேக கோரமான ஜலஜந்துக்கள் பருத்த ரூபம்கொண்டு பெரும் கூச்சலிட்டு விளேயாடுவதையும்; சிலவிடங்களில் அலேகள் இடிபோல் மோதுவதையும்; சில விடங்களில் அலேகளேயில்லாமல் ஸமுத்திர ராஜன் தூங்குவது போலிருப்பதையும்; சில விடத்தில் அலேகள் மஹா பர்வதத்தைப்போலிருப்பதையும்; சில விடத்தில் சிறிய அலேகளால் ஸமுத்திரம் விளேயாடுவதுபோல் காணப்

படுவதையும்; பாதாள லோகவாஸிகளான தானவர்களுக்கு விளையாடுமிடமாய் விளங்கும் மஹா ஸமுத்திரத்தைக் கண்டு வானரர்களுக்குப் பயம் மேலிட்டு மயிர்க்கூச்சலெடுத்தது. ஆகாசத்தைப்போல் தாண்டுவதற்கு அஸாத்தியமாயிருப்பதைப் பார்த்து வானரர்கள், "நாம் இதை எபபடி கடந்து செல்வோம்" என்று கவலைகொண்டார்கள். அதை அறிந்த மஹாபுத்திமானான அங்கதன் சாதுரியமான வார்த்தைகளால் அவர்களுடைய பயத்தைப் போக்கித் தைரியப்படுத்தினர்.

"மனத்தில் கவலை கொள்ளும்படி எப்பொழுதும்' விடக் கூடாது. கவலைகொள்வதால் அநேக தோஷங்களுண்டு. மஹா ஸர்ப்பத்தை ஒரு அறியாக் குழந்தை கோபமூட்டினுல் எப்படி அது அவனைக் கடித்துக்கொல்லுமோ, அப்படிக் கவலையும் சீக்கிரத்தில் மனுஷ்யனை நாசம் செய்யும். நாம் ஒரு காரியத்தை உத்ஸாஹத்துடன் ஆரம்பித்துச் செய்யும்பொழுது கவலைக்கு இடம் கொடுத்தால், அது நம்மை மேற்கொண்டு நமது பிரயத்தனங்களை நாசம் செய்யும். கவலையால் நமது பலம் அடங்கினுல் எந்தக் காரியம்தான் கைகூடும்" என்று வானரர்களை ஸமாதானம் செய்தான்

மறுநாட் காலையில் அங்கதன், வயதாலும் ஞானத்தாலும் அனுபவத்தாலும் பிரஸித்திபெற்ற வானர சிரேஷ்டர்களை ஸபை கூட்டி மறுபடியும் ஆலோசித்தான். மருத்துக்களுடைய கணங்கள் இந்திரனைச் சூழ்ந்திருப்பதுபோல, அந்த வானர ஸைன்யம் அங்கதனைச் சூழ்ந்து விளங்கிற்று. வாலி புத்திரனுன அங்கதனையும் ஆஞ்ஜநேயரையும் தவிர மற்ற யார் அந்த வானர ஸைன்யத்தை அடக்கமுடியும்? அப்பொழுது அங்கதன் அவர்களை உபசரித்து, "எந்த மஹா தேஜஸ்வி ஸமுத்திரத்தைத் தாண்டுவான்? மஹா வீரனுன ஸுக்ரீவனுடைய வார்த்தையை எவன் ஸத்தியமாகச் செய்வான்? நூறு யோஜனை தூரமுள்ள இந்த ஸமுத்திரத்தைத் தாண்டி நம்மெல்லோரையும் மஹாராஜாவின் தண்டனைக்குட்படாமல் எவன் செய்வான்? நமது காரியத்தை நிறைவேற்றி, இங்கிருந்து கிஷ்கிந்தைக்குச் சென்று, பெண்டு பிள்ளைகள் தன தான்யங்கள் கிருகங்கள் முதலியவைகளை மறுபடியும் பார்த்து ஸுகமாய் நாம் வஸிக்கும்படி செய்யக்கூடிய மஹானுபாவன் யாரோ? எவனுடைய கிருபையால் நாம் மஹா பலசாலிகளான ராமலக்ஷ்மணர்களையும் ஸுக்ரீவனையும் ஸந்தோஷமாய்ப் பார்ப்போம்? உங்களில் இந்த ஸமுத்திரத்தைத் தாண்டக்கூடியவன் எவனுவது இருந்தால் அவன் நம்மெல்லோருக்கும் இப்பொழுதே அபயதானம் செய்து ஸகல க்ஷேமத்தையும் அனுக்கிரஹிக்கட்டும்" என்று தெரிவித்தான். அதைக்கேட்டு அங்கிருந்த எவனும் பதில் சொல்லவில்லை. அந்த வானர ஸைன்யம் முழுவதும் சப்தமற்றிருந்தது. அப்பொழுது அங்கதன் மறுபடியும் அந்த வானரர்களை நோக்கி. "நீங்கள் எல்லோரும் பலசாலிகளுக்குள் சிறந்தவர்களென்றும் கலங்காத பராக்கிரமமுடையவர்களென்றும், உத்தம குலத்தில் பிறந்தவர்களென்றும் மஹாராஜா உங்களை விசேஷ மரியாதை செய்திருக்கிருர். உங்களில் எவனுவது எப்பொழுதாவது எங்கேயாவது போகத் தடைப்பட்டதென்று கிடையாதாகையால் ஒவ்வொருவரும் இவ்வளவு தூரம் தாண்டக் கூடுமென்று சொல்லுங்கள்" என்று ஆக்ஞாபித்தான்.



ந ஹி வோ க$^{3}$மநே ஸங்க$^{3}$: கதா$^{3}$சித் கஸ்யசித் க்வசித் |
ப்$^{3}$ருவத்$^{4}$வம் யஸ்ய யா ஶக்தி: ப்லவநே ப்லவக$^{3}$ர்ஷபா$^{4}$: ‖ (24)

---

## ஸர்க்கம் 65

## வானரர்களின் சக்தி

---

தே$^{3}$தாங்க$^{3}$த$^{3}$ வச: ஶ்ருத்வா ஸர்வே தே வாநரோத்தமா: |
ஸ்வம் ஸ்வம் க$^{3}$தௌ ஸமுத்ஸாஹ மாஹுஸ்தத்ர யதா$^{2}$க்ரமம் (1)

அதைக்கேட்டு வானரர்கள் வெகு உத்ஸாஹத்துடன் தங்கள் திறமையைச் சொல்லிக்கொண்டார்கள். கஜன், 'பத்து யோஜனை தாண்டுவேன்' என்ருன். கவாக்ஷன், 'இருபது யோஜனை தாண்டுவேன்' என்ருன், கவயன், 'முப்பது யோஜனை தாண்டுவேன்' என்றும், சரபன், 'நாற்பது யோஜனை' என்றும், கந்தமாதனன், 'ஸந்தேஹமின்றி ஐம்பது யோஜனை' என்றும், மைந்தன், 'அறுபது யோஜனை' என்றும், த்விவிதன், 'எழுபது யோஜனை' என்றும், ஸுஷேணன், 'எண்பது யோஜனை' என்றும் சொன்னுர்கள். அப்பொழுது மிகவும் வயதுசென்ற ஜாம்பவான் எல்லோரையும் வணங்கி, 'முன்பு எனக்கும் ஏதோ கொஞ்சம் சக்தி இருந்தது. ஆனுல் இப்பொழுது மிக்வும் கிழவனுனேன். எப்படியிருந்தாலும் ரகுநாதனும் ஸுக்ரீவனும் ஏற்படுத்திய காரியமோ மஹா சிலாக்கியமானது. மேலும் அதை முடிக்கும் விஷயத்தில் நாம் ஒவ்வொருவரும் வஞ்சனையின்றி கூடியவரையில் உதவி செய்யவேண்டும். காலகதியால் என் பலமும் சக்தியும் மிகவும் குறைந்திருக்கின்றன. ஆகையால் இப்பொழுது தொண்ணூறு யோஜனை தாண்டுவேன் என்பதில் ஸந்தேகமில்லை. ஆனுல் என் வீரியம் எப்பொழுதும் இப்படி இருந்ததென்று நினைக்க வேண்டாம். மஹாபலி சக்கரவர்த்தி செய்த யாகத்தில் பகவான் திரவிக்ரமாவதாரமெடுத்து லோகங்களை மூன்று அடிகளால் அளந்தார். அப்பொழுது நான் அவரைப் பிரதக்ஷிணம் செய்திருக்கிறேன். பிரஹ்மாண்டத்தை ஒருதடவை சுற்றி வந்ததற்கு ஸமம். இப்பொழுதோ எனக்கு வயதாகிவிட்டது. தாண்டுவதில் சக்தி குறைந்திருக்கிறது. என் யௌவன தசையில் என்னைப் போன்ற பலவான் வேறொருவரும் இல்லை. ஆனுல் இப்பொழுது எனக்

குள்ள சக்தியால் இந்தக் காரியத்தை முடிப்பேனென்று தோன்றவில்லை" என்றார்.

அப்பொழுது அங்கதன் மஹா புத்திமானான ஜாம்பவானை உபசரித்து, "இந்த நூறு யோஜனையையும் நான் அலக்ஷ்யமாகத் தாண்டுவேன். ஆனால் திரும்பிவர முடியுமோ முடியாதோ என்று எனக்குத் தெரியாது" என்றார்.

ஜாம்பவான், "வானர சிரேஷ்ட! உன் சக்தி அபாரமென்று எங்களுக்குத் தெரிந்த விஷயமே. நூறு, ஆயிரம், பதினாயிரம், யோஜனையென்று உன் சக்திக்கு எல்லையில்லை. நீ நினைத்த இடத்திற்குப்போய்த் திரும்பிவரமுடியும். ஆனால் எங்களெல்லோரையும் காரியங்களில் ஏவும் உன்னை நாங்கள் ஒரு காரியத்தில் ஏவுவது நியாயமல்ல. நாங்களெல்லோரும் காப்பாற்றுபவர்கள்; நீயோ மனைவிபோல் காப்பாற்றப்பட வேண்டியவன். எங்களுடைய பிராணங்களும் புத்தியும் பலமும் உள்ளவரையில் உன்னைக் காப்பாற்ற வேண்டும். குடும்ப காரியங்களில் பாரியை பர்த்தாவைக் கட்டளையிடவேண்டும். அதைப்பற்றிய அதிகாரம் யாவும் அவளுக்கே. ஸேனைத் தலைவன் பத்தினியைப் போன்றவன். அவனே கதி. இந்தக் காரியத்திற்கு நீயே மூலம். நமது காரியத்தின் மூலத்தை ஜாக்கிரதையாகக் காப்பாற்றவேண்டுமென்று நீதி சாஸ்திர நிபுணர்கள் சொல்லுகிறார்கள். வேர் செழித்திருந்தால் குணங்களென்ற புஷ்பங்களும் பழங்களும் ஸுலபமாகக் கிடைக்கும். புத்தியாலும் பராக்கிரமத்தாலும் இந்தக் காரியத்தை முடிப்பதற்கு நீ காரணமாக இருக்கிறாய்; எங்களுக்கு யுவராஜா; மஹாராஜாவின் புத்திரன்; உன் ஆதரவால் நாங்கள் இந்தக் காரியத்தை முடிக்கக்கூடும்" என்று அங்கதனிடம் சொன்னார்.

அங்கதன், "நானும் போகாமல் மற்ற வானரர்களும் போக முடியாமலிருந்தால் நாம் மறுபடியும் பிராயோபவேசம் செய்து உயிரை விடுவதைத் தவிர வேறு வழியில்லை. மஹாராஜாவின் உத்தரவை நிறைவேற்றாமல் அவரிடத்திற்குப் போனால் உயிர் தப்ப மாட்டோம். அவர் நமக்கு வெகுமானம் செய்வதற்கும் தண்டிப்பதற்கும் பிரபு. அவருடைய கட்டளையை மீறி அங்கே போனால் கொல்லப்படுவோம். லங்கைக்குப் போனாலும் திரும்பி வர முடியாவிட்டால் என்ன பிரயோஜனம்? தாங்களோ மஹாபுத்திமான்; வயதாலும் ஞானத்தாலும் எல்லா விஷயங்களின் உண்மையை பிரத்யக்ஷமாக அறிந்திருப்பதாலும் எங்களெல்லோரிலும் சிரேஷ்டர். ஆகையால் இந்த ஸமுத்திரத்தைத் தாண்டி எப்படியாவது நமது காரியத்தை முடிப்பதற்குத் தாங்களே உபாயம் தேடவேண்டும்" என்று பிரார்த்தித்தான்.

அப்பொழுது ஜாம்பவான், "ராஜபுத்திர! இந்தக் காரியத்திற்கு குறைவு ஏதும் நேராது. இதை முடிக்கக்கூடியவனைக் கண்டு பிடித்து



ஏவுகிறேன் பாருங்கள்" என்று ஸுகமாகத் தனியே உட்கார்ந்திருக்கும் ஆஞ்ஜநேயரை அந்தக் காரியத்தில் ஏவ நிச்சயித்தார்.

தத: ப்ரதீதம் ப்லவதாம் வரிஷ்ட2ம்
ஏகாந்த மாஶ்ரித்ய ஸுகோ2பவிஷ்டம் |
ஸஞ்சோத3யாமாஸ ஹரிப்ரவீரோ
ஹரிப்ரவீரம் ஹநுமந்தமேவ ॥ (34)

## ஸர்க்கம் 66

## ஜாம்பவான் ஆஞ்ஜநேயரைப் புகழ்ந்தது

அநேகஶத ஸாஹஸ்ரீம் விஷண்ணாம் ஹரிவாஹிநீம் |
ஜாம்ப3வாந் ஸமுதீ3க்ஷ்யைவம் ஹநுமந்த மதா2ப்3ரவீத் ॥ (1)

எண்ணிறந்த வானரர்கள் வருந்துவதைப்பார்த்து, ஜாம்பவான் ஆஞ்ஜநேயரை நோக்கி, "வானரர்களுக்குள் வீரசிகாமணியே! ஸகல சாஸ்திரங்களிலும் நிபுணனே! தனியே போய் உட்கார்ந்துகொண்டு மௌனமாக இருப்பதேன்? தேஜஸிலும் பலத்திலும் ஸுக்ரீவ மஹாராஜாவிற்கும் ராமலக்ஷ்மணர்களுக்கும் நீ ஈடல்லவா? கஶ்யப பிரஜாபதியின் புத்திரனான கருடன் எல்லாப் பக்ஷிகளிலும் மஹா பலவானென்றும் சிரேஷ்டனென்றும் பெயர் பெற்றவன். அவன் ஆகாரத்திற்காக ஸமுத்திரத்திலிருந்து மஹா ஸர்ப்பங்களை அதிவேகமாகக் கொத்திக்கொண்டுபோவதைப் பல தடவை பார்த்திருக்கிறேன். அவனுடைய இறக்கைகளின் பலமும் உன் புஜபலமும் ஸமமானது. பராக்கிரமத்திலும் வேகத்திலும் அவனுக்குக் குறைந்தவனல்ல. பலம், புத்தி, தேஜஸ், வலிமை முதலிய குணங்களில் ஸகல பூதங்களிலும் நீ மேலானவனென்று உனக்கு ஏன் தெரியவில்லை? இந்த ஸமுத்திரத்தைத் தாண்டத் தகுந்தவன் நீயே அல்லவா?

"கேஸரி என்ற வானரசிரேஷ்டனுக்கு அஞ்ஜனை என்ற பத்தினியுண்டு. அப்ஸரஸ்களுக்குள் உத்தமமான புஞ்ஜிகஸ்தலை என்பவள் அவளே. மூன்று லோகங்களிலும் அவளைப்போன்ற ரூபவதி கிடையாது. ரிஷி சாபத்தால் குஞ்ஜரனென்ற வானரனுக்குப் புத்திரியாய்ப் பிறந்து தெய்வத்தன்மையால் நினைத்த ரூபத்தை எடுக்கக் கூடியவள். ஒரு நாள் அவள் ஸகலப்பிராணிகளையும் மயக்கும்படியான மனுஷ்ய ரூபத்துடன் விசித்திர வஸ்திராபரணங்களால் அலங்கரிக்கப்பட்டு மழைக்கால மேகம் போன்ற பர்வத சிகரத்தில் உலாவிக்கொண்டிருந்தாள். அப்பொழுது வாயு பகவான் அவள் மேல் ஆசை கொண்டு அவள் தரித்த சிவந்த கரையுடைய மஞ்சள் பட்டை அபகரித்தான். திரண்டு உருண்ட துடைகளை

யும், மலர்ந்த தாமரையைப் பழிக்கும் முகத்தையும், அழகிய ஸ்தனங்களையும், ஸூக்ஷ்மமான இடையையும் மற்றும் குற்றமற்ற அவளது அவயவங்களையும் கண்டு, காமம் மீறி, வாயு இரு கைகளாலும் அவளை இறுகத் தழுவினான். அந்த மஹா பதிவிரதை பயந்து நடுங்கி, "பதிவிரதையான என்னைக் கெடுக்க விரும்பின துஷ்டன் யார்?" என்று கோபத்துடன் கேட்டாள். அதற்கு வாயுபகவான், "பெண்ணே! பயப்படாதே. நான் உன்னைக் கெடுக்க விரும்பினவனல்ல. உன்னை ஆலிங்கனம் செய்து மனத்தால் அனுபவித்தபடியால் உனக்குப் பிறக்கும் புத்திரன் வீரியத்திலும் புத்தியிலும் நிகரற்றவனும், மஹா பலவானும், அபார தேஜஸ்வியாயும், ஒப்பில்லாத வலிமையுடையவனும், தாண்டுவதிலும், தடையில்லாமல் செல்வதிலும் எனக்கு ஸமமாயும் இருப்பான்" என்றார். தேவசிரேஷ்டனுடைய அனுக்கிரஹத்தைப் பற்றி உன் தாய் பரமானந்தமடைந்து, மந்த்ர பர்வதத்தின் குகையில் உன்னைப் பெற்றாள்.

"அப்பொழுது ஸூரியோதயமாயிற்று. நீ குழந்தையானதால் சிவந்த ஸூரிய மண்டலத்தைப் பழமென்றெண்ணிப் பிடிக்க விரும்பி ஆகாசத்தில் தாவிச் சென்றாய். அநேகமாயிரம் யோஜனை தூரம் அதிவேகமாகத் தாவிப் போயும் சளைக்காமல், ஸூரிய தேஜஸால் எரிக்கப்பட்டும் வருந்தாமலிருப்பதைப் பார்த்து, இந்திரன் பயந்து,வஜ்ராயுதத்தை உன்மேல் கோபத்துடன் எறிந்தான். உடனே நீ அங்கிருந்து விழுந்தாய். உன் கன்னம் ஒரு மலைச் சிகரத்தில் அடிபட்டு முறிந்தது; அதனால் உனக்கு ஹனுமானென்ற பெயர் கிடைத்தது. வாயுபகவான் தன் அருமைக் குழந்தையான உனக்கு நேர்ந்த ஆபத்தைப் பார்த்து, ஸகல பிராணிகளிடத்திலும் கோபம் கொண்டு தன் போக்கை அடக்கி ஓரிடத்திலும் வீசாமலிருந்தான். அப்பொழுது ஸகல ஜீவன்களும் மூச்சுவிட முடியாமல் தவித்தார்கள். தேவதைகள் பயந்து வாயுவை பிரார்த்திக்க, அவர் கோபம் தணிந்து அவர்களிடத்தில் கிருபை வைத்து, முன்போல் லோகங்களில் ஸஞ்சரித்தார். எப்பொழுதும் உனக்கு ஆயுதங்களால் அழிவில்லை என்று பிரஹ்மா அனுக்கிரஹித்தார். இந்திரன், நீ வஜ்ராயுதத்தால் அடி பட்டும் இறக்காததைக் கண்டு, மகிழ்ந்து, 'உனக்கு இஷ்டமான பொழுது நீ மரணமடையக்கடவாய்' என்று வரம் கொடுத்தான்.

"ஆகையால் நீ கேஸரி என்ற வானரனுடைய க்ஷேத்திரத்தில் வாயு பகவானுக்குப் பிறந்த புத்திரன். தேஜஸிலும் பராக்கிரமத்திலும் தாண்டுவதிலும் அவரைப் போன்றவன். நாங்கள் இப்பொழுது உயிரில் ஆசையை விட்டிருக்கிறோம். நீ எங்களைக் காப்பாற்ற வேண்டும். திறமையிலும் பராக்கிரமத்திலும் நீ கருடனைப் போன்றவனல்லவா? பகவான் திரிவிக்ரமாவதாரமெடுத்தபொழுது நான் இந்தப் பூமண்டலத்தை இருபத்தோரு தரம் சுற்றி வந்தேன். பாற்கடலைக் கடையும்பொழுது தேவதைகளின் உத்திரவால் அநேக லோகங்களிலிருந்து அபூர்வமான ஓஷதிகளைக் கொண்டு வந்தேன். அவைகளை ஸமுத்திரத்தில் போட்டதால் அமிருத முண்டாயிற்று. அப்பொழுது என் பலம் எல்லையற்றது. இப்பொழுதோ நான் கிழவன். பலபராக்கிரமமற்றவன். நீ ஸகல உத்தம குணங்களால் அலங்கரிக்கப்பட்டவன்; எங்களில் மேலானவன். ஆகையால் அளவற்ற உன் பல பராக்கிரமத்தை வெளிப்படுத்து. உன் அத்புதமான வீரியத்தைப் பார்க்க இந்த வானர ஸைன்யம் ஆவல் கொண்டிருக்கிறது. எழுந்திரு. இந்த மஹா ஸமுத்திரத்தை ஒரு நிமிஷத்தில் தாண்டி வா. வேகமாகத் தடையில்லாமல் ஸஞ்சரிக்கக்கூடியவன். ஸகலப் பிராணிகளிலும் உன்னைப்போலுண்டோ? வானரர்கள் ஏக்கம் பிடித்திருக்கிறார்கள். ஆஞ்ஜநேய! இந்த ஸமயத்திலும் அலக்ஷ்யம் செய்யலாமா? ஸகல லோகங்களையும் மூன்று அடிகளால் முன்பு விஷ்ணு தாண்டினது போல், நீயும் இந்த மஹா ஸமுத்திரத்தை ஓரடியால் தாண்டுவாய்" என்று ஜாம்பவான் மாருதியை ஸ்தோத்திரம் செய்தார்.

அதைக் கேட்டு ஹனுமாரும், "அப்படியே செய்கிறேன்" என்று ஒப்புக்கொண்டு அதற்குத் தகுந்த பெரிய ரூபத்தை எடுத்தார். வானர ஸைன்யங்கள் கவலை நீங்கி ஆனந்தத்தால் பரவசமானார்கள்.

ததஸ்து வை ஜாம்ப3வதா ப்ரசோதி3த:
ப்ரதீதவேக3: பவதாத்மஜ: கபி: |
ப்ரஹர்ஷயம்ஸ் தாம்,ஹரிவீரவாஹிநீம்
சகார ரூபம் மஹதா3த்மநஸ் ததா3 ‖ (39)

---

## ஸர்க்கம் 67

# ஆஞ்ஜநேயர் மஹேந்திர பர்வதத்தில் ஏறினது

தம் த்3ருஷ்ட்வா ஜ்ரும்ப4மாணம் தே க்ரமிதும் ஶதயோஜநம் |
வீர்யேணாபூர்யமாணம் ச ஸஹஸா வாநரோத்தமம் ‖ (1)

இப்படி நூறு யோஜனையுள்ள ஸமுத்திரத்தைத் தாண்டுவதற்குத் தன் தேகத்தை வரவர விருத்திசெய்துகொண்டு, வீரியத்தால் ஜ்வலிக்கும் மாருதியைக் கண்டு, வானரர்களெல்லோரும் ஸகல துக்கத்தையும் மறந்து ஸந்தோஷமாய்க் கூச்சலிட்டுக் கொண்டாடினார்கள். முன்காலத்தில் பகவான் நாராயணன் திரிவிக்ரமாவதாரமெடுத்தபொழுது ஸகல பிராணிகளும் பார்த்தது போல், வானரர்கள் ஆச்சரியத்துடனும் ஸந்தோஷத்துடனும் ஆஞ்ஜநேயரை நான்கு புறங்களிலிருந்தும் பார்த்துக் கொண்டிருந்தார்கள். அவர்களால் கொண்டாடப்பட்டு, வர்வர வளர்ந்தார். வாலைப் பூமியில் சுழற்றி அடித்து, பலமும் தேஜஸும் ஒவ்வொரு நிமிஷத்திலும் அதிகரிக்க, அவருடைய ரூபம், வயது சென்ற அந்த வானர சிரேஷ்டர்

கள் புகழப்புகழ, கண்கொண்டு பார்க்க முடியாமலிருந்தது. மலைக் குகையில் ஸிம்ஹம் வளர்வது போல் வாயுபுத்திரன் நிமிஷத்திற்கு நிமிஷம் பருத்தார். அப்பொழுது அந்தப் புத்திமானுடைய முகம் பழுக்கப் பழுக்கக் காய்ச்சின மடக்கைப் போலவும், புகையற்று கொழுந்துவிட்டெரியும் அக்கினியைப் போலவும் தோன்றிற்று.

வானரர்களுக்கு நடுவிலிருந்து ஸந்தோஷத்தால் மயிர்க் கூச்சலுடன் எழுந்து ஹனுமான், வானர மூத்தோர்களை வணங்கி, "அக்னியின் பரம மித்திரனான வாயு பகவான் மஹா பலசாலி; அளவிடக் கூடாத பராக்கிரமமுடையவர்; வேகமாக அடிக்கும்பொழுது மலைச் சிகரங்களைப் பெயர்த்தெறிவார். கருடனுடைய வேகமும் அவருடைய வேகத்திற்கு ஈடல்ல. நான் அவருக்குப் பிறந்தவன். தாண்டுவதிலும் ஆகாசத்தில் போவதிலும் எனக்கு நிகரில்லை. ஆகாசத்தை அளாவி நிற்கும் மேருமலையை, இங்கிருந்து கிளம்பி, பூமியில் தொடாமல் அநேக ஆயிரம் தடவை சுற்றி வருவேன். மஹா ஸமுத்திரங்களைப் புஜங்களால் கலக்கி, இந்த லோகங்களை முழுகச் செய்வேன். என் துடைகளின் வேகத்தால் உண்டான காற்று ஸமுத்திர ஜலத்தைக் கிளப்பி, அதிலுள்ள ஜந்துக்களைக் கரையில் வாரியடிக்கும். ஸமுத்திரத்திலிருக்கும் மஹா ஸர்ப்பங்களை ஆகாரத்திற்காகப் பிடிக்கப் பூர்ண பல பராக்கிரமத்துடன் அதி வேகமாகப் பறந்து வரும் கருடனை நிற்காமல் அநேகம் ஆயிரம் தடவை சுற்றிவர முடியும். அவனுக்கும் பிராணனைக் கொடுக்கும் வாயுவின் புத்திரனல்லவா நான்? எனக்கு இந்தத் திறமை இயற்கையாக உள்ளது. ஸூரியனுடன் உதயகிரியிலிருந்து புறப்பட்டு அவருக்கு முன்பு அஸ்தகிரிக்குப் போய், நடுப்பகலில் திரும்பிவந்து அவரைக் காண்பேன். பிறகு அங்கிருந்து பூமியைத் தொடாமலேயே முன்னிருந்த வேகம் குறையாமல் மறுபடியும் ஒருதடவை அவரை ஸந்திப்பேன். ஆகாசத்திலுள்ள கிரஹங்கள் நக்ஷத்திரங்கள் முதலியவைகளை வேகத்தால் ஜயிப்பேன்; ஸமுத்திரத்தை வற்றச் செய்வேன்; பூமியைப் பிளப்பேன். நான் தாண்டும் பொழுது மலைகள் பொடியாகும். என் துடைகளின் வேகத்தால் ஸமுத்திரத்தை எழும்படி செய்வேன். ஆகாசத்தில் போகையில் பல மரங்களும், கொடிகளும், புஷ்பங்களும் என்னைத் தொடரும். ஆகாசத்தில் ஸ்வாதி நக்ஷத்திரத்தின் வழியைப் போல் நான் போகும் வழி பிரகாசிக்கும். நான் இங்கிருந்து கிளம்பி அக்கரையில் குதிக்கும்பொழுது, ஸகல பூதங்களும் என்னைக் கண்டு மகிழும். ஆகாசத்தை மறைத்துக்கொண்டு போகும் பெரிய மேகத்தைப் போல் நான் ஆகாச மார்க்கமாகச் செல்லும்பொழுது, வேகத்தால் ஆகாசத்தை விழுங்கிக்கொண்டு போவது போலிருப்பதைக் காண்பீர்கள். மேகங்களைச் சிதறடிப்பேன்; மலைகளை நடுங்கச் செய்வேன்; ஸமுத்திரத்தைக் கலக்குவேன். இந்த சக்தி எனக்கும் கருடனுக்கும் வாயுபகவானுக்கும் மாத்திரமுண்டு. அவ்விருவர்களைத் தவிர என்னைத் தொடரக் கூடியவர்கள் இல்லை. மேகத்திலிருந்து பாயும் மின்னலைப்போல் யாதொரு பற்றுமில்லாமல் ஆகாசத்தில் கிளம்பி ஒரு நிமிஷத்திற்குள் அக்கரைக்குப் போவேன். நான் ஸமுத்திரத்தைத் தாண்டும்போது ... திரிவிக்ரமாவதாரமெடுத்த மஹா விஷ்ணுவைப்போல் விளங்குவேன். (ஸாதுக்களுக்கு ஸந்தேகம் நேரும்பொழுது அவர்களுடைய அந்தக்கரணத்தில் அகஸ்மாத்தாகத் தோன்றும் எண்ணங்களே பிரமாணம்.) ஸீதையைப் பார்ப்பேனென்று நிச்சயமாய் எனக்குத் தோன்றுகிறது. ஆகையால் நீங்கள் கவலையற்று ஸந்தோஷிக்கலாம். வேகத்தில் வாய பகவானுக்கும் கருடனுக்கும் நான் ஸமமானவன். அநேக ஆயிரம் யோஜனை தூரம் சிரமமில்லாமல் அலக்ஷ்யமாய்ச் செல்வேனென்று எனக்குத் தோன்றுகிறது. வஜ்ராயுதத்தைத் தரிக்கும் தேவேந்திரனால் காக்கப்பட்ட தேவதைகளின் அமிருதத்தையும், பிரஹ்மாவால் காக்கப்பட்ட யோகிகளுடைய அமிருதத்தையும் அவர்களை ஜயித்து ஒரு க்ஷணத்தில் கொண்டுவருவேன். வேண்டுமென்றால் லங்கையைப் பெயர்த்து இங்கே எறிவேன்" என்று இப்படிக் கர்ஜிக்கும் அந்த வானரசிரேஷ்டனைப் பார்த்து, மற்ற வானரர்கள் அளவற்ற ஆனந்தம் கொண்டு, அவருடைய அபார தேஜஸைக் கண்டு திகைத்து நின்றார்கள்.

வானர ஸைன்யங்களின் துக்கத்தைப் போக்கும் அவருடைய வார்த்தைகளைக் கேட்டு, ஜாம்பவான் அடங்கா மகிழ்ச்சிகொண்டு, "மஹா வீரனான கேஸரியின் புத்திரனான ஹனுமானே! வாயுபகவானுக்குப் பிறந்தவனே! உன் மித்திரர்களுடைய ஹிருதயத்தை இதுவரை இருள்போல் மூடிக்கொண்டிருந்த துக்கமானது உன்வார்த்தைகளாகிற சந்திர கிரணங்களால் நாசமடைந்தது. உன் க்ஷேமத்தையே பிரார்த்தித்துக்கொண்டிருக்கும் நாங்களெல்லோரும் நீ போகும் காரியம் ஸித்திக்கும் பொருட்டு மங்களக் கிரியைகளை வெகு ஜாக்கிரதையாகச் செய்துகொண்டிருப்போம். மஹரிஷிகளின் அருளாலும் பெரியோர்களின் கிருபையாலும் வானர மூத்தோர்களின் ஸம்மதியாலும் ஸமுத்திரத்தைத் தாண்டி வா. எங்கள் பிராணன்களெல்லாம் உன்னிடத்திலேயே நாடியிருக்கின்றன. ஆகையால் நீ வரும் வரையில் ஒற்றைக் காலால் நின்றுகொண்டிருப்போம்" என்றார்.

அப்பொழுது மாருதி, "நான் இங்கிருந்து கிளம்பும்பொழுது என் வேகத்தை இந்தப் பூமி தாங்காது. இந்த மஹேந்திர பர்வதத்தின் சிகரங்கள் விஸ்தாரமாகவும் உறுதியாகவும் இருக்கின்றன. பல வகைத் தாதுக்கள் நிறைந்தும் பல மரங்களால் செழித்தும் விளங்கும் இந்த மலையில் ஏறி நின்று, நூறு யோஜனை தூரம் தாண்டுவதற்கு வேண்டிய வேகத்தைச் சேர்த்துக் கொள்ளுகிறேன். நான் உதைத்துக் கிளம்பும் வேகத்தை இந்த மலைச் சிகரங்கள் நன்றாகத் தாங்கும்" என்றார்.

வானரர்கள் அனைவரும் அதற்கு ஸம்மதிக்க, ஆஞ்ஜநேயர் அவர்களால் சூழப்பட்டு, மஹேந்திர மலையில் ஏறினார். பல பல

அபூர்வ விருக்ஷங்கள் அதில் நிறைந்திருந்தன. மான்களுக்கு பிரியமான பல புல் தரைகள் நவரத்தினங்கள் இழைத்ததுபோல் அங்கே பிரகாசித்தன. அங்குள்ள மரங்கள் எக்காலத்திலும் புஷ்பங்களாலும் பழங்களாலும் கண்ணைப் பறித்தன. ஸிம்ஹம், புலி, மதயானை, பக்ஷிகள் முதலிய பல ஜந்துக்களின் ஓசையாலும் நீர்த்தாரைகளாலும் கேட்பதற்கு மதுரமாக இருந்தது. அதன் சிகரங்கள் ஆகாசத்தை எட்டின. மஹேந்திரனுக்கு ஸமமான பலத்தையுடைய ஹனுமான் அந்த மஹேந்திரகிரியில் சற்று நேரம் நடமாடினார். அந்த மஹா பலவானுடைய பாதங்களால் அழுத்தப்பட்ட அந்த மலை ஸிம்ஹத்தால் அடிக்கப்பட்ட மதயானையைப் போல் விளங்கிற்று. மலையருவிகள் பெருகி ஓடின; சிகரங்கள் தூளாயின; யானை, புலி, ஸிம்ஹம் முதலிய மிருகங்கள் பயந்து நடுங்கின; மஹா விருக்ஷங்கள் சாய்ந்தன; மதுபானத்தில் மிகுந்த பிரியமுள்ள நாக, கந்தர்வ,வித்யாதர கணங்களும் பக்ஷிகளும் அந்த மலையிலிருந்து கிளம்பி ஆகாசத்தில் போக ஆரம்பித்தன. அங்குள்ள மஹா ஸர்ப்பங்கள் பயந்து ஒளிந்தன; சிகரங்கள் அசைந்தன. புற்றிலிருந்து சீறிக்கொண்டு பாதி வெளியில் வந்த ஸர்ப்பங்கள் அப்படியே நசுங்கித் தொங்கினபடியால் அந்த மலையெங்கும் சிறு கொடிகள் கட்டித் தொங்கவிட்டதுபோல் காணப்பட்டது. அங்குள்ள மஹரிஷிகளும் பயத்தால் அதைவிட்டுப் போனபடியால், வழி நடப்பவர்களை, கூடவந்தவர்கள்நடுக்காட்டில் விட்டுப் போவதுபோலிருந்தது. ஆஞ்ஜநேயர் இயற்கையாகவே வேகசாலி; ஸமுத்திரத்தைத் தாண்டுவதற்கு வேண்டிய வேகத்தைச் சேர்த்துக்கொண்டிருந்தார். வானர சிரேஷ்டர்; அந்த ஸமுத்திரத்தைத் தாண்டுவதும் தன்னைத் தடுக்கும் சத்துருக்களை அழிப்பதும் அவருக்குப் பொருட்டல்ல. உத்தமமான மனத்தையுடையவர்; விசேஷ மஹிமை பொருந்தினவர்; ஆகையால் வெளி விஷயங்களிலிருந்து மனத்தை இழுத்து வசப்படுத்தி, தான் லங்கைக்குச் சென்று அங்கே முடிக்க வேண்டிய கார்யங்கள் யாவையும் தெளிவாக மனத்தால் நினைத்தார்.

ஸ வேக[3]வாந் வேக[3] ஸமாஹிதாத்மா
ஹரிப்ரவீர: பரவீரஹந்தா |
மந: ஸமாதா[4]ய மஹாநுபா[4]வோ
ஜகா[3]ம லங்காம் மநஸா மநஸ்வீ ‖ (51)

---

## கிஷ்கிந்தா காண்டம் முற்றிற்று.

---

ஸ்ரீ ஸீதா லக்ஷ்மண பரத சத்ருக்ன ஹனுமத் ஸமேத
ஸ்ரீராமசந்த்ர பரப்ரஹ்மணே நம:

* * *



நிஷ்ப்ரமாண ஶரீர : ஸந் லிலங்க⁴யிஷு ரர்ணவம் |
ப்ரக்³ருஹ்ய ப³லவாந் ப³ாஹூ லங்காமபி⁴முக²: ஸ்தி²த : |
பா³ஹூப்⁴யாம் பீட³யாமாஸ சரணுப்⁴யாம் ச பர்வதம் ||
—ஸு ந். 1 ஸ-14 சு.

அளவற்ற சரீரத்தை உடையவராய், கடலைக் கடக்க விரும்பி, கைகளாலும் கால்களாலும் அந்த மலையை அழுத்தினர். (பக்கம் 7 பார்க்க)



ஸ்ரீ :



ஸ்ரீராமசந்த்ர பரப்ரஹ்மணே நம:

# ஸ்ரீமத் வால்மீகி ராமாயணம்

## ஸுந்தர காண்டம்

### ஸர்க்கம் 1

### ஆஞ்ஜனேயர் ஸமுத்திரத்தைத் தாண்டி லங்கைக்குப் போனது

ததோ ராவண நீதாயா: ஸீதாயா: ஶத்ருகர்ஶந: |
இயேஷ ''பத³மந்வேஷ்டும் சாரணுசரிதே பதி² || (1)

**அவதாரிகை**

பகவான் யாவற்றைக்காட்டிலும் மேலானவர் என்பதற்கு அடையாளமான எண்ணிறந்த கல்யாண குணங்கள் அவரிடத்தில் விளங்குகின்றன என்று கிஷ்கிந்தா காண்டத்தில் சொல்லப்பட்டது அவர் எல்லாவற்றையும் நாசம் செய்யும் சக்தியுமுடையவர் என்று இந்தக் காண்டத்தில் உபதேசிக்கப்படுகிறது. பதினைந்தாவது ஸர்க்கத்தில், "ராமனை விரோதித்துக்கொண்டவனை, ராமனால் கொல்லத் தகுந்தவனை, பிரஹ்மா, ருத்திரன், இந்திரன் முதலியவர்களும் காப்பாற்ற முடியாது'' என்பதால் இது நன்ருக விளங்குகிறது.

கிஷ்கிந்தா காண்டத்தில் மித்திரர்களை எப்படியாவது ரக்ஷிக்க வேண்டும் என்ற தர்மமும், இந்தக் காண்டத்தில் தூதனும் பதிவிரதையும் நடந்துகொள்ளவேண்டிய தர்மமும் சொல்லப் படுகின்றன.



அல்லது, முன் காண்டத்தில் ஸகல லோகங்களையும் ரக்ஷிக்க அவதரித்த மஹாவிஷ்ணுவுக்கு, ஆசாரியன் என்ற புருஷகாரம் (மத்தியஸ்தம்) கிடைத்த தென்பதையும், இந்தக் காண்டத்தில் ஆசாரியன் செய்யவேண்டிய காரியத்தையும் வால்மீகி தெரிவிக்கிருர். அதில் முதல் ஸர்க்கத்தில் உபதேசம் பெறத் தகுந்த

சிஷ்யனைக் குரு தேடிப் போவது சொல்லப்படுகிறது. (கோவிந்த ராஜீயம்)

முன் காண்டத்தில் ஆஞ்ஜநேயர் மனத்தால் லங்கைக்குச் சென்றாரென்று சொல்லப்பட்டது. இந்தக் காண்டத்தில் தேகத்தாலும் அங்கே சென்றது வர்ணிக்கப் படுகிறது. (தீர்த்தீயம்)

கிஷ்கிந்தா காண்டத்துடன் 11,000 சுலோகங்கள் முடிந்தன. ஸுந்தர காண்டம் முதல் ஸர்க்கம் முதல் சுலோகத்தில் 'ததோ ராவண' என்ற பதங்களில் நான்காவது அக்ஷரமாகிய 'வ்' என்பது காயத்ரியின் பன்னிரண்டாவது அக்ஷரம்.

ராவண நீதாயா: (ராவணனால் கொண்டுபோகப்பட்ட) என்ற விசேஷணத்தால் ஸீதையின் ஸாத்விகஸ்வரூபம் அக்னி குண்டத்திலும், ராஜஸஸ்வரூபம் பகவானுடைய வலது புஜத்திலும் என்றும் பிரியாமலிருந்தனவென்றும் தாமஸ ரூபத்தையே ராவணன் எடுத்துப் போனானென்றும் உட்கருத்து குறிப்பிடப்படுகிறது.

ராமாயணத்தின் மற்ற காண்டங்களுக்கு அந்தந்தப் பெயர்களிட்டதற்குக் காரணங்களுண்டு. பாலகாண்டம் ராமனுடைய பால்ய விருத்தாந்தங்களையும், அயோத்யா காண்டம் பன்னிரண்டாவது வயது முதல் இருபத்தைந்தாவது வயது வரையில் அயோத்யையில் நடந்த விருத்தாந்தங்களையும், ஆரண்ய காண்டம் தண்டகாரண்யத்தில் நடந்த வரலாற்றையும், கிஷ்கிந்தா காண்டம் கிஷ்கிந்தையில் நடந்த விசேஷங்களையும், யுத்த காண்டத்தில் ராமலக்ஷ்மணர்கள், வானர ஸைன்யங்கள் இவர்களுக்கும் ராவணாதி ராக்ஷஸர்களுக்கும் நடந்த யுத்த விவரங்களையும், உத்தர காண்டத்தில் ராமன் அயோத்யைக்கு வந்த பிறகு நடந்த காரியங்களையும் வர்ணிப்பதால் அந்தப் பெயர்கள் கிடைத்தன. ஆனால் இந்த காண்டத்திற்கு ஸுந்தரமென்ற பெயர் வாய்த்ததேன்? ஸுந்தரமென்றால் அழகு பொருந்தினது என்று பொருள். ஆனால் மற்றக் காண்டங்களின் அமைப்பு அழகு வாய்ந்ததல்லவென்று எண்ணக்கூடுமா? ஆகையால் வேறு காரணம் வால்மீகியின் மனத்திலிருக்கவேண்டும். ஆஞ்ஜநேயர் ஸமுத்திரத்தைத் தாண்டினது, லங்காநகரம், சந்திரோதயம், அசோகவனம், மதுவனம் முதலியவைகளின் வர்ணனை ஒப்பற்றது என்று எல்லோராலும் ஒப்புக்கொள்ளப்படுகின்றது. ஆனால் இந்தக் காரணமே போதுமா? ராமாயணத்தின் தத்வார்த்தத்தைக் கவனித்தவர்களுக்கு ஞான பூமியான அயோத்யையிலிருந்து ஜீவன் இந்திரியங்கள், அந்தக்கரணம், முக்குணங்கள் என்ற இவைகளால் ஆக்ரமிக்கப்பட்டு ஸம்ஸார தசையில் கட்டுண்டு கிடக்கையில், பரம காருணிகரான பகவான் அதைத் தேடிச் சென்று மறுபடியும் தன்னடிச் சோதிக்குச் சேர்த்துக்கொள்ள விரும்பிப் பரம குருவை அனுப்புகிறார். அந்தக் குருவினுடைய தரிசனம் சிஷ்யனான ஜீவனுக்குக் கிடைத்ததும் பகவானுடைய கல்யாண குணங்களை அவர் ஜீவனுக்கு உபதேசித்ததும், அவர் தன்னைக் காப்பாற்றுவாரென்று ஜீவன் தைரியமடைந்ததும், தன் நிலைமையையும் துக்கத்தையும் ஜீவன் ஆசார்யன் மூலமாக பகவானுடைய ஸந்நிதியில் தெரிவித்துக் கொண்டதும் ஆசாரியன் ஜீவனுடைய நிலைமையைப் பகவானிடத்தில் விண்ணப்பம் செய்துகொண்டதும் இந்தக் காண்டத்தில் சொல்லப்படுகின்றன. ஆகையால் அக்ஞானம் நீங்கி ஞானோதயமாகி மோக்ஷ ஸாம்ராஜ்யத்தை அடைவதற்கு இந்தக் காண்டத்தில் விதை விதைக்கப்பட்டது. ஆகையால் இது ஸுந்தர காண்டமெனத் தகும்.

"ராமாயணமென்ற மாலையில் நடுநாயகமான ரத்தினம்போல் ஆஞ்ஜநேயர் விளங்குகிறார்" என்றபடி இந்தக் காண்டத்தில் ஆரம்பம் முதல் முடிவுவரையில் ஆஞ்ஜநேயரே கதாநாயகன். அவருடைய பலம், பராக்கிரமம், புத்தி, மஹிமை, வீரியம் முதலியவைகளே வர்ணிக்கப்படுகின்றன. ஸர்வசக்தனான பகவானும் அவருடைய உதவியைத் தேடினாரென்றும் ஸீதாபிராட்டிக்கே அவர் பிராணதானம் செய்தாரென்றும் சொல்லியிருப்பதாலும், 'நீ செய்த உபகாரத்திற்கு நான் பதில் செய்யச் சக்தியற்றவன்' என்று பெருமாளும் பிராட்டியும் தெரிவிப்பதாலும், ஆஞ்ஜநேயருடைய சரித்திரத்தைச் சொல்லும் இந்தக் காண்டமே ஸுந்தரமானது.

ராமாயண பீடிகையில் இந்தக் காண்டத்தின் மஹிமையையும் மந்திரத்தையும் விஸ்தாரமாய்ச் சொல்லியிருப்பதைப் பார்க்கவும்.

---



இப்படி ஜாம்பவானால் தூண்டப்பட்ட ஆஞ்ஜநேயர், சாரணர்கள் ஸஞ்சரிக்கும் ஆகாச மார்க்கத்தில், ராவணனால் அபகரித்துக் கொண்டு போகப்பட்ட ஸீதை இருக்குமிடத்தைத் தேடிக் கண்டுபிடிக்க விரும்பினார். அப்படித் தேடும் விஷயத்தில் நேரும் இடையூறுகளை நீக்க அவருக்குள்ள ஸாமர்த்தியம் எவருக்கும் கிடையாது.

[சிஷ்யனிருக்குமிடத்தைத் தேடிப் போகும் பரம குருவின் ஸ்வரூபம் உபதேசிக்கப்படுகிறது. சிஷ்யன் தாபத்ரயத்தால் நொந்து, தன்னைத் தேடி வரும் வரையில் பொறுத்திருப்பவர் குரு. சிஷ்யனுடைய துக்கத்தையும் கஷ்டத்தையும் அவனைக் காட்டிலும் நன்றாயறிந்து மனமுருகித் தாங்காமல் அவனை வலுவில் தேடிப் போய் ரக்ஷிக்கிறவர் பரமகுரு. 'கு' என்ற அக்ஷரம் அக்ஞானமாகிய இருட்டையும், 'ரு' என்ற அக்ஷரம் அவ்விருட்டைப் போக்கும் சக்தியையும் குறிக்கின்றது. அக்ஞானமென்ற இருட்டைப் போக்குவதால் குரு என்ற பெயர் கிடைத்தது" என்ற வாக்கியப்படி அக்ஞானத்தைப் போக்கும் ஸ்வபாவத்தையுடைய குரு, புராதன தர்மங்களை லோகத்தார் அனுஷ்டிக்கும்படி செய்யும் பூர்வாசாரியர்கள் அனுஷ்டித்து வந்த மார்க்கத்தை அவலம்பித்தவராய், ஞானத்

ஸ்ரீ :

ஸ்ரீரஸ்து

ஸ்ரீ ராமசந்த்ர பரப்ரஹ்மணே நம :

# ஸ்ரீமத் வால்மீகி ராமாயணம்

(தமிழ் வசனம் - இரண்டு பாகங்களில்)



## பாகம் 2

ஸுந்தர காண்டம்
யுத்த காண்டம்



ஸங்கீதபீஷ்ம, ஸங்கீத விமர்சகாசார்ய,
அபிநவ த்யாகப்ரஹ்ம, கீர்த்தனாசார்ய

ஸ்ரீ உ. வே. C. R. ஸ்ரீநிவாஸய்யங்கார், B.A.

அவர்களால் ஸ்ரீமத் வால்மீகி ராமாயணத்திலிருந்து
மொழிபெயர்க்கப்பட்டது

Released by Maran's Dog ,Toronto, Canada

பதிப்பகத்தார் :

**தி லிட்டில் ப்ளவர் கம்பெனி**

தியாகராயநகர்
சென்னை-600 017



நந்திகோயில் தெரு
திருச்சி-620 002

[ பாகங்கள் 1 & 2 சேர்ந்து
விலை ரூ. 250/-

Released by Maran's Dog ,Toronto, Canada

கேட்டு, வித்யாதரர்கள் மஹேந்திர பர்வதத்தில் ஒப்பில்லாத வீரியத்துடன் நிற்கும் மாருதியைப் பார்த்தார்கள்.

அவர் மயிர்களைச் சிலிர்த்தார்; பெரிய மலையைப்போல் அசைந்தார்; நீருண்ட மேகத்தைப்போல் கர்ஜித்தார்; அடிமுதல் நுனிவரையில் நீண்டு உருண்டு மயிர்களடர்ந்த வாலை, கருடன் மஹா நாகத்தைப் பற்றிச் சுழற்றுவதுபோல் சுழற்றி உதறினார். ஆகாசத்தில் செல்வதற்கு வேண்டிய வேகத்தை வளர்க்கும் ஆஞ்ஜநேயருடைய வால், ஸமுத்திரத்திலிருந்து கருடனால் கொத்திக் கொண்டுபோகப்படும் பெரிய ஸர்ப்பத்தைப்போல் காணப்பட்டது.

அளவற்ற காந்தியையும் வீரியத்தையுமுடைய வாயுபுத்திரர் கோட்டை வாசல் தாழ்ப்பாளைப்போன்ற புஜங்களைப் பூமியில் பலமாக ஊன்றி, இடுப்பைச் சுருக்கி, கால்களை மடக்கி, புஜங்களையும் கழுத்தையும் வளைத்து, தேஜஸையும் ஸத்வத்தையும் வீரியத்தையும் விருத்தி செய்தார். வெகு தூரம் வரையில் தான் போகும் வழியை நிமிர்ந்து உற்றுப் பார்த்து, ஆகாசத்தை நோக்கிப் பிராண வாயுக்களை ஹிருதயத்தில் நிறுத்தினார். கால்களை உறுதியாக ஊன்றி, காதுகளை மடக்கிக்கொண்டு, அந்த மஹாபலசாலியான வானர சிரேஷ்டன் ஆகாசத்தில் தாவும் ஸமயத்தில் வானர வீரர்களைப் பார்த்து, இவ்விதம் சொன்னார்.

“வாயு வேகமுள்ள ராமபாணம் தடையில்லாமல் எப்படிப் போகுமோ, அப்படி ராவணனால் ஆளப்பட்ட லங்கைக்குப் போவேன். அங்கே ஜானகியைக் காணாவிட்டால் அந்த வேகத்துடன் தேவலோகத்திற்குப் போவேன். அங்கேயும் அவளைக் காணாவிட்டால் கொஞ்சம்கூட சிரமமில்லாமல் ராக்ஷஸ ராஜனான ராவணனைப் பிடித்துக் கட்டி இங்கே கொண்டு வருவேன். உத்தேச காரியத்தை எப்படியாவது முடித்துக்கொண்டு ஸீதையுடன் திரும்பி வருவேன். அல்லது ராவணனுடைய லங்கையையும் வேருடன் பெயர்த்து இங்கே கொண்டு வருவேன்” என்று அவர்களுக்குத் தைரியம் சொல்லிக் கவலையில்லாமல் அதிவேகமாக ஆகாசத்தில் கிளம்பி, தன்னைப் பக்ஷிராஜனான கருடனுக்கு ஸமமாக எண்ணினார். அப்பொழுது அந்த வேகத்தால் மலையிலுள்ள மரங்கள் யாவும் இலைகளுடன் நான்கு புறங்களிலிருந்து மேலே கிளம்பின. மதம்கொண்ட நாரைகளுடன் மலர்ந்த புஷ்பங்களால் விளங்கும் அந்த மரங்களைத் தன் துடையின் வேகத்தால் இழுத்துக்கொண்டு ஆகாசத்தில் போனார். நெடுந்தூரம் பிரயாணம்போகும் ஒருவனை அவனுடைய பிரியமான பந்துக்கள் சிறிதுதூரம் வரையில் சென்று வழிவிடுவதுபோல், அந்த மரங்கள் கொஞ்ச தூரம் அவரைத் தொடர்ந்தன. ஸேனைகள் அரசனைத் தொடர்வதுபோல் அவருடைய வேகத்தால் முறிக்கபட்ட ஆச்சா முதலிய மரங்கள் அவரைப் பின் தொடர்ந்தன. மஹா பர்வதம் போன்ற மாருதி புஷ்பங்களால் விளங்கும் அந்த மரங்களால் சூழப்பட்டு ஆச்சரியமாகக் காணப்பட்டார். மஹேந்திரனைக் கண்டு பயந்து, மலைகள் கடலில் விழுந்து மறைந்ததுபோல், வைரமுள்ள மரங்கள் கடலில் விழுந்து முழுகின. மஹாமேகம் போன்ற ஆஞ்ஜநேயர் பல வர்ணங்களுள்ள புஷ்பங்களாலும் குருத்துகளாலும் மொட்டுகளாலும் சூழப்பட்டு, மின்மினிப் பூச்சிகள் மொய்த்த பெரிய மலையைப்போல் தோன்றினார். அவருடைய வேகத்தாலுண்டான சக்தி அடங்கி, அந்த மரங்கள் புஷ்பங்களை உதிர்த்துக்கொண்டு ஸமுத்திரத்தில் விழுவதைப் பார்க்கும்பொழுது, பிரயாணியை வழியனுப்பிவிட்டு, கண்ணீர் சொரிந்துகொண்டு திரும்பும் மித்திரர்களைப்போல் காணப்பட்டன. அவருடைய வேகத்தால் அந்த லேசான புஷ்பங்கள் நானா வர்ணங்களுடன் ஸமுத்திரத்தில் தூவப்பட்டு, நக்ஷத்திரங்களால் நிறைந்த ஆகாசத்தைப்போல் அந்தக் கடலை விளங்கச் செய்தன. நானா வர்ணங்களுள்ள அந்தப் புஷ்பங்களால் சூழப்பட்ட வாயு புத்திரன், மின்னற் கொடிகளுடன் ஆகாசத்தில் கிளம்பும் மேகத்தைப்போல் பிரகாசித்தார். அவர் போகும் வேகத்தால் நாற்புறங்களிலும் இறைக்கப்பட்ட புஷ்பங்களால் நிறைந்த ஸமுத்திரம் அழகான நக்ஷத்திரக் கூட்டங்கள் உதித்த ஆகாச வீதிபோல் காணப்பட்டது.

இரு கைகளையும் நீட்டிக்கொண்டு அவர் வாயுமார்க்கத்தில் போகும்பொழுது, மலைச் சிகரத்திலிருந்து கிளம்பும் ஐந்து தலை நாகங்களைப்போல் தோன்றினார். தாண்டும் வேகத்தால் வரவரக் குறையும் கடலைக் குடித்து, ஆகாசத்தை விழுங்கப் பார்ப்பவர்போல் காணப்பட்டார். ஆகாசமார்க்கத்தில் போகும்போது அந்த வானர சிரேஷ்டனுடைய மஞ்சள் வர்ணமுள்ள வட்டமான இரண்டு கண்களும் மின்னலைப் போலும், மலைச்சிகரங்களில் கொழுந்துவிட்டெரியும் நெருப்பு ஜ்வாலைகளைப் போலும் ஒரே காலத்தில் சந்திரஸூரியர்கள் உதித்தது போலும் பிரகாசித்தன. அவருடைய சிவந்த முகம், சிவந்த மூக்கின் காந்தியால், ஸந்தியா காலத்துச் சிவப்பால் பரவப்பட்ட ஸூரியமண்டலத்தைப் போல் விளங்கிற்று.

உயர்ந்து வளர்ந்த வால், அவர் ஆகாசத்தில் போகும்பொழுது மேலே இந்த்ரத்வஜம் தூக்கிக் கட்டப்பட்டதுபோல் தோன்றிற்று. வெளுத்த பற்களையுடைய மாருதி, சக்கரம்போல் தன்னைச் சுற்றிவளைந்த வாலால், மண்டலம்சூழ்ந்த ஸூரியனைப்போல் பிரகாசித்தார். வாலின் அடிப்பாகம் சிவந்து, பிளந்த மலையில் சிவந்த தாதுக்கள் விளங்குவதுபோல் தோன்றிற்று. அந்த வானர சிரேஷ்டன் ஸமுத்திரத்தைத் தாண்டும்பொழுது விலாப்புறங்களிலிருந்து கிளம்பும் காற்று மேகம்போல் கர்ஜித்தது. ஆகாசத்தில் வடக்கிலிருந்து தெற்கு முகமாக வாலுடன் கூடின உல்கா என்ற எரிகொள்ளி வேகமாக விழுவதுபோல் ஆஞ்ஜநேயர் அப்பொழுது காணப்பட்டார். நீண்ட வேகத்தையுடைய அஞ்ஜனாபுத்திரன் வடக்கிலிருந்து தெற்கே போகும் ஸூரியனைப் போலவும், இறுக்கிக்

கட்டப்பட்ட கச்சுப்பட்டையால் நீண்ட மதயானையைப் போலவும் தோன்றினர். கப்பலில் அடிப்பாகம் ஜலத்தில் மூழ்கி மேல்பாகம் ஆகாசத்தில் காணப்பட்டுப் பாய்களில் காற்றுத் தூக்கி ஓடுவதுபோல் அவருடைய நிழல் ஸமுத்திரத்தில் அழுந்தித் தேகம் ஆகாசத்தில் தோன்றிற்று; ஸமுத்திரத்தில் போகுமிடமெல் லாம் அவருடைய தொடை வேகத்தால் ஜலம் காக்கை வலிப்பு கொண்டதுபோல் சுழன்று கதறி நுரையுடன் காணப்பட் டது. மார்பின் காற்று வேகத்தால் மலை போன்ற அலைகளை அடித்துத் தள்ளிக்கொண்டு அந்த வானரசிரேஷ்டன் அதிவேக மாகக் கடலைத் தாண்டினர். மேகத்தின் மழைக் காற்றும் அவ ருடைய வேகக்காற்றும் சேர்ந்து பயங்கரமாகச் சப்திக்கும் ஸமுத்தி ரத்தைக் கலக்கி நடுங்கச் செய்தது. மலைகளைப் போன்ற அலைகளை இழுத்துக்கொண்டு போகும் அந்த ராமதூதன், ஆகாசத்தையும் பூமியையும் பிரிப்பவரைப்போல் தாவினர். மேரு மந்திரம் முதலிய மஹாபர்வதங்களைப் போல் எழும்பும் அலைகளை ஒவ்வொன்ருக எண்ணுகிறவரைப்போல் தாண்டிப் போனர். அவருடைய வேகத் தால் மேலே கிளப்பப்பட்ட கடல் ஆகாசத்தில் சரத்காலத்தில் விளங்கும் நீருண்ட மேகத்தைப்போல் காணப்பட்டது. மனிதர்கள் உடுக்கும் வஸ்திரங்களை அவிழ்த்தெறிந்தால் அவர்களுடைய தேகம் காணப்படுவதுபோல், ஸமுத்திரத்தில் வாழும் திமிங்கிலம், முதலை, மீன், ஆமை முதலிய ஜந்துக்கள், தங்களை மூடியிருந்த ஜலம் மேலே கிளம்பினதால் வெளியில் காணப்பட்டன. கடலில் வஸிக்கும் மஹா ஸர்ப்பங்கள் ஆகாசத்தில் அதிவேகமாகப் போகும் அந்த வானர சிரேஷ்டனைப் பார்த்துக் கருடனென்றெண்ணிப் பயந்தன. பத்து யோஜனை அகலமும், முப்பது யோஜனை நீளமும் உள்ள அவ ருடைய நிழல் அந்த ஸமுத்திர ஜலத்தில் அழகாக விளங்கிற்று. (காலையில் புறப்பட்டு ஸூரியாஸ்தமனத்திற்கு ஒரு முகூர்த்தத் திற்கு முந்தியே அக்கரைக்குப் போயிருக்க வேண்டும்). அந்த நிழல் ஸமுத்திரத்தில் அவரைத் தொடர்ந்து செல்லும்பொழுது வெளுத்த மேகக் கூட்டங்களைப்போல் காணப்பட்டது. (இது நடுப் பகலில் தோன்றும்). யாதொரு பற்றுமில்லாத வாயுமார்க்கத்தில் அந்த மஹா தேஜஸ்வி பெரிய சரீரத்துடன் போகும்பொழுது இறக்கை களையுடைய மலை ஆகாசத்தில் பறப்பது போலிருந்தது. வேகத்தால் அவர் போகும் வழியிலுள்ள ஸமுத்திர ஜலம் பெரிய மலையைப் போல் சேர்க்கப்பட்டு நின்றது. பக்ஷிகள் பறக்கும் ஆகாசத்தில் பக்ஷி ராஜனைப் போலும் வாயுபகவான் மேகக் கூட்டங்களை அடித் துக்கொண்டு போவது போலும் ஹனுமான் அதிவேகமாகப் போனர். அந்த மேகங்கள் வெளுப்பு, சிவப்பு, நீலம், மஞ்சள் முதலிய வர்ணங்களுடன் அதி விசித்திரமாக விளங்கின. மேகக்



ஶுஶுபே$^4$ ஸ மஹாதேஜா மஹாகாயோ மஹாகபி: |
வாயுமார்கே$^3$ நிராலம்பே$^3$ பக்ஷவாநிவ பர்வத: || — ஸு. 1ஸ—77சு.

யாதொரு பற்றுமில்லாத வாயுமார்க்கத்தில் அந்த மஹாதேஜஸ்வி பெரிய சரீரத்துடன் போகும்பொழுது இறக்கைகளை யுடைய மலை ஆகாசத்தில் பறப்பது போலிருந்தது. (பக்கம் 10 பார்க்க)

Notes : This Blank Page has also to be counted as a another page Number.

It is intentionally left blank after Picture Sketches.!

Released by Maran's Dog ,Toronto, Canada



கூட்டங்களுக்கு நடுவில் அடிக்கடி புகுந்து வெளிப்படும்பொழுது அவர் சந்திரனைப்போல் தோன்றினார்.

இப்படி அதிவேகமாய் அவர் ஸமுத்திரத்தைத் தாண்டிச் செல்வதைக் கண்டு, தேவர்களும், தானவர்களும், கந்தர்வர்களும் புஷ்பமாரி பெய்தார்கள். ராமகாரியத்தின் பொருட்டுச் செல்லும் அந்த வானரசிரேஷ்டனை ஸூரியன் உஷ்ணமான கிரணங்களால் சிரமப்படுத்தவில்லை. வாயுபகவானும் அவர்மேல் குளிர்ச்சியாய் வீசி சிரமத்தைப் போக்கினார். மஹரிஷிகள் ஸ்தோத்திரம் செய்தார்கள். தேவர்களும் கந்தர்வர்களும் அந்த மஹாவீர்யசாலியைக் கொண்டாடினார்கள். அந்த வானரசிரேஷ்டன் சிரமமில்லாமல் மஹாவேகமாய் ஆகாசத்தில் செல்வதைக் கண்டு நாகர்களும், யக்ஷர்களும், திக்பாலர்களான பல ராக்ஷஸர்களும், விபுதர்களும், கருடர்களும், அவரைப் புகழ்ந்தார்கள். அப்பொழுது ஸமுத்திர ராஜன் இக்ஷ்வாகு குலத்தை மரியாதை செய்ய விரும்பி, "இந்த வானரசிரேஷ்டனான ஹனுமானுக்கு நான் ஒத்தாசை செய்யாவிட்டால் லோகத்தில் எல்லோரும் என்னை நிந்திப்பார்கள். இக்ஷ்வாகு வம்சத்தரசனான ஸகர மஹாராஜனால் வளர்க்கப்பட்டேன். இவர் இக்ஷ்வாகு குலதிலகரான ராமனுடைய தூதன். இவர் சிரமப்படும்படி விடுவது எனக்கு அழகல்ல. ஆகையால் இவர் சற்று நேரம் இங்கே இளைப்பாறிப் பிறகு அதி சீக்கிரமாய் ஸமுத்திரத்தைத் தாண்டும்படி செய்ய வேண்டும்" என்று ஹிதமான யோசனை செய்து, ஸமுத்திர ஜலத்தில் தங்கச் சிகரங்களுடன் மறைந்திருக்கும் மைனாக பர்வதத்தைப் பார்த்து, "தோழா! பாதாளத்திலுள்ள அஸுரர்கள் மேலே வராதபடி இந்திரன் உன்னைக் கோட்டை வாசல் தாழ்ப்பாளைப் போல் இங்கே வைத்திருக்கிறானல்லவா? அந்த மஹா பலசாலிகள் மேலே வர யத்தினம் செய்கையில் அவர்களை விடாமல் பாதாளத் துவாரத்தை மறைத்துக்கொண்டு நிற்கிறாயல்லவா? மேலும் கீழும் நான்கு பக்கங்களிலும் வளரும் சக்தி உனக்குண்டு. ஆகையால் உன்னை ஏவினேன். பர்வதராஜனே! சீக்கிரம் எழுந்திரு. வானர சிரேஷ்டரான ஹனுமான் ராமகாரியத்தின் பொருட்டு ஆகாச மார்க்கமாய் உனக்கு நேராக வருகிறார். இக்ஷ்வாகு குலத்திற்குப் பணிவிடை செய்ய ஆசைகொண்ட நான் இவருக்கு என்னால் கூடிய ஒத்தாசை செய்யவேண்டியது. அந்த அரசர்களை நான் பூஜிக்க வேண்டியதல்லவா? அதே காரணத்தால்தான் நீயும் அவர்களை விசேஷமாய்ப் பூஜிக்கவேண்டியது. அவர்களால் வெட்டப்பட்ட இந்த ஸமுத்திரத்தில் ஒளிந்துகொண்டு உன் பிராணனைக் காப்பாற்றி வருகிறாயல்லவா? மேலும் உன்னை இங்கே கொண்டுவந்து சேர்த்த வாயுவின் புத்திரனான இந்த ஆஞ்ஜநேயருக்கு ஸஹாயம் செய்வது உன் கடமையல்லவா? ஆகையால் இவருக்குத் தகுந்த உபகாரம் செய். நாம் உத்தேசித்த காரியம் காலதாமதமாகக் கூடாது. செய்யவேண்டிய காரியத்தை தகுந்த காலத்தில் செய்யா

விட்டால் ஸாதுக்கள் கோபிப்பார்கள். ஆகையால் மேலே வா; ஆஞ்ஜநேயர் உன்னிடத்தில் இளைப்பாறட்டும்; இவர் நமக்கு உத்தமமான அதிதி; பூஜிக்கத் தகுந்தவர்; வானரசிரேஷ்டர். தேவர்களால் பூஜிக்கப்பட்டு ஸுவர்ண சிகரங்களுடன் பிரகாசிக்கும் பர்வதராஜ! இவர் உன்னிடத்தில் கொஞ்சம் சிரம பரிஹாரம் செய்துகொண்டு பிறகு அதி சீக்கிரமாய் அக்கரை சேர்வார். ஹனுமானுக்கு ஸீதையிடத்திலுள்ள தயையையும், ஸீதை நாயகனைப் பிரிந்து லங்கையில் துக்கிப்பதையும், ஆஞ்ஜநேயருடைய சிரமத்தையும் யோசித்து நான் சொன்னபடி செய்'' என்றார்.

இதைக் கேட்டு அந்தப் பர்வத ராஜனும் மரம், செடி, கொடிகளுடன் பிரகாசமான கிரணங்களுடன் ஸூரியன் மேகங்களின் நடுவிலிருந்து புறப்படுவதுபோல் அதிவேகமாகக் கிளம்பினான். ஸமுத்திர ஜலத்தால் சூழப்பட்ட அந்த மலை, உரகர் கின்னரர் முதலிய கணங்களால் நிறைந்த தன் தங்கச் சிகரங்களைச் சீக்கிரத்தில் வெளியில் காட்ட, நிர்மலமான ஆகாசத்தில் ஸூரியன் உதிப்பதுபோல், அவை மேக மண்டலத்தைப் பிளந்துகொண்டு மேலே கிளம்பின. ஸ்வபாவமாகவே அதிக காந்தியுள்ள அந்தத் தங்கக் கொடிமுடிகளால் மைநாகமலை பல ஸூரியர்களுடன் பிரகாசிப்பது போல் தோன்றிற்று. இப்படித் தனக்கு எதிரில் தடையில்லாமல் எழுந்த அந்த மலையைப் பார்த்து மாருதி, "இது நமக்கு நேர்ந்த முதலாவது தடை'' என்று நினைத்தார். அதிவேகமாகச் சென்று கொண்டிருந்த வாயுபுத்திரன், அளவில்லாமல் வர வர வளரும் அந்த மலையை, வாயுபகவான் மேகங்களைச் சிதறவடிப்பது போல், தன் மார்பால் விளையாட்டாக அடித்துத் தள்ளினார். அதைக் கண்டு மைநாகம் அவருடைய வேகத்தையும் சக்தியையும் அறிந்து ஆச்சரியப்பட்டு ஸந்தோஷித்தான். பிறகு மனுஷ்ய ரூபத்துடன் அவன் ஆகாசமார்க்கத்தில் நின்றுகொண்டு அந்த வழியாகச் செல்லும் வானர வீரனைப் பார்த்து, மிகுந்த பிரீதியுடன், "வானர சிரேஷ்ட! ஒருவரும் செய்யத் துணியாத காரியத்தை செய்யப் புகுந்திருக்கிறீர். என் சிகரங்களில் சற்று நேரம் இளைப்பாறும். ராமனுடைய முன்னோர்கள் இந்த ஸமுத்திரத்தை வெட்டினார்கள். ராமகாரியத்திற்காகச் செல்லும் உமக்கு ஸமுத்திர ராஜன் பூஜை செய்கிறார். உபகாரம் செய்தவனுக்கு பதில் உபகாரம் செய்வது புராதனமான தர்மம். அப்படி செய்ய விரும்பும் நாங்கள் உமக்குக் கொடுக்கும் அதிதி பூஜையை நீர் பெற்றுக்கொள்ள வேண்டும். "இந்த வானர சிரேஷ்டர் நூறு யோஜனை தூரம் தாண்ட உத்தேசித்துப் புறப்பட்டு வருகிறார். உன் தாழ்வரைகளில் சற்று இளைப்பாறிப் பிறகு அக்கரைக்குப் போவார்'' என்று ஸமுத்திர ராஜன் என்னை விசேஷ மரியாதையுடன் உம்மிடத்தில் அனுப்பியிருக்கிறார். ஆகையால் சற்று நில்லும். என்னிடத்தில் இளைப்பாறிப் போம். என்னிடத்திலுள்ள கந்தமூலங்கள் அதிக ருசியாயும் மணத்துடனும்



இருக்கின்றன. அவைகளை அங்கீகரித்து சிரமம் தீர்த்துக்கொண்டு பிறகு செல்வீர். நம்மிருவர்க்கும் வேறு விதமான ஸம்பந்தமும் உண்டு. அது மூன்று லோகங்களிலும் பிரஸித்தி பெற்றுப் பெரியோர்களால் ஒப்புக்கொள்ளப் பட்டிருக்கிறது. அதிவேகமாகத் தாண்டிப்போகும் வானரர்களுக்குள் உம்மை முதல்வராக மதித்திருக்கிறேன். சாதாரணமான அதிதியையும் விவேகி பூஜிக்க வேண்டும். உம்மைப்போன்ற மஹானை, தர்மரஹஸ்யத்தை அறிந்தவன் விசேஷமாகப் பூஜிக்க வேண்டியதென்று சொல்லவும் வேண்டுமோ? நீர் தேவ சிரேஷ்டனான வாயு பகவானுடைய புத்திரர்; வேகத்தில் அவரைப் போன்றவர். உம்மைப் பூஜித்தால் அவரைப் பூஜித்ததாகும் என்பதைத் தர்மம் தெரிந்த உமக்குச் சொல்ல வேண்டியதில்லை. ஆகையால் நான் உம்மை பூஜிக்கவேண்டும். வேறொரு காரணமும் உண்டு.

"முன்பு கிருதயுகத்தில் மலைகளுக்கு இறக்கைகளுண்டு. அவை வாயுவேக கருட வேகத்துடன் ஸகல திக்குகளிலும் அதிவேகமாகப் பறந்துபோகும். அதைக் கண்ட தேவ கணங்களும், ரிஷிகளும், ஸகல பூதங்களும் எங்கே இவை மேலே விழுந்து நம்மை நாசம் செய்யுமோ என்று பயந்தார்கள். அப்பொழுது தேவேந்திரன் அவைகளிடத்தில் கோபங்கொண்டு வஜ்ராயுதத்தால் அவைகளின் இறக்கைகளைத் துண்டு துண்டாய் வெட்டினான். பயங்கரமான வஜ்ராயுதத்தைத் தூக்கிக்கொண்டு கோபாவேசத்துடன் அவன் என்னிடம் வரும்பொழுது, மஹாத்மாவான வாயு பகவான் என்னை இந்த ஸமுத்திரத்தில் அடித்துக்கொண்டு வந்து தள்ளினார். என் இறக்கைகளுக்கு யாதொரு அபாயமுமின்றி என்னைக் காப்பாற்றினார். அவரை நான் பூஜிக்கவேண்டியதல்லவா? ஆகையால் உம்மையும் பூஜிக்க விரும்புகிறேன். நமக்கு இவ்விதமான ஸம்பந்தம் ஏற்பட்டிருக்கிறது. இப்படி விசேஷ உபகாரம் பெற்ற நானும், ஸமுத்திர ராஜனும் செய்யும் உபசாரத்தைப் பெற்றுக்கொண்டு எங்களை ஸந்தோஷப்படுத்த வேண்டும். சற்று இளைப்பாறும்; நாங்கள் செய்யும் உபசாரத்தையும் அதிதிபூஜையையும் பெற்றுக்கொள்ளும். எங்களுக்கு உம்மிடத்திலுள்ள பிரீதியைக் கௌரவியும். உம்மைப் பார்த்ததால் எங்களுக்கு அளவற்ற ஆனந்தமுண்டாகியிருக்கிறது'' என்றார்.

அதைக் கேட்டு மாருதி, "பர்வதராஜனே! நீர் இப்படிச் சொல்வதாலேயே நான் மிகுந்த பிரீதியடைந்தேன். உம்மைத் தரிசித்ததே எனக்குப் போதும். நீர் எனக்குச் செய்யும் அதிதி பூஜை இதுவே. உம் இஷ்டப்படி நான் இங்கே தங்கவில்லை என்று கோபிக்கக் கூடாது. நான் உத்தேசித்த காரியத்தைச் செய்ய வேண்டிய காலம் என்னைச் சீக்கிரப்படுத்துகிறது. இங்கே தங்கினால் இன்று பகலுக்குள் லங்கைக்குப் போக முடியாது. மேலும் வழியில் எவ்விடத்திலும் தயங்காமல் போக வேண்டுமென்று வானரர்களிடத்தில் பிரதிக்ஞை செய்திருக்கிறேன்'' என்று கையால் அந்த மலையைத் தொட்டு,

அவரால் செய்யப்பட்ட அதிதி பூஜையை அங்கீகரித்து, மனம் மகிழ்ந்து, புன்சிரிப்புடன் ஆகாசமார்க்கமாகச் சென்றார். ஸமுத்திர ராஜனும் மைநாகமும் மிகுந்த பிரீதியுடன் அவரைப் பார்த்து ஆசீர்வதித்தார்கள். பிறகு ஆஞ்ஜநேயர் அவர்களைவிட்டு வெகுதூரம் உயரக் கிளம்பி, தன் பிதாவான வாயு பகவான் ஸஞ்சரிக்கும் மார்க்கத்தில் வந்தார். அங்கிருந்து மேலே போய்ப் பர்வத ராஜனை ஒரு தட்வை பிரீதியுடன் பார்த்து, நிர்மலமான ஆகாச மார்க்கத்தில் சென்றார். ஆஞ்ஜநேயர் ஸமுத்திரத்தைத் தாண்டிப்போவது அவருடைய அபூர்வச் செயல்களில் முதலாவது; மைநாக பர்வதத்தை ஜயித்தது இரண்டாவது; இதைப் பார்த்துக் கொண்டிருந்த தேவர்களும், ஸித்தர்களும், மஹரிஷிகளும் மகிழ்ந்து மாருதியைக் கொண்டாடினார்கள். தேவராஜன் மைநாகனிடத்தில் அளவற்ற ஸந்தோஷமடைந்து, "தங்கக் கொடிமுடிகளுடன் விளங்கும் பர்வத சிரேஷ்டா! இன்று நீ செய்த காரியம் அதிக ஆனந்தத்தை எனக்கு உண்டுபண்ணுகிறது. இன்று முதல் உனக்கு யாதொரு பயமுமில்லை; உன்னிஷ்டப்படி ஸுகமாக இரு. விஸ்தாரமான ஸமுத்திரத்தைத் தாண்டி ஆகாசமார்க்கமாகப் போகும்பொழுது ஹனுமான் கீழே விழுவாரோ என்று பயந்தோம். ஆனால், அந்த மஹாவீரன் சற்றும் பயமில்லாமல் அலக்ஷ்யமாகப் போகிறான். நீ அவனுக்கு நல்ல உதவி செய்தாய். ராமதூதனை ஹனுமானுக்கு நீ செய்த உபசாரம் எனக்கு எல்லையற்ற ஆனந்தத்தைக் கொடுக்கிறது" என்றான். தன்னிடத்தில் ஸந்தோஷித்ததைப் பார்த்து மைநாகனுக்கு விசேஷ மகிழ்ச்சி உண்டாயிற்று. பிறகு இந்திரனிடத்தில் மேலான வரங்களைப் பெற்று ஸுகமாக வஸித்தான். ஹனுமான் அங்கிருந்து ஒரு முகூர்த்தத்தில் அப்புறம் சென்றார்.

அப்பொழுது தேவ, கந்தர்வ, ஸித்த, மஹரிஷி கணங்கள் ஸூரியனைப்போல் விளங்குபவளும் நாகங்களுக்குத் தாயுமான ஸுரஸையைப் பார்த்து, "இந்த வானர வீரன் வாயுபுத்திரர், மஹாகாந்தியை உடையவர். இந்த ஹனுமான் ஸமுத்திரத்தைத் தாண்டி ஆகாச வீதியில் போகிறார். நீ சற்று நேரம் இவருக்கு இடையூறாக இரு. கோரைப் பற்களாலும் நெருப்புப் பொறிகளைப் போன்ற கண்களாலும் ஆகாசம்போல் திறந்த வாயாலும், மலைபோன்ற சரீரத்தாலும் பயங்கரமான ராக்ஷஸ ரூபத்துடன் இவருக்கெதிரில் நில். இவருடைய பலத்தையும், பராக்கிரமத்தையும் மறுபடியும் பரீக்ஷிக்க வேண்டும். உன்னை உபாயத்தால் ஜயிக்கிறாரா? தைரியமற்று மயங்குகிறாரா?" என்றார்கள். இப்படித் தேவதைகளால் வேண்டப்பட்டு ஸுரஸை, ஸகல பிராணிகளும் கண்டு நடுங்கும் கோர ராக்ஷஸ ரூபத்துடன் கடலின் நடுவில் நின்று, அந்த வழியாக வரும் மாருதியை மறித்து, "தேவர்கள் எனக்கு ஆஹாரமாக இங்கே உன்னை அனுப்பியிருக்கிறார்கள்; உன்னை விழுங்கப் போகிறேன்; என் வாயில் நுழை" என்றாள். அதைக் கேட்டு அந்த மஹா தேஜஸ்வி கைகூப்பி வணக்க



ஸோபி'பத்யாபா³ தத்³வக்த்ரம் நிஷ்பத்ய ச மஹாஜவ : |
அந்தரிக்ஷே ஸ்தி²த : ஸ்ரீமாநித³ம் வசநமப்³ரவீத் || — ஸு. 1ஸ-167 ஸ.

ஹனுமான் மஹா புத்திமானதால்......அவளுடைய வாயில் கட்டை விரலளவு தன் சரீரத்தைச் சுருக்கிக்கொண்டு சீக்கிரமாகப் புகுந்து வெளியில் வந்து ஜயலக்ஷ்மி ஜ்வலிக்க ஆகாசத்தில் நின்று...சொன்னார். (பக்கம் 19 பார்க்க)

மாக, "தசரத புத்திரனுன ராமன் தம்பி லக்ஷ்மணனேடும் பார்யை ஜானகியோடும் தண்டகாரண்யத்தில் ஸஞ்சரித்துக் கொண்டிருக்கும் பொழுது, அவருக்கு விரோதியான ராவணனென்ற ராக்ஷஸராஜன், அவர் வேறு வேலையாகப் போயிருக்கையில் அவருடைய பாரியையை எடுத்துப் போனுன். கீர்த்தி வாய்ந்த அந்த ஸீதையினிடத்தில் என்னைத் தூதனுக ராமன் அனுப்பியிருக்கிருர். அவருடைய ராஜ்யத்தில் வஸிக்கும் நீ அவருக்கு உதவி செய்ய வேண்டியதல்லவா? அல்லது ஸீதையைக் கண்டு அவளுடைய வரலாற்றை ராமனுக்குத் தெரிவித்த பிறகு உனக்கு ஆஹாரமாகிறேன். இது நான் செய்யும் பிரதிக்ஞை" என்ருர்.

அப்பொழுது ஸுரஸை, "என்னைத் தாண்டி ஒருவரும் செல்லக் கூடாது. இது நான் பெற்ற வரம். என் வாயில் புகுந்து செல்வதைத் தவிர வேறு வழியில்லை" என்று சொல்லிக்கொண்டிருக்கையில், அதை லக்ஷ்யம் செய்யாமல் ஆஞ்ஜநேயர் போய்க்கொண்டிருந்தார். ஸுரஸை அதைக்கண்டு, அவருடைய பலத்தை அறிய விரும்பி, "இன்று நீ என் வாயில் நுழைந்தே அப்புறம் போகவேண்டும். இப்படி பிரஹ்மா எனக்கு வரம் கொடுத்திருக்கிருர்" என்று தன் வாயை விஸ்தாரமாகத் திறந்து வாயுபுத்திரனுக்கெதிரில் நின்ருள். அப்பொழுது ஆஞ்ஜநேயர் கோபம்கொண்டு "என்னை விழுங்கும்படி வாயை விஸ்தாரமாகத்திற" என்று பத்து யோஜனை தூரம் வளர்ந்தார்; ஸுரஸை தன் வாயை இருபது யோஜனை யளவு திறந்தாள்; பிறகு ஹனுமான் முப்பது யோஜனை உயரம் வளர்ந்தார்; ஸுரஸை நாற்பது யோஜனை தூரம் வாயைத் திறந்தாள். பிறகு ஹனுமான் ஐம்பது யோஜனை தூரம் வளர்ந்தார்; ஸுரஸை அறுபது யோஜனை தூரம் வாயைத் திறந்தாள். ஹனுமான் எழுபது யோஜனை உயரம் வளர்ந்தார்; ஸுரஸை எண்பது யோஜனை தூரம் வாயைத் திறந்தாள். ஹனுமான் பிறகு தொண்ணூறு யோஜனை உயரம் வளர்ந்தார்; அப்பொழுதும் ஸுரஸை நூறு யோஜனை தூரம் வாயைத் திறந்தாள். ஹனுமான் மஹா புத்திமானுனதால் மிகவும் விஸ்தாரமான ஸுரஸையின் வாயில் ஸூக்ஷ்ம ரூபத்துடன் புகுந்து வெளியில் வர இதே ஸமயமென்று நிச்சயித்து, நீண்ட நாக்குகளுடன் கோரமான நரகம் போன்ற அவளுடைய வாயில் கட்டை விரலளவு தன் சரீரத்தைச் சுருக்கிக்கொண்டு சீக்கிரமாகப் புகுந்து வெளியில் வந்து, ஜயலக்ஷ்மி ஜ்வலிக்க ஆகாசத்தில் நின்று, "தக்ஷப் பிரஜாபதியின் புத்ரீ! உன்னை நமஸ்கரிக்கிறேன். உன் வாயில் புகுந்து வெளிப்பட்டேன். உன் வரமும் நிஜமாயிற்று; ஸீதை இருக்குமிடத்திற்குப் போகிறேன்" என்று சொன்னுர்.

ராகுவின் வாயிலிருந்து வெளிப்பட்ட சந்திரனைப்போல் பிரகாசிக்கும் ஆஞ்ஜநேயரைப் பார்த்து ஸுரஸை தன் உண்மையான ரூபத்துடன், "குழந்தாய்! உன் காரியம் கைகூடட்டும். ஸுகமாய்ப் போய் வா. ராமனையும் ஸீதையையும் சேர்த்து வை" என்று ஆசிர்

வதித்தாள். ஸகலப் பிராணிகளும் ஆஞ்ஜநேயருடைய மூன்றுவது அத்புதமான செயலைக் கண்டு அவரைக் கொண்டாடின.

பிறகு ஹனுமான் மற்ற எவராலும் தாண்டமுடியாத வருணனுக்கு இருப்பிடமான ஸமுத்திரத்தைக் கடந்து ஆகாச மார்க்கத்தில் கருடனைப்போல் அதிவேகமாகப் போனார். அங்கே நீருண்ட மேகங்கள் ஓடிக்கொண்டிருந்தன. பதகர்களும், வித்யாதரர்களும் ஐராவதமென்ற திக்கஜமும் உலாவிக் கொண்டிருந்தார்கள். அது பதகர்களுக்கும், உரகர்களுக்கும் வாஹனங்களான ஸிம்ஹம், யானை, புலி முதலியவைகளாலும் நிர்மலமான விமானங்களாலும் அலங்கரிக்கப்பட்டிருந்தது. வஜ்ராயுதம் இடி முதலியவைகளைப் போன்ற அக்னிகளால் பிரகாசித்தது. புண்ணியகர்மங்களால் ஸ்வர்க்க லோகத்தையடைந்த மஹான்களால் விளங்கிற்று. இவ்வுலகத்தில் ஹோமம் செய்யப்பட்ட ஹவிஸை தேவதைகளுக்குக் கொண்டு போய்க் கொடுக்கும் சித்திரபானு என்ற அக்னிபகவான் ஸஞ்சரிக்கும் வழி அதே. கிரஹங்கள், நக்ஷத்திரங்கள், சந்திரன் முதலியவைகளால் பிரகாசித்தது. மஹரிஷிக் கூட்டங்களும், கந்தர்வர்களும், நாகர்களும், யக்ஷர்களும் கூடுமிடம் தனித்தனியாக வகுக்கப்பட்டது; நிர்மலமானது; எங்கும் பரவியது. விசுவாவஸு முதலிய கந்தர்வர்களுக்கு இருப்பிடம்; மற்றத் திசை யானைகள் விளையாடுமிடம், சந்திர ஸூரியர்கள் செல்லும் வழி; புண்ணியஸ்தலம்; இந்தப் பூலோகத்திற்கு மேல்மெத்தையைப் போன்றது; விஸ்தாரமானது; பிரஹ்மாவால் நியமிக்கப்பட்டது. வீரர்களாலும் வித்யாதர கணங்களாலும் நிறைந்தது. யாதொரு பற்றுமில்லாமல் இந்த வாயுமார்க்கத்தில் ஸகலப் பொருள்களையும் கவனித்துப் பார்த்துக்கொண்டு கருடனைப்போலவும், இறக்கைகளுள்ள மலையைப்போலவும் வாயுபுத்திரன் போனார்.

அப்பொழுது அந்த வழியிலிருந்த ஸிம்ஹிகை என்ற ராக்ஷஸி அவர் ஆகாசத்தில் போவதைக் கண்டு, நினைத்த ரூபத்தை எடுக்கக் கூடியவளானதால் தன் தேகத்தை வளரச் செய்து, இவ்வளவு நாளாக ஆகாரமில்லாத எனக்கு இந்தப் பெரிய ஜந்து வலுவில் வந்து கிடைக்கிறதென்று நினைத்து மாருதியின் நிழலைப் பிடித்திழுத்தாள். அதைப் பார்த்து வாயுபுத்திரன், திடீரென்று யாரோ என்னைத் தடுக்கிறார்கள்; என் பராக்கிரமம் குறைகிறது. ஸமுத்திரத்தில் போகும் பெரும் கப்பலைப் பலமான எதிர்காற்றுத் தாக்கி நிறுத்துவதுபோல் அசையமுடியவில்லை என்று மேலும் கீழும் நான்கு புறங்களிலும் கவனித்துப் பார்த்தார். ஸமுத்திரத்திலிருந்து ஒரு பெரிய ஜந்து எழுந்து நிற்பதைக் கண்டார். உடனே "ஸுக்ரீவனால் சொல்லப்பட்ட அற்புதமான பிராணி அதோ; இந்த விஸ்தாரமுள்ள ஜந்து மஹா வீரியமுள்ளது: நிழலைப் பிடித்திழுக்கும் சக்தியுள்ளது, இதில் ஸந்தேகமில்லை'' என்று நிச்சயித்து மஹாபுத்திமானான மாருதி அவள் ஸிம்ஹிகை என்றறிந்து மழைக்காலத்து மேகத்தைப்போல் தன் சரீரத்தை வளரச் செய்தார். அதைப் பார்த்து அவள் தன் வாயைப் பாதாளத்தைப்போல் திறந்து மேகக்கூட்டங்களைப்போல் கர்ஜித்து ஆஞ்ஜநேயரை விழுங்க வாய் திறந்து ஓடிவந்தாள். அவர் அவளுடைய தேகப் பிரமாணத்தையும், பெரிய முகத்தையும் திறந்த வாயையும், உயிர் நிலையையும் உற்றுப்பார்த்து மஹா பலவானும் வஜ்ராயுதத்தைப் போன்ற வலிமையுடையவருமானதால் தன் தேகத்தைச் சுருக்கிக் கொண்டு அவளுடைய வாயில் புகுந்தார். பர்வகாலத்தில் பூர்ண சந்திரனை ராகு விழுங்குவதுபோல் அவளுடைய வாயில் ஹனுமான் நுழைந்ததை ஸித்த சாரணர்கள் ஆச்சரியத்துடன் பார்த்துக் கொண்டிருந்தார்கள். மனோ வேகத்தையுடைய மாருதி, அவளுடைய உயிர் நிலையைத் தன் கூரான நகங்களால் பிளந்துவிட்டு அவள் வாயை மூடுவதற்குள் அதி வேகமாக வெளிப்பட்டார். தன் பார்வையாலும் தைரியத்தாலும், சாதுரியத்தாலும் இப்படி அவளை வென்று மறுபடியும் முன்போல் தேகத்தை வளர்த்தார். அந்த ஸிம்ஹிகை ஹிருதயம் பிளந்து, கதறிக்கொண்டு ஸமுத்திரத்தில் விழுந்ததைப் பார்த்து, ஆகாசத்தில் ஸஞ்சரிக்கும் பூதங்கள், "மாருதே! பயங்கரமான காரியத்தைச் செய்தீர்; இந்த மஹா பலமுள்ள ஜந்துவை அலக்ஷ்யமாகக் கொன்றீர். நீர் உத்தேசித்த காரியத்தை க்ஷேமமாக முடித்து வாரும். உம்மைப்போல் நுட்பமான பார்வையும் தைரியமும் வஸ்துக்களின் உண்மையை அறியும் புத்தியும் திறமையும் யாருக்குண்டோ அவனே தன் காரியங்களில் வருத்தப்படமாட்டான்'' என்று கொண்டாடினார்கள். ஸுரஸையையும் ஸிம்ஹிகையையும் ஜயித்த சுபசகுனத்தால், தான் உத்தேசித்துப் போகும் காரியம் கைகூடுமென்று ஸந்தோஷமடைந்து, ஹனுமான் கருடனைப்போல் ஆகாசவீதியில் போனார்.



அக்கரைக்கு ஸமீபத்தில் போய் நான்கு பக்கங்களிலும் பார்க்கையில் நூறுயோஜனை தூரத்தின் முடிவில் காடுகள் தோன்றின. ஆகாச மார்க்கத்தில் போய்க்கொண்டிருக்கையில் மரங்களடர்ந்து அழகான லங்கைத் தீவையும் மலய பர்வதத்தைச் சேர்ந்த காடுகளையும், கடலையும் அதன் கரையிலுள்ள சதுப்பு நிலங்களையும், அங்கே வளரும் மரங்களையும், த்ரிகூட மலையிலிருந்து ஆறுகள் ஸமுத்திரத்தில் விழுமிடங்களையும் பார்த்தார். பிறகு பெரியமேகத்தைப்போல் ஆகாசத்தை மறைக்கும் தன் தேகத்தைப் பார்த்து, "நான் இப்படிப்போனால் என் பெரிய தேகத்தையும் வேகத்தையும் ராக்ஷஸர்கள் கண்டு ஆச்சரியமடைந்து என்னை யாரென்று அறிய முயல்வார்கள்'' என்று யோசித்து, மோஹம் தீர்ந்த ஆத்மஞானியைப்போல் தன் தேகத்தை சுருக்கிக்கொண்டு, முன் ரூபத்தை எடுத்தார். அப்போது மஹாவிஷ்ணு த்ரிவிக்ரமாவதார மெடுத்து, பலிச்சக்கரவர்த்தியின் வீர்யத்தை அபகரித்து மறுபடியும் வாமன ரூபியாக நின்றதுபோல் ஹனுமான் விளங்

---

ராவணேசுவரன். லங்கை என்ற பெண்ணிற்குக் கோட்டைச் சுவர்களைத் தாங்கும் கட்டடங்களே இடை; சுத்த ஜலத்தால் நிறைந்த அகழ்களே புது வஸ்திரம்; மதில்களில் வைத்திருக்கும் பீரங்கி, சூலம் முதலிய ஆயுதங்களே தலைமயிர்; மதில்களில் கட்டப்பட்ட யுத்த ஸ்தானங்களே காதில் அணியும் ஆபரணங்கள்; அந்நகரம் விசுவகர்மாவால் அமைக்கப்பட்டது. ஆனால் பார்க்கையில் மனத்தால் ஸ்ருஷ்டிக்கப் பட்டதோ என்று எண்ணும்படி இருந்தது.

பிறகு ஹனுமான் வடக்கு வாசலுக்கருகில் சென்று அந்தப் பட்டணத்தை உற்றுப் பார்த்தார். அது கைலாஸ சிகரத்தைப்போல் வெண்மையாய் ஆகாசத்தை அளாவியிருந்தது. உயர்ந்த வீடுகளைப் பார்க்கையில் ஆகாசத்தில் பறந்து போவதுபோல் காணப்பட்டது. போகவதீ என்ற நகரம் நாகர்களால் காக்கப்படுவதுபோலும், மலைக்குகை ஸர்ப்பங்களால் ரக்ஷிக்கப்படுவதுபோலும், கணக்கில்லாத ராக்ஷஸர்கள் கோரைப்பற்களுடன் பயங்கரமானரூபம்தரித்து, ஆயுதபாணிகளாய் எப்பொழுதும் அதைப் பாதுகாத்து வந்தார்கள். பூர்வத்தில் குபேரனுடைய ராஜதானியான அந்த நகரம் அழகாகக் கட்டப்பட்டு, இப்படிப்பட்டதென்று மனத்தாலும் நினைக்கமுடியாததாக இருந்தது. அதற்கு ஏற்பட்ட அரண்களோ வெகு ஆச்சரியமானவை; மேலும் ஒருவராலும் தாண்டமுடியாத ஸமுத்திரம் அதை நான்கு புறங்களிலும் பாதுகாக்கின்றது; அதை ஆளும் அரசனோ பெயரைக் கேட்டவுடனே எல்லோரும் நடுங்கும்படியான ராவணேசுவரன். இதை எல்லாம் யோசித்து ஹனுமான், "வானர ஸைன்யங்கள் இங்கே வருவது அரிது. அப்படி வந்தாலும் பிரயோஜனப்படாது. தேவதைகள் ஒன்று சேர்ந்தாலும் இந்த லங்கையை முற்றுகையிட்டுப் பிடிப்பது அஸாத்தியம். சத்துருக்கள் ஜயிப்பதற்கரிய அரண்களையுடையதாய், பிரதாப லங்கேசுவரனால் ரக்ஷிக்கப்பட்ட இந்த நகரத்திற்கு ஒருவேளை ராகவன் எப்படியாவது வந்தாலும் அவரால் என்ன செய்ய முடியும்? அஸுர ஸ்வபாவமுள்ள இந்த ராக்ஷஸர்களை ஸாமமென்ற உபாயத்தால் வசப்படுத்த முடியாது; அளவற்ற ஐசுவரியத்தையுடையவர்களை திரவியத்தைக் கொடுத்து வசப்படுத்த முடியுமோ? பலபராக்கிரமங்களால் இறுமாப்புக் கொண்டிருப்பவர்களுக்குள் கலஹம் செய்து அவர்களைக் கெடுக்க முடியாதே. புத்தியிலும் பராக்கிரமத்திலும் சிரேஷ்டர்களானதால் யுத்தத்தில் தோல்வியடையார்கள். அங்கதன் நீலன், ஸுக்ரீவன், நான் இவர்களைத் தவிர மற்ற வானரர்கள் இங்கே வரமுடியாது. இருக்கட்டும்; ஜானகி உயிரோடிருக்கிறாளா இல்லையா என்று தெரிந்துகொள்வோம். பிழைத்திருந்தால் அப்போது இதைப்பற்றி யோசித்துக்கொள்ளலாம்" என்று, ஒரு முகூர்த்தகாலம் அந்த மலைச்சிகரத்தில் உட்கார்ந்து ராமனுடைய



க்ஷேமத்தில் கவலைகொண்டவராய் ஸீதையைக் காணும் உபாயத்தை ஆலோசித்தார்.

"எப்பொழுது லங்கைக்குள் பிரவேசிக்கலாம்? எந்த ரூபத்தை எடுக்கலாம்? இந்த ரூபத்துடன் பிரவேசிப்பதில் பிரயோஜனமில்லை. பலசாலிகளான ராக்ஷஸர்கள் எங்கும் காவலிருக்கிறார்கள்; வெகு குரூரர்கள்; உக்கிரமான தேஜஸ் உடையவர்கள்; மஹா வீரர்கள். இவர்களை ஏமாற்றிப் பிறகு ஸீதையைத் தேட வேண்டும். நான் எடுக்கும் ரூபத்தைப் பிறர் ஸுலபமாய்க் கண்டு பிடிக்கக்கூடாது. ஆனால், நான் செய்ய வேண்டிய காரியத்திற்கு அது அனுகூலமாக இருக்க வேண்டும். பெரிய ரூபத்தை எடுத்தால் ராக்ஷஸர்கள் கண்டு பிடிப்பார்கள். கண்ணிற்குத் தெரியாத ரூபத்தை எடுத்தால் லங்கை முழுவதையும் தேட முடியாது. ராத்திரியில் உள்ளே சென்றால் நான் உத்தேசித்த பெரிய காரியத்தை முடிக்கலாம்" என்று, தேவர்களும் நெருங்க முடியாத அந்த நகரத்தைப் பார்த்து, ஸீதையைத் தேடும் வழியை அடிக்கடி ஆலோசித்தார்.

"துராத்மாவான ராவணனுடைய கண்ணில் படாமல் எப்படி ஜானகியைப் பார்க்க முடியும்? ஸகலமும் அறிந்த ராமனுடைய காரியம் கெடாமலிருப்பதற்கு வழி என்ன? ஒருவரும் இல்லாமல் தனியாக இருக்கையில் ஸீதையைப் பார்க்கும் உபாயம் என்ன? ஹிதமாய் முடியப்போகிற காரியங்களும் விவேகமில்லாத தூதனிடத்தில் அகப்பட்டால், தேச காலத்திற்குத் தகுந்த பிரயத்தனம் செய்யப்படாமல், ஸூரியனைக் கண்ட இருள்போல் நாசமடைகின்றன. இது மாத்திரமா? அரசன் மந்திரிகளுடன் காரியா காரியங்களையும் ஸாதன விரோதிகளையும் தீர்க்காலோசனை செய்துமுடித்துப் பிறகு பகுத்தறிவில்லாத தூதனிடத்தில் ஒப்புவித்தால், அவனுக்குப் புத்திக் குறைவும் அபகீர்த்தியும் நேருமே தவிர, காரியம் கைகூடாது. தூதர்கள் தங்களை மஹா புத்திமான்களென்று நினைத்துக் கொண்டு தங்களை நம்பிவிட்ட காரியங்களைக் கெடுத்து விடுகிறார்கள். ராம காரியம் கெடக்கூடாது; இப்பொழுதே பகலில் லங்கையில் போகலாமா? ராத்திரியில் போவது நலமா? இந்தப் பெரிய ரூபத்துடன் செல்லலாமா? சிறிய ரூபத்தை எடுப்பது நலமா? நான் புத்திஹீனனென்று பெயர் வாங்கக்கூடாது. நான் ஸமுத்திரத்தைத் தாண்டி வந்தது வீணாகக்கூடாது. ராக்ஷஸ ராஜனான ராவணனை நாசம் செய்ய வேண்டுமென்பது எல்லாமறிந்த ராமனுடைய கருத்து; நான் தேடும்போது ராக்ஷஸர்கள் என்னைக் கண்டுவிட்டால் அந்தக் காரியம் கெட்டுவிடும். ராக்ஷஸ ரூபத்தைத் தரித்துக்கொண்டிருந்தாலும் இங்கிருக்கும் ராக்ஷஸர்களுக்குத் தெரியாமல் ஒரு நிமிஷமாவது இருக்க முடியாது. மற்ற ரூபங்களைப் பற்றிச் சொல்ல வேண்டுமோ? ஆகையால் இந்தப் பெரிய ரூபத்துடன் லங்கையில் செல்வது தவறு. வாயு பகவானும் இவர்களுக்குத்

தெரியாமல் இங்கே ஸஞ்சரிக்க முடியாதென்று எண்ணுகிறேன். பலவான்களான ராக்ஷஸர்களுக்குத் தெரியாததும் உண்டோ? இந்த ரூபத்துடன் இங்கே நான் தங்கியிருந்தால் நிச்சயமாகக் கொல்லப் படுவேன்; அப்பொழுது என் பிரபுவின் காரியமும் கெடும். அவருடைய உத்தேசம் கைகூடும் பொருட்டு ராத்திரி காலத்தில் என் ஸ்வய ரூபத்தை மிகவும் சுருக்கிக்கொண்டு லங்கைக்குள் செல்ல வேண்டும். அதுவரையில் எங்கேயாவது மலைக்குகையில் ஒளிந்திருப்பேன். அஸ்தமித்த பிறகு பிறர் நெருங்க முடியாத இந்த ராவணனுடைய ராஜதானியில் புகுந்து ஸகல வீடுகளிலும் தேடி ஸீதையைக் கண்டு பிடிக்கிறேன்" என்று நிச்சயித்து அந்த வானர வீரன், ஸீதையைக் காண ஆவல்கொண்டு ஸூரியாஸ்தமனத்தை எதிர் பார்த்துக் கொண்டிருந்தார்.

ஸூரியன் அஸ்தமித்து ராத்திரியானவுடன், மாருதி தன் தேகத்தைப் பூனையளவிற்குச் சுருக்கிக் கொண்டார். அது பார்ப்பதற்கு ஆச்சரியமாக இருந்தது. பிறகு இரவின் துடக்கத்தில் ஹனுமான் அங்கிருந்து கிளம்பி, அழகாய் அமைக்கப்பட்ட வீதிகளுள்ள அந்த லங்கையில் வேகமாய்ப் புகுந்தார். அது வெள்ளி, தங்கம் இவைகளால் செய்யப்பட்ட தூண்களாலும், தங்கமயமான ஜன்னல்களாலும் அலங்கரிக்கப்பட்ட அரண்மனைக் கூட்டங்களால் கந்தர்வ நகரம்போல் தோன்றிற்று; (நானா ரத்னங்களிழைத்த கோபுரங்களாலும், அரண்மனைகளாலும் விளங்கும் நகரத்தைப்போல் ஆகாசத்தில் காணப்படும் மேகக்கூட்டம் கந்தர்வ நகரம் எனப்படும். அது தோன்றினால் யானை, குதிரை, மனிதர்கள் கணக்கில்லாமல் மடிந்து, பூமி அவர்களின் ரத்தத்தைக் குடிக்குமென்று சாஸ்திரம்). ஏழெட்டு உப்பரிகைகளுள்ள வீடுகள் ஸ்படிகக் கற்களால் அமைக்கப்பட்டு, தங்கவேலை செய்யப்பட்ட தரைகளுடனும் வைடூரியம் முதலிய ரத்தினங்களும், முத்துக்களும் கலந்த மாலைகளுடனும் பிரகாசித்தன. எங்கே பார்த்தாலும் ராக்ஷஸர்களின் வீட்டு வாசல்கள் தங்கத்தால் அலங்கரிக்கப்பட்டு லங்கையை ஜ்வலிக்கச் செய்தன. ஸீதையைக் கண்டு பிடிக்க ஆவல் கொண்ட மாருதி, மனத்தாலும் நினைக்க முடியாததாய், ஆச்சரியகரமாய் விளங்கும் அந்த நகரத்தைக் கண்டு, அதில் பிரவேசிப்பதிலுள்ள கஷ்டத்தால் துக்கத்தையும், அதன் அழகைப் பார்த்து ஆச்சரியத்தையும் அடைந்தார். ஆகாசத்தையளாவும் வெண்மையான விமானங்களாலும், விலையுயர்ந்த ஸுவர்ணத்தால் செய்யப்பட்ட ஜன்னல்கள், வாசற்படிகளாலும் மேன்மை பெற்றுப் பயங்கரமான பலமுள்ள ராக்ஷஸர்களால் சூழப்பட்டு ராவணேசுவரனால் ரக்ஷிக்கப்பட்ட அந்த நகரத்தைப் பார்க்க மாருதிக்கு ஆச்சரியமுண்டாயிற்று. அந்த ஸமயத்தில் சந்திரனும் ஆஞ்ஜநேயருக்கு உதவி செய்பவன்போல், நிலவென்ற மேல்கட்டால் லோகத்தில் பரவி, நக்ஷத்திரக் கூட்டங்களுக்கு நடுவில் அனேகமாயிரம் கிரணங்களுடன் உதித்தான். வலம்புரிச்



சங்கின் காந்தியுடன், பாலையும் தாமரைக் குருத்தையும் போன்ற நிறமுள்ள சந்திரனைப் பார்த்து ஹனுமான், "இவ்வளவு காந்தியுடன் உதிக்கும் இவன் நிர்மலமான தடாகத்தில் ஆனந்தமாய் நீந்தும் ராஜ ஹம்ஸமோ!" என்று நினைத்தார்.

ஶங்க2 ப்ரப4ம் க்ஷீரம்ருணால வர்ணம்
உத்3க3ச்ச2 மாநம் வ்யவபா4ஸமாநம் |
த3த3ர்ஶ சந்த்3ரம் ஸ ஹரிப்ரவீர:
போப்லூய மாநம் ஸரஸீவ ஹம்ஸம் ‖ (58)

---

## ஸர்க்கம் 3

# மாருதி லங்காதேவதையை ஜயித்தது

ஸ லம்ப3 ஶிக2ரே லம்பே3 லம்ப3 தோயத3 ஸந்நிபே4 |
ஸத்வமாஸ்தா2ய மேதா4வீ ஹநூமாந் மாருதாத்மஜ: ‖ (1)

நீருண்ட மேகம் ஆகாச வீதியில் தொங்குவது போலத் தோன்றும் லம்பமென்ற பெயர் பெற்ற ஸுவேல மலையின் மேலிருந்து மஹா புத்திமானான ஹனுமான், லங்கையில் பிரவேசித்துத் தேடுவதற்கு வேண்டிய திறமையை அடைந்து, ராத்திரி காலத்தில் அந்த நகரத்தில் புகுந்தார். அது அழகிய பூஞ்சோலைகள் சூழ்ந்து நீர்வளம் மிகுந்து, சரத்காலத்து மேகங்களையொத்த வீடுகளால் விளங்கிற்று. ஜனங்களுடைய கோஷம் ஸமுத்திரம் கர்ஜிப்பது போலிருந்தது. ஸமுத்திரக் காற்று ஸுகமாய் எப்பொழுதும் வீசிக் கொண்டிருந்தது. குபேரனுடைய அளகாபுரியைப்போல் நன்றாய்ப் போஷிக்கப்பட்ட சதுரங்க பலத்தை உடையது. அழகிய தோரண வாசல்களில் மதயானைகள் கட்டப் பட்டிருந்தன. வெண்மையான தோரண வாசல்கள் அமைக்கப்பட்டிருந்தன. ஸர்ப்பங்களுடைய ராஜதானியான போகவதியைப்போல் நன்றாய் ரக்ஷிக்கப்பட்டது. உயர்ந்த வீடுகளின் உச்சியில் மின்னற் கொடிகள் கொண்ட மேகங்கள் இருந்தன. அவை நக்ஷத்திரமண்டலத்தை அளாவி இருந்தனவன்றோ? காற்று மிருதுவாயும் சுகமாயும் வீசிக்கொண்டிருந்தது. இந்திரனுடைய அமராவதியோ என்று மலைக்கும்படி இருந்தது. பொன்னால் செய்த பெரிய மதிள்சுவரால் சூழப்பட்டிருந்தது. கொடிகளிலும் த்வஜங்களிலும் கட்டப்பட்டிருந்த கிங்கிணிகள் மதுரமாய் சப்தித்துக்கொண்டிருந்தன. இவைகளைப் பார்த்து அடங்காத ஆச்சரியம்கொண்டு, ஹனுமான் தங்கப்பிராகாரத்திற்கு ஸமீபத்தில் சென்றார். தங்கமயமான கதவுகளும், வைடூரியங் களிழைத்த மேடைகளும், நவரத்தினங்களாலும் ஸ்படிகத்தாலும் முத்துக்களாலும் விசித்திரமாய் வேலை செய்யப்பட்ட தரைகளும், உருக்கி ஓடவிட்ட தங்கத்தால் அமைக்கப்பட்ட மதயானைகளும், வைடூரியப் படிக் கட்டுகளுடனும், ஸ்படிகத்தினால் புழுதியற்று பிரகாசிக்கும் வெள்ளி

யால் செய்யப்பட்ட மேல் மாடங்களும், ஆகாசத்தையளாவும் அழகிய ஸபைகளும், கிரௌஞ்சம், மயில், ராஜ ஹம்ஸம் முதலிய பக்ஷிகளும், வாத்தியங்களும், பாட்டும் ஆபரணங்களும் இனிமையாய்ச் சப்திப்பதும், அமராவதியோ என்று பார்ப்பவர்கள் மயங்கும்படி ஆகாசத்தில் பறந்து போவதுபோல் இருப்பதுமான அந்த நகரம் ஆஞ்ஜனேயருக்கு மேலும் ஸந்தோஷத்தையும் ஆச்சரியத்தையும் விருத்தி செய்தது.

விரும்பக்கூடிய ஸகல ஐசுவரியத்தாலும் விளங்கும் அந்த ராக்ஷஸ ராஜதானியைப் பார்த்து, "என்ன ஆச்சரியம்! இந்த லங்கையை எந்தச் சத்துருவாவது கண்ணெடுத்துப் பார்க்கக் கூடுமா? எக்காலத்திலும் ஆயுதபாணிகளாக இதை ரக்ஷிக்கும் ராவண ஸைன்யங்கள் ஸாமான்யமா? குமுதன், அங்கதன், ஸுஷேணன், மைந்தன், த்விவிதன், இவர்களுக்கே இந்த நகரம் தெரிந்திருக்கும்; ஆனால் ஸுக்ரீவனும், குசபர்வனும், கேதுமாலனும், நானுமே இதில் பிரவேசிக்க முடியும்" என்று கவலை கொண்டார். பிறகு ராவணனுடைய பராக்கிரமத்தையும் லக்ஷ்மணனுடைய வீரியத்தையும் நினைத்து அளவற்ற ஸந்தோஷமடைந்தார். லங்கை என்ற ஸ்த்ரீக்கு ரத்தினங்களிழைத்த பிராகாரமே வஸ்திரம்; யானை, குதிரை, பசுக்களிருக்கும் சாலைகளே செவிக்கு ஆபரணங்கள்; மதில்களிலுள்ள ஆயுத சாலைகளே ஸ்தனங்கள்; அந்த நகரத்தில் ரத்தின தீபங்களாலும், ஜ்வலிக்கும் வீடுகளாலும் இருட்டென்பதே தெரியாது.

இப்படி அநேக அற்புதமான காக்ஷிகளைப் பார்த்துக்கொண்டு மாருதி செல்லுகையில், அந்த நகரத்தைக் காக்கும் தேவதை, ஹனுமான் அந்த நகரத்தில் பிரவேசிக்க முயலுவதைக் கவனித்து, விகாரமான ஸ்த்ரீ ரூபத்துடன் அவருக்கெதிரே தோன்றிக் கோரமான குரலுடன், "நீ யார்? காட்டில் வஸிக்கும் குரங்கு இங்கே வந்த காரணமென்ன? உன் பிராணன் போவதற்குமுன் உண்மையைச் சொல். மூடா! குரூர ராக்ஷஸர்கள் இடைவிடாமல் இதைக் காத்து வருகிறார்கள்; ராவணேசுவரன் இதைத் தன்னுயிரைப்போல் ரக்ஷிக்கிறான். நானே இந்த நகரத்தைக் காக்கும் தேவதை; நீ இதற்குள் ஸுலபமாக பிரவேசிக்கலாமென்று வந்தாயோ?" என்று அதட்டினாள். அதற்கு மாருதி, "பெண்ணே! நீ கேட்டதற்கு நிஜமான மறுமொழி சொல்கிறேன். ஆனால் நீ யார்? விகார ரூபத்துடன் இந்த நகரத்து வாசலில் நின்றுகொண்டு என்னைத் தடுத்து ஏன் அதட்டுகிறாய்?" என்றார். லங்காதேவதை தான் கேட்டதற்குப் பதில் சொல்லாமல் தன்னை எதிர்த்துக் கேட்ட ஹனுமானிடத்தில் கோபம்கொண்டு, "கேளடா குரங்கே! ராக்ஷஸராஜனான ராவணேசுவரனுடைய கட்டளைப்படி இந்த நகரத்தை ரக்ஷித்துவருகிறேன். என்னை ஒருவரும் எதிர்க்க முடியாது; என்னை அலக்ஷ்யம் செய்து நீ

Notes : This Blank Page has also to be counted as a another page Number.

It is intentionally left blank after Picture Sketches.!

Released by Maran's Dog ,Toronto, Canada



(Block: By Courtesy of the Bhavan's Journal, Bombay)

தத : ஸம்வர்தயாமாஸ வாமஹஸ்தஸ்ய ஸோங்குலி : ।
முஷ்டிநாபிஜகாநைநாம் ஹநூமாந் க்ரோதமூர்ச்சித : ॥ — ஸு.ஸ-40 சு.

அந்த வானர வீரன் கோபம் கொண்டு, இடிபோல் சிரித்து, ஸ்த்ரீயை வலது கையால் அடிப்பது தனக்குக் குறைவாகையால், இடதுகை விரல்களை மடக்கி அவளைக் குத்தினர். (பக்கம் 31 பார்க்க)

இந்த நகரத்தில் செல்லமுடியுமோ? இதோ உன் உயிரை வாங்குகிறேன் பார். நானே லங்காபுரி; எந்தத்திக்கிலும் இதைக் காத்து வருகிறேன்.'' என்ருள். அதைக்கேட்டு, ஹனுமான் அவளை ஜயிப்பதற்கு வேண்டிய சக்தியை மேற்கொண்டு மஹாபர்வதத்தைப் போல் அசையாமல் நின்று விகாரமான ஸ்த்ரீரூபம் கொண்ட அந்தத் தேவதையை நோக்கி, "இந்த லங்காபுரியையும் இதிலுள்ள வீடுகளையும் அரண்மனைகளையும் கோட்டைகளையும் வனங்களையும் தோட்டங்களையும் சோலைகளையும் நன்ருய்ப் பார்க்கவேண்டுமென்று எனக்கு மிக்க ஆசை உண்டு; அப்படியே என் இஷ்டப்படி ஸகல ஆச்சரியங்களையும் பார்க்க வந்திருக்கிறேன்'' என்று மறுமொழி சொன்னர். உடனே லங்காதேவதை, "மூடா! என்னை ஜயித்தாலல்லவா நீ இந்தப் பட்டணத்தில் புக முடியும்'' என்று கடுமையாய் அதட்டினள். அதற்கு ஹனுமான், "பெண்ணே! இருக்கட்டும்; இந்த நகரத்தை நன்ருகச் சுற்றிப்பார்த்துவிட்டுத் திரும்பிப்போக நிச்சயித்திருக்கிறேன்'' என்று சாந்தமாய்ப் பதில் சொன்னர்.

உடனே அந்த நகரதேவதை பயங்கரமாய்க் கர்ஜித்து, ஆஞ்ஜனேயரை ஓங்கி அறைந்தாள். அந்த வானரவீரன் கோபம்கொண்டு, இடிபோல் சிரித்து, ஸ்த்ரீயை வலதுகையால் அடிப்பது தனக்குக் குறைவாகையால், இடதுகை விரல்களை மடக்கி அவளைக் குத்தினர்; அதே காரணத்தால் அவளிடத்தில் மிகவும் கோபிக்கவில்லை. அந்தக் குத்தைத் தாங்கமுடியாமல் அந்த ராக்ஷஸி தேகம் கலங்கி, விகாரமான முகத்தையும், கண்களையும் உடையவளாய்ப் பூமியில் விழுந்தாள். அதைப்பார்த்து ஹனுமான் அவள் ஸ்த்ரீஎன்பதை நினைத்து, இரக்கம்கொண்டார். அப்பொழுது லங்காதேவதை பயத்தால் நடுங்கி வார்த்தைகள் குளற கர்வமழிந்து, "வானர சிரேஷ்டா! கிருபைசெய்யும்; மஹானுபாவா! என்னைக் காப்பாற்றும். தைரியம் பலம் முதலிய உத்தம குணங்களையுடைய வீரர்கள் ஸ்த்ரீகளைக் கொல்வதில்லை. நானே இந்த லங்காபுரி; உமது பராக்கிரமத்தால் இன்று ஜயிக்கப்பட்டேன். வேருெரு விஷயம் சொல்லுகிறேன், கேளும்; இது ஸத்தியம், முன்காலத்தில் பிரஹ்மதேவர் என்னைப் பார்த்து, "எந்த ஸமயத்தில் ஒரு வானரன் உன்னைப் பராக்கிரமத்தால் ஜயிப்பானே, அப்பொழுது ராக்ஷஸகுலத்திற்குப் பெரிய பயம் நேரும்'' என்று வரம் கொடுத்திருக்கிருர். இன்று உம்மைப் பார்த்தால் அந்தஸமயம் வந்துவிட்டதென்று தோன்றுகிறது. பிரஹ்மாவின் வார்த்தைக்கு இரண்டுண்டோ? துராத்மாவான ராவணனும், ஸமஸ்த ராக்ஷஸர்களும், ஸீதையின்பொருட்டு மடியும் காலம் ஸமீபத்திலிருக்கிறது. வானரோத்தம! ராவணனுல் ரக்ஷிக்கப்பட்ட இந்த லங்கையில் உமது இஷ்டப்படி பிரவேசித்து, வேண்டிய காரியங்களைச் செய்யும். அனேக சாபங்களால் கொளுத்தப்பட்ட

இந்நகரில் பிரவேசியும்; இந்த ராக்ஷஸ ராஜதானியில் உமது இஷ்டப்படி ஸகலவிடங்களிலும் ஸீதையைத் தேடும்'' என்றாள்.

ப்ரவிஶ்ய ஶாபோபஹதாம் ஹரீஶ்வர:
புரீம் ஶுபா4ம் ராக்ஷஸ ராஜபாலிதாம் |
யத்3ருச்ச2யா த்வம் ஜநகாத்மஜாம் ஸதீம்
விமார்க3 ஸர்வத்ர க3தோ யதா2ஸுக2ம் || (52)

## ஸர்க்கம் 4

## மாருதி லங்கையில் ஸீதையைத் தேடினது

ஸ நிர்ஜித்ய புரீம் ஶ்ரேஷ்டா2ம் லங்காம் தாம் காமரூபிணீம் |
விக்ரமேண மஹாதேஜா ஹநுமாந் கபிஸத்தம: || (1)

மஹா தேஜஸுள்ள அந்த வானர வீரன், தன் பராக்கிரமத்தால் ஸகல ரூபங்களையும் எடுக்கக்கூடிய லங்காதேவதையை வென்று, "சத்துருக்களை ஜயிக்க விரும்புகிறவன் அவனுடைய பட்டணத்திலாவது கிராமத்திலாவது வீட்டிலாவது நுழையும் போது, வழியில்லாத இடத்தால் பிரவேசிக்க வேண்டியது" என்ற நீதிசாஸ்திரப்படி, மதிள்சுவரில் வாசலில்லாத இடத்தில் தாண்டிச் சென்று, ராக்ஷஸர்களுடைய தலையில் அடிவைத்து மிதிப்பதுபோல தனக்கு அளவற்ற ஜயம் கிடைக்கவேண்டுமென்று தன் இடது பாதத்தை முதலில் வைத்து லங்கையில் பிரவேசித்தார்.

பரிமளமுள்ள புஷ்பங்கள் தூவிய ராஜவீதிவழியாய் அந்த நகரத்தை நான்குபுறங்களிலும் சுற்றிப்பார்க்கையில், ஜனங்கள் ஸந்தோஷமாகச் சிரிக்கும் சப்தமும், வாத்தியகோஷமும் எங்கும்நிறைந்திருந்தது. வஜ்ராயுதத்தைப்போலும் மாவெட்டியைப்போலும் கட்டப்பட்ட வீடுகள் நவமணிகளிழைத்த ஜன்னல்களுடன் ஆகாசத்தில் மேகக்கூட்டங்கள்போல் பிரகாசித்தன. பத்மம் ஸ்வஸ்திகம் வர்த்தமானமென்ற பலவித கிருஹங்கள், ஸமஸ்த அலங்காரங்களுடன் வெண்மையான மேகங்களைப்போல் லங்கையை பிரகாசிக்கச் செய்தன. ஸுக்ரீவனுக்கும் ராமனுக்கும் ஹிதத்தைச் செய்யப் புகுந்த வானரவீரன், விசித்திரமாலைகளால் அலங்கரிக்கப்பட்ட லங்கையைச் சுற்றிப்பார்த்து, "ஒருவராலும் பிரவேசிக்கமுடியாத இந்த நகரத்தில் ஸுலபமாக நுழைந்து, எங்கும் தாராளமாக நான் ஸஞ்சரிக்கிறபடியால் என் பிரபுக்களின் காரியம் அவசியம் கைகூடும் என்பதற்கு இதே சகுனம்" என்று ஸந்தோஷித்தார். வீடுவீடாகத் தேடிக் கொண்டுபோகையில், அநேகவிதமாய் அமைக்கப்பட்ட மாடமாளிகைகளைக் கண்டார். மார்பு கழுத்து தலை என்ற மூன்று ஸ்தானங்களிலிருந்து உண்டான மந்த்ரம் மத்யம் தாரமென்ற ஸ்வரங்களால் விளங்கும் மதுரமான கானத்தை மதம் கொண்ட ஸ்த்ரீகள் பாடிக்கொண்டிருந்தார்கள்; அதைக்கேட்ட



மாருதி ஸ்வர்க்கத்தில் அப்ஸரஸ்கள் பாடுகிறார்களோ என்று பிரமித்தார். பிரபுக்களுடைய வீடுகளில், ஸ்த்ரீகளின் கால் சிலம்புகளும் அரைநூல் மாலைகளும் மதுரமாய்ச் சப்திப்பதும், காலில் தரிக்கும் ஆபரணங்கள் மாடிப்படிகளில் படுவதாலுண்டாகும் சப்தமும் கேட்கப்பட்டன. சில வீடுகளில் வீரர்கள் தோள்தட்டி ஸிம்ஹநாதம் செய்துகொண்டிருந்தார்கள். சில வீடுகளில் ராக்ஷஸர்கள் வேதாத்யயனம் செய்துகொண்டிருந்தார்கள். சிலர் மந்திரங்களை ஜபித்துக்கொண்டிருந்தார்கள். சிலர் ராவணனுடைய கீர்த்தியைப் புகழ்ந்து கர்ஜித்தார்கள். அளவற்ற ராக்ஷஸ ஸைன்யங்கள் ராஜமார்க்கத்தைச் சுற்றித் தங்கியிருந்தன. மந்திரி பிரதானிகள், நகரத்திலுள்ளவர்களின் ரஹஸ்ய விருத்தாந்தங்களை அறிவதற்காக அனுப்பிய அனேக தூதர்கள் லங்கையின் நடுவிலிருந்த ஸைன்யங்களுக்குள் ஸஞ்சரித்துக்கொண்டிருந்தார்கள்; யாகதீக்ஷைபூண்டவர்களும், நீண்ட ஜடைகளைத் தரித்த தபஸ்விகளும், விரதங்களை முடித்து க்ஷவரம் செய்துகொண்டவர்களும், அல்பமந்திரங்களை ஸித்திசெய்வதற்காகப் பசுவின் தோலைத் தரித்தவர்களும், வஸ்திரமில்லாத திகம்பரஸன்யாஸிகளும், ஸகல சத்துருக்களையும் இடையூறுகளையும் நாசம்செய்வதற்குத் தர்ப்பைக்கட்டுகளையே ஆயுதமாக உடையவர்களும், கோரமான கிருத்யை சக்தி முதலியவைகளை ஸிருஷ்டித்து சத்துருக்களைக் கொல்வதற்கு எப்பொழுதும் ஹோமங்களைச் செய்துகொண்டிருப்பதால் ஹோமகுண்டத்தையே ஆயுதமாக உடையவர்களும் அங்கங்கே காணப்பட்டார்கள். ஸகலவித ஆயுதங்களைத் தரித்தவர்களும், ஒற்றைக்கண்ணுள்ளவர்களும், ஒற்றைக் காதுள்ளவர்களும், பெரும்வயிறு மார்பு இவைகளை உடையவர்களும், கோரரூபமுள்ளவர்களும், வளைந்த முகத்தையுடையவர்களும், நெட்டையானவர்களும், குள்ளர்களும், வில் கத்தி பீரங்கி இரும்புலக்கை முதலிய ஆயுதங்களை உடையவர்களும், விசித்திர கவசங்களுள்ளவர்களும், மிகவும் பருக்காதவர்களும், மிகவும் இளைக்காதவர்களும், மிகவும் உயரமில்லாதவர்களும், மிகவும் குட்டையாயிராதவர்களும், அதிகம் வெண்மையாக இல்லாதவர்களும், அதிகம் கறுப்பாக இல்லாதவர்களும், அதிகக் கூனலாயும் அதிகக் குள்ளமாயும் இல்லாதவர்களும், விகாரரூபமுள்ளவர்களும், மேன்மையான காந்தியுள்ளவர்களும், த்வஜம், கொடி, சக்தி, கத்தி, பாசம் முதலியவைகளைத் தரித்தவர்களும், திவ்யசந்தனம் மாலைகள் ஆபரணங்களால் அலங்கரிக்கப்பட்டு பலவேஷங்களுடன் ஸ்வேச்சையாய் ஸஞ்சரிப்பவர்களும், கூர்மையான சூலங்களையும் வஜ்ரங்களையுமே ஆயுதமாயுடையவர்களும், ஆயுதமில்லாமலேயே யுத்தம் செய்யும் மஹாபலவான்களும், நடுக்கோட்டையில் எண்ணிக்கையில்லாமல் அணிவகுத்திருக்கும் ராவணனுடைய மூலபல ஸேனைவீரர்களும் ஆஞ்ஜனேயரால் பார்க்கப்பட்டார்கள்.

பிறகு விலையுயர்ந்த ஸுவர்ணத்தால் அலங்கரிக்கப்பட்ட தோரணத்தையுடைய ராவணனுடைய அரண்மனை காணப்பட்டது. அது திரிகூடசிகரத்தில் கட்டப்பட்டு தாமரைகள் நிறைந்த ஆழமான அகழ்களாலும், ஆகாசத்தை அளாவிய மதில்களாலும் சூழப்பட்டது. தேவலோகத்தைப்போல் தேவர்கள் வஸிக்கத்தகுந்ததாய் திவ்விய நாதங்களாலும், குதிரைகள் கனைப்பதாலும், யானைகள் வீறிடுவதாலும், ஆபரணசப்தங்களாலும், பல்லக்கு முதலிய வாஹனங்களாலும், விமானங்களாலும், லக்ஷணங்கள் பொருந்திய உத்தம அசுவங்களாலும், வெண்மையான மேகங்களையொத்த நான்கு தந்தங்களுள்ள கஜங்களாலும், மதங்கொண்ட மிருகங்களாலும், பக்ஷிகளாலும் விளங்கிற்று. அனேகமாயிரம் கோரமான ராக்ஷஸர்கள் வாசலில் ஜாக்கிரதையாகப் பாதுகாத்துக் கொண்டிருந்தார்கள். இவ்விதமான ராக்ஷஸாதிபதியின் கிருஹத்தில் வாயுபுத்திரன் பயமில்லாமல் நுழைந்தார். விலையுயர்ந்த பொன் தங்கம் ஸுவர்ணம் முதலியவைகளால் செய்யப்பட்ட உன்னதமான சுவர்களாலும், நவரத்தினங்களிழைத்த விடுதிகளாலும், வைரமேறின அகில் சந்தனம் முதலிய பரிமளங்களாலும் விளங்கும் ராவணனுடைய அந்தப்புரத்தில் மாருதி பிரவேசித்தார்.

ஸ ஹேம ஜாம்பூ³நத³ சக்ரவாலம்
மஹார்ஹ முக்தாமணி பூ⁴ஷிதாந்தம் |
பரார்த்⁴ய காலாக³ரு சந்த³நாக்தம்
ஸ ராவணாந்த: புர மாவிவேஶ || (30)

## ஸர்க்கம் 5

## சந்திரோதய வர்ணனை

தத: ஸ மத்⁴யம்க³த மம்ஶுமந்தம்
ஜ்யோத்ஸ்நா விதாநம் மஹது³த்³வமந்தம் |
த³த³ர்ஶ தீ⁴மாந் தி³வி பா⁴நுமந்தம்
கோ³ஷ்டே² வ்ருஷம் மத்தமிவ ப்⁴ரமந்தம் || (1)

பிறகு அளவற்ற காந்தியுள்ள சந்திரன் ஸகல திக்குகளிலும் நிலவை வியாபிக்கச் செய்துகொண்டு, பசுக்களின் மந்தையில் ஸ்வேச்சையாக உலாவும் மதம்கொண்ட காளையைப்போல் ஆகாசத்தின் நடுவில் பிரகாசிப்பதை மஹாபுத்திமானை மாருதி கண்டார். ஸகல பிராணிகளுக்கும் ஆனந்தத்தைக் கொடுப்பதால் சந்திரன் பாபங்களுடைய பலனை துக்கத்தை நாசம் செய்பவர்; ஸமுத்திரங்களைப் பொங்கச்செய்பவர். ஸகல பிராணிகளையும் விளங்கச்செய்பவர். இவ்விதமான சந்திரன் ஆகாசவீதியில் சென்று கொண்டிருப்பதை ஹனுமான் கண்டார்.



லோகத்தில் மந்தரபர்வதமும், பிரதோஷகாலத்தில் ஸமுத்திரமும், தடாகங்களில் செந்தாமரையும், மிகுந்த காந்திபெற்று விளங்குவதுபோல், சந்திரனிடத்தில் காந்தியும் தேஜஸும் விசேஷமாய் விளங்கின. நிலாவினால் வெளுத்த ஆகாசத்தில் ஸஞ்சரிப்பதால் வெள்ளிக்கூட்டில் விளையாடும் ராஜஹம்ஸத்தைப் போலும், வெண்மையான மந்தரகிரியின் குகையிலிருக்கும் ஸிம்ஹத்தைப் போலும், கறுத்த மதயானைமேலிருக்கும் யுத்தவீரனைப்போலும், சந்திரன் ஆகாசத்தில் பிரகாசித்தான். கூர்மையான கொம்புகளையுடைய காளையைப்போலும், மஹாபர்வதத்தின் வெண்மையான சிகரத்தைப்போலும், தங்கப்பூண் கட்டின தந்தங்களுள்ள மதயானையைப்போலும், சந்திரன் ஸகல கலைகளுடன் விளங்கினான். பனித்துளிகளென்ற சேறு நீங்கி, தன் தேஜஸால் சுக்கிரன் பிருஹஸ்பதி முதலிய கிரஹங்களை மறைத்ததால் சுத்தமாய் பிரகாசித்து, மிகவும் வெளுத்திருப்பதால் தன் களங்கம் நன்றாய் வெளிப்பட, சந்திரன் ஒப்பில்லாத மஹிமையுடன் காணப்பட்டான். குகைக்கு வெளியிலுள்ள கற்பாறையில் உட்கார்ந்திருக்கும் ஸிம்ஹத்தைப்போலும், பெரிய யுத்தகளத்தில் ஸஞ்சரிக்கும் மதயானையைப்போலும், ராஜ்யாபிஷேகம் பெற்ற அரசனைப்போலும் சந்திரன் பிரகாசித்தான்.

மிகுந்த காந்தியுடன் சந்திரன் உதித்ததால் இருள் நீங்கிற்று; மாம்ஸத்தைப் புஜிக்கும் ராக்ஷஸர்கள் வெளியில் ஸஞ்சரிக்க ஆரம்பித்தார்கள்; அழகிய ஸ்த்ரீகள் கோபம் கர்வம் முதலியவைகளை விட்டார்கள்: ஸ்வர்க்கத்தைப்போல் ஸகலவிதமான ஆனந்தத்திற்கும் காரணமான காலமும் ஸமீபித்தது. வீணை முதலிய வாத்தியங்களின் நாதம் மதுரமாய்க் கேட்டது; பதிவிரதைகள் தங்களுடைய நாயகர்களுடன் நித்திரை செய்தார்கள். ராத்திரியில் ஸஞ்சரிக்கும் ஜந்துக்களும் ராக்ஷஸர்களும் ஆச்சரியகரமான குரூரஸ்வபாவத்துடன் விளையாட ஆரம்பித்தார்கள். ராக்ஷஸர்களுடைய கிருஹங்களிலுள்ள ஜனங்கள் மதுபானத்தால் மயங்கிச் செய்யும் தொழில்களை மறந்தார்கள். யானை குதிரை ரதம் முதலிய வாஹனங்களும் ஆஸனங்களும் நிறைந்திருந்தன. வீரலக்ஷ்மி எங்கும் விளங்கிற்று.

வீடுகளில் சிலர் ஒருவருக்கொருவர் பரிஹாஸம் செய்துகொண்டிருந்தார்கள்; சிலர் நீண்டு பருத்த கைகளை ஒருவர்மேலொருவர் போட்டார்கள்; குடிமயக்கத்தால் சிலர் பிதற்றினார்கள்; சிலர் ஒருவரையொருவர் அதட்டினார்கள். சிலர் வீரவாதம்செய்து மார்பு தட்டினார்கள்; சிலர் கைகால்களைத் தங்கள் நாயகிகள்மேல் போட்டார்கள்; சிலர் அவர்களின் பிரீதியை ஸம்பாதிக்கும் பொருட்டு அனேக வேஷங்களைத் தரித்தார்கள். சிலர் பெரிய வில்லுகளை எடுத்து நாணேற்றினார்கள்; சில ஸ்த்ரீகள் நேர்த்தியான பரிமளத்திரவியங்களைப் பூசிக்கொண்டார்கள்; சிலர் அயர்ந்து நித்திரை

செய்து, விழித்துக்கொண்டு நாயகனுடன் கூடி, மறுபடியும் தூங்கினர்; சில ரூபவதிகள் நாயகர்களுடன் ஸுகமனுபவித்து ஸந்தோஷமாகச் சிரித்து விளையாடிக்கொண்டிருந்தார்கள்; சிலர் புருஷனிடத்தில் கோபம்கொண்டு பெருமூச்சு விட்டார்கள். மேகங்களைப்போல் கர்ஜிக்கும் யானைகளாலும், பிறரால் கொண்டாடப்பட்ட நல்லொழுக்கமுள்ளவர்களாலும், தங்களுக்கு எதிரிகள் கிடைக்காததால் பெருமூச்சுவிடும் வீரர்களாலும், அந்த லங்காபுரி மஹாஸர்ப்பங்கள் சீறிக்கொண்டிருக்கும் பெரிய மடுவைப்போல் விளங்கிற்று.

மேன்மையான புத்தியுடையவர்களையும், பிரியமாய் பேசுகிறவர்களையும், ஆஸ்திக புத்தியுள்ளவர்களையும், லோகத்தில் விசேஷ கீர்த்திபெற்றவர்களையும், பலவித ரூபங்களையும் ஆசாரங்களையுமுடையவர்களையும், அழகான பெயரையுடைய அனேக ராக்ஷஸர்களையும் மாருதி பார்த்துக்கொண்டே சென்றார். அழகிய ரூபமுடையவர்களையும், பலவித குணங்களையுடையவர்களையும், தங்களுடைய குணங்களுக்குத் தகுந்த ரூபத்தையுடையவர்களையும், சிலஸ்த்ரீகள் தேக காந்தியால் எங்கும் பிரகாசிக்கச் செய்வதையும் சிலர் அழகில்லாமல் குரூபிகளாயிருப்பதையும் கண்டார். விவாஹப் பருவத்தை அடைந்திருப்பவர்களையும், கபடமில்லாத சுத்தஸ்வபாவமுடையவர்களையும், மஹாபதிவிரதைகளையும், நாயகனிடத்திலும் மதுபானத்திலும் ஆசைகொண்டவர்களையும், மஹிமையுள்ள நக்ஷத்திர கணங்களைப்போன்ற ராக்ஷஸ ஸ்த்ரீகளையும் கண்டார். தேக காந்தியால் ஜ்வலிப்பவர்களையும், வெட்கம் மேற்கொண்டவர்களையும், ஸந்தோஷம் மேலிட்டவர்களையும், ராத்திரிகாலத்தில் புஷ்பத்தால் மூடப்பட்ட பெண்பக்ஷியைப்போல் நாயகனை ஆலிங்கனம் செய்துகொண்டு தூங்குகின்றவர்களையும் பார்த்தார். வேறு சில தர்மபுத்தியுள்ள பத்தினிகள் பர்த்தாக்களுடைய பிரீதிக்குப் பாத்திரமாய், அவர்களிடத்தில் ஆசைகொண்டு, மாளிகையின்மேல் நிலவில் அவர்களுடைய மடியில் உட்கார்ந்திருப்பதையும் கண்டார். மேற்போர்வை விலகித் தூங்கும் சில பெண்கள் தங்கக்கொடிகள் போலும், சிலர் உருக்கியோடவிட்ட உத்தமமான தங்கப்போலும் கணவனைவிட்டுப் பிரிந்த சிலர் வெளுத்த சந்திரனைப்போலும் காணப்பட்டார்கள். சிலர் தங்களுடைய ஆசை நாயகர்களைத் தேடிச்சென்று, அவர்களுடன் ஆனந்தமாக அனுபவிப்பதையும் பார்த்தார். பூர்ண சந்திரனைப்போல பிரகாசிக்கும் முகங்களையும், வளைந்த இமைகளால் அலங்கரிக்கப்பட்ட நேத்திரங்களையும், மின்னற்கொடிபோன்ற ஆபரணங்களையும் பார்த்தார். ஆனால் நிகரில்லாத ரூபவதியாய், தர்மமார்க்கத்தைவிட்டு நழுவாத ஜனக மஹாராஜ புத்திரியாய்ப் பிறந்து, நன்றாக வளர்ந்து புஷ்பங்களால் விளங்கும் கொடியைப்போல் லாவண்யமுடையவளாய், லோகநாதனை ராமனுக்குத் தகுந்த அற்புதரூபத்துடன் அவதரித்த ஸீதையை



மாத்திரம் காணவில்லை. அனாதிகாலமாயுள்ள பதிவிரதாதர்மத்தை அனுஷ்டித்து, ராமனைப் பார்க்காமல் உயிரை வைத்துக்கொள்வதில்லை என்று நிச்சயித்து, அவரிடத்தில் நீங்காத ஆசைகொண்டவளாய், அவருடைய மனத்திலேயே குடிபுகுந்தவளாய், உத்தம ஸ்த்ரீகளுக்குச் சிரோமணியாய் விளங்கும் ஜானகியை மாத்திரம் காணவில்லை. விரஹாக்னியால் கொளுத்தப்பட்டு, இடைவிடாமல் பெரும் கண்ணீர் நெஞ்சையடைக்க, முன், ராமனுடன் ஸுகமாய் வஸிக்கும்பொழுது விலையுயர்ந்த ஹாரங்களை அணிந்து, அழகான இமையுடையவளாக, குயில்போன்ற மதுரத்வனியுடன், வனத்தில் மேகத்தைக் கண்டு ஆனந்தத்தால் தோகையை விரித்தாடும் மயிலைப்போன்ற ஸீதையை மாத்திரம் காணவில்லை. மங்கின கிரணங்களை உடைய சந்திரனைப்போல் இளைத்து, புழுதி மூடின தங்கப்பிரதிமைபோல் அழுக்கடைந்து, அம்பு பாய்ந்த காயம் மேலே மாத்திரம் ஆறி, உள்ளே அம்பும் புண்ணும் இருந்து உபத்திரவிப்பதுபோல் ஹிருதயத்தில் துக்கமென்ற நெருப்பு எரிக்க, பெருங்காற்றாலடிக்கப்பட்டுச் சிதறின மேகக்கூட்டத்தைப்போல் தன் எண்ணங்களெல்லாம் பாழான ஸீதையை மாத்திரம் பார்க்கவில்லை. நெடுநேரம் தேடியும், லோகநாதனும் பேசும் திறமையுள்ளவர்களுக்குள் சிரேஷ்டருமான ராமனுடைய தர்மபத்தினியைக் காணாமல் புத்தி மயங்கினவன்போல் மிகுந்த கவலைகொண்டார்.

ஸீதாமபஶ்யந் மநுஜேஶ்வரஸ்ய
ராமஸ்ய பத்நீம் வத$^{3}$தாம் வரஸ்ய |
ப$^{3}$பூ$^{4}$வ து$^{3}$க்கா$^{3}$பி$^{4}$ஹதஶ் சிரஸ்ய
ப்லவங்க$^{3}$மோ மந்த$^{3}$ இவாசிரஸ்ய || (27)

---

## ஸர்க்கம் 6

# மாருதி பிரபுக்களுடைய வீடுகளில் தேடியது

ஸ நிகாமம் விமாநேஷு விஷண்ண : காமரூபத்$^{4}$ருக் |
விசசார கபிர் லங்காம் லாக$^{4}$வேந ஸமந்வித: || (1)

தேஜஸ்வியும் விரும்பிய வடிவம் தாங்கும் சக்தியுடையவருமான மாருதி, விமானங்களின்மேல் சற்றுநேரம் ஒன்றும் தோன்றாமல் உட்கார்ந்திருந்து, பிறகு தைரியம் கொண்டு மறுபடியும் லங்காபுரியில் ஜாக்கிரதையாய்த் தேட ஆரம்பித்து ராவணேசுவரனுடைய அரண்மனைக்கு வந்து சேர்ந்தார். அது ஸூரியனைப்போல் காந்தியுள்ள மதிள்சுவர்களால் சூழப்பட்டு, ஸிம்ஹங்கள் பெரும்காட்டைக் காப்பதுபோல் கோரமான ராக்ஷஸர்களால் ரக்ஷிக்கப்பட்டிருந்தது. விசித்திரமான வெள்ளித்தோரணங்கள் தங்கவேலை செய்யப்பட்டு வாசலில் விளங்கின. அழகிய அறைகளும் வாசற்படிகளும் அமைக்கப்பட்டிருந்தன. கணக்கில்லாத

யானைவீரர்களும் சோர்வில்லாத காலாள்வீரர்களும், கொல்ல முடியாத உத்தமமான போர்க்குதிரைகளும், ரதவீரர்களும் அதை இமைகொட்டாமல் காத்துக்கொண்டிருந்தார்கள். தங்கம், வெள்ளி, தந்தம் முதலியவைகளால் அலங்கரிக்கப்பட்டு ஸிம்ஹம், புலி முதலியவைகளின் தோல்களால் பரப்பப்பட்டு, மேகங்களைப்போல சப்திக்கும் உத்தமரதங்கள் எப்பொழுதும் ஸஞ்சரித்துக்கொண்டே இருந்தன. நாநாரத்னங்களாலும், உத்தமமான ஆஸனங்களாலும், பாத்திரங்களாலும் நிறைந்திருந்தது. சிறந்த மஹாரதர்களாலும் மஹாரதங்களின் சப்தத்தாலும் விளங்கிற்று. அனேகமாயிரம் அபூர்வமான அழகிய மிருகங்களும பக்ஷிகளும் அவைகளுக்குத் தகுந்தபடி வளர்க்கப்பட்டு நாற்புறங்களிலும் ஸஞ்சரித்துக் கொண்டிருந்தன. நன்ருய்ப் பழக்கப்பட்ட எல்லைக் காப்போர்களும் ராக்ஷஸர்களும் தங்கள் உயிரைப்போல் அதைப் பாதுகாத்துக் கொண்டிருந்தார்கள். அழகிய ஸ்த்ரீகளால் எங்கும் நிறைந்து, அவர்களுடைய ஸந்தோஷத்வனியாலும் அவர்கள் தரித்த சிரேஷ்டமான ஆபரணங்களின் சப்தத்தாலும் ஸமுத்திரம் பொங்கிக் கர்ஜிப்பதுபோலிருந்தது. அரசர்களுக்குத் தகுந்த ஸகல பதார்த்தங்கள் நிறைந்து, சந்தனம், அகில் முதலிய வாசனைத்திரவியங்களால்பரிமளித்து, ஸிம்ஹங்கள்மிகுந்த பெருங்காட்டைப்போல் மஹாஜனங்களால் அலங்கரிக்கப்பட்டிருந்தது. அங்கே பேரிகை, மிருதங்கம், சங்கம் முதலிய வாத்தியங்கள் எப்பொழுதும் முழங்கிக்கொண்டிருந்தன; பிரதிதினமும் கந்தம் புஷ்பம் தூபம் முதலியவைகளால் பூஜைசெய்யப்பட்டது; அமாவாஸ்யை பௌர்ணிமை முதலிய பருவகாலங்களில் அங்கே ஹோமங்கள் விதிப்படி நடக்கும்; ராக்ஷஸர்கள் தங்கள் பிரபுவின் கிருஹமென்று அதைப் பூஜித்துவந்தார்கள். ஸமுத்திரத்தைப்போல் கம்பீரமாய் சத்தமில்லாமலும் இருந்தது. விலையுயர்ந்த ரத்னங்களிழைத்த பாத்திரங்களும் ஆபரணங்களும் எங்கும் காணப்பட்டன. இப்படி காந்திமிகுந்த யானை குதிரை ரதங்களால் நிறைந்து பிரகாசிக்கும் அந்த அரண்மனையைப் பார்த்துஆஞ்ஜனேயர் இது லங்கைக்குப் பூஷணமென்றே நினைத்து ஆச்சரியமடைந்தார். ராவணனுடைய கிருஹத்தின் ஸமீபத்தில் சென்று, ராக்ஷஸர்கள் வஸிக்கும் வீடுகளையும் தோட்டங்களையும் ஒவ்வொன்ருய் பார்த்துக்கொண்டு சிறிதும் பயமில்லாமல் உப்பரிகைகளில் ஸஞ்சரித்தார்.

இப்படி வெளிப்பிராகாரத்திற்குள் பிரதானராக்ஷஸர்களும் ராவணனுடைய புத்திரர்களும் ஸஹோதரர்களும் வஸிக்கும் வீடுகளில் தேடிப்பார்த்து, பிரஹஸ்தன் மஹாபார்சுவன் கும்பகர்ணன் விபீஷணன் மஹோதரன் விரூபாக்ஷன் வித்யுஜ்ஜிஹ்வன் வித்யுன்மாலி வஜ்ரதம்ஷ்ட்ரன் சுகன் ஸாரணன் இந்திரஜித் ஜம்புமாலி ஸுமாலி ரச்மிகேது ஸூரியசத்ரு வஜ்ரகாயன் தூம்ராக்ஷன் ஸம்பாதி வித்யுத்ரூபன் கனன் விகனன் சுகநாஸன் வக்ரன் சடன் விகடன் ஹ்ரஸ்வகர்ணன் தம்ஷ்ட்ரன் ரோமசன் யுத்தோன்மத்தன் மத்தன் த்வஜக்ரீவன் நாதி இந்த்ரஜிஹ்வன் ஹஸ்திமுகன் கராளன் பிசாசன் சோணிதாக்ஷன் முதலியவர்களுடைய வீடுகளை ஒவ்வொன்ருய் தேடினுர். அங்கங்கே அந்த பாக்கியசாலிகள் அனுபவிக்கும் அளவற்ற ஐசுவரியங்களைக் கண்டு ஆச்சரியப்பட்டார்.



அவைகளைத் தாண்டி ராவணனுடைய அரண்மனைக்கு வந்து பார்க்கையில், அங்கே அந்தப்புரத்துவாசலைக்காக்கும் கோரதிருஷ்டியுள்ள ராக்ஷஸிகள் அரசனுக்கருகில் முறைவைத்துக் காத்துக் கொண்டிருந்தார்கள். சில ராக்ஷஸிகள் சூலம் சக்தி முதலிய அனேக ஆயுதங்களைத் தரித்து நின்ருர்கள்; அங்கங்கே பல ராக்ஷஸ ஸைன்யங்கள் அணிவகுக்கப்பட்டிருந்தன. பருத்த சரீரமுள்ள அனேக ராக்ஷஸர்கள் ஸகலாயுதபாணிகளாய்க் காத்துக்கொண்டிருந்தார்கள்; வாயுவேகமுள்ள அனேகம் சிவப்புக் குதிரைகளும், வெள்ளைக்குதிரைகளும் அங்கே கட்டப்பட்டிருந்தன; உத்தமஜாதியில் பிறந்த அநேக யானைகள், வர்ஷிக்கும் மேகங்களைப்போலும் நீர்த்தாரைகள் நிறைந்த மலைகளைப்போலும் மதஜலம் பெருக, ஸகல லக்ஷணங்களும் அழகும் பொருந்தினவைகளாய் அங்கே ஸஞ்சரித்துக்கொண்டிருந்தன. அவை சத்ருஸைன்யங்களைநாசம்செய்யும்; அவைகளிலுள்ள யானைகளை ஹிம்ஸிக்கும்; கஜவித்யைப்படி நன்ருகப் பழக்கப்பட்டவை; யுத்தத்தில் ஐராவதத்திற்கு ஸமமானவை; நீருண்ட மேகங்களைப்போல் கர்ஜிப்பவை. காலாட்படைகள் ஆயிரக்கணக்காய், தேகம் முழுவதும் ஸாதாரண தங்கத்தாலும், ஜம்பூநதியிலுண்டாகும் தங்கத்தாலும் செய்யப்பட்ட ஆபரணங்களால் அலங்கரிக்கப்பட்டு, பாலஸூரியனைப்போல் பிரகாசித்தார்கள். நாநாரூபமுள்ள அழகான பல்லக்குகளுக்கோ கணக்கில்லை. விசித்திரமான லதாகிருஹங்களும், நேர்த்தியான சித்திரங்களால் அலங்கரிக்கப்பட்ட கிருஹங்களும், பலவித விளையாட்டுகளுக்காகக் கட்டப்பட்டிருக்கும் கிருஹங்களும், மரத்தால் செய்யப்பட்ட கிரீடா பர்வதங்களும், இரவிலும் பகலிலும் ஸ்த்ரீகளுடன் அனுபவிப்பதற்காக ஏற்பட்ட பலகிருஹங்களும் எங்கே பார்த்தாலும் அமைக்கப்பட்டிருந்தன. மயில்களுக்காக அனேக கூடுகள் கட்டப்பட்டிருந்தன. ராவணனுடைய பிரதாபங்களுக்கு அடையாளமாய் அனேக கொடிகள் கட்டப்பட்டிருந்தன. நவரத்தினங்கள் முத்துக்கள் பவழங்கள் தங்கநாணயங்கள் வெள்ளிநாணயங்கள் முதலிய ஸகல ஐசுவரியங்களாலும் பொக்கிஷங்கள் நிறைந்திருந்தன, மஹாபுத்திமான்களும் ஸமர்த்தர்களுமான சில்பிகளால் நிர்மிக்கப்பட்டு, மந்தரகிரியைப்போல் உன்னதமாயும், ஸகலதாதுக்களாலும் மிருகங்களாலும் நிறைந்து, பரமசிவன் வஸிக்கும் கைலாஸகிரியைப்போல் ஆகாசத்தையளாவி வெண்மையாய் பூதராக்ஷஸகணங்களுக்கு இருப்பிடமாயும் விளங்கும் அந்தத் தசக்ரீவனுடைய அரண்மனையைக்

கண்டு மாருதி ஆச்சரியம் கொண்டார். ஸூரியன் தனது கிரணங்களால் பிரகாசிப்பதுபோல், அது ரத்தினங்களுடைய ஒளியாலும் ராவணனுடைய தேஜஸாலும் ஜ்வலித்தது. உயர்ந்த தங்கத்தால் விசித்திரமாயமைக்கப்பட்ட படுக்கைகளும், ஆஸனங்களும், முக்கியமான பானபாத்திரங்களும், போஜனபாத்திரங்களும், அங்கே காணப்பட்டன. நெருங்கியிராமல், விஸ்தாரமான இடைவெளிகளுடன் கட்டப்பட்டிருக்கும் உன்னதமான அனேக உப்பரிகைகளும், மிகவும் நீண்ட கட்டுகளையுடைய பல கிருஹங்களும் காணப்பட்டன. குடித்து மிகுந்த பானங்கள் அங்கே அனேக ரத்தினபாத்திரங்களில் வைக்கப்பட்டிருந்தன; குடிவெறியால் கூத்தாடும் ஸ்த்ரீகளின் சிலம்புகளும் ஒட்டியாணச் சலங்கைகளும் ஒலிப்பதும், பேரிகை மத்தளம் மிருதங்கம் முதலிய வாத்தியங்கள் சப்திப்பதும் மதுரமாய்ச் செவியில் பட்டன. ஸகல லக்ஷணங்களும் பொருந்திய ஸ்த்ரீ ரத்தினங்களால் பிரகாசித்து, அழகிலும் காந்தியிலும் ஐசுவரியத்திலும் குபேரனுடைய கிருஹத்தைப் போன்ற ராவணனுடைய அரண்மனையில் ஆஞ்ஜனேயர் பிரவேசித்தார்.

ப்ராஸாத$^{3}$ ஸங்க$^{4}$ாதயுதம் ஸ்த்ரீரத்ந ஶத ஸங்குலம் |
ஸுவ்யூட$^{4}$ கக்ஷ்யம் ஹநுமாந் ப்ரவிவேஶ மஹாக்$^{3}$ருஹம் (41)

---

## ஸர்க்கம் 7

# ராவணனுடைய அரண்மனை

---

ஸ வேஶ்ம ஜாலம் ப$^{3}$லவாந் த$^{3}$த$^{3}$ர்ஶ
வ்யாஸக்த வைடூ$^{3}$ர்ய ஸுவர்ணஜாலம் |
யதா$^{2}$ மஹத் ப்ராவ்ருஷி மேக$^{4}$ஜாலம்
வித்$^{3}$யுத் பிநத்$^{3}$த$^{4}$ம் ஸவிஹங்க$^{3}$ ஜாலம் || (1)

பிறகு பலவானான ஹனுமான், மின்னற் கொடிகளோடும் பக்ஷிக் கூட்டங்களோடும் கூடின மழைக் காலத்து மேகங்களைப் போல், நவரத்தினங்களிழைத்த தங்க ஜன்னல்களுடன் விளங்கும் கிருஹ வரிசைகளைப் பார்த்தார். உத்தமமான சங்கம் வில் முதலிய ஆயுதங்களால் பிரகாசிக்கும் அனேக கட்டடங்களையும், வீடுகளின் மேல் அமைக்கப்பட்டிருக்கும் உப்பரிகைகளையும் கண்டார். ராவணனுடைய அரண்மனை சில்ப சாஸ்திர விதிகளின்படி யாதொரு தோஷமும் இல்லாமல் கட்டப்பட்டது; அதிலுள்ள பலவித ஐசுவரியங்களால் ஜ்வலித்துக் கொண்டிருந்தது; தேவர்களும் அஸுரர்களும் ராவணனிடத்திலுள்ள பயத்தால் அதைக்கண்டு தேவாலயத்தைப்போல் நமஸ்கரித்தார்கள். அதைக் குபேரனிடத்திலிருந்து ராவணன் தன் பலத்தால் அபகரித்தான். லங்கையிலுள்ள மற்ற வீடுகளை விசுவகர்மா நிர்மித்தான். இவைகளை மயன் அமைத்தானென்ற பெயரே தவிர ஸகலவித யுக்திகளையும் யோசனைகளையும் சொல்லிக் கட்டுவித்தவன் ராவணனே; அதுவும் ஸுலபமான காரியமல்ல. பூமியிலுள்ள அரண்மனைகளுக்குள் இவைகளுக்கே ஸகல குணங்களும் விசேஷமாய்ப் பொருந்தியிருந்தன.



மாருதி அங்கே ஸீதையைத் தேடிக்கொண்டு போகையில், ராவணனுடைய புஷ்பக விமானத்தைக் கண்டார். அது வேகமாய் ஆகாசத்தில் கிளம்பும் மேகத்தைப்போல் விஸ்தாரமாக, சுத்தமான ஸுவர்ணத்தால் செய்யப்பட்டுப் பார்ப்பவர்களை மயக்கும்படியான அழகுடன், ராவணனுடைய பலத்திற்கும் பிரதாபத்திற்கும் தகுந்த வாகனமாக இருந்தது. ஸ்வர்க்கமே ஸகல வைபவங்களுடன் அகஸ்மாத்தாய் பூலோகத்திற்கு வந்ததோ என்று சொல்லும்படி இருந்தது. உத்தமமான ரத்தினங்கள் இழைக்கப்பட்டு, காந்தியால் ஜ்வலித்தது. மலைச் சிகரத்தைப்போல் நானா விருக்ஷங்களின் புஷ்பங்களாலும், புஷ்பத் தூளிகளாலும் மூடப்பட்டிருந்தது. (புஷ்பகம் என்ற பெயர் கிடைத்ததற்கு இதுவே காரணம்). மேகங்களுக்கு நடுவில் மின்னற் கொடிகள் பாய்வதுபோல், உத்தம ஸ்த்ரீகள் அங்குமிங்கும் ஸஞ்சரித்துக் கொண்டிருந்தார்கள். ராஜஹம்ஸங்களால் சுமக்கப்பட்டு ஸகல ஐசுவரியங்களும் நிறைந்திருக்கும் புண்ணிய புருஷர்களுடைய தேவ விமானங்களை ஒத்திருந்தது. அனேக தாதுக்களால் விளங்கும் பர்வத சிகரம்போலும், நவக்ரஹங்களாலும் நக்ஷத்திரங்களாலும் சந்திரனாலும் நானா வர்ணமுள்ள மேகக் கூட்டங்களாலும் பிரகாசிக்கும் ஆகாசத்தைப்போலும் கணக்கில்லாத ரத்தினங்களால் ஜ்வலித்தது. அதில் மலைகள் நிறைந்த தேசங்களும், மரங்கள் நிறைந்த மலைகளும், புஷ்பங்கள் நிறைந்த மரங்களும், சிறு இதழ்கள் நிறைந்த புஷ்பங்களும் விசித்திரமாக எழுதப்பட்டிருந்தன. வெண்மையான கிருஹங்களும் அழகான புஷ்பங்களால் விளங்கும் தடாகங்களும், மெல்லிய தாதுக்களுடன் கூடின தாமரைகளும், சிரேஷ்டமான நானா வனங்களும் அங்கே எழுதப்பட்டிருந்தன. ரத்தினங்களுடைய காந்தியால் ஜ்வலித்துக் கொண்டு, லங்கையிலுள்ள உத்தம கிருஹங்களைக் காட்டிலும் மிகவும் பெரிதாய் விளங்கிற்று.

அங்கே ஹம்ஸம் மயில் முதலிய பக்ஷிகள், பவழங்களால் செய்யப்பட்ட மூக்குகளோடும் கால்களோடும் வெள்ளியால் அமைக்கப்பட்டு வைடூரியம் முதலிய ரத்தினங்களால் இழைக்கப்பட்டிருந்தன. இன்னும் அனேக பக்ஷிகள் புஷ்பம்போல் மெல்லிய சிறகுகளுடனும், விளையாடும்பொழுது தொங்கியும் வளைந்தும் இருக்கிற இறக்கைகளுடனும், பார்க்கையிலேயே காம விகாரத்தை உண்டு பண்ணக் கூடிய அழகுடனும் ஸுவர்ணத்தாலும் பவழத்தாலும் செய்யப்பட்டிருந்தன. பலவகை ஸர்ப்பங்கள் தங்கத்தாலும் வெள்ளியாலும் ரத்தினங்களாலும் செய்யப்பட்டிருந்தன. அழகான

துதிக்கைகளையுடைய யானைகள் நீரோடைகளில் இறங்கி, தாமரை மலர்த் தூளிகள் படிந்த தேகங்களுடன், கருநெய்தல் இலைகளைத் துதிக்கைகளால் தானே வர்ஷிக்கும்படி செய்யப்பட்ட பிரதிமைகளும், அவைகளால் அபிஷேகம் செய்யப்பட்டு, மங்களகரமான திருக் கைகளுடன், ஒரு ஹஸ்தத்தில் தாமரை மலரைத் தரித்துக் கொண்டிருக்கும் ஜகன்மாதாவான மஹாலக்ஷ்மியின் விக்கிரகமும் வெகு சாதுரியமாக அமைக்கப்பட்டிருந்தன. அழகிய புஷ்பங்களாலும் தளிர்களாலும் தழைத்துப் பரிமளம் வீசும் மஹா விருக்ஷத்தைப்போலும், மனோகரமான குகைகளால் விளங்கும் மஹா பர்வதமானது பனியும் குளிரும் நீங்கி வஸந்த காலத்தில் புஷ்பங்களாலும் பழங்களாலும் தளிர்களாலும் பிரகாசிப்பதுபோலும் இருக்கும் அந்த மங்களகரமான விமானத்தை ஆஞ்ஜனேயர் அடிக்கடிச் சுற்றிப் பார்த்து அடங்காத ஆச்சரியமடைந்தார். எல்லோராலும் பூஜிக்கப்பட்டு ராவணேசுவரனால் பரிபாலிக்கப்பட்ட அந்த லங்காபுரியை நன்றாகத் தேடியும், ராமசந்திரனுடைய அனந்த கல்யாண குணங்களில் ஈடுபட்டு, எப்பொழுதும் அவரையே தியானித்துக்கொண்டு ஸகல லோகங்களாலும் கொண்டாடப்படும் ஜானகியைக் காணாமல் மாருதி மிகுந்த துக்கமடைந்தார். அவர் ஆத்ம ஸ்வரூபத்தை நன்றாக அறிந்தவர்; ஸன்மார்க்கத்தில் நிலை பெற்றவர்; மஹானுபாவர்; பிறர் அறிய முடியாத விஷயங்களையும் பிரத்யக்ஷமாய்ப் பார்க்கக்கூடிய சக்தியையுடையவர்; லங்கை முழுவதையும் வெகு ஜாக்கிரதையாகச் சுற்றிப் பார்த்தும் ஸீதையைக் காணாமல் பலபல யோசனை செய்து விசேஷ மனோவியாகுலத்தை அடைந்தார்.

ததஸ்ததா3 ப3ஹுவித4 பா4விதாத்மந:
க்ருதாத்மநோ ஜநகஸுதாம் ஸுவர்த்மந: |
அபஶ்யதோ ப4வத3தி து3க்கி2தம் மந:
ஸுசக்ஷுஷ: ப்ரவிசரதோ மஹாத்மந: ॥ (17)

---

## ஸர்க்கம் 8

## புஷ்பக விமானம்

---

ஸ தஸ்ய மத4யே ப4வநஸ்ய ஸம்ஸ்தி2தம்
மஹத்3 விமாநம் மணிவஜ்ர சித்ரிதம் |
ப்ரதப்த ஜாம்பூ3நத3 ஜால க்ருத்ரிமம்
த3த3ர்ஶ வீர: பவநாத்மஜ: கபி: ॥ (1)

**ரா**வண கிருஹங்களுக்கு நடுவில் நவமணிகள் இழைத்து உருக்கியோடவிட்ட தங்கத்தால் செயயப்பட்ட பக்ஷிகளுடன் விளங்கும் ஒரு பெரிய விமானத்தை ஹனுமான் கண்டார். அது அளவுக்கு அடங்காதது; ஒப்பில்லாதது; விசுவகர்மா அதை நிர்மித்து, "நான் செய்த வஸ்துக்களுள் இதே மிகவும் சிலாக்கியமானது" என்று மெச்சினான். ஸகல திக்குகளிலும் தடையில்லாமல் செல்லக் கூடியது; தேவ விமானமானதால் பூமியில் படாமல் ஆகாச மார்க்கத்தில் நின்று கொண்டிருந்தது; காந்தியால் ஸூரிய மார்க்கத்தைக் குறிக்கும் அடையாளம் போலிருந்தது. அதில் ஒவ்வொரு வேலையும் மிகுந்த பிரயத்தனத்தால் செய்யப்பட்டது; அதில் இழைக்கப்பட்ட ரத்தினங்கள் ஸகல விதத்திலும் ஒப்பில்லாதவை; அதிலுள்ள விசித்திர விசேஷங்கள் தேவர்களுடைய விமானங்களிலும் இல்லை; அதைப்பற்றிய ஒவ்வொரு விஷயமும் அபூர்வமானது. பூர்வ காலத்தில் ராவணன் கோகர்ணக்ஷேத்திரத்தில் பிரஹ்மாவைக் குறித்துப் பதினாயிரவருஷகாலம் கோரமான தவம் செய்து தன் பராக்கிரமத்தால் குபேரனை ஜயித்து இந்த விமானத்தை அடைந்தான். அது பிரபுவின் அபிப்பிராயத்தை அறிந்து, போகவேண்டிய இடத்திற்கு வாயுவேகமாய்ச் செல்லும். அதில் பல விசித்திரமான மாளிகைகள் அமைக்கப் பட்டிருந்தன. லோகத்தில் அழகான பதார்த்தங்கள் யாவற்றிற்கும் உபமானமாக இருந்தன. பிறரால் தடுக்க முடியாத வேகத்தை உடையது. மஹாத்மாக்களான பெரியோர்களுடைய ஆசிரமம்போல் பரிசுத்தமாயும், புண்ணியகர்மங்களால் ஸம்பாதிக்கப்பட்ட ஸ்வர்க்கத்தைப்போல் ஸகல போகங்களுக்கும் இருப்பிடமாகவும், லக்ஷ்மீகடாக்ஷம் பெற்ற பாக்கியவான்களுடைய கிருஹங்களைப்போல் ஸகல ஸம்பத்துக்களுடனும் கூடினதாகவும்; அபூர்வமான செய்கைகளால் அழிவற்ற கீர்த்தியை ஸம்பாதித்த புண்ணியசாலிகளுடைய இருப்பிடங்களைப்போல் ஸகல லோகங்களும் கொண்டாடும்படியாகவும் மதுரமான கானம் நர்த்தனம் ரூபவதிகளான ஸ்த்ரீகள் திவ்விய போகங்கள், அழகிய வாஸஸ்தலங்கள் முதலியவைகளால் தேவேந்திரனுடைய அமராவதியைப் போலும் விளங்கிற்று. ஒப்பற்ற வேகத்துடன் ஆகாசத்தில் தங்கியிருந்தது. விசித்திரமான கொடிமுடிகளையுடைய மலைச் சிகரத்தைப் போல், விசித்திரமான பதார்த்தங்களுக்கு இருப்பிடமாகவும் விஸ்தாரமான கட்டுக்களுடையதாயும் மனோஹரமாயும் சரத் காலத்துச் சந்திரனைப்போல் நிர்மலமாயும் இருந்தது. குண்டலங்களால் அலங்கரிக்கப்பட்ட முகங்களுடன் பருத்த சரீரங்களுடனும் ஆகாசத்தில் அதி வேகமாய் ஸஞ்சரிக்கும் ராக்ஷஸர்களைப்போலும், வட்டமாயும் கோணலாயும் அகலமாயும் இருக்கிற கண்களையுடைய பூத கணங்களைப்போலும் அனேகமாயிரம் பொம்மைகள் மஹா சாதுர்யமாய் அதில் செய்து வைக்கப்பட்டிருந்தன. மஹா விருக்ஷங்களடர்ந்த வனத்தில் நானா வர்ணமுள்ள புஷ்பங்களாலும் பழங்களாலும் துளிர்களாலும் விளங்கும் வஸந்த காலத்திற்குரிய நதிகள், நீரோடைகள், தென்றல், வண்டுகள், மயில்கள், குயில்கள், மான் முதலிய மிருகங்கள், அழகிய ஸ்த்ரீ புருஷர்கள் முதலியவைகளால் வஸந்த ருதுவைக்காட்டிலும் விசேஷ அழகாய் பிரகாசிக்கும் அந்தப் புஷ்பக

விமானத்தை வானர வீரரான ஹநுமார் கண்டு ஆச்சரியமடைந்தார்.

வஸந்த புஷ்போத்கர சாரு த³ர்ஶநம்
வஸந்த மாஸாத³பி காந்த த³ர்ஶநம் |
ஸ புஷ்பகம் தத்ர விமாந முத்தமம்
த³த³ர்ஶ தத்³ வாநர வீர ஸத்தம: ‖ (8)

## ஸர்க்கம் 9

## ராவணனுடைய அந்தப்புரம்

தஸ்யாலய வரிஷ்ட²ஸ்ய மத்⁴யே விபுல மாயதம் |
த³த³ர்ஶ ப⁴வநஶ்ரேஷ்ட²ம் ஹநுமாந் மாருதாத்மஜ: ‖ (1)

அந்த உத்தமமான விமானத்தின் நடுவில் மாருதி ஒரு சிறந்த மாளிகையைக் கண்டார். அது ராவணன் வஸிக்குமிடம். ஒரு யோஜனை நீளம் அரையோஜனை அகலம் விஸ்தீர்ணமுள்ளதாய் அநேக உப்பரிகைகளுடன் விளங்கிற்று. அங்கெல்லாம் ஒப்பில்லாத அழகையுடைய ஜனக புத்திரியைத் தேடிக்கொண்டு மாருதி திரிந்து, பிறகு ராக்ஷஸர்களுடைய நேர்த்தியான கிருஹங்களைப் பார்த்துக் கொண்டே ராவணனுடைய கிருஹத்திற்கு வந்து சேர்ந்தார். மூன்று நான்கு தந்தங்களையுடைய உத்தமமான யானைகள் அங்கங்கே கட்டப்பட்டிருந்தன. ஆயுதபாணிகளான ஸேவகர்கள், நெருங்கியிராமல், நான்குபுறத்திலும் அதைச் சூழ்ந்து காத்துக் கொண்டிருந்தார்கள். அங்கே ராவணனுடைய பத்தினிகளான ராக்ஷஸ ஸ்த்ரீகளும், திக்விஜயம் செய்தபோது ஜயித்த அரசர்களுடைய கிருஹங்களிலிருந்து பலாத்காரமாய்க் கொண்டுவரப்பட்ட ராஜ கன்யைகளும் தூங்கிக் கொண்டிருந்தார்கள். இப்படித் திமிங்கிலம், முதலை, மீன் முதலிய ஜலஜந்துக்களால் நிறைந்து, மலைகளைப் போன்ற அலைகள் பெருங்காற்றால் அடிக்கப்பட்டுக் கொந்தளிக்க, நீருண்ட மேகங்களைப்போல் கர்ஜித்துப் பொங்கிக் கொதிக்கும் மஹா ஸமுத்திரத்தைப் போலிருக்கும் அந்த ராவண கிருஹம், கோரரூபிகளாய் ஸஹிக்க முடியாத தேஜஸையுடைய ராக்ஷஸர்களால் நிறைந்திருப்பதை ஆஞ்ஜநேயர் கண்டார். ஸகல ஐசுவரியங்களுக்கும் அதிபதியான குபேரனுடைய செல்வமும், தேவராஜனை மஹேந்திரனுடைய வைபவமும், பகவானுக்கு நித்யவாஹனமாக இருக்கப்பெற்ற கருடனுடைய அபார தேஜஸூம் எல்லாம் சேர்ந்து எப்பொழுதும் ராவணனுடைய மாளிகையில் குறையாமலிருந்தன. லங்கையில் வஸிக்கும் ராக்ஷஸர்களின் கிருஹங்களில், குபேரன் யமன் வருணன் முதலியவர்கள் அனுபவிக்கும் செல்வமும் ஐசுவரியமும் போகங்களும் அவைகளுக்கு மேலானவைகளும் காணப்பட்



டன. பூர்வத்தில் விசுவகர்மா பிரஹ்மாவிற்காக அந்த விமானத்தைத் தெய்வ லோகத்தில் ஸிருஷ்டித்தான். பிறகு குபேரன் பிரஹ்மாவைக் கோரமான தவத்தால் ஸந்தோஷப்படுத்தி அதை அடைந்தான். ஸகல ரத்தினங்களாலும் அலங்கரிக்கப்பட்ட அந்த விமானத்தை ராவணன், குபேரனைத் தன்பராக்கிரமத்தால் ஜயித்து அவனிடத்திலிருந்து அபகரித்தான். தங்கத்தாலும், வெள்ளியாலும் விசித்திரமாய்ச் செய்யப்பட்ட ஸ்தம்பங்களில் செந்நாய்களைப் போன்ற பிரதிமைகள் அமைக்கப்பட்டிருந்தன. அந்த விமானம் காந்தியால் ஜ்வலிப்பதுபோல், மேரு மந்தரம் முதலிய பர்வதங்களுக்கு ஸமானமாய், ஆகாசத்தை அளாவிற்று. சிறு கட்டடங்கள் மங்களகரமான ரூபங்களுடன் மறைவாய்க் கட்டப்பட்டிருந்தன. ஸூரியன் அக்னி முதலியவர்களுடைய காந்தியும் இதன் காந்திக்கு ஈடல்ல. விசுவகர்மா செய்த அநேக வஸ்துக்களில் இதே ஸகல விதத்திலும் சிரேஷ்டமானது. தங்கப் படிக்கட்டுகளையுடைய அநேக அழகான மேடைகளாலும், தங்கம் ஸ்படிகம் முதலிய அபூர்வ வஸ்துக்களால் நிர்மிக்கப்பட்ட ஜன்னல்களாலும், இலைக் கதவு ஜன்னல்களாலும், இந்திரநீலம் மஹாநீலம் முதலிய அபூர்வமான மணிகளால் இழைக்கப்பட்ட திண்ணைகளாலும், பவழம் ஒப்பில்லாத முத்துக்கள் விலையற்ற ரத்தினங்கள் முதலியவைகளால் அலங்கரிக்கப்பட்ட தரைகளாலும், நேர்த்தியான பரிமளத்துடன் பால ஸூரியனைப்போல் சிவந்த சந்தனத்தாலும், உதய பர்வதத்திலிருந்து கிளம்பும் ஆதித்தியனைப்போல் ஜ்வலிக்கும் அந்தப் புஷ்பக விமானத்தில் ஆஞ்ஜநேயர் ஸீதையைத் தேட உத்தேசித்து ஏறினார். (மஹா நீலமென்பது ஸிம்ஹளத்வீபத்தில் உண்டாகும் என்று ரத்தின சாஸ்திரம் கூறுகிறது.)

அங்குள்ள பலவித பானங்களிலிருந்தும் பக்ஷ்யங்களிலிருந்தும் அன்னங்களிலிருந்தும் கிளம்பும் வாஸனை நான்கு பக்கத்திலும் பரவிற்று. அதை வாயு பகவான் மனுஷ்ய ரூபமெடுத்து வந்ததுபோல் ஆஞ்ஜநேயர் முகர்ந்தார். தூர தேசத்திலிருந்து வந்தவனை அவனுடைய பிரியமான பந்துக்கள் அன்புடன் அழைப்பதுபோல், ராவணனுடைய போஜன கிருஹத்திலிருந்து வீசும் பரிமளமானது ஆஞ்ஜநேயரை "ராவணன் இருக்குமிடத்திற்கு வா" என்று அழைப்பது போலிருந்தது. அந்த வழியாகவே சென்று ராக்ஷஸேசுவரனுடைய பானசாலையைக் கண்டார். அது அதிகப் பிரியமான உத்தம ஸ்த்ரீயைப்போல் ராவணனுக்கு ஸந்தோஷத்தைக் கொடுத்தது. நவரத்தினங்களிழைத்த படிக்கட்டுகள் இருந்தன. சிலவிடங்கள் ஸ்படிகத்தாலும் தந்தத்தாலும் இழைக்கப்பட்டிருந்தன. சிலவிடங்களில் பொன் வெள்ளி முதலிய வஸ்துக்களால் அலங்கரிக்கப்பட்ட ரத்தின ஸ்தம்பங்கள் அமைக்கப்பட்டிருந்தன. மேடுபள்ளமில்லாமல் இழைக்கப்பட்டு சித்திர வேலைகளால் அலங்கரிக்கப்பட்ட மிகவும் உயரமான இன்னும் அநேக ஸ்தம்பங்களால் அந்த விமா

னம் இறக்கைகளை விரித்துக்கொண்டு ஆகாசத்தில் பறப்பதுபோலிருந்தது. தரையில் விரிக்கப்பட்ட கம்பளத்தில், மலை ஸமுத்திரம் நதி பள்ளத்தாக்கு மைதானம் விருக்ஷம் வனம் நகரம் கிராமம் முதலியவைகளுடன் பூலோகம் சித்திர ரூபமாய் வேலை செய்யப்பட்டிருந்தது. அதைப் பார்க்கையில் அநேக ராஜாக்களாலும் சக்கரவர்த்திகளாலும் ஆளப்பட்ட ராஜ்யங்களெல்லாம் அந்த விமானத்தில் இருப்பதுபோல் தோன்றிற்று. அநேக உத்தம ஜாதி பக்ஷிகள் கொழுப்படைந்து கூவிக்கொண்டிருந்தன. சந்தனம், அகில், பன்னீர், புனுகு, ஜவ்வாது, குங்குமம், அத்தர் முதலியவைகளின் பரிமளம் வீசிக்கொண்டிருந்தது. விலையற்ற ஆஸனங்களும் விரிப்புகளும் நிறைந்திருந்தன. சிலவிடங்கள் அகிற் கட்டையின் தூபத்தால் கறுத்திருந்தன. சிலவிடங்கள் ராஜ ஹம்ஸங்களைப்போல் வெண்மையாக இருந்தன. பலவித புஷ்பங்கள் எங்கும் வாரி இறைக்கப்பட்டிருந்தன. வஸிஷ்ட மஹரிஷியிடத்திலிருக்கும் தோஷமற்ற காமதேனுவைப்போல் அந்த விமானம் ஸகல மனோரதங்களையும் பூர்த்தி செய்தது. மனத்துக்கு அளவற்ற ஸந்தோஷத்தைக் கொடுத்து துக்கத்தை நாசம் செய்து ஸகல ஸம்பத்தையும் தேக காந்தியையும் உண்டு பண்ணிற்று. பஞ்சேந்திரியங்களுக்கும் அவைகளுக்குப் பிரியமான விஷய போகங்களைக் கொடுத்துப் பெற்ற தாயைப்போல் திருப்தி செய்யும் அந்த விமானத்தைக் கண்டு ஹனுமான் பிரமித்து, "இது யாகயக்ஞங்களை ஸம்பூர்ணமாய் நடத்திய புண்யவான்கள் அடையும் ஸ்வர்க்க லோகமோ! தேவகணங்கள் வஸிக்கும் தேவ லோகமோ! தேவ ராஜாவான மஹேந்திரனுடைய ராஜதானியான அமராவதியோ! கடின தபஸால் மஹாத்மாக்கள் அடையும் பிரஹ்ம லோகமோ!" என்று திகைத்து நின்றார். அங்கே தங்க ஸ்தம்பங்களில் பிரகாசிக்கும் ரத்தின தீபங்கள் சுத்தமான வத்திகளுடனும் தெளிவான தைலங்களுடனும் அசையாமல் கொழுந்துவிட்டெரிந்தன. அதைப் பார்க்கையில், கைதேர்ந்த சூதர்களால் ஜயிக்கப்பட்ட ஸாமான்ய சூதர்கள், அவர்களை மறுபடியும் ஜயித்துத் தாங்களிழந்த திரவியங்களை அடைவதற்கு ஆழ்ந்த யோசனை செய்து கொண்டிருப்பதைப்போல் தோன்றிற்று. கணக்கில்லாத, தீபங்களுடைய பிரகாசத்தையும், பிறரால் அஸாத்தியமான தவத்தைச் செய்து வேதவேதாங்கங்களைக் கரைகடந்து நித்திய நைமித்திக கர்மங்களைக் குறைவில்லாமல் நடத்தி வந்து ஸகல லோகங்களும் பெயரைக் கேட்டவுடனே நடுங்கும் பிரதாபத்தையுடைய ராவணேசுவரனுடைய ஸஹஜமான தேஜஸையும், அவனுடைய பத்தினிகள் அணிந்திருக்கும் ஆபரணங்களுடைய காந்தியையும் கண்டு, ஹனுமான், "இந்த விமானம் நெருப்புப்பற்றி எரிகிறதோ!" என்று ஸந்தேகித்தார்.

அங்கே விரித்திருக்கும் கம்பளங்களில் அநேக உத்தம ஸ்த்ரீகள் நாநாவர்ணமுள்ள வஸ்திரங்களையும் மாலைகளையும் தரித்துக்கொண்டு பற்பல வேஷங்களால் அலங்கரிக்கப்பட்டு, கிரீடைசெய்ததாலும் மதுபானத்தாலும் அர்த்தராத்திரியில் அயர்ந்து நித்திரை செய்வதைக் கண்டார். பகற்காலங்களில் அந்தப்புரத்தில் சப்திக்கும் ஆபரணங்கள், அர்த்தராத்திரியில் ஸகல ஸ்த்ரீகளும் சோர்ந்து தூங்குவதால் கொஞ்சம்கூட சப்தமற்றிருப்பதைக்கண்டு, மாருதி, "இது ராத்திரிகாலத்தில் தூங்கும் ஹம்ஸங்களாலும் அவைகளின் மேலிருக்கும் வண்டுகளாலும் பிரகாசிக்கும் தாமரையோடையோ!" என்று நினைத்தார். அந்த ஸ்த்ரீகள் தாமரைமலரின் பரிமளத்தைப்போல் ஸுகந்தம் வீசும் முகங்களுடனும், மறைக்கப்பட்ட பற்களுடனுடம், மூடின கண்களுடனும் நித்திரைசெய்துகொண்டிருந்தார்கள். (நான்குஜாதி ஸ்த்ரீகளில் இவர்கள் உத்தமமான பத்மினீ ஜாதியைச் சேர்ந்தவர்கள். தூங்கும்போது பற்கள் வெளிப்படுவதும், கண்கள் பாதி திறந்திருப்பதும், குறட்டைவிடுவதும், வாயிலிருந்து துர்க்கந்தமான காற்று வீசுவதும் தாழ்ந்த ஜாதிஸ்த்ரீகளின் லக்ஷணம். தூங்கும்பொழுது அங்கங்கள் அசையாமலிருப்பதும், வாய் மூடியிருப்பதும், முகம் பிரஸன்னமாயிருப்பதும், மிருதுவாய் மூச்சு விடுவதும், சுவாசம் ஸுகந்தமாயிருப்பதும், ஸ்வப்னவஸ்தையில் பிதற்றாமலிருப்பதும், உத்தமஸ்த்ரீகளின் லக்ஷணங்கள்.) உதய காலத்தில் தாமரைப்புஷ்பங்கள், ஸூரியகிரணங்களால் எழுப்பப்பட்டு மலர்ந்து எல்லோர்க்கும் ஆநந்தத்தைக் கொடுத்து, ஸூரியன் அஸ்தமித்தவுடன் இதழ்கள் மூடி நித்திரை செய்வதுபோல, அந்த ஸ்த்ரீகள் தங்கள் நாயகனுடைய கடாக்ஷம் தங்களுக்குக் கிடைக்க வேண்டுமென்று காலையில் அவனுக்கு முன்னே எழுந்திருந்து காத்துக்கொண்டிருந்து, பகலெல்லாம் அவனுடன் ஆநந்தமாய்க் காலத்தைக்கழித்து, ராத்திரியில் அவன் நித்திரைசெய்த பிறகு களைப்பால் தாங்களும் அயர்ந்து நித்திரைசெய்தார்கள். சிரமத்தால் வஸ்திரங்கள் நழுவ, ஸ்வேச்சையாய் நித்திரைசெய்யும் அந்த ரூபவதிகளைக் கண்டும், ஆஞ்ஜனேயருடைய இந்திரியங்கள் கொஞ்சம்கூடக் கலங்காமல் விசேஷ காந்தியுடன் விளங்கினர். "அழகிலும் நிறத்திலும் பரிமளத்திலும் ஆநந்தத்தைக் கொடுப்பதிலும் இந்த ஸ்த்ரீகளுடைய முகங்கள் கமலங்களைப்போலிருக்கின்றன தேனைக் குடித்து மதங்கொண்டவண்டுகள் இவைகளைப் புஷ்பமென்றெண்ணி அடிக்கடி வந்து மொய்க்கும் என்பதற்கு ஸந்தேகமில்லை" என்று மாருதி எண்ணினர். கருத்துச் சுருண்ட மயிர்களுடனும் மின்னற்கொடிபோல் விளங்கும் அங்கங்களுடனும் நித்திரைசெய்யும் ஸ்த்ரீகளால் நிறைந்த ராவணனுடைய அந்தப்புரம், சரத்காலத்தில் நக்ஷத்திரங்கள் நிறைந்த நிர்மலமான ஆகாசம்போல் பிரகாசித்தது. அவர்களுக்கு நடுவில் நித்திரைசெய்யும் ராவணன் நக்ஷத்திரமண்டலங்களுக்கு நடுவில் பௌர்ணிமையில் பூர்ணகலைகளுடன் விளங்கும் சந்திரனைப்போல் தோன்றினன். ஒப்பில்லாத புண்ணியகர்மங்களால் நக்ஷத்திரங்களாய்ப் பிரகாசித்து, தாங்கள் செய்த புண்ணியம் முடியும்

போது மிகுதியுள்ள ஸ்வல்பபுண்ணியத்தால் பூமியில் நழுவி விழுந்த பாக்கியசாலிகளோ என்று ஆஞ்ஜநேயர் அந்த ஸ்த்ரீகளைக் கண்டு பிரமித்தார். மங்களகரமான பிரகாசத்தையுடைய பெரிய நக்ஷத்திரங்களைப்போல் அந்த ஸ்த்ரீகளுடைய தேககாந்தியும் ரூபமும் தெளிவும் ஸ்பஷ்டமாய் விளங்கின. மதுபானத்தாலும் விளையாட்டுகளாலும் ரதிக்ரீடையாலும் பருத்த புஷ்பமாலைகளும் ஹாரங்களும் கலைந்து நழுவி, ஆபரணங்கள் சிதறி, சிரமத்தால் களைத்து முகம் வாடி அயர்ந்து தூங்கினார்கள்.

சில உத்தம ஸ்த்ரீகளுடைய நெற்றிகளில் திலகங்கள் அழிந்திருந்தன. சில ஸ்த்ரீகளின் சிலம்புகள் கழன்றிருந்தன. சிலருடைய முத்துஹாரங்கள் பக்கங்களில் நழுவிக்கிடந்தன. முத்துஹாரங்களும், அரைநூல்மாலைகளும் அறுந்து, வஸ்திரங்கள் நழுவி ரதி சிரமத்தால் பிரக்ஞையற்று நித்திரைசெய்யும் அந்தப் பெண்கள், வெகுதூரம் ஓடிக்களைத்து சிரமநிவிருத்திக்காகப் பூமியில் மணலில் விழுந்து புரளும் பெண்குதிரைகளைப்போல் காணப்பட்டார்கள். சிலர் நேர்த்தியான குண்டலங்களைத் தரித்திருந்தார்கள்; சிலருடைய மாலைகள் வாடி அறுந்திருந்தன. மஹாபலவானான ராவணனால் அனுபவிக்கப்பட்டு, வனத்திலுள்ள புஷ்பக்கொடிகள் மதயானையால் மிதிக்கப்பட்டதுபோல் அவர்கள் காணப்பட்டார்கள். சிலருடைய ஸ்தனங்களுக்கு நடுவில் ஸூரிய சந்திரர்களைப்போல் ஜ்வலிக்கும் முத்து ஹாரங்கள் தாமரையோடையில் இரண்டு புஷ்பங்களுக்கு நடுவில் நித்திரை செய்யும் ராஜ ஹம்ஸத்தைப்போல் பிரகாசித்தன. சிலருடைய மார்பில் விளங்கும் வைடூரிய மாலைகள் ஹம்ஸங்களைப்போலும் தங்கச்சரடுகள் சக்ரவாக பக்ஷிகள்போலும் தோன்றின. சரத் காலத்தில் தெளிவாக ஓடும் நதிகளைப்போன்ற அந்த ஸ்த்ரீகளுடைய பின் பாகங்களே மணற் குன்றுகள்; ஹாரங்களே ஹம்ஸங்கள்; ஸ்தனங்களே சக்ர வாகங்கள்; நேத்திரங்களே கருநெய்தல் புஷ்பங்கள்; உதடுகளே இளந் தளிர்கள்; பாதங்களே தாமரைகள்; கழுத்துகளே சங்குகள்; கண்களே மீன்கள்; நாபிகளே சுழல்கள்; கீர்த்திக்குக் காரணமான தேககாந்தியே இரு கரைகள்; சிருங்கார சேஷ்டைகளே முதலைகள்; ஆபரணங்களே மலர்ந்த தாமரைகள்; சதங்கைகளே மொட்டுகள். சிலருடைய மிருதுவான அங்கங்களிலும் ஸ்தனங்களுடைய நுனிகளிலும் உள்ள சுபமான ஆபரணங்கள், அவர்களிடத்தில் ஆசை கொண்ட காமுகர்களைப்போல் தோன்றின. சிலருடைய முகங்களிலிருந்து வீசும் சுவாஸக் காற்றால் அசைக்கப்பட்ட வஸ்திரங்களின் நுனிகள் அடிக்கடி முகங்களில் தாக்கின. அவை மேலே எழும்பி விழும்பொழுது விசித்திர வர்ணங்களுடைய கொடிகளைப்போல் காணப்பட்டன. அங்கே நித்திரை செய்துகொண்டிருந்த சில காந்திமதிகளின் மூச்சுக் காற்றின் வேகத்தால் அவர்கள் தரித்த குண்டலங்கள் மெள்ள மெள்ள அசைந்தன. ஸ்வபாவமாகவே அவர்களுடைய சுவாஸம் ஸுகந்தமாக இருக்கும்; சர்க்கரை கலந்த மதுவின் வாஸனையால் அது இன்னும் பரிமளமாகவும் ஸுகமாகவும் ராவணன்மேல் வீசிற்று. சிலர் பான மயக்கத்தாலும், நித்திரையாலும் தேக ஸ்வாதீனமற்றுத் தூங்கும்பொழுது, தங்களுக்கருகில் படுத்திருக்கும் சக்களத்திகளுடைய முகங்களைத் தங்கள் பிரியநாயகனான ராவணனுடைய முகமென்றெண்ணிக் காம பரவசர்களாய் அடிக்கடி முத்தமிட்டார்கள். அந்த ஸ்த்ரீகளும் ராவணனிடத்திலுள்ள ஆசையால் அவன் முத்தமிடுகிறானென்றெண்ணி மறுபடியும் முத்தம் கொடுத்தார்கள். இப்படி நாயகனிடத்திலுள்ள ஆசையால் சக்களத்திகள் ஒருவர்க்கொருவர் தெரியாமல் தங்களிஷ்டத்தையே பூர்த்தி செய்துகொண்டார்கள். சிலர் ஆபரணங்களால் அலங்கரிக்கப்பட்ட கைகளையும், சிலர் பீதாம்பரங்களையும் தலையணையாக வைத்துக்கொண்டு தூங்கினார்கள். பான மயக்கத்தாலும் ஒருவர்க்கொருவர் ஸ்நேஹவிசேஷத்தாலும் ஒரு ஸ்த்ரீ மற்றொரு ஸ்த்ரீயின் மார்பில் தலை வைத்து நித்திரை செய்தாள். அவளுடைய தோளில் தலை வைத்து மற்றொருத்தி நித்திரை செய்தாள். ஒருத்தி தன் தோழியின் மடியில் தலை வைத்து நித்திரை செய்தாள். அவளுடைய புஜங்களில் தலை வைத்து இரண்டு ஸ்த்ரீகள் நித்திரை செய்தார்கள். துடை பக்கம் இடுப்புப் பின்பாகம் முதலிய அங்கங்கள் ஒன்றோடொன்று பற்றி, இப்படி நித்திரை செய்யும் அந்தப் பெண்கள், புஜங்களாகிற நூலால் தொடுக்கப்பட்டு, மதுவின் பரிமளத்துடன் சுருண்ட தலை மயிரென்ற வண்டுகள் மொய்க்கும் புஷ்ப மாலையைப்போல் விளங்கினார்கள். ராவணனுடைய பத்நிகளால் நிறைந்த அந்தப்புரம் வஸந்தருதுவில் ஒரு புஷ்ப வனத்தைப்போல் தோன்றிற்று. அவர்களுடைய கைகளே கொடிகள்; தோள்களே தண்டுகள்; விரல்களே தளிர்கள். இடுப்பில் வஸ்திரத்தின் முடிகளே புஷ்பக் கொத்துகள்; கறுத்துச் சுருண்ட தலைமயிரே வண்டுகள்; மூச்சுக் காற்றே தென்றல்; இப்படித் தூக்கக் கலக்கத்தால் ஒருவர் மேலொருவர் கைகால்களைப் போட்டுக்கொண்டு காற்றால் ஒன்று சேர்க்கப்பட்ட புஷ்பக் கொடிகள்போல் விளங்கினார்கள். அந்தக் கூட்டத்தில் ஒவ்வொருத்தியின் ஆபரணங்களையும் அவயவங்களையும் தனித் தனியாய் அறிவது அஸாத்தியம்.

ராவணன் விழித்துக் கொண்டிருக்கையில் அவர்களைப் பிறர் பார்ப்பது அஸாத்தியமாகையால், அங்குள்ள ரத்தின ஸ்தம்பங்களில் வைக்கப்பட்ட நாநா வர்ணமுள்ள ரத்தின தீபங்களும், அவன் தூங்கின பிறகு, மதுபானத்தாலும் சிரமத்தாலும் நித்திரையாலும் வஸ்திரங்கள் ஆபரணங்கள் நழுவினதை அறியாமல் தூங்கும் ராவண பத்நிகளை இமை கொட்டாமல் ஆசையுடன் பார்ப்பது போல், அசைவற்றுக் கொழுந்துவிட்டெரிந்தன. ராஜ ரிஷிகள் பிதிருக்கள் தைத்தியர்கள் கந்தர்வர்கள் ராக்ஷஸர்கள் முதலியவர்களுடைய கன்யைகள் ராவணனிடத்தில் ஆசை வைத்து வந்தவர்

களே. யுத்தத்தில் பிரியமுள்ள ராவணனால் சிலர் தங்களுடைய பந்துக்களை ஜயித்துக் கொண்டுவரப்பட்டவர்கள். சிலர் அவனுடைய அழகிலும் தேஜஸிலும் ஐசுவரியத்திலும் பராக்கிரமத்திலும் ஈடுபட்டு வலுவில் ஆசை மீறி அவனை வந்தடைந்தவர்கள். அவர்களில் ராவணனுடைய பராக்கிரமத்தால் மாத்திரம் கட்டுப்பட்டிருந்தவர்கள் ஒருவருமில்லை. எல்லோரும் அவனிடத்தில் மோஹித்தவர்களே. ஸ்த்ரீ ரத்தினமான ஜானகியைத் தவிர மற்ற யாவரும் ராவணனை விரும்பி வந்தவர்கள். வேறொருவனால் விவாஹம் செய்யப்பட்டவர்களுமல்லர்; உத்தம குலத்தில் பிறந்து உத்தமமான பத்மினீ ஜாதி ஸ்த்ரீகளல்லாதவர்கள் அங்கில்லை; ஸகல சுப லக்ஷணங்களாலும் அமைந்திராதவர்கள் அங்கில்லை; ஸர்வாபரணங்களாலும் அலங்கரிக்கப்படாதவர்கள் அங்கில்லை; ராவணனுக்கு ஸமஸ்த உபசாரங்களையும் பரம ப்ரீதியுடன் செய்யாதவர்கள் அங்கில்லை. அவனுக்குத் தகுந்த தேகபலம் இல்லாதவர்கள் அங்கில்லை; அவனுடைய அன்பிற்குப் பாத்திரமில்லாதவர்கள் அங்கில்லை.

ஹனுமான் மஹா புத்திமானாக இருந்தாலும் அவர்களைப் பார்த்து ஜாதி ஸ்வபாவத்திற்குத் தகுந்த விபரீத புத்தியை அடைந்து, "இந்த ஸ்த்ரீகளையெல்லாம் கன்யைகளாக இருக்கும் பொழுதே ராவணன் கொண்டு வந்து விவாஹம் செய்ததுபோல், ஸீதையையும் ராகவன் பாணிக்கிரஹணம் செய்வதற்கு முன் கொண்டுவந்து விவாஹம் செய்திருந்தால் அவனுக்கு க்ஷேமமுண்டாயிருக்குமே" என்று அகஸ்மாத்தாக எண்ணினார்.

பிறகு அந்த ஹனுமான், "ஸீதையைப் போன்ற பதிவிரதை எந்த லோகத்திலுமுண்டோ! இந்த ராவணன் பிரம்ம தேவருடைய குலத்தில் பிறந்தும் அவளை அபகரித்து மஹா பாபத்தை ஸம்பாதித்தான்" என்று மிகவும் துக்கத்தை அடைந்து, "அக்னியையும் கொளுத்தும்படியான ஸீதையின் பதிவிரதா தர்மத்திற்கு என்றைக் காவது பங்கம் வருமோ? வீணான அபவாதத்தைச் சுமத்தினதே தவிர வேறென்ன?" என்று எண்ணினார்.

புநஶ்ச ஸோசிந்தய தா³ர்த ரூபோ
த்⁴ருவம் விஶிஷ்டா கு³ணதோ ஹி ஸீதா |
அதா²யமஸ்யாம் க்ருதவாந் மஹாத்மா
லங்கேஶ்வர: கஷ்ட மநார்ய கர்ம ‖ (74)

---



## ஸர்க்கம் 10

## ராவணனுடைய அந்தப்புரம்

தத்ர தி³வ்யோபமம் முக்²யம் ஸ்ப²டிகம் ரத்நபூ⁴ஷிதம் |
அவேக்ஷமாணோ ஹநுமாந் த³த³ர்ஶ ஶயநாஸநம் ‖ (1)

அவ்விடத்தில் ஸ்படிகத்தால் செய்யப்பட்டு ரத்தினங்கள் இழைத்துத் தேவேந்திரனுடைய சயனம் போன்ற ஓர் மஞ்சத்தைக் கண்டார். அதற்கு நான்கு புறத்திலும் தந்தத்தாலும் தங்கத்தாலும் அலங்கரிக்கப்பட்ட கால்களுடன் வைடூரியங்கள் பதித்து விலையற்ற விரிப்புகளால் மூடப்பட்ட அநேக ஆஸனங்கள் போடப்பட்டிருந்தன. அங்கே ஒரு பக்கத்தில் முத்து ஹாரங்களாலும், ரத்தின மாலைகளாலும் அலங்கரிக்கப்பட்டுப் பூர்ண சந்திரனைப்போல் வெண்மையான ஒரு குடையைக் கண்டார். உருக்கி ஓடவிட்ட ஆயிரத்தெட்டுமாற்று அபரஞ்சித் தங்கத்தால் செய்யப்பட்ட அந்த மஞ்சம் ஸூரியனைப்போல் ஜ்வலித்தது. அசோகம் முதலிய மாலைகள் கட்டித் தொங்கவிடப்பட்டிருந்தன. மெல்லிய ரோமங்களையுடைய ஆடு முதலிய மிருகங்களின் தோல்களும், விலையுயர்ந்த சால்வைகளும், விரிப்புகளும், பஞ்சணை மெத்தைகளும் பரப்பப்பட்டிருந்தன. நானா வர்ணமுள்ள புஷ்பங்கள் வாரி இறைக்கப்பட்டிருந்தன. குங்குமம், கஸ்தூரி, ஜவ்வாது, புனுகு, அத்தர், அகில், சந்தனக்கட்டை முதலிய வாஸனைத் திரவியங்களின் பரிமளம் நிறைந்திருந்தது. வெண்சாமரங்களைக் கையிலேந்தி வீசிக்கொண்டிருக்கும் பெண் பிரதிமைகளால் அலங்கரிக்கப்பட்டிருந்தது.

அதில் மழைக்காலத்தில் நீருண்ட மேகம்போல் கறுத்த தேகத்துடனும், யானைத் துதிக்கைகளைப்போல் பருத்த நீண்டு உருண்ட கைகளுடனும், நெருப்புப் பொறிபோல் சிவந்த நேத்திரங்களுடனும், ஸூரியனைப்போல் ஜ்வலிக்கிற குண்டலங்களால் விளங்கும் முகத்துடனும், பிரதாபலங்கேசுவரன் நித்திரை செய்துகொண்டிருந்தான். அவன் தரித்த ஒப்பற்ற பீதாம்பரம் கறுத்த மேகங்களுக்கு நடுவில் பாயும் மின்னற்கொடிபோல் பிரகாசித்தது. மார்பிலும் கைகளிலும் பூசப்பட்ட உத்தமமான சிவப்புச்சந்தனம் ஸந்தியாகாலத்தில் மின்னற் கொடிகளுடன் விளங்கும் சிவந்த மேகம்போல் காணப்பட்டது. சிரேஷ்டமான ஆபரணங்களால் அலங்கரிக்கப்பட்டிருந்தான். இஷ்டமான ரூபத்தை எடுக்கக்கூடியவனானதால் தன் பத்தினிகள் கண்டு மோகிக்கும்படி மன்மதனைப்போல் ரூபம்தரித்திருந்தான். ராத்திரியில் நெடுநேரம் க்ரீடித்ததாலும் மதுபானத்தாலும் களைத்து அயர்ந்து தூங்கிக்கொண்டிருந்தான். ராக்ஷஸஸ்த்ரீகளுக்கு பிரியநாயகனாயும் ராக்ஷஸர்களுக்கு ஸகல க்ஷேமங்களையும் கொடுப்பவனாயுமிருக்கும் ராவணனைப் பார்த்து," மரங்கள் புதர்கள் காடுகள் நிறைந்த மந்தரபர்வதம் அசைவற்று நித்திரைசெய்

கிறதோ!'' என்று மாருதி நினைத்தார். இப்படி ஸூரியனைப் போலும் அக்னியைப்போலும் பிரகாசிக்கும் அந்த மஞ்சத்தில் மஹாஸர்ப்பத்தைப்போல் பெருமூச்சு விட்டுக்கொண்டு நித்திரை செய்யும் ராவணனைப்பார்த்து, "ராமபத்தினியைத் தேடிவந்த நான் அவளைப் பார்ப்பதற்குமுன் அவளை அபகரித்த மஹாபாபியைப் பார்க்கும்படி நேரிட்டதே'' என்று துக்கமடைந்தார். பயம் கொண்டவன் பிசாசம் முதலிய துஷ்டஜந்துக்களுக்கெதிரில் நிற்க முடியாமல் ஒதுங்குவதுபோல், "இந்த மஹாபாபியின் ஸமீபத்திலிருப்பது தகாது'' என்று சற்றுப் பின்வாங்கினார். பிறகு படிக்கட்டுகளின் வழியாய் வேறொரு பக்கத்திலுள்ள ஒரு மேடையின்மேலேறி அந்த ராக்ஷஸேசுவரனை உற்றுப் பார்த்தார். யானைத்துதிக்கைகளைப் போன்ற புஜங்களுடனும் பரிமளம் வீசுகிற சந்தனப்பூச்சுகளுடனும் விளங்கும் அந்த தசமுகன் படுத்திருக்கும் மஞ்சமானது மத ஜலத்தைப் பெருகவிட்டுக்கொண்டிருக்கும் யானையுடன் கூடின மலையருவிபோல் தோன்றிற்று. அவனுடைய புஜங்கள் முழங்கால் வரையில் நீண்டு தெய்வலோகத்தில் நாட்டிய இந்திரத்வஜங்கள் போல் விளங்கின. உருக்கி அடித்த இருப்புலக்கைகள்போல் கடினமாய் யானைகளின் துதிக்கைகளைப்போல் அடி பெருத்து வரவரச் சிறுத்திருந்தன. ஒன்றிற்கொன்று பேதமில்லாமல் மஹாபலமுள்ளவைகளாய், கெட்டியாய்ப் பொருத்தப்பட்ட இடைவெளிகளுடன், உத்தம லக்ஷணங்களமைந்த நகங்களாலும் கட்டைவிரல்களாலும் அலங்கரிக்கப்பட்டிருந்தன. விலையற்ற மோதிரங்கள் அணிந்த விரல்களுடன், இரண்டு ஐந்துதலை மஹாநாகங்கள் படுத்திருப்பதுபோல் காணப்பட்டன. தங்கத்தோள்வளைகள் அணிந்த புஜங்களில் இந்திரனுடன் யுத்தம்செய்யும் காலத்தில் ஐராவதத்தின் தந்தங்களாலும், விஷ்ணுவுடன் யுத்தம் செய்யும் காலத்தில் சக்ராயுதத்தாலும் உண்டான காயங்களின் வடுக்கள் கறுத்த ஆகாசத்தில் சந்திரர்களைப்போல் பிரகாசித்தன. முயலின் ரத்தத்தைப்போல் சிவந்து சிரேஷ்டமான பரிமளமும் மிகுந்து குளிர்ச்சியுமுள்ள சந்தனத்தால் நன்றாய் பூசப்பட்டு, விசித்திரமாக அலங்கரிக்கப்பட்டிருந்தன. நேர்த்தியான கந்தங்களால் வாஸனையேறினவை; உத்தமஸ்த்ரீகளால் பிடிக்கப்பட்டவை; யக்ஷர், பன்னகர், கந்தர்வர், தேவர், அஸுரர், முதலியவர்களைக் கதற அடித்தவை. மிருகங்களையும் பக்ஷிகளையும் தின்று மயங்கிக் கோபத்தால் சீறிக்கொண்டு மந்தரகிரியின் நடுவில் தூங்கும் மலைப்பாம்புகளைப்போல் அந்தப் புஜங்கள் படுக்கையில் கிடப்பதைக் கண்டார். பர்வதத்தைப் போன்ற சரீரத்தையுடைய ராவணனுக்கு உத்தமலக்ஷணங்கள் பொருந்திய இரண்டுபுஜங்களும் மந்தரகிரியின் இரண்டு சிகரங்களைப் போல் விளங்கின. அவனுடைய மூச்சுக்காற்று மாங்கனி புன்னை மகிழம்பூ முதலியவைகளிலிருந்து இறக்கின மதுவின் வாஸனையாலும், ஷட்ரஸங்களுடன் புஜித்த அன்னத்தின் வாஸனையாலும், சிரேஷ்டமான பானங்களின் வாஸனையாலும் அந்த சயனகிருஹம்முழுவதையும் மணக்கும்படி செய்தது. நவரத்னங்களாலும் முத்துக்களாலும் அலங்கரிக்கப்பட்ட தங்கக்கிரீடம் கொஞ்சம் நழுவி இருந்தது. குண்டலங்களுடைய காந்தி முகமெங்கும் பரவியது. பருத்து நீண்டு அகன்ற மார்பில் சிவந்த சந்தனம் பூசப்பட்டிருந்தது. ஹாரங்கள் ஜ்வலித்தன. சிரேஷ்டமான பட்டு உத்தரீயங்கள் கொஞ்சம் நழுவி இருந்தன. இடுப்பில் பீதாம்பரத்தைத் தரித்திருந்தான். சிவந்த கண்களுடனும் உளுந்துமலையைப்போன்ற தேகத்துடனும், மஹா ஸர்ப்பத்தைப்போல் மூச்சுவிட்டுக் கொண்டு, கங்காப் பிரவாஹத்தின் மத்தியில் அயர்ந்து தூங்கும் மதயானையைப்போல் தோன்றினான். நான்கு பக்கங்களிலுமுள்ள தங்க ஸ்தம்பங்களில் ஏற்றிய தீபகாந்தியால் ஸகல திக்குகளும் பிரகாசித்தன.

ஆகையால் ஸகலபாகங்களையும் நன்றாகத் தெரியச்செய்யும் மின்னற்கொடிகள்பாயும் மேகத்தைப்போல் மஹாசரீரத்தையுடைய ராவணனையும், அவனிடத்தில் பரமப்பிரீதிவைத்த ஸ்த்ரீகள் அவனுடைய பாதத்தடியில் தூங்குவதையும் ஹநுமார் கண்டார். பூர்ண சந்திரனுக்கு ஸமமான காந்திபொருந்திய முகங்களுடன், அழகிய குண்டலங்களாலும் வாடாதமாலைகளாலும் அலங்கரிக்கப்பட்ட அநேக ஸ்த்ரீகளைக் கண்டார். சிலர் நாட்டியத்தாலும் வாத்தியங்களாலும் ராவணனை ஸந்தோஷப்படுத்தி அவனால் சிரேஷ்டமான ஆபரணங்களை வெகுமதியாகக் கொடுக்கப்பட்டு, அவனுடைய புஜங்களிலும் மடியிலும் கொஞ்சி விளையாடி, அப்படியே தூங்கிவிட்டார்கள். சிலர் வஜ்ர வைடூரியங்களால் இழைக்கப்பட்ட தோள்வளைகள் அணிந்த புஜங்களையே தலையணையாய் வைத்துத் தூங்கினதால், தோள்வளைகளும் காதில் தரித்த குண்டலங்களும் கலந்து பிரகாசித்தன. சந்திரனையொத்த முகங்களாலும், நக்ஷத்திரங்களைப் போன்ற குண்டலங்களாலும் அந்த விமானம் ஆகாசத்தைப்போல் விளங்கிற்று. யௌவனக்கொழுப்பால் ராவணனுடன் வெகுநேரம் கிரீடித்துக் களைத்து, அவர்கள் இருந்தவிடத்திலேயே தூங்கிவிட்டார்கள். ஒரு ஸுந்தரி பரதசாஸ்திரத்தில மிகவும்திறமையுள்ளவள். நர்த்தனத்தாலும் அபிநயத்தாலும் ராவணனை ஸந்தோஷப்படுத்தி அயர்ந்து தூங்குகையிலும் அவயவங்களை நாட்டியலக்ஷணங்களுக்கு இசைந்தபடியே வைத்துக்கொண்டு தூங்கிவிட்டாள். ஒரு பெண்மணி அத்புதமாய் வீணைவாசித்து ராவணனை மகிழச்செய்து, அந்த வீணையை அணைத்துக்கொண்டே தூங்குகையில், புஷ்பங்களாலும் இலைகளாலும் விளங்கும் தாமரைக்கொடி நதிப்பிரவாகத்தில் அடித்துக்கொண்டுபோகப்படும்பொழுது அகஸ்மாத்தாய் ஸங்கித்த ஒரு ஓடத்தைப் பற்றிக் கொண்டு நிற்பதுபோல் தோன்றினாள். கைக்குழந்தையை மிக்க பிரேமையுடன் இடுப்பில் வைத்துக்கொண்டிருப்பவளைப்போல், ஒருத்தி மட்டுகமென்ற வாத்தியத்தைஅணைத்துக்கொண்டே தூங்கிவிட்டாள். நெடுநாளாகக் காணாத நாயகனைச்

சேர்ந்து ஆசையுடன் அணைவதுபோல், ஒருத்தி படஹமென்ற வாத்தியத்தை அணைத்துக்கொண்டே நித்திரை செய்தாள். தன் பிரியநாயகனை அணைவதற்கு ஸமயம் நேராமல், தவித்துக்கொண்டிருந்த காமினி, அகஸ்மாத்தாய் நாதனை ஏகாந்தத்தில் ஸந்தித்து, ஆசை மீறி இறுகத் தழுவுவதுபோல், ஒருத்தி புல்லாங்குழலை இறுகத் தழுவிக்கொண்டே உறங்கினாள். நாயகனுடன் ஸ்வேச்சையாய்ப்படுத்திருக்கும் கமலாக்ஷியைப்போல், நாட்டியத்தில் தேர்ந்தவளும் மிருதுபாஷிணியுமான ஒரு ஸ்த்ரீரத்னம் விபஞ்சியை அணைத்துகொண்டே தூங்கினாள். ஒருத்தி மதத்தால் கண்கள் சுழல, பருத்து மிருதுவாய்த் தங்கக்கொடிபோன்ற அவயவங்களால் மிருதங்கத்தை ஆலிங்கனம் செய்துகொண்டே தூங்கிவிட்டாள். சிறுத்த இடையுள்ள ஒருத்தி மதுபானத்தால் களைத்து பணவத்தைப் புஜங்களுக்கும் விலாவிற்கும் நடுவில்அணைத்துக்கொண்டே தூங்கினாள். ஒருத்தி ஒரு டிண்டிமத்தை மார்பிலும் வேறொரு டிண்டிமத்தைப் புஜத்திலும் அணைத்துக்கொண்டு தூங்கும்பொழுது, பிரியநாயகனை மார்புடன் ஆலிங்கனம்செய்துகொண்டு, குழந்தையையும் கட்டியணைப்பவளைப் போல் தோன்றினாள். ஒருத்தி ஆடம்பரத்தை புஜங்களால் இறுகத் தழுவிக் கொண்டே தூங்கிவிட்டாள். ஒருத்தி கலசத்தைக் கவிழ்த்துத் தலையணையாய் வைத்துக்கொண்டு தூங்குகையில்அதில் மிகுந்திருந்த குங்குமம் சந்தனம் கலந்த ஜலம் அவளுடைய தேகத்தில் பெருக, கோடை காலத்தில் வாடாமல் இருப்பதற்காக ஜலம் தெளித்துவைக்கப்பட்ட புஷ்பமாலையைப்போல் காணப்பட்டாள். ஒருத்தி தூக்கம் தாங்கமுடியாமல், தங்கக் கலசங்களைப்போன்ற ஸ்தனங்களைக்கைகளால் மறைத்துக்கொண்டே தூங்கிவிட்டாள். ஒருத்தி மதத்தால் மெய்மறந்து, தன் ஸமீபத்தில் படுத்திருந்த ஸகியை நாயகன்என்றெண்ணி இறுகத் தழுவிக்கொண்டே தூங்கினாள். காமினிகள் நாயகர்களை இறுகத் தழுவுதல் போல் உத்தம ஸ்த்ரீகள் அநேகர் விசித்திரமான வாத்தியங்களைப் புஜங்களாலும் ஸ்தனங்களாலும் அணைத்துக்கொண்டே தூங்கினார்கள். அவர்களைப் பார்த்துக்கொண்டுபோகையில், ஹனுமான் ஓரிடத்தில் தனியாய் திவ்யாலங்காரங்களுடன் ஒரு சயனத்தையும் அதில் அழகே உருவெடுத்து வந்ததுபோலிருக்கும் ஒருஸ்த்ரீ நித்திரைசெய்வதையும் கண்டார். முத்துக்களாலும் நவமணிகளாலும் இழைக்கப்பட்ட ஆபரணங்களை அணிந்துகொண்டு,உருக்கியோடவிட்ட ஆயிரத்தெட்டு மாற்றுத் தங்கத்தைப் போல் ஜ்வலிக்கும் தேக காந்தியுடன், தன் தேஜஸாலும் கலைகளாலும் அந்த விமானத்திற்கு ஒரு சிரேஷ்டமான ஆபரணம்போல் விளங்கும் அந்தப் பெண்மணி மந்தோதரி என்று கீர்த்திபெற்ற ராவணனுடைய பட்ட மஹிஷி. அவனுக்கு உயிருக்குயிரானவள், அந்தப்புரத்திற்குஅதிபதி. ஆஞ்ஜனேயர் அவளுடைய அபூர்வமான ரூபத்தையும் யௌவனத்தையும் கவனித்து இவள் ஸீதையாக இருக்கலாமென்று நினைத்து, ஸந்தோஷம் தாங்காமல், தோள்தட்டி வாலை முத்தமிட்டு ஆனந்தமடைந்தார்; குதித்து விளையாடினார்;பாடினார்; ஆடினார்; உலாவினார்; ஸ்தம்பங்களில் ஏறிக் குதித்தார்; இப்படி வானரர்களுக்கு ஸ்வபாவமான சேஷ்டைகளை எல்லாம் செய்தார்.



ஆஸ்போ$^{2}$டயாமாஸ சுசும்ப$^{3}$ புச்ச$^{2}$ம்
நநந்த$^{3}$ சிக்ரீட$^{3}$ ஜகௌ$^{3}$ ஜகா$^{3}$ம |
ஸ்தம்பா$^{4}$ நரோஹந் நிபபாத பூ$^{4}$மௌ
நித$^{3}$ர்ஶயந் ஸ்வாம் ப்ரக்ருதிம் கபீநாம் ‖ (55)

## ஸர்க்கம் 11

## பானசாலை

அவதூ$^{4}$ய ச தாம் பு$^{3}$த்$^{3}$தி$^{4}$ம் ப$^{3}$பூ$^{4}$வா வஸ்தி$^{2}$தஸ் ததா$^{3}$ |
ஜகா$^{3}$ம சாபராம் சிந்தாம ஸீதாம் ப்ரதி மஹாகபி: ‖ (1)

**பி**றகு கொஞ்சம் யோசித்து அவள் ஸீதையல்ல என்றுதெளிந்து, ஜானகி எங்கே இருக்கக் கூடுமென்று மறுபடியும் கவலைகொண்டார். "ராமனை விட்டுப் பிரிந்து அவர் படும் கஷ்டங்களை அறிந்தும் ஜானகிக்குத் தூக்கம் வருமோ? அன்னம் வேண்டியிருக்குமோ? அலங்காரம் செய்துகொள்ளவும் தோன்றுமோ? பானங்களையும் பக்ஷ்யங்களையும் அனுபவிக்கப் புத்தியுண்டாகுமோ? தேவேந்திரனுயிருந்தாலும் ராமனைத் தவிர வேறு புருஷனை ஸ்வப்பனத்திலும் நினைப்பாளோ? ஸகல லோகங்களிலும் ராமனைப்போன்ற வேறொருவருமுண்டோ? ஆகையால் இவள் ஸீதையல்ல; வேறு யாரோ" என்று முடிவுசெய்து பானசாலையில் மறுபடியும் தேடினார். அங்கே சிலர் சொக்கட்டான் சோழி அம்மானை சூது சதுரங்கம் முதலிய விளையாட்டுகளால் களைத்தும், சிலர் பாட்டினால் சிரமமடைந்தும், சிலர் நாட்டியததால் அலுத்தும், சிலர் மதுபானம் செய்து மயங்கியும், சிலர் முரவம் மிருதங்கம் முதலிய வாத்தியங்களைத் தலையணையாய் வைத்துக்கொண்டும், சிலர் பீடங்களின்மேலும், சிலர் நேர்த்தியான விரிப்புகளின்மேலும், பிரக்ஞையற்றுத் தூங்கினார்கள். அவர்களிலும் ஸீதையைக் காணாமல் மறுபடியும் ராவணன் படுத்திருக்கும் இடத்திற்கு வந்தார். அவனுடைய ஸ்த்ரீகளெல்லாம் மஹா பக்தியுடன் தங்களுடைய பர்த்தாவின் ரூபத்தையும் குணங்களையும் எப்பொழுதும் புகழ்பவர்கள்; யுக்தமாய்ப் பாடவும் அதன் தாத்பரியத்தைத் தெளிவாக எடுத்துச் சொல்லவும் ஸாமர்த்தியமுடையவர்கள்; தேச காலங்களை அறிந்து நடப்பவர்கள்; ஸமயோசிதமாய்ப் பேசுகிறவர்கள். ராவணன் அவர்களுடன் காம சாஸ்திரப்படி ஸகல போகங்களையும் அனுபவித்து, அயர்ந்து தூங்குவதைக் கண்டார். அவர்களுக்கு நடுவில் அந்த ராக்ஷஸேசுவரன் சிரேஷ்டமான பசுக்களுக்கு நடுவில் விளங்கும் காளையைப்போலும்,வனத்தில்பெண் யானைகளால் சூழப்பட்ட மதயானையைப்போலும் விளங்கினான்.

பிறகு விரும்பக்கூடிய ஸகல பதார்த்தங்களாலும் நிறைந்த பான பூமிக்கு மாருதி வந்தார். அங்கே மான் எருமை பன்றி முதலிய மிருகங்களின் மாம்ஸங்கள் குப்பல் குப்பல்களாய் வைக்கப்பட்டிருந்தன. விசாலமான தங்கத் தட்டுகளில் தின்று மிகுந்தமயில், கோழி, மான் பன்றி, சல்யம், வார்த்ராணஸம் முதலிய பறவை மிருகங்களின் மாம்ஸங்கள் தயிரிலும் ருசகமென்ற உப்பிலும் பக்குவம் செய்து வைத்திருந்ததைக் கண்டார். வெகு சாதுரியமாய்ப் பக்குவம் செய்யப்பட்ட க்ரிகரம் சகோரமென்ற பக்ஷிகள் எருமைகள் ஆடுகள் ஏகசல்யமென்ற மீன் முதலியவைகளின் மாம்ஸங்களும் நானாவிதமான துவையல்களும் பானங்களும் தின்பண்டங்களும் புஜிக்கப்பட்டு மிகுந்திருப்பதைக் கண்டார். உப்புப் புளிப்பேற்றிய அனேக வ்யஞ்ஜனங்களாலும், வெள்ளைக்கடுகு கலந்த ஆறு வகை ரஸங்கள் பொருந்திய பக்ஷ்யங்களாலும், ஸ்த்ரீ புருஷர்கள் குடிமயக்கத்தில் கழற்றியெறிந்த ஹாரம் சிலம்பு முதலிய பூஷணங்களாலும், பான பாத்திரங்களில் ஊறும் பலவகைப் பழங்களாலும், அந்தப் பான சாலை புஷ்பங்களால் பூமிதேவியை அர்ச்சிப்பதுபோல் விளங்கிற்று. அங்கங்கே போட்டிருக்கும் படுக்கைகளாலும் ஆஸனங்களாலும் அந்தக் கிருஹம் நெருப்பில்லாமலேயே கொழுந்துவிட்டெரிவதுபோலிருந்தது. அதி ஸமர்த்தர்களான சமையற்காரர்களால் விதம் விதமாகப் பக்குவம் செய்து தனித் தனியாய் வைக்கப்பட்ட மாம்ஸங்களைக் கண்டார்; ஸமுத்திர மதன காலத்தில் உண்டான வாருணி என்ற பானத்தின் வகைகளும், சர்க்கரை தேன் புஷ்பங்கள் பழங்கள் முதலியவைகளிலிருந்து இறக்கின பானங்களும், சாதுரியமாய்ச் செய்யப்பட்ட பானங்களும், வாஸனைப் பொடிகளும் ஏராளமாய் வைக்கப்பட்டிருந்தன. (திராக்ஷை, இலுப்பை, பேரீச்சை, பனை, கரும்பு, கொம்புத்தேன், அடைத்தேன், வெல்லம், தென்னை முதலியவைகளிலிருந்து பலவித பானங்கள் செய்யப்படும்), தங்கத்தாலும் ஸ்படிகத்தாலும் செய்யப்பட்ட போஜன பாத்திரங்களாலும், தங்கக் கூஜாக்களாலும் அந்தப் பானபூமி நிறைந்திருந்தது. தங்கக் குடங்களிலும் வெள்ளிக் குடங்களிலும் சிரேஷ்டமான பானங்கள் ஊற்றி வைக்கப்பட்டிருந்தன. தங்கத்தாலும் வெள்ளியாலும் செய்யப்பட்டு ரத்தினங்கள் இழைத்த அனேக பான பாத்திரங்கள் சாராயம் குடிப்பதற்காக ஸித்தமாக இருந்தன. சில இடங்களில் பாத்திரங்களில் வைக்கப்பட்ட பானங்கள் குடிக்கப்படாமலேயே இருந்தன; சிலவிடங்களில் பாதி குடிக்கப்பட்டிருந்தன; சிலவிடங்களில் முழுவதும் குடிக்கப்பட்டிருந்தன; ஓரிடத்தில் பலவித பக்ஷ்யங்களும், ஓரிடத்தில் பானங்களின் மிகுதியும், ஓரிடத்தில் புஜித்த அன்னத்தின் மிகுதியும் காணப்பட்டது; ஓரிடத்தில் கிண்டிகள் உடைந்து கிடந்தன; ஓரிடத்தில் குடங்கள் உருண்டு கிடந்தன; ஓரிடத்தில் மாலைகளும்



காமம் த்$^{3}$ருஷ்டா மயா ஸர்வா விஸ்வஸ்தா ராவணஸ்த்ரிய: |
ந ஹி மே மநஸ : கிஞ்சித்$^{3}$ வைக்ருத்ய முபபத்$^{3}$யதே ‖ —ஸு, 11 ஸ—39 சு.

"ராவண பத்தினிகள் ஸ்வேச்சையாகத் தூங்கும் பொழுது என்னால் நன்ருகப் பார்க்கப்பட்டார்கள்; ஆனல் என் மனத்தில் யாதொரு காம விகாரமும் உண்டாகவில்லை" (பக்கம் 59 பார்க்க)

பழங்களும் ஜலத்தில் கிடந்தன; ஓரிடத்தில் ஸ்த்ரீகளுக்காக அனேகம் படுக்கைகள் போடப்பட்டிருந்தன.

சில ஸ்த்ரீகள் ஒருவரையொருவர் இறுகத் தழுவிக்கொண்டும், சிலர் தூங்குகிறவர்களுடைய வஸ்திரங்களை உடுத்துக்கொண்டும் நித்திரை மேலிட்டுத் தூங்கினர்கள். மிருதுவான தென்றலைப்போல் அவர்களுடைய சுவாஸக் காற்று அவர்கள் அணிந்த வஸ்திரங்களையும் மாலைகளையும் சற்று அசைத்தது. அந்தப் பானசாலையில் வீசும் காற்று, குளிர்ந்த சந்தனம் தேனின் ரஸம் சாராயம் நானுவித புஷ்ப மாலைகள் பலவகைத் தூபங்கள் முதலியவைகளில் தாக்கி அவைகளின் குளிர்ச்சியையும் பரிமளத்தையும் ராவணன் படுத்திருந்த புஷ்பக விமானத்தில் வீசிற்று. அங்கேயிருந்த சில ஸ்த்ரீகள் கறுப்பும் வெளுப்பும் கலந்த வர்ணமுடையவர்கள்; சிலர் கறுத்தவர்கள்; சிலர் தங்கக் கொடிபோன்ற அவயவங்களையுடையவர்கள். ரதி சிரமத்தாலும் தூக்கத்தாலும் பிரக்ஞையற்றிருக்கும் அந்தப் பெண்கள் ஸூரியாஸ்தமன காலத்தில் மூடியிருக்கும் தாமரைகளைப் போல் விளங்கினர்கள். மஹா தேஜஸ்வியான ஹனுமான் இப்படி ராவணனுடைய அந்தப்புரம் முழுவதையும் வெகு ஜாக்கிரதையாகத் தேடியும் ஜானகியைக் காணவில்லை. "பர ஸ்த்ரீகள் பர்த்தாவுடன் ஸ்வேச்சையாய்த் தூங்கும்போது பார்த்துவிட்டேனே. என்னுடைய பிரஹ்மசரிய தர்மத்திற்குக் குறைவு நேருமே. இவர்களைக் கண்டதால் என் மனத்தில் யாதொரு விகாரமும் இல்லாவிட்டாலும், பர ஸ்த்ரீகளைப் பார்ப்பது பாபமல்லவா" என்று சற்றுநேரம் நினைத்து, பிறகு 'இந்தக் கவலை நமது காரியத்தைக் கெடுத்துவிடும்" என்று அதையொழித்து, தனக்கு ஸ்வபாவமான தைரியத்தையும் புத்திக் கூர்மையையும் கைக்கொண்டு, நடக்கவேண்டிய காரியத்தின் குண தோஷங்களை யோசித்தார். "ராவண பத்தினிகள் ஸ்வேச்சையாகத் தூங்கும்போது என்னல் நன்ருகப் பார்க்கப்பட்டார்கள்; ஆனல் என் மனத்தில் யாதொரு காம விகாரமும் உண்டாகவில்லை. ஸகல புண்ணிய பாப கர்மங்களைச் செய்வதிலும் இந்திரியங்களை ஏவுகிறது மனமல்லவா? என் மனத்திலோ கொஞ்சமாவது களங்கமில்லை. இவர்களைப் பார்க்காமலேயே இருக்கலாமே என்றல், ஜானகியை ஸ்த்ரீகள் இருக்கும் இடத்தில் தேடாமல் வேறு எங்கே தேட முடியும்? ஒவ்வொரு வஸ்துவையும் அந்த ஜாதி வஸ்துக்கள் இருக்குமிடத்தில் தேடினல் கண்டு பிடிக்கலாமே தவிர மான்களுக்கு நடுவில் ஸ்த்ரீயைத் தேடுவார்களுண்டோ? சுத்தமான மனத்துடன் ராவணனுடைய அந்தப்புரம் முழுவதிலும் தேடிப் பார்த்தும், ஜானகியைக் காணவில்லையே. தேவ கன்யைகளையும் கந்தர்வ கன்யைகளையும் நாக கன்யைகளையுமல்லவா கண்டேன்; ராகவ பத்னியான ஜானகியைக் காணக் கிடைக்கவில்லையே!' என்று சற்று நேரம் கவலைகொண்டார். மறுபடியும் தைரியமடைந்து அந்தப்

பானசாலையை விட்டு ராவணனுடைய சயன கிருஹத்தில் தேட ஆரம்பித்தார்.

ஸ பூ⁴யஸ்து பரம் ஸ்ரீமாந் மாருதிர் யத்ந மாஸ்தி²த: |
ஆபாநபூ⁴மி முத்ஸ்ருஜ்ய தாம் விசேதும் ப்ரசக்ரமே ‖ (46)

---

## ஸர்க்கம் 12

# ஸீதையைக் காணமல் மாருதி துக்கித்தது

---

ஸ தஸ்ய மத்⁴யே ப⁴வநஸ்ய மாருதி:
லதா க்³ருஹாந் சித்ர க்³ருஹாந் நிஶாக்³ருஹாந் |
ஜகா³ம ஸீதாம் ப்ரதி த³ர்ஶநோத்ஸுகோ
ந சைவ தாம் பஶ்யதி சாரு த³ர்ஶநாம் ‖ (1)

ஆஞ்ஜநேயர் ஸீதையைக் கண்டுபிடிப்பதிலேயே நோக்கமுள்ளவராய், அந்தக் கிருஹத்தில் தேடிக்கொண்டு போகையில், கொடிகளால் செய்யப்பட்ட வீடுகளையும், விசித்திர ரூபங்களுடன் கட்டப்பட்ட வீடுகளையும், ராத்திரியில் வஸிக்கத் தகுந்த வீடுகளையும் கண்டு அங்கெல்லாம் ஜாக்கிரதையாய்த் தேடினர். அழகிய பார்வையுடைய ஸீதையை மாத்திரம் காணவில்லை. "ஐயோ! இந்த லங்கா நகரத்தில் எல்லா விடங்களிலும் வெகு ஜாக்கிரதையாகத் தேடியும் ரகுநாதனுடைய பிரிய பாரியையைக் காணமே. பிராணநாயகனை விட்டுப் பிரிந்திருக்க முடியாமல் உயிரை விட்டாளோ? ஸாதுக்களுடைய மார்க்கத்திலிருந்து நழுவாத ஜனகபுத்திரி தன் கற்பை ரக்ஷிப்பதில் நோக்கமுள்ளவளாய், இந்த குரூர ராக்ஷஸனுக்கு இணங்காமல் அவனால் கொல்லப்பட்டாளோ? ராகவனுடைய திவ்விய மங்கள விக்ரஹத்தைக் கண்டு ஆனந்தித்த ஸீதை, தனக்குக் காவலாய் வைக்கப்பட்ட ராக்ஷஸிகளின் ஏற்றக் குறைவான சரீரங்களையும் அவயவங்களையும் விகார வேஷத்தையும் தேஜஸற்ற முகங்களையும் குரூர காரியங்களையும் கண்டு பயத்தால் உயிரை விட்டாளோ? ஸுக்ரீவனோ மஹா பலவான்; மிகவும் கடுமையாகத் தண்டிப்பவன். அவன் குறிப்பிட்ட ஒரு மாத காலத்தையும் வானரர்களுடன் விளையாட்டில் கழித்தேன்; ஸீதையையும் கண்டு பிடிக்கவில்லை; சத்துருவின் பல பராக்கிரமங்களையும் அறியவில்லை; இந்த ஸ்திதியில் மஹா ராஜாவிற்கெதிரில் போவதற்கும் யோக்கியதை உண்டோ? ராவணனுடைய அந்தப்புரத்தில் ஓரிடம் விடாமல் தேடினேன்; அவனுடைய பத்தினிகளைக் கண்டேனே தவிர மஹா பதிவிரதையான ஸீதையைக் காணவில்லையே! நூறு யோஜனை விஸ்தீரணமுள்ள மஹா ஸமுத்திரத்தைத் தாண்டினதும், நடுவில் நேர்ந்த விக்கினங்களை ஜயித்ததும், ஸூக்ஷ்ம ரூபத்துடன் இந்த நகரத்தில் எங்கும் தேடினதும் வீணாயிற்றே!



வந்த காரியத்தை முடிக்காமல் திரும்பிப் போனால், "ஹனுமான் ஸமுத்திரத்தைத் தாண்டி லங்கைக்குப் போயிருக்கிறான். நம்முடைய ஸகல உத்தேசங்களையும் நிறைவேற்றிக்கொண்டே வருவான். நாம் விசாரப்பட வேண்டியதில்லை, நமது கஷ்டங்கள் தீர்ந்தன" என்று என் வரவை ஆவலுடன் எதிர்பார்த்துக் கொண்டிருக்கும் வானர வீரர்களெல்லாம் என்னைச் சூழ்ந்துகொண்டு என்ன சொல்வார்கள்? 'வீர சிகாமணியே! எங்களால் முடியாத காரியத்தைச் செய்தாய். ராகவ பத்தினியைக் கண்டாயா? ராவணனுடைய பல பராக்கிரமங்களைப் பூர்ணமாக அறிந்து வந்தாயா? நீ அங்கே செய்த ஸகல வியவஹாரங்களையும் விஸ்தாரமாய் எங்களுக்குச் சொல்" என்று கேட்பார்களே. என்ன பதில் சொல்வேன்? லங்கா நகரத்தில் எவ்வளவு தேடியும் ஜானகியைக் காணவில்லை என்று சொல்வேனா? மற்ற வானர வீரர்கள் அங்கதனிடத்தில் தங்களுடைய பலத்தைச் சொல்லித் தப்புவித்துக் கொண்டார்கள். நான் மாத்திரம் வாயை மூடிக்கொண்டிருந்து ஜாம்பவான் என்னை ஸ்தோத்திரம் செய்யும் பொழுது மனமகிழ்ந்து அசட்டுத் தனமாய்ப் பிதற்றிவிட்டேனே. செய்ய வேண்டிய காரியத்தின் ஸ்வபாவத்தை ஆராய்ந்து பாராமல். செய்து முடிக்கிறேனென்று ஒப்புக்கொண்டேன். புறப்படுகையில் மௌனமாயிராமல், "ராகவனுடைய கோதண்டத்திலிருந்து பிரயோகிக்கப்பட்ட பாணத்தைப்போல் ஒரு க்ஷணத்தில் லங்கைக்குப் போவேன். அங்கே ஸீதையைத் தேடிக் கண்டுபிடிப்பேன். காணாவிட்டால் பதினான்கு லோகங்களில் எங்கிருந்தாலும் போய்க் கண்டுபிடிப்பேன். அங்கும் காணாவிட்டால், மறுபடியும் லங்கைக்கு வந்து ராவணனைக் கட்டி. இழுத்துக்கொண்டு வருவேன். அவனையும் காணாவிட்டால் லங்கையை வேருடன் பெயர்த்து இங்கே கொண்டு வருவேன்" என்று வீரவாதம் பேசினேனே. என்னைப் புகழ்ந்த வயது சென்ற ஜாம்பவானும் அவரை அனுஸரித்துப் பேசின அங்கதனும், மற்ற வானரவீரர்களும் இப்பொழுது என்னைப் பலவிதமாய் நிந்திப்பார்களே. திரும்பிப் போகாமல் இங்கேயே இருந்து விடு என்றால், நான் குறிப்பிட்ட காலம் தாண்டினவுடன், வானரர்களெல்லோரும் "ஹநுமான் களைத்து ஸமுத்திரத்தில் வீழ்ந்திருப்பான்; அல்லது சத்துருக்களால் கொல்லப்பட்டிருப்பான்" என்று நிச்சயித்து பிராயோபவேசம் செய்து உயிரை விடுவார்களே" என்று சற்றுநேரம் கவலைகொண்டு பிறகு, "என்ன புத்தி மோசம் போனேன்! கவலை உயிரை வாங்குமே; காரியங்களைக் கெடுக்குமே; ஸகல ஸம்பத்திற்கும் உத்ஸாஹமல்லவா காரணம்; உத்ஸாஹமே சிரேஷ்டமான ஸுகத்தைக் கொடுக்கும். எந்தக் காரியத்தையும் செய்யும்படி மனிதனைத் தூண்டிவிடுகிறது உத்ஸாஹமல்லவா? மனிதன் செய்யும் ஸகல காரியங்களையும் ஸுலபமாகச் செய்வது உத்ஸாஹமே. ஆகையால் உத்ஸாஹத்துடன் மறுபடியும் பிரயத்தனம் செய்கிறேன். ராவணனால் ஆளப்பட்ட ஸ்தலங்களையும் பானசாலைகளையும், புஷ்ப

கிருஹங்களையும், சித்திர சாலைகளையும், கிரீடா கிருஹங்களையும், வீடுகளைச் சேர்ந்த தோட்டங்களிலுள்ள பாதைகளையும், புஷ்பகம் முதலிய விமானங்களையும், சுரங்கங்களையும், நாற்சந்திகளிலுள்ள கிருஹங்களையும், வீடுகளுக்குத் தொலைவில் ஸ்வேச்சையாய் விளையாடுவதற்காகக் கட்டப்பட்ட கிருஹங்களையும் மறுபடியும் தேடுகிறேன்" என்று மேலே ஏறியும் இறங்கியும் நின்றுகொண்டும் நடந்துகொண்டும் வாசல்களையும் கதவுகளையும் திறந்துகொண்டும், உள்ளே நுழைந்தும் வெளியே வந்தும், குகைகளில் பிரவேசித்தும், வெளிக் கிளம்பியும் தேடிக்கொண்டே போனார். ராவணனுடைய அந்தப்புரத்தில் அவரால் பரிசோதிக்கப்படாத இடம் கிடையாது. கோட்டைக்குள்ளிருக்கும் வீதிகளையும் நாற்சந்தி மரங்களுக்கடியிலுள்ள மேடைகளையும் துரவுகளையும் குளங்களையும் நன்றாய்த் தேடிப் பார்த்தார். நானா ரூபமுள்ளவர்களும் குரூபிகளும் விகார வேஷமுள்ளவர்களுமான ராக்ஷஸிகளைக் கண்டார்; ஜானகியைக் காணவில்லை. நிகரற்ற ஸௌந்தரியத்தையுடைய வித்யாதர ஸ்த்ரீகளைக் கண்டார்; ராகவனுக்கு ஆனந்த ஹேதுவான ஸீதையைக் காணவில்லை. பூர்ணசந்திரனையொத்த முகங்களையுடைய உத்தமமான நாக கன்யைகளைக் கண்டார்; லாவண்ய நிதியான வைதேஹியைக் காணவில்லை. யுத்தத்தில் ஜயித்த நாகர்களுடைய கன்யைகளைப் பலவந்தமாய் அபகரித்துக் கொண்டுவந்து வைத்திருப்பதைக் கண்டார்; ஜனக மஹாராஜனுக்கு அருமையான ஸீதையைக் காணவில்லை.

வாயு புத்திரனும், ஸூரியனை அலக்ஷ்யமாய்த் தாவிப் பிடித்தவரும், புத்தியிலும் யோசனையிலும் ஒப்பில்லாதவருமான ஆஞ்ஜனேயர் மற்ற ஸ்த்ரீ ரத்தினங்களையும் கண்டு ஸீதையைமாத்திரம் காணாமல் சொல்ல முடியாத துக்கத்தை அடைந்தார். அளவற்ற பராக்கிரமசாலியானாலும் வானர வீரர்களுடைய பிரயத்தனங்களும், தான் ஸமுத்திரத்தைத் தாண்டினதும் வீணானதைக் கண்டு மறுபடியும் கவலைகொண்டு புஷ்பகத்திலிருந்து இறங்கி, துக்கத்தால் மனம் நொந்து மறுபடியும் ஆலோசிக்கலானார்.

அவதீர்ய விமாநாச்ச ஹநூமாந் மாருதாத்மஜ: |
சிந்தா முபஜகா³மாத² ஶோகோபஹத சேதந: || (25)

## ஸர்க்கம் 13

## ஸீதையைக் காணாமல் மாருதி துக்கித்தது (தொடர்ச்சி)

விமாநாத்து ஸுஸங்க்ரம்ய ப்ராகாரம் ஹரியூத²ப: |
ஹநூமாந் வேக³வாநாஸீத்³ யதா² வித்³யுத்³ க⁴நாந்தரே || (1)

பிறகு மஹா வேக சாலியான ஹனுமான் இந்திர நீலக்கல்லால் அலங்கரிக்கப்பட்ட கோட்டைமதில் மேலேறி நிற்கையில் கறுத்த

Notes : This Blank Page has also to be counted as a another page Number.

It is intentionally left blank after Picture Sketches.!



பூ4யிஷ்ட2ம் லோலிதா லங்கா ராமஸ்ய சரதா ப்ரியம் ‖
நஹி பஶ்யாமி வைதே3ஹீம் ஸீதாம் ஸர்வாங்க3ஶோப4நாம் —ஸு". 13ஸ—3சு.

"ராமனுடைய ஆக்ஞையை நிறைவேற்ற முயன்ற நான் இந்த லங்கா நகரத்தை வேண்டிய வரையில் தேடினேன். உத்தம லக்ஷணங்கள் பொருந்திய அவயவங்களையுடைய ஸீதையை மாத்திரம் காணவில்லை (பக்கம் 65 பார்க்க)

மேகங்களுக்கு நடுவில் பிரகாசிக்கும் மின்னலைப்போல் தோன்றினர். ராவண கிருஹத்தில் எங்கும் தேடியும் ஸீதையைக் காணமல் பின் வருமாறு யோசித்தார். "ராமனுடைய ஆஜ்ஞையை நிறைவேற்ற முயன்ற நான் இந்த லங்கா நகரத்தை வேண்டியவரையில் தேடினேன். உத்தம லக்ஷணங்கள் பொருந்திய அவயவங்களையுடைய ஸீதையை மாத்திரம் காணவில்லை. குட்டைகள், குளங்கள், ஏரிகள், வாய்க்கால்கள், நதிகள், சதுப்பு நிலங்கள் நிறைந்த வனங்கள், புதர்கள், மலைகள் ஒன்றுவிடாமல் தேடிப் பார்த்தேன்; ஜானகி மாத்திரம் காணப்படவில்லையே! 'ராவண கிருஹத்தில் ஸீதை இருக்கிறாள்; அதோ பாருங்கள்' என்று சொன்ன ஸம்பாதியின் வார்த்தைப்படி இங்கே அவளைக் காணேனே!

எது எப்படியிருந்தாலும், ஜானகி காம பரவசமாய், துஷ்ட ஸ்வபாவத்தையுள்ள ராவணனிடத்தில் மோகித்து அவனுக்கு உட்பட்டிருப்பாளோ? அவள் ஸாமான்ய ஸ்த்ரீயா? யாகயக்ஞங்களுக்கும் பிரஹ்மவித்யைக்கும் வாஸ ஸ்தலமான விதேஹ வம்சத்தில் பிறந்தவளல்லவா? சதானந்தர் யாக்ஞவல்க்யர் முதலிய பிரஹ்ம நிஷ்டர்களால் பரிசுத்தமான மிதிலா நகரத்தில் அவதரித்தவளல்லவா? மஹரிஷிகளும் உபதேசத்திற்காக வந்து அடுக்கும்படியான ஜனகரென்ற பிரஹ்மவித்திற்குப் பிறந்தவளல்லவா? மற்ற ஜீவகோடிகளைப்போல் ஸ்த்ரீ புருஷ ஸம்பந்தத்தால் பிறக்காமல், யாக காலத்தில் யாக பூமியை உழும்பொழுது கலப்பை நுனியால் வெளிப்படுத்தப் பட்டவளன்றோ?

ஒருவேளை ராவணன் ஸீதையை எடுத்துக்கொண்டு ஆகாச மார்க்கமாகப் போகையில், 'இதற்குள் ராமன் பர்ணசாலைக்கு வந்து, ஸீதையைக் காணமல் தேடி, ஜடாயு முதலியவர்களால் நான் கொண்டு போகிறேனென்றறிந்து, பாணப் பிரயோகம் செய்தால் என்ன செய்வேன்? அது எங்கிருந்தாலும் விடாதே. மாரீசனைப் படுத்தினபாடு தெரியாதா?' என்று நினைத்து நடுங்கி ஸீதையை நழுவ விட்டிருக்கலாம். அவள் மலைகளைப்போன்ற அலைகள் கொந்தளிக்கும் ஸமுத்திரத்தை ஒரு நாளும் காணாதவள்; தேவகணங்கள் ஸஞ்சரிக்கும் ஆகாச வீதியில் அதிவேகமாய்ச் செல்லும்போது முதலை திமிங்கிலம் நீர்ப் பாம்பு முதலிய ஜல ஜந்துக்களைக் கண்டு பயத்தால் பிரக்ஞையற்றுக் கீழே விழுந்து இறந்தாளோ? மிக்க செல்வமாய் வளர்க்கப் பட்டவளாகையால் மஹா பலவானான ராவணனுடைய புஜங்களால் பீடிக்கப்பட்டு அவன் போகும் அதி வேகத்தை ஸஹிக்காமல் உயிரை விட்டிருப்பாளோ? அல்லது, மஹா பதிவிரதையாகையால் பர புருஷனால் தொடப்பட்ட தேகத்தைச் சுருக்கிக் கொண்டு ராவணன் ஸமுத்திரத்திற்குமேல் வர வர உயரக் கிளம்பிப் போகையில் ஸமுத்திரத்தில் விழுந்திருப்பாளோ? அல்லது, ராவணன் தன் இஷ்டத்திற்கிணங்கும்படி அவளைப் பலாத்

காரம் செய்திருப்பான்; உயிரை விட்டாலும் விடுவாளே அன்றி ஸம்மதிப்பாளா? அதைக் கண்டு ராவணன் கோபபரவசனாய் தனியாயும் அனாதையாயும் இருக்கும் ஜானகியைத் தின்றிருப்பான். அல்லது ராவண பத்னிகள் சக்களத்தி துவேஷத்தால் ஸாதுவான ஜானகியைப் பங்கிட்டுத் தின்று விட்டார்களோ? அல்லது ராமமூர்த்தியின் திவ்விய மங்கள விக்ரஹத்தையும், கோடி மன்மத ஸௌந்தரியத்தையும், பூர்ண சந்திரனைப் போன்ற முகத்தையும், மலர்ந்த செந்தாமரையைப் போன்ற நேத்திரங்களையும் நினைத்து நினைத்துருகி, 'இனி அவரை நான் பார்க்கப் போகிறதில்லை.' என்று மனம் தளர்ந்து உயிரை விட்டாளோ? "ஹா! ராம! லக்ஷ்மண! ஹா! அயோத்யா!" என்று கதறிக் கொண்டே பிராணனை விட்டாளோ?

சீ! இப்படி எண்ணுவதெல்லாம் புத்திஹீனம். ஸீதையைக் கொஞ்சம்கூட அபாயமில்லாமல் லங்கையில் கொண்டுபோய் வைப்பது ராவணனுக்கு ஒரு பெரிய காரியமா? ஹிமய மலையைப்போல் கலங்காத தைரியத்தையுடைய வீர சிரேஷ்டர்களுடைய வம்சத்தில் பிறந்த ஜானகிக்குப் பயமென்பதும் உண்டோ? பதிவிரதா தர்மமென்ற நெருப்புக் கொழுந்தால் சூழப்பட்ட ஜானகியை ராவணன் ஹிம்ஸை செய்யவும் முடியுமோ? தான் ஆசை கொண்டு, ஸகல அபாயங்களையும் லக்ஷ்யம் செய்யாமல், மஹா பாதகத்தைச் செய்யத் துணிந்த ராவணன் ஸீதையைத் தின்றிருப்பான் என்று எண்ணவும் முடியுமோ? ராக்ஷஸேச்வரனுக்கு மிக்கப் பிரியமான ஸீதையை அவனுடைய பத்னிகள் கண்ணெடுத்துப் பார்க்கவும் துணிவார்களோ? ராமனுடைய நிஜ ஸ்வரூபத்தையும், தேஜஸையும் பராக்கிரமத்தையும் பலத்தையும் வீரியத்தையும் பூர்ணமாக அறிந்த ஸீதை, அவர் தன்னை மறந்து விடுவாரென்றும், அவருக்கு ராவணனை ஜயிப்பது அஸாத்தியமென்றும் எண்ணி நம்பிக்கையற்று உயிரை விடுவாளோ?

ஆகையால் உயிரோடிருக்கிறாள்; லங்கையிலேயே இருக்கிறாள். ஆனால் பஞ்சவர்ணக் கிளியைக் கூட்டிலடைத்து வைப்பதைப்போல் எங்கேயோ ரஹஸ்யமான இடத்தில் ராவணனால் ஒளித்து வைக்கப்பட்டுக் கஷ்டப்பட்டுக் கொண்டிருக்கிறாளென்பது நிச்சயம். ஸ்த்ரீ புருஷ ஸம்பந்தமில்லாமல் யாக பூமியில் பிறந்து, ஜனக ராஜரிஷியால் வளர்க்கப்பட்டு, ஸகலலோக நாதனான ராமமூர்த்தியைப் பர்த்தாவாக அடைந்து பிரபஞ்சத்தை மயக்க வந்த மாயையைப்போல் அழகால் ஸமஸ்த பிராணிகளையும் மோகிக்கச் செய்யும் ஜானகி, எவ்விதத்திலும் தனக்குத் தகாத மஹா பாபிக்கு ஸ்வாதீனப்பட்டிருப்பாளோ? ராவணன் அவளை எங்கேயாவது பூமிக்குள் ஒளித்துவைத்திருப்பானோ? வரும் வழியில் மயங்கி ஸமுத்திரத்தில் விழுந்தாளோ? ராகவனைப் பிரிந்திருக்க முடியாமல் உயிரை விட்டாளோ? ஸீதை



யிடத்தில் அபாரப் பிரியமுள்ள ராமனிடத்தில் இதைத் தெரிவிப்பது அயுக்தம். சொன்னால் பெரும் கெடுதி நேரும்; சொல்லாவிட்டால் ஸ்வாமிக்குத் துரோகம் செய்தவனாவேன்; ஒன்றிற்கொன்று விரோதமாக இருக்கிறது. என்ன செய்யலாம்? இந்த ஸங்கடதசையில் கால தேசத்திற்கு ஒத்தபடி நான் செய்ய வேண்டியதென்ன?" என்று ஆஞ்ஜனேயர் சிந்திக்கலானார். "ஸீதையைக் காணாமல் இங்கிருந்து கிஷ்கிந்தைக்குச் சென்றதால் என்ன பிரயோஜனம்? ஸமுத்திரத்தை தாண்டினதும், லங்கையில் பிரவேசித்ததும், ராவணனைப் பார்த்ததும் வீணாகும். ஸுக்ரீவ மஹாராஜனும், கிஷ்கிந்தையிலுள்ள வானரர்களும், ராம லக்ஷ்மணர்களும் என்னை என்ன சொல்லமாட்டார்கள்?

"எப்படித் தேடியும் ஸீதையைக் காணவில்லை" என்ற கோரமான வார்த்தையை ராமனிடத்தில் சொன்னால், அந்த க்ஷணத்திலேயே உயிரை விடுவாரே. என் கடுமையான வாக்கியங்கள் நாராசங்களைப் போல் அவருடைய ஹிருதயத்தைக் குரூரமாய்த் துளைத்து, இந்திரியங்களை வேரறுக்கும்; அதற்குப் பிறகும் பிராணன் தரிக்குமோ? ஸஹிக்கமுடியாத துக்கத்தால் ராமன் உயிரைவிட நிச்சயிப்பதைக் கண்டு, தனது உடல் உயிர் ஆவியை அவருக்கு அர்ப்பணம் செய்த லக்ஷ்மணன் பிழைத்தும் இருப்பாரோ? மஹாபுத்திமானல்லவா? ராமலக்ஷ்மணர்கள் இறந்ததைக் கேட்டவுடன் பரதன் உயிரை விடுவார். அவருடைய நிழலைப்போன்ற சத்துருக்னன் ஒரு நிமிஷமாவது அவனை விட்டிருப்பாரோ? லோக பாலர்களைப்போன்ற புத்திரர்களைப் பறிகொடுத்துக் கௌஸல்யை ஸுமித்திரை கைகேயி என்ற ராஜபத்தினிகள் பிழைத்தும் இருப்பார்களோ? ஸுக்ரீவ மஹாராஜன் சொன்ன சொல் தவறாதவன்; ராமனாலடைந்த பரமோபகாரத்திற்குத் தன்னால் பிரத்யுபகாரம் செய்ய முடியாமல் அவர் துக்கத்தால் இறப்பதைப் பார்க்க ஸஹிப்பாரோ? வெகு காலம் கஷ்டங்களை அனுபவித்துப் பலவிதமாய் அவமானம் செய்யப்பட்டுத் தன் பர்த்தாவிற்கு க்ஷேமம் பிறக்குமோ என்று தெய்வங்களை வேண்டிய ருமை, ஸுக்ரீவனும் இறந்து விதவையாய்க் காலம் கழிக்க நினைப்பாளோ? உத்தம பதிவிரதையல்லவா? வாலியைப் பறிகொடுத்து நடைபிணம் போலிருக்கும் தீக்ஷ்ண புத்தியுள்ள தாரை ஸுக்ரீவனையும் இழந்து உயிரோடிருப்பாளா? நிகரற்ற மாதாபிதாக்களுமில்லாமல், தகப்பனுக்கு தகப்பனாயிருந்த ஸுக்ரீவனும் இறந்து, குழந்தை அங்கதன் அகாலமரணமடைவானென்பதில் ஸந்தேகமுண்டோ? தங்களுக்கு ஸகலவிதத்திலும் கதியான அரசர்கள் மடிந்த பிறகு வானரர்கள் கைகளாலும் முஷ்டிகளாலும் தலைகளில் அறைந்துகொண்டு பிராணனை விடுவார்கள். மஹாராஜாவால் மிருதுவான வார்த்தைகளாலும் வெகுமானங்களாலும் கௌரவத்தாலும் பெருமைப்படுத்தப்பட்ட வானரசிரேஷ்டர்கள் அவர் இறந்த பிறகும் மானஹீனமாய் ஜீவனம் செய்வார்களா?

வீடுகளிலும் வனங்களிலும் மலைகளிலும் கூடி ஸந்தோஷமாய் விளையாடுவார்களோ? ஸுக்ரீவனுக்கு நேர்ந்த கஷ்டத்தை நினைத்து மந்திரி பிரதானிகளுடனும் பெண்டு பிள்ளைகளுடனும் மலைச்சிகரங்களிலிருந்து விழுந்து மடிவார்கள்; விஷத்தைத் தின்றோ, நெருப்பில் விழுந்தோ, தூக்குப்போட்டுக்கொண்டோ, உபவாசம் செய்தோ, ஆயுதங்களாலோ எந்தவிதத்திலாவது தற்கொலை செய்து கொள்வார்கள். நான் போனவுடன் பெருங்கூச்சலும் அழுகையும் கிளம்பும்; இக்ஷ்வாகு வம்சம் மடியும்; வானரர்களும் நிர்மூலமாவார்கள். இப்படி எல்லோரையும் கொல்லும் நான் இங்கிருந்து கிஷ்கிந்தைக்குப் போக நினைப்பேனோ? ஸீதையைக் காணாமல் மஹாராஜாவின் முகத்தில் எப்படி விழிப்பேன்?

நான் போகாமல் இங்கேயே இருந்துவிட்டால், தர்மாத்மாக்களும் பராக்கிரமசாலிகளுமான ராமலக்ஷ்மணர்களும் ஸமுத்திரக் கரையில் என்னை எதிர்பார்த்திருக்கும் வானர வீரர்களும், "மாருதி காரியத்தை எப்படியாவது முடித்துக்கொண்டே வருவான்" என்ற நம்பிக்கையால் உயிரை வைத்துக்கொண்டிருப்பார்கள். நான் பழம் கிழங்கு ஜலம் நிறைந்த ஸமுத்திரக்கரையோரங்களில் வானப்பிரஸ்த விரதத்தை அனுஷ்டித்துக்கொண்டு அகஸ்மாத்தாய் என் கைகளிலும் வாயிலும் விழும் பதார்த்தங்களைத் தின்று காலம் கழிப்பேன்; அல்லது, சிதையை அடுக்கி நெருப்பில் விழுந்து இறப்பேன்; ஸமுத்திரத்தில் குதித்து உயிரைவிடுவேன். உபவாஸம்செய்து தேகத்திலிருந்து ஆத்மாவைப் பிரிக்க யத்தனம் பண்ணிக்கொண்டிருக்கையில் காக்கைகளும் நாற்கால் ஜந்துக்களும் என் தேகத்தைத்தின்றுவிடும். இவ்வித மரணம் மஹரிஷிகளால் மெச்சப்பட்டதே. இந்த ராத்திரி நன்றாக ஆரம்பித்தது; முதலில் லங்காதேவதையை ஜயித்தேன்; சந்திரனும் எனக்கு விசேஷ உபகாரம் செய்தான்; ஸீதையைத் தேடும் உத்தமகாரியத்தில் ஸஹாயம் செய்ததென்றும், ஹனுமான் ஸீதையைக் கண்டுபிடித்த ராத்திரி என்றும் அபாரகீர்த்தியால் அலங்கரிக்கப்படும் என்று எண்ணியிருந்தேன்; ஸீதையைக் காணாமல் இதெல்லாம் வீணாயிற்று. தபஸ்வியாக இருந்து மரத்தடிகளில் காலம்கழிப்பேனேயொழிய ஸீதையைக் காணாமல் திரும்பிப் போகமாட்டேன். போனால் என்னை ஆவலுடன் எதிர்பார்த்துக்கொண்டிருக்கும் அங்கதனும் மற்ற வானரர்களும் உடனே பிராணனை விடுவார்கள். நான் இறப்பதில் அனேகம் கெடுதிகளுண்டு; உயிரோடிருந்தால் என்றைக்காவது க்ஷேமம் நேரும். ஆகையால் உயிரை வைத்துக்கொள்வதே நலம்."

இப்படிப் பலவிதமாய் யோசித்தும் ஆஞ்ஜநேயருக்குத் துக்கம் தீரவில்லை. "அல்லது, மஹாபலவானான லங்காபதியைக் கொல்லட்டுமா? அதனால் வேறு பிரயோஜனமில்லாவிட்டாலும் அந்தப் பாபி செய்த அக்கிரமத்திற்குப் பழிவாங்கின திருப்தியாவது உண்டாகும்.



அல்லது யாகபசுவை அக்னிதேவதைக்கு வெகுமானமாய்க் கொண்டு போவதுபோல், ராவணனைக் கட்டி ஆகாசமார்க்கமாய்க் கொண்டுபோய் ராமனுடைய பாதத்தில் போடட்டுமா?" என்று ஹனுமான் துக்கத்தாலும் கவலையாலும் பீடிக்கப்பட்டு மறுபடியும் ஆலோசித்தார். "ஸீதையைக் காணும் வரையில் இங்கேயிருந்து லங்கையை அடிக்கடி தேடுவேன். அல்லது, ஸம்பாதி சொன்ன வார்த்தையை நம்பி, "ஸீதை லங்கையில் இருக்கிறாள்" என்று சொல்லி ராமனை அழைத்து வந்தாலென்ன? ஐயோ! ஸீதை இங்கு இல்லாவிட்டால் வானரகுலத்தைச் சாம்பலாக்குவாரே! ஆகையால் இங்கேயே இந்திரியங்களை அடக்கிக்கொண்டு உபவாஸம் செய்வேன்; பாபம்! என்னால் வானரர்களெல்லாம் நாசமடைய வேண்டுமா" என்று நாற்புறங்களிலும் கவனித்துப் பார்த்து, "மோசம் போனேனே! என்ன புத்திஹீனம்! இதோ ஆகாசத்தையளாவும் அசோகமரங்களடர்ந்த சோலையை நான் இதுவரையில் தேடவில்லையே; ஜானகியை ஏன் இங்கே வைத்திருக்கக் கூடாது? இந்த க்ஷணமே தேடுகிறேன். வஸுக்கள் ருத்திரர்கள் ஆதித்தியர்கள் அச்வினிகள் மருத்துக்கள் முதலிய தேவகணங்களை நமஸ்கரிக்கிறேன். எனக்கு ஸஹாயம் செய்து நான் ராக்ஷஸகுல காலனாகும்படி ஆசீர்வதிக்கட்டும். வெகுகாலம் கடுந்தவம் செய்தவனுக்கு ஸித்தியைக் கொடுக்கும் தேவதையைப்போல் ரகுகுலகீர்த்தியை விளங்கச்செய்யும் ஸீதையை ராமனிடத்தில் கொண்டுபோய் ஒப்புவிப்பேன்" என்று மஹாதேஜஸ்வியான ஆஞ்ஜநேயர் சற்று நேரம் யோசித்து, கவலையால் இந்திரியங்கள் கலங்கி, இப்பொழுதாவது காரியம் கைகூடுமோ" என்று எண்ணிக்கொண்டே எழுந்தார். 'ராமலக்ஷ்மணர்களுக்கும் ஜானகிக்கும் ருத்திரன் இந்திரன் யமன் வாயு சந்திரன் ஸூரியன் மருத்துக்கள் முதலிய தேவதைகளுக்கும் நமஸ்காரம்" என்று ஸூரியபுத்திரனும் தன் பிரபுவுமான ஸுக்ரீவனை மனத்தால் வந்தனம் செய்து ஸகல திக்குகளையும் நன்றாய்ப் பரிசோதித்துப் பார்த்து, ஒருவரும் இல்லை என்றறிந்து அசோக வனத்தை உற்றுப் பார்த்தார். அங்கே போய்த் தேட நிச்சயித்து மேலே செய்யவேண்டிய காரியங்களை ஆலோசித்தார். "அசோக வனத்தில் ஜலம் நிறைந்திருக்கும்; கணக்கில்லாத ராக்ஷஸர்கள் ஸஞ்சரித்துக்கொண்டிருப்பார்கள். ஸகலவித ஸாதனங்களாலும் பரிஷ்காரமாக இருக்கும். மரங்களைப் பாதுகாக்க அனேகம் பெயர்கள் ஏற்படுத்தப்பட்டிருப்பார்கள். ஸர்வஜகத்திற்கும் பிராணாதாரமான என் பிதாவும் கடுமையாய் வீசக்காணேன். ராவணனைச் சேர்ந்தவர்கள் காணாமலிருப்பதற்கும் ராமகாரியம் ஸித்திக்கும் பொருட்டும் என் தேகத்தைச் சுருக்கியிருக்கிறேன். மஹரிஷிகளும் தேவதைகளும் நான் ஸீதையைப் பார்க்கும்படி ஆசீர்வதிக்கட்டும். ஸ்வயம்புவான பிரஹ்மதேவரும் அக்னி வாயு வருணன் மஹேந்திரன் ஸூரியசந்திரர்கள் அச்வினிகள் மருத்துக்

கள் ருத்திரன் முதலியவர்களும் என் காரியம் ஸித்திக்கும்படி அனுக்கிரகிக்கட்டும். ஸகல பூதங்களும் அவைகளுக்கு நாதனான விஷ்ணுவும் நான் போகும் வழியில் என் கண்ணில் படுகிறவர்களும் படாதவர்களும் என் காரியம் கைகூடும்படி ஆசீர்வதிக்கட்டும். சிறந்த மூக்கையும், வெண்மையான பற்களையும், நிலவு போன்ற சிரிப்பையும், செந்தாமரை இதழ்போன்ற கண்களையும் உடையதாய் பூர்ண சந்திரனைப்போல் ஸகல பிரபஞ்சத்திற்கும் ஆனந்தத்தைக் கொடுக்கும் ஸீதாதேவியின் திருமுகமண்டலத்தை இந்தத் தேவதைகளுடைய கிருபையால் எப்பொழுது பார்ப்பேன்? மஹாநீசன், பாபத்திற்கு அஞ்சாதவன், ஸகல லோகங்களும் நடுங்கும்படியான குரூரகிருத்தியங்களைச் செய்கிறவன், கோரரூபியானாலும் எல்லோரும் மோகிக்கும்படியான வேஷத்தைத் தரிக்கிறவன்; தன் ஜனங்களை விட்டுத் தனியாய்த் தவிக்கும் மஹாபதிவிரதையான ஜானகியைப் பலாத்காரம் செய்து கொண்டுவந்திருக்கிறானே! அவளை இப்பொழுது பார்ப்பது எப்படி?" என்று சிந்தித்தார்.

க்ஷு$^{3}$த்$^{3}$ரேண பாபேந ந்ருஶம்ஸ கர்மணா
ஸு$^{3}$தா$^{3}$ருணாலங்க்ருத வேஷதா$^{4}$ரிணா |
பலாபி$^{4}$பூ$^{4}$தா ஹ்யப$^{3}$லா தபஸ்விநீ
கத$^{2}$ம் நு மே த்$^{3}$ருஷ்டி பதே$^{2}$த்$^{3}$ய ஸா ப$^{4}$வேத் (69)

---

## ஸர்க்கம் 14

# அசோகவனம்

---

ஸ முஹூர்தமிவ த்$^{4}$யாத்வா மநஸா சாதி$^{4}$க$^{3}$ம்ய தாம் |
அவப்லுதோ மஹாதேஜா: ப்ரகாரம் தஸ்ய வேஶ்மந: || (1)

இப்படிச் சற்றுநேரம் ஆலோசித்து அசோகவனத்திற்குப்போக நிச்சயித்து, மஹாதேஜஸ்வியான ஹனுமான் அதன் மதில் சுவரைத் தாண்டினார். பிராகாரத்தின் மேலிருந்து பார்க்கையில் ஆனந்தத்தால் அவருடைய ஸகல அவயவங்களும் பூரித்தன. வஸந்த ருதுவில் முதலில் புஷ்பித்த ஆச்சா அசோகம் சம்பகம் மா முதலிய பலவித விருக்ஷங்களைக் கண்டார்; பிறகு வில்லிலிருந்து பிரயோகிக்கப்பட்ட நாராசத்தைப்போல், மாந்தோப்புகளால் மறைக்கப்பட்டுக் கொடிகளால் சூழப்பட்ட மரச்சோலைகளில் பாய்ந்தார். அங்கே குயில்களும் மயில்களும் வண்டுகளும் இன்னும் பலவகைப் பக்ஷிகளும் மதுரமாய்ச் சப்தித்துக்கொண்டிருந்தன; மான் முதலிய மிருகங்கள் கூட்டங்கூட்டமாய் ஸஞ்சரித்தன; வெள்ளிமயமாயும் தங்கமயமாயும்விளங்கும் அனேக விருக்ஷங்கள் பாலஸூரியர்களைப்போல் புஷ்பங்களாலும் பழங்களாலும் பிரகாசித்தன. விசித்திரமான காடுகளில் ஸகலப் பிராணிகளும் ஆனந்தமாய் விளையாடிக்கொண்டிருந்தன. அழகிலும் சீலத்திலும் நிகரில்லாத ஜானகியைத் தேடிக்



கொண்டு போகையில் ஸுகமாய்த் தூங்கிக்கொண்டிருந்த பக்ஷிகளை எழுப்பினார்; அவை நான்கு புறங்களிலும் பறந்து இறக்கைகளால் மரங்களை அடித்து நானா வர்ணமுள்ள புஷ்பங்களை உதிர்த்தன. மலர்களால் தூவப்பட்ட தேகத்தையுடைய ஹனுமான் அசோகவனத்தில் புஷ்பத்தால் செய்யப்பட்ட மலையைப்போல் தோன்றினார். மரச்சோலைகளிலிருந்து ஸகல திக்குகளிலும் பாயும் ஆஞ்ஜநேயரை வஸந்தருதுவின் தேவதை என்று அங்கிருந்த ஸகலப் பிராணிகளும் நினைத்தன. மரங்களிலிருந்து உதிர்ந்த பலவகைப் புஷ்பங்களால் அலங்கரிக்கப்பட்ட பூமியானது ஆபரணங்களணிந்த ஸுந்தரியைப்போல் விளங்கிற்று. மஹாபலவானான ஹனுமான் அந்த மரங்களை வேகமாய் அசைக்கும்பொழுது அவை விசித்திரமான புஷ்பங்களைச் சொரிந்தன. சூதாட்டத்தில் பந்தயம் வைத்து தோற்று ஆடையாபரணங்களைக் கழற்றிவைத்த சூதாடிகளைப்போல், புஷ்பங்களையும் பழங்களையும் இலைகளையும் உதிர்த்த அந்த விருக்ஷங்கள் அழகு குறைந்து நின்றன. பெருங்காற்றில் அடிபட்டவைபோல், புஷ்பங்களும் பழங்களும் இலைகளுமற்றுப் பக்ஷிகளுமில்லாமல் வஸிக்கத் தகாதவைகளாயின. நாயகனுடன் ரதிகேளி அனுபவித்த யௌவனஸ்த்ரீ, கலைந்த கேசங்களுடனும் சந்தனப்பூச்சுகளும் மகரிகாபத்திரங்களும் திலகமும் அழிந்தும், ஆசையுடன் அதரபானம் செய்யப்பட்டதால் பற்களைப்போல் வெண்மையான உதடுகளுடனும், நகங்களாலும் பற்களாலும் காயம்பட்ட தேகத்துடனும் விளங்குவதுபோல், அசோகவனம் ஹனுமானுடைய கால்களாலும் கைகளாலும் வாலாலும் துவைக்கப்பட்டுச் சின்னபின்னமான மரங்களுடன் விளங்கிற்று. மழைக்காலத்தில் வாயுபகவான் விந்திய மலையில் தங்கியிருக்கும் மேகக்கூட்டங்களைச் சிதறடிப்பதுபோல், அந்த வானரவீரன் பெருங்கொடிகளை அறுத்தெறிந்தார்.

அங்கே தங்கம் வெள்ளி நவமணிகள் முதலியவைகள் இழைத்த தரைகளைக் கண்டார். விசித்திரமான ரூபங்களுடன் அனேகம் குளங்கள் வெட்டப்பட்டிருந்தன; படிகளில் நவரத்தினங்கள் பிரகாசித்தன; ஸ்படிகத்தால் தளவரிசைபோடப்பட்டிருந்தது; முத்து பவழம் முதலிய விலையுயர்ந்த வஸ்துக்களின் பொடிகளே மணல்கள்; அமிருதத்தைப்போல் ருசியுள்ள ஜலம் நிறைந்திருந்தது; அதில் தாமரை கருநெய்தல் முதலிய புஷ்பங்கள் அழகாய் மலர்ந்திருந்தன; அவைகளின்மேல் நீர்ப்பறவைகள் மதுரமாய்க் கூவிக்கொண்டிருந்தன; நான்கு புறங்களிலிருந்தும் ஆறுகள் வந்து விழுந்தன; கரைகளில் பொன்மயமான விருக்ஷங்களும், ஸந்தானம் முதலிய ஸ்வர்க்கலோகத்து விருக்ஷங்களும், புதர்களும் இடைவெளியில்லாமல் செழித்து வளர்ந்தன. சிறிது தூரத்திற்கப்பால் ஒரு க்ரீடாபர்வதத்தைக் கண்டார். அது மேகத்தைப்போல் கறுத்து, உன்னதமான சிகரத்தையும் விசித்திரமான கொடிமுடிகளையுடையதாய், கற்பாறைகளாலமைக்கப்பட்ட அறைகளுடன், நானாவிருக்ஷங்

களால் நிறைந்து வெகு மனோஹரமாய் விளங்கிற்று. நாயகனுடன் கோபித்துக்கொண்டு திடீரென்று அவன் மடியிலிருந்துகுதித்தோடும் யுவதியைப்போல் ஒரு நதி அந்தப்பர்வதத்திலிருந்து கீழே விழுந்தது. அவளுடைய தோழிகளும் பந்துக்களும் போகவேண்டாமென்று தடுப்பதுபோல், அதன் ஜலத்தில் நனைந்த நுனிகளுடன் அனேகம் மரங்கள் இருகரைகளிலும் செழித்து வளர்ந்தன. நாயகனிடத்தில் கோபம் தணிந்து திரும்பிவரும் நாயகியைப்போல் மரங்களால் தடுக்கப்பட்ட ஜலம் எதிர்த்து வந்தது. அந்த நதிக்கு ஸமீபத்தில், பல வகைப் பறவைக்கூட்டங்களால் அலங்கரிக்கப்பட்ட தாமரை யோடைகள் இருந்தன. வெகு நீளமாக அமைக்கப்பட்ட அனேக நடவாவிகள் குளிர்ந்தஜலத்தால் நிறைந்து, நவமணிகள் இழைத்த படிகளுடனும், முத்துப் பொடியால் செய்த மணல்களுடனும் காணப்பட்டன. கரைகளில் விசித்திரமான மாடி வீடுகளும் பலவகை மிருகங்களால் நிறைந்த ஆச்சரியமான வனங்களும், காடுகளும், விசுவகர்மாவால் அமைக்கப் பட்டிருந்தன.

பழங்களாலும் புஷ்பங்களாலும் தழைத்தசில பெரிய விருக்ஷங்களுக்குநான்குபுறங்களிலும் விஸ்தாரமான மேடைகள் கட்டப்பட்டிருந்தன. அதன்மேல் தங்கமேடைகளும் வெய்யில் மழைமுதலியவை களைத் தடுப்பதற்காகப் பந்தல்களும் போடப்பட்டிருந்தன' அங்கே ஒரு சிம்சுபாவிருக்ஷம் கொடிகளாலும் இலைகளாலும் சூழப்பட்டு தங்கமயமாய் பிரகாசித்தது. அதைச் சுற்றிலும் தங்கமேடைகள் போடப்பட்டிருந்தன. இன்னும் அனேக விசித்திரமான பிரதேசங்களையும், பூமிப் பிளப்புகளையும், மலைபருவிகளையும், நெருப்புக் கொழுந்துபோல் ஜ்வலிக்கும் தங்கமயமான விருக்ஷங்களையும் கண்டார். "ஸுவர்ணமயமான மேருபர்வதத்தின் காந்தியால் ஸூரியன் தங்கமயமாய்த் தோன்றுவதுபோல், இந்த விருக்ஷங்களின் தேஜஸால் என் தேகம் முழுவதும் தங்கமயமாய்த் தோன்றுகிறது" என்றார். அனேக மஹாவிருக்ஷங்களால் சூழப்பட்ட அந்தசிம்சுபா மரத்தில் விசித்திரமான த்வனியுள்ள அனேக சிறு மணிகள் கட்டப்பட்டிருந்தன; அவைகள் காற்றுலசைக்கப்படும்பொழுது மதுரமான சப்தமுண்டாயிற்று.

பிறகு இலைகளாலும் புஷ்பங்களாலும் தளிர்களாலும் அரும்புகளாலும் விளங்கும் அந்த மரத்திலேறி ஆஞ்ஜனேயர் இப்படி ஆலோசித்தார். "ராமனை எப்போது காண்பேனென்று ஆவலாக எதிர்பார்க்கும் ஜானகியை இங்கிருந்து காணலாம். கவலையால் தூக்கம் பிடிக்காமல் அங்குமிங்கும் அலைந்து கொண்டு ஒரு வேளை இவ்விடத்திற்கு வரக்கூடாதா? சம்பகம் சந்தனம் முதலிய சிரேஷ்டமான விருக்ஷங்களால் விளங்கும் இந்த அசோக வனத்தில் அவளுக்குப் பிரியமிருக்கும்; இந்தத் தாமரையோடையில் பக்ஷிகள் இன்பமாய் கூவுகின்றன. ஸீதைக்கு வனங்களில் ஸஞ்சரிப்பதில் விசேஷஆனந்தம்; ராமனை விட்டுப் பிரிந்து இளைத்து அந்தத் தாபத்தைப் போக்குவதற்காக இங்கே வருவாள்; வனத்தில் ஸஞ்சரிக்கும் பிராணிகளுடைய க்ஷேமத்தில் அவளுக்கு வெகு கவலை; அனேக வருஷங்களாய் வனங்களில் திரிந்து பழகினவள்; யௌவனப் பருவத்திலிருப்பவள்; ஜனங்களுடைய கூட்டத்தை நீக்கித் தனியாய் ராமனை தியானிக்கவும் அவருடன் ஆனந்தமாகக் கடந்த காலத்தை ஞாபகம் செய்யக்கூடிய இந்த வனங்களைப் பார்க்கவும் இங்கே நிச்சயமாய் வருவாள்; அல்லது தெளிந்த ஜலத்தையுடைய இந்த நதியில் காலை ஸந்தியாதேவதையை உபாஸிக்க வருவாள்; இது அவள் ஸஞ்சரிக்கத் தகுந்த வனம்; அவளும் இந்த வனத்திற்குத் தகுந்த ஆபரணம்; அவள் உயிரோடு மாத்திரமிருந்தால் இந்த நதிக் கரைக்கு வராமல் இருக்கமாட்டாள்." என்று மஹா மேதாவியான மாருதி, பூவும் இலைகளும் நிறைந்த அந்த சிம்சுபா விருக்ஷத்தில் மறைந்திருந்து, நான்கு புறங்களிலிருந்தும் ஸீதையின் வரவை எதிர்பார்த்துக் கொண்டு நான்கு திக்குகளையும் கவனித்தார்.



ஏவம் து மத்வா ஹநுமாந் மஹாத்மா
ப்ரதீக்ஷமாணோ மநுஜேந்த்3ர பத்நீம் |
அவேக்ஷமாணஶ் ச த3த3ர்ஶ ஸர்வம்
ஸுபுஷ்பிதே பர்ண க4நே நிலீந: ‖ (51)

---

## ஸர்க்கம் 15

## ஹநுமான் ஸீதையைக் கண்டது

ஸ வீக்ஷமாணஸ் தத்ரஸ்தே2ா மார்க3மாணஶ்ச மைதி2லீம் |
அவேக்ஷமாணஶ்ச மஹீம் ஸர்வாம் தாமந்வவைக்ஷத ‖ (1)

ஹநுமான் அந்த மரத்தின் மேலிருந்து நான்கு பக்கங்களிலும் ஸீதையைத் தேடிக் கொண்டு, பூமியையும் மரச் சோலைகளையும் உற்றுப் பார்த்தார். கல்பகம் முதலிய தேவ விருக்ஷங்களின் ஜோதியால் திக்குகள் பிரகாசித்தன; குயில்கள் மதுரமாய்க் கூவின; அசோக மரங்கள் புஷ்பங்களாலும் பழங்களாலும் பால ஸூரியனைப் போலும், நெருப்பைப் போலும் ஜ்வலித்தன; ஸகல ருதுக்களில் உண்டாகும் புஷ்பங்களும் அங்கே காணப்பட்டன; விசித்திர ரூபமுள்ள புஷ்பங்கள் ஆபரணங்களைப் போல் காணப்பட்டன. பழங்களாலும் புஷ்பங்களாலும் இலைகளாலும் அடிமுதல் நுனிவரையில் மறைக்கப்பட்டு, பாரம் தாங்காமல் பூமியில் புரளும் அசோகம் முதலிய அனேகம் விருக்ஷங்களைக் கண்டார். பக்ஷிக் கூட்டங்கள் கணக்கில்லாமல் வந்து விழுந்து, கிளைகளில் இலைகளே இல்லாமல் செய்து விடுவன போலிருந்தன. நடவாவிகளில் தங்க மயமான தாமரை முதலிய புஷ்பங்கள் பிரகாசித்தன. திவ்யமான வாஸனையாலும் ரஸத்தாலும் அந்த வனம் மனத்தை அபகரித்தது. மனிதர்

பார்த்து ஸந்தோஷிக்கும் ஸகல விதமான பக்ஷிகளும் மிருகங்களும் அங்கே காணப்பட்டன. உப்பரிகைகளாலும், அரசர்களின் அரண்மனைகளாலும், பலவகை ஆஸனங்களாலும் கம்பளங்களாலும் அலங்கரிக்கப்பட்ட அனேகம் சுரங்கங்களாலும் நெருக்கமாக இருந்தது. எவ்விடமும் அழகாக அலங்கரிக்கப்பட்டு, இந்திரனுடைய நந்தனமென்ற வனத்தை ஒத்திருந்தது. அந்த விருக்ஷங்களின் கார்த்தியால் அந்தப் பிரதேசம் முழுவதும் நெருப்புப் பிடித்து எரிவது போல் தோன்றிற்று. ஆழமாய் வேரூன்றிச் செழிக்கும் புன்னை ஏழிலைப்பாலை சம்பகம் முதலிய மரங்களும், தங்கம் நெருப்பு மை முதலியவைகளைப்போல் வர்ணமுள்ள அசோக மரங்களும் அங்கே காணப்பட்டன. அதி மனோஹரமாய் வர்ணிக்க முடியாததாய் விசேஷ சோபையுடன் இந்திரனுடைய நந்தனத்தை ஒத்து, குபேரனுடைய சைத்ரரதத்தைப் பரிகாஸம் செய்வது போலிருந்தது. புஷ்பங்களாகிற நக்ஷத்திரங்களால் ஆகாசத்தைப் போலவும், புஷ்பங்களாகிற ரத்தினங்களால் ஐந்தாவது ஸமுத்திரத்தைப்போலவும், ஸகல ருதுக்களிலும் புஷ்பிக்கும் மரங்களாலும் தேன் மணம் வீசும் மரங்களாலும் பல வகைப் பக்ஷிகளாலும் மிருகங்களாலும் அவைகளின் விசித்திரமான த்வனிகளாலும் வாசனைகளாலும் அந்த அசோக வனம் பரிசுத்தமான கந்தமாதன பர்வதத்தைப் போலும் தோன்றியது.

அந்த வனத்தில் சற்று தூரத்திற்கப்பால் யாக சாலை போல் கட்டப்பட்ட ஒரு மாளிகையைக் கண்டார். அது வெகு உயரமாய் ஆயிரம் ஸ்தம்பங்களுடன் வெண்மையாகக் கைலாஸ பர்வதத்தைப் போலிருந்தது. அதன் பவழப் படிகளும் தங்க மேடைகளும் கண்ணைப் பறித்தன. பிறகு அந்தச் சிம்சுபா விருக்ஷத்திற்கு அருகிலுள்ள மாளிகையின் அருகில் ஒரு ஸ்த்ரீ இருப்பதைக் கண்டார். அவளைச் சுற்றிலும் ராக்ஷஸிகள் கண்கொட்டாமல் காத்துக் கொண்டிருந்தார்கள். நெடுநாளாய் ஆகாரமில்லாமல் துரும்புபோல் இளைத்திருந்தாள்; புழுதிபடிந்த தேகத்தில் அழுக்குப் படிந்து கிழிந்த தங்க மயமான ஒற்றை வஸ்திரம் சுற்றப்பட்டிருந்தது; தாமரை மலர் அற்ற தடாகம்போல் யுவதிகளுக்கு உசிதமான ஆபரணங்களின்றி அவள் காணப்பட்டாள்; கண்ணீர் தாரைதாரையாய்ப் பெருகிக் கொண்டிருந்தது; சரத்காலத்தில் கருத்து வன வரிசைகளால் விளங்கும் பூமியைப்போன்ற சுருண்டு நீண்ட தலைமயிர் கருநாகத்தைப்போல் ஒற்றைப் பின்னலாய் இடுப்பிற்குக் கீழ் வரையில் தொங்கிக் கொண்டிருந்தது. தைரியமற்று அடிக்கடி பெருமூச்சு விட்டுக் கொண்டிருந்தாள்; மிகுந்த லஜ்ஜையுடன் தன் பர்த்தாவை விட்டுப் பிரிந்த துக்கத்தால் வாடித் தவித்துக்கொண்டிருந்தாள். ஆனால் ஸகலப் பிரபஞ்சத்தையும் பதிவிரதாக்கினியால் கொளுத்தக் கூடியவள்; அவள் படும்பாட்டைப் பார்த்துக் கருங்



தாம் ஸமீக்ஷ்ய விஶாலாக்ஷீம் அதிகம் மலினாம் க்ருஶாம்।
தர்கயாமாஸ ஸீதேதி காரணைருபபத்திபி:॥ —ஸு. 15ஸ-26ஸ.
அழுக்கடைந்து இளைத்த தேகத்தையும் விசாலமான நேத்திரங்களையுமுடைய அந்தப் பெண்ணை நன்ருய்க் கவனித்துப் பார்க்கையில் தகுந்த காரணங்களால் இவளே ஸீதை என்று மாருதி நிச்சயித்தார். (பக்கம் 77 பார்க்க)

கல்லும் உருகும்; ராமத் தியானந்தாலும் அவரைப் பிரிந்த சோகத்தாலும் மெய்மறந்தவள்; மனம் குன்றித் துக்கத்தைத் தவிர வேறு கதியில்லாதவள்; தன் பிரிய ஜனங்களை விட்டு ராக்ஷஸிகளின் நடுவில் அவள் இருப்பது, தன் இனத்தை விட்டுப் பிரிந்த பெண்மான் நாய்களால் சூழப்பட்டதுபோல் இருந்தது; கஷ்டத்தையே அறியாதவள்; பரம ஸுகத்தையே அனுபவிக்கத் தகுந்தவள்; சொல்ல முடியாத துக்கத்தால் வாட்டப்படுகிறவள்; அவளுடைய ரூபத்தையும் அழகையும் சற்று யோசித்துப் பார்த்த பிறகுதான் இவள் ஜானகி என்று அறிய முடியும்; சுக்கிலபக்ஷத்தின் ஆரம்பத்தில் நிர்மலமான சந்திர ரேகையைப்போலும், புகையால் மூடப்பட்ட அக்னி ஜ்வாலையைப் போலும், பிரிய நாயகனை சந்திரனை அடைய வேண்டிய ரோஹிணியை அங்காரகனென்ற குரூரக் கிரஹம் பிடித்ததுபோலும் தோன்றினள்.

அழுக்கடைந்து இளைத்த தேகத்தையும் விசாலமான நேத்திரங்களையுமுடைய அந்தப் பெண்ணை, நன்ருய்க் கவனித்துப் பார்க்கையில் தகுந்த காரணங்களால் இவளே ஸீதை என்று மாருதி நிச்சயித்தார். "இஷ்டமான ரூபத்தை எடுக்கக்கூடிய ராவணன் எடுத்துக் கொண்டு போகையில் எவளைக் கண்டேனே அவளுக்கும் இவளுக்கும் ரூபத்தில் பேதமில்லை. பூர்ண சந்திரனைப் போன்ற முக மண்டலத்தையும், மன்மதனுடைய வில்லைப்போன்ற புருவங்களையும், தாமரை இதழ்களைப்போல் மலர்ந்து செவ்வரி படர்ந்து மான் குட்டியைப்போல் மிரண்டிருக்கும் நேத்திரங்களையும், கருத்த தலைமயிரையும், கருத்து வளைந்திருக்கும் இமைகளையும் கோவைக் கனிபோன்ற உதடுகளையும்; சிறுத்த இடையையும் கவனிக்கையில் அவளென்றே தோன்றுகிறது. தேக காந்தியால் ஸகல திக்குகளும் இருள் நீங்கி பிரகாசிக்கின்றன; அங்கங்கள் பொருத்தமாக அமைக்கப்பட்டிருக்கின்றன; மன்மதனின் பத்தினியான ரதியைப்போல் அழகுள்ளவள், பூர்ணிமா சந்திரனைப்போல் ஸகலப் பிராணிகளும் பார்க்க விரும்பக்கூடியவள்; அவயவங்கள் உத்தம லக்ஷணங்கள் பொருந்தி இருக்கின்றன; பூமியில் உட்கார்ந்து பெருமூச்சு விடுவதால் தவம் செய்பவளைப்போல் தோன்றுகிருள்; ஆனால் நாகராஜனுடைய பத்தினியைப்போல் நெருங்க முடியாதவள்; புகைக் கூட்டத்தால் மறைக்கப்பட்ட அக்னி ஜ்வாலையைப்போல் பெரும் துக்கத்தால் மறைந்த பிரகாசத்தை உடையவள்; ஸந்தேகமான அர்த்தங்களையுடைய மனு முதலிய மஹரிஷிகளின் ஸ்மிருதி வாக்கியங்களைப்போலும், க்ஷீணமான ஸம்பத்தைப்போலும், அவநம்பிக்கையால் தடையுற்ற சிரத்தையைப் போலும், நிறைவேருத ஆசையைப்போலவும், விக்கினங்களால் தடைப்பட்ட காரிய ஸித்தியைப்போலும், கலங்கின புத்தியைப் போலும், அநியாயமான அபவாதத்தால் கெடுக்கப்பட்ட கீர்த்தி

யைப்போலும், நீருண்ட மேகங்களால் மறைக்கப்பட்ட சந்திர காந்தியைப்போலும், வேதசுருதிகளின் ஆதாரமில்லாமையால் பிரஸித்தியற்ற வேத விரோதமான வித்தையைப்போலும், (அடிக்கடி வேதாத்யயனம் செய்யாததால்) மறைந்துபோன வித்தையைப் போலும் காணப்படுகிறாள்; தன் பிரிய நாயகனான ராமனைப் பிரிந்து அவரை அடைவேனா என்று ஏக்கம்பிடித்து, ராவணன் தொட்டு எடுத்ததால் தேகம் குன்றி, அனாதையாய் என்ன ஆபத்து நேருமோ என்று நான்கு புறங்களிலும் பயத்துடன் பார்த்துக் கொண்டிருக்கிறாள். கண்ணீரால் முகம் கறுத்து, உத்தம பூஷணங்களை அணிந்துகொள்ளத் தகுந்தவளானாலும், ஆபரணங்கள் இல்லாமலிருக்கிறாள்'' என்று யோசித்தார். ஹனுமான், அவளை அடிக்கடி பார்த்தும் அவருக்கு ஸந்தேகம் தீரவில்லை. வியாகரணமும் சாஸ்திர பரிசயமும் இல்லாதவன், ஒரு வாக்கியத்திற்கு விபரீதமான அர்த்தத்தை தரும் வாக்கியத்தை கஷ்டப்பட்டு அறிவதுபோல் யாதொரு அலங்காரமும் இல்லாத ஸ்திரீயில், இவள்தான் ஜானகி என்று கஷ்டப்பட்டு அறிந்தார்.

பிறகு, விசாலமான நேத்திரங்களையும் சுத்தமான நடத்தையையும் உடைய ஸீதையை வேறு சில காரணங்களால் அடையாளம் கண்டுபிடித்தார். அவள் இருக்குமிடத்தைச் சுற்றிலும் கவனித்துப் பார்க்கையில் அவள் எந்த ஆபரணங்களை அணிந்திருந்ததாக ராமன் தனக்குச் சொல்லியிருந்தாரோ அவையெல்லாம் மரக்கிளைகளில் தொங்க விடப்பட்டிருந்தன; விசித்திரமாய்ச் செய்யப்பட்ட கம்மல், கர்ணப்பூ முதலிய கர்ணாபரணங்களும், பவளத்தாலும் நவமணிகளாலும் பிரகாசிக்கும் கடகம் சங்கிலி மோதிரம் முதலிய பூஷணங்களும் பர்த்தாவைப் பிரிந்த விரஹாக்கினியால் கறுத்திருக்கின்றன. வெகுகாலம் அணிந்தபடியால் அவைகளைக் கழற்றின பிறகும் அந்த அடையாளங்கள் இருக்கின்றன. ஆகையால், ராமன் எனக்குச் சொன்ன பூஷணங்கள் இவைகளே'' என்று நிச்சயித்தார். "ஜானகியினுடைய தேகத்திலிருந்து எந்த ஆபரணங்கள் கழன்று விழுந்தனவோ, அவை இங்கே இல்லை; எவை விழவில்லையோ அவை இங்கே இருக்கின்றன. ஸீதையை அபகரித்துக் கொண்டுபோகையில் ரிசியமூகபர்வதத்தில் விழுந்த தங்கமயமான பச்சை உத்தரீயத்தையும், மதுரமாய் சப்திக்கும் ஆபரணங்களையும் விட்டெறிந்தவள் இவளே. இப்பொழுது தரித்திருக்கும் வஸ்திரம் வெகுநாளானதால் அழுக்கடைந்து கிழிந்திருக்கிறது; ஆனாலும் என்னால் ரிசியமூகபர்வதத்தில் பார்க்கப்பட்ட வஸ்திரத்தின் வர்ணத்திலும் காந்தியிலும் பேதமில்லை. ராகவனுடைய பிரியமான மஹிஷியும் பதிவிரதையும் ஸுவர்ண காந்தியுடையவளுமான இவள் மறைந்தாளாயினும் ராமனுடைய மனத்தில் எப்போதும் குடியிருக்கிறாள். அவளே இவள் என்பதில் ஸந்தேகமில்லை. எவளைக்



குறித்து ராமன் வெகுகாரணங்களால் பரிதவிக்கிறாரோ, அவள் இவளே. "ஒவ்வொருவனும் தன்னைச் சேர்ந்த ஸ்த்ரீகளுக்கு ஆபத்து நேரும்பொழுது அவர்களை ரக்ஷிப்பது ஸஹஜம்; நான் அப்படிச் செய்ய முடியாமல் போயிற்றே'' என்று இரக்கத்தாலும், "அண்டினவர்களைக் கைவிடுவதில்லை என்பது நமது பிரதிக்ஞையன்றோ? எல்லோரும் தடுக்கும்போது என்னையே ரக்ஷகனாய் ஆசிரயித்து வனத்துக்கு வந்து என்னுடன் ஸகல கஷ்டங்களை அனுபவித்தவளைக் கைவிட்டேனே'' என்ற உருக்கத்தாலும் "புருஷனில் பாதி பாரியை என்ற சுருதிப்படி அக்னிஸாக்ஷியாய் நம்மைப் பர்த்தாவாக அடைந்தவளை இழந்தேனே'' என்ற சோகத்தாலும்; "என் அன்பிற்குரிய நாயகியைப் பிரிந்தும் இன்னம் இந்தப் பாழும் பிராணன் போகவில்லையே'' என்ற விரஹாக்கினியாலும் ராமர் தவிக்கிறார். இவ்விருவர்களுடைய சரீரமும், கரசரணாதி அவயவங்களுடைய மேன்மையும் ஒரேவிதமாக இருக்கின்றன.

ஆகையால் இந்தப் பெண்மணி அவருக்குத் தகுந்தவளே. இவளுடைய மனம் அவரிடத்திலேயே வேரூன்றி இருக்கிறது; அவருடைய மனமும் இவளிடத்திலேயே நாடியிருக்கிறது; அதனால்தான் இவ்விருவரும் உயிரை வைத்துக்கொண்டிருக்கின்றார்கள். மால்யவானென்ற பர்வதத்தில் ராகவன் ஸீதையின் பிரிவை ஸஹிக்காமல் புலம்பினபொழுது, 'இதென்ன விபரீதம்! வஸிஷ்ட மஹரிஷியின சிஷ்யராம்; வேதவேதாந்தங்களைக் கரைகடந்தவராம்; ஸகல கஷ்டங்களையும் ஸஹிக்க வல்ல க்ஷத்திரிய வீரராம்; யாரோ ஒரு ஸ்த்ரீயை விட்டுப் பிரிந்ததற்காக இவ்வளவு பாடுபடுகிறாரே!'' என்று நான் நித்தியப் பிரஹ்மசாரியானதாலும் விஷயங்களில் விரக்தனாகையாலும் பரிஹாஸம் செய்தேன். இப்போது இவளுடைய ஸௌந்தரியத்தையும் தீன ஸ்திதியையும் கண்டபிறகு எனக்குப் புத்தி வந்தது. இந்த ஸமுத்திரத்தைத் தாண்டினது ஒருபெரிய காரியம் என்று எண்ணியிருந்தேன். இவளைப் பிரிந்தும் இன்னும் ராமன் தேகத்தை வைத்துக்கொண்டிருப்பதால் ஒரு பெரிய செய்யமுடியாததைச் செய்து வருகிறார் என்று நினைக்க வேண்டும். அவருடைய சோகத்தால் அவர் அழியவில்லை. இந்த உத்தம ஸ்த்ரீயைப் பிரிந்து ஒரு முகூர்த்தமாவது அவர் பிழைத்திருப்பது அஸாத்தியமான காரியம். அவருக்கென்ன? மஹாப்பிரபு; ராஜ்யத்தை ஆளவும் யானை குதிரைகளை பழக்கவும் யுத்தம்செய்யவும் மாத்திரம் தெரியுமே ஒழிய உத்தம ஸ்த்ரீயின் பிரீதியைக் கொஞ்சமாவது அனுபவித்தவரல்ல. என்ன பிரபு! தனக்குக் கீர்த்தியையும் தேஜஸையும் விருத்திசெய்யும் இவளைப் பிரிந்தும் பிரபுத்வமுண்டோ? தன்னை அண்டினவர்களைக் கைவிடும் பிரபுவும் உண்டோ? ஸீதையோ பர்த்தாவிற்கு உட்பட்டவள்; அவருடைய ஆக்ஞையில்லாமல் தன் தேகத்தைவிடக்கூடாது; ராமனோ ஸ்வதந்

திரர்; இந்தத்தேகம் தானல்லவே; ஒரு காரியத்திற்காக எடுத்துக் கொண்டது தானே. போகங்களை அனுபவிப்பதற்காகத் தேகத்தை வைத்துக்கொள்கிறதோ, துக்கத்தை அனுபவிப்பதற்காக வைத்துக் கொள்ளுகிறதோ? பலவந்தமாய் பிராணனை விடலாமோ, என்றால், பிராணனைப் போக்க சோகம் ஒன்றே போதாதோ?" என்று எண்ணி, அழுக்கடைந்த வஸ்திரத்துடன் உபவாஸத்தால் இளைத்து நாயகனையே தியானித்துக்கொண்டிருக்கும் ஸீதையைப் பார்த்து ஹனுமான் ஸந்தோஷமடைந்தார். தன் புத்தியில் குடிகொண்டிருக்கும் ராமமூர்த்தியை தியானித்து, "உம்மைத் திரும்பி அடையும்படி தன் பதிவிரதாதர்மத்தைக் காப்பாற்றிக்கொண்டிருக்கும் உத்தமியைப் பத்தினியாக அடைந்த நீரன்றோ பாக்யசாலி" என்று ஸ்தோத்திரம் செய்தார்.

ஏவம் ஸீதாம் ததா³ த்³ருஷ்ட்வா ஹ்ருஷ்ட: பவநஸம்ப⁴வ: |
ஜகா³ம மநஸா ராமம் ப்ரஶஶம்ஸ ச தம் ப்ரபு⁴ம் ‖ (54)

## ஸர்க்கம் 16

## ஸீதையைக் கண்டு ஹநுமான் துக்கித்தது

ப்ரஶஸ்ய து ப்ரஶஸ்தவ்யாம் ஸீதாம் தாம் ஹரிபுங்க³வ: |
கு³ணாபி⁴ராமம் ராமம் ச புநஸ் சிந்தாபரோ ப⁴வத் ‖ (1)

அனந்தகல்யாண குணபூர்ணரான ராமனையும் எல்லோரும் கொண்டாடத்தகுந்த ஸீதையையும் புகழ்ந்து மாருதி மறுபடியும் கவலையுடன் யோசித்தார். இப்படி கொஞ்ச நேரமிருந்து கண்ணீர் சொரிய ஸீதையின் நிலைமையை நினைத்து பிரலாபித்தார். "வஸிஷ்டர் முதலிய மஹரிஷிகளால் பழக்கப்பட்ட லக்ஷ்மணனாலும் பூஜிக்கத்தகுந்தவள்; லோக குருவான ரகுநாதனுடைய பார்யை; இவளையே துக்கம் பீடிக்குமானால், காலகதியே பெரிது. அதை மீற முடியாதென்று சொல்ல வேண்டியிருக்கிறது. ராமலக்ஷ்மணர்களுடைய நடத்தை இவளுக்கு நன்றாகத் தெரியுமாகையால், வருஷாகாலத்தில் கங்காநதி கலங்காததுபோல், மஹாகஷ்டங்கள் நேர்ந்தபொழுதும் அதைரியப்படவில்லை. ஒரே வயதும் ஸ்வபாவமும் நடத்தையும் வம்சமும் லக்ஷணங்களுமுடைய இவர்களிருவரும் ஒருவருக்கொருவர் தகுந்தவர்களே."

இப்படிப் புதிதாக உருக்கின தங்கத்தையொத்த தேககாந்தியுடன், ஸகலப் பிராணிகளுக்கும் ஆனந்தத்தைக் கொடுத்துக் கொண்டு மஹாலக்ஷ்மியைப்போல் விளங்கும் ஸீதையைப் பார்த்து ஆஞ்ஜநேயர் ராமமூர்த்தியை ஸ்மரித்துப் பின்வருமாறு சொன்னார் "ராமா! இவளுக்காகவல்லவா மஹாபலவானான வாலியையும் ராவணனுக்கு ஸமமான பராக்கிரமமுள்ள கபந்தனையும் ஸம்ஹரித்தீர்



தேவேந்திரன் சம்பராஸுரனைக் கொன்றதுபோல் பயங்கரமான பராக்கிரமமுள்ள விராதனை வதம் செய்தீர். நெருப்புக் கொழுந்துகள் போன்ற பாணங்களால் பதினாலாயிரம் கோரராக்ஷஸர்களை ஜனஸ்தானத்தில் லீலையாய் நாசம் செய்தீர். கரனையும் தூஷணனையும் திரிசிரஸையும் யுத்தகளத்தில் மடித்தீர். வாலியால் அனுபவிக்கப்பட்ட வானர ராஜ்யமும் ஐசுவரியமும் ஸாமான்யமா? பிறருக்குக் கிடைக்குமோ? ஸகல ஜனங்களும் கொண்டாடக் கூடியதன்றோ? இவளுக்காகவல்லவா அவற்றையெல்லாம் ஸுக்ரீவனுக்குக் கொடுத்தீர். விசாலமான நேத்திரங்களையுடைய இவளுக்காகவன்றோ நானும் மஹாஸமுத்திரத்தைத் தாண்டி இந்த லங்காபுரியைப் பார்த்தேன். ஸமுத்திரத்தை மாலையாய்த் தரித்த இந்த பூமியையும் மற்ற லோகங்களையும் இவளுக்காக ராமன் தலைகீழாக மாற்றினாலும் தகுமென்றே நான் எண்ணுகிறேன். பூலோகம் புவர்லோகம் ஸ்வர்க்கமென்ற திரிலோகங்களுக்கும் ஏக சக்ராதிபதியாயிருப்பது பெரிதா? ஜானகியை அடைவது பெரிதா? திரிலோகமும் ஜானகியின் காலில் ஒட்டின தூசி பெறுமோ? ஸகல தர்மங்களையும் குறைவில்லாமல் அனுஷ்டிக்கும் மஹாத்மாவான ஜனகராஜரிஷி யாகத்திற்காகப் பூமியை உழும்பொழுது, அதைப் பிளந்துகொண்டு, தாமரைத்தூள்களைப்போன்ற மங்களகரமான யக்ஞபூமியின் புழுதிபடிந்த தேகத்துடன் கலப்பை உழுத நிலத்தினின்றும் கிளம்பிய புண்யவதியல்லவோ? பதிவிரதாதர்மமே உருவெடுத்து வந்ததல்லவா? சிரேஷ்டமான ஆசாரத்தையுடையவரும் பிரதாபசாலியும் யுத்தகளத்தில் பின்வாங்காதவருமான தசரத சக்கரவர்த்திக்கு இந்தக் கீர்த்திசாலி மூத்த நாட்டுப் பெண்ணல்லவா? ஸமஸ்த தர்மங்களையும் அவைகளை நடத்தும் விதத்தையும் பதார்த்தங்களின் தத்துவத்தையும் பூர்ணமாக அறிந்த ராமனுக்கு இவள் பிரியபார்யை அன்றோ? இப்பொழுது கோர ராக்ஷஸிகளின் வசத்தில் அகப்பட்டிருப்பது என்ன கொடுமை! பர்த்தாவிடத்தில் தனக்குள்ள பிரீதியையே பெரிதாக எண்ணி, ஸகல ராஜபோகங்களையும் விட்டு, வனவாஸ துக்கங்களைக் கொஞ்சமாவது நினையாமல் மனுஷ்ய ஸஞ்சாரமற்ற கோரமான வனத்திற்கு வந்தாளல்லவா? பழங்களையும் கிழங்குகளையும் ஸந்தோஷமாய்ப் புஜித்துக்கொண்டு, பர்த்தாவின் சுச்ருஷையிலேயே பிரீதிவைத்து, அயோத்யையில் தன் அந்தப்புரத்திலிருக்கும் பொழுது அடைந்த ஆனந்தத்தைவிட அதிகமான ஆனந்தத்தை அடைந்தவளல்லவா? யாதொரு கஷ்டத்தையும் அனுபவிக்கத் தகாதவள்; உத்தமமான ஸுவர்ணத்தைப்போன்ற தேககாந்தியுள்ளவள்; எப்பொழுதும் புன்சிரிப்பும் நல்லவார்த்தையும் உடையவள்; இந்தக் கொடுமையையும் பொறுமையாய் ஸஹித்துக் கொண்டிருக்கிறாள். ராவணனால் நிர்ப்பந்தம் செய்யப்பட்டும், சிரேஷ்டமான ஆசாரத்தைக் கைவிடாமலிருக்கும் இந்த உத்தமி

யைத் தாகத்தால் தவிப்பவன் தண்ணீர்ப்பந்தலைக் கண்டு களிப்பது போல் ஸ்ரீராமன் அவசியம் பார்க்கவேண்டும். ராஜ்யலக்ஷ்மியை இழந்த அரசனுக்குப் பூமண்டலாதிபத்தியம் கிடைத்தது போல் ராமன் இவளை மறுபடியும் அடைந்தால் பரம ஸந்தோஷத்தை அடைவார். தனக்கு ஸஹஜமான ஸகல போகபோக்யங்களை இழந்தும், தன் இஷ்டமித்திர பந்துஜனங்களை விட்டுப்பிரிந்தும், எப்படியும் ராமன் இங்கே வருவார். அவரை அடைவேன்' என்ற ஆசையால் இன்னும் உயிரை வைத்துக் கொண்டிருக்கிறாள். ராகவனிடத்தில் தன்னுடைய நினைவு முழுவதையும் வைத்து அவரையே தியானித்துக்கொண்டு, இந்த ராக்ஷஸிகளையும் இந்த வனங்களையும் மரங்களையும் கண்ணெடுத்தும் பார்க்கவில்லை. ஸ்த்ரீகளுக்கு ஸகல ஆபரணங்களைக்காட்டிலும் பர்த்தாவே சிரேஷ்டமான ஆபரணம். அதைத் தரிக்கத் தகுந்த இவள் ராமனைப் பிரிந்ததால் காந்தியற்றிருக்கிறாள். ஜகத்பிரபுவான ராமன் இவளைப் பிரிந்து இன்னும் தேகத்தை வைத்துக் கொண்டிருக்கிறாரே! துக்கத்தால் நசிக்கவில்லையே! இது யாருக்கு ஸாத்தியம்! ஸ்த்ரீகளுக்குத் தலைமயிரின் நுனி முற்றிலும் கறுத்திருப்பது அபூர்வம்; அந்த உத்தமலக்ஷணம் பொருந்தின இவள் சுருண்ட தலைமயிரையுடைய ராமனையும் மயக்குகிறாள். இவளுடைய நேத்திரங்கள் மலர்ந்த செந்தாமரையைப் பழிக்கின்றன; ராமனுடைய மடியில் விளையாடத் தகுந்தவள்; ராக்ஷஸிகளுக்கு நடுவில் அகப்பட்டுக்கொண்டு தவிக்கிறாள். இதைக் கண்டு கேவலம் குரங்கான எனக்குக்கூட மனம் கலங்குகிறது; பரம தயாளுவான ராமமூர்த்திக்கு எப்படியிருக்கும்! ஸுகதுக்கங்களைத் துறந்த எனக்கே இப்படியிருந்தால் காமஸுகங்களை அனுபவிக்கத் தகுந்த ராமனுக்கு எப்படியிருக்கும்! இவ்வளவு அபராதம் செய்த ராவணனைப் பதிவிரதாக்னியால் சாம்பலாக்காமலிருக்கும் இவளுடைய பொறுமை பூமிதேவிக்கும் வருமோ? ராம லக்ஷ்மணர்களால் காப்பாற்றப்பட்ட இவள் கோரமான நேத்திரங்களையுடைய ராக்ஷஸிகளால் ரக்ஷிக்கப்படுகிறாள். இவள் மரத்தடியில் உட்கார்ந்திருக்கிறாள்! வெகுகாலமாய் அழகாய் விளங்கின தாமரையோடை பனிக்காலத்தில் புஷ்பங்கள் கருகி, பார்க்க விகாரமாக இருப்பதுபோல், பன்னிரண்டு வருஷகாலம் ராமனுடன் ஏகாந்தமாய் ஸகல ஸுகங்களையும் அனுபவித்துத் திடீரென்று இந்தக் கஷ்டம் நேர்ந்ததால் காந்தியற்றிருக்கிறாள். கஷ்டஸுகங்கள் மாறி மாறிவந்தால் ஒருவிதமாய்ப் பொறுக்கமுடியும்; இவளுக்குக் கஷ்டத்தைத் தவிர வேறு அனுபவம் கிடையாது. சக்கரவாகபக்ஷிகள் பகலில் பிரிந்திருந்தும், ராத்திரி வந்தவுடன் சேருவோம் என்ற நிச்சயத்தால் துக்கத்தைப் பொறுத்துக்கொண்டிருக்கின்றன; இவளுக்கு மறுபடியும் ராமனைச் சேரும் காலம் தெரிந்திருந்தால் இந்தக் கஷ்டத்தைப் பொறுத்திருப்பாள்; அதுவோ தெரியவில்லை, இப்படிப்பட்ட கஷ்டங்களை அனுபவிக்க வளர்க்கப்பட்டவளும் அல்ல; ஜனகமஹாராஜனால் வெகு செல்வமாய் வளர்க்கப்பட்டவள். வஸந்தருதுவால் புஷ்பித்திருக்கும் இந்த அசோக மரங்கள் இவளுக்குச் சோகத்தையே விருத்தி செய்கின்றன. ஸகல லோகங்களுக்கும் ஆனந்தத்தைக் கொடுக்கும் சந்திரனும் ஒரே காலத்தில் நெருப்புப் பொறி போன்ற ஆயிரம் கிரணங்களை உடையவனாய் சோகத்தைப் பெருக்குகின்றான்." என்று கூறி இப்படி அனேக காரணங்களால் இவளே ஸீதை என்று நிச்சயித்து, பலத்திலும் வேகத்திலும் ஒப்பில்லாத ஆஞ்ஜனேயர், அந்த சிம்சுபா விருக்ஷத்திலேயே மறைந்திருந்தார்.



இத்யேவ மர்த3ம் கபி ரந்வவேக்ஷ்ய
ஸீதேய மித்யேவ நிவிஷ்டபு3த்3தி4: |
ஸம்ச்ரித்ய தஸ்மிந் நிஷஸாத3 வ்ருக்ஷே
ப3லீ ஹரீணாம் ரிஷப4ஸ் தரஸ்வீ ‖ (32)

---

## ஸர்க்கம் 17

## ராக்ஷஸிகள்

தத: குமுத3ஷண்டா3போ4 நிர்மலோ நிர்மலம் ஸ்வயம் |
ப்ரஜகா3ம நப4ஸ்சந்த்3ரோ ஹம்ஸோ நீல மிவோத3கம் ‖ (1)

கருத்த ஜலத்தில் ஹம்ஸம் விளையாடுவது போல், களங்கமற்ற ஆகாசத்தில் தெளிவாய் யாதொரு மருவில்லாமல், ஆம்பல் மலர்க் கொத்துகளைப்போல் காந்தியையுடைய சந்திரன் பிரகாசித்தான். ராமகாரியத்தில் தானும் கூடிய ஸஹாயத்தைச் செய்ய வந்தது போல், தன் காந்தியால் ஸகல பதார்த்தங்களையும் ஆஞ்ஜநேயருக்கு ஸ்பஷ்டமாய்த் தெரிவித்துக்கொண்டும், குளிர்ந்த கிரணங்களால் அவருடைய சிரமத்தைப் போக்கிக்கொண்டும் இருந்தான். பிறகு ஹனுமான், அதிக பாரத்தால் ஜலத்தில் முழுகும் கப்பலைப்போல் துக்கம் தாங்காமல் சோகஸமுத்திரத்தில் முழுகும் பூரணசந்திரனையொத்த முகத்தையுடைய ஸீதையைக் கண்டார். ஸீதையை நன்றாய் உற்றுப் பார்க்கையில் அவளுக்கு ஸமீபத்திலிருந்த ராக்ஷஸிகளையும் பார்த்தார். ஒரே கண்ணுடையவளையும், ஒரே காதுடையவளையும், தலையை மூடிக்கொண்டிருக்கும் காதுடையவளையும், காதில்லாதவளையும், முளைகளைப் போன்ற காதுடையவளையும்; மேல் நோக்கியிருக்கும் மூக்கையுடையவளையும்; தலைபெருத்தவளையும், கொஞ்சம் தலை மயிருடையவளையும்; தலைமயிர் முளைக்காதவளையும்; கம்பளியைப் போன்ற மயிரால் மூடப்பட்டவளையும்; தொங்குகிற காதையும், முகத்தையும், வயிற்றையும், ஸ்தனங்களையும், உதடுகளையுமுடையவளையும்; மோவாய்க் கட்டையில் உதடுள்ளவளையும், தொங்கும் முழங்காலையுடையவளையும்; ஏற்றக்குறைவான அங்கங்

களையுடையவளையும்; கூனியையும்; குள்ளமானவளையும்; விஸ்தாரமான பின்பாகத்தையுடையவளையும்; கோரைப்பல்லுடையவளையும்; மஞ்சள்வர்ணமான கண்களையுடையவளையும்; வளைந்த முகத்தையுடையவளையும்; மூக்கு உதடுகளில்லாத முகத்தையுடையவளையும்; பயங்கரமான ரூபமுடையவர்களையும் கண்டார். மேலும், விகாரவேஷமுள்ளவர்களையும்; மஞ்சள் வர்ணமுடையவர்களையும்; கறுத்தவர்களையும்; எப்பொழுதும் கோபமுடையவர்களையும்; கலஹத்தில் பிரியமுடையவர்களையும் இரும்புத்தடி சூலம் உலக்கை முதலிய ஆயுதங்களைத் தரித்தவர்களையும்; பன்றி, மான், எருமை, புலி, ஆடு, நரி, யானை, பசு, குதிரை, கழுதை இவைகளைப்போல் முகமுடையவர்களையும்; யானை, குதிரை, ஒட்டகம் இவைகளைப்போல் பாதங்களையுடையர்களையும்; கழுத்தில் அழுந்தின தலையையுடையவர்களையும்; ஒரு கை ஒரு காலுடையவர்களையும்; கழுதை, நாய், பசு, யானை, குரங்கு இவைகளைப்போல் காதுகளையுடையவர்களையும்; மூக்கில்லாதவர்களையும்; மூக்குப் பெருத்தவர்களையும்; குறுக்காயிருக்கும் மூக்குடையவர்களையும்; முகத்திற்கு மேலுள்ள மூக்குள்ளவர்களையும்; கால் பெருத்தவர்களையும்; காலில் மயிர் வளர்ந்தவர்களையும்: யானை, பசு இவைகளைப்போல் கால்களையுடையவர்களையும்; அளவுகடந்த மிஞ்சின ஸ்தனம், கழுத்து, தலை, வயிறு, முகம், கண்களையுடையவர்களையும்: நீண்ட நாக்கு நகங்களையுடையவர்களையும், புகைபோன்ற தலைமயிருடையவர்களையும் கண்டார். அவர்கள் எப்பொழுதும் மாம்ஸங்களைப் புசித்து, மதுவைக் குடிப்பதிலேயே ஆசையுடையவர்கள்; ரத்தத்தை பிரியமாய்க் குடிப்பவர்கள். சரீரமெங்கும் மாம்ஸமும் ரத்தமும் பூசியிருக்கும். பார்ப்பவர்களுக்கு மயிர்க்கூச்சமுண்டாகும். இவர்கள், அந்த விருக்ஷத்தைச் சுற்றிலும் உட்கார்ந்திருந்தார்கள்.

அவர்களுக்கு நடுவில் ஸீதை, கறுத்த மேகங்களுக்கு நடுவில் தோன்றி மறையும் பூர்ணசந்திரனைப்போல் காணப்பட்டாள். அதிக செல்வாக்குள்ள விதேஹராஜவம்சத்தில் பிறந்தவள்; எல்லோரும் கொண்டாடும்படியான நடத்தையுடையவள்; பிரஹ்மஞானியான ஜனகருடைய புத்திரி; சோகத்தால் பீடிக்கப்பட்டுக் காந்தியற்றவள்; அழுக்கடைந்த தலைமயிருடன், புண்ணியம் நசித்து ஆகாசத்திலிருந்து 'பூமியில் விழுந்த நக்ஷத்திரத்தைப் போன்றவள்; பதிவிரதா தர்மத்தை அனுஷ்டிப்பதில் பெயர் பெற்றவள்; பர்த்தாவைப் பார்க்க அதிருஷ்டமில்லாதவள்; சிரேஷ்டமான ஆபரணங்களால் அலங்கரிக்கப்படா விட்டாலும், பர்த்தாவின் ஸ்நேஹமென்ற ஆபரணத்தாலேயே பிரகாசிப்பவள்; தன் இனத்திலிருந்து பிரிக்கப்பட்டு ஸிம்ஹத்தால் பிடிக்கப்பட்ட பெண்யானையைப்போல் தன் ஜனங்களை விட்டுப்பிரிந்து ராவணனால் சிறையில் வைக்கப்பட்டவள். மழைக்காலத்தின் முடிவில் மேகங்களால் சூழப்பட்டு பிரகாசமற்றிருக்கும் சந்திரனுடைய கலையைப் போன்றவள்; மங்கள ஸ்நானமில்லாததால் தேகம் அழுக்கடைந்து அழகு குறைந்திருப்பவள். தந்திகள் பூட்டாத வீணையைப் போன்றவள்; பர்த்தாவான ராமமூர்த்தியுடன் வஸிக்கத்தக்கவள்; ராக்ஷஸிகளுக்கு நடுவில் இருக்கத்தகாதவள்; குரூரக்ரஹங்களால் பீடிக்கப்படும் ரோஹிணீநக்ஷத்திரத்தைப் போன்றவள்; புஷ்பங்கள் உதிர்ந்த கொடியைப்போன்றவள்; தேகமெங்கும் அழுக்கடைந்தும் ஸஹஜமான அழகால் விளங்குகிறவள்; சேற்றால் மூடப்பட்ட தாமரைக்கொடி போல் பிரகாசிப்பவள்; கிழிந்த அழுக்கு வஸ்திரத்தை உடுத்தியிருந்தும் காந்தியால் ஜ்வலிப்பவள். முகத்திலோ ஸந்தோஷக்குறி இல்லை; தன் பர்த்தாவின் தேஜஸையும் பராக்கிரமத்தையும் நினைக்க நினைக்கத் தைரியமடைபவள். கண்ணீரால் கலங்கிக் கறுத்த நேத்திரங்களையுடையவள். தனது பதிவிரதாக்னியையே காவலாக உடையவள். மான் குட்டிபோல் பயத்தால் அங்குமிங்கும் பார்ப்பவள். அவளுடைய உஷ்ணமானபெருமூச்சினால் சுற்றிலுமிருக்கும்மரங்களிலுள்ள தளிர்களைவாடச் செய்பவள் போலிருப்பவள். சோகங்கள் ஒன்று சேர்ந்து உருவெடுத்ததுபோலும், துக்க ஸமுத்திரத்தின் அலைகளைப் போலும் இருப்பவள்; மிக்கப் பொறுமையுடையவள்; உத்தம லக்ஷணப்படி அமைக்கப்பட்ட அங்கங்களுடன் ஆபரணங்களில்லாமலேயே பிரகாசிப்பவள். இப்படிப்பட்ட கஷ்டதசையிலும் காந்தியைக் கைவிடாமலிருக்கும் ஜானகியைக் கண்டு ஹனுமான் ஸந்தோஷத்தால் கண்ணீர்விட்டு, "ராமலக்ஷ்மணர்களுடைய அனுக்கிரஹத்தாலல்லவா இந்த மஹா புண்யவதியின் தரிசனம் கிடைத்தது" என்று அவர்களை மனத்தால் அடிக்கடி நமஸ்கரித்தார். பிறகு ஸீதையைப் பார்த்து ஆனந்தம் பொங்க, அந்த விருக்ஷத்திலேயே மறைந்திருந்தார்.

*நமஸ்க்ருத்வா ஸ ராமாய லக்ஷ்மணாய ச வீர்யவாந் |*
*ஸீதாத$^{3}$ர்ஶந ஸம்ஹ்ருஷ்டோ ஹநுமாந் ஸம்வ்ருதோப$^{4}$வத் ‖ (31)*

---

### ஸர்க்கம் 18

## ராவணன் அசோகவனத்திற்கு வந்தது

*ததா$^{2}$ விப்ரேக்ஷமாணஸ்ய வநம் புஷ்பித பாத$^{3}$பம் |*
*விசிந்வதஶ்ச வைதே$^{3}$ஹீம் கிஞ்சிச்சே$^{2}$ஷா நிஶாப$^{4}$வத் ‖ (1)*

இப்படி அந்த மரத்திலிருந்து ஸீதையைத் தேடிக்கொண்டிருப்பதிலும், அவளை அடையாளம் கண்டு பிடிப்பதிலும் ராத்திரிகாலம் சென்று, சிறிது பாக்கி இருந்தது. இரவின் பிற்பகுதியில் வேத வேதாங்கமறிந்த பிராம்மண ராக்ஷஸர்களின் வேதகோஷத்தைக் கேட்டார். அப்பொழுது காதுக்கினிய மங்களவாத்தியங்களால் அபார பலபராக்கிரமமுள்ள ராக்ஷஸேசுவரன் விழித்துக் கொண்டான். பூமாலை வஸ்திரங்கள் ஆபரணங்கள் நழுவ, எப்பொழுதும் தன்

மனத்தில் குடிகொண்டிருக்கும் ஸீதையிடத்தில் ஆசைசெல்ல அவனை நினைத்தான். ஸ்வபாவத்திலேயே கொழுப்படைந்தவன்; ஸீதையிடத்தில் மிக்க ஆசை வைத்தவன். ஆகையால், அதை அடக்கமுடியவில்லை. பிறகு, ஸகல அலங்காரங்களுடன் அங்கிருந்து புறப்பட்டு தங்கத்தாலும் நவமணிகளாலும் அலங்கரிக்கப்பட்ட தோட்டத்திலுள்ள வீதிகளின் வழியாய் அசோகவனத்திற்கு வந்தான். அது ஸகல புஷ்பங்களாலும் பழங்களாலும் எக்காலத்திலும் விளங்கும் மரங்களையுடையது. பற்பல புஷ்பங்களால் நிறைந்த ஓடைகள் உள்ளது. விசித்திரவர்ணமுள்ள பக்ஷிகளும்செந்நாய் முதலிய மிருகங்களும் ஸஞ்சரிக்குமிடம். அந்த அற்புதங்களைப் பார்த்துக்கொண்டே ராவணன் வருகையில், தேவேந்திரன் புறப்படும் பொழுது தேவஸ்த்ரீகள் சூழ்ந்து வருவதுபோல், அவனுடைய பாரியைகளில் அனேகர் அவனைப் பின்தொடர்ந்தார்கள். சிலர் தங்கமயமான தீபங்களையும், சிலர் சாமரங்களையும், சிலர் விசிறிகளையும், சிலர் தங்கக்கூஜாக்களையும், சிலர் கத்திகளையும், சிலர் ஆஸனங்களையும் எடுத்துக்கொண்டு வந்தார்கள். ஒருத்தி ரத்தினங்களிழைத்த தங்கப் பாத்திரத்தில் ருசியுள்ள பானத்தை வலது கையில் எடுத்து வந்தாள். மற்றொருத்தி ராஜஹம்ஸத்தைப்போலும் பூர்ணசந்திரனைப் போலும் காந்தியுள்ள தங்கக்காம்புடைய வெண்குடையை எடுத்துக்கொண்டு பின்னே வந்தாள். மின்னற்கொடிகள் மேகங்களுடன் போவதுபோல், ராவணனுடைய பத்தினிகள் தூக்கத்தால் கண்கள் சுழல அவனைப் பின்தொடர்ந்தார்கள். சந்தனம் முதலியவைகளை நன்றாய்ப் பூசிக்கொண்டு, தாறுமாறாகப் போடப்பட்ட ஆபரணங்களுடன், தலை மயிர் அவிழ்ந்து தேகத்தில் புரள, முகத்தில் வியர்வையுடன், பானமயக்கத்தாலும் தூக்கத்தாலும் தள்ளாடிக்கொண்டு சென்றார்கள். மதுபானத்தால் கண்கள் சிவந்து, புஷ்பமாலைகளால் அலங்கரிக்கப்பட்ட தலைமயிருடன், கழுத்தில் தரித்த ஹாரங்கள் வியர்வையால் வாட, தங்களுடைய நாயகன் போகும்பொழுது அவனிடத்தில் வைத்த பிரியத்தாலும் கௌரவத்தாலும் அவனைப் பின் தொடர்ந்தார்கள். அவர்களுக்குப் பர்த்தாவும் மஹாபலவானுமான ராவணனே, காமபரவசனாய் ஸீதையிடத்திலேயே மனத்தை வைத்து வேறொன்றும் தோன்றாமல் மதத்தால் அழகிய நடையுடன் அங்கே வந்தான். அப்பொழுது காலில் அணிந்த சலங்கைளும் அரைநூல் மாலைகளிலுள்ள சலங்கைகளும் மதுரமாய் த்வனிப்பது ஹனுமானுடைய காதில் விழுந்தது. ராவணன் அசோகவன வாசலில் வந்ததை ஹனுமார் கண்டார்.

பரிமளமுள்ள தைலங்கள் நிறைந்த தீபங்களால் பிரகாசிப்பவனும், சிவந்துக் குறுக்காக நோக்கும் கண்களுடன், கர்வம் காமம் முதலியவைகளால் நிறைந்த ராவணன், வில்லைத் தரிக்காது வந்த மன்மதனைப்போல் தோன்றினான். அப்பொழுது கடையப்பட்ட மோர், கறக்கப்பட்ட பால் இவற்றின் நுரையைப் போன்ற வர்ண



முள்ள சுத்தமான அவனுடைய உத்தரீயம், கழன்றிருந்த தோள் வளையில் மாட்டிக்கொண்டது; அதை விளையாட்டாய் இழுத்துக்கொண்டே நடந்தான். இப்படிப் பலம் பராக்கிரமம் முதலிய குணங்களில் ஒப்பற்றவனும், பிறரால் செய்யக்கூடாத காரியங்களைச் செய்து முடித்தவனும், தூரத்தில் வந்து கொண்டிருந்தாலும் விசேஷ தேஜஸால் அதிஸமீபத்தில் வருகிறவனைப்போல் தோன்றுகிறவனுமான ராக்ஷஸனை ஆஞ்ஜனேயர் இலைகளாலும் புஷ்பங்களாலும் நிறைந்த மரத்தில் உட்கார்ந்துகொண்டு உற்றுப்பார்த்தார். அவனுக்குப் பின்னால் அவனுடைய பத்தினிகள் ரூபத்திலும் அழகிலும் காந்தியிலும் சிறந்தவர்களாய் விலாஸமாய் நடந்து வந்தார்கள். அவர்களால் சூழப்பட்டு அந்தப் பிரதாபலங்கேசுவரன் அசோகவனத்தில் நுழைந்தான். விச்ரவஸ் என்ற ரிஷியின் புத்திரன்; ராக்ஷஸர்களுக்கு அரசன்; அளவற்ற பலசாலி; கர்வத்தால் நிமிர்ந்து நிற்கும் காதுகளையுடையவன்; விசித்திரமான ஆபரணங்களுடன் நக்ஷத்திரங்களால் சூழப்பட்ட சந்திரனைப்போல் அந்தப் பெண்மணிகளால் சூழப்பட்டு அவன் வருவதைக்கண்டு, ஆஞ்ஜனேயர் "மஹாவீரனான ராவணன் இவனே" என்று நிச்சயித்து, மேல் நடக்கும் காரியங்களை நன்றாய்ப் பார்க்கவேண்டுமென்று, கீழ்க்கிளையில் இறங்கினார். வாயுபுத்திரனும், பலத்திலும் வேகத்திலும் காந்தியிலும் சிரேஷ்டமானவரும், கருடனைப்போன்றவருமான ஆஞ்ஜனேயரும், அவனுடைய தேஜஸுக்கெதிரில் நிற்கமுடியவில்லை. ஆகையால், "ஸகல மாயைகளுக்கும் நிதியான ராவணனுக்கெதிரில் நமது ஸூக்ஷ்மரூபமும் பிரயோஜனமில்லை" என்று, இலைகளும் புஷ்பங்களுமடர்ந்த மரக்கிளைகளில் மறைந்திருந்தார். கேசபாரமுடையவளும் நெருங்கின அழகான ஸ்தனங்களுடன், கறுத்த நேத்திரங்களால் விளங்குபவளுமான ஸீதையைப் பார்க்க இச்சை கொண்டவனாய், ராவணன் அருகில் வந்தான்.

ஸ தாமஸித கேசாந்தாம் ஸுஸ்ரோணீம் ஸம்ஹதஸ்தநீம் |
தி$^{3}$த்$^{3}$ருக்ஷுர ஸிதாபாங்கா$^{3}$முபாவர்தத ராவண: || (32)

---

## ஸர்க்கம் 19

## ஸீதை

தஸ்மிந்நேவ தத: காலே ராஜபுத்ரீ த்வநிந்தி$^{3}$தா |
ரூபயௌவந ஸம்பந்நம் பூ$^{4}$ஷணோத்தம பூ$^{4}$ஷிதம் || (1)

ஸகல ஆபரணங்களாலும் அலங்கரிக்கப்பட்டு, ரூபத்திலும் யௌவனத்திலும் நிகரில்லாத ராவணன் தன்னிடத்தில் ஆசை கொண்டு தன்னைப்பார்க்க வருவதைப் பதிவிரதைகளுக்குள் சிரேஷ்டையான ஜானகி என்ற ராஜபுத்திரி கண்டு, பெரும் காற்றிலடிபட்ட இளம் வாழையைப்போல் நடுங்கினாள். உடனே, துடை

களால் வயிற்றையும் கைகளால் ஸ்தனங்களையும் மறைத்துக் கொண்டு, என்ன நேருமோ என்று கண்ணீர் சொரிய உட்கார்ந்திருந்தாள். ராவணனும் ஸமீபத்தில் வந்து ராக்ஷஸிகளுக்கு நடுவில் ஸீதை உட்கார்ந்திருப்பதையும், ஸமுத்திரத்தில் முழுகும் கப்பலைப் போல் அவள் துக்கத்தால் பீடிக்கப்படுவதையும் கண்டான். வெறும் தரையில் ஆஸனமில்லாமல், ஸகல பூஷணங்களையும் தரிக்கத் தகுந்தவளாயிருந்தும் யாதொரு ஆபரணமும் இல்லாமல், அழுக்கையே ஆபரணமாக அணிந்து கொண்டு, பூமியில் வெட்டித்தள்ளப்பட்ட மரக்கிளைபோலவும், சேற்றால் பூசப்பட்ட தாமரைக்கொடிபோலும் சற்று பிரகாசித்தும் சற்று பிரகாசிக்காமலும் இருந்தாள். ஆத்மஞானியான ராமமூர்த்தியை ஸ்தூலதேகத்தால் அடையமுடியாமல், எண்ணங்களாகிய குதிரைகளை மனமென்ற ரதத்தில் பூட்டி அதிவேகமாய் அவருடைய ஸமீபத்தை அடைய முயல்பவள்போல் அவள் காணப்பட்டாள். முகம் வாடி அழுது கொண்டு தனியாக ராமனைக்குறித்துக் கவலைப்படுவதும் அவரை தியானிப்பதுவுமே தொழிலாக இருந்தாள். அவளுடைய துக்கம் எப்பொழுது முடியுமென்று அவளுக்குத் தெரியாது. ராகவனே கதி என்று நம்பியிருந்தாள். மந்திரத்தால் தடைபட்டுப் புரண்டு கொண்டிருக்கிற நாகராஜனுடைய ஸ்த்ரீபோலும், கேதுவால் பீடிக்கப்பட்ட ரோஹிணீ நக்ஷத்திரம்போலும், நல்ல ஆசாரமுள்ள தர்மவான்களுடைய குலத்தில் பிறந்து ஹீனமான குலத்தில் விவாஹம் செய்யப்பட்டவளைப்போலும், (ஸ்த்ரீகளுக்கு விவாஹமும் புருஷர்களுக்கு உபநயனமும் இரண்டாவது ஜன்மம்) வீணாய் அபவாதத்தினால் கெடுக்கப்பட்ட கீர்த்தியைப்போலும், அடிக்கடி அப்யாஸம் செய்யாததால் மறந்துபோன வேதவித்யையைப் போலும், அழிந்த புகழைப்போலும், அவமானத்தையடைந்த சிரத்தையைப்போலும், வரவரக் குறைந்த தேவபூஜையைப் போலும், பிரயோஜனத்தை அடையாத ஆசையைப்போலும், உத்தேசத்திற்கு மிகவும் குறைந்த தனலாபத்தைப்போலும், அலக்ஷ்யம் செய்து தடுக்கப்பட்ட பிரபுக்களுடைய உத்திரவைப்போலும், கெட்ட காலங்களில் திக்குகள் நெருப்புப் பட்டு எரிவதுபோலும், பூஜாத்திரவியங்கள் அபகரிக்கப்பட்டதுபோலும், பனி முதலியவைகளால் எரிக்கப்பட்ட தாமரையோடையைப்போலும், வீரர்களை இழந்த ஸேனையைப்போலும், இருள் சூழ்ந்த வெளிச்சத்தைப் போலும், ஜலம் வற்றின நதியைப்போலும், அசுத்த பதார்த்தங்கள் தொட்ட அக்னிகுண்டத்தைப் போலும், அணைந்துபோன அக்னிஜ்வாலையைப்போலும், ராகுவால் பீடிக்கப்பட்ட சந்திரனை உடைய பௌர்ணிமா ராத்திரியைப்போலும், யானையால் குழப்பப்பட்டு தாமரைத்தண்டு புஷ்பம் பக்ஷிகள் முதலியன அழிந்த தாமரை ஓடையைப்போலும், வெள்ளத்தால் அடித்துக் கொண்டுபோகப்பட்ட ஜலத்தையுடைய நதியைப்போலும், கரையில் பிடுங்கிப் போட்டவுடன் உஷ்ணத்தால் வாடும் தாமரைக் கொடிபோலும், தன் நாயகனை விட்டுத் தன்னைப் பிரித்து ஸ்தம்பத்தில் இறுக்கிக்கட்டப்பட்டு துக்கத்தால் பெருமூச்சுவிட்டுக்கொண்டிருக்கும் பெண் யானையைப் போலும், கறுத்து நீண்ட பின்னலால் சரத்காலத்தில் கறுத்த வனங்களால் விளங்கும் பூமியைப்போலும் தோன்றினாள். ஸ்நானம் அலங்காரம் முதலியவை இல்லாததால் கிருஷ்ணபக்ஷ ராத்திரியைப்போல் விளங்கவில்லை. மிகவும் செல்வமாய் வளர்க்கப்பட்டு சுத்தமான அவயவங்களையுடையவளாகையால் நவமணிகளிழைத்த உத்தமகிருஹத்தில் வஸிக்கத் தகுந்தவள். உபவாஸத்தாலும் கவலையாலும் பயத்தாலும் எப்போதும் பர்த்தாவையே தியானித்துக்கொண்டிருந்ததாலும் மிகவும் இளைத்திருந்தாள். ஸந்தோஷமற்று ஜலத்தையே ஆகாரமாகக்கொண்டு ராமன் ராவணனைச் சீக்கிரமாய் வதம் செய்யவேண்டுமென்று தன் இஷ்டதேவதையைக் கைகூப்பி மனத்தால் பிரார்த்திப்பவள் போலிருந்தாள். தோஷமற்ற நடத்தையை உடையவள்; அழகிய கண்களையும் இமைகளையும் உடையவள்; தன்னை ரக்ஷிப்பவர்கள் இன்னும் வரவில்லையே என்று அழுதுகொண்டிருந்தாள். தன் பர்த்தா அனுஷ்டிக்கும் தர்மத்தையே தானும் அனுஷ்டித்துக் கொண்டு, அவரைப் பிரிந்த துக்கத்தால் தவித்துக்கொண்டிருக்கும் ஸீதையை ராவணன் கபடவார்த்தைகளால் பலவிதமாய் மயக்கப் பார்த்தான். அதனால் தன் நாசத்தையும் தேடிக்கொண்டான்.

ஸமீக்ஷமாணாம் ருத³தீ மநிந்தி³தாம்
ஸுபக்ஷ்ம தாம்ராயத ஶுக்ல லோசநாம் |
அநுவ்ரதாம் ராம மதீவ மைதி²லீம்
ப்ரலோப⁴யாமாஸ வதா⁴ய ராவண: || (23)



## ஸர்க்கம் 20

## ராவணன் ஸீதையைப் பிரார்த்தித்தது

ஸ தாம் பதிவ்ரதாம் தீ³நாம் நிராநந்தா³ம் தபஸ்விநீம் |
ஸாகாரைர் மது⁴ரைர் வாக்யைர் ந்யத³ர்ஶயத ராவண: || (1)

பர்த்தாவையே தெய்வமாக உடையவளாய், அவரை விட்டுப் பிரிந்ததால் மனம் வாடித் துன்பமடைந்து, சந்தோஷமற்றிருக்கும் ஸீதையைத் தனக்கு இணங்கும்படி மதுரமான வார்த்தைகளால் ராவணன் தன் அபிப்பிராயத்தை வெளியிட்டான். அவளோ மஹா பதிவிரதை; ஸகல லோகங்களையும் தன் தவத்தின் மஹிமையால் நாசம் செய்யக்கூடியவள்.

"யானைத் துதிக்கையைப் போன்ற துடைகளையுடையவளே! என்னைப் பார்த்தவுடன் உனது வயிற்றையும் ஸ்தனங்களையும் மறைத்துக்கொண்டு என் கண்ணில் படாமலிருக்க வேண்டுமென்று விரும்புகிறாய்போலும். விசாலமான நேத்திரங்களையுடையவளே!

ஸமஸ்த பிராணிகளுடைய மனத்தை அபகரிப்பவளே! உன்மேல் ஆசைவைத்தேன். என்னிடத்தில் தயவு செய். நீ ஏன் என்னைக் கண்டு பயப்படுகிறாய்? இங்கே மனுஷ்யர்களாவது, இஷ்டமான ரூபத்தை எடுக்கக்கூடிய ராக்ஷஸர்களாவது உனக்குப் பயத்தை உண்டுபண்ணக்கூடியவர்கள் எவருமில்லை. பர ஸ்த்ரீகளை பலாத்காரமாய்க் கொண்டுவருவதும் அவர்களைச் சேர்வதும் ராக்ஷஸர்களுக்கு ஸ்வதர்மம். இதில் ஸந்தேகமுண்டோ? அளவற்ற ஆசை என்மனத்தில் எழுந்தாலும், என்னிடத்தில் உனக்குப் பிரியமுண்டாகாதவரையில் உன்னைத் தொடமாட்டேன். ஸுந்தரீ! இவ்விடத்தில் உனக்குப் பயமுண்டோ? என்னை நம்பு; என்னிடத்தில் உனக்கு நிஜமான பிரேமை உண்டாகட்டும். வீணாய்த் துக்கத்திற்கு இடம் கொடுத்து தேகத்தைக் கெடுத்துக்கொள்ளாதே.

உன் அழகான தலைமயிரை ஒரே பின்னலாய்த் தொங்கவிட்டிருப்பதும், வெறும் தரையில் படுப்பதும், அழுக்கடைந்த ஒற்றை வஸ்திரத்தைத் தரிப்பதும் , காரணமில்லாமல் உபவாஸமிருப்பதும் உனக்குத் தகாது. என்னைப் புருஷனாக அடைந்து உத்தமமான புஷ்பமாலைகளையும் சந்தனம் முதலிய பூச்சுக்களையும் விசித்திரமான வஸ்திரங்களையும் அழகான ஆபரணங்களையும் அகில் முதலிய தூபங்களையும் படுக்கைகளையும் ஆஸனங்களையும், பாட்டு ஆட்டம் வாத்தியம் முதலியவைகளையும், உயர்ந்த அன்னபானங்களையும் அனுபவிக்கலாம். ஸ்த்ரீரத்தினமே! ஸகல லக்ஷணங்களும் பொருந்தின உன் அவயவங்களில் அவைகளுக்குத் தகுந்த ஆபரணங்களைத் தரிக்கக்கூடாதா? என்னிடத்தில் வந்து சேர்ந்தபிறகும் அலங்காரம் செய்துகொள்வதற்குத் தகாதவளாய் எப்படி ஆவாய்? ஆற்றில் ஓடும் ஜலப்பிரவாகம் எப்படித் திரும்பிவராதோ அப்படி உனது யௌவனம் அதி சீக்கிரமாய் சென்று விடும். அதற்குள் என்னை அடைந்து ஸுகமாக இரு.

ஸகலப் பிரபஞ்சத்தையும் ஸிருஷ்டித்த பிரஹ்மா உன்னை ஸிருஷ்டித்த பிறகு, "இனி இதைக் காட்டிலும் உத்தமமான ரூபத்தை என்னால் ஸிருஷ்டிக்க முடியாது" என்று தொழிலை விட்டு விட்டாற்போலிருக்கிறது. உன்னைப்போன்ற அழகுள்ள ஸ்த்ரீ எங்கும் இல்லாமலிருப்பதே இதற்கு அடையாளம். ரூபத்தாலும் யௌவனத்தாலும் பிரகாசிக்கும் உன்னை அடைந்து உன் அழகில் ஈடுபட்டு மயங்காதவனுமுண்டோ? உன்னை ஸிருஷ்டித்த பிரஹ்மாவே உன்னைக்கண்டு மோகிப்பதில் ஸந்தேகமில்லை. பூர்ண சந்திரனைப்போன்ற முகத்தையுடையவளே! உன் தேகத்தில் எந்தப்பக்கத்தில் என் பார்வை விழுகிறதோ அங்கேயிருந்து அதைத் திருப்பமுடியவில்லை. ஸீதே! என்னைப் புருஷனாக அடை. ஏன் இந்த அறிவின்மை உனக்கு? நான் அநேக லோகங்களிலிருந்து கொண்டு வந்த ஸகல ஸ்த்ரீகளுக்கும் நீ பட்ட மஹிஷியாக இரு. உனக்கு ஸகல மங்களங்களும் உண்டாகட்டும். நான் திக்விஜயம் செய்து அந்தந்த லோகங்களிலிருக்கும் அபூர்வமான வஸ்துக்களைக் கொண்டு வந்திருக்கிறேன். அவைகளும் நானும் இந்த லங்காபுரியும் உன்னுடையவை. உனக்காக இந்தப்பூமி முழுவதையும் ஜயித்து உன் பிதாவான ஜனகமஹாராஜாவிற்குக் கொடுக்கிறேன்.



பலத்திலும், பராக்கிரமத்திலும் வீரியத்திலும் தைரியத்திலும் என்னைப்போன்றவனுண்டோ? தேவர்களையும் அஸுரர்களையும் யுத்தத்தில் அடிக்கடி தோற்கடித்து அவர்களுடைய ஸைன்யங்களை நாசம் செய்து கொடிகளையும் த்வஜங்களையும் அறுத்து, எனக்கெதிரில் நிற்கமுடியாமல் துரத்தியிருக்கிறேன். உனது ரூபத்திற்கும அழகிற்கும் தகுந்தபடி, ஸாமர்த்தியமுள்ள ஸ்த்ரீகள் வஸ்திரங்களாலும் ஆபரணங்களாலும் உன்னை அலங்கரிக்கட்டும். நான் பார்த்து அளவற்ற ஆனந்தமடைவேன். இங்கிருக்கும் ஸமஸ்த போக பதார்த்தங்களில், வஸ்திரம் ஆபரணம் மது மாம்ஸம் ஆஸனம் வாகனம் இன்னும் எது உனக்குப் பிரியமோ அவைகளை எல்லாம் உன் இஷ்டப்படி அனுபவி. பூமியையும் தனங்களையும் தடையில்லாமல் வேண்டியவர்களுக்குக் கொடு. உன் கண்ணில் பட்ட ஸகலப் பிராணிகளும் உனக்கு அடிமைகளே; நீ அவர்களை இஷ்டப்படி அதிகாரம் செய்யலாம். என்னிடத்தில் அந்தரங்கமான பிரீதி வை. உன் மூலமாய் உனது பந்துக்களும் என் அனுக்கிரஹத்தால் க்ஷேமத்தை அடையட்டும்.

என் ஐசுவரியத்தையும் செல்வத்தையும் கீர்த்தியையும் கவனித்துப் பார். உடுக்கத் துணியில்லாமல், உண்ணச்சோறில்லாமல், படுக்க இடமில்லாமல் பரதையாய்க் காட்டில் அலையும் ராமனால் உனக்கென்ன பிரயோஜனம்? தபஸ்விகளைப்போல் ஆகார நியமத்துடன் மரவுரி மான்தோல் முதலியவைகளைத் தரித்து வெறுந்தரையில் படுத்து வனத்தில் மிருகங்களுடன் திரிகிறவன் உனக்குத் தகுந்தவனா? ராஜ்யலக்ஷ்மியும் ஜயலக்ஷ்மியும் அவனைக் கைவிட்டன. அவன் இதுவரையில் பிழைத்திருக்கிறானோ இல்லையோ? மழைக் காலத்தில், கொக்குகள் கூட்டம் கூட்டமாய் முன்னே நிறைந்துள்ள மேகங்களால் மறைக்கப்பட்ட நிலவைக் காண முடியாததுபோல என்னால் இங்கே கொண்டுவந்து வைக்கப்பட்ட உன்னை ராமன் பார்க்கவும் முடியுமோ? ஹிரண்ய கசிபு இந்திரன் கவர்ந்து சென்ற தன் மனைவியைத் திரும்பவும் அடைந்தது போல் ராமன் உன்னை எந்த உபாயத்தாலும் அடைய முடியாது.

கருடனிடத்தில் அகப்பட்ட மஹாஸர்ப்பத்தைப்போல், உன் நேத்திரங்களையும் பல்வரிசையையும் புன்சிரிப்பையும் லீலாவினோதங்களையும் பார்த்து என் மனம் மயங்குகிறது. அழுக்கடைந்த பட்டுவஸ்திரத்தைத் தரித்துக்கொண்டு, உபவாஸத்தால் இளைத்திருக்கும் தேகத்துடன், யாதொரு அலங்காரமும் இல்லாமல் காந்தி

குறைந்திருக்கும் உன்னைப் பார்த்து என் பாரியைகளிடத்தில் ஸுகத்தை அனுபவிக்க மனம் வரவில்லை. என் அந்தப்புரத்தில் கணக்கில்லாத ஸ்த்ரீரத்தினங்கள் இருக்கிறார்கள். அவர்களுக்கெல்லாம் நீயே பிரபு. அப்ஸரஸ்கள் மஹாலக்ஷ்மிக்குக் கைங்கரியம் செய்வதுபோல், ஸகல லோகங்களிலும் உத்தம ஸ்த்ரீகளென்று பிரஸித்தி பெற்றவர்களெல்லாம் உனக்குப் பணிவிடை செய்யட்டும். குபேரனிடத்திலுள்ள ரத்தினங்களும் ஸகல லோகங்களும் நானும் உன் ஸ்வாதீனத்தில் இருக்கிறோம். இவைகளை இஷ்டப்படி அனுபவிக்கத் தடையென்ன? தவம் செய்வதிலாவது தேகபலத்திலாவது பராக்கிரமத்திலாவது பிரதாபத்திலாவது கீர்த்தியிலாவது ராமன் எனக்கு ஈடாவானா? நேர்த்தியான பானங்களைக் குடி; வனங்களிலும் தோட்டங்களிலும் உன் இஷ்டப்படி விளையாடு; இங்குள்ள ஸகல போகங்களையும் அனுபவி: இந்தப் பூமியையும் அதிலுள்ள ஸமஸ்த தனங்களையும் உனக்குக் கொடுத்தேன். என்னுடன் உன் இஷ்டப்படி க்ரீடைசெய்; உனது பந்துக்களும் உன்னை அடைந்து ஸகல ஸௌயங்களையும் அனுபவிக்கட்டும்; பயத்தை விடு. ஸகல ஆபரணங்களாலும் உன்னை அலங்கரித்துக்கொண்டு, அநேக வர்ணமுள்ள புஷ்பங்களாலும் அவைகளில் மொய்க்கும் வண்டுகளாலும் மறைந்த மரங்களையுடைய ஸமுத்திரக்கரையிலுள்ள வனங்களில் என்னுடன் ஆநந்தமாகக் காலத்தைப் போக்குவாயாக'' என்றான்.

குஸுமித தருஜால ஸந்ததாநி
ப்$^4$ரமரயுதாநி ஸமுத்$^3$ர தீரஜாநி |
கநகவிமல ஹார பூ$^4$ஷிதாங்கீ$^3$
விஹர மயா ஸஹ பீ$^4$ரு காநநாநி || (36)

---

### ஸர்க்கம் 21

## ஸீதை ராவணனுக்கு ஹிதோபதேசம் செய்தது

தஸ்ய தத்$^3$வசநம் ஶ்ருத்வா ஸீதா ரௌத்$^3$ரஸ்ய ரக்ஷஸ: |
ஆர்தா தீ$^3$நஸ்வரா தீ$^3$நா ப்ரத்யுவாச ஶனைர் வச: || (1)

க்ரூரனான ராவணன் இப்படிச் சொல்லக்கேட்டு ஸீதை மிகுந்த வருத்தமடைந்து தீனஸ்வரத்துடன் மெதுவாய்ப் பதில் சொன்னாள். பர்த்தாவை விட்டுப்பிரிந்த துக்கத்தால் தவித்து, அவரையே நினைத்து அழுதுகொண்டு, மஹாதுஷ்டனான ராவணனைப் பார்த்து நடுங்கினாள்; ஆனால் ராமனையே ஸர்வகாலத்திலும் தியானிப்பவளாய், அவருடைய சரணாரவிந்தங்களில் நீங்காத பக்தியுடன் பதிவிரதா தர்மத்தைக் காப்பாற்றிக்கொண்டு, ஒரு துரும்பைக் கிள்ளி அவனுக்கும் தனக்கும் நடுவில் போட்டு அவனுடைய அறிவின்மையை நினைத்துச் சிறிதே நகைத்து அவனுக்குப் பதிலுரைத்தாள்.



ராவண! என்னிடத்தில் வைத்த ஆசையை விலக்கி உனது பாரியைகளிடத்தில் வைப்பது நியாயம். மஹாபாபிக்கு மோக்ஷம் கிடைக்குமோ? பிரஹ்மஞானிகளான விதேஹ ராஜர்களுடைய வம்சத்தில் பிறந்து, களங்கமற்ற ஆசாரத்தையுடைய ஸூரிய வம்சத்தில் புகுந்து, ஸர்வலோகநாதனான ராமமூர்த்தியைப் பர்த்தாவாக அடைந்து, அன்னிய புருஷனை ஸ்வப்பனத்திலும் நினையாத நான், அல்பமனிதர்கள்கூட நிந்திக்கும் பாபத்தைச் செய்வேனா?'' என்று அவனை அலக்ஷ்யம் செய்து, "நானோ பதிவிரதை; பிறருடைய பாரியை; விலைகொடுத்து வாங்கக்கூடிய பாரியையல்ல; ஸாதுக்கள் அனுஷ்டிக்கும் தர்மத்தையும் ஆசாரத்தையும் அனுஸரி. இந்த விஷயத்தில் உன்னையே உபமானமாக வைத்துச் சொல்லுகிறேன்; உனது பத்தினிகளைப் பரபுருஷர்கள் கண்ணெடுத்துப் பார்க்காமல் வெகுஜாக்கிரதையாகக் காப்பாற்றி வருகிறாயல்லவா? அப்படியே இதரபுருஷர்களும் தங்களுடைய பத்தினிகளைப் பிறர் நெருங்காதபடி ரக்ஷிப்பது நியாயமல்லவா?

உன்னிடத்தில் பரமப்பிரீதிவைத்து உனது ஸகல இஷ்டங்களையும் நிறைவேற்றக் காத்திருக்கும் பாரியைகளிடத்தில் உன் இஷ்டப்படி அனுபவிக்கலாகாதா? ஒருவன் தனது பத்தினிகளிடத்தில் திருப்தியடையாமல் காமம் மீறி இந்திரியஸ்வாதீனமில்லாதவனாய்ப் பரஸ்த்ரீகளைத் தொடர்ந்தால் அவனுக்கு அந்த ஸமயத்தில் அது ஹிதமாகத் தோன்றினாலும், முடிவில் ஆயுளையும் ஐசுவரியத்தையும் தேஜஸையும் மனைவி மக்களையும் நல்ல கதியையும் நாசம் செய்யும்.

இந்த தேசத்தில் உனக்கு ஹிதத்தை உபதேசிக்கும் ஸாதுக்கள் இல்லையோ? நீ செய்யும் அகாரியத்திலிருந்து உன்னைத் தடுப்பவர்கள் இல்லையோ? விபீஷணன் அகம்பனன் மால்யவான் முதலியவர்களிருப்பதால் அப்படிச் சொல்லக்கூடாது. ஆகையால் அவர்களுக்குச் சுச்ரூஷைசெய்து நமஸ்கரித்து வணக்கமாய் அவர்களிடத்தில் தர்மங்களை நீ கேட்கவில்லையோ? 'நேற்றுவந்த உனக்கு இது எப்படித் தெரியும் என்றால், உனது புத்தி விபரீதத்தில் செல்வதே போதுமான அடையாளமல்லவா? 'பிறருடைய எண்ணம் பிரத்யக்ஷமாகத் தெரியாமலிருக்க என் புத்தியை நீ அறிந்ததெப்படி.' என்றால் ஸாதுக்களால் நிந்திக்கத்தக்க உன் ஆசாரமே அதற்கு ஸாக்ஷி. உன் நடத்தை உன்னை மாத்திரம் அழிக்குமோ; உன்னை அண்டியிருக்கும் ராக்ஷஸர்களையும் வேரறுக்குமே! அவர்களுக்குப் பரமஹிதத்தைச் செய்பவன்போல் காட்டிக்கொள்கிறாய்; ஆனால் அவர்களை நிர்மூலம் செய்ய எண்ணம் கொண்டு ஸாதுக்களின் ஹிதோபதேசத்தை அலக்ஷ்யம் செய்கிறாய். அநியாயத்தில் ஆசைவைத்துப் புத்திஹீனனான அரசனை அடைந்த ராஜ்யமும் பிரஜைகளும் ஐசுவரியமும் அழியும். அப்படி அநியாயத்திலேயே நோக்கமுள்ள உன்னால் ஸகல ஐசுவரியங்களும் பொருந்திய இந்த லங்காராஜ்யமும் இதில் வஸிக்

கும் கணக்கில்லாத ராக்ஷஸர்களும் நாசமடையப் போகிறார்கள். ஆராய்ந்து பாராமல் கொடிய பாபங்களைச் செய்து அவைகளால் நாசத்தையடையும் மனிதனைப் பார்த்து ஸகலப்பிராணிகளும் ஸந்தோஷிப்பார்கள். அப்படியே மஹாபாபியான உன்னால் வஞ்சிக்கப்பட்ட உன் பிரஜைகள், "குரூரனான ராவணன் தெய்வானுக்ரஹத்தால் நாசமடைந்தான்" என்று ஸந்தோஷிக்கப் போகிறார்கள்.

உன் செல்வமும் ஐசுவரியமும், எனக்கு ஒரு பொருட்டா? அவைகளைக்கொண்டு என்னை மயக்கப் பார்க்கிறாயே! உன் அந்தப் புரஸ்த்ரீகளுக்கு யஜமானியாக இருப்பது எனக்கு ஒரு மேன்மையா? ஸகல லோகங்களுக்கும் மங்களத்தை உண்டாக்கும் பொருட்டு ரகுவம்சத்தில் அவதரித்த மஹாவிஷ்ணுவை விட்டு என்னைப் பிரிக்க முடியுமா? அவர் எந்தக் குலத்தில் அவதரிக்கிறாரோ அந்தக் குலத்திலேயே மஹாலக்ஷ்மியான நானும்அவதரிக்கிறேன். ஸூரியனை விட்டு அவருடைய தேஜஸைப் பிரிக்கமுடியுமோ? நான் ராமனுக்கு உட்பட்டவள்; ஜனகருடைய புத்திரி யாருக்குப் பத்தினியோ அவருடைய தேஜஸ் எல்லையற்றதென்று மாரீசன் உனக்கு உபதேசித்ததை மறந்தாயோ? பிரஹ்மா முதலிய ஸகல தேவர்களும் தங்களுடைய பதவியை அடையும் பொருட்டு பிரார்த்திக்கும் லோகநாதனுடைய வலது புஜத்தையடைந்து, அவரால் ஆலிங்கனம் செய்யப்பட்டு, அதையே தலையணையாய் வைத்துத் தூங்கின நான், அவருடைய கிருபையால் ஸகல போகங்களையும் பெற்று, பேரும் ஊருமில்லாத ஒரு அல்ப ராக்ஷஸனான உன்னைச்சேர்ந்து உன் புஜத்தில் தலைவைத்துத் தூங்குவேனோ? மஹாவிரதங்களை அனுஷ்டித்து ஸித்திபெற்ற தீரனான ப்ரஹ்மஞானிக்கு யோகாப்பியாஸரூபமான வித்யை எப்படித் தகுந்ததோ அப்படி மஹாவிஷ்ணுவான ராமமூர்த்திக்கு மஹாலக்ஷ்மியான நான் தகுந்த பாரியையன்றோ? ராவணா! நான் வேறொருவருக்கும் பாரியையாக இருக்கத் தகாதவள்; அவரைப்பிரிந்து பிழைத்திருக்கமாட்டேன்; ஆகையால், காட்டில் ஆண் யானையை விட்டுப் பிரிந்து தவிக்கும் யௌவனப்பருவமுள்ள பெண்யானையை அதனுடன் சேர்த்து வைப்பதுபோல், நீயும் ராமனைப் பிரார்த்தித்து இங்கே அழைத்து வந்து என்னை அவரிடத்தில் ஒப்புவி.

ராவணா! திருடனும் பூமியில் அடிவைத்து நடந்தல்லவா திருடவேண்டும்; ஆகையால் உனக்குப் பூமியிலிருக்க இடம் வேண்டுமென்று விரும்பினால் அவருடன் ஸ்நேஹம் செய்வது யுக்தம். 'என் சத்துருவைச் சரணமடைவதைவிட உயிரை விடுவதே நலம்' என்று நீ நினைத்தால், அப்பொழுதும் நீ அவரையே அடையவேண்டும். மற்றவர்களைப் போல் உன்னை ஸுகமாய் மரணமடைய விடுவாரென்று நினைக்கிறாயோ? உன்னை உயிரோடு வைத்து, உனக்கெதிரே உன் புத்திரர்களையும் வம்சத்தையும் பிரஜைகளையும் ஸைன்யங்களையும் நாசம் செய்து, பிறகு உன்னைச் சித்திரவதை



செய்து கொல்வார். ஆகையால், அவரையே சரணமடை. இப்படிச் செய்தாலும் அவர் என்னை ரக்ஷிப்பாரென்று என்ன நிச்சயம் என்றால், இதோ இருக்கும் அந்த மஹாபுருஷன் நீ செய்த அபராதங்களை எல்லாவற்றையும் மறந்து, அவரைச் சரணமடைய விரும்பினதையே பெரிதாக எண்ணி உனக்கு ஸகல மங்களங்களையும் தருவார். அவருடைய கோபத்தைத் தணிக்க வழி தேடு. நானும் உனக்கு வேண்டியவரையில் ஸஹாயம் செய்து அவரைப் பிரார்த்திக்கிறேன். சரணமடைந்தவர்களிடத்தில் அவருக்குள்ள பிரேமைக்கு எல்லை இல்லை. மனத்தில் கல்மஷமில்லாமல் என்னை அவரிடத்தில் ஒப்புவித்தாலே அவருடைய கோபம் தணியும்.

இப்படிச் செய்யாவிட்டால் நீ கோரமான மரணமடைவாய். இந்திரனால் விடப்பட்ட வஜ்ராயுதத்திலிருந்தும் யமனுடைய கையிலிருந்தும் நீ தப்பினாலும் தப்பலாம். ஸகல லோகங்களுக்கும் ஈசுவரனான ராமசந்திரன் கோபம் கொண்டால் உன்னை விடுவாரோ? தேவேந்திரனால் பிரயோகிக்கப்பட்ட இடியின் முழக்கத்தைப்போல், ஸகல திக்குகளும் நடுங்கும்படியாய் அவர் கோதண்டத்தில் நாணேற்றும் ஓசையைச் சீக்கிரத்தில் கேட்பாய். ராமலக்ஷ்மணர்களால் பிரயோகிக்கப்பட்ட பாணங்கள் அழகான கணுக்களுடன் நெருப்பு ஜ்வாலைகளைக் கக்கும் மஹா ஸர்ப்பங்களைப்போல் வந்து விழும், பார். அவை அழகான கழுகின் இறகுகளால் அலங்கரிக்கப்பட்டு இந்த லங்காபுரியில் இடைவெளி இல்லாமல் வந்து விழுந்து ராக்ஷஸர்களைக் கோடிகோடியாய் நாசம் செய்யும்.

கருடன் ஸர்ப்பங்களைக் கொத்திக்கொண்டு போவதுபோல், ராமனென்ற மஹாகருடன் ராக்ஷஸ ஸர்ப்பங்களை நிர்மூலம்செய்வார். பூர்வகாலத்தில் மஹாவிஷ்ணு மூன்றடிகளால் ஸகலலோகங்களையும் அளந்து அஸுரர்களிடத்திலிருந்து கீர்த்தியைக் கொண்டு போனதுபோல், அதிசீக்கிரத்தில் என் பர்த்தா உன்னை வதம்செய்து என்னை அழைத்துக்கொண்டு போவார். ஒரு முஹூர்த்தத்தில் ஜனஸ்தானத்திலுள்ள பதினான்காயிரம் ராக்ஷஸ வீரர்களும் ஒருவரால் மடிந்ததைக்கண்டு பயந்து, கையாலாகாத நீ அவர்கள் ஆசிரமத்தில் இல்லாமல் வெளியில் போயிருக்கும் ஸமயம் பார்த்து, அவர்களை யுத்தம்செய்து ஜயிக்காமல் என்னைத் திருட்டுத்தனமாய் எடுத்து வந்தாய். புலியின் வாஸனை அடிக்குமிடத்தில் நாய் நிற்கமுடியுமா? புருஷஸிம்ஹங்களான ராமலக்ஷ்மணர்களுடைய காற்றடிக்குமிடத்தில் நீ நிற்கவும் முடியுமா? அவர்களுடைய கண்ணில் பட்டுப் பிழைக்கவும் முடியுமா? பூர்வகாலத்தில் இந்திரனுடைய வஜ்ராயுதத்தால் ஒரு கையற்ற விருத்ராஸுரன் இரண்டு மஹாபுஜங்களையுடைய இந்திரனுடன் எதிர்த்து யுத்தம் செய்ய முடிந்ததா? அப்படி ஒருவனான நீ அவ்விருவர்களையும் யுத்தத்தில் எதிர்த்து ஜயமடையவும் முடியுமோ? இறப்பதில் ஸந்தேகம் உண்டோ? ஸூரியனுடைய தீக்ஷ்ணமான கிரணங்கள் அல்ப ஜலத்தை

எப்படி ஒரு நிமிஷத்தில் வற்றச்செய்யுமோ அப்படி என் நாதனும் லக்ஷ்மணனும் பாணங்களால் உன் பிராணனைக் கொள்ளை கொள்வார்கள். குபேரன் வஸிக்கும் கைலாஸகிரியில் ஒளிந்து பார்; நீ பூஜைசெய்யும் பரமசிவன் அங்கே வஸிக்கிருர். அல்லது, வருண பகவானுடைய ஸபையில் ஒளிந்துபார். ராமபாணங்கள் அங்கேயும் உன்னைத் துரத்திக்கொண்டு வந்து சித்திரவதை செய்யும். காலம் குறுகின மஹாவிருக்ஷம் இந்திரனுடைய இடிக்குத் தப்பினது உண்டோ?

கி3ரிம் குபே3ரஸ்ய க3தோபதா4ய வா
ஸபா4ம் க3தோ வா வருணஸ்ய ராஜ்ஞ: |
அஸம்ஶயம் தா3ஶரதே2ர் ந மோக்ஷ்யஸே
மஹாத்3ரும: காலஹதோஶநேரிவ ‖ (34)

---

## ஸர்க்கம் 22

## ராவணன் ஸீதையைப் பயமுறுத்தினது

ஸீதாயா வசநம் ஶ்ருத்வா பருஷம் ராக்ஷஸாதி4ப: |
ப்ரத்யுவாச தத: ஸீதாம் விப்ரியம் ப்ரியத3ர்ஶநாம் ‖ (1)

**ஸ**கலப் பிராணிகளும் பார்த்து ஆனந்திக்கக்கூடிய பார்வையையுடைய ஸீதை இப்படிச் சொல்லியும், ராவணன் அவளுடைய கடும் வார்த்தைகளை ஸஹிக்காமல் கோபம்கொண்டு, "லோகத்தில் புருஷன் ஸ்த்ரீகளைத் தன் வசப்படுத்தவேண்டுமென்று எவ்வளவு நல்ல வார்த்தை சொன்னாலும், எவ்வளவு ஸமாதானம் செய்தாலும், அவர்களுக்கு அவனிடத்தில் அலக்ஷ்யபுத்தியும் கர்வமும் விருத்தியாகுமே தவிர அவர்கள் ஸ்வாதீனப்படுவதில்லை. மிரண்டு ஓடுகிற குதிரைகளை ஸமர்த்தனை ஸாரதி அடக்குவதுபோல, நான் உன்னிடத்தில் வைத்த ஆசை என் கோபத்தை அடக்குகிறது. காமத்தின் கதி வெகு விபரீதமாக இருக்கிறது பார். நாம் ஆசை வைக்கும் வஸ்துவிடத்தில் ஸ்நேஹமும் தயையும் விருத்தியாகிறதேயன்றி அதன் தோஷங்களும் கெடுதிகளும் தோன்றுவதில்லை. ஆகையால் கபடவேஷமுள்ள ராமனிடத்தில் ஆசைகொண்டிருக்கும் உன்னை அவமானம் செய்து கொல்லவேண்டியது; அதற்கோ மனம் வரவில்லை. நீ சொன்ன ஒவ்வொரு கடும் வார்த்தைக்கும் உன்னை அப்பொழுதே சித்திரவதை செய்யவேண்டியது. நான் உனக்குக் கெடுவிட்ட பன்னிரண்டு மாதங்களில் இரண்டு மாதங்கள் பாக்கி இருக்கின்றன. அதற்குள் நீ என்னைச் சேராவிட்டால் மறுநாளே என் சமையற்காரர்கள் உன்னைச் சித்திரவதைசெய்து, என் காலை போஜனத்திற்காகப் பக்குவம் செய்வார்கள்" என்று பேரிடிபோல் கர்ஜித்தான்.



அதைக்கேட்ட தேவகந்தர்வ கன்னியைகள், தாங்களும் அனுபவித்த கஷ்டங்களை நினைத்து, ஜானகியைப் பார்த்துப் பரிதவித்து, சிலர் ரஹஸ்யமாய் "ஸீதே! பயப்படாதே; இந்த அல்பன் உன்னை என்ன செய்யக்கூடும்?" என்ற கருத்தை வெளிப்படுத்த உதட்டை அசைத்தனர்கள்; சிலர் கண்களைச் சிமிட்டினுர்கள்; சிலர் தலையை ஆட்டினுர்கள். அதைக்கண்ட ஸீதை தைரியம் கொண்டு, தன் பதிவிரதா மஹிமையாலும் பர்த்தாவின் பராக்கிரமத்தாலும் அவனை அலக்ஷ்யம் செய்து, மறுபடியும் அவனுக்கு ஹிதத்தை உபதேசித்தாள். "ராவண! லோகத்தார்கள் நிந்திக்கும் இந்த கெட்ட செய்கையிலிருந்து உன்னைத்திருப்பி ஸன்மார்க்கத்தில் நடக்கும்படி செய்பவர்கள் உன் ராஜ்யத்தில் ஒருவரும் இல்லையென்று நிச்சயமாய்த் தெரிகிறது. எல்லோரும் உன் அன்னத்தைத்தின்று உனக்கு துரோகம் நினைப்பவர்களே. இந்திரனுடைய பத்தினியான சசிதேவியைப் போன்ற என்னை ஸகல லோகங்களிலும் உன்னைத்தவிர எவனாவது மனத்தாலும் விரும்பத் துணிவானு? தர்மஸ்வரூபியான ராமனுடைய பாரியையைப்பார்த்து இப்படிப்பட்ட பாபவார்த்தைகளைச் சொன்ன பிறகும், அளவற்ற தேஜஸையுடைய அந்த மஹா வீரனிடத்திலிருந்து தப்பித்துக்கொள்ள எங்கே ஒளிந்துகொள்ளப் போகிருய்? காட்டில் மதயானையும் முயலும் யுத்தம் செய்தால் முடிவென்ன? ஸ்ரீராமனே அந்த மதயானை; நீயோ அல்பஜந்துவான முயல். கபடத்தால் அவரை ஆசிரமத்திலிருந்து வெளியில் இழுத்து, என்னைத்திருடின உனக்கு வெட்கமென்பது கிடையாதோ? ஐயோ! ஒரு நிமிஷமாவது அவருடைய கண்ணில் படாமல் போய் விட்டாயே!

உன் விகார ரூபமுள்ள குரூரநேத்திரங்கள் வெட்கமில்லாமல் பரஸ்த்ரீயை ஆசையுடன் பார்க்கத் துணிந்தபொழுதே பூமியில் ஏன் விழவில்லை? ஸாதுவான தசரத சக்கரவர்த்திக்கு நாட்டுப் பெண்ணும் தர்மாத்மாவான ராமனுக்குப் பாரியையும் பரபுருஷனையே ஸ்மரிக்காதவளுமான என்னைப் பார்த்துக் காம விகாரத்தோடு தகாத வார்த்தைகளைச் சொல்லும் உன் நாக்கு ஏன் அறுந்து விழவில்லை. 'உனக்கு அபராதம் செய்தவர்களுக்குச் சாபம் கொடு' என்று ராமன் எனக்கு உத்தரவு செய்யவில்லை. நான் பதிவிரதா தர்மத்தைக் காப்பாற்றுகிறவள். பர்த்தா இருக்கையில் அவரை மீறி அவர் தண்டிக்க வேண்டியவர்களை நான் தண்டிக்கத் துணியமாட்டேன். ஆகையால் என் கோபாக்னியால் சாம்பலாக்கத் தகுந்த உன்னை இதுவரையிலும் சாம்பலாக்கவில்லை.

மஹாபுத்திமானுன ராமனிடத்திலிருந்து என்னை யாராவது அபகரிக்கமுடியுமா? உன் உத்தேசம் அவருக்குத் தெரியாததோ? நீ மரணமடைவதற்கு நான் காரணமென்று விதி ஏற்பட்டிருந்ததால் இப்படி நடந்தது. இதில் ஸந்தேகம் உண்டோ? ஆகையால் நீ

ஸாமர்த்தியமாய் என்னை அபகரித்தாயென்று பெருமையடையாதே. நீ அநேக யுத்தங்களில் கைதேர்ந்த சூரனென்று பெயர் பெற்றவன்; குபேரனுக்கு ஸஹோதரன்; அளவற்ற சதுரங்க பலத்தையுடையவன். இப்படியிருக்க ராமலக்ஷ்மணர்களை மோசம் செய்து என்னைத் திருடி வந்ததற்குக் காரணமென்ன?" என்றாள்.

ஸீதை இப்படிச் சொல்லக்கேட்ட, ராவணன் கோபத்தால் கண்களை உருட்டிவிழித்து, ஜானகியைப் பயங்கரமாய்ப் பார்த்தான். நீருண்ட மேகம்போல் கறுத்த தேகத்தையுடையவன்; பர்வதசிகரங்களைப்போன்ற புஜங்களையுடையவன்; கொழுத்த ஸிம்ஹத்தைப்போல் பலத்தையும் நடையையும் உடையவன்; நெருப்புக் கொழுந்துக்களைப் போன்ற நாக்கின் நுனியையும் கண்களையும் உடையவன்; அசைகிற நுனிகளையுடைய கிரீடத்தால் உயர்ந்தவன்; விசித்திரமான மாலைகளாலும் பூச்சுக்களாலும் சிவந்த வஸ்திரங்களாலும் நேர்த்தியான தங்கத்தால் செய்யப்பட்ட தோள்வளை முதலிய ஆபரணங்களாலும் அலங்கரிக்கப்பட்டவன்; அமிருதத்திற்காக ஸமுத்திரத்தைக் கடைந்தகாலத்தில் மந்தரபர்வதம் வாஸுகியென்ற மஹா ஸர்ப்பத்தால் கட்டப்பட்டதுபோல் நீல நிறமுள்ள அரைநூல் மாலையால் அலங்கரிக்கப்பட்ட இடுப்பையுடையவன்; இரண்டு புஜங்களால் இரண்டு உன்னத சிகரங்களுடன் விளங்கும் மந்தரகிரியைபோல் பிரகாசித்தான். சிவந்த புஷ்பங்களாலும் தளிர்களாலும் நிறைந்த அசோக மரங்களால் அழகுபெற்றிருக்கும் மலையைப்போல், பாலஸூரியர்களுக்கு ஸமமான காந்தியுடன் ஜ்வலிக்கும் இரண்டு குண்டலங்களைத் தரித்திருந்தான். வஸந்த ருதுவே உருவெடுத்து வந்தது போலிருந்தாலும், ஸகல விதமாய் அலங்கரிக்கப்பட்டிருந்தாலும், ஸ்மசானத்திலுள்ள விருக்ஷத்தைப்போல் பார்க்கப் பயங்கரமாயிருந்தான். கோபத்தால் சிவந்த கண்களுடன் ஸீதையை வெறிக்கப் பார்த்து, காலஸர்ப்பத்தைப்போல் சீறிக்கொண்டு, "நீதி நெறி யில்லாமல் ஸகலத்தையும் இழந்து திரியும் ராமனிடத்தில் இன்னும் பிரியம் வைத்த உன்னை ஸூரியன் ஸந்தியாகால இருட்டை அழிப்பதுபோல் இப்பொழுதே வதம் செய்கிறேன்" என்று, சத்துருக்களைக் கதறவடிக்கும் ராக்ஷஸேசுவரன் கோரமான பார்வையுள்ள ராக்ஷஸிகளைப் பார்த்துப் பின்வருமாறு ஆக்ஞாபித்தான். அவர்களில் ஒருத்தி ஒரே கண்ணுடையவள்; ஒருத்தி ஒரே காதுடையவள்; ஒருத்தியின் காது தலையை மூடிக்கொண்டிருந்தது; யானை பசு முதலியவைகளைப்போல் காதுடையவர்கள் சிலர். ஒருத்திக்குக் காது நீளமாய்த் தொங்கிக்கொண்டிருந்தது; ஒருத்திக்குக் காதே இல்லை. யானை குதிரை பசு முதலியவைகளைப்போல் பாதங்களையுடையவர் சிலர்; ஒருத்திக்கு ஒரே கால், ஒருத்திக்குப் பெருங்கால்; ஒருத்திக்குக் காலே இல்லை;



ஒருத்திக்குத் தலையும் கழுத்தும். ஒருத்திக்கு ஸ்தனமும் வயிறும், ஒருத்திக்கு வாயும் கண்ணும் அளவுக்கு மிஞ்சியிருந்தன. ஒருத்தியின் நாக்கு தொங்கிக்கொண்டிருந்தது. ஒருத்திக்கு நாக்கே இல்லை. ஒருத்திக்கு மூக்கேயில்லை. ஸிம்ஹத்தைப்போல் ஒருத்திக்கு முகம். பன்றியைப்போல் ஒருத்திக்கு முகம். பசுவைப்போல் ஒருத்திக்கு முகம்.

இவர்களைப் பார்த்து ராவணன், "ராக்ஷஸிகளே! நீங்களெல்லோரும் இவள் எனக்கு அதிசீக்கிரத்தில் ஸ்வாதீனப்படும்படி செய்ய வேண்டியது. இவளுடன் அனுகூலமாய்ப் பேசியும் பிரதிகூலமாய்ப் பேசியும் ஸாம தான பேதமென்ற மற்ற மூன்று உபாயங்களாலும் வசப்படுத்துங்கள். அப்படியும் முடியா விட்டால் தண்டோபாயத்தைக் காட்டுவதன் மூலமும் வசப்படுத்துங்கள்" என்று கடுமையாய் ஆக்ஞாபித்து காமத்தாலும் கோபத்தாலும் நிறைந்த மனத்தையுடையவனாய் ஸீதையை அடிக்கடி மிரட்டினான். அப்பொழுது அவனுடைய பிரியபார்யையான தான்யமாலினி என்பவள், சீக்கிரமாய் ஸமீபத்தில் வந்து ராவணனை இறுகத்தழுவி, "மஹாராஜ! என்னுடன் க்ரீடிக்க வாரும். இவளோ மனுஷ்யஸ்த்ரீ; உம்மிடத்தில் இஷ்டமில்லாதவள்; முகம் வெளுத்து விகாரமாயிருப்பவள்; இவளால் உமக்கென்ன பிரயோஜனம்? உமது புஜபலத்தால் ஸம்பாதிக்கப்பட்ட உத்தமபோகங்களை அனுபவிக்கவேண்டுமென்று பிரஹ்மா இவளுடைய தலையில் எழுதவில்லை என்பது நிச்சயம். தன்னிடத்தில் பிரியமில்லாத ஸ்த்ரீயை விரும்பி வருத்துகிறவனுடைய தேகம் தாபத்தை அடையும். தன்னிடத்தில் ஆசை வைப்பவளை விரும்பினால் உத்தமமான ஸந்தோஷமுண்டாகும்" என்றாள். காளமேகம் போல் கறுத்த அந்த மஹா பலவான், தான்யமாலினி இப்படிச் சொல்லித் தன்னை அவ்விடம் விட்டு இழுத்துக்கொண்டு போவதைக் கண்டு, கோபம் தணிந்து சிரித்துக்கொண்டு அங்கிருந்து திரும்பினான். அவனுடைய நடையைத் தாங்காமல் பூமி நடுங்க, ஜ்வலிக்கும் ஸூரியனைப்போல் காந்தியுடைய தன் அரண்மனைக்குள் சென்றான். தேவ கந்தர்வ நாககன்யைகளும் அவனைப் பின்தொடர்ந்தார்கள். பதிவிரதா தர்மத்தைக் காப்பாற்றுவதிலேயே நோக்கமுள்ளவளாய்ப் பயத்தால் நடுங்கும் ஸீதையை ராவணன் இவ்விதமாய் மிரட்டி, அங்கிருந்து புறப்பட்டுக் காமத்தால் கலங்கின மனத்துடன் பிரகாசமுள்ள தனது க்ருஹத்தில் பிரவேசித்தான்.

ஸ மைதி$^{2}$லீம் த$^{4}$ர்மபரா மவஸ்தி$^{2}$தாம்
ப்ரவேபமாநாம் பரிப$^{4}$ர்த்ஸ்ய ராவண: |
விஹாய ஸீதாம் மத$^{3}$நேந மோஹித:
ஸ்வமேவ வேச்ம ப்ரவிவேச பா$^{4}$ஸ்வரம் || (46)

## ஸர்க்கம் 23

# ராக்ஷஸிகள் ஸீதைக்குப் போதித்தது

இத்யுக்த்வா மைதி²லீம் ராஜா ராவண: ஶத்ரு ராவண: |
ஸந்தி³ஶ்ய ச தத: ஸர்வா ராக்ஷஸீர் நிர்ஜகா³ம ஹ ‖ (1)

இப்படி ராவணனால் ஆக்ஞாபிக்கப்பட்ட ராக்ஷஸிகள் அவன் அந்தப்புரத்திற்குப் போனவுடன் ஸீதையின் ஸமீபத்தில் வந்து, கோபத்தால் நிலை தெரியாமல் குரூரமான வார்த்தைகளைச் சொன்னார்கள். "ஸீதே! உன்னைப் பார்யையாக விரும்பும் ராவணன் ஸாமான்யனா? பிரஜாபதிகளுள் ஒருவரான புலஸ்தியருடைய பௌத்திரன்; சத்துருக்களைக் கதற அடிப்பவன்; மஹாபுத்திமான்; பத்துத்தலைகளையுடையவன்; லோகத்திலுள்ள ஸகல ராக்ஷஸர்களுக்கும் பிரபு. இவனுக்கு மனைவியாக ஆவதை நீ பெரிதாக நினைக்கவில்லையே" என்று ஒருத்தி சொன்னாள். பிறகு, ஏகஜடை என்ற மற்றொருத்தி,சிறுத்த இடையையுடைய ஸீதையை அழைத்து,கோபத்தால் கண்கள் சிவக்க, "மரீசி அத்திரி அங்கிரஸ் புலஸ்தியர் புலஹர் கிரது என்ற ஆறு பிரஜாபதிகளுக்குள் நான்காவதான புலஸ்தியர் பிரஹ்மதேவருடைய மானஸபுத்திரர்; விச்ரவஸ் என்ற மஹரிஷி மஹாதேஜஸ்வியாய்ப் புலஸ்தியருடைய மனத்திலிருந்து உண்டானார்; அவர் பிரஹ்மாவிற்கு ஸமமானவர். அவருடைய புத்திரன் ராக்ஷஸேச்வரனான ராவணன்; சத்ருக்களுடைய தைரியத்தைக் குலைத்து அவர்களைக் கதறச் செய்கிறவன். நீ அவனுக்குப் பாரியையாக இருக்கத் தகுந்தவள். என் வார்த்தைகள் உன் செவியில் ஏறவில்லையோ? என்ன காரணம்?" என்றாள். பிறகு, பூனைக்கண்களையுடைய ஹரிஜடை என்பவள், நெருப்புப் பொறிபோன்ற கண்களையுருட்டி, "முப்பத்து முக்கோடி தேவர்களையும் தேவேந்திரனையும் முறியடித்த ராக்ஷஸராஜாவுக்குப் பாரியையாகத் தகுந்தவள் நீயே" என்றாள். பிறகு பிரகஸை என்ற மற்றொருத்தி கோபம் மேலிட்டு, ஸீதையைப் பயமுறுத்தி, "எங்களுடைய அரசன் பராக்கிரமசாலி, சூரன், யுத்தத்தில் பின்வாங்காதவன். பலத்திலும் வீர்யத்திலும் நிகரற்றவன். இப்படிப் பட்டவனுடைய பாரியையாக உனக்கேன் இஷ்டமில்லை? அவனுடைய பலமென்ன! பராக்கிரமமென்ன! ஸகல ஸ்த்ரீகளுக்கும் சிரோமணிபோல் பிரகாசிக்கும் மந்தோதரியையும் லக்ஷ்யம் செய்யாமல் உன்னை வந்தடைகிறான். அவள் ராவணனுடைய பட்டமஹிஷி; அவன் அனுபவிக்கும் பாக்கியங்களுக்கெல்லாம் காரணம்; ஸகலவிதத்திலும் அவனுடைய மனத்தை அபகரிக்கக் கூடியவள்; உன்னிடத்தில் வைத்த ஆசையால் அவளையும் திரும்பிப் பார்க்கிறதில்லை. அந்தப்புரத்திலுள்ள கணக்கில்லாத ஸ்த்ரீ ரத்தினங்களையும், நினைக்கிறதில்லை. ஆகையால் உனக்குச் சக்களத்திகளே இல்லை" என்றாள். பிறகு விகடை என்ற மற்றொருத்தி,



"தேவ கந்தர்வ நாக தானவர் முதலியவர்களை யுத்தத்தில் பல தடவை தோற்கடித்த அந்த மஹாவீரன், பலமற்ற மனுஷ்யஸ்த்ரீயான உன்னிடத்தில் வந்து பிரார்த்திக்கிறான். ஐசுவரியத்திலாவது புத்தியிலாவது அவனுக்கு ஈடுண்டோ? அந்த ராக்ஷஸேசுவரனை விரும்பாத உன் புத்தியைச் சுடவேண்டும். இந்தப் பாக்கியம் யாருக்குக் கிடைக்கும்" என்றாள். பிறகு துர்முகி என்ற மற்றொருத்தி, "அடி! முட்டாளே! ஸூரியசந்திரர்களும் வாயுவும் அக்னியும் அவனைக் கண்டு நடுங்குகின்றனர். ஸூரியன் அவனுக்கு ஸுகமான உஷ்ணத்துடன் மாத்திரம் ஸஞ்சரிக்கிறான். அவனுக்கு இஷ்டமில்லாதபோது வாயுவும் வீசாது. எந்த ருதுவாயிருந்தாலும் அவன் நினைத்தவுடன் மரங்கள் வேண்டிய புஷ்பங்களை வர்ஷிக்க வேண்டும். பர்வதங்களும் மேகங்களும் அவன் நினைத்தபொழுது ஜலத்தைச் சொரியவேண்டும். இப்படி பிரபஞ்சத்திற்கெல்லாம் அதிபதியாக இருக்கும் ராக்ஷஸ சக்கரவர்த்திக்கு பிரியபாரியையாக இருப்பது உனக்கு அல்பவிஷயமாய்த் தோன்றுகிறதோ? மஹாரூபவதியே! உனக்குப் பரமஹிதத்தை எங்களுக்குத் தெரிந்தவரையில் எடுத்துச் சொன்னோம். அதை ஸரியாய் கிரஹித்து அப்படியே நட; தவறினால் உன்னை இப்பொழுதே கொல்வோம்" என்றாள்.

ஸாது⁴ தே தத்வதோ தே³வி கதி²தம் ஸாது⁴ ப⁴ாமிநி |
க்³ருஹாண ஸுஸ்மிதே வாக்ய மந்யதா² ந ப⁴விஷ்யஸி ‖ (20)

## ஸர்க்கம் 24

# ராக்ஷஸிகள் ஸீதையை உபத்திரவித்தது

தத: ஸீதாமுபாக³ம்ய ராக்ஷஸ்யோ விக்ருதாநநா: |
பருஷம் பருஷா நார்ய ஊசுஸ்தாம் வாக்ய மப்ரியம் ‖ (1)

பிறகு கடின ஹிருதயமுள்ள அந்தக் கோர ராக்ஷஸிகள் ஸீதையைச் சூழ்ந்து, பிரியமில்லாத கடுமையான வார்த்தைகளைச் சொல்ல ஆரம்பித்தார்கள். "விலையுயர்ந்த சயனங்களால் அலங்கரிக்கப்பட்ட ராவணனுடைய அந்தப்புரத்தில் மஹிஷியாயிருக்க நீ ஸம்மதிக்காமலிருப்பதேன்? ஸமஸ்த பிராணிகளின் மனத்தை அபகரிக்கக் கூடிய அழகு பொருந்திய உனக்குத் தகுந்த அந்தஸ்து அதுவே. நீ மனுஷ்ய ஸ்த்ரீயானதால் மனுஷ்யனுக்குப் பாரியையாக இருப்பதையே பெரிதாக எண்ணுகிறாய். ராமனிடத்திலிருந்து உன் மனத்தைத் திருப்பு. இனி ஒருபொழுதும் நீ அவனுக்குப் பாரியையாகப் போகிறதில்லை. ராக்ஷஸேசுவரனும் மூன்று லோகங்களிலுமுள்ள ஐசுவரியங்களை அனுபவிப்பவனுமான ராவணனைப் பர்த்தாவாக அடைந்து இஷ்டமான போகங்களை அனுபவி. ராஜ்யத்திலிருந்து துரத்தப்பட்டு, ஸகல ஐசுவரியங்களையும் இழந்து, பயத்தால்

சித்தம் கலங்கின ஒரு அல்பமனுஷ்யனை நீ கொண்டாடுகிறாய்; நீயும் மனுஷ்ய ஸ்த்ரீயல்லவா?" என்றார்கள்.

அதைக் கேட்டு ஸீதை கண்ணீர் சொரிய, "நீங்களெல்லோரும் சேர்ந்து சொல்லும் வார்த்தைகள் எனக்குக் கோரமாய்த் தோன்றுகின்றன. மஹாபாபமென்றும் ஸகல ஜந்துக்களும் நிந்திக்கத் தகுந்ததென்றும் உங்களுக்கு ஏன் தெரியவில்லை? மனுஷ்ய ஸ்த்ரீ ராக்ஷஸனுக்குப் பாரியையாவது யுக்தமா? உங்களுடைய இஷ்டப்படி என்னைத் தின்றுவிடுங்கள்; நீங்கள் சொன்னபடி செய்யமாட்டேன். ராமன் தரித்திரராயிருந்தாலும் ராஜ்யமற்றவராயிருந்தாலும் என் பர்த்தா; ஆகையால் என்னால் பூஜிக்கத் தகுந்தவர்; சிரேஷ்டர். ஸுவர்ச்சலாதேவி ஸூரியனைப் பின்தொடர்வது போல் நானும் அவரிடம் பிரீதிவைத்து அவரைப் பின்தொடர்வேன். மஹா பாக்யசாலியான சசீதேவி இந்திரனையும், அருந்ததி வஸிஷ்டரையும், ரோஹிணி சந்திரனையும், லோபாமுத்திரை அகஸ்தியரையும், ஸுகன்யை ச்யவனரையும், ஸாவித்ரி ஸத்யவானையும், மதயந்தி ஸௌதாஸனையும், ஸ்ரீமதி கபிலரையும், கேசினி ஸகரனையும், தமயந்தி நளனையும், இந்துமதி அஜனையும் மஹாப்ரேமையுடன் சேர்ந்திருப்பதைப்போல், நானும் ரகுகுல சிரேஷ்டனான ராமனைப் பதியாக அடைந்து ஸந்தோஷிக்கிறேன்" என்றாள்.

ஸீதை இப்படிச் சொல்ல, ராக்ஷஸிகள் கோபத்தால் அறிவிழந்து, ராவணனுடைய கட்டளையை ஞாபகம் செய்துகொண்டு குரூரமான வார்த்தைகளால் பயமுறுத்தினார்கள். ஹனுமான் சிம்சுபா விருக்ஷத்தில் மறைந்துகொண்டு, இவற்றையெல்லாம் ஜாக்கிரதையாகக் கவனித்துக் கொண்டிருந்தார். ராக்ஷஸிகள் பயத்தால் நடுங்கிக்கொண்டிருக்கும் ஸீதையைச் சுற்றிக்கொண்டு நெருப்புக்கொழுந்துபோல் தொங்கிக்கொண்டிருக்கும் உதடுகளைக் கோபத்தால் நக்கிக்கொண்டு, "ராக்ஷஸாதிபதியான ராவணனைப் பர்த்தாவாக அடைய இவள் தகாதவள்" என்று கோடாலிகளை ஓங்கிக்கொண்டு ஓடி வந்தார்கள்.

அதைக் கண்டு ஸீதை அவர்களுடைய ஹிம்ஸையைப் பொறுக்காமல் கண்ணீர் பெருக, ஹனுமான் மறைந்திருக்கும் சிம்சுபா விருக்ஷத்தை நோக்கி வந்து, அதனடியில் உட்கார்ந்தாள். ராக்ஷஸிகளும் அவளைச் சூழ்ந்து, அவளுடைய அழுக்கடைந்த வஸ்திரத்தையும் துக்கத்தால் வாடின முகத்தையும் பார்த்துக் கொஞ்சம்கூட இரங்காமல் அவளைப் பயமுறுத்தினார்கள். அவர்களில் வினதை என்பவள் மலையைப் போன்ற வயிற்றையும் பயங்கரமான கண்களையுமுடையவள். கோபத்தால் தேகம் பதற, "அடி! ஸீதே! உன் பர்த்தாவிடத்தில் நீ இதுவரையிலும் வைத்த பிரீதியும் விசுவாஸமும் போதும். எந்தக் காரியத்திலும் அளவுக்கு மிஞ்சி நடப்பது பிசகல்லவா? மனுஷ்யர்களுக்குத் தகுந்தபடி இதுவரையில் உன் பதிவிரதா தர்மத்தைக் காப்பாற்றி வந்தது எனக்கு ஸந்தோஷம். நான் சொல்லுகிறபடி செய்; உனக்கு ஸகல மங்களங்களும் உண்டாகும். ராவணனே ஸகல ராக்ஷஸர்களுக்கும் அதிபதி; மஹா பராக்கிரமசாலி; அழகில் மன்மதனை ஜயித்தவன்; ஸகல காரியங்களிலும் ஸமர்த்தன்; யாசகர்களுக்குக் கொடுப்பதில் ஒப்பற்றவன்; எல்லோரும் பார்த்து பிரியப்படக்கூடியவன்; தேவதைகளுக்கு இந்திரனைப்போல் எங்களுக்கு நாதன். அப்படிப்பட்டவனை நீ அடைவது உனக்கு மிகவும் தகுந்தது. அல்பமனுஷ்யனான ராமனை முற்றிலும் மற; ராவணனைக் கைப்பற்று. திவ்யமான ஆபரணங்களாலும், மாலைகளாலும், பூச்சுக்களாலும் அலங்கரிக்கப்பட்டு ஸகலலோகங்களுக்கும் பிரபுவாக இருக்கலாம். இந்திரனுடைய பத்தினியான ஸ்வாஹாவும் உனக்கு நிகரல்ல. அல்பாயுளுள்ள ராமனென்ற பதரால் உனக்கென்ன பிரயோஜனம்? நான் சொன்னபடி செய்யாவிட்டால் இந்த நிமிஷமே உன்னைத் தின்றுவிடுவோம்" என்றாள்.

பிறகு விகடையென்ற மற்றொருத்தி, தொங்குகின்ற ஸ்தனங்களுடன், கோபத்தால் விரல்களை மடக்கி உயரத் தூக்கிக்கொண்டு, ஸீதையை நோக்கி ஓடிவந்து, "அடி! துர்ப்புத்தி பிடித்தவளே! நீ மிருதுவான சரீரமுடையவளென்றும் பிரியம் வைத்துக்கொண்டு வரப்பட்டவளென்றும் உன்னிடத்தில் இரக்கம் பிறந்து, நீ இதுவரையிலும் சொன்ன கடும் வார்த்தைகளையெல்லாம் ராவணன் பொறுத்திருந்தான். நாங்கள் கால தேசங்களுக்குத் தகுந்தபடி உனக்கு ஹிதத்தை உபதேசிக்கிறோம். அப்படிச் செய்யாமற்போனால் நீ பிழைக்க மாட்டாய். பிறரால் தாண்டமுடியாத ஸமுத்திரத்தைத் தாண்டி, கோர ராக்ஷஸர்களால் இரவும் பகலும் காக்கப்பட்ட ராவணனுடைய அந்தப்புரத்தில், இந்தஅசோகவனத்தில், எங்களுக்கு நடுவிலிருக்கும் உன்னைத் தப்புவிக்க வஜ்ராயுதத்தைத் தரித்த இந்திரனுக்கும் சக்தியுண்டோ? நான் உனக்கு ஹிதத்தையே சொல்லுகிறேன்; இப்படியே செய்; வீணாகத் துக்கப்படாதே; கண்ணீர் விடாதே; கொஞ்சம்கூட பிரயோஜனமில்லை. ராவணனுடன் ஸ்நேகம்செய்து ஆனந்தமாய்க் காலத்தைக் கழிக்காமல் எப்பொழுதும் துக்கப்படுவது உனக்குத் தகுமோ? ஸ்த்ரீகளுடைய யௌவனம் நிலையற்றதென்று உனக்குத் தெரியுமல்லவா? உனது யௌவனப் பருவம் கழிவதற்குமுன், ஸகல ஸுகங்களையும் அனுபவிக்க வேண்டாமா? ராவணனுடன் ஸந்தோஷமாய் மதுபானம்செய்து, வனங்களிலும் தோட்டங்களிலும் இஷ்டப்படி ஸஞ்சரி. ஏழாயிரம் ராக்ஷஸ ஸ்த்ரீகள் உனக்குப் பணிவிடை செய்வார்கள்; ஆகையால் ராக்ஷஸேசுவரனான ராவணனைப் பர்த்தாவாக அடை; நான் சொன்னபடி செய்யாவிட்டால் உன் ஹிருதயத்தைப் பிடுங்கித் தின்றுவிடுவோம்" என்றாள்.

பிறகு சண்டோதரி என்ற மற்றொருத்தி பெரிய சூலத்தைச் சுழற்றிக்கொண்டு, கோபத்தால் கண்கள் ஜ்வலிக்க ஸீதையைப் பார்த்து, "மானைப்போல் சஞ்சலமான இவளுடைய நேத்திரங்களையும் பயத்தால் நடுங்கும் ஸ்தனங்களையும் பார்க்கும்பொழுது எனக்கு ஆசை தாங்கமுடியவில்லை. இவளுடைய வயிற்றின் வலது பக்கத்திலுள்ள யக்ருத் என்ற மாம்ஸபிண்டத்தையும், மார்பின் இடது பக்கத்திலுள்ள ப்லீஹமென்ற பசுமையான மாம்ஸத்தையும், அதற்கு மேலிருக்கும் உத்பீடமென்ற மாம்ஸத்தையும், நாடிகளோடு கூடின இவளுடைய ஹ்ருதயத்தையும், குடலையும், தலையிலுள்ள மாம்ஸங்களையும் கடித்துத் தின்னவேண்டுமென்று எனக்கு ஆசையுண்டாகிறது" என்றாள். பிறகு பிரகஸை என்ற மற்றொருத்தி, "இவள் மிகவும் பொல்லாதவள்; இவளுடைய கழுத்தைத் திருகுவோம். ஏன் சும்மா உட்கார்ந்திருக்கிறீர்கள்? பிறகு, 'நீ கொண்டுவந்த மனுஷ்யஸ்த்ரீ துக்கத்தால் இறந்தாள்' என்று ராவணனிடத்தில் சொல்லுவோம். அவளைத் தின்றுவிடுங்கள்' என்று நிச்சயமாய் நமக்கு உத்திரவு செய்வார்" என்றாள். பிறகு அஜாமுகியென்ற மற்றொருத்தி "இந்த விஷயத்தில் நாம் சண்டை போடக்கூடாது. இவளைக் கொன்று ஸமமாய்ப் பங்கிட்டுக் கொள்வோம். குடிப்பதற்குப் பலவித பானங்களையும், துவையல் பச்சடி முதலிய பதார்த்தங்களையும் கொண்டுவாருங்கள்" என்றாள். பிறகு சூர்ப்பணகையென்ற மற்றொருத்தி, "அஜாமுகி சொல்லும் வார்த்தை எனக்கும் இஷ்டமே. ஸகல துக்கங்களையும் மறக்கச் செய்யும் மதுவைக்குடித்து நமது நகர தேவதையான நிகும்பிலையைக் குறித்து நர்த்தனம் செய்வோம்" என்றாள். (நிகும்பிலை லங்காபுரியின் மேற்கேயுள்ள பத்ரகாளியின் பெயர்). இப்படி ராக்ஷஸிகளால் கோரமாய் அதட்டப்பட்ட ஸீதை தைரியத்தை விட்டு அழுதாள்.

ஏவம் ஸம்ப‘ர்த்ஸ்யமாநா ஸா ஸீதா ஸுரஸுதோபமா
ராக்ஷஸீபி‘: ஸுகோ‘ராபி‘: தை‘ர்ய முத்ஸ்ருஜ்ய ரோதி$^3$தி ‖ (46)

---

## ஸர்க்கம் 25

## ஸீதை துக்கித்தது

ததா$^3$ தாஸாம் வத$^3$ந்தீநாம் பருஷம் தா$^3$ருணம் ப$^3$ஹு |
ராக்ஷஸீநா மஸௌம்யாநாம் ருரோத$^3$ ஜநகாத்மஜா ‖ (1)

இப்படி அந்தக் குரூர ராக்ஷஸிகள் கடும் வார்த்தைகளைப் பயங்கரமாகச் சொல்வதைக்கேட்டு, ஸீதை வாய் விட்டழுதாள். பிறகு பயத்தாலும், கண்ணீராலும் குரல் நடுங்க அவர்களைப்பார்த்து, "மனுஷ்யஸ்த்ரீ எப்பொழுதாவது ராக்ஷஸனுக்குப் பாரியையாக முடியுமா? உங்களிஷ்டப்படி என்னைக்கொன்று தின்னுங்கள். உங்களுக்கு உட்படமாட்டேன்." என்றாள். தேவகன்யைகளுக்கு ஸமானமான



ஜானகி, ராவணன் பயமுறுத்தினதையும் ராக்ஷஸிகள் மிரட்டினதையும் ராமலக்ஷ்மணர்கள் தன்னைத் திரும்பிப் பாராமலிருப்பதையும் நினைத்து துக்கம்தாங்காமல் தேகம்குன்றி மறைகிறவள்போலவும், காட்டில் தன் கூட்டத்திலிருந்து விலகிச் செந்நாய்களால் துரத்தப்பட்ட பெண்மான் போலவும் நடுங்கினாள். ஹனுமான் மறைந்திருக்கும் விசாலமான சிம்சுபாவிருக்ஷத்தின் கிளையைப் பிடித்துக்கொண்டு, ராமனைப் பிரிந்த துக்கத்தால் வாடி, 'இனி அவரைப் பார்ப்பதேது' என்று ஆசையற்று, ஸ்வபாவத்தாலும் பழக்கத்தாலும் அவரையே தியானித்தாள். கண்ணீர்த் தாரைகளால் தேகமெங்கும் நனைய அவரையே நினைத்துக் கொண்டு துக்க ஸமுத்திரத்தில் கரைகாணாமல் தத்தளித்தாள். பெருங்காற்றிலடிபட்டு விழுந்த இளம் வாழையைப் போல் நடுங்கி, ராக்ஷஸிகளுடைய கோரவார்த்தைகளால் மிரண்டு முகம் வெளுத்தாள். அப்பொழுது, நீண்டு அகன்ற அவளுடைய பின்னலும் நடுங்கிக்கொண்டு நான்கு புறங்களிலும் பாயும் கிருஷ்ண ஸர்ப்பம் போல் தோன்றிற்று. ராமனைப்பிரிந்து புண்பட்ட மனத்தில் ராக்ஷஸிகளின் குரூர வார்த்தைகள் தைக்க, பிரக்ஞையற்று, பெரு மூச்சுவிட்டுக்கொண்டு, கண்ணீர் பெருக பிரலாபித்தாள்.

"என்ன கஷ்டம்! ஹா, ராம!" என்பாள். மறுபடியும் துக்கம் தாங்காமல், "ஹா! லக்ஷ்மண! என் மாமியான கௌஸல்யே! ஹா! ஸுமித்ரே!" என்று கதறுவாள். "ஐயோ! குரூரராக்ஷஸிகளால் இப்படி உபத்திரவிக்கப்பட்டு ராகவனையும் பிரிந்து, சொல்லமுடியாத துக்கங்களை அனுபவித்துக்கொண்டு ஒரு க்ஷணம்கூடப் பிழைத்திருக்கிறேனல்லவா? ஸ்த்ரீயாவது புருஷனாவது கர்மத்தாலேற்பட்ட காலத்திற்கு முந்தியாவது பிந்தியாவது மரணமடையமுடியாது என்று பண்டிதர்கள் சொல்லும் லோகவசனம் நிஜமென்றே தோன்றுகிறது. ஸமுத்திரத்தின் நடுவில் எதிர்க்காற்றால் அடிக்கப்பட்ட கப்பல் பாரம் தாங்காமல் முழுகுவதுபோல், காப்பாற்றுகிறவர்களிருந்தும் நான் அனாதையைப்போல், பூர்வஜன்மத்தில் விசேஷ புண்ணியம் செய்யாததால் உயிரை விடப்போகிறேன். ஆற்றில் பிரவாகம் கரைகளை இடித்துத் தள்ளுவதுபோல், நிகரில்லாத ஸௌந்தரியத்தையுடைய என் பிராணநாதனைக் காணக்கிடைக்காமல் இந்த ராக்ஷஸிகளுடைய வசத்தில் அகப்பட்டு, துக்கத்தால் மடியப்போகிறேன். இந்த ஸமயத்தில் ரகு வீரனுடைய மலர்ந்த செந்தாமரையைப் போன்ற விசால நேத்திரங்களையும், கொழுத்த ஸிம்ஹத்தின் நடையைப்போன்ற நடையையும் கண்டு களித்து, எப்பொழுதும் எல்லோருக்கும் பிரியத்தையே பேசிக்கொண்டு பிறர் செய்த அல்ப உபகாரத்தையும் பெரிதாக எண்ணும் அந்த மஹானுபாவனுடைய அருகில் இருக்கக் கிடைத்த ஜனங்களைப்போன்ற புண்யசாலிகளும் உண்டோ? அவருடைய தர்மபத்தினியான எனக்கு மாத்திரம்அது கிடைக்காமற்போயிற்றே! கொடும் விஷத்தைத் தின்றவன் க்ஷணமாவது பிழைத்திருப்பானோ? ஸகல பதார்த்தங்களின்

நிஜஸ்வரூபத்தை அறிந்த அந்தப் புருஷோத்தமனைப் பிரிந்து நான் ஒரு நிமிஷமாவது பிழைத்திருக்கலாமோ? இவ்விதமான கஷ்டங்களையும், கோரமான துக்கங்களையும் அனுபவிப்பதற்குப் பூர்வஜன்மங்களில் என்ன மஹாபாபம் செய்தேனோ? இந்தக் குரூர ராக்ஷஸிகள் என்னைச் சூழ்ந்திருக்க இனி ராமனை நான் பார்க்கப்போகிறேனா? ஆகையால் இந்த மஹா துக்கத்தை அனுபவிப்பதைவிட உயிரைவிடுவது சிரேஷ்டமென்று எண்ணுகிறேன். ஐயோ! இந்த மனுஷ்ய ஜன்மத்தைச் சுட வேண்டும். எந்த விதத்தாலாவது பிராணனை விடுவோம் என்றால் பரலோகத்தில் கோரமான நரகத்தை அனுபவிக்கவேண்டுமென்று சாஸ்திரங்கள் சொல்லுகின்றனவே. ஆகையால் எப்படிப்பட்ட கஷ்டத்தையும் ஸஹித்துக்கொண்டிருப்பதே நல்லது. ஐயோ! பாரியையின் தேகம் பர்த்தாவிற்கு ஸொந்தமல்லவா? இஷ்டப்படி உயிரை விட முடியவில்லையே" என்று பிரலாபித்தாள்.

தி4க3ஸ்து க2லு மாநுஷ்யம் தி4க3ஸ்து பரவஶ்யதாம் |
ந ஶக்யம் யத் பரித்யக்தும் ஆத்மச்ச2ந்தே3ந ஜீவிதம் ॥ (25)

---

## ஸர்க்கம் 26

## ஸீதை துக்கித்தது (தொடர்ச்சி)

---

ப்ரஸக்தாஶ்ரு முகீ2த்யேவம் ப்3ருவந்தீ ஜநகாத்மஜா |
அதோ4முக2 முகீ2 பா3லா விலப்து முபசக்ரமே ॥ (1)

இப்படி ஜானகி ஸகல ஸௌகங்களையும் அனுபவிக்கத் தகுந்த யௌவனத்தில் கண்ணீர் பெருகப் பூமியைப் பார்த்துக்கொண்டு புலம்பினாள். பிறகு தன் பூர்வஸ்திதியையும் தற்கால நிலைமையையும் நினைத்து நினைத்துப் பைத்தியம் பிடித்தவள் போலவும், மதுபானம் செய்து புத்தி சிதறினவள் போலவும், நெடுந்தூரம் ஓடிக்களைத்த பெண்குதிரை பூமியில் விழுந்து புரண்டு சிரமம் தீர்த்துக்கொள்வது போல்மறுபடியும் வாய் விட்டழுதுதன் மனத்திலிருக்கும் துக்கத்தை ஆற்றிக்கொள்ளப் பார்த்தாள். "ஐயோ! இந்த மஹாபாபி மாயையால் எந்தரூபத்தையும் எடுக்கக்கூடியவன். ராம லக்ஷ்மணர்களை மயக்கி என்னைப் பலாத்காரம் செய்து பயங்கரமாய் மிரட்டி கோவென்று கதறிக் கொண்டிருக்கையில் அதிவேகமாக எடுத்துவந்துவிட்டானே! இந்த ராக்ஷஸிகளுக்கு நடுவில் அகப்பட்டு ராமனையே நினைத்துக் கொண்டு சொல்ல முடியாத துக்கங்களை அனுபவித்தும் இனிப் பிழைத்திருக்க முடியாது. அந்த மஹாவீரனே என்னைக் கைவிட்ட பிறகு இந்த ராக்ஷஸிகளின் நடுவில் இருந்துகொண்டு எதற்காக உயிரை வைத்துக் கொண்டிருக்கவேண்டும்? தனங்களும், ஆபரணங்களும், போகங்களும் எனக்கு வேண்டுமோ? இவ்வளவு துக்கத்தையும் தாங்கும் என் ஹிருதயம் கருங்கல்லாற் செய்ததோ?



நாசமற்றதென்று விதிக்கப்பட்டதோ? இன்னும்பிளக்கக்காணோமே! என் பர்த்தாவைப் பிரிந்து ஒரு க்ஷணமாவது பிழைத்திருக்கலாமோ! என்னைப் போன்ற மஹா பாபியுண்டோ? பெரியோர்களும் பதி விரதைகளும் என்னை நிந்திப்பார்களென்பதில் ஸந்தேகம் உண்டோ? கடல்சூழ்ந்த இந்தப் பூமிக்கு அதிபதி; அமிருதவர்ஷத்தைப் போன்ற வார்த்தைகளையுடையவர்; என் உயிருக்கு உயிரானவர். அப்படிப்பட்ட பர்த்தாவை விட்டு உயிரோடிருப்பதிலும் ஸௌகங்களை அனுபவிப்பதிலும் எனக்கு என்ன பிரயோஜனம்? ஆகையால், இந்த ராக்ஷஸிகள் என் தேகத்தை வெட்டித் தின்னட்டும். ரகுவீரனைப் பிரிந்திருப்பதைவிட என் சரீரத்தை விடுவது ஸௌலபம். இந்த ராவணனை என் இடது காலாலும் தொடுவேனோ? அப்படியிருக்க அவனிடத்தில் பிரியம் வைக்கவா? குரூரஸ்வபாவமுள்ள அந்தப்பாபி நான் படும் கஷ்டங்களை அறியாமல் தனக்கு உட்படும்படி பிரார்த்திக்கிறானே! எனக்கு அவனிடத்திலுள்ள வெறுப்பு எவ்வளவென்று அவனுக்குத் தெரியுமா? நான் பிறந்த வம்சம் இன்னதென்றும் என் ஸ்வபாவம் இன்னதென்றும் அந்த அல்பனுக்குத் தெரியுமா? ஆகையால் நீங்கள் எவ்வளவு நேரம் உபதேசித்தும் மிரட்டியும் பிரயோஜனமில்லை. என்னைக் கண்டதுண்டமாய் வெட்டுங்கள்; கோடாலியால் பிளவுங்கள்; கிழித்தெறியுங்கள்; நெருப்பில் போட்டுக் கொளுத்துங்கள்; ராவணனைத் திரும்பிப் பார்க்க மாட்டேன்.

என் ரகுநாதன் அபராதிகளிடத்திலும் குணங்களை கிரஹிக்கிறவர். அல்ப உபகாரத்தையும் பெரிதாக எண்ணுகிறவர். பிறர் படும் அல்ப கஷ்டத்தையும் ஸஹிக்கமாட்டார். பிறர் க்ஷேமத்தையடைவதே தனக்கு முக்கியப் பிரயோஜனமாக எண்ணுகிறவர். இந்தக் கல்யாண குணங்கள் அவருடைய சத்துருக்களாலும் ஒப்புக்கொள்ளப் பட்டவைகளே. நான் இவ்விதக் கஷ்டங்களை அனுபவிக்கும் பொழுதும் என்னைத் திரும்பிப் பாராமலிருப்பதேன்? நான் பூர்வஜன்மங்களில் அவ்வளவு புண்ணியம் செய்யவில்லை. என்னை ரக்ஷிக்கச் சக்தியில்லை என்று நினைக்கலாமோ? ஜனஸ்தானத்தில் பதினாயிரம் ராக்ஷஸவீரர்களையும் கரதூஷணர்களையும் ஒரு முகூர்த்தத்தில் கொல்லவில்லையோ? என்னை இங்கே சிறையில் வைத்திருக்கும் இந்த ராவணனுடைய வீரியம் எவ்வளவு? இவனைக்கொல்வது ரகுவீரனுக்குப் பெரிதா? தண்டகாரண்யத்தில் மஹாபயங்கரமான விராதன் மடிந்ததைக் காணவில்லையோ? ஸமுத்திரத்தின் நடுவிலிருக்கும் இந்த லங்கைக்கு வருவது அவருக்கு அஸாத்தியமென்று நினைக்கலாமோ? ராமபாணங்கள் போகமுடியாத ஸ்தலம் இந்தப் பிரபஞ்சத்திலும் உண்டோ? அப்படியிருக்கச் சத்துருக்கள் அண்ட முடியாத பராக்கிரமமுள்ள ரகுநாதன் தனக்குப் பிரியமான பாரியையை அல்பராக்ஷஸன் எடுத்துக்கொண்டு போகையில் அந்த அவமானத்தை எப்படிப் பொறுத்திருக்கிறார்?

ஒருவேளை நான் இங்கிருப்பதாக அவருக்குத் தெரியாதோ? அபராதிகளிடத்தில் ராமனுக்குள்ள அளவற்ற தயையால் அவர் ராவணனை மன்னித்தாலும், கூடவிருக்கும் லக்ஷ்மணன் விட்டுவிடுவாரோ? என்னை ராகவன் தன்னிடத்தில் ஒப்புவித்திருக்க, ராவணன் எடுத்துப் போவதைக்கண்டு, தான் வயது சென்றவராக இருந்தாலும் ஜடாயு அவனுடன் எதிர்த்துக் கோரயுத்தம் செய்து முடிவில் உயிரை விட்டார். ஐயோ! என் விருத்தாந்தத்தை ராமனுக்கு தெரிவிக்கக் கூடிய அந்த ஒரு பிராணியும்போயிற்றல்லவா? ஆகையால் ராமனுக்கு ஸமாசாரம் தெரியாதென்றே எண்ணுகிறேன். நான் இங்கிருப்பதாக அவருக்குத் தெரிந்திருந்தால், கோபபரவசராய்ப் பாணங்களால் பிரபஞ்சத்தில் ராக்ஷஸப் பூண்டில்லாமலேயே செய்வார். ஸமுத்திரத்தை வற்றச்செய்துஇந்த லங்காபுரியைத் தூளாக்கி நீசனான ராவணனுடைய பெயரே இல்லாமல் செய்வார். நான் என் பர்த்தாவைப் பிரிந்து கதறுவதுபோல், இங்குள்ள ராக்ஷஸிகள் புருஷர்களைப் பறிகொடுத்து வீடுவீடாய்க் கதறுவார்கள். இதில் ஸந்தேகமென்ன? அளவற்ற ஸாமர்த்திய முள்ளவர்களாகையால் தெய்வானுக்ரஹத்தால் ராமலக்ஷ்மணர்கள் எப்படியாவது இந்த லங்கையைக் கண்டுபிடித்து ராக்ஷஸர்களை நாசம் செய்வார்கள். அவர்களுடைய கண்ணில் பட்ட சத்துரு ஒரு க்ஷணமாவது பிழைப்பதுண்டோ? இந்த லங்கையில் விழும் பிணங்களைக் கழுகுகள் கூட்டம் கூட்டமாய்ப் பிடுங்கித் தின்னும்; பிணப் புகையால் வழிகள் மறைந்திருக்கும். அப்பொழுது ஒரே ச்மசானமாகத் தோன்றும்.

நீங்கள் செய்யும் கெட்ட காரியங்கள் உங்களையே கெடுக்கும் என்று தெரியவில்லையா? அதிசீக்கிரத்தில் என் எண்ணங்கள் நிறைவேறும்; இந்தப் பட்டணத்தில் ஸகலவிதமான அசுபங்களும் நேரும்; அவைகளால் இது காந்தியற்றுப் பாழாகும். சத்துருக்களால் அண்டமுடியாத இந்த லங்காபுரி ராவணனென்ற நீசனான பாபி மடிந்தவுடன் பர்த்தாவை இழந்த சிறுபெண் கதியில்லாமல் துக்கத்தால் இறப்பதுபோல் அதிசீக்கிரத்தில் இருந்த இடம் தெரியாமற்போகும். அரசனை இழந்து, மங்களகரமான காரியங்களற்று, புருஷர்கள் இறந்து, ராக்ஷஸிகள் நிறைந்த இந்த லங்கை, புருஷனை இழந்த விதவையைப்போல் களையற்றிருக்கும். ஒவ்வொரு வீட்டிலும் ராக்ஷஸப் பெண்கள் துக்கத்தால் வாய்விட்டு அழுவதைக் கேட்கப்போகிறேன். ராமபாணங்கள் இங்கே வந்து விழுந்து ராக்ஷஸ சிரேஷ்டர்களைக் கொல்லும்; லங்கையைக் கொளுத்தும். அப்பொழுது காந்தியற்று ஒரே இருட்டாய்ப் பார்க்கப் பயங்கரமாக இருக்கும். நான் இங்கே ராவணனால் வைக்கப்பட்டிருக்கிறேன் என்று ரகுவீரனுக்குத் தெரிந்த அடுத்த க்ஷணத்தில் இவையெல்லாம் நடக்குமென்பதில் ஸந்தேக முண்டோ?.



க்ரூரனும் நீசனுமான இந்த ராவணன் எனக்கு இட்ட கெடு ஸமீபித்துவிட்டது; இன்னும் இரண்டு மாதங்கள் பாக்கி இருக்கின்றன. "நீ பயப்படுவதற்காக அப்படிச் சொல்லியிருக்கலாமே தவிர நிஜமாய் உன்னைக் கொல்வார்களா?'' என்றால், எப்பொழுதும் பாபத்தையே செய்துகொண்டிருக்கிற இந்த ராக்ஷஸர்கள் செய்யத் துணியாத காரியம் உண்டோ? ஆகையால், இவர்களுடைய அதர்மமான நடத்தையை யோசித்துப் பார்த்தால் எனக்குப் பெரிய ஆபத்து நேருமென்பதில் கொஞ்சம்கூட ஸந்தேகமில்லை. மாம்ஸத்தையே ஆகாரமாக உடைய ராக்ஷஸர்களுக்குத் தர்மமென்றும் அதர்மமென்றும் உண்டோ? ராவணன் இட்ட கெடுக்கழிந்தவுடன் காலைப் போஜனத்திற்காக என்னை நிச்சயமாய்ப்பக்குவம் செய்யக் கட்டளையிடுவான். சிவந்த கடைக்கண்களையும் அழகான பார்வையையும் உடைய ராமனை விட்டுச்சொல்லமுடியாத துக்கங்களையனுபவித்துக் கொண்டு என்ன செய்வேன்? இதிலிருந்து எப்படித் தப்புவேன்? பர்த்தாவுடன் கூடியிருக்க பிராப்தமில்லாத எனக்கு இவ்விடத்தில் யாராவது கொஞ்சம் விஷம் கொடுத்தால் அதி சீக்கிரத்தில் யமலோகத்திற்குப் போவேன்.

நான் பிழைத்திருப்பதாக ராமலக்ஷ்மணர்களுக்குத் தெரியாதென்று எண்ணுகிறேன். தெரிந்திருந்தால் இந்தப் பூமியெங்கும் என்னைத் தேடமாட்டார்களா? ஆகையால் நான் இறந்துவிட்டேன் என்று எண்ணிக் கவனிக்காமல் இருக்கிறார்களோ?

அல்லது என்னைப்பிரிந்த துக்கத்தால் ராமன் உயிரை விட்டாரோ? தேவர்களும் கந்தர்வர்களும் ஸித்தர்களும் மஹரிஷிகளும் செந்தாமரைக்கண்ணனை என் நாதனை ஸ்வர்க்கலோகத்தில் கண்டு களிப்பார்களல்லவா? அவர்களே பாக்கியசாலிகள். அல்லது ஸகல பதார்த்தங்களின் ஸ்வரூபத்தை யறிந்து, பிரஹ்மஸ்வரூபியாய், உத்தம தர்மத்தையே நாடும் அந்த ராஜரிஷிக்குப் பாரியையால் பிரயோஜனமில்லை. ஆகையால் பரமவைராக்கியத்தால் என்னைக் கவனிக்காமலிருக்கிறாரோ? அப்படியும் இருக்காது. ஜீவன் முக்தர்கள் இவ்விதமான கர்மபந்தங்களை ஒப்புக்கொள்ளமாட்டார்கள். ஒப்புக்கொண்டால் ஸரியாய் நடத்துவார்களேயன்றி நடுவில் விடமாட்டார்கள்.

ஆகையால் நான் வெகுதூரத்தில் இருப்பதாலும், என்னைப் பிரிந்து வெகுகாலமானதாலும் மறந்தாரோ? என்னை அடிக்கடி பார்த்துக் கொண்டிருந்தால், பிரீதி விருத்தியாகும்;பார்க்காவிட்டால் அழியுமல்லவா? சீ! இப்படி எண்ணுவது முற்றிலும் பிசகு.

நன்றி மறந்தவர்களே இப்படிச் செய்வார்கள். தன்னை அடுத்தவர்களைத் தன்னுயிரைக்கொடுத்தும் காப்பாற்றுவதையே விரதமாக உடைய ரகுவீரனிடத்தில் இந்ததோஷத்தைச் சொல்லலாமோ? ஆகையால், அவரைக் குற்றம் சாட்டுவதில் பிரயோஜனமென்ன?

இதுவரையில் என்னிடத்தில் பரமப் பிரீதிவைத்து ஸகல விதத்திலும் காப்பாற்றி வந்த ராமன், இப்பொழுது என்னை மறந்திருப்பதை யோசித்தால், என்னிடத்தில் ஏதோ சில தோஷங்கள் இருக்கின்றனவென்று எண்ணுகிறேன். அப்படியானால் நான் அவருக்கு யாதொரு அபசாரமும் செய்ததாக ஞாபகமில்லையே!

ஆகையால், பூர்வஜன்மங்களில் செய்த பாபத்தால் என் பாக்கியம் குறைந்து இந்தக் கஷ்டங்களை அனுபவிக்கிறேன் என்பது நிச்சயம். சிரேஷ்டமான ஆசாரத்தையுடையவரும் சூரரும் சத்ருகுலகாலனும் பெருந்தன்மையான ஸ்வ... வத்தையுடையவருமான அந்தப் புருஷோத்தமனைப் பிரிந்தும் நான் பிழைத்திருப்பதிலும் இறப்பதே மேன்மை. ஆனால் என்னுடைய பாக்கியக்குறைவென்று நிச்சயமாய்ச் சொல்லவும் முடியவில்லை.

ஒருவேளை அந்தப் புருஷசிரேஷ்டர்கள், "ஆயுதங்களை எடுத்ததாலல்லவா நமக்கு இவ்வளவு கஷ்டங்களும் நேர்ந்தன" என்று நிச்சயித்து, ஆயுதங்களை விட்டெறிந்து, வனவாஸிகளாய்ப் பழம் கிழங்கு முதலியவைகளைப் புஜித்துக்கொண்டு தவம் செய்கிறார்களோ? அப்படியுமிருக்காது. க்ஷத்திரியனாகப் பிறந்தவன் ராக்ஷஸர்களுடன் விரோதித்துக்கொண்டு அவர்களை வேரறுக்காமல் ஒதுங்கிப் போவானோ?

அல்லது, ராவணன் முன்பு பொன்மானைக்கொண்டு அவர்களை மோசம் செய்ததுபோல் மாயையால் அவர்களை மயக்கிக் கொன்றானோ? இப்படிப்பட்ட கஷ்டம் நேர்ந்த பிறகும் எவ்விதத்திலாவது நான் உயிரைவிடவேண்டியது அவசியம். இந்தத் துக்கம் கூட என்னைக் கொல்லச் சக்தியற்றதோ? எனக்கு மரணமென்பதே கிடையாதோ?

இந்தத் துக்கத்தைப் போக்கக்கூடியது விவேகமேயல்லாது வேறுண்டோ? அக்ஞானத்தால் மோஹமடையும் ஜீவகோடிகளுடைய ஜன்மம் எதற்குப் பிரயோஜனம்? பூர்வஜன்மங்களில் பலாபேக்ஷையில்லாமல் தர்மங்களை அனுஷ்டித்து சித்தசுத்தியடைந்து, அழிவற்ற சமாதியிலிருந்து, ப்ரஹ்மஸ்வரூபத்தில் தங்களுடைய ஆத்மாவைக் கலந்து, ஸம்ஸாரஸமுத்திரத்தைத் தாண்டிய மஹான்களுக்குப் பாபபுண்யத்தாலுண்டாகும் விருப்பமும் வெறுப்பும் உண்டோ? அவர்களைப் பாபங்கள் அணுகமுடியுமோ? தங்களுக்குப் பிரியமான வஸ்துவைப் பிரிந்ததால் அவர்களுக்குத் துக்கமில்லை. பிரியமில்லாத விஷயங்கள் நேர்ந்ததால் விசேஷ பயமுமில்லை. இப்படி விருப்பும் வெறுப்புமில்லாத அந்த மஹாத்மாக்களை நமஸ்காரம் செய்கிறேன். அவர்களே உத்தமபுருஷர்கள். நானும் அவர்களைப்போல ஆகக்கிடைக்குமோ? என் அன்பிற்குரிய ரகுவீரன் ஸுகதுக்கங்களின் ஸ்வரூபத்தை நன்றாயறிந்தவர். என் பிராணநாதனே என்னைக் கைவிட்டார்; மஹாபாபியான ராவணனுடைய



தாஸாம் ஸ்ருத்வா து வசநம் ராக்ஷஸீநாம் ஸுதா³ருணம் |
உவாச வசநம் காலே த்ரிஜடா ஸ்வப்ந ஸம்ஹிதம் — ஸ². 27 ஸ—8க.

அந்த ராக்ஷஸிகள் சொல்லிய வார்த்தைகளைக் கேட்டு, திரிஜடை தான் ஸ்வப்னத்தில் கண்டதைச் சொல்லுகிறுள். (பக்கம் 113 பார்க்க)



கையில் அகப்பட்டேன்; இவனுக்கு இணங்கப்போகிறதில்லை; இவன் கையால் மரணமடைவதைவிட, நானே உயிரைவிடுவது நல்லது'' என்று பிரலாபித்தாள்.

ஸாஹம் த்யக்தா ப்ரியேணேஹ ராமேண விதி³தாத்மநா |
ப்ராணாம்ஸ் த்யக்ஷ்யாமி பாபஸ்ய ராவணஸ்ய க³தாவஶம் ‖ (51)

## ஸர்க்கம் 27

## திரிஜடை கண்ட ஸ்வப்னம்

இத்யுக்தா: ஸீதயா கோ⁴ரா ராக்ஷஸ்ய: க்ரோத⁴மூர்ச்சி²தா: |
காஸ்சித் ஜக்³முஸ்³தத³ாக்³யாதும் ராவணஸ்ய தரஸ்விந: ‖ (1)

ஸீதை இப்படிச் சொல்லக் கேட்டு சில ராக்ஷஸிகள் கோபம் மேலிட்டு அந்த ஸமாசாரத்தை ராவணனிடத்தில் சொல்ல ஓடினர்கள். பிறகு மற்றவர்கள் கோரமான வேஷங்களுடன் ஸீதையைச் சூழ்ந்து, அவளுக்குக் கெடுதி நேருமென்ற ஒரே விஷயத்தைப் பல விதமாய் கொடும் வார்த்தைகளால் சொல்லிப் பயமுறுத்தினர்கள். "ஸீதே! நீ தற்கொலைசெய்துகொண்டு எங்களிடத்திலிருந்து தப்பப் பார்க்கிருயோ? உன்னை இப்பொழுதே கொன்று உன் மாம்ஸத்தை நாங்கள் பங்கிட்டுத் தின்னப் போகிறோம்'' என்றுர்கள்.

இப்படி அந்தத் துஷ்ட ராக்ஷஸிகள் ஸீதையை மிரட்டுவதை திரிஜடை என்பவள் பார்த்துக்கொண்டிருந்தாள். அவள் விபீஷணனுடைய பெண்; வயதிலும் ஞானத்திலும் அனுபவத்திலும் முதிர்ந்தவள். அதுவரையில் தூங்கிக்கொண்டிருந்து, திடீரென்று விழித்துக்கொண்டு, அந்த ராக்ஷஸிகளைப் பார்த்து, "துஷ்டைகளே! ஜனகருக்கு புத்திரியும் தசரதசக்கரவர்த்திக்கு நாட்டுப் பெண்ணுமான இவளைத் தொடவேண்டாம். உங்களுக்குப் பசித்தால் உங்களுடைய தேகங்களையே பிடுங்கித் தின்னுங்கள்; இப்பொழுதுதான் ஒரு பயங்கரமான ஸ்வப்னத்தைக் கண்டேன். அதை நினைக்க எனக்கு மயிர்க்கூச்சலெடுக்கிறது. ஸீதையின் பர்த்தாவிற்கு ஸகல மங்களங்களும் ராக்ஷஸர்களுக்கு நாசமும் ஸமீபித்திருக்கின்றன'' என்றுள். அதைக்கேட்டு முன்பு கோப பரவசர்களான ராக்ஷஸிகளுக்குப் பயம் பிடித்து எல்லோரும் திரிஜடையைச் சூழ்ந்துகொண்டு, "விடியற்காலத்தில் கண்ட ஸ்வப்னம் வீண்போகாது. ஆகையால் அதை எங்களுக்கு விஸ்தாரமாய்ச் சொல்'' என்றுர்கள்.

அந்த ராக்ஷஸிகள் சொல்லிய வார்த்தையைக் கேட்டு, திரிஜடை, தான் ஸ்வப்பனத்தில் கண்டதைச் சொல்லுகிறுள். "கேளுங்கள், ராகவன் லக்ஷ்மணனுடன் வெண்மையான வஸ்திரங்களையும் மாலைகளையும் தரித்துக்கொண்டு கணக்கில்லாத ஹம்ஸங்களால் தாங்கப்பட்ட ஒரு தந்தப்பல்லக்கில் ஆகாச மார்க்கமாய் இந்த லங்கைக்கு வந்தார்; பிறகு ஸீதை வெண்மை

யான வஸ்திரத்தால் அலங்கரிக்கப்பட்டு க்ஷீரஸமுத்திர மத்தியிலுள்ள ஒரு வெண்மையான பர்வதத்தில் உட்கார்ந்திருந்தாள். பிறகு ஸூரியகாந்தி ஸூர்யனுடன் சேர்வதைப்போல் இந்தப் பாக்கியசாலி ரகுநாதனுடன் சேர்ந்திருக்கக் கண்டேன். பிறகு ராமலக்ஷ்மணர்கள் அந்தப் பல்லக்கைவிட்டு நான்கு தந்தங்களையுடையதும் மஹாபர்வதத்தைப்போன்றதுமான ஒரு பெரிய யானையின் மேலேறி, ஸீதையை நோக்கி வந்தார்கள். (பசு, காளை, யானை, அரண்மனை, பர்வதம், விருக்ஷங்கள் முதலியவைகளில் ஏறுவதாயும், அழுவதாயும், தான் மரணமடைவதாயும், சேரக்கூடாதவர்களுடன் சேருவதாயும் ஸ்வப்னத்தில் காண்பது மங்களகரம்—**ஸ்வப்னுத்தியாயம்**). அந்த ராஜபுத்திரர்கள் தேஜஸால் ஜ்வலித்துக்கொண்டு வெண்மையான வஸ்திராபரணங்களுடன் ஸீதை இருக்கும் பர்வத சிகரத்திற்கு வந்தார்கள். ராமன் ஸீதையை எடுத்து யானையின் கழுத்தில் உட்காரவைப்பதைக் கண்டேன். பிறகு சந்தோஷத்தால் மலர்ந்த கண்களுடன் ஸீதை ராமனுடைய மடியிலிருந்து கிளம்பி சந்திரஸூரியர்களைக் கையால்|தொட்டாள். (ஸூரியமண்டலத்தையாவது சந்திரமண்டலத்தையாவது ஸ்ப்னத்தில் கைகளால் தொடுகிறவன் ராஜ்யத்தை ஆள்வான்—**ஸ்வப்னுத்தியாயம்**.) பிறகு அந்த யானை ராமலக்ஷ்மணர்களுடனும் ஸீதையுடனும் லங்கைக்குப்போய் நின்றது. பிறகு ராமன் ஸீதையுடன் எட்டு வெள்ளைக்காளைகள் பூட்டின திவ்விய ரதத்தில் இங்கே வந்தார். பிறகு ஸீதையோடும் லக்ஷ்மணனேடும் ஸூரியனைப்போல் ஜ்வலிக்கும் புஷ்பக விமானத்தில் ஏறி வடக்குநோக்கிச் சென்றூர். பராக்கிரமத்தில் விஷ்ணுவிற்கு ஸமமான ராமனையும் லக்ஷ்மணனையும், ஸீதையையும் ஸ்வப்னத்தில் காணும் பாக்கியம் பெற்றேன். முட்டாள்களே! மஹாபாபிகளுக்கு மோக்ஷம் கிடைக்குமோ? அப்படித் தேவர்கள் அஸுரர்கள் ராக்ஷஸர்கள் மற்றும் இந்தப் பிரபஞ்சத்திலுள்ள ஸகலப்பிராணிகளும் சேர்ந்தாலும் மஹாதேஜஸ்வியான ரகுவீரனை ஜெயிக்க முடியுமா?

ராவணன் தைலத்தை தேகமெங்கும் பூசிக்கொண்டு, சிவப்பு வஸ்திரத்தை உடுத்து, மதுபானத்தால் கொழுப்படைந்து அலரிப் பூமாலையைத் தரித்துக்கொண்டு பூமியில் சஞ்சரிப்பதைக் கண்டேன். பிறகு, மொட்டைத் தலையுடன் கறுப்பு வஸ்திரத்தை உடுத்துக்கொண்டு புஷ்பகவிமானத்திலிருந்து கீழே விழுந்தான். ஒரு ஸ்த்ரீ அவனை இழுத்தாள். பிறகு, சிவந்த மாலையாலும் சந்தனத்தாலும் அலங்கரிக்கப்பட்டுத் தைலத்தைக் குடித்துக்கொண்டு சித்தப்பிரமையுடையவனுய் இந்திரியஸ்வாதீனமற்றுச் சிரித்துக்கொண்டும் கூத்தாடிக்கொண்டும் கழுதைகள் பூட்டிய தேரிலேறி அதிவேகமாகத் தெற்கே போவதைக் கண்டேன். பிறகு கழுதையின்மேலிருந்து ராவணன் பயத்தால் நடுங்கிப் பூமியில் தலைகீழாக விழுவதைக் கண்டேன். பிறகு சீக்கிரமாக எழுந்து பயத்தால் கலங்கி பைத்தியம்



பிடித்ததுபோலும் குடிவெறிக்கொண்டதுபோலும் வஸ்திரமே இல்லாமல் பலவிதமாய்க் கெட்ட வார்த்தைகளைப் பிதற்றிக்கொண்டு, அழுக்குப்படிந்த சேற்றில்திடீரென்று முழுகிமறைந்தான். ஸஹிக்கமுடியாததும் கெட்ட நாற்றமுடையதும் இருள் மூடியதுமான நரகத்தைப்போல் பயங்கரமாயும் இருந்தது. பிறகு, கறுப்பு நிறமுள்ள ஒரு ஸ்த்ரீ தேகமெங்கும் அழுக்கடைந்து சிவப்பு வஸ்திரம் தரித்து ராவணனுடைய கழுத்தில் கையைப்போட்டுத் தெற்கே இழுத்துக்கொண்டு போனுள்.

இப்படியே கும்பகர்ணனும் இருக்கக் கண்டேன். ராவணனுடைய புத்திரர்கள் எல்லோரும் தைலத்தைப் பூசிக்கொண்டு நின்றூர்கள். ராவணன் பன்றியின்மேலும், இந்திரஜித் முதலையின்மேலும், கும்பகர்ணன் ஒட்டகத்தின்மேலும், அதிவேகமாய்த் தெற்கே சென்றூர்கள்.

பிறகு, விபீஷணன் வெண்மையான மாலைகளையும் வஸ்திரங்களையும் சந்தனப்பூச்சுகளையும் தரித்துக்கொண்டு சங்கம், துந்துபி முதலிய வாத்தியகோஷங்களாலும் பாட்டு நாட்டியம் முதலியவைகளாலும் உபசரிக்கப்பட்டு பர்வதத்தைப் போன்ற சரீரத்துடன் மேகங்களைப்போல் கர்ஜிக்கும் நான்கு தந்தங்களுள்ள ஒரு யானையின் மேலேறி நான்கு மந்திரிகளுடன் ஆகாசமார்க்கத்தில் நிற்கக் கண்டேன்.

பிறகு ராக்ஷஸர்கள் சிவப்பு வஸ்திரங்களையும் மாலைகளையும் தரித்து மதுபானம் செய்து கோரவாத்தியங்களைச் சப்தித்துக்கொண்டு கூட்டம் கூட்டமாய் நிற்பதைக் கண்டேன். பிறகு இந்த அழகிய லங்காபுரி, ரதகஜதுரகபதாதிகளுடன் உப்பரிகைகளும் கோபுரங்களும் வாசற்படிகளும் இடிந்து ஸமுத்திரத்தில் விழக்கண்டேன். ராவணன் அதிக ஜாக்கிரதையுடன் காப்பாற்றிவரும் இந்தப் பட்டணத்தை ராமதூதனை ஒருவானரவீரன் கொளுத்தக் கண்டேன். சாம்பலாய்க்கிடந்த இந்த நகரத்தில் ராக்ஷஸிகள் தைலத்தைக் குடித்துப் பாடிக்கொண்டும் ஆடிக்கொண்டும் பெருங்கூச்சலுடன் பிரவேசிக்கக் கண்டேன். கும்பகர்ணன் முதலான ராக்ஷஸ சிரேஷ்டர்கள் சிவப்பு வஸ்திரங்களை உடுத்திக்கொண்டு சாணத்தால் நிறைந்த மடுவில் முழுகினூர்கள்.

ரகுவீரன் அதிசீக்கிரத்தில் இங்கே வந்து ஸீதையை அழைத்துக்கொண்டு போவார். அவருடைய கோபாக்னியால் நீங்களும் ராவணனும் இதர ராக்ஷஸர்களும் சாம்பலாவீர்கள். ஓடிப்போங்கள். எங்கேயாவது ஒளிந்துகொள்ளுங்கள். இவள் ராமனுக்கு மிகவும் பிரியமானவள்; இவளிடத்தில் அவருக்கு விசேஷ மதிப்பும் கௌரவமும் உண்டு. தான் எவ்வளவு தடுத்தும் கேட்காமல் தன்னுடன் வனத்திற்கு வந்தவள்; இப்படிப்பட்டவளை நீங்கள் பயமுறுத்தி ஹிம்ஸிப்பதைப்பார்த்து ஸஹிப்பாரோ? ஆகையால் இனி கொடியவார்த்தைகளைச் சொல்லவேண்டாம். அவளை ஸமாதானம் செய்து கோபத்

தைத் தணியுங்கள். 'ராமனுடைய கோபத்திலிருந்து எங்களைக் காப்பாற்றவேண்டும்' என்று இவளை ப்ரார்த்திப்பதே நமக்குப் பரமஹிதமென்று எனக்குத் தோன்றுகிறது; மிகுந்த துக்கத்தை அனுபவித்துக்கொண்டிருக்கும் இந்த ஸீதை ஸகலகஷ்டங்களும் தீர்ந்து உத்தமமான பர்த்தாவுடன் கூடி சந்தோஷிக்கப்போகிறாளென்று நான் கண்ட ஸ்வப்னத்தால் விளங்கவில்லையா? நீங்கள் இவளை விசேஷமாகப் பயமுறுத்தி ஹிம்ஸித்திருக்கிறீர்கள்; ஆனாலும் 'எங்களைக் காப்பாற்ற வேண்டும்' என்று ப்ரார்த்தியுங்கள்; 'நாம் இவ்வளவு உபத்திரவித்திருக்க நம்மிடத்தில் இவளுக்குத் தயை உண்டாகுமா' என்று ஸந்தேகப்படவேண்டாம். ராக்ஷஸர்களுக்கு ராமனால் உண்டாகப்போகிற நாசத்தை நினைக்கும்பொழுது எந்த உபாயத்தாலாவது நாம் தப்பவேண்டியது அவசியமென்று தெரிகிறது. இவளுடைய ஸ்வபாவம் உங்களுக்குத் தெரியாது. இவளை ஒருவன் சரணமடைந்தாலே போதும்; அவன் செய்த ஸகல அபராதங்களையும் மறந்து அவனுக்குப் பரம உபகாரத்தைச் செய்வாள்; ஆகையால் நம்மை இந்தக் கோரமான ஆபத்திலிருந்து தப்புவிக்க இவளுக்கே உரிமையுண்டு.

மேலும், இவளுடைய அவயவங்களில் விகாரமான அடையாளங்கள் கொஞ்சமாவது காணப்படவில்லை. காந்தி மாத்திரம் கொஞ்சம் குறைந்திருக்கிறது. ஆகையால், துக்கத்தை அனுபவிக்கவே தகாதவளும், தேவபோகங்களை அனுபவிக்கத் தகுந்தவளுமான இந்த ராஜகுமாரிக்கு இந்தச் சோகம் நேர்ந்திருக்கிறது. இவளுடைய காரியம் ஸித்தியாகுமென்றும் ரகுநாதன் ஜயமடைவாரென்றும் ராவணன் அழிவானென்றும் எனக்கு நன்றாகத் தெரிகிறது. இவளுக்கு அதிசீக்கிரத்தில் ப்ரியமான ஸமாசாரம் கிடைக்கப்போகிறதென்பதற்கு அனேக அடையாளங்கள் தோன்றுகின்றன. தாமரை இதழ் போன்ற இவளுடைய விசாலமான இடது கண் மிகுந்த காந்தி பெற்று விளங்குகிறது. இடது புஜமும், யானைத் துதிக்கை போன்ற இடது துடையும் கொஞ்சம் மயிர்க்கூச்சமடைந்து துடிக்கின்றன. இந்தச் சகுனங்களால் இவள் அதிசீக்கிரத்தில் ராகவனைச் சேர்ந்து ஸுகமடைவாள் என்பது நிச்சயம். இதோ பாருங்கள். அந்த மரக்கிளையில் ஒரு பக்ஷி விஸ்தாரமான இறக்கைகளை விரித்துக்கொண்டு, ப்ரதக்ஷிணமாய் வந்து மேலே கிளம்பிக் கீழே இறங்கி, மலர்ந்த புஷ்பங்களாலும் தளிர்களாலும் விளங்கும் கிளையின்மேல் நன்றாக உட்கார்ந்திருக்கிறது. இது ஒரு சுபசகுனம். அது அங்குள்ள அதிமதுரமான பழங்களைப் புஜித்து தென்றலை அனுபவித்து ஆனந்தத்தால் மெய் மறந்திருக்கிறது. அது அடிக்கடி இனிமையாய்க் கூவுவதைப் பார்த்தால், 'ஸீதே! நீ ஏன் வருத்தப்படுகிறாய்? உன் பர்த்தா அதிசீக்கிரத்தில் இங்கே வந்து உன் கஷ்டங்களைத் தீர்த்து அயோத்யைக்கு அழைத்துக் கொண்டு போவார். நீ படும் துக்கம் அதிகமென்று தோன்றினாலும் அவருடைய வருத்தத்திற்கு



ஈடாமோ? ஆகையால் உன் நாயகனை எதிர் கொண்டழைக்க நீ தகுந்தபடி ஸ்நானம்செய்து அலங்கரித்துக் கொள்ளாமல் கண்ணும் கண்ணீருமாக இருப்பது அழகல்ல. எழுந்திரு. உன் ப்ரிய நாயகன் வரப்போகிறானென்ற ஸந்தோஷ ஸமாசாரத்தை நினைக்க எனக்கும் ஆனந்தத்தால் மயிர்க் கூச்சமிடுகிறது' என்று ஸீதையின் துக்கத்தைத் தணிப்பது போலிருக்கின்றது.

(அநாதி காலமாய்ப் பகவானுடைய ஸம்பந்தம் பெற்ற ஜீவனைக் கடைத் தேற்றுவதற்கு ஆசாரியன் செய்யும் ப்ரயத்தனங்கள் இந்தக் காண்டத்தில் கதாரூபமாய் வர்ணிக்கப் படுகின்றன. லங்கையே சரீரம்; ஸீதையைக் காக்கும் ராக்ஷஸிகளே இந்திரியங்கள்; ராவணனும் கும்பகர்ணனும் நான் என்னுடையது என்ற அஹங்கார மமகாரங்கள்; இந்திரஜித் முதலியவர்கள் காமக்குரோத லோப மோஹ மத மாத்ஸர்ய தம்பம் முதலியவை. ஜீவனுக்கு பகவத் ஸ்வரூபத்தை உபதேசிக்க வந்த ஆசாரியனே ஹனுமான். ஆசாரிய லக்ஷணங்களாவன:—உத்தம கதிக்கு ஸாதனங்களான ஞான கர்மங்களைப் பூர்ணமாய் அனுஷ்டித்தவர்; யக்ஞத்தாலும் தானத்தாலும் அழிவற்ற தவத்தாலும் அடைய விரும்பும் ப்ரஹ்ம ஞானிகள், சாஸ்திரங்களின் அர்த்தங்களைத்தான் பரிசோதித்தறிவதாலும் பிறர் அவைகளை அனுஷ்டிக்கும்படி செய்வதாலும் தானே அனுஷ்டித்துக் காட்டுவதாலும், ஆசாரிய பதவியை அடைந்தவர்; வேத சாகைகளை இடைவிடாமல் அத்யயனம் செய்து, அவைகளின் அர்த்தங்களை சிரவண மனன நிதித்யாஸனமென்ற அனுஷ்டானத்திற்குக் கொண்டு வந்தவர்; வேதங்களைக் கரைகண்டவர்; பகவானிடத்தில் எல்லையற்ற பக்தியுள்ளவர்; பொறுமையில்லாதவர்; மந்திரங்களின் ரஹஸ்யத்தை அறிந்து அவைகளில் பக்திவைத்து எப்பொழுதும் அவைகளையே கதியென்று ஆசிரயிப்பவர்; சுத்தமான ஆசாரமுள்ளவர்; புராணங்களின் தத்வார்த்தங்களை அறிந்தவர்; குருபக்தியுள்ளவர்; ஆனந்தத்தால் கண்ணீர் பெருகத் தேகமெங்கும் மயிர்க் கூச்சலுடன் பரமாத்மாவின் கல்யாண குணங்களிலேயே ஈடுபட்டிருப்பவர்; புருஷோத்தமனுடைய குணங்களையும் மஹிமையையும் அடிக்கடி சிஷ்யனுக்கு உபதேசிப்பவர். ஆசாரியன் அலுத்துப் போகாமல் சிஷ்யன் போன வழியே விட்டு அவனைச் சீர்திருத்தத் திருமந்திரத்தை உபதேசித்து அவனைப் பகவானிடத்தில் சேர்ப்பிக்கிறார்.)

பக்ஷீ சஶா கா2நிலய: ப்ரஹ்ருஷ்ட:
புந: புநஶ்சோத்தம ஸாந்த்வவாதீ3 |
ஸுஸ்வாக3தாம் வாசமுதீ3ரயாந:
புந: புநஶ்சோத3யதீவ ஹ்ருஷ்ட: ॥ (64)

## ஸர்க்கம் 28

## ஸீதை உயிரை விட யத்தனித்தது

ஸா ராக்ஷஸேந்த்[3]ரஸ்ய வசோ நிஶம்ய
தத்[3] ராவணஸ் யாப்ரிய மப்ரியார்தா ।
ஸீதா விதத்ராஸ யதா[2] வநாந்தே
ஸிம்ஹாபி[4]பந்நா க[3]ஜராஜகந்யா ॥ (1)

**ஸீ**தை ராவணன் சொன்ன குரூரவார்த்தைகளைக் கேட்டு மனம் நொந்து, காட்டில் ஸிம்ஹத்தால் பிடிக்கப் பட்ட பெண் யானையைப்போல் நடுங்கினாள். ஸ்வபாவத்திலேயே பயந்தவள்; ராக்ஷஸிகளுக்கு நடுவில் அகப்பட்டு, ராவணனுடைய வார்த்தைகளால் பயமடைந்து, ஜனஸஞ்சாரமில்லாத காட்டில் ஒரு சிறு பெண்ணை அவனைச் சேர்ந்தவர்கள் பஞ்சத்தின் கொடுமையால் விட்டுப் போவதைப்போல் தன்னைச் சேர்ந்தவர்களால் கை விடப் பட்டு அழுதாள். "ஐயோ! நான் கொஞ்சம் கூடப் புண்ணியம் செய்யவில்லையோ? இவர்களால் இப்படி மிரட்டப்பட்டும் இன்னும் உயிர் போகக் காணேனே. கர்மகதி முடிந்தாலொழிய மரணம் வராதென்று பெரியோர்கள் சொல்லும் வார்த்தை நிஜமே. என்ன கஷ்டம்! ஸௌகமென்பதே இல்லாமல் எல்லையற்ற துக்கத்தையே அனுபவிக்கும் என் மனம், வஜ்ராயுதத்தால் அடிபட்ட மலைச்சிகரத்தைப் போல், தூள் தூளாகவில்லையே! இதற்கு அழிவே இல்லை என்பது நிச்சயம். இந்தக் கஷ்டத்தைப் பொறுப்பதைக் காட்டிலும் ஏன் உயிரை விடக்கூடாது? ஆனால், அது மஹாபாதகமல்லவா? எப்படியும் ராவணன் என்னைக் கொல்வானென்பது நிச்சயம்; ஆகையால் அவன் கையால் இறப்பதைவிட நானே உயிரைவிடுவதில் தோஷமே இல்லை. "எவ்விதத்திலாவது உயிரை காப்பாற்றிக் கொள்ள வேண்டும்" என்ற சுருதிப்படி ராவணனை அனுஸரித்து ஏன் பிழைத்திருக்கக்கூடாது? அப்படி ராவணனிடத்தில் என் மனம் நாடுமோ? பிராம்மணன் மற்ற ஜாதியார்களுக்கு வேத மந்திரங்களை உபதேசிக்க முடியுமோ? என்றால், லோகநாதனான ராமன் இரண்டு மாதங்களுக்குள் இங்கே வராவிட்டால், ரணவைத்தியன் கர்ப்பத்தில் மடிந்த சிசுவின் அங்கங்களை ஆயுதங்களால் துண்டிப்பதுபோல் ராவணன் என்னுடைய அவயவங்களை இரக்கமில்லாமல் துண்டிப்பான். திருடன் ராஜாவுக்கு அபராதம் செய்து சிறையில் அடைக்கப்பட்டு, மறுநாட் காலையில் கொலை செய்யப்படுவான் என்றிருந்தால், எப்படி அதையே நினைத்து நினைத்து வருந்துவானோ, அப்படி ராவணன் கெடுவிட்ட இரண்டு மாத காலம் வரவர ஸமீபிக்கிறதே என்று நினைக்க என் தேகம் நடுங்குகிறது. பெருங்கடலில் சுழற்காற்றால்முழுகும்கப்பலைப் போல் மஹாபாபத்தைச் செய்த நான் நாசமடையப்போகிறேன்.



...ஹா! ராம! ஸகலப் பிராணிகளையும் ஸந்தோஷப் படுத்தக் கூடியவரென்று பெயருள்ள உமக்கு என் துக்கத்தைநீக்கி ஆனந்தத்தைக் கொடுப்பது அஸாத்தியமோ? லக்ஷ்மண! ஒரு வேளை ராமன் அலக்ஷ்யம் செய்தாலும், "ஸீதையை என்னைப்போல் நினை" என்று வனத்திற்கு புறப்படும்பொழுது ஸௌமித்திரை உனக்கு உபதேசித்தபடி, என்னைத் தாயாகப் பாவிக்கும் உனக்குக் கூட என்னிடத்தில் அலக்ஷ்யம் பிறந்ததோ? பகவானுடைய நிஜஸ்வரூபத்தையறிந்த ஸௌமித்திராதேவி! உமது புத்திரன் உம்முடைய வாக்கியத்தை மீறி நடப்பதையும் மாதாவான என்னைக் கை விடுவதையும் நீர் பார்த்துச் சும்மாவிருப்பது நியாயமோ? கௌஸல்யாதேவி! உமது புத்திரனை நம்பி என்னை வனத்திற்குக் கூட அனுப்பினீரே. இப்படி என்னைக் கை விட்டதை அறியவில்லையோ? இவர்களெல்லோரும் என்னைக் கை விட்டாலும் குற்றமல்ல. என்னைப் பெற்ற தாயே! நீயும் இப்படி உபேக்ஷையாக இருப்பது தர்மமோ?

இரண்டு ஸிம்ஹங்களின் மேல் இடிவிழுந்து நாசம் செய்தது போல் மான் ரூபத்தைத் தரித்த அந்த மாரீசன் பலவான்களான ராஜகுமாரர்களைக் கொன்றானோ? இல்லாவிட்டால் என்னைக் காப்பாற்ற மாட்டார்களா? ஒரு அல்ப ராக்ஷஸனுக்கு ராமலக்ஷ்மணர்களை நாசம் செய்யும் சக்தியுண்டா? ஆகையால், காலதேவதையே மான் வேஷம்கொண்டு பாக்கியமற்ற என்னை மோசம் செய்தது. இல்லாவிட்டால் ராமனையும் அவர் பிறகே லக்ஷ்மணனையும் துரத்துவேனா? ராம! பூர்ணசந்திரனைப் போன்ற முகத்தையும் நீண்ட புஜங்களையுமுடையவரே! ஸகலப் பிராணிகளுக்கும் பிரியமானவரே! ஸத்தியத்தையே விரதமாயுடையவரே! நான் ராக்ஷஸர்களால் மரணமடையப்போகிறது உமக்குத் தெரியவில்லையே. உமது முகமலண்டலத்தைப் பார்க்க எனக்குமாத்திரம் கிடைக்காதோ? உமது புஜங்கள் என்னைக் காப்பாற்றச் சக்தியற்றனவோ? என் துக்கத்தைத் தீர்த்து ஆனந்தத்தைக் கொடுக்க முடியாத உமக்கு ராமனென்ற பெயர் தகுமோ? ராம! நீர் பூஜிக்கும் தெய்வம் ஸ்ரீமந் நாராயணன்; நானும் அவரைப் பூஜிக்கவில்லையா? மேலும் உம்மைத் தவிர என்னை ரக்ஷிக்கும் தெய்வம் வேறுண்டென்று எனக்கு ஸ்வப்பனத்திலும் எண்ணமுண்டோ? என் பதிவிரதாக்னியால் இந்த ராக்ஷஸ வம்சத்தைச் சாம்பலாக்க முடியாதா? உம்மைச் சரணமடைந்தேன்; பிறகு எனது பொறுப்பெல்லாம் உம்முடையதே; நான் என் விஷயமாய் பிரயத்தனம் செய்தால் சரணாகதிதர்மத்திற்கு விரோதம் வரும்; உம்முடைய விரதத்திற்கு பங்கம் நேருமென்று இவ்வளவு ஹிம்ஸைகளையும் பொறுத்துக் கொண்டிருக்கிறேன். அயோத்யையில் ஸகல ராஜபோகங்களையும் அனுபவித்துக்கொண்டு ஸௌகமாக இருக்கக்கூடாதா? நான் ராவணனைக் கண்ணெடுத்துப் பார்த்தால் அதைக்காட்டிலும் சிரேஷ்டமான போகங்கள் என் காலடியில் விழாதோ? அவைகளை ஸ்மரிக்காமல், உம்முடன் வன

வாஸ கஷ்டங்களையெல்லாம் அனுபவித்து, இங்கே வெறும் தரையில் புழுதிபடிய உட்கார்ந்திருக்கிறேன். தர்ம மார்க்கத்திலிருந்து என் புத்தி ஒரு க்ஷணமாவது நழுவினதில்லை. கூடியவரையில் பதிவிரதா தர்மத்தைக் காப்பாற்றி வருகிறேன். ஐயோ! நன்றியற்றவர்களுக்குச் செய்த உபகாரங்கள் வீணாவதுபோல் இவையெல்லாம் பிரயோஜனமற்றனவோ? இவைகளை அனுஷ்டித்தால் உத்தம பலன்கள் கிடைக்குமென்ற சாஸ்திரங்களும் பெரியோர்களுடைய வாக்கியங்களும் பொய்யோ? நீரும் என்னைக் கைவிட்டீர்; உம்மைத் திரும்பிப் பார்ப்போமென்ற நம்பிக்கை இல்லை; உம்மைப் பார்க்காமல் இளைத்து தேகம் வெளுத்தது. நான் உம்மையே தெய்வமென்றிருந்ததும் தர்மங்களை ஆசரித்ததும் உபயோகமில்லை.

ஒருவேளை நீர் பிதாவின் ஆக்ஞைப்படி வனவாஸம் செய்து முடித்து, அயோத்யைக்குத் திரும்பிப்போய், ஸகல கஷ்டங்களும் தீர்ந்து, ராஜ்யத்தில் அபிஷேகம் செய்யப்பட்டு, விசால நேத்திரங்களுள்ள ஸ்த்ரீகளுடன் ஆநந்தமாய்க் காலத்தைக் கழிப்பீர். நானோ பாக்கியமற்றவள்; இதுவரையில் அனுஷ்டித்த தவமும் விரதங்களும் வீணாயின; உம்மிடத்தில் வைத்த ஆசைக்கோ எல்லையில்லை; அது என் மரணத்திற்கே ஹேதுவாயிற்று; ஆகையால் இந்தப் பாழும் பிராணனை விடப் போகிறேன். விஷத்தைக் குடித்தாவது ஆயுதங்களாலாவது உயிரைப் போக்கிக் கொள்ளலாம். ஆனால், அவைகளை எனக்குக் கொண்டுவந்து கொடுக்கக்கூடிய உபகாரிகள் இங்கிருப்பார்களோ? என்னைக் கெடுப்பதற்கு வேண்டிய ஸகல ஸாதனங்களும் நினைத்தவுடன் கிடைக்கும். என்னைத் தர்மமார்க்கத்தில் காப்பாற்றக்கூடிய ஸாதனங்கள் பாபிகளால் நிறைந்த இந்த நகரத்தில் கிடைக்குமோ'' என்று ஜானகி ராக்ஷஸிகளின் உபத்திரவத்தை ஸகிக்கமுடியாமல் முகம் உலர்ந்து, இப்படிப் பலவிதமாய்ப் புலம்பினாள். பிறகு, ''ராக்ஷஸிகள் விழித்துக்கொள்வதற்குமுன் நான் இறக்கவேண்டியது அவசியம்'' என்று, ஸகலவிதத்தாலும் ராமனையே தியானித்துக்கொண்டு, ஆஞ்ஜநேயர் மறைந்திருந்த சிம்சுபாவிருக்ஷத்தின் அடியில் வந்தாள். எவ்விதமாக பிராணனை விடலாமென்று நன்றாக ஆலோசித்து, "பின்னலை மரக்கிளையில் மாட்டித் தூக்குப் போட்டுக்கொள்வதே நலம்; என் கஷ்டம் தீர்ந்து சீக்கிரத்தில் யமலோகம் செல்வோம்'' என்று புஷ்பத்தைப்போல் மிருதுவான அவயவங்களையுடைய ஸீதை அந்த மரக்கிளையைப் பிடித்துக்கொண்டு நின்றாள்.

பிறகு, "ராமனுடைய சக்தி நன்றாய்த் தெரிந்திருக்க அவரிடத்தில் நம்பிக்கையற்று இப்படிச் செய்யலாமோ? ஒருவேளை அபார கருணையால் சத்துருவின் அபராதத்தை அவர் பொறுத்திருக்கலாம். தசரதரையும் பரதனையும் தண்டிக்கிறேன் என்று சொன்ன லக்ஷ்மணன் பொறுத்துக் கொண்டிருப்பானோ? மேலும் நான் பிறந்த



ஜனகவம்சம் எவ்வளவு பரிசுத்தமானது! என்னால் அதற்கு நீங்காத தோஷம் ஏற்படுமே'' என்று யோசித்துக் கொண்டிருக்கையில் அனேக சுபசகுனங்கள் தோன்றின. அவை அதுவரையில் ஸகல ஜனங்களுக்கும் க்ஷேமத்தைக் கொடுத்துத் துக்கத்தைப் போக்கினவென்று பிரஸித்தம். ''நீ இனி ஏன் துக்கப்படுகிறாய்? தைரியமாக இரு'' என்று ஸீதையைத் தேற்றுவது போலிருந்தது.

ஶுபாநிமித்தாநி ததா2 ப3ஹூநி
தை4ர்யார்ஜிதாநி ப்ரவராணி லோகே |
ப்ராது3ர் நிமித்தாநி தத3ர ப3பூ4வு:
புராபி ஸித்3தா4ந் யுபலக்ஷிதாநி || (20)

---

## ஸர்க்கம் 29

## சுபசகுனங்கள்

---

ததா2க3தாம் தாம் வ்யதி2தாமநிந்தி3தாம்
வ்யபேதஹர்ஷாம் பரிதீ3ந மாநஸாம் |
ஶுபா4ம் நிமித்தாநி ஶுபா4நி பே4ஜிரே
நரம் ஶ்ரியா ஜுஷ்ட மிவோபஜீவிந: || (1)

சொல்லமுடியாத துக்கங்களை அனுபவித்து ஸகல ஸந்தோஷமும் அற்று, மனம் நொந்திருக்கும் ஸீதைக்கு அநேக சுபசகுனங்கள் உண்டாயின. மங்களஸ்வரூபியும் குற்றமற்ற ஆசாரத்தையுடையவளுமான ஸீதை, "நான் ஸுகத்தை அனுபவித்த காலமும் உண்டோ?'' என்று நினைத்தாள். (லோகத்தில் ஒருவனுக்கு லக்ஷ்மீ கடாக்ஷம் பிறந்து ஸகல ஐசுவரியங்களும் அதிகாரமும் கிடைத்தால் ஏழைகள் அவனுக்குத் தங்களாலியன்ற உபகாரங்களைச் செய்து பிரயோஜனத்தையடைய விரும்புவதுபோல் சுபசகுனங்களும்ஸாக்ஷாத் மஹாலக்ஷ்மியின் விஷயத்தில் தங்களால் கூடிய உபகாரத்தைச் செய்து சகுனங்களுக்கெல்லாம் சிரேஷ்டமான பதவியை அடைந்தன.) வளைந்த இமை மயிர்களால் சூழப்பட்டு ஓரத்தில் சிவந்து சுற்றிலும் வெளுத்து, நடுவில் கறுத்த விசாலமான இடது கண் மீன்களால் அடிக்கப்பட்ட தாமரைப் புஷ்பம்போல் வேகமாய்த் துடித்தது. அழகாய்ப் பொருந்தி, பருத்து உருண்டு அகில் சந்தனம் முதலிய உத்தம கந்தங்களால் அலங்கரிக்கப்பட்டு பிரியநாயகனால் தழுவப்பெற்ற இடதுபுஜம் அடிக்கடி வெகுகாலம் துடித்தது. மதயானையின் துதிக்கையைப் போன்றதும், பருத்து அழகாய் ஒன்றுக்கொன்று சேர்ந்ததுமான அவளுடைய இடது துடையும் அடிக்கடி துடித்து, ரகுநாதன் சீக்கிரத்தில் வரப்போகிறாரென்று தெரிவித்தது. நிர்மலமான நேத்திரங்களையும் மாதுளம்பழத்தின் விதைபோன்ற நுனியையுடைய பற்களையுமுள்ள ஸீதை உடுத்திருந்த தங்கமயமான வஸ்திரம் கொஞ்சம் புழுதி படிந்து சரீரத்திலிருந்து சற்று நழுவி விழுந்தது. இவைகளாலும் இன்னும் பெரியோர்களால் ஒப்புக்

கொள்ளப்பட்ட மற்ற சுபசகுனங்களாலும் தன் பர்த்தா வரப் போகிறாரென்று நிச்சயம்கொண்டு, காற்றாலும் வெயிலாலும் வாட்டப்பட்டுப் பூமியில் மறைந்துபோன விதை மழைபெய்தவுடன் மறுபடியும் முளைப்பதுபோல், ஸந்தோஷத்தால் பூரித்தாள். கோவைக் கனிபோன்ற உதடுகளையும், சிரேஷ்டமான கண்களையும், புருவங்களையும், நுனிமயிரையும், கோணலான இமைகளையும், இடைவெளியில்லாமல் வெண்மையான பற்களையுமுடைய ஸீதையின் முகம், ராகுவால் பிடிபட்டு விடப்பட்ட சந்திரனைப்போல் மறுபடியும் விளங்கிற்று. சோகமும் புத்தியின் கல்மஷமும் ஸந்தாபமும் நீங்கி, ஸந்தோஷத்தால் முகம் மலர்ந்து, சுக்லபக்ஷத்தில் சந்திரனால் வரவரக் காந்தி பெற்ற இரவுபோல் விளங்கினாள்.

ஸா வீதஶோகா வ்யபநீத தந்த்3ரீ
ஶாந்தஜ்வரா ஹர்ஷ விவ்ருத்3த4ஸத்வா |
அஶோப4தார்யா வதநேந ஶுக்லே
ஶீதாம்ஶுநா ராத்ரி ரிவோதி3தேந || (8)

---

## ஸர்க்கம் 30

# ஹநுமான் ஸீதையிடத்தில் பேச நிச்சயித்தது

ஹநுமாநபி விக்ராந்த: ஸர்வம் ஶுஶ்ராவ தத்வத: |
ஸீதாயாஸ் த்ரிஜடாயாஶ்ச ராஷஸீநாம் ச தர்ஜநம் (1)

பராக்கிரமசாலியான ஆஞ்ஜனேயர் ஸீதைக்கும் ராக்ஷஸிகளுக்கும் நடந்த ஸம்வாதத்தையும் திரிஜடை சொன்ன ஸ்வப்பனத்தையும் கேட்டுக் கொண்டிருந்தார். பிறகு இந்திரனுடைய நந்தவனத்தில் விளங்கும் தேவஸ்த்ரீயைப் போன்ற ஸீதையைக் கவனித்துப் பார்த்து பலவிதமாக ஆலோசித்தார். "கணக்கில்லாத வானரர்கள் ஸகல திக்குகளிலும் தேடிக் கொண்டிருக்கும் ஸீதையை நான் பார்க்கக் கிடைத்தது. இந்த லங்காபுரியையும், ராவணனுடைய மஹிமையையும், ராக்ஷஸர்களுடைய விசேஷத்தையும் நான் மறைந்திருந்து, சத்துருவின் சக்தியை ரஹஸ்யமாக அறிகிற தூதனைப்போல் நடந்து பல விஷயங்களைத் தெரிந்துகொண்டேன். அளவற்ற பராக்கிரமசாலியும், ஸகல பூதங்களிடத்திலும் தயையுள்ளவருமான ராமனுடைய பாரியை அவரைப் பார்க்கவேண்டுமென்று ஆசைகொண்டிருக்கிறாள். அவளுக்கு ஆறுதல் சொல்ல வேண்டியது அவசியம். துக்கமென்பதையே அறியாமல், துக்கத்தால் பீடிக்கப்பட்டு, துக்கஸமுத்திரத்தின் கரையைக் காணாத இந்தச் சந்திரமுகியை நான் அவசியம் ஸமாதானம் செய்யவேண்டும். சோகத்தால் கலங்கின மனத்தையுடைய இவளுக்குத் தேறுதல் சொல்லாமல் நான் திரும்பிப் போனால் மஹாதோஷத்திற்குள்ளாவேன். அபார கீர்த்திசாலியான



இந்த ராஜபுத்திரி, ரக்ஷிப்பவர்கள் இருப்பார்களென்பதை அறியாமல், நான் வானரர்களிருக்குமிடத்திற்குப் போவதற்குள் பிராணனை விடுவாள். பூர்ணசந்திரனைப்போல் எல்லோருக்கும் ஆனந்தத்தைக் கொடுக்கும் முகத்தையுடைய மஹாவீரனான ரகுநாதன் ஸீதையைப் பார்க்க ஆவல் கொண்டிருக்கிறார். அவருக்கு இவளுடைய விருத்தாந்தத்தைச் சொல்லி ஸமாதானம் சொல்ல வேண்டியதும் அவசியமே.

ஆனால், ராக்ஷஸிகள் விழித்துக்கொண்டிருக்கையில் ஸீதையுடன் பேசுவது அஸாத்தியம். அதற்கு வழியென்ன? ஒன்றிற்கொன்று விரோதமாயிருக்கிறதே. இந்த ராத்ரி கொஞ்சம் பாக்கி இருக்கிறது. அதற்குள் அவளை ஸமாதானம் செய்யாவிட்டால் எப்படியாவது பிராணனை விடுவாள் என்பதில் ஸந்தேகமில்லை. இவளுடன் பேசாமற்போனால், 'ஸீதை எனக்கு என்ன ஸமாசாரம் சொல்லியனுப்பினாள்?" என்று ராமன் என்னைக் கேட்டால் என்ன பதில் சொல்வேன்? இவளிடத்திலிருந்து யாதொரு ஸமாசாரத்தையும் கொண்டு போகாமல் அதிசீக்கிரமாய்த் திரும்பிப் போனால், ராமனுக்குக் கோபம் மேலிட்டு கோபப் பார்வையால் என்னைக் கொளுத்திவிடுவார். இவளுடன்பேசி, ராமனுடைய ஸமாசாரத்தைத் தெரிவித்து இவளைத் தேற்றாமல் திரும்பிப்போய், ஸுக்ரீவனை ராவணனோடு யுத்தம் செய்வதற்காக இவ்விடத்திற்கு அழைத்து வந்தாலும் என்ன பிரயோஜனம்? அவரும் அவருடைய ஸைன்யங்களும் இங்கே வருவதற்குள் இவள் பிராணனை விடுவாள். ஆகையால், நான் இந்த மரத்திலிருந்துகொண்டே ராக்ஷஸிகள் அப்புறம் போவதையாவது தூங்குவதையாவது பார்த்து அந்த ஸமயத்தில் துக்கத்தால் தவிக்கும் ராமபாரியையைக் கொஞ்சம் கொஞ்சமாகத் தேற்ற வேண்டும்.

வானரனான நான் அதிஸூக்ஷ்மரூபத்துடன் மனுஷ்யவார்த்தையால் பேசலாமா? அல்லது, வியாகரணலக்ஷணங்கள் பொருந்திய ஸம்ஸ்கிருத வார்த்தையால் பேசலாமா? பிராஹ்மணனைப்போல் ஸம்ஸ்கிருத பாஷையில் பேசினால், "குரங்கிற்குப் பிறரோடு ஸம்ஸ்கிருத பாஷையில் பேசப் பழக்கமெங்கே? ஆகையால், ராவணனே நம்மை மோசம் செய்ய இந்த ரூபத்துடன் வந்திருக்கிறான்" என்று ஸீதை பயப்படுவாள். சிரேஷ்டமான அர்த்தங்களடங்கிய மனுஷ்ய பாஷையிலேயே இவளுடன் பேசுவது நலம். இவளை வேறுவிதமாக ஸமாதானம் செய்ய முடியாது. கோஸல தேசத்திலுள்ளவர்கள் பேசும் பாஷையிலேயே இவளுடன் பேச வேண்டும்.

இருக்கட்டும். இந்த வானரரூபத்துடன் அவள் எதிரில் போய் நின்று பேசினால், என் ரூபத்தையும் அதற்கு விரோதமான மனுஷ்ய பாஷையையும் கவனித்து, முன்பே ராக்ஷஸர்களால் பல விதமாய் பயமுறுத்தப் பட்டவளாகையால் அதிக பயமடைந்து, நினைத்த

ரூபத்தைத் தரிக்கக் கூடிய ராவணனென்றே என்னை நினைத்துப் பெருங்கூச்சலிடுவாள். அதைக்கேட்டு, ராக்ஷஸர்கள்பல ஆயுதங்களை எடுத்துக் கொண்டு ஓடி வருவார்கள். அவர்கள் விகாரமான முகங்களுடன் யமனைப்போல் என்னைச் சூழ்ந்து அவர்களுடைய பலத்திற்குத் தகுந்தபடி என்னைப்பிடிக்கவாவது கொல்லவாவது பிரயத்தனம் செய்வார்கள். பெரிய விருக்ஷங்களுடைய கிளைகளையும் கீழ்க்கிளைகளையும் அடிமரத்தையும் பிடித்துக் கொண்டு தாவும் என்னைப் பார்த்து, நான் அவர்களுடன் யுத்தம் செய்வதற்காக எடுக்கும் பெரிய ரூபத்தைக் கண்டு பயந்து, 'காட்டில் திரியும் குரங்கிற்கு இந்தப் பெரிய ரூபம் ஏது? இவன் சத்துருவால் அனுப்பப்பட்டு நினைத்த ரூபங்களை எடுக்கக்கூடிய தூதனுயிருக்க வேண்டும்' என்று ஸந்தேகிப்பார்கள். பிறகு, ராவணனுடைய அரண்மனையில் காவல் காப்பவர்களை அழைத்துக்கொண்டு வருவார்கள். அவர்களும், சூலம் சக்திமுதலிய ஆயுதங்களுடன் அதிவேகமாய்ப் பயங்கரமான யுத்தம் செய்வார்கள். அவர்களால் சூழப்பட்டு அவர்களைச் சின்னு பின்னமாயடித்துக்கொண்டிருக்கும் பொழுது மிகவும் களைத்துப்போவேன்; பிறகு ஸமுத்திரத்தைத் தாண்டிச் செல்ல முடியாது. ஒருவேளை பல ராக்ஷஸர்கள் சேர்ந்து என்னைப் பிடித்து விட்டால், இவளுக்கு ராமனுடைய விருத்தாந்தமே தெரியாமற் போகும். பிராணிகளை ஹிம்ஸிப்பதிலேயே ஆசையுள்ள இந்த ராக்ஷஸர்கள், "இவன் யார்? சொல்" என்று இவளை உபத்திரவிப்பார்கள். அப்பொழுது, ராமனும் ஸுக்ரீவனும் உத்தேசித்த காரியம் கெடும். இவளைக் கடுங்காவல் வைத்திருக்கும் லங்கையோ கடலால் சூழப்பட்டது; அதற்குப் போகும் வழி மற்றவர்களுக்குத் தெரியாது; ராக்ஷஸர்கள் இராப்பகலாகக் காத்துக் கொண்டிருக்கிறார்கள். அவர்கள் என்னை யுத்தத்தில் பிடித்து விட்டாலும், கொன்று விட்டாலும், என்னைத் தவிர வேறு வானரன் நன்றாய் விசாரித்துக்கொண்டு நூறுயோஜனை விஸ்தீரணமுள்ள இந்தப் பெருங்கடலைத் தாண்டி வந்து, ராம காரியத்தை நிறைவேற்றுவதில் ஸஹாயம் செய்வானென்று நான் எண்ணவில்லை. ராக்ஷஸர்கள் கணக்கில்லாமல் வந்தாலும் அவர்களைக் கொல்வேனென்பதில் ஸந்தேகமில்லை. ஆனால், ஸமுத்திரத்தை மறுபடியும் தாண்ட முடியாதென்று எண்ணுகிறேன். யுத்தத்தில் ஜயமும் அபஜயமும் ஒருவனுக்கு நிச்சயமில்லை. அப்படி, ஸந்தேகமுள்ள விஷயத்தில் தலையிட எனக்கு இஷ்டமில்லை. எந்த புத்திமானாவது ஸந்தேகப் படக்கூடிய காரியத்தைச்செய்வானா? ஸீதையுடன் பேசா விட்டாள் அவள் பிராணனை விடுவாள்; இந்த ரூபத்துடன் அவளிடத்தில் பேசினால் மேற் சொன்ன அபாயங்கள் நேரும்.

ஏறக்குறைய முடிந்த காரியங்களும் விவேகமற்ற தூதனிடத்தில் ஒப்புவிக்கப் பட்டால் ஸூரியோதயத்தில் இருள் நாசமடைவது போல் காலதேசங்களுக்கு ஒவ்வாமல் கெடுகின்றன. அரசர்கள் மந்திரிகளுடன் நன்றாய் யோசித்துச் செய்யும் காரியங்களும் விவேகமற்ற தூதனிடத்தில் அகப்பட்டால் விளங்குகிறதில்லை. அவர்கள் தங்களை மிகவும் தெரிந்தவர்களாக நினைத்துக் கொண்டு காரியங்களைக் கெடுத்து விடுகிறார்கள். ராமனுடைய காரியம் நிறைவேற வேண்டும்; நான் புத்திஹீனனென்று பெயரெடுக்கக்கூடாது. ஸமுத்திரத்தைத் தாண்டினதும் இங்கே தேடினதும் வீணாகக் கூடாது. நான் சொல்ல வந்த ஸமாசாரத்தை ஸீதை பயப்படாமல் கேட்டு ஆறுதலடைய வேண்டும். இவைகளை ஒன்றிற்கொன்று விரோதமில்லாமல் எப்படிமுடிக்கலாம்? சிரேஷ்டமான ஆசாரத்தையுடையவரும் இவளுக்கு பிரிய பந்துவுமான ராமருடைய விருத்தாந்தத்தை இங்கே மறைந்திருந்தே சொல்லவேண்டும். அப்பொழுது அவரிடத்திலேயே நாடின மனத்தையுடையவளாய்ப் பயப்படமாட்டாள். இக்ஷ்வாகுகுல திலகரும் மஹாக்ஞானியுமான ஸ்ரீராமமூர்த்தியின் ஸமஸ்த கல்யாண குணங்களையும் மதுரமான வார்த்தைகளால் வர்ணிக்கவேண்டும். மங்களகரமாயும் தர்மத்தை அனுசரித்ததாயும் இருக்கும் அந்த விருத்தாந்தங்களைக் கேட்ட பிறகுதான் என்னிடத்தில் இவளுக்கு நம்பிக்கையுண்டாகும் என்று லோகநாதனை ராமனுடைய பாரியையைப் பற்றி இப்படிப் பலவிதமாய் யோசித்து, பிறகு நிகரற்ற ஸாமர்த்தியமுள்ள ஆஞ்ஜனேயர் மரக்கிளைகளில் மறைந்து கொண்டே பின்வரும் உத்தமமான வாக்கியங்களை மதுரமாய்ச் சொல்ல ஆரம்பித்தார்.

இதி ஸ ப3ஹுவித4ம் மஹாநுபா4வோ
ஜக3திபதே: ப்ரமதா3மவேக்ஷமாண: |
மது4ர மவிதத2ம் ஜகா3த3 வாக்யம்
த்3ரும விடபாந்தரமாஸ்தி2தோ ஹநுமாந் ‖ (44)

---

## ஸர்க்கம் 31

## மாருதி ராம சரித்திரத்தை வர்ணித்தது

ஏவம் ப3ஹுவிதா4ம் சிந்தாம் சிந்தயித்வா மஹாகபி: |
ஸம்ஶ்ரவே மது4ரம் வாக்யம் வைதே3ஹ்யா வ்யாஜஹார ஹ ‖ (1)

ஆஞ்ஜனேயர் இப்படி மேல் நடத்த வேண்டிய காரியத்தை அனேகவிதமாய் நிச்சயித்து, ஸீதைக்கு நன்றாகக் கேட்கும்படியான தூரத்திலிருந்து பின்வரும் மதுரமான வார்த்தைகளைச் சொன்னார். "இக்ஷ்வாகு குலத்தில் தசரதரென்று ஒரு ராஜா இருந்தார். அவருடைய சதுரங்க பலத்திற்கு எல்லையில்லை; புண்யத்தையே ஸ்வபாவமாக உடையவர்; விஸ்தாரமான கீர்த்தி பெற்றவர்; நியாய மார்க்கத்திலேயே நடப்பவர்; எல்லோராலும் கொண்டாடப் பட்டவர்; ராஜரிஷிகளுக்குள் குணங்களால் மேலானவர்; தவத்தில் ரிஷிகளைப் போன்றவர்; சக்கரவர்த்திகளுடைய வம்சத்தில்பிறந்தவர்; பராக்கிரமத்தில் இந்திரனுக்கு ஸமமானவர்; பிறர்க்கு ஹிம்ஸை செய்யாம

விருப்பதிலேயே பிரியமுள்ளவர்; பெருந்தன்மை பொருந்தினவர்; அளவற்ற கருணையுடையவர்; அவருடைய பராக்கிரமம் வீண் போகாது; இக்ஷ்வாகு குலத்து அரசர்களுக்குள் பிரதானமானவர்; ராஜ்யலக்ஷ்மி பொருந்தினவர்; அவரால் அந்த ராஜ்யத்திற்கு லக்ஷ்மீ கடாக்ஷம் விருத்தியாயிற்று; ஸகலராஜலக்ஷணங்களும் குறைவில்லாமல் பொருந்தினவர்; எல்லையற்ற ஜயலக்ஷ்மியால் விளங்கினவர்; ராஜஸிரேஷ்டர்; அவருடைய கீர்த்தி பரவாத இடமே பூமியில் இல்லை; தன்னை அண்டினவர்களுக்கு ஸகல ஸுகத்தையும் அளிப்பவர்; ஸகல ஸுகங்களையும் அனுபவித்தவர்; அவருடைய மூத்த குமாரனுக்கு ராமனென்று பெயர். தகப்பனுக்கு மிகவும் அருமையானவர்; பூர்ண சந்திரனைப் போன்ற முகத்தையுடையவர்; ஸகல சாஸ்திரங்களையும் அறிந்தவர்; ஸகல வில்லாளிகளுக்கும் மேலானவர்; தனக்குரிய தர்மத்தைக் குறைவற நடத்துகிறவர்; தன்னைச் சேர்ந்தவர்களை ரக்ஷிக்கிறவர்; ஸகலப் பிராணிகளுடைய தர்மங்களையும் ஸரியாய் நடத்தி வைப்பவர்; தன் தேஜஸாலேயே சத்துருக்களை எரிப்பவர்; வீரசிகாமணி. அவர் ஸத்தியம் தவருத தன் வயது சென்ற பிதா செய்த பிரதிக்ஞையை நிறைவேற்றத் தன் பத்னியோடும் தம்பியோடும் ராஜ்யத்தைவிட்டு வனத்திற்கு வந்தார். அங்கே வேட்டையாடும் பொழுது, இஷ்டமான ரூபத்தை எடுக்கக் கூடிய அனேக ராக்ஷஸ வீரர்களைக் கொன்ருர். கரதூஷணர்களும் ஜனஸ்தானத்திலுள்ள ராக்ஷஸர்களும் ராமனுல் மடிந்ததைக்கேட்டு ராவணன் கோபம் கொண்டு, பொன்மானென்ற மாயையால் ராமலக்ஷ்மணர்களை வஞ்சித்து, ராமனுடைய பாரியையான ஸீதையை அபகரித்தான். பிறகு ராமன் அவளைத் தேடிக்கொண்டு வருகையில், காட்டில் ஸுக்ரீவனென்ற வானரனுடன் ஸ்நேஹம் செய்தார். மஹாபலவானும் சத்துருக்களை வேரறுப்பவருமான ராமமூர்த்தி ஸுக்ரீவனுக்கு விரோதியான வாலி என்ற வானர ராஜனைக் கொன்று, தன் மித்திரனுக்கு அந்த ராஜ்யத்தைக் கொடுத்தார். பிறகு, ஸுக்ரீவன் தனக்குட்பட்ட வானரர்களைக் கட்டளையிட, நினைத்த ரூபத்தை எடுக்கக் கூடிய அந்த வீரர்கள் ஆயிரக்கணக்காக ஸகல திக்குகளிலும் ஸீதையைத் தேடுகிருர்கள். அவள் இங்கே இருக்கிருளென்று ஸம்பாதி என்ற கழுகு சொல்லக் கேட்டு, நானும் அவளைப் பார்க்க விரும்பி நூறுயோஜனை விஸ்தீர்ணமுள்ள இந்த ஸமுத்திரத்தை அதிவேகமாகத் தாண்டினேன். இங்கே தேடும்பொழுது என் பாக்கியவசத்தால் அவளைக் கண்டேன்! சரீரத்திலும் ரூபத்திலும் வர்ணத்திலும் காந்தியிலும் ராமன் எனக்கு வர்ணித்தது போலவே இருக்கிருள்" என்று முடித்தார்.

அதைக் கேட்டுக்கொண்டிருந்த ஜானகிக்கு உண்டான ஆச்சரியத்தைச் சொல்லி முடியாது. கறுத்து நீண்டு சுருண்டு நுனியில் கொஞ்சம் வளைந்த தலைமயிரையுடைய ஸீதை, பிராணனைப் போக்கிக்கொள்வதற்காகப் பின்னலால் சுற்றப்பட்ட முகத்தை நிமிர்த்தி, இவ்வளவு பிரியமான விஷயத்தைச் சொல்லுகிறவனுடைய ரூபம் எப்படியிருக்குமோ என்று, பயத்துடன் அந்தச் சிம்சுபாவிருக்ஷத்தைப் பார்த்தாள். அந்த வானர சிரேஷ்டனுடைய வார்த்தையைக் கேட்டு ஸகல திக்குகளையும் ஜாக்கிரதையாக கவனித்துக்கொண்டு, ஸர்வகாலத்திலும் ராமனையே தியானித்துக் கொண்டிருப்பவளாகையால் எல்லையற்ற ஆனந்தத்தை அடைந்தாள். பிறகு இரு பக்கங்களிலும் பார்த்தாள்; ராக்ஷஸிகள் தூங்கிக் கொண்டிருப்பதைத்தவிர வேறொருவரையும் காணவில்லை. நமது கஷ்டத்தைப் பார்த்துத் தேவ கணங்களில் யாராவது இரங்கி இந்த ஸமாசாரத்தைச் சொன்னுர்களோ?" என்று மேலேபார்த்தாள்; ஒருவரையும் காணும். "பாதாளலோகவாஸிகளில் யாராவது கருணை புரிந்து இந்த உபகாரத்தைச் செய்தார்களோ? என்னைப்பெற்ற பூமிதேவி தான் இப்படி ஆறுதல் செய்கிருளோ?" என்று கீழே பார்த்தாள். ஒன்றும் கண்ணில் படவில்லை. பிறகு மரக்கிளைகளைக் கவனித்துப் பார்க்கையில் ஏதோ ஒரு ரூபம் மஹாதேஜஸ் உள்ளதாகக் காணப்பட்டது. குரலைக்கொண்டு ஸகலலோக கண்டகனை ராவணனுடைய நகரத்தில் பிரவேசித்து, ஒருவருக்கும் தெரியாமல் எங்கும் தேடி, ராக்ஷஸர்களுடைய காவல்களைக் கடந்து, இந்த ராக்ஷஸிகளுக்கு நடுவிலிருக்கும் தன்னை அவர்களுக்குத் தெரியாமல் கண்டு பேசினவன் ஒப்பற்ற புத்திமானுக இருக்கவேண்டும். வணக்கமாயும் மிருதுவாயும் பேசுவதால் இவன் பிறர்க்குக் கீழ்ப்பட்டவன்; பேசும் திறமையால் சிறந்த யோசனை சொல்லக்கூடிய மந்திரி; இவனுடைய மதுரமான மங்களவாக்கியங்களால் நான் தற்கொலை செய்துகொள்வதிலிருந்து தப்பி உயிர் பெற்றேன்; நான் உயிரோடிருந்தால் ராமன் பிழைத்திருப்பார். ராமன் உயிருடனிருந்தால் ஸகல பிராணிகளும் ஜீவித்திருக்கும். இப்படி ஸகல ஜீவகோடிகளுக்கும் பிராணதானம் செய்த இவன், அவைகளுக்கு பிராணதாரமான வாயுபகவானுடைய புத்திரனுக இருக்கவேண்டும்; இவன் வானர ராஜனுல் ராஜகாரியமாக அனுப்பப்பட்ட தூதன்" என்று முடிவு செய்தாள். உதிக்கும் ஸூரியனுடைய வரவைத் தெரிவிக்கும் அருணனைப் போல் என் பிரிய நாதனை ராமமூர்த்தி வருவதைத் தெரிவிக்க வந்த தூதனே?" என்று ஆனந்தம் கொண்டாள்.

ஸா திர்யகூர்த்4வம் ச ததா2ப்யத4ஸ்தாத்
நிரீக்ஷமாணா தமசிந்த்ய பு3த்3தி4ம் |
த3த3ர்ஶ பிங்கா3தி4பதே ரமாத்யம்
வாதாத்மஜம் ஸூர்யமிவோத3யஸ்த2ம் ‖ (19)

## ஸர்க்கம் 32

# ஸீதையின் ஸந்தேகம்

*தத: ஶாகா²ந்தரே லீநம் த்³ருஷ்ட்வா சலிதமாநஸா |*
*வேஷ்டிதார்ஜுநவஸ்த்ரம் தம் வித்³யுத் ஸங்கா⁴த பிங்க³ளம் ‖ (1)*

**பி**றகு அந்த சிம்சுபாவிருக்ஷத்தில் மறைந்திருந்தவனைப் பார்க்கையில் அவன் வெண்மையான வஸ்திரத்தை உடுத்திருந்தான்; மின்னற் கொடிகளின் கூட்டங்களைப்போல் மஞ்சள் வர்ணமுள்ள தேகத்துடனும், உருக்கின தங்கத்தைப்போன்ற நேத்திரங்களுடனும், மலர்ந்த அசோக புஷ்பங்களின் கொத்துகளைப் போலும் இருக்கக் கண்டாள்; முதலில் ஸாமான்யமாய்ப் பார்த்துப் பிறகு கவனித்துப் பார்க்கையில், "நமக்குப் பிரியமான வார்த்தையைச் சொல்லும் இந்த ஜந்து மாயையாக இருக்குமோ" என்று பயத்தால் மனம் நடுங்கிற்று; நினைக்க நினைக்க ஆச்சரியம் அதிகரித்து "வானரங்களுக்கும் இந்தப் பயங்கரமான ரூபமும், இந்தத் தேஜஸும் எங்கேயாவது உண்டோ? கண்ணெடுத்துப் பார்க்கக் கூசுகின்றதே! ஆகையால் இது மாயைதான் என்று மறுபடியும் மயங்கினாள். பயத்தால் மோஹித்துத் துக்கம் மேலிட்டு "ராம! ராம! லக்ஷ்மண! என்னை இப்படிப் பட்ட கஷ்டங்களுக்கு உட்படுத்திக் கைவிட்டீர்களா" என்று பலவிதமாகக் கேட்போர் மனம் உருகும்படி பிரலாபித்தாள். ஆனால், "தெய்வானுக்ரஹத்தால் இவன் ராமதூதனாக இருந்தால், என் அழுகையைக்கேட்டு ராக்ஷஸிகள் விழித்துக்கொண்டு கண்டுபிடித்தால் என்ன செய்வேன்?' என்று மெதுவாய் அழுதாள். மிகவும் வணக்கமாய்த் தன் முன் உட்கார்ந்திருந்த அந்த வானரனைக்கண்டு, "ஒரு வேளை இது ஸ்வப்பனமோ' என்று ஸந்தேகித்தாள். பிறகு 'ஒரு வேளை எனக்கு அனுகூலத்தைச் செய்ய வந்தவனாய் ஏன் இருக்கக்கூடாது?" என்று அவனுடைய பருத்து வளைந்த முகத்தை உற்றுப் பார்த்தாள். ஸுக்ரீவ மஹாராஜாவின் முக்கிய மந்திரியும் அவருடைய ஆக்ஞையைத் தவறாமல் நடத்துகிறவனும், ஒப்பில்லாத புத்தியுடையவனுமான அந்த வாயுபுத்திரனைப் பார்க்கப்பார்க்க ஸீதை மெய்மறந்து உயிரிழந்தவளைப்போல் கீழே விழுந்தாள். வெகுநேரம் கழித்துப் பிரக்ஞை தெளிந்து, பின்வருமாறு யோசித்தாள்.

"ஸ்வப்பனத்தில் விகார ரூபமுள்ள இந்தக் குரங்கைக் கண்டேனே ஐயோ! ஸ்வப்னத்தில் குரங்கைக் கண்டால் பந்துக்களுக்கு நாசம் நேருமென்று சாஸ்திரத்தில் சொல்லியிருக்கிறதே. ராமலக்ஷ்மணர்களுக்கும் என் பிதாவான ஜனகமஹாராஜாவிற்கும் யாதொரு கஷ்டமும் நேராமலிருக்கட்டும்;' ஸகல மங்களங்களும் உண்டாகட்டும். இது ஸ்வப்பனமல்ல; தூங்கினாலல்லவா ஸ்வப்பனமுண்டாகும்? கவலையற்று ஸுகமாயிருந்தாலல்லவா தூக்கம் வரும்? சோகத்தாலும் துக்கத்தாலும் தவித்துக்கொண்டிருக்கும் எனக்கு ஸுகமேது? பூர்ணசந்திரனைப்போன்ற முகத்தையுடைய ராமனைப் பிரிந்த எனக்கு ஸுகமும் உண்டோ? எப்பொழுதும் ராம ராம என்று மனத்தால் நினைத்துக்கொண்டிருப்பதாலும், அந்த வார்த்தைகளையே எப்பொழுதும் வாயால் சொல்லிக்கொண்டிருப்பதாலும், அதற்குத் தகுந்த வார்த்தைகள் என் காதில் விழுகின்றன; அவைகளுக்குத் தகுந்த ரூபங்களும் என் கண்ணில் படுகின்றன. ராமனிடத்திலேயே என் ஸகல எண்ணங்களும் நாடியிருக்கின்றன; அவரிடத்திலேயே வைத்தஆசை என்னை எரிக்கின்றது; அவரைத் தவிர வேறொரு ஞாபகமும் எனக்கில்லை;ஆகையால்,அவைகளே என் இந்திரியங்களுக்குப் பிரத்யக்ஷமாய்த் தோன்றுகின்றன. ஆகையால் இது வாஸ்தவமல்ல; கேவலம் மனத்தால் கல்பிக்கப்பட்டதே. ஆனால் நன்றாய் யோசித்துப் பார்த்தால் அப்படி இருக்கவும் நியாயமில்லை. ஏனென்றால் மனத்தால் கல்பிக்கப்படும் பதார்த்தங்களுக்கு ஸ்தூல ரூபம் கிடையாது. இந்த வானரனுடைய ரூபம் ஸ்தூலமான கண்ணிற்கு நன்றாய்த்தெரிகிறது; இவனுடைய வார்த்தைகளும் நன்றாய்க் கேட்கப் படுகின்றன. எப்படியிருந்தாலும், இவன் சொல்லும் விஷயம் எனக்கு மிகுந்த ப்ரீதியைக் கொடுக்கின்றது. ஆகையால், அது வாஸ்தவமாக இருக்கும்படி, ப்ருஹஸ்பதி இந்திரன் ப்ரஹ்மா அக்னி முதலிய தேவதைகள் அனுக்கிரஹிக்கட்டும்; பொய்யாகக்கூடாது" என்று பிரார்த்தித்தாள்.

*நமோஸ்து வாசஸ்பதயே ஸவஜ்ரிணே*
*ஸ்வயம்பு⁴வே சைவ ஹுதாஶநாய ச |*
*அநேந சோக்தம் யதி³த³ம் மமாக்³ரத:*
*வநௌகஸா தச்ச த²தா²ஸ்து நாந்யதா² ‖ (14)*

---



## ஸர்க்கம் 33

# ஸீதை பதில் சொன்னது

*ஸோவதீர்ய த்³ருமாத் தஸ்மாத் வித்³ரும ப்ரதிமாநந: |*
*விநீதவேஷ: க்ருபண: ப்ரணிபத்யோபஸ்ருத்ய ச ‖ (1)*

**ப**வழத்தைப்போன்ற முகத்தையுடைய மஹாதேஜஸ்வியான மாருதி, அந்த மரத்திலிருந்து இறங்கி அதிக விநயத்துடன் ஸீதையின் ஸமீபத்தில் போய், தலைமேல் கைகூப்பி ஸாஷ்டாங்கமாய் நமஸ்கரித்து, அவள் படும் கஷ்டத்தைப் பார்த்துத் தானும் மனம் நொந்து, மதுரமான வாக்கியங்களால், "தாமரை இதழ்களைப் போன்ற நேத்திரங்களையுடையவளே! ஸகல விதத்திலும் உத்தமமானவளே! கிழிந்த பட்டை உடுத்துக்கொண்டு மரத்தின் கிளையைப் பிடித்துக்கொண்டு தாங்கள் நிற்பது முற்றிலும் ஒவ்வாததாக இருக்கிறது. தாங்கள் யார்? தாமரை இலையிலிருந்து நீர்த்துளிகள்

உதிர்வதுபோல் தங்களுடைய கண்களிலிருந்து துக்கத்தாலுண்டான ஜலம் ஏன் பெருகுகின்றது? ஆனந்த பாஷ்பத்தால் அலங்கரிக்கப்பட வேண்டிய தங்களுடைய நேத்திரங்கள் துக்கத்தால் தளும்புவது யாருடைய குலநாசத்திற்கோ? தேவ அஸுர கந்தர்வ ராக்ஷஸ யக்ஷ கின்னர கணங்களுக்குள் தாங்கள் யார்? தங்களைப் பார்த்தால் தேவஸ்த்ரீயைப் போலிருக்கிறது. ருத்திரர்கள் மருத்துக்கள் வஸுக்கள் முதலிய தேவதாகணங்களுக்குள் தாங்கள் யார்? நக்ஷத்திரங்களுக்குள் சிறந்தவளும் ஸமஸ்த உத்தம குணங்களோடு கூடினவளுமான ரோஹிணீதேவி சந்திரனை விட்டு ஸ்வர்க்கத்திலிருந்து பூமியில் வந்திருக்கிறாளோ? ஸகல மங்களங்களுக்கும் இருப்பிடமானவளே! தாங்கள் யார்? கோபத்தாலோ அறியாமையாலோ தங்களுடைய நாயகரான வஸிஷ்ட மஹரிஷியைக் கோபமூட்டி ஸ்வர்க்கத்திலிருந்து இங்கே வந்த அருந்ததியோ? தங்களுடைய புத்திரர்களாவது உடன் பிறந்தவர்களாவது பர்த்தாவாவது பரலோகத்தை அடைந்தார்களென்று துக்கிக்கிறீர்களோ? கண்ணீர் விடுவதாலும் பெருமூச்சாலும் பூமியில் பாதம்வைத்து நிற்பதாலும் தாங்கள் தேவ ஸ்த்ரீயல்ல. தங்களுக்கு ராஜலக்ஷணங்கள் நன்றாக அமைந்திருக்கின்றன. தங்களுடைய அவயவங்களின் லக்ஷணங்களாலும் கைகால்களிலுள்ள ரேகைகளாலும் தாங்கள் பட்ட மஹிஷி அல்லது ராஜகுமாரி என்று நினைக்கிறேன். அல்லது, ஜனஸ்தானத்திலிருந்து ராவணனால் எடுத்துவரப்பட்ட ஸீதையாக இருந்தால் தங்களுக்கு ஸகல மங்களங்களும் உண்டாகட்டும். தங்களுடைய நிஜஸ்திதியைத் தெரிந்து கொள்ள விரும்புகிறேன். தயவு செய்து சொல்லுங்கள். தங்களுடைய ஸௌந்தரியமும் தாங்கள் அனுபவிக்கும் கஷ்டமும் மனுஷ்யர்களுக்குள் பார்ப்பதரிது. வனத்தில் வஸிக்கும் தபஸ்விகளின் வேஷத்தைத் தரித்திருக்கிறீர்கள். ஆகையால், தாங்கள் ராகவனுடைய பாரியை என்று நிச்சயமாக எண்ணுகிறேன்'' என்றார்.

ஜானகி அதைக் கேட்டு ராமனைப் பற்றிய வார்த்தைகளால் ஸந்தோஷித்து, மரத்தடியிலிருக்கும் ஆஞ்ஜனேயரைப் பார்த்து "பூமியில் ராஜசிரேஷ்டர்களுக்குத் தலைவரும் மஹாவீரரும் ஆத்ம ஸ்வரூபத்தை அறிந்தவருமான தசரத சக்கரவர்த்திக்கு நான் நாட்டுப் பெண். விதேஹராஜாவான ஜனகரென்ற மஹாத்மாவுக்குப் பெண். புத்தியிற் சிறந்த ராமசந்திரனுக்குப் பாரியை. என் பெயர் ஸீதை. ராகவனுடைய கிருஹத்தில் பன்னிரண்டு வருஷங்கள் வரையில் மனுஷ்யர்கள் விரும்பக் கூடிய ஸகல போகங்களையும் அனுபவித்துக் கொண்டு ஸகல ஆசைகளும் நிறைவேறினவளாய் ஸுகித்தேன். பதின்மூன்றாவது வருஷத்தில் சக்கரவர்த்தியும் வஸிஷ்டமகரிஷியும் கலந்து ஆலோசித்து ரகுநந்தனனை யுவராஜாவாக அபிஷேகம் செய்ய நிச்சயித்தார்கள். அதற்கு வேண்டிய ஏற்பாடுகள் நடந்து கொண்டிருக்கையில், சக்கரவர்த்திக்கு பிரிய பாரியையான கைகேயி தன் பர்த்தாவைப் பார்த்து, "ராமனுக்கு அபிஷேகம்செய்தால் நான் அன்ன பானங்களைத் தொடமாட்டேன். நிச்சயமாய் உயிரை விடுவேன். நீர் முன்பு பிரியத்தால் எனக்குக் கொடுத்த வரங்களைப் பூர்த்தி செய்ய இஷ்டமிருந்தால் ராமனை வனத்திற்கு அனுப்பும்'' என்றாள்.

தசரதர் ஸத்தியம்தவறாதவர்; கைகேயிதனக்குப் பிரியமில்லாத குரூர வாக்கியங்களைச் சொல்லக் கேட்டுத் தான் அவளுக்குக் கொடுத்த வரங்களையும் நினைத்து மதிமயங்கினார். மிகவும் வயது சென்றவர்; ஸத்தியத்தையும் தர்மத்தையும் காப்பாற்றுகிறவர்; ஆகையால் கோ என்று கதறிக் கொண்டு மஹாகீர்த்திமானான மூத்த புத்திரனைப் பார்த்து, "ராம! குலாசாரத்தாலும், யோக்கியதையாலும், என் பிரதிக்ஞையாலும் உனக்கு நியாயமாகக் கிடைக்கவேண்டிய ராஜ்யத்தை உன்னிடத்திலிருந்து யாசிக்கிறேன்'' என்றார். ஸாதாரண ஜனங்களுக்குத் துக்கமும் காந்திக் குறைவும் நேரும் ஸமயங்களில் ராமனுக்குஉத்ஸாகமும் ஸந்தோஷமும் காந்தியும் விருத்தியாகும். ராஜ்யத்தை ஆள்வதை விடப் பிதாவின் பிரதிக்ஞையை நிறைவேற்றுவது சிரேஷ்டமென்று நிச்சயித்து, "தங்கள் உத்திரவுப்படி நடக்கிறேன்'' என்றார். "நம்மைக் கேட்டவுடன் தடையில்லாமல் கொடுத்துவிட வேண்டும். ஜீவனத்திற்குவேண்டிய ஸாதனங்களைக் கூட மறுபடியும் கேட்டு வாங்கக்கூடாது. மாதா பிதாக்களுக்கு பிரியமில்லாத வார்த்தையைச் சொல்லக்கூடாது'' என்பது ராமனுடைய விரதம்; வீண்போகாத பராக்கிரமசாலியல்லவா? ஆகையால், உத்தரீயங்களையும் விலையற்ற ஆபரணங்களையும் கழற்றி, ராஜ்யத்தை மனத்தால் தத்தம் செய்து, என்னைக் கௌஸல்யாதேவியுடன் வஸிக்கும்படி கட்டளையிட்டார்; அவருடைய கீர்த்திக்கு எல்லையும் உண்டோ? ஆனால், அவரைவிட்டு ஸ்வர்க்கத்திலும் வஸிக்க எனக்கு மனம் வருமா? ஆகையால், அவருக்கு முன்பாகவே சீக்கிரமாய் வனவாஸத்திற்கு வேண்டிய ஏற்பாடுகளுடன் பிரயாணம் புறப்பட்டேன். மஹாபாக்கியசாலியும் மித்திரர்களுக்கு ஆனந்தத்தைக் கொடுப்பவரும், உத்தமியான ஸுமித்திரையின் புத்திரருமான லக்ஷ்மணன் ராமனைப் பின் தொடர்ந்து கிருதார்த்தனாக வேண்டுமென்று அதிசீக்கிரமாய் மான்தோல் மரவுரி முதலியவைகளைத் தரித்துக் கொண்டார்.

அபிஷேகம் தடைப்பட்டதையே தனக்கும் பரம லாபமாக நினைத்து, "தங்களுக்கு ஸகலவித கைங்கரியங்களையும் எக்காலத்திலும் செய்வேன்'' என்ற பிரதிக்ஞை செய்தபடி, புருஷோத்தமனாக ரக்ஷணத்திற்காக மனுஷ்யாவதாரம் எடுத்த பொழுது மற்றவர்களுக்குக் கிடைக்காத கைங்கரிய பாக்கியத்தைப் பெற்றவர். "நீ ராமனுடன் வனத்திற்குச் சென்று அவருக்குத் தாஸனாயிருக்க வேண்டுமென்றே நீ பிறந்தவனன்றோ'' என்றுசொன்ன ஸுமித்திரையின்

புத்திரன்;"நமக்கு அப்படிப்பட்ட பாக்கியம் கிடைக்கா விட்டாலும் நமது மித்திரனை லக்ஷ்மணன் அதைப் பெற்றானல்லவா" என்று ஸ்நேஹிதர்கள் ஸந்தோஷித்தார்கள்.

நாங்கள் சக்கரவர்த்தியின் உத்திரவுப்படி அங்கிருந்து புறப்பட்டு வனவாஸம் செய்ய நிச்சயித்தவர்களாய்ப் பார்க்கப் பயங்கரமான தண்டகாரண்யத்தில் பிரவேசித்தோம்; அதுவரையிலும் அதைக் கண்டதே இல்லை. நாங்கள் அங்கே வஸித்துக் கொண்டிருக்கும் பொழுது ராவணன் ராமனுடைய அபாரதேஜஸை அறியாமல், கெட்ட புத்தியால் அவருடைய பாரியையான என்னை அபகரித்தான். அவன் கெடுவிட்ட காலத்தில் இன்னும் இரண்டு மாதங்கள் பாக்கி இருக்கின்றன. பிறகு நான் உயிரை விடுவேன்" என்றாள்.

த்³வௌ மாஸௌ தேந மே காலோ
ஜீவிதாநுக்³ரஹ: க்ருத: |
ஊர்த்⁴வம் த்³வாப்⁴யாம் து மாஸாப்⁴யாம்
ததஸ் த்யக்ஷ்யாமி ஜீவிதம் ‖ (31)

## ஸர்க்கம் 34

## மாருதி ராமனுடைய வரலாற்றைச் சொன்னது

தஸ்யாஸ் தத்³வசநம் ஶ்ருத்வா ஹநுமாந் ஹரியூத²ப: |
து³க்காத்³ து³க்காபி⁴பூ⁴தாயா: ஸாந்த்வமுத்தர மப்³ரவீத் ‖ (1)

ஓய்வில்லாமல் ஸமுத்திரத்தின் அலைகள்போல் துக்கத்தால் பீடிக்கப்படும் ஸீதை இப்படிச் சொல்லக் கேட்டு, ஹனுமான் அவளுக்கு ஆறுதலுண்டாகும்படி பதில் சொன்னார். "ஸ்ரீராகவன் க்ஷேமமாக இருக்கிறார். அதைத் தங்களிடத்தில் தெரிவிக்கும்படி என்னை இங்கேஅனுப்பினார். தங்களுடைய விருத்தாந்தத்தைஅறிந்து அவரிடத்தில் சொல்வதற்காக வந்தேன். பிரஹ்மாஸ்திரத்தையும் வேதங்களையும் நன்றாயறிந்தவரும் அவைகளின் தத்வார்த்தத்தைத் தெரிந்தவர்களுக்குள் சிரேஷ்டருமான ராமன் தன் க்ஷேமத்தைத் தங்களிடத்தில் சொல்லச்சொன்னார். அவருடைய தம்பி லக்ஷ்மணன் தங்களுக்கு நேர்ந்த கஷ்டத்தை நினைத்து நினைத்து வியஸனமடைந்து தங்களுக்கு ஸாஷ்டாங்க நமஸ்காரம் செய்தார்; அவர் மஹா தேஜஸ்வி என்றும் ராமனுக்கு மிகவும் அருமையானவரென்றும், அவருக்கு ஸகல கைங்கரியத்தையும் செய்யப் பெற்றவரென்றும் தங்களுக்குத் தெரியுமே" என்றார்.

புருஷ சிரேஷ்டர்களான ராமலக்ஷ்மணர்கள் க்ஷேமமாக இருக்கிறார்களென்று கேட்டு, பிரியத்தால் அவயவங்கள் மயிர்க் கூச்சமடைய, ஸீதை ஆஞ்ஜனேயரைப் பார்த்து, "என்ன ஆச்சரியம்! ஒருவன் பிழைத்து மாத்திரமிருந்தால் நூறு வருஷங்களுக்குப் பிறகாவது ஸந்தோஷத்தை அனுபவிக்காமல் இருக்க மாட்டான்"என்ற லோகவார்த்தை என் விஷயத்தில் வாஸ்தவமாயிற்று" என்றாள். பிறகு தன்னிடத்தில் தூதனாக வந்த ஹனுமாரிடத்தில் ஸீதைக்கு ஆச்சரியகரமான பிரீதியுண்டாயிற்று; அவ்விருவரும் வெகு நம்பிக்கையாய்ப் பேசிக் கொண்டார்கள்.



ஸீதை இப்படிச் சொல்லக் கேட்டு, ஹனுமான் சோகத்தால் வாடியிருக்கும் இவளை இன்னும் தேற்ற வேண்டு மென்று ஸமீபத்தில் வர ஆரம்பித்தார். உடனே ஸீதைக்கு சந்தேகம் பிறந்து அவர் வர வர ராவணனென்றே எண்ணினாள். "ஐயோ! புத்தி மயங்கி இவனிடத்தில் கபடமில்லாமல் என் மனத்திலுள்ள விஷயங்களைச் சொல்லி விட்டேனே. என்னைப் போல் முட்டாளுண்டோ? என்னை வஞ்சகமாய் அபகரித்த ராவணனே மாறுவேஷம் கொண்டு இப்படி வந்திருக்கிறான் என்று அந்த மரத்தின் கிளையை விட்டு, வருத்தம் மேலிட்டுப் பூமியில் உட்கார்ந்தாள். பயத்தாலும் துக்கத்தாலும் அவள் புத்தி ஸ்வாதீன மற்றிருப்பதை ஆஞ்ஜனேயர் அறிந்து அவளை நமஸ்கரித்தார். ஆனால் ஜானகி பயத்தால் மிரண்டு அவரைத் திரும்பிப் பார்க்கவே இல்லை.

சற்று நேரம் கழித்து அவர் அப்படியே தலையில் கை கூப்பி வணக்கமாய் நிற்பதைக் கண்டு ஸீதை பெருமூச்சு விட்டு, நீ "ஸகல மாயைகளையும் அறிந்த ராவணனாகவே இருந்து, இந்த ரூபத்தை எடுத்து வந்திருந்தால், பலவித துக்கங்களால் வாடியிருக்கும் என்னை இன்னும் உபத்திரவிப்பது க்ஷேமகரமல்ல. தண்ட காரண்யத்தில் கபட ஸன்யாஸிவேஷம் தரித்து என்னை மோசம் செய்த துஷ்டனல்லவா? நினைத்த ரூபத்தை எடுக்கக் கூடிய உனக்கு இது மிகவும் ஸுலபம். ஆனால் ஆகாரமில்லாமல் இளைத்து மனம் நொந்திருக்கும் என்னை மறுபடியும் கஷ்டப் படுத்துவது உனக்கு நன்மையன்று.

ஐயோ! நான் இப்படி ஸந்தேகிப்பதும் ஸரியல்ல. உன்னைப் பார்க்கையில் எனக்கு எல்லையற்ற பிரீதியுண்டாகிறது. ஆகையால் நீ ராவணனாக இருக்க மாட்டாய். நீ நிஜமாகவே ராமனால் என்னிடத்தில் அனுப்பப்பட்ட தூதனாயிருந்தால் உனக்கு மங்களங்களுண்டாகட்டும். ரகுநாதனுடைய சரிதங்களைக் கேட்பது எனக்கு மிகவும் பிரியம். ஆகையால் உன்னைக் கேட்கிறேன். என் பிராணநாதனை ராமமூர்த்தியின் குணங்களைச் சொல். ஜலப்பிரவாஹம் ஆற்றங்கரையை அறுப்பதுபோல் என் மனத்தை வரவர கவர்கின்றாய்.

இருக்கட்டும். இவ்வளவு காலங்கழித்துப் பயங்கரமான ஸமுத்திரத்தைத் தாண்டி நான் இருக்குமிடத்தைக் கண்டு பிடித்துக் காற்றும் நுழையமுடியாத இந்த லங்காபுரியில் ராமனிடத்திலிருந்து

தூதன் வருவதற்கு நியாயமில்லை. ஆகையால், இது ஸ்வப்பனமே. ஆனாலும் மிகவும் ஸுகமான ஸ்வப்பனம். என்னை அபகரித்த இவ்வளவு காலத்திற்குப் பிறகு ராமனால் அனுப்பப்பட்ட ஒரு தூதனைப் பார்க்கவும் என் நாயகனுடைய விருத்தாந்தத்தை அவன் சொல்லக் கேட்கவும் கிடைத்தது. என்ன ஆச்சரியம்! இப்படியே இந்த ஸ்வப்பனத்தில் ராமலக்ஷ்மணர்களையும் பார்க்கக் கிடைத்தால் என் துக்கமெல்லாம் தீர்ந்து ஸந்தோஷிப்பேன். ஸ்வப்பனமும் எனக்குச் சத்துருவாய் நிற்கிறதே!

இது ஸ்வப்பனமாய் இருக்க நியாயமில்லை. ஸ்வப்பனத்தில் குரங்கைக் கண்டால் கெடுதி விளையுமென்று சொல்லுகிறார்கள். எனக்கோ பரமலாபம் கிடைத்திருக்கிறது. ஒருவேளை சித்தப் பிரமையோ ? வாதபித்தங்களின் விகாரமோ ? பைத்தியத்தின் காரியமோ? கானல் நீர்ப்போல் பொய்யோ? ராமன் க்ஷேமமாக இருக்கிறாரென்று கேட்பதில் எனக்குள்ள ஆசையும் எப்பொழுதும் அவருடைய தியானமும் சேர்ந்து இப்படி என் மனத்தில் மோஹமுண்டாக்கிற்றோ? அன்னபானமும் நித்திரையும் இல்லாமல் தேகத்திலுள்ள தாதுக்கள் விகாரமடைந்து இப்படித் தோன்றுகிறதோ? நாயகனை விட்டுப் பிரிந்தவர்களுக்கு நேரும் அவஸ்தைகளுக்குள் ஒன்றான உன்மாதம் (பைத்தியம்) என்ற அவஸ்தையோ? ஒரு பதார்த்தத்தை வேறொன்றாகத் தோற்றுவிக்கும் கானல் நீர்போன்ற விபரீத ஞானமோ? இது உன்மாதமாயிருக்க நியாயமில்லை. பிரமை என்பது நிஜமானால் அதைப் போக்கக் கூடிய வஸ்து இருக்க வேண்டும். மேலும், மோஹம் கொண்டவர்களும் பைத்தியம் பிடித்தவர்களும் தாங்கள் இன்னாரென்றும் இன்னது செய்கிறார்களென்றும் பிறர் இன்னாரென்றும் இன்னது செய்கிறார்களென்றும் அறியார்கள். இருக்கும் வஸ்துக்களை இல்லை என்றும், இல்லாதவஸ்துக்களை இருக்கின்றன என்றும் நினைத்து நடப்பார்கள். எனக்கு அப்படியில்லையே. என் ஸ்வரூபமும் எனக்கு ஸமீபத்திலிருக்கும் இந்தவானரனுடைய ஸ்வரூபமும் நன்றாய் விளங்குகின்றன. முன் சொன்ன நான்கு அவஸ்தைகளும் நீங்கும்; இது நீங்காமல் ஸ்திரமாக இருக்கிறது. மேலும் அவைகளுக்கு அவிவேகமே ஆதாரம்; எனக்கோ விவேகம் பூர்ணமாயிருக்கிறது'' என்று நிச்சயித்து, மேற் சொன்னவைகளின் பலாபலங்களைப் பரிசோதித்து, "இவன் நினைத்த ரூபங்களை எடுக்கக் கூடிய ராவணனே'' என்று தீர்மானித்தாள். ஆகையால், ஹனுமானைத் திரும்பிப் பார்த்துப் பதில் சொல்லவில்லை.

அவரும் ஸீதையின் எண்ணத்தை அறிந்து, கேட்பதற்கு இனிமையான வார்த்தைகளால் அவளுடைய மனத்தை ஸந்தோஷப் படுத்தினார். "லோகத்தில் ஒரு மஹானுபாவர் இருக்கிறார். அவர் தேஜஸில் ஸூரியனைப் போலும், ஸகலப் பிராணிகளுக்கும் ஆனந்தத்தைக் கொடுப்பதில் சந்திரனைப்போலவும் ஸகல ராஜாக்களுக்கும் பிரபுவாயிருப்பதில் குபேரனைப் போலும், கீர்த்தியிலும் பராக்கிரமத்திலும் மஹாவிஷ்ணுவைப் போலும், புத்தியில் பிருஹஸ்பதியைப் போலும், ஸௌந்தரியத்தில் மன்மதனைப் போலும் இருப்பவர். ஸத்தியமாயும் மதுரமாயும் பேசுகிறவர். ரமணீயமாயும் காந்தி பொருந்தியும் இருக்கும் பார்வையை உடையவர். இடமறிந்து கோபித்து சத்ருக்களை நாசம்செய்பவர். அவருக்கு மேலானவரில்லை; மஹாரதர். இந்த பிரபஞ்சம் முழுவதும் அவருடைய பராக்கிரமத்தின் நிழலில் கவலையற்று வஸிக்கிறது. பொன்மானைக் கொண்டு அவரை ஆசிரமத்திலிருந்து அப்புறப்படுத்தி அவரில்லாத ஸமயத்தில் ராவணன் தங்களை அபகரித்தான். அதற்காக அவனுக்குக் கிடைக்கும் பலனை அதிசீக்கிரத்தில் பார்ப்பீர்கள். கொஞ்சகாலத்திற்குள் அவர் கோபம் கொண்டு ஜ்வலிக்கும் அக்னிக் கொழுந்துகளைப் போன்ற பாணங்களால் ராவணனை யுத்தத்தில் வதம் செய்வார். நான் அவரால் தங்களிடத்திற்கு அனுப்பப்பட்ட தூதனாய் வந்திருக்கிறேன். தங்களைப் பிரிந்து வியஸனத்தால் பீடிக்கப்பட்டு தங்களுடைய க்ஷேமஸமாசாரத்தைத் தெரிந்து வரும்படி என்னை அனுப்பினார். மஹாதேஜஸ்வியும் பராக்கிரமசாலியும் ஸுமித்திரையின் பாக்கிய ரூபமான லக்ஷ்மணன் தங்களுக்கு நமஸ்கரித்து க்ஷேமத்தைத் தெரிந்து வரும்படி சொன்னார். ராமனுக்கு முக்கிய ஸ்நேகிதரும் வானராதிபதியுமான ஸுக்ரீவ மஹாராஜா தங்களுடைய க்ஷேமத்தை விசாரித்துவரும்படி சொன்னார். ராமனும் லக்ஷ்மணனும் ஸுக்ரீவனும் எப்பொழுதும் தங்களை ஸ்மரித்துக் கொண்டிருக்கிறார்கள். ராக்ஷஸிகளின் வசத்தில் அகப்பட்டும் தாங்கள் பிழைத்திருப்பது தெய்வானுக்கிரஹம்தான். அபார பலமுள்ள ராமரும் லக்ஷ்மணனும் ஸுக்ரீவனும் கணக்கில்லாத வானரஸேனைகளுக்கு நடுவில்ஒப்பற்ற தேஜஸுடன் விளங்குவதை அதி சீக்கிரத்தில் பார்ப்பீர்கள். நான் ஸுக்ரீவ மஹாராஜாவின் மந்திரி; என் பெயர் ஹனுமான். இந்த ஸமுத்திரத்தைத் தாண்டி லங்கையில் பிரவேசித்துத் தங்களைத் தேடிவந்தேன். ராமனுடைய கிருபையால் எனக்குள்ள பராக்கிரமத்தை ஆதாரமாய்க் கொண்டு துஷ்டனான ராவணனுடைய தலையில் அடிவைத்து அவனை அலக்ஷ்யம் செய்து தங்களைப் பார்க்க வந்தேன். தாங்கள் ஸந்தேகிக்கிறபடி நான் ராவணனல்ல. இந்தப் பிசகான அபிப்ராயத்தை விட்டு விடுங்கள்; என் வார்த்தையில் நம்பிக்கை வையுங்கள்'' என்றார்.

நாஹமஸ்மி ததா2 தே3வி யதா2 மாமவக3ச்ச2ஸி |
விஶங்கா த்யஜ்யதாமேஷா ஶ்ரத்3த4த்ஸ்வ வத3தோ மம || (40)

## ஸர்க்கம் 35

## மாருதி ராமனுடைய வரலாற்றைச் சொன்னது (தொடர்ச்சி)

தாம் து ராமகதா²ம் ஶ்ருத்வா வைதே³ஹீ வாநரர்ஷபா⁴த் |
உவாச வசநம் ஸாந்த்வ மித³ம் மது⁴ரயா கி³ரா || (1)

ராகவனுடைய சரித்திரத்தை வானர சிரேஷ்டன் வர்ணிக்கக் கேட்டு, ஸீதை மதுரமான வாக்கியங்களால் ஆஞ்ஜனேயரைப் பார்த்து, "ராகவனுக்கும் உனக்கும் ஸம்பந்தம் ஏற்பட்டதெப்படி? லக்ஷ்மணனை உனக்கு எப்படித் தெரியும்? மனிதர்களுக்கும் வானரர்களுக்கும் சேர்க்கை எப்படி நேர்ந்தது? ராமலக்ஷ்மணர்களுடைய அடையாளங்களை மறுபடியும் நன்றாய் வர்ணி. அவர்களுடைய அவயவப் பொருத்தங்களையும் ரூபங்களையும் துடைகளையும் புஜங்களையும் விஸ்தாரமாய் வர்ணித்தால் உன்னிடத்தில் எனக்கு நம்பிக்கை பிறந்து துக்கம் தீரும்" என்றாள்.

அதைக்கேட்டு ஹநுமான் ராமனுடைய லக்ஷணங்களைத் தான் அறிந்தவரையில் வர்ணிக்க ஆரம்பித்தார். "அம்மா! நான் ராம தூதன் என்றறிந்து ராவணனென்ற ஸந்தேகத்தை விட்டு என்னை ராமலக்ஷ்மணர்களுடைய அடையாளங்களைக் கேட்பதால் நான் பார்த்தறிந்தவரையில் தெரிவிக்கிறேன். கவனத்துடன் கேட்க வேண்டும். ராமனுடைய ஸகல அவயவங்களும் வெகு ஸுந்தரமாக இருந்தாலும் செந்தாமரை இதழ்கள் போன்ற அவருடைய நேத்திரங்களின் அழகை என்ன சொல்வேன்! அவை காந்தி என்ற பிரவாஹத்தில் ஆழ்ந்த சுழல்களைப்போல் ஸமஸ்த பிராணிகளுடைய மனத்தையும் அபகரிக்கின்றன. மரத்திற்கு மரம் தாவிக் கொண்டு நன்மை தீமை தெரியாத கேவலம் குரங்கான என்னையும் மயக்குகின்றன. அவருடைய தேகத்திலும் புத்தியிலும் அனந்த கல்யாண குணங்கள் குடி கொண்டிருக்கின்றன, அவை அவருக்கு ஸ்வபாவமானவை. என்னைப் பரீக்ஷிக்கும் தங்களுக்கல்லவா அவைகளின் விஷயம் தெரியும்? யோகத்தாலும் தவத்தாலும் ஸகல காமங்களையும் அடக்கின மஹரிஷிகளும் அவரைக் கண்டு பிரமிக்கிறார்கள்.

தேஜஸில் ஸூரியனுக்கும், பொறுமையில் பூமி தேவிக்கும், புத்தியில் பிருஹஸ்பதிக்கும், கீர்த்தியில் தேவேந்திரனுக்கும் ஸமமானவர். ஸகல பிராணிகளையும் ரக்ஷிப்பவர். தன்னை அண்டினவர்களுக்கு யாதொரு துக்கமும் நேராமல் காப்பாற்றுகிறவர். தன்னுடைய ஆசாரத்தையும் தர்மத்தையும் குறைவில்லாமல் நடத்துகிறவர். சத்துருக்களை வேரறுப்பவர். நான்கு வர்ணத்தார்களையும் தன்னைப்போல் காப்பாற்றுகிறவர். லோகத்தார்கள் ஆசரிக்கவேண்டிய ஸகல தர்மங்களையும் ஏற்படுத்தி அவைகளைக் குறை வில்லாமல் நடத்தி வைக்கிறவர். மஹாதேஜஸ்வி; எல்லோராலும் பூஜிக்கப்படுகிறவர். பிரஹ்மசரிய விரதத்தை அனுஷ்டிக்கிறவர். ஸாதுக்களுக்கு உபகாரம் செய்யவேண்டிய காலமறிந்தவர். கர்மங்களுடைய ஹேதுவையும், அநுஷ்டானத்தையும் பலன்களையும் நிஜமாய் அறிந்தவர். ஆன்வீக்ஷிகீ, த்ரயீ, வார்த்தா, தண்ட நீதி என்ற நான்கு ராஜவித்யைகளையும் பூர்ணமாக அறிந்தவர். பிராம்மணர்களைப் பக்தியுடன் உபாஸிப்பவர். சாஸ்திரார்த்தங்களை ஸந்தேக விபரீதமில்லாமல் பெரியோர்களிடத்தில் கேட்பவர்; அதற்குத் தகுந்த ஆசாரமுடையவர்; விநயத்தையே பூஷணமாகக் கொண்டவர்; தனது சாகையான யஜுர்வேதத்தில் ஸமர்த்தர்; வேத ரஹஸ்யங்களை அறிந்தவர்களால் பூஜிக்கப் பட்டவர்; தனுர்வேதத்திலும் இதர வேதங்களிலும் வேதாங்கங்களிலும் நிபுணர்.

விசாலமான தோள்களையும் பருத்து நீண்ட புஜங்களையும் சங்கம் போன்ற கழுத்தையும் மங்களகரமான முகத்தையும் மாமிஸத்தால் மறைந்த கழுத்தெலும்புகளையும் செந்தாமரை யிதழ்களைப் போல் மிகவும் சிவந்த நேத்திரங்களையும் துந்துபியின் த்வனியைப் போன்ற குரலையும் சியாமள வர்ணத்தையும் ஏற்றக் குறைவில்லாத சரீரத்தையும் பொருத்தமாய் அமைக்கப்பட்ட அங்கங்களையும் உடையவர்; பிரதாபசாலி. இப்படிப்பட்ட திவ்விய மங்களவிக்கிரஹத்தை உடையவரென்பது லோகப் பிரஸித்தம். மார்பு மணிக்கட்டு முஷ்டி இவை மூன்றும் கெட்டியாயும்; புருவம், புஜம், விருஷணம் இவை மூன்றும் நீளமாயும்; மயிர் நுனியும் விருஷணங்களும் முழங்கால்களும் ஏற்றக்குறைவில்லாமல் ஸமமாயும்; நாபி வயிறு மார்பு இம்மூன்றும் உயர்ந்தும்; உள்ளங்கை கடைக்கண் உள்ளங்கால் இம்மூன்றும் சிவந்தும்; பாதரேகை தலைமயிர்கள் ஆண்குறி இம்மூன்றும் மழமழப்பாயும்; த்வனி தேகவலிமை நாபி இம்மூன்றும் கம்பீரமாயும்; கழுத்து வயிறு இவ்விரண்டும் மூன்று ரேகைகளுடன் கூடினதாயும்; ஸ்தனம் ஸ்தனத்தின் காம்பு பாதரேகை இம் மூன்றும் உள்ளாழ்ந்தும்; நரம்பு வெளியில் தெரியாத பாதங்களையும், ஒரே மயிரையுடைய மயிர்க்கால்களையும், சிறிய ஆண்குறியையும், மாம்ஸம் தோற்றாத அடிவயிற்றையும் உடையவராயும்; ஏற்றக் குறைவின்றி ஸமமாய்க் குடைபோல் வட்டமாய் விசாலமுள்ள சிரஸையுடையவராயும்; கட்டை விரலினடியில் நான்கு ரேகைகளையுடையவராயும்; 96 அங்குலங்களடங்கிய நான்கு முழம் தேகப் பிரமாணமுடையவராயும்; புஜங்கள், முழங்கால், துடை, கன்னம் இந்த நான்கும் ஸமமாயும்; புருவங்கள், மூக்கின் துவாரங்கள், காதுகள், உதடுகள், முலைக்காம்புகள், முழங்கைகள், மணிக்கட்டுகள், முழங்கால்கள், விருஷணங்கள், இடுப்புகள், கைகள், கால்கள், பின்பாகங்கள், இந்தப் பதினான்கும் ஏற்றக்குறை வில்லாமலும்; இரண்டு பல்வரிசைகளும் உரத்து வழ வழப்பாய்க் கோரப் பற்கள் போன்ற நான்கு தந்தங்களையுடையவராயும்; யானை ஸிம்

ஹம் புலி காளை இவைகளைப்போல் நடையுள்ளவராயும் வேங்கைப் புஷ்பங்கள் போலவும் கோவைக்கனி போலவும் சிவந்து அழுத்தமான உதட்டையும், மாம்ஸம் நிறைந்த கன்னங்களையும், உயர்ந்த மூக்கையும் உடையவராயும்; தலைமயிர், கண்கள், பற்கள், தோல், உள்ளங்கால் மிருதுவாயும்; சரீரம், பின்புறம், கை, கால், விரல், கண், காது, ஆண்குறி நீண்டும்; முகம், வாய், கண்கள், நாக்கு, உதடு, தாடை, ஸ்தனம், நகம், கை, கால் தாமரைப் புஷ்பம்போல் சிவந்தும்; மார்பு, தலை, முகம், கழுத்து, புஜம், தோள், நாபி, இடபுறம், பின்புறம், த்வனி கம்பீரமாயும் விசாலமாயும்; தேஜஸா லும் கீர்த்தியாலும் ஸம்பத்தாலும் பிரஸித்தி யடைந்தவராயும் கண்களிலும் பற்களிலும் வெளுப்புடையவராயும்; கக்ஷம், வயிறு மார்பு, மூக்கு, தோள், முகம் உயர்ந்தும்; தலைமயிர், மீசை, நகம், மயிர், தோல், கட்டைவிரல், ஆண்குறி, புத்தி, இவை ஸூக்ஷ்மமாயும்; முன்பகல் நடுப்பகல் பிற்பகல் இம்மூன்று காலங்களிலும் அவைகளுக்கு உசிதமான தர்மங்களை அனுஷ்டிப்பவராயும்; ஸத்தியத்திலும் தர்மத்திலும் பிரியமுள்ளவராயும்; தனத்தைஸம்பாதிப்பதிலும், பிறருக்குக் கொடுப்பதிலும் பிரியமுள்ளவராயும்; தேச காலங்களையும் அவைகளின் உபயோகங்களையும் நன்றாகஅறிந்தவராயும்; ஸமஸ்தப் பிராணிகளுக்கும் பிரியமான வார்த்தையையே சொல்லுகிறவராயும்; ஸகல ஐச்வரியலக்ஷ்மி பொருந்தினவராயும்; இன்னும்உத்தம புருஷர்களுக்குரிய ஸகல லக்ஷணங்களுக்கும் வாஸஸ்தானமாயும் இருப்பவர்.

ஸுமித்ரைக்குப் பிறந்து, கௌஸல்யையால் வளர்க்கப்பட்ட லக்ஷ்மணன் பிறரால் ஜயிக்கமுடியாதவர்; அன்பிலும் ஸௌந்தரியத்திலும் குணங்களிலும் ராமனைப் போன்றவர். அவ்விருவரும் எல்லாவிடங்களிலும் தங்களைத் தேடிக்கொண்டு வருகையில் எங்களைக் கண்டார்கள். வானர ராஜாவான ஸுக்ரீவன், வாலி என்ற தமையனால் ராஜ்யத்திலிருந்து துரத்தப்பட்டு பயந்து, மரங்களால் சூழப்பட்ட ரிசியமூகபர்வதத்தின் பின்பாகத்தில் ஒளிந்துகொண்டிருந்தார். பிரியமான பார்வை உடையவரும், சொன்ன சொல்லைத் தவறாதவருமான ஸுக்ரீவனை நாங்கள் அண்டியிருக்கிறோம். ராம லக்ஷ்மணர்கள் அவரைத் தேடிக்கொண்டு தபஸ்வி வேஷத்துடன் ஆயுதபாணிகளாய் நாங்களிருக்குமிடத்திற்கு வந்தார்கள். அவர்களைக் கண்டு ஸுக்ரீவன் பயத்தால் மெய் மறந்து அங்கிருந்து தாவி ஓடிப்போனார். பிறகு வேறிடத்தில் மறைந்திருந்து அவருடைய விருத்தாந்தத்தை அறிந்துவரும்படி என்னை அவர்களிடத்தில் அனுப்பினார். ரூபத்தாலும் லக்ஷணங்களாலும் அலங்கரிக்கப்பட்ட அந்தப் புருஷ சிரேஷ்டர்களை நான் மஹாராஜாவின் ஆக்ஞையால் கைகூப்பி நமஸ்கரித்து, அவர்களுடைய விருத்தாந்தத்தைக் கேட்டறிந்து எங்களுடைய ஸ்திதியையும்



உத்தேசத்தையும் வணக்கமாய்த் தெரிவித்தேன். பிறகு என்னிடத்திலும் ஸுக்ரீவனிடத்திலும் பிரீதி உண்டாகி அவர்கள் என் முதுகிலேறிக்கொண்டு வானர ராஜனிருக்குமிடத்திற்கு வந்தார்கள், அந்த மஹாத்மாக்களின் விருத்தாந்தங்களை யதார்த்தமாய் ஸுக்ரீவனுக்குச் சொன்னேன். பிறகு அவர்கள் கலந்து பேசிக்கொண்டு, பூர்வ விருத்தாந்தங்களைத் தெரிவித்து, விசுவாஸமும் பிரீதியும் விருத்தியாய், ஒருவர்க்கொருவர் தேற்றிக் கொண்டார்கள். பலவானான வாலியால் ஒரு ஸ்த்ரீ விஷயமாய் ராஜ்யத்திலிருந்து துரத்தப்பட்ட ஸுக்ரீவனை ராமன் ஸமாதானம் செய்தார்.

பிறகு ராவணன் தங்களை அபகரித்ததையும் குற்றமற்ற ரகுநாதன் தங்களைப் பிரிந்து கஷ்டப்படுவதையும், லக்ஷ்மணன் ஸுக்ரீவனுக்குத் தெரிவித்தார். அதைக்கேட்டு ராகுவால் பிடிக்கப்பட்ட ஸூரியனைப்போல் ஸுக்ரீவன் காந்தியற்றான். தங்களை ராவணன் எடுத்துக்கொண்டு போகையில் தாங்கள் கழற்றி எறிந்த ஆபரணங்களையும் வஸ்திரங்களையும் வானர சிரேஷ்டர்கள் வெகு ஸந்தோஷத்துடன் கொண்டுவந்து ராமனுக்குக் காட்டினார்கள்; ஆனால், தங்களை மறைத்து வைத்திருந்த இடத்தை மாத்திரம் அறிய முடியவில்லை. முன்பு அவைகளை நானே கண்டெடுத்து ஸுக்ரீவனிடத்தில் கொடுத்தேன். அவர் அவைகளை ஜாக்கிரதையாய்க் காப்பாற்றி வைத்திருந்து ராமன் துக்கத்தால் மெய்மறந்ததைக் கண்டு அவருக்கு எதிரில் கொண்டு வந்து வைத்தார். தேவதைகளைப்போல் தேஜஸுள்ள ரகுநாதன் அவைகள் தங்களுடைய அங்கங்களில் விளங்கினதை நினைத்துப் பலவிதமாய் பிரலாபித்தார். அவைகளைப் பார்த்து அழுதுகொண்டு தேகம் வாடியிருக்கும் அவருடைய துக்காக்னியை அவை கொழுந்து விட்டு எரியும்படி செய்தன. மஹா தைரியசாலியான ரகுவீரனும் துக்கம மேலிட்டு வெகு காலம் மூர்ச்சை அடைந்தார். பிறகு நான் அவரைப் பலவிதமாய் ஸமாதானம் செய்து எழுப்பினேன். ராம லக்ஷ்மணர்கள் அவைகளை ஒவ்வொன்றாய்ப் பார்த்து வர்ணித்து, துக்கித்து ஸுக்ரீவனிடத்தில் கொடுத்து வைத்தார்கள். மேருமலையின் சிகரங்களில் ஒன்றான மால்யவான் என்ற கொடிமுடியில் ஸம்வர்த்தகமென்ற காலாக்னி எப்பொழுதும் கொழுந்து விட்டெரிவதுபோல் ராமன் தங்களைப் பார்க்காமல் விரஹாக்னியால் கொளுத்தப் படுகிறார். அக்னிஹோத்திர கிருஹத்தில் கார்ஹபத்யம், ஆஹவனீயம் என்ற மூன்று அக்னிகளும் எரிவதுபோல் தங்களை நினைத்துக் கவலையும் துக்கமும் நித்திரையில்லாமையும் ராகவனைவாட்டுகின்றன. பெரிய பூகம்பத்தால் மஹா பர்வதங்கள் நடுங்குவதுபோல் தங்களைப்பார்க்காத வியஸனத்தால் ராமன் நடுங்குகிறார். அழகான காடுகளிலும் மலையருவிகளிலும் ஆறுகளிலும் திரிந்தும் தங்களைக் காணாமல் துக்கமே விருத்தியாகின்றது. அவர் ராவணனை புத்திர மித்திர பந்துக்களுடன் யுத்தத்தில் கொன்று சீக்கிரத்தில் தங்களை அடைவார்.

பலவானான வாலியைக் கொல்வதென்றும் தங்களைத் தேடுவதென்றும் ராமனும் ஸுக்ரீவனும் ஒருவருக்கொருவர் பிரதிக்ஞை செய்துகொண்டார்கள். பிறகு அவர்கள் கிஷ்கிந்தைக்குச் சென்றார்கள்; அங்கே ராமன் வாலியை யுத்தம் செய்கையில் கொன்று, வானர ராஜ்யத்தில் ஸுக்ரீவனை அபிஷேகம் செய்தார். விவேகமற்ற வானரர்களுக்கும் இக்ஷ்வாகு வம்சத்தில் பிறந்து வஸிஷ்டரால் ஞானோபதேசம் பெற்ற ராம லக்ஷ்மணர்களுக்கும் ஸம்பந்தம் எப்படி நேர்ந்ததென்று தாங்கள் கேட்டீர்களல்லவா? அதை விஸ்தாரமாகச் சொன்னேன். விதேஹ குலத்தில் பிறந்து ரகு குலத்தில் புகுந்த லோக மாதாவான தங்களுடன் கிளைக்குக் கிளை தாவும் குரங்கான நான் பேசும்படியும் தன்னுடன் பிறந்து தனக்கு ஸகல கைங்கரியங்களையும் செய்வதாய் பிரதிக்ஞை செய்து வனத்திற்கு வந்த லக்ஷ்மணனிருக்க ஒன்றும் தெரியாத நான் ரகுவீரனுடைய அந்தப்புர காரியத்தில் நியமிக்கப்பட்டபடியும் இந்த நட்பு ஏற்பட்டது.

ஸுக்ரீவன் வானர ராஜ்யத்தை அடைந்து ஸேனைத்தலைவர்களை வரவழைத்து ஸகல திக்குகளிலும் தங்களைத் தேடும்படி அனுப்ப, பர்வதங்களைப் போன்ற வானர வீரர்களும் ஸுக்ரீவாக்ஞையால் பூமியெங்கும் தேடப் புறப்பட்டார்கள்; இன்னும் தேடிக்கொண்டிருக்கிறார்கள். அவர்களில் நாங்கள் ஒரு பாகம். மஹாபலசாலியும் காந்தியுடையவனும் வாலி புத்திரனுமான அங்கதன் வானர ஸைன்யங்களில் மூன்றிலொரு பாகத்தை அழைத்துக்கொண்டு புறப்பட்டான். விந்தியமலைச் சாரல்களில் வழி தெரியாமல் கஷ்டப்பட்டு அனேக தினங்கள் தவித்தோம். பிறகு மஹாராஜா எங்களுக்குக் குறிப்பிட்டகாலம் கடந்துபோனதாலும், அவர் கடுமையாகக் தண்டிப்பாரென்ற பயத்தாலும், காடுகளிலும் மலைகளிலும் தேடியும் தாங்களிருக்குமிடம் தெரியாமல், வந்த காரியம் முடியாததாலும் பிராணனை விட நிச்சயித்தோம். ஸகல வானர சிரேஷ்டர்களும் உபவாஸம் செய்து பிராணனைவிடத் தயாராயிருப்பதைக் கண்டு, அங்கதன் துக்கம் மேலிட்டுத் தாங்கள் காணாமல் போனதையும், வாலி இறந்ததையும், வானரர்கள் பிராயோபவேசம் செய்ததையும், ஜடாயு மரண மடைந்ததையும் சொல்லி பிரலாபித்தான். இப்படி நாங்கள் ஆசையற்று, ஸுக்ரீவனுடைய ஆக்ஞைக்குப் பயந்து, உயிரைவிட நிச்சயித்திருக்கையில், வெகு பராக்கிரமசாலியும், மிகவும் வயது சென்றவரும், கழுகுகளுக்கு அரசனும், ஜடாயுவின் உடன் பிறந்தவருமான ஸம்பாதி என்பவர், அங்கே, எங்களுடைய காரியத்தை முடிப்பதற்காகவே வந்தவர்போல், ஜடாயுவின் மரணத்தைக் கேள்விபட்டுக் கோபம் கொண்டு, "வானரர்களே! என் தம்பி எங்கே மரணமடைந்தான்? எவனால் கொல்லப்பட்டான்? இதை எனக்கு விஸ்தாரமாகச் சொல்லுங்கள்' என்றார். பிறகு, அங்கதன் ஜனஸ்தானத்திலிருந்து தங்களை ராவணன் எடுத்துப்போனது, ஜடாயு



அவனுடன் கோர யுத்தம் செய்து மரணமடைந்தது இவைகளை தெரிவித்தான். அதைக்கேட்டு அருணனுடைய புத்திரனான ஸம்பாதி மிக்க வியஸனத்தை அடைந்து, தாங்கள் ராவணனுடைய அரண்மனையில் இருப்பதாகச் சொன்னார். அதைக் கேட்டு நாங்கள் அளவற்ற ஆனந்த மடைந்து அங்கதனுடன் உடனே அங்கிருந்து புறப்பட்டு ஸமுத்திரக் கரைக்கு வந்தோம். உத்ஸாஹத்தாலும் ஸந்தோஷத்தாலும் தங்களைப் பார்க்க ஆசையாலும் மெய்மறந்த நாங்கள் அந்த மஹா ஸமுத்திரத்தைப் பார்த்து இதைத்தாண்டுவது எப்படி என்று பய[illegible] கவலைகொண்டோம்.

அப்பொழுது நான் அவர்களைப் பார்த்து மனமிரங்கி, அவர்களுடைய பயத்தைப் போக்கடித்து, நூறு யோஜனை விஸ்தீர்ணமுள்ள ஸமுத்திரத்தைத் தாண்டினேன். ராத்திரியில் இந்த லங்கையில் பிரவேசித்து கணக்கில்லாத ராக்ஷஸர்கள் வெகு ஜாக்கிரதையாகக் காத்துக்கொண்டிருந்தும் ஊசி நாட்டும் இடமில்லாமல் தேடினேன். அந்தப்புரத்தில் தூங்கும் ராவணனைக் கண்டேன். துக்கத்தால் தவிக்கும் தங்களையும் தரிசிக்கும் பாக்கியம் பெற்றேன்.

தாங்கள் கேட்டதற்கு நடந்தது நடந்தபடி விஸ்தாரமாக பதில் சொன்னேன். இனிமேலாவது நான் ராவணனல்லவென்று நம்பிக்கை பிறந்ததா? நான் ராமதூதன். என்னிடத்தில் ஸந்தேகமில்லாமல் பேசலாம். நான் வாயுபுத்திரன்; ஸுக்ரீவனுக்கு மந்திரி; ராமனால் அனுப்பப்பட்டுத் தங்கள் நிமித்தமாக இங்கே வந்தேன். ஆயுதமெடுத்தவர்களுக்குள் சிரேஷ்டரான ரகுவீரனும் அவரைப் பிதாவைப்போல் பாவித்து அவருடைய கைங்கரியத்திலே ஈடுபட்டிருக்கும் ஸகல உத்தமலக்ஷணங்களும் பொருந்திய லக்ஷ்மணனும் க்ஷேமமாக இருக்கிறார்கள். மஹாவீரனான தங்களுடைய பர்த்தாவின் க்ஷேமத்திலேயே நோக்கமுள்ளவனான நான், ஸுக்ரீவனுடைய உத்திரவால் தனியாகவே இங்கே வந்தேன். தாங்கள் இருக்குமிடத்தைக் கண்டுபிடிக்க ஆவல்கொண்டு நினைத்த ரூபத்தை எடுக்கக் கூடியவனாய்த் தெற்குத்திக்கில் தேடிக்கொண்டு இங்கே வந்தேன். தங்களைத் தெய்வானுக்கிரஹத்தால் நான் கண்ட ஸமாசாரத்தைச் சொல்லித் தங்களைக் காணாமல் தவித்துக்கொண்டிருக்கும் வானர ஸைன்யங்களை ஸந்தோஷப்படுத்துவேன். நான் ஸமுத்திரத்தைத் தாண்டினது வீணாகவில்லை. தங்களைக் கண்டேனென்ற கீர்த்தியும் எனக்குக் கிடைத்தது. ராகவனென்ற வீர சிரேஷ்டர் சீக்கிரத்தில் ராவணனைப் புத்திர மித்திர பந்துக்களுடன் யுத்தத்தில் நாசம் செய்து தங்களை அடைவார்.

வானரனான நான் வாயுபகவானுக்கு எப்படி புத்திரனாகக் கூடுமென்று தாங்கள் எண்ணலாம். கேஸரி என்ற வானர சிரேஷ்டன் மால்யவானென்ற பர்வதத்தில் வஸித்துக் கொண்டிருந்தார். ஒரு ஸமயத்தில் ஸமுத்திரத்தில் தவம் செய்து கொண்டிருந்த ரிஷிகள்

சம்பஸாதனன் என்ற அஸுரன் தங்களை மிகவும் ஹிம்ஸிக்கிறானென்றும் அவனைக் கொல்ல வேண்டுமென்றும் கேஸரியை பிரார்த்தித்தார்கள். அவர் கோகர்ணபர்வதத்திற்குச் சென்று அந்தத்துஷ்டனை ஸம்ஹரித்தார். அப்பொழுது கேஸரியின் பார்யையிடத்தில் வாயுபகவானுக்குப் பிறந்தேன். அந்தக்காலத்தில் நடந்த விருத்தாந்தத்தால் எனக்கு ஹனுமானென்ற பெயர் கிடைத்தது. (ஸூரியனைப் பழமென்று தாவிப் பிடிக்கப் போகையில் இந்திரன் வஜ்ராயுதத்தால் (ஹனு) தாடையிலடித்ததால் ஹனுமானென்றபெயர் கிடைத்தது.) தங்களுக்கு என்னிடத்தில் நம்பிக்கை உ[illegible]ரும் பொருட்டு ராகவனுடைய குணங்களை எனக்குத் தெரிந்த வரையில் வர்ணித்தேன். அதிசீக்கிரத்தில் ராகவன் தங்களை இவ்விடத்திலிருந்து அழைத்துப் போவார்'' என்றார்.

அதுவரையில் துக்கத்தால் இளைத்திருந்த ஸீதை மேற்சொன்ன காரணங்களாலும் அடையாளங்களாலும் மாருதியிடத்தில் நம்பிக்கை வைத்து அவன் ராம தூதனென்றே நிச்சயித்தாள். அளவற்ற ஸந்தோஷமடைந்து ஆனந்தக் கண்ணீர் உதிர்த்தாள். அழகான நேத்திரங்களால் விளங்கும் அவளுடைய முகம் ராகுவால் விடப்பட்ட சந்திரனைப்போல் பிரகாசித்தது. முடிவில் அவன் ஹனுமானென்ற வானரனென்றும், வேறல்லவென்றும் ஸ்பஷ்டமாய்த் தெரிந்து கொண்டாள். பிறகு ஆஞ்ஜநேயர் ஸந்தோஷத்தால் முகம் மலர்ந்த ஸீதையைப் பார்த்து, "அம்மா! எனக்குத்தெரிந்த வரையில் ஸகல விருத்தாந்தங்களையும் சொன்னேன். தாங்கள் வருத்தப்பட வேண்டியதில்லை. தங்களுடைய ஆக்ஞையை நிறைவேற்றத் தயாராக இருக்கிறேன். நான் தங்களுடைய க்ஷேம ஸமாசாரத்தை அதிசீக்கிரத்தில் ராகவனுக்குத் தெரியப்படுத்த வேண்டிய தாகையால் திரும்பிப் போகிறேன். ஒரு அல்பக் குரங்கு நமக்கு என்ன செய்யப் போகிறதென்று நினைக்கக் கூடாது. வானர சிரேஷ்டனான கேஸரி, சம்பஸாதனனென்ற ராக்ஷஸனை வதம் செய்யப் போயிருக்கையில் அவருடைய பாரியையிடத்தில் பிறந்தேன். பலத்திலும் பராக்கிரமத்திலும் வேகத்திலும் என் பிதாவான வாயுபகவானுக்கு ஸமமானவன்'' என்றார்.

ஹதேஸூரே ஸம்யதி ஶம்ப³ஸாத³நே
கபிப்ரவீரேண மஹர்ஷி சோத³நாத் |
ததோஸ்மி வாயுப்ரப⁴வோ ஹி மைதி²லி
ப்ரப⁴ாவதஸ் தத்ப்ரதிமஶ்ச வாநர: ‖ (89)

---



## ஸர்க்கம் 36

# ஹனுமான் கணையாழியைக் கொடுத்தது

பூ⁴ய ஏவ மஹாதேஜா ஹநூமாந் மாருதாத்மஜ: |
அப்ர³வீத் ப்ரஶ்ரிதம் வாக்யம் ஸீதாப்ரத்யய காரணாத் ‖ (1)

மஹாதேஜஸ்வியான மாருதி ஸீதைக்கு நம்பிக்கையுண்டாகும்படி மிகவும் வணக்கமாய், "அம்மா! அளவற்ற பாக்கியசாலியே! நான்மஹாபுத்திமானான ராமமூர்த்தியால் தங்களிடத்தில் அனுப்பப்பட்ட தூதன். அவருடைய திருநாமத்தால் அலங்கரிக்கப்பட்ட இந்தக் கணையாழியைப் பாருங்கள். தங்களுக்கு நம்பிக்கையுண்டாகும் பொருட்டு இதை ராமன் என்னிடத்தில் ஒப்புவித்துத் தங்களுக்குக் கொடுக்கச் சொன்னார். கவலையை விடுங்கள். தங்களுக்கு ஸகல மங்களங்களும் உண்டாகட்டும். அதிசீக்கிரத்தில் தங்களுடைய துக்கங்களெல்லாம் இருந்த இடம் தெரியாமல் போகும்'' என்று சொல்லி அந்த மோதிரத்தைக் கொடுத்தார்.

ஸீதை ராமனுடைய கையில் விளங்கும் அந்த ஆபரணத்தை வாங்கிப் பார்த்துப் பர்த்தாவை மறுபடியும் கண்டவளைப் போல் அளவற்ற ஸந்தோஷம் அடைந்தாள். அதைப் பார்த்துப் பார்த்து ஆசை தீராமல் அதிலிருந்து கண்களை எடுக்க முடியவில்லை. முதலில் ராவணன் மாறுவேஷம் பூண்டு வந்தானோ என்று பயந்தவள், பிறகு அனேக காரணங்களால் அவன் தனது பர்த்தாவிடமிருந்து வந்த பிரிய தூதனென்று நம்பிக்கை பிறந்து ஆஞ்ஜனேயரைப் பார்த்து ஸந்தோஷித்தாள். பிறகு ராமனுடைய மோதிரத்தைக் கண்டு ராமனையே கண்டதுபோல் பரவசமானாள். (தன்னை ரகுநாதன் பாணிக்கிரஹணம் செய்த காலத்தில் அவருடைய கையிலணிந்த ஆபரணமாகையால், அந்த மஹோத்ஸவமும் அதற்குப் பிறகு அவரும் தானும் அனுபவித்த ஏகாந்த ஸுகங்களும் ஞாபகத்திற்கு வந்தன. ரதி காலத்தில் இருவரும் வேடிக்கையாகக் கோபித்துக் கொண்டிருக்கையில் ஒருவர்க்கொருவர் பேசாமலும் பார்க்காமலும் இருக்கும் பொழுது, பிரிந்திருக்க ஸஹிக்காமையாலும் வேறு மத்தியஸ்தர்கள் இல்லாமையாலும் ராமன் தன் மோதிரத்தை மெள்ளக் கழற்றி அகஸ்மாத்தாய் நழுவினதுபோல் கீழே போடுவார். அப்பொழுது ஸீதை 'மோதிரம் கழன்று கீழே விழுந்து விட்டதே' என்று சொல்லி அதை 'எடுத்துக் கொடுப்பாள். உடனே கலஹம் தீர்ந்து மறுபடியும் ஆனந்தமாய்ப் பேசிக்கொண்டிருப்பார்கள். அப்படிப்பட்ட மோதிரமல்லவா என்று நினைத்தாள். வெகு நாளாகப் பிரிந்திருந்த தங்களைச் சேர்த்து வைத்த மோதிரமல்லவா என்று நினைத்தாள். அந்த மோதிரமணிந்த விரலையும் கிரமமாய்க் கையையும் புஜங்களையும் திருமேனியையும் தன்னெதிரில் நிற்பதுபோல் பார்த்து ஆலிங்கனம் செய்து கொண்டாள்.) சிவந்து

நீண்டு ஸந்தோஷத்தால் மலர்ந்த கண்களையுடைய ஸீதையின் முகம் ராகுவால் விடப்பட்ட சந்திரன்போல் பிரகாசித்தது.

பிறகு, "ஐயோ! இவனை நமக்கு பிராணதானம் செய்தவனென்று கொண்டாடாமல் ராவணனென்று ஸந்தேஹித்தோமே" என்று வெட்கப்பட்டு, ராமனுடைய விருத்தாந்தத்தைக் கேட்டதால் பரமானந்தமடைந்து, அந்த ஸமாசாரத்தைக் கொண்டு வந்த ஆஞ்ஜநேயரை வெகுபிரியத்துடன் குளிரக் கடாக்ஷித்து, "வானரசிரேஷ்டா! நீ தனியாக இந்த ராக்ஷஸராஜதானியில் அலக்ஷ்யமாய் வந்தாயே! உன் பலத்தையும் சக்தியையும் புத்தியையும் என்னவென்று சொல்லுவேன்! பயங்கரமான ஜலஜந்துக்கள் வஸிக்கும் நூறுயோஜனை விஸ்தீர்ணமுள்ள இந்த ஸமுத்திரத்தை ஒப்பற்ற பராக்கிரமசாலியான நீ பசுவின் குளப்படியைப்போல் அலக்ஷ்யமாய்த் தாண்டினாயே! ஸர்வலோக கண்டகனான ராவணனைக்கண்டு உனக்குக் கொஞ்சமாவது பயமும் கலக்கமுமில்லை ; ஆகையால், ஸாதாரணமான வானரனென்று உன்னை நினைக்கவும் முடியுமோ ? மஹாபுத்திமானான ராமனே உன்னை என்னிடத்தில் நம்பிக்கையாக அனுப்பியிருக்கிறார்; ஆகையால் என்னுடன் நீ தடையில்லாமல் பேசத்தகுந்தவன். பிறரால் நெருங்க முடியாத சக்தியையுடைய ராகவன் ஒருவனுடைய பராக்கிரமத்தைப் பூர்ணமாக அறிந்து அவனை நன்றாகப் பரீக்ஷிக்காமல் என்னிடத்தில் அனுப்பமாட்டாரல்லவா?

தர்மாத்மாவும் வீணாகாத பிரதிக்ஞையையுடையவருமான ராகவன் என் பாக்கிய விசேஷத்தாலும் தெய்வானுக்கிரஹத்தாலும் க்ஷேமமாக இருக்கிறாரா? மஹா தேஜஸ்வியான லக்ஷ்மணர் க்ஷேமமாயிருக்கிறாரா? ராகவன் க்ஷேமமாயிருந்தால் கடல் சூழ்ந்த பூமியை பிரளயகாலாக்னியைபோல் கோபத்தால் ஏன் கொளுத்தாமல் இருக்கின்றார்?

தேவாஸுரர்களை ஒருக்ஷணத்தில்நாசம் செய்ய ராமலக்ஷ்மணர்களுக்குச் சக்தியில்லையா? ஆகையால், என் துக்கம் முடிவதற்குக் காலம் வரவில்லை என்று எண்ணுகிறேன். அந்தப் புருஷோத்தமன் வருத்தத்தால் இளைக்காதிருக்கிறாரா? பரிதவிக்காமலிருக்கிறாரா ? தைரியத்தை இழக்காமலிருக்கிறாரா? துக்கத்தால் மெய்மறந்து காரியங்களில் மயங்காமலிருக்கிறாரா? ஸகல புருஷ பிரயத்தனங்களையும் செய்து கொண்டிருக்கிறாரா? ஸ்நேஹிதர்களிடத்தில் கிருபையுடன் ஸாமதான உபாயங்களையும் பகைவர்களை ஜயிப்பதற்காக அவர்களிடத்தில் பேதம் தண்டமென்ற உபாயங்களையும் கிரமமாய் அனுஸரித்து வருகிறாரா? சுத்தமான மனத்தையுடைய ஸ்நேஹிதர்களை ஸம்பாதிக்கிறாரா? அப்படிப் பட்டவர்கள் அவரைத்தேடி அடைகிறார்களா? அவர்களால் கௌரவிக்கப் படுகிறாரா? என்னை அடையும் பொருட்டு தேவதைகளுடைய அனுக்கிரஹத்தை பிரார்த்தித்து வருகிறாரா? அவருடைய வீரியசௌரிய பராக்கிரமங்களுக்குத் தகுந்தபடி ஸகல புருஷப் பிரயத்தனங்களையும் குறைவில்லாமல் செய்து வருகிறாரா? குலதெய்வமான நாராயணனுடைய கிருபைக்கு தன்னைப்பாத்திரனாகச் செய்துகொண்டு வருகிறாரா? அவரைவிட்டுப் பிரிந்து வெகுகாலமாய்க் கண்ணுக் கெட்டாத தேசத்தில் நான் இருக்கிறேன் என்று என்னை மறக்கவில்லையல்லவா? என்னிடத்திலுள்ள பூர்வ ஸ்நேஹத்திற்குக் கொஞ்சமேனும் குறைவில்லையல்லவா? இந்த ஸங்கடத்திலிருந்து என்னைச் சீக்கிரத்தில் விடுவிப்பாரா? உத்தம ஸுகங்களை அனுபவிக்கத் தகுந்தவர். கஷ்டத்தை அனுபவிக்கவே தகாதவர். அதிக துக்கத்தால் தேகம் நொந்து வருந்தாமல் க்ஷேமமாக இருக்கிறாரா? கௌஸல்யை ஸுமித்திரை பரதன் முதலியவர்கள் க்ஷேமமாக இருப்பதாக ஸமாசாரம் கிடைத்துக் கொண்டிருக்கிறதா? என்னைப் பிரிந்த சோகத்தால் தாபத்தையடையாமலிருக்கிறாரா? வேறு விஷயங்களில் மனத்தைச் செலுத்தாமல் என்னை இந்தக் கஷ்டத்திலிருந்து கரையேற்றுவாரா? ராமனிடத்தில் பரமபக்தியுள்ள பரதன் தன் மந்திரிகளையும் கணக்கில்லாத வீரர்களடங்கிய சதுரங்க பலத்தையும் என்நிமித்தமாக அனுப்புவாரா ? பற்களையும் நகங்களையும் ஆயுதமாக உடைய வானரவீரர்களால் சூழப்பட்டு ஸுக்ரீவ மஹாராஜா இங்கே அதிசீக்கிரத்தில் வருவாரா? சூரனும் அஸ்திர ரஹஸ்யங்களைப் பூர்ணமாக அறிந்தவருமான லக்ஷ்மணன் பாணவர்ஷத்தால் ராக்ஷஸர்களை நாசம் செய்வாரா? நெருப்பு ஜ்வாலைகளைக் கக்கும் பாணங்களால் ராவணனும் அவனுடைய பந்துக்களும் யுத்தத்தில் அதிசீக்கிரத்தில் அடிபட்டுக் கிடப்பதைக் காண்பேனா? தங்க நிறமுள்ளதும் தாமரைப் புஷ்பத்தின் வாஸனையுடையதுமான ராகவனுடைய முகம்வெயிலால் ஜலம் வற்றின ஓடையில் வாடும் தாமரைப் புஷ்பத்தைப்போல், என்னைப் பிரிந்த துக்கத்தால் உலர்ந்து வாடாமலிருக்கிறதா?



தர்மானுஷ்டானத்தைக் காரணமாய் வைத்துக் கொண்டு, தன் ராஜ்யத்தை விட்டு, ஸகல ஸுகங்களையும் அனுபவித்துக் கொண்டிருந்த என்னையும் வனத்தில் கால்நடையாய் அழைத்துக் கொண்டு வந்த ராமனுக்கு வருத்தமும் பயமும் சோகமும் கொஞ்சம் கூட இல்லை. அப்படிப்பட்டவர் என்னைப் பிரிந்து தைரியத்தை இழக்காதிருக்கிறாரா? தன்னிடத்தில் பரமப் பிரீதிவைத்த கௌஸல்யையும், தன்னைப் பிரிந்து உயிரோடிருக்க ஸஹிக்காமல் மரணமடைந்த தசரதரும், இதர பந்துக்களும் ராமனுடைய மனத்தில் எனக்கு ஸமமாவார்களோ? ரகுநாதன் என்னை அழைத்துப் போவாரென்ற வார்த்தையைக் கேட்கும் வரையில் மாத்திரம் பிராணனை வைத்துக் கொண்டிருப்பேன்.

இந்தப் பிரகாரம் அநேக அர்த்தங்களடங்கிய மதுரமான வார்த்தைகளைச் சொல்லி, "இந்த வானரேந்திரன் என்னுடைய கேள்வி

களுக்கு என்ன பதில் சொல்வான், பார்ப்போம்" என்று பேசாமலிருந்தாள்.

மஹா பராக்கிரமசாலியான மாருதி, தலைமேல் கைகூப்பி வணக்கமாய்ப் பின்வருமாறு பதில்சொன்னார். "பூர்வம்அனுஹ்லாதனென்னும் அஸுரன் இந்திரனுடைய பாரியையான சசிதேவியை ஒளித்தான். அவ்விடத்தை வெகுகாலம் அறியாமல் இந்திரன் பிறகு தேடிக் கண்டுபிடித்ததுபோல், ராமனுக்குத் தாங்கள் இருக்குமிடம் இதுவரையில் தெரியவில்லை. செந்தாமரையைப் பழிக்கும் நேத்திரங்களையுடையவரே! தங்களை இதுவரையிலும் அழைத்துப் போகாததற்கு இதுவே காரணம். நான் தங்களுடைய விருத்தாந்தத்தைத் தெரிவித்த அடுத்த க்ஷணத்திலேயே வானரஸைன்யங்களைக் கூட்டிக் கொண்டு இங்கே வருவார். அவை நூறுயோஜனை விஸ்தீர்ணமுள்ள இந்த ஸமுத்திரத்தை எப்படி தாண்ட முடியுமென்று ஸந்தேகிக்க வேண்டாம். ராகவன் இந்தப் பயங்கரமான கடலைத் தன் பாணங்களால் கட்டித் தன் ஸைன்யங்களுடன் இங்கே வந்து ராக்ஷஸ குலத்தை வேரறுப்பார். மிருத்யுதேவதையாவது தேவர்களாவது அஸுரர்களாவது அதைத் தடுக்கப்பார்த்தால் அந்த க்ஷணமே நாசமடைவார்களென்பதில் ஸந்தேகமுண்டோ? ஸிம்ஹத்தால் பீடிக்கப்பட்ட யானையைப்போல் ராகவன் தங்களைக் காணாமல் துக்கத்தால் தவிக்கிறார். இது ஸத்தியம். நான் வஸிக்குமிடங்களான மலயம், விந்தியம், மேரு மந்த்ரம், தர்த்துரம் முதலிய பர்வதங்களின் மேலும் நான் புஜிக்கும் பழம் கிழங்கு ஜலம் முதலிய பதார்த்தங்களின் மேலும் ஆணைவைத்துச் சொல்லுகிறேன். அழகான கண்களாலும் கோவைக்கனிபோன்ற உதடுகளாலும் ஜ்வலிக்கும் குண்டலங்களாலும் பூர்ணசந்திரனைப்போல் விளங்கும் ராமமூர்த்தியின் திருமுக மண்டலத்தைக் காண்பீர்கள்.

ராமன் மதுமாம்ஸங்களை விட்டார். வானப்பிரஸ்தருக்குத் தகுந்த பழம் கிழங்கு முதலியவைகளை ஸாயங்காலத்தில் புஜிக்கிறார். தங்களிடத்திலேயே மனத்தை செலுத்தி தேகத்தையும் மறந்து, காட்டு ஈக்கள், கொசுக்கள், புழுக்கள், ஊரும் ஜந்துக்கள் முதலியவைகளால் நேரும் உபத்திரவத்தைக் கவனிக்கிறதுமில்லை; அவைகளை ஓட்டுகிறதுமில்லை, தங்களிடத்தில் வைத்த ஆசையால் எப்பொழுதும் தங்களையே நினைத்துக்கொண்டு சோகம் மேலிட்டு வேறு ஞாபகமில்லாமல் இருக்கிறார். அவருக்குத் தூக்கமே கிடையாது. எப்பொழுதாவது தன்னை அறியாமல் தேகம் அலுத்துத் தூங்கினாலும், 'ஸீதே!' என்று மதுரமான வார்த்தையைச் சொல்லிக்கொண்டே விழித்துக் கொள்ளுகிறார். பழங்கள் புஷ்பங்கள் முதலிய மனோஹரமான பதார்த்தங்களைக் கண்டாலும், 'ஹா! ஸீதே!' என்று அடிக்கடி பெருமூச்சுவிட்டுத் தாங்கள் பேசுவதுபோல் தங்களுக்குப் பதில் சொல்லுகிறார். தாங்கள் எப்பொழுதும் எதிரில் இருப்பதாக அவருடைய பாவனை. தங்களைப் பிரிந்ததால் எப்பொழுதும்



பரிதவித்துக்கொண்டிருக்கிறார். தங்களை அடைவதற்கு வேண்டிய ஸகலப் பிரயத்தனங்களையும் குறைவில்லாமல் செய்துகொண்டிருக்கிறார். அவர் கலங்காத தைரியமுடையவரென்றும் செய்த பிரதிக்ஞையைத் தவறாதவரென்றும் க்ஷத்திரிய வீரரென்றும் தங்களுக்குத் தெரியாதா?" என்றார்.

ராமனுடைய விருத்தாந்தத்தைக் கேட்டதால் ஸீதைக்கு ஒருவாறு கவலை நீங்கிற்று. ஆனால், தன்னைப் பிரிந்து ராமன் படும் கஷ்டத்தைக் கேட்டு, அதைப்போல் தானும் சோகமடைந்து, சரத்ருதுவின் ஆரம்பத்தில் கொஞ்சம் மேகத்தால் மறைந்து மாறி மாறி பிரகாசிக்கும் சந்திரமண்டலத்தைப்போல் தோன்றினாள்.

ஸா ராமஸங்கீர்தந வீதஶோகா
ராமஸ்ய ஶோகேந ஸமாநஶோகா |
ஶரந்முகே2 ஸாம்பு3த3 ஶேஷசந்த்3ரா
நிஶேவ வைதே3ஹஸுதா ப3பூ4வ || (47)

## ஸர்க்கம் 37

## மாருதி ஸீதையைத் தன்னுடன் வரும்படி பிரார்த்தித்தது

ஸீதா தத்3 வசநம் ஶ்ருத்வா பூர்ணசந்த்3ர நிபா4நநா |
ஹநூமந்த முவாசேத3ம் த4ர்மார்த2 ஸஹிதம் வச: || (1)

அதற்கு ஸீதை நீதி நிறைந்த வாக்கியங்களால் மறுமொழி சொன்னாள். "ராமன் வேறு ஞாபகமில்லாமல் இருக்கிறார்; ஆனால், சோகஸமுத்திரத்தில் முழுகி இருக்கிறாரென்று நீ சொன்னது விஷத்தையும் அமிருதத்தையும் கலந்து கொடுத்தாற் போலிருக்கிறது. அவரைவிட்டுப் பிரிந்தது நானாகச் செய்துகொண்டதல்ல. ஸகல ஐசுவரியங்களும் பொருந்தின ரகுநாதனையும் மிகவும் தாழ்ந்த ஸ்திதியில் கஷ்டப்பட்டுக்கொண்டிருக்கும் ஸாமான்ய புருஷனையும், தெய்வம் கயிற்றால் கட்டி இழுப்பதுபோல் நினைத்தபடியெல்லாம் ஆட்டுகிறது. பிராணிகள் விதியை வெல்வது அஸாத்தியம். இதற்கு என்னையும் ராமனையும் லக்ஷ்மணனையும் காட்டிலும் வேறு உபமானங்கள் வேண்டுமோ? (மஹாவிஷ்ணுவான ராமனும், காலரூபியும் ஞான ரூபியுமான லக்ஷ்மணனும், பராசக்தியான நானும் கர்ம கதிக்குத் தப்ப முடிந்ததோ?).

பெருங்கடலில் காற்றால் அடிக்கப்பட்ட கப்பல் தத்தளிப்பதுபோல் ராமன் சோக ஸமுத்திரத்திலிருந்து எப்பொழுது கரையேறுவார்? ராவணனை ராக்ஷஸர்களுடன் நாசம் செய்து லங்கையை அழித்து என் நாயகன் எப்பொழுது என்னைக் காண்பாரோ? ராவணன் கெடுவிட்ட ஒருவருஷகாலம் முடிவதற்குமுன் என்னை மீட்கும்

படி நீ அவருக்குச் சொல்லவேண்டியது. அதுவரையிலும்தான் நான் உயிரோடிருப்பேன். பத்தாவது மாதம் நடக்கிறது; இன்னும் இரண்டு மாதங்களிருக்கின்றன. தன் ஸஹோதரனை விபீஷணன் என்னைத் திரும்பிக் கொடுக்கும்படி தன்னால் கூடியமட்டும் பிரயத்தனம் செய்தும் ராவணன் அதைக் கொஞ்சமாவது லக்ஷ்யம் செய்யவில்லை. அந்த விஷயமே அவனுக்கு இஷ்டமில்லை. காலபாசத்தால் கட்டுப்பட்ட ராவணனை மிருத்யுதேவதை யுத்த களத்தில் தேடிக் கொண்டிருக்கிறது. விபீஷணனுடைய பாரியை ஸுரஸை என்பவள் இந்த ஸமாசாரத்தைத் தனது மூத்த பெண்ணான அனலை மூலமாய் எனக்குச் சொல்லி யனுப்பினாள்.

என் அந்தராத்மா கல்மஷமில்லாமல் சுத்தமாக இருக்கிறது. லோகோத்தரமான காரியங்களைச் செய்யவேண்டுமென்ற ஸ்திரமான பிரயத்தனமும் அவைகளைச் செய்வதற்கு வேண்டிய சக்தியும் குரூரமற்றிருப்பதும் நன்றி மறவாமையும் சௌரியமும் மஹிமையும் இன்னும் அனந்தமான குணங்களும் ரகுநாதனிடத்தில் விளங்குகின்றன. ஆகையால், என் பர்த்தா என்னைச் சீக்கிரமாயடைவாரென்பதில் கொஞ்சங்கூட ஸந்தேகமில்லை. லக்ஷ்மணனுடைய ஸஹாயமும் இல்லாமல் பதினாலாயிரம் ராக்ஷஸவீரர்களை ஒரு முகூர்த்தத்தில் லீலையாகக்கொன்ற ரகுவீரனைக் கண்டு பயப்படாத சத்துருவும் உண்டோ? எப்படிப்பட்ட ஸங்கடங்கள் நேர்ந்தாலும் அவருடைய தைரியம் கொஞ்சமாவது கலங்குமோ? இந்திரனுடைய மஹிமையை இந்திராணி அறிவதுபோல் அவருடைய மஹிமை எனக்கல்லவா தெரியும்? ராமனென்ற ஸூரியன் பாணக்கூட்டங்களாகிற கிரணங்களால் ராக்ஷஸர்களென்ற ஜலத்தை அதி சீக்கிரத்தில் வற்றச் செய்வார்,'' என்று கண்ணீர்பெருக மனத்தில் துக்கம் ததும்ப ஸீதை ராமமூர்த்தியைப்பற்றிப் பரிதவிப்பதைக் கேட்டு, ஆஞ்ஜநேயர், ''தாயே! ஏன் கவலைப்படுகிறீர்கள்? தங்களுடைய விருத்தாந்தத்தை நான் சொன்னவுடனே கணக்கில்லாத வானர ஸைன்யங்களுடன் ரகுநாதன் இங்கே வருவார். இவ்வளவென்ன? தங்களுடைய துக்கத்தை இந்த க்ஷணமே போக்கடிக்கிறேன், என் முதுகில் ஏறுங்கள். ஒரு நொடியில் இந்த ஸமுத்திரத்தைத் தாண்டி ராகவனிடத்தில் தங்களைக் கொண்டுபோய்ச் சேர்க்கிறேன். ஸந்தேகப் படவேண்டாம். இந்த லங்கையையும் இதிலுள்ள ஸகல பதார்த்தங்களையும் அலக்ஷ்யமாய் எவ்விடத்திற்கும் கொண்டுபோக என்னால் முடியாதா? ஹோமம் செய்கிற பதார்த்தங்களை அக்னி பகவான் இந்திரனிடத்தில் ஸமர்ப்பிப்பதுபோல் பிரஸ்ரவணகிரியில் விளங்கும் ராமமூர்த்தியிடத்தில் தங்களைக் கொண்டுபோய்ச் சேர்ப்பேன். மஹாவிஷ்ணு அஸுரர்களை நாசம் செய்வதில் உத்ஸாஹத்துடன் இருப்பதுபோல் எப்பொழுதும் ஊக்கமுள்ள ரகுநாதனையும் லக்ஷ்மணனையும் இப்பொழுதே பார்ப்பீர்கள். தேவேந்திரன் ஸ்வர்க்கத்தில் மஹிமையோடு வீற்றிருப்பதைப்போல் தங்களைப்



பார்க்கும் பொருட்டு ஸகல பிரயத்தனங்களையும் செய்துகொண்டு வீற்றிருக்கும் பிரஸ்ரவணகிரியில் மஹாபலவானான ராகவனைப் பார்க்கப்போகிறீர்கள். ஆகையால், என் முதுகில் ஏறுங்கள். என்னால் என்ன முடியும் என்று அலக்ஷ்யம் செய்ய வேண்டாம். ரோஹிணீதேவி சந்திரனுடன் கூடி ஸுகிப்பதுபோல் ரகுநாதனுடன் சேர்ந்திருக்க விரும்புங்கள், என் முதுகில் ஏறிக்கொண்டு ஸூரிய சந்திரர்களுடன் வார்த்தை சொல்வதுபோல் ஆகாச வீதியில் உன்னதமாய்ச் செல்லுங்கள். இந்த லங்கையிலுள்ளவர்கள் ஒன்று சேர்ந்தாலும் நான் தங்களை எடுத்துப் போகும்பொழுது என்னைத் தடுக்கவாவது பின் தொடரவாவது முடியுமோ? நான் இங்கே எப்படி அலக்ஷ்யமாய் வந்தேனோ அப்படியே தங்களை எடுத்துக்கொண்டு ஆகாசமார்க்கமாய்ச் செல்வேன்; இதில் ஸந்தேகமில்லை'' என்று பிரார்த்தித்தார்.

இந்த ஆச்சரியமான வார்த்தையைக் கேட்டு ஸீதை ஸந்தோஷத்தால் மயிர்கூச்சமடைந்து மாருதியைப் பார்த்து, ''நூறு யோஜனை விஸ்தீர்ணமுள்ள ஸமுத்திரத்தைத் தாண்டி கிஷ்கிந்தைக்கு என்னை எடுத்துக்கொண்டு போகிறேனென்று நீ சொல்வது விநோதமாக இருக்கின்றது. உனக்கு ஸ்வபாவமான வானர புத்தி இது தான். அல்பமான சரீரத்தையுடைய நீ என்னை ராமனிடத்தில் கொண்டுபோய் விடுகிறேன் என்று எந்தத் தைரியத்தால் சொன்னாய்'' என்று கேட்டாள்.

உடனே ஹனுமார், ''என்ன ஆச்சரியம்! நான் இதுவரையில் ஒருவரிடத்திலும் இப்படி அவமானப்பட்டதில்லை'' என்று எண்ணினார். ''நான் அளவற்ற பலமுடையவனென்றும், பிறரால் செய்யக்கூடாத காரியங்களைச் செய்தவனென்றும் இவளுக்குத் தெரியாததால் இப்படிச் சொல்லுகிறாள். ஆகையால் நான் இஷ்டமான ரூபங்களை எடுக்கக்கூடியவன் என்பதைக் காட்டவேண்டும்'' என்று நிச்சயித்து, தன் விசுவரூபத்தை ஸீதைக்குக் காட்டினார். அவளுக்கு நம்பிக்கை உண்டாகும் பொருட்டு அந்த மரத்திலிருந்து குதித்து வளர வளர ஆரம்பித்தார். மேரு மந்தரம் முதலிய மஹாபர்வதங்களைப்போல் காந்தியுடன் பிரகாசித்துக்கொண்டு ஸீதைக்கு நேராக நின்றார். மலைபோன்ற தேகத்தையும் சிவந்த முகத்தையும் எல்லையற்ற பலத்தையும் வஜ்ராயுதம் போன்ற பற்களையும் நகங்களையும் உடையவராய்ப் பயங்கரமான ரூபத்துடன் ஸீதையைப் பார்த்து' ''தாயே! இந்த லங்கையையும் அதிலுள்ள பர்வதங்கள் வனங்கள் பிராகாரங்கள் கட்டிடங்கள் பிராணிகள் அவைகளுக்கு அதிபதியான ராவணன் இவை எல்லாவற்றையும் துரும்பைப் போல் அலக்ஷ்யமாக எடுத்துச் செல்ல எனக்குச் சக்தியுண்டு. ஆகையால் என்னை உபேக்ஷிக்காமல் தங்களுடைய மனத்தை ஸ்திரப்படுத்திக் கொண்டு என் பிரார்த்தனையை அங்கீகரித்து ராமலக்ஷ்மணர்களுடைய துக்கத்தைப் போக்குங்கள்'' என்று வேண்டினார்.

பிரளயகால ருத்திரனைப்போல் பயங்கரமாய் ஜ்வலிக்கும் வாயு புத்திரனை ஸீதை குளிரக் கடாக்ஷித்து, "வானர சிரேஷ்ட! உனது பலத்தையும் பராக்கிரமத்தையும் நான் நன்ருக அறிவேன். வேகத்தில் வாயுவிற்கும் அத்புதமான தேஜஸில் அக்னிக்கும் ஸமமென்பதையும் நன்ருக அறிவேன். உன்னைத் தவிர வேறு ஸாமான்ய புருஷன் தனியாக இந்த மஹா ஸமுத்திரத்தைத் தாண்டி, கோர ராக்ஷஸர்களால் நிறைந்த இந்த லங்கையில் பயமில்லாமல் பிரவேசித்து மஹா ஸாமர்த்தியமாய் என்னுடன் பேச முடியுமா? என்னை எடுத்துக் கொண்டு ஆகாச மார்க்கமாகப் போகக் கூடிய சக்தியுடையவனென்று எனக்கு நன்ருய்த் தெரியும். ரகுநாதனுடைய காரியத்தில் சீக்கிரம் ஸித்தியடையும் வழியை யோசிக்க வேண்டியது.

ஆனல், நான் உன்னுடன் போவதுயுக்தமல்ல. வாயுவிற்கு ஸமமாகச் செல்லும் உன் வேகத்தால் எனக்கு பிரக்ஞை போய்விடும், ஸமுத்திரத்திற்கு மேல் ஆகாசத்தில் அதிவேகமாய் வர வர உயரக் கிளம்பிப் போகையில் நான் பயந்து கடலில் விழுந்து விடுவேன். உடனே அங்குள்ள திமிங்கிலம் போன்ற பயங்கரமான ஜலஜந்துக்கள் என்னைத் தின்றுவிடும். நீ சத்துருக்களை நாசம் செய்வதில் ஒப்பில்லாதவனென்று எனக்குத் தெரியும். ஆனல், எடுத்துப் போகையில் உன் பிராணனுக்கும் நிச்சயமாய் ஆபத்து நேரும். எப்படி என்ருல், நான் இங்கிருந்துபோய்விட்டது தெரிந்தவுடன் ராவணன் பயங்கரமான பராக்கிரமமுள்ள ராக்ஷஸர்களை உன்னைப் பின்தொடர்ந்து கொல்லும்படி கட்டளையிடுவான். சூலம் உலக்கை முதலிய ஆயுதங்களுடன் அவர்கள் கணக்கில்லாமல் தனியாக, ஆயுதமற்றிருக்கும் உன்னைச் சூழ்ந்து கொள்வார்கள். அப்பொழுது அவர்களுடன் யுத்தம் செய்து அவர்களை நாசம் செய்வாயா? அல்லது, உன்னைக் காப்பாற்றிக் கொள்வாயா? அல்லது, எனக்கு யாதொரு தீங்கும் நேரிடாமல் காப்பாற்றுவாயா? இம் மூன்றையும் ஒரே காலத்தில் செய்ய முடியாதல்லவா? ஆகையால் உன் பிராணனுக்கு ஆபத்து நேருமென்பதில் ஸந்தேக மென்ன?

மேலும், அந்தக் குரூரராக்ஷஸர்களோடு நீ யுத்தம் செய்கையில் நான் அதைக் கண்டு பயந்து உன் முதுகிலிருந்து விழுந்து விடுவேன். பிறகு பல பராக்கிரமத்தால் பயங்கரமான அந்த ராக்ஷஸர்கள் உன்னைஎப்படியாவது யுத்தத்தில் ஜயிப்பார்கள். அல்லது நீ யுத்தத்தில் கவனத்தைச் செலுத்திப் பராமுகமாயிருக்கையில் உன் முதுகிலிருந்து நழுவி விழுவேன். உடனே அந்தப் பாபிகள் என்னையும் பிடித்துக்கொண்டு போவார்கள். உன் கையிலிருந்து என்னை அபகரித்துக் கொல்லவும் கொல்வார்கள். 'நான் ஸாமான்யனு? என்னை ஜயித்துத் தங்களைக் கொண்டுபோக அவர்களுககுத்திறமையுண்டா' என்றுகேட்டால், யுத்தத்தில் புகுந்தால் ஜயமும் அபஜயமும் நிச்சயமில்லையே. அவர்கள் என்னை மிரட்டி உபத்திரவிக்கும்பொழுது அதை ஸகிக்காமல் நான் பிராணனை விடுவேன். அப்பொழுது நீ இவ்வளவு பிரயத்தனம் செய்ததும் சிரம்ப்பட்டதும் வீணுகுமே.



மேலும், ஸகல ராக்ஷஸர்களையும் நாசம்செய்ய உனக்குச் சக்தியிருந்தாலும் அப்படிச் செய்வது ராகவனுடைய கீர்த்திக்குக் குறைவல்லவா? ராவணனை எதிர்க்கத் தைரியமில்லாமல் திருட்டுத் தனமாய் ஒரு குரங்கை விட்டு ராமன் என்னை எடுத்து வரச் சொன்னுரென்று லோகத்தார் சொல்வார்களே.

மேலும், ராக்ஷஸர்கள் என்னைப் பிடித்து வானரர்களுக்கும் ராமலக்ஷ்மணர்களுக்கும் தெரியாத ஓரிடத்தில் மறைத்து வைப்பார்கள். அப்பொழுது எனக்காக நீ படும் பாடெல்லாம் வீணுகுமே. ரகுநாதனிடத்தில் நீ போய் என் ஸமாசாரத்தைச் சொல்லி, அவரை இங்கே அழைத்துவருவதில் அதிக நன்மையுண்டு. அப்படிச் செய்யாமல் என்னை இங்கிருந்து எடுத்துப் போக யத்தனித்துத் தவறி நான் ராக்ஷஸர்களுடைய கையில் அகப்பட்டால் மறுபடியும்உங்களுடைய கண்ணில் படப்போகிறதில்லை. என்னைக் காணுமல் ராகவன் உயிரை விடுவார். உடனே அவருடைய தம்பிகளும்தாய்களும் ஸுக்ரீவனும் வானர ஸைன்யங்களும் பிராணனை வைத்துக் கொள்வார்களோ?

மேலும் பர்த்தாவிடத்தில்அளவற்றபிரியத்தையும் பக்தியையும் வைத்திருக்கும் நான் வேறு புருஷனைத் தொடுவது நியாயமல்ல. ராவணன் உன்னைத் தொட்டு எடுத்து வரவில்லையா என்ருல், நானே தனியாக இருந்தேன்;பலமற்ற மனுஷ்யஸ்த்ரீ;என்னை ரக்ஷிப்பவர்கள் ஸமீபத்திலில்லை; அவனே ராக்ஷஸன்; அளவற்ற பலசாலி; மஹாக்ரூரன்; என்னைப் பலத்தால் தூக்கியபொழுது எப்படித் தடுக்க முடியும்? ஆனலும், என்னல் முடிந்த வரையிலும் தடுத்துப் பார்த்தேன்? முடியவில்லை. ராகவன் இங்கே வந்து ராவணனையும் அவனைச் சேர்ந்தவர்களையும் யுத்தத்தில் கொன்று எல்லோரும் அறிய என்னை அழைத்துப் போவது அவருடைய குலத்திற்கும் வீரியத்திற்கும் பராக்கிரமத்திற்கும் கீர்த்திக்கும் என்னிடத்தில் வைத்த பிரீதிக்கும் அழகாகும். யுத்தத்தில் தேவ கந்தர்வ பன்னக ராக்ஷஸர்கள் முதலியவர்களும் அவருக்கு எதிரில் நிற்கமாட்டார்கள். அவருடைய வீரியத்தையும் விராதன் கரன் தூஷணன் ஜனஸ்தானத்திலுள்ள ராக்ஷஸர்கள் முதலியவர்களைக் கொன்ற பொழுது பார்த்திருக்கிறேன். என்னை விவாஹம் செய்வதற்கு முன் மாரீசன் ஸுபாஹு தாடகை முதலியவர்களைப் படுத்தின பாட்டையும் பிறர் சொல்லக் கேட்டிருக்கிறேன். கபந்தனையும் வாலியையும் வதம்செய்ததை நீயே சொல்லியிருக்கிருய். கொழுந்து விட்டெரியும் நெருப்பு, காற்றுடன் சேர்ந்தது போல் மஹா பலவானும் தேவேந்திரனுக்கு ஸமமான பராக்கிரமசாலியும் அத்புதமான வில்லாளியுமான ராமனும் லக்ஷ்மணனும் யுத்த களத்தில் சேர்ந்து நின்ருல் எவன்தான் அவர்களைக்

கண்ணெடுத்துப் பார்க்க முடியும்? பிரளயகாலத்தில் ஸகல லோகங்களையும் ஸம்ஹரிப்பதற்காக ஸூரிய பகவான் ஆயிரத்தெட்டு கண்களையும் திறந்து கொண்டு நிற்பது போல் பாணங்களையே கிரணங்களாயுடைய ரகுவீரன் யுத்த களத்தில் மதம் கொண்ட திக்கஜத்தைப்போல் லக்ஷ்மணனுடன் நின்று கோதண்டத்தை வளைத்துக் கால ஸர்ப்பங்களைப்போல் பாணங்களை வர்ஷித்து, சத்ருஸைன்யங்களை ஹதம் செய்தால் எவனாவது அவர்களைப் பார்த்துப் பிழைக்க முடியுமா? ஆகையால், வானர சிரேஷ்ட! ராமலக்ஷ்மணர்களையும் ஸுக்ரீவனையும் வானர ஸைன்யங்களையும் சிக்கிரமாய் இங்கே அழைத்துக் கொண்டு வா. வெகுகாலமாய் ராமனை நினைத்து நினைத்து அவர் வருவாரென்று வழி பார்த்து ஸகல கஷ்டங்களையும் பொறுத்துப் பொறுத்துத் தேகம் துரும்பாய்ப்போன எனக்கு ஸந்தோஷத்தையும் பிராணனையும் கீர்த்தியையும் கொடுக்கும் பெரும் உபகாரத்தைச் செய்வாய்'' என்றாள்.

ஸ மே ஹரிஶ்ரேஷ்ட2 ஸலக்ஷ்மணம் பதிம்
ஸயூத2பம் க்ஷிப்ர மிஹோபபாத3ய |
சிராய ராமம் ப்ரதி ஶோக கர்ஶிதாம்
குருஷ்வ மாம் வாநரமுக்2ய ஹர்ஷிதாம் || (68)

---

## ஸர்க்கம் 38

## காகாஸுர விருத்தாந்தம்

தத: ஸ கபிஶார்தூ3ல: தேந வாக்யேந ஹர்ஷித: |
ஸீதா முவாச தச்ச்2ருத்வா வாக்யம் வாக்யவிஶாரத3: ||

மஹா புத்திமானான அந்த வானர சிரேஷ்டன் ஸீதையின் வார்த்தையைக் கேட்டு மிகுந்த ஸந்தோஷமடைந்து, "அம்மா! தாங்கள் சொன்ன வார்த்தைகள் ஸ்த்ரீகளின் ஸ்வபாவத்திற்கும் பதிவிரதைகளுடைய விநயத்திற்கும் தகுந்தவையே. நூறுயோஜனை விஸ்தீர்ணமுள்ள இந்தப் பெருங்கடலை என் முதுகிலேறித் தாண்டுவது ஸ்த்ரீயான தங்களுக்கு முடியாதல்லவா? ராமனைத் தவிர வேறு புருஷனைத் தொடமாட்டேனென்ற இரண்டாவது காரணம் அந்த மஹாத்மாவின் பத்தினியாகிய தங்களுக்கே தகும். இப்படிப் பட்ட வார்த்தையை வேறொருவரும் சொல்ல மாட்டார்கள். தங்களுடைய ஸகல விருத்தாந்தங்களையும் வார்த்தைகளையும் ஒன்று விடாமல் ராகவனிடத்தில் சொல்வேன். அவருக்குப் பிரியமான காரியத்தைச் செய்ய வேண்டுமென்ற இச்சையாலும் வேறு அநேக காரணங்களாலும் தங்களிடத்திலுள்ள ஸ்நேகத்தாலும் களங்கமில்லாத மனத்துடன் இப்படிச் சொன்னேனே தவிர வேறல்ல. இந்தப் பெருங்கடலைத் தாண்டுவது கஷ்டம். கோர ராக்ஷஸர்களால் இரவும் பகலும் காக்கப்பட்ட இந்த லங்கையில் பிரவேசிப்பது அதிலும் கஷ்டம்; நான் சொன்னபடிசெய்ய எனக்குச் சக்தியுண்டு; மற்றவர்களுக்கு ஸுலபமல்ல. ஆகையால் இப்படிச் சொன்னேன். ராகவனிடத்தில் எனக்குள்ள ஸ்நேகத்தாலும், தங்களிடத்தில் வைத்த பக்தியாலும், இப்பொழுதே தங்களை ராமனோடு சேர்த்து வைக்க வேண்டுமென்று அளவற்ற ஆசை கொண்டிருக்கிறேன்; இல்லாவிட்டால் இப்படிச் சொல்வேனா? என்னுடன் ராமனிருக்குமிடத்திற்கு வருவதற்குத் தாங்கள் இஷ்டப்படாவிட்டால் நான் தங்களைப் பார்த்தேனென்று அவர் நம்பும்படி சில அடையாளங்களைக் கொடுங்கள்'' என்று பிரார்த்தித்தார்.



அதைக்கேட்டு ஸீதை தனக்கும் ராகவனுக்கும் ஏகாந்தத்தில் நடந்த விருத்தாந்தங்களைச் சொல்ல ஆரம்பிக்கையில், தான் முன்பு அனுபவித்த ஸுகங்களையும் இப்பொழுது படும் கஷ்டத்தையும் நினைத்துக் கண்ணீர் நெஞ்சையடைக்க மெதுவாய், "ஆஞ்ஜநேய! சித்திரகூட பர்வதத்தினடியில் வடகிழக்குமூலையில் மந்தாகினி நதிக்குஸமீபத்தில் ஒரு புண்ணியஸ்தலமுண்டு. அங்கே ஸித்தர்களும் தபஸ்விகளும் ஆனந்தமாய் வஸிப்பார்கள். பழம் கிழங்கு ஜலம் குறைவில்லாமல் கிடைக்கும். நாங்கள் அங்கே இருக்கையில் நடந்த ஒரு விருத்தாந்தத்தைச் சொல்லுகிறேன். இந்த அடையாளத்தை என் பர்த்தாவிடத்தில் சொல். "ஒரு ஸமயத்தில் பலவித புஷ்பங்களால் வாஸனையுள்ள மரச்சோலைகளில் நான் வெகுநேரம் விளையாடி. வியர்த்துக் களைத்து தங்களுடைய மடியில் உட்கார்ந்தேன். அப்பொழுது ஒரு காக்கை மாம்ஸத்தில்ஆசைகொண்டு என் மார்பின் மத்தியில் கொத்திற்று. நான் அதன்மேல் ஒருசிறிய கல்லை எடுத்தெறிந்து துரத்தினேன். மாம்ஸத்தில் ஆசைவைத்த அந்தத் துஷ்டக் காக்கை நான் எவ்வளவு துரத்தியும் மறுபடியும் என்னை அடிக்கடி ஹிம்ஸித்ததேயல்லாமல், அவ்விடத்தைவிட்டுப் போகவே இல்லை. அந்த ஹிம்ஸையைத் தீர்க்கவேண்டுமென்று பரபரப்புடன் எழுந்தேன்; என் உத்தரியம் நழுவ அதை ஒட்டியாணத்துடன் சேர்த்துப் பிடித்துக்கொண்டு அந்தக் காக்கையின்மேல் மிகுந்த கோபத்துடன் நின்றேன். அப்பொழுது என்னைப் பார்த்தீர்கள். பிறகு நான் அந்தக் காக்கையை எவ்வளவு அடித்துத் துரத்தியும் அது என்னைக் கொத்திக்கொண்டே இருந்தது. அதைக் கண்டு, ஒரு காக்கையை ஓட்ட எனக்குச் சக்தியில்லாததைப் பற்றித் தாங்கள் பரிகாஸம் செய்தீர்கள். அப்பொழுது எனக்குண்டான வெட்கமும் அந்தக் காக்கையிடத்திலுள்ள கோபமும் சொல்லி முடியாது. அதைக்கண்டு தாங்கள் என்னை ஸமாதானம் செய்தீர்கள். நான் மிகவும் களைத்துத் தங்களுடைய மடியில் மறுபடியும் வந்து படுத்தேன்.ஒரு காக்கை நம்மை இவ்வளவு பாடுபடுத்திற்றல்லவா என்று நினைக்க எனக்குத் துக்கம் தாங்காமல் கண்ணீரால் முகம் நனைந்து பிறகு மெள்ள மெள்ளத் துடைத்துக்கொண்டேன். அப்பொழுது தாங்கள் என்னைப் பார்க்க வில்லையோ?'' பிறகு களைப்பால் வெகு நேரம் அவரு

டைய மடியில் படுத்துத் தூங்கினேன். அவரும் களைத்து என் மடியில் படுத்துத் தூங்கிவிட்டார். அப்பொழுது அந்தக் காக்கை என் ஸமீபத்தில் வந்து நான் விழித்துக்கொண்டு ராகவனுடைய மடியிலிருந்து எழுந்தவுடன் சீக்கிரமாய் என்மேல் பாய்ந்து மார்பின் நடுவில் கொத்திற்று. அடிக்கடி கிளம்பிக் கிளம்பி என்னைக் கொத்திக் கிழிக்கையில் ரத்தத் துளிகள் ரகுநாதன்மேல் விழ அவர் விழித்துக் கொண்டார். அந்தக் காக்கையின் ஹிம்ஸையைப் பொறுக்கமுடியாமல் நான் அவரை எழுப்பினேன்.

அந்த மஹாவீரன் நான் படும் அவஸ்தையையும் அந்தக் காக்கை என் மார்பின் நடுவில் செய்த காயத்தையும் பார்த்துக் கொண்டு காலஸர்ப்பத்தைப்போல் பெருமூச்சுவிட்டு, "ஸுந்தரீ! இப்படி உன்னை மார்பில் கொத்திக் காயப்படுத்தினவன் யார்? வாயைத் திறந்துகொண்டு கோபத்துடனிருக்கும் பாம்புடன் விளையாடுபவன் யார்?" என்று சொல்லி நான்கு புறத்திலும் பார்க்கையில் அந்தக் காக்கை குரூரமான நகங்களுடன் என் ரத்தத்தால் பூசப்பட்டு எனக்கெதிரே உட்கார்ந்திருப்பதைக் கண்டார். அது இந்திரனுடைய புத்திரனான ஜயந்தன்; ராகவன் கோபத்துடன் தன்னைப் பார்த்தபொழுது "ஓஹோ! மோசம் வந்ததே" என்று வாயுவேகமாய் பூமிக்குள் மறைந்தான். அதைக்கண்டு மஹாபுத்திமானான ரகுவீரன் அந்தக் காக்கையின் நிஜஸ்வரூபத்தையும் எண்ணத்தையுமறிந்து, கோபத்தால் கண்கள் ஜ்வலிக்க, அதைக் குரூரமாக சிக்ஷிக்கவேண்டுமென்று நினைத்தார். ஆனால், அங்கே அவருடைய கோதண்டமும் பாணங்களும் இல்லை. உடனே தான் உட்கார்ந்திருந்த ஆஸனத்திலிருந்து ராமன் ஒரு தர்ப்பத்தைக்கிள்ளி அதில் பிரஹ்மாஸ்திரத்தின் மந்திரத்தை ஜபித்து அந்தக் காக்கையை உத்தேசித்து பிரயோகித்தார். உடனே அது காலாக்னிபோல் ஜ்வலித்துக்கொண்டு அந்தக் காக்கையை ஆகாச மார்க்கமாய்த் துரத்த ஆரம்பித்தது.

அதைக்கண்டு அந்தக்காக்கை ஓடிற்று, தாவிற்று, பறந்தது, மறைந்தது; தனக்குத்தெரிந்த ஸகல தந்திரங்களையும் உபாயங்களையும் செய்தது. ஒன்றும் பலிக்காததைக்கண்டு என்னைக் காப்பாற்றுவாருண்டோ என்று வாய்விட்டலறிக்கொண்டு இந்த லோகமெங்கும் அலைந்து திரிந்தது. என்ன கஷ்டம்! பிறகு தன் பிதாவான தேவேந்திரனிடத்தில் சென்றால் தன்னைக் காப்பாற்றுவாரென்று அங்கே ஓடிற்று. தேவேந்திரன் அஸுரரூபத்தையும் துக்கத்தையும் கண்டு, நடந்த விருத்தாந்தத்தை விசாரித்துத் தெரிந்துகொண்டு அவனைத் துரத்திவரும் பிரஹ்மாஸ்திரத்தையும் பார்த்தான். "ராமன், ஒருவனைக் கொல்லவேண்டுமென்று நிச்சயித்த பிறகு நாம் அதில் தலையிட்டுக்கொண்டால் பிழைப்பதேது? மேலும், இவன் செய்த துஷ்டகாரியத்திற்கு இந்தத்தண்டனை தகுந்ததே,

ராமன் ஒரு தர்ப்பத்தைக் கிள்ளி அதில் பிரஹ்மாஸ்திரத்தின் மந்திரத்தை ஜபித்து அந்தக் காக்கையை உத்தேசித்து பிரயோகித்தார். உடனே அது காலாக்னிபோல் ஜ்வலித்துக்கொண்டு அந்தக் காக்கையை ஆகாச மார்க்கமாய் துரத்த ஆரம்பித்தது. (பக்கம் 154 பார்க்க)

மேலும் நான் ராஜ்யத்தையும்தேஜஸையும் பாரியையையும் கீர்த்தியையும் இழந்து, ஓடி ஒளிந்துத் தவிக்கும்பொழுது எனக்கு ஸகலத்தையும் கொடுத்துரக்ஷித்த லோகமாதாவிற்கு அபராதம் செய்தவனை நான் திரும்பிப்பார்க்கலாமோ? ஸ்கல லோகங்களுக்கும் பிதாவான ஹரியே அவனைக் கைவிட்டபின் எனக்கென்ன? அவர் என் உடன் பிறந்தவரன்றோ? அவருக்கு அபராதம் செய்தாலென்ன? எனக்கு அபராதம் செய்தாலென்ன? என்னையும் தேவர்களையும் கதறவடிக்கும் ராவணனை வதம்செய்யப் பகவான் அவதரித்திருக்க, இவன் அந்தக் காரியத்திற்கு விரோதம் செய்து எங்களுடைய க்ஷேமத்தைக் கெடுக்க வந்து துஷ்டன்; ஆகையால் ஒரு குலத்திற்கு நாசம் வராதபடி அதில் ஒருவனைத் தள்ளிவிடுவது நியாயம் என்று புத்தி பூர்வகமாக ஜயந்தனை அங்கிருந்து துரத்தி விட்டான். பிறகு தன்னைப் பெற்றெடுத்த தாய் தன்னிடத்தில் இரங்காமலிருப்பாளோ என்று ஜயந்தன் இந்திராணியிடத்தில் சென்று அடைக்கலம் வேண்டினான். அவளும், "ஸகலப் பிராணிகளுக்கும் மங்களத்தைச் செய்ய வேண்டி,சொல்ல முடியாத கஷ்டங்களை ஸஹித்துக்கொண்டிருக்கும் ஜானகிக்குத் தீராத அபராதம் செய்த இவன் நமக்குப் புத்திரனல்ல" என்று துரத்திவிட்டாள். பிறகு தன்னைப்போன்ற தேவதைகளிடத்தில் சென்று அடைக்கலம் புகுந்தான். அவர்களும் "எவருடைய கிருபையால் நாம் ஸமுத்திர மதன காலத்தில் அமிருதத்தைப் பெற்றுச் சிரஞ்ஜீவிகளாய் வாழ்கிறோமோ; எவருடைய பராக்கிரமத்தால் அஸுரர்களை ஜயித்து ஸ்வர்க்கலோக ராஜ்யத்தை ஆளுகிறோமோ அந்த நமது குலதெய்வமான ராமனுடைய கண் சிவந்தால் நாமெங்கே" என்று துரத்திவிட்டார்கள். பிறகு ஜயந்தன் தன்னைப்போன்ற பக்ஷிகளிடத்தில் போய்ச் சரணமடைந்தான். அவைகள், "நமக்குப் பிரபுவான கருடன் யாருக்கு வாஹனமோ அந்த மஹாப்பிரபுவைக் கோபமூட்டினவன் நம்மிடத்திற்கு ஏன் வந்தான்?" என்று அடித்துத் துரத்திவிட்டன. பிறகு மஹரிஷிகளிடத்தில் சென்று தன்னைக் காப்பாற்ற வேண்டுமென்று பிரார்த்தித்தான். அவர்களும் மூன்று காலங்களையும் அறிந்தவர்களாகையால், "நாம் இவனுக்கு இடம் கொடுத்தால் நமக்கும் ஆபத்து நேரும். ராமனே இவனைக் காப்பாற்றுவார். பக்ஷிகளுக்குள் காக்கை சண்டாளன்; நாம் இவனைப் பார்ப்பதும் பிசகு. ஸகல ஜீவகோடிகளுக்கும் புருஷகாரமாய் நின்று உத்தம கதியை அடைவிக்கும் லோகரக்ஷிக்கு அபராதம் செய்த இவனுக்கு கதியுண்டோ?" என்று கைவிட்டார்கள். இப்படிப் பூமி புவர் லோகம் ஸ்வர்க்கமென்ற மூன்று லோகங்களிலும் சுற்றி அலைந்தான். பூமியில் மஹரிஷிகளும் புவர்லோகத்தில் பக்ஷிகளும் ஸ்வர்க்கத்தில் தேவர்களும் மாதாபிதாக்களும் கைவிட்டார்கள். இன்னும் ஆசைவிடாமல் கண்டபேர்களைக் கேட்டுக் கண்டவிடங்களில் வெட்கமில்லாமல் நுழைந்தும் அடித்துத் துரத்தப்பட்டான்.

ஆகையால், முடிவில் ஸர்வலோக சரண்யனான ரகுவீரனையே சரணடைந்தான். மஹாலக்ஷ்மியே ஒருவன்மேல் குற்றம் சொன்னாலும், "என்னடியார் குற்றம் செய்யார். அப்படிச் செய்தாலும் அது குற்றமாயிராது" என்று பக்தர்களைக் காப்பாற்றும் கருணாமூர்த்தியைச் சரணமடைந்தான். பூர்வத்தில் இந்திரனுக்கு ஸஹாயமாய் அஸுரர்களை ஜயித்த ககுத்ஸ்தருடைய வம்சத்தில் பிறந்த ராமன், இந்திரனுடைய புத்திரனிடத்தில் இரக்கம் வைத்தார். அவன் செய்த அபராதத்திற்கு அவனைக் கொல்லவேண்டியது: ஆனாலும், அதுவரையில் வெகு கஷ்டங்களை அனுபவித்திருக்கிறான். இப்பொழுது வேறு கதியற்று நம்மைச் சரணமடைந்திருக்கிறான். ரக்ஷிப்பது நமது விரதமல்லவா என்று அவனிடத்தில் கிருபை செய்தார்; ஸகல ஜீவகோடிகளுக்கும் அவரைத் தவிர வேறு சரணமுண்டோ? ஸகல லோகங்களிலும் அலைந்து திரிந்து யாதொரு ப்ரயோஜனமும் இல்லாமல், தன்னையே சரணமடைந்த அந்தக் காக்கையின் துக்கத்தையும் பரிதாபத்தையும் அவன் தன்னையே கதி என்று வந்தடைந்ததையும் கண்டு, "இந்த ப்ரஹ்மாஸ்திரம் வீண் போகாதே; ஆகையால், 'தங்களுடைய அஸ்திரத்திற்கு என் வலது கண்ணைப் பலியாகக் கொடுக்கிறேன் என்று சொல்" என்றார். ஜயந்தனும் அப்படியே செய்ய, அவனுடைய வலது கண்ணைப் பிடுங்கினார். இப்படித் தனது வலது கண்ணைக் கொடுத்து ராமனுடைய கடாக்ஷத்தால் உயிர் பிழைத்தான். பிறகு அவன் ரக்ஷகனான ரகுநாதனையும் அந்த மஹானுபாவரைப் பெற்ற தசரதசக்கரவர்த்தியையும் நமஸ்கரித்து ராமசந்திரனிடத்தில் உத்திரவு பெற்றுக் கொண்டு ஸ்வர்க்கலோகம் சென்றான்.

லோகநாத! எனக்காக ஒரு காக்கையின்மேல் ப்ரஹ்மாஸ்திரத்தை பிரயோகிக்கவில்லையா? இப்பொழுது என்னைத் தங்களிடத்திலிருந்து அபகரித்துத் தங்களை அவமானம் செய்து என்னை இப்படி உபத்திரவிக்கும் ஒரு அல்ப ராக்ஷஸனைப் பொறுத்திருப்பதற்குக் காரணமேதோ? அளவற்ற உற்சாகத்தையுடைய தாங்கள் என்னிடத்தில் தயவு செய்யக்கூடாதா? பிறர் துக்கப்படுவதைக் கண்டு ஸஹிக்க மாட்டேனென்ற தாங்கள் அந்த வார்த்தையை நடத்தையில் காட்டித் தங்களைச் சேர்ந்த நான் படும் துக்கத்தைத் தீர்க்கக்கூடாதா? இப்படிச் செய்யாவிட்டால் புருஷோத்தமனென்ற பெயர் தங்களுக்கு எப்படித் தகும்? அதைக் காப்பாற்றிக் கொள்ளுங்கள். நான் தங்களை நாதனாக அடைந்தும் அனாதையைப்போல் இருக்கிறேனே. ஓடத்திலேறிய பிறகு கூலி கேட்பதுபோல், தங்களுடன் ஏகாந்தமாக இருக்கையில், 'தங்களுக்கு மிகவும் பிரியமான தர்மம் எது?' என்று நான் கேட்டிருக்கிறேன். 'பிறர் துக்கப்படுவதைப் பார்த்தால் ஸஹிக்காமலிருப்பதே உத்தமமான தர்மம்; அதே எனக்கும் பிரியம்; அதுவே என் ஸ்வபாவம் என்று தாங்களே சொல்லக் கேட்டேன். வேறு தூதன் முதலியவர்கள் மூலம்



சொன்னதில்லை. 'இது வார்த்தையே' தவிர அனுஷ்டானத்திற்கு வரவில்லையே" என்று ஆஞ்ஜனேய! உன் பிரபுவைக் கேள்.

"தாங்கள் அளவற்ற வீரியம் உத்ஸாஹம் பலம் முதலிய அனந்த கல்யாண குணபரிபூர்ணரென்றும், கம்பீரத் தன்மையில் ஸமுத்திரத்தைப் போன்றவரென்றும், பிறரால் அசைக்கமுடியாதவரென்றும், இந்திரன் எப்படி ஸ்வர்க்கத்திற்கு அதிபதியோ அப்படி இந்தக் கடல்சூழ்ந்த பூமிக்கு நாதனென்றும் நான் அறிவேன்" என்று அவரிடத்தில் சொல்லவேண்டும். ஆஞ்ஜனேய! ரகுவீரன் சொன்ன வார்த்தையைத் தவறுகிறதுண்டோ? அஸ்திரவித்யையில் அவருக்கு நிகருண்டோ? அவருடைய பலத்திற்கு எல்லையுண்டோ? இப்படியிருந்தும் வீண்போகாத அஸ்திரங்களை ராக்ஷஸர்களிடத்தில் ஏன் பிரயோகிக்கக்கூடாது? யுத்தகளத்தில் நாகர்களாவது கந்தர்வர்களாவது அஸுரர்களாவது தேவர்களாவது ராமனுடைய பாணவேகத்தைத் தடுக்கமுடியுமா? அந்த வீரருக்கு என்னிடத்தில் நிஜமான பிரேமையும் என்னைச் சீக்கிரத்தில் மீட்க வேண்டுமென்ற இச்சையும் இருந்தால் கூர்மையான பாணங்களால் ராக்ஷஸர்களை ஏன் நாசம் செய்யவில்லை? அவ்வளவென்ன? லக்ஷ்மணன் பலவானல்லவா? வீரனல்லவா? சத்ருக்களுக்குக் காலனல்லவா? ராமனிடத்தில் உத்திரவு பெற்றுக்கொண்டு என்னை ரக்ஷிக்கக்கூடாதா? வாயுவிற்கும் அக்னிக்கும் ஸமமான வேகத்தையும் தேஜஸ்ஸையும் உடைய அவ்விருவர்களும் தேவர்களாலும் எதிர்க்கப்படுவார்களா? அவர்கள் சேர்ந்திருந்தால் என்னை ஏன் கவனிக்கவில்லை? சத்ரு வர்க்கங்களை வேரறுத்து என்னை ரக்ஷிக்க அவர்களுக்குச் சக்தியில்லையோ? இதுவரையில் அப்படிச் செய்யவில்லையோ? இப்பொழுது நான் படும் அவஸ்தைகளைப் பார்த்தால் தங்களுடைய பிராணனைக் கொடுத்தாவது என்னை ரக்ஷிப்பதற்கு நான் தகாதவளோ?

ஆகையால் அவர்களிடத்திலாவது என்னிடத்திலாவது ஏதோ குற்றமிருக்கவேண்டும். அவர்கள் இப்படிச் செய்ய ஸமர்த்தர்களென்று எவரும் ஒப்புக்கொள்வார்கள். ஆகையால், என்னிடத்தில் பெரிய குற்றம் ஏதோ இருக்கிறது; ஸந்தேகமில்லை. நான் ஸர்வமும் தெரிந்தவளா? எனக்குத் தெரியாமல் நான் பாபத்தைச் செய்திருக்கலாம். அதை அனுபவித்தாலொழியத் தீருமோ? காரணமிருக்கையில் காரியம் உண்டென்பதில் ஸந்தேகமோ? ஒருவேளை அவர் என்னை வனத்திற்கு அழைத்துப் போகமாட்டேனென்று சொன்னபொழுது, "தாங்கள் புருஷவேஷம் தரித்த ஸ்த்ரீ என்பதை அறியாமல் அநியாயமாய் என் தகப்பனார் மோசம்போய் என்னைத் தங்களுக்கு விவாஹம் செய்துவிட்டாரே" என்று சொல்லி மஹாபராதத்தைச் செய்திருக்கிறேனல்லவா? அந்தப் பாவம் போதாதா?" என்றாள்.

ஸீதை இப்படித் தீனமாய்க் கண்ணீர் பெருக பிரலாபிப்பதைக் கேட்டு ஆஞ்ஜனேயர் மனம் கலங்கி, "தாயே! தங்களைப் பிரிந்த துக்கத்தால் ராமன் இதர விஷயங்களில் ஆசையற்றுச் சோக ஸமுத்திரத்தில் முழுகி இருக்கிறார். லக்ஷ்மணன் பரிதவிக்கிறார். ஸத்தியத்தின் மேல் ஆணையிட்டுச் சொல்கிறேன். இவ்வளவு கஷ்டப்பட்டுத் தங்களைக் கண்டு பிடித்தேன். இனிமேலும் தாங்கள் கிலேசப்பட வேண்டிய நியாயமென்ன? இந்த முகூர்த்தத்தில் தங்களுடைய துக்கங்களெல்லாம் நாசமடைந்தன. மஹாபலவான்களான அந்தப் புருஷ சிரேஷ்டர்கள் தங்களைப்பார்க்க ஆவல்கொண்டு லங்கையைச் சாம்பலாக அழிக்கப் போகிறார்கள். துஷ்டனான ராவணனையும் அவனுடைய பந்துக்களையும் யுத்தத்தில் மடித்துத் தங்களை அயோத்யைக்கு அழைத்துக் கொண்டு போவார்கள். ஆகையால் ராகவனுக்கும் லக்ஷ்மணனுக்கும் தேஜஸ்வியான ஸுக்ரீவனுக்கும் வானரர்களுக்கும் நான் சொல்ல வேண்டிய ஸமாசார மென்ன?" என்றார்

அதற்கு ஸீதை, சோகத்தால் குரல் தழுதழுக்க, "மாருதே! லோகத்தில் ஸ்த்ரீகள் இஹபர ஸாதகத்திற்காகவும், தங்களை ரக்ஷிப்பதற்காகவும் புத்திரர்களைப் பெறுகிறார்கள். என் மாமியாரான கௌஸல்யையோ அப்படிச் செய்யவில்லை. பெருந்தன்மையான ஸ்வபாவமுடையவராகையால், ஸகல லோகங்களையும் ரக்ஷிக்கும் புத்திரன் பிறக்க வேண்டுமென்று விரதங்களை அனுஷ்டித்து லோகோபகாரத்திற்காக ரகுவீரனைப் பெற்றாள். அவருடைய உத்தேசம் வீணாகுமோ? அவர் ரக்ஷிக்க வேண்டிய லோகத்தில் நானும் சேரவில்லையா? என்னை ரக்ஷிக்க வேண்டுமென்று நான் பிரார்த்திப்பதும் பிசகு; அந்தக் கவலை அவருக்கல்லவா? கால தாமதத்தை ஸஹிக்கமுடியாமல் நான் சீக்கிரப்படுவதேதவிரவேறல்ல. அவருக்கு என்னை ரக்ஷிக்கச் சக்தியிருந்தால் போதும். அப்பொழுது எனக்குக் குறை என்ன? அவருக்கு எப்பொழுதும் பக்தர்களை ரக்ஷிக்கும் சக்தியும் கருணையும் குறையாமலிருக்க வேண்டுமென்று நாம் பிரார்த்திக்க வேண்டியது மாத்திரமே. ஆகையால் ரகுவீரன் க்ஷேமமாக இருக்கிறாரா என்று நான் விசாரித்ததாகச் சொல். அவரை நான் ஸாஷ்டாங்கமாய் நமஸ்கரித்தேன் என்று சொல். ஏனென்றால் லோகத்தார்களைப்போல் அவரிடத்தில் நான் பிரார்த்திக்க வேண்டியது ஏதாவது இருந்தால் இந்த நமஸ்காரத்தைத்தவிர நான் செய்ய வேண்டியது வேறென்ன?

மாலைகள், ரத்தினங்கள், பிரியமான பாரியைகள் இவைகளையும் இன்னும் இந்த விசாலமான பூமியில் அடைய முடியாத ஸம்பத்துக்களையும்விட்டு லக்ஷ்மணன் மாதாபிதாக்களிடத்தில் வணக்கமாய் உத்திரவு பெற்றுக்கொண்டு, தமையனிடத்தில் வைத்த ஸ்நேஹத்தாலும் பக்தியாலும் அவரைப் பின்தொடர்ந்து, அவருக்கு ஸகல கைங்கரியங்களையும் செய்து அரண்யத்தில் ரக்ஷித்து வருகிறானல்லவா? ஸிம்ஹத்தைப்போல், பலமுள்ள புஜங்களையும் நீண்ட

Notes : This Blank Page has also to be counted as a another page Number.

It is intentionally left blank after Picture Sketches.!



ததோ வஸ்த்ரக³தம் முக்த்வா தி³வ்யம் சூடா³மணிம் ஶுப⁴ம் |
ப்ரதே³யோ ராக⁴வாயேதி ஸீதா ஹநுமதே த³தௌ³ || —ஸு.38 ஸ-67சு.

ஸீதை தன் வஸ்திரத்திலிருந்து மங்களகரமான சூடாமணியை எடுத்து ராகவனுக்கு அடையாளமாகக் காட்டும்படி ஆஞ்ஜநேயரிடத்தில் கொடுத்தாள். (பக்கம் 163 பார்க்க)

கைகளையுமுடையவன்; பெருந்தன்மையான ஸ்வபாவத்தையுடையவன்; பார்க்கப் பிரியமானவன்; தன் தாயைப் போல் என்னையும், பிதாவைப்போல் ராமனையும் பாவித்துச் சுச்ரூஷை செய்பவன்; பெரியோர்களைப் பணிகிறவன்; ராமனுக்கு ஸகலவித கைங்கரியத்தையும் செய்யும் பாக்கியம் பெற்றவன்; ஸகல காரியங்களையும் செய்ய ஸமர்த்தன்; அதிகமாகப் பேசாதவன்; என் மாமனாரான தசரதருக்கு ஸமமானவன்; அவருக்குப் பிரியமான புத்திரன்; என் பிரீதிக்கு எப்பொழுதும் பாத்திரன்; சிரேஷ்டன்; தைரியவான்; ராமனுக்குத் தம்பி; கட்டளையிட்ட காரியங்களை நிர்வஹித்துச் செய்யக் கூடியவன்; அவனுடைய முகத்தைப் பார்த்து ராமன், தசரதர் காலம் சென்றதையும் நினைக்காதிருக்கிறார். எப்பொழுதும் பரிசுத்தன், ஸமர்த்தன், மிருதுவான ஸ்வபாவமுள்ளவன், ராகவனுக்குப் பிரியன். என் விஷயத்தை கவனிக்க வேண்டுமென்று அவனை நான் க்ஷேமம் விசாரித்ததாகச் சொல். என்னை ராவணன் அபகரித்துக் கொண்டு போனானென்று அவனுக்குத் தெரியாது. இல்லாவிட்டால் இவ்வளவு காலம் நான் கஷ்டப் படவேண்டுமா?

ஆஞ்ஜநேய! ராகவன் என் துக்கத்தை நாசம் செய்யும்படி நீயே அவருக்குச் சொல்ல வேண்டியது. வானர சிரேஷ்ட! இந்தக் காரியத்தை நீயே முடித்து வைக்க வேண்டியது. உன் ஸாமர்த்தியத்தால் ராகவன் என்னை மீட்க ஸகலப் பிரயத்தனங்களையும் செய்ய வேண்டியது. மஹாசூரனாகவும் என் நாதனாகவும் இருக்கும் ராமனிடத்தில் 'தாசரதே! நான் ஒரு மாதத்திற்கு மேல் பிழைத்திருக்க மாட்டேன். இது ஸத்தியம். பூர்வத்தில் இந்திரன் விருத்திராஸுரனென்ற' பிராஹ்மணனைக் கொன்று அந்த ப்ரஹ்மஹத்யையால் ஸ்வர்க்கத்தையும் ராஜ்ய லக்ஷ்மியையும் இழந்து தரித்திரனாய்க் கஷ்டப் பட்டான். அப்பொழுது நாராயணன் மற்ற தேவதைகளுடன் அசவமேதமென்ற வைஷ்ணவயாகத்தைச் செய்து அவனுடைய பாவத்தைப் போக்கிப் பூர்வ ஸ்திதியில் வைத்தார். (அவனை விட்டு விலகின கௌசிகி என்ற ராஜ்யலக்ஷ்மி கவாக்ஷமென்ற புண்ணிய தீர்த்தத்தில் வஸித்துக் கொண்டிருந்தாள். தேவர்கள் அங்கே சென்றவுடன் பாதாளத்தில் மறைந்தாள். அப்பொழுது அவளை அழைத்து வரக் கூடியவர்கள் யாரென்று தேவர்கள் கவலை கொள்ள, ஆகாசவாணி, "அவளைக் கொண்டு வரக் கூடியவர் உத்தம புருஷ லக்ஷணங்கள் பொருந்தின நாராயணனே" என்று சொன்னாள். அதைக் கேட்டுத் தேவர்கள் பகவானை பிரார்த்திக்க அவரும் லக்ஷ்மியை அழைப்பித்து ஸ்வர்க்கத்தில் வைத்தார்) அப்படிப் பாபியான ராவணனால் வஞ்சிக்கப்பட்டு இங்கே சிறையில் வைக்கப்பட்டிருக்கும் என்னைத் தாங்களே ரக்ஷிக்கத் தகுந்தவர்கள் என்று அடிக்கடி சொல்ல வேண்டியது" என்று ஸமாசாரத்தைத் தெரிவித்து ஸீதை தன் வஸ்திரத்திலிருந்து மங்களகரமான சூடாமணியை

எடுத்து ராகவனுக்கு அடையாளமாகக் காட்டும்படி ஆஞ்ஜனேயரிடத்தில் கொடுத்தாள். அவர் அதை வணக்கமாய்ப் பெற்றுக் கொண்டு விரலில் தரிக்கப் பார்த்தார். ஆனால், தான் விசுவரூபத்தை மாற்றி முன்பெடுத்த ஸூக்ஷ்மமான ரூபத்துடன் இருந்தபடியால் அது அந்த ஆபரணத்திற்கு ஸரியாகவில்லை.

பிறகு, ஹனுமான்ஸீதையை நமஸ்கரித்து பிரதக்ஷிணம் செய்து வணக்கமாய்ப் பக்கத்தில் நின்றார். ஜானகியைக்கண்ட ஸந்தோஷத்தால் பூரித்த தேகம் லங்கையில் இருந்தபோதிலும் மனத்தால் ராகவனுடைய திருவடிகளையடைந்து நமஸ்கரித்தார். பெருங்காற்றால் கொஞ்சம் அசைந்து, பிறகு முன்போல் ஸ்திரமாயிருக்கும் மலையைப்போல், ஆஞ்ஜனேயர் ஸீதையைத் தேடியும் காணாமல் கலங்கி பிராணனை விட நிச்சயித்து, அவளைக் கண்ட பிறகு ஆனந்தப் பரவசராய், அவளிடத்திலிருந்து சூடாமணியைப் பெற்றுக் கொண்டு ராமனுடைய ஸன்னிதிக்குத் திரும்பிப்போக யத்தனித்தார்.

மணிவர முபக்3ருஹ்ய தம் மஹார்ஹம்
ஜனக ந்ருபாத்மஜயா த்4ருதம் ப்ரபா4வாத் |
கி3ரிரிவ பவாநவதூ4த முக்த:
ஸுகி3தமநா: ப்ரதிஸங்க்ரமம் ப்ரபேதே3 ‖ (71)

---

## ஸர்க்கம் 39

# மாருதி ஸீதையைத் தேற்றினது

மணிம் த3த்வா தத: ஸீதா ஹநுமந்த மதா2ப்3ரவீத் |
அபி4ஜ்ஞாந மபி4ஜ்ஞாதம் ஏதத்3ராமஸ்ய தத்வத: ‖ (1)

**பி**றகு ஸீதை, "ஆஞ்ஜனேய! இந்த அடையாளம் ராமனுக்கு நன்றாகத் தெரியும். எனது விவாஹ ஸமயத்தில் என் தாய் என்பிதாவிடத்திலிருந்து இதை வாங்கி நான் அணிந்து கொள்ளும்படி தசரதரிடத்தில் கொடுத்ததை ராமன் பிரத்யக்ஷமாய்ப் பார்த்துக் கொண்டிருந்தார். ஆகையால் இதைக் கண்டவுடன் என்னையும் என் தாயையும் தசரதரையும் ஸ்மரிப்பார். இந்தக் காரியத்தில் நீ முன்னைவிட அதிக உத்ஸாகமுள்ளவனாய் மேல் நடக்க வேண்டிய விஷயங்களை யோசித்துச் சொல். என் ஸமாசாரத்தைத் தெரிவித்தவுடன் எல்லாம் முடிந்துவிட்டதென்று எண்ணாதே. இந்தக் காரியத்தைத் தலைக்கட்டுவதற்கு நீயே ஸமர்த்தன். ஸகலப் பிரயத்தனங்களையும் செய்து என் துக்கத்தைப் போக்கு. ராகவன் எப்பொழுது ஸந்தோஷிக்கப் போகிறாரென்று நீ கவலை கொண்டிருப்பதே என் துக்கத்தை நாசம் செய்யும்" என்றாள்.

மாருதியும் அந்த வார்த்தைகளை மனத்தில் வைத்துத் தலை வணங்கி அப்படியே செய்கிறேனென்று பிரதிக்ஞை செய்து போகப் புறப்பட்டார். அதைக் கண்டு ஸீதை, "ஐயோ! இவன் போய்விட்டால் நமக்குக் கதி யார்? சோக ஸமுத்திரம் மறுபடியும் மூடிக் கொள்ளுமே" என்று, கண்ணீரால் குரல் தழுதழுக்க, "ராமலக்ஷ்மணர்களையும் ஸுக்ரீவனையும் அவனுடைய மந்திரிகளையும் வயது சென்ற ஸகல வானரர்களையும் அவர்களுடைய தர்மத்திற்குத் தகுந்தபடி நான் க்ஷேமம் விசாரித்ததாகச் சொல். இந்த துக்க ஸமுத்திரத்திலிருந்து ராமன் என்னைக் கரையேற்ற வேண்டியது உன்னாலேயே. நான் உயிரை விடுவதற்கு முன் ராகவன் என்னைப் பார்க்கும்படி நீயே செய்யவேண்டியது. அப்படிச் சொல்லி விசேஷ தர்மத்தைக் கட்டிக்கொள். அகில ஜீவ கோடிகளையும் தன் பந்துக்களையும் ரக்ஷிப்பவரென்றும் பிறர் துக்கப்படுவதை ஸஹிக்க மாட்டாரென்றும் பிரஸித்தி பெற்ற ராமன் அந்தக் கீர்த்தியைக் காப்பாற்றிக் கொள்ளவாவது என்னைச் சிறை மீட்க வேண்டியது. நீ உத்ஸாகத்தைக் கொடுக்கும் வார்த்தைகளை எப்பொழுதும் சொல்லிக் கொண்டிருந்தால் அதைக் கேட்டு ராமன் என்னை அடையும் விஷயத்தில் பிரயத்தனம் செய்வார்; அவருடைய பராக்கிரமம் விருத்தியாகும்" என்றாள்.

அப்பொழுது ஆஞ்ஜனேயர் தலைமேல் கைகூப்பி, "அம்மா! ரகுநாதன் அதிசீக்கிரத்தில் வானர ஸைன்யங்களுடன் இங்கே வந்து சத்துருக்களை ஜயித்துத் தங்களுடைய துக்கத்தைப் போக்குவார். அவர் பாணப் பிரயோகம் செய்கையில் மனுஷ்யர்களாவது தேவர்களாவது அஸுரர்களாவது எதிரில் நிற்க முடியுமா? தங்களைத் திரும்பியடையும் விஷயத்தில் ஸூரியன் இந்திரன் யமன் முதலிய ஸகல தேவ கணங்களையும் துரத்தியடிப்பதற்கு ஸமர்த்தரல்லவா? இந்தக் கடல் சூழ்ந்த பூமியை ரக்ஷிக்க அவரே தகுந்தவர். தங்கள் மூலமாக அவருக்கு விசேஷ லாபமுண்டாகப் போகிறது" என்றார்.

இப்படி ஆஞ்ஜனேயர் நன்றாகவும் யதார்த்தமாகவும் சொல்லக் கேட்டு ஸீதை அவரை மிகவும் ஆதரித்து, அவர் போய்விடுகிறாரே என்று அவரை அடிக்கடிப் பிரியத்துடன் பார்த்து, அவருக்கு உத்திரவு கொடுக்க மனம் வராமல், ராகவனுக்குத் தன்னிடத்திலுள்ள ஸ்நேஹத்தைக்குறிக்கும் சில வார்த்தைகளைச் சொன்னாள். "வானர சிரேஷ்ட! ஒருவேளை மிகவும் களைத்திருந்தால் ஒரு தினம் இவ்விடத்தில் தங்கி மரங்களாலும் கொடிகளாலும் நன்றாக மறைக்கப்பட்ட ஓரிடத்தில் இளைப்பாறி நாளைப் போகலாம். பாக்கியமற்ற நான் உன் ஸமீபத்திலிருந்தால் இந்தப் பெரும் துக்கத்தைக் கொஞ்ச காலம் மறந்திருப்பேன். நீ இங்கிருந்துபோய் ராமனுக்கு ஸமாசாரத்தைத் தெரிவித்து, அவரை அழைத்துக் கொண்டு திரும்பி வருவதற்குள் என்பிராணன் நிற்பது நிச்சயமில்லை. அதில் ஸந்தேகமென்ன? ஆகையால், அதற்குள் ராமன் இங்கேவரும்படி செய்ய வேண்டியது.

நீ வருவதற்கு முன் மிக்க துக்கத்தை அனுபவித்துக் கொண்டிருந்தேன். உன்னைப் பார்த்து அதை மறந்தேன். இப்பொழுது நீயும் கண்ணில்படாமல் போய்விட்டால் பூர்வ துக்கம் முன்னைவிட அதிகமாய் என்னைக் கொளுத்துமே.

வானரவீர! ஆனால், ஒரு ஸந்தேகம் மாத்திரம் இடைவிடாமல் என்னை உபத்திரவிக்கிறது. அதாவது, ராமலக்ஷ்மணர்களும் வானர ஸைன்யங்களும் இந்தக் கோரமான பெருங்கடலை எப்படித் தாண்ட முடியும்? உன்னையும் கருடனையும் வாயுவையும் தவிர இதைத் தாண்டக் கூடியவர்களும் உண்டோ? காரியங்களை ஸாமர்த்தியமாய் முடிப்பதில் உனக்கு நிகரில்லை. நாம் உத்தேசித்த காரியத்திற்குப் பெரும்தடையாயிருக்கும் இதற்கென்ன உபாயம் உனக்குத் தோன்றுகிறது? நீ தனியாக இந்தக்காரியத்தை முடிக்கத்திறமையுள்ளவன். இப்படிச் செய்வதில் உனக்கு விசேஷ கீர்த்தியுண்டாகும். ஆனால் ராகவன் ஸைன்யங்களுடன் இங்கே வந்து ராவணனை யுத்தத்தில் ஜயித்து என்னை அயோத்யைக்கு அழைத்துக் கொண்டு போனாலல்லவா எனக்குப் பெருமை? சத்ருகுல காலனான ரகுவீரன் தீக்ஷ்ணமான பாணங்களால் லங்கையைக் கலக்கி, என்னை அழைத்துக்கொண்டு போனாலல்லவா அவருக்குப் பெருமை? ஆகையால் எனக்கும் அவருக்கும் யாதொரு கீர்த்திக் குறைவில்லாமலும் அவருடைய பராக்கிரமம் நன்றாய் விளங்கும்படியும் உபாயம் செய்ய வேண்டியது உன் கடமை'' என்றாள்.

இப்படி அனேக அர்த்தங்களடங்கியதாய் யுக்தியுடன் ஸீதை சொன்ன வார்த்தையைக் கேட்டு ஹனுமான், "தேவி! வானர ஸைன்யங்களுக்கதிபதியான ஸுக்ரீவன் அளவற்ற பராக்கிரமமுடையவர்; தங்களை எப்படியாவது கண்டு பிடித்து ராமனுடன் சேர்த்து வைக்க வேண்டுமென்று நிச்சயம் செய்திருக்கிறார். கணக்கில்லாத வானர ஸைன்யங்களால் சூழப்பட்டு, ராக்ஷஸர்களை நாசம் செய்யப் போகிறார். அவருக்குட்பட்டவர்களெல்லோரும் பராக்கிரமசாலிகள்; மிகுந்த சக்தியுடையவர்கள்; பலவான்கள்; மனோவேகமாய்ச் செல்லுகிறவர்கள்; ஸகல திக்குகளிலும் தடையில்லாமல் ஸஞ்சரிப்பவர்கள்;அளவற்ற தேஜஸ்விகள்; பெரியகாரியங்களிலும் கொஞ்சம் கூடச் சிரமத்தையடையாதவர்கள். அவர்கள் வெகு உத்ஸாஹத்துடன் ஆகாசமார்க்கமாய் இந்தப் பூமியை அடிக்கடி சுற்றி வந்திருக்கிறார்கள். ஸுக்ரீவனுடைய ஸபையிலிருப்பவர்கள் எல்லோரும் என்னை மிஞ்சியவர்கள், அல்லது எனக்கு ஸமமானவர்கள்; எனக்குக் குறைந்தவர்கள் ஒருவரும் அங்கில்லை. நான் இங்கே வந்திருக்கும் பொழுது அந்த மஹாபல்வான்கள் வரத் தடையென்ன? அரசர்கள் முக்கியமானவர்களை வெளியில் அனுப்புவார்களா? ஸாமான்யர்களையே தூது செல்லச் சொல்வார்கள். ஒரே தாண்டாய் வானராதிபதிகள் லங்கையில் வந்து குதிப்பார்கள். தாங்கள்



வியஸனப்படவேண்டாம்; துக்கத்தை விடுங்கள், அளவற்ற ஸத்வமுடைய அந்தப் புருஷ சிரேஷ்டர்களான ராமலக்ஷ்மணர்கள் என் முதுகிலேறிக் கொண்டு ஸூர்ய சந்திரர்கள் உதித்ததுபோல் தாங்களிருக்குமிடம் வந்து, லங்கையைப் பாணங்களால் கொளுத்துவார்கள். ராமன் ராவணனையும் அவனுடைய பரிவாரங்களையும் யுத்தத்தில் வதம் செய்து தங்களை அயோத்யைக்கு அழைத்துப் போவார். ஆகையால் தாங்கள் ஆறுதலடைய வேண்டியது; தங்களுக்கு ஸகல மங்களமும் உண்டாகட்டும். ராவணன் நாசமடையும் காலத்தைத் தாங்கள் அதிசீக்கிரத்தில் எதிர்பார்க்கலாம். ஜ்வலிக்கும் அக்னியைப் போல் ராகவன் இவ்விடத்தில் வருவதையும், ராவணனைக் கொல்வதையும், தாங்கள் துக்க ஸமுத்திரத்தைத் தாண்டுவதையும் சீக்கிரத்தில் பார்ப்பீர்கள்'' என்று ஸீதையை ஸமாதானம் செய்து அங்கிருந்து போகப் புறப்பட்டு அவளுக்கு இன்னும் அதிக நம்பிக்கை உண்டாகும் பொருட்டு மறுபடியும் சொன்னார்.

"அம்மணீ! சத்துருக்களுக்குக் காலனான கோதண்டபாணி ஸகலப் பிரயத்தனங்களையும் குறைவறச் செய்து லக்ஷ்மணனுடன் இந்த லங்கைக் கோட்டை வாசலில் வந்துநிற்பதையும்; நகங்களையும் பற்களையும் ஆயுதங்களாயுடையவர்களும், ஸிம்ஹம் புலி இவைகளைப்போல் பராக்கிரமசாலிகளும் மதயானைகளைப்போல் காந்தியுள்ளவர்களுமான வானரவீரர்கள் ஒன்றுசேர்ந்து இங்கே படையெடுத்து வருவதையும், இங்கே மலயபர்வதத்தின் தாழ்வரைகளில் வானர சிரேஷ்டர்களின் கூட்டங்கள் பர்வதங்களைப்போலும் மேகங்களைப்போலும் சப்தித்துக் கொண்டு பரவியிருப்பதையும் பார்க்கப் போகிறீர்கள். ஸிம்ஹத்தால் பிடிக்கப்பட்ட யானையைப் போல் ராகவன் தங்களைப் பிரிந்து மன்மத பாணத்தால் ஹிருதயத்தில் அடிபட்டு வருந்துகிறார். அம்மா! அழவேண்டாம்; மனத்தில் கவலை வைக்க வேண்டாம். சசிதேவி கொஞ்சகாலம் இந்திரனைப் பிரிந்து மறுபடியும் கூடினதுபோல் ராகவனுடன் சேருவீர்கள். அவருக்கு மேலானவர்களும் உண்டோ? லக்ஷ்மணனைப்போன்றவர்கள் யார்? அக்னிக்கும் வாயுவிற்கும் ஸமமான அந்த ஸகோதரர்கள் தங்களுக்கு ஆதாரமாக இருக்கிறார்கள். ராக்ஷஸர்களால் நிறைந்த இந்தக் கோரமானதேசத்தில் நெடுங்காலம்தாங்கள் வஸிக்கப்போகிறதில்லை. தங்களுடைய நாதன் இங்கே வர நெடுநாள் செல்லுமோ? நான் போய் அவரைக் காணும் வரையில் தாங்கள் பொறுத்திருக்க வேண்டும்'' என்று பிரார்த்தித்தார்.

நாஸ்மிம்ஶ்சிரம் வத்ஸ்யஸிதே3வி தே3ஶே
ரக்ஷோக3ணைரத்4யுஷிதேதி ரௌத்3ரே |
ந தே சிராத3ாக3மநம் ப்ரியஸ்ய
க்ஷமஸ்வ மத்ஸங்க3ம காலமாத்ரம் (58)

---

## ஸர்க்கம் 40

## மாருதி ஸீதையைத் தேற்றினது (தொடர்ச்சி)

ஶ்ருத்வா து வசநம் தஸ்ய வாயுஸூநோர் மஹாத்மந: |
உவாசாத்ம ஹிதம் வாக்யம் ஸீதா ஸுரஸுதோபமா ‖ (1)

மஹா புத்திமானன வானரவீரன் சொல்வதைக் கேட்டு ஸீதை, தனக்கு ஹிதமான வார்த்தையைச் சொன்னாள். "பயிர் பாதி வளர்ந்து பலனைக் கொடுக்கும் ஸமயத்தில் மழையில்லாமல் காய்ந்துபோய், பிறகு தெய்வ ஸங்கல்பத்தால் மழைபெய்து செழிப்பது போல், ராமனோடு ஸகல போகபோக்கியங்களையும் குறைவில்லாமல் அனுபவித்து நடுவில் சொல்லமுடியாத கஷ்டங்களை அடைந்து பிராணனை விடுவதற்கு நிச்சயித்தேன். அப்பொழுது உன் வார்த்தைகள் அமிருததாரையைப்போல் எனக்குப்போன உயிரைத் திரும்பக் கொடுத்தன. நான் அந்தப் புருஷஸ்ரேஷ்டனைத் தரிசித்து, துக்கத்தால் இளைத்த அவயவங்களால் அவரை ஆசைதீர ஆலிங்கனம் செய்து கொள்ளும்படி நீயே என்னிடத்தில் தயை செய்ய வேண்டும். அவர் கோபம் கொண்டு காக்கையின் மேல் பிரஹ்மாஸ்திரத்தைப் பிரயோகித்ததையும், அதனுடைய வலது கண்ணைப் பரித்ததையும், நாங்களிருவரும் ஒரு பர்வதத்திலிருக்கையில் என் கன்னத்திலிட்ட திலகம் அழிந்துபோக, என் நாதன் மனச்சிலையென்ற பர்வத தாதுவால் மறுபடியும் திலகமிட்டதையும் அந்தரங்க அடையாளங்களாய் ஞாபகப் படுத்திக் கொள்ளச் சொல்.

மஹேந்திரன் வருணன் முதலிய திக்பாலர்களுக்கு ஸமமான ரகுவீரன், தன் பாரியையை ஒரு ராக்ஷஸன் அபகரித்துச் சிறையில் வைத்திருப்பதை எப்படிப் பொறுத்திருக்கிறாரோ? தாங்கள் பிரியத்துடன் கொடுத்த சூடாமணியை இதுவரையில் ஜாக்கிரதையாய்க் காப்பாற்றிவந்தேன். துக்கம் நேர்ந்தபோதெல்லாம் தங்களைப்பார்ப்பதுபோல் அதைப் பார்த்துத் தேறுதலடைந்தேன். அந்த ஜீவாதாரத்தையும் தங்களுக்கு அனுப்பி விட்டேன். ஆகையால் தங்களைப் பார்க்காமல் தவித்துக் கொண்டிருக்கும் நான் இனி உயிரைவைத்துக் கொள்ள முடியாது. பிறரால் ஸஹிக்க முடியாத கஷ்டங்களையும், கோர ராக்ஷஸிகள் என் ஹிருதயத்தைப் பிளக்கும்படியாகச் சொல்லும் வார்த்தைகளையும், தாங்கள் என்னை எப்படியாவது ரக்ஷிப்பீர்கள் என்றல்லவா பொறுத்திருக்கிறேன்? தாங்கள் சத்துருக்களை நாசம்செய்வீர்களென்ற நம்பிக்கையால் ஒரு மாதம்வரையில் உயிரை வைத்துக் கொண்டிருப்பேன். அப்பொழுதும் தங்களை அடையாவிட்டால் அடுத்த க்ஷணத்தில் பிராணனை விடுவேன். ராவணன் வெகு குரூரன்; பயங்கரமான ரூபமுள்ளவன்; நான் அவனைப் பார்க்க ஸஹிக்கமாட்டேன். தாங்களும் தாமதம்செய்வதாக நான்கேள்விப்பட்டால் ஒரு நிமிஷம் கூடப் பிழைத்திருக்க மாட்டேனென்று ரகுவீரனிடத்தில் சொல்ல வேண்டியது" என்றாள்.



ஸீதை இப்படிக் கண்ணும் கண்ணீருமாய் பிரலாபிப்பதைக் கேட்டு ஹனுமான், "தேவி! தங்களைப் பிரிந்து தாங்களிருக்குமிடம் தெரியாமல் துக்கம் மேலிட்டிருப்பதால் மாத்திரம் தங்களை மீட்பதற்குத் தகுந்த பிரயத்தனங்களைச் செய்யவில்லையேயன்றி ரகுநாதனுக்குத் தாங்களிருக்குமிடம் தெரிந்தபிறகும் ஒரு க்ஷணமாவது சும்மாயிருப்பாரா? இதை ஸத்தியத்தின் மேல் ஆணையிட்டுச் சொல்கிறேன். தன்னுயிருக்குஉயிரான ராமன் கிலேசப்படுகையில்லக்ஷ்மணனுக்கு வேறுஞாபகமிருக்குமா? போகட்டும். இவ்வளவு கஷ்டப்பட்டாவது தங்களைக் கண்டுபிடித்தேனல்லவா? இனிமேலும் துக்கப்பட வேண்டுமோ? இந்த முகூர்த்தத்திலேயே அவையெல்லாம் தீர்ந்தன. சத்துருகுல காலர்களான அந்தப் புருஷோத்தமர்கள் தங்களைப்பார்ப்பதில் உத்ஸாஹமுடையவர்களாய்ப் பாணங்களால் லங்கையைச் சாம்பலாயடித்து குரூரனை ராவணனையும் அவனுடைய பரிவாரங்களையும் யுத்தத்தில் மடித்துத் தங்களை அயோத்யைக்கு அழைத்துப் போவார்கள். ராமனுக்கு நன்றாய்த் தெரிந்ததும் பிரீதியை உண்டு பண்ணக்கூடியதுமான ஓர் அடையாளத்தை மறுபடியும்சொல்லுங்கள்" என்று பிரார்த்தித்தார். அதற்கு ஸீதை, "இதுவரையிலுமே சிரேஷ்டமான அடையாளங்களைச் சொன்னேனே. இந்தச் சூடாமணியைக்கண்டவுடன் நீ சொல்லும் ஸகல வார்த்தைகளையும் நம்புவார்" என்றாள். பிறகு மாருதி அந்தச் சூடாமணியை எடுத்துக் கொண்டு, ஸீதையை நமஸ்கரித்து, தான் வந்த காரியத்தை நிறைவேற்றியதால் ஜயலக்ஷ்மி பிரகாசிக்கும்படி போகப் புறப்பட்டார்.

தன் தேகத்தை வளர்த்து, வேகத்தைச் சேர்த்துக் கொண்டு உயரக் கிளம்பத்தயாராயிருக்கும் ஆஞ்ஜனேயரைப் பார்த்து ஸீதை "நான் ராமனைப் போல் பார்த்து வந்த சூடாமணியையும் கொடுத்துவிட்டு, இவனையும்போகவிட்டு எப்படிப் பிழைத்திருப்பேன்? இவன் என் நாதனைஎப்பொழுது காண்பானோ? அவர் எப்பொழுது இங்கே வருவாரோ? அவருடைய தரிசனம் எனக்கு எப்பொழுது கிடைக்குமோ? எப்பொழுது என் துக்கம் தீருமோ?" என்று முகம் வாடி, மெய் சோர்ந்து, கண்ணீர் பெருக, குரல் தழுதழுக்க, "ஆஞ்ஜநேய! ஸிம்ஹத்தைப்போல் பராக்கிரமசாலிகளான ராமலக்ஷ்மணர்களையும் ஸுக்ரீவனையும் அவனுடைய மந்திரிகளையும் மற்ற வானரர்களையும் நான் க்ஷேமம் விசாரித்ததாகச் சொல். இந்த துக்க ஸமுத்திரத்திலிருந்து ராகவன் என்னை எப்படிக் கரையேற்றுவாரோ அப்படிச் செய்யவேண்டியது உன் கடமை. ராமனுடைய ஸமீபத்தில் சென்று நான் அனுபவிக்கும் தீவிரமான இந்தச்சோகத்தையும் இந்த ராக்ஷஸிகள் என்னை அதட்டி உபத்திரவிப்பதையும் நன்றாகச் சொல்லு

வேண்டும். நீ போகும் வழியில் உனக்கு ஸகல மங்களங்களும் உண்டாகட்டும்" என்றாள். இப்படி ஆஞ்ஜனேயர் ஸீதையின் விருத்தாந்தத்தையும் அவள் சொன்ன ஸமாசாரத்தையும் தெரிந்து கொண்டு, தான் வந்த காரியத்தை முடித்துவிட்டு, மிகுந்த ஸந்தோஷத்துடன் திரும்பிப்போக யத்தனிக்கையில், செய்யவேண்டிய காரியம் கொஞ்சம் பாக்கியிருப்பதாகத் தோன்றிற்று. ஆகையால் அதை யோசிப்பதற்கு வடக்கு நோக்கிச் சென்றார்.

ஸ ராஜபுத்ர்யா ப்ரதிவேதி$^{3}$தார்த$^{3}$ :
கபி: க்ருதார்த$^{3}$: பரிஹ்ருஷ்ட சேதா: |
அல்பாவஶேஷம் ப்ரஸமீக்ஷ்ய கார்யம்
தி$^{3}$ஶம் ஹ்யுதீ$^{3}$சீம் மநஸா ஜகாம || (25)

---

## ஸர்க்கம் 41

## ஹனுமார் அசோகவனத்தை அழித்தது

---

ஸ ச வாக்$^{3}$பி$^{4}$: ப்ரஶஸ்தாபி$^{4}$: க$^{3}$மிஷ்யந் பூஜிதஸ்தயா |
தஸ்மாத்$^{3}$தே$^{3}$ஶா த்$^{3}$பாக்ரம்ய சிந்தயாமாஸ வாநர : || (1)

இப்படி ஸீதை சிறந்த வார்த்தைகளால் தன்னைக் கொண்டாட, ஆஞ்ஜனேயர் திரும்பிப்போக நிச்சயித்து, அங்கிருந்து அப்புறம் சென்று யோசித்தார். "ஸீதையைக் கண்டுபிடிப்பது, ராவணனுடைய இருப்பிடத்தைத் தெரிந்து கொள்வதென்ற இரண்டு காரியங்களைச் செய்ய நிச்சயித்தேன். ஸீதையைக்கண்டு பேசினேன். இனி ராவணனுடைய இருப்பிடத்தைத் தெரிந்து கொள்வதில் கொஞ்சம் பாக்கி இருக்கிறது. லங்கையையும் அதிலுள்ள ஸகல ஸ்தலங்களையும் நன்றாகப் பரிசோதித்தேன். ஆனால் ராக்ஷஸர்களுடைய பலாபலங்களையும், ராவணனுடைய அந்தரங்க அபிப்பிராயத்தையும் அறியவில்லை. அதற்கு ஸாமதான பேதமென்ற உபாயங்களைக்காட்டிலும் தண்டோபாயமே சிரேஷ்டம். ராக்ஷஸர்களிடத்தில் ஸமாதானம் செய்ய முடியாது; அளவற்ற ஐசுவரியத்தையுடையவர்களை திரவியத்தைக் கொடுத்து வசப்படுத்த முடியுமா? பலக் கொழுப்படைந்தவர்களுக்குள் கலஹம் செய்விப்பது ஸாத்தியமில்லை. யுத்தத்தில் ஜயமும் அபஜயமும் நிச்சயமில்லையாகையால், ஒரு பொழுதும் அந்த உபாயத்தைக் கைக்கொள்ளக்கூடாதென்று பெரியோர்கள் சொல்கிறார்கள். ஆனால் பலசாலிக்கு ஸகலமும் ஹிதமாகவே முடியுமென்றபடி, ஒப்பற்ற பல பராக்கிரமமுள்ள எனக்கு அபஜயமென்பது ஒருநாளும் இல்லை. ஆகையால் என் உத்தேசத்தை நிறைவேற்றுவதற்குப் பராக்கிரமமே தகுந்த உபாயமென்று எண்ணுகிறேன்.

இதைத் தவிர வேறு வழியில்லை. வீரர்களெல்லாரும் யுத்தத்தில் மடிந்த பிறகுதான் இந்த ராக்ஷஸர்கள் கொஞ்சமாவது அறிவார்கள். ஆனால், 'ஸீதையைக் கண்டுபிடித்து ராவணனிருக்குமிடத்தை அறிந்து வா' என்று என்னை ஸுக்ரீவன் ஆக்ஞாபித்தார். அதைத் தவிர வேறு காரியங்களைச் செய்வது தோஷமல்லவா என்றால், உத்தேசித்த காரியத்தைச் செய்வதில், அதற்கு விரோதமில்லாமல் அனேக காரியங்களை முடிப்பவனே திறமையுள்ளவன். அல்ப காரியத்தை முடிப்பதற்கும் ஒரே ஸாதனத்தை நம்பியிருக்கக் கூடாது; அனேக ஸாதனங்களை ஸித்தமாய் வைத்திருக்கவேண்டும். அப்படிப்பட்டவனல்லவா காரியத்தை ஸாதிப்பான்? பெரிய காரியங்களைப் பற்றிச் சொல்ல வேண்டுமோ? ராக்ஷஸர்களுடைய பலாபலங்களையும் யுத்தத்தில் எனக்கும் அவர்களுக்கும் உள்ள தாரதம்யத்தையும் நன்றாக அறிந்து கொண்டு மஹாராஜாவினிடத்தில் திரும்பிச்சென்றாலொழிய அவருடைய கட்டளை பூர்த்தியாகுமா? லங்கையையும் அதிலுள்ள ராக்ஷஸர்களையும் பற்றி என்னைக் கேட்டால் நான் என்ன பதில் சொல்வேன். ஆகையால் எனக்கும் இங்குள்ள ராக்ஷஸர்களுக்கும் ஸுலபமாய் யுத்தம் நேரும் உபாயத்தைத் தேடவேண்டும். அப்பொழுதுதான் ராவணனுக்குத்தன் ஸைன்யத்தின் பலத்திற்கும் என் பலத்திற்கும் பேதம் தெரியும். பிறகு ராக்ஷஸ ராஜனையும் அவனுடைய மந்திரிகளையும் ஸேனைத் தலைவர்களையும் எதிர்த்து, அவனுடைய பலத்தையும் ஸீதையைப்பற்றி அவன் மனத்திலுள்ள அபிப்பிராயத்தையும் நன்றாக அறிந்து கொண்டு திரும்பிப் போவேன்.

இந்த அசோகவனம் விசித்திரமான விருக்ஷங்களாலும் கொடிகளாலும் பார்ப்பவர்களுடைய கண்களையும் மனத்தையும் கவர்கின்றது. தேவேந்திரனுடைய நந்தனமென்ற தோட்டமும் இதற்கு ஈடாகுமோ? காட்டுத் தீ உயர்ந்த மரங்களைப் பற்றுவதுபோல் இந்தக் கொடிய ராக்ஷஸனுடைய தோட்டத்தை நாசம் செய்தால் அவனுக்குக் கடும் கோபமுண்டாகும்; என்னைக் கொல்ல அனேக ஸைன்யங்களை அனுப்புவான்; அவர்களுக்கும் எனக்கும் கோரயுத்தம் நடக்கும். அந்த ராக்ஷஸப்படைகளை என் வீரியாக்னியால் கொளுத்திவிட்டுக் கிஷ்கிந்தைக்குச் செல்வேன்" என்று ஆலோசித்து மாருதி வாயுபகவானைப்போல் கோபம்கொண்டு, தன் பயங்கரமான பராக்கிரமத்தை பிரயோகித்து துடைகளின் சண்டவேகத்தால் மஹாவிருக்ஷங்களை முறிக்க ஆரம்பித்தார்.

அந்தப்புரத்திலுள்ள மரச்சோலையை அழித்தார். நானுபக்ஷிகளாலும் மரங்களாலும் விளங்கும் அந்த வனத்திலுள்ள விருக்ஷங்களை முறித்தார்; தடாகங்களை உடைத்தார்; கிரீடாபர்வதங்களைப் பொடிசெய்தார்: பறவைகள் பயந்துகூச்சலிட்டன; மரம்கொடிகள் வாடி வதங்கின; தாமரை முதலிய புஷ்பங்கள் காய்ந்து கருகின; அந்தச் சோலை காட்டுத் தீ பற்றி அழிந்ததுபோல் விகாரமாய்க் காணப்பட்டது. கொடிகள் ஆதாரமற்று, பயத்தால் திகைத்து நிற்

கும் பெண்களைப்போல தோன்றின. கிரீடாகிருஹங்களும், கல் மண்டபங்களும், ஸாதாரண கட்டடங்களும் கொடிகளால் அமைக்கப்பட்ட கிருஹங்களும் அழிந்தன; மஹாஸர்ப்பங்களும் துஷ்ட மிருகங்களும் மடிந்தன; அந்தத் தோட்டம் உருவழிந்தது. வாடாத நாக மரம் கொடிகளுடன் ஸீதைக்குக் காவலாயிருந்த அந்தத் தோட்டம் மாருதியின் வீரியத்தால் அழிக்கப்பட்டு, முறிந்துவிழுந்த விருக்ஷங்களால் சோகம் தாங்காமல் தலைசாய்ந்து கிடப்பதுபோல் காணப்பட்டது. இப்படி ராக்ஷஸாதிபதியின் மனத்தைப் புண் படுத்தி ஹனுமான் தான் ஒருவனே அனேக ராக்ஷஸ வீரர்களுடன் யுத்தம் செய்ய நிச்சயித்து உத்ஸாஹலக்ஷ்மியால் ஜ்வலித்துக் கொண்டு தோட்டத்தின் வெளிவாசலில் காத்திருந்தார்.

ஸ தஸ்ய க்ருத்வார்த²பதேர் மஹாகபி:
மஹத்³வ்யலீகம் மநஸோ மஹாத்மந: |
யுயுத்ஸுரேகோ ப³ஹுபி⁴ர் மஹாப³லை:
ஶ்ரியா ஜ்வலம்ஸ் தோரண மாஸ்தி²த: கபி: || (21)

## ஸர்க்கம 42

## ராவண கிங்கரர்களைக் கொன்றது

தத: பக்ஷிநிநாதே³ந வ்ருக்ஷப⁴ங்க³ ஸ்வநேந ச |
ப³பூ⁴வுஸ் த்ராஸ ஸம்ப்⁴ராந்தா: ஸர்வே லங்கா நிவாஸிந: || (1)

பக்ஷிகளின் கூச்சலாலும் மரங்கள் முறியும் சப்தத்தாலும் லங்கையிலுள்ள ஸகலப் பிராணிகளும் பயந்து நடுங்கின. மிருகங்களும் பக்ஷிகளும் திகிலடைந்து நான்கு திக்குகளிலும் ஓடி ஊளையிட்டன. ராக்ஷஸர்களுக்கு அநேக அபசகுனங்கள் தோன்றின. அங்கிருந்த ராக்ஷஸிகள் திடீரென்று விழித்துக் கொண்டு பார்க்கையில் அசோகவனம் அழிந்ததையும், ஒரு வானரவீரன் அட்டஹாஸம் செய்வதையும் கண்டார்கள். ஆஞ்ஜனேயர் அவர்களைப் பயமுறுத்த எண்ணிக் கோரமான பெரியரூபத்தை எடுத்தார். மஹாபர்வதத்தையொத்த தேகத்தையும் ஒப்பற்ற பலத்தையும் உடைய அந்தவானர வீரனைக் கண்டு, ராக்ஷஸிகள் ஸீதையைப் பார்த்து, "இவன் யார்? யாரைச் சேர்ந்தவன்? எங்கிருந்து எதற்காக வந்தவன்? உன்னுடன் இவன் எப்படிப் பேசலாயிற்று? உன்னிடத்தில் என்ன சொன்னான்? பயப்படாமல் சொல்" என்று கேட்டார்கள்.

ஸகல உத்தம லக்ஷணங்களும் பொருந்திய தேகத்தையுடைய அந்தப் பதிவிரதை, "பயங்கரமான ரூபமெடுக்கக் கூடிய ராக்ஷஸர்களின் தந்திரங்களை என்னால் அறியமுடியுமோ? இவன்யாரோ? என்ன செய்வானோ? உங்களுக்கே நன்றாய்த் தெரியும். பாம்பின் கால் பாம்பிற்கல்லவா தெரியும்? இதிலென்ன ஸந்தேகம்? உங்களைப் போலவே



நானும் இவனைக்கண்டு பயந்து கொண்டிருக்கிறேன். இவனைப்பற்றி எனக்கு ஒன்றும் தெரியாது. நினைத்த ரூபங்களை எடுக்கக்கூடிய ராக்ஷஸன் வந்திருக்கிறான் என்றே நினைக்கிறேன்" என்றாள்.

ஸீதையின் வார்த்தையைக் கேட்டு ராக்ஷஸிகள் நான்கு புறங்களிலும் ஓடி மறைந்தார்கள். சில விகார முகமுள்ள ராக்ஷஸிகள் ராவணனிடத்திற்கு ஓடி அந்தக் கோரரூபமுள்ள வானர வீரனைப் பற்றிச் சொல்ல ஆரம்பித்தார்கள். "ஸ்வாமி! ஒரு குரங்கு நமது அசோகவனத்தில் வந்து ஸீதையுடன் ரஹஸ்யமாகப் பேசிற்று. இப்பொழுதும் அங்கேயேஇருக்கிறது. அதின் பராக்கிரமத்திற்கோ அளவில்லை. நாங்கள் பலவிதமாய்க் கேட்டும் ஸீதை அதைப் பற்றி யாதொன்றும் சொல்லவில்லை. இந்திரனுடைய தூதனோ? குபேரனுடைய தூதனோ? ஸீதையைத்தேடுவதற்கு ராமனால் அனுப்பப்பட்ட தூதனோ? அத்புதமான ரூபமுள்ள அந்தக் குரங்கு நாநா விருக்ஷங்களும் மிருகங்களுமுள்ள அழகான அந்தப்புரத் தோட்டத்தைச் சின்னாபின்னமாக்கி விட்டது. ஸீதை இருக்குமிடத்தைத் தவிர மற்ற இடமெல்லாம் நாசமாயிற்று. ஸீதையைக் காப்பாற்றுவதற்கோ அல்லது சிரமத்தாலோ தெரியவில்லை? அதற்கு அது ஒரு சிரமமா? அவளை ரக்ஷிப்பதற்காகவே அப்படிச் செய்திருக்க வேண்டும். அவளிருக்குமிடத்தில் அழகான துளிர்களோடும் புஷ்பங்களோடும் விளங்கும் சிம்சுபாவிருக்ஷத்தை அது தொடவே இல்லை. பயங்கரமான பராக்கிரமமுடைய ஸ்வாமி! பயங்கரமான ரூபத்துடன் கூடிய அந்த வானரனைத் தாங்களே தண்டிக்கும்படி ஆக்ஞாபிக்கவேண்டும். அவன் ஸீதையுடன் ரஹஸ்யமாகப் பேசியிருக்கிறான். நமது வனத்தையும்அழித்திருக்கிறான். கணக்கில்லாத ராக்ஷஸஸைன்யங்களுக்குத் தாங்கள் அதிபதியல்லவா ? தாங்கள் மனத்தால் விரும்பிய இந்த ஸீதையுடன் பேசியும் ஒருவன் உயிருடனிருப்பது தகுமா?" என்று தெரிவித்தார்கள்.

அதைக்கேட்டு பிரதாபலங்கேசுவரன் கோபத்தால் கண்கள் சுழல, அக்னியில் ஆஹுதிசெய்ததுபோல் ஜ்வலித்தான். எரியும் இரண்டு தீபங்களிலிருந்து எண்ணெய்ச் சுடர் கொதித்து விழுவது போல் கோபாவேசம் கொண்ட அவனுடைய நேத்திரங்களிலிருந்து நீர்த் துளிகள் விழுந்தன. பலபராக்கிரமத்தில் தனக்கு ஸமமான கிங்கரர்களென்று பெயர்பெற்ற ராக்ஷஸவீரர்களை அழைத்து ஹனுமானை சிக்ஷிக்கும்படி ஆக்ஞாபித்தான். பலசாலிகளான அந்த எண்பதினாயிரம் கிங்கரர்களும் பல ஆயுதங்களுடன் அரண்மனையிலிருந்து வெளிப்பட்டார்கள். பெரிய வயிறு பற்களுடையவர்கள்; கோரரூபமுள்ளவர்கள்; மஹாபலவான்கள்; யுத்தம் செய்வதில் ஆசை கொண்டவர்கள்; ஆஞ்ஜனேயரைப் பிடிப்பதிலேயே நோக்கமுள்ளவர்கள்; தோட்டத்தின் வாசலில் தயாராய் உட்கார்ந்திருக்கும் அந்த வானரவீரனை நெருங்கி, விட்டில்பூச்சிகள்

நெருப்பில் விழுவதுபோல் அதிவேகமாய் அவர்மேல் பாய்ந்தார்கள் விசித்திரமான கதாயுதங்களாலும், தங்கப்பிடி கட்டின பரிகை, ஸூரியகாந்தியுள்ளபாணங்கள்,இருப்புலக்கைகள்,பெரிய கத்திகள், சூலம், பிராஸம், எறிவல்லயம், கத்தி முதலிய ஆயுதங்களால் நான்கு புறங்களிலிருந்தும் மாருதியை அடித்தார்கள். தேஜஸாலும் காந்தியாலும் ஜ்வலிக்கும் வாயுபுத்திரனும் பெரிய மலையைப்போல் அசையாமல் நின்று, பூமியில் வாலையடித்துத் திக்குகள் நடுங்கும்படி கர்ஜித்தார். பிறகு தன் சரீரத்தை மிகவும் பெரியதாய்ச் செய்து கொண்டு லங்கை கிடுகிடென்று நடுங்கும்படி ஸிம்ஹநாதம் செய்தார். சுற்றிலுமிருந்த பர்வதங்களிலிருந்து ஆயிரமடங்காய் எதிரொலியுண்டாக, ஆகாசத்தில் பறந்த பக்ஷிகள் மெய்மறந்து பூமியில் விழுந்தன.

அப்பொழுது ஆஞ்ஜனேயர் அந்த ராக்ஷஸர்களைப் பார்த்து, "பலபராக்கிரமத்தில் நிகரற்ற ராமனுக்கும் மஹாபலவானான லக்ஷ்மணனுக்கும் ராகவனால் காப்பாற்றப்பட்ட ஸுக்ரீவ மஹாராஜாவுக்கும் ஸமமானவர்களுண்டோ? ஸகலப் பிராணிகளுக்கும் ஹிதத்தைச் செய்யும் இக்ஷ்வாகு குலதிலகரான ராமமூர்த்திக்கு நான் அடிமை; என் பெயர் ஹனுமான்; சத்ருஸைன்யங்களுக்குக் காலன்; வாயுபகவானுடைய புத்திரன்; கற்களாலும் விருக்ஷங்களாலும் யுத்தம் செய்கிறவன்; ராக்ஷஸர்களை ஆயிரக்கணக்காய் மடிப்பேன்; உங்கள் அரசனான ராவணனைப்போல் ஆயிரம் ராக்ஷஸர்கள் ஒன்று சேர்ந்தாலும் எனக்கு ஈடோ? உங்களுடைய காவல்களைக் கடந்து இந்த லங்கையில் பிரவேசித்து, ஸீதையை நமஸ்கரித்து, அவளுடைய விருத்தாந்தத்தை அறிந்து, நீங்கள் பார்த்துக் கொண்டிருக்கும் பொழுதே இந்த நகரத்தை நாசம் செய்து, நான் வந்த காரியத்தை முடித்துக் கொண்டு ஸுகமாய்த் திரும்பிப் போவேன்" என்று கர்ஜித்தார்.

அந்தச் சப்தத்தால் ராக்ஷஸர்கள் பயந்து, ஸந்தியா காலத்து மேகம்போல் ஆகாசத்தை அளாவி நிற்கும் ஆஞ்ஜனேயரைக்கண்டு நடுங்கினார்கள். ஆனாலும் ராவணனுடைய கடுமையான உத்திரவால் இவனுடன் நாம் யுத்தம் செய்வது நமக்கு நன்மையா என்ற ஸந்தேகம் தீர்ந்து, பயங்கரமான பலவித ஆயுதங்களால் மாருதியை அடித்தார்கள். அவர்களால் சூழப்பட்டு ஹனுமான் நான்கு புறங்களிலும் பார்க்கையில், வாசற்படிக்கு ஸமீபத்தில் ஒரு பயங்கரமான இருப்புலக்கையைக்கண்டு, அதைப்பிடுங்கி, கையிலெடுத்துக்கொண்டு ராக்ஷஸர்களை அடித்துக்கொன்றார். கருடன் காந்தி பொருந்திய ஸர்ப்பங்களை எடுத்துக் கொண்டு ஆகாசத்தில் செல்வதுபோல் ஹனுமான் அந்த இருப்புலக்கையைச் சுழற்றிக் கொண்டு ஆகாசத்தில் ஸஞ்சரித்தார். இப்படி ராவணன் அனுப்பிய கிங்கரர்களை நாசம் செய்து மறுபடியும் எவர் யுத்தத்திற்கு வருவார்களென்று வாசற்படியின் மேல் நின்று பார்த்துக் கொண்டிருந்தார்.



அதற்குள் சில ராக்ஷஸர்கள் மாருதியைக்கண்டு பயந்து யுத்தம் செய்யாமல் ராவணனிடத்திற்கு ஓடி, கிங்கரர்கள் நாசமடைந்ததைத் தெரிவித்தார்கள். அதைக்கேட்டு அந்த ராக்ஷஸேசுவரன் கண்களை உருட்டிவிழித்து, நிகரில்லாத பராக்கிரமசாலியும் யுத்தத்தில் ஜயிக்க முடியாதவனுமான ஜம்புமாலியை அனுப்பினான். (இவன் ராவணனுக்கு முக்கிய மந்திரியான பிரஹஸ்தனுடைய புத்திரன்.)

ஸ ராக்ஷஸாநாம் நிஹதம் மஹத்3ப3லம்
நிஶம்ய ராஜா பரிவ்ருத்த லோசந: |
ஸமாதி3தே3ஶாப்ரதிமம் பராக்ரமே
ப்ரஹஸ்தபுத்ரம் ஸமரே ஸுது3ர்ஜயம் ‖ (43)

---

## ஸர்க்கம் 43

## மாருதி உப்பரிகையை இடித்தது

தத: ஸ கிங்கராந் ஹத்வா ஹநுமாந் த்4யாந மாஸ்தி2த: |
வநம் ப4க்3நம் மயா சைத்ய ப்ராஸாதோ3 ந விநாஶித: ‖ (1)

அதற்குள் ஹனுமான், "கிங்கரர்களைக் கொன்றேன். அசோக வனத்தை அழித்து விட்டேன். ஆனால் தேவகிருஹம்போன்ற இந்த உப்பரிகையை அழிக்கவில்லையே. இதையும் நாசம் செய்து என் பலத்தைக் காட்டுகிறேன்" என்று நிச்சயித்து மேருமலையின் சிகரத்தைப் போல் உன்னதமான அந்த உப்பரிகையின்மேல் தாவிநின்று, ஸூரியனுக்கு எதிராக வேறு ஸூரியன் உதித்ததுபோல் தேஜஸால் ஜ்வலித்தார். (ஒரேகாலத்தில் இரண்டு ஸூரியர்கள் காணப்படுவது ராஜ்யத்திற்கு க்ஷேமக்குறைவு.) அங்கிருந்து பாரியாத்திரமென்ற குலபர்வதத்தைப்போல் தன்ரூபத்தை விருத்திசெய்துகொண்டு, ஜயலக்ஷ்மியால் விளங்கி, லங்கை அதிரும்படி ஸிம்ஹநாதம் செய்தார். அது கேட்போர் செவிகளைத் துளைத்தது; ஆகாசத்திலிருந்து பக்ஷிகள் சுருண்டு விழுந்தன; அந்த உப்பரிகையைக் காப்பவர்களும் மெய் மறந்தார்கள். "ராக்ஷஸர்களே! அஸ்திரவித்யையில் நிகரற்ற ரகுவீரனுக்கும் மஹாபலவானான லக்ஷ்மணனுக்கும் ராமனால் காப்பாற்றப்படும் ஸுக்ரீவ மஹாராஜாவுக்கும் நிகருண்டோ? ஸகல பூங்களுக்கும் ஹிதத்தைச் செய்யும் இக்ஷ்வாகுகுல சிரேஷ்டனான ராமமூர்த்திக்கு நான் அடிமை; என் பெயர் ஹனுமான்; நான் வாயுவின் புத்திரன்; சத்ருக்களுக்கு மிருத்யு; பாறைகளாலும் விருக்ஷங்களாலும் ராக்ஷஸர்களை ஆயிரக்கணக்காய்க் கொல்கிறவன்; ஆயிரம் ராவணன்கள் ஒன்று சேர்ந்தாலும் எனக்கு ஈடாவார்களோ? உங்களால் காக்கப்பட்ட இந்த லங்கையில் பிரவேசித்து, உங்களுக்குத் தெரியாமல் ஸீதையுடன் பேசிவிட்டு, உங்களுக்கெதிரேயே இந்த நகரத்தை நாசம்செய்து, நான் வந்த காரியத்தை முடித்துக் கொண்டு திரும்பப் போகிறேன்"

என்று அந்த உப்பரிகையின் விமானத்திலிருந்து அதிலுள்ள ராக்ஷஸர்களைப் பார்த்துப் பயங்கரமாகக் கர்ஜித்தார்.

அதைக்கேட்டு அதைக்காப்பவர்கள் பல ஆயுதங்களை எடுத்துக் கொண்டு மாருதியைச் சூழ்ந்து நான்கு புறங்களிலிருந்தும் அவரை அடித்தார்கள். கங்காப்பிரவாகத்தில் பெரிய விஸ்தாரமான சுழியைப்போல் அந்த ராக்ஷஸஸைன்யம் ஆஞ்ஜனேயரைச் சுற்றிச்சுற்றி ஸஞ்சரித்தது. அப்பொழுது அந்த வானரவீரன் இவர்களுடன் எவ்வளவு நேரம் யுத்தம் செய்கிறதென்று கோபம் கொண்டு, பயங்கரமான ரூபத்தை எடுத்து அந்த உப்பரிகையின் ஒரு பெரிய ஸ்தம்பத்தைப் பிடுங்கி, இந்திரன் வஜ்ராயுதத்தைச் சுழற்றுவதுபோல் கரகரவென்று அதைச் சுழற்றினார். தங்கத்தால் அலங்கரிக்கப்பட்ட அந்த ஸ்தம்பத்துடன் மற்ற ஸ்தம்பங்கள் இடிபட்டு நெருப்புப் பிடித்து அந்த உப்பரிகை முழுவதும் வெந்து போயிற்று. அதைக்கண்டு இந்திரன் வஜ்ராயுதத்தால் அஸுரர்களை நாசம் செயவதுபோல் மாருதி ராக்ஷஸக் கூட்டத்தை நாசம் செய்து, ஆகாசத்திலிருந்து கொண்டு, "எங்களுடைய மஹாராஜாவான ஸுக்ரீவன் ஸீதையைத்தேடுவதற்காக ஸகல திக்குகளிலும் கணக்கில்லாத வானரவீரர்களை அனுப்பியிருக்கிறார். அவர்கள் என்னைப்போல்பலவான்கள், தைரியசாலிகள், மஹாராஜாவின் ஆக்ஞையை நிறைவேற்றுகிறவர்கள். சிலர் பத்து யானைகளின் பலமுள்ளவர்கள்; சிலர் நூறு, சிலர் ஆயிரம், சிலர் ஓகம் (ஒருவித எண்) இப்படிப் பலவிதமான பலத்தையுடையவர்கள்; சிலர் பலத்தில் வாயுபகவானுக்கு ஸமமானவர்கள்; சிலர் அளவற்ற பலமுடையவர்கள். பற்களையும் நகங்களையும் ஆயுதமாயுடைய கணக்கில்லாத வானர ஸைன்யங்களால் சூழப்பட்டு ஸுக்ரீவ மஹாராஜா உங்களெல்லோரையும் இருந்த இடம் தெரியாமல் நாசம் செய்யப் போகிறார். ரகுவீரனுடன் பகைத்துக் கொண்டு அந்த மஹாத்மாவின் கோபத்திற்குப் பாத்திரமான பிறகும் இந்த லங்கை இருக்குமோ? நீங்களும் இருப்பீர்களோ? உங்கள் பிரபுவான ராவணன் இருப்பானோ?" என்று கர்ஜித்தார்.

நேயமஸ்தி புரீ:லங்கா ந யூயம் ந ச ராவண: |
யஸ்மாதி³க்ஷ்வாகு நாதே²ந ப³த்³த⁴ம் வைரம் மஹாத்மநா || (23)

---

## ஸர்க்கம் 44

## ஜம்புமாலி வதம்

---

ஸந்தி³ஷ்டோ ராக்ஷஸேந்த்³ரேண ப்ரஹஸ்தஸ்ய ஸுதோ ப³லீ |
ஜம்பு³மாலீ மஹாத³ம்ஷ்ட்ரோ நிர்ஜகா³ம த⁴நுர்த⁴ர: || (1)

அதற்குள் பிரஹஸ்தனுடைய புத்திரனான ஜம்புமாலி ராவணனால் உத்திரவு செய்யப்பட்டு ஆயுதபாணியாய் யுத்தத்திற்குப் புறப்



பட்டான் பெரிய கோரப்பற்களையுடையவன் சிவந்தமாலைகளாலும் வஸ்திரங்களாலும் அலங்கரிக்கப்பட்டவன். குண்டலங்களையும் ஹாரங்களையும் தரித்துக் கொண்டு கண்களைச் சுழற்றிக் கொண்டு கடுங்கோபத்துடன் மலைபோல் நடந்து வந்தான். யுத்தத்தில் ஜயிக்க முடியாதவன்; இந்திர தனுஸைப் போன்றவில்லையும் சிரேஷ்டமான பாணங்களையும் எடுத்துக் கொண்டு வஜ்ராயுதம் விழுந்ததுபோலும் இடிஇடித்ததுபோலும் வேகமாய் நாணேற்றினான். அதனால் ஸகல திக்குகளும் மூலைகளும் ஆகாசமும் நடுங்கிற்று. கோவேறு கழுதைகள் பூட்டின ரதத்தில் ஏறி வரும் ஜம்புமாலியைக் கண்டு மாருதி வேகம் கொண்டு, இவனுடன்கொஞ்சநேரம் யுத்தம் செய்யலாமென ஸந்தோஷித்துஸிம்ஹநாதம்செய்தார். பருத்தபுஜங்களையுடையஅந்த ராக்ஷஸனும் தோரணவாசலின் குறுக்கு மரத்தின் மீதுள்ள அந்த வானர வீரனைக் கண்டு, வரும்பொழுதே முகத்தில் ஒரு அர்த்த சந்திர பாணத்தாலும் தலையில் ஒரு கர்ணியாலும் புஜங்களில் பத்து நாராசங்களாலும் அடித்தான். (கர்ணி: யானையின் மாவெட்டியைப்போல் நுனியையுடைய அம்பு.) அப்பொழுது சூரிய கிரணத்தால் தாக்கப்பட்டு மலர்ந்திருக்கும் தாமரையைப்போல் ஆஞ்ஜனேயரின் சிவந்த முகம் பாணங்களால் அடிபட்டு விளங்கிற்று. ரத்தத் துளிகளால் சிவந்த அவருடைய சிவப்பான முகம் சிவப்புச் சந்தனத்துளிகளால் நிறைந்த பெரிய தாமரை ஆகாசத்தில் மலர்ந்தது போலிருந்தது. ஜம்புமாலியின் பாணங்களால்அடிபட்டு ஹனுமான் கோபம்கொண்டு, இவனை முடிக்கும் வழி என்ன என்று சுற்றிலும் பார்க்கையில் ஓரிடத்தில் ஒரு பெரிய பாறையைக் கண்டார். பலவான்களுக்குள் பலவானான மாருதி அதைப் பெயர்த்து ராக்ஷஸன் மேலெறிய, அவன் அதைப் பத்து பாணங்களால் உடைத்தான். சண்ட மாருதத்தைப்போல் வேகமுள்ள அந்த வானரவீரன் தன் எண்ணம் வீணானதைக்கண்டு, உன்னதமான ஓர் ஆச்சாமரத்தைப் பிடுங்கிக் கரகரவென்று சுழற்றினார். உடனே அந்த ராக்ஷஸன் நான்கு பாணங்களால் அதைத்துண்டித்து, ஹனுமானைத் தோளில் ஐந்து பாணங்களாலும் மார்பில் ஒரு பாணத்தாலும் மார்பின் மத்தியில் பத்து பாணங்களாலும் அடித்தான். அந்த வானர சிரேஷ்டன் தேகமெங்கும் அம்புகள் தைக்க, கடும் கோபத்துடன் முன்னிருந்த இருப்புலக்கையை எடுத்து அதிவேகமாய்ச் சுழற்றினார். அளவற்ற பலசாலி; நிகரற்ற வேகமுடையவர்; அந்த ஆயுதத்தைத் தன் பூர்ண பலத்துடன் சுழற்றி ஜம்புமாலியின் விஸ்தாரமான மார்பை நோக்கி எறிந்தார். அதற்குப் பிறகு ஜம்புமாலியின் தலையாவது கைகளாவது முழங்கால்களாவது வில்லாவது பாணங்களாவது தேராவது கோவேறு கழுதைகளாவது ஒன்றும் காணப்படவில்லை. மஹாபலவானான ஜம்புமாலி ஆஞ்ஜனேயரால் அடிபட்டுப் பொடிப்பொடியாய்ப்பூமியில்விழுந்தான். பலசாலிகளான கிங்கரர்கள் மடிந்ததையும் ஜம்புமாலி நாசமடைந்ததையும் ராவணன் கேட்டு கோபத்தால் கண்கள் சிவந்து, மஹாபராக்கிரமசாலி

களான தனது மந்திரி புத்திரர்களை நோக்கி, "அந்தத் துஷ்டக் குரங்கைப் பிடித்து வாருங்கள்" என்று கட்டளையிட்டான்.

ஸ ரோஷ ஸம்வர்தித தாம்ர லோசந:
ப்ரஹஸ்த புத்ரே நிஹதே மஹாப³லே |
அமாத்ய புத்ரா நதிவீர்ய விக்ரமாந்
ஸமாதி³தே³ஶாஸு நிஶாசரேஶ்வர: || (22)

## ஸர்க்கம் 45
## மந்திரி குமாரர்களின் வதம்

ததஸ்தே ராக்ஷஸேந்த்³ரேண சோதி³தா மந்த்ரிணம் ஸுதா: |
நிர்யயுர் ப⁴வநாத் தஸ்மாத் ஸப்த ஸப்தார்சி வர்சஸ: || (1)

அக்னியைப்போல் தேஜஸால் ஜ்வலிக்கும் அந்த ஏழு மந்திரி புத்திரர்களும் ராவணனால் ஏவப்பட்டு ஸபையிலிருந்து புறப்பட்டார்கள். மஹாபலவான்கள்; அஸ்திரவித்யை தெரிந்தவர்களுக்குள் சிரேஷ்டர்கள்; ஒருவர்க்கொருவர் ஜயிக்க வேண்டுமென்று ஆசைப்படுபவர்கள்; அளவற்ற பராக்கிரமசாலிகள்; கணக்கில்லாத வீரர்களால்சூழப்பட்டு, ஸ்வர்ணமயமான ஜன்னல்களாலும்கொடிகளாலும் பாவட்டாக்களாலும் விளங்கி மேகத்தைப்போல் சப்திக்கும் பெரிய ரதங்களில் ஏறிக்கொண்டு, உருக்கின தங்கத்தால்செய்த வில்லுகளை நாணேற்றி டங்காரம் செய்துகொண்டு, மின்னல்கள் பாயும் மேகங்களைப்போல் ஸுலபமாய் ஜயிப்போம் என்ற ஸந்தோஷத்துடன் வெளிக்கிளம்பினார்கள். அவர்களுடைய தாய்களும் பந்துக்களும் மித்திரர்களும் பலசாலிகளானகிங்கரர்களே மடிந்தார்களென்பதைக்கேட்டு சோகத்தால் துடித்தார்கள். அந்த மந்திரி புத்திரர்கள், "நான் முந்தி நான் முந்தி" என்று மேல்விழுந்து தோரண வாசற்படிமேலிருக்கும் ஹனுமானுக்கு ஸமீபத்தில் வந்தார்கள். மழைக்காலத்து மேகங்கள்போல் பாணங்களை வர்ஷித்துக்கொண்டு, இடிபோல்குமுறுகின்ற ரதங்களுடன் ஆஞ்ஜநேயரைச்சூழ்ந்துகொண்டார்கள். அவர் தேகமெங்கும் பாணவர்ஷத்தால் நிறைந்து, மழைத் தாரைகளால் மூடப்பட்ட மஹாபர்வதம்போல்விளங்கினார். நிர்மலமான ஆகாசத்தில் அதிவேகமாய் ஸஞ்சரித்துக் கொண்டு அந்த மந்திரிபுத்திரர்களுடைய பாணங்களின் குறியையும் ரதங்களின் வேகத்தையும் பிரயோஜனமில்லாமல் செய்தார். வான வில்லால் அலங்கரிக்கப்பட்ட மேகங்களுடன் வாயுபகவான் ஆகாசத்தில் விளையாடுவதுபோல், மாருதி ஆகாசத்தில் அந்த வில்லாளிகளுடன் விளையாட்டு யுத்தம் செய்துகொண்டு விளங்கினார். பிறகு பயங்கரமான ஒரு சப்தமிட்டு அந்த ராக்ஷஸ ஸைன்யத்தை பயத்தால் நடுங்கச் செய்து, அதிவேகமாய் அவர்களுக்கு நடுவில் பாய்ந்தார். சிலரைக் கைகளால் அறைந்து கொன்றார்; சிலரைக் கால்களால் உதைத்தார்; சிலரை முஷ்டியால் குத்தினார்; சிலரை நகங்களால் கிழித்தார்; சிலரை மார்பால் இடித்தார்; சிலரைத் துடைகளால் மோதினார்; சிலர் அவருடைய ஸிம்ஹநாதத்தால் பூமியில் விழுந்தார்கள். இப்படி மந்திரி புத்திரர்கள் இறந்து பூமியில் விழுந்ததைக் கண்டு, அந்த ஸைன்யம் முழுவதும் பயம் பிடித்து மூலைக்குமூலை ஓடிவிட்டது. யானைகள் விகாரமாய் வீறிட்டன; குதிரைகள் பூமியில் சுருண்டு விழுந்தன; த்வஜம் குடை முதலியவைகள் முறிந்து ரதங்கள் பூமியெங்கும் கிடந்தன; வழியிலுள்ள ஆறுகளில் ரத்தப்பிரவாகம் ஓடிற்று; லங்கை நகரம் முழுவதும் விகாரமான சப்தங்களால் நிறைந்தது.



மஹாபலவானும் பிறரால் தடுக்க முடியாத பராக்கிரமசாலியுமான மாருதி, பெயர் பெற்ற அந்த ராக்ஷஸர்களைக் கொன்று இன்னும் பலசாலிகளிருந்தால் ஒருகை பார்ப்போம்" என்று அந்த வாசற்படியில் இருந்தார்.

ஸ தாந் ப்வ்ருத்³தா⁴ந் விநிஹத்ய ராக்ஷஸாந்
மஹா ப³லஶ்சண்ட³ பராக்ரம: கபி: |
யுயுத்ஸுரந்யை: புநரேவ ராக்ஷஸை:
தமேவ வீரோபி⁴ ஜகா³ம தோரணம் || (17)

## ஸர்க்கம் 46
## பஞ்சஸேனாதிபதிகளின் வதம்

ஹதாந் மந்த்ரி ஸுதாந் பு³த்³த்⁴வா வாநரேண மஹாத்மநா |
ராவண: ஸம்வ்ருதாகார: சகார மதி முத்தமாம் || (1)

தன் மந்திரி புத்திரர்கள் ஆஞ்ஜநேயரால் மடிந்தார்களென்று கேட்டு, ராவணன் தான் ஸமான்யக் குரங்கென்று நினைத்திருந்த மாருதியிடத்தில் தனக்குண்டான பயத்தை வெளிக்காட்டாமல், மிகுந்த தைரியத்துடன் வேறு யோசனை செய்தான். விரூபாக்ஷன் யூபாக்ஷன் துர்த்தரன் பிரகஸன் பாஸகர்ணனென்ற ஐந்து ஸேனாதிபதிகளை அழைத்து, ஹனுமானைப் பிடித்து வரும்படி உத்திரவு செய்தான். அவர்கள் வீரர்கள்; யுத்தநீதியில் தேர்ந்தவர்கள்; சண்டையில் வாயுவேகமுள்ளவர்கள். அவர்களைப் பார்த்து ராவணன், "ஸேனாதிபதிகளே! கணக்கில்லாத சதுரங்க ஸைன்யங்களுடன் செல்லுங்கள். அந்தக் குரங்கை நான் சொல்லுகிற விதமாக சிக்ஷியுங்கள். அதன்ஸமீபத்தில் வெகு ஜாக்கிரதையாகச் செல்லுங்கள். தேசகாலங்களுக்கு விரோதமாய் நடக்கும் அந்தக் குரங்கின் சேஷ்டைகளை நிறுத்துங்கள். அதன் செய்கைகளை நான் நன்றாய் யோசித்துப் பார்க்கையில் அது ஒருக்காலும் குரங்கல்ல என்று தோன்றுகிறது. இந்திரனோ மற்ற எவரோ நமக்குக் கெடுதிசெய்யக் கடுந்தவத்தால் இந்த மஹா

பலமுள்ள பெரிய பிராணியை ஸிருஷ்டித்து விட்டிருக்கிறார்கள். நாகர்களும் யக்ஷர்களும் கந்தர்வர்களும் தேவர்களும் அஸுரர்களும் மஹரிஷிகளும் உங்களாலும் என்னாலும் பலதடவை ஜயிக்கப் பட்டிருக்கிறார்கள். அவர்கள் நமக்கு ஏதாவது கெடுதி செய்வது ஆச்சரியமில்லையே. ஆகையால் எப்படியாவது அந்தக் குரங்கைப் பிடித்து வாருங்கள். புத்தியிலும் பராக்கிரமத்திலும் அளவிற்கு மிஞ்சிய அந்தக் குரங்கை ஸாமான்யமென்று அலக்ஷ்யம் செய்யக் கூடாது. வாலியையும் ஸுக்ரீவனையும் மஹாபலசாலியான ஜாம்பவானையும் ஸேனாதிபதியான நீலனையும் த்விவிதன் முதலிய மற்ற வானரர்களையும் பார்த்திருக்கிறேன். அவர்கள் அதிக பராக்கிரம சாலிகளானாலும் அவர்களுடைய ஸஞ்சாரமும் தேஜஸும் பராக்கிரமமும் புத்தியும் ஸத்வமும் உத்ஸாஹமும் இப்படியல்ல. இந்தப் பெரிய ஜந்து நினைத்த ரூபங்களை எடுக்கக் கூடியது. ஆகையால் நீங்கள் எப்படியாவது இதை ஜயிக்க வேண்டியது. இந்திரனும் தேவர்களும் அஸுரர்களும் மனுஷ்யர்களும் மூன்று லோகங்களிலுமுள்ள மற்றப்பிராணிகளும் ஒன்று சேர்ந்தாலும் உங்களுக்கு முன் நிற்க முடியாதென்று எனக்குத் தெரியும். ஆனாலும் யுத்தத்தில் ஜயமும் அபஜயமும் நிச்சயமல்ல. ராஜநீதியை அறிந்து யுத்தத்தில் ஜயம்பெற வேண்டுமென்று விரும்புகிறவன் தன்னை நன்றாய் ரக்ஷித்துக் கொள்ள வேண்டும்'' என்று ஆக்ஞாபித்தான்.

அக்னியைப்போல் ஜ்வலிக்கும் அந்தப் பிரதாபவீரர்கள் அரசனுடைய உத்திரவை அங்கீகரித்துத் தேர்களோடும் மதயானைகளோடும் மஹாவேகமுள்ள குதிரைகளோடும் ஸகல ஸைன்யங்களோடும் தீக்ஷ்ணமான ஆயுதங்களை எடுத்துக்கொண்டு அதிவேகமாய் வெளிக்கிளம்பினார்கள். பாலஸூர்யனைப்போல தன் தேஜஸாகிற கிரணங்களால் சூழப்பட்டு பிரகாசிக்கும் ஆஞ்ஜனேயர் அந்த தோரணவாசலின் உச்சியில் உட்கார்ந்திருப்பதைக் கண்டார்கள். அவர் உத்ஸாஹத்திலும் ஸத்வத்திலும் பலத்திலும் புத்தியிலும் வேகத்திலும் ரூபத்திலும் நிகரில்லாதவர். நான்கு புறங்களிலிருந்தும் பயங்கரமான ஆயுதங்களுடன் ராக்ஷஸர்கள் அவர்மேல் பாய்ந்தார்கள். துர்த்தரன், கருநெய்தல் புஷ்பத்தைப்போல் காந்தியுள்ள ஐந்து பாணங்களால் அவருடைய தலையில் அடித்தான். அவை இரும்பால் செய்யப்பட்டவை, உக்ரமானவை, பச்சை வர்ண முள்ளவை, ஹிருதயத்தைப் பிளக்கக்கூடியவை. உடனே மாருதி ஸகலதிக்குகளும் பிளக்கும்படி கர்ஜித்துக்கொண்டு ஆகாசத்தில் தாவினார். பிறகு துர்த்தரனென்ற வீரன் ரதத்திலிருந்து இடைவிடாமல் அவர்மேல் பாணங்களை வர்ஷித்தான். மழைக்காலத்தின் முடிவில் காற்று நீருண்ட மேகங்களைச் சிதறவடிப்பதுபோல் பாண வர்ஷங்களைப் பொழிகிற துர்த்தரனை மாருதி தன் வேகத்தால் தடுத்தார். பிறகு அவன் தன்னை மிகவும் உபத்திரவிப்பதைக்கண்டு, ரூபத்தை விருத்தி செய்துகொண்டு, மஹாவேகத்துடன் ஆகாசத்தில்



வெகுதூரம் கிளம்பி அவனுடைய தேரில் இடிக்கூட்டங்கள் மலையில் விழுந்தாற்போல் சீக்கிரமாய்க் குதித்தார். உடனே அந்தத் தேர் ஏர்க்கால் முறிந்து தூளாயிற்று; எட்டுக்குதிரைகளும் இறந்தன; துர்த்தரனும் பிணமாய்ப் பூமியில் விழுந்தான்.

அதைக்கண்டு பிறரால் ஜயிக்கமுடியாத யூபாக்ஷனும் விரூபாக்ஷனும் வெகு ரோஷம்கொண்டு மாருதியின்மேல் பாய்ந்து, முத்கரமென்ற ஆயுதத்தால் மார்பில் அடித்தார்கள். கருடனைப் போன்ற பலபராக்கிரமமுள்ள ஆஞ்ஜனேயர் அவர்களுடைய வேகத்தை அடக்கி, மறுபடியும் பூமியில் குதித்து, ஓர் ஆச்சாமரத்தைப் பிடுங்கிக்கொண்டு அவ்விரண்டு ராக்ஷஸர்களையும் அடித்துக் கொன்றார்.

அதைக்கண்டு பிரகஸன் ஒரு பட்டாக்கத்தியுடனும் பாஸகர்ணன் கூர்மையான நுனியையுடைய சூலாயுதத்துடனும் ஆஞ்ஜனேயர் மேல் பாய்ந்து யுத்தம் செய்தார்கள். அவர்களால் தேகமெங்கும் காயப்பட்டு ரத்தத்தால் பூசப்பட்ட மயிர்களுடன் மாருதி பாலஸூரியனைப்போல் கோபத்தால் ஜ்வலித்தார். பிறகு ஒரு பர்வத சிகரத்தை அதில் வஸிக்கும் விருக்ஷங்கள் மிருகங்கள் துஷ்ட ஜந்துக்களுடன் அலக்ஷ்யமாய்ப் பிடுங்கி, அதனால் அந்த ராக்ஷஸர்களை அடித்துக்கொன்று, மற்ற ஸைன்யங்களையும், குதிரைகளால் குதிரைகளையும், யானைகளால் யானைகளையும், காலாட்களால் காலாட்களையும், ரதங்களால் ரதங்களையும், தேவேந்திரன் அஸுர ஸைன்யத்தை நாசம் செய்ததுபோல் மடித்தார். அடிபட்ட யானைகளாலும் குதிரைகளாலும் ராக்ஷஸர்களாலும் முறிபட்ட ரதங்களாலும் அந்த யுத்த பூமியில் போக வழியில்லை. இப்படி அந்த வானர சிரேஷ்டன் பஞ்சஸேனாதிபதிகளையும் அவர்களுடைய வாஹனங்களையும் ஸைன்யங்களையும் நாசம்செய்து பிரளயகால மிருத்யுவைப் போல் மறுபடியும் அந்த வாசற்படியின்மேல் உட்கார்ந்து சற்று இளைப்பாறினார்.

தத: கபிஸ்தாந் த்⁴வஜிநீபதீந் ரணே
நிஹத்ய வீராந் ஸப³லாந் ஸவாஹநாந் |
ஸமீக்ஷ்ய வீர: பரிக்³ருஹ்ய தோரணம்
க்ருதக்ஷண: கால இவ ப்ரஜாக்ஷயே ‖ (40)

## ஸர்க்கம் 47

# அக்ஷகுமாரனுடைய வதம்

ஸேநாபதீந் பஞ்ச ஸ து ப்ரமாபிதாந்
ஹநூமதா ஸாநுசராந் ஸவாஹநாந் |
ஸமீக்ஷ்ய ராஜா ஸமரோத்3த4தோந்முக2ம்
குமாரமக்ஷம் ப்ரஸமைக்ஷதாக்3ரத: ॥ (1)

இப்படி ஒரு வானரனால் பஞ்சஸேனாதிபதிகளும் ஸைன்யமும் நாசமடைந்ததைக் கேட்டு, ராவணன் தன்னைச் சூழ்ந்திருப்பவர்களில் யாரை அனுப்பலாமென்று பார்க்கையில், தன் குமாரனான அக்ஷன் மாருதியோடு யுத்தம்செய்து அவரைப்பிடித்துவர ஆவல் கொண்டவனாய் முகத்தைத் தூக்கினான். அதைக்கண்டு ராவணனும் கண் ஜாடையால் "போய் வா" என்று அவனை உத்திரவுசெய்ய அவன் ஸபையிலிருந்து வெளியிற் சென்றான். அவன் பிரதாபசாலி; பிராம்மண சிரேஷ்டர்களால் ஹோமம்செய்து வளர்க்கப்பட்ட அக்கினியைப்போல் ஜ்வலித்துக்கொண்டு, ஸ்வர்ணத்தால் அலங்கரிக்கப்பட்ட வேலாயுதத்தைக் கையிலேந்தி யுத்தத்திற்குப் புறப்பட்டான். உருக்கிவிட்ட தங்கத்தால் செய்யப்பட்டு பாலஸூரியனைப் போல பிரகாசிக்கும் பெரிய ரதத்திலேறி ஆஞ்ஜனேயரிருக்குமிடத்திற்குச் சென்றான். தேவதைகளுக்கு ஸமமான பராக்கிரமத்தையுடைய அந்த அக்ஷகுமாரனுடைய ரதம் கடுந்தபஸால் ஸம்பாதிக்கப்பட்டது. உருக்கின தங்கத்தால் செய்யப்பட்ட ஜன்னல்களை உடையது. ரத்னத்தால் அலங்கரிக்கப்பட்ட கொடிகளாலும் த்வஜங்களாலும் அழகு பொருந்தினது. மனோவேகமுள்ள எட்டுக் குதிரைகள் பூட்டினது. தேவர்களாலும் அஸுரர்களாலும் தடுக்க முடியாதது. யாதொரு ஸஹாயமுமில்லாமல் செல்லக்கூடியது. ஸூரியனைப்போன்ற காந்தியையுடையது. ஆகாசத்தில் தடையில்லாமல் ஸஞ்சரிக்கக்கூடியது. அதில் அம்பறைகளும் எட்டுக் கத்திகளும் சக்தி தோமரம் முதலிய ஆயுதங்களும் வரிசையாய்க் கட்டப்பட்டிருந்தன. இப்படி யுத்தத்திற்கு வேண்டிய ஸகல பதார்த்தங்களாலும் நிறைந்து ஸூரியனைப்போலும் சந்திரனைப் போலும் மஞ்சள் நிறமும் வெண்மையுமுள்ள கடிவாளங்களையுடைய அந்த திவ்யரதம் ஆகாசத்தில் ஸூரியன் உதித்தது போல் ஸித்தமாய் நிற்கக் கண்டு அக்ஷகுமாரன் அதிலேறி யுத்தபூமிக்கு வந்தான். இப்படிக் குதிரை யானை ரதம் காலாட்கள் இவைகளுடைய சப்தத்தால் ஆகாசமும் பூமியும் இதிலுள்ள பர்வதங்களும் நடுநடுங்க, யுத்தகளத்தில் இன்னும் யார் வருகிறானென்று எதிர்பார்த்துக்கொண்டிருக்கும் ஹனுமானுடைய ஸமீபத்தில் வந்தான்.



பிறகு ஸிம்ஹத்தைபோல் நேத்திரங்களையுடைய அந்த ராக்ஷஸன், ஸகல பதார்த்தங்களையும் நாசம்செய்யும் காலாக்னியைப் போல் ஜ்வலிக்கின்ற அந்த வாயுபுத்திரனைக்கண்டு, "என்ன ஆச்சரியம்! இந்த ஒரு குரங்கு பயமில்லாமல் நமது நகரத்தில் பிரவேசித்து இவ்வளவு ஸைன்யங்களையும் விளையாட்டாய்க் கொன்று எவ்வளவு அலக்ஷ்யமாய் உட்கார்ந்திருக்கிறது!" என்று பரபரப்புடன் மாருதியிடத்தில் கௌரவம் வைத்து அவரை உற்றுப்பார்த்தான். மஹா பலவானும் புத்திசாலியுமாகையால், அக்ஷகுமாரன் ஹனுமானுடைய தேகத்தையும் பலத்தையும் பராக்கிரமத்தையும் அவருடைய செய்கைகளால் ஊஹித்து, தனது பலபராக்கிரமத்தையும் ஒப்பிட்டு, இவனை ஜயிப்போமென்று நிச்சயம்கொண்டு, பனி நீங்கினவுடன் உதிக்கும் ஸூரியனைப்போல் உக்கிரமான தேஜஸால் விருத்தியடைந்தான். பிறகு அவருடன் யுத்தம்செய்ய நிச்சயித்து, அவர் பிறரால் தடுக்கமுடியாத பராக்கிரமசாலி என்று கண்டு, கோபபரவசனாக அமரிக்கையாய் யுத்தம்செய்ய ஏற்பாடுசெய்துகொண்டு, ஆஞ்ஜனேயரை மூன்று கூர்மையான பாணங்களால் அடித்தான். அவர் கொஞ்சம் கூட சிரமமில்லாமல் யுத்தம்செய்துகொண்டு, சத்ருக்களை ஜயிப்போமென்ற நிச்சயத்தால் கர்வமடைந்திருப்பதைக் கண்டு, "இன்றைக்கு எனக்கு ஸரியான யுத்தவீரன் கிடைத்தான்" என்று ஸந்தோஷப்பட்டு வில்லையும் பாணங்களையும் எடுத்துக் கொண்டு, மறுபடியும் மாருதியை உற்றுப்பார்த்து பதக்கங்கள் குண்டலங்கள் முதலிய ஸமஸ்த ஆபரணங்களாலும் அலங்கரிக்கப்பட்ட பராக்கிரமசாலியான அக்ஷகுமாரன் அதிசீக்கிரமாய் மாருதிக்கு ஸமீபத்தில் வந்தான்.

பிறகு, தேவர்களும் அஸுரர்களும் பயத்தால் நடுங்கும்படி அவ்விருவர்க்கும் யுத்தம் நேர்ந்தது; அதற்கு உபமானம்சொல்ல முடியாது. அதைக்கண்டு பூமி நடுங்கிற்று; ஸூரியன் பயந்து மறைந்தான்; காற்று அடிக்கவில்லை; மலைகள் அசைந்தன; ஆகாசத்தில் பெரும்சப்தமுண்டாயிற்று; ஸமுத்திரம் கலங்கிற்று; அக்ஷகுமாரன் மஹாவீரன்; பாணங்களின் லக்ஷ்யத்தை அறிவதிலும் அவைகளைத் தொடுப்பதிலும் பிரயோகிப்பதிலும் நிபுணன்; தங்கக்கட்டுகளுடன் இறகுகளால் அலங்கரிக்கப்பட்டுக் கூர்மையான மூன்று பாணங்களைக் கடும் விஷமுள்ள மஹா ஸர்ப்பங்களைப்போல் ஹனுமானுடைய தலையில் பிரயோகித்தான். உடனே ரத்தப் பிரவாஹத்தால் அந்த வானரவீரனுடைய தேகம் நனைந்தது; அவர் கண்களை கோபத்தால் உருட்டி விழித்துப் பாலஸூரியனைப்போல் சிவந்து, பாணங்களாகிற கிரணங்களால் சூழப்பட்டு விளங்கினார். ராவணேசுவரனுடைய புத்திரன், பயங்கரமான ஆயுதங்களையும் வில்லையும் தரித்துத் தன்னுடன் யுத்தத்திற்கு வந்து நிற்பதைக் கண்டு, ஸந்தோஷத்தாலும் யுத்த ஆவேசத்தாலும் பூரித்தார். உத்தராயணத்தில் மத்யாஹ்னகாலத்தில் மந்தர பர்வதத்தின்

உச்சியிலிருந்து லோகத்தைக்கொளுத்தும் ஸூரியனைப்போல், ஹனுமான் கோபத்தாலும் பலத்தாலும் வீரியத்தாலும் நிறைந்து, நேத்திரங்களிலிருந்து பறக்கும் நெருப்புப்பொறிகளால், அக்ஷகுமாரனையும் அவனுடைய வாஹனங்களையும் ஸைன்யத்தையும் எரித்தார். பிறகு அக்ஷகுமாரனென்ற காளமேகம் தங்கத்தால் அலங்கரிக்கப்பட்ட வில்லாகிற இந்திரதனுஸால் பிரகாசித்துக்கொண்டு, ஹனுமானென்ற பர்வதத்தில் பாணங்களான மழைத்தாரைகளைப் பெய்தது. மஹாமேகங்களுக்கு ஸமமான பராக்கிரமத்தையுடைய மாருதி. அக்ஷகுமாரன் யுத்தத்தில் தீரனாய் நிமிஷத்திற்கு நிமிஷம் அவனுடைய வீரியமும் தேஜஸும் விருத்தியடைவதைக் கண்டு, இன்று நல்ல யுத்தம் நடக்குமென்று ஸந்தோஷத்தால் கர்ஜித்தார். காட்டில் புல்லால் மூடப்பட்ட பெருங்கிணற்றில் மதயானை வீழ்வதுபோல் அக்ஷகுமாரன் பால்யத்தால் கர்வமடைந்து, யுத்தம் செய்வதில் தனக்கு நிகரில்லை என்ற கொழுப்புடன் வரவரக் கோபத்தால் கண்கள் ரத்தம்போல் சிவக்க, யுத்தத்தில் நிகரில்லாத ஆஞ்ஜனேயரை எதிர்த்தான். பாணவர்ஷத்தால் அவரை மறைக்க, மாருதி மேகம் போல் கர்ஜித்துப் புஜங்களையும் துடைகளையும் பயங்கரமாய் தட்டிக்கொண்டு ஆகாசத்தில் கிளம்பினார். உடனே பிரதாபசாலியான அந்த ராக்ஷஸவீரன் ரதத்தைச் செலுத்திக் கார்மேகம் பர்வதத்தில் சிலைகளை வர்ஷிப்பதுபோல் அந்த வானர வீரன்மேல் பாணங்களை பிரயோகித்தான்.

மனோவேகமுள்ள மாருதி அதைக்கண்டு கோபம் மேலிட்டு அவைகளைத் தன்மேல் படாமல் உபாயமாய்த் தப்பித்துக்கொண்டு, அவைகளுக்கு நடுவில் காற்றைப்போல் ஸஞ்சரித்து ஆகாசமார்க்கத்தில் உலாவினார். அக்ஷகுமாரன் வில்லை வளைத்து யுத்தாவேசம் கொண்டு சிரேஷ்டமான பல பாணங்களால்' ஆகாசத்தை மறைப்பதைக்கண்டு, அவனை மெச்சி, "இவ்வளவு சாதுரியமாய் யுத்தம் செய்பவனை ஜயிக்கும் வழி என்ன?" என்று யோசித்தார். அப்பொழுது அந்த ராக்ஷஸன் மிகவும் தைரியமாய் அவரைப் புஜங்களுக்கு நடுவில் பாணங்களால் பிளக்க, ஆஞ்ஜனேயர் பேரிடிபோல் கர்ஜித்து, யுத்த ரஹஸ்யத்தை நன்றாயறிந்தவராகையால் அந்தச் சிறுவனுடைய பராக்கிரமத்தைப் பற்றி சற்று யோசித்து "பாலஸூரியனைப் போல் பிரகாசிக்கும் இந்த ராக்ஷஸன் மஹாபலவானாய்த் தோன்றுகிறான்; வயதில் சிறுவனாயிருந்தாலும் யுத்தத்தில் கைதேர்ந்தவர்கள் செய்யமுடியாத ஆச்சரியங்களைச் செய்கிறான். ஸகல யுத்ததந்திரங்களையும் நன்றாக அறிந்து பிரயோகிக்கிறான். இவனைக் கொல்ல எனக்கு மனமில்லை, இவன் மஹாதைரியசாலி; பராக்கிரமத்தில் சிறந்தவன், அமரிக்கையாய் யுத்தம் செய்கிறவன்; மிகுந்த பொறுமையுள்ளவன், தேவகணங்களும் மஹரிஷிகளும் யுத்த முறைகளில் இவனுடைய சௌரியத்தைக்கண்டு ஸந்தேகமில்லாமல் மெச்சுவார்கள். இவனுடைய பராக்கிரமமும் உத்ஸாகமும்



வரவர விருத்தியாகின்றன. கொஞ்சம்கூட பயமில்லாமல் எனக்கெதிரே வந்து நின்று யுத்தத்திற்கு அழைக்கிறான். கண்கூசாமல் என்னைப்பார்க்கிறான். மனோவேகமுடைய இந்தச் சிறுவன் பராக்கிரமத்தால் தேவாஸுரர்களின் ஹிருதயத்தையும் நடுங்கச் செய்வான். க்ஷணத்திற்கு க்ஷணம் இவனுக்கு யுத்தத்தில் வீரியம் விருத்தியடைகின்றது. இவனை நான் அலக்ஷ்யம் செய்தால் எப்படி ஜயிக்கமுடியும்? ஆகையால் இவனைக் கொல்லவேண்டியது அவசியம். வரவரப்பற்றி எரியும் நெருப்பை அலக்ஷ்யம் செய்யலாமா" என்று சத்துருவின் பராக்கிரமத்தை இவ்விதமாய் ஊஹித்து, தான் செய்ய வேண்டிய காரியத்தையும் நிச்சயித்து, அவனைக்கொல்வதில் புத்தியைச் செலுத்தினார். அவனுடைய ரதத்தில் எட்டுக்குதிரைகள் கட்டியிருந்தன. அவை பலத்தால் கொழுத்து, வாயுவேகமுள்ளவைகளாய், பலவித நடைகளிலும் பழகி, ரதத்தை அலக்ஷ்யமாய் இழுக்கக்கூடியவை.

முதலில் இவனை ரதமில்லாமல் செய்யவேண்டுமென்று, ஆஞ்ஜநேயர் ஆகாசமார்க்கத்தில் இருந்துகொண்டே கைகளால் அவைகளை அறைந்து கொன்றார். உடனே அந்தத் திவ்யரதம், ஏர்க்கால் முறிந்து, கொடிகளறுந்து, குதிரைகள் மடிந்து, பூமியில் விழுந்தது. அப்பொழுது மஹாரதனான அக்ஷகுமாரன் அந்தத் தேரைவிட்டு வில்லையும் கத்தியையும் எடுத்துக்கொண்டு ஆகாசத்தில் பாய்ந்து, யோகாப்பியாஸத்தால் ஸ்தூலதேகத்தை விட்டுத் திவ்விய தேகத்துடன் ஸ்வர்க்கத்திற்குப் போகும் முனியைப்போல் விளங்கினான். வாயுவின் பராக்கிரமத்தையுடைய வாயுபுத்திரன், தன் தகப்பனும் கருடனும் ஸஞ்சரிக்கும் ஆகாசவீதியில் பயமில்லாமல் தன்னை எதிர்த்து வரும் அந்த ராக்ஷஸவீரனை ஸமயம் பார்த்து நெருங்கி, அவனுடைய கால்களை இறுகப்பிடித்து, கருடன் ஸர்ப்பத்தைச் சுழற்றுவதுபோல் அவனை பலவிதமாய்ச் சுழற்றி தன் பிதாவின் பலத்தை பிரயோகித்து, அவனை அடித்து நொறுக்கித் தேய்த்துப் பிண்டமாக்கி பூமியில் வீசி எறிந்தார். புஜங்கள், துடைகள், இடுப்பு, கழுத்து முதலிய அவயவங்கள் நொறுங்கி, கட்டுகள் தளர்ந்து, ரத்தம் பெருக, அக்ஷகுமாரன் பூமியில் விழுந்து உயிரை விட்டான்.

இப்படி ஹனுமான் அவனை அடித்து முறித்துத் தேய்த்து ராவணனுடைய ஹிருதயத்தைக் கலக்கினார். மஹரிஷிகளும் கிரஹதேவதைகளும் மஹாவிரதங்களை அனுஷ்டித்தவர்களும் பூதங்களும் யக்ஷர்களும் பன்னகர்களும் தேவர்களும் இந்திரனும் ஆச்சரியம் மேலிட்டு ஆஞ்ஜனேயரைக் கண்கொட்டாமல் பார்த்தார்கள். ரத்தத்தைப் போல் சிவந்த நேத்திரங்களையுடையவனும் இந்திர புத்திரனான ஜயந்தனைப்போல் தேஜஸ்வியுமான அக்ஷகுமாரனை இவ்

விதமாய்க் கொன்று, ஹனுமான் உத்ஸாஹம் மேலிட்டு மறுபடியும் அந்த வாசற்படியின் மேல் பிரளயகால மிருத்யுவைப்போல் நின்றார்.

நிஹத்ய தம் வஜ்ரஸுதோபம ப்ரப$^{4}$ம்
குமாரமக்ஷம் க்ஷதஜோபமேக்ஷணம் |
தமேவ வீரோ பி$^{4}$ஜகா$^{3}$ம தோரணம்
க்ருதக்ஷண: கால இவ ப்ரஜாக்ஷயே || (38)

---

## ஸர்க்கம் 48

## ஹனுமார் பிரஹ்மாஸ்திரத்தால் கட்டுப்பட்டது.

தத: ஸ ரக்ஷோதி$^{4}$பதிர் மஹாத்மா
ஹநூமதாக்ஷே நிஹதே குமாரே |
மந: ஸமாதா$^{4}$ய ததே$^{3}$ந்த்$^{3}$ரகல்பம்
ஸமாதி$^{3}$தே$^{3}$ஶேந்த்$^{3}$ரஜிதம் ஸரோஷம் || (1)

இப்படி அக்ஷகுமாரன் மாருதியால் கொல்லப்பட்டதைக் கேட்டு, ராவணன் தன் துக்கத்தை வெளியில் காட்டிக்கொள்ளாமல் மனத்தை தைரியப்படுத்திக்கொண்டு, வீரியத்தில் இந்திரனுக்கு ஸமமான இந்திரஜித் என்ற தன் குமாரனை வெகு கோபத்துடன் ஆக்ஞாபித்தான். "குழந்தாய்! உனக்கு பிரஹ்மாஸ்திரத்தின் ரஹஸ்யம் தெரியும்; ஆயுதவித்யையின் மர்மங்களை அறிந்தவர்களுக்குள் உன்னைப்போன்றவர்கள் இல்லை. தேவர்களும் அஸுரர்களும் உன் பெயரைக் கேட்டால் அலறுகிறார்கள். தேவர்களையும் இந்திரனையும் நீ முறியடித்தது லோகப்பிரஸித்தமல்லவா? பிரஹ்மதேவரைக் கடுந்தபஸால் ஆராதித்து ஸகல அஸ்திரங்களையும் பெற்றிருக்கிறாய். யுத்தத்தில் அஸுரர்களும் இந்திரனால் காப்பாற்றப்பட்ட தேவகணங்களும் உன் அஸ்திரபலத்தின் முன் நிற்கமுடியவில்லை. மூன்று லோகங்களிலுள்ளவர்கள் யாராயினும், ஹரிஹராதிகளாயிருந்தாலும் உன்னுடன் யுத்தம் செய்து கஷ்டத்தை அடையாதவர்களில்லை. புஜபலத்தாலும் கடுந்தபஸாலும் தன்னை ரக்ஷித்துக் கொண்டு தேசகாலங்களின் பேதங்களை அறிந்த மஹாபுத்திமான் நீயே. யுத்தங்களில் உன் பராக்கிரமத்திற்கு முடியாத காரியம் கிடையாது. யுத்த ஆலோசனையில் உன் புத்திக்கெட்டாத விஷயமுண்டோ? மூன்று லோகங்களிலுமுள்ள ஸகலப் பிராணிகளும் உன் தேகபலத்தையும் அஸ்திரபல்த்தையும் அறியார்களா? தபோபலத்திலும் அஸ்திரபலத்திலும் யுத்தத்தில் பராக்கிரமத்திலும் என்னைத் தவிர உனக்கு ஈடில்லை. ஆகையால் உன்னை யுத்தத்திற்கு அனுப்புவதால் ஜயம் நிச்சயமென்று என் மனம் கவலையற்றிருக்கிறது. நான் அனுப்பின கிங்கரர்களும் ஜம்புமாலியும் வீரர்களான மந்திரிகுமாரர்களும் ஐந்து ஸேனாதிபதிகளும் அவர்களுடன் சென்ற அளவற்ற சதுரங்கபலமும் முடிவில் உன் அருமைத்தம்பியான அக்ஷனும்



ஒரு அல்பக்குரங்கால் கொல்லப்பட்டார்கள். ஆனால், எனக்கு உன்னிடத்திலிருக்கும் நம்பிக்கை அவர்களிடத்தில் இல்லவேயில்லை.

ஒரு குரங்கு, தனியாய், ஸஹாயமில்லாமல், வெகு ஜாக்கிரதையாய் காக்கப்பட்ட நமது லங்கையில் பயமில்லாமல் பிரவேசித்து, இவ்வளவு வீரர்களைக் கொன்றதையும், அவனுடைய ஸௌக்ஷ்மபுத்தியையும் அபாரபலத்தையும் சக்தியையும் பராக்கிரமத்தையும் நீ நன்றாக ஆலோசித்து, உனது சக்தியையும் ஸத்வத்தையும் நன்றாய் ஆலோசித்து, உன் பலத்திற்குத்தகுந்த வேகத்தை விருத்தி செய்து கொள். அஸ்திர ரஹஸ்யங்கள் உன்னைப்போல் யாருக்காவது தெரியுமா? இதுவரையில் நீ ஜயிக்காத சத்துருக்களுண்டோ? நீ அந்தக் குரங்கை ஸமீபித்தவுடன் உன் ஸேனை நாசமடையாதபடி உன் பலத்தையும் சத்துருபலத்தையும் நன்றாக ஆலோசித்து, ஜயமுண்டாகும்படி யுத்தத்திற்கு ஆரம்பம் செய். வீரசிரேஷ்டா! பெரிய ஸைன்யத்தைக் கூட்டிக்கொண்டு அவனை ஜயிக்கலாம் என்று எண்ணாதே; அவைகளை ஒரு க்ஷணத்தில் மடித்துவிடுவான். வஜ்ராயுதத்தால் அவனைக்கொல்ல நினைக்காதே; அவனுடைய ஸத்வத்திற்கு இது ஒரு பொருட்டா? வாயுவிற்கும் இவனுடைய வேகம் கிடையாது; திடீரென்று எந்தத் திக்கிலிருந்தாவது பாய்ந்து அடிப்பவனிடத்தில் வஜ்ராயுதத்தால் பிரயோஜனமென்ன? ஸமீபத்தில் வரும்பொழுது முஷ்டிகளால் குத்திக் கொல்வேனென்றால், காலாக்னியைப் போன்றவனை முஷ்டிகளால் அடிக்கமுடியுமோ? ஆகையால் நான் இதுவரையில் சொல்லிவந்த விஷயங்களை நன்றாய் ஆலோசித்துப்பார். நீ உத்தேசித்த காரியம் ஸித்தியாகும்பொருட்டு, மனத்தைச் சிதறவிடாமல் நிறுத்தி, வில்லை எடுத்துக்கொண்டு திவ்யாஸ்திரங்களின் மந்திரங்களை தியானம் செய்துகொண்டே போ. எப்படியாவது ஜயத்துடன் திரும்பி வா. அஸ்திரபலத்தால் அவனைக் கட்டலாமே தவிர வேறு விதத்தால் முடியாது. 'இவ்வளவு பயங்கரமான சத்துருவிடத்தில் என்னைப்போன்ற சிறுவனை அனுப்பிப் பரீக்ஷிப்பதைக் காட்டிலும் தாங்களே செல்லக் கூடாதா' என்றால், தன் பரிவாரங்களிருக்கையில் அரசன் அவர்களை அனுப்பாமல் தானே யுத்தத்திற்குப் போவது ராஜதர்மமல்ல; அவைகளை அனுஷ்டிக்கும் எனக்கும் அழகல்ல. மேலும், யுத்தத்தில் ஸகல ஆயுதங்களையும் பிரயோகிப்பதில் உன்னைப் போன்றவன் இல்லை என்று எனக்குத் தெரியும். மேலும், யுத்தத்தில் சத்துருக்களை நாசம்செய்து ஜயமடைவது நமக்கு அழகல்லவா? இப்படிப்பட்ட ஸமயத்தை விட்டுவிடலாமோ? ஆகையால் உன்னை அனுப்பினேன்" என்றான்.

பராக்கிரமத்தில் தேவர்களைப் போன்ற இந்திரஜித் ஸாமான்ய பலவானா? மஹாவீரன். ராவணனுடைய வார்த்தையைக் கேட்டு, யுத்தம் செய்ய ஆவல் கொண்டு பிதாவை பிரதக்ஷிணம் செய்தான். அவனுடைய பந்துக்களும் மித்திரர்களும் கொண்டாட, யுத்தம்

செய்வதில் நோக்கமுள்ளவனாய் வெகு உத்ஸாஹத்துடன் யுத்தத்திற்குப் புறப்பட்டான். பிரதாப லங்கேசுவரனுடைய மூத்த குமாரன்; தாமரை இதழ்களைப் போன்ற நேத்திரங்களை உடையவன்; மஹாதேஜஸ்வி; தைரிய லக்ஷ்மியால் ஜ்வலித்துக் கொண்டு பர்வ காலங்களில் பொங்கும் மஹா ஸமுத்திரத்தைப்போல், அட்டஹாசம் செய்து கொண்டு வெளிக்கிளம்பினான். இந்திரனைப்போன்ற இந்திரஜித் நான்கு ஸிம்ஹங்கள் பூட்டின உத்தம ரதத்தில் ஏறிச் சென்றான். அவை வேகத்தில் கருடனைப் போன்றவை; ஒன்றிற்கொன்று ஸமமானவை; வெளுத்த கூர்மையான பற்களையுடையவை; அந்த ரதம் எங்கும் தடையின்றிச் செல்லக் கூடியது. வில்லாளிகளுக்குள் சிரேஷ்டனும், அஸ்திர சஸ்திர வித்யையில் நிகரில்லாதவனுமான இந்திரஜித், திவ்விய ரதத்தின்மேல் ஹனுமானிருக்குமிடத்திற்கு வந்தான். அவர் ரதகோஷத்தையும் வில்லின் நாணோசையையும் கேட்டு, நமக்குத் தகுந்த சத்துரு வருகிறானென்று அளவற்ற ஸந்தோஷத்தை அடைந்தார். யுத்த சாஸ்திரத்தில் நிபுணனான ராவண குமாரன் அதற்குள் பெரிய வில்லையும் எஃகால் செய்யப்பட்ட நுனிகளையுடைய கூர்மையான பாணங்களையும் எடுத்துக் கொண்டு ஆஞ்ஜநேயரை நோக்கி வந்தான். இப்படி யுத்தத்தில் உத்ஸாஹம் கொண்டு ஆயுதபாணியாய் இந்திரஜித் வருகையில் ஸகல திக்குகளும் கலங்கின; மிருகங்கள் பயங்கரமாய்க் கத்தின; அந்த அற்புதமான யுத்தத்தைப் பார்க்க நாகர்களும் யக்ஷர்களும் ஸித்தர்களும் மஹரிஷிகளும் கிரஹதேவதைகளும் நக்ஷத்திரதேவதைகளும் கூட்டம்கூட்டமாய் ஆகாசவீதியில் நின்றார்கள். பக்ஷிகள் இன்று நமக்கு நல்ல ஆஹாரம் கிடைக்குமென்று உரக்கக் கூவின.

அப்பொழுது தன்னை நோக்கி ரதத்தில் ஏறிவரும் இந்திரஜித்தைப் பார்த்து ஆஞ்ஜனேயர் ஸிம்ஹநாதம் செய்து சரீரத்தை விருத்தி செய்து கொண்டார். இந்திரஜித்தும் தன் திவ்விய ரதத்திலிருந்துகொண்டுவில்லைவளைத்து இடிபோல் நாணோசைசெய்தான். பிறகு கடும்வேகமுடையவர்களும் மஹாபலசாலிகளும் யுத்தவிஷயங்களில் ஸந்தேக மற்றவர்களுமான ஆஞ்ஜனேயரும் இந்திரஜித்தும் எப்பொழுதும் விரோதிகளான தேவாஸுர சிரேஷ்டர்களைப்போல் யுத்தத்திற்கு ஆரம்பித்தார்கள். பிரஸித்தமான வில்லாளியும் மஹாரதனும் சூரனும் யுத்தத்தில் ஆசையுள்ளவனுமான ராவணபுத்திரன் பிரயோகிக்கும் பாணங்களை மாருதி தடுத்துக் கொண்டும் சரீரத்தை வரவரப் பெருக்கிக் கொண்டும் ஆகாசமார்க்கத்தில் ஸஞ்சரித்தார். பிறகு அந்த ராக்ஷஸன் தங்கக்கட்டுகளாலும் இறகுகளாலும் அலங்கரிக்கப்பட்ட நிமிர்ந்த பாணங்களை பிரயோகித்தான். அவை நீண்டு வெகு கூர்மையாய்ச் சத்துருக்களின்மேல் வஜ்ராயுதத்தைப்போல் வேகமாய் விழுந்து கொல்லும். பேரி மிருதங்கம் தப்பட்டை முதலிய வாத்தியங்களுடைய சப்தத்தையும் ரதத்தின் கர்ஜனையையும் நாணோசையையும் ஸைன்யங்களின் கோஷத்தையும் கேட்டு, ஹனு



மார் மறுபடியும் உயரக்கிளம்பி, வில்லாளிகளுக்குள் சிரேஷ்டனான இந்திரஜித் பிரயோகிக்கும் பாணங்களைத் தன்மேல்விழாமல் செய்து கொண்டு, அவைகளுக்கு நடுவில் புகுந்து புறப்பட்டு, வீரியத்தையும் பலத்தையும் விருத்தி செய்து கொண்டார். அந்த ராக்ஷஸன் பாணப் பிரயோகம் செய்த பொழுது கைகளை நீட்டி அவைகளை விலக்கிக் கொண்டு ஆகாசத்தில் தாவினார். இருவரும் அளவற்ற வேகமுள்ளவர்கள்; யுத்த விஷயத்தில் நிபுணர்கள்; அவர்கள் செய்யும் யுத்தத்தைக் கண்டு ஸகல பூதங்களும் ஆச்சரியமடைந்தன. இந்திரஜித் ஹனுமானுடைய மர்மத்தை அறியமுடியவில்லை; இருவரும்தேவதைகளைப்போல் பராக்கிரமசாலிகள்; அவர்கள் செய்யும் யுத்தம் பிறரால் ஸகிக்க முடியாமலிருந்தது. இந்திரஜித் மஹாபுத்திமான்; குறி வைப்பதிலும் அதை அடிப்பதிலும் மனத்தைச் சிதறவிடாமல்வெகு ஜாக்கிரதையாக இருப்பவன். "நான் பிரயோகிக்கும் பாணங்களெல்லாம் நான் நினைத்தபடி இவன் மேல் விழுகின்றன. ஆனால் இவன் எப்படியோ அவைகளுக்கு அகப்படாமல் தப்பித்துக் கொண்டு வருகிறான். என்ன ஆச்சரியம்" என்று தீர்க்கமாய் யோசித்து, "இவனைப் பாணங்களால் கொல்ல முடியாது. எப்படியாவது மூர்ச்சை அடையும்படி செய்து கட்டிக் கொண்டு போவதே சிரேஷ்டம்" என்று நிச்சயித்தான்.

பிறகு ஸகல அஸ்திரங்களின் ரஹஸ்யத்தை அறிந்த இந்திரஜித் "இவன் எந்த அஸ்திரங்களாலும் மரணமடையான். இவனைக் கட்டக் கூடியது பிரஹ்மாஸ்திரம் ஒன்றே" என்று கண்டு, மாருதியின் மேல் அதை பிரயோகித்து அவரைக் கட்டிவிட்டான். உடனே அவர் செயலற்று மூர்ச்சையடைந்து பூமியில் விழுந்தார். சற்று நேரம் கழித்துத் தான் பிரஹ்மாஸ்திரத்தால் கட்டுப்பட்டிருப்பதையும், அதனால் தன் வேகம் அடங்கினதையும், தனக்கு முன்பு பிரஹ்மா கொடுத்திருக்கும் வரத்தையும் ஞாபகப் படுத்திக் கொண்டார். "பிரஹ்மாஸ்திரத்தைத் தவிர என்னைக் கட்டக் கூடிய அஸ்திரம் வேறொன்றில்லை. இதிலிருந்து என்னை விடுவித்துக் கொள்ள எனக்குக் கொஞ்ச காலம் சக்தி கிடையாது. இந்த ரஹஸ்யத்தை அறிந்தே இந்த ராக்ஷஸன் இதை பிரயோகித்திருக்கிறான். ஆகையால் லோககுருவான பிரஹ்மாவின் ஆக்ஞைக்கு நான் கட்டுப்பட வேண்டியது. இந்த அஸ்திரத்தின் வீரியமோ எல்லையற்றது. ஆனால் எனக்குயாதொரு உபத்திரவம் நேராதென்றும் இதற்கு ஒரு முகூர்த்தம் வரையில் நான் கட்டுப்பட்டிருக்க வேண்டுமென்றும் பிரஹ்மா எனக்கு வரம் கொடுத்திருக்கிறார். ஆகையால் கொஞ்ச நேரத்திற்கெல்லாம் இதிலிருந்து விடுபடுவேன். பிரஹ்மா இந்திரன் வாயு முதலியவர்கள் என்னை ரக்ஷிக்கையில், இந்த அஸ்திரத்தால் கட்டப்பட்டிருந்த போதிலும் எனக்குக் கொஞ்சம் கூடப் பயமில்லை; இந்த ராக்ஷஸர்கள் என்னைக் கட்டிக்கொண்டு போவதும் எனக்கு லாபம்

தான். ராவணனைக் கண்டு பேசி அவனுடைய குணங்களையும் பராக்கிரமத்தையும் நன்றாக அறியலாம்'' என்று அசைவற்றிருந்தார்.

பிறகு ராக்ஷஸர்கள் ஸமீபத்தில் வந்து சணல் கயிறுகளாலும் மரவுரிகளாலும் அவரை இறுக்கிக் கட்டி மிரட்டினார்கள். மாருதி தீர்க்கமான ஆலோசனையுள்ளவர்; தான் செய்ய வேண்டிய காரியத்தை நன்றாய் நிச்சயித்துக்கொண்டவர்; எவ்வித சத்துருக்களையும் அலக்ஷ்மாய்க் கொல்லக் கூடியவர்; ஆகையால் மிகவும் பயந்தவர் போல் சேஷ்டையற்று, ஒருவேளை ராவணன் என்னைப் பார்க்க விரும்பி வரவழைப்பான்'' என்ற நம்பிக்கையால் சத்துருக்கள் தன்னைக் கட்டுவதையும் உபத்திரவிப்பதையும் லக்ஷ்யம் செய்யவில்லை. சணல் கயிற்றால் கட்டப்பட்டவுடன் பிரஹ்மாஸ்திரத்திலிருந்து விடுபட்டார். அதனால் கட்டப்பட்டிருக்கும் பொழுது வேறொன்றைக் கொண்டு கட்டினால் அந்த அஸ்திரத்தின் வீரியம் போய்விடும். ஹனுமார் சணல் கயிறால் கட்டப்பட்டவுடன் பிரஹ்மாஸ்திரத்திலிருந்து விடுபட்டார் என்றறிந்து, மஹாபுத்திமானான இந்திரஜித், 'ஐயோ! இந்த அஸ்திரத்தை பிரயோகித்திருக்கும் பொழுது வேறொன்றால் கட்டக் கூடாது' என்ற மந்திர ரஹஸ்யம் இந்த மூடர்களுக்குத்தெரியவில்லையே! அருமையான அஸ்திரம் வீணாயிற்றே! என் உத்தேசமும் நிறைவேறாமற் போயிற்றே! இந்த அஸ்திரம் வீணான பிறகு வேறு பிரயோஜனப்படாதே! சிரமப்பட்டு செய்த இந்தப் பெரும் காரியத்தைக் கெடுத்து விட்டார்களே! பிரஹ்மாஸ்திரத்தை மறுபடியும் பிரயோகிக்க முடியாது. இவன் அதிலிருந்து விடுபட்ட போதிலும் கட்டுப்பட்டவன்போல் காட்டிக் கொள்கிறான். இதன் ரஹஸ்யம் எனக்குத் தெரியவில்லை. திடீரென்று கிளம்பி எல்லோரையும் நாசம் செய்தாலும் செய்வான்'' என்று கவலைகொண்டான்.

ஹனுமான் தான் பிரஹ்மாஸ்திரத்திலிருந்து விடுபட்டதாகக் காட்டிக்கொள்ளாமல், ராக்ஷஸர்கள் தன்னைக் கட்டி இழுப்பதையும் தடிகளாலும் முஷ்டிகளாலும் அடிப்பதையும் பொறுத்துக் கொண்டிருந்தார். பிறகு அவரை ராவணனிருக்குமிடத்திற்குக் கொண்டு போனார்கள். அங்கே இந்திரஜித், "நமது ஸைன்யங்களையும் ஸேனாதிபதிகளையும் கொன்று அசோகவனத்தை அழித்த குரங்கைப் பாருங்கள்'' என்று ராவணனுக்கும் மந்திரிகளுக்கும் மாருதியைக் காட்டினான். ஆனால் அவர் பிரஹ்மாஸ்திரத்திலிருந்து விடுபட்டும் ஏதோ காரணத்தால் கட்டுப் பட்டவர் போலிருக்கிறாரென்று அவனுக்கு நன்றாய்த் தெரியும். மயங்கின மதயானையைப்போல் கட்டுப்பட்டுக் கிடக்கும் அந்த வானர சிரேஷ்டனை ராக்ஷஸர்கள் ராவணனுக்கு தெரிவித்தார்கள். அங்கிருந்த ராக்ஷஸ வீரர்கள் மாருதியைப் பார்த்து, "இவன் யார்? யாரைச்சேர்ந்தவன்? எங்கிருந்து வந்தான்? இங்கே என்ன காரியம்? இவனுக்கு வேண்டியவர்கள் இவ்விடத்தில்



யார்''? என்று பலவிதமாய் ஒருவர்க்கொருவர்பேசிக்கொண்டார்கள். பிறகு அவரைக் கண்டு கோபம் கொண்டு, "நமது பந்துக்களையும் மித்திரர்களையும் கொன்றுநம்மை அவமானம்செய்த இந்தத்துஷ்டக் குரங்கைக் கொல்லுங்கள். கொளுத்துங்கள், தின்னுங்கள், சித்திர வதை செய்யுங்கள்'' என்று இரைந்தார்கள். அதைக் கேட்டுக் கொண்டே அந்த வானரவீரன் ராஜமார்க்கத்தைத் தாண்டிச் சென்று, ராவணனுடைய காலடியில் வயது சென்ற மந்திரிகள் உட்கார்ந்திருப்பதையும், நவரத்தினகசிதமான அந்தக் கொலுமண்டபத்தின் அழகையும் பார்த்தார். விகாரரூபமுள்ள ராக்ஷஸர்களால் அங்குமிங்கும் இழுக்கப்பட்ட அந்த வானர சிரேஷ்டனை மஹா தேஜஸ்வியான ராவணனும் பார்த்தான். ஆஞ்ஜனேயரும் கொஞ்சம் கூடப் பயமில்லாமல் அந்த பிரதாப லங்கேசுவரனை உற்றுப் பார்த்தார். அவன் எல்லையற்ற தேஜஸும் பலமும் பொருந்தி, ஸமஸ்தகிரணங்களுடன் ஜ்வலிக்கும் ஆதித்தியனைப்போல் பிரகாசித்தான். பிறகு ராக்ஷஸாதிபதி மாருதியைப் பார்த்துக் கோபத்தால் சிவந்த கண்களை உருட்டி விழித்து, தன் பாதத்தடியில் உட்கார்ந்திருப்பவர்களும் குலத்தாலும் ஆசாரத்தாலும் முதிர்ந்தவர்களுமான மந்திரிகளைநோக்கி, "இவனுடைய வரலாற்றைக் கேளுங்கள்'' என்று ஆக்ஞாபித்தான். அப்படியே அவர்கள், "நீ யார்? இங்கே வந்த காரணமென்ன? இங்கே செய்யவேண்டிய காரியமென்ன?'' என்று கேட்க, ஆஞ்ஜனேயர், "நான் ஒரு தூதன். ஸுக்ரீவ மஹாராஜாவால் அனுப்பப்பட்டேன்'' என்று சொன்னார்.

யதா2க்ரமம் தை: ஸ கபிர்விப்ருஷ்ட:
கார்யார்த2 மர்த2ஸ்ய ச மூலமாதௌ3 |
நிவேத3யாமாஸ ஹரீஶ்வரஸ்ய
தூ3த: ஸகாஶாத3ஹ மாக3தோஸ்மி || (62)

---

## ஸர்க்கம் 49

# ராவணன் மஹிமை

தத: ஸ கர்மணா தஸ்ய விஸ்மிதோ பீ4மவிக்ரம: |
ஹநூமாந் ரோஷ தாம்ராக்ஷோ ரக்ஷோதி4ப மவைக்ஷத || (1)

பயமில்லாமல் லங்கையில் புகுந்து சத்துருக்களைக் கலக்கின மாருதி, "ஹா! ஹா! என்ன ஆச்சரியம்! ராக்ஷஸவீரர்களை ஒவ்வொருவராய் நாசம் செய்தால் முடிவில் ராவணன் நம்முடன் யுத்தத்திற்கு வருவான். அப்போது அவனுடைய பலத்தை அறியலாமென்று நான் செய்த யோசனை வீணாயிற்றே! இவன் ஸிம்ஹாஸனத்திலிருந்து இறங்காமலேயே என்னைத் தன்னிடத்திற்கு வரவழைத்துக் கொண்டானே'' என்று ஆச்சரியப்பட்டார். பிறகு, அவன் ராமனுக்குச் செய்த அபராதத்தையும் ஸீதையை உபத்திரவித்ததையும்

நினைத்துக் கோபம் தாங்காமல் அவனை உற்றுப்பார்த்தார். சிரஸில் நவரத்தினகசிதமான ஸுவர்ணகிரீடம் முத்துமாலைகளால் அலங்கரிக்கப்பட்டு விளங்கிற்று. அருமையான நவரத்தினங்களிழைத்து மனத்தால் ஸிருஷ்டிக்கப்பட்டதுபோல் விசித்திரமாய்ச் செய்யப்பட்ட ஸமஸ்த ஆபரணங்களாலும் அலங்கரிக்கப்பட்டிருந்தான். விலையுயர்ந்த வெண்பட்டை உடுத்துக்கொண்டு, கஸ்தூரி புனுகு ஜவ்வாது முதலிய பரிமளத்திரவியங்கள் கலந்த சிவப்புச் சந்தனத்தால் விசித்திரமான கோடுகளை வரைந்து பூசப்பட்டிருந்தான். ரத்தத்தைப்போல் சிவந்த இருபது கண்களால் ஆஞ்ஜநேயரைப் பயங்கரமாக உருட்டி விழித்துப் பார்த்துக்கொண்டிருந்தான். உதடுகள் தொங்கிக்கொண்டிருந்தன; க்ரூரமான கோரைப்பற்கள் ஜ்வலித்தன; பலவித க்ரூர ஜந்துக்கள் ஸஞ்சரிக்கும் சிகரங்களையுடைய மந்தரகிரியைப்போல் பத்துத்தலைகளுடன் விளங்கினான்; கறுத்த மைமலைபோல் தேககாந்தியுள்ளவன். பூர்ணசந்திரனைப்போல் நாயகமணியையுடைய முத்துஹாரம் கொக்குகளோடுகூடின மேகத்தைப்போல் மார்பில் பிரகாசித்தது. புஜங்களில் கேயூரங்களும் தோள்வளைகளும் கட்டப்பட்டு உத்தமமான சந்தனம் பூசப்பட்டிருந்தது. அவை ஐந்து தலை நாகங்களைப்போன்ற விரல்களுடன் பருத்துத் திரண்டு விளங்கின.

அவன் உட்கார்ந்திருந்த ஆஸனம் ஸ்படிகத்தால் செய்யப்பட்டு சிரேஷ்டமான ரத்தினஸ்தம்பங்களாலும் விரிப்புகளாலும் அலங்கரிக்கப்பட்டிருந்தது. ஸர்வாலங்காரமுள்ள ரூபவதிகள் ஸமீபத்தில் நான்கு பக்கங்களிலும் இருந்து சாமரங்களாலும் விசிறிகளாலும் உபசரித்துக்கொண்டிருந்தார்கள். நான்கு மஹாஸமுத்திரங்களால் இந்தப் பூமி சூழப்பட்டிருப்பதைப்போல், துர்த்தரன் பிரஹஸ்தன், மஹா பார்ச்வன் நிகும்பன் என்ற மந்திரிகளால் சூழப்பட்டிருந்தான். அவர்கள் மந்திராலோசனையில் சிறந்தவர்கள்; பலத்தால் கர்வம் கொண்டவர்கள்.மேலும்,ராவணனுக்கு எப்பொழுதும் மங்களத்தையே தேடும் புத்திமான்களான இதர மந்திரிகள், தேவர்கள் இந்திரனைச் சூழ்ந்திருப்பதுபோல் அவனைச்சுற்றி உட்கார்ந்திருந்தார்கள். தேஜஸாலும் காந்தியாலும் பார்ப்போர்களின் கண் கூசும்படி, மலையருவிகள் பாயும் மேருவின் சிகரத்திலிருக்கும் காளமேகத்தைப்போல் ஸிம்ஹாஸனத்தில் இறுமாந்து வீற்றிருக்கும் பிரதாபலங்கேசுவரனைப் பார்த்து மாருதி, ராக்ஷஸர்கள் தன்னை உபத்திரவிப்பதையும் மறந்து அளவற்ற ஆச்சரியமடைந்தார். அவனுடைய தேஜஸால் மயங்கி, "என்ன ரூபம்! என்ன தைரியம்! என்ன ஸத்வம்! என்ன காந்தி! இவனுடைய தேஜஸுக்கும் பிரபாவத்திற்கும் அளவில்லையோ? ஸகல லக்ஷணங்களும் பொருந்தி இருக்கின்றன. இந்தப் பலவான் தர்மசாலியாக இருந்தால் இந்திரனையும் ஸ்வர்க்கத்தையும் காப்பாற்றத் தகுந்தவனல்லவா? தேவர்களும் அஸுரர்களும் ஸகல லோகங்களும் இவனுடைய க்ரூரக்ருத்யங்களாலும் லோகத்தார் நிந்திக்கும்படியான நடத்தையாலும் நடுங்குகிறார்கள். இவன் கோபம் கொண்டால் இந்தப் பிரபஞ்சத்தை நாசம் செய்து ஸமுத்திரத்தில் தூற்றிவிடக்கூடியவன்" என்று பலவிதமாக யோசித்தார்.



இதி சிந்தாம் ப³ஹுவிதா⁴மகரோந் மதிமாந் ஹரி: |
த்³ருஷ்ட்வா ராக்ஷஸ ராஜஸ்ய ப்ரபா⁴வ மமிதௌஜஸ: ‖ (20)

## ஸர்க்கம் 50

## ராவணனுக்கும் மாருதிக்கும் ஸம்வாதம்

தமுத்³வீக்ஷ்ய மஹாபா³ஹு: பிங்கா³க்ஷம் புரத: ஸ்தி²தம் |
கோபேந மஹதாவிஷ்டோ ராவணோ லோகராவண: ‖ (1)

ஸகல லோகங்களையும் கதறச்செய்யும் மஹாபலவானான ராவணன், தேஜஸால் ஜ்வலிக்கும் ஆஞ்ஜனேயர் மஞ்சள் வர்ணமான நேத்திரங்களுடன் தனக்கெதிரில் நிற்பதைக்கண்டு கோபம்கொண்டு "இவன் யார்? பூர்வத்தில் நான் கைலாஸகிரியைப் பெயர்த்து அசைக்கும் பொழுது என்னைச் சபித்த நந்திகேசுவரபகவான் இந்த ரூபமெடுத்து வந்திருக்கிறாரா? அல்லது பாணாஸுரன் இந்த ரூபத்துடன் வந்திருக்கிறானோ" என்று பலவிதமாய் யோசித்தான்.

பிறகு ராவணன் பிரஹஸ்தனைப்பார்த்து விஸ்தாரமான அர்த்தங்களடங்கிய வார்த்தையைக் காலதேசங்களுக்குத் தகுந்தபடி சொன்னான். "இந்தத் துஷ்டன் யார்? எங்கிருந்து வந்தான்? யார் அனுப்பினார்கள்? அசோகவனத்தை அழித்து ராக்ஷஸர்களை எதற்காகப் பயமுறுத்தினான்? கேள். பிறர் நெருங்கமுடியாத என் ராஜதானியில் ஏன் வந்தான்? என் ஸைன்யங்களுடன் ஏன் யுத்தம் செய்தான்? கேள்" என்று ஆக்ஞாபித்தான். பிரஹஸ்தன், "குரங்கே! பயப்படாதே; தைரியப்படுத்திக்கொள். உனக்கு க்ஷேமமுண்டாகட்டும். இந்திரன் உன்னை இங்கே அனுப்பி இருந்தால் வாஸ்தவத்தைச் சொல். பயப்படாதே; உன்னை விட்டு விடச் சொல்லுகிறேன். குபேரனாவது, யமனாவது, வருணனாவது, விஷ்ணுவாவது, ராக்ஷஸேசுவரனை ஜயிக்க விரும்பி, உன்னை இந்த ரூபத்துடன் இங்கே அனுப்பியிருந்தாலும் சொல். நீ ரூபத்தால் வானரனே தவிர தேஜஸாலும் பலத்தாலும் உன்னை வானரனென்று சொல்லமுடியுமோ? நிஜத்தைச் சொல்; உன்னை விட்டுவிடுவோம். பொய்யைச் சொன்னால் நீ பிழைப்பது அரிது. அரசனுடைய அந்தப்புரத்தில் எப்படி பிரவேசித்தாய்? சொல். எதற்காக பிரவேசித்தாய்?" என்று கேட்டான்.

அதற்கு ஆஞ்ஜனேயர், அவனை லக்ஷ்யம் செய்யாமல் ராவணனைப்பார்த்து, இந்திரனாவது யமனாவது வருணனாவது எனக்கு யஜ

மானனல்ல. குபேரனுடன் எனக்கு ஸ்நேஹமில்லை. விஷ்ணு என்னை அனுப்பவில்லை. நான் வானரன். இது என் ஸ்வரூபம். ராக்ஷஸ ராஜனைப் பார்ப்பதற்காக இங்கே வந்தேன். அந்த உத்தேசத்துடன் அசோகவனத்தை அழித்தேன். உடனே ராக்ஷஸர்கள் என்னுடன் யுத்தம் செய்ய வந்தார்கள். என் தேகத்தை ரக்ஷிப்பதற்காக அவர்களுடன் யுத்தம் செய்தேன். தேவர்களும் அஸுரர்களும் அஸ்திரங்களும் என்னைக் கட்டுப்படுத்தாதென்று பிரஹ்மா எனக்கு வரம் கொடுத்திருக்கிறார். தங்களைப்பார்க்க விரும்பியே பிரஹ்மாஸ்திரத்திற்குக் கட்டுப்பட்டவன் போலிருந்து இந்த ராக்ஷஸர்கள் செய்யும் உபத்திரவங்களை ஸஹித்துக்கொண்டிருக்கிறேன். ஒரு ராஜ காரியமாய்த் தங்களிடத்தில் வந்திருக்கிறேன். அளவற்ற தேஜஸுடைய ரகுவீரனால் நான் இங்கே அனுப்பப்பட்டேன். லங்கேசுவர! நான் சொல்லும் ஹிதமான வார்த்தைகளைக் கேட்க வேண்டும்'' என்றார்.

து$^{3}$தோஹமிதி விஜ்$^{3}$ஞேயோ ராக$^{4}$வஸ் யாமிதௌஜஸ: |
ஶ்ருயதாம் சாபி வசநம் மம பத்$^{2}$ய மித$^{3}$ம் ப்ரபோ$^{4}$ ‖ (19)

---

## ஸர்க்கம் 51

# மாருதி ராவணனுக்கு ஹிதோபதேசம் செய்தது

---

தம் ஸமீக்ஷ்ய மஹாஸத்வம் ஸத்வவாந் ஹரிஸத்தம: |
வாக்ய மர்த$^{2}$வ த$^{3}$வ்யக்$^{3}$ர: தமுவாச த$^{3}$ஶாநநம் ‖ (1)

பராக்கிரமசாலியான ஹனுமான் எல்லோரும் கண்டு நடுங்கும் பிரபாவமுள்ள ராவணனை லக்ஷ்யம் செய்யாமல், தான் தனியாக இருப்பதையும் கணக்கில்லாத சத்துருக்கள் தன்னைச் சூழ்ந்திருப்பதையும் கவனிக்காமல், தான் சொல்லும் விஷயம் ராவணனுக்குக் கோபத்தை உண்டாக்குமென்று தெரிந்திருந்தும் பயப்படாமல், விசேஷ அர்த்தங்களடங்கிய வார்த்தைகளைச் சொன்னார். "லங்கேசுவர! கிஷ்கிந்தாநகரத்தில் அரசுசெய்யும் ஸுக்ரீவமஹாராஜர் என்னைத் தங்களிடத்தில் அனுப்பினார். ஸஹோதரனைப்போல் தங்களிடத்தில் பிரியம் வைத்த மஹாராஜர் தங்களுடைய க்ஷேமத்தை விசாரிக்கிறார். மஹாத்மாவாயும் தங்களுக்கு ஸஹோதரராயுமிருக்கும் அவர் சொல்லியனுப்பின விஷயங்கள் இஹபரஸாதகமானவை; தர்மம் அர்த்தமென்ற புருஷார்த்தங்களுக்கு ஒத்தவை; ஆகையால் அதைக் கவனித்துக் கேளுங்கள். தசரதரென்று பிரஸித்தி பெற்ற ஒரு அரசர் இருந்தார். அவர் நிகரில்லாத சதுரங்கபலத்தையுடையவர்; தேஜஸில் இந்திரனைப்போன்றவர்; பிரஜைகளை ரக்ஷிப்பதில் பிதாவைப்போன்றவர். அவருடைய மூத்தபுத்திரனான ராமன் மஹாதேஜஸ்வி; மஹாபலவான்; எல்லோருக்கும் ஆனந்தத்தைக் கொடுப்பவர்; அனுக்கிரஹிக்கவும் சிக்ஷிக்கவும் திறமையுள்ளவர்.



பெரியோர்களுடைய ஆசாரத்தை அனுஷ்டித்துப் பிதாவின் ஆக்ஞையால் ராஜ்யத்தை விட்டு, லக்ஷ்மணனென்ற தம்பியோடும் ஸீதை என்ற பாரியையோடும் தண்டகாரண்யத்தில் பிரவேசித்தார். அங்கே மஹாபதிவிரதையான ஸீதை காணமற்போனாள். அவள் விதேஹ தேசத்தரசனான ஜனகனென்ற மஹாத்மாவின் பெண்.

பிறகு அவ்விருவரும் அவளைத் தேடிக்கொண்டு ரிசியமூகபர்வதத்திற்கு வந்து ஸுக்ரீவமஹாராஜாவுடன் ஸ்நேஹம் செய்துகொண்டார்கள். ஸுக்ரீவன் ஸீதையைத்தேடிக் கண்டுபிடிக்கிறேனென்று பிரதிக்ஞை செய்தார். ராமன் ஸுக்ரீவனை வானர ராஜ்யத்தில் அபிஷேகம் செய்து வைக்கிறேனென்று பிரதிக்ஞை செய்தார். அப்படியே ராமன் வாலியை யுத்தத்தில் கொன்று ஸுக்ரீவனை வானரர்களுக்கு அதிபதியாக்கினார். வாலியைத் தங்களுக்கு இதற்குமுன் நன்றாகத் தெரியுமே. அந்த வானரசிரேஷ்டனை ராமன் யுத்தத்தில் ஒரே பாணத்தால் அடித்தார். பிறகு, ஸத்தியவானான ஸுக்ரீவன் ஸீதையைத் தேட நிச்சயித்து வானரஸைன்யங்களை ஸகல திக்குகளிலும் அனுப்பினார். அவர்கள் பூமியிலும் ஆகாசத்திலும் பாதாளத்திலும் கூட்டம்கூட்டமாய்க் கணக்கில்லாமல் சென்று அவளைத் தேடிவருகிறார்கள். அவர்களில் சிலர் கருடனைப்போன்றவர்கள்; சிலர் வாயுவைப்போன்றவர்கள். ஆகையால் அளவற்ற வேகத்துடன் எங்கும் தடையில்லாமல் செல்லக்கூடியவர்கள். என் பெயர் ஹனுமான்; நான் வாயுபகவானுக்குப் பிறந்தவன். ஸீதையைக் கண்டு பிடிப்பதற்காக நூறுயோஜனை விஸ்தீர்ணமுள்ள ஸமுத்திரத்தைத் தாண்டி இங்கே வந்தேன். நகரமெங்கும் தேடிப்பார்க்கையில் ஸீதை தங்களுடைய கிருஹத்திலிருக்கக் கண்டேன்.

தாங்கள் மஹாபுத்திமான்; ஸகல சாஸ்திரங்களையும் புருஷார்த்தங்களின் ஸ்வரூபத்தையும் அறிந்தவர்கள்; கடுமையான தவம் செய்து அபூர்வமான வரங்களைப் பெற்றவர்கள். ஆகையால் பிறருடைய பத்தினிகளை அபகரித்துப் பலாத்காரம் செய்வது தங்களுக்கு நியாயமல்ல. தங்களைப்போன்ற புத்திமான்கள் தர்மத்திற்கு விரோதமாயும், பெரிய ஆபத்துகளுக்குக் காரணமாயும் வேருடன் நாசம் செய்யக்கூடியதாயும் இருக்கும் காரியங்களில் தலையிட்டுக்கொள்ள மாட்டார்களல்லவா? ராமன் கோபம் கொண்டு லக்ஷ்மணனை ஏவி அவர் பாணப்பிரயோகம் செய்தால், தேவாஸுரர்களில் யாராவது எதிரில் நிற்க முடியுமா? ரகுவீரனுக்கு அபராதம் செய்து ஸுகமாக இருந்தவன் இந்த மூன்று லோகங்களிலும் உண்டோ? ஆகையால் மூன்று காலங்களிலும் தங்களுக்குப் பரம மங்களத்தைச் செய்யக்கூடியதும் தர்மத்திற்கும் அர்த்தத்திற்கும் ஒத்ததுமான இந்த ஹிதோபதேசத்தை அங்கீகரித்து ரகுநாதனிடத்தில் ஸீதையைக் கொண்டுபோய் ஒப்புவியுங்கள். வெகு சிரமப்பட்டு ஸீதையைக் கண்டு பிடித்தேன். மேல் நடக்கவேண்டிய காரியங்களுக்கு ராம

னுடைய ஆக்ஞையை எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறேன். ஸீதை சொல்லமுடியாத துக்கத்தால் தவித்துக்கொண்டிருப்பதைக் கண்டேன். அவளை எடுத்துவந்து இங்கே வைத்திருப்பது, ஐந்துதலை நாகத்தை மடியில் கட்டிக்கொள்வதுபோலாகுமென்று தங்களுக்குத் தோன்றவில்லையா? 'அவளுடைய கற்பை அழித்துவிட்டால் பிறகு ராமனுக்கு அவளால் என்ன பிரயோஜனம் என்றால், விஷம் கலந்த அன்னத்தை வயிறு நிறைய புஜித்து ஜீர்ணம் செய்து கொள்ளமுடியுமா? தேவாஸுரர்களும் இவளைக் கொண்டுபோய் வைத்துப் பிழைக்கவும் முடியுமா? கடுமையான தவங்களையும் சிரேஷ்டமான தர்மங்களையும் வெகுகாலம் அனுஷ்டித்துப்பெற்ற இந்த வஜ்ரதேகத்தையும் தீர்க்காயுளையும் ஐசுவரியத்தையும் நாசம் செய்துகொள்வது நியாயமா?

'நான் தபோபலத்தால் தேவர்களாலும் அஸுரர்களாலும் மரணமில்லை என்ற வரத்தைப்பெற்றிருக்கிறேன்' என்று தாங்கள் நம்பியிருக்கலாம். ஆனால், நான் சொல்லும் விஷயத்தைக் கவனியுங்கள். ஸுக்ரீவன் தேவனல்ல, அஸுரனல்ல, ராக்ஷஸனல்ல, தானவனல்ல, பன்னகனல்ல; ஆகையால் அவனிடத்திலிருந்து எப்படி பிராணனைக் காப்பாற்றுவீர்கள்?

'நான் இதுவரையிலே அனேகப் பாபங்களைச் செய்திருக்கிறேன். அவைகளின் பலத்தை அனுபவிக்கவேண்டியது ஸித்தம். உன் உபதேசத்தால் பிரயோஜனமென்ன?' என்று நினைக்கவேண்டாம். ஒருவன் தர்மத்தையும் அதர்மத்தையும் ஒரே காலத்தில் சேர்ந்து அநுபவிக்கமுடியுமா? பிரகாசமும் இருட்டும் சேர்ந்திருக்குமா? தர்மம் ஸுகத்தையே கொடுக்கும்; அதர்மம் துக்கத்தையே கொடுக்கும்.

'தர்மத்தால் பாபத்தைப் போக்கடிக்கிறான் என்ற சுருதிப்படி, நான் பூர்வத்தில் செய்த தர்மம் அதர்மத்தை அழித்துவிடாதா? என்னை ரக்ஷிக்காதா' என்று எண்ணவேண்டாம். அப்படியல்ல. தாங்கள் செய்த தர்மங்களெல்லாம் ஸீதையை அபகரிப்பதற்கு முந்திச் செய்தவை. அவைகளின் பலனாய் அளவற்ற போகங்களை இதுவரையிலும் அனுபவித்தீர்கள். இனி அவைகளுக்குச் சக்தியில்லை. தாங்கள் செய்த அதர்மங்களின் பலன் பாக்கியிருக்கிறது. அது தீராத துக்கத்தைக் கொடுக்கும்; வேரறுக்கும். ஆகையால் தர்மபலத்தை நம்பி மோசம் போகவேண்டாம். அதர்மத்தின் பலத்தையும் அதிசீக்கிரத்தில் அனுபவிப்பீர்கள்.

இது ஒரு அல்பக்குரங்கு சொல்லும் வார்த்தை என்று அலக்ஷ்யம் செய்ய வேண்டாம்; இதில் ஸந்தேகமில்லை. ஆகையால் அதற்கு முன்னமே விசேஷதர்மத்தைச் செய்தால் தப்பலாம். ஜனஸ்தானத்தில் பதினாலாயிரம் ராக்ஷஸவீரர்கள் மடிந்ததையும், தங்களைச் சிறையில்வைத்த வாலி ஒரே பாணத்தால் மாண்டதையும், ராமனும் ஸுக்ரீவனும் ஸ்நேஹம் செய்து கொண்டிருப்பதையும் நன்றாய் ஆலோசித்து ஹிதமான காரியத்தைச் செய்யுங்கள். இந்த லங்கையை இதிலுள்ள ராக்ஷஸர்களுடனும் ஸைன்யங்களுடனும் நாசம் செய்ய நான் ஒருவனே போதும். ஆனால், ரகுவீரனுக்கு அப்படிப்பட்ட உத்தேசமில்லை. ஸீதையை அபகரித்தவனை மூலநாசம் செய்வேனென்று ராகவன் வானரர்களுக்கு முன்பாக பிரதிக்ஞை செய்திருக்கிறார். ராமனுக்கு அபராதம் செய்து ஸாக்ஷாத் தேவேந்திரனும் பிழைப்பானோ? அப்படியிருக்கத் தங்களைப்போன்ற மற்றவர்களைப்பற்றிச் சொல்லவும் வேண்டுமோ? தங்களுடைய ஸ்வாதீனத்தில் இருக்கிறாளென்று தாங்கள் எண்ணும் ஸீதை, லங்கையை முற்றிலும் நாசம் செய்ய வந்த காளராத்திரி என்ற சக்தியென்று அறியுங்கள். ஸீதையென்ற காலபாசத்தைத் தாங்களே கழுத்தில் மாட்டிக்கொள்ளவேண்டாம். தங்களை ரக்ஷிக்கும் வழியைத் தேடுங்கள். மஹாபதிவிரதையான ஸீதையின் தவத்தாலும் ராகவனுடைய கோபாக்னியாலும் இந்த லங்காபுரி முழுவதும் எரிக்கப்படுவதைத் தாங்கள் பார்க்கவில்லையோ? தங்களுடைய நண்பர்களையும் ஹிதத்தைக் கோரும் மந்திரிகளையும் பந்துக்களையும் ஸஹோதரர்களையும் புத்திரர்களையும் போகங்களையும் பாரியைகளையும் இந்த லங்கையையும் வீணாக அழிக்கவேண்டாம்.



நான் ஸாமான்ய வானரல்ல; ஸகலலோகநாதனான ராமனே என்னை அடிமையாய் ஒப்புக்கொண்டிருக்கிறார்; என்னை நம்பித் தன் அந்தப்புர காரியத்தை என்னிடத்தில் ஒப்புவித்து இங்கே அனுப்பியிருக்கிறார்.

ஸத்தியம் தர்மம் தயை முதலிய கல்யாண குணங்களின் அவதாரமான ரகுநாயகனுடைய தாஸனான நான் சொல்லும் வார்த்தைகள் பொய்யாகுமோ? பஞ்சபூதங்களால் அமைக்கப்பட்டு, சராசர ஜந்துக்களுடன் கூடியிருக்கும் இந்தப் பிரபஞ்சம் முழுவதையும் ரகுநந்தனன் ருத்திர ரூபியாய் ஸம்ஹாரம் செய்து அப்படியே ஸிருஷ்டிக்கச் சக்தியுள்ளவர்; அவருக்குப்பிரபு ஒருவருமில்லை, அவருடைய பெயர் மஹாகீர்த்தி என்று சுருதி ஸ்மிருதிகளில் ஸித்தித்தபடி அவர் அளவற்ற கீர்த்திசாலி. தேவர்கள், அஸுரர்கள், அரசர்கள், யக்ஷர்கள், ராக்ஷஸர்கள், வித்தியாதரர்கள், கந்தர்வர்கள, உரகர்கள், ஸித்தர்கள், கின்னரர்கள், பக்ஷிகள் முதலிய ஸகல பூதங்களிலும் பராக்கிரமத்தில்மஹாவிஷ்ணுவிற்குஸமமானராமனுடன் எதிர்த்து யுத்தம் செய்பவன் எவ்விடத்திலும் எக்காலத்திலும் கிடையவே கிடையாது. ஸகலலோகங்களுக்கும் நாயகனும் ராஜாதிராஜனுமான ராமசந்திரனுக்கு ஸஹிக்கமுடியாத அபராதத்தைச் செய்து இன்னும் பிழைத்திருக்கலாமென்று தங்களுக்கு ஸந்தேகமுண்டோ? தேவர்களும் அஸுரர்களும் கந்தர்வர்களும் வித்தியாதரர்களும் நாகர்களும் யக்ஷர்களும் இன்னும் மற்ற எவர்களும் மூன்று லோகங்களுக்கும் நாயகனான ராமனுடன் யுத்தம்செய்ய ஸமர்த்தர்களோ?

இவ்வளவென்ன? ஒருவனைக் கொல்லவேண்டுமென்று ராமன் ஸங்கல்பம் செய்தபிறகு அவரோடு யுத்தஞ்செய்து அவனை இந்திரன் காப்பாற்றமுடியுமோ? மூன்றுலோகங்களுக்கும் அதிபதியாயிருந்தாலும், விருத்திரன் முதலிய அஸுரர்களைக் கொன்றிருந்தாலும், தன்னைப்போன்ற முப்பத்துமுக்கோடி தேவர்களுடைய ஸஹாயத்தைப் பெற்றாலும் ஏதாவது பிரயோஜனமுண்டோ? அவன் போகட்டும். 'ஸகல பிரபஞ்சத்தையும் ஸம்ஹாரம்செய்யும் ருத்திரனால் முடியாதோ' என்றால், ஸம்ஹாரகாலத்தில் அவருக்கு அந்தச் சக்தியுண்டேதவிர மற்ற காலங்களில் கிடையாது. 'நெற்றிக்கண்ணால் மன்மதனையும் பலவான்களான திரிபுராஸுரர்களையும் ஸம்ஹரித்தவருக்கு இது லக்ஷ்யமா' என்றால், அவர்கள் அபராதிகள். ஆகையால் அவர்களிடத்தில் நேத்திராக்னி பிரயோஜனப்படுமேயொழிய கல்யாணகுணபரிபூர்ணனான ராமனிடத்தில் செல்லுமோ? போகட்டும். பகவானுக்கு மூத்தபுத்திரனான ப்ரஹ்மாவால் முடியாதோ? அவர் ருத்திரனுக்கும் பிதாவல்லவா என்றால், அவரும் கர்மகதிக்குக் கட்டுப்பட்டவரே. 'மற்றவர்களைப்போல் உத்பத்தியாகாமல் ஸ்வயம்புவல்லவா' என்றால், ஸஹாயமில்லாமல் என்ன செய்ய முடியும்? ஒரே காலத்தில் ஸகல வேதங்களையும் உச்சரிக்கக் கூடிய மஹிமைபொருந்தினவரல்லவா என்றால், அந்த மஹிமையும் பிரயோஜனப்படாது. இவர்கள் ஒன்று சேர்ந்தாலும் பிரயோஜனமில்லை'' என்றார்.

இப்படி ஹனுமான் மஹாதைரியமாய்த் தனக்குப் பிரியமில்லாத வார்த்தைகளை ஹிதோபதேசரூபமாய்ச் சொல்லக்கேட்டு, எவ்விதத்திலும் தனக்கு நிகரில்லை என்று கர்வம்கொண்ட ராவணன், கோபத்தால் கண்களை உருட்டி விழித்துக் கொஞ்சம்கூட யோசியாமல், "இந்தக் குரங்கைக் கொன்றுவிடுங்கள்'' என்று ஆக்ஞாபித்தான்.

ஸ ஸௌஷ்ட2வோபேத மதீ3நவாதி3ந:
கபேர் நிஶம்யாப்ரதிமோ (அ)ப்ரியம் வச: |
த3ஶாநந: கோப விவ்ருத்த லோசந:
ஸமாதி3ஶத் தஸ்ய வத4ம் மஹாகபே: || (46)

---

## ஸர்க்கம் 52

## விபீஷணன் ராவணனைத் தடுத்தது

தஸ்ய தத்3வசநம் ஶ்ருத்வா வாநரஸ்ய மஹாத்மந: |
ஆஜ்ஞாபயத்3 வத4ம் தஸ்ய ராவண: க்ரோத4மூர்ச்சி2த: || (1)

மாருதி இப்படிச் சொல்லக்கேட்டு, ராவணன் கோபத்தால் மெய்மறந்து, "இந்தக் குரங்கைக் கொன்றுவிடுங்கள்'' என்று கட்டளையிட்டான். அதைக் கேட்டுக்கொண்டிருந்த விபீஷணன், "ஐயோ!



தன் பிரபு சொல்லியனுப்பிய ஸமாசாரத்தைத் தெரியப்படுத்தினால் அது தூதனுடைய அபராதமா? இவனைக் கொல்வது நியாயமல்ல. ஆனால் ராவணன் கடுங்கோபம்கொண்டிருக்கிறான்; அதிசீக்கிரத்தில் இவனைக் கொல்வான். இப்பொழுது என்ன செய்யலாம்'' என்று நன்றாய் யோசித்து, ஒரு முடிவு செய்துகொண்டான். மஹாபராக்கிரமசாலியானதால் ராவணனை எதிர்க்கிறோமே என்று கொஞ்சம் கூடப் பயப்படவில்லை. பேசும் திறமையுள்ளவனாகையால் தான் உத்தேசித்த காரியத்தை முடிப்போமென்று நிச்சயமுண்டு. ஆகையால் ராவணனை நமஸ்கரித்து ஸாமோபாயத்தால் அவனுக்கு ஹிதமான விஷயத்தைச் சொன்னான்.

"ராக்ஷஸாதிபதியே! பொறுத்துக்கொள்ளுங்கள்; கோபத்தை விடுங்கள்; மனத்தில் கலக்கமற்றிருங்கள்; நான் சொல்லும் விஷயத்தைக் கவனித்துக்கேளுங்கள். நியாய அநியாயங்களை பகுத்தறியக் கூடிய யோக்கியர்களான அரசர்கள் தூதர்களைக் கொல்ல மாட்டார்கள். பிரபோ! இவன் தூதன், அல்பக்குரங்கு. இவனைக் கொல்வது ராஜதர்மத்திற்கு விரோதம்; எல்லோரும் நிந்திக்கக் கூடியது; தங்களுடைய பலத்திற்கும் பராக்கிரமத்திற்கும் கீர்த்திக்கும் அழகல்ல. தாங்கள் பிராணிகளுக்குள் தர்மங்களை அறிந்தவர்கள்; ராஜநீதியில் மஹாநிபுணர்கள்; நியாயாநியாயங்களைப் பரீக்ஷித்தறிந்தவர்கள்; பரமார்த்தஞானத்தில் மேலானவர்கள்; அல்ப உபகாரத்தையும் மறக்காதவர்கள்; தங்களைப்போன்ற பண்டிதர்களே கோபத்திற்கு இடம்கொடுத்தால், சாஸ்திரங்களைப் படிப்பது வீண் சிரமமல்லவா? தாங்கள் ராக்ஷஸாதிபதி; ஸகல சத்துருக்களையும் நாசம் செய்யும் பராக்கிரமத்தையுடையவர்கள்; ஸகல விஷயங்களிலும் தங்களுக்கு நிகரில்லை; ஆகையால் தயவு செய்து இந்த அனாவசியமான பாபத்தை நிறுத்துங்கள். நியாயாநியாயத்தை விசாரித்துப் பிறகு இவனைத் தண்டிக்கலாம்'' என்று பிரார்த்தித்தான்.

அதைக்கேட்டு ராவணன், கோபம் மேலிட்டு, "விபீஷணா! பராக்கிரமசாலியாயிருந்தும் இப்படிச் சொல்லுகிறாயே. பாபிகளைக் கொல்வது பாபமா? இவனைப்போல் பாபியுண்டோ? ஆகையால் இவனை அவசியம் கொல்லவேண்டும்'' என்று பதில் சொன்னான்.

விபீஷணன் உத்தமபுத்திமானாகையால், "ஐயோ! இவன் சொல்வது முற்றிலும் தர்மவிரோதமாயிருக்கிறது. கோபத்தால் மெய்மறந்திருக்கிறான். இங்கிருக்கும் துஷ்டர்களுக்கும் அது மிகவும் பிரியமாயிருக்கிறது. ஆனாலும் நாம் இப்பொழுது சும்மா இருக்கக் கூடாது'' என்று எண்ணி சிரேஷ்டமான தத்வங்களடங்கிய வார்த்தைகளைச் சொன்னான். "லங்கேசுவர! என்னிடத்தில் தயவு செய்யுங்கள். புருஷார்த்தங்களுக்கு விரோதமில்லாமல் நான்

சொல்லும் வார்த்தைகளைக் கேளுங்கள்''. 'எக்காலத்திலும் எவ்விடத்திலும் தூதர்களைக் கொல்லக்கூடாது'' என்று பெரியோர்கள் சொல்லியிருக்கிறார்கள். 'இவன் தூதன் மாத்திரமல்ல; நமது ஸைன்யங்களையும் வீரர்களையும் கொன்ற சத்ரு. ஆகையால் இவனைக் கொல்வது தோஷமில்லை' என்றால், இவன் நமது சத்துரு. நமக்கு விசேஷ கெடுதியையும் அவமானத்தையும் செய்திருக்கிறான். இவனை வளரும்படிவிட்டால் நம்மைநாசம் செய்வான். ஆனாலும், தூதனாகையால் இவனைக் கொல்லக்கூடாது. தூதர்களைச் சிக்ஷிப்பதற்குப் பெரியோர்கள் அநேக வழிகளை ஏற்படுத்தியிருக்கிறார்கள். அங்கங்களை விகாரப்படுத்தலாம்; சாட்டையினால் அடிக்கலாம்; மொட்டையடிக்கலாம். இப்படி எப்பொழுதும் அடையாளமிருக்கக்கூடிய தண்டனைகளை விதித்திருக்கிறார்களேயன்றிக் கொல்லச் சொல்லவில்லை. தாங்கள் புருஷார்த்தங்களை நன்றாக அறிந்து அனுஷ்டித்தவர்கள்; ஹிதாஹிதங்களைப் பரீக்ஷித்து நிச்சயமான ஞானத்தை ஸம்பாதித்தவர்கள். தாங்களே கோபத்திற்கு உட்பட்டால், பலவான்கள் கோபத்தை எப்படி அடக்க முடியும்? தர்ம விசாரத்திலும் லோகவியவஹாரத்திலும் சாஸ்திரார்த்தங்களைப் பரீக்ஷித்துஅறிவதிலும் தங்களுக்கு ஸமமானவர்கள்ஒருவரும் இல்லை. ஸகல ஸுராஸுரர்களுக்குள் தாங்களே சிரேஷ்டர்கள். இந்தக் குரங்கைக் கொல்வதில் ஒரு பிரயோஜனமும் காணப்படவில்லை. இவனை அனுப்பினவர்களையல்லவா கொல்ல வேண்டும்? சத்துருக்களால் அனுப்பப்பட்டவன் ஸாதுவானாலும் துஷ்டனானாலும் பிறர்க்குட்பட்டவன்; பிறர் சொன்ன ஸமாசாரத்தைச் சொல்கிறவன். அவனைக் கொல்வது தகாது. இவனைக் கொன்று விட்டால் ஆகாசமார்க்கமாய் ஸமுத்திரத்தைத் தாண்டிஇங்கே வரக்கூடியவன் வேறொருவன் இல்லை. நமது சத்துருக்களான ராமலக்ஷ்மணர்களுக்கு ஸமாசாரத்தைச்சொல்லி நம்முடன் யுத்தம்செய்யஅவர்களை இங்கே அழைத்து வருவதற்கு வேறொருவன் இல்லை.அந்தக்குரூரர்கள் தூரமான மார்க்கத்தால் இங்கே வராமல் தடைப்பட்டிருக்கிறார்கள். இவனை விட்டு விட்டால் அவர்களை எப்படியாவது இங்கே அழைத்து வருவான். அப்பொழுது அவர்களைக் கொல்லலாம் பராக்கிரமம் உத்ஸாஹம் மனோதைரியம் பூர்ணமாயுள்ள தேவாஸுரர்களும் தங்களை ஜயிக்க முடியுமோ? ராக்ஷஸர்களுடைய ஸகல இஷ்டங்களையும் பூர்த்தி செய்து ஸந்தோஷத்தைக் கொடுக்கும் தாங்கள், ராமலக்ஷ்மணர்களுடன் எப்பொழுது யுத்தம் நேருமென்று பரபரப்புடன் தோள்தட்டிக் கொண்டிருக்கும் ராக்ஷஸ வீரர்களுடைய ஆசையைக் கெடுக்கலாமா? தங்களுடைய ஸைன்யங்கள் ஹிதத்தையே கோருகிறவர்கள்; சூரர்கள்; ஸன்மானங்களாலும் கௌரவத்தாலும் வசப்பட்டவர்கள்; உத்தம குலத்தில் பிறந்தவர்கள்; காரியங்களை நன்றாய் வஹிக்கக் கூடியவர்கள்; யுத்தத்தில் கைதேர்ந்தவர்கள்; கலங்காத தைரியமுடையவர்கள்; இன்னும் அநேக உத்தம குணங்களையுடையவர்கள். ஆகையால் இப்பொழுதே சில ஸைன்யங்களை ராமலக்ஷ்மணர்களென்ற மூடர்களிடத்தில்அனுப்பி, அவர்களை அவமதித்துச் சத்துருக்களிடத்தில் தங்களுடைய மஹிமையை வெளிப்படுத்துங்கள்'' என்றார்.



ராவணன் தேவர்களைக் கதறச்செய்பவனாயும் பலவானாயும், பராக்கிரமசாலியாயும், ராக்ஷஸாதிபதியாகவும் இருப்பினும் விபீஷணன் ஹிதமாயும் பிரியமாயும் சொன்ன வார்த்தைகளை அங்கீகரித்தான்.

நிஶாசராணா மதி$^{4}$போநுஜஸ்ய
விபீ$^{4}$ஷணஸ் யோத்தம வாக்யமிஷ்டம் |
ஜக்$^{3}$ராஹ பு$^{3}$த்$^{4}$யா ஸுரலோக ஶத்ரு:
மஹாப$^{3}$லோ ராக்ஷஸராஜமுக்ய: ‖ (32)

---

ஸர்க்கம் 53

## மாருதியின் வாலில் நெருப்பு வைத்தது

தஸ்ய தத்$^{3}$வசநம் ஶ்ருத்வா த$^{3}$ஶக்$^{3}$ரீவோ மஹாப$^{3}$ல: |
தே$^{3}$ஶகாலஹிதம் வாக்யம் ப்$^{4}$ராது ருத்தரமப்$^{3}$ரவீத் ‖ (1)

இப்படி தேசகாலங்களுக்குத் தகுந்தபடி விபீஷணர் சொல்லக் கேட்டு, ராவணன், "விபீஷண! தூதர்களைக் கொல்லக் கூடாதென்று நீ சொன்னது யுக்தம். ஆகையால் இவனுக்கு வேறு முக்கியமான தண்டனை தரப்பட வேண்டும். குரங்குகளுக்குப் பிரியமான ஆபரணம் வாலல்லவா? ஆகையால் அதில் நெருப்பை வைத்துஇவனை அடித்துத் துரத்துங்கள். இவனுடைய மித்திரர்களும் பந்துக்களும் இவன் அங்கஹீனமாய் உத்ஸாஹமற்றிருப்பதைப் பார்க்கட்டும். வாலில் நெருப்பு வைத்து இவனை இந்தப் பட்டணம் முழுவதிலும் ஓரிடம் பாக்கியில்லாமல் அழைத்துப் போங்கள்'' என்று ஆக்ஞாபித்தான்.

உடனே ராக்ஷஸர்கள், மாருதி தங்களைச் சேர்ந்தவர்களைக் கொன்றாரென்ற கோபத்தால் அவருடையவாலில் பழைய வஸ்திரங்களைச் சுற்றினார்கள். காட்டில்உலர்ந்த கட்டைகளில் பிடித்த அக்னியைப் போல் மாருதி விருத்தியடைந்தார். பிறகு அவர்கள் வாலின் மேல் எண்ணெயைக் கொட்டி நெருப்பு வைத்தார்கள். கோபத்தாலும் ரோஷத்தாலும் பால ஸூரியனைப்போல் ஜ்வலிக்கும் ஆஞ்ஜநேயர், எரிந்து கொண்டிருக்கும் வாலால் ராக்ஷஸர்களை அடித்துத் தள்ளினார். துஷ்டக் குரங்கின் வாலில் நெருப்பு வைத்ததைப் பார்க்க ஸ்த்ரீகளும் சிறுவர்களும் கிழவர்களும் ஸந்தோஷமாய் ஓடிவந்தார்கள். அடித்துத் தள்ளிய பிறகும் மேல் விழுந்து தன்னைக் கட்டுவதைக் கண்டு, "இவர்கள் என்னை எந்த விதமாய்க் கட்டினாலும்,

ஒரு பொருட்டா? நினைத்தவுடன் கட்டுகளை அறுத்தெறிந்து இவர்களைப் பொடிசெய்வேன். நான் இவர்களுக்குச் செய்த கெடுதிக்கு சிக்ஷையாகுமா? இவ்வளவு ராக்ஷஸர்களையும் நான் ஒருவனே யுத்தத்தில் கொல்லக் கூடியவன். ஆனால் ராவணனையும் லங்கையையும் நாசம் செய்வதாக ராமன் பிரதிக்ஞை செய்திருக்கிறபடியால் நான் யுத்தம்செய்வதை விட்டு லங்கையைச் சுற்றிப் பார்த்துப் போவேன். இவர்கள் செய்யும் அவமானங்களையெல்லாம் பொறுப்பேன். இந்த லங்கா நகரத்தையும், கோட்டைகள், கொத்தளங்கள், அரண்கள் முதலியவைகளையும் ராத்திரியில் பார்த்தேன். ஆனால் பகலில் மறுபடியும் கவனித்துப் பார்க்க வேண்டும். என்னை ஓரிடம் பாக்கியில்லாமல் கொண்டு போகும்படி ராவணன் உத்திரவு செய்தது இந்தக் காரியத்திற்கும் அனுகூலமாகவே இருக்கிறது. பிறகு இங்கே யுத்தம் செய்யும் பொழுதும், இந்தப் பாபிகள் ஸீதையை எவ்விடத்தில் ஒளித்தாலும் கண்டு பிடிக்கும்படிக்கு நான் போகும்போது எல்லா இடங்களையும் கவனித்துக் கொண்டு போகவேண்டும். இவர்கள் என்னைக் கட்டி வாலைக் கொளுத்தி வேண்டியவரையில் ஹிம்ஸிக்கட்டும். என் மனத்தில் கொஞ்சம் கூட ஆயாஸமுண்டாகவில்லை" என்று முடிவு செய்தார்.

மஹாபலவானானாலும், தன் ஸ்வபாவத்தை மறைத்து அல்பக் குரங்கைப்போல் காட்டிக்கொள்ளும் ஆஞ்ஜனேயரை ராக்ஷஸர்கள் பிடித்துக்கொண்டு வெகு ஸந்தோஷமாய் நகரத்தைச் சுற்றிவந்தார்கள். "கணக்கில்லாத ராக்ஷஸவீரர்களைக் கொன்ற இந்தத் துஷ்டக் குரங்கைக் கட்டிக்கொண்டு வந்திருக்கிறோம்" என்று தோள்தட்டிக் கர்ஜித்து, சங்கம் பேரி முதலிய வாத்தியகோஷத்துடன், மாருதியை அழைத்துச்சென்றார்கள். எந்த சத்துருக்களையும் விளையாட்டாய் நாசம் செய்யக்கூடிய வாயுபுத்திரன், ராக்ஷஸர்களால் சூழப்பட்டு லங்காநகரத்தை ஜாக்கிரதையாய்ப் பார்த்துக்கொண்டே சென்றார். விசித்திரமான விமானங்களையும் மறைவான பூமிகிருஹங்களையும் நன்றாய்ப் பிரிக்கப்பட்ட நாற்சந்திகளையும், ராஜவீதிகளையும், சிறு வீதிகளையும்,பெரிய உப்பரிகைகளையும் சிறு வீடுகளையும் பார்த்தார். காவற்காரர்கள் ராஜமார்க்கங்களிலும் நாற்சந்திகளிலும் மண்டபங்களிலும் நின்று, "இதோ நமது ரஹஸ்யங்களைக் கண்டுபிடிக்க வந்த தூதனைப் பாருங்கள்" என்று கூச்சலிட்டார்கள். உடனே ஸ்த்ரீகளும் சிறுவர்களும் வயதுசென்றவர்களும் ஹனுமாரையும், அவருடைய வால் நெருப்புப்பற்றி எரிவதையும் பார்க்க ஆவலுடன் கூட்டம் கூட்டமாக வந்தார்கள்.

அதற்குள் அசோகவனத்திலிருந்த ராக்ஷஸிகள் ஜானகியிடத்தில் சென்று, "ஸீதே! சிவந்த முகமுள்ள ஒரு குரங்கு உன்னுடன் பேசிக்கொண்டிருந்ததல்லவா? அதன் வாலில் நெருப்பு வைத்து நகரத்தைச் சுற்றி அழைத்துக்கொண்டு போகிறார்கள்" என்றார்கள்.



தான் உயிரைவிடப்போகும் ஸமயத்தில் தன்னைத்தடுத்து, பிரிய நாயகனுடைய க்ஷேமஸமாசாரத்தைத் தெரிவித்துத் தனக்குப் பிராணனையும் ஸந்தோஷத்தையும் கீர்த்தியையும் கொடுத்த ஹனுமானுக்கு இந்த அபாயம் நேர்ந்ததென்று கேட்டவுடன், ஸீதை தன் பிராணனைப் பறிகொடுத்ததுபோல் துக்கத்தால் துடிதுடித்து, மாருதிக்குக்ஷேமமுண்டாவதற்காக அக்னிபகவானை உபாஸித்தாள். மாருதியிடத்தில் வைத்த பிரியத்தால் கண்கள் மலர்ந்து, அவருக்கு மங்களமுண்டாகவேண்டுமென்று கோரி, தன்னைச் சுத்திசெய்து கொண்டு அக்னியை ஆராதித்தாள். "நான் பர்த்தாவிற்கு ஸகல சுச்ரூஷையும் செய்தது நிச்சயமானால், நான் இந்திரியங்களை அடக்கி அவரையே தியானித்துக்கொண்டிருப்பது நிஜமானால், நான் பதிவிரதை என்பது நிஜமானால், இவற்றிற்குப் பலனாக தாங்கள் ஹனுமானைத் தஹிக்காமல் குளிர்ந்திருக்கவேண்டும். மஹா ஞானியான ராகவனுக்கு என்னிடத்தில் கொஞ்சமாவது தயை இருப்பது நிச்சயமானால், நான் இந்தத் துக்கத்திலிருந்து நீங்கி என் நாதனுடன் சேரும் பாக்கியம் எனக்கிருப்பது நிஜமானால், மாருதியைத் தஹிக்காமல் குளிர்ந்திருக்கவேண்டும். நான் நல்ல நடத்தையுள்ளவளென்றும், என் நாதனைச் சேர ஆவல்கொண்டவளென்றும் தர்மாத்மாவான ஹனுமானுக்குத் தெரிந்திருப்பது நிஜமானால், அவனுடைய தேகத்தை தஹிக்காமல் குளிர்ந்திருக்கவேண்டும். ஸத்தியம் தவறாத ஸுக்ரீவன், இந்தத் துக்க ஸமுத்திரத்திலிருந்து என்னைக் கரையேற்றுவாரென்பது நிஜமானால், ஹனுமானைக் கொளுத்தாமல் குளிர்ந்திரும்" என்று பிரார்த்தித்தவுடன், அக்னி பகவான் ஸீதைக்கு மாருதியின் க்ஷேமத்தைச் சொல்லுகிறவர்போல் உஷ்ணமான ஜ்வாலைகளை அடக்கி பிரதக்ஷிணமாய் அசையாமல் எரிந்து கொண்டிருந்தார். வாயுபகவான் ஸீதைக்கு ஹிதம் செய்ய விரும்பி எரிகின்ற வாலால் வீசும் உஷ்ணக்காற்றைப் பனிக்கட்டியைப்போல் குளிர்ச்சியாக மாற்றினார்.

வாலில் நெருப்புப்பற்றி எரிவதைக்கண்டு மாருதி, "என்ன ஆச்சரியம்! வால் எரிந்துகொண்டிருக்கிறது. நெருப்பு ஜ்வாலைகள் வரவர விருத்தியாகின்றன; ஆனால், எனக்கு கொஞ்சம்கூட உபத்திரவமில்லை. வாலின் நுனியில் குளிர்ந்த பதார்த்தங்களெல்லாவற்றையும் ஒன்றுசேர்த்து வைத்ததுபோலிருக்கிறது. ஆனால் ராம காரியமாய் நான் கடலைத்தாண்டும்பொழுது ராகவனுடைய மஹிமையால் என் சிரமநிவர்த்திக்காக மைநாகபர்வதம் ஸமுத்திரத்திலிருந்து கிளம்பிற்றல்லவா? இதுவும் அதைப்போலிருக்கலாம். ஸமுத்திரத்திற்கும் மைநாகத்திற்கும் ராமகைங்கரியத்தில் இருக்கும் பரபரப்பு அக்னிபகவானுக்கு ஏன் இருக்கக்கூடாது? ஸீதையின் அபாரகிருபையாலும் ராகவனுடைய மஹிமையாலும் என் பிதாவிடத்திலுள்ள ஸ்நேஹத்தாலும் அக்னிபகவான் என்னைக் கொளுத்தவில்லை" என்று ஒரு முகூர்த்தகாலம் மேல் நடக்கவேண்

டிய ஸங்கதிகளை யோசித்துத் திடீரென்று கிளம்பி கர்ஜித்துக் கொண்டு, பர்வதசிகரத்தைப்போல் உயர்ந்த நகரத்து வாசலின்மேல் ஏறினார். ஒரு க்ஷணத்தில் மலையைப்போல் தேகத்தைப் பெருக்கிக் கொண்டு, உடனே அதிஸூக்ஷ்மமாகச் செய்துகொண்டு கட்டுகளை உதறினார். பிறகு முன்போல் பெரியரூபத்தை எடுத்துக்கொண்டு சுற்றிப் பார்க்கையில் வாசற்படியில் வைத்திருந்த இருப்புத்தடியைக் கண்டார். அதைக்கொண்டு அங்கிருந்த காவற்காரர்களையும் சுற்றிலிருந்த அரக்கர்களையும் அடித்துக்கொன்றார். அந்த வானர வீரன் நகரத்தை நன்றாகச் சுற்றிப்பார்த்து வருகையில் வாலின் நுனியில் கொழுந்துவிட்டெரியும் அக்னியால் ஆயிரம் கிரணங்களோடு விளங்கும் ஆதித்தியனைப்போல் தோன்றினார்.

ஸ தாந் நிஹத்வா ரணசண்ட³விக்ரம:
ஸமீக்ஷமாண: புநரேவ லங்காம் |
ப்ரதீ³ப்த லாங்கூ³ல க்ருதார்சிமாலீ
ப்ரகாஶ தாதி³த்ய இவார்சிமாலீ ‖ (60)

---

### ஸர்க்கம் 54

## ஹநுமார் லங்கையைக் கொளுத்தினது

---

வீக்ஷமாணஸ் ததோ லங்காம் கபி: க்ருத மநோரத²: |
வர்த⁴மாந ஸமுத்ஸாஹ: கார்யஶேஷ மசிந்தயத் ‖ (1)

“ஸீதையைக் கண்டுபிடித்து, ராமனுடைய விருத்தாந்தத்தை அவளுக்குத் தெரிவித்து ஸமாதானம் செய்து, அவளுடைய விருத்தாந்தத்தைத் தெரிந்துகொண்டேன். ராக்ஷஸர்களுடைய பலாபலத்தைப் பரீக்ஷித்துப் பார்த்தேன். ராவணனைக் கண்டு பேசி அவனுடைய அபிப்பிராயத்தைத் தெரிந்துகொண்டேன். இனிச் செய்ய வேண்டியது ஏதாவது பாக்கியுண்டோ?” என்று ஆஞ்ஜனேயர் வரவர விருத்தியாகும் உத்ஸாஹத்துடன் நான்கு புறங்களிலும் கவனித்துப் பார்த்தார். “இந்த ராக்ஷஸர்களை வருத்தப்படுத்தக் கூடிய காரியம் என்ன செய்யலாம்? அசோகவனத்தை அழித்தேன்; முக்கியமான ராக்ஷஸவீரர்களைக் கொன்றேன்; ஸைன்யங்களில் ஒரு பாகத்தை மடித்தேன்; கோட்டையையும் அரண்களையும் அழிப்பது தான் மிகுதி. கோட்டையை அழித்தால் நான் இதுவரையிலும் சிரமப்பட்டுச்செய்த காரியங்களெல்லாம் பிரயோஜனமுள்ளதாகும். இந்த விஷயத்தில் அதிக சிரமப்படாமல் உபாயத்தால் காரியத்தை முடிக்க வேண்டியது. என்னிடத்தில் பரமகிருபை செய்திருக்கிற அக்னிபகவானுக்கு இந்தக் கட்டடங்களைப் பலியாகக் கொடுத்துத் திருப்தி செய்வேன்” என்று முடிவு செய்தார்.

பிறகு, மேகங்களில் பாயும் மின்னலைப்போல் மாருதி எரிகின்ற வாலுடன் லங்கையிலுள்ள வீடுகளின்மேல் ஸஞ்சரிக்கஆரம்பித்தார்.



தத: ப்ரதீ³ப்த லாங்கூ³ல: ஸவித்³யுதி³வ தோயத³: |
ப⁴வநாக்³ரேஷு லங்காயா விசசார மஹாகபி: | —ஸு॰ந்: 54 ஸ– 6சு

பிறகு மேகங்களில் பாயும் மின்னலைப்போல் மாருதி எரிகின்ற வாலுடன் லங்கையிலுள்ள வீடுகளின் மேல் ஸஞ்சரிக்க ஆரம்பித்தார். (பக்கம் 204 பார்க்க)

Notes : This Blank Page has also to be counted as a another page Number.

It is intentionally left blank after Picture Sketches.!

Released by Maran's Dog ,Toronto, Canada



ராக்ஷஸர்களுடைய வீடுகளையும் தோட்டங்களையும் மாளிகைகளையும் நன்றாய்ப் பார்த்துக்கொண்டு வீட்டிற்கு வீடு தாவினார். ப்ரஹஸ்தனுடைய வீட்டில் பாய்ந்து அதில் நெருப்பை வைத்தார். பிறகு மஹாபார்சுவன், வஜ்ரதம்ஷ்ட்ரன், சுகன், ஸாரணன், இந்திரஜித், ஜம்புமாலி, ஸுமாலி, ரச்மிகேது, ஸூர்யசத்ரு, ஹ்ரஸ்வகர்ணன், தம்ஷ்ட்ரன், ரோமசன், யுத்தோன்மத்தன், மத்தன், த்வஜக்ரீவன், வித்யுத்ஜிஹ்வன், ஹஸ்திமுகன், கராளன், சோணிதாக்ஷன், கும்பகர்ணன், மகராக்ஷன், யக்ஞசத்ரு, ப்ரஹ்மசத்ரு, நராந்தகன், கும்பன், நிகும்பன் முதலியவர்களுடைய வீடுகளையெல்லாம் வரிசையாய்க் கொளுத்திக்கொண்டு வந்தார். தனக்கும் ஸீதைக்கும் ஹிதத்தைக் கோரின விபீஷணனுடைய கிருஹத்தை மாத்திரம் கொளுத்தவில்லை. அந்தந்த வீடுகளில் தனதான்யங்களாலும் வாஹனங்களாலும் ஐசுவரியங்களாலும் விளங்கும் பாக்கியவான்களுடைய செல்வத்தை முற்றிலும் நாசம் செய்தார். பிறகு எல்லா வீடுகளையும் தாண்டி, ராக்ஷஸாதிபதியான ராவணனுடைய வீட்டிற்கு வந்தார். என்ன தைரியம்! ஸகல லோகங்களிலும் ஒப்பில்லாத அந்த அரண்மனை பலவகை ரத்தினங்களால் அலங்கரிக்கப்பட்டிருந்தது. மேருமந்தரபர்வதங்களைப் போல் ஆகாசத்தையளாவி ஸகல மங்களத்திரவியங்களாலும் சோபித்தது. அந்த ராஜகிருஹத்தில் மாருதி தன் வாலில் எரியும் நெருப்பை வைத்துக் கர்ஜித்தார்.

உடனே அக்னிபகவான் வாயுவுடன் சேர்ந்து காலாக்னியைப் போல் ஜ்வலித்து விருத்தியடைந்தார். வாயுவும் அந்த நகரத்திலுள்ள வீடுகளிலெல்லாம் நெருப்பைப் பரவச்செய்து அதிவேகமாக வீசினார். முத்துஹாரங்களாலும் ரத்தினங்களாலும் ஸ்வர்ண ஜன்னல்களாலும் பிரகாசிக்கும் பெரிய வீடுகள் சாம்பலாயின. புண்ணியத்தால் ஸ்வர்க்கத்தை அடைந்தவர்களுடைய விமானங்கள் புண்ணியகர்மங்கள் முடிந்தவுடன் பூமியில் விழுவதுபோல் வீடுகளின் விமானங்கள் வெடித்து விழுந்தன. ராக்ஷஸர்கள் தங்களுடைய வீடுகளைக் காப்பாற்றிக்கொள்வதில் உத்ஸாஹமற்று அங்குமிங்கும் ஓடிக்கொண்டு, "ஐயோ! இங்கே வந்தது குரங்கல்ல. அக்னியே இந்த ரூபத்தை எடுத்துக்கொண்டு வந்திருக்கிறான். என்ன கஷ்டம்!" என்று பெருங்கூச்சலிட்டார்கள். மாடி வீடுகள் நெருப்புப் பிடித்தவுடன் அங்கிருந்த சில ஸ்த்ரீகள் தலைமயிர் அவிழ்ந்து அலங்கோலமாய்க் குழந்தைகளை எடுத்துக்கொண்டு மேகங்களிருந்து விழும் மின்னற்கொடிகளைப்போல் கீழே விழுந்தார்கள். வஜ்ரம் பவழம் முத்து வெள்ளி முதலியவைகளால் விசித்திரமாகக் கட்டப்பட்ட வீடுகளும் அங்குள்ள பொன் வெள்ளி முதலிய தாதுக்களும் உஷ்ணத்தால் உருகுவதை மாருதி கண்டார். எவ்வாறு கட்டைகளாலும் காய்ந்த புற்களாலும் அந்த நெருப்பு திருப்தியடையவில்லையோ அவ்வாறே எரிகின்ற அக்னியால் ஹனுமார் திருப்தியடைய

வில்லை; மரணமடைந்த ராக்ஷஸர்களால் பூமியும் திருப்தியடைய வில்லை; லங்கைமுழுவதும் நாசமடைந்தால் ஒருவேளை திருப்தி யடைந்திருப்பார். அக்னிஜ்வாலைகள் சிலவிடங்களில் பலாச புஷ்பங் களைப்போலவும், சிலவிடங்களில் இலவம் புஷ்பங்களைப் போலவும், சிலவிடங்களில் குங்குமத்தைப்போலவும் காணப்பட்டன. பூர்வ காலத்தில் ருத்திரன் திரிபுரங்களை எரித்ததுபோல் ஹனுமான் லங்கையை எரித்தார்.

பிறகு ஆஞ்ஜனேயர் திரிகூடமென்ற பர்வதசிகரத்திற்குப் போனார். அவரால் வைக்கப்பட்ட அக்னி, லங்கையில் எல்லாவிடங் களிலும் பரவியது. ராக்ஷஸகிருஹங்களில் பிடித்த அக்னி ஆகாசத்தை யளாவி, புகையில்லாமல் கொழுந்துவிட்டெரிந்து ராக்ஷஸர்களுடைய சரீரமென்ற நெய்யால் விருத்தி செய்யப்பட்டது. அதுவரையில் ராவணனுக்குப் பயந்திருந்த வாயுவும் அக்னியும் ஹனுமானால் பயம் நீங்கி ஒன்றுசேர்ந்து பிரளயகாலாக்னிபோல் லங்கையை நாசம் செய்ய ஆரம்பித்தார்கள். கோடிஸூரியதேஜஸுடன் அந்தப் பெரும் அக்னி லங்கையில் ஓரிடம் பாக்கியில்லாமல் வியாபித்தது; அங்கங் குள்ள ஸகல பதார்த்தங்களும் வெந்து வெடிப்பதாலுண்டான சப்தங்கள் ப்ரஹ்மாண்டத்தைப் பிளப்பதுபோலிருந்தன. பலாச புஷ்பங்களைப்போன்ற ஜ்வாலைகளுடன் அக்னிபகவான் ஆகாசம் வரையில் வளர்ந்து ஓங்கினார். அணைந்த புகையால் மேகங்களும் மறைக்கப்பட்டுக் கருநெய்தல் புஷ்பங்களைப்போல் காணப்பட்டன.

லங்கையிலுள்ள பிராணிகளும் வீடுகளும் விருக்ஷங்களும் அதி சீக்கிரமாய் எரிந்ததைக்கண்டு அங்குள்ள அனேக புத்திமான்கள், "வஜ்ராயுதத்தைத் தரித்த தேவராஜனோ, விருத்ராஸுரனைக் கொன்ற மஹேந்திரனோ, வருணனோ, வாயுவோ, ருத்திரனோ, அக்னி யோ, ஸூரியனோ, குபேரனோ, சந்திரனோ, அல்லது ஸாக்ஷாத் காலனோ? அல்லது ஸகலலோகங்களையும் ஸிருஷ்டித்த பிரஹ்ம தேவருடைய கோபம் இந்த வானரரூபத்தை எடுத்து ராக்ஷஸர்களை நாசம்செய்ய இங்கே வந்திருக்கிறதோ? அல்லது தேசகாலவஸ்துக் களுக்குப் புறம்பாயும், இந்திரியங்களுக்கும் மனத்திற்கும் எட்டாத தாயும், ஒன்றாயுமிருக்கும் மஹாவிஷ்ணுவின் அத்புதமான தேஜஸே தன் மாயையால் ராக்ஷஸர்களை அழிக்க இப்போது இந்த வானர ரூபத்தை எடுத்துவந்திருக்கிறதோ?" என்று சொல்லிக் கொண் டார்கள்.

ராக்ஷஸர்களும் குதிரைகளும் யானைகளும் பக்ஷிகளும் மிருகங் களும் விருக்ஷங்களும் இன்னும் லங்கையிலுள்ள ஸகல பதார்த் தங்களும் ஹனுமானால் நாசமடைந்து, அந்த நகரம் கேட்போர் பரிதவிக்கும்படி கதறிற்று. "ஆ! குழந்தாய்! ஆ! அப்பா! ஆ! நாதா! ஆ! மித்திர! அநியாயமாய் இறந்தீர்களே! ஸுகத்தை இழந்தோம் பிராணனைப் பறிகொடுத்தோம்; இனி எப்படிப் பிழைப்போம்"



என்று அலறுகிற ராக்ஷஸர்களின் கூச்சல்கள் கோரமாயும் பயங்கர மாயும் கிளம்பின. நெருப்பு ஜ்வாலைகளால் சூழப்பட்டு, வீர சிரேஷ்டர்கள் இறந்து, ஸைன்யங்கள் மூலைக்குமூலை ஓடிப்போக, ஹனுமானுடைய கோபத்தாலும் பலத்தாலும் நாசம்செய்யப்பட்ட லங்கை, சாபத்தால் அழிந்ததுபோல் காணப்பட்டது. பகவானுடைய ஆக்ஞையால் அழிந்த பூமியைப்போல், ஜ்வாலைகளோடு கூடின அக்னியால் லங்கை வெந்து, அதிலுள்ள ராக்ஷஸர்கள் துக்கத்தால் பரபரப்புடன் அங்குமிங்கும் ஓடுவதை ஆஞ்ஜனேயர் கண்டார்.

நானாவிருக்ஷங்களால் நிறைந்த அசோகவனத்தை அழித்து, பெயர் பெற்ற ராக்ஷஸர்களை யுத்தத்தில் கொன்று, அழகான வீடு களையே ரத்தினமாலையாகத் தரித்த லங்கையைக் கொளுத்தி, தான் வந்த காரியத்தை நிறைவேற்றி, திரிகூடபர்வதத்தின் சிகரத்தில் எரிகின்ற வாலுடன் உட்கார்ந்திருக்கையில், மாருதி கிரணங்களால் விளங்கும் ஸூரியனைப்போல் தோன்றினார். கணக்கற்ற ராக்ஷஸர் களைக் கொன்று, மரங்களடர்ந்த அசோகவனத்தை அழித்து, ராக்ஷ ஸர்களுடைய வீடுகளில் நெருப்புவைத்துத் தான்வந்த காரியம் நிறைவேறிற்றென்று மனத்தால் ஸ்ரீ ராமனை ஸ்மரித்து, "ஸ்வாமீ! நான் தங்களுடைய ஸன்னிதியைவிட்டு வந்ததுமுதல் நடந்தவிஷயங் களை ஸ்தூலதேகத்துடன் வந்து விக்ஞாபனம் செய்கிறேன்; அங்கீ கரிக்கவேண்டும்" என்று பிரார்த்தித்தார். அப்பொழுது மஹா பலவானும் வேகத்தில் வாயுவிற்கு ஸமமானவரும் வாயுபுத்திரனும் மஹாபுத்திமானும் வானரசிரேஷ்டருமான மாருதியை ஸகல தேவ கணங்களும் கொண்டாடினார்கள். அவரும் அசோகவனத்தை அழித்து ராக்ஷஸர்களை யுத்தத்தில் கொன்று லங்கையைக் கொளுத்தி மஹாதேஜஸுடன் விளங்கினார். அப்பொழுது தேவகந்தர்வ ஸித்தகணங்களும் மஹரிஷிகளும், "என்ன தைரியம்! என்ன பராக் கிரமம்! நாம் இதுவரையில் கண்ணெடுத்துப்பார்க்கத் துணியாத இந்த லங்கையை இவன் ஒருவனே சாம்பலாக்கிவிட்டானே" என்று அடங்காத ஆச்சரியமடைந்தார்கள். பிறரால் செய்ய முடியாத காரியங்களைச் செய்த மாருதி திரிகூடசிகரத்தில் ஜ்வலிப் பதைக்கண்டு ஸகலப் பிராணிகளும், "இது குரங்கல்ல. ஸாக்ஷாத் பிரளயகாலாக்னி" என்று நினைத்துப் பயந்தன. தேவ கந்தர்வ வித்யாதர நாக யக்ஷகணங்களும் முனிசிரேஷ்டர்களும் ஸகல பூதங் களும் ஆஞ்ஜனேயருடைய அத்புத கிருத்யத்தால் அளவற்ற ஸந்தோஷத்தை அடைந்தார்கள்.

தே3வாஶ்ச ஸர்வே முநிபுங்க3வாஶ்ச
க3ந்த4ர்வ வித்3யாத4ர நாக3யக்ஷா: |
பூ4தாநி ஸர்வாணி மஹாந்தி தத்ர
ஜக்3மு: பராம் ப்ரீதி மதுல்யரூபாம் || (62)

## ஸர்க்கம் 55

## ஸீதை இறந்ததாக எண்ணி மாருதி துக்கித்தது

*லங்காம் ஸமஸ்தாம் ஸந்தீ³ப்ய லாங்கூ³லாக்³நிம் மஹாப³ல: |*
*நிர்வாபயாமாஸ ததா³ ஸமுத்³ரே ஹரிஸத்தம: ॥ (1)*

இப்படி லங்கை முழுவதையும் கொளுத்தி வாலிலுள்ள நெருப்பை ஸமுத்திரத்தில் அணைத்தார். எங்கும் தீப்பிடித்து ராக்ஷஸர்கள் பயத்தால் கதறச் சுடுகாடுபோலான லங்கையைக் கவனித்துப் பார்த்து ஆஞ்ஜநேயர் கவலைகொண்டார். "ஐயோ! இந்த லங்கையைக் கொளுத்தினதில் ஒரு பெரிய பாபத்தைச் செய்துவிட்டேனே! என்ன புத்திமோசம் போனேன்" என்று அவருக்கு அடங்காத பயமும் தன்னிடத்தில் வெறுப்பும் உண்டாயின. "ஐயோ! கொழுந்துவிட்டெரியும் அக்னியை ஜலத்தால் அணைப்பதைப்போல், மனத்தில் கோபம் பொங்கி எழுந்தபொழுது அதைப் புத்தியால் அடக்குகிற மஹாத்மாக்களல்லவா பாக்கியசாலிகள்? புருஷோத்தமர்கள்? கோபத்திற்குஇடம் கொடுத்தவன் எந்தப் பாபத்தைத்தான் செய்யமாட்டான்? குருவையும் கொல்வான். கடும் வார்த்தைகளால் ஸாதுக்களை உபத்திரவிப்பான். தான் பேசும் வார்த்தைகள் உசிதமா இல்லையா என்று பார்க்கமாட்டான். அவன் செய்யாத காரியமில்லை; சொல்லாத வார்த்தையில்லை. ஸர்ப்பம் பழைய சட்டையை எப்படி உரிக்குமோ அப்படிக் கோபமுண்டானவுடன் அதைப் புத்தியால் அடக்குகிறவனே புருஷன். நான் பாபிகளுக்குள் பாபி; வெட்கமற்றவன்; கெட்டபுத்தியுள்ளவன்; ஸீதை இருக்கிறாளென்பதை மறந்து லங்கையில் நெருப்புவைத்தேனே. என் புத்தியைச் சுடவேண்டும். லங்கை எரிந்தால் அதிலுள்ள ஜானகி தப்புவாளா? என் யஜமானனுடைய காரியத்தைப் படுமுட்டாளான நான் பாழாக்கிவிட்டேனே! எதற்காக இவ்வளவு காரியங்களையும் செய்தேனோ அதைக் கெடுத்துவிட்டேனே! ஸீதையை ரக்ஷிக்கும் ஏற்பாட்டைச் செய்யாமல் லங்கையில் என்ன புத்தியால் நெருப்பு வைத்தேன்? இவ்வளவு சிரமப்பட்டு ஸீதையைத் தேடிக்கண்டுபிடித்ததும் வீணாயிற்றே! நான் கோபத்திற்கு இடம் கொடுத்து முக்கியமான காரியத்தை மூலநாசம் செய்துவிட்டேன். லங்கையில் சாம்பலாகாத இடத்தைக் காணேன். ஆகையால் ஜானகி நிச்சயமாய் இறந்திருப்பாள். என் புத்திக்குறைவால் இவ்வளவு காரியமும் வீணானால் நான் இப்பொழுதே பிராணனைவிடுவது நலம். இந்த லங்கையில் பற்றி எரியும் நெருப்பில் விழலாமா? வடவாமுகாக்னியில் பிரவேசிக்கலாமா? கடலில் வாழும் ஜந்துக்களுக்கு இரையாக என் தேகத்தை விட்டுவிடலாமா? நான் செய்ய வந்த ஸகல காரியங்களையும் கெடுத்துவிட்டு ஸுக்ரீவனையும் ராமலக்ஷ்மணர்களையும் எந்தத் தைரியத்தால் பார்ப்பேன்? இப்படிக் கோபத்திற்கு இடம் கொடுத்து மஹாபாபத்தைச் செய்ததால் நான் குரங்கென்றும் என் ஜாதிஸ்வபாவமான சாபல்யத்தைக் காட்டிக் கொண்டேனென்றும் மூன்று லோகங்களிலும் பிரஸித்தியாகும். ஸீதையை ரக்ஷிக்க எனக்குச் சக்தியிருந்தும் கோபத்திற்கு இடம் கொடுத்து அப்படிச் செய்ய மறந்தேனே! இதற்குக் காரணமான ரஜோகுணத்தைப் பொசுக்கவேண்டும், அது கட்டிற்கு அடங்காதது; ஸ்திரமில்லாதது.

ஸீதை இறந்ததைக் கேட்டால் ராமலக்ஷ்மணர்கள் இறப்பார்கள். உடனே ஸுக்ரீவனும் அவனைச் சேர்ந்தவர்களும் உயிரை விடுவார்கள். அதைக்கேட்டு ராமனிடத்தில் ஸகலப் பிராணன்களையும் வைத்திருக்கும் பரதன் உடனே இறப்பான். அந்தத் தர்மாத்மா போனவுடன் அவனுடைய நிழல் போன்ற சத்ருக்னன் உயிரோடிருப்பானா? இப்படி இக்ஷ்வாகுவம்சம் அழிந்தால் ஸகல பிரஜைகளும் துக்கத்தால் துடிப்பார்கள். ஆகையால் புருஷார்த்தங்களை நன்றாய் ஸம்பாதிக்காமல் கோபத்திற்கு இடம் கொடுத்துக் கோபத்திற்குட்பட்ட நான், இந்தப் பிரபஞ்சம் முழுவதும் நாசமடைவதற்குக் காரணமாகிறேன். என்னைப்போன்ற பாக்கியஹீனனும் உண்டோ" என்று கவலை கொண்டார்.

ஸீதையைத் தேடிக் காணமல் மனம்சோர்ந்து அவர் உயிரைவிட நிச்சயித்திருக்கையில் சுபசகுனங்கள் நேர்ந்ததுபோல், இப்போதும் உண்டாயின. அதைக் கண்டு மாருதி ஆச்சரியமடைந்து, "ஒருவேளை அந்தப் புண்ணியவதி தன் மஹிமையால் என் ரக்ஷிக்கப் படக்கூடாது? ஸகல மங்களங்களுக்கும் இருப்பிடமான ஜானகிக்கு நாசமுண்டோ? நெருப்பு நெருப்பைக் கொளுத்துமா? அளவற்ற பராக்கிரமசாலியான ராமமூர்த்தியின் பாரியை அவருடைய தேஜஸாலும் தன் பதிவிரதாமஹிமையாலும் ரக்ஷிக்கப்படுகையில் அக்னிபகவான் அவளைத் தொடமுடியுமா? ராமனுடைய கிருபையாலும் ஸீதையின் புண்ணியவசத்தாலும் அந்த அக்னி என்னையே கொளுத்தவில்லையே! லக்ஷ்மண பரத சத்துருக்னர்கள் பூஜிக்கும் தேவதையும், ராகவனுக்குப் பிரிய பாரியையுமானவள் நாசமடைவாளா? பதார்த்தங்களை எரிப்பதே தொழிலாக உடைய அக்னிபகவானும் என் வாலைக் கொளுத்தாமலிருக்க, ஸீதையை மாத்திரம் எப்படிக் கொளுத்துவார்" என்று யோசித்து ஸமுத்திரமத்தியிலிருந்து மைநாகபர்வதம் கிளம்பித் தனக்கு உபகாரம் செய்த ஆச்சரியத்தை ஞாபகப்படுத்திக்கொண்டார். "ஸீதை ஸத்தியம் தவறாதவள். இந்திரியங்களை அடக்கினவள். பர்த்தாவிடத்திலேயே மனத்தை நாட்டினவள். அக்னி அவளைத் தொட்டால் எரிந்து போவானேதவிர, அவளுக்கு அக்னியால் நாசமில்லை" என்று ஸீதையின் பதிவிரதா தர்மத்தின் மஹிமையை ஞாபகப்படுத்திக்கொண்டார். அப்பொழுது ஆகாசத்தில் ஸஞ்சரிக்கும் சாரணர்கள் "என்ன

ஆச்சரியம்! ஹனுமான் என்ன காரியம் செய்தார்! லங்கையிலுள்ள ராக்ஷஸகிருஹங்களில் ஒன்று பாக்கியில்லாமல் நெருப்புவைத்துவிட்டார். மலையின் குகையிலிருந்து ஜந்துக்கள் கதறுவதுபோல் லங்கையில் ராக்ஷஸர்களும் ஸ்த்ரீகளும் சிறுவர்களும் கிழவர்களும் பெரும் கூச்சலிடுகிறார்கள். லங்கையிலுள்ள அரண்மனைகளும் கோபுரங்களும் உப்பரிகைகளும் நெருப்புப்பட்டு அழிந்தன. ஆனால், ஜானகி யாதொரு அபாயமும் இல்லாமலிருக்கிறாள். இதுவல்லவா ஆச்சரியம்'' என்று பேசிக்கொண்டதை மாருதி கேட்டார்.

இப்படி அனேக சுபசகுனங்களாலும் முக்கியமான காரணங்களாலும் ஸீதையின் க்ஷேமத்தைச் சொல்லும் சாரணர்களுடைய வாக்கியங்களாலும் ஸந்தோஷமடைந்தார். பிறகு தன் எண்ணங்கள் நிறைவேறி, ஸீதையை மறுபடியும் ப்ரத்யக்ஷமாய்ப் பார்த்துவிட்டுத் திரும்பிப்போகலாமென்று முடிவு செய்தார்.

தத: கபி: ப்ராப்த மநோரதா²ர்த²:
தாமக்ஷதாம் ராஜஸுதாம் விதி³த்வா |
ப்ரத்யக்ஷதஸ்தாம் புநரேவ த்³ருஷ்ட்வா
ப்ரதி ப்ரயாணாய மதிம் சகார || (36)

---

## ஸர்க்கம் 56

## மாருதி ஸீதையிடம் உத்தரவு பெற்றது

ததஸ்து ஶிம்ஶுபாமூலே ஜாநகீம் பர்யவஸ்தி²தாம் |
அபி⁴வாத்³யாப்³ரவீத் தி³ஷ்ட்யா பஶ்யாமி த்வாமிஹாக்ஷதாம் || (1)

பிறகு சிம்சுபாவிருக்ஷத்தினடியில் உட்கார்ந்திருக்கும் ஸீதையைக்கண்டு நமஸ்கரித்து, "அம்மா! இந்த லங்கை முழுவதும் பற்றி எரியும்பொழுது தாங்கள் தெய்வானுக்கிரஹத்தால் யாதொரு அபாயமும் இல்லாமல் தப்பினது என் பாக்கியமே. நான் திரும்பிப் போகும்படி உத்திரவு செய்ய வேண்டும்'' என்று பிரார்த்தித்தார். அவர் புறப்படத் தயாராக இருப்பதைக்கண்டு ஸீதை அவரைப் பிரியத்துடன் அடிக்கடி பார்த்து, "இவன் அசோகவனத்தை முறித்து ராக்ஷஸவீரர்களை நாசம் செய்து லங்கையைக் கொளுத்தின மஹா பராக்கிரமசாலி. ராகவனிடத்தில் அவர்களைக் கொன்று, ஸீதையை நானே கொண்டுவருகிறேன்'' என்று சொன்னாலும் சொல்வான். ஆனால் அது ராமனுக்குக் குறைவு; எனக்கும் இஷ்டமில்லை. அதைத் தடுக்கவேண்டும்'' என்று எண்ணி இவ்வாறு சொன்னாள்.

''ஆஞ்ஜனேய! நீ ஒருவனே இங்கிருக்கும் ஸகல சத்துருக்களையும் நாசம் செய்து என்னை இங்கிருந்து மீட்டுப்போக ஸமர்த்தன். அது உனக்கு அபாரகீர்த்தியைக் கொடுக்கும். ஆனால் ராகவ



னுடைய கீர்த்தியைக் குறைக்கும். ராமன் பாணவர்ஷத்தால் லங்கையை மறைத்து சத்ருக்களை ஹதம்செய்து என்னை அழைத்துப் போவதல்லவா அவருடைய கீர்த்திக்கும் வீரியத்திற்கும் ராவணன் செய்த அவமானத்திற்கும் பொருத்தமானது? ஆகையால் யுத்தத்தில் பின் வாங்காத அந்தச் சூரனுடைய பராக்கிரமம் எப்படி விளங்குமோ அப்படி நன்றாக ஆலோசித்துச் செய்'' என்றாள்.

இப்படி யுக்தியுக்தமாயும் விநயமாயும் ராமகாரியத்திற்கு அனுகூலமாயும் ஸீதை சொன்ன வார்த்தைகளைக் கேட்டு ஆஞ்ஜனேயர், "அம்மா! தங்களிஷ்டப்படியே ரகுவீரன் வானரஸைன்யங்களுடன் அதிசீக்கிரத்தில் இங்கே வந்து ஸகல சத்துருக்களையும் யுத்தத்தில் நாசம்செய்து தங்களை அழைத்துப்போவார். இது நிச்சயம்'' என்று ஜானகியை ஸமாதானம் செய்து திரும்பிப்போக உத்தேசித்து ஸீதையை நமஸ்கரித்தார்.

பிறகு மாருதி, தான் வந்த காரியம் நிறைவேறினதால் பிரபுவான ராகவனைப் பார்க்க ஆசைகொண்டு அரிஷ்டமென்ற பர்வதத்தில் ஏறினார். அதில் உன்னதமான பத்மக விருக்ஷங்கள் செழித்து வளர்ந்திருந்தன; வனவரிசைகளால் கறுப்பாகக் காணப்பட்டது; கொடிமுடியின் நடுவில் தொங்கும் மேகங்கள் உத்தரீயத்தைப் போல் விளங்கின; மங்களகரமான ஸூரியகிரணங்களென்ற கைகளால் தட்டி எழுப்பப்பட்டு அந்தப் பர்வதம் தாதுக்களென்ற கண்களை விழித்துப் பார்த்து, கம்பீரமாகச் சப்திக்கும் மலையருவிகளால் வேதங்களை அத்யயனம் செய்வதுபோலும்; மலைச்சாரல்களில் விழும் நீர்த்தாரைகள் இனிமையாகப் பாடுவதுபோலும்; ஆகாயத்தை அளாவியிருக்கும் தேவதாரு மரங்களால் கைகளை மேலே தூக்கிக்கொண்டிருப்பதுபோலும்; கற்பாறைகளிலிருந்து கீழேவிழும் சுனைகளால் அழுவதுபோலும்; காற்றில் ஆடும் கறுத்த ஏழிலைப்பாலை மரங்களால் நடுங்குவதுபோலும்; காற்றால் அசைக்கப்பட்ட மூங்கில்களால் கூவுவது போலும்; பயங்கரமான ஸர்ப்பங்களின் சுவாஸத்தால் கோபம் மிகுந்து பெருமூச்சுவிடுவது போலும்; பனியால் மூடப்பட்டிருக்கும் குகைகளால் தியானம் செய்வது போலும்; மேகங்கள் இறங்கி ஸஞ்சரிப்பதுபோலிருக்கும் மலைத்தாழ்வரைகளால் நாற்புறங்களிலும் நடப்பது போலும்; மேகமாலைகளால் அலங்கரிக்கப்பட்ட சிகரங்களால் ஆகாசத்தில் வளர்வது போலும் இருந்தது. மாருதியின் பாதங்களால் உடைந்து முறிந்த குகைகளால் நிறைந்திருந்தது. ஆச்சா பனை அசுவகர்ணம் முதலிய விருக்ஷங்களாலும், மூங்கில்களாலும், பூங்கொத்துக்களையுடைய கொடிகளாலும், மதுரமான பழம் கிழங்கு வேர் முதலியவைகளாலும், பலவித மிருகங்களாலும், தாதுக்களாலும், மலையருவிகளாலும், கற்பாறைகளாலும், குகைகளில் வஸிக்கும் ஸிம்ஹங்களாலும், புலிக்கூட்டங்களாலும், மஹரிஷி யக்ஷ கந்தர்வ கின்னர

உரககணங்களாலும் நிறைந்த அந்தப் பர்வதத்தில் ஆஞ்ஜநேயர், ராமனைப் பார்க்க ஆவல்கொண்டு, ஸந்தோஷமாய் ஏறினார். அவருடைய பாதங்களில் அகப்பட்ட தாழ்வரைகளிலுள்ள பாறைகள் நொறுங்கிப் பெரும் சப்தத்துடன் சிதறி விழுந்தன. பிறகு ஸமுத்திரத்தைத்தாண்டி வடகரை சேர நினைத்துத் தேகத்தை வளரச்செய்து, முன்போல் இடையூறுகள் இல்லாமல் திரும்பிச் செல்லவேண்டுமென்று ராகவனைப் பிரார்த்தித்தார். அந்த மலையில் ஏறி, அனேக ஜலஜந்துக்களால் நிறைந்து மிகவும் பயங்கரமான ஸமுத்திரத்தைப் பார்த்து, வாயுபுத்திரன் தன் பிதாவைப்போல் தானும் ஆகாசமார்க்கமாய் அதிசீக்கிரத்தில் ஸமுத்திரத்தைத் தாண்டி வடகரையைச் சேர நினைத்தார். அந்தப் பர்வதம் அவருடைய காலடிகளால் அழுந்தி, அதிலுள்ள ஜந்துக்களோடும் பெயர்ந்துவிழும் சிகரங்களோடும் முறிந்துவிழும் விருக்ஷங்களோடும் பூமிக்குள் மறைந்துபோவதுபோல் சப்தித்தது. அங்குள்ள புஷ்பித்த மரங்கள் வஜ்ராயுதத்தால் அடிபட்டதுபோல் அவருடைய துடைகளின் வேகத்தால் முறிந்து பூமியில் விழுந்தன. குகைகளிலுள்ள ஸிம்ஹங்கள் தேகம் நசுங்கி வீரியம் குன்றிக் கதறுகிற சப்தம் பயங்கரமாய் ஆகாசத்தைப் பிளந்தது. அங்கே வஸித்த வித்தியாதர ஸ்த்ரீகள் வஸ்திரங்கள் நழுவ ஆபரணங்கள் சிதற, அந்தப் பர்வதத்திலிருந்து சீக்கிரமாய் உயரக் கிளம்பினார்கள். பருத்த தேகத்தையும் அதிகபலத்தையும் உடைய அங்கிருந்த மலைப் பாம்புகள், பிரகாசமான நாக்குகளுடன் கோரமான விஷங்களைக் கக்கிக்கொண்டு தலைகளும் கழுத்துகளும் நசுங்கித் தரையில் புரண்டன.

இப்படி மாருதியால் உபத்ரவிக்கப்பட்ட அந்த மலையிலிருந்து கின்னர உரக கந்தர்வ யக்ஷ வித்யாதர கணங்கள் வேறிடங்களுக்குப் போனார்கள். அவருடைய பாரத்தையும் வேகத்தையும் தாங்காமல், முப்பது யோஜனை நீளமும் பத்து யோஜனை அகலமுமுள்ள அந்த மலை, மரங்களோடும் மிருகங்களோடும் பூமிக்குள் நுழைந்து பூமியோடு ஸமமாயிற்று. மலைகளைப்போன்ற அலைகளால் நிறைந்த பயங்கரமான ஸமுத்திரத்தைத் தாண்ட உத்தேசித்து ஹனுமான் பிறகு விளையாட்டாய் ஆகாசத்தில் தாவினார்.

ஸ விலங்க4யிஷுர் பீ4மம் ஸலீலம் லவணார்ணவம் |
கல்லோலாஸ் போ3ல வேலாந்தம் உத்பபாத நபோ4 ஹரி: || (49)

---



## ஸர்க்கம் 57

## மாருதி திரும்பி வந்தது

ஸசந்த்3ர குமுத3ம் ரம்யம் ஸார்க காரண்ட3வம் ஶுப4ம் |
தி3வ்ய ஶ்ரவண காத3ம்ப3ம் அப்4ரஶைவால ஶாத்3வலம் || (1)

ஆகாசமென்ற மஹாஸமுத்திரத்தில் சந்திரனே குமுதபுஷ்பம்; ஸூரியனே நீர்க்கோழி; புஷ்யம் சிரவணமென்ற நக்ஷத்திரங்களே ஹம்ஸங்கள்; மேகங்களே பாசியும் பசும்புல்லும்; புனர்வஸுவே பெரிய மீன்; அங்காரகனே முதலை; ஐராவதமே பெரிய தீவு; ஸ்வாதீ நக்ஷத்திரமே ஹம்ஸம்; காற்றின் சேர்க்கைகளே ஓயாத அலைகள்; சந்திரகிரணங்களே குளிர்ந்த ஜலம்; புஜங்க யக்ஷ கந்தர்வ கணங்களே மலர்ந்த புஷ்பங்கள்; இப்படிக் கரைகாணாத ஆகாச ஸமுத்திரத்தை வாயுபுத்திரனான ஹனுமான், கப்பல் ஸமுத்திரத்தைக் கடப்பதைப்போல், தாண்டிச் சென்றார். மேகக்கூட்டங்களை இழுத்துக்கொண்டு போவதுபோலும், ஆகாசத்தை விழுங்குவதுபோலும், சந்திரனைக் கீறுவதுபோலும், நக்ஷத்திரங்களோடும் ஸூரியனோடும் கூடிய ஆகாசத்தைக் கைகளால் பிடிப்பதுபோலும் சென்றார். வெளுப்பு, சிவப்பு, நீலம், மஞ்சள்கலந்த சிவப்பு, மஞ்சள், இவ்வர்ணங்களுள்ள மேகங்களின் நடுவில் அவர் புகுந்து புறப்படுகையில், அவர் தரித்த வெண்மையான உத்தரீயத்தால் சற்றுப் பிரகாசித்து சற்று மறையும் சந்திரனைப்போல் விளங்கினார். அடிக்கடி மேகக்கூட்டங்களைப் பிளந்துகொண்டு வெளிக்கிளம்பும் ஆஞ்ஜனேயர் ஆகாசத்தில் செல்லுகையில் கருடனைப்போல் காணப்பட்டார். மேகங்கள் கர்ஜிப்பதுபோல் ஸிம்ஹநாதம் செய்துகொண்டு, ஆஞ்ஜநேயர் ராக்ஷஸவீரர்களைக்கொன்று தன் பெயரை லங்கையில் பலர் அறியச்செய்தபின் அந்த நகரத்தை நாசம் செய்து, ராவணனை வருத்தப்படுத்தி, அவனுடைய பயங்கரமான ஸைன்யத்தைக் கலக்கி, ஸீதையைக் கண்டு நமஸ்கரித்து, மறுபடியும் ஸமுத்திரத்தைத் தாண்டி வந்தார். வழியில் மைநாகபர்வதத்தைக் கண்டு, நடந்த விருத்தாந்தங்களை அவனுக்குச் சொல்லி, வில்லிலிருந்து விடப்பட்ட பாணத்தைப்போல் அதிவேகமாய்க் கிளம்பிவந்தார். பிறகு, மஹாமேகம்போன்ற மஹேந்திரபர்வதத்தை ஸமீபித்து பிரளயகால மேகங்கள் கர்ஜிப்பதுபோல் ஸகல திக்குகளும் நடுங்கும்படி ஜயத்வனி செய்தார். அதிசீக்கிரத்தில் தன் ஸ்நேஹிதர்களைப் பார்க்க ஆசைகொண்டு, தன் வாலை ஆட்டி மறுபடியும் கர்ஜித்தார். ஆகாசவீதியில் அடிக்கடி மாருதி கர்ஜிப்பதால் கிரஹமண்டலங்களோடுகூடின அந்தப் பிரதேசம் பிளந்து விழுவது போலிருந்தது.

வடக்குக்கரையில் மாருதியை ஆவலுடன் எதிர்பார்த்துக்கொண்டு உட்கார்ந்திருந்த வானரவீரர்கள், பெருங்காற்றில் அடித்

துக் கொண்டுவரப்பட்ட மேகக்கூட்டங்களின் த்வனியைப்போன்ற ஹனுமாருடைய துடைவேகத்தையும் ஸிம்ஹநாதத்தையும் கேட்டார்கள். ஏக்கம் பிடித்திருந்த அந்த வானரர்களெல்லோரும் மாருதியைப் பார்க்க ஆசைகொண்டிருக்கையில், ஜாம்பவான் மிகுந்த ஸந்தோஷத்துடன் ஸமஸ்த வானரர்களையும் ஸமீபத்தில் அழைத்து, "ஹனுமான் உத்தேசித்த காரியத்தை ஸகல விதத்திலும் முடித்துவருகிறான் என்பது நிச்சயம். இல்லாவிட்டால் இவ்வளவு தைரியமாயும் ஸந்தோஷமாயும் சப்தம் செய்வானா" என்றார். பிறகு, ஹனுமானுடைய புஜங்கள் துடைகளினின்று உண்டான வேகத்தையும் த்வனியையும் கேட்டு வானரர்கள் ஸந்தோஷத்தால் தாவிக் குதித்தார்கள். அவர்கள் ஆஞ்ஜநேயரைப் பார்க்க விரும்பி மரத்திற்கு மரம், பர்வதத்திற்குப் பர்வதம் தாவினார்கள். தூரத்திலிருப்பவனை வஸ்திரங்களை விசிறி அடையாளம் காட்டிக் கூப்பிடுவதுபோல், அவர்கள் மரங்களின் நுனியிலிருந்து கொண்டு கிளைகளையும் கொம்புகளையும் அசைத்தார்கள். மலைக் குகைகளில் அடங்கின வாயு எப்படிக் கர்ஜிக்குமோ அப்படி ஹனுமான் கர்ஜித்துக்கொண்டே வந்தார். மஹாமேகத்தைப்போல் அவர் கீழே இறங்குவதைக் கண்டு வானரர்கள் கைகூப்பி வணக்கமாய் நின்றார்கள். பிறகு விருக்ஷங்களடர்ந்த மஹேந்திரபர்வதத்தில் மற்றொரு பர்வதம் இறங்கினதுபோல் ஆஞ்ஜநேயர் தன் வேகத்தை அடக்கி இறங்கினார். ஸந்தோஷத்தால் தேகம் பூரிக்க, அறுபட்ட இறக்கைகளையுடைய பர்வதத்தைப்போல் மாருதி ஆகாசத்திலிருந்து இறங்கினார். உடனே ஸகல வானரசிரேஷ்டர்களும் ஆனந்தத்தால் மலர்ந்த முகங்களுடன், வெகுப்ரீதியுடன் அந்த மஹாத்மாவைச் சூழ்ந்துகொண்டு, யாதொரு அபாயமும் இல்லாமல் திரும்பிவந்த வானரவீரனுக்குக் கிழங்குகளையும் பழங்களையும் காணிக்கையாகக் கொடுத்தார்கள்.

ஜாம்பவானையும் மற்று வானரவிருத்தர்களையும், அங்கதனையும் ஆஞ்ஜனேயர் நமஸ்கரிக்க, அவ்விருவரும் அவரை உபசரித்தார்கள். ஸகல வானரர்களும் மெச்சினார்கள். பிறகு "கண்டேன் ஸீதையை" என்று நடந்த விருத்தாந்தங்களைச் சுருக்கமாய் தெரிவித்து, அங்கதனுடன் கைகோத்துக்கொண்டு மஹேந்திரபர்வதத்தில் ஓர் அழகான தோப்பில் உட்கார்ந்துகொண்டு, வானரர்களைப் பார்த்து, "மித்திரர்களே! நாம் இவ்வளவு சிரமப்பட்டுத் தேடின ஸீதையைக்கண்டேன். அசோக வனத்தில் இருக்கிறாள். கோர ராக்ஷஸிகள் அவளை வெகுஜாக்கிரதையாய்க் காத்துக்கொண்டிருக்கிறார்கள். ஒற்றைப் பின்னலுடன், தலைமயிர் சடைவிழுந்து, தேகம் இளைத்து அழுக்கடைந்து ஆகாரமில்லாமல் மெலிந்து, ராமனைப் பார்க்க ஆசைகொண்டு உத்தமமான பதிவிரதாதர்மத்தை அனுஷ்டித்து வருகிறாள்" என்றார்.

அனேக அர்த்தங்களடங்கிய ஆஞ்ஜனேயருடைய வாக்கியங்கள் துக்கத்தாலும் கவலையாலும் வெந்த மனத்தில் அமிருத தாரைகளைப்போல் விழுந்தவுடன், வானரவீரர்கள் எல்லாவற்றையும் மறந்தனர். சிலர் ஸிம்ஹநாதம் செய்தார்கள்; சிலர் கூவினார்கள்; சிலர் கர்ஜித்தார்கள்; சிலர் கிலகில என்று சப்தித்தார்கள்; சிலர் ஒருவர்க்கொருவர் போட்டியாய்க் கர்ஜித்தார்கள்; சிலர் வால்களை உயரத்தூக்கிப் பூமியில் அடித்தார்கள்; சிலர் பர்வத சிகரங்களிலிருந்து பாய்ந்து, மதயானையைப்போல் கம்பீரமாய் நிற்கும் ஆஞ்ஜனேயரை ஆலிங்கனம் செய்தார்கள். பிறகு அங்கதன் மாருதியின் வார்த்தையைக்கேட்டு வானரவீரர்களுக்கு நடுவில் எழுந்து, "ஆஞ்ஜனேய! இந்த விஸ்தாரமான ஸமுத்திரத்தைத்தாண்டி மறுபடியும் வந்த உனக்கு பராக்கிரமத்திலும் வலிமைக்கும் நிகருண்டோ? யஜமானனிடத்தில் உனக்குள்ள பக்திக்கும் உன் வீரியத்திற்கும் பராக்கிரமத்திற்கும் எல்லையுண்டோ? ஸகல கீர்த்திக்கும் இருப்பிடமான ராமபாரியையைப் பார்க்கும்படியான பாக்கியத்தைப் பெற்றாயே. ஸீதையைப் பிரிந்த துக்கம் ராகவனுக்கு நீங்குவதற்கு நீயல்லவா காரணம்" என்று கொண்டாடினான். பிறகு வானரர்கள் மாருதியையும் அங்கதனையும் ஜாம்பவானையும் சூழ்ந்து, அந்த வானரவீரன் பெருங்கடலைத் தாண்டினதையும், லங்கையைப் பார்த்ததையும், ஸீதையைத் தரிசித்ததையும் ராவணனைக்கண்டு பேசினதையும், இன்னும் மற்ற விருத்தாந்தங்களையும் விஸ்தாரமாகக்கேட்க விரும்பிப் பெரிய பாறைகளில் ஹனுமானுக்கெதிரே கைகூப்பி உட்கார்ந்தார்கள். தேவதைகள் இந்திரனைச் சூழ்ந்து உபசரிப்பதுபோல் அங்கதனை வானரவீரர்கள் சூழ்ந்து நின்றார்கள்.

இப்படி மஹாகீர்த்திசாலியான ஆஞ்ஜனேயரும் புகழ்பெற்ற அங்கதனும் இன்னும் மற்ற வானரர்களும் ஸந்தோஷமாய் உட்கார்ந்திருக்கையில், அந்த மஹேந்திரகிரியின் சிகரம் காந்தியால் ஜ்வலித்தது.

ஹநூமதா கீர்திமதா யஶஸ்விநா
ததா[3]ங்க[3]தே[3]நாங்க[3]த[3] ப[3]த்[3]த‘பா[3]ஹுநா |
முதா[3] தத[3]த்‘யாஸிதமுந்நதம் மஹத்
மஹீத‘ராக்[3]ரம் ஜ்வலிதம் ஶ்ரியாப‘வத் || (52)

---

## ஸர்க்கம் 58

## மாருதி தன் யாத்திரையை வர்ணித்தது

ததஸ்தஸ்ய கி[3]ரே: ஶ்ருங்கே[3] மஹேந்த்[3]ரஸ்ய மஹாபலா: |
ஹநுமத் ப்ரமுகா[2]: ப்ரீதிம் ஹரயோ ஜக்[3]முருத்தமாம் || (1)

பிறகு மாருதியும் மற்ற வானரர்களும் அந்த மஹேந்திர பர்வதத்தின் சிகரத்தில் அளவற்ற ஆனந்தத்துடன் உட்கார்ந்திருக்

கையில், ஜாம்பவான் ஸந்தோஷத்தால் மயிர்க்கூச்சமடைந்து வாயு புத்திரனைப்பார்த்து, "மாருதே! ஸீதையை எப்படிக் கண்டுபிடித்தாய்? அவள் எந்த ஸ்திதியில் இருக்கிறாள்? குரூரனான ராவணன் அவளிடத்தில் எப்படி நடந்துகொள்ளுகிறான்? இவை எல்லாவற்றையும் எங்களுக்கு வாஸ்தவமாகச் சொல். ராமனுடைய ஸன்னிதியில் எதைச் சொல்லவேண்டியதென்றும் எதை மறைக்க வேண்டியதென்றும் இனிமேல் செய்யவேண்டிய காரியம் இன்னதென்றும் நிச்சயிப்போம்" என்றார்.

அப்பொழுது ஆஞ்ஜனேயர் ஸந்தோஷத்தால் மயிர்க்கூச்சத்துடன் கைக்கூப்பி, ஜானகியை மனத்தால் நமஸ்கரித்துப் பின்வருமாறு சொல்ல ஆரம்பித்தார். "நீங்கள் பார்த்துக்கொண்டிருக்கும் பொழுதே இந்தப் பர்வதத்திலிருந்து ஆகாசத்தில் தாவி, ஸமுத்திரத்தைத் தாண்டித் தெற்குக்கரையைச் சேர உத்தேசித்துப் புறப்பட்டேனல்லவா? வழியில் ஒரு பர்வதம் தங்கமயமான கொடுமுடிகளுடன் திடீரென்று கிளம்பிற்று. அது வழி மறைப்பதைக் கண்டு என் பிரயாணத்திற்கு இடையூறென்று எண்ணினேன். இதைப் பிளந்தெறிந்து அப்புறம் செல்லவேண்டியதென்று நினைத்துக் கொண்டு, அதைக்கிட்டி வாலைச் சுழற்றி ஸூரியனைப்போல பிரகாசிக்கும் சிகரத்தில் அடிக்க, அது தூளாயிற்று. அந்தப் பர்வத தேவதை என் உத்தேசத்தை அறிந்து, "குழந்தாய்!" என்று என்னை இனிமையாக அழைத்து, 'வானரவீர! நான் உன் பிதாவான வாயுவிற்கு முக்கிய மித்திரன். ஆகையால் உனக்குச் சிறிய தகப்பன் முறை. இந்த ஸமுத்திரத்தில் வஸித்துக்கொண்டிருக்கிறேன். மைநாகமென்று எனக்குப் பெயர். பூர்வகாலத்தில் பர்வதங்கள் இறக்கைகளுடன் நினைத்த இடங்களிலெல்லாம் ஸஞ்சரித்து லோகத்தில் அதிக உபத்திரவத்தைச் செய்து கொண்டிருந்தன. அதைக் கேட்டு மஹேந்திரன் வஜ்ராயுதத்தால் அவைகளின் இறக்கைகளை அறுத்தான். அப்பொழுது உன் பிதா என்னை இந்த ஸமுத்திரத்தில் அடித்துக் கொண்டுவந்து தள்ளி, அந்தக் கஷ்டத்தை அனுபவிக்காமல் இருக்கும்படி காப்பாற்றினார். மேலும், ராமன் தர்மாத்மாக்களுக்குள் சிரேஷ்டர்; பராக்கிரமத்தில் மஹேந்திரனுக்கு ஸமமானவர். அவருக்கு நான் உதவி செய்ய வேண்டியது அவசியம்" என்றது. உடனே நான் உத்தேசித்துப் போகும் காரியத்தை அவருக்குத் தெரிவித்து உத்திரவு பெற்றுக்கொண்டு சென்றேன். மைநாகம் மனுஷ்ய சரீரத்தை மறைத்துப் பர்வதரூபமாய் ஸமுத்திரத்தில் இருந்தது.

பிறகு நான் அதிவேகத்துடன் ஆகாசத்தில் வெகுநேரம் சென்று கொண்டிருந்தேன். அப்பொழுது நாகங்களுக்கு மாதாவான ஸுரஸை என்ற தேவஸ்த்ரீ ஸமுத்திரத்திலிருந்து என்னை அழைத்து, 'வானரசிரேஷ்ட! தேவர்கள் உன்னை எனக்கு ஆஹாரமாகக் கொடுத்திருக்கிறார்கள். வெகு காலமாய் உன்னை எதிர்பார்த்



துக் கொண்டிருந்தேன்; இன்று கிடைத்தாய். உன்னைத் தின்னப் போகிறேன்" என்றாள். அதைக்கேட்டு நான் கைகூப்பி வணங்கி தீனமான முகத்துடன், 'அம்மா! தசரதபுத்திரனான ராகவன் மஹா பராக்கிரமசாலி; தேஜஸ்வி; ஒரு காரியமாய் லக்ஷ்மணனென்ற தம்பியோடும் ஸீதை என்ற பாரியையோடும் தண்டகாவனத்தில் ஸஞ்சரித்துக்கொண்டிருக்கையில் ராவணனென்ற துராத்மா ஸீதையை அபகரித்தான். நான் ராமனுடைய ஆக்ஞையால் அவளைக் கண்டுபிடிக்கச் செல்கிறேன். ராமனுடைய ராஜ்யத்தில் வஸித்துக் கொண்டிருக்கும் நீ அவருக்கு ஸஹாயம் செய்யவேண்டாமா? அப்படியும் இஷ்டமில்லாவிட்டால் நான் ஸீதையைக் கண்டு ராமனுடைய விருத்தாந்தத்தை அவளுக்குத் தெரிவித்து, அவளுடைய க்ஷேமத்தை ராமனுக்குச் சொல்லிவிட்டு, இங்கே வந்து உன் வாயில் பிரவேசிக்கிறேன்; இது ஸத்தியம்" என்றேன். நினைத்த ரூபங்களை எடுக்கக்கூடிய ஸுரஸை, 'என் கண்ணிற்பட்ட ஒருவனும் என்னைத் தப்பிப் போகமுடியாது" என்றாள். உடனே நான் பத்துயோஜனையளவு என் தேகத்தை வளர்த்தேன். அவள் அதற்குத் தகுந்தபடி வாயை வளர்த்துக்கொண்டாள். நான் உடனே என் தேகத்தைச் சுருக்கிக் கட்டைவிரலளவு செய்துகொண்டு, அவளுடைய வாயில் பாய்ந்து ஒரு க்ஷணத்தில் வெளியே வந்தேன். பிறகு ஸுரஸை தன் நிஜரூபத்துடன் என்னைப்பார்த்து "குழந்தாய்! நீ போகும் காரியம் கைகூடட்டும். ஸீதையையும் ராமனையும் சேர்த்து வைப்பாய். உனக்கு ஸகல மங்களங்களும் உண்டாகட்டும். உன்னிடத்தில் விசேஷப்பிரீதி வைத்தேன்" என்று சொன்னாள். அப்பொழுது ஸகலப்பிராணிகளும், 'நல்லது நல்லது" என்று என்னைக் கொண்டாடின.

பிறகு நான் விசாலமான ஆகாசத்தில் கருடனைப்போல் அதிவேகமாகச் செல்லுகையில், திடீரென்று என்வேகம் அடங்கிற்று; செல்லமுடியவில்லை; ஸகல திக்குகளிலும் பார்க்கையில் ஒன்றும் காணப்படவில்லை. இது என்ன ஆச்சரியம்! வேகமாகப் போய்க்கொண்டிருந்த எனக்கு இந்த இடையூறு நேர்ந்த காரணமென்ன? யாதொரு பிராணியையும் நான் போகும் வழியில் காணவில்லையே! என் நிழலை யாரோ பிடித்துத் தடை செய்திருக்கிறார்கள்" என்று சற்று யோசித்துத் தக்கித்துக் கீழே பார்க்கையில், ஜலத்தில் ஒரு பயங்கரமான ராக்ஷஸி படுத்திருப்பதைக் கண்டேன். அவள் என்னைப்பார்த்து இடிபோல் சிரித்துப் பரபரப்பில்லாமல் வெகு தைரியத்துடன், "பர்வதம் போன்ற சரீரத்தையுடையவனே! வெகு காலமாக நான் ஆகாரமில்லாமல் வருந்துகிறேன். உன் தேகத்தை எனக்கு ஆஹாரமாகக் கொடுத்து என்னை திருப்தி செய்" என்றாள். நானும் நல்லதென்று அவளுடைய வாயளவைக் காட்டிலும் அதிகமாக என் தேகத்தை வளர்த்துக்கொண்டேன். அவளும் என்னை விழுங்குவதற்குப் போதுமானவரையில் தன் வாயை வளர்த்துக்

கொண்டாள். ஆனால், நான் நினைத்த ரூபங்களை எடுக்கக்கூடியவனென்று அவளுக்குத் தெரியாது. நான் உடனே என் பெரிய ரூபத்தைச் சுருக்கி அவளுடைய வாயில் நுழைந்து ஹிருதயத்தைப் பிளந்துகொண்டு ஆகாசத்தில் தாவினேன். மலைபோன்ற அந்தக் கோரராக்ஷஸி உடனே கைகளை உதறிக்கொண்டு ஸமுத்திரத்தில் விழுந்து இறந்தாள். அப்பொழுது ஆகாசத்தில் ஸஞ்சரிக்கும் ஸித்த சாரணர்கள் "ஹனுமான் பயங்கரமான ஸிம்ஹிகையைக் கொன்று விட்டான்" என்று சொல்லக் கேட்டேன்.

பிறகு நான் உத்தேசித்த காரியத்தை நினைத்துக் கொண்டு ஆகாசவீதியில் வேகமாய்ச் செல்லுகையில் ஸமுத்திரத்தின்தெற்குக் கரையில் மலைகளும் வனங்களும் லங்கா பட்டணமும் இருக்கக் கண்டேன். ஸூரியன் அஸ்தமித்தவுடன் அங்கிருந்தபயங்கரமான காவற்காரர்களுக்குத் தெரியாமல் ராக்ஷஸர்களுடைய ராஜதானியில் பிரவேசித்தேன். அப்பொழுது ஒரு ஸ்த்ரீ பிரளயகால மேகத்தைப் போல் சிரித்துக்கொண்டு திடீரென்று கிளம்பி என்னைத் தடுத்தாள். நெருப்புக் கொழுந்து போன்ற தலைமயிரையுடைய அந்த ராக்ஷஸி என்னைக் கொல்ல வருவதைக் கண்டு நான் இடது கை விரல்களை மடக்கி அவளைக் குத்தி ஜயித்துக் கீழே தள்ளி, நகரத்தில் பிரவேசித்தேன். அப்பொழுது அவள், 'மஹானுபாவ! நான் லங்கா தேவதை. என்னை நீ ஜயித்தபடியால் ஸகல ராக்ஷஸர்களையும் ஜயிப்பாய்'' என்றாள்.

பிறகு நான் அந்த ராத்திரி முழுவதும் லங்கையெங்கும் தேடி, முடிவில் ராவணனுடைய அந்தப்புரத்திலும் நன்றாய்ப் பரிசோதித்துப் பார்த்தேன்; ஸீதையைக் காணவில்லை. ஆகையால் நான் துக்க ஸமுத்திரத்தில் முழுகிக் கரை காணாமல் தவிக்கையில், ஓரிடத்தில் தங்கப் பிராகாரத்தால் சூழப்பட்ட ஒரு அழகான தோட்டத்தைக் கண்டேன். அதன் சுவரைத் தாண்டிக் குதித்து நான் விருக்ஷங்கள் நிறைந்த அசோகவனத்தையும் அதற்கு நடுவில் ஒரு பெரிய சிம்சுபா விருக்ஷத்தையும், அதைச் சுற்றி ஸ்வர்ணமயமான வாழைத் தோட்டத்தையும் கண்டேன். அந்தச் சிம்சுபாவிருக்ஷத்திற்கு ஸமீபத்தில் சிரேஷ்டமான வர்ணமுள்ள ஒரு ஸ்த்ரீ, பெண் புலிகளால் சூழப்பட்ட மானைப்போல், ரத்த மாம்ஸங்களையே ஆகாரமாகவுடைய கோர ராக்ஷஸிகளால் சூழப்பட்டிருப்பதைக் கண்டேன். அவள் நல்ல யௌவனப் பருவத்திலிருப்பவள்; தாமரை இதழ்களைப் போன்ற நேத்திரங்களையுடையவள். ஆகாரமில்லாததாலும் சோகத்தாலும் தேகம் இளைத்து முகம் முடித் தலைமயிர் புழுதி படிந்து, ஒற்றை வஸ்திரத்துடன் உட்கார்ந்திருந்தாள். எப்பொழுதும் பர்த்தாவையே தியானித்துக்கொண்டு ராவணனிடத்தில் மிகுந்த வெறுப்புடன் ராக்ஷஸிகளால் மிரட்டப் பட்டு, பயந்த மான் குட்டிபோல் அங்குமிங்கும் பார்த்துக் கொண்டு ஒற்றைப் பின்னலுடன் தரையில் உட்கார்ந்திருந்தாள். ஹேமந்தருதுவில் தாமரையோடையைப்போல்



விகார வர்ணத்தையுடைய சரீரத்துடன் இனி உயிரை வைத்துக் கொள்ளுகிறதில்லை என்று நிச்சயித்திருந்தாள். இப்படி மஹாகீர்த்தி சாலியான ராமபாரியையை தரிசித்து அந்தச் சிம்சுபா விருக்ஷத்திலேயே ஒளிந்திருந்தேன்.

பிறகு ராவணனுடைய அரண்மனையிலிருந்து ஒட்டியாணம் சிலம்பு முதலிய ஆபரணங்களையுடைய நாதத்துடன் கலந்து கம்பீரமான ஹலஹலா சப்தமும் உண்டாயிற்று. அதைக் கேட்டு சிறிது அச்சமுற்று,நான் தேகத்தைச் சுருக்கிக் கொண்டு அந்த விருக்ஷத்தில் இலைகளின்மறைவில் பக்ஷியைப்போல்ஒளிந்திருந்தேன். அப்பொழுது ஸீதை இருக்குமிடத்திற்கு ராவணனும் அவனுடைய பத்தினிகளும் வந்தார்கள். அவனைக் கண்டு பதிவிரதையான ஸீதை துடைகளை நெருக்கிக்கொண்டு கைகளால் ஸ்தனங்களை மறைத்துக்கொண்டாள். என்ன நேருமோ என்று பயத்துடன், நம்மை ரக்ஷிப்பவர்கள் உண்டோ என்று நான்கு புறங்களிலும் பார்த்துக் கொண்டு, ஒருவரையும் காணாமல் நடுங்கிக் கொண்டு துக்கத்தால்கலங்கியிருந்தாள். ராவணன் அவளை நமஸ்கரித்து, 'அழகால் கர்வமடைந்திருப்பவளே! என்னைப் புருஷனாக அங்கீகரிக்க மாட்டாயா? கொழுப்பால் நீ என் இஷ்டப்படி நடக்கா விட்டால் இன்னும் இரண்டு மாதங்கள் பொறுப்பேன்.பிறகு உன் ரத்தத்தைக்குடித்து விடுவேன்' என்றான். அதைக் கேட்டு ஸீதை வெகு கோபம் கொண்டு, "ராக்ஷஸப்பதரே! அபாரதேஜஸ்வியான ராமனுடைய பாரியையைப் பார்த்துச் சொல்லத் தகாத வார்த்தைகளைச் சொல்லுகின்ற உன் நாக்கு ஏன் அழுகி விழவில்லை! இக்ஷ்வாகு குல சக்கரவர்த்தியான தசரதருக்கு நாட்டுப் பெண் என்பதை மறந்தாயோ? அயோக்கிய! பாபி! என் பர்த்தா இல்லாத ஸமயத்தில் அந்த மஹாத்மாவிற்குத் தெரியாமல் என்னை அபகரித்து வந்தாயே. உன் வீரியத்தைச் சுட வேண்டும். ராகவனுக்கு நீ ஸமமாவாயா ? அவருக்கு ஊழியம் செய்யக் கூடத் தகுந்தவனல்ல. ஸத்தியவானும் யுத்தத்தில் எல்லோராலும் கொண்டாடப்பட்டவரும் யக்ஞங்களைச் செய்தவருமான ரகுவீரன் எங்கே, நீ எங்கே?'' என்றாள். ஸீதையின் கடுமையான வார்த்தைகளைக் கேட்டு ராவணன் கோபம் கொண்டு ச்மசானத்தில் சிதையில்எரியும் அக்னியைப்போல் ஜ்வலித்துக் கண்களை உருட்டி விழித்து வலது கை விரல்களை மடக்கிக்கொண்டு ஸீதையைக் கொல்ல ஓடிவந்தான். அப்பொழுது அங்கிருந்த ஸ்த்ரீகள் 'ஹா! ஹா!' என்று கத்தினார்கள். அவர்களுக்குள் மந்தோதரி என்ற பட்டமஹிஷி ராவணனைத் தழுவிப் பிடித்துக்கொண்டு, "மஹாராஜா! பராக்கிரமத்தில் மஹேந்திரனுக்கு ஸமமான தங்களுக்கு ஸீதையால் என்ன பிரயோஜனம் ? தேவ கந்தர்வ யக்ஷ கன்யைகள் கணக்கில்லாமல் தங்களுடைய இஷ்டத்தை எதிர் பார்த்துக் கொண்டிருக்கிறார்கள். அவர்களுடன் கிரீடிக்கலாம், வாருங்கள்'' என்று அழைத்துக் கொண்டு போனாள். (தான்யமாலினி, மந்தோதரி என்ற இருமனைவியருமே ராவணனைத்

தடுத்தார்கள். தான்யமாலினி தடுத்ததாக ஸர்க்கம் இருபத்திரண்டில் கூறப்பட்டதாலும் மந்தோதரி தடுத்ததாக இங்கு கூறப்பட்டதாலும் இது விளங்கும்.) அப்பொழுது ராவணன் கோபம் தணிந்து காமபரவசனாய் அவர்களுடன் தன் அரண்மனைக்குச் சென்றான். உடனே அங்கிருந்த கோரராக்ஷஸிகள் ஸீதையைச் சூழ்ந்து கொண்டு குரூரமான வார்த்தைகளில் அவளை மிரட்டினார்கள். அவர்களுடைய கர்ஜனைகள் ஸீதையினிடத்தில் பலிக்கவில்லை. அவர்களுடைய வார்த்தையை அவள் துரும்புபோல் எண்ணினாள். பிறகு அவர்கள் வீணாய்க் கத்தி அலுத்துப் போய், ராவணனுக்கு ஸீதையின் உறுதியான நிச்சயத்தை தெரிவிக்கப் போனார்கள். அங்கிருந்தவர்கள் அவளை உட்படுத்துவோமென்ற ஆசையற்று ஸகல பிரயத்தனங்களையும் விட்டு ஸீதையின் நான்கு பக்கங்களிலும் படுத்துத் தூங்கினார்கள். தன் பர்த்தாவின் க்ஷேமத்தையே கோரும் ஸீதை துக்கம் தாங்காமல் தீனமாய் பிரலாபித்தாள்.

பிறகு, அந்த ராக்ஷஸிகளுக்கு நடுவிலிருந்து திரிஜடை என்றவள் எழுந்து, "துஷ்டைகளே! ஸீதையைத் தொட வேண்டாம். உங்களுக்குப் பசித்தால் உங்களையே பிடுங்கித்தின்னுங்கள். ஜனகருடைய புத்திரியும் தசரதருடைய நாட்டுப் பெண்ணுமான ஜானகி நாசமடையாள். இவளுடைய பர்த்தாவிற்கு ஜயமும் மங்களங்களும் உண்டாகப் போகின்றன வென்றும் ராவணனும் ஸகல ராக்ஷஸர்களும் நாசமடையப் போகிறார்களென்றும் தெரிவிக்கும் ஒரு ஸ்வப்பனத்தைக்கண்டேன். ராகவனுடைய கோபத்திலிருந்து ராக்ஷஸிகளைக் காப்பாற்ற இவள் ஒருவளே போதும். நாம் இவளைப் பிரார்த்திப்போம். இது எனக்கு நல்லயோசனை என்று தோன்றுகிறது. இவள் இப்பொழுது அதிக துக்கத்தை அனுபவித்துக் கொண்டிருக்கிறாள். ஆனால் அதி சீக்கிரத்தில் ஸகல துக்கங்களும் நீங்கி உத்தமமான ஸுகத்தையடைவாள்" என்றாள். அதைக் கேட்டு ஸீதை, தன் நாயகனுக்குக் கிடைக்கும் ஜயத்தைப்பற்றி ஸந்தோஷித்து, 'நீ சொல்வது நிஜமானால் நான் உங்களை ரக்ஷிக்கிறேன்" என்றாள்.

ஸீதை அந்தப் பயங்கரமான ஸ்திதியிலிருப்பதைக் கண்டு நான் அதை நீக்குவதற்குப் பலவிதமாய் யோசித்தும் ஒன்றும் தோன்றாமல் வருத்தப்பட்டுக் கொண்டிருந்தேன். ஸீதையுடன் இன்ன விதமாகப் பேசுகிறதென்று நிச்சயித்துக் கொண்டு இக்ஷ்வாகு வம்ச பரம்பரையை வர்ணிக்கஆரம்பித்தேன். ராஜரிஷிகளால் கொண்டாடப்பட்ட அந்த வார்த்தைகளைக்கேட்டு ஸீதை கண்ணீர் பெருக, "வானரசிரேஷ்ட! நீ யார்? இங்கே எப்படி வந்தாய்? "எந்தக் காரியமாய் வந்தாய்? ராகவனுக்கும் உனக்கும் பரிசயம் உண்டான விதமென்ன" என்று கேட்டாள். அதற்கு நான், தங்களுடைய பர்த்தாவான ராமனுக்கு ஸுக்ரீவனென்ற ஒரு மித்திரனுண்டு. மஹாபலவான், பராக்கிரமசாலி, நான் அவருடைய ஸேவகன்; என் பெயர்



ஹனுமான். அவர் என்னைத் தங்களிடத்தில் அனுப்பியிருக்கிறார். அந்தப் புருஷோத்தமன் நம்பிக்கை உண்டாகும்படி தன் மோதிரத்தை அடையாளமாக என்னிடத்தில் கொடுத்தனுப்பியிருக்கிறார். ஆகையால் தங்களுடைய கட்டளையை நிறைவேற்றத் தயாராக இருக்கிறேன். என்ன செய்யட்டும்? தங்களை ராமலக்ஷ்மணர்களுடைய ஸமீபத்தில் கொண்டு போய் விடட்டுமா? என்ன பதில் சொல்லுகிறீர்கள்?' என்றேன். அதைக் கேட்டு ஸீதை என் ஸ்வரூபத்தை அறிந்து, 'ராகவன் ஸைன்யங்களுடன் இங்கே வந்து ராவணனையும் ஸகல ராக்ஷஸர்களையும் யுத்தத்தில் கொன்று என்னை அழைத்துக் கொண்டு போகட்டும்' என்றாள். பிறகு நான் அந்தப் புண்யவதியை சிரஸால் நமஸ்கரித்து, "ராமனுக்கு நம்பிக்கையையும் ஸந்தோஷத்தையும் உண்டாக்கும் ஓர் அடையாளத்தைக் கொடுங்கள்" என்று கேட்டேன். அப்பொழுது தன் சூடாமணியை எடுத்து என்னிடத்தில் கொடுத்து, 'இதை ராமனுக்கு காட்டினால் நீ என்னைக் கண்டு பேசினாயென்று நம்பிக் கௌரவிப்பார். ஆஞ்ஜனேய! என் விருத்தாந்தங்களை ராகவனுக்குத் தெரிவிப்பாய். ராமலக்ஷ்மணர்களும் ஸுக்ரீவனும் வானர ஸைன்யங்களுடன் இங்கே வரும்படி செய்ய வேண்டியது உன் கடமை. அப்படியில்லாவிட்டால் இரண்டு மாதங்களுக்கு மேல் பிழைத்திருக்க மாட்டேன். ராமன் என்னைப் பார்க்க முடியாது. அநாதையைப்போல் மரணமடைவேன்" என்று தன் அபிப்பிராயத்தை முடிவாகச் சொன்னாள். அந்தத் தீனமான வார்த்தையைக் கேட்டு எனக்குத் தேகம் தெரியாமல் கோபம் வந்தது. மேல் நடக்க வேண்டிய காரியம் கொஞ்சம் பாக்கியிருக்கிறதென்று அறிந்து, மலைபோன்ற ரூபத்தை எடுத்துக் கொண்டு, ராக்ஷஸர்களுடன் யுத்தம் செய்ய விரும்பி, அந்த அசோகவனத்தை அழித்தேன். மரங்கள் முறிக்கப்படுவதையும் மிருகங்களும் பக்ஷிகளும் பயத்தால் கூச்சலிடுவதையும்கேட்டு ராக்ஷஸிகள் விழித்துக்கொண்டு, அங்கே வந்து பார்த்து என்னைக் கண்டு சீக்கிரமாய் ராவணனிடத்தில் போய்ச் சொன்னார்கள். "பிரபோ! தங்களுடைய பலபராக்கிரமங்களை அறியாமல் ஒரு துஷ்டக்குரங்கு இங்கேவந்து பிறர் நெருங்க முடியாத நமது அசோகவனத்தை அழிக்கிறது. அந்தத் துர்ப்புத்தியுள்ள வானரன் தங்களுக்குப் பிரியமில்லாத காரியத்தைச் செய்து கொண்டிருக்கிறான். அவனைக் கொல்லும்படி கட்டளையிடுங்கள்" என்றார்கள்.

உடனே ராவணன் கிங்கரர்களென்று பிரஸித்தி பெற்ற ராக்ஷஸர்களை அனுப்பினான். அவர்கள் லங்காதிபதியின் எண்ணங்களை அறிந்துநடப்பவர்கள்; ஸுலபமாய் ஜயிக்கமுடியாதவர்கள்; ஸமஸ்த ஆயுதங்களையும் எடுத்துக் கொண்டு என்னுடன் யுத்தம் செய்யவந்த எண்பதினாயிரம் கிங்கரர்களையும் அங்கிருந்த ஒரு இரும்புத் தடியால் கொன்றேன். அதில் பயந்து ஓடினவர்கள் அந்த ஸமாசாரத்தை ராவணனிடத்தில் சொன்னார்கள்.

பிறகு, அப்பட்டணத்தின் நடுவிலிருந்த ஒரு உன்னதமான உப்பரிகையில் தாவி ஒரு ஸ்தம்பத்தைப் பிடுங்கிக் கொண்டு, அங்கிருந்த அரக்கர்களைக்கொன்று, லங்கைக்குப்பூஷணமாயிருந்த அந்தக் கட்டடத்தை நாசம் செய்தேன். பிறகு, ராவணன், பிரஹஸ்தனுடைய புத்திரனான ஜம்புமாலியையும் பயங்கரமான அநேக ராக்ஷஸர்களையும் அவனுடன் அனுப்பினான். யுத்தத்தில் நிபுணனான அந்தப் பலவானையும் அவனுடன் வந்த ராக்ஷஸர்களையும் ஒரு இருப்புலக்கையால் அடித்துக்கொன்றேன். பிறகு, ராவணன்மஹாபலசாலிகளான ஏழு மந்திரி புத்திரர்களைக் கணக்கற்ற காலாட்களுடன் அனுப்பினான். அவர்களையும் இருப்புலக்கையால் யமலோகத்திற்கு அனுப்பினேன். பிறகு, சூரர்களான ஐந்து ஸேனாதிபதிகளை அனுப்பினான். அவர்களை ஸைன்யங்களுடன் இருந்த இடம் தெரியாமல் கொன்றேன். பிறகு, தன் புத்திரனான அக்ஷனென்ற பலவானை அளவற்ற ஸைன்யங்களுடன் அனுப்பினான். யுத்தத்தில் நிபுணனான அந்த மந்தோதரி புத்திரன் முடிவில் கத்தியை உருவிக் கொண்டு ஆகாசத்தில் கிளம்புவதைக் கண்டு, அவனுடைய கால்களைப் பிடித்துக் கரகர என்று சுழற்றி பூமியில் அடித்துக் கொன்றேன். பிறகு, ராவணன் கோபம் கொண்டு, பலத்தாலும் பராக்கிரமத்தாலும் கொழுப்படைந்த இந்திரஜித் என்ற தன் புத்திரனை அனுப்பினான். அவனுடைய ஸைன்யம் முழுவதையும் கொன்று, அவனுடைய பராக்கிரமத்தை வீணாகச் செய்து, வெகு ஸந்தோஷமடைந்தேன். கொழுப்படைந்த வீரர்களுடன் அந்த இந்திரஜித்தை ராவணன் பூர்ண நம்பிக்கையுடன் என்னுடன் யுத்தம் செய்ய அனுப்பினான். தன் பலம் ஒடுங்கினதையும் அஸ்திரங்களாலும் ஆயுதங்களாலும் என்னை ஜயிக்க முடியாதென்றதையும் கண்டு, அந்த ராக்ஷஸன் அதிவேகமாய் என்மேல் பிரஹ்மாஸ்திரத்தை பிரயோகம் செய்து என்னைக் கட்டினான்.

பிறகு ராக்ஷஸர்கள் என்னைக் கயிறுகளால் கட்டி ராவணனிடத்தில் கொண்டு போனார்கள். அவன் என்னைப் பார்த்து நான் லங்கைக்கு வந்ததற்கும் ராக்ஷஸர்களைக் கொன்றதற்கும் காரணத்தைக் கேட்டான். 'ஸீதையின் நிமித்தமாய் இப்படிச் செய்தேன்' என்று சொன்னேன். 'நான் வாயுவின் புத்திரன்; என் பெயர் ஹனுமான். ஸீதையைப் பார்க்க விரும்பி தங்களுடைய அரண்மனைக்கு வந்தேன். நான் வானரன்; ஸுக்ரீவனுக்கு மந்திரி; ராமனால் அனுப்பப்பட்ட தூதன்; தங்களிடத்திற்கு வந்தேன். மஹா தேஜஸ்வியான ஸுக்ரீவன் தங்களை க்ஷேமம்விசாரித்து, புருஷார்த்தங்களுக்கு ஒத்ததும் க்ஷேமகரமுமான பின்வரும் ஸமாசாரத்தைச் சொல்லி அனுப்பியிருக்கிறார். 'ரிசியமூகபர்வதத்தில் நான் வஸித்துக் கொண்டிருக்கையில் ரணதீரனான ராகவன் எனக்கு மித்திரனாய், 'என் பாரியையை ராக்ஷஸன் கொண்டு போய் விட்டான்; அவளைத் திரும்பி அடையும் விஷயத்தில் நீ எனக்கு ஸஹாயம் செய்ய வேண்டியது" என்று கேட்டார். 'அப்படியானால் என் சத்துருவான வாலியைக் கொல்வதில் தாங்களும் ஸஹாயம் செய்ய வேண்டும்' என்றேன். பிறகு ராமலக்ஷ்மணர்கள் அக்னிஸாக்ஷியாய் என்னுடன் ஸ்நேகம் செய்தார்கள். ராமன் வாலியை யுத்தத்தில் ஓரே பாணத்தால் கொன்று, என்னை வானரவீரர்களுக்கு அரசனாக அபிஷேகம் செய்தார். அவருக்கு ஸகல விதத்தாலும் நான் ஸஹாயம் செய்ய வேண்டியது. ஆகையால் என் தூதனை உன்னிடத்திற்கு அனுப்பி இருக்கிறேன். உடனே ஸீதையைக் கொண்டுவந்து விடு. இல்லாவிட்டால் வானர வீரர்கள் உன் ஸைன்யங்களை அழித்து விடுவார்கள். தேவர்கள் அடிக்கடி ஸஹாயத்திற்காகப் பிரார்த்தித்து அழைத்துக் கொண்டு போகும் வானரர்களுடைய மஹிமை யாருக்குத்தான் தெரியாது' என்று ஸுக்ரீவ மஹாராஜா தங்களுக்குச் சொல்லி அனுப்பியிருக்கிறார்' என்றேன். அதைக் கேட்டு ராவணன் கோபத்தால் மெய்மறந்துஎன்னை எரித்துவிடுபவன்போல் பார்த்தான். பிறகு அந்தத் துஷ்டன் என் மஹிமையை அறியாமல், 'இவனைக் கொன்று விடுங்கள்' என்று ஆக்ஞாபித்தான். அப்பொழுது அவனுக்குத் தம்பியான விபீஷணன், மஹாபுத்திமான், ராவணனைப் பார்த்து, 'அண்ணா! இது நியாயமல்ல; இப்படிச் செய்யக் கூடாது; இது ராஜநீதிக்கு விரோதம். தூதர்களைக் கொல்லக் கூடாதென்று சாஸ்திரங்கள் விதிக்கின்றன. யஜமானனுடைய க்ஷேமத்தைக் கோருகிற தூதன் தன்னிடத்தில் ஒப்புவிக்கப்பட்ட ஸமாசாரத்தைச் சொல்ல வேண்டியதல்லவா? அவன் விசேஷ அபராதம் செய்தாலும் அவனுடைய ரூபத்தைக் கெடுக்க வேண்டுமே தவிர கொல்லக் கூடாதென்பது நீதிசாஸ்திரம்' என்று பிரார்த்தித்தான். இப்படி எனக்காகப்பரிந்து பேசின வீபீஷணனுடைய வார்த்தையை அங்கீகரித்து ராவணன், 'இந்தக் குரங்கின் வாலைக் கொளுத்தி விடுங்கள்' என்று கட்டளையிட்டான்.

உடனே அங்கிருந்த குரூர ராக்ஷஸர்கள் என்னைக் கழிகளாலும் முஷ்டிகளாலும் அடித்து, என் வாலில் சணல் கயிறுகளையும் வஸ்திரங்களையும் சுற்றித் தைலத்தில் நனைத்து நெருப்பு வைத்து பிறகு என்னை ராஜமார்க்கங்களிலும் மற்ற வீதிகளிலும் கட்டி இழுத்துக் கொண்டு ஜயகோஷத்துடன் சென்றார்கள். நான் என் பெரிய ரூபத்தைச் சுருக்கிக் கட்டுகளிலிருந்து விடுவித்துக் கொண்டு, பழைய ரூபத்துடன் இருப்புலக்கையால் அவர்களைக் கொன்றேன். பிறகு அந்த நகரத் துவாரத்திற்குச் சென்று, பிரளய காலாக்னி பிராணிகளைக் கொளுத்துவதுபோல் வாலிலிருந்த நெருப்பால் அமரிக்கையாய் லங்கை முழுவதையும் கொளுத்தி விட்டேன். ஓரிடம் பாக்கியில்லாமல் வெந்து சாம்பலாயிற்று. உடனே, 'ஐயோ! புத்தியில்லாமல் லங்கையில் நெருப்பு வைத்து ஸீதையையும் கொளுத்தி ராகவனுடைய முக்கிய காரியத்தைக் கெடுத்து விட்டேனே' என்று சொல்ல முடியாத துக்கத்தை அனுபவிக்கையில், சாரணர்கள், "லங்கையில்

ஓரிடம் பாக்கியில்லாமல் வெந்துபோயும் ஸீதைஅபாயமில்லாமலிருப்பது என்ன ஆச்சரியம்' என்று சொல்லிக்கொள்வதைக் கேட்டேன். மேலும் என் வாலில் எரியும் நெருப்பு பனிபோல் குளிர்ந்திருந்தது; என் மனத்தில் கொஞ்சம் கூட துக்கமில்லை; காற்று பரிமளமாய் வீசிற்று; கண் சுபமாய்த் துடித்தது. மகரிஷிகளின் வார்த்தைகள் வீண் போகாதாகையால் ஸீதைக்கு அபாயமில்லை என்று ஸந்தோஷித்து, மறுபடியும் அவளைத் தரிசித்து உத்திரவு பெற்றுக் கொண்டு, அரிஷ்டமென்ற பர்வதத்தில் ஏறி உங்களைப் பார்க்க ஆசை கொண்டு ஆகாசத்தில் கிளம்பினேன். வாயு, சந்திரன், ஸூரியன், ஸித்த, கந்தர்வ கணங்கள் ஸஞ்சரிக்கும் ஆகாச மார்க்கமாய் இங்கே வந்து உங்களைக் கண்டேன். ராகவனுடைய மஹிமையாலும் உங்களுடைய பிரபாவத்தாலும் ஸுக்ரீவன் கட்டளையிட்ட ஸகல காரியங்களையும் என்னால் கூடிய வரையில் செய்து முடித்தேன். மேல் நடக்க வேண்டியவைகளை நீங்களே செய்து முடிக்க வேண்டியது.

ஏதத் ஸர்வம் மயா தத்ர யதாவ து³பபாதி³தம் |
அத்ர யந் ந க்ருதம் ஶேஷம் தத்ஸர்வம் க்ரியதாமிதி ‖ (159)

---

## ஸர்க்கம் 59

## மாருதி வானரர்களுடன் ஆலோசித்தது

ஏததா³க்²யாய தத்ஸர்வம் ஹநுமாந் மாருதாத்மஜ: |
பூ⁴ய: ஸமுபசக்ராம வசநம் வக்து முத்தரம் ‖ (1)

**நா**மெல்லோரும் இப்பொழுதே லங்கைக்குச்சென்று ராவணனை ஜயித்து ஸீதையுடன் ராமலக்ஷ்மணர்களைப் பார்ப்போம் என்று நீங்கள் சொல்லலாம். ஆனால், ராகவனுடைய பிரயத்தனங்களும் ஸுக்ரீவனுடைய உத்ஸாகமும் ஸீதையின் பதிவிரதா மஹிமையால் நிறைவேறிற்றே தவிர வேறல்ல. அவளிடத்தில் என்மனம் எல்லையற்ற பக்தியுடன் இருக்கிறது. 'அப்படிப்பட்ட பிரபாவத்தையுடைய ஸீதையைத்தொட்டெடுத்தும் ராவணன்இன்னும் எப்படிப்பிழைத்திருக்கிறான்' என்றால், அந்த ராக்ஷஸ ராஜன் கடுந்தவம் செய்து அளவற்ற பலத்தையும் பராக்கிரமத்தையும் தேஜஸையும் பெற்றிருக்கிறான். ஸகல லோகங்களையும் ரக்ஷிக்கக் கூடியவன்; கோபம் கொண்டால் அவைகளை நாசம் செய்யக் கூடியவனாகையால் ஸீதையைத் தொட்டும் அவன் சாம்பலாகவில்லை. ஆனால், ஸீதையின் பதிவிரதாமஹிமை பலமற்றதென்று எண்ண வேண்டாம். ஸீதை கொஞ்சம் கோபித்தால் பிரளய காலாக்னியும் அதற்கு ஈடோ? நாயகன் இருக்கும்பொழுது அவருடைய உத்திரவில்லாமல் தான்ஒன்றையும் செய்யக் கூடாது. ராவணனை ஜயித்துக் கொன்றானென்ற கீர்த்தி தன் பர்த்தாவிற்குக் கிடைக்க வேண்டும். அதைக் கெடுக்கக்கூடாதென்று ஸகல கஷ்டங்களையும் பொறுத்திருப்பதே தவிர வேறென்ன?



நடந்த காரியங்களை தங்களுக்குத் தெரிவித்தேன். ஜாம்பவானும் மற்றப் பெரியோர்களும் நாம் ஸீதையுடன் ராமலக்ஷ்மணர்களைப் பார்க்க வேண்டியதென்று முடிவு செய்தால் எனக்கு ஆக்ஷேபமில்லை. நானொருவனே லங்கையையும் ராவணனையும் ஸகல ராக்ஷஸர்களையும் ஒரு க்ஷணத்தில் நாசம் செய்வேன். நீங்கள் சூரர்கள்; பலசாலிகள்; தைர்யவான்கள்; ஆயுதப்பிரயோகங்களில் நிபுணர்கள்; ஜயிக்க நிச்சயித்தவர்கள்; நானும் உங்களுடன் சேர்ந்தால் கேட்க வேண்டுமோ? நானொருவனே ராவணனையும் அவனுடைய ஸஹோதரர்களையும் புத்திரர்களையும் ஸேவகர்களையும் ஸைன்யங்களையும் விளையாட்டாய்க் கொல்ல முடியும். இந்திரஜித் பிரயோகிக்கும் பிறர் கண்ணெடுத்துப் பார்க்கமுடியாத பிரஹ்மாஸ்திரம் இந்திராஸ்திரம் வாயவ்யாஸ்திரம் வருணாஸ்திரம் முதலியவைகளைப் பொடியாக்குவேன். என் பராக்கிரமத்தால் இந்திரஜித்தை மயக்குவேன். நான் இடைவிடாமல் கல்மாரி பொழிய ஆரம்பித்தால் தேவர்களையும் கொல்வேன். ராக்ஷஸர்களைப் பற்றிச் சொல்லவும் வேண்டுமோ? நீங்கள் உத்திரவு கொடுத்தால் அவர்களைக் கொல்வது எனக்கு ஒரு விளையாட்டு. ஸமுத்திரம் கரைபுரண்டாலும் மேருமலை அசைந்தாலும் ஜாம்பவானை யுத்தத்தில் அசைக்கக்கூடிய சத்ருஸைன்யம் உண்டோ? ஸமஸ்த ராக்ஷஸர்களுக்குள் சிரேஷ்டமான வீரர்களை வாலி புத்திரன் ஒருவனே நாசம் செய்ய முடியாதா? பனஸன் நீலன் என்றவர்களுடைய துடைகளின் வேகத்தால் மேருமலையும் பிளவுபடுமே; மந்தரகிரியும் பொடியாகுமே; ராக்ஷஸர்கள் எம்மாத்திரம்? மைந்தன் த்விவிதன் என்றவர்களோடு யுத்தம் செய்யக்கூடிய தேவ, அஸுர, யக்ஷ, கந்தர்வ, உரக, பக்ஷிகணங்களைக் காட்டுங்கள். இவர்கள் அச்வினி புத்திரர்கள். அளவற்றபிரபாவமுடையவர்கள். இவர்களுடன் ஸமமாய் யுத்தம் செய்யக் கூடியவர்களும் உண்டோ? பிரஹ்மாவின் வரத்தால் அளவற்ற பலமடைந்தவர்கள்; அமிருத பானம் செய்தவர்கள். முன்பு அச்வினி தேவதைகளை ஸந்தோஷப் படுத்துவதற்காக பிரஹ்மா, 'இவர்கள்ஒருவராலும் மரணமடையார்கள்' என்ற வரத்தைக் கொடுத்தார். அந்தக் காரணத்தால் கொழுப்படைந்து, பெரிய ஸைன்யத்தை நாசம் செய்து தேவர்கள் வைத்திருந்த அமிருதத்தைப் பானம் செய்தார்கள். நீங்கள் எல்லோரும் இருங்கள். இவ்விருவரே கோபம் கொண்டால் லங்கையையும் அதிலுள்ள ஸமஸ்த பிராணிகளையும் நாசம் செய்வார்களே! நான் இது வரையிலுமே லங்கா தேவதையை ஜயித்து, அந்த நகரத்தைக் கொளுத்திச் சாம்பலாக்கி, ராஜமார்க்கங்களில் என் பெயரையும் ராம லக்ஷ்மணர்கள் பெயரையும் பிரஸித்தப்படுத்தினேன். 'ராகவனுக்கும் லக்ஷ்மணனுக்கும் அவர்களால் காப்பாற்றப்பட்ட...

ஸுக்ரீவனுக்கும் பலத்திலும், பராக்கிரமத்திலும் நிகருண்டோ?' என்று கர்ஜித்தேன். 'நான் கோஸலாதிபதியான ரகுவீரனுடைய தூதன் ; என் பெயர் ஹனுமான்; நான் வாயுவின் புத்திரன்'' என்று எல்லோரும் கேட்கும்படி கோஷித்தேன்.

ராவணனுடைய அசோகவனத்தில் சிம்சுபா விருக்ஷத்தின் அடியில் ஜனகராஜபுத்திரி தீனமாக உட்கார்ந்திருக்கிறாள். மேகங்களால் சூழப்பட்ட சந்திரனைப்போல் காந்தியற்று, ராக்ஷஸிகளால் சூழப்பட்டுச் சோக ஸாகரத்தில் மூழ்கி, வெறுந்தரையில் உட்கார்ந்திருக்கிறாள். பலத்தால் கொழுப்படைந்த ராவணனைக் கொஞ்சமாவது லக்ஷ்யம் செய்யவில்லை. ரூபத்தில் நிகரில்லாத அந்தப் பதிவிரதை ராவணனால் சிறையில் வைக்கப்பட்டு, ஜனகராஜ புத்திரியாயும் ஸகல மங்களங்களுக்கும் வாஸஸ்தானமாயும் இருந்தும், இந்திரனைப் பிரிந்த இந்திராணியைப்போல் தன் பர்த்தாவையே தியானித்துக் கொண்டு, அவரிடத்திலேயே ஸகல ஆசைகளையும் வைத்து, ஒற்றை வஸ்திரத்துடன் தேகமெங்கும் அழுக்கடைந்து சோகத்தால் வாடி மெலிந்து, 'என் நாதனுக்கு எப்பொழுது ஜயமுண்டாகும்? எப்பொழுது ராவணனை ஸம்ஹரிப்பார்? எப்பொழுது என் துக்கம் தீரும்?' என்று ஆவலுடன் எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறாள். அசோகவனத்தில் கோரமான ராக்ஷஸிகள் அவளை அடிக்கடி மிரட்டுவதைப் பார்த்தேன். ஒரே பின்னலுடன் ஸந்தோஷமற்று, ராமனிடத்தில் நாடிய மனமுடையவளாய், வர்ணம்மாறி, தரையில்படுத்துக் கொண்டு, ஹேமந்த ருதுவில் வாடி விகாரமடைந்த தாமரையோடையைப்போல் காணப்படுகிறாள். ராவணன் எவ்வளவு பிரார்த்தித்தும் அவனிடத்தில் கொஞ்சம் கூட மனம் வைக்காமல் உயிரை விட நிச்சயித்து, மான் குட்டியைப்போல் மிரண்ட கண்களுடன் நான்கு புறத்திலும் பார்த்துக் கொண்டிருப்பதை நான் கண்டேன். வெகு கஷ்டப்பட்டு அவளுக்கு என்னிடத்தில் நம்பிக்கை வரும்படிசெய்து, அவளுடன் பேசி ஸகல விருத்தாந்தங்களையும் சொன்னேன். ராகவனுக்கும் ஸுக்ரீவனுக்கும்ஏற்பட்ட ஸ்நேகத்தைக் கேள்விப்பட்டு மிகவும் ஸந்தோஷித்தாள். ராமனிடத்தில் விசேஷ பக்தி வைத்திருப்பதாலும், தன் பதிவிரதா தர்மத்திற்குக் குறைவு வருமென்பதாலும் மஹாபராதம் செய்த ராவணனைக் கொல்லாமலிருக்கிறாள். அது ராவணன் செய்த புண்ணியமே. ஆகையால் ராகவனே அவனைக் கொல்லக்கடவர். ஸீதை கேவலம் அதற்கு நிமித்தமே. ராவணனுடைய பராக்கிரமத்தையும் தவத்தையும் வரங்களையும் யோசித்தால், ஸீதையைக் காரணமாகக் கொண்டு ராகவன் அவனைக் கொல்ல வேண்டும். ஸ்வபாவத்திலேயே மெல்லிய தேகமுடைய ஸீதை ராமனைப் பிரிந்ததால், பிரதமையில் அத்யயனம் செய்பவனுடைய வித்தையைப்போல் இளைத்திருக்கிறாள். இப்படி ஸீதை படும் கஷ்டங்களை என்னால் கூடியவரையில் தெரிவித்தேன். இதற்கு எப்படிப் பதில் செய்யவேண்டுமோ அதைக் குறைவில்லாமல் செய்வது உங்களைச் சேர்ந்தது'' என்றார்.

ஏவமாஸ்தே மஹாபா4கா3 ஸீதா ஶோகபராயணா |
யத3த்ர ப்ரதிகர்தவ்யம் தத்ஸர்வ முபபத்3யதாம் ‖ (35)

---



## ஸர்க்கம் 60

# அங்கதனுடைய யோசனை

தஸ்ய தத்3 வசநம் ஶ்ருத்வா வாலிஸூநு ரபா4ஷத |
அயுக்தம் து விநா தே3வீம் த்3ருஷ்டவத்3பி4ஶ்ச வாநரா: ‖ (1)

அதைக் கேட்டு அங்கதன், "ஹனுமான் ஸீதையைக் கண்டுபிடித்த பிறகு, அவளில்லாமல் நாம் ராமனிடத்தில் போவது யுக்தமல்ல. ஸீதையைக் கண்டோம், அழைத்து வரவில்லை என்று பராக்கிரமத்தில் பிரஸித்தி பெற்ற நீங்கள் சொல்வது யுக்தமல்ல. தாண்டுவதிலும் பராக்கிரமத்திலும் தேவாஸுரர்களிலாவது எந்த லோகங்களிலாவது நமக்கு நிகருண்டோ? ராக்ஷஸ வீரர்கள் ஹனுமானால் நாசமடைந்த பிறகு வேறென்ன செய்ய வேண்டியிருக்கிறது? ஜானகியை அழைத்துக் கொண்டே போவோம்'' என்றான். அப்பொழுது விஷயங்களை நன்றாக அறிந்த ஜாம்பவான் அங்கதனைப் பார்த்து பரமப் பிரீதியுடன், "குழந்தாய்! நீ சொல்லும் யோசனை யுக்தம் தான். ஆனால் ராகவனுடைய அபிப்பிராயத்தை ஒத்து அவர் உத்தேசித்த காரியம் கெடாமல் நடக்க வேண்டியதல்லவா?'' என்றார்.

ந தாவதே3ஷா மதிரக்ஷமா நோ
யத2ா ப4வாந் பஶ்யதி ராஜபுத்ர |
யதா2து ராமஸ்ய மதிர் நிவிஷ்டா
ததா2 ப4வாந் பஶ்யது கார்யஸித்3தி4ம் ‖ (15)

---

## ஸர்க்கம் 61

# வானரர்கள் மதுவனத்தில் பிரவேசித்தது

ததோ ஜாம்ப3வதோ வாக்ய மக்3ருஹ்ணந்த வநௌகஸ: |
அங்க3த3ப்ரமுகா2 வீரா ஹநூமாம்ஶ்ச மஹாகபி: ‖ (1)

அங்கதனும் மற்ற வானரர்களும் ஹனுமானும், ஜாம்பவானுடைய வார்த்தையை யுக்தமென்று அங்கீகரித்தார்கள். பிறகு ஸகல வானரர்களும் ஹனுமானை முன்னிட்டுக் கொண்டு வெகு ஸந்தோஷத்துடன் மஹேந்திரபர்வதத்திலிருந்து கிளம்பி ஆகாசமார்க்கமாய்ச் சென்றார்கள். பெரிய சரீரங்களுடன் அளவற்ற பலத்துடனும் மேருமந்தரமென்ற பர்வதங்களைப் போலும் மதயானைகளைப் போலும் ஆகாசத்தை மறைத்துக் கொண்டு, பலத்தாலும் தைரியத்

தாலும் வேகத்தாலும் ஸமஸ்த பிராணிகளால் கொண்டாடப் பட்ட மாருதியைத்தங்களுடைய பிரியமான பார்வைகளால் சுமந்து போவதுபோல் சென்றார்கள். ராகவனுக்கு ஜயத்தையும் கீர்த்தியை யும் செய்ய நிச்சயித்தவர்கள்; தாங்கள் உத்தேசித்த பிரயோஜனம் கைகூடினதால் பெருமை கொண்டவர்கள்; ராகவனிடத்தில் ஸந்தோஷ ஸமாசாரத்தைச் சொல்ல ஆவல் கொண்டவர்கள்; ராக்ஷ ஸர்களுடன் எப்பொழுது யுத்தம் நேருமென்று கைகளைத் தீட்டிக் கொண்டிருப்பவர்கள்; ராகவன் ஸுக்ரீவனுக்குச் செய்த உபகாரத் திற்கு பிரத்யுபகாரம் செய்ய நிச்சயித்தவர்கள்; விசாலமான மனத்தை யுடையவர்கள்.

வெகுதூரம் சென்று, நந்தனமென்ற இந்திரனுடைய வனத் திற்கு ஸமமாய், மரங்களாலும் கொடிகளாலும் விளங்கும் ஒரு வனத்திற்கு வந்தார்கள். அது ஸகலப் பிராணிகளும் கண்டு ஆசைப் படக்கூடியது; எவரும் நெருங்க முடியாதது; ஸுக்ரீவனால் நன்றாகக் காப்பாற்றப்பட்டது; அந்த மதுவனத்தை ஸுக்ரீவனுக்குமாமனான ததிமுகனென்ற வானரவீரன் வெகுஜாக்கிரதையாய் எப்பொழுதும் ரக்ஷித்து வந்தான். அதைக் கண்டு வானரக் கூட்டங்கள் மிகுந்த உத்ஸாகத்தையடைந்து, "இங்கிருக்கும் தேனைக் குடிக்கும்படி எங்களுக்கு உத்திரவு செய்ய வேண்டும்" என்று அங்கதனை பிரார்த் தித்தார்கள். அவனும் ஜாம்பவான் முதலிய பெரியோர்களைக் கலந்து யோசித்து, "நீங்கள் இஷ்டப்படி இங்கிருக்கும் தேனைக்குடியுங்கள்" என்றான். அதைக் கேட்ட வானரர்கள் அங்கதனால் அனுமதி கொடுத்து ஏவப்பட்டதால் குதித்தார்கள்; சிலர் பாடினார்கள்; சிலர் ஆடினார்கள்; சிலர் விழுந்தார்கள்; சிலர் நமஸ்கரித்தார்கள்; சிலர் திரிந்தார்கள்; சிலர் சிரித்தார்கள்; சிலர் தாவினார்கள்; சிலர் பிதற்றினார்கள். சிலர் ஒருவரையொருவர் கட்டிக் கொண்டார்கள்: சிலர் ஒருவர்மேலொருவர் பாய்ந்தார்கள்; சிலர் அந்யோந்யமாய்ப் பேசிக் கொண்டிருந்தார்கள்; சிலர் ஒருவரோடொருவர் விளையாடிக் கொண்டிருந்தார்கள்; சிலர் மரத்திற்கு மரம் தாவினார்கள்; சிலர் மரங்களின் நுனியிலிருந்து பூமியில் விழுந்தார்கள்; சிலர் பூமியி லிருந்து வெகுவேகமாய் மரங்களின் நுனியில் தாவினார்கள். ஒருவன் பாடிக் கொண்டிருக்கையில் வேறொருவன் சிரித்துக் கொண்டு அவனி டத்தில்போனான்; சிரித்துக்கொண்டிருப்பவனிடத்தில் வேறொருவன் அழுது கொண்டு போனான்; அவனிடத்தில் வேறொருவன் அதிகாரம் செய்துகொண்டு போனான்; அவனைப் பார்த்து வேறொருவன் இறைந் தான். தேனைக் குடித்துக் கொழுப்படைந்து தேகம் தெரியாமல் அந்த வானர ஸைன்யம் வனத்தில்பரவிற்று. அதில் மதுபானத்தால் மயங்காதவனாவது திருப்தியடையாதவனாவது கிடையாது. அவர் கள் மரங்களை முறித்து இலைகளை உதிர்த்து புஷ்பங்களைப் பறித்து மதுவைக் குடித்து வனத்தை அழிப்பதை ததிமுகன் பார்த்துக் கோபம் கொண்டு தடுத்தான். பெரிய வானரவீரர்கள் அவனை



மிரட்ட, மஹாப் பிரதாபமுள்ளவனாகையால் அந்த வனத்தை ரக்ஷிக்க விரும்பிச் சிலரை நல்ல வார்த்தையாலும் சிலரைக் கடும் சொற்களாலும் சிலரைக் கலகத்தாலும் சிலரை அடிப்பதாலும் தடுத்துப் பார்த்தான். அதைக் கண்டு வானரர்கள் பலத்தாலும் கொழுப்பாலும் குடியாலும் ஸுக்ரீவனிடத்திலுள்ள பயத்தை மறந்து ததிமுகனைச் சூழ்ந்து கொண்டு அவன் யஜமானனுடைய மாமன் என்பதையும் அவனை எதிர்ப்பது குற்றமென்பதையும் லக்ஷ்யம் செய்யாமல் அவனைத்திட்டி அவமானப்படுத்தி, அங்குமிங் கும் இழுத்து, நகங்களால் கீறிப் பற்களால் கடித்துக் கைகளால் அறைந்து கால்களால் உதைத்து, அந்த மஹாவனத்தைப் பாழாக் கினார்கள்.

நகை$^{2}$ஸ்துத$^{3}$ந்தோ த$^{3}$ஶநைர் த$^{3}$ஶந்த:
தலைஶ்ச பாதை$^{3}$ஶ்ச ஸமாபயந்த: |
மதா$^{3}$த் கபிம் தம் கபய: ஸமக்$^{3}$ரா:
மஹாவநம் நிர்விஷயம் ச சக்ரு: ‖ (25)

---

## ஸர்க்கம் 62

# வானரர்கள் மதுவனத்தை அழித்தது

தாநுவாச ஹரிஶ்ரேஷ்டோ$^{2}$ ஹநுமாந் வாநரர்ஷப$^{4}$: |
அவ்யக்$^{3}$ர மநஸோ யூயம் மது$^{4}$ ஸேவத வாநரா: ‖ (1)

அப்பொழுது ஹனுமான், "வானரர்களே! நீங்கள் கவலைப் படாமல் யதேச்சையாய்த் தேனைக் குடியுங்கள். உங்களைத் தடுப்ப வர்களை நான் பார்த்துக் கொள்கிறேன்" என்றார். பிறகு அங்க தன் வெகு ஸந்தோஷத்துடன், "ஸ்நேகிதர்களே! இஷ்டப்படி தேனைக் குடியுங்கள். நமது காரியத்தை நிறைவேற்றி வந்த மாருதி சொல்லும் வார்த்தை அயுக்தமாயிருந்தாலும் அதை நாம் கட்டாயம் நிறைவேற்ற வேண்டியது. இந்த விஷயத்தில் கேட்கவேண்டுமோ?" என்றான்.

வானரர்களெல்லோரும் அந்த வார்த்தையை "நல்லது நல்லது" என்று கொண்டாடி நதீப்பிரவாகத்தைப்போல் சீக்கிரமாய் மது வனத்தில் பிரவேசித்தார்கள். அவர்கள் ஹனுமானைப் பார்த்த தாலும் ஸீதையின் க்ஷேமத்தைக் கேட்டதாலும் அங்கதன் உத்திரவு கொடுத்ததாலும் இறுமாப்படைந்து, அங்கிருந்த காவற்காரர்களை லக்ஷ்யம் செய்யாமல் பழங்களைப் பறித்துத் தின்று தேனைக் குடித் தார்கள். காவலர்கள் தடுத்த பொழுது எல்லோரும் ஒன்று சேர்ந்து அவர்களை அடித்துத் துரத்தினார்கள். சிலர் தொன்னைகளில் தேனைக் குடித்தார்கள். சிலர் தேனை வாரி எறிந்தார்கள்; சிலர் தேனைக் குடித்துத் தேனடைகளைப்பிழிந்து விட்டெறிந்தார்கள்; சிலர் தேன் மெழுகை மற்றவர்மேல் விட்டெறிந்தார்கள்; சிலர் தேனைக் குடித்து

மயங்கி மரங்களினடியில் கிளைகளைப் பிடித்துக் கொண்டு தரையில் இலைகளைப் பரப்பிப் படுத்துத் தூங்கினார்கள். சிலர் மதுபானத்தால் கொழுத்துப் பைத்தியம் பிடித்தவர்களைப்போல் ஒருவர்க்கொருவர் ஸந்தோஷத்தால் இடித்துக் கொண்டார்கள்; சிலர் போட்டி போட்டுக் கொண்டு குதித்தார்கள்; சிலர் ஸிம்ஹநாதம் செய்தார்கள்; சிலர் ஸந்தோஷம் தாங்காதவர்கள்போல் கூவினார்கள். சிலர் ஒன்றும் தோன்றாமல் பூமியில் படுத்துத் தூங்கினார்கள்; சிலர் ஏதோ ஒரு காரியத்தைச் செய்துவிட்டுச் சிரித்தார்கள்; அதைப் பார்த்துச் சிலர் வேறு காரியங்களைச் செய்தார்கள்; சிலர் ஒரு காரியத்தைச் செய்து விட்டு இதை நான் செய்தேனென்று சொல்லிக் கொண்டார்கள்; சிலர் இதை இப்படிச் செய்யலாமென்று நிச்சயித்தார்கள்.

அந்த வனத்தில் ததிமுகனால் நியமிக்கப்பட்ட காவற்காரர்கள் வானரர்களால் மிரட்டப்பட்டு, மூலைக்கு மூலை ஓடித் ததிமுகனிடத்திற் சென்று, "ஸ்வாமீ! வானரர்கள் நமது மதுவனத்திற் புகுந்து அழிக்கிறார்கள். நாங்கள் கூடியவரையில் தடுத்தோம். எங்களை அடித்துத் துரத்திக் கால்களைப் பிடித்திழுத்து ஆகாசத்தில் விட்டெறிந்தார்கள். ஹனுமானுடைய உத்திரவால் இப்படிச்செய்கிறார்கள்" என்று முறையிட்டார்கள். அதைக் கேட்டுத் ததிமுகன் கடுங்கோபமடைந்து, காவற்காரர்களை ஸமாதானம் செய்து, "என்னுடன் வாருங்கள். நமது வனத்தை அழிக்கும் அந்தத் துஷ்டர்களை நமது ஸைன்யத்தைக்கொண்டு அடித்துத் துரத்துவோம்" என்றான். பிறகு ததிமுகனும் காவற்காரர்களும் மதுவனத்தில் பிரவேசித்து மரங்களையும் கற்களையும் பாறைகளையும் எடுத்துக்கொண்டு, ததிமுகனுடைய தைரியத்தால் தேனைக் குடித்துக் கொண்டிருக்கும் வானரர்கள் இருக்குமிடத்திற்குச் சென்றார்கள். ஹனுமானும் மற்ற வானரர்களும், ததிமுகன் கோபத்துடன் வருவதைக் கண்டு எதிர் சென்றார்கள். மஹாபலவானான ததிமுகன் பெரிய விருக்ஷத்தைப்பிடுங்கிக் கொண்டு தங்களை எதிர்ப்பதைக் கண்டு, அங்கதன் குடிமயக்கத்தால் ஒன்றும் தெரியாமல், தனக்குப் பூஜ்யனான ததிமுகனைக் கைகளால் அறைந்து கீழே தள்ளி தேய்த்துப் பிண்டமாக்கினான். ததிமுகன் கைகள் முறிந்து, கால்கள் ஒடிந்து, ரத்தத்தால் நனைந்து, கொஞ்ச நேரம் பிரக்ஞையற்றுக் கிடந்தான். பிறகு சீக்கிரமாய் மூர்ச்சை தெளிந்து, கோபம் கொண்டு, தேனைக் குடித்து மயங்கியிருக்கும் வானரர்களைத் தடியால் அடித்து விலக்கினான். பிறகு கஷ்டப்பட்டு அவர்களிடத்திலிருந்து தன்னை விடுவித்துக் கொண்டு, தனியாய் ஓரிடத்திற்போய்த் தன் வேலைக்காரர்களைப் பார்த்து, இந்தத் துஷ்டர்கள் இங்கிருக்கட்டும். நமது பிரபுவான ஸுக்ரீவ மஹாராஜாவும் ராமனும் இருக்குமிடத்திற்குப் போவோம். அங்கதனிடத்தில் ஸகல தோஷத்தையும் சுமத்துகிறேன். உடனே ஸுக்ரீவன் கோபம் கொண்டு ஸகல வானரர்களையும் கொல்லும்படி ஆக்ஞாபிப்பான். இந்த மதுவனம் தேவர்களும் அண்டக் கூடாதது; ஸுக்ரீவனுக்கு மிகவும் பிரியமானது; முன்னோர்களுக்குக் கிடைத்தது; மிகவும் அழகானது. தேனைக் குடித்து மதம் கொண்ட இந்த வானர வீரர்களையும் அவர்களைச் சேர்ந்தவர்களையும் நிச்சயமாய்க் கொல்வான். அரசனுடைய ஆக்ஞையைக் கடந்த இவர்களைக் கொல்ல வேண்டியதே. நம்மை இப்படி அவமானம் செய்தது வீண்போகுமா?" என்று அங்கிருந்து அதிவேகமாய்க் காவற்காரர்களுடன் கிளம்பி ஸூரியபுத்திரனான ஸுக்ரீவன் இருக்குமிடத்திற்கு கண் மூடித் திறப்பதற்குள் வந்து சேர்ந்தான். அங்கே ராமலக்ஷ்மணர்களையும் ஸுக்ரீவனையும் கண்டு ஆகாசத்திலிருந்து இறங்கித் தன் ஸேவகர்களுடன் தலைமேல் கைகூப்பி, வெகு தீனமாய் ஸுக்ரீவனுடைய பாதங்களில் வணங்கினான்.

ஸ தீ$^{3}$நவத$^{3}$நோ பூ$^{4}$த்வா க்ருத்வா ஶிரஸி சாஞ்ஜலிம் |
ஸு$^{3}$க்$^{3}$ரீவஸ்ய ஶுபௌ$^{4}$ மூர்த்$^{4}$நா சரணௌ ப்ரத்யபீட$^{3}$யத் || (40)

---



## ஸர்க்கம் 63

## ததிமுகன் முறையிட்டது

ததோ மூர்த்$^{4}$நா நிபதிதம் வாநரம் வாநரர்ஷப$^{4}$: |
த்$^{3}$ருஷ்ட்வை வோத்$^{3}$விக்$^{3}$நஹ்ருத$^{3}$யோ வாக்யமேத து$^{3}$வாச ஹ || (1)

அதைக் கண்டு ஸுக்ரீவன் பயந்து, என்ன அனர்த்தம் நேர்ந்ததோ என்று கவலை கொண்டு, "வானரவீரரே! எழுந்திரும், எழுந்திரும். எதற்கும் பயப்படாத நீர் என் பாதங்களில் விழுந்தது ஆச்சரியமாக இருக்கிறது; நடந்ததைச் சொல்லும். உமது பயத்தை நீக்குகிறேன்" என்றான். மஹாபுத்திமானான ததிமுகன் இப்படி ஸமாதானம் செய்யப்பட்டு எழுந்து, "தங்களுடைய பிதாவான ரிக்ஷரஜஸும் தமையனான வாலியும் தாங்களும் மதுவனத்தைப் பிறர் அனுபவிக்கும்படி விட்டதில்லையல்லவா? அங்கே தங்களைச்சேர்ந்த வானரர்கள் பிரவேசித்து, என் காவற்காரர்கள் தடுத்த பொழுதும் அதனைக் கொஞ்சம் கூட லக்ஷ்யம் செய்யாமல், பழங்களைப்பறித்து தேனைக் குடிக்கிறார்கள்; மிகுதியை விட்டெறிகிறார்கள்; தடுத்தால் வெறித்துப்பார்க்கிறார்கள்; கோபத்தால்கண்கள் சிவந்து இவர்களை வனத்திலிருந்து அடித்துத் துரத்தி விட்டார்கள். சிலரைக் கைகளால் அறைந்து, சிலரை முழங்கால்களால் இடித்து, சிலரை பூமியில் தள்ளி இழுத்து, சிலரைக்காலைப்பிடித்து ஆகாசத்தில் எறிந்து, இப்படி பிரபுவான தாங்கள் இருக்கும் பொழுது எங்களை உபத்திரவித்து தங்களையும் அலக்ஷ்யம் செய்து, மதுவனம் முழுவதையும் தாம் நினைத்தபடியெல்லாம் அனுபவித்து அழிக்கின்றார்கள்" என்று தெரிவித்தான்.

பிறகு லக்ஷ்மணன் ஸுக்ரீவனைப் பார்த்து, "இந்த வானரன் யார்? வனங்களுக்குக் காவற்காரனைப்போல் தோன்றுகிறது. என்ன காரியமாய் இங்கு வந்தான்? வாடின முகத்துடன் என்ன சொல்லு கிறான்?" என்று கேட்டார். அதற்கு ஸுக்ரீவன், "லக்ஷ்மண! தெற்கே அனுப்பப்பட்ட அங்கதன் முதலிய வானரர்கள் என் மது வனத்தில் புகுந்து தம் விருப்பப்படி தேனைக் குடிக்கிறார்களென்று ததிமுகனென்ற இந்த வானரவீரன் சொல்கிறான். உத்தேசித்த காரியத்தை முடிக்காமல் வானரவீரர்கள் மதுவனத்தில் பிரவேசிக்க மாட்டார்கள்; தேனைக் குடிக்க மாட்டார்கள்; வனத்தை அழிக்க மாட்டார்கள். ஆகையால் போன காரியத்தை முடித்துக் கொண்டு வந்திருக்கிறார்கள். ஸீதையைக் கண்டு பிடித்தார்கள் என்பதில் ஸந்தேகமில்லை. மேலும் ஹனுமானே அந்தக்காரியத்தைச்செய்திருக் கிறான். அவனைத் தவிர வேறொருவரும் அதைச் செய்யக்கூடுமென்று நான் எண்ணவில்லை. காரியஸித்தியும் புத்தியும் பிரயத்னமும் பராக் கிரமமும் சாஸ்திரஞானமும் அவனிடத்தில் குடி கொண்டிருக்கின் றன. ஜாம்பவான் மந்திரியாயும் அங்கதன் சேனாநாயகனாகவும் ஹனுமான் ரக்ஷகனாயும் இருக்கையில் காரியம் முடியாமல் வேறுவித மாகுமோ? அவர்கள் அடங்காத ஸந்தோஷத்தால் மதுவனத்தில் பிரவேசித்துத் தேனைக் குடிக்கிறார்கள். ததிமுகனும் காவற்காரர் களும் அவர்களைத் தடுத்த பொழுது முழங்கால்களால் இடித்துத் துரத்தி விட்டார்கள். இந்த ஸந்தோஷ ஸமாசாரத்தை நமக்குச் சொல்ல வானரவீரனான ததிமுகன் இங்கேவந்திருக்கிறான். லக்ஷ்மண! வீரசிரேஷ்ட! ஸீதையைக் கண்டுபிடித்தோம். நிச்சயமாய் நம்பும். ஆகையாலேயே நமது வீரர்கள் மதுவனத்தில் புகுந்து தேனைக் குடித்து உத்ஸவம் கொண்டாடுகிறார்கள். அவ்வாறு இல்லாவிடில் நான் வைத்த கெடுவையும் கடந்து, ஸீதையையும் பார்க்காமல், நான் கண்ணுக்குக் கண்ணாய் வைத்திருக்கும் சிரேஷ்டமான மது வனத்தை, பிரஹ்மாவால் என் பிதாவான ரிக்ஷரஜஸுக்குக் கொடுக் கப்பட்டதை அழிக்க முற்படுவார்களா?" என்றான்.

ஸுக்ரீவனுடைய வார்த்தைகள் அமிருத தாரையைப்போல் ராமலக்ஷ்மணர்களுடைய செவிகளில் விழுந்து ஹிருதயத்திலுள்ள தாபங்களைப் போக்கி அளவற்ற ஆனந்தத்தை உண்டு பண்ணின. பிறகு ஸுக்ரீவன் ததிமுகனை நோக்கி ஸந்தோஷத்துடன், "மாமா! அங்கதனும் மற்ற வானரர்களும் நமது காரியத்தை முடித்து வந்த ஸந்தோஷத்தால் மதுவனத்தில் புகுந்து விளையாடுகிறார்கள். அது எனக்குத் திருப்தியே. ஜயத்துடன் வந்தவர்களால் செய்யப்பட்ட இந்த அபராதத்தை மன்னிக்க வேண்டியது அவசியம். அப்படியே மன்னித்தேன். அனுப்பின காரியத்தை முடித்துக் கொண்டு வந்த ஸிம்ஹம்போல் பராக்கிரமசாலிகளான அந்த வானர வீரர்களையும் அவர்களுக்குப் பூஷணமான ஹனுமானையும் பார்த்து ஸீதையைக் கண்ட விருத்தாந்தத்தைக் கேட்க ராமலக்ஷ்மணர்களும் நானும் ஆவல் கொண்டிருக்கிறோம்" என்றான். பிறகு ஸந்தோஷத்தால் கண் கள் மலர்ந்து தேகமெங்கும் மயிர்க் கூச்சமிட்டுப் பேரானந்தத் தால் பூரித்த ராமலக்ஷ்மணர்களைப் பார்த்துத் தானும் மயிர்க் கூச்ச மடைந்து, தங்களுடைய உத்தேசங்களெல்லாம் கைகூடியதாகக்கருதி எல்லையற்ற ஆனந்தத்தை அடைந்தான்.



ப்ரீதிஸ்பீ3தாக்ஷௌ ஸம்ப்ரஹ்ருஷ்டௌ குமாரௌ
த்3ருஷ்ட்வா ஸித்3தா4ர்தௌ2 வாநராணாம் ச ராஜா |
அங்கை3: ஸம்ஹ்ருஷ்டை: கர்மஸித்3தி4ம் விதி3த்வா
பா3ஹ்வோ ராஸந்நாம் ஸோதிமாத்ரம் நநந்த3 ||

---

## ஸர்க்கம் 64

## வானரர்கள் ஸுக்ரீவனிடத்திற்கு வந்தது

ஸுக்ரீ3வேணைவமுக்தஸ்து ஹ்ருஷ்டோ த3தி4முக2: கபி: |
ராக4வம் லக்ஷ்மணம் சைவ ஸுக்3ரீவம் சாப்4யவாத3யத் || (1)

இப்படி ஸுக்ரீவனால் கட்டளையிடப்பட்ட ததிமுகன் ஸந் தோஷமாய் ராமலக்ஷ்மணர்களையும் மஹாராஜாவையும் நமஸ்கரித் துத் தன் ஸேவகர்களுடன் ஆகாசத்தில் கிளம்பி வெகு சீக்கிரமாய் மதுவனத்திற்கு வந்து குதித்தான். அங்கே வானரர்கள் மயக்கம் தெளிந்து, குடித்த தேன் ஜீர்ணமாகி, தம் நினைவுடன் சிறுநீர் கழித் துக் கொண்டிருந்தனர். ததிமுகன் கைகூப்பி வணக்கமாய் அவர் களிடத்தில் சென்று, ஸந்தோஷத்துடன் அங்கதனைப் பார்த்து, "குழந்தாய்! என் ஸேவகர்கள் கோபத்தாலும் அறியாமையாலும் உங்களைத் தடுத்தார்கள். அதைப் பற்றிக் கோபிக்கக் கூடாது. நீ மஹாபலவான்; யுவராஜா; எங்களுக்குப் பிரபு; முதலில் அறிவின்மை யால் செய்யப்பட்ட அபராதத்தைப் பொறுக்க வேண்டியது. உன் னிடத்தில் யாதொரு குற்றமும் இல்லை. நீங்களெல்லோரும் இங்கே வந்திருக்கிறீர்களென்று உன் சிற்றப்பனிடத்தில் தெரிவித்தேன். நீயும் மற்ற வானர வீரர்களும் இங்கே வந்திருப்பதையும் இந்த மது வனத்தில் பிரவேசித்து இஷ்டப்படி ஸஞ்சரித்ததையும் கேள்விப் பட்டுக் கோபித்துக் கொள்ளவில்லை; மிகவும் ஸந்தோஷப்பட்டான். 'ஸகல வானரர்களையும் அதிசீக்கிரமாய் என்னிடத்தில் அனுப்ப வேண்டியது' என்று எனக்கு உத்திரவு செய்தான்" என்றான்.

ததிமுகனுடைய மதுரமான வார்த்தைகளைக் கேட்டுப் புத்தி மானான அங்கதன், "வானர சிரேஷ்டர்களே! இந்த விருத்தாந்தம் ராமனுக்குத் தெரிந்ததென்று எண்ணுகிறேன். ஆகையால் கட்டளை யிட்ட காரியத்தை முடித்துவிட்டு நாம் இங்கேதங்குவது யுக்தமல்ல. நமது ஸைன்யங்கள் விரும்பியபடி தேனைக் குடித்து களைப்பாற்றிக் கொண்டார்கள். ஆகையால் நமது பிரபு இருக்குமிடத்திற்குப்

போவதைத் தவிர வேறென்ன செய்ய வேண்டியது? நீங்களெல்லோரும் எப்படிச் சொல்லுகிறீர்களோ அப்படிச் செய்கிறேன். உங்களுடைய யோசனையின்படி நடக்க வேண்டியதென்று என் கருத்து. நான் உங்களுக்கு யுவராஜாவாக இருந்தாலும் உங்களைக் கட்டளையிட எனக்கிஷ்டமில்லை. நம்மை அனுப்பின காரியத்தை முடித்து வந்த உங்களை அலக்ஷ்யம் செய்யத் தகுமா? ஆகையால் இருக்க வேண்டுமென்றால் இருப்போம். போவோமென்றால் போவோம்'' என்றான்.

அதைக் கேட்டு ஸகல வானரர்களும் மிகுந்த ஸந்தோஷத்தை அடைந்து, "பிரபோ! தங்களைப்போல் யுவராஜாவாயும் கணக்கில்லாத வானர ஸைன்யங்களுக்கு அதிபதியாயும் இருந்து, இப்படிப்பட்ட விநயமான வார்த்தையைச் சொல்லுகிறவன் தங்களைத் தவிர வேறுண்டோ? இந்த வார்த்தைகள் தங்களுக்கே தகும். மற்ற எவனுக்கும் தகாது. லோகத்தில் பெரும்பாலும் ஜனங்கள் ஐசுவரியத்தால் கொழுப்படைந்து, எல்லாம் நானே என்று எண்ணுகிறார்கள். தங்களிடத்தில் விளங்கும் இந்த விநயம் இனி தங்களுக்குக் கிடைக்கப் போகின்ற மங்களத்தைகாட்டுகிறது. நாங்களெல்லோரும் ஸுக்ரீவ மஹாராஜாவிடத்திற்குப் போகத் தயாராக இருக்கிறோம். தங்களுடைய ஆக்ஞையில்லாமல் அடியெடுத்து வைக்க எங்களால் முடியுமா? இது உபசார வார்த்தை அல்ல. ஸத்தியமே'' என்றார்கள். அதற்கு அங்கதன், 'ஸரி' என்றான். உடனே வானரர்கள், 'புறப்படுவோம்' என்று சொல்லி ஆகாசத்தில் கிளம்பி, அதை மறைத்துக் கொண்டு யந்திரத்திலிருந்து எறியப்பட்ட கற்பாறைகளைப்போல் அங்கதனைப் பின்தொடர்ந்து, பெருங்காற்றால் அடிக்கப்பட்ட மஹா மேகங்களைப்போல் கர்ஜித்துக் கொண்டு அதிவேகமாகச் சென்றார்கள்.

அதற்குள் அங்கதன் முதலிய வானரர்கள் வருவதற்குத் தாமதப்பட்டதால் ராமனுடைய செந்தாமரைக் கண்கள் துக்கத்தால் கலங்க, அதைக் கண்டு ஸுக்ரீவன், "ரகுவீர! தங்களுக்கு ஸகல மங்களங்களும் உண்டாகட்டும். மனத்தை ஸமாதானம் செய்து கொள்ளுங்கள். ஸீதை கண்டு பிடிக்கப்பட்டாள் என்பதில் ஸந்தேகமே இல்லை. நான் வைத்த கெடுவைத் தாண்டி வானரர்கள் இங்கே வரத் துணிவார்களா? யுவராஜாவும் மஹா பராக்கிரமசாலியுமான அங்கதன் காரிய ஸித்தியில்லாமல் இங்கே வரமாட்டான் என்பது தங்களுக்குத் தெரியாதா? காரியத்தை முடிக்காமல் மதுவனத்தை அழித்திருந்தால் அங்கதன் தீனமான முகத்துடன் மனம் கலங்கி நடுங்க மாட்டானா? பிரஹ்மாவால் என் பிதாவிற்குக் கொடுக்கப்பட்டு அவராலும் வாலியாலும் வெகு ஜாக்கிரதையாய் ரக்ஷிக்கப்பட்ட மதுவனத்தை துக்கப்பட்டுக் கொண்டிருப்பவன் அழிக்கத்துணிவானா? ராம! ஸீதையைக் கண்டு பிடித்தோம். ஸகலப் பிராணிகளுக்கும் ஸந்தோஷத்தைக் கொடுப்பவர் என்ற (ராமன்)



பெயர் இப்பொழுதுதான் தங்களுக்குத் தகும். இப்பொழுது ஸகல துக்கமும் தீர்ந்து அளவற்ற ஆனந்தத்தை அடைந்தீர்களல்லவா? ஸீதையைக் கண்டதால் தங்களுடைய பிராணன் நிலைபெற்றது. இன்றுதான்கௌஸல்யாதேவி சிரேஷ்டமான புத்திரனைப்பெற்றாள் என்று சொல்லலாம். தாங்கள் இதுவரையில் அனுஷ்டித்த மஹா விரதங்கள் இப்பொழுதுதான் பயன் பெற்றன. துக்கப்பட வேண்டாம். ஸீதையைக் கண்டு பிடித்து விட்டார்கள். அதையும் ஹனுமானே செய்திருக்க வேண்டும். அவனைத் தவிர இந்தக்காரியத்தைச் செய்யக் கூடியவர்கள் வேறொருவரும் இல்லை: ஸூரியனிடத்தில் தேஜஸ் ஸ்வபாவமாயும் அளவற்றதாயும் இருப்பதுபோல், ஹனுமானிடத்தில் காரியஸித்தியும் புத்தியும் முயற்சியும் பராக்கிரமமும் குடி கொண்டிருக்கின்றன. யோசனை சொல்லுகிறவன் ஜாம்பவானும் ஸேனாநாயகன் அங்கதனும் ரக்ஷகன் ஹனுமானும் இருக்கையில் காரியம் வேறு விதமாய் முடியுமா? ஆகையால் அளவற்ற பராக்கிரமமுள்ள தங்கள் எண்ணங்களெல்லாம் கைகூடிவரும் இந்த ஸமயத்திலா துக்கப்படுகிறது'' என்று ஸமாதானம் செய்தார்.

அதற்குள் தெற்கே தேடப்போன வானரர்கள், ஹனுமான் ஸீதையைக் கண்டு பிடித்ததால் கர்வமடைந்து, காரியத்தை முடித்தோம் என்றதைத் தெரிவிப்பவர்கள்போல் கர்ஜித்துக் கொண்டு, கில கில சப்தத்துடன் ஆகாச மார்க்கமாய் வருவது ஸமீபத்தில் கேட்கப்பட்டது. உடனே ஸுக்ரீவன் ஸந்தோஷத்தால் மயிர்க்கூச்சமடைந்து தன் நீண்ட வாலைச் சுழற்றினான். அப்பொழுது வானர சிரேஷ்டர்கள் அங்கதனையும் ஹனுமானையும் முன்னிட்டுக் கொண்டு ராமனைத் தரிசிக்க விரும்பி, அங்கே வந்து சேர்ந்து, ஆனந்தத்தால் தேகத்தை மறந்து ஸுக்ரீவனும் ராமலக்ஷ்மணர்களும் இருக்குமிடத்திற்கு அருகில் ஆகாசத்திலிருந்து பூமியில் குதித்தார்கள். பிறகு ஹனுமான் மஹாராஜாவையும் ராமலக்ஷ்மணர்களையும் ஸாஷ்டாங்கமாய் நமஸ்கரித்து, ராகவனை நோக்கி, "ஸ்வாமி! கண்டேன் ஸீதையை. யாதொரு அபாயமும் இல்லாமல் பதிவிரதா தர்மத்தைப் பூர்ணமாக அனுஷ்டித்துக் கொண்டிருக்கிறாள்'' என்று விக்ஞாபனம் செய்தார். தங்களுடைய காரியம் நிறைவேறிற்றென்று நிச்சயமடைந்து, ஸுக்ரீவனும் லக்ஷ்மணனும் ஹனுமானை வெகு கௌரவத்துடனும் பிரீதியுடனும் கண்கொட்டாமல் பார்த்தார்கள். ரகுவீரன் அடைந்த ஆனந்தத்திற்கு எல்லையுமுண்டோ?

ப்ரீத்யா ச ரமமாணோ'த2 ராக4வ: பரவீரஹா |
ப3ஹுமாநேந மஹதா ஹநுமந்த மவைக்ஷத ॥ (42)

---

## ஸர்க்கம் 65

## ஸீதா விருத்தாந்தம்

ததः ப்ரஸ்ரவணம் ஶைலம் தே க³த்வா சித்ர காநநம் |
ப்ரணம்ய ஶிரஸா ராமம் லக்ஷ்மணம் ச மஹாப³லம் || (1)

பிறகு அந்த வானரர்கள் பிரஸ்ரவணகிரிக்கு வந்து, அங்கதனை முன்னிட்டுக்கொண்டு, ராமலக்ஷ்மணர்களையும் ஸுக்ரீவனையும் நமஸ்கரித்து, ஸீதையின் விருத்தாந்தத்தைச் சொல்ல ஆரம்பித்தார்கள். ஜானகி ராவணனுடைய அந்தப் புரத்தில் சிறைப்பட்டிருப்பதையும், ராக்ஷஸர்களால் மிரட்டப்படுவதையும், ராமனிடத்தில் மாறாத விசுவாஸத்தை வைத்திருப்பதையும், ராவணன் கெடு இட்டிருப்பதையும் ஸகல வானரர்களும் ராமனிடத்தில் சொல்ல ஆரம்பித்தார்கள். ஸீதை க்ஷேமமாக இருக்கிறாள் என்பதைக் கேட்டு ராமன், "வானரர்களே! ஸீதை எங்கிருக்கிறாள்? என்னிடத்தில் எப்படி அபிப்பிராயப்படுகிறாள்? இதை விஸ்தாரமாகச் சொல்லுங்கள்" என்றார். அப்பொழுது ஸகல வானரர்களும் ஸீதையின் விருத்தாந்தத்தை பிரத்யக்ஷமாய்ப் பார்த்தறிந்த ஆஞ்ஜனேயரை ராமனிடத்தில் விண்ணப்பம் செய்யும்படி தூண்டிவிட்டார்கள். அவர்கள் சொல்வதைக்கேட்டு ஹனுமான் ஸீதை இருக்கும் திசையைப் பார்த்து வெகு பக்தியுடன் நமஸ்கரித்து, ஸீதையின் விருத்தாந்தத்தை வெகு சாதுரியமாய்ச் சொல்ல ஆரம்பித்தார்.

"நான் இங்கிருந்து புறப்பட்டு நூறுயோஜனை விஸ்தீர்ணமுள்ள ஸமுத்திரத்தைத் தாண்டி, ஸீதையைத் தேடிக்கொண்டு, எப்படியாவது அவளைக் கண்டுபிடிக்கிறதென்ற நிச்சயத்துடன் செல்லுகையில், ஸமுத்திரத்திற்கு அக்கரையில் ராவணனென்ற துஷ்ட ராக்ஷஸனுடைய ராஜதானியான லங்கையில் பிரவேசித்து ஓரிடம் பாக்கியில்லாமல் தேடினேன். முடிவில் அவனுடைய அந்தப் புரத்தில் ஸீதை காவலில் வைக்கப்பட்டிருப்பதைக் கண்டேன். அங்கே அசோகவனத்தில் ராக்ஷஸிகளால் சூழப்பட்டு, அவர்களுடைய குரூரவார்த்தைகளையும் ஹிம்ஸையையும் பொறுத்துக் கொண்டு, தங்களிடத்தில் மாறாத பிரீதி வைத்திருப்பதைக் கண்டேன். பரமபதிவிரதையாயும் துக்கத்தை அனுபவிக்கத் தகாதவளாயும் இருக்கும் தங்களுடைய பாரியை, ஒரே பின்னலுடன் துக்க ஸமுத்திரத்தில் முழுகிக் கரைகாணாமல் வெறும் தரையில் படுத்திருக்கிறாள். ஹேமந்தருதுவில் வாடியிருக்கும் தாமரை யோடையைப் போல் நிறம் மாறி, ராவணன் எவ்வளவு பிரார்த்தித்தும் அவனிடத்தில் சிறிதும் மனத்தைச் செலுத்தாமல், தங்களிடத்திலேயே நாடின சித்தத்தையுடையவளாய் இனி உயிரை வைத்துக் கொள்ளுகிறதில்லை என்று நிச்சயம் செய்துகொண்டிருக்கையில், நான் அவளைக் கண்டேன். இக்ஷ்வாகுவம்சத்தின் மஹிமையை நான் வர்ணிப்பதைக்கேட்டு அவளுக்கு என்னிடத்தில் மெள்ள மெள்ள நம்பிக்கையுண்டாயிற்று. பிறகு அவளுடன் ஸம்பாஷித்து நடந்த விருத்தாந்தம் யாவற்றையும் தெரிவித்தேன். தங்களுக்கும் மஹாராஜாவிற்கும் ஸ்நேகமேற்பட்டதைக் கேட்டு மிகவும் ஸந்தோஷித்தாள். அவளுடைய ஆசாரம் சிரேஷ்டமாக இருக்கிறது. தங்களிடத்தில் பக்தியும் எல்லைபற்றதாக இருக்கிறது. மஹாப்பிரபாவமுள்ளவள். உக்ரமான தபஸையுடையவள். தங்களிடத்தில் வைத்த பக்தியை எப்படி வர்ணிப்பேன்!

நிகரில்லாத புத்தியையுடைய மஹானுபாவ! தாங்கள் சித்திரகூடத்தில் வஸிக்கையில் ஒரு காக்கையின் விஷயமாய் நடந்த விருத்தாந்தத்தைத் தங்களுக்கு அடையாளமாகச் சொல்லச்சொன்னாள். 'வாயுபுத்திர! இங்கே பார்த்த விஷயங்கள் எல்லாவற்றையும் விஸ்தாரமாய்ச் சொல்லவேண்டியது. 'ராம, மேலும் நாம் தண்டகாரண்யத்தில் வஸிக்கையில் ஒருநாள் என் திலகம் அழிந்துபோகத் தாங்கள் மனச்சிலையால் என் நெற்றியில் வேறு திலகம் வைக்கவில்லையா? இந்த விஷயத்தை நன்றாய் ஞாபகப்படுத்திக் கொள்ளவேண்டியது. நான் இப்பொழுது அனுப்பும் சூடாமணியை இதுவரையில் வெகு ஜாக்கிரதையாய் ரக்ஷித்துவந்தேன். நான் தங்களைப் பிரிந்து துக்கப்படும் போதெல்லாம் தங்களைப் பார்ப்பதுபோல் இதைப் பார்த்து ஆறுதலடைந்தேன். இப்பொழுது அதையும் அனுப்பி விட்டேன். நான் இன்னும் ஒரு மாதம் மாத்திரம் பிழைத்திருப்பேன். ராக்ஷஸிகளால் ஒவ்வொரு நிமிஷமும் உபத்திரவிக்கப்பட்டு ஒரு மாதத்திற்குமேல் பிழைத்திருக்கமாட்டேன் என்று இந்த வார்த்தைகளை ஸுக்ரீவன் கேட்டுக்கொண்டிருக்கையில் ராமனிடத்தில் சொல்லிப் பிறகு சூடாமணியைக் கொடு' என்று என்னை ஆக்ஞாபித்தாள்.

ராவணனுடைய அந்தப்புரத்தில் ராக்ஷஸிகளுக்கு நடுவில் அகப்பட்டு, காட்டில் புலிகளுக்கு நடுவில் அகப்பட்ட மானைப்போல் பயத்தால் மிரண்டு, தங்களைப் பிரிந்த துக்கத்தால் தேகம் இளைத்து, இவ்வளவு கஷ்டத்திலும் பதிவிரதா தர்மத்தைக் கொஞ்சம்கூடக் கைவிடாமல் பூர்ணமாக அனுஷ்டிக்கும் தங்களுடைய பாரியை சொல்லியனுப்பின ஸமாசாரம் இதுதான். நடந்தப்பிரகாரம் ஸகல விருத்தாந்தங்களையும் தெரிவித்தேன். எது எப்படியிருந்தாலும் ஸமுத்திரத்தைக் கடந்து லங்கைக்குப்போவதற்கு வேண்டிய ஸகல பிரயத்னங்களையும் இப்பொழுதே செய்ய வேண்டியது" என்று ஆரம்பம் முதல் முடிவுவரையில் ஸகல விஷயங்களையும் சாதுரியமாயும் உருக்கமாயும் வர்ணித்து, ராமலக்ஷ்மணர்கள் துக்கத்தைவிட்டு ஆறுதலடைந்தார்களென்று அறிந்து,

ஸீதை அடையாளமாய்க் கொடுத்த சூடாமணியை ஹநுமார் ரகுநாதனிடத்தில் வணக்கமாய் ஸமர்ப்பித்தார்.

தௌ ஜாதாஶ்வாஸௌ ராஜபுத்ரௌ விதி³த்வா
தச்சாபி⁴ஜ்ஞாநம் ராக⁴வாய ப்ரதா³ய |
தே³வ்யா சாக்²யாதம் ஸர்வமேவாநுபூர்வ்யாத்
வாசா ஸம்பூர்ணம் வாயுபுத்ர: ஶஶம்ஸ ‖ (26)

---

## ஸர்க்கம் 66

## சூடாமணியைக் கண்டு ராமன் துக்கித்தது

ஏவமுக்தோ ஹநுமதா ராமோ த³ஶரதா²த்மஜ: |
தம் மணிம் ஹ்ருத³யே க்ருத்வா ப்ரருரோத³ ஸலக்ஷ்மண: ‖ (1)

**ஹ**னுமான் இப்படிச் சொல்லிச் சூடாமணியைக் கொடுத்தவுடன், ரகுவீரன் அதை மார்போடணைத்து, அடங்காத பிரீதியுடன் பார்த்துப் பூர்வஞாபகத்தால் துக்கம்மேலிட்டுக் கண்ணீர் கண்களை மறைக்க, சூடாமணியைப் பார்க்கமுடியாமல் ஸுக்ரீவனை நோக்கி, "நண்பனே! கன்றிடத்தில் வைத்த பிரியத்தால் பசு எப்படிப் பாலைப் பெருக்குமோ அப்படி இந்தச் சூடாமணியைப்பார்த்தவுடன் என் ஹிருதயம் உருகுகிறது. என் விவாஹகாலத்தில் தசரத சக்கரவர்த்தி இதை ஜனகமஹாராஜனிடத்திலிருந்து வாங்கி ஸீதையின் தலையில் வைத்து அலங்கரிக்கும்படி கொடுத்தார். அப்படியே ஸீதையின் மாதா அதைச் சூட்டினாள். உடனே இந்த ஆபரணம் முன்னைவிட அதிகமாய் பிரகாசித்தது. இந்த உத்தம ரத்தினம் ஸமுத்திரத்திலிருந்து உண்டானது; ஸாதுக்களால் பூஜிக்கப்பட்டது. இதை தேவேந்திரன் முன்னொருகாலத்தில் ஜனகர் செய்த யக்ஞத்தால் ஸந்தோஷித்து அவருக்கு வெகுமதியாகக் கொடுத்தான். இதைக் கண்டவுடன் என் பிதாவையும் மஹாத்மாவான ஜனகரையும் பார்த்தது போலாயிற்று. இது என் ஸீதையின் சிரஸில் அழகாய் விளங்கும் ஆபரணமல்லவா? இதைப் பார்த்தவுடன் அவளையே அடைந்ததுபோல் எண்ணுகிறேன். ஹனுமானே, ஸீதை என்ன சொன்னாள்? அதையே அடிக்கடி சொல். தாகத்தால் தவிப்பவனுக்குக் குளிர்ந்த ஜலம் கிடைத்தால் எப்படியோ அப்படி அவளுடைய வார்த்தைகள் என் தாபத்தைத் தணிக்கின்றன. லக்ஷ்மணா, இந்த ஆபரணத்தை ஸீதையின் சிரஸில் பார்த்துவிட்டு இப்பொழுது ஸீதையில்லாமல் இதை மாத்திரம் பார்க்கும்படி நேர்ந்ததே! இதைவிட கஷ்டமுண்டோ?

ஸீதை ஒரு மாதம் வரையில் பிழைத்திருப்பாளென்றால் அவள் தீர்க்காயுளுள்ளவள் என்றே சொல்லவேண்டும். ஏனென்றால் அழகான கண்களையுடைய ஜானகியைப் பாராமல் ஒரு நிமிஷம்கூடப் பிழைத்திருக்கமாட்டேன். ஹனுமானே, ஸீதையை எவ்விடத்தில்



தௌ ஜாதாஶ்வாஸௌ ராஜபுத்ரௌ விதி³த்வா தச்சாபி⁴ஜ்ஞாநம் ராக⁴வாய ப்ரதா³ய |
தே³வ்யா சாக்²யாதம் ஸர்வமேவாநுபூர்வ்யாத் வாசா ஸம்பூர்ணம் வாயுபுத்ர: ஶஶம்ஸ ‖
—ஸு॰ 65ஸ. 26 ச.

ராமலக்ஷ்மணர்கள் துக்கத்தை விட்டு ஆறுதலடைந்தார்களென்று ஸீதை அடையாளமாய் கொடுத்த சூடாமணியை ஹநுமார், ரகுநாதனிடத்தில் வணக்கமாய் ஸமர்ப்பித்தார். (பக்கம் 240 பார்க்க)

கண்டாயோ அவ்விடத்திற்கு என்னையும் அழைத்துச் செல். ஸீதையின் விருத்தாந்தம் தெரிந்தபிறகு ஒரு க்ஷணம் கூட இங்கு இருக்கமாட்டேன். அழகில் நிகரற்றவள்; ஸ்வபாவமாய் மிகவும் பயந்தவள்; சிரேஷ்டமான பதிவிரதை; இப்படிப்பட்டவள் பயங்கரமான குரூர ராக்ஷஸிகளுக்கு நடுவில் பிழைத்திருப்பதெப்படி? சரத் காலத்தில் இருள் நீங்கி மேகங்களால் சூழப்பட்ட சந்திரனைப் போல் விகாரரூபமுள்ள ராக்ஷஸர்களுக்கு நடுவில் அவளுடைய முகம் பிரகாசிக்காதல்லவா? ஸீதை என்ன சொன்னாள்? அதை நிஜமாகச் சொல்லும். ரோகத்தால் பீடிக்கப்படுகிறவன் சிரேஷ்டமான ஒளஷதங்களால் எப்படிப் பிழைப்பானோ அப்படி நீர் சொல்லும் வார்த்தைகளால் நான் உயிரை வைத்துக்கொண்டிருப்பேன். அவளுடைய ரூபம் பார்க்கப் பார்க்க இன்பத்தைக் கொடுக்கும்; அவளுடைய வார்த்தைகள் கேட்கக்கேட்க அமிருததாரையைப்போல் இருக்கும்: என்னைவிட்டுப் பிரிந்து தவிக்கும் ஸீதை என்ன சொன்னாள்?" என்று மிகவும் தீனமாய்க் கேட்டார்.

மது⁴ரா மது⁴ராலாபா கிமாஹ மம பா⁴மிநீ |
மத்³விஹீநா வராரோஹா ஹநுமந் கத²யஸ்வ மே || (15)

---

## ஸர்க்கம் 67

## ஸீதையின் விருத்தாந்தம்

ஏவமுக்தஸ்து ஹநுமாந் ராக⁴வேண மஹாத்மநா |
ஸீதாயா பா⁴ஷிதம் ஸர்வம் ந்யவேத³யத ராக⁴வே || (1)

அதைக் கேட்டு ஆஞ்ஜநேயர் ஸீதையின் ஸகல விருத்தாந்தங்களையும் சொல்ல ஆரம்பித்தார்: "ரகுவீர! தங்களுடைய பாரியை தாங்கள் சித்திர கூடத்தில் இருந்த பொழுது நடந்த இந்த விஷயத்தையும் நடந்தபடி வர்ணித்து, இதையே அடையாளமாகச் சொன்னாள். ஒருநாள் ஸீதையும் தாங்களும் ஸௌக்கியமாய்ப் படுத்துத் தூங்கிக் கொண்டிருந்தீர்கள். பிறகு அவள் தங்களுக்கு முன் எழுந்து விட்டாள். அப்பொழுது ஒரு காக்கை வேகமாய்ப் பறந்து வந்து அவளை மார்பில் கொத்திற்று. பிறகு அவளுடைய மடியில் தாங்கள் தூங்கும் பொழுது மறுபடியும் அந்தக் காக்கை அவளை ஹிம்ஸித்தது. அடிக்கடி கூர்மையான மூக்கால் மார்பைக் கிழிக்கையில் ரத்தம் பெருகித் தூங்கிக் கொண்டிருந்த தங்களுடைய முகத்தில் விழத் தாங்கள் விழித்துக் கொண்டீர்கள். தாங்கள் ஸுகமாய்த் தூங்கிக் கொண்டிருக்கையிலேயே சத்துருக்களை நாசம் செய்யும் ஸாமர்த்தியமுள்ளவர்களல்லவா? அந்தக் காக்கையின் உபத்திரவத்தைத் தாங்காமல் ஸீதை தங்களை எழுப்பினாள். தாங்களோ க்ஷத்திரியர்; இக்ஷ்வாகு குலத்தில் பிறந்தவர்; ரணதீரர்; தங்களுடைய பாரியை மார்பில் காயம்பட்டு ரத்தம் பெருகுவதைக் கண்டு, கால ஸர்ப்பத்

தைப்போல் கோபத்தால் சீறிக் கொண்டு, "ஸீதே! உன்னை நகங்களால் இப்படி மார்பில் கிழித்துக் காயப்படுத்தினவன் எவன்? கோபம் கொண்ட ஐந்துதலை நாகத்துடன் விளையாடுகிறவன் யார்?" என்று கூறி நான்கு புறத்திலும் பார்க்கையில், அந்தக் காக்கை ரத்தத்தால் பூசப்பட்ட நகங்களுடன் எதிரில் உட்கார்ந்திருப்பதைக் கண்டீர்கள். அது இந்திரனுடைய பிள்ளையான ஜயந்தனல்லவா? தாங்கள் அவனிடத்தில் கோபம் கொண்டதைக் கண்டு வாயுவேகத்துடன் பூமிக்குள் மறைந்தான். தாங்கள் மஹாபுத்திமானானதால் அவனுடைய நிஜஸ்வரூபத்தையும் கெட்ட எண்ணத்தையும் கண்டு அவனைக் குரூரமாய்த் தண்டிக்க வேண்டுமென்று நிச்சயித்து, ஆஸனத்திலிருந்து ஒரு தர்ப்பத்தை எடுத்து அதில் பிரஹ்மாஸ்திரத்தின் மந்திரத்தை பிரயோகித்தீர்களல்லவா? அந்த அஸ்திரம் அக்னிஜ்வாலைகளைக் கக்கிக் கொண்டு அந்தக் காக்கையைத் துரத்திற்று. அப்பொழுது அவன் தாய்தகப்பனையும் தேவர்களையும் மஹரிஷிகளையும் சரணமடைந்தும் அவர்கள் கை விட்டார்கள். பிறகு மூன்று லோகங்களிலும் அலைந்தும் காப்பாற்றுவார் இல்லை. ஆகையால் மறுபடியும் தங்களிடத்திலேயே வந்து தங்களைச் சரணமடைந்து பாதங்களில் விழுந்தான். ஸகல லோகங்களுக்கும் தாங்கள் ரக்ஷகர்; சரணமடைந்தவர்களைக் காப்பாற்றுவதென்ற தர்மத்தை அனுஸரித்தும், பூர்வத்தில் தங்களுடைய முன்னோரான ககுத்ஸ்தரால் ஒத்தாசை செய்யப்பட்ட இந்திரனுடைய புத்திரனென்ற அபிமானத்தாலும், அவன் மஹாபராதம் செய்திருக்கிறானென்பதையும் அதற்காக அவனைக் கொல்ல வேண்டியதென்பதையும் மறந்து, அபாரகிருபையால் ரக்ஷித்தீர்கள். ஆனால் பிரஹ்மாஸ்திரம் வீணாகாது; அதற்காக அவனுடைய வலது கண்ணைப் பலியாகக் கொடுக்கச் செய்தீர்கள். பிறகு அவன் தங்களையும் தசரதரையும் நமஸ்கரித்து தங்களிடத்தில் உத்தரவு பெற்றுக்கொண்டு தன்னிருப்பிடம் சென்றான்.

"தாங்கள் அஸ்திரங்களின் ரஹஸ்யத்தை அறிந்தவர்களுக்குள் சிரேஷ்டரல்லவா? தங்களுடைய பலத்திற்கும் வீரியத்திற்கும் எல்லையுண்டோ? தாங்கள் சுத்த க்ஷத்திரிய வீரனல்லவா? குலாசாரத்தைப் பூர்ணமாக அனுஷ்டிக்கிறவர்களல்லவா? இப்படியிருந்தும் அந்த பிரஹ்மாஸ்திரத்தை ராக்ஷஸர்களிடத்தில் ஏன் பிரயோகிக்கக் கூடாது? நாக கந்தர்வ அஸுரமருத்கணங்களும் யுத்தத்தில்ராமனுக்கெதிரில்நிற்கமுடியாதென்பது லோகப்பிரஸித்தமல்லவா? அவருக்கு வீரியம் கொஞ்சமாவது இருந்தால், என்னை மறுபடியும் அடைய வேண்டுமென்ற கவலை கொஞ்சமாவது இருந்தால், கூர்மையான பாணங்களால் ராவணனை யுத்தத்தில் கொல்லவேண்டும். மஹாபராக்கிரமசாலியும் ரோஷமுடையவனுமானலக்ஷ்மணனாவது தமையனுடையஉத்திரவுபெற்றுக்கொண்டு ஏன்என்னைக்காப்பாற்றவில்லை? அந்தப் புருஷ சிரேஷ்டர்கள் தேஜஸில் வாயுவிற்கும் அக்னிக்கும் ஸமானர்கள். தேவர்களும்நெருங்கக்கூடாதவர்கள்; எதையும்செய்ய சக்தியுள்ளவர்கள்; இப்படியிருந்தும் என்னை ஏன் கவனிக்கவில்லை? சத்துருக்களுக்குக் காலர்களும் ஸமர்த்தர்களுமான ராமலக்ஷ்மணர்கள் என்னை இப்படி உபேக்ஷை செய்வதைப்பார்த்தால், நான் ஏதோ மஹாபாபத்தைச் செய்திருக்கிறேன் என்பதில் ஸந்தேகமில்லை" என்று தீனமாய்க்கண்ணீர் விட்டுக்கொண்டு ஜானகி சொன்னதைக் கேட்டு, நான் இவ்விதம் சொன்னேன்.



"தாயே! ராகவன் தங்களைவிட்டுப் பிரிந்த சோகத்தால் வேறெந்த காரியத்திலும் மனம் செல்லாதவராய் இருக்கிறார். ராமன் துக்கப்படுகையில் லக்ஷ்மணன் தபிக்கிறாரென்று சொல்ல வேண்டுமோ? இது ஸத்தியமென்று பிரமாணம் செய்கிறேன். போகட்டும்; எவ்வளவோ கஷ்டப்பட்டுத் தங்களைக் கண்டு பிடித்தேனல்லவா? இனிமேலும் தாங்கள் துக்கப்பட வேண்டுமா? தாங்கள் அனுபவிக்கும் ஸகல கஷ்டங்களும் இந்த க்ஷணத்திலேயே நீங்கப் போவதைப் பார்ப்பீர்கள். புருஷ சிரேஷ்டர்களான அந்த ராஜகுமாரர்கள் தங்களைப் பார்க்க வேண்டுமென்ற ஆவலுடன் அதிசீக்கிரத்தில் இங்கே வந்து லங்கையைச் சாம்பலாக்குவார்கள். ராவணனைப் புத்திர மித்திர ஸகல பரிவாரங்களுடன் ராகவன் யுத்தத்தில் கொன்று தங்களை அயோத்யைக்கு அழைத்துப் போவார். இது நிச்சயம். ஆகையால் ராமனுக்கு நன்றாய்த் தெரிந்ததாயும் அவருக்குப் பிரீதியை உண்டு பண்ணக் கூடியதாயும் இருக்கும் ஓர் அடையாளத்தைத் தர வேண்டும் என்று பிரார்த்தித்தேன். அப்பொழுது ஸீதை ஸகல திக்குகளிலும் பார்த்துத் தன் வஸ்திரத்திலிருந்து இந்த ஆபரணத்தை அவிழ்த்துத் தங்களுக்கு அடையாளமாகக் கொடுக்கும்படி என்னிடத்தில் ஒப்புவித்தாள். தங்களுக்காக அதைப் பெற்றுக் கொண்டு ஸீதாதேவியை நமஸ்கரித்துத் திரும்பிப்போக யத்தனித்தேன். நான் தேகத்தை வளர்த்துக் கொண்டு புறப்படத் தயாராக இருப்பதைக் கண்டு ஸீதை,

"ஐயோ! இவனும் போய்விட்டால் என்ன செய்வேன்" என்று கண்ணீரால் முகம் நனைந்து குரல் தழுதழுக்கச் சோகம் தாங்காமல் ஆஞ்ஜனேய! புருஷ ஸிம்ஹங்களான ராமலக்ஷ்மணர்களையும் ஸுக்ரீவனையும் நான் க்ஷேமம் விசாரித்தேனென்று சொல்ல வேண்டும். இந்த துக்க ஸமுத்திரத்திலிருந்து ராகவன் என்னைக் கரையேற்றும்படி செய்யவேண்டியது உன் கடமை. நான் அனுபவிக்கும் இந்தத் தீவிரமான சோகத்தையும் ராக்ஷஸிகள் என்னைக் குரூரமாய் ஹிம்ஸிப்பதையும் ராமனிடத்தில் நீ விஸ்தாரமாகச் சொல்ல வேண்டும். நீ போகிற வழியில் உனக்கு ஸகல க்ஷேமங்களும் உண்டாகட்டும்" என்றாள்.

"ராஜ சிரேஷ்ட! அந்தப் புண்யவதி சொல்ல முடியாத துக்கத்துடன் நான் இது வரையில் தெரிவித்த விஷயங்களைத் தங்களிடத்தில் விக்ஞாபனம் செய்யச் சொன்னாள். இதைக் கேட்டு, ஸீதை

பூர்ணமான க்ஷேமத்தை அடையும்படி தாங்கள் கவலையெடுத்துக் கொள்ள வேண்டும்'' என்று ஹனுமார் சொன்னார்.

ஏதத் தவார்யா ந்ருப ராஜஸிம்ஹ
ஸீதா வச: ப்ராஹ விஷாத3 பூர்வம் |
ஏதச்ச பு3த்4வா க3தி3தம் மயா த்வம்
ஶ்ரத்3த4த்ஸ்வ ஸீதாம் குஶலாம் ஸமக்3ராம் || (43)

---

## ஸர்க்கம் 68

## ஸீதையின் விருத்தாந்தம் (தொடர்ச்சி)

அதா2ஹ முத்தரம் தே3வ்யா புநருக்த: ஸஸம்ப்4ரம: |
தவ ஸ்நேஹாந் நரவ்யாக்4ர ஸௌஹார்தா3 த3நுமாந்ய வை || (1)

**தா**ங்கள் என்னிடத்தில் வைத்த பிரீதியாலும் ஸீதை என்னிடத்தில் வைத்த ஸ்நேகத்தாலும் அவளால் நான் கௌரவிக்கப் பட்டு, மேல் நடக்க வேண்டிய காரியத்தைப் பற்றிப் பின்வருமாறு ஆக்ஞாபிக்கப்பட்டேன். 'ராமன் ராவணனை யுத்தத்தில் கொன்று என்னைச் சீக்கிரம் அடையும்படி நான் சொன்னபடியும் இன்னும் உன் புத்திக்குத் தோன்றும் பலவிதமாயும் சொல்ல வேண்டியது. உனக்கு இஷ்டமிருந்தால் இங்கே இன்னும் ஒருதினம் தங்கிப் போ. ராக்ஷஸர்கள் கண்டு பிடிக்கக் கூடாத ஓரிடத்தில் சிரமம் தீர்த்துக் கொண்டு மறுநாள் போகலாம். மஹா வீரனான நீ என் ஸமீபத்திலிருக்கும் வரையில் பாக்கியமில்லாத நான் அனுபவிக்கும் துக்கம் ஒரு முகூர்த்தமாவது விலகியிருக்கும். நீ போய்விட்டால், திரும்பி வருவாயென்று நான் எதிர்பார்த்துக் கொண்டிருக்கையில் என் பிராணன் போனாலும் போகும். துக்கத்தின்மேல் துக்கம் என்னை வாட்டுகின்றது; துக்கத்தைத் தவிர எனக்கு வேறு பிராப்தமில்லை; சொல்லமுடியாத கஷ்டத்தைஅனுபவிக்கிறேன்;உன்னையும் பார்க்காவிட்டால் மறுபடியும் துக்கம் என்னை வாட்டுமே.

"அது இருக்கட்டும். கருடனையும் வாயுவையும் வாயுபுத்திரனை உன்னையும் தவிர இந்த ஸாகரத்தைத் தாண்டக்கூடியவர் ஒருவரும் இல்லையே. ராமலக்ஷ்மணர்களாவது வானர சிரேஷ்டர்களாவது வானர ஸைன்யங்களாவது மலைபோன்ற அலைகளையுடைய இந்தப் பெருங்கடலை எப்படித் தாண்டப் போகிறார்கள்? இந்த ஸந்தேகம் எப்பொழுதும் என் மனத்தில் குடிகொண்டு என்னை உபத்திரவிக்கிறது. மஹாபுத்திமானான நீயே இதற்கு ஒரு உபாயம் சொல்ல வேண்டியது. ஸமுத்திரத்தைத் தாண்டி ராவணனையும் அவனைச் சேர்ந்தவர்களையும் யுத்தம் செய்து கொன்று, லங்கையை நாசம் செய்து, என்னை அழைத்துப்போக நீ ஒருவனே போதும். மஹா பராக்கிரமசாலியான உனக்கு அது விசேஷ கீர்த்தியைக்கொடுக்கும். ஆனால் ராமன் ஸைன்யங்களுடன் இங்கே வந்து, ராவணனையும்



ராக்ஷஸர்களையும் யுத்தத்தில் கொன்று என்னை அயோத்யைக்கு அழைத்துப்போனால் அது அவருடைய குலத்திற்கும் ஆசாரத்திற்கும் பராக்கிரமத்திற்கும் கீர்த்திக்கும் அழகு. அவரிடத்தில் பயந்து அவரில்லாத வேளையில் திருடனைப்போல் ராவணன் என்னை எடுத்து வந்தபடியால், இங்கிருந்து அவனுக்குத் தெரியாமல் ரஹஸ்யமாய் என்னை அழைத்துப்போவது அவருக்குத் தகாது. மஹாவீரன், லோகமறிய ஸேனாஸமுத்திரத்தை இங்கே அழைத்துக்கொண்டு வந்து லங்கையைத் தூளாக்கி, ராக்ஷஸர்களை வேரறுத்து, என்னை ஜயலக்ஷ்மியுடன் அழைத்துப்போவது அவருக்குத் தகும். யுத்தத்தில் அவரைப்போன்ற சூரனுண்டோ? அவருடைய பராக்கிரமமும் பிரதாபமும் எப்படி விளங்குமோ அப்படிச் செய்யவேண்டியது நீயே'' என்று வினயமாய் அனேக காரணங்களுடன் விசேஷ அர்த்தங்கள் அடங்கச் சொன்னாள்.

அதைக்கேட்டு நான், "தாயே! கணக்கற்ற வானரஸைன்யங்களுக்கு அதிபதியான ஸுக்ரீவமஹாராஜா, மஹாபலவான்; ஒப்பற்ற பராக்கிரமமுடையவர். அவருடைய ஆக்ஞைகளை நிறைவேற்றுவதற்கு மஹாபலவான்களும் பராக்கிரமசாலிகளும் உத்ஸாஹமுள்ளவர்களும் மனோ வேகமுள்ளவர்களுமான வானரவீரர்கள் கணக்கில்லாமல் காத்துக்கொண்டிருக்கிறார்கள். எந்தத் திக்குகளிலும் அவர்களுக்குத் தடையில்லை. அபாரதேஜஸ்விகளானதால் பெரிய காரியங்களைத் தயங்காமல் நிறைவேற்றுவார்கள். கேவலம் பலக்கொழுப்பால் அவர்கள் ஆகாசமார்க்கமாய் இந்தப் பூமியை அனேகம் தடவை பிரதக்ஷிணம் செய்திருக்கிறார்கள். ஸுக்ரீவனிடத்தில் இருப்பவர்கள் எல்லோரும் எனக்கு ஸமானர்கள்; அல்லது எனக்கு மேலானவர்கள். எனக்குத் தாழ்ந்தவன் அங்கே ஒருவனும் கிடையாது. நானே இங்கே வந்திருக்கையில் அவர்கள் வரத்தடையென்ன? அரசன் தன்னிடமிருக்கும் ஸாமான்யர்களை இதைப்போன்ற வேலையிடுவானே தவிர சிரேஷ்டமானவர்களை ஏவுவானா? ஆகையால் ஏன் ஸந்தேகப்படுகிறீர்கள்? கவலையை விடுங்கள். அவர்கள் கிஷ்கிந்தையிலிருந்து ஒரே மூச்சில் தாண்டி இங்கே வந்து குதிப்பார்கள். புருஷஸிம்ஹங்களான அந்த ராமலக்ஷ்மணர்கள் என் முதுகில் ஏறிக்கொண்டு ஸூரியசந்திரர்களைப்போல் ஆகாசமார்க்கமாய் இங்கே வருவதையும், சத்ருகுலகாலனும் ஸிம்ஹத்தைப்போல் பராக்கிரமமுள்ளவருமான ராமன் கோதண்டபாணியாய் லக்ஷ்மணருடன் இந்த லங்கைக் கோட்டைவாசலில் வந்து நிற்பதையும், நகத்தையும் பற்களையும் ஆயுதங்களாயுடையவர்களும் பராக்கிரமத்தில் ஸிம்ஹங்களுக்கும் புலிகளுக்கும் நிகரானவர்களும் மதயானையைப்போல் விளங்குகிறவர்களும் வீரசிரேஷ்டர்களுமான வானரஸைன்யங்கள் லங்கையைச் சூழ்ந்து அதன் ஸமீபத்திலுள்ள மலைத்தாழ்வரைகளில் மஹா மேகங்களைப்போல் வீரகோஷம் செய்வதையும், ஸ்ரீரகுவீரன் வனவாஸத்தை முடித்துச்

சத்துருக்களை நிர்மூலம் செய்து தங்களுடன் அயோத்யைக்குச் சென்று ராஜ்யாபிஷேகம் பெறுவதையும் அதிசீக்கிரத்தில் மஹா பாக்கியசாலியான தாங்கள் பார்க்கப்போகிறீர்கள்".என்று கம்பீரமாயும் மங்களகரமாயும் பிரியமாயும் நான் சொன்னதைக்கேட்டு தாங்களனுபவிக்கும் கஷ்டத்தைக் கேள்விப்பட்டு எனக்கெதிரே விசேஷதுக்கத்தை அடைந்த ஜனகராஜபுத்திரி, மனம் தெளிந்து ஆறுதலடைந்தாள்" என்றார்.

தேதா மயா வாக்$^{3}$பி$^{4}$ரதீ$^{3}$ந பா$^{4}$ஷிணு
ஶிவாபி$^{4}$ரிஷ்டாபி$^{4}$ரபி$^{4}$ ப்ரஸாதி$^{3}$தா |
ஜகா$^{3}$ம ஶாந்திம் மம மைதி$^{2}$லாத்மஜா
தவாபி ஶோகேந ததா$^{3}$பி$^{4}$பீடி$^{3}$தா ‖ (29)

---

## ஸுந்தர காண்டம் முற்றிற்று

---

ஸ்ரீ ஸீதாலக்ஷ்மண பரத ஶத்ருக்ந ஹனுமத்ஸமேத
ஸ்ரீ ராமசந்த்ர பரப்ரஹ்மணே நம:

* * *

Released by Maran's Dog ,Toronto, Canada



ஸ்ரீ:



ஸ்ரீராமசந்த்ர பரப்ரஹ்மணே நம:

# ஸ்ரீமத் வால்மீகி ராமாயணம்

## யுத்த காண்டம்

### ஸர்க்கம் 1

### ராமன் மாருதிக்கு வெகுமதி அளித்தது

ஶ்ருத்வா ஹநுமதோ வாக்யம் யத²ாவ த³பி⁴பா⁴ஷிதம் |
ராம: ப்ரீதிஸமாயுக்தோ வாக்யமுத்தர மப்³ரவீத் || (1)

**அவதாரிகை**

ஸுந்தர காண்டத்தில் ஸகலப் பிராணிகளுக்கும் புருஷகாரமான மஹாலக்ஷ்மியின் குணம் வர்ணிக்கப்பட்டது. இந்தக் காண்டத்தில் உத்தமப் பிரயோஜனத்தை அடைவதற்கு உபாயம் உபதேசிக்கப்படுகிறது. ஸேவகன் தனக்கு இட்ட வேலையைச் செய்து முடித்தவுடன் யஜமானன் அவனிடத்தில் இவ்விதமாக நடக்க வேண்டுமென்று லோகத்தார்க்கு உபதேசிப்பதற்காகவும், ஸுக்ரீவன் முதலிய வானரர்களை உத்ஸாஹப்படுத்துவதற்காகவும், ஸீதையைக் கண்டுபிடித்து அவளுடைய விருத்தாந்தத்தைத் தெரிவித்த ஆஞ்ஜனேயருக்கு ராமன் வெகுமதியளிக்கிறார்.

---

இப்படி ஹனுமான் நடந்த விருத்தாந்தத்தை நடந்தபடி வர்ணிக்கக் கேட்டு ராமன் பிரீதியுடன் அவரைப் பார்த்து, ''கருடனும் வாயுவும் ஹனுமானும் மாத்திரம் இந்த ஸமுத்திரத்தைத் தாண்ட முடியும். அவ்விருவரும் சேர்ந்து செய்யக்கூடிய காரியத்தை இவன் ஒருவனே செய்திருக்கிறான். இது பெரிய விஷயம். தேவ தானவ, யக்ஷ, கந்தர்வ, உரக, ராக்ஷஸர்களும் நெருங்க முடியாத லங்கையில், ஸர்வலோககண்டகனை ராவணன் ஜாக்கிரதையாய் ரக்ஷித்துவரும் போது பிரவேசிக்க எவனாலும் முடியுமா? அது போகட்டும். கேவலம் தன் பலத்தையே துணையாகக்கொண்டு அங்கிருந்த ராக்ஷஸ வீரர்களைக்கொன்று, அந்த நகரத்தை நாசம் செய்து, அங்கிருந்து உயிருடன் தப்பிவர எவனால் முடியும்? இது மிகவும் பெரிய காரியம், மனத்தாலும் நினைக்க முடியாதது. 'ஒருவனுக்கு வீரியமும் பலமும் குறைவில்லாமலிருந்தாலும் இந்த விஷயங்களில் ஹனுமானுக்கு ஸமமாக இராவிட்டால், க்ரூரராக்ஷஸர்களால் ஜாக்கிரதையாய்

ரக்ஷிக்கப்பட்ட லங்கையில் பிரவேசிக்க முடியுமா? இது பிறர்க்கு அரிது. தன் பிரபுவான ஸுக்ரீவன் கட்டளையிட்ட காரியத்தைச் செய்ததால் மாத்திரம் ஹனுமான் ஸேவகனுடைய கடமையைச் செய்தானென்று சொல்லக்கூடாது. தான் ஏவப்பட்ட காரியத்திற்கு அனுகூலமான இதர காரியங்களையும் தன் விசேஷசக்திக்குத் தகுந்தபடி செய்து முடித்ததால், ஸேவகன் செய்ய வேண்டியதைப் பூர்ணமாய்ச் செய்திருக்கிறான்.

ஸேவகர்கள் மூன்று விதம். யஜமானனால் ஏவப்பட்ட காரியத்தைச் செய்து முடித்து, அதற்கு அனுகூலமான மற்றொரு காரியத்தை ஏவப்படாமலிருந்தாலும் ஸ்வாமி பக்தியால் செய்து முடிக்கிறவன் உத்தமன். ஸமர்த்தனும் உத்ஸாஹமுள்ளவனும் இருந்தும் யஜமானனால் ஏவப்படாத அனுகூலமான காரியத்தைச் செய்யாதவன் மத்யமன். ஸமர்த்தனும் உத்ஸாஹமுள்ளவனும் இருந்தும் வேறு காரியத்தில் கவனம் வைத்து யஜமானன் கட்டளையிட்ட காரியத்தைச் செய்யாதவன் அதமன். இவர்களுக்குள் ஹனுமான் உத்தம ஸேவகன். அதற்குத் தகுந்தபடியே நடந்திருக்கிறான். சத்ருக்களால் அபஜயமடைந்து தன் கௌரவத்தைக் குறைத்துக் கொள்ளவில்லை. ஸுக்ரீவனுடைய கட்டளையைப் பூர்ணமாய் நிறைவேற்றி, அதற்கு அதிகமாய் லாபகரமான காரியங்களைச் செய்ததால் யஜமானனை ஸந்தோஷப்படுத்தியிருக்கிறான். இது மாத்திரமல்ல. எங்களைப் பெரிய அதர்மத்திலிருந்து விலக்கி தர்மத்தை நிலைநிறுத்தினான். இவன் ஸீதையைக் கண்டுபிடிக்காவிட்டால் நான் பிழைக்கமாட்டேன். என் ஸஹோதரர்களும், பந்துக்களும், அயோத்யையிலுள்ள ஜனங்களும், வானரர்களும் உடனே உயிரை விடுவார்கள். ஆத்மஹத்யை என்ற தோஷத்திலிருந்து இவர்களைக் காப்பாற்றினான். மேலும் ஸீதையைக் கண்டுபிடித்ததால் லோகத்தில் நம் எல்லோர்க்கும் அபவாதமில்லாமல் செய்தான்.

இவ்வாறு நமக்கு உபகாரம் செய்தவனுக்குத் தகுந்தபடி பிரியமான விஷயத்தைச் செய்ய முடியவில்லையே என்ற வருத்தம் எளியவனான என் ஹ்ருதயத்தைப் பிளக்கிறது. ஸீதையின் க்ஷேமஸமாசாரத்தைக்கேட்டதாலுண்டான ஆனந்தத்தையும் மறக்கச்செய்கிறது. ஆகையால் என்னிடத்திலுள்ள வஸ்துக்களில் இவனுக்கு இதைக் கொடுக்கலாமென சொல்லமுடியாது; எல்லாவற்றையும் கொடுத்தாலொழிய எனக்குத் திருப்தியுண்டாகாது. அதற்குப்பதிலாக இவனை ப்ரீதியுடன் ஆலிங்கனம் செய்து கொள்ளுகிறேன். இவன் என்னிடத்திலிருந்து யாதொன்றையும் அபேக்ஷிக்கிறதில்லை. எனக்கு வேண்டிய ஸகல காரியங்களையும் குறைவில்லாமல் செய்து வருகிறான். இவனுக்கு எப்பொழுதாவது ஒரு ப்ரத்யுபகாரம் செய்ய வேண்டுமென்று வெகுகாலமாய் எதிர்பார்த்துக்கொண்டிருந்தேன். இப்பொழுது நல்ல ஸமயம் வாய்த்தது. எவரும் ஆக்ஷேபிக்க இடமில்லை. இவன் என் திவ்யமங்கள விக்கிரகத்திலேயே விசேஷப் பிரேமை வைத்திருக்கிறபடியால் இதையே இவனுக்குக் கொடுக்க வேண்டும். அமிருதத்தைப் புஜிக்கிறவனுக்குப் புல்லைக்கொடுத்தால் பிரயோஜனப்படுமா? இதைத் தவிர வேறு வஸ்துக்களைக் கொடுத்தால் இதைக் கொடுக்கவில்லையே என்று வருத்தப்படுவான். இதில் ஸகலப் பிரயோஜனங்களும் அடங்கியிருக்கிறபடியால், இதைக் கொடுத்தால் ஸகல பதார்த்தங்களையும் கொடுத்தது போலாயிற்று. மேலும் இது பிறரைப்போல் கர்மகதியால் கிடைத்த சரீரமல்ல. ஸர்வோத்தமமென்றும் ஸகல மங்களங்களுக்கும் இருப்பிடமென்றும் பரிசோதித்துப் பார்த்து ஸ்வேச்சையாக எடுத்தது; அனுபவத்திலும் அப்படியே இருக்கிறது; எல்லையற்ற ஆனந்தத்தை கொடுக்கக்கூடியது; என் ஸ்வரூபமும் அதுவே; என்னிடத்திலுள்ள வஸ்துவும் அதுவே. ("ஆனந்தமே மாயையால் ராமகிருஷ்ணாதி தேகங்களுடன் விளங்குகிறார்" என்று சங்கராசார்யர் கீதாபாஷ்யத்திலும் விஷ்ணு ஸஹஸ்ரநாம பாஷ்யத்திலும் சொல்லியிருக்கிறார். இப்படி ஆலிங்கனம் செய்து கொண்டதால் கேவலம் ப்ரஹ்மானந்தத்தையே ஆஞ்ஜநேயருக்கு அனுக்ரஹித்தாரென்று ப்ரஹ்மாண்ட புராணத்தில் சொல்லப்பட்டிருக்கிறது). மேலும் ஸீதை உயிரை விடப்போகும் ஸமயத்தில் அவளைக் கண்டுபிடித்து அவளுடைய விருத்தாந்தத்தை எனக்குச் சொல்லி, என் உயிரைக் காப்பாற்றினான். ஆகையால் இரண்டு தேகங்களைக் காப்பாற்றினவனுக்கு ஒரு தேகத்தை கொடுப்பது போதுமா? என்று ப்ரீதியால் தேகம் புளகித்து, ஆஞ்ஜநேயரை ஆலிங்கனம் செய்துகொண்டார். (மஹாத்மாவும் பிறரால் செய்ய முடியாத காரியத்தைச் செய்து வந்தவருமான ஆஞ்ஜநேயருக்கு இது தகுந்ததே).



பிறகு ராமன் ஸமுத்திரத்தைத் தாண்டும் கஷ்டத்தை நினைத்துக் கவலையடைந்து, "ஸுக்ரீவ! ஹனுமான் ஸமுத்திரத்தைதாண்டினதும், லங்கையில் பிரவேசித்ததும், ராவணனுடைய அந்தப்புரத்தில் ஸீதையைக் கண்டுபிடித்ததும் சிரேஷ்டமானதே. ஆனால் இந்த மஹாஸமுத்திரத்தைப் பார்த்து இதை வானர ஸைன்யங்களுடன் நாம் எப்படித் தாண்டப் போகிறோம்? என்ற கவலையால் ஸீதையின் விருத்தாந்தத்தைக் கேட்டதாலுண்டான ஆனந்தமும் போய்விட்டது. இந்த ஸமுத்திரத்தின் அகலத்தையும் ஆழத்தையும் இதில் வஸிக்கும் பயங்கரமான ஜந்துக்களையும் பார்க்கையில் வானர ஸைன்யம் எப்படி அக்கரை சேரப்போகிறதென்று எனக்குத் தெரியவில்லை. ஸீதையின் விருக்தாந்தத்தை அறிகிறவரையில் அதைப்போல் அஸாத்தியமான விஷயம் வேறொன்றும் இல்லையென்று எண்ணினேன். இப்பொழுது ஸமுத்திரத்தைத் தாண்டுவது அதைக் காட்டிலும் அஸாத்தியமென்று நினைக்கிறேன். இதற்குமேல் செய்ய வேண்டிய காரியமென்ன?" என்று, ராமன் சோகத்தால் பீடிக்கப்பட்டவராய் ஹனுமானைப் பார்த்துக் கேட்ட

பின், ஸாகரத்தை வற்றச்செய்வது முதலிய உபாயங்களை ஆலோசித்துக் கொண்டிருந்தார்.

இத்யுக்த்வா ஶோக ஸம்ப்4ராந்தோ ராம: ஶத்ரு நிப3ர்ஹண: |
ஹநுமந்தம் மஹாபா3ஹு: ததோ த்4யாந முபாக3மத் || (19)

---

## ஸர்க்கம் 2

# ஸுக்ரீவன் ராமனைத் தேற்றினது

---

தம் து ஶோகபரித்3யூநம் ராமம் த3ஶரதா2த்மஜம் |
உவாச வசநம் ஸ்ரீமாந் ஸுக்3ரீவ: ஶோகநாஶநம் || (1)

**ரா**மன் இப்படித் துக்கப்படுவதைப் பார்த்து ஸுக்ரீவன் ஸஹிக்கவில்லை. அவரிடத்தில் வைத்த பிரேமையால் அவருக்கு நேரும் ஸுக துக்கங்களைத் தனக்கு நேருவதுபோல் பாவித்தான். மித்திரனுக்கு ஆபத்து நேரும்பொழுதும், அவன் கெட்ட வழியில் போகும் பொழுதும், ஒரு காரியத்தைச் செய்ய வேண்டிய காலம் தாண்டிப் போகும்பொழுதும், நாம் அவனுடைய க்ஷேமத்தை விரும்பினால், அவன் நம்மைக் கேட்காமலிருந்தாலும், அவனுக்கு ஹிதோபதேசம் செய்யவேண்டியதென்ற சாஸ்திரத்தை அனுஸரித்து, ராமனுடைய சோகத்தைப் போக்கும்படியான வார்த்தைகளைச் சொன்னான். ராமன் தசரதசக்கரவர்த்தியால் செல்வமாய் வளர்க்கப்பட்டவர்; சோகத்தை அனுபவிக்கத் தகாதவர்; ஸகலப் பிராணிகளுக்கும் எப்பொழுதும் ஆனந்தத்தைக் கொடுப்பவர். சுக்ரன் காமந்தக நீதியில் சொல்லுகிறபடி சுத்தம், தானம், சௌரியம், ஸுகதுக்கங்களைக்கூட அனுபவிப்பது, பிரேமை சாதுரியம், ஸத்தியம்' என்ற மித்திரகுணங்களை உடையவன். ஆகையால் ரகுவீரனை நோக்கி, "ராமா! மற்ற அல்ப மனிதர்களைப்போல் தாங்களும் பரிதவிக்கிறீர்களே. இப்படிச் செய்யலாமா? நன்றி இல்லாதவன் பூர்வ ஸ்நேகத்தை முற்றிலும் மறப்பதுபோல், தங்கள் மனத்தில் குடிகொண்டிருக்கும் துக்கத்தை விட்டு விடுங்கள்.

தாங்கள் இப்படித் துக்கப்பட யாதொரு நியாயமும் இல்லையே. இதுவரையில் ஸீதையின் விருத்தாந்தம் தெரியவில்லை என்ற காரணம் இருந்தது. இப்பொழுது அதுவும் இல்லை. தாங்கள் வரப் போகும் காரியத்தை அறியக்கூடியவர்கள்; நீதி சாஸ்திர நிபுணர்கள்; காரியங்களை ஊஹிக்கக்கூடிய புத்தியுடையவர்கள்; விஷயங்களின் தாரதம்யத்தை ஆலோசித்து நிர்ணயிக்கக்கூடியவர்கள். ஆகையால் தங்களுடைய குணங்களை யோசித்தாலும் துக்கப்பட நியாயமில்லை. மோக்ஷரூபமான உத்தம பலனைக் கெடுக்கும் புத்தியை யோகி விலக்குவதுபோல் இந்தப் பாப புத்தியை விலக்குங்கள். ஸமுத்திரத்தைத் தாண்ட முடியவில்லையே என்று கவலைப்பட நியாயமில்லை. கோரமான ஜல ஜந்துக்களால் நிறைந்த ஸமுத்தி



ரத்தை ஸைன்யங்களுடன் தாண்டி, லங்கையில் பிரவேசித்து சத்துருக்களைக் கொல்வோம். நமக்குத் தகுந்த ஸஹாயமில்லையே என்று வருத்தப்படவும் காரணமில்லை. இதோ இருக்கும் வானர வீரர்கள் மஹா சூரர்கள், ஸமர்த்தர்கள், கணக்கில்லாதவர்கள்; தாங்கள் நெருப்பில் குதிக்கும்படி கட்டளையிட்டாலும் ஸந்தோஷத்துடன் குதிக்க ஸித்தமாக இருப்பவர்கள். நமது சத்துருக்களைக் கொல்வது அவர்களுக்கு ஒரு பொருட்டா? இவர்களுடைய முகத்தில் விளங்கும் தெளிவாலும் ஸந்தோஷத்தாலும் இவர்களுடைய உத்ஸாஹத்தை நன்றாகஅறிவேன். அதில் எனக்கு விசேஷ நம்பிக்கை உண்டு. இருக்கட்டும். கவலைப்பட காரணங்களிருந்தாலும் கவலையை விடவேண்டியதல்லவா? கவலைக்கு இடம் கொடுத்தால் உத்ஸாஹத்தை அழிக்கும்;உத்ஸாஹத்தை இழந்தால் தீனனாவான்; தீனத்தன்மையால் செல்வம் அழியும்; செல்வம் அழிந்தால் ஆபத்துக்கள் நேரும்;ஸகலப் பிரயோஜனங்களும் கெடும். மஹாபாபியான அந்த ராவணனை யுத்தத்தில் கொன்று, ஸீதையை அழைத்து வர ஸமுத்திரத்தில் அணைகட்டி நாம் லங்கையில் பிரவேசிக்கும்படியான ஏற்பாடுகளைச் செய்யுங்கள். 'அந்தப் பட்டணத்தைப் பார்த்தால் மாத்திரம் நமக்கென்ன பிரயோஜனம்' என்றால், த்ரிகூடசிகரத்திலுள்ள லங்கையைக் கண்டபொழுதே ராவணன் யுத்தத்தில் இறந்தானென்று நம்புங்கள். கோரமான ஸமுத்திரத்தில் அணை கட்டாமல் லங்கையை நாசம்செய்ய, தேவாஸுரர்கள் ஒன்று சேர்ந்தாலும் முடியாது. லங்கைக்கருகில் நாம் அணை கட்டிச் சென்றவுடன் சத்துருஸைன்யத்தை ஜயித்தோமென்று எண்ணுங்கள். இந்த வானரர்கள் யுத்தத்தில் கைதேர்ந்தவர்கள்; நினைத்த ரூபங்களை எடுக்கக்கூடியவர்கள். ஆகையால் ஸகல புருஷார்த்தங்களையும் நாசம் செய்யும் இந்தச் சோகத்திற்கு இடம் கொடுக்க வேண்டாம். லோகத்தில் சோகம் புருஷனுடைய ஸகல சக்திகளையும் சௌரியத்தையும் நாசம் செய்யும். அது மாத்திரமல்ல. தாங்கள் சோகத்தைவிட்டுத் தைரியத்தைக் கைக்கொள்ள வேண்டும். சௌரியத்தை பிரதானமாயுள்ள மனிதன் ஸம்பாதிக்க வேண்டிய தைரியத்தையும் பராக்கிரமத்தையும் அடையுங்கள். 'இந்தக் கவலை ஸமுத்திரத்தைப்பற்றினதல்ல. ஸீதையைப் பார்க்காததாலுண்டானது'என்றால்,தங்களைப்போன்ற மஹாத்மாக்களும் சூரர்களும் உத்தேசித்த காரியம் மறைந்திருந்தாலும் நஷ்டமானாலும் சோகத்திற்கு இடம் கொடுக்கலாமா? தாங்களே புத்திமான்களுக்குள் சிரேஷ்டர்கள்; ஸகல சாஸ்த்ரங்களின் அர்த்தங்களை நன்றாக அறிந்தவர்கள். என்னைப்போன்ற மந்திரிகளால் சத்துருவை ஜயிக்க வேண்டியது. தாங்கள் வில்லைக் கையிலெடுத்து நின்றால் தங்களுக்கெதிரில் நிற்கக்கூடியவன் இந்த மூன்று லோகங்களிலும் உண்டோ? இந்த வானரர்களிடத்தில் ஒப்புவிக்கப்பட்ட காரியம் கெடாது. விசாலமான ஸாகரத்தைத்

தாண்டி ஸீதையைக் காண்பீர்கள். ஆகையால் சோகத்திற்கு இடம் கொடுத்தது போதும். கோபத்தை வருவித்துக்கொள்ளுங்கள். முயர்ச்சியில்லாத க்ஷத்திரியர்களும் அதிருஷ்டமில்லாதவர்களுமான யாவரும் கடுமையான ஆக்ஞையுடையவனைக் கண்டு பயப்படுகிறார்கள். ஆகையால் இந்தக் கோர ஸமுத்திரத்தைத் தாண்ட ஸூக்ஷ்மமான உபாயத்தை எங்களுடன் கலந்து ஆலோசியுங்கள். என் ஸைன்யங்கள் ஸமுத்திரத்தைத் தாண்டினவுடனே சத்துருவை ஜயிக்குமென்று எண்ணுங்கள். இவர்கள் யுத்தத்தில் சூரர்கள்; நினைத்த ரூபங்களை எடுக்கக்கூடியவர்கள்; மரங்களாலும் பாறைகளாலும் சத்துருக்களை நாசம் செய்வார்கள். அணையில்லாமற் போனாலும் போகட்டும். வேறு எப்படியாவது ஸமுத்திரத்தைத் தாண்டி சத்துருக்களை நிர்மூலம் செய்வோம். இதோ காணப்படும் சுபசகுனங்களைப் பார்க்கும்பொழுது தங்களுக்கு ஜயம் கிடைக்குமென்பதில் ஸந்தேகமில்லை; என் மனத்தில் பொங்கும் ஸந்தோஷத்தால் நமது காரியம் நிறைவேறிற்றென்று எண்ணுகிறேன். அணையைக் கட்டினாலும் கட்டாவிட்டாலும் தாங்கள் ஜயலக்ஷ்மியுடன் திரும்பி வருவீர்களென்பதில் ஸந்தேகமில்லை'' என்றான்.

நிமுக்த்வா ப³ஹுதா⁴ சாபி ஸர்வதா² விஜயீ ப⁴வாந் |
நிமித்தாநி ச பஶ்யாமி மநோ மே ஸம்ப்ரஹ்ருஷ்யதி || (26)

---

## ஸர்க்கம் 3

## ஹநுமான் லங்கையைப் பற்றிக் கூறியது

---

ஸுக்³ரீவஸ்ய வச: ஶ்ருத்வா ஹேதுமத் பரமார்த²வித் |
ப்ரதிஜக்³ராஹ காகுத்ஸ்தே²ா ஹநுமந்த மதா³ப்³ரவீத்'' (1)

இப்படி மனுஷ்யபாவனையை அனுஸரித்து ஸமுத்திரத்தைத் தாண்டுவது கஷ்டமென்று ராமன் வருத்தப்பட்டு, மித்திரனுடைய தேறுதலால் தைரியமடைந்தார். சத்துருவின் கோட்டை, பலம், ஸைன்யம், ராஜ்யம் முதலியவைகளின் ரஹஸ்யத்தை அறிய வேண்டியதென்ற ராஜநீதிப்படி, மிகவும் ஸாரக்ராஹியானதால், ஸுக்ரீவன் யுக்திக்கு ஒத்துச்சொன்ன வார்த்தைகளை அங்கீகரித்து, ஹனுமானைப் பார்த்து ராமன், ''இந்த ஸமுத்திரத்தைத் தாண்டுவது பெரிதல்ல. என் தபோபலத்தால் அணைகட்டுவேன்; பாணங்களால் ஜலத்தை வற்றச் செய்வேன்; அதிருக்கட்டும். லங்கை பிறரால் நெருங்கமுடியாததென்று தெரிவித்தாயே. அங்கே கோட்டையின் அமைப்பு எப்படி? ஜலம், மலை, தரை, வனம் முதலிய அரண்களையும் ஸேனையின் கணக்கையும் கோட்டைவாசல்களிலுள்ள காவலையும் பிராகாரம், அகழ் முதலியவைகளையும் ராக்ஷஸர்



களுடைய வீடுகளையும் நான் பிரத்யக்ஷமாகப் பார்ப்பதுபோல் தெளிவாகச் சொல். லங்கை முழுவதையும் ஸாவகாசமாகக் கவனித்துப் பார்த்திருக்கிறாய்; ஸகல விதத்திலும் நுட்பமான புத்தியுள்ள நீ, முக்கியமான விஷயங்களை அறிவதிலும் மறக்காமலிருப்பதிலும் ஸமர்த்தனென்று எனக்குத் தெரியும். முன்பு இதைப் பற்றி நீ ஒரு தடவை சொல்லியிருந்தாலும் விஸ்தாரமாயும் தெளிவாயும் மறுபடியும் சொல்லவேண்டும்'' என்றார்.

அப்பொழுது பேசும் திறமையுள்ளவர்களுக்குள் சிரேஷ்டரான மாருதி, ''பிரபோ! லங்கையிலுள்ள அரண்களையும் காவல்களையும், ஸைன்யங்களையும் ராக்ஷஸர்கள் ராவணனிடத்தில் வைத்திருக்கும் அபிப்பிராயத்தையும் லங்கையின் செழிப்பையும் ஐசுவரியத்தையும் அதைச் சூழ்ந்த ஸமுத்திரத்தின் லக்ஷணத்தையும் ஸேனைகளின் அணிகளையும் வாஹனங்களின் கணக்கையும் எனக்குத் தெரிந்தவரையில் சொல்லுகிறேன். லங்கையிலுள்ள ஸகலப் பிராணிகளும் தேகஸௌக்யத்தாலும் மனஸ்திருப்தியாலும் எப்பொழுதும் ஸந்தோஷத்தை அனுபவித்துக்கொண்டிருக்கின்றன. லங்கை வெகு விஸ்தாரமானது. உத்தமமான ரதங்களுக்கும் குதிரைகளுக்கும் மதயானைகளுக்கும் கணக்கில்லை. சத்துருக்களால் நெருங்க முடியாதது. கதவுகள் அழுத்தமாயும் இரும்புப் பட்டங்களுடனும் பெரிய தாழ்ப்பாள்களுடனும் அமைக்கப்பட்டிருக்கின்றன. கோட்டை வாசல்கள் நான்கு; வெகு அகலமாயும் உன்னதமாயும் இருக்கின்றன. சத்துருஸைன்யங்களை அப்பொழுதே நாசம் செய்வதற்காக அங்கே விசித்திரமான யந்திரங்கள் வைக்கப்பட்டிருக்கின்றன. அவைகளிலிருந்து பாணங்களும் கற்பாறைகளும் ஓயாமல் வந்து விழுந்துகொண்டே இருக்கும். வாசற்படியில் சுத்தமான இரும்பாலும் எஃகாலும் செய்யப்பட்டு, கூர்மையான முட்களுடன் சதக்னி என்ற அநேக யந்திரங்கள் வைக்கப்பட்டிருக்கின்றன. ராக்ஷஸ வீரர்கள் எந்த நிமிஷமும் அவைகளை உபயோகிக்கத் தயாராய் நியமிக்கப்பட்டிருக்கிறார்கள். லங்கையின் வெளிச்சுவர் ஆகாசத்தை அளாவியிருக்கிறது; வெகு உறுதியானது; தங்கத்தால் செய்யப்பட்டு நவரத்தினங்களாலும், பவழங்களாலும், முத்துக்களாலும் அலங்கரிக்கப்பட்டிருக்கிறது. அதைச் சுற்றிப் பாதாளம் வரையில் ஆழமுள்ள வெகு அகலமான அகழ்கள் குளிர்ந்த ஜலத்தால் நிறைந்து, முதலைகள் முதலிய குரூர ஜந்துக்களுடன் பிறர் நெருங்க முடியாமலிருக்கின்றன. அவைகளுக்குமேல் விஸ்தாரமான பலகைகள் போடப்பட்டிருக்கின்றன. அவைகளை இறக்குவதற்கும் தூக்குவதற்கும் அநேக பெரிய யந்திரங்கள் வைக்கப்பட்டிருக்கின்றன. கோட்டை வாசல்களைக் காப்பதற்குக் கணக்கில்லாத ராக்ஷஸர்கள் அங்கேயே வஸித்துக்கொண்டிருக்கிறார்கள். ஸாதாரண ஸமயங்களில் அந்தப் பலகைகள் அகழ்களின்மேல் போடப்பட்டிருக்கும்; சத்ருஸைன்யங்

கள் ஸமீபித்தால் யந்திரங்களால் உயரத் தூக்கிக் கட்டப்படும். அந்த நான்கு பலகைகளில் வடக்குக் கோட்டை வாசலிலுள்ளது மிகப்பெரிது; அழுத்தமானது; அகழில் நாட்டப்பட்ட தங்க ஸ்தம்பங்களின்மேல் தங்கியிருக்கிறது. அதைக் காப்பவர்கள் தங்குவதற்காக அநேக மேடைகள் கட்டப்பட்டிருக்கின்றன.

ராவணன் அரசர்களுக்குரிய சூதாட்டம் முதலிய தோஷங்களில்லாதவன்; எப்பொழுதும் யுத்தத்தில் பிரியமுள்ளவன். வெகு ஜாக்கிரதையுள்ளவன்; ஸைன்யங்களைப் பரிசோதிப்பதிலும், பரீக்ஷிப்பதிலும், பழக்குவதிலும் சிறிதும் சோம்பலில்லாதவன். லங்கை உன்னதமான த்ரிகூட சிகரத்தில் கட்டப்பட்டிருக்கிறது. ஒரு பிராணியும் அடி வைத்து ஏற முடியாமல் மலையின் பக்கங்கள் வழவழப்பாய் இழைக்கப் பட்டிருக்கின்றன. ஸமுத்திரத்தால் நீர் அரணும், ஸமுத்திரக் கரையிலுள்ள வனங்களால் காட்டரணும், த்ரிகூடப்பர்வதத்தால் மலையரணும், மதில்கள், கோபுரங்கள், அகழ்கள், யந்திரங்கள் முதலியவைகளால் செயற்கை அரணும், யுத்த சாஸ்திர விதிப்படி குறைவற ஏற்பட்டிருக்கின்றன. ஆகையால் பயங்கரமானது; தேவர்களாலும் நெருங்க முடியாதது. நூறு யோஜனை தூரம் வரையில் கரையில்லாத ஸமுத்திரத்தால் சூழப்பட்டிருக்கிறது. அங்கே கப்பல்களின் போக்குவரத்தில்லை. ஆகையால் மற்ற தேசங்களுக்கு லங்கையின் ஸமாசாரம் தெரிய நியாயமில்லை. மதில்களாலும், அகழ்களாலும், யந்திரங்களாலும், சதுரங்க ஸைன்யங்களாலும் எப்பொழுதும் காக்கப்பட்டுப் பிறர் நெருங்க முடியாமல் இருக்கிறது.

மேற்குக் கோட்டை வாசலில் பதினாயிரம் ராக்ஷஸர்களும், தெற்கில் நியுதம் (10,0000) ராக்ஷஸர்களும், கிழக்கில் பிரயுதம் (100,00000) ராக்ஷஸர்களும், வடக்கில் ந்யர்புதம் (100-கோடி) ராக்ஷஸர்களும் சதுரங்க ஸைன்யங்களுடன் ஸகல ஆயுதபாணிகளாய்க் காத்துக்கொண்டிருக்கிறார்கள். லங்கையின் நடுவில் ராக்ஷஸ வீரர்கள் உத்தம வாஹனங்களுடன் கணக்கில்லாமல் வைக்கப் பட்டிருக்கிறார்கள். உத்தமகுலத்தில் பிறந்தவர்கள்; நம்பிக்கையுள்ளவர்கள்; ராவணனால் வெகுமானிக்கப்பட்டவர்கள். சத்துருக்கள் கண்டு நடுங்கும்படியான ராக்ஷஸ ஸைன்யம் ஒரு கோடி லங்கையில் இருக்கும். ஆனால் நான் அகழ்களின்மேல் போடப்பட்ட பலகைகளை முறித்து, அகழ்களைப் பள்ளமில்லாமல் நிரப்பி, லங்கையைக் கொளுத்தி, பிராகாரங்களை இடித்து, ஸைன்யத்தின் நாலிலொரு பங்கை நாசம் செய்தேன். எப்படியாவது இந்த ஸமுத்திரத்தைத் தாண்டிவிடுவோம். வானரங்களால் லங்கை அழிந்ததென்று நம்புங்கள். அங்கதன், த்விவிதன், மைந்தன், ஜாம்பவான், பனஸன், நளன், நீலன் முதலியவர்கள் ஆகாசமார்க்கமாய்ச் சென்று லங்கையையும் அதிலுள்ள மலைகளையும், அகழ்களையும், வாசற்படிகளையும், பிராகாரங்களையும், கிருஹங்களையும் நாசம் செய்து ஜானகியை அழைத்து வருவார்கள். ஆகையால் வானர ஸைன்யத்தின் ஸாரமான இந்த வீரர்களை மேற்சொன்னபடி ஆக்ஞாபியுங்கள். நல்ல முகூர்த்தத்தில் இங்கிருந்து புறப்படவேண்டும்'' என்று வணக்கமாய்த் தெரிவித்தார்.

ஏவமாஜ்ஞாபய க்ஷிப்ரம் ப$^{3}$லாநாம் ஸர்வ ஸங்க்$^{3}$ரஹ்ம் |
முஹூர்தேந து யுக்தேந ப்ரஸ்த$^{2}$ாந மபி$^{4}$ரோசய || (35)

---



## ஸர்க்கம் 4

# லங்கையைக் குறித்து பிரயாணம்

ஶ்ருத்வா ஹநுமதோ வாக்யம் யத$^{2}$ாவ த்$^{3}$நுபூர்வஶ: |
ததோப்$^{3}$ரவீந் மஹாதேஜா ராம: ஸத்யபராக்ரம: || (1)

மஹாபலவானும் வீணாகாத பராக்கிரமசாலியுமான ராமன் ஆஞ்ஜநேயருடைய வார்த்தையைக் கேட்டு, "நீ இப்பொழுது வர்ணித்த லங்கா நகரத்தைப் பாணங்களால் தூளாக்குகிறேன். நான் சொல்வது ஸத்தியம். ஸுக்ரீவ! இந்த முகூர்த்தத்தில் பிரயாணம் செய்வது நலம் என்று தோன்றுகிறது. இது யாத்திரைக்குத் தகுந்தது. ஸூரியன் மத்யாஹ்னத்தில் இருப்பதால், இது ஜயத்தைக் கொடுக்கக்கூடிய 'அபிஜித்' என்ற முகூர்த்தம். இப்பொழுது நான் பிரயாணம் செய்தால், ராவணன் ஸீதையை அபகரித்து எங்கே தான் போகமுடியும்? 'ஸமுத்திரத்தைத் தாண்ட யாதொரு யோசனையும் செய்யாமல் பிரயாணம் செய்வதில் லாபமென்ன?' என்றால் ஒருவன் விஷத்தைக் குடித்து மரணமடையும் ஸமயத்தில் அமிருதத்தைத் தொட்டவுடன் பிழைப்பதுபோல், நாம் ஸீதையை மீட்பதற்குப் புறப்பட்டோமென்று திரிஜடை முதலியவர்கள் சொல்லக்கேட்டு அவள் உயிரை வைத்துக்கொள்வாள். ஆனால், நாம் ஆலோசனை செய்துகொண்டு இங்கேயே இருந்தால் ஸீதை இதை அறியாமல் உயிரை விடுவாள். இன்றைக்கு உத்தரபல்குனீ நக்ஷத்திரம்; நாளைக்கு ஹஸ்தம். ஸுக்ரீவ! ஆகையால் ஸகல ஸைன்யங்களையும் கூட்டிக்கொண்டு இன்றைக்கே பிரயாணம் செய்வோம். உத்தம சகுனங்கள் நமக்கு அனுகூலமாய்க் காணப்படுகின்றன. ஆகையால் ராவணனைக் கொன்று ஸீதையை அழைத்து வருவோமென்று எண்ணுகிறேன். கண்ணின் மேல்பாகம் துடிப்பதால் நமக்கு ஜயம் ஸித்தம். நமது ஸைன்யத்திற்கு முன்பாகத்தில் நீலன் அநேக வானரர்களுடன் நாம் போகவேண்டிய மார்க்கத்தைப் பரிசோதித்துக்கொண்டு செல்லட்டும்'' என்றார். ஸுக்ரீவனும் லக்ஷ்மணனும் ராமனுடைய வார்த்தைகளைக் கொண்டாட, அவர் நீதி சாஸ்திர விதிப்படி ஸேனையைப் பிரயாண காலத்தில் அணி வகுத்தார்.

"நீல! நீ ஸேனைகளை அழைத்துப் போகும் வழி குளிர்ந்த காடுகளின் நடுவாக இருக்கவேண்டும். பழம், கிழங்கு, ஜலம், தேன் முதலிய பதார்த்தங்கள் பூர்ணமாகக் கிடைக்க வேண்டும். துஷ்ட ராக்ஷஸர்கள் வழியிலுள்ள பழங்களையும், கிழங்குகளையும், வேர்களையும், ஜலத்தையும் விஷமிடுவார்கள். ஆகையால் நீங்கள் வெகு ஜாக்கிரதையாக அவைகளைப் பரீக்ஷிக்க வேண்டியது. உங்களில் சிலர் காடுகளிலுள்ள பள்ளத்தாக்குகளில் சத்துருக்கள் மறைந்திருக்கிறார்களா என்று இறங்கிப் பார்க்கவேண்டியது. நமது ஸைன்யத்தில் யுத்தத்திற்கு உபயோகமில்லாத பாகம் அதிகமாக இராது. இருந்தால் அதைக் கிஷ்கிந்தையிலேயே வைத்துப்போவது நலம். நாம் செய்யப்போகிற கோர யுத்தத்திற்கு பூர்ண பலமும் சக்தியும் உள்ளவர்களை மாத்திரம் அழைத்துப் போவோம். எவ்விடத்தில் சத்ருஸைன்யத்தை எதிர்பார்க்கிறானோ அவ்விடத்தில் தன் ஸைன்யத்தைப் பலப்படுத்தவேண்டியதென்ற நீதிசாஸ்திரப்படி, கஜன், கவயன், கவாக்ஷன் முதலிய வானர வீரர்கள் ஆயிரக் கணக்காய்க் கொழுத்த காளைகளைப்போல் பயங்கரமான நமது ஸேனாஸமுத்ரத்தின் முன் பாகத்தை நடத்தட்டும். ஸகல திக்குகளிலும் ஸேனாபதிகளையும் அணித் தலைவர்களையும் நியமிக்க வேண்டியதென்ற நீதிசாஸ்திரப்படி, ரிஷபன் நமது ஸைன்யத்தின் மேற்குப்பக்கத்தையும், கந்தமாதனன் இடது பக்கத்தையும் காப்பாற்றி வரட்டும். தேவேந்திரன் ஐராவதத்தில் ஏறுவதுபோல் நான் மாருதியின்மேல் ஏறி ஸைன்யத்திற்கு நடுவிலிருந்து அவர்களை உத்ஸாஹம் செய்கிறேன். குபேரன் ஸார்வபௌமம் என்ற திக்கஜத்தில் ஏறுவதுபோல், யுத்தத்தில் சத்துருக்களுக்குக் காலனான லக்ஷ்மணன் அங்கதன்மேல் ஏறி வரட்டும். நீ பல்லக்கில் எங்களுடன் வா. ஜாம்பவான் ஸுஷேணன், வேகதர்சி ஜாம்பவானுடைய ஸஹோதரனான ரிக்ஷரஜஸ் முதலியவர்கள் ஸைன்யத்தின் பின் பாகத்தை ரக்ஷிக்கட்டும்" என்றார்.

ஸுக்ரீவனும் அப்படியே உத்தரவு செய்ய, வானர கணங்கள் ராக்ஷஸர்களுடன் யுத்தம் செய்ய ஆசைகொண்டு, குகைகளிலிருந்தும் பர்வத சிகரங்களிலிருந்தும் வெளிப்பட்டன. பிறகு ஸுக்ரீவனும் லக்ஷ்மணனும் முன்னே செல்ல, நீதி சாஸ்திர நிபுணரான ராமன் ஸைன்யத்துடன் தெற்கே பிரயாணம் செய்ய ஆரம்பித்தார். நூறு, ஆயிரம், லக்ஷம், கோடி, அயுதமென்று கணக்கில்லாமல் வானர ஸைன்யம் அவரைப் பின் தொடர்ந்தது. ஸுக்ரீவனுடைய ஆக்ஞைக்கு உட்பட்ட அவர்களெல்லோரும் பலத்தால் கொழுப்படைந்தவர்கள்; ஸந்தோஷத்துடன் குதித்துக் கொண்டும் தாவிக்கொண்டும் பாய்ந்து கொண்டும் கர்ஜித்துக் கொண்டும் கீச்சென்று கத்திக்கொண்டும் தேனையும் பழங்களையும் இஷ்டப்படி புஜித்துக்கொண்டும், புஷ்பக் கொத்துக்களையுடைய மஹாவிருக்ஷங்களைப் பெயர்த்தெடுத்துக்கொண்டும், தெற்கே



ததோ வாநரராஜேந லக்ஷ்மணேந ச பூஜித: |
ஜகா3ம ராமோ த4ர்மாத்மா ஸஸைந்யோ த3க்ஷிணாம் தி3சம் || —யுத். 4ஸ - 23 சு.

இப்படி ஸுக்ரீவனும் லக்ஷ்மணனும் பூஜிக்க, ரகுவீரன் வானர ஸைன்யத்துடன் தெற்கு திக்கில் பிரயாணம் செய்து கொண்டிருந்தார்.

பிரயாணம் செய்தார்கள். கொழுப்பால் ஒருவரை யொருவர் தூக்கி எறிகிறார்கள். அதற்குப் பதில் செய்ய முடியாத சிலர், வார்த்தை களால் சண்டையிடுகிறார்கள்; தங்களைத் தூக்கி எறிந்தவர்களைத் தாங்களும் வாரி எறிகிறார்கள். சிலர் ராகவனுடைய ஸமீபத்தில் வந்து நாங்களே ராவணனைக் கொல்வோமென்று கர்ஜிக்கிறார்கள். நீலன் குமுதன் முதலிய வானர வீரர்கள் ஸைன்யத்திற்கு முன்பாக வெகுதூரம் பரீக்ஷித்துக் கொண்டு சென்றார்கள். ஸுக்ரீவனும் லக்ஷ்மணனும் ராமனும் நடுவில் சென்றார்கள். சதவலி என்ற வீரன் பத்துகோடி வானரர்களுடன் ஸகல ஸைன்யத்தையும் தானொரு வனே ரக்ஷித்து வந்தான். பனஸன், கஜன் அர்க்கன் முதலியவர்கள் ஸைன்யத்தின் இடது பக்கத்தில் காத்து வந்தார்கள். ஸுஷேணன் ஜாம்பவான் முதலியவர்கள் ஸுக்ரீவனுக்குப் பின்னாலிருந்த ஸைன் யத்தைக் காத்து வந்தார்கள். எல்லோருக்கும் அதிபதியான நீலனென்றவானரவீரன் ஸைன்யம் முழுவதையும் வெகுஜாக்கிரதை யாய்க் காப்பாற்றிவந்தான். தரீமுகன், ப்ரஜங்கன், ரம்பன் முதலிய வர்கள் ஸகல திக்குகளிலும் ஓடி ஸேனைகளைச் சீக்கிரப்படுத்தி நடத்திக் கொண்டு போனார்கள். இப்படிச் சென்று கொண்டிருக்கை யில் மரங்களடர்ந்த ஸஹ்யமென்ற பர்வதத்தையும் ஏரிகளையும் மலர்ந்த புஷ்பங்களால் நிறைந்த ஓடைகளையும் வனங்களையும் தூரத்தில் கண்டார்கள். ஸமுத்திரத்தைப் போல் எல்லையற்றுக் கேட்போர் நடுங்கும்படி சப்திக்கும் அந்த வானர ஸைன்யம், ராம னுடைய கடுமையான ஆக்ஞைக்குப் பயந்து நகரங்களையும் கிராமங் களையும் விட்டு ஒதுங்கிச் சென்றது. வானர வீரர்கள் அடிக்கடி ராமனுக்கு முன்பாக வந்து குதித்து அவருடைய திருமேனியின் அழகை அனுபவித்துக் கொண்டிருந்தார்கள். திறமையுள்ள ஸாரதி யால் நடத்தப்பட்ட உத்தமமான குதிரைகளைப்போல், மாருதியா லும்அங்கதனாலும் சுமக்கப்பட்ட ராம லக்ஷ்மணர்கள் சுக்கிரனாலும் பிருஹஸ்பதியாலும் தொடப்பட்ட சந்திரஸூரியர்களைப்போல் விளங்கினார்கள். இப்படி ஸுக்ரீவனும் லக்ஷ்மணனும் பூஜிக்க, ரகு வீரன் வானர ஸைன்யத்துடன் தெற்கு திக்கில் பிரயாணம் செய்துகொண்டிருந்தார்.

அப்பொழுது சகுனசாஸ்திரத்தில் நிபுணரும் ஸமயோசித புத்தியுடையவருமான லக்ஷ்மணன், தன் மனோரதங்கள் நிறை வேறினதால் ராமனைப் பார்த்து, "அண்ணா! ஆகாசத்திலும் பூமி யிலும் காணப்படும் சகுனங்களால் தங்களுடைய எண்ணம் ஸித் திக்குமென்று நினைக்கிறேன். ராவணனால் அபகரிக்கப்பட்ட ஸீதை யைச் சிறைமீட்டு, ராவணனை யுத்தத்தில் கொன்று நமது எண்ணங் களை நிறைவேற்றி, அயோத்யைக்குச் சென்று அங்குள்ள பிரஜை களால் கொண்டாடப்படுவோம். நமது ஸேனையின்மேல் காற்று மிருதுவாயும் ஹிதமாயும் ஸுகமாயும் மங்களகரமாயும் பின் பக்கத் திலிருந்து வீசுகிறது. மிருகங்களும் பக்ஷிகளும் இனிமையாயும்

பூர்ணஸ்வரத்துடன் சப்திக்கின்றன. ஸகலதிக்குகளும் தெளிந்திருக்கின்றன. ஸூரியன் களங்கமில்லாமல் பிரகாசிக்கிறான். சுக்கிரன் தங்களுக்குப் பின்திசையில் இருக்கிறான்,

ஸகல வேதங்களை அறிந்தவரும் பாபக்ரஹத்துடன் ஸம்பந்தப் படாதவருமான சுக்கிரன், தங்களுக்கு அனுகூலர். ஸப்தரிஷிகள் தெற்குதிக்கில் சென்றார்கள்.( துருவனை பிரதக்ஷிணம் செய்கிறார்கள்.) இக்ஷ்வாகு வம்சத்தரசர்களின் மூல புருஷர்களுக்குள் சிரேஷ்டரான திரிசங்கு, புரோஹிதரான வஸிஷ்டருடன் தெளிவாகப் பிரகாசிக்கிறார். விசாகத்திலுள்ள இரண்டு நக்ஷத்திரங்களும் குரூரக் கிரஹங்களால் பீடிக்கப் படாமல் தெளிவாய் பிரகாசிக்கின்றன. ராக்ஷஸர்களுடைய நக்ஷத்திரம் மூலம்; நைருதியைதேவதையாக உடையது; இப்பொழுது ஸமீபத்திலுள்ள தூமகேதுவால் கொளுத்தப்படுகிறது. இவையெல்லாம் ராக்ஷஸர்களுடைய நாசத்திற்கு அடையாளங்கள். காலம் குறுகினவர்களுடைய நக்ஷத்ரங்கள் பாபக்கிரஹங்களால் பீடிக்கப்படுகின்றன. ஜலங்கள் தெளிந்து ருசியாயும் இருக்கின்றன. வனங்களில் பழங்கள் நிறைந்திருக்கின்றன; அந்தந்த ருதுக்களுக்குத் தகுந்தபடி மரங்களில் புஷ்பங்களும் பழங்களும் காணப்படுகின்றன. முன்பு தாரகாஸுர வதகாலத்தில் தேவர்களுடைய ஸைன்ய மிருந்ததைப் போல் நமது ஸைன்யங்களும் விசேஷமாய் பிரகாசிக்கின்றன. இவை எல்லாவற்றையும் பார்த்துத் தாங்கள் ஸந்தோஷமடைய வேண்டும்'' என்று லக்ஷ்மணன் ராமனைத் தேற்றினார்.

அப்பொழுது வானர ஸைன்யம் பூமியை மறைத்துக் கொண்டு சென்றது. கரடிகளும் குரங்குகளும் கைகளாலும் கால்களாலும் வாரியிறைத்த புழுதி, ஸூரியகிரணங்களை மறைத்துப் பூமியெங்கும் இருட்டாகச் செய்தது. மேகக் கூட்டங்கள் மழைக் காலத்தில் ஆகாசத்தை மறைப்பதுபோல், பர்வதங்களையும் வனங்களையும் இருந்த இடம் தெரியாமல் மறைத்துக் கொண்டு அந்த ஸேனை பிரயாணம் செய்தது. ஆறுகளையும் ஓடைகளையும் சுனைகளையும் வனங்களையும் மலைகளையும் ஸமதேசங்களையும் தாண்டிக் குளிர்ந்த ஜலமுள்ளவிடங்களின் நடுவிலும், மரங்களடர்ந்த பர்வதங்களின் மேலும் ஸமதேசங்களில் எல்லாப் பக்கங்களிலும் ருசியான பழங்களுள்ள வனங்களுக்குள்ளும் புகுந்து சென்றது. எல்லோரும் ஸந்தோஷத்தால் நிறைந்த மனமுள்ளவர்கள்; வேகத்தில் வாயுவைப் போன்றவர்கள். ராம காரியத்தில் அவர்களுடைய பராக்கிரமம் விருத்தியாயிற்று. பலக் கொழுப்பாலும் வீரியப் பெருக்காலும் ஸந்தோஷ மிகுதியாலும் பால்யச் செருக்காலும் சிலர் அதிவேகமாகச் சென்றார்கள்; சிலர் தாவிச்சென்றார்கள்;சிலர் கிலகிலவென்று கத்தினார்கள்;சிலர் வால்களைச் சுழற்றியடித்தார்கள்; சிலர் கைகளாலும், கால்களாலும், விருக்ஷங்களையும், பாறைகளையும் நாசம் செய்தார்கள்; சிலர் பர்வதசிகரங்களில் ஏறிக் கர்ஜித்தார்கள்; சிலர் ஸிம்ஹநாதம் செய்தார்கள்; சிலர் துடைகளின் வேகத்தால் கொடிகளை அறுத்தார்கள்; சிலர் கொழுப்பால் கொட்டாவி விட்டுக் கொண்டு பாறைகளையும் விருக்ஷங்களையும் விட்டெறிந்து விளையாடினார்கள். நூறு, ஆயிரம், பதினாயிரம், லக்ஷம், கோடி என்று கணக்கில்லாமல் பூமி முழுவதும் வானரர்களால் மூடப்பட்டிருந்தது. இப்படி ஸுக்ரீவனால் ரக்ஷிக்கப்பட்ட அந்த ஸைன்யம் வெகு ஸந்தோஷத்துடன் ராத்திரிப் பகலாய்ச் சென்று கொண்டிருந்தது. அதிலுள்ள ஒவ்வொருவனும் ஸீதையை அதிசீக்கிரத்தில் விடுவிக்க வேண்டுமென்ற கவலை கொண்டவனாக, ஒரு க்ஷணமாவது தாமதம் செய்யாமல் அதிவேகமாய்ச் சென்றான். பிறகு நானாவிருக்ஷங்களடர்ந்த ஸஹ்யம் மலயமென்ற பர்வதங்களைத் தாண்டிச் செல்லுகையில், ராமலக்ஷ்மணர்கள் சிலவிடங்களில் காட்டு மரங்கள் காற்றால் அடிக்கப்பட்டுக் கற்பாறைகளில் புஷ்பங்களை உதிர்ப்பதையும், தேன் பாயும் சோலைகளில் வண்டுகள் மதுரமாய்ப் பாடுவதையும், இளந்தென்றல் குளிர்ச்சியாய் அடிப்பதையும், பர்வதங்கள் தாதுக்களால் விளங்குவதையும், வாயு வேகத்தால் பிளக்கப்பட்ட தாதுவின் பொடிகள் வானரஸைன்யத்தை மறைப்பதையும், மலைச்சாரல்களில் தாழை முதலிய விருக்ஷங்கள் புஷ்பித்திருப்பதையும், வானர ஸைன்யங்கள் அவைகளைச் சின்னாபின்னமாக்குவதையும், அங்கங்கே மலைப் பிரதேசங்களில் வாவிகளும் ஓடைகளும் சக்கரவாகம் முதலிய பக்ஷிகளால் அலங்கரிக்கப் பட்டு, கரடி, செந்நாய், புலி, ஸிம்ஹம், யானை முதலிய காட்டு மிருகங்களால் நிறைந்திருப்பதையும், நானா வர்ணமுள்ள இறக்கைகளுடன் பறவைகள் மலைச்சாரல்களில் மதுரமாய்க் கூவுவதையும் பார்த்துக் கொண்டே சென்றார்கள். வானரர்கள் ஜலத்தில் ஸ்நானம்செய்து குதித்து விளையாடினார்கள்; பர்வதங்களில் ஏறிக் குதித்தார்கள்; ஒருவரையொருவர் பார்த்து நகைத்தார்கள்; ருசியான பழங்களையும், வேர்களையும், புஷ்பங்களையும் பறித்துத் தின்றார்கள்; வேண்டியவரையில் தேனைக் குடித்துக் களித்தார்கள்; மரங்களை முறித்துக் கொடிகளை அறுத்தார்கள்; மலைச் சிகரங்களைப் பொடி செய்தார்கள்; சிலர் குடி மயக்கத்தால் மரங்களுக்கு மரம் தாவிக் கொண்டே சென்றார்கள்; சிலர் கீழே விழுந்தார்கள். பூமியில் ஊசி நாட்ட இடமில்லை. வயலில் தங்கவர்ணமுள்ள கதிர்கள் நிறைந்திருப்பதுபோல் அந்தப் பிரதேசம் முழுவதும் வானரர்களால் நிறைந்திருந்தது. பிறகு ராமன் மஹேந்திர பர்வதத்திற்கு வந்து, ஸமுத்திரத்தைப் பார்க்க ஆவல்கொண்டு, கண்கள் மலர்ந்து, சிகரத்தில் ஏறி, ஆமை, முதலை, திமிங்கிலம், ஸர்ப்பம் முதலிய மஹா ஜந்துக்களால் நிறைந்த ஸமுத்திரத்தைப் பார்த்தார். வானரஸைன்யங்களும் ஸஹ்யம் மலயமென்ற பர்வதங்களைத் தாண்டி, பயங்கரமாகச் சப்திக்கும் ஸமுத்திரக் கரைக்கு வந்து சேர்ந்தார்கள். பிறகு ராமலக்ஷ்மணர்களும் ஸுக்ரீவனும் அங்கிருந்து இறங்கி

வேலாவனத்தைத் தாண்டி அலைகளால் மோதப்பட்ட கற்பாறைகளால் நிறைந்த ஸமுத்திரக் கரைக்கு வந்தார்கள். அப்பொழுது ராமன், "ஸுக்ரீவ! ஸமுத்திரக்கரை வந்து சேர்ந்தோம். முன்பு நமக்குள்ள கவலையே இப்பொழுதும் உபத்திரவிக்கிறது. இதற்கப்பால் கரை காணமுடியாது. உபாயத்தாலல்லாமல் இந்த ஸமுத்திரத்தைத் தாண்டமுடியாது. ஆகையால் இங்கேயே ஸைன்யத்தை நிறுத்தி, மேல் நடக்கவேண்டிய காரியத்தை ஆலோசிப்போம். நமது ஸைன்யம் அக்கரை சேரவேண்டியதல்லவா? ஸமுத்திரக் கரையில் நமது ஸைன்யங்கள் தங்கட்டும். இதைத் தாண்டுவதற்கு ஆலோசனை செய்ய வேண்டிய காலம் வந்துவிட்டது. எவனும் தன் ஸைன்யத்தை விட்டு அப்புறம் செல்லக்கூடாது. வானர வீரர்கள் அங்கங்கே சென்று சத்துருக்கள் ஒளிந்திருக்கிறார்களோ என்று வெகு ஜாக்கிரதையாகப் பரிசோதிக்க வேண்டியது" என்றார்.

உடனே ஸுக்ரீவனும் லக்ஷ்மணனும் ஸமுத்திரக் கரையில் மரங்கள் அடர்ந்தவிடத்தில் ஸைன்யத்தை அணிவகுத்தார்கள். ஸமுத்திரத்திற்கு ஸமீபத்திலிருந்த வானர ஸைன்யம் மற்றொரு ஸமுத்திரத்தைப் போல் விளங்கிற்று. பிறகு வானரசிரேஷ்டர்கள் வேலாவனத்தில் இறங்கி, எப்பொழுது அக்கரைபோய்ச் சேருவோமென்ற எண்ணத்துடன் அங்கே தங்கியிருந்தார்கள். அந்த ஸைன்யத்திலிருந்து உண்டான சப்தம் ஸமுத்திரத்தின் பேரோசையை அடக்கிவிட்டது. ஸுக்ரீவனுடைய உத்திரவின்படி அது மூன்று வட்டமாக வகுக்கப்பட்டது. வானரவீரர்கள் ஸமுத்திரக் கரைக்கு ஸந்தோஷத்துடன் சென்று, கரைகாணாமல் ஒருவராலும் அண்டமுடியாமல் மலைபோன்ற அலைகள் ஓயாமல் மோதிக்கொண்டிருப்பதையும், குரூரமான பெரிய ஜலஜந்துக்களால் நிறைந்திருப்பதையும், பெருங்காற்றுகள் ஓயாமல் அடித்துக்கொண்டிருப்பதையும், ராக்ஷஸர்கள் எப்பொழுதும் அங்கே ஸஞ்சரித்துக்கொண்டிருப்பதையும் கண்டு மனம் தளர்ந்தார்கள். அந்தக் கடலில், பயங்கரமான முதலைகளே குரூரக்கிரஹங்கள்; அது இரண்டு ஸந்தியாகாலங்களிலும் பயங்கரமாய்ப் பொங்கிக் கொண்டிருந்தது. நுரைக் கூட்டங்களால் சிரிப்பதுபோலும் அலைகளால் கூத்தாடுவதுபோலும் இருந்தது. உதித்தவுடன் சந்திரன் ஒவ்வொரு அலையிலும் தோன்றுவதால் அநேக பிரதிசந்திரர்களுடன் கூடியிருப்பதுபோல் இருந்தது. பெருங்காற்றிற்கு ஸமமான வேகத்தையுடைய பெரும் முதலைகளும், நூறுயோஜனை நீளமுள்ள திமிகளும், அவற்றையும் விழுங்கும் திமிங்கிலங்களும், தலையில் பிரகாசிக்கும் ரத்தினங்களையுடைய மஹாஸர்ப்பங்களும், நீர்யானை சிம்சுமாரம் முதலிய ஜலஜந்துக்களும் அதில் நிறைந்திருந்தன. கற்பாறைகளாலும் பர்வதங்களாலும் நிறைந்திருப்பதால் அங்கே கப்பல்கள் போக முடியாது; அஸுரர்களுக்கு இருப்பிடம். ஸமுத்திரத்தில் பெரிய ஸர்ப்பங்களைப் போன்ற தேகங்களுடன் மகரமீன்கள் வஸித்துக்கொண்டிருந்தன; ஆகாசத்தில் நாககணங்கள் ஸஞ்சரித்தார்கள். ஸமுத்திரத்தில் ஜலம் காற்றால் அடிக்கப்பட்டு அலைகளாக எழும்பி விழுந்தன; ஆகாசத்தில் எப்பொழுதும் மேகங்கள் காற்றால் ஒன்று சேர்ந்து அடிக்கடி கலைக்கப்பட்டுக்கொண்டிருந்தன. ராத்திரியில் ஸமுத்திரத்தின் ஜலத்துளிகள் அக்னிப்பொறிகள் போல் பிரகாசித்தன; ஆகாசத்தில் நக்ஷத்திரங்கள் ராத்திரியில் ஜ்வலித்தன. ஸமுத்திரத்தின் ஜலம் தெளிவாயும் கறுப்பாயும் இருந்தது; ஆகாசமும் அப்படியே இருந்தது. ஸமுத்திரத்தில் மஹாஸர்ப்பங்கள் வஸித்தன; ஆகாசத்தில் உரககணங்கள் ஸஞ்சரித்தார்கள். (உரகர்கள்—ஸர்ப்பங்கள்.) ஸமுத்திரத்தில் அஸுரர்கள் வஸித்தார்கள்; ஆகாசத்திலும் அப்படியே. ஸமுத்திரம் பாதாளத்தைப்போல் ஆழமற்றது; ஆகாசமும் அப்படியே. ஸமுத்திரம் பார்ப்பவர்களுக்குப் பயத்தை உண்டு பண்ணும்; ஆகாசமும் அப்படியே. ஆகையால் ஸமுத்திரம் ஆகாசத்தைப்போலும் ஆகாசம் ஸமுத்திரத்தைப்போலும் ஒன்றிற்கொன்று பேதமில்லாமல் காணப்பட்டது. ஸமுத்திரம் ரத்தினங்களால் நிறைந்திருப்பதுபோல் ஆகாசம் நக்ஷத்திரங்களால் நிறைந்திருந்தது. ஸமுத்திரத்தின் அலைகள் ஆகாசத்தில் மேகங்களின் பிரதிபிம்பத்தைப் போல் காணப்படுகின்றன. ஸமுத்திரத்திற்கும் ஆகாசத்திற்கும் யாதொரு பேதமும் இல்லை. அலைகள் ஒன்றோடொன்று சேர்ந்து மோதுவதாலுண்டான பயங்கரமான சப்தம் ஸமுத்திரராஜனுடைய பேரீ முதலிய வாத்தியங்கள்யுத்தகாலத்தில் இடிக்கப்படுவதுபோல் இருந்தது.

*ததோ விஸ்மயமாபந்நா த$^{3}$த்$^{3}$ருஶுர் ஹரயஸ் தத$^{3}$ா |*
*ப்‘ராந்தோர்மிஜால ஸந்நாத$^{3}$ம் ப்ரலோலமிவ ஸாக$^{3}$ரம் ‖ (121)*

---

## ஸர்க்கம் 5

# ராமனுடைய விரஹதாபம்

---

*ஸா து நீலேந விதி‘வத் ஸ்வாரக்ஷா ஸுஸமாஹிதா |*
*ஸாக$^{3}$ரஸ்யோத்தரே தீரே ஸாது‘ ஸேநா நிவேஶிதா ‖ (1)*

### அவதாரிகை

செய்த உபகாரத்தை மறக்காமலிருப்பது, மித்திரர்களுடைய இஷ்டத்தை அனுஸரித்து நடப்பது, காரியங்களைப் பரீக்ஷித்துச் செய்வது, அளவற்ற உத்ஸாஹத்துடனிருப்பது முதலிய லோக ரக்ஷகனுக்கு வேண்டிய கல்யாணகுணங்கள் ராமனிடத்தில் இருப்பதாக இதுவரையில் வர்ணிக்கப்பட்டன. இந்த ஸர்க்கத்தில் கருணை என்ற பிரதானகுணம் வர்ணிக்கப்படுகிறது.

---

ஸமுத்திரத்தின் வடக்குக்கரையில் வானர ஸைன்யத்தைத் தங்கச் செய்து, ஸேனாபதியான நீலன், நீதிசாஸ்திரப்படி காவல்களை

ஏற்படுத்தி, மைந்தனையும் த்விவிதனையும் ஸகல திக்குகளிலும் எப்பொழுதும் ஸஞ்சரித்துக்கொண்டு ஸேனையை ஜாக்கிரதையாய்ப் பாதுகாக்கும்படி ஆக்ஞாபித்தான். ஸைன்யம் ஸௌக்கியமாக ஸமுத்திரக் கரையில் தங்கினபிறகு, ராமன் ஸமீபத்திலிருந்த லக்ஷ்மணனைப் பார்த்து, "பிரியமான வஸ்துவைவிட்டுப் பிரிந்ததாலுண்டாகும் துக்கம் நாளடைவில் குறையுமென்று லோகத்தில் சொல்வது வழக்கம். ஆனால் ஸீதையைப் பார்க்காமலிருக்கும் எனக்கு நாளுக்கு நாள் சோகம் அதிகரிக்கிறது. 'சத்துருவால் அபகரிக்கப்பட்டுத் தூரதேசத்திலிருக்கிறாளென்று நீர் வருத்தப்பட நியாயமில்லையே. பராக்கிரமசாலியான உமக்கு அவளை மீட்பது பெரிய காரியமா' என்றால், ஸமுத்திரத்தை அணைகட்டி ஸுக்ரீவ ஸைன்யங்களுடன் லங்கைக்குச் சென்று ஸீதையை மீட்டு வருவோம். பலவானான ராவணனால் அபகரிக்கப்பட்டிருந்தால் அவன் தலையை அறுத்து ஸீதையை மீட்டு வருவோம். இதற்காக நான் வருத்தப்படவில்லை. உத்தமமான போகங்களை அனுபவிப்பதற்குத் தகுந்த இந்தக் காலம் வீணாகப் போகிறதே என்றல்லவா வருத்தப்படுகிறேன். ஸீதை பார்க்கிற சந்திரனையே நானும் பார்க்கிறேன். அதன் மூலமாய் நான் அவளைப் பார்ப்பது போலல்லவா? வாயுவே! அப்படியே நீயும் ஸீதையிருக்குமிடத்திலிருந்து வீசு. அவளைத் தொட்டு என்னையும் தொடு. உன் மூலமாய் அவளை ஆலிங்கனம் செய்துகொள்ளுகிறேன். இதிருக்கட்டும். இதுவும் நான் படும் துக்கத்திற்குக் காரணமல்ல. ஸீதை ஸகல போகங்களையும் அனுபவித்துக்கொண்டு அயோத்யையில் ஸுகமாக இருக்கக்கூடாதா? அவைகளை விட்டு என்னுடன் வனத்திற்கு வந்தாள். ராவணன் அவளை அபகரிக்கும்பொழுது பதிவிரதாக்னியால் அவனை ஒரு க்ஷணத்தில் சாம்பலாக்கியிருக்கலாம். ஆனால் அது தனக்குத் தகாதென்றும் என் கீர்த்திக்குக் குறைவு வருமென்றும் நினைத்தல்லவா, 'ஆ! நாதா!' என்று, தன்னைக் காப்பாற்றுவதற்கு எனக்குள்ள சக்தியை நம்பி, என்னைச் சரணமடைந்தாள். அதை நினைக்க நினைக்க, கொடிய விஷத்தைக் குடித்தால் அது ஒவ்வொரு அவயவத்தையும் கொளுத்துவதுபோல், என்னைக் கொளுத்துகிறது. காமமென்ற நெருப்பு என் தேகத்தை வாட்டுகிறது. ஸீதையை விட்டுப் பிரிந்ததே அதை வளர்க்கும் விறகுகள்; அவளைப்பற்றின ஓயாத நினைவே நெருப்பு ஜ்வாலைகள்; அது ராத்திரிப்பகலாய் இடைவிடாமல் வரவரத் தீக்ஷ்ணமாய் எரிகிறது. லக்ஷ்மண! ஸீதையின் ஞாபகத்தை அடிக்கடி வருவிக்கும் நீ இல்லாவிட்டால் இந்த ஸமுத்திரத்தில் இறங்கித் தாபம் தீர்ந்து ஸுகமாய்த் தூங்குவேன். ஆனால் இப்பொழுது ஜ்வலிக்கும் காமாக்னி, ஜலத்தில் தூங்கும் என்னை எப்படியாவது கொளுத்திவிடும். நானும் அவளும் ஒரே பூமியிலிருக்கிறோமென்ற காரணத்தால் மாத்திரம் ஸஹிக்க முடியாத இந்தச் சோகத்தைப் பொறுத்துக்கொண்டு பிழைத்திருக்கிறேன். அவளிடத்தில் அளவற்ற



ஆசையுள்ள எனக்கு இது நாங்களிருவரும் ஒரே படுக்கையில் படுத்திருப்பதுபோல் தோன்றுகிறது. ஜலம் வற்றின வயல், ஜலம் நிறைந்த வயலுக்கு ஸமீபத்திலிருப்பதால் பிழைப்பது போல், அவள் உயிரோடிருக்கிறாளென்ற ஸமாசாரத்தைக் கேட்டதால் பிழைத்திருக்கிறேன். சத்துருக்களை நாசம் செய்து, செந்தாமரை இதழ்கள் போன்ற நேத்திரங்களையுடைய ஸீதையை, அளவற்ற ஐசுவரியத்தைப்போல் எப்பொழுது பார்ப்பேன்? அவளுடைய தாமரைபோன்ற அழகிய உதடுகளையுடைய முகத்தைக் கொஞ்சம் உயரத் தூக்கி, ரோகத்தால் பீடிக்கப்பட்டவன் உத்தமமான ஔஷதத்தை ஆவலாய்க் குடிப்பதுபோல், எப்பொழுது அதரபானம் செய்வேன்? பருத்து இடைவெளியில்லாமல் பனம்பழங்களைப் போன்ற அவளுடைய ஸ்தனங்கள், என்னை அவள் ஆலிங்கனம் செய்யும்பொழுது பரபரப்புடன் எப்பொழுது என் தேகத்தில் படுமோ? கருத்த கடைக்கண்களையுடைய என் பிரியநாயகி, ராக்ஷஸிகளுக்கு நடுவில் அகப்பட்டுக்கொண்டு, நான் அவளுக்கு நாதனாயிருந்தும் அனாதையைப்போல் காப்பாற்றுவாரைத் தேடுகிறாள். ஜனகராஜருடைய புத்திரியும் தசரத சக்ரவர்த்தியின் நாட்டுப்பெண்ணும் எனக்குப் பிரிய பார்யையுமான ஸீதை ராக்ஷஸிகளுக்கு நடுவில் எப்படித் தூங்குகிறாள்? சரத் காலத்தில் நீருண்ட மேகங்களை விலக்கிச் சந்திரகிரணம் வெளிப்படுவதுபோல் ராக்ஷஸர்களை விலக்கி எப்பொழுது வெளிப்படுவாளோ? தேச காலங்களின் விரோதத்தால் ஸ்வபாவமாய் மெல்லிய தேகத்தையுடைய ஸீதை, சோகத்தாலும் ஆகாரமில்லாமையாலும் இன்னும் இளைத்துப் போயிருப்பாள். ராவணனுடைய ஹ்ருதயத்தில் என் பாணங்களை நாட்டி, எப்பொழுது ஸகல துக்கத்தையும் ஒழிப்பேன்? ஸீதையைத் திரும்பியடைந்து, தேவஸ்த்ரீகளைப் போன்ற அந்த மஹாபதிவிரதை ஆவலுடன் என் கழுத்தைக் கட்டிக்கொண்டு எப்பொழுது ஆனந்த பாஷ்பத்தைப் பெருக விடுவாள்? மனிதன் அழுக்கு வஸ்திரத்தை அவிழ்த்தெறிவது போல், ஸீதையை விட்டுப் பிரிந்ததாலுண்டான கோரமான சோகத்தை எப்பொழுது தொலைப்பேன்" என்று மஹாபுத்திமானான ராமன் பிரலாபிக்கையில் ஸூரியன் அஸ்தமித்தான். பிறகு லக்ஷ்மணன் பலவிதமாய் அவரைத் தேற்ற, ஸந்தியாதேவதையை உபாஸித்தார்.

ஆஶ்வாஸிதோ லக்ஷ்மணேந ராம: ஸந்த்'யா முபாவிஶத் |
ஸ்மரந் கமலபத்ராக்ஷீம் ஸீதாம் ஶோகாகுலீக்ருத: || (23)

---

## ஸர்க்கம் 6

# ராவணனுடைய மந்த்ராலோசனை

லங்காயாம் து க்ருதம் கர்ம கோ$^{4}$ரம் த்$^{3}$ருஷ்ட்வா ப$^{4}$யாவஹம் |
ராக்ஷஸேந்த்$^{3}$ரோ ஹநுமதா ஶக்ரேணவ மஹாத்மநா || (1)

இந்திரனுக்கு ஸமமான பராக்கிரமத்தையுடைய மாருதியால் லங்கையில் செய்யப்பட்ட பயங்கரமான காரியங்களைப் பார்த்து ராக்ஷஸாதிபதி வெட்கத்தால் கொஞ்சம் தலைகுனிந்து, ஸகல ராக்ஷஸர்களையும் நோக்கி, "இந்த லங்கை இதுவரையில் ஒருவராலும் நெருங்க முடியாமலிருந்தது. இப்பொழுது ஒரு அல்பக் குரங்கு இங்கே பிரவேசித்து ஸீதையைக் கண்டு பேசிற்று; நகரமெங்கும் சுற்றிப் பார்த்தது; பட்டணத்தின் நடுவிலிருந்த அழகான உப்பரிகையை இடித்தது; ராக்ஷஸ வீரர்களைக் கொன்றது; இந்த நகரத்தைக் கரியாக்கிற்று; இனி நான் செய்ய வேண்டியதென்ன? நமக்கு எது ஹிதமோ அதை நன்றாக யோசித்துச் சொல்லுங்கள். அப்படியே செய்வோம். உங்களுக்கு ஸகல மங்களங்களுமுண்டாகட்டும். மஹா பலவானான தாங்கள் ஆலோசனை செய்யவேண்டிய அவசியமென்னவென்றால் ஜயத்திற்கு ஆலோசனையே ஆதாரமென்று புத்திமான்கள் சொல்லியிருக்கிறார்கள். ஆகையால் நீங்கள் பலவான்களாயிருந்தாலும் ராமனைப் பற்றி நாம் ஆலோசிக்க வேண்டியது.

'தாங்களே ஆலோசித்துச் செய்யக்கூடாதா' என்றால் லோகத்தில் ஆலோசனை செய்பவர்கள் மூன்று வகை. அவர்களுக்குள்ள பேதங்களை அறியும் பொருட்டு அவர்களுடைய லக்ஷணங்களையும் குணதோஷங்களையும் சொல்லுகிறேன். தனக்கு ஹிதத்தை தேடுகிறவர்களும் ஆலோசனையில் நிபுணர்களுமான மந்திரிகளுடனாவது ஸுகதுக்கங்களை ஸமமாய் அனுபவிக்கிற மித்திரர்களோடாவது தனக்கு ஹிதமான பந்துக்களோடாவது நன்றாய் ஆலோசித்து, தெய்வத்தினிடத்தில் பாரத்தை வைத்துக் காரியங்களை ஆரம்பிக்கிறவன் உத்தமன். காரியங்களைத் தானே ஆலோசித்துத் தெய்வத்தினிடத்தில் பாரத்தை வைத்து, தான் ஒருவனே கார்யங்களை பிறருடைய ஸஹாயமில்லாமல் செய்கிறவன் மத்யமன். குணதோஷங்களை விசாரித்து நிச்சயிக்காமல் தெய்வ ஸஹாயத்தைக் கைவிட்டுக் காரியங்களைச் செய்கிறேனென்று ஆரம்பித்துப் பிறகு உபேக்ஷையாயிருப்பவன் அதமன். அப்படியே யோசனையும் மூன்று வகைப்படும். சாஸ்திராப்யாஸமென்ற ஞானக் கண்ணையுடையவர்களாய் ஒரே மனத்துடன் ஆலோசனை செய்யும் மந்த்ரிகளுடைய யோசனையே உத்தமம். மந்த்ரிகளுடைய அபிப்ராயங்கள் ஆரம்பத்தில் பலவகைப்பட்டு, காரியத்தை நிர்ணயிக்கும்பொழுது ஒன்றுபடும் யோசனை மத்யமம். மந்த்ரிகள் தங்கள் தங்களுடைய அபிப்ராயத்தையே



பிடிவாதமாய்ச் சாதித்து ஒருமைப்படுவதில் இஷ்டமில்லாதவர்கள் செய்யும் ஆலோசனை அதமம். நீங்கள் மஹாபுத்திமான்கள். ஆகையால் நன்றாக ஆலோசித்துச் செய்யத் தகுந்த காரியத்தை ஒருமைப்படுத்திச் சொல்லுங்கள். அதை நான் அவசியம் செய்து முடிக்கிறேன். போனது போகட்டும்; அதைப்பற்றி ஆலோசனையென்ன? இனியாவது நமக்குக் கெடுதி நேரிடாமல் பார்த்துக்கொள்ள வேண்டியது. அதிசீக்ரத்தில் கணக்கில்லாத வானரவீரர்களுடன் ராமன் லங்கையை முற்றுகைப் போடுவான். நமது நகரம் இந்தப் பெருங்கடலால் சூழப்பட்டிருக்கையில் அது முடியுமாவென்றால், அவன் பராக்ரமத்தால் ஸமுத்திரத்தில் அணைகட்டுவான்; அல்லது அதை வற்றச் செய்வான். வேறு எந்த விதமாகவாவது லக்ஷ்மணனுடனும், ஸைன்யங்களுடனும் ஸமுத்திரத்தைத் தாண்டுவான். இப்படி நாம் வானரர்களுடன் விரோதித்துக்கொண்டு அவர்கள் லங்கையை முற்றுகை செய்தால், மேல் நடக்க வேண்டிய கார்யத்தைச் சொல்லுங்கள். லங்கையிலும் ஸைன்யங்களிலும் நாம் என்ன ஏற்பாடு செய்யவேண்டும்'' என்றான்.

அஸ்மிந்நேவம் க$^{3}$தே கார்யே விருத்$^{3}$தே$^{4}$ வாநரை: ஸஹ |
ஹிதம் புரே ச ஸைந்யே ச ஸர்வம் ஸம்மந்த்ர்யதாம் மம || (20)

## ஸர்க்கம் 7

# ராவணனுடைய மந்திரிகள்

இத்யுக்தா ராக்ஷஸேந்த்$^{3}$ரேண ராக்ஷஸாஸ்தே மஹாப$^{3}$லா: |
ஊசு: ப்ராஞ்ஜலய: ஸர்வே ராவணம் ராக்ஷஸேஶ்வரம் || (1)

அதைக் கேட்டு மஹாபலசாலிகளான அந்த ராக்ஷஸர்கள் கைகூப்பி ராவணனை நோக்கிப் பின்வருமாறு பதில் சொன்னார்கள். மதக்கொழுப்பால் ரகுவீரனுடைய பிரபாவத்தை அறியாதவர்கள்; ராஜநீதிக்குக் கட்டுப்படாதவர்கள்; "மஹாராஜா! கதை, சக்தி, கத்தி, சூலம் முதலிய ஆயுதங்களில் மிகுந்த பயிற்சியுள்ள நமது அபார ஸைன்யமிருக்கையில் தங்களுக்கு விசாரமென்ன? ஸைன்யமிருக்கட்டும். தாங்கள் தனியாகவே ஸகல சத்துருக்களையும் நாசம் செய்யக்கூடியவர்களல்லவா? முன்பு போகவதி என்ற ஸர்ப்பராஜாவின் நகரத்திற்குச் சென்று அவனை யுத்தத்தில் ஜயிக்கவில்லையா? கைலாஸத்தில் வஸிக்கும் குபேரன் பரமசிவனுடைய தோழன்; தங்களால் பூஜிக்கப்பட்டவன்; லோகபாலன்; மஹாபலவான்; கணக்கில்லாத யக்ஷர்களால் சூழப்பட்டவன்; தாங்கள் கோபம்கொண்டு அந்தக் குபேரனை யுத்தத்தில் ஜயித்து, யக்ஷர்களைக் கொன்று புஷ்பக விமானத்தை அபகரிக்கவில்லையா? தானவாதிபதியான மயன் தங்களிடத்தில் பயந்து, தங்களுடைய ஸ்நேஹத்தை விரும்பி, மந்தோதரி என்ற தன் பெண்ணைத் தங்களுக்குப்

பார்யையாகக் கொடுக்கவில்லையா? ரஸாதல லோகத்திற்குச்சென்று வாஸுகி, தக்ஷகன், சங்கன், ஜடீ முதலிய நாகர்களை ஜயிக்கவில்லையா? காலகேயர்களென்ற ராக்ஷஸர்கள் பிரஹ்மாவிடத்தில் அபூர்வ வரங்களைப் பெற்றவர்கள்; அவர்களைப் பொடி செய்தாலும் மறுபடியும் பிழைக்கிறவர்கள்; மஹா பலவான்கள்; சூரர்கள். அவர்களைத் தங்களுடைய பலத்தால் ஒரு வருஷம் யுத்தம்செய்து ஜயித்து, அவர்களிடத்திலிருந்து அநேக மாயாவித்யைகளைக் கற்கவில்லையா? வருணனுடைய புத்திரர்கள் சூரர்கள்; பலவான்கள். அவர்களையும் துரத்தியடிக்கவில்லையா? யமனுடைய ஸைன்யமென்ற ஸமுத்திரத்திற்குக் கால தண்டமே முதலைகள்; சால்மலி என்ற ஆயுதங்களே கரையில் வளரும் விருக்ஷங்கள்; காலபாசமே அலைகள்; யமகிங்கரர்களே ஸர்ப்பங்கள்; அந்த மஹாஸமுத்திரத்தைக் கலக்கி மிருத்யுவை ஓடும்படிச் செய்து விசேஷ கீர்த்தியடையவில்லையா? அந்த ஸமயத்தில் ஸகல லோகவாஸிகளையும் ஸ்வல்ப யுத்தம்செய்தே அடித்துத் துரத்தவில்லையா? அந்தக் காலத்தில் மஹாவிருக்ஷங்களைப்போல் கணக்கில்லாத க்ஷத்திரிய வீரர்கள் இந்திரனைப்போல் பராக்கிரமசாலிகளாய்ப் பூமியெங்கும் பரவியிருந்தார்கள். அநரண்யன் முதலிய க்ஷத்திரியர்கள் தங்களுடன் யுத்தம் செய்து நாசமடையவில்லையா? வீரியத்திலாவது, குணத்திலாவது, உத்ஸாஹத்திலாவது ராமன் அவர்களுக்கு ஈடா? மஹாராஜா! தாங்கள் ஏன் சிரமப்படவேண்டும்? ஸௌக்யமாக இருங்கள். இந்திரஜித் ஒருவனே ஸகல வானரர்களையும் நாசம் செய்வானே. உத்தமன்; மாஹேச்வர யாகத்தைச் செய்து அபூர்வமான வரங்களை அடைந்திருக்கிறான். 'தேவதைகளுடைய ஸைன்யமென்ற ஸமுத்திரத்தில் சக்தி தோமரமென்ற ஆயுதங்களே மீன்கள்; பிணங்களின் குடல்களே பாசி; யானைகளே ஆமைகள்; குதிரைகளே தவளைகள்; ருத்திரர்களும் ஆதித்யர்களும் முதலைகள்; மருத்துக்களும் வஸுக்களும் மஹாஸர்ப்பங்கள்; ரதங்களும், குதிரைகளும், யானைகளும் அலைகள்; காலாட்களே மணல்கள்; அந்த மஹாஸமுத்திரத்தில் புகுந்து தேவராஜனைப் பிடித்து லங்கையில் வைக்கவில்லையா? பிறகு பிரஹ்மா கேட்டுக்கொண்டதால் அவனைத் தாங்கள் சிறை நீக்க, அவன் தங்களுக்கு வந்தனம் செய்து தேவலோகத்திற்குப் போகவில்லையா? ராமனையும் வானர ஸேனைகளையும் அழிப்பதற்கு இந்திரஜித்தையே அனுப்புங்கள். ஒரு அல்பக்குரங்கால் தங்களுக்கு என்றைக்காவது ஆபத்து நேருமோ?'' என்றார்கள்.

ராஜந்நாபத3 யுக்தேய மாக3தா ப்ராக்ருதாத் ஜநாத் |
ஹ்ருதி3 நைவ த்வயா கார்யா த்வம் வதி4ஷ்யஸி ராக4வம் ‖ (26)



## ஸர்க்கம் 8

## ராவணனுடைய மந்திரிகள் (தொடர்ச்சி)

ததோ நீலாம்பு3த நிப4: ப்ரஹஸ்தோ நாம ராக்ஷஸ: |
அப்3ரவீத் ப்ராஞ்ஜலிர் வாக்யம் ஶூர: ஸேநாபதிஸ் ததா3 ‖ (1)

பிறகு நீருண்ட மேகம் போன்ற ஸேனாதிபதியான பிரஹஸ்தன் எழுந்து கைகூப்பி, "தேவ தானவ கந்தர்வ பிசாச பக்ஷ உரகர்களும் யுத்தத்தில் தங்களை எதிர்க்கமுடியவில்லையே; குரங்குகளா ஜயிக்கப் போகின்றன? நம்மை எதிர்க்க எவனால் முடியுமென்ற நம்பிக்கையால் அலக்ஷ்யமாக இருந்தோம். ஆகையால் ஹனுமான் நம்மை அவமானம் செய்தான். அஜாக்கிரதையாக இருக்கையில் சத்துருவிடத்திலிருந்து நமக்கு நேரும் அவமானம் நமக்குக் குறைவல்ல. இல்லாவிட்டால் நான் பிழைத்திருக்கும்பொழுது அந்தக் குரங்கு இங்கிருந்து பிராணனுடன் போகமுடியுமா? தாங்கள் உத்திரவு கொடுத்தால் ஸமுத்திரத்தால் சூழப்பட்ட இந்தப் பூமியில் ஓரிடத்திலாவது குரங்குப் பூண்டில்லாமல் செய்கிறேன். ஸீதையை அபகரித்து வந்ததற்காகத் தாங்கள் கொஞ்சம் கூடக் கவலைப்படவேண்டாம். வானரர்களிடத்திலிருந்து இந்த நகரத்தைக் காப்பாற்ற நான் ஒருவனே போதும்'' என்றான்.

பிறகு துர்முகன் மஹாகோபத்துடன், ''அந்தக் குரங்கு செய்த காரியம் நம் எல்லோருக்கும் அவமானமாக இருக்கிறது. மேலும் நமது நகரத்திற்கும் அந்தப்புரத்திற்கும் அவமானம். இவற்றைக் காட்டிலும் நமது மஹாராஜாவிற்குச் செய்த அவமானம் மிகவும் அதிகம். இதைப் பொறுக்கலாமா? ஆகையால் அந்த வானரர்கள் பூமியில் ஒளிந்தாலும் ஸமுத்திரத்தில் மறைந்தாலும் பாதாளத்தில் புகுந்தாலும் அவர்களை ஒருவர் பாக்கியில்லாமல் கொன்று திரும்பி வருகிறேன்'' என்றான்.

பிறகு மஹாபலவானான வஜ்ரதம்ஷ்ட்ரன் வெகுகோபத்துடன் மாம்ஸத்தாலும் ரத்தத்தாலும் பூசப்பட்ட கோரமான உழல் தடியைத் தூக்கிக்கொண்டு, "ராமலக்ஷ்மணர்களும் ஸுக்ரீவனும் இருக்கையில் ஒரு அல்பக் குரங்கான ஹனுமானைப்பற்றி விசாரமென்ன? இப்பொழுதே ராமலக்ஷ்மணர்களையும் ஸுக்ரீவனையும் வானர ஸைன்யங்களையும் இந்தத் தடியால் நாசம் செய்து திரும்பி வருகிறேன். சோம்பலில்லாமல் உபாயங்களை ஸாமர்த்தியமாய் பிரயோகிக்கிறவனே சத்துருக்களை ஜயிப்பான். ஆகையால் நான் ஒரு உபாயம் சொல்லுகிறேன், கேளுங்கள். சூரர்களும் பார்க்கப் பயங்கரமானவர்களும் மனம் கலங்காதவர்களும் நினைத்த ரூபமெடுக்கக் கூடியவர்களுமான கணக்கில்லாத ராக்ஷஸர்கள் மனுஷ்யர்களைப் போல் வேஷம் தரித்து ராமனுடைய ஸமீபத்தில் சென்று அமரிக்கையாய், "ஸ்வாமி! தங்களுடைய தம்பி பரதன் எங்களை அனுப்

பின்னர். சதுரங்க ஸைன்யத்துடன் பின்னால் வருகிறார்" என்று சொல்லட்டும். அதற்குள் நாங்கள் இங்கிருந்து ஆயுதபாணிகளாய் ஆகாச மார்க்கமாய் அங்கே சென்று வானர ஸைன்யங்களை அஸ்திர சஸ்திரங்களால் யமலோகத்திற்கு அனுப்புகிறோம். ராமலக்ஷ்மணர்கள் நாங்கள் செய்த கபடத்திற்கு உட்படுவார்கள்; அவர்களை ஸமீபத்தில் வரும்பொழுது லகுவாய்க் கொன்றுவிடுவோம்" என்றான்.

பிறகு கும்பகர்ணனுடைய புத்திரனான நிகும்பன் கடுங்கோபத்துடன், "நீங்களெல்லோரும் மஹாராஜாவுடன் இங்கே இருங்கள். நானொருவனே ராமலக்ஷ்மணர்களையும், ஸுக்ரீவனையும் ஹனுமானையும், மற்ற வானரர்களையும் கொன்றுவிட்டு வருகிறேன்" என்றான்.

பிறகு பர்வதத்தைப் போன்ற வஜ்ரஹனு என்ற ராக்ஷஸன், கோபத்தால் உதடுகளை நாக்கால் நக்கிக்கொண்டு, "நீங்கள் கவலை இல்லாமல் ஸாவகாசமாய் உங்களுடைய காரியத்தைப் பாருங்கள். நானொருவனே ஸகல வானரவீரர்களையும் விழுங்கிவிடுகிறேன். விசாரமில்லாமல் மதுவைக் குடித்து இஷ்டப்படி விளையாடுங்கள். நானொருவனே ரணதீரனான ராமனையும், லக்ஷ்மணனையும், ஸுக்ரீவன், ஹனுமான், அங்கதன் முதலிய வானரர்களையும் கொன்றுவிடுகிறேன்" என்றான்.

அஹமேகோ வதி⁴ஷ்யாமி ஸுக்³ரீவம் ஸஹ லக்ஷ்மணம் |
அங்க³த³ம் ச ஹநூமந்தம் ராமம் ச ரணகுஞ்ஜரம் ‖ (24)

---

## ஸர்க்கம் 9

## விபீஷணன்

---

ததோ நிகும்போ⁴ ரப⁴ஸ: ஸூர்யஶத்ருர் மஹாப³ல: |
ஸுப்தக்⁴நோ யஜ்ஞகோபஶ்ச மஹாபார்ஶ்வ மஹோத³ரௌ ‖ (1)

பிறகு, நிகும்பன், ரபஸன், ஸூரியசத்ரு, ஸுப்தக்னன், யக்ஞஹா, மஹாபார்ச்வன், மஹோதரன், அக்னிகேது, துர்தர்ஷன், ரச்மிகேது, இந்திரஜித், பிரஹஸ்தன், விரூபாக்ஷன், வஜ்ரதம்ஷ்ட்ரன், தூம்ராக்ஷன், அதிகாயன், துர்முகன் முதலிய ராக்ஷஸவீரர்கள், வில், பாணங்கள், கத்தி, பரிகம், வல்லயம், சக்தி, சூலம், கோடாலி முதலிய ஆயுதங்களை எடுத்துக்கொண்டு மஹாகோபத்துடன் தாவி, தேஜஸால் ஜ்வலித்துக்கொண்டு, "ராமலக்ஷ்மணர்களையும் ஸுக்ரீவனையும் இந்த லங்கையை அவமானம் செய்த அந்த அல்பக் குரங்கையும் இப்பொழுதே கொன்றுவிட்டு வருகிறோம்" என்று கர்ஜித்தார்கள். அப்பொழுது விபீஷணன் அவர்களைத் தடுத்து உட்காரும்படி செய்து, "ஸாமதானபேதத்தால் காரியத்தை ஸாதிக்க முடியாதபொழுது மாத்திரம் தண்டோபாயத்தை பிரயோகிக்கும்



படி நீதிசாஸ்திர நிபுணர்கள் சொல்லுகிறார்கள். (தண்டிக்கத் தகுந்தவரிடத்தில் ஸாம, தான, பேத, உபாயங்கள் பிரயோஜனமற்றபொழுது மாத்திரம் தண்டோபாயத்தைக் கைக்கொள்ள வேண்டியது.—காமந்தக நீதி) இது தண்டோபாயத்திற்குக் காலமல்ல. அதிருக்கட்டும். நமது சத்ருவைத் தண்டிக்கவேண்டிய நியாயமே இல்லை. விஷயபோகங்களில் முழுகி, அஜாக்கிரதையாயிருப்பவர்களிடத்திலும், பலசாலிகளால் பீடிக்கப்பட்டவர்களிடத்திலும், பாக்கியமற்றவர்களிடத்திம், பாலர்களிடத்திலும், வயதுசென்றவர்களிடத்திலும், நீதிசாஸ்திரத்தில் சொல்லியபடி மந்திரிகளால் விசாரித்து, பிறகு யுத்தம் செய்வது பிரயோஜனப்படும். (சிறுவன், வயதுசென்றவன், தீராநோயுடையவன், பந்துக்களால் தள்ளப்பட்டவன், பயந்தவன், பயந்தவர்களால் சூழப்பட்டவன், பேராசை பிடித்தவன், பிரஜைகளின் பிரியத்தை ஸம்பாதிக்காதவன், விஷயபோகங்களில் அதிக ஆசை வைத்தவன், பலபல யோசனை செய்பவன், தேவதைகளையும் பிராஹ்மணர்களையும் நிந்திக்கிறவன், தெய்வத்தினுடைய கோபத்திற்குட்பட்டவன், எல்லாவிஷயங்களிலும் தெய்வத்தையே நம்பியிருக்கிறவன், பஞ்சத்தால் பீடிக்கப்பட்டவன், சத்துருக்களின் பலத்தை நினைத்து நினைத்து ஏங்குகிறவன், தன் தேசத்தில் வஸிக்காதவன், அனேக சத்துருக்களையுடையவன், காலம் குறுகினவன், ஸத்தியத்தையும் தர்மத்தையும் விட்டவன், இவர்களுடன் ஸ்நேஹம் செய்யக்கூடாது; விரோதிப்பதே நலம்—காமந்தகநீதி.) ஆனால் ராமன் ஜாக்கிரதையுள்ளவன்; ஸ்திரமான பலத்தையுடையவன்; யுக்தமான ஸமயத்திலேயே கோபிக்கிறவன்; சத்துருக்களால் நெருங்க முடியாதவன். இப்படிப்பட்டவனுடன் நீங்கள் விரோதிக்கப் பார்க்கிறீர்கள். கோரமான ஸமுத்திரத்தைத் தாண்டி நமது லங்கையை நாசம்செய்த ஹனுமானுடைய அபூர்வ காரியங்களைப் பார்த்து ஆச்சரியப்படாதவனும் உண்டோ? நமது சத்துருக்களுடைய ஸைன்யங்களும் வீரியமும் அளவற்றவை; அவைகளை யோசிக்காமல் அலக்ஷ்யம் செய்வது பிசகு.

மேலும் நமக்கு அபராதம் செய்யாதவனிடத்தில் காரணமில்லாமல் விரோதிப்பது நியாயமல்ல. ராமன் ராவணனுக்கு என்ன அபராதம் செய்தான்? எதற்காக ராவணன் அவனுடைய பாரியையை ஜனஸ்தானத்திலிருந்து அபகரித்தான்? கரனைக் கொன்றதே முதலாவது அபராதமென்றால் அந்தத் துஷ்டன் ராமனைக் கொல்லவேண்டுமென்ற எண்ணத்துடன் படையெடுத்துப் போய் யுத்தத்தில் மடிந்தால் ராகவன் ராவணனுக்குச் செய்த அபராதமென்ன? எல்லோரும் சக்தியுள்ளவரையில் பிராணனைக் காப்பாற்றிக்கொள்வது ஸஹஜமல்லவா? ராமனே முதலில் அபராதம் செய்திருந்தாலும் அவனுடைய பாரியையை அபகரிக்க நியாயமென்ன? அவனுடன் யுத்தம் செய்து ஜயித்து அவனைத் தண்டிக்கவேண்டியதல்லவா? பரஸ்த்ரீகளை அபகரிப்பது கீர்த்தி

யையும் ஆயுளையும் ஐசுவரியத்தையும் அழிக்கும். கோரமான பாபமே உருவெடுத்து வந்ததுபோன்றது. இந்தக் காரணங்களால் நமக்கு ஸீதையால் விசேஷ பயம் நேரப்போகிறது. அவளைத் திரும்பிக் கொண்டுபோய் விடவேண்டியது. இப்பொழுது கலகம் செய்வதால் பிரயோஜனமென்ன? உத்தமமான தர்மத்தை அனுஸரிக்கிறவனும் வீரனுமான ராமனுடன் விரோதிப்பது பிரயோஜனமில்லை. ஆகையால் ஸீதையைத் திருப்பிக் கொடுத்துவிட வேண்டியது. ராமன் கூர்மையான பாணங்களால் அளவற்ற ஐசுவரியத்தையும் சதுரங்க ஸைன்யத்தையுமுடைய இந்த லங்கையையும் அழிப்பதற்கு முன் ஸீதையைத் திருப்பிக் கொடுத்துவிட வேண்டியது. தடையற்ற கோரமான வானர ஸைன்யம் நமது லங்கையை முற்றுகை போடுவதற்குமுன் ஸீதையைத் திருப்பிக் கொடுக்க வேண்டியது. ராமனுடைய பிரியமான பாரியையை நாமே கொண்டு போய் விடாவிட்டால் இந்த லங்கையும் அதிலுள்ள ஸகல ராக்ஷஸ வீரர்களும் நசிப்பார்கள். தாங்கள் எனக்குப் பந்துவானதால் தங்களை நமஸ்கரித்து பிரார்த்திக்கிறேன். நான் சொல்வதைக் கேளுங்கள். என் வார்த்தை தங்களுக்கு ஹிதமாயும் நிஜமாயும் இருக்கும். ராமபாணங்கள் சரத்காலத்து ஸூரிய கிரணங்களைப் போன்றவை, தீக்ஷ்ணமானவை, கெட்டியானவை, வீணாகாதவை. அவைகளால் ராமன் தங்களை வதம் செய்வதற்கு முன் ஸீதையைத் திருப்பிக் கொடுத்து விடுங்கள். கோபம் சுபத்தையும் தர்மத்தையும் அழிக்கும்; அதை விடுங்கள். தர்மம் கீர்த்தியையும் சந்தோஷத்தையும் விருத்தி செய்யும்; அதைக் கைக்கொள்ளுங்கள். நாமெல்லோரும் பெண்டு பிள்ளைகளுடன் ஸௌக்கியமாக இருப்போம். தயவுசெய்து ஸீதையை ராமனிடத்தில் கொடுத்து விடுங்கள்'' என்று வேண்டினான்.

அதைக் கேட்டு ராவணன், "எல்லாவற்றையும் காலையில் யோசித்துக்கொள்வோம்'' என்று சொல்லி அங்கிருந்தவர்களுக்கு உத்தரவு கொடுத்தனுப்பி, தான் அரண்மனைக்குச் சென்றான்.

விபீ‘ஷணவச: ஸ்ருத்வா ராவணோ ராக்ஷஸேஸ்வர: |
விஸர்ஜயித்வா தாந் ஸர்வாந் ப்ரவிவேஸ ஸ்வகம் க்[3]ருஹம் ‖ (24)

## ஸர்க்கம் 10

## விபீஷணனுடைய ஆலோசனை

தத: ப்ரத்யுஷஸி ப்ராப்தே ப்ராப்த த[4]ர்மார்த[2] நிஸ்சய: |
ராக்ஷஸாதி‘பதேர் வேஸ்ம பீ‘மகர்மா விபீ‘ஷண: ‖ (1)

மறுநாட் காலையில் விபீஷணன், ஸீதையைத் திருப்பிக் கொடுப்பதே நமக்கு ஸகல புருஷார்த்தங்களுக்கும் ஸாதனமென்று நிச்சயித்து ராவணனுடைய அரண்மனைக்குச் சென்றான். தான் சொல்லும்



யோசனை ராவணனுக்குப் பரமஹிதத்தைச் செய்யக் கூடியது. ஆனாலும் அவனுக்குக் கொஞ்சம்கூட பிரியமில்லாததால் அப்படிச் சொல்வது துணிவான காரியம். அனேக கொடிமுடிகளையுடைய பர்வதத்தைப்போல் ராவணனுடைய கிருஹம் கோபுரங்களால் விளங்கிற்று; பர்வதசிகரத்தைப்போல் உன்னதமானது; நன்றாய் வகுக்கப்பட்ட அனேக கட்டுகளுடையது; வித்வான்களால் நிறைந்தது; புத்திமான்களும் அரசனுடைய ஹிதத்தைத் தேடுகிறவர்களுமான மந்திரிபிரதானிகள் கூடியிருந்தார்கள். ஸகல காரியங்களிலும் ஸமர்த்தர்களான ராக்ஷஸர்கள் எப்பொழுதும் காத்துக் கொண்டிருந்தார்கள். மதயானைகளின் மூச்சால் சுழல் காற்றுகள் அடித்துக் கொண்டிருந்தன. சங்கங்கள் கோஷித்துக் கொண்டிருந்தன; வாத்ய சப்தங்கள் பிரதித்வனிசெய்தன. கணக்கில்லாத யௌவன ஸ்த்ரீகள் அங்குமிங்கும் ஸஞ்சரித்துக் கொண்டிருந்தார்கள். மார்க்கங்களில் ஜனங்கள் கோலாஹலமாய்ப் பேசிக் கொண்டிருந்தார்கள். சிரேஷ்டமான தோரணங்கள், பந்தல்கள், உருக்கின தங்கத்தால் செய்யப்பட்ட மதயானைகள் முதலிய ஆபரணங்களால் அலங்கரிக்கப்பட்டிருந்தன. எப்பொழுதும் விளங்கும் வாத்திய கோஷங்களாலும், பாட்டுக்களாலும் நர்த்தனங்களாலும் கந்தர்வ லோகத்தைப் போலும், அளவற்ற ஐசுவரியங்களால் மருத்துக்களின் லோகத்தைப் போலும், விலையற்ற ரத்தினங்களால் நாகலோகத்தைப் போலும் இருந்தது. தேஜஸால் விஸ்தாரமான கிரணங்களையுடைய ஸூரியன் பெரிய மேகத்தில் பிரவேசிப்பதுபோல், மஹாதேஜஸ்வியும் வீரனுமான விபீஷணன் ராவணனுடைய அரண்மனையில் பிரவேசித்தான். ராவணனுடைய ஜயத்தை உத்தேசித்து வேதத்தில் நிபுணர்கள் புண்யாஹமந்திரங்களை உச்சரிப்பதைக் கேட்டான். தயிராலும், நெய்யாலும், புஷ்பங்களாலும், அக்ஷதைகளாலும் நன்றாய்ப் பூஜிக்கப் பட்டு, வேதத்தின் ஸகல பாகங்களிலும் கரைகண்ட பிராம்மண சிரேஷ்டர்களைப் பார்த்தான்.

அங்கிருந்த ராக்ஷஸர்களால் கொண்டாடப்பட்டு, விபீஷணன் தன் தேஜஸால் ஜ்வலித்துக் கொண்டு, ராவணனுடைய ஸமீபத்தில் சென்று நமஸ்கரித்தான். ஒரு தங்கமயமான ஆஸனத்தில் உட்காரும்படி ராவணன் கண்ஜாடை காட்ட, ஆசாரமுறைகளில் நிபுணனான விபீஷணன், 'ஜய விஜயீ பவ' என்று மஹாராஜாவை வாழ்த்தி ஆஸனத்தில் உட்கார்ந்தான். மந்திரிகளைத் தவிர மற்றவர்கள் வெளியில் போனபிறகு, தன் தமயனைப் பார்த்துத் தகுந்த காரணங்களையுடைய ஹிதமான வார்த்தையைச் சொல்ல ஆரம்பித்தான். பேசவேண்டிய முறையை நன்றாயறிந்தவன்; தேச காலங்களின் பிரயோஜனங்களை அனுஸரித்து நடப்பவன்; லோகத்தில் மேலானவர்களையும் தாழ்ந்தவர்களையும் நன்றாய்ப்பகுத்தறிந்தவன். (ராமன் புருஷோத்தமனென்றும் ராவணன் அதர்மத்தில் பிரியமுள்ளவனென்றும் நன்றாயறிந்தவன்.) முதலில் பிரியமான

வார்த்தைகளால் ராவணனை ஸந்தோஷப்படுத்தித்தனக்கு அனுகூலமாகச் செய்து கொண்டு, பிறகு தன் மனத்திலிருக்கும் விஷயத்தைத் தெரிவித்தான்.

"அண்ணா! ஜானகி இந்த நகரத்திற்கு வந்தது முதல் நமக்கு அபசகுனங்கள் காணப்படுகின்றன. அக்னிகள் உத்பத்தி காலத்தில் புகையால் சூழப்பட்டும், நடுவில் புகையுடன் கலந்த ஜ்வாலைகளுடனும், முடிவில் நெருப்புத் தணல்களுடனும் இருக்க வேண்டியது. இப்பொழுது மந்திரோச்சாரணங்களுடன் ஆஹுதி செய்யும் பொழுதும் நன்றாய் எரிகிறதில்லை. அடுப்புகளிலும் அக்னி ஹோத்திர சாலைகளிலும் அத்யயனம்செய்யுமிடங்களிலும் பாம்புகள் ஸஞ்சரிக்கின்றன. தேவதைகளை உத்தேசித்துக் கொடுக்கும் ஆஜ்யம் புரோடாசம் முதலியவைகளில் எறும்புகள் மொய்க்கின்றன. பசுக்களுக்குப் பால் வற்றிப்போகிறது. மஹாவீரியமுள்ள யானைகள் மதமற்றன. குதிரைகள் தீனமாய்க் கனைக்கின்றன. எவ்வளவு தீனிபோட்டாலும் பசி அடங்குகிறதில்லை. கழுதைகளும் ஒட்டகங்களும் கோவேறுகழுதைகளும் மயிர்உதிர்ந்து கண்ணீர் விடுகின்றன; எவ்வளவு வைத்தியம் செய்தாலும் முன்போல் இருக்கிறதில்லை. க்ரூரமான காக்கைகள் கூட்டம்கூட்டமாய் விமானங்களுக்குமேல் உட்கார்ந்து கத்துகின்றன. கழுகுகள் நகரத்திற்குமேல் வட்டமாய்ப் பறந்து கொண்டிருக்கின்றன. நரிகள் நகரத்திற்கு ஸமீபத்தில்வந்து காலையிலும் மாலையிலும் பயங்கரமாய் ஊளையிடுகின்றன. க்ரூரமான மிருகங்கள் கோட்டைவாசல்களில் கூட்டம் கூட்டமாய்வந்து இடியிடிப்பதுபோல் சப்திக்கின்றன. இவை குறிப்பிடும் அபஜயத்தையும் நாசத்தையும், இதுவரையிலும் ஒரு ஸாதாரணக் குரங்கால் நமது நகரம் நாசமடைந்ததையும் நன்றாய் யோசித்துப் பார்த்தால், ஸீதையை ராமனிடத்தில் கொண்டு போய் விடுவதைத் தவிர இதற்குப் பரிகாரம் வேறொன்றும் தோன்றவில்லை. ஒருவேளை செய்ய வேண்டிய காரியத்தை அறியாமலாவது பேராசையாலாவது நான் இப்படிச்சொல்லியிருந்தாலும், தாங்கள் அதைக்குற்றமாக எண்ணக் கூடாது. இந்த நகரத்திலுள்ள ராக்ஷஸர்களும் ராக்ஷஸிகளும் அந்தப்புரத்து ஜனங்களும் எல்லோரும் நான் சொன்ன விஷயங்களைப் பார்த்திருக்கிறார்கள். ஆகையால் என் வார்த்தை தங்களுக்கு ஹிதமாகத் தோன்றினால் அப்படியே செய்யுங்கள். தோன்றாவிட்டால் என்னிடத்தில் கோபித்துக்கொள்ளக் கூடாது. ப்ரஹஸ்தன் முதலியவர்கள் தங்களுடைய மனம் அறிந்து நடக்கிறவர்களாகையால் இந்த விஷயத்தைத் தங்களுக்குச் சொல்லவில்லை. ஆனால் நான் தங்களுடன் பிறந்தவனாகையால் பார்த்ததையும் கேட்டதையும் உள்ளபடி சொல்லக் கடமைப்பட்டவன். ஆகையால் தகுந்தபடி நன்றாய் ஆலோசித்துப் பிறகு செய்ய வேண்டிய காரியங்களைச் செய்யுங்கள்" என்றான்.



விபீஷணன் இப்படித் தன் மந்திரிகளுக்கெதிரே அனுகூலமாயும் ஹிதமாயும் விசேஷ அர்த்தங்களடங்கியும் மிருதுவாயும் இருக்கும் உபதேசத்தைத் தகுந்த காரணங்களுடன் சொன்னான். ஸீதையை அபகரித்ததற்குப் பரிகாரம் செய்து பெரிய அபகீர்த்தியை நீக்குவதால், சென்ற காலத்திற்கும், ஸுகத்தையும் கீர்த்தியையும் விருத்திசெய்வதால் தற்காலத்திற்கும் சிரேஷ்டமான தர்மத்தை ஸம்பாதிப்பதால் வருங்காலத்திற்கும் அது அனுகூலமாக இருந்தது. ஆனால், அதைக்கேட்டு ராவணன் வெகு கோபம்கொண்டு தான் பிடித்த பிடியை விடாமல், "எவ்விடத்திலிருந்தும் எனக்குப் பயமிருப்பதாகத் தெரியவில்லை. ராமன் ஸீதையை ஒருநாளும் அடையப் போகிறதுமில்லை. தேவர்களும் இந்திரர்களும் அவனுக்கு ஸஹாயம் செய்தாலும் ராமன் எனக்கெதிரில் நிற்கமுடியுமோ?" என்று சொல்லித் தனக்கு ஹிதத்தை உபதேசித்த விபீஷணனுக்கு உத்திரவு கொடுத்தனுப்பினான். தேவ ஸைன்யங்களைக் கதறவடித்ததாலும் அளவற்ற பலக்கொழுப்பாலும் யுத்தத்தில் தடையற்ற பராக்கிரமத்தாலும் பத்துத் தலை படைத்தவனென்ற செருக்காலும் ரகுவீரனைத் துரும்புபோல் எண்ணித் தனக்கு நன்மையை உபதேசிக்கும் விபீஷணனை உதறித் தள்ளினான்.

இதீத³முக்த்வா ஸுரஸைந்ய நாஶநோ
மஹாப³ல: ஸம்யதி சண்ட³விக்ரம: |
த³ஶாநநோ ப்⁴ராதர மாப்தவாதி³நம்
விஸர்ஜயாமாஸ ததா³ விபீ⁴ஷணம் || (30)

## ஸர்க்கம் 11

## ராவண ஸபை

ஸ ப³பூ⁴வ க்ருஶோ ராஜா மைதி²லீகாம மோஹித: |
அஸம்மாநாச்ச ஸுஹ்ருதா³ம் பாப: பாபேந கர்மணா || (1)

ராவணன் ஸீதையை அபகரித்ததால் எல்லோராலும் வெறுக்கத்தக்கவனானான். விபீஷணன் தடுத்தபொழுது ஒருவரும் ஆக்ஷேபிக்காததால் பிரஹஸ்தன் முதலிய மந்திரிகள் தன் அபிப்பிராயத்தை ஆதரிக்கவில்லை என்றறிந்து ஸீதையிடத்தில் வைத்த ஆசையால் ஒன்றும் தோன்றாமல் மயங்கி தீராக் கவலைகொண்டான். மந்திரிகளுடன் ஆலோசனை செய்யவேண்டிய காலம் தாண்டிவிட்டது. அப்படியிருக்க மந்திரிகளோடும் பிரதானிகளோடும் ஆலோசனை செய்யவேண்டிய காலம் அதுவே என்று புத்தி மயக்கத்தால் எண்ணினான்.

பிறகு தங்கமயமான ஜன்னல்களுடையதும், ரத்தினங்களாலும் பவழங்களாலும் அலங்கரிக்கப்பட்டதும், நன்றாய்ப் பழக்கப்பட்ட குதிரைகள் பூட்டினதும், மஹாமேகங்களைப்போல் கர்ஜிப்பதுமான

தன் மஹாரதத்தை பிரதக்ஷிணம் செய்து அதில் ஏறி ஸபைக்குச் சென்றான். கத்தி கேடயங்களைத் தரித்தவர்களும் ஸர்வாயுதபாணிகளுமான யுத்தவீரர்கள் பலபல வேஷங்களுடன் பலவகையாய் அலங்கரிக்கப்பட்டு மஹாராஜாவின் பக்கங்களிலும் முன்னும் பின்னும் சென்றார்கள். சிலர் ரதங்களிலும் சிலர் மதயானைகளிலும் சிலர் விசித்திரமான நடைகளையுடைய குதிரைகளிலும் ஏறிக்கொண்டு கதை, உழல்தடி, சக்தி, தோமரம், கோடாலி, சூலம் முதலிய ஆயுதபாணிகளாய் ராவணன் பின் சென்றார்கள். அவன் ஸபைக்குச் செல்லும்பொழுது சங்கம் பேரி முதலிய வாத்தியங்களின் கோஷம் ஸகல திக்குகளிலும் வியாபித்தது. ரதசக்கரங்களின் ஓசையால் ஸகல திக்குகளையும் நடுங்கச் செய்து கொண்டு ஸகல ஐசுவரியங்களும் நிறைந்த ராஜமார்க்கத்தில் வந்தான். பூர்ண சந்திரனைப் போல் பிரகாசித்த ஒரு குடை வெகு அழகாக அவனுக்கு மேல் விளங்கிற்று. சுத்தமான ஸ்படிகத்தைப்போல் ரூபமுள்ள இரண்டு சாமரங்கள் தங்கக் கயிறுகளால் கட்டப்பட்டு ராவணனுக்கு இருபுறத்திலும் வீசப்பட்டன. எல்லோரும் பூமியில் நின்று கொண்டு கைகூப்பி ரதத்திலிருந்த மஹாராஜாவைத் தலைவணங்கி நமஸ்கரித்தார்கள். 'ஜய விஜயீபவ' என்று எல்லோரும் கொண்டாட, ராவணன் தேஜஸால் ஜ்வலித்துக்கொண்டு ஸபையில் வந்து சேர்ந்தான்.

அது தங்கத்தாலும் வெள்ளியாலும் செய்யப்பட்ட தூண்களால் அலங்கரிக்கப்பட்டுச் சில்பசாஸ்திரப்படி மங்களகரமாக அமைக்கப்பட்டிருந்தது. நிர்மலமான ஸ்படிகத்தால் நடுவில் இழைக்கப்பட்டுத் தங்கத்தால் வேலைசெய்யப்பட்ட விரிப்பால் மூடப்பட்டிருந்தது. அறுநூறு பிசாசங்கள் அந்த ஸபையை எப்பொழுதும் காத்துக்கொண்டிருந்தன. அதன் நடுவில் வைடூரியத்தால் செய்யப்பட்டு, பிரியகமென்ற மிருகத்தின் தோலால் மூடப்பட்டு, விசித்திரமான தலையணைகளையுடைய ஒரு பரமாஸனத்தில் ராவணேசுவரன் வீற்றிருந்தான்.

பிறகு லங்காதிபன் வேகத்திலும் பராக்கிரமத்திலும் ஒப்பற்ற தூதர்களைப் பார்த்து, "லங்கையிலுள்ள ராக்ஷஸசிரேஷ்டர்களை இப்பொழுதே அழைத்து வாருங்கள். ஒரு முக்கியமான விஷயம் நடந்திருக்கிறது. அதற்குத் தகுந்த ஏற்பாடுகள் இப்பொழுதே செய்யவேண்டியதென்று சொல்லுங்கள்" என்றான். (ராமனும் வானர ஸைன்யங்களும் ஸமுத்திரக் கரையில் வந்துவிட்டதை ராவணன் தூதர்களால் அறிந்தானென்று தெரிகிறது.)

மஹாராஜாவின் உத்திரவைக் கேட்டுத் தூதர்கள் லங்கையில் ஒவ்வொரு கிருஹத்திற்கும் சென்று, ராக்ஷஸர்கள் தூங்கிக்கொண்டிருக்கையிலும் விளையாடிக்கொண்டிருக்கையிலும் ராவணனுடைய உத்திரவைத் தெரிவித்து அழைத்து வந்தார்கள். சிலர் அழகான ரதங்களிலும், சிலர் குதிரைகளிலும், சிலர் யானைகளிலும், சிலர் நடந்தும் ராஜஸபைக்குச் சென்றார்கள். அப்பொழுது லங்கை கருட பக்ஷிகளால் நிறைந்த ஆகாசத்தைப்போல், விளங்கிற்று. அவர்கள் வாஹனங்களை ஸபைக்கு வெளியில் நிறுத்திவிட்டு, ஸிம்ஹங்கள் மலைக்குகைக்குள் பிரவேசிப்பதுபோல், கால்நடையாய் ராஜஸபைக்குச் சென்றார்கள். ராவணனுடைய பாதங்களைத்தொட்டு நமஸ்கரித்து, அவனால் கௌரவிக்கப்பட்டு, அவரவர்களுடைய ஸ்திதிக்குத் தகுந்தபடி புரோஹிதர் முதலியவர்கள் தங்கமயமான ஆஸனங்களிலும், சுரோத்திரிய பிராஹ்மணர்கள் தர்ப்பாஸனங்களிலும், புத்திரன் முதலியவர்கள் விரிப்பால் மூடப்பட்ட பூமியிலும் மஹாராஜாவிற்கு ஸமீபத்தில் உட்கார்ந்தார்கள். ஆலோசனை ஸபையைச் சேர்ந்தவர்களும் காரிய நிர்வாஹ ஸபையைச் சேர்ந்தவர்களும் கூட்டம் கூட்டமாய் வந்திருந்தார்கள். அவர்கள் விஷயங்களின் யுக்தாயுக்தங்களை நிச்சயிப்பதில் நிபுணர்கள்; தங்களுடைய வேலைக்கு வேண்டிய ஸகல குணங்களும் பொருந்தினவர்கள்; ஸகல சாஸ்திரங்களிலும் கலைகளிலும் பயிற்சியுள்ளவர்கள்; ராஜ்யத்தில் நடக்கும் ஸகல விஷயங்களையும் அறிந்தவர்கள்; சூரர்கள்; ஞானக் கண்ணையுடையவர்கள்; ராவணனுடைய பரம க்ஷேமத்தை நன்றாய் ஆலோசிப்பதற்காக அங்கே கூடியிருந்தார்கள். பிறகு, விபீஷணன் மங்களகரமான ஒரு உத்தம ரதத்தில் ஏறி ராவணனுடைய ஸபைக்குச் சென்று, தன் பெயரைச் சொல்லி, தமயனுடைய பாதங்களைத் தொட்டு நமஸ்கரித்தான். பிறகு சுகனும் பிரஹஸ்தனும் அப்படியே நமஸ்கரிக்க அவர்களுக்கு ராவணன் தகுந்த ஆஸனங்களைக் கொடுத்தான். தங்கத்தாலும் ரத்தினங்களாலும் செய்யப்பட்ட ஆபரணங்களாலும் அழகான வஸ்திரங்களாலும் அலங்கரிக்கப்பட்ட ராக்ஷஸர்கள் தரித்த அகில் சந்தனம் முதலிய வாஸனைத் திரவியங்களாலும் மாலைகளாலும் அந்த ஸபை எங்கும் பரிமளம் வீசிற்று. அங்குள்ளவர்கள் ஒருவரும் இரைந்து பேசவில்லை; அனாவசியமாகப் பேசவுமில்லை; பொய் சொல்லவுமில்லை; உரத்துப் பேசவுமில்லை; எல்லோரும் உக்கிரமான வீரியமுடையவர்கள்; ஸகல புருஷார்த்தங்களையும் ஸாதித்தவர்கள்; இப்படி மஹாபலசாலிகளும் பெருந்தன்மையுடையவர்களும் சுத்த வீரர்களுமான மந்திரிகளால் சூழப்பட்ட லங்கேசுவரன், வஸுக்களால் சூழப்பட்ட தேவேந்திரனைப்போல் விளங்கினான்.

ஸ ராவண: ஶஸ்த்ரப்4ருதாம் மநஸ்விநாம்
மஹாப3லாநாம் ஸமிதௌ மநஸ்வீ |
தஸ்யாம் ஸபா4யாம் ப்ரப4யா சகாஶே
மத்4யே வஸூநாமிவ வஜ்ர ஹஸ்த: || (32)

## ஸர்க்கம் 12

# ராவணனுடைய உத்தேசம்

*ஸ தாம் பரிஷத³ம் க்ருத்ஸ்நாம் ஸமீக்ஷ்ய ஸமிதிஞ்ஜய: |*
*ப்ரசோத³யாமாஸ தத³ா ப்ரஹஸ்தம் வாஹிநீபதிம் ||* (1)

பிறகு ராவணன் அந்த ஸபையில் எல்லோரும் வந்திருக்கிறார்களா என்று கவனித்துப் பார்த்து, பிரஹஸ்தனை நோக்கி, "ஸேனாபதே! நன்றாய்ப் பழக்கப்பட்ட சதுரங்க ஸைன்யத்தை அனுப்பி, நமது நகரத்தை இன்னும் ஜாக்கிரதையாய்க் காக்கும்படி ஏற்பாடு செய்து வா" என்றான். உடனே பிரஹஸ்தன் எழுந்து ராவணனுடைய அரண்மனையிலும் அதற்கு வெளியிலும் தகுந்தபடி ஸைன்யங்களை வைத்து, நகரத்தைக் காப்பதற்கு வேறு ஏற்பாடு செய்து, ராவணனிடத்திற்கு வந்து, மஹாராஜ! பட்டணத்திற்கு உள்ளும் வெளியிலும் போதுமான காவல்களை ஏற்படுத்தியிருக்கிறேன். ஆகையால் கவலையில்லாமல் தாங்கள் உத்தேசித்த காரியத்தைச் செய்யலாம்" என்றான்.

தன் ராஜ்யம் க்ஷேமமடையவேண்டுமென்று விரும்பினாலும், தர்மம், அர்த்தம், மோக்ஷமென்ற புருஷார்த்தங்களை லக்ஷ்யம் செய்யாமல், காமத்தையே விரும்பின ராவணன் அதைக் கேட்டு, "மித்திரர்களே! தர்மார்த்தகாமங்களில் எந்த ஸமயத்தில் எதை அனுஷ்டிக்க வேண்டுமென்ற ஸந்தேகம் நேரும்பொழுது, அவைகளை அனுஷ்டிப்பதின் பலனான பிரியத்தையும் அப்பிரியத்தையும், ஸுகத்தையும், துக்கத்தையும், லாபத்தையும், நஷ்டத்தையும் ஹிதத்தையும் அஹிதத்தையும் விஸ்தாரமாக அறிய நீங்களே திறமையுள்ளவர்கள். இதுவரையில் நீங்கள் ஆலோசித்துச் செய்த எந்தக் காரியமும் பிரயோஜனமில்லாமல் போகவில்லை. நவக்கிரஹங்களாலும் நக்ஷத்திரங்களாலும் தேவகணங்களாலும் சூழப்பட்டுத் தேவேந்திரன் தேவலோகத்தில் விளங்குவதுபோல், நான் உங்களால் சூழப்பட்டு விசேஷ கீர்த்தியையும் ஐசுவரியத்தையும் அடைவேன். நான் இதற்கு முன்பே ஸபையில் இந்த விஷயத்தை உங்களுக்குச் சொல்லவேண்டுமென்று நினைத்தேன். கும்பகர்ணன் தூங்கிக்கொண்டிருந்ததால் அப்படிச் செய்யவில்லை. ஒப்பற்ற யுத்தவீரனும் மஹாபலவானுமான என் தம்பி ஆறுமாதகாலம் நித்திரைசெய்துவிட்டு இப்பொழுது விழித்துக்கொண்டிருக்கிறான். கொஞ்சகாலத்திற்குமுன் நமது ராக்ஷஸர்கள் வஸிக்கும் ஜனஸ்தானத்திலிருந்து ராமனுடைய பாரியையை நான் கொண்டு வந்திருக்கிறேனென்பது உங்களுக்குத் தெரியுமே. மூன்று லோகங்களிலும் அவளைப் போன்றவளில்லை. சிறுத்த இடையையும், சரத்காலத்துச் சந்திரனைப்போன்ற முகத்தையும், சிவந்த பாதங்களையும் சிவந்த நகங்களையுமுடையவள்; தங்கப் பிரதிமையைப்போல் மனத்தைக் கவரும் அழகுடன் மாயையால் நிர்மிக்கப்பட்ட ரூபத்தைப்போன்ற அந்த ஜானகியைப் பார்க்கப் பார்க்க எனக்கு மன்மத் தாபம் அதிகரிக்கிறது. எடுப்பான மூக்கையும் விஸ்தாரமாய் அழகு பொருந்தின நேத்திரங்களையும் பார்த்துப் பார்த்து மெய்மறந்து காமனுடைய வசத்தில் அகப்பட்டேன். கோபகாலத்திலும் ஸந்தோஷகாலத்திலும் ஒரே விதமான உபத்திரவமுண்டாகிறது; தேகத்தின் நிறம் மாறுகிறது; சோகமும் தாபமும் குடிகொண்டிருக்கின்றன. இவ்விதமான கஷ்டங்களை அனுபவித்துக் கொண்டிருந்தும் நான் எவ்வளவு பிரயத்தனம் செய்தும் ஸீதை என் இஷ்டத்திற்கு இணங்கவில்லை; அவளை விட்டுவிடவும் எனக்கு மனமில்லை. ராமன் தன்னை மீட்க வருவானென்று எதிர்பார்த்துக்கொண்டு ஒரு வருஷகாலம் தனக்கு அவகாசம் கொடுக்கவேண்டுமென்று என்னைக் கேட்டுக்கொண்டாள். அப்படியே நான் பிரதிஜ்ஞை செய்தேன். ஓடி ஓடிக் களைத்த குதிரையைப்போல் அவளிடத்தில் ஆசை வைத்துக் களைத்திருக்கிறேன்.

பலவிதமான கொடிய ஜந்துக்களால் நிறைந்த இந்த ஆழமான பெருங்கடலை ராமலக்ஷ்மணர்களாவது வானரர்களாவது எப்படித் தாண்டமுடியும்? ஆனால் ஒரு குரங்கு இங்கே வந்து இந்த நகரத்தை நாசம் செய்து நம்மைப் படுத்தின பாட்டை யோசித்தால் காரியங்கள் எவ்விதமாய் முடியுமென்று தெரியவில்லை. ஆகையால் இதைப் பற்றி உங்களுடைய அபிப்பிராயத்தைத் தெரிவியுங்கள். மனிதர்களிடத்திலிருந்து எனக்குப் பயமில்லை; ஆனாலும் நன்றாய் யோசித்துப் பாருங்கள். தேவாஸுரர்களுடன் யுத்தம் செய்யும்பொழுது எப்பொழுதும் ஜயத்தையே அடைந்து வந்தேன். ஆனாலும் நன்றாய் ஆலோசியுங்கள். ராமலக்ஷ்மணர்கள் ஸீதையைத் தேடிக்கொண்டு ஸுக்ரீவன் முதலிய வானரர்களுடன் ஸமுத்திரக் கரைக்கு வந்திருக்கிறார்கள். ஸீதையைக் கொடுக்கக்கூடாது; ராமலக்ஷ்மணர்களைக் கொல்லவேண்டும். இதற்குத் தகுந்த ஆலோசனைசெய்து உங்களுடைய முடிவைச் சொல்லுங்கள். ராமனைத் தவிர வேறொருவன் வானரர்களுடன் ஸமுத்திரத்தைத் தாண்டி இங்கே வரமுடியாது; ஆகையால் நான் ஜயிப்பது நிச்சயம்" என்றான்.

இப்படிக் காமத்தால் புத்திமயங்கி ராவணன் பிரலாபிப்பதைக் கேட்ட கும்பகர்ணன் கோபத்துடன், "ஆலோசனை செய்பவர்களில் உத்தமர்களிலும் மத்யமர்களிலும் நீ சேர்ந்தவனல்ல. நீ எங்களுடன் ஆலோசனைசெய்து பிறகு ராமலக்ஷ்மணர்களுடன் விரோதித்துக் கொண்டு ஸீதையை அபகரித்து வந்திருந்தால் யமுனாநதி யாமுன பர்வதத்தைவிட்டுப் பிரியாததைப்போல், ஸீதையின் மனம் உன்னிடத்திலேயே நாடியிருக்கும். எங்களுடன் ஆலோசிக்கவேண்டிய காலம் அதுவே. அதைவிட்டு இப்பொழுது ஆலோசிப்பது, ஜலம் வடிந்த பிறகு அணைகட்டுவது போலிருக்கிறது. ஸீதையை அபகரிப்

பதற்குமுன் இவற்றையெல்லாம் செய்திருந்தால் எவ்விதத்திலும் குறைவு வராது. விஷயங்களை நன்றாய் ஆலோசித்து முடிவுசெய்து தர்மவிரோதமில்லாமல் காரியங்களை நடத்துகிறவன் பச்சாத்தாபமடைகிறதில்லை. விபரீதமான உபாயங்களால் செய்யப்பட்ட காரியங்கள் பலிக்கிறதில்லை. மேலும் அசுத்தமான பாத்திரங்களால் கொடுக்கப்பட்ட ஆஹுதிகளைப்போல் நமக்குக் கெடுதி செய்கின்றன. முதலில் செய்யவேண்டிய காரியங்களை பிறகு செய்வதும், பிந்திச் செய்யவேண்டிய காரியங்களை முதலில் செய்வதும் நீதி தெரியாதவனுடைய லக்ஷணம். முதலில் எங்களுடன் ஆலோசித்துப் பிறகு ஸீதையைக் கொண்டுவர வேண்டியது. முதலில் ராமலக்ஷ்மணர்களைக் கொன்றுவிட்டுப்பிறகு ஸீதையை அபகரிக்க வேண்டியது. நீ அப்படிச் செய்யவில்லை. காரியங்களைச் செய்வதில் ஸ்திரபுத்தியில்லாதவன் அதிக பலசாலியாயிருந்தால், அவனை எதிர்த்து வெல்வது அஸாத்யமென்றெண்ணி, க்ரௌஞ்சபர்வதத்தை ஹம்ஸங்கள் ஒரு த்வாரத்தின் வழியாய்த் தாண்டுவதுபோல், அவனுடைய சத்துருக்கள் அவன் காரியங்களை விசாரிக்காமல் செய்யும் ஸமயத்தை எதிர்பார்த்துக்கொண்டிருக்கிறார்கள். (க்ரௌஞ்சபர்வதம் வெகு உன்னதமாயிருப்பதால் ஹம்ஸங்கள் அதைப் பறந்து தாண்டமுடியாமல், ஸுப்ரஹ்மண்யஸ்வாமியின் சக்தியென்ற ஆயுதத்தால் துளைக்கப்பட்ட த்வாரத்தின் வழியாய் அப்புறம் செல்கின்றன என்பது ப்ரஸித்தம்.) கொஞ்சம்கூட ஆலோசிக்காமல் வெகு அபாயமுள்ள காரியத்தைச் செய்துவிட்டாய். விஷம் கலந்த மாம்ஸம், தின்றவனைக் கொல்வதுபோல், ராமன் உன்னை இது வரையில் கொல்லாதிருந்தது உன் அதிருஷ்டமே. பிறரால் அஸாத்தியமான காரியத்தைச் செய்துவிட்டாய். ஆனாலும் உன் சத்ருக்களை நாசம்செய்து நான் அதை நமக்கு அனுகூலமாய் முடிக்கிறேன். இந்திரன் ஸூரியன் அக்னி வாயு குபேரன் வருணன் இன்னும் யார் உனக்குச் சத்துருவாக இருந்தாலும் ஸரி; அவர்களை யுத்தத்தில் நாசம் செய்கிறேன். என் சரீரமோ பர்வதத்தைப்போன்றது. கூர்மையான பற்களுடன் இந்தக் கோரமான உழல்தடியை எடுத்துக்கொண்டு ஸிம்ஹநாதம்செய்து யுத்தகளத்தில் நின்றால், தேவேந்திரனும் அலறமாட்டானா? 'ராமன் ஒப்பற்ற வில்லாளியல்லவா? உன்னால் அவனை எதிர்க்க முடியுமா' என்றால் ஒரு பாணம் அல்லது இரண்டு பாணங்களுக்கு இடம் கொடுப்பேன். அதற்குமேல் அவனுடைய ரத்தத்தை ஆசைதீரக் குடிப்பேன். கவலைப்படாதே; ராமனைக் கொன்று உனக்கு ஜயத்தையும் கீர்த்தியையும் ஸுலபமாய் ஸம்பாதித்து வைக்கிறேன். ராமலக்ஷ்மணர்கள் இறந்தபின் வானர சிரேஷ்டர்களை ஒன்றுவிடாமல் தின்கிறேன். அண்ணா! யதேச்சையாகக் காலம் கழி; மதுவைக் குடி; கவலையற்று வேண்டிய காரியங்களைச் செய். நான் ராமனை யமலோகத்திற்கனுப்பின பிறகு ஸீதை உனக்கு வசப்படுவாள்'' என்றான்.



ரமஸ்வ காமம் பிப³ சாக்³ர்ய வாருணீம்
குருஷ்வ கார்யாணி ஹிதானி விஜ்வர: |
மயா து ராமே க³மிதே யமக்ஷயம்
சிராய ஸீதா வஶகா³ ப⁴விஷ்யதி ॥ (42)

## ஸர்க்கம் 13

## மஹாபார்ச்வன் சொன்னது

ராவணம் க்ருத்³த⁴ மாஜ்ஞாய மஹாபார்ஶ்வோ மஹாப³ல: |
முஹூர்த மநுஸஞ்சிந்த்ய ப்ராஞ்ஜலிர் வாக்யமப்³ரவீத் ॥ (1)

அரசர்களிடத்தில் ஸமயோசிதமாய்ப் பேசவேண்டிய விதம் தெரியாமல் இப்படிக் கும்பகர்ணன் மனத்தில் தோன்றினதைக் கபடமில்லாமல் சொல்ல, ராவணன் கடுங்கோபம் கொண்டான். அப்பொழுது மஹாபார்ச்வனென்ற மந்திரி, மஹாராஜாவின் கோபத்தைத் தணிக்க உபாயத்தைச் சற்றுநேரம் ஆலோசித்துக் கைகூப்பி, "துஷ்டமிருகங்களாலும் ஸர்ப்பங்களாலும் நிறைந்த வனத்தில் பிரவேசித்து அங்கிருக்கும் தேனைகுடிக்கத் துணியாதவன் மூடன். இவ்வளவு சிரமப்பட்டு ஸீதையை அபகரித்துவந்த தாங்கள் அவளை எப்படியாவது அனுபவிக்காமலிருப்பது தங்களுடைய புத்திக்கு அழகல்ல. 'சத்துருக்களிருக்கையில் இந்த அதர்மமான காரியத்தை எப்படிச் செய்வேன்'' என்றால், எல்லோருக்கும் பிரபுவான தங்களுக்கும் பிரபுவுண்டோ? ஆகையால் அதர்மத்திற்குப் பயப்படாமல் சத்துருக்களுடைய தலையில் அடிவைத்து ஸீதையுடன் இஷ்டப்படி அனுபவியுங்கள். அவள் தங்களுக்குஉட்படாவிட்டால் கோழிகளைப்போல் அவளை வஞ்சித்துப் பலாத்காரமாகவாவது அனுபவியுங்கள். தங்கள் இஷ்டம் பூர்த்தியான பிறகு சத்துருக்களால் ஏதாவது பயம் நேர்ந்தால், அந்தக் காலத்தில் அதை விலக்கத் தங்களுக்குத் தெரியாதா? இதற்குத் தாங்கள் பயப்பட வேண்டியதில்லையே; கும்பகர்ணனும் இந்திரஜித்தும் வஜ்ராயுதத்தைத் தரித்த இந்திரனைக்கூட கதறும்படி செய்வார்களே. யுத்தம்செய்ய ஸாமர்த்தியமில்லாதவர்கள் சொல்லுகிறபடி ஸாம தான பேதோபாயங்களால் கொஞ்சம் கூட பிரயோஜனமில்லை. தண்டோபாயத்தாலேயே ஸகல காரியங்களும் ஸித்திக்கின்றன. இங்கே எந்த சத்துருக்கள் வந்தாலும் நாங்களெல்லோரும் அவர்களை ஆயுதங்களால் நாசம் செய்து தங்களுக்கு வசப்படுத்துகிறோம். அவர்கள் இருக்குமிடத்தைத் தேடிப்போகவேண்டுமா?'' என்றான்.

தன் இஷ்டப்படி பேசின மஹாபார்ச்வனுடைய ஆலோசனையைக் கேட்டு ராவணன் ஸந்தோஷித்து, அவனுக்கு வெகுமானம்

செய்து, "மஹாபார்ச்வ! வெகுகாலத்திற்கு முன் ஒரு காரியம் நடந்திருக்கிறது. அது ஒருவருக்கும் தெரியாது. சொல்லுகிறேன், கேள். ஒரு ஸமயத்தில் புஞ்ஜிகஸ்தலை என்ற அப்ஸரஸ் பிரஹ்மாவை நமஸ்கரிக்கும் பொருட்டு பிரஹ்மலோகத்திற்குச் சென்றாள். ஆகாசத்தில் நெருப்புக் கொழுந்துபோல் மறைந்து செல்லும் அந்த ஸுந்தரியைக் கண்டு நான் காமம் மீறி அவளைப் பலாத்காரமாய் அனுபவித்து வஸ்திரமில்லாமல் செய்தேன். மதயானையால் மிதிக்கப்பட்ட தாமரைக் கொடியைப்போல் வாடி, அவள் பிரஹ்மலோகம் சென்றாள். பிரஹ்மா அவளுக்கு நேர்ந்த அவமானத்தைக் கண்டு கோபம் கொண்டு, "இந்த க்ஷணம் முதல் பரஸ்த்ரீயை பலாத்காரம் செய்தால் உன் தலை ஆயிரம்துண்டுகளாய் வெடிக்கவேண்டியது" என்று என்னைச் சபித்தார். அதற்குப் பயந்தல்லவா ஸீதையைப் பலாத்காரம் செய்யமுடியாமல் இருக்கிறேன்?

நான் வேகத்தில் ஸமுத்திரத்தைப் போன்றவனென்றும் நடையில் வாயுவைப் போன்றவனென்றும் ராமனுக்குத் தெரியாது; ஆகையால் வானரஸைன்யங்களுடன் என்னை எதிர்க்கப்பார்க்கிறான். மலைக்குகையில் ஸுகமாகத் தூங்கும் ஸிம்ஹத்தை எவனாவது எழுப்புவானா? கோபம் கொண்ட மிருத்யுதேவதையை எவனாவது எதிர்ப்பானா? இரண்டு நாக்குகளுள்ள ஸர்ப்பங்களைப் போன்ற பாணங்களை நான் யுத்தத்தில் பிரயோகிப்பதை ராமன் பார்த்ததில்லை. ஆகையால் என்னை எதிர்க்கத் துணிந்தான். எரி கொள்ளிகள் யானைகளை அடித்துத் துரத்துவதுபோல், என் வில்லிலிருந்து இடைவிடாமல் கிளம்பும் வஜ்ரத்தைப்போன்ற பாணங்கள் அவனைக் கொளுத்தும். உதய காலத்தில் ஸூரியன் நக்ஷத்திரங்களின் காந்தியை அபகரிப்பதுபோல் ராமனுடைய ஸைன்யத்தைக் கண்டதுண்டமாய்ச் செய்கிறேன். ஆயிரம் கண் படைத்த இந்திரனும் வருணனும் என்னை யுத்தத்தில் ஜயிக்க முடியவில்லையே; மனுஷ்யர்களா ஜயிக்கப் போகிறார்கள்? இந்த லங்கையில் முன்பு ஆண்டு கொண்டிருந்த குபேரனை ஜயித்த எனக்கு ஒரு அல்ப மனிதன் எம்மாத்திரம்?" என்றான்.

ந வாஸவேநாபி ஸஹஸ்ர சக்ஷுஷா
யுதா4ஸ்மி ஶக்யோ வருணேந வா புந: |
மயா த்வியம் பா3ஹுப3லேந நிர்ஜிதா
புரீ புரா வைஶ்ரவணேந பாலிதா || (27)

---



## ஸர்க்கம் 14

# விபீஷணன் ஹிதோபதேசம் செய்தது

நிஶாசரேந்த்3ரஸ்ய நிஶம்ய வாக்யம்
ஸ கும்ப4கர்ணஸ்ய ச க3ர்ஜிதாநி |
விபீ4ஷணோ ராக்ஷஸராஜ முக்2யம்
உவாச வாக்யம் ஹித மர்த2யுக்தம் || (1)

ராவணனுடைய வார்த்தைகளையும் கும்பகர்ணன் புத்தியில்லாமல் வீண் பெருமை பேசிக்கொண்டதையும் கேட்டு, வீபீஷணன் ராவணனுக்கு ஹிதமும் விசேஷ அர்த்தங்களும் அடங்கிய வாக்கியங்களைச் சொன்னான். "ஸீதை மஹாஸர்ப்பத்தைப் போன்றவள். அவளுடைய மார்பே அதன் பயங்கரமான படம்; அவளைப் பற்றின எண்ணமே, பிறரை உடனே கொல்லும் கொடிய விஷம்; அவளுடைய புன்சிரிப்பே, காமுகர்களின் மனத்தை நாசம் செய்கிற கூர்மையான விஷப் பற்கள்; அவள் கவலைகொண்டபோது முகத்தைத் தாங்கியிருக்கும் கையின் ஐந்து விரல்களே, அதன் ஐந்து தலைகள்; பெரிய தேகத்தையுடைய அந்த ஸர்ப்பம் கடிக்கவேண்டியதில்லை; தொட்ட மாத்திரத்திலேயே கொல்லும். அதை வலுவில் கொண்டு வந்து வைக்கும்படி உனக்கு புத்தி தோன்றின காரணமென்ன? இப்பொழுதே அவளைக் கொண்டுபோய் ராமனிடத்தில் விடு. பர்வத சிகரங்களைப்போன்ற தேகங்களுடன் பற்களையும்நகங்களையும் ஆயுதமாக உடைய வானர ஸைன்யங்கள் லங்கையில் வருவதற்கு முன் ஸீதையை ராமனிடத்தில் கொண்டுபோய் விடு. வஜ்ராயுதங்களைப் போன்ற ராம பாணங்கள் வாயு வேகத்துடன் வந்து விழுந்து ராக்ஷஸ சிரேஷ்டர்களுடைய தலைகளை அறுப்பதற்கு முன் ராமனிடத்தில் ஸீதையைக் கொண்டுபோய் விடு. அடே! பிரஹஸ்த! தீக்ஷ்ணமான ராமபாணங்கள் பேரிடிகளைப்போல் அதிவேகமாய் உன் தேகத்தைப் பிளந்து உயிரை வாங்கும் வரையில் இப்படியே வீண் பெருமை பேசிக் கொண்டிருப்பாய். துர்புத்தி பிடித்தவனே! கும்பகர்ணனும், இந்திரஜித்தும், மஹாராஜாவும், மஹாபார்ச்வனும், மஹோதரனும், நிகும்பனும், கும்பனும், அதிகாயனும் ராகவனுக்கெதிரில் யுத்தகளத்தில் நிற்கமுடியுமா? அண்ணா! தாங்கள் ஆதித்யகணங்களாலும், மருத்கணங்களாலும் ரக்ஷிக்கப்பட்டாலும், தேவேந்திரனும் மிருத்யுதேவதையுமே தங்களைப் புத்திரனைப்போல் மடியில் வைத்துப் பாதுகாத்தாலும், ஆகாசத்தில் மறைந்தாலும், பாதாளத்தில் ஒளிந்தாலும், ராமன் உயிரை வாங்காமல் விடப் போகிறானோ?" என்றான்.

அப்பொழுது பிரஹஸதன் எழுந்து, "தேவ, தானவ, யக்ஷ, கந்தர்வ, உரக, கருடர்களாலும் எங்களுக்குக் கொஞ்சமும் பயமென்பதே இல்லை. அப்படியிருக்க ராமன் அல்பமனிதன்; க்ஷத்திரி

யப் பையன்; இவனால் எங்களுக்கு எக்காலத்திலும் பயம் நேராது'' என்றான்.

தர்மார்த்த காமமென்ற புருஷார்த்தங்களில் நாடின புத்தியையுடைய விபீஷணன், ராவணனுடைய ஹிதத்தையே கோரினவன்; மஹாபுத்திமான். "அடே! பிரஹஸ்த! அதர்மத்திலேயே நாடின புத்தியுடையவர்களுக்கு ஸ்வர்க்கம் கிடைக்குமா? நீயும் மஹாராஜாவும், மஹோதரனும், கும்பகர்ணனும் ராமனைப்பற்றிச் செய்யும் ஆலோசனைகள் ப்ரயோஜனப்படாது. ஓடமில்லாதவன் மஹாஸமுத்திரத்தைத் தாண்டமுடியுமா? ஸகல காரியங்களிலும் மஹாஸமர்த்தனான ராமனை, நீயும் நானும் ஸகல ராக்ஷஸர்களும் ஒன்று சேர்ந்தாலும் கொல்லமுடியுமா? ராமன் ஸகல புருஷார்த்தங்களை இழந்தாலும் தர்மத்தைக் கைவிடமாட்டான். யுத்தத்தில் தன்னையும் ஸாரதியையும் காப்பாற்றிக்கொண்டு சத்ருஸைன்யங்களை நாசம் செய்யக்கூடிய மஹாரதன். ஒப்பற்ற பராக்கிரமத்தை ஸ்வபாவமாயுடைய இக்ஷ்வாகுகுலத்தில் பிறந்தவன். ஸகலப் பிரஜைகளையும் திருப்திசெய்கிறவன். விராதன், கபந்தன், வாலி முதலிய மஹா வீரர்களைக் கொன்றதால் அவனுடைய திறமை லோகப்பிரஸித்தம். யுத்த வியாபாரங்களில் கைதேர்ந்தவன். தேவர்களுக்கும் அவனுடைய வழி தெரியாது; உங்களுக்கா தெரியும்? தீக்ஷ்ணமாயும் வளைந்த கணுக்களுடனும் கழுகிறகுகளால் அலங்கரிக்கப்பட்டும் (அதிவேகமாய்ச் செல்வதற்காகப் பாணங்களில் கழுகிறகுகளைக் கட்டுவதுண்டு) பிறரால் தடுக்க முடியாததுமான ராமபாணங்கள் உன் தேகத்தைத் துளைக்கிறவரை நீ இப்படி வீண் பெருமை பேசிக் கொண்டிருப்பாய். ராவணனாவது, அதிபலனாவது, திரிசிரஸாவது, கும்பகர்ணனாவது, நிகும்பனாவது, இந்திரஜித்தாவது நீயாவது தேவேந்திரனுக்கு ஸமமான ராமனை யுத்தத்தில் தடுக்க முடியுமா? தேவாந்தகனும், நராந்தகனும், பெரிய சரீரமுடைய அதிகாயனும், மலையைப்போன்ற பலத்தையுடைய அகம்பனனும் யுத்தத்தில் ராமனுக்கெதிரில் நிற்க முடியுமா?

நமது மஹாராஜா விஷயபோகங்களில் முழுகியிருக்கிறார்; ஸ்வபாவத்திலே கொடியவர்; காரியங்களை விசாரித்துச் செய்யாதவர்; நீங்கள் பார்வைக்கு அவருக்கு மித்திரர்களாயிருந்தாலும் உங்களுடைய செய்கைகளால் பரமசத்துருக்கள். மேற்சொன்ன தோஷங்கள் அவரிடத்திலிருப்பதை மறந்து அவருடைய குரூர ஸ்வபாவத்தையே முன்னிட்டு அவர் இஷ்டம்போல் பேசி, ஸகல ராக்ஷஸர்களையும் நாசம்செய்ய வந்திருக்கிறீர்கள். அளவற்ற தேகத்தையும் ஆயிரம் தலைகளையும் மஹா பலத்தையுமுடைய பெரிய ஸர்ப்பம் உங்களுடைய அரசனைச் சுற்றிக்கொண்டிருக்கிறது. ராமனுடன் விரோதிப்பதென்ற அந்தப் பெரும்பாம்பு இவரை விழுங்குவதற்கு முன் நீங்கள் இவரை விடுவிக்கவேண்டும். காலம்



தாண்டி விட்டது. இனி என்ன செய்வோமென்று சும்மாவிருக்கக் கூடாது. நீங்களெல்லோரும் இவரால் ஸகல விதத்திலும் ஸௌக்யத்தையும், வெகுமானத்தையும், கீர்த்தியையும் அடைந்திருக்கிறீர்கள். உயிரைக் கொடுத்தாவது இவரைக் காப்பாற்றவேண்டும். பயங்கரமான பலத்தையுடைய பூதங்களால் பிடிக்கப்பட்டவனை அவனுடைய மித்திரர்கள் எந்த உபாயத்தாலாவது ரக்ஷிப்பது போல், நீங்கள் இவருக்கு மித்திரர்களென்பது வாஸ்தவமானால், ஒன்று சேர்ந்து ஒரே மனத்துடன் மயிரைப் பிடித்தாவது பலாத்காரமாய் அநர்மத்திலிருந்து இவரை விலக்கி ரக்ஷிக்கவேண்டியது. லக்ஷ்மணனென்ற மஹாஸமுத்திரம் இவரை நாசம்செய்யக் காத்துக் கொண்டிருக்கிறது. அதன் வேகத்திலகப்பட்டு ராமனென்ற வடவாக்னியின் வாயில் போய் விழுவதற்குமுன் நீங்களெல்லோரும் சேர்ந்து இப்பொழுதே இவருக்குக் கைகொடுத்துக் கரையேற்றவேண்டியது. (முதலில் லக்ஷ்மணனால் அடிக்கப்பட்டுப் பிறகு ராமனால் கொல்லப்படுவானென்பது கருத்து.)

இந்த லங்கைக்கும் இதிலுள்ள ராக்ஷஸர்களுக்கும் மஹாராஜாவிற்கும் அவருடைய மித்திரர்களுக்கும் பரம மங்களத்தைக் கொடுக்கக்கூடிய வார்த்தையைச் சொல்லுகிறேன். இவருக்கு இஷ்டமில்லாவிட்டாலும், நாம் ஒன்று சேர்ந்து பலாத்காரமாகவாவது ஸீதையைக் கொண்டுபோய் ராமனிடத்தில் விடுவோம். ஆனால், 'மஹாராஜாவின் சத்துருக்களைக் கொல்லவேண்டுமென்றே ஆலோசனை சொல்லுகிறோம். அது ஹிதமல்லவா?' என்றால், உத்தம மந்திரி செய்யவேண்டியதென்ன? சத்துருவின் வீரியத்தையும் ஐசுவரியத்தையும் தன் அரசனுடைய வீரியத்தையும் ஐசுவரியத்தையும் நன்றாகப் பரீக்ஷித்துப் பார்க்கவேண்டியது. அப்படியேஇருவர்களுடைய விருத்தி காலத்தையும், க்ஷயத்தையும், (குறைவையும்) ஆலோசிக்கவேண்டியது. சத்துரு, க்ஷீண தசையிலிருந்து, தான் விருத்தி தசையிலிருந்தால் படையெடுத்துச் செல்ல வேண்டியது. சத்துரு விருத்தி தசையிலிருந்து தான் க்ஷீண தசையிலிருந்தால் அவனுடன் ஸ்நேஹம் செய்ய வேண்டியது. இருவரும் ஸமமாயிருந்தால் ஒன்றும் செய்யக்கூடாது. இப்பொழுது ராமன் விருத்தி தசையிலிருக்கிறான்; ஸீதை இருக்குமிடம் தெரிந்துவிட்டது; அவனுடைய தூதன் நமக்குத் தெரியாமல் இங்கே வந்து தன் காரியத்தை முடித்துக்கொண்டு நம்மை அவமானம் செய்து, நமது நகரத்தைச் சாம்பலாக்கி, நமது வீரர்களைக் கொன்றுவிட்டான்; அளவற்ற வானர ஸைன்யம் ராமனுக்கு ஸஹாயம் செய்கிறது; ஸமுத்திரக் கரைக்கு வந்துவிட்டான்; அதிசீக்கிரத்தில் அதைத் தாண்டிவிடுவான்; இப்பொழுது அவனுக்கு ஜய காலம். நமது அரசனுடைய ராஜதானி எரிந்து, இவருடைய புத்திரர்கள் மடிந்து விட்டபடியால் இப்பொழுது அபஜய காலம். ஆகையால் ராமனுடன் ஸ்நேஹம் செய்து ஸீதையைக் கொண்டு

போய்விட வேண்டுமென்று நீங்கள் யோசனை சொல்லவேண்டும்" என்றான்.

பரஸ்ய வீர்யம் ஸ்வப$^{3}$லம் ச பு$^{3}$த்$^{3}$த்$^{4}$வா
ஸ்த$^{2}$ாநம் க்ஷயம் சைவ ததை$^{2}$வ வ்ருத்$^{3}$தி$^{4}$ம் |
தத$^{2}$ா ஸ்வபக்ஷேப்யநும்ருஶ்ய பு$^{3}$த்$^{4}$யா
வதே$^{3}$த் க்ஷமம் ஸ்வாமி ஹிதம் ச மந்த்ரீ || (22)

---

## ஸர்க்கம் 15

# இந்திரஜித்தின் ஆலோசனை

---

ப்$^{3}$ருஹஸ்பதேஸ் துல்ய மதேர் வசஸ்தத்
நிஶம்ய யத்நேந விபீ$^{4}$ஷணஸ்ய |
ததோ மஹாத்மா வசநம் ப$^{3}$ப$^{4}$ாஷே
தத்ரேந்த்$^{3}$ரஜிந் நைர்ருத யூத$^{2}$முக்$^{2}$ய: || (1)

இப்படிப் புத்தியில் பிருஹஸ்பதியைப்போன்ற விபீஷணன் சொன்ன வார்த்தைகளை வெகு பொறுமையுடன் கேட்டுக்கொண்டிருந்த ராக்ஷஸவீரசிகாமணியான இந்திரஜித் எழுந்து, "சிற்றப்பா! என்னவார்த்தைசொன்னீர்? இப்படிஎவனாவதுநடக்கப்போகிறான்? பிரயோஜனமில்லாத வார்த்தைகளைத் தைரியமில்லாத பேடியைப் போல் சொல்வதில் உமக்கு வெட்கமில்லையா? இந்தப் பௌலஸ்திய குலத்தில் பிறக்காதவனும் இப்படிச் சொல்வானா? இப்படிச் செய்வானா? இதைச் சொல்கிறவர்களையும் இதைக் கேட்டுக்கொண்டிருப்பவர்களையும் நிந்திக்க வேண்டியது. மஹாப் பிரஸித்தி பெற்ற இந்தப் பௌலஸ்திய குலத்தில் பிறந்தும் கொஞ்சமாவது பலம், பிரபாவம், உத்ஸாஹம், சௌரியம், தைரியம், தேஜஸ் இவைகளில் ஒன்றுமில்லாத நீர் சொன்ன வார்த்தைகள் உமக்கே தகும். நீர் கனிஷ்டனென்பது நிஜமே. (கனிஷ்டனென்றால் தம்பி என்றும், எல்லோருக்கும் தாழ்ந்தவனென்றும் அர்த்தமாகும்). ஓய்! ராக்ஷஸாதமரே! நீர் தைரியமற்றுப் பேடியைப்போல் பயத்தால் நடுங்கிக்கொண்டு எங்களையும் அப்படியே நடுங்கச் செய்யப் பார்க்கிறீரோ! அந்த க்ஷத்திரியப் பையன்கள் எம்மாத்திரம்? நமது நகரத்திலுள்ள ஒரு அல்ப ராக்ஷஸன் அவர்களை விளையாட்டாய் விழுங்கி விடுவானே. எங்களுக்கும் பயமென்பதுண்டோ? முன் நடந்ததை மறந்து விட்டீரோ? த்ரிலோகங்களுக்கும் அதிபதி; அளவற்ற ஐசுவரியத்தையுடையவன்; பராக்கிரமமுள்ள தேவஸைன்யங்களால் சூழப்பட்டவன்; அந்த இந்திரனைத் தரையில் அடித்துத் தள்ளினேன்; அவன் ஏறி வந்த ஐராவதமென்ற திக்கஜத்தை பூமியில் அடித்துத் தள்ளி, அதன் தந்தங்களைப் பிடுங்கி, ஸகல தேவகணங்களையும் இருந்தவிடம் தெரியாமல் ஓடும்படித் துரத்தியடித்தேன். அப்படிப்பட்ட நான் தேவர்களுடைய கொழுப்பை அடக்கினவன்; தானவோத்தமர்களைக் கதறச் செய்தவன்; அளவற்ற வீரியமுடையவன். நம்மைக் கண்டு நடுங்கிக்கொண்டிருந்த தசரதனுடைய இரண்டு சிறு பையன்களிடத்தில் பயப்படவேண்டுமோ? அவர்கள் தேவர்களுமல்ல; தானவர்களுமல்ல. ஏன் வீணாய்ப் பயமுறுத்துகிறீர்?" என்றான்.



இந்திரஜித் மஹாதேஜஸ்வி; பிறர் அண்டக்கூடாதவன்; சொன்னபடி செய்பவன். அவனுடைய வார்த்தையைக்கேட்டு, மஹா தைரியசாலியும் ராக்ஷஸ வீரசிரேஷ்டனுமான விபீஷணன் விசேஷ அர்த்தங்களடங்கிய ஹிதத்தை உபதேசித்தான். ஆனால் அது இந்திரஜித்தின் புத்திக்கு எட்டவில்லை. "அடே குழந்தாய்! நீயோ சிறு பையன்; இன்னும் உன் புத்தி பக்குவ தசைக்கு வரவில்லை; விஷயங்களை நன்றாகப் பரிசோதித்து நிச்சயமான ஆலோசனை சொல்லத் திறமையில்லை. யாதொரு பிரயோஜனமுமில்லாத வார்த்தைகளைப் பிதற்றிக்கொண்டு கேவலம் உன் நாசத்தையே தேடிக்கொள்கிறாய். ராகவனுடன் விரோதித்தால், அவன் ராவணனையும் அவனுடைய புத்திரமித்திர பந்துக்களையும் ஸைன்யங்களையும் நாசம் செய்வானென்று நான் பலவிதமாய் எடுத்துச்சொன்னாலும் கேட்காமல், தெரியாததனத்தால் ஓரேபிடிவாதமாய்ப்பேசுகிற நீ, ராவணனுக்குப் புத்திரனென்று பெயர் உடையவனேயன்றி வாஸ்தவமாக அவனைக் கொல்ல வந்த பரமசத்துருவல்லவா? உன்னைக் கெடுத்துக் கொள்வது மல்லாமல் உன்னைப் பெற்றவனையும் கெடுக்கப் பார்க்கிறாய். துர்ப்புத்தி பிடித்த உன்னையே கொல்லவேண்டியது. ஒன்றும் தெரியாமல் பிடிவாதம் பிடிக்கும் சிறுபையனை இந்த ஆலோசனை ஸபையில் வரும்படி விட்டவனையும் கொல்ல வேண்டியது. நீ நியாயாநியாய விவேகமற்றவன்; தலைதெரியாமல் கர்வம் கொண்டவன்; மஹாபுத்திமானென்று நினைக்கிறவன்; பெரியோர்களால்பழக்கப்படாதவன்; மரியாதை தெரியாதவன்; குரூர ஸ்பாவமுடையவன்; கெட்ட புத்தியுள்ளவன்; காரியங்களைப் பரீக்ஷித்துச் செய்யாதவன்; கெடுதியைச் செய்யும் விஷயங்களையே ஆலோசிக்கும் புத்தியையுடையவன்; வெகு அல்பன்; சிறு பிள்ளையானதால் இப்படிப் பிதற்றுகிறாய். பிரஹஸ்தன் மஹா பார்ச்வன் முதலியவர்கள் குடிகேடர்களென்று எண்ணியிருந்தேன்; நீயோ அவர்களை மிஞ்சிவிட்டாய். ராமபாணங்களின் மஹிமை உனக்குத் தெரியுமா? ப்ரஹ்மதண்டத்திற்கும் காலாக்னிக்கும் தப்பினாலும் தப்பலாம்; யமதண்டத்திலிருந்தும் விடுவித்துக்கொள்ளலாம்; ராமன் யுத்தகளத்தில் நின்று ப்ரசண்ட கோதண்டத்தை வளைத்து அக்னி ஜ்வாலைகளைக் கக்கும் பாணங்களை இடைவிடாமல் பொழியும் பொழுது, எதிரில் நின்று பிழைக்கிறவனும் உண்டோ? (ப்ரஹ்மதண்டமென்றால், ஆயிரம் யுகங்களடங்கிய ப்ரஹ்மாவின் ஒருதினத்தின் முடிவில் ஸகல பிரபஞ்சத்தையும் ஸம்ஹாரம் செய்வதற்காக நெருப்புக் கொழுந்தைப்போல் வெளிப்படும் தூமகேது; அல்லது ப்ரஹ்மாவின் சாபமென்றும் அர்த்தம் செய்யலாம்). மஹாராஜ!

நாம் இதுவரையில் செய்த அபராதங்களுக்கும் செய்யத்தவறின காரியங்களுக்கும் ஒரே பரிகாரமுண்டு. நமது ஐசுவரியத்தையும் ரத்தினங்களையும் ஆபரணங்களையும் உடைகளையும் சிரேஷ்டமான இதர வஸ்துக்களையும் ராமனுடைய பாதங்களில் ஸமர்ப்பித்து, மஹாலக்ஷ்மியைப்போன்ற ஜானகியை அவரிடத்தில் ஒப்புவித்து, நாம் செய்த அபசாரத்தைப் பொறுக்கும்படி ப்ரார்த்தித்தால், நாமும் நம்மைச் சேர்ந்தவர்களும் அபாயமில்லாமல் ஸுகமாக வஸிப்போம்; இதைத் தவிர வேறு யோசனை எனக்குத் தோன்றவில்லை'' என்றான்.

த4நாநி ரத்நாநி ஸுபூ4ஷணாநி
வாஸாம்ஸி தி3வ்யாநி மணீம்ஶ்ச சித்ராந் |
ஸீதாம் ச ராமாய நிவேத்3ய தே3வீம்
வஸேம ராஜந்நிஹ வீதஶோகா: || (14)

---

## ஸர்க்கம் 16

# ராவணன் விபீஷணனைக் கோபித்தது

---

ஸுநிவிஷ்டம் ஹிதம் வாக்யமுக்தவந்தம் விபீ4ஷணம் |
அப்3ரவீத் பருஷம் வாக்யம் ராவண: காலசோதி3த: || (1)

விபீஷணனுடைய வார்த்தைகளின் அர்த்தத்தை யோசிக்காவிட்டாலும், அவை கேட்கும்பொழுது மிகவும் ப்ரீதிகரமாயிருந்தன. ஆகையால், அர்த்தம் அனுகூலமாயிராவிட்டாலும், அவைகளைக் கேட்காமலிருக்க மனம் வராது. கேட்பவர்களுடைய மனத்தில் படாமலிருக்கும்படிச் சொன்னால், ஒருவேளை ஆதரிக்காமலிருக்கலாம்; ஆனால் ராவணனுடைய மனத்தில் நன்றாய்ப் படும்படி சொன்னான். கேவலம் கேட்பதற்கு மாத்திரம் மதுரமாயில்லாமல், தனக்கு நேரும் பெரும் கஷ்டத்தைத் தீர்ப்பதற்கு உபாயமிருந்தபடியால், அவனுக்குப் பரமஹிதமானது. கேட்பதற்கு இன்பமாயிராவிட்டாலும், ஹிதமென்ற ஒரு காரணத்தாலேயே ஆதரிக்கத் தகுந்தது. ஒரு வருஷம் வரையில் சுச்ரூஷை செய்யாதவனுக்குப் பரமார்த்தத்தை உபதேசிக்கக்கூடாதென்ற விதிப்படி, குருகுலவாஸம் செய்து குருசுச்ரூஷை செய்து, அவருடைய பாதங்களைத் தவிர வேறு கதியில்லையென்று சரணமடைந்தவனுக்கே உபதேசிக்க வேண்டிய ஹிதத்தை, ராவணனுக்கு நேரும் பெரிய ஆபத்தைப் பார்த்து விபீஷணன் ஸம்பூர்ணமாய் உபதேசித்தான். வேறொருவன் இப்படிச் சொல்லியிருந்தால் அதை அலக்ஷ்யம் செய்யலாம். சொன்னவனோ தன்னுடன் பிறந்தவன்; கஷ்ட ஸுகங்களுக்குப் பாத்யப்பட்டவன்; எப்பொழுதும் தன்னுடனிருந்து ஸகல விஷயங்களையும் நன்றாக அறிந்தவன். அப்படியிருக்க ராவணன் அதை அலக்ஷ்யம் செய்யக்கூடாது; கேட்டவுடன்,



அர்ஜுனனைப்போல், "எனக்கு இதுவரையிலுமிருந்த ஸந்தேகம் தீர்ந்து ஞானோதயமாயிற்று. நீர் சொல்கிறபடி செய்கிறேன்" என்று சொல்லவேண்டியது. அல்லது, "நீ எனக்கு பரம உபகாரத்தைச் செய்தாய்'' என்றாவது கொண்டாடவேண்டியது. அதற்குத் தகுந்த ப்ரதியுபகாரம் செய்ய முடியாததால், அனுதாபப்படவேண்டியது. அதை விட்டுத் தனக்குப் பரம சத்துருக்களிடத்தில் சொல்லவேண்டிய வார்த்தைகளை ராவணன் விபீஷணனுடைய மனத்தில் நன்றாய்த் தைக்கும்படி கடுமையாய்ச் சொன்னான். ஏனென்றால், ஸகல லோகங்களையும் கதறச் செய்வதால் பிறரை ஹிம்ஸிப்பதையே ஆனந்தமாயுடைய ராவணனென்று பெயர் பெற்றவன்; காரணமில்லாமல் கெட்ட காரியங்களைச்செய்துவிட்டுப் பிறகு கஷ்டப்படுகிறவன். மேலும், "ராகவனைச் சரணமடை'' என்று தன்னுடன் பிறந்தவன் சொன்னான்; "அப்படிச் செய்யாதே'' என்று அகங்காரம் சொல்லிற்று. ராவணன் ஒன்றும் தோன்றாமல், முடிவில் தன் ஸ்வபாவப்படி விதியின் உபதேசத்தை அனுஸரித்தான்.

"ப்ரத்யக்ஷமான சத்துருவுடன் வஸிக்கலாம்; கோபம் கொண்ட காலஸர்ப்பத்துடன் வஸிக்கலாம்; நமக்கு மித்திரனைப்போல் காட்டிக் கொண்டு சத்துருவிற்கு அனுகூலமாயிருப்பவனுடன் வஸிக்கலாகாது. (ஆகையால் 'நீ இங்கிருந்து ஓடிப்போ' என்று அர்த்தமாகிறது). அடே ராக்ஷஸ! லோகத்திலுள்ள ஸகல ஜனங்களிலும் தாயாதிகள் எப்படிப் பட்டவர்கள் தெரியுமா? அவர்களுடைய நடத்தை எனக்கு நன்றாய்த் தெரியும். தங்களுக்குள் ஒருவனுக்குக் கெடுதி நேர்ந்தால், அளவற்ற ஆனந்தமடைவார்கள். ஆகையால், எனக்கு இப்பொழுது ஆபத்து நேர்ந்ததென்று நீ இப்படிக் குதிக்கிறாய். தங்களுக்குள் சிரேஷ்டனாகவாவது, காரியங்களை ஸாமர்த்தியமாய் முடிக்கக் கூடியவனாகவாவது, வித்வானாகவாவது, தர்மவானாகவாவது ஒருவனிருந்தால் அவர்களுக்குப்பொறுக்காது. அந்தச் சூரனை ஸமயம் பார்த்துஅவமானம் செய்வார்கள். இவ்வளவு குணங்களும் பொருந்தியிருக்கும் என்னிடத்தில் உனக்குப் பொறாமையுண்டாவது ஆச்சரியமல்ல. தாயாதிகள் மனத்திலுள்ள அபிப்ராயத்தைக் காட்டிக் கொள்ள மாட்டார்கள்; பார்வைக்கு மாத்திரம் ஒருவரோடொருவர் அத்யந்த மித்திரர்களைப்போல் பழகுவார்கள். ஸ்வபாவமோ மிகவும் குரூரம்; ஆபத்காலத்தில் துரோகம் செய்து கெடுப்பார்கள். நீயும் அப்படியே எனக்கு ஆபத்து நேரும் ஸமயம் பார்த்திருந்து கெடுதி செய்கிறாய். தாயாதிகளைக் கண்டால் நடுங்க வேண்டும்.

ஒரு காட்டில் அனேக யானைகள் வஸித்துக் கொண்டிருந்தன. ஒரு நாள் சில மனிதர்கள் அவைகளைப் பிடிக்க விரும்பி, பழக்கப்பட்ட யானைகளை அழைத்துக் கொண்டு, கயிறுகளுடன் அங்கே வந்தார்கள். அவர்களைக் கண்டு அங்கிருந்த யானைகள், 'ஐயோ!

நாம் நெருப்பைக் கண்டு பயப்பட வேண்டியதில்லை; உடனே கொல்லும் ஆயுதங்களைக் கண்டு பயப்பட வேண்டியதில்லை; இவர்கள் கையிலிருக்கும் கயிறுகள் நம்மைக் கட்டிப் பிறருக்கு வசப்படுத்தி, பிராணத்தைக் காட்டிலும் அதிக ஹிம்ஸையைச் செய்யுமே என்று அவைகளுக்கும் பயப்பட வேண்டியதில்லை. இதோ கொஞ்சமும் இரக்கமில்லாமல் தங்களைக் காப்பாற்றிக் கொள்வதிலேயே நோக்கமுள்ள நமது தாயாதிகளைக் கண்டல்லவா பயப்பட வேண்டியிருக்கிறது! இவர்கள் நம்மைப் பிடிப்பதற்கு வேண்டிய ஸகல உபாயங்களையும் இந்த மனிதர்களுக்குச் சொல்லிக் கொடுப்பார்கள்; ஸந்தேகமில்லை. மற்ற பயங்களைக் காட்டிலும் தாயாதிகளால் நேரும் பயம் மஹா கஷ்டமென்று நமக்குத் தெரிந்த விஷயமே'' என்றன.

'தாயாதிகள் நம்மிடத்தில் ஸ்நேகமாயிருக்கும் பொழுது பயமென்ன?' என்றால், பசுக்களிடத்தில் ஹவ்யகவ்யாதிகளுக்கு உபயோகப்படும் பால் தயிர் முதலியவை எப்படிக் குறைவில்லாமல் கிடைக்குமோ; பிராம்மணர்களிடத்தில் அடக்கம் எப்படி ஸ்வபாவமோ; ஸ்த்ரீகளிடத்தில் சபல புத்தி எப்படி ஸ்வபாவமோ, அப்படியே தாயாதிகளிடத்திலிருந்து நமக்குப் பயம் நேருவதும் ஸ்வபாவமே. நான் உத்தம குலத்தில் பிறந்தவன்; லோகத்தாரால் கொண்டாடப் பட்டவன்; சத்துருக்களின் தலைகளில் கால் வைத்தவன். ஆகையால் உனக்கு என்னிடத்தில் பொறாமையுண்டாயிற்று.

'பிறந்தது முதல் உன்னுடனிருக்கும் நான் இப்படிச் செய்வேனா?' என்றால், தாமரை இலையில் நீர்த்துளிகள் ஒட்டுமா? அப்படி அயோக்கியர்கள் எவ்வளவு காலம் நம்மிடத்தில் சேர்ந்திருந்தாலும் பிரயோஜனமில்லை.

''உன்னால் ஸகல ஸௌக்கியங்களும் பெற்ற நானே உனக்குக் கெடுதி நினைப்பேனா?' என்றால், தேனில் ஆசைவைத்த வண்டு அதைக் குடித்தபிறகு தனக்கு அந்த தேனைக் கொடுத்த புஷ்பத்தில் உட்காருமா? அப்படி அயோக்கியர்கள் உபகாரங்களால் கட்டுப்படுகிறதில்லை. நீயும் அப்படியே.

'நான் உன்னுடன் இதுவரையிலும் செய்த ஸ்நேகத்தைக் கெடுத்துக் கொண்டு எனக்கு ஆபத்தைத் தேடுவேனா' என்றால், யானை அமுக்குப்போக ஸ்நானம் செய்தவுடனே மண்ணைவாரித் தேகமெங்கும் இறைத்துக் கொள்ளவில்லையா? அப்படியே அயோக்கியர்கள் தங்களுக்கே கெடுதியைத் தேடிக் கொள்வார்கள். சரத்காலத்தில் மேகங்கள் எவ்வளவு கர்ஜித்தாலும் மழை எப்படி பெய்வதில்லையோ, அப்படியே நீங்கள் பார்வைக்கு எவ்வளவு ஸ்நேஹமாய்க் காட்டிக் கொண்டாலும் உங்களால் ஒரு பிரயோஜனமும் இல்லை. வேறொருவன் இந்த வார்த்தைகளைச் சொல்லியிருந்தால் இதுவரையிலும் பிழைத்திருப்பானா? ராக்ஷஸ குலத்தைக் கெடுக்கவந்த அயோக்ய! நீ என்னு



டன் பிறந்த தோஷத்திற்காக உன்னை உயிருடன் விட்டேன். சீ! ஓடிப்போ'' என்றான்.

இப்படிக் கடுமையான வார்த்தைகளால் துளைக்கப்பட்டு, விபீஷணன் தான் நியாயத்தை எடுத்துச் சொல்லியும் ராவணன் கேட்காததால், இப்பொழுது உசிதமல்லவென்று, கதாயுதத்தைக் கையிலெடுத்துக் கொண்டு, தனக்கு மித்திரர்களான நான்கு ராக்ஷஸர்களுடன் கோபபரவசனாய் ஆகாசத்தில் கிளம்பினான். ஆனாலும், ''ஐயோ! வீணாய்க் கெட்டுப் போகிறானே! இப்பொழுது நல்ல புத்தி வராதா'' என்று அனுதாபப்பட்டு, மறுபடியும் ஹிதத்தை உபதேசித்தான். லங்கையையும் மித்திரர்களையும் ஐசுவரியத்தையும் விட்டுப் போகும் விபீஷணன் தனக்குப் பிரதிகூலமான விஷயங்களை நீக்கித் தனக்கு அனுகூலமான ராமனுடைய கிருபையை அடைய பிரயத்தனம் செய்வதென்ற கைங்கரிய லக்ஷ்மியால் விளங்கினான். ''மஹாராஜரே! எவ்வளவு கடுமையாய்ப் பேசினாலும் தாங்கள் எனக்குத் தமயன். நான் தங்களை எதிர்த்துப் பேசுவது நியாயமா? வேண்டியதைச் சொல்லுங்கள். 'ஏன் புறப்பட்டுப் போகிறாய்? பதில் சொல்ல முடியாவிட்டால், பொறுத்துக் கொண்டிரு' என்றால், தாங்கள் எனக்கு மூத்தவர்கள்; பிதாவிற்கு ஸமம்; நான் தங்களைப் பூஜிக்க வேண்டியது. ஆனால், தாங்கள் தர்மமார்க்கத்திலிருந்து விலகிவிட்டீர்கள். தாங்கள் சொல்வது கொஞ்சம் கூட நிஜமல்ல. இந்தக் கடுமையான வார்த்தைகளைப் பொறுக்க மாட்டேன். தங்களுக்கு ஹிதமுண்டாக வேண்டுமென்ற எண்ணத்தால் நீதியைச் சொன்னேன். ஆனால், அக்ஞானத்தால் மயங்கிக் காலகதிக்கு வசப்பட்டவர்கள் ஹிதோபதேசத்தை ஆதரிக்க மாட்டார்கள். பிறருக்குப் பிரியமான வார்த்தைகளைச் சொல்லுகிறவர்களும் அவைகளைக் கேட்கிறவர்களும் லோகத்தில் ஸுலபமாய்க் கிடைப்பார்கள். ஆனால், ஒருவனுக்கு ஹிதமான விஷயம் அவனுக்குக் கேட்க வெறுப்பாயிருந்தால், அதைத் துணிந்து சொல்லுகிறவனும் அதைக் கேட்கிறவனும் கிடைப்பதரிது.

'உன் வார்த்தையைக் கேட்காதவனிடத்தில் ஏன் சிரமப்படுகிறாய்?' என்றால், ஸகல பூதங்களையும் நாசம் செய்யும் தயையற்ற காலபாசத்தால் கட்டுப்பட்டு தாங்கள் அழியப் போகிறீர்களென்று எனக்குத் தெரிந்தும், தங்களை நான் உபேக்ஷிப்பது அழகல்ல. தன் வீடு நெருப்புப் பிடித்து எரிகையில் அதை விட்டுப்போக மனம் வருமா? தங்கக்கட்டுகளால் அலங்கரிக்கப்பட்டு நெருப்புக் கொழுந்துகளைப் போன்ற ராமபாணங்களால் தாங்கள் மரணமடைவதை நான் பார்த்துக் கொண்டிருக்க மாட்டேன். 'ஸமுத்திரத்தில் அலைகளால் மணல்கள் இருந்த இடம் தெரியாமல் கரைவதுபோல், காலபாசத்தால் கட்டப்பட்டவர்கள் சூரர்களாகவும் பலசாலிகளாயும் ரணதீரர்களாயும் இருந்தாலும் அழிகிறார்கள். ஆகையால், எனக்கும் கெடுதி நேருமோ' என்று தாங்கள் எண்ணக் கூடாது. தங்களுடைய

ஹிதத்தையே கோரின என் வார்த்தைகளை மன்னிக்க வேண்டும். தாங்கள் எனக்குப் பெரியவர்களல்லவா? தங்களையும் இந்த லங்கையையும் ராக்ஷஸர்களையும் காப்பாற்றும்வழியை எப்படியாவது தேட வேண்டும். தங்களுக்கு க்ஷேமமுண்டாகட்டும். போய் வருகிறேன். நான் இல்லாத பொழுதாவது ஸுகமாக இருப்பீர்களல்லவா? தங்களுடைய ஹிதத்தை விரும்பி அதர்மத்திலிருந்து தங்களைத் தடுத்துப் பார்த்தேன். என் வார்த்தையைத் தாங்கள் கேட்கவில்லை. காலம் குறுகி மரணமடைய வேண்டியவர்கள், தங்களுடைய மித்திரர்கள் செய்யும் ஹிதோபதேசத்தைக் கேட்பார்களா?" என்றான்.

நிவார்யமாணஸ்ய மயா ஹிதைஷிணா
ந ரோசதே தே வசநம் நிஶாசர |
பராந்தகாலே ஹி க³தாயுஷோ நரா:
ஹிதம் ந க்³ருஹ்ணந்தி ஸுஹ்ருத்³பி⁴ரீரிதம் || (26)

---

## ஸர்க்கம் 17

## விபீஷணன் ராமனைச் சரணமடைந்தது

இத்யுக்த்வா பருஷம் வாக்யம் ராவணம் ராவணாநுஜ: |
ஆஜகாம முஹூர்த்தேந யத்ர ராம: ஸலக்ஷ்மண: || (1)

அவதாரிகை

(1) ராமனுக்கு அனுகூலமாக இருக்க வேண்டுமென்ற ஸங்கல்பம், (2) அவருக்கு விரோதமானவைகளை நீக்குதல் (3) தன்னைக் காப்பாற்றுவானென்ற நம்பிக்கை, (4) தன்னைக் காப்பாற்றுகிறவனைப் போய் அடைவது, (5) தன்னை அவனிடத்தில் ஒப்புவிப்பது, (6) தன் தீனத் தன்மையை அவனுக்கு வெளியிடுவது என்று சரணாகதியின் அங்கங்கள் ஆறு. ராமனைச் சரணமடைய வேண்டுமென்று விரும்பிய விபீஷணன், முதல் இரண்டையும் ஸம்பாதித்தானென்று காட்டப்பட்டது. ராமனுடைய கருணைபற்றி அடிக்கடி உபதேசித்ததால் ரக்ஷிப்பவனிடத்தில் வைக்கவேண்டிய நம்பிக்கை காட்டப்பட்டது. இப்பொழுது தீனத் தன்மையை விவரித்து, பிறகு சரணாகதியின் ஸ்வரூபத்தை உபதேசிக்கிறார்.

---

இப்படி விபீஷணன் ராவணனிடத்தில் கடுமையான வார்த்தைகளைச் சொல்லிவிட்டு, ஒரு முகூர்த்தகாலத்திற்குள் ராமன் லக்ஷ்மணனுடன் இருக்குமிடத்திற்கு வந்து சேர்ந்தான்.

[குறிப்புகள்:—ராவணன் தன்னை அவமதித்தவுடன், "சீ! இந்த இடத்திலேயே இருக்கக்கூடாது. பரமதார்மிகரான **ஸ்ரீராமனைப் போய் அடையவேண்டியது**" என்ற தர்மபுத்தி தார்மிகரான விபீஷணனுக்கு உண்டாயிற்றென்று வால்மீகி பகவான் கொண்டாடுகிறார்.



**இப்படிச்சொல்லி:**—"ஜானகியை ராகவனிடத்தில் கொண்டு போய் விடு" என்று ராவணன் செய்யவேண்டிய காரியம் அதி ஸுலபமென்றும், 'பாணங்கள் உங்கள் தலைகளை அறுக்கும்' என்று கூறியதால் அப்படிச் செய்யாவிட்டால் நேரும் ஆபத்தையும், தெளிவாய் எடுத்துச் சொல்லி,

**கடுமையான:**—தன் பிரியநாயகியுடன் ஆனந்தமாயிருப்பவனுக்கு ஸுகத்தைக் கொடுக்கும் தென்றல் காற்று, நாயகியை விட்டுப் பிரிந்தவனுக்குத் துக்கத்தைஉண்டுபண்ணுவதுபோல், விபீஷணனால் உபதேசிக்கப்பட்ட ஹிதமானது, ராவணனைச் சேர்ந்தவர்களுடைய துஷ்டஸ்வபாவத்தால், அவனுக்குக் கடுமையாகத் தோன்றிற்று.

**ராவணனிடத்தில்:**—தமயனுடைய ஹிதத்தைக் கோரின விபீஷணன், தன்னுடன் பிறந்தவனுக்கு ஆபத்து நேர்ந்த பொழுது, அவனைக் கைவிட்டானென்ற அவதூறு வாராதபடி, தன்னால் கூடிய வரைக்கும் அதை நீக்கப் பார்த்தான். ஆனால் உபதேசிக்கப்படுகிறவனோ, பலவான் பலஹீனனென்று விசாரிக்காமல் எல்லோரையும் நாசம் செய்கிற ராவணன்; அவனிடத்தில் சத்துருவின் பராக்கிரமத்தை வர்ணித்தால் கடுமையாய்த் தோன்றாதா?

**விபீஷணன்:**—துஷ்டனான ராவணனுக்குத் தம்பியாய்ப் பிறந்தாலும் ஸாத்விக ஸ்வபாவமுடையவனாகையால், சொல்லவேண்டிய ஹிதத்தைப் பயமில்லாமல் சொன்னானென்று வால்மீகி கொண்டாடுகிறார். ஹிதத்தைச் சொல்லவேண்டிய விஷயத்தில், வயதில் தனக்குப் பெரியவனாயிருந்தாலும் பாதகமில்லை; அங்கிரஸின் புத்திரனான கவி என்பவர், தன்னைவிடப் பெரியோர்களுக்கு வேதங்களை அத்யயனம் செய்வித்து, ஞான தசையில் அவர்களை, "பிள்ளைகளே" என்று அழைத்தார். ஞானமில்லாதவன் குழந்தை; தனக்கு மந்த்ரோபதேசம் செய்கிறவனே பிதா"—மனு.

**வந்து சேர்ந்தான்:**—ராவண கோஷ்டியில் தனக்கு ஸம்பந்தமில்லாதபடியாலும் ராமனுடைய கோஷ்டியே தனக்குரிய வீடாகையாலும், 'போனான்'என்று சொல்லாமல், தூரதேசங்களுக்குப் போனவன் வெகுகாலம் கழித்துத் தன் பெண்டு பிள்ளைகளையும் மித்திரர்களையும் பந்துக்களையும் பார்க்க வேண்டுமென்று ஆவலுடன் தன் வீட்டை நோக்கி வருவதுபோல், 'வந்தான்' என்று சொல்லப்படுகிறது.

**ஒரு முகூர்த்தத்தில்:**—"நெருப்பு ஜ்வாலைகளுக்கு நடுவிலிருப்பது நலம். பகவானிடத்தில் பக்திவைக்காமல் அவரை

த்வேஷிப்பவர்களிருக்குமிடத்தில் ஒரு க்ஷணம்கூடத் தங்குவது அபாயம்" என்ற நியாயப்படி, விபீஷணன் ராவண ஸபையை விட்ட அடுத்த க்ஷணத்தில் ராமனிருக்குமிடத்தில் காணப்பட்டான்.

**ராமன் லக்ஷ்மணனுடன் இருக்குமிடத்திற்கு:**—"குபேரன் வஸிக்கும் சைத்ர ரதமென்ற உத்யானம் போல் ராமன் வஸிக்கும் இந்தச் சித்ரகூடபர்வதம் வெகு பாக்யம் செய்தது" என்று கூறியபடி ராமனைக் காட்டிலும் ராமன் வஸிக்குமிடமே நாம் விரும்பக்கூடியதென்று சொல்லப்படுகிறது.

**லக்ஷ்மணனுடன்:**—ராமனை விட்டு லக்ஷ்மணன் எப்பொழுதும் பிரியமாட்டாரென்பது. பகவான் தன்னை எப்பொழுது பக்தர்கள் சரணமடைவார்களோ என்று புருஷகாரமான லக்ஷ்மணனை ஸமீபத்தில் வைத்துக்கொண்டிருக்கிறாரென்பது பகவானை த்வேஷிப்பவர்கள் இருக்குமிடத்தில் நாம் ஒரு நிமிஷம் கூடத் தங்கக்கூடாது. பகவானைக் காட்டிலும் பகவான் இருக்குமிடமே நாம் விரும்பவேண்டிய வஸ்து. ஆனால் பகவானிருக்குமிடத்தைக் காட்டிலும் பகவத் பக்தர்களுடைய அபிமானமே விசேஷமாகையால் லக்ஷ்மணன் அங்கிருப்பது குறிக்கப்பட்டது.

**கேள்வி:**—விச்ரவஸென்ற பாட்டனுடைய வரங்களின் மஹிமையால் விபீஷணன் ஸகல தர்மங்களையும் அறிந்தவன்; ராக்ஷஸர்களுக்குரிய தோஷங்களற்றவன்; தன் பிதாவிற்கு ஸமமான தமயன் தன்னைப் பால்யம் முதல் எடுத்து வளர்த்து ஆதரித்து ஸகல விதத்திலும் மேன்மை பெறச் செய்திருக்க, அவனைத் திடீரென்று கைவிடலாமா? விடட்டும்; அவனைக் கொல்வதற்குக் கங்கணம் கட்டிக்கொண்டிருக்கும் பரமசத்துருவைச் சேரலாமா? சேர்ந்தாலும் தன் தமயனுடைய ராஜ்யம் தனக்குக் கிடைக்க வேண்டுமென்று ஸகல ப்ரயத்னமும் செய்யலாமா? செய்தாலும் அவனைக் கொல்வதற்கு வேண்டிய ஸகல உபாயங்களையும் சத்துருவிற்குத் தெரிவிக்கலாமா?

**பதில்:**—"நமக்கு மூத்தோர்கள் கர்வம் கொண்டு நியாயம் தெரியாமல் ஸன்மார்க்கத்திலிருந்து விலகினால், அவர்களைக் கைவிடுவதில் தோஷமில்லை" என்ற நியாயப்படி, ராவணன் பகவானிடத்தில் எல்லையற்ற அபராதம்செய்தபடியால் அவனை விட்டு வந்தது தோஷமல்லவென்று சிலர் எண்ணுகிறார்கள்.

ஆனால், ஸ்ரீமத் வேதாந்த தேசிகர் பின் வருமாறு அபிப்ராயப்படுகிறார். "தன் பாட்டன் கொடுத்த வரத்தின் மஹிமையால் விபீஷணன், ஸகல லோகங்களுக்கும் ஈச்வரனும், ஸகல ஜீவகோடிகளாலும் சரணமடையத்தகுந்தவனும், ஸகல வேதாந்தசாஸ்திரங்களாலும் அறியக்கூடியவனும், முக்தர்களால் அடையக்கூடியவனும், நாராயணனென்ற திருநாமத்தை யுடையதுமான பரப்ரஹ்மமே பூபாரத்தைத் தீர்க்க ராமனாக அவதாரம் செய்திருக்கிறதென்று நன்றாயறிந்தவன்; மந்தோதரி முதலியவர்களும் அப்படியே. இப்படித் தத்வஞானம் பெற்ற விபீஷணன், ஸாமான்யதர்மம் விசேஷதர்மமென்ற இரண்டின் குணதோஷங்களையும் பலாபலத்தையும் நன்றாகப் பரீக்ஷித்து, ஸாமான்யதர்மத்தை விட்டு விசேஷதர்மத்தைக் கைக்கொள்வது யுக்தமே. தமயனுக்குக் கீழ்ப்படிந்து நடக்க வேண்டுமென்பது தர்மார்த்தகாமமென்ற புருஷார்த்தங்களைக் கொடுக்கும்; பரமாத்மாவை ஆராதிப்பதற்கு ஸாதனமாகும்; ஆகையால் மோக்ஷமென்ற பரமபுருஷார்த்தத்திற்கும் ஸாதனமாகிறது. ஆனால், அது பரமாத்மாவை உபாஸிப்பதற்குக் கேவலம் ஒரு அங்கமாகையால் ஸாமான்யதர்மமே. ராமனைப் போய்ச் சேருவதோ ஸாக்ஷாத் பரமாத்மாவின் ஆராதனமாகையால் விசேஷதர்மம். இவ்விரண்டிற்கும் விரோதமில்லாத பக்ஷத்தில் இரண்டையும் அனுஷ்டிக்கலாம்; விரோதமிருந்தால் ஸாமான்யதர்மத்தை விட்டு விசேஷதர்மத்தை அனுஷ்டிக்க வேண்டும். ஆகையால் விபீஷணன், "நான் இதுவரையில் செய்து வந்த ஸாமான்யதர்மத்திற்கு விரோதமில்லாமல் விசேஷதர்மமான ராமகைங்கரியத்தையும் செய்ய மார்க்கமுண்டோ?" என்று தேடிப்பார்த்தான்; ராவணனுக்குஅடிக்கடி ஹிதத்தை உபதேசித்தான்; அஸுர ஸ்வபாவமுள்ள ராவணனுக்கு ராமனிடத்திலுள்ள த்வேஷம் நீங்காதென்று நிச்சயித்து, இனிமேல் இவனுக்குக் கட்டுப்பட்டிருந்தால் ராமனுடைய கோபத்திற்குப் பாத்திரனாய் நாசமடைவோமென்று பயந்து, அந்தத் துஷ்டஸஹவாஸத்தைவிட்டு, ராமனை ஆச்ரயிப்பதென்ற விசேஷதர்மத்தைக் கைப்பற்றினான். ஆகையால் அவன் செய்தது நியாயமே; அவனை நன்றியற்றவனென்று சொல்வது பிசகு.

கேள்வி,—ராவணனுடைய ராஜ்யத்திற்காக ஆசைப்பட்டு ராமனைச் சரணமடைந்திருக்கக்கூடாதா ?

பதில்.—ராமனைச் சரணமடையும்பொழுது பெண்டு பிள்ளைகளை விட்டு ராமனைச் சரணமடைந்தானென்றும் இதர விஷயங்களில் பரமவைராக்யம் கொண்டானென்றும் ஸ்பஷ்டமாய்ச் சொல்லப்படுகிறது. ஆகையால் அந்த உத்தேசம் அவனுக்குக் கிடையாது. பிறகு ராமனிடத்தில் தான் விக்ஞாபனம் செய்யும்பொழுதும், "லங்கையையும் மித்திரர்களையும் ஐசுவரியங்களையும் விட்டேன். எனக்கு ராஜ்யமும் உயிரும் ஸௌக்யங்களும் எல்லாம் தாங்களே. தங்களையே ஸகல புருஷார்த்தங்களென்று ஆச்ரயிக்கிறேன்" என்று சொல்லுகிறான்.

கேள்வி—ராவணனையும் அவனைச் சேர்ந்தவர்களையும் யுத்தத்தில் கொன்று உன்னை அரசனாகச்செய்கிறேன். இது ஸத்தியம் என்று ராமன் சொல்வதால், விபீஷணன் அப்படி ப்ரார்த்தித் திருக்கவேண்டுமே!

பதில்—தன்னை ஆச்ரயித்தவர்களிடத்தில் ராமனுடைய ப்ரீதிப்ரவாஹம் கரைபுரண்டு ததும்பி ஸகல போகபோக்யங்களையும் தானாகவே (விபீஷணன் ப்ரார்த்திக்காமலிருக்கும் பொழுதே) கொடுத்தது. "நித்யமான மோக்ஷபதவியைக் கொடுக்கும் பரமபுருஷன், தன்னைத் தியானிப்பவர்களுக்கு தீர்க்காயுளையும் ஆரோக்யத்தையும் ஐசுவரியத்தையும் இடைவிடாத போகங்களையும் வலுவிலேயே கொடுக்கிறார்" என்று பெரியோர்கள் சொல்லுகிறார்கள்.

கேள்வி—"ராவணனுடைய ராஜ்யம் தனக்குக் கிடைக்கும்படிச் செய்யவேண்டுமென்று தங்களைப்புத்திபூர்வமாய்ப்ப்ரார்த்திக்க வந்திருக்கிறான்" என்று ஹனுமான் சொல்லியிருக்கிறார். "இந்த ராக்ஷஸன் ராவணனுடைய ராஜ்யத்தை அபேக்ஷித்து என்னிடத்தில் வந்திருக்கிறான்" என்று ராமனும் சொல்லியிருக்கிறார். அப்படி இருக்க இது எவ்வாறு பொருந்தும்?

பதில்—ராமனிடத்தில் வைத்த அதிக ப்ரேமையால் ஸுக்ரீவன் விபீஷணனிடத்தில் ஸந்தேகம் கொண்டான். அதை நீக்கவேண்டி நீதிசாஸ்திரத்தில் சொல்லப்பட்ட ராஜதர்மத்தைக் காட்டுவதற்காக மாத்திரம் இவ்வாறு ராமனால் சொல்லப்பட்டது. ஹனுமானும் ராமனும் சொன்ன வார்த்தைகளுக்கும் விபீஷணன் சொன்ன வார்த்தைகளுக்கும் விரோதம் தோன்றினால், பஹிரங்கமான அர்த்தத்தைக் காட்டிலும் அந்தரங்கமான அர்த்தம் விசேஷமென்ற நியாயத்தால், விபீஷணனுடைய வார்த்தைகளையே நாம் ஒப்புக்கொள்ள வேண்டியது. மேலும், "நான் உன்னை அரசனாகச் செய்கிறேன்" என்று ராமன் சொன்னபொழுது யாதொரு மறுமொழியும் சொல்லாமல் ராமகைங்கரியத்தையே ப்ரார்த்தித்தான். பிறகும், "ராக்ஷஸர்களை நாசம் செய்வதிலும் லங்கையை இடிப்பதிலும் என் உயிருள்ளவரையில் என்னால்கூடிய ஸஹாயம் செய்கிறேன். தங்களுடைய சைன்யத்தில் என்னைச் சேர்த்துக்கொள்ளுங்கள்" என்றான். தனக்கு இஷ்டமில்லாவிட்டாலும் ராமனுடைய நிர்ப்பந்தத்தால் லங்காராஜ்யத்தை ஒப்புக்கொண்டானென்று "ராக்ஷஸாதிபதே! மஹாவீர! ப்ரஜைகளுள்ளவரையில் நீ இந்த லங்கையை ஆளவேண்டியது. உன்னை எனக்குத் தோழனாக லங்கையில் வைத்திருக்கிறேன். ப்ரஜைகளைத் தர்மமாய்ப் பரிபாலனம் செய்; என் வார்த்தையைத் தட்டாதே. பதில் சொல்லக்கூடாது" என்ற உத்தரகாண்ட வசனத்தால்வெளிப்படுகிறது. இப்படி வேறொரு ப்ரயோஜனத்தையும் விபீஷணன் அபேக்ஷிக்காததால் அவனுக்குக் குலதனமாகத் தான்பூஜித்து வந்த ரங்கநாதனுடைய விக்ரஹத்தை ராமன் கொடுத்தார். தர்மத்தை நிலைநிறுத்துவதற்காக அவதரித்த ராமனுடைய ஆக்ஞையால், எஞ்சியுள்ள ராக்ஷஸர்களையும் ஸன்மார்க்கத்தில் ஸ்தாபிப்பதற்காக விபீஷணன் லங்காராஜ்யத்தை ஒப்புக்கொண்டான். ராமனுடைய ஆக்ஞையானதால், அதுவும் அவருடைய கைங்கரியவகையில் சேர்ந்ததென்று விபீஷணனுடைய தாத்பரியம். இப்படியே தர்மரஹஸ்யத்தை நன்றாயறிந்த லக்ஷ்மணனும், "தசரத சக்கரவர்த்தியை நான் பிதாவாக நினைக்கவில்லை. எனக்கு ஸஹோதரனும் போஷகனும் பந்துவும் தகப்பனும் ராகவனே" என்று தேக ஸம்பந்தத்தால் வந்த பிதாவைக் கைவிட்டு, நித்திய பிதாவான ராமனை, "நான் தங்களுக்கு வழிகாட்டிக்கொண்டு முன்னே போகிறேன். தாங்கள் விழித்துக்கொண்டிருக்கும்பொழுதும் தூங்கிக்கொண்டிருக்கும் பொழுதும் ஸகல கைங்கரியங்களையும் செய்கிறேன்" என்று ராமனுக்குத் தொண்டு செய்வதையே பலனாகப் ப்ரார்த்தித்து, ராமனுடைய திருவடிகளைக் கெட்டியாய்ப் பிடித்துக்கொண்டு அவரைச் சரணமடைந்தான். அப்படியே விபீஷணனும் தேக சம்பந்தத்தால் ஏற்பட்ட ராவணனைக் கைவிட்டு, பகவானுக்குக் கைங்கரியம்செய்யவேண்டுமென்ற ஆசையால் ஸகலவிதத்திலும் ஸஹஜ பந்துவான ராமனைச் சரணமடைந்தான். ஆகையால் விபீஷணன் தர்மத்தைக் கைவிட்டானென்று சொல்ல நியாயமில்லை.

கேள்வி—நாகபாசத்தால் ராமலக்ஷ்மணர்கள் கட்டப்பட்டபொழுது விபீஷணன் "எவர்களுடைய பலத்தை நம்பி நான்கீர்த்திஅடையவிரும்பினேனோ, அந்தப்புருஷசிரேஷ்டர்கள் மயங்கிவிட்டார்களே! ஐயோ! கெட்டேன். பிழைத்திருந்தும் ராஜ்யத்தை இழந்துஎண்ணங்கள்சிதறிநடைப்பிணமானேனே. என் சத்துருவான ராவணன் பிரதிக்ஞையை நிறைவேற்றினான். அவன் மனம் குளிர்ந்தது" என்று ராஜ்யத்தைப் பற்றியே வருத்தப்படுவானேன்?

பதில்—'கீர்த்தி' என்ற பதத்திற்கு, ராமகைங்கரியமே தாத்பரியம். ராஜ்யமென்ற பதத்திற்கு, 'எனக்குத் தாங்களே ராஜ்யம்' என்று முன்பு விபீஷணன் கூறியுள்ளதால் இங்கும் ராமகைங்கரிய ஸாம்ராஜ்யமாகக் கூறியதாகக் கொள்ளவேண்டும்.

கேள்வி—"தர்மவானே! லங்கா ராஜ்யத்தை அடைவாய்; ஸந்தேஹமில்லை" என்ற ஸுக்ரீவனுடைய வசனம் எப்படிப் பொருந்தும்?

பதில்—விபீஷணனுடைய அந்தரங்க அபிப்ராயம் ஸுக்ரீவனுக்குத் தெரியாமல் இப்படிச் சொன்னான்.]

மேருசிகரத்தைப்போல் பருத்த தேகத்துடனும், மின்னற்கொடியைப்போல் பிரகாசித்துக்கொண்டும் ஆகாச வீதியில் நிற்கும் விபீஷணனை ஸகல வானரர்களும் பார்த்தார்கள். ராவணனுடைய ஸமீபத்திலிருந்து ஆகாசத்தில் கிளம்பும்பொழுதே ஸுக்ரீவன் முதலியவர்களுக்குத் தெரியும்.

[குறிப்புகள்:—விபீஷணன்:-கொழுந்துவிட்டெரியும் காட்டுத் தீயிலிருந்து தப்பியோடுகிறவன் குளிர்ந்த ஜலத்தால் மடுவில் வந்துவிழுவதுபோல் பரபரப்புடன் வருகிறவனை.

மேருசிகரம்:—உயரத்தாலும் பருமனாலும் ரத்னாபரணங்களாலும் மேருசிகரத்தைப் போன்றவன். மேலும் தனக்கு விரோதிகளை விட்டதால் ஸ்திரமான ஸௌக்யத்தையும் பிரகாசத்தையும் ராமகைங்கரியத்தையும் பெற்று மேரு சிகரத்தைப்போல் விளங்கினனென்பது. ராமனென்ற மஹா பர்வதத்திற்கு ஒரு உன்னதசிகரம் வந்து சேர்ந்தது. ராவணனென்ற பர்வதத்திலிருந்து ஒரு உன்னத சிகரம் போயிற்று.

மின்னற்கொடி:—தேஜஸாலும் ஆகாசத்தில் ஸஞ்சரிப்பதாலும் மின்னற்கொடியைப்போன்றவன். "ராமபக்தர்களான வானரர்கள் நம்மைச் சேர்த்துக்கொள்ளமாட்டார்கள்"என்ற நடுக்கமும் அப்பொழுது நமது உயிர் நிற்காதென்ற பரபரப்பும் குறிப்பிடப்படுகின்றன.]

அனலன், சரபன், ஸம்பாதி, ப்ரகஸனென்ற நான்கு மந்திரிகளுடன் தங்களை நோக்கி ஆயுதபாணியாய் ஆகாச மார்க்கத்தில் வரும் விபீஷணனைக் கண்டு ஸுக்ரீவன், தங்களுக்குக் கெடுதி செய்வதற்காகவே அவன் வருகிறானென்று நினைத்து, ராமனிடத்தில் வைத்த அளவற்ற ப்ரீதியால், ஒருவன் அவரைச் சரணமடைந்தாலும் துரோகி என்று தனக்குத் தெரியும் பக்ஷத்தில் அந்த நிமிஷமே அவனைத் துரத்தத் தயாராயிருந்தான். தானே பிறருடன் ஆலோசிக்காமல் எந்தக் காரியத்தையும் செய்யக்கூடும்; ஆனாலும், நடக்க வேண்டிய விஷயம் முக்கியமானதாலும்,வானரவீரர்களுடன் கலந்து யோசிப்பது ராஜநீதியாகையாலும், வருகிறவன் சத்துருவா அல்லது ரகஸ்யமாய் அனுப்பப்பட்ட தூதனா? என்று ஸந்தேகித்தான். முகத்தோற்றம் முதலிய அடையாளங்களால் விரோதியல்லவென்று தோன்றினாலும், ராமனிடத்திலுள்ள மட்டில்லாதப்ரேமையால் யாரிடத்திலும் அவனுக்கு ஸந்தேகமுண்டாயிற்று. ஆகையால் வானரர்களை நோக்கி, "மித்திரர்களே! இதோ ஆகாசவீதியில் ஆயுதபாணியாய் நான்கு ராக்ஷஸர்களுடன் நம்மைநோக்கி வருகிறவனைப் பார்த்தீர்களா? அவன் தூதனல்ல; ரகஸ்யமாய் அனுப்பப்பட்ட வேலைக்காரனுமல்ல. நமக்குக் கெடுதி செய்யவரும் சத்ருவென்றே



ப்ரத்யக்ஷமாய்த் தெரிகிறது. ராக்ஷஸனாகையால் க்ரூரன்; அதற்குத் தகுந்த ஆயுதங்களுடனும் வருகிறான். நமக்குள் ஒவ்வொருவனையும் கொல்வது அஸாத்யம். ஆகையால் நமக்கு உயிர் நிலையான ராமனைக் கொன்றுவிட்டால் நாமெல்லோரும் பிழைக்கமாட்டோமென்றறிந்து அவருக்குக் கெடுதி செய்ய வருகிறான்" என்றான்.

அதைக் கேட்டு எல்லா வானர வீரர்களும் கற்பாறைகளையும் விருக்ஷங்களையும் எடுத்துக்கொண்டு, "ஸ்வாமி! சீக்கிரமாய் உத்தரவு கொடுங்கள். ஒரு நிமிஷத்தில் இந்தத் துஷ்டர்களைக் கொன்றுவிடுகிறோம். பலமற்ற இவர்கள் இப்பொழுதே கொல்லப்பட்டுத் தரையில் வீழ்வார்கள்" என்பரபரப்புடன்சொன்னார்கள். மஹாபுத்திமானான விபீஷணன் இந்த விஷயங்களை நன்றாய்க் கவனித்துக்கொண்டு. "இவர்கள் ஒருவர்க்கொருவர் எதைப் பேசிக்கொண்டாலும் நமக்கென்ன? கருணாமூர்த்தியான ராகவன் நம்மிடத்தில் இரங்கமாட்டாரா? எல்லாமறிந்தவர்க்கு என் மனத்திலுள்ள கருத்து தெரியாதா? ஸர்வலோகரக்ஷகன் எனக்குமாத்திரம் ரக்ஷகனாகாமற் போவாரா? என்னை நிச்சயமாய்க் காப்பாற்றுவார் என்று பூர்ண நம்பிக்கையுடன் ஸமுத்திரத்தின் வடகரை சேர்ந்து, தன்னைக் கொல்வதற்குக் காத்துக்கொண்டிருந்த வானரர்களிருக்குமிடத்திற்கு பயமில்லாமல் சென்று எல்லோரும் தன்னைப்பார்க்கும்படி ஆகாசவீதியில் அசைவற்று நின்றான். புருஷகாரத்தைக் கொஞ்சம்கூட அபேக்ஷிக்காமல் ஸகல இடையூறுகளையும் விலக்கி ராமன் என்னை ரக்ஷிப்பார் என்ற பூர்ண நம்பிக்கையோடிருந்தாலும், விபீஷணன் உடனே ராமனைப் போய்ச் சரணமடையவில்லை. ஆனால் தூரத்திலிருந்துகொண்டே தன்னைத் தடுத்த ஸுக்ரீவன் முதலியவர்களையே புருஷகாரமாகச் செய்து ராமனிடத்தில் தன்னைப் பற்றிச் சிபார்சு செய்யும்படி உரக்க பிரார்த்தித்தான்.

(ராமன் தன்னைக் காப்பாற்றுவதற்கு, தான் அவரைத் தேடி வந்ததே போதும். பிரார்த்திப்பது அவசியமில்லை; தன்னைத் தேடி நடந்து வந்ததையே, தன் தலையில் வைத்த ஒரு பெரிய பாரமாக நினைக்கும் ராமனுக்கு, விபீஷணனுடைய பிரார்த்தனை, புண்ணில் உப்பை வைத்துக் கட்டினது போலாயிற்று. மஹாபுத்திமானாகையால், விபீஷணன் "ராமன் என் எண்ணத்தை எனக்குச்சிபார்சாக வைத்துக்கொண்டு என்னைக் காப்பாற்றும் கருணாநிதி; ஆனாலும், ராஜாவை ப்ரத்யக்ஷமாய்ச் சரணமடைவதுதான் அரசர்க்கு நாம் செய்யும் மரியாதையாகும். இந்த வானரர்கள் எனக்கு விரோதமாக நடப்பது என்னிடத்திலுள்ள த்வேஷத்தாலல்ல; ராமனிடத்தில் வைத்த விசேஷ பக்தியால் அவருக்கு எங்கே கெடுதி நேருமோ என்று யாரைக் கண்டாலும் சந்தேகப்படுகிறார்கள். ஆகையால் இதுவும் உத்தம குணம்தான். ராமபக்தர்கள் என்னை ஆதரிக்காவிட்டால் ராமன் ஆதரித்து எனக்கென்ன ப்ரயோ

ஜனம்? ஆகையால் ராமன் என்னை ஆதரிப்பதைவிட இந்த ராம பக்தர்களால் அங்கீகரிக்கப்பட்டு அவர்களில் ஒருவனாகச் சேருவதே நான் அடையவேண்டிய பரமபுருஷார்த்தம் என்று எண்ணினான். தான் சரணமடையப்போகிற மஹாபுருஷனும் தன்னைச் சிபார்சு செய்யவேண்டிய ராமபக்தர்களும் தன் நிலைஸ்திதியை நன்றாயறிய வேண்டுமென விரும்பி உரக்க பிரார்த்தித்தான்.)

"ஸகல லோகங்களையும் கதறச் செய்கிறவனென்று அர்த்தமுள்ள ராவணனென்ற குரூரமான பெயரையுடைய ஒருவனுண்டு. அதற்குத் தகுந்தபடியே அவனுடைய நடத்தையும் குரூரமானது. அப்படியே ஜாதியில் ராக்ஷஸன்; தன்னைப்போன்ற கணக்கில்லாத குரூர ராக்ஷஸர்களால் ஸேவிக்கப்பட்டவன். நான் அவனுக்குத் தம்பி.

(அவனுக்குத் தமயனாகப் பிறந்தால் அவனுடைய கட்டளைக்கு உட்படவேண்டியதில்லை. குபேரனைப்போல் அவனுடைய தோஷங்கள் என்னைப் பற்றாது. அவனுக்குத் தம்பியாகையால் அவனுடைய உத்தரவுப்படி ஸகல தோஷங்களுக்கும் ஆளானேன்.)

என்னை விபீஷணனென்று சொல்வார்கள். அவன் இக்ஷ்வாகு வம்சத்தரசனான ரகுநாதனுடைய பிரியபார்யையை ஜனஸ்தானத்திலிருந்து அபகரித்தான்; அவளை ரக்ஷிக்க வந்த ராம பக்தனான ஜடாயுவைக் கொன்றான். திக்கற்றவளான ஸீதையை லங்கையில் கொண்டுபோய் அவளுக்குக் கோர ராக்ஷஸிகளைக் காவல் வைத்து, ராமனுக்கு அளவற்ற அபகாரம் செய்திருக்கிறான். 'அண்ணா! ஸீதையை ராமனிடத்தில் கொண்டுபோய் விடுங்கள்' என்று அனேக காரணங்களைக் காட்டி நான் பலதடவை எவ்வளவுஎடுத்துச்சொல்லியும், அவனுக்குக் காலம் குறுகிவிட்டபடியால் கொஞ்சம்கூட என் ஹிதோபதேசத்தை லக்ஷ்யம்செய்யவில்லை. மரணமடையப்போகிறவனுக்கு உத்தமமான ஔஷதம் விபரீதமாய்ப் படுமல்லவா? பகவான் யாதொரு காரணமுமில்லாமல் என்னிடத்தில் கருணைவைத்து ராவணன் என்னைக் கடுமையான வார்த்தைகளால்தூஷித்துவேலைக்காரனை அவமதிப்பதுபோல் அவமதிக்கச் செய்தார். ஆகையால் வேறு பிரயோஜனங்களில் எனக்கு வெறுப்புண்டாகி, மனைவி மக்களையும் ஐசுவரியத்தையும் விட்டு, பரமபுருஷார்த்தமான ராமகைங்கரியத்தை அடையும்பொருட்டு அவரையே சரணமடைய வந்திருக்கிறேன். (வேறு பிரயோஜனத்தைக் குறிப்பிடாததாலும், "ராக்ஷஸர்களை நாசம் செய்வதில் என்னால் கூடிய ஸஹாயம் செய்கிறேன்" என்றுதானே சொன்னதாலும், ராமகைங்கரியத்தையே நாடி வந்தானென்று தெரிகிறது. இப்படிச் சரணமடைய வந்தவன் தன்னை ரக்ஷிப்பவனிடத்தில் செய்ய வேண்டிய விக்ஞாபனத்தைச் சொல்லி,



தனக்குப் புருஷகாரமானவர்களை, நீங்கள் இதை என் ரக்ஷகனிடத்தில் தெரிவியுங்கள்" என்று பிரார்த்திக்கிறான்) ஸகலப் பிராணிகளும் சரணமடையத் தகுந்தவனும் மஹாத்மாவுமான ரகுகுல திலகனிடத்தில், 'நான் விபீஷணன், இங்கே வந்திருக்கிறேன்' என்று சீக்கிரமாய் விக்ஞாபனம் செய்யுங்கள்" என்றான்.

(ராகவன் தன்னைச் சரணமடைந்தவர்களுடைய குலம், வித்யை, நடத்தை முதலிய யாதொன்றையும் ஆலோசிக்காமல் ஸகலப் பிராணிகளுக்கும் அபயதானம் செய்கிறவர். ஆகையால் பல பல பாதகங்களைக் கணக்கில்லாமல் செய்த ராவணனுக்கும் உங்களைப்போல் அவருடைய கருணையில் பாகமுண்டு. அப்படியிருக்க அதைச் சேர்ந்த எனக்கு மாத்திரம் கிடையாதா? ராவணன் துர்ப்புத்திப்பிடித்துத் தன் பாகத்தைப் பெற்றுக்கொள்ளவில்லை. ராகவனிடத்தில் பரம பக்தியுடன் அவரைத் தேடி வந்திருக்கும் என் பாகத்தை இல்லையென்று சொல்ல உங்களால் முடியுமா? 'மஹாத்மா, ராகவன்' என்ற பதங்களால் ரக்ஷகனுக்குரிய பரத்வம், அதாவது ஸர்வோத்தமனாயிருப்பது, ஸௌலப்யம், எல்லோரும் ஸுலபமாய் வந்து அடையக்கூடிய தன்மையென்ற இரண்டு உத்தமலக்ஷணங்கள்குறிப்பிடப்பட்டன. கல்லும் கட்டையும் ஸுலபமாய் அடையக்கூடியபதார்த்தங்கள்; ஆனால், அவைகளால்யாதொரு பிரயோஜனமுமில்லை; அவைகளைவிரும்புகிறவர்களுமில்லை. மேரு பர்வதம் சிரேஷ்டமான வஸ்து; ஆனால் ஸுலபமாய் அடைய முடியாதது; அதை விரும்புவதில் பிரயோஜனமில்லை. ஆகையால் இரண்டு குணங்களும் அவசியம். மனத்திற்கும் இந்திரியங்களுக்கும் எட்டாததென்று சுருதிகளால் வர்ணிக்கப்படும் பரவஸ்து, ஸகல ஜீவகோடிகளும் பிரத்யக்ஷமாய்ப் பார்த்து ஆனந்தித்துக் கடைத்தேறும்படி மனுஷ்யாவதாரமெடுத்ததைக் காட்டிலும் ஸௌலப்யமென்ற குணத்திற்கு வேறு திருஷ்டாந்தம் வேண்டுமோ? நித்தியவிபூதியில் தன்னைவிட்டு அகலாத ஞானம் சக்திமுதலிய ஸமஸ்த கல்யாண குணங்களும் அவதார தசையிலும் பூர்ணமாயிருப்பதால் மஹாத்மா. தான் நேரே வந்திருக்கையில் அதைத் தெரிவிப்பதால் பிரயோஜனமில்லை. ஆகையால், "நான் மஹாபராதி என்பதையும், இந்த பிரபஞ்சத்திலுள்ள ஸகல விஷயங்களிலும் பரமவைராக்யமடைந்தேனென்பதையும், என்னை ரக்ஷிப்பதற்கு அழிவற்ற உபாயத்தைக் கைப்பற்றினேனென்ற சரணாகதி லக்ஷணத்தையும், ராமகைங்கரியத்தையே நாடி வந்தேனென்பதையும், அவருடைய பக்த கோஷ்டியில் சேருவதையே பிரயோஜனமாய் அபேக்ஷிக்கிறேன் என்பதையும் விக்ஞாபனம் செய்யுங்கள்" என்பது கருத்து. ரக்ஷகன் என்னைத் தானே வந்து காப்பாற்று

வதற்குமுன் நீங்கள் விக்ஞாபனம் செய்வதால் எனக்கு மித்திரர்களாவீர்கள்.

காட்டில் வஸித்துக் காய்கனிகளைத் தின்னும் உங்களைப் போன்ற மிருகங்களுக்கு ராமன் அபயதானம் செய்திருக்க, என் விஷயத்தில் ஸந்தேகமென்ன? ராமனிடத்தில் செய்த ப்ரதிக்ஞையை மறந்த ஸுக்ரீவனையே அபாரகருணையால் ரக்ஷித்த ரகுநாதன், அவருடைய ப்ரியபாரியையைத் திருப்பிக் கொடுக்கும்படி என்னால் கூடியவரையிலும் பிரயத்னம்செய்த என்னைக் காப்பாற்றுவதில் தடையென்ன? மஹாபராதம் செய்த காகாஸுரனுக்குக் கிடைத்த கருணை எனக்கில்லையோ?

**ராகவனிடத்தில்:...**தன் தேகத்தை அறுத்து ஒரு புருவைக் காப்பாற்றுவதற்காக ஸந்தோஷமாய்க் கொடுத்த சிபி முதலிய தர்மாத்மாக்கள் அவதரித்த ரகுகுலத்தில் பிறந்தவர்க்கு, சரணமடைந்தோர்களைக் காப்பாற்றுவது ஸஹஜகுணம்.

**மஹாத்மாவான:...**'இந்த மஹா புருஷனை நான் அறிவேன்' என்ற சுருதிப்படியும், 'வீணாகாத பராக்கிரமத்தையுடைய ராமனை வேதங்களால் உபதேசிக்கப்பட்ட மஹாபுருஷனென்று நானறிவேன்' என்ற விசுவாமித்திர மஹரிஷியின் வாக்கியப்படியும், அந்தப் பரமபுருஷனே ராமனாய் அவதரித்திருப்பதை நான் அறிவேன்.

**என்னை..,**சரணமடைய வந்திருக்கிறேனென்று சொல்லுங்கள். பேரும் ஊரும் குலமும் கோத்திரமும் வித்யையும் செல்வமும் தெரியப்படுத்த வேண்டியதில்லை. தங்களைச்சரணமடைய ஒருவன் வந்திருக்கிறானென்று சொன்னமாத்திரத்திலேயே ஓடிவந்து காப்பாற்றக் கடமைப்பட்டவர். ஒருவேளை ராவணனே வந்திருக்கிறானோ என்று சந்தேகப்பட்டு, இப்படிப் பட்ட மஹாபராதியை ரக்ஷிக்கலாமோஎன்று ஆலோசிக்கலாம். ராவணனைப்போல் நான் ராமனுக்கு விரோதியல்ல; ராக்ஷஸ குலத்தில் தர்ம மார்க்கத்தை அனுசரிக்கும் விபீஷணனென்று சொல்லப்பட்டவன். அவனுடைய தம்பிகளில் இங்கே வந்திருப்பவன் 'கும்பகர்ணனல்ல; பால்யம்முதல் ராம பக்தியில் ஈடுபட்ட விபீஷணனென்று சொல்லுங்கள்; எவ்வளவு தாழ்ந்தவனாயிருந்தாலும் தன்னைத் தேடிவருவதே ராமனுடைய பரம ப்ரீதிக்குக் காரணமாகையால் நீங்கள் அதிகமாய்ச் சொல்ல வேண்டியதில்லை.

**சீக்கிரத்தில்...**'எந்த க்ஷணத்தில் விரக்தி பிறந்ததோ அந்த க்ஷணத்திலேயே ஸன்யாஸம் பெறவேண்டும்' என்ற சுருதிப்படி, எந்த க்ஷணத்தில் அவரைச் சரணமடையவேண்டியதென்று புத்தி பிறந்ததோ, அந்த க்ஷணத்திலேயே அவரை வந்தடைந்தேன். என்னைக் காப்பாற்றாவிட்டால் அவருடைய



விரதத்திற்கும் கீர்த்திக்கும் தீராத குறைவு வரும். அது உங்களால் நேரவேண்டாமென்று எண்ணமிருந்தால் சீக்கிரத்தில் தெரிவியுங்கள். பகவானுக்கு அபசாரம் செய்வதைவிட பக்தர்களுக்கு அபசாரம் செய்வது மஹாபாவம். அதற்குப் பரிகாரமில்லை. பகவான் அதைப் பொறுக்கவே மாட்டார். என்னைத் தடுத்துத் தாமதம் செய்தால் அவருடைய கோபத்திற்குப் பாத்திரமாவீர்கள்; ஆகையால் சீக்கிரமாய்த்தெரிவியுங்கள். மனுஷ்ய தேகம் அநித்யம். நான் அவரைச் சரணமடைந்து, உங்களுடைய தாமதத்தால் அவர் என்னைக் காப்பாற்றுவதற்குமுன் இந்தத் தேகம் அழிந்தால், சரணமடைந்தவனைக் காப்பாற்றாமல் விட்டாரென்ற தீராப்பழி அவரைத் தொடரும். அதற்கு இடம் கொடுக்காதீர்கள். சீக்கிரமாய்த் தெரிவியுங்கள்.

**(இங்கே வந்திருக்கிறேனென்று...**கஜேந்திரனையும் ப்ரஹ்லாதனையும் துருவனையும் காப்பாற்றுவதற்காக வைகுண்டத்திலிருந்து வெகுதூரம் வந்ததுபோல் இப்பொழுது சிரமப்பட வேண்டியதில்லை. நானே அவரைத்தேடி அவரிருக்குமிடத்திற்கு வந்திருக்கிறேன். இன்னும் காப்பாற்றுவதற்குத் தடையென்ன?)

அதைக்கேட்டு, ஸுக்ரீவன் ராமனிடத்தில் வைத்த அதிக ப்ரேமையால் அவருடைய ஞானத்தையும் சக்தியையும் பராக்ரமத்தையும் மறந்து, "தன்னைச் சரணமடைந்தவர்களிடத்தில் எல்லையற்ற ப்ரீதியுள்ள ரகுநாதன், 'சரணமடைந்தேன்' என்ற சப்தத்தைக் கேட்டமாத்திரத்திலேயே இவனை ஸந்தேகமில்லாமல் ஆதரிப்பார். இவன் மஹா கபடன்; க்ரூரன்; ஸமயம் பார்த்து அவருக்கு என்ன கெடுதி செய்வானோ?" என்று பரமஸாதுவான விபீஷணனிடத்தில் ஸந்தேகம் கொண்டு பரபரப்புடன் ராமனிடத்திற்கு ஓடி, தன்னைப் போன்ற அபிப்பிராயம்கொண்ட லக்ஷ்மணனைத் தனக்கு ஸஹாயமாய்ச் சேர்த்துக்கொண்டு "ராவணனுடைய தம்பி விபீஷணன், நான்கு ராக்ஷஸர்களுடன் தங்களை வந்து சரணமடைந்திருக்கிறான். செய்யவேண்டியவைகளையும் விலக்கவேண்டியவைகளையும் விசாரித்தறிதல், ஸேனையை அணிவகுத்தல், விசாரித்து முடிவு செய்தவைகளை தன் விஷயத்தில் பிரயோகித்தல், ரகஸ்யமாய்த் தூதர்களை அனுப்புதல் என்ற நீதி முறைகளை நம்மைச் சேர்ந்தவர்களிடத்தில் உபயோகப்படுத்திச் சத்ருஸைன்யத்தில் இவை எப்படி நடக்கின்றனவென்று தாங்களறியவேண்டும். இப்படிச் செய்தால் தங்களுக்குஸகல மங்களங்களும் உண்டாகும். இந்த ராக்ஷஸர்கள் கண்ணிற்குத் தெரியாமல் ஸஞ்சரிப்பவர்கள்; கபடமான உபாயங்களை அறிந்தவர்கள்; நினைத்த ரூபங்களை எடுக்கக்கூடியவர்கள்; சூரர்கள். ஒருபொழுதும் அவர்களை நம்பக்கூடாது. இவன் ராவணனால் ரஹஸ்யமாய் அனுப்பப்பட்ட தூதன்; நமது ஸைன்யத்தில் புகுந்து நமக்குள் கலஹம் செய்வான். சத்துருவிடத்திலிருந்து

வந்தவனை நாம் சேர்த்துக்கொண்டால் சத்துருவிற்குப் பலக்குறைவும் நமக்கு பலவிருத்தியும் உண்டல்லவா" என்றால், மித்திரர்கள், காட்டில் வஸிப்பவர்கள், பரம்பரையாய்த் தன்னிடத்திலிருக்கும் ஸைன்யம், அந்தந்தக் காலங்களில் சம்பளம் கொடுத்துச் சேர்ந்த ஸைன்யம் இவைகளைச் சேர்த்துக்கொள்ளலாமேயொழிய, சத்ருவிடத்திலிருந்து வந்தவனை ஒருபொழுதும் சேர்க்கலாகாது. மேலும் இவன் க்ரூரமான ராக்ஷஸஜாதியில் பிறந்தவன்; தங்களுக்குப் பரமசத்ருவான ராவணனுடைய தம்பி; அவனுடைய கக்ஷியிலிருந்து வந்திருக்கிறான். இவனை நம்பலாமா? 'என்னைச் சரணமடைந்தவனைக் கைவிடலாமா' என்றால், இவன் சரணமடைவதென்ற மாயோபாயத்தால் தங்களுடைய நம்பிக்கைக்குப் பாத்திரனாய், ஸமயம் பார்த்துத் தங்களுக்கு கெடுதி செய்வான். ஆகையால் ராவணனால் அனுப்பப்பட்ட இந்தத் துஷ்டனைக் கொல்வது நலமென்று எனக்குத்தோன்றுகிறது. தங்களுடைய பொறுமைக்கு எல்லையில்லை. ஆனால் அதைத், தகுந்தவர்களிடத்திலல்லவா உபயோகிக்கவேண்டும்? 'நமக்குக் கெடுதிசெய்ய யத்தனித்தால் அப்பொழுது இவனைத் தண்டிக்கலாம்' என்றால், இவன் புத்திசாலி; நம்மைக் கொல்ல வந்திருக்கிறானென்பதை அறியாமல் இவனுக்கு நமது ஸைன்யத்தில் இடம்கொடுத்தால், நமக்கு அஸௌகரியமான ஸமயத்தில் நம்மை நாசம் செய்வான். 'அளவற்ற நமது ஸைன்யங்களை ஒருவன் நாசம் செய்யமுடியுமா?' என்றால் நமது பலாபலங்களைத் தெரிந்துகொண்டால் அது வெகு ஸுலபம். ஒரு கோட்டான் ராத்திரியில் காக்கைகளுக்குக் கண் தெரியாதென்பதை அறிந்து, கூடுகளில் புகுந்து, ஸுலபமாய் எல்லாக் காக்கைகளையும் நாசம் செய்ததைக் கேட்டிருப்பீர்களே. இவன் மஹாக்ரூரனான ராவணனுடைய ஸகோதரன். முன்பு மாரீசனை இரக்கத்தால் கொல்லாமல் விட்டது போல் இவனையும் விட்டால் பின்பு பெரிய கெடுதியைச் செய்வான். முதலில் இவனுடன் வந்தவர்களுடைய தலைகளை அறுத்து இவனுடைய கையில் கொடுத்துப் பிறகு இவனுடைய தலையில் நெருப்பை வைத்துக் கொளுத்தவேண்டியது. வாலியைப்போல் ஒரே பாணத்தால் இவன் உயிரை வாங்கக்கூடாது. க்ரூரமாய்ச் சித்திரவதை செய்யவேண்டும்" என்று சொல்லி, "ராமன் மஹாபுத்திமான்; பிறருடைய அபிப்ராயத்தை வார்த்தைகளால் அறியக்கூடியவர். நான் இவ்வளவு சொன்னதே அதிகம். இதற்கு இவர் சொல்லும் பதிலைக் கேட்டு பிறகுமேற்சொல்லவேண்டியவிஷயங்களைச் சொல்லுவோம்" என்று மௌனமாய் இருந்தான்.

சரணமடைந்தவர்களிடத்தில் அளவற்ற ப்ரீதியுள்ள ராமசந்திரன், ஸுக்ரீவன் பரபரப்புடன் சொன்ன வார்த்தைகளை ஆக்ஷேபிப்பதற்கு ஏதாவது ஒரு காரணத்தைத் தேடிக்கொண்டிருந்தார். கொஞ்சம் காலதாமதமானாலும் விபீஷணன் தன்னிடத்தில் வைத்த ப்ரீதியால் வருத்தப்படமாட்டானென்று அறிந்து வானர



கோஷ்டியில் விபீஷணன் சேர விரும்பினதால் அவனுக்கு நேர் விரோதமாகப் பேசும் ஸுக்ரீவனாலேயே அவனை அழைத்து வருவது யுக்தமல்லவென்றெண்ணி, ஸமீபத்திலிருந்த ஹனுமான் முதலியவர்களைப் பார்த்து, மித்திரர்களே! வானராதிபதி, விபீஷணனைக் குறித்துச் சொன்ன வார்த்தைகளைக் கேட்டீர்களல்லவா? விசேஷ அர்த்தங்களடங்கியும் தகுந்த காரணங்களோடு கூடியுமிருக்கின்றன அவன் கூறியவை. ஆனால் ஸுக்ரீவன் சொல்லிவிட்டானே என்று நீங்கள் உங்களுடைய அபிப்பிராயங்களைச் சொல்லாமலிருக்கவேண்டாம். ஸாதுவாயும், புத்திமானாயும், ஸமர்த்தனாயும் நமது ஹிதத்தைத் தேடுகிறவனாயுமிருக்கும் மித்திரன் இப்படிப்பட்ட ஸமயங்களில் அவசியமாய் தன் அபிப்பிராயத்தைத் தெரியபடுத்த வேண்டும்" என்றார்.

உடனே வானரச்சிரேஷ்டர்கள் தயங்காமல் ராமனுடைய ஹிதத்தையே நாடினவர்களாய்த் தங்களுடைய அபிப்ராயங்களைச் சொல்ல ஆரம்பித்தார்கள். "ஸ்வாமி! ஸகல லோகங்களிலும் தங்களுக்குத் தெரியாத விஷயமுண்டோ? ராமன் வானரர்களுக்கு மித்திரனென்ற கீர்த்தியை லோகத்தில் எங்களுக்கு ஸம்பாதித்து வைப்பதற்காக இப்படி எங்களுடைய அபிப்பிராயத்தைக் கேட்கிறீர்கள். சரணமடைந்தவர்களைப் பரமசத்துருவாயிருந்தாலும் காப்பாற்றுகிறேனென்று தாங்கள் தவறாத ப்ரதிக்ஞை செய்தவர்கள்; சூரர்கள்; தர்மத்தைக் கைவிடாதவர்கள்; கலங்காத பராக்கிரமத்தையுடையவர்கள்; ஸர்வக்ஞரானாலும் தகுந்த ஹேதுக்களால் நன்றாய் விசாரித்துக் காரியங்களைச் செய்கிறவர்கள்; செய்த நன்றியை மறக்காதவர்கள்; ஸ்நேஹிதர்களுடைய விஷயத்தில் மூற்றிலும் கட்டுப்பட்டவர்கள்; ஆகையால் ஸமர்த்தர்களும் புத்திமான்களுமான தங்களுடைய மந்திரிகள் ஒவ்வொருவரும் தகுந்தகாரணங்களுடன் அபிப்பிராயங்களைத் தெரிவிக்கட்டும்" என்றார்கள்.

அப்பொழுது ஸுக்ரீவனுக்கு அடுத்த வரிசையில் அங்கதன் யுவராஜாவானதால், விபீஷணனைப் பரீக்ஷிக்கும் விஷயத்தில் தன் அபிப்பிராயத்தை நன்றாய் ஆலோசித்துச் சொன்னான். "சத்துருவிடத்திலிருந்து வந்தவன் தங்களைச் சரணமடைந்தாலும் அனுகூலனா அல்லனா என்று யோசிக்க வேண்டியது. ஆகையால், சீக்கிரமாய்ப் பரீக்ஷித்துப்பார்த்த பிறகே அவனிடத்தில் நம்பிக்கைவைக்க வேண்டும். கபடபுத்தி யுள்ளவர்கள் அவர்களுடைய அபிப்பிராயத்தை வெளிப்படுத்தக்கூடிய நடை உடை பாவனைகளை மறைத்துக்கொண்டு யோக்கியர்களைப்போல் நடப்பார்கள். நாம் அஜாக்கிரதையாய் இருக்கும் ஸமயம் பார்த்து நம்மைக் கெடுப்பார்கள். அது பெரிய ஆபத்திற்கு ஹேதுவாகும். ஆகையால், அவர்களை உடனே நம்பக்கூடாது. குணதோஷங்களை அறிவதற்காக ஏதோ ஒரு காரியத்தில் அவர்களை நியமித்து, அவர்களிடத்தில் விசேஷ குணங்கள்

புலப்பட்டால் சேர்த்துக்கொள்ளலாம்; விசேஷ தோஷங்கள் புலப்பட்டால் தள்ளிவிடலாம். ஆனால், ஒரு தோஷமுமில்லாதவனும் ஒரு குணமும் இல்லாதவனும் லோகத்தில் கிடையாதாகையால், இந்த் விபீஷணனிடத்தில் அனேக நல்ல குணங்களிருந்து சில தோஷங்களிருந்தால்- சேர்த்துக்கொள்ளலாம்; ஸ்வல்ப குணங்களிருந்து பல தோஷங்களிருந்தால் தள்ளிவிடலாம்'' என்றான்.

"ஒரு காரியத்தில் அவனை நியமிக்காமல் அவனுடைய குணதோஷங்களை அறிய முடியாது. திடீரென்று நியமித்தால் ஒருவேளை ஸ்நேஹத்திற்கு ஹானிவரும். ஆகையால், சுக்ரீவனுடைய அபிப்பிராயத்தைக்காட்டிலும் இது மேலானதல்ல'' என்று சரபன் யோசித்து, "ஸ்வாமி! அங்கதன் சொல்லும் உபாயம் ஸாத்யமல்ல. இப்பொழுதே நம்மைச் சேர்ந்த ஒரு தூதனை அனுப்பி நீதி சாஸ்திரத்தில் சொல்லியிருக்கிறபடி அவனைப் பரீக்ஷித்து, நியாயாநியாயத்தை நன்றாய் ஆலோசித்து, விபீஷணனை அங்கீகரிக்கலாம்'' என்றான்.

பிறகு ஸூக்ஷ்மபுத்தியுள்ள ஜாம்பவான், "ஒரு காரியத்தில் நியமிப்பதாலும், தூதனால் பரீக்ஷிப்பதாலும் இவனுடைய நிஜ ஸ்வபாவம் வெளிப்படாது. மேலும் நாம் இவனை நம்பாமலிருப்பதற்கு அனேக காரணங்கள் உண்டு'' என்று ஆலோசித்து, மற்றவர்கள் சொன்னதைப்போல் அபாயகரமாயில்லாமல் விசேஷ குணங்களையுடைய யோசனையைச் சொன்னான். "ராவணன் குரூர ஸ்வபாவமுள்ள ராக்ஷஸர்களுக்குத் தலைவன்; மஹாபாபி; நம்மிடத்தில் தீராத பகைகொண்டவன். இந்த விபீஷணன் நம்மை வந்தடைவதற்கு இது தகுந்த இடமல்ல. நாம் லங்கைக்கு வெகு தூரத்திலிருக்கிறோம். ஆகையால் நம்மைக் கண்டு இவன் பயப்படவேண்டிய நியாயமில்லை. இப்பொழுது இங்கே வருவதில் அவனுக்கென்ன பிரயோஜனம்? மேலும் இது அவன் நம்மிடத்தில் வரவேண்டிய காலமல்ல. தனக்குப் பிரபுவும் ஸகோதரனுமான ராவணனுக்கு ஆபத்து நேர்ந்திருக்கையில் அவனைக் கைவிட இதுதானா ஸமயம்? எவ்விதமாய் யோசித்தாலும் இவனிடத்தில் நாம் ஸந்தேகப்படவேண்டியது நியாயமே'' என்றான்.

பிறகு மைந்தன், "ஸகல விதத்தாலும் இவனிடத்தில் ஸந்தேகப்படவேண்டியது நியாயமே. ஆனால் ஸுலபமான உபாயத்தால் இவனுடைய குணதோஷங்களைப் பரீக்ஷிக்காவிட்டால், ஒருவேளை இவன் யோக்கியனாக இருந்தால் நமக்கு வலுவில் கிடைத்த மித்திரனை இழந்துவிடுவோமே'' என்று ஆலோசித்து, தகுந்த காரணங்களுடன் வெகுசாதுரியமாய், "பிரபோ! இவனுக்குத் தெரியாத மதுரமான வார்த்தைகளால் ராவணனைப்பற்றின விஷயங்களை மெள்ள மெள்ளக் கேட்டுப் பாருங்கள். இப்படிப் பரீக்ஷிப்பதால் இவனுடைய வாஸ்தவ அபிப்பிராயம் வெளிப்படும். நல்லவனாயிருந்தால் இவனை அங்கீகரிப்போம்; துஷ்டனாயிருந்தால் தள்ளிவிடுவோம்'' என்றான்.



பிறகு சாஸ்திராப்யாஸத்தால் உறுதியான ஞானமுள்ளவரும், மந்திரிகளுக்குள் சிரேஷ்டருமான ஹனுமான், மதுரமாயும் தெளிவாயும், சுருக்கமாயும், விசேஷ பிரயோஜனமுள்ளதுமான தன் அபிப்பிராயத்தைத் தெரிவித்தார். "ஸ்வாமி! ஸகல நீதியையும் அறிந்த மஹாபுத்திமானும், காரியங்களைச் செய்வதில் நிகரில்லாத ஸாமர்த்தியமுடையவரும், பேசும் திறமையுடையவர்களுக்குள் சிரேஷ்டருமான தங்களைக் காட்டிலும், இந்த விஷயத்தில் பிருஹஸ்பதி பகவானும் ஆலோசனை சொல்லத் தகுந்தவரல்லர். ஸகல விதத்திலும் தாங்கள் சிரேஷ்டர்கள். தங்களுக்குத் தெரியாததைச் சொல்லப்போகிறவனல்ல நான். வீண்வாதம் செய்ய வேண்டுமென்றாவது, மற்ற மந்திரிகளிடத்தில் பொறாமையினாலாவது, மற்றவர்களைக் காட்டிலும் நான் புத்திமான், நன்றாகப் பேசக்கூடியவனென்ற கர்வத்தாலாவது பேசுவதாக எண்ணக் கூடாது. தாங்கள் என்னை ஒரு பொருட்டாக எண்ணிக் கௌரவம் செய்து பேசும்படியாகக் கட்டளையிட்டதால் மாத்திரம் பேசத் துணிந்தேன். குணதோஷங்களைப் பரீக்ஷித்து அறிவதற்காகச் சில மந்திரிகள் உபாயங்களைச் சொன்னார்கள். ஆனால் அப்படிப் பரீக்ஷிப்பது ஸாத்யமல்ல. ஒரு ராஜகாரியத்தில் விபீஷணனை நியமிக்காமல் அவன் நல்லவனா கெட்டவனா என்று அறிய முடியாது. அப்படி அறியாமல் அவனை ஒரு ராஜகாரியத்தில் நியமிப்பதால் கெடுதி நேரும். ஆகையால், இவ்விரண்டும் ஒன்றையொன்று பொறுத்திருக்கின்றன. (இதர மந்திரிகளுடைய அபிப்பிராயங்களைக் கண்டிப்பதால்] அவர்களுடைய பெயரைக் குறிக்காமல் பேசுகிறார். அங்கதனுடைய அபிப்பிராயம் கண்டிக்கப்பட்டது.)

தூதர்களால் பரீக்ஷித்தறியலாமென்று சில மந்திரிகள் சொன்னார்கள். தூரத்திலிருக்கும் வஸ்துக்களையும் மறைந்திருக்கும் வஸ்துக்களையுமல்லவா தூதர்களை அனுப்பித் தெரிந்துகொள்ள வேண்டும்? இந்த விபீஷணன் அதி ஸமீபத்திலிருக்கிறான்; பிரத்யக்ஷமாய்ப் பார்க்கலாம்; யாதொரு மறைவும் இல்லாமல் ஆகாசவீதியில் நிற்கிறான்; ரகசியமாக தூதனால் அறியவேண்டிய பிரயோஜனம் இங்கே யாதொன்றுமில்லை என்று தோன்றுகிறது. (சரபனுடைய அபிப்பிராயம் கண்டிக்கப்பட்டது).

இவன் வந்த இடமும் காலமும் ஸரியானவையல்லவென்று சில மந்திரிகள் நினைக்கிறார்கள். ராவணன் அதம புருஷனென்றும் தாங்கள் புருஷோத்தமனென்றும் இவன் ஆழ்ந்த யோசனையால் அறிந்தவன்; தங்களுடைய குணங்களையும் தோஷங்களையும் பரீக்ஷித்துப் பார்த்தவன்; ராவணன் ஸீதையைக் கொடுக்க இஷ்டப்படாததால் ராக்ஷஸகுலத்திற்கு நாசத்தைத் தேடுகிறானென்பதை

யும், தாங்கள் கரதூஷணன் முதலிய ராக்ஷஸர்களை வதம் செய்ததையும், வாலியைக் கொன்று ஸுக்ரீவனுக்குப் பட்டம்கட்டினதையும், ஒருவராலும் தாண்டமுடியாத ஸமுத்திரத்தைத் தாண்டுவதற்குத் தகுந்த பிரயத்தனங்களைச் செய்ததையும் கண்டவன்; புத்திபூர்வமாய்த் தனக்குப் பிரதிகூலனான ராகவனிடத்தில் தோஷத்தையும், தனக்கு அனுகூலமான தங்களிடத்தில் குணத்தையும் கிரஹித்தவன்; தங்களிடத்தில் வந்தது ஸகலவிதத்திலும் காலதேசங்களுக்கு ஒத்திருக்கிறதென்று தோன்றுகிறது. (ஜாம்பவானுடைய அபிப்பிராயம் கண்டிக்கப்பட்டது.)

விபீஷணனுக்குத் தெரியாதவர்களால் அவனுடைய ஸ்வரூபத்தை அறியலாமென்று சில மந்திரிகள் தெரிவித்தார்கள். புத்திமானான மனிதனையும் தனக்குப் பரிசயமில்லாதவர்கள் விஷயங்களைக் கேட்டால், 'இவர்கள் என்னிடத்தில் நம்பிக்கையில்லாமல் இப்படிக் கேட்கிறார்கள். எந்த வார்த்தை சொன்னால் எந்த அனர்த்தம் நேருமோ?' என்று தான் சொல்லவேண்டிய பதிலை ஆலோசித்துக்கொண்டு பலவிதமாய் ஸந்தேகிப்பான். நம்மை நம்பி யாதொரு தோஷமும் இல்லாமல் நம்மிடத்தில் வந்த மித்திரன் நாம் கபடமாய்ப் பரீக்ஷிப்பதைப் பார்த்துத் துஷ்டனாக மாறிவிடுவான். பெரும்பாலும், இந்த உபாயம் பிரயோஜனமற்றது. தான் வெகு ஸமர்த்தனென்று நம்பியிருப்பவர்களும் பிறருடைய வார்த்தைகளைக்கொண்டு அவர்களுடைய நிஜமான அபிப்பிராயத்தை அறிவது அஸாத்யம். தன்னைக் கேட்பவர்கள் மனத்தில் ஒன்றை வைத்துக் கொண்டு வெளியில் கபடமாய்ப் பேசுகிறார்கள் என்று அறிந்து, கபடமாய்ப் பேசுகிறவர்களுக்குக் கபடமாய்ப் பதில் சொல்வதில் தோஷமில்லை என்று தங்களுடைய மனோபிப்பிராயத்தை வெளியிடமாட்டார்கள். (மைந்தனுடைய அபிப்பிராயத்தைக் கண்டிக்கிறார்.)

இப்படி மற்றவர்கள் இதுவரையில்சொன்ன ஆலோசனைகளிலுள்ள தோஷங்களை எனக்குத் தெரிந்தவரையில் எடுத்துச் சொன்னேன். இப்பொழுது என் அபிப்பிராயத்தை விக்ஞாபனம் செய்கிறேன். விபீஷணன் பேசும் வார்த்தைகளை நான் நன்றாய்க் கவனித்துப் பார்த்தேன். அவைகளால் இவன் துஷ்ட ஸ்வபாவமுள்ளவனென்று கண்டுபிடிக்க முடியவில்லை. முகம் தெளிவாயிருக்கிறது, ஆகையால் இவனிடத்தில் எனக்கு ஸம்சயமில்லை. ரஹஸ்யமாய் நமக்குத் துரோகம் செய்கிறவன், கொஞ்சமும் மனத்தில் ஸந்தேகமில்லாமல் கவலையற்று நம்மிடத்தில் வரமாட்டான். மேலும் இவனுடைய வார்த்தைகளில் யாதொரு தோஷமும் வெளிப்படவில்லை. ஆகையால் இவனைப்பற்றி எனக்குக் கொஞ்சம்கூட ஸந்தேகமில்லை. (ஹனுமான் ராமலக்ஷ்மணர்களிடத்தில் முதலில் பேசினபொழுது. அவன் யோக்யன் என்பதற்கு ராமன் இதே காரணங்களைச் சொல்லியிருக்கிறார்.) 'மஹாவஞ்சகனான புருஷன் தன் அபிப்பிராயத்தைப் பிறர் அறியாமல் மறைத்துக் கொள்வான். அவனை நம்பலாமா' என்றால், எண்ணங்களை மறைக்கலாமேயன்றி முகவிகாரங்களை வெகு காலம் மறைக்க முடியாது. எப்படியாவது மனத்திலிருக்கும் எண்ணம் தன்னை மீறி வெளிப்படாமல் போகாது. மேலும் இவன் உசிதமான தேசகாலங்களிலும் ஜனங்களிடத்திலும் தான் உத்தேசித்த காரியம் அதிசீக்கிரத்தில் நிறைவேறும்படியான பிரயத்தனங்களைச் செய்கிறான். இவனிடத்தில் யாதொரு தோஷமும் இல்லை. உசிதமானவைகளை அறிந்து செய்கிறவனென்ற குணமும் பொருந்தியிருக்கிறது. ஆகையால் ராவணன் துஷ்ட நடத்தையுள்ளவன் என்பதையும், தாங்கள் தர்மவான் என்பதையும், அவனுடைய பிரயத்தனங்கள் பலிக்காதென்பதையும், தங்களுடைய பிரயத்தனங்கள் கைகூடுமென்பதையும், தாங்கள் வாலியைக்கொன்று ஸுக்ரீவனுக்கு ராஜ்யத்தைக் கொடுத்ததையும் பார்த்து, தானும் லங்காராஜ்யத்தை அடைய வேண்டுமென்கிற எண்ணத்துடன் புத்திபூர்வமாக இங்கே வந்திருக்கிறான். இவன் ராக்ஷஸனாக இருந்தாலும் யோக்யனென்று எனக்குத் தெரிந்தவரையில் எடுத்துச் சொன்ன காரணங்களால் இவனை அங்கீகரிக்கலாம். ஆனால், இந்த விஷயத்தில் நியாயாந்யாயமும், மேல் நடக்கவேண்டிய காரியமும் தங்களுக்குத் தெரியாததல்ல. தங்களுடைய ஆக்ஞையை எதிர்பார்க்கிறோம்'' என்று தெரிவித்தார்.

யதா$^2$ஶக்தி மயோக்தம் து ராக்ஷஸஸ்யார்ஜவம் ப்ரதி |
ப்ரமாணம் த்வம் ஹி ஶேஷஸ்ய ஶ்ருத்வா பு$^3$த்$^3$தி$^4$மதாம் வர || (68)

---

## ஸர்க்கம் 18

## ராமனுடைய அபிப்பிராயம்

அத$^2$ ராம: ப்ரஸந்நாத்மா ஶ்ருத்வா வாயுஸுதஸ்ய ஹ |
ப்ரத்யபா$^4$ஷத து$^3$ர்த$^4$ர்ஷ: ஶ்ருதவாநாத்மநி ஸ்தி$^2$தம் || (1)

புரு, கண்டுமஹர்ஷி முதலிய புண்யவான்களின் விருத்தாந்தங்களை வஸிஷ்டர் முதலிய பெரியோர்களிடத்திலிருந்து கேட்டவரானபடியால், ராமன் வானரசிரேஷ்டர்கள் சொன்ன ஆக்ஷேபங்களால் புத்தி கலங்காமல், ஹனுமானுடைய வார்த்தைகளால் மனம் தெளிந்து, தன் அபிப்பிராயத்தை வெளியிட்டார்.

"விபீஷணனைப்பற்றி நானும் சில வார்த்தைகள் சொல்லவேண்டியிருக்கிறது. என் நன்மையைக்கோருகிற நீங்கள் அவைகளை ஸாவதானமாய்க் கேட்டு உங்களுடைய முடிவைச் சொல்லவேண்டும்.

(இதுவரையில் சொன்ன அபிப்பிராயங்களைக் கண்டிக்க வேண்டியிருப்பதால், மந்திரிகள் வருத்தப்படுவார்களோ என்று அவர்களை இப்படி ஸமாதானம் செய்து, தகுந்த கார

ணங்களுடன் தம் கருத்தைத் தெரிவிக்கிறார். ஸுக்ரீவன் முதலியவர்கள் சொன்ன அபிப்பிராயங்களில் ஹேதுக்களும் பிரயோஜனங்களும் ஸரியல்ல. ஆகையால் அவைகளைத் தள்ளிவிடலாம். ஹனுமானுடைய அபிப்பிராயத்தில் விபீஷணனைச் சேர்த்துக்கொள்ளலாம் என்ற பிரயோஜனம் ஸரியானாலும் அவன் தோஷமில்லாதவனென்ற ஹேது ஸரியல்ல, 'தங்களைச் சரணமடைந்தேன்' என்ற வார்த்தைகளைச் சொல்வதே முக்கியமான ஹேதுவென்பது கருத்து.)

"மித்திரனென்று என்னை வந்து அடைந்தவனை நான் ஒருபொழுதும் கைவிடுகிறதில்லை, அவனிடத்தில் தோஷங்களிருந்தாலும் அவனை அங்கீகரிப்பதை ஸாதுக்கள் நிந்திக்கமாட்டார்கள்.

(வாஸ்தவமாக மித்திரனாயில்லாவிட்டாலும் மித்திரனைப்போல் காட்டிக்கொண்டாலும் போதும். இவ்விடத்தில் மித்திர சப்தத்திற்குச் சரணமடைதலென்றும் அர்த்தம் செய்யலாம். ஸீதையும் ராவணனுக்கு ஹிதோபதேசம் செய்கையில், 'நீ பிழைக்கவேண்டுமென்றிருந்தால் ராமனுடன் ஸ்நேஹம் செய்' என்று இதே அர்த்தத்தைக் குறிப்பிட்டிருக்கிறாள். "எனக்கு ஸகல விஷயங்களிலும் சக்தியிருந்தும், 'உன்னைச் சரணமடைந்தேன்' என்ற வார்த்தைகள் காதில் விழுந்தபிறகு, அவனைக் கைவிடுவதற்குக் கொஞ்சம்கூடச் சக்தியில்லை. அப்படிச் செய்வதால் கணக்கில்லாத அபாயங்கள் எனக்குத்தெரிந்தும் தெரியாமலும் நேர்ந்தாலும், ஸகலப் பிராணிகளும் கூடாதென்று தடுத்தாலும், அதனால் எனக்கு மரணம் நேரிட்டாலும் சரணமடைந்தவனைக் கைவிட முடியாது. ஸுக்ரீவன் முதலியவர்கள் சொல்லுகிறபடி விபீஷணனிடத்தில் தோஷங்களிருக்கட்டும்; இன்னும் கோரமான தோஷங்கள் இருக்கட்டும்; என்னால் முடியாத காரியத்தை எப்படிச் செய்வேன்? சிஷ்டர்களை அங்கீகரிப்பதால் எனக்கு விசேஷ கீர்த்தியில்லை; துஷ்டர்கள் என்னைச் சரணமடைந்து' அவர்களை ரக்ஷித்தால் எனக்கு விசேஷ கீர்த்தியுண்டு. ஸாதுக்கள் இப்படிச் செய்வதைக்குற்றமாய் எண்ணமாட்டார்கள்; குணமாகக் கொண்டாடுவார்கள். தோஷங்களை விலக்கவேண்டியதென்ற சாஸ்திர வாக்கியம் சரணமடைந்தவர்களைப் பற்றிச் சொன்னதல்ல. மேலும், சரணமடைந்தவன் கொல்லத் தகுந்த குற்றத்தைச் செய்திருந்தாலும் அவனைக் காட்டிக்கொடுக்கக்கூடாது' என்று சுருதியும் சொல்லுகிறது" என்பது கருத்து.)

சில மஹான்கள் பின்வருமாறு வியாக்யானம் செய்கிறார்கள். 'என்னிடத்தில் பூர்ணபக்தி வைக்கவேண்டியதில்லை; என்னை. துவேஷிக்காமலிருப்பதே போதும். என்னுடன் ஸ்நேஹம் செய்யவேண்டுமென்ற இச்சை கொஞ்சமாவது இருந்தாலும் போதும். மித்திரனைப்போல் நடந்துகொண்டாலும் போதும். பகவானுடைய அபார கிருபையால் அதிசீக்கிரத்தில் அவனுக்கு வாஸ்தவபக்தியுண்டாகும். அல்லது, 'பகவான் ஸகல பூதங்களுக்கும் மித்திரன்' என்ற எண்ணத்தை ஆதாரமாய்க் கொண்டு சரணமடைந்தாலும் நல்லதே. நானே இவனைத் தேடிப்போய் காப்பாற்றவேண்டியிருக்க, அவனே என்னைத் தேடி வந்திருக்கையில் இன்னும் காப்பாற்றாமலிருப்பதைப்பற்றி வெட்கப்படுகிறேன். ஒருவன் கோயிலுக்குள் சென்று பகவானைத் தரிசிக்கும்பொழுது தான் வெளியில் விட்டுவந்த செருப்புக்களையே நினைத்துக்கொண்டிருப்பதுபோலிராமல் லங்கையையும் மித்திரர்களையும் ஐசுவரியத்தையும் விட்டுத் திரும்பிப் பாராமல், சரணாகதிக்கு விரோதிகளை விலக்கி என்னிடத்தில் வந்திருக்கிறான். தாயும் தந்தையும் ஸகோதரர்களும் பந்துக்களும் மித்திரர்களும் ஐசுவரியமும் நானே என்று நம்பி வந்திருக்கிறான். லங்கையிலிருந்தே "ராமா! உன்னைச் சரணமடைந்தேன்" என்றால், அந்த நிமிஷத்திலேயே ஓடிப்போய் அவனைக் காப்பாற்றவேண்டியது. முடவனிருக்கும் இடத்திற்கு கங்காப் பிரவாஹம் வருவதுபோல் நான் இருக்குமிடத்திற்கு அவனே வந்ததால் எனக்குப் பெரிய உபகாரத்தைச் செய்திருக்கிறான். இவன் செய்த உபகாரத்திற்குப் பதில் செய்யவேண்டாமா? இவன் சரணமடையவேண்டியதேயன்றி ஸ்தோத்ரம், அர்ச்சனை, தியானம், நமஸ்காரம் முதலிய ஸாதனங்களை அனுஷ்டிக்கவேண்டியதில்லை.

மேலும் மனத்தாலும், வார்த்தையாலும், நடத்தையாலும் பூர்ணமாய் என்னைச் சரணமடைந்திருக்கிறான். பயிரிடுகிறவன் மழையை ஆவலுடன் எதிர்பார்ப்பதுபோல், என்னை யாராவது சரணமடைந்து என் பிரதிக்ஞையை நிறைவேற்றுவார்களென்று காத்துக்கொண்டிருக்கிறேன். வலுவில் வந்தவனை விடுவேனா? இவன் மூலமாக ராவணனும் வருவானென்று நான் எதிர்பார்த்துக்கொண்டிருக்கையில் இவனைக் கைவிடுவேனா? 'விபீஷணனைச் சேர்த்துக்கொள்ளாவிட்டால் தங்களுடைய கீர்த்திக்குக் குறைவு வரும்; அவனைச் சேர்த்துக் கொண்டால் எங்களெல்லோருக்கும் மிகுந்த கெடுதி நேரும்' என்று நீங்கள் ஆக்ஷேபித்தால், உயிரைக் கொடுத்தாவது சரணமடைந்தவர்களைக் காப்பாற்றுவேன். லோகத்தில் பசு, புதிதாய்ப் பிறந்த கன்றிடத்திலுள்ள விசுவாஸத்தால் முன்பிறந்த கன்றுகளைத் திரும்பிப் பார்க்காததுபோல், விபீஷணனைக் காப்பாற்றும் விஷயத்தில் உங்களெல்லோரையும் கைவிடுவேன். மேலும் நீங்கள் சொல்லுகிற தோஷங்கள் ஒன்றுவது அவனிடத்தில் இருப்பதாக எனக்குத் தெரியவில்லை. அப்படி இருந்தாலும் அந்தத் தோஷங்களே எனக்குப் பிரியமாகும். முஞ்சம்

என்ற ஒருவகைப் புல்லின் பஞ்சுபோன்ற பூ நெருப்பில்போடப்பட்டவுடன் எப்படி ஸ்வரூபமில்லாமல் போகுமோ, அப்படிப் பகவானைத் தரிசித்தவனுடைய பாபங்கள் இருந்த இடம் தெரியாமல் நாசமடைகின்றன' என்ற சுருதிப்படி, என்னைச் சரணமடைந்தவர்களிடத்தில் தோஷங்களிருக்கநியாயமில்லை."அவன் என்னைக்கொல்லவேண்டுமென்றுவந்திருந்தாலும் அவனுடைய எண்ணத்தைப் பூர்த்திசெய்வது என் கடமை' (இது ஸ்ரீவத்ஸாங்கமிச்ரருடைய அபிப்பிராயம்.) 'அப்படியானால் மஹாபுத்திமான்களான வானரசிரேஷ்டர்கள் விபீஷணனை ஏன் நிந்திக்கவேண்டும்' என்றால், என்னிடத்தில் பக்ஷபாதம் வைத்து, காரணமில்லாமல் கெடுதியை ஸந்தேகிக்கும் வானர சிரேஷ்டர்கள் இவனுடைய தோஷங்களை மாத்திரமே நினைத்து இவனை ஏற்றுக்கொள்ள விரும்பமாட்டார்கள். ஆனால் புறாவைப் போன்ற பரமார்த்தஞானிகள் என் நடத்தையைச் கொண்டாடுவார்கள். 'தோஷமுள்ளவனைக் கைவிடாமலிருப்பதால் தங்களுக்கு எந்தப் புருஷார்த்தம் ஸித்தித்தது? எந்தக்கெடுதல் நீங்கிற்று? எந்தப் பாபத்திற்கு பரிஹாரமாயிற்று' என்றால், இவையொன்றுமில்லை. ஸாதுக்களுடைய கோஷ்டியில் நான் நிந்திக்கப்படாமலிருப்பதே பலன். தன்னைக் கொல்ல வந்தவர்களைக் காப்பாற்றின புறாவைப்போன்ற மஹான்கள் என்னை நிந்திக்காமலிருந்தால் போதும்' என்றார். (ஸர்வ சக்தியுள்ள பகவானுக்கு ஒரு விஷயத்தில் மாத்திரம் சக்தியில்லையென்பதும் ஸர்வமும் தெரிந்த பகவானுக்குத் தன்னைச் சரணமடைந்தவர்களின் தோஷங்கள் மாத்திரம் தெரியாதென்றும் இந்த ச்லோகத்தால் புலப்படுகின்றதென கோவிந்தயதி என்பவர் கருதுகின்றார்.

அதைக் கேட்டு ஸுக்ரீவன் ராமனுடைய ஸ்வபாவத்தைப் பூர்ணமாக அறிந்து, இது மிகவும் துணிவான காரியமென்று பயந்து நடுங்கி, ரகுவீரனிடத்தில் தான் வைத்த அளவற்ற ப்ரீதியால் "ஸ்வாமி! இவன் யோக்கியனாக இருந்தாலும் ஸரி, அயோக்கியனாக இருந்தாலும் ஸரி, இந்த ராக்ஷஸன் நன்றியற்றவன். தன் தமையன் இப்படிப்பட்ட ஆபத்தில் இருக்கையில் அவனைக்கைவிட்டவன் எவனைக் கைவிடமாட்டான்? லங்கை எரிந்து, புத்திரர்கள் மடிந்து, தன் சத்துரு ஸமுத்திரத்தைத் தாண்டி, தன் நகரத்தை முற்றுகையிடத் தயாராயிருப்பதைக் காட்டிலும் வேறு கஷ்டம் உண்டோ" என்றான்.

அதற்கு ராமன், "ஸுக்ரீவன் தர்மத்தினுடைய ரஹஸ்யத்தையும் என் அபார சக்தியையும் சரணமடைந்தவர்களைக் காப்பாற்றுவேனென்ற என் ப்ரதிக்ஞையையும் நன்றாக அறியாமல் இப்படிச் சொல்லுகிறான்" என்று நினைத்து புன்சிரிப்புடன் ராஜநீதிப்படி அவனுக்குப் பதில் சொன்னார். ஸகல வானரர்களையும் ஒரு தடவை பார்த்து, புண்யவானான லக்ஷ்மணனை நோக்கி, "சாஸ்திராப்யாஸமில்லாமல் பெரியோர்களிடத்தில் சுச்ரூஷை செய்யாமல் ஒருவனும் இப்படிப் பேச முடியாது. ஆனால் இந்த விஷயத்தில் ஸூக்ஷ்மமான விஷயத்தைக் கவனிக்கவேண்டியது. அது ஸகல ராஜாக்களிடத்திலும் காணப்படும்; லோகானுபவத்தால் அறியப்படும். அதாவது ஓர் அரசனுடைய தாயாதிகளும் அடுத்த தேசங்களிலுள்ள அரசர்களும் சத்ருக்களென்று சொல்லப்படுகிறார்கள். அவர்கள் கஷ்டம் நேர்ந்த ஸமயங்களை எதிர்பார்த்துக்கொண்டு கெடுதி செய்கிறார்கள். ஆனால் புண்யவான்களான சில அரசர்கள் தங்களுடைய தாயாதிகள் எப்பொழுதும் ஹிதகாரிகள் என்று எண்ணிக் கௌரவம் செய்கிறார்கள். அப்படிப்பட்ட அரசர்களும் உத்தமகுணங்களுடைய இந்த விபீஷணனிடத்தில் ஸந்தேகிப்பார்கள். பாபிகள் நிறைந்த இந்த லோகத்தில் நல்லவனிடத்திலும் ஸந்தேகமுண்டாகிறது. மஹா பாபியான ராவணன் மஹாபுண்யவானான இந்தவிபீஷணனிடத்தில் ஸந்தேகப்படுவது ஆச்சரியமல்ல; ஆகையால் அவனுடன் விரோதித்துக்கொண்டே இங்கே வந்திருக்கிறான். இப்படி இவன் ராவணனைவிட்டு வந்ததற்குக் காரணம் சொன்னேன். இவனை நான் கைவிடக்கூடாதென்பதற்குக் காரணம் சொல்லுகிறேன்.



"சத்ருவிடத்திலிருந்து வந்தவனைச் சேர்த்துக்கொள்ளக்கூடாதென்று சொன்னீர்கள். நீதி சாஸ்த்ரப்படி அதை விசாரித்துப் பார்ப்போம். நான் ராவணனுக்குத் தாயாதியல்ல. அவனுடைய ராஜ்யத்தில் எனக்குக் கொஞ்சம்கூட அபேக்ஷையில்லை. ராவணன் இவனைச் சத்ருவாக எண்ணுகிறானேயன்றி, இவனிடத்தில் எனக்கு அப்படிப்பட்ட எண்ணமில்லை. ஆகையால் இவன் என்னைக் கைவிடமாட்டான். இவன் என்னால் ராவணனை நாசம் செய்வித்து அவனுடைய ராஜ்யத்தை அடைய விரும்புகிறான். தன் காரியம் கெடுமென்ற பயத்தாலாவது எனக்குக் கெடுதி செய்யாமலிருப்பான். 'ராக்ஷஸர்களுக்கு இவ்வளவு ஆலோசனை ஏதென்றால், அவர்களிலும் விவேகிகளிருக்கமாட்டார்களா? ஆகையால் இவனைச் சேர்த்துக்கொள்ளலாம். ஞாதிகள் ஒருவருக்கொருவர் கல்மஷமில்லாமல் ஸந்தோஷமாய்ப் பழகுவதில்லை; ஆகையால் அவர்களுக்குள் கலகம் நேருவது ஸுலபம். இவன் பலவானான ராவணனிடத்திலிருந்து விசேஷ ஆபத்து நேரும் என்று அறிந்து பயந்து, தன்னைக் காப்பாற்றிக்கொள்ள இங்கே வந்திருக்கிறான் என்று இவனுடைய குரலினாலும் வார்த்தைகளாலும் வெளிப்படுகிறது. ஆகையால் இவனை ஒப்புக்கொள்வதில் கெடுதலில்லை; தனக்கு மூத்தவன் துஷ்டனாக இருந்தாலும் அவனுக்குக் கீழ்ப்படிந்தே நடக்கவேண்டுமென்ற தர்மத்தை எல்லோரும் அனுஸரிக்கமாட்டார்கள். உடன்பிறந்தவர்களெல்லோரும் பரதனைப்போலாவார்களா? பிதாவிற்குப் பிறக்கும் புத்திரர்களெல்லாம் என்னைப்போலாவார்களா? மித்திரர்களெல்

லாம் உங்களைப்போலாவார்களா? கைகேயி தசரதரிடத்திலிருந்து பெற்ற வரங்களால் பரதனுக்கு ராஜ்யம் நியாயமாகக்கிடைக்கிறது; அதை வேண்டாமென்று மறுத்து, காட்டிற்குச் சென்ற என்னைக் கண்டுபிடித்து, பரமபக்தியுடன் நமஸ்கரித்து "அண்ணா, ராஜ்யம் தங்களுடையது. தாங்கள் வந்து அதை ஒப்புக்கொண்டு ஆளவேண்டியது. நான் தங்களுக்கு ஸகல கைங்கரியங்களும் செய்கிறேன்" என்று பரதனைத் தவிர வேறொருவன் சொல்லமுடியுமா? (லக்ஷ்மணனுக்கு அவ்விதமாய் நடந்துகொள்ள அவகாசம் நேராததால் அவனைப்பற்றி பிரஸ்தாபிக்கவில்லை) என்னைப்போல பாக்கியசாலியான புத்திரன் வேறொருவரும் இல்லை. என்னைப் பிரிந்த துக்கத்தை ஸஹிக்காமல் என் பிதா உயிரை விட்டார். இப்படி பிரியமுள்ள பிதாவையுடைய புத்திரனும் உண்டோ? அப்படியிருந்தாலும் பரதனைப்போன்ற ஸஹோதரனும் உங்களைப்போன்ற மித்திரர்களும் கிடைப்பது அரிது. வர்ஷகாலத்தில் ஸுக்ரீவன் அலக்ஷ்யமாக இருக்கிறானென்று நான் கடுமையாய்க் கோபிக்க, அதைக்கண்டு லக்ஷ்மணன் குரூரமான வார்த்தைகளால் அவனைத் துளைக்க, எங்களிடத்தில் கொஞ்சம்கூட வருத்தப்படாமல் எல்லையற்ற பிரேமையையும் விசுவாஸத்தையும் பாராட்டி, எங்களுக்கு ஸகல உதவியையும் செய்துவரும் உன்னைப்போன்ற மித்திரர்களும் உண்டோ?

கேள்வி:—ராமன் தன்னைப்பற்றி இப்படிப் புகழ்ந்து கொள்வது ஸரியா?

பதில்: நடந்த விஷயத்தை உண்மையாய்ச் சொல்வது தற்புகழ்ச்சி ஆகாது. அபார கிருபையுள்ளவனாக இருப்பது, தன்னைப்பற்றிப் புகழ்ந்துகொள்ளாதவனாக இருப்பது, என்ற தீரோதாத்த நாயகலக்ஷணம் பொருந்திய துஷ்யந்தன், "ஸாதுக்களுக்குத் தர்மஸந்தேகம் நேரும்பொழுது அவர்களுடைய உள்ளத்தின் வேகமே பிரமாணம்" என்று தன்னை ஸாதுவாகச் சொல்லிக்கொண்டிருக்கிறான், ஆஞ்ஜனேயர், "ஆகாச வீதியில் பூர்ண பலத்துடன் அதிவேகமாய்ச் செல்லும் கருடனை அநேக ஆயிரம் தடவை நிற்காமல் நான் சுற்றிவரமுடியும்" என்று தன்னைப்பற்றிச் சொல்லிக்கொண்டிருக்கிறார். இப்படியே காவ்யாதர்சத்தில் முதல் பரிச்சேதத்தில் தண்டி என்ற மஹாகவி, "நடந்த விஷயத்தை யதார்த்தமாய் வர்ணிப்பது ஆத்மஸ்தோத்ரமாகாது" என்று சொல்லியிருக்கிறார்.)

அதைக்கேட்டு ஸுக்ரீவன், நீதிசாஸ்திரப்படி விபீஷணனைத் தள்ளிவிடவேண்டும் என்பதை நிரூபிக்க முடியாமல், இவனைச் சேர்த்துக்கொண்டால் இவனுடைய அந்தரங்கம் நமக்குத் தெரியாததால் ராமனுக்கு எந்தக் காலத்தில் என்ன கெடுதி செய்வானோ என்று, ரகுவீரனிடத்தில் வைத்த அளவற்ற பிரேமையால் மனம் கலங்கி, தானும் லக்ஷ்மணனும் செய்யும் சரணாகதியையே சிரேஷ்டமாக எண்ணிச் சரணமடைவதற்கு முன்னமே விபீஷணனை விலக்கிவிடவேண்டியதென்று நினைத்து, "ஸ்வாமி! தாங்கள் இந்த விஷயத்தில் பொறுமைக்கு இடம் கொடுக்கக் கூடாது. இவன் ராவணனால் அனுப்பப்பட்டு இங்கு வந்தவனே; ஸந்தேகமில்லை. ஆகையால் இவனைச் சேர்த்துக்கொள்ளக்கூடாது. இப்பொழுதே நீக்கிவிடவேண்டும். கபடபுத்தியுள்ள ராவணன் இவனை அனுப்பி நமது ரஹஸ்யங்களை அறிந்துகொண்டு ஸமயம் பார்த்து நமக்குக் கெடுதி செய்ய யோசித்திருக்கிறான். தாங்கள் இவனை நம்பினவுடன் தங்களுக்காவது எனக்காவது கெடுதிசெய்யாமல் போகமாட்டான்; அல்லது லக்ஷ்மணனுக்கு என்ன கெடுதி செய்வானோ? ஆகையால் இவனையும் இவனுடன் வந்த நான்கு மந்திரிகளையும் இப்பொழுதே பிடித்துக்கொல்லவேண்டியது. இதில் தோஷமில்லை. இவன் மஹாகுரூரனான ராவணனுடைய தம்பி. இதைத் தவிர வேறு விசாரிக்கவேண்டியதென்ன?" என்று சொல்லி, தான் இவ்வளவு சொல்லியும் ராமனுக்கு மனதில் படவில்லை என்று நினைத்து அவரிடத்திலுள்ள பிரேமையால் கோபம் கொண்டான்.

(பகவானுக்கு அபராதம் செய்வதைக் காட்டிலும் பக்தர்களுக்கு அபராதம் செய்வது பெரும் குற்றமாகையால், ராமன் அதைப்பொறுக்கமாட்டார் என்றெண்ணித் தனக்கும் லக்ஷ்மணனுக்கும் கெடுதி நேருமென்று சொன்னதேயன்றி வாஸ்தவமாய் அதற்குப் பயந்துசொன்ன வார்த்தையல்ல.)

அதைக்கேட்டு ராமன் "ஐயோ! இவன் நம்மிடத்தில் வைத்த அதிகப் பிரேமையாலல்லவா இப்படிச் சொல்லுகிறான். நாம் ஸர்வ சக்தனென்றும், நமக்குக் கெடுதி செய்யக்கூடியவன் ஒருவனுமில்லையென்று சரணாகதர்களை ரக்ஷிப்பது நம்முடையவிரதமென்றும், சாஸ்திரத்தால் விதிக்கப்பட்டபடியால் அவசியம் அனுஷ்டிக்கப்படவேண்டுமென்றும் இதனை இவனுக்கு எடுத்துச்சொல்ல வேண்டும் என்றும் நினைத்து, "இந்த ராக்ஷஸன் மிக துஷ்டனாக இருக்கட்டும்; அல்லது ஸாதுவாக இருக்கட்டும்; இவனால் என்ன செய்ய முடியும்? எனக்கும் என்னை ஆசிரயித்தவர்களுக்கும் என்னைச் சேர்ந்தவர்களுக்கும் அணுவளவாவது கெடுதி செய்ய இவனால் முடியுமென்று எண்ணுகிறாயா? வானராதிபதே! நீயும் உன் ஸைன்யங்களும் ஏதோ என்னை ஆபத்திலிருந்து காப்பாற்றிக்கொண்டிருப்பதாக எண்ணுகிறீர்கள். உங்களைக்கொஞ்சம்கூட சிரமப்படுத்தாமல் பூமியிலுள்ள ராக்ஷஸர்களையும், இதர லோகங்களிலுள்ள தானவர்கள், யக்ஷர்கள், பிசாசர்கள் முதலிய பிராணிகளையும் நினைத்தமாத்திரத்திலேயே விரலின் நுனியால், நாசம் செய்வேனென்று அறி. அஸ்த்ர சஸ்த்ரங்கள் வேண்டாம்; கையிலுள்ள மற்றவிரல்களின் உதவியும் வேண்டாம்; விரலில் மற்ற கணுக்களும் வேண்டாம்; நுனி ஒன்றே போதும். லங்கையில் வஸிக்கும் இந்த அல்ப ராக்ஷஸர்களைப்பற்றிச் சொல்லவேண்டியதென்ன? இவர்களைக் கொல்லவேண்டுமென்ற எண்ணமுண்டாகவில்லையே யன்றி, நினைத்துவிட்டால் அடுத்த நிமி

ஷத்தில் இவர்களைப் பார்க்க முடியுமா? ஆகையால் இவனிடத்திலிருந்து எனக்குக் கெடுதிநேருமென்ற ஸ்வப்பனம்கூட வேண்டாம். அப்படி இவன் கெடுதி செய்யக்கூடியவனுயிருக்கட்டும்; அதனுல் என் உயிர் போகட்டும்; அப்பொழுதும் இவனை விடக்கூடாது; அவசியம் ரக்ஷிக்க வேண்டியதே. இந்த விஷயமாய் ஒரு பிரஸித்தமான கதையைச் சொல்கிறேன் கேள்:

ஒரு காட்டில் ஒரு புரு இருந்தது. ஒரு நாள் ஒரு வேடன் அது வஸிக்குமிடத்திற்கு வந்து அதன் பாரியையை வலை போட்டுப் பிடித்துவிட்டான். பிறகு அஸ்தமித்தது. இருள் சூழ்ந்தது. பெருங்காற்றும் மழையும் பிடித்துக்கொண்டது. அதனுல் வேடன் அடிபட்டு நடந்து, பசியால் வருந்தி, கண்டவிடமெல்லாம் திரிந்து, ஆண் புருவிருந்த மரத்தடியில் வந்து சேர்ந்தான். அப்பொழுது அந்தப் புரு வேடன்படும் அவஸ்தையைக் கண்டு, அவனுக்கு உதவி செய்ய நினைத்து, ஆனுலும் தன் ஜாதிக்கு ஸ்வபாவ சத்ருவானதால் தயங்கி நின்றது. அப்பொழுது வலையில் அகப்பட்டுக்கொண்டிருந்த பெண் புரு தன் கணவனைப் பார்த்து "நாதா! என்னைக் குறித்துத் தாங்கள் வருத்தப்படவேண்டாம். நான் இந்த வேடனுடைய வலையிலிருக்கிறேன். தாங்கள் கவனிக்க வேண்டியது ஒரு விஷயமே. இந்த வேடன் நாம் இருக்கும் இடத்தைத் தேடிவருகிருன். நமது அதிதி. மழையாலும், குளிராலும், இருட்டாலும், பசியாலும் வருந்துகிருன். இவனுக்கு நம்மால் கூடியவரையில் அதிதிபூஜை செய்யாவிட்டால் நாம் இதுவரையில் அனுஷ்டித்துவந்த தர்மம் வீணுகும்" என்றது. அந்த ஆண் புரு பிரஹ்ம, க்ஷத்திரிய, வைசிய ஜாதிகளில் பிறந்ததும் அன்று; ஆசிரம தர்மங்களை அனுஷ்டிக்கக் கூடிய மனுஷ்யனும் அல்ல. கேவலம் ஒரு பக்ஷி. புருவிற்கு வேடன் ஸஹஜ சத்ரு. அதன் பார்யையை அபகரித்துக் கட்டிக்கொண்டு வந்திருக்கிருன்; கொஞ்ச நேரத்தில் அதைக் கொன்று தின்பான். தான் அவனுக்கு ஒத்தாசை செய்யப்போனுல் தன்னையும் கொன்று தின்பான். மேலும் அவன் புருவைச் சரணமடையவில்லை. அதன் வீட்டைத் தேடி வரவுமில்லை. மரத்தடியில் அகஸ்மாத்தாய் வந்து, "இந்த மரத்தில்வஸிக்கும் தேவதையே! உன்னைச்சரணமடைந்தேன்" என்று தலைமேல் கைகூப்பிச் சொன்னுன். அப்படியிருந்தும் அந்தப் புரு வேடனைத் தேவதையாக எண்ணி ஆராதித்தது; காட்டில் அங்கங்கேபோய்ச் சருகுகளையும் சுள்ளிகளையும் கொண்டுவந்து நெருப்பு மூட்டி, வேடனைக் குளிர் காயச் செய்து, தனக்கு அப்பொழுது கிடைக்கக்கூடிய பழம் முதலிய ஆஹாரங்களைக் கொண்டுவந்து கொடுத்தது. அதனுலும் அவனுடைய பசி தீராததைக்கண்டு, அக்னியில் செய்யும் ஆகுதிகளால் தேவதைகளைத் திருப்தி செய்வது வழக்கமாகையால், அவனுக்கு வேறு மாம்ஸத்தை ஸம்பாதித்துக் கொடுக்க முடியாமல், தன் தேகமிருக்கும்பொழுது இதரப் பிராணிகளை ஹிம்ஸிப்பது ஸரியல்லவென்று, தான் மூட்டிய தீயில் தன் தேகத்தை அர்ப்பணம் செய்து, வேடனைப் பசி தீர்த்துக்கொள்ளும்படி பிரார்த்தித்து, உயிரைவிட்டு உத்தம லோகங்களை அடைந்தது.



அந்தப் புரு ஒன்றே; நாம் கணக்கில்லாத வானரஸைன்யங்களை ஸஹாயமாய் வைத்துக்கொண்டிருப்பவர்கள். வேடன் புருவிற்கு ஸஹஜ சத்துரு; விபீஷணன் நமக்கு ஸஹஜ சத்துருவல்ல. வேடன் புருவின் பார்யையை அபகரித்தான்; என் பார்யையை அபகரித்தவன் இவனல்ல. நியாயப்படி அந்த ராவணனே என்னை வந்து சரணமடைந்தால், புருவைப் போல் நானும் என் உயிரைக் கொடுத்தாவது அவனைக் காப்பாற்ற வேண்டியது. வேடன் புருவைச் சரணமடையவில்லை; இவன் என்னைச் சரணமடைந்திருக்கிருன். இவன் சத்துருவினுடைய ஊரிலிருந்து வந்திருக்கிருனே அன்றி சத்துருவல்ல. என் முன்னேரான ரகுமஹாராஜாவிற்கும் ஒரு ராக்ஷஸனுக்கும் நடந்த ஸம்வாதத்தில் சொல்லியிருக்கிறபடி, சரணமடைந்த அந்த ராக்ஷஸனை அவர் காப்பாற்றினுரென்று கேள்விப்பட்டு இவனும் என்னைச் சரணமடைந்திருக்கிருன். புரு வேடனுக்கு ஸகல உபகாரமும் செய்து, அவனுடைய வருத்தத்தைப் போக்கித் தன் உயிரைக் கொடுத்து, அவனைத் திருப்தி செய்தது; நாமோ விபீஷணனை க்ரூர தண்டனையால் சிக்ஷிப்பதற்கு வழி தேடிக்கொண்டிருக்கிருேம். அவன் போதாமல் அவனுடைய மந்திரிகளையும் கொல்லப் பார்க்கிருேம். க்ரூரனென்றும், சத்துருவென்றும், தனக்கு அபராதம் செய்தவனென்றும் ஸ்பஷ்டமாய்த் தெரிந்த வேடனுக்கு புரு நல்ல வார்த்தை சொல்லி உபசரித்து, 'பசி தீரும் வரையில் அதிதியைப் பூஜிக்க வேண்டும்' என்ற நியாயப்படி, கொஞ்சம்கூட மனத்தில் வருத்தமில்லாமல் கபடமில்லாமல் உபசரித்தது. நாமோ வார்த்தையாலும் நடத்தையாலும் ஸாதுவென்று ஊஹிக்கக்கூடியவனை, சத்துருவென்று ருஜுவாகாதவனை, சத்துருவென்று முடிவு செய்து, கபடமாய்ப் பேசவும் மோசம்செய்யவும் தண்டிக்கவும் ஏற்பாடுசெய்துகொண்டிருக்கிருேம், அக்ஞானிகள் தானென்று அபிமானிப்பது தேகம். ஜ்ஞானிகள் தர்மானுஷ்டானத்திற்கு ஸாதனமென்று ஆதரிப்பது தேகம். அதையும் லக்ஷ்யம் செய்யாமல், சரபங்கமஹரிஷியைப்போல் அந்தப் புரு இதுவும் ஒரு பெரிய தபஸென்று நினைத்து மனப்பூர்வமாய் தத்தம் செய்தது.

என்னைப்போல் ஸகல தர்மங்களையும் அனுஷ்டிக்க யோக்யதையுடைய ஜாதியில் அந்தப் புரு பிறக்கவில்லை. சரணமடைந்தவர்களைக் காப்பாற்றுவதையே விரதமாக உடைய இக்ஷ்வாகுகுலத்தில் என்னைப்போல் பிறக்கவுமில்லை. வேடனே ஜாதியாலும் ஸ்வபாவத்தாலும் அல்பன்; வேறு கதியற்றவன்; இரக்கமில்லாதவன்; நல்ல வார்த்தை சொல்லி அறியாதவன்; அவனையும் அந்தப்

புறா பிராணனைக் கொடுத்து உபசரித்ததல்லவா? முன்பு சிபி சக்கரவர்த்தியைப் பரீக்ஷிக்க வந்த பக்ஷிகளைப்போல் அது மாறுரூபமெடுத்து வந்த தேவதையல்ல; ஸாதாரணமான புறாவே. கஜேந்திரனைப் போல் பூர்வபுண்யவிசேஷத்தால் இந்த உத்தமதர்மத்தை அனுஷ்டிக்கப்பெற்றது. இது இருக்கட்டும்;

ஒருநாள் ஒரு வேடன் புலியால் துரத்தப்பட்டு ஒரு மரத்தடியில் வந்து, அதிலிருந்த குரங்கைச் சரணமடைய, அதனால் காப்பாற்றப்பட்டு அந்த மரத்தில் ஏறிக்கொண்டான். பிறகு அந்த மரத்தடியில் வந்த புலி, குரங்கு தூங்கிக்கொண்டிருப்பதைக் கண்டு, வேடனைப் பார்த்து, "அதோ தூங்கிக்கொண்டிருக்கும் குரங்கைக் கீழே தள்ளிவிடு. அதைத் தின்றுவிட்டு உனக்கு யாதொரு கெடுதலும் செய்யாமல் போகிறேன்" என்றது. துரோக புத்தியுள்ள வேடன் அதன் வார்த்தையை நம்பி, தன் உயிரைக் காப்பாற்றிக்கொள்ள நினைத்துக் குரங்கைக் கீழே தள்ளிவிட்டான். விழுந்த குரங்கைப் பிடித்துக்கொண்டு, புலி "உனக்குத் துரோகம் செய்த அந்த வேடனைக் கொல்" என்று தூண்டிவிட்டது. தர்மங்களை அறிந்த குரங்கு தன்பிராணனைத் தப்பித்துக்கொள்வதற்காக அதற்கு ஸம்மதிப்பதுபோல் பாவித்து மரத்தில் ஏறிக்கொண்ட பிறகு, தனக்கு அபராதம் செய்தவேடனைத் தைரியப்படுத்தி, பொழுது விடியும் வரையில் வைத்துக் காப்பாற்றி அனுப்பிற்று. ஒரு சாதாரணக் குரங்கு செய்த சரணாகத ரக்ஷண தர்மத்தை, வானராதிபதியாயும் ஸூரிய புத்திரனாயுமிருக்கும் நீ அனுஷ்டிக்காமலிருப்பது என்ன ஆச்சரியம்!

நான் மனுஷ்யன்; ரகுவம்சத்தில் பிறந்தவன்; அறுபதாயிரம் வருஷங்களாய் பிரஜைகளைத் தர்மமாய்ப் பரிபாலனம் செய்து நரைத்துப்போன தசரத சக்கரவர்த்தியின் புத்திரன்; வஸிஷ்டர் விசுவாமித்திரர் முதலிய மஹரிஷிகளால் உபதேசிக்கப்பட்டுத் தர்மரஹஸ்யங்களை அறிந்தவன்; மஹாயோகியான ஜனகருடன் ஸம்பந்தம் பெற்றவன்; தர்மமே அவதரித்து வந்த ராமனென்று பெயருடையவன்; ஜனங்கள் அனுஷ்டிக்க வேண்டிய தர்மங்களை ஏற்படுத்தினவன்; அவைகளை ஸரிவர நடத்தி வைப்பவன்; அவைகளை நடத்திக் காட்டுகிறவன். நானே சரணமடைந்தவனை ஹிம்ஸித்தால் பிறகு லோகம் எதைத்தான் செய்யாது? கொல்லத்தகாதவர்களைக் கொல்லும். ராவணன் செய்யவேண்டிய காரியமேயன்றி என்னைப்போன்றவனுக்கு இது அழகல்ல. சரணமடைந்தவனைக் கைவிடுகிறவன் எந்தப் பிறப்பைச் சேர்ந்தவனோ தெரியவில்லை.

ஆனால், 'சாஸ்திராப்யாஸம் செய்வதற்கு அதிகாரமில்லாத ஒரு புறா அனுஷ்டித்த ஒரு காரணத்தால் மாத்திரம் நாமும் அப்படிச் செய்வது நியாயமல்ல' என்று ஆக்ஷேபித்தால்,



கண்வமஹர்ஷியின் புத்ரனான கண்டு என்பவர் பின்வரும் தர்மவாக்கியங்களைச் சொல்லியிருக்கிறார். அவர் மஹாகுலத்தில் பிறந்தவர். விஷயங்களின் யதார்த்தத்தை அறியக்கூடியவர்; அப்படி அறிந்தவைகளை உள்ளபடி சொல்லுகிறவர். ஆகையால் அவருடைய வார்த்தைகள் ஆப்தவாக்கியம்; வேதவசனங்களும் இதற்கு ஆதாரமாக இருக்கின்றன.

இது அவர் கல்பித்த வாக்கியமல்ல. ரிக்வேதத்திலுள்ள மந்திரங்களையே ஸ்வரபேதத்தால் ஸாமவேதமாய்ச் சொல்வது போல், அநாதியாய் வழங்கிவரும் தர்மத்தையே அவரும் வெளியிட்டிருக்கிறார். வேதத்தில் சொல்லியிருக்கும் தர்மங்களை அனுஷ்டித்தால் எந்த பரமப்ரயோஜனமுண்டாகுமோ அதைக் கொடுக்கக்கூடியது. அனேக அர்த்தங்களடங்கியதாய் ஸுலபமாய் ஞாபகத்தில் வைக்கக்கூடியதாய்ச் சுருக்கமாயிருக்கிறது. இதை நீ இதுவரையிலும் கேட்டிராததால் இப்படி மயங்குகிறாய்.

"நம்மைக் காப்பாற்றுகிறவனிடத்தில் அனுகூல புத்தியும் வார்த்தையும் நடத்தையும் இல்லாவிட்டாலும், பூர்ணப்ரபத்திக்குரிய லக்ஷணங்களில்லாவிட்டாலும் வேறுகதியில்லாததால் தன்னுடைய பாரத்தை ரக்ஷகனிடத்தில் ஒப்புவிக்கிறதென்ற கருத்தைக் குறிக்கும் அடையாளமாயும் சரணாகதியின் ஒரு அங்கமாயும் இருக்கும் கைகூப்புதல் இருந்தால்போதும்; ஸகல துக்கமும் தீரும்; அனுக்ரஹத்திற்குக் காரணமாகும். பகவானுடைய கிருபையைப் பெறுவதற்குச் சீக்கிரமான உபாயம், கைகூப்புவதென்ற யோக முத்திரையே. ஸ்வதந்திரமாயிருப்பவனையும் ஸுலபமாய் வசப்படுத்தும்; பக்தர்களுக்கு பரதந்திரனாக இருக்கும் பகவானை வசப்படுத்துவதில் ஸந்தேகமென்ன? கைகூப்பாவிட்டாலும், தான் தீனனென்று பிறருக்குத் தெரிவிப்பதே போதும்; அப்படி இல்லாவிட்டாலும், ப்ரார்த்திப்பதுபோல் தோன்றும் வார்த்தைகளைச் சொன்னாலும் போதும். இம்மூன்றும் இல்லா விட்டாலும், ரக்ஷகன் இருக்குமிடத்தை நோக்கி வருவதே போதும். அவன் பரமசத்ருவாகஇருந்தாலும்அவனைக்கொல்லக் கூடாது. (இது சாஸ்திரங்களில் சொல்லப்பட்ட அர்த்தமா? இஹலோகத்தில் ஸகல ஸௌக்யங்களையும் அடைவதற்காகவா? பரலோகத்தில் உத்தமகதி அடைவதற்காகவா? செய்யாவிட்டால் நேரும் தோஷத்தைப் போக்குவதற்காகவா?" என்றால், க்ரூரனென்ற பெயர் வாங்காமல் தப்புவதற்கே.) அஹிம்ஸை பரம தர்மமென்றபடி, ஸகல தர்மத்திற்கும் ஸாரமானதயையென்ற குணத்தைக் காப்பாற்றுவதற்கே. (பிறரை ஹிம்ஸிக்காமலிருப்பதே உத்தமமான தர்மமென்று தாங்கள் சொல்லக்கேட்டிருக்கிறேனென்று ஸுந்தரகாண்டத்தில் ஸீதை சொல்லுகிறாள்),

சரணமடைந்தவர்களிடத்தில் நமது பௌருஷத்தைக் காட்டுவதில் பிரயோஜனமென்ன ? சத்ருக்களிடத்திலல்லவா காட்டவேண்டும் ?

மேலும் நம்மைச் சரணமடைந்தவன் சரணாகதி செய்யும் ஸமயத்தில் தான் செய்த அபராதங்களை நினைத்துப் பயங்கொண்டவனாக இருந்தாலும் ஸரி ; அல்லது சீக்கிரம் தாமஸம் என்பதை கவனியாமல் கார்யம் நிறைவேறுவதிலேயே நோக்கமுள்ளவனாக இருந்தாலும் ஸரி; அல்லது, சரணாகதி செய்யும் ஸமயத்தில் வினயமில்லாமலிருந்தாலும், தான் செய்த அபராதங்களைநினைத்துப் பயமில்லாமலிருந்தாலும்ஸரி; ஸம்ஸாரத்தில்வெறுப்படைந்துஅந்தக்ஷணத்திலேயே தேகத்திலிருந்து விடுபட ஆசைப்பட்டவனாயிருந்தாலும் ஸரி;பிராரப்த கர்மத்தின் முடிவில் முக்தியை விரும்பினாலும் சரி; 'நான் ஒன்றும் முடியாதவன்; வேறு கதியற்றவன்' என்று வந்து சரணமடைந்தவனானாலும் ஸரி; கபடமாகவாவது பரிஹாஸமாகவாவது 'சரணமடைந்தேன்' என்ற வார்த்தைகளைச் சொன்னாலும் ஸரி; மனத்தில் விரோதத்துடன் 'சரணமடைந்தேன்' என்ற வார்த்தையைச் சொன்னாலும் சரி; தர்மசாஸ்திரத்தில்நம்பிக்கை வைத்து நிச்சயமான புத்தியையுடைய புருஷன் ஸ்திரமில்லாத பிராணனைக் கொடுத்தாவது ஸ்திரமான சரணாகதரக்ஷணமென்ற தர்மத்தை ஸம்பாதிக்க வேண்டியது. செய்யத் தவறினால் ஸாதாரண மனுஷ்யனைக் காட்டிலும் வித்வானுக்கு விசேஷ பாபம் நேரும். தன்னால் கூடியமட்டும் தன்னுடைய தேகம் திரவியம் பிராணன் முதலியவைகளைக் கொடுத்தாவது தீனனைக் காப்பாற்ற வேண்டும்;தன்னைச் சரணமடைந்தவனாவதுஅவனைச் சேர்ந்தவர்களாவது தனக்குக் கெடுதி செய்வார்களோ என்ற பயத்தாலாவது, சாஸ்திரங்களை அறியாமையாலாவதுசரணமடைந்தவனுடைய சத்ருவிடத்திலிருந்து ஒரு பிரயோஜனத்தை அபேக்ஷித்தாவது அப்படிச் செய்யாவிட்டால் இஹலோகத்தில் எல்லோரும் நிந்திப்பார்கள்; பரகதி கிடைக்காது. இது மாத்திரமல்ல. ஒருவன் தன்னைச் சரணமடைந்தவனை ரக்ஷிக்கச்சக்தியிருந்தும் அப்படிச் செய்யாமல், சத்துருக்களால் நாசமடைவதைப் பார்த்துக் கொண்டிருந்தால்,அவன் அதுவரையில் செய்த ஸகல புண்யகர்மங்களும் நசிக்கின்றன; அந்தகர்மபலன்கள் சரணாகதி செய்தவனை அடைகின்றன; சரணமடைந்தவர்களை ரக்ஷிக்காவிட்டால் மஹாதோஷமுண்டாகும்; நரகத்திற்கு ஹேதுவாகும்; இஹத்தில் அபகீர்த்தியைத் தரும் ; பலம் வீரியம் முதலிய குணங்களை நாசம் செய்யும்.கண்டு மஹரிஷியின் அபிப்பிராயப்படி நான் நடப்பேன். தர்மத்தை ஸ்தாபிக்க விரதம் பூண்ட நான் இப்படி அவசியம் செய்யவேண்டியது. இதை ஸகலப்



பிராணிகளும் கொண்டாடும் ; இது பாபத்தைப் போக்கும்; ஸ்வர்க்கபலனைக் கொடுக்கும்" என்றார்.

"சுருதி, ஸ்மிருதி, ஸதாசாரம், தனது ப்ரியம், தீர்க்கமாய் ஆலோசித்த பிறகு உண்டாகும் இச்சை இவைகளே தர்மத்திற்கு மூலம்" என்று யாக்ஞ்யவல்க்ய ஸ்மிருதியில் சொன்ன தர்மப்ரமாணங்களில், நம்மைச் சரணமடைந்தவன் கொல்லப்பட வேண்டியவனாக இருந்தாலும்அவனைக் காட்டிக்கொடுக்கக் கூடாது என்ற சுருதி வாக்கியமும்; கண்டுவின் உபதேசத்தால் ஸ்மிருதியும்; புருவின் உபாக்யானத்தால் ஸதாசாரமும்; சத்துருக்களை நாசம் செய்து, பலவான்களைத் தன்னிடத்தில் சேர்த்துக்கொள்வதென்றதால் தனக்குப் பிரியமானதென்றும்;மேற்சொன்ன நான்கு பிரமாணங்களும் பிரபந்நனைக் காப்பாற்ற வேண்டுமென்ற தர்மத்தை ஸ்தாபித்தன. இப்பொழுது தான் தீர விசாரித்துச் செய்த முடிவு (பிரதிக்ஞை) என்ற ஐந்தாவது 'பிரமாணம் நிரூபிக்கப்படுகிறது.

உத்தமகதியை அடைவதற்குச் சாஸ்திரங்களில்சொல்லியிருக்கும் இதர உபாயங்களைப் பலதடவை அனுஷ்டித்தால் மாத்திரம் பிரயோஜனப்படும் ; சரணாகதியோ அப்படியல்ல. என்னை ஒருவன் ஒரே தடவை வந்து சரணமடைந்தாலும் போதும். அதையும் வார்த்தைகளால் சொல்வதும் தேகத்தால் செய்வதும் அவசியமில்லை; மனஸால் சரணமடைவதே போதும். 'நான் உன்னைச் சேர்ந்தவன்; உனக்கு கைங்கரியம் செய்வதே நான் அபேக்ஷிக்கும் பலன்' என்று பிரார்த்தித்தால், அவனுக்கு பயம் நேரக்கூடிய ஸகல பூதங்களிடத்திலிருந்தும் பயமில்லாமல் செய்வேன். சரணமடைந்தவர்களைச் சேர்ந்தவர்களுக்கும் அபயதானம் செய்கிறேன்; இது என் விரதம். எக்காலத்திலும் எந்த சமயத்திலும் இதைக் கைவிடமாட்டேன்.

அபயமென்றால் மோக்ஷமென்பது கருத்து. 'பிறகு அவன் அபயத்தையடைகிறான்'; 'பிரஹ்மாவின் ஆனந்தத்தையடைந்தவனுக்கு யாதொன்றிடத்திலிருந்தும் பயமில்லை'—சுருதி. பிரஹ்மவித்யையின் பலனான மோக்ஷத்தையே சரணமடைந்தவனும் அடைகிறான்.

விஷ்ணுபக்தனை ஆசிரயித்த பசு, மனுஷ்யன், பக்ஷி முதலிய ஸகலப் பிராணிகளும் அந்த மஹிமையால் விஷ்ணுவின் பரம பதத்தை அடைகின்றன. அப்படிச் சொன்னவுடன் ஸுக்ரீவனுடைய ஸந்தேகம் தீர்ந்து முகம் தெளிந்தது. விபீஷணனிடத்தில் நம்பிக்கையும் விச்வாஸமும் உண்டாயிற்று.

பிறகு ராமன், "ஸுக்ரீவ! விபீஷணன் உங்களைப் புருஷகாரமாய் வைத்து, என்னிடத்தில் தங்களைப்பற்றி விக்ஞாபனம் செய்ய

வேண்டுமென்று பிரார்த்தித்தான். இப்பொழுது நீயே போய் அவனை அழைத்து வந்தால் இதுவரையிலும் அபயதானம் செய்யாமல் அவனைக் காக்க வைத்த துக்கம் நீங்கும். என்னிடத்தில் பிரியமுள்ள வானரர்களுக்குள் நீயே எனக்குப் பிரியமாவாய். இவன் தன் பந்துக்களைவிட்டு, தன் தீனஸ்திதியை வெளியிட்டு என்னை வந்தடைந்திருக்கிருன். மித்திரனென்று பாவனை செய்தாலேபோதும் என்ற அபிப்பிராயத்தையுடைய நான், அவன், 'சரணமடைந்தேன்' என்ற க்ஷணத்திலேயே அபயதானம் செய்துவிட்டேன். "நான் எப்படிப்போய் அழைத்துவருவேன்' என்று தயங்குகிருயோ? தர்மவானன விபீஷணனை ரக்ஷிப்பதில் பெருமை இல்லை. குரூரஸ்வபாவமுள்ள ராவணனை அபயதானம் செய்து ரக்ஷித்தாலல்லவா பெருமை? விபீஷணனை ரக்ஷித்தால் அவனைச் சேர்ந்த நான்கு ராக்ஷஸர்களை மாத்திரம் ரக்ஷித்ததாகும்; ராவணனை ரக்ஷித்தால் ராக்ஷஸ வம்சம் முழுவதும் ரக்ஷிக்கப்படும். அது பெரிய லாபம். எனக்கு நேரும் கீர்த்தியும்க்ஷேமமும்உங்களுக்குமல்லவா? விபீஷணனிடத்தில் இவ்வளவு ஸந்தேகப்படுகிருயே! ராவணனே ஸீதையைத் திருப்பிக் கொடுக்காமல் நேரே வந்து என்னை ரக்ஷிக்கவேண்டுமென்று பிரார்த்தித்தாலும் நான் ஸித்தமாக இருக்கிறேன். இவன் விபீஷணனாக இல்லாமல் ராவணனே இந்த ரூபத்தைத் தரித்துவந்தாலும் அபயம் கொடுப்பேன். 'இவன் விபீஷணனல்ல, ராவணன்' என்று என்னிடத்தில் சொல்லவரக்கூடாது; உடனே அழைத்து வா" என்றார்.

அதைக் கேட்டு ஸுக்ரீவன், அவரைச் சரணமடைந்த விபீஷணனிடத்திலும், தன்னிடத்திலும் அவருக்குள்ள அத்யந்த ஸ்நேஹபாவத்தை ஆலோசித்து ஆச்சரியம் கொண்டு, ஸகல தோஷங்களையும் கவனிக்காமல் தனக்கு விரோதமாய்ப் பேசின பழைய மித்திரர்களைப் பலவிதமாக ஸமாதானம் செய்து, ராவணன் வந்தாலும் ஸரி என்று கூறிய இவருடைய வாத்ஸல்யத்திற்கு எல்லை உண்டோ என்று பிரமித்து, "ராம! தங்களுடைய ஸஹஜமான அனந்த கல்யாண குணங்களை யோசித்தால், தாங்கள் இப்படிச் செய்வது ஆச்சரியமா? தர்மரஹஸ்யத்தை அறிந்த தாங்கள் ஸகல தாஸகோடிகளையும் ரக்ஷிக்கிற பிரபு.எவ்வித ஆசையுமில்லாமல் பிறருக்கு ஸகல ஸுகத்தையும் கொடுப்பதிலேயே நோக்கமுள்ளவர்கள். இப்படிச் சொல்வது தங்களுக்கே தகும்; சொன்ன வார்த்தையை நிறைவேற்றும்படியான அபாரசக்தியுள்ளவர்கள். தர்மத்தை ஸ்தாபிப்பதற்காகவே அவதாரம் செய்தவர்கள். சரணமடைந்தவர்களை ரக்ஷிப்பதற்கு மேற்சொன்ன குணங்களில் ஒன்றே போதும்; எல்லாம் பொருந்தியிருக்கும்பொழுது ஆச்சரியமென்ன? 'என்னைப் புகழ்வதால் பிரயோஜனமில்லை. உன் மனத்திற்கு திருப்தியாக இருந்தாலல்லவா விபீஷணனை அங்கீகரிக்கலாம்' என்றால், இவனைக் கடுமையாகச் சிக்ஷிக்க வேண்டுமென்று நான் சொன்னாலும் என் அந்தக்கரணத்தில் இவன் சுத்தனென்று நன்றாகத் தெரியும்.



இதைத் தவிர வேறு பிரமாணங்களும் உண்டு. தாங்களும் மாருதியும் சொல்லிவந்த காரணங்களாலும் மனத்திலுள்ள அபிப்ராயத்தை வெளிப்படுத்தக் கூடிய நடை உடை பேச்சு முகக்குறி முதலியவைகளாலும் இவனுடைய ஸாதுத் தன்மையை அறிந்தேன். இதுவரையில் அக்ஞானத்தால் இவனை நம்பாமல் பெரும் பாபத்தைக் கட்டிக்கொண்டேன். நிஜத்தை அறிந்தபிறகு இவனை ரக்ஷிப்பதில் தாங்கள் ஒரு க்ஷணம்கூடத் தாமஸிக்கக்கூடாது. 'ராமனிடத்தில் என்னைப்பற்றித் தெரிவியுங்கள்' என்று குரூரஸ்வபாவமுள்ள எங்களைப் புருஷகாரமாய் வைத்து பிரார்த்தித்தான். அந்த யோக்கியதை எங்களுக்கு ஸித்திக்கவேண்டுமென்றே தாங்கள் இவ்வளவு சிரமப்பட்டீர்கள். அதிசீக்கிரத்தில் இவனும் எங்களைப்போன்றவனாக தங்களுடைய பக்தகோடியில் சேரும்படி அனுக்ரஹிக்கவேண்டும்" என்று விபீஷணனுக்குப் பரமபுருஷார்த்தம் கிடைக்கவேண்டுமென்று பிரார்த்தித்து, அந்தப் பரமபக்தனுடைய தோழமை என்ற புருஷார்த்தம் தங்களுக்குக் கிடைக்கவேண்டுமென்று, "பிரபோ! உத்தம கதியை அடைவதற்கு ஸாதனங்களையும் நன்றாக அறிந்த இந்தப் பரமபாகவதன், எங்களுக்குத் தோழனாகும்படி அனுக்கிரஹிக்கவேண்டும்" என்று ஸுக்ரீவன் பிரார்த்தித்தான்.

"பிறகு அந்த வானர ராஜன் விபீஷணனிடத்தில் சென்று, மஹாபாக்கியவானே! இதுவரையில் தாமதப்பட்டதை மன்னிக்க வேண்டும். ரகுவீரன் உனக்கு அபயம் கொடுத்தார்; உன்னை அழைத்துவரச் சொன்னார்" என்றான். ராமன் அதைக்கேட்டு, வானர வீரர்களுடைய ஆக்ஷேபங்களாகிற ஆச்ரித விரோதிகளை விலக்கி, இவனை அங்கீகரிக்கவேண்டுமென்று பிரதிக்ஞை செய்து, ஸுக்ரீவன் முதலியவர்களுடைய வார்த்தைகளால் நேர்ந்த தாமதத்தைப் பொறுக்காமல் ஒருவேளை ஸுக்ரீவனுடைய புத்தி மறுபடியும் விபரீதமாகுமென்று, அதிசீக்கிரமாய்த் தேவேந்திரன் கருட பகவானைச் சேர்வதுபோல், தானே விபீஷணனை எதிர்சென்று அங்கீகரித்தார்.

ததஸ்து ஸுக்³ரீவ வசோ நிஶம்ய தத்
ஹரீஶ்வரேணாபி⁴ஹிதம் நரேஶ்வர: |
விபீ⁴ஷணேநாஶு ஜகா³ம ஸங்க³மம்
பதத்ரி ராஜேந யதா² புரந்த³ர: ॥ (39)

---

## ஸர்க்கம் 19

## விபீஷண கைங்கர்யம்

---

ராக⁴வேணாப⁴யே த³த்தே ஸந்நதோ ராவணாநுஜ: |
விபீ⁴ஷணோ மஹாப்ராஜ்ஞோ பூ⁴மிம் ஸமவலோகயத் ॥ (1)

விபீஷணன் அபேக்ஷித்தபடி ஸகலப் பிராணிகளிடத்திலிருந்தும் தமக்குப் பயமில்லை என்று ராமனுடைய அபயதானத்

திற்குப் பாத்திரமானுன். அவருடைய கல்யாணகுணங்களைக் கேட்டே அவருக்குத் தாஸனுன அந்த ராக்ஷஸன் தான் கேட்டதைக் காட்டிலும் கோடிமடங்கு அதிகமான ராமனுடைய கல்யாண குணங்களை ப்ரத்யக்ஷமாய்ப் பார்த்துப் பக்தியால் வணங்கினுன். அபாயமற்ற உபாயத்தை ஆரம்பித்ததால் பரம புருஷார்த்தத்தை அடைந்தான். வேதசாஸ்திரங்களை விசேஷமாய் அப்யஸித்து ஞானம் முதிர்ந்ததற்கு இப்பொழுது பலன் கிடைத்தது. ராமனுடைய அந்தரங்க மந்திரிகள் கொஞ்சமும் இடைவெளியில்லாமல் அவரைச் சூழ்ந்து நின்ருர்கள். ராமனுக்கெதிரே நின்ற முக்கிய மந்திரிகள் தங்களில் ஒருவனுன விபீஷணனுக்கு ராமனுக்கருகில் இடம் கொடுத்தார்கள். அதை நன்ருய்க் கவனித்த விபீஷணன் தூரத்திலிருந்தே ரகுவீரனை நமஸ்கரித்து, ஸாஷ்டாங்கமாய் வந்தனம் செய்வதற்கு ஆகாச வீதியில் இடமில்லாமையால் பூமியில் குதித்தான். தான் அபேக்ஷித்த அபயதானம் கிடைத்த பிறகும் ராமனைப் ப்ரார்த்திக்கவேண்டியது என்னவென்ருல், ராமனுடைய ஸ்வரூபம், ரூபம், குணம் முதலியவைகளை அனுபவித்ததாலுண்டான ஆனந்தம் மேலிட்டு, ப்ரக்ஞையற்ற சரீரமே வணங்கிற்று. வேறுபிரயோஜனத்தை உத்தேசித்துச் செய்ததன்று. ராமனைச் சரணமடைந்தவன் விபீஷணனே; ஆனுல் அவனுடைய பக்தி விசேஷத்தால் அவனைச் சேர்ந்தவர்களும், ராமனுக்குக் கைங்கரியம் செய்த லாபத்தைப் பெற்றுர்கள். (விஷ்ணுபக்தனை ஆசிரயித்த பசு, பக்ஷி, மனுஷ்யர்களும் அவனுடன் விஷ்ணுவின் பரமபதத்தை அடைகிருர்கள்;-பெரியோர்) இதுவரையில் வாக்கால் ப்ரபத்தி செய்து இனி தேகத்தால் ப்ரபத்தி செய்ய ஆரம்பித்து, ஸம்சயம் விபர்யயம் முதலிய தோஷங்கள் நீங்கி, தனக்கு அனுகூலமான விஷயத்தை நிச்சயமாக அறிந்த விபீஷணன், பூர்வ ஸ்வரூபம் மாறி எந்த அவஸ்தையிலும் சரணுகதிதர்மநிஷ்டையைக் கைவிடாதவனுய் "இவனைக் கொல்லவேண்டும்; நம்பக்கூடாது" என்று வானரர்கள் சொன்னபொழுதும், "இவனைக் கைவிடமாட்டேன்; இவனை அழைத்து வா" என்று ரகுநாதன் சொன்னபொழுதும், "எங்களைப்போல் இவனும் ஆகட்டும்' என்று ஸுக்ரீவன் சொன்ன பொழுதும் கொஞ்சமும் கவலையில்லாமல் ராமனிடத்தில் எல்லையற்ற விசுவாஸம் வைத்து, அவரையே ரக்ஷகனுகக் கோரி, அவருக்குத் தன்னிடத்திலுள்ள பக்ஷபாதத்தைக் காட்டும் திவ்ய மங்கள விக்ரஹத்தையுடைய ஸ்ரீராமப்பிரஹ்மத்தின் ஸ்ரீபாதங்களே தனக்குக் கடையேற ஸாதனமென்று, கைக்குழந்தை தாயை நோக்கித் தாவுவதுபோல் ராமனுடைய சரண கமலங்களில் சிரஸை வைத்து நமஸ்கரித்தான். அவனுடன் வந்த நான்கு ராக்ஷஸர்களும் அப்படியே அவனுடைய அங்கங்களைப்போல் பரதந்திரர்களாய் நமஸ்கரித்தார்கள். (ராவணனுக்கு உபதேசம் செய்ததால் பகவானுக்கு அனுகூலமாக இருக்கவேண்டுமென்ற ஸங்கல்பம், ராவணனை



கா³த் பபாதாவநிம் ஹ்ருஷ்டோ ப⁴க்தை ரநுசரை: ஸஹ |
ஸது ராமஸ்ய த⁴ர்மாத்மா நிபபாத விபீ⁴ஷண: ||
—யு. 19 ஸ — 2க.

...திவ்ய மங்கள விக்ரஹத்தையுடைய ஸ்ரீ ராமபிரஹ்மத்தின்... சரணகமலங்களில் சிரஸை வைத்து நமஸ்கரித்தான். அவனுடன் வந்த நான்கு ராக்ஷஸர்களும்... நமஸ்கரித்தார்கள்.
(பக்கம் 78 பார்க்க)

Notes : This Blank Page has also to be counted as a another page Number.

It is intentionally left blank after Picture Sketches.!

Released by Maran's Dog ,Toronto, Canada



விட்டு நீங்கியதால் ராமனுக்கு ப்ரதிகூலமாக இராதிருத்தல் என்ற சரணாகதியின் இரண்டு அங்கங்கள் முன்பே கூறப்பட்டன. தர்மாத்மா என்றதால் ரக்ஷகனிடத்தில் 'இவன் நம்மைக் காப்பாற்றக் கூடியவன் என்ற பூர்ண நம்பிக்கைகொள்ளுதல்; 'சரணமடைந்து' என்றதால் ரக்ஷகனைத் தேடுவது, 'நமஸ்கரித்தான்' என்றதால் தன்னை ரக்ஷகனிடத்தில் ஒப்புவித்தல் என்ற மற்ற சரணாகதியின் அங்கங்கள் எல்லாம் நிரம்பவும், சரணாகதி அனுஷ்டிக்கப்பட்டதாயிற்று.)

இப்படித் தேகத்தால் சரணாகதி செய்து பிறகு வார்த்தையால் சரணமடைந்தான். ஸுக்ரீவன் முதலியவர்கள் தன்னிடத்தில் ஒரே மனதாய் அதிகப் பிரேமை வைத்திருந்தார்கள். முன்பு வானர வீரர்களைப் புருஷகாரமாய் வைத்து பிரார்த்தித்த விஷயத்தையே இப்பொழுது ரக்ஷகனிடத்தில் நேரில் பிரார்த்திக்கிறான். அவனுடைய வார்த்தைகளில் சரணாகதியின் ஸகல அங்கங்களும் அடங்கியிருந்தன. தன்னைக் காப்பாற்றச் சக்தியும் அபார கிருபையுமுள்ள ரகுவீரனைக் குறித்துச் சொல்லப்பட்டதால் ஸகல விதத்திலும் ஸுக்ரீவன் முதலியவர்களுக்கு மிகுந்த வெறுப்பை உண்டுபண்ணின; இப்பொழுதோ எல்லாரையும் ஆனந்தத்தால் மெய் மறக்கும்படிச் செய்தன.

"நான் ராவணனுடைய தம்பி; அவனால் அவமதிக்கப்பட்டேன். (தன் தீனத்தன்மையை விக்ஞாபனம் செய்கிறான்.) ராவணனும் என் வாத்ஸல்யத்திற்குப் பாத்திரனென்றதால், தாங்கள் ஸகல பூதங்களுக்கும் ரக்ஷகன். ஞானம் சக்தி முதலிய அனந்த கல்யாண குண பரிபூரணன்; ஆகையால் தங்களையே சரணமடைந்தேன். என் வாஸஸ்தானமான லங்கையையும் மித்திரர்களையும் அவர்களால் கிடைத்த தனங்களையும் விட்டு, எனக்கு ராஜ்யம் முதலிய ஸகல விரும்பக்கூடிய வஸ்துக்களும் என் பிராணனும் இஹபர லோகங்களில் அனுபவிக்கும் ஸுகங்களும் எல்லாம் தங்களுடைய கைங்கரியமே. அதைத்தவிர நான் வேறொன்றையும் அபேக்ஷிக்கவில்லை" என்று தெரிவித்தான்.

இப்படி ஸகலப்பிரயோஜனங்களையும் விட்டு ராமனிடத்தில் ஸகல பாரத்தையும் வைத்து, அவருடைய கைங்கரியத்தையே பரம பிரயோஜனமாய் அபேக்ஷித்த விபீஷணனை ராமன், "மித்ரா! சரணமடைந்தேனென்று சொன்னவுடனே உன்னை அங்கீகரிக்கவேண்டியது. இதுவரையில் தாமதித்ததை மன்னிக்கவேண்டும்" என்று அவனை ஸமாதானம் செய்து, அவனுடைய மனத்தைக் குளிரச் செய்து, அவனைக் கண்கொட்டாமல் பார்த்துப் பார்த்துப் பரமானந்தமடைந்தார். பிறகு விபீஷணன், "ஸ்வாமி! நான் தங்களுக்கு என் தேகத்தால் கைங்கரியம் செய்யும்படி ஆக்ஞாபிக்க வேண்டும்" என்று பிரார்த்திக்க, ராமன், 'பிறகு அதைப்பற்றி யோசிப்போம்.

இப்பொழுது வார்த்தையால் கைங்கரியம் செய். ராக்ஷஸர்களுடைய பலாபலத்தை எனக்கு வாஸ்தவமாய்த் தெரிவி" என்றார். ('ராக்ஷஸர்களுடைய' என்றதாலும் 'உன்னைச் சேர்ந்தவர்களுடைய' என்று சொல்லாததாலும், "இவன் ராக்ஷஸ ஜாதியல்ல. இக்ஷ்வாகு வம்சத்தில் என்னைப்போல் பிறந்தவன்." என்று எண்ணினதாகத் தெரிகிறது. பகவானை ஆச்ரயித்தால் அவருக்கு ஸமமான பதவியை அவர் உடனே கொடுப்பார்.) அதற்கு விபீஷணன், "ஸ்வாமி! ராஜசிரேஷ்டரே! கந்தர்வ உரக ராக்ஷஸர்கள் முதலிய ஸகல பூதங்களாலும் தனக்கு மரணமில்லை என்று ராவணன், பிரஹ்மாவால் வரம் கொடுக்கப்பட்டவன். எனக்கு மூத்தவனும் ராவணனுக்குத் தம்பியுமான கும்பகர்ணன் மஹா தேஜஸ்வி; மஹாவீரியவான்; யுத்தத்தில் இந்திரனுக்கு ஸமானன். ராவணனுடைய ஸேனாதிபதியான பிரஹஸ்தன் யுத்தத்தில் பெயர் பெற்றவன்; கைலாஸத்தில் குபேரனுடன் நடந்த யுத்தத்தில் மாணிபத்ரனென்ற அவனுடைய ஸேனாதிபதியைத் தோற்கடித்தவன். ராவண புத்திரனான இந்திரஜித் இடைவிடாமல் பாணங்களை வர்ஷிப்பான். அவனுடைய கவசத்தை எவரும் பிளக்க முடியாது. ஹோமங்களால் அக்னிபகவானைத் திருப்தி செய்து, யுத்தக்களத்தில் வில்லைக் கையிலெடுத்து நின்று, ஸேனையை அணிவகுத்தவுடன் ஒருவர் கண்ணிலும் படாமல் மறைந்திருந்து சத்துருக்களைக் கொல்வான். மஹோதரன் மஹாபார்சுவன் அகம்பனன் முதலிய ஸேனாதிபதிகள் யுத்தத்தில் லோகபாலர்களுக்கு ஸமானர்கள். நினைத்த ரூபமெடுக்கக் கூடியவர்களாய் மாம்ஸம் ரத்தம் முதலியவைகளையே ஆஹாரமாக உடைய ராக்ஷஸர்கள் லங்கையில் பதினாயிரம் கோடி இருக்கிறார்கள். அவர்களுடன் சென்று ராவணன் லோக பாலர்களை எதிர்த்து யுத்தத்தில் ஜயித்தான். அவர்களுக்கு ஸஹாயமாக இருந்த தேவகணங்களையும் இருந்த இடம் தெரியாமல் துரத்தியடித்தான்" என்றான்.

கலங்காத பராக்கிரமமுள்ள ராமன், விபீஷணன் சொன்னதைக் கேட்டு, செய்யவேண்டிய காரியங்களை நன்றாய் ஆலோசித்து, "ராக்ஷஸர்களுடைய வீரியத்தையும் பராக்கிரமத்தையும் கிருத்யங்களையும் பற்றி நீ சொன்னதை நன்றாய்க் கவனித்தேன். ராவணனையும் அவனுடைய மந்திரிகளையும் பந்துக்களையும் ஸைன்யங்களையும் யுத்தத்தில் நாசம் செய்து உன்னை லங்காதிபதியாய் அபிஷேகம் செய்கிறேன்; நான் சொல்வது ஸத்தியமென்று நம்பு. ராவணன் ரஸாதலம் பாதாளம் முதலிய கீழ்லோகங்களில் ஒளிந்துகொள்ளட்டும்; தனக்கு வரம்கொடுத்த பிரஹ்மாவைச் சரணமடையட்டும்; எங்கிருந்தாலும் அவனை உயிரோடு விடமாட்டேன். ராவணனையும் அவனுடைய புத்திர, மித்திர, பந்து, ஸைன்யங்களையும் யுத்தத்தில் கொல்லாமல் அயோத்யையில் பிரவேசிக்கமாட்டேன். இப்படி என் ஸஹோதரர்களான லக்ஷ்மண பரத சத்துருக்னர்களின் பேரில் ஆணையிட்டுச் சொல்லுகிறேன்" என்றார்.



தான் வெறுப்படைந்து பிரயோஜனமற்றதென்று விட்டு வந்த ராஜ்யத்தைத் தனக்குக் கொடுக்கிறேனென்று ராமன் பிரதிக்ஞை செய்ததைக் கேட்டு, தான் அபேக்ஷித்த பரமப் பிரயோஜனமான ராமகைங்கரியத்தையே வேண்டி, விபீஷணன் அவரை நமஸ்கரித்து, அவர் ஸகல பூதங்களுக்கும் மங்களத்தைச் செய்பவரென்றதாலும் தான் சரணாகதி தர்மத்தையும் கைங்கரிய மஹிமையையும் பூரணமாக அறிந்தவனாகையாலும், "ஸ்வாமி! ராக்ஷஸர்களை நாசம் செய்வதிலும் லங்கையைப் பிடித்து இடிப்பதிலும் என்னால் கூடியவரையில் என் உயிருள்ளமட்டும் ஒத்தாசை செய்கிறேன். தங்களுடைய ஸைன்யத்தில் சேரும்படி எனக்கு உத்திரவு கொடுக்கவேண்டும்" என்றான். ராம கைங்கரியத்தைத் தவிர வேறு பலனை விரும்பாத விபீஷணனை ராமன் பிரியத்துடன் ஆலிங்கனம் செய்துகொண்டு, "எதிர்பாராமல், நடுவில் கிடைக்கும் பலனையும் நீ பெறவேண்டும். என் ஆக்ஞையைத் தட்டாதே" என்று சொல்லி, லக்ஷ்மணனைப் பார்த்து, "குழந்தாய்! ஸமுத்திரத்திலிருந்து ஜலத்தைக் கொண்டு வா! இவன் தன் தாஸபாவத்தை நன்றாக அறிந்த மஹாஞானி. ராஜ்யாபிஷேகத்தைக் கொஞ்சமாவது அபேக்ஷித்தவனல்ல. என் அன்பைப் பெற்ற இவனிடத்தில் நான் வைத்த பிரீதியால் இவனுக்குக் கொடுக்கும் வரன் பலனைக் கொடுக்கச் செய்யவேண்டியது உன் கடமையல்லவா? ஆகையால் அதிசீக்கிரத்தில் இவனை ராக்ஷஸர்களுக்கு அரசனாக, லங்காதிபதியாக அபிஷேகம் செய்" என்றார்.

அதைக் கேட்டு லக்ஷ்மணன் ராமனுடைய ஆக்ஞைப்படி ஸமுத்திர ஜலத்தை எடுத்துவந்து, வானர சிரேஷ்டர்கள் சூழ்ந்திருக்க, வானர ஸைன்யங்களுக்கெதிரில் விபீஷணனென்ற பரம பாகவதனை லங்கா ராஜ்யத்திற்கு அதிபதியாய் அபிஷேகம் செய்தார்; வானர ஸைன்யங்கள், ராமனுடைய அபார கிருபையையும் பக்தவாத்ஸல்யத்தையும் பார்த்து, "நல்லது நல்லது" என்று கொண்டாடி ஆரவாரித்தன.

('வானரர்களுக்கெதிரே' என்றதால் மஹாஜனங்கள் ஸாக்ஷியாயிருக்கையில் செய்த காரியத்தை விபீஷணன் பிறகு தட்ட முடியாதென்றும், ராமன் அந்த பிரதிக்ஞையை அவசியம் நிறைவேற்ற வேண்டியதென்றும்; 'ராமனுடைய உத்திரவால்' என்றதால் ரக்ஷகனுடைய ஆக்ஞையைத் தட்டக் கூடாதென்ற நியாயத்திற்குக் கட்டுப்பட்டு விபீஷணன் ஒப்புக்கொண்டானென்றும் கருத்து.)

பிறகு வேறொரு ஸமயத்தில் ஹனுமானும் ஸுக்ரீவனும் விபீஷணனை ஏகாந்தத்தில் அழைத்து, "மித்ர! வருணனுக்கு இருப்பிடமாயும் ஒருவரும் நெருங்கக்கூடாததாகவும் இருக்கும் இந்த ஸமுத்திரத்தை எப்படித் தாண்டுவோம்? நாம் மாத்திரமிருந்தாலும் பாதகமில்லை. கணக்கில்லாத இந்த வானர ஸைன்யங்களை அக்கரையில் கொண்டுபோய்ச் சேர்க்க வேண்டுமே" என்றார்கள். அதற்கு விபீஷ

ணன், "ரகுவீரன் ஸமுத்திர ராஜனைச் சரணமடையட்டும்; அதைக் காரணமாய்க் கொண்டு அவன் தகுந்த உபாயத்தைச் சொல்லுவான். எல்லையற்ற இந்த ஸமுத்திரம் இக்ஷ்வாகு வம்சஸ்தனை ஸகரசக்கரவர்த்தியின் புத்திரர்களால் வெட்டப்பட்டது. ஆகையால் தன் பந்துவான ராமனுக்கு அவன் அவசியம் ஸஹாயம் செய்வான். செய்த உபகாரத்தை மறப்பவனல்ல" என்றான். ஸமயோசித புத்தியுடைய விபீஷணன் இப்படிச் சொல்ல, ஸுக்ரீவனும் ஹனுமானும் ராமனிடத்தில் வந்து அந்த யோசனையைத் தெரிவித்தார்கள். ஸ்வபாவமாய் தர்மசீலனான ரகுவீரனுக்கு அது பிரியமாக இருந்தது. தான் தனியாக உத்தேசித்த காரியத்தை முடிக்கக் கூடுமானாலும், விபீஷணனுடைய ஸமயோசித யோசனையையும் மதிக்கக்கருதி, வானரராஜனை ஸுக்ரீவனைப்பார்த்துப் புன்சிரிப்புடன், "ஸுக்ரீவ! லக்ஷ்மணா! விபீஷணனுடைய யோசனை எனக்கு இஷ்டமாய் இருக்கிறது. ஸுக்ரீவன் மஹா புத்திமான்; நீங்கள் யோசனையில் ஸமர்த்தர்கள்; நீங்களிருவரும் கலந்து ஆலோசித்து எது செய்வது யுக்தமென்று உங்களுக்குத் தோன்றுகிறதோ அதைச் சொல்லுங்கள்" என்றார். அவர்கள் கைகூப்பி, "இப்பொழுது நமக்கு வேறு வழியில்லை. விபீஷணன் சொல்லும் உபாயம் அதிக ஸுலபமாயும் ஸுகத்தைக் கொடுக்கக்கூடியதாயும் இருக்கிறது. ஆகையால் எங்களுக்கு இஷ்டமே. கோரமான இந்த ஸமுத்திரத்தில் அணைகட்டாமல் ஸுராஸுரர்களும் லங்கையை நெருங்க முடியாது. ஆலோசனையில் சூரனான விபீஷணனுடைய வார்த்தைகள் நிஜமாயும் ஹிதமாயும் இருக்கின்றன. தாமதிக்காமல் அப்படியே செய்து ஸமுத்திர ராஜனை பிரார்த்தியுங்கள். ராவணனால் ஆளப்பட்ட லங்கைக்கு நமது ஸைன்யங்களுடன் போவதற்கு வேறு உபாயமில்லை." என்றார்கள்.

பிறகு ஸமுத்திரக்கரையில் தர்ப்பைகளைப் பரப்பி ஹோம குண்டத்தில் ஜ்வலிக்கும் அக்னியைப்போல், ராமன் அவைகளின் மீது படுத்தார்.

ஏவமுக்த: குஶாஸ்தீர்ணே தீரே நத3நதீ3பதே: |
ஸம்விவேஶ ததா3 ராமோ வேத்3யாமிவ ஹுதாஶந: || (41)

---

## ஸர்க்கம் 20

# ராவணன் ஸுக்ரீவனைக் கலைத்தது

ததோ நிவிஷ்டாம் த்4வஜிநீம் ஸுக்3ரீவேணாபி4பாலிதாம் |
த3த3ர்ஶ ராக்ஷஸோऽப்4யேத்ய ஶார்தூ3லோ நாம வீர்யவாந் || (1)

பிறகு சார்த்தூலனென்ற ராக்ஷஸன், ஸமுத்திரக் கரையில் இறங்கியிருக்கும் ஸுக்ரீவஸைன்யத்தை வந்து பார்த்தான். அவன் துஷ்டனான ராவணனுடைய ரஹஸ்யதூதன். (அகாலத்தில் தூதர்களை அனுப்பினதால் ராஜநீதிக்குக் கட்டுப்படாத துஷ்டன் ராவணன்.) ஸைன்யத்தை நான்கு புறத்திலும் சுற்றிப்பார்த்து, அதிவேகமாக ராவணனிடத்தில் சென்று மஹாராஜ! ஒரு பெரிய வானர ஸைன்யம் நமது லங்கையை நோக்கி வந்துகொண்டிருக்கிறது. ஆழமற்று அளவிடக் கூடாத மஹா ஸமுத்திரத்தைப்போல் இப்பொழுது ஸமுத்திரக் கரையில் இறங்கிப் பத்து யோஜனை பரவியிருக்கிறது. தசரத புத்திரர்களான ராம லக்ஷ்மணர்கள் உத்தம ஆயுதங்களுடன் ஸீதையைத் தேடி வந்திருக்கிறார்கள். நான் ஸாமான்யமாய்ப் பார்த்துவந்தேன்; தாங்கள் அதன் உண்மையை எப்படியாவது அறியவேண்டும். அதிசீக்கிரத்தில் தூதர்களை அனுப்புங்கள். ராமனிடத்தில் தண்டோபாயம் பிரயோஜனப்படாது. ஸாமதான பேதமென்ற உபாயங்களைத் தகுந்தபடி பிரயோகியுங்கள்" என்றான். அதைக் கேட்டு ராவணன் நன்றாக ஆலோசித்து, செய்யவேண்டிய காரியத்தை நிச்சயித்துக் கொண்டு, சொன்ன விஷயங்களை நன்றாக கிரஹித்துச் சாதுரியமாகப் பேசக்கூடிய சுகனென்ற ராக்ஷஸனை அழைத்து, "நீ இப்பொழுதே ஸுக்ரீவனிடம் சென்று, நான் சொல்லும் வார்த்தைகளை ஸரியாகவும் மதுரமாகவும் தைரியமாகவும் சொல். 'மஹாராஜ! நீ ஸூரியனுடைய புத்திரன்; மஹாபலவான்; ரிக்ஷரஜஸென்ற வானரவீரனுக்குப் பிறந்தவன். அவன் பிரஹ்மாவிற்குப் பௌத்ரனாகையால் நீ எனக்குப் பந்து. ராமனை ஆசிரயித்து உனக்கு ஆகவேண்டியது ஒன்றுமில்லை; ஆசிரயிக்காவிட்டால் கெடுவது ஒன்றுமில்லை; என்னுடன் விரோதித்துப் பலனில்லை. வாலி எனக்கு பரமமித்திரன்; ஆகையால் நீ எனக்குத் தம்பியாகிறாய்; நியாயமாய் என்னுடன் சேரவேண்டியவன். ராமனுடைய பாரியையை நான் அபகரித்தால் யாதொரு ஸம்பந்தமும் இல்லாத உனக்கு என்ன நஷ்டம்? நீ புத்திமானாகையால் இந்த விஷயத்தை நன்றாக யோசித்துக் கிஷ்கிந்தைக்குத் திரும்பிப் போ. ஆரம்பித்த 'காரியத்தை கைவிடலாமா' என்றால், தேவாஸுரர்களும் இந்த லங்கையைக் கண்ணெடுத்து பார்க்க முடியாது; கேவலம் மனிதர்களும் குரங்குகளும் இதைப் பிடிக்கமுடியுமா? என்று சொல்" என்றான்.

உடனே சுகன் பக்ஷிரூபத்துடன் ஆகாசமார்க்கமாய் ஸமுத்திரத்தைத் தாண்டி வானர ஸைன்யத்துக்கு நேரே வந்து, ஸுக்ரீவனைப் பார்த்து ஆகாசத்திலிருந்து கொண்டே ராவணன் சொன்ன ஸமாசாரத்தை ஒன்று விடாமல் சொன்னான். அதற்குள் வானரர்கள் ஆகாசத்தில் தாவி, சுகனைப் பிடித்து அடித்துக் குத்திக்கிழிக்க ஆரம்பித்தார்கள். அதைப் பொறுக்க முடியாமல் சுகன் ஆகாசத்திலிருந்து கீழே விழுந்தான். அப்பொழுதும் வானரர்கள் உபத்திரவிப்பதைப் பார்த்து, "ஐயோ!

ராம! இவர்களை அடக்குங்கள்; தூதர்களைக் கொல்லலாமா? தன் யஜமானன் சொல்லி அனுப்பின வார்த்தைகளைச் சொல்லாமல் தன் அபிப்பிராயத்தைச் சொல்லுகிறவன் தூதனல்ல. அவனையல்லவா தண்டிக்க வேண்டும்'' என்று கதறினான். அவனுடைய தீனமான வார்த்தைகளைக் கேட்டு, ராமன் வானரர்களைப் பார்த்து, "இவனைக் கொல்ல வேண்டாம்'' என்று ஆக்ஞாபித்தார். உடன் அவன் ஆகாசத்தில் கிளம்பி, வானரர்கள் தன்னை உபத்திரவித்ததையும் தன் இறக்கைகளை ஒடித்ததையும் லக்ஷியம் செய்யாமல், "ஸுக்ரீவ! பராக்கிரமசாலியே! நான் உனக்குச் சொல்லவேண்டியதென்ன? உன் ஸத்வத்தையும் பராக்கிரமத்தையும் ஸகல லோக கண்டகனான ராவணனுடைய வீரியத்தையும் யோசித்துப் பார்க்கவேண்டியது. நான் உன்னிடத்திலிருந்து பதில் ஸமாசாரம் கொண்டு போகாவிட்டால் ராவணன் என்னைக் கொல்வான்'' என்றான்.

அதைக் கேட்டு ஸுக்ரீவன் மஹாபலவானும் நிகரற்ற தைரியமுடையவனுமாதலால், "அடே! ராக்ஷஸ! நீ எனக்கு மித்திரனல்ல. தமயனென்று எப்படிச் சொல்லிக் கொள்வாய்? உன்னிடத்தில் நான் இரக்கம் காட்ட நியாயமில்லை. நீ எனக்கு யாதொரு உபகாரமும் செய்யவில்லை. உன்னிடத்தில் எனக்கு பிரியமும் இல்லை. என் மித்திரனான ராமனுக்கு நீ சத்துருவாகையால் எனக்கும் சத்துரு. என் சத்துருவான வாலிக்கு நீ மித்திரனானதால் எனக்கும் சத்துரு. ஆதலால் எனக்கு நீ நேராக யாதொரு அபகாரம் செய்யாவிட்டாலும், வாலியைப்போல் உன்னையும் கொல்வதற்கு இந்த ஒரு காரணமே போதும். உன்னையும் உன் புத்திரர்களையும் உன் பந்துக்களையும் உன் ஞாதிகளையும் யுத்தத்தில் கொன்று என் அளவற்ற வானர ஸைன்யங்களால் உன் ராஜதானியைச் சாம்பலாக அடிப்பேன். முட்டாளே! நீ செய்த அபகாரத்திற்காக உன்னைச் சேர்ந்தவர்களும் நாசமடையப் போகிறார்கள். தேவர்களும் இந்திரர்களும் உன்னை அதிக ஜாக்கிரதையாக ரக்ஷித்தாலும் ராமன் உன்னை விடப் போகிறாரா? லங்கையை விட்டு வேறிடத்திற்குப் போனால் ராமன் என்ன செய்வாரென்றால், நீ எங்கே மறைந்தாலும் ஸூரிய வீதியில் ஒளிந்தாலும், பாதாள லோகங்களில் அடைக்கலம் புகுந்தாலும் தப்ப முடியுமா? ஸகல லோகங்களிலுமுள்ள எந்த பிராணிகளும் பிசாச, ராக்ஷஸ, கந்தர்வ, அஸுர, தேவர்கள் முதலிய கணங்களாயிருந்தாலும் ராமனுடைய சத்துருவான உன்னைக் காப்பாற்றத் துணிவார்களா? 'ராமனுடன் சேர்ந்திருந்தால் ஜடாயுவைப்போல் உன்னையும் கொல்வேன்' என்று பயமுறுத்துகிறாயோ? வயது சென்று அங்கம் தளர்ந்து பலமற்ற ஒரு கிழக்கழுகைக் கொன்றது என்ன பெருமை? அது



என்னிடத்தில் செல்லுமா? 'பார்யையை அபகரிக்கும்போது ராமன் என்ன செய்துவிட்டான்? இப்பொழுது என்ன செய்யப்போகிறான்?'' என்றால், அவர் இருக்கும்பொழுது ஸீதையை அபகரித்திருந்தால் அப்பொழுதல்லவா தெரியும்! அது வேண்டாம்; லக்ஷ்மணனிருந்தாலும் போதுமே! ஸீதையைக் கொண்டு போய் வைத்ததால் உனக்கு நேர்ந்த அனர்த்தத்தை நீ கொஞ்சமாவது அறியவில்லையே! ராமன் மஹாபலவான்; மஹாபுத்திமான், தேவர்களாலும் எதிர்க்க முடியாதவன்; இக்ஷ்வாகு குலசிரேஷ்டனென்று அவருடைய நிஜஸ்வரூபத்தை அறியாமற் போனாயே. உன் பிராணனை அவர் கொள்ளை கொள்ளப் போகிறாரே'' என்றான் ஸுக்ரீவன்.

பிறகு வாலிபுத்திரனான அங்கதன், "மஹாராஜ! இவன் தூதனல்ல; நமது ரஹஸ்யங்களைக் கண்டுபிடிக்க சத்துருவால் அனுப்பப்பட்ட சாரன்; இவனைக் கொல்வதில் தோஷமில்லை; இங்கிருந்துகொண்டே நம்மைப்பற்றின ஸகல செய்திகளையும் கவனித்து அறிந்துகொண்டான். இவனை லங்கைக்குத் திரும்பிப்போகும்படி விடக்கூடாது, பிடியுங்கள்'' என்றான். உடனே ஸுக்ரீவன் அதற்கு ஸம்மதிக்க, வானரர்கள் ஆகாசத்தில் பாய்ந்து சுகனைப் பிடித்து, அவன் அனாதையைப்போல் கதறுவதைக் கொஞ்சமும் கவனிக்காமல் இறுகக்கட்டி குரூரமாய் உபத்திரவித்தார்கள். அதைப் பொறுக்காமல் சுகன் ராமனைப் பார்த்து, "தசரத புத்திர! வானரர்கள் என் இறக்கைகளை ஒடித்துக் கண்களைக் குத்துகிறார்கள். இவர்களுடைய கையால் நான் மரணமடைந்தால், நான் பிறந்த க்ஷணம் முதல் இறக்கும் க்ஷணம் வரையில் செய்த ஸகல பாபங்களும் உன்னைச் சேரக்கடவது'' என்றான். அந்தத் தீனமான வார்த்தைகளைக் கேட்டு, ராமன் "இவனைக்கொல்லாமல் விட்டுவிடுங்கள்'' என்று வானரர்களுக்கு ஆக்ஞாபிக்க, அவர்கள் சுகனைத் தெற்குக்கரையில் கொண்டுபோய் விட்டார்கள்.

நாக4ாதயத் ததா3 ராம: ஶ்ருத்வா தத்பரிதே3விதம் |
வாநரா நப்3ரவீத்,ராமோ முச்யதாம் தூ3த ஆக3த: ‖ (34)

---

## ஸர்க்கம் 21

## ராமன் ஸமுத்திரராஜனிடத்தில் கோபித்தது

தத: ஸாக3ரவேலாயாம் த3ர்ப4ாநாஸ்தீர்ய ராக4வ: |
அஞ்ஜலிம் ப்ராங்முக2: க்ருத்வா ப்ரதிஶிஶ்யே மஹோத3தே4: ‖ (1)

பிறகு ராமன் ஸமுத்திரக்கரையில் தர்ப்பங்களைப் பரப்பி ஸகல பூதங்களுக்கும் அபயதானம் செய்யும் குலத்தில் பிறந்தவராக இருந்தும் ஸமுத்திரராஜனுக்குக் கைகூப்பி, கிழக்கு

முகமாய் ஸமுத்திரத்தை நோக்கி, வலதுபுஜத்தைத் தலையணையாய் வைத்துக்கொண்டு, மற்றொரு ஸமுத்திரம் படுத்திருப்பது போல் படுத்தார். எந்த ஸமயத்திலும் நெருங்கமுடியாதவர். தசரத சக்கரவர்த்தியால் வெகு செல்வமாக வளர்க்கப்பட்ட ராமனுடைய மிருதுவான தேகம் ஸமுத்திரக்கரையில் கரடுமுரடான கற்களின்மேல் படுத்தது என்ன கஷ்டம்! ஸர்வலோக சரண்யன், ஸமுத்திரராஜனைச் சரணமடையும்படி நேர்ந்தது. என்ன கஷ்டம்! பூலோகத்தில் அவதாரம் செய்வதற்கு முந்தி ஸ்ரீவைகுண்டத்திலும் அயோத்யையிலும் வஸிக்கையில், விலையற்ற ரத்தினங்களிழைத்த விசித்திரமான தங்க ஆபரணங்களால் அலங்கரிக்கப்பட்ட புஜம்; ஸர்வாபரண பூஷிதைகளான உத்தம ஸ்த்ரீகளின் கைகளால் பலவிதமாய் ஸ்நான காலத்திலும் அலங்காரம் செய்யும் ஸமயத்திலும் சந்தனம் அகில் குங்குமம், முதலிய வாசனைத் திரவியங்களால் நன்றாகப் பூசப்பட்ட புஜம்; பாலஸூரியனைப் போன்ற குங்குமத்தால் அலங்கரிக்கப்பட்ட புஜம்; கங்காப்பிரவாஹத்தில் தக்ஷகனென்ற மஹாநாகம் படுத்திருப்பதுபோல் ஹம்ஸதூளிகா சயனத்தில் விளங்கின புஜம்; ஸீதையின் சிரஸால் அலங்கரிக்கப்பட்ட புஜம்; யுத்த பூமியில் கோட்டைவாசலின் தாழ்ப்பாளைப்போல சத்துருக்களைத் தடுக்கும் புஜம்; அவர்களுடைய சோகாக்னியை வளரச் செய்யும் ஆஹுதிகளைக் கொடுக்கும் புஜம்; மித்திரர்களுக்கு அளவற்ற ஆனந்தத்தைக் கொடுக்கும் புஜம்; யானைத் துதிக்கையைப்போல் நீண்டு உருண்ட புஜம்; இந்தப் பூமண்டலம் முழுவதற்கும் ஆச்சரியமான புஜம்; இடைவிடாமல் பாணப்பிரயோகம் செய்வதால் நாண் கயிற்றின் தழும்பேறிய புஜம்; பயங்கரமான கோட்டைத்தாள்போல் கெட்டியான புஜம்; கணக்கில்லாத பசுக்களைத் தானம்கொடுத்த புஜம்; இப்படிப்பட்ட வலது புஜத்தைத் தலையணையாக வைத்துக்கொண்டு ஸகல பூதங்களுக்கும் அபயம்கொடுக்கும் ராமசந்திரன், "இன்று நான் ஸமுத்திரத்தைத் தாண்டவேண்டும்; அல்லது மரணமடைய வேண்டும்" என்று நிச்சயித்து சாஸ்திரவிதிப்படி மனோவாக்குக் காயங்களை அடக்கிப் பிடித்து, ஸமுத்திர ராஜனை உபாஸித்தார்.

இப்படி ராமன் நியமம் தவறாமல் மூன்றுதினங்கள் வரையில் தர்ப்பத்தின்மேல் படுத்திருந்தார். (தான் ஸர்வசக்தனாக இருந்தும் லோகத்தில் தர்மத்தை அனுஷ்டித்துக் காட்ட ஸமுத்திர ராஜனை இடைவிடாமல் உபாஸித்தார். சரணாகதிதர்மத்தில் தனக்குள்ள விசேஷ ப்ரீதியை லோகத்தாருக்குக் காட்ட, தானே அதை அனுஷ்டித்தார். மஹாலக்ஷ்மியைப்புருஷகாரமாய்க்கொண்டு பக்தர்கள் லக்ஷ்மீபதியைச் சரணமடைவதுபோல், தானும்நதிகளைப்புருஷகாரமாய்க்கொண்டு நதீபதியான ஸமுத்திர ராஜனைச் சரணமடைந்தார். ஸகலப் பிராணிகளையும் சுண்டுவிரலின் நுனியால் கொல்வேனென்ற பராக்கிரமத்தையுடைய ராமன், முதலில் ஸாமமென்ற உபாயத்தை அனுஷ்டிக்கவேண்டியது என்ற நீதியை அறிந்தவர். அபராதம் செய்யாதவனைத் தண்டிக்கக் கூடாதென்ற தர்மத்தை அறிந்தவர்.) இப்படி ராமன் மனோவாக்குக் காயங்களை அடக்கி விதிப்படி பூஜித்தும், ஸமுத்திர தேவதை அக்ஞானத்தால் வெளியில் வராமலிருந்தது.



பிறகு ராமனுக்கு ஸமுத்திர ராஜனிடத்தில் பிறந்த கோபத்தால் கடைக்கண் சிவந்து, தன் மனத்திலுள்ள கோபத்தை அறிந்து புன்சிரிப்புடன் ஸமீபத்திலிருக்கும் லக்ஷ்மணனைப் பார்த்து, "இந்த ஸமுத்திர ராஜனுடைய கர்வத்தைப் பார்த்தாயா? இன்னும் வெளியில் வரவில்லை. கோபிக்காமலிருப்பது, அபராதங்களைப் பொறுப்பது கபடமில்லாமலிருப்பது, பிரியமாய் பேசுவதென்ற உத்தம குணங்களை, குணமில்லாதவர்கள் ஸாமர்த்தியமில்லாததற்கு அடையாளமென்று எண்ணுகிறார்கள். தன்னைப் புகழ்ந்துகொண்டு, வஞ்சகனாய், இரக்கமில்லாமல், எல்லோரையும் துரத்தியடித்துக்கொண்டு ஸாதுக்களையும் கெட்டவர்களையும் பேதமில்லாமல் தண்டித்துக் கொண்டிருப்பவனையே ஜனங்கள் மதிக்கிறார்கள். பலத்தாலும் பராக்கிரமத்தாலும் ஸம்பாதிக்கப்படவேண்டிய கீர்த்தியும், யுத்தத்தில் ஜயமும் ஸாமமென்ற உபாயத்தால் அடைய முடியாது. இன்று என் பாணங்களால் இந்த ஸமுத்திரத்திலிருக்கும் மகரங்களைக் கொன்று, இடைவெளியில்லாமல் எங்கும் மிதக்கும்படி செய்வேன்; பெரிய சரீரங்களையுடைய மஹாஸர்ப்பங்களையும் கடல்யானைகளையும் சின்னபின்னமாய்த் துண்டிக்கப்பட்ட அங்கங்களுடன் மிதக்கச் செய்வேன்; சங்கம் முத்துச் சிப்பி ரத்தினம் முதலியவைகளாலும் மீன்களாலும் மகரங்களாலும் நிறைந்த இந்த ஸமுத்திரத்தை என் பாணங்களால் வற்றச் செய்கிறேன். 'பொறுமையையே ஆபரணங்களாகக்கொண்ட தங்களுக்கு இந்த வார்த்தைகள் தகுமா' என்றால், ஸமுத்திரத்தை வற்றச் செய்ய ஸங்கல்பித்தும், இவ்வளவுகாலம் பொறுமையுடன் ஸமுத்திர ராஜனைக் காலைப் பிடித்து வேண்டிக்கொண்டேன். பிறருடைய ஸஹாயமில்லாமல் இந்த ஸமுத்திரத்தைத் தாண்டக்கூடிய என்னை, இவன் கையாலாகாதவனென்று எண்ணிக்கொண்டிருக்கிறான்; இப்படிப்பட்டவர்களிடத்தில் பொறுமை வைப்பது முற்றிலும் பிசகு. இவன் மீன்களும், முதலைகளும், ஸர்ப்பங்களும் தங்கும் ஒருஜலஸமுத்திரத்திற்கு காவற்காரன். அதை மறந்து, தான் அயோத்தியாதிபதி என்றும் கோஸலாதிபதி என்றும் எனக்கு ஸமன் என்றும் எண்ணுகிறான். 'இப்பொழுது பொறுமையைக் கைவிடக்கூடாதே' என்றால், இவன் பொறுமை வைப்பதற்குத் தகுந்தவனல்ல; ராக்ஷஸர்களுக்கும் இவன் இருப்பிடம்; அவர்களுடைய ஸஹவாஸத்தால் இவனுடைய புத்தி கெட்டிருக்கிறது.

லக்ஷ்மண! ஒருவேளை என் கோபமான வார்த்தைகளைக்கேட்டாவது வரமாட்டானா என்று இதுவரையிலும் பார்த்தேன்; இன்னும் வரவில்லை. ஆகையால் குணமற்ற இந்த மூடனை வசப்படுத்துவதற்குக் குணத்துடன் கூடின (குணமென்றால் நாண்கயிறு) வில்லை எடுத்து வா. நமக்கு வணங்காத இந்தத்துஷ்டனைத் திருத்துவதற்கு என் வில்லைக் கொண்டு வா." (ஸமுத்திரம் ஆதிசேஷனுக்குப் படுப்பதற்கு இடம் கொடுக்கிறபடியால் ஆதிசேஷாவதாரமான லக்ஷ்மணன் அதனிடத்தில் இரக்கம்கொண்டு வில்லை எடுத்துவர தாமஸித்தார்.) அதைக் கண்டு ராமன், "ஸுமித்திரையின் புத்திர! உன் தாயின் வார்த்தையை மாத்திரம் கேட்கவேண்டுமென்றும், உனக்கு மூத்தவனை என் வார்த்தையைக் கேட்கக்கூடாதென்றும் நியாயமுண்டோ? அப்படியும் நீ அயோத்யையை விட்டுப் புறப்படுகையில், 'ராமனைத் தசரதராக நினைத்து நட' என்று உன் தாய் சொன்னதையும், 'ராம கைங்கரிய விஷயத்தில் அஜாக்கிரதையாக இராதே' என்று சொன்னதையும் மறந்தாயோ? (லக்ஷ்மணன் வில்லைமாத்திரம் எடுத்துவர, ராமன்) பாணங்களையும் எடுத்து வா. (விளையாட்டாய்ப் பிரயோகிக்கும் சில பாணங்களை லக்ஷ்மணன் எடுத்துவர, ராமன்) கண் வைத்தவுடனே கொல்லும் ஸர்ப்பங்களைப் போன்ற குரூரமான பாணங்களை எடுத்துவா. (ஸமுத்திரத்தைத் தாண்டுவோர்க்குப் பாணங்களால் பிரயோஜனமென்னவென்று லக்ஷ்மணன் கேட்க, ராமன்) இந்த ஸமுத்திரம் இதுவரையில் எனக்கெதிரே வந்து அணை கட்டுவதற்கு இடம் கொடுக்காததால் ஒரு சொட்டு ஜலமில்லாமல் இதை வற்றச் செய்கிறேன். (ராமபாணங்கள் ஸகல வஸ்துக்களையும் சாம்பலாக எரிக்கும்.)

தன் தாயாதியான ஸகரசக்கரவர்த்தியால் வெட்டப்பட்ட இந்த ஸாகரம், என்னிடத்தில் தாயாதியைப்போல் நடந்துகொள்ளுகிறபடியால், நானும் அதற்குத் தகுந்தபடியே நடந்துகொள்வேன். ஸகரனுடைய அறுபதாயிரம் புத்திரர்களால் வெட்டப்பட்ட இந்த ஸமுத்திரத்தை நான் ஒருவனே வற்றச் செய்கிறேன். என் காரியத்திற்கு இடையூறு செய்த இவனுடைய தலையில் என் வானரங்களை அடிவைத்து மிதிக்கச் செய்கிறேன். (ஸமுத்திரத்தில் அணைவேண்டாம்; வானரர்கள் நடந்தே அக்கரை சேரும்படி செய்கிறேன்.) ஒருவராலும் கலக்கமுடியாததென்று இது பெயர் பெற்றிருந்தாலும் இன்று என் கோபத்திற்கு இலக்காகி கலங்குவதைப் பார். நான்கு புறங்களிலும் ஏற்பட்ட எல்லையைத் தாண்டாதென்று பெயர் பெற்ற இந்த ஸமுத்திரத்தை என் பாணங்களால் எல்லையற்றுக் கரைபுரளும்படி செய்கிறேன். இதில் வஸிக்கும் தானவர்களும் வருணனும்இதைக் காப்பாற்ற முடியுமா பார்ப்போம்" என்று வில்லைக் கையிலெடுத்துக் கோபத்தால் கண்களை உருட்டி விழித்து பிரளய காலாக்னியைப்போல் ஜ்வலித்துக்கொண்டு, பிறரால் நெருங்க முடியாத தேவேந்திரன் வஜ்ராயுதத்தைப் பிரயோகிப்



பதைப்போல், வில்லை வளைத்து நாணேற்றித் தீக்ஷ்ணமான பாணங்களைப் பிரயோகித்து, ஜகத்தைப் பயத்தால் நடுங்கச் செய்தார்.

அந்த பாணங்கள், தேஜஸால் ஜ்வலித்துக்கொண்டு அதிவேகமாய் ஸமுத்திரத்தில் புகுந்து, அதிலிருக்கும் மஹாஸர்ப்பங்களை நடுங்கச் செய்தன. அலைகள் மலைகளைப்போல் கிளம்பி முதலைகளுடனும் மகரங்களுடனும் வேகமாய் மோதின. பயங்கரமாகப் புயலடிக்க ஆரம்பித்தது. பெரிய அலைகள் கடும் சப்தத்துடன் கரையில் மோதின. ஜலத்தின் வேகத்தால் சங்கம் முத்து பவழம் ரத்தினம் முதலியவை கரையில் வாரி இறைக்கப்பட்டன. பாணங்களிலிருந்து புகையுடன் கிளம்பும் நெருப்பு ஜ்வாலைகளால் ஸமுத்திர ஜலம் கொதித்துச் சுழிகளுடன் நான்கு புறங்களிலும் பெருகிற்று. அங்கே வஸித்த ஸர்ப்பங்கள், கண்களிலிருந்தும் வாய்களிலிருந்தும் நெருப்புப் பொறிகளைக் கக்கிக்கொண்டு பாணாக்னியை ஸஹிக்க முடியாமல் வருந்தின. பாதாளத்தில் வஸிக்கும் அஸுரர்களும் தானவர்களும் தபித்தார்கள். ராமபாணங்களிடத்தில் அவர்களுடைய மஹாவீரியம் செல்லவில்லை. விந்த்யம், மந்தரம், மேரு முதலிய பர்வதங்களைப்போல் அலைகள் பெரிய ஜலஜந்துக்களை அடித்துக்கொண்டு ஓயாமல் கரையில் மோதின. அலைகள் சுற்றிச் சுற்றி அடிக்க, ராக்ஷஸர்களும் நாகங்களும் திகைக்க, கோரமான ஜல ஜந்துக்களின் பிணங்கள் மிதக்க, பார்க்கப் பயங்கரமாக இருந்தது. அளவற்ற பராக்கிரமத்தையுடைய ராமன் கோபத்தால் சீறிக்கொண்டு, வீணாகாத மஹிமையுள்ள மஹாஸ்திரங்களை பிரயோகிக்க வில்லை வளைத்து நாணை இழுப்பதைக் கண்டு லக்ஷ்மணன் "அண்ணா! இந்த கோபம் தகுமா? பொறுங்கள், பொறுங்கள்" என்று வேண்டினர். ராமன் அதையும் லக்ஷ்யம் செய்யாமலிருக்கக் கண்டு, கோதண்டத்தைக் கெட்டியாய்ப் பிடித்துக்கொண்டார்.

ததஸ்து தம் ராக4வ முக்3ரவேக3ம்
ப்ரகர்ஷமாணம் த4நுரப்ரமேயம் |
ஸௌமித்ரிருத்பத்ய விநிஶ்வஸந்தம்
மாமேதி சோக்த்வா த4நு ராலலம்பே3 ॥ (35)

## ஸர்க்கம் 22

## ஸேதுபந்தனம்

அதோ2வாச ரகு4ஶ்ரேஷ்ட2: ஸாக3ரம் தா3ருணம் வச: |
அத்3ய த்வாம் ஶோஷயிஷ்யாமி ஸபாதாலம் மஹார்ணவ ॥ (1)

**வா**னர சேனைகள் ஸமுத்திரத்தைத் தாண்டுவதற்கு ராமன் ஸமுத்திர ராஜனைச் சரணமடைந்து, அவன் வராதபொழுது, "லக்ஷ்மண! வில்லை எடுத்துவா" என்று பயமுறுத்தி, அப்பொழுதும் வராமலிருக்கக் கண்டு அவனைப் பாணங்களால் கலக்கி, அப்படியும்

வராதபொழுது. அவனுக்கு விசேஷபயத்தைஉண்டாக்குவதற்காகக் கடும்கோபத்துடன், "இப்பொழுதே உன்னை பாதாளம் வரையில் வற்றச் செய்கிறேன். மஹாஸமுத்திரமென்ற பெயரே இல்லாமல் செய்கிறேன். என் பாணங்களால் ஜலம் வற்றி பூமியில் சுவறி இருக்கும் ஜலமுமில்லாமல், உன் சக்திமுழுவதையும் எரித்து, காள மேகங்கள் ஒன்று சேர்ந்து கல்பகோடி காலம் வர்ஷித்தாலும் ஒரு துளி ஜலம்கூட இல்லாமல் நுட்பமான புழுதி கிளம்பும்படி செய்கிறேன்; பார். 'ஸகல ஜலத்தையும் வற்றச்செய்தால் பாதாளம் தெரியும். அங்கே நீங்கள் போகமாட்டீர்கள். ஆகாசமார்க்கமாயல்லவா போகவேண்டும்? இப்பொழுதே அப்படிச் செய்யக் கூடாதா? ஏன் வீணாய்க் கோபிக்கிறீர்கள்' என்றால், என் கோதண்டத்திலிருந்து பிரயோகிக்கும் பாணங்கள் வானர ஸேனைகளை லங்கையில் கொண்டுபோய்ச் சேர்க்கும். என் பலத்தையும் பராக்கிரமத்தையும் நன்றாய் ஆலோசிக்க உனக்குத் தெரியாது. தானவர்களுக்கு வாஸஸ்தானமாக இருக்கும் உனக்கு, ஸஹவாஸ தோஷத்தால் அவர்களுக்குள்ள அக்ஞானம் பழகியிருக்கிறது. நான் பிரயோகிக்கும் பிரஹ்மாஸ்திரத்தால் நீ படும் கஷ்டமும் உனக்குத் தெரியவில்லையே"(ஸமுத்திரத்திற்குமேல்பாணங்களால்அணைகட்டியாவது அல்லது ஜலத்தை கெட்டியாகச் செய்தாவது, அல்லது வற்றச்செய்தாவது என் ஸைன்யத்தை உன்மேல் நடத்திச் செல்லும் சக்தி எனக்கு உண்டு என்பதையும், சரணாகதி சாஸ்திரத்திற்கு வசப்பட்டு உன்னை நான் சரணமடைந்ததையும், நான் ஸகல சக்திகளும் உள்ளவனாக இருந்தாலும் தர்மத்தை அனுஷ்டித்துக்காட்ட உன்னைச் சரணமடைந்தபோது நான் பிரார்த்தனையை நிறைவேற்றாவிட்டால் பெரிய அனர்த்தம் நேருமென்பதையும் நீ அறியவில்லை—தீர்த்தீயம்) என்று பிரஹ்மதண்டத்தைப்போல் வீண்போகாத ஒரு பாணத்தில் பிரஹ்மாஸ்திரத்தை அபிமந்திரித்து உத்தமமான கோதண்டத்தைப் பூட்டி பிரயோகித்தார். அப்பொழுது ஆகாசமும் பூமியும் வெடித்ததுபோலிருந்தது. மஹாபர்வதங்கள் கிடுகிடென நடுங்கின; லோகமெங்கும் இருள் மூடிற்று; திக்குகள் தெரியவில்லை; ஏரிகளும் ஆறுகளும் கலங்கின; ஸூரியசந்திரர்கள் நக்ஷத்திரங்களுடன் வக்ரமாய்ச் சேர்ந்துகொண்டார்கள்; ஆகாசம் இருள் சூழ்ந்து, ஸூரியகிரணங்களால் கொஞ்சம் வெளிச்சத்துடன், கணக்கில்லாத எரிகொள்ளிகளால் பளீர்பளீரென்று வானத்திலிருந்து நிற்காதமென்ற பேரிடிகள் மஹாசப்தத்துடன் விழுந்தன. ஆவஹம் ப்ரவஹம் முதலிய வாயுக்கள் தங்களுடைய ஸ்தானங்களை விட்டு ஸஞ்சரித்தன. பெருங்காற்று மரங்களை முறித்து, மேகங்களை சிதறவடித்து, மலைகளின் நுனிகளைப் பெயர்த்து, சிகரங்களைத் தூளாக்கிற்று. மஹாமேகங்கள் ஆகாசத்தை மறைத்து ஒன்றோடொன்று தாக்கிப் பெரும் சப்தத்துடன் மின்னல்களும் பயங்கரமான இடிகளும் உண்டாயின.



ஸாக³ர: ஸமுபக்ரம்ய பூர்வமாமந்த்ர்ய வீர்யவாந் |
அப்³ரவீத் ப்ராஞ்ஜலிர் வாக்யம் ராக⁴வம் ஶரபாணிநம் || —யுத். 22ஸ-25 சு

அப்பொழுது ஸமுத்திர ராஜன் ராமனை நோக்கி அதிவேகமாய் வந்து, தன் ஸ்நேகத்தைத் தெரிவிக்கும்பொருட்டு அவரை முதலில் கூப்பிட்டு, தலைமேல் கை கூப்பி, கோதண்டபாணியாய் நிற்கும் ராகவனைப் பார்த்து விக்ஞாபனம் செய்தான். (பக்கம் 95 பார்க்க)

கண்ணிற்குத் தென்படும் ஜந்துக்களும், அப்படியில்லாத பிசாசம் முதலியவைகளும் பயந்து நடுங்கி இடியைப்போல் கதறி பிறகு மூர்ச்சையடைந்து பூமியில் விழுந்து அசைவற்றுக் கிடந்தன. ராமன் பாணங்களைப் பிரயோகிக்க ஆரம்பித்தவுடன் ஸமுத்திரத்தின் அலைகள் வேகமாக அடிக்க ஆரம்பித்தன. பிரஹ்மாஸ்திரத்தைப் பிரயோகித்தவுடன் நாகர்கள், ராக்ஷஸர்கள் முதலிய கணங்களோடும் ஜல ஜந்துக்களோடும் கூடின ஸமுத்திரத்தின் அலைகள் மலைகளைப் போல் அதிவேகமாய்ப் பொங்கிக் கொந்தளிப்பதைப் பார்க்கப்பயங்கரமாக இருந்தது. ஒரு நாளும் கரைபுரளாத ஸமுத்திரம் ஒரு யோஜனை பூமியை மறைத்துவிட்டது. அப்படிப் பயந்தோடுகிற ஸமுத்திரத்தை ராமன் துரத்தி ஹிம்ஸிக்கவில்லை. சத்துருக்களை வேரறுக்கும் பிரபாவமுள்ள ராகவன் கர்வம்கொண்ட அந்த ஸமுத்திர ராஜனிடத்தில் தயவு செய்தார்.

பிறகு மேருபர்வதத்திலிருந்து ஸூரியன் உதித்ததுபோல், ஸமுத்திரத்தின் நடுவிலிருந்து அதன் அபிமானி தேவதை வெளிப்பட்டார். கொழுந்துவிட்டெரியும் முகங்களையுடைய மஹாஸர்ப்பங்கள் அவரைச் சூழ்ந்துவந்தன. அழகான வைடூரிய பர்வதத்தைப்போல் தேககாந்தியுடன், ஜாம்பூநதம் ஜாதரூபமென்ற பல வகைத் தங்கங்களால் செய்யப்பட்ட விசித்திரபூஷணங்களாலும் தன்னிடத்திலுண்டான உத்தம ரத்னங்களாலும் அலங்கரிக்கப்பட்டு அனேக தாதுக்களால் விளங்கும் ஹிமயகிரியைப்போல் பிரகாசித்தார். தாமரையிதழ்போன்ற நேத்திரங்களுடனும் சிவந்த மாலையுடனும் வஸ்திரங்களுடனும் ஸகல புஷ்பங்களாலும்நிறைந்த ஹாரத்தைத் தலையில் அணிந்துகொண்டிருந்தார். பாடல (சிவப்பு) வர்ணமுள்ள நடுநாயகத்தையுடைய ஒரு முத்துஹாரம் அவருடைய விசாலமான மார்பில் கௌஸ்துபமென்ற மஹாவிஷ்ணுவின் ஆபரணத்தைப்போல் ஜ்வலித்தது. அலைகள் சுழன்றுகொண்டிருந்தன. மேகக்கூட்டங்களாலும் பெருங்காற்றாலும் ஸமுத்திரம் கலங்கிற்று. பெரிய ஜலஜந்துக்கள் தங்கள் இருப்பிடத்தை விட்டு வெளியில் வந்தன. உரக ராக்ஷஸ கணங்கள் திகிலடைந்தன; அப்பொழுது ஸமுத்திரராஜன் ராமனை நோக்கி அதிவேகமாய் வந்து, தன் ஸ்நேஹத்தைத் தெரிவிக்கும்பொருட்டு அவரை முதலில் கூப்பிட்டுத் தலைமேல் கைகூப்பி, கோதண்டபாணியாய் நிற்கும் ராகவனைப் பார்த்து "பூமி, ஜலம், வாயு, தேஜஸ் ஆகாசமென்ற பஞ்சபூதங்கள்தொன்றுதொட்டு அவைகளுக்கேற்பட்ட குணங்களை மீறுகிறதில்லை. ஸர்வ சக்தனை தங்களுக்கு என்னால் ஆகவேண்டியதென்ன? ஸமுத்திரத்தில் ஆழமில்லாமல் செய்யவேண்டுமா? அல்லது ஜலத்தை ஓட்டமில்லாமல் கெட்டியாகச் செய்யவேண்டுமா? அல்லது அணைகட்டுவதற்கு அனுகூலமாய் அதில் போடும் பதார்த்தங்கள் அமிழ்ந்து போகாமல் இருக்கச்செய்யவேண்டுமா? ஆழமாக இருப்பதும் தாண்ட முடியாமலிருப்பதும் என் ஸ்வபாவம்; இதற்கு விரோதமாய் என்னால்

இருக்கமுடியாது. ஆகையால் என்னை ஆழமில்லாமல் செய்ய முடியாது. ஐசுவரியத்தை விரும்பியாவது கிடைத்த வஸ்துவைவிட்டுப் பிரிய இஷ்டமில்லாமலாவது, தண்டனைக்கு பயந்தாவது ஜலத்தை அசைவில்லாமல் செய்ய முடியாது; அதில் வஸிக்கும் ஜந்துக்களுக்கு அதிக பீடையுண்டாகுமல்லவா? ராஜஸிரேஷ்டரான தாங்கள் ஸகல தர்மங்களையும் நிலைநிறுத்துகின்றவர்களல்லவா? என்னால் கூடிய வரையில் தங்களுக்கு ஸஹாயம் செய்கிறேன். வானரஸைன்யம் ஸமுத்திரத்தைத் தாண்டுகிறவரையில் ஜலஜந்துக்கள் அவர்களை உபத்திரவிக்காது; குரங்குகள் ஜலத்தில் விழாது. தாங்கள் கட்டுகிற அணை உறுதியாயும், தரையைப்போலும் இருக்கும்படி செய்கிறேன், அதைச் சேர்ந்த எந்த வஸ்துவும் ஜலத்தால் அபகரிக்கப்படாமல் இருக்கும்'' என்று விக்ஞாபனம் செய்தான்.

அதற்கு ராமன், ''ஆனால் நான் உன்மேல் பிரயோகித்த பிரஹ்மாஸ்திரம் வீண்போகாது. அதை எங்கே அனுப்பட்டும்' என்றார். மஹாதேஜஸ்வியான ஸமுத்ரராஜன் ராமன்சொன்னதைக் கேட்டு பிரஹ்மாஸ்திரத்தையும் பார்த்து,''ஸ்வாமி! இதற்கு வடக்கே ஸமீபத்தில் ஓர் அழகான ஸ்தலமிருக்கிறது. அது லோகத்தில் த்ருமகுல்யமென்று பிரஸித்தி பெற்றது. தங்களைப்போல், பயங்கரமான ரூபத்தையும்நடத்தையையும் உள்ள சில திருடர்கள் அங்கே வஸிக்கிறார்கள். அந்த பாபிகள் என் ஜலத்தைத் தொட்டுக்குடிப்பதை நான் பொறுக்கமுடியவில்லை; தங்களுடைய பாணத்தை அவர்கள்மேல் பிரயோகித்துத் திருப்தி செய்யுங்கள்'' என்றான். ராமனும் அவன் குறிப்பிட்ட ஸ்தலத்தில் அந்தத் தீக்ஷ்ணமான அஸ்திரத்தைப் பிரயோகித்தார். நெருப்பிடியைப்போல் பிரகாசிக்கும் ராமபாணம் விழுந்தவிடம் மருகாந்தாரம்(பாலைவனம்)என்றுபிரஸித்திபெற்றிருக்கிறது. அந்தப் பாணத்தால் துளைக்கப்பட்ட பூமி அலறிற்று. அந்தப் பிளப்பின் வழியாய் ரஸாதலத்திலிருந்து ஜலம் பிரவஹித்து ஓடிற்று. அதற்கு 'வர்ணகூபம்' என்று பெயர். அதிலிருந்து எப்பொழுதும் பெருகிக்கொண்டிருக்கும் ஜலத்திற்கும் ஸமுத்திர ஜலத்திற்கும் பேதமில்லை, பாணக்னியின் வேகத்தால் கோரமான சப்தத்துடன் பூமி வெடித்து அந்த ஸ்தலத்திலுள்ள ஜலமெல்லாம் வற்றிற்று. ராமன் அங்கிருந்த ஜலத்தை வற்றச்செய்து தோஷத்தை நீக்கி, அதற்கு மருகாந்தாரமென்ற கீர்த்தியையும் உத்தமமான வரங்களையும் கொடுத்தார். ''ஸத்தியத்தால் ஸகல லோகங்களையும் வசப்படுத்தின ராகவனுடையஞானத்தையும் பராக்கிரமத்தையும்யோசிக்கையில் மனுஷ்யபாவனையாலும் அவர் வரங்களைக் கொடுக்கத்தக்கவரென்பதில் ஸந்தேகமுண்டோ? பசுக்களுக்குப் பிரியமான இளம் புற்களையுடையதாய் எவ்விதமான ரோகமும் இல்லாமல், பழம் கிழங்கு தேன் முதலியவைகள் நிறைந்து, பால் தைலம் பரிமளமான பலவித ஔஷதிகள் இவைகுறைவில்லாமல் கிடைக்குமிடமாய், இப்



படிப்பட்ட அநேக உத்தம குணங்களுடன் கூடி, ராமனுடைய வர மகிமையால் மிகவும் அழகான பிரதேசமாயிற்று மருகாந்தாரம்.

பிறகு ஸமுத்திரராஜன் ஸகல சாஸ்திரங்களையும்கரைகண்ட ரகுவீரனை நோக்கி, ''தங்களுடைய ஸைன்யத்தில் நளன் என்று ஒரு வானர வீரன் இருக்கிறான். அவன் விசுவகர்மாவின் புத்திரன், 'என்னைப்போன்ற ஒரு புத்திரன் உனக்குப் பிறப்பான்'' என்று அவனுடைய தாய்க்கு விசுவகர்மா வரம் கொடுத்தான்: ஆகையால் நளன் தன் பிதாவிற்கு ஸமானன். அவன் என்மேல் அணை போடட்டும்; விசுவகர்மாவைப்போல் அவனைக் கௌரவித்து அவனால் போடப்பட்ட எந்தப் பதார்த்தத்தையும் அமிழ்த்தாமல் காப்பாற்றுகிறேன்'' என்று சொல்லி ராமனிடத்தில் உத்திரவு பெற்றுக்கொண்டு, அவரைப் பிரதக்ஷண நமஸ்காரங்கள் செய்து தன் இருப்பிடம் சென்றான்.

பிறகு நளன் கைகூப்பி ராமனைப் பார்த்து, ''எல்லையற்ற ஸமுத்திரத்தில் நான் அணைகட்டுகிறேன். ஸமுத்திரராஜன் சொன்னது நிஜமே. என் பிதாவின் ஸாமர்த்தியம் எனக்கும் உண்டு. லோகத்தில் தண்டோபாயத்தைப்போல் காரியத்தை ஸாதிக்கக் கூடியது வேறொன்றில்லை. ஸாமம் தானமென்ற உபாயங்களும் அறிவில்லாதவர்களிடத்தில் ஒருநாளும் பிரயோஜனப்படாது. மஹா பயங்கரமான இந்த ஸமுத்திரராஜன் தாங்கள் அணைகட்டுவதைப் பார்க்கவேண்டுமென்ற ஆசையாலும், தங்களுடைய தண்டனைக்குப் பயந்தும்இந்தவழியில் ஆழமில்லாமல் செய்திருக்கிறான். (அவனுக்கு விரோதிகளான த்ருமகுல்யத்தில் வஸிப்பவர்களை ராமனைக்கொண்டு நாசம் செய்யவேண்டும். ராவண பராக்கிரமம் ராமனுக்குண்டோ என்று பரீக்ஷித்துப் பார்ப்பதற்காக அவ்வளவு காலம் வராமல் தாமஸித்தான் -கோவிந்தராஜர்.) ஒரு ஸமயத்தில் என் பிதா மந்தரபர்வதத்தில் என் தாயுடனிருக்கையில், 'என்னைப்போன்ற புத்திரன் உனக்குப் பிறப்பான்' என்று வரம் கொடுத்திருக்கிறார். அதை ஸமுத்திர ராஜன் எனக்கு இப்பொழுது நினைவுபடுத்தினார். அவர் சொன்ன வார்த்தை நிஜமே; மேலும், இதற்கு முன்பே எனக்கு இந்த ரஹஸ்யம் தெரியும். ஆனாலும், அதை நானே சொல்லிக்கொண்டால் இவ்விதமான பெரிய காரியத்தை ஆரம்பிப்பதில் நம்பிக்கை பிறக்காது. ஆகையால் வேறொருவர் சொல்லுகிற வரையில் காத்துக்கொண்டிருந்தேன். ஸமுத்திரத்தில் அணை கட்ட எனக்குத் திறமையுண்டு. வானரசிரேஷ்டர்கள் அதற்கு வேண்டிய வஸ்துக்களை இப்பொழுதே கொண்டுவரட்டும்'' என்றான். ராமனும் அப்படியே உத்திரவு செய்ய, வானரங்கள் ஆயிரக்கணக்காய் காடுகளிலும், மலைகளிலும் சென்று, மலையைப்போன்ற விருக்ஷங்களைப் பெயர்த்து ஸமுத்திரக்கரைக்கு இழுத்துக்கொண்டு வந்தார்கள். ஆச்சா, வில்வம், ஏழிலைப்பாலை, மா முதலிய மரங்களை வேர்களோடும், வேர்களில்லாமலும், புஷ்பங்களோடும், தளிர்

களோடும், பழங்களோடும், காய்களோடும் பெயர்த்துக்கொண்டு வந்து,இந்திரத்வஜங்கள் நாட்டினதுபோல் எடுத்துவந்து ஸமுத்திரத்தின்மேல் போட்டு அதனை மறைத்தார்கள்: மஹாபலவான்களான வானர வீரர்கள் மஹா கஜங்களைப்போன்ற பாறைகளையும் மலைகளையும் பெயர்த்து யந்திரங்களால் ஸமுத்திரக் கரையில் சேர்ப்பித்தார்கள். ஸ்வபாவமாய்ப் பெரிய அலைகளுள்ள ஸமுத்திர ஜலம், பாறைகளையும் விருக்ஷங்களையும் மரங்களையும் போட்டவுடன் ஆகாசம் வரையில் எழும்பிற்று; வானரர்கள் ஸமுத்திரத்தைக் கலக்கினர்கள். சிலர் நூறுயோஜனையளவு ஏற்றக்குறைவில்லாமல் அணைகட்டுவதற்காகக் கயிறுகளைப் பிடித்து ஒழுங்கு பார்த்தார்கள். இப்படி நளன் மஹா ஸமுத்திரத்தின் நடுவில் பெரிய அணையைக் கட்டுகையில் வானரர்கள் ஒவ்வொருவரும் அநேக பர்வதங்களை எடுத்துக் கொண்டு வந்து, பிறரால் செய்ய முடியாத காரியங்களைச் செய்து அவனுக்கு ஸகாயம் செய்தார்கள். இன்னும் சிலர் அளவுகோல்களைப் பிடித்து அளந்தார்கள். சிலர் கழிகளை எடுத்துக்கொண்டு வேலை செய்யும் வானரர்களை அதட்டி வேலை வாங்கினர்கள். சிலர் மேடுபள்ளமில்லாமல் அணை ஸமமாக இருக்கிறதா என்று பரீக்ஷித்து வந்தார்கள். சிலர் சிரமபரிஹாரத்திற்காக நிழலில் படுத்துத் தூங்கும் வானரர்களைத் தேடி எழுப்பிக்கொண்டு வந்தார்கள். ராமனுடைய ஆக்ஞையை முன்னிட்டுக்கொண்டு எண்ணிறந்த வானரர்கள் மஹாமேகங்களைப் போன்ற பர்வத சிகரங்களையும் கட்டைகளையும், புற்களையும், புஷ்பித்த விருக்ஷங்களையும் கொண்டு அணையைக் கட்டினர்கள். புஷ்பித்த விருக்ஷங்களை மேலே பரப்புவது (நடக்கும்பொழுது மிருதுவாக இருப்பதற்காக) மதயானையைப் போன்ற அநேக வானரர்கள் மலைகளைப்போன்ற பாறைகளையும் பர்வத சிகரங்களையும் தூக்கிக்கொண்டு அதிவேகமாய் ஓடினர்கள். கற்பாறைகளை விட்டெறிவதாலும் மலைகளை இடித்துத் தள்ளுவதாலும் உண்டாகும் சப்தம் ஸமுத்திரத்தின் ஓசையை அடக்கிவிட்டது. மஹாபலவான்களும் பயங்கரமான தேகங்களையுடையவர்களுமான வானரர்கள் முதல் நாளில் அதிக ஸந்தோஷத்துடன் பதினன்கு யோஜனை தூரமும், இரண்டாம்நாளில் இருபதுயோஜனை தூரமும், மூன்ருவது நாளில் இருபத்தொரு யோஜனை தூரமும், நான்காவது நாளில் இருபத்திரண்டு யோஜனை தூரமும், ஐந்தாவது நாளில் ஸுவேல மலைவரையில் எல்லையாக வைத்துக்கொண்டு இருபத்திமூன்று யோஜனை தூரமும் அணை கட்டினர்கள். விச்வகர்மாவின் புத்திரனும் பலவானும் வானர சிரேஷ்டனுமான நளன், தன் பிதாவைப்போல் வெகு ஸாமர்த்தியமாய் அந்த அணையைக் கட்டினன். அது ஆகாசத்தில் ஸ்வாதி வீதியைப்போல் மிகவும் அழகாய் விளங்கிற்று. (ஸூரியன் முதலானவர்களுக்கு தக்ஷிணம், உத்தரம், மத்யமமென்று மூன்று மார்க்கங்கள். பூர்வபல்குனி, உத்தரபல்குனி, மகம் என்ற நக்ஷத்திரங்கள் ரிஷபவீதியென்றும், ஹஸ்தம் சித்திரை



நலஸ் சக்ரே மஹாஸேதும் மத்4யே நத3நதீ3பதே: |
ஸ ததா3 க்ரியதே ஸேது: வாநரைர் கோ4ரகர்மபி4: ||
—யுத். 22ஸ—62சு.

இப்படி நளன் மஹாஸமுத்திரத்தின் நடுவில் பெரிய அணையைக் கட்டுகையில் வானரர்கள் ஒவ்வொருவரும் அநேக பர்வதங்களை எடுத்துக்கொண்டு வந்து, பிறரால் செய்ய முடியாத காரியங்களைச் செய்து, அவனுக்கு ஸகாயம் செய்தார்கள்.
(பக்கம் 98 பார்க்க)

Notes : This Blank Page has also to be counted as a another page Number.

It is intentionally left blank after Picture Sketches.!

Released by Maran's Dog ,Toronto, Canada



ஸ்வாதி என்பவை மத்யவீதி என்றும், ஜ்யேஷ்டம் விசாகம், அனுராதா என்றவை அஜகவீதி என்றும் சொல்லப்படும். இவை மூன்றும் மத்யம மார்க்கமெனப்படும்—வாயுபுராணம்). அப்பொழுது தேவ, கந்தர்வ, ஸித்த, மஹர்ஷிகணங்கள் அந்த ஆச்சரியத்தைப் பார்க்க ஆகாசவீதியில் கூட்டம் கூட்டமாய் வந்து நின்றார்கள். அந்த அணை நூறு யோஜனை நீளமும் பத்து யோஜனை அகலமுமாய், பிறரால் அமைக்க முடியாததாக நளனுடைய புத்திவிசேஷத்தால் ஸமுத்திரத்தின் நடுவில் விளங்குவதைக் கண்டு மகிழ்ந்தார்கள்.

யாதொரு விக்னமும் இல்லாமல் அணை கட்டி முடிந்ததைப் பற்றி வானரர்கள் ஸந்தோஷமடைந்து சிலர் பாய்ந்தார்கள்; சிலர் தாவினார்கள்; சிலர் குதித்தார்கள்; சிலர் கர்ஜித்தார்கள்; சிலர் மனத்தால் நினைக்கவும் முடியாததும் எவ்வித பிரயத்னத்திலும் பிறர்க்கு அஸாத்தியமானதும் ஆச்சரியகரமும் மயிர்க் கூச்சலும் உண்டுபண்ணுவதுமான அந்த அணையைப் பார்த்து பிரமித்தார்கள். வானரர்கள் கோடி கோடியாய் அணைகட்டுகிறவர்களுக்கு உதவி செய்துகொண்டே அக்கரை சேர்ந்தார்கள். அழகுள்ள ஸ்த்ரீயின் வகிட்டைப்போல் ஸமுத்திரத்தின் நடுவில் போடப்பட்ட அந்த அணை விசாலமாகவும் உறுதியாகவும் அழகாகவும் யாதொரு தோஷமும் இல்லாமலும் மேடுபள்ளமில்லாமலும் பிளப்புகள் துவாரங்கள் இல்லாமலும் வெகு சாதுரியமாய் நளனால் அமைக்கப்பட்டது. ஸமுத்திரத்தின் தெற்குக் கரையில் விபீஷணன் கையில் கதாயுதத்துடன் மந்திரிகளால் சூழப்பட்டு, சத்துருக்களை நாசம் செய்வதற்காக ஸஞ்சரித்துக்கொண்டிருந்தான். பிறகு ஸுக்ரீவன் ராமனைப் பார்த்து, "தாங்கள் ஆஞ்ஜனேயன்மீதும், லக்ஷ்மணர் அங்கதன் மீதும் ஏறி வாருங்கள். இவர்கள் தங்களை அதிசீக்கிரத்தில் ஆகாச மார்க்கமாய் அக்கரைக்குக் கொண்டுபோவார்கள்" என்று தெரிவித்தான். ராமலக்ஷ்மணர்கள் ஆயுதபாணிகளாய் ஸுக்ரீவனுடன் வானர ஸைன்யங்களுக்கு முன்னால் ஜயலக்ஷ்மி விளங்கச் சென்றார்கள். மற்ற வானரர்கள் அணையின் நடுவிலும், சிலர் ஓரங்களிலும் சென்றார்கள். சிலர் இடமில்லாமல் கரையிலேயே சற்று நேரம் தங்கியிருந்தார்கள். சிலர் ஜலத்தில் விழுந்து வந்தார்கள். சிலர் கருடனைப்போல் ஆகாசவீதியில் தாவிச் சென்றார்கள். அவர்களுடைய மஹாகோஷங்களால் ஸமுத்திரத்தின் ஓசை அதிகரித்தது. வானர ஸைன்யம் அந்த பயங்கரமான ஸமுத்திரத்தைக் கொஞ்சம் கூட லக்ஷ்யம் செய்யாமல் தாண்டிச் சென்று, நளனால் கட்டப்பட்ட அணையின் வழியாய் அபாயமில்லாமல் அக்கரை சேர்ந்து, ஸுக்ரீவனுடைய உத்தரவால் ஜலம் பழங்கள் கிழங்குகள் நிறைந்த ஓரிடத்தில் தங்கிற்று. தேவர்களும் ஸித்தசாரணமஹர்ஷி கணங்களும் பிறர்க்கு அஸாத்தியமான காரியத்தை ராகவன் செய்து முடித்ததைக் கண்டு, ஸர்வ லோககண்டகனான ராவணனுடைய தலைகளை

அறுப்பதற்குச் சுபசகுனமாக இந்த அணையை மஹாசாதுரியமாய் ஸமுத்திரத்தில் கட்டினுரென்று கொண்டாடி, எல்லையில்லாமல் பொங்கும் ஆனந்தத்தை ராவணன் நாசமடையும் வரையிலும் ஒருவருக்கும் தெரியாமல் அடக்கவேண்டுமென்று தங்களால் கூடிய வரையில் பிரயத்தனம் செய்தும் முடியாமல், மனுஷ்யர்களாலும் தேவர்களாலும் பூஜிக்கப்பட்ட ராமனைச் சூழ்ந்து விதிப்படி அபிஷேகம் செய்து பூஜித்தார்கள். "ராம! லோக ஸம்ரக்ஷணத்திற்காக மனுஷ்யாவதாரம் செய்த ஜகந்நாயக! ஸகல சத்துருக்களையும் ஜயித்து, ஸமுத்திரங்களால் சூழப்பட்ட இந்தப்பூமியை வெகுகாலம் ஆண்டுவரக்கடவீர்'' என்று சுபமான மங்களாசீர்வாதங்களால் ஸ்தோத்ரம் செய்தார்கள். (பகவானை ஆசிரயித்தவர்களுடைய சத்துருக்களே பகவானுக்கு சத்துருக்கள்.)

ஜய ஸ்வஶத்ரூந் நரதே³வ மேதி³நீம்
ஸஸாக³ராம் பாலய ஶாஶ்வதீ: ஸமா: |
இதீவ ராமம் நரதே³வ ஸத்க்ருதம்
ஶுபை⁴ர் வசோபி⁴: விவிதை⁴ ரபூஜயந் ॥ (91)

## ஸர்க்கம் 23

## சகுனங்கள்

நிமித்தாநி நிமித்தஜ்ஞோ த்³ருஷ்ட்வா லக்ஷ்மணபூர்வஜ: |
ஸௌமித்ரிம் ஸம்பரிஷ்வஜ்ய இத³ம் வசந மப்³ரவீத் ॥ (1)

சகுன சாஸ்திர நிபுணரான ராகவன், தான் வெகுகாலமாய் எதிர்பார்த்த மஹாயுத்தம் ஸமீபித்ததால ஸந்தோஷமடைந்து, சகுன லக்ஷணங்களையும் பலன்களையும் பூர்ணமாயறிந்து, லக்ஷ்மணனைப் பார்த்து, "குழந்தாய்! குளிர்ந்த ஜலத்தாலும் பழங்களாலும் நிறைந்த காடுகளில் ஸைன்யங்களைத் தங்கச் செய்து, கருடவ்யூஹமாய் அணிவகுத்து வை. சாதாரணஜனங்களை நிர்மூலம் செய்யும் மஹாபயம் ஸமீபித்திருக்கிறது. வீரர்கள் நாசமடைவார்கள். கரடிகளும் குரங்குகளும் ராக்ஷஸர்களும் கணக்கில்லாமல் மடிவார்கள். காற்றுகள் கலக்கமாக அடிக்கின்றன; பூமி நடுங்குகின்றது பர்வத சிகரங்கள் அசைகின்றன; மஹாவிருக்ஷங்கள் திடீரென்று முறிந்து விழுகின்றன. மேகங்கள் செந்நாய்களின் நிறத்துடன் பார்க்கப் பயங்கரமாய், கழுகுகளால் மறைக்கப்பட்டு, கோர சப்தங்களுடன், ரத்தம் கலந்த மழையைப் பெய்கின்றன. (ஸந்தியாகாலத்தில் பூமி நடுங்குவதும், பகலில் எரிகொள்ளி விழுவதும், நக்ஷத்திரங்கள் காணப்படுவதும், இடி விழுவதும், கட்டைபுல் ரத்தம் முதலியவை வர்ஷிக்கப்படுவதும், ராஜ்யத்திற்கு நாசத்தைக் குறிக்கும்—வராஹமிஹிரர்) ஸந்தியாகாலத்தில் எங்கும் குங்குமத்தைப் போல் மேகங்கள் பார்க்கப் பயங்கரமாகத் தோன்றுகின்றன. ஸூரியனிடத்திலிருந்து நெருப்புக்கட்டிகள் ஜ்வலித்துக்



கொண்டு விழுகின்றன. குரூரமான மிருகங்களும் பக்ஷிகளும் தீனமாய் ஈனஸ்வரத்துடன் நான்கு பக்கங்களிலும் ஸூரியனைப் பார்த்து ஊளையிட்டுக் கொண்டும் கத்திக் கொண்டும் லோகத்திற்கு மஹாபயம் உண்டாகப்போவதைத் தெரிவிக்கின்றன. இரவிலும் சந்திரன் பிரகாசமற்றிருப்பது நம் மனத்தை வருத்துகின்றது. ஸாயங்காலத்தில் ஸூரியனைச்சுற்றி ஒருமண்டலம், நடுவில் அதிகச் சிவப்பாகவும், அதைச் சுற்றிக் கொஞ்சம் சிவப்பாகவும் அதைச்சுற்றிக் கருப்பாகவும், பிரளய காலத்தில் காணப்படுவது போல் குரூரமாக, இதுவரையிலும் இல்லாமல் தோன்றுகிறது. (ஸூரியனைச் சுற்றி இரண்டு மண்டலங்கள் இருந்தால் ஸைன்யங்கள் நாசமடையும்; மூன்று மண்டலங்கள் இருந்தால் அரசர்கள் மடிவார்கள். முதல் ஜாமத்தில் ஸூரியனைச்சுற்றி மண்டலம் காணப்பட்டால் பீடையும், இரண்டாவது ஜாமத்தில் மழையும், மூன்ருவது ஜாமத்தில் க்ஷேமமும், நான்காவது ஜாமத்தில் ஸகல நாசமும் நேரும் —காச்யபர்). இதுவரையில் களங்கமற்ற சூரியனிடத்தில் கருப்பான புள்ளிகள் தோன்றுகின்றன. (பர்வகாலங்களில்லாமல் சந்திரஸூரியர்களை ராகு பிடிப்பதும் அந்த மண்டலங்களில் துவாரங்கள் காணப்படுவதும் தேசங்களின் நாசத்திற்கு அடையாளம்—வராஹமிஹிரர்). நக்ஷத்திரங்கள் அதிக மங்கலாய்க் காணப்படுகின்றன. லோகங்களுக்குப் பிரளயகாலம் ஸமீபித்தது போலிருக்கின்றன. காக்கைகளும் கழுகுகளும் பருந்துகளும் பலஹீனமான பக்ஷிகளால் ஜயிக்கப் படுகின்றன. நரிகள் பயங்கரமாக ஊளையிடுகின்றன.

கற்பாறைகளாலும் சூலங்களாலும் கத்திகளாலும் ராக்ஷஸர்களும் வானரர்களும் யுத்தம் செய்யும் பொழுது பூமி யெங்கும் ரத்தத்தாலும் மாம்ஸத்தாலும் சேருக இருக்கும். இதுவரையில் ஒருவரும் நெருங்காமல் ராவணனைக் காப்பாற்றிவந்த இந்த லங்காபுரியில் வானர ஸைன்யங்களுடன் நான்கு புறங்களிலிருந்தும் வேகமாகப் பிரவேசிப்போம்'' என்ருர். அவர் தர்ம ஸ்வரூபி; வீரசிகாமணி, மஹாஸமர்த்தர்; யுத்தம் ஸமீபித்ததென்ற எண்ணத்தால் முகமலர்ந்து, தேஜஸால் ஜ்வலித்துக்கொண்டு, லங்கையை நோக்கிப் புறப்பட்டார். விபீஷணனும் ஸுக்ரீவன் முதலிய வானர சிரேஷ்டர்களும் சத்துருக்களை நாசம் செய்வோம் என்ற பூர்ண நம்பிக்கையுடன், ஸந்தோஷத்தால் கர்ஜித்துக்கொண்டு, ஸேனைகள் தங்கத் தகுந்த இடத்தைத் தேடப் புறப்பட்டார்கள். தைரியம் வீரியம் பராக்கிரமம் முதலிய குணங்களில் ஒப்பற்ற வானர ஸைன்யங்கள் கோரமான ஸமுத்திரத்தையும் லங்கையின் அரண்களையும் கண்டு ஒருவேளை உத்ஸாஹமற்றுக் கலங்குமோ என்று ராமன் ஸந்தேகித்ததுண்டு. ஆனல் யுத்தம் எப்பொழுது நேருமென்று ஆவலுடன் எதிர்பார்த்துக்கொண்டு, தாவுதல், கர்ஜித்தல், வால்களை உயரச் சுழற்றியடித்தல் முதலிய ஸந்தோஷக்

குறிகளால் தனது இஷ்டத்தைப் பூர்த்தி செய்வதிலேயே அவர்கள் நோக்கமுள்ளவர்களாக இருப்பதைக் கண்டு கவலை தீர்ந்து ஸந்தோஷித்தார்.

ராக4வஸ்ய ப்ரியார்த2ம் து ஸுதராம் வீர்யஶாலிநாம் |
ஹரீணாம் கர்மசேஷ்டாபி4: துதோஷ ரகு4நந்த3ந: || (16)

---

## ஸர்க்கம் 24

# ராவணன் ராமனுடைய வரவைக் கேள்வியுற்றது

---

ஸா வீரஸமிதீ ராஜ்ஞா விரராஜ வ்யவஸ்தி2தா |
ஶஶிநா ஶுப4நக்ஷத்ரா பௌர்ணமாஸீவ ஶாரதீ3 || (1)

சரத் காலத்தில் சுபநக்ஷத்திரத்துடன் கூடின பௌர்ணிமா சந்திரனைப் போல், அந்த வானர ஸைன்யம் ஸௌக்யமுள்ள விடத்தில் ராமனுடைய உத்திரவால் தங்கிக் களைப்பாற்றிக் கொண்டது. ஸமுத்திரத்தைப்போல் எல்லையற்ற ஸுக்ரீவ ஸேனையால் பூமி பாரம் தாங்காமல் நடுங்கிற்று. பிறகு லங்கையிலிருந்து பேரி மிருதங்கம் முதலிய யுத்த வாத்தியங்களின் சப்தமும் ஸைன்யங்களுடைய கோஷமும் பயங்கரமாகவும் மயிர்க்கூச்சம் உண்டாகும்படியாயும் கேட்கப்பட்டது. வானரர்கள் ஸந்தோஷித்து அதைப் பொறுக்காமல் ராக்ஷஸர்களுடைய கோஷத்தை அடக்கும்படி கர்ஜித்தார்கள். மஹா மேகங்கள் ஆகாசத்தில் வர்ஷாகாலத்தில் கர்ஜிப்பதுபோல், வானர ஸைன்யங்களின் சப்தத்தை லங்கையிலுள்ள பிராணிகளும் கேட்டன.

விசித்திரமான த்வஜங்களாலும் கொடிகளாலும் விளங்கும் லங்கையைப் பார்த்தவுடன் ராமன் ஸீதையை நினைத்துத் துக்கித்தார். 'ஐயோ! அங்காரகனால் ரோஹிணீ நக்ஷத்திரம் பீடிக்கப்படுவதுபோல், மிரண்ட மான்களைப்போல் பார்வையையுடைய என் ஜானகி இங்கே ராக்ஷஸர்களால் சிறையில் வைக்கப்பட்டிருக்கிறாளல்லவா'' என்று பெருமூச்சு விட்டார். பிறகு யுத்த ஸமயத்தில் இது உசிதமல்லவென்று சோகத்தை அடக்கிக்கொண்டு, லங்கையின் அழகை வர்ணிப்பதால் தன் வருத்தத்தை மாற்ற உத்தேசித்து, ஸமீபத்திலிருந்த லக்ஷ்மணனைப் பார்த்து, ''குழந்தாய்! லங்கை திரிகூட சிகரத்தில் விசுவகர்மாவால் எவ்வளவு அழகாக அமைக்கப்பட்டிருக்கிறது பார்! கேவலம் மனத்தால் ஸிருஷ்டிக்கப்பட்டது போல் ஆகாசத்தை அளாவி நிற்கிறது. அனேக மாடிகளையுடைய கிருஹங்களால் இந்த நகரம் வெளுத்த மேகங்கள் பரவின ஆகாசத்தைப் போல் காணப்படுகிறது. பழங்களாலும் புஷ்பங்களாலும் விளங்கும் வனங்களால் சூழப்பட்டு, குபேரனுடைய சைத்ரரதமென்ற தோட்டத்தைப்போல் விளங்குகின்றது. பலவித பக்ஷிகள் மதுரமாய்க் கூவுகின்றன. தேனைக் குடித்து மதம் கொண்ட வண்டுகளும் குயில்களும் புஷ்பக்கொத்துகளில் தங்கியிருக்கின்றன. இங்கே எந்த ருதுவிலும் எவ்வித புஷ்பங்களும் பழங்களும் உண்டாகுமென்று எண்ணுகிறேன். காற்று மிருதுவாயும் ஸுகமாயும் வீசுகின்றது.'' என்று ராவண ராஜதானியை மெச்சினார்.



பிறகு, நீதிசாஸ்திரப்படி தன் ஸைன்யத்தை வகுத்து, "அங்கதனும் நீலனும் இந்த வ்யூஹத்தின் மார்பில் இருக்கட்டும். ரிஷபன் வலது பக்கத்திலும், மதயானையைப் போன்ற கந்தமாதனன் இடது பக்கத்திலும் இருக்கட்டும். நானும் லக்ஷ்மணனும் தலையிலிருக்கிறோம். ஜாம்பவான் ஸுஷேணன் வேகதர்சி என்றவர்கள் வயிற்றிலிருக்கட்டும். லோகத்தின் மேற்கு பாகத்தை மஹா தேஜஸ்வியான வருணன் ரக்ஷிப்பதுபோல், ஸுக்ரீவன் வாலைக் காப்பாற்றட்டும்'' என்று ஆக்ஞாபித்தார். (இதனால் வானர ஸேனை கருடனைப் போல் வகுக்கப்பட்டதென்று தெரிகிறது.) ஆகாசத்தில் மஹா மேகங்கள் ஸஞ்சரிப்பதுபோல் விளங்கும் வானரப் படை, இப்படி மஹா வீரர்களால் வெகு ஜாக்கிரதையாய் ரக்ஷிக்கப்பட்டது. வானரர்கள் பர்வதசிகரங்களையும் பெரிய விருக்ஷங்களையும் ஸித்தம் செய்துகொண்டு லங்கையை அழிக்கத் தயாராக இருந்தார்கள். "கற்பாறைகளை விட்டெறிந்தாவது கைகளால் குத்தியாவது இந்த லங்கையைத் தூளாக்குவோம்'' என்று நினைத்தார்கள்.

பிறகு ராமன், "ஸுக்ரீவ! ஸைன்யத்தை அணிவகுத்தோம். இனி சுகனென்ற ராக்ஷஸனை விட்டுவிடலாம்'' என்றார். குரங்குகளால் மிகவும் உபத்திரவிக்கப்பட்டு, சுகன் பயத்தால் நடுங்கிச் 'செத்தேன் பிழைத்தேன்' என்று ராவணனிடத்திற்கு ஓடி, பாதத்தில் விழுந்தான். லங்கேசுவரன் அவனுடைய அலங்கோலத்தைக் கண்டு சிரித்து, "அடே! சபலசித்தமுள்ள குரங்குகளின் கையில் அகப்பட்டாயா? அவர்களால் கட்டுப்பட்டதுபோல் தோன்றுகிறாய். உன் இறக்கைகள் ஒடிந்திருக்கக் காரணமென்ன? ஸுக்ரீவன் என்ன பதில் சொன்னான்?'' என்று கேட்டான். சுகன் புத்தி சிதறி, ஒன்றும் தோன்றாமல், ராவணனுடைய ஆக்ஞைக்குப் பயந்து "ஸ்வாமி! தங்களுடைய உத்தரவுப்படி. ஸமுத்திரத்தின் வடகரைக்குச் சென்று ஸுக்ரீவனிடத்தில் தாங்கள் சொன்ன வார்த்தைகளைச் சொன்னேன். மதுரமாயும் ஸமாதானமாயும் நான் பேசியும், அந்தக் குரங்குகள் என்னைக் கண்டவுடனே தாவிப்பிடித்து, அடித்துத் தள்ளி, கோபாவேசத்தால் என் இறக்கைகளை ஒடிக்க ஆரம்பித்தன. அவை ஸ்வபாவமாகவே வெகு கோபம் கொண்டவை; வெகு க்ரூரங்கள். அவைகளுடன் பேசுவதே அஸாத்யம். விராதன் கபந்தன் கரன் முதலிய பிரபல சத்துருக்களை விளையாட்டாய்க் கொன்ற மஹா வீரனான ரகுநாதன், ஸுக்ரீவனுடைய வானர ஸைன்யங்களால் சூழப்பட்டு ஸீதையைத் தேடி வந்திருக்கிறான். ஸமுத்திரத்தில் அணை கட்டித் தாண்டினான். இதுவரையில் இப்படிப்

பட்ட ஆச்சரியத்தைப் பார்த்ததுமில்லை, கேட்டதுமில்லை. நமது ராக்ஷஸ கணங்களெல்லாம் அவனுக்கு எம்மாத்திரம்? ப்ரசண்ட கோதண்டத்தைக் கையிலெடுத்து ஸிம்ஹம்போல் கர்ஜித்துக் கொண்டு நின்றான். இதுவரையில் தங்களையும் தங்களுடைய ஸைன்யத்தையும் பற்றிக் கேள்விப்பட்டதற்கே இவ்வளவு கோபமும் பராக்கிரமும் உண்டானால், ப்ரத்யக்ஷமாய்ப் பார்த்துவிட்டால் நம்முடைய கதி எப்படியாகுமோ தெரியவில்லை. குரங்குகளும் கரடிகளும் பர்வதங்களைப்போலும் மேகங்களைப் போலும் பூமியை மறைத்துக்கொண்டிருக்கின்றன. 'மறுபடியும் வேறுவிதமாய்ச் சென்று அவர்களைக் கண்டு பேசி வா' என்றால், தேவர்களுக்கும் தானவர்களுக்கும் எப்படியோ அப்படி ராக்ஷஸ ஸைன்யத்திற்கும் வானர ஸைன்யத்திற்கும் ஒரு நாளும் சேர்க்கை நேராது. அவர்கள் நமது நகரத்தில் பிரவேசிப்பதற்கு முன் ஸீதையையாவது ராமனிடத்தில் கொண்டுபோய் விடுங்கள்; அல்லது யுத்தம் செய்யச் சித்தமாயிருங்கள்'' என்றான்.

இந்த வார்த்தைகளைக் கேட்டவுடன் ராவணனுடைய கண்கள் நெருப்புப் பொறிபோல் சிவக்க அவன் சுகனைச் சாம்பலாக எரித்து விடுபவன் போலிருந்தான். "அடே துஷ்ட! என்ன சொன்னாய்? ஸீதையைக் கொடுத்துவிடவா? தேவ கந்தர்வ தானவர்கள் என்னுடன் எதிர்த்து யுத்தம் செய்தாலும், ஸகலப் பிராணிகளும் ஒன்று சேர்ந்து எனக்கு பயத்தை விளைவித்தாலும் ஸீதையைத் திருப்பிக் கொடுப்பதில்லை. வசந்த காலத்தில் புஷ்பித்த மரத்தில் மதம் கொண்ட வண்டுகள் மொய்ப்பது போல் ராமனுடைய தேகத்தில் என் பாணங்கள் எப்பொழுது பாயுமோ? எப்பொழுது என் அம்பறையில் அடங்கியிருக்கும் குரூரமான பாணங்களை வில்லிலிருந்து பிரயோகித்து, யானையைப் பிடிப்பவர்கள் பந்தங்களைக் கொளுத்தி அவைகளைத் துரத்துவதுபோல் இந்த ராமனை என் பாணாக்னியால் எப்பொழுது அடித்துத் துரத்துவேனோ? ஸூரியன் உதிக்கும்பொழுது இதரக் கிரஹங்களின் காந்தியை அலக்ஷ்யமாய் விழுங்குவதுபோல், இந்த வானர ஸைன்யத்தையும் நீ எல்லையில்லாமல் கொண்டாடும் ராமனுடைய பராக்கிரமத்தையும் அலக்ஷ்யமாய் அபகரிப்பேன். நான் வேகத்தில் ஸமுத்திரத்தைப் போன்றவன்; நடையில் வாயுவைப் போன்றவன். தசரதபுத்திரனான ராமனுக்கு என்னைப்பற்றி இதுவரையில் நன்றாகத் தெரியாது. தெரிந்திருந்தால் என்னுடன் யுத்தம் செய்ய நினைப்பானா? இனிமேல் அவனுக்குத் தெரியும். மஹாவிஷமுள்ள ஸர்ப்பங்களைப்போன்ற பாணங்கள் என் அம்பறையில் வேலையில்லாமல் சீறிக்கொண்டிருப்பதை ராமன் அறியான். அறிந்தால் என்னுடன் யுத்தம் செய்ய நினைப்பானா? யுத்தகளத்தில் என் வீரியத்தை ராகவன் பார்த்ததில்லை. சத்ரு ஸைன்யமே விஸ்தாரமான நர்த்தனசாலை; என் வில்லே வீணை; பாணங்களே அதை



வாசிக்கும் குச்சிகள்; நான் யுத்த பூமியில் பிரவேசித்து வில்லை வளைத்து நாணேற்றி, டங்காரசப்தத்தாலும், என் கோர ஸ்வரூபத்தையும் பாணப் பிரயோகத்தையும் கண்டு பயத்தால் கதறுகிறவர்களின் கூக்குரலாலும், பாணங்களால் சித்திரவதை செய்யப்படுகிறவர்கள் வாய்விட்டலறும் சப்தத்தாலும் வீணையில் மந்த்ரம் மத்யம் தாரம் என்ற ஸ்வரங்களைக் காட்டி ப்ரஸ்தாரம் செய்து வாசிப்பதுபோல், பிறரால் அஸாத்யமான கிருத்யங்களைச் செய்வதை ராமன் பார்க்கப் போகிறான். ஆயிரம் கண்களைப் படைத்தோமென்று கர்வம்கொண்ட இந்திரனும், என்னால் ஜயிக்கப்பட்ட புத்திரர்களுக்குத் தகப்பனான ஸாக்ஷாத் வருணனும், பிதிருக்களுக்கு அரசனான யமனும், என் தமையனான குபேரனும், யுத்த பூமியில் என்மேல் பாணப் பிரயோகம் செய்து ஜயமடைய முடியுமோ?'' என்று ஆரவாரித்தான்.

ந வாஸவேநாபி ஸஹஸ்ரசக்ஷுஷா
யுத்3தே'ஸ்மி ஶக்யோ வருணேந வா ஸ்வயம் |
யமேந வா த4ர்ஷயிதும் ஶராக்3நிநா
மஹாஹவே வைஶ்ரவணேந வா புந: || (25)

## ஸர்க்கம் 25

# ராவணன் சுகஸாரணர்களை அனுப்பினது

ஸப2லே ஸாக3ரம் தீர்ணே ராமே த3ஶரதா2த்மஜே |
அமாத்யௌ ராவண: ஶ்ரீமாந் அப்3ரவீத் ஶுகஸாரணௌ || (1)

ராமன் மனுஷ்யபாவனையால் தசரத புத்திரனாக அவதரித்து, வானர ஸைன்யங்களுடன் ஸமுத்திரத்தைத் தாண்டி, மதம் கொண்ட ஸிம்ஹத்தைப்போல் வீற்றிருக்கையில், ராவணன் காலம் குறுகினதாலும் பலக்கொழுப்பாலும் கர்வம் கொண்டு, சுகன், ஸாரணன் என்ற மந்திரிகளைப் பார்த்து, "என்ன ஆச்சரியம்! ஒருவரும் தாண்ட முடியாத ஸமுத்திரத்தை வானர ஸைன்யங்கள் கோடிகோடியாய்த் தாண்டி விட்டன. ராமன் ஸமுத்திரத்தின்மேல் அணைகட்டினான். இதுவரையில் இப்படிப்பட்ட விஷயங்களைக் கேட்டதுண்டோ? பார்த்ததுண்டோ? எனக்கு மிகவும் நம்பிக்கையுள்ளவர்கள் எவ்வளவு சொன்னாலும் நான் நேரில் பார்க்காவிட்டால் நம்பமாட்டேன். மேலும், வானர பலம் இவ்வளவென்று எனக்குத் தெரியவேண்டும். நீங்கள் பிறர்க்குத் தெரியாமல் சத்ருஸைன்யத்தில் பிரவேசித்து, ராமனுக்கும் ஸுக்ரீவனுக்கும் நம்பிக்கையுள்ள மந்திரிகள் யார்? ஸகல காரியங்களிலும் முன் நிற்பவர்கள் யார்? சூரர்கள் யார்? ஸமுத்திரத்தில் இந்த அணை எப்படிக் கட்டப்பட்டது? சத்ரு ஸைன்யம் எவ்விடத்தில் தங்கியிருக்கிறது? ராம லக்ஷ்மணர்களுடைய பலமும் ஆயுதங்களும்

மேல் நடக்க வேண்டிய கார்யாலோசனையும் என்ன? மஹா பலவான்களான வானரர்களுக்கு ஸேனாபதி யார்?—இந்த விஷயங்களை நுட்பமாக அறிந்து அதிசீக்கிரத்தில் எனக்கு நிஜத்தைத் தெரிவியுங்கள்'' என்றான். (இங்கே சொல்லப்படும் சுகன், வேறு ராக்ஷஸன்).

அப்படியே அவர்கள் வானரரூபத்தைத் தரித்துக்கொண்டு சத்துரு ஸைன்யத்தில் பிரவேசித்துப் பார்க்கையில், அது எல்லையற்றதாயும் பயங்கரமாயும் மயிர் கூச்சமெடுக்கும்படியாயும் எண்ண முடியாததாயும் இருக்கக் கண்டார்கள். அது பர்வத சிகரங்களிலும் குகைகளிலும் பள்ளத்தாக்குகளிலும் ஸமுத்திரக் கரையிலும் காடுகளிலும் சோலைகளிலும் தங்கியிருந்தது. சிலர் ஸமுத்திரத்தைத் தாண்டிவிட்டார்கள்; சிலர் தாண்டிக்கொண்டிருந்தார்கள்; சிலர் தாண்டத் தயாராயிருந்தார்கள்; சிலர் தகுந்த விடங்களில் தங்கி இருந்தார்கள்; சிலர் தூங்கிக்கொண்டிருந்தார்கள். அது மஹா ஸமுத்திரத்தைப்போல் பெரிய கோஷத்துடன் அணுக முடியாமல் பயங்கரமாக இருந்தது. மாறு வேஷம் தரித்த சுக ஸாரணர்களை விபீஷணன் அதிசீக்கிரத்தில் கண்டு பிடித்து ராமனிடத்தில் கொண்டுபோய், "ஸ்வாமி! சுகன் ஸாரணனென்ற இவ்விருவரும் ராவணனுடைய மந்திரிகள்; லங்கையிலிருந்து இங்கே வந்து நமது விருத்தாந்தங்களை அறிந்து செல்ல எண்ணம் கொண்டவர்கள்'' என்று தெரிவித்தான். அந்த ராக்ஷஸர்கள் பயந்து நடுங்கி, பிழைப்போமென்ற ஆசையைவிட்டுக் கைகூப்பி, "ஸ்வாமி! கருணாமூர்த்தி! தங்களுடைய ஸைன்யத்தைப் பற்றின யாவற்றையும் அறிந்துவரும்படி ராவணனால் அனுப்பப்பட்டு வந்தோம். சரணமடைந்தவர்களைக் காப்பாற்றுவதையே தர்மமாக உடைய ரகுகுல சிகாமணி! அப்புறம் தங்கள் இஷ்டம்'' என்று விக்ஞாபனம் செய்தார்கள். அதற்கு ராமன் ராவணனுடைய புத்திக் குறைவைப்பற்றிப் புன்சிரிப்புக்கொண்டு, அவர்களை ஸமாதானம் செய்தார். உத்தம குணங்களால் அலங்கரிக்கப்பட்ட தசரதனுடைய புத்திரருக்குக் கருணை ஸஹஜம்; ஸகலப் பிராணிகளுக்கும் ஹிதத்தைச் செய்வதிலேயே நோக்கமுள்ளவர், அக்ஞானத்தால் தன்னை எதிர்த்தவர்களிடத்தில் அவருக்கு விசேஷ பிரீதி. "எங்களுடைய ஸைன்யத்தை நன்றாய்ச் சுற்றிப் பாருங்கள். என்னைப்பற்றி வேண்டியவரையில் விசாரித்துத் தெரிந்து கொள்ளுங்கள். ராவணனுடைய உத்திரவுப்படி வந்த காரியத்தை முடித்துக்கொண்டு செல்லுங்கள். பார்க்க வேண்டியது ஏதாவது பாக்கியிருந்தால் மறுபடியும் அமரிக்கையாய்ப் பார்த்துத் தெரிந்து கொண்டு செல்லுங்கள். அல்லது, விபீஷணனை உங்களுக்கு யாவற்றையும் நன்றாய்க் காட்டச் சொல்லட்டுமா? சத்துருக்கள் வசத்தில் அகப்பட்டோமே, பிழைப்போமா என்று பயப்பட வேண்டாம். யுத்தத்தில் பிடிக்கப்பட்டவர்களையும் ஆயுதங்களை



எறிந்து விட்டவர்களையும் தூதர்களையும் கொல்லவே கூடாது. விபீஷண! இவர்கள் சத்துரு ஸைன்யத்தை ஸாமம் தானம் முதலிய உபாயங்களால் கலைப்பவர்கள். ஆனால் நம்மை அபயமென்று பிரார்த்திக்கிறார்கள். இவர்களை உபத்திரவிக்காமல் விட்டுவிடு. ராக்ஷஸர்களே! நீங்கள் லங்கைக்குப் போய் ராவணனிடத்தில் நான் சொல்லும் வார்த்தைகளை ஜாக்கிரதையாகத் தெரிவியுங்கள். 'எந்த பலத்தை நம்பி என் பிரிய பார்யையான ஸீதையை அபகரித்தாயோ அந்த பலத்தை நீயும் உன் பந்துக்களும் ஸைன்யமும் இப்பொழுது கூடியவரையில் உபயோகிக்க வேண்டியது. லங்கையும் அதிலுள்ள பிராகாரங்களும் தோரணங்களும் ராக்ஷஸ ஸைன்யமும் நாளைக் காலையில் என் பாணங்களால் நாசமடைவதைப் பார்ப்பாய். தேவேந்திரன் வஜ்ராயுதத்தைத் தானவர்களிடத்தில் பிரயோகிப்பதுபோல் என் பயங்கரமான கோபத்தை உன்னிடத்திலும் உன் ஸைன்யத்தினிடத்திலும் நாளைக் காலையில் பிரயோகிக்கப் போகிறேன்' என்று தெரிவியுங்கள்'' என்றார்.

சுக ஸாரணர்கள் ராகவனை நமஸ்கரித்து, 'ஜய விஜயீபவ' என்று வாழ்த்தி, லங்கைக்குச் சென்று, ராவணனிடத்தில் நடந்த விருத்தாந்தத்தைத் தெரிவித்தார்கள். "ஸ்வாமி! விபீஷணனால் கண்டுபிடிக்கப்பட்டோம். நியாயமாக எங்களைக் கொல்லவேண்டியது. ஆனால், தர்மாத்மாவும் மஹாதேஜஸ்வியுமான ரகுவீரன் எங்களிடத்தில் கிருபை வைத்துப் போகவிட்டார். தூதர்களை உபத்திரவிக்கக்கூடாதென்ற ராஜதர்மத்தை அனுஷ்டிப்பவர். (ஆஞ்சநேயரிடத்தில் ராவணன் நடந்துகொண்ட விதத்தை நீதி விரோதமென்று சொல்லாமல் குறித்துக் காட்டுகிறார்கள்). அவருடைய பராக்கிரமத்திற்கு எல்லையுண்டோ? தங்களுக்குப் பயந்து எங்களைப் போகவிட்டார் என்று எண்ணவேண்டாம். ராம லக்ஷ்மண விபீஷண சுக்ரீவர்கள் லோகபாலர்களைப் போன்றவர்கள்; சூரர்கள்; கலங்காத பராக்ரமசாலிகள்; அஸ்த்ரவித்தையில் நிபுணர்கள். அவர்களில் ராமன் தேவர்களுக்கு ஸஹாயம் செய்து அஸுரர்களைத் தோற்கடித்த தசரதருடைய புத்திரன்; தீபத்தில் ஏற்றின திவட்டி போன்றவன்; அஷ்டலக்ஷ்மீஸமேதன்; லக்ஷ்மணன் அவருடைய வலது புஜம். ஒப்பற்ற பராக்கிரமமுள்ள வாலியின் தம்பி அவனுக்கு எல்லாவிதத்திலும் ஸமானன்; பராக்கிரமத்தில் தன் பிதாவான இந்திரனைப் போன்றவன். விபீஷணனுடைய தேஜஸும் வீரியமும் தங்களுக்குத் தெரியாதவை அல்ல. இந்த நான்கு புருஷ சிரேஷ்டர்களும் ஓரிடத்தில் சேர்ந்து ஒரே மனதாக இருக்கிறார்கள். இந்த லங்கையை வேரோடு பிடுங்கி இதிலுள்ள ஸகல வஸ்துக்களுடன் நினைத்த இடத்தில் எறியக் கூடியவர்கள். மற்ற வானரர்களுடைய ஸஹாயம் அவர்களுக்கு வேண்டுமோ? ராமனுடைய ரூபத்தையும் ஆயுதங்களையும் பார்க்கை

யில் அவரொருவரே லங்கையை நாசம் செய்யக்கூடியவரென்று தோன்றுகிறது. மற்ற மூவரும் வேண்டுமோ? 'ராமன் அஸஹாய சூரனானாலும் அவனுடைய ஸைன்யத்தை நாம் அழித்தால் அவனுக்கு உத்ஸாஹம் குறையுமல்லவா' என்றால், ராமலக்ஷ்மணர்களாலும் ஸுக்ரீவனாலும் ரக்ஷிக்கப்பட்ட வானரஸைன்யம், தேவர்களும் அஸுரர்களும், இந்திரர்களும் ஒன்று சேர்ந்தாலும் அசைக்க முடியாதது. ராக்ஷஸர்களுடன் யுத்தம் செய்யப் போகிறோம் என்ற ஸந்தோஷத்தால் பூரித்து இந்த க்ஷணமே சண்டைக்குத் தயாராக இருக்கிறது; கலங்காத நிச்சயமுள்ளது; அதனோடு விரோதிக்க வேண்டாம். கோபத்தை அடக்கிப் பொறுமையைக் கைக்கொள்ளுங்கள். ஸீதையை ராமனிடத்தில் கொண்டுபோய் விடுங்கள்'' என்று விக்ஞாபித்தார்கள்.

ப்ரஹ்ருஷ்டரூபா த்4வஜிநீ வநௌகஸாம்
மஹாத்மநாம் ஸம்ப்ரதி யோத்3து4மிச்ச2தாம் |
அலம் விரோதே4ந ஶமோ விதீ4யதாம்
ப்ரதீ3யதாம் தா3ஶரதா2ய மைதி2லீ || (35)

---

## ஸர்க்கம் 26
## வானர ஸைன்யம்

---

தத்3வச: பத்2யமக்லீப3ம் ஸாரணேநாபி4 பா4ஷிதம் |
நிஶம்ய ராவணோ ராஜா பர்யபா4ஷத ஸாரணம் || (1)

இப்படி ஸாரணன் பயமில்லாமல் ராவணனுக்கு ஹிதத்தை உபதேசிக்க, அந்த ராக்ஷஸராஜன் கோபத்தால் சிரித்து, "அடே! நீ இப்படிப் பயந்தவனென்று எனக்கு இதுவரையிலும் தெரியாது. தேவ, கந்தர்வ தானவர்கள் ஒன்று சேர்ந்து என்னை எதிர்த்தாலும், ஸகலப் பிராணிகளால் எனக்கு பயம் நேர்ந்தாலும் ஸீதையைத் திருப்பிக் கொடுக்கிறதில்லை. நீ வானரர்கள் கையில் அகப்பட்டுப் பயந்து இந்த யோசனை எனக்கு ஹிதமென்று எண்ணிச் சொல்லுகிறாய். யுத்தத்தில் எனக்கு எதிரே நின்று என்னை ஜயிக்கக்கூடியவனும் உண்டோ? சொல்'' என்று கடுமையாகப் பேசி, அவர்களுடன் அனேக பனைமரங்களின் உயரத்தையுடையதும், பனியைப்போல் வெளுத்ததுமான தன் அரண்மனையின் மாடியிலேறி, கோபத்தால் கண்கள் சிவக்க, ஸமுத்திரத்தையும், பர்வதங்களையும், வனங்களையும் பார்த்தான். த்ரிகூட பர்வதத்தின் அடிவாரம் முழுவதும் வானரர்களால் மறைக்கப்பட்டிருந்தது. அந்த ஸைன்யம் எல்லையற்று எண்ணிற்கடங்காததைக்கண்டு ராவணன், "ஸாரண! இந்த வானர சிரேஷ்டர்களுக்குள் சூரர்கள் யார்? மஹாபலசாலிகள் யார்? எந்தக் காரியத்திலும் முன்னின்று நடத்துகிறவர்கள் யார்? உத்ஸாகமுள்ளவர்கள் யார்? யாருடைய வார்த்தைப்படி ஸுக்ரீவன் நடக்கிறான்? ஸேனாபதிகள் யார்? நிஜத்தைச் சொல்'' என்றான்.



ஸாரணன் வானர ஸைன்யத்தை நன்றாகப் பார்த்தறிந்தவனாதலால், "மஹாராஜரே! அதோ லங்கையை நோக்கிக் கர்ஜித்துக் கொண்டு நிற்கும் வானரன், ஸகல வானர ஸைன்யத்திற்கும் முன்னின்று நடத்தும் ஸேனாபதியான நீலன். அனேக ஆயிரம் வானராதிபதிகள் அவனைச் சூழ்ந்து நிற்பதைப் பாருங்கள். அவனுடைய வீர கோஷத்தால் லங்கையும் அதிலுள்ள பிராகாரங்களும் வீடுகளும் அதைச் சுற்றின மலைகளும் வனங்களும் சோலைகளும் கிடுகிடென்று நடுங்குகின்றன. அதோ கைகளை உயரத் தூக்கிக்கொண்டு கால்களால் நடந்துவரும் வானர வீரனைப் பாருங்கள். லங்கையை நோக்கி அடிக்கடி கொட்டாவி விடுகிறான். பர்வத சிகரத்தைப்போல் பருத்து, தாமரைத் தாதுவைப்போல் காந்தியுள்ள தேகத்துடன், வாலைச் சுழற்றி அடிக்கடி பூமியில் அடிக்கிறான். அந்தச் சப்தத்தால் ஸகல திக்குகளும் நடுங்குகின்றன. இவன் ஸுக்ரீவனால் யுவராஜாவாக அபிஷேகம் செய்யப்பட்டவன். வாலியின் புத்திரனான அங்கதன். ஸகலவிதத்திலும் பிதாவிற்கு ஸமானன். ஸுக்ரீவனுக்கு இவனிடத்தில் விசேஷப்ரீதி. இந்திரனுடைய க்ஷேமத்தில் வருணன் எப்படிக் கவலைப்பட்டவனோ, அப்படி ராமனுடைய ஹிதத்தையே கோருகிறவன். ஹனுமான் ஸீதையைக் கண்டுபிடித்தது இவனுடைய யோசனையாலல்லவா? ராகவனுடைய ஹிதத்திலேயே நோக்கமுள்ள ஆஞ்ஜநேயன் இவனுடைய ஆக்ஞைக்கு உட்பட்டவன். கணக்கில்லாத வானர சிரேஷ்டர்களடங்கிய தன் ஸைன்யத்தால் சூழப்பட்ட இவனை ஜயிப்பது ஸாத்யமல்ல. தங்களை இப்பொழுதே யுத்தத்திற் கழைப்பதைப் பாருங்கள்.

அங்கதனுக்குப் பின்னால் நிற்கும் வானர வீரனைப் பாருங்கள். யுத்தகளத்தில் சத்துருக்களுக்குக் காலன். ஸமுத்திரத்தில் அற்புதமான அணையைக் கட்டிய நளன் இவனே. கோபத்தால் தாவிக் குதித்து கொட்டாவி விட்டு அங்கங்களை நெட்டி முறிக்கும் இவனைச் சூழ்ந்து வானர ஸைன்யம் ஆரவாரித்து ஸிம்ஹநாதம் செய்வதைப் பாருங்கள். ஆயிரம்கோடி எட்டு லக்ஷம் வானர வீரர்கள், சந்தனக் காடுகளில் வஸிக்கும் தீரர்கள் இவனைப் பின்தொடர்கிறார்கள். இவன் ஒருவனே தன் ஸைன்யத்தால் லங்கையை நாசம் செய்ய நிச்சயித்திருக்கிறான்.

அதோ வெள்ளி மலையைப்போல் பயங்கரமான பராக்கிரமத்துடன் ஓரிடத்தில் நிற்காமல் ஸஞ்சரித்துக்கொண்டிருப்பவன் ச்வேதன்; மூன்று லோகங்களிலும் பிரஸித்திப்பெற்ற மஹாபுத்திமான்; "இப்பொழுதே லங்கையை நாசம் செய்கிறேன், உத்திரவு கொடுங்கள்'' என்று ஸுக்ரீவனைப் போய் பிரார்த்திக்க, "அவஸரப்படவேண்டாம், சற்றுப்பொறு''என்று வானராதிபதி ஸமாதானம் செய்ய, அதிருப்தியுடன் திரும்பி வருகிறதைப் பாருங்கள். வானர ஸேனையை அணிவகுத்துக்கொண்டு சாதுர்யமான வார்த்தைகளால் அவர்களை உத்ஸாஹப்படுத்திக்கொண்டிருக்கிறான்.

அதோ ஒரு வானர வீரன் வெகு தீர்க்கமான வாலுடனும், சிவப்பு வெளுப்பு கறுப்பு மஞ்சள் வர்ணமான அனேக வியாம நீளமுள்ள வால் மயிர்களுடனும் விளங்குகிறான்; (வியாமமென்பது இரண்டு புஜங்களையும் நீட்டின அளவு.) இவன் குமுதனென்ற ஸேனாபதி; ஒருவர்க்குமடங்காதவன்; வெகு ரோஷமுள்ளவன்; மூர்க்கன்; தங்களுடன் எப்பொழுது யுத்தம் நேருமென்று காத்துக் கொண்டிருக்கிறான். இவனும் தன் ஸைன்யத்தால் லங்கையை நாசம் செய்ய நிச்சயித்திருக்கிறான். கோமதீ நதிக் கரையில் அழகான விருக்ஷங்களடர்ந்த ஸங்கோசனமென்றபர்வதத்திலும் அதைச் சூழ்ந்த வனங்களிலும் வானரகோடிகளை ஆண்டுவருகிறான். இப்பொழுது ஸுக்ரீவனுடைய ஆக்ஞையால் ஸைன்யத்தில் கலந்திருக்கிறான். அனேககோடி வானர வீரர்களுக்கு அதிபதி.

அதோ பாருங்கள்; கொழுத்த ஸிம்ஹத்தைப் போல் மஞ்சள் நிறமுள்ள ஒரு வானர சிரேஷ்டன் நீண்ட கண்களுடன் லங்கையை எரிப்பவனைப் போல் ஒரே மனதாய் உற்றுப் பார்த்துக்கொண்டிருக்கிறான். முப்பதுகோடி வானரர்கள் இவனைப் பின்தொடர்கிறார்கள். விந்தியம் கிருஷ்ணகிரி ஸஹ்யம் ஸுதர்சனமென்ற பர்வதப் பிரதேசங்களில் இவன் ஆண்டுவருகிறான். கோர பராக்கிரமமுள்ள இந்த ரம்பனுடைய ஸைன்யம் லங்கையைத் தூளாக்க ஸித்தமாக இருக்கின்றது.

அதோ ஒருவன் காதுகளை நெறித்துக்கொண்டு அடிக்கடி கொட்டாவி விடுகிறான்; கோபத்தால் நடுங்குகிறான்; அடிக்கடி கடைக் கண்ணால் பார்க்கிறான்; தன் வாலை உற்றுப்பார்த்து ஸிம்ஹநாதம் செய்கிறான். இவன் ஸால்வேய பர்வதத்தில் அரசுபுரியும் சரபனென்ற வானர சிரேஷ்டன்; மஹா பலவான்; மஹா தேஜஸ்வி; பயமறியாதவன்; மிருத்யு தேவதையையும் லக்ஷ்யம் செய்யாதவன்; யுத்தத்தில் பின்வாங்காதவன்; அதிவேகமுள்ளவன். விஹாரர்களென்ற பலவான்களான நாற்பது லக்ஷம் வானரத் தலைவர்கள் இவனைப் பின்தொடர்கிறார்கள்.

ஆகாசத்தை மறைக்கும் மஹா மேகத்தைப்போலும் தேவகணங்களுக்குள் இந்திரனைப்போலும் வானர வீரர்களுக்கு நடுவில் அதோ நிற்பவன் பனஸன். ரணபேரிகைப்போன்ற கர்ஜனையையுடையவன்; யுத்தம் செய்ய ஆவலாயிருக்கும் வானர வீரர்களுக்குள் கோரமானவன். பாரியாத்ரபர்வதத்தில் அரசு செய்பவன். யுத்த பூமியில் இவனை ஸஹிப்பது அரிது. ஐம்பது லக்ஷம் வானராதிபதிகள் இவனைப் பின்தொடர்கிறார்கள்.

அதோ ஸமுத்திரக் கரையில் மற்றொரு ஸமுத்திரத்தைப்போல் உத்ஸாஹமுள்ள வானர ஸைன்யத்தின் நடுவில் தர்த்தரமென்ற பர்வதத்தையொத்த தேகத்துடன் ஸஞ்சரிப்பவன் வினதன்; பர்ணாஸமென்ற நதிக்கரையில் வஸிப்பவன்; அறுபதுலக்ஷம் ஸேனையையுடையவன்.



அதோ பாருங்கள், க்ரோதனனென்ற ஸேனாபதி தங்களை யுத்தத்திற்கு அழைக்கிறான். அவனுடைய ஸைன்யத்தில் ஒவ்வொருவனும் பராக்கிரமசாலி, பலவான். சிவந்த பர்வததாதுவைப்போல் விளங்கும் தேகத்துடன் கொழுப்படைந்த ஸகல வானரர்களையும் லக்ஷ்யம் செய்யாமல் திரிகிறவன் கவயன்; மஹா கோபத்துடன் தங்களுக்காக காத்துக்கொண்டிருக்கிறான். எழுபது லக்ஷம் வானர வீரர்களுடன் லங்கையைத் தானொருவனே நாசம் செய்வதாக நிச்சயித்திருக்கிறான். இப்படி பலவான்களாயும் நினைத்த ரூபத்தை எடுக்கக்கூடியவர்களாயும் யுத்தத்தில் ஸஹிக்க முடியாதவர்களாயும் இருக்கும் வானர ஸைன்யத்தையும் அங்கதன் முதலிய ஸேனாபதிகளையும் ஸுக்ரீவன் முதலிய ஸேனாபதிகளையும் அதோ பாருங்கள்.

ஏதே து3ஷ்ப்ரஸஹா கோ4ரா: ப3லிந: காமரூபிண: |
யூத2பா யூத2பஶ்ரேஷ்டா2: ஏஷாம் யூதா2நி பா4க3ஶ: ‖ (53)

## ஸர்க்கம் 27

## வானரஸைன்யம் (தொடர்ச்சி)

தாம்ஸ்து தேஹம் ப்ரவக்ஷ்யாமி ப்ரேக்ஷமாணஸ்ய யூத2பாந் |
ராக4வார்தே2 பராக்ராந்தா யே ந ரக்ஷந்தி ஜீவிதம் ‖ (1)

அவர்களுடைய உயிரை லக்ஷ்யம் செய்யாமல், ராகவனுக்காகப் பராக்கிரமம் பலம் வீரியம் முதலிய ஸகல சக்திகளையும் உபயோகிக்கும் வானராதிபதிகளைப் பாருங்கள். அதோ நீண்ட வாலுடன் நிற்கிறவன் ஹரன். வாலின் மயிர்கள் அனேக வ்யாம நீளமுள்ளவை; சிவப்பு, மஞ்சள், வெளுப்பு, கருப்பு முதலிய விசித்திர வர்ணங்களுடையவை; ஸூரிய கிரணங்களைப்போல் நான்கு புறங்களிலும் காந்தி வீசுகின்றதைப் பாருங்கள். ஒரு ஸமயம் வாலைமேலே சுழற்றிக்கொண்டும் ஒருஸமயம் பூமியில் போட்டு இழுத்துக் கொண்டும் இருக்கிறான். யுத்தத்தில் பயங்கரமானவன். வானரத்தலைவர்கள் கோடிகோடியாய் மஹாவிருக்ஷங்களை இழுத்துக் கொண்டு லங்கையை நாசம் செய்ய நிச்சயித்து இவனைப் பின்தொடர்கிறார்கள். அதோ மலைகளிலும் மேடுபள்ளங்களிலும் ஆற்றங்கரைகளிலும் தங்கியிருக்கும் கரடிக் கூட்டங்களைப் பாருங்கள். அவர்களை எண்ண முடியாது; தனித்தனியாய் வர்ணிக்க முடியாது. மஹாஸமுத்திரத்தைப்போல் எல்லையற்றவர்கள்; நீருண்ட மேகங்களைப்போலும் மைமலைகளைப் போலும் தேக காந்தியுள்ளவர்கள்; தடையற்ற பராக்கிரமசாலிகள்; மிகக்குரூரர்கள்; தங்களை ஆவலுடன் எதிர்பார்த்துக்கொண்டிருக்கிறார்கள். மேகங்களால் சூழப்பட்ட பர்ஜன்யனென்ற தேவதையைப்போல் இவர்களுக்கு நடுவில்

பயங்கரமான ரூபத்துடனும் நேத்திரங்களுடனும் விளங்குகிறவன், கரடிகளுக்கு அரசனான தூம்ரன். ரிக்ஷவானென்ற பர்வதமே இவனுடைய ராஜ்யம். நர்மதாநதிக் கரையில் ஸஞ்சரிப்பவன்.

ரூபத்தில் இவனைப் போன்றவனும் பராக்கிரமத்தில் மிஞ்சினவனும் மஹாபர்வதத்தைப்போன்ற தேகத்தையுடையவனுமாய் அதோ நிற்பவன் இவனுடைய தம்பி, ஜாம்பவானென்ற ஸேனாபதி; மஹாபராக்ரமசாலி; பெரியோர்களை ஆசிரயிப்பவன்; யுத்தத்தில் வெகு பொறுமையுள்ளவன். இந்த மஹாபுத்திமான் தேவாஸுர யுத்தத்தில் இந்திரனுக்கு விசேஷ ஸஹாயம் செய்து அபூர்வ வரங்களைப்பெற்றவன். இவனைப் பின்தொடரும் கரடிகள் பர்வத சிகரங்களிலிருந்து பெரும்பாறைகளை மஹாமேகங்களைப்போல் சத்துருக்களின் மேல் வீசுவார்கள்; யமனுக்கும் அஞ்சார்கள்; தேகமெங்கும் மயிரால் மூடப்பட்டிருக்கும்; ராக்ஷஸர்களையும் பிசாசங்களையும் அலக்ஷ்யமாய் எதிர்ப்பார்கள்; தேஜஸால் அக்னியைப் போன்றவர்கள்.

அதோ கோபத்தை அடக்க முடியாமல் எப்பொழுதும் தாவுகிறவனைப் போலிருப்பவன், தம்பனென்ற ஸேனாபதி. ஸகல வானரர்களும் அவனை ஆச்சரியத்துடன் பார்த்துக்கொண்டிருக்கிறார்கள். தேவேந்திரனும் இவனுடைய பலத்தைக் கண்டு மெச்சினான்.

அதோ நாற்கால் ஜந்துக்களுக்குள் இவ்விதமான ரூபமில்லை என்று எண்ணும்படி நிற்பவன் ஸன்னாதன்; வானரர்களுக்கு மூல புருஷன்; ஒருயோஜனை தூரத்திலிருக்கும் பர்வதத்தை ஒரே அடியில் போய்ச் சேருவான்; ஒருயோஜனை உயரமுள்ளவன்; தேவாஸுர யுத்தத்தில் அஸுரர்களாலும் ஜயிக்கப்படாதவன்; அபார கீர்த்தியைப் பெற்ற ஸேனாபதி. பராக்கிரமத்தில் இந்திரனைப் போன்ற இவனைத் தேவாஸுர யுத்தத்தில் ஸஹாயம் செய்வதற்காக அக்னி பகவான் கந்தர்வ கன்யையிடத்தில் பெற்றார்.

அதோ அநேக கோடி வானரர்களுக்கு நடுவில் நிற்பவன் க்ரோதனனென்ற ஸேனாபதி; யுத்தத்தில் வீண்பெருமை பேசாதவன், பலவான், காந்திமான். இவனும் தன் ஸைன்யங்களால் லங்கையை நாசம் செய்ய நிச்சயித்திருக்கிறான். இவன் வஸிக்கும் சிரேஷ்டமான பர்வதத்தில் நாவல் மரங்கள் அதிகம். அது தங்களுடைய தமயனான குபேரனுக்கு ஸுகமான வாஸஸ்தானம். அதற்கு இவனே ராஜா.

அதோ பெருங்காற்றில் கிளப்பப்பட்ட மஹாமேகத்தைப்போல் நிற்பவன், பிரமாதி என்ற ஸேனாபதி; ஒருவராலும் எதிர்க்கமுடியாதவன். யானைகளுக்கும் குரங்குகளுக்கும் ஏற்பட்ட பகையை மனத்தில் வைத்துக்கொண்டு கங்கைக் கரையிலுள்ள யானைகளை அடித்துத் துரத்துகிறவன். (முன்பு சம்பஸாதனனென்ற அஸுரன் யானையைப்போல் ரூபம் தரித்து ரிஷிகளையும் முனிகளையும் அதிகமாய் உபத்திரவித்தான். அவர்கள் கேஸரி என்ற வானர வீரனைத் தங்களுக்கு ஒத்தாசை செய்யும்படி வேண்டினார்கள். அவனும் அப்படியே சம்பஸாதனனுடன் கோர யுத்தம் செய்து அவனைக் கொன்றான். அது முதல் யானைகளுக்கும் வானரர்களுக்கும் தீராப்பகை உண்டாயிற்று). மலைக்குகைகளில் வஸிப்பவன்; நடக்கும்பொழுதே சத்துருக்களை நாசம் செய்பவன். யானைகளால் விருக்ஷங்களையும் விருக்ஷங்களால் யானைகளையும் அழிக்கிறவன். கங்கைக்கரையிலுள்ள உசீரபீஜமென்ற பர்வதத்தில் இந்திரன் தேவலோகத்தில் வீற்றிருப்பது போல், ராஜ்யபாலனம் செய்பவன். பலத்தாலும், வீரியத்தாலும், பராக்கிரமத்தாலும் கொழுப்படைந்த வான்ரர்கள் லக்ஷம் லக்ஷமாய் இந்த ஸேனாபதியைப் பின் தொடர்கிறார்கள். இவனுடைய ஸைன்யத்தைச் சேர்ந்த வானரர்கள் கோபம் கொண்டு வேகமாய்த் தாவுவதால் நான்குபுறங்களிலும் கிளம்பின சிவப்புப் புழுதியைப் பாருங்கள்.

அதோ மஹாவேகசாலியான கவாக்ஷனென்ற ஸேனாபதியைப் பாருங்கள். ஸமுத்திரத்தில் அணை கட்டினதைப் பார்த்து இவனுக்குட்பட்ட கோலாங்கூலங்களென்ற வானரகோடிகள் அவனைச் சூழ்ந்து, லங்கையை இப்பொழுதே நாசம் செய்வதற்காகத் தங்களை அனுப்பும்படிப் பிரார்த்திக்கிறார்கள்.

அதோ கேஸரி என்ற வானராதிபதியைப் பாருங்கள். அவன் காஞ்சன பர்வதத்தில் அரசு செய்பவன். அங்கே வளரும் விருக்ஷங்கள் எக்காலத்திலும் ஸகல விதமான பழங்களாலும் புஷ்பங்களாலும் விளங்கும். தேனைக் குடித்து மதங்கொண்ட வண்டுகளின் ஓசை மதுரமாய்க் கேட்கப்படும். ஸூரியபகவான் அதன் ஸமீபத்தில் பிரதிதினமும் ஸந்தோஷமாய் செல்லுகிறார். மஹரிஷிகள் அங்கே எப்பொழுதும் ஆனந்தமாய் வஸிக்கிறார்கள். ஸூரிய காந்தியால் அந்த மலையும் அதில் வஸிக்கும் மிருகங்களும் பக்ஷிகளும் தங்க நிறமுள்ளவை.

அதோ சதவலி என்ற வானரசிரேஷ்டனைப் பாருங்கள். மஹா வீரன், புத்திமான், பலவான், விக்ரமசாலி, எல்லையற்ற தைரியமுடையவன், தங்களை ஜயிப்பதற்காக பிரதிதினமும் ஸூரியனை உபாஸிக்கிறான். ராமனுடைய இஷ்டத்தைப் பூர்த்தி செய்வதில் உயிரைத் துரும்பாய் நினைப்பவன். அஸ்தகிரிக்கு மேற்கில் மேரு என்ற ஒரு பர்வதமுண்டு. அதைச் சுற்றிலும் அறுபதாயிரம் அழகான தங்கமலைகள். தங்களை ராக்ஷஸ வீரர்கள் சூழ்ந்திருப்பது போல் விளங்குகின்றன. அங்கே இவனுடைய ஸைன்யங்கள் யதேச்சையாய் வஸிக்கிறார்கள். வெளுப்பு, சிவப்பு, மஞ்சள், பழுப்பு முதலிய நிறமுள்ளவர்கள்; கூர்மையான நகங்களையும் பற்களையும் ஆயுதமாக உடையவர்கள்; ஸிம்ஹங்களைப் போல் நான்கு கோரைப்

பற்களை உடையவர்கள்; புலிகளைப் போல் நெருங்க முடியாதவர்கள்; கோபத்தால் ஜ்வலிக்கும் மஹாஸர்ப்பங்களைப்போன்றவர்கள்; நீண்ட வாலை உடையவர்கள்; மதயானைகளைப்போல் பருத்தவர்கள்; மஹாபர்வதங்களைப்போல் கெட்டியான தேகத்தையுடையவர்கள்; மஹாமேகங்களைப்போல் கர்ஜிப்பவர்கள்; கோபத்தால் சிவந்த உருண்டை மஞ்சள் நிறமுள்ள கண்களையும் அதிபயங்கரமான குரல்களையும் உடையவர்கள்; லங்கையைக் கண்டவுடன் அதைப் பொடியாக்குகிறவர்கள் போல் பரபரக்கிறார்கள்.

கஜன், கவாக்ஷன், கவயன், நளன், நீலனென்ற வானரோத்தமர்கள் ஒவ்வொருவரும் பத்துகோடி வானரர்களுக்கு அதிபதிகள். இன்னும் விந்தியபர்வதத்தில் வஸிக்கும் வானரச்ரேஷ்டர்கள் பலருண்டு. அவர்களை எண்ணமுடியாது. எல்லோரும் அளவற்ற சக்தியுடையவர்கள்; ஸமர்த்தர்கள்; பூமியிலுள்ள பர்வதங்களை ஒரு க்ஷணத்தில் பொடிப்பொடியாகச் செய்யக் கூடியவர்கள்; மலை போன்ற சரீரத்தையுடையவர்கள்" என்று தெரிவித்தான்.

ஸர்வே மஹாராஜ மஹாப்ரபா⁴வா:
ஸர்வே மஹாசைல நிகாச காயா: |
ஸர்வே ஸமர்தா²: ப்ருதி²வீம் க்ஷணேந
கர்தும் ப்ரவித்⁴வஸ்த விகீர்ண சைலாம் ‖ (47)

---

## ஸர்க்கம் 28

## வானர ஸைன்யம்

---

ஸாரணஸ்ய வச: ச்ருத்வா ராவணம் ராக்ஷஸாதி⁴பம் |
ப³லமாதி³ச்ய தத் ஸர்வம் சுகோ வாக்ய மத²ாப்³ரவீத் ‖ (1)

**ஸா**ரணன் முற்றிலும் சொல்லவில்லையென்று சுகன் தானே வர்ணிக்க ஆரம்பித்தான். "மஹாராஜா! அதோ மதயானைகளைப் போலவும், கங்கைக் கரையில் வளரும் ஆலமரங்களைப் போலவும், ஹிமயமலையிலுள்ள ஆச்சாமரங்களைப் போலவும் ஓங்கி நிற்கும் வானரர்களைப் பார்த்தீர்களா? இவர்கள் யுத்தத்தில் எதிர்க்க முடியாதவர்கள்; பலசாலிகள்; நினைத்தரூபங்களை எடுக்கக்கூடியவர்கள்; பலத்தில் தைத்யர்களையும் தானவர்களையும் போன்றவர்கள்; யுத்தத்தில் தேவர்களைப் போன்ற பராக்கிரமமுள்ளவர்கள். இவர்கள் இருபத்தோறு கோடி, அநேக ஆயிரம் சங்கங்கள், அநேக நூறு பிருந்தங்கள். ஸுக்ரீவனுக்கு உதவி செய்பவர்கள்; எப்பொழுதும் கிஷ்கிந்தையில் வஸிப்பவர்கள்; காமரூபிகளாய்த் தேவர்களுக்கும் கந்தர்வர்களுக்கும் பிறந்தவர்கள்.

அதோ தேவர்களைப்போல் ஸுந்தரமான இரண்டு குமாரர்களைப்பாருங்கள்; **மைந்தன், த்விவிதன்** என்று பிரஸித்திபெற்றவர்கள். யுத்தத்தில் தேவர்களே இவர்களுக்கு நிகரில்லை. பிரஹ்மாவின் அனுமதிபெற்று அமிருதபானம் செய்தவர்கள். தங்களுடைய பலத்தால் லங்கையை அழிக்க நிச்சயித்திருக்கிறார்கள்.



அதோ மதம்கொண்ட மஹாகஜத்தைப்போல் நிற்பவனைப் பாருங்கள். கோபம்கொண்டால் ஸமுத்திரங்களையும் கலக்குவான். இவனே ஸீதையைத் தேடிக்கொண்டு தங்களால் ரக்ஷிக்கப்பட்ட லங்கையில் பிரவேசித்தவன். இவனை முன்பு பார்த்திருக்கிறீர்கள்; இவனே மறுபடியும் வந்திருக்கிறான். கேஸரியின் மூத்த புத்திரன்; வாயுபகவானுக்குப் பிறந்தவன்; ஹனுமானென்று பிரஸித்தி பெற்றவன்; முன்பு ஸமுத்திரத்தைத் தாண்டினவன்; நினைத்த ரூபத்தையெடுக்கக்கூடியவன்; வானரசிரேஷ்டன்; ஆச்சரியகரமான பலத்தையும் ரூபத்தையுமுடையவன்; வாயு பகவானைப்போல் எங்கும் தடையற்றவன். குழந்தையாக இருக்கும்பொழுது பசியால் வருந்தி, உதித்த ஸூரியனைக் கண்டு, 'இந்த ஆதித்யனைப் பிடித்துத் தின்று, என் பசியைத் தீர்த்துக்கொள்வேன்' என்று நினைத்து, அளவற்ற பலத்தால் கொழுப்படைந்து மூவாயிரம் யோஜனை தூரம் ஆகாச மார்க்கமாய்ச் சென்றான். தேவர்களாலும் மஹர்ஷிகளாலும் தானவர்களாலும் நெருங்கமுடியாத ஆதித்யபகவானுடைய தீக்ஷ்ணமான தேஜஸால் தடுக்கப்பட்டு களைத்துமயங்கி உதயகிரியில் விழுந்தான். அங்கே ஒரு கற்பாறையில் இவனுடைய கன்னம் அடிபட்டு சிதறிஉடைந்தது. ஆகையால் ஹனுமான் (அடிபட்ட கன்னத்தை உடையவன்) என்று பெயர்பெற்றான். பெரியோர்களிடத்திலிருந்து இந்த விருத்தாந்தத்தை அறிந்தேன். இவனுடைய பலத்தையும் ரூபத்தையும் பிரபாவத்தையும் வர்ணிப்பது ஸாத்யமல்ல. இவன் ஒருவனே தன் பராக்கிரமத்தால் லங்கையை நாசம் செய்ய நிச்சயித்திருக்கிறான்.

அவனுடைய தோளின் மேல் வீற்றிருக்கும் சூரனைப் பாருங்கள். தங்கமலையின் சிகரத்தில் தங்கியிருக்கும் நீருண்ட காளமேகத்தைப்போல் மனோஹரமான திவ்யமங்கள விக்ரஹத்தையுடையவன் **ராமன்.** அழகிய மஹா தடாகத்தில் மலர்ந்த செந்தாமரை இதழ்களைப் போன்ற நேத்திரங்களையுடையவன். முன்பு தங்களால் ஜயிக்கப்பட்ட அனரண்யன் முதலியவர்களைப் போன்றவனல்ல. இக்ஷ்வாகு வம்சத்தரசர்களுக்குள் சத்துருக்களால் அணுக முடியாதவன். இது லோகப் பிரஸித்தமான விஷயம். கரன், தூஷணன், த்ரிசிரஸ், தங்களுடைய சத்துருவான வாலி, கபந்தன், விராதன், ஸுபாஹு, மாரீசன், தாடகை முதலியவர்கள் இதற்கு சாக்ஷிகள். கேவலம் பௌருஷம் மாத்திரமல்ல; அதை ஒருவராலும் அசைக்க மாற்ற முடியாது. (அயோத்யா காண்டத்தில் ஜாபாலியின் நாஸ்திக வாதம் இவரிடத்தில் கொஞ்சம்கூட உபயோகப்படவில்லை.) தர்மத்தின் எல்லையைத் தாண்டாதவன். (பரதன் எவ்வளவு தடுத்தும், பிதிருவாக்ய பரிபாலனத்தை விடவில்லை. ஸீதை எவ்வளவு

தடுத்தும் தண்டகாரண்ய ரிஷிகளுக்குச் செய்த அபயதானத்தை நிறைவேற்றினார்.) கரனுடன் யுத்தம் செய்யும்பொழுது பாணங்களைப் பிரயோகிக்க இடமில்லாததால் சற்றுப் பின் வாங்கினார். வாலியைக் கபடமாய்க் கொன்றது தர்ம விரோதமல்ல. தன்னை ஆசிரயித்தவனுக்குச் செய்த பிரதிக்ஞையை நிறைவேற்ற வேண்டியது அவசியம். அதற்கு வேறு வழி இல்லை. கேவலம் பௌருஷமும் தர்மமும்மாத்திரமல்ல; அஸ்திரசஸ்திரபலமும் எல்லையற்றது. பிரஹ்மாஸ்திரத்தின் மந்திரத்தையும் வேதங்களையும் நன்றாயறிந்தவன். வேதங்களின் அர்த்தங்களை அறிந்தவர்களுக்குள் சிரேஷ்டன். (லோகத்திற்கு ஞானோபதேசம் செய்ய யோக்கியதை பெற்ற வஸிஷ்டர் முதலியவர்களைக் காட்டிலும் மேலானவர்.) பாணங்களால் ஆகாசத்தைப் பிளப்பான்; பர்வதங்களையும் துளைப்பான்; கோபத்தில் மிருத்யுதேவதையைப் போன்றவன்; பராக்கிரமத்தில் தேவேந்திரனுக்கு ஸமானன். இவன் ஜனஸ்தானத்தில் வஸிக்கையில் இவனுடைய பிரிய பாரியையான ஸீதையைத் தாங்கள் எடுத்துவந்ததால் தங்களிடத்தில் அடங்காத கோபம் கொண்டிருக்கிறான். தங்களுடன் கோர யுத்தம் செய்வதற்குத் தங்களைத் தேடி வந்திருக்கிறான்.

அவனுக்கு வலது பக்கத்தில், சுத்தமான ஜாம்பூநதமென்ற தங்கத்தைப்போன்ற காந்தியாலும் விசாலமான மார்பாலும் தங்களிடத்திலுள்ள கோபத்தால் சிவந்திருக்கும் நேத்திரங்களாலும் கருத்துச் சுருண்ட தலைமயிராலும் அலங்கரிக்கப்பட்டவன் ராமனுக்குத் தம்பி; **லக்ஷ்மண**னென்ற பெயரைப்பெற்றவன்; ராமனுக்கு உயிரைப் போன்றவன்; மிகவும் பிரியன்; தனுர் வேதம் நீதிசாஸ்திரம் முதலிய ஸகல வித்தைகளிலும் நிபுணன்; பிறருடைய பராக்கிரமத்தைப் பொறுக்காதவன்; ஜயிக்க முடியாதவன்; சத்துருக்களை ஜயிப்பவன்; எல்லையற்ற ஆண்மையுடையவன்; புத்திமான்; பலசாலி; ராமனுடைய வலது புஜம்; எப்பொழுதும் வெளியில் சஞ்சரிக்கும் பிராணன். ரகுவீரனுடைய விஷயத்தில் தன் உயிரையும் லக்ஷ்யம் செய்யாதவன். இவன் ஒருவனே ஸகல ராக்ஷஸர்களையும் நாசம் செய்ய நிச்சயித்திருக்கிறான்.

ராமனுக்கு வலது பக்கத்தில் ராக்ஷஸகணங்களால் சூழப்பட்டு நிற்பவன், தங்களுடைய ராஜ்யத்திற்கு அரசனான **விபீஷணன்**. (நான்கு ராக்ஷஸர்களால் சூழப்பட்டிருந்தும் ஒவ்வொருவரும் அநேக கணங்களுடைய பராக்கிரமத்தையுடையவர்களென்பது.) ஸகல இச்சைகளும் நிறைவேறினவரானதால் ராமனுக்கு லங்கா ராஜ்யத்தில் விருப்பமில்லை. ஆகையால் விபீஷணனை அதற்கரசனாக அபிஷேகம் செய்திருக்கிறான். தங்களிடத்தில் அடங்காத கோபம் கொண்டு தங்களுடன் யுத்தம் செய்ய வந்திருக்கிறான்.

ராமனுக்கும் விபீஷணனுக்கும் நடுவில் மஹாபர்வதத்தைப் போல் அசைக்க முடியாமல் இருப்பவனைப் பாருங்கள். ஸகல வானரர்களுக்கும் அதிபதி; ஒருவராலும் ஜயிக்கப்படாதவன். ஹிமயமலை எப்படிப் பர்வதங்களுக்குள் சிரேஷ்டமோ, அப்படி தேஜஸாலும் கீர்த்தியாலும், ஸ்வபாவ ஞானத்தாலும், சாஸ்திர ஞானத்தாலும், உத்தம குலத்தாலும் ஸகல வானரர்களைக்காட்டிலும் அதிகமாய் பிரகாசிப்பவன். குகைகளாலும் வனங்களாலும் விளங்கும் கிஷ்கிந்தையில் ராஜ்யபாலனம் செய்யும் **ஸுக்ரீவன்** பிறர் நெருங்கக் கூடாத பர்வதத்தில் விசித்திரமாய் அமைக்கப்பட்ட கோட்டையில் முக்கியமான ஸேனாபதிகளுடன் வஸிப்பவன். அநேக ஸ்வர்ணத் தாமரை புஷ்பங்களுடன் விளங்கும் தங்கஹாரம் அவனுடைய கழுத்தில் பிரகாசிப்பதைப் பாருங்கள். அது தேவர்களும் மனுஷ்யர்களும் ஆசைப்படக்கூடியது; ஜயலக்ஷ்மிக்கு வாஸஸ்தானம். (இதை அணிந்தவனை சத்துருக்கள் ஜயிக்க முடியாது.) ஆகையால் ராமன் வாலியை மறைந்து கொல்லும்படி நேர்ந்தது. ராமன் வாலியைக் கொன்று இந்த மாலையையும் தாரை என்ற உத்தம ஸ்த்ரீயையும் சாசுவதமான வானர ராஜ்யத்தையும் இவனுக்குக் கொடுத்தார்.

நூறு ஆயிரம்கொண்டது ஒரு லக்ஷம்; நூறு லக்ஷங்கள் ஒரு கோடி; லக்ஷம் கோடிகள் ஒரு சங்கம்; லக்ஷம் சங்கங்கள் ஒரு மஹா சங்கம்; லக்ஷம் மஹாசங்கங்கள் ஒரு பிருந்தம்; லக்ஷம் பிருந்தங்கள் ஒரு மஹா பிருந்தம்; லக்ஷம் மஹாபிருந்தங்கள் ஒரு பத்மம்; லக்ஷம் பத்மங்கள் ஒரு மஹாபத்மம்; லக்ஷம் மஹாபத்மங்கள் ஒரு கர்வம்; லக்ஷம் கர்வங்கள் ஒரு மஹாகர்வம்; லக்ஷம் மஹாகர்வங்கள் ஒரு ஸமுத்திரம்; லக்ஷம் ஸமுத்திரங்கள் ஓர் ஓகம்; லக்ஷம் ஓகங்கள் ஒரு மஹாஓகம்; இப்படிக் கோடி மஹாஓகங்கள், நூறு ஸமுத்திரங்கள், நூறு கர்வங்கள், ஆயிரம் மஹாபத்மங்கள், நூறு பத்மங்கள், ஆயிரம் மஹாபிருந்தங்கள், நூறு பிருந்தங்கள், ஆயிரம்மஹாசங்கங்கள், நூறு சங்கங்கள் ஆயிரம் கோடிகள் அடங்கிய வானர ஸைன்யத்தால் சூழப்பட்டு, மற்றொரு ஸமுத்திரத்தைப் போன்ற விபீஷணனாலும், அவனுடைய நான்கு மந்திரிகளாலும் ஸகாயம் செய்யப்பட்டு, வானரேச்வரனான ஸுக்ரீவன் தங்களை யுத்தத்திற்கு அழைக்கிறான். எல்லையற்ற ஸைன்யத்துடனும் எல்லையற்ற பல பராக்கிரமத்துடனும் விளங்குகிறான். குரூர க்ரஹத்தைப் போல் ஜ்வலித்துக்கொண்டு நமக்கு ஸமீபத்தில் வந்து நிற்கும் வானர ஸேனையை நன்றாய்க் கவனித்துப் பாருங்கள். சத்துருவால் நமக்கு அபஜயம் நேரக்கூடாது; ஜயம் கிடைக்கவேண்டும். அதற்குத் தகுந்த சிரேஷ்டமான உபாயங்களைச் சீக்கிரத்தில் அனுஷ்டிக்க வேண்டும்" என்று தெரிவித்தான்.

இமா மஹாராஜ ஸமீக்ஷ்ய வாஹிநீம்
உபஸ்தி2தாம் ப்ரஜ்வலித க்3ரஹோபமாம் |
தத: ப்ரயத்ந: பரமோ விதீ4யதாம்
யதா2 ஜய: ஸ்யாந் ந பரை: பராஜய: ‖ (45)

## ஸர்க்கம் 29

# ராவணன் தூதர்களை ரஹஸ்யமாக அனுப்பியது

ஶுகேந து ஸமாக்$^{2}$யாதாந் தாந் த்$^{3}$ருஷ்ட்வா ஹரியூத$^{2}$பாந் |
ஸமீபஸ்த$^{2}$ம் ச ராமஸ்ய ப்$^{4}$ராதரம் ஸ்வம் விபீ$^{4}$ஷணம் || (1)

இப்படி சுகனால் வர்ணிக்கப்பட்ட வானரத் தலைவர்களும், தன்னுடன் பிறந்த விபீஷணனும், ராமனுக்கு வலது புஜமான லக்ஷ்மணனென்ற மஹாவீரனும், பயங்கரமான பராக்கிரமத்தையுடைய வானராதிபதியான ஸுக்ரீவனும் ராமனைச் சூழ்ந்து நிற்பதைக் கண்டு. ராவணன் கொஞ்சம் பயந்தான். பிறகு, தன் எதிரில் சத்துருவைப் புகழ்ந்ததால் கடுங்கோபம் கொண்டு, கைகூப்பித் தலை குனிந்து நிற்கும் அவ்விருவர்களையும் நோக்கி, ரோஷத்தால் வார்த்தைகள் குளற, "என்ன தைரியம்! கொடுக்கவும் கெடுக்கவும் சக்தியுள்ள பிரபுவிடத்தில் அவரை அண்டிப் பிழைக்கும் மந்திரிகள் அவருக்கு இஷ்டமில்லாத வார்த்தைகளைச் சொல்வதென்பது எந்த நீதி சாஸ்திரத்திற்கு ஏற்றது? நமது சத்துருக்கள் நம்மை நாசம் செய்ய நினைத்து யுத்தத்திற்கு வந்திருக்கையில், யாதொரு காரணமும் இல்லாமல் நீங்கள் அவர்களைப் புகழ்வது எந்த நீதி சாஸ்திரத்திற்கு ஏற்றது? யுத்தத்திற்கு ஆரம்பிக்கும் ஸமயத்தில் சத்துருக்களை ஸ்தோத்திரம் செய்தால் நம்மவர்களுக்குத் தைரியம் குறையாதா? அரசனைச் சேர்ந்தவர்கள் அவனிடத்தில் நடந்துகொள்ள வேண்டிய முறையே ராஜநீதியின் ஸாரம். அது உங்களுக்குத் தெரியவில்லை. நீதிசாஸ்திரத்தை உபதேசிக்கும் ஆசாரியர்களையும் மஹான்களையும், ஞானத்தாலும் வயதாலும் ஆசாரத்தாலும் பெரியோர்களையும், நீங்கள் ஆசிரயித்தது வீணாயிற்று. அவர்களால் உபதேசிக்கப்பட்ட நீதியை அறிந்தும் ஒருவேளை மறந்துவிட்டீர்களோ? அல்லது, ஞானம் பிறந்தும், அதை அனுஷ்டானத்திற்குக் கொண்டுவராமல் கேவலம் சுமையைப்போல் சுமந்து கொண்டிருக்கிறீர்களோ? தெரிந்தவர்களென்று இது வரையில் நீங்கள் பெயர்பெற்றதற்கு இதே காரணமாக இருக்க வேண்டும். இப்படி நீதிசாஸ்திர வாஸனையே இல்லாத முட்டாள்களான மந்திரிகளை வைத்துக்கொண்டு இதுவரையில் நான் இந்த ராஜ்யத்தை ஆண்டு வந்ததும் உயிருடன் பிழைத்திருப்பதும் நான் செய்த புண்யத்தாலல்லவா? என்னிடத்தில் இப்படிக் கடுமையாகப் பேசின உங்களுக்கு உயிர் போகுமென்ற பயமில்லையோ? உங்களை ஆண்டுவரும் என் நாக்கின் நுனியில் உங்களுடைய க்ஷேமமும் நாசமும் குடியிருக்கிறதென்று அறியீர்களோ? காட்டிலுள்ள மரங்கள் நெருப்பில் அகப்பட்டும் பிழைக்கலாம்; அரசனுடைய கோபத்திற்குட்பட்ட அபராதிகள் பிழைப்பதுண்டோ? "சத்துருபக்ஷத்தைக் கொண்டாடும் இந்தப் பாபிகளை இப்பொழுதே கொல்வது தகும். ஆனால், இவர்கள் எனக்குச் செய்த உபகாரங்களை நினைத்தால் என் கோபம் அடங்குகிறது" என்று தனக்குள் ஆலோசித்து. "துஷ்டர்களே! இந்த க்ஷணம் முதல் உங்களை வேலையிலிருந்து நீக்கினேன். இனி என் கண்ணில் படாமல் எங்கேயாவது ஓடிப்போங்கள். எனக்குச் செய்த உபகாரங்களை நினைத்து உங்களைக் கொல்லவில்லை. நீங்கள் என்னிடத்தில் நன்றி மறந்ததும் என் ஸ்நேகத்தை இழந்ததுமே உங்களுக்கு மரணத்தைக் காட்டிலும் குரூரமான தண்டனை" என்றான். அவர்கள் வெட்கத்தால் தலை குனிந்து, "ஜய விஜயீபவ" என்று அவனை வாழ்த்தி, அவ்விடம் விட்டுச் சென்றார்கள்..

பிறகு, ராவணன் ஸமீபத்திலிருந்த மகோதரனைப் பார்த்து, "நீதிசாஸ்திரத்தில் நிபுணர்களான சாரர்களை இப்பொழுதே வரச் சொல்" என்றான். அவர்கள் அப்படியே அவனிடத்திற்கு வந்து, நமஸ்கரித்துக் கைகூப்பி, "ஜய விஜயீபவ" என்று வாழ்த்தி, அவனுடைய உத்திரவை எதிர்பார்த்துக்கொண்டு நின்றார்கள். அவர்கள் நம்பிக்கையுள்ளவர்களென்றும் சூரர்களென்றும் தன்னிடத்தில் பக்தியுள்ளவர்களென்றும் சத்துருக்களுக்குப் பயப்படாதவர்களென்றும் நன்றாக அறிந்து, தசமுகன் அவர்களை நோக்கி, "நீங்கள் இங்கிருந்து சத்துரு ஸைன்யத்தில் பிரவேசித்து, ராமனுடைய உத்தேசத்தை அறிந்து வாருங்கள். அதில் ஏதாவது குறை இருந்தால், அவனைப் பயமுறுத்தி ஜயிப்போம். அவனுடைய மந்திரிகளில் அவனுக்கு அந்தரங்கமானவர்கள் யார்? மித்திரர்கள் யார்? அவகாசமிருந்தால் அவர்களைக் கலைப்போம். தூங்கும் பொழுது அவனை அநேகர்கள் ரக்ஷித்துக் கொண்டிருக்கிறார்களா? அல்லது, தனியாகத் தூங்குகிறானா? அப்படியிருந்தால் தூங்கும் பொழுது யுத்தம் செய்வோம். விழித்துக்கொண்டிருக்கையில் எப்படிக் காலத்தைக் கழிக்கிறான்? கவலையற்றிருக்கிறானா? கவலை கொண்டிருக்கிறானா? அப்படியிருந்தால் அவனை மோசம் செய்து கொல்லுகிறேன். லங்கையை இப்பொழுதே முற்றுகை போடுவானா? அப்படியிருந்தால் நாளடைவில் இவனை வஞ்சித்து விடலாம். நீங்கள் மறைந்திருந்து இந்த விஷயங்களை ஸகல விதங்களிலும் பூர்ணமாக அறிந்து வாருங்கள். புத்திமான்களான அரசர்கள் சாரர்களைக்கொண்டு சத்துருவின் ஸகல விருத்தாந்தங்களையும் அறிந்து, யுத்தத்தில் அதிஸுலபமாய்ச் சிரமமில்லாமல் அவர்களை ஜயிக்கிறார்கள்." என்றான்.

அந்தத் தூதர்கள் சார்த்தூலனை முன்னிட்டுக்கொண்டு ராக்ஷஸாதிபதியை பிரதக்ஷிண நமஸ்காரங்கள் செய்து உத்திரவு பெற்றுக்கொண்டு. ராமலக்ஷ்மணர்கள் இருக்குமிடத்திற்கு ஸந்தோஷமாய்ச் சென்று. சுவேல மலையின் ஸமீபத்தில் போய் மாறுவேஷம் பூண்டு, ராமலக்ஷ்மணர்களையும் ஸுக்ரீவன் விபீஷணன் முதலியவர்களையும் கவனித்துப் பார்த்துக்கொண்டிருந்

தார்கள். வானர ஸைன்யத்தைப் பார்க்கப் பார்க்க அவர்களுக்குப் பயம் அதிகரித்துத் தைரியம் குறைந்தது. அதற்குள் தர்மாத்மாவான விபீஷணன் அவர்களைக் கண்டறிந்து ராமனிடத்தில் பிடித்துக் கொண்டுபோய், "ஸ்வாமி! இவன் சார்த்தூலனென்ற ராக்ஷஸன். ராவணனால் ரஹஸ்யமாக அனுப்பப்பட்ட இந்தச் சாரர்களுக்குத் தலைவன்" என்று தெரிவித்தான். அதற்குள் வானரர்கள், "இந்தப் பாபியை உயிருடன் விடக்கூடாது" என்று உபத்திரவித்துக் கொல்ல யத்தனிக்கையில், ராமன், "இவனை ஒன்றும் செய்யாமல் விட்டு விடுங்கள்" என்று ஆக்ஞாபித்தார். உடனே வானரவீரர்கள் அவனை அடித்துத் துரத்தினார்கள். மற்ற சாரர்களை ஹிம்ஸிப்பதைக் கண்டு ராமன் இரங்கி அவர்களையும் விடுத்தார். அவர்கள் புத்தி சிதறி, இந்திரியங்கள் கலங்கி, பெருமூச்சுவிட்டுக்கொண்டு, லங்கைக்குத் திரும்பிப்போய், இதர ராஜ்யங்களில் நடக்கும் விருத்தாந்தங்களை மாறுவேஷம் பூண்டு அறிந்து வருகிறவர்களானதால், "ஸுவேல மலையில் ராமலக்ஷ்மணர்கள் எல்லையற்ற ஸைன்யத்துடன் வந்திருக்கிறார்கள்" என்று ராவணனுக்குத் தெரிவித்தார்கள்.

ததோ த$^{3}$ஶக்$^{3}$ரீவ முபஸ்தி$^{2}$தாஸ்து தே
சாரா ப$^{3}$ஹிர் நித்யசரா நிஶாசரா: |
கி$^{3}$ரே: ஸுவேலஸ்ய ஸமீபவாஸிநம்
ந்யவேத$^{3}$யந் பீ$^{4}$மப$^{3}$லம் மஹாப$^{3}$லா: || (33)

---

## ஸர்க்கம் 30

## வானர ஸைன்யம்

---

ததஸ் தமக்ஷோப்$^{4}$யப$^{3}$லம் லங்காதி$^{4}$பதயே சரா: |
ஸுவேலே ராக$^{4}$வம் ஶைலே நிவிஷ்டம் ப்ரத்யவேத$^{3}$யந் || (1)

அதைக் கேட்டு ராவணன் கொஞ்சம் பரபரப்படைந்து சார்த்தூலனை நோக்கி, "ஏதோ கஷ்டத்தை அனுபவித்தவனுக் காணப்படுகிறாயே. முகத்தின் நிறம் மாறியிருக்கிறது. கோபம் கொண்ட சத்துருக்களின் வசத்தில் அகப்பட்டாயோ?" என்று கேட்டான்.

சார்த்தூலன் பயத்தால் நடுங்கிக்கொண்டு, தழதழத்த குரலுடன், "மஹாராஜ! அந்த வானர சிரேஷ்டர்களுடைய விருத்தாந்தங்களை ரகஸ்யமாக அறிய முடியாது. அவர்கள் பலசாலிகள்; பராக்ரமிகள்; ராகவனால் ரக்ஷிக்கப்பட்டவர்கள். அவர்களுடன் பேசவே முடியவில்லை; பரீக்ஷித்து அறிவதெப்படி? பர்வதங்களைப் போன்ற வானரர்கள் ஒவ்வொரு மார்க்கத்திலும் ஜாக்கிரதையாகக் காத்துக் கொண்டிருக்கிறார்கள். நமது சாரர்களால் நெருங்கப்படாத வானர ஸைன்யத்தில் நான் பிரவேசித்தவுடனே என்னைக் கண்டு விட்டார்கள். விபீஷணனுடைய மந்திரிகள் எங்களைப்



பிடித்துப் பூமியில் தள்ளிப் புரட்டினார்கள். அதற்குள் வானரர்கள் எங்களைச் சூழ்ந்து, கைகளால் குத்தி அறைந்து, முழங்கால்களால் இடித்து, நகங்களாலும் பற்களாலும் கீறிக் கிழித்தார்கள். கொஞ்சம்கூடப் பொறுமையில்லாத அந்தக் குரங்குகள் எங்களைக் கட்டியிழுத்துக்கொண்டு, "இதோ நமது ஸைன்யத்தின் ரஹஸ்யங்களை அறிய வந்த சாரர்களைப் பாருங்கள்" என்று ஒவ்வோரிடத்திலும் கோஷித்தார்கள். பிறகு தேகமெங்கும் ரத்தம் பெருக, இந்திரியங்கள் சிதறி, மூர்ச்சையடைந்தோம். பிரக்ஞை வந்தவுடன் அந்தக் குரங்குகள் மறுபடியும் உபத்திரவித்தன. முடிவில் எங்களை ராமனிடத்தில் கொண்டு போனார்கள். 'இனி நாங்கள் பிழைக்கமாட்டோம். எங்களைக் காப்பாற்றும்' என்று ரகுவீரனைக் கைகூப்பிப் பிரார்த்தித்தோம். அவர் கிருபை கூர்ந்து எங்களை விட்டுவிடும்படி ஆக்ஞாபித்தார். அவருடைய தயவால் பிழைத்து இந்த ஸ்திதியில் இருக்கிறோம். பர்வதங்களாலும் பாறைகளாலும் ஸமுத்திரத்தில் ராமன் அணைகட்டி, வானர ஸைன்யங்களுடன் லங்கைக்கோட்டை வாசலில் ஆயுதபாணியாய் நிற்கிறான். தன் ஸேனையைக் கருடவ்யூஹமாய் அணிவகுத்து, என்னை அனுப்பி விட்டு, தேஜஸால் ஜ்வலித்துக்கொண்டு லங்கையை நோக்கி வருகிறான். நகரத்தில் பிரவேசிக்குமுன் ஸீதையையாவது அவனிடத்தில் கொண்டுபோய் விடவேண்டும்; யுத்தத்திற்காவது தயாராக வேண்டும்" என்று தெரிவித்தான்.

ராவணன் சற்று நேரம் ஆலோசித்து, "தேவ, கந்தர்வ, தானவர் முதலியவர்கள் எல்லோரும் ஒன்று சேர்ந்து என்னை எதிர்த்தாலும், ஸகலப் பிராணிகளும் எனக்குப் பயத்தை உண்டு பண்ணினாலும் ஸீதையைக் கொடுப்பதில்லை. நீங்கள் சொன்னபடி யுத்தம்செய்யப்போகிறேன். அதற்காகச்சத்துருக்களைப்பற்றித்தெரிய வேண்டிய விஷயங்களை நீங்கள் பார்த்தறிந்தவரையில் சொல்லுங்கள். வானர ஸைன்யத்தில் சூரர்கள் யார்? சத்துருக்களால் எதிர்க்க முடியாத வானர சிரேஷ்டர்களின் ரூபமெப்படி? காந்தியெப்படி? எவருடைய பிள்ளைகள்? எவருடைய பேரன்கள்? நிஜத்தைச் சொல்லுங்கள். அவர்களுடைய பலாபலத்தை அறிந்து தகுந்த ஏற்பாடு செய்யலாம். நம்முடன் யுத்தம் செய்ய விரும்புகிறவர்களின் கணக்கும் பலாபலமும் நமக்கு நன்றாய்த் தெரிய வேண்டுமல்லவா" என்றான்.

அப்பொழுது சார்த்தூலன், "மஹாராஜ! வானராதிபதியான ஸுக்ரீவன் ரிக்ஷரஜஸின் புத்திரன்; யுத்தத்தில் ஜயிக்க முடியாதவன். கத்கதனுக்கு தாம்ரனென்றும் ஜாம்பவானென்றும் இரண்டு புத்திரர்கள். பிரஹ்மா கொட்டாவி விடும்பொழுது அவருடைய முகத்திலிருந்து ஜாம்பவான் பிறந்தான்; பிறகு கத்கதனால் வளர்க்கப் பட்டான். கேஸரி பிருஹஸ்பதிக்குப் பிறந்தவன்; இவனுக்குப்

புத்திரனான ஹனுமானால் அக்ஷன் முதலிய ராக்ஷஸ வீரர்கள் கொல்லப்பட்டார்கள். ஸுஷேணன் தர்மதேவதையின் புத்திரன். (பால காண்டத்தில் வருணன் ஸுஷேணனென்ற புத்திரனைப் பெற்றானென்று சொல்லப்பட்ட தேவதையே இங்கே தர்மமென்று சொல்லப்படுகிறான். அல்லது, சார்த்தூலன் பயத்தால் புத்தி சிதறி ஸரியாய்த் தெரிந்துகொள்ளாமலிருக்கலாம்). ததிமுகன் ஸோமனுக்குப் பிறந்தவன். ஸுமுகன், துர்முகன், வேகதர்சி என்றவர்கள் வானர ரூபத்தை எடுத்து வந்த மிருத்யுவென்றே சொல்லவேண்டும். பிரஹ்மாவும் இதற்காகவே அவர்களை சிருஷ்டித்திருக்கிறார். ஸேனாபதியான நீலன் அக்னிபகவானுக்குப் பிறந்தவன். ஹனுமான் வாயுபகவானுடைய புத்திரன். பலத்தாலும் யௌவனத்தாலும் கொழுப்படைந்த அங்கதன் இந்திரனுக்குப் பேரன். மைந்தனும் த்விவிதனும் அச்வினீ தேவர்களுக்குப் பிறந்தவர்கள். கஜன், கவாக்ஷன், கவயன், சரபன், கந்தமாதனன் என்றவர்கள் யமனுக்குப் பிறந்தவர்கள்; ஸகல விதத்திலும் அவனைப் போன்றவர்கள். தேவர்களுக்குப் பிறந்த அபார தேஜஸையுடைய வானர வீரர்கள் பத்து கோடி; மற்றவர்களுடைய உத்பத்தி இருப்பிடம் முதலியவைகளைச் சொல்ல முடியாது. இவர்களை ரக்ஷிக்கிற மஹானுபாவன் தசரதனுடைய புத்திரன். ஸிம்ஹத்தைப் போல் அழகான அவயவங்களையுடையவன்; யௌவன புருஷன்; கரன், தூஷணன், த்ரிசிரஸ், மாரீசன், ஸுபாஹு, தாடகை முதலியவர்களைக்கொன்றவன். ஸகல லோகங்களிலும் அவனைப் போன்ற பராக்கிரமசாலி இல்லை. மிருத்யு தேவதையைப் போன்ற விராதனுக்கும் கபந்தனுக்கும் அவன் மிருத்யுவல்லவா? ராமனுடைய கல்யாண குணங்களை ஒருவராலும் வர்ணிக்க முடியாது. ஜனஸ்தானத்தில் அவனை எதிர்த்த ராக்ஷஸர்களில் எவன் பிழைத்தான்? அவனுடைய தம்பியான லக்ஷ்மணன் தர்மாத்மா; சிரேஷ்டமான மதயானையைப் போன்றவன். தேவேந்திரனும் அவனுடைய பாணத்திற்கு இறையாகி உயிர் தப்ப மாட்டான். சுவேதன் ஜ்யோதிர்முகனென்ற இருவரும் ஸூரியனுக்குப் பிறந்தவர்கள். ஹேமகூடன் வருணனுக்குப் பிறந்தவன். நளனென்ற வானரவீரன் விச்வகர்மாவின் புத்திரன். துர்த்தரனென்ற பராக்கிரமசாலி வஸுதேவதைகளின் புத்திரன். தங்களுடைய தம்பியான விபீஷணன் ராமனிடத்திலிருந்து இந்த லங்காராஜ்யத்தைப் பெற்று அவருடைய ஹிதத்தையே கோரிக்கொண்டிருக்கிறான். இப்படி எனக்குத் தெரிந்தவரையில் வானர ஸைன்யத்தைப் பற்றின விஷயங்களைச் சொன்னேன். பிறகு உசிதப்படி செய்யுங்கள்'' என்று விக்ஞாபனம் செய்தான்.

(இந்த ஸர்க்கத்தில் சொல்லப்பட்ட வானரர்களுடைய ஜன்மமும் வம்சமும் பால காண்டத்தில் சொல்லப்பட்டதற்கு விரோதமாக இருக்கின்றன; இந்த ஸர்க்கமில்லாமலேயே பூர்வோத்திர



கதை பொருந்தும். ஆகையால் இது வால்மீகியால் செய்யப்பட்டதல்லவென்று சிலர் எண்ணுகிறார்கள்.—கோவிந்தராஜர்)

இதி ஸர்வம் ஸமாக்²யாதம் தவேத³ம் வாநரம் ப³லம் |
ஸுவேலே தி⁴ஷ்டி²தம் ஶைலே ஶேஷகார்யே ப⁴வாந் க³தி: ‖ (36)

---

## ஸர்க்கம் 31
## ராவணன் ஸீதையை மயக்கினது

---

ததஸ்த மக்ஷோப்⁴ய ப³லம் லங்காதி⁴பதயே சரா: |
ஸுவேலே ராக⁴வம் ஶைலே நிவிஷ்டம் ப்ரத்யவேத³யந் ‖ (1)

பிறரால் நெருங்கமுடியாத வானர ஸைன்யத்தையும் சுவேல மலையில் தங்கியிருக்கும் ராமமூர்த்தியையும் பற்றின விஷயங்களைத் தூதர்கள் லங்கேசுவரனுக்குத் தெரிவிக்க, ராவணன் கொஞ்சம் பரபரப்படைந்து, ஸமீபத்திலிருந்த மந்திரிகளையும் பார்த்து, "ராக்ஷஸர்களே! ஆலோசனை செய்யும் காலம் ஸமீபித்து விட்டது. நீதிசாஸ்திரத்தில் நிபுணர்களான ஸகல மந்திரிகளும் இங்கே வரவேண்டும்'' என்று ஆக்ஞாபித்தான். அவர்கள் அப்படியே வந்து சேர, மேல் நடக்கவேண்டிய காரியங்களை அவர்களுடன் தீர்க்கமாக ஆலோசித்து, அவர்களுக்கு உத்திரவு கொடுத்தனுப்பிவிட்டுத் தன் அரண்மனைக்குள் சென்றான்.

அங்கே வித்யுஜ்ஜிஹ்வனை அழைப்பித்து, "மித்திர! நீ மஹா மாயாவி: ஸகல மாயவித்யைகளிலும் நிபுணன், மஹாபலவான். நாம் மாயையால் ஸீதையை மயக்குவோம். ராமனுடைய பொய்த் தலையையும், கோதண்டத்தையும் மாயையால் சிருஷ்டித்து வை'' என்றான். அந்த ராக்ஷஸனும் "உத்திரவுப்படி செய்கிறேன்'' என, ராவணன் ஸந்தோஷித்து, அளவற்ற ஆபரணங்களையும் தனங்களையும் அவனுக்கு வெகுமதியாய்க் கொடுத்தான். பிறகு ஸீதையைப் பார்க்க ஆசைகொண்டு, அந்த மஹாபலவான் அசோக வனத்திற்குள் சென்று, ஸீதை சோகத்தால் பீடிக்கப்பட்டுக் குனிந்த தலை நிமிராமல் வெறும் தரையில் உட்கார்ந்திருப்பதைக் கண்டான். அவள் கஷ்டங்களை அனுபவிக்கத்தகாதவள்; பர்த்தாவையே தியானம் செய்துகொண்டு தீனமாய்க் கோர ராக்ஷஸிகளால் சூழப்பட்டிருந்தாள். ராவணன் அவளுடைய ஸமீபத்தில் சென்று, ஸந்தோஷ ஸமாசாரத்தைச் சொல்கிறவனைப்போல், வெகு துணிவாய், ''ஸீதே நான் எவ்வளவு உன்னை ஸமாதானம் செய்தும் ராமனுடைய தைரியத்தால் என்னைக் கடும் வார்த்தைகளைச் சொல்லி அவமதித்தாயல்லவா? கரதூஷணர்களை ஏதோ அதிருஷ்டவசத்தால் கொன்ற அந்த மஹாவீரன் என் ஸைன்யங்களால் யுத்தத்தில் கொல்லப்பட்டான். உனக்கு இது வரையில் ஆதாரமான வஸ்து வேரறுந்தது; உன் கொழுப்பை அடக்கினேனல்லவா? உனக்கு

நேர்ந்த ஆபத்தால் நான் பிரார்த்திக்காமலே என் பார்யையாகப் போகிறாய். இந்த மூட புத்தியை விடு. ராமன் இறந்த பிறகு அவனால் உனக்கென்ன பிரயோஜனம்? என் பார்யைகளெல்லோருக்கும் ஈச்வரியாக இரு. அல்ப புண்யம் செய்தவளே! இதுவரையில் பரம புருஷார்த்தங்களான செல்வத்தையும் காமஸுகங்களையும் துறந்தவளே! முட்டாளே! மஹாபுத்திசாலியென்று கர்வம் கொண்டிருக்கிறாய். முன்காலத்தில் விருத்ராஸுரன் இந்திரன் கையால் இறந்ததைப் போல், ராமன் உயிரிழந்த விதத்தைக் கேள். அவன் என்னைக் கொல்லவெண்ணி, ஸுக்ரீவனுடைய ஸைன்யத்துடன் ஸமுத்திரத்தின் வடகரையில் தங்கியிருந்தான். அன்று ராத்திரி அவர்கள் வழிநடப்பால் அலுத்து அயர்ந்து நித்திரை செய்கையில், என் தூதர்கள் ரஹஸ்யமாய்ச் சென்று, ஸகல விருத்தாந்தங்களையும் அறிந்தார்கள். ராமலக்ஷ்மணர்களிருந்த ஸைன்யத்தை பிரஹஸ்தன் என்ற என் மந்திரியால் அனுப்பப்பட்ட ராக்ஷஸ ஸைன்யம் இருந்த இடம் தெரியாமல் அழித்துவிட்டது. கத்திகளாலும், இரும்புச் சக்கரங்களாலும், தடிகளாலும், தாழ்ப்பாள்களாலும், இரும்பைக் காய்ச்சி ஊற்றின கதைகளாலும், தடிகளாலும், உலக்கை முதலிய ஆயுதங்களாலும் என் ராக்ஷஸர்கள் வானரர்களைப் பல தடவை நாசம் செய்தார்கள். பிறகு சத்துரு ஸைன்யங்களைக் கலக்குகிற பிரஹஸ்தன் அதிசீக்கிரத்தில் ராமன் தூங்கிக்கொண்டிருக்கும் இடத்திற்குச் சென்று, தன் கத்தியால் வெகு சாதுரியமாய் உன் பர்த்தாவின் தலையை வெட்டினான். விபீஷணன் தப்பி ஓடுகையில் பிடிக்கப்பட்டான். லக்ஷ்மணனை வானர ஸைன்யங்களுடன் ஸகல திக்குகளிலும் அடித்துத் துரத்திவிட்டோம். ஸுக்ரீவன் கழுத்து ஒடிந்து கிடக்கிறான். ஹனுமான் கன்னம் முறிந்து கிடக்கிறான். ஜாம்பவான் 'இரண்டு கால்களும் வெட்டப்பட்டு வேரற்ற மரம் போல் விழுந்து கிடக்கிறான். மைந்தன் த்விவிதனென்ற வானர சிரேஷ்டர்கள் ரத்தப் பிரவாகம் பெருகப் பெருமூச்சு விட்டுக் கதறுகிறார்கள். அந்த வீரர்கள் இடுப்பில் வெட்டுண்டு பிழைப்பதரிது. பனஸன் பழத்தைப்போல் ராக்ஷஸர்களால் கொத்தப்பட்டுப் பூமியில் கிடக்கிறான். தரீமுகன் அநேக நாராசங்களால் பிளக்கப்பட்டுக் கிடக்கிறான். மஹா தேஜஸ்வியான குமுதன் பாணங்களால் வாயடைத்துக் கிடக்கிறான். அங்கதன் சரங்களால் துண்டிக்கப் பட்டு ரத்தத்தைக் கக்கிக்கொண்டு தரையில் புரளுகிறான். மேகங்கள் பெருங்காற்றால் கலக்கப்படுவதுபோல், சில வானரர்கள் படுத்துத் தூங்குகையில் யானைகளாலும், சிலர் ரதங்களாலும் தேய்த்துக் கொல்லப்பட்டார்கள்; சிலர் பிடிக்கப்பட்டார்கள்; சிலர் பயத்தால் மூலைக்கு மூலை ஓடினார்கள்; சிலர் பின்பக்கத்திலிருந்து அடித்துப் பிடிக்கப்பட்டார்கள்; மஹா ஸிம்ஹங்களால் துரத்தப்பட்ட யானைக் கூட்டத்தைப் போல் அந்த வானர ஸைன்யம் ஒரு க்ஷணத்தில் அலங்கோலமாயிற்று; சிலர் ஸமுத்திரத்தில் விழுந்தார்கள்; சிலர் ஆகாசத்தில் தாவினார்கள்; கரடிகள் குரங்குகளைப்போல் மரங்களிலேறித் தப்பின. ஸமுத்திரக் கரைகளிலும், மலைகளிலும், வனங்களிலும் வானரர்கள் ஒருவருக்கொருவர் இருட்டில் அடையாளம் தெரியாமல் சத்துருக்களென்றெண்ணிச் சண்டையிட்டு மடிந்தார்கள். இப்படி உன் பர்த்தாவும், அவனுடைய ஸைன்யமும் என் ஸைன்யத்தால் ஹதம் செய்யப்பட்டார்கள். புழுதிபடிந்து ரத்தத்தால் பூசப்பட்ட ராமனுடைய தலையை இதோ பார் என்று அங்கிருந்த ஒரு ராக்ஷஸியை அழைத்து ஸீதை கேட்கும்படியாய், "வித்யுஜ்ஜிஹ்வனை இங்கே வரச்சொல். அவன் யுத்தகளத்திலிருந்து ராமனுடைய தலையைக் கொண்டுவந்திருக்கிறான் என்று ஆக்ஞாபித்தான்.



உடனே வித்யுஜ்ஜிஹ்வன் ராமனுடைய தலையையும் வில்லையும் எடுத்துக்கொண்டு ராவணன் இருக்குமிடம் வந்து நமஸ்கரித்து நின்றான். பிறகு ராவணன், "ராமனுடைய தலையை ஸீதைக்கெதிரில் வை. தன் பர்த்தா மரணமடைந்ததை நேரே பார்த்து நம்பட்டும்" என்றான். உடனே அந்த ராக்ஷஸன் ராமனுடைய அழகான சிரஸை ஸீதையின் ஸமீபத்தில் வைத்துவிட்டுச் சென்றான். ராவணன் வித்யுஜ்ஜிஹ்வனுடைய கையிலிருந்து ரகுவீரனுடைய பிரசண்டகோதண்டத்தை வாங்கி, ஸீதையை நோக்கி, "இதோ பார்! உன் பர்த்தாவின் வில். 'அர்த்தராத்திரியில் என் ஸேனாபதியான பிரஹஸ்தன் அவனைக்கொன்று, இதை எடுத்து வந்திருக்கிறான்" என்று ராமனுடைய தலையையும் வில்லையும் குறித்துக்காட்டி "ஸீதே! இப்பொழுதாவது எனக்கு வசப்பட்டு என்னிஷ்டப்படி நடப்பாயா?" என்றான்.

ஸ வித்3யுஜ்ஜிஹ்வேந ஸஹைவ தச்சி2ரோ
த4நுஶ்ச பூ4மௌ விநிகீர்ய ராவண: |
விதே3ஹ ராஜஸ்ய ஸுதாம் யஶஸ்விநீம்
ததோ(அ)ப்3ரவீத் தாம் ப4வ மே வஶாநுகா || (49)

## ஸர்க்கம் 32

## ஸீதை ப்ரலாபித்தது

ஸா ஸீதா தச்சி2ரோ த்3ருஷ்ட்வா தச்ச கார்முகமுத்தமம் |
ஸுக்3ரீவ ப்ரதிஸம்ஸர்க3 மாக்2யாதம் ச ஹநூமதா || (1)

ஜானகி அந்தச் சிரஸையும் உத்தமமான வில்லையும் பார்த்தாள். முன்பு ஹனுமானால் சொல்லப்பட்ட ராமனுக்கும் ஸுக்ரீவனுக்கும் ஏற்பட்ட ஸம்பந்தத்தை ஞாபகப்படுத்திக் கொண்டாள். நேத்திரங்களும் முகத்தின் நிறமும் தலைமயிரும் நெற்றியும் சூடாமணியும் மற்ற அடையாளங்களும் நன்கு பொருந்தியிருக்கக் கண்டாள். அது ராமனுடைய சிரஸென்றும் ராமன் இறந்தாரென்றும் முடிவுசெய்தாள். நாயகனைவிட்டுப் பிரிந்த அன்றில் பக்ஷியைப்

போல் துக்கம் தாங்காமல் வாய்விட்டலறிக் கைகேயியை நிந்தித்தாள். "அம்மா! கைகேயி! இப்பொழுதாவது உன் மனம் குளிர்ந்ததா? உன் எண்ணம் நிறைவேறிற்ரு? கலஹம் செய்வதையே ஸ்வபாவமாகவுடைய நீ இக்ஷ்வாகு வம்சத்தை வேரறுத்தாயல்லவா? ரகுகுல திலகரான ராமசந்திரனைக் காட்டிற்கனுப்புகையில், 'இவனுக்கு ஏதாவது ஆபத்து நேர்ந்து திரும்பி வராமல் மடியட்டும்' என்றல்லவா உன் உத்தேசம். ரகுநாதன் இறந்தார். இக்ஷ்வாகு குலத்திற்கு வேராக இருந்த ராமன் இறந்தார். அவரிடத்திலேயே ஸகலப் பிராணன்களையும் வைத்திருக்கும் லக்ஷ்மண பரத சத்ருக்னர்கள் உயிரை விடுவார்கள். நீ இவ்வளவு அநியாயம் செய்வதும் உன் பிள்ளை பரதனுக்காகவல்லவா? அவன் இறந்தால் உன் உத்தேசம் பலிக்குமோ? நீ ஸம்பாதித்ததென்ன? கலகத்தைத் தவிர வேறுண்டோ? பெருந்தன்மையையே ஆபரணமாகக் கொண்ட ராமன் உனக்குச் செய்த கெடுதி என்ன? என்னையும் ராமனையும் மரவுரியுடன் காட்டிற்குத் துரத்தி மஹாபாபத்தைக் கட்டிக் கொண்டாயல்லவா" என்று பிரலாபித்து, அடியற்ற வாழையைப் போல் மூர்ச்சையடைந்து, பூமியில் விழுந்தாள். கொஞ்ச நேரத்திற்குள் பிரக்ஞை தெளிந்தெழுந்து, கண்ணீரால் நேத்திரங்கள் மறைக்கப்பட்டு, ராமனுடைய சிரஸை மடியில் வைத்து உச்சி முகர்ந்து,

"ஐயோ! கெட்டேன். மஹானுபாவ! சத்ருவைக் கொல்லாமல் அயோத்யைக்குத் திரும்புவதில்லை என்ற வீரவிரதத்தை இப்படியா நிறைவேற்றவேண்டும்! தாங்கள் மரணமடைவதைப் பார்க்கும்படியான பாபத்தைச் செய்தேனே! விதவை என்ற பெயரைப் பெற்றேனே! பார்யையின் பாபத்தால் பர்த்தா மரண மடைகிறான் என்று சொல்லுகிறார்கள். தாங்களோ சிரேஷ்டமான ஆசாரத்தையுடையவர்கள்; பதிவிரதா தர்மத்தை என்னால் கூடிய வரையில் நானும் அனுஷ்டித்து வருகிறேன். எனக்கு முன்பு தாங்கள் மரணமடையவேண்டிய நியாயமென்ன? முதலில் ராஜ்யத்திலிருந்து வனத்திற்குத் துரத்தப்பட்டேன்; பிறகு ராவணன் என்னை அபகரித்தான்; இப்படி ஒன்றைவிட ஒன்று அதிகமான துக்கங்கள் மென்மேலும் என்னைப் பீடிக்க, என்னிடத்தில் இரக்கம் வைத்துக் காப்பாற்ற நினைத்த தங்களுக்கே இந்தக் கதி நேர்ந்தது. இனி எல்லையற்ற சோக ஸமுத்திரத்தில் முழுகினேன். வெளிக் கிளம்புகிறதில்லை; கரையேறுவதில்லை.

கேவலம் எனக்குமாத்திரமல்ல; பரம ஸாதுவான கௌஸல்யைக்கும் இந்தத் துக்கம் நேரவேண்டுமா? கன்றை விட்டுப் பிரிந்த பசுவைப்போல் கதறுவாளே! அவளுக்குத் தங்களைத் தவிர வேறு புத்திரர்களுண்டோ? தங்களுக்குத் தீர்க்காயுஸ் என்று பிராம்மணோத்தமர்கள் சொன்ன வார்த்தைகள் பொய்யாயிற்றே! கேவலம் தங்களுடைய பராக்கிரமத்தைப் பார்த்து இப்படிச் சொன்னார்களோ?



அவர்கள் சாஸ்திர ரீதியாய் ஆராய்ந்து சொல்லியிருந்தால் அல்பாயுஸ் உள்ளவரென்றல்லவா சொல்ல வேண்டும்? அப்படி அவர்கள் பொய் சொல்லமாட்டார்களே! தங்களுடைய பாக்ய காலம் மாறி விட்டபடியால் அவர்களுக்கும் புத்தி பிசகிற்றோ? அல்லது, ஸகல பூதங்களுக்கும் காரணமான பரமாத்மாவே காலரூபியாய்க் கர்மங்களின் பலனைக் கொடுத்துக் கொண்டு, மூன்று காலங்களையும் அறிந்த ஸாதுக்களுடைய புத்தியையும் மயக்கி, தங்களுடைய விஷயத்தில் நிஜத்தைத் தெரியாமல் செய்தாரோ? (தங்களுடைய பூர்வ கர்மத்திற்குத் தகுந்தபடி பகவான் காலரூபனாய் பலனைக் கொடுத்து வருகிறார்; ஆகையால் நினைக்க முடியாத பராக்கிரமசாலியான தங்களுடைய புத்தியையும் மயக்கி சத்துரு வசத்தில் அகப்படும்படி செய்தாரென்றும் கருத்து). தாங்கள் நீதி சாஸ்திர நிபுணர்கள்; யுத்த சாஸ்திரத்தில் கரை கண்டவர்கள்; ஸகல அபாயங்களின் ஸ்வரூபத்தையும் பூர்ணமாக அறிந்தவர்கள். அப்படி இருக்கையில், தாங்கள் அஜாக்கிரதையாய்த் தூங்கிக் கொண்டிருக்கும் பொழுது மரணமடைய நியாயமென்ன? அதிக்ரூரமான காள ராத்ரி என்ற துஷ்ட ஸ்த்ரீ, தங்களைக் கெட்டியாய் ஆலிங்கனம் செய்துகொண்டு அபகரித்துவிட்டாளோ! செந்தாமரை இதழ்களைப்போல் அதிஸுந்தரமான தங்களுடைய கண்ணழகைக் கண்டல்லவா உங்களை அபகரித்துவிட்டாள் காளராத்ரி. எந்த ராத்ரியில் ஸமுத்திரக் கரையில் தங்கினீர்களோ அந்த ராத்திரியே தங்களைக் கொன்றுவிட்டது. அல்லது, ஸகல பூதங்களையும் நாசம் செய்யும் காளராத்ரி என்ற ஒரு மஹாசக்தி, என் ரூபமாய் தங்களை ஆலிங்கனம் செய்து பலாத்காரமாய்க் கொன்றதோ?) கோரமான பாபங்களைச் செய்து இப்படி விதவையானேன். இந்தப் பாபியை விவாஹம் செய்து கொண்டதால் தங்களுக்கு இப்படி அகால மரணம் நேர்ந்தது.

புருஷசிரேஷ்டரான தாங்கள் அல்ப ஸ்வபாவமுள்ள நாயகனைப்போல் நடப்பது அழகா? சொல்லமுடியாத கஷ்டங்களை அனுபவித்துக்கொண்டு, பார்ப்போர் மனம் உருகும்படி தவித்துக் கொண்டிருக்கும் என்னை இப்படி அலங்கோலமாய் விட்டுப் பூமியென்ற ஸ்திரீயிடத்தில் விசேஷப் பிரீதி வைத்து ஆலிங்கனம் செய்து கொண்டிருப்பது தர்மமா? (பூமண்டலாதிபதியான தங்களுடைய சிரசு நாதனில்லாதது போல் இப்படிப் புழுதி படிந்த தரையில் கிடப்பது தகாதென்பது கருத்து). தங்கத்தால் விசித்திரமாக அலங்கரிக்கப்பட்டு உத்தமமான கந்தங்களாலும் மாலைகளாலும் எப்பொழுதும் விசேஷப் பிரீதியுடன் நானும் தாங்களும் பூஜை செய்த இந்த பிரசண்ட கோதண்டம் என்னைப்போல் நாதனற்று சத்துரு கையில் அகப்பட்டுப் பூமியில் கிடப்பதைப் பார்க்கும்படி நேர்ந்ததே! தங்களுக்குக் குறைவென்ன? என் அருமை மாமனாரும்

தங்களுடைய பிதாவுமான தசரத சக்கரவர்த்தியையும் ஸகல பிதிருக்களையும் ஸ்வர்க்கத்தில் கண்டு, அளவற்ற ஆனந்தத்தை அனுபவித்துக் கொண்டிருக்கிறீர்கள். தாங்கள் ஆகாசத்தில் நக்ஷத்திரரூபியாய் இருந்துகொண்டு மஹாபுண்யங்களைச் செய்தவர்கள் அடைய விரும்பும் இந்த இக்ஷ்வாகு வம்சத்தை பார்த்துக் கொண்டிருக்கிறீர்கள். நாதா! கண்ணைத்திறந்து என்னை ஒரு தடவை பார்க்கலாகாதா? நான் இவ்வளவு கதறியும் வாய்திறந்து, "வருத்தப்படாதே" என்று ஒரு வார்த்தை சொல்லலாகாதோ? நானோ சிறு பெண்; சிறு வயதிலேயே தங்களைப் பர்த்தாவாக அடைந்தேன். எப்பொழுதும் உங்களால் நான் காப்பாற்றத் தகுந்தவளல்லவா? தங்களுடைய கஷ்ட ஸுகங்களை என்னுடையதாக பாவித்து, நிழலைப்போல் தங்களை விட்டுப் பிரியாமல் இருக்கவில்லையா? தாங்கள் அனுஷ்டிக்கும் தர்மங்களை நானும் சிரத்தையுடன் அனுஷ்டிக்கவில்லையா? இதைவிட விசேஷ கஷ்டம் நேரும் ஸமயமும் எனக்குண்டோ? விவாஹகாலத்தில் என்னைப் பாணிக்ரஹணம் செய்தபொழுது உயிருள்ளவரையில் உன்னை விட்டுப் பிரியேனென்று தாங்கள் செய்த பிரதிக்ஞையை ஞாபகப்படுத்திக் கொள்ளுங்கள். தாங்கள் போகுமிடத்திற்கு என்னையும் அழைத்துக்கொண்டு போங்கள். விசேஷப் பிரீதி வைத்த என்னை இப்படித் துக்கப்படும்படி விட்டு, தாங்கள்மாத்திரம் உத்தம லோகங்களுக்குப் போய் ஸுகத்தை அனுபவிப்பது எந்த நியாயத்திற்கு ஏற்றது? சுபமான வஸ்துக்களாலும் பரிமளங்களாலும் ஆபரணங்களாலும் தங்களுடைய திருமேனியை நானே பிறருக்கு இடம் கொடாமல் அலங்கரித்துக் கண்ணாரக் கண்டு ஆனந்தித்தேனல்லவா? அந்த திவ்யமங்கள சரீரத்தை நரிகளும் நாய்களும், பருந்துகளும், கழுகுகளும் பிடுங்கித் தின்னும்படி நேர்ந்ததோ?

வனவாஸம் நீங்கிய பிறகு அயோத்யைக்குச் சென்று, அக்னிஷ்டோமம் முதலிய யக்ஞங்களை வெகு ஸம்ப்ரமமாய்ச் செய்து தேவதைகளைப் பூஜித்து, அக்னிஹோத்ரம் யாகம் முதலிய வைதிகக் கிரியைகளில் உபயோகித்த அக்னியைக்கொண்டே பெறப்பட வேண்டிய ஸம்ஸ்காரத்தைத் தாங்கள் பெறவில்லையே! இப்படி யாதொரு ஸம்ஸ்காரமும் இல்லாமல் துர்மரணமடைய வேண்டியதென்ன? யுத்தகளத்தில் சத்துருக்களை நாசம் செய்து அவர்களால் மரணமடைந்தீர்களா? க்ஷத்திரிய வீரர்களுக்குக் கிடைக்க வேண்டிய கதி தங்களுக்கு ஏன் கிடைக்கவில்லை? நாம் வனம் வந்த மூவரில் - லக்ஷ்மணன் மாத்திரம் அயோத்யைக்குத் திரும்பிச் சென்றால், தங்களை வனத்திற்கு அனுப்பிவிட்டு வருத்தப்பட்டுக் கொண்டிருக்கும் கௌஸல்யாதேவிக்கு என்ன பதில் சொல்வான்? தாங்கள் நித்திரை செய்து கொண்டிருக்கும்பொழுது தங்களையும் தங்களுக்கு ஸஹாயமாய் வந்த ஸைன்யத்தையும் சத்துருக்கள், மேல் விழுந்து கொன்று விட்டார்களென்றல்லவா சொல்ல வேண்டும்? இப்படித் தாங்கள் துர்மரணம் அடைந்ததையும் நான் ராக்ஷஸர்களுடைய கையில் அகப்பட்டதையும் கேட்டவுடன் கௌஸல்யை துக்கம் தாங்காமல் ஹிருதயம் வெடித்து உயிரை விடுவாளே! மஹாபாபியும் துஷ்டையுமான எனக்காகத் தாங்கள் படாத பாடெல்லாம் பட்டு, கோரமான ஸமுத்திரத்தைத் தாண்டி, கரன், தூஷணன், த்ரிசிரஸ், விராதன், கபந்தன், வாலி, மாரீசன், ஸுபாஹு, தஹாடகை, முதலியவர்களை விளையாட்டால் ஸம்ஹாரம் செய்த தாங்கள், ஒரு குளப்படியில் மூழ்கி இறந்தவன்போல், ஸகல விதத்திலும் நீசனான பிரஹஸ்தனென்ற ராக்ஷஸனுடைய கையால் மரணமடைந்தது என்ன ஆச்சரியம்!

நான் பிறந்த குலத்தையும் புகுந்த குலத்தையும் கெடுக்க வந்த மஹாபாபி. இதை அறியாமல் ராகவன் என்னை விவாஹம் செய்து கொண்டாரே! என் பிரிய நாயகனான ராமனுக்கு மனைவியே மிருத்யுவாக ஆகவேண்டுமென்று இருந்ததோ? பூர்வ ஜன்மங்களில் உத்தமமான கன்யாதானத்தைத் தடுத்தேனோ? இல்லாவிட்டால் ஸகல லோக ரக்ஷகனான ராமனைப் பர்த்தாவாக அடைந்தும் இப்படி அநாதையாய் பரிதவிப்பேனா? ராவண! என்னையும் கொன்று ராமனுடைய தேகத்தின்மேல் போடு. பார்யையைப் பர்த்தாவுடன் சேர்த்து வைத்த உத்தம புண்யம் உனக்குக் கிடைக்கும். அவருடைய சிரஸுடன் என் சிரஸையும் அவருடைய தேகத்தையும் சேர்த்து வை. மஹாத்மாவான என் பதியடைந்த உத்தம கதியை நானும் அடைவேன்" என்று ஜானகி துக்கம் தாங்காமல் பிரலாபித்து, ராமனுடைய சிரஸையும் கோதண்டத்தையும் பார்த்துப் பார்த்துக் கதறினாள். (ஸாமான்ய ஸ்த்ரீகளைப்போல் ஸீதை ராமனுடைய சிரஸைக் கண்டு நெடுநேரம் புலம்பியும் பிழைத்திருக்கக் காரணமென்னவென்றால், திவ்யதம்பதிகளான ராமனுக்கும் சீதைக்கும் அழிவுண்டோ? ராமனுடைய உயிரிருக்கும் வரையில் ஸீதை இருப்பாள்; ஸீதை பிழைத்திருக்கும் வரையில் ராமனுக்கு நாசமில்லை.)

அப்பொழுது வாசற்காப்பான் ஒருவன் அங்கே வந்து, 'ஜய விஜயீபவ' என்று லங்கேசுவரனை வாழ்த்தி, தலைமேல் கைகூப்பி, ஸேனாபதியான பிரஹஸ்தன் வாசலில் வந்து காத்துக்கொண்டிருப்பதாய்த் தெரிவித்தான். "மஹாராஜ! தங்களுடைய ஸேனைத் தலைவரான பிரஹஸ்தன் ஸகல மந்திரிகளுடனும் வந்திருக்கிறார். தங்களைப் பார்க்க வேண்டுமென்று விக்ஞாபனம் செய்ய என்னை அனுப்பினார். ஸமயமில்லாதபொழுது வந்ததற்காக மன்னிக்க வேண்டும். ஸகல ராஜ்ய காரியங்களையும் தானே நடத்தும்படி அவருக்கு அனுமதி கொடுத்திருக்கிறீர்கள். ஆனால், தங்களிடத்தில்

உள்ள கௌரவத்தால் தங்களுக்குத் தெரிவித்து உத்திரவுப்படி நடத்த வேண்டும் என்றிருக்கிறார். ஸகல குணங்களும் பொருந்தின தாங்கள் அவர்களுக்குத் தர்சனம் கொடுக்க வேண்டும். ஏதோ அவசியமான காரியம் நேர்ந்திருக்க வேண்டும்'' என்று விக்ஞாபனம் செய்தான்.

அதைக் கேட்டு ராவணன் அசோக வனத்திலிருந்து வெளியில் வந்து, ராமனுடைய பராக்கிரமத்தையும் யுத்த வியாபாரங்களையும் கேட்டறிந்து, ஆலோசனை ஸபைக்குச் சென்று, மேல் நடக்க வேண்டிய காரியங்களை மந்திரிகளுடன் கலந்து ஆலோசித்துச் செய்து முடித்தான். ராவணன் போனவுடனே ராமனுடைய பொய்த்தலையும் கோதண்டமும் மறைந்து விட்டன. பிறகு ராவணன் தனக்கு ஸமீபத்திலிருந்த தன் ஹிதத்தையே கோரும் மஹாபராக்கிரமசாலிகளான ஸேனைத் தலைவர்களைப் பார்த்து, நமது ஸகல ஸைன்யங்களும் இப்பொழுதே வந்து சேரவேண்டுமென்று எங்கும் பறை சாற்றுங்கள். யாதொரு காரணமும் சொல்ல வேண்டியதில்லை'' என்று ஆக்ஞாபித்தான். (யுத்தத்திற்காகப் புறப்படும்படி ஸேனாபதிகள் ஸைன்யத்திற்குத் தெரிவித்தால், அது ஊரெங்கும் பரவி, ஸீதைக்குத் தெரிந்து, ராமனையும் வானர ஸைன்யங்களையும் நாசம் செய்து விட்டேனென்று தான் அவளுக்குச் சொன்ன பொய் வெளியாகுமென்பது கருத்து). அப்படியே ஸேனாபதிகள் ஸைன்யங்களைக் கூட்டி, ''மஹாராஜ! தங்களுடைய உத்திரவுப்படி ஸகல ஸைன்யமும் வந்திருக்கிறது'' என்று தெரிவித்தார்கள்.

ததஸ்ததே2தி ப்ரதிக்3ருஹ்ய தத்3 வசோ
ப3லாதி4பாஸ்தே மஹதா3த்மனோ ப3லம் |
ஸமாநயம்ஸ்சைவ ஸமாக3மம் ச தே
ந்யவேத3யந் ப4ர்தரி யுத்3த4காங்க்ஷிணி || (44)

---

## ஸர்க்கம் 33

# ஸரமை ஸீதையைத் தேற்றினது

ஸீதாம் து மோஹிதாம் த்3ருஷ்ட்வா ஸரமா நாம ராக்ஷஸீ |
ஆஸஸாத3ாஶு வைதே3ஹீம் ப்ரியாம் ப்ரணயிநீம் ஸகீ2ம் || (1)

இப்படி ராவணனுடைய மாயையால் புத்திக் கலக்கமடைந்து ராமனைப்பற்றி வருத்தப்படும் ஸீதையிடத்தில், அவளுக்குப் பிரியமான தோழியான ஸரமை என்ற விபீஷணனுடைய பாரியை வந்து சேர்ந்து, மிருதுவான வார்த்தைகளால் அவளை ஸமாதானம் செய்தாள். ஜானகியைக் காக்கும்படியும் அடிக்கடி அவளுடைய யோக க்ஷேமங்களை விசாரித்துத் தகுந்த ஏற்பாடு செய்யும்படிக்கும் ராவணனால் நியமிக்கப்பட்டவள். ஸ்வபாவமாய் விசேஷ கருணையுள்ளவள். ஆகையால் ஸீதையிடத்தில் விசேஷப்ரீதி வைத்து ஸ்நேஹம் செய்தாள். உறுதியான புத்தியுடையவளாகையால், மாறுத ஸ்நேஹத்தைச் செய்பவள். ஸீதை புத்தி சிதறியிருப்பதையும் பூமியில் விழுந்து புரண்டு புழுதிபடிந்த பெண் குதிரையைப் போல் தவிப்பதையும் கண்டு, வாரி எடுத்துத் தடவிக் கொடுத்து, கண்ணீரைத் துடைத்து, ''குழந்தாய்! ஜானகி! வருத்தப்படாதே; துக்கத்தை விடு. ராவணன் உன்னிடத்தில் சொன்ன வார்த்தைகளையும் உன் பிரலாபத்தையும் நான் கேட்டுக்கொண்டிருந்தேன். உன்னிடத்தில் நான் வைத்த பிரீதியால் என் மனம் உருகிற்று. ஒருவருமில்லாத ஒரு மரப்பொந்தில் ஒளிந்திருந்து கேட்டேன். ராவணனிடத்தில் எனக்குள்ள பயத்தையும் சிறிது விட்டேன். உன் விஷயத்தில் என் உயிரைத் துரும்பாய் நினைத்திருக்கிறேன். நீ வருத்தப்படுகையில் நான் பார்த்துக் கொண்டிருக்க முடியுமா? (விபீஷணனுடைய பாரியையை ராவணன் ஸீதைக்குக் காவலாய் வைப்பானா? அப்படி வைத்தாலும் அவள் ராவணனிடத்தில் பயந்து ஒளியவேண்டியதென்னவென்றால், விபீஷண லங்கையில் இருக்கும்பொழுது, ஸீதையின் யோகக்ஷேமத்தைக் கவனிப்பதற்காக ராவணன் ஸரமையைத் தனக்கு அந்தரங்கமானவளென்று நியமித்தான். விபீஷணன் லங்கையைவிட்டுப் போன பிறகு, ராவணன் ஸீதையுடன் அந்தரங்கமாய்ப் பேசிக் கொண்டிருப்பதைக் கேட்கப் பயந்தாள். தனக்கு நாட்டுப்பெண் முறையானதால் ராவணன் வேலைக்காரி மூலமாய் இவளை நியமித்தான்.' 'இவள் விபீஷணனுடைய பார்யையல்ல. ஸரமை என்ற வேறொரு ராக்ஷஸி'' என்றும் சிலர் கருதுகின்றார்கள்).

ராவணன் பரபரப்புடன் கவலைகொண்டு இங்கிருந்து புறப்பட்டுப்போன காரணத்தை நான் வெளியில் போய் விசாரித்தறிந்தேன். அப்படி விசாரிக்காமலேயே ராவணன் சொன்னது பொய்யென்று ஸ்பஷ்டமாய் விளங்குமே. ராமனை விழித்துக் கொண்டிருக்கும் பொழுதாவது தூங்கிக் கொண்டிருக்கும்பொழுதாவது கொல்வது ஸாத்யமா? அதிருக்கட்டும். ஸர்வமும் அறிந்த மஹா ஞானியை வஞ்சிக்கவும் முடியுமோ? மேலும் புருஷோத்தமனான ராமனுக்கு இவ்விதமான மரணம் எப்பொழுதாவது நேருமா? வானரர்கள் ஸாமான்யர்களா? தவிர, இந்திரன் தேவர்களை ரக்ஷிப்பதுபோல் ராகவன் அவர்களை ரக்ஷித்து வருகிறார். சத்துருக்கள் அவர்களுடைய காற்றுவாடையில் நிற்கவும் முடியுமோ? மேலும், ராமனிடத்தில் விளங்கும் உத்தம புருஷ லக்ஷணங்களை யோசித்துப் பார். அவருக்கு இந்த கதி நேரக்கூடியதோ? நீண்டு பருத்த புஜங்களையும், அளவற்ற காந்தியையும் தேஜஸையும் சுபமாக அமைக்கப்பட்ட அவயவங்களையும் விசாலமான உயர்ந்த மார்பையும் உடையவர்; பிரசண்டகோதண்டபாணி; தர்ம ஸ்வ

ரூபி; ஸகல லோகங்களிலும் நிகரற்ற கீர்த்தி பெற்றவர்; மஹா பராக்கிரமசாலி; லக்ஷ்மணனுடன் தன்னைச் சேர்ந்தவர்களையும் தன்னைச் சரணமடையும் விரோதிகளையும் கண்ணிமையைப்போல் ரக்ஷிப்பவர்; ராஜநீதியில் நிபுணர்; யுத்த வியாபாரங்களில் கைதேர்ந்தவர்; ஸாமர்த்தியசாலி; சத்துரு ஸைன்யங்களை விளையாட்டாக அழிக்கிறவர்; மனத்திற்கெட்டாத பலத்தையும் ஆண்மையையும் உடையவர்; சத்துருகுலகாலன்; விஜயலக்ஷ்மிக்கு வாஸஸ்தானம்; இப்படிப்பட்டவர்க்கு இந்த அகால மரணம் நேருமோ? ராவணன் மாயாவித்யையில் நிபுணன்; குரூர ஸ்வபாவமுள்ளவன்; ஸகல பிராணிகளுக்கும் விரோதி; தனக்குத் தகாத அல்ப காரியங்களிலேயே நோக்கமுள்ளவனானதால் உன்னிடத்தில் இந்த மாயையைப் பிரயோகித்தான். உன் துக்கங்களெல்லாம் நீங்கின; ஸகல மங்களங்களும் உனக்கு நேரும். ஐச்வரியமும் ஸந்தோஷமும் ஜயமும் உன்னையடையக் காத்துக்கொண்டிருக்கின்றன. (தன் கடாக்ஷ லேசத்தால் இவற்றையெல்லாம் தன்னையண்டினவர்களுக்கு அனுக்ரஹிக்கும் மஹாலக்ஷ்மியைப் பற்றி இப்படிச் சொல்வது ஆச்சரியமல்ல). உன் ஸந்தோஷத்தை விருத்தி செய்யும் வார்த்தைகளைச் சொல்லுகிறேன் கேள். 'ராமன் வானர ஸேனையுடன் ஸமுத்திரத்தைத் தாண்டி தெற்குக்கரையில் லக்ஷ்மண ஸமேதராய் வீற்றிருக்கிறார்; எண்ண முடியாத வானர ஸைன்யம் எப்பொழுதும் அவரைக் காத்துக்கொண்டிருக்கிறது. அவருடைய எண்ணங்களெல்லாம் நிறைவேறின. இதை நான் பிரத்யக்ஷமாய்க் கண்டேன். ராவணனால் அனுப்பப்பட்ட சாரர்கள், ராமலக்ஷ்மணர்களும் வானர ஸைன்யமும் இங்கே வந்திருப்பதை அவனுக்குத் தெரிவித்தார்கள். அதைப்பற்றி ஸகல மந்திரிகளுடன் ஆலோசித்துக் கொண்டிருக்கிறான்'' என்றாள்.

அப்பொழுது ராக்ஷஸ ஸைன்யம் யுத்தத்திற்குப் புறப்படும்பொழுது செய்த பயங்கரமான ஸிம்ஹநாதம் கேட்கப்பட்டது. பெரிய தங்கக் கழிகளால் அடிக்கப்பட்ட ரணபேரிகள் காளமேகங்களைப்போல் சப்தித்தன. அதைக்கேட்டு ஸரமை, குழந்தாய்! இந்த பயங்கரமான பேரி சப்தத்தால் ராக்ஷஸ ஸைன்யம் யுத்தத்திற்குத் தயாராகிறதென்று தெரிகிறது. மதயானைகளை ஆபரணங்களாலும் அம்பாரிகளாலும் அலங்கரிக்கிறார்கள். ரதங்களில் உத்தம அசுவங்களைப் பூட்டுகிறார்கள். கணக்கில்லாத குதிரை வீரர்கள் உத்தம ஜாதியில் பிறந்த குதிரைகளில் ஏறிக்கொண்டு யுத்தம் நேர்ந்ததென்று ஸந்தோஷிக்கிறார்கள். காலாட்கள் ஆயுதபாணிகளாய் அங்கங்கே கூடுகிறார்கள். வேகமான மஹாநதிகள் ஸமுத்திரத்தில் வீழுவதைப் போல் ரதகஜதுரகபதாதிகள் அற்புதமான அலங்காரங்களுடன் ராஜமார்க்கங்களில் கூட்டம் கூட்டமாய்ச் சேருகிறார்கள். பளபளக்கும் ஆயுதங்களாலும் கேடயங்களாலும் கவசங்களாலும் சதுரங்க ஸைன்யத்தால் தரிக்கப்பட்ட



ஆபரணங்களாலும், கோடைகாலத்தில் பெருங்காட்டை எரிக்கும் அக்னியைப்போல், நானா வர்ணமுள்ள காந்தி எங்கும் வீசுகிறது; யானைகளின் மணியோசையும் ரதசக்கரங்கள் மோதும் ஓசையும், குதிரைகளின் கனைப்பும், வாத்ய சப்தங்களைப்போல் கேட்கப்படுகின்றன பார். லங்காபதியைப் பின் தொடரும் ஆயுதபாணிகளான ராக்ஷஸ வீரர்களின் யுத்தஸன்னாஹம் கம்பீரமாகவும் மயிர்க்கூச்சம் உண்டாக்குவதாகவும் இருக்கிறது. ஸகல சோகங்களையும் நாசம் செய்யும் ஜயலக்ஷ்மி உன்னை ஆசிரயிக்கிறாள். ராக்ஷஸர்களுக்கு விநாசகாலம் ஸமீபித்து விட்டது. 'சிவந்த கடைக்கண்களுள்ள ஸாதாரண புருஷனை ஜயலக்ஷ்மி ஒருநாளும் விட்டுப்பிரிகிறதில்லை; செந்தாமரைக் கண்ணனான ராமனிடத்தில் வீரலக்ஷ்மி எப்பொழுதும் வஸிக்கிறாள்; அவருடைய பராக்கிரமம் மனத்திற்கு எட்டாதது. ராவணனை யுத்தகளத்தில் தனக்கெதிரில் பார்க்காததால் கோபத்தை அடக்கிக் கொண்டிருக்கிறார். இந்திரன் அஸுரர்களை முறியடிப்பதுபோல், ராவணனையும் ராக்ஷஸ ஸைன்யத்தையும் மடியச்செய்து உன்னை அழைத்துப் போவார். பூர்வகாலத்தில் மஹாவிஷ்ணுவும் இந்திரனும் தைத்யர்களை நாசம் செய்தது போல், உன் பர்த்தாவும் லக்ஷ்மணனும் ராக்ஷஸர்களிடத்தில் தங்களுடைய பராக்கிரமத்தைப் பிரயோகிப்பார்கள். ஸகல சத்துருக்களும் அழிந்து, உன் மனோரதங்கள் நிறைவேறி, ராமனுடைய மடியில் வீற்றிருக்கும் மஹாபதிவிரதையான உன் முகவிலாஸத்தையும், நெடுநாளாக உன்னைவிட்டுப் பிரிந்து, இவ்வளவு சிரமப்பட்டு உன்னையடைந்த ராமனுடைய முகவிலாஸத்தையும், நான் பார்த்து ஆனந்திப்பதே உன் விஷயமாக நான் செய்யும் ஸகலப் பிரயத்னங்களுக்கும் பூர்ணப்பிரயோஜனம். நீ ராமனுடன் சேர்ந்து அந்த மஹானுபாவனை ஆலிங்கனம் செய்து, அவருடைய விசாலமான மார்பில் ஆனந்தக் கண்ணீர் உதிர்ப்பதை அதிசீக்கிரத்தில் பார்ப்பேன். இவ்வளவு மாதங்களாக அலங்கரிக்காமல் ஒரே பின்னலாகக் கட்டித் தொங்கவிட்டிருக்கும் உன் அழகான தலைமயிரை, ராமமூர்த்தி அதிசீக்கிரத்தில் அவிழ்ப்பார். பூரண சந்திரன் உதித்தது போலிருக்கும் அவருடைய முகத்தைப் பார்த்து, மஹா ஸர்ப்பம் சட்டையை உரிப்பதுபோல், துக்கத்தால் கண்ணீர் விடுவதை நீக்குவாய். அதிசீக்கிரத்தில் ராவணனை ஸம்ஹரித்து ராமன் ஸகல மனோரதங்களையும் பூர்த்தி செய்வார்; ஸகல ஸுகத்தையும் அனுபவிக்கத் தகுந்த தாசரதி, உன்னுடன் ஸமஸ்த போகங்களையும் அனுபவிப்பார். பயிரால் நிறைந்த பூமி நல்ல மழையால் எப்படிக் களிக்குமோ, அப்படி நீயும் மஹாத்மாவான ராமனையடைந்து அவருடைய சௌரியத்தைக் கண்டு ஸந்தோஷிப்பாய். மேரு பர்வதத்தை முப்பது முகூர்த்த காலத்தில் உத்தம அசுவத்தைப் போல் அதிசீக்கிரமாய் பிரதக்ஷிணம் செய்யும் ஸூரிய பகவானை நமஸ்காரம் செய். ஸகல அனிஷ்டங்களும் விலகும். ஸமஸ்த ஜீவ

கோடிகளுக்கு பிரகாசத்தையும் தேஜஸையும் கொடுப்பவர். அவைகளுக்கெல்லாம் ஸூரியனே காரணம் அல்லவா?

கி3ரிவர மபி4தோநுவர்தமாநோ
ஹய இவ மண்ட3ல மாஸு1 ய: கரோதி |
தமிஹ ஶரணமப்4யுபேஹி தே3வம்
தி3வஸகரம் ப்ரப4வோ ஹ்யயம் ப்ரஜாநாம் || (41)

---

ஸர்க்கம் 34

## ஸரமை ராவணனுடைய உத்தேசத்தை அறிந்தது

அத2 தாம் ஜாதஸந்தாபாம் தேந வாக்யேந மோஹிதாம் |
ஸரமா ஹ்லாத3யாமாஸ ப்ருதி2வீம் த்3யௌ ரிவாம்ப4ஸா || (1)

ராவணனுடைய வார்த்தைகளால் மயங்கின ஸீதையை, ஆகாசத்திலுள்ள மேகங்கள் பூமியை மழையால் ஸந்தோஷப்படுத்துவதுபோல், ஸரமை மதுரமான வாக்கியங்களால் தேற்றினள். பிறகு அவளுக்கு ஹிதமான காரியத்தைச் செய்ய வேண்டுமென்று நினைத்து, புத்திசாலியானதால், தகுந்த ஸமயத்தில் புன்சிரிப்புடன், "அம்மா! ஒருவருக்கும் தெரியாமல் ராமனிடத்தில் சென்று உன் க்ஷேமஸமாசாரத்தை அவருக்குத் தெரிவித்துத் திரும்பிவர என்னல் முடியும். யாதொரு பற்றுமில்லாமல் ஆகாசமார்க்கத்தில் நான் செல்லுகையில் கருடனுவது வாயுபகவானுவது என்னைப் பின் தொடர முடியாது. போய்வரட்டுமா?" என்ருள்.

ஸீதை, சோகத்தால் தீனமான குரலை மாற்றி, ஸந்தோஷத்துடன் மதுரமான வார்த்தைகளால் அவளைத் தடுத்தாள். உன் க்ஷேமஸமாசாரத்தை ராமனுக்குத் தெரிவித்து வருகிறேனென்று வலுவில் சொல்வதைத் தடுத்தால் ஸ்நேஹத்துக்குக் குறைவு வரும்; ராமன் ராவணனை ஸம்ஹாரம் செய்து லோகமறியத் தன்னையழைத்துப்போவதே அவருக்கு அழகென்று சொன்ன ஸீதை. அவரிடத்தில் தன் ஸமாசாரத்தைச் சொல்லியனுப்புவது யுக்தமல்ல. (ஸர்வரக்ஷகனைச் சரணமடைந்து அவரிடத்தில் ஸகல பாரங்களையும் வைத்தபிறகு, தான் அந்த விஷயத்தில் யாதொரு பிரயத்தனம் செய்வதும் ஸரியல்ல என்று காகாஸுரவிருத்தாந்தத்தால் ஸீதைக்கு நன்ருய்த் தெரியும். ஆகையால் வேறு காரணத்தைச் சொல்லி ஸாமர்த்தியமாய் ஸரமையை நிறுத்தினள். "அம்மா! நீ ஆகாசத்திலும் பாதாளத்திலும் எவ்விடத்திலும் தடையில்லாமல் செல்லக்கூடியவளென்று நன்ருக அறிவேன். பிறரால் என் விஷயத்தில் செய்யமுடியாத உபகாரத்தை நீ செய்யக்கூடியவளென்றும் அறிவேன். ஆனல் எனக்குப் பிரியமான காரியத்தைச் செய்ய வேண்டுமென்று உறுதியான எண்ணம் உனக்கிருந்தால், ராவணன்



என்ன செய்துகொண்டிருக்கிருனென்று அறிந்து வா. அவன் மாயாபலமுள்ளவன்; குரூரன்; சத்துருக்களைக் கதறச்செய்கிறவன்; துஷ்டாத்மா; வாருணி என்ற மது, எப்படிக் குடித்தவுடன் புத்தியை மயக்குமோ அப்படி என்னை மதியை மயக்குகிருன். அவனுடைய உத்திரவால் என்னைச் சூழ்ந்திருக்கும் ராக்ஷஸிகள், மூக்கு நுனியில் விரலை வைத்துக் கண்களை உருட்டி விழித்து, பற்களைக் காட்டி, இன்னும் இதர விகாரமான சேஷ்டைகளாலும், "உன்னைக் கொன்று விடுவார், தின்று விடுவார், எரித்து விடுவார்" என்ற வார்த்தைகளாலும் பயமுறுத்துகிருர்கள். அவனைக் கண்டு பயந்து நடுங்குகிறேன். அசோக வனத்தில் என்னைத் தனியாய் வைத்திருப்பதால் ஸந்தேகமுண்டாகிறது. அவனுடைய விருத்தாந்தத்தையும் நிச்சயமான உத்தேசத்தையும் நீ அறிந்து சொன்னல் அதுவே எனக்குப் பரம உபகாரம்" என்ருள்.

அதைக் கேட்டு அழகாகப் பேசும் ஸரமை, ஸீதையின் கண்ணீரைத் துடைத்து, "குழந்தாய்! உனக்கு அப்படி இஷ்டமிருந்தால் இதோ ஒரு நொடியில் போய் ராவணனுடைய அந்தரங்கமான அபிப்பிராயத்தை அறிந்து வருகிறேன் பார்" என்று சொல்லி, ராவணனுடைய ஸமீபத்தில் சென்று, அவன் மந்திரிகளுடன் செய்துகொண்டிருந்த ஆலோசனையையும் முடிவான நிச்சயத்தையும் கேட்டறிந்து, அசோகவனத்திற்குத் திரும்பி வந்தாள். அங்கே ஸீதை, கமலாஸனத்தையிழந்த லக்ஷ்மியைப்போல் களையற்று, தன் வரவை எதிர்பார்த்துக் கொண்டிருப்பதைக் கண்டாள். ஸீதை ஸரமையை பிரியத்துடன் ஆலிங்கனம் செய்து, ஓர் ஆசனத்தைப்போட்டு உட்காரச்சொல்லி, "அம்மா! இங்கே ஸுகமாய் உட்கார்ந்துகொண்டு அந்தக் குரூரராக்ஷஸனுடைய ஆலோசனையையும் நிச்சயத்தையும் எனக்கு நிஜமாய்ச் சொல்" என்று கூறி, எந்த அனர்த்தத்தைச் சொல்லப் போகிருளோ என்று பயந்து நடுங்கிக் கொண்டிருந்தாள்.

அப்பொழுது ஸரமை, "குழந்தாய்! ஜானகி! ராவணனுடைய தாயான கைகஸியும் அவித்தனென்ற வயது சென்ற மந்திரியும் உன்னை விட்டுவிடும்படி அவனுக்குப் பலவிதமாய்ப் போதித்தார்கள். 'ராமனை விசேஷமாய் உபசரித்து ஸீதையை அவனிடத்தில் கொண்டுபோய் விடு. ஜனஸ்தானத்தில் கரதூஷணர்களையும் அநேக ராக்ஷஸ வீரர்களையும் ஒரே முகூர்த்தத்தில் விளையாட்டாய் ஸம்ஹரித்ததே இனி ராக்ஷஸர்களை அவன் என்ன பாடு படுத்துவானென்பதற்குப்போதுமான அடையாளமல்லவா? அவனிருக்கட்டும். அவனுடைய தூதனை ஒரு குரங்கு ஸமுத்திரத்தைத் தாண்டி வந்து, ஒருவருக்கும் தெரியாமல் உன் காவலைக் கடந்து, ஸீதையைக் கண்டு பேசி, நமது ராக்ஷஸ வீரர்களைக் கொன்று, நம்மை அவமானப் படுத்தினன். இது மனுஷ்யன் செய்யும் காரியமா? அவனொருவனே ஸகல ராக்ஷஸர்களையும் நாசம் செய்யப் போதாதா? தன் ஸேவ

கனைக் கொண்டு இந்த அபூர்வகிருத்யங்களைச் செய்வித்த ராமனைக் கேவலம் மனுஷ்யனென்று சொல்லத் தகுமா? என்று அவர்கள் எவ்வளவு தடுத்தும், பணத்தாசை பிடித்தவன் திரவியத்தை விட ஸம்மதிக்காதது போல், உன்னைத் திருப்பிக்கொடுக்க இஷ்டப்படவில்லை. இப்படித் தன் மந்திரிகளுடன் ஆலோசித்து முடிவு செய்தவன் யுத்தத்தில் தன் உயிரை விடும்வரையில் உன்னைத் திருப்பிக் கொடுப்பதில்லையென்று நிச்சயித்திருக்கிறான். அவனுக்குக் காலம் குறுகி மரணம் ஸமீபித்தபடியால் இந்தப் புத்தி தோன்றியதேயன்றி வேறல்ல. தானும் ஸகல ராக்ஷஸர்களும் யுத்தத்தில் மடிந்தாலொழியக் கேவலம் பயத்தால் உன்னைத் திருப்பிக் கொடுக்க மாட்டானென்று தெரிகிறது. ராவணனை யுத்தத்தில் கூர்மையான பாணங்களால் கொன்று, ராமன் உன்னை அயோத்யைக்கு அழைத்துப் போவார்'' என்றாள்.

அந்த க்ஷணத்தில் அப்படியே நடக்குமென்று ஆகாசவாணி சொன்னதைப்போல், வானர ஸைன்யத்தில் ரணபேரிகைகள் அடிக்கப்படும் சப்தமும் சங்கங்களின் த்வனியும் பூமியை அதிரும்படி செய்தன. அதைக் கேட்டு லங்கையிலுள்ள ராக்ஷஸர்களெல்லாம் தேஜஸ் குறைந்து, தீனமாய் ஒன்றும் தோன்றாமல், தங்களுடைய அரசன் செய்த பாபங்களால் தங்களுக்கு ஸகல ஸௌபாக்கியமுமற்று, ஸந்தோஷத்தையும் ஐசுவரியத்தையும் கீர்த்தியையும் ஆயுஸையும் புத்திரமித்திர பந்துக்களையும் இழப்போமே என்று ஏங்கினார்கள்.

> ஶ்ருத்வா து தத்³வாநர ஸைந்யஶப்³த³ம்
> லங்காக³தா ராக்ஷஸராஜ ப்⁴ருத்யா: |
> நஷ்டௌஜஸோ தை³ந்ய பரீதசேஷ்டா:
> ஶ்ரேயோ ந பஶ்யந்தி ந்ருபஸ்ய தோ³ஷை: ‖ (28)

---

## ஸர்க்கம் 35

## மால்யவான் ராவணனுக்கு ஹிதத்தை உபதேசித்தது

> தேந ஶங்க²விமிஶ்ரேண பே⁴ரீஶப்³தே³ந ராக⁴வ: |
> உபயாதி மஹாபா³ஹு: ராம: பரபுரஞ்ஜய: ‖ (1)

சத்ருகுலகாலனான ஸ்ரீரகுவீரன் சங்கம் பேரீ முதலிய வாத்ய சப்தங்களுடன் யுத்தத்திற்கு வந்தார். அந்த சப்தத்தைக் கேட்டு, ராக்ஷஸாதிபதி இப்பொழுது என்ன செய்யலாம் என்று ஒரு முகூர்த்த காலம் ஆலோசித்து, சுற்றிலும் இருந்த மந்திரிகளை ஒரு தடவை உற்றுப் பார்த்தான். பிறகு, அந்த ஆஸ்தான மண்டபம் நடுங்கும்படியாய் பேரிடிபோல் கோபத்தால் கர்ஜித்து அவர்களை நிந்தித்தான். ஸகல ராக்ஷஸர்களுக்கும் அதிபதி, மஹா பலவான், ஸகலப் பிராணிகளையும் கதறச் செய்கிறவன், க்ரூரஸ்வ



பாவமுள்ளவன். ஆகையால் அவன் இப்படிச் சொல்வது ஸஹஜமே. "ராக்ஷஸப் படர்களே! ராமன் ஸமுத்திரத்தைத் தாண்டினதையும், பெரிய ஸைன்யத்துடன் லங்கையை முற்றுகையிட்டதையும், அவனுடைய வீரிய பராக்கிரமங்களையும் நீங்கள் வர்ணிக்கக் கேட்டேன். யுத்தத்தில் நீங்கள் வீண்போகாத பராக்க்கிரமிகளென்று அறிவேன். ராமனுடைய ஸௌரியத்தைக் கேட்டு மனம் தளர்ந்து ஒருவரையொருவர் பார்த்துக்கொண்டு உத்ஸாஹமற்றிருக்கிறீர்கள் என்று அறிவேன்'' என்றான்.

அப்பொழுது ராவணனுடைய பாட்டனான மால்யவான் மஹாபுத்திமானாகையால், "ராமன் அபாரபலவான்; அவனுடன் ஸ்நேஹம் செய்வதே க்ஷேமகரம்'' என்று நிச்சயித்து, ராவணனை நோக்கி, "குழந்தாய்! ஆன்விக்ஷிகீ, த்ரயீ, வார்த்தா, தண்டநீதி என்ற நான்கு வித்யைகளில் நிபுணனாய், நீதிசாஸ்திரத்தை அனுஸரிக்கும் அரசனே நீண்டகாலம் தடையற்ற அதிகாரத்தைச் செலுத்திச் சத்ருக்களைத் தன் வசப்படுத்துவான்.

தகுந்த காலத்தில், தன் பலம் குறைவதை அறிந்த சத்ருக்களுடன் ஸ்நேஹம் செய்யவேண்டும். தன் பலம் விருத்தியடையும் காலத்தில் அவர்களை எதிர்க்கவேண்டும். இப்படிச் செய்தால் எல்லையற்ற அதிகாரத்தையடைந்து தன்னைச் சேர்ந்தவர்களுக்கு ஸகல க்ஷேமத்தையும் ஸம்பாதிப்பான். சத்துரு தனக்கு ஸமமான பலவானாக இருந்தாலும் அதிக பலசாலியாக இருந்தாலும் அவனுடன் ஸமாதானம் செய்யவேண்டியது. தன்னைக்காட்டிலும் குறைந்த பலமுள்ள சத்துருவை அலக்ஷ்யம் செய்யாமல் யுத்தம் செய்து ஜயிக்கவேண்டியது. இப்பொழுது உனக்கு பலக்குறைவு; ராகவனுக்கு பல விருத்தி. ஆகையால், அவனுடன் நீ ஸமாதானம் செய்வது நலம். ஆனால், தன்னைவிட பலவானான அரசனுடன் ஸ்நேஹம் செய்யும் பொழுது விலையுள்ள காணிக்கையைக் கொடுக்கவேண்டும். எதற்காக ராமன் நம்முடன் விரோதிக்கிறானோ, அந்த ஸீதையையே காணிக்கையாகக் கொடு.

தேவரிஷிகள் கந்தர்வர்கள் முதலிய ஸகலரும் அவனுக்கு ஜயம் கிடைக்கவேண்டுமென்று பிரார்த்திக்கிறார்கள். ஆகையால் அவனுக்குப் பலம் வரவர விருத்தியடைகிறது. அவனுடன் விரோதிக்காதே: ஸ்நேஹம் செய்து கொள். ஸகலமும் அறிந்த பிரஹ்மா ஆதியில் தேவர்களையும் அஸுரர்களையும் ஸிருஷ்டித்து, தேவர்கள் தர்மத்தை அவலம்பிக்கவேண்டுமென்றும் அஸுரர்களும் ராக்ஷஸர்களும் அதர்மத்தை மேற்கொள்ள வேண்டுமென்றும் ஏற்படுத்தினர். மஹாத்மாக்களான தேவர்கள் தர்மத்தில் அபிமானமுள்ளவர்களாகையால், தர்மஸ்வரூபியான ராமனுக்கு ஸஹாயம் செய்து ஜயம் கிடைக்கவேண்டுமென்று பிரார்த்திக்கிறார்கள். தர்மத்தால் அதர்மம் அடங்கியிருக்கும் காலம் கிருதயுகம்;

அதர்மத்தால் தர்மம் அடங்கியிருக்கும் காலம் கலியுகம். நீ திக்விஜயம் செய்கையில் பரஸ்த்ரீகளை அபகரித்துத் தர்மத்தைக் கெடுத்து அதர்மத்தைக் கைக்கொண்டாய். கிருதயுக தேவதையான தர்மம் ராமனிடத்திலும், கலியுக தேவதையான அதர்மம் உன்னிடத்திலும் குடிகொண்டிருக்கிறது. கலியைவிட கிருதயுக தேவதை பலவான்; உன்னைவிட ரகுநாதன் பலவான். ஒருவன் செய்த தர்மம் அதர்மத்தை மிஞ்சியிருந்தால் அசுபம் நேரும். நீ அதர்மத்தை ஆச்ரயித்தபடியால் உனக்கு அபஜயமும், தர்மத்தை ஆச்ரயித்தபடியால் ராமனுக்கு ஜயமும் நிச்சயம். நீ அனுஷ்டிக்கும் அதர்மம் அக்ஞானத்தால் வரவர விருத்தியடைந்து, எங்களை வேரறுத்து, நமது சத்துருக்களான தேவர்களுடைய பலத்தையும் தேஜஸையும் விருத்தி செய்கிறது. 'நான் செய்யும் அதர்மத்தால் சத்துருபக்ஷம் விருத்தியாவது எப்படி' என்ருல், விஷயஸுகங்களில் முழுகி நியாயாநியாயம் தெரியாமல் பரஸ்த்ரீகளைப் பலாத்காரம் செய்துவந்தாய். அதனுல் அக்னியைப் போன்ற தேஜஸுள்ள மஹரிஷிகளின் மனத்தைக்கொதிக்கும்படி செய்தாய். கொழுந்து விட்டெரியும் நெருப்பைப்போல் அவர்களுடைய மஹிமை எதிர்க்க முடியாதது. அவர்கள் தவத்தால் பரிசுத்தமான மனத்தையுடையவர்கள்; தர்மத்தை விருத்தி செய்வதிலேயே பிரியமுள்ளவர்கள்; அக்னிஹோத்திரம் முதல் ஸகல யாகங்களையும் விதிப்படி பிரதினம் செய்து வருகிருர்கள்; அக்னியில் விதிப்படி ஹோமம் செய்கிருர்கள்; ராக்ஷஸர்களைக் கொஞ்சம்கூட லக்ஷ்யம் செய்யாமல் உயர்ந்த ஸ்வரத்துடன் வேதங்களை அத்யயனம் செய்கிருர்கள். கோடைக் காலத்தில் மேகங்கள் சிதறிப்போவது போல் ராக்ஷஸர்கள் மேற்சொன்ன காரணங்களால் மூலைக்கு மூலை ஓடுகிருர்கள். உக்ரமான தேஜஸையுடைய மஹரிஷிகள் செய்யும் அக்னிஹோத்திரங்களிலிருந்து கிளம்பும் புகை, ஸகல திக்குகளிலும் வியாபித்து ராக்ஷஸர்களுடைய தேஜஸை அபகரிக்கிறது. விரதங்களை உறுதியாக அனுஷ்டிக்கும் ரிஷிகள் அந்தந்தப் புண்ய ஸ்தலங்களில் செய்யும் கடுந்தவம் ராக்ஷஸர்களை வாட்டுகிறது. தேவதானவயக்ஷ கந்தர்வர் முதலியவர்களால் மரணமில்லையென்று பிரஹ்மா உனக்கு வரம் கொடுத்தார். ஆனுல் அதில் அடங்காத மனிதர்களும் வானரர்களும், கரடிகளும், கொண்டை முஸுருகளும் இங்கே வந்து, பலக்கொழுப்பாலும், கலங்காத பராக்கிரமத்தாலும் கர்ஜிக்கிருர்கள்.

மேலும், கோரயான பலவித அபசகுனங்களை உத்தேசித்தும், ஸகல ராக்ஷஸர்களுக்கும் நாசகாலம் ஸமீபித்துவிட்டதென்று நிச்சயிக்கிறேன். பயங்கரமாக கர்ஜிக்கும் மேகங்கள் கோர ரூபங்களுடன் லங்கை முற்றிலும் உஷ்ணமான ரத்தத்தைப் பொழிகின்றன. யானை குதிரை முதலிய வாஹனங்கள் கண்ணீர்விட்டு அழுகின்றன. த்வஜங்கள் புழுதி பரந்து நிறம் மாறி, முன்போல் பிரகாசிக்கிறதில்லை. துஷ்ட மிருகங்களும், நரிகளும், கழுகுகளும் லங்கையில் பிரவேசித்து, கூட்டங்கூட்டமாய் நின்று, கேட்போர் நடுங்கும்படிக் கத்துகின்றன; கருத்த நிறமுள்ள ஸ்த்ரீகள் வெண்மையான பற்களைக் காட்டிக் கொண்டு, எதிர்த்துப் பேசி வீட்டிலிருக்கும் வஸ்துக்களைத் திருடிவிட்டு, இடிபோல் சிரிப்பதை ஸ்வப்பனங்களில் அடிக்கடி காண்கிருேம். (இவைகள் பூதனை முதலிய சக்தி தேவதைகள்). வீடுகளில் போடும் பலிகளை நாய்கள் தின்கின்றன. பசுக்களுக்குக் கோவேறு கழுதைகளும், கீரிப்பிள்ளைகளும் மூஞ்சூறுகளும்; செந்நாய்களுக்குப் பூனைகளும்; பன்றிகளுக்கு நாய்களும்; ராக்ஷஸர்களுக்குக் கின்னரர்களும், மனுஷ்யர்களும் பிறக்கிருர்கள். புருக்கள் வெளுத்த தேகங்களுடனும் சிவந்த பாதங்களுடனும் தெய்வகதியால் லங்கையில் காணப்படுகின்றன. வீட்டில் வளர்க்கும் கிளிகளும் நாணத்தான் குருவிகளும் வீசி கூசி என்று கத்துகின்றன. காக்கை முதலிய பக்ஷிகளும் மிருகங்களும், எவ்வளவு தடவை அடித்துத் துரத்தினுலும் மறுபடியும் கூட்டங்கூட்டமாய்ச் சண்டைக்கு வந்து ஸூரியனை நோக்கி அழுகின்றன. மிருத்யு ரூபமான ஒரு புருஷன், கருப்பும் மஞ்சளும் கலந்த நிறத்துடன் தலை மொட்டையாய், ஒவ்வொரு வீட்டிலும் காலையிலும் மாலையிலும் நுழைந்து பயங்கரமாய் உற்றுப் பார்த்துக்கொண்டே போகிருன். இன்னும் இதைப்போன்ற அநேக அபசகுனங்கள் காணப்படுவதையும் ஆலோசித்து. நமக்கு இப்பொழுது காலபலம் அனுகூலமல்லவென்பதையும் கவனித்து, இனி நமக்குப் பரம க்ஷேமமுண்டாகும்படியான யோசனையைச் செய்" என்று பரமஹிதத்தை உபதேசித்தான். பிறகு மந்திரிசிரேஷ்டர்களுக்குள் முக்கியனுன மால்யவான், ராவணனுடைய முகக்குறிகளாலும் அங்க சேஷ்டைகளாலும் தான் சொல்லும் வார்த்தை அவனுக்குப் பிரியமில்லை என்றும் அப்படிச் செய்யமாட்டானென்றும் ஊஹித்து, மௌனமாயிருந்தான்.

ம் வசஸ்தஸ்ய நிஶம்ய மால்யவாந்
பரீக்ஷ்ய ரக்ஷோதி$^{4}$பதேர் மந: புந: |
அநுத்தமேஷூத்தம பௌருஷோ ப$^{3}$லீ
ப$^{3}$பூ$^{4}$வ தூஷ்ணீம் ஸமவேக்ஷ்ய ராவணம் ‖ (42)

---

## ஸர்க்கம் 36

# ராவணன் லங்கைக்குக் காவல் ஏற்படுத்தினது

---

தத் து மால்யவதோ வாக்யம் ஹிதமுக்தம் த$^{3}$ஶாநந: |
ந மர்ஷயதி து$^{3}$ஷ்டாத்மா காலஸ்ய வஶமாக$^{3}$த: ‖ (1)

ஆனுல் விநாசகாலம் ஸமீபித்துவிட்டபடியால் ராவணன் தனக்குப் பரமஹிதத்தை உபதேசித்த மால்யவானுடைய வார்த்தை

யைப் பொறுக்கவில்லை. கடும்கோபமடைந்து புருவங்களைப் பயங்கரமாய் நெறித்து, கண்களை உருட்டி விழித்து, "எனக்குப் பரம ஹிதமென்றெண்ணி நீர் சொல்லுகிற வார்த்தைகள் என் செவியில் ஏறவில்லை. அவை எனக்கு ஹிதத்தைச் செய்யாது. காதில் நாராசம் பாய்ந்ததுபோல் கடுமையாக இருக்கின்றன. நீர் சத்ரு பக்ஷத்தை ஆச்ரயித்தவரென்று தெரிகிறது. அது உமக்குத் தகாது; ராமனே மனிதன்; அந்த ஜாதிக்கே பலம் கிடையாது. மேலும், ஸ்வபாவமாய் பலமற்றவன்; தனி மனிதன். அல்பமான குரங்குகளையும் கரடிகளையும் நம்பியிருக்கிறவன்; ராஜ்யத்திலிருந்து தகப்பனால் துரத்தப்பட்டவன்; காடே கதி என்று வந்தவன்; இவன் உமக்குத் தடையற்ற பலவானாய்த் தோன்றுகிறான். நானோ ஸகல ராக்ஷஸர்களுக்கும் ஈசுவரன்; தேவதைகளும் என்னைக்கண்டு நடுங்குகிறார்கள்: மஹாவீரனுக்குரிய ஸமஸ்த உத்தம லக்ஷணங்களும் பொருந்தினவன். நான் உமக்குப் பலஹீனனாய்த் தோன்றுகிறேன். என்னிடத்தில் இவ்விதமான கடும் வார்த்தைகளைப் பேசுவது யுக்தமல்ல. அல்லது உம்முடைய ஜாதியில் பிறந்த நான், நிகரில்லாத சுத்த வீரனென்று உமக்குப் பொறாமையோ? அல்லது என் சத்துருவான ராமனிடத்தில் உமக்குப் பக்ஷபாதமோ? அல்லது சத்ருவால் தூண்டப்பட்டு இப்படி என்னிடத்தில் கடுமையான வார்த்தைகளைப் பேசுகிறீரோ? பண்டிதனும் சாஸ்திரங்களின் தத்வத்தை அறிந்தவனும் இருக்கும் புருஷன், சத்துருவால் தூண்டப்படாமல், தடையற்ற பிரபாவத்தையும் பக்குவமான புத்தியையும் உடையவனிடத்தில் கடுமையான வார்த்தைகளைப் பேசுவானா? நீர் சொல்வது நிஜமாயிருக்கட்டும்; ஹிதமாயிருக்கட்டும். கமலாஸனத்தை விட்டு வந்த லக்ஷ்மியைப்போல் ஒப்பற்று விளங்கும் ஸீதை ஸுலபமாய்க் கிடைக்கக் கூடிய வஸ்துவா? ராமனிடத்திலிருந்து எனக்கு அபாயம் நேருமென்ற கேவலம் பயத்தால் அவளைத் திருப்பிக் கொடுக்க எப்படி ஸம்மதிப்பேன்? சில தினங்களுக்குள் ராமலக்ஷ்மணர்களையும் அவர்களை நம்பிவரும் ஸுக்ரீவனையும் வானர ஸைன்யத்தையும் இருந்த இடம் தெரியாமல் அழிக்கிறேன் பாரும். இந்திராதி தேவதைகளும் என்னுடன் எதிர்த்து யுத்தம் செய்யத் துணிவார்களா? அப்படிப்பட்ட நான் ராமனுடன் யுத்தம் செய்யப் பயப்படுவேனா? மிகவும் வயது சென்றவராயும் எனக்குப் பாட்டனாயும் என் ஹிதத்தையே கோருகிறவராயும் இருக்கும் உம்மை இப்படிக் கடுமையாய்ப் பேசுவது எனக்கே வருத்தமாயிருக்கிறது. கேவலம் ராமனுக்குப் பயந்து ஸீதையைத் திருப்பிக் கொடு என்று சொன்னீர். அதிருக்கட்டும். எனக்கு எந்தக் கெடுதி நேர்ந்தாலும், என்னை இரண்டாய் வெட்டினாலும் பிறர்க்கு வணங்கிக் கீழ்ப்படிவதென்பது என்னால் முடியாது. ராமனாயிருந்தாலும் ஸரி, அவனைவிட அளவற்ற மடங்கு பலசாலியாயிருந்தாலும் ஸரி; 'உனக்குப் பலக்குறைவான காலம்; சத்துருவுடன் ஸ்நேகம் செய் என்று சொன்னாலும் அப்படிச் செய்யமாட்டேன். இது நீதிசாஸ்திர விரோதமென்று தெரியும். ஆனாலும், இது என்னுடன் பிறந்த தோஷம்; ஸ்வபாவத்தை விலக்க எவனால் முடியும்? ராமன் ஸமுத்திரத்தில் அணை கட்டினதைக்கண்டு உமக்கு ஆச்சரியமும் பயமும் உண்டாயிருக்கின்றன. அது, 'காக்கை உட்காரப் பனம்பழம் விழுந்தது'போல் அகஸ்மாத்தாக நடந்தவிஷயம். இது ஒரு விசேஷமா? இதைக்கண்டு பயப்படுவார்களா? இந்த அல்ப ஸமுத்திரத்தைத் தாண்டி ஸைன்யங்களுடன் ராமன் இங்கே வந்திருக்கிறான். இது எனக்கு ஸௌகர்யமே. இவ்வளவு பெயர்களையும், அவர்கள் இருக்குமிடத்தைத் தேடிப் போய்க் கொல்வது மிகவும் சிரமம். ஒரே காலத்தில் நான் இருக்குமிடத்தைத் தேடிவந்து எனக்கு சிரமமில்லாமல் என் கையால் மரணமடையப் போகிறார்கள். ஒருவனாவது உயிருடன் திரும்பிப் போகிறதில்லை. நான் ஆணையிட்டுச் சொல்கிறேன்" என்றான். லங்கேசுவரன் தன்னிடத்தில் அதிக கோபம் கொண்டான் என்றறிந்து, தன் வார்த்தைகள் வீணானதால் வெட்கமடைந்து, மால்யவான் ஒன்றும் பதில் சொல்லவில்லை. 'ஜய விஜயீபவ' என்று அவனை வாழ்த்தி, உத்திரவு பெற்றுக் கொண்டு தன் அரண்மனைக்குச் சென்றான்.



பிறகு ராவணன் மந்திரிகளுடன் ஆலோசித்து, தானும் தனியாக இருந்து ஆலோசித்து, லங்கையைக் காப்பாற்றுவதற்கு வேண்டிய ஸகல ஏற்பாடுகளையும் குறைவில்லாமல் செய்தான். கிழக்குக் கோட்டைவாசலில் பிரஹஸ்தனையும், தெற்குக் கோட்டைவாசலில் மஹாபார்சுவனையும் மஹோதரனையும், மேற்குக் கோட்டை வாசலில் மஹாமாயாவியான இந்திரஜித்தையும் அநேக ராக்ஷஸர்களையும், வடக்குக் கோட்டை வாசலில் சுகஸாரணர்களையும் நிறுத்தி, தான் அரண்மனையிலேயே இருந்தான். விரூபாக்ஷனென்ற ராக்ஷஸ வீரனை நகரத்தின் நடுவிலிருக்கும் ஸைன்யங்களுக்குத் தலைவனாக நியமித்தான். இப்படி லங்கைக்குக் காவல்களை ஏற்படுத்தி, தான் செய்ய வேண்டியது பாக்கி ஒன்றுமில்லையென்று ஸந்தோஷித்தான். இது அவனுடைய காலபலத்திற்குத் தகுந்த புத்தி. பிறகு மந்திரிகளை அனுப்பிவிட்டு, அவர்களால் 'ஜய விஜயீபவ' என்று வாழ்த்திப் பூஜிக்கப்பட்டு, அந்தப்புரத்தில் பிரவேசித்தான்.

விஸர்ஜயாமாஸ தத: ஸ மந்த்ரிணோ
விதா⁴ந மாஜ்ஞாப்ய புரஸ்ய புஷ்கலம் |
ஜயாஶிஷா மந்த்ரிக³ணேந பூஜிதோ
விவேஶ சாந்த:புரம்ருத்³தி⁴மந் மஹத் ‖ (23)

## ஸர்க்கம் 37

# ராமன் ஸேனையை அணிவகுத்தது

*நரவாநர ராஜௌ தௌ ஸ ச வாயுஸுத: கபி: |*
*ஜாம்ப³வாந் ரிக்ஷராஜஶ்ச ராக்ஷஸஶ்ச விபீ⁴ஷண: ||* (1)

**ரா**மன், ஸுக்ரீவன், ஹனுமான், ஜாம்பவான், தூம்ரன், விபீஷணன், அங்கதன், லக்ஷ்மணன், சரபன், ஸுஷேணன், அவனுடைய பந்துக்கள், மைந்தன், த்விவிதன், கஜன், கவாக்ஷன், குமுதன், அனலன், பனஸன் முதலியவர்கள் சத்ருவிருக்கும் தேசமாகிய லங்கையில் வந்து மேல் நடக்கவேண்டிய காரியங்களைப் பற்றி ஆலோசித்தார்கள். "இதோ தெரியும் ராக்ஷஸராஜதானி அஸுர உரககந்தர்வதேவகணங்களாலும் ஜயிக்க முடியாதது. முன் ஹனுமானால் சொல்லப்பட்ட விஷயங்களை மனத்தில் வைத்துக் கொண்டு நமது உத்தேசத்தை நிறைவேற்றுவதற்கு வேண்டிய உபாயங்களை ஆலோசிக்க வேண்டும். ராக்ஷஸாதிபதியான ராவணன், இவ்விடத்தில் எப்பொழுதும் வஸித்துக் கொண்டிருக்கிறான்" என்றார்கள். அப்பொழுது விபீஷணன் எல்லோருக்கும் தெரியும்படியாய் விசேஷ அர்த்தங்களடங்கின வார்த்தைகளைச் சொன்னான். "அனலன், சரபன், பிரகஸன், ஸம்பாதி என்ற என்னுடைய நான்கு மந்திரிகளும் பக்ஷிரூபத்துடன் லங்கைக்குச் சென்று, சத்துரு ஸைன்யத்தில் பிரவேசித்து, ராவணன் செய்திருக்கும் ஸமஸ்தயுத்த வியாபாரங்களையும் அறிந்துசொன்னார்கள். கிழக்குக் கோட்டை வாசலில் பிரஹஸ்தனும், தெற்குக் கோட்டை வாசலில் மஹோதரனும் மஹாபார்ச்வனும், மேற்குக் கோட்டை வாசலில் இந்திரஜித்தும், வடக்குக் கோட்டை வாசலில் பயமென்பதே அறியாத ராவணனும் காத்துக் கொண்டிருக்கிறார்கள். ஒவ்வோரிடத்திலும் விசேஷ கீர்த்திபெற்ற ராக்ஷஸவீரர்கள் ஸகல ஆயுதபாணிகளாகக் கணக்கில்லாமல் வைக்கப்பட்டிருக்கிறார்கள். விரூபாக்ஷன் நகரத்தின் நடுவிலிருக்கும் ஸேனைத்தலைவன். ராவணனுக்கு மிகவும் அந்தரங்கமான ஸைன்யம், ஆயிரம் யானைவீரர்கள் பதினாயிரம் ரதவீரர்கள், இருபதினாயிரம் குதிரை வீரர்கள். கோடி காலாட்படைகள். இவர்களிடத்தில் ராவணனுக்கு அளவற்ற நம்பிக்கை. இவர்களில் ஒவ்வொருவனுக்கும் பத்துலக்ஷம் பரிவாரங்கள் யுத்தத்திற்காகவே ஏற்பட்டிருக்கிறார்கள். இந்த ராக்ஷஸ வீரர்கள் விக்ரமசாலிகள், பலவான்கள், யுத்தத்தில் பின்வாங்காதவர்கள், மஹாக்ரூரர்கள்" என்று தெரிவித்து, தன் மந்திரிகளைக் கொண்டும் அதே விஷயத்தை விஸ்தாரமாய்ச் சொல்லச் சொன்னான். "ரகுவீர! பராக்கிரமத்திலும் வீரியத்திலும் தேஜஸிலும் பலத்திலும் கௌரவத்திலும் கொழுப்பிலும் ராவணனுக்கு நிகரான அறுபது லக்ஷம் வீரர்கள் குபேரனுடன் யுத்தம் செய்யும்பொழுது



லங்கேச்வரனைப் பின் தொடர்ந்தார்கள். அதைவிட இப்பொழுது சேர்ந்திருக்கும் ஸைன்யம் அதிகம். ஸ்வாமி! தங்களுக்கெதிரே சத்துருவின் பலத்தை வர்ணிப்பது உசிதமல்ல. தங்களைப் பயமுறுத்துவதற்காக நான் இப்படிச் சொல்லவில்லை. தங்களுக்குக் கோபத்தை உண்டாக்குவதற்காகவே சொல்லுகிறேன். தேவாஸுரர்களையும் ஒருநொடியில் தாங்கள் ஸம்ஹரிப்பீர்கள். ராவணன் தன் ஸைன்யத்தை வகுத்திருப்பதைப்போல் தாங்களும் வானர ஸைன்யத்தைச் சதுரங்கமாகப் பிரித்து ராக்ஷஸர்களை நாசம் செய்ய வேண்டும்" என்றான்.

ரகுவீரன் அதைக் கேட்டு, "கிழக்குக் கோட்டை வாசலில் நமது ஸேனாபதியான நீலன் பிரஹஸ்தனை எதிர்க்கட்டும். தெற்குக் கோட்டைவாசலில் அங்கதன் மஹோதரனையும், மஹாபார்ச்வனையும் ஜயிக்கட்டும். அளவற்ற பராக்கிரமமுள்ள வாயுபுத்திரன் மேற்குக் கோட்டைவாசலில் மஹாமாயாவியான இந்திரஜித்தைத் தடுக்கத் தகுந்தவன். தைத்ய தானவ மஹரிஷி கணங்களுக்கும் மஹாத்மாக்களுக்கும் எப்பொழுதும் உபத்திரவத்தைச் செய்கிறவனும், அல்பபுத்தியுள்ளவனும், அபூர்வ வரங்களை யடைந்ததால் மதம் கொண்டவனும், ஸகலப் பிராணிகளுக்கும் அனர்த்தத்தை விளைவித்துக் கொண்டு ஸகல லோகங்களிலும் திரிகிறவனுமான ராவணன் தங்கியிருக்கும் வடக்குக் கோட்டை வாசலில் நான் லக்ஷ்மணனுடன் போய், அவனை வதம் செய்து லங்கையில் பிரவேசிக்கிறேன். ஸுக்ரீவனும், ஜாம்பவானும், விபீஷணனும் எனக்கும் ஹனுமானுக்கும் நடுவில் வானர ஸைன்யங்களுடன் தங்கியிருக்கட்டும். இனி நடக்கும் யுத்தத்தில் நானும் லக்ஷ்மணனும் விபீஷணனும், அவனுடைய நான்கு மந்திரிகளுமே மனுஷ்ய ரூபங்களைத் தரிப்போம். வானரர்களில் ஒவ்வொருவனும் தன் நிஜ ரூபத்துடன் யுத்தம் செய்யவேண்டும். இதுவே நமது ஸைன்யத்தைச் சேர்ந்தவர்கள் என்பதற்கு அடையாளமாகஇருக்கட்டும். ராக்ஷஸர்கள் காமரூபிகளானதால் மனுஷ்ய ரூபத்தையும் எடுப்பார்கள். வானரர்களும் காமரூபிகளானதால் மனுஷ்ய ரூபத்துடன் யுத்தம் செய்தால், நமக்கும் சத்ருவிற்கும் பேதம் தெரியாது. ராக்ஷஸர்கள் வானர ரூபத்தை இகழ்வாக எண்ணித் தரிக்கமாட்டார்கள். அப்படித் தரித்தாலும், வானர ரூபத்துடன் நமது வானரர்களுடன் யுத்தம் செய்கிறவனை சத்ருவென்று அறிந்து கொல்ல வேண்டியது. மேற்சொன்ன ஏழு பேர்களைத் தவிர மனுஷ்ய ரூபத்துடன் நம்மை எதிர்க்கிறவர்களை உடனே கொல்ல வேண்டும்" என்று தன் உத்தேசம் நிறைவேறும் பொருட்டு இவ்விதமான ஏற்பாடுகளைச் செய்து, ஸுவேல மலையின் சிகரம் சத்துருக்கள் நெருங்கமுடியாததாயும் மனோஹரமாயும் இருக்கக் கண்டு, அங்கே அன்று ராத்திரி தங்க நிச்சயித்தார். இப்படி ராமன் தன் ஸைன்யங்களால் பூமியை மறைத்து. சத்துருவைக் கொல்வதில்

புத்தியைச் செலுத்தி, ஜயிப்போமென்ற நிச்சயத்தால் ஸந்தோஷமடைந்து லங்கையை நோக்கிச் சென்றார்.

ததஸ்து ராமோ மஹதா ப3லேந
ப்ரச்சா2த்3ய ஸர்வாம் ப்ருதி2வீம் மஹாத்மா |
ப்ரஹ்ருஷ்டரூபோ பி4ஜகா3ம லங்காம்
ச்ருத்வா மதிம் ஸோரிவதே4 மஹாத்மா ‖ (41)

---

## ஸர்க்கம் 38

# ராமன் ஸுவேலமலையில் தங்கினது

ஸ து க்ருத்வா ஸுவேலஸ்ய மதிமாரோஹணம் ப்ரதி |
லக்ஷ்மணாநுக3தோ ராம: ஸுக்3ரீவ மித3மப்3ரவீத் ‖ (1)

**பி**றகு ராமன் தன்னிடத்தில் அளவற்ற விச்வாஸம் வைத்தவர்களும் தர்மாத்மாக்களும் ஆலோசனையில் ஸமர்த்தர்களும் செய்ய வேண்டிய காரியங்களை நன்றாக அறிந்து தகுந்த காலத்தில் செய்பவர்களுமான ஸுக்ரீவனையும் விபீஷணனையும் நோக்கி, "மித்ரர்களே! இந்த ஸுவேல மலை அநேக தாதுக்களால் விளங்குகிறதைப் பாருங்கள். இன்று ராத்திரி நாமெல்லோரும் அங்கே அதன் அழகைப் பார்த்து ஸந்தோஷிப்போம். என் பார்யையை அபகரித்து மரணத்தை வலுவில் தேடிக்கொண்ட அந்தத் துராத்மா இருக்கும் லங்கையையும் அங்கிருந்து பார்ப்போம். மஹான்கள் ஏற்படுத்தின தர்மத்தையும் தன் குலாசாரத்தையும் தன் குலத்தின் மேன்மையையும் சற்று யோசித்தால் இப்படிச் செய்ய நியாயமில்லையே. அல்பமான ராக்ஷஸ புத்தியால் ஸகலரும் நிந்திக்கும் இந்தக் கோர பாபத்தைச் செய்து விட்டான். அவனுடைய பெயரைக் கேட்ட மாத்திரத்தில் எனக்குத் தேகம் தெரியாமல் கோபம் பொங்குகிறது. அந்த நீசன் செய்த அபராதத்திற்காக ஸகல ராக்ஷஸர்களும் அழியப் போகிறார்கள். கால கதியால் கட்டுப்பட்டு ஒருவன் பாபத்தைச் செய்கிறான். அந்த அல்பனுடைய தோஷத்தால் அவன் குலம் முழுவதும் நசிக்கிறது." என்று சொல்லிக்கொண்டே, ராவணனிடத்தில் கடுங்கோபத்துடன் ஸுவேல மலையில் ஏறினார். லக்ஷ்மணன் ஆயுதபாணியாய் ராமனை அதிஜாக்கிரதையாய்க் காத்துக்கொண்டு பின்தொடர்ந்தார். கஜன் கவாக்ஷன், கவயன், சரபன், கந்தமாதனன், பனஸன், குமுதன் ஹரன், ரம்பன், ஜாம்பவான், ஸுஷேணன், ரிஷபன், துர்முகன் சதவலி, மைந்தன், த்விவிதன், நீலன், அங்கதன், ஹனுமான் ஸுக்ரீவன் அவனுடைய மந்திரிகள் விபீஷணன் முதலியவர்களும் ராமனுடன் சென்றார்கள். வாயுவேகமுள்ள அந்த வானர வீரர்கள் அதிசீக்கிரத்தில் அந்தப் பர்வத சிகரத்தைச் சேர்ந்து, லங்காபுரி ஆகாசத்தில் யாதொரு ஆதாரமுமில்லாமல் தொங்குவதைப்போல் த்ரிகூடசிகரத்தில் கட்டப்பட்டிருப்பதைக் கண்டார்கள். அழகான



கோட்டை வாசல்களாலும் பிராகாரங்களாலும் விளங்கி, மங்களகரமாய் ராக்ஷஸர்களால் நிறைந்திருக்கும் லங்கையைப் பார்த்து அளவற்ற ஆச்சரியத்தை அடைந்தார்கள். கோட்டைச் சுவர்களில் காத்துக்கொண்டிருந்த கணக்கில்லாத ராக்ஷஸ வீரர்கள் கருத்த தேகங்களுடன் மற்றொரு பிராகாரத்தைப்போல் தோன்றினார்கள். ராக்ஷஸர்களுடன் எப்பொழுது யுத்தம் நேருமென்று ஆவலுடன் எதிர்பார்த்துக்கொண்டிருந்த வானரர்கள் அவர்களைக் கண்டவுடன் வீராவேசம் கொண்டு ஸிம்ஹநாதம் செய்து கர்ஜித்தார்கள். அதற்குள் ஸந்தியா காலமாயிற்று; ஸூரியன் அஸ்தமித்தார். சந்திரனும் ஸகல கலைகளுடன் ஆகாசவீதியில் பிரகாசித்தான்.

இப்படி ராமன் விபீஷணனால் உபசரிக்கப்பட்டு, லக்ஷ்மணனாலும் வானரஸேனாபதிகளாலும் காக்கப்பட்டு, ஸுவேல மலையில் அன்று ராத்திரி வஸித்தார்.

தத: ஸ ராமோ ஹரிவாஹிநீபதி:
விபீ4ஷணேந ப்ரதிநந்த்3ய ஸத்க்ருத: |
ஸலக்ஷ்மணோ யூத2பயூத2 ஸம்வ்ருத:
ஸுவேல ப்ருஷ்டே2 ந்யவஸத்3 யதா2 ஸுக2ம் ‖ (21)

---

## ஸர்க்கம் 39

# வானரர்கள் லங்கையைக் கண்டது

தாம் ராத்ரி முஷிதாஸ் தத்ர ஸுவேலே ஹரிபுங்க3வா: |
லங்காயாம் த3த்3ருஶுர் வீரா: வநாந் யுபவநாநி ச ‖ (1)

**ம**றுநாட் காலையில் வானரர்களும் ராமலக்ஷ்மணர்களும் ஸுவேலையின் சிகரத்திலிருந்து லங்கா நகரத்தைப் பார்த்தார்கள். (இது ஸமுத்திரத்தைத் தாண்டின தினத்தில் நடந்த விருத்தாந்தம். முன்பு சுருக்கமாயும் இங்கே விஸ்தாரமாயும் சொல்லப்பட்டிருக்கிறது. அன்று பௌர்ணமி என்றும் மறுநாள் பிரதமையில் யுத்தம் ஆரம்பித்ததென்றும் தெரிகிறது.) அதிலுள்ள வனங்களும், தோட்டங்களும், மேடுபள்ளமில்லாமல் விசாலமாய் துஷ்ட மிருகங்களில்லாமல் மனோஹரமாய் அமைக்கப்பட்டிருந்ததைக் கண்டு அவர்கள் ஆச்சரியமடைந்தார்கள். அழகான புஷ்பங்களாலும் பழங்களாலும் தளிர்களாலும் கொடிகளாலும் விளங்கும் சம்பகம், அசோகம், புன்னை, ஆச்சா, பனை, பச்சிலை, பலா, மருதை, கடம்பு, எழிலைப்பாலை முதலிய விருக்ஷங்களால் நிறைந்த வனங்கள், இந்திரனுடைய நந்தவனத்தைப்போலும் குபேரனுடைய சைத்ரரதத்தைப் போலும் சோபித்தன. எல்லா ருதுக்களிலும் பழங்களாலும் புஷ்பங்களாலும் நிறைந்திருந்தது. மயில்கள்

குயில்கள் முதலிய பக்ஷிகள் மதுரமாய்க் கூவிக்கொண்டிருந்தன. அன்னம், நீர்க்கோழி, சக்ரவாகம் முதலிய நீர்ப்பறவைகளாலும் தாமரை, செங்கழுநீர், கருநெய்தல், ஆம்பல், அலரி முதலிய புஷ்பங்களாலும் நீரோடைகளும், வாபிகளும், தடாகங்களும், ஏரிகளும் பிரகாசித்தன. வனங்களில் வண்டுகள் தேனைக் குடித்து மதம்கொண்டு இனிமையாய் ரீங்காரம் செய்து கொண்டிருந்தன. வானரர்கள் அந்தக் காக்ஷிகளை ஆச்சரியத்துடனும் ஸந்தோஷத்துடனும் பார்த்துக்கொண்டே சென்றார்கள். புஷ்பங்களிலிருந்தும் பழங்களிலிருந்தும் பரிமளத்தை கிரஹித்துக்கொண்டு காற்று ஸுகமாய் வீசிற்று. சில வானரவீரர்கள் ஸுக்ரீவனிடத்தில் உத்திரவு பெற்றுக்கொண்டு லங்கையை நோக்கிச் சென்றார்கள். போகும் வழியில் பக்ஷிகளும் மிருகங்களும் அவர்களைக்கண்டு பயந்து நடுங்கின. அவர்களுடைய ஸிம்ஹநாதங்களாலும் லங்கா நகரம் அதிர்ந்தது; வேகத்தால் பூமி வருந்திற்று. அவர்கள் கிளப்பின புழுதி ஆகாசத்தை மறைத்தது. அந்தக் காடுகளிலுள்ள கரடிகளும், ஸிம்ஹங்களும், பன்றிகளும், யானைகளும், எருமைகளும், மான்களும் அந்த சப்தத்தைக் கண்டு பயந்து மூலைக்கு மூலை ஓடின. (இதுவரையில் த்ரிகூடத்தில் மூன்று சிகரங்களில் முதலாவதான ஸுவேலம் வர்ணிக்கப்பட்டது. இனி இரண்டாவது சிகரம் வர்ணிக்கப்படுகிறது). த்ரிகூடபர்வதத்தின் நடுச்சிகரம் மற்ற இரண்டைவிட அதிக உன்னதமாய் ஆகாசத்தையளாவி, புஷ்பித்த விருக்ஷங்களால் வெள்ளிமலையைப்போல் பிரகாசித்தது. பார்க்க ரமணீயமானது. நூறு யோஜனை விஸ்தாரமுள்ளது. பக்ஷிகளும் ஏறுவது அஸாத்தியம். மனிதர்கள் அதில் ஏற முடியும் என்று மனத்தில் நினைக்கவும் முடியாதென்றால் ஏற முடியாதென்பதைச் சொல்லவும் வேண்டுமா? இப்படி வெகு காந்தி பெற்று விளங்கும் அந்தப் பர்வத சிகரத்தில் ராவணனுடைய ராஜதானியான லங்கை விச்வகர்மாவால் அமைக்கப்பட்டிருந்தது. நூறு யோஜனை விஸ்தீர்ணமும் முப்பது யோஜனை நீளமும் உடையது. வெளுத்த மேகங்களைப் போன்ற கோபுரங்களும் வெளிச் சுவர்களும், தங்கச் சுவர்களும், அரண்மனைகளும், விமானங்களும் அதை அலங்கரித்தன. சரத் காலத்து மேகங்கள் ஆகாசத்தில் விளங்குவதைப்போலிருக்கும் கிருகங்களுக்கு நடுவில் கைலாஸ சிகரத்தைப்போல் ஒரு கட்டடம் தோன்றிற்று. அது நகரத்தின் நடுவில் நான்கு ராஜ வீதிகளும் சேருமிடத்தில் அமைக்கப்பட்ட உப்பரிகை. அநேக ஸ்தம்பங்களால் அலங்கரிக்கப்பட்டு ஆகாசத்தை அளாவுவதுபோல் லங்காபுரிக்கு ஓர் ஆபரணமாய் விளங்கிற்று. எண்ணிறந்த ராக்ஷஸ வீரர்கள் அதை இரவும் பகலும் காத்துக் கொண்டிருந்தார்கள். (மற்றவர்களுக்கு முன்னே சென்ற வானரர்கள் லங்கையைப் பார்த்ததை இதுவரையில் வர்ணித்து, இனி ஸ்ரீ ராமமூர்த்தி அந்த நகரத்தைக் கடாக்ஷித்ததை வர்ணிக்கிறார்.)



அழகான காடுகளாலும் பலவித விசித்திரமான தாதுக்கள் நிறைந்த க்ரீடாபர்வதங்களாலும், தோட்டங்களாலும் பலவகை மிருகங்களும் பக்ஷிகளும் ஆனந்தமாய் ஸஞ்சரிக்கும் வனங்களாலும் ஸகல ஐச்வரியத்தாலும் மனத்தைக் கவரும் ராக்ஷஸராஜதானியை ரகுவீரனும் மற்ற வானரர்களும் கண்டு ஸந்தோஷித்தார்கள். உன்னதமான கிருஹங்களையும் ரத்தினம், முத்து, பவழம் முதலிய உத்தம வஸ்துக்களையும் சாதுரியமாய் ஏற்பட்ட அரண்களையும் காவல்களையும் பெரிய யந்திரங்களையும் கதவுகளையும் அரண்மனை வரிசைகளையும் பார்க்கப் பார்க்க அவர்களுக்கு ஆச்சரியம் அதிகரித்தது. ஸமஸ்த லக்ஷ்மீஸமேதரும் தேவர்களைப் போன்றவருமான ரகுவீரனும் அவைகளை ஆச்சரியத்துடன் பார்த்துக் கொண்டிருந்தார். (அதுவரையிலும் அப்படிப்பட்ட செல்வத்தையும் ஐச்வரியத்தையும் செழிப்பையும் பார்க்காததால் வானரர்களுக்கு ஆச்சரியமுண்டாயிற்று. பூர்வபுண்யத்தால் இப்படிப்பட்ட பதவியையும் ஸுகத்தையும் அதிகாரத்தையுமடைந்த ராவணனுக்கு இவ்விதமான பாப புத்தி தோன்றி, யாவற்றையும் இழக்கும்படி நேர்ந்த கர்ம கதியை நினைத்து ரகுவீரன் ஆச்சரியப்பட்டார்.)

தாம் ரத்நபூர்ணாம் ப3ஹுஸம்விதா4நாம்
ப்ராஸாத3 மாலாபி4 ரலங்க்ருதாம் ச |
புரீம் மஹாயந்த்ர கவாடமுக்2யாம்
த3த3ர்ஶ ராமோ மஹதா ப3லேந || (31)

---

## ஸர்க்கம் 40

# ராவணனுக்கும் ஸுக்ரீவனுக்கும் மல்லயுத்தம்

---

ததோ ராம: ஸுவேலாக்3ரம் யோஜநத்3வய மண்ட3லம் |
ஆருரோஹ ஸஸுக்3ரீவோ ஹரியூத2ப ஸம்வ்ருத: || (1)

பிறகு ரகுநாதன், இரண்டு யோஜனை சுற்றளவுள்ள ஸுவேல மலையின் சிகரத்தில் ஏறி ஸுக்ரீவன் முதலிய வானரத் தலைவர்களுடன் அங்கே ஒரு முகூர்த்தம் தங்கி, நான்கு புறங்களையும் பார்த்தார். திரிகூடபர்வதத்தின் நடுச்சிகரத்தில் லங்காநகரம் அழகிய காடுகளால் சூழப்பட்டு, வெகு சாதுரியமாய் விச்வகர்மாவால் அமைக்கப்பட்டிருந்தது. அதை உற்றுப் பார்க்கையில் ஒரு கோபுரத்தின் மேல்மாடியில் ஸர்வலோக கண்டகனை பிரதாப லங்கேசுவரன் தன் மந்திரி பரிவாரங்களுடன் உட்கார்ந்திருக்கக் கண்டார். பூர்ண சந்திரனைப்போன்ற ஒரு வெண்குடையைச் சில ராக்ஷஸர்கள் பிடித்துக் கொண்டிருந்தார்கள். சிலர் தங்கப் பிடிகளுள்ள சாமரங்களை இரு புறங்களிலும் வீசினார்கள். அவன் நவ ரத்தினங்களிழைத்த ஆபரணங்களைத் தரித்து சிவப்புச் சந்தனத்தைப் பூசிக்கொண்டு, தங்கத்தால் விசித்திரமாக வேலை செய்யப்

பட்ட வெண்பட்டை உடுத்தியிருந்தான். கருத்து நீருண்ட மேகம் போல் பிரகாசிக்கும் அவனுடைய மார்பில் ஐராவதமென்ற கஜத்தின் தந்தங்கள் தாக்கின வடுக்கள் சந்திர பிம்பங்கள்போல் விளங்கின. முயலின் ரத்தத்தைப்போல் சிவந்த உத்தரீயத்துடன், ஸந்தியா காலத்தில் காணப்படும் சிவப்பு நிறமுள்ள மேகக் கூட்டங்களைப்போல் தோன்றினன். அவனைக் கண்டவுடன் ஸுக்ரீவனுக்குத் தேகம் தெரியாமல் கோபமுண்டாயிற்று. பிரபுவான ராமனுக்கெதிரில் இந்த மஹாபாபி ஸகல ராஜோபசாரத்துடன் இருப்பதா? என்று ஸஹிக்காமல், திடீரென்று எழுந்து, அளவற்ற தேக பலத்தையும் மனோபலத்தையும் உடையவனுகையால், அங்கிருந்து பாய்ந்து, ராவணனிருக்கும் கோபுரத்தில் அவனுக்கெதிரில் குதித்தான். "அந்த ராக்ஷஸபாபி என் கண்ணில் பட்டவுடன் இறந்தானென்று நம்புங்கள்" என்று ராமனிடத்திற் செய்த பிரதிக்ஞையை நிறைவேற்ற ஸமயம் பார்த்திருந்தான். சற்று நேரம் ராவணனை வெறிக்கப் பார்த்து, சிறிதும் பயமில்லாமல், அவனைத் துரும்பாக எண்ணி, அவன் செவியில் நாராசம் துளைத்ததுபோல், "அடே! ராக்ஷஸப்பதரே! மஹாபாபி! நான் யார் தெரியுமா? லோகநாதனை ராமமூர்த்தி என்னைத் தோழனென்று அழைக்கிருர். வாஸ்தவத்தில் நான் அவருடைய தாஸன். அந்த மஹாவீரனுடைய அனுக்கிரஹத்தால் நான் உன்னை இன்று உயிருடன் விடப்போகிறதில்லை" என்று, லங்கேசுவரன் மேல் பாய்ந்து, அவனுடைய ரத்ன கிரீடத்தை அடித்துப் பூமியில் தள்ளினன்.

ஸுக்ரீவன் வருவதைக் கண்ட ராக்ஷஸாதிபதி, "இதுவரையில் உனக்கு ஸுக்ரீவன் (அழகான கழுத்தையுடையவன்) என்று பெயரிருந்தது. என் கண்ணில் பட்டபிறகு கழுத்தில்லாதவன் என்ற பெயரை அடைவாய்" என்று சொல்லி, எழுந்து ஸுக்ரீவனைக் கைகளால் பிடித்து மேலே தூக்கிப் பூமியிலடித்தான். வானரேசுவரன் பந்துபோல் கிளம்பி, தசமுகனைத் தூக்கி ஆகாசத்தில் விட்டெறிந்தான். ஒருவரையொருவர் இறுக்கக் கட்டினதால் தேகமெங்கும் வியர்வையால் நனைந்தது. நகங்களால் கீறி உடம்பெல்லாம் ரத்தம் பெருகிற்று. இறுகக் கட்டிப் பிடித்துக் கொஞ்ச நேரம் அசைவற்று நின்ருர்கள். பிடித்த பிடியைத் திமிறிக்கொண்டு சிவந்த புஷ்பங்களால் நிறைந்த இலவமரத்தைப்போல் ரத்தப் பிரவாஹத்தால் விளங்கினுர்கள். ஒருவரையொருவர் கைகளை மடக்கிக் குத்தினுர்கள்; ஓங்கி அறைந்தார்கள்; விரல் நுனிகளால் துளைத்தார்கள்; சுண்டுவிரலைத் தவிர மற்ற விரல்களை மடக்கிக் குத்தினுர்கள்; இப்படி மஹாபலசாலியான ராக்ஷஸேசுவரனும் வானரேசுவரனும் பிறர் பார்க்க ஸஹிக்காத கோரயுத்தம் செய்தார்கள். வெகு காலம் அவ்விருவரும் அந்தக் கோபுரத்தின் மேடையில் மல்ல யுத்தம் செய்து, கைச்சண்டையை விட்டு ஒருவரையொருவர் உயரத் தூக்கி எறிந்தார்கள்; இழுத்துத் தள்ளினுர்கள்



முஷ்டிப்ரஹாரைஶ்ச தலப்ரஹாரை: அரத்நிகா‘தைஶ்ச கராக்$^{3}$ரக$^{4}$ாதை: |
தௌ சக்ரதுர் யுத்$^{3}$த$^{4}$ மஸஹ்ய ரூபம் மஹாப$^{3}$லௌ ராக்ஷஸ வாநரேந்த்$^{3}$ரௌ ‖
— யு. 40ஸ—15சு.

ஒருவரை யொருவர் கைகளை மடக்கிக் குத்தினர்கள்; ஓங்கி அறைந்தார்கள்... இப்படி மஹாபலசாலிகளான ராக்ஷஸேசுவரனும் வானரேசுவரனும் பிறர் பார்க்க ஸஹிக்காத கோர யுத்தம் செய்தார்கள். (பக்கம் 150 பார்க்க)

Notes : This Blank Page has also to be counted as a another page Number.

It is intentionally left blank after Picture Sketches.!





கழுத்தைப் பிடித்து அவயவங்களை வளைத்தார்கள்; முன்னும் பின்னும் அடிவரிசைகளைப் போட்டார்கள்; புஜங்களால் கட்டி இறுக்கினார்கள். அப்படியே பிராகாரத்திற்கும் அகழிக்கும் நடுவில் விழுந்தார்கள். வெகு ஸாமர்த்தியசாலிகளாகையால், பூமியைத் தொடாமல் கிளம்பி, ஒரு முகூர்த்த காலம் சிரமத்தால் பெருமூச்சு விட்டுக்கொண்டிருந்தார்கள். அவயவங்களைப் பிடித்துவிட்டுக்கொண்டு, பிறகு தாவி, யமபாசங்களைப் போன்ற புஜங்களால் இறுக்கி நெறித்தார்கள். கொழுத்த ஸிம்ஹத்தையும் புலியையும் போலும், யானைக்குட்டிகளைப்போலும், அவ்விருவரும் ஸஹஜ பலத்தாலும், பழக்கத்தாலும், சக்தியாலும் ஒருவரையொருவர் பிடிக்கவேண்டுமென்று தங்களுக்குத் தெரிந்த ஸகல யுத்தவரிசைகளையும் காட்டினார்கள். பிறகு மார்புகளால் ஒருவரையொருவர் இடித்து ஒரே காலத்தில் பூமியில் வீழ்ந்தார்கள். பிறகு எழுந்து ஒருவரையொருவர் கீழே தள்ளி, ஒவ்வொரு உபாயத்தையும் பிரயோகித்தார்கள். யுத்த ஸம்பந்தமான தேகப்பயிற்சியிலும் வில் வித்யையிலும் அதிகமாய்ப் பழகினதாலுண்டான பலத்தால் அவ்விருவருக்கும் களைப்புண்டாகவில்லை. உத்தமமான மதயானைகளைப்போன்ற நிறமுடையவர்களாய், யானைகளைக் கட்டும் ஸ்தம்பங்களையொத்த புஜங்களால் ஒருவரையொருவர் தடுத்தார்கள். இப்படி வெகு காலம் யுத்தம் செய்து மண்டலம் முதலிய வரிசைகளைக் காட்டிக்கொண்டு, ஒருவரையொருவர் கொல்வதில் நோக்கமுள்ளவர்களாய், ஒரு பக்ஷயத்திற்காக காத்துக்கொண்டிருக்கும் இரண்டு பூனைகளைப்போல்அசைவற்று அடிக்கடி நின்றார்கள். அநேக மண்டலங்களையும் விசித்திரமான ஸ்தானங்களையும் கோமூத்ரம் முதலிய பந்தங்களையும் முன்னடி பின்னடிகளையும் குறுக்குப் பாய்ச்சல்களையும், கோணல் பாய்ச்சல்களையும் பரிமோக்ஷம்,வர்ஜ்ஜம், பரிதாவனம்,அபித்ரவணம் முதலிய பலவித யுத்த வரிசைகளையும் காட்டி, அபூர்வ யுத்தம் செய்தார்கள். அப்பொழுது ராவணன் நியாயமாய் ஸுக்ரீவனை ஜயிக்க முடியாதென்று கண்டு, தன் மாயையை உபயோகித்து எங்கே பார்த்தாலும் தன்னைப்போல் காட்டினான். அதைக் கண்டு ஸுக்ரீவன் இனி இவனுடன் யுத்தம் செய்வது உசிதமல்லவென்று எண்ணி, ஜயத்தால் விளங்கி, மஹாபலவானான ராவணனுடன் நெடுநேரம் மல்ல யுத்தம் செய்தும்கூடக் களைக்காமல், ஆகாசத்தில் பாய்ந்து ராமனுடைய பக்கத்தில் வந்து சேர்ந்தான்.

ராவணன் எதிர்பார்க்காமலிருக்கையில் அவனுடைய இருப்பிடத்திற்குப்போய் அவனுடன் யுத்தம் செய்து ஜயித்து அவனை வஞ்சித்து அவன் கையில் அகப்படாமல் திரும்பி வந்துவிட்டான். இப்படி ராவணனை ஒரு க்ஷணத்தில் கொல்லக்கூடிய ஸைன்யங்களுக்கு அரசனான வானரராஜன் ராமனிடத்திலுள்ள பக்தியால் அவருடைய உத்தரவில்லாமல் சென்று, ராக்ஷஸேச்வரனுடன் வலு

வில் கோர யுத்தம் செய்து, அதனால் கிடைத்த கீர்த்தியை ராமனுக்கு ஸம்பாதித்து வைத்தான். ராவணனைப் போன்றவர்கள் அநேகர் அங்கிருந்தாலும், அவர்களை லக்ஷ்யம் செய்யாமல் அவனையே குறிவைத்துத் தோற்கடித்தான். தசக்ரீவனைப்போல் கபட யுத்தம் செய்யாமல், யுத்த நீதிக்குக் கட்டுப்பட்டுத் தர்ம யுத்தம் செய்து, அவனுக்கு அதுவரையில் அவன் அறியாத சிரமத்தை உண்டாக்கினான். அதுவே ராவணனுக்குக் கிடைத்த பிரயோஜனம்; அபார கீர்த்தியே ஸுக்ரீவனுக்குக் கிடைத்த பிரயோஜனம். தான் ஆதித்யனுடைய புத்திரனாகையால் அவருடைய ராஜ்யமான ஆகாச மார்க்கமாய் வந்து சேர்ந்தான். அவரைப்போல் இவனுடைய வேகத்திற்கும் எல்லையில்லை. ஆச்சரியகரமான காரியத்தைச் செய்தும் விநயத்தால் வானரர்களுக்குள் தானும் ஒருவனாய் நின்றான். "ராவணனுடைய சிரஸை நான் கொண்டுவர முடியவில்லையே, என் பிரபுவிற்கு எதிரில் எப்படி நிற்பேன்" என்று வெட்கப்படுகிறவனைப்போல், அவருடைய பக்கத்தில் வந்து நின்றான். நானே ராவணனைக் கொல்லுகிறேன் என்று ராமன் செய்த பிரதிக்ஞை வீணாகுமென்றே ஸுக்ரீவன் ராவணனைக் கொல்லவில்லை. மாயா வித்யை தெரியாதவனல்ல. ராவணனைப்போல் தானும் அதைப் பிரயோகித்தால் ராமனுக்குக் கோபமுண்டாகுமென்று வந்து விட்டான். இப்படி ஸூரிய புத்திரனான ஸுக்ரீவன் இந்த ஆச்சரியகரமான காரியத்தைச் செய்து, அளவற்ற ஸந்தோஷத்துடன் வாயு வேகமாய் மறுபடியும் வானரர்கள் இருக்குமிடத்திற்கு வந்தான். அதைக் கண்ட ரகுநாதனுக்குண்டான யுத்தாவேசத்திற்கும் ஆனந்தத்திற்கும் எல்லையுண்டோ? வானரசிரேஷ்டர்கள் ஸுக்ரீவனைக் கொண்டாடிப் பூஜித்தார்கள்.

இதி ஸ ஸவித்ருஸூநுஸ் தத்ர தத் கர்ம க்ருத்வா
பவநக3தி ரநீகம் ப்ராவிஶத் ஸம்ப்ரஹ்ருஷ்டம் |
ரகு4வர ந்ருபஸூநோ: வர்த4யந் யுத்3த4ஹர்ஷம்
தரும்ருக3 க3ணமுக்2யை: பூஜ்யமாநோ ஹரீந்த்3ர: || (34)

## ஸர்க்கம் 41

## லங்கையை முற்றுகையிட்டது

அத2 தஸ்மிந் நிமித்தாநி த்3ருஷ்ட்வா லக்ஷ்மண பூர்வஜ: |
ஸுக்3ரீவம் ஸம்பரிஷ்வஜ்ய தத3ா வசந மப்3ரவீத் || (1)

பிறகு ராவணனுடன் ஸுக்ரீவன் யுத்தம் செய்த அடையாளங்களை ரகுவீரன் அந்த வானராதிபதியின் தேகத்தில் கண்டு, க்ஷேமமாய்த் திரும்பி வந்ததைப்பற்றி ஸந்தோஷித்து, அவனை ஆலிங்கனம் செய்து, 'மித்திர! என்னுடன் ஆலோசிக்காமல் இப்படிப்பட்ட துணிவான காரியத்தை நீ செய்யலாமா? அரசர்கள்



எங்களைப்போன்ற பரிவாரங்களை இப்படிப்பட்ட காரியங்களில் நியமிப்பார்களே ஒழியத் தாங்களே போகமாட்டார்கள். நாங்களிருக்கையில் நீ இப்படிச் செய்யலாமா? துணிவான காரியங்களைச் செய்வதில் உனக்கு விசேஷப்ப்ரீதி. ஆனால் நானும் விபீஷணனும் இந்த வானரஸைன்யமும் உன் க்ஷேமத்தைப்பற்றி ஒன்றும் தெரியாமல் கவலைப்பட்டுக்கொண்டிருக்கும்படி செய்வது நியாயமா? இனி எங்களுடன் ஆலோசிக்காமல் இப்படிச் செய்யாதே. உனக்கு ஏதாவது ஆபத்து நேர்ந்தால் ஸீதையாலாவது பரதனாலாவது லக்ஷ்மணனாலாவது சத்துருக்கனனாலாவது என் தேகத்தாலாவது எனக்கென்ன ஆகவேண்டியிருக்கிறது? (பசு ஏற்கெனவே பிறந்த கன்றுகளை விட்டு அப்பொழுது பிறந்த கன்றிடத்தில் ஸகல ப்ரீதியையும் வைப்பதுபோல் எக்காலத்திலும் தன்னைவிட்டகலாத லக்ஷ்மியையும் லக்ஷ்யம் செய்யாமல், கொஞ்சகாலமாய்த் தன்னை ஆசிரயித்துவரும் ஒரு குரங்கை விசேஷமாக எண்ணும் ராமமூர்த்தியின் வாத்ஸல்யத்திற்கு எல்லையுண்டோ? தன் ஆத்மாவில் பாதி என்ற பத்னியைவிடப் பக்தனே பெரியவன் என்றெண்ணும் மஹானல்லவா? தன் பிரதிபிம்பங்களென்ற ஸஹோதரர்களையும், ஸகல தர்மங்களுக்கும் ஸகல கர்மங்களுக்கும் ஆதாரமான தேகத்தையும் பக்தர்களுடைய க்ஷேமத்திற்காகக் கைவிடும் மஹானுபாவன் ராமனைத் தவிர வேறுண்டோ? பத்தினிகளையும் புத்திரர்களையும் ஐசுவரியத்தையும் கொடுத்தாவது காப்பாற்றவேண்டிய தன் உயிரையும் பக்தர்களுடைய விஷயத்தில் துரும்பாய் நினைத்த மஹாத்மா). நீ திரும்பி வராமலிருக்கையில் பின்வருமாறு நிச்சயம் செய்துகொண்டேன். உன் பராக்கிரமம் எனக்கு நன்றாய்த் தெரிந்திருந்தும் உன்னிடத்திலுள்ள அதிக ப்ரீதியால் உன்னைப்பற்றிக் கவலைப்பட்டேன். ராவணனைப் புத்திரமித்திர பந்துக்களுடன் யுத்தத்தில் கொன்று நான் செய்த பிரதிக்ஞையை நிறைவேற்றி, விபீஷணனை லங்காதிபதியாய் அபிஷேகம் செய்து, அவன் என்னைச் சரணமடைந்ததை ஸபலமாக்கி, பரதனிடத்தில் கோஸல ராஜ்யத்தை ஒப்புவித்து (இல்லாவிட்டால் குலதர்மம் கெடும்) உயிரைவிட எண்ணினேன்" என்றார். அதற்கு ஸுக்ரீவன், "தங்களுடைய ப்ரியபார்யையை அபகரித்த அந்த மஹாபாபியை நேரில் பார்த்துவிட்டு எப்படிப் பொறுத்திருப்பேன்? தங்களுக்கு நான் தாஸன்; இது என் கடமை; துணிவால் செய்த காரியமல்ல' என்றான்.

ராகவன் அந்த வார்த்தையை மெச்சி லக்ஷ்மணனைப்பார்த்து, "குழந்தாய்! பழம், கிழங்கு, குளிர்ந்த ஜலம் முதலியவை நிறைந்த இடத்தில் நமது ஸைன்யத்தை இறக்கி அணிவகுப்போம். லோகத்திலுள்ள ஜந்துக்கள் அழியப்போகிறதென்பதைக் குறிப்பிடும் பயங்கரமான சகுனங்களைப் பார். வானர ராக்ஷஸவீரர்களும் மடிவார்கள். காற்றுகள் கடுமையாக அடிக்கின்றன; பூமி நடுங்குகின்றது;

பர்வதசிகரங்கள் அசைகின்றன; மரங்கள் முறிந்து விழுகின்றன; மேகங்கள், கழுகு பருந்து முதலிய குரூர ஜந்துக்களுக்கு இருப்பிடமாய், கடுமையான சப்தங்களுடனும் கோரமான ரூபங்களுடனும் ரத்தம் கலந்த மழையைப் பெய்கின்றன. இது பிராணிகளின் நாசத்தைக் குறிக்கின்றது. ஸந்தியாகாலத்தில் ஆகாசம் சிவப்புச் சந்தனத்தைப்போல் பார்க்கப் பயங்கரமாயிருக்கிறது; ஸூரிய மண்டலத்திலிருந்து நெருப்புக்கட்டிகள் ஜ்வலித்துக்கொண்டு விழுகின்றன. அல்பமிருகங்களும் பக்ஷிகளும் தீனமாய் தீனஸ்வரங்களுடன் ஸூரியனைப் பார்த்துக் கத்தும்பொழுது எல்லோருக்கும் பயம் நேரிடுகிறது. ராத்திரியில் சந்திரன் பிரகாசிக்கிறதில்லை; உஷ்ணகிரணங்களால் எரிக்கிறான்; ஜகத்பிரளயம் நேரும்பொழுது காணப்படுவதுபோல் நடுவில் சிவந்து ஓரத்தில் கருத்த மண்டலங்களால் சூழப்படுகிறான். அந்த மண்டலம் குறுகிப் பயங்கரமாய் அளவற்ற அபாயங்களையும் கஷ்டங்களையும் குறிக்கின்றது. ஸூரிய மண்டலத்தில் கருப்புப்புள்ளிகள் தெரிகின்றன. நக்ஷத்திரங்கள் முன்போல் பிரகாசிக்கவில்லை. இந்த அபசகுனங்களைப் பார்த்தால் யுகங்கள் முடிந்து லோகங்களுக்குப் பிரளயம் வருமோ என்றெண்ணும்படியிருக்கிறது. காக்கைகளும், கழுகுகளும், பருந்துகளும் பலஹீனமான பக்ஷிகளால் ஜயிக்கப்படுகின்றன; நரிகள் பயங்கரமாக ஊளையிடுகின்றன. நாம் ஸகல ஸைன்யங்களுடன் ராவணனால் ஜாக்கிரதையாகக் காக்கப்பட்ட லங்கையில் இப்பொழுதே வேகமாய் பிரவேசிப்போம்'' என்று, ஸுவேல மலையிலிருந்து இறங்கிச் சத்துருக்களால் எதிர்க்கமுடியாத தன் ஸைன்யத்தைக் கவனித்துப் பார்த்து, தானும் ஸுக்ரீவனும் வானரர்களை உத்ஸாகப்படுத்தி, யுத்தகாலத்தில் வீராவேசத்துடன் யுத்தம் செய்யும்படி தைரியப்படுத்தினர்.

பிறகு சுபமுகூர்த்தத்தில் ரகுவீரன் கோதண்டபாணியாய் வானரஸேனையை லங்கையை நோக்கி நடத்திச்சென்றார். விபீஷணன், ஸுக்ரீவன், ஹனுமான், ஜாம்பவான் நளன், தூம்ரன், நீலன், லக்ஷ்மணன் முதலியவர்கள் அவரைப் பின் தொடர்ந்தார்கள். மஹாஸமுத்திரத்தைப்போன்ற வானரசேனை பூமியை மறைத்துக்கொண்டு அவர்களைப் பின்பற்றிச் சென்றது. சத்துருகுல காலர்களாய் மதயானையைப் போன்றவர்களாய் விளங்கும் வானர வீரர்கள் பர்வதசிகரங்களையும் பெரிய மரங்களையும் எடுத்துக்கொண்டு போனார்கள். பிறகு ராமலக்ஷ்மணர்கள் லங்கைக்கு ஸமீபத்தில் வந்து சேர்ந்தார்கள். அது கொடிகளாலும் த்வஜங்களாலும் பிரகாசித்தது. அழகான தோட்டங்கள் கணக்கில்லாமல் அமைக்கப்பட்டிருந்தன. விசித்திரமான மதிள்கள் ஆகாசத்தை அளாவிக்கொண்டு சத்துருக்கள் நெருங்க முடியாமல் பிராகாரங்களாலும் கோட்டை வாசல்களாலும் சோபித்தன.



வானரர்கள் ராகவனுடைய ஆக்ஞைப்படி இடங்களை ஏற்படுத்திக்கொண்டு தேவர்களும் நெருங்கமுடியாத அந்த நகரத்தை முற்றுகை போட்டார்கள். பர்வதசிகரத்தைப்போல் உன்னதமான வடக்குக் கோட்டை வாசலில் ராமலக்ஷ்மணர்கள் ஆயுதபாணிகளாய் நின்றார்கள். வருணபகவான் ஸமுத்திரத்தைக் காப்பதுபோல் அவ்விடத்தை ராவணன் தானே ரக்ஷித்து வந்தான். ராமனைத்தவிர வேறு யாராவது அங்கே நின்று நிர்வஹிக்க முடியுமோ? அது அதிக பயங்கரமானது; எப்பொழுதும் ஆயுதபாணிகளாய் நிற்கும் கோரமான ராக்ஷஸர்களால் ஸகல திக்குகளிலும் ரக்ஷிக்கப்பட்டது; தானவர்கள் வஸிக்கும் பாதாள லோகத்தைப்போல் அல்பஜனங்கள் கண்டு நடுங்கும்படியானது; கோட்டை வாசலுக்கு ஸமீபத்தில் அமைக்கப்பட்ட மேடைகளில் ராக்ஷஸ வீரர்களுடைய ஆயுதங்களும் கவசங்களும் கொடிகளும் ஒழுங்காய் வைக்கப்பட்டிருந்தன. கிழக்குக்கோட்டை வாசலில் வானர ஸேனாபதியான நீலன் மைந்தனையும் த்விவிதனையும் தனக்கு ஸஹாயமாய் வைத்துக்கொண்டு இறங்கியிருந்தான். ரிஷபன் கவாக்ஷன் கஜன் கவயனென்பவர்களுடன் அங்கதன் தெற்குக் கோட்டைவாசலை முற்றுகையிட்டான். பிரமாதி, பிரகஸன் முதலிய வீரர்களுடன் ஹனுமான் மேற்குக் கோட்டைவாசலை முற்றுகையிட்டார். கருடனைப்போல் சீறிக்கொண்டிருக்கும் மற்ற வானவீரர்களால் சூழப்பட்டு, ஸுக்ரீவன் ராவணனாலும் இந்திரஜித்தாலும ரக்ஷிக்கப்பட்ட வடக்குக்கோட்டை வாசலுக்கும் மேற்குக் கோட்டை வாசலுக்கும் நடுவிலிருந்துகொண்டு, ராமனுக்கும் ஹனுமானுக்கும் ஸஹாயம் செய்து வந்தான். வானர சேனைத் தலைவர்களில் பிரஸித்தி பெற்ற முப்பத்தாறுகோடி வீரர்கள் ஸுக்ரீவனைச் சூழ்ந்து நின்றார்கள். ராமனுடைய உத்தரவின்படி லக்ஷ்மணனும் விபீஷணனும் ஒவ்வொரு வாசற்படியிலும் கோடி வானரர்களை வைத்தார்கள்; ராமனுக்கு மேற்கில் ஸுக்ரீவன் ஜாம்பவானுடன் தங்கியிருந்தான். பராக்கிரமத்தில் புலிகளைப் போன்ற அந்த வானர வீரர்கள் மரங்களையும் பர்வத சிகரங்களையும் கற்பாறைகளையும் தூக்கிக்கொண்டு, கோபத்தால், வால்களையும் முகங்களையும் அவயவங்களையும் பயங்கரமாய்ச் செய்துகொண்டு, நகங்களையும் பற்களையும் ஆயுதமாயுடையவர்களாய், ஸந்தோஷத்துடன் யுத்தம் செய்யத் தயாராயிருந்தார்கள். சிலர் பத்து யானைபலமுடையவர்கள்; சிலர் நூறு, சிலர் ஆயிரம், சிலர் பதினாயிரம், சிலர் ஓளகம், சிலர் மஹௌளகம், இவ்விதமான பலசாலிகள்; சிலருடைய பலத்திற்கு எல்லையில்லை. வானரர்களும், கொண்டை முஸுருகளும், கரடிகளும், நானாவர்ணங்களுடன் நானாவேஷங்களுடன், நானா சப்தங்களுடன் லங்கையைச் சுற்றிக் கூடியிருந்தன. வெட்டுக்கிளிகள் கணக்கில்லாமல் ஒரு தேசத்தில் திடீரென்று வந்திறங்கினதுபோல் வானரர்கள் சூழ்ந்திருந்தது ஆச்சரியகரமாயும் விசித்திரமாயுமிருந்

தது. அங்கு தங்கியிருந்த வானரர்களால் பூமி முற்றிலும் மறைந்தது; தாவிக் குதித்துக்கொண்டிருந்த வானரர்களால் ஆகாசம் மறைந்தது. அநேக கோடி வானரர்கள் லங்கையின் கோட்டை வாசல்களை முற்றுகை போட்டார்கள். மற்றவர்கள் யுத்தம் செய்யத் தயாராய் நின்றார்கள். த்ரிகூடபர்வதத்தைச் சுற்றிலும் லங்கையின் நான்கு புறங்களிலும் கணக்கில்லாத வானரர்கள் பாறைகளையும் மரங்களையும் தூக்கிக்கொண்டு காற்றுக்கூட உள்ளே நுழைய இடமில்லாமல் தடுத்தார்கள். மஹாமேகங்களைப்போன்ற ரூபத்துடனும் தேவேந்திரனைப்போன்ற பராக்கிரமத்துடனும் வானர வீரர்கள் திடீரென்று தங்களைச் சூழ்ந்துகொண்டதைக் கண்டு, ராக்ஷஸர்கள் ஆச்சரியப்பட்டார்கள். ஸமுத்திரம் கரைபுரண்டு ஓடுவதுபோல் அந்த வானர ஸைன்யத்திலிருந்து ஒரு பெரும் சப்தமுண்டாயிற்று. அதனால் த்ரிகூடபர்வதமும் அதிலுள்ள வனங்களும் சோலைகளும் லங்கா நகரமும் அதிலுள்ள கிருஹங்களும் மதில்களும் கிடுகிடென்று நடுங்கின. ராமலக்ஷ்மணர்களாலும் ஸுக்ரீவனாலும் ரக்ஷிக்கப்பட்ட அந்த ஸேனை தேவாஸுரர்களும் இந்திரர்களும் ஒன்று சேர்ந்தாலும் எதிர்க்க முடியாததாயிருந்தது. பிறகு, ராமன் தன் ஸைன்யத்தை யுத்த சாஸ்திரப்படி வகுத்து, ராக்ஷஸர்களைக் கொல்வதற்குத் தகுந்த உபாயங்களை மந்திரிகளுடன் ஆலோசித்து, தன் புத்தியாலும் அவைகளை அடிக்கடி பரீக்ஷித்து ஒரு முடிவு செய்தார்; யுக்தமான ஸாம தான உபாயங்களையும் அவைகளின் பலத்தையும் நிஜ ஸ்வரூபத்தையும் அறிந்தவரானதால் சத்துருவுடன் யுத்தம் செய்வதற்காக அவனுடைய நகரத்தை முற்றுகையிடும்பொழுது ஒரு தூதன் மூலமாய் அந்தச் சத்துருவை யுத்தத்திற்கழைப்பது ராஜதர்மமென்று, விபீஷணனுடைய அனுமதியின்படி அங்கதனை யழைத்து இவ்விதம் சொன்னார்.

“குழந்தாய்! நீ சிரமமில்லாமல் பிராகாரங்களைத் தாண்டி, லங்கையில் போய் நான் சொல்லும் வார்த்தைகளை ராவணனிடத்தில் பயமில்லாமல் தைரியமாய் சொல்லவேண்டியது. ‘லக்ஷ்மீ கடாக்ஷத்தை இழந்தவனே! அதிகாரத்தை இழந்தவனே! காலம் குறுகினவனே! மதி கெட்டவனே! பிரஹ்மாவிடத்திலிருந்து வரம் பெற்ற கர்வத்தினால் ரிஷிகளையும், தேவதைகளையும், கந்தர்வர்களையும் அப்ஸரஸ்களையும், நாகர்களையும், யக்ஷர்களையும், அரசர்களையும் அவமதித்து உபத்திரவித்து அக்ஞானத்தால் மஹாபாபங்களை ஸம்பாதித்தாயே. அந்தக் கர்வம் இன்றுடன் ஒழிந்தது. என் பார்யையை நீ அபகரித்ததால் என் கோபத்திற்குட்பட்டாய். உன்னைத் தண்டிக்க நான் ஏற்பட்டுக் கோதண்டத்தில் திவ்யாஸ்திரங்களைப் பூட்டி, உன் கோட்டை வாசலில் வந்து நிற்கிறேன். என்னுடன் யுத்தம் செய்து என் கையால் மரணமடைந்தால், தேவதைகள், மஹர்ஷிகள், ராஜர்ஷிகள் முதலிய மஹான்களடையும் உத்தம லோகங்களை யடைவாய்; ஸகல பாபங்களிலிருந்தும் விடுபடுவாய். சீக்கிரம் யுத்தத்திற்கு வா. மாரீசனுடைய மாயையால் என்னை வஞ்சித்து, ஆச்ரமத்தினின்றும் வெகு தூரத்தில் அழைத்துக்கொண்டு போய் ஸீதையை அபகரித்தாயே. எதை நம்பி அப்படிச் செய்யத் துணிந்தாயோ அந்த பலத்தைக் காட்ட இதுவே ஸமயம். ஸுவர்ணத்தைத் திருடினவன் அதைத் திருப்பிக் கொடுத்தாலொழிய பிராயச்சித்தம் செய்து கொள்வதற்கு அதிகாரியாகமாட்டான். அப்படி ஸீதையை என்னிடத்தில் ஸமர்ப்பணம் செய்து என்னைச் சரணமடை. நீ செய்த அபராதங்கள் எல்லாவற்றையும் மன்னிக்கிறேன். இல்லாவிட்டால் என் தீக்ஷ்ணமான பாணங்களால் ஸகல லோகங்களிலும் ராக்ஷஸப் பூண்டில்லாமல் செய்வேன். (ராவணன் தன்னைச் சரணமடைந்தால் தனக்கு வேண்டிய கோஸலராஜ்யத்தை விபீஷணனுக்குக் கொடுப்போமென்று ராமனுடைய கருத்து.) தர்மாத்மாவாயும் ராக்ஷஸ சிரேஷ்டனாயுமிருக்கும் விபீஷணன் என்னைச் சரணமடைந்திருக்கிறான். அதனால் நித்தியமாயும் சத்துருக்களால் உபத்திரவமில்லாததாயும் இருக்கும் இந்த லங்கா ராஜ்யத்தைப் பெற்று, விசேஷ காந்தியுடன் விளங்குகிறான். இந்த ராஜ்யத்தை ஆள்வதற்கு வேண்டிய ஸகல குணங்களும் அவனிடத்தில் பொருந்தியிருக்கின்றன; நீயோ ஸகலவிதத்திலும் அந்தப் பதவிக்குத் தகாதவன்; தர்மமார்க்கத்தைவிட்டு விலகினவன்; மஹாபாபி; இந்திரியஸ்வாதீனமற்றவன்; மூர்க்கர்களால் சூழப்பட்டவன்; உனக்கும் இந்த ராஜ்யத்திற்கும் வெகு தூரம்; ஸீதையைக் கொண்டுவந்து விட்டு என்னைச் சரணமடைந்தால் விபீஷணனுக்கு வேறு ராஜ்யத்தைக் கொடுத்து, உன்னைக் கொல்லாமல் விடுவேன். இல்லாவிட்டால் யுத்தம் செய்யப் புறப்படு. தைரியத்தையும் சௌரியத்தையும் கைக்கொண்டு என்னுடன் யுத்தம் செய்தால் என் பாணங்களால் ஸகல பாபங்களிலிருந்தும் விடுபட்டவனாய், யுத்தத்தில் பின் வாங்காமல் உயிரைவிட்டவர்கள் அடையும் வீரஸ்வர்க்கம் உனக்கும் கிடைக்கும். நீ என்னிடத்திலிருந்து தப்ப நினைத்துப் பக்ஷி ரூபமெடுத்து மனோவேகத்துடன் எந்த லோகத்தில் ஒளிந்திருந்தாலும், என் கண்ணில் பட்ட பிறகு உயிருடன் திரும்பி வருவாயோ? உனக்கு ஹிதமான வார்த்தையைச் சொல்லுகிறேன். கேள். உன் உயிரை என் கையில் வைத்துக்கொண்டிருக்கிறேன். நினைத்தவுடன் உன்னைக் கொல்வேன். ராக்ஷஸ குலத்தில் ஒருவரும் மிஞ்சப்போகிறதில்லை. ஆகையால் உனக்குப் ப்ரேதகிருத்யங்களைச் செய்ய ஒருவரும் இருக்கமாட்டார்கள். நீயே அவைகளை இப்பொழுதே செய்துவிடு. இறப்பவர்கன், சாபல்யத்தால் புத்திரமித்திர களத்திரங்களையும் மற்ற பிரியமான வஸ்துக்களையும் பார்க்க விரும்புவதுபோல் நீ அளவற்ற அபிமானத்துடன் ரக்ஷித்துவரும் இந்த லங்கையை நன்றாகச் சுற்றிப் பார்’ என்று நான் சொன்னதாக ராவணனிடம் சொல்” என்றார்.

அங்கதன் ராமனிடத்தில் உத்தரவு பெற்றுக்கொண்டு, மனுஷ்ய ரூபமெடுத்த அக்னிபகவானைப்போல் அதிவேகமாய் ஆகாச மார்க்கத்தில் சென்று, ராவணனுடைய அரண்மனையில் இறங்கினான். அங்கே ராவணன் மந்திரிகளுடன் ஆலோசித்துக்கொண்டிருப்பதைக் கண்டு ஸமீபத்தில் சென்று, தன்னை இன்னானென்று தெரிவித்து, ராமன் சொல்லியனுப்பின வார்த்தைகளைச் சிறிதும் ஏற்றக்குறைவில்லாமல் மந்திரிபிரதானிகள் கேட்டுக்கொண்டிருக்கையில் லங்கேசுவரனிடத்தில் சொன்னான்: "ஸகல பிராணிகளுக்கும் க்ஷேமத்தையே செய்யும் கோஸலாதிபதியான ராமன் என்னை இங்கே அனுப்பினார். நான் வாலியின் புத்திரன். எனக்கு அங்கதனென்ற பெயர். இது வரையில் தாங்கள் கேட்டிருப்பீர்களே! ரகுவீரன் தங்களிடத்தில் பின்வருமாறு சொல்லச் சொன்னார். "குரூரஸ்வபாவ முள்ளவனே! நீ ஆண் பிள்ளையானால் லங்கைக்கு வெளியில் வந்து என்னுடன் யுத்தம் செய். உன் ராஜதானியை முற்றுகையிட்டபிறகும் என்னுடன் யுத்தம் செய்யாமலிருப்பதைப் பார்த்தால் நீ புருஷாதமன் என்று தோன்றுகிறது. உன்னையும் உன் மந்திரிகளையும் புத்திரர்களையும், ஞாதிகளையும், பந்துக்களையும் கொல்லப்போகிறேன். ஸகல லோகங்களும் இனியாவது பயமற்று வாழட்டும். தேவ, தானவ, யக்ஷ, கந்தர்வ, உரக, ராக்ஷஸ ரிஷிகணங்களுக்கு நித்திய சத்துருவான உன்னை இன்று வேரறுக்கிறேன். அப்படி வேண்டாமென்றால், ஜானகியை என்னிடத்தில் கொண்டுவந்துவிட்டு என்னைச் சரணமடை என்று சொன்னார்'' என்றான்.

அந்தக் கடும் வார்த்தைகளைக் கேட்டு, ராக்ஷஸாதிபதி கோபம் தாங்காமல் ஜ்வலித்துக்கொண்டு, கண்கள் சிவந்து, நெருப்புப் பொரி பரக்க, ''இந்தத் துஷ்டனைப் பிடித்து இப்பொழுதே கொல்லுங்கள்' என்று மந்திரிகளை அடிக்கடி ஆக்ஞாபித்தான். நான்கு ராக்ஷஸர்கள், நெருப்புக் கொழுந்துபோல் ஜ்வலிக்கும் ராவணனுடைய உத்திரவுப்படி, அங்கதனைப் பிடித்தார்கள். ராக்ஷஸர்களுக்கு நடுவில் தன் பலத்தைக் காட்டுவதற்காக அங்கதன் அதைப் பொறுத்துக் கொண்டிருந்து, ஒவ்வொரு புஜத்திலும் தொங்கிக்கொண்டிருந்த இரண்டு ராக்ஷஸர்களுடன் அலக்ஷ்யமாய் உன்னதமான அறையிலிருந்து தாவி ஆகாசமார்க்கத்தில் சென்று அவர்களை வேகமாய் உதறித் தள்ளினான். அவர்கள் ராவணனுக்கெதிரே பிரக்ஞையற்றுப் பூமியில் விழுந்தார்கள். பிறகு பர்வத சிகரத்தைப்போல் ஆகாசத்தை அளாவியிருக்கும் ராவணனுடைய அரண்மனையின் கோபுரத்தை அவனுக்கெதிரே காலாலுதைக்க, முன்பு இந்திரனுடைய வஜ்ராயுதத்தால் ஹிமயமலையின் சிகரம் அடிபட்டுப் பிளந்ததுபோல் அந்தக் கோபுரம் பொடியாயிற்று. இப்படி அரண்மனையை இடித்துத்தள்ளி, தன்பெயரையும் கீர்த்தியையும் கோஷித்துக்கொண்டு, ஸிம்ஹநாதத்துடன் அங்கதன் ஆகாசமார்க்கத்தில் கிளம்பி, வானரர்களுக்கு நடுவில் ராமனுக்கு ஸமீபத்தில் வந்து குதித்தான். ராக்ஷஸர்கள் அதைக் கண்டு வருத்தமடைந்தார்கள்; வானரர்கள் ஸந்தோஷத்தால் ஆரவாரித்தார்கள். தன் அரண்மனை நாசமடைந்ததைப்பற்றி ராவணனுக்கு அடங்காத கோபமுண்டாயிற்று. அது தனக்கு நேரும் நாசத்திற்கு ஓர் அடையாளமென்று நினைத்துப் பெருமூச்சு விட்டான்.

இப்படியிருக்கையில் ராமன் வானர ஸைன்யங்களால் சூழப்பட்டு ராவணனைக் கொல்ல நினைத்து யுத்தத்திற்கு ஆரம்பித்தார். பர்வத சிகரத்தைப் போன்ற ஸுஷேணனென்ற வானர வீரன் ஸுக்ரீவனுடைய உத்தரவால் அநேக காமரூபிகளான வானரர்களுடன் சந்திரன் ராசிகளைச் சுற்றி வருவதுபோல் எல்லாக் கோட்டை வாசல்களையும் சுற்றி வந்துகொண்டிருந்தான். இப்படி வானர ஸைன்யங்கள் எல்லையில்லாமல் லங்கையை வளைத்துக் கொண்டதைக் கண்டு ராக்ஷஸர்களில் தைரியசாலிகள் ஆச்சரியமடைந்தார்கள்; தைரியமற்றவர்கள் பயந்து நடுங்கினார்கள். சிலர் மல்யுத்தம் நடக்குமென்ற கொழுப்பால் ஸந்தோஷித்தார்கள். பிராகாரங்களுக்கும் அகழ்களுக்கும் நடுவில் வானரர்கள் ஊசிநாட்ட இடமில்லாமல் தங்கியிருப்பதைக்கண்டு சிலராக்ஷஸர்கள் பயத்தால் மெய்மறந்து, ஹா! ஹா! என்று அலறினார்கள். இப்படி லங்கா புரியில் பயங்கரமான கோலாஹல சப்தம் அதிகரித்தது. ராக்ஷஸ வீரர்கள் உத்தமமான ஆயுதங்களை எடுத்துக்கொண்டு பிரளய காலத்தில் வீசும் வாயுக்களைப்போல் அங்குமிங்கும் ஸஞ்சரித்தார்கள்.

தஸ்மிந் மஹாபீ$^{4}$ஷணகே ப்ரவ்ருத்தே
கோலாஹலே ராக்ஷஸ ராஜதா$^{4}$ந்யாம் |
ப்ரக்$^{3}$ருஹ்ய ரக்ஷாம்ஸி மஹாயுதா$^{4}$நி
யுகா$^{3}$ந்தவாதா இவ ஸம்விசேரு: ‖ (104)

---

## ஸர்க்கம் 42

## யுத்த ஆரம்பம்

---

ததஸ்தே ராக்ஷஸாஸ் தத்ர க$^{3}$த்வா ராவணமந்தி$^{3}$ரம் |
ந்யவேத$^{3}$யந் புரீம்ருத்$^{3}$தா$^{4}$ம் ராமேண ஸஹ வாநரை: ‖ (1)

பிறகு ராக்ஷஸர்கள் ராவணனிடத்திற்குச் சென்று ராமன் வானர ஸைன்யங்களுடன் லங்கையை முற்றுகையிட்டதைத் தெரிவித்தார்கள். அதைக் கேட்டு, ராக்ஷஸாதிபதி கோபம் கொண்டு முன்னைவிட அதிக ஜாக்கிரதையாய்க் காவல்களை ஏற்படுத்தி, தன் அரண்மனையின்மேல் மாடியில்ஏறிப்பார்க்கையில், லங்கையும்அதைச் சூழ்ந்த குன்றுகளும், மலைகளும், வனங்களும் யுத்தம் செய்ய ஆவல் கொண்ட வானரர்களால் மறைந்திருப்பதைக் கண்டான். இவர்களை எப்படி நாசம் செய்கிறதென்று அவனுக்குப் பெரும் கவலை

யுண்டாயிற்று. நெடுநேரம் ஆலோசித்துத் தைரியமடைந்து, ராகவனையும் வானர ஸைன்யத்தையும் ஆச்சரியத்துடன் பார்த்தான். அதற்குள் ராகவன், வானரர்களுடன் பிராகாரத்திற்கு ஸமீபத்தில் வந்து சேர்ந்து, லங்கை நான்கு புறங்களிலும் கோரமான ராக்ஷஸ வீரர்களால் ரக்ஷிக்கப்பட்டிருப்பதைக் கண்டார். விசித்திரமான த்வஜங்களாலும் கொடிகளாலும் விளங்கும் லங்காபுரியைப் பார்த்தவுடன் ராமனுக்கு ஸீதையின் ஞாபகம் வந்து, "ஐயோ! பெண்மானைப்போல் நேத்திரங்களையுடைய என் ஜானகி, கொஞ்சமாவது கஷ்டத்தை அனுபவிக்கத் தகுந்தவளா? இந்த லங்கையில் கோர ராக்ஷஸிகளால் உபத்திரவிக்கப்பட்டு, துக்கத்தால் பீடிக்கப்பட்டு, வெறும் தரையில் படுத்திருக்கிறாள். இவ்வளவும் என்னாலல்லவா நேர்ந்தது! எனக்காகவல்லவா பொறுத்துக்கொண்டிருக்கிறாள்" என்று வருந்தி, அபார தயையுள்ளவராகையால், தனக்குப் பொங்கும் கடும் கோபத்தை அடக்கி, வானரர்களை "யுத்தம் செய்ய ஆரம்பியுங்கள்" என்று ஆக்ஞாபித்தார்.

அதைக் கேட்டு வானரர்கள் ஒருவர்க்கொருவர் போட்டி போட்டுக்கொண்டு ஸிம்ஹநாதம் செய்தார்கள். "பர்வதசிகரங்களாலும் வஜ்ரத்தைப்போன்ற எங்களுடைய முஷ்டிகளாலும் இந்த லங்கையைத் தூளாக்குவோம்" என்று வானரத் தலைவர்கள் ஒவ்வொருவரும் நினைத்தார்கள். மலைச்சிகரங்களையும் பெரிய பாறைகளையும் எடுத்துக்கொண்டு, நானாவிருக்ஷங்களை வேருடன் பிடுங்கிக்கொண்டு, ஸேனைத்தலைவர்கள் யுத்தம் செய்யத் தயாரானார்கள். ராவணன் பார்த்துக்கொண்டிருக்கையில் அவனைக் கொஞ்சம்கூட லக்ஷ்யம் செய்யாமல், வானர ஸைன்யம் அவரவர்களுக்குக் குறிப்பிட்டவிடத்தில் லங்கையின் கோட்டைச் சுவர்களைத் தாண்ட ஆரம்பித்தார்கள். அதைக்கண்டு ராகவன் ஸந்தோஷித்தார். ராமனுக்காக உயிரைக்கொடுக்க நிச்சயித்து, விருக்ஷங்களையும் பாறைகளையுமே ஆயுதங்களாகக்கொண்டு, சிவந்த முகங்களுடனும், தங்கநிறமான தேகத்துடனும் லங்கையைச் சூழ்ந்தார்கள். மரங்களாலும் மலைச்சிகரங்களாலும் முஷ்டிகளாலும் சுவர்களையும் தோட்டங்களையும், வாசற்படிகளையும் நாசம் செய்தார்கள். கட்டைகளாலும் புற்களாலும் பாறைகளாலும் மரங்களாலும் மண்ணினாலும் சுத்த ஜலத்தால் நிறைந்த அகழ்களை நிரப்பினார்கள். ஆயிரம்கோடி வானரர்களுடன் ஸேனாபதிகள் லங்கையின் கோட்டைச்சுவர்களில் ஏறினார்கள். தங்கத்தால் இழைக்கப்பட்ட வாசற்படிகளையும் கைலாஸசிகரத்தைப்போன்ற கோபுரங்களையும் இடித்துத் தள்ளினார்கள். மதயானைகளைப்போல் கர்ஜித்துக்கொண்டு தாவிக்கொண்டும் போய்க்கொண்டும் வந்துகொண்டும் லங்கையை நான்கு புறங்களிலிருந்தும் பிரவேசித்தார்கள். நினைத்த ரூபங்களை எடுக்கக்கூடியவர்களாய், "மஹாபலவானான ராமலக்ஷ்மணர்களும் அவர்களால் ரக்ஷிக்கப்பட்ட ஸுக்ரீவனும் வாழ்க"



என்று கர்ஜித்துக்கொண்டும், ஸிம்ஹநாதம் செய்துகொண்டும், அட்டஹாஸம் செய்துகொண்டும், லங்கையை நோக்கிச் சென்றார்கள். இதற்குள் வீரபாஹு, ஸுபாஹு, நளன் முதலிய வானரத் தலைவர்கள் கோட்டைச்சுவர்களைத் தாண்டி ஸைன்யங்களை அங்கங்கே அணிவகுத்து நிறுத்தினார்கள். கிழக்குக் கோட்டை வாசலில் ஈசான்ய மூலையில் குமுதன் பத்துக்கோடி வானரர்களுடன் தங்கியிருந்தான். பிரகஸனும், பனஸனும், அவனுக்கு உதவியாக நியமிக்கப்பட்டார்கள். சதவலி 20 கோடி வானரர்களுடன் தெற்குக் கோட்டைவாசலில் தென்கிழக்கு திக்கிலிருந்தான். தாரையின் பிதாவான ஸுஷேணன் 60 கோடி வானரர்களுடன் தென்மேற்கு மூலையில் மேற்குக்கோட்டை வாசலில் தங்கியிருந்தான். வானராதிபதியான ஸுக்ரீவன் ஜாம்பவானுடன் ராமலக்ஷ்மணர்களிருக்கும் வடக்குக்கோட்டை வாசலுக்கருகில் தங்கியிருந்தான். கோலாங்கூலங்களுக்கு நாயகனான கவாக்ஷன் பயங்கரமான நேத்திரங்களுடனும் மலையைப் போன்ற தேகத்துடனும் கோடிவானர வீரர்களுடனும் ராமனுடைய வலதுபக்கத்திலும்; கோரமான வேகத்தையுடைய கரடிகளுக்கரசனான தூம்ரன் கோடி ஸைன்யங்களுடன் இடதுபக்கத்திலும் இருந்தார்கள். பலத்திலும் வீரியத்திலும் நிகரில்லாத விபீஷணன், தன் மந்திரிகளுடன் கதாபாணியாய் ராமனுக்கருகில் நின்றான். கஜன், கவாக்ஷன், கவயன், சரபன், கந்தமாதனனென்றவர்கள் எல்லாவிடங்களிலும் ஸஞ்சரித்துக்கொண்டு ஸேனையை ரக்ஷித்து வந்தார்கள்.

அதைக்கண்டு ராவணன் கோபம் கொண்டு, ஸகல ஸைன்யங்களையும் யுத்தத்திற்குப் புறப்படும்படி ஆக்ஞாபித்தான். அதைக் கேட்டு ராக்ஷஸர்கள் ஸந்தோஷத்தால் பயங்கரமாக சப்தித்தார்கள். சந்திரனைப்போல் வெண்மையான ரணபேரிகைகளைத் தங்கக் கழிகளாலடித்துச் சங்கங்களை ஊதினார்கள். விலையற்ற ஆபரணங்களால் அலங்கரிக்கப்பட்ட கருத்த தேகங்களுடன் ஸகல திக்குகளும் செவிடுபடும்படி சங்கத்வனி செய்துகொண்டு, கொக்குகளால் சூழப்பட்டு மின்னல் கொடிகள் பாயும் நீருண்ட மேகங்களைப் போல் தோன்றினார்கள். பிரளயகாலத்திலும் சந்திரோதய காலத்திலும் ஆறுகள் ஸமுத்திரத்தில் விழுவதுபோல், ராக்ஷஸ ஸேனைகள் ஸந்தோஷத்தால் ஆரவாரித்துக்கொண்டு அங்கங்கே வந்து சேர்ந்தன. அவைகளைக்கண்டு வானர ஸைன்யங்கள் செய்த ஸிம்ஹநாதங்களாலும் கர்ஜனைகளாலும் த்ரிகூடபர்வதமும் அதன் தாழ்வரைகளும் குகைகளும் பிரதித்வனி செய்தன. சங்கம், துந்துபி, பேரிகை முதலிய ரணவாத்யங்களாலும், யானை வீறிடுவதாலும், குதிரைகள் கனைப்பதாலும், ரதங்களின் ஓசையாலும், ஸைன்யங்களின் கோஷத்தாலும், ஆகாசமும் பூமியும் கிடுகிடென்று நடுங்கின.

அப்பொழுது முன்காலத்தில் தேவர்களுக்கும் அஸுரர்களுக்கும் யுத்தம் நடந்ததுபோல் வானரர்களுக்கும் ராக்ஷஸர்களுக்கும்

கோரயுத்தம் ஆரம்பித்தது. ராக்ஷஸர்கள் தங்களுடைய பெயர்களையும் பராக்கிரமங்களையும் சொல்லிக்கொண்டு கதைகளாலும், கத்திகளாலும் சூலங்களாலும் கோடாலிகளாலும் வானரர்களை அடித்தார்கள். தங்களுடைய பெயர்களைக் கொண்டு, ''மஹாராஜாவிற்கு ஜயமுண்டாகக்கடவதாக'' என்ற ராக்ஷஸர்களுடைய கோஷமும், ''ஸுக்ரீவ மஹாராஜா வெல்வாராக'' என்று வானரர்களுடைய கோஷமும் கிளம்பின. விருக்ஷங்களாலும், பர்வதசிகரங்களாலும் நகங்களாலும், பற்களாலும் வானரர்கள் ராக்ஷஸர்களை நாசம் செய்தார்கள். ராக்ஷஸர்கள் கோரரூபங்களுடன் கோட்டைச் சுவர்களிலிருந்து கத்திகளாலும் சூலங்களாலும் கத்திவாய்த்தடிகளாலும் பூமியில் நின்ற வானரர்களை குத்திக் கிழித்தார்கள். வானரர்கள் கோபம் கொண்டு அவர்களை தாவிப்பிடித்திழுத்துக் கீழே தள்ளினார்கள். இப்படி மாம்ஸங்களைச் சேறுயுடைய ரத்தப்பிரவாகம் பெருகியோட, ராக்ஷஸர்களுக்கும் வானரர்களுக்கும் கோரயுத்தம் நடந்தது; அதற்கு உபமானம் சொல்வதரிது.

ஸ ஸம்ப்ரஹாரஸ் துமுலோ மாம்ஸ ஶோணித கர்த$^3$ம: |
ரக்ஷஸாம் வானராணாம் ச ஸம்ப$^3$பூ$^4$ வாத்$^3$பு$^4$தோபம: || (48)

## ஸர்க்கம் 43

## த்வந்த்வ யுத்தம்

யுத்$^4$யதாம் து ததஸ்தேஷாம் வானராணாம் மஹாத்மநாம் |
ரக்ஷஸாம் ஸம்ப$^3$பூ$^4$வாத$^2$ ப$^3$லகோப: ஸுதா$^3$ருண: || (1)

இப்படி வானரர்களும் ராக்ஷஸர்களும் யுத்தம் செய்கையில் இரண்டு ஸேனைகளுக்கும் கோபம் அதிகரித்தது. தங்க ஆபரணங்களால் அலங்கரிக்கப்பட்ட குதிரைகளோடும், நெருப்புக்கொழுந்துகளைப்போன்ற த்வஜங்களோடும் ஸூரியமண்டலங்களைப்போன்ற ரதங்களோடும், அழகான கவசங்களோடும், ராக்ஷஸவீரர்கள் யுத்தத்திற்குப் புறப்பட்டு ஸிம்ஹநாதங்களால் திக்குகளை நடுங்கச் செய்தார்கள். அவர்கள் பயங்கரமான காரியங்களைச் செய்கிறவர்கள்; ராவணனுக்கு ஜயத்தையே தேடுகிறவர்கள். வானரஸேனைகளும் அவர்களை ஜயிக்காமல் விடுகிறதில்லையென்று, காமரூபிகளான ராக்ஷஸர்களின்மேல் பாய்ந்தார்கள். அதற்குள் இருதிறத்து வீரர்களுக்கும் த்வந்த்வ யுத்தம் நடந்தது. ருத்ரனும் யமனும் யுத்தம் செய்ததுபோல், அங்கதனும் இந்திரஜித்தும் சண்டையிட்டார்கள். ப்ரஜங்கனென்ற ராக்ஷஸனும் விபீஷணனுடைய மந்திரியான ஸம்பாதியும் ஜம்புமாலியும் ஹனுமானும்; விபீஷணனும் மித்ரக்நனென்ற ராக்ஷஸனும்; கஜனும் தபனனும்; நீலனும் நிகும்பனும்; ஸுக்ரீவனும் ப்ரகஸனும்; லக்ஷ்மணனும் விரூபாக்ஷனும்; ஸ்ரீராமனும் அக்னிகேது, ரச்மிகேது, ஸுப்தக்னன், யக்ஞகோபன் என்ற



ராக்ஷஸர்களும்; மைந்தனும் வஜ்ரமுஷ்டியும்; த்விவிதனும் அசனிப்ரபனும்; நளனும் ப்ரதபனனும்; தர்மதேவதையின் புத்ரனான ஸுஷேணனும் வித்யுன்மாலியும்; இன்னும் மற்றப் போர் வீரர்களும் கோரமான யுத்தம் செய்தார்கள். ரத்தப்பிரவாகங்கள் வானர ராக்ஷஸவீரர்களுடைய தேகங்களென்ற மரங்களை அடித்துக் கொண்டு, அவர்களுடைய மயிர்களென்ற இளம்புல்களால் மூடப்பட்டுப் பெருகியோடின.

இந்திரனுடைய வஜ்ராயுதத்தைப்போன்ற கதையால் இந்திரஜித் அங்கதனை அடித்தான். அங்கதனும் ராவணபுத்திரனுடைய திவ்ய ரதத்தையும், குதிரைகளையும், ஸாரதிகளையும் நொறுக்கினான். ப்ரஜங்கன் மூன்று பாணங்களால் ஸம்பாதியைத் துளைத்தான். ஸம்பாதியும் ஒரு பெரிய விருக்ஷத்தால் ப்ரஜங்கனை அடித்துக் கொன்றான். ஜம்புமாலி ரதத்திலிருந்துகொண்டே, சக்தி என்ற ஆயுதத்தால் ஹனுமானை மார்பில் அடித்தான். மாருதி அவனையும் அவன் ஏறிவந்த ரதத்தையும் பொடி செய்தார். ப்ரதபனன் கர்ஜித்துக்கொண்டு நளன்மேல் பாய்ந்தான்; நளன் அந்த ராக்ஷஸனுடைய தீக்ஷ்ணமான பாணங்களால் தேகம் பிளந்து, அவனுடைய கண்களைப் பிடுங்கி எறிந்தான். ப்ரகஸன் வானர ஸைன்யங்களை விழுங்குவதுபோல் நாசம் செய்வதைக் கண்டு, ஸுக்ரீவன் ஒரு மஹாவிருக்ஷத்தால் அவனை அடித்து முறித்தான். அக்னிகேது, ரச்மிகேது, ஸுப்தக்னன், யக்ஞகோபனென்ற ராக்ஷஸர்கள் ராமனைக் கூர்மையான பாணங்களால் துளைத்தார்கள். ராமன் அவர்களுடைய தலைகளை நெருப்புக் கொழுந்துகளைப் போன்ற கோரமான பாணங்களால் அறுத்துத் தள்ளினார். மைந்தன் வஜ்ரமுஷ்டியையும், அவனுடைய ரதத்தையும், குதிரைகளையும் தன் முஷ்டியால் அடித்துக் கொன்றான். ஸூரியன் கிரணங்களால் மேகத்தைத் துளைப்பதுபோல் நிகும்பன் கருத்த தேகமுடைய நீலனைப் பாணங்களால் துளைத்தான். மறுபடியும் அதிசாதுரியமாய் அநேக பாணங்களைப் பிரயோகித்து அவனுடைய அங்கங்களைப் பிளந்து அட்டஹாஸம் செய்தான். முன்பு மஹாவிஷ்ணு சக்ராயுதத்தால் அஸுரர்களை அழித்ததுபோல், நீலன் நிகும்பனுடைய ரதசக்கரத்தைப் பிடுங்கி, அவனுடைய ஸாரதியின் தலையை அறுத்தான். வஜ்ராயுதத்தையும் இடியையும் போன்ற தேகமுடைய த்விவிதன் ஒரு மலைச்சிகரத்தால் அசனிப்ரபனை அடித்தான். அந்த ராக்ஷஸனும் இடிபோன்ற பாணங்களால் த்விவிதனைத் துளைத்தான். அந்த வானரன் கடுங்கோபம் கொண்டு ஒரு பெரிய ஆச்சா மரத்தால் அசனிப்ரபனையும் அவனுடைய ரதத்தையும் குதிரைகளையும் அடித்துக் கொன்றான். வித்யுன்மாலி, ரதத்திலிருந்துகொண்டே தங்கக் கட்டுகளையுடைய பாணங்களால் ஸுஷேணனை அடித்து அடிக்கடி கர்ஜித்தான். ஸுஷேணன் ஒரு பெரிய மலைச் சிகரத்தால் அந்த ரதத்தைப் பொடி செய்ய, வித்யுன்மாலி அதி

சாதுரியமாய் கதாயுதத்துடன் பூமியில் குதித்தான். அதைக் கண்டு ஸுஷேணன் ஒரு பெரிய பாறையை எடுத்துக்கொண்டு அவன் மேல் பாய்ந்தான். அதைப் பார்த்து அந்த ராக்ஷஸன் கதையால் ஸுஷேணனை மார்பில் அடித்தான். அதைக் கொஞ்சம்கூட லக்ஷயம் செய்யாமல் வானரவீரன் அந்தப் பெரும் பாறையை வித்யுன்மாலியின் தலையில் போட்டான். வித்யுன்மாலி ஹிருதயம் பிளந்து பூமியில் விழுந்து இறந்தான்.

பூர்வத்தில் தேவர்களால் தைத்யர்கள் முறியடிக்கப்பட்டது போல் இந்த த்வந்த்வயுத்தத்தில் ராக்ஷஸ வீரர்கள் வானர வீரர்களால் ஜயிக்கப்பட்டார்கள். ஒடிந்த கத்தி, கதை, சக்தி, தோமரம், பட்டாக்கத்தி முதலிய ஆயுதங்களாலும் முறிந்த ரதங்களாலும் உயிரிழந்த போர்க் குதிரைகளாலும், மதயானைகளாலும், வானரர்களாலும், ராக்ஷஸர்களாலும், ஏர்க்கால்களாலும், சக்கரங்களாலும் நுகத்தடிகளாலும், பிணங்களைத் தின்னும் நரிகளாலும், கழுகுகளாலும், துஷ்ட மிருகங்களாலும் அந்த யுத்த பூமி கோரமாய் விளங்கிற்று. வானரர்களின் கபந்தங்களும், ராக்ஷஸர்களின் கபந்தங்களும் ரத்தப் பிரவாஹத்தில் துள்ளிக் குதித்தன. தேவாஸுர யுத்தம் போன்ற அந்தச் சண்டையில் ராக்ஷஸர்கள் வானரர்களுடைய நகங்களாலும், பற்களாலும் கிழிக்கப்பட்டு தேகமெங்கும் ரத்தம் பெருக, ஸூரியன் அஸ்தமிக்கும் ஸமயத்தை எதிர்பார்த்துக்கொண்டு மறுபடியும் யுத்தத்திற்கு வந்தார்கள். (ராத்திரியில் ராக்ஷஸர்களுக்கு பலம் அதிகம். மாயைகளை உபயோகிப்பதற்குத் தகுந்த காலம்.)

> வித3ார்யமாணு ஹரிபுங்க3வைஸ் தத3ா
> நிஶாசரா: ஶோணித தி3க்த4 க3ாத்ரா: |
> புந: ஸுயுத்3த4ம் தரஸா ஸமாஸ்தி2தா:
> தி3வாகர ஸ்யாஸ்தமயாபி4 காங்க்ஷிண: ‖ (48)

---

## ஸர்க்கம் 44

## ராத்திரி யுத்தம்

---

> யுத்3த்4ய தாமேவ தேஷாம் து தத3ா வாநரரக்ஷஸாம் |
> ரவிரஸ்தம் க3தோ ராத்ரி: ப்ரவ்ருத்3த4ா ப்ராணஹாரிணீ ‖ (1)

இப்படி இரண்டு ஸைன்யங்களும் யுத்தம் செய்து கொண்டிருக்கையில் ஸூரியன் அஸ்தமித்தார்; வானரர்களுடைய உயிரைப் போக்கும் ராத்திரியும் ஆரம்பித்தது. வானரர்களும் ராக்ஷஸர்களும் தீராப் பகையுடன், ஒருவரையொருவர் ஜயிக்க முயன்று, கோரமாய் ராத்திரி யுத்தம் செய்ய ஆரம்பித்தார்கள். இருட்டில் ஒன்றும் தெரியாமல் ராக்ஷஸர்களும் வானரர்களும் தங்களைச் சேர்ந்தவர்களையே சத்ருவென்று நினைத்து அடித்துக் கொன்றார்கள். "வா, கிழி,



கொல், ஓடுகிறாயா?" என்று இப்படிப்பட்ட பயங்கரமான சப்தங்கள் மாத்திரம் கேட்கப்பட்டன. ராத்திரியில் ஸஞ்சரிக்கும் ஸ்வபாவமுள்ள ராக்ஷஸர்களுக்கும் அந்த இருட்டில் தடுமாற்றம் உண்டாயிற்று. கருத்த தேகங்களுடனும் பிரகாசிக்கும் தங்க ஆபரணங்களுடனும் அந்த ராக்ஷஸர்கள், ஜ்வலிக்கும் ஔஷதிகளையுடைய வனங்களால் நிறைந்த பர்வதங்களைப்போல் தோன்றினார்கள். அந்தக் கோரமான இருட்டில் ராக்ஷஸர்கள் கோபாவேசம் கொண்டு வானரர்களை அதிவேகமாய்த் தின்ன ஆரம்பித்தார்கள். வானரர்களும் தங்கச் சேணங்களையுடைய குதிரைகளையும் நெருப்புக் கொழுந்துகளைப் போன்ற த்வஜங்களையும் யானைகளையும் யானை வீரர்களையும் ரதங்களையும் கோப வெறியால் தாவிப் பிடித்து இழுத்துப் பற்களாலும் நகங்களாலும் கிழித்துக் கடித்து எறிந்தார்கள். ராமலக்ஷ்மணர்கள் மஹாஸர்ப்பங்களைப் போன்ற பாணங்களால் கண்ணிற்குத் தோன்றின ராக்ஷஸர்களையும் மறைந்திருப்பவர்களையும் அடித்தார்கள். குதிரைகளாலும் ரதங்களாலும் கிளப்பப்பட்ட புழுதி. செவிகளையும் மூக்குகளையும் அடைத்தது. இப்படி மயிர்க்கூச்சமுண்டாகும்படி கோரயுத்தம் நடக்கையில் ரத்தம் ஆறுகளாய் ஓடிற்று. பேரிகை மிருதங்கம் தவில் சங்கம் புல்லாங்குழல் முதலிய வாத்தியங்களின் சப்தங்கள் ஒன்று சேர்ந்து அத்புதமான ஒரு த்வனி உண்டாயிற்று. அடிபட்டுக் கதறும் வீரர்களுடைய சப்தமும் பயங்கரமாய்க் கேட்கப்பட்டன. சக்தி சூலம் முதலிய ஆயுதங்களால் கொல்லப்பட்ட வானரர்களும், அவர்களால் எறியப்பட்ட மலைச்சிகரங்களும் கொல்லப்பட்ட ராக்ஷஸர்களும் பூமிக்குக் கொடுக்கப்பட்ட பலிகளாய், ஆயுதங்களே பூஜை செய்யும் புஷ்பங்களாய், அந்த யுத்த பூமி அடையாளம் தெரியாமலும் ஒருவரும் பிரவேசிக்க முடியாமலும் மாம்ஸத்தாலும் ரத்தத்தாலும் நிறைந்திருந்தது. ஸர்வப் பிராணிகளின் உயிரை அபகரிக்கும் காளராத்திரியைப்போல் அந்த ராத்திரி வானரர்களுக்கும் ராக்ஷஸர்களுக்கும் அபாயகரமாயிருந்தது. அந்த பயங்கரமான இருட்டில் ராக்ஷஸர்கள் ராமனைப் பாணவர்ஷங்களால் மறைத்தார்கள். கோபத்தால் கர்ஜித்துக்கொண்டு அவர்கள் எதிர்க்கும் சப்தம், ஏழு ஸமுத்திரங்களும் பிரளய காலத்தில் பொங்குவதுபோல் கேட்கப்பட்டது. அதைக் கண்டு ராமன் ஒரு நொடியில் அக்னி ஜ்வாலைகளைப் போன்ற ஆறு பாணங்களால் அவர்களின் உயிர்நிலைகளில் அடித்தார். அதனால் யமசத்ரு, மஹாபார்ச்வன், வஜ்ரதம்ஷ்ட்ரன், மஹாகாயன், சுகன், ஸாரணன் என்றவர்கள் உயிருடன் தப்பியோடினார்கள். பிறகு தங்கக் கட்டுகளுடன் பிரகாசிக்கும் ராமபாணங்களால், அந்த ராத்திரி சரத்காலத்தில் மின்மினிப் பூச்சிகளால் பிரகாசிக்கும் ராத்திரியைப்போல் விளங்கிற்று. அந்தக் கோரமான ராத்திரி, ராக்ஷஸர்களுடைய சப்தங்களாலும் குதிரைகள் கனைப்பதாலும் அதிகோரமாயிற்று. நான்கு பக்கங்களிலும் வரவர அதிகரிக்கும்

ஓசையால், த்ரிகூடபர்வதம் குகைகளென்ற வாயால் பேசுவது போலிருந்தது. பருத்த சரீரங்களையும் இருட்டைப் போன்ற நிறத்தையுமுடைய கருங்குரங்குகள் ராக்ஷஸர்களைப் புஜங்களால் இறுக்கித் தழுவிக் கொன்று அவர்களின் உடலை மற்றப் பிராணிகள் தின்னும்படி உதவின.

அப்பொழுது அங்கதன் இந்திரஜித்தைக் கொல்ல நினைத்து, அவனையும் ஸாரதியையும் குதிரைகளையும் அடித்தான். அதைக் கண்டு இந்திஜித் ரதத்தையும் குதிரையையுமிழந்து யுத்த பூமியிலிருந்து மறைந்தான். அந்த அற்புதமான செய்கையைக் கண்டு ராமலக்ஷ்மணர்களும் தேவர்களும் ரிஷிகளும் கொண்டாடினார்கள். இந்திரஜித்தின் பிரபாவம் ஸகலப் பிராணிகளுக்கும் தெரிந்திருப்பதால், அவன் அடித்துத் துரத்தப்பட்டதைக் கண்டு அங்கதனை மெச்சினார்கள். ஸுக்ரீவன் முதலிய வானரர்களும் விபீஷணனும் "நல்லது! நல்லது" என்று வாலி புத்திரனைக் கொண்டாடினார்கள். இந்திரஜித் அபஜயமடைந்ததால் அடங்காத கோபம் கொண்டான். அதற்குள் ராமன் வானரர்களைப் பார்த்து, "நீங்களெல்லோரும் ஸுக்ரீவனுடன் கவலையற்றுப் பயப்படாமலிருங்கள். இந்த ராக்ஷஸன் பிரஹ்மாவால் கொடுக்கப்பட்ட வரங்களின் மஹிமையால் மூன்று லோகங்களையும் ஹிம்ஸிக்கிறான். இப்பொழுது அவனுக்குக் காலபலம் அனுகூலமாயிருப்பதால் உங்களை ஜயிப்பான். நான் பிரஹ்மாவின் வரத்தை மதித்துச் சிறிது காலம் இதைப் பொறுத்திருக்க வேண்டும்" என்று எச்சரித்தார். அப்பொழுது ரணதீரனான அந்தப் பாப ராக்ஷஸன் மறைந்திருந்து இடிகளைப் போன்ற கூர்மையான சில பாணங்களைப் பிரயோகித்தான். அவை மஹாஸர்ப்பங்களின் ரூபத்துடன் ராமலக்ஷ்மணர்களுடைய அவயவங்களைத் துளைத்தன. பிறகு மாயையால் அவர்களைப் பிரக்ஞையற்றுப் போகும்படி செய்து, நாகபாசங்களால் கட்டினான். இப்படி இந்திரஜித் கோபம்கொண்டு கொடிய விஷமுள்ள ஸர்ப்பங்களைப்போன்ற பாணங்களால் அந்தப் புருஷ சிரேஷ்டர்களைக் கட்டி மூர்ச்சையடைவித்ததை ஸகல வானரர்களும் பார்த்தார்கள். அந்தத் துராத்மா பகலில் தர்ம யுத்தத்தால் அவர்களை ஜயிக்க முடியாமல், ராத்திரியில் மாயையை உபயோகித்து அந்த ராஜபுத்திரர்களைக் கட்டினான்.

ப்ரகாஶரூபஸ்து யதா3 ந ஶக்த:
தௌ பா3தி4தும் ராக்ஷஸராஜ புத்ர: |
மாயாம் ப்ரயோக்தும் ஸமுபாஜகா3ம
ப3ப3ந்த4 தௌ ராஜஸுதௌ மஹாத்மா || (46)

---



## ஸர்க்கம் 45

## ராமலக்ஷ்மணர்கள் நாகபாசத்தால் கட்டுப்பட்டது

ஸ தஸ்ய க3திமந்விச்ச2ந் ராஜபுத்ர: ப்ரதாபவாந் |
தி3தே3ஶாதிப3லோ ராமோ த3ஶ வாநரயூத2பாந் || (1)

அப்பொழுது அவன் இருக்குமிடத்தை அறிவதற்கு ராமன் மஹாபலசாலியான ஸுஷேணனுடைய இரண்டு குமாரர்களையும் நீலனையும் அங்கதனையும் வினதனையும் ஜாம்பவானையும் ஸானுப்ரஸ்தனையும் ரிஷபனையும் ரிஷபஸ்கந்தனையும் சரபனையும் அனுப்பினார். அவர்களும் வெகு ஸந்தோஷத்துடன் விருக்ஷங்களைப் பிடுங்கிக்கொண்டு ஆகாசத்தில் எங்கும் தேடினார்கள். இந்திரஜித் அவர்களுடைய நிகரற்ற வேகத்தை அனேக உத்தமபாணங்களால் தடுத்து அஸ்திர வித்யையில் தனக்குள்ள ஸாமர்த்தியத்தைக் காட்டினான். நாராசங்களால் தேகங்கள் பிளக்கப்பட்டு, மேகங்களால் சூழப்பட்ட ஸூரியனைப்போல் இந்திரஜித்தைப் பயங்கரமான வேகமுள்ள அந்த வானர வீரர்கள் காணமுடியவில்லை. பிறகு, ராவண புத்திரன் ராமலக்ஷ்மணர்களின் தேகமெங்கும் சரவர்ஷங்களால் துளைத்து, ஊசிநாட்ட இடமில்லாமல் செய்தான். அந்தக் காயங்களிலிருந்து ரத்தம் பிரவாஹமாய் ஓட, ராமலக்ஷ்மணர்கள் சிவந்த புஷ்பங்களையுடைய பலாச மரங்களைப்போல் விளங்கினார்கள். அப்பொழுது பிளந்த மைமலையைப்போன்ற தேகத்துடனும் கோபத்தால் சிவந்த கடைக்கண்களுடனும் விளங்கும் இந்திரஜித், மாயையால் மறைந்திருந்து யுத்தம் செய்கையில் தேவராஜனான இந்திரனும் காணமுடியுமா? வேறு பலத்தால் என்னை நெருங்க முடியுமா? அல்ப மனிதர்களான உங்களைப்பற்றிச் சொல்ல வேண்டியதென்ன? இதோ நான் உங்களைக் கழுகிறகுகள் பூண்ட என்பாணங்களால் யமலோகத்திற்கு அனுப்பப்போகிறேன்" என்று மிகவும் கோபத்துடன் கூறிவிட்டு மறுபடியும் கூர்மையான பாணங்களால், தர்மம் தவறாத அந்த ராஜபுத்திரர்களைப் பிளந்து, ஸந்தோஷத்தால் ஸிம்ஹநாதம் செய்தான். மலையைப்போன்ற வில்லை வளைத்துக் கோரமான பாணங்களை இடைவிடாமல் பிரயோகித்தான். அஸ்திரங்களின் ரஹஸ்யத்தையும் தேகத்தின் உயிர்நிலைகளையும் அறிந்தவனாகையால், தீக்ஷ்ணமான சரங்களை அந்தந்த இடங்களில் பிரயோகித்து அடிக்கடி கர்ஜித்தான். ராமலக்ஷ்மணர்கள் தர்மயுத்தம் செய்பவர்களாகையால் சப்தவேதமென்ற வித்யைப்படி சப்தமுண்டான இடத்தை நோக்கி அடிக்க ஸம்மதிக்கவில்லை. ஸர்ப்ப ரூபமான பாணங்களால் கட்டப்பட்டுக் கடிக்கப்பட்டு, ஒரு நிமிஷத்திற்குள் கண் திறக்க முடியாமல் போனார்கள். தூக்கிக் கட்டியிருந்த கயிறுகள் அவிழ்ந்தபொழுது ஆடிவிழும் இந்திரத்வஜத்தைப்போல், ராவண புத்திரன் எய்த அம்புகளால் தேகமெங்கும் துளைக்கப்பட்டு அந்த ராஜபுத்திரர்கள்

பூமியில் விழுந்தார்கள். தேகமெங்கும் ரத்தம் ஒழுக, பாணங்களால் இறுக்கிக் கட்டப்பட்டு, ஸஹிக்க முடியாத உபத்திரவத்தை அடைந்து, பாணங்களையே படுக்கையாய் அடைந்தார்கள். ஒரு விரலின் அகலமாவது அவர்களுடைய தேகத்தில் பாணங்கள் பதியாத இடமில்லை. கால் முதல் தலைவரையில் ஸர்ப்ப ரூபமுள்ள பாணங்களால் துளைக்கப்படாத இடமில்லை. அசைக்க முடியாமல் கட்டப்படாத இடமும் இல்லை. காமரூபியான அந்தக் குரூர ராக்ஷஸனால் உபத்திரவிக்கப்பட்டு, மலைகளிலிருந்து நீர்த்தாரைகள் பெருகுவதுபோல், அவர்களுடைய தேகங்களிலிருந்து ரத்தம் பெருகிற்று. முன்பு இந்திரனை ஜயித்த ராவண குமாரன் கோபம் கொண்டு பாணங்களால் உயிர்நிலைகளில் அடிக்க, ராமன் முதலில் விழுந்தார். தங்கக் கட்டுகளுடனும் கூர்மையான முனைகளுடனும் விளங்கும் நாராசங்களாலும் அர்த்த நாராசங்களாலும் அஞ்சலிகங்களாலும் வத்ஸதந்தங்களாலும் ஸிம்ஹதம்ஷ்ட்ரங்களாலும் க்ஷுரங்களாலும் அவரை இந்திரஜித் மறுபடியும் துளைத்தான். தங்கத்தால் அலங்கரிக்கப்பட்டு, மூன்று வளைவுகளுடன் கைப்பிடி முறிந்து நாண் தளர்ந்து, வில்லின்மேல் சாய்ந்துகொண்டே அவர் யுத்தபூமியில் படுத்தார். லக்ஷ்மணன் திரும்பிப் பார்த்து, தன் அண்ணன் பிரக்ஞையற்றுக் கீழே பாணங்களால் அமைக்கப்பட்ட படுக்கையில் கிடப்பதைக் கண்டு, பிழைப்பதரிதென்று எண்ணினார். பாணங்களால் கட்டப்பட்டுத் தேகமெங்கும் பிளந்து பூமியில் விழுந்து கிடக்கும் ராமனையும் மலர்ந்த செந்தாமரை இதழ்களைப்போன்ற அவருடைய கலங்காத நேத்திரங்களையும் கண்டு லக்ஷ்மணன் துக்கித்தார். ஸகல வானரர்களும் சொல்ல முடியாத வருத்தமடைந்தார்கள். இப்படி நாகபாசங்களால் கட்டுப்பட்டு, தேகமெங்கும் துளைக்கப்பட்டு, பூமியில் பிரக்ஞையற்றுக் கிடக்கும் ராமலக்ஷ்மணர்களை ஹனுமான் முதலிய வானரர்கள் சூழ்ந்து நின்று துக்கத்தால் ஒன்றும் தோன்றாமல் தவித்தார்கள்.

ப$^{3}$த்$^{3}$தௌ$^{4}$ து வீரௌ பதிதௌ ஶயானௌ
தௌ வானரா: ஸம்பரிவார்ய தஸ்து$^{2}$: |
ஸமாக$^{3}$தா வாயுஸுத ப்ரமுக்$^{2}$யா:
விஷாத$^{3}$ மார்தா: பரமம் ச ஜக்$^{3}$மு: || (28)

---

### குறிப்பு

(1. ராமன் இந்திரஜித்தால் பிரயோகிக்கப்பட்ட நாகபாசத்திற்கு ஏன் கட்டுப்பட வேண்டுமென்றால், ஸகலப் பிரபஞ்சத்தையும் ஸம்ஹரிக்கும் ஸர்வேச்வரனான ஸ்ரீராமன், தாம் ஏற்படுத்தின மரியாதையைக் காப்பாற்றவேண்டி, பிரஹ்மா கொடுத்த வரங்களுக்காகத் தாமே கட்டுப்பட்டார்.



2. "பரமாத்மாவின் தேகம் பஞ்சபூதங்களின் ஸம்பந்தத்தால் ஏற்பட்டதல்ல. மாம்ஸம் கொழுப்பு எலும்பு முதலியவைகளால் ஸாதாரண சரீரங்களைப்போல் ஏற்பட்டதல்ல" என்ற வாக்கியத்தால் ராமலக்ஷ்மணர்களின் தேகங்கள் ஸாமான்ய சரீரங்களைப்போன்றவையல்லவென்று தெரிகிறது. அப்படியிருக்க, காயப்படுவதும் ரத்தம் பெருகுவதும் எப்படியென்றால், வாஸ்தவமாக அவர்களுடைய தேகங்களில் ரத்தமென்பது கிடையாது. வேஷதாரிகளைப்போல் ரத்தம் பெருகுவதாய்க் காட்டுவார்கள். இப்படி நிர்ப்பந்தத்திற்குட்பட்டு மனுஷ்யபாவனையைக் காட்டுவதால் பிரயோஜனமென்னவென்றால், மற்றவர்கள் தம்போல் நடக்கவேண்டும் என்பதே. இல்லாவிட்டால், ஜனங்கள் 'இவன் மனுஷ்யனல்ல, தேவதை; இவன் அனுஷ்டிக்கும் தர்மங்களை நாம் அனுஷ்டிக்கக்கூடாது" என்று எண்ணுவார்கள். எப்பொழுதும் மனுஷ்யபாவனையாக நடந்தால், மஹாத்மாக்கள் அனுஷ்டித்த தர்மங்களைத் தானும் அனுஷ்டித்து இதர ஜீவகோடிகளையும் அனுஷ்டிக்கும்படிச் செய்யலாம். மேலும், ராவணன் மனுஷ்யனால் மரணமடைவானென்ற பிரஹ்மாவின் வார்த்தையை நிறைவேற்றுவதற்காகவும் அப்படிச் செய்யவேண்டியிருந்தது. நாகபாசத்தால் ராமன் கட்டுப்பட்டதால் நாம் அறியவேண்டிய தர்மமென்னவென்றால், எப்பொழுதும் நியாயமார்க்கத்தில் நடப்பவர்களுக்கும், ஒருநாள் ஆபத்துகள் நேரும்; ஆனால், அவை அதிசீக்கிரத்தில் விலகுமென்பதே.

3. நாராசம்—வட்டமான முகங்களுள்ள பாணம்; அர்த்த நாராசம்—நடுவில் பிளப்புள்ளது; நாராசத்தைப் போன்றது. பல்லம்—கோடாலியைப்போன்ற முனையுள்ளது. அஞ்சலிகம்—கைகளைக் கூப்பினதுபோன்ற முனையுள்ளது. வத்ஸ தந்தம்—பசுவின் கன்றின் பற்களைப்போன்ற முனையுள்ளது. ஸிம்ஹதம்ஷ்ட்ரம்—ஸிம்ஹத்தின் கோரப் பற்களைப்போன்ற முனையுடையது. க்ஷுரம்—நாவிதனுடைய கத்தியைப்போல் கருக்குள்ள முனையை உடையது.)

---

## ஸர்க்கம் 46

## நாகபாசத்தால் கட்டுப்பட்டது (தொடர்ச்சி)

ததோ த்$^{3}$யாம் ப்ருதி$^{2}$வீம் சைவ வீக்ஷமாணா வனௌகஸ: |
த$^{3}$த்$^{3}$ருஶு: ஸந்ததௌ பா$^{3}$ணை: ப்$^{4}$ராதரௌ ராமலக்ஷ்மணௌ || (1)

பிறகு வானரர்கள், இந்திரஜித்தின் பாணங்களால் ராமலக்ஷ்மணர்களும் ஆகாசமும் பூமியும் மறைக்கப்பட்டதைக் கண்டார்கள். காளமேகங்கள் மழை பெய்து ஓய்ந்ததைப்போல் இந்திரஜித்

சரமாரி பொழிந்து ஓய்ந்தபொழுது, விபீஷணன் ஸுக்ரீவனுடன் அங்கே வந்தான். நீலன், த்விவிதன், மைந்தன், ஸுஷேணன், குமுதன், அங்கதன், ஹனுமான் முதலியவர்கள் துக்கித்துக்கொண்டிருந்தார்கள். ராமலக்ஷ்மணர்கள் அசைவற்று மெதுவாய் மூச்சு விட்டுக்கொண்டு, தேகமெங்கும் ரத்தம் பெருக, பாணங்களால் துளைக்கப்பட்டு, பூமியில் விழுந்து கிடந்தார்கள். சற்று நேரம் பெருமூச்சு விட்டுக்கொண்டும், சற்று நேரம் அசைவற்றும், சற்று நேரம் மெள்ள மெள்ள அவயவங்களை அசைத்துக்கொண்டும், சற்று நேரம் ஸர்ப்பங்களைப்போல் சீறிக்கொண்டும் தங்கத்வஜங்களைப்போல் கிடந்தார்கள். வானரத் தலைவர்கள் தாரைதாரையாய்க் கண்ணீர் பெருகச் சுற்றிலும் நின்று கொண்டிருந்தார்கள். இப்படித் தங்களுக்கு நாயகனான ராமனும் லக்ஷ்மணனும் யுத்த பூமியில் பிரக்ஞையற்றுக் கிடப்பதைக் கண்டு, விபீஷணனும் வானரர்களும் தாங்கமுடியாத துக்கமடைந்தார்கள். பூமியிலும் ஆகாசத்திலும் ஸகல திக்குகளிலும் எவ்வளவு தேடிப்பார்த்தும், மாயையால் மறைந்திருந்த இந்திரஜித்தைக் கண்டு பிடிக்க முடியவில்லை. விபீஷணன் மாத்திரம் ராக்ஷஸமாயையால்அந்த ராவணபுத்திரனைக் கண்டான். தேஜஸாலும் கீர்த்தியாலும் பராக்கிரமத்தாலும் விளங்கும் இந்திரஜித், தான் நாகபாசங்களால் ராம லக்ஷ்மணர்களைக் கட்டினதையும் அவர் பிரக்ஞையற்றுக் கிடப்பதையும் பார்த்து விசேஷப் பிரீதியடைந்து, ராக்ஷஸ ஸைன்யங்களை உத்ஸாகப்படுத்தினான்.

"பாருங்கள்! கரன், தூஷணன், த்ரிசிரஸ் முதலிய ராக்ஷஸ வீரர்களைக் கொன்ற பலசாலிகள் என் பாணங்களால் அடிபட்டுக் கிடக்கிறார்கள். இந்த நாகபாசத்திலிருந்து இவர்களைத் தப்புவிக்க தேவாஸுரர்கள் ஒன்று சேர்ந்தாலும் முடியாது. எவர்களைப்பற்றிக் கவலை கொண்டு என் பிதா படுக்கையில் படுக்காமல் ராத்திரி முழுவதும் வருத்தப்படுகிறாரோ, எவர்களை நினைத்து லங்கையிலுள்ள பிராணிகள், மழைக் காலத்தில் ஆறுகள் கரைபுரண்டு கலங்குவது போல் மனம்கலங்கி பயந்துநடுங்குகிறார்களோ அந்த ராமலக்ஷ்மணர்கள் என் அஸ்திரங்களால் கொல்லப்பட்டார்கள். இவர்கள் நம்மெல்லோரையும் வேரறுக்கிறவர்கள்; பெரும் கெடுதியை விளைவிக்கிறவர்கள். சரத் காலத்திலுள்ள மேகங்களைப்போல், ராமலக்ஷ்மணர்களுடையவும் வானர ஸைன்யத்தினுடையவும் பராக்ரமம் முற்றும் வீணாயிற்றல்லவா" என்று கூறி மறுபடியும் வானரத் தலைவர்களைப் பாணங்களால் துளைத்தான். நீலனை ஐம்பது பாணங்களாலும், மைந்த த்விவிதர்களை மும்மூன்று பாணங்களாலும், ஜாம்பவானை மார்பில் ஒரு பாணத்தாலும், ஹனுமானைப் பத்து பாணங்களாலும், அரசனான கவாக்ஷனையும் அங்கதனையும் அநேக பாணங்களாலும் அடித்தான். இப்படி அந்த மஹாவீரன் வானரர்களை நெருப்புக் கொழுந்துகளைப் போன்ற பாணங்களால் பிளந்து, பயந்து நடுங்கச் செய்து, திக்குகள் நடுங்கும்படி கர்ஜித்து சிரித்து, "ராக்ஷஸர்களே! கோரமான பாண பாசங்களால் கட்டப்பட்டு யுத்த பூமியில் பிரக்ஞையற்றுக் கிடக்கும் ராம லக்ஷ்மணர்களைப் பாருங்கள்" என்றான். ஸகல ராக்ஷஸர்களும் கபடயுத்தம் செய்பவர்களாகையால் அவனுடைய ஆச்சரியகரமான காரியத்தால் அடங்காத மகிழ்ச்சியடைந்து, மேகங்களைப்போல் நான்கு புறங்களிலிருந்தும் ஸிம்ஹநாதம் செய்து, கர்ஜித்து, அந்த ராஜபுத்திரர்கள் மூச்சில்லாமல் அசைவற்றுப் பூமியில் கிடப்பதைக் கண்டு, அவர்கள் இறந்தார்களென்றே நிச்சயித்து, இந்திரஜித்தைக் கொண்டாடினார்கள்.

பிறகு இந்திரஜித் பேரானந்தமடைந்து லங்கைக்குச் சென்றான். ஸகல ராக்ஷஸர்களும் பரம ஸந்தோஷ மடைந்தார்கள். ராமலக்ஷ்மணர்களுடைய தேகத்தில் உச்சிமுதல் உள்ளங்கால் வரையில் ஊசிநாட்ட இடமில்லாமல் பாணங்கள் நாட்டியிருப்பதைக் கண்டு, ஸுக்ரீவனுக்குப் பெரும் பயமுண்டாயிற்று. முகம் வாடிக் கண்ணீர் பெருகத் திகிலடைந்து வருத்தப்படும் வானராதிபதியைப் பார்த்து விபீஷணன், "ஸுக்ரீவ! பயப்படாதே! கண்ணீர் விடுவதை நிறுத்து. யுத்தங்கள் இப்படித்தானிருக்கும். ஜயம் எப்பொழுதும் ஒருவருடைய பங்கா? நாம் பூர்வஜென்மங்களில் பாக்யம்செய்திருந்தால், தசரத புத்திரர்கள் மோகம்தெளிந்து முன்போல் பலத்தாலும் வீரியத்தாலும் விளங்குவார்கள். தைரியப்படுத்திக் கொள்; அநாதையான என்னையும் தைரியப்படுத்து. ஸத்தியத்திலும் தர்மத்திலும் நாடின மனத்தையுடையவர்களுக்கு மரண பயமுண்டோ" என்று அவனைத் தேற்றி, அசுபத்தைப் போக்குவதற்கும் சிரமத்தை நீக்குவதற்கும் ஜலத்தால் ஸுக்ரீவனுடைய நேத்திரங்களைத் துடைத்தான். பிறகு ராக்ஷஸ மாயைகளைக் கண்டு பிடிக்கக் கூடிய மந்திரத்தால் ஜலத்தை ஜபித்து அவனுடைய கண்களையும் முகத்தையும் துடைத்து, துக்கத்திற்கு இடம் கொடுக்காமல் ஸமயோசிதமான வார்த்தைகளைச் சொன்னான். 'துக்கப்படுவதற்கு இது ஸமயமல்ல. அகாலத்தில் அதிக ஸ்நேஹத்தைப் பாராட்டுவதும் மரணத்திற்கு ஹேதுவாகும். ஆகையால் அதைரியத்தை விடு; இது ஸமஸ்த காரியங்களையும் கெடுக்கும். ராமனை நம்பியிருக்கும் இந்த வானர ஸைன்யத்திற்கு ஹிதத்தை யோசிக்க வேண்டாமா? அல்லது, ரகுவீரனை மூர்ச்சை தெளியும் வரையில் காப்பாற்று. இந்தத் தசரதபுத்திரர்கள் கொஞ்சம் சிரமம் தீர்ந்த பிறகு நமது துக்கத்தைப் போக்குவார்கள். ராமனுக்கு இந்த நாகபாசபந்தனம் ஒரு பொருட்டா? அவருக்கு மரணம் நேருமென்ற ஸந்தேஹம் ஏன்? ஆயுள் குறுகினவர்களுக்கு லக்ஷ்மிகளை இருக்குமா? இவர்களுடைய முகத்தில் அது பூர்ணமாய் விளங்குவதைப் பார். ஆகையால் நீயும் உன் ஸைன்யமும் கவலை

யற்றிருங்கள். மேல் நடக்க வேண்டிய காரியங்களை நான் ஏற்பாடு செய்துவிட்டு வரும்வரையில் யாவற்றையும் ஜாக்கிரதையாகப் பார்த்துக் கொள். இதோ நமது வானர வீரர்கள் பயத்தால் மயிர்க்கூச்ச மடைந்து ஓடிப் போவோம் என்று ஒருவர்க்கொருவர் ரஹஸ்யமாய்ப் பேசிக் கொண்டிருக்கிறார்கள். இந்திரஜித் நம்முடன் யுத்தம் செய்து கொண்டிருக்கும் பொழுது, இவர்களை உத்ஸாஹப் படுத்துவதற்காக அங்குமிங்கும் நான் ஓடிக் கொண்டிருப்பதைக் கண்டு, என்னை இந்திரஜித்தென்றெண்ணி நடுங்கினார்கள். சூட்டின மாலையைக் கழற்றி எறிவதுபோல், நமது ஸைன்யங்கள் பயத்தை விடட்டும்'' என்று ஸுக்ரீவனை ஸமாதானம் செய்து வானர ஸைன்யங்களைப் பார்த்து, "நான் இந்திரஜித்தல்ல. உங்களுக்குப் பரம மித்திரனும் ராவணனுக்குப் பரம சத்துருவாயுமிருக்கும் விபீஷணன், பயப்படாதீர்கள்'' என்று தைரியம் செய்தான்.

அதற்குள் இந்திரஜித்தென்ற மஹாமாயாவி ஸகல ஸைன்யங்களும் சூழ, லங்கைக்குச் சென்று, ராவணனை நமஸ்கரித்துக் கை கூப்பி, ''மஹாராஜ! ராம லக்ஷ்மணர்கள் இறந்தார்கள்'' என்று தெரிவித்தான். அதைக் கேட்டு லங்கேச்வரன் ஆனந்த பரவசனாய், ஸிம்ஹாஸனத்திலிருந்து தாவிக் குதித்து, அந்த வீரசிகாமணியை இறுகத் தழுவி, உச்சிமுகர்ந்து, தன் சத்ரு நாசமடைந்ததை விஸ்தாரமாய்ச் சொல்லும்படி கேட்டான். அதற்கு இந்திரஜித்தும் தான் ராம லக்ஷ்மணர்களை நாகபாசங்களால் கட்டித் தேஜஸற்று அசைவில்லாமல் பூமியில்அடித்துத் தள்ளினதை நடந்தபடி வர்ணித்தான். ஸந்தோஷத்தால் மனம் பூரித்துத் தன் புத்திரனுடைய வார்த்தைகளால் ராமனைப்பற்றின பயமும் கவலையும் தீர்ந்து, தன் புத்திரனை மிகவும் கொண்டாடினான்.

ஸ ஹர்ஷவேக³ாநுக³தாந்தராத்மா
ஶ்ருத்வா வசஸ்தஸ்ய மஹாரத²ஸ்ய
ஜஹௌ ஜ்வரம் தா³ஶரதே²:ஸமுத்தி²தம்
ப்ரஹ்ருஷ்ய வாசாபி⁴நநந்த³ புத்ரம் ॥ (51)

---

## ஸர்க்கம் 47

## ராம லக்ஷ்மணர்களை ஸீதைக்குக் காட்டினது

ப்ரதிப்ரவிஷ்டே லங்காம் து க்ருதார்தே² ராவணாத்மஜே |
ராக⁴வம் பரிவார்யார்தா: ரரக்ஷுர் வாநரர்ஷப⁴ா: ॥ (1)

பிறகு வானர சிரேஷ்டர்கள் ராகவனைச் சூழ்ந்து வெகு ஜாக்கிரதையாய்க் காத்துவந்தார்கள். ஹனுமான், அங்கதன், நீலன்



ஸுஷேணன், குமுதன், நளன், கவாக்ஷன், கவயன், சரபன், கந்தமாதனன், ஜாம்பவான், ரிஷபன், கந்தன், ரம்பன், சதவலி முதலிய வானர வீரர்கள்ஸேனைகளை அணிவகுத்து, வெகு ஜாக்கிரதையாய்ப் பெரிய விருக்ஷங்களை எடுத்துக் கொண்டு, மேலும் கீழும் ஸகல திக்குகளிலும் உற்றுப் பார்த்துக் கொண்டு, புல் அசைந்தாலும் ராக்ஷஸர்கள் வந்து விட்டார்களென்று பயந்தார்கள். அதற்குள் ராவணன் இந்திரஜித்தை உத்தரவு கொடுத்தனுப்பி விட்டு, ஸீதையைக் காக்கும் ராக்ஷஸிகளையும் த்ரிஜடையையும் வருவித்து, "ராம லக்ஷ்மணர்கள் இந்திரஜித்தால் கொல்லப் பட்டார்கள்'' என்று ஸீதைக்குச் சொல்லுங்கள். அவளைப் புஷ்பக விமானத்திலேற்றி யுத்த பூமியில் இறந்து கிடக்கும் அந்த க்ஷத்ரியப் பதர்களைக் காட்டுங்கள். எவனுடைய தைரியத்தால் கர்வம் கொண்டு என்னை லக்ஷ்யம் செய்யாமலிருக்கிறாளோ அந்தப் பர்த்தாவும் அவன் உடன்பிறந்தவனும் யுத்தகளத்தில் அடிபட்டுக்கிடக்கிறார்கள். இனி விசாரமற்றுத் துக்கமற்று ராமனைச் சேருவோமென்ற எண்ணமில்லாமல் என்னை அடைவாள். ராம லக்ஷ்மணர்கள் யுத்தத்தில் இறந்ததை நேரில் கண்டபின் ஆசையற்று, என்னைத் தவிர வேறு கதியில்லை என்றறிந்து, மிகுந்த ஸந்தோஷத்துடன் தானே என்னை அடைந்து, ஸமஸ்த ஆபரணங்களாலும் அலங்கரிக்கப்பட்டு விளங்குவாள்'' என்றான். அந்த ராக்ஷஸிகள் அப்படியே ஸீதையைப் புஷ்பக விமானத்திலேற்றி, அவள் துக்கத்தால் புத்தி சிதறியிருப்பதையும் லக்ஷ்யம் செய்யாமல், ராமலக்ஷ்மணர்களைக் காட்டுவதற்காக யுத்த பூமிக்கு அழைத்துச் சென்றார்கள். ராவணன் நகரமெங்கும் த்வஜங்களாலும், கொடிகளாலும், மாலைகளாலும், அலங்கரித்து ராம லக்ஷ்மணர்கள் இந்திரஜித்தால் கொல்லப்பட்டார்களென்று தெரிவித்தான்.

ஸீதை த்ரிஜடையுடன் புஷ்பக விமானத்திற் சென்று, ஸகல வானர ஸைன்யமும் அடிபட்டு விழுந்து கிடப்பதையும் வானர வீரர்கள் ராமலக்ஷ்மணர்களைச் சுற்றி துக்கித்துக் கொண்டிருப்பதையும் தசரத புத்திரர்கள் பாணங்களென்ற படுக்கையில் பிரக்ஞையற்றுக் கவசம் பிளந்து வில்லுகள் நழுவிப் பாணங்களால் ஸகல அவயவங்களிலும் துளைக்கப்பட்டுச் சரக்கூடுகளைப் போல் கிடப்பதையும் கண்டாள். அக்னிகுமாரர்களான ஸ்கந்தனையும் விசாகனையும்போல், அந்தப் புருஷ சிரேஷ்டர்கள் செந்தாமரை இதழ்களைப் போன்ற நேத்திரங்களுடன், அந்தக் கதியை அடைந்திருப்பதைக் கண்டு துக்கம் மேலிட்டு வெகு நேரம் பிரலாபித்தாள். நிகரற்ற அழகும் ஸௌந்தரியமும் பொருந்தின ஜானகி, ராமனும் லக்ஷ்மணனும் புழுதியில் விழுந்து புரளுவதைக் கண்டு வாய்விட்டழுதாள். தேவர்களைப்போல் காந்தி பொருந்தின அந்த ஸகோதரர்கள் அசைவற்றிருப்பதைக் கண்டு, கண்ணீரால் ஒன்றும் தெரியா

யாமல் அவர்கள் இறந்தார்களென்றெண்ணி, பின்வருமாறு துக்கித்தாள்.

ஸா பா³ஷ்பஶோகாபி⁴ஹதா ஸமீக்ஷ்ய
தௌ ப்⁴ராதரௌ தே³வஸமப்ரபா⁴வௌ |
விதர்கயந்தீ நித⁴நம் தயோ: ஸா
து³:க²ாந்விதா வாக்யமித³ம் ஜகா³த³ ‖ (26)

---

## ஸர்க்கம் 48

# ஸீதையின் பிரலாபம்

ப⁴ர்தாரம் நிஹதம் த்³ருஷ்ட்வா லக்ஷ்மணம் ச மஹாப³லம் |
விலலாப ப்⁴ருஶம் ஸீதா கருணம் ஶோககர்ஶிதா ‖ (1)

"ஐயோ! ஸாமுத்ரிகா சாஸ்திர நிபுணர்கள் எனக்குப் புத்திரர்கள் பிறப்பார்களென்றும் நான் விதவையாக மாட்டேனென்றும் சொன்னார்களே. அந்தப் புத்திமான்களுடைய வார்த்தை பொய்யாயிற்றே. நான் அநேக யாகங்களைச் செய்யும் சக்கரவர்த்தியின் பட்ட மஹிஷியாக இருப்பேனென்று சொன்னவர்களுடைய வார்த்தைகளெல்லாம் என் நாதன் இறந்ததால் பொய்யாயிற்றே. 'நீ மஹா அதிருஷ்டசாலி, வீரசிகாமணியான அரசனுக்குப் பத்னியாவாய்' என்ற வார்த்தைகள் என் ரகுவீரன் உயிரிழந்த பிறகும் நிஜமாகுமா? 'அம்மா! உனக்கு நித்திய மங்களங்கள் உண்டாகும்' என்று ஆசீர்வதித்த பெரியோர்களுடைய வார்த்தைகள் என் ராகவனுடன் போயிற்றோ? இதோ என்பாதங்களில் காணப்படும் பத்ம ரேகைகள், நான் சக்கரவர்த்திக்குப் பார்யையாய்ப் பட்டாபிஷேகம் பெறுவதற்கு அடையாளமென்று சொன்னார்களே. பாக்யமற்ற ஸ்த்ரீகள் பர்த்தாக்களை இழந்து விதவைகளாவதற்கு வேண்டிய லக்ஷணங்களை எவ்வளவு தேடிப் பார்த்தும் என்னிடத்தில் காணவில்லையே. பத்மம் என்ற பதத்திற்கு பாதத்தில் லக்ஷ்மியை உடையவர்களென்று கருத்து. என்பாதங்களில் அவ்விதமான பத்ம ரேகைகளிருப்பதால் நான் விசேஷ ஐச்வர்யத்தையும் ஸௌக்யத்தையுமனுபவிப்பேனென்று ஏற்படுகிறது. என் தாசரதி உயிருடனிருந்தாலல்லவா இது நிஜமாகும்? என் தலைமயிர்கள் மெல்லியதாயும் ஏற்றத் தாழ்வில்லாமலும் கருத்துமிருக்கின்றன. என் புருவங்கள் ஒன்றிற்கொன்று சேரவில்லை. என் முழங்கால்கள் உருண்டு திரண்டு இடைவெளியின்றி சேர்ந்து இருக்கின்றன, என்பற்கள் இடைவெளியின்றிச் சேர்ந்திருக்கின்றன. நெற்றியின் இருபுறங்கள், நேத்திரங்கள், கைகள், பாதங்கள், முழங்கால்கள், துடைகள் உயர்ந்து பருத்திருக்கின்றன. என் விரல்கள் ஸமமாயும் வட்டமான நகங்களுடன் விளங்குகின்றன. ஸ்தனங்கள், நாபி, விலாப்புறங்கள், மார்பு இவைகள் லக்ஷணப்படி அமைந்திருக்கின்றன, ரத்னங்களின் காந்தியைப்



போல் என் நிறம் மனோஹரமாக இருக்கிறது. பாதங்களின் பத்து விரல்களும் முன் காலும் குதிகாலும் நடக்கும்போது பூமியில் நன்றாய்ப் பதிந்திருக்கின்றன; ஆகையால் சுப லக்ஷணங்கள் பொருந்தினவளென்று என்னை எல்லோரும் மெச்சுகிறார்களே! என் கைகளும் பாதங்களும் யவமென்ற தான்யத்தைப்போன்ற ரேகைகளால் நிறைந்திருக்கின்றன. கைவிரல்களைச் சேர்த்து வைத்தால் இடைவெளி தெரியவில்லை; குங்குமத்தைப்போல் சிவந்த நிறமுள்ளவை. எப்பொழுதும் அழகான புன்சிரிப்பையுடையவளென்று ஸ்த்ரீகளுடைய ஸாமுத்ரிகாசாஸ்திர நிபுணர்கள் சொல்லியிருக்கிறார்களே! ஜ்யோதிஷசாஸ்திரத்தில் வல்லவர்கள் நானும் என் பர்த்தாவும் மஹாராஜ்யாபிஷேகம் பெறுவோமென்று சொன்ன வார்த்தை பொய்யாயிற்றே. ராமலக்ஷ்மணர்கள் ஜனஸ்தானமெங்கும் என்னைத் தேடி ஸமாசாரத்தையறிந்து ஸமுத்திரத்தைத் தாண்டிய பின் ஒரு குளம்பளவு தண்ணீரில் மூழ்கி இறந்தார்களே! கபந்தன், விராதன், வாலி, கரதூஷணர்களைக் கொன்று முடிவில் இந்திரஜித்தின் மாயையால் மடிந்தார்களே! ஐயோ! வாருணம், ஆக்னேயம், ஐந்த்ரம், வாயவ்யம், ப்ரஹ்மசிரஸ் முதலிய அஸ்திரங்கள் உங்களுக்கில்லையா? இந்திரனையும் உபேந்திரனையும் போன்ற ராமலக்ஷ்மணர்கள், மாயையால் மறைந்து அடிக்கும் இந்திரஜித்தின் கையால் மாண்டு என்னை அநாதையாய் விட்டார்களே! எந்தச் சத்ருவும், அவன் மனோவேகமுள்ளவனாயிருந்தாலும் யுத்தத்தில் ராகவனுடைய கண்ணில் பட்ட பிறகு உயிருடன் திரும்புவானா? காலத்திற்கு ஸாத்யமில்லாத காரியம் ஒன்றுமில்லை. விதியை வெல்ல முடியாது. இல்லாவிட்டால் ராமரும் லக்ஷ்மணனும் ஒரு ராக்ஷஸனால் அடிபட்டுக் கிடப்பார்களா? ராமரையும் லக்ஷ்மணனையும் என்னையும் என் தாயையும் குறித்து எனக்கு அவ்வளவு வருத்தமில்லை. பரம சாதுவான என் மாமியார் கௌஸல்யாதேவியை நினைக்கும்பொழுது எனக்குத் துக்கம் தாங்க முடியவில்லை. 'வனவாஸம் முடிந்து என்னருமைக் குழந்தைகளான ராமலக்ஷ்மணர்களும் ஸீதையும் எப்பொழுது திரும்பி வருவார்கள்; எப்பொழுது நான் அவர்களைப் பார்த்து மகிழ்வேன்' என்று எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறாரே" என்று இப்படிப் பலவிதமாகப் பிரலாபித்தாள்.

அப்பொழுது த்ரிஜடை, "அம்மா! ஏன் இப்படி வருத்தப்படுகிறாய்? உன் பர்த்தா பிழைத்திருக்கிறார். நான் இப்படிச் சொல்வதற்குத் தகுந்த காரணங்களுண்டு. ஸேனாநாயகன் இறந்தால் ஸேனைகள் உத்ஸாஹமிழந்து, ஒன்றும் தோன்றாமல், மாலுமியை இழந்த கப்பலைப்போல் மயங்கும். இந்த வானரஸைன்யம் அப்படி இல்லை. ஸந்தோஷத்தால் பிரஸன்னமான முகங்களையும் கோபத்தால் ஜ்வலிக்கும் நேத்திரங்களையும் பார். மேலும், இவர்கள் கலங்காமல் கவலைப்படாமல் ராமலக்ஷ்மணர்களை பிரக்ஞைவரும்

வரையில் ரக்ஷித்துக் கொண்டிருப்பதைப் பார்; உன்னிடத்தில் எனக்குள்ள ப்ரீதியால் இதை உனக்குச் சொன்னேன். இந்தச் சுபமான அடையாளங்களாலும் தகுந்த காரணங்களாலும் ராமலக்ஷ்மணர்கள் பிழைத்திருக்கிறார்களென்றும் அவர்களுக்கு யாதொரு அபாயமுமில்லையென்றும் நம்பு. இதுவரையில் நான் பொய் சொன்னதில்லை; இனிச் சொல்லப் போகிறதுமில்லை. உன் நன்னடத்தையும் ஆசாரமும் என் மனத்தைக் கவர்ந்தன. உன்னிடத்திலுள்ள ப்ரீதியால் இப்படிச் சொன்னேன். ரகுவீரர்களை யுத்தத்தில் ஜயிப்பதற்குத் தேவாஸுரர்களாலும் இந்திரனாலும் முடியுமா? மேற்சொன்ன காரணங்களையும் நான் கண்ட ஸ்வப்னத்தையும் ஆதாரமாய்க்கொண்டு இப்படிச் சொல்கிறேன். இதிருக்கட்டும். ராமலக்ஷ்மணர்களுடைய முகங்களைப் பார். ப்ரக்ஞையற்றவர்களாயிருந்தும் இவர்களுடைய தேககாந்தியும் முகவிலாஸமும் லக்ஷ்மீ விலாஸமும் குறையவில்லையே! வீரியமற்றவர்களுக்கும் உயிரிழந்தவர்களுக்கும் முகத்தில் ஒரு விகாரம் காணப்படுமல்லவா? ஜானகி! இந்த ராஜபுத்திரர்களுடைய விஷயத்தில் வருத்தத்தையும் சோகத்தையும் புத்திக் கலக்கத்தையும் விடு. இவர்கள் பிழைக்காமலிருக்க முடியாது" என்று தைரியப்படுத்தினாள்.

அமிருததாரைகளைப்போன்ற அந்த வார்த்தையைக் கேட்டு ஸீதை துக்கம் நீங்கிக் கைகூப்பி, "அம்மா! நீ சொல்லுகிறபடியே நடக்கக்கடவது" என்று ப்ரார்த்தித்தாள். (பகவானுடைய குணங்களையும் மஹிமையையும் உபதேசிக்கிறவர்கள் யாராயிருந்தாலும் அவர்களைக் குருவாகப் பாவித்து ஆதரிக்கவேண்டும் என்பது கருத்து.) பிறகு ஸீதையும் த்ரிஜடையும் புஷ்பகவிமானத்திலேறி அசோக வனத்திற்கு வந்து சேர்ந்தார்கள். த்ரிஜடை எவ்வளவு தைரியம் சொல்லியும், ஜானகி அசோக வனத்திற்குப் போய் ராக்ஷஸிகளுக்கு நடுவிலிருந்தவுடன் ராமலக்ஷ்மணர்களுடைய ஞாபகம் வந்தது. அவர்களை எதிரில் இருப்பதாகப் பாவித்து அவர்களுக்கு நேர்ந்த கஷ்டத்தைப்பற்றிச் சொல்லமுடியாத துக்கத்தையடைந்தாள்.

ப்ரவிஶ்ய ஸீதா ப$^{3}$ஹுவ்ருக்ஷஷண்டா$^{3}$ம்
தாம் ராக்ஷஸேந்த்$^{3}$ரஸ்ய விஹாரபூ$^{4}$மிம் |
ஸம்ப்ரேக்ஷ்ய ஸஞ்சிந்த்ய ச ராஜபுத்ரௌ
பரம் விஷாத$^{3}$ம் ஸமுபாஜகா$^{3}$ம ॥ (41)

---



## ஸர்க்கம் 49

## ராமன் ப்ரக்ஞை தெளிந்தது

கோ$^{4}$ரேண ஶரப$^{3}$ந்தே$^{4}$ந ப$^{3}$த்$^{3}$தௌ$^{4}$ த$^{3}$ஶரதா$^{2}$த்மஜௌ |
நிஶ்வஸந்தௌ யதா$^{2}$ நாகௌ$^{3}$ ஶயானௌ ருதி$^{4}$ரோக்ஷிதௌ ॥ (1)

மஹாபலமுள்ள ஸுக்ரீவன் முதலிய வானரசிரேஷ்டர்கள் சோகம் மேலிட்டுக் கோரமான நாகபாசங்களால் கட்டுப்பட்டு ரத்தம் பெருக, ஸர்ப்பங்களைப்போல் பெருமூச்சு விட்டுக்கொண்டு பூமியில் படுத்திருக்கும் ராமலக்ஷ்மணர்களைச் சூழ்ந்திருந்தார்கள். அதற்குள் ராமன் மூர்ச்சை தெளிந்து விழித்துக்கொண்டார். வீரியத்திலும், தைரியத்திலும், பலத்திலும் ஒப்பற்றவரல்லவா? தன் பக்கத்தில் லக்ஷ்மணன் பாணங்களால் துளைக்கப்பட்டு ரத்தம் பெருக, முகம்வாடி, புழுதிபடிந்து தரையில் கிடப்பதைக் கண்டு துக்கம் மேலிட்டு ப்ரலாபித்தார். "என்னுடன் பிறந்த நீ ஒரு அல்ப ராக்ஷஸனால் ஜயிக்கப்பட்டுப் பூமியில் கிடப்பதைக் கண்ட பிறகும் நான் உயிரை வைத்துக்கொள்ள வேண்டுமா? இனி ஸீதையையடைந்தும் எனக்கென்ன ப்ரயோஜனம்? லோகத்தில் தேடிப்பார்த்தால் ஸீதையைப்போன்ற ஒரு ஸ்த்ரீ கிடைக்கலாம். ஆனால் ரணதீரனான லக்ஷ்மணனைப்போல் ஸஹோதரன் கிடைப்பானா? ஸுமித்திரையின் அருமைக்குழந்தை இறந்தால் இந்த வானரர்களுக்கு எதிரே உயிரை விடுவேன். என்னை நம்பி எனக்கு உதவி செய்ய என்னுடன் அனுப்பின லக்ஷ்மணனைப் பறிகொடுத்துவிட்டு நான் மாத்திரம் உயிருடன் ஸுமித்ராதேவியை எப்படிப் பார்ப்பேன்? கௌஸல்யையும், கைகேயியும், ஸுமித்திரையும், 'லக்ஷ்மணன் எங்கே?' என்று என்னைக் கேட்டால் என்ன சொல்வேன்? புத்திரனைப் பறிகொடுத்து நடுங்கிக் கதறும் ஸுமித்திரையை எப்படி ஸமாதானம் செய்வேன்? 'உன்னுடன் வனத்திற்குப்போன லக்ஷ்மணனை விட்டு நீ மாத்திரம் வந்த காரணமென்ன? பரதசத்ருக்னர்களிடத்தில் இந்த விருத்தாந்தத்தை எப்படிச் சொல்வேன்? இவ்விடத்திலேயே உயிரை விடுகிறேன்; பிழைத்திருக்க இஷ்டமில்லை. லக்ஷ்மணனை வனத்திற்கு அழைத்து வந்ததைப்போல் கெட்ட காரியமுண்டோ? பெரியோர் இப்படிச் செய்வார்களா? தசரதர் என்னைக் காட்டிற்குப் போகச்சொன்னாரேயன்றி லக்ஷ்மணனை நான் அழைத்துப்போக நியாயமென்ன? எனக்காக உயிரைப் பறிகொடுத்துப் பூமியில் கிடக்கிறானே! என் ஜன்மத்தைச் சுடவேண்டும். குழந்தாய்! நான் துக்கப்படும்போதெல்லாம் எனக்கு ஆறுதல் சொல்லிவந்தாயே. இப்பொழுது உன்னை இழந்து நான் பரிதபிக்கையில் என்னைத்தேற்ற உனக்கு உயிரில்லையே? ராக்ஷஸர்களைக் கணக்கில்லாமல் அடித்துத் தள்ளின இந்த யுத்த பூமியில் நீயே சத்ருக்களால் அடிக்கப்பட்டுக் கிடக்கும்படி நேர்ந்ததோ? ஸூரியன் அஸ்தகிரியில் இறங்குவதுபோல் பாணங்களாகிற கிரணங்களால் சூழப்

பட்டு ரத்தப்பிரவாஹமென்ற ஸந்தியாகாலவர்ணத்துடன், அம்புகளால் பரப்பப்பட்ட படுக்கையென்ற அஸ்தகிரியில் ரவிகுல ஸூரியனை நீ தங்கியிருக்கிறாயோ? ஒரு வேளை உயிர்நிலைகளில் பாணங்களால் அடிபட்டு உபத்திரவம் பொறுக்காமல் என்னுடன் பேசவில்லையோ? உனக்கு என்னிடத்திலுள்ள பிரேமையை உன் கண்ணிறத்தால் எப்பொழுதும் புலப்படுத்துகின்றாய். நான் வனத்திற்கு வரும்பொழுது எவ்வளவு ஆவலுடன் வந்தாயோ அப்படியே நானும் உன்னுடன் யமலோகத்திற்கு வருகிறேன். நீ எனக்குப் பிரியமான பந்து. எப்பொழுதும் எனக்கு அனுகூலமாய் நடக்கிறவன். என்னுடைய துர்க்குணங்களால் இந்த அவஸ்தையை அடைந்திருக்கிறாய். மஹாவீரனான லக்ஷ்மணன் கடுங்கோபங்கொண்டபொழுதும் கடுமையாகவாவது ஹிதமில்லாமலாவது என்னிடத்தில் பேசியறியேன். கார்த்தவீர்யார்ஜுனன் ஆயிரம் கைகளால் ஒரே தடவையில் ஐநூறு பாணங்களைப் பிரயோகிக்கும் காலத்திற்குள் லக்ஷ்மணன் இரண்டு கைகளாலும் அத்தனை பாணங்களை பிரயோகிப்பான். தேவேந்திரன் பிரயோகிக்கும் அஸ்த்ரங்களைக்கூட தன்னுடைய அஸ்திரங்களால் நாசம் செய்யக்கூடிய மஹாவீரன் ஒரு அல்ப ராக்ஷஸனால் தோல்வியடைய வேண்டியதென்ன? உத்தம சயனங்களில் படுக்கத்தகுந்த நீ இப்படி வெறும் தரையில் படுப்பது தகுமா?

ஸுக்ரீவ! விபீஷணனை ராக்ஷஸர்களுக்கு அரசனாக அபிஷேகம் செய்விக்கிறேனென்று பிரதிக்ஞை செய்து அதை நிறைவேற்றாவிட்டால் அந்தத் துக்கம் என்னைக் கொளுத்திவிடும். ஆகையால், நான் இங்கே இருக்கவேண்டியது. நீ இப்பொழுதே வானரஸைன்யங்களுடன் ஸமுத்திரத்தைத் தாண்டிக் கிஷ்கிந்தைக்குத் திரும்பிப் போ. ஒருவேளை மஹாபலவானான ராவணன் நான் இல்லையென்றறிந்து இங்கே வந்து உன்னை ஹிம்ஸிப்பான். ஹனுமான், ஜாம்பவான், தூம்ரன், அங்கதன், மைந்தன், த்விதவன், கேஸரி, ஸம்பாதி, கவயன், கவாக்ஷன், கஜன், சரபன் முதலிய வானவீரர்கள் எனக்காக உயிரை அலட்சியம் செய்து இந்த யுத்தத்தில் காட்டின பராக்கிரமும் செய்த காரியங்களும், அடைந்த கீர்த்தியும் பிறருக்கு ஸாத்யமா? ஸுக்ரீவா! உத்தம மித்திரனும் அருமைத்தோழனும் செய்யவேண்டியதையெல்லாம் நீ குறைவில்லாமல் செய்தாய். மித்திரதர்மத்தைப் பூர்ணமாக அனுஷ்டிக்க வேண்டுமென்று கவலை கொண்டவனல்லவா நீ? வானரசிரேஷ்டர்களே! உயிர்த்தோழர்கள் எனக்குச் செய்யவேண்டிய பரம உபகாரங்களை நீங்கள் குறைவில்லாமல் செய்தீர்கள். உங்களெல்லோருக்கும் உத்தரவு கொடுத்தேன். இஷ்டமான இடங்களுக்குப் போகலாம்'' என்றார். அதைக்கேட்டு வானரர்கள் துக்கத்தால் கண்கள் சிவந்து மலையருவிகள் மழைக்காலத்தில் நீர்த்தாரைகளைப் பெருகவிடுவது போல் கண்ணீர் உகுத்தார்கள். பிறகு விபீஷணன் ஸகல ஸைன்யங்களையும்



அங்கங்கே நிறுத்திவிட்டு, கதாபாணியாய் ராகவனிருக்குமிடத்திற்கு வந்தான். மை மலையைப்போல் கருத்த தேகத்துடன் அவன் ஓடிவருவதைக்கண்டு, ஸகல வானரர்களும் அவனை இந்திரஜித்தென்றெண்ணி மூலைக்குமூலை சிதறிப்போனார்கள்.

தம் த்[3]ருஷ்ட்வா த்வரிதம் யாந்தம் நீலாஞ்ஜந சயோபமம் |
வாநரா து[3]த்[3]ருவு: ஸர்வே மந்யமாநாஸ்து ராவணிம் || (35)

## ஸர்க்கம் 50

## ராமலக்ஷ்மணர்கள் நாகபாசத்திலிருந்து விடுபட்டது

அதோ[2]வாச மஹாதேஜா ஹரிராஜோ மஹாப[3]ல: |
கிமியம் வ்யதி[2]தா ஸேநா மூட[4]வாதேவ நௌர் ஜலே || (1)

அப்பொழுது ஸுக்ரீவன், "என்ன ஆச்சரியம்! ஸமுத்திரத்தில் எதிர்க்காற்றால் தத்தளிக்கும் கப்பலைப்போல் நமது ஸைன்யம் மிரளக் காரணமென்ன?'' என்றான். அங்கதன், "ரகுவீரர்கள் பாணங்களால் அடிபட்டு ரத்தம்பெருகச் சராஸனத்தின் மீது படுத்துக் கிடப்பதை தாங்கள் பார்க்கவில்லையோ. அதைத் தவிர வேறு காரணம் வேண்டுமோ?'' என்றான். ஸுக்ரீவன், "அப்படியல்ல. ஏதோ ஒரு பெரிய பயத்தாலல்லாமல் இப்படி நேராது. இவர்கள் முகம் குன்றி ஆயுதங்களை எறிந்துவிட்டு மூலைக்குமூலை ஓடுகிறார்கள். பயத்தால் கண்கள் மிரண்டு திரும்பிப் பார்க்காமல் ஒருவரையொருவர் இழுத்துக்கொண்டு அதிவேகமாய் ஓடுகிறார்கள். அதைப்பற்றிக் கொஞ்சம்கூட வெட்கப்படாமல், கீழே விழுந்தவர்களைக் கவனிக்காமல், தாண்டிக்கொண்டு செல்லுகிறார்கள் பார்'' என்றான். அதற்குள் விபீஷணன் கதாபாணியாய் அங்கே வந்து ஸுக்ரீவனை ஆசீர்வதித்து, ராமன் பிரக்ஞை தெளிந்திருப்பதைக் கண்டான். அப்பொழுது ஸுக்ரீவன் தன்னருகிலிருந்த ஜாம்பவானைப் பார்த்து, "இதோ வந்திருக்கும் நமது பரமமித்திரனான விபீஷணனைப் பார்த்தல்லவா வானரர்கள் இந்திரஜித்தென்றெண்ணி மூலைக்குமூலை ஓடுகிறார்கள். இப்பொழுதே போய் அவர்களை நிறுத்தி நிஜத்தைச் சொல்லி தைரியப்படுத்த வேண்டியது அவசியம்'' என்றான். ஜாம்பவானும் அப்படியே செய்ய, வானரஸைன்யங்கள் அவருடைய வார்த்தையை நம்பி விபீஷணனையும் கவனித்துப்பார்த்துப் பயம்தெளிந்து திரும்பி வந்தன. விபீஷணன் ராமலக்ஷ்மணர்களுடைய உடம்பெங்கும் பாணங்களால் துளைக்கப்பட்டிருப்பதைக் கண்டு, மனம் பதை பதைத்து, ஜலத்தைத் தொட்டு அவர்களுடைய கண்களைத் துடைத்து, துக்கத்தை அடக்கமுடியாமல் அழுது பிரலாபித்தான்.

"மஹாபலவான்களும் பராக்கிரமசாலிகளும் யுத்தத்தில் பிரியமுள்ளவர்களுமான இந்தப் புருஷசிரேஷ்டர்கள் கபடயுத்தம் செய்யும் ராக்ஷஸர்களால் இந்தக் கதியடைந்தார்களே. என்னு

டன் பிறந்தவன் மஹாக்ரூரன். அவனுக்குப் பிறந்த புத்திரன் அவனைவிட துஷ்டன். அந்த மஹா பாபி ராக்ஷஸர்களுக்குரிய அல்ப புத்தியாலும் மாயையாலும் இவர்களை மோசம் செய்து விட்டானே. இதனால் தன்னைப் பெற்றவனுக்கு அழியாத அபகீர்த்தியை ஸம்பாதித்தான். இந்த ராஜபுத்திரர்களோ கபடமறியாதவர்கள்; பாணங்களால் துளைக்கப்பட்டு ரத்தத்தால் நனைந்து முள்ளம்பன்றிகளைப்போல் பூமியில் கிடப்பதைக் காணவும் எனக்கு விதியோ? இவர்களுடைய வீரியத்தை அண்டி நான் க்ஷேமமடையலாமென்றிருந்தேன். அந்தப் புருஷ சிரேஷ்டர்கள் பூமியில் விழுந்து மரணமடையப் போகிறார்களே. இவர்களைப் பறிகொடுத்து நான் மாத்திரம் உயிருடன் இருக்கிறேன். நான் உயிருடனிருந்தும் இறந்தவனே. என் எண்ணங்களெல்லாம் வீணாய் ராஜ்யத்தையும் இழந்து பரிதபிக்கிறேன். என் சத்துருவான ராவணன் தன் பிரதிக்ஞையை நிறைவேற்றி ஸந்தோஷப்படுகிறான்'' என்று பிரலாபிக்கும் அந்தப் பக்தசிரோமணியை சுக்ரீவன் பிரியத்துடன் ஆலிங்கனம் செய்து "தர்மாத்மாவே! லங்கா ராஜ்யம் உனக்குக் கிடைப்பதில் ஸந்தேகமுண்டோ? ராவணன் புத்திரமித்திர பந்துக்களுடன் க்ஷேமமாய் வாழ்வானென்ற நம்பிக்கை வேண்டாம். நமது ரக்ஷகர்களுக்கு இந்த நாகபாசங்கள் யாதொரு கெடுதியையும் செய்ய முடியாது. சற்று நேரம் மயங்கியிருப்பார்களேயன்றி வேறல்ல. இதோ அதிசீக்கிரத்தில் பிரக்ஞை தெளிந்து ராவணனையும் ஸகல ராக்ஷஸர்களையும் நாசம் செய்வார்கள்'' என்று ஸமாதானம் செய்தான். பிறகு ஸமீபத்திலிருந்த தன் மாமனை ஸுஷேணனை நோக்கி, "நீ ராமலக்ஷ்மணர்களை எடுத்துக்கொண்டு வானர ஸைன்யங்களுடன் கிஷ்கிந்தைக்குப் போ. நான் ராவணனையும் அவனுடைய புத்திரமித்திர பந்துக்களையும் நாசம் செய்து, முன்பு இந்திரன் தன்னை விட்டுப் பிரிந்த லக்ஷ்மியைத் திரும்பி அடைந்ததுபோல், ஜானகியை ராமனிடத்தில் கொண்டுவந்து சேர்க்கிறேன்'' என்றான். அதைக் கேட்டு ஸுஷேணன், "தேவர்களுக்கும் அஸுரர்களுக்கும் நடந்த கோர யுத்தத்தை நான் பார்த்திருக்கிறேன். அப்பொழுது பாணப் பிரயோகத்தில் ஒப்பற்ற திறமையுடைய தானவர்கள் அபூர்வமான பாணங்களாலும் அஸ்திரங்களாலும் தேவர்களை அடிக்கடி மறைத்தார்கள். சில தேவர்கள் உபத்திரவம் தாங்காமல் துடித்தார்கள்; சிலர் பிரக்ஞையற்றார்கள்; சிலர் உயிரிழந்தார்கள். அப்பொழுது மிருதஸஞ்ஜீவினி முதலிய வித்யைகளாலும் மந்திரங்களாலும் ஔஷதிகளாலும் பிருஹஸ்பதி அவர்களை அபாயத்திலிருந்து தப்புவித்தார். ஸம்பாதி பனஸன் முதலிய வானரர்களுக்கு அவைகளும் அவை வளரும் பர்வதமும் நன்றாய்த் தெரியும். க்ஷீரஸமுத்திரத்தில் முன்பு அமிருதத்தைக் கடைந்தெடுத்தவிடத்தில் சந்திரகிரி த்ரோணகிரி என்ற மலைகளில் தேவர்களால் வைத்து வளர்க்கப்



படுகின்றன. அந்த ஸஞ்ஜீவகரணி விசல்யகரணி என்ற ஔஷதிகளைக் கொண்டு வருவதற்கு வானரர்களைச் சீக்கிரமாய் அனுப்ப வேண்டியது. இதோ இருக்கும் வாயுபுத்திரன் போய்வரட்டும்'' என்றான்.

அதற்குள் மேகங்கள் மின்னற்கொடிகளுடன் கர்ஜித்தன. அவைகளையும் ஸமுத்திர ஜலத்தையும் அடித்துத் தள்ளிக்கொண்டு சண்டமாருதம் வீசிற்று. பூமி நடுங்கிற்று. மஹாவிருக்ஷங்கள் வேருடன் ஸமுத்திரத்தில் விழுந்தன. பெரிய தேகங்களுடன் லங்கையில் வஸிக்கும் ஸர்ப்பங்களும் ஸகல ஜல ஜந்துக்களும் பயந்து நடுங்கி நீரில் மறைந்தன. கொஞ்ச நேரம் கழித்துக் கருட பகவான் வானரர்களுக்கு பிரத்யக்ஷமானார். அளவற்ற பலவானான அந்த விநதையின் புத்திரன் அக்னியைப்போல் ஜ்வலித்துக்கொண்டு வருவதைக் கண்டு பாண ரூபமாய் ராமலக்ஷ்மணர்களைக் கட்டியிருந்த நாகங்கள் இருந்த இடம் தெரியாமல் மறைந்தன. பெரிய திருவடியும் மஹாபலவான்களான அந்தப் புருஷசிரேஷ்டர்களைப் பார்த்து பூர்ண சந்திரனைப்போன்ற அவர்களுடைய முகங்களைக் கைகளினால் தடவினார். உடனே அவர்களுடைய தேகங்களிலிருந்த காயங்களெல்லாம் மறைந்து அவர்கள் உருக்கியோடவிட்ட தங்கத்தைப்போன்ற சரீர காந்தியுடன் பிரகாசித்தார்கள். பிறரை ஜயிக்கும் ஸாமர்த்தியமும் பிறர் செய்யும் அவமானத்தைப் பொறுக்காமையும் பராக்கிரமும் தேகபலமும் காந்தியும் லோகோத்தமமான காரியங்களில் ஸ்திரமானப் பிரயத்தனம் செய்யும் உறுதியும் ஸூக்ஷ்மமான விஷயங்களை அறியும் ஞானமும் விவேகமும் ஞாபக சக்தியும் முன்னைவிட இரு மடங்காயின. இந்திரனையும் உபேந்திரனையும்போன்ற அந்த ராஜபுத்திரர்களைக் கருடன் வாரியெடுத்து மஹாப்ரீதியுடன் ஆலிங்கனம் செய்தார்.

பிறகு ராமன் அந்தப் பக்ஷிராஜனை நோக்கி, "இந்திரஜித்தால் எங்களுக்கு நேர்ந்த பெரிய ஆபத்திலிருந்து தங்களுடைய கிருபையால் நாங்கள் தப்பி முன்போல் பலத்தையும் வீரியத்தையும் உத்ஸாகத்தையும் அடைந்தோம். என் பிதாவான தசரதரையும் என் பாட்டனான அஜமஹாராஜனையும் கண்டதுபோல் தங்களைப் பார்த்து என் மனம் ஸந்தோஷிக்கிறது. அத்புதமான ரூபத்துடன் தெய்வலோகத்துக் கந்தம், புஷ்பம், மாலை, வஸ்திரம், ஆபரணம் முதலியவைகளுடன் விளங்கும் தாங்கள் யார்?'' என்று கேட்டார். கருடன் ஆனந்தம் மேலிட்டுக் கண்களில் நீர் கரைபுரள, "ரகுவீர! நான் உமக்கு வெகுப் பிரியமான தோழன். (பகவானுக்கு வாஹனமாயிருப்பதால் தோழனென்று சொல்லிக் கொண்டார்.) உமது பிராணனே ரூபமெடுத்து வெளியில் ஸஞ்சரிப்பதுபோலிருப்பவனென்று நம்புவீராக. கருடனென்று எனக்குப் பெயர். உங்களுக்கு உதவி செய்வதற்காக இங்கே வந்தேன். மஹாவீரர்களான

அஸுரர்களும் மஹா பலவான்களான தானவர்களும் தேவர்களால் ரக்ஷிக்கப்பட்ட இந்திரனும், மஹாக்ரூரனை இந்திரஜித்தின் மாயா பலத்தால் ஸிருஷ்டித்த இந்தக் கோரமான நாகபாசத்திலிருந்து உங்களைத் தப்புவிக்க முடியாது. இந்த ஸர்ப்பங்கள் சத்துருவின் வம்சத்தைச் சேர்ந்தவை. கூர்மையான பற்களையும் கொடிய விஷத்தையும் உடையவை. ராவண புத்திரனுடைய மாயாபலத்தால் ஸர்ப்பரூபம் தரித்து உங்களை உபத்திரவித்தன. தர்மங்களையறிந்தவரே! வீணாகாத பராக்ரமத்தையுடையவரே! நீரும் சத்ருகுல காலனை லக்ஷ்மணனும் பாக்யசாலிகள். உங்களுக்கு நேர்ந்த அபாயத்தைக் கேள்விப்பட்டு எனக்கு உங்களிடத்திலுள்ள ஸ்நேஹத்தாலும் தோழனுடைய கடமையாலும் அதிவேகமாய் வந்து சேர்ந்தேன். மஹாகோரமான இந்த அஸ்திர பந்தத்திலிருந்து விடுபட்டீர்கள். எப்பொழுதும் அதிக ஜாக்கிரதையாக இருக்க வேண்டியது. யுத்தத்தில் கபடத்தையும் மாயையையும் உபயோகிப்பது ராக்ஷஸர்களுக்கு ஸஹஜம்; குலதர்மம். சுத்தமான ஆசாரத்தையுடைய உங்களைப்போன்ற வீரர்களுக்கு நியாயமாய் நடப்பதே பலம். யுத்தத்தில் ராக்ஷஸர்களை ஒருபொழுதும் நம்பக்கூடாது. இப்பொழுது நேர்ந்த விஷயத்தைக்கொண்டே ராக்ஷஸர்கள் எப்பொழுதும் கபடமுள்ளவர்களென்று அறியுங்கள்" என்று கருடபகவான் ராமனை இறுகத்தழுவி, "மித்ர! ரகுநாத! தர்மமூர்த்தி! சத்ருக்களிடத்திலும் பரமவாத்ஸல்யத்தைப் பாராட்டும் கருணா ஸமுத்ர! நான் போய்வருகிறேன். உத்திரவு கொடுங்கள். நான் உமக்கு எப்படித் தோழனென்றதைப்பற்றி இப்பொழுது கேட்க வேண்டாம். யுத்தத்தில் ஸகல சத்ருக்களையும் நாசம் செய்தபிறகு உமக்கே தெரியும். உமது பாணாக்னியால் லங்கையில் குழந்தைகளும் கிழவர்களும் மாத்திரம் வஸிக்கும்படிச் செய்து மற்ற ராக்ஷஸர்களை வேரறுத்து ராவணனை வதம் செய்து ஜானகியை அடைவீராக" என்றார். இப்படி அந்தப் பக்ஷீந்திரன் ராமலக்ஷ்மணர்களுக்கு நேர்ந்த அபாயத்தைத் தீர்த்து அவர்களைப் ப்ரதக்ஷிணம் செய்து, பிரியத்துடன் கட்டியணைத்து ஆகாசமார்க்கமாய் வாயு பகவானைப்போல் அதிவேகமாய்ச் சென்றார். வானரத் தலைவர்கள் தெய்வானுக்ரஹத்தால் ரகுவீரர்களுக்கு நேர்ந்த அபாயம் நீங்கினதைக் கண்டு ஸந்தோஷம் தாங்காமல் ஸிம்ஹநாதம் செய்து வால்களைச் சுழற்றினார்கள். பேரிகை மிருதங்கம் சங்கம் முதலிய வாத்யங்களை வாசித்தார்கள்; கர்ஜித்தார்கள்; தோள் தட்டினார்கள்; தாவினார்கள். மஹா விருக்ஷங்களையும் பர்வதங்களையும் பெயர்த்தெடுத்துக்கொண்டு யுத்தத்திற்குத் தயாராய் நின்றார்கள். லங்கையின் கோட்டை வாசல்களைத் தாக்கி அட்டஹாஸம் செய்தார்கள். அதைக்கேட்டு ராக்ஷஸர்கள் ஆச்சரியப்பட்டுப் பயந்தார்கள். கோடை காலத்தின் முடிவில் மேகங்கள் ராத்திரியில் பயங்கரமாய்க் கர்ஜிப்பதுபோல் வானரத் தலைவர்கள் சத்ருக்களின் ஹிருதயம்



பிளக்கும்படியாய்க் கர்ஜித்து அவர்களை யுத்தத்திற்கு அழைத்தார்கள்.

ததஸ்து பீ$^{4}$மஸ் துமுலோ நிநாதோ$^{3}$
ப$^{3}$பூ$^{4}$வ ஶாகா$^{2}$ம்ருக$^{3}$ யூத$^{3}$பாநாம்
க்ஷயே நிதா$^{3}$க$^{4}$ஸ்ய யதா$^{2}$ க$^{4}$நாநாம்
நாத$^{3}$: ஸுபீ$^{4}$மோ நத$^{3}$தாம் நிஶீதே$^{2}$ ॥ (66)

## கேள்வி - பதில்

[கே:—பிரபஞ்சத்திலுள்ள ஸகலப் பிராணிகளையும் சுண்டுவிரலின் நுனியால் ஹதம் செய்வேனென்ற ரகுவீரன், எல்லையற்ற சக்தியையும் ஞானத்தையும் உடையவரல்லவா? கையாலாகாதவரைப்போல் இந்திரஜித்தால் ஜயிக்கப்பட்டு ரத்தம் பெருகப் பூமியில் விழுந்து கிடந்ததெப்படி?

ப:—லோகத்தில் தர்மத்தையும் ஆசாரத்தையும் நிலைநிறுத்துவதற்காக அப்படிச் செய்தார். கபடமில்லாத சுத்தமான மனத்தையும் நடத்தையையுமுடைய ஸாதுக்களுக்கு பிராணனைப் போக்கும் அபாயங்கள் நேர்ந்தாலும் அவர்கள் நாசமடைவார்கள். பாபிகளும் துஷ்டர்களும் தங்களுடைய எண்ணங்கள் கைகூடினவென்று ஸந்தோஷித்தாலும் அவர்களுடைய உத்தேசங்கள் நிறைவேறாமல் நாசமடைவார்கள். இந்த விஷயம் நாகபாசவிருத்தாந்தத்தால் நமக்கு உபதேசிக்கப்படுகிறது.

கே:—ராவணனை வதம் செய்யவேண்டுமென்று தேவதைகள் பிரார்த்திக்க, அதற்கிணங்கி பகவான் ராமமூர்த்தியாய் அவதாரம் செய்தாரல்லவா?

ப:—நிஜமே. துஷ்டர்களை நாசம் செய்வதுபோல் தர்மத்தை நிலைநிறுத்துவதற்கும் அவதாரம் செய்தார். ராவணனைமாத்திரம் ஸம்ஹரிப்பது உத்தேசமானால், இவ்வளவு சிரமப்படவேண்டியதில்லை. நான்கு வர்ணத்தார்களையும் அவரவர்களுடைய தர்மங்களை அனுஷ்டிக்கும்படி செய்யவேண்டுமல்லவா?

கே:—அந்த தர்மங்களைத் தெளிவாய் உபதேசிக்கக்கூடாதோ?

ப:—ச்ருதிஸ்மிருதிகளால் அப்படிச் செய்தும் பலிக்கவில்லை. தானே அனுஷ்டித்துக் காட்டவேண்டியிருந்தது. அதற்காகவே இந்த அவதாரமெடுத்தது.]

## ஸர்க்கம் 51

## தூம்ராக்ஷன் யுத்தத்திற்குப் புறப்பட்டது

*தேஷாம் து துமுலம் ஶப்3த3ம் வாநராணாம் மஹௌஜஸாம் |*
*நத3தாம் ராக்ஷஸை: ஸார்த4ம் ததா3 ஶுஶ்ராவ ராவண: ‖ (1)*

**வா**னரவீரர்கள் ஸந்தோஷத்தால் ஆரவாரிப்பதை ராவணனும் ராக்ஷஸர்களும் கேட்டு ஆச்சரியமடைந்தார்கள். "மந்திரிகளே! மழைக்காலத்து மேகங்களைப்போல் கர்ஜிக்கும் வானரர்களுக்கு விசேஷ ஸந்தோஷத்திற்கு ஏதோ காரணமிருக்கவேண்டும். அவர்களுடைய கர்ஜனைகளால் ஸமுத்திரம் கலங்குகிறது. ராமலக்ஷ்மணர்கள் தீக்ஷ்ணமான பாணங்களால் கட்டப்பட்டு பிரக்ஞையற்றுக் கிடப்பதையும் வானரர்கள் ஸந்தோஷத்தால் கூச்சலிடுவதையும் யோசித்தால் எனக்கு ஸந்தேகமுண்டாகிறது. தூதர்களே! நீங்கள் அதிசீக்கிரமாய்ச் சென்று வானரர்கள் தலைவர்களையிழந்து துக்கிக்கவேண்டிய காலத்தில் ஸந்தோஷமுண்டான காரணத்தை அறிந்துவாருங்கள்" என்றான். அப்படியே அநேக ராக்ஷஸர்கள் பரபரப்புடன் கோட்டைச் சுவர்களிலேறிப் பார்க்கையில், ஸுக்ரீவன் வானரஸைன்யத்தை வகுத்து ஒழுங்குபடுத்தி ரக்ஷிப்பதையும், ராமலக்ஷ்மணர்கள் நாகபாசத்திலிருந்து விடுபட்டு பிரக்ஞை தெளிந்து முன்போல் ஸேனையை நடத்துவதையும் கண்டு, மனம் கலங்கி, முகம்வாடி ராவணனிடத்தில் தெரிவித்தார்கள். "மஹாராஜ! ராமலக்ஷ்மணர்களை இந்திரஜித் பாணபாசங்களால் கட்டி பிரக்ஞையைப்போக்கிப் பூமியில் தள்ளினார். மதயானைகள் அவைகளைக் கட்டியிருக்கும் கயிறுகளை அறுப்பதுபோல் அவர்கள் இப்பொழுது நாகபாசங்களை இருந்த இடம் தெரியாமல் செய்து, கொழுத்த ஸிம்ஹங்களைப்போல் ஸஞ்சரிக்கிறார்கள்" என்று விக்ஞாபனம் செய்தார்கள். தசமுகன் முகம்வாடிக் கவலைகொண்டு, "இந்த பாணங்கள் வரப்ரஸாதத்தால் ஸர்ப்பரூபத்துடன் ஸூரியனைப்போல் ஜ்வலிக்கின்றன. இவை ஒரு பொழுதும் வீணாகாது. அஸ்திரவித்தையில் ஸாமர்த்தியமாக இந்திரஜித் இவைகளால் ராமலக்ஷ்மணர்களைக் கட்டினான். இவைகளிலிருந்து அவர்கள் தப்பினார்களென்றால் நமது ஸைன்யத்திற்குப் பெரும் ஆபத்து நேர்ந்ததென்பதில் ஸந்தேகமில்லை. இந்த பாணங்கள் வாஸுகி, தக்ஷகன், கார்க்கோடகன் முதலிய மஹாநாகங்களைப் போல் வீரியமுடையவை. இதுவரையிலும் எவனும் இவைகளுக்குத் தப்பவில்லை. இவைகளே வீணாயிற்றென்றால் நாம் செய்வதென்ன? என்று வருந்தினான். சற்றுநேரம் யோசித்து அடங்காத கோபம் கொண்டு கொடிய ஸர்ப்பத்தைப்போல் சீறி, "அடே! தூம்ராக்ஷ! நீ இருக்கையில் நான் கவலைப்படவேண்டியதில்லை. உனக்கு வேண்டிய ஸைன்யத்துடன் இப்பொழுதே சென்று ராமலக்ஷ்மணர்களையும் வானரர்களையும் ஹதம் செய்து வா" என்று ஆக்ஞாபித்தான்.



அதைக்கேட்டுத் தூம்ராக்ஷன் தன்னை முதலில் அனுப்பினதைப் பற்றி மிகவும் மகிழ்ந்து, தசமுகனை பிரதக்ஷிண நமஸ்காரம் செய்து, வெளியில் வந்து ஸேனைத்தலைவனைப் பார்த்து, "இன்னும் தாமதம் ஏன்? ஸைன்யங்களை யுத்தத்திற்கு ஸித்தம் செய்" என்றான். அது மஹாராஜாவின் ஆக்ஞையென்றறிந்து ஸேனைத் தலைவனும் அப்படியேசெய்ய, எண்ணிறந்த ராக்ஷஸர்கள் இடுப்பில் வீரகண்டாமணிகளுடன் ஸகல ஆயுதபாணிகளாய், கோரரூபங்களையும் அளவற்ற பலத்தையுமுடையவர்களாய் மழைக்காலத்து மேகங்களைப்போல் நான்கு புறங்களிலிருந்தும் கர்ஜித்துக்கொண்டு வந்து பூமியை மறைத்தார்கள். சிலர் நேர்த்தியான கவசங்களையணிந்துகொண்டு, த்வஜங்களாலும் தங்க ஜன்னல்களாலும் அலங்கரிக்கப்பட்டு, பலவகை முகங்களுள்ள கோவேறு கழுதைகளால் இழுக்கப்பட்ட ரதங்களிலேறி வந்தார்கள். சிலர் மனோவேகமுள்ள குதிரைகளிலும் சிலர் மதம்பெருகும் யானைகளிலும் ஏறி, கொழுத்த புலிகளைப்போல் யுத்தத்திற்குப் புறப்பட்டார்கள். செந்நாய், புலி, ஸிம்ஹம் முதலியவைகளைப்போல் முகங்களையுடைய கோவேறு கழுதைகள் ஸர்வாபரணங்களால் அலங்கரிக்கப்பட்டு, தூம்ராக்ஷன் ஏறிவரும் ரதத்தில் கட்டப்பட்டிருந்தன. அவன் இடிபோல் சிரித்துக்கொண்டு, கோரராக்ஷஸர்களால் சூழப்பட்டு, அனுமானிருக்கும் மேற்குக்கோட்டை வாசலை நோக்கி வந்தான். வழியில் கோரமான அநேக அபசகுனங்கள் காணப்பட்டு அவனைத் தடுத்தன. பயங்கரமான ஒரு பெரிய கழுகு ரதத்தின் நுனியில் விழுந்தது. த்வஜத்தின் நுனியில் அநேக கழுகுகள் கட்டிப் புரண்டுகொண்டு விழுந்தன. ஒரு வெளுத்த தலையில்லாத முண்டம், ரத்தம் பெருகப் பயங்கரமாய்க் கத்திக்கொண்டு, தூம்ராக்ஷனுக்கு எதிரே வந்தது; ரத்தமாரி பொழிந்தது; ஸகல திக்குகளும் இருட்டால் மூடப்பட்டு பிரகாசிக்கவில்லை. அந்தக் கோரமான அபசகுனங்களைக் கண்டு தூம்ராக்ஷன் வருத்தமடைந்தான். ராக்ஷஸர்கள் பயந்து மயங்கினார்கள்; இப்படி மஹாபலவானும் பயங்கரமான பராக்ரமமுடையவனுமான தூம்ராக்ஷன் ராக்ஷஸ வீரர்களால் சூழப்பட்டுச் சத்ருக்களுடன் யுத்தம் செய்ய ஆவலுள்ளவனாய் நகரத்திலிருந்து வெளியில் வந்து பார்க்கையில், ராமனால் ரக்ஷிக்கப்பட்ட வானரஸைன்யம் ஸமுத்திரத்தைபோல் எல்லையற்றிருப்பதைக் கண்டான்.

*தத: ஸுபீ4மோ ப3ஹுபி4ர் நிஶாசரை:*
*வ்ருதோபி4 நிஷ்க்ரம்ய ரணோத்ஸுகோ ப3லீ |*
*த3த3ர்ஶ தாம் ராக4வபா3ஹு பாலிதாம்*
*ஸமுத்3ர கல்பாம் ப3ஹுவாநரீம் சமூம் ‖ (40)*

## ஸர்க்கம் 52

## தூம்ராக்ஷனுடைய வதம்

தூ⁴ம்ராக்ஷம் ப்ரேக்ஷ்ய நிர்யாந்தம் ராக்ஷஸம் பீ⁴மவிக்ரமம் |
விநேது³ர் வாநரா: ஸர்வே ப்ரஹ்ருஷ்டா யுத்³த⁴ காங்க்ஷிண: || (1)

மஹாபராக்ரமமுள்ள தூம்ராக்ஷன் ராக்ஷஸ வீரர்களுடன் யுத்தத்திற்கு வருவதைக் கண்டு, வானரர்கள் அவனை எதிர்க்க ஆவல்கொண்டு ஸந்தோஷத்துடன் கர்ஜித்தார்கள். பிறகு வானரர்களுக்கும் ராக்ஷஸர்களுக்கும் கோரயுத்தம் நடந்தது. விருக்ஷங்களாலும், மலைகளாலும், கற்பாறைகளாலும் வானரர்கள் ராக்ஷஸர்களை அடித்தார்கள். சூலம், கத்தி, கோடாலி முதலிய ஆயுதங்களாலும் பாணங்களாலும் ராக்ஷஸர்கள் வானரர்களை அடித்தார்கள். கணக்கில்லாத ராக்ஷஸர்கள் வானரர்களால் அடித்துத் தள்ளப்பட்டார்கள். ராக்ஷஸர்களும் கோபம் கொண்டு கழுகிறகுகள் பூண்ட தீக்ஷ்ணமான பாணங்களாலும், கதைகளாலும், உலக்கைகளாலும் வானரர்களை அடித்துக் கொன்றார்கள். அம்புகளால் துளைக்கப்பட்டுச் சூலங்களால் தேகம் பிளந்து வானரர்கள் ரோஷம் கொண்டு கொஞ்சமும் பயமில்லாமல் மரங்களையும் பாறைகளையும் எடுத்துக் கொண்டு ஆச்சரியமான வீரகிருத்யங்களைச் செய்தார்கள். தங்களுடைய பெயர்களைக் கோஷித்துக்கொண்டு ராக்ஷஸர்களின்மேல் அதிவேகமாய்ப் பாய்ந்து, தரையில் தேய்த்து ஸிம்ஹநாதம் செய்தார்கள். சில ராக்ஷஸர்கள் மரங்களாலும் மலைகளாலும் தூளாக்கப்பட்டார்கள். சிலர் வாயால் ரத்தத்தைக் கக்கினார்கள். சிலர் விலாப்புறங்களில் கிழிக்கப்பட்டார்கள். சிலர் மரங்களால் அடித்துப் பிண்டமாக்கப்பட்டார்கள். சிலர் கற்பாறைகளால் தேய்க்கப்பட்டார்கள். சிலர் பற்களால் கிழிக்கப்பட்டார்கள். த்வஜங்கள் ஒடிந்து, சக்கரங்கள் முறிந்து, ஏர்க்கால் பிளந்து, கோவேறு கழுதைகள் மடிந்து, தூளான ரதங்களாலும், பர்வதங்களைப் போன்ற யானைகளாலும், மதயானைகளைப்போன்ற ராக்ஷஸ வீரர்களாலும், வானரர்கள் விட்டெறிந்த மலைச்சிகரங்களாலும், உயிரிழந்த குதிரைகளாலும், தலைகளறுந்த யானைப்பாகர்களாலும், குதிரைப்பாகர்களாலும் அந்த யுத்தபூமி நிறைந்து மஹாபராக்ரமசாலிகளான வானரவீரர்கள் தாவித்தாவி ராக்ஷஸர்களுடைய முகங்களை நகங்களால் கிழித்தார்கள். அந்த நிசாசரர்கள் முகம்வாடித் தலைமயிர் விரிந்து ரத்தத்தின் நாற்றத்தால் மூர்ச்சித்துப் பூமியில் விழுந்தார்கள். சிலர் கடும் கோபத்துடன் பயங்கரமாய்க் கூச்சலிட்டு வஜ்ராயுதம் போன்ற கைகளால் வானரர்களை அறைந்தார்கள். வானரர்களும் அதிவேகமாய்த் தாவி முஷ்டிகளாலும் கால்களாலும் பற்களாலும் விருக்ஷங்களாலும் ராக்ஷஸர்களை நாசம் செய்ய, அவர்கள் அதைத் தாங்கமுடியாமல் மூலைக்கு மூலை ஓட ஆரம்பித்தார்கள். அதைக் கண்டு தூம்ராக்ஷனென்ற



மஹாவீரன் கோபம் கொண்டு வானரர்களைக் கணக்கில்லாமல் கொல்ல ஆரம்பித்தான். சிலர் எறியீட்டிகளால் தேய்க்கப்பட்டு ரத்தத்தைக் கக்கினார்கள். சிலர் இரும்புலக்கைகளால் அடிபட்டுப் பூமியில் விழுந்தார்கள். உழல்தடிகளால் சிலர் அவயவங்கள் முறிந்து கிடந்தார்கள். சிலர் கத்திவாய்த்தடிகளால் பிளக்கப்பட்டார்கள். சிலர் மொட்டைத்தலைத்தடிகளால் அடிபட்டு இந்திரியங்கள் சிதறி உயிரிழந்தார்கள். சிலர் சூலங்களால் குத்திக் கொல்லப்பட்டார்கள். சிலர் ராக்ஷஸர்களால் அடித்துத் துரத்தப்பட்டார்கள். சிலர் ஹிருதயம் பிளந்து கிடந்தார்கள். சிலர் ஒரு பக்கத்தில் கிழிபட்டுக் கிடந்தார்கள். சிலர் குடல்சரிந்து கிடந்தார்கள். இப்படி இருதிறத்தாரும் மஹாபயங்கரமாய் யுத்தம் செய்யும் சப்தமும், மலைகளும் பாறைகளும் மரங்களும் விழும் சப்தமும் சேர்ந்து ஸகலப்பிராணிகளையும் நடுங்கச் செய்தது. அந்த யுத்தத்தில் வில்லுகளே வீணை; நாண் கயிறுகளே தந்திகள்; விட்டுவிட்டு விக்குவதே தாளம்; அசக்தியால் மெள்ள மெள்ளப் பேசுவதே பாட்டு; இப்படி யுத்த ஸங்கீதம் அங்கே விளங்கிற்று.

தூம்ராக்ஷன் வில்லை வளைத்துப் பாணவர்ஷங்களால் வானரர்களை அடித்து, மூலைக்குமூலை ஓடச்செய்து சிரித்தான். வானர ஸைன்யம் கலங்கித் தத்தளிப்பதைக் கண்டு, ஆஞ்ஜநேயர் ஒரு பெரிய பாறையைத் தூக்கிக்கொண்டு அதிவேகமாய் ஓடி வந்தார். வாயுவைப்போன்ற பராக்ரமமுடையவராய் கோபத்தால் கண்கள் சிவக்க, அந்தப் பாறையைத் தூம்ராக்ஷனுடைய ரதத்தின் மேல் எறிந்தார். அதைக் கண்டு அந்த ராக்ஷஸன் கதாபாணியாய்ப் பூமியில் குதித்தான். அந்தப் பாறை அவனுடைய ரதத்தையும் குதிரைகளையும், த்வஜத்தையும், வில்லையும், ஆயுதங்களையும், ஸாரதியையும் கொன்று பொடி செய்தது. பிறகு மாருதி விருக்ஷங்களை வேருடன் பெயர்த்து ராக்ஷஸர்களைக் கூட்டம் கூட்டமாய் அடித்துத் தலைகளை உடைத்துப் பூமியில் தள்ளி ரத்தப்பிரவாகமெடுக்கும்படி செய்தார். இப்படி ராக்ஷஸ ஸைன்யத்தை இருந்த இடம் தெரியாமல் துரத்தி, ஹனுமான் ஒரு பர்வதசிகரத்தைத் தூக்கிக்கொண்டு தூம்ராக்ஷனை நோக்கி ஓடி வந்தார். அதைக் கண்டு அந்த ராக்ஷஸன் அநேக இரும்பாணிகளால் நிறைந்த கதையைச் சுழற்றிக் கொண்டு மாருதியின்மேல் பாய்ந்து கடுங்கோபத்துடன் தலையில் அடித்தான். வாயுபகவானைப்போல் நிகரற்ற பலமுள்ள ஹனுமான் அதைக் கொஞ்சமாவது லக்ஷ்யம் செய்யாமல் அந்தக் கற்பாறையால் தூம்ராக்ஷனுடைய தலையின் நடுவில் அடித்தார். அவன் அவயவங்கள் முறிந்து மஹாபர்வதம் உடைந்து விழுந்ததுபோல் தரையில் விழுந்து உயிரைவிட்டான். தங்களுடைய ஸேனைத் தலைவன் இறந்ததைக் கண்டு, மிகுந்த ராக்ஷஸர்கள் பயந்து நடுங்கி லங்கையில் புகுந்து ஒளிந்தார்கள். வானரர்களும் அவர்களை விடாமல் துரத்திக் கொன்றார்கள். இப்படி ஆஞ்ஜநேயர் தூம்ராக்ஷனை

யும் அவனுடன் வந்த ஸைன்யத்தையும் மடித்து ரத்தவெள்ளம் பெருகச் செய்தார். கொஞ்சம் களைப்படைந்தும் சத்துருக்களை வதம் செய்ததால் விசேஷ ஸந்தோஷத்தையடைந்தார். வானரர்கள் அந்த மஹாத்மாவைக் கொண்டாடிப் பூஜித்தார்கள்.

(த்விதீயையில் தூம்ராக்ஷனுடைய வதமென்று தெரிகிறது.)

ஸ து பவநஸுதோ நிஹத்ய ஶத்ரும்
க்ஷதஜவஹா: ஸரிதஶ்ச ஸந்நிகீர்ய |
ரிபுவத⁴ ஜநிதஶ்ரமோ மஹாத்மா
முத³மக³மத் கபிபி⁴: ஸுபூஜ்யமாந: ‖ (41)

---

## ஸர்க்கம் 53

## வஜ்ரதம்ஷ்ட்ரனுடைய யுத்தம்

தூ⁴ம்ராக்ஷம் நிஹதம் ஶ்ருத்வா ராவணோ ராக்ஷஸேஶ்வர: |
க்ரோதே⁴ந மஹதாவிஷ்டோ நிஶ்வஸந்நுரகோ³ யதா² ‖ (1)

தூம்ராக்ஷன் இறந்ததைக் கேட்டு ராவணன் அடங்காத கோபம் கொண்டு, இந்திரியங்கள் பதற, காலஸர்ப்பத்தைப்போல் சீறிக்கொண்டு மஹாபலவானான வஜ்ரதம்ஷ்ட்ரனை நோக்கி, "வீர சிகாமணீ! நீ வேண்டிய ஸைன்யத்துடன் சென்று ராமலக்ஷ்மணர்களையும் வானர ஸைன்யத்தையும் இருந்தவிடம் தெரியாமல் செய்து வா" என்றான்.

வஜ்ரதம்ஷ்ட்ரன், "தங்கள் உத்தரவுப்படி முடித்து வருகிறேன்" என்று தசமுகனைப் பிரதக்ஷிணம் செய்து நமஸ்கரித்து எண்ணிறந்த யானைகள், குதிரைகள், கோவேறு கழுதைகள், ஒட்டகங்களாலும், த்வஜங்களால் விளங்கும் ரதங்களாலும், தடி, தோமரம், சூலம், உலக்கை, ஈட்டி, பாசம், சக்தி, சக்கரம், கதை, கோடாலி முதலிய ஆயுதங்களைத் தரித்து விசித்திரமான அஸ்திரங்களாலும் ஆபரணங்களாலும் அலங்கரிக்கப்பட்ட காலாட்களாலும் சூழப்பட்டு யுத்தத்திற்குப் புறப்பட்டான். உத்தமமான கேயூர மகர குண்டலங்களால் அலங்கரிக்கப்பட்டுக் கவசம் தரித்து முதுகில் அம்பறைகளைக் கட்டி, வில்லைக் கையில் பிடித்துத் தன் ரதத்தைப் பிரதக்ஷிணம் செய்து அதன் மேல் ஏறினான். யுத்தத்தில் நன்றாய்ப் பழக்கப்பட்ட கஜங்கள் மதம் பெருகப் பர்வதங்கள் நடந்து வருவதுபோல் விளங்கின. பிரஸித்தி பெற்ற யுத்த வீரர்கள் ஆயுதபாணிகளாய் அவைகளின்மேல் ஏறிச் சென்றார்கள்; மழைக் காலத்தில் நீருண்ட மேகங்கள் மின்னற்கொடிகள் பாயக் குமுறுவதுபோல், கருத்த சரீரங்களையுடைய அந்த ராக்ஷஸ ஸைன்யம் பிரகாசிக்கும் ஆபரணங்களால் அலங்கரிக்கப்பட்டு ஸிம்ஹநாதங்களோடும், அட்டஹாஸங்களோடும், கர்ஜனைகளோடும் யுத்தத்திற்குப் புறப்பட்டது. அங்கதனால் முற்றுகை செய்யப்பட்ட



தெற்குக் கோட்டை வாசலிலிருந்து வெளியில் வருகையில், மேகங்களில்லாமல் நிர்மலமான ஆகாசத்திலிருந்து எரிகொள்ளிகள் விழுந்தன. நரிகள் நெருப்பு ஜ்வாலைகளைக் கக்கிக்கொண்டு பயங்கரமாய் ஊளையிட்டன; கோரமான மிருகங்கள் ராக்ஷஸர்களுக்கு நாசகாலம் ஸமீபித்ததென்பதைத் தங்களுடைய அசுபமான சப்தங்களால் வெளியிட்டன. அதைக் கண்டு ராக்ஷஸர்கள் பயந்து மயங்கித் தத்தளித்தார்கள். வஜ்ரதம்ஷ்ட்ரன் இவைகளை லக்ஷ்யம் செய்யாமல், தேஜஸ்வியும் பலவானும் மாயாவியுமானதால் தைரியத்தைக் கைவிடாமல், யுத்தம் செய்ய ஆசைகொண்டு ஸைன்யத்தை நடத்திவந்தான். வானரர்கள் அவர்களைக்கண்டு ஸந்தோஷத்தால் கர்ஜித்து ஸகல திக்குகளும் நடுங்கச் செய்தார்கள்.

பிறகு இருதிறத்தாரும் பயங்கரமான ரூபங்களுடன் ஒருவரையொருவர் ஜயிக்க நிச்சயித்துக் கோரயுத்தம் செய்தார்கள். சிலர் அதிக உத்ஸாஹத்துடன் வந்து விழுந்து தலைகள் உடைந்து, தேகங்கள் பிளந்து ரத்தம் பெருகப் பூமியில் விழுந்தார்கள். சிலர் இடைவிடாமல் ஆயுதங்களைப் பிரயோகித்துக்கொண்டு முன்வைத்த காலைப் பின்வைக்காமல் ஸாமர்த்தியமாய் யுத்தம் செய்தார்கள். மரங்களும் மலைகளும் பாறைகளும் ஆயுதங்களும் விழும் சப்தம் ஆகாசத்தையும் பூமியையும் நடுங்கச் செய்தது. வில்லுகளை வளைத்து நாணேசை செய்யும் சப்தமும், சங்கம், பேரிகை, மிருதங்கம் முதலிய ரணவாத்யங்களின் சப்தமும் கலந்து ஒன்றும் தோன்றாமற் செய்தது. சிலர் தங்களிடத்திலிருந்த ஆயுதங்களையெல்லாம் பிரயோகித்துப் பிறகு கைகளால் சண்டை செய்தார்கள். கைகளாலும் கால்களாலும் முழங்கால்களாலும் சில ராக்ஷஸர்கள் அடிபட்டுத் தேகம் பிளந்து கிடந்தார்கள். மதம் கொண்ட வானரர்களால் எறியப்பட்ட பாறைகளால் சிலர் பொடியானார்கள். வஜ்ரதம்ஷ்ட்ரன் கூர்மையான பாணங்களால் வானரர்களைப் பயந்தோடச் செய்து, லோக ஸம்ஹாரகாலத்தில் பாசத்துடன் ஜ்வலிக்கும் யமனைப்போல் ஸஞ்சரித்தான். பலவான்களும் அஸ்திரவித்தையில் நிபுணர்களும் ஸகல ஆயுதங்களிலும் பயிற்சியுள்ளவர்களுமான ராக்ஷஸர்கள் கோபத்தால் மெய்மறந்து வானரர்களைக் கணக்கில்லாமல் அடித்துக் கொன்றார்கள். அதைக் கண்டு அங்கதன் தாங்கமுடியாத கோபம் கொண்டு, ஸம்வர்த்தமென்ற பிரளயகால வாயுவைப்போல் சீறி, ஒரு பெரிய மரத்தை எடுத்துக்கொண்டு, ஸிம்ஹம் அல்பமிருகங்களை அடித்துக் கொல்வதைப்போல், ராக்ஷஸர்களை நாசம் செய்தான். கோபத்தால் கண்கள் சிவந்து தேஜஸால் ஜ்வலிக்கும் அந்த வானரவீரனுக்கு எதிரில் நின்ற ராக்ஷஸ வீரர்கள் வெகுபராக்கிமசாலிகளானாலும் தலைகள் உடைந்து அவயவங்கள் முறிந்து, வேரற்ற மரங்களைப்போல் பூமியில் விழுந்தார்கள். ரதங்களாலும் குதிரைகளாலும் விசித்திரமான த்வஜங்களாலும் ராக்ஷஸர்களாலும் வானரர்களாலும் பூமி நிறைந்து

ஆபரணங்களாலும் அஸ்திரங்களாலும் அலங்கரிக்கப்பட்டு, ரத்த வெள்ளம் பெருகியோட, அந்த யுத்தத்தில் சரத்கால ராத்திரியைப் போல் விளங்கிற்று. மேகங்கள் பெருங்காற்றால் கலைவதுபோல, அந்தப் பெரும் ராக்ஷஸ ஸைன்யம் அங்கதனுடைய கடும் வேகத்தால் நடுங்கிற்று.

அங்க$^{3}$த$^{3}$ஸ்ய ச வேகே$^{3}$ந தத்$^{3}$ராக்ஷஸ ப$^{3}$லம் மஹத் |
ப்ராகம்பத தத$^{3}$ா தத்ர பவநேநாம்பு$^{3}$தே$^{3}$ா யதா$^{2}$ ‖ (35)

## ஸர்க்கம் 54

## வஜ்ரதம்ஷ்ட்ரனுடைய வதம்

ப$^{3}$லஸ்ய ச நிக$^{4}$ாதேந அங்க$^{3}$த$^{3}$ஸ்ய ஜயேந ச |
ராக்ஷஸ: க்ரோத$^{4}$மாவிஷ்டோ வஜ்ரத$^{3}$ம்ஷ்ட்ரோ மஹாப$^{3}$ல: ‖ (1)

அங்கதன் ஜயமடைந்ததையும் தன் ஸைன்யம் மடிந்ததையும் கண்டு மஹா பலவானான வஜ்ரதம்ஷ்ட்ரன் கோபம் கொண்டு, பயங்கரமான வில்லை வளைத்து, இடிபோல் நாணொசை செய்து, வானரங்கள்மேல் சரமாரி பொழிந்தான். அவனைச் சேர்ந்த ரதவீரர்கள் ஸகல ஆயுதங்களாலும் வானரர்களை அடித்தார்கள். வானர வீரர்கள் பாறைகளையும் மலைகளையும் மரங்களையும் எடுத்துக் கொண்டு ராக்ஷஸர்களை அடித்தார்கள். கணக்கில்லாத ஆயுதங்களை வானரர்கள்மேல் பிரயோகிக்க, வானரர்கள் மலைகளையும் மரங்களையும் பாறைகளையும் ராக்ஷஸர்களின்மேல் வாரி இறைக்க, இருதிறத்து யுத்த வீரர்களும் பின்வாங்காமல் கோர யுத்தம் செய்தார்கள். தலைகள் உடைந்தவர்களும் கால்கள் ஒடிந்தவர்களும் கைகள் அறுந்தவர்களும் அம்புகளால் துளைக்கப்பட்டவர்களும் ரத்தத்தால் நனைக்கப்பட்டவர்களும் வானரர்களும் ராக்ஷஸர்களும் யுத்தபூமியில் எங்கும் கிடந்தார்கள். கழுகுகளும் பருந்துகளும் காக்கைகளும் நரிகளும் கூட்டம் கூட்டமாய் ஸஞ்சரித்தன. பயங்கரமான புஜங்களும் தலைகளும் கால்களும் அவயவங்களும் அறுந்து விழுந்து கொண்டேயிருந்தன. இப்படி ராக்ஷஸ ஸைன்யத்தை வானரர்கள் அடித்து, கலங்கிப் பயந்தோடும்படி செய்ததை வஜ்ரதம்ஷ்ட்ரன் கண்டு கோபத்தால் கண்கள் சிவந்து வானரர்களுக்கு நடுவில் புகுந்து, வில்லை வளைத்துக் கழுகிறகுகள் பூண்ட தீக்ஷ்ணமான பாணங்களால் வானரர்களைப் பிளந்தான். வெகு சாதுர்யமாய் ஒரே பாணத்தால் ஐந்து, ஆறு, ஏழு, எட்டு, ஒன்பது, பத்து வானரர்களைத் துளைத்தான். அவர்கள் அம்புகளால் கையறுந்தவர்களும் தேகம் பிளந்தவர்களும் தலையுடைந்தவர்களுமாய், பிரஹ்மாவைப் பிராணிகள் சரணமடைவதுபோல, அங்கதனை நோக்கி ஓடினார்கள். அந்த வானரவீரன் தன் ஸைன்யம் தத்தளிப்பதைக் கண்டு வஜ்ரதம்ஷ்ட்ரனைக் கோபத்தால் சிவந்த கண்களுடன் வெறித்துப் பார்த்தான்.



அப்பொழுது, வஜ்ரதம்ஷ்ட்ரனும் அங்கதனும் மதயானைகளைப்போல் ஒருவர்மேலொருவர் பாய்ந்தார்கள். அந்த ராக்ஷஸன் அங்கதனை அநேக பாணங்களால் உயிர்நிலைகளில் துளைத்து, எறிஈட்டிகளால் துளைக்கப்பட்ட மதயானையைப்போல், தேகமெங்கும் ரத்த வெள்ளம் பெருகச் செய்தான். அதைக் கண்டு வாலிபுத்திரன் ஒரு பெரிய மரத்தைப் பிடுங்கித் தன் பூர்ண பலத்துடன் வஜ்ரதம்ஷ்ட்ரனை அடித்தான். அந்த ராக்ஷஸ வீரன் கொஞ்சமும் கலங்காமல் அந்த விருக்ஷத்தை அநேக பாணங்களால் பிளந்து தள்ளினான். அதைக் கண்டு அங்கதன் ஒரு பெரும் பாறையை அவன் மேல் எறிந்து கர்ஜித்தான். ராக்ஷஸ வீரன் அது தன் ரதத்தில் விழுவதற்கு முன் கதாபாணியாய்ப் பூமியில் குதித்தான். அந்தப் பாறை வஜ்ரதம்ஷ்ட்ரனுடைய ரதத்தையும் குதிரைகளையும், ஸாரதியையும் பொடியாக்கிற்று. பிறகு அங்கதன் மரங்களடர்ந்த வேறொரு பெரிய மலையைப் பிடுங்கி வஜ்ரதம்ஷ்ட்ரனுடைய தலையில் விட்டெறிந்தான். அதனால் அடிபட்டு ரத்தத்தைக் கக்கிக்கொண்டு, புத்தி சிதறிக் கதையின்மேல் சாய்ந்துகொண்டு சற்று நேரம் மூர்ச்சையடைந்து பிறகு பிரக்ஞை தெளிந்து, தன் கதையைக் கரகரவென்று சுழற்றி, அங்கதனைக் கடுங் கோபத்துடன் அங்கதனுடைய மார்பில் அடித்தான். பிறகு கதையை விட்டெறிந்து இருவரும் முஷ்டி யுத்தம் செய்தார்கள். ஒருவரையொருவர் குத்தி, அடித்துத் தள்ளிக்களைத்து ரத்தத்தைக் கக்கிக்கொண்டு, அங்காரகனும்புதனும் எதிர்ப்பதுபோல் சண்டையிட்டார்கள். பிறகு இருவரும் மரங்களைப் பிடுங்கி அடித்தார்கள். எருமைத் தோலால் மூடப்பட்ட கேடயங்களையும் தீக்ஷ்ணமான கத்தியையும் எடுத்துக்கொண்டு, பரம கோபத்துடன் விசித்திரமான நடை வரிசைகளைக் காட்டி யுத்தம் செய்தார்கள். ஒருவரையொருவர் ஜயிக்க நிச்சயித்து, இரக்கமில்லாமல் அடித்துக் குத்திக் கிழித்தார்கள். தேகமெங்கும் காயப்பட்டு ரத்தம் பெருக, சிவந்த புஷ்பங்களால் அலங்கரிக்கப்பட்ட விருக்ஷங்களைப்போல் காணப்பட்டார்கள். இப்படி யுத்தம் செய்ததால் இருவரும் களைத்துப் பூமியில் முழங்காலை ஊன்றி நின்றார்கள். அப்பொழுது அங்கதன் கழியால் அடிப்பட்ட கருநாகத்தைப்போல் சீறிக்கொண்டு ஒரு நொடியில் அதிவேகமாய்ப் பாய்ந்து தீக்ஷ்ணமான கத்தியால் வஜ்ரதம்ஷ்ட்ரனுடைய தலையை வெட்டித் தள்ளினான். வஜ்ரதம்ஷ்ட்ரனுடைய தலை, கோபத்தால் சுழலும் நேத்திரங்களுடனும் துடிக்கும் மீசையுடனும் வெகு தூரத்தில் விழுந்தது. அதைக் கண்டு ராக்ஷஸர்கள் பயந்து ஒன்றும் தோன்றாமல் லங்கையை நோக்கி ஓடினார்கள். வாடின முகங்களுடன் வெட்கத்தால் தலை குனிந்து தீனமாய் ஓடும் ராக்ஷஸர்களை வானரர்கள் துரத்தியடித்துக் கொன்றார்கள். இப்படித் தன் பாட்டனை இந்திரனுக்கு ஸமமான பராக்கிரமமுள்ள வாலிபுத்ரன் வானர ஸைன்யங்கள் பார்த்துக் கொண்டிருக்க வஜ்ரதம்ஷ்ட்ரனுடன் கோர

யுத்தம் செய்து, அவனைக் கொன்று பரம ஸந்தோஷத்தை அடைந்தான். பிறகு ஆயிரம் கண்களையுடைய தேவராஜன் தைத்யர்களை ஜயித்தவுடன் தேவர்களால் கொண்டாடப்படுவதுபோல், ஸகல வானரர்களும் அங்கதனைச் சூழ்ந்து, உபசரித்துப் புகழ்ந்தார்கள்.

(த்ருதீயையில் வஜ்ரதம்ஷ்ட்ரனுடைய வதம்)

நிஹத்ய தம் வஜ்ரத$^{4}$ர ப்ரபா$^{4}$வ:
ஸ வாலிஸூநு: கபிஸைந்ய மத்$^{4}$யே |
ஜக$^{3}$ாம ஹர்ஷம் மஹிதோ மஹாப$^{3}$ல :
ஸஹஸ்ரநேத்ரஸ் த்ரித$^{3}$ைரிவாவ்ருத: ‖ (37)

## ஸர்க்கம் 55

# அகம்பனனுடைய யுத்தம்

வஜ்ரத$^{3}$ம்ஷ்ட்ரம் ஹதம் ஶ்ருத்வா வாலிபுத்ரேண ராவண: |
ப$^{3}$லாத்$^{4}$யக்ஷமுவாசேத$^{3}$ம் க்ருதாஞ்ஜலிமுபஸ்தி$^{2}$தம் ‖ (1)

அங்கதனால் வஜ்ரதம்ஷ்ட்ரன் கொல்லப்பட்டானென்று கேள்விப்பட்டு, ராவணன் ஸமீபத்தில் கைகூப்பி நின்றுகொண்டிருந்த பிரஹஸ்தனை நோக்கி, "பலவகை யுத்தங்களிலும் நிபுணனை அகம்பனன் பயங்கரமான பராக்கிரமமுள்ள ராக்ஷஸ வீரர்களுடன் யுத்தத்திற்குப் புறப்படட்டும். அவன் சத்ருஸைன்யங்களைக் கதறவடித்து நமது ஸைன்யத்தை யாதொரு அபாயமுமில்லாமல் காப்பாற்றுவான். விசேஷப் பிரஸித்தி பெற்ற ஸேனாநாயகன்; எப்பொழுதும் என் க்ஷேமத்தையே கோருகிறவன்; எப்பொழுதும் யுத்தம் செய்வதில் பிரியமுள்ளவன். ராமலக்ஷ்மணர்களையும் ஸுக்ரீவனையும் ஜயித்து மற்ற கோரமான வானரர்களை நாசம் செய்வான்" என்று ஆக்ஞாபித்தான். பிரஹஸ்தனும் தசமுகனுடைய உத்தரவுப்படி அதிசீக்கிரத்தில் ஸைன்யத்தை ஸித்தம் செய்ய, பயங்கரமான கண்களையும் முகங்களையுமுடையவர்களாய், ஸகல ஆயுதங்களையும் தரித்த ராக்ஷஸ சிரேஷ்டர்கள் யுத்தத்திற்குப் புறப்பட்டார்கள். மேகத்தின் நிறத்தையும் காந்தியையுமுடையவனாய், மேகத்தைப்போன்ற குரலுடன், பயங்கரமான ராக்ஷஸர்களால் சூழப்பட்டு விலையற்ற ஆபரணங்களால் அலங்கரிக்கப்பட்டு, ஒரு பெரிய ரதத்தின் மேலேறி அகம்பனன் யுத்தத்திற்குப் புறப்பட்டான். பெரிய யுத்தங்களில் அவனை ஒருவரும் அசைக்க முடியாததால் அகம்பனன் (அசைக்கமுடியாதவன்) என்ற பெயர் பெற்றான். கிரஹங்களுக்குள் ஆதித்தியனைப்போல் ராக்ஷஸர்களுக்குள் தேஜஸால் விளங்குகிறவன். அவன் வெகு பரபரப்பாய் யுத்தத்திற்கு வந்து கொண்டிருக்கையில் ரதத்தில் பூட்டியிருந்த உத்தம ஜாதிக் குதிரைகள் திடீரென்று முகம்வாடிச் சோர்ந்தன. அகம்பனனுடைய இடது கண் துடித்தது; முகத்தின் நிறம் மாறிற்று. குரல் தழ



தழுத்தது. முதலில் ஆகாசம் நிர்மலமாயிருந்தாலும் அப்பொழுது மேகங்களால் மூடப்பட்டு, மழையும் மின்னலும் இடியும் பயங்கரமான புயல் காற்றும் உண்டாயின. பக்ஷிகளும் மிருகங்களும் பயங்கரமாய்க் கத்தின. ஸிம்ஹத்தைப்போல் பருத்த தோள்களையும், புலியைப் போன்ற நடையையுமுடைய அகம்பனன் அந்த அபசகுனங்களைக் கொஞ்சம்கூடக் கவனிக்காமல் யுத்த பூமிக்கு வந்தான்.

அப்பொழுது ராக்ஷஸர்கள் ஸந்தோஷத்தால் ஸிம்ஹநாதம் செய்ய, ஸமுத்ரம் கலங்கிற்று. அதைக்கேட்டு வானரஸைன்யம் மிரண்டு, விருக்ஷங்களையும், மலைகளையும், பாறைகளையும் சேகரித்து சத்துருக்களை எதிர்பார்த்துக் கொண்டிருந்தது. பிறகு ராமனுக்காகவும் ராவணனுக்காகவும் உயிரை லக்ஷ்யம் செய்யாமல் வானரர்களும் ராக்ஷஸர்களும் கோரயுத்தம் செய்ய ஆரம்பித்தார்கள். இருதிறத்தார்களும் மஹாபலவான்கள்; சூரர்கள்; பர்வதத்தைப் போன்ற தேகமுள்ளவர்கள்; ஒருவரையொருவர் ஜயிக்க நிச்சயித்தவர்கள். கோபத்தால் ஒருவரையொருவர் எதிர்த்துக் கர்ஜிப்பதாலும் ஸிம்ஹநாதம் செய்வதாலும் உண்டான சப்தம் வெகு தூரம் பரவிற்று. பயங்கரமான செந்தூள் கிளம்பி வானரர்களையும் ராக்ஷஸர்களையும் ஸகல திக்குகளையும் மறைத்தது. த்வஜங்கள், கொடிகள், கவசங்கள், குதிரைகள், ஆயுதங்கள், ரதங்கள், யாதொன்றும் தெரியவில்லை. ஒருவர்மேலொருவர் பாய்ந்து கர்ஜிக்கும் கோரமான சப்தம் மாத்திரம் கேட்கப்பட்டதேயன்றி ரூபங்கள் காணப்படவில்லை. அந்த இருட்டில் ஒன்றும் தோன்றாமல் இரு கக்ஷிக்காரர்களும் கோபத்தால் தங்களைச் சேர்ந்தவர்களையே அடித்துக் கொன்றார்கள். சத்துரு மித்திரனென்ற பேதமில்லாமல் சண்டையிட்டுக்கொண்டு ரத்தவெள்ளம் பெருகப் பூமியெங்கும் சேறாயிற்று. அதனால் அந்தப் புழுதி யடங்கி, யுத்தபூமியெங்கும் பிணக்காடாய்க் காணப்பட்டது. மரங்கள், சக்திகள், பாறைகள், ஈட்டிகள் முதலிய ஆயுதங்களாலும், கைகளாலும் முஷ்டிகளாலும் வானரர்களும் ராக்ஷஸர்களும் தோன்றினபடியெல்லாம் யுத்தம் செய்தார்கள். வானரர்கள் மரங்களாலும், பாறைகளாலும் ராக்ஷஸர்களை அடித்தார்கள். அவர்கள் சூலம், கத்தி, ஈட்டி முதலிய ஆயுதங்களால் வானரர்களை அடித்தார்கள். அகம்பனன் கோபம்கொண்டு ராக்ஷஸர்களை உத்ஸாகப்படுத்திப் பயங்கரமான காரியங்களைச் செய்யும்படி தூண்டிவிட்டான். அப்பொழுது குமுதன், நளன், மைந்தன், த்விவிதனென்ற வானரச்ரேஷ்டர்கள் அதிவேகமாய் அங்கே வந்து, மலைபோன்ற விருக்ஷங்களால் ராக்ஷஸர்களை விளையாட்டாய்க் கொன்று, கூட்டம் கூட்டமாய் மடித்தார்கள்.

கத$^{3}$நம் ஸுமஹச்சக்ரு: லீலயா ஹரிபுங்க$^{3}$வா: |
மமந்து$^{2}$ ராக்ஷஸாந் ஸர்வே வாநரா க$^{3}$ணஶோ ப்$^{4}$ருஶம் (33)

## ஸர்க்கம் 56

# அகம்பனனுடைய வதம்

தத்[3] த்[3]ருஷ்ட்வா ஸுமஹத் கர்ம க்ருதம் வாநரஸத்தமை: |
க்ரோத[4]மாஹாரயாமாஸ யுதி[4] திவ்ர மகம்பந: ‖ (1)

அதைக்கண்டு அகம்பனனென்ற சுத்தவீரன் அடங்காக் கோபம் கொண்டு மெய்மறந்து, வில்லைச்சுழற்றி ஸாரதியைப் பார்த்து, "அதோ அந்த வானரர்கள் நமது ராக்ஷஸர்களைக் கணக்கில்லாமல் கொல்லுகிறார்கள். என் ரதத்தை அங்கே கொண்டு போ. மஹா பலசாலிகளாய்ப் பயங்கரமான தேகங்களுடன் அநேக வானரர்கள் மரங்களையும் மலைகளையும் எடுத்துக்கொண்டு எனக்கெதிரே நிற்கிறார்கள். இவ்வளவு உத்ஸாஹமாய் யுத்தம் செய்பவர்களை நான் கொல்லாமலிருக்கக்கூடாது. அலக்ஷ்யம் செய்தால் ஸகல ராக்ஷஸர்களையும் யமலோகத்திற்கு அனுப்புவார்கள்" என்றான். பிறகு வானரர்களின் மேல் ரதத்தைச் செலுத்தி, க்ரூரமான பாணங்களால் அவர்களை ஹிம்ஸித்தான். சரங்களால் தேகமெங்கும் துளைக்கப்பட்டு, அந்த உபத்திரவத்தை சகிக்க முடியாமல் வானரர்கள் மூலைக்குமூலை ஓட ஆரம்பித்தார்கள். அவனுக்கெதிரில் நிற்கவே முடியவில்லை. யுத்தம் செய்பவர்களைப் பற்றிச் சொல்லவும் வேண்டுமா?

இப்படி வானர ஸைன்யம் யமன் கையில் அகப்பட்டது போல் அகம்பனனுடைய பாணங்களுக்கு இரையாவதைக்கண்டு, ஹனுமான் வானரவீரர்களுக்கு ஒத்தாசை செய்ய வந்தார். அவர்களும் ஸந்தோஷமடைந்து மாருதியைச் சூழ்ந்துகொண்டார்கள். ஸ்வபாவத்திலேயே பலசாலிகள்; பலவானான ஆஞ்சநேயருடன் சேர்ந்துவிட்டார்கள். மஹாபர்வதத்தைப்போல் தேகத்தையும் நிறத்தையுமுடைய ஆஞ்சநேயரைக் கண்டு அகம்பனன் வெகு ரோஷத்துடன், மஹேந்திரபர்வதத்தில் நீர்த்தாரைகள் விழுவது போல் அவரைப் பாணவர்ஷங்களால் துளைத்தான். அதைக் கொஞ்சம் கூட லக்ஷ்யம் செய்யாமல் அவர் அவனைக் கொல்லும் உபாயத்தை ஆலோசித்து, திடீரென்று அந்த ராக்ஷஸன் மேல் பாய்ந்தார். அந்த அதிர்ச்சியால் பூமி நடுங்கிற்று. தேஜஸால் ஜ்வலித்துக்கொண்டு பயங்கரமாய்ச் சப்தம் செய்யும் மாருதியின் ரூபம் ஸகல கிரணங்களோடும் விளங்கும் ஸூரியனைப்போல் பார்க்க முடியவில்லை. தன்னிடத்தில் ஆயுதமில்லையென்றறிந்து கோபத்தால் ஒரு பர்வதத்தை அதிவேகமாய் பிடுங்கி, அதை ஒரு கையால் கரகரவென்று சுழற்றி அகம்பனன்மேல் விட்டெறிந்து கர்ஜித்தார். முன்பு இந்திரன் வஜ்ராயுதத்துடன் நமுசியென்ற அஸுரனை எதிர்த்ததுபோல், ஆஞ்ஜநேயர் தன்னை எதிர்த்ததைக் கண்டு, அந்த ராக்ஷஸவீரன் தனக்கு வெகுதூரத்தில் அந்தப்பர்வதம்



வரும்பொழுதே அதை அநேக அர்த்தசந்திரபாணங்களால் பொடியாக்கினான். அதைக்கண்டு ஹநூமார் கோப பரவசராய் மலை போல் வளர்ந்திருந்த ஒரு மரத்தைப் பிடுங்கிக்கொண்டு அதைக் கிளைகளுடன் கிறுகிறென்று சுழற்றி இடிபோல் சிரித்தார். அவர் ஓடிவரும் பொழுது துடைகளின் வேகத்தால் மரங்கள் முறிந்தன. பாதங்கள் பூமியைப் பிளந்தன. அந்த விருக்ஷத்தால் யானைகளையும் யானைவீரர்களையும், ரதங்களையும், ரதவீரர்களையும், காலாட்களையும் அடித்துக்கொன்றார். ஸகலப் பிராணிகளையும் நாசம் செய்யும் யமனைப்போல் கோபம்கொண்டு அந்த யுத்தபூமியில் ஸஞ்சரிக்கும் ஆஞ்ஜனேயரைக்கண்டு ராக்ஷஸர்கள் பயந்தோடினார்கள். அப்பொழுது அகம்பனன் கோபத்தால் கர்ஜித்து (பதினான்கு) தீக்ஷ்ண மான பாணங்களால் மாருதியைப் பிளந்தான். அதனால் ஆஞ்ஜனேயர் விருக்ஷங்களால் நிறைந்த மலைவரையைப்போலவும், புஷ்பித்த அசோக மரத்தைப் போலவும், புகையற்ற நெருப்பைப் போலவும் விளங்கினார். பெரிய தேகத்தையும் எல்லையற்ற வீரியத்தையும் புத்தியையுமுடைய வாயுபுத்திரன் மற்றொரு மரத்தை பிடுங்கிக்கொண்டு அதிவேகமாய் அகம்பனனுடைய தலையில் அடித்தார். மாருதி கோபம்கொண்டு அடித்த அடியைத் தாங்க முடியாமல் அகம்பனன் பூமியில் விழுந்து உயிரைவிட்டான்.

அதைக்கண்டு ஸகல ராக்ஷஸர்களும் பூகம்பத்தால் மரங்கள் நடுங்குவதுபோல் நடுங்கி ஆயுதங்களை விட்டெறிந்து லங்கையை நோக்கி ஓடினார்கள். வானரர்களும் அவர்களைத் துரத்திக் கொன்றார்கள். தலைவிரிகோலமாய் மானமழிந்து, தோல்வியடைந்து, புத்தி சிதறி, வியர்வை தேகமெங்கும் சொரிய, பெருமூச்சுவிட்டுக்கொண்டு ஓடினார்கள். ஒருவரையொருவர் கீழே தள்ளி மிதித்துக்கொண்டு பட்டணத்தில் புகுந்தார்கள். பயத்தால் அடிக்கடி திரும்பிப்பார்த்துக்கொண்டு லங்கையில் ஓடிஒளிந்தார்கள். பிறகு ஸகல வானரர்களும் ஆஞ்ஜனேயரைச் சூழ்ந்து கொண்டாடி உபசரித்தார்கள். அவரும் அவர்களை மரியாதை செய்தார். வானரர்கள் ஜயத்தால் மெய்மறந்து, தங்களால் கூடிய வரையில் கூச்சலிட்டு, உயிருடனிருக்கும் ராக்ஷஸர்களையும் இழுத்து ஹிம்ஸித்தார்கள். இப்படி ஹனுமான் அகம்பனனையும் ராக்ஷஸசிரேஷ்டர்களையும் கொன்று, பூர்வகாலத்தில் மஹாவிஷ்ணு பலியென்ற அஸுரனை யுத்தத்தில் ஜயித்ததுபோல் விசேஷகீர்த்தியடைந்தார். தேவகணங்களும் ராமலக்ஷ்மணர்களும் விபீஷணனும் ஸுக்ரீவன் முதலிய வானரச்ரேஷ்டர்களும் வாயுபுத்திரனைக் கொண்டாடினார்கள்.

அபூஜயந் தே[4]வக[3]ணாஸ் தத[3]ா கபிம்
ஸ்வயம் ச ராமோதிப[3]லஶ்ச லக்ஷ்மண: |
ததை[2]வ ஸுக்[3]ரீவமுக[2]ா: ப்லவங்க[3]மா:
விபீ[4]ஷணஶ்சைவ மஹாப[3]லஸ் தத[3]ா ‖ (39)

## ஸர்க்கம் 57

# பிரஹஸ்தன்யுத்தத்திற்குப் புறப்பட்டது

அகம்பநவத⁴ம் ஶ்ருத்வா க்ருத்³தே⁴ா வை ராக்ஷஸேஶ்வர: |
கிஞ்சித்³ தீ³நமுக²ஶ்ஶாத³ ஸசிவாம்ஸ்தா நுதை³க்ஷத || (1)

**அ**கம்பனன் கொல்லப்பட்டதைக் கேட்டு ராவணன் கோபம் கொண்டு சற்று முகம் வாடி மந்திரிகளை உற்றுப்பார்த்தான். பிறகு கொஞ்சநேரம் தனக்குள் யோசித்து மந்திரிகளுடனும் நன்றாய் ஆலோசித்து அன்று முற்பகலில் நகரத்திலுள்ள ஸேனைகளின் அணி வகுப்பைப் பரிசோதித்துப் பார்க்க உத்தேசித்தான். நகரமெங்கும் கொடிகளாலும், த்வஜங்களாலும், மாலைகளாலும் அலங்கரிக்கப்பட்டிருந்தது. ராக்ஷஸர்கள் கூட்டம் கூட்டமாய் அதைக் காத்துக் கொண்டிருந்தார்கள். ஸேனை அங்கங்கே அணிவகுக்கப் பட்டிருந்தது. சுற்றிலும் வானரர்கள் லங்கை முற்றுகையிடப் பட்டதைப் பார்த்து ராவணன் தன் ஸேனாதிபதியான பிரஹஸ்தனை நோக்கி, "நாம் யுத்தம் செய்து சத்துருக்களை அழித்தாலொழிய இந்த முற்றுகைய்யை விலக்கமுடியாது. நானாவது கும்பகர்ணனாவது நீயாவது இந்திரஜித்தாவது நிகும்பனாவது இந்தப் பொறுப்பை ஏற்றுக்கொள்ளவேண்டும். ஆகையால் உனக்கு வேண்டிய ஸைன்யத்தை ஸித்தம் செய்துகொண்டு, வானர வீரர்களிருக்குமிடத்திற்குப்போய் அவர்களை ஜயித்து வா. சபல ஸ்வபாவமுள்ள வானர ஸைன்யம் நீ புறப்பட்டு வருவதைக் கண்டவுடனே ஓடிப்போகும். ராக்ஷஸ வீரர்களுடைய கர்ஜனையைக் கேட்டால் அங்கே நிற்குமா? வானரர்கள் ஸ்திரபுத்தியில்லாதவர்கள்; யுத்தப் பயிற்சியில்லாதவர்கள்; ஓரிடத்தில் நிற்கமுடியாதவர்கள். ஆகையால் ஸிம்ஹகர்ஜனையைக் கேட்ட யானைகளைப்போல் பயத்தால் உயிரை விடுவார்கள். ஸைன்யம் மூலைக்குமூலை ஓடிவிட்டால் ராமலக்ஷ்மணர்கள் புத்தி சிதறி யாதொரு பற்றுமில்லாமல் உன் கையில் அகப்படுவார்கள். யுத்தம் செய்தால் மரணமடைவோமென்பது நிச்சயமல்ல. அப்படி அடைந்தாலும் கீர்த்தியையும் ஸ்வர்க்கத்தையும் ஸம்பாதிப்போம். யுத்தம் செய்யாமலிருந்தால் சத்துருக்களால் மரணமடைவது நிச்சயம். அவ்வித மரணத்தால் அபகீர்த்தியும் நரகமுமே நேரும். இதற்கு அனுகூலமாகவாவது பிரதிகூலமாகவாவது உனக்குத் தோன்றுகிறதைச் சொல்" என்றான்.

அதைக்கேட்ட பிரஹஸ்தன், தேவேந்திரனுக்கு மந்திரியான பிருஹஸ்பதியைப்போல், "மஹாராஜ! விபீஷணன் முதலிய மந்திரிகளும் நானும் முன்பு ஆலோசித்து நிச்சயித்த விஷயமே இப்பொழுது நேர்ந்திருக்கிறது. ஆனால் எங்களுக்குள் ஒற்றுமையில்லாமல் வெவ்வேறு அபிப்பிராயம்கொண்டு கலஹம் செய்ததால் அதன்படி நடக்கவில்லை. ஸீதையைத் திருப்பிக்கொடுத்தால் நமக்கு க்ஷேமமும் கீர்த்தியும் உண்டென்றும் கொடுக்காவிட்டால் ஸர்வநாசமென்றும் அப்பொழுதே நிச்சயித்த விஷயமல்லவா? தங்களிடத்தில் எண்ணமுடியாத வெகுமானங்களையும் மரியாதைகளையும் உபகாரங்களையும் பெற்றிருக்கிறேன். பிரியமான வார்த்தைகளாலும் ஸ்தோத்திரத்தாலும் என்னை மேன்மைப் படுத்தியிருக்கிறீர்கள். எந்த ஸமயத்திலும் தங்களுடைய இஷ்டத்தைப் பூர்த்தி செய்யக் கடமைப்பட்டிருக்கிறேன். அதைத் தவிர எனக்கு வேறு ஸந்தோஷமில்லை. என் உயிரையும் மனைவி மக்களையும் ஐசுவரியத்தையும் தங்களுடைய விஷயத்தில் ஒரு துரும்பாய் நினைத்திருக்கிறேன். யுத்தமென்ற அக்னியில் என் பிராணனை இன்று ஆஹுதி செய்கிறேன் பாருங்கள்" என்றான்.

பிறகு ஸமீபத்திலிருந்த ஸேனைத்தலைவர்களை நோக்கி, "அதிசீக்கிரத்தில் பெரிய ராக்ஷஸ ஸைன்யத்தை ஸித்தம் செய்து கொண்டு வாருங்கள். இந்திரனுடைய இடியைப்போல் வேகமாய் விழும் என் பாணங்களால் வானரக் கூட்டங்களைக் கழுகு முதலிய பக்ஷிகளுக்குப் பூர்ணமான ஆகாரம் போடுகிறேன்" என்றான். அப்படியே ராக்ஷஸ ஸைன்யம் தயாராயிற்று. லங்கையெங்கும் அவர்களுடைய ஆயுத காந்தியாலும் கோஷங்களாலும் மதயானைகள் நிறைந்த காட்டைப்போல் விளங்கிற்று. அக்னியில் சாந்தி ஹோமம் முதலிய வைதிகக் கிரியைகளை நடத்துகிறவர்களும், பிராம்மணர்களைக் கந்த புஷ்பாதிகளால் பூஜித்து நமஸ்கரிக்கிறவர்களும் எங்கும் காணப்பட்டார்கள். நெய் புஷ்பங்கள் பரிமளத் திரவியங்கள் முதலியவைகளின் வாஸனையை கிரஹித்துக்கொண்டு காற்று ஸுகமாய் வீசிற்று. ராக்ஷஸர்கள் யுத்தம் செய்ய ஆவல்கொண்டு, தங்களுக்கு ஜயமுண்டாவதற்காக பிரபலமான மந்திரங்களால் மஹிமை பெற்ற ஹாரங்களைத் தரித்தார்கள். உத்தமமான கவசங்களையும் வில்லுகளையும் அணிந்து, அதிசீக்கிரமாய் வந்து, ராவணனை நமஸ்கரித்து, பிரஹஸ்தனைச் சூழ்ந்து நின்றார்கள்.

அவனும் தசக்ரீவனிடத்தில் உத்திரவு பெற்றுக்கொண்டு, பயங்கரமான பேரிகையை அடிக்கும்படிச் செய்து, திவ்யமான ரதத்தில் ஏறினான். அது ஸகல ஆயுதங்களாலும் நிறைந்திருந்தது. வாயு வேகமுள்ள குதிரைகள் பூட்டப்பட்டிருந்தன. வெகு ஸாமர்த்தியமுள்ள ஸாரதி அவைகளை நடத்தி வந்தான். ஸூரியனைப்போல் தேஜஸுடன், சந்திரனைப்போல் எல்லோருடைய மனத்தையும் கவர்ந்து, நேர்த்தியான சக்கரம் ஏர்க்கால் குடம் அரம் முதலியவைகளுடன், நன்றாய் ரக்ஷிக்கப்பட்டு, தங்க ஜன்னல்கள் விளங்க, காந்தியால் சிரிப்பது போலிருந்தது. இவ்விதமான ரதத்திலேறி, யுத்தம் செய்வதைப்பற்றி ராவணனுடைய உத்திரவைப் பெற்றுக் கொண்டு, ஸமுத்திரத்தைப் போன்ற ராக்ஷஸ ஸைன்யத்தால் சூழப்

பட்டு லங்கையிலிருந்து புறப்பட்டான். அப்பொழுது துந்துபி முதலிய வாத்யங்களும் சங்க நாதமும் மேககர்ஜனையைப்போல் ஸமுத்திரமெங்கும் பரவிற்று. பிரஹஸ்தனுக்கு முன் செல்லும் ராக்ஷஸர்கள் மலைபோன்ற சரீரங்களுடனும் பயங்கரமான ரூபங்களுடனும் கோரமான வீரத்வனிகளுடனும் சென்றார்கள். நராந்தகன், கும்பஹனு, மஹாநாதன், ஸமுன்னதனென்ற பிரஹஸ்தனுடைய மந்திரிகள் அவனைச் சூழ்ந்து வந்தார்கள். மதயானைகளைப் போன்ற ராக்ஷஸர்களால் சூழப்பட்டு, பயங்கரமான ஜல ஜந்துக்களால் சூழப்பட்ட ஸமுத்திரராஜனைப் போல், கிழக்குக் கோட்டை வாசலிலிருந்து பிரஹஸ்தன் வெளியில் வந்தான். பிரளய காலத்தில் ஸகலப் பிராணிகளையும் நாசம் செய்யும் யமனைப்போல், ராக்ஷஸ ஸேனாபதி வெளிக்கிளம்பும் கோஷத்தாலும் ராக்ஷஸர்களுடைய கர்ஜனைகளாலும் லங்கையிலுள்ள ஸகலப் பிராணிகளும் நடுங்கி விகாரமாய்க் கூச்சலிட்டன. நிர்மலமான ஆகாசத்தில் பக்ஷிகள் கூட்டம் கூட்டமாய் ரதத்தைச் சுற்றி அபஸவ்யமாய்ப் பறந்துகொண்டு, இன்று நமக்கு மாம்ஸமும் ரத்தமும் வயிறு நிறையக் கிடைக்குமென்று ஸந்தோஷித்தன. கோரமான நரிகள் நெருப்பு ஜ்வாலைகளைக் கக்கிக்கொண்டு ஊளையிட்டன. எரி கொள்ளிகள் விழுந்தன. கடுங்காற்றடித்தது. கிரஹங்கள் ஒன்றிற்கொன்று யுத்தம் செய்துகொண்டு ஒளி மழுங்கின. மேகங்கள் பயங்கரமான சப்தங்களுடன் பிரஹஸ்தனுடைய ரதத்தின் மேலும் முன் சென்ற ராக்ஷஸர்களின் மேலும் ரத்த மழை பொழிந்தன. த்வஜத்தின் நுனியில் ஒரு பருந்து தெற்கு முகமாய் உட்கார்ந்து, இரண்டு இறக்கைகளையும் மூக்கால் சொறிந்து கொண்டிருந்தது. அதைக் கண்டு பிரஹஸ்தனுடைய முகம் காந்தி குறைந்ததாயிற்று. உத்தமமான ஸூத குலத்தில் பிறந்து ரதத்தை நடத்துவதில் விசேஷ பெருமையுள்ள ஸாரதியின் கையிலிருந்து குதிரைச் சவுக்கு அகஸ்மாத்தாய்க் கீழே விழுந்தது. புறப்படும்பொழுது பிரஹஸ்தனுக்கிருந்த நிகரற்ற தேஜஸ்ஸும் காந்தியும் உத்ஸாஹமும் ஒரு முகூர்த்தத்தில் அழிந்தன. குதிரைகள் மேடுபள்ளமில்லாத இடத்தில் இடறி விழுந்தன. பலத்திலும் வீரியத்திலும் பெயர் பெற்ற பிரஹஸ்தன் யுத்த பூமியில் வருவதைக் கண்டு வானர ஸைன்யம் மலைகளையும் விருக்ஷங்களையும் பாறைகளையும் எடுத்துக்கொண்டு கோரமான வீரத்வனிகளுடன் எதிர்த்தார்கள். இரு திறத்தாரும் யுத்தாவேசத்தால் மெய்மறந்து, திக்குகள் நடுங்கும் படிக் கூச்சலிட்டார்கள். மஹாவேகமுள்ளவர்கள்; யுத்தத்தில் ஒப்பற்ற திறமையுள்ளவர்கள்; ஒருவரையொருவர் கொல்ல நிச்சயித்தவர்கள். ஒருவரையொருவர் யுத்தத்திற்கழைத்துத் தோள் தட்டும் ஓசை எங்கும் நிறைந்தது. இப்படித் துஷ்ட புத்தியுள்ள பிரஹஸ்தன் வானர ஸைன்யத்தை நாசம் செய்து ராமலக்ஷ்மணர்களை ஜயிக்க நிச்சயம்கொண்டு, எரியும் நெருப்பில் விளக்குப் பூச்சி வந்து விழுவதுபோல், வரவர விருத்தியாகும் வேகத்தையுடைய வானர ஸைன்யத்தில் பிரவேசித்தான்.



தத: ப்ரஹஸ்த: கபிராஜவாஹிநீம்
அபி⁴ப்ரதஸ்தே² விஜயாய துர்மதி: ।
விவ்ருத்³த⁴ வேகா³ம் ச விவேஶ தாம் சமூம்
யதா² முமூர்ஷு: ஶலபோ⁴ விபா⁴வஸும் ॥ (48)

## ஸர்க்கம் 58

## பிரஹஸ்தனுடைய வதம்

தத: ப்ரஹஸ்தம் நிர்யாந்தம் த்³ருஷ்ட்வா பீ⁴மபராக்ரமம் ।
உவாச ஸஸ்மிதம் ராமோ விபீ⁴ஷண மரிந்த³ம: ॥ (1)

**ப**யங்கரமான பராக்கிரமமுள்ள பிரஹஸ்தன் யுத்தத்திற்கு வருவதைக் கண்டு, ராமன் புன்சிரிப்புடன் விபீஷணனை நோக்கி, "அதோ ஒரு ராக்ஷஸன் பெரிய தேகத்துடன் அளவற்ற ஸைன்யத்தால் சூழப்பட்டு வருகிறான். அந்த வீரன் யார்?" என்றார். (பலவானான சத்துருவைப் பார்த்தால் ஸந்தோஷமும் புன்சிரிப்பு முண்டாயிற்று. பிரஹஸ்தன் கிழக்குக் கோட்டை வாசலிலிருந்து வந்தான்; வடக்கு வாசலிலிருந்த ராமனுக்கு வெகு தொலைவில் நடந்த விஷயம் எப்படித் தெரியுமென்றால், தனக்கு நம்பிக்கையுள்ளவர்கள் சொல்லும் வார்த்தையைக் கொண்டு பிரத்யக்ஷமாய்ப் பார்ப்பதுபோல தெரிந்து கொண்டார்.) அதற்கு விபீஷணன் "ஸ்வாமி! இவன் ராவணனுடைய ஸேனாபதி; இவனுக்கு பிரஹஸ்தனென்று பெயர். லங்கையிலுள்ள ஸைன்யத்தில் மூன்றில் ஒரு பாகத்திற்குத் தலைவன்; அஸ்த்ர வித்யையில் நிபுணன்; யுத்தத்தில் பின்வாங்காதவன்; அநேக யுத்தங்களில் பிரஸித்தி பெற்றவன்" என்றான்.

பிறகு, சத்துருக்கள் கண்டு நடுங்கும்படியான தேகத்தையும் ரூபத்தையும் பாராக்கிரமத்தையுமுடையவனாய், கோடையிடிபோல் கர்ஜித்துக்கொண்டு, மை மலைபோன்ற ராக்ஷஸர்கள் சூழ, யுத்தத்திற்கு வரும் பிரஹஸ்தனைக் கண்டு பலசாலிகளான வானரர்கள் ரோஷத்தால் கர்ஜித்தார்கள். காந்தியால் ஜ்வலிக்கும் கத்தி, சூலம், ஈட்டி, உலக்கை, வில் முதலிய ஆயுதங்களை எடுத்துக் கொண்டு, ராக்ஷஸர்கள் வானரர்களை ஜயிக்க விரும்பி ஓடிவந்தார்கள். வானர சிரேஷ்டர்கள் புஷ்பித்த விருக்ஷங்களையும் நீண்டு அகன்ற பாறைகளையும் தூக்கிக்கொண்டு ராக்ஷஸர்கள்மேல் பாய்ந்தார்கள். இரு கக்ஷிக்காரர்களும் கல்மாரி சரமாரி பொழிந்து கொண்டு கைகலந்து கோர யுத்தம் செய்ய ஆரம்பித்தார்கள். கணக்கில்லாத வானர வீரர்கள் ராக்ஷஸர்களாலும் எண்ணிறந்த ராக்ஷஸ வீரர்கள் வானரர்களாலும் அந்த யுத்தத்தில் மடிந்

தார்கள். சிலர் சூலங்களால் குத்தப்பட்டார்கள்; சிலர் சங்கரங்களால் அறுபட்டார்கள்; சிலர் இரும்புக் கட்டுத் தடிகளால் அடிக்கப்பட்டார்கள்; சிலர் கோடாலிகளால் பிளக்கப்பட்டார்கள்; சிலர் பிணமாய்க் கீழே விழுந்தார்கள்; சிலர் ஹ்ருதயம் பிளந்திறந்தார்கள்; சிலர் சரங்களென்ற கயிறுகளால் கோர்க்கப்பட்டு இறந்தார்கள்; சிலர் கத்திகளால் இரண்டாய் வெட்டப்பட்டுப் பூமியில் புரண்டு இறந்தார்கள்; சிலர் சூலங்களால் விலாப்பக்கங்கள் பிளக்கப்பட்டு இறந்தார்கள். வானரர்களும் கோபம் கொண்டு, மரங்களாலும் பர்வத சிகரங்களாலும் ராக்ஷஸக் கூட்டங்களைத் தரையில் தேய்த்தார்கள்; வஜ்ரங்களைப்போன்ற முஷ்டிகளாலும் உள்ளங்கைகளாலும் அறையப்பட்டுப் பற்கள் உதிர்ந்து, கண்கள் தெறித்து ராக்ஷஸர்கள் வாயால் ரத்தத்தைக் கக்கினார்கள். உபத்திரவம் தாங்காமல் கதறுகிறவர்களும் ஸந்தோஷத்தால் ஸிம்ஹநாதம் செய்கிறவர்களும் எங்கும் செவிடுபடும்படி கூச்சலிட்டார்கள். இருதிறத்து வீரர்களும் தங்களுடைய ஸாமர்த்தியத்தைக் காட்ட ஆரம்பித்தார்கள். கண்களை உருட்டி விழித்துக்கொண்டு கொஞ்சம்கூடப் பயமில்லாமல் குரூர ஸ்வபாவமுள்ளவர்களாய் வீர கிருத்யங்களைச் செய்தார்கள்.

நராந்தகன் கும்பஹனு மஹாநாதன் ஸமுன்னதனென்ற பிரஹஸ்தனுடைய மந்திரிகள் நான்கு புறங்களிலும் பாய்ந்து வானரர்களைக் கொன்றார்கள். அதைக் கண்டு த்விவிதன் ஒரு பர்வத சிகரத்தால் நராந்தகனையும், துர்முகன் ஒரு பெரிய விருக்ஷத்தால் ஸமுன்னதனையும், ஜாம்பவான் ஒரு பெரிய பாறையால் மஹாநாதனையும், தாரன் ஒரு விருக்ஷத்தால் கும்பஹனுவையும் அடித்துக் கொன்றார்கள். அதைக் கண்டு பிரஹஸ்தன் பொறுக்காமல் வானரர்களைப் பாணங்களால் கூட்டம் கூட்டமாய்க் கொன்றான். இரண்டு ஸைன்யங்களும் ஒன்றோடொன்று கலந்து அங்குமிங்கும் அலைவதால் பெரும் சுழலைப்போல் தோன்றிற்று. பெருங்காற்றால் கலக்கப்பட்ட ஸமுத்திரத்தைப்போல் சப்தமுண்டாயிற்று. பிரஹஸ்தன் கோபம் கொண்டு இடைவிடாமல் சரமாரி பொழிந்து வானரர்களைக் கொன்று தன் யுத்தத் திறமையைக் காட்டினான். அந்த யுத்தகளத்தில் வீழ்ந்திறந்த ராக்ஷஸர்களாலும் வானரர்களாலும் அந்தப் பூமியெங்கும் பர்வதங்களால் மூடப்பட்டதுபோல் பயங்கரமாய்த் தோன்றிற்று. ரத்த வெள்ளத்தால் தரை தெரியாமல் வஸந்த மாதத்தில் பலாச புஷ்பங்களால் மறைக்கப்பட்ட வனத்தைப்போல் காணப்பட்டது. அந்த யுத்த பூமியே ஒரு பெரிய நதி; இரண்டு ஸைன்யங்களிலும் அடிபட்டிறந்த வீரர்களுடைய தேகங்களே இரு கரைகள்; ஒடிந்த ஆயுதங்களே கரையிலுள்ள விருக்ஷங்கள்; ரத்தமே ஜலம்; அங்கே பிராணிகளின் உயிரை வாங்க ஸஞ்சரிக்கும் யமனே அது போய் விழும் ஸமுத்திரம்; ஹ்ருதயத்தின் இரு புறங்களிலுமுள்ள மாம்ஸங்களே சேறு; சரிந்து



கிடக்கும் குடல்களே பாசிகள்; அறுந்து கிடக்கும் தேகங்களும் தலைகளுமே மீன்கள்; அங்கங்களும் அவயவங்களுமே கரையிலுள்ள இளம் புற்கள்; கழுகுகளே அன்னங்கள்; பருந்துகளே ஸாரஸ பக்ஷிகள்; கொழுப்பே நுரை; அடிபட்டுக் கதறுகிறவர்களின் கூச்சலே ஜலம் விழும் ஓசை; பயந்தவர்கள் அதைத் தாண்ட முடியாது. மழை காலம் நீங்கியவுடன் ஹம்ஸங்களாலும் ஸாரஸங்களாலும் விளங்கும் நதியைப்போன்ற இந்த நதியை ராக்ஷஸர்களும் வானரர்களும் தாண்டினார்கள். மதயானைகள் தாமரையோடையில் இறங்கி அதைக் கலக்கி, தாமரைப் பொடிகளால் நிறம் மாறி அக்கரை சேர்வதுபோல், அந்த யுத்த வீரர்களும் ரத்தத்தால் நனைந்து சிவந்த தேகங்களுடன் வெளிப்பட்டார்கள்.

பிரஹஸ்தன் ரதத்திலிருந்து சரமாரிகளால் வானர ஸைன்யங்களை அழிப்பதை ஸேனாபதியான நீலன் கண்டான். ஆகாசத்தில் ஒரு பெருங்காற்று மேகக் கூட்டங்களை அடித்துக்கொண்டு வருவதுபோல், ராக்ஷஸர்களை அடித்துத் துரத்திக்கொண்டு நீலன் தன்னை நோக்கி வருவதைப் பார்த்து, பிரஹஸ்தன் ஸூரியனைப்போல் பிரகாசிக்கும் ரதத்தை அவன் இருக்குமிடத்திற்கு நடத்தினான். வில்லாளிகளுக்குள் சிரேஷ்டனான அந்த ராக்ஷஸன், வில்லை வளைத்து நாணேற்றி டங்காரம் செய்து அநேக பாணங்களால் நீலனைத் துளைத்தான். அவை கோபம் கொண்ட ஸர்ப்பங்களைப்போல் சீறிக்கொண்டு அவனுடைய தேகத்தில் ஊடுருவிப் பூமியில் பாய்ந்தன. நெருப்பு ஜ்வாலைகளைப்போன்ற தீக்ஷ்ணமான பாணங்களால் துளைக்கப்பட்டு, நீலன் ஒரு விருக்ஷத்தைப் பிடுங்கிக்கொண்டு, தன்மேல் பாயும் அந்த ராக்ஷஸ வீரனை ரோஷத்துடன் அடித்தான். பிரஹஸ்தன் கோபத்தால் கர்ஜித்து அந்த வானர வீரன்மேல் சரமாரி பொழிந்தான். அவைகளைத் தடுக்க முடியாமல், நீலன் கண்களை மூடிக்கொண்டு, சரத்காலத்து மழையில் திடீரென்று அகப்பட்ட கொழுத்த காளையைப்போல் அசைவற்று நின்றான். பிறகு ஒரு பெரிய ஆச்சாமரத்தைப் பிடுங்கிக்கொண்டு பிரஹஸ்தனுடைய ரதத்தில் பூட்டியிருக்கும் மனோவேகமுள்ள குதிரைகளை அடித்துக் கொன்று, அவனுடைய வில்லை ஒடித்தெறிந்து கர்ஜித்தான். பிரஹஸ்தன் குதிரைகள் இறந்து வில்லொடிந்து பூமியில் குதித்து, ஒரு இருப்புலக்கையைக் கையில் எடுத்தான். அவர்களிருவரும் ஸேனாபதிகள்; மஹாவேகசாலிகள்; தீராத த்வேஷமுடையவர்கள்; மதம் பெருகும் யானைகளைப்போல் ரத்தத்தால் நனைந்த தேகங்களுடன் ஒருவரையொருவர் கூர்மையான பற்களால் கடித்துக் கிழித்தார்கள். ஸிம்ஹத்தையும் புலியையும்போன்ற பலமுள்ளவர்கள்; அவைகளின் நடையையும் செயலையுமுடையவர்கள்; அதுவரையில் தோல்வியடையாதவர்கள்; வீரர்கள்; யுத்தத்தில் பின்வாங்காதவர்கள்; ஒருவரையொருவர் ஜயித்து அளவற்ற கீர்த்தியை ஸம்பாதிக்க முயன்றவர்கள்; தேவ

ராஜனையும் விருத்ராஸுரனையும் போன்றவர்கள். பிரஹஸ்தன் இருப்புலக்கையால் பூர்ணபலத்துடன் நீலனை நெற்றியில் அடித்தான். நீலன் தேகமெங்கும் ரத்தம் சொரிய ஒரு பெரிய விருக்ஷத்தைப் பிடுங்கி பிரஹஸ்தனை மார்பிலடித்தான். அதை லக்ஷ்யம் செய்யாமல் பிரஹஸ்தன் ஒரு பெரிய இருப்புலக்கையுடன் அந்த வானர வீரன் மேல் பாய்ந்தான். அதைக் கண்டு நீலன் அதிவேகமாய் ஒரு பெரிய பாறையைப்பெயர்த்து பிரஹஸ்தனுடைய தலையில் அடித்தான். அதனால் பிரஹஸ்தன் தலை நொறுங்கி இந்திரியங்கள் சிதறிப் பலமிழந்து உயிரற்றுக் களையற்று வேரறுந்த மரம்போல் பூமியில் விழுந்தான். அவனுடைய தேகத்திலிருந்தும், தலையிலிருந்தும், மலையிலிருந்து நீர்த்தாரைகள் பெருகுவதைப்போல் ரத்த வெள்ளம் பெருகிற்று.

நீலனால் தங்களுடைய ஸேனாபதி மடிந்ததைக் கண்டு அதுவரையில் கலங்காத ராக்ஷஸஸைன்யம் ஸந்தோஷமற்று உத்ஸாஹமிழந்து ஒன்றும் தோன்றாமல் வானரர்களுக்கெதிரில் நிற்க முடியவில்லை. பெரிய அணையில் அடிபட்டுச் சிதறின ஜலத்தைப்போல் மூலைக்குமூலை ஓடினார்கள். லங்கைக்குச் சென்று ராவணனுடைய அரண்மனையில் பிரவேசித்து, சோக ஸமுத்திரத்தில் முழுகி, பிரக்ஞையற்றவர்கள் போல் ஒன்றும் பேசாமல் ஏக்கம் பிடித்திருந்தார்கள். பிறகு மஹாபலவானான நீலன் ராக்ஷஸஸேனாபதியான பிரஹஸ்தனை யுத்தத்தில் ஜயித்துக்கொன்று, ராமலக்ஷ்மணர்களிருக்குமிடத்திற்குச் சென்று அவர்களை நமஸ்கரித்து நடந்த விருத்தாந்தத்தைத் தெரிவித்தான். அவர்களும் ஸகல வானரர்களும் அளவற்ற ஸந்தோஷமடைந்து அக்னி புத்திரனான நீலனைக் கொண்டாடி உபசரித்தார்கள்.

ததஸ்து நீலோ விஜயீ மஹாப$^{3}$ல:
ப்ரஶஸ்யமாந: ஸ்வக்ருதேந கர்மணா |
ஸமேத்ய ராமேண ஸலக்ஷ்மணேந ச
ப்ரஹ்ருஷ்டரூபஸ்து ப$^{3}$பூ$^{4}$வ யூத$^{3}$ப: || (67)

---

## ஸர்க்கம் 59

# ராமன் ராவணனுடைய கிரீடத்தை உடைத்தது

தஸ்மிந் ஹதே ராக்ஷஸ ஸைந்யபாலே
ப்லவங்க$^{3}$மாநா ம்ருஷபே$^{4}$ண யுத்$^{3}$தே$^{4}$ |
பீ$^{4}$மாயுத$^{4}$ம் ஸாக$^{3}$ரதுல்யவேக$^{3}$ம்
விது$^{3}$த்$^{3}$ருவே ராக்ஷஸராஜஸைந்யம் || (1)

இப்படி வானரத் தலைவனால் ராக்ஷஸ ஸேனாபதி கொல்லப்பட்டவுடன், பயங்கரமான ஆயுதங்களையும் ஸமுத்திரத்தைப் போன்ற வேகத்தையுமுடைய அந்த ராக்ஷஸஸேனை முறிந்தோடி



ராவணனிடத்திற்குச் சென்று, அக்னி புத்திரனால் பிரஹஸ்தன் மடிந்ததைத் தெரிவித்தார்கள். அப்படி நடக்குமென்று தசமுகன் ஸ்வப்னத்திலும் நினைத்ததில்லை. ஆகையால் ஆச்சரியமும், சோகமும், கோபமும் மேலிட்டு, தேவேந்திரனைச் சூழ்ந்த அமரயுத்த வீரர்களைப்போல் தன் ஸமீபத்தில் நிற்கும் ராக்ஷஸ வீரர்களை நோக்கி, "பார்த்தீர்களா? நமது ஸேனாபதியான பிரஹஸ்தன் ஸாமான்யனா? இந்திரனையும் கதறச் செய்கிறவன்; இப்பொழுது அவனும் அளவற்ற ராக்ஷஸ ஸைன்யமும் அல்பக் குரங்குகளால் மடிந்தார்கள். ஆகையால் சத்ருவை நாம் அலக்ஷ்யம் செய்யக்கூடாது. இனி நானே யுத்தத்திற்குச் சென்று ராமலக்ஷ்மணர்களையும் வானரர்களையும் காட்டுத் தீ விருக்ஷங்களை எரிப்பதுபோல் என் பாணாக்னியால் கொளுத்தி ஜயசாலியாய்த் திரும்பி வருகிறேன்" என்று நெருப்புக் கொழுந்தைப்போல் பிரகாசிக்கும் ரதத்திலேறினான். அதில் உத்தம ஜாதி அச்வங்கள் பூட்டியிருந்தன; காந்தியால் திக்குகளைப் பிரகாசிக்கச் செய்தது. அந்த ராக்ஷஸேச்வரன் யுத்தத்திற்குப் புறப்படும்பொழுது சங்கம், பேரிகை, துந்துபி, மிருதங்கம் முதலிய வாத்யங்களின் ஓசையும், யுத்த வீரர்கள் தோள் தட்டும் சப்தமும், வீரவாதங்களும், ஸிம்ஹநாதங்களும், புண்யாஹவாச ஸ்தோத்ரங்களும் எங்கும் நிறைந்தன. பெரியோர்களால் ஆசீர்வதிக்கப்பட்டு, பிரஜைகளால் கொண்டாடப்பட்டு, லங்கேசுவரன் யுத்தத்திற்குப் புறப்பட்டான். பர்வதங்களைப்போல் கடினமான தேகங்களையும் மேகங்களைப்போல் நினைத்த மாத்திரத்தில் மாற்றக்கூடிய ரூபங்களையும் நெருப்புக் கொழுந்தைப்போல் பிரகாசிக்கும் நேத்திரங்களையுமுடைய ராக்ஷஸ வீரர்களால் சூழப்பட்ட தசமுகன், பூதகணங்களால் சூழப்பட்டு அஸுரர்களுக்குத் தலைவனான ருத்திரனைப்போல் விளங்கினான். "இவருடைய தாமஸ அம்சமே ருத்திரனெனப்படும்" என்று மைத்ராயணீய உபநிஷத்தில் சொல்லியபடி, ருத்ரன் அஸுரர்களுக்கு அதிபதியென்றும் தெரிகிறது.

பிறகு அந்த மஹாதேஜஸ்வியான தசமுகன் லங்கைக்கு வெளியில் வந்து, வானரஸைன்யம் விருக்ஷங்களையும் மலைகளையும் எடுத்துக்கொண்டு, பார்க்கப் பயங்கரமாய் ஸமுத்திரத்தைப்போலும் மேகங்களைப்போலும் கர்ஜித்துக் கொண்டிருப்பதைக் கண்டான். ராக்ஷஸஸைன்யம் அதிகோபத்துடன் வருவதைக் கண்டு ராமனுக்கு யுத்தாவேசத்தால் புஜங்கள் நீண்டன; வீரலக்ஷ்மி விளங்கிற்று. எல்லையற்ற வானரஸைன்யங்களால் சூழப்பட்டு நிற்கையில், விபீஷணன் யுத்தவீரர்களின் தாரதம்யத்தை நன்றாக அறிந்தவனாகையால், ராமன் அவனை நோக்கி, "அநேக த்வஜங்களாலும் கொடிகளாலும் வில்லுகளாலும், சூலம், ஈட்டி முதலிய ஆயுதங்களாலும், மலைகளைப்போன்ற யானைகளாலும், பயமற்ற வீரர்களாலும் விளங்கும் இந்த ஸைன்யம் யாருடையது? இது கலக்கமுடியாதது" என்றார். அதற்கு இந்திரனைப்போன்ற

வீரியமுடைய விபீஷணன், ராக்ஷஸஸைன்யத்தின் விவரத்தையும் ராக்ஷஸவீரர்களுடைய பெருமைகளையும் வர்ணித்தான். "அதோ பெரிய சரீரத்துடன் பாலஸூரியனைப்போன்ற சிவந்த முகத்துடனும் அந்த மதயானையின் தோளில் உட்கார்ந்துகொண்டு, தன் தேக பாரத்தால் அந்த கஜத்தின் தலையை அதிரச்செய்கிறவன் ராவண புத்திரனை அகம்பனன். அதோ ஸிம்ஹக்கொடியையுடைய ரதத்தில் இந்திரவில்லைப் போன்ற தன் தனுஸைச் சுழற்றிக்கொண்டிருப்பவன், ராவணனுடைய மூத்தகுமாரனை இந்திரஜித். தேக பலத்தில் மதயானையைப்போன்றவன்; பயங்கரமாய் வெளியில் தெரியும் கோரைப்பற்களை யுடையவன்; ப்ரஹ்மாவால் கொடுக்கப்பட்ட வரங்களால் நினைத்தபொழுது மறையக்கூடியவன். அதோ விந்தியம் மஹேந்திரம் அஸ்தகிரி முதலியவைகளைப் போல் எல்லையற்ற தேகத்தையுடையவன் அதிகாயன். அளவிற்கு மிஞ்சின ஒரு வில்லைச் சுற்றிக்கொண்டு, ஆயிரம் குதிரைகளால் இழுக்கப்பட்ட ரதத்தில் வருகிறான். மாயாபல மில்லாவிட்டாலும் இந்திரஜித்தை விட மேலான வீரன். அதோ பாலஸூரியனைப்போல்சிறந்தநேத்திரங்களுடன் உத்தமமான யானையின்மேலேறிக் கொண்டு, அதன் மணியின் சப்தத்தோடு தன் கர்ஜனையையும் சேரும்படி செய்கிறவன் மஹோதரன். அதோ தங்க ஆபரணங்களாலும் ஜேணங்களாலும் அலங்கரிக்கப்பட்ட குதிரைமீது ஏறிக்கொண்டு, கிரணங்கள் பாயும் எறியீட்டியைச் சுழற்றிக்கொண்டு வருகிறவன் பிசாசன். ஸந்தியா காலத்தில் மேகங்கள் நிறைந்த மலையைப்போல் பிரகாசிக்கும் அவனுடைய குதிரையையும் இடியைப்போல் அவன் வரும் வேகத்தையும் பாருங்கள். அதோ கூர்மையான முனையுடனும் மின்னலைப் போன்ற காந்தியுடனும் வஜ்ராயுதத்தை மிஞ்சின வேகத்துடனும் விளங்கும் சூலத்தையெடுத்துக் கொண்டு, மலையைப்போல் பிரகாசிக்கும் காளைமேல் வருகிறவன் திரிசிரஸ் என்று பிரஸித்திபெற்றவன். அதோ மேகத்தைப்போன்ற ரூபத்துடனும் பருத்த அகன்று உயர்ந்த மார்புடனும் நாகக்கொடியுடனும் யுத்தத்தை ஆவலுடன் எதிர் பார்த்துக்கொண்டு வில்லைச் சுழற்றுகிறவன் கும்பன். தங்கத்தாலும் வஜ்ரங்களாலும் அலங்கரிக்கப்பட்டு புகைகளுடன் பிரகாசிக்கும் இருப்புக்கட்டுத்தடியை எடுத்துக்கொண்டு ராக்ஷஸஸைன்யத்திற்கு பிரதான புருஷனாய் விளங்குகிறவன், அற்புதமான கோரகிருத்யங்களைச் செய்யும் நிகும்பன். அதோ வில் கத்தி பாணங்கள் முதலிய ஆயுதங்களால் நிறைந்து, அழகான கொடியுடன் கொழுந்துவிட்டெரியும் நெருப்பைப் போல் பிரகாசிக்கும் ரதத்திலேறி வருகிறவன் நராந்தகன். இவனுடன் யுத்தம் செய்கிறவர்கள் கிடைக்காததால் புஜங்களின் தினவு தீருவதற்காக மலைகளுடன் யுத்தம் செய்து கொண்டிருப்பவன்.

பலவகைக் கோரரூபங்களோடும் புலி, ஒட்டகம், பாம்பு, மான், குதிரை முதலிய மிருகங்களைப்போன்ற முகங்களோடும் சுழலும் கண்களோடும் காணப்படும் பூதங்களால் சூழப்பட்டு, அதோ வருகிறவன், தேவர்களுடைய கர்வத்தையும் அடக்கினவன். அதோ வெள்ளைக்குடை சந்திரனைப்போல் அவன் தலைமேல் விளங்குகிறது. மெல்லிய கம்பிகளையுடைய அதன் கீழ் பூதகணங்களால் சூழப்பட்ட ருத்திரனைப்போல் வீற்றிருப்பவன், ராக்ஷஸாதிபதி. உத்தமகிரீடத்தாலும் குண்டலங்களாலும் பிரகாசிக்கும் முகத்துடன், ஹிமவான் விந்தியம் முதலிய மலைகளைப்போல் பருத்த தேகத்துடன் தோன்றுகிறவன், இந்திரன் யமன் முதலிய திக்பாலர்களுடைய மதத்தையடக்கின லங்கேச்வரன். ஸூரியனைப்போல் தேஜஸால் ஜ்வலிப்பதைப் பாருங்கள்" என்றான்.

அதைக்கேட்டு ராமன், "விபீஷண! என்ன காந்தி! ராக்ஷஸாதிபதியான ராவணன்மஹாப்ரதாபவானென்று தோன்றுகிறது. மத்யாஹ்னகாலத்தில் பூர்ணகிரணங்களுடன் ஜ்வலிக்கும் ஸூரியனைப் பார்ப்பது எப்படி அஸாத்தியமோ அப்படி இவனைப் பார்க்கக் கண் கூசுகிறது. இவனுடைய தேகம் தேஜஸால் சூழப்பட்டிருப்பது எனக்கு நன்றாகத் தெரிகிறது. தேவதானவ வீரர்களுக்கும் இப்படிப்பட்ட தேககாந்தி கிடையாது. இவனுடைய ஸைன்யத்தில் ஒவ்வொருவனும் மலைபோன்ற தேகத்தை யுடையவன்; மலைகளால் யுத்தம் செய்கிறவன்; தீக்ஷ்ணமான ஆயுதங்களைத் தரித்தவன்; கோர ரூபமுள்ள பூதங்களால் சூழப்பட்ட யமனைப்போல் பராக்கிரமசாலிகளான வீரர்களுடன் வருகிறான். இந்தப் பாபி இன்று என் கண்ணில் பட்டது நல்லதுதான். ஸீதையை அபகரித்ததாலுண்டான கோபத்தை இதுவரையிலும் அடக்கிவந்தேன். இப்பொழுது அதை இவன் மேல் பிரயோகிக்கிறேன்' என்று சொல்லி ரகுவீரன் பிரசண்ட கோதண்டத்தை வளைத்து நாணேசை செய்து ஒரு சிரேஷ்டமான பாணத்தை ஸித்தம் செய்து, லக்ஷ்மணனுடன் ராவணனுக்காகக் காத்துக்கொண்டிருந்தார்.

அப்பொழுது தசமுகன் தன்னைச் சுற்றியிருந்த ராக்ஷஸர்களைப் பார்த்து, "நீங்கள் ஸகல கவலையையும் விட்டு லங்கையின் உட்கோட்டை வாசல்களையும் கோபுரங்களுக்குப் பக்கங்களில் ஸைன்யங்களுக்காகக் கட்டப்பட்டிருக்கும் வீடுகளையும் கோபுரங்களையும் ஜாக்கிரதையாய்க் காத்துக்கொண்டிருங்கள். நீங்கள் என்னுடன் இங்கே வந்திருப்பதாய் நமது சத்ருக்களுக்குத் தெரிந்தால், லங்கையில் நுழைந்து அங்குள்ளவர்களை ஜயித்து அதைப்பிடித்துக் கொள்வார்கள்" என்று அவர்களை அனுப்பிவிட்டு, ஒரு திமிங்கலம் கொந்தளிக்கும் ஸமுத்திரத்தை அலக்ஷ்யமாய்க் கிழித்துக்கொண்டு செல்வதுபோல், வானர ஸைன்யத்தை இருபுறத்திலும் பிளந்து தள்ளிக்கொண்டு சென்றான். ஜ்வலிக்கும் வில்லையும் பாணங்களையும் கையிலெடுத்துக்கொண்டு, வானர ஸைன்யத்தை நாசம் செய்வதற்குக் காலபாசத்தை ஏந்திவரும் யமனைப்போல் வரும் தசக்ரீவனைக் கண்டு, ஸுக்ரீவன் ஒருமலைச்சிகரத்தைப் பெயர்த்து அவனைநோக்கி

ஓடிவந்து அதை அவன்மேல் எறிந்தான். பெரிய விருக்ஷங்களுடனும் மலையருவிகளுடனும் விளங்கும் அந்தச் சிகரம் தன்னை நோக்கிவருவதைக் கண்டு, தங்களுடைய பாணங்களால் தசக்ரீவன் அதைத் தூளாக்கி, மஹாஸர்ப்பத்தைப்போல் சீறிக்கொண்டு, மஹேந்திரனுடைய வஜ்ரத்தைப்போல் அதிவேகத்துடன், அந்தகனைப்போல் ஸகல வஸ்துக்களையும் நாசம் செய்யக்கூடியதாய், நெருப்புப்பொறிகள் பறக்கும் அக்னியைப்போல் ஜ்வலிக்கும் பாணத்தை எடுத்து வானரராஜனைக் கொல்வதற்காகப் பிரயோகித்தான். ஸுப்ரஹ்மண்யரால் கிரௌஞ்ச பர்வதத்தின்மேல் பிரயோகிக்கப்பட்டசக்தியைப் போல் அந்த பாணம் ஸுக்ரீவனுடைய தேகத்தைப் பிளந்து ஊடுருவிச் சென்றது. அந்த உபத்திரவத்தைப் பொறுக்காமல் வானரராஜன் புத்தி சிதறி அலறிக்கொண்டு பூமியில் விழுந்தான். அவன் பிரக்ஞையற்றுக் கிடந்ததைக் கண்டு ராக்ஷஸர்கள் ஸந்தோஷத்தால் கர்ஜித்தார்கள். உடனே கவாக்ஷன், கவயன், ஸுதம்ஷ்ட்ரன், ரிஷபன், ஜ்யோதிர்முகன், நளன் என்ற வானர வீரர்கள் மலைகளைப் பெயர்த்துக்கொண்டும், தேகங்களைப் பெருக்கிக்கொண்டும் தசக்ரீவனை எதிர்த்தார்கள். அவன்கூர்மையான பாணங்களால் அவர்களுடைய அடிகளை வீணாக்கி, விசித்திரமான தங்கக்கட்டுகளையுடைய வேறு பாணங்களால் அவர்களைப் பிளந்தான். அவர்கள் புத்திசிதறி கைகால்களை உதறிக்கொண்டு பூமியில் விழ, ராவணன் வானர ஸைன்யத்தை அம்பு மாரியால் மறைத்தான். தசக்ரீவனுடைய பாணங்களால் அடிப்பட்டு உபத்திரவத்தைத் தாங்காமல் சிலரும் பயமென்ற பாணங்களால் அடிப்பட்டுக்கதறும் சிலரும், ராக்ஷஸாதிபதியின் வேகத்தால் பூமியில் அடிபட்டு விழும் சிலரும், வனத்தில் ஸஞ்சரித்துக்கொண்டு அதுவரையில் அடிபட்ட சத்துருக்களையும் ஆயுதங்களையும் பார்க்காததால் மிரண்டு கூச்சலிடும் சிலரும் ஸர்வ லோகங்களும் சரணமடையும் ராமமூர்த்தியைக் கதியென்றுஅடைந்தார்கள். (நீக்க முடியாத துக்கமே சரணாகதிக்கு ஹேதுவாகும். தேசம், காலம், அதிகாரி, பலம், நியமம் முதலியவைகளை விசாரிக்க வேண்டியதில்லை.)

சரணாகதியின் தாரதம்யத்தையறிந்த சரண்யன், உடனே வில்லை எடுத்து நாணேற்றி, ராவணனை எதிர்த்துச் சென்றார். ஆர்த்தப்பிரபத்திக்கு (அபாயத்திலிருந்தாவது கஷ்டத்திலிருந்தாவது தன்னை நீக்கும்படி சரணமடைவது) உடனே பலனைக் கொடுக்க வேண்டியதாகையால், ஒருவேளை லக்ஷ்மணன் நம்மை கேட்காமலேயே யுத்தத்திற்குப் போய் விடுவானோ என்று தானே வில்லும் கையுமாகப் போகப் புறப்பட்டார். தன்னை ஆச்ரயித்தவர்களை ரக்ஷிப்பதற்கு அதிவேகமாய்ச் செல்லும் ராமனை லக்ஷ்மணன் கைகூப்பிப் போகும் வழியில் மறித்து பிரார்த்தித்தார். ராமனுக்கு ஸகலவித கைங்கர்யத்தையும் செய்வதாய் பிரதிக்ஞை



செய்து, அதனால் கிடைத்த கைங்கரிய லக்ஷ்மியையுடைய இளைய பெருமாள், தன் பிரார்த்தனையை அங்கீகரிப்பதற்காகக் கை கூப்பினார். ஸர்வசேஷியான பகவானுடைய கைங்கரியமே சேஷபூதர்களான ஜீவர்களுக்குப் பரமப்பிரயோஜனம். "அண்ணா! தங்களுடைய பாரியையை அபரிக்கத் துணிந்த இந்தத் துராத்மாவைத் தாங்களே கொல்லவேண்டியது. அது தங்களுக்கு ஒரு பொருட்டல்ல. ஆனால் அளவற்ற பலபராக்ரமங்களால் விளங்கும் தாங்கள் இந்த அல்பராக்ஷஸனுடன் யுத்தம் செய்வது அழகல்ல. உத்திரவானால் நான் இவனைவதம் செய்கிறேன்" என்றார். (உனக்குச்சக்தியிருந்தால் போகக்கூடாதோ என்றால், சேஷபூதனான நான் ஸர்வசேஷியான தங்களுடைய உத்திரவில்லாமல் ஒரு காரியத்தைச் செய்வது என் பாரதந்த்ரஸ்வரூபத்திற்கு ஹானியை உண்டாக்கும்). அதற்கு ராமன், "அப்படியானால் போ. சத்துருவை அலக்ஷ்யம் செய்யாதே. யுத்தம் செய்வதற்கு ஆவல் கொண்டிருப்பதைப்போல் வெகு ஜாக்கிரதையாயிரு. ராவணனோ மஹாவீரன்; அற்புதமான பராக்கிரமத்தை யுடையவன். ஒரு அஸ்திரத்தை எடுப்பவன்போல காட்டி வேறொன்றை எடுக்கிறான்; அதைத் தொடுப்பவன்போல் காட்டி வேறொன்றைத் தொடுக்கிறான்; அதை விடுப்பவன்போல் காட்டி வேறொன்றை விடுக்கிறான். இவன் கோபம் கொண்டால் மூன்று லோகத்திலுள்ளவர்களும் இவனுக்கெதிரில் நிற்கமுடியாது. ஆகையால், அவனுடைய குறைகளை நன்றாய்க் கவனித்தறிந்து உன் குறைகளை நீக்கிக்கொள். உன் வில்லாலும் பார்வையாலும் உன்னை ஜாக்கிரதையாய்க் காப்பாற்றிக்கொள்". என்றார். லக்ஷ்மணன் ரகுவீரனை ஆலிங்கனம் செய்து பிரதக்ஷிண நமஸ்காரங்களுடன் உத்திரவு பெற்றுக்கொண்டு யுத்தத்திற்குச் சென்றார். அங்கே ராவணன் காந்தியால் ஜ்வலிக்கும் வில்லை வளைத்துச் சரமாரிகளால் வானர ஸைன்யத்தை மறைத்துக் கண்ட துண்டம் செய்வதைக் கண்டார்.

அதற்குள் ஆஞ்ஜநேயர் ஓடி வந்து, "இதென்ன அநியாயம்! ஸேவகனான நானிருக்கத் தாங்கள் இப்படி வரலாமா?" என்று முறையிட்டு, பாணக் கூட்டங்களைத் தடுத்து ராவணன்மேல் பாய்ந்தார். அவனுடைய ரதத்தினருகில் சென்று வலது கையை ஓங்கி ராவணனைப் பயமுறுத்தி, "தேவ, தானவ, கந்தர்வ, யக்ஷர்களை நீயும் உன் ராக்ஷஸர்களும் முறியடித்தீர்கள். ஆனால் வானரர்களிடத்திலிருந்து உனக்கு மிருத்யுவென்பதை ஏன் அறியாய்? இதுவரையிலும் உன்னைப் பிழைக்கும்படி விட்டதே தவறு. இதோ பார். ஐந்து கிளைகளுள்ள மஹாவிருக்ஷத்தைப் போன்ற என் வலது கை உன் பிராணனை வாங்கப்போகிறது" என்றார். அதற்கு ராவணன், கோபத்தால் விழிகள் சிவந்து, நிகரற்ற பராக்கிரமத்தால் இடிபோல் சிரித்து, "அடே, குரங்கே! சீக்கிரமாய் அடி; தயங்காதே. ராவணனை எதிர்த்து அடித்தேனென்ற கீர்த்தியை அடைய

விரும்புகிறாய். அதையேன் கெடுக்கவேண்டும்? அதனால் உன்பலத்தை யறிந்து அதற்குத் தகுந்த பலத்தை உபயோகித்து உன்னைக் கொல்வேன்" என்றான். அதற்கு மாருதி, "அடே, துஷ்டா! நீ என்னைக் கொல்வதிருக்கட்டும். உன் புத்திரனான அக்ஷனை நான் கொன்றது பொய்யல்லவே" என்றார். அதைக் கேட்டு மஹாதேஜஸ்வியான ராவணன் வாயுபுத்ரனுடைய மார்பில் ஓங்கிஅறைந்தான். அதனால் ஹநுமான் பலதடவை நடுங்கிஒரு முகூர்த்தம் அசைவற்று நின்றார். பிறகு மஹா புத்திமானானதால் தைரியப்படுத்திக் கொண்டு, கடுங்கோபத்துடன் தசமுகனைக் கையால் அறைந்தார். அதனால் தசக்ரீவன் மலைகள் பூகம்பத்தால் நடுங்குவதுபோல் நடுங்கினான். அதைக் கண்டு ரிஷிகளும், வானரர்களும், ஸித்தர்களும், தேவர்களும் அஸுரர்களும் ஸந்தோஷத்தால் கோஷித்தார்கள். பிறகு ராவணன் கொஞ்சம் சிரமம் தீர்ந்து, "அடே, குரங்கே! நல்லது. உன் வீரியத்தை மெச்சினேன். நீ எனக்குத் தகுந்த சத்ருவே" என்றான். அதற்கு ஆஞ்ஜநேயர், "என் வீரியத்தைச் சுடவேண்டும். என்னிடம் அடிபட்டும் நீ இன்னும் பிழைத்திருக்கிறாயே! நான் கொடுத்த அடி உன்னைக் கொல்லாதபொழுது அதைப் புகழ்வது எப்படி? இன்னும் ஒரு தடவை அடி, பார்ப்போம். வீண் பெருமை பேசாதே. பிறகு இந்த முஷ்டியால் உன்னை யமலோகத்திற்கனுப்புகிறேன். துஷ்டா! முன்பு கொஞ்சம் கவனிக்காமலிருந்ததால் நீ பிழைத்தாய். இப்பொழுது தப்பமாட்டாய்" என்றார். அந்த வார்த்தைகளைக்கேட்டு ராவணனுக்குக் கோபம் ஜ்வலித்தது. கண்கள் சிவக்க வலது கையை மடக்கிக்கொண்டு தன் பூர்ணபலத்துடன் மாருதியை மார்பில் குத்தினான். மறுபடியும் மார்பில் அடிக்கப்பட்டு ஹநுமான் கிடுகிடென்று நடுங்கினார். மஹாபலவானான ஆஞ்ஜநேயர் புத்திகலங்கி நிற்பதை ராவணன் கண்டு, நீலனிருக்குமிடத்திற்கு ரதத்தைச் செலுத்தினான்.

காலஸர்ப்பங்களைப் போன்ற பாணங்களால் அவனுடைய உயிர்நிலைகளைப் பிளந்து, ப்ரதாபலங்கேசுவரன் வானரஸேனாபதியை எரித்தான். நீலன் மிகவும் வருத்தமடைந்து ஒரு கையால் பாணங்களைத் தடுத்து, மற்றொரு கையால் ஒரு பர்வதசிகரத்தைப் பிடுங்கி ராவணன் மேலெறிந்தான். தேஜஸிலும், புத்தியிலும் தைரியத்திலும் விசேஷித்த ஹநுமான், அதற்குள் சிரமம் தீர்ந்து யுத்தம் செய்ய விரும்பி, நீலனுடன் ராவணன் யுத்தம் செய்து கொண்டிருப்பதைப் பார்த்து ரோஷம் கொண்டு, "அடே ராக்ஷஸ! நீ வேறொருவனுடன் யுத்தம் செய்துகொண்டிருப்பதால் உன்னை இந்தத் தடவை விட்டேன்" என்றார். தசமுகன், தன்மேல் விழும் பாறையை ஏழு கூர்மையான பாணங்களால் தூளாக்கினான். அதைக்கண்டு நீலன் பலவித புஷ்பித்த மரங்களை வேருடன் பிடுங்கித் தசக்ரீவனை அடித்தான். ராக்ஷஸாதிபதி அவைகளைப் பாணங்களால் துண்டித்து நீலனைக் கோரமான சரமாரியால் துளைத்தான்.



மேகங்கள் பொழியும் பர்வதத்தைப்போல் நீலன் அசைவற்று நின்று, தன் ரூபத்தைச் சுருக்கிக்கொண்டு ராவணனுடைய த்வஜத்தின் நுனியில் குதித்தான். அதைக் கண்டு ராவணன் கோபத்தால் ஜ்வலிக்க, நீலன் கர்ஜித்தான். த்வஜத்தின் நுனியிலும் வில்லின் நுனியிலும் கிரீடத்தின் நுனியிலும் நீலன் அலக்ஷ்யமாய் ஸஞ்சரிப்பதைக் கண்டு, ராமலக்ஷ்மணர்களும் மாருதியும் ஆச்சரியமடைந்தார்கள். ராவணன் அந்த வானர வீரனுடைய லாகவத்தையும் சாதுரியத்தையும் மெச்சி, ஜ்வலிக்கும் ஓர் அற்புதமான ஆக்னேயாஸ்திரத்தை எடுத்தான். நீலனுடைய வேகத்தால் ராவணன் திகைத்திருப்பதைக் கண்டு வானரர்கள் ஸந்தோஷத்தால் கூச்சலிட்டார்கள். அதனால் தசமுகன் இன்னும் புத்தி சிதறி ஒன்றும் தோன்றாமலிருந்தான். பிறகு ஒரு பாணத்தில் ஆக்னேய மந்திரத்தை ஜபித்து த்வஜத்தின் நுனியிலிருக்கும் நீலனைப் பார்த்து, "குரங்கே! உன்னுடைய வேகத்தாலும் லாகவத்தாலும் மாயையால் பல ரூபங்களை எடுப்பவன்போல் காட்டுகிறாய். உயிரைக் காப்பாற்றிக் கொள்ள நீ செய்யும் தந்திரங்கள் வீணாகும். இதோ என் கையிலிருக்கும் பாணம் உன் உயிரை வாங்கப் போகிறது. சக்தியிருந்தால் உன்னைக் காப்பாற்றிக் கொள்" என்று அதட்டி, அந்த ராக்ஷஸ வீர சிகாமணி நீலன்மேல் ஆக்னேயாஸ்திரத்தைப் பிரயோகித்தான். வானரஸேனாபதி அஸ்திரத்தால் மார்பில் அடிபட்டு, தேகமெங்கும் எரிக்கப்பட்டுப் பதைபதைத்துப் பூமியில் சாய்ந்தான். தான் மஹாதேஜஸ்வியானதாலும் தன் பிதாவான அக்னிபகவானுடைய கிருபையாலும் மரணமடையாமல் பூமியில் முழங்காலை ஊன்றிக் கொண்டு விழுந்தான்.

நீலன் பிரக்ஞையற்றுக் கிடப்பதைக்கண்டு ராவணன் யுத்தாவேசங்கொண்டு, காளமேகங்களைப்போல் கர்ஜிக்கும் ரதத்தை லக்ஷ்மணனிருக்குமிடத்திற்குச் செலுத்தினான். ஸுக்ரீவன் முதலிய வானர வீரர்களை விலக்கிக்கொண்டு, ஸைன்யத்திற்கு நடுவில் ஜ்வலித்துக்கொண்டு, வில்லைச் சுழற்றி வளைத்து நாணேற்றிப் பூமி நடுங்கும்படி டங்காரம் செய்தான். அபார ஸத்வமுள்ள லக்ஷ்மணன் அதைக்கண்டு, "ராக்ஷஸராஜனே! இந்த வானரர்கள் உன்னுடன் யுத்தம் செய்யத் தகாதவர்கள். என்னிடத்தில் வா; வேறெங்கும் போகாதே" என்றார். அந்த வார்த்தைகளையும் அவருடைய ஸிம்ஹநாதத்தையும் உக்ரமான நாணோசையையும் கேட்டு, தசானனன் லக்ஷ்மணனைக்கிட்டிக் கோபம் தாங்காமல், "புத்தி மயங்கி மரணத்தைவிரும்பி இன்றுஎன்கண்ணில் பட்டாய்; நல்லது. இதோ என் பாணங்களால் உன்னைத் துண்டித்து யமலோகத்திற் கனுப்புகிறேன், பார்" என்றான். வெண்மையான கோரைப் பற்கள் தெரியும்படி கர்ஜிக்கும் அந்த ராக்ஷஸ வீரசிரேஷ்டனைப் பார்த்து லக்ஷ்மணன் கொஞ்சம்கூடக் கலங்காமல், "ராக்ஷஸ ராஜனே! விசேஷ ப்ரதாபமுள்ளவர்கள் தங்களைப் புகழார்கள். நீ மஹா

பாபியானதால் வீண் பெருமை பேசிக் கர்ஜிக்கிறாய். உன் வீரியத்தையும் பலத்தையும் பராக்கிரமத்தையும் நானறியேனா? ஒருவருமில்லாதபொழுது ஸந்யாஸி வேஷம் பூண்டு ஸீதையை அபகரித்த மஹாவீரனல்லவா! இதோ வில்லும் கையுமாய் எதிரில் வந்திருக்கிறேன். என்ன செய்யப் போகிறாய், பார்ப்போம். வீணாய்ப் பிதற்றாதே'' என்றார். அதனால் கோபம் கொண்டு தசமுகன் ஏழு கூரான பாணங்களால் லக்ஷ்மணனை அடிக்க அவர் அவைகளைத் துண்டித்தார். அதனால் அதிக கோபங் கொண்டு கூர்மையான வேறு பாணங்களைப் பிரயோகித்தான். லக்ஷ்மணனும் உக்ரமாய்ச் சரமாரி பொழிந்து அர்த்தசந்திரம், பல்லம், கர்ணி முதலிய பாணங்களால் ராவணனுடைய சரங்களை அறுத்தார். அதைக் கண்டு லங்காதிபதி லக்ஷ்மணனுடைய லாகவத்தை மெச்சி வேறு பாணங்களை பிரயோகித்தான். லக்ஷ்மணன் கூர்மையாயும் வஜ்ராயுதத்தைப் போன்ற வேகமுடையவைகளாயும் நெருப்பைப்போல் காந்தியுடையவைகளாயும் இருக்கும் உத்தமமான பாணங்களை வில்லிற்பூட்டி தசமுகனைக் கொல்வதற்காக விடுத்தார். ராவணன் அவைகளை துண்டித்து, பிரஹ்மா தனக்குக் கொடுத்த ஒரு காலாக்னியைப் போன்ற காந்தியுள்ள பாணத்தால் இளைய பெருமாளை நெற்றியில் அடித்தான். அதனால் லக்ஷ்மணன் வில்லை நழுவவிட்டு நடுங்கினார். பிறகு பிரக்ஞை தெளிந்து, ராவணனுடைய வில்லை ஒடித்து மூன்று பாணங்களால் அவனை அடித்தார். தசமுகன் அந்த வேகத்தால் வருந்தி நடுங்கிப் பிறகு பிரக்ஞையை அடைந்தான். இப்படி வில் விழுந்து, பாணங்களால் துளைக்கப்பட்டு, தேகமெங்கும் கொழுப்பும் ரத்தமும் பெருக, திறமை வாய்ந்த லங்கேச்வரன், தனக்கு முன்பு பிரஹ்மாவால் கொடுக்கப்பட்ட சக்தி யென்ற ஆயுதத்தைக் கையிலெடுத்தான். வானரஸைன்யம் அதைக் கண்டு நடுங்கிற்று. புகையற்ற நெருப்பைப்போல் ஜ்வலிக்கும் அந்த ஆயுதத்தை ராவணன் லக்ஷ்மணனைக் கொல்ல உத்தேசித்துப் பிரயோகித்தான். ராமானுஜன் அதைக் கொழுந்துவிட்டெரியும் நெருப்பைப்போன்ற அநேக பாணங்களால் அடித்தார். அப்படியும் அவருடைய விசாலமான மார்பில் அது ஊடுருவிச் சென்றது. அபாரசக்தியுள்ள இளைய பெருமாள் ராவணனுடைய சக்தியாயுதத்தால் அடிக்கப்பட்டு, நெருப்பு ஜ்வாலைகளால் சூழப்பட்டு பிரஜ்ஞையற்று அசைந்தார். உடனே ராவணன் பாய்ந்து இருபது கைகளாலும் அவரைத் தூக்கி எடுக்கப் பார்த்தான்.

லோகத்தில் தைரியத்திற்கு உபமானமாய்ச் சொல்லப்படும் ஹிமயபர்வதத்தைத் தூக்கியெடுக்கலாம்; ராவணன் அதில் ஒரு பாகமான கைலாஸத்தைப் பெயர்த்திருக்கிறானல்லவா? ஸமுத்திரங்களுக்குப் பிரதானமான க்ஷீராப்தியைக் கடைவதற்குத் தகுந்ததென்று நினைக்கப்பட்ட மந்தரபர்வதத்தையும் புஜங்களால் எடுக்கலாம்; அதைக் கடைந்த தேவாஸுரர்களைப் பலதடவை லங்காதிபதி ஜயித்திருக்கிறானல்லவா? ஸகல குலபர்வதங்களுக்கும் நடுநாயகமான மேருவைப் பெயர்த்தெடுக்க முடியும்; வாயுபகவான் அதன் சிகரத்தையடித்து லங்கையைச் சூழ்ந்த ஸமுத்திரத்தில் தள்ளி விட்டாரல்லவா? அந்த வாயுபகவான் ராவணனுக்குப் பயந்திருந்தார். ஐம்பதுகோடி விஸ்தீர்ணமுள்ள மூன்று லோகத்தையும் பெயர்த்தெடுக்க முடியும். அதல் ஒரு பாகமான பூமியைக் கும்பகர்ணனுடைய முன் பிறப்பான ஹிரண்யாக்ஷன் புஜத்தின் கீழ் வைத்துக் கொண்டு போகவில்லையா? மூன்று லோகங்களையும் ஆளும் தேவர்களுடன் அவைகளைத் தூக்கவும் முடியும்; அவர்களுக்கதிபதியான இந்திரனைத் தன்னுடைய புத்திரனே ஜயித்துச் சிறையில் வைத்திருக்கிறான். ஆனால், ராமனுடைய தம்பியான பரதனுக்குத் தம்பியாய், விஷ்ணுவின் நாலிலொரு அம்சமான இளைய பெருமாளைத் தூக்கி எடுக்கவாவது அசைக்கவாவது ராவணனால் முடியவில்லை, இரண்டு புஜங்களால் கைலாஸத்தை அசைத்த ராவணன், இருபது கைகளாலும் லக்ஷ்மணனை அசைக்க முடியவில்லை. தசமுகனும் அவனுடைய பரிவாரங்களும் ஒன்று சேர்ந்தும் முடியவில்லை.

பிரஹ்மாவால் அனுக்ரஹிக்கப்பட்ட சக்தியால் மார்பில் லக்ஷ்மணன் அடிக்கப்பட்டு,தன் மனத்திற்கெட்டாத விஷ்ணுவின் அம்சமான ஸ்வரூபத்தை ஞாபகப்படுத்திக்கொண்டார்.

தானவர்களுடைய கொழுப்பையடக்கும் ராமானுஜனை ராவணன் புஜங்களால் நெடுநேரம் புரட்டிப் பார்த்தும் அசைக்க முடியவில்லை. மனுஷ்யதேகத்தில் அவதாரம் செய்த விஷ்ணுவின் அம்சமல்லவா? (அவயவமில்லாத விஷ்ணு ஸ்வரூபத்திற்கு அம்சமுண்டோ என்றால், ஸ்வரூபத்திற்கு அப்படி யில்லாவிட்டாலும், குணங்கள் வெளிப்படுவதில் விளங்கும் தாரதம்யத்தால் அம்சங்களின் பேதம் இருப்பதுபோல் காணப்படுகிறது).

பிறகு ஆஞ்ஜநேயர் கோபம்கொண்டு ராவணன்மேல் பாய்ந்து வஜ்ரத்தைப்போன்ற முஷ்டியால் தசமுகனுடைய மார்பில் குத்தினார். அந்த வேகத்தால் ராக்ஷஸாதிபதி தேர்த்தட்டில் முழங்காலை ஊன்றிக்கொண்டு கிடுகிடென்று நடுங்கி விழுந்தான். வாயாலும், நேத்திரங்களாலும் செவிகளாலும் ரத்தம் பெருகிற்று. கொஞ்ச காலம் பிரமித்தாற்போலிருந்து அசைவற்று தேர்த்தட்டில் சாய்ந்தான். பிறகு பிரக்ஞையற்று மூர்ச்சை யடைந்தான். சற்றுத் தெளிந்தும் ஸ்திரமாய் நிற்க முடியவில்லை. பயங்கரமான பராக்ரமமுள்ள ராவணன் யுத்தத்தில் பிரக்ஞையற்றதைக் கண்டு ரிஷிகளும், வானரர்களும், தேவர்களும், இந்திரனும் ஸந்தோஷத்தால் கூச்சலிட்டார்கள். ராவணனால் உபத்திரவத்தை யடைந்த லக்ஷ்மணனை மஹாதேஜஸ்வியான ஆஞ்ஜநேயர் புஜங்களால் தூக்கியெடுத்து ராகவனிடத்தில் கொண்டுபோய் வைத்தார். ராவணனுக்கும் அவனுடைய பரிவாரங்களுக்கும் அசையாத ராமானுஜன், ஆஞ்

ஜநேயருடைய அனுகூலமான, ஹ்ருதயத்தாலும் எல்லையற்ற பக்தியாலும் ஒரு குரங்கிற்கு வசப்பட்டு அதிக லேசானார். (லக்ஷ்மணன் மூர்ச்சையடைந்திருந்தும் அவருக்கு ஞானமும் சக்தியும் குறைவில்லையென்பதால், ராமலக்ஷ்மணர்கள் அந்தந்த ஸமயங்களில் அக்ஞானத்தாலும் அசக்தியாலும் வருந்துகிறவர்கள்போல் காணப்படுவதும் பேசுவதும் மனுஷ்ய பாவனையை அனுஸரித்துச் செய்தவையென்று நினைக்க வேண்டியது. பகவான் கேவலம் ராக்ஷஸ வதத்திற்காகவே மனுஷ்யாவதாரம் செய்ததல்ல. லோகத்தார்க்கு தர்மங்களை அனுஷ்டித்துக் காட்டுவதற்காகவும் ஏற்பட்டது. இல்லாவிட்டால் ஸர்வக்ஞனும் ஸர்வேச்வரனும் ஆனந்தஸ்வரூபியுமான பகவானுக்கு ஸீதையையும் லக்ஷ்மணனையும் விட்டுப் பிரிந்ததால் துக்கமேது?—சுகர்). அந்தச் சக்தியாயுதமும் லக்ஷ்மணன் யுத்தத்தில் ஜயிக்க முடியாதவரென்று கண்டு, அவரைவிட்டு ராவணனுடைய ரதத்தில் தானிருக்குமிடத்திற்குப் போய்ச் சேர்ந்தது. ஸகல விரோதிகளையும் இடையூறுகளையும் நாசம் செய்யும் ஸ்வபாவமுள்ள விஷ்ணுவின் மனத்திற்கெட்டாத அம்சமான தன் ஸ்வரூபத்தை ஞாபகப்படுத்திக் கொண்டதால் லக்ஷ்மணன் பிரக்ஞை தெளிந்து காயம் ஆறி முன்போலானார்.

மஹாதேஜஸ்வியான ராவணனும் மூர்ச்சை தெளிந்து, வில்லை வளைத்துக் கூர்மையான பாணங்களால் வானரர்களை உபத்திரவித்தான். வானர வீரர்கள் மடிவதையும் ஸைன்யம் மூலைக்கு மூலை ஓடுவதையும் ராகவன் கண்டு ராவணனை நோக்கி ஓடிவந்தார். அப்பொழுது ஹனுமான், அவரை நமஸ்கரித்து, "ஸ்வாமி! என் முதுகின்மேலேறிக்கொண்டு, மஹாவிஷ்ணு எல்லையற்ற பலவானான கருடன் மேலேறி அஸுரர்களை ஸம்ஹரித்தது போல் ராக்ஷஸர்களுடன் யுத்தம் செய்யுங்கள்" என்று பிரார்த்தித்தார். ரகுவீரனும் அப்படியே செய்து, ராவணன் ரதத்தில் இறுமாந்து உட்கார்ந்திருப்பதைக் கண்டு கோப பரவசராய், பூர்வத்தில் மஹாவிஷ்ணு பலியை ஸம்ஹரிக்க வந்ததுபோல், கோதண்டத்தை வளைத்து இடிபோல் நாணொசை செய்து, லங்கேசுவரனை நெருங்கி வெகு கம்பீரமாய், "ராக்ஷஸ வீரசிரேஷ்டனே! நில், நில், ஓடாதே. என் பிரிய பாரியையான ஸீதையை அபகரித்து என் கோபத்திற்காளான பிறகு எங்கே போய் தப்புவாய்? இந்திரன், யமன், ஸூரியன், பிரஹ்மா, அக்னி, சங்கரன் முதலியவர்களை அண்டினாலும் பத்துத் திக்குகளிலும் ஓடி ஒளிந்தாலும் என் கண்ணில்பட்ட பிறகு உன் உயிர் தப்புமா? உனக்கும் உன்னைச் சேர்ந்தவர்களுக்கும் ம்ருத்யுவைப்போன்ற என் தம்பி இதோ வந்து விட்டான். நீ அவனைச் சக்தியால் அடித்துக் கொல்லப் பார்த்தாயே? அவனை மூர்ச்சையடையும்படி செய்தோமென்று துள்ளாதே. 'லக்ஷ்மணன் என்னை அடிக்க முடியவில்லையே. உன்னாலாகுமா?' என்றால் இதோவிருக்கும் அத்புதமான பாணங்களால் ஜனஸ்தானத்தில்



வஸித்த பதினான்காயிரம் ராக்ஷஸ வீரர்களையும் கரன், தூஷணன், த்ரிசிரஸ் முதலியவர்களையும் ஒரு முகூர்த்தத்தில் ஸம்ஹரித்ததை அறியாயோ" என்றார். அதைக் கேட்டு லங்கேச்வரன் மஹா வீரியவானான ஆஞ்ஜநேயரைக் காலாக்னியின் கொழுந்துகளைப் போன்ற கூர்மையான பாணங்களாலடித்தான். தன்னைக் குத்தித் தள்ளிவிட்டு ராமனைச் சுமந்து வருகிறானென்று கோபம் கொண்டு ராவணன் பாணங்களால் மாருதியைத் துளைக்கத் துளைக்க, அவருடைய ஸ்வபாவமான தேஜஸ் விருத்தியாயிற்று. தசமுகனால் தேகமெங்கும் காயம்பட்ட வாயுபுத்திரனைப் பார்த்து ராமனுக்கு அடங்காத கோபமுண்டாயிற்று. உடனே ராவணனுடைய ரதத்தையும், சக்கரங்களையும், த்வஜத்தையும், குடையையும், கொடிகளையும், ஸாரதியையும், ஆயுதங்களையும் பாணங்களால் நாசம் செய்தார். இந்திரன் வஜ்ராயுதத்தால் மேருபர்வதத்தை இடிப்பதுபோல், ரகுநாதன் வஜ்ரத்தையும் இடியையும் போன்ற ஒரு பாணத்தால் ராவணனுடைய அகன்ற அழகான மார்பில் அதிவேகமாய் அடித்தார். முன்பு வஜ்ரத்தாலும் இடியாலும் கலங்காமல் அசையாமலிருந்த தசக்ரீவன், ராம பாணத்தாலடிப்பட்டு மிகவும் வருந்தி, நடுங்கி, வில்லை நழுவவிட்டான். அவன் மூர்ச்சையடைவதைக் கண்டு, ராமன் ஒரு அர்த்தசந்திர பாணத்தைப் பிரயோகித்து, ஸூரியனைப்போல் ஜ்வலிக்கும் அவனுடைய கிரீடத்தை அறுத்துத் தள்ளினார். (தன்னை அதுவரையில் ரக்ஷித்து வந்த வில்லையெறிந்து, தானே தன்னை ரக்ஷிக்க முடியுமென்ற அகம்பாவத்தைவிட்டு, ரகுநாதனே தன்னை ரக்ஷிக்க வேண்டுமென்றும் தனக்கு வேறு அடைக்கலமில்லையென்றும் ராவணனுடைய ஸ்திதியால் பகவான் அறிந்துகொண்டார். அவன் அப்படி வார்த்தைகளால் சொல்லவில்லை. ஆகையால் பரம தயாளுவான ஜகதீசன் அவன் உயிரை வாங்காமல் மானபங்கத்தை மாத்திரம் செய்துவிட்டார். தலைக்கு வந்தது தலைப்பாகையுடன் போயிற்றென்ற வசனம் ஸரியாயிற்று. ஒருவன் தன்னை ரக்ஷித்துக் கொள்வதற்கு யாதொரு பிரயத்தனமும் செய்யாமல் பகவானை நம்பியிருப்பதே அவர் அவனை ரக்ஷிப்பதற்கு ஹேதுவாகும்.) விஷமற்ற ஸர்ப்பத்தைப்போலும் அணைந்த நெருப்பைப்போலும் வில்லை விட்டெறிந்து, அணைந்த கிரணங்களையுடைய ஸூரியனைப்போல் பிரகாசமற்று, லக்ஷ்மியின் களையற்று, கிரீடம் அறுபட்டுத் தீனமாய் நிற்கும் ராவணனைப் பார்த்து ராமன், "ராவண! நீ இன்று பிறரால் செய்ய முடியாத வீரச் செயல்களைச் செய்திருக்கிறாய். பல வானர சிரேஷ்டர்களையும் என் தம்பியையும் அடித்துத் தள்ளியிருக்கிறாய். ஆகையால் ஆயுதங்களைத் தரித்து யுத்தம் செய்வதற்கு முடியாமல் கொஞ்சம் களைத்திருக்கிறாயென்று எண்ணுகிறேன். நெடுநேரம் யுத்தம் செய்து களைத்தவனைக் கொன்றானென்ற அபவாதத்திற்கு இடம் கொடுக்காமலிருப்பதற்கே இப்பொழுது உன்னைக் கொல்லா

மல் விடுகிறேன். 'சத்துரு எதிரில் நிற்கையில் நான் எப்படிப் போவேன்' என்றால், நான் ஸம்மதித்து உனக்கு உத்திரவு கொடுக்கிறேன். கபடயுத்தம் செய்பவனே! உன் மாயையெல்லாம் தர்ம யுத்தம் செய்யும் என்னிடத்தில் பலிக்கவில்லையே. ராவண! யுத்தம் செய்து களைத்திருக்கிற நீ லங்கையில் போய் இளைப்பாறி, வேறு ரதத்தையும் ஆயுதங்களையும் ஸம்பாதித்துக்கொண்டு நாளைக்கு வா'' என்றார். அதைக் கேட்டு ராவணன் கர்வமும் ஸந்தோஷமுமற்று, வில்லொடிந்து, குதிரைகளும் ஸாரதியும் மடிந்து, பாணங்களால் துளைக்கப்பட்டு, கிரீடம் பிளக்கப்பட்டு, அதிவேகமாய் லங்கையில் பிரவேசித்தான்.

தேவாஸுரர்களுக்கும் பயங்கரனும் நிகரற்ற பலவானுமான தசமுகன் போனபிறகு, தேவர்களும் தானவர்களும் ஸந்தோஷித்துக்கொண்டாடினார்கள். பிறகு, ராமன் லக்ஷ்மணன் மேலும் வானரர்கள் மேலும் பாய்ந்திருக்கும் பாணங்களை யெடுத்துக் காயங்களை ஆற்றி ஸேனையை வேறிடத்திற்கு நடத்திக்கொண்டு போனார். தேவர்களுக்கு நித்ய சத்ருவான தசானனன் முறிபட்டோடுவதைப் பார்த்து, தேவர்கள், பூதங்கள், திக்பாலர்கள், ஜலத்தில் வஸிப்பவர்கள், ரிஷிகள், உரகர்கள், மற்றும் பூமியில் வஸிப்பவர்களும் கவலையற்று, "மஹாபாபியான ராவணன் ராமனால் தோல்வியடைந்தான். இனி அவனுக்கு மரணமும் நமது கஷ்டங்கள் தீரும் காலமும் ஸமீபித்துவிட்டது'' என்று ஆனந்தித்தார்கள்.

தஸ்மிந் ப்ரபி4ந்நே த்ரித3ஶேந்த்3ர ஶத்ரௌ
ஸுராஸுரா பூ4தக3ணா தி3ஶஶ்ச |
ஸஸாக3ரா: ஸர்ஷி மஹோரக3ாஶ்ச
ததை2வ பூ4ம்யம்பு3சராஶ்ச ஹ்ருஷ்டா: ‖ (157)

---

## ஸர்க்கம் 60

## கும்பகர்ணனை எழுப்பினது

ஸ ப்ரவிஶ்ய புரீம் லங்காம் ராமபா3ண ப4யார்தி3த: |
ப4க்3நத3ர்பஸ் தத3ா ராஜா ப3பூ4வ வ்யதி2தேந்த்3ரிய: ‖ (1)

ராவணன் லங்கையில் பிரவேசித்து மறுபடியும், ராமபாணங்கள் வந்து விழுகின்றனவோ என்று பயத்தால் திரும்பித் திரும்பிப் பார்த்துக்கொண்டு, கொழுப்பழிந்து மனக்கலக்கம் கொண்டான். ஸிம்ஹத்தால் துரத்தப்பட்ட யானையைப்போலும் கருடனால் துரத்தப்பட்ட ஸர்ப்பத்தைப்போலும் பலவானான ரகுவீரனால் ஜயிக்கப்பட்டு அவமானமடைந்தான்.

"என்ன ஆச்சரியம்! இவைகளைப்போன்ற பாணங்களுமுண்டோ! பிரஹ்மதண்டத்தைப்போல் ஜ்வலிக்கின்றன. மின்னலைப்போல் காந்திபொருந்திக் கண் கூசுகின்றன'' என்று நினைத்து



க3ச்சா2நுஜாநாமி ரணாத்3 தி3தஸ் த்வம் ப்ரவிஶ்ய ராத்ரிஞ்சரராஜ லங்காம் |
ஆஶ்வாஸ்ய நிர்யாஹி ரதீ2 ச த4ந்வீ தத3ா ப3லம் த்3ரக்ஷ்யஸி மே ரத2ஸ்த2: ‖ —யு. 95ஸ—154சு.

''ராவண! யுத்தம் செய்து களைத்திருக்கிற நீ, லங்கையில்போய் இளைப்பாறி, வேறு ரதத்தையும் ஆயுதங்களையும் ஸம்பாதித்துக் கொண்டு நாளைக்கு வா'' என்றார்.

(பக்கம் 216 பார்க்க )

நினைத்து வருந்தினான். தங்க ஸிம்ஹாஸனத்தில் வீற்றிருந்து ராக்ஷஸர்களை நோக்கி, "நான் வெகு கஷ்டப்பட்டுச் செய்த தவமெல்லாம் வீணாயிற்று. தேவாஸுரர்களையும் இந்திரனையும் அலக்ஷ்யமாய்ப் பலதடவை ஜயித்த நான், ஒரு அல்ப மனுஷ்யனால் அவமானமடைந்தேனே? முன்பு பிரஹ்மா எனக்குக் கொடுத்த கோரமான சாபம் வீணாகுமா? மனுஷ்யர்களிடத்திலிருந்து உனக்குப் பயம் நேருமென்ற வார்த்தைகள் என்னிடத்தில் பலித்தன. தேவ, தானவ, கந்தர்வ, யக்ஷ, ராக்ஷஸ, பன்னகர் முதலியவர்களிடத்திலிருந்து எனக்கு மரணம் வரக்கூடாதென்று மாத்திரம் கேட்டுக்கொண்டேனேயன்றி மனுஷ்யர்களை அலக்ஷ்யம் செய்து அவர்களையும் அதில் சேர்க்காமல் விட்டேனே. முன்பு இக்ஷ்வாகு வம்சத்தரசனான அனரண்யன் என்னால் ஜயிக்கப்பட்டு மரணமடையும்பொழுது, என்னைப் பார்த்து, "அடே நீசனே! ராக்ஷஸாதமனே! துர்ப்புத்தி பிடித்தவனே! உன்னைப் புத்திரமித்திர பந்து பரிவார ஸைன்யங்களுடன் யுத்தத்தில் வேரறுக்க ஒரு மஹாபுருஷன் என் வம்சத்தில் பிறப்பான்' என்று கூறிய சாபத்தின்படி, தசரத புத்திரனான இந்த ராமனே என்னைக் கொல்லுவதற்காக மனுஷ்ய ரூபமெடுத்து வந்திருக்கிறானோ? முன்பு நான் வேதவதி என்ற பதிவிரதையைப் பலாத்காரம் செய்தபொழுது அவளும் என்னைச் சபித்திருக்கிறாள். 'என்னால் உனக்கு மரணம் நேரப்போகிறது' என்ற வார்த்தைகளை நிறைவேற்றுவதற்காகவே ஜனகராஜனுக்குப் புத்திரியாக ஸீதையென்று பெயர் தரித்து வந்திருக்கிறாளோ? பார்வதி, நந்தி, ரம்பை, வருணனுடைய புத்திரி, இந்த நால்வரும் விசேஷ தபோமஹிமையுள்ளவர்கள். அவர்களுடைய வார்த்தை பொய்யாகாது. (ராவணன் கைலாஸ கிரியைப் பெயர்க்கும்பொழுது பார்வதிக்குத் திடீரென்று பயமுண்டாய், "அடே துஷ்ட! நானும் என் பதியும் ஏகாந்தமாயிருக்கையில் நீ அகாரணமாய்ப் பயத்தையுண்டுபண்ணினதால் என்னைப்போன்ற ஒரு ஸ்த்ரீயால் உனக்கு மரணபயம் நேரக்கடவது" என்று சபித்ததாகத் தெரிகிறது. புஞ்ஜிகஸ்தலையென்ற அப்ஸரஸே இங்கே வருணனுடைய புத்திரியென்று சொல்லப்படுகிறது. இவைகளின் விவரங்களை உத்தரகாண்டத்தில் காண்க.—திர்த்தீயம்) இந்த விஷயங்களை நன்றாய் ஆலோசித்துச் சத்துருவை ஜயிக்கும் உபாயங்களைச் செய்ய வேண்டியது. ஸகல ராக்ஷஸர்களும் லங்கையின் உட்கோட்டை வாசல்களிலும் கோபுரங்களிலும் அவைகளுக்கடுத்த வீடுகளிலும் இருக்கட்டும்.

ஒப்பில்லாத கம்பீரனும் தேவாஸுரர்களின் கர்வத்தை அடக்குகிறவனுமான என் தம்பி கும்பகர்ணன் பிரஹ்மாவின் சாபத்தால் தூங்கிக்கொண்டிருக்கிறான். அவனை எழுப்புங்கள். கவலையற்று ஸுகமாய்ச் சில வேளை ஒன்பது, சில வேளை ஆறு, சில வேளை ஏழு, சில வேளை எட்டு மாதங்கள் வரையிலும் தூங்கு

கிறான். நானோ எந்த வழியிலும் தடைப்பட்டு, எண்ணங்கள் நிறைவேறாமல் ஏக்கம் பிடித்துத் தூக்கமற்றிருக்கிறேன். ("ஸ்வாமி! அநேக வருஷங்கள் ஸுகமாய்த் தூங்கும்படி வரம் கொடுக்க வேண்டும்" என்று கும்பகர்ணன் காலத்தைக் குறிப்பிடாமல் பிரஹ்மாவை பிரார்த்தித்ததாக உத்தரகாண்டத்தில் சொல்லப் படுகிறது. "இவன் ஆறு மாதங்கள் வரையில் தூங்கிவிட்டு ஒரு நாள் விழித்திருப்பான்" என்று விபீஷணன் ராமனிடத்தில் சொன்னதற்கு ஆறு மாதத்திற்குக் குறைவில்லையென்று தாத்பரியம்). இதற்கு ஒன்பது தினங்களுக்கு முன் நம்முடன் மந்திராலோசனை செய்துவிட்டுத் தூங்க ஆரம்பித்தான். ஆகையால் அவனை ஸுலபமாக எழுப்பலாம். அவனைப்போன்ற பலவானிருக்கையில் நமக்குக் குறையென்ன? அவன் யுத்தத்தில் வெகு ஸமர்த்தன். ராக்ஷஸ வம்சத்திற்கே சிகரம் போன்றவன். ராம லக்ஷ்மணர்களையும் வானரர்களையும் ஒரு நொடியில் நாசம் செய்வான். யுத்தத்தில் ஸேனாதிபதியின் கொடியைக் கண்டு ஸேனைகள் உத்ஸாஹத்தையும் தைரியத்தையும் அடைவதுபோல் ராக்ஷஸ குல திலகனான இவனை யுத்தபூமியில் கண்டவுடன் நமது ஸைன்யங்களுக்குப் பலமும் தைரியமும் உத்ஸாஹமும் அதிகரிக்கும். ஆனால் இவன் தன் மஹிமையையறியாமல் அல்பஸுகங்களில் புத்தியைச் செலுத்தி இடைவிடாமல் தூங்கிக்கொண்டிருக்கிறான். இல்லாவிட்டால் எவ்வளவோ காரியங்களைச் செய்திருப்பான். இந்தக் கோர யுத்தத்தில் ராமனால் மிகவும் அவமானப்பட்டேன். கும்பகர்ணன் விழித்துக் கொண்டிருந்தால் எனக்கு யாதொரு விசாரமுமில்லை. ஐயோ! பாவம்! அவனை அகாலத்தில் எழுப்ப வேண்டியிருக்கிறதே. என்ன செய்வேன்? வேறுவழியில்லை. நான் இவ்விதமான கஷ்டங்களையும் அவமானத்தையுமடைந்தும், பலபராக்கிரமத்தில் தேவேந்திரனைப் போன்ற ஒருதம்பி எனக்கிருந்தும், அவனால் யாதொரு ஸஹாயமும் இல்லாமல் வருந்துகிறேன். ஆகையால் அவன் சீக்கிரமாய் விழித்துக்கொள்ளும் ஏற்பாடுகளைச் செய்யுங்கள்" என்றான்.

(கும்பகர்ணன் தூங்கி விழித்து, ஒருநாள் முழுவதும் வ்யவஹாரங்களைக் கவனிப்பான். ஆகையால், ராவண ஸபையில் ஆலோசனை நடந்த மறுநாள் தூங்க ஆரம்பித்திருக்கவேண்டும். ஆலோசனை நடந்த தினத்திலேயே விபீஷணன் ராமனைச் சரணமடைந்து அவரால் ஒப்புக்கொள்ளப்பட்டான். அந்த தினம்முதல் மூன்று தினங்கள் வரையில் ராமன் ஸமுத்திரபகவானை பிரார்த்தித்து தர்ப்ப சயனத்திலிருந்தார். அதற்குப்பிறகு ஐந்து தினங்களில் அணைகட்டப்பட்டது. அதற்கு முதல்நாள் ஸாயங்காலத்தில் ஸுவேலமலையில் ஏறினது. ராத்திரி ஸுக்ரீவனுக்கும் ராவணனுக்கும் த்வந்த்வ யுத்தம். மறுநாள் இரு ஸைன்யங்களுக்கும் யுத்தம். அன்று ராத்திரி ராமலக்ஷ்மணர்கள் நாகபாசத்தால் கட்டுப்பட்டு விடுபட்டார்கள். தூம்ராக்ஷனும் வஜ்ரதம்ஷ்ட்ரனும் அகம்பனனும் கொல்லப்பட்டார்கள். மறுநாள் பிரஹஸ்தனுடைய வதமும் ராவணனுடைய கிரீடத்தையுடைத்ததும் நடந்தன. இப்படி ஒன்பது தினங்கள் சென்றனவென்று சிலர் அபிப்பிராயப் படுகிறார்கள்.)



அதைககேட்டு ஸேவகர்கள் அகாலத்தில் கும்பகர்ணனை எப்படி எழுப்புவோமென்று ஒன்றும் தோன்றாமல் கவலைகொண்டு, அவனுடைய அரண்மனைக்குச் சென்றார்கள். தசமுகனுடைய உத்திரவுப்படி அவர்கள் கும்பகர்ணனை எழுப்புவதற்கு வேண்டிய சக்தி விருத்தியாகும் பொருட்டு மாம்ஸங்களையும் ரத்தத்தையும் அளவில்லாமல் உட்கொண்டு, அவன் விழித்துக்கொண்டவுடன் பசி தாகம் முதலியவை ஒருவாறு அடங்குவதற்காக மாலைகளையும், தூபங்களையும் பரிமளத்திரவியங்களையும் பக்ஷ்யங்களையும் மாம்ஸங்களையும் பானங்களையும் எடுத்துக்கொண்டு, கும்பகர்ணன் தூங்கும் குகைக்குள் சென்றார்கள். அது ஒரு யோஜனை அகலமும் நீளமுமுள்ளதாய், பெரிய வாசற்படியுடன், மிகவும் அழகாய்க் கட்டப்பட்டிருந்தது. அவன் பூசிக்கொண்டிருந்த கந்தங்களின் பரிமளம் எங்கும் வீசிற்று. அவர்கள் அவனுடைய மூச்சுக்காற்றால் அடித்து வெளியில் தள்ளப்பட்டு. மஹாபலசாலிகளானதால் உறுதியாய் நின்று வெகு கஷ்டப்பட்டுக் குகைக்குள் சென்றார்கள். அதில் அநேக தங்கமேடைகள் போடப்பட்டிருந்தன. அங்கே கும்பகர்ணன் அவயவங்கள் விகாரமாய் அலங்கோலப்பட்டு, பெரிய பர்வதம் சிதறிக்கிடந்தது போல், தூங்குவதைப் பார்த்துப் பயந்து, எல்லோரும் சேர்ந்து அவனை எழுப்பப் பிரயத்னம் செய்தார்கள். மரங்களைப்போல் நீண்டு தடித்து வளர்ந்த மயிரால் தேகமெங்கும் மூடப்பட்டிருந்தது. மஹாநாகம் கோபத்தால் சீறுவதுபோல் மூச்சு விட்டுக் கொண்டிருந்தான். அவன் குறட்டை விடும் ஓசையால் ஸகலப் பிராணிகளும் பயந்து நடுங்கின. தூங்கும் பொழுதே அவனுடைய ரூபம் பார்க்கக் கோரமாயிருந்தது. மலைக்குகைகள் போன்ற மூக்குத்வாரங்களையும் பாதாளத்தைப்போன்ற விசாலமான வாயையும் உடையவனாய்க் குடித்து வழிந்த கொழுப்பும் ரத்தமும் சுற்றிலும் நாற்றம் வீசக் கிரீட குண்டல கேயூர ஹாரங்களால் அலங்கரிக்கப்பட்டு, கால் கை போன இடம் தெரியாமல், அயர்ந்து தூங்கிக்கொண்டிருந்தான். அந்த ஸேவகர்கள் அவன் விழித்தவுடன் தவக்கமில்லாமல் புஜிப்பதற்கு மான், எருமை, பன்றி முதலிய மிருகங்களின் மாம்ஸங்களையும் அன்னங்களையும் மேருபர்வதங்களைபோல் அவனுக்கெதிரே குவித்தார்கள். பலவித மதுபானங்களையும் ரத்தக் குடங்களையும் ஸமீபத்தில் வைத்து, நேர்த்தியான சந்தனம் பூசி, மாலைகள் தூபங்கள் முதலிய பரிமளத் திரவியங்களால் எங்கும் மணம் வீசும்படி செய்தார்கள்.

பிறகு, அடிக்கடி எல்லோரும் சேர்ந்து மேகங்கள் குமுறுவது போல் கர்ஜித்தார்கள். சந்திரனைப்போல் காந்தியுள்ள சங்கங்களை ஊதினார்கள். தங்கள் பிரயத்னங்கள் வீணானதைக் கண்டு கோப

மடைந்து, கும்பகர்ணனை எழுப்புவதற்காக இடைவிடாமல் எல்லோரும் பயங்கரமாய்க் கூச்சலிட்டார்கள். அசைத்தார்கள், புரட்டினார்கள், அறைந்தார்கள். சங்கம், பேரிகை தம்பட்டம் முதலிய வாத்யங்களின், த்வனியும், ஸேவகர்கள் அறைந்து கூச்சலிட்டு ஸிம்ஹநாதம் செய்யும் த்வனியும் லங்கையெங்கும் பரவிற்று. அதைக்கேட்டுப் பக்ஷிகள் பயந்து தப்பித்துக்கொள்வதற்காக ஸகல திக்குகளிலும் ஓடின. அப்படியும் தூக்கம் தெளியவில்லை. மஹா சரீரமுள்ள அந்தராக்ஷஸவீரன் அப்பொழுதும் விழித்துக்கொள்ளாததைக் கண்டு, ஸேவகர்கள் தங்களுடைய பிரயத்னங்களும் சிரமமும் வீணாயினவென்று கோபம் மிகுந்து, உலக்கை இருப்புலக்கை கதை பாறை மலைச்சிகரம் மரங்கள் முதலியவைகளால் கைசோரும் வரையில் அடித்தார்கள்; கைகளால் அறைந்தார்கள்; முஷ்டிகளால் குத்தினார்கள்; கும்பகர்ணன் அயர்ந்து ஸுகமாய்த் தூங்கிக்கொண்டிருந்தான். பலவான்களான அந்த ராக்ஷஸர்களும் கும்பகர்ணனுடைய மூச்சுக்காற்றிற்கெதிரில் நிற்கமுடியவில்லை. பிறகு பயங்கரமான பராக்கிரமமுள்ள அந்த ஸேவகர்கள் வேண்டிய ஏற்பாடுகளைச் செய்துகொண்டு, பதினாயிரம் ராக்ஷஸர்கள் ஓரே காலத்தில் மிருதங்கம், தம்பட்டம், பேரீ, சங்கம், கடம், முதலிய வாத்யங்களை ஓயாமல் சப்தித்தார்கள். மைமலைகளைப் போன்ற அந்தக் கிங்கரர்கள் கூச்சலிட்டும் நான்கு பக்கங்களிலிருந்து அடித்தும் அவன் விழிக்காததைக்கண்டு, வேறு பயங்கரமான யத்னங்களைச்செய்ய ஆரம்பித்தார்கள். எண்ணமுடியாத குதிரைகளையும், ஒட்டகங்களையும் யானைகளையும் கழிகளாலும், கொறடாக்களாலும் மாவட்டிகளாலும் அடித்துக் கோபமூட்டி அவன் மேல் ஏறி மிதிக்கச்செய்தார்கள். பேரிகை, சங்கம், மிருதங்கம் முதலிய வாத்தியங்களைப் பூர்ணபலத்துடன் சப்தித்தார்கள். பெரிய ஸ்தம்பங்களில் கட்டின இருப்புக் குறடாக்களாலும் உலக்கைகளாலும் அவனுடைய அவயவங்களைத் தங்களால் கூடிய வரையில் தயையில்லாமல் அடித்தார்கள். அந்தச் சப்தத்தால் லங்காபுரியும் அந்தச் சூழ்ந்த வனங்களும், மலைகளும் நிறைந்து அதிர்ந்தன. கும்பகர்ணனோ விழித்துக்கொள்ளவேயில்லை. பிறகு அநேக ஆயிரம் பேர்கள் தங்கக்கழிகளால் ஓரே காலத்தில் மூச்சு விடாமல் அடித்தார்கள். அந்த ராக்ஷஸனோ பிரஹ்மாவின் சாப மஹிமையால் வரவர அயர்ந்து ஸுகமாய் பிரக்ஞையற்றுத் தூங்கினான். அதைக்கண்டு அந்தக் கிங்கரர்கள் கோபத்தால் மெய்மறந்து குத்தினார்கள்; சிலர் பேரிகளை யடித்தார்கள்; சிலர் தொண்டை கிழியக் கத்தினார்கள்; சிலர் அவனுடைய முகத்திலுள்ள மயிர்களைப் பிடுங்கினார்கள்; சிலர் காதுகளைக் கடித்தார்கள்; சிலர் காதுகளில் குடம்குடமாய் ஜலத்தை ஊற்றினார்கள். அவனோ தூக்கத்தின் கொடுமையால் அசையவில்லை. கத்திவாய்தடிகளை பிரயோகிப்பதில் தேர்ந்த சில பலசாலிகள் அவனுடைய தலையிலும் மார்பிலும்



நேது3 ராஸ்போ2டயாமாஸு: சிக்ஷுபுஸ்தே நிசாசரா: |
கும்ப4கர்ண விபோ3தா4ர்த2ம் சக்ருஸ்தே விபுலம் ஸ்வநம் ||   —யு. 60ஸ—39 சு.

கும்பகர்ணனை எழுப்புவதற்காக, இடைவிடாமல் எல்லோரும் பயங்கரமாய்க் கூச்சலிட்டார்கள், அசைத்தார்கள், புரட்டினார்கள், அறைந்தார்கள்.
(பக்கம் 222 பார்க்க)

Notes : This Blank Page has also to be counted as a another page Number.

It is intentionally left blank after Picture Sketches.!

Released by Maran's Dog ,Toronto, Canada



கைகால்களிலும் ஓங்கியோங்கி அடித்தார்கள். அழுத்தமுள்ள கயிறுகளால் தோல்போட்டு இறுக்கிக் கட்டப்பட்டு இரும்புமுளைகள் நாட்டின பெரிய கதாயுதங்களால் நான்குபுறங்களிலிருந்தும் இடைவிடாமல் இடிக்கப்பட்டும் அவனுடைய சரீரத்தில் உணர்ச்சியுண்டாகவில்லை. பிறகு அநேக ஆயிரம் யானைகளை அவன் மேல் ஓட்டச் செய்தார்கள்.

அப்பொழுது கொஞ்சம் உணர்ச்சியுண்டாய் விழித்துக்கொண்டு, பூச்சி புழுக்கள் மேலே ஊருகின்றனவோ என்று நினைத்தான். பிறகு அவன் எழுந்திருப்பதற்காக அந்த ராக்ஷஸர்கள் மலைச்சிகரங்களையும், விருக்ஷங்களையும் பெயர்த்து அவனை ஓங்கியோங்கியடித்தார்கள். அதைக் கொஞ்சம் கூட லக்ஷ்யம் செய்யாமல், அகாலத்தில் தன்னைஎழுப்பித் தூக்கத்தைக் கெடுப்பதற்காகக் கோபம் கொண்டான். பிறகு இப்படி நம்மை எழுப்பவேண்டிய காரணம் என்ன நேர்ந்ததோ என்று பயந்தான். கோரமான பசியுண்டாயிற்று. கைகால்களை நெட்டிமுறித்துக்கொண்டு எழுந்து உட்கார்ந்தான். மஹாஸர்ப்பங்களைப்போல் நீண்டு, மலையைப்போல் உறுதியாய் மலைச்சிகரங்களைப்போல் பலமுள்ள அவனுடைய புஜங்களை உதறிக்கொண்டு, வடவாக்னியின் முகத்தைப்போன்ற விகாரமான வாயைப் பயங்கரமாய்த் திறந்து கொட்டாவி விட்டான். அப்பொழுது பாதாளத்தைப்போன்ற அவனுடைய வாய் மேருசிகரத்தின் உச்சியிலுதிக்கும் ஸூரியனைப்போல் காணப்பட்டது.

கும்பகர்ணன் கொட்டாவி விட்டபிறகு நன்றாய் விழித்துக்கொண்டான். அளவிற்கு மிஞ்சின பலத்தையுடைய அந்த ராக்ஷஸன் விடும் மூச்சுக்காற்று பெரிய மலைகளிலிருந்து வீசும் பெருங்காற்றைப் போலிருந்தது. அவன் உட்கார்ந்திருக்கையில் தங்க ஆபரணங்களால் அலங்கரிக்கப்பட்ட அவனுடைய சரீரம், கோடைமுடிவில் மழையைச் சொரியும் கருத்த மேகம் கொக்குகளால் சூழப்பட்டதுபோல் காணப்பட்டது. கொழுந்து விட்டெரியும் நெருப்பைப்போல் குரூரமான அவனுடைய நேத்திரங்கள், அகாலத்தில் எழுப்பப்பட்டதால் மின்னல் கொடிகளைப்போல் அங்குமிங்கும் மிரண்டு கொண்டேயிருந்தன. அவை, சனி அங்காரகன் என்ற க்ரஹங்களைப்போல், பிறருக்குப் பீடையை உண்டுபண்ணக் கூடியவை. பிறகு அந்த ராக்ஷஸர்கள் அவனுக்கெதிரில் ஸித்தம் செய்யப்பட்டிருக்கும் பலவகை அன்னங்களையும், மாம்ஸங்களையும், பக்ஷ்யங்களையும் அவனுக்குச் சுட்டிக் காட்டினார்கள். பசியடங்குவதற்காக அளவற்ற மாம்ஸத்தை தின்றான். தாகம் தீருவதற்காக ரத்தத்தைக் குடித்தான். அதுவும் போதாமல், கொழுப்பு மத்யம் முதலியவைகளால் பூர்ணமான பாத்திரங்களையும் குடித்தான். பிறகு அந்த ஸேவகர்கள் அவன் பசிதாகம் தீர்ந்து திருப்தி

யடைந்து ஸந்தோஷமாயிருக்கிறானென்று கண்டு, மெள்ள மெள்ள வெளிப்பட்டு எதிரில் வந்தார்கள். அகாலத்தில் அவனை எழுப்பினதாலுண்டாகும் கோபத்திற்குப் பயந்து, அதுவரையில் அவனுடைய கண்ணில் படாமல் மறைந்து, பிறகு தலைவணங்கி நமஸ்கரித்து அவனைச் சூழ்ந்து நின்றார்கள். நித்திரை மயக்கத்தால் கண்கள் கலங்கிப் பூர்ணமாய்த் திறக்காமல் நான்கு புறங்களிலும் கவனித்துப் பார்த்து, ராவணனால் அனுப்பப்பட்ட ஸேவகர்களைக் கண்டான். தன்னைத் திடீரென்று எழுப்பினதாலும் அதுவரையில் அப்படி ஒருநாளும் செய்யாததாலும் ஆச்சரியமடைந்து, அந்த ராக்ஷஸர்களை மரியாதை செய்து, "நீங்கள் இவ்வளவு சிரமப்பட்டு என்னை எழுப்பின காரணமென்ன? நமது அரசன் க்ஷேமமாயிருக்கிறாரா? அல்லது பயத்தால் பீடிக்கப்படுகிறாரா? நீங்கள் இவ்வளவு விரைவில் என்னை எழுப்பினதைப் பார்த்தால், என் தமயனுக்குச் சத்துருவால் ஏதோ பெரிய பயம் நேர்ந்திருக்க வேண்டும். இந்த க்ஷணமே அவருக்கு யாதொரு பயமுமில்லாமல் செய்கிறேன். மஹேந்திரனை அவனுடைய ஸ்தானத்திலிருந்து அடித்துத் தள்ளுகிறேன். அக்னியை ஸ்வரூபமே இல்லாமல் அழிக்கிறேன். ஸுகமாய்த் தூங்கிக்கொண்டிருந்த என்னைத் தகுந்த காரணமில்லாமல் என் அண்ணன் எழுப்பமாட்டார். ஆகையால், உண்மையான காரணங்களைச் சொல்லுங்கள்" என்றான்.

அளவற்ற பலமுள்ள கும்பகர்ணன் கோபத்தால் கண்கள் சிவந்து இப்படிக் கேட்க, யூபாக்ஷனென்ற மந்திரி, கைகூப்பி வணக்கமாய், "ஸ்வாமி! தேவாஸுரர்களால் தங்களுக்கு யாதொரு பயமுமில்லை. நாம் இதுவரையில் லக்ஷ்யம் செய்யாத அல்ப மனிதர்கள் பெருங்கெடுதியை விளைவிக்கிறார்கள். தைத்யர்களும் தானவர்களும் இப்படி எங்களை உபத்திரவித்ததில்லை; அவர்களைக் கண்டு நாங்கள் இப்படிப் பயப்பட்டதில்லை. மலைகளைப் போன்ற வானரர்கள் லங்கையைக் காற்று நுழையாமல் முற்றுகை போட்டிருக்கிறார்கள். ஸீதையை அபகரித்ததால் கோபம் கொண்ட ரகுவீரன் நம்மை நடுங்கச் செய்கிறான். முன் ஒரு அல்பக்குரங்கு, பிறர் கண்ணெடுத்துப் பார்க்க முடியாத நமது ராஜதானியைச் சுட்டுக் கரியாக்கி, நமது ராஜகுமாரனான அக்ஷன் முதலிய ராக்ஷஸவீரர்களைச் சதுரங்க ஸேனையுடன் நாசம் செய்து ராக்ஷஸாதிபதியும் ஸர்வலோக கண்டகனுமான நமது பிரதாப லங்கேச்வரன், ராமனால் யுத்தத்தில் அவமானப்பட்டு, தேரழிந்து, குதிரைகள் மடிந்து, ஸாரதி இறந்து, வில்லொடிந்து, கவசம் பிளந்து, கிரீடம் பொடிப் பொடியாக உயிர்த்தப்பி வந்தார். தேவர்களும், தைத்யர்களும், தானவர்களும் இவ்வளவு பாடுபடுத்தினதில்லை. நமது மஹாராஜா இன்று யுத்தத்திலிருந்து உயிருடன் வந்தது வெகு ஆச்சரியம்" என்றான்.



தன் தமயன் யுத்தத்தில் அபஜயமடைந்ததைக் கேட்டவுடன் கும்பகர்ணன் கோபத்தால் கண்களை உருட்டி விழித்து, மஹாமேகங்கள் முழங்குவதுபோல், "அடே! யூபாக்ஷ! ராமனையும் லக்ஷ்மணனையும் எல்லா வானரஸேனையையும் இருந்தவிடம் தெரியாமல் நாசம் செய்யாமல் என் அண்ணன் முகத்தில் விழிக்க மாட்டேன். இன்று வானர மாம்ஸத்தால் லங்கையிலுள்ள ராக்ஷஸர்களுக்குத் திருப்தியாய் விருந்து செய்கிறேன். ராமலக்ஷ்மணர்களுடைய ரத்தத்தையும் மாம்ஸத்தையும் எனக்காக வைத்திருக்கிறேன்" என்றான். அதைக் கேட்டு மஹோதரனென்ற ராக்ஷஸ வீரன், கர்வத்தாலும் ரோஷத்தாலும் கும்பகர்ணனுடைய க்ரூர ஸ்வபாவம் விருத்தியடைவதைக் கண்டு ஸந்தோஷித்துக் கைகூப்பி, "ஸ்வாமி! மஹாராஜாவின் அபிப்பிராயத்தை அறிந்து, குண தோஷங்களை ஆலோசித்து, பிறகு சத்ருக்களை நாசம் செய்யுங்கள்" என்றான். கும்பகர்ணனும் அதற்கிணங்கி, ராவணனுடைய ஸபைக்குப் போகப் புறப்பட்டான். அப்பொழுது ராக்ஷஸர்கள் அவனை வஸ்திரங்களாலும், ஆபரணங்களாலும், சந்தனம், புஷ்பம் முதலிய பரிமளத் திரவியங்களாலும் அலங்கரித்தார்கள். சிலர் ராவணனிடம் சென்று "மஹாராஜா! தங்களுடைய தம்பி கும்பகர்ணன் தூக்கம் தெளிந்து பசிதாகம் தீர்ந்து, தங்களுடைய தரிசனத்திற்காக வந்து கொண்டிருக்கிறார்" என்று தெரிவித்தார்கள். தசக்ரீவன் அதைக் கேட்டு ஸந்தோஷித்து, "நானும் அவனைப் பார்க்க ஆவல் கொண்டிருக்கிறேன். அதிசீக்கிரத்தில் தகுந்த மரியாதையுடன் இங்கே அழைத்து வாருங்கள்" என்றான். அவர்கள் கும்பகர்ணனிடம் சென்று, "ஸ்வாமி! ராக்ஷஸாதிபதி தங்களைப் பார்க்க விரும்புகிறார். தாங்கள் அங்கே சென்று அவருடைய மனத்தை ஸந்தோஷப்படுத்துங்கள்" என்றார்கள்.

தன் தமையனுடைய ஆக்ஞையை ஒப்புக்கொண்டு, கும்பகர்ணன் படுக்கையிலிருந்து இறங்கி, முகம் கழுவி, பலத்தை விருத்தி செய்யும் உத்தமமான பாணங்களைக் கொண்டு வரும்படி ஆக்ஞை செய்தான். உடனே ஸேவகர்கள் உத்தமமான பலவித மத்யங்களால் நிறைந்த பாத்திரங்களைக் கொண்டுவந்து வைத்தார்கள். அவைகளில் இரண்டாயிரத்தைக் குடித்துக் கொஞ்சம் மயங்கி, தேஜஸும் பலமும் அதிகமாகி, மனமகிழ்ச்சிகொண்டு, பிரளய காலத்தில் எல்லா பூதங்களையும் ஸம்ஹரிக்கும் யமனைப்போல் விளங்கினான். அநேக ராக்ஷஸ வீரர்களால் சூழப்பட்டு ராவணனுடைய அரண்மனையை நோக்கி நடந்து வருகையில், அவனுடைய பாரம் தாங்காமல் பூமி நடுங்கிற்று. ஸூரியன் தன் கிரணங்களால் பூமியைப் பிரகாசிக்கச் செய்வதுபோல், தன் தேஜஸால் ராஜமார்க்கமெங்கும் வியாபிக்கச் செய்து, பிரஜைகள் கூப்பின கைகளையே ஹாரமாய்த் தரித்துக்கொண்டு, தேவேந்திரன் பிரஹ்ம ஸபையில் பிரவேசிப்பதுபோல், கும்பகர்ணன் ராக்ஷஸேச்வரனுடைய அரண்

மனையில் நுழைந்தான். அவன் ராஜவீதியில் நடந்து வரும்போது லங்கைக்கு வெளியிலிருந்த வானர ஸேனைகள், "மஹா பர்வதத்தைப்போல் பருத்து ஆகாசத்தை அளாவிப் பூமி அதிரும்படி நடந்துவரும் இந்த மஹாபூதம் யாரோ?" என்று திகிலடைந்தார்கள். சிலர் எல்லா பிராணிகளுக்கும் அபயஸ்தானமான ரகுவீரனைச் சரணமடைந்தார்கள். சிலர் ஒன்றும் தோன்றாமல் கீழே விழுந்தார்கள். சிலர் மூலைக்கு மூலை ஓடினார்கள். சிலர் பயத்தால் பித்துப் பிடித்தவர்போல் உட்கார்ந்திருந்தார்கள். மஹா பர்வத சிகரத்தைப்போல் நவரத்னங்களாலிழைக்கப்பட்ட கிரீடத்தால் அலங்கரிக்கப்பட்டு, தன் தேஜஸால் ஸூரியமண்டலத்தைத் தொடுகிறவன்போல் நடந்துவரும் அவனுடைய அபூர்வமான ரூபத்தைக் கண்டு, எல்லா வானரர்களும் பயத்தால் மதிமயங்கி அங்குமிங்கும் ஓடி ஒளிந்தார்கள்.

தமத்3ரி ஶ்ருங்க3 ப்ரதிமம் கிரீடிநம்
ஸ்ப்ருஶந்த மாதி3த்ய மிவாத்மதேஜஸா |
வநௌகஸ: ப்ரேக்ஷ்ய விவ்ருத்3த4 மத்3பு4தம்
ப4யார்தி3தா து3த்3ருவிரே ததஸ் தத: ‖ (106)

## ஸர்க்கம் 61

## கும்பகர்ணனுடைய விருத்தாந்தம்

ததோ ராமோ மஹாதேஜா த4நுராதா3ய வீர்யவாந் |
கிரீடிநம் மஹாகாயம் கும்ப4கர்ணம் த3த3ர்ஶ ஹ ‖ (1)

**வா**னரர்கள் மிரண்டோடுவதைக் கண்டு, ராமன் கோதண்டத்தையெடுத்து, "இவர்கள் இப்படி அகஸ்மாத்தாய்ப் பயப்படக் காரணமென்ன"வென்று பார்க்கையில், கும்பகர்ணன் உத்தம கிரீடத்தால் விளங்கும் அளவற்ற சரீரத்துடன் ஸூரிய மண்டலத்தால் பிரகாசிக்கும் மேருமலையைப்போலும், த்ரிவிக்ரமாவதாரத்தில் மூன்று லோகங்களையும் மூன்றடிகளால் அளந்த மஹாவிஷ்ணுவைப்போலும், தங்கமயமான ஹார கேயூர மகுட குண்டலங்களாலும் நவரத்னமிழைத்த ஆபரணங்களாலும் அலங்கரிக்கப்பட்டு, மின்னற்கொடிகள் பாயும் நீருண்ட மேகங்களைப்போலும் வருவதைக் கண்டார். அந்த ரூபம் நெருங்கி வரவர, வானர ஸேனை கலைந்தோடுவதையும் ராக்ஷஸர்கள் மகிழ்ந்து உத்ஸாஹத்தால் ஸிம்ஹநாதம் செய்வதையும் கண்டு ராமன் ஆச்சரியமடைந்து, "விபீஷண! அதோ பார், ஏதோ ஒரு பிராணி பெருமலையைப்போல் லங்கையில் நடந்து வருகிறது. மஞ்சள் நிறமான கண்கள் அதிக்ரூரமான பார்வையுடன் சுழன்று கொண்டிருக்கின்றன. தலையில் ஒரு கிரீடம் வைத்திருக்கிறது. பூமிக்கு ஒரு த்வஜம்போல் விளங்குகிறான். மின்னற்கொடிகளால் பிரகாசிக்கும் மேகங்களைப்போல் ஸஞ்சரிக்கும் இந்த வீரன் யார்? லங்கையில் இவனைப்போல் வேறு ஒருவனையும் காணோம். இவனைக் கண்டு வானரர்கள் இருந்தவிடம் தெரியாமல் ஓடுகிறார்கள். இவன் யார்? ராக்ஷஸனா, அஸுரனா? இவ்விதமான பிராணியை நான் இதுவரையில் பார்த்ததில்லை" என்று கேட்டார்.



அதைக் கேட்டு மஹாபுத்திமானான விபீஷணன், "ஸ்வாமி! யமனையும் இந்திரனையும் யுத்தத்தில் தோற்கடித்த கீர்த்திசாலி இவனே. விச்ரவஸின் புத்திரன். ராவணனுக்குத் தம்பி. கும்பகர்ணனென்று பெயர். இவனைப்போன்ற தேகப்ரமாணமுள்ள ராக்ஷஸன் கிடையாது. இவனால் யுத்தத்தில் ஜயிக்கப்பட்ட தேவ தானவ, யக்ஷ, புஜங்க, ராக்ஷஸ, கந்தர்வ, வித்யாதர, கின்னர, பிசாச கணங்களுக்குக் கணக்கில்லை. பயங்கரமான நேத்திரங்களுடன், யமனைப்போல் சூலத்தைக் கையிலேந்தி, யுத்தகளத்தில் இந்த மஹாபலவான் நிற்கும்பொழுது தேவர்கள் இவனைக் கண்ணெடுத்துப் பார்க்க முடியுமா? காலாந்தகனென்று மயங்கி மூர்ச்சையடைந்தார்கள். ராவணன் முதலிய மற்ற ராக்ஷஸர்களுக்கு வரங்களால் கிடைத்த பலம் அதிகம்; இவனோ ஸ்வபாவமாகவே அளவற்ற பலமும் தேஜஸும் பொருந்தினவன். இவன் பிறந்தவுடன் பசிதாங்காமல், சுற்றிலுமிருந்த பிராணிகளை ஆயிரக் கணக்காய்த் தின்ன ஆரம்பித்தான். ஸகல ஜந்துக்களும் பயந்து திகிலடைந்து ஒன்றும் தோன்றாமல், இந்திரனைச் சரணமடைந்து முறையிட்டார்கள். தேவராஜன் கோபம் கொண்டு, கூர்மையான வஜ்ராயுதத்தால் இவனை அடித்தான். அதைக் கொஞ்சம்கூட லக்ஷ்யம் செய்யாமல், இந்த ராக்ஷஸன் கோபத்தால் தேகம் நடுங்கக் கர்ஜித்தான். அதுவரையிலுமே அவனைக் கண்டு நடுங்கின பூமியும் அதிலுள்ள பிராணிகளும் அதிகமாய்ப் பயந்தன. பிறகு கோபாவேசத்தால் ஐராவதத்தின் ஒரு தந்தத்தைப் பிடுங்கி, தேவராஜனை மார்பில் அடித்தான். தேவேந்திரன் அது தாங்காமல் வருந்திக் கோபத்தால் ஜ்வலித்தான். தேவர்களும், பிரஹ்மரிஷிகளும், தானவர்களும் பூலோகத்திலுள்ள பிரஜைகளும், இந்திரனை முன்னிட்டுக் கொண்டு, பிரஹ்மதேவரிடம் சென்று, கும்பகர்ணனுடைய துஷ்டத்தனத்தையும், அவன் பிராணிகளை நாசம் செய்வதையும், தேவர்களை உபத்திரவிப்பதையும், ஆசிரமங்களை அழிப்பதையும், பரஸ்த்ரீகளைப் பலாத்காரம் செய்வதையும் எடுத்துச் சொல்லி, "ஸ்வாமி! இப்படி இவன் பிரதி தினமும் பிரஜைகளை ஒழித்து வந்தால் அதிசீக்கிரத்தில் பூலோகம் சூன்யமாகும்" என்றார்கள். பிதாமஹர் ராக்ஷஸர்கள் யாவரையும் வரவழைத்துப் பின் கும்பகர்ணனைப் பார்த்தார். அவருக்கே பயம் பிடித்தது. பிறகு கும்பகர்ணனை ஸமீபத்திலழைத்து பிரியமாய்ப் பேசி, ஸ்வாதீனப்படுத்திக் கொண்டு, "குழந்தாய்! ஸகல லோகங்களையும் நாசம் செய்வதற்காக என் பேரன் உன்னைப் பெற்றானா? நீ இன்று முதல் பிணம்போல் விழுந்து கிடக்கக் கடவாய்" என்று சபித்தார்.

உடனே கும்பகர்ணன் அவருக்கெதிரில் திடீரென்று பிரக்ஞையற்று விழுந்தான். அதைக் கண்டு ராவணன் மனம் கலங்கி, "ஸ்வாமி! உத்தமவிருக்ஷத்தைத் தாங்களே வைத்து வளர்த்து பழுக்கும் காலத்தில் வெட்டித் தள்ளுவது நியாயமா? ஸகலப் பிராணிகளுக்கும் ரக்ஷகரான தாங்கள் கொள்ளுப் பேரனை இப்படிச் சபிப்பது தகுமா? தங்களுடைய வார்த்தை பொய்யாகாது; இவன் ஒரே தூக்கமாய்த் தூங்குவான். ஆகையால் அதற்கு ஆரம்பத்தையும் முடிவையும் ஏற்படுத்துங்கள்" என்று பிரார்த்தித்தான். அதற்குப் பிதாமஹர், "இவன் ஆறு மாஸகாலத்திற்குக் குறையாமல் தூங்கி, பிறகு ஒருநாள் விழித்திருப்பான்" என்றார். அப்படியே இந்த மஹாவீரன் அந்த ஒரு தினத்தில் தீராப்பசி கொண்டு, பூமியில் ஸஞ்சரித்துப் பாதாளத்தைப்போல் வாயைத் திறந்துகொண்டு, காலாக்னியைப்போல் கோபபரவசனாய், எதிரில் வரும் பிராணிகளையெல்லாம் தின்று வருகிறான். ராவணன் தங்களால் அவமானப்பட்டுத் தங்களுடைய பராக்கிரமத்திற்குப் பயந்து, கும்பகர்ணனை எழுப்பியிருக்கிறான். இன்னும் கொஞ்ச நேரத்திற்குள் இவன் தன் அரண்மனையிலிருந்து வெளியில் வந்து, வானர ஸைன்யங்களைக் கணக்கில்லாமல் தின்பான். அப்பொழுது, கோபவெறியால் இவனுக்குப் பிரக்ஞையிருக்காது. நமது வானரர்கள் இவனைக் கண்டு பயந்தோடுகிறார்கள். யுத்தத்தில் இவனை எப்படித் தடுப்பார்களோ தெரியவில்லை. ஆகையால், இது ஒரு பெரிய யந்த்ரம்; ஸூத்ரங்களால் நடந்து வருகிறதென்று நம்மைச் சேர்ந்தவர்களுக்குச் சொல்லி வைத்தால் திகிலடைய மாட்டார்கள்" என்றான். ("ஸ்வாமி! அநேகவர்ஷங்கள் வரையில் ஒரே தூக்கமாய்த் தூங்க வேண்டுமென்ற ஆசை கொண்டிருக்கிறேன். என் பிரார்த்தனையை அங்கீகரிக்க வேண்டும்" என்று ப்ரஹ்மதேவரைக் கும்பகர்ணன் பிரார்த்திக்க, "அப்படியே ஆகட்டும்" என்று சதுர்முகர் அனுக்ரஹித்தார். இப்படிக் கடுந்தவம் செய்து அதன் பலனாய் நெடுந்தூக்கத்தையடைந்தானென்றும் கூறப்பட்டுள்ளது.)

அதைக்கேட்டு ராமன் ஸேனாபதியான நீலனை அழைத்து, "நீல, நமது ஸைன்யங்களை அணிவகுத்து லங்கையின் கோட்டை வாசல்களையும் மார்க்கங்களையும் ஸ்வாதீனப்படுத்திக்கொள். மலைச்சிகரங்களையும் மரங்களையும் பாறைகளையும் வேண்டியவரையில் சேர்த்து வைத்துக்கொள். ஸகல வானரர்களும் கத்தி கேடயம் முதலிய ஆயுதங்களுடனும் கற்பாறைகளுடனும் யுத்தம் செய்யத் தயாராயிருக்கட்டும்" என்று ஆக்ஞாபித்தார். நீலன் அப்படியே ஸைன்யங்களுக்கு உத்திரவு செய்ய, கவாக்ஷன், சரபன், ஹனுமான், அங்கதன் முதலிய வானர வீரர்கள் மலைகளைப்போன்ற சிகரங்களைப் பெயர்த்துக்கொண்டு, கோட்டைவாசல்களை மறைத்துக் கொண்டார்கள். ராமனுடைய வார்த்தையைக் கேட்டு, வானரர்கள் வீராவேசம் கொண்டு, லங்கையைக் காப்பதற்காக வெளியில் ஸஞ்சரித்துக்கொண்டிருக்கும் ராக்ஷஸர்களைப் பெரிய மரங்களால் அடித்தார்கள். நீருண்ட கருமேகங்கள் ஒரு மஹா பர்வதத்தைச் சூழ்ந்து கொண்டதைப்போல், உக்ரமான வானர ஸைன்யம் கைகளில் பாறைகளைத் தூக்கிக்கொண்டு விளங்கிற்று.



ததோ ஹரீணாம் தத3நீக முக்3ரம்
ரராஜ ஶைலோத்3யத தீ3ப்தஹஸ்தம் |
கி3ரே: ஸமீபாநுக3தம் யதை2வ
மஹந் மஹாம்போ4த4ரஜால முக்3ரம் || (43)

## ஸர்க்கம் 62

# ராவணன் கும்பகர்ணனை ஸமாதானம் செய்தது

ஸ து ராக்ஷஸஶார்தூ3லோ நித்3ராமத3 ஸமாகுல: |
ராஜமார்க3ம் ஶ்ரியா ஜுஷ்டம் யயௌ விபுலவிக்ரம: || (1)

ராக்ஷஸசிரேஷ்டனான கும்பகர்ணன் அகாலத்தில் எழுப்பப்பட்டதால் கொஞ்சம் நித்திரை மயக்கத்துடனும், கணக்கில்லாமல் மதுபானம் செய்ததால் கொழுப்புடனும், ஸகல ஐச்வரியத்தாலும் விளங்கும் ராஜமார்க்கத்தில் நடந்து வந்தான். அநேக ஆயிரம் ராக்ஷஸர்களால் சூழப்பட்டு, சத்ருக்களால் ஜயிக்க முடியாதவனாய், வழியிலுள்ள வீடுகளில் நிற்கும் ஜனங்கள் வாரியிறைத்த புஷ்பங்களால் மூடப்பட்டு, தங்கமாலைகளாலும் ஜன்னல்களாலும் விளங்கி, ஆகாசத்தில் சூரியனைப்போல் பிரகாசிக்கும் ராக்ஷஸேச்வரனுடைய அரண்மனையைக் கண்டான். மேகக்கூட்டங்களில் ஆதித்யன் பிரவேசிப்பதுபோல், கும்பகர்ணன் அதில் பிரவேசித்து, ஸபாமண்டபத்திற்குச் சென்று இந்திரன் ப்ரஹ்மலோகத்தில் கமலாஸனத்தில் வீற்றிருக்கும் பிதாமஹரைத் தரிசிப்பதுபோல், நவரத்னகசிதமான ஸிம்ஹாஸனத்தில் விளங்கும் ராவணனைக் கண்டான். ராக்ஷஸ வீரர்களால் சூழப்பட்டுக் கும்பகர்ணன் நடக்கையில் பூமி நடுங்கிற்று. அநேக கட்டுகளைத் தாண்டி, உள்ளே சென்று, புஷ்பகவிமானத்தில் தன் அண்ணன் முகம் வாடி மனம் நொந்து உட்கார்ந்திருக்கக் கண்டான். அவன் வருவதைப் பார்த்த ராவணன் பரபரப்புடன் எழுந்து மனமகிழ்ந்தான். கும்பகர்ணன் நமஸ்கரித்துப் பாதங்களைத் தொட்டு, "என்ன உத்திரவு" என்று கேட்டான். லங்காதிபதி அவனைத் தூக்கியெடுத்து, பிரியத்துடன் அணைத்து, க்ஷேமம் விசாரித்து, உச்சிமுகர்ந்து, உத்தமமான ஆஸனத்தில் உட்காரச் செய்தான். மஹாபலவானான கும்பகர்ணன், அந்த உபசாரங்களால் கோபம் தணியாமல், கண்கள் சிவந்து, "மஹாராஜரே, என்னை ஒரு பொருட்டாக எண்ணித் தாங்கள் எழுப்பச் சொன்ன காரணமென்ன? எவன் உங்களுக்குப் பயத்தை உண்டாக்குகிறான்? எவன் இன்றைக்குப் பிரேதமாகப் போகிறான்" என்று கேட்டான். தன் சகோதரன் கோபித்துக் கொண்டிருக்கிறானென்றறிந்து, "நமது ஸுகதுக்கங்களுக்கு உடன்படவேண்டிய இவன்

அகாலத்தில் தன்னை எழுப்பினதற்காகக் கோபம் கொண்டிருக்கிறான். நமது க்ஷேமத்தைவிட இவனுக்குத் தூக்கம் பெரிதாய் விட்டதல்லவா" என்று தானும் கொஞ்சம் கோபமடைந்து, "நீ தூங்க ஆரம்பித்து இன்று ஒன்பது தினங்களாகின்றன. நித்திரையின் ஸுகத்தால் உனக்கு லோக வ்யவஹாரமே தெரியவில்லை. ராமனால் எனக்கு நேர்ந்த பயத்தை நீ அறிவாய். நம்மைக் கண்டு பயந்து நடுங்கும் தசரதனுடைய புத்திரனான இந்த ராமன், பழங்களையும், கிழங்குகளையும் பிடுங்கித் தின்றுகொண்டு மரத்திற்கு மரம் தாவிக் காட்டில் ஸஞ்சரிக்கும் குரங்குகளுக்குத் தலைவனான ஸுக்ரீவனுடைய ஸஹாயத்தால் ஸமுத்திரத்தில் அணைகட்டி, அதன் வழியாக ஸைன்யத்துடன் லங்கையில் வந்து, நம்மெல்லோரையும் வேரறுக்கப் பார்க்கிறான். நகரத்தைச் சூழ்ந்த தோப்புகளும் சோலைகளும் தோட்டங்களும் வனங்களும் காடுகளும் மலைகளும் வானர வெள்ளத்தால் கரைபுரண்டிருப்பதைப் பார். நமக்குள் பிரஸித்தி பெற்ற வீரர்கள் வானரர்களால் மடிந்தார்கள். ஆனால் அவர்களையோ யுத்தத்தில் நாசம் செய்யும் உபாயத்தைக் காணேன். இது வரையில் அவர்கள் சண்டையில் ஜயிக்கப்பட்டதாக நான் கேட்டதில்லை. எனக்கு இப்பொழுது நேர்ந்திருக்கும் பயம் இதுதான். இந்த வானர ஸமுத்திரத்தை உன் தேஜஸால் நாசம் செய்து இந்த லங்கையைக் காப்பாற்று. இதற்காகவே உன்னை எழுப்பினேன். நமது நகரத்தில் சிறுவர்களையும் கிழவர்களையும் தவிர மற்றவர்கள் மடிந்தார்கள். ஸகல ஐச்வர்யமும் அழிந்தது. இதைக் காப்பாற்றுவதற்கு உன்னையே நம்பியிருக்கிறேன். உன்னுடன் பிறந்த எனக்காக இந்தக் காரியத்தைச் செய்ய வேண்டும். தம்பி! சத்ருகுலகாலனே! இதுவரையில் உன்னை இப்படி நான் கேட்டதுண்டோ? உன்னிடத்தில் நான் வைத்திருக்கும் ஸ்நேஹத்திற்கும் கௌரவத்திற்கும் எல்லையுண்டோ? தேவர்களையும் அஸுரர்களையும் யுத்தத்தில் முறியடித்துக் கலக்கித் தலைவிரிகோலமாய்ப் பலதடவை நீ ஓடச் செய்ததை அறியேனா? பலத்திலும், தைரியத்திலும், பராக்கிரமத்திலும் எந்தப் பிராணியாவது உனக்கு நிகரா? பயங்கரமான வீரியத்தைக் கைக்கொண்டு, பெருங்காற்றுச் சரத்காலத்து மேகங்களைச் சிதறவடிப்பதுபோல், இந்த வானர ஸைன்யத்தை இருந்தவிடம் தெரியாமலடித்து, என் கவலையை நீக்கி, மனத்தைக் குளிரச் செய். என்னிடத்தில் உனக்குள்ள பிரீதியை அறிவேன். யுத்தத்தில் உனக்கிருக்கும் பிரியத்தையும் அறிவேன். அவைகளுக்குத் தகுந்தபடி நடந்துகொள்" என்றான்.

குருஷ்வ மே ப்ரியஹித மேதது3த்தமம்
யதா2ப்ரியம் ப்ரியரண பா3ந்த4வப்ரிய |
ஸ்வதேஜஸா வித4ம ஸபத்நவாஹிநீம்
ஶரத்3க4நம் பவந இவோத்3யதோ மஹாந் ‖ (28)

---



## ஸர்க்கம் 63

# கும்பகர்ணன் ராவணனுக்கு புத்தி சொன்னது

தஸ்ய ராக்ஷஸராஜஸ்ய நிஶம்ய பரிதே3விதம் |
கும்ப4கர்ணோ ப3பா4ஷேத3ம் வசநம் ப்ரஜஹாஸ ச ‖ (1)

இப்படி ராக்ஷஸ கோடிகளுக்கதிபதியான பிரதாப லங்கேச்வரன் அனாதையைப்போல் கவலைகொண்டு பிரலாபிப்பதைக் கேட்டு, கும்பகர்ணன் பின்வருமாறு மறுமொழி சொன்னான். "இதுவும் ஒரு ஆச்சரியமோ" என்று நினைத்துச் சிரித்தான். "அண்ணா! முன்பு மந்திராலோசனை செய்யும்பொழுது சத்ருக்களால் தங்களுக்கு ஆபத்து நேருமென்று நாங்கள் நிச்சயித்துச் சொன்ன கெடுதியே இப்பொழுது நேர்ந்திருக்கிறது. தங்களுடைய ஹிதத்தையே கோருகிறவர்களின் யோசனையைக் கேட்காமலிருந்ததின் பலனை இப்பொழுது அனுபவிக்கிறீர்கள். மஹாபாபங்களைச் செய்தவன் கோரமான நரகங்களில் விழுவது போல், தங்களுக்கு ஸீதையை அபகரித்த பாபத்தின் பிரயோஜனம் அதிசீக்கிரத்தில் கிடைத்துவிட்டது. கேவலம் பலக்கொழுப்பால் புத்தி மயங்கி, 'இது நமக்கு நன்மையைக் கொடுக்குமா, அல்லது கெடுக்குமா' என்று முதலில் ஆலோசிக்காமல், அதிலுள்ளதோஷங்களைக் கவனிக்காமல் செய்து விட்டீர்கள். ஒரு காரியத்தைச் செய்வதற்குமுன் அதன் குணதோஷங்களையும் லாப நஷ்டங்களையும் நன்றாய் யோசிக்க வேண்டியது. இப்படியில்லாமல், முந்திச் செய்ய வேண்டியதைப் பிந்தியும், பிந்திச்செய்ய வேண்டியதை முந்தியும் செய்கிறவன், ராஜநீதியையும் அதற்கு விரோதமானதையும் அறியாதவன். தாங்கள் இப்படி விபரீதமாய் நடந்துகொண்டிருக்கிறீர்கள். ஸீதையை எடுத்து வருவதற்குமுன் அதனால் வரும் ஸுகத்தையும் துக்கத்தையும், லாபத்தையும்நஷ்டத்தையும், மந்திரிகளுடனும் தனியாகவும் நன்றாக ஆலோசித்துப் பிறகு அவளை அபகரித்திருக்க வேண்டும்' தாங்கள் முதலில் அவளை அபகரித்துவிட்டு, இப்பொழுது ஆலோசனை செய்கிறீர்கள்.

இதிருக்கட்டும்; தங்களுக்கு விரோதம்செய்யக்கூடிய ராம லக்ஷ்மணர்களை முதலில் கொல்லவேண்டியது; பிறகு ஸீதையை எடுத்து வரவேண்டியது. தாங்களோ முதலில் ஸீதையை எடுத்து வந்து, இப்பொழுது ராமலக்ஷ்மணர்களைக் கொல்ல வழிதேடுகிறீர்கள். தேசகாலங்களுக்கு ஒத்து செய்யும் காரியங்கள் உத்தம பலனைக் கொடுக்கும். அப்படி செய்யாதவை விபரீதமான தேசகாலங்களில் செய்த காரியங்களைப்போல் உத்தம பலனையும் கெடுத்துப் பெரும் கெடுதியையும் விளைவிக்கும். மந்திரங்கள் உச்சரித்துச் சுத்தி செய்யப்படாத பாத்திரங்களில் கொடுக்கப்படும் ஆஹுதிகளைப்போல், பலமற்று விபரீதபலனைக் கொடுக்கும். அரசன் மந்

திரிகளுடன் தான் செய்யும் காரியத்தை நன்றாக ஆலோசிக்க வேண்டும்.

தனக்கு ஜயமும், சத்துருவுக்கு அபஜயமும் நேரக்கூடிய ஸமயத்தில் படையெடுத்துச் செல்வது உத்தமம். தனக்கும் சத்துருவுக்கும் பலம் ஸமமான ஸமயத்தில் படையெடுத்துச் செல்வது மத்யமம். தனக்கு அபஜயமும் சத்துருவுக்கு ஜயமும் உண்டாகும் காலத்தில் படையெடுத்துச் செல்வது அதமம். இம்மூன்று விதமான காரியங்களையும் ஆரம்பிக்கவேண்டிய உபாயம், அதற்கு வேண்டிய மனிதர்களையும் பதார்த்தங்களையும் ஸம்பாதிப்பது, தேசகாலங்களை ஆலோசித்துச் செய்வது, தனக்கு நேரக்கூடிய இடையூறுகளை நீக்குவது, உத்தேசித்த காரியத்தை நிறைவேற்றுவதென்ற ஐந்து விஷயங்களும் பொருந்தியிருக்கவேண்டும். (தேசம், காலம், தான், உதவிப் பொருள்கள், தங்கள் பிரயோஜனம் என்று இவ்வைந்தைச்சொல்வதுமுண்டு). நீதிசாஸ்திரப்படி அரசன் காரியங்களை மந்திரிகளுடன் ஆலோசிக்கவேண்டியது; பிறகு மித்திரர்களுடன் அதைக் கலந்து பேசவேண்டியது. இப்படி நடப்பவன் உத்தமமான ராஜநீதியின் பலனை அனுபவிப்பான்.

காலையில் தர்மத்தை ஆசரிக்கவேண்டியது. மத்யான்னத்தில் அர்த்தத்தை அனுஷ்டிக்கவேண்டியது. மாலையில் காமத்தை அவலம்பிக்க வேண்டியது. அல்லது, காலையில் தர்மத்தையும் அர்த்தத்தையும்; மத்யான்னத்தில் அர்த்தத்தையும் தர்மத்தையும்; மாலையில் காமத்தையும் அர்த்தத்தையும் அனுஷ்டிக்கலாம். அல்லது ஸாயங்காலத்தில் ஏற்பட்ட காமத்தையும், காலையிலும் நடுப்பகலிலும் விதிக்கப்பட்ட தர்மத்தையும் அர்த்தத்தையும் அனுஷ்டிக்கலாம். ஆனால் எக்காலத்திலும் கேவலம் காமத்தையே அனுஷ்டிப்பவன் புருஷர்களுக்குள் அதமன். இந்தப் புருஷார்த்தங்களில் உத்தமமான தர்மத்தையும், அவைகளைத் தனித்தனியாய் அனுஷ்டிப்பதையும் சிரேஷ்டமென்று கேட்டு, அரசனும் அரசனுக்குச் சமமான செல்வமுடையவனும் அதை அனுஷ்டானத்திற்குக் கொண்டு வராவிட்டால், அவன் கற்றதும் கேட்டதும் வீணாகும். ('நீ உத்தம புருஷார்த்தமான தர்மத்தை விட்டு, கேவலம் காமத்தையே பற்றியிருக்கிறாய். நீ சாஸ்திரங்களையும் ராஜநீதிகளையும் கற்றதும் கேட்டதும் ஸமுத்திரக்கரையில் சத்தமிடுவது போல் வீணல்லவா'' என்று கருத்து). அகாலத்தில் காமத்தை விலக்குவதைப்போல் பராக்கிரமத்தையும் காலமறிந்து உபயோகிக்கவேண்டும். தகுந்த காலத்தில் சத்துருக்களுடன் கலந்து, அவர்களைத் தனங்களாலும் வெகுமதிகளாலும் கலைக்கவேண்டும். அவர்களுக்குத் தகுந்தபடி பேசவேண்டும். அவர்களுடைய பந்துமித்திரர்களுக்கும் அவர்களுக்கும் விரோதம் செய்துவைக்கவேண்டும். காலமறிந்து படையெடுத்துச் செல்லவேண்டும். இவைகளைத் தனித்தாவது சேர்த்தாவது முன் சொன்ன நீதியையும் அதன் விரோதியையும் இவைகளை ஸாதிக்கும் தர்மார்த்த காமங்களையும் தான் மந்திரிகளுடன் தீர்க்கமாக ஆலோசித்து, இந்திரியங்களையும் மனத்தையும் சிதறவிடாமல் அனுஷ்டிப்பவன் ஒருபொழுதும் கஷ்டத்தை அடையமாட்டான். நீதிசாஸ்திர நிபுணர்களான மந்திரிகளுடன் தனக்கு ஹிதமாக முடியும் காரியத்தையும் அதற்கு இடையூறுகளையும் நன்றாக ஆலோசித்துச் செய்பவன் க்ஷேமத்தை அடைகிறான். (நீ அப்படிச்செய்யாததால் கஷ்டத்தை அனுபவிக்கிறாய் என்பது கருத்து.)



நீதி சாஸ்திரத்தில் சொல்லிய அர்த்தங்களைக் குருமுகமாகக் கேட்டறியாமல் மனுஷ்யரூபத்தைத் தரித்த சில மிருகங்கள் உண்டு. ஆகாரத்தையும் நித்திரையையும் தவிர அவர்களுக்கு வேறொன்றும் தெரியாது. மதிகெட்ட அரசர்கள் ராஜகாரியங்களை ஆலோசிப்பதற்கு அவர்களை வருவிக்கிறார்கள். அப்பொழுது புத்தி யுக்தி ஒன்றுமில்லாமல் கேவலம் கர்வத்தாலும் மதத்தாலும் அவர்கள் யோசனை சொல்ல ஆரம்பிக்கிறார்கள். லாபநஷ்டங்களையும் அபாய உபாயங்களையும் ஆலோசித்து முடிவுசெய்கிறதில்லை. க்ஷேமத்தை விரும்புகிற அரசன், சாஸ்திரபரிசயமில்லாத அந்த மந்திரிகள் சொல்லும் அபாயகரமான யோசனைகளை ஒருபொழுதும் அனுஷ்டிக்கக்கூடாது. ஹிதத்தைபோலத் தோன்றும் ஹிதமில்லாத யோசனையைக் கேவலம் கர்வத்தால் பிதற்றும் மந்திரிகளைத்தேடிப் பார்த்துப் பரீக்ஷித்து, மந்திராலோசனை ஸபையிலிருந்து விலக்க வேண்டியது. ஸகல காரியங்களையும் முடிக்கும் ஸமயத்தில் அவர்கள் கெடுத்துவிடுவார்கள். இது மாத்திரமல்ல. உபாயங்களை அறிந்த சத்துருக்களால் ஏவப்பட்டு, அந்த மந்திரிகள் தங்களுடைய அரசனை நாசம் செய்வதற்காக, விபரீதபலனைக் கொடுக்கும் காரியங்களைச் செய்யும்படி தூண்டிவிடுகிறார்கள். சத்ருக்களால் லஞ்சம் கொடுத்துக் கலைக்கப்பட்டு, மித்ரர்களைப்போல் விளங்கும் சத்ருக்களைக் கலந்து பேசுவதால் எளிதில் கண்டுபிடிக்கலாம். காரியங்களை யோசிக்காமல் செய்கிறவனும், துஷ்டமந்திரிகளுடன் ஆலோசனைசெய்கிறவனுமான அரசன், துர்மந்திரிகளால்தூண்டப்பட்டுச் செய்யும் காரியங்களை வைத்துக்கொண்டு, ஸ்கந்தரால் பிளக்கப்பட்ட க்ரௌஞ்சமலையின் த்வாரத்தில் பக்ஷிகள் உள்ளே புகுவது போல் சத்ருக்களால் வசப்படுத்தப்பட்டு நாசம் அடைகிறான். இப்படித் தன்னைக் கெடுக்கவந்த மந்திரிகளையறிந்து, அவர்களை விலக்கித் தன்னை ரக்ஷித்துக்கொள்ளாதவன், பெரிய அபாயங்களுக்குட்பட்டு, ராஜ்யத்தை இழக்கிறான். நமது தம்பி விபீஷணன் முன்பு சொன்ன ஆலோசனையே தங்களுக்குப் பரமஹிதத்தைக் கொடுக்கும். அப்படியே செய்யலாம். பிறகு தங்களிஷ்டம்'' என்றான்.

அதைக்கேட்டுத் தசமுகன் கோபத்தால் புருவங்களை நெரித்து, ''நான் உனக்கு மூத்தவன், பூஜிக்கத்தகுந்தவன், ஆசாரியன்; இப்படியிருக்க, உன்னைப் பெரிய ஆசாரியனாக நினைத்துக்கொண்டு

நீ எனக்கு உபதேசம் செய்வது யுக்தமல்ல; நீ சொல்லுகிறபடி நான் நடக்கப் போகிறதில்லை. நீதியையும் மந்திராலோசனையையும் அனுசரிக்க வேண்டியகாலம் தாண்டிவிட்டது. இப்பொழுது நமது பராக்கிரமத்தை உபயோகிக்கவேண்டும். நியாயாநியாய விவேகமில்லாததாலோ அஞ்ஞானத்தாலோ, பலத்தையும் வீரியத்தையும் நம்பி, கர்வத்தாலோ எந்தக் காரியத்தைச் செய்யத் தவறினோமோ அதைப்பற்றிக் காலம் கடந்த பிறகு இப்பொழுது பேசியென்ன? போனது போனதே; விவேகிகள் அதைப்பற்றி வருத்தப்படுவார்களா? இப்பொழுது செய்ய வேண்டியதைக் குறைவில்லாமல் செய்யவேண்டும். நான் நீதிதப்பி நடந்ததால் உண்டான தீங்கை உன் பலத்தால் ஸரிப்படுத்து. என்னிடத்தில் உனக்கு உண்மையான பிரியமிருந்தால், உன் அபார பலத்தை நீ அறிந்திருந்தால், இப்பொழுது யுத்தம்செய்வது உனக்கு அவசியமாய்த் தோன்றினால், அப்படியே தாமதமில்லாமல் செய். அபாயங்களால் கவலைகொண்டு, எண்ணங்கள் வீணாகித் தவிப்பவனுக்குத் தைரியம் சொல்லி, அவனைக் கைவிடாமல் எப்பொழுதும் கூடவிருந்து, தன்னால் இயன்ற மட்டும் ஸஹாயம்செய்பவனே மித்திரன். கெட்ட யோசனைகளால் நீதிதப்பி நடந்து வருந்துகிறவனுக்கு ஒத்தாசை செய்பவனே பந்து'' என்றான்.

இப்படி ராவணன் கம்பிரமாயும் கடுமையாகவும் பேசுவதைக் கேட்டு, அவன் கோபம்கொண்டிருக்கிறானென்றறிந்து, கும்பகர்ணன் மெள்ளமெள்ள மிருதுவாய்ப் பேசி ஸமாதானம் செய்தான். "ராக்ஷஸேச்வர! தாங்கள் கவலைப்பட்டது போதும். கோபிக்க வேண்டாம்; மனத்தை ஸமாதானம் செய்துகொள்ளுங்கள். இதுவரையிலும் நடந்ததைப்பற்றி நினைக்கவேண்டாம். எவனைக் குறித்துத் தாங்கள் கவலைப்படுகிறீர்களோ அவனை இப்பொழுதே நாசம் செய்கிறேன். நான் உயிரோடிருக்கும் வரையில் தங்களுக்குக் குறைவென்ன? நான் தங்களுக்கு உடன் பிறந்தவன், மித்திரன், ஸுகதுக்கங்களிலும் கோபதாபங்களிலும் லாபநஷ்டங்களிலும் பாத்யப்பட்டவன். ஆகையால் எப்பொழுதும் தங்களுக்குஹிதத்தைச் சொல்ல வேண்டியதல்லவா? தங்களிடத்தில் பிரியம் வைத்த பந்து இந்த ஸமயத்தில் எது செய்ய வேண்டுமோ அதைச் செய்து இன்று யுத்தத்தில் சத்ருக்களை ஹதம் செய்கிறேன். இன்று யுத்தத்தில் ராமலக்ஷ்மணர்களைக் கொன்று வானர ஸைன்யத்தைச் சின்னாபின்னமாயடிக்கிறேன், பாருங்கள். மஹாபராக்ரமசாலியான தாங்களே என் வீரியத்தை மெச்சப் போகிறீர்கள். இன்று 'ராமனுடைய தலையைக் கொண்டுவந்து தங்களெதிரில் போடுகிறேன். அப்பொழுதாவது தங்களுடைய கவலை தீருமா? ஸீதையின் மனம் துடிக்குமா? இதுவரையில் வானரர்களால் பந்துக்களை இழந்த நமது ராக்ஷஸர்கள், ராமன் என் கையால் மடிவதை ஸந்தோஷத்துடன் பார்க்கட்டும். பந்துக்களைப் பறிகொடுத்த



ராக்ஷஸர்களின் கண்ணீரைத் துடைத்து, ராமன் என் கையால் இறந்தானென்ற வார்த்தையை லங்கையெங்கும் கோஷிக்கச் செய்கிறேன். ஸூரியப்பிரகாசத்தால் சிவந்த மேகத்தைப்போல், ஸுக்ரீவனுடைய பர்வதாகாரமான தேகத்திலிருந்து ரத்தம் அருவிகளாய்ப் பெருகுவதைப் பாருங்கள். ராமனைக் கொல்ல பிரதிக்ஞை செய்த இந்த ராக்ஷஸ வீரர்களாலும் என்னாலும் தாங்கள் ரக்ஷிக்கப்பட்டிருக்கையில், ராமனால் தங்களுக்கு அபாயம் நேருமா? ராமன் என்னைக் கொன்றபிறகல்லவா தங்களிடத்தில் வரவேண்டும்? என்னை எவனாவது கொல்வானென்ற பயம் எனக்கில்லை. ஆகையால் இப்பொழுதே என்னை யுத்தத்திற்கனுப்புங்கள்; வேறொருவரும் போகக்கூடாது. தங்களுடைய சத்துருக்களை வேரறுக்கிறேன். இந்திரன், யமன், அக்னி, மருத்துக்கள், குபேரன், வருணன், இன்னும் எவனாயிருந்தாலும் ஸரி; அவனுடன் யுத்தம் செய்து உயிரை வாங்குகிறேன். மேருமலையைப்போன்ற என் சரீரத்தையும் தீக்ஷ்ணமான சூலத்தையும் கூர்மையான என் பற்களையும் பார்த்து என் கர்ஜனையைக் கேட்டவுடன் தேவேந்திரனும் பயந்து சுருண்டு விழுவானே. இது இருக்கட்டும். ஆயுதமில்லாமல் சத்துருக்களைக் கையாலறைந்து ஆயிரக்கணக்காய்க் கொல்லும்பொழுது, உயிரில் ஆசை வைத்த எவனாவது எனக்கெதிரில் நிற்க முடியுமா? சக்தி, கதை, கத்தி, கூர்மையான பாணங்கள், ஒன்றும் எனக்கு வேண்டியதில்லை. தேவராஜன் வஜ்ராயுதத்தைக் கையிலேந்தி என்னை எதிர்த்தாலும் அவனைக் கைகளாலேயே அறைந்து கொல்வேன். என் முஷ்டியால் ராகவனை முதலில் அடிக்கிறேன்; அதற்குத் தப்பினால் என் பாணங்கள் அவனுடைய ரத்தத்தைக் குடிக்கும். நானிருக்கையில் தங்களுக்குக் கவலை ஏன்? சத்துருக்களை நாசம் செய்வதற்காக எனக்கு இப்பொழுதே உத்திரவு கொடுத்தனுப்புங்கள். ராமனிடத்திலுள்ள பயத்தை விடுங்கள். இன்று கோர யுத்தம் செய்து ராமலக்ஷ்மணர்களையும், மஹா பலவானான ஸுக்ரீவனையும், நமது லங்கையைச் சுட்டுக் கரியாக்கி ராக்ஷஸ வீரர்களைக் கொன்ற ஹனுமானையும், இன்னும் என் கண்ணில்பட்ட வானரர்களையும் நாசம் செய்வேன். இன்று நிகரில்லாத கீர்த்தியைத் தங்களுக்கு ஸம்பாதித்து வைக்கிறேன். இந்திரனைக் கண்டும் தாங்கள் பயப்பட வேண்டியதில்லை. நான்கு முகங்களைப் படைத்த பிரஹ்மாவாக இருந்தாலும் ஸரி, நான் கோபம் கொண்டால் தேவர்கள் பயத்தால் மெய்மறந்து பூமியில் விழுந்து இறப்பார்கள். யமனுடைய கொழுப்பை அடக்குகிறேன். அக்னியை விழுங்கி விடுகிறேன்; ஸூரியனை நக்ஷத்திரங்களோடு ஆகாச வீதியிலிருந்து உதிர்க்கிறேன்; நூறு அசுவமேத யாகங்கள் செய்து இந்திர பதவியை அடைந்த தேவராஜனையும் சித்திரவதை செய்கிறேன்; வருணனுக்கு இருப்பிடமான ஸப்தஸமுத்திரங்களையும் குடிப்பேன். அஷ்ட குலபர்வதங்களையும் தூளாக்குவேன்;

ஒரே உதையால் இந்தப் பூமியைப் பிளப்பேன். நெடுநாள் தூங்கி எழுந்த கும்பகர்ணனுடைய பராக்கிரமத்தை அவனால் பக்ஷிக்கப் படும் பிராணிகள் இன்று பார்க்கட்டும். இந்த மூன்று லோகங்களும் என் பசிக்குப் போதாது. ராமலக்ஷ்மணர்களைக் கொன்று, உத்தமமான ஸுகத்தைத் தங்களுக்குக் கொடுப்பதற்காக இதோ புறப்பட்டுப் போகிறேன். குரங்குகளில் ஒன்று மிஞ்சாதபடி எல்லாவற்றையும் தின்று விடுகிறேன். மஹாராஜரே! இஷ்டமான ஸுகங்களை அனுபவியுங்கள்; உத்தமமான மதுவைப் பானம் செய்யுங்கள்; எப்பொழுதும்போல் ராஜகாரியங்களைக் கவனியுங்கள்; கவலையை விடுங்கள்; இன்று ராமனை யமலோகத்திற்கு அனுப்புகிறேன்; பிறகு ஸீதை ஒரு நொடியில் நிரந்தரமாக தங்களுக்கு வசப் படுவாள்'' என்றான்.

ரமஸ்வ காமம் பிப$^{3}$ சாக்$^{3}$ர்ய வாருணீம்
குருஷ்வ க்ருத்யாநி விநீயதாம் ஜ்வர: |
மயாத்$^{3}$ய ராமே க$^{3}$மிதே யமக்ஷயம்
சிராய ஸீதா வஶகா$^{3}$ பி$^{4}$விஷ்யதி || (59)

---

## ஸர்க்கம் 64

# மஹோதரன் கும்பகர்ணனை நிந்தித்தது

---

தது$^{3}$க்த மதிகாயஸ்ய ப$^{4}$லிநோ பா$^{3}$ஹுஶாலிந: |
கும்ப$^{4}$கர்ணஸ்ய வசநம் ஶ்ருத்வோவாச மஹோத$^{3}$ர: || (1)

அளவற்ற சரீரத்தையுடைய கும்பகர்ணன் வீரியக்கொழுப்பாலும், புஜபலத்தாலும் சொன்ன வார்த்தைகளைக் கேட்டுப் பொறுக்காமல், மஹோதரன் கோபம் கொண்டு, "கும்பகர்ண! லோகோத்தரமான புலஸ்தியகுலத்தில் பிறந்தும் அல்பபுத்தி உன்னை விடவில்லையே. சாஸ்திர பரிசயமில்லாமல் கேவலம் கொழுப்பால் பேசுகிறாய். கர்வத்தால் தலைதெரியாததால், எந்த விஷயத்திலும் நன்கு ஆலோசனை செய்ய உனக்குத் திறமையில்லை. நமது மஹாராஜா ராஜநீதியையும் அதற்கு விரோதமான வழிகளையும் அறியாதவரல்ல. நீ ஒன்றுமறியாத சிறுவன்; கர்வத்தால் பிதற்றுகிறாய். ஆலோசனை செய்ய வேண்டிய காலதேசங்களையும் அதற்கு விரோதிகளையும் இரு கக்ஷிக்காரர்களுடைய பலத்தையும் அதன் விருத்தியையும் குறைவையும் நமது அரசர் நன்றாயறிந்தவர் தான். பெரியோர்களை ஆசிரயித்து அவர்களிடத்தில் தத்வார்த்தங்களை உபதேசம் பெறாமல், கேவலம் சௌரியத்தையே நம்பியுள்ள ஒரு ஸாதாரண புத்திமான் செய்யும் காரியங்களை விவேகி செய்வானா? அப்படி இருக்க நமது மஹாராஜா செய்வாரா?

தர்மார்த்தகாமங்களுக்குப் பலன்கள் தனித்தனி என்றும், காரணங்கள் வெவ்வேறென்றும், அந்தந்த பலன்களையே அவை நிச்சயமாய்க் கொடுக்குமென்றும் நீ சொல்லுகிறாய். அவைகளின் ஸ்வரூபத்தையும், பிரமாணங்களையும் அறிவதற்கு உனக்குப் புத்தி கிடையாது. ஸ்வர்க்க ஸுகத்தைக் கொடுக்கும் யாகாதிகர்மங்கள், அவை செய்யப்படும்பொழுது சரீர ஆயாஸம் முதலிய துக்கங்களை முதலில் கொடுக்கின்றன. அப்படியே பரத்திரவியத்தை அபகரிப்பது முதலான காரியங்கள் முடிவில் துக்கத்தைக் கொடுத்தாலும், ஆரம்பத்தில் ஸுகத்தைக் கொடுக்கின்றன. ஆகையால் கர்மங்களுக்கு நீ கூறியபடி பலன்கள் நிச்சயமில்லை. அப்படி யாதொரு பிரமாணங்களுமில்லை. ஸ்வர்க்கம் நரகம் முதலிய ஸகல பலன்களுக்கும் கர்மங்களே ஸாதனங்கள். ஆனால், விசேஷ பாபகர்மங்களும் உத்தம பலனைக் கொடுக்கின்றன. தர்மமும் அர்த்தமும் இவைகளுக்கு விரோதமான கர்மங்களும் இந்நான்கும் உத்தம பலனைக் கொடுக்கும்; சில சமயங்களில் அதர்மமும் அனர்த்தமும் துக்கத்தைக் கொடுக்கும். ஆகையால் தர்மாதர்மங்களுக்கும் அர்த்தானர்த்தங்களுக்கும் இருவித பலன்களும் உண்டென்று ஏற்படுகிறது. இந்த லோகத்திலும் பரலோகத்திலும் உபயோகப்படும் கர்மங்களை பிராணிகள் செய்து அவைகளின் பலன்களை அடைகின்றன. கேவலம் காமத்தையே அவலம்பித்த புருஷன் சுபமான கர்மங்களின் பலனை அடைவதைப் பார்த்திருக்கிறோம். ஆகையால் சாஸ்திரங்களால் விதிக்கப்பட்ட கர்மமே ஸுகத்தைக் கொடுக்கும்; விலக்கப்பட்டவை துக்கத்தைக் கொடுக்குமென்பதும் நிச்சயமில்லை. ஸகல கர்மங்களும் ஸகல பலனையும் கொடுக்கும். கர்மங்களுக்கும் பலன்களுக்கும் நித்தியமான ஸம்பந்தமில்லை.

இந்த நியாயத்தை ஆசிரயித்தே நமது மஹாராஜா ஸீதையை அபகரித்தார்; நாங்களும் அதற்கு ஸம்மதித்தோம். சத்ருவைப் பற்றின விஷயத்தில் தீர்க்கமாய் ஆலோசிக்காமல் நாங்கள் ஒன்றும் செய்யவில்லை. எடுத்துக்காட்டு, பார்ப்போம். நீ தனியாக ஸஹாயமில்லாமல் யுத்தத்திற்குச் செல்லுகிறேனென்றும் அதற்குக் காரணமாய் உன்னுடைய பலத்தையும் வீரியத்தையும் காட்டியும் சொன்னாய். அது பிரயோஜனமற்ற வார்த்தையென்று நிரூபிக்கிறேன். ஜனஸ்தானத்தில் வஸித்த கரதூஷணர்களும், மற்ற ராக்ஷஸ வீரர்களும் ஸாமான்யர்களா? அவர்களை ராமன் ஒருவனாக ஒரு முகூர்த்தத்தில் நாசம் செய்திருக்கிறான். அந்த வீர சிகாமணியை நீ யுத்தத்தில் ஜயிக்க முடியுமா? ஜனஸ்தான ராக்ஷஸர்களுடைய பந்துக்கள் இன்னும் ராமனுடைய பெயரைக் கேட்டவுடன் நடுங்குகிறார்கள். அவன் பத்துத் திக்கிலும் தடையில்லாமல் தன் ரதத்தைச் செலுத்தும் தசரதனுடைய புத்திரன்; கோபம் கொண்ட ஆண் ஸிம்ஹத்தைப் போன்றவன்; அதிகப் பசியால் மெய்மறந்து தூங்கும் கிருஷ்ணஸர்ப்பத்தைத் தடியால் அடித்து எழுப்பப் பார்க்கும் புத்திமான் உன்னைத் தவிர வேறுண்டோ? ராமன் எக்காலத்திலும் தேஜஸால் ஆதித்யனைப்

போல் ஜ்வலித்துக் கொண்டிருக்கிறான்; கோபத்தால் நெருங்க முடியாதவன்; ஸகலப் பிராணிகளையும் ஸம்ஹரிக்க வந்த யமனைப் போன்ற ரகுவீரனைக் கண்ணெடுத்துப் பார்க்கவும் முடியுமோ? நமது ஸைன்யம் யாவும் அவனுக்கெதிரில் ஒரு க்ஷணம்கூட நிற்பது ஸந்தேகம்; அப்படியிருக்க, நீ ஒருவன் போய் என்ன செய்யலாம்? வரவரக் குறையும் பலத்தையுடையவன், வரவர விருத்தியாகும் பலத்தையுடைய சத்துருவை அலக்ஷ்யமாக எண்ணி ஜயிக்கப்போவானா? உயிரை வெறுத்து மரணத்தைத் தேடுகிறவனல்லவா அப்படிச் செய்வான்? நீ ராக்ஷஸர்களுக்குள் சிரேஷ்டன். ராமனோ மனுஷ்யர்களுக்குள் சிரேஷ்டர். அது மாத்திரமல்ல; இந்திரன் ஆதித்யன் முதலிய தேவர்களும் அவனுக்கு நிகரில்லை. அவனுடன் யுத்தம் செய்யப் போகிறேனென்று சொல்லவும் உனக்கு யோக்கியதையுண்டோ" என்றும் கும்பகர்ணனைத் தூஷித்து, பிறகு ராவணனை நோக்கி,

"மஹாராஜரே! விசேஷ பிரயத்னங்களைச் செய்து அடைய வேண்டிய ஸீதையைத் தாங்கள் அதிஸுலபமாய் அடைந்திருக்கும் பொழுது பல யோசனை செய்வதேன்? அவளைத் தங்களுக்கு வசப்படுத்தி, அவள் தங்களை வந்தடையும்படியாக ஒரு உபாயம் எனக்குத் தோன்றுகிறது. அது தங்களுக்கு இஷ்டமானால் பிறருடைய யோசனையைக் கேட்காமல் தங்களுடைய புத்திக்குத் தோன்றின படி நடத்துங்கள். நானும் த்விஜிஹ்வனும் ஸம்ஹ்ராதியும், கும்பகர்ணனும் விதர்தனனும் ராமனைக் கொல்வதற்காகப் புறப்பட்டுப்போகிறோமென்று லங்கையெங்கும் தெரிவியுங்கள். பிறகு நாங்கள் கோட்டைக்கு வெளியில் சென்று கோரயுத்தம் செய்கிறோம். நாங்கள் ஜயித்தால் மேற்கண்ட உபாயங்கள் ஒன்றும் வேண்டியதில்லை; அப்படியில்லாவிட்டால் ராமனுடைய பெயரால் அடையாளம் செய்யப்பட்ட பாணங்களால் எங்களுடைய தேகங்களில் காயப்படுத்திக்கொண்டு, ரத்தம்பெருக, ராமலக்ஷ்மணர்களைத் தின்று விட்டோமென்று கோஷித்துக் கொண்டு தங்களுடைய பாதத்தில் நமஸ்கரிக்கிறோம். தாங்கள் எங்களுக்கு விசேஷ வெகுமானங்களைச் செய்யுங்கள். உடனே, "ராமலக்ஷ்மணர்களும் வானர ஸைன்யமும் மடிந்ததென்று லங்கையெங்கும் யானையின்மேல் பறை சாற்றுவியுங்கள். பிறகு, வெகு ஸந்தோஷத்துடன் தங்களுடைய ஸேவகர்களுக்கு வஸ்திரங்களையும் ஆபரணங்களையும் பரிவாரங்களையும் வேண்டியவரையில் கொடுங்கள். கந்தபுஷ்பங்களாலும் மாலைகளாலும் பக்ஷ்யங்களாலும் ராக்ஷஸ வீரர்களைத் திருப்தி செய்யுங்கள். இப்படி, "ராமன் ராக்ஷஸர்களால் தின்னப்பட்டான்" என்று வதந்தி ஊரெங்கும் பரவும். உடனே தாங்கள் ஸீதையிடத்திற்குச் சென்று, பர்த்தாவைப் பறிகொடுத்த சோகத்தை ஆற்றி, "என்னிடத்தில் பிரீதிவைத்து, என்னிஷ்டப்படி நடக்க வேண்டுமென்று அவளைப் பிரார்த்தித்து தனங்களையும் தான்யங்களையும் ரத்னங்களையும் வஸ்திரங்களையும் ஆபரணங்களையும் யதேஷ்டமாய்க் கொடுங்கள். இந்தக் கபடோபாயத்தால் ஸீதை பயந்து வருந்தி, அதுவரையில் தங்களிடத்தில் ஆசையில்லாமலிருந்தும், புருஷனை இழந்து வேறு கதியற்றதால் தங்களையே சரணமடைவாள். தன் பிரியத்திற்குப் பாத்திரமான பதி இறந்தானென்று நிச்சயமாய் அறிந்து, அவனை அடைவோமென்ற ஆசையை விட்டு, ஸ்திரீகளுக்குரிய சபலபுத்தியால் தங்களுக்கு வசப்படுவாள். மிகுந்த செல்வத்தில் வளர்ந்தவள்; ஸுகத்தையே அனுபவிக்கத் தகுந்தவள்; விசேஷ கஷ்டங்களால் புண்பட்டவள். இனி ஸகல ஸுகமும் தங்களையே பொருத்திருக்கின்றது என்று வலுவில் வந்தடைவாள். என் புத்திக்கு எட்டின வரையில் இது நல்ல உபாயமென்று தோன்றுகிறது. ராமனுடன் யுத்தத்திற்குச்சென்று அவன் கண்ணில் பட்டால் பெரிய அனர்த்தம் நேரும். வலுவில் மரணத்தைத் தேடிக்கொள்ளவேண்டாம். தாங்கள் யுத்தம் செய்யாமல் இருந்த விடத்திலேயே உத்தமலாபத்தையும் க்ஷேமத்தையும் அடையலாம். சத்துருஸைன்யத்தைப் பார்க்காமல், யுத்தத்தில் நேரும் பிராண பயமில்லாமல், சத்ருக்களை யுத்தம் செய்யாமலே ஜயித்து, விசேஷ கீர்த்தியையும் ஸுகத்தையும், ஸகல லக்ஷ்மிக்கும் வாஸஸ்தானமான ஸீதையென்ற உத்தம ஸம்பத்தையும் அடைவீர்கள். (ஸீதை தன்னைவிட்டுப் பிரிந்து பரபுருஷனிடத்தில் ஆசைவைத்து அவனுக்குப் பார்யையானாளென்று கேட்டவுடனே ராமலக்ஷ்மணர்கள் இறப்பார்களென்பது மஹோதரனுடைய கருத்து).

அத்3ருஷ்டஸைந்யோ ஹ்யநவாப்த ஸம்ஶயோ
ரிபூநயுத்3தே'ந ஜயந் நராதி'ப: |
யஶஶ்ச புண்யம் ச மஹந் மஹீபதே
ஶ்ரியம் ச கீர்த்திம் ச சிரம் ஸமஶ்நுதே || (36)

## ஸர்க்கம் 65

# கும்பகர்ணன் யுத்தத்திற்குப் புறப்பட்டது

ஸ ததோ2க்தஸ்து நிர்ப'ர்த்ஸ்ய கும்'கர்ணோ மஹோத3ரம் |
அப்3ரவீத்3 ராக்ஷஸ ஶ்ரேஷ்ட2ம் ப்'ராதரம் ராவணம் தத: || (1)

அதைத் கேட்டுக் கும்பகர்ணன் மஹோதரனை அதட்டித் தூஷித்து, ராவணனை நோக்கி, "துராத்மாவான அந்த ராமனால் தங்களுக்கு நேர்ந்த பயத்தை, அவனைக் கொன்று தீர்க்கிறேன். சத்துருக்களற்று ஸுகமாயிருங்கள். ஜலம் வற்றின மேகங்களைப் போல் சூரர்கள் வீணாய்க் கர்ஜிக்கமாட்டார்கள். என் வார்த்தைகளுக்குத்தகுந்தபடி செய்கைகளையும் பாருங்கள். சூரர்கள்பிறர் அவமானமாய்ப் பேசுவதைப் பொறுக்கமாட்டார்கள்; தங்களைத் தாங்களே புகழார்கள்; தங்களுடைய பராக்கிரமத்தைக்காரியங்களால்

வெளிப்படுத்துவார்களேயன்றி வீண்பெருமை பேசார்கள். புத்தியில்லாமல் சத்துருக்களுக்குப் பயந்து, தங்களை எல்லாம் தெரிந்தவர்களாக எண்ணிக்கொள்ளும் உன்னைப்போன்ற மந்திரிகளின் வார்த்தையைக்கேட்டு, மஹோதர! நம் அரசன் இந்தக் கதியடைந்திருக்கிறார். யுத்தமென்ற வார்த்தையைக் கேட்டவுடனே பயந்து நடுங்கி, அரசனுக்கு இச்சகம்பேசி, அவனுடைய மனம் போனபடியெல்லாம் நடக்கும் உன்னைப்போன்ற மந்திரிகளின் ஆலோசனையைக் கேட்டு ஸீதையை அபகரித்து, இந்தக் கோரயுத்தத்தை வலுவில் அழைத்துக்கொண்டார். ஐயோ! ஸகல லக்ஷணங்களும் பொருந்தின இந்த லங்காபுரிக்கு வாய்த்த அரசனை என்னவென்று சொல்லுவேன். பரமமித்திரனைப்போல் வேஷம் பூண்டு, ரஹஸ்மாய் அதை ஸகல விதத்திலும்கெடுக்கவந்திருக்கிறான்; இவனை அரசனாய் அடைந்து லங்கையில் பிரஜைகள் மடிந்தார்கள்; ஸைன்யம் அழிந்தது; ஐச்வர்யம் குலைந்தது; மஹாராஜா மாத்திரம் பாக்கி. நீங்கள் வருவித்த அநர்த்தத்தைப் பரிஹாரம் செய்ய இதோ நான் யுத்தத்திற்குப் புறப்படுகிறேன். சத்ருக்களை நாசம் செய்கிறேன். ஒருவரும் கவலைப்பட வேண்டாம்'' என்று காளமேகங்களைப் போல் கர்ஜித்தான்.

அதைக்கேட்டு ராவணன், கும்பகர்ணனை மெச்சி, அவன் புத்தி சாதுர்யமாய்ப் பேசினதைப்பற்றி ஸந்தோஷித்து, மஹோதரனைப் பார்த்துச் சிரித்து, "தம்பி! இவன் ராமனிடத்தில் மிகவும் பயந்தவன் போலிருக்கிறது. ஆகையால் யுத்தமென்றால் இவனுக்குஇஷ்டமேயில்லை. யுத்தத்தில் எப்பொழுதும் ஆவலுள்ளஉன்னைப்போன்றவன் கிடைப்பதரிது. ஸகலவித யுத்தத்திலும் கைதேர்ந்த நீ என்னிடத்தில் வைத்த ஸ்நேகத்திலும் பலத்திலும் நிகரற்றவன். ஆகையால் சத்துருக்களை ஜயித்து என் பயத்தை நாசம்செய்ய உன்னை அகாலத்தில் எழுப்பினேன். எனக்கு ஹிதத்தையே கோரும் ராக்ஷஸர்கள் தங்களுடைய விச்வாஸத்தைக் காட்டிக்கொள்ள ஸமயம் இதே. கால பாசத்தைத் தரித்த யமனைப் போல் நீ சூலபாணியாய் யுத்தத்திற்குச் சென்று ராமலக்ஷ்மணர்களையும் வானரர்களையும் தின்று வா. ஆதித்யர்களைப்போல் அவர்கள் தேஜஸால் ஜ்வலித்தால் உனக்கு அது ஒரு பொருட்டா? உன் ரூபத்தைக் கண்டவுடனே அவர்களுடைய ஹ்ருதயம் பிளக்குமே. சண்டமாருதத்தால் அடிபட்ட மேகங்களைப்போல் வானரர்கள் இருந்தவிடம் தெரியாமல் ஓடி ஒளிவார்கள். யுத்தத்திற்குப் புறப்பட்டுப் போ. ஜயலக்ஷ்மியுடன் திரும்பி வா'' என்றான். மஹாபலவானான கும்பகர்ணனைப் பார்த்து இப்படி உத்ஸாஹமான வார்த்தைகளைச் சொல்லி, தான் போன உயிரைத் திரும்பியடைந்ததுபோல் எண்ணினான். கும்பகர்ணனுடைய பலத்தையும் பராக்ரமத்தையும் நன்றாக அறிந்தவனாகையால், களங்கமற்ற சந்திரனைப்போல் அவன் முகம் கவலையற்று பிரகாசித்தது.



தன் அண்ணனும் மஹாராஜாவுமான ராவணன் தன்னை முற்றிலும் நம்பிக் கொண்டாடினதைப்பற்றி கும்பகர்ணன் ஸந்தோஷத்தால் பூரித்து, அவனிடத்தில் உத்தரவுபெற்றுக்கொண்டு யுத்தத்திற்குப் போக யத்தனித்தான். கருத்த இரும்பால் செய்யப்பட்ட பயங்கரமான தன் சூலத்தைக் கையிலெடுத்தான். அது உருக்கியோடவிட்ட தங்கத்தால் அலங்கரிக்கப்பட்டுநெருப்புஜ்வாலைபோல் பிரகாசித்தது. இந்திரனுடைய இடியைப் போல் பயங்கரமாய், வஜ்ராயுதத்தைப்போல் பளுவாக இருந்தது. தேவ, தானவ, கந்தர்வ, யக்ஷ, கின்னர கணங்களை யுத்தத்தில் பலதடவை நாசம்செய்து ஜயத்தை ஸம்பாதித்த சூலம், சிவந்தபுஷ்பங்களால் அலங்கரிக்கப்பட்டு, நிகரற்ற தேஜஸுடன் அதற்குள்ள க்ரூரஸ்வபாவத்தால் நெருப்புஜ்வாலைகளைக் கக்கிக் கொண்டிருந்தது. சத்துருக்களுடைய ரத்தத்தாலும் மாம்ஸத்தாலும் விளங்கிற்று. அதை அலக்ஷ்யமாய்ச் சுழற்றிக்கொண்டு கும்பகர்ணன், "மஹாராஜரே! நான் ஒருவனே யுத்தத்திற்குச் செல்கிறேன். என்ஸைன்யம் இங்கேயேஇருக்கட்டும். இன்று கோபபரவசனாய் வானர ஸைன்யத்தைக் கலக்கி விழுங்குவேன்'' என்று அட்டஹாஸம் செய்தான். அதைக் கேட்டு ராவணன், "குழந்தாய்! அப்படியல்ல; ஸகல ஆயுதபாணிகளான ஸைன்யத்தால் சூழப்பட்டு யுத்தத்திற்குச் செல். வானரர்கள் மஹாபுத்திமான்கள், விவேகசாலிகள், உத்ஸாஹமுள்ளவர்கள், விடாமுயற்சியுள்ளவர்கள். சத்துரு அஜாக்கிரதையால் தனியாக அகப்பட்டுக் கொண்டால் கடித்துக் கொன்று விடுவார்கள். ஆகையால் யுத்தத்தில் நெருங்க முடியாத ஸைன்யத்துடன் செல். ராக்ஷஸர்களுக்கு விரோதமான ஸகல சத்துருக்களையும் ஹதம் செய்'' என்று ஆஸனத்திலிருந்தெழுந்து, நவரத்னங்களால் விளங்கும் ஒரு தங்கஹாரத்தை அவனுடைய கழுத்தில் போட்டான். தோள்வளைகளையும் மோதிரங்களையும் ஹாரத்தையும் குண்டலங்களையும் புஜகீர்த்திகளையும் இன்னும் மற்ற உத்தமமான ஆபரணங்களையும், அவனுக்கு வெகுமானமாகக் கொடுத்து, சிரேஷ்டமான மாலைகளாலும் பரிமளத் திரவியங்களாலும் அலங்கரித்து, யுத்தத்திற்கு உத்தரவு கொடுத்தான். அப்பொழுது பிரபலமான மந்திரங்களுடன் விதிப்படி ஆஹுதி செய்யப்பட்ட அக்னியைப்போல் கும்பகர்ணன் ஜ்வலித்தான். தேவாஸுரர்கள் க்ஷீரஸமுத்திரத்தை அமிருதத்திற்காகக் கடையும்பொழுது மந்தரபர்வதத்தில் சுற்றப்பட்ட வாஸுகி என்ற மஹா நாகத்தைப்போல், கோமேதகம் இந்திரநீலம் முதலியவைகளால் அலங்கரிக்கப்பட்ட ஸுவர்ணமயமான அரைநூல்மாலை அவனுடைய இடுப்பில் பிரகாசித்தது. சத்துருக்களுடைய ஆயுதங்களால் பிளக்க முடியாமல், அஸ்திரங்களால் துளைக்க முடியாததாய், மின்னலைப்போல் தன் காந்தியால் விளங்கும் தங்கக்கவசத்தால், ஸந்தியாகாலத்தில் மேகமாலைகளால் சூழப்பட்ட பர்வதராஜனைப்போல் தோன்றினான். ஸர்வாபரண

பூஷிதனாய் சூலபாணியாய் அவன் யுத்தத்திற்குப் புறப்படும்பொழுது, மூன்று லோகங்களையும் மூன்றடிகளால் அளக்க உத்தேசித்து திரிவிக்ரமாவதாரமெடுத்த நாராயணனைப்போல் விளங்கினான். தன் அண்ணனை ஆலிங்கனம் செய்து, பிரதக்ஷிணம் செய்து தலைவணங்கி, அந்த மஹாபலவான் யுத்தத்திற்குப் புறப்பட்டான். அளவற்ற சரீரத்தையும் பலத்தையுமுடைய அந்த ராக்ஷஸ வீரன் பேரிடிபோல் கர்ஜித்துக்கொண்டு போகும்பொழுது, பிரபலமான ஆசீர்வாதங்களால் ராவணன் அவனுக்கு ஜயத்தை அனுக்ரஹித்தான்.

சங்கம் துந்துபி முதலிய ரணவாத்யங்கள் கோஷிக்க, உத்தமமான ஆயுதங்களைத் தரித்த ஸைன்யங்கள் புடைசூழ, மலைபோன்ற யானைகளும் சண்டமாருதத்தைப் போன்ற குதிரைகளும் நீருண்ட மேகங்களைப்போல் கர்ஜிக்கும் ரதங்களும் ரதவீரர்களும் ஆயிரக் கணக்காய் அவனைப் பின்தொடர்ந்தார்கள். ஸர்ப்பங்கள், ஒட்டகங்கள், கோவேறு கழுதைகள், குதிரைகள், ஸிம்ஹங்கள், யானைகள், மான்கள், ஹம்ஸம் முதலிய பக்ஷிகள் ராக்ஷஸ வீரர்களுக்கு வாஹனங்களாயிருந்தன. தேவாஸுரர்களைக் கதறவடிக்கும் கும்பகர்ணன் பிரஜைகளால் வாரியிறைக்கப்பட்ட புஷ்பமாரியால் மறைந்து, பூர்ண சந்திரனைப்போல் ஒரு வெள்ளைக்குடை விளங்க, கூரான சூலத்தைக் கையில் பிடித்துச் சென்றான். ஸ்வபாவமான கொழுப்புடன் யுத்தபூமியிலிருந்து அடிக்கும் ரத்தத்தின் வாஸனை கலந்து அவனுக்கு எல்லையற்ற மதத்தை உண்டு பண்ணிற்று. மஹா பலவான்களான காலாட்கள் பயங்கரமான ரூபங்களுடன் கோபத்தால் சிவந்த நேத்திரங்களுடனும் பார்வைகளுடனும் மை மலைகளைப்போன்ற சரீரங்களுடனும் ஸகல ஆயுதங்களாலும் அலங்கரிக்கப்பட்டு வீரவாதங்களைச் செய்துகொண்டு கும்பகர்ணனைப் பின்தொடர்ந்தார்கள். சிலர் சூலங்களையும், சிலர் கூரான கத்திகளையும், சிலர் கோடாலிகளையும், சிலர் வெகு நீளமுள்ள ஈட்டிகளையும் கதைகளையும் உலக்கைகளையும் பனை மரங்களையும், சுழற்றிக்கொண்டு உத்ஸாஹத்துடன் சென்றார்கள். சத்துருக்கள் கண்டு பயந்து மயிர்க் கூச்சமடையும்படியான வேறு ரூபத்தைத் தரித்து, கும்பகர்ணன் தேஜஸாலும் பலத்தாலும் நிகரற்றவனாக யுத்தத்திற்குப் புறப்பட்டான். நூறு வில்லளவு விசாலமாகவும் அறுநூறு வில்லளவு உயரமாயும் மஹாபர்வதத்தைப்போலுமிருக்கும் தேகத்துடன், தேர்ச்சக்கரங்களைப்போல் வட்டமான நேத்திரங்களால் பார்ப்போர் நடுங்கும்படி, காட்டுத் தீயால் எரிக்கப்பட்ட காடுகளையுடைய மலையைப்போல் பூமி அதிரும்படி நடந்துகொண்டு, தன்னைச் சூழ்ந்த ராக்ஷஸர்களைப் பார்த்து, பாதாளத்தைப்போன்ற வாயைத் திறந்து, இடிபோல் சிரித்து, "இன்று என் வீரியத்தைப் பாருங்கள், விட்டில் பூச்சிகள் நெருப்பில் விழுந்து மடிவதுபோல், இந்த வானர ஸைன்யமும்



ஸேனைத் தலைவர்களும் வரிசை வரிசையாக கோபாக்னியில் விழுந்து சாம்பலாவார்கள். வனத்தில் ஸஞ்சரிக்கும் இந்தக் குரங்குகள் இதுவரையிலும் எனக்கு யாதொரு தவறும் செய்யவில்லை. லங்கையின் தோட்டங்களுக்கு ஒரு ஆபரணமாக இந்த வானரஜாதி இருந்து கொண்டிருந்தது. இப்பொழுது லங்கையை முற்றுகையிடத் துணிந்தபடியால் அவைகளைத் தண்டிக்க வேண்டியது. இதற்குக் காரணமான ராமலக்ஷ்மணர்களைக் கொன்று, பிறகு வானரப்பூண்டில்லாமல் செய்கிறேன்" என்றான். அதைக் கேட்டு ராக்ஷஸர்கள் ஸந்தோஷத்தால் கோரமாய்க் கூச்சலிட்டார்கள்; ஸமுத்திரம் கலங்கிற்று.

கும்பகர்ணன் யுத்தத்திற்குப் புறப்படும்பொழுது கோரமான அபசகுனங்கள் நான்கு பக்கங்களிலும் காணப்பட்டன. மஹா புத்திமானானதால் அவைகளின் பிரயோஜனம் அவனுக்கு நன்றாய்த் தெரியும். மேகங்கள் கழுதைகளைப்போன்ற நிறத்துடன், இடி எரிகொள்ளிகளால் பயங்கரமாய்க் காணப்பட்டன. காடு மலை ஸமுத்திரம் முதலியவைகளுடன் பூமி நடுங்கிற்று. பயங்கரமான நரிகள் நெருப்பு ஜ்வாலைகளைக் கக்கிக்கொண்டு கோரமாய் ஊளையிட்டன. பக்ஷிகள் அபஸவ்யமாய் வட்டமிட்டன. கழுகுகள் மாலையாய்க் கோத்ததுபோல் அவன் போகும் வழியில் விழுந்தன. அவனுடைய இடது கண்ணும் புஜமும் துடித்தன. ஓர் எரி கொள்ளி ஜ்வலித்துக்கொண்டு பயங்கரமான சப்தத்துடன் அவனுக்கெதிரே விழுந்தது. ஸூரியனுடைய ஒளி மழுங்கிற்று. காற்று சுகமாய் வீசவில்லை. யமனுடைய பாசத்தால் கட்டுப்பட்டுப் புத்திமயங்கி, கும்பகர்ணன் மயிர்க்கூச்சமுண்டாக்கும் அந்த பெரிய அபசகுனங்களைக் கவனிக்கவில்லை. நகரத்தின் பிராகாரங்களைக் கால்நடையாய்த் தாண்டி வெளியில் வந்து, வானரஸைன்யம் மேகக்கூட்டங்களைப்போல் எங்கும் பரவியிருப்பதைக் கண்டு ஆச்சரியமடைந்தான். மஹாபர்வதம் நடந்து வருவதைப்போன்ற அந்த ராக்ஷஸவீரனைக் கண்டு குரங்குகள் மூலைக்கு மூலை ஓடி ஒளிந்தார்கள். நீருண்ட மேகங்கள் சுழற்காற்றால் அடிக்கப்பட்டுச் சிதறுவதுபோல், பயங்கரமான அந்த வானரஸைன்யம் பயந்து ஓடுவதைக் கண்டு, அந்த ராக்ஷஸவீரன் ஸந்தோஷத்தால் கர்ஜித்தான். ஆகாசத்தில் மழைக்காலத்தில் குமுறும் மேகங்களைப்போல் கருத்த சரீரத்தையுடைய கும்பகர்ணன் ஸிம்ஹநாதம் செய்வதைக் கேட்டு, வானரர்கள் வேரற்ற ஆச்சாமரங்களைப்போல் இருந்தவிடத்திலேயே பிரக்ஞையற்று விழுந்தார்கள். இப்படி அந்த ராக்ஷஸ சிரேஷ்டன் நிகரில்லாத ரூபம், பலம், வீரியம், தைரியம் முதலிய குணங்களுடன், விசாலமான சூலத்தைக் கையிலேந்தி, யுத்தகளத்தில் சத்துருக்களை மூலநாசம் செய்ய வருவதைக் கண்டு, பிரளயகாலத்தில் லோகங்களை ஸம்ஹரிக்க வரும் யமன், "என்ன உத்திரவு?" என்று காத்துக் கொண்டிருக்கும்

தண்டத்துடன் வருகிறானே என்று வானரர்கள் பயத்தால் மெய் மறந்தார்கள்.

விபுல பரிக‘வாந் ஸ கும்ப‘கர்ணோ
ரிபுநித‘நாய விநிஸ்ஸ்ருதோ மஹாத்மா |
கபிக3ண ப‘யமாத3த‘த் ஸுபீ‘மம்
ப்ரபு‘ரிவ கிங்கரத3ண்ட3வாந் யுக3ாந்தே || (60)

## ஸர்க்கம் 66

## கும்பகர்ணனுடைய யுத்தம்

ஸ லங்க‘யித்வா ப்ராகாரம் கி3ரிகூடோபமோ மஹாந் |
நிர்யயௌ நக3ராத் தூர்ணம் கும்ப‘கர்ணோ மஹாப3ல: || (1)

மஹாபலவானான கும்பகர்ணன், பர்வதசிகரத்தைப்போல் பிராகாரங்களை அலக்ஷ்யமாய்த் தாண்டி, லங்கையிலிருந்து சீக்கிரமாய் வெளியில் வந்தான். அவனுடைய கர்ஜனையால் ஸமுத்திரம் பிரதித்வனி செய்தது; இடிகள் விழுந்தன; பர்வதங்கள் எரிந்து சாம்பலாயின; இந்திரன், யமன், வருணன் முதலிய தேவர்களும் கொல்ல முடியாத அந்த ராக்ஷஸ சிரேஷ்டன் பயங்கரமான நேத்திரங்களுடன் யுத்தத்திற்கு வருவதைக் கண்டு, வானரர்கள் மூலைக்கு மூலை ஓடினார்கள். அதைப் பார்த்து அங்கதன், ஸேனைத் தலைவர்களான நளன், நீலன், கவாக்ஷன், குமுதன், முதலியவர்களை நோக்கி, "என்ன காரியம் செய்கிறீர்கள்! உங்களுடைய வீரியத்தையும், சௌரியத்தையும், பராக்கிரமத்தையும், உத்தமகுலத்தையும் மறந்து பயத்தால் கிலிபிடித்து, ஸாமான்யக் குரங்குகளைப்போல் நீங்களும் ஓடலாமா? மித்திரர்களே! நல்லது, திரும்பி வாருங்கள். உயிர் வெல்லமா? ரகுவீரனுக்கல்லாமல் எதற்காக அதைக் காப்பாற்ற வேண்டும்? இவன் நீங்கள் யுத்தம் செய்யத் தகுந்த ராக்ஷஸ வீரனல்ல. நம்மைப் பயமுறுத்துவதற்காகச் செய்யப்பட்ட ஓர் உருவம். லங்கையிலுள்ள ராக்ஷஸர்களுக்குப் பயமுண்டாக்குவதற்காக நிர்மிக்கப்பட்ட இந்தப் பெரும் பொம்மையை நமது பராக்கிரமத்தால் தூளாக்குவோம். திரும்புங்கள்" என்றான்.

அப்பொழுது வானரவீரர்கள் மெள்ளமெள்ளத் தைரியமடைந்து ஒன்று சேர்ந்து மரங்களையும் பாறைகளையும் எடுத்துக்கொண்டு யுத்த பூமிக்கு வந்தார்கள். மதம்கொண்ட யானைகளைப்போல் கும்பகர்ணனைத் தடுத்து வெகுகோபத்துடன் கைகொண்ட வரையில் அடித்தார்கள். உன்னதமான மலைச்சிகரங்களாலும் பாறைகளாலும் புஷ்பித்த விருக்ஷங்களாலும் இடைவிடாமல் அடிக்கப்படும் அந்த ராக்ஷஸவீரன் சற்றும் அசையாமல் சிரித்துக்கொண்டிருந்தான்; அவனுடைய பலம் அப்படிப்பட்டது. பாறைகளும் மரங்களும் அவனுடைய தேகத்தில் பட்டுப் பொடிப்பொடியாய் பூமியில் விழுந்தன. காட்டுத்தீ வானங்களை எரிப்பதுபோல், அவன் மஹாவீரியமுள்ள வானரஸைன்யத்தைக் குழப்பினான். கணக்கில்லாத வானரர்கள் ரத்தத்தால் நனைந்து பூமியில் விழுந்தார்கள். பலர் சிவந்த புஷ்பங்களையுடைய விருக்ஷங்களைப்போல் வாரியெறியப்பட்டார்கள். பலர் தலைவிரிகோலமாய் ஓடிக்கொண்டு வழியிலிருக்கும் எல்லாவற்றையும் தாண்டித் திரும்பிப் பார்க்காமல் சென்றார்கள். பலர் ஸமுத்திரத்தில் மூழ்கினார்கள். பலர் ஆகாசத்தில் மறைந்தார்கள். பலர் அதிக பலவானான கும்பகர்ணனால் அடித்துக் கொல்லப்பட்டு ஸமுத்திரத்தில் கட்டின அணைவழியாய் ஓடினார்கள். கரடிகள் மரங்களில் ஏறிக்கொண்டன; பலர் பள்ளத்தாக்குகளில் ஒளிந்தார்கள்; பலர் மலைகளிலேறி மறைந்தார்கள்; பலர் ஸமுத்திரத்தில் அமிழ்ந்தார்கள்; பலர் குகைகளில் நுழைந்தார்கள்; பலர் தரையில் விழுந்தபடி கிடந்தார்கள்; சிலர் அவ்விடத்தில் நிற்கவே இல்லை. பலர் சரணமென்று பூமியில் விழுந்தார்கள்; பலர் பிணம்போல் மூச்சை அடக்கிக் கொண்டு கிடந்தார்கள்.

இப்படி வானரஸைன்யம் முறிபட்டோடுவதைக் கண்டு அங்கதன், "நில்லுங்கள், திரும்புங்கள்; யுத்தம் செய்வோம்; இந்த பூமியில் நீங்கள் எங்கே ஓடிஒளிந்தாலும் இவனிடத்திலிருந்து தப்பமுடியாது. ஆகையால் திரும்பி வாருங்கள். அவமானப்பட்டு எதற்காக உயிரைக் காப்பாற்ற வேண்டும்? தடையற்ற பராக்கிரமத்தையுடையவர்களே! ஆயுதங்களை விட்டெறிந்து ஓடும் உங்களைக் கண்டால் பெண்பிள்ளைகளும் கைகொட்டிச் சிரிப்பார்களே! மானமுள்ளவர்களுக்கு அதைவிட மரணம் வேறுண்டோ? நீங்களெல்லோரும் உத்தம குலத்தில் பிறந்தவர்கள். அல்பக் குரங்குகளைப்போல் பயத்தால் மெய்மறந்து எங்கே ஓடுகிறீர்கள்? தைரியத்தை விட்டுப் பயந்து ஓடுகிறவர்கள் பரம நீசர்களல்லவா? ஜனக்கூட்டங்களில் நீங்கள் ஒவ்வொருவரும் அபாரமாக உங்களை மெச்சிக்கொண்ட வீரவாதங்களும் ஆத்மஸ்தோத்ரங்களும் இப்பொழுது எங்கேபோயின? பிறரால் நிந்திக்கப்பட்டு உயிரை வைத்துக் கொண்டிருப்பவனை எல்லோரும் தைரியமற்ற பேடி யென்று நிந்திப்பார்கள். நமது முன்னோர்களான சூரர்கள் அனுஷ்டித்த ஸன்மார்க்கத்தை நீங்களும் அனுஷ்டியுங்கள்; பயத்தை விடுங்கள். நாம் பயந்தோடினாலும் யமன் நம்மை விடப் போகிறதில்லை. யுத்தத்தில் சத்துருவால் அடிப்பட்டு இறந்தால் சுத்தவீரர்களுக்குரிய பிரஹ்மலோகத்தை அடைவோம்; அது எல்லோருக்கும் கிடைக்குமா? சத்துருவை நாம் கொன்றால் அபார கீர்த்தியடைவோம். வீரஸ்வர்க்கமடைவதற்கு நாம் கொடுக்க வேண்டிய விலை நமது அல்பஜீவன்; அடையும் பிரயோஜனமோ எல்லையற்றது. இந்தக்கும்பகர்ணன் ரகுவீரனுடைய கண்ணில் பட்டும் உயிருடன் திரும்புவானா? கொழுந்துவிட்டெரியும் நெருப்பில் விழுந்த பூச்சி மீளுமோ? மஹாகீர்த்திபெற்ற நாம் ஒரு ராக்ஷஸனால் அடிபட்டோடி உயிரைக் காப்பாற்றிக்கொண்டால்

கீர்த்தியென்ற உயிர் போகுமல்லவா" என்று தைரியம் சொன்னான். இவ்வாறுகூறும் அங்கதனைநோக்கி, வானரர்கள் பயத்தால் புத்தி சிதறி, ஓடிக்கொண்டே "இந்தக் கும்பகர்ணன் எங்களைக் கோரமாய் வதம் செய்கிறான். இங்கே நின்று யுத்தம் செய்வதற்கு இது காலமா? தாங்களும் எங்களுடன் ஓடிவாருங்கள். உயிர்போனால் வருமா? உயிரிருந்தால் பிழைக்கலாம்; பிழைத்திருந்தால் இன்னும் அநேக யுத்தங்களில் கீர்த்தியடையலாம்" என்று கூறிக்கொண்டே எல்லோரும் இருந்தவிடம்தெரியாமல் மறைந்தார்கள். அப்பொழுது பயங்கரமான ரூபத்துடன் பயங்கரமான நேத்திரங்களுடன் கோபத்தால் ஜ்வலிக்கும் கும்பகர்ணனைக் கண்டு ஓடும் வானர வீரர்களை அங்கதன் ஆறுதல் செய்து, பயத்தை தீர்த்து, ராமன் வாலியைக் கொன்றதையும், ஸாலவிருக்ஷங்களையும் பர்வதங்களையும்துளைத்ததையும், மஹாஸமுத்திரத்தில் அணைக்கட்டினதையும் எடுத்துச் சொல்லி, அவருடைய அபார பராக்கிரமத்தை வர்ணித்து மெள்ள மெள்ளத் திருப்பிக்கொண்டு வந்தான். வரவர தைரியமடைந்து உத்ஸாஹம்கொண்டு, அங்கதனுடைய வார்த்தைக்குக்கட்டுப்பட்டு, ரிஷபன், சரபன், மைந்தன், த்விவிதன், தூம்ரன், நீலன், குமுதன், கவாக்ஷன், ரம்பன், தாரன், பனஸன் முதலிய வானரவீரர்கள் கும்பகர்ணனுடன் யுத்தம்செய்ய அதிவேகமாய்த் திரும்பிவந்தார்கள். அவர்களுடன் ஆஞ்சநேயரும் சென்றார்.

ரிஷப4 ஶரப4 மைந்த3 தூ4ம்ர நீலா:
குமுத3 ஸுஷேண க3வாக்ஷ ரம்ப4 தாரா: |
த்3வித3 பநஸ வாயுபுத்ர முக்2யா:
த்வரிததராபி4முக2ம் ரணம் ப்ரயாதா: ‖ (36)

## ஸர்க்கம் 67

## கும்பகர்ணவதம்

தே நிவ்ருத்தா மஹாகாயா: ஶ்ருத்வாங்க3த3 வசஸ் தத3ா |
நைஷ்டி2கீம் பு3த்3தி4மாத3ாய ஸர்வே ஸங்க்3ராம காங்க்ஷிண: ‖ (1)

இப்படி மலைப்போன்ற தேகங்களையுடைய வானரர்கள் அங்கதனுடைய வார்த்தையைக் கேட்டுத் தங்களுக்கு ஸ்வபாவமான வீரியத்தையும் தைரியத்தையும் அடைந்து மறுபடியும் யுத்தம் செய்வதில் ஆவல்கொண்டார்கள். தங்களுடைய பராக்கிரமங்களைச் சொல்லிக்கொண்டு, தங்களுடைய வீரியத்தையே நம்பி, உயிரை வெறுத்து ராமனுக்கு அர்ப்பணம் செய்ய நிச்சயித்து, ஸந்தோஷத்தால் கூச்சலிட்டுக்கொண்டு கும்பகர்ணனைச் சூழ்ந்து கோரயுத்தம் செய்தார்கள். விருக்ஷங்களையும் பெரிய மலைகளையும் பெயர்த்தெடுத்துக்கொண்டு அவனை நான்கு புறங்களிலிருந்தும் அடித்தார்கள் அவனோ கோபம்கொண்டு கதையைக் கறகறவென்று சுழற்றி வானரவீரர்களைக் கூட்டம் கூட்டமாய் மடித்து ஸகலதிக்குகளிலும் வாரியெறிந்தான். எழுநூறு எண்ணூறு ஆயிரம் இப்படி வானரர்களை ஒரே தடவையில் அடித்துப் பூமியில் தள்ளினான். எட்டு, பத்து, பதினாறு, இருபது, முப்பது இப்படி வானரர்களை வாரி வாயில் போட்டு விழுங்கிக்கொண்டு ஓடிவந்தான். கருடன் ஸர்ப்பங்களைக் கொத்திவிழுங்குவதைப்போல், அவனுடைய வயிற்றில்போன வானரர்களுக்கோ கணக்கில்லை. அப்பொழுது ஸேனைத் தலைவர்களால் ஸமாதானம் செய்யப்பட்டு, வானரர்கள் பலதிக்குகளிலிருந்தும் ஓடிவந்து, மரங்களையும் மலைகளையும் எடுத்துக்கொண்டு மறுபடியும் அவனைச் சூழ்ந்து கொண்டார்கள்.



த்விவிதன் ஒரு பெரிய பர்வதத்தைப் பெயர்த்து, மஹாபர்வதத்தில் தங்கும் மேகத்தைப்போல் கும்பகர்ணன்மேல் விட்டெறிந்தான். அது அவனுடைய தேகத்தில் படாமல் அவனைச் சூழ்ந்த ராக்ஷஸஸைன்யத்தில் விழுந்து, குதிரைகளையும் யானைகளையும் ரதங்களையும் ராக்ஷஸர்களையும் நாசம் செய்தது. மறுபடியும் வேறொரு மலையை விட்டெறிந்து ராக்ஷஸர்களுடைய குதிரைகளையும் ஸாரதிகளையும் நாசம் செய்து ரத்தவெள்ளம் பெருகச்செய்தான். ராக்ஷஸ ரதவீரர்கள் கூரான பாணங்களால் வானரர்களுடைய தலைகளை அறுத்துப் பயங்கரமாய்க் கர்ஜித்தார்கள். வானரர்களும் பெரிய விருக்ஷங்களால் ரதங்களையும் குதிரைகளையும் யானைகளையும் ஒட்டகங்களையும் ராக்ஷஸர்களையும் அடித்துக் கொன்றார்கள்.

ஹனுமான் ஆகாசத்தில் நின்றுகொண்டு கும்பகர்ணனுடைய தலைமேல் மலைச்சிகரங்களையும் பல விருக்ஷங்களையும் இடைவிடாமல் பொழிந்தார். அவன் அவைகளைச் சூலாயுதத்தால் பிளந்து பொடி செய்து, தீக்ஷ்ணமான சூலத்தைத் தூக்கிக்கொண்டு வானர ஸேனையைக் நோக்கி ஓடிவந்தான். மாருதி ஒரு பர்வதசிகரத்தைப் பெயர்த்தெடுத்துக் கொண்டு, தன் இனத்தாரை நாசம் செய்ததால் கோபம்கொண்டு, அவனை மறித்து அடித்தார். ரத்தத்தாலும் கொழுப்பாலும் பூசப்பட்டு, பெரிய மலையைப்போன்ற தேகத்தையுடைய கும்பகர்ணன், அந்த அடியைத் தாங்காமல் கலங்கினான். உடனே தீப்பிடித்த மலைச்சிகரத்தைப்போல் ஜ்வலித்து, மின்னலைப் போல் பிரகாசிக்கும் தன் சூலத்தைச்சுழற்றிக்கொண்டு, பூர்வகாலத்தில் ஷண்முகர் க்ரௌஞ்சபர்வதத்தைத் தன் உக்கிரமான சக்தியால் அடித்ததுபோல், ஹனுமானை மார்பில் குத்தினான். ஆஞ்சநேயர் மார்பு பிளந்து, இந்திரியங்கள் கலங்கிப் புத்திசிதறி, வாயால் ரத்தத்தைக் கக்கிக்கொண்டு, பிரளயகாலத்தில் மேகங்கள் கர்ஜிப்பதுபோல் பயங்கரமாகக் கர்ஜித்தார். அவர் வருந்தினதைக் கண்டு ராக்ஷஸர்கள் ஸந்தோஷத்தால் கூச்சலிட்டார்கள். வானரர்கள் மனம் நொந்து பயந்து யுத்தகளத்திலிருந்து ஓடிப்போனார்கள்.

பிறகு நீலன் ஸைன்யத்தை ஒழுங்குபடுத்தி அடக்கிக் கும்பகர்ணனை ஒரு மலைச்சிகரத்தால் அடித்தான். அதைக் கண்டு கும்ப

கர்ணன் விரல்களை மடக்கிக்கொண்டு அதைக் குத்தினான். அந்த வேகத்தால் அது பொடிப்பொடியாய் நெருப்புப் பொறிகளை உதிர்த்துக்கொண்டு பூமியில் விழுந்தது. பிறகு விருஷபன் சரபன் நீலன் கவாக்ஷன் கந்தமாதனனென்ற வானர சிரேஷ்டர்கள் கும்பகர்ணனை எதிர்த்துச் சூழ்ந்துகொண்டு, மலைகளாலும் மரங்களாலும் கைகளாலும் கால்களாலும் முஷ்டிகளாலும் அடித்தார்கள். அவை கும்பகர்ணனுக்கு ஸுகமாய் உடம்பைப் பிடித்து விடுவது போலிருந்தது. விருஷபனைத் தன் புஜங்களால் இறுக்கிக் கட்டினான். அந்த வானரன் எலும்புகள் ஒடிந்து, கண்களும் நாக்கும் பிதுங்கி, ரத்தத்தைக் கக்கிக்கொண்டு பூமியில் விழுந்தான். சரபனை முஷ்டியால் அடித்துத் தள்ளி, நீலனை முழங்காலால் இடித்துத் தள்ளி, கவாக்ஷனை அறைந்து தள்ளி, கந்தமாதனனை உதைத்துத் தள்ளினான். அவர்கள் அதைத்தாங்க முடியாமல் மூர்ச்சையடைந்து, வேரறுபட்ட பலாச விருக்ஷங்களைப்போல் ரத்தம் தாரையாய்ப் பெருகப் பூமியில் விழுந்தார்கள். அதைக் கண்டு அநேக ஆயிரம் வானரர்கள் கும்பகர்ணனைச் சூழ்ந்துகொண்டார்கள். மஹாபர்வதத்தைப்போன்ற அவனுடைய சரீரத்தின் மேல் நான்கு புறங்களிலும் ஏறித் தேகமெங்கும் கடித்தார்கள், நகங்களால் கிழித்தார்கள். முஷ்டிகளால் குத்தினார்கள், முழங்கால்களால் இடித்தார்கள். பெரும் மலையில் வளரும் விருக்ஷங்களைப் போல், வானரர்கள் தன்மேல் பரவி நிற்பதைக் கண்டு, அவன் அவர்களை இரு கைகளாலும் வாரிவாரிக் கருடன் ஸர்ப்பங்களை விழுங்குவதுபோல் கோபம் கொண்டு விழுங்க ஆரம்பித்தான். பாதாளத்தைப்போன்ற அவனுடைய வர்யில் விழுந்த வானரர்கள் காதுகளாலும் மூக்காலும் வெளியில் வந்தார்கள். இப்படி ஆயிரக்கணக்காய் வானர ஸைன்யத்தைத் தின்று கோபம் அதிகரித்து, கும்பகர்ணன் அவர்களைக் கூட்டங் கூட்டமாய்ச் சேர்த்து இறுக்கிக்கட்டி நொறுக்கி வாயில் போட்டுக் கொண்டான். மாம்ஸத்தாலும் கொழுப்பாலும் ரத்தத்தாலும் பூசப்பட்டுப் போகுமிடங்களிலெல்லாம் அவைகளால் நனைத்துக் கொண்டு, கோபபரவசனான காலாக்னியைப்போல் ராக்ஷஸ ஸைன்யத்தில் ஸஞ்சரித்தான். பயங்கரமான சூலத்தைச் சுற்றிக் கொண்டுவரும் அவனைக் கண்டு, வஜ்ரபாணியான இந்திரனோ, காலபாசத்தையுடைய யமனோவென்று எல்லோரும் பயந்தார்கள். கடுங் கோடையில் நன்றாய்க் காய்ந்த மரங்களைக் காட்டுத்தீ எரிப்பது போல், கும்பகர்ணன் வானரஸைன்யத்தை தன் கோபாக்னியால் சாம்பலாக்கினான். வானரஸேனாதிபதிகள் மூர்ச்சையடைந்து, தலைவனில்லாமல் வானரஸைன்யம் பயந்து நடுங்கிப் பெருங் கூச்சலிட்டது. அவர்கள் கூட்டங் கூட்டமாய் அந்த ராக்ஷஸனால் அடிக்கப்பட்டு, மனம் நொந்து ஒன்றும் தோன்றாமல், ராகவனைச் சரணமடைந்தார்கள்.



அதைக் கண்டு அங்கதன் ஒரு பர்வதசிகரத்தைப் பிடுங்கிக் கொண்டு, கும்பகர்ணனைப் பின்தொடரும் ராக்ஷஸர்கள் திகிலடையும்படி கர்ஜித்துக்கொண்டு, அவனுடைய தலையில் அடித்தான். அதைச் சற்றும் லக்ஷ்யம் செய்யாமல், அந்த ராக்ஷஸன் ஜ்வலித்துக் கொண்டு, ஸகல வானரர்களும் புத்தி சிதறி விழும்படி கூச்சலிட்டுக் கொண்டு, அங்கதன்மேல் பாய்ந்து, சூலத்தைச் சுழற்றி விட்டெறிந்தான். ஸகல யுத்தங்களிலும் ஸமர்த்தனான அங்கதன் லாவகமாய்த் தன் பலத்தால் தப்பித்துக்கொண்டு, பிறகு தாவி, அந்த ராக்ஷஸனை மார்பில் அறைந்தான். மலைபோன்ற அந்த நிசாசரன் கொஞ்சம் கலங்கித் தன்னைத் திடப்படுத்திக்கொண்டு, விரல்களை மடக்கி இடது கையால் அங்கதனைக் குத்தி வாறியெறிந்தான். அந்த வானரச்ரேஷ்டன் அதைப் பொறுக்காமல் ப்ரக்ஞையற்றுப் பூமியில் விழுந்தான்.

அதைக் கண்டு கும்பகர்ணன் தன் சூலத்தை எடுத்துக்கொண்டு ஸுக்ரீவனை நோக்கி ஓடிவந்தான். ஸுக்ரீவனும் ஒரு மலைச்சிகரத்தைப் பெயர்த்துச் சுழற்றிக்கொண்டு கும்பகர்ணனை எதிர்த்தான். அதைக் கண்டு அந்த ராக்ஷஸன் அவயவங்களை வளைத்துக்கொண்டு அசையாமல் நின்றான். ரத்தத்தால் பூசப்பட்ட தேகத்துடன், வானரர்களை ஓயாமல் தின்றுகொண்டிருக்கும் அந்த ராக்ஷஸோத்தமனைப் பார்த்து ஸுக்ரீவன், "நீ வானர வீரர்களை அடித்துத் தள்ளினாய்; அஸாத்யமான வீரகிருத்யங்களைச் செய்தாய்; வானரர்களைத் தின்றாய்; ஒப்பற்ற கீர்த்தியடைந்தாய். ஆனால், இந்த அல்ப வானரர்களால் உனக்கு ஆகவேண்டியதென்ன? என்னிடத்தில் வா. இதோ இந்த மலைச்சிகரத்தின் ஒரு அடியைத் தாங்குவாயா?" என்றான். இப்படித் தைர்யமாயும் கொழுப்புடனும் ஸுக்ரீவன் சொன்னதைக் கேட்டுக் கும்பகர்ணன் கடகடவென்று சிரித்து, "நீ ப்ரஹ்மாவின் பௌத்ரன். ரிக்ஷரஜஸின் புத்ரன். உன் ஆண்மையும் வீர்யமும் எல்லோருக்கும் தெரிந்தேயிருக்கிறது. ஏன் வீணாய்க் கதறுகிறாய்?" என்றான். (ஒரு ஸமயத்தில் ப்ரஹ்மா கொட்டாவி விடும்பொழுது ரிக்ஷரஜஸென்ற வானரச்ரேஷ்டன் உண்டானான். அவன் ஒருநாள் ப்ரஹ்மலோகத்தில் ஸஞ்சரித்துக் கொண்டிருக்கையில் ஓர் ஏரியில் வேடிக்கையாக ஸ்நானம் செய்ய, அதன் மஹிமையால் தன் ரூபம் மாறி, ஓர் அப்ஸரஸானான். அவளைக் கண்டு இந்திரனும் ஸூர்யனும் ஆசை கொண்டனர். முறையே வாலி ஸுக்ரீவனென்ற இரண்டு புத்ரர்கள் உண்டானார்கள். அதைக் கண்டு பிரஹ்மா சிரித்து, "நீ இந்தக் குழந்தைகளுடன் இதோ இருக்கும் ஏரியில் முழுகி உன் வானர ரூபத்தை அடையக்கடவாய்" என்றார். ஆகையால் வாலிஸுக்ரீவர்கள் ப்ரஹ்மாவின் பௌத்ரர்கள்; ரிக்ஷரஜஸின் புத்ரர்கள். சிலர் காச்யபருக்கு ஸூர்யனும், ஸூர்யனுக்கு ஸுக்ரீவனும் பிறந்தார்களென்று சொல்லுகிறார்கள். இப்படி ஸுக்ரீவனுடைய பிறப்பைப்பற்றிப் பரிஹாஸம் செய்து,

அவன் வாலியால் அடிபட்டோடினதைக் கும்பகர்ணன் சொல்லிக் காட்டினன்.) அதைக் கேட்டு ஸுக்ரீவன் அடங்காக் கோபங் கொண்டு, வஜ்ராயுதத்தைப்போன்ற அந்த மலைச்சிகரத்தால் கும்பகர்ணனை மார்பில் அடித்தான். அவனுடைய விசாலமான மார்பில் பட்டு அது பொடியாயிற்று. ராக்ஷஸர்கள் ஆரவாரித்தார்கள்; வானரர்கள் வருந்தினர்கள். அந்த ராக்ஷஸ வீரன் அதிக கோபங் கொண்டு, மலைக்குகையைப்போன்ற வாயைத் திறந்து, திக்குகள் அதிரும்படி ஸிம்ஹநாதம் செய்தான். பிறகு சூலத்தைக் கரகர வென்று சுழற்றி, ஸுக்ரீவனைக் கொல்வதற்காக விட்டெறிந்தான். தங்கஹாரங்களால் அலங்கரிக்கப்பட்டுக் கூர்மையான முனைகளுடன், நெருப்புஜ்வாலைகளைக் கக்கிக்கொண்டு வந்து விழும் அந்தச்சூலத்தை ஆஞ்ஜநேயர் தாவிப் பிடித்துக் கைகளால் ஒடித்தார். ஆயிரம் பாரம் கருப்பு இரும்பால் செய்யப்பட்ட அந்தச் சூலத்தை, மாருதி முழங்காலில் வைத்து ஒரு குச்சியை ஒடிப்பதுபோல் ஒடித்தார். தங்களில் அநேகரைக் கொன்ற அந்த ஆயுதம், மாருதியால் முறிக்கப்பட்டதைக் கண்டு வானரர்கள் ஸிம்ஹநாதம் செய்தார்கள்; ஸந்தோஷத்தால் குதித்துக் கூச்சலிட்டார்கள்; தைர்யங்கொண்டு நான்கு புறங்களிலிருந்தும் ஓடிவந்து மாருதியைக் கொண்டாடி உபசரித்தார்கள். கும்பகர்ணன் தன் முக்யமான ஆயுதம் வீணானதைக் கண்டு, த்ரிகூட பர்வதத்தின் ஒரு சிகரத்தைப் பெயர்த்து அதனால் ஸுக்ரீவனை அடித்தான். (லங்கைக் கோட்டை வாசலில் யுத்தம்செய்யும் கும்பகர்ணன் வெகு தூரத்திலுள்ள மலைச்சிகரத்தை எப்படிப் பெயர்க்க முடியுமென்றால், அதற்குத் தகுந்த சரீர பரிமாணம் உண்டல்லவா?) ஸுக்ரீவன் அடிபட்டு ப்ரக்ஞையற்றுப் பூமியில் விழுந்தான்; ராக்ஷஸர்கள் அதைக் கண்டு ஸந்தோஷத்தால் கூச்சலிட்டார்கள். உடனே கும்பகர்ணன் அவனைத் தூக்கி எடுத்துக் கொண்டு, சண்டமாருதம் மேகத்தை அடித்துக்கொண்டு போவது போல், லங்கையை நோக்கி வேகமாய்ச் சென்றான். பெரிய மேகத்தைப்போன்ற ரூபமுள்ள அந்த வானராதிபதியைத் தூக்கிக் கொண்டு கும்பகர்ணன் செல்லுகையில், உன்னதமான சிகரத்துடன் மேருபர்வதம் நடந்து வருவதுபோலிருந்தது. ஸகல ராக்ஷஸர்களும் அவனைப் புகழ்ந்து, வீரத்வனி செய்தார்கள். தேவகணங்கள் ஆச்சர்யப்பட்டு ஹா! ஹா! வென்று கூச்சலிட்டார்கள். "வானரர்களுக்கு அரசனும் ராமலக்ஷ்மணர்களுக்கு ஸஹாயமுமான இவனைக் கொண்டுபோய் விட்டால் வானர ஸைன்யம் தத்தளிக்கும். அதை வெகு ஸுலபமாய் ஜயிக்கலாம். ராமலக்ஷ்மணர்கள் ஆசையற்றுத் திரும்பிப் போவார்க"ளென்று ஆலோசித்துக் கும்பகர்ணன் யுத்தம் முடிந்ததாக நினைத்துச் சென்றான்.

ஸுக்ரீவன் சத்ருவால் பிடிக்கப்பட்டு, வானர ஸைன்யம் சிதறி அலங்கோலமாவதைக் கண்டு, அதிக புத்திமானான ஹநுமான், "இப்பொழுது நான் என்ன செய்ய வேண்டியது? எது யுக்தமோ



அதை எவ்விதத்திலும் செய்யாமலிருக்கக்கூடாது. ஒரு பெரிய பர்வதத்தைப்போல் ரூபமெடுத்து இந்த ராக்ஷஸன்மேல் விழுந்து, நசுக்கிக் கொல்லட்டுமா? என் முஷ்டியால் இவனை அடித்துக் கொன்று வானராதிபதியை விடுவித்தால் ஸகல வானரர்களும் ஸந்தோஷிப்பார்கள். அப்படியல்ல; மஹாராஜா சீக்கிரத்தில் தன்னை விடுவித்துக்கொள்வார். தேவாஸுரர்களும் இவரைக் கட்டி வைக்க முடியுமோ? இப்பொழுது கும்பகர்ணன் விட்டெறிந்த மலையால் அடிபட்டு ப்ரக்ஞையற்றிருக்கிறார். கொஞ்ச நேரங்கழித்து ப்ரக்ஞை தெளிந்து, தனக்கும் வானர ஸைன்யத்திற்கும் எது ஹிதமோ அதைச் செய்வார். நான் பதறி அவரை விடுவித்தால், ஒப்பற்ற வீர்யமுள்ள அந்த வானரச்ரேஷ்டன் என்னைக் கோபிப்பார். அவருடைய கீர்த்திக்கு என்றும் அழியாத குறைவு நேரும். ஆகையால் கொஞ்ச நேரம் பொறுக்கிறேன். ஸுக்ரீவன் என்ன செய்கிறார், பார்ப்போம். அதற்குள் கலைந்தோடும் வானர ஸைன்யத்தை அடக்கி ஸமாதானம்செய்கிறேன்" என்று ஆலோசித்து, வானரர்களை அங்கங்கே மறித்துத் தைர்யப்படுத்தினர்.

மஹாதேஜஸ்வியான ஸுக்ரீவனை எடுத்துக்கொண்டு கும்பகர்ணன் லங்கையில் ப்ரவேசித்தான். வீடுகளிலிருந்தும் விமானங்களிலிருந்தும் கோபுரங்களிலிருந்தும் அரண்மனைகளிலிருந்தும் அவன் மேல் புஷ்பமாரி விழுந்தது. பொரிகளும் பரிமளத்ரவியங்களும் தாரைதாரையாய் விழுந்தன. ராஜவீதி வெகு குளிர்ச்சியாயிருந்ததாலும் ஸுக்ரீவன் விசேஷ ஸத்வமும் பலமும் பொருந்தினவனானதாலும் சீக்ரத்தில் மூர்ச்சை தெளிந்து, மலைபோன்ற கும்பகர்ணனுடைய மார்பில் புஜங்களுக்கு நடுவில் தான் படுத்துக்கிடப்பதையும் சுற்றிலும் ராக்ஷஸர்களுடைய கிருஹங்களும் ராக்ஷஸர்களும் நெருங்கியிருப்பதையும் கண்டு, "நான் சத்ருவால் பிடிக்கப்பட்டு அவன் வசத்திலிருக்கிறேன். இப்போது என்னை விடுவித்துக் கொள்ளவேண்டியது. என்னை உபத்ரவித்ததற்குப் பதில் செய்ய வேண்டியது. இதற்கென்ன வழி? வானரர்களுக்கு ஹிதத்தையும் ஸந்தோஷத்தையும் கொடுக்கும் கார்யத்தையே செய்யவேண்டும்" என்று ஆலோசித்தான். பிறகு தன் கூர்மையான நகங்களால் கும்பகர்ணனுடைய காதுகளையும் பற்களால் மூக்கின் பக்கங்களையும் கிழித்தான். காதுகளும் மூக்குமற்று, ஸுக்ரீவனைத் தரையில் சுழற்றியடித்துத் தேய்த்தான். அப்படியும் அந்த வானர ராஜன் ஆகாசமார்க்கத்தில் தாவி, சீக்கிரத்தில் ராமனுடைய ஸமீபத்தில் வந்து சேர்ந்தான். (ஸுக்ரீவன் கால்களால் கன்னங்களிலும் தோள்களிலும் வயிற்றிலும் கும்பகர்ணனைக் கிழித்தான்.)

காது மூக்கற்று, ரத்ததாரைகள் பெருக, மலையருவிகள் பாயும் பர்வதத்தைப்போல் கும்பகர்ணன் விளங்கினான். எல்லையற்ற பலத்தையும் வீர்யத்தையுமுடையவனாகையால் அதைக் கொஞ்சம்

கூட லக்ஷ்யம் செய்யாமல், மறுபடியும் யுத்தத்திற்குப் புறப்பட்டான். அந்த அவமானத்தைப் பொறுக்காமல், வாயால் ரத்தத்தைக் கக்கிக்கொண்டு, ஸந்த்யா காலத்தில் சிவந்தமேகங்களால் மூடப்பட்ட மைமலையைப்போல் தோன்றினான். தன் கையில் ஆயுதமில்லையென்று அறிந்து, ஒரு பயங்கரமான இருப்புலக்கையை எடுத்துக்கொண்டு, தன் பரிவாரங்களுடன் வானர ஸைன்யத்தை அடித்துத் தின்றுகொண்டே, யுகங்களின் முடிவில் ப்ராணிகளை ஸம்ஹரிக்கும் காலாக்னியைப்போல் ஜ்வலித்தான். அப்படியும் பசியடங்காமல், ரத்தத்திலும் மாம்ஸத்திலும் ஆசை மிகுந்து வெறிகொண்டு, ராக்ஷஸர்களையும், வானரர்களையும், பிசாசர்களையும், கரடிகளையும் பேதம்தெரியாமல் கொன்று தின்றான். பிரளய காலத்தில் ம்ருத்யு ப்ராணிகளை ஸம்ஹரிப்பதுபோல், வானரர்களையும் ராக்ஷஸர்களையும் ஒரு கையால் சேர்த்துப் பிடித்து நசுக்கி ஓயாமல் வாயில் போட்டுக் கொண்டான். தேகமெங்கும் ரத்தமும் கொழுப்பும் பெருக, பர்வதசிகரங்களால் அடிக்கப்பட்டும் அதிக பலத்தால் அதைக் கவனியாமல், கடைவாய்களின் வழியாய் ரத்தம் சொரிய, வானரர்களைக் கடித்துத் தின்றான். ஓடிக்கொண்டே எழுநூறு எண்ணூறு வானரர்களை இப்படிக் கைகளால் வாரிவாரி நொறுக்கித் தின்றான். அதைக் கண்டு வானரர்கள் லோகநாதனை ராமனைச் சரணமடைந்தார்கள்.

அப்பொழுது லக்ஷ்மணன் கோபங்கொண்டு, அவனை எதிர்த்து, ஏழு தீக்ஷ்ணமான பாணங்களை அவனுடைய தேகத்தில் பிரயோகித்தார். அதையும் லக்ஷ்யஞ்செய்யாமல், லக்ஷ்மணனைத் தாண்டி, பூமி நடுங்கும்படியாய் ராமனை நோக்கி ஓடிவந்தான். அப்பொழுது ராமன் ருத்ராஸ்த்ரத்தை ப்ரயோகித்து, அவனுடைய ஹ்ருதயத்தில் தீக்ஷ்ணமான பாணங்களால் அடித்தார். உடனே அவனுடைய முகத்திலிருந்து நெருப்புத்தணல்கள் ஜ்வாலைகளுடன் விழுந்தன. ராமபாணங்களால் அடிக்கப்பட்டு, கோரமாய்ச் சப்தித்துக் கொண்டு, கோபத்தால் வானரர்களை அடித்துத் துரத்திக்கொண்டு ஓடிவந்தான். மயிலிறகுகள் பூண்ட பாணங்கள் அவனுடைய மார்பில் பதிந்து அவனைச் சற்றுக் கலக்கின. கையிலிருந்த பெரிய இருப்புலக்கை பூமியில் நழுவி விழுந்தது. மற்ற ஆயுதங்களும் மூலைக்கு மூலை சிதறிப்போயின. தன் கையில் ஆயுதமில்லையென்று தெரிந்தவுடன், முஷ்டிகளாலும் கால்களாலும் வானரர்களைக் குத்தி அடித்து உதைத்து நாசஞ்செய்தான். பாணங்களால் தேகமெங்கும் துளைக்கப்பட்டு, மலையிலிருந்து நீர்த்தாரைகள் பெருகுவதுபோல் விளங்கினான். பயங்கரமான கோபத்தாலும் ரத்தவெறியாலும் மெய்மறந்து, வானரர்களையும், ராக்ஷஸர்களையும், கரடிகளையும் தின்றான். பிறகு ஒரு மலைச்சிகரத்தைப் பெயர்த்துச் சுழற்றி ராமன்மேல் விட்டெறிந்தான். அதை ஏழு உக்ரமான பாணங்களால் ரகுவீரன் தூளாக்கினார். உடனே இருநூறு வானரச்ரேஷ்டர்களை நோக்கி மேருசிகரத்தைப்போல் தேஜஸால் ஜ்வலித்துக்கொண்டு ஓடிவரும் கும்பகர்ணனைப் பாணங்களால் தடுத்தார். அப்பொழுது லக்ஷ்மணன் தர்மாத்மாவாகையால் அவனைக் கொல்ல அநேக உபாயங்களை ஆலோசித்து, "ஸுக்ரீவ! ரத்தத்தின் நாற்றத்தால்இவன் புத்திமயங்கி வானரர்களுக்கும், ராக்ஷஸர்களுக்கும் பேதந்தெரியாமல் கொன்று தின்கிறான். வானர வீரர்கள் நான்கு புறங்களிலிருந்தும் இவன் மேல் ஏறட்டும். ஸேனைத் தலைவர்கள் இவனைச் சூழ்ந்து நிற்கட்டும். ஒருவேளை பாரந்தாங்காமல் இவன் கீழே விழுந்தால், வானரர்களை நசுக்கிக் கொல்லாமலிருப்பான்" என்றார். அதைக் கேட்டு வானரர்கள் ஸந்தோஷமடைந்து, அந்த ராக்ஷஸன்மேல் ஏறினார்கள். அதனால் அவனுக்குக் கோபம் மிகுந்து, மதம் பிடித்த யானை, பாகர்களை வீசியெறிவதுபோல், வானரர்களை அதிவேகமாய் உதறியடித்தான். அதைக் கண்டு ராமன், "இந்த ராக்ஷஸன் மிகவும் பொல்லாதவன்" என்று, அதிவேகமாய் சிரேஷ்டமான வில்லையெடுத்துக் கோபத்தால் கண்கள் சிவந்து, சத்ருக்களை எரிப்பதுபோல் ரோஷங்கொண்டு, கும்பகர்ணனை நோக்கி ஓடிவந்தார். அந்த ராக்ஷஸ வீரனால் பயமடைந்த வானரர்களை ஸந்தோஷமடைவித்து அவர்களை ஸமாதானம் செய்து, காலஸர்ப்பத்தைப்போன்ற நாண்பூட்டி, தங்கத்தால் விசித்ரமாய் வேலை செய்யப்பட்ட உறுதியான வில்லைச் சுழற்றிக்கொண்டு, முதுகில் உத்தமமான அம்பறைகள் ப்ரகாசிக்க, லக்ஷ்மணன் பின்தொடர, வானரக் கூட்டங்கள் புடைசூழ, யுத்தத்திற்குப் புறப்பட்டார். கும்பகர்ணனைக் கண்டார். நவரத்னங்களால் ஜ்வலிக்கும் கிரீடத்துடன், ஸூர்ய கிரணங்களால் அலங்கரிக்கப்பட்ட மேருசிகரத்தைப்போல் அவன் விளங்கினான். தேகமெங்கும் ரத்தவெள்ளம் பெருகிற்று: எல்லையற்ற பலசாலி, கோபங்கொண்ட திக்கஜங்களைப்போல் எல்லோரையும் அடித்துத் தள்ளிக்கொண்டிருந்தான். ராக்ஷஸர்களால் சூழப்பட்டு வானரர்களைத் தின்பதற்காகத் தேடித் தேடிப் பிடித்தான். விந்தியம் மந்தரம் முதலிய பர்வதங்களைப்போல் பார்க்கப் பயங்கரமாய், தங்கஹார கேயூர மகுட குண்டலங்களால் விசித்ரமாக அலங்கரிக்கப்பட்டிருந்தான். மழைக்காலத்தில் மேகங்களைப்போல் அவன் கடைவாயிலிருந்து ரத்தமாரி சொரிந்தது. அதை நசுக்கிக் கொண்டே வானரர்களைப் பிடித்துக் கடித்துத் தின்றான். கொழுந்துவிட்டெரியும் அக்னியைப்போன்ற தேஜஸுடையவன். அந்த ராக்ஷஸ ச்ரேஷ்டனைக் கண்டு, ராமன் வில்லை வளைத்து நாணேற்றித் திக்குகள் அதிரும்படி டங்காரம் செய்தார். அந்த நாதத்தைக் கேட்டுக் கும்பகர்ணன் பொருமைகொண்டு, ராமனை நோக்கி ஓடிவந்தான். பெருங்காற்றால் அடிக்கப்பட்ட கருமேகத்தைப்போலும், ஆதிசேஷனைப்போல் நீண்டு பருத்த புஜங்களுடனும், பர்வதம் நடந்து வருவதுபோல் தன்னை நோக்கி வரும் கும்பகர்ணனைப்

பார்த்து ராமன், "ராக்ஷஸச்ரேஷ்டனே! வா, கவலைப்படாதே; வில்லுங்கையுமாய் உனக்காக எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறேன். ராமனென்பவன் நானே. ஒரு முகூர்த்தத்தில் உன் உயிரை வாங்குகிறேன்" என்றார். அவர் ராமனென்று அறிந்து, கோபத்தாலும் ஸந்தோஷத்தாலும் பேரிடிபோல் சிரித்து, வானரர்களை நான்கு புறங்களிலும் வாரியெறிந்துகொண்டு, அவர்களுடைய ஹிருதயம் பிளக்கும்படி மஹாமேகங்களைப்போல் கர்ஜித்துக் கொண்டு, கும்பகர்ணன், "என்னையும் விராதன், கபந்தன், கரன், வாலி, மாரீசன் முதலியவர்களைப்போல் அலக்ஷ்யமாய் எண்ணாதே. இங்கே வந்திருக்கிறவன் கும்பகர்ணனென்று அறி. இதோ என் கையிலிருக்கும் கோரமான உலக்கையைப் பார்த்தாயா? இதனால் தேவர்களையும் தானவர்களையும் ஜயித்திருக்கிறேன். இது உறுதியான கருப்பு இரும்பால் செய்யப்பட்டது. எனக்குக் காதுகளும் மூக்குமில்லையென்று அலக்ஷ்யம் செய்கிறாயோ? அவைகள் போனதால் எனக்குக் கொஞ்சங்கூட வருத்தமில்லை. உன் வீர்யத்தையும் லாகவத்தையும் கூடியவரையில் என்மேல் ப்ரயோகிக்கலாம். உன் ஆண்மையையும் பராக்ரமத்தையும் பார்த்துவிட்டுப் பிறகு உன்னைத் தின்கிறே"னென்றான். அதைக்கேட்டு ராமன் தீக்ஷ்ணமான பாணங்களால் கும்பகர்ணனை அடித்தார். வஜ்ராயுதங்களைப்போல் அவை அதிவேகமாக அவன் மேல் விழுந்தும் அந்த ராக்ஷஸன் கலங்கவுமில்லை, வருத்தமடையவுமில்லை. முன்பு ஏழு ஸாலமரங்களையும் துளைத்த பாணங்களும், வானரச்ரேஷ்டனான வாலியைக் கொன்ற பாணமும் கும்பகர்ணனுடைய சரீரத்தில் வஜ்ராயுதங்களைப்போல் துளைத்தும் அவனுக்குக் கொஞ்சங்கூட உபத்ரவமுண்டாகவில்லை. அவனுடைய சரீரத்தில் விழும் பாணங்கள் ஸமுத்திரத்தில் விழும் மழைத்தாரைகளைப்போல் இருந்தவிடந் தெரியாமல் மறைந்தன; லோகத்திலுள்ள ஸகல நதிகளும் மேகங்களும் ஸமுத்ரத்தில் போய்க் கலந்தாலும் அது கலங்கிக் கரை புரளாததுபோல், கும்பகர்ணன் சற்றும் கலங்கவில்லை. தன் கையிலிருந்த இருப்புலக்கையைச் சுழற்றிப் பயங்கரமான வேகத்துடன் ராமனுடைய பாணங்களை அடித்துத் தள்ளித் தேவர்களுடைய ஸைன்யங்களும் கண்டு நடுங்கும் அந்த உலக்கையால் வானர ஸைன்யங்களை அடித்துத் துரத்தினான். அப்பொழுது, ராமன் ஒரு வாயவ்யாஸ்திரத்தை ப்ரயோகித்து, இருப்புலக்கையுடன் அவனுடைய புஜத்தை அறுத்துத் தள்ளினார். கும்பகர்ணன் அந்த உபத்ரவம் பொறுக்காமல் திக்குகள் நடுங்கும்படி கூச்சலிட்டான். மலைச்சிகரம் போன்ற அந்தப் புஜமும் வஜ்ராயுதத்தைப் போன்ற உலக்கையும் வானர ஸைன்யத்தில் விழுந்து, அநேகமாயிரம் குரங்குகளைக் கொன்றது. கொல்லப்பட்டனவும் தின்னப்பட்டனவும் போக எஞ்சின வானரர்கள் வாடின முகத்துடன் தூரத்தில் நின்றுகொண்டு, ராமனுக்கும் ராக்ஷஸவீரனுக்கும் நடக்கும் கோர யுத்தத்தைப் பார்த்து



ஸ கும்ப$^{4}$கர்ணஸ்ய வசோ நிஶம்ய
ராம: ஸுபுங்கா$^{2}$ந் விஸஸர்ஜ பா$^{3}$ணாந் |
தைராஹதோ வஜ்ரஸமக்$^{3}$ர வேகை$^{3}$:
ந சுக்ஷுபே$^{4}$ ந வ்யத$^{2}$தே ஸுராரி: ||

— யு. 67 ஸ - 162 சு.

அதைக் கேட்டு ராமன் தீக்ஷ்ணமான பாணங்களால் கும்பகர்ணனை அடித்தார். வஜ்ராயுதங்களைப்போல் அவை அதி வேகமாக அவன் மேல் விழுந்தும் அந்த ராக்ஷஸன் கலங்கவுமில்லை, வருத்தமடையவுமில்லை.
(பக்கம் 256 பார்க்க)

Notes : This Blank Page has also to be counted as a another page Number.

It is intentionally left blank after Picture Sketches.!





நடுங்கினார்கள். அந்த ராக்ஷஸவீரன் மற்றொரு கையால் ஒரு பெரிய மரத்தைப் பிடுங்கிக்கொண்டு சிகரத்தை இழந்த பர்வதத்தைப்போல் ராமனை நோக்கி ஓடிவந்தான். மஹாநாகம் ஆகாசமார்க்கமாய் வருவது போலிருக்கும் புஜத்தை விருக்ஷத்துடன் ரகுவீரன் ஒரு ஐந்திராஸ்திரத்தால் அறுத்துத் தள்ளினார். அது பூமியில் விழுந்து மரங்களையும் மலைகளையும் பாறைகளையும் வானரர்களையும் ராக்ஷஸர்களையும் நாசம் செய்தது. அப்படியும் கொஞ்சங்கூடத் தயங்காமல் கோரமாய்க் கர்ஜித்துக்கொண்டு, அந்த ராக்ஷஸசிகாமணி ஓடிவருவதைக் கண்டு ராமன் இரண்டு அர்த்தசந்த்ர பாணங்களால் அவனுடைய கால்களை அறுத்துத் தள்ளினார். அவை பூமியில் விழுந்த சப்தத்தால் ஸகல திக்குகளும் பர்வதங்களும் குஹைகளும் ஸமுத்திரமும் லங்கையும் வானர ராக்ஷஸ ஸேனைகளும் நடுங்கி ப்ரதித்வனி செய்தன. கைகளும் கால்களுமற்றும் அந்தப் பராக்ரமசாலி கொஞ்சங்கூட அதைர்யப்படாமல், வடவாமுகத்தைப் போன்ற தன் வாயைத் திறந்து கோரமாய்க் கர்ஜித்துக்கொண்டு, சந்திரனை விழுங்க ராஹு ஆகாசமார்க்கமாய் ஓடிவருவதுபோல், ராமனை விழுங்க உருண்டு ஓடி வந்தான். அவனுடைய தேஹம் பூமியில் புரண்டு வரும்பொழுது கணக்கில்லாத வானரர்களும் ராக்ஷஸர்களும் நசுங்கி மடிந்தார்கள். எதிரில் அகப்பட்டவர்களைத் தின்றுகொண்டே வந்தான். கோபாவேசங்கொண்ட அவனுடைய மூச்சுக்காற்றின் வேகத்தால் அநேக ஆயிரக்கணக்கான வானரர்களும் ராக்ஷஸர்களும் உள்ளே இழுக்கப்பட்டு அழிந்தார்கள். சிலர் வெகு தூரம் வெளியில் அடித்துத் தள்ளப்பட்டு மாண்டார்கள். அதைக் கண்டு ராமன் தீக்ஷ்ணமான பாணங்களால் அவனுடைய வாயை நிரப்பினார். அவன் பேச முடியாமல் பெருங்கூச்சலிட்டு மூர்ச்சையடைந்தான். பிறகு கைகளற்றுக் கால்களற்றுப் பாணங்களால் வாய் நிறைந்து, ராமனை நோக்கி ஓடிவந்தான்.

ராமன் அவனுக்கு மரண காலம் ஸமீபித்ததென்று அறிந்து, ஓர் ஐந்த்ராஸ்த்ரத்தை எடுத்து அபிமந்த்ரித்து பிரயோகித்தார். ஸூர்யகிரணங்களைப்போல் ஜ்வலித்துக்கொண்டு, ப்ரஹ்மதண்டத்தைப்போல் ஒருவராலும் தடுக்க முடியாததாய், காலஸ்வரூபியான யமனைப்போல் ஸகல வஸ்துக்களையும் நாசஞ்செய்வதாய், ப்ரளயகால சண்டமாருதத்தைப்போல் தடையற்ற வேகமுள்ளதாய், அழகான கணுக்களுடனும், தீக்ஷ்ணமான முனையுடனும், அந்தச் சரம் விளங்கிற்று. மத்யாஹ்னகாலத்தில் பூர்ணதேஜஸுடன் ஜ்வலிக்கும் ஸூர்யனைப்போலும், ஆஹுதிகளால் திருப்தியடைந்து கொழுந்து விட்டெரியும் அக்னியைப்போலும், மஹேந்திரனுடைய வஜ்ராயுதத்தையும் இடியையும்போல் பார்ப்போர் ஹிருதயம் பிளக்கும்படியான வேகமுள்ளதான, தங்கக் கட்டுகளுள்ள அந்த உத்தம அஸ்த்ரத்தை ரகுவீரன் ப்ரயோகித்தவுடன்,

அது ஸகல திக்குகளையும் தன் காந்தியால் ப்ரகாசிக்கச் செய்துகொண்டு கும்பகர்ணன்மேல் விழுந்தது. முன்காலத்தில் தேவேந்த்ரனுடைய வஜ்ராயுதம் விருத்ராஸுரனுடைய தலையை அறுத்துத் தள்ளினதுபோல், பெரிய பர்வதசிகரம்போன்ற கும்பகர்ணனுடைய முகம், கோரைப் பற்கள் பயங்கரமாய்த் தெரிய, அழகான குண்டலங்கள் அசைய, ராமபாணத்தால் அறுபட்டுப் பூமியில் விழுந்தது. குண்டலங்களால் அலங்கரிக்கப்பட்ட கும்பகர்ணனுடைய தலை, அறுபட்ட வேகத்தால் ஆகாசத்தில் கிளம்பி, அதிதியை தேவதையாயுடைய புனர்வஸு நக்ஷத்ரங்கள் இரண்டிற்கும் நடுவில் ப்ரகாசிக்கும் சந்த்ரனைப்போல் விளங்கிற்று. (ஸுக்ரீவனால் குண்டலங்கள் அணிந்த பாகத்தைத் தவிர இரு காதுகளும் கடிக்கப்பட்டனவென்று தெரிகிறது.) இப்படி ராமபாணத்தால் அறுக்கப்பட்ட அந்த ராக்ஷஸனுடைய சிரஸ், மஹா பர்வதம் ஆகாசத்திலிருந்து விழுவதுபோல், லங்கையிலுள்ள வீடுகளையும் கோபுரங்களையும் உயர்ந்த மதிள்களையும் கோபுரங்களுக்கருகிலுள்ள ஸேவகர்களின் வீடுகளையும் நாசஞ்செய்துகொண்டு, பூமியில் விழுந்தது. பிறகு அவனுடைய தேஹம், நான்கு புறங்களிலும் தப்பித்துக் கொள்வதற்காக ஓடிக்கொண்டிருந்த அநேக கோடி வானரர்களை நசுக்கிக் கொன்று யுத்த பூமியில் விழுந்தது. அதில் ஒரு பாகம் ஹிமயமலையைப்போல் ப்ரகாசித்துக்கொண்டு லங்கையையடுத்த ஸமுத்ரத்தில் விழுந்தது. அங்குள்ள முதலைகளும், திமிங்கிலங்களும், சிம்சுமாரங்களும், கடல் யானைகளும் மற்றப் பெரிய சரீரமுள்ள ஜலஜந்துக்களும் கணக்கில்லாமல் நசுங்கி இறந்தன; ஸமுத்ரத்தின் அடியில் அவனுடைய தேஹம் போய் விழுந்து பூமியைப் பிளந்துகொண்டு உள்ளே சென்றது.

ப்ராஹ்மணர்களையும், தேவர்களையும் தன் க்ரூர க்ருத்யங்களால் கதறடித்த கும்பகர்ணன், மஹாபலவானான பகவானுடைய அபாரகருணையால் கொல்லப்பட்டதைக் கண்டு, பூமியும், பர்வதங்களும், தேவர்களும் ஸந்தோஷத்தால் குதித்து ஆரவாரித்தார்கள். தேவர்ஷி, மஹர்ஷி, பன்னக, அஸுர, பூத, ஸுபர்ண, குஹ்யக, யக்ஷ, கந்தர்வகணங்களும் ராமனுடைய பராக்ரமத்தால் அடங்காத ஆனந்தமடைந்து ரகுவீரனைக் கொண்டாடினார்கள். ராவணனுடைய பந்துக்களும், பரிவாரங்களும், தங்களுக்குள் த்வஜம்போல் விளங்கின கும்பகர்ணன் இப்படி ரகுபதியால் மடிந்ததைக் கண்டு, முன்காலத்தில் அஸுரர்கள் ஸ்ரீமந்நாராயணனைப் பார்த்து நடுங்கிக் கதறினதுபோல், அபாரமான தேஜஸுடனும் ஜயலக்ஷ்மியுடனும் வீராவேசங்கொண்டு விளங்கும் ராமனைப் பார்த்துப் பயந்து வாய்விட்டு அலறினார்கள். மூன்று லோகங்களைச் சூழ்ந்த இருளையும் பயத்தையும் தன் தேஜஸால் போக்கி, ராஹுவின் முகத்திலிருந்து வெளிப்பட்ட ஸூர்யனைப்போல், வானர ஸைன்யங்களுக்கு நடுவில் ரகுநாயகன் பிரகாசித்தார். பயங்கரமான பலத்தையும் அபாரமான



வீர்யத்தையுமுடைய கும்பகர்ணனை யுத்தத்தில் வதஞ்செய்த அந்தக் கருணாமூர்த்தியை, ஸகல வானரர்களும் மலர்ந்த செந்தாமரையைப்போல் ஆனந்தத்தால் மலர்ந்த முகங்களுடன் கொண்டாடினார்கள். முன்பு ஸகல லோகங்களையும் உபத்ரவித்துக் கொண்டிருந்த விருத்ராஸுரனைக் கொன்றபொழுது தேவேந்த்ரன் மகிழ்ந்ததுபோல், தேவகணங்களை யுத்தங்களில் பலதடவை முறியடித்தவனும் ரணபூமியில் சிரமமென்பதையே அறியாதவனுமான அந்த ராக்ஷஸவீரசிகாமணியைக் கோரயுத்தத்தில் கொன்று தாசரதியும் ஸந்தோஷித்தார்.

ஸ கும்ப4கர்ணம் ஸுரஸங்க4 மர்த3நம்
மஹத்ஸு யுத்3தே4ஷு பராஜிதஸ்ரமம் |
நநந்த3 ஹத்வா ப4ரதாக்3ரஜோ ரணே
மஹாஸுரம் வ்ருத்ர மிவாமராதி4ப : ॥ (187)

---

## ஸர்க்கம் 68

## ராவணன் பிரலாபித்தது

---

கும்ப4கர்ணம் ஹதம் த்3ருஷ்ட்வா ராக4வேண மஹாத்மநா |
ராக்ஷஸா ராக்ஷஸேந்த்3ராய ராவணாய ந்யவேத3யந் ॥ (1)

மஹாத்மாவான ராமனால் கும்பகர்ணன் கொல்லப்பட்டதைக் கண்டு, ராக்ஷஸர்கள் ராவணனிடத்தில் ஓடித் தெரிவித்தார்கள். "காலாந்தகனைப் போன்ற நமது கும்பகர்ணமஹாராஜா சுத்த வீரர்கள் அடைய விரும்பும் உத்தமலோகங்களை அடைந்தார். ஸுக்ரீவஸைன்யத்தைக் கலக்கித் துரத்தியடித்தார். அநேக ஆயிர வானரங்களைப் பக்ஷித்தார். ஒரு முகூர்த்தம் எல்லோரையும் தத்தளிக்கும்படி செய்தார். பிறகு ராமனுடைய தேஜஸால் அடங்கி தன் கர்மகதி முடிந்து, என்றைக்கும் அழியாத புகழ் பெற்றார். அவருடைய சரீரம் புஜங்களற்று, கால்களறுந்து, ரத்ததாரைகள் பெருக, விகாரமடைந்து, காட்டுத்தீயால் எரிபட்ட மஹாவிருக்ஷத்தைப்போல், பாதி ஸமுத்ரத்தில் விழுந்து, பாதி லங்கைக் கோட்டை வாசலைப் பெரும் மலையைப்போல் அடைத்துக் கொண்டிருக்கிறது. தங்களுடைய ஸகோதரர் ராமபாணங்களால் வீரஸ்வர்க்கமடைந்தார்" என்று தெரிவித்தார்கள்.

பலத்தாலும், வீர்யத்தாலும், தைர்யத்தாலும், விச்வாஸத்தாலும் தனக்கு முக்கிய ஆதாரமாயிருந்த உடன்பிறந்தான் இறந்ததைக் கேட்டு, ராவணன் சோகம் மேலிட்டுப் புத்திமயங்கி ஆஸனத்திலிருந்து பூமியில் விழுந்தான். தேவாந்தகன், நராந்தகன், த்ரிசிரஸ், அதிகாயன் முதலியவர்கள், தங்களுடைய சிறிய தகப்பன் இறந்ததைக் கேட்டுத் துக்கம் தாங்காமல் வாய்விட்டழுதார்கள். மஹோ

தரனும் மஹாபார்ச்வனும் தங்களுடைய ஸஹோதரன் கொல்லப்பட்டதைக் கேட்டுச் சோகஸமுத்ரத்தில் அமிழ்ந்தார்கள். சிறிது நேரம் சென்ற பின் ராவணன் ப்ரக்ஞை தெளிந்து மனம் நொந்து, "ஹா! வீரச்ரேஷ்ட! சத்ருக்களின் கொழுப்பை அடக்கும் சூர! எல்லையற்ற பலவானே! என்னைத் தனியாக விட்டுக் காலவசத்திற்குட்பட்டு யமலோகத்திற்குச் சென்ருயே! நானும் உன் பந்துக்களும் உன்னை நம்பியிருக்க எங்களுடைய குறையைத் தீர்க்காமல் சத்ருஸைன்யத்தைச் சிதறவடித்து, நீ மாத்ரம் என்னை இங்கே விட்டுப்போவது நியாயமா? உன்னை நம்பித் தேவாஸுரர்களைத் துரும்பாய் நினைத்திருந்தேனே. இன்று என் வலது புஜம் போயிற்று. இந்த க்ஷணம் முதல் நான் இருந்தும் இறந்தது போலானேன். என்ன ஆச்சர்யம்! நிகரற்ற தேஹத்தையும் பலத்தையும் வீர்யத்தையுமுடைய உன்னை, தேவதானவர்களுடைய கொழுப்பை அடக்கினவனை, காலாக்னியைப்போல் சத்ருக்கள் நெருங்க முடியாதவனை, ராமன் இன்று யுத்தத்தில் எப்படிக் கொன்ருனே? இந்த்ரனுடைய வஜ்ராயுதமும் உன் தேஹத்திற்பட்டு ஒழிந்ததேயொழிய, உனக்குக் கொஞ்சமாவது வருத்தமுண்டா? ராமபாணங்களால் அடிபட்டுப் பூமியில் தூங்கும்படி நேர்ந்ததெப்படி? அதோ ஆகாசவீதியில் தேவர்களும் ரிஷிகளும் நின்றுகொண்டு, இன்று நம்மைப் பிடித்த பயமும் ஆபத்தும் விட்டதென்று ஸந்தோஷிப்பதைப் பார்க்க, என் மனம் கொதிக்கிறதே. இன்று வானரர்களுக்கு ஆனந்தக்கூத்தாட நல்ல ஸமயம் வாய்த்தது. லங்கையின் கோட்டை வாசல்களிலும் மதில்களிலும் ஏறுவார்கள். கும்பகர்ணனில்லாமல் இந்த லங்கா ராஜ்யம் எனக்கேன்? இவ்வளவு சிரமமும் எதற்காகப் படுகிறேனே அந்த ஸீதையிருந்துதான் எனக்கென்ன ப்ரயோஜனம்? என் உயிருக்குயிராயிருந்த அருமைத்தம்பி போனபிறகு, என் ப்ராணனை எதற்காக வைத்துக்கொள்ள வேண்டும்? என் உடன் பிறந்தவனைக் கொன்றவனைச் சித்ரவதை செய்யாமலிருப்பதைவிட என்னுயிரைப் பலவந்தமாய் விடுவது நலம். பிழைத்திருந்து என்ன ஸுகத்தைக் காணப்போகிறேன்? ஸகல கஷ்ட ஸுகங்களையும் என்னிடம் சேர்ந்தனுபவித்த கும்பகர்ணனில்லாமல் எனக்கு ஸுகமுமுண்டோ? என் தம்பி போனவிடத்திற்கு நானும் போகிறேன். அவனைவிட்டு நான் தனியாக உயிர்தரிப்பேனே? முன்பு லக்ஷ்யமில்லாமல் சிதறவடித்த தேவர்கள் இப்பொழுது என்னைப் பரிஹாஸம் செய்வார்களே. குழந்தாய்! நீ இறந்த பிறகு இந்த்ரனை எப்படி ஜயிப்பேன்?

ஐயோ! மஹாபுத்திமானான விபீஷணனுடைய வார்த்தையை கேளாமற்போனேனே! அக்ஞானத்தால் அதை அப்பொழுது அலக்ஷ்யம் செய்தேன்; ப்ரஹஸ்தனும் கும்பகர்ணனும் க்ரூரமாய் மரணமடைந்தது முதல் அந்த ஹிதோபதேசம் என் மனஸை அறுக்கிறது. தர்மவானான என் தம்பியை, கோபத்தாலும் கொழுப்பாலும் புத்தி மயங்கி இவ்விடத்திலிருந்து துரத்தினேன்; அதன் ப்ரயோஜனத்தை இப்பொழுது அனுபவிக்கிறேன்" என்று மனங் கலங்கித் தீனமாய்க் கும்பகர்ணனை நினைத்துப் பலவிதமாய் ப்ரலாபித்தான். "பெயரைக் கேட்டமாத்திரத்திலே தேவர்களும் இந்த்ரனும் நடுங்கும்படியான பராக்ரமமுள்ள கும்பகர்ண! உன்னைக் கண்டு நடுங்கின யமனுக்கு நீயும் வசப்பட்டாயோ" என்று அலறி மூர்ச்சையடைந்து பூமியில் விழுந்தான்.



இதி ப⁴ஹுவித⁴ மாகுலாந்தராத்மா
க்ருபணமதீவ விலப்ய கும்ப⁴கர்ணம் |
ந்யபதத³த² த³ஶாநநோ ப்⁴ருஶார்த:
தமநுஜ மிந்த்³ரரிபும் ஹதம் விதி³த்வா || (24)

---

## ஸர்க்கம் 69

## அதிகாயன் யுத்தத்திற்குப் புறப்பட்டது

ஏவம் விலபமாநஸ்ய ராவணஸ்ய து³ராத்மந: |
ஶ்ருத்வா ஶோகாபி⁴தப்தஸ்ய த்ரிஶிரா வாக்யமப்³ரவீத் || (1)

இப்படி ராவணன் ப்ரலாபிப்பதைக் கேட்டு த்ரிசிரஸ்,"மஹாராஜா! தாங்கள் சொல்வது நிஜமே. சிற்றப்பனைப்போல் வீர்யத்திலும் பலத்திலும் நிகரானவர்களுண்டோ? அப்படியிருந்தும் அவர் மரணமடைந்ததை என்ன சொல்வோம்? ஆனல் தங்களைப்போன்ற பெரியோர்கள் இப்படி நெடுங்காலம் ப்ரலாபிப்பது தகாது. மூன்று லோகங்களையும் ரக்ஷிக்கவும் ஸம்ஹரிக்கவும் தங்களுக்குச் சக்தியிருக்க, ஸாதாரண மனுஷ்யனைப்போல் தங்களைப் பற்றித் துக்கிக்கலாமா? ப்ரஹ்மாவிடத்திலிருந்து சக்தியாயுதமும் கவசமும் வில்லும் பாணங்களும் தங்களுக்கு வரப்ரஸாதமாகக் கிடைத்திருக்கின்றன. ஆயிரம் கோவேறு கழுதைகள் பூட்டி மஹாமேகங்களைப்போல் கர்ஜிக்கும் திவ்யரதமிருக்கிறது. ஆயுதங்களில்லாமலேயே தாங்கள் பல தடவை தேவர்களையும் தானவர்களையும் நாசம் செய்திருக்கிறீர்கள். ஸகல ஆயுதங்களுடன் தாங்கள் யுத்தஞ்செய்யும் பொழுது ராமனைக் கொல்வீர்களென்பதில் ஸந்தேஹமுண்டோ? தாங்கள் கவலையற்றிருங்கள். நான் யுத்தத்திற்குப் போய் வருகிறேன். ஸமுத்ரத்திலிருக்கும் ஸர்ப்பங்களைக் கருடன் கொத்தியெடுப்பதுபோல், சத்ருக்களை ஒழித்து விடுகிறேன். தேவ்ராஜன் சம்பராஸுரனைக் கொன்றதுபோலும், விஷ்ணு நரகாஸுரனை ஹதஞ்செய்தது போலும், இன்று ராமனை என் ஆயுதங்களால் கண்ட துண்டமாகச் செய்கிறேன்" என்ருன்.

அந்த வார்த்தைகளைக் கேட்டு ராவணன் விதியால் புத்தி மயங்கி, போன உயிர் வந்ததுபோல் ஸந்தோஷித்தான். த்ரிசிரஸ்

இவ்வாறு சொல்ல, தேவேந்த்ரனும் நராந்தகனும் அதிகாயனும் யுத்தஞ்செய்ய ஆவல்கொண்டு, நான் முந்தி நான் முந்தியென்று கர்ஜித்துக்கொண்டு கிளம்பினார்கள். (விப்ரசித்தியென்ற தானவனுக்கும் ஸிம்ஹிகைக்கும் பிறந்த வாதாபி முதலியவர்களில் நரகாஸுரன் என ஒருவன் உண்டு. வாதாபி, நமுசி, இல்வலன், ஸ்ருமரன், அந்தகன், நரகன், காலநாபனென்று அவர்களுக்குப் பெயர். இவன் கிருஷ்ணனால் கொல்லப்பட்ட நரகாஸுரனல்ல. த்ரிசிரஸ் சொன்ன வார்த்தையைத் தாங்களும் சொன்னதாய் வைத்துக்கொண்டு, அவனுடைய ஸஹோதரர்களும் யுத்தத்திற்குப் புறப்பட்டார்கள்.) பராக்ரமத்தில் தேவேந்த்ரனைப் போன்றவர்கள். ஆகாசத்தில் ஸஞ்சரிக்கின்றவர்கள். மாயவித்யைகளில் நிபுணர்கள். தேவர்களைக் கதறடித்தவர்கள். யுத்தத்தில் ஜயிக்க முடியாதவர்கள். அபார பலசாலிகள், நிகரற்ற கீர்த்தி பெற்றவர்கள். அதுவரையில் யுத்தகளத்தில் சென்று ஜயிக்காமல் திரும்பி வந்தார்களென்பதில்லை. தேவ, கந்தர்வ, கின்னர, உரக கணங்களும் அவர்களுடைய பெயரைக் கேட்டால் நடுங்கும். வித்வான்கள் வீரர்கள்; ஸகலவித யுத்தங்களிலும் கைதேர்ந்தவர்கள். உத்தம ஞானவான்கள், அத்புதமான வரங்களை அடைந்தவர்கள். ஸூர்யனைப்போன்ற காந்தியுள்ளவர்களும் சத்ரு ஸைன்யங்களைக் கலக்குகிறவர்களுமான இந்தப் புத்ரர்களால் சூழப்பட்ட ராவணன் தானவர்களுடைய கொழுப்பை அடக்கும் தேவர்களால் சூழப்பட்ட மஹேந்த்ரனைப்போல் விளங்கினான். அவர்களை ப்ரியத்துடன் ஆலிங்கனம் செய்து, ப்ரபலமான ஆசிர்வாதங்களால் வாழ்த்தி, யுத்தத்திற்கு அனுப்பினான். தன் ஸஹோதரர்களான யுத்தோன்மத்தனையும், மத்தனையும் குமாரர்களை ரக்ஷிப்பதற்காக நியமித்தான். க்ரஹங்கள் ஸூர்யனைச் சுற்றி வருவதுபோல் அவர்கள் மஹாத்மாவான ராவணனை ப்ரதக்ஷிணஞ் செய்து, நமஸ்கரித்து யுத்தத்திற்குப் புறப்பட்டார்கள். ஸகல விதமான ஓஷதிகளாலும் கந்தங்களாலும் அலங்கரிக்கப்பட்டு, அந்த ஆறு ராக்ஷஸ வீரர்களும் யுத்தஞ்செய்ய ஆவல்கொண்டு, நகரத்திலிருந்து வெளியில் வந்தார்கள். (யுத்தோன்மத்தன் மத்தனென்பன மஹோதரனுக்கும் மஹாபார்ச்வனுக்கும் வேறு பெயர்கள்.)

ஐராவதத்தின் குலத்தில் பிறந்த ஸுதர்சனமென்ற ஒரு மத யானையிலேறி, மஹோதரன், அஸ்தகிரியின் உச்சியில் விளங்கும் ஸூர்யனைப்போல் யுத்தத்திற்கு வந்தான். அதன் அம்பாரியில் ஸகல ஆயுதங்களும் அம்பறைகளும் கட்டப்பட்டிருந்தன. த்ரிசிரஸ், உத்தம அச்வங்கள் பூட்டி, ஸமஸ்த ஆயுதங்களும் நிறைந்த திவ்ய ரதத்தில் ஏறி வந்தான். மூன்று தலைகளிலும் மூன்று கிரீடங்கள் ப்ரகாசிக்க, மூன்று தங்கச் சிகரங்களால் விளங்கும் ஹிமய மலையைப்போலும், மின்னற்கொடிகள் பாய்ந்துகொண்டு எரிகொள்ளிகளாலும் இந்த்ரவில்லுகளாலும் ப்ரகாசிக்கும் மேகம் பர்வத சிகரத்தில் தங்கியிருப்பதுபோலும், காணப்பட்டான். நிகரற்ற வில்லாளியான அதிகாயன், வெகு அழகாயும் சாதுர்யமாயும் செய்யப்பட்டு, ஸமஸ்த ஆயுதங்களால் நிறைந்து, ஸூர்ய மண்டலத்தைப்போலிருக்கும் திவ்ய ரதத்தில், நவரத்னங்களிழைத்த தங்கக் கிரீடத்தாலும் ஸகல பூஷணங்களாலும் கிரணங்களோடு ஜ்வலிக்கும் ஆதித்யனை அடைந்த மேருவைப்போல் ப்ரகாசித்தான். ராக்ஷஸ வீரர்களால் சூழப்பட்டு யுத்தத்திற்கு வரும் அந்த ராஜகுமாரன், தேவகணங்களால் சூழப்பட்டுத் தானவர்களுடன் யுத்தத்திற்குச் செல்லும் இந்திரனைப்போல் தோன்றினான். ஸுவர்ண பூஷணங்களால் அலங்கரிக்கப்பட்டு, மனோவேகமுள்ள ஓர் அச்வத்திலேறி நராந்தகன் யுத்தத்திற்குப் புறப்பட்டான். அது பெரிய சரீரமுடையது; ஸகல லக்ஷணங்களும் பொருந்தினது; உச்சைச்ரவஸென்ற அச்வத்தின் குலத்தில் பிறந்தது. சக்தியாயுதத்தால் விளங்கும் ஸ்கந்தர் மயில்மேல் ஏறிவருவதுபோல், நராந்தகன் எரிகொள்ளியையொத்த ஓர் எரியீட்டியைக் கையில் பிடித்திருந்தான். ஸமுத்திரத்தைக் கடையும் காலத்தில் மந்தரபர்வதத்தை இருகைகளாலும் விளையாட்டாய் எடுத்த மஹாவிஷ்ணுவைப் பரிகசிப்பதுபோல் தேவாந்தகன் வஜ்ரங்களால் அலங்கரிக்கப்பட்ட பரிகமென்ற ஆயுதத்துடன் காணப்பட்டான். பெரிய சரீரத்தையுடைய மஹாபார்ச்வன் கதாபாணியான குபேரனைப்போல் ஒரு கதையைக் கையில் எடுத்துக்கொண்டு யுத்தத்திற்கு வந்தான். ரத கஜதுரகபதாதிகள் ஸகல ஆயுதங்களாலும் ஸகல ஆபரணங்களாலும் அலங்கரிக்கப்பட்டு, எல்லையற்ற உத்ஸாஹத்துடனும் தைர்யத்துடனும் அவர்களைப் பின்தொடர்ந்தார்கள். உத்தம கிரீடங்களைத் தரித்துக்கொண்டு காந்தியால் விளங்கும் அந்த ராஜகுமாரர்கள் தேஜஸால் ஸூரியனுக்கு நிகரானவர்களாய், ஆகாச வீதியில் ஜ்வலிக்கும் க்ரஹங்களைப்போல் தோன்றினார்கள். அவர்கள் தரித்த ஆயுதக்கூட்டங்கள், சரத்காலத்து மேகங்களையுடைய ஹம்ஸவரிசைகளைப்போல் ப்ரகாசித்தன. 'ஜயலக்ஷ்மியுடன் திரும்பி வருவோம்; அல்லது வீர ஸ்வர்க்கமடைவோ'மென்று ப்ரதிக்ஞை செய்துகொண்டு, யுத்தத்தில் ஆவல் கொண்டவர்களாய்க் கர்ஜித்தார்கள். பாணங்களை விட்டெறிந்து பிடித்தார்கள். ராக்ஷஸவீரர்களுடைய வீரத்வனிகளாலும், ஸிம்ஹநாதங்களாலும், அட்டஹாஸங்களாலும் பூமி நடுங்கிற்று; ஆகாசம் பிளந்தது. இப்படி அந்த ராக்ஷஸ ஸைன்யம் நகரத்திலிருந்து வெளிப்பட்டு, மலைச் சிகரங்களோடும், மரங்களோடும், பாறைகளோடும் தங்களுடைய வரவை எதிர்பார்த்துக்கொண்டிருக்கும் வானரர்களைக் கண்டார்கள். வானரவீரர்கள் அந்த ராக்ஷஸ ஸைன்யத்தைக் கண்டு ஸந்தோஷத்தையும் ஆச்சர்யத்தையும் அடைந்தார்கள். கணக்கில்லாத யானைகளாலும், குதிரைகளாலும் நிறைந்து அநேக ஆயிரம் தங்கச்சலங்கைகளால் இனிமையாய்ச் சப்தித்துக்கொண்டு,

மேகக்கூட்டங்களுக்கு நடுவில் பாயும் மின்னற்கொடிகளைப்போல், அவர்களுடைய கருத்த தேஹங்களில் ஆபரணங்களும் ஆயுதங்களும் விளங்க, புகையற்ற நெருப்பைப்போலும் ஸூர்யனைப் போலும் தேஜஸால் பிரகாசிக்கும் ராக்ஷஸ வீரர்களுடன் அந்த ஸேனை தங்களைநோக்கி வருவதைக்கண்டு, வானரர்கள் 'இன்று நல்ல யுத்தம் நடக்கு'மென்று ஸந்தோஷித்துக் கர்ஜித்தார்கள். அதைக் கேட்டுப் பொறுக்காமல் ராக்ஷஸர்களும் மஹாபயங்கரமாயும் உக்ரமாயும் கர்ஜித்தார்கள்.

சிகரங்களால் விளங்கும் பர்வதங்களைப்போல், குன்றுகளையும் மலைகளையும் கையில் எடுத்துக்கொண்டு வானரத்தலைவர்கள் பயங்கரமான ராக்ஷஸ ஸைன்யத்தில் பிரவேசித்து, யுத்தம் செய்துகொண்டே சென்றார்கள். சிலர் ஆகாசத்திலிருந்தும் சிலர் பூமியில் நின்றுகொண்டும் விருக்ஷங்களாலும் பாறைகளாலும் ராக்ஷஸர்களை அடித்தார்கள். ராக்ஷஸர்கள் பாணவர்ஷத்தால் அவைகளைத் தடுத்தார்கள். வானரர்களும் ராக்ஷஸர்களும் அடிக்கடி ஸிம்ஹநாதம் செய்தார்கள். வானரர்கள் பாறைகளால் சில ராக்ஷஸர்களைக் கொன்றார்கள் ; சிலர் கோபம் கொண்டு கவசங்களாலும் ஆபரணங்களாலும் அலங்கரிக்கப்பட்ட ராக்ஷஸர்களையும் சிலர் ரதத்திலுள்ள வீரர்களையும், சில யானை குதிரைகளில் ஏறியிருந்த சூரர்களையும் தாவித்தாவி அடித்துத்தள்ளினார்கள். மலைச்சிகரங்களால் சிதைந்த தேகங்களுடனும், முஷ்டிகளால் குத்தப்பட்டுப் பிதுங்கின கண்களுடனும், ராக்ஷஸ சிரேஷ்டர்கள் அசைந்து விழுந்து கூச்சலிட்டார்கள். ராக்ஷஸர்களோ தீக்ஷ்ணமான சரங்களால் வானரசிரேஷ்டர்களைப் பிளந்தார்கள். சூலம் உலக்கை கத்தி .எரியீட்டி சக்தி முதலிய ஆயுதங்களால் அடித்தார்கள். சிலர் ஒருவரையொருவர் ஜயிக்க விரும்பித் தேகமெங்கும் ரத்தம் பெருக, ஒருவரையொருவர் அடித்துத் தள்ளித் தரையில் விழுந்தார்கள். வானரர்களாலும் ராக்ஷஸர்களாலும் பெயர்த்தெறியப்பட்ட மலைகளாலும், விட்டெறியப்பட்ட கத்திகளாலும் அந்த யுத்தபூமி ஒரு முகூர்த்தத்தில் மறைக்கப்பட்டு, ரத்தவெள்ளம் பெருகிற்று. யுத்தம் செய்ய மதம் கொண்ட ராக்ஷஸர்கள் பர்வதங்களைப்போல் அங்கங்கே கிடந்தார்கள். வானரர்களால் வாரி எறியப்பட்டவர்களும் எறியப்படுகிறவர்களும் சூலங்கள் ஒடிந்தவர்களும் மறுபடியும் வெறுங்கைகளால் யுத்தம் செய்ய வந்தார்கள். சில ராக்ஷஸர்கள் வானரர்களை வானரர்களால் அடித்துக்கொன்றார்கள். அப்படியே சில வானரர்கள் ராக்ஷஸர்களை ராக்ஷஸர்களால் அடித்துக் கொன்றார்கள். வானரர்கள் விட்டெறியும் கற்பாறைகளைத் தட்டி விட்டு ராக்ஷஸர்கள் அவர்களை அடித்துக்கொன்றார்கள். ராக்ஷஸர்கள் பிரயோகிக்கும் ஆயுதங்களை ஒடித்துவிட்டு வானரர்கள் அவர்களை அடித்துக் கொன்றார்கள். பர்வதங்களாலும் சூலங்களாலும் அஸ்திரங்களாலும் ஒருவருக்கொருவர் அடித்துக்



கொண்டு, இரு திறத்து வீரர்களும் ஸிம்ஹநாதம் செய்தார்கள். ராக்ஷஸர்கள் கவசங்கள் பிளந்து, வானரர்களால் அடிக்கப்பட்டு, ரஸத்தைக் கக்கும் மரங்களைப்போல், வாயிலிருந்து ரத்தத்தைப் பெருக்கினார்கள். சில வானரர்கள் ரதங்களால் ரதங்களையும் யானைகளால் யானைகளையும், குதிரைகளால் குதிரைகளையும் அடித்தார்கள். வானரர்கள் எல்லோரும் அளவற்ற ஸந்தோஷத்துடனும், பெரிய மலைச்சிகரங்களுடனும், மரங்களாலும், பாறைகளாலும் ராக்ஷஸர்களை அடித்தார்கள். ராக்ஷஸர்களுக்கும் வானரர்களுக்கும் நடந்த கோர யுத்தத்தில் அர்த்தசந்திரம், பல்லம், க்ஷுரம் முதலிய கூர்மையான பாணங்களால் ராக்ஷஸர்கள் அந்த மலைகளையும், மரங்களையும் நாசஞ்செய்தார்கள். பிளந்து விழுந்த மலைகளாலும் ஒடிந்த விருக்ஷங்களாலும் இறந்த வானர ராக்ஷஸர்களாலும் அந்த யுத்த பூமியில் நடக்க வழியில்லை. வானரர்கள் கர்வத்தாலும் ஸந்தோஷத்தாலும் பூரித்து பயத்தைவிட்டு, அபாரமான தைர்யத்துடன், பலபல ஆயுதங்களால் ராக்ஷஸர்களை எதிர்த்து யுத்தம் செய்தார்கள். இப்படி இருவரும் கைகலந்து யுத்தம் செய்கையில் வானரர்கள் ஜயத்தால் கூச்சலிட, அரக்கர்கள் முறிபட்டுக் கதற, மஹரிஷிகளும் தேவகணங்களும் நல்லது நல்லதென்று கொண்டாடினார்கள்.

வாயுவைப்போல் வேகமுள்ள ஓர் உத்தம அச்வத்திலேறி, நராந்தகன், சக்தியாயுதத்தைக் கையில் எடுத்துக்கொண்டு, மஹாஸமுத்திரத்தில் ஒரு திமிங்கிலம் பிரவேசிப்பதுபோல், வானர ஸைன்யத்தில் புகுந்தான். ஜ்வலிக்கும் எறியீட்டியால் ஒரே தடவையில் எழுநூறு வானரர்களை குத்திப் பிளந்தான். வானர ஸைன்யத்தை ஒருவனாய் ஒரு க்ஷணத்தில் அடித்துத் துரத்தினான்; தேவேந்திரனும் இவனைக் கண்டு நடுங்கினவனல்லவா? பெரிய சரீரத்துடன் பர்வதத்தைப்போன்ற குதிரையில் ஏறிக்கொண்டு, போகும் வழியெல்லாம் மாம்ஸத்தாலும் ரத்தத்தாலும் சேறுக்கிக்கொண்டு, இருபுறத்திலும் மலைபோன்ற வானரர்களைக் கூட்டம்கூட்டமாய் அடித்துத் தள்ளிக்கொண்டு செல்வதை வித்யாதரர்களும் மஹர்ஷிகளும் கண்டு வருந்தினார்கள். அவனை எதிர்க்க நினைத்து பிரயத்தனம் செய்யுமுன் வானரர்கள்மேல் பாய்ந்து ஒரு நொடியில் பிளந்து கொன்றான். வனங்களைக் கோடைகாலத்தில் காட்டுத்தீ எரிப்பதுபோல், நராந்தகன் யுத்தபூமியில் ஜ்வலிக்கும் எறியீட்டியுடன் வானர ஸைன்யத்தைக் கொளுத்திச் சாம்பலாக்கினான். வானரர்கள் மரங்களையும் மலைகளையும் விட்டெறிவதற்கு முன், வஜ்ரத்தால் அடிக்கப்பட்ட பர்வதங்களைப்போல், எறியீட்டியால் கொல்லப்பட்டு விழுந்தார்கள். மழைக்காலத்தில் மேகங்களைப் பெருங்காற்று சிதறவடிப்பபடிபோல், யுத்தபூமியில் ஸகல திக்குகளிலும் ஸஞ்சரித்துக்கொண்டு, அந்த ராக்ஷஸன் வானரர்களைத் துரத்தித் துரத்தி அடித்தான். அவர்கள் நிற்கவாவது ஓடவாவது அசையு

வாவது முடியவில்லை. தாவுகிறவர்களையும் நிற்கிறவர்களையும் நடக்கிறவர்களையும் மறைகிறவர்களையும் நராந்தகன் தேடித்தேடி அடித்தான். ஸூர்யனைப்போல் பிரகாசிக்கும் எறியீட்டியால் பிரளய காலத்தில் சூலத்துடன் விளங்கும் அந்தகனைப்போல் வானர ஸைன்யத்தை இருந்தவிடம் தெரியாமல் துரத்தினான். வஜ்ராயுதத்தைப்போல் வந்து விழும் அந்த எறியீட்டியைத் தாங்க முடியாமல் வானரர்கள் பெருங்கூச்சலிட்டார்கள். இந்திரனுடைய வஜ்ரத்தால் பிளந்து விழும் பர்வதசிகரங்களைப்போல் வானரர்களுடைய சரீரங்கள் அறுபட்டு விழுந்தன. முன்பு கும்பகர்ணனால் அடிபட்ட வானரர்கள் ஸுக்ரீவனை அடைந்து சிரமபரிஹாரம் செய்து கொண்டிருந்தார்கள்.

இப்படித் தன் ஸைன்யம் நராந்தகனால் கலக்கப்பட்டுப் பயம் பிடித்து அங்குமிங்கும் ஓடுவதை ஸுக்ரீவன் கண்டான் பிறகு அந்த ராக்ஷஸன் எறியீட்டியைத் தூக்கிக்கொண்டு குதிரையின் மேலேறித் தன்னை நோக்கி வருவதைப் பார்த்து, ஸமீபத்திலிருந்த அங்கதனை அழைத்து, "குழந்தாய்! நீ பராக்ரமத்தில் தேவேந்திரனைப் போன்றவனல்லவா? இதோ குதிரையில் ஏறி வரும் ராக்ஷஸ வீரன் நமது ஸைன்யத்தைக் கலக்குகிறான். அவனை மறித்து யுத்தம் செய்து உயிரை வாங்கு'' என்றான். அதைக் கேட்டு வாலிபுத்திரன், மேகக்கூட்டங்களிலிருந்து வெளிக் கிளம்பும் ஆதித்யனைப்போல், கருத்த வானர ஸைன்யத்திலிருந்து புறப்பட்டான் பர்வதங்களைப்போல் உறுதியான தேகத்தையுடைய அங்கதன் அழகான தோள்வளைகளால் அலங்கரிக்கப்பட்டு, தாதுக்களால் விளங்கும் பர்வதத்தைப்போல் தோன்றினான். நகங்களையும் பற்களையும் தவிர வேறு ஆயுதமில்லாமல், நராந்தகனை மறித்து, 'அடே! ராக்ஷஸ! என்ன காரியம் செய்கிறாய்? அல்ப வானரர்களை இந்நேரம் அடித்துக் கொல்வதில் உனக்கென்ன பெருமை? நில். உன் கையில் வஜ்ரம்போல் விளங்கும் எறியீட்டியை என் மார்பில் விட்டெறி, பார்ப்போம்'' என்றான். தன்னை இப்படி அவமானப்படுத்தினதைக் கண்டு நராந்தகன் உதட்டைக் கடித்து மஹாஸர்ப்பத்தைப்போல் சீறிக்கொண்டு, எறியீட்டியைச் சுழற்றி, வாலிபுத்திரன் மார்பில் அடித்தான். வஜ்ரத்தைப்போல் கெட்டியான அந்த வானர குல திலகனுடைய மார்பில் அது பட்டு முறிந்து பூமியில் விழுந்தது. கருடனால் கிழித்தெறியப்பட்ட ஸர்ப்பத்தைப்போல், முறிந்து கிடந்த அந்த எறியீட்டியைப் பார்த்து, அங்கதன் ரோஷத்தால் இடிபோல் சிரித்து, நராந்தகனுடைய குதிரையின் மேல் பாய்ந்து அதன் தலையில் ஓங்கியறைந்தான். மண்டை பிளந்து, கண்கள் தெறித்து, நாக்குத் தொங்கி, அந்த உத்தம அச்வம் சுருண்டு விழுந்தது. அதைக் கண்டு நராந்தகன் கோபத்தால் மெய்மறந்து, விரல்களை மடக்கி அங்கதனைத் தலையில் அடித்தான்; அதனால் அந்த வானரன் மண்டை பிளந்து ரத்த வெள்ளம் பெருக சற்று பிரக்ஞை



யற்றுப் பிறகு தெளிந்து, ஆச்சரியமடைந்து, கோபத்தால் ஜ்வலித்தான். பர்வதசிகரத்தைப்போன்ற தன் முஷ்டியால், வஜ்ராயுதம் வந்து விழுவதுபோல், பூர்ண பலத்துடன் நராந்தகனை மார்பில் குத்தினான். அதனால் அந்த ராக்ஷஸன் மார்பு பிளந்து, நெருப்பு ஜ்வாலைகளைப்போன்ற ரத்தத்தைக் கக்கிக்கொண்டு, தேகமெங்கும் ரத்தம் பெருக, இந்திரனுடைய வஜ்ராயுதத்தால் அடிப்பட்ட பர்வதத்தைப்போல் பூமியில் விழுந்திறந்தான். அதைக் கண்டு வானர ஸைன்யமும் ஆகாசத்திலிருந்த தேவகணங்களும் ஸந்தோஷத்தால் ஆரவாரித்தார்கள்.

இப்படி அங்கதன் பிறரால் அஸாத்யமான வீரகிருத்யத்தைச் செய்து, ராமனுடைய மனத்தை ஸந்தோஷப்படுத்தினான். நிகரற்ற பலபராக்கிரமமுள்ள ரகுவீரனும் அவனை விசேஷமாய்க் கொண்டாடி ஆச்சரியமடைந்தார். அதனால் அங்கதன் ஸகல சிரமும் தீர்ந்து, பலமும் தைரியமும் உத்ஸாஹமும் அதிகரித்து, மறுபடியும் யுத்தம் செய்ய ஆவல்கொண்டு நின்றான்.

அத²ாங்க³தோ³ ராம மந:ப்ரஹர்ஷணம்
ஸுது³ஷ்கரம் தத்க்ருதவாந் ஹி விக்ரமம் |
விஸிஷ்மியே ஸோப்யதிவீர்ய விக்ரம:
புநஶ்ச யுத்³தே⁴ ஸ ப³பூ⁴வ ஹர்ஷித: || (104)

## ஸர்க்கம் 70

## தேவாந்தகன் முதலியவர்களின் வதம்

நராந்தகம் ஹதம் த்³ருஷ்ட்வா சுக்ருஶுர் நைர்ருதர்ஷபா⁴: |
தே³வாந்தகஸ் த்ரிமூர்தா⁴ ச பௌலஸ்த்யஶ்ச மஹோத³ர: || (1)

நராந்தகன் அங்கதனால் கொல்லப்பட்டதைக் கண்டு, ராக்ஷஸ வீரர்கள் பெருங்கூச்சலிட்டார்கள். தேவாந்தகனும் த்ரிசிரஸும் மஹோதரனும் அதிக கோபம் கொண்டு வானரஸைன்யத்தில் பிரவேசித்தார்கள். அப்பொழுது மஹோதரன் மஹாமேகத்தைப் போன்றஒரு மதயானையின்மேலேறி அங்கதனை நோக்கி ஓடிவந்தான். தன் ஸகோதரன் மரணமடைந்ததால் கோபம் கொண்டு பலவானான தேவாந்தகன் ஜ்வலிக்கும் ஒரு பரிகமென்ற ஆயுதத்தை எடுத்துக் கொண்டு, உத்தம அச்வங்கள் பூட்டப்பட்டு ஸூரியனைப்போல் பிரகாசிக்கும் ரதத்திலேறி, வானரராஜகுமாரனைத் தடுத்தான். தேவர்களுடைய கொழுப்பை அடக்கும் இம்மூன்று ராக்ஷஸ சிரேஷ்டர்களால் எதிர்க்கப்பட்டும், அங்கதன் சற்றும் அவர்களை லக்ஷ்யம் செய்யாமல், யுத்தாவேசம் கொண்டு, பெரிய கிளைகளையுடைய ஒரு மரத்தைப் பிடுங்கி, ஜ்வலிக்கும் வஜ்ராயுதத்தை இந்திரன் பிரயோகிப்பதுபோல் தேவாந்தகனை அடித்தான். அதை த்ரிசிரஸ் கூரான பாணங்களால் அறுத்துத் தள்ளினான். அதைக் கண்டு அங்கதன்

ஆகாசத்தில் கிளம்பி மரங்களையும் பாறைகளையும் மலைகளையும் வர்ஷித்தான். அவைகளை த்ரிசிரஸ் தீக்ஷ்ணமான சரங்களால் பொடி செய்தான். தேவாந்தகன் பரிகத்தின் முனையால் அந்த மரங்களை அடித்து முறித்தான். பிறகு, த்ரிசிரஸ் அங்கதனை பாணங்களால் துளைத்தான். மஹோதரன் தன் மதயானையை வாலிபுத்திரன்மேல் நடத்தி வஜ்ரங்களைப் போன்ற தோமரங்களால் அவனுடைய மார்பில் அடித்தான். தேவாந்தகன் அவனைப் பரிகத்தால் அடித்து அதிவேகமாய்த் திரும்பிச் சென்றான். இப்படி மூன்று ராக்ஷஸவீரர்களாலும் எதிர்த்து அடிக்கப்பட்டும், வாலிபுத்திரன். கொஞ்சமாவது கலங்கவுமில்லை; உபத்திரவமடையவுமில்லை ஸ்வபாவமாகவே வேகசாலி; அப்பொழுது தன் வேகத்தை விருத்தி செய்துகொண்டு, அந்த மதயானையை ஓங்கியறைந்தான். அந்த அடியால் அதன் கண்கள் தெறித்து விழுந்தன; அறைகள் தாங்காமல் அது வீறிட்டது. பிறகு அங்கதன் அதன் தந்தத்தைப் பிடுங்கி தேவாந்தகனை அடித்தான். சண்டமாருதத்தால் தாக்கப்பட்ட மரத்தைப்போல், அந்த ராக்ஷஸன் அவயவங்கள் சோர்ந்து, வாயாலும் மூக்காலும், கண்களாலும், காதுகளாலும் ரத்தத்தைக் கக்கினான். பிறகு தன்னை உறுதிப்படுத்திக்கொண்டு, மஹாதேஜஸ்வியும் பலவானுமாதலால், தேவாந்தகன் பயங்கரமான பரிகத்தைச் சுழற்றி, அங்கதனை அடித்தான். அந்த அடியால் வானரவீரன் பூமியில் முழங்காலை ஊன்றி விழுந்து, உடனே தாவினான். அதைக் கண்டு த்ரிசிரஸ் மூன்று தீக்ஷ்ணமான பாணங்களால் அவனை நெற்றியில் அடித்நான்.

இப்படி மூன்று ராக்ஷஸவீரர்களால் சூழப்பட்டு தனியாக அங்கதன் யுத்தம் செய்து கலங்குவதைக் கண்டு, ஹனுமானும் நீலனும் அவனுடைய உதவிக்கு வந்தார்கள். நீலன் ஒரு பர்வதசிகரத்தைப் பிடுங்கி த்ரிசிரஸை அடித்தான். அதை ராவணனுடைய புத்திரன் கூர்மையான பாணங்களால் பிளக்க, அது நெருப்புப் பொறிகளோடும் ஜ்வாலைகளோடும் பூமியில் விழுந்தது. அதைக் கண்டு தேவாந்தகன் தன் வில்லை இழந்து, பரிகமென்ற ஆயுதத்தால் ஆஞ்ஜநேயரை எதிர்த்தான். அவன் பாய்ந்து வருகையில் மாருதி அவனை வஜ்ரத்தைப்போன்ற முஷ்டியால் அடித்து, ராக்ஷஸர்களைத் தன் ஸிம்ஹநாதத்தால் நடுங்கும்படி செய்தார். தலை பிளந்து பற்கள் உதிர்ந்து கண்கள் தெறித்து நாக்கு வெளியில் தொங்கி, ராவண புத்திரனான தேவாந்தகன் உயிரிழந்து பூமியில் விழுந்தான். தேவகணங்களைக் கதறவடித்த அந்த ராக்ஷஸவீரன் மடிந்த பிறகு த்ரிசிரஸ் கோபமடைந்து, கூர்மையான பாணவர்ஷத்தால் நீலனை மார்பில் துளைத்தான். அதற்குள் மஹோதரன் பர்வதாகாரமான மதயானையிலேறி, கோபத்தால் மெய்மறந்து, மந்தர பர்வதத்தின் உச்சியில் உதிக்கும் ஸூரியனைப்போல் விளங்கி, இந்திரவில்லாலும் மின்னற்கொடிகளாலும் பிரகாசிக்கும் மேகம் பர்வதத்தின்மேல் மழையை வர்ஷிப்பதுபோல், நீலனுடைய மார்பில் சரமாரி பொழிந்தான். அந்த வானரஸேனாபதி தேகமெங்கும் சரங்களால் துளைக்கப்பட்டு அவயவங்களை அசைக்கமுடியாமல் அங்கங்கள் தளர்ந்து நின்றான். சிறிது நேரம் சென்றபின் பிரக்ஞைதெளிந்து, மரங்களடர்ந்த ஒரு பர்வதத்தைப் பிடுங்கி மஹாவேகத்துடன் மஹோதரன் தலையில் அடித்தான். வஜ்ராயுதத்தால் அடிபட்ட பர்வதத்தைப்போல் மஹோதரன் அவயவங்கள் ஒடிந்து அடையாளம் தெரியாமல் பூமியில் விழுந்து உயிரைவிட்டான். தன் சிற்றப்பன் இறந்ததைக் கண்டு த்ரிசிரஸ் வில்லை வளைத்து ஆஞ்ஜனேயரைப் பாணங்களால் அடித்தான். வாயுபுத்திரன் கோபம் கொண்டு ஒரு பர்வதத்தை அவன் மேலெறிய அதைக் கூர்மையான பாணங்களால் அடித்தான். பிறகு அந்த ராவணபுத்திரன் மேல் பெரிய விருக்ஷங்களைப் பிடுங்கியெறிந்தார். அவை ஆகாசத்தில் வரும்பொழுதே அவற்றை த்ரிசிரஸ் பாணங்களால் துண்டித்து கர்ஜித்தான். அதைக் கண்டு ஹனுமான் பாய்ந்து, ஸிம்ஹம் மதயானையின் சிரஸைப் பிளப்பதுபோல், கூர்மையான நகங்களால் ரதத்தில் கட்டியிருந்த குதிரைகளின் தலையில் அடித்துக் கிழித்தார். பிரளய காலத்தில் அந்தகன் காளராத்ரியை பிரயோகிப்பதுபோல், உடனே த்ரிசிரஸ் ஒரு சக்தியாயுதத்தை மாருதியின்மேல் பிரயோகித்தான். பகலில் விழும் எரிகொள்ளியைப்போல் ஒன்றாலும் தடுக்கப்படாமல் வந்து விழுந்த சக்தியை வானரவீரன் தாவிப்பிடித்து ஒடித்து அட்டஹாஸம் செய்தார். அந்தக் கோரமான சக்தி முறிபட்டதைக் கண்டு வானரகணங்கள் மேகங்களைப்போல் கர்ஜித்தார்கள். பிறகு த்ரிசிரஸ் கூர்மையான கத்தியை உருவி வாயுபுத்திரன் மார்பில் வெட்டினான். அதைப் பொறுத்துக் கொண்டு ஹனுமான் த்ரிசிரஸைத் தன் பூர்ணபலத்துடன் ஓங்கியறைந்தார். அவன் கைகளிலிருந்த ஆயுதங்கள் நழுவி பிரக்ஞையற்றுப் பூமியில் விழுந்தான். அதற்குள் அவனுடைய கத்தியைப் பிடுங்கிக் கொண்டு ஹனுமான் ராக்ஷஸர்கள் நடுங்கும்படி கர்ஜித்தார். அதைக்கேட்டுப் பொறுக்காமல் த்ரிசிரஸ் பாய்ந்து மாருதியைத் தன் முஷ்டியால் குத்தினான். அதனால் அவருக்குக் கோபம்பொங்கி த்ரிசிரஸை அவனது கிரீடங்களில் பிடித்து, பூர்வ காலத்தில் த்வஷ்டாவின் புத்திரனான விச்வரூபனுடைய மூன்று தலைகளையும் இந்திரன் வஜ்ராயுதத்தால் அறுத்துத் தள்ளினதுபோல், அந்த ராவணபுத்திரனுடைய மூன்று சிரஸுகளையும் அவனுடைய கத்தியாலேயே அறுத்துத் தள்ளினார். புண்யகர்மங்கள் நாசமடைந்தவுடன் ஆகாசவீதியிலிருந்து விழும் கிரஹங்களைப் போல் நீண்டு, அக்னியைப்போல் ஜ்வலித்துக்கொண்டு, பர்வதங்களைப்போல் பருத்த கண்களால் பிரகாசிக்கும் அவனுடைய தலைகள் பூமியில் விழுந்தன. அதைக்கண்டு வானரர்கள் கர்ஜித்தார்கள்; பூமி நடுங்கிற்று; ராக்ஷஸர்கள் மூலைக்கு மூலை ஓடினார்கள்.

த்ரிசிரஸ், மஹோதரன், தேவாந்தகன், நராந்தகன் இந்நால்வரும் இறந்ததைக் கண்டு, மஹாபார்ச்வன் உறுதியான இரும்பால் செய்யப்பட்ட ஒரு கதையை எடுத்துக்கொண்டு யுத்தத்திற்கு வந்தான். அது தங்கக் கட்டுகளால் அலங்கரிக்கப்பட்டு மாம்ஸத்தாலும் ரத்தத்தாலும் பூசப்பட்டிருந்தது. ஐராவதம் மஹாபத்மம் ஸார்வபௌமமென்ற திக்கஜங்களும் அதைக் கண்டு நடுங்கும்; சத்துருக்களுடைய ரத்ததாரைகளால் விளங்கிற்று. அழகாயும் விசித்திரமாயும் செய்யப்பட்டது; நெருப்பு ஜ்வாலைகளால் சூழப்பட்டு நெருப்புப் பொறிகளைக் கக்கிக்கொண்டிருந்தது; சிவந்த மாலைகளால் அலங்கரிக்கப்பட்டிருந்தது; பிரளயகாலாக்னியைப் போல் ஜ்வலித்துக்கொண்டு மஹாபார்ச்வன் வானர ஸைன்யத்தைக் கலக்கினான். அப்பொழுது ரிஷபனென்ற வானரன் ராக்ஷஸ ஸைன்யத்தில் பாய்ந்து அவனை எதிர்த்தான். மஹாபார்ச்வன் கோபம் கொண்டு வஜ்ரத்தைப்போன்ற தன் கதையால் அவனுடைய மார்பில் அடித்தான். அந்த அடியால் மார்பு பிளந்து கிடுகிடென்று நடுங்கி, சற்றுநேரம் பிரக்ஞையற்று, பிறகு தன்னைத் தைரியப்படுத்திக்கொண்டு, அந்த ராக்ஷஸனுடைய கதாயுதத்தைப் பிடுங்க ஓடிவந்தான். அதனால் ராக்ஷஸஸைன்யத்தை மூலைக்குமூலை அடித்துத் துரத்தி, அதைக் கறகறவென்று சுழற்றி மஹாபார்ச்வனைத் தலையில் அடித்தான். தன் ஆயுதத்தால் அடிபட்டும் பற்களும் கண்களும் தெறித்து வஜ்ரத்தால் அடிபட்ட பர்வதத்தைப் போல் உயிரிழந்து பூமியில் விழுந்தான். ராவணனுடைய ஸஹோதரனை மஹாபார்ச்வன் மரணமடைந்ததைக் கண்டு, ஸமுத்திரத்தைப் போன்ற ராக்ஷஸ ஸைன்யம் ஆயுதங்களை விட்டெறிந்து உயிர் பிழைத்தால் போதுமென்று சிதறி ஓடிற்று.

தஸ்மிந் ஹதே ப்4ராதரி ராவணஸ்ய
தந்நைர்ருதாநாம் ப3லமர்ணவாப4ம் ‖
த்யக்தாயுத4ம் கேவல ஜீவிதார்த2ம்
து3த்3ராவ பி4ந்நார்ணவ ஸந்நிகாஶம் ‖ (68)

---

## ஸர்க்கம் 71
## அதிகாய யுத்தம்

---

ஸ்வப3லம் வ்யதி2தம் த்3ருஷ்ட்வா துமுலம் ரோமஹர்ஷணம் |
ப்4ராத்ரும்ஶ்ச நிஹதாந் த்3ருஷ்ட்வா ஶக்ரதுல்ய பராக்ரமாந் ‖ (1)

பயங்கரமான தன் ராக்ஷஸஸைன்யம் இப்படிக் கலங்குவதையும் பராக்கிரமத்தில் தேவேந்திரனைப்போன்ற தன் ஸஹோதரர்கள் மடிந்ததையும் ராக்ஷஸசிரேஷ்டர்களான தன் சிற்றப்பன்கள் கொல்லப்பட்டதையும் கண்டு, மஹாதேஜஸ்வியான அதிகாயன் கோபத்தால் ஜ்வலித்தான். மலையைப்போன்றவன்; தேவர்களையும் தானவர்களையும் நடுங்கச் செய்கிறவன்; பிரஹ்மாவிடத்திலிருந்து உத்தமமான வரங்களைப் பெற்றவன்; அநேக ஸூரியர்கள் ஒன்றாய்க் கூடினதுபோல் பிரகாசிக்கும் ரதத்தில் ஏறிக்கொண்டு கிரீட கவச குண்டலங்களால் அலங்கரிக்கப்பட்டு, வில்லைச் சுழற்றிக்கொண்டு, தன் பெயரையும் வீரகிருத்யங்களையும் கோஷித்துக்கொண்டு, திக்குகள் நடுங்கும்படிக் கர்ஜித்தான். அந்த ஸிம்ஹநாதத்தாலும் கோஷத்தாலும் நாணோசையாலும் வானரர்கள் பயந்தார்கள். அவனுடைய தேகபரிமாணத்தைக் கண்டு கும்பகர்ணன் பிழைத்தெழுந்தானென்று வானரர்கள் திகிலடைந்து ஒருவரையொருவர் கட்டிக்கொண்டார்கள். மூன்று லோகங்களையும் மூன்றடிகளால் அளந்த மஹாவிஷ்ணுவின் உயர்ந்த வடிவம் போன்ற அவனுடைய வடிவத்தைக் கண்டு வானரத் தலைவர்கள் புத்திமயங்கி மூலைக்குமூலை ஓடினார்கள். சிலர் ஸர்வலோக சரண்யனான ராமனைச் சரணமடைந்தார்கள்.

காளமேகத்தைப்போல் கர்ஜித்துக்கொண்டு பர்வததைப் போல் ரதத்தில் வீற்றிருக்கும் அதிகாயனை ராமன் தொலைவிலே பார்த்து, அவனுடைய சரீரத்தையும் தேஜஸ்ஸையும் தைரியத்தையும் கண்டு மிகவும் ஆச்சரியப்பட்டார். வானரர்களை ஸமாதானம் செய்து ஸமீபத்திலிருந்த விபீஷணனை அழைத்து, "அதோ அநேக குதிரைகள் பூட்டின பெரிய ரதத்தில் மலைபோன்ற சரீரத்துடன் மஞ்சள் வர்ணமான நேத்திரங்களுடன் உட்கார்ந்திருக்கும் வில்லாளி யார்? மஹேச்வரன் பூதகணங்களால் சூழப்படுவதுபோல் கூர்மையான சூலங்களும் வல்லயங்களும் எறியீட்டிகளும் அவனைச் சுற்றி பிரகாசிக்கின்றன. யமனுடைய நாக்குகளைப் போலும் மேகங்களில் பாயும் மின்னல்களைப்போலும் பிரகாசிக்கும் அநேக சக்தியாயுதங்கள் ரதத்தில் ஜ்வலிக்கின்றன. மேகங்களில் வானவில்லுகள் காணப்படுவதுபோல் அந்த ரதத்தில் எங்கே பார்த்தாலும் நாண்பூட்டித் தங்கத்தால் அலங்கரிக்கப்பட்ட வில்லுகள் மாட்டப்பட்டிருக்கின்றன. ஸூரியனைப்போல் தேஜஸுள்ள அந்த ரதத்திலே வரும் ரதவீரன் யார்? அவனுடைய தேஜஸால் இந்த ரணபூமி பிரகாசிக்கிறது. அவனுடைய த்வஜத்தின் நுனியில் ராகு விளங்குகிறான். ஸூரியகிரணங்களைப் போன்ற பாணங்களால் ஸகல திக்குகளும் ஒளி வீசுகின்றன. மூன்று வளைவுகளுடன், இடியைப்போல் உறுதியாய், தங்கத்தால் அலங்கரிக்கப்பட்டு இந்திர வில்லைப்போன்ற ஒரு தனுஸ் அவன் கையில் விளங்குகிறது. அதன் நாணோசை மேக கர்ஜனைகளைப் பழிக்கிறது. த்வஜத்தாலும் கொடிகளாலும் அலங்கரிக்கப்பட்ட அந்தத் திவ்யரதத்தில் நான்கு ஸாரதிகள் குதிரைகளை நடத்துகிறார்கள்; முப்பத்தெட்டு கார்முகமென்ற வில்லுகளும் தங்கக்கயிறுகளும் காணப்படுகின்றன. இரண்டு பக்கங்களிலும் இரண்டு தீக்ஷ்ணமான கத்திகள் வைக்கப்

பட்டிருக்கின்றன. அவைகளின் கைப்பிடி நான்கு சாண் சிற்றளவிருக்கும்; நீளமோ பத்துச் சாண்களிருக்கும். கழுத்தில் சிவந்த மாலைகள் தொங்குகின்றன; கருத்த நிறமுள்ளவன்; காலனைப் போன்ற பயங்கரமான வாயுள்ளவன்; மேகங்கள் சூழ்ந்த ஸூரியனைப்போல் தோன்றுகிறான். தங்கக்கேயூரங்களால் விளங்கும் இவனுடைய புஜங்கள் ஹிமயமலையின் சிகரங்களைப்போலிருக்கின்றன. சுபமான நேத்திரங்களுடனும் குண்டலங்களுடனும் சோபிக்கும் இவனுடைய முகம் புனர்வஸு நக்ஷத்திரங்களுக்கு நடுவில் விளங்கும் பூர்ணசந்திரனைப்போல் காணப்படுகிறது. வானரர்களெல்லாம் இவனைக் கண்டு பயந்தோடுகிறார்கள். இவன் யார்?'' என்றார்.

அதற்கு விபீஷணன், "குபேரனுக்குத் தம்பியாய் ராக்ஷஸர்களுக்கரசனாய்ப் பத்துத்தலைகளுடன் விளங்கும் ராவணனுடைய குமாரன் இவனே. பயங்கரமான கிருத்யங்களைச் செய்கிறவனும் அளவற்ற உத்ஸாஹமுள்ளவனுமான லங்கேச்வரனுடைய வீரனான புத்திரன் இவனே. யுத்தத்தில் பிதாவுக்கு ஸமானன்; பெரியோர்களை ஆசிரயிப்பவன்; அஸ்திரவித்யையில் நிபுணர்களுக்குள் நிபுணன். யானை ஏறுவதிலும் குதிரை ஏறுவதிலும் கத்திச்சண்டையிலும் வில் வித்யையிலும் ஸாம தான பேத தண்டமென்ற சதுர்வித உபாயங்களிலும் மந்திராலோசனையிலும் நிகரற்ற திறமையுள்ளவன். இவனுடைய புஜபலத்தை நம்பி லங்கை பயமில்லாமல் வஸிக்கிறது. இவனுக்குத் தெரியாத அஸ்திரங்களில்லை. அநேக சத்ருக்களை யுத்தத்தில் ஜயித்திருக்கிறான். பிரஹ்மாவைத் தபஸால் ஸந்தோஷப்படுத்தி அபூர்வமான அஸ்திரங்களை அடைந்திருக்கிறான். ராவணனுடைய பிரிய பார்யையான தான்யமாலினியின் புத்திரன். அதிகாயனென்று இவனுக்குப்பெயர். அஸுரர்களாலும் தனக்கு மரணமில்லையென்று பிரஹ்மாவிடத்திலிருந்து வரம் பெற்றிருக்கிறான். இந்தத் திவ்ய கவசமும் ஸூரியனைப்போல் ஜ்வலிக்கும் இந்த ரதமும் அப்பொழுது இவனுக்குக் கிடைத்தன. தேவர்களையும் தானவர்களையும் கணக்கில்லாமல் முறியடித்திருக்கிறான். யக்ஷர்களை நாசம் செய்து ராக்ஷஸர்களைக் காப்பாற்றியிருக்கிறான்; இந்திரனுடைய வஜ்ரத்தையும் வருணனுடைய பாசத்தையும் பாணங்களால் தடுத்த ராக்ஷஸ சிரேஷ்டன்; புத்திமான்; தேவாஸுரர்களுடைய கொழுப்பை அடக்கினவன். இவனுடைய பாணங்களால் வானர ஸைன்யம் மடிவதற்கு முன் இவனை ஜயிக்க வேண்டும்'' என்றான்.

அதற்குள் அந்த ராக்ஷஸவீரன் வானர ஸைன்யத்தில் புகுந்து வில்லைச் சுழற்றிக்கொண்டு அடிக்கடி கர்ஜித்தான். குமுதன் த்விவிதன், மைந்தன், நீலன், சரபன் முதலிய வானர சிரேஷ்டர்கள் மரங்களையும் மலைச்சிகரங்களையும் எடுத்துக்கொண்டு அவனை எதிர்க்க ஓடி வந்தார்கள். அவைகளைத் தன் பாணங்களால் ஒரு



க்ஷணத்தில் அந்த ராஜகுமாரன் தூளாக்கி, தன்னெதிரில் நின்ற ஸகல வானரர்களையும் இரும்பால் செய்யப்பட்ட சரங்களால் துளைத்தான். அவர்கள் அங்கங்கள் பிளந்து அந்தச் சரமாரியால் கலங்கி அவனுடன் யுத்தம் செய்ய முடியவில்லை. மான் கூட்டங்களைக் கொழுத்த சிங்கக்குட்டி துரத்தியடிப்பதுபோல், அந்த வானர ஸைன்யத்தை அந்த ராக்ஷஸ வீரன் சிதறவடித்தான். தன்னுடன் யுத்தம் செய்யாமலிருந்த ஒருவரையும் அவன் அடிக்கவில்லை. ராமனிருக்குமிடத்திற்கு வந்து கர்வத்துடன், "ரதத்தில் சரசாபங்களுடன் நானிருக்க, ஸாதாரண யுத்த வீரனுடன் நான் சண்டை செய்யத் தகாது. உத்ஸாகத்துடன் விளங்கும் எந்த வீர சிகாமணியாவது உங்களுக்குள்ளிருந்தால் அவன் முன்னின்று என்னுடன் யுத்தம் செய்யட்டும்'' என்றான்.

அந்த வார்த்தையைப் பொறுக்காமல் லக்ஷ்மணன் பாய்ந்து வில்லை வளைத்து நாணேற்றி, பூமியும் மலைகளும் ஆகாசமும் ஸமுத்திரமும் திக்குகளும் ராக்ஷஸர்களும் நடுங்கும்படி டங்காரம் செய்தார். மஹாதேஜஸ்வியும் பலவானுமான அதிகாயன் அந்தப் பயங்கரமான சப்தத்தைக்கேட்டு ஆச்சரியப்பட்டான். பிறகு கோபங்கொண்டு ஒரு கூர்மையான பாணத்தை எடுத்து, "லக்ஷ்மண! நீயோ சிறு குழந்தை, வீரகிருத்யங்களை அறியாதவன்; போ. யமனைப்போன்ற என்னுடன் யுத்தம் செய்ய ஆசைப்படலாமோ? என் கையிலிருந்து விடப்பட்ட பாணங்களுடைய வேகத்தை ஹிமயமலையும் ஆகாசமும் பூமியும் தாங்குமோ? ஸுகமாய்த் தூங்கிக்கொண்டிருக்கும் காலாக்னியை ஏன் எழுப்ப விரும்புகிறாய்? வில்லை எறிந்துவிட்டுத் திரும்பிப்போ. ஏன் வீணாய் என்னால் உயிரை இழக்கிறாய்? அல்லது, அப்படி இஷ்டமில்லாமல் என்னை எதிர்த்தால் நில். பிராணனைப் பறிகொடுத்து யமலோகத்திற்குச் செல். சத்ருக்களுடைய கொழுப்பை நாசம் செய்யும் என் கூர்மையான பாணங்களைப் பார்த்தாயா? ருத்திரனுடைய த்ரிசூலத்தைப் போன்றவை; உருக்கியோடவிட்ட தங்கத்தால் அலங்கரிக்கப்பட்டவை; மஹா ஸர்ப்பங்களைப் போன்றவை; கோபம்கொண்ட ஸிம்ஹம் மதயானையின் மூளையைப் பிளந்து அதன் ரத்தத்தைக் குடிப்பதுபோல், இந்தச் சரம் உன் ரத்தத்தைக் குடிக்கும்'' என்று கோபத்தால் சீறிக்கொண்டு அந்தச் சரத்தை வில்லில் தொடுத்தான்.

ரோஷத்தோடும் கர்வத்தோடும் அதிகாயன் சொன்ன வார்த்தைகளை கேட்டு லக்ஷ்மணன் அடங்காக் கோபங்கொண்டு, அபார பலவானும் காந்தி பொருந்தினவருமாகையால் அதைப் பொறுக்காமல், அநேக அர்த்தங்களடங்கிய மறுமொழியைச் சொன்னார். "அடே ராக்ஷஸ! வார்த்தையாலேயே உனக்கு மேன்மை ஏற்படுமா? உன்னைப் புகழ்ந்து கொண்டதாலேயே சூரனாவாயா?

துஷ்டனே! இதோ வில்லும் கையுமாய் உன்னுடன் யுத்தம்செய்யத் தயாராயிருக்கிறேன்; உன் பூர்ணபலத்தையும் காட்டு; வீண் பெருமை பேசாதே; செய்கைகளால் உன் திறமையைக் காட்டு; ஆண்மையுடையவனே சூரனெனப்படுவான். நல்லவர்கள் பெருமை பேசுவதில்லை. சிரேஷ்டமான ரதத்தில் ஸகல ஆயுதங்களுடனும் நீ யுத்தத்திற்கு வந்திருக்கிறாய். பாணங்களாலோ அல்லது அஸ்திரங்களாலோ உன் பராக்ரமத்தை வெளியிடு. பிறகு, பெருங்காற்று பனம்பழங்களை உதிர்ப்பதுபோல், கூர்மையான பாணங்களால் உன் தலையை அறுத்து உதிர்க்கின்றேன். இன்று என் பாணங்கள் சரீரத்தைத் துளைத்து அதிலிருந்து பெருகும் ரத்தத்தைக் குடிக்கும். நான் வயதில் முதிர்ந்தவனல்லவென்று என்னை நீ அலக்ஷ்யம் செய்யக்கூடாது. நான் சிறுவனாயிருந்தாலும் வயது சென்றவனாயிருந்தாலும் யுத்தத்தில் உனக்குக் காலமிருத்யு வென்றறி. முன்காலத்தில் வாமனனென்ற சிறுவனாய் அவதாரம் செய்த விஷ்ணுவால் மூன்று லோகங்களும் மூன்று அடிகளால் அளக்கப்பட்டதை அறியாயோ?'' என்றார்.

அப்படித் தகுந்த காரணங்களுடனும் சிரேஷ்டமான அர்த்தங்களுடனும் லக்ஷ்மணன் சொல்லக் கேட்டு அதிகாயன் கோபம் கொண்டு, உத்தமமான பாணத்தை எடுத்தான். அப்பொழுது வித்யாதர, பூத, தேவ, தைத்ய, மஹர்ஷி, குஹ்ய கணங்கள் அந்த யுத்தத்தைப் பார்க்க வந்தார்கள். அதிகாயன் வில்லை வளைத்து நாணேற்றி அந்த பாணத்தைப் பூட்டி ஆகாசத்தை விழுங்குவதுபோல் அதிவேகமாய் அதை லக்ஷ்மணன்மேல் பிரயோகித்தான். கொடிய விஷமுள்ள நாகத்தைப்போல் தன்னை நோக்கி வரும் அந்த தீக்ஷ்ணமான சரத்தை லக்ஷ்மணன் ஒரு அர்த்த சந்திர பாணத்தால் துண்டித்தார். அதிகாயன் அதைக் கண்டு, ஐந்து பாணங்களைப் பிரயோகிக்க, லக்ஷ்மணன், அவைகளை அதி ஸுலபமாய்த் தன்னிடத்தில் வருவதற்கு முன்பே நாசம் செய்து, தேஜஸால் ஜ்வலிக்கும் ஒரு கூர்மையான பாணத்தை எடுத்து அந்த ராக்ஷஸனுடைய நெற்றியிலடித்தார். மஹா ஸர்ப்பம் பர்வதத்தில் நுழைவதுபோல் அந்தச் சரம் அவனுடைய நெற்றியில் பதிந்தது. ரத்தம் பெருகிற்று. ருத்திரனுடைய பாணங்களால் அடிக்கப்பட்ட த்ரிபுராஸுரர்களுடைய நகர கோபுரம்போல், அந்த பாணத்தைத் தாங்க முடியாமல் அதிகாயன் நடுங்கினான். பிறகு தன்னை ஒருவாறு தேற்றிக்கொண்டு, நன்றாய் ஆலோசித்து, மேல் நடக்க வேண்டியதை நிச்சயித்து, "லக்ஷ்மண! நீ எனக்குத் தகுந்த சத்ரு. உன் திறமையை மெச்சினேன். வில்வித்யையில் நிபுணனாயிருக்கிறாய்'' என்று புகழ்ந்து, ஒருதரம் கொட்டாவி விட்டு, புஜங்களை முறுக்கிப் பிடித்து ஸ்வாதீனப்படுத்திக் கொண்டு, தேர்த்தட்டில் உறுதியாய் உட்கார்ந்து, ஒன்று பத்து நூறு இப்படி எண்ணிறந்த பாணங்களை எடுத்துத் தொடுத்து விடுத்தான். அவை தங்கக்கட்டுகளால் அலங்கரிக்கப்பட்டு, யமதூதர்களைப்போல், ஆகாசமெங்கும் ஒரே பிரகாசமாய்த் தோன்றும்படி செய்தன. லக்ஷ்மணன் சற்றும் கலங்காமல் அவைகளை அறுத்துத் தள்ளினார். பிறகு அதிகாயன் ஓர் உத்தமமான பாணத்தை வெகு ஜாக்கிரதையாக விடுக்க, அது லக்ஷ்மணனை நடுமார்பில் அடித்தது. மதயானை மதஜலத்தைப் பெருகவிடுவதுபோல், அவருடைய தேகம் ரத்ததாரைகளால் நனைக்கப்பட்டது. அதைப் பிடுங்கியெறிந்து லக்ஷ்மணன் வெகு கூர்மையான ஒரு பாணத்தை எடுத்து அதில் ஆக்னேயாஸ்திர மந்திரத்தை ஜபித்து அதிகாயன்மேல் விடுத்தார். அதை அதிகாயன் ஸௌரியாஸ்திரத்தால் தடுத்தான். அவ்விரண்டும் மஹா நாகங்களைப்போல் ஆகாச வீதியில் எதிர்த்து யுத்தம் செய்தன. முடிவில் தேஜஸற்று, ஒன்றையொன்று எதிர்த்துப் பூமியில் சாம்பலாய் விழுந்தன. அதிகாயன் அதைக் கண்டு ஐஷீகாஸ்திரத்தைப் பிரயோகிக்க, லக்ஷ்மணன் அதை இந்திராஸ்திரத்தால் தடுத்தார். அதனால் கோபமடைந்து அதிகாயன் யமனுடைய அஸ்திரத்தை பிரயோகிக்க, அது லக்ஷ்மணனுடைய வாயவ்யாஸ்திரத்தால் அடித்துத் தள்ளப்பட்டது. பிறகு இளையபெருமாள் அந்த ராக்ஷஸனைச் சரமாரியால் மறைக்க, அவை அவனுடைய வஜ்ரகவசத்தில் பட்டு முனையொடிந்து பூமியில் விழுந்தன. அதைக்கண்டு லக்ஷ்மணன் ஆயிரம் சிரேஷ்டமான பாணங்களைப் பிரயோகித்தார். யாதொன்றாலும் பிளக்கப்படாத கவசத்தை அவன் பிரஹ்மாவிடத்திலிருந்து பெற்றதால், அந்தப் பாணங்கள் அவனைக் கொஞ்சம்கூட உபத்திரவிக்கவில்லை.

அப்பொழுது வாயுபகவான் லக்ஷ்மணனிடத்தில் வந்து, "குழந்தாய்! இந்த ராக்ஷஸன் அஸ்திரசஸ்திரங்களால் பிளக்க முடியாத ஒரு கவசத்தை பிரஹ்மாவிடத்திலிருந்து வரத்தால் பெற்றிருக்கிறான். ஆகையால் இவனை பிரஹ்மாஸ்திரத்தால் அடிக்க வேண்டும்; மற்றவை பிரயோஜனப்படா'' என்றார். அதைக்கேட்டு லக்ஷ்மணன், தடையற்ற வேகமுள்ள ஒரு பாணத்தை எடுத்து அதில் பிரஹ்மாஸ்திர மந்திரத்தை ஜபித்து அதிகாயன்மேல் பிரயோகித்தார். அப்பொழுது திக்குகளும், ஸௌரிய சந்திரர்களும், கிரஹங்களும், ஆகாசமும், பூமியும் நடுங்கின. தங்கக்கட்டுகளாலும் வஜ்ரத்தாலும் அலங்கரிக்கப்பட்டு, இந்திரனுடைய வஜ்ராயுதத்தைப்போலும், யமனுடைய காலதண்டத்தைப்போலும், அக்னியைப்போலும் ஜ்வலித்துக்கொண்டு, தடுக்க முடியாத வேகத்துடன் அந்த பிரஹ்மாஸ்திரம் தன்னை நோக்கி வருவதை அதிகாயன் கண்டு, தீக்ஷ்ணமான அநேக பாணங்களால் அதை அடித்தான். அவைகளை விழுங்கிக்கொண்டு அது கருடனைப்போல் அதிவேகமாய் அந்த ராஜகுமாரனுடைய பக்கத்தில் வந்தது. அப்பொழுது, கலங்காமல், அதிகாயன் அதைச் சக்தி, கதை, கோடாலி, சூலம் முதலிய ஆயுதங்களால் அடித்தான். அது அந்த உத்தம ஆயுதங்களையும் நாசம்

செய்து, ராவணகுமாரனான அதிகாயனுடைய சிரஸைக் கிரீட குண்டலங்களுடன் அறுத்துத் தள்ளிற்று. ஹிமயமலையின் சிகரம் பெயர்ந்து விழுவதுபோல், அந்தத் தலை ஆபரணங்களுடன் பூமியில் விழுவதைக் கண்டு, மடிந்தவர் போக மிகுந்த ராக்ஷஸர்கள் கண்ணீர்விட்டுக் கதறியழுதார்கள். முகம் வாடித் தீனமாய், தேகமெங்கும் பாறைகளாலும் மரங்களாலும் மலைகளாலும் அடிபட்டுக் களைத்து, தங்கள் தலைவனையும் இழந்து, திகிலடைந்து, இனி யுத்தம் செய்து ஜயிப்போம் என்ற ஆசை ஒழிந்து, லங்கையைநோக்கி ஓட ஆரம்பித்தார்கள். ஸூர்யோதயத்தால் மலர்ந்த தாமரைப்போல், வானரர்களுடைய முகங்கள் சந்தோஷத்தால் மலர்ந்தன. பயங்கரமான தேகத்துடன் அளவற்ற பலபராக்ரமங்களுடன் தங்களை மூலநாசம் செய்ய வந்த சத்ருவைக் கொன்று தங்களுக்கு உயிரையும் ஸகல சௌக்யங்களையும் அனுக்ரஹித்த லக்ஷ்மணனை அவர்கள் பூஜித்துக் கொண்டாடினார்கள்.

ப்ரஹர்ஷயுக்தா ப³ஹவஸ்து வாநரா:
ப்ரபு³த்³த⁴ பத்³ம ப்ரதிமாநநாஸ் தத³ா ||
அபூஜயந் லக்ஷ்மண மிஷ்டபா⁴கி³நம்
ஹதே ரிபௌ பீ⁴மப³லே து³ராஸதே³ || (15)

## ஸர்க்கம் 72
## ராவணன் கவலை கொண்டது

அதிகாயம் ஹதம் ஶ்ருத்வா லக்ஷ்மணேந மஹௌஜஸா |
உத்³வேக³ மக³மத்³ ராஜா வசநம் சேத³மப்³ரவீத் || (1)

அதிகாயன் லக்ஷ்மணனால் மடிந்தானென்ற வார்த்தையைக் கேட்டவுடன் ராவணன் மனம் நடுங்கி, "ஐயோ! என்ன ஆச்சரியம்! வில்லாளிகளுக்குள் சிரேஷ்டனும் ஸகல ஆயுதப் பிரயோகங்களிலும் நிபுணனும், சத்துருவைப் பார்க்கப் பொறுக்காதவனுமான தூம்ராக்ஷன், அகம்பனன், பிரஹஸ்தன், கும்பகர்ணன் இன்னும் மற்ற ராக்ஷஸவீரர்களும் சத்துருவால் மடிந்தார்கள். இவர்கள் மலைபோன்ற தேகங்களையும் ஸமுத்திரத்தைப்போன்ற உறுதியையும் அபாரபலத்தையுமுடையவர்கள்; எப்பொழுதும் யுத்தத்தில் ஆவல் கொண்டவர்கள். சத்ருஸைன்யங்களை ஜயிப்பதுமாத்திரம் அவர்களுக்குத் தெரியுமேயொழிய, அபஜயமென்பதை அறியாதவர்கள்; அஸ்திரவித்தையில் ஈடில்லாதவர்கள். மூன்று லோகங்களிலும் பிரஸித்தமான பலத்தையும் வீரியத்தையுமுடைய என் குமாரனால் ராமலக்ஷ்மணர்கள் கட்டப்பட்டார்கள். வரப்பிரஸாதத்தால் இந்திரஜித் அடைந்த நாகபாசத்திலிருந்து தேவாஸுர யக்ஷகந்தர்வ கின்னரகணங்களும் தப்பமுடியாது. அந்தப் பாசங்களிலிருந்து தங்களுடைய ஸாமர்த்தியத்தாலோ, பிறரை மோஹிக்கும் மாயா



வித்யையாலோ, அல்லது ஔஷதிகளாலோ விடுவித்துக்கொண்டார்கள். நான் இதுவரையில் யுத்தத்திற்கனுப்பின ராக்ஷஸவீரர்கள் மஹாபலவான்களான வானரர்களால் கொல்லப்பட்டார்கள். ராமலக்ஷ்மணர்களையும் ஸுக்ரீவனையும் விபீஷணனையும் வானரர்களையும் யுத்தத்தில் வெல்லக்கூடிய ஒருவனையும் காணோம். அந்த ராமனுடைய ஸ்வபாவபலம் வெகு ஆச்சரியகரமாயிருக்கிறது. அஸ்திரங்களால் அவனுக்குக் கிடைத்த பலமோ அளவற்றது. இதுவரையில் ஸகல ராக்ஷஸர்களும் அவனுடைய பராக்ரமத்தால் மடிந்ததைப் பார்த்தால், அந்த ராகவன் நித்யனான **ஸ்ரீமந்நாராயணனேயென்று தோன்றுகிறது.** அவனைக் கண்டு பயந்து, லங்கையில் வெளிக்கதவுகளும் உட்கதவுகளும் எப்பொழுதும் அடைக்கப்பட்டிருக்கின்றன.

ராக்ஷஸர்களே! நீங்கள் மறைந்திருந்து அதிஜாக்கிரதையாக லங்கையின் ஸகல பாகங்களையும் காக்கவேண்டும். ஸீதை வஸிக்கும் அசோகவனத்தில் என் உத்தரவில்லாமல் எனக்குத் தெரியாமல் ஒருவரும் பிரவேசிக்கக்கூடாது; அங்கிருந்து வெளியில் போகவும் கூடாது; எங்கெங்கே ஸேனைகளுக்கு விடுதிகள் ஏற்பட்டிருக்கின்றனவோ அங்கங்கே உங்களுடைய ஸைன்யத்துடன் எப்பொழுதும் யுத்தத்திற்கு தயாராயிருக்கவேண்டியது. வானரர்களை ஒருபொழுதும் அலக்ஷ்யம் செய்யக்கூடாது. அவர்கள் யுத்தம் செய்யத் தயாராயிருக்கிறார்களா? யுத்தத்திற்கு வந்து கொண்டிருக்கிறார்களா? இளைப்பாறுகிறார்களா? கவலைகொண்டிருக்கிறார்களா? என்ற விஷயங்களை ஸாயங்காலத்திலும் பாதிராத்திரியிலும் விடியற்காலையிலும் எப்பொழுதும் அறிந்துவர வேண்டும்" என்று ஆக்ஞாபித்தான். ராக்ஷஸவீரர்கள் அப்படியே செய்ய, ராவணன் கோபத்தாலும் வருத்தத்தாலும் பீடிக்கப்பட்டுத் தன் அரண்மனைக்குச் சென்றான். தன் புத்திரர்களை இழந்த துக்கத்தாலும் அதுவரையில் சத்துருக்களால் ஒவ்வொரு தடவையிலும் அபஜயமடைந்ததைப் பற்றிக் கோபத்தாலும் அதை நினைத்து நினைத்துப் பெருமூச்சு விட்டு உருகினான்.

தத: ஸ ஸந்தீ³பித கோபவஹ்நி:
நிஶாசராணா மதி⁴போ மஹாப³ல: |
ததே³வ புத்ரவ்யஸநம் விசிந்தயந்
முஹுர்முஹுஶ்சைவ தத³ா வ்யநிஶ்வஸத் || (20)

## ஸர்க்கம் 73

## ராமலக்ஷ்மணர்கள் பிரஹ்மாஸ்திரத்தால் கட்டப்பட்டது

ததோ ஹதாந் ராக்ஷஸபுங்க³வாம்ஸ் தாந்
தே³வாந்தகாதி³ த்ரிஶிரோதிகாயாந் |
ரக்ஷோக³ணாஸ் தத்ர ஹதாவஶிஷ்டா
தே ராவணாய த்வரிதம் ஶஶம்ஸு: || (1)

பிறகு ராக்ஷஸகணங்கள் யுத்த பூமியிலிருந்து வந்து, தேவாந்தகன், த்ரிசிரஸ் அதிகாயன் முதலியவர்கள் நாசமடைந்ததை ராவணனுக்குத் தெரிவித்தார்கள். அதைக் கேட்டு ராவணன் கண்களில் நீர் பெருக, ஒன்றும் தோன்றாமல் புத்தி மயங்கி, பித்துப்பிடித்தவன் போலிருந்தான். தன் புத்திரர்களிறந்ததையும் ஸஹோதரர்கள் கோரமாய் மடிந்ததையும் கேட்டு, சிந்தாக்கிராந்தனாய்ச் சோக ஸமுத்திரத்தில் முழுகியிருப்பதைக் கண்டு, இந்திரஜித்தென்ற ராக்ஷஸ வீரசிகாமணி, "ராக்ஷஸாதிபதியே! தங்களுடைய புத்திரனான இந்திரஜித் பிழைத்திருக்கும்வரையில் தங்களுக்குக் கவலையேன்? யுத்த பூமியில் இந்திரஜித்தின் பாணங்களால் அடிபட்டு உயிருடன் திரும்பினவனை இதுவரையில் யாராவது பார்த்ததுண்டோ? ராமலக்ஷ்மணர்கள் இன்று என் ஆயுதங்களால் தேகம் பிளந்து அவயவங்கள் சிதறி உயிரிழந்து கூர்மையான பாணங்களால் தேகமெங்கும் துளைக்கப்பட்டுத் தரையில் விழுந்து கிடக்கப்போவதை பாருங்கள். இந்திரனைக் கதறவடித்த நான் ஸ்வபாவ பலத்தாலும் தெய்வ பலத்தாலும் சத்துருக்களால் நெருங்க முடியாதவன். நான் செய்யும் கோரப்பிரதிக்ஞையைக் கேளுங்கள். இன்று ராமலக்ஷ்மணர்களது சரீரத்தில் என் பாணங்களால் ஊசி நாட்ட இடமில்லாமல் துளைக்கிறேன். இன்று இந்திரன், யமன், விஷ்ணு, ஸூரியன், ஸாத்யர்கள், அச்வினிகள், அக்னி, சந்திரன் முதலிய எல்லோரும், முன்பு பலிசக்கரவர்த்தியின் யாகசாலையில் தடையற்ற பராக்கிரமத்துடன் விளங்கின மஹாவிஷ்ணுவைப்போல் நான் என் உக்கிரமான வீரியத்தைப் பிரயோகிப்பதை காணப்போகிறார்கள்" என்று வீரத்வனி செய்தான்.

பிறகு அளவற்ற உத்ஸாகத்துடன் தன் பிதாவிடத்தில் உத்தரவு பெற்றுக்கொண்டு, அநேக கோவேறு கழுதைகள் பூட்டின ஓர் உத்தம ரதத்திலேறிக்கொண்டு யுத்தத்திற்குப் புறப்பட்டான். ஸூரியனுடைய ரதத்தைப்போல் பிரகாசித்து, வேகத்தால் வாயுவைப் பழிக்கும் அந்த ரதத்தில் ஸூரியனைப்போல் ஜ்வலிக்கும் ராவண புத்திரனை அநேக ராக்ஷஸவீரர்கள் ஸந்தோஷத்துடன் பின் தொடர்ந்தார்கள். அவர்கள் பிரஸித்தி பெற்ற வில்லாளிகள்.



சிலர் யானையின்மேலும் சிலர் குதிரையின்மேலும் ஏறிக்கொண்டு கத்தி, சூலம், ஈட்டி, கோடாலி முதலிய ஆயுதங்களைத் தரித்து, சங்கம், துந்துபி, பேரிகை முதலிய ரணவாத்யங்கள் கோஷிக்க, ஸகல ராக்ஷஸர்களும் ஆசீர்வதிக்க, இந்திரஜித்தைப் பின்தொடர்ந்தார்கள். ஆகாசத்தில் பூர்ண சந்திரனைப்போல் சங்கத்தையும் சந்திரனையும் காந்தியால் பழிக்கும் ஒரு வெண்குடையின் கீழ் அந்த ராவண புத்திரன் விளங்கினான். அந்த ராக்ஷஸ வீரனுக்கு இரு புறத்திலும் தங்கப்பிடிகளுடன் நவரத்னங்களிழைத்த இரண்டு சாமரங்கள் எப்பொழுதும் போடப்பட்டன. நிகரற்றதேஜஸுள்ள ஸூரியனால் ஆகாச வீதி விளங்குவது போல் லங்கை இந்திரஜித்தின் தேஜஸால் விளங்கிற்று. அவன் யுத்த பூமிக்கு வந்து, தன் ஸைன்யங்களை ரதத்தைச் சுற்றிக் காவல் வைத்து, அக்னியை மூட்டி பிரபலமான மந்திரங்களை ஜபித்து, விதிப்படி ஹவிஸாலும், பொரிகளாலும், மாலைகளாலும் கந்தங்களாலும் அதில் ஹோமம் செய்தான். அக்னிக்கு நான்கு பக்கங்களிலும் பரப்பப்படும் தர்ப்பைகளுக்குப் பதிலாக தோமரங்கள் முதலிய ஆயுதங்கள் வைக்கப்பட்டிருந்தன. விபீதகமென்ற விருக்ஷம் ஹோமம் செய்வதற்கு ஸமித்துகளாக உபயோகப்பட்டது. அவன் உடுத்திருந்த வஸ்திரங்கள் சிவப்பு வர்ணமாயும், அவன் ஹோமம் செய்த கரண்டிகளும் பாத்திரங்களும் கருப்பு இரும்பால் செய்யப்பட்டும் இருந்தன. இப்படி யுத்த பூமியில் அக்னியை வளர்த்து, முற்றிலும் கருத்த ஒரு ஆட்டின் கழுத்தைப் பிடித்து அறுத்துப் பலி கொடுத்தான். ஒரு தடவை போடப்பட்ட ஸமித்துகளால் அக்னி புகையில்லாமல் விசேஷ காந்தியுடன் கொழுந்துவிட்டெரிந்தது. பிரதக்ஷிணமாய்ச் சுழலும் கொழுந்துகளுடன் அக்னி பகவான் மனுஷ்ய ரூபமெடுத்து, ஹாரகேயூர கிரீட குண்டலங்களால் அலங்கரிக்கப்பட்டவராய்க் கொடுக்கப்பட்ட ஹவிஸைப் பெற்றுக்கொண்டார். பிறகு அந்த அக்னியில் பிரஹ்மாஸ்திரத்தையும் வில்லையும் ரதத்தையும் யாவற்றையும் ஹோமம் செய்தான். அப்பொழுது ஸூர்ய சந்திர கிரஹ நக்ஷத்திரங்களுடன் ஆகாச வீதி நடுங்கிற்று. தேஜஸில் அக்னியைப் போலும், வீரியத்தில் இந்திரனைப்போலும் விளங்கும் இந்திரஜித், வில், பாணங்கள், கத்தி, ரதம், குதிரைகள், ஸாரதி முதலியவைகளுடன் ஆகாசத்தில் மறைந்தான். பிறகு ராக்ஷஸவீரர்கள் யானை, ரதம் முதலியவைகளில் ஏறிக்கொண்டு லங்கையிலிருந்து வெளிப்பட்டுக் கூர்மையான பாணங்களாலும் தோமரம் கத்தி சூலம் முதலிய ஆயுதங்களாலும் வானரர்களை அடித்தார்கள். அப்பொழுது ராவணபுத்திரன், கோபத்தால் சிவந்த கண்களுடன், "நீங்கள் சற்றும் கலங்காமல் வெகு உத்ஸாகத்துடன் வானரர்களை நாசம் செய்யுங்கள்" என்றான். பிறகு ஸகல ராக்ஷஸர்களும் வானரர்களை ஜயிக்க விரும்பி, கர்ஜித்துக்கொண்டு, கோரமாய்ச் சரமாரி பொழிந்தார்கள். இந்திரஜித்தும் ராக்ஷஸவீரர்களால் சூழப்பட்டு வானரர்களை நாளீகம்

நாராசம் முதலிய பாணங்களாலும் கதை உலக்கை சூலம் முதலிய ஆயுதங்களாலும் கூட்டங் கூட்டமாய் ஹதம் செய்தான். அதைக் கண்டு இதரவானரர்கள் மரங்களையும்மலைகளையும் எடுத்துகொண்டு அவனைசூழ்ந்தார்கள் யுத்தத்தில்பின்வாங்காததீரனான இந்திரஜித்து கோபம் கொண்டு, பலமும் தேஜஸும் எல்லையில்லாமல் விருத்தியாக, ஒரே பாணத்தால் ஐந்து பத்து ஐம்பது இப்படி வானரர்களைக் கூட்டங் கூட்டமாய்த் துளைத்தான்; அதைக் கண்டு ராக்ஷஸர்கள் மகிழ்ந்தார்கள். தங்கத்தால் அலங்கரிக்கப்பட்டு ஸூரியனைப் போல் பிரகாசிக்கும் பாணங்களால் வானரர்கள் அங்கங்கள் பிளந்து, உபத்திரவத்தைத் தாங்காமல், கொழுப்பழிந்து, யுத்தம் செய்ய ஆசையற்று, பூர்வகாலத்தில் அஸுரர்கள் தேவர்களால் முறியடிக்கப்பட்டதுபோல் விழுந்தோடினார்கள். சில வானர வீரர்கள் பாணங்களாகிற கிரணங்களால் ஸூரியனைப்போல் ஜ்வலிக்கும் இந்திரஜித்தை நாசம் செய்ய நிச்சயித்து, அவனை நான்கு புறங்களிலும் வளைத்துக்கொண்டு கோர யுத்தம் செய்தார்கள். ஆனால் அவனுக்குமுன் நிற்க முடியாமல், அவயவங்கள் சிதைந்து ரத்தம் பெருக பிரக்ஞையற்றுப் புத்திமயங்கி ஓடும்படியாயிற்று. பிறகு ராம கைங்கரியத்திற்காகத் தங்களுடைய ஸகல வீரியத்தையும் பராக்கிரமத்தையும் உபயோகித்து, அவசியமானால் தங்களுடைய உயிரையும் கொடுக்க நிச்சயித்து வானரசிரேஷ்டர்கள், பாறைகளையும் மலைகளையும் எடுத்துக்கொண்டு, திரும்பி வந்து இந்திரஜித்தைச் சூழ்ந்துகொண்டு, ஓயாமல் கல்மாரி பொழிந்தார்கள். அவைகளை அவன் ஒரு நொடியில் சிதறவடித்து வானர ஸைன்யங்களைக் கூர்மையான சரங்களால்துளைத்தான். கந்தமாதனனைப் பதினெட்டு பாணங்களாலும், தூரத்திலிருந்த நளனை ஒன்பது சரங்களாலும்,மைந்தனுடைய உயிர்நிலைகளை ஏழு அம்புகளாலும், கஜனை ஐந்து வாளிகளாலும் துளைத்தான். பிரளய காலாக்னியைப்போல் கோபத்தால் மெய்மறந்து ஜாம்பவானைப் பத்து சரங்களாலும், நீலனை முப்பது பாணங்களாலும் ஸுக்ரீவன், ரிஷபன், அங்கதன், த்விவிதன் முதலிய வானர சிரேஷ்டர்களை வரப்பிரஸாதத்தாலடைந்த அநேக கோரமான பாணங்களாலும் பிரக்ஞையற்றுப் போகும்படி செய்தான். ஸூரியனைப்போல் ஜ்வலிக்கும் சரங்களை வெகு சாதுரியமாய் பிரயோகிக்க, அவை மனோவேகத்துடன் வானர ஸைன்யங்களில் வந்து விழுந்து அவைகளைக் கலக்கின. பாணவர்ஷத்தால் வருந்தி ஒன்றும் தோன்றாமல், ரத்த வெள்ளத்தால் நனைக்கப்பட்டிருக்கும் வானர ஸைன்யத்தைக் கண்டு அவனுக்கு அடங்காத மகிழ்ச்சியுண்டாயிற்று. மறுபடியும் பாணங்களையும் கோரமான ஆயுதங்களையும் இடைவிடாமல் வானரர்கள்மேல் பிரயோகித்துச் சொல்லமுடியாத துன்பத்தை உண்டு பண்ணினான். தன் ஸைன்யத்தைவிட்டு வானர ஸைன்யத்தில் புகுந்து ஒருவர் கண்ணுக்கும் தெரியாமல் நீருண்ட மேகத்தைப்போல் சரங்களைப் பொழிந்தான். வானரர்கள் அவனுடைய பாண வேகத்தால் தேகங்கள் பிளந்து, அவனுடைய மாயையால் ஒன்றும் தோன்றாமல் விகாரமாய்க் கூச்சலிட்டுக்கொண்டு, இந்திரனால் அடிக்கப்பட்ட பர்வதங்களைப்போல் பெரிய சரீரங்களுடன் பூமியில் விழுந்தார்கள். கூர்மையான சரங்கள் தங்கள்மேல் வந்து விழுவது மாத்திரம் அவர்களுக்குத் தெரிந்தது. மாயையால் மறைந்திருந்த அந்த ராக்ஷஸ வீரனைக் காண முடியவில்லை. ஸூரிய கிரணங்களைப்போல் பிரகாசிக்கும் பாணங்களால் ஸகல திக்குகளையும் இடைவெளி இல்லாமல் நிரப்பி, ஆகாசத்தையும் பூமியையும் மறைத்தான். வானர சிரேஷ்டர்களைக் கதறவடித்தான். நெருப்புப் பொறிகளுடனும் ஜ்வாலைகளுடனும் கொழுந்துவிட்டெரியும் அக்னியைப் போன்ற சூலம், கத்தி, கோடாலி முதலிய ஆயுதங்களைக் கரகரவென்று சுழற்றி வானரர்களை அசைக்க முடியாமல் அடித்தான். நெருப்பு ஜ்வாலைகளைப் போன்ற பாணங்கள் தேகத்தில் பாய்ந்து ரத்தம் பீறிட்டடிக்க, பெரிய சரீரமுள்ள வானரர்கள் புஷ்பங்களால் நிறைந்த பலாசவிருக்ஷங்களைப்போல் விளங்கினார்கள். ஒருவரையொருவர் தழுவிக்கொண்டு விகாரமாய்க் கூச்சலிட்டு வானர வீரர்கள் உயிரிழந்து பூமியில் விழுந்தார்கள். ஆகாசத்தை நிமிர்ந்து பார்த்த சிலர் கண்களில் அடிக்கப்பட்டார்கள். சிலர் பாணங்களினின்றும் தப்புவதற்காகப் பூமியில் ஒருவர் மேலொருவர்விழுந்தார்கள். ஹனுமான்,ஸுக்ரீவன், அங்கதன்,கந்தமாதனன், ஜாம்பவான், ஸுஷேணன், வேகதர்சி, மைந்தன், த்விவிதன், நீலன், கவாக்ஷன், கஜன், கோமுகன், கேஸரி, ஹரிலோமா, வித்யுத்தம்ஷ்ட்ரன், ஸூர்யமுகன், ஜ்யோதிர்முகன். ததிமுகன்,பாவகாக்ஷன், நளன், குமுதன் முதலிய வானரத் தலைவர்களை மந்திரங்களால் காக்கப்பட்ட ஈட்டி, வல்லயம், சூலம் முதலிய ஆயுதங்களாலும் பாணங்களாலும் ஒன்றும் தோன்றாமலடித்து, ராமலக்ஷ்மணர்களை ஸூரியகிரணங்களைப்போன்ற பாணங்களால் மறைத்தான்.

எல்லையற்ற தைரியத்தையுடைய ரகுவீரன், மலையில் விழும் மழைத்தாரைகளைப்போல் அவைகளைச் சற்றும் லக்ஷ்யம்செய்யாமல், "லக்ஷ்மண! இந்த ராக்ஷஸராஜகுமாரன் வரத்தாலடையப்பட்ட பிரஹ்மாஸ்திரத்தை ஆதாரமாய் வைத்துக்கொண்டு, வானர ஸைன்யத்தைக் கலக்கி முறியடித்து, நம்மையும் குரூரமான பாணங்களால் உபத்திரவிக்கிறான். அந்த மஹாவீரன் பிரஹ்மாவால் கொடுக்கப்பட்ட வரங்களின் மஹிமையைக் கொண்டு ஆகாசத்தில் மறைந்திருந்து நமது ஸைன்யங்களை நாசம் செய்கிறான் அவன் இருக்குமிடம் தெரியாமல் நமது வீரர்கள் அவனுடன் யுத்தம் செய்வதெப்படி? ஜயிப்பதெப்படி? நீ உன் ஸ்வபாவ மஹிமையை ஆசிரயித்து இவனால் பிரயோகிக்கப்படும் பிரஹ்மாஸ்திரத்தைத் தடுக்க நினைக்கிறாய். அது ஸரியல்ல. இந்த அஸ்திரத்திற்குத் தேவையாயிருந்து இவ்வளவு சக்தியையும் அதற்குக் கொடுத்த பிரஹ்மதேவர் மனத்

திற்கெட்டாத பிரபாவத்தையுடையவர். ஆகையால் இந்த ஸமயத்தில் இவனால் பிரயோகிக்கப்படும் பாணங்களின் வேகத்தை மனம் கலங்காமல் என்னைப்போல் பொருத்துக்கொண்டிரு. இந்த ராக்ஷஸ வீரன் சரமாரிகளால் ஸகல திக்குகளையும் மறைக்கிறான். இந்த வானரஸைன்யம் தலைவர்கள் மடிந்து மூலைக்குமூலை சிதறி தேஜஸற்றிருக்கிறது. ஆகையால் நாமிருவரும் பிரக்ஞையற்று யுத்தம்செய்யாமல் மூர்ச்சையடைந்து பூமியில் விழுவதைக் கண்டு, இந்த ராக்ஷஸன் ஜயலக்ஷ்மியுடன் அதிசீக்கிரமாய் லங்கையில் பிரவேசிப்பான்" என்று எச்சரித்தார். பிறகு அவர்கள் இந்திரஜித்தால் பிரயோகிக்கப்பட்ட பாணவர்ஷத்தால் மிகவும் பீடிக்கப்பட்டு பூமியில் விழுந்தார்கள். அதைக் கண்டு இந்திர சத்துருவானவன் ஸந்தோஷம் தாங்காமல் ஆரவாரித்தான். இப்படி வானர ஸைன்யத்தையும் ராமலக்ஷ்மணர்களையும் மிகுந்த உபத்திரவத்திற்குள்ளாக்கி லங்கையில் பிரவேசித்து, ராவணனுக்கு அந்த ஸமாசாரத்தைத் தெரிவிக்க அதிவேகமாய்ச் சென்றான்.

ஸ தத் ததா2 வாநரஸைந்ய மேவம்
ராமம் ச ஸங்க்2யே ஸஹ லக்ஷ்மணேந |
விஷாத3யித்வா ஸஹஸா விவேஶ
புரீம் த3ஶக்3ரீவ பு4ஜாபி4கு3ப்தாம் || (73)

---

## ஸர்க்கம் 74

## ராமலக்ஷ்மணர்கள் பிரஹ்மாஸ்திரத்திலிருந்து விடுபட்டது

---

தயோஸ்ததா2 ஸாதி3தயோ ரணாக்3ரே
முமோஹ ஸைந்யம் ஹரிபுங்க3வாநாம் |
ஸுக்3ரீவ நீலாங்க3த3 ஜாம்ப3வந்தோ
நசாபி கிஞ்சித் ப்ரதிபேதி3ரே தே || (1)

இப்படி ராமலக்ஷ்மணர்கள் யுத்தபூமியில் பிரஹ்மாஸ்திரத்தால் மயங்கிக் கிடப்பதைக் கண்டு, ஸுக்ரீவன், நீலன், அங்கதன், ஜாம்பவான் முதலிய வானர வீரர்கள் ஒன்றும் தோன்றாமலிருந்தார்கள்; வானர ஸைன்யம் புத்தி சிதறி ஏக்கம் பிடித்தது. அப்பொழுது மஹாபுத்திமானான விபீஷணன் வானர சிரேஷ்டர்களை மதுரமான வார்த்தைகளால் தைரியப் படுத்தினான். "பபப்பட வேண்டாம்; நமது ரக்ஷகர்கள் பிரக்ஞையற்றுக் கிடக்கிறார்களென்பதைப்பற்றி வருந்தவேண்டியதில்லை. பிரஹ்மாவின் ஆக்ஞையைக் கௌரவிப்பதற்காக இந்திரஜித்தின் பாணங்களுக்குக் கட்டுப்பட்டிருக்கிறார்கள். அந்த ராக்ஷஸகுமாரன் சதுர்முகரைக் கடுந்தவத்தால் ஸந்தோஷப்படுத்தி, தடையற்ற வேகமுள்ள இந்த உத்தம



மான அஸ்திரத்தைப் பெற்றான். அவரிடத்திலுள்ள மரியாதையால் ராமலக்ஷ்மணர்கள் அஸ்திரபந்தத்திற்குட்பட்டிருக்கிறார்கள்; ஒரு முகூர்த்தம் சென்றபின் முன்போல் சுகமாயிருப்பார்கள். இதைப்பற்றிக் கவலைப்படலாமா?" என்றான். அதைக்கேட்டு ஹனுமான் பிரஹ்மாஸ்திரத்தை கௌரவிப்பவராக, விபீஷணனை நோக்கி, இதுவரையில் நமது ஸைன்யத்தில் கொல்லப்பட்டவர்களைத் தவிர உயிருடனிருப்பவர்களைக் கண்டுபிடித்து ஆறுதல் செய்வோம் வா" என்று அவனை அழைத்துக்கொண்டு, தீவட்டிகளுடன் ராத்ரியில், அந்த யுத்தகளத்தில் தேடினார்.

வால், கை, கால்கள், விரல்கள், கழுத்து முதலிய அவயவங்கள் அறுந்தவர்களும், தேகமெங்கும் ரத்தம் பெருகுகிறவர்களும், மலமூத்திரங்களை விடுகிறவர்களும், பர்வதங்களைப்போல் இறந்து கிடப்பவர்களும் ஆயுதங்களால் அடிபட்டுக் கிடப்பவர்களும் அங்கங்கே காணப்பட்டார்கள். அடியெடுத்து வைப்பதற்கு இடமில்லை. ஸுக்ரீவன், அங்கதன், நீலன், சரபன், கந்தமாதனன், கவாக்ஷன், ஸுஷேணன், வேகதர்சி, ஆஹுகன், மைந்தன், நளன், ஜ்யோதிர்முகன், த்விவிதன், பனஸன் முதலிய வானரத் தலைவர்கள் அடிபட்டுப் பிணம்போல் கிடப்பதைக் கண்டார்கள். இப்படி ஆறு நாழிகைக்குள் அறுபத்தேழு கோடி வானரர்கள், பிரஹ்மாவிடத்திலிருந்து வரம் பெற்ற அந்த ராக்ஷஸ ராஜகுமாரனால் கொல்லப்பட்டார்கள். மஹாஸமுத்திரத்தைப்போன்ற வானர ஸைன்யம் இந்திரஜித்தின் பாணங்களாகிற சண்டமாருதத்தால் அடிக்கப்பட்டுக் கொந்தளித்துக்கொண்டிருக்கும்பொழுது, மாருதியும் விபீஷணனும் ஜாம்பவானைத் தேடிக்கொண்டிருந்தார்கள்.

மிகவும் வயதுசென்று; பாணங்களால் துளைக்கப்பட்டு, அணையும் நெருப்பைப்போல் காணப்படும் அந்த பிரஹ்மபுத்திரனைப் பார்த்து விபீஷணன், "ஐயோ! ராக்ஷஸர்களுடைய கூர்மையான பாணங்களால் தாங்கள் கொல்லப்படாமல் பிழைத்திருக்கிறீர்களா" என்று கேட்டான். அதற்கு அந்த வானர வீரன், "மஹாவீரியமுள்ள ராக்ஷஸேஸ்வர! நீ இருக்கிற இடம் தெரியவில்லை. உன் குரலால் அடையாளம் கண்டுபிடித்தேன். பாணங்களால் துளைக்கப்பட்டு இந்திரிய ஸ்வாதீனமற்றிருக்கிறேன். அது இருக்கட்டும். வாயுபகவானுக்கும் அஞ்சனாதேவிக்கும் பாக்கியவசத்தால் பிறந்த ஹனுமான் உயிர் தப்பி ஸௌக்கியமாக இருக்கிறானா?" என்று, வெகு கஷ்டப்பட்டுப் பேச முடியாமல் பதில் சொன்னார். அப்பொழுது அந்த ராக்ஷஸன், "ஐயா! என்ன ஆச்சரியம்! ராமலக்ஷ்மணர்களைப்பற்றி க்ஷேமம் விசாரிக்கவில்லை. ஸுக்ரீவ மஹாராஜா அங்கதன் முதலியவர்கள் பிழைத்திருக்கிறார்களா என்று கேட்கவில்லை. இவர்களைவிட வாயுபுத்திரனிடத்தில் தாங்கள் அதிக ஸ்நேஹம் வைத்திருப்பதற்குக் காரணமென்ன?" என்றான். ஜாம்பவான்,

"ராக்ஷஸசிரேஷ்ட! மாருதியைப்பற்றி விசேஷமாய் விசாரிக்க வேண்டியது அவசியம். அவன் உயிருடனிருந்தால் நமது ஸைன்யம் முழுவதும் கொல்லப்பட்டாலும் பிழைத்திருப்பதாக எண்ணிக்கொள்ளலாம். அவன் உயிரிழந்தால் நாமெல்லோரும் உயிருடனிருந்தும் இறந்தவர்கள் போலாவோம். பலத்தில் வாயுபகவானையும், வீரியத்தில் அக்னியையும் போன்ற ஆஞ்ஜனேயன் அபாயமில்லாமலிருந்தால் நாம் உயிரில் ஆசைவைக்கலாம்" என்றார். பிறகு ஹனுமான் ஜாம்பவானுடைய பாதங்களைத் தொட்டு விதிப்படி நமஸ்கரித்து அபிவாதனம் செய்தார். ஜாம்பவான் மாருதியின் குரலைக்கேட்டு, இந்திரியங்கள் கலங்கியிருந்தும் தனக்குப் போன உயிர் திரும்பி வந்ததுபோல் ஸந்தோஷித்தார். "வானரோத்தம! வா; நமது ஸைன்யத்தைக் காப்பாற்றுவது உன் கடமை. அதற்கு வேண்டிய பராக்கிரமத்தையுடையவன் இங்கே ஒருவருமில்லை. இவர்களுக்கு பரம உபகாரத்தைச் செய்யக்கூடியவன் நீயே. உன் பராக்கிரமத்தை உபயோகப்படுத்தவேண்டிய ஸமயம் இதே. அதற்குத் தகுந்த வேறொருவனையும் காணேன். ராமலக்ஷ்மணர்களுக்குப் பாணங்களால் நேர்ந்த உபத்திரவத்தைத் தீர்த்து, வானர ஸைன்யத்திற்கு ஸந்தோஷத்தைக் கொடு. ஸமுத்திரத்திற்குமேல் ஆகாச மார்க்கமாய் வெகுதூரம் சென்று பர்வதராஜனான ஹிமயமலையைச் சேர். அதற்கப்பால் ரிஷபமென்ற உன்னதமான தங்கமலையும், கைலாஸ சிகரமும் காணப்படும். இவ்விரண்டிற்கும் நடுவில் ஸகல ஓஷதிகளால் நிறைந்து அவைகளின் காந்தியால் ஜ்வலித்துக்கொண்டிருக்கும் ஓஷதிபர்வதத்தைக் காண்பாய். அதன் உச்சியில் மிருதஸஞ்ஜீவினீ, விசல்யகரணீ, ஸந்தானகரணீ ஸாவர்ணகரணீ என்ற நான்கு பரம ஓஷதிகள் ஸகல திக்குகளையும் தங்களுடைய தேஜஸால் பிரகாசிக்கச்செய்துகொண்டு வளர்கின்றன. அவைகளை எடுத்துக்கொண்டு இங்கே வா. இறந்த வானரர்களுக்கு உயிரைக் கொடுத்து ஆறுதல் செய்" என்றார். (**மிருதஸஞ்ஜீவினீ:**—இறந்தவனைப் பிழைப்பிக்கும். **விசல்யகரணீ:**—பிழைத்தபிறகு தேகத்திலிருக்கும் பாணங்களை வெளியில் எடுத்து அவனை நடக்கும்படி செய்யும். **ஸாவர்ணகரணீ:**—காயத்தால் உண்டான வர்ணத்தை மாற்றி தேகத்தின் மற்றப் பாகங்களிலுள்ளதுபோன்ற ஸ்வபாவமான வர்ணத்தைக் கொடுக்கும். **ஸந்தானகரணீ:**—பாணங்கள் வெளிப்பட்டவுடன் பிளக்கப்பட்ட தோலின் இரண்டுபாகத்தையும் சேர்க்கும்.

ஜாம்பவான் இப்படிச் சொல்லக் கேட்டு, நான்கு திக்குகளிலிருந்து வந்துவிழும் நதிகளால் ஸமுத்திரம் பொங்குவதுபோல், மாருதிக்குப் பலமும் உத்ஸாஹமும் தைரியமும் விருத்தியாயின. த்ரிகூடப் பர்வதத்தின் உச்சியில் நின்று அதைக் காலால் உதைத்து ஆகாசத்தில் கிளம்ப யத்னம் செய்துகொண்டிருந்த ஆஞ்ஜனேயர், ஒரு பர்



வதத்தில் மற்றொரு பர்வதம் தங்கினதுபோல் காணப்பட்டார். அவருடைய பாதங்களால் பிளக்கப்பட்டுத் தாங்காமல் அந்தப் பர்வதம் பூமியில் அழுந்திற்று. அவருடைய வேகத்தால் அதிலிருந்து சிகரங்கள் பிளந்து பாறைகள் நெருப்பு ஜ்வாலைகளுடன் விழுந்தன. அதிலுள்ள மரங்கள் முறிந்து விழுந்து, பாறைகள் பிளந்து, அந்தப் பர்வதம் அசைந்தாடும்பொழுது வானரர்கள் அதில் நிற்க முடியவில்லை. லங்கையின் கோபுரங்களும் அதற்கு ஸமீபத்திலுள்ள கிருகங்களும் இடிந்து விழுந்தன. கோட்டை வாசல்கள் அசைந்தாடின. லங்கா நகரம் அந்த ராத்திரியில் பயத்தால் நடுங்கித் தத்தளிப்பதுபோல் தோன்றிற்று. மலைபோன்ற சரீரத்துடன் த்ரிகூடபர்வதத்தை உதைத்துக் கிளம்பி பூமியையும் ஸமுத்திரத்தையும் கலங்கச் செய்தார். பிறகு லங்கையிலுள்ள மலைய பர்வதத்தில் ஏறினார். அது மேருமந்திரபர்வதங்களைப்போல்உன்னதமாய்,அநேக மலையருவிகள் மரங்கள்கொடிகள்தாமரையோடைகள் மிருகங்கள்குகைகளால்அழகாய்விளங்கிற்று. எண்ணிறந்த தேவர்களும் கந்தர்வர்களும் வித்தியாதரர்களும், முனிகணங்களும், அப்ஸரஸுகளும் அதில் ஆனந்தமாய் வஸித்துக்கொண்டிருந்தார்கள். அறுபது யோஜனை உயரமுள்ளது. அதிலிருந்தவர்கள் அவருடைய ரூபத்தையும் வீராவேசத்தையும் கண்டு பயந்தார்கள். தன் சரீரத்தை விருத்தி செய்துகொண்டு வடவா முகத்தைப்போன்ற தன் வாயைத் திறந்து, லங்கையிலுள்ள ராக்ஷஸர்கள் தான் வருமளவும் வெளிக்கிளம்பாமலிருக்கும்படி பயங்கரமாய்க் கர்ஜித்தார். அதைக்கேட்டு லங்கையிலுள்ள ஸகலப் பிராணிகளும் ஆச்சரியமடைந்து பயத்தால் அசைவற்றிருந்தார்கள். பிறகு மாருதி ராமமூர்த்தியை மனத்தால் நமஸ்கரித்து, தான் உத்தேசித்த காரியம் விக்னமில்லாமல் நிறைவேறும்படி அனுக்ரஹிக்க வேண்டுமென்று பிரார்த்தித்து, அவருக்குக் கைங்கரியரூபமாக ஒரு அற்புதமான வீரகிருத்யத்தைச் செய்தார். மஹா ஸர்ப்பத்தைப் போன்ற வாலை உயரத்தூக்கி, முதுகை வளைத்து, காதுகளை மடக்கி, வடவா முகத்தைப்போன்ற வாயைத்திறந்து, பயங்கரமான வேகத்துடன் ஆகாசத்தில் கிளம்பினார். (வாலைத் தூக்குவதால் அளவற்ற உத்ஸாகமும், முதுகை வளைப்பதால் ஆகாசமார்க்கத்தில் செல்வதற்கனுகூலமாய் பிராணவாயுவை அடக்கினாரென்றும், காதுகளை மடக்குவதால் தன் பலத்தை விருத்தி செய்துகொண்டாரென்றும், வாயைத் திறப்பதினால் தான் செய்யும் காரியத்தில் ஸகலப் பிரக்ஞையையும் வைத்தாரென்றும் விளங்குகின்றன.) அந்த மலையிலுள்ள மரச்சோலைகளையும் கற்பாறைகளையும் அங்கே வஸித்த வானரர்களையும் தன் வேகத்தால் இழுத்துக்கொண்டு போனார். கைகால்களுடைய வேகத்தால் அவர்கள் பீடிக்கப்பட்டு, வெகுதூரம் அவருடன் போய், வரவர வேகம் குறைந்து ஸமுத்திரத்தில் விழுந்தார்கள். மஹாஸர்ப்பங்களைப்போன்ற புஜங்களை நீட்டிக்கொண்டு, வீரியத்தில் கருடனுக்கு ஸமானராய், தான் போகும் வேகத்தால் திக்கு

களை இழுத்துக்கொண்டு போகிறவர்போல், பர்வதசிரேஷ்டனை மேருவைப் போய்ச் சேர்ந்தார். (கைலாஸத்திற்கருகில் ஹிமயமலையின்ஒருபாகமான மேருவென்ற ஒரு சிகரமுண்டு; அல்லதுமேருமலையிருக்கும் திக்கிலுள்ள ஹிமயபர்வதமென்றும் அர்த்தம் செய்யலாம்; அல்லது மேருமலையிருக்கும் உத்தர திக்கை நோக்கிச் சென்றாரென்றும் பொருந்தும்; அல்லது, மேருவைப்போல் உன்னதமான ஹிமயமலையென்றும் அர்த்தமாகும்).கொந்தளிக்கும்அலைகளுடனும் தத்தளிக்கும் ஜலஜந்துக்களுடனும் கூடின ஸமுத்திரத்தைப் பார்த்துக்கொண்டு, மஹாவிஷ்ணுவின் கரத்தால் பிரயோகிக்கப்பட்ட சக்ராயுதத்தைப்போல் அதிவேகமாய்ச் சென்றார். மலைகள், மரச் சோலைகள், ஏரிகள், ஆறுகள், தடாகங்கள், நகரங்கள், தேசங்கள், வனங்கள் முதலியவைகளைப்பார்த்துக்கொண்டே, ஆஞ்ஜநேயர் தன் பிதாவான வாயுபகவானைப்போன்ற வேகமுடையவராய், ஆகாச வீதியில் கொஞ்சம்கூட சிரமமில்லாமல் சென்றார். அவர் போகும் பொழுது உண்டான சப்தத்தால் திக்குகள் நிறைந்தன. ஜாம்பவானுடைய வார்த்தைகளை நினைத்துக்கொண்டு, ஓஷதிபர்வதத்தைத் தாண்டிப் போகக்கூடாதென்று தன் வேகத்தை வரவரக் குறைத்தார்.

கொஞ்சநேரத்திற்குள் ஹிமயபர்வதம் காணப்பட்டது. அநேக மலையருவிகளாலும் குகைகளாலும் வெளுத்த மேகக் கூட்டங்களைப் போன்ற சிகரங்களாலும் பலவகை விருக்ஷங்களாலும் அது விளங்கிற்று. அதன் சிகரங்களிலும் தாழ்வரைகளிலும் பரிசுத்தமான ஆசிரமங்களையும் அதில் வஸிக்கும் தேவரிஷி முதலியவர்களையும் கண்டார். சதுர்முகப்பிரஹ்மாவின் கிருஹம், கைலாஸம், இந்திரன் வஸிக்குமிடம், ருத்ரன் விளையாட்டாய் தன் பாணங்களை எய்யுமிடம், ஹயக்ரீவமூர்த்தியை ஆராதனம்செய்யும் ஸ்தலம், ருத்ரனால் அறுக்கப்பட்ட பிரஹ்மாவின் சிரஸ் விழுந்த இடம், ஸூரியனுக்கு ஒவ்வொரு மாதத்திலும் ஊழியம்செய்யும் கிராமணி முதலியவர்கள் இளைப்பாறுவதற்காக ஏற்பட்ட ஸ்தலங்கள், இந்திரன் பிரஹ்மாவிடத்திலிருந்து வஜ்ராயுதத்தைப் பெற்றவிடம், ஸூரியனைப்போல் ஜ்வலிக்கும் குபேரனுடைய வாஸஸ்தானம், சாயாதேவியைத் திருப்தி செய்வதற்காக விச்வகர்மா ஸூரியனைச் சாணைக்கல்லில் வைத்துக் கட்டி, அவருடைய கிரணங்களை அறுத்த ஸ்தானம், தேவதைகள் பிரஹ்மாவைத் தரிசிப்பதற்காக ஏற்பட்ட ஸிம்ஹாஸனம் (பிரஹ்மரிஷிகளுடைய வாஸஸ்தானங்களென்றும் சொல்லலாம்.), பரமசிவனுடைய தனுஸ் இருக்குமிடம், பாதாளலோகத்திற்குப் போகும் துவாரம், கைலாஸத்திற்கு ஸமீபத்தில் 'ஹிமவச்சிலா' என்ற ஒரு பெரிய பாறை, ரிஷபமென்ற ஓஷதிமலை, கிழக்கு திக்கிலுள்ள மேருபர்வதம், ஸகல உத்தம ஓஷதிகளின் பிரகாசத்தால் ராத்திரிகாலத்தில் விளங்கும் ஓஷதிபர்வதம் முதலியவைகளைக்



ஸ தம் ஸமுத்பாட்ய க3முத்பபாத வித்ராஸ்ய லோகாந் ஸஸுராஸுரேந்த்3ராந் |
ஸம்ஸ்தூயமாந: க3சரை ரநேகைர் ஜக3ாம வேக3ாத் க3ருடோ3க்3ர வேக3: ||
—யுத். 74ஸ - 71 சு.

தன் வாலை அதன் நடுவில் சுற்றி அதைப் பெயர்த்தெடுத்து, தேவாஸுரர்களும் ஸகலப்ராணிகளும் பயந்து நடுங்க, ஆகாசத்தில் ஸஞ்சரிக்கும் கணங்கள் கொண்டாட, கருடனைப்போல் அதிவேகமாய்த் திரும்பி வந்தார். (பக்கம் 291 பார்க்க)

கண்டார். மிகவும் ஆச்சரியமடைந்து அதிலேறித் தனக்கு வேண்டிய ஔஷதங்களைத் தேடவாரம்பித்தார். அநேக ஆயிரம் யோஜனை தூரம் தாண்டிவந்து, ஓஷதிபர்வதமெங்கும் ஜாக்கிரதையாய்த் தேடிப் பார்த்தும் அவைகளைக் காணாமல் கோபத்தால் கர்ஜித்தார். அந்த ஓஷதிகள் தங்களைக் கொண்டுபோக ஒருவன் வருவதையறிந்து மறைந்தன. அந்த அவமானத்தைப் பொறுக்காமல் கோபத்தால் கண்கள் சிவக்க, அந்தப் பர்வதத்தைப் பார்த்து, "ஓ! ரகுவீரனிடத்தில் விச்வாஸமாவதுபரிதாபமாவது வைக்காமல், இப்படி நான் வந்த காரியத்தைத் தடுப்பது உமக்கு உசிதமென்று தோன்றுகிறதா? இன்று என் புஜபலத்தால் நீர் பொடிப்பொடியாய் ஸ்வரூபமில்லாமல் நாசமடைவதைப் பார்ப்பீர்" என்று மரச்சோலைகள், மிருகங்கள், தாதுக்கள், சிகரங்கள், கொடிமுடிகள், தேவ கந்தர்வஸித்தசாரண கணங்கள் முதலியவர்களுடன் கூடின அந்த உத்தமபர்வதத்தைப் பிடித்து அதிவேகமாய் அசைத்துப்பிடுங்கினர். தன் வாலை அதன் நடுவில் சுற்றி அதைப் பெயர்த்தெடுத்து, தேவாஸுரர்களும் ஸகலப் பிராணிகளும் பயந்து நடுங்க, ஆகாசத்தில் ஸஞ்சரிக்கும் கணங்கள் கொண்டாட கருடனைப்போல் அதிவேகமாய்த் திரும்பி வந்தார். ஸூரியனுடைய தேஜஸால் விளங்கும் ஹனுமான் ஸூரியனைப்போல் ஜ்வலிக்கும் அந்தப் பர்வத சிகரத்தை ஸூரியவீதியில் கொண்டுவருகையில், ஸூரியனுடைய ஸமீபத்தில் விளங்கும் எதிர் ஸூரியனைப்போல் தோன்றி, ஆயிரம் முனைகளுடன் நெருப்புஜ்வாலைகளால் சூழப்பட்டு விளங்கும் சக்கராயுதத்தைப்போல், அந்த ஓஷதிபர்வதத்தைத் தூக்கிவரும் ஹனுமான் விளங்கினர்.

வானரர்கள்அவரைக்கண்டு பெருங்கூச்சலிட்டார்கள். அவரும் அவர்களைக்கண்டு ஜயத்வனி செய்தார். (ஓஷதிபர்வதம் வெகு தூரத்தில் வரும்பொழுது அதன் வாஸனையால் வானரர்கள் பிழைத்தெழுந்தார்களென்று தெரிகிறது). அதைக் கேட்டு லங்கையிலிருக்கும் ஜந்துக்கள் பயந்து பெரும் கூச்சலிட்டன. பிறகு ஆஞ்ஜநேயர் அந்த ஓஷதிபர்வதத்துடன் த்ரிகூடபர்வதத்தின் சிகரத்தில் குதித்தார். வானரசிரேஷ்டர்களால் தலைவணங்கி நமஸ்கரிக்கப்பட்டு, மாருதி விபீஷணனை வெகு பிரியத்துடன் ஆலிங்கனம் செய்துகொண்டார். ராமலக்ஷ்மணர்கள் அந்த ஓஷதிகளின் வாஸனையை முகர்ந்து, தேகத்தில் பதிந்திருந்த அம்புகளும் ஆயுதங்களும் உதிர, உபத்திரவம் நீங்கி எழுந்தார்கள். இறந்தவர்களும் காயப்பட்டவர்களும் காயங்கள் ஆறி உபத்திரவங்கள் நீங்கி, தூங்கி எழுந்தவர்களைப்போல் அதிகரித்த தேஜஸ்ஸுடனும் பலத்துடனும் கிளம்பினர்கள். லங்கையில் வானரர்களும் ராக்ஷஸர்களும் யுத்தம் ஆரம்பித்த காலம்முதல் இறந்தவர்களின் கணக்கு தனக்குத் தெரிவதற்காகவும் பிறர்க்குத் தெரியாமலிருப்பதற்காகவும், வானரர்களால் கொல்லப்பட்ட ராக்ஷஸர்களையும் சாகப்போகிறவர்களையும் ஸமுத்திரத்தில்

எறிந்துவிடும்படி ராவணன் உத்திரவு செய்தான். (ஓஷதிகளின் மஹிமையால் ராக்ஷஸர்களும் பிழைத்திருப்பார்களே என்பதற்கு ஸமாதானம்). இப்படி வாயுபுத்திரன் உத்தமமான ஓஷதிகள் வளரும் பர்வதத்தை மறுபடியும் முன்னிருந்த இடத்திற்குக் கொண்டுபோய் வைத்து, ராமனுடைய ஸமீபத்தில் வந்து சேர்ந்தார்.

தத்தோ ஹரிர் க$^{3}$ந்த$^{4}$வஹாத்மஜஸ்து
தமோஷதீ$^{4}$ ஸைல முத$^{3}$க்$^{3}$ரவீர்ய: |
நிநாய வேக$^{3}$ாத் ஹிமவந்தமேவ
புநஸ்ச ராமேண ஸமாஜக$^{3}$ாம || (79)

## ஸர்க்கம் 75
## லங்கையைக் கொளுத்தினது

தத்தோப்$^{3}$ரவீந் மஹாதேஜா: ஸுக்$^{3}$ரீவோ வானராதி$^{4}$ப: |
அர்த்$^{2}$யம் விஜ்ஞாபயம்ஸ் சாபி ஹநுமந்த மித$^{3}$ம் வச: || (1)

பிறகு வானராதிபதியான ஸுக்ரீவன் ராமனிடத்தில் தன் உத்தேசத்தைத் தெரிவித்து ஆஞ்ஜநேயரைப் பார்த்து, "கும்பகர்ணன் மடிந்தான். அதிகாயன் முதலிய ராஜகுமாரர்கள் கொல்லப்பட்டார்கள். ஆகையால் இனிமேல் ராவணன் யுத்தத்திற்கு வெளியில் வரும்படி நாம் இடம் கொடுக்கக்கூடாது. நமது ஸைன்யத்தில் பலவான்களும் வேகசாலிகளுமான வானரர்கள் தீவட்டிகளை எடுத்துக்கொண்டு லங்கையில் பிரவேசிக்கட்டும்" என்று ஆக்ஞாபித்தான்.

அப்படியே வானர வீரர்கள் ஸூரியன் அஸ்தமித்தவுடன் முதல் ஜாமத்தில் கோரமான இருட்டில், தீவட்டிகளுடன் நான்கு புறங்களிலிருந்தும் லங்கையில் நுழைந்து காவற்காரர்களை அடித்துத் துரத்தினார்கள். கோபுரங்களிலும், கோட்டை வாசல்களிலும், கோட்டைச் சுவர்களிலுள்ள வீடுகளிலும், வீதிகளிலும், சந்துகளிலும், மாளிகைகளிலும், நெருப்பு வைத்தார்கள். அநேக ஆயிரம் வீடுகள் ஒரு நிமிஷத்தில் சாம்பலாயின. மலைகளைப் போன்ற அரண்மனைகள் எரிந்து விழுந்தன. அவைகளிலுள்ள அகில், சந்தனம் முதலிய பரிமளத் திரவியங்கள் எரிவதாலுண்டான வாஸனை ஒரு பக்கத்திலும், ஜீவ ஜந்துக்கள் எரிவதாலுண்டான பிண நாற்றம் வேறொரு பக்கத்திலும் வீசின. அவைகளிலுள்ள முத்து, பவழம், வஜ்ரம் முதலிய ரத்தினங்களும், வெண்பட்டுகளும், கம்பளங்களும், பட்டுகளும், ஸுவர்ண பாத்திரங்களும், ஆயுதங்களும், குதிரைகளைச் சேர்ந்த பாத்திரங்களும், ஆபரணங்களும், யானைகளின் சங்கிலி அரைக்கச்சை முதலிய ஆபரணங்களும், ரதத்தின் அநேக



பாகங்களும் அலங்காரங்களும், வீரர்களும் யானை குதிரைகளும் தரிக்கும் கவசங்களும், கேடயங்களும், கத்தி, வில், நாண், அம்புகள், தோமரம், கோடாலி, சக்தி முதலிய ஆயுதங்களும், ஆடு செம்மறி இவைகளுடைய மயிரால் செய்யப்பட்ட நேர்த்தியான கம்பளங்களும், சாமரங்களும், விரிப்புகளும், புலித்தோல், மான்தோல் முதலியவைகளும், கஸ்தூரி முதலிய உத்தம பதார்த்தங்களும், முத்துகளாலும், ரத்னங்களாலும் அலங்கரிக்கப்பட்ட அரண்மனைகளும், ஆயுதக் குவியல்களும், விசித்திரமாய் அமைக்கப்பட்ட வீடுகளும், மிகுந்த ஐச்வரியமுள்ள ராக்ஷஸர்களின் வீடுகளும், தங்கக் கவசங்களும், மாலைகளும், ஹாரங்களும் அந்த அக்னியால் எரிக்கப்பட்டன.

மதுபானம் செய்து கண்கள் சுழன்றவர்களும், மதத்தால் தள்ளாடி நடப்பவர்களும், தங்களுடைய வஸ்திரங்களைப் பிடித்துக் கொண்டுவரும் ஸ்த்ரீகளால் பின் தொடரப்படுகிறவர்களும், வானரர்களால் கோபமூட்டப்பட்டுக் கண்கள் சிவந்தவர்களும், ரதி கேளியிலிருந்து அப்பொழுதே வெளியில் வந்தவர்களும், கதை சூலம் முதலிய ஆயுதங்களைத் தரித்தவர்களும், தின்று கொண்டிருந்தவர்களும், குடித்துக் கொண்டிருந்தவர்களும், ஸ்த்ரீகளுடன் நேர்த்தியான சயனங்களில் படுத்துக் கொண்டிருந்தவர்களும், பயந்தவர்களும், ஓடிக் கொண்டிருக்கிறவர்களும், குழந்தைகளைத் தூக்கிக் கொண்டு ஓடுகிறவர்களும், அநேக ஆயிரக்கணக்காய் அக்னி பகவானால் எரிக்கப்பட்டார்கள். சிரேஷ்டமான தனங்கள் நிறைந்து, விஸ்தாரமாயும், அழகாயும், வட்டமாயும் இன்னும் விசித்திர ரூபங்களுடனும் வீடுகளின் உச்சியில் கட்டப்பட்ட கிருஹங்கள் ஸூரியனை அளாவியிருந்தன. அவைகளில் வெள்ளியாலும் தங்கத்தாலும் செய்யப்பட்டு ரத்தினங்களாலிழைக்கப்பட்ட ஜன்னல்களும், முத்து, பவழம், நவரத்தினங்கள் முதலியவைகளால் அலங்கரிக்கப்பட்ட ஆஸனங்களும் படுக்கைகளும், மயில்கள், கிரௌஞ்சங்கள் முதலிய பக்ஷிகளுடைய சப்தங்களாலும் வீணை, வேணு, மிருதங்கம் முதலிய வாத்ய கோஷங்களாலும் விளங்கிக் கொண்டு, காந்தியால் அலைகளையுடைய ஸமுத்திரத்தைப்போல் பிரகாசித்தன; இவை யாவும் நெருப்புப் பிடித்து வெந்தன. நெருப்பு ஜ்வாலைகளால் சூழப்பட்ட வாசற்படிகள் வர்ஷா காலத்தில் மின்னல்கள் பாயும் நீருண்ட மேகத்தைப்போல் தோன்றின; மஹாபர்வதங்களுடைய சிகரங்கள் இந்திரனுடைய வஜ்ராயுதத்தால் அடிபட்டு விழுவதுபோல், சில மாளிகைகள் நெருப்புப் பிடித்துத் திடீரென்று பெரும் சப்தத்துடன் விழுந்தன. சில உப்பரிகைகளில் படுத்துத் தூங்கின உத்தம ஸ்த்ரீகள், ஆபரணங்களைக் கழற்றி எறிந்து ஹா! ஹா! என்று கதறிக் கொண்டிருந்தார்கள். ஹிமய பர்வதத்தின் சிகரங்கள் ராத்ரியில் அவைகளிலுள்ள ஓஷதிகளுடைய காந்தியால் ஜ்வலிப்பதுபோல், லங்கையில் தீப்பிடித்து

எரியும் உன்னதமான கிருஹங்கள் காணப்பட்டன. வீடுகள் ஜ்வாலைகளால் சூழப்பட்டு நெருப்புக் கொழுந்துகள் அங்குமிங்கும் விளையாடுகையில் அவை புஷ்பித்த பலாச விருக்ஷங்களைப்போல் காணப்பட்டன. யானைப் பாகர்களாலும் குதிரைப் பாகர்களாலும் கட்டவிழ்த்து விடப்பட்ட யானைகளும் குதிரைகளும், மஹாப் பிரளய காலத்தில் ஸமுத்திரம் கரை புரண்டு அதிலுள்ள ஜல ஜந்துக்கள் பயத்தால் மிரண்டு தத்தளிப்பதுபோல் தோன்றின. ஓரிடத்தில் ஒரு குதிரை கட்டைத் தெறித்துக்கொண்டு ஓடி வருவதைக் கண்டு ஒரு யானை பயந்தோடிற்று. ஓரிடத்தில் பயந்தோடும் யானையைக் கண்டு குதிரை ஓட்டம் பிடித்தது. சிவந்த நெருப்புக் கொழுந்துகளால் விளங்கும் லங்காநகரம் ஸமீபத்திலுள்ள ஸமுத்திர ஜலத்தில் பிரதிபிம்பிக்கவும், ஸமுத்திரம் சிவந்த ஜலமுடையதுபோல் தோன்றிற்று. ஒரு முகூர்த்தத்தில் வானரர்களால் கொளுத்தப்பட்ட அந்தப் பட்டணம், லோகங்கள் அழியும் ஸமயத்தில் அக்னியால் சூழப்பட்ட பூமண்டலத்தைப்போல் தோன்றிற்று. நெருப்பாலும் புகையாலும் சூழப்பட்டு, மூச்சுத் திணறிக் கதறும் ஸ்த்ரீகளின் கூக்குரல் பத்துயோஜனை தூரத்திற்கப்பால் கேட்கப்பட்டது. நெருப்பால் வெந்த தேகங்களுடன் சில ராக்ஷஸர்கள் வீடுகளிலிருந்து தப்பி பாய்ந்து வெளியில் வருகையில், வானரர்கள் சண்டை செய்து அவர்களைக் கொன்றார்கள். வானரர்களும் ராக்ஷஸர்களும் போட்ட கூச்சல்களால் பத்துத் திக்குகளும் ஸமுத்திரமும் பூமியும் நடுங்கின.

ராமலக்ஷ்மணர்கள் காயங்கள் ஆறிப் பலமும் தேஜஸும் விருத்தியடைந்து கொஞ்சம் கூடக் கலங்காமல் பிரசண்ட கோதண்டங்களை எடுத்தார்கள். ராமன் ராக்ஷஸர்களுடைய ஹிருதயம் பிளக்கும்படி நாணேற்றி டங்காரம் செய்தார். வேதத்திற் சொல்லியிருக்கும் லக்ஷணங்கள் பொருந்தின பினாகமென்ற தனுஸுடன் பரமசிவன் கோபத்தால் ஜ்வலிப்பதுபோல், கோதண்டபாணி விளங்கினார். ராமலக்ஷ்மணர்களுடைய நாணோசை வானரர் ராக்ஷஸர்கள் இவர்களுடைய சத்தத்தையும் விஞ்சி இருந்தது. இம்மூன்று சப்தங்களும் பத்துத் திக்குகளையும் பிளந்தன. ரகுவீரனுடைய வில்லிலிருந்து வெளிப்பட்ட பாணங்களால் லங்கையின் கைலாஸ சிகரங்களைப் போன்ற கோபுரங்கள் பொடியாகி பூமியில் விழுந்தன. உப்பரிகைகளிலும், கோபுரங்களிலும், கிருஹங்களிலும், ராமபாணங்கள் வந்து விழுவதைக் கண்டு ராக்ஷஸர்கள் அதிவேகமாய் யுத்தம் செய்யத் தயாரானார்கள். அவர்களுடைய ஸிம்ஹநாதங்களால் அந்த ராத்திரி வெகு கோரமாய்த் தோன்றிற்று.

"ராவணனுடைய அந்தப்புரத்தின் வாசலை மறைத்துக் கொண்டு யுத்தம் செய்யுங்கள். என் ஆக்ஞையை மீறுகிறவனை



அந்தவிடத்திலேயே கொல்லுங்கள்" என்று ஸுக்ரீவன் வானரர்களுக்குக் கட்டளையிட்டான். அப்படியே அவர்கள் ஜ்வலிக்கும் தீவட்டிகளுடன் அந்தப்புரத்தின் வாசலைச் சூழ்ந்து நிற்பதைப் பார்த்து, ராவணனுக்கு அடங்காக் கோபமுண்டாயிற்று. அவன் ரோஷத்தால் கைகால்களை உதறிக்கொண்டு முறிக்கையில் பத்துத் திக்குகளும் நடுங்கின. காலாக்னி ருத்ரனுடைய அவயவங்களில் விளங்கும் கோபம் உருவெடுத்து வந்ததுபோல் காணப்பட்டான். கும்பகர்ணனுடைய புத்திரர்களான கும்பனையும், நிகும்பனையும் அநேக ராக்ஷஸர்களுடன் யுத்தத்திற்கனுப்பினான். யூபாக்ஷன், சோணிதாக்ஷன், ப்ரஜங்கன், கம்பனனென்ற ராக்ஷஸத் தலைவர்களும் ராவணனுடைய உத்திரவால் யுத்தத்திற்குச் சென்றார்கள். "நீங்கள் இப்பொழுதே போய் வானர ஸைன்யத்தை ஜயித்துச் சீக்கிரமாய்த் திரும்பி வாருங்கள்" என்று அந்த மஹா பலவான்களான ராக்ஷஸர்களைப் பார்த்து ராவணன் கட்டளையிட, அவர்கள் ஜ்வலிக்கும் ஆயுதங்களுடன் வீரத்வனிகளையும் ஸிம்ஹநாதங்களையும் அட்டஹாஸங்களையும் செய்துகொண்டு நகரத்திலிருந்து வெளிக் கிளம்பினார்கள். அவர்களுடைய ஸ்வபாவமான தேஜஸாலும், ஆபரணங்களின் காந்தியாலும், அக்னிஜ்வாலைகளாலும் ஆகாசமெங்கும் பிரகாசித்தது. அதற்குள் சந்திரோதயமாயிற்று. சந்திரகாந்தியும் நக்ஷத்திரங்களின் ஒளியும் இருஸைன்யங்களும் அணிந்த ஆபரணங்களின் பிரகாசமும் ஆகாசத்தின் இருட்டைப் போக்கின. சந்திரிகையாலும் ஆபரணகாந்தியாலும் எரியும் வீடுகளாலும் இரு ஸைன்யமும் நடுப்பகல்போல் தெளிவாய்க் காணப்பட்டன. ஆகாசத்தையளாவி எரியும் கிருஹங்களின் வெளிச்சத்தால், பாதாளம் வரையில் ஆழமுள்ள ஸமுத்திரம் கொந்தளிக்கும் அலைகளுடன் விசேஷ அழகு பொருந்தியிருந்தது. காற்றில் ஆடிக்கொண்டிருக்கும் கொடிகளாலும், மத்ஸ்யம் முதலிய ஜந்துக்களால் அலங்கரிக்கப்பட்ட த்வஜங்களாலும் கத்தி, கோடாலி, சூலம், கதை, எறியீட்டி, வல்லயம் முதலிய ஆயுதங்களாலும், ரதகஜதுரக பதாதிகளாலும், ஸுவர்ண ஆபரணங்களாலும், மணிகளின் நாதத்தாலும், தங்கக் கவசங்கள் பூண்ட புஜங்களால் விசித்திரமாய்ச் சுழற்றப்படும் ஆயுதங்களிலிருந்து பிரகாசிக்கும் ஒளியாலும், நாணில் வைத்திழுக்கப்பட்ட பாணங்களின் ஜ்வாலைகளாலும், பரிமளத் திரவியங்களிலிருந்தும் பலவகைப் புஷ்பஹாரங்களிலிருந்தும் சிரேஷ்டமான மதுபானங்களிலிருந்தும் வாஸனையை கிரஹித்துக்கொண்டு வீசும் காற்றாலும், கோர ரூபங்களையுடைய சூரர்களாலும், ஸமுத்திரத்தைப்போல் கம்பீரமாய்க் கேட்கப்படும் இரு ஸைன்யத்தின் வீரத்வனிகளாலும் சோபித்துக் கொண்டு ராக்ஷஸ ஸேனை கரைபுரண்டு வருவதைக் கண்டு, வானர ஸைன்யம் ஸந்தோஷத்தால் ஒருதடவை கலங்கிப் பெருங் கூச்ச

விட்டது. பிறகு அதிவேகமாய்த் தாவி, விளக்குப் பூச்சிகள் நெருப்பில் விழுவதுபோல் அந்த ராவண ஸைன்யத்தின்மேல் வந்து விழுந்தது. தங்களுடைய புஜங்களால் இடைவிடாமல் சுழற்றியெறியப்பட்ட ஆயுதகாந்தியால் ராக்ஷஸஸைன்யம் அதிகமாய் விளங்கிற்று.

வானரர்கள் பைத்தியம் பிடித்து மெய்மறந்தவர்களைப்போல் அவர்களின்மேல் பாய்ந்து மரங்களாலும், மலைகளாலும் முஷ்டிகளாலும் அடித்துத் தள்ளினார்கள். ராக்ஷஸர்கள் ஓயாமல் கூர்மையான கத்திகளால் வானரர்களுடைய தலைகளை அறுத்துத் தள்ளிப் பயங்கரமாய்க் கர்ஜித்தார்கள். வானரர்களால் கடித்துக் கிழிக்கப்பட்ட காதுகளுடனும் முஷ்டிகளால் பிளந்த தலைகளுடனும் பாறைகளாலொடிந்த அவயவங்களுடனும் ராக்ஷஸர்கள் கூட்டம் கூட்டமாய்த் தரையில் விழுந்தார்கள். அப்படியே அநேக வானர வீரர்கள் வேகசாலிகளான ராக்ஷஸர்களால் அடித்துத் தள்ளப்பட்டார்கள். ஒருவன் வேறொருவனை அடித்துக் கொண்டிருக்கையில் அவனை மற்றொருவன் அடித்துத் தள்ளினான். ஒருவன் மற்றொருவனை நிந்தித்துக்கொண்டிருக்கையில் மற்றொருவன் அவனை நிந்தித்தான். ஒருவன் வேறொருவனை கடித்துக் கொண்டிருக்கையில் மற்றொருவன் அவனை கடித்தான். 'கொடு, கொடுக்கிறான், கொடுக்கிறேன், ஏன் என்னை உபத்திரவப்படுத்துகிறாய்? அடிக்காதே, ஓடாதே, நில்' என்ற சப்தங்கள் அடிக்கடி கேட்கப்பட்டன. வஸ்திரங்கள் அவிழ்ந்து ஆயுதங்கள் நழுவின. ஈட்டி, சூலம் முதலியவைகளை உயரத் தூக்கிக்கொண்டு ஓடிவரும் சிலரும், அங்குமிங்கும் கலந்து அந்த யுத்த பூமி வெகு கோரமாயிருந்தது. ராக்ஷஸர்கள் வானரர்களையும், வானரர்கள் ராக்ஷஸர்களையும் கூட்டம் கூட்டமாய் அடித்துத் தள்ளினார்கள். தலைமயிர் அவிழ்ந்து வஸ்திரங்கள் நழுவி, கொடிகளறுந்து, த்வஜங்களொடிந்து, கவசங்கள் பிளந்து சிதறியோடும் ராக்ஷஸ ஸைன்யத்தை வானரர்கள் மடக்கிக்கொண்டு யுத்தம் செய்தார்கள்.

விஸ்ரஸ்த கேஶவஸநம் வித்$^{4}$வஸ்த கவசத்$^{4}$வஜம் |
ப$^{3}$லம் ராக்ஷஸமாலம்ப்$^{3}$ய வாநரா: பர்யவாரயந் ‖ (70)

## ஸர்க்கம் 76

## கும்பனுடைய வதம்

ப்ரவ்ருத்தே ஸங்குலே தஸ்மிந் கோ$^{4}$ரே வீரஜநக்ஷயே |
அங்க$^{3}$த$^{3}$ம் கம்பநோ வீரம் ஆஸஸாத$^{3}$ ரணோத்ஸுக: ‖ (1)

இப்படி இருதிறத்தாரும் கோரமாய் மடியும்போது, அங்கதன் கம்பனனென்ற ராக்ஷஸனைக் குறிப்பிட்டு யுத்தம் செய்ய ஆரம்பித்தான். அந்த ராக்ஷஸன் அவனை வா என்றழைத்து, அதி



கோபத்துடன் தன் கையிலிருந்த கதையைச் சுழற்றி அங்கதனைத் தலையிலடித்தான். வாலிபுத்திரன் அந்த வேகத்தால் நடுங்கிப் பிரக்ஞையற்று, சற்றுத்தெளிந்து ஒரு மலைச்சிகரத்தைப் பிடுங்கி, கம்பனனுடைய மார்பில் விட்டெறிந்தான். அதனால் மார்பு பிளந்து, கம்பனன் உயிரிழந்து பூமியில் விழுந்தான்.

அதைக்கண்டு சோணிதாக்ஷன் கொஞ்சம்கூடப் பயப்படாமல் அங்கதன்மேல் தன் ரதத்தை நடத்தி, கூரான பாணங்களாலும் க்ஷுரம், அர்த்தசந்திரம், நாராசம், வத்ஸதந்தம், கர்ணி, அர்த்த நாராசம், விபாடம் முதலிய பாணங்களாலும், பிரளய காலாக்னியின் ஜ்வாலைகளைப்போல் அந்த வானர வீரனுடைய அவயவங்களைத் துளைத்தான். அதனால் கடுங்கோபம் கொண்டு அங்கதன் சோணிதாக்ஷனுடைய வில்லையும், ரதத்தையும், பாணங்களையும் நொறுக்கினான். உடனே அந்த ராக்ஷஸன் கத்தியையும் கேடயத்தையும் எடுத்துக்கொண்டு ஆகாசத்தில் தாவி, அதிவேகமாய் அங்கதனை நோக்கி வந்தான். அதைக்கண்டு அந்த வானரன் அவனுடைய கையிலிருந்த கத்தியைப் பிடுங்கிக்கொண்டு, கேடயத்தையும் அந்த ராக்ஷஸனுடைய தேகத்தையும் யக்ஞோபவீதம் தரித்ததுபோல் அதிசாதுரியமாய் ஒரே வெட்டால் துண்டித்தான். பிறகு அந்த கத்தியை எடுத்துக்கொண்டே இதர ராக்ஷஸ வீரர்களை எதிர்த்து, அடிக்கடி ஸிம்ஹநாதத்தால் அவர்களுடைய ஹிருதயங்களை நடுங்கச் செய்தான். அப்பொழுது சோணிதாக்ஷன் ஓர் இரும்புக்கதையைச் சுழற்றிக்கொண்டு அங்கதன்மேல் பாய்ந்தான். பிரஜங்கனும், யூபாக்ஷனும் தங்களுடைய ரதங்களை நடத்தி வாலி புத்திரனை மறித்தார்கள். விசாகநக்ஷத்திரங்களுக்கு நடுவில் விளங்கும் சந்திரனைப்போல் அந்த வானராதிபதி பிரஜங்கனுக்கும் சோணிதாக்ஷனுக்கும் நடுவில் விளங்கினான். அவனுக்கு ஸஹாயமாயிருந்த அவனுடைய மாமன்களான மைந்தனும், த்விவிதனும் இரு பக்கத்திலும் நின்றுகொண்டு தங்களுக்கு ஸமமான ராக்ஷஸ வீரர்களை தேடிக்கொண்டிருந்தார்கள். அதைக் கண்டு மலைபோன்ற தேகங்களையும் அளவற்ற பலத்தையும் உத்ஸாஹத்தையுமுடைய ராக்ஷஸர்கள் கத்தி, கேடயம், கதைகளுடன் அவர்களை எதிர்த்தார்கள். அப்பொழுது சோணிதாக்ஷன், யூபாக்ஷன், ப்ரஜங்கன் என்ற மூன்று ராக்ஷஸர்களுக்கும் அங்கதன் மைந்தன் த்விவிதன் என்ற வானர வீரர்களுக்கும் கோர யுத்தம் உண்டாயிற்று. வானரர்களால் விட்டெறியப்பட்ட விருக்ஷங்களை பிரஜங்கன் கத்தியால் வெட்டித் தள்ளினான். மரங்களாலும், மாலைகளாலும் ரதங்களையும் குதிரைகளையும் வானரர்கள் அடிக்க, அவைகளைப் பாண வருஷங்களால் யூபாக்ஷன் பொடி செய்தான். மைந்த த்விவிதர்கள் எறிந்த பெரிய விருக்ஷங்களைச் சோணிதாக்ஷன் கதையால் நடுவில் அடித்து ஒடித்தெறிந்தான். பிறகு பிரஜங்கன் ஒரு பெரிய கத்தியை உருவிச் சுழற்றிக்

கொண்டு வாலி புத்திரனைக் கொல்வதற்காக ஓடி வந்தான். அங்கதன் அவன் ஸமீபத்தில் வரும் வரையில் பொறுத்திருந்து அச்வகர்ணமென்ற ஒரு விருக்ஷத்தைப் பிடுங்கி, தன் பூர்ண பலத்துடன் அடித்தான். விரல்களை மடக்கிக்கொண்டு கத்தியைப் பிடித்துக் கொண்டிருந்த புஜத்தில் குத்தினான். உடனே அந்தக் கத்தி நழுவி, பூமியில் விழுந்தது. அதைக் கண்டு பிரஜங்கன் வஜ்ரத்தைப் போன்ற தன் முஷ்டியால் அந்த வானரசிரேஷ்டனை நெற்றியில் குத்தினான். அந்த வேகத்தால் அங்கதன் சற்று நேரம் நடுங்கித் திகைத்தான். பிறகு தன் பலத்தையும் தேஜஸையும் விருத்தி செய்துகொண்டு பிரஜங்கனுடைய சிரஸை அவனுடைய கத்தியால் அறுத்துப் பூமியில் தள்ளினான்.

தன் தகப்பனுடன் பிறந்த பிரஜங்கன் இறந்ததைக் கண்டு யூபாக்ஷன் கண்ணீர்விட்டு ரதத்திலிருந்து இறங்கி, அம்பறையில் பாணங்களற்றதால் கத்தியைச் சுழற்றிக்கொண்டு அங்கதன்மேல் பாய்ந்தான். அதைக் கண்டு த்விவிதன் அவனை மார்பில் அறைந்து இழுத்துத் தள்ளினான். தன் ஸகோதரன் பிடிபட்டதைக் கண்டு சோணிதாக்ஷன் த்விவிதனைக் கதையால் மார்பில் பூர்ணபலத்துடன் அடித்தான். த்விவிதன் மஹாபலவானானாலும் சற்று கலங்கி, பிறகு அவன் மறுபடியும் கதையைத் தூக்குவதைக் கண்டு, வெகு லாகவத்துடன் அதைப் பிடுங்கிக்கொண்டான். அதற்குள் மைந்தன் யூபாக்ஷனை மார்பில் ஓங்கியறைந்தான். சோணிதாக்ஷ யூபாக்ஷர்களும் மைந்த த்விவிதர்களும் ஒருவரை யொருவர் இழுத்துத் தள்ளி வாரி யெறிந்து கோர யுத்தம் செய்தார்கள். த்விவிதன் சோணிதாக்ஷனை முகத்தில் நகங்களால் கீறிப் பூமியில் இழுத்துத் தள்ளி அதிவேகமாய்த் தேய்த்தான். மைந்தன் யூபாக்ஷனைப் புஜங்களால் இறுக்கிக் கட்டிப் பூமியில் தள்ளினான். அதைக் கண்டு ராக்ஷஸ ஸைன்யம் திகிலடைந்து, தைரியமற்றுக் கும்பகர்ணனுடைய புத்திரர்களிருக்குமிடத்திற்கு ஓடிற்று.

கும்பன் அவர்களை ஸமாதானம் செய்து, ராக்ஷஸ வீரர்கள் மடிந்ததையும் வானரர்கள் தடையற்று ராக்ஷஸர்களைத் துரத்திக் கொல்வதையும் கண்டு, யுத்தகளத்திற் புகுந்து அத்புதமான வீர கிருத்யங்களைச் செய்தான். வில்லை வளைத்து நாணேற்றி வெகு ஜாக்கிரதையாய்க் காலஸர்ப்பங்களைப் போன்ற பாணங்களால் வானரர்களைச் சிதறவடித்தான். உத்தமமான பாணங்கள் பூட்டின அவனுடைய வில்லானது மின்னற் கொடியோடும் ஐராவதமென்ற நீண்ட இந்திர வில்லோடும் விளங்கும் இந்திரதனுஸைப்போல் தோன்றிற்று. (மின்னற் கொடி நாண்கயிற்றுக்கும், ஐராவதம் பாணத்திற்கும், இந்திர தனுஸ் வில்லிற்கும் உபமானங்கள். ஐராவதம் நீண்டிருக்கும். இந்திரதனுஸ் வளைந்திருக்கும். தேசங்களுக்குப் பெரிய ஆபத்துகள் நேரும் காலத்தில் ஐராவதம் இந்திர வில்லுடன் காணப்படும்.) இப்படித் தனுஸை வளைத்து காது வரையில் நாணை இழுத்துத் தங்கக் கட்டுகளாலும் கழுகிறகுகளாலும் அலங்கரிக்கப்பட்ட ஒரு பாணத்தை த்விவிதன்மேல் பிரயோகித்தான். அந்த வானரன் கைகால் நடுங்கித் தள்ளாடிப் பர்வதசிகரத்தைப்போல் அசைந்து விழுந்தான். அதைக் கண்டு மைந்தன் ஒரு பெரும் பாறையைத் தூக்கிக்கொண்டு ஓடிவந்து கும்பன்மேல் விட்டெறிந்தான். அந்த ராக்ஷஸ வீரன் அதை ஐந்து பாணங்களால் பொடி செய்து, வேறொரு சிரேஷ்டமான சரத்தால் மைந்தனை மார்பிலடித்தான். உயிர் நிலைகள் பிளந்து, மைந்தன் மூர்ச்சையடைந்து பூமியில் விழுந்தான்.

தன் மாமன்கள் அடிபட்டதைக் கண்டு அங்கதன் கும்பன்மேல் பாய, அவனை இரும்பாற் செய்த ஐந்து பாணங்களால் கும்பன் தடுத்து, மதம்கொண்ட யானையை அங்குசத்தால் அடக்குவதுபோல் வேறு மூன்று பாணங்களால் அசையாமல் நிறுத்தினான். பிறகு, தடையற்ற வேகமுள்ள சில பாணங்களால் அவனுடைய அவயவங்களைத் துளைத்தான். அந்த வாலிபுத்திரன் அவைகளைச் சற்றும் லக்ஷ்யம் செய்யாமல், கலங்காமல் பாறைகளையும், மலைகளையும், மரங்களையும் கும்பனுடைய தலையில் சொரிந்தான். கும்பகர்ணனுடைய புத்திரன் அவைகளைத் தன் பாணங்களால் அறுத்துத்தள்ளிப் பொடி செய்தான். அங்கதன் தன்மேல் பாய்வதைக்கண்டு, ராத்திரிகாலத்தில் யானையைக் கொள்ளிக்கட்டைகளால் மிரட்டித் திருப்புவதுபோல, இரண்டு பாணங்களால் வாலி புத்திரனுடைய புருவங்களுக்கு நடுவில் அடித்தான். ரத்ததாரைகள் பெருகிக் கண்களை மறைத்தன. அங்கதன் ஒரு கையால் நேத்திரங்களை மறைத்துக்கொண்டு, மற்றொரு கையால் ஸமீபத்திலிருந்த ஓர் ஆச்சாமரத்தைப் பிடுங்கி மார்பிலும் தோளிலும் அணைத்துக் கொண்டு, சற்றுக்குனிந்து அதிவேகத்துடன் கும்பன்மேல் விட்டெறிந்தான். இந்திரத்வஜத்தைப்போலும் மந்திரபர்வதத்தைப் போலும் அந்த விருக்ஷம் தன்னை நோக்கிவருவதைக்கண்டு, கும்பன் தீக்ஷ்ணமான ஏழு பாணங்களால் அதைத் துண்டித்து அங்கதனைப் பிளந்தான்.

அந்த வானரவீரன் மிகவும் வருந்திக் கலங்கி மூர்ச்சையடைந்தான். ஸமுத்திரத்தில் பெருங்காற்றால் முழுகும் கப்பலைப்போல் அங்கதனென்ற வானரசிரேஷ்டன் அடிபட்டு விழுந்ததைக்கண்டு சிலர் ராமனிடத்திலோடி, "ஸ்வாமி! சத்ருக்களால் நெருங்க முடியாத வாலிபுத்திரன் அடித்துத் தள்ளப்பட்டான்" என்று தெரிவித்தார்கள். உடனே ரகுவீரன் தன் ஸமீபத்திலிருந்த வானர வீரர்களை, "நீங்கள் போய் அங்கதனுக்கு உதவி செய்யுங்கள்" என்று கட்டளையிட, அவர்கள் கோபபரவசமாய்க் கும்பனை வளைத்துக்கொண்டார்கள். ஜாம்பவானும் ஸுஷேணனும் வேக

தர்சியும் கோபத்தால் கண்கள் சிவந்து மரங்களையும், மலைகளையும் தூக்கிக்கொண்டு தன்மேல் பாய்வதைக்கண்டு, அதிவேகமாய் ஓடி வரும் காட்டாற்றை ஒரு பெரிய மலை தடுப்பதுபோல் பாணவர்ஷங்களால் அவர்களைத் தடுத்தான். ஸமுத்திரம் கரைதாண்ட முடியாததுபோல், அந்த பிரஸித்தமான வானர வீரர்களுக்கு அவனுடைய பாண வரிசையைத் தாண்டி முன்செல்ல முடியவில்லை.

அதைக்கண்டு வானராதிபதியான ஸுக்ரீவன் தன் தமயனுடைய புத்திரனைப் பின்னால் தள்ளிவிட்டுக் கும்பன்மேல் பாய்ந்து, மலையில் ஸஞ்சரிக்கும் யானையைப் பார்த்து ஆண் சிங்கம் கர்ஜிப்பதுபோல் ஸிம்ஹநாதம் செய்தான். பிறகு அநேக விருக்ஷங்களை வேருடன் பெயர்த்தெடுத்துக் கும்பன்மேல் விட்டெறிந்தான். அவை ஆகாசத்தையும் பூமியையும் மறைத்துக்கொண்டு வருவதைக் கண்டு, கும்பன் கூரான பாணங்களால் அவைகளைக் கண்டதுண்டம் செய்து வெட்டவெளியாக்கினான். அந்தத் துண்டங்கள் அவைகளில் பதிந்த பாணங்களுடன் இரும்பு முளைகள் நாட்டப்பட்ட சதக்னியென்ற ஆயுதங்களைப்போல் பூமியில் நான்கு புறங்களிலும் விழுந்தன. அதைக் கண்டு ஸுக்ரீவன் கலங்காமல் அந்தப் பாணவர்ஷத்தையும் பொறுத்துக்கொண்டு, கும்பனுடைய வில்லைத் தாவிப் பிடுங்கியொடித்தான். தந்தங்களொடிந்த யானையைப்போல் நிற்கும் கும்பனைப் பார்த்து அதிக கோபத்துடன், “நிகும்பனுக்குத் தமயனான ராக்ஷஸவீர! உன் பராக்கிரமமும் பாணவேகமும் ஆண்மையும் யுத்தப்பயிற்சியும் வினயமும் ஆச்சரியகரமாயிருக்கின்றன. நீ ஸகலவிதத்திலும் ராவணனுக்கு ஸமானன். பிரஹ்லாதன், பலி, விருத்திரன் முதலியவர்களை ஜயித்த இந்திரனுக்கும் குபேரனுக்கும் வருணனுக்கும் நிகரானவனே! நீ ஒருவனே உன் பிதாவான கும்பகர்ணனுக்குப் பலத்தில் ஒப்பானவன். மஹா பராக்கிரமசாலியான நீ வில்லை வளைத்து நாண் ஒலிசெய்து யுத்தகளத்தில் நின்றால், இந்திரியங்களை ஸ்வாதீனப்படுத்தினவனை மனக் கவலைகள் நெருங்காததுபோல் தேவதைகள் உன்னை அண்ட முடியாது. மஹா புத்திமானே! உன் யுத்தத்திறமையை காட்டு. நான் பார்த்து ஸந்தோஷிக்கிறேன். தேவாஸுரர்களை உன் பிதாவான கும்பகர்ணன், ஸ்வபாவ வீரியத்தாலும் உன் பெரிய தகப்பனான ராவணன் வரங்களின் மஹிமையாலும் ஜயித்து வந்தார்கள். வில்லாளிகளுக்குள் நீ இந்திரஜித்தைப் போன்றவன்; பிரதாபத்தில் ராவணனையொத்தவன். பலத்தாலும் வீரியத்தாலும் இப்பொழுது ராக்ஷஸர்களுக்குள் சிகாமணியாய் விளங்குகிறாய். முன் இந்திரனுக்கும் சம்பராஸுரனுக்கும் நடந்த யுத்தத்தைப்போல் இன்று உனக்கும் எனக்கும் நடக்கும் கோரயுத்தத்தை ஸகலப் பிராணிகளும் பார்த்து ஆச்சரியப்படப்போகின்றன. பிறருக்கு அஸாத்தியமான வீரகிருத்யங்களை இன்று செய்தாய். அஸ்திர சஸ்த்ர வித்யையில் உன் திறமையைக் காட்டினாய். பயங்கரமான பராக்கிரமமுள்ள வானர சிரேஷ்டர்களை அடித்துத் தள்ளினாய். அநேக வீரர்களுடன் யுத்தம் செய்து களைத்திருந்தவனை அடித்துக் கொன்றானென்ற அபவாதத்திற்குப் பயந்து நான் உன்னைக் கொல்லவில்லை. ஆகையால் நீ சற்று இளைப்பாறு. நானும் சிரமபரிஹாரம் செய்து கொள்கிறேன். பிறகு என் பலத்தைப் பார்” என்றான்.

இப்படி அவனை மரியாதை செய்வதுபோன்ற வார்த்தைகளால் ஸுக்ரீவன் அவமானப்படுத்தினதைக் கேட்டுப் பொறுக்காமல், கொழுந்து விட்டெரியும் அக்னியில் நெய்யை ஆஹுதி செய்தது போல் அவனுடைய தேஜஸும் கோபமும் விருத்தியடைந்தன. பிறகு கும்பன் ஸுக்ரீவனைப் புஜங்களால் பிடித்து இறுக்கிக் கட்டினான். இரண்டு மதயானைகள் ஒன்றையொன்று எதிர்த்தது போல் அவ்விருவரும் அடிக்கடி பெருமூச்சு விட்டுக்கொண்டு, அவயவங்களைப் பின்னிக்கொண்டு இழுத்துத் தள்ளினார்கள். சிரமத்தால் இருவருடைய முகத்திலிருந்தும் புகையும் ஜ்வாலைகளும் வெளிப்பட்டன. அவர்களுடைய கால்களால் அடிபட்டுப் பூமி அழுந்திற்று. ஸமுத்திரம் அலைகளால் கொந்தளித்தது. ஸுக்ரீவன் கும்பனைத் தூக்கி, “ஸமுத்திரத்தின் அடியைப் போய்ப் பார்” என்று விட்டெறிந்தான். (நூறுயோஜனை விஸ்தீர்ணமுள்ள த்ரிகூடத்தின் நடுவிலிருந்து கும்பனை லங்கா த்வீபத்தைத் தாண்டி ஸமுத்திரத்தில் விட்டெறிந்த ஸுக்ரீவனுடைய பலம் எல்லையற்றது—ராமாநுஜீயம்.) கும்பனுடைய தேகம் விழுந்த அதிர்ச்சியால் விந்தியம் மந்திரம் முதலிய பர்வதங்களைப்போல் ஸமுத்திர ஜலம் கிளம்பி நான்கு புறத்திலும் பரவிற்று. பிறகு கும்பன் அங்கிருந்து கிளம்பி ஸுக்ரீவனுடைய மார்பில் வஜ்ரம் போன்ற முஷ்டியால் குத்தினான். அந்த வானர வீரனுடைய தோல் பிளந்து ரத்த தாரைகள் பெருகின. கும்பனுடைய முஷ்டி அவனுடைய மார்பெலும்பில் பட்டுத் தடைப்பட்டது. மேரு மலையின் சிகரம் வஜ்ரத்தால் அடிபட்டதுபோல் அந்த வேகத்தால் ஜ்வாலைகளுடன் அடிக்கடி தேஜஸ் கிளம்பிற்று. ஸுக்ரீவன் மஹாபலவானானதால் அதை லக்ஷ்யம் செய்யாமல், விரல்களை மடக்கிக்கொண்டு, ஸூரிய கிரணங்களால் சூழப்பட்ட ஆதித்ய மண்டலத்தைப் போன்ற முஷ்டியைச் சுழற்றிக் கும்பனை மார்பில் அடித்தான். அந்த அடியால் வருந்தி, இந்திரியங்கள் கலங்கி, அணைந்த நெருப்பைப்போல் கும்பன் பூமியில் விழுந்தான். அவன் விழுந்தது, அங்கதன் தன் ஜ்வலிக்கும் கிரணங்களுடன் ஆகாச வீதியிலிருந்து பூமியில் விழுவது போலிருந்தது. ஸுக்ரீவனுடைய முஷ்டியால் மார்பு பிளந்து எலும்புகள் ஒடிந்து கும்பன் பூமியில் விழும்பொழுது, ருத்திர மூர்த்தியால் ஆக்கிரமிக்கப்பட்ட ஸூரியனைப்போலிருந்தான். இப்படி மஹா பராக்கிரமசாலியான வானராதிபதி கும்பனை

அடித்துக் கொன்றபொழுது, பூமியும் அதிலுள்ள பர்வதங்களும், வனங்களும் நடுங்கின; ராக்ஷஸர்களுக்கு அளவற்ற பயமுண்டாயிற்று.

தஸ்மிந் ஹதே பீ4மபராக்ரமேண
ப்லவங்க3மாநா ம்ருஷபே4ண யுத்3தே4 |
மஹீ ஸஶைலா ஸவநா சசால
ப4யம் ச ரக்ஷாம்ஸ்யதி4கம் விவேஶ ‖ (94)

---

## ஸர்க்கம் 77

## நிகும்பனுடைய வதம்

---

நிகும்போ4 ப்4ராதரம் த்3ருஷ்ட்வா ஸுக்3ரீவேண நிபாதிதம் |
ப்ரத3ஹந்நிவ கோபேந வாநரேந்த்3ர மவைக்ஷத ‖ (1)

தன் ஸஹோதரன் ஸுக்ரீவனால் மடிந்ததைக் கண்டு, நிகும்பன் கோபத்தால் எரித்துவிடுபவன்போல் அந்த வானராதிபதியைப் பார்த்தான். பிறகு மாலைகளாலும் ஹாரங்களாலும் அலங்கரிக்கப்பட்டுச் சந்தனம் குங்குமம் முதலியவைகளின் அடையாளத்தால் ஐந்துவிரல்களும் பதிந்தபிடியையுடையபர்வதசிகரத்தையொத்த ஒரு பரிகத்தை எடுத்தான். அது தங்கக் கட்டுகளாலும், வஜ்ரங்களாலும், முத்துக்களாலும் அலங்கரிக்கப்பட்டிருந்தது. யமதண்டத்தைப்போல் பயங்கரமாய், ராக்ஷஸர்களுடைய பயத்தை நாசம் செய்து உத்ஸாஹத்தைக் கொடுத்தது. இந்திரத்வஜம் போன்ற அந்த ஆயுதத்தைச் சுழற்றிக்கொண்டு, பெரும் வாயைத் திறந்து, திக்குகள் நடுங்கும்படி கர்ஜித்தான். மார்பிலணிந்த தங்க ஹாரங்களாலும், புஜங்களில் தரித்த தோள் வளைகளாலும், காதுகளில் விளங்கும் குண்டலங்களாலும், கையில் ஜ்வலிக்கும் பரிகாயுதத்தாலும் இந்திர வில்லோடும் மின்னற்கொடிகளோடும் கூடின மேகம் கர்ஜிப்பது போல் தோன்றினான். அந்த ஆயுதத்தின் நுனியால் வாயுமண்டலத்தைப் பிளந்தான். புகையற்ற நெருப்பைப் போல் ஜ்வலித்தான். கந்தர்வர்களுடைய மாளிகைகளில் சோபிக்கும் அளகாபுரியும், தேவர்களுடைய அரண்மனைகளால் விளங்கும் அமராவதியும், அச்வினி முதலிய நக்ஷத்திர கணங்களும், புதன் முதலிய கிரஹங்களும், இதர நக்ஷத்திரங்களும், சுக்ரன் முதலிய மஹாக்ரஹங்களும், நிகும்பன் பரிகாயுதத்தைச் சுழற்றுவதாலுண்டான காற்றால் சுழல்வது போலிருந்தன. அந்த ஆயுத காந்தியால் ஜ்வலித்துக்கொண்டு பிறர் நெருங்க முடியாமல் நிகும்பனென்ற பிரளயாக்னி வானரர்களை ஸம்ஹரிப்பதற்காகக் கிளம்பிற்று. ராக்ஷஸர்களும், வானரர்களும் பயத்தால் அசைவற்று நின்றார்கள். "மஹா பலவான்களான பிரஜங்கன் முதலியவர்கள் கொல்லப்பட்டிருக்கையில் பலமற்ற நீங்கள் ஏன் யுத்தத்திற்கு வந்தீர்கள்" என்று நிகும்பன் கோபிப்பானென்று ராக்ஷஸர்களுக்குப் பயமுண்டாயிற்று. ஆஞ்ஜநேயர் மாத்திரம் தனது விஸ்தாரமான மார்பை அவனுக்கெதிரில் காட்டிக்கொண்டு நின்றார். பரிகாயுதத்தைப் போன்ற புஜத்தால் நிகும்பன் அந்தப் பரிகாயுதத்தைச் சுழற்றிப் பூர்ண பலத்துடன் பலத்திற்கு இருப்பிடமான மாருதியின் மார்பில் அடித்தான். அது வஜ்ரம் போன்ற அவருடைய அகன்ற மார்பில் பட்டு முறிந்து, ஆகாசத்திலிருந்து எரிகொள்ளிகள் விழுவது போல் பூமியில் விழுந்தது. பூகம்பத்தால் மலை நடுங்குவது போல் வாயுபுத்திரன் அந்த அடியால் சற்று நடுங்கினார். பிறகு விரல்களை மடக்கிக்கொண்டு அதிவேகமாய் நிகும்பனுடைய மார்பில் குத்தினார். அந்த ராக்ஷஸனுடைய தோல் கிழிந்து, ரத்த தாரைகள் பெருகி, மின்னல் போன்ற ஜ்வாலைகள் கிளம்பின.

நிகும்பன் கலங்கிப் பிறகு தைரியப்படுத்திக்கொண்டு ஹனுமானைக் கட்டிப் பிடித்தான். அதைக் கண்டு லங்கையில் வஸிப்பவர்கள், "பலவானான ஹனுமான் நமது நிகும்பனால் பிடிக்கப்பட்டான்" என்று பயங்கரமாய்க் கூச்சலிட்டார்கள். அவன் தன்னைத் தூக்கிக்கொண்டு போவதைக் கண்டு மாருதி, அவனை முஷ்டியால் அடித்துத் தள்ளித் தன்னை விடுவித்துக்கொண்டு பூமியில் குதித்தார். பிறகு அவனைத் தரையில் போட்டுத் தேய்த்தார்; ஆகாசத்தில் கிளம்பி அதிவேகமாய் அவன் குதித்தான்; அவனுடைய சிரஸைப் புஜங்களால் இறுக்கிப் பிடித்துப் பயங்கரமாய்க் கர்ஜித்துக்கொண்டு கழுத்தை முறித்தார். நிகும்பன் மடிந்ததைக் கண்டு வானரர்கள் ஸந்தோஷித்து ஸிம்ஹநாதம் செய்தார்கள்; திக்குகள் நடுங்கிற்று; பூமி அதிர்ந்தது; ஆகாசம் பிளந்தது; ராக்ஷஸ ஸைன்யம் திகிலடைந்தது.

வ்யபேதே து ஜீவே நிகும்ப4ஸ்ய ஹ்ருஷ்டா
விநேது3: ப்லவங்கா3 தி3ஶ: ஸஸ்வநுஶ்ச |
சசாலேவ சோர்வீ பபா3லேவ ச த்3யௌ:
ப4யம் ராக்ஷஸாநாம் ப3லம் சாவிவேஶ ‖ (25)

---



## ஸர்க்கம் 78

## மகராக்ஷன் யுத்தத்திற்குப் புறப்பட்டது

---

நிகும்ப4ம் ச ஹதம் ஶ்ருத்வா கும்ப4ம் ச விநிபாதிதம் |
ராவண: பரமாமர்ஷீ ப்ரஜஜ்வாலாநலோ யதா2 ‖ (1)

நிகும்பனும் கும்பனும் இறந்ததைக் கேட்டு ராவணன் கோபம் தாங்காமல் அக்னியைப்போல் ஜ்வலித்தான். கோபத்தாலும் சோகத்தாலும் மெய்மறந்து, கரனுடைய புத்திரனை

மகராக்ஷனைப் பார்த்து, "நீ ராக்ஷஸ ஸைன்யத்துடன் சென்று, காட்டில் ஸஞ்சரிக்கும் ராமலக்ஷ்மணர்களை ஜயித்து வா" என்றான். அதைக் கேட்டு மகராக்ஷன் ஸந்தோஷித்துத் தன் பலத்தையும் வீரியத்தையும் நம்பி, 'அப்படியே செய்கிறேன்' என்று ராவணனை பிரதக்ஷிண நமஸ்காரம் செய்து ஸமீபத்திலிருந்த ஸேனைத் தலைவனைப் பார்த்து, "சீக்கிரமாய் என் ரதத்தைக் கொண்டு வா; ஸைன்யத்தைத் தயார் செய்" என்றான். அவனும் அப்படியே செய்ய, மகராக்ஷன் ரத்தை பிரதக்ஷிணம் செய்து அதிலேறி, "ஸாரதே! அதிசீக்கிரத்தில் என்னைச் சத்துருக்களுக்கெதிரில் கொண்டு போ!" என்று கட்டளையிட்டான். தன் பரிவாரங்களை அழைத்து, "நீங்களெல்லோரும் எனக்கு முன் சென்று யுத்தம் செய்யுங்கள். ராமலக்ஷ்மணர்களைக் கொன்று வரும்படி மஹாராஜா எனக்கு உத்தரவு செய்திருக்கிறார். என் பாணவர்ஷங்களாலும் சூலங்களாலும் அவர்களையும் ஸுக்ரீவனையும் வானரர்களையும், காட்டுத் தீ உலர்ந்த கட்டைகளை எரிப்பதுபோல் சாம்பலாக்குகிறேன்" என்றான். அவனுடைய வார்த்தைகளால் உத்ஸாஹமடைந்து ராக்ஷஸர்கள் ஸகல ஆயுதங்களுடன் யுத்தத்திற்குப் புறப்பட்டார்கள்.

காமரூபிகள்; நீண்ட கோரைப் பற்களையும் மஞ்சள் நிறமான கண்களையும் உடையவர்கள்; மலைபோன்ற சரீரமுள்ளவர்கள். அவர்கள் தலைமயிரை விரித்துக்கொண்டு மதயானைகளைப்போல் வீறிட்டுக்கொண்டு பூமி நடுங்கும்படி யுத்தகளத்தில் வந்தார்கள். சங்கம் பேரிகை முதலிய ரணவாத்யங்கள் ஆயிரக்கணக்காய் அடிக்கப்படும் சப்தமும், வீரத்வனிகளும், ஸிம்ஹநாதங்களும் ஒன்று சேர்ந்து பெரும் சப்தமுண்டாயிற்று. அப்பொழுது சாரதியின் கையிலிருந்து குதிரைச் சவுக்கு திடீரென்று நழுவி விழுந்தது. ரதத்திலிருந்த த்வஜம் ஒடிந்து விழுந்தது. அதில் பூட்டியிருந்த குதிரைகள் வழக்கப்படி அடி வரிசைகளைக் காட்டி விசித்திரமாய்ச் செல்லாமல் கஷ்டப்பட்டு நடந்தன; அவைகளின் முகங்கள் வாடி, கண்களிலிருந்து நீர் தாரை தாரையாய்ச் சொரிந்தது. குரூரமான அந்த துஷ்ட ராக்ஷஸன் யுத்தத்திற்குச் செல்லுகையில் கடுங் காற்றுப் புழுதியுடன் அடித்தது. ராக்ஷஸர்கள் அந்த அப சகுனங்களைக் கண்டும், வீரியக் கொழுப்பால் கொஞ்சம்கூட லக்ஷ்யம் செய்யவில்லை. நிறத்தில் மேகங்களையும், யானையையும், எருமையையும் போன்றவர்கள்; அநேக யுத்தங்களில் பல ஆயுதங்களால் காயமடைந்தவர்கள்; சண்டை செய்ய ஆவலுடன் 'நான், நான்' என்று முந்திக்கொண்டு நான்கு புறத்திலும் கோரமாய்க் கூச்சலிட்டார்கள்.

க$^{4}$ந க$^{3}$ஜ மஹிஷாங்க$^{3}$ துல்யவர்ணா:
ஸமரமுகே$^{2}$ஷ்வஸக்ருத் க$^{3}$தா$^{3}$ஸி பி$^{4}$ந்நா: |
அஹமஹமிதி யுத்$^{3}$த$^{4}$ கௌஶலாஸ் தே
ரஜநிசரா: பரிப$^{3}$ ப்$^{4}$ரமுர் நத$^{3}$ந்த: ‖ (21)

---



## ஸர்க்கம் 79

## மகராக்ஷனுடைய வதம்

நிர்க$^{3}$தம் மகராக்ஷம் தே த்$^{3}$ருஷ்ட்வா வாநரயூத$^{2}$பா: |
ஆப்லுத்ய ஸஹஸா ஸர்வே யோத்$^{3}$து$^{4}$காமா வ்யவஸ்தி$^{2}$தா: ‖ (1)

**வா**னரத் தலைவர்கள் மகராக்ஷன் வருவதைக்கண்டு அவனை எதிர்க்கத் தயாராய் நின்றார்கள். தேவாஸுரயுத்தத்தைப்போல் வானரர்களுக்கும் ராக்ஷஸர்களுக்கும் பயங்கரமான யுத்தம் ஆரம்பித்தது. அவ்விரு திறத்தாரும் மரங்களாலும், சூலங்களாலும், பாறைகளாலும், பரிகங்களாலும் ஒருவரையொருவர் அடித்தார்கள். வேறு சிலர் சக்தி, கத்தி, கதை, தோமரம், உலக்கை, துண்டாந்தடி முதலிய ஆயுதங்களால் வானரர்களைக் கொன்றார்கள். மகராக்ஷனுடைய பாணவர்ஷத்தால் எல்லோரும் பயந்து புத்தி கலங்கி மூலைக்குமூலை ஓடினார்கள். அதைக்கண்டு ராக்ஷஸர்கள் ஸந்தோஷத்தால் ஜயத்வனி செய்தார்கள். அப்பொழுது ராமன் சரமாரி பொழிந்து ராக்ஷஸர்களைத் தடுத்தார். அதைக்கண்டு மகராக்ஷன் கோபமடைந்து, "ராம! நில்; உன்னுடன் யுத்தம் செய்கிறேன். என் வில்லிலிருந்து விடப்பட்ட பாணங்களால் உன் உயிரைக் கொள்ளை கொள்கிறேன். தண்டகாரண்யத்தில் என் பிதாவை நீ கொன்ற பழியை இன்று தீர்க்கிறேன். உன்னைக் கண்டு எனக்குக் கோபம் பொங்குகிறது. அந்த ஸமயத்தில் தண்டகாரண்யத்தில் என் கண்ணில் படாமற் போனாயென்று நினைக்க நினைக்க என் அவயவங்கள் எரிகின்றன. நல்லது; பசியால் வருந்தும் ஸிம்ஹத்தை இதர மிருகங்கள் தேடி வந்ததுபோல், வெகுநாளாய் உன்னை எதிர்பார்த்துக் கொண்டிருந்த எனது அதிருஷ்டவசத்தால் நானிருக்குமிடத்தை நீயே தேடி வந்திருக்கிறாய். இன்று என் பாணங்கள் உன்னை அதிவேகமாய் யமலோகத்திற்குக் கொண்டு போய்ச் சேர்க்கும். உன்னால் இதுவரையில் கொல்லப்பட்ட ராக்ஷஸவீரர்களுடன் அங்கு நீ ஸுகமாய்க் காலம்கழிக்கலாம். அதிகமாய்ச் சொல்ல வேண்டியதென்ன? ஒரு வார்த்தை கேள். நாமிருவரும் இன்று யுத்த களத்தில் அஸ்திரங்களாலோ கதைகளாலோ புஜங்களாலோ நீ பயின்றிருக்கும் மற்ற எவ்விதத்தாலோ யுத்தம் செய்வோம். ஸகலப் பிராணிகளும் பார்க்கட்டும்" என்றான்.

இதைக் கேட்டு ராகவன் அலக்ஷ்யமாய்ச் சிரித்துக்கொண்டு, "அடே, ராக்ஷஸ! ஏன் வீணாப் பெருமை பேசிக்கொள்ளுகிறாய்? இந்த வீரவாதங்கள் உனக்குத் தகாது. வார்த்தைகளால் இதுவரையில் ஒருவரும் சத்துருக்களை ஜயித்ததில்லை. உன் பிதாவான கரனும், தூஷணனும், த்ரிசிரஸும், பதினாலாயிரம் ராக்ஷஸ வீரர்களுடன் தண்டகாரண்யத்தில் என் பாணத்திற்கு இரையானார்கள்.

கூரான நகங்களையும் மூக்குகளையுமுடைய கழுகுகளும் காக்கைகளும் நரிகளும் உன் மாம்ஸத்தால் இன்று திருப்தியடையப் போகின்றன'' என்றார்.

அதைக் கேட்டுக் கோபம்கொண்டு மகராக்ஷன் ராமனைப் பாணவர்ஷத்தால் மறைத்தான். தன்னிடத்தில் வருமுன் ரகுவீரன் கூரான சரங்களால் அவைகளை அறுத்துத்தள்ளினார். அவர்களுடைய நாணோசை மஹாமேகங்கள் குமுறுவதுபோல் அந்த யுத்தத்தில் கேட்கப்பட்டது. தேவ தானவ கந்தர்வ கின்னர உரக கணங்கள் ஆகாச வீதியில் கூட்டம் கூட்டமாய் நின்று அந்த ஆச்சரியத்தைப் பார்த்துக் கொண்டிருந்தார்கள். பாணங்களால் இருவருடைய தேகங்களும் துளைக்கப்பட்டன; ஒருவருடைய அஸ்திரங்களை மற்றொருவர் துண்டித்துக்கொண்டே வந்தார்கள். ஸகல திக்குகளும் பூமியும் சரமாரியால் மறைந்து ஒன்றும் தெரியவில்லை. பிறகு, ராமன் கோபம்கொண்டு, மகராக்ஷனுடைய வில்லையொடித்து, எட்டு நாராசங்களால் ஸாரதியைத் துளைத்து, ரதத்தையும் குதிரைகளையும் நாசம் செய்தார். அந்த ராக்ஷஸன் உடனே பூமியில் குதித்து, பிரளயகாலாக்னியைப்போல் ஜ்வலிக்கின்ற ஒரு பயங்கரமான சூலத்தையெடுத்து, கரகரவென்று சுழற்றி ராகவன்மேல் எறிந்தான். ஆகாசத்தில் வரும்பொழுதே ராமன் மூன்று பாணங்களால் அதைத் துண்டிக்க, அது எரிகொள்ளியைப்போல் நான்கு புறங்களிலும் தூள்தூளாய் விழுந்தது. ஆகாச வீதியில் இருந்தவர்கள் ராமனை 'நல்லது நல்லது' என்று கொண்டாடினார்கள். அதைக்கண்டு மகராக்ஷன் விரல்களை மடக்கிக்கொண்டு, 'நில், ஓடாதே' என்று கர்ஜித்து, ராமன்மேல் பாய்ந்தான். ரகுவீரன் அலக்ஷ்யமாய்ச் சிரித்துக்கொண்டு ஒரு ஆக்நேயாஸ்திரத்தைப் பிரயோகித்து, அவனுடைய இருதயத்தைப் பிளந்து மகராக்ஷனைக் கொன்றார். அதைக்கண்ட ராக்ஷஸர்கள் ராமபாணங்களுக்குப் பயந்து லங்கையில் ஓடியொளிந்தார்கள். வஜ்ராயுதத்தால் பிளக்கப்பட்ட மலை விழுவதுபோல் ராமபாணங்களால் கொல்லப்பட்டுக் கீழே வீழ்ந்த கரனுடைய மகனைக் கண்டு தேவர்கள் மகிழ்ந்தார்கள்.

த³ஶரத²ந்ருப புத்ர பா³ணவேகை³:
ரஜனிசரம் நிஹதம் க²ராத்மஜம் தம் |
த³த்³ருஶுரத² ஸுரா ப்⁴ருஶம் ப்ரஹ்ருஷ்டா
கி³ரிமிவ வஜ்ரஹதம் யதா² விகீர்ணம் ‖ (43)

---



## ஸர்க்கம் 80

## இந்திரஜித்து யுத்தத்திற்குப் புறப்பட்டது

மகராக்ஷம் ஹதம் ஶ்ருத்வா ராவண: ஸமிதிஞ்ஜய: |
க்ரோதே⁴ந மஹதாவிஷ்டோ த³ந்தாந் கடகடாபயந் ‖ (1)

மகராக்ஷன் மடிந்ததைக் கேள்வியுற்று ராவணன் மஹாகோபம்கொண்டு பற்களைக் கடகடவென்று கடித்து, என்ன செய்யலாமென்று ஆலோசித்து, இந்திரஜித்தை யுத்தத்திற்கனுப்பினான். "ராக்ஷஸவீர! ராமலக்ஷ்மணர்கள் எல்லையற்ற வீரியவான்கள்; நீயே அவர்களை ஜயிக்கவேண்டும். நீ எதிர்த்து யுத்தம் செய்தாலும் மறைந்திருந்தாலும் எப்பொழுதும் பலத்தில் உனக்கு ஈடுண்டோ? நிகரற்ற பராக்கிரமமுள்ள இந்திரனை யுத்தத்தில் ஜயித்தாய். அல்ப மனுஷ்யர்கள் உனக்கு ஒரு பொருட்டா?'' என்றான்.

இந்திரஜித்து ராவணனுடைய ஆக்ஞையை ஏற்றுக்கொண்டு யுத்த பூமியில் விதிப்படி அக்னியை வளர்த்து ஹோமம் செய்தான். அப்பொழுது சிவப்புத் தலைப்பாகைகளை ராக்ஷஸ ஸ்த்ரீகள் அதிவேகமாய் எடுத்து வந்தார்கள். (இந்த யாகத்தில் ரித்விக்குகள் சிவப்புத் தலைப்பாகைகளைத் தரிக்கவேண்டியது—ச்ருதி). தோமரங்களே நான்கு புறங்களிலும் பரப்பின தர்ப்பங்கள்; விபீதக விருக்ஷத்தின் குச்சிகளே ஸமித்துகள்; ரித்விக்குகள் தரித்த வஸ்திரங்கள் சிவப்பு வர்ணமுடையவை; ஸ்ருக் ஸ்ருவம் முதலிய பாத்திரங்கள் கருப்பு இரும்பால் செய்யப்பட்டவை. பிறகு அந்த ராவண புத்திரன் அக்னியை வளர்த்து, ஒரு கருப்பு ஆட்டைப் பிடித்து, கழுத்தையறுத்து, அதன் ரத்தத்தை ஆஹுதி செய்தான். ஒரு தடவை மூட்டினவுடன் அக்னி புகையில்லாமல் வெகு தேஜஸுடன் ஜ்வலித்தது; அவைகளால் தனக்கு ஜயம் கிடைக்குமென்று இந்திரஜித்து ஸந்தோஷித்தான். உருக்கியோடவிட்ட தங்கத்தைப்போன்ற காந்தியுடன் அக்னிபகவான் உருவமெடுத்து வந்து, பிரதக்ஷிணமாய்ச் சுழலும் ஜ்வாலையுடன் அவன் கொடுத்த ஆஹுதிகளைப் பெற்றுக்கொண்டார். இப்படி அக்னியையும் தேவ, தானவ, ராக்ஷஸர்களையும் திருப்திசெய்து, திவ்ய ரதத்திலேறி ஆகாச வீதியில் மறைந்தான். அதில் நான்கு குதிரைகள் பூட்டப்பட்டிருந்தன; சிரேஷ்டமான வில்லும் தீக்ஷ்ணமான பாணங்களும் வைக்கப்பட்டிருந்தன; தங்கத்தால் செய்யப்பட்டு மிருகங்களாலும் சந்திரன்களாலும் விசித்திரமாய் அலங்கரிக்கப்பட்டிருந்தது. அதன் த்வஜம் தங்கத்தாலும் வைடூரியங்களாலும் நெருப்புக்கொழுந்தைப்போல் ஜ்வலித்தது. ஸூரியனைப்போல் ஒளிவீசும் பிரஹ்மாஸ்திரத்தால் ரக்ஷிக்கப்பட்டவனாய், இந்திரஜித்து

அளவற்ற பலத்தையும் சத்துருக்கள் நெருங்க முடியாத வீரியத்தையும் அடைந்தான். லங்கையிலிருந்து வெளியில் வந்து, ராக்ஷஸ மந்திரங்களால் (நிர்ருதிதேவதையை பிரதானமாயுடைய மந்திரங்களால்) அக்னியில் ஹோமம்செய்து, கண்ணுக்கு மறைந்து, "கபடமுனிவேஷம் பூண்ட ராமலக்ஷ்மணர்களை இன்று யுத்தத்தில் கொன்று என் பிதாவிற்கு ஜயத்தைக் கொடுக்கிறேன். இன்று முதல் பூமியில் வானரப் பூண்டில்லாமற் செய்து ஸகல ராக்ஷஸர்களுக்கும் மஹாராஜாவுக்கும் பரமப்ரீதியையுண்டுபண்ணுகிறேன்" என்றான்.

அதிவேகமாய் யுத்த பூமியில் வந்து, ராமலக்ஷ்மணர்கள் மூன்று தலைகளுள்ள ஸர்ப்பங்களைப்போல் கோதண்டங்களை வளைத்து ராக்ஷஸர்களைச் சரமாரியால் நாசம்செய்வதைக் கண்டு கோபமடைந்தான். (பருத்து உயர்ந்த இரு தோள்களோடும் உன்னதமான சிரஸோடும் விளங்கும் ராமலக்ஷ்மணர்களுடைய மஹாபுருஷ லக்ஷணம் இதனால் குறிக்கப்பட்டது.) "நான் கொல்ல வேண்டியவர்கள் இவர்களே" என்று முடிவுசெய்து, வில்லை வளைத்து அவர்களைச் சரமாரியால் துளைத்தான். இப்படி ஆகாச வீதியிலிருந்து ஒருவர் கண்ணிலும் படாமல் தங்களைப் பாணங்களால் ஹிம்ஸிப்பதைக் கண்டு, அவர்கள் வில்லில் ஒரு பாணத்தைப் பூட்டி, திவ்யாஸ்திரத்தை அதில் அபிமந்திரித்தார்கள். தங்களுடைய அம்புகளால் ஆகாசத்தை மறைத்து ஸூரியதேஜஸுள்ள அஸ்திரங்களால் அடித்தும் அவனை அணுகித் தொடமுடியவில்லை. அந்த ராக்ஷஸனுடைய மாயையால் ஆகாசத்தில் இருட்டும் புகையும் பனியும் சூழ்ந்து திக்குகளை மறைத்தன. அவனுடைய ரூபமாவது நாணோசையாவது ரதத்தின் சப்தமாவது ஒன்றும் தெரியவில்லை. அந்தக் கோரமான இருட்டில் அவனுடைய நாராசங்கள் மாத்திரம் ஓயாமல் விழுந்துகொண்டிருந்தன. அத்புதமான வரங்களைப் பெற்றுக் கோபபரவசனாய், ராமமூர்த்தியை ஸூரியனைப்போல் ஜ்வலிக்கும் பாணங்களால் ஸகல அவயவங்களிலும் துளைத்தான். பர்வதத்தில் நீர்த்தாரைகள் சொரிவதுபோல் நாராசங்களால் அவர்கள் அடிபட்டுத் தங்கக் கட்டுகளுடன் விளங்கும் சரங்களை அவன்மேல் பிரயோகித்தார்கள். பக்ஷிகளைப்போல் அதிவேகமாய் ஆகாசத்திற் சென்று அவனைத் துளைத்து ரத்தத்தால் நனைந்து பூமியில் விழுந்தன. அவனால் எய்யப்பட்ட பாணங்களை அந்த ராஜபுத்திரர்கள் அநேக பல்லங்களால் அறுத்தார்கள். அவை வந்து விழும் இடத்தை லக்ஷ்யம் வைத்து உத்தமமான அஸ்திரத்தைப் பிரயோகித்தார்கள். இந்திரஜித்தோ அதிவேகமாய் ஸகல திக்குகளிலும் ஸஞ்சரித்துக்கொண்டு, ராமலக்ஷ்மணர்களை ஓயாமல் கூரான சரங்களால் வருத்தினான். அவை தேகமெங்கும் ஊடுருவிப் பாய்ந்து, ரத்த தாரைகள் பெருக, புஷ்பித்த விருக்ஷங்களைப்போல் விளங்கினார்கள். அந்த ராக்ஷஸ குமாரனுடைய ஸஞ்சாரமோ, உருவமோ, வில்லோ, அல்லது அம்போ ஒருவருக்கும் தெரியவில்லை. மேகங்களால் மறைக்கப்பட்ட ஸூரியனைப்போல் தோன்றினான். வானரர்கள் நூற்றுக் கணக்கில் அவனால் அடிபட்டு உயிரிழந்து பூமியில் விழுந்தார்கள்.



அதைக் கண்டு லக்ஷ்மணன் கோபம்கொண்டு, "அண்ணா! ஸகல ராக்ஷஸர்களையும் ஒரு க்ஷணத்தில் பிரஹ்மாஸ்திரத்தால் நாசம் செய்கிறேன்" என்றார். அதற்கு ரகுநாதன், "குழந்தாய்! அப்படியல்ல; ஒருவனுடைய அபராதத்திற்காகப் பூமியிலுள்ள ஸகல ராக்ஷஸர்களையும் கொல்வது நியாயமில்லை. யுத்தம் செய்யாதவர்களும் மறைந்தவர்களும் கைகூப்பிச் சரணமடைந்தவர்களும் ஓடுகிறவர்களும் அஜாக்கிரதையாக இருப்பவர்களும் இங்கே அநேகருண்டு. அவர்களை வதம் செய்வது தர்மமல்ல. இவனைக் கொல்ல யத்தனம் செய். மஹாவேகமுள்ள அஸ்திரங்களைப் பிரயோகிப்போம். இந்த நீசன் மாயாபலத்தால் தன்னையும் ரதத்தையும் மறைத்துக் கொண்டிருக்கிறான். வானரத் தலைவர்கள் இவனைக் கண்டால் உயிருடன் விடமாட்டார்கள். இவன் பூமியில் நுழைந்தாலும், ஆகாசத்தில் மறைந்தாலும், பாதாளத்தில் ஒளிந்தாலும், ஸ்வர்க்கத்தில் மறைந்தாலும், என் பாணம் அவனைத் துரத்திக் கொளுத்திப் பூமியில் பிணமாய்த் தள்ளும்" என்று கூறிவிட்டு, அந்தக் குரூர ராக்ஷஸனைக் கொல்ல உபாயத்தை ஆலோசித்தார்.

இத்யேவ முக்த்வா வசநம் மஹாத்மா
ரகு⁴ப்ரவீர: ப்லவக³ர்ஷபை⁴ர் வ்ருத: |
வதா⁴ய ரௌத்³ரஸ்ய ந்ருஶம்ஸகர்மண:
தத³ா மஹாத்மா த்வரிதம் நிரீக்ஷதே ‖ (43)

---

## ஸர்க்கம் 81

## மாயாஸீதையைக் கொன்றது

விஜ்ஞாய து மநஸ் தஸ்ய ராக⁴வஸ்ய மஹாத்மந: |
ஸந்நிவ்ருத்யாஹவாத் தஸ்மாத் ஸம்விவேஶ புரம் தத: ‖ (1)

அவருடைய அபிப்பிராயத்தை அறிந்து இந்திரஜித்து யுத்தபூமியிலிருந்து திரும்பி லங்கையில் பிரவேசித்தான். கும்பகர்ணன் முதலிய ராக்ஷஸ வீரர்கள் மடிந்ததை நினைத்து, ரோஷத்தால் கண்கள் சிவந்து, அளவற்ற தேககாந்தியுடன், அநேக ராக்ஷஸர்கள் சூழ, மேற்குக் கோட்டை வாசலால் வெளியில் வந்தான். தேவ தானவர்களை நடுங்கச் செய்யும் அந்த ராவணபுத்திரன் அங்கே ராமலக்ஷ்மணர்கள் கோர யுத்தம் செய்வதற்குத் தயாராயிருப்பதைக் கண்டு ஒரு மாயையை பிரயோகித்தான். (நிகும்பிலையில் யாகம் செய்து சத்துருக்களால் ஜயிக்க முடியாத அஸ்திர பலத்தைப் பெற விரும்பி

னான். அதுவரையில் ராமலக்ஷ்மணர்களை யுத்தத்தின்மூலம் தடுக்க வேண்டும்; ஆகையால் மாயையை உபயோகித்தான். கோபாவேசம் கொண்ட ராமலக்ஷ்மணர்களை நெருங்க முடியவில்லை. அவர்களைத் தவிர ஸீதையின் ஸ்வரூபத்தையறிந்தவன் ஹனுமான் ஒருவரே. விபீஷணனிடத்தில் அந்த மாயை பலிக்காது. மாருதியின் கண்ணிற் கெதிரே ஸீதையைப்போன்ற மாயையை உபயோகிக்கவேண்டு மென்று, அவரிருந்த மேற்குக் கோட்டை வாசல் வழியாய் வெளியில் வந்தான். அவனை ராமலக்ஷ்மணர்கள் காண முடியவில்லை.) மாயையால் ஸீதையைப்போன்ற ஒரு ரூபத்தைத் தன் ரதத்தில் வைத்துக்கொண்டு ராக்ஷஸ ஸைன்யத்தின் நடுவில் அவளைக் கொல்லவாரம்பித்தான். ஸகல வானரர்களுடைய புத்தியையும் மயக்கவேண்டுமென்று, மாயா ஸீதையுடன் அந்தத் துஷ்டன் வானரர்களை நோக்கி வந்தான். அவனைக் கண்டவுடன் எல்லா வானரர்களும் மலைகளுடனும் மரங்களுடனும் அவனை எதிர்த்தார்கள். ஒரு பெரிய பர்வதசிகரத்தை எடுத்துக்கொண்டு ஆஞ்ஜநேயர் அவர்களுக்கு முன் சென்றார். தனக்கெதிரில் இந்திரஜித்தின் ரதத்தில் ஸீதை, ஸந்தோஷமற்றுத் தீனமாய், ஒற்றைப் பின்னலுடன் அழுக்கடைந்த ஒற்றை வஸ்திரத்துடன் உபவாஸத்தால் தேகம் இளைத்து, புழுதியாலும் அழுக்காலும் அவயவங்களின் காந்தி குறைந்து, பார்ப்போர் மனம் உருகும்படி உட்கார்ந்திருப்பதைக் கண்டு திடுக்கிட்டார். அவளைச் சற்றுநேரம் உற்றுப்பார்த்து ஸீதை தானென்று நிச்சயித்தார்; அதற்குக் கொஞ்சகாலத்திற்கு முன் அவளைப் பார்த்துப் பேசியிருக்கிறாரல்லவா? அலங்கோலமாய் ஜானகி சத்துருவசத்தில் அகப்பட்டுத் தவிப்பதைக் கண்டு மாருதிக்குக் கண்களில் நீர் பெருகிற்று; மனம்தளர்ந்தது. 'இவளை ரதத்தில் இங்கே அழைத்து வருவதில் இந்த ராக்ஷஸனுடைய அபிப்ராயமென்ன?" என்று ஆலோசித்தார். பிறகு வானர சிரேஷ்டர்களுடன் இந்திரஜித்தின் ரதத்தின்மேல் பாய்ந்தார். அதைக் கண்டு ராவணபுத்திரன் கோபத்தால் கண்களிலிருந்து நெருப்புப்பொறிகள் பறக்க, கத்தியை உருவி, ஸீதையின் மயிரைப் பிடித்திழுத்து, ஸகல வானரர்களும் பார்த்துக்கொண்டிருக்க அடித்தான்; அவள் 'ராமா, ராமா' என்று கதறினாள். அந்தக் குரூரராக்ஷஸன் ராமனுடைய பிரியபத்தினியை, ஸர்வாங்க ஸுந்தரியை, பதிவிரதா சிரோமணியைத் தலை மயிரைத் தொட்டு இழுத்ததைக் கண்டு ஹனுமான் மனம் நொந்து, சோகம் மேலிட்டு, கண்ணீருதிர்த்தார். உடனே கோபத்தால் மெய்மறந்து, "அடே துஷ்டா! உன்னை அதிசீக்கிரத்தில் கோரமான நரகத்தில் தள்ளுவதற்காக இந்த வழியைத் தேடிக் கொண்டாயோ? ராம பார்யையைத் தலைமயிரைப் பிடித்திழுக்க உனக்கு ஆண்மையோ? பிரஹ்மரிஷிகளுடைய குலத்திற் பிறந்தும், ராக்ஷஸ ஸ்வபாவம் விடவில்லையே. சீ! இப்படிப்பட்ட அல்பபுத்தியையும் நீசமான ஆசாரத்தையுமுடைய உன்னைச் சுடவேண்டும். குரூர! அல்ப! துஷ்ட! மஹாபாபியே! உனக்கு இரக்கமென்பதுமுண்டோ? இவள் வீட்டைவிட்டு ராஜ்யத்தையும்விட்டு ராமனையும் விட்டு இந்தத் துர்க்கதியடைந்திருக்கிறாள்; இவளை நீ கொல்ல யத்தனிப்பதற்கு இவள் உனக்கு என்ன கெடுதி செய்தாள்? நீ இவளைக் கொன்றால் வெகுகாலம் பிழைத்திருக்கமாட்டாய். இந்த ஒரு காரியத்திற்காகவே என்கையால் மரணமடைவாய். ஸ்த்ரீகளைக்கொல்லுகிறவர்களுக்கு ஏற்பட்ட நரகங்களை நிரந்தரமாய் அடைவாய்" என்று கூறி, வானர வீரர்களால் சூழப்பட்டு இந்திரஜித்தை நோக்கி ஓடிவந்தார். அவர்களைப் பயங்கரமான ராக்ஷஸ வீரர்கள் தடுத்தார்கள். இந்திரஜித்து வானர ஸைன்யத்தைப் பாணவர்ஷத்தால் கலக்கி, ஆஞ்ஜநேயரைப்பார்த்து, "ஸுக்ரீவனும் நீயும் ராமனும் எந்தக்காரியத்திற்காக வந்திருக்கிறீர்களோ அந்த ஜானகியை நீங்கள்பார்த்துக் கொண்டிருக்கையிலேயே கொல்லுகிறேன். பிறகு ராமனையும் லக்ஷ்மணனையும் உன்னையும்ஸுக்ரீவனையும் விபீஷணனையும் நாசம் செய்யப்போகிறேன். ஸ்த்ரீகளைக் கொல்லக் கூடாதென்று சொன்னாய். சத்துருக்களுக்கு வருத்தத்தையும் உபத்திரவத்தையும் கொடுக்கக் கூடியஎந்த காரியத்தையும்செய்யவேண்டியதல்லவா?" என்று அந்த மாயாஸீதையைக் கூர்மையான கத்தியால் யக்ஞோபவீதம் தரித்ததுபோல் வெட்டினான். அவள் ரத்தம் பெருக, 'கோ' என்று அலறிக்கொண்டு பூமியில் விழுந்தாள். பிறகு இந்திரஜித்து ஹனுமானை நோக்கி, "இதோ பார். ராமனுடைய பார்யையை என் கோபத்திற்கு இரையாக்கினேன். ஸீதை இறந்தாள். நீங்கள் படும் சிரமமெல்லாம் வீணல்லவா" என்று ஸந்தோஷத்துடன் ஸிம்ஹநாதம் செய்தான். ஸமீபத்திலிருந்த வானரர்கள் அந்தச் சப்தத்தைக் கேட்டு மனம் கலங்கித் திகைத்து நின்றார்கள். ஆனால், ராக்ஷஸர்களால் சூழப்பட்டிருந்த இந்திரஜித்தை நெருங்க முடியவில்லை.

இப்படி அந்தத்துஷ்ட ராக்ஷஸன் ஸீதையைக்கொன்று அளவில்லாத ஸந்தோஷத்தையடைந்தான். வானரர்கள் மிகவும் மனம் நொந்து யுத்தகளத்திலிருந்து ஓடினார்கள்.

ததா2 து ஸீதாம் விநிஹத்ய து3ர்மதி:
ப்ரஹ்ருஷ்டசேதா: ஸ ப3பூ4வ ராவண: |
தம் ஹ்ருஷ்டரூபம் ஸமுதீ3க்ஷ்ய வாநரா:
விஷண்ணரூபா: ஸமபி4ப்ரது3த்3ருவு: || (36)

———

## ஸர்க்கம் 82
## நிகும்பிலா யாகம்

ஶ்ருத்வா து பீ4மநிர்ஹ்ராத3ம் ஶக்ராஶநி ஸமஸ்வநம் |
வீக்ஷமாணா தி3ஶ: ஸர்வா: து3த்3ருவுர் வாநரர்ஷபா4: ‖ (1)

இந்திரனுடைய வஜ்ராயுதம் விழுந்ததுபோன்ற அந்த வீர த்வனியைக் கேட்டு, வானரர்கள் ஸகல திக்குகளிலும் ஓடி ஒளிந்தார்கள். தீனமாய் முகம் வாடிப் பயந்தோடும் வானர வீரர்களைப் பார்த்து ஆஞ்ஜனேயர், "மித்திரர்களே! யுத்தத்தில் பின்வாங்கி, தைரியத்தையிழந்து ஏன் இப்படி ஓடுகிறீர்கள்? உங்களுடைய சௌரியம் எங்கே போயிற்று? சூரர்களாயும் உத்தம குலத்தில் பிறந்தவர்களாயுமிருக்கும் நீங்கள் இப்படிப் புறங்காட்டி ஓடுவது தகுமா? நான் முன்னே செல்லுகிறேன்; நீங்கள் எனக்குப் பின்னால் வாருங்கள்" என்று உத்ஸாஹப்படுத்தினார். அதைக் கேட்டு வானரர்கள் தைரியமடைந்து மலைகளையும் மரங்களையும் பெயர்த்துக்கொண்டு கோரமான கர்ஜனைகளுடன் மாருதியைப் பின்தொடர்ந்தார்கள். ஜ்வாலைகளால் சூழப்பட்ட அக்னி பகவானைப்போல் அவர்களுடன் ஆஞ்ஜநேயர் ராக்ஷஸ ஸைன்யத்தில் புகுந்து, கோபபரவசராய் அதை ஸம்ஹாரம் செய்தார். பிரளய காலத்தில் பிராணிகளை ஸம்ஹரிக்கும் யமனைப்போல், கோபத்தாலும் சோகத்தாலும் அவர் மெய்மறந்து, இந்திரஜித்தின் ரதத்தின்மேல் ஒரு பெரும் பாறையை விட்டெறிந்தார். அதைக் கண்டு மஹாஸாமர்த்தியமுள்ள ஸாரதி ரதத்தை வெகு தூரத்தில் கொண்டுபோனான். அந்தப் பாறை குறிப்பிட்ட ரதத்தையும் ஸாரதியையும் குதிரைகளையும் நாசம் செய்யாமல் பூமியில் விழுந்து வெகு தூரம் பதிந்தது. விழும்பொழுது ராக்ஷஸ ஸைன்யம் கணக்கில்லாமல் மடிந்தது. உடனே வானரர்கள் ஒரே கூட்டமாய் அவன் மேல் பாய்ந்து மலைகளையும் மரங்களையும் வர்ஷித்து, அநேக ராக்ஷஸர்களைக் கொன்று, ஸந்தோஷத்தால் பலவிதமாய்க் கர்ஜித்தார்கள். அந்த யுத்தகளத்தில் மரங்களால் அடிபட்டு அநேக கோர ரூபமுள்ள ராக்ஷஸர்கள் விழுந்து புரண்டார்கள். தன் ஸைன்யம் வானரர்களால் நாசமடைவதைக் கண்டு, இந்திரஜித்து வானரத் தலைவர்களைத் தீக்ஷ்ணமான பாணங்களால் அடித்துக் கலக்கினான். அவனுடைய பரிவாரங்கள் சூலங்களாலும், கத்திகளாலும், உலக்கைகளாலும் வானரர்களைக் கொன்றார்கள்.

மற்றொரு பக்கத்தில் ஹனுமான் ராக்ஷஸ வீரர்களை மரங்களாலும், மலைகளாலும், பாறைகளாலும் நாசம் செய்தார். ராக்ஷஸ ஸைன்யத்தை மறித்து, வானரர்களைப் பார்த்து, "நாம் திரும்பிப் போவோம்; இந்த ராக்ஷஸர்களை ஜயித்தும் பிரயோஜனமென்ன? இதுவரையில் உயிரைக் கொடுத்தாவது ராமனுக்கு ஸந்தோஷத்தை உண்டு பண்ணி வந்தோம். எதற்காக யுத்தம் செய்து வந்தோமோ அந்த ஸீதை இன்று நமது கண்களுக்கெதிரே கொல்லப்பட்டாள். இந்த ஸமாசாரத்தை ராமனுக்கும் ஸுக்ரீவனுக்கும் தெரிவித்து அவர்களுடைய உத்தரவுப்படி நடப்போம்" என்றார். பிறகு ஸகல வானரர்களையும் அழைத்துக்கொண்டு, யுத்த பூமியிலிருந்து திரும்பி ராமனிருக்குமிடத்திற்குச் சென்றார்.

இந்திரஜித்து தன் உத்தேசம் நிறைவேறினதைக் கண்டு, 'இது தான் ஸமயம்' என்று நிகும்பிலையென்ற மரச்சோலைக்குச் சென்று, அக்னியை வளர்த்து, மாம்ஸங்களாலும் ரத்தத்தாலும் அதில் ஆஹுதி செய்தான். அதிலிருந்து உண்டான அக்னிஜ்வாலை ஸந்தியாகாலத்தில் காணப்படும் ஸூரியனைப்போல் விளங்கிற்று. யாக விதிகளைப் பூர்ணமாயறிந்த இந்திரஜித்து, ராக்ஷஸர்களுக்கு க்ஷேமமும் கீர்த்தியும் உண்டாவதற்காக விதிப்படி அக்னியில் ஆஹுதி செய்தான். யக்ஞயாகக்ரியைகளில் நிபுணர்களான ராக்ஷஸர்கள் கணக்கில்லாமல் அவனைச் சூழ்ந்து நின்றார்கள்.

அதே2ந்த்3ரஜித்3 ராக்ஷஸபூ4தயே து
ஜுஹாவ ஹவ்யம் விதி4நா விதா4நவித் |
த்3ருஷ்ட்வா வ்யதிஷ்ட2ந்த ச ராக்ஷஸாஸ்தே
மஹாஸமூஹேஷு நயாநயஜ்ஞா: ‖ (29)



## ஸர்க்கம் 83
## லக்ஷ்மணன் ராமனைத் தேற்றினது

ராக4வஶ்சாபி விபுலம் தம் ராக்ஷஸ வநௌகஸம் |
ஶ்ருத்வா ஸங்க்3ராம நிர்கோ4ஷம் ஜாம்ப3வந்த முவாச ஹ ‖ (1)

வானரர்களுக்கும் ராக்ஷஸர்களுக்கும் நடந்த சண்டையாலுண்டான பெரும் சப்தத்தை ரகுவீரன் கேட்டு ஸமீபத்திலிருந்த ஜாம்பவானைப் பார்த்து, "மித்திர! ஹனுமான் ஏதோ அத்புதமான வீர கிருத்யத்தைச் செய்துகொண்டிருக்கிறான்; இல்லாவிட்டால் இந்த பயங்கரமான ஆயுத சப்தம் நமது காதில் விழாது. ஆகையால் நீ உன் ஸைன்யங்களுடன் சென்று அவனுக்கு உதவி செய்" என்றார். அப்படியேஜாம்பவான் தன் ஸைன்யத்தால் சூழப்பட்டு ஹனுமானிருந்த மேற்குக்கோட்டை வாசலை நோக்கிச் சென்றார். நடுவழியில் வானரர்கள் யுத்தம் செய்து சிரமத்தால் பெருமூச்சு விட்டுக்கொண்டு திரும்பி வருவதையும் ஹனுமான் அவர்களுக்கு முன் வருவதையும் கண்டார். மாருதி நீருண்ட மேகங்களைப்போல் கருத்துப் பயங்கரமாய்த் தனக்கெதிரே வரும் அந்தக்

கரடிக் கூட்டங்களைக் கண்டு, அவர்களைத் தன்னுடன் திரும்பச் செய்து, ராமனிருக்குமிடத்திற்கு அதிசீக்கிரமாய் வந்து, அடங்காத துக்கத்துடன், "நாங்கள் யுத்தம் செய்துகொண்டிருக்கும்பொழுது, எங்களுக்கெதிரே இந்திரஜித்து ஸீதையைக் கதறிக்கொண்டிருக்கையில் கொன்றுவிட்டான். அதைப் பார்த்தது முதல் எனக்குத் துக்கத்தால் பித்துப் பிடித்ததுபோலிருக்கிறது. இந்த விருத்தாந்தத்தைத் தங்களுக்குத் தெரிவிப்பதற்காக வந்தேன்'' என்றார்.

அந்த வார்த்தையைக் கேட்டவுடன் ரகுவீரன், வேரற்ற மரம் போல் சோகத்தால் மூர்ச்சையடைந்து பூமியில் விழுந்தார். தேவதையைப்போன்ற ராகவன் திடீரென்று பூமியில் விழுந்தவுடன், எல்லா வானரத்தலைவர்களும், அதிவேகமாய்ப் பாய்ந்து அவரைச் சூழ்ந்து, தாமரைகளாலும், உத்பலங்களாலும் பரிமளமடைந்த ஜலத்தை அவர் மேல் தெளித்தார்கள். கொழுந்துவிட்டெரியும் நெருப்பு, ஜ்வாலைகளற்ற பிறகு ஜலத்தால் அணைக்கப்படுவதுபோலிருந்தது. அவரை லக்ஷ்மணன் வாரியெடுத்து, தன் மனத்திலுள்ள துக்கத்தால் பீடிக்கப்பட்டு, ராமனைப் பார்த்து தகுந்த காரணங்களையும் உத்தமமான அர்த்தங்களையுமுடைய பின்வரும் வார்த்தைகளைச் சொன்னார். (ஸீதை கொல்லப்பட்டாளென்று கேட்டதாலுண்டான துக்கத்தால் எல்லையற்ற அதைர்யத்தையடைந்த ராமனைத் தேற்றுவதற்காக லக்ஷ்மணன் தர்மாதர்மங்களுடைய ஸ்வரூபத்தைக் கண்டித்து, "நீதிசாஸ்திரப்படி பார்த்தால் பலத்தையே பிரதானமாக நம்பவேண்டும்'' என்று நிரூபிக்கிறார்.)

"தாங்கள் பிதிருவாக்யபரிபாலனமென்ற ஸன்மார்க்கத்தில் என்றும் நடக்கிறவர்கள்; கையில் கிடைத்த ராஜ்யத்தைக் கெடுத்த கைகேயியினிடத்திலும், தசரதரிடத்திலும் கொஞ்சமாவது கல்மஷம் மனத்திலுமில்லாததால் இந்திரியங்களை ஜயித்தவர். இப்படிப்பட்ட தங்களை, பிரமாணங்களால் ஏற்படாமல், "முயலின் கொம்பு'' என்பதுபோல் பேச்சளவில் மாத்திரமே இருக்கும் தர்மம் கஷ்டங்களிலிருந்து காப்பாற்ற முடியவில்லையே. இப்படியே அதர்மமும் உபயோகமற்றதே. ஏனென்றால், அதையே அனுஷ்டிக்கும் ராவணனுக்கு ஸகல ஸௌக்யங்களும் கிடைப்பதைத் தடுக்க முடியவில்லையல்லவா? பிதிருவாக்யபரிபாலனம் முற்றிலும் பிரயோஜனமற்றதென்று தங்களுக்கு நான் அப்பொழுதே சொல்லியிருக்கிறேன். தர்மாதர்மங்கள் பிரமாணமென்பதென்ன? பிரத்யக்ஷமா, அனுமானமா, சப்தமா?

பிரத்யக்ஷமென்று சொல்லுவோம். அசையும் பொருள்கள், அசையாப் பொருள்கள் இவ்விரண்டும் பஞ்சேந்திரியங்களுக்குப் புலப்படுகிறபடி தர்மமும் அதர்மமும புலப்படவில்லை; ஆகையால்



பிரத்யக்ஷப்பிரமாணத்திற்கு புலப்படாததால் அவை இல்லவேயில்லை. (முன் ச்லோகத்தில், தர்மத்தின் பலனான ஸுகம் தங்களிடத்தில் காணப்படாததால் அனுமானப் பிரமாணத்திற்குத் தர்மம் ஒவ்வாததென்று நிரூபித்து, இப்பொழுது பிரத்யக்ஷத்திற்கும் ஒவ்வாததென்று காட்டுகிறார்—தீர்த்தீயம்). ஸ்தாவர ஜங்கமவஸ்துக்கள் உருவத்துடன் எப்படி பிரத்யக்ஷமாய்த் தெரிகின்றனவோ, அப்படியே தர்மமும் பிரத்யக்ஷ பதார்த்தமாயிருந்தால் ஸ்தாவரமாயாவது ஜங்கமமாயாவது நமது புத்தியால் அறியப்படவேண்டும்; அப்படியில்லை. அப்படியிருந்தால், தங்களைப்போன்ற தர்மவான் கஷ்டங்களை அனுபவிப்பதும், ராவணனைப்போன்ற அதார்மிகன் ஸுகங்களை அனுபவிப்பதும் ஏன்?

அனுமானப்பிரமாணத்திற்கும் அவை புலப்படுவதில்லை என்பதைக் காட்டுகிறேன். அதர்மம் வாஸ்தவமாயிருந்தால், அதர்மத்தையே செய்யும் ராவணன் நரகத்தை அடையவேண்டியது. தர்மம் வாஸ்தவமாயிருந்தால், தர்மத்தை அனுசரிக்கும் தாங்கள் இப்படிப்பட்ட கஷ்டங்களை அனுபவிக்கக்கூடாது. தர்மாதர்மங்கள் இருக்கின்றனவென்றும், வாஸ்தவமான வஸ்துக்களென்றும் அவைகளின் பலன்களான ஸுகதுக்கங்களால் அனுமானிக்கவேண்டும். மஹாதார்மிகனென்று ஸகலப் பிராணிகளும் ஒப்புக்கொண்ட தங்களிடத்தில் கஷ்டமென்பதே தோன்றக்கூடாது. ஸகலலோககண்டகனென்று எல்லோரும் ஒப்புக்கொள்ளும் ராவணனிடத்தில் ஸுகமென்பது தோன்றக்கூடாது. ஆகையால், நாம் நிரூபிக்கவேண்டிய விஷயத்திற்கு ஹேதுக்களில்லை. (இங்கே அனுமானப் பிரமாணத்திற்கும் ஒவ்வாததென்று காட்டப்பட்டது—கோவிந்தராஜீயம்). தங்களால் காப்பாற்றப்பட்ட தர்மம் அதர்மத்தின் பலனான துக்கத்தைக் கொடுத்திருக்கிறது. ராவணனால் அவலம்பிக்கப்பட்ட அதர்மம், தர்மத்தின் பலனான ஸுகத்தைக் கொடுத்திருக்கிறது. தர்மாதர்மங்கள், அவைகளுக்கேற்பட்ட ஸுக துக்கங்களென்ற பலன்களைக் கொடுக்காமலிருப்பது மாத்திரமல்ல. நேர் விரோதமான பலன்களையும் கொடுக்கின்றன. ஆகையால் அவை இல்லையென்றே எண்ணவேண்டியிருக்கிறது. 'தர்மத்தால் ஸுகத்தையும், அதர்மத்தால் துக்கத்தையும் அடைவதைப் பார்த்திருக்கிறோமல்லவா' என்றால், தர்மத்தையே பரிபாலித்துவரும் தங்களைப் போன்றவர்களுக்குத் தர்மபலனான ஸுகம் கிடைக்க வேண்டுமே? அதர்மத்தை நாடிவரும் ராவணனைப் போன்றவர்களுக்கு துக்கம் நேரவேண்டுமே? ஆனால், அதர்மத்திலேயே புத்தியைச் செலுத்தினவனுக்கு ஸகல க்ஷேமங்களும் மேன்மேலும் விருத்தியாகின்றன; தர்மவான்களோ மிகுந்த கஷ்டத்தை அனுபவிக்கிறார்கள். ஆகையால், தர்மாதர்மங்கள் நிச்சயமான பலனைக் கொடுக்காது.

மேலும், தர்மாதர்மங்களுக்கு வேதப்பிரமாணமும் இல்லை. பாபிகள் அதர்மத்தைச் செய்து துக்கத்தையடைவது நிஜமானாலும்,

புண்யவான்கள் தர்மத்தைச்செய்து ஸுகத்தை அனுபவிப்பது நிஜமானாலும், அந்த ஹிம்ஸையோ ஸுகமோ மூன்று க்ஷணங்களுக்குமேல் நீடித்திருக்கிறதில்லை; நாசமடைகின்றன. அவை எவனுக்கு க்ஷேமத்தைக் கொடுக்கப்போகின்றன? எவனைத் துன்பப்படுத்தப் போகின்றன? தர்மாதர்மங்கள் அனுஷ்டான தசையில் சில க்ஷணங்களுக்குமேல் நீடித்திருக்கிறதில்லை. ஆகையால், சில காலத்திற்குப் பிறகு நேரவேண்டிய பலன்களை உண்டு பண்ணுவது அஸாத்யம். 'கற்கள் மிதக்கின்றன' என்று கூறும் வேத வாக்யத்தைப்போன்று, தர்மாதர்மங்களைப்பற்றின வேத வாக்யங்களும் வெற்றுச் சொற்கள் என்பதில் ஸந்தேகமுண்டோ?'' ஆனால், கர்மங்கள் க்ஷணத்திற்கு மேல் நீடித்திராவிட்டாலும், அவைகளால் ஆராதிக்கப்பட்ட தேவதைகள் அந்தந்த பலன்களைக் கொடுக்கலாமே. அந்தத் தேவதையால் ஒருவன் உபத்திரவிக்கப் படுகிறான்; அல்லது வேறொருவனை உபத்திரவிக்கிறான்'' என்று சொன்னால் அப்பொழுது அந்தப் பாபகர்மத்தின் பலனான துக்கம் அந்தத் தேவதையைத் தொடர்கின்றது. அதனால் பிரயோஜன மடைகிறவன் அதில் ஸம்பந்தப்படுகிறதில்லை. தர்மத்தின் பலனான ஸுகமும் இப்படியே அந்த தேவதைக்குத்தான் சேரும்.

'நல்ல கர்மங்களால் ஆராதிக்கப்பட்டுக் கெட்ட கர்மங்களால் கோபிக்கும் ஈசுவரனே தர்மாதர்மங்களென்று சொல்லுவோமே' என்றால், அவரே ஸுக துக்கங்களைப் பகுத்துக் கொடுப்பவரும் அவைகளைச் செய்விப்பவருமாகிறார். அவைகளால் பிரயோஜன மடைகிறவனுக்கு யாதொரு ஸம்பந்தமுமில்லை. "ஆனால், ஸ்வதந்திரனான ஒரு அரசன், விளையாட்டாய் ஒரு விதியை ஏற்படுத்தி, அதன்படி நடக்கிறவனை அனுக்ரஹித்து, அதை மீறுகிறவனைத் தண்டிப்பதுபோல், ஈச்வரனும் தனது ஆக்ஞைகளான கர்மங்களை அனுஷ்டிக்கிறவனை அனுக்கிரஹிக்கிறார்; அப்படிச் செய்யாமல் விபரீத கர்மங்களைச் செய்கிறவனைத் தண்டிக்கிறாரென்று சொல்வோமென்றால், அவர் தனது திருப்திக்காக அப்படிச் செய்கிறாரா? பிறருடைய திருப்திக்காக அப்படிச் செய்கிறாரா? ஸகல இச்சைகளையும் அடைந்த பரிபூர்ணனான ஈச்வரனுக்கு அடையவேண்டிய வஸ்து இல்லாதபடியால், அவருடைய திருப்திக்காகச் செய்கிறாரென்பது பொருந்தாது. ஒருவனை பிரஹ்மாவாகவும் ஒருவனைத் தரித்திரனாகவும் செய்கிறவர் பக்ஷபாதமாயும் நடக்கிறாரென்ற தோஷம் ஏற்படும். ஆனால், அந்தந்தக் கர்மங்களுக்குத் தகுந்தபடி ஜீவகோடிகளை ஸிருஷ்டிப்பதால், பக்ஷபாதம் கொஞ்சமும் இல்லை—யென்றால், ஜீவன்களை நல்ல கர்மங்களையே செய்யும்படி அவர் நியமிக்கலாமே. ஸர்வமும் அறிந்தவருக்கு இது ஒரு தோஷமல்லவா? அவருக்கு இரக்கமில்லையென்று ஏன் சொல்லக்கூடாது? அனாதியாய் வரும் கர்மப்பிரவாஹத்தால் பூர்வஜன்மங்களில் செய்யப்பட்ட கர்மங்களுக்குத் தகுந்தபடி பாபபுண்யங்களைச் செய்யும்



புத்தியைக் கொடுக்கிறாரென்றால், ஒருவனுக்கு எப்பொழுதும் துக்கமும் ஒருவனுக்கு எப்பொழுதும் ஸுகமும் வந்துகொண்டே இருக்க வேண்டும். ஏனென்றால், முன் ஜன்மத்தில் செய்த கர்மத்தால் இந்த ஜன்மத்தில் புண்யகர்மங்களைச் செய்ய புத்தியுண்டாகிறது. நல்ல கர்மம் காரணமாய், வரும் ஜன்மத்திலும் புண்ணிய கர்மத்தைச் செய்ய புத்தியுண்டாக வேண்டும். தீயகர்மம் காரணமாக, வரும் ஜன்மத்தில் ஒருவன் கெடுதியையே செய்துகொண்டிருக்க வேண்டி வரும். இப்படி மாறாமல் ஒருவன் புண்யத்தையோ பாபத்தையோ செய்துகொண்டு வந்து, அவைகளின் பலனான ஸுகத்தையோ துக்கத்தையோ எப்பொழுதும் அனுபவிக்க வேண்டும். அப்படி லோகத்தில் காணவில்லை; நியமமில்லாமல் நடந்து வருகின்றது.

ஆனால், "கர்மத்தினாலுண்டான அபூர்வமென்ற ஒரு சக்தியே பலனைக் கொடுக்கின்றது. அதையே தர்மமென்று சொல்வோம்'' என்றால், அனுமானத்தாலும் பிரத்யக்ஷத்தாலும் அடையப்படாமல் ஸ்வரூபமற்றிருக்கும் அபூர்வமென்று சொல்லப்பட்ட தர்மத்தால் உத்தமமான சிரேயஸை அடைவது அஸாத்யம். தர்மமென்ற ஒரு வஸ்து இருந்தால், தார்மிகனான தங்களுக்குக் கொஞ்சங்கூடக் கஷ்டம் நேரக்கூடாது. இப்பொழுது ஸஹிக்கமுடியாத கஷ்டத்தை அனுபவிக்கிறீர்கள். ஆகையால் தர்மமென்பதே இல்லை.

காரியம் புலப்படாததால், அபூர்வமென்ற தர்மத்திற்கே இடமில்லை. பலன் நமக்குத் தெரியாததால் அதற்குக் காரணமும் இல்லையென்று எப்படிச் சொல்லலாம்? இந்திரியங்களுக்கு எட்டாத விஷயங்களை இல்லையென்று சொல்லவேண்டியிருக்குமே. ஆகையால் உதவியான காரணமிருந்தும் பயன் தோன்றாவிட்டால் காரணம் இல்லை எனலாம். தர்மம் முக்யமான காரணம், அதற்குத் துணைசெய்வது ஆண்மை. 'துணைக்காரணமான ஆண்மை இல்லாததால் தர்மம் பயனளிக்கவில்லை என்று சொல்லலாமே' என்றால்,

'வேறொன்றின் உதவியில்லாமல் பலனைக்கொடுக்கமுடியாதது. தானே ஒன்றையும் செய்யச் சக்தியற்றது தர்மம்' என்று கூறப்பட்டதாகிறது. பலவானின் ஸஹாயத்தால் மாத்திரம் ஸுகத்தைக் கொடுக்கும் என்றும் ஏற்படுகிறது. ஆகையால், நியமமில்லாமல், பலமற்று, ஸ்வதந்திரமாய் ஸுகத்தை விளைவிக்க முடியாத தர்மத்தை முக்யமாக அனுஷ்டிக்க வேண்டியதில்லை என்றெண்ணுகிறேன். ஒரு காரியத்தை ஸாதிப்பதில், தர்மம், துணைக்காரணத்திற்கு அங்கமாயிருக்கிறது; ஆகையால், தர்மத்தை விட்டு, அதை அனுஷ்டித்ததுபோல் ஆண்மையை அனுஷ்டிக்க வேண்டும்.

ஆனால், ஸாமான்யதர்மம் மேற்சொன்ன தோஷங்களுக்கு உட்பட்டாலும், ஸத்தியத்தைப் பரிபாலனம் செய்வதென்ற

விசேஷ தர்மத்திற்கு இந்தக் குறை ஏற்படவில்லையே; அதை ஏன் அனுஷ்டிக்கக் கூடாதென்றால், சொன்ன சொல்லைத் தவறாதிருப்பது தர்மமென்று தாங்கள் எண்ணுகிறீர்கள். நமது பிதா, 'உன்னை யுவராஜாவாய் அபிஷேகம் செய்விக்கிறேன்' என்று பிரதிக்ஞை செய்து, அப்படி நிறைவேற்றாததால் ஸத்தியம் தவறினார். ஸகல கல்யாண குணங்களுக்கும் இருப்பிடமான தாங்கள், அவருக்கு மூத்த புத்திரனல்லவா ? கொஞ்சம்கூட இரக்கமில்லாமல் தங்களை ராஜ்ய ஸுகத்திலிருந்து வனவாஸ கஷ்டத்திற்கு அனுப்பவில்லையா? அவரைக் கட்டிக் காவலில் வைக்கவேண்டியது. சாஸ்திரப்படி தர்மத்தைக் கைவிட்டவர்களைத் தண்டிக்கவேண்டியதல்லவா ? பிதிருவசன பரிபாலனம் செய்கிறேனென்று பிரதிக்ஞை செய்த தாங்கள் ஏன் அப்படிச் செய்யவில்லை? மேலும், ஸகல பிரஜைகளுக்கும் முன், ராமனை அபிஷேகம் செய்விக்கிறேனென்று சொன்ன வார்த்தையும் பிதிருவசனமே. பிறகு, 'காட்டிற்குப் போ' என்று சொன்னதும் பிதிருவசனமே. இவ்விரண்டில் முந்திச் சொன்னதை விட்டு, பிந்திச் சொன்னதை நிறைவேற்றின தாங்கள், ஸத்தியத்தை நன்றாகப் பரிபாலிக்கவில்லை யென்று தோன்றுகிறது.

தர்மா தர்மங்களிலிருந்தாலும் அரசன் தர்மத்தையாவது அதர்மத்தையாவது ஒரே போக்காய் அனுஷ்டிக்கக் கூடாது. அந்தந்தக் காலத்திற்குத் தகுந்த பிரயோஜனத்துக்கேற்றபடி இரண்டையும் அனுஷ்டிக்க வேண்டியதென்பது சிஷ்டாசாரமல்லவா? கேவலம் தர்மத்தையே அனுஷ்டிக்க வேண்டியதென்ற விதியிருந்தால், இந்திரன் விச்வரூபனென்ற முனியை முதலில் கொன்று, பிறகு யாகங்களைச் செய்ய வேண்டியதில்லை. யாகத்தையே செய்தால் போதாதா ? கேவலம் அதர்மத்தையே ஒருவன் எப்பொழுதும் அனுஷ்டிக்க வேண்டியதென்றிருந்தால், இந்திரன் விச்வரூபனைக் கொன்று பிறகு யாகத்தையும் செய்ய வேண்டியதில்லையே. அவனைக் கொன்றதே போதுமே. இந்திரன், வருணன், பர்ஜன்யன், யமன், ஈசானனென்றவர்கள் தேவதைகளுக்குள் க்ஷத்திரியர்களென்ற சுருதிப்படி, க்ஷத்திரியனான இந்திரன் தர்மாதர்மங்களைக் காலத்திற்குத் தகுந்தபடி அனுஷ்டித்துக் காட்டியிருக்கிறான். தர்மாதர்மங்களைத் தனித்தனியாய் ஒரே போக்காய் அனுஷ்டித்து வந்தால், அப்படிச் செய்பவன் நாசமடைகிறான். ஆகையால் அவைகளை அந்தந்தக் காலத்திற்குத் தகுந்தபடி கலந்து அனுஷ்டிக்க வேண்டும்.

மேற்சொன்ன விஷயத்தில் எனக்குக் கொஞ்சம்கூட ஸந்தேகமில்லை. (முதலில் தர்மாதர்மங்களுக்கு யாதொரு பிரமாணமில்லையென்றும் பிறகு அப்படிக் கொஞ்சம் பிரமாணமிருந்தாலும் அவை பிரதானமில்லையென்றும் சொன்னார். இப்பொழுது, அப்படி



பிரதானமில்லாவிட்டாலும் ராமன் தர்மத்தை அனுஷ்டிக்கவே இல்லையென்று நிரூபிக்கிறார்.) தர்மத்தை ஸரியாய் அனுஷ்டிப்பதற்கு ஆதாரம் செல்வமே. கையில் கிடைத்த ராஜ்யத்தை வேண்டாமென்று தாங்கள் தள்ளிவிட்டதால் ஐச்வர்யத்தை இழந்தீர்கள். தர்மத்தை எப்படிப் பரிபாலிக்க முடியும்? மலைகளிலிருந்து நதிகள் உண்டாவதுபோல், பிரஜைகளைக் காப்பாற்றி, அவர்களிடத்திலிருந்து வாங்கும் ஆறிலொரு கடமை வரவரச் சேர்ந்து, யக்ஞம் தானம் முதலிய ஸகலக் கிரியைகளுக்கும் ஆதாரமாகின்றன. கோடையில் சிறு நதிகள் வற்றுவதுபோல், தனமற்று அல்பதேஜஸுள்ளவன் செய்யும் யாதொரு கிரியையும் முடிவுபெறாது. ஐசுவரியத்தைக் கைவிடுவதால், தர்மம் நடக்காதது மாத்திரமல்ல; தோஷமும் ஏற்படும். பிறந்தது முதல் ஸுகமாய் வளர்ந்தவன் செல்வத்தைக் கைவிட்டால், முன் அனுபவித்த ஸுகத்தை விடமுடியாததால் அநியாயமாயாவது தனத்தை ஸம்பாதிக்க யத்னம் செய்வான்; அது பாபத்திற்கு இடமாகும். தனவானே மித்திரர்களால் ஆசிரயிக்கப்படுகிறான்; பந்துக்களும் அவனையே அண்டுகிறார்கள்; தனவானே பண்டிதனெனப்படுவான்; தனவானே புருஷன்; தனமில்லாதவன் கையாலாகாத ஸ்திரீயைப் போன்றவன்; தனவானே பராக்கிரமசாலி; தனவானே புத்திமான்; தனவானே வீரன்; தனவானே நன்னடத்தை முதலிய நற்குணங்களுள்ளவன். ஐச்வரியத்தைத் தள்ளிவிடுவதால் முன்சொன்ன குணங்களுக்கு விரோதமான தோஷங்களுண்டாகின்றன. நியாயமாய்த் தங்களுக்குக் கிடைக்க வேண்டிய ராஜ்யத்தை வேண்டாமென்று தள்ளிவிட்டு எந்தக் குணத்தை அபேக்ஷித்து வனத்திற்கு சென்றீர்களென்று எனக்குத் தெரியவில்லை. தன் செல்வத்தால் தர்ம கர்மங்களை ஸாதிக்கும்படிச் செய்பவனுக்கு எல்லாம் அநுகூலமாய் முடியும். ஐச்வரியத்தை இழந்து, பிறகு தனத்தை ஸம்பாதிக்க வேண்டுமென்று ஸகலப் பிரயத்தனங்களையும் செய்தாலும், அது கிடைக்குமென்றெண்ணவில்லை. ஐசுவரியத்தால் அர்த்தம் காமமென்ற புருஷார்த்தங்கள் மாத்திரம் ஸித்திக்குமென்று எண்ணக்கூடாது. ஸந்தோஷம், சுகம், கர்வம், தர்மம், கோபம், அடக்கம், சாந்தி முதலியவை ஐசுவரியத்தால் சோபிக்கின்றன. பரலோகத்தில் உத்தம லாபத்தைமாத்திரம் கொடுக்கக்கூடியதல்ல; இஹலோகத்தில் ஸகல ஸௌக்யத்திற்கும் ஐசுவரியமே காரணமாகும். அது தங்களிடத்திலில்லை. தனக்குக் கிடைக்கும் ஐசுவரியத்தை அலக்ஷ்யம் செய்து கேவலம் தர்மத்தையே ஆசரிப்பவர்களுக்கு இந்த லோகத்தில் ஸுகமில்லை. மழைக்காலத்தில் ஆகாசம் மேகங்களால் மூடப்பட்டிருக்கையில் ஸூரியன் முதலிய கிரஹங்கள் காணப்படாதது போல் ஸுகத்திற்கு மூலமான ஐசுவரியங்களைத் தங்களிடத்தில் காணவில்லையே. ஸகல க்ஷேமத்திற்கும் ஹேதுவான ராஜ்யத்தை

விட்டு, பிதிருவாக்யபரிபாலனமென்ற தர்மத்தை மாத்திரம் ஆசிரயித்த தங்களுக்கு நேர்ந்த கஷ்டத்தைப் பாருங்கள். உயிரைக் காட்டிலும் தங்களுக்குப் பிரியமாயிருந்த ஜானகியை ராக்ஷஸர்கள் அபகரித்தார்கள். ஆகையால் நமக்கு இன்று இந்திரஜித்து செய்த கெடுதியை என் பலத்தால் போக்குகிறேன். ரகுகுல சிரேஷ்ட! எழுந்திருங்கள். பதிலுக்குப் பதில் செய்து அந்தத் துக்கத்தைப் போக்குகிறேன். தாங்கள் ஸர்வக்ஞனான பரமாத்ம ஸ்வரூபமென்பதை ஏன் ஞாபகப்படுத்திக்கொள்ளவில்லை? தங்களுக்கு சோக மோகங்களுண்டோ? அவைகளுக்குக் காரணமெங்கே? பாபலேசமற்ற புண்ணியமூர்த்தியே! இதோ நான் தங்களுடைய ஆக்ஞையை நிறைவேற்றுவதற்காகவே பிறந்திருக்கிறேன். தங்களை எப்பொழுதும் இடைவிடாமல் அண்டியிருப்பதும் அந்தக் கைங்கரியத்தை உத்தேசித்தே. பிரஹ்மக்ஞானியான ஜனகருடைய அருமைப்புத்திரி ஜானகி, துஷ்டனான இந்திரஜித்தால் கொல்லப்பட்டதைப் பார்த்து, எனக்கு அடங்காக்கோபமுண்டாகியிருக்கிறது. லங்கையையும் அதிலுள்ள ரத கஜ துரக பதாதிகளையும் ராவணனையும் என் பாணங்களால் நாசம் செய்கிறேன். ஏதோ ஆத்திரத்தால் தர்மாதர்மங்களைத் தர்க்கயுக்திகளால் கண்டித்தேன். என் சௌரியத்தை உபயோகப்படுத்தத் தங்களுடைய உத்திரவை எதிர்பார்க்கிறேன்" என்றார்.

அயமநக4 தவோதி3த: ப்ரியார்த2ம்
ஜநகஸுதா நித4நம் நிரீக்ஷ்ய ருஷ்ட: |
ஸஹயக3ஜ ரதா2ம் ஸராக்ஷஸேந்த்3ராம்
ப்4ருஶமிஷுபி4ர் விநிபாதயாமி லங்காம் || (44)

---

## ஸர்க்கம் 84

# இந்திரஜித்தைக் கொல்லும் உபாயம்

ராமமாஶ்வாஸயாநே து லக்ஷ்மணே ப்4ராத்ருவத்ஸலே |
நிக்ஷிப்ய கு3ல்மாந் ஸ்வஸ்தா2நே தத்ராக3ச்ச2த்3 விபீ4ஷண: || (1)

இப்படி லக்ஷ்மணன் ராமனிடத்தில் வைத்த அளவற்ற பிரீதியால் அவரைத் தேற்றிக்கொண்டிருக்கும்பொழுது, விபீஷணன் ஸைன்யத்தை அங்கங்கே அணிவகுத்துவிட்டு, மைமலைகளைப் போன்ற தனது நான்கு மந்திரிகள் ஆயுதபாணிகளாய், யானைகள் தங்களுடைய தலைவனைச் சூழ்ந்து வருவதுபோல், அவனைப் பின்தொடர, ராமனிருக்குமிடம் வந்து சேர்ந்தான். ("தேற்றிக்கொண்டிருக்கும்பொழுது" என்று கூறியதால் முன் ஸர்க்கத்தில் லக்ஷ்மணன் சொன்ன தர்க்கவாதங்கள் ஸஹோதரவாத்ஸல்யத்தால் சொல்லப்பட்டனவேயன்றி உண்மையில் லக்ஷ்மணன் தர்மத்தை நிந்தித்தவனன்று எனத்தெரிகிறது). ராகவன் சோகத்தால் கலங்கியிருப்பதையும் வானரர்கள் கண்ணீர் விட்டுக்கொண்டு சூழ்ந்திருப்பதையும் கண்டான். இக்ஷ்வாகுகுல திலகனான ரகுவீரன் புத்தி மயங்கி, "நாம் உயிரோடிருக்கையில் சத்துரு நமது எண்ணங்களை வீணாக்கி நமக்குத் தீராத துக்கத்தை யுண்டுபண்ணினானே" என்று வெட்கமடைந்து, லக்ஷ்மணனுடைய மடியில் தலையை வைத்துப் படுத்திருப்பதையும் பார்த்து அடங்காத் துயரம் கொண்டு மனம் நொந்து, 'இதென்ன ஆச்சரியம்' என்றான். விபீஷணனுடைய முகத்தையும் ஸுக்ரீவனையும் மற்ற வானரர்களையும் கவனித்து, லக்ஷ்மணன் கண்ணீரால் தழதழத்த குரலுடன் நடந்த விருத்தாந்தத்தைச் சுருக்கமாய்ச் சொன்னார்; "ஸீதை இந்திரஜித்தால் கொல்லப்பட்டாளென்று ஹனுமான் சொல்லக் கேட்டு, அப்பொழுது முதல் இப்படிப் புத்திமயங்கி யிருக்கிறார்[8]" என்றார்.

விபீஷணன் அவரைத் தடுத்து, "எல்லா ஸங்கதிகளையும் நான் யூகித்தறிந்தேன். ஹனுமான் பெரும் துயரத்துடன் சொன்ன ஸமாசாரம் ஒரு நாளும் நடக்காது. ஸமுத்திரம் எப்பொழுது வற்றுமோ அப்பொழுது இதுவும் நேரும். அந்தத் துஷ்டனான ராவணனுடைய மனம் ஸீதையினிடத்தில் எவ்விதமாயிருக்கிறதென்பது எனக்குத் தெரியும். ஜானகியை ஒருபொழுதும் கொல்லமாட்டான். அவளை விட்டுவிடென்று நான் பலவகையாய்க் கெஞ்சிக் கேட்டும் என் வார்த்தையைத் தள்ளிவிட்டான். ஸாமதான பேதோபாயங்களால் அவளை அவன் நெருங்க முடியவில்லை; தண்டோபாயத்தாலும் மாயா வித்யைகளாலும் அவளைக் கெடுக்கவும் முடியுமோ? வானரர்களை மயக்கித் தான் நிகும்பிலையில் இடையூறில்லாமல் யாகம் செய்வதற்காக இந்திரஜித்து போயிருக்கிறான். ஹோமங்களை முடித்து, யுத்தகளத்திற்கு வந்துவிட்டால், தேவதானவகணங்களாலும் இந்திரனாலும் அவனை ஜயிக்க முடியாது. வானரர்கள் தன்னை உபத்திரவித்து யாகத்தைக் கெடுக்காதபடி இந்த மாயையை பிரயோகித்து அவர்களை மயக்கியிருக்கிறான். ஆகையால், இந்தக் காரணமில்லாத துக்கத்தை விடுங்கள்; அந்த யாகத்தை முடிப்பதற்கு முன், ஸைன்யங்களுடன் நாம் அங்கே போய்ச் சேருவோம். தாங்கள் இப்படி வருத்தப்படுவதைப் பார்த்து, ஸகல வானர ஸைன்யமும் மனம் தளர்கின்றது. தாங்கள் கவலையற்று இங்கே இருங்கள். லக்ஷ்மணனை வானர ஸைன்யங்களுடன் அனுப்புங்கள். இவர் தீக்ஷ்ணமான பாணங்களால் அவன் அந்த யாகத்தைப் பூர்த்தியாவதற்கு முன் அந்த யாகத்தை விட்டு வரும்படி செய்வார். பிறகு அவனைக் கொல்வது சுலபம். கழுகின் இறகுகள் பூண்ட இவருடைய கூரான சரங்கள் அவனுடைய ரத்தத்தைக் குடிக்கும். லங்கையில் அவனைத் தவிர வேறு யுத்தம் செய்யக்கூடியவர்கள் இல்லை. அவன் யாகத்தில் கவனமாயிருக்கும்பொழுது வானரர்கள் அவனை எதிர்த்து அதைக் கெடுப்

பார்கள். அப்பொழுது பிரம்மா கொடுத்த வரத்தின்படி நாசமடைவான். இந்திரன் தன் வஜ்ராயுதத்தை அனுப்புவதுபோல், லக்ஷ்மணனை ராக்ஷஸர்களுடைய நாசத்திற்காக இப்பொழுதே அனுப்புங்கள். இந்த ஸமயத்தில் சத்துருவை அழிக்கும் விஷயத்தில் சிறிதும் காலதாமதம் செய்யக்கூடாது. மஹேந்திரன் அஸுரத் தலைவனைக் கொல்வதற்கு அனுமதி கொடுப்பதுபோல் இந்திரஜித்தைக் கொல்லும்படி லக்ஷ்மணனுக்கு ஆக்ஞை செய்யுங்கள். இந்திரஜித்து செய்யும் யக்ஞம் விக்னமில்லாமல் முடிந்தால், தேவாஸுரர்களுக்கும் அகப்படாமல் அவன் மறைவான். அவர்கள் ஒன்று சேர்ந்தாலும் அப்பொழுது அவனை எதிர்க்க நினைப்பது பிரயோஜனமில்லை" என்றான்.

ஸமாப்தகர்மா ஹி ஸ ராக்ஷஸாதி‘போ
ப‘வத்யத்³ருஶ்ய: ஸமரே ஸுராஸுரை: |
யுயுத்ஸதா தேந ஸமாப்தகர்மணா
ப‘வேத் ஸுராணாமபி ஸம்ஶயோ மஹாந் ॥ (22)

---

ஸர்க்கம் 85

## லக்ஷ்மணன் யுத்தத்திற்குப் புறப்பட்டது

---

தஸ்ய தத்³வசநம் ஶ்ருத்வா ராக‘வ: ஶோககர்ஶித: |
நோபத‘ாரயதே வ்யக்தம் யது³க்தம் தேந ரக்ஷஸா ॥ (1)

ரகுவீரன் துக்கத்தால் புத்தி சிதறி விபீஷணனுடைய வார்த்தைகளை நன்றாய் மனத்தில் வாங்கிக்கொள்ளவில்லை. பிறகு தைரியமடைந்து, ஸமீபத்திலிருந்த விபீஷணனைப் பார்த்து, "ராக்ஷஸாதிபதே! நீ சொன்ன வார்த்தைகளை மறுபடியும் கேட்க விரும்புகிறேன்" என்றார். அதற்கு விபீஷணன், "ஸ்வாமி! தங்களுடைய கட்டளைப்படி ஸேனைகளை அணிவகுத்து அந்தந்தத் தலைவர்களிடத்தில் ஒப்புவித்து வந்தேன். வேறொரு ஸங்கதியைத் தங்களிடத்தில் தெரிவித்துக்கொள்ளுகிறேன். தாங்கள் காரணமில்லாமல் துக்கப்படும்பொழுது, எங்களுடைய மனம் வருந்துகின்றது. ஆகையால் தாங்கள் துக்கப்படுவதை நிறுத்தி எங்களை உத்ஸாகப்படுத்தி சத்துருக்களின் கர்வத்தை அடக்குங்கள். முயற்சியையும் மனத்தெளிவையும் கைக்கொள்ளுங்கள். தாங்கள் ஸீதையை அடைய வேண்டுமல்லவா? ராக்ஷஸர்களை மூலநாசம் செய்யவேண்டுமல்லவா? ஆனால் நான் சொல்லும் உபாயத்தைக் கேளுங்கள். லக்ஷ்மணன் வானர ஸைன்யத்துடன் நிகும்பிலை என்னும் இடத்திற்குச் சென்று, அங்கே யாகம் செய்யும் இந்திரஜித்தை யுத்தம் செய்து கொல்லட்டும். கோதண்டத்தை மண்டலாகாரமாய் வளைத்து, காலஸர்ப்பங்களைப்போன்ற பாணங்களால் அவனுடைய மார்பைப் பிளந்து உயிரை வாங்கட்டும். அவன் பிரஹ்



மாவைக் கடுந்தவத்தால் ஆராதித்து, பிரஹ்மசிரஸென்ற அஸ்திரத்தையும், நினைத்தவிடங்களுக்குச் செல்லும் ரதத்தையும் குதிரைகளையும் பெற்றிருக்கிறான். இப்பொழுது ஸைன்யத்துடன் நிகும்பிலைக்குச் சென்றிருக்கிறான். விக்னமில்லாமல் யாகத்தை முடித்தெழுந்தால், நாமெல்லோரும் இறந்தோமென்பதில் ஸந்தேகமில்லை. 'நீ நிகும்பிலை என்ற ஆலமரத்தடியில் போய்ச் சேருவதற்கு முன், ஹோமம் செய்துமுடிப்பதற்கு முன், சத்துருவை ஜயிக்கப் புறப்படும் உன்னை எவன் எதிர்த்து அடிப்பானோ அவனால் இந்திரசத்ருவான உனக்கு மரணம் நேரும்' என்று ப்ரஹ்மா இந்திரஜித்திற்குக் கட்டளையிட்டிருக்கிறார். அவனுடைய மரணம் இவ்விதமென்று முன்பே ஏற்பட்டிருக்கின்றது. அவனைக் கொல்வதற்காக லக்ஷ்மணனை அனுப்புங்கள். அவனிறந்தால் ராவணனும் அவனுடைய பரிவாரங்களும் மடிந்தார்களென்பது நிச்சயம்" என்றான்.

அதைக்கேட்டு ராமன், "அவனுடைய மாயாபலத்தை நான் நன்றாயறிவேன். பிரஹ்மாஸ்திரத்தைப் பெற்றவன்; மஹாபுத்திமான்; மஹாமாயாவி; மஹாபலசாலீ; யுத்தகளத்தில் திக்பாலர்களுடன் தேவர்கள் வந்தெதிர்த்தாலும் அவர்கள் பிரக்ஞையற்றுக் கிடக்கும்படி செய்வான்; மேகக்கூட்டங்களால் மறைக்கப்பட்ட ஸூரியனைப்போல், அவன் ஆகாச வீதியில் ரதாரூடனாய் ஸஞ்சரிக்கும்பொழுது, அவனுடைய போக்கும் வரவும் தெரியவில்லை" என்று கூறி, சத்துருவின் மாயாபலத்தை நன்றாக அறிந்தவராகையால், துஷ்டனான இந்திரஜித்துடன் யுத்தம் செய்யப்போகிற லக்ஷ்மணன் பிரஸித்தி பெற்றவீரனாயிருந்தாலும், "குழந்தாய்! ஸுக்ரீவனுடைய ஸைன்யத்தையும் ஜாம்பவானுடைய ஸைன்யத்தையும் மாருதி முதலிய வீரசிரேஷ்டர்களையும் அழைத்துக்கொண்டு, மாயாபலத்தில் நிகரில்லாத அந்த ராக்ஷஸனை ஜயித்து வா. இந்த விபீஷணன் மஹா புத்திமான்; ராக்ஷஸர்களுடைய மாயையையும் இருப்பிடங்களையும் வழிகளையும் நன்றாயறிந்தவன்; இவன் மந்திரிகளுடன் உன்னோடு வருகிறான்" என்றார்.

உடனே லக்ஷ்மணன், கோதண்டத்தைக் கையிலெடுத்து, கவசம் தரித்து, முதுகில் அம்பறையை மாட்டி, இடுப்பில் கத்தியைக் கட்டி, ராமனுடைய பாதங்களைத் தொட்டு நமஸ்கரித்து, "அண்ணா! இன்று என் கோதண்டத்திலிருந்து கிளம்பும் பாணங்கள் இந்திரஜித்தின் ஹிருதயத்தைப் பிளந்து, ஹம்ஸங்கள் புஷ்கரிணியில் பரவுவதுபோல் லங்கையில் போய்விழும்" என்று சொல்லி வீரலக்ஷ்மி ஜ்வலிக்க, இந்திரஜித்தின் வதத்திற்காகப் புறப்பட்டார். ராமன் அவரை ஆசீர்வதித்து, யுத்தத்தில் அபாயம் நேராமல் ஜயத்துடன் திரும்பி வருவதற்காக ரக்ஷாமந்திரங்களை ஜபித்து, உத்திரவு கொடுத்தார். பிறகு, லக்ஷ்மணன் விபீஷணனையும் அவனுடைய மந்திரிகளையும், வானர ஸைன்யங்களையும், ஜாம்பவானையும், ஆஞ்ஜ

நேயர் முதலியவர்களையும் அழைத்துக்கொண்டு வெகுதூரம் சென்று, இந்திரஜித்தின் ஸைன்யத்தைக் கண்டார். இந்திரஜித்தின் மாயையை நன்றாக அறிந்தவராகையால் பிரஹ்மாவின் கட்டளைப்படி நிகும்பிலைக்கு இந்திரஜித்து போகுமுன்னமே அவனை எதிர்க்கக் கூடிய இடத்தில் தங்கியிருந்தார். எல்லையற்ற இருட்டில் பிரவேசிக்கும் ஸூரியனைப்போல், பலவகை ஆயுதங்களாலும், த்வஜங்களாலும், ரதங்களாலும் விளங்கும் அந்தப் பயங்கரமான ராக்ஷஸ ஸைன்யத்தில் அங்கதன், ஹனுமான், விபீஷணன் முதலியவர்களுடன் லக்ஷ்மணன் புகுந்தார்.

விவித$^4$மமல ஶஸ்த்ர பா$^4$ஸ்வரம் தத்$^3$
த்$^4$வஜ க$^3$ஹநம் விபுலம் மஹாரதை$^2$ஶ்ச |
ப்ரதிப$^4$ய தம மப்ரமேய வேக$^3$ம்
திமிரமிவ த்$^3$விஷதாம் ப$^3$லம் விவேஶ ‖ (39)

## ஸர்க்கம் 86

## இந்திரஜித்து யுத்தத்திற்கு ஆரம்பித்தது

அத$^2$ தஸ்யாமவஸ்தா$^2$யாம் லக்ஷ்மணம் ராவணாநுஜ: |
பரேஷா மஹிதம் வாக்ய மர்த$^2$ஸாத$^4$க மப்$^3$ரவீத் ‖ (1)

**பி**றகு விபீஷணன் லக்ஷ்மணனைப் பார்த்து ராமலக்ஷ்மணர்களுக்கு க்ஷேமகரமாயும் ராக்ஷஸர்களுக்கு நாசகரமாயும் இருக்கும் வார்த்தைகளைச் சொன்னான். "மேகம்போல் கருத்த இந்த ராக்ஷஸ ஸைன்யத்தை வானரர்கள் அழிக்கட்டும். இவர்களை அடித்துத் துரத்தினால் இந்திரஜித்திருக்குமிடம் தெரியும். இந்த யாகம் முடியுமுன், இவர்களை உன் பாணங்களால் துளைக்கவேண்டும். தர்ம விரோதியும், மாயாவியும், துஷ்டனும், க்ரூரனும், ஸகலப் பிராணிகளையும் நடுங்கச் செய்பவனுமான அந்த ராக்ஷஸனைக் கொல்" என்றான்.

உடனே லக்ஷ்மணன் வில்லை வளைத்து, நாணேற்றி, இடிபோன்ற பாணங்களால் இந்திரஜித்தையும் அவனுடைய ஸைன்யத்தையும் மறைத்தார். கரடிகளும் குரங்குகளும், மலைகளாலும் மரங்களாலும் பற்களாலும்நகங்களாலும் ராக்ஷஸர்களைக் கொன்றார்கள். வானரர்களுடைய தேகங்களைப் பாணங்களாலும், கத்திகளாலும், சத்தி தோமரம் முதலிய ஆயுதங்களாலும் ராக்ஷஸ வீரர்கள் சிதைத்தார்கள். அவ்விருதிறத்தார்க்கும் நடந்த யுத்தம் பார்க்கப் பயங்கரமாயிருந்தது; லங்கையெங்கும்கிடுகிடென்று நடுங்கிற்று. பலவிதமான பாணங்களாலும் மரங்களாலும் மலைகளாலும் ஆகாசம்



மறைந்தது.இப்படி கொஞ்சநேரம் சென்றபிறகு, ராக்ஷஸஸைன்யம் வானரர்களாலும் கரடிகளாலும் நாசமடைவதையும்மனம்தளர்ந்து மூலைக்குமூலை ஓடுவதையும் கேள்விப்பட்டு, இந்த்ரஜித்து யாகம் முடிவதற்குமுன் எழுந்து, அவர்களை ரக்ஷிக்க வந்தான். அந்த மரச்சோலையின் இருளிலிருந்து வெளியில் வந்து கோப பரவசனாய்க் குதிரைகள் பூட்டித் தயாராயிருந்த தன் ரதத்தில் ஏறினான். மேகத்தைப்போல் கருத்த தேகத்துடன், முகமும் நேத்திரங்களும் அதிக கோபத்தால் சிவக்க, வில்லைக் கையிலெடுத்து, பிராணிகளை ஸம்ஹரிக்க வரும் யமனைப்போல் வெளிப்பட்டான். உத்ஸாஹமிழந்த ராக்ஷஸ ஸைன்யம் அவனை ரதத்தில் பார்த்தவுடன், திரும்பி லக்ஷ்மணனுடன் யுத்தம் செய்ய வந்தது. அப்பொழுது மலைபோன்ற ஆஞ்ஜநேயர் பெரிய ஒரு விருக்ஷத்தைப் பிடுங்கிக் கணக்கி 'லாத ராக்ஷஸர்களைக் கூட்டம் கூட்டமாய் அடித்துக் கொன்றார். உடனே அனேக ஆயிர ராக்ஷஸர்கள் அவரைக் கூரான சூலம், சக்தி, பரிகம், கதை, சக்கரம், சதக்னி, இரும்புலக்கை, கோடாலி முதலிய ஆயுதங்களாலும், முஷ்டிகளாலும், இடிபோன்ற கைகளாலும், நான்கு புறங்களிலிருந்தும் அடித்தார்கள். அதனால் அவர் கோபமடைந்து தன்னைச் சூழ்ந்த ராக்ஷஸர்களை முறித்துத் தள்ளினார். இப்படி ராக்ஷஸர்களால் கொஞ்சமும் உபத்திரவத்தையடையாமல் அவர்களை விளையாட்டாய்க் கொல்லும் ஆஞ்ஜநேயரை இந்திரஜித் வெகு ஆச்சரியத்துடன் பார்த்து, முன்னொருதடவை அவருடைய பராக்கிரமத்தை அறிந்தவனாகையால், கவலைகொண்டு தன் ஸாரதியை நோக்கி, "அதோ, அந்த வானரனிருக்குமிடத்திற்கு ரதத்தைக் கொண்டு போ, சற்று அலக்ஷ்யமாயிருந்தால் நமது ஸைன்யம் அழிந்துவிடும்" என்றான். அந்த ஸாரதியும் அப்படியே செய்ய, இந்திரஜித்து மாருதியிருக்குமிடம் வந்து, தன்னிடத்திலிருந்த ஸகல ஆயுதங்களாலும் அவரைத் தலையிலடித்தான். வாயுபுத்திரன் அவைகளைப் பிடித்து ஒடித்து, வெகு கோபமடைந்து, "அடே புத்தி கெட்டவனே! நீ சூரனாயிருந்தால் எனக்கெதிரில் நின்று யுத்தம் செய். உன் தகப்பன் என்னிடத்தில் பட்டபாடு கேட்டதில்லையா? மாருதியை யுத்தத்தில் எதிர்த்தபிறகும் உயிருடன்திரும்பலாமென்று எண்ணமோ? வா; மல்யுத்தம் செய்வோம். என்னுடைய வேகத்தை உன்னால் தாங்க முடிந்தால் உன்னை ராக்ஷஸசிரேஷ்டனென்று மெச்சுகிறேன்" என்றார். பிறகு ஹனுமானைக் கொல்வதற்காக இந்திரஜித்து வில்லையெடுத்துப் பாணங்களைப்பூட்டுவதைவிபீஷணன் கண்டு, லக்ஷ்மணனைப் பார்த்து, "இந்திரனை ஜயித்த இந்த துஷ்ட ராக்ஷஸன் ரதத்திலிருந்துகொண்டு நமது மாருதியைக் கொல்ல விரும்புகிறான். ஆகையால் அவனுடைய இருதயத்தைப் பிளந்து உயிரை வாங்கும் கோரமான பாணங்களைப் பிரயோகிக்கவேண்டும்" என்றான். லக்ஷ்மணன் அப்படியே செய்கிறேனென்று, வெகு தூரத்தில் மஹா பலவானான அந்த ராக்ஷஸன் தேர்த்தட்டில்

பெரிய மலையைப்போல் கர்ஜித்துக்கொண்டு உட்கார்ந்திருப்பதைக் கண்டார்.

இத்யேவமுக்தஸ்து ததா3 மஹாத்மா
விபீ4ஷணேநாரி விபீ4ஷணேந |
த3த3ர்ஶ தம் பர்வத ஸந்நிகாஶம்
ரணே ஸ்தி2தம் பீ4மப3லம் நத3ந்தம் ॥ (35)

---

## ஸர்க்கம் 87

# இந்திரஜித்திற்கும் விபீஷணனுக்கும் நடந்த ஸம்வாதம்

ஏவமுக்த்வா து ஸௌமித்ரிம் ஜாதஹர்ஷோ விபீ4ஷண: |
த4நுஷ்பாணிந மாதா3ய த்வரமாணோ ஜகா3ம ஹ ॥ (1)

பிறகு கோதண்டபாணியான லக்ஷ்மணனை அழைத்துக் கொண்டு விபீஷணன் வெகு ஸந்தோஷத்துடன் அந்த மரச்சோலையிற் புகுந்து, யாக பூமியை அவருக்குக் காட்டினான். அங்கே கருத்த நீருண்ட மேகத்தைப்போல் ஒரு பெரிய ஆலமரம் ஆகாசத்தையும் பூமியையும் மறைத்துக்கொண்டிருந்தது. அப்பொழுது விபீஷணன், "இவ்விடத்தில் இந்திரஜித்து ஸகல பூதங்களுக்கும் பலி கொடுத்துத் திருப்தி செய்து இங்கிருந்து யுத்தத்திற்குக் கிளம்புவான். பிறகு ஒருவனுடைய கண்ணிலும் படமாட்டான். உத்தமமான சரங்களால் சத்துருக்களைக் கட்டிவிடுவான். அவன் இங்கே வருவதற்கு முன், தீக்ஷ்ணமான பாணங்களால் அவனையும் ரதத்தையும் குதிரைகளையும் ஸாரதியையும் நாசம் செய்யவேண்டும்" என்றான்.

அப்படியே ஆகட்டுமென்று சொல்லி லக்ஷ்மணன் வில்லை வளைத்து நாணேற்றிப் பாணங்களைத் தொடுத்துத் தயாராய் நின்றார். அதற்குள் அக்னியைப்போல் ஜ்வலிக்கும் ரதத்தில் வீரத்வஜங்கள் விளங்க, இந்திரஜித்து கவசம்பூண்டு வில்லும் கையுமாய் வருவதைக் கண்டார்கள். லக்ஷ்மணன் அவனையழைத்து, "புலஸ்திய வம்சத்தில் பிறந்த வீரசிரேஷ்ட! நீ இதுவரையிலும் சத்துருக்களால் ஜயிக்கப்படாதவனென்று சொல்லுகிறார்கள். உன்னை யுத்தத்திற்கு அழைக்கிறேன். உன் பலத்தையும், வீரியத்தையும், திறமையையும் காட்டுவதற்கு இதே ஸமயம்" என்றார். அதைக் கேட்டு இந்திரஜித்து பக்கத்தில் நின்ற விபீஷணனைப் பார்த்து, "அடே! த்ரோஹி! நீ இந்த லங்கையில் பிறந்து வளர்ந்தவன்; என் பிதாவுடன் பிறந்தவன்! எனக்குச் சிற்றப்பன்; உனக்குப் பிள்ளையான எனக்கே துரோகம் செய்யத் துணிந்தாயா? உனக்குப் பந்துக்களுமில்லை; மித்திரனுமில்லை; ஜாதியுமில்லை; யாவற்றையும் துறந்தவன்; மரியாதை தர்மம் முதலிய கட்டுப்பாடுகள்



ஒன்றுமில்லாதவன். துர்புத்தி பிடித்தவனே! உன்னைப் பார்க்க எனக்குப் பரிதாபமுண்டாகிறது. உன் இனத்தாரை விட்டு விலகி, சத்துருவிற்கு ஊழியம் செய்ய உன் தலையில் எழுதியிருக்கிறதல்லவா? அல்ப புத்தியுள்ளவனாகையால், தன் சுற்றத்தாருடன் ஆனந்தமாகக் காலம் கழிப்பதற்கும் அல்பர்களை அண்டியிருப்பதற்குமுள்ள தாரதம்யம் உனக்குத் தெரியவில்லை. சத்ரு ஒருவன் குணசாலியாயிருந்தாலும், நம்மைச் சேர்ந்தவர்கள் குணமில்லாதவர்களாயிருந்தாலும், நம்மைச் சேர்ந்தவர்களே மேலானவர்கள். எப்படியானாலும் பிறன் பிறனேயல்லவா? தன் இனத்தாரை விட்டுச் சத்ருக்களைப் போய்ச் சேருகிறவனை, அவர்கள் தங்களுக்குக் காரியம் முடியும்வரையில் உபசரிப்பார்கள். அவன் மூலமாய் அவனுடைய இனத்தாரை அழித்த பிறகு அவனையும் அழிப்பார்களென்பதில் ஸந்தேகமுண்டோ? இப்படி என் ஹோமத்தைக் கெடுத்து, லக்ஷ்மணனை இங்கே அழைத்துவரும் குரூர காரியமும் இரக்கமின்மையும் எங்களுக்கு க்ஞாதியான உனக்கல்லது மற்றவர்க்கு ஸாத்தியமோ?" என்று நிந்தித்தான்.

அதற்கு விபீஷணன், "என் ஸ்வபாவத்தையும் நடத்தையையும் அறியாதவன்போல் ஏன் வீண் பெருமை பேசிக்கொள்ளுகிறாய்? நீ ராவணனுக்குப் பிறந்தவனல்லவா? அவனுடைய ஸகல துர்க்குணங்களும் உனக்கும் இருக்குமல்லவா? நான் உனக்குச் சிற்றப்பனென்ற முறைமைக்காவது மரியாதைசெய்து இந்தக் கடும் வார்த்தைகளைச் சொல்வதை நிறுத்து. நான் ராக்ஷஸகுலத்தில் பிறந்தது வாஸ்தவமே. ஆனால் அவர்களுக்குரிய குரூர கிருத்யங்களில்லாமல் ஸாதுக்களுடைய மார்க்கத்தை அனுஸரிக்கிறேனென்பது எனக்கு முக்யகுணம். அதர்மமும் குரூரகிருத்யங்களும் எனக்கு இஷ்டமில்லை. நான் உங்களை விட்டு வந்ததற்காக என்னைக் குற்றம் சாட்டுகிறாய். உன் பிதாவான ராவணன் தன்னுடன் பிறந்த என்னைக் கடும் வார்த்தைகளைப் பேசி ஏன் துரத்தினான்? ஸ்வஜாதி அபிமானமும் பந்துக்களுக்குள்ள பிரியமும் ஸஹோதர வாத்ஸல்யமும் அவனிடத்தில் எங்கே? மேலும் அவன் துன்மார்க்கத்திலும் குரூரகிருத்யங்களிலும் பிரவேசிப்பதைக் கண்டு வெறுப்படைந்து விலகினேன். கையில் சுற்றின ஸர்ப்பத்தை உதறியெறிவதுபோல், தர்மத்தை விட்டுப் பாபத்திலேயே புத்தியை நாட்டினவனை விலக்கவேண்டியதுதானே; அப்பொழுதுதான் நமக்கு ஸௌக்யமுண்டாகும். பிறரை ஹிம்ஸிப்பதும், பிறருடைய பொருளை அபகரிப்பதும், பரஸ்த்ரீகளைப் பலாத்காரம் செய்வதும் வெறுக்கத்தக்கவை. தீப்பிடித்தெரியும் வீட்டிலிருந்து ஒருவன் தப்பி ஓடுவதுபோல், அந்தத் துன்மார்க்கத்தை விட்டு விலகவேண்டும். பிறருடைய பொருளை அபகரிப்பது, பரஸ்த்ரீகளை பலாத்காரம் செய்வது, மித்திரர்களிடத்தில் காரணமில்லாமல் ஸந்தேகிப்பது என்ற இம்மூன்றும் பெரும் குற்றமாகும். இவை ஒருவனைச் சீக்கிரத்

தில் அழித்துவிடும். மஹரிஷிகளைக் கோரமாய் வதம் செய்வதும், தேவர்களுடன் பகைப்பதும், கர்வமும் கோபமும், ஒருவனிடத்தில் தீராத த்வேஷம் வைப்பதும், பிறருடைய க்ஷேமத்தைக்கண்டு பொறாமை கொள்வதும், இதர உத்தம குணங்களை மறைத்து, மேகங்கள் பர்வதத்தை மூடுவதுபோல் இருந்தவிடம் தெரியாமல் செய்தன. என் தமயனும் உன் பிதாவுமான ராவணனிடத்தில் அநேக நல்ல குணங்களிருந்தும் இந்தத் துர்க்குணங்களுக்காகவே அவனைவிட்டு வந்தேன். இந்த லங்கையும் நீயும் உன்பிதாவும் அதிசீக்கிரத்தில் அழிவீர்கள். நீ சிறுவன்; துஷ்டன்; ஸாதுக்களால் பழக்கப்படாதவன்; தலை தெரியாத கர்வம்கொண்டவன்; யமனுடைய பாசத்தால் கட்டப்பட்டு உனக்குக் காலம் குறுகிவிட்டது. ஆகையால் உனக்குத் தோன்றினபடியெல்லாம் சொல். இதோ உனக்கு ஆபத்து வந்துவிட்டது; என்னைப் பரிகாசம் பண்ணுகிறாயே. இந்த ஆலமரத்தடியில் உன்னால் வரமுடியுமா? ராமலக்ஷ்மணர்களை விரோதித்த பிறகும் உன் உயிர் தப்புமா? லக்ஷ்மணனுடன் யுத்தம் செய். அதிசீக்கிரத்தில் யமலோகம் சென்று, யமனுக்கு அடிமையாவாய். உன் பூர்ணபலத்தையும் காட்டு. உன் அஸ்திரங்களையும் சஸ்திரங்களையும் வஞ்சனையில்லாமல் பிரயோகம் செய். லக்ஷ்மணனுடைய பாணங்களுக்குத் தப்பி, உயிருடன் லங்கைக்குத் திரும்பிப் போவோமென்ற ஆசையை விடு'' என்றார்.

*நித³ர்ஶய ஸ்வாத்மப³லம் ஸமுத்³யதம்*
*குருஷ்வ ஸர்வாயுத⁴ஸாயக வ்யயம் |*
*ந லக்ஷ்மணஸ்யைத்ய ஹி பா³ணகோ³சரம்*
*த்வமத்³ய ஜீவந் ஸப³லோ க³மிஷ்யஸி ||* (33)

---

## ஸர்க்கம் 88

## லக்ஷ்மணனுக்கும் இந்திரஜித்திற்கும் யுத்தம்

*விபீ⁴ஷணவச: ஶ்ருத்வா ராவணி: க்ரோத⁴மூர்சி²த: |*
*அப்³ரவீத் பருஷம் வாக்யம் வேகே³நாப்⁴யுத்பபாத ஹ ||* (1)

**வி**பீஷணனுடைய வார்த்தைகளைக் கேட்டு, இந்திரஜித்து கோபத்தால் தாவிக்குதித்தான். அழகாய் அலங்கரிக்கப்பட்டுக் கருப்புக் குதிரைகள் பூட்டின ரதத்தில் காலாந்தகனைப்போல் வீற்றிருந்து, கத்தி, வில், பாணங்கள் முதலிய ஆயுதங்களை ஜாக்கிரதையாய்க் கவனித்துப் பார்த்து, சத்ரு ஸைன்யத்தை நோக்கி, தனக்கு எதிரில் லக்ஷ்மணன் யுத்தகோலத்துடன் நிற்பதைக் கண்டான். ஆஞ்ஜநேயருடைய முதுகில் உட்கார்ந்திருக்கும் லக்ஷ்மணன் உதயபர்வதத்தில் விளங்கும் ஆதித்தியனைப்போல் பிரகாசித்தார். (இதனால் மாருதியின் தேகம் தங்கநிறமென்றும் லக்ஷ்மணனுடைய தேகம் ஸூரியவர்ணமென்றும் தெரிகின்றன.) பிறகு இந்திரஜித்து விபீஷணனையும் லக்ஷ்மணனையும் வானரவீரர்களையும் நோக்கி, "இன்று என் பராக்கிரமத்தைப் பாருங்கள். என் வில்லிலிருந்து கிளம்பும் பாணவர்ஷத்தைத் தடுங்கள். நீங்கள் பிரஸித்தமான வீரர்களல்லவா? பஞ்சுப்பொதியில் நெருப்புப் பொறிகள் விழுவதுபோல் என் பாணாக்னியால் உங்களுடைய தேகங்கள் எரிந்து சாம்பலாகும். சூலம், கத்தி, தோமரம் முதலிய ஆயுதங்களால் உங்களுடைய அவயவங்களைப் பிளந்து, உங்களெல்லோரையும் யமலோகத்திற்கு அனுப்புகிறேன். மழைக்காலத்தில் குமுறும் மேகங்களைப்போல் குமுறிச் சரமாரியைப் பொழியும்பொழுது, எனக்கெதிரில் நிற்கக்கூடியவன் எவனாவது இருந்தால் வெளியில் வாருங்கள். அன்று ராத்திரி யுத்தத்தில் வஜ்ரங்களையும் இடிகளையும் போன்ற பாணங்களால் ராமலக்ஷ்மணர்களை அடித்துத்தள்ளி மூர்ச்சையடையும்படி செய்தேன். அதை அதிசீக்கிரத்தில் மறந்துவிட்டீர்களா? அல்லது யமலோகத்திற்குப் போக நிச்சயித்திருக்கிறீர்களா? உங்களுக்கு விநாச காலம் ஸமீபித்தாலல்லாமல், காலஸர்ப்பம்போல் சீறிக்கொண்டிருக்கும் என்னுடன் யுத்தம் செய்ய வரமாட்டீர்கள்'' என்று கர்ஜித்தான்.

அதைக் கேட்டு லக்ஷ்மணன் அலட்சியமாய்ச் சிரித்துக்கொண்டு "உன்னால் ஒரு நாளும் சாதிக்க முடியாத காரியங்களைப்பற்றி வெகு சாதுரியமாய் பேசுகிறாய்; சொல்லுகிறபடி செய்யப் போகிறதில்லை. காரியங்களை முடித்த பிறகு பேசுகிறவனல்லவா புத்திமான்? நீ ஒரு நாளும் சத்துருவை ஜயித்தோமென்ற பிரயோஜனத்தை அடையப் போகிறதில்லை. அப்படிப்பட்ட வார்த்தைகளைச் சொல்லிக்கொண்டு காலம் கழிக்கிறாய். காரியங்களை முடித்துவிட்டதாக எண்ணி வீணாய் ஸந்தோஷிக்கிறாய். யுத்தகளத்தில் வந்து, மாயையால் மறைந்து, ஆகாசத்தில் ஸஞ்சரிக்கிறாய். அது திருடன் செய்யும் வேலையேயன்றி வீரனுக்கழகா? இதோ உன் பாணங்களுக்கெதிரில் நிற்கிறேன். அதுபோல் நீயும் என் பாணங்களுக்கெதிரே நில். அப்பொழுது உன் திறமையை அறிகிறேன். வீணாய்ப் படபடவென்று ஏன் பிதற்றுகிறாய்?'' என்றார்.

அதைக் கேட்டவுடன் இந்திரஜித்து வில்லை எடுத்து குரூரமான பாணங்களைத் தொடுத்து விடுத்தான். அவை காலஸர்ப்பங்களைப்போல்சீறிக் கொண்டு, லக்ஷ்மணனுடைய அவயவங்களில் பாய்ந்தன. தேகமெங்கும் ரத்தத்தால் நனைந்து, லக்ஷ்மணன் வீரலக்ஷ்மியால் விளங்கிக்கொண்டு, புகையற்றுக் கொழுந்துவிட்டெறியும் அக்னியைப்போல் ஜ்வலித்தார். தன் பராக்கிரமத்தைக்கண்டு இந்திரஜித்து ஸந்தோஷமடைந்து, இடிபோல் கர்ஜித்து, "இன்று என்னால் பிரயோகிக்கப்படும் பாணங்கள் உன்னைச் சித்திரவதை செய்து உன் உயிரைக் கொள்ளை கொள்ளப் போகின்றன. இன்று நரிகளும் கழுகுகளும் பருந்துகளும் கூட்டம் கூட்டமாய் உன் மாம்ஸத்

தைப் பிடுங்கித் தின்னப்போகின்றன. துஷ்ட புத்தியுள்ள அந்த ராமன் நீ படும் பாட்டைப் பார்க்கப்போகிறான். க்ஷத்ரியப்பதரே! நீசனே, நீ ராமனிடத்தில் எல்லையற்ற பக்தி வைத்திருக்கிறாயல்லவா? இன்று யுத்தகளத்தில் நீ கவசம் பிளந்து, வில்முறிந்து, தலையிழந்து முண்டமாய்க் கிடப்பதை அவன் பார்க்கப்போகிறான்'' என்றான்.

அதற்கு லக்ஷ்மணன், விசேஷ அர்த்தங்களடங்கினதும் தகுந்த காரணங்களுடன் கூடினதுமான வார்த்தைகளால் அவனுடைய கடும்மொழிகளைக் கண்டித்தார். "புத்திகெட்டவனே! வார்த்தைகள் வீரியமாகுமா? அதை விடு. குரூரகிருத்யங்களைச் செய்வதே உன் தொழிலல்லவா? ஏன் இப்படிப் பேசுகிறாய்? உன் பலத்தைச் செய்கைகளால் அறிவேன். ஒன்றும் செய்யாமல் வீண் வார்த்தை பேசுவதில் என்ன பிரயோஜனம்? உன் ஆத்ம ஸ்தோத்ரத்தை நான் நம்பும்படியான காரியங்களைச் செய். இதோ பார். உன்னைப்போல் கோபமாயும் கடுமையாயும் கர்வமாயும் வீண்பெருமையாயும் பேசாமலேயே உன்னைக் கொல்கிறேன்'' என்று, நாணைக் காதுவரையில் இழுத்து, ஐந்து கூர்மையான நாராசங்களை அவனுடைய மார்பில் பிரயோகித்தார். அவை ஜ்வலிக்கும் ஸர்ப்பங்களைப்போல் அதிவேகமாய் அவனுடைய மார்பில் பதிந்து ஸூரிய கிரணங்களைப்போல் பிரகாசித்தன. அதனால் ரோஷம் கொண்டு, அவன் மூன்று பாணங்களால் லக்ஷ்மணனைக் குறி தப்பாமல் துளைத்தான்.

பிறகு அவ்விருவர்களும் ஒருவரையொருவர் ஜயிக்க விரும்பிப் பயங்கரமான யுத்தம் செய்தார்கள். இருவரும் பலத்திலும் பராக்கிரமத்திலும் அஸ்திர சஸ்திர வித்யைகளிலும் தைரியத்திலும் நிகரற்றவர்கள்; சத்துருக்களால் ஜயிக்க முடியாதவர்கள். ஆகாச வீதியில் இரண்டு கிரஹங்கள் ஒன்றையொன்று எதிர்த்ததுபோல், அந்த வீரர்கள் யுத்தம் செய்தார்கள். இந்திரனையும் விருத்திரனையும் போல் பயமற்றவர்கள்; யுத்தத்தில் அசைக்க முடியாதவர்கள்; இரண்டு ஆண் ஸிம்ஹங்களைப்போல் சண்டையிட்டார்கள்; மஹா உத்ஸாகத்துடன் ஓயாமல் சரமாரி பொழிந்தார்கள்; மஹாமேகங்களைப்போல் கர்ஜித்துக் கொண்டு ஒருவரையொருவர் பாணவர்ஷங்களால் மறைத்தார்கள். இந்திரனும் சம்பராஸுரனும் யுத்தம் செய்ததுபோல், மஹாபலவான்களான அவ்விருவரும் வரவர வீராவேசம் அதிகரித்து, யுத்த சாஸ்திரத்தில் தங்களுக்குள்ள பயிற்சியையும் திறமையையும் காட்டினார்கள்.

அபி4ப்ரவ்ருத்3தௌ4 யுதி4 யுத்3த4கோவிதௌ3
ஶராஸி சண்டௌ3 ஶிதஶஸ்த்ரதா4ரிணௌ |
அபீ4க்ஷ்ண மாவிவ்யத4துர் மஹாப3லௌ
மஹாஹவே ஶம்ப3ர வாஸவாவிவ || (40)

---



## ஸர்க்கம் 89

## லக்ஷ்மணனுக்கும் இந்திரஜித்திற்கும் யுத்தம் (தொ)

தத: ஶரம் தா3ஶரதி2: ஸந்தா4யாமித்ர கர்ஶந: |
ஸஸர்ஜ ராக்ஷஸேந்த்3ராய க்ருத்3த4: ஸர்ப இவ ஶ்வஸந் || (1)

பிறகு, லக்ஷ்மணன் மஹாநாகம்போல் கோபத்தால் சீறிக்கொண்டு, ஒரு சிரேஷ்டமான பாணத்தை நாணில் பூட்டி, இந்திரஜித்தின்மேல் விடுத்தார். அவருடைய நாணோசையைக் கேட்டு, இந்திரஜித்து முகம் வெளுத்து அவரைப் பார்த்தான். அவன் வாடியிருப்பதையும், லக்ஷ்மணன் யுத்தாவேசத்தால் பூரித்திருப்பதையும் கண்ட விபீஷணன், "இவன் களைத்து வீரியம் குறைந்திருக்கிறானென்று அநேக அடையாளங்கள் எனக்குத் தெரிகிறது. ஆகையால் சீக்கிரமாய் யுத்தத்தை நடத்தி இவனைக் கொல்ல வேண்டும்'' என்றான்.

உடனே லக்ஷ்மணன் அக்னி ஜ்வாலைகளைப் போன்ற பாணங்களை வில்லில் பூட்டி இந்திரஜித்தின்மேல் பிரயோகித்தார். அவன் இந்திரியங்கள் சிதறி, இடிவிழுந்ததுபோல் ஒரு முகூர்த்தம் வரையில் ஒன்றும் தோன்றாமலிருந்தான். ஆனாலும், கலங்காத தைரியமுடையவனானதால், சீக்கிரத்தில் பிரக்ஞை தெளிந்து, எதிரில் லக்ஷ்மணன் வீர கோஷத்துடன் நிற்பதைக் கண்டு, கோபத்தால் கண்கள் சிவந்து, "அடே! முதலாவது யுத்தத்தில் என் பாணங்களால் நீயும் உன் அண்ணனும் கஷ்டப்பட்டுத் தரையில் கிடந்து புரண்டதை மறந்தாயா? என் பராக்கிரமத்தை இன்னும் அறியவில்லையா? உங்களையும் வானர ஸைன்யத்தையும் இடிபோன்ற பாணங்களால் மூர்ச்சையடைவித்ததை ஞாபகப்படுத்திக்கொள். அல்லது, யம லோகத்திற்கு வழியைத் தேடுகின்றாயோ? அங்கே போக ஆசைகொண்டு என்னுடன் யுத்தம் செய்ய வந்தாயோ? முன் ஒரு தடவை என் பராக்கிரமத்தையும் யுத்தத் திறமையையும் நீ பார்த்து, உனக்குப் புத்தி வந்ததென்றெண்ணினேன். அதை மறந்திருந்தாலும் இன்று நன்றாய்த் தெரிவிக்கிறேன். நில்; ஜாக்கிரதையாய் யுத்தம் செய்'' என்று ஏழு பாணங்களால் லக்ஷ்மணனையும், பத்து பாணங்களால் ஆஞ்ஜநேயரையும், விபீஷணனை அநேக பாணங்களாலும் அடித்தான்.

அதைக் கண்டு லக்ஷ்மணன் சிரித்துக் கொண்டு, "இதென்ன ஒரு பெரும் காரியமா?'' என்று, கோரமான பாணங்களை எடுத்து பிரயோகித்து, "அடே, ராக்ஷஸ! சூரர்கள் யுத்தகளத்தில் வந்தால் உன்னைப்போல் யுத்தம் செய்யார்கள். ஜயத்தை விரும்பினவர்கள் இப்படி அல்ப வீரியமுள்ள ஸாமான்ய பாணங்களை பிரயோகிப்பார்களா? உன் பாணங்களால் எனக்கு யாதொரு உபத்திரவமு

மில்லை; மிகவும் ஸுகமாயிருக்கின்றன" என்று சொல்லிக் கொண்டே சரமாரி தொடுத்தார். அவைகளால் இந்திரஜித்தின் தங்கக் கவசம் பிளந்து, ஆகாசத்திலிருந்து நக்ஷத்திரங்களைப்போல் ரதத்தில் சிதறிற்று. அவன் தேகமெங்கும் பாணங்களால் காயமடைந்து, விருக்ஷங்களால் மூடப்பட்ட பர்வதத்தைப்போல் தோன்றினான். உடனே கோபத்தால் மெய்மறந்து, ஆயிரம் பாணங்களால் லக்ஷ்மணனைப் பிளந்தான். அவருடைய திவ்ய கவசம் பொடியாயிற்று.

இப்படி ஒருவருக்கொருவர் பதிலுக்குப் பதில் செய்து கொண்டு, பெருமூச்சு விட்டுக் கொண்டு, தேகமெங்கும் சரங்களால் துளைபட்டு, ரத்த தாரைகள் பெருக, வெகுநேரம் கூரான பாணங்களால் ஒருவரையொருவர் சிதைத்தார்கள். யுத்த ரகஸ்யங்களில் கைதேர்ந்தவர்கள்; பயங்கரமான பராக்கிரமமுள்ளவர்கள்; பரஸ்பரம் ஜயிக்க நிச்சயித்தவர்கள்; தேகமெங்கும் பாணங்கள் ஊடுருவி, கவசம் பிளந்து, மலையிலிருந்து காட்டாறுகள் பெருகுவதுபோல் ரத்தப் பிரவாகம் சொரிந்து, கேட்போர் நடுங்கும்படியாய்க் கர்ஜித்துக் கொண்டு, சரமாரிபொழிகின்ற அவ்விருவரும் கருத்த காளமேகங்களைப்போல் விளங்கினார்கள். இப்படி வெகு நேரம் சென்றும் அவர்கள் களைக்கவுமில்லை; யுத்தத்தில் ஆசையும் குறையவில்லை. பலவகையான பாணங்களையும் அஸ்திரங்களையும் பிரயோகித்து, ஆகாசமும் பூமியும் தெரியாதபடி சரக்கூடு கட்டினார்கள். அஸ்திரவித்யையில் அவர்களை மிஞ்சினவர்களில்லை; விசித்திரமாயும், சாதுரியமாயும், லாகவமாயும், குறிதப்பாமல், கைசளைக்காமல், பாணங்களை ஓயாமல் பிரயோகித்து வந்தார்கள்; அந்த யுத்தம் பார்க்கப் பயங்கரமாயிருந்தது. ஆகாசத்திலிருந்து பேரிடிகள் விழுவதுபோல் அவர்களுடைய நாணோசை தனித்தனியாய்க் கேட்டது. கோரமாய்க் கர்ஜிக்கும் மேகங்களைப்போல், அவர்களுடைய ஸிம்ஹநாதங்களும், வீரத்வனிகளும், அட்டகாஸங்களும் கர்ஜனைகளும் கேட்கப்பட்டன. அபாரகீர்த்திசாலிகள்; ஜயிப்பதில் மனத்தை நாட்டினவர்கள்; தங்கக்கட்டுகளால் அலங்கரிக்கப்பட்ட நாராசங்கள் தேகமெங்கும் பாய்ந்து ரத்தவெள்ளம் பெருகிற்று. அவை ஊடுருவி, ரத்தத்தால் பூசப் பட்டுப் பூமியைப் பிளந்து சென்றன. சில பாணங்கள் ஆகாசத்தில் ஒன்றிற்கொன்று தாக்கின; சில ஒன்றையொன்று முறித்தன; சில ஒன்றையொன்று துண்டித்தன. கொழுந்துவிட்டெரியும் கார்ஹபத்யம் ஆஹவனீயமென்ற அக்னிகளால் யாகத்தில் கொளுத்தப்பட்ட தர்ப்பைக் கட்டுகளைப் போல், அவர்களால் பிரயோகிக்கப்பட்ட பாணங்கள் தீப்பிடித் தெரிந்தன. அந்த மஹா வீரர்களுடைய தேகங்கள் காயம்பட்டு, இலைகளில்லாமல் புஷ்பங்களால் நிறைந்த சால்மலீவிருக்ஷத்தையும் பலாசவிருக்ஷத்தையும் ஒத்திருந்தன.



இப்படி அவ்விருவரும் ஒருவரையொருவர் கொல்லாமல் விடுகிறதில்லையென்று பிரதிக்ஞை செய்து கொண்டு அடிக்கடி கோர யுத்தம் செய்தார்கள். ஓயாமல் ஒருவரையொருவர் பாணங்களால் அடித்தும் கொஞ்சமாவது சளைக்கவில்லை. இருவருடைய தேகங்களிலும் சரங்கள் பதிந்து, அவை அடர்ந்த காடுகளால் மறைந்த பர்வதங்களைப்போல் விளங்கின. அம்புகளால் மூடப் பட்டு, ரத்தத்தால் பூசப்பட்ட அவர்களுடைய ஸகல அவயவங்களும், ஜ்வாலைகளால் சூழப்பட்ட இரண்டு நெருப்புக்களைப்போல் பிரகாசித்தன. இப்படி வெகுநேரம் சண்டையிட்டும், அவர்களுக்கு ஆசைதீரவுமில்லை; கைசோரவுமில்லை. பிறகு, கலங்காத தைரியத்துடனும் அடங்காத உத்ஸாகத்துடனும் போர் புரியும் லக்ஷ்மணனுக்கு சிரமத்தைத் தீர்க்கும்பொருட்டு, விபீஷணன் அவருக்கு ஸமீபத்தில் வந்து, ஹிதமாயும் பிரியமாயும் இருக்கும் வார்த்தைகளைச் சொன்னான்.

அத² ஸமரபரிஸ்ரமம் நிஹந்தும்
ஸமரமுகே²ஷ்வஜிதஸ்ய லக்ஷ்மணஸ்ய |
ப்ரியஹித முபபாத³யந் மஹௌஜா:
ஸமரமுபேத்ய விபீ⁴ஷணோ வதஸ்தே² || (41)

---

## ஸர்க்கம் 90

# இந்திரஜித்து ரதத்தை இழந்தது

---

யுத்⁴யமானௌ து தௌ த்³ருஷ்ட்வா ப்ரஸக்தௌ நரராக்ஷஸௌ |
ப்ரபி⁴ந்நாவிவ மாதங்கௌ³ பரஸ்பர ஜயைஷிணௌ || (1)

அவ்விருவரும் மதயானைகளைப்போல், ஒருவரையொருவர் கொல்ல நிச்சயித்து, வரவர ரோஷம் அதிகரித்து, யுத்தம் செய்வதைப் பார்க்க விபீஷணன் அவ்விடத்திற்கு வந்து, வில்லைவளைத்து கூரான பாணங்களால் ராக்ஷஸர்களை வருத்தினான். முன்பு இந்திரனுடைய வஜ்ராயுதத்தால் மலைகள் பிளந்து இறக்கைகள் அறுபட்டதுபோல், அவை ராக்ஷஸர்களுடைய தேகங்களைப் பிளந்தன. அவனுடைய மந்திரிகள் ராக்ஷஸ வீரர்களைக் கத்தி, சூலம் முதலிய ஆயுதங்களால் வெட்டிக் கொன்றார்கள். அவர்களால் சூழப்பட்ட விபீஷணன், மதயானைகளால் சூழப்பட்ட யானைத்தலைவனைப்போல் விளங்கினான் (யுத்தத்தைப் பார்ப்பதற்காக முதலில் வந்தவன். பிறகு தானும் யுத்தம் செய்யவேண்டுமென்று நினைத்தான். ஆனால் அவர்களில் யார் பலசாலியென்று அறிவதற்குச் சற்றுநேரம் சும்மாயிருந்தான். இருவரும் பலத்தில் ஸமானர்களென்றறிந்து, தான் ஏதாவது ராமகைங்கரியம் செய்ய வேண்டுமென்று யுத்தம்செய்ய ஆரம்பித்தான்). ஸாமர்த்தியமாய்ப் பேசும் சக்தியுள்ள அந்த ராக்ஷஸாதிபதி, வானரர்களை உத்ஸாஹப்

படுத்துவதற்கு அது நல்ல ஸமயமென்றறிந்து, "மித்திரர்களே! ராவணனுக்கு இவனைத் தவிர இப்பொழுது வேறு கதியில்லை; இதைத் தவிர வேறு ஸைன்யமுமில்லை. ஏன் சும்மாவிருக்கிறீர்கள்? இவன் இறந்தால், ராவணனைத் தவிர மற்ற எல்லோரும் மடிந்தார்களென்பது நிச்சயம். பிரஹஸ்தன், நிகும்பன், கும்பன், கும்பகர்ணன், தூம்ராக்ஷன், ஸம்ஹ்ராதி, விகடன், நிக்னன், தபனன், அதமன், ப்ரகாஸன், ஜங்கன், ப்ரஜங்கன், அக்னிகேது, ரச்மிகேது, வித்யுஜ்ஜிஹ்வன், த்விஜிஹ்வன், ஸூர்யசத்ரு, அகம்பனன், ஸுபார்ச்வன், சக்ரமாலி, ஜம்புமாலி, மஹாமாலி, அக்னிப்ரபன், ஸுப்தக்னன், யக்ஞகோபன், வஜ்ரதம்ஷ்ட்ரன், கம்பனன், தேவாந்தகன், நராந்தகன் முதலிய ராக்ஷஸர்கள் ஸாமான்யர்களா? பலம், வீர்யம், சௌர்யம், தைர்யம், பராக்ரமம் அஸ்திர சஸ்திர வித்தைகளில் திறமை லாகவம் முதலிய உத்தமகுணங்களில் அவர்களுக்கு நிகருண்டோ? அவர்களெல்லோரையும் யுத்தம் செய்து கொன்றோமல்லவா? மஹாஸமுத்ரத்தைக் கைகளால் நீந்தினவர்களுக்கு ஒரு குளம்புப் படியைத் தாண்ட யோசனையென்ன? நீங்கள் ஜயிக்கவேண்டியவர்கள் இவர்களைத் தவிர வேறில்லை. தலை தெரியாமல் கர்வம்கொண்டு நம்முடன் யுத்தம் செய்ய வந்த ராக்ஷஸர்களெல்லோரும் திரும்பிச் சென்றார்களா? இவனுக்கு நான் சிற்றப்பன்; நானே இவனைக் கொல்வது தகாது. அப்படி இருந்தும் ராமனுக்காக இரக்கத்தை விட்டு என் அண்ணன் மகனைக் கொல்வேன். என் மனம் ஒப்பினாலும், கண்ணீர் கண்களை மறைக்கின்றன. ஆகையால் லக்ஷ்மணனென்ற மஹாவீரன் அவனை அடக்குவான். ஸமீபத்திலிருக்கும் இவனுடைய வேலைக்காரர்களை வானரர்கள் அடித்துக் கொல்லட்டும்" என்று விபீஷணனால் உத்ஸாகப்படுத்தப்பட்ட வானர வீரர்கள், ஸந்தோஷக் கூச்சலிட்டு வால்களைச் சுழற்றினார்கள். நீருண்ட மேகத்தைக் கண்ட மயில்களைப்போல், பலவகையாய்க் கூச்சலிட்டு, தோள்களையும், புஜங்களையும் தட்டி, வால்களைச் சுழற்றிப் பூமியில் அடித்தார்கள்.

அந்த வானரத் தலைவர்களுக்கு நடுவில் விளங்கும் ஜாம்பவான், பாறைகளாலும், நகங்களாலும், பற்களாலும் ராக்ஷஸர்களைக் கொன்றார். அவர்கள் பயமில்லாமல் அவரைச் சூழ்ந்துகொண்டு, பாணங்களாலும் தீக்ஷ்ணமான ஆயுதங்களாலும் அடித்தார்கள். முன்காலத்தில் தேவாஸுரர்களுக்கு நடந்த கோர யுத்தத்தைப் போல், வானரர்களும் ராக்ஷஸர்களும் ஒருவரையொருவர் எதிர்த்துச் சண்டையிட்டார்கள். அப்பொழுது ஆஞ்ஜநேயர் பெரிய ஆச்சா மரத்தைப் பிடுங்கிக்கொண்டு அநேக ஆயிரம் ராக்ஷஸர்களை அடித்துக் கொன்றார்.

இந்திரஜித்து சற்றுநேரம் தன் சிற்றப்பனுடன் யுத்தம்செய்து, பிறகு லக்ஷ்மணனை எதிர்த்தான். அவர்கள் பொழியும் சரமாரிகளால் அவர்கள் இருக்குமிடமே தெரியவில்லை. வர்ஷருதுவின்



ஆரம்பத்தில் ஸூரியசந்திரர்கள் மேகங்களால் மறைக்கப்படுவது போல், அவ்விருவரும் சரக்கூட்டத்தால் மறைந்தார்கள். சரங்களை அம்பறைகளிலிருந்து எடுப்பதும், வில்லில் பூட்டுவதும், வில்லைக் கையில் பிடிப்பதும், பாணங்களை விடுவதும், காது வரையில் நாண்களை இழுப்பதும், முன்னடி பின்னடி வலசாரி இடசாரி முதலிய வரிசைகளைக் காட்டுவதும், வில்லுகளை முஷ்டிகளால் பிடிப்பதும், குறிவைப்பதும் அவர்களுடைய கைலாகவத்தால் யாதொன்றும் தெரியவில்லை. அந்தச் சரமாரியால் ஆகாசமெங்கும் மறைக்கப்பட்டு, ஒருவருடைய வடிவம் மற்றவனுக்குத் தெரியவில்லை. இந்திரஜித்து லக்ஷ்மணனை அடிக்கிறானா என்றாவது லக்ஷ்மணன் இந்திரஜித்தை அடிக்கிறானா என்றாவது பார்ப்பவர்களுக்குத் தெரியாமல் அவ்வளவு வேகமாய்ப் பாணங்களை பிரயோகித்தார்கள். ஆகாசத்தில் இடைவெளியில்லாமல் ஒரே இருட்டாயிற்று. திக்குகளும் சரங்களால் நிறைந்து செல்ல முடியாமலிருந்தது. ஸகல வஸ்துக்களும் பயங்கரமான ஒரு பெரும் இருட்டால் மூடப்பட்டது. பகலாயிருந்தும், ஸூரியன் அஸ்தமித்து ராத்திரிகாலத்தில் இருள் நிறைந்து ஒன்றும் புலப்படாதது போலிருந்தது. அநேக ஆயிர ரத்தப்பிரவாகங்கள் ஓடிக்கொண்டிருந்தன. க்ரூரராக்ஷஸர்கள் பயங்கரமாய்க் கர்ஜித்துக் கொண்டிருந்தார்கள். காற்றடிக்கவில்லை. அக்னி ஜ்வலிக்கவில்லை. மஹரிஷிகள் ஸகலப் பிராணிகளுக்கும் க்ஷேமமுண்டாகட்டுமென்று ஆசீர்வதித்தார்கள். அந்த யுத்தத்தைப் பார்க்க வந்திருந்த கந்தர்வ சாரணகணங்கள் பயத்தால் நடுங்கி அவ்விடம்விட்டுப் போனார்கள்.

பிறகு, அந்த ராக்ஷஸவீரனுடைய ரதத்தில் பூட்டியிருந்த நான்கு குதிரைகளை லக்ஷ்மணன் நான்கு பாணங்களால் கொன்றார். வேறொரு பாணத்தை எடுத்து ஜாக்கிரதையாய் வில்லில் தொடுத்துக் காதுவரையில் இழுத்து, இந்திரஜித்தின் ஸாரதியின்மேல் பிரயோகிக்க, அது அவனுடைய சிரஸை அறுத்துத் தள்ளிற்று. அப்பொழுதும் இந்திரஜித்து சற்றும் கலங்காமல், குதிரைகளை நடத்திக் கொண்டே யுத்தம் செய்துவந்தான். எல்லோரும் அவனுடைய யுத்தத் திறமையைப் பார்த்து ஆச்சரியப்பட்டார்கள். அவன் ரதத்தை நடத்திக் கொண்டிருக்கையில் லக்ஷ்மணன் அவனைப் பாணங்களால் அடித்தார். அவன் யுத்தம்செய்யும்பொழுது குதிரைகளைப் பாணங்களால் அடித்தார். பாணப்பிரயோகம் செய்வதில் அவனுடைய குறைகளைக் கவனித்து, லக்ஷ்மணன் வெகு லாகவமாய்ப் பாணங்களை எய்து அவனை மறைத்தார். தன் ஸாரதி இறந்தபிறகு, இந்திரஜித்து யுத்தம்செய்வதில் உத்ஸாகமிழந்து, மனம் தளர்ந்தான். கர்வமும் அழிந்தது. அதைக் கண்டு வானரத் தலைவர்கள் ஸந்தோஷத்தால் கூச்சலிட்டுலக்ஷ்மணனைக்கொண்டாடினார்கள். பிறகு பிரமாதி, சரபன், ரபஸன், கந்தமாதனனென்ற வானரத் தலைவர்கள் பொறுமைகொண்டு ரதத்தில் கட்டின குதிரை

களின்மேல் தாவி உட்கார்ந்தார்கள். பர்வதங்களைப் போன்ற அவர்களுடைய பாரத்தைத் தாங்காமல், அவை வாயாலும் மூக்காலும் கண்களாலும் காதுகளாலும் ரத்தத்தைக் கக்கி, எலும்புகள் ஒடிந்து, அவயவங்கள் நொறுங்கி, உயிரிழந்து பூமியில் விழுந்தன. அந்த வானர வீரர்கள் இந்திரஜித்தின் ரதத்தையும் குதிரைகளையும் நாசம்செய்து, அதிவேகமாய்த் தாவி லக்ஷ்மணனுடைய ஸமீபத்தில் வந்தார்கள். அந்த ராக்ஷஸன் குதிரைகளும் ஸாரதியுமற்று ரதத்திலிருந்து குதித்து, லக்ஷ்மணனை சரமாரியால் வருத்தினன். மஹேந்திரனைப் போன்ற ராமானுஜனும், பாதசாரியாய் நின்ற இந்திரஜித்தைத் தன் சரவேகத்தால் தடுத்தார்:

தஹோ மஹேந்த்³ர ப்ரதிம: ஸ லக்ஷ்மண:
பதா³திநம் தம் நிஹதைர் ஹயோத்தமை: |
ஸ்ருஜந்த மாஜௌ நிஶிதாந் ஶரோத்தமாந்
ப்⁴ருஶம் ததா³ பா³ணக³ணைர் ந்யவாரயத் ‖ (51)

## ஸர்க்கம் 91

# இந்திரஜித்தின் வதம்

ஸ ஹதாஶ்வோ மஹாதேஜா பூ⁴மௌ திஷ்ட²ந் நிஶாசர: |
இந்த்³ரஜித் பரமக்ருத்³த⁴: ஸம்ப்ரஜஜ்வால தேஜஸா ‖ (1)

குதிரைகள் மடிந்த பிறகு, இந்திரஜித்து பூமியில் நின்றுகொண்டு கோபத்தால் தேகம் பதறி, தேஜஸால் ஜ்வலித்தான். லக்ஷ்மணன் இந்திரஜித்தென்ற அவ்விரு வில்லாளிகளும், காட்டில் ஒன்றையொன்று ஜயிக்க விரும்பி, சண்டையிடும் யானைகளையும் காளைகளையும்போல் யுத்தம் செய்தார்கள். அவர்களைச் சேர்ந்தவர்களும், அவர்கள் போகுமிடமெல்லாம் தாங்களும் போய்க்கொண்டு, அதிக ஆவலுடன் பார்த்துக் கொண்டிருந்தார்கள். அப்பொழுது அந்த ராக்ஷஸன் தன் பரிவாரங்களைப் புகழ்ந்து உத்ஸாகப்படுத்தி, "மித்திரர்களே! இப்பொழுது ஸகல திக்குகளும் இருளால் மூடப்பட்டு மித்திரன் சத்துரு என்பது தெரியவில்லை. வானரர்களை மயக்கி நான் இங்கே இல்லாததை அவர்கள் அறியாதபடி வெகு தைரியமாய் யுத்தம் செய்யுங்கள். நான் வேறொரு ரதத்தைக் கொண்டு வருகிறேன். நான் லங்கைக்குப் போயிருப்பது இவர்களுக்கு ஒருக்காலும் தெரியக்கூடாது. ஜாக்கிரதையாயிருங்கள்" என்று சொல்லிவிட்டு, நகரத்தில் சென்று தங்கத்தால் அலங்கரிக்கப்பட்ட வேறொரு ரதத்தில் ஏறிவந்தான். யுத்தத்திற்கு வேண்டிய ஸகல ஆயுதங்களும் அதில் வைக்கப்பட்டிருந்தன. உத்தம அசுவங்கள் பூட்டப்பட்டிருந்தன. அச்வசாஸ்திரத்திலும் அச்வவித்யையிலும் அச்வ ஹிருதயத்திலும் நிபுணனும், தனக்கு ஹிதத்தை உபதேசிப்பவனுமான ஸாரதி அவைகளை நடத்தினன். (அச்வ

தௌ த⁴ந்விநௌ ஜிகீ³ஷந்தௌ அந்யோந்ய மிஷுபி⁴ர் ப்⁴ருஶம் |
விஜயேநாபி⁴ நிஷ்க்ராந்தௌ வநே க³ஜவ்ருஷாவிவ ‖ —யுத். 91ஸ-2 ஈ.

லக்ஷ்மணன் இந்திரஜித்தென்ற அவ்விரு வில்லாளிகளும், காட்டில் ஒன்றையொன்று ஜெயிக்க விரும்பி, சண்டையிடும் யானைகளையும் காளையையும் போல் யுத்தம் செய்தார்கள். (பக்கம் 336 பார்க்க)

Notes : This Blank Page has also to be counted as a another page Number.

It is intentionally left blank after Picture Sketches.!

Released by Maran's Dog ,Toronto, Canada



ஹ்ருதயம்:-குதிரைகளின் ஸ்வபாவத்தையும் லக்ஷணங்களையும் அறிந்து, அவைகள் நமக்கிஷ்டமான வேலைகளைச் செய்யும் உபாயங்களை உபதேசிக்கும் சாஸ்திரம்).

இந்திரஜித்து வேறொரு ரதத்தில் ஏறிவந்ததைக்கண்டு, வானரர்களும் விபீஷணனும் மிகவும் ஆச்சரியமடைந்து, அவனுடைய புத்தியையும் லாகவத்தையும் மெச்சினார்கள். அந்த ராக்ஷஸன் வானரத் தலைவர்களைத் தன் கோபாக்னியால் கொளுத்தி, அநேக நூறு, ஆயிர பாணங்களால் அடித்துத் தள்ளினான். வில்லை மண்டலாகாரமாய் வளைத்து, வெகுலாகவமாய்ச் சரங்களை பிரயோகித்து வானரர்களை ஓடவிடாமல் தடுத்து யமலோகத்திற்கு அனுப்பினான். பராக்கிரமசாலிகளான வானரவீரர்களும் அதைக் கண்டு பயந்து, பிராணிகள் பிரஹ்மாவைச் சரணமடைவதுபோல், லக்ஷ்மணனைச் சரணமடைந்தார்கள். யுத்தாவேசத்தால் அவர் ஜ்வலித்துக் கொண்டு, அவனுடைய வில்லை முறித்துத் தன் லாகவத்தைக் காட்டினார். உடனே இந்திரஜித்து வேறொரு வில்லை எடுத்து நாண்பூட்டினான். அதையும் அவர் மூன்று பாணங்களால் அறுத்து, அவனை ஐந்து பாணங்களால் துளைத்தார். அவை அவனுடைய தேகத்தில் ஊடுருவி, சிவந்த மஹாஸர்ப்பங்களைப் போல் பூமியில் பாய்ந்தன. இந்திரஜித்து கவசம் பிளந்து, வாயால் ரத்தத்தைக் கக்கிக் கொண்டு, வேறு கவசம் பூண்டு, உறுதியான நாண்பூட்டின மற்றொரு வில்லை எடுத்து, தேவேந்திரன் மழைத் தாரைகளைச் சொரிவதுபோல், அதிலாகவமாய் லக்ஷ்மணன் மேல் சரமாரிப் பொழிந்தான். அவர் கொஞ்சம் கூடக் கலங்காமல், அவைகளைத் தடுத்துத் தன் ஸாமர்த்தியத்தை அந்த ராக்ஷஸனுக்குக் காட்டினார். அதைப் பார்த்து எல்லோரும் ஆச்சரியப்பட்டார்கள். பிறகு பாணங்கள் அதிவேகமாய்ச் செல்லும்படி மந்திரத்தை ஜபித்து, அங்கிருந்த ஒவ்வொரு ராக்ஷஸனையும் மூன்று பாணங்களால் துளைத்து, இந்திரஜித்தையும் அநேக பாணங்களால் பிளந்தார். பலவானான லக்ஷ்மணனால் இப்படி உபத்திரவிக்கப்பட்ட அந்த ராக்ஷஸன் அதிசீக்கிரமாய் அநேக பாணங்களைத் தொடுத்து விடுத்தான். அவை தன்னிடத்தில் வருமுன்னே லக்ஷ்மணன் அவைகளைக் கண்டித்து, ஸாரதியின் தலையை ஒரு பல்லத்தால் அறுத்து, இந்திரஜித்தின் காலடியில் விழச் செய்தார். குதிரைகள் நன்றாய் பழக்கப்பட்டிருந்தபடியால், ஸாரதி இறந்தும் சற்றும் கலங்காமல் முன்போல் அதிசாதுரியமாய் ரதத்தைநடத்திக் கொண்டு விசித்திரமான மண்டலங்களையும் அடிவரிசைகளையும் காட்டின. அதைக் கண்டு லக்ஷ்மணன் ரோஷம் கொண்டு, அவைகளை அநேக பாணங்களால் அடித்து நடுங்கச் செய்தார். இந்திரஜித்து கடுங்கோபமடைந்து லக்ஷ்மணனைப் பத்துப் பாணங்களால் அடித்தான். அவை வஜ்ராயுதங்களைப்போல் அவருடைய கவசத்தைத் தாக்கியபின் கீழே விழுந்தன. இந்திரஜித்து, 'இனி இவனுடைய

கவசத்தைப் பிளக்க முடியாது' என்றெண்ணி, அவரை நெற்றியில் மூன்று பாணங்களால் துளைத்துத் தன் கை லாகவத்தைக் காட்டினான். யுத்தத்தில் வெகு பிரியமுள்ள லக்ஷ்மணன், மூன்று சிகரங்களுள்ள பர்வதத்தைப்போல் அவைகளால் விளங்கினார். மிகுந்த உபத்திரவமடைந்து இந்திரஜித்தினுடைய முகத்தில் ஐந்து கூர்மையான பாணங்களால் அடித்தார். அவ்விருவரும் வீரர்கள்; மஹா பலமுள்ள வில்லையுடையவர்கள்; பிறர் நடுங்கும் பராக்கிரமத்தையுடையவர்கள். ஒருவரையொருவர் தீக்ஷ்ணமான சரங்களால் ஓயாமல் அடித்தார்கள்; ரத்தத்தால் ஸகல அவயவங்களும் பூசப்பட்டு, புஷ்பித்த பலாச விருக்ஷங்களைப்போல் விளங்கினார்கள். ஒருவரையொருவர் ஜயிக்கவெண்ணி, ஸகல அவயவங்களிலும் அம்புகளால் துளைத்தார்கள். பிறகு இந்திரஜித்து கோபாவேசத்தால் விபீஷணனை முகத்தில் மூன்று பாணங்களால் அடித்து, வானரத் தலைவர்களை ஒவ்வொரு பாணங்களால் பிளந்தான். அதைக் கண்டு விபீஷணன் அவனுடைய குதிரைகளைத் தன் கதையால் அடித்துக் கொன்றான். உடனே ராவணபுத்திரன் பூமியில் குதித்து, ரதத்திலிருந்த சக்தியைச் சுழற்றித் தன் சிற்றப்பன்மேல் எறிந்தான். லக்ஷ்மணன் அதைப் பாணங்களால் பத்துத் துண்டுகளாய் அறுத்துத் தள்ளினார். விபீஷணன் ராவண புத்திரனை வஜ்ரம் போன்ற ஐந்து பாணங்களால் மார்பில் அடித்தான். அவை அவனுடைய தேகத்தில் பாய்ந்து சிவந்த ஸர்ப்பங்களைப்போல் வெளியில் வந்தன.

உடனே அந்த ராக்ஷஸன் விபீஷணனைக் கொல்லவெண்ணி, தனக்கு முன்னால் மயன் அனுக்ரஹித்த ஒரு உத்தமமான சரத்தை எடுத்தான். அவன் அதை வில்லில் தொடுக்கக் கண்டு, லக்ஷ்மணனும் தனக்குக் குபேரனால் ஸ்வப்னத்தில் அனுக்கிரஹிக்கப்பட்ட ஒரு பாணத்தை எடுத்தார். அது ஒருவராலும் ஜயிக்க முடியாதது; இந்திரனாலும் தேவாஸுரர்களாலும் தாங்க முடியாதது. மஹா பலவான்களான அவ்விருவரும் பரிகாயுதங்களைப்போன்ற புஜங்களால் வில்லுகளைக் காதுவரையில் வளைத்து நாணோசை செய்யும்பொழுது, க்ரௌஞ்ச பக்ஷிகள் கூவுவதுபோலிருந்தது. நாண்களில் நன்றாய்ப் பூட்டப்பட்ட அவ்விரு பாணங்களும் விசேஷ காந்தியுடன் ஜ்வலித்தன. அவை வில்லிலிருந்து விடுபட்டு, ஆகாச வீதியில் முகத்தோடு முகம் தாக்கி, பூமியில் விழுந்தன. அதனால் புகையுடனும் பொரிகளுடனும் நெருப்புக் கிளம்பிப் பயங்கரமாய் எரிந்தது. இரண்டு பெரிய கிரஹங்களைப்போல் அவை ஒன்றையொன்று எதிர்த்துப் பொடிபொடியாய்ப் பூமியில் விழுந்தன. அதைக் கண்டு அவ்விருவருக்கும் ரோஷமும் வெட்கமும் உண்டாயின. லக்ஷ்மணன் கோபத்தால் மெய்மறந்து வருணாஸ்திரத்தைப் பிரயோகிக்க, அதை இந்திரஜித்து ரௌத்ராஸ்திரத்தால் தடுத்தான். பிறகு இந்திரஜித்து ஸகலலோகங்களையும்எரிக்கும் தேஜஸையுடைய



ஆக்னேயாஸ்திரத்தை விடுக்க, அதை லக்ஷ்மணன் ஸௌர்யாஸ்திரத்தால் அடக்கினார். பிறகு ராவணபுத்திரன் சத்துருவை நாசம்செய்யவெண்ணி, கோரமான அஸுராஸ்திரத்தைப் பிரயோகிக்க, அதிலிருந்து ஜ்வலிக்கும் சூலங்களும், கதைகளும், கத்திகளும், கோடாலிகளும், இருப்புலக்கைகளுமுண்டாயின. ஸகலப் பிராணிகளாலும் தடுக்க முடியாததாய் ஸர்வ சத்துருக்களையும் நாசம்செய்யும் அந்த அஸ்திரத்தை மஹாதேஜஸ்வியான லக்ஷ்மணன்மஹேச்வராஸ்திரத்தால் நாசம் செய்தார். அவ்விருவர்க்கும் பிறகு அத்புதமான கோரயுத்தம் நடந்தது. ஆகாசத்தில் ஸஞ்சரிப்பவர்கள் லக்ஷ்மணனைச் சூழ்ந்து நின்றார்கள். பயங்கரமான சப்தத்துடன் வானரர்களும் ராக்ஷஸர்களும் போர் செய்யும் பொழுது, ஆகாசவீதியில் அநேக கணங்கள் நின்று வேடிக்கைப் பார்த்துக்கொண்டிருந்தார்கள், ரிஷிகள், பித்ருக்கள், தேவர்கள், கந்தர்வர்கள், கருடர்கள், உரகர்கள் முதலிய தேவ கணங்கள் இந்திரனை முன்னிட்டுக் கொண்டு லக்ஷ்மணனை ஜயமடைவாய்' என்று ஆசீர்வதித்து உத்ஸாகம் செய்து ரக்ஷித்து வந்தார்கள்.

பிறகு லக்ஷ்மணன் வேறொரு பாணத்தை வில்லில் பூட்டினார். அது உத்தமமான இந்திராஸ்திரம். அக்னியைப்போல் ஸகல பதார்த்தங்களையும் எரிக்கும். அழகான கழுகிறகுகளால் அலங்கரிக்கப்பட்டது. ஸகல அஸ்திர லக்ஷணங்களும் பொருந்தினதாய் அமைக்கப்பட்டது; தங்கத்தால் விசித்திரமாய் வேலைசெய்யப்பட்டது; சத்ருக்களின் தேகங்களை அழிக்கும் திறமையுடையது; ஒருவராலும் தடுக்க முடியாதது; ஒருவராலும் தாங்க முடியாதது; ராக்ஷஸர்களின் மனத்தைக் கலக்கும்படியானது; காலஸர்ப்பத்தின் விஷத்தைப்போன்றது; தேவகணங்களால் பூஜிக்கப்பட்டது. முன் காலத்தில் தேவாஸுரயுத்தத்தில் இந்திரன் அந்தப் பாணத்தால் தானவர்களை ஜயித்தான். அதுவரையில் யுத்தத்தில் அபஜயமடையாத அந்த இந்திராஸ்திரத்தை நரசிரேஷ்டனான லக்ஷ்மணன் சிரேஷ்டமான தனுஸில் பூட்டிக் காதுவரையில் இழுத்து ஸகல லோகங்களையும் ஸம்ஹரிக்கும் காலனைப்போல் கோபத்தால் ஜ்வலித்துக்கொண்டு, தன் உத்தேசத்தைத் தடையில்லாமல் நிறைவேற்றக்கூடிய வாக்கியங்களைச் சொன்னார். "ராமன் தசரத புத்திரனாய் அவதரித்தது ஸத்யமானால், ராமன் தர்மஸ்வரூபியென்பது நிஜமானால், ராமன் ஸத்தியம் தவறாதவரென்பது நிஜமானால், ராமன் ஆண்மையில் நிகரற்றவரென்பதுநிஜமானால் ஓ! இந்திராஸ்திரமே! இதோ என் முன்நிற்கும் ராவணபுத்திரன் இந்திரஜித்தை நாசம் செய்யக் கடவாய்" என்று சொன்னார். இந்திராஸ்திர மந்திரத்தை ஜபித்து அந்த பாணத்தை வில்லில் தொடுத்து இந்திரஜித்தை உத்தேசித்து விட்டவுடன், அது இந்திரஜித்தின் சிரஸைக் குண்டலங்கள், தலைப்பாகை, கிரீடம் முதலிய ஸகல ஆபரணங்களுடன் அறுத்துப் பூமியில் தள்ளிற்று.

ரத்தம் தாரை தாரையாய்ப் பெருகும் அந்த இந்திரஜித்தின் பெரிய தலை பூமியில்விழுந்து கிடக்கையில் ஸ்வர்ணத்தால் செய்யப்பட்டது போல் விளங்கிற்று. இப்படி அந்த ராவண புத்திரன் ஆயுதபாணியாய் லக்ஷ்மணனால் கொல்லப்பட்டு, கவசம் பிளந்து வில்லொடிந்து உயிரை விட்டான்.

முன்பு விருத்ராஸுரன் இந்திரனால் கொல்லப்பட்டபொழுது தேவகணங்கள் ஆனந்தமடைந்ததுபோல், ஸகல வானரர்களும் விபீஷணனும் அடங்காத ஸந்தோஷமடைந்து ஜயத்வனி செய்தார்கள். ஆகாசத்தில் தேவர்களும், ரிஷிகளும், கந்தர்வர்களும், அப்ஸரஸ்களும் லக்ஷ்மணனைக் கொண்டாடிக் களித்தார்கள். இந்திரஜித்து மடிந்தவுடன், ஜயசாலிகளான வானரர்கள் அவனுடைய ஸைன்யங்களை வெகு சுலபமாய் மூலைக்குமூலை அடித்துத் துரத்தினார்கள். அவர்கள் பயத்தால் மெய்மறந்து, ஆயுதங்களை விட்டெறிந்து, லங்கையைநோக்கி ஓடினார்கள். சிலர் அந்த நகரத்தில் ஒளிந்து கொண்டார்கள்; சிலர் ஸமுத்திரத்தில் விழுந்தார்கள்; சிலர் மலைகளில் ஏறினார்கள். மஹாவீரனான இந்திரஜித் யுத்தகளத்தில் அடிபட்டுக் கிடப்பதைக் கண்டு, அங்கிருந்த அநேக ஆயிர ராக்ஷஸர்களில் ஒருவனாவது கண்ணில் படவில்லை. அஸ்தமித்த பிறகு ஸூரியகிரணங்கள் மறைவதுபோல், அந்த ராக்ஷஸாதிபதி இறந்தவுடன் அவனுடைய பரிவாரங்கள் மூலைக்குமூலை ஓடி ஒளிந்தார்கள். கிரணங்கள் அடங்கின ஆதித்தியனைப்போலும், அணைந்த நெருப்பைப்போலும், அவயவங்கள் அலங்கோலமாய் இந்திரஜித்து உயிரிழந்து தேஜஸற்றுப் பூமியில் கிடந்தான். அந்த ராவண புத்திரன் மடிந்தவுடன் மூன்று லோகங்களும் பீடை நீங்கிச் சத்ருவற்று விளங்கின. அவனைக் கண்டு பயந்து ஒளி குறைந்த ஸூரியனும் அப்பொழுது பூர்ணதேஜஸுடன் பிரகாசித்தார். இந்திரனும் தேவகணங்களும் அந்த மஹாபாபி நாசமடைந்ததைக் கண்டு பரமானந்தமடைந்தார்கள்; தேவர்கள் துந்துபிகளை அடித்தார்கள்; அப்ஸரஸ்கள் நர்த்தனம் செய்தார்கள்; கந்தர்வர்கள் மதுரமாய்ப் பாடினார்கள்; லக்ஷ்மணன்மேல் தேவகணங்கள் புஷ்பமாரி சொரிந்து பலவிதமாய்க் கொண்டாடினார்கள். ஸகல லோகங்களையும் கதறச் செய்த இந்திரஜித்து இறந்தவுடன் ஜலங்களும் திக்குகளும் களங்கமற்றுத் தெளிந்தன. தேவர்களும் தானவர்களும் மகிழ்ந்தார்கள் தேவ கந்தர்வ தானவர்கள் ஒன்றுசேர்ந்து "இனி பிராம்மணர்கள் கவலையற்று, உத்திரவமில்லாமல் ஸஞ்சரிக்கலாம்" என்றார்கள். பலபராக்ரமத்தில் நிகரற்ற அந்த ராக்ஷஸ வீரன் கொல்லப்பட்டதைக் கண்டு, விபீஷணன் ஹனுமான் ஜாம்பவானும் மற்ற வானரவீரர்களும் லக்ஷ்மணனை, 'ஜய விஜயீ பவ!' என்று ஸ்தோத்திரம் செய்தார்கள். வானரர்கள் அவரைச் சூழ்ந்து கர்ஜித்தார்கள்; ஸிம்ஹநாதம் செய்தார்கள்; தோள் தட்டினார்கள் வாலைச் சுழற்றி அடித்தார்கள்; அவருடைய சரித்திரங்களை வர்ணித்தார்கள்; ஒருவரையொருவர் ஆனந்தத்தால் ஆலிங்கனம் செய்து கொண்டார்கள்; 'லக்ஷ்மணனுக்கு எப்பொழுதும் ஜயமுண்டாகட்டும்' என்று கோஷித்தார்கள். ஒருவராலும் ஸாத்தியமில்லாத அந்த அத்புதமான வீரகிருத்யத்தைக் கண்டு, லக்ஷ்மணனுடைய பிரியமித்திரர்களான தேவர்கள் எல்லையற்ற ஆனந்தமடைந்தார்கள். (இந்திரஜித்து லக்ஷ்மணனால் கொல்லப்பட்டானென்று சாரணர்கள் முதலியவர்கள் சொன்ன ஸமாசாரத்தைக் கேட்டு, ஸகல தேவகணங்களும் ஸந்தோஷித்தார்கள்' ஆனால் அது அஸாத்யமான காரியம், நம்பத்தக்கதல்லவென்று ஸந்தேகமுண்டாயிற்று. அதைத் திர்ப்பதற்காக யுத்தபூமிக்கு வந்து பிரத்யக்ஷமாய்ப் பார்த்து ஆச்சரியத்தால் ஒன்றும் தோன்றாமல் திகைத்து நின்றார்கள்).



தத$^{3}$ஸுகர மதா$^{3}$பி$^{4}$வீக்ஷ்ய ஹ்ருஷ்டா:
ப்ரியஸுஹ்ருதே$^{3}$ா யுதி$^{4}$ லக்ஷ்மணஸ்ய கர்ம |
பரமமுபலப$^{4}$ந் மந: ப்ரஹர்ஷம்
விநிஹித மிந்த்$^{3}$ர ரிபும் நிஶம்ய தே$^{3}$வா: ‖ (94)

---

## ஸர்க்கம் 92

## லக்ஷ்மணனை ராமன் புகழ்ந்தது

ருதி$^{4}$ரக்லிந்ந கா$^{3}$த்ரஸ்து லக்ஷ்மண: ஶுப$^{4}$லக்ஷண: |
ப$^{3}$பூ$^{4}$வ ஹ்ருஷ்டஸ் தம் ஹத்வா ஶக்ரஜேதார மாஹவே ‖ (1)

லக்ஷ்மணன், உடம்பெங்கும் ரத்தத்தால் நனைந்து பாணங்களால் அவயவங்கள் பிளந்து, தேவேந்திரனை ஜயித்துச் சிறையில் வைத்த இந்திரஜித்தை யுத்தம் செய்து தான் கொன்றதைப்பற்றி மிகுந்த ஸந்தோஷமடைந்தார். பிறகு ஜாம்பவானையும் ஹனுமானையும் மற்ற வானரவீரர்களையும் அழைத்துக்கொண்டு, யுத்தம்செய்ய சிரமத்தால் அவ்விருவராலும் கைலாகு கொடுக்கப்பட்டு, ராகவனும் ஸுக்ரீவனும் இருக்குமிடத்திற்குச் சென்றார். ரகுவீரனை நமஸ்கரித்து அபிவாதனம் செய்து, பிருஹஸ்பதி இந்திரனுடைய ஸமீபத்தில் வீற்றிருப்பதுபோல் அவருடைய ஸமீபத்தில் நின்றுகொண்டு, சிரமத்தால் தழதழத்த குரலுடையவர்போல் தனக்கும் இந்திரஜித்திற்கும் நடந்த கோரயுத்தத்தையும் தன் கையால் அவன் இறந்ததையும் தெரிவித்தார். (லக்ஷ்மணனுக்கு வாஸ்தவமாய் ஆயாஸமில்லை. லோகபாவனைக்காக அப்படிக் காட்டிக்கொள்ள வேண்டியதென்பதை, 'குரலுடையவன்போல்' என்று மூலத்தில் பிரயோகித்திருக்கிறார்). லக்ஷ்மணன் சுருக்கமாய்த் தெரிவித்ததை விபீஷணனும் ஸந்தோஷமடங்காமல், விஸ்தாரமாய் வர்ணித்தான். அளவற்ற வீரியமுள்ள ரகுநாதன் லக்ஷ்மணனால் இந்திரஜித்து கொல்லப்பட்டதைக் கேட்டு ஒப்பற்ற ஸந்தோஷமடைந்து

"லக்ஷ்மண! நல்லது; செய்யவேண்டிய காரியத்தை நன்ருகச் செய்தாய். அதனல் எனக்குள்ள ஆனந்தத்திற்கு எல்லையில்லை. இந்திரஜித்து இறந்தானென்றவுடன் ஸகல சத்துருக்களும் மடிந் தார்களென்பது நிச்சயம்" என்று கூறிக்கொண்டாடி அவரை உச்சி மோந்து, "நமது அண்ணன் வீரசிகாமணி; இந்த அல்பகாரியத்தை நான் செய்ததற்காக என்னை அளவிற்கு மிஞ்சி மெச்சுகிருரே" என்று வெட்கப்பட்டு ஒதுங்கி நிற்கும் லக்ஷ்மணனை, ரகுநாதன் பலாத்காரமாய்த் தன்னிடத்தில் இழுத்துத் தன் மடியில் உட்காரச் செய்தார். தேகமெங்கும் பாணங்களால் புண்பட்டிருக்கும் தன் அருமைத் தம்பியை இறுகத் தழுவி, அடிக்கடி அவருடைய முகத்தை பார்த்துப் பரவசமடைந்தார். பிறகு ஸகல அவயவங்களிலும் சரங்கள் பாய்ந்து ஊடுருவிக் காயம் பட்டிருப்பதையும் தேகமெங் கும் ரத்தத்தால் நனைந்திருப்பதையும் சிரமத்தால் பெருமூச்சு விடு வதையும் கண்டு, ராமன் சொல்லமுடியாத துக்கமடைந்து பெரு மூச்சுவிட்டார். மறுபடி லக்ஷ்மணனை உச்சிமோந்து, அதிசீக்கிர மாய் தேகமெங்கும் தடவிக்கொடுத்து, ஆறுதல் செய்து, "குழந் தாய்! பிறரால் அஸாத்தியமான காரியங்களைச் செய்யும் ஸ்வபாவ முள்ள நீ, ஸகல லோகங்களுக்கும் மங்களத்தைக் கொடுப்பதும் இதுவரையில் ஒருவரும் செய்யத் துணியாததுமான வீரகாரியத்தை இன்று செய்தாய். குரூரராக்ஷஸனை அந்த ராவணனுடைய வலது புஜத்தை இன்று வெட்டித் தள்ளிவிட்டாய். இந்திரஜித்தையே அவன் முற்றிலும் நம்பியிருந்தான். விபீஷணனும் ஹனுமானும் இந்த யுத்தத்தில் அத்புதமான விரகிருத்யங்களைச் செய்தார்கள். ஏகாதசி த்வாதசி த்ரயோதசி இம்மூன்று தினங்களிலும் இரவு பகலாய் ஓயாமல் யுத்தம்செய்து, அந்த ராக்ஷஸவீரனை வெகு கஷ்டப்பட்டுக் கொன்றீர்கள். இன்றுதான் எனக்குச் சத்ருக்கள் அழிந்தார்கள். இனி தன் புத்திரன் இறந்ததைக் கேட்டு, ராவணன் ஸகல ஸைன்யத்துடனும் யுத்தத்திற்கு வருவான். இது வரையில் சத்துருவால் ஜயிக்கப்படாதிருந்த அந்த ராக்ஷஸாதிபதி புத்திர சோகத்தால் பீடிக்கப்பட்டு யுத்தத்திற்கு வந்தவுடன், வானர ஸைன்யத்தால் அவனை சூழ்ந்துகொண்டு ஹதம் செய்கி றேன். என் கட்டளைகளை நிறைவேற்றுவதற்கு நீ ஸமீபத்திலிருக் கையில் எனக்கென்ன குறை? மஹேந்திரனை ஜயித்தவனை நீ ஜயித்த பிறகு, ஸீதையும் இந்த பூமியும் எனக்குக் கையில் கிடைத்ததாய் எண்ணுகிறேன்" என்ருர்.

இப்படித் தன் ஸஹோதரனைப் புகழ்ந்து ஆலிங்கனம் செய்து, ஸுஷேணனை அழைத்து, "மஹாபுத்திமானே! என் அருமைத் தம்பி பாணங்களால் மிகவும் அடிபட்டிருக்கிருன். அவைகளால் உண்டான உபத்திரவம் நீங்கி எப்பொழுதும்போல் ஸுகமாயிருக் கச் செய்வாய். விபீஷணனும் மற்ற வானர வீரர்களும் பாணங் களாலும் ஆயுதங்களாலும் விசேஷ உபத்திரவத்தை அடைந்திருக் கிருர்கள். அவர்கள் எப்பொழுதும்போல் பல வீரிய பராக்கிரமங் களுடன் விளங்கச் செய்வது உன் கடமை" என்று கட்டளை யிட்டார். ஸுஷேணன் உத்தம ஔஷதத்தை லக்ஷ்மணனுடைய மூக்கில் பிடிக்க, அந்த வாஸனையால் அவருடைய அவயவங்களில் பாய்ந்த அம்புகள் உதிர்ந்தன; உபத்திரவம் நீங்கிற்று; காயங்கள் ஆறின. விபீஷணனுக்கும் மற்ற வானரர்களுக்கும் தகுந்த சிகிச் சைகள் செய்யப்பட்டன. பிறகு, லக்ஷ்மணன் பூர்வ பலத்தையும் ஆரோக்கியத்தையும் அடைந்து கவலையற்றிருந்தார். ராமன், ஸுக்ரீவன், விபீஷணன் முதலியவர்கள் அதைக்கண்டு பரமா னந்தமடைந்தார்கள். லக்ஷ்மணன் அன்று செய்த அத்புதமான கிருத்யத்தைப்பற்றி ராமன் அடிக்கடி புகழ்ந்தார். வானரத் தலை வர்களும் இந்திரஜித்து யுத்தத்தில் மடிந்ததைக் கேள்விப்பட்டு மனம் களித்தார்கள்.

அபூஜயத் கர்ம ஸ லக்ஷ்மணஸ்ய
ஸுது3ஷ்கரம் தா3ஶரதி2ர் மஹாத்மா |
ஹ்ருஷ்டா ப3பூ4வுர் யுதி4 யூத2பேந்த்3ரா
நிபாதிதம் ஶக்ரஜிதம் நிஶம்ய ‖ (28)



## ஸர்க்கம் 93

## ராவணனுடைய புத்திரசோகம்

தத: பௌலஸ்த்ய ஸசிவா: ஶ்ருத்வா சேந்த்3ரஜிதம் ஹதம் |
ஆசசக்ஷு ரபி4ஜ்ஞாய த3ஶக்3ரீவாய ஸவ்யதா2: ‖ (1)

பிறகு, இந்திரஜித்து யுத்தகளத்தில் இறந்தானென்று ராவண னுடைய மந்திரிகள் கேள்விப்பட்டு, மனம் நொந்து, தாங்களும் நேரில் போய்ப் பார்த்து, மஹாராஜாவிற்குத் தெரிவித்தார்கள். (நிகும்பிலா யாகம் முடிவு பெருமல் தடைப்பட்டதென்று அறிந்த வுடன் இந்திரஜித்து யுத்தகளத்திலிருந்து பிழைத்து வரமாட்டா னென்று ராவணனுக்கு ஸந்தேகமுண்டு). "மஹாராஜ! தங்க ளுடைய அருமைக் குழந்தையான இந்திரஜித்து மஹாதேஜஸ்வி; அவனை இன்று யுத்தத்தில் லக்ஷ்மணன் விபீஷணனுடைய ஆலோ சனையாலும் ஸஹாயத்தாலும் கொன்றுவிட்டான். மஹாசூரன்; இதுவரையில் யுத்தத்தில் அபஜயமடைந்ததில்லை; தேவேந்திரனை ஜயித்து சிறையில் வைத்தவன்; தங்களுக்கு ஸகல விதத்திலும் தகுந்த புத்திரன். அவனுக்கு ஸமமான சூரனுடன் யுத்தம்செய்து, லக்ஷ்மணனை விசேஷமாய் உபத்திரவப்படுத்தி, பிறகு அவனுடைய அஸ்திரத்தால் கொல்லப்பட்டு உத்தம லோகங்களை அடைந்தான்" என்று தெரிவித்தார்கள்.

இந்திரஜித்து யுத்தத்தில் கொல்லப்பட்டானென்ற கோரமான வார்த்தையைக் கேட்டவுடன், ராவணன், ஹா! என்று கதறி

மூர்ச்சையடைந்து, வேரற்ற மஹாவிருக்ஷத்தைப்போல் பூமியில் விழுந்தான். வெகு நேரம் கழித்து பிரக்ஞை தெளிந்து, இந்திரியங்கள் கலங்கி, தீனமாய் பிரலாபித்தான். "ஐயோ! என் அருமைக் குழந்தாய்! ஒப்பில்லாத மஹாரத! ராக்ஷஸ வீரசிகாமணே! தேவர்களுக்கு அதிபதியான மஹேந்த்ரனை ஜயித்த நீயும் லக்ஷ்மணனிடத்தில் அகப்பட்டு உயிரிழந்தாயோ! நீ கோபங்கொண்டால் உன் பாணங்கள் காலாந்தகனையும் மந்தரபர்வதத்தின் சிகரங்களையும் பிளக்குமே! இந்த லக்ஷ்மணன் உனக்கு எவ்வளவு? (காலன்—ஸகல ப்ராணிகளையும் ஸம்ஹரிக்கிற சக்தி; அந்தகன்—அதற்கு அபிமானி தேவதை). நீ இன்று கால கதியை அடைந்த பிறகு தான் யமனிடத்தில் எனக்கு விசேஷ கௌரதை ஏற்பட்டிருக்கிறது. எவன் யஜமானனுடைய காரியத்திற்காக உயிரை இழக்கிறானோ அவன் ஸ்வர்க்கமடைகிறானென்ற ந்யாயப்படி, ஸகல சூரர்களும் தேவர்களும் இவ்வித மரணம் தங்களுக்குக் கிடைக்க வேண்டியதென்று பிரார்த்திக்கிறார்கள். ஆகையால் நீ வீர ஸ்வர்க்கத்தை அடைந்ததைப்பற்றி நான் துக்கிக்கக்கூடாது. இந்திரஜித்து கொல்லப்பட்டானென்ற வார்த்தையைக் கேட்டு இன்று ஸகல தேவகணங்களும் லோக பாலர்களும் ரிஷிகளும் பயமற்று ஸுகமாய்த் தூங்குவார்கள். இன்று மூன்று லோகங்களும் இந்தப் பூமியும் அதிலுள்ள மலைகளும் வனங்களும் இந்திரஜித்தில்லாமல் எனக்குச் சூன்யமாய்த் தோன்றுகின்றனவே! அந்தப்புரத்தில் ராக்ஷஸப் பெண்கள் வாய்விட்டலறும் கூக்குரல், மலைக் குஹைகளில் பெண் யானைகள் கதறுவதுபோல் என் செவியைத் துளைக்குமே! அகண்டமான ராக்ஷஸ ராஜ்யத்திற்கு இளவரசாயிருப்பதையும் இந்த லங்காபுரியையும் ராக்ஷஸர்களையும் உன் தாய் மந்தோதரியையும் உன் ப்ரிய பார்யையும் என்னையும் விட்டு எங்கே போய்விட்டாய்? நான் இறந்து எனக்கு நீ ப்ரேத காரியங்களைச் செய்ய வேண்டியிருக்க, நீ இறந்து நான் உனக்கு ப்ரேதகார்யங்களைச் செய்ய வேண்டுமென்ற விபரீத கதியைப்பற்றி என்ன சொல்வேன்! ராமலக்ஷ்மணர்களும் ஸுக்ரீவனும் மற்ற வானரர்களும் உயிருடனிருக்க, என் ப்ரதிக்ஞையை நிறைவேற்றாமல், பழியைத் தீர்க்காமல், எங்களெல்லோரையும் அனாதைகளாய் விட்டு எங்கே போய்விட்டாய்" என்று, இப்படி அநேக விதமாய்க் கூறி ப்ரதாப லங்கேச்வரன் பிரலாபித்தான்.

ஸ்வபாவமாகவே வெகுகோபிஷ்டன்; புத்ரசோகத்தால் அது எல்லையில்லாமல் அதிகரித்து, கோடையில் ஸூரியனைக் கிரணங்கள் ஜ்வலிக்கச் செய்வதுபோல், அவனுக்குக் கோபாக்னியை அதிகமாக்கியது புத்ரசோகம். புருவங்களை நெரித்துக்கொண்டு, அவன், ப்ரளகாலத்தில் முதலைகளால் நிறைந்த ஸமுத்திரத்தின் பெரும் அலைகளைப்போல் தோன்றினான். பூர்வத்தில் விருத்ராஸுரனைப்போல், அவன் கோபாவேசத்தால் கொட்டாவிவிடும் பொழுது, அவன் வாயிலிருந்து புகையுடன் நெருப்புக் கொழுந்துகள் ஜ்வலித்துக்கொண்டு வெளியில் விழுந்தன. அந்த ராக்ஷஸவீரன் புத்ரசோகத்தால் தவித்துக்கொண்டு, கோபபரவசனாய், நன்றாய் ஆலோசித்துப் பார்த்து, ஜானகியைக் கொல்வது நலமென்று நிச்சயித்தான். ஸ்வபாவமாகவே சிவந்த அவனுடைய நேத்ரங்கள் கோபாக்னியால் மிகவும் சிவந்து, அதிக கோரமாய் ஜ்வலித்தன. ஸ்வபாவமாகவே கோர ரூபத்தையுடையவன்; கோபாக்னியால் மூர்ச்சையடைந்து, கோபங்கொண்ட ருத்ரமூர்த்தியின் ரூபத்தைப் போல், கண்ணெடுத்துப் பார்க்க முடியாமலிருந்தான். கோபாக்னியால் ஜ்வலிக்கும் அவனுடைய நேத்ரங்களிலிருந்து ஜ்வலிக்கும் இரண்டு விளக்குகளிலிருந்து எண்ணெய்ச்சுடர்கள் விழுவதுபோல் கண்ணீர்த் துளிகள் விழுந்தன. பற்களைக் கடகடவென்று கடிக்கும் சப்தம், பலசாலிகளான தானவர்கள் செக்குகளில் எள்ளைப் போட்டு வேகமாய் ஆட்டுவதுபோல் கேட்கப்பட்டது. ப்ரளய காலாக்னியைப்போல் கோபங்கொண்டு அவன் எந்தப்புறம் திரும்பினாலும், அங்கேயிருந்த ராக்ஷஸர்கள் பயத்தால் நடுங்கிக் கண்ணில் படாமல் மறைந்தார்கள். ஸகல சராசரங்களையும் விழுங்கிவிடுகிறவனைப்போல், கடுங்கோபத்துடன் ஸகல திக்குகளையும் வெறித்துப் பார்த்துக்கொண்டிருக்கும் அந்த லோக கண்டகனை ஒருவரும் நெருங்க முடியவில்லை.

தன் ஸைன்யங்களும் பரிவாரங்களும் பயந்து யுத்தம்செய்ய உத்ஸாஹமற்றிருப்பதைக் கண்டு, அவர்களைத் தைர்யப்படுத்துவதற்காக, "நான் அநேக ஆயிரவர்ஷங்கள் கடுந்தவம் செய்து அவை முடியும் காலங்களில் ப்ரஹ்மதேவரைப் பலவிதமாய்த் திருப்தி செய்திருக்கிறேன். அந்தத் தபோமஹிமையாலும் பிதாமஹருடைய கிருபையாலும் தேவாஸுரர்களால் எனக்கு ஒருபொழுதும் பயமில்லை. ஸூர்யனைப்போல் ஜ்வலிக்கும் தங்கக்கவசத்தை ப்ரஹ்மாவிடத்திலிருந்து பெற்றிருக்கிறேன். தேவாஸுரர்களுடன் யுத்தம் செய்யும்பொழுது வஜ்ரத்தாலும் சக்திகளாலும் கொஞ்சங்கூட அது பிளக்கப்படவில்லை. அதைத் தரித்துக்கொண்டு ரதத்திலேறி நான் யுத்தபூமியில் செல்லும்பொழுது என்னை எதிர்க்கக் கூடியவன் யார்? வஜ்ராயுதந்தரித்த இந்திரனும் துணிவானா? ப்ரஹ்மதேவர் என் தபஸால் ஸந்தோஷமடைந்து எனக்குக் கொடுத்த வில்லும் பாணமுமிருக்கின்றன. முன் தேவாஸுர யுத்தங்களில் அவரிடத்திலிருந்து நான் பெற்ற இந்த ஆயுதங்களால் எல்லோரையும் ஜயித்தேன். இன்று அவைகளை வாத்யகோஷங்களுடன் எடுத்து ராமலக்ஷ்மணர்களை யுத்தத்தில் கொல்வதற்காக உபயோகிக்கிறேன்." என்றான்.

அந்த ராக்ஷஸவீரன் புத்ர சோகத்தாலும் கோபத்தாலும் மெய் மறந்து நன்றாய் ஆலோசித்து ஸீதையைக் கொல்வதே நல்லதென்று

நிச்சயித்தான். கோபத்தால் சிவந்த கண்களுடன், கோரமான பார்வையுடன், மனம் நொந்து, தன்னைச் சூழ்ந்திருந்த ஸகல ராக்ஷஸர்களையும் பார்த்துத் தீனமாய், "மித்ரர்களே! என் குழந்தை ராமலக்ஷ்மணர்களையும் வானரர்களையும் மயக்க நினைத்து ஸீதை இறந்தாளென்று அவர்கள் நம்பும்படி ஒரு மாயையைக் கல்பித்து, அவர்களுக்கெதிரே அதைக் கொன்றான். இன்று நிஜமாகவே அவளைக் கொல்லுகிறேன். அந்த அல்பக்ஷத்ரியர்களை ஆச்ரயிக்கும் ஜானகியைச் சித்ரவதை செய்து என் கோபத்தையும் சோகத்தையும் தீர்க்கிறேன்!" என்று கர்ஜித்தான். பிறகு தீக்ஷ்ணமாய்க் களங்கமற்ற ஆகாயம்போல் காந்தியுடையதாக மாலையுடன் ஜ்வலிக்கும் தன் கத்தியை உருவிக் கொண்டு, கோபத்தால் இந்திரியங்கள் சிதறி, மந்திரிகளும் பார்யைகளும் பின்தொடர, ஸீதையிருக்குமிடத்திற்குச் சென்றான். அதைக் கண்டு ஸகல ராக்ஷஸர்களும் ஸந்தோஷித்து, ஒருவரையொருவர் ஆலிங்கனம் பண்ணிக்கொண்டு ஸிம்ஹநாதம் செய்தார்கள். "இன்று நமது மஹாராஜாவை ராமலக்ஷ்மணர்கள் கண்டால் நாசமடைவார்களென்பதில் ஸந்தேகமில்லை. இவருக்குக் கோபாவேசம் வந்த ஸமயத்தில் நான்கு லோகபாலர்களையும் யுத்தத்தில் தன்னை எதிர்த்த எந்தச் சத்ருக்களையும் அடித்துத் தள்ளியிருக்கிறார். மூன்று லோகங்களிலுமுள்ள சிரேஷ்டமான வஸ்துக்களைக் கொண்டுவந்து அனுபவிக்கும் பாக்யசாலி இவர் ஒருவரே. பலத்திலும் பராக்கிரமத்திலும் இவருக்கு நிகர் ஒருவருமில்லை" என்று அவர்கள் பேசிக் கொண்டிருக்கையில், ராவணன் அசோகவனத்தில் ஸீதையிருக்குமிடத்தை நோக்கி ஓடினான். ஆகாசவீதியில் அங்காரகன் ரோஹிணியைப் பிடிக்க ஓடுவதுபோல், அவனுக்கு ஹிதத்தை நாடும் மித்ரர்களால் எவ்வளவு தடுக்கப்பட்டும் நிற்காமல் ராவணன் ஸீதையைக் கொல்ல நிச்சயித்து ஓடிவந்தான்.

ராக்ஷஸிகளுக்கு நடுவில் வெகு ஜாக்கிரதையாய்க் காக்கப்பட்டு வரும் ஸீதை, ராவணன் கோபபரவசனாய்க் கத்தியை உருவிக் கொண்டு தன்னைநோக்கி ஓடிவருவதையும் அநேக மித்ரர்கள் அவனைப் பின்தொடர்ந்து தடுப்பதையும் கண்டு, மிகுந்த துக்கமடைந்து, "ஐயோ! இந்தத் துஷ்டன் கத்தியை உருவிக் கொண்டு வெகுகோபத்துடன் என்னை நோக்கி ஓடிவருவதைப் பார்த்தால் என்னைக் கொல்லாமல் விடமாட்டான் எனத் தோன்றுகிறது. என்னைரக்ஷிப்பதற்கு வீரசிரேஷ்டர்களான ராமலக்ஷ்மணர்களிருக்க அநாதையானேனே! இந்தத் துஷ்டன் என்னைத் தனக்குப் பார்யையாகும்படியும், தன்னுடன் ஸகல ஸுகங்களையும் அனுபவிக்கும்படியும் பலதடவை வேண்டினான். என்பர்த்தாவைத் தவிர வேறொருவரையும் மனத்தாலும் நினைக்காத நான், இவனை நிந்தித்து இவனுடைய வார்த்தைகளுக்கு இடங்கொடுக்கவில்லை. ஆகையால்



இவனுக்கு என்னை அடைவோமென்ற ஆசை முற்றிலும் போயிற்று. நமக்கில்லாத வஸ்து பிறர்க்கு வேண்டாமென்று, கோபத்தாலும் சோகத்தாலும் புத்திஸ்வாதீனமற்று என்னைக் கொல்ல வருகிறான். ஒருவேளை அந்தப் புருஷ சிரேஷ்டர்களான ராமலக்ஷ்மணர்கள் எனக்காக இவனுடன் யுத்தஞ்செய்து இந்தப் பாபியால் மரணமடைந்தார்களோ? அந்தராஜபுத்ரர்கள் எனக்காக உயிரை விடும்படியான மஹாபாபத்தைச் செய்த என் ஜன்மத்தைச் சுட வேண்டும். ஒருவேளை புத்ரசோகத்தால் மனங்கலங்கி, ராமலக்ஷ்மணர்களைக் கொல்ல முடியாமல் இந்த க்ரூரன் என்னைக் கொல்ல வருகிறானோ? ஐயோ! நான் புத்தி பிசகி முன்பு ஆஞ்ஜநேயருடைய வார்த்தையைக் கேட்காமற் போனேனே! அவருடைய முதுகில் ஏறிச் சென்றிருந்தால் என் பர்த்தாவை அடைந்திருப்பேன். இந்தக்கஷ்டத்தை அனுபவிக்கமாட்டேன்! ராமனைத் தவிர வேறு புத்திரனில்லாமல் ராமனையே கதியாய் நம்பியிருக்கும் கௌஸல்யை, யுத்தத்தில் ரகுவீரன் இறந்தானென்பதைக் கேள்விப்பட்டால், ஹிருதயம் பிளந்து பிராணனை விடுவாளே! அவருடைய பிறப்பையும் பால்யத்தையும் யௌவனத்தையும் நன்னடத்தையையும் தர்மத்தையும் ஸத்தியத்தைக் காப்பாற்றுவதையும் நினைத்து நினைத்துக் கதறுவாளே! தான் அவருக்கு உத்தர கிரியைகளைச் செய்யும்படி நேர்ந்த விபரீத கதியைப்பற்றி அடிக்கடி துக்கித்து, இனி ஸுகத்தையும் ஆனந்தத்தையும் அடைவோமென்ற ஆசையை விட்டுப் புத்தி ஸ்வாதீனமற்று, அக்னியை மூட்டி, அதில் குதிப்பாள் அல்லது ஜலத்தில் விழுந்திறப்பாள். அவளுக்கு இவ்வளவு துக்கத்தையும் உண்டு பண்ணின அந்த மந்தரையை என்ன செய்தாலும் தகும். மஹா பாபியான அந்தக் கூனியைச் சுட வேண்டும்" என்று கூறி சந்திரனை விட்டுப் பிரிந்து அங்காரகனுடைய வசத்தில் அகப்பட்ட ரோஹிணீ தேவியைப்போல், தீனமாய் பிரலாபித்துக் கொண்டிருந்தாள்.

அவளைக் கண்டு ராவணன் அதிவேகமாய் ஓடிவந்தான். அப்பொழுது அவனுடைய மந்திரிகளில் ஒருவனான ஸுபார்ச்வனென்றவன் மஹாபுத்திமான்; நன்னடத்தையுள்ளவன்; மேன்மேலும் தோன்றும் யோசனையுள்ளவன். யார் தடுத்தும் நிற்காமல் கோபங்கொண்ட மதயானையைப்போல் ஓடிவரும் தசக்ரீவனைப் பார்த்து, "மஹாராஜா! இதென்ன ஆச்சரியம்! தாங்கள் வேறொருவராலும் அடையப்படாத தசக்ரீவனென்ற பெயரைப் பெற்றிருக்கிறீர்கள். (ஸாதாரணமான மனுஷ்யனைவிடப் பத்துத் தலைகள் படைத்த உமக்குப் பத்துமடங்கு புத்தியிருக்க வேண்டியதென்று கருத்து.) தாங்கள் திக்பாலனான குபேரனுக்கு ஸஹோதரன்; அவரோ தங்கள் குலதெய்வமான பரமசிவனுக்கும் பரமமித்ரர்; இப்படியிருக்கத் தங்களுடைய குலத்தையும் நடத்தையையும் கீர்த்தியையும் ஞானத்தையும் தர்மத்தையும் போகவிட்டு,

ஸீதையைக் கொன்று ஸ்த்ரீஹத்யாதோஷத்தைக் கட்டிக்கொள்ள விரும்புவதேன்? இப்படிக் கோபத்திற்கு இடங் கொடுக்கலாமா? வேதாப்யாஸம் வித்யைகள் விரதங்கள் ஸ்நானம் ஸ்வகர்மானுஷ்டானம் முதலிய கிரியைகளில் எப்பொழுதும் நாடின புத்தியையுடைய தாங்கள் ஒரு ஸ்த்ரீயை வதம் செய்ய ஏற்பட்டதேன்? ஸகல ராக்ஷஸர்களுக்கும் ஈச்வரனாயும், தர்மா தர்மங்களையும் ஆசாரங்களையும் அவர்களுக்கு நடத்திக்காட்டுகிறவராயுமிருக்கும் தங்களுக்கு இது தகுமா? நிகரில்லாத அழகு பொருந்தின ஸீதை காலக்கிரமத்தில் தங்களுக்கு வசப்படுவாளென்று நம்புங்கள். தாங்களும் தங்களுடைய பரிவாரங்களான நாங்களும் நமது கோபத்தை அந்த ராமன்மேல் பிரயோகிப்போம். இன்று கிருஷ்ண பக்ஷசதுர்தசி. இன்று தாங்கள் யுத்தத்திற்குப் புறப்படலாம். தங்களுடைய ஸைன்யங்களால் சூழப்பட்டு, அமாவாஸ்யையில் லங்கையிலிருந்து வெளிக்கிளம்பலாம். சௌர்யத்திலும் புத்தியிலும் தங்களுக்கு நிகருண்டோ? தாங்கள் கவசம்பூண்டு, ஆயுதங்களைத் தரித்துத் திவ்ய ரதத்திலேறி பிரசண்டமான வில்லைக் கையில் பிடித்து, யுத்த களத்தில் சென்று, அந்த ராமலக்ஷ்மணர்களை நாசம் செய்து, பிறகு ஸீதையை இஷ்டப்படி அனுபவிப்பீர்கள்'' என்றான்.

ஸுபார்ச்வனுடைய தர்மவாக்யங்களைத் தனக்கு ஹிதமென்று ஒப்புக்கொண்டு, அந்தத் துஷ்ட ராக்ஷஸன் அசோக வனத்திலிருந்து தன் அரண்மனைக்குச் சென்று, ஸபையில் பிரவேசித்து, மேற் செய்யவேண்டிய காரியங்களை மித்ரர்களுடன் ஆலோசித்துக் கொண்டிருந்தான்.

ஸ தத்3து3ராத்மா ஸுஹ்ருதா3 நிவேதி3தம்
வச: ஸுத4ர்ம்யம் ப்ரதிக்3ருஹ்ய ராவண: |
க்3ருஹம் ஜகா3ம த்3ருதஸ்ச வீர்யவாந்
புந: ஸபா4ம் ச ப்ரயயௌ ஸுஹ்ருத்3வ்ருத: ॥ (69)

## ஸர்க்கம் 94
## மூலபல யுத்தம்

ஸ ப்ரவிஸ்2ய ஸபா4ம் ராஜா தீ3ந: பரமது3:க்கி2த: |
நிஷஸாத3ாஸநே முக்2யே ஸிம்ஹ: க்ருத்3த4 இவஸ்2வஸந் ॥ (1)

ராவணன் ஸபாமண்டபத்தில் பிரவேசித்து, தீனனாய் மிகுந்த துக்கத்துடன், கோபங்கொண்ட ஆண் ஸிம்ஹத்தைப்போல ஸிம்ஹாஸனத்தில் உட்கார்ந்து, நெடு நேரம் யோசித்தான். பிறகு புத்திர சோகத்தால் தேஹம் வாடி, தன்னைச் சுற்றியிருந்த ஸேனைத் தலைவர்களைப் பார்த்து, கைகூப்பி, "நீங்களெல்லோரும் ஸகல



ஸைன்யங்களாலும் ரதகஜதுரகபதாதிகளாலும் சூழப்பட்டு,யுத்தத்திற்குச் சென்று, ராமன் ஒருவனையே சூழ்ந்து கொண்டு, மழைக் காலத்து மேகங்களைப்போல் பாணவர்ஷத்தால் அவனைச் சின்னாபின்னஞ் செய்ய வேண்டியது. அப்படி முடியாவிட்டால், உங்களுடைய பாணங்களால் அவயவங்கள் பிளந்து தவிக்கும் அந்த ராமனை, நான் எல்லோரும் பார்த்துக் கொண்டிருக்கையில் அதிஸுலபமாய்க் கொல்வேன்'' என்று தசக்ரீவன் கட்டளையிட, லங்கையிலுள்ள ராக்ஷஸர்கள் பர்வதங்களைப்போன்ற ரதங்களிலும் யானைகளிலும், குதிரைகளிலுமேறி யுத்தத்திற்குப் புறப்பட்டார்கள். (ராக்ஷஸர்களுக்கு அதிபதியாயிருந்தும் அவர்களைத் தன் எண்ணப்படி நடக்கவேண்டுமென்று ப்ரார்த்திக்கிறான். ஆகையால் கைகூப்புவது பிசகல்ல).

பரிகம், பட்டா, கோடாலி, கத்தி முதலிய ஆயுதங்களால் வானரர்களை ராக்ஷஸர்கள் அடித்தார்கள்; மரங்களையும் மலைகளையும், வானரர்கள் ராக்ஷஸர்களின்மேல் விட்டெறிந்தார்கள். இப்படி அவ்விருவர்க்கும் ஸூர்யோதயம் முதல் கோர யுத்தம் நடந்தது. பலவகை ஆயுதங்களால் ஒருவரையொருவர் அடித்துக் காயப்படுத்தி வானரர்களும் ராக்ஷஸர்களும் சற்றும் பின்வாங்காமல் போர் செய்கையில், செந்தூளெழும்பி, ஸைன்யங்களை மறைத்து, பிறகு மலையருவிகளைப்போல் பெருகும் ரத்த ப்ரவாஹத்தால் அடங்கிற்று. யானைகளும் ரதங்களும் அதன் இரு கரைகள்; குதிரைகளே மீன்கள்; த்வஜங்களே விருக்ஷங்கள்; மிதக்கும் சரீரங்களே தெப்பங்கள். இவ்விதமாய் ஓடின ரத்த ப்ரவாஹத்தால் வானரர்கள் நனைந்து, தாவித்தாவி ராக்ஷஸர்களுடைய த்வஜங்களையும்,கவசங்களையும், ரதங்களையும், குதிரைகளையும், ஆயுதங்களையும் ஒடித்தார்கள். அவர்களுடைய தலை மயிர்களையும், காதுகளையும், நெற்றிகளையும் மூக்குகளையும் கூர்மையான நகங்களாலும், பற்களாலும் அறுத்துக் கிழித்தார்கள். ஒரு விருக்ஷத்தில் அநேக பக்ஷிகள் உட்காருவதுபோல், ஒரு ராக்ஷஸ வீரனை அநேக வானரச்ரேஷ்டர்கள் சூழ்ந்துகொண்டார்கள். மலைகளைப்போன்ற ராக்ஷஸர்கள் வானரவீரர்களைக் கதை, கத்தி, கோடாலி, ஈட்டி, வல்லயம் முதலிய ஆயுதங்களால் அடித்துக் கொன்றார்கள். ராக்ஷஸர்களால் மிகவும் உபத்ரவிக்கப்பட்டு, வானரர்கள் ஸர்வலோக சரண்யனை ராமனைச் சரணமடைந்தார்கள். ரகுநாதன் ப்ரசண்ட கோதண்டத்தை எடுத்து, வளைத்து, நாணேற்றி, ராக்ஷஸர்களைச் சரமாரியால் துளைத்தார். பாணாக்னியால் தங்களைக் கொளுத்தும் ராமசந்திரனை ராக்ஷஸர்கள் நெருங்க முடியவில்லை. பூர்ண தேஜஸுடன் ஆகாச வீதியில் ஜ்வலிக்கும் ஸூர்யனை மேகங்கள் நெருங்க முடியுமோ? ராமனால் செய்யப்பட்ட அத்புதமான வீர க்ருத்யங்களைப் பார்த்து ராக்ஷஸர்கள் பயந்து திகைத்தார்கள். எல்லையற்ற ராக்ஷஸ ஸைன்யத்தைக் கலக்கிக்கொண்டும் ராக்ஷஸ

மஹாரதர்களை எரித்துக்கொண்டுமிருக்கும் ராமனை அவர்கள் காணமுடியவில்லை. வனத்தில் மரங்களை முறித்துத் தள்ளும் காற்றைக் காணமுடியுமா? அதிலுண்டாகும் நாசத்தைத் தவிர நமக்கு வேறு புலப்படுவதுண்டோ? ராக்ஷஸர்கள் தேஹம் பிளந்து, அவயவங்களறுந்து, பாணாக்னியால் வெந்து, எலும்புகளொடிந்து, அலங்கோலமாய் மடிவதைக் கண்டார்களேயொழிய, அவர்களுக்குள் அதிவேகமாய் ஸஞ்சரிக்கும் ராமனைக் காணவில்லை. பஞ்ச பூதங்களால் அமைக்கப்பட்ட சரீரத்தில் விளங்கும் ஜீவாத்மாவை நாம் பார்க்கிறோமா? பஞ்சேந்திரியங்களால் விஷயங்களை அனுபவிப்பதாலேயே அனுமானிக்கிறோமல்லவா ? அப்படி ராக்ஷஸர்களுடைய தேஹங்களில் ராமனுடைய பாணங்கள் விழுவது மாத்ரம் காணப்படுமேயொழிய ராகவனைப் பார்த்தவர்களில்லை.

'இவனே யானைகளைக் கொல்லுகிறான்; இவனே மஹா ரதங்களை உடைக்கிறான்; இவனே குதிரைகளை நாசம் செய்கிறான்; இவனே காலாட்களை ஸம்ஹரிக்கிற'னென்று கோபங்கொண்டு, தங்களைச் சேர்ந்தவர்களே ராமனைத் தோன்றி, ராக்ஷஸர்களெல்லோரும் ஒருவர்க்கொருவர் அடித்துக் கொன்றார்கள். அது அந்த மஹாத்மாவால் ப்ரயோகிக்கப்பட்ட காந்தர்வாஸ்த்ரத்தின் மஹிமை; ஆகையால் தங்களுடைய ஸைன்யத்தைக் கொளுத்தும் ராமனைக் காணமுடியவில்லை. ஒருபொழுது எங்கே பார்த்தாலும் அநேக ஆயிர ராமன்கள் நிற்பதாகக்கண்டார்கள். பிறகு ரகுநாதன் ஒருவரே கோதண்டபாணியாய் யுத்தபூமியில் விளங்கக் கண்டார்கள். ராமன் மண்டலாகாரமாய்ச் சுழன்று பாணங்களைப் ப்ரயோகிக்கையில், தங்கத்தால் அலங்கரிக்கப்பட்ட கோதண்டத்தின் முனைமாத்ரம் ராக்ஷஸர்களுக்குக் காணப்பட்டது; ராமன் ஒருவரே அதிவேகமாய்ச் சுழல்வதால் எங்குமிருப்பதுபோல் காணப்பட்டார். அவருடைய கோதண்டத்தின் நுனி தெரிந்ததேயொழிய, அவர் காணப்படவில்லை. ராமனே விஷ்ணுவின் சக்ராயுதம்; அதற்கு நடுமுனையாயிருக்கும் அவருடைய சரீரமே குடம்; பலமே அதிலிருந்து கிளம்பும் காந்தி; அதனால் ப்ரயோகிக்கப்படும் பாணங்களே ஆரங்கள்; வில்லே சக்ரத்தின் வெளிவட்டம்; நாணோசையும் நாண் கையில் அடிபடும் ஓசையுமே சக்ரத்திலிருந்து ஜ்வாலைகள் கிளம்பும்பொழுது உண்டாகும் ஓசை; பராக்ரமமே புத்திக்கு ஸ்தானமான நேத்ரம்; சரீரகாந்தியே அதிலிருந்து வெளிப்படும் ஜ்யோதிஸ்; திவ்யாஸ்த்ரங்களின் சக்தியே அதன் எல்லை. இப்படி ராக்ஷஸர்களை யுத்தத்தில் கணக்கில்லாமல் நாசம்செய்யும் ராமன், கோதண்டத்துடன் ஸுதர்சன சக்ரத்தைப்போல் காணப்பட்டார். வாயுவேகமுள்ள பதினாயிரம் அநேகம் ரதங்களும், பதினெண்ணாயிரம் அநேகம் யானைகளும், பதினாலாயிரம் அநேகம் குதிரைகளும், பாகர்களும், இரண்டு லக்ஷம் அநேகம் காலாட்களும், 



பகலின் எட்டிலொரு பாகத்தில் ராமன் ஒருவரால் ஸம்ஹரிக்கப்பட்டார்கள்.

யானைகள் மடிந்து குதிரைகளழிந்து ரதங்களொடிந்து காலாட்களொழிந்து அந்த ராக்ஷஸஸைன்யம் கொழுப்படங்கி லங்கையை நோக்கி ஓடிற்று. யானைகளும், குதிரைகளும், ரதங்களும் வானர ராக்ஷஸவீரர்களும் மலைமலையாய் அங்கங்கே கிடந்தார்கள். அந்த யுத்த பூமியைப் பார்க்கையில், ப்ரளயகாலத்தில் ருத்ரமூர்த்தி கோபங்கொண்டு விளையாடுமிடம்போலிருந்தது. தேவர்களும், கந்தர்வர்களும், ஸித்தர்களும், ரிஷிகளும், ராமனை 'நல்லது, நல்ல'தென்று கொண்டாடினார்கள். தம் ஸமீபத்திலிருந்த ஸுக்ரீவன், விபீஷணன், ஜாம்பவான், ஹனுமான், மைந்தன், த்விவிதன் முதலியவர்களை நோக்கி, ராமன், "இந்தக் காந்தர்வாஸ்த்ரத்தை ப்ரயோகிக்கும் சக்தி எனக்குண்டு; அல்லது பரமசிவனுக்கு ஸம்ஹார காலத்திலுண்டு. இப்படி ஒரு க்ஷணத்தில் கணக்கில்லாத ராக்ஷஸர்களை நாசஞ் செய்தது மாயாபலமென்று நீங்கள் எண்ணவேண்டாம். கேவலம் அஸ்த்ரபலமே" என்றார். இப்படி பலபராக்ரமத்தில் தேவேந்திரனைப்போன்ற ராமன் ராக்ஷஸஸைன்யத்தை அழித்து, அஸ்த்ரசஸ்த்ரங்களில் அளவில்லாத பயிற்சியையும் திறமையையுமுடையவராய், தேவகணங்களால் ஸந்தோஷமாய்க் கொண்டாடப்பட்டார்.

*நிஹத்ய தாம் ராக்ஷஸ வாஹிநீம் து*
*ராமஸ் ததா³ ஶக்ரஸமோ மஹாத்மா |*
*அஸ்த்ரேஷு ஶஸ்த்ரேஷு ஜிதக்லமஶ்ச*
*ஸம்ஸ்தூயதே தே³வக³ணை: ப்ரஹ்ருஷ்டை: ‖* (39)

## ஸர்க்கம் 95

## ராக்ஷஸிகள் பிரலாபித்தது

*தாநி தாநி ஸஹஸ்ராணி ஸாரோஹாணாம் ச வாஜிநாம் |*
*ரதா²நாம் த்வக்³நிவர்ணாநாம் ஸத்⁴வஜாநாம் ஸஹஸ்ரஶ: ‖* (1)

இப்படி அநேக ஆயிரம் குதிரைகளும் குதிரைப்பாகர்களும், த்வஜங்களால் விளங்கும் ரதங்களும், ஆயுதபாணிகளான ராக்ஷஸர்களும் ராகவனுடைய தீக்ஷ்ணமான சரங்களால் மடிந்ததைக் கண்டு, இதரராக்ஷஸர்கள் புத்திகலங்கித் திகைத்தார்கள். ராக்ஷஸ ஸ்த்ரீகள் கணக்கில்லாமல் யுத்தபூமிக்கு வந்து தீனமாய்க் கவலைகொண்டு, பர்த்தாவையிழந்தவர்களும் புத்திரனையிழந்தவர்களும் பந்துக்களையிழந்தவர்களுமாய் வாய்விட்டலறினார்கள்.

"ஐயோ! ராமன் மன்மதனுக்கு மன்மதன்; மிருதுவான அங்கங்களையுடையவன்; மஹாபலவான்; ஸகலப் பிராணிகளுடைய

ஹிதத்தையே தேடுகிறவன்; மஹாதேஜஸ்வி; அனந்தகல்யாண குண பரிபூர்ணன்; அந்த மஹானுபாவனை நமது சூர்ப்பணகை ஆசைமீறி அடையவிரும்பினாள். இவளுடைய ரூபத்தையும் குணங்களையும் வர்ணிக்கவும் முடியுமோ! மிகவும் வயதுசென்றவள்; பார்க்கப் பயங்கரமானவள்; பருத்த வயிற்றையுடையவள்; உடம்பெங்கும் சுருக்கமுள்ளவள்; வெளுத்த தலைமயிருள்ளவள்; நல்ல குணங்களென்பதே அவளிடத்தில் கிடையாது; குரூபி; பார்த்தவர்கள் அவளை உடனே கொல்லவேண்டியது. பூர்ணசந்திரனைப் போன்ற முகத்தையுடைய ராமனெங்கே! பயங்கரமான முகத்தையுடைய சூர்ப்பணகையெங்கே! ராக்ஷஸ ஸ்த்ரீ மனுஷ்யனை விரும்பலாமா? எல்லோரும் பரிஹாஸம் செய்யும்படியாயும் நிந்திக்கும்படியாயும் வெறுக்கும்படியாயும் இந்த மஹாபாபத்தைச் செய்துவிட்டாள். அதனால் கரன், தூஷணன், திரிசிரஸ், முதலிய ராக்ஷஸ வீரர்களும் பதினாலாயிரம் ஸேனைகளும் மடிந்தார்கள்; மாரீசன் இறந்தான்; லங்கையிலுள்ள ராக்ஷஸ சிரேஷ்டர்களும் ஸைன்யங்களும் ஒருவர் பாக்கியில்லாமல் ஒழிந்தார்கள். இவள் ராமனிடத்தில் மோஹித்து அவனை அடையவிரும்பலாமா? அதனால் ராவணன் ராமனுடன் பகைத்து ஸீதையை அபகரித்தான்; ராமனுடைய தீராக் கோபத்திற்குப் பாத்திரமானான்.

முன்பு ஸீதையைக் கண்டு ஆசைப்பட்ட விராதனை ஒரே பாணத்தால் ராமன் கொன்றது எங்களுக்குப் போதும். அதைக் கொண்டே அவருடைய பலத்தையும் பராக்கிரமத்தையும் ஊஹித்தோம். தசக்ரீவன் ஸீதையை ஒருநாளும் அடையப் போகிறதில்லை. கரதூஷணர்கள் மடிந்ததே எங்களுக்குப் புத்தி புகட்டப் போதுமானது. ஒரு யோஜனை நீளமுள்ள புஜங்களையுடைய கபந்தன் ராமனுடைய பாணங்களால் மடிந்தது ஒன்றே எங்களுக்குப் போதும். வானர ராஜன் வாலி, மேருவைப் போன்ற தேஹத்தையுடையவன்; தேவேந்திரனுடைய புத்திரன்; மஹாபலசாலி; அவனை ராமன் ஒரே பாணத்தால் கொன்றதே எங்களுக்குப் போதும். ரிச்யமூகபர்வதத்தில் தீனனாய் ஆசையொழிந்து ஒளிந்துகொண்டிருந்த ஸுக்ரீவனை ராமன் கை கொடுத்து வானர ராஜ்யத்தில் அபிஷேகஞ் செய்து வைத்தது ஒன்றே போதும்.

விபீஷணன் தர்மத்திற்கு ஒத்து ஸகல ராக்ஷஸர்களுக்கும் அநுகூலமான உபதேசத்தைச் செய்ய, அதை ராவணன் துர்ப்புத்தி பிடித்து அலக்ஷ்யம் செய்தான். அதைக் கேட்டிருந்தால் இந்த லங்கை இப்படிச் சுடுகாடாய் நாயும், நரியும், பேயும், பிணமுமாய்க் கிடக்குமா? மஹாபலவானான கும்பகர்ணன் ராமனால் கொல்லப்பட்டானென்றவுடனாவது ராவணனுக்கு புத்தி வர வேண்டாமா? ஒருவராலும் எதிர்க்க முடியாத அதிகாயனையும் பராக்கிரமமே உருவெடுத்து வந்த இந்திரஜித்தையும் லக்ஷ்மணன் ஜயித்துக் கொன்றாரென்று அறிந்த பிறகாவது தசக்ரீவனுக்குப் புத்தி வரவில்லையே! எங்கே பார்த்தாலும் எந்த வீட்டிலும் ‘ஐயோ! என் புத்திரனைப் பறி கொடுத்தேனே! என் அண்ணனையிழந்தேனே! என் பர்த்தா கொல்லப்பட்டாரே’ என்ற அழுகைக் குரலைத் தவிர வேறொன்றும் கேட்கப்படவில்லையே! ராமன் ஒருவன் இந்த யுத்தகளத்தில் தன் பாணங்களால் மலைகளைப்போல் அடித்துக் குவித்திருக்கும் யானைகளையும், குதிரைகளையும், ரதங்களையும், ராக்ஷஸ வீரர்களையும் பாருங்கள். இவன் மனுஷ்யனல்ல; ருத்ரமூர்த்தியோ, விஷ்ணுவோ, நூறு யாகங்களைச் செய்து பெரும் பதவி பெற்ற இந்திரனோ, அல்லது ஸாக்ஷாத் அந்தகனோ, ராமரூபமெடுத்து நம்மை நாசஞ்செய்கிறான். நமது வீரர்கள் மடிந்தார்கள்; இனி நாம் பிழைப்போமென்கிற ஆசையை விட்டோம்; எங்களுடைய பயத்திற்கு முடிவில்லை; அநாதைகளாய் புலம்புகிறோம்; தசக்ரீவன் பத்துத் தலைகளைப் படைத்தவனே; சூரனே; பிரஹ்மாவிடத்திலிருந்து அபூர்வமான வரங்களைப் பெற்றவனே; ஆனாலும் ராமனிடத்திலிருந்து தனக்குப் பெரும் பயம் நேரப் போகிறதென்றதை அறியவில்லையே! ராமன் ஒருவனை யுத்தத்தில் எதிர்த்து நின்றால் தேவகந்தர்வபிசாச ராக்ஷஸகணங்களும் அவனை ரக்ஷிக்க முடியுமோ? இதுவரையில் நடந்த ஒவ்வொரு சண்டைகளிலும் நேரும் சகுனங்கள் ராமனுக்கு ஜயத்தையும் ராவணனுக்கு அபஜயத்தையும் குறிக்கின்றன. ராவணன் பிரஹ்மாவைக் கடுந்தபஸால் ஸந்தோஷப்படுத்தித் தேவதானவ ராக்ஷஸகணங்களால் தனக்கு மரணமில்லையென்ற வரத்தையடைந்தான்; மனுஷ்யர்களை மறந்துவிட்டான். இன்று அந்த மனுஷ்யர்களால் நமக்கும் ராவணனுக்கும் கோரமான அபாயம் நேர்ந்திருக்கிறது. முன்பு தேவர்கள் ராவணனால்மிகவும் உபத்திரவிக்கப்பட்டுக் கடுந்தபஸால் பிரஹ்மாவைப் பூஜித்தார்கள். அவர் ஸந்தோஷித்து, அவர்களுடைய க்ஷேமத்தை உத்தேசித்து, “இன்று முதல் தானவர்களும் ராக்ஷஸர்களும் எப்பொழுதும் தேவர்கள் யார் மூலம் என்ன தீங்கு செய்வார்களோ என்ற பயத்தால் சூழப்பட்டு ஸஞ்சரித்துக் கொண்டிருக்கட்டும்” என்று அனுக்ரஹித்தார். பிறகு இந்திரன் முதலிய தேவதைகள் விருஷபாரூடரான பரமசிவனைப் பூஜித்தார்கள். அவர் பிரஸன்னமாகி, “தேவர்களே! முன்பு மஹாவிஷ்ணு அமிருதத்தை உங்களுக்குப் பங்கிட்டுக் கொடுத்த பிறகு, உங்களால் பிரயோகிக்கப்பட்ட கோரமான பசி தானவர்களைத் துன்புறுத்தியதுபோல், ராவணனையும் ராக்ஷஸர்களையும் நாசஞ் செய்வதற்காக ஸீதையென்று ஓர் ஸ்த்ரீ பிறப்பாள். கெட்ட நடத்தையையும் கெட்ட எண்ணத்தையுமுடைய அந்தத் துஷ்டன் அவளால் கோரமாய் மடிவான்” என்று உத்ஸாஹப்படுத்தினர். யுகங்களின் முடிவில் காலன் பிராணிகளை ஸம்ஹரிக்க வரும்பொழுது ‘பயப்படாதே’ என்று அடைக்கலங் கொடுப்பார்களுண்டோ! அப்படியே ‘இந்த

ராம பாணங்களிலிருந்து உன்னை ரக்ஷிக்கிறேன்' என்று சொல்லுகிறவர்கள் எந்த லோகங்களிலுமில்லையே! காட்டில் பெண் யானைகள் பெருந்தீயால் சூழப்பட்டுத் தத்தளிப்பது போல், இந்தப் பயத்தால் புத்தி சிதறும் எங்களுக்குக் கதி யார்? ராக்ஷஸ குலத்திற்கு எவரிடத்திலிருந்து பயம் நிச்சயமோ அந்த ராமனையே புத்திமானான விபீஷணன் சரணமடைந்தான். அது அவனுடைய நல்ல காலத்திற்கு அடையாளம்'' என்று கூறி ஸகல ராக்ஷஸ ஸ்த்ரீகளும் ஒருவரையொருவர் கட்டிக் கொண்டு, பயத்தால் நடுங்கி, கோரமாய் வாய்விட்டலறினார்கள்.

இதீவ ஸர்வா ரஜநீசர ஸ்த்ரிய:
பரஸ்பரம் ஸம்பரிரப்⁴ய பா³ஹுபி⁴: |
விஷேது³ ரார்தா ப⁴யபா⁴ர பீடி³தா
விநேது³ ருச்சைஶ்ச தத³ா ஸுத³ாருணம் || (44)

---

## ஸர்க்கம் 96

## ராவணன் யுத்தத்திற்குப் புறப்பட்டது

ஆர்தாநாம் ராக்ஷஸீநாம் து லங்காயாம் வை குலே குலே |
ராவண: கருணம் ஶப்³த³ம் ஶுஶ்ராவ பரிதே³விதம் || (1)

இப்படி ராக்ஷஸிகள் ஒவ்வொரு வீட்டிலும் பரிதாபமாய் அழுவதை ராவணன் கேட்டு, நெடுநேரம் பெருமூச்சு விட்டுக் கவலையில் ஆழ்ந்தான். பிறகு தனக்கு நேர்ந்த துக்கத்தையும் அவமானத்தையும் நினைத்து, கோபத்தால் மெய்மறந்து பார்க்கப் பயங்கரமானான். நேத்திரங்கள் சிவந்து நெருப்புப் பொரிகள் பறக்க, உதட்டைக் கடித்து, வரவரக் கொழுந்துவிட்டெரியும் காலாக்னியைப்போல் ராக்ஷஸர்கள் கூடக் கண்டு நடுங்கும்படியானான். ஸமீபத்திலிருந்த ராக்ஷஸர்களைப் பார்வையால் எரிப்பவனைப்போல், பயத்தால் வார்த்தைகள் தடுமாற, மஹோதரன் மஹாபார்ச்வனென்ற மந்திரிகளையும் விரூபாக்ஷனையுமழைத்து, "நமது ஸைன்யங்கள் யாவும் சீக்கிரமாய் யுத்தத்திற்குப் புறப்படவேண்டுமென்று சொல்லுங்கள்'' என்றான். அவனுடைய ஆக்ஞைப்படி ஸகல ஸைன்யமும் அதிசீக்கிரமாய் யுத்தத்திற்குத் தயாராயிற்று. ஹோமம் சாந்தி முதலிய மங்கள காரியங்களைச் செய்து முடித்து, எல்லோரும் ஆயுதபாணிகளாய் யுத்தத்திற்குப் புறப்பட்டார்கள். (முன்பு கொல்லப்பட்ட மஹோதரனும் மஹாபார்ச்வனும் ராவணனுடைய ஸஹோதரர்கள். அவர்களுக்கே மத்தனென்றும் ப்ரமத்தனென்றும் பெயருண்டு.) எல்லோரும் ராவணனிடத்தில் வந்து கைகூப்பி நமஸ்கரித்து, 'ஜய விஜயீபவ' என்று வாழ்த்தி, அவனுடைய ஆக்ஞையை எதிர்பார்த்து நின்றார்கள். அப்பொழுது ராவணன் மஹோதரன், மஹாபார்ச்வன், விரூபாக்ஷன் முதலிய ராக்ஷஸர்களைப் பார்த்து கோபத்தால் இடிபோல் சிரித்து, சத்ருக்களை அலக்ஷ்யஞ்செய்து, "யுகங்களின் முடிவில் லோகங்களை ஸம்ஹரிக்கும் ஆதித்யர்களைப்போன்ற பாணங்களை என் வில்லில் பூட்டி விடுத்து, ராமலக்ஷ்மணர்களையும் வானரர்களையும்இருந்தவிடந்தெரியாமல் நாசஞ்செய்து, கரன், கும்பகர்ணன், ப்ரஹஸ்தன், இந்திரஜித்து முதலிய ராக்ஷஸ வீரர்களுக்குத் திருப்தி செய்யப் போகிறேன். ஆகாசம் பூமி திக்குகள் நதிகள் ஸமுத்திரங்கள் என் சரங்களென்ற மேகங்களால் மறைக்கப்பட்டு ஒன்றும் தெரியப் போகிறதில்லை. இன்று வானர ஸைன்யங்களை அணியணியாய்த் தலைவர்களுடன் என் பாணங்களுக்கு இரையாக்குகிறேன். இன்று என் வில்லாகிற ஸமுத்திரத்திலிருந்து உண்டாகும் பாணங்களென்ற அலைகளாலும் வாயுவேகமுள்ள என் ரதத்தாலும் வானர ஸைன்யங்களை நாசஞ்செய்வேன். தாமரைத் தாதுகளைப்போன்ற நிறமுள்ள வானரர்களுடைய முகங்களே சற்று மலர்ந்த தாமரைப் புஷ்பங்கள்; வானரஸேனையின் அணிகளே தாமரையோடைகள்; அவைகளை மதயானையைப்போல் இறங்கிக் கலக்குகிறேன். இன்று வானரத் தலைவர்களுடைய முகங்கள் பாணங்களால் துளைக்கப்பட்டு, காம்புகளையுடைய தாமரை மலர்களைப்போல் பூமியை அலங்கரிக்கும். இன்றுயுத்தத்தில் அந்த வானரவீரர்களுடைய ப்ரசண்ட வேகத்தை தடுத்து ஒவ்வொரு பாணத்தால் நூறு வானரர்களைச் சித்ரவதை செய்கிறேன். சத்ருவதத்தின் மூலம் இன்று பர்த்தாவையிழந்தவர்களுக்கும் புத்ரனைப் பறிகொடுத்தவர்களுக்கும் ஸகோதரர்களற்றவர்களுக்கும் கண்ணீரைத் துடைப்பேன். கோடிமடங்காய் அவர்களுடைய பழியைத் தீர்க்கிறேன். இன்று வானரர்களை என் கூர்மையான பாணங்களால் பிளந்து, பூமியில் சிறிதும் இடைவெளியில்லாதபடி பரப்புகிறேன். இன்று நரிகளும் கழுகுகளும் மாம்ஸத்தைத் தின்னும் மற்ற ப்ராணிகளும் என் பாணங்களால் சிதைக்கப்பட்ட மாம்ஸங்களைத் தின்று அளவற்ற திருப்தியடையப்போகின்றன. என் ரதத்தைச் சீக்ரம் தயார் செய்யுங்கள்; வில்லையெடுத்து வாருங்கள். மிகுந்திருக்கும் ராக்ஷஸர்களெல்லாம் என்னுடன் வரட்டும்'' என்றான்.



அவனுடைய கட்டளையைக் கேட்டு மஹாபார்ச்வன் ஸேனாநாயகர்களைப் பார்த்து, "ஸைன்யங்கள் சீக்ரமாய்த் தயாராகட்டும்'' என்றான். அவர்கள் பரபரப்புடன் ராக்ஷஸர்களை ஒவ்வொரு வீட்டிலிருந்தும் அழைத்து வந்தார்கள். பயங்கரமான பார்வைகளையும் முகங்களையுமுடைய ராக்ஷஸர்கள், கத்தி, பட்டா, சூலம், கதை, உலக்கை, சக்ரம், கோடாலி, சதக்னி முதலிய ஆயுதங்களுடன், கோரமாய்க் கர்ஜித்துக்கொண்டு ஒரு முஹூர்த்தத்தில் யுத்தத்திற்குத் தயாராய் நின்றார்கள். பிறகு ஸேனைத் தலைவன் எட்டு குதிரைகள் பூட்டி, ஸகல ஆயுதங்களாலும் நிறைந்து, மஹாபுத்திமானான ஸாரதியால் நடத்தப்பட்ட ஓர் திவ்யரதத்தைக் கொண்டு வந்தான்.

ராவணன் தன் தேஜஸால் ஜ்வலிக்கும் அந்த ரதத்திலேறி, அநேக ராக்ஷஸர்களால் சூழப்பட்டு யுத்தத்திற்குப் புறப்பட்டான். அவனுடைய பலத்தாலும் காம்பீர்யத்தாலும் பூமி பிளக்கும்போலிருந்தது. அவனுடைய உத்திரவுப்படி மஹாபார்ச்வனும் மஹோதரனும் விருபாக்ஷனும் ரதங்களிலேறி, வீரகோஷத்தால் ஆகாசத்தையும் ரதவேகத்தால் பூமியையும் பிளந்துகொண்டு, ஜயலக்ஷ்மியையடைய நிச்சயித்தவர்களாய், தசமுகனைப் பின்தொடர்ந்தார்கள். பிறகு தன் ஸைன்யம் தயாராயிருப்பதைக் கண்டு, ராவணன் வீரலக்ஷ்மி ஜ்வலிக்க, வில்லைக் கையில் பிடித்து, ப்ரளயகாலத்தில் ஸகல ப்ராணிகளையும் ஸம்ஹரிக்க வரும் யமனைப்போல், வடக்குக் கோட்டை வாசலைத் தாண்டி, ராமலக்ஷ்மணர்களிருக்குமிடத்திற்கு வந்தான்.

அப்பொழுது ஸூர்யனுடைய ஒளி மழுங்கிற்று. திக்குகள் இருளால் மூடப்பட்டன. பக்ஷிகள் கோரமாய்க் கூவின. பூமி நடுங்கிற்று. மேகங்கள் ரத்தமழை சொரிந்தன. குதிரைகள் போகும் வழியில் இடறி விழுந்தன. த்வஜத்தின் நுனியில் ஒரு கழுகு தங்கிற்று. நரிகள் பயங்கரமாய் ஊளையிட்டன. ராவணனுடைய இடது புஜமும் வலது கண்ணும் துடித்தன. முகத்தில் நிறம் மாறிற்று. குரல் சற்றுத் தழதழத்தது. இப்படி யுத்தத்திற்குச் செல்லும் தசானனனுக்கு அபஜயத்தையும் மரணத்தையும் குறிக்கும் சகுனங்கள் தோன்றின. ஆகாசத்திலிருந்து எரிகொள்ளிகள் பேரிடிகளைப்போல் சப்தித்துக்கொண்டு விழுந்தன. கழுகுகளும் காக்கைகளும் அசுபமாய்க் கத்தின. இந்த அபசகுனங்களைக் கொஞ்சங்கூட லக்ஷ்யஞ்செய்யாமல், ராவணன் காலபாசத்தால் புத்திமயங்கி, தன் மரணத்தைத் தேடிக்கொண்டு யுத்தத்திற்குப் புறப்பட்டான்.

ராக்ஷஸவீரர்களுடைய ரதகோஷத்தைக் கேட்டு வானர ஸைன்யம் யுத்தத்திற்குத் தயாராயிற்று. பிறகு ஒருவரையொருவர் யுத்தத்திற்கழைத்து வீரவாதம் பேசிக்கொண்டு ஜயிக்க முயன்று, வானரர்களும் ராக்ஷஸர்களும் கடும்போர் புரிந்தார்கள். தசானனன் கோபமூண்டு, தங்கக்கட்டுகளையுடைய பாணங்களால் வானரர்களை க்ரூரமாய்க் கொன்றான். சிலர் தலைகளறுந்து, சிலர் ஹ்ருதயம் பிளந்து, சிலர் காதுகளறுந்து, சிலர் விலாப்பக்கங்கள் கிழிந்து, சிலர் ச்வாஸம் அடங்கி, சிலர் தலைகளுடைந்து, சிலர் கண்கள் பிதுங்கிக் கிடந்தார்கள். தசக்ரீவன் கோபத்தால் கண்களையுருட்டி விழித்துக்கொண்டு, அந்த யுத்தபூமியில் எந்தப்புறத்தில் செல்லுகிறானோ அங்கிருந்த வானரவீரர்கள் அவனுடைய பாணவேகத்தை ஸஹிக்காமல் அலங்கோலமாய் ஓடினார்கள்.

த$^3$ஶாநந: க்ரோத$^4$ விவ்ருத்த நேத்ரோ
யதோ யதோப்$^4$யேதி ரதே$^2$ந ஸங்க்$^2$யே |
ததஸ்ததஸ் தஸ்ய ஶரப்ரவேக$^3$ம்
ஸோடு$^4$ம் ந ஶேகுர் ஹரி புங்க$^3$வாஸ் தே || (52)

---



## ஸர்க்கம் 97

## விருபாக்ஷனுடைய வதம்

ததா$^2$ தை: க்ருத்த கா$^3$த்ரைஸ்து த$^3$ஶக்$^3$ரீவேண மார்க$^3$ணை: |
ப$^3$பூ$^4$வ வஸுதா$^4$ தத்ர ப்ரகீர்ணா ஹரிபி$^4$ஸ் ததா$^3$ || (1)

இப்படி ராவணனுடைய பாணங்களால் அவயவங்களறுந்து வானரவீரர்கள் யுத்தகளத்தில் கிடந்தார்கள். விளக்குப் பூச்சிகள் ஜ்வலிக்கும் நெருப்பை நெருங்கமுடியாததுபோல், ராவணன் ஒண்டியாய் நின்று ப்ரயோகிக்கும் பாணாக்னியை, அவர்கள் ஸஹிக்க முடியவில்லை. காட்டுத்தீயால் வெந்த யானைகளைப்போல் தசக்ரீவனுடைய கூர்மையான பாணங்களால் வருந்தி, கூச்சலிட்டுக்கொண்டு ஓடினார்கள். பெருங்காற்று மேகங்களைச் சிதறவடிப்பதுபோல், ராவணன் வானரஸேனைகளைத் தன் சரவேகத்தால் துரத்தியடித்தான். இப்படி வானரர்களைக் கலக்கி, தசமுகன் ராகவனிருக்குமிடத்திற்கு வந்தான்.

அப்பொழுது வானரர்கள் முறிபட்டோடுவதைக் கண்டு ஸுக்ரீவன் ஸுஷேணனை அவர்களுக்குக் காவலாய் வைத்து, தான் ராவணனுடன் யுத்தம்செய்ய நிச்சயித்தான். தனக்கு ஸமமான பராக்ரமமுள்ள ஸுஷேணனிடத்தில் ஸைன்யத்தை ஒப்புவித்துக் கவலையற்று, ஒரு மஹாவிருக்ஷத்தைப் பிடுங்கிக்கொண்டு ராவணனையெதிர்த்தான். அவனுக்கு இருபுறத்திலும் பின்னும் வானரவீரர்கள் பெரிய மலைச்சிகரங்களையும் மரங்களையுமெடுத்துக்கொண்டு வந்தார்கள். ஸுக்ரீவன் கோரமாய்க் கர்ஜித்துக்கொண்டு, போகும் வழியில் அநேக ராக்ஷஸச்ரேஷ்டர்களை அடித்துத் தள்ளினான். (மஹாராஜா யுத்தத்திற்குச் செல்லும்பொழுது ஸேவகர்கள் அவர் ப்ரயோகிக்கும் ஆயுதங்களையெடுத்துக்கொண்டு பின் செல்வது வழக்கம்). ப்ரளயகாலத்தில் அடிக்கும் காற்று பெரும் விருக்ஷங்களை முறித்துத் தள்ளுவதுபோல், ராக்ஷஸர்களை ஸுக்ரீவன் முறித்துத் தள்ளினான். காட்டில் மேகங்கள் பக்ஷிகளின்மேல் ஆலங்கட்டியைப் பொழிவதுபோல் அந்த வானரவீரன் ராக்ஷஸர்கள்மேல் மலைமாரிபொழிந்தான். வேரற்ற பர்வதங்களைப்போல் ராக்ஷஸ வீரர்கள் தலைகளுடைந்து அங்கங்கே விழுந்தார்கள். இப்படி ராக்ஷஸர்கள் நான்கு புறத்திலும் ஸுக்ரீவனால் அடிக்கப்பட்டுப் பெருங்கூச்சலுடன் மடிவதைக் கண்டு, விருபாக்ஷன் பொறுக்காமல் தன் பெயரைக் கோஷித்துக்கொண்டு ரதத்திலிருந்து தாவி, ஓர் மதயானைமேல் பாய்ந்தான். வானரர்களையெதிர்த்துத் தடுத்து, கோரமான சரங்களால் அவர்களை வருத்தி, ராக்ஷஸர்களுடைய பயத்தைப்போக்கி உத்ஸாஹப்படுத்தி, ஓடுகிறவர்களை நிறுத்தினான். அவனுடைய

பாணங்களால் தேஹமெங்கும் துளைக்கப்பட்டு, ஸுக்ரீவன் கடுங்கோபங்கொண்டு, அவனைக் கொல்ல நிச்சயித்தான். ஓர் பெரிய விருக்ஷத்தைப் பிடுங்கிக்கொண்டு அந்த ராக்ஷஸன் ஏறியிருந்த யானையை முகத்திலடிக்க, அந்த அடியைத் தாங்காமல் விரூபாக்ஷனுடைய யானை ஒரு வில்லின் ப்ரமாணம் பிந்திக் கீழேபடுத்து வீறிட்டது. அந்த ராக்ஷஸவீரன் அதிலிருந்து குதித்து, எருமைத் தோலால் மூடப்பட்ட கேடயத்தையும் கத்தியையுமெடுத்துக்கொண்டு ஸுக்ரீவனை எதிர்த்தான். உடனே வானரராஜன் மேகம்போன்ற ஓர் பெரிய பாறையைப் பெயர்த்து விரூபாக்ஷன் மேல் விட்டெறிந்தான். அந்த ராக்ஷஸன் சற்றுப் பின் வாங்கி அதனின்றும் தப்பித்துக்கொண்டு, ஸுக்ரீவனைக் கத்தியால் வெட்டினான். வானராதிபதி ஒரு முஹூர்த்தம் ப்ரக்ஞையற்றவனைப் போலிருந்து, பிறகு வேகமாய்த் தாவித் தன் விரல்களை மடக்கிக் கொண்டு விரூபாக்ஷனுடைய மார்பில் ஓங்கிக் குத்தினான். அந்த ராக்ஷஸன், அதை லக்ஷியஞ்செய்யாமல் தன் கத்தியால் ஸுக்ரீவனுடைய கவசத்தைப் பிளந்து, அவனை உதைத்துத் தள்ளினான். வானர ராஜன் எழுந்து இடியிடித்ததுபோல் அவனை ஓங்கியறைந்தான். அந்த ராக்ஷஸன் அதை லாகவத்தால் தப்பித்துக் கொண்டு விரல்களை மடக்கி ஸுக்ரீவனை மார்பில் குத்தினான். தான் அவமானமடைந்ததைப்பற்றி ஸுக்ரீவனுக்குக் கோபமும் வெட்கமும் எல்லையில்லாமல் அதிகரித்தன. அந்த ராக்ஷஸனை வெகு ஜாக்ரதையாய்க் கவனித்துக் கொண்டிருந்து, அவன் கொஞ்சம் கவனமற்றிருக்கும்பொழுது அவனுடைய நெற்றியில் ஓங்கியறைந்தான். அந்த அடியால் தலை பிளந்து ரத்தத்தைக் கக்கிக்கொண்டு விரூபாக்ஷன் பூமியில் விழுந்தான். கண்கள் தெறித்து, கோபத்தால் ரத்தத்தையும் நுரையையும் கக்கிக் கொண்டு, அந்த ராக்ஷஸ வீரன் பூமியில் புரண்டு துடித்துக்கொண்டு கூச்சலிடுவதை வானர வீரர்கள் கண்டு ஸந்தோஷித்தார்கள். அவ்விரு ஸைன்யங்களும் இரண்டு ஸமுத்ரங்கள் கரைபுரண்டதுபோல் கோஷித்துக்கொண்டு கடும் போர் புரிந்தன. மஹாபலவானான விரூபாக்ஷன் வானர ராஜனால் கொல்லப்பட்டதைக் கண்டு, ராக்ஷஸர்களும் வானரர்களும் பயத்தாலும் ஸந்தோஷத்தாலும் கங்கை கரை புரண்டது போல் தோன்றினார்கள்.

விநாஸிதம் ப்ரேக்ஷ்ய விரூபநேத்ரம்
மஹாப³லம் தம் ஹரிபார்தி²வேந |
ப³லம் ஸமஸ்தம் கபிராக்ஷஸாநாம்
உந்மத்த க³ங்கா³ப்ரதிமம் ப³பூ⁴வ ‖ (35)

---



## ஸர்க்கம் 98

## மஹோதரனுடைய வதம்

ஹந்யமாநே ப³லே தூர்ண மந்யோந்யம் தே மஹாம்ருதே⁴
ஸரஸீவ மஹாக⁴ர்மே ஸோபக்ஷீணே ப³பூ⁴வது: ‖ (1)

இப்படிக் கோடைகாலத்தில் ஜலம் வற்றின இரண்டு ஏரிகளைப்போல் அவ்விரு ஸைன்யமும் வரவரக் குறைந்து சளைக்கையில், ராக்ஷஸாதிபதி தன் ஸைன்யம் மடிந்ததையும் விரூபாக்ஷன் இறந்ததையும் கண்டு இருமடங்கு கோபங்கொண்டான். வானரர்கள் தன் பரிவாரங்களைக் கடித்துக் கிழிப்பதைப் பார்த்து, 'இப்படியும் கால கதி நமக்கு வாய்த்ததோ'வென்று மிகுந்த வருத்தமுண்டாயிற்று. பிறகு ஸமீபத்தில் நின்ற மஹோதரனைப் பார்த்து, "வீரச்ரேஷ்ட! இந்த ஸமயத்தில் சத்ருக்களை ஜயிப்பதற்காக உன்னை நம்பியிருக்கிறேன். வானர ஸைன்யத்தை நாசஞ்செய்து உன் பராக்கிரமத்தைக் காட்டு. உன் யஜமானனிடத்தில் உனக்குள்ள விச்வாஸத்தையும் அவன் உனக்குச் செய்த உபகாரத்தையும் தெரிவிக்க இதுதான் ஸமயம்; வெகு ஜாக்ரதையாய் யுத்தஞ் செய்" என்றான்.

'அப்படியே செய்கிறே'னென்று, கூறிவிட்டு எரியும் நெருப்பில் விளக்குப் பூச்சி விழுவதுபோல் மஹோதரன் வானர ஸைன்யத்தில் ப்ரவேசித்து, தன் ஸ்வபாவ வீர்யத்தாலும் ராவணனுடைய ஆக்ஞையாலும் வானரர்களைக் கூட்டங் கூட்டமாய்க் கொன்றான். அவர்கள் பெரும் பாறைகளைப் பெயர்த்துக்கொண்டு ராக்ஷஸர்களை அடித்துக் கொன்றார்கள். மஹோதரன் கோபங்கொண்டு தங்கக் கட்டுகளால் ப்ரகாசிக்கும் சரங்களால் வானரர்களுடைய கை கால்களை அறுத்துத் தள்ளினான். சிலர் மூலைக்கு மூலை ஓடினார்கள். சிலர் ஸுக்ரீவனைச் சரணமடைந்தார்கள். வானரேச்வரன் மஹோதரனால் தன் ஸைன்யம் முறிபட்டோடுவதைக் கண்டு, மலையைப் போன்ற ஒரு பெரும் பாறையைத் தூக்கிக்கொண்டு ஓடி வந்து மஹோதரன்மேல் விட்டெறிந்தான். அந்த ராக்ஷஸன் சற்றும் கலங்காமல் அதைத் தன் பாணங்களால் பிளந்து தள்ளினான். அது சிதறியோடும் கழுகுக் கூட்டங்களைப்போல், ஆயிரம் சுக்கல்களாய்ப் பூமியில் விழுந்தது. அதைக் கண்டு ஸுக்ரீவன் வெட்கமடைந்து, கோபபரவசனாய், ஆகாசத்தையளாவின ஓர் ஆச்சா மரத்தைப் பிடுங்கி அந்த ராக்ஷஸன்மேல் விட்டெறிந்தான். அதையும் அவன் பாணங்களால் நாசஞ்செய்ய, ஸுக்ரீவன் அங்குமிங்கும் பார்க்கையில் ஓர் பரிகாயுதம் பூமியில் கிடப்பதைக் கண்டு, அதைக் கரகரவென்று சுழற்றி அதிவேகமாய் மஹோதரனுடைய ரதத்தில் பூட்டியிருந்த குதிரைகளை அடித்தான். அந்த ராக்ஷஸ

வீரன் உடனே ரதத்திலிருந்து குதித்து ஒரு கதையை எடுத்தான். அவ்விரு வீரர்களும் கதையுடனும் பரிகத்துடனும் இரண்டு காளைகளைப்போலவும், மின்னற்கொடிகளால் விளங்கும் இரண்டு மேகங்களைப்போலவும் கர்ஜித்துக்கொண்டு எதிர்த்தார்கள். பிறகு மஹோதரன் ஸூர்யனைப்போல் தேஜஸால் ஜ்வலிக்கும் அந்த கதையைச் சுழற்றி ஸுக்ரீவனையடித்தான். அதை வானராதிபதி தன் பரிகாயுதத்தால் தடுத்தான். அவ்விரண்டும் தூள் தூளாய்ப் பூமியில் விழுந்தன. பிறகு ஸுக்ரீவன் ஸமீபத்தில் கிடந்த ஓர் இருப்புலக்கையையெடுத்துச் சுழற்றி மஹோதரன்மேலெறிய, அவன் அதை வேறொரு கதையால் தடுத்தான். அவ்விரண்டும் ஒன்றுக்கொன்று தாக்கித் தூளாய்ப் பூமியில் விழுந்தன.

பிறகு ஆஹுதிகளால் ஜ்வலிக்கும் இரண்டு அக்னிகளைப் போல் அவ்விருவரும் முஷ்டியுத்தம் செய்தார்கள்; இருவர்க்கும் ஆயுதங்களில்லை. தேஜஸிலும் பலத்திலும் நிகரில்லாதவர்கள்; ஒருவரையொருவர் குத்தினார்கள், அறைந்தார்கள், கூச்சலிட்டார்கள், தரையில் விழுந்தார்கள், தாவினார்கள், அடித்தார்கள்; தூக்கியெறிந்தார்கள். இப்படி அவ்விரு வீரர்களும் கைச்சண்டை செய்து களைத்தார்கள். பிறகு மஹோதரன் அதிவேகமாய் ஓர் கத்தியையும் கேடயத்தையும் எடுத்துக்கொண்டு ஸுக்ரீவன் மேல் பாய்ந்தான். அவனும் ஸமீபத்தில் கிடந்த ஓர் கத்தியையும் கேடயத்தையுமெடுத்துக்கொண்டு மஹோதரன்மேல் பாய்ந்தான். ரோஷத்தால் தேஹம் பதறக் கர்ஜித்துக்கொண்டும் ஒருவரையொருவர் துரத்திக்கொண்டும் அவ்விருவர்க்கும் உத்ஸாஹம் அதிகரித்து, யுத்தசாஸ்த்ரத்தில் தங்களுக்குள்ள திறமையையும் பயிற்சியையும் காட்டினார்கள். ஒருவரையொருவர் சுற்றி வந்து, வலசாரி இடசாரியாயும் மண்டலாகாரமாயும் சுழன்று கொண்டு, ஜயிப்பதில் மனத்தை நாட்டினார்கள். பிறகு மஹோந்தரன் ஸுக்ரீவனுடைய கேடயத்தை தன் கத்தியால் வெகு லாகவமாயும் அதிவேகமாயும் பிளந்தான். அதில் சிக்கிக்கொண்ட கத்தியை மஹோதரன் பிடுங்கியெடுக்கையில், ஸுக்ரீவன் ஸமயம் பார்த்து, மஹோதரனுடைய சிரஸை அதிலுள்ள ஆபரணங்களுடன் அறுத்துத் தள்ளினான். அதைக்கண்டு அந்த ராக்ஷஸஸைன்யம் அவ்விடத்தில் நிற்காமல் சிதறிப்போயிற்று. ஸுக்ரீவனும் வானரர்களும் வீரகோஷம் செய்தார்கள்; தசக்ரீவன் கோபத்தால் ஜ்வலித்தான்; ராகவன் ஸந்தோஷித்தார்; ராக்ஷஸர்கள் வாடின முகங்களுடன் மனம் நொந்து, பயத்தால் புத்திசிதறி மூலைக்குமூலை ஓடினார்கள். ஸூர்யன் தனது தேஜஸால் ஜ்வலிப்பதுபோல், ஸூர்யபுத்ரனான ஸுக்ரீவன் மஹோதரனைப் பெரிய பர்வதசிகரத்தைப் போல் அடித்துத்தள்ளி எல்லையற்ற கீர்த்தியையடைந்தான். இப்படி ஜயலக்ஷ்மியால் விளங்கும் வானராதிபதியை ஆகாசவீதியிலிருந்து தேவ யக்ஷ சித்தகணங்களும் பூமியிலிருந்த ஸகல ப்ராணிகளும் கொண்டாடினார்கள்.



அத2 விஜய மவாப்ய வாநரேந்த்3ர:
ஸமரமுகே2 ஸுரயக்ஷஸித்3த4 ஸங்கை4: |
அவநிதல க3தைஶ்ச பூ4தஸங்கை4ர்
ஹருஷஸமாகுலிதை: ஸ்துதோ மஹாத்மா || (46)

---

## ஸர்க்கம் 99

## மஹாபார்ச்வனுடைய வதம்

---

மஹோத3ரே து நிஹதே மஹாபார்ஶ்வோ மஹாப3ல: |
ஸுக்3ரீவேண ஸமீக்ஷ்யாத2 க்ரோத4ாத் ஸம்ரக்தலோசந: || (1)

மஹோதரனிறந்ததைக்கண்டு மஹாபார்ச்வன் அடங்காக் கோபங்கொண்டு, அங்கதனுடைய ஸேனைகளைப் பாணங்களால் நாசஞ்செய்தான். பழங்களைப் பெருங்காற்று அடித்துத் தள்ளுவது போல், வானரர்களுடைய தேஹங்களிலிருந்து தலைகளைத் தன் சரங்களால் அறுத்துத் தள்ளினான். சிலரை விலாப்பக்கங்களில் பிளந்தான்; சிலருடைய புஜங்களை அறுத்துத் தள்ளினான். மஹாபார்ச்வன் தொடுத்த சரமாரியால் வானரர்கள் நொந்து யுத்தத்தில் ஆசையற்றுப் ப்ரக்ஞையற்று மனந்தளர்ந்தார்கள்;

தன் ஸைன்யம் இப்படிச் சத்ருவால் தபிப்பதைக் கண்டு, பர்வகாலங்களில் ஸமுத்ரம் பொங்குவதைப்போல் அங்கதன் தன் வேகத்தை விருத்திசெய்தான். இரும்பால் செய்யப்பட்டு ஸூர்யகிரணங்களைப்போல் ஜ்வலிக்கும் ஒரு பரிகாயுதத்தை எடுத்துக்கொண்டு மஹாபார்ச்வன்மேல் பாய்ந்து அடித்தான். அந்த அடியால் மஹாபார்ச்வன் மூர்ச்சையடைந்து ப்ரக்ஞையற்று, ஸாரதியுடன் ரதத்திலிருந்து பூமியில் விழுந்தான். மைமலையைப் போன்ற ஜாம்பவான் தன் ஸைன்யத்திலிருந்து தாவி, ஓர் பெரும்பாறையால் அவனுடைய ரதத்தையும் குதிரைகளையும் பொடியாக்கினார். ஒரு முஹூர்த்தமான பிறகு அந்த ராக்ஷஸன் மயக்கந்தெளிந்து, அங்கதனைப் பாணவர்ஷத்தால் துன்புறுத்தினான். ஜாம்பவானை மூன்று பாணங்களால் மார்பில் துளைத்தான். கவாக்ஷனை அநேக சரங்களால் பிளந்தான். அவ்விருவரும் உபத்ரவப்படுவதைக்கண்டு அங்கதன் கோபமூண்டு, ஒரு கோரமான பரிகாயுதத்தை இருகைகளாலும் சுழற்றித் தூரத்திலிருந்த மஹாபார்ச்வனைத் தன் பூர்ண பலத்துடன் அடித்தான். அங்கதன் வேகத்துடனும் கோபத்துடனும் மெய்மறந்து எறிந்து அந்தப் பரிகம் மஹாபார்ச்வனுடைய வில்லையும் பாணங்களையும் தலைப்பாகையையும் அடித்துத் தள்ளிற்று. அதைக்கண்டு அங்கதன்

தாவி, அவனுடைய கன்னத்தில் ஓங்கியறைந்தான். அந்த ராக்ஷஸவீரன் அதனால் மகா கோபமடைந்து, ஒரு கையால் ஒரு பெரிய கண்ட்ரகோடாலியை எடுத்துச் சுழற்றி அங்கதன் மேல் விட்டெறிந்தான். அது ப்ரதிதினம் எண்ணெய்தடவி தேய்க்கப்பட்டுப் பளபளவென்று ஜ்வலித்தது; பர்வதத்தைப் போல் கடினமானது; முறிக்கமுடியாதது; அது அந்த வானர வீரனுடைய இடதுதோளில் வந்து வேகமாய் விழுந்தது. அங்கதன் அதனின்றும் லகுவாய்த் தப்பித்துக்கொண்டு வஜ்ரத்தைப் போன்ற தன் முஷ்டியால் மஹாபார்ச்வனை மார்பில் குத்தினான். அங்கதன் தன் பிதாவிற்கு ஸமமான பராக்ரமத்தையும் பலத்தையுமுடையவன்; அந்த ராக்ஷஸனுடைய உயிர்நிலைகளையறிந்து அவனுடைய ஹ்ருதயமிருக்குமிடத்தைக் குறிவைத்து வஜ்ரத்தைப் போன்ற தன் முஷ்டியால் குத்தினவுடன், மஹாபார்ச்வன் ஹ்ருதயம் பிளந்து பூமியில் விழுந்து உயிரிழந்தான். அதைக்கண்டு அவனுடைய ஸைன்யம் தத்தளித்தது. ராவணனுக்கு அடங்காத கோபமுண்டாயிற்று. தேவர்களும் இந்த்ரனும் ஆகாசவீதியில் உத்ஸாஹத்தால் ஜயகோஷம் செய்ய, வானரர்கள் ஸந்தோஷத்தால் ஸிம்ஹநாதம் செய்ய, இவ்விருசப்தங்களும் ஒன்று சேர்ந்து லங்கையிலுள்ள கோபுரங்களையும், வீடுகளையும், கோட்டைகளையும் பிளந்தது. அதைக்கேட்டு ராக்ஷஸாதிபதி ரோஷங்கொண்டு மறுபடியும் யுத்தத்திற்குப் புறப்பட்டான்.

அதே²ந்த்³ரஶத்ருஸ் த்ரிதி³வாலயாநாம்
வநௌகஸாம் சைவ மஹாப்ரணாத³ம் |
ஶ்ருத்வா ஸரோஷம் யுதி⁴ ராக்ஷஸேந்த்³ர:
புநஶ்ச யுத்³தா⁴பி⁴முகோ²ऽவதஸ்தே² || (26)

---

## ஸர்க்கம் 100

## ராம ராவண யுத்தாரம்பம்

---

தஸ்மிம்ஶ் ச நிஹதே வீரே விரூபாக்ஷே மஹாப³லே |
மஹோத³ரமஹாபார்ஶ்வௌ ஹதௌ த்³ருஷ்ட்வா து ராக்ஷஸௌ ||

மஹோதரன், மஹாபார்ச்வன், விரூபாக்ஷனென்ற ராக்ஷஸஸிரேஷ்டர்களிறந்ததைக்கண்டு, ராவணன் தேகம் தெரியாமல் கோபங்கொண்டு, தன் ஸாரதியைப் பார்த்து, "என் மந்த்ரிகளைக் கொன்றதற்கும் என் ராஜதானியை முற்றுகையிட்டதற்கும் பதிலாக அந்த ராமலக்ஷ்மணர்களைக் கொன்று என் துக்கத்தைத் தீர்த்துக்கொள்கிறேன்; ராமனென்ற விருக்ஷத்திற்கு ஸீதையே புஷ்பமும் பழமும்; ஸுக்ரீவன், ஜாம்பவான், குமுதன், நளன், மைந்தன் த்விவிதன், அங்கதன், கந்தமாதனன், ஹனுமான், ஸுஷேணன் முதலிய வானரவீரர்கள் பெருங்கிளைகள்; அந்த மரத்தை இன்று வேரறுக்கிறே''னென்று கர்ஜித்துக்கொண்டு, ரதவேகத்தால் பத்துத்திக்குகளையும் நடுங்கச்செய்து ராகவனை எதிர்த்தான். ஆறுகள், மலைகள், வனங்கள், மிருகங்கள், பக்ஷிகள் நிறைந்த பூமி முழுவதும் அந்தச் சப்தத்தால் நடுங்கிற்று. கோரமான ஒரு தாமஸாஸ்த்ரத்தைப் பிரயோகித்து வானரர்களை வாட்டினான்; அவர்கள் நான்கு புறங்களிலும் கூட்டங்கூட்டமாய் விழுந்தார்கள். அவர்கள் முறிபட்டோடும்பொழுது கிளம்பின புழுதி கோரமாயிருந்தது. பூர்வத்தில் ப்ரஹ்மாவால் நிர்மிக்கப்பட்ட அந்த அஸ்த்ரவேகத்தை வானரர்கள் ஸஹிக்கமுடியவில்லை. தசக்ரீவனுடைய பாணங்களால் தன் ஸைன்யங்கள் கலங்கினதைக்கண்டு, ராகவன் யுத்தம் செய்யத் திரும்பினார்.

பிறகு அந்த ராக்ஷஸவீரன் வானரஸைன்யத்தை அடித்துத் துரத்தியபின், தன் எதிரில் ராமன் நிற்பதைக் கண்டான். அவர் சத்ருக்களால் ஜயிக்கமுடியாதவர்; மஹாவிஷ்ணுவும் தேவேந்த்ரனும் நிற்பதுபோல் லக்ஷ்மணனுடன் யுத்தபூமியில் காக்ஷி கொடுத்தார். மேருவைப்போல் ஆகாசத்தையளாவின கோதண்டத்தின் மேல் லீலையாய்ச் சாய்ந்துகொண்டிருந்தார்; மலர்ந்த செந்தாமரையிதழ்தனைப்போல் சிவந்து அகன்று நீண்ட நேத்ரங்களையுடையவர்; முழங்கால்வரையில் நீண்ட புஜங்களையுடையவர்; சத்ருக்களின் கொழுப்பையடக்குகிறவர்; பலமும் தேஜஸும் உருவமெடுத்ததுபோன்றவர்; ஆதிசேஷாவதாரமான லக்ஷ்மணனுடைய' ஸஹாயத்தைப்பெற்றவர். வானரர்கள் பயந்தோடுவதையும் ராவணன் தன்னையெதிர்த்து வருவதையும் கண்டு, அடங்கா மகிழ்ச்சிகொண்டு, கோதண்டத்தை நடுவில் பிடித்து வளைத்துப் பூமியெங்கும் கிடுகிடென்று நடுங்கும்படி நாணேற்றி டங்காரஞ் செய்தார். ராவணனுடைய சரமாரியாலும் ராமனுடைய நாணோசையாலும் ராக்ஷஸர்களும் வானரர்களும் மெய்மறந்து விழுந்தார்கள். ராமலக்ஷ்மணர்களுடைய பாணமார்க்கத்தில் வந்த ராவணன் ஸூர்யசந்த்ரர்களுக்கு ஸமீபத்திலிருக்கும் ராஹுவைப்போல் தோன்றினான். (அமாவாஸ்யையில் ஸூர்யசந்த்ரர்களுக்கு ஸமீபத்தில் ராஹு வருவது உபமானமாகச் சொல்லப்பட்டதேயொழிய அவனால் இவர்களுடைய தேஜஸின் குறைவு முதலியவை ஏற்பட்டதென இங்கே கருத்தல்ல.) அப்பொழுது லக்ஷ்மணன் லங்கேச்வரனுடன் முதலில் யுத்தஞ்செய்ய விரும்பி, வில்லை வளைத்து நெருப்புக் கொழுந்தைப்போன்ற கூர்மையான பாணங்களைப் பிரயோகித்தார். அவை வில்லிலிருந்து வெளிப்பட்டவுடனே ராவணன் அவைகளை ஆகாசத்தில் பாணங்களால் ஒன்றிற்கொன்று மூன்றிற்கு மூன்று, பத்திற்குப் பத்து இப்படித் தடுத்துக் கண்டித்தான். தன் ஹஸ்த லாகவத்

தைக் காட்டி, தன்மேல் லக்ஷ்மணனுடைய பாணம் யாதொன்றும் விழாதபடியால் அவனை அலக்ஷ்யஞ் செய்து அப்புறஞ் சென்று மேருவைப்போல் அசையாமல் நிற்கும் ரகுவீரனை யெதிர்த்தான்.

கோபத்தால் கண்கள் சிவந்து ராமனைச் சரமாரியால் மறைத்தான். அவைகளை ராமன் பல்லங்களால் கண்டிக்க, அவை கோபங்கொண்ட கோரமான ஸர்ப்பங்களைப்போல் பூமியில் விழுந்தன. பிறகு ஒருவரையொருவர் பலவகை தீக்ஷ்ணமான பாணங்களால் அடித்தார்கள். இடசாரி, வலசாரி, மண்டலம் முதலிய அடிவரிசைகளைக் காட்டினார்கள். ஒருவர்க்கொருவர் பின் வாங்காமல் பாணங்களைத் தடுத்து வந்தார்கள். அந்த யுத்தத்தைப் பார்த்து யமனும் ருத்ரனும் யுத்தஞ் செய்கிறார்களோவென்று ஸகல ப்ராணிகளும் நடுங்கின. மழைக்காலத்தில் ஆகாசம் மேகங்களால் கருத்து, மின்னற்கொடிகளால் ப்ரகாசிப்பதுபோல், அவர்களுடைய பாணங்களால் ஆகாசம் மறைந்தது, பாணாக்னியால் ஜ்வலித்தது, சரமாரிகளால் ஆகாசத்தில் ஜன்னல்கள் வைத்தது போலிருந்தது. அந்த அம்புகள் அழகான கணுக்களுள்ளவை; கூர்மையான முனைகளுள்ளவை, கழுகிறகுகள் பூண்டவை; மகா வேகமுள்ளவை. அவ்விருவரும் தங்களுடைய சரங்களால் ஆகாசமும் பூமியும் தெரியாதபடி ஒரே இருட்டாய்ச் செய்தார்கள். ஸூர்யன் அஸ்தமித்த பிறகு நீருண்ட மேகங்கள் ஆகாசத்தில் பரவினதுபோலிருந்தது. அவ்விருவரும் ஒருவரையொருவர் கொல்ல நிச்சயித்து செய்யும் யுத்தம் முன்பு இந்த்ரனுக்கும் விருத்ராஸுரனுக்கும் நடந்த யுத்தத்தைப்போன்றது. அதுவரையில் ஒருவரும் இப்படி யுத்தஞ் செய்ததில்லை. ராவணனுக்கு இவ்விதமான யுத்தம் நேருமென்று ஸ்வப்னத்தில்கூட எண்ணமில்லை. இருவரும் உத்தமமான வில்லாளிகள்; இருவரும் ஆயுதப் பயிற்சியில் நிகரற்றவர்கள்; இருவரும் அஸ்த்ர ரஹஸ்யங்களை யறிந்தவர்களுக்குள் முதன்மையடைந்தவர்கள்; இருவரும் யுத்தத்தில் ஸகல நடைகளையும் வரிசைகளையும் காட்டினார்கள்; ஸமுத்ரத்தில் காற்றடிக்கும் திசையில் அலைகள் கிளம்புவதைப்போல், அவ்விருவரும் போகும் வழியில் பாணங்களாகிற அலைகள் மலைகளைப்போல் கிளம்பின. பிறகு பாணப்ரயோகத்தில் நிகரற்ற ராவணன், ராமனுடைய நெற்றியில் நாராசபாணங்களை மாலையாகக் தொடுத்து அடித்தான். பயங்கரமான வில்லிலிருந்து விடப்பட்டு நீலோத்பலத்தின் இதழ்களைப் போன்ற நிறமுள்ள அந்தச் சரமாலையை ராமன் சிரஸில் தரித்துக் கொண்டார். அதனால் அவருக்குக் கொஞ்சமாவது உபத்ரவமுண்டாகவில்லை. பிறகு ராமன் கோதண்டத்தை வளைத்து ருத்ராஸ்த்ர மந்த்ரத்தை ஜபித்துப் பாணங்களை ப்ரயோகித்தார். அவை மஹாமேகம் போன்ற ராவணனுடைய கவசத்தில் விழுந்தும்



அதைப் பிளக்க முடியவில்லை. அவனுக்கு யாதொரு உபத்ரவமுமுண்டாகவில்லை. பிறகு ரகுநந்தனன் சில பாணங்களை யெடுத்து ச்ரேஷ்டமான அஸ்த்ரங்களுடைய மந்த்ரங்களால் ஜபித்து ராவணனை நெற்றியிலடித்தார். அவைகளை ராவணன் அநேக பாணங்களால் தடுத்தான். அவைகளையும் பிளந்து ஐந்துதலை நாகங்களைப்போல் சீறிக்கொண்டு பூமியில் ப்ரவேசித்தன.

இப்படி ராகவனுடைய அஸ்த்ரத்தைக் கண்டித்து ராவணன் மஹாகோரமான அஸுராஸ்த்ரத்தை ப்ரயோகித்தான். அதிலிருந்து ஸிம்ஹம், புலி, கழுகு, காக்கை, பருந்து, நரி, செந்நாய், ஐந்து தலை நாகங்கள், ஸர்ப்பங்கள், கோவேறு கழுதைகள், பன்றிகள், நாய்கள், கோழிகள், மகரங்கள், கருநாகங்கள் முதலியவைகளைப்போல் பயங்கரமான முகங்களையுடைய அநேக பாணங்கள் வெளிப்பட்டன. அதைக் கண்டு ரகுவீரன் உத்ஸாஹத்துடன் தேஜஸால் ஜ்வலித்துக்கொண்டு ஆக்னேயாஸ்த்ரத்தை ப்ரயோகித்தார். கொழுந்துவிட்டெரியும் நெருப்பு, ஸூர்யன், சந்த்ரன், அர்த்தசந்த்ரன், தூமகேது, க்ரஹங்கள், நக்ஷத்ரங்கள், எரிகொள்ளிகள், மின்னற்கொடிகள் முதலியவைகளைப்போல் முகங்களையுடைய தீக்ஷ்ணமான பாணங்கள் அதிலிருந்து கணக்கில்லாமல் வெளிப்பட்டன. தசமுகனுடைய அஸ்த்ரம் ராமனுடைய அஸ்த்ரத்தால் அடிக்கப்பட்டு ஆகாசத்திலிருந்து தூள் தூளாய் விழுந்தது. அந்த அத்புதமான செய்கையைக் கண்டு ஸுக்ரீவன் முதலிய வானர வீரர்கள் ரகுநாதனை மிகுந்த உத்ஸாஹத்துடன் கொண்டாடிக் கர்ஜித்தார்கள்; தாசரதியும் திருப்தியடைந்தார்.

ததஸ் தத³ஸ்த்ரம் விநிஹத்ய ராக⁴வ:
ப்ரஸஹ்ய தத்³ ராவண பா³ஹுநிஸ்ருதம் |
முதா³ந்விதோ தா³ஶரதி²ர் மஹாஹவே
விநேது³ ருச்சைர் முதி³தா: கபீஶ்வரா: ‖ (50)

## ஸர்க்கம் 101

## லக்ஷ்மணன் சக்தியாலடிபட்டது

தஸ்மிந் ப்ரதிஹதேஸ்த்ரே து ராவணோ ராக்ஷஸாதி⁴ப: |
க்ரோத⁴ம் ச த்³விகு³ணம் சக்ரே³ க்ரோதா⁴ச் சாஸ்த்ர மநந்தரம் ‖ (1)

**தா**ன் பிரயோகித்த அஸ்த்ரம் வீணானதைக்கண்டு ராவணன் இருமடங்கு கோபங்கொண்டு, வேறொரு அஸ்த்ரத்தையெடுத்தான். அது மயனால் செய்யப்பட்டது; ருத்ரனை தேவதையாயுடையது; வெகு காந்தி பொருந்தினது. அதை ராகவன்மேல் ப்ரயோகித்த

பொழுது அதிலிருந்து சூலங்கள், கதைகள், உலக்கைகள், வில்லுகள், இடிகள் முதலிய அநேக ஆயுதங்கள் வஜ்ரங்களைப்போல் கடினமாய் நெருப்புஜ்வாலைகளுடன் யுகங்களின் முடிவில் தீக்ஷ்ணமான சண்ட மாருதங்களைப்போல் அதிவேகமாய்க் கிளம்பி வந்தன. உத்தமமான அஸ்த்ரங்களின் ரஹஸ்யங்களை அறிந்தவர்களுக்குள் ச்ரேஷ்டரான ராகவன் அதைக்கண்டு, ஸந்தோஷித்துத் தேஜஸூம் காந்தியும் விருத்தியடைந்து, காந்தர்வாஸ்திரத்தைப் பிரயோகித்து அதைத் தடுத்தார். தசானனன் ஸூர்யாஸ்த்ரத்தைப் பிரயோகித்தான். அதிலிருந்து மஹாகாந்தியுள்ள சக்ரங்கள் வெளிக் கிளம்பின. அவை ஆகாசமெங்கும் பரவி, ஸகல திக்குகளிலும் சந்த்ரஸூர்யர்கள் நிறைந்ததுபோல் ப்ரகாசித்தன. ராமன் அந்த விசித்திரமான சரங்களைப் பாணவர்ஷத்தால் நாசம் செய்தார். ராவணன் பத்துப் பாணங்களால் ராமனை ஸகல அவயவங்களிலும் துளைத்தான். மஹாதேஜஸ்வியான ராமன் கொஞ்சங்கூடக் கலங்காமல் ராவணனை ஸகல அங்கங்களிலும் பாணங்களால் துளைத்தார்.

இப்படி ராவணனைத் தடுத்து ராமன் சற்று ச்ரமபரிஹாரம் செய்துகொண்டிருக்கையில், லக்ஷ்மணன் ஏழு உத்தமமான பாணங்களையெடுத்து, மனுஷ்யனுடைய தலையையுடைய ரதத்வஜத்தை அறுத்துத்தள்ளி, ராவணனுடைய ஸாரதியின் சிரஸைக் குண்டலங்களுடன் கொய்தார். யானையின் துதிக்கையைப்போன்ற அந்த ராக்ஷஸனுடைய வில்லை ஐந்து கூர்மையான சரங்களால் பொடி செய்தார். கருத்த மேகங்களைப்போலும் பர்வதங்களைப்போலும் அவனுடைய ரதத்தில் பூட்டப்பட்ட குதிரைகளை, விபீஷணன் பாய்ந்து கதையால் அடித்துக் கொன்றான். உடனே ராவணன் பூமியில் குதித்து, விபீஷணன்மேல் அடங்காக் கோபங்கொண்டு நெருப்பிடிபோல் ஜ்வலிக்கும் ஒரு சக்தியையெடுத்து, விபீஷணன் மேல் ப்ரயோகித்தான். அது வருமுன்னே லக்ஷ்மணன் மூன்று பாணங்களால் அதைக் கண்டித்தார். அதைக் கண்டு வானரர்கள் பெருங் கூச்சலிட்டார்கள். அந்தச் சக்தி தங்கமாலைகளால் அலங்கரிக்கப்பட்டு, ஆகாசத்திலிருந்து எரிகொள்ளி விழுவதுபோல் நெருப்புப் பொரிகளுடன் மூன்று துண்டங்களாய்ப் பூமியில் விழுந்தது.

உடனே ராவணன் ரோஷத்தால் நேத்ரங்களிலிருந்து நெருப்புப்பொரிகள் பறக்க, வேறொரு உக்ரமான சக்தியையெடுத்தான். அது சந்தனம் அகில் முதலிய தூபதீபங்களால் பூஜிக்கப்பட்டது; யமனாலும் நெருங்க முடியாதது. தேஜஸால் ஜ்வலித்துக்கொண்டிருந்தது; இந்த்ரனுடைய இடியைப்போல் கோரமாய், பலவானான ராவணனால் ப்ரயோகிக்கப்பட்டு, விபீஷணனைக் கொல்வதற்காக வருவதைக் கண்டு லக்ஷ்மணன், "இது விபீஷணன்மேல் விழுந்தால் அவன் பிழைக்க மாட்டான்" என்றெண்ணி, அவனை அப்புறம் தள்ளி, மறைத்துக்கொண்டு தான் முன்னே வந்து நின்று, வில்லை வளைத்து, ராவணன் அந்தச் சக்தியைப் பிரயோகிக்காதபடி பாண வர்ஷத்தால் அவனைத் தடுத்தார். அதனால் ராவணன் விபீஷணனைக் கொல்லமுடியாமல், 'லக்ஷ்மணனால் இவன் தப்பினானல்லவா" என்று கோபங்கொண்டு, "அடே! துஷ்டா! நீ விபீஷணனை இன்று மரணத்திலிருந்து தப்புவித்தாயல்லவா? அதற்குப்பதிலாக இந்தச் சக்தி உன் உயிரை வாங்கப்போகிறது. இதுவரையில் அநேக சத்ருக்களின் ப்ராணனைக் கொள்ளை கொண்டிருக்கிறது. ரத்தத்தால் பூசப்பட்டிருப்பதைப் பார். உன் ஹிருதயத்தைப் பிளந்து, உன் உயிருடன் என்னிடத்தில் வரப்போகிற"தென்று கூறி ராவணன் அந்தச் சக்தியை மஹாகோபத்துடன் லக்ஷ்மணனை உத்தேசித்து விடுத்தான். அது எட்டுத் தங்கமணிகள் கட்டிக் கம்பீரமான நாதத்துடன் கூடினது; மயன் தன்னுடைய மாயா பலத்தால் அதை ஸ்ருஷ்டித்தான்; வீண்போகாதது; சத்ருக்களை நாசஞ்செய்யும் ஸ்வபாவமுள்ளது; தேஜஸால் ஜ்வலித்துக்கொண்டிருந்தது. அதை ப்ரயோகித்து, லக்ஷ்மணன் அதற்குத் தப்ப மாட்டானென்று, ராவணன் ஸந்தோஷத்தால் கர்ஜித்தான். அது பயங்கரமான வேகத்துடன் இந்திரனுடைய இடியைப்போல் குமுறிக்கொண்டு லக்ஷ்மணனை நோக்கி வந்தது. அப்பொழுது ராமன் லக்ஷ்மணனுக்கு 'மங்களமுண்டாகட்டு'மென்று வாழ்த்தி, அந்தச் சக்தியைப்பார்த்து, "நீ லக்ஷ்மணனைக் கொல்ல முடியாமல் வீணாகக்கடவாய்" என்று சொன்னார். ராவணன் மஹாகோபத்துடன் ப்ரயோகித்த சக்தி, கொடிய ஸர்ப்பத்தைப்போல், பயமில்லாமல் எதிர்த்து நிற்கும் லக்ஷ்மணனுடைய விசாலமான மார்பில் விழுந்தது. ராவணன் கடும் வேகத்துடன் சுழற்றியெறிந்த அந்தச் சக்தி தேஹத்தில் ஆழமாய்ப் பாய்ந்து, மஹாஸர்ப்பத்தின் நாக்கைப் போல் நெருப்புக் கொழுந்துகளுடன் ஜ்வலித்துக்கொண்டிருந்தது. லக்ஷ்மணன் ஹிருதயம் பிளந்து பூமியில் விழுந்தார்.

ஸமீபத்திலிருந்த ராமன் அதைக்கண்டு, அவனிடத்திலுள்ள ஸ்நேஹத்தால் மனம்நொந்தார். மஹாதேஜஸ்வியானாலும் அதைத் தாங்கமுடியாமல், கொஞ்சநேரம் என்ன செய்யலாமென்று யோசித்துக் கண்ணீர்பெருக ப்ரளய காலாக்னியைப்போல் கடுங் கோபமடைந்தார். பிறகு இது துக்கப்படுவதற்கு ஸமயமல்லவென்று ராவணனைக் கொல்ல நிச்சயித்து அவனுடன் கோர யுத்தம் செய்தார். ஸீதையை அபஹரித்த துக்கம் லக்ஷ்மணனைப் பார்த்து அதிகரித்தது. சக்தியால் ஹிருதயம் பிளந்து தேஹமெங்கும் ரத்தத்தால் நனைந்து, அசைவற்ற மஹாஸர்ப்பத்தைப்போல் லக்ஷ்மணன் கிடப்பதையும் கண்டார். ராவணனைக் கொல்லாமல் விடுவதில்லையென்று நிச்சயித்தார். ராவணன் அதிசீக்கிரமாய் எய்த அம்புகளால் வானரச்ரேஷ்டர்கள் அந்தச் சக்தியைப் பிடுங்கி

யெடுத்து ஓடிக்க முடியவில்லை. அது லக்ஷ்மணனைத் துளைத்துப் பூமியில் பதிந்தது. ராமன் அந்தப் பயங்கரமான ஆயுதத்தை லகுவாய்ப்பிடுங்கிக் கைகளால் தடவி ஒடித்தெறிந்தார். அப்பொழுது ராவணன் அவரை ஸகல அவயவங்களிலும் மர்மஸ்தானங்களிலும் சரங்களால் துளைத்தான். அவைகளைச் சற்றும் லக்ஷ்யஞ்செய்யாமல் ராமன் லக்ஷ்மணனைத் தழுவிக்கொண்டு, ஸுக்ரீவனையும் ஹனுமானையும் அழைத்து,

"நீங்கள் லக்ஷ்மணனைச் சூழ்ந்திருங்கள். கோடையின் முடிவில் மழைஜலத்திற்காகக் காத்துக்கொண்டிருக்கும் சாதகபக்ஷி மேகத்தைக் கண்டதுபோல், இந்தப் பாவியைக் கொல்வதற்கு ஸமயம் தேடிக்கொண்டிருந்தேன்; இன்று நேர்ந்தது; இப்பொழுது என் பராக்ரமத்தை ப்ரயோகித்து இவனுடைய பத்துத்தலைகளையும் அறுக்கிறேன். இன்னும் ஒரு முஹூர்த்தத்தில் ராமனாவது ராவணனாவது மடிவதைப் பாருங்கள். நான் கையில் கிடைத்த ராஜ்யத்தையிழந்ததும், தண்டகாரண்யத்திற்கு வந்ததும், அங்கே ஓரிடத்திலில்லாமல் அலைந்ததும், ஸீதையைப் பறிகொடுத்ததும், பிறகு ராக்ஷஸர்களோடு யுத்தஞ்செய்ததும் நரகவேதனையைப்போல் எனக்குத் தாங்கமுடியாத துக்கத்தையுண்டுபண்ணுகின்றன. இன்று ராவணனைக் கொன்று அவற்றையெல்லாம் மறப்பேன். வானரஸைன்யத்தை இவ்வளவு தூரம் அழைத்து வந்ததும், வாலியைக் கொன்றதும், ஸுக்ரீவனைப் பட்டத்தில் வைத்ததும், ஸமுத்திரத்தைத் தாண்டினதும், அதில் அணைகட்டினதும் இவனுக்காகவல்லவா? இந்தப்பாபி இன்று என் கண்ணில் பட்டிருக்கிறான். இனி உயிருடன் திரும்பிப் போவானா? பார்வையால் கொல்லும் கொடிய விஷமுள்ள நாகத்தினிடத்திலகப்பட்டவன் தப்புவதுண்டோ? நீங்களெல்லோரும் இதோவிருக்கும் பர்வதங்களிலுட்கார்ந்து ஸுகமாய் வேடிக்கைப் பாருங்கள். ராமன் ஸகல லோகங்களிலும் நிகரில்லாத வீரனென்பதும் பராக்ரமத்தால் எல்லோரையும் ஸந்தோஷப்படுத்துகிறவனென்பதும் மூன்று லோகங்களிலுமுள்ள தேவ, கந்தர்வ, ஸித்த, சாரண ரிஷிகணங்கள் முதலிய ஸகல ஜந்துக்களுக்கும் தெரியும். (நான் அவதாரமெடுத்ததின் ப்ரயோஜனமென்று உட்கருத்து). இன்றைக்கு நான் செய்யப்போகிற அத்புதமான யுத்தத்தை லோகங்களிலுள்ள சராசர வஸ்துக்களும் தேவகணங்களும் இந்தப் பூமியுள்ளவரைக்கும் கூடிக்கொண்டாடும்" என்று சொல்லிவிட்டு,

தங்கக்கட்டுள்ள கூர்மையான பாணங்களால் ராவணனை ஜாக்ரதையாய் அடித்தார். மேகங்கள் நீர்த்தாரைகளைச் சொரிவதுபோல் தசமுகன் ஜ்வலிக்கும் நாராசங்களையும் உலக்கைகளையும் ராமன்பேரில் வர்ஷித்தான். அவ்விருவரும் ஒருவரையொருவர் எதிர்த்து ப்ரயோகித்த பாணங்கள் தாக்கும் சப்தம் கோரமாயிருந்தது. அவை முறிந்து சிதறி ஆகாசத்திலிருந்து ஜ்வலிக்கும் முனைகளுடன் பூமியில் விழுந்தன. அவர்களுடைய நாணொசை ஸகல ப்ராணிகளுடைய ஹ்ருதயத்தையும் நடுங்கச்செய்தது. பெருங்காற்றாலடிக்கப்பட்ட மேகத்தைப்போல், ராவணன் ராமனுடைய சரமாரியால் மிகவும் வருந்தி, நிற்கமுடியாமல் பயந்து ஓடிப்போனான்.



ஸ கீர்யமாண: ஶரஜால வ்ருஷ்டிபி$^{4}$:
மஹாத்மநா தீ$^{3}$ப்த த$^{4}$நுஷ்மதார்தி$^{3}$த: |
ப$^{4}$யாத் ப்ரது$^{3}$த்$^{3}$ராவ ஸமேத்ய ராவணோ
யதா$^{2}$நிலேநாபி$^{4}$ஹதோ வலாஹக: || (65)

## ஸர்க்கம் 102

## லக்ஷ்மணன் மூர்ச்சை தெளிந்தது

ஶக்த்யா விநிஹதம் த்$^{3}$ருஷ்ட்வா ராவணேந ப$^{3}$லீயஸா |
லக்ஷ்மணம் ஸமரே ஶூரம் ருதி$^{4}$ரௌக$^{4}$ பரிப்லுதம் || (1)

லக்ஷ்மணன் ராவணனுடைய சக்தியாலடிப்பட்டு ரத்தம் பெருகக் கிடப்பதைக் கண்டு, ராமன் ராவணனுடன் கோர யுத்தம் செய்துகொண்டு பாணங்களைப் பிரயோகித்துக்கொண்டே ஸுஷேணனைப் பார்த்து, "மஹாசூரனான நமது லக்ஷ்மணன் ராவணனுடைய வீர்யத்தால் பூமியிலடித்துத் தள்ளப்பட்டான். மஹாஸர்ப்பத்தைப்போல் கிடந்து புரளும் லக்ஷ்மணனைக் கண்டு எனக்குத் துக்கம் அதிகரிக்கிறது. உயிரைக் காட்டிலும் எனக்கு ப்ரியமான லக்ஷ்மணன் ரத்தத்தால் நனைந்து கிடக்கையில் நான் இந்த்ரியங்கள் சிதறி எப்படி யுத்தஞ் செய்வேன்? ஸகல உத்தம லக்ஷணங்களும் பொருந்தின இந்த வீரச்ரேஷ்டன் யுத்தத்தில் ப்ரியமுள்ளவன்; என் உடன் பிறந்தவன்; என்னை நம்பி வந்தவன்; இவன் இறந்தால் எனக்கு ஸுகம் எதற்கு? உயிரை வைத்துக்கொள்ளவும் வேண்டுமோ? என் பலம் வெட்கமடைந்து அடங்குகிறது; கோதண்டம் கையிலிருந்து நழுவுகிறது; பாணங்கள் கைக்கு வரவில்லை; கண்ணீர் கண்களை மறைக்கிறது; ஸ்வப்னத்தில் ஆபத்திலிருந்து தப்பித்துக்கொள்வதற்காக வேகமாய் ஓட வேண்டுமென்று விரும்புகிறவனுக்குக் கால்கள் எப்படிப் பதிந்து ஸ்வாதீனப்படாமலிருக்குமோ அப்படித் தீவிரமான கவலை என்னை ஆழ்த்துகிறது. உயிரை விடுவது நலமென்று தோன்றுகிறது" என்று கூறினர்.

ரகுவீரன் லக்ஷ்மணனைப் பார்த்துப் பார்த்து, அவன் உயிர் நிலையில் அடிபட்டு உபத்ரவத்தை ஸஹிக்க முடியாமல் பெருமூச்சுவிட்டுக்கொண்டு புரளுவதைக் கண்டு, சோகமும் கவலையும் மேற்கொண்டு, இந்த்ரியஸ்வாதீனமற்று ப்ரலாபித்தார். "எனக்கு

வெளியில் ஸஞ்சரிக்கும் ப்ராணனுன லக்ஷ்மணன் அடிபட்டுப் புழுதியில் விழுந்து கிடப்பதைக் கண்டபிறகு ராஜ்யத்தாலும் ப்ராணனுலும், யுத்தத்தாலும் என்ன ப்ரயோஜனம்? என் அருமைத் தம்பி அடிப்பட்டுக் கிடக்கையில் எனக்கு ஒன்றுந்தோன்றவில்லை. என் மனஸும், புத்தியும், இந்த்ரியங்களும் அவனிடத்தில் லயமாயின. நான் நடைப்பிணம்போலானேன். பார்யைகளை எந்தத்தேசத்திலும் ஸம்பாதிக்கலாம்; பந்துக்கள் எந்தத் தேசத்திலும் கிடைப்பார்கள். ஆனுல் உடன்பிறந்தான் கிடைக்கக்கூடிய தேசம் மாத்ரம் கிடையாது'' என்று கூறி சோகத்தால் இந்த்ரியங்கள் கலங்கி, பார்ப்போர் பரிதபிக்கும்படி அடிக்கடி பெருமூச்சு விட்டுக்கொண்டு, ரகுநாதன் புரண்டழுவதைக் கண்டு, ஸுஷேணனென்ற வானர வீரன் அவரை ஸமாதானம் செய்தான்.

'ஸ்வாமி! ஸகல சுப லக்ஷணங்களுக்குமிருப்பிடமான லக்ஷ்மணன் மரணமடையவில்லை; இவருடைய முகம் விகாரமடையவில்லை; நிறம் மாறவில்லை; காந்தி குறையவில்லை; ப்ரஸன்னமாயும் தேஜஸுடனும் விளங்குகிறது; கைகள் தாமரைப் புஷ்பங்களைப்போல் சிவந்திருக்கின்றன; நேத்ரங்கள் தெளிவாயிருக்கின்றன. உயிரற்றவர்களுக்கு இவ்விதமான லக்ஷணங்கள் கிடையாது; தீர்க்காயுஸுள்ளவர்களுடைய முகங்கள் இப்படியிருக்கும். இவர் மரணமடையவில்லை; பிழைத்திருக்கிறுர். ஸுகமாய்த் தூங்கிக்கொண்டிருப்பவனைப்போல் கைகால்களை விரித்துக்கொண்டு படுத்திருக்கும் இவருடைய ஹ்ருதயம் ஸரியாய் அடித்துக்கொண்டு வருகிறது. ஆகையால் இவர் உயிரோடிருக்கிருரென்பதில் ஸந்தேஹமில்லை'' என்று ரகுவீரனைத் தேற்றி,

ஸமீபத்திலிருந்த ஆஞ்ஜநேயரைப் பார்த்து, "வாயுபுத்ர! இங்கிருந்து அதிசீக்ரமாய் ஓஷதிபர்வதத்திற்குச் செல். முன்பு ஜாம்பவான் அதன் லக்ஷணங்களையும் இடத்தையும் வர்ணித்திருக்கிறுர். அதன் தென் சிகரத்திலிருந்து விசல்யகரணீ, ஸாவர்ணகரணீ, ஸந்தானகரணீ, ஸஞ்சீவினீ என்ற ஓஷதிகளைக் கொண்டுவா. அவைகளால் லக்ஷ்மணன் மூர்ச்சை தெளிந்து முன்போல் ஸுகமாயிருக்கும்படிச் செய்கிறேன்'' என்றுன்.

உடனே ஆஞ்ஜநேயர் ஆகாச மார்க்கமாய் ஓஷதிபர்வதமிருக்குமிடத்திற்குச் சென்று, அவைகளைக் கண்டுபிடிக்க முடியாமல் கவலைகொண்டார். "இந்த ஓஷதிகளின் அடையாளங்களையும் லக்ஷணங்களையும் நன்றுய்த் தெரிந்துகொள்வதற்காக மறுபடியும் ஸுஷேணனிடத்தில் நான் சென்றுல் கால தாமஸமாகும்; உத்தேசித்த கார்யமும் கெடும். ஆகையால் இந்தச் சிகரத்தைப் பெயர்த்துக்கொண்டு போவது நலம். அவை இதில் வளர்கின்றனவென்று ஸுஷேணன் சொல்லியிருக்கிறுன். என் அந்தக்கரணம் தெளிந்திருப்பதால் அவை இங்கிருக்கவேண்டுமென்றே நிச்சயிக்கிறே''னென்று தனக்குள் ஆலோசித்துக்கொண்டு, ஓஷதி பர்வதத்தின் தென்சிகரத்தில் தன் வாலைச் சுழற்றி மூன்றுதரம் அசைத்தார். அதை மரங்களோடும் மிருகங்களோடும் நதிகளோடும் பிடுங்கியெடுத்து, கைகளால் பந்தாடிக்கொண்டு அதிசீக்ரமாய்த் திரும்பி வந்து, ஆகாச வீதியிலிருந்து ஓர் கருத்த நீருண்ட மேகத்தைப்போல் வானர ஸைன்யத்திற்கு நடுவில் குதித்தார்.

சற்று இளைப்பாறி அந்தப் பர்வதசிகரத்தை ஸுஷேணனுக்கெதிரில் வைத்து, "நீ கொண்டுவரச் சொன்ன ஓஷதிகள் எனக்கு அடையாளம் தெரியவில்லை. ஆகையால் அந்தச் சிகரத்தை அப்படியே பெயர்த்துக்கொண்டு வந்திருக்கிறேன்'' என்றுர்.

ஸுஷேணன் வாயுபுத்ரனைப் புகழ்ந்து, அந்தச் சிகரத்திலிருந்து வேண்டிய ஓஷதிகளை யெடுத்துக் கொண்டான். தேவர்களாலும் செய்யமுடியாத அத்புதகார்யத்தை மாருதி செய்ததைப்பற்றி வானரர்களும் ராக்ஷஸர்களும் ஆச்சர்யமடைந்தார்கள். பிறகு ஸுஷேணன் அந்த ஓஷதிகளைப் பிழிந்து லக்ஷ்மணனை முகரும்படி செய்தான். அவருடைய தேகத்திலிருந்த பாணங்களெல்லாம் உதிர்ந்து விழுந்தன; காயங்கள் ஆறின; உபத்ரவம் நீங்கிற்று; முன்போல் அளவற்ற பலபராக்ரமத்துடன் பூமியிலிருந்து கிளம்பினுர். அதைக்கண்டு வானரர்கள் 'நல்லது நல்ல'தென்று ஸுஷேணனைக் கொண்டாடினுர்கள். ரகுவீரன் லக்ஷ்மணனை "வா, வா'' என்றழைத்து, வெகுப்ரேமையுடன் இறுகத் தழுவிக் கண்ணீருதிர்த்தார். "வீரசிகாமணே! நீ செத்துப் பிழைத்ததை என் புண்யவசத்தால் பார்க்கின்றேன். நீ இறந்தால் எனக்கு ப்ராணனுலாவது, ஸீதையாலாவது, சத்ருக்களை ஜயிப்பதாலாவது ஆகவேண்டியதென்ன?'' என்று தன் ப்ரியத்தை வெளிப்படுத்தினுர்.

அதைக்கேட்டு லக்ஷ்மணன் வருத்தமடைந்து, வார்த்தைகள் குளர, "அண்ணு! என்ன வார்த்தை சொன்னீர்கள்? தங்களுடைய பராக்ரமம் வீண்போகாதல்லவா? ராவணனைக் கொன்று விபீஷணனை இந்த லங்காராஜ்யத்தில் அபிஷேகஞ் செய்கிறேனென்று முன்பு ப்ரதிக்ஞை செய்திருக்கிறீர்களல்லவா? யாரோ கையாலாகாதவன்போலும், ஊரும்பேருமில்லாதவன் போலும், இப்பொழுது இப்படிப் பேசத்தகுமா? பாபலேசமில்லாத புண்யமூர்த்தி! ஸாதுக்கள் தாம் செய்த ப்ரதிக்ஞையைக் கைவிடமாட்டார்கள். ப்ரதிக்ஞையை நிறைவேற்றுவது பெருந்தன்மையின் லக்ஷணம். தாங்கள் ஸீதையையும் ஜயத்தையுமடைவதில் எனக்காக அச்ரத்தைகொள்வது நியாயமல்ல. ராவணனைக் கொன்று, தாங்கள் சொன்ன வார்த்தையை நிறைவேற்றுங்கள். தங்களுடைய பாணமார்க்கத்தில் வந்த சத்ரு உயிருடன் தப்புவானு? கூர்மையான தந்தங்களுடன் கோபத்தால் கர்ஜிக்கும் ஸிம்ஹத்தின் கண்ணில்பட்ட யானை தப்புமா? ஸூர்யன் அஸ்தமிப்பதற்குமுன் இந்தத் துஷ்டனை அதி

சீக்ரமாய்க் கொல்லவேண்டும். ராவணனை யுத்தஞ்செய்து கொல்ல வேண்டுமென்றிருந்தால், ப்ரதிக்ஞையை நிறைவேற்றவேண்டுமென்றிருந்தால், ஸீதையை மறுபடியும் அடையவேண்டுமென்றிருந்தால் இப்போது நான் ப்ரார்த்திக்கிறபடி சீக்ரமாய் நடவுங்கள்'' என்றார்.

> யதி$^3$ வத$^4$மிச்ச$^2$ஸி ராவணஸ்ய ஸங்க்$^2$யே
> யதி$^3$ ச க்ருதாம் த்வமிஹேச்ச$^2$ஸி ப்ரதிஜ்ஞாம் |
> யதி$^3$ தவ ராஜவராத்மஜாபி$^4$லாஷ:
> குரு ச வசோ மம ஶீக்$^4$ர மத்$^3$ய வீர ‖ (54)

---

## ஸர்க்கம் 103

# ராமன் இந்திரனுடைய ரதத்திலேறி யுத்தம் செய்தது

---

> லக்ஷ்மணேந து தத்$^3$வாக்யமுக்தம் ஶ்ருத்வா ஸ ராக$^4$வ: |
> ஸந்த$^3$தே$^4$ பரவீரக்$^4$நோ த$^4$நு ராத$^3$ாய வீர்யவாந் ‖ (1)

அதைக்கேட்டு ரகுநந்தனன் வில்லையெடுத்து வளைத்துக் கோரமான சரங்களை ராவணன்மேல் ப்ரயோகித்தார். பிறகு அந்த ராக்ஷஸன் வேறு ரதத்திலேறி, ஸூர்யனை விழுங்க ராஹு ஓடி வருவதுபோல், ராமனை நோக்கி ஓடிவந்து, ரதத்திலிருந்துகொண்டே ராமனை வஜ்ராயுதம்போன்ற கோரமான பாணங்களால் அடித்தான். ரகுநாதன் கொழுந்துவிட்டெரியும் நெருப்பைப்போன்ற அம்புகளால் தசகண்டனைப் பிளந்தார். பூமியில் நிற்கும் ராமன் ரதத்திலிருக்கும் ராவணனுடன் யுத்தஞ்செய்வது ஸரியல்லவென்று தேவ கந்தர்வ தானவர்கள் அபிப்ராயப்பட்டு, இந்திரனுடைய ரதத்தை ராமனிடத்திலனுப்பினார்கள். அது தங்கத்தால் அலங்கரிக்கப்பட்டு மதுரமாய்ச் சப்திக்கும் அநேக ஸுவர்ண மணிகளால் விளங்கிற்று. பாலஸூர்யனைப்போல் காந்தி பொருந்தினது; வைடூரியங்களால் விளங்கும் ஸூர்யதேஜஸுள்ள அச்வங்கள் பூட்டினது; வெண்சாமரங்களாலும் தங்க ஜன்னல்களாலும் விளங்கிற்று. அழகான தங்க த்வஜத்தையுடையது. இந்த்ரனுடைய ஸாரதியான மாதலி அதை ஆகாசத்திலிருந்து ராமனிருக்குமிடத்திற்கு கொண்டுவந்து, கையில் குதிரைச் சவுக்குடன் ரதத்திலிருந்தபடி கைகூப்பி, "ஸ்வாமி! தாங்கள் ராவணனை ஜயிக்கவேண்டுமென்று விரும்பி தேவராஜன், இந்த ரதத்தையனுப்பினார். சத்ருகுலகால! அளவற்ற காந்தி பொருந்தினவரே! நிகரில்லாத பலவானே! இந்த்ரனால் கொடுக்கப்பட்ட இந்தப் பெரிய வில்லையும் அக்னிபோல் ஜ்வலிக்கும் கவசத்தையும் ஸூர்ய தேஜஸுள்ள பாணங்களையும் கூர்மையான சக்தியையும் அங்கீகரித்து, இந்தத்



திவ்யரதத்திலேறி ராவணனை ஜயிக்கக்கடவீர்கள். மஹேந்த்ரன் தானவர்களை ஜயிக்கும்பொழுது நான் ஸாரத்யம் செய்தேன். இன்று தாங்கள் ராவணனை ஜயிக்கும்பொழுது தங்களுக்கு ஸாரத்யம் செய்யும் பாக்யத்தைப் பெற்றேன்'' என்றார். ராமன் அந்த ரதத்தை ப்ரதக்ஷிணஞ்செய்து நமஸ்கரித்து பூர்ண சந்திரனைப் போல் ஸகல லோகங்களையும் தன் காந்தியால் ப்ரகாசிக்கச் செய்துகொண்டு அதிலேறினார்.

பிறகு ராமனுக்கும் ராவணனுக்கும் நடந்த யுத்தம் மிகவும் அத்புதமாக இருந்தது, பார்த்தவர்களுக்குப் பயத்தால் மயிர்க்கூச்சத்தை உண்டுபண்ணிற்று. உத்தம அஸ்த்ரங்களின் ரஹஸ்யத்தைப் பூர்ணமாயறிந்த ரகுவீரன், ராவணனால் ப்ரயோகிக்கப்பட்ட காந்தர்வம், தைவம் முதலிய அஸ்த்ரங்களை அந்தந்த அஸ்திரங்களாலேயே தடுத்தார். பிறகு ராவணன் கோபங்கொண்டு கோரமான ராக்ஷஸாஸ்த்ரத்தை ப்ரயோகித்தான். அவனுடைய வில்லிலிருந்து தங்கக்கட்டுகளுள்ள பாணங்கள் வெளிப்பட்டு, மஹாவிஷமுள்ள ஸர்ப்பங்களாய் ராமனைச் சூழ்ந்துகொண்டன. அவை நெருப்பு ஜ்வாலைகளைக்கக்கும் வாய்களைத் திறந்துகொண்டு, ராமனை உபத்ரவித்தன. வாஸுகி, கார்க்கோடகன் முதலிய மஹாநாகங்களைப் போல் ஜ்வலிக்கும் படங்களுடனும் கொடிய விஷங்களுடனும் ஸகல திக்குகளையும் மறைத்தன. அதைக்கண்டு ராமன் பயங்கரமான கருடாஸ்த்ரத்தை ப்ரயோகித்தார். அதிலிருந்து கிளம்பின பாணங்கள் ஸர்ப்பங்களையெல்லாம் நாசஞ்செய்தன; அவை மனஸால் நினைத்த ஸகல ரூபங்களையுமெடுக்கும். தன் அஸ்த்ரங்கள் வீணானதைக்கண்டு ராவணன் கோபபரவசனாய் ராமனை சரமாரியால் துளைத்தான். மாதலியையும் தீக்ஷ்ணமான பாணங்களால் வருத்தினான். ஒரு பாணத்தால் ரதத்தில் கட்டியிருந்த தங்க த்வஜத்தை அறுத்துத் தள்ளினான். தேவலோகத்து அச்வங்களையும் பாணவர்ஷத்தால் அடித்தான். அந்த அற்புதமான வீரக்ருத்யத்தைக் கண்டு தேவதானவகந்தர்வசாரணர்கள் துக்கமடைந்தார்கள். ராமன் சத்ருவால் பீடிக்கப்படுவதைக்கண்டு ஸித்தர்களும், மஹரிஷிகளும், வானரச்ரேஷ்டர்களும், விபீஷணனும் கவலை கொண்டார்கள். ராமனென்ற பூர்ணசந்த்ரன் ராவணனென்ற ராஹுவால் பீடிக்கப்பட்டதைக்கண்டு ஸகல ப்ராணிகளும் துயரமுற்றன.

சந்த்ரனுக்கு ப்ரியபார்யையாயும் ப்ரஜாபதியை தேவதையாயுடையதுமான ரோஹிணீ நக்ஷத்திரத்தைப் புதன் ஆக்ரமித்தான். அது ஸகல ஜகத்திற்கும் அபாயத்தைக் குறிப்பிட்டது. புகையால் சூழப்பட்ட அலைகளுடன் ஸமுத்ரம் ஜ்வலிப்பதுபோல் பொங்கி, ஸூர்யனை ஆக்ரமிப்பதுபோல் காணப்பட்டது. கத்தியைப்போல் கருத்த வர்ணத்துடன் ஆதித்யன் ஒளி மழுங்கிற்று. அதில் தலை

யில்லாத முண்டம் காணப்பட்டது. தூமகேது ஸூர்யனைப் பற்றிக்கொண்டது. கோஸலராஜாக்களுடைய நக்ஷத்ரமாயும் இந்த்ரனையும், அக்னியையும், தேவதைகளாயுடையதுமான விசாக நக்ஷத்ரத்தை அங்காரகன் ஆகாசவீதியில் ஆக்ரமித்து நின்றான். ராவணன் பத்துத்தலைகளுடனும் இருபது கைகளுடனும் மலை போன்ற வில்லைக் கையிற்பிடித்து, மைநாகபர்வதத்தைப்போல் தோன்றினான். அவனால் பீடிக்கப்பட்ட ராமன் பாணங்களை வில்லில் தொடுத்து விடுக்கமுடியவில்லை. அப்பொழுது தான் செய்யவேண்டிய கார்யத்தை ஞாபகப்படுத்திக்கொண்டு, புருவங்களை நெறித்துக் கொஞ்சம் சிவந்த நேத்ரங்களுடன் எல்லையற்ற கோபங்கொண்டு, ஸகல ஜகத்தையும் தன் பார்வையால் எரிப்பவர் போலத் தோன்றினார்.

ஸ க்ருத்வா ப்$^{4}$ருகுடிம் க்ருத்$^{3}$த$^{4}$: கிஞ்சித் ஸம்ரக்தலோசந: |
ஜகா$^{3}$ம ஸுமஹாக்ரோத$^{4}$ம் நிர்த$^{3}$ஹந்நிவ சக்ஷுஷா || (36)

---

## ஸர்க்கம் 104

## ராவணன் சூலத்தைப் பிரயோகித்தது

---

தஸ்ய க்ருத்$^{3}$த$^{4}$ஸ்ய வத$^{3}$நம் த்$^{3}$ருஷ்ட்வா ராமஸ்ய தீ$^{4}$மத: |
ஸர்வபூ$^{4}$தாநி வித்ரேஸு: ப்ராகம்பத ச மேதி$^{3}$நீ || (1)

இப்படிப் புத்திமானான ரகுவீரன் கோபங்கொண்டதைக் கண்டு அவருடைய முகத்தைப் பார்க்க முடியாமல் ஸகல பூதங்களும் பயத்தால் நடுங்கின; பூமி கிடுகிடென்று அதிர்ந்தது. பர்வதங்கள் விருக்ஷங்களுடனும் ஸிம்ஹம் புலி முதலிய மிருகங்களுடனும் அசைந்தாடின. ஸமுத்ரங்கள் கலங்கிப்பொங்கின. பக்ஷிகள் க்ரூரமாய்ச் சப்தித்தன. ஆகாசத்தில் மேகங்கள் பயங்கரமாய்க் குமுறிக்கொண்டு நான்கு புறங்களிலும் பரவின. ராமன் கோபாவேசங்கொண்டதையும் கோரமான அபசகுனங்களுண்டானதையுங் கண்டு ஸகல ப்ராணிகளும் திகிலடைந்தன. ராவணனுக்கும் பயமுண்டாயிற்று.

லோகங்களை நாசஞ்செய்யும் மஹாப்ரளயகாலத்தைப்போல் அவ்விரு வீரச்ரேஷ்டர்களுக்கும் நடந்த அத்புதமான யுத்தத்தைப் பார்க்க, தேவகந்தர்வ உரக ரிஷி தானவ தைத்ய கருடர்கள் முதலிய கணங்கள் ஆகாச வீதியில் கூட்டங்கூட்டமாய் விமானங்களில் வந்திருந்தார்கள். விசித்ரமான ஆயுதங்களாலும், கோரமான அஸ்த்ரங்களாலும், அவ்விருவரும் செய்யும் யுத்தமானது பார்ப்பவர்களுடைய உத்ஸாஹத்தையும் பயத்தையும் விருத்தி செய்தது. அப்பொழுது அங்கிருந்த தேவகணங்கள் ராமனிடத்திலுள்ள பக்ஷபாதத்தால், "ரகுநந்தன! ராவணனை ஜயிக்கக் கடவாய்" யென்று



அடிக்கடி ஆசிர்வதித்தார்கள். அஸுரகணங்கள் ராவணனிடத்திலுள்ள விச்வாஸத்தால், "தசமுக! ராமனை ஸம்ஹரிக்கக்கடவாய்" யென்று வாழ்த்தினார்கள்.

இப்படி ஒருவருக்கொருவர் பெரும் சப்தம் செய்துகொண்டிருக்கையில் ராவணன் ராமனை நாசஞ்செய்ய உத்தேசித்து அபூர்வ சக்தியுள்ள ஓர் சூலாயுதத்தை மஹாகோபத்துடன் எடுத்தான். பிறகு "இதை இப்பொழுது ப்ரயோகிப்பது அவச்யமா? அல்லது இன்னும் விசேஷமான அபாயம் நமக்கு நேர்ந்தபொழுது இதை ப்ரயோகிக்கலாமா" வென்று சற்று ஆலோசித்தான். அது இந்த்ரனுடைய வஜ்ரத்தைப்போல் உறுதியானது; பயங்கரமான சப்தத்தையுடையது; மலைச்சிகரங்களைப்போன்ற இருப்பு முனைகளடிக்கப்பட்டது; சத்ருக்களை நாசஞ்செய்யக்கூடியது; பார்ப்பவர்களுடைய ஹ்ருதயத்தைப் பிளக்கக்கூடியது; புகையால் சூழப்பட்ட ப்ரளயாக்னியைப்போல் கூர்மையான முனையையுடையது; ருத்ரனுடைய சூலாயுதத்தை மிஞ்சினது; சத்ருக்கள் அண்ட முடியாதது; ஸகல ப்ராணிகளையும் ஸம்ஹரிக்கும் காலனும் கண்டு நடுங்கக்கூடியது; ஸகல பூதங்களுடைய தேஹங்களை அறுத்துப் பிளந்து சிதைத்து, பயத்தால் உயிரைவிடும்படி செய்யக்கூடியது. இவ்விதமான சூலத்தை ராவணன் கோபத்தால் ஜ்வலிப்பவன்போல் நடுவில் பிடித்து, ராக்ஷஸ வீரர்கள் சுற்றிலும் ஆச்சர்யத்துடன் பார்த்துக்கொண்டிருக்க, அதை உயரத் தூக்கிப் பேரிடிபோல் கர்ஜித்தான். ரோஷத்தால் சிவந்த நேத்ரங்களையும் கருத்த மலையைப்போன்ற தேஹத்தையுமுடைய ராவணன், பத்து வாய்களாலும் கர்ஜிப்பதைக் கேட்டு, ராக்ஷஸ ஸைன்யம் ராமன் இறந்தா"னென்று அடங்கா மகிழ்ச்சிகொண்டது. ஆகாசமும், பூமியும், திக்குகளும் நடுங்கின. அந்தத் துஷ்டனுடைய கர்ஜனையால் ஸகல பூதங்களும் பயத்தால் மெய்மறந்தன; ஸமுத்ரம் கலங்கிற்று. தசமுகன் சூலத்தைச் சுழற்றி மறுபடியும் பயங்கரமாய்க் கர்ஜித்து, "அடே! ராம! இந்தச் சூலத்தைப் பார்த்தாயா? இந்த்ரனுடைய வஜ்ராயுதமும் இதற்கு ஈடல்ல. உன்னிடத்தில் உண்டாகும் கடுங்கோபத்தால் இதை ப்ரயோகிக்கிறேன்; இது உன்னையும் உனக்கு உதவிசெய்யும் உன் தம்பியையும் ஒரு க்ஷணத்தில் நாசஞ்செய்யும். இதுவரையில் அநேக ராக்ஷஸ வீரர்கள் உங்களால் இறந்திருக்கிறார்கள். யுத்தத்தில் உனக்கு மிகவும் ப்ரீதியல்லவா? இன்று என் கையால் மரணமடைந்து உத்தம கதியையடைவாய். இன்று உன்னைக் கொன்று, இறந்த ராக்ஷஸ வீரர்களுக்கு ஸமமாகச் செய்கிறேன். நில்; இந்த சூலத்தால் உன் உயிரை வாங்குகிறேன் பார்" என்று சொல்லி அதை ராமன்மேல் எறிந்தான். அது ஜ்வாலைகளாலும் மின்னல்களாலும் சூழப்பட்டு, எட்டுத் தங்கமணிகளால் செவிடுபடும்படி சப்தித்துக்கொண்டு, பயங்கரமாய் ஆகாசத்தில் வருவதைக்கண்டு, ரகுவீரன் கோதண்டத்தை வளைத்து ப்ரளயாக்னி

எரிய ஆரம்பிக்கையில் அதை இந்த்ரன் மழைத்தாரைகளால் நனைப்பதுபோல், பாணவர்ஷத்தால் தடுத்தார். எரியும் நெருப்பில் விழுந்த விளக்குப் பூச்சிகளைப்போல் அவை அந்தச் சூலத்தால் எரிக்கப்பட்டு இருந்தவிடந்தெரியாமல் போயின. தன் பாணங்கள் சூலத்தில் பட்டுச் சிதறிச் சாம்பலானதைக்கண்டு ராமனுக்குச் சொல்லமுடியாத கோபமுண்டாயிற்று. மாதலியின் வழியாய் இந்த்ரன் அனுப்பின உத்தமமான சக்தியையெடுத்துக் கையில் தூக்கிச் சுழற்றினார். அளவற்ற பலமுடைய ராகவனுடைய புஜத்தால் சுழற்றப்பட்ட அந்தத் திவ்யாயுதத்தில் கட்டியிருந்த தங்க மணிகள் மதுரமாய்ச் சப்தித்தன. ஆகாசம் யுகங்களின் முடிவில் எரிகொள்ளிகளால் வலிப்பதுபோல், அந்தச் சக்தியின் தேஜஸால் விளங்கிற்று. அது ராவணனுடைய சூலத்தின்மேல் விழுந்து அதன் பலத்தையும் தேஜஸையும் அபஹரித்து அதை ஒடித்துப் பொடிப் பொடியாய்ப் பூமியில் தள்ளிற்று. உடனே ராமன் பாணங்களை அதிவேகமாய் ப்ரயோகித்து, ராக்ஷஸாதிபதியின் ரதத்தில் பூட்டியிருந்த வாயுவேகமுள்ள அச்வங்களை அடித்தார். ராவணனை நெற்றியிலும் மார்பிலும் அடித்துப் பிளந்தார். ஸகல அவயவங்களும் பாணங்களால்பிளந்து ரத்தத்தாரைகள் பெருகத் தசானனன் புஷ்பங்களால் நிறைந்த அசோக விருக்ஷத்தைப்போல் காணப்பட்டான். இப்படி யுத்தத்தில் ராமபாணங்களால் தேஹமெங்கும் காயம் பட்டு ரத்தத்தால் நனைந்து, பாதியுத்தத்தில் மனந்தளர்ந்தான். பிறகு கடுங்கோபங்கொண்டான்.

ஸ ராமபா$^{3}$ணை ரபி$^{4}$வித்$^{3}$த$^{4}$ கா$^{3}$த்ரோ
நிஶாசரேந்த்$^{3}$ர: க்ஷதஜார்த்$^{3}$ர கா$^{3}$த்ர: |
ஜகா$^{3}$ம கே$^{2}$த$^{3}$ம் ச ஸமாஜமத்$^{4}$யே
க்ரோத$^{4}$ம் ச சக்ரே ஸுப்$^{4}$ருஶம் ததா$^{3}$நீம் || (37)

---

## ஸர்க்கம் 105

## ராவணனுடைய ஸாரதி ரதத்தை யுத்தபூமியிலிருந்து கொண்டுபோனது

ஸ தேந து ததா$^{2}$ க்ரோதா$^{4}$த் காகுத்ஸ்தே$^{3}$நார்தி$^{3}$தோ ரணே |
ராவண: ஸமரஶ்லாகீ$^{4}$ மஹாக்ரோத$^{4}$முபாக$^{3}$மத் || (1)

**ரா**மன் கோபமூண்டு இப்படித் தன்னை வருத்துவதைக் கண்டு, யுத்தத்தில் சத்ருவின் பராக்ரமத்தை மெச்சும் தன்மையுள்ள ராவணனுக்கும் தேஹந்தெரியாமல் கோபமுண்டாயிற்று. ஸப்த மேகங்களும் ஒரே காலத்தில் மழைத்தாரைகளைச் சொரிந்து ஒரு பெரிய ஏரியை நிரப்புவதுபோல், தசக்ரீவன் கண்கள் சிவந்து, ச்வாஸத்தையடக்கிக்கொண்டு, தன் பூர்ணவீர்யத்தையும் ப்ரயோகித்து ராகவனை ஊசிநாட்ட இடமில்லாமல் பாணங்களால் நிறைத்தான். மேருமலை பெருங்காற்றால் அசையுமா? ரகுவீரன் சத்ருவின் பாணங்களை அலக்ஷ்யஞ்செய்து அவைகளால் சற்றும் வருந்தாமல், ஸூர்யனுடைய கிரணங்களைக் குடையால் தடுப்பதுபோல் சரமாரியால் அவைகளைத் தடுத்தார். உடனே ராவணன் அநேகம் ஆயிரம் அஸ்த்ரங்களை அதிவேகமாய் ப்ரயோகித்து ராமனை மார்பில் துளைத்தான். ரத்தத்தால் நனைந்து, ராகவன் காட்டில் வஸந்த காலத்தில் புஷ்பங்களால் நிறைந்த ஒரு பெரிய பலாச விருக்ஷத்தைப்போல் விளங்கினார். அந்தச் சரங்களால் கோபங்கொண்டு, யுகங்களின் முடிவில் ஜ்வலிக்கும் ஸூர்யனைப்போல் தேஜஸ்வியாய், ச்ரேஷ்டமான பாணங்களைக் கோதண்டத்தில் தொடுத்து விடுத்தார். இருவரும் வாயுவேக மனோவேகமாய் ப்ரயோகிக்கும் சரங்களாலுண்டான இருட்டில் ஒருவரையொருவர் பார்க்கமுடியவில்லை.



பிறகு ராமன், இவனுடன் எவ்வளவு நேரம் யுத்தஞ்செய்கிறதென்று கடுங்கோபங்கொண்டு, அவனைப் பார்த்து அலக்ஷ்யமாகச் சிரித்து, "அடே! துஷ்ட ராக்ஷஸ! ஜனஸ்தானத்தில் என் பார்யை தனியாக அனாதையா யிருக்கையில் நீ அவளைத் திருட்டுத்தனமாய் நானில்லாத வேளையில் அபகரித்தாய். இந்த அல்பகிருத்யத்தைச் செய்த நீயும் ஒரு வீரனா? சுத்தவீரர்களிருக்குமிடத்திற்கு வருவதற்கும் உனக்கு யோக்யதையுண்டோ? ஒரு ஸ்திரீ நிர்மானுஷ்யமான காட்டில் பர்த்தா இல்லாமல் தனியாக கவலைக்கொண்டிருக்கையில் அவளைப் பலாத்காரஞ்செய்ததும், நீ 'நம்மைப்போன்ற சூரனில்லை'யென்று எண்ணங்கொள்வதும் மிகவும் ஆச்சர்யமாயிருக்கிறது. ரக்ஷிப்பதற்கு பர்த்தா ஸமீபத்திலில்லாத பெண் பிள்ளையிடத்தில் சௌர்யத்தைக் காட்டும் பதரே! பரஸ்த்ரீயை அபகரிக்கும் மஹா பாபி! லோகத்தில் நீசர்களும் நிந்திக்கக்கூடிய செய்கையைச் செய்த பிறகும், 'நான் வீர'னென்று எண்ணத்துணிந்தாயல்லவா? லோக மரியாதையைக் கடந்தவனே! வெட்கங்கெட்டவனே! நன்னடத்தையைத் துறந்தவனே! கொழுப்பாலும் கர்வத்தாலும் தலைதெரியாமல் காலமிருத்யுவை வலுவில் தேடி வீட்டிற்கு அழைத்துக் கொண்டுவந்தும், 'நம்மைப்போன்ற சூரனில்லை'யென்று அகமகிழ்கிறாயே? திக்பாலகனான குபேரனுக்குத் தம்பி; மஹா சூரன்; எண்ணிறந்த வீரர்களால் சூழப்பட்டவன்; நீ செய்த அத்புதமான கார்யத்தை ஸகல ப்ராணிகளும் மெச்சுவார்கள். அதனால் உனக்கு அழிவற்ற கீர்த்தி கிடைக்கும். மதத்தால் நீ செய்த இந்தக்கார்யம் உன்னை வேரறுக்கும். அந்தப் பாபத்தின் கொடுமையான பலனை இதோ அனுபவிக்கப்போகிறாய். துர்புத்தி பிடித்துச் 'சௌர்யத்தில் நமக்கீடில்லை'யென்று நினைக்கிறாய். திருடனைப்போல் ஸீதையை எடுத்துவந்த உனக்கு வெட்கமென்பது கிடையாதோ? நானிருக்கும்பொழுது நீ அப்படிச் செய்திருந்தால் என் பாணங்களுக்கிரையாகி, உன்னுடன் பிறந்த கரனிருக்குமிடம் போயிருப்பாய்.

போகட்டும். இன்று நீ என் கண்ணில் பட்டது மிகவும் நல்லது. இந்தக் கூர்மையானபாணங்களால் உன்னை யமலோகத்திற்கனுப்புகிறேன். இன்று உன் சிரத்தை ஜ்வலிக்கும் குண்டலங்களுடன் என் சரங்களாலறுத்துப் பூமியில் தள்ளுகிறேன். அங்கே அது புழுதியில் புரள, நாய்களும் நரிகளும் அதைப் பிடுங்கித் தின்னும். பூமியில் கிடக்கும் உன் முண்டத்தில் சரங்கள் பாய்ந்தவிடங்களிலிருந்து பெருகும் ரத்தத் தாரைகளை இன்று கழுகுகள் குடித்துத் தாகத்தைத் தீர்த்துக்கொள்ளும். கருடன் ஸர்ப்பங்களைக் கொத்திக் கொண்டு போவதுபோல், இன்று என் அம்புகளால் பிளக்கப்பட்டு நீ உயிரற்றுப் பூமியில் கிடக்கையில் உன் உடல்களைப் பறவைகள் பிடுங்கித் தின்னும்.'' என்றார்.

இப்படிக் கடும் வார்த்தைகளால் ராவணனைத் தூஷித்து அவன் மேல் சரமாரி பொழிந்தார். அவனைக் கொல்லவேண்டுமென்று நினைத்தவுடன் ராமனுக்கு வீர்யமும், பலமும், உத்ஸாஹமும், அஸ்த்ர பலமும் இரு மடங்காயின. எல்லையற்ற ஞானமுள்ள ராகவனுக்கு அப்பொழுது ஸகல அஸ்த்ரங்களும் தோன்றி ஸித்தமாயிருந்தன. தேஜஸூம் ஸந்தோஷமும் விருத்தியடைந்து பாணங்களைப் ப்ரயோகிப்பதில் வாயுவேக மனோவேகத்தை மிஞ்சினார். இப்படிப் பட்ட சுபசகுனங்களைக் கவனித்து ஜயம் ஸமீபித்ததென்றெண்ணி, மறுபடியும் ராவணனை மிகவும் கடுமையாய் நெருக்கி, ஓயாமல் பாணங்களை ப்ரயோகித்ததால், கல்மாரி பொழிவது போல் இடைவிடாமல் வந்துவிழும் ராமபாணங்களாலடிபட்டு, ராவணன் மனந்தளர்ந்து ப்ரமித்தான். வில்லை வளைக்கவுமில்லை; பாணங்களைத் தொடுக்கவுமில்லை; விடுக்கவுமில்லை; ராமனுடைய பாணங்களைத் தடுக்கவுமில்லை; இந்த்ரிய ஸ்வாதீனமற்று மனந்தளர்ந்தான். அவனால் ப்ரயோகிக்கப்பட்ட அஸ்த்ரங்களும் சஸ்த்ரங்களும் பலமற்றுச் சத்ருவைக் கொஞ்சமேனும் உபத்ரவிக்கவில்லை. இப்படி மரணமடையும் தசையிலிருப்பவனைப்போல் ராவணன் கஷ்டப்படுவதைக் கண்டு, ஸாரதி மனங்கலங்காமல் அந்த ரதத்தை யுத்தபூமியிலிருந்து அப்புறம் மெள்ள நடத்திக் கொண்டு வந்தான்.

ஸூதஸ்து ரத2நேதாஸ்ய
தத3வஸ்த2ம் ஸமீக்ஷ்ய தம் |
ஶனைர் யுத்3த4ா த3ஸம்ப்4ராந்தோ
ரத2ம் தஸ்யாபவாஹயத் || (38)

---



## ஸர்க்கம் 106

# ராவணனுடைய ரதம் மறுபடியும் யுத்தபூமிக்கு வந்தது

---

ஸது மோஹாத் ஸுஸங்க்ருத்3த4: க்ருதாந்த ப3லசோதி3த: |
க்ரோத4 ஸம்ரக்தநயனோ ராவண: ஸூதமப்3ரவீத் || (1)

ராவணன் "தான் சத்ருவுடன் யுத்தம் செய்துகொண்டிருக்கையில் மயக்கங்கொண்டோமல்லவா"வென்று நினைத்துக் கோபத்தால் கண்கள் சிவக்க, காலங்குறுகிவிட்டபடியால் அந்தக் கோபத்தை ஸாரதியின்மேல் தாக்கினான். "அடே, புத்திகெட்டவனே! என்னை வீர்யங்குறைந்து சக்தியற்று ஆண்மையிழந்தவனென்றெண்ணினையோ? பலமும்தேஜஸூம் மழுங்கி யுத்தத்திற்குப் பயந்தோடும் அல்பனென்றெண்ணினையோ? என் மாயாவித்தைகள் மாயமாயிற்றோ? என் அஸ்த்ரங்கள் மறைந்தனவோ? என்னை ஒரு பொருட்டா யெண்ணாமல் அலக்ஷ்யஞ்செய்து உன் யோசனைப்படி நடக்கத் துணிந்தாயல்லவா? என் அபிப்ராயத்தை அறியாமல் என்னை யுத்த பூமியிலிருந்து இங்கே கொண்டுவந்தாயல்லவா? என் சத்ருவிற்கெதிரே என்னை அவமானப்படுத்தினையல்லவா? இதுவரையில் நிகரற்ற கீர்த்தியும், வீர்யமும், தேஜஸூம் யுத்தத்தில் பின்வாங்காதவனென்ற நம்பிக்கையும் என்னிடத்தில் குடிகொண்டிருந்தன. வெகு காலமாய் எவ்வளவோ சிரமப்பட்டு ஸம்பாதித்த இவற்றை யெல்லாம் ஒரு நிமிஷத்தில் கெடுத்த நீச! என் சத்ரு ஸாமான்யனா? மஹாவீரனென்று ப்ரஸித்தி பெற்றவன்; என் பராக்ரமத்தால் அவனை ஸந்தோஷப்படுத்த நினைத்தேன். நான் யுத்தத்தில் அளவற்ற ஆசை கொண்டவனென்று உனக்கு நன்றாய்த் தெரிந்திருந்தும், அவன் பார்த்துக் கொண்டிருக்கையில் என்னைப் பயந்தவனென்றும் தைர்யமற்ற பேடியென்றும் லோகத்தார் நிந்திக்கும்படி செய்து விட்டாயே! என் ரதத்தைச் சத்ருவுக்கெதிரில் நிறுத்தாமல் யுத்த பூமியிலிருந்து இங்கே கொண்டுவந்ததை யோசித்தால் நீ சத்ருவிடத்தில் லஞ்சம் வாங்கிக்கொண்டு அவனுக்கு ஸ்வாதீனப் பட்டாயென்று எண்ண வேண்டியிருக்கிறது. என் மித்ரர்களும் என் ஹிதத்தை விரும்புகின்றவர்களும் இப்படிச் செய்வார்களா? இது பரமசத்ருக்கள் எனக்குச் செய்யும் கெடுதியல்லவா? நீ செய்தது முற்றிலும் பிசகு. என் சத்ரு என்னை இங்குவந்து எதிர்ப்பதற்கு முன் ரதத்தைத் திருப்பிக் கொண்டுபோ. நீ எனக்கு மித்ரனாயிருந்தால், நான் உனக்குச் செய்த உபகாரங்களை நீ மறக்காமலிருந்தால், என்னைச் சத்ருவால் அவமானப்படும்படி

செய்யாதே'' என்று புத்தியில்லாமல் ராவணன் தனக்கு ஹிதத்தை உத்தேசித்த ஸாரதியைக் கடுமையாகப் பேசினன்.

ஆனல் அந்த ராக்ஷஸன் புத்திமானகையாலும், ராவணனுடைய ஸ்பாவத்தையறிந்தவனுதலாலும், வணக்கமாய் ராவணனுக்கு ஹிதத்தையுபதேசித்தான். "நான் பயப்படவில்லை; புத்தி பிசகவும் இல்லை. என் சத்ருக்களால் லஞ்சங்கொடுத்து வசப்படுத்தப்படவில்லை; அஜாக்ரதையுள்ளவனல்ல; தங்களிடத்தில் ஸ்நேஹமற்றவனல்ல; தாங்கள் எனக்குச் செய்த உபகாரங்களை மறந்தவனல்ல; தங்களுடைய ஹிதத்தையே விரும்பி தங்களுடைய கீர்த்திக்கு யாதொரு குறைவும் வராமல் காப்பாற்றவேண்டுமென்று, தங்களிடத்தில் வைத்த ஸ்நேஹத்தால் மனமுருகி, இப்படிச் செய்தேன். அது தங்களுக்கு ப்ரியமாயிருக்குமென்றெண்ணினேன். தங்களுக்கு ப்ரியமில்லையென்று தெரிந்துகொண்டேன். இந்த விஷயத்தில் நான் தங்களுடைய க்ஷேமத்தைக் கோருகிறவன். ஊரும் பேருமில்லாத குலத்தில் பிறந்து, அல்ப புத்தியுள்ள துஷ்டனைப் போல் என்னையும் நினைத்து, என்னிடத்தில் தோஷங்களை ஆரோபிக்கக்கூடாது. உன்னதமான ப்ரதேசத்திலிருந்து விழும் நதியைப் போல், அதிவேகமாய் யுத்த பூமியிலிருந்து நான் ரதத்தைத் திருப்பிக் கொண்டு வந்த காரணத்தைக் கேளுங்கள். தாங்கள் யுத்தத்தில் அற்புதமான வீரகிருத்யங்களைச் செய்து களைத்திருந்தீர்கள். தங்களுடைய முகம் ப்ரஸன்னமாயில்லை. மனஸில் ஸந்தோஷமில்லையென்றறிந்துகொண்டேன். மேலும் ரதத்தில் பூட்டியிருக்கும் இந்தக் குதிரைகள் இதை இழுத்துக் களைத்திருந்தன. மழையிலடிபட்ட பசுக்களைப் போல் வெயிலாலும் உஷ்ணத்தாலும் வாடி வருந்தியிருந்தன. நமக்கு ப்ரதிகூலமான சகுனங்கள் காணப்பட்டன. ரதத்தை நடத்தும் ஸாரதி தேசகாலங்களையும், சுபாசுப சகுனங்களையும், முகத்தில் தெளிவு, துக்கம், அதைர்யம் இவை காணப்படுவதையும், யுத்தவீரனுக்கு உத்ஸாஹம், ஸந்தோஷம், பலம் முதலியவை அதிகரிப்பதையும் குறைவதையும், மேடுபள்ளம் ஸமபூமி முதலியவைகளையும், யுத்தஞ்செய்யவேண்டிய காலத்தையும் சத்ருவின் குறைகளைக் கவனித்துக் கண்டுபிடிப்பதையும், அவனுக்கு ஸமீபத்தில் செல்வதையும், பக்கங்களில் செல்வதையும் அசையாமல் எதிரில் நிற்பதையும், பின்வாங்குவதையும் நன்றுயறிந்திருக்க வேண்டியது. தாங்களும் இந்தக் குதிரைகளும் மிகவும் களைத்திருப்பதைக் கண்டு அதை நிவர்த்தி செய்தாலொழிய தாங்கள் சத்ருவால் அவமானப்படுவீர்களென்று நினைத்து, கோரமான யுத்தபூமியிலிருந்து ரதத்தைத் திருப்பிக் கொண்டு வந்தேன். இப்படிச் செய்வதில் எனக்கு இஷ்டமென்றுவது சந்தோஷமென்றுவது தாங்கள் நினைக்கக்கூடாது, தங்களிடத்திலுள்ள ஸ்நேஹத்தால் இப்படிச் செய்தேனேயொழிய வேறல்ல. தாங்கள் உத்தரவு செய்கிறபடி நடக்க ஸித்தமாயிருக்கிறேன். இல்லாவிட்டால் தங்களிடத்தில் நான் பெற்ற உபகாரங்களுக்கு வேறு எந்தவிதமாய்ப் பதில் செய்ய முடியும்?'' என்றான்.

அதைக்கேட்டு ராவணன் ஸந்தோஷித்து, அவனைப் பலவிதமாய்க் கொண்டாடி, மறுபடியும் யுத்தஞ்செய்ய ஆசை கொண்டு, "ஸாரதே! அதிசீக்கிரத்தில் இந்த ரதத்தை ராமனுக்கெதிரில் கொண்டுபோய் நிறுத்து. சத்ருவை நாசஞ்செய்யாமல் ராவணன் யுத்தபூமியிலிருந்து திரும்பமாட்டான்.'' என்று கூறி தான் கையில் தரித்திருந்த ஓர் உத்தமமான ஆபரணத்தை அவனுக்கு வெகுமானமாகக் கொடுத்தான். அந்த ஸாரதி அதிவேகமாய் ரதத்தை நடத்திக்கொண்டு வந்து அதை ராமனுக்கெதிரே நிறுத்தினன்.

தததோ த்3ருதம் ராவணவாக்ய சோதி3த :
ப்ரசோத3யாமாஸ ஹயாந் ஸ ஸாரதி2: |
ஸ ராக்ஷஸேந்த்3ரஸ்ய ததோ மஹாரத2:
க்ஷணேந ராமஸ்ய ரணாக்3ரதோ ப4வத் ॥ (29)

---

## ஸர்க்கம் 107

## அகஸ்த்யர் ஆதித்யஹ்ருதயத்தை உபதேசித்தது

---

ததோ யுத்3த4 பரிஸ்ராந்தம் ஸமரே சிந்தயா ஸ்தி2தம் |
ராவணம் சாக்3ரதோ த்3ருஷ்ட்வா யுத்3த4ாய ஸமுபஸ்தி2தம் ॥ (1)

அப்பொழுது அந்த அத்புதமான ராமராவண யுத்தத்தைப் பார்க்க வந்த தேவகணங்களுடன் அகஸ்த்யமஹர்ஷியும் கூடவிருந்தார். ராவணன் யுத்தஞ்செய்து களைத்திருப்பதையும், மறுபடியும் எல்லையற்ற ரோஷத்துடன் ராகவனையெதிர்த்து நிற்பதையும், 'என் பரஸ்வரூபத்தை வெளிப்படுத்தாமல் இவனை எப்படி ஜயிப்பே'னென்று ராமன் கவலைகொண்டு நிற்பதையும் கவனித்து அகஸ்த்யர் ரகுவீரனுடைய ஸமீபத்தில் சென்று பின்வருமாறு சொன்னர். (ராமனுடைய அஸ்த்ரங்களால் அடிபட்டுக் களைத்த ராவணனை அவனுடைய ஸாரதி யுத்தபூமியிலிருந்து அப்புறம் கொண்டு போனன்; ஸூர்யனும் ஆகாச வீதியில் வரவர விருத்தியடைந்தான். ராமன் நெடுநேரம் யுத்தஞ் செய்ததால் கொஞ்சம் சிரமமடைந்து இந்த ராக்ஷஸனைக் கொல்லுமுபாயமென்னவென்று ஆலோசித்துக்கொண்டிருந்தார். அப்பொழுது அவருடன் யுத்தஞ் செய்ய வெகு ஆவலுடன் ராவணன் ரதத்தை நடத்திக்கொண்டு

அங்கே வந்து நின்றான்; அதைக் கண்டு அகஸ்திய பகவான், "ரகுபதே! ராவணனை இப்பொழுதே ஜயிப்பாய், கவலைப்படாதே. ஆனால் உன்னுடைய ஸ்வபாவமான வீர்யத்தை விருத்தி செய்வதற்காக ஸூர்ய பகவானை ஆதித்ய ஹிருதயமென்ற ஸ்தோத்ரத்தால் உபாஸனை செய்''என்று அதை உபதேசஞ்செய்வதற்கு, ஆகாச வீதியிலிருந்து இறங்கி வந்து ராமனைப் பார்த்துச் சொல்லுகிறார்.—தீர்த்தீயம்).

"ராம! ராம! அளவற்ற பராக்ரமமுள்ளவனே! இது வரையில் நீ செய்த ஒப்பற்ற வீர்ய கிருத்யங்களை மறந்துவிட்டாயா? வேதத்தைப்போல் நித்யமான ஒரு ரஹஸ்யத்தைச் சொல்லுகிறேன்; கேள். ஆதித்யஹிருதயமென்று ஒரு ஸ்தோத்ரமுண்டு. அது ஸூர்ய பகவானுடைய மனஸைத் திருப்தி செய்யும்; அதை ஜபிக்கிறவர்களுடைய புண்யம் எல்லையில்லாமல் விருத்தியாகும்; ஸகல சத்ருக்களையும் நாசஞ்செய்யும்: ஜயத்தைக் கொடுக்கும்; அழிவில்லாத பலத்தையுடையது; அத்யந்தம் நம்மைப் பரிசுத்தஞ் செய்யக்கூடியது; ஸமஸ்த க்ஷேமங்களையும் ஸாதிக்கக் கூடிய கருவி; இதற்கு முன் செய்த ஸகல பாபங்களையும் அழிக்கும்; தேஹவ்யாதியையும் மனக்கவலையையும் போக்கி ஸ்வபாவமாய் ஏற்பட்ட ஆயுஷ்காலத்தை விருத்தி செய்யும்; இந்த உத்தமமான ஸ்தோத்ரத்தை நீ ஜபிக்க வேண்டியது. குழந்தாய்! இதன் மஹிமையால் ஸகல சத்ருக்களையும் யுத்தத்தில் ஜயிக்கும்படியான சக்தி உண்டாகும்.

"நீ உபாஸிக்க வேண்டிய தேவதை தங்க நிறமுள்ள கிரணங்களையுடையது; நன்றாய் ஆகாச வீதியில் உதயமானது, வெயில், மழை, பனி முதலியவைகளால் ஸகல லோகங்களையும் காப்பாற்றுகிறவர்; இவரை ஆதித்யஹிருதயத்தால் ஸ்தோத்ரம் செய்.

"ஸகல தேவதைகளுமிருக்கும்பொழுது இவரைப் பூஜிப்பானேன்'' என்றால், அவர்களெல்லோரும் இவரிடத்தில் அடங்கியிருக்கிறார்கள். அவர்களுக்கு இவரே ஆத்மா."

"ஸூர்யமண்டலத்தின் நடுவில் காணப்படும் தங்கமயமான எந்தப் புருஷனை யோகிகள் த்யானத்தில் தர்சிக்கிறார்களோ, அந்தப் புருஷன் இவரே. சதுர்முகப்ரஹ்மா, மஹாவிஷ்ணு, பரமசிவன், ஸுப்ரஹ்மண்யன், ஒன்பது ப்ரஜாபதிகள், மஹேந்த்ரன், குபேரன், மிருத்யுதேவதை, யமன், ஸோமன், வருணன், பிதிருக்கள், வஸுக்கள், ஸாத்யர்கள், அச்வினிகள், மருத்துக்கள், மனு, வாயு, அக்னி முதலிய தேவதைகளின் சரீரங்களில் அந்தர்யாமியாய் வஸிப்பவர் இவரே.

"இதுவரையில் உனக்கு அந்த ஸ்தோத்ரத்தால் உபாஸிக்கப்படும் தெய்வத்தின் ஸ்வரூபத்தையும் லக்ஷணங்களையும் உப



தேசித்தேன். இனி ஆதித்யஹ்ருதயமென்ற ஸ்தோத்திரத்தை உபதேசிக்கப்போகிறேன். 'நீர் அதிதியின் புத்திரனாய் அவதரித்தவர்; இந்த ஜகத்தை ஸிருஷ்டிக்கிறவர்; ஜனங்கள் கர்மங்களைச் செய்யும்படி ஏவுகிறவர்; லோகோபகாரத்திற்காக ஆகாசத்தில் ஸஞ்சரிக்கிறவர்; மழைகளால் ஜகத்தைப் போஷிக்கிறவர்; காந்தி பொருந்தின கிரணங்களையுடையவர்; தங்கநிறமுள்ளவர்; அபரிமிதமாய் விளங்குகிறவர்; ஸுவர்ணமயமான ப்ரஹ்மாண்டத்தை ஸிருஷ்டித்தவர்; பகலைச் செய்கிறவர்;

"கருத்த குதிரைகளால் இழுக்கப்படுகிறவர்; ஆயிரம் கிரணங்களையுடையவர்; 'ஸப்த' என்ற பெயரையுடைய ஒரு குதிரையால் இழுக்கப்பட்டவர்; விசேஷ ப்ரகாசமுள்ளவர்; இருட்டை நாசம் செய்கிறவர்; அவரிடத்திலிருந்து ஸகலஸுகமும் உண்டாகின்றது; ஸகல ரூபங்களையும் ஸம்ஹரிக்கிறவர்; ஸகல பதார்த்தங்களும் ஸம்ஹரிக்கப்பட்டபிறகு அவைகளை மறுபடியும் ஸிருஷ்டிப்பதற்காக, முன்பு நாசமடைந்த ப்ரஹ்மாண்டத்தில் பிறக்கிறவர்; ப்ரகாசித்துக்கொண்டிருக்கிறவர்.

"ஸுவர்ணமயமான அண்டத்திற்குள்ளிருப்பவர்; தாபத்ரயங்களால் எரிக்கப்பட்டவர்களுடைய சிரமத்தை போக்கும் குளிர்ந்த ஸ்தானம்; எரிக்கிறவர்; ப்ரகாசிக்கச்செய்கிறவர்; எல்லோராலும் கொண்டாடப்படுகிறவர். பகலில் அக்னியைத் தனக்குள் அடக்கிக்கொண்டிருப்பவர்; அதிதியின் புத்திரனாய் புரந்தரனைக் காப்பாற்றுகிறவர்; தானே ஸாயங்காலத்தில் அடங்குகிறவர்; பனியை அழிப்பவர். ஆகாசத்திற்கு நாதன்; ராஹுவைப் பிளந்துகொண்டு வெளியில் வரும்படியான சக்தியுள்ளவர்; ருக்வேதம் யஜுர்வேதம் ஸாமவேதம் இவற்றின் முடிவைக் கண்டவர். அவரிடத்திலிருந்து மழை உண்டாகிறது. ஜலங்களை வஹிக்கும் ஸமுத்திரத்திற்கு மித்திரன். தக்ஷிணாயனத்தில் விந்திய பர்வதம் அவருக்கு ஸஞ்சரிக்கும் மார்க்கம். ஆகாசத்தில் தெப்பத்தைப்போல் செல்லுகிறவர். வெயிலுக்கு இருப்பிடம்; வட்டமான ரூபத்தையுடையவர்; விரோதிகளை நாசம் செய்கிறவர்; உதயகாலத்தில் மஞ்சள் நிறமுள்ளவர்; எல்லா வஸ்துக்களையும் மத்யாஹ்னத்தில் தபிக்கச்செய்கிறவர்; வியாகரணம் முதலிய சாஸ்திரங்களை வெளிப்படுத்தி உபதேசிக்கிறவர்; ப்ரபஞ்சத்தை நடத்துகிறவர்; மஹத்தான தேஜஸையுடையவர்; எல்லாப் பிராணிகளிடத்திலும் பிரேமையுள்ளவர்; ஸகலப்பிராணிகளுக்கும் ஸம்ஸாரமென்பது இவரால் உண்டாகிறது. நக்ஷத்ரங்களுக்கும் க்ரஹங்களுக்கும் அதிபதி. ப்ரபஞ்சத்தை நிலைபெறச் செய்கிறவர். தேஜஸுள்ள தேவதைகளைக்காட்டிலும் விசேஷ தேஜஸுள்ளவர். " இந்திரன், தாதா, பகன், பூஷா'மித்திரன், வருணன், அர்யமா, அர்ச்சிஸ், விவஸ்வான், த்வஷ்டா, ஸவிதா, விஷ்ணு என்ற பன்னிரண்டு மூர்த்திகளையுடையவரே! உமக்கு நமஸ்காரம்.'.

"உதய பர்வதத்தில் வஸிக்கும் உமக்கு நமஸ்காரம்; மேற்கு மலையில் அஸ்தமிக்கின்ற உமக்கு நமஸ்காரம். ஜ்யோதிர் மண்டலங்களுக்கு அதிபதியாயும், தினத்திற்கு அதிபதியாயுமிருக்கும் உமக்கு நமஸ்காரம். உபாஸகர்களுக்கு ஜயத்தைக் கொடுக்கிறவரும், க்ஷேமத்தைக் கொடுக்கிறவரும், கருத்த குதிரைகளால் இழுக்கப்படுகிறவருமான உமக்கு நமஸ்காரம்; (தடையற்ற பராக்கிரமத்தையுடையவரும், தன்னை உபாஸிக்கிறவர்களுடைய ரோகத்தையும் பாபத்தையும் போக்கி ஸகல மங்களங்களையும் கொடுக்கிறவரும், ஆஞ்சநேயரை வாஹனமாயுடையவருமான உமக்கு நமஸ்காரம்; அனந்த ஜீவகோடிகளையுடையவரும் ஆதித்யரூபியுமான உமக்கு நமஸ்காரம்; தன்னை உபாஸிக்காதவர்களுக்குக் கடுமையாயும், ஸகலப் பிராணிகளையும் கர்மங்களைச் செய்யும்படி ஏவி விடுகிறவரும், அரை நிமிஷத்தில் இரண்டாயிரம் யோஜனை தூரம் போகிறவருமான உமக்கு நமஸ்காரம். தாமரையை மலரும்படி செய்கிறவரும், உயிரற்ற பிரஹ்மாண்டத்தை ஜீவிக்கச் செய்கிறவருமான உமக்கு நமஸ்காரம். பிரஹ்மா, விஷ்ணு, ருத்திரனென்ற ஸிருஷ்டி ஸ்திதி ஸம்ஹார கர்த்தாக்களுக்கும் மேலான பரப்பிரஹ்மஸ்வரூபியாயும், ஸூரியரூபியாயும், ஆதித்தியன் மூலமாய்த் தன் தேஜஸை வெளிப்படுத்துகிறவராயும், அளவற்ற ஜ்யோதிஸாயும், ஸகலத்தையும் ஸம்ஹரிக்கிறவராயும், அந்தக் காலத்தில் ருத்திரரூபியாயுமிருக்கும் உமக்கு நமஸ்காரம். "எவருக்கு ப்ராஹ்மணர்களும் க்ஷத்ரியர்களும் ஆஹாரமோ" என்ற ச்ருதிப்படி ஸகலத்தையும் ஸம்ஹரிக்கிறவர். சத்துருக்களை நாசஞ் செய்வதற்காகப் பயங்கரமான ரூபத்தைத் தரித்தவரென்பதால் நரஸிம்ஹாவதாரம் குறிப்பிடப்படுகிறது). இருட்டை நாசஞ் செய்கிறவராயும், தன்னை ஆச்ரயித்தவர்களுடைய சத்ருக்களை அழிக்கிறவராயும், பனியைப் போக்குகிறவராயும், அகண்டமான ஸ்வரூபத்தையுடையவராயும், நன்றியற்றவர்களை ஸம்ஹரிக்கிறவராயும், விசேஷ காந்தியுடையவராயும், ஜ்யோதிஸால் விளங்கும் பதார்த்தங்களுக்குப் பதியாயுமிருக்கும் உமக்கு நமஸ்காரம். உருக்கியோடவிட்ட தங்கத்தின் காந்தியுள்ளவராயும், அக்னியின் ரூபமாய் ஹவ்யகவ்யங்களைத் தேவதைகளுக்குப் பங்கிட்டுக் கொடுப்பவராயும், ஸகல ஜகத்திற்கும் கர்த்தாவாயும், அக்ஞானமென்ற இருட்டைப் போக்குகிறவராயும், கருணாமூர்த்தியாயும், ஸகலப் பிராணிகளுக்கும் அந்தர்யாமியாயிருந்து அவர்களுடைய புண்ய பாபங்க க்கு ஸாக்ஷியாயுமிருக்கும் உமக்கு நமஸ்காரம்.

"மஹாப்ரளய காலத்தில் ஜகத்தை ஸம்ஹரித்து, மறுபடியும் அதை ஸிருஷ்டிக்கிறார் இவர். எல்லாவற்றிற்கும் ரக்ஷகனாய் ஜலங்களை வற்றச் செய்கிறார்; எரிக்கிறார்; தன் கிரணங்களால் மழை பெய்விக்கிறார்; ஸகலப் பிராணிகளும் ஸுஷுப்தி தசையில் அடங்கியிருக்கும்பொழுது அவைகளுக்கு அந்தர்யாமியாயிருந்து



கொண்டு எப்பொழுதும் விழித்துக்கொண்டிருக்கிறார். அக்னிஹோத்ரிகள் செய்யும் யக்ஞமும் அதன் பலமும் இவரே. ஸகல வேதங்களாலும் அறியப்பட வேண்டியவரும், யக்ஞயாகாதி க்ரதுக்களால் ஆராதிக்கப்படுகிறவரும் இவரே. ஸகல லௌகிக கர்மங்களுக்கும் அத்யக்ஷராயிருந்து கொண்டு அவைகளுக்குப் பலனைக் கொடுப்பவரும் ஸர்வாத்மாவாய், ஸர்வசக்தராய், ஸர்வேச்வரனாய் விளங்குபவரும் இந்த ஆதித்தியனே.

"ராகவ! ஸகல ஆபத் ஸமயங்களிலும், கஷ்டதசைகளிலும், நிர்மானுஷ்யமான காட்டுமார்க்கங்களிலும், பயத்திற்குக் காரணமுண்டாகும்பொழுதும், இவரை எவன் ஸ்மரித்து ஸ்தோத்திரம் செய்கிறானோ, அவனுக்கு யாதொரு குறைவுமில்லை. ஆகையால் மனத்தைச் சிதறவிடாமல் தேவதைகளுக்கு தேவனாகவும் ஸகல ஜகத்திற்கும் பதியாயுமிருக்கும் இவரைப் பக்தியுடன் பூஜை செய். இந்த ஆதித்யஹிருதயஸ்தோத்திரத்தை மூன்று தடவை ஜபித்தால் யுத்தத்தில் ஜயமடைவாய். இந்த க்ஷணமே ராவணனை ஸம்ஹரிப்பாய்" என்று உபதேசித்து அகஸ்தியர் தானிருந்த இடத்திற்குப் போனார்.

மஹாதேஜஸ்வியான ராகவன் அதைக் கேட்டுச் சோகம் நீங்கி, மஹாப்பிரீதியுடன் அதை ஞாபகத்தில் வைத்துக்கொண்டார். இந்திரியங்களையும் மனத்தையுமடக்கிக்கொண்டு சுத்தராய் மூன்றுதரம் ஆசமனம் செய்து, ஆதித்யனைநோக்கி அதை விதிப்படி ஜபித்துப் பரமானந்தமடைந்தார். பிறகு வீரியமும் தேஜஸும் அபாரமாய் விருத்தியடைந்து எதிரில் நிற்கும் ராவணனைப் பார்த்து, மனத்தில் சந்தோஷம் பொங்க, அவனுடன் யுத்தம் செய்து, ஸகலப் பிரயத்னங்களாலும் அவனை எப்படியாவது ஸம்ஹரிக்க வேண்டுமென்று உறுதியான நிச்சயம் செய்துகொண்டார்.

ஸூரியபகவானும் தன்னை ஸ்தோத்திரம் செய்த ராமனைப் பிரேமையுடன் பார்த்து, அவருடைய பக்தியாலும் ஸ்தோத்திரத்தாலும் மிகவும் ஸந்தோஷித்து மயிர்க்கூச்சமடைந்து, ராக்ஷஸாதிபதி நாசமடையக்கடவானென்று கூறி தேவதைகளின் நடுவிலிருந்துகொண்டு ராமனைப் பார்த்து, "ராம! ராவணனைச் சீக்கிரமாய் ஸம்ஹாரம் செய்" என்றார்.

(யுத்தத்தைப் பார்ப்பதற்காக ஸூரியன் தன் மண்டலத்திலிருந்து இறங்கி வந்து ஆகாசவீதியில் ராமனுக்கு ஸமீபத்தில் நின்று ஸ்தோத்திரத்தின் பலனை அனுக்ரஹித்தாரென்று தெரிகிறது. ஆனால், மேல் வரும் ஸர்க்கங்களில் பிரஹ்மா ருத்ரன் இந்திரன் முதலியவர்கள் ஒரே வார்த்தையாய், "தாங்கள் நாராயணமூர்த்தியே" என்று ராமனைக் குறித்துச் சொன்னதால், விஷ்ணுவே எல்லோருக்கும் மேலானவரென்று விளங்குகிறது. இவ்விடத்

திலோ அந்த லக்ஷணம் ஸௌரிய பகவானுக்குப் பொருந்தியிருப்பதாகச் சொல்லப்படுகிறது. இதற்கு ஸமாதானமென்னவென்றால், சாந்தோக்ய உபநிஷத்தில் மதுவித்யைக்கு ஆதித்யன் அதிஷ்டான தேவதையென்று சொல்லப்பட்டிருந்தாலும், அவருக்கு அந்தர்யாமியான பரமாத்மாவே அந்த வித்யையால் உபாஸிக்கப்பட வேண்டியவரென்றும், அவரே அதற்குத் தாத்பர்யமென்றும் வியாஸபகவான் ப்ரஹ்மஸூத்திரத்தில் வெளியிட்டிருக்கிறார். ஆகையால் இந்த ஸ்தோத்திரம், ஆதித்யனுக்கு அந்தர்யாமியாயிருக்கும் பரமாத்மாவையே உபாஸிக்கும் தெய்வமாயுள்ளது. இந்த ராம சரித்திரத்தில் ஆரம்பம் முதல் முடிவு வரையில் நாராயணனையே பரவஸ்துவாய் உபதேசிக்கப்பட்டிருக்கிறது. "ப்ரஹ்மா விஷ்ணு ருத்ரன் என்றவர்களுக்கு ஈச்வரன்" என்றதால் த்ரிமூர்த்திகளும் பரமாத்மாவினிடத்திலிருந்து உண்டானவர்களென்று தெரிகிறது.

சில ராமாயண கோசங்களில் இந்த ஸர்க்கம் காணப்படவில்லை. உடாரியும் இதற்கு வியாக்யானம் செய்யவில்லை. ஆரம்பம் முதல் இந்த கிரந்தத்தில் உபதேசிக்கப்பட்ட நாராயணனுடைய பரத்வத்திற்கு இந்த ஸர்க்கத்தில் சொல்லப்படும் ஸௌரியனுடைய பரத்வம் விரோதமாகின்றது. மேலும், இந்தக் காண்டத்தில் *130* ஸர்க்கங்களென்று உடாரி கணக்குச் செய்கிறார். இதைச் சேர்த்தால் *131* ஸர்க்கங்களென்று சொல்லியிருக்க வேண்டும்.)

அத2 ரவிரவத3ந் நிரீக்ஷ்ய ராமம்
முதி3தமநா: பரமம் ப்ரஹ்ருஷ்யமாண: |
நிஶிசரபதி ஸம்க்ஷயம் விதி3த்வா
ஸுரக3ண மத்4யக3தோ வசஸ் த்வரேதி || (39)

---

## ஸர்க்கம் 108

# ராவணனுக்கு நேர்ந்த அபசகுனங்கள்

---

ஸ ரத2ம் ஸாரதி2ர் த்3ருஷ்ட்வா பரஸைந்ய ப்ரத4ர்ஷணம் |
க3ந்த4ர்வ நக3ராகாரம் ஸமுச்ச்2ரித பதாகிநம் || (1)

**அ**ப்பொழுது ராவணனுடைய ஸாரதி அதிசீக்கிரமாய் ரதத்தை நடத்திக்கொண்டு வந்தான். அது சத்ருஸைன்யங்கள் கண்டு நடுங்கும்படியானது; கந்தர்வநகரத்தைப் போன்றது; ஆகாசத்தை யளாவும் கொடியையுடையது; தங்கமாலைகளால் அலங்கரிக்கப்பட்ட உத்தம அச்வங்கள் பூட்டினது; வில் கவசம் பாணங்கள் கத்தி கேடயம் கதை முதலிய ஸகல ஆயுதங்களால் நிறைந்தது; கொடிகளாலும் த்வஜங்களாலும் அலங்கரிக்கப்



பட்டது: ஆகாசத்தை விழுங்குவது போலிருந்தது; சப்தத்தால் பூமியை நடுங்கச் செய்தது; சத்ரு ஸைன்யங்களை அழிக்கக்கூடியது; தன் ஸைன்யங்களுக்கு ஸந்தோஷத்தை விருத்தி பண்ணக்கூடியது; இப்படி ஸகல திக்குகளையும் திடுகிடென்று நடுங்கச் செய்துகொண்டு ராக்ஷஸாதிபதியின் ரதம் தன்னை நோக்கி அதிவேகமாய் வருவதை ரகுவீரன் கண்டார். கருப்புக் குதிரைகள் பூட்டிப் பயங்கரமான தேஜஸுடன், மின்னற்கொடி போன்ற த்வஜங்களுடன், இந்திரனுடைய ஆயுதங்களைப் போன்ற ஆயுதங்கள் அதில் பிரகாசிக்க, காளமேகங்கள் வர்ஷிப்பதுபோல் சரமாரி பொழிந்துகொண்டு, ஆகாசத்தில் நீருண்ட மேகம் பரவுவதுபோல், சத்துருவின் ரதம் தனக்கு ஸமீபத்தில் வந்ததைக் கண்டு ரகுவீரன், நாணேற்றிப் பாலசந்திரனைப்போல் வளைந்துவிளங்கும் பிரசண்ட கோதண்டத்தை எடுத்து, வஜ்ராயுதத்தால் மலைகள் பிளக்கப்படுவதுபோல் டங்காரம் செய்தார். பிறகு மாதலியைப் பார்த்து "பார்த்தாயா? ராவணன் அதிவேகமாய்த் தன் ரதத்தை நடத்திக்கொண்டு வருகிறான். அவன் அப்ரதக்ஷிணமாய் வருகிறதைக் கொண்டே யுத்தத்தில் நாசத்தைத் தேடிக் கொள்ளுகிறானென்று தெரிகிறது. ஆகையால் ஜாக்கிரதையாய் நமது ரதத்தை நடத்தி அவனுக்கெதிரில் கொண்டு போ. பெருங்காற்று மேகங்களைச் சிதறவடிப்பதுபோல் அவனையும் அந்த ரதத்தையும் நாசம் செய்ய விரும்புகிறேன். வெகு உத்ஸாஹத்துடன், பதறாமல், ஜாக்கிரதையாய், மனத்திலும் பார்வையிலும் கலக்கம் கொள்ளாமல், கடிவாளங்களை ஒரே மாதிரியாய்ப் பிடித்து நடத்து. இந்திரனுக்கு ஸாரத்யம் செய்து வழக்கப்பட்ட உனக்கு நான் உபதேசிக்க வேண்டியதொன்றுமில்லை. ஆனால் பிரபலமான சத்ருவுடன் நான் ஒரே மனதாய் யுத்தம் செய்ய நிச்சயித்திருக்கிறபடியால், உனக்கு ஞாபகம் செய்தேனேயன்றி தெரியாததை உபதேசித்ததாக நீ எண்ணக்கூடாது" என்றார். அந்த வார்த்தைகளால் மாதலி ஸந்தோஷப்பட்டு, அதிவேகமாய் ரதத்தை நடத்திக்கொண்டு, ராவணனுடைய ரதத்தைத் தனக்கு அபஸவ்யமாகச் செய்துகொண்டு சக்கரங்களால் கிளப்பப்பட்ட புழுதியால் அவனை மறைத்தான். அதைக் கண்டு தசக்ரீவன் கோபத்தால் சிவந்த கண்களையுருட்டி விழித்து, தனக்கெதிரில் நின்ற ராமனைப் பாணவர்ஷத்தால் வருத்தினான். அதனால் ராகவன் ரோஷம் கொண்டு, மஹாதைர்யத்துடன் இந்திரனால் அனுப்பப்பட்ட வில்லையும், ஸௌரிய கிரணங்களைப் போல் தேஜஸுள்ள பாணங்களையும் அதிவேகமாய் எடுத்தார்.

பிறகு அவ்விருவரும் ஒருவரையொருவர் எதிர்த்து நின்று, ஸம்ஹரிக்க நிச்சயித்து, கொழுத்த ஸிம்ஹங்களைப்போல் போர் புரிந்தார்கள். தேவ, கந்தர்வ, ஸித்த மஹரிஷி கணங்கள் ராவணன்

நாசமடையவேண்டுமென்று ப்ரார்த்தித்துக்கொண்டு, அவ்விருவர்க்கும் நடக்கும் கோர யுத்தத்தைப் பார்க்க அங்கே கூடினார்கள். அப்பொழுது ராகவனுக்கு ஜயத்தையும் ராவணனுக்கு விநாசத்தையும் குறிக்கும் அநேக கோரமான அபசகுனங்கள் தோன்றின. மேகங்கள் ராவணனுடைய ரதத்தின்மேல் ரத்த மழை பொழிந்தன. சுழல் காற்றுகள் தீக்ஷ்ணமாயும் அப்ரதக்ஷிணமாயும் அடித்தன. பெரிய கழுகுகள் ஆகாசத்தில் கூட்டம் கூட்டமாய் அவனுடைய ரதம் போகுமிடமெல்லாம் பின்தொடர்ந்தன. (சாகப்போகிறவனுடைய ஸமீபத்தில் கழுகு முதலிய அசுபமான பக்ஷிகள் அவன் தலைக்குமேலும் வீட்டின் மேலும் வட்டமிடும். —**சகுனார்ணவம்**). செம்பருத்திப் பூவைப்போன்ற நிறமுள்ள ஸந்தியாகாலவர்ணத்தால் லங்கையும் அதைச் சுற்றிலுமுள்ள பூமியும் வியாபிக்கப்பட்டு, ராத்திரியில் தீப்பிடித்தெரிவது பகலிலேயே தோன்றிற்று. ஆகாசத்தில் எரிகொள்ளிகளும் இடிகளுமுண்டாகி, ராவணனுக்கு அபஜயத்தைக் குறிப்பிட்டன; ராக்ஷஸர்கள் மனம் நடுங்கினார்கள்; ராவணன் போகுமிடமெல்லாம் பூகம்பம் உண்டாயிற்று; ராக்ஷஸர்களுடைய புஜங்கள் எவராலோ பிடித்துத் தடுக்கப்பட்டதுபோல், ஆயுதங்களை ப்ரயோகிக்க முடியாமல் போயின. பர்வதங்களில் அநேக வர்ணமான தாதுக்கள் விளங்குவதுபோல், ஸூரியகிரணங்கள் ராவணனுடைய அவயவங்களில் சிவப்பு, வெளுப்பு, கறுப்பு முதலிய பல வர்ணங்களுடன் விழுந்தன. நரிகள் நெருப்பு ஜ்வாலைகளைக் கக்கிக்கொண்டு தசமுகனுடைய முகத்தைப் பார்த்து அசுபமாய் ஊளையிட்டன; கழுகுகளும் பருந்துகளும் அப்படியே பயங்கரமாய்ச் சப்தித்தன. அவன் மேல் எதிர்க்காற்றடித்துப் புழுதியை வாரி இறைத்துக் கண்களை மறைத்தது. அவனுடைய ஸைன்யத்தில் நான்கு புறங்களிலும் மேகங்களில்லாமல் நெருப்பிடிகள் கோரமாய்ச் சப்தித்துக்கொண்டு விழுந்தன. ஸகல திக்குகளும் இருளாலும் புழுதியாலும் மூடப்பட்டு ஆகாசம் மறைந்தது. சாரிகை என்னும் பக்ஷிகள் கணக்கில்லாமல் ஒன்றிற்கொன்று சண்டையிட்டுக்கொண்டும், பயங்கரமாய்க் கூச்சலிட்டுக்கொண்டும் அந்த ரதத்தை நோக்கி வந்தன. அதில் கட்டியிருந்த குதிரைகள் கண்ணீர்விட்டு அழுதன; அவைகளின் பின்பாகங்களிலிருந்து நெருப்புப் பொறிகள் கிளம்பின. இப்படி அநேக அபசகுனங்கள் ராவணனுக்கு விநாசகாலம் ஸமீபித்ததென்பதைக் காட்டிக்கொண்டு பயங்கரமாய்த் தோன்றின. ராகவனுக்கு ஜயம் கிடைக்குமென்பதைக் குறிக்கும் அநேக சுபசகுனங்களும் காணப்பட்டன. அவைகளால் ரகுவீரன் ஸந்தோஷமடைந்து, ராவணன் இறந்தானென்று நிச்சயித்தார்.

சகுனசாஸ்திரத்தில் அதிநிபுணரான ராகவன் தனக்குப் பரம அனுகூலமாயும் ராவணனுக்கு பரமப்ரதிகூலமாயும் காணப்படும் சகுனங்களையும் அபசகுனங்களையும் கவனித்து, ஸந்தோஷத்தால் மயிர்க்கூச்சமடைந்து, அளவற்ற சுகத்தைப்பெற்று, யுத்தத்தில் விசேஷ பராக்கிரமத்தைக் காண்பித்தார்.



ததோ நிரீக்ஷ்யாத்மக$^{3}$தாநி ராக$^{4}$வோ
ரணே நிமித்தாநி நிமித்த கோவித$^{3}$: |
ஜக$^{3}$ாம ஹர்ஷம் ச பராம் ச நிர்வ்ருதிம்
சகார யுத்$^{3}$தே$^{4}$ ஹ்யதி$^{4}$கம் ச விக்ரமம் ‖ (35)

---

## ஸர்க்கம் 109
## ராம ராவண யுத்தம்

---

தத: ப்ரவ்ருத்தம் ஸுக்ரூரம் ராமராவணயோஸ் ததா$^{3}$ |
ஸுமஹத்$^{3}$ த்$^{3}$வைரத$^{2}$ம் யுத்$^{3}$த$^{4}$ம் ஸர்வலோக ப$^{4}$யாவஹம் ‖ (1)

**பி**றகு ராமனும் ராவணனும் திவ்யரதங்களில் ஏறிக்கொண்டு ஸகல ப்ராணிகளும் நடுங்கும்படி கோரயுத்தம் செய்தார்கள். அவ்விரு ஸைன்யமும் ஆயுதங்களைக் கையிலெடுத்துக்கொண்டு அந்த யுத்தத்தைப் பார்க்க ஆவலுடன் அசைவற்று நின்றது. அந்த வீரர்கள் நன்றாய் யுத்தம் செய்ய ஆரம்பித்ததைக் கண்டு எல்லோரும் அதிலேயே நாடின மனத்துடன் எல்லையற்ற ஆச்சரியமடைந்தார்கள். ஆயுதங்களை எடுத்தவர்கள் எடுத்தபடியே நின்றார்கள். ஆச்சரியத்தால் மெய்மறந்து அந்த யுத்தத்தைப் பார்த்துக்கொண்டே அடிக்க மறந்தார்கள். அவ்விரு ஸைன்யமும் தங்களுடைய தலைவர்களைக் கண்கொட்டாமல் பார்த்துக்கொண்டு சித்திரம்போல் அசைவற்று நின்றது. அந்த வீரர்கள் சகுனங்களைக் கவனித்துப் பயப்படாமல் ஸ்திரபுத்தியுடன் அடங்காத ரோஷங்கொண்டு யுத்தம் செய்தார்கள்; 'ஜயமே வரும்' என்ற நம்பிக்கையுடன் ரகுபதியும், 'மரணம் நிச்சயம்' என்று ராவணனும் தைரியமடைந்து தங்களுடைய ஸகல வீரியத்தையும் யுத்தத்தில் காட்டினார்கள்.

பிறகு தசக்ரீவன் சில அத்புதமான பாணங்களை ராகவனுடைய ரதத்தின் த்வஜத்தின்மேல் ப்ரயோகித்தான். அவை ரதசக்தியால் தடுக்கப்பட்டு த்வஜத்தை அடையாமல் பூமியில் விழுந்தன. அதனால் ராமனுக்குக் கோபமுண்டாகி, பதிலுக்குப் பதில் செய்யவேண்டுமென்று, வில்லை வளைத்து மஹாஸர்ப்பத்தைப்போல் தடுக்க முடியாத தேஜஸால் ஜ்வலித்துக் கொண்டிருக்கின்ற ஒரு கூரான சரத்தை விடுத்து ராவணனுடைய ரதத்தில் விளங்கும் கொடியை அறுத்துப் பூமியில் தள்ளினார். அதனால் ராவணனுக்குக் கோபத்தால் தேகமெங்கும் ஜ்வலிக்க, எல்லோரையும் எரித்துவிடுகிறவன்போல் தோன்றினான். அந்த மஹாபலவான் கடுங்கோபத்துடன் பல தீக்ஷ்ணமான சரங்களைப் ப்ரயோகித்து இந்திர

ரதத்தில் பூட்டியிருக்கும் குதிரைகளை அடித்தான். ஆனால் அவை தெய்வலோகத்து அச்வங்கள்; சற்றும் மயங்கவுமில்லை, அசையவுமில்லை; தாமரைத் தண்டுகளால் அடிபட்டவைபோல் ஸுகமாயிருந்தன. அதைக்கண்டு ராவணன் மறுபடியும் சரமாரி பொழிந்தான். அவனுடைய மாயாசக்தியால் பாணங்களிலிருந்து கதைகளும், பரிகங்களும், சக்ரங்களும், உலக்கைகளும், மலைச் சிகரங்களும், மரங்களும், சூலங்களும், கோடாலிகளும் வெளிப்பட்டன. பயங்கரமாயும் கோரமான சப்தங்களுடனும் வந்து விழும் அந்தச் சரமாரியால் எல்லாப் பிராணிகளும் நடுங்கின. இப்படி ராகவனுடைய ரதத்தை மறைக்க, அவர் அதிவேகமாய் அந்தப் பாணங்களை நாசம் செய்தார். அதைக் கண்டு தசானனன் அவருடைய ரதத்தைவிட்டு வானர ஸைன்யத்தின்மேல் இடைவிடாமல், உத்ஸாஹம் குறையாமல், மனோதைரியம் அழியாமல், எண்ணிறந்த பாணங்களைப் பிரயோகித்து ஆகாசத்தையும் ஸகல திக்குகளையும் இடைவெளியில்லாமல் மறைத்தான். ராவணன் யுத்தத்தில் மனத்தை நாட்டி வீராவேசம்கொண்டு வரவர விருத்தியடைவதைக் கண்டு, ராகவன் அலக்ஷ்யமாய்ச் சிரித்து, வில்லை வளைத்து, ஒன்று, பத்து, நூறு, ஆயிரமென்று கணக்கில்லாமல் சரமாரி தொடுத்தார். அதைக் கண்டு ராவணன் ஆகாசத்தில் ஊசிநாட்ட இடமில்லாமல் பாணங்களைப் பரப்பினான். அவர்கள் தொடுத்து விடுத்த சரமாரியால் பிரகாசமுள்ள ஆகாசவீதி மறைந்தும் சரக்கூட்டால் மற்றொரு ஆகாசம் ஜ்வலிப்பதுபோல் தோன்றிற்று. ஒரு பாணமாவது குறிதப்பவில்லை. உத்தேசித்ததற்கு அதிகமாய்ப் பிளக்கவுமில்லை. குறியில் விழுந்தும் உத்தேசித்த காரியத்தை முடித்தன. ஒன்றையொன்று தாக்கிப் பூமியில் விழுந்தன. இப்படி ராமனும் ராவணனும் ஓயாமல் வலசாரி இடசாரியாய்ச் சுற்றிக்கொண்டு அமோகமான பாணங்களால் ஆகாசம் மூச்சுவிட இடமில்லாததுபோல் செய்தார்கள். ஒருவருடைய ரதத்தில் பூட்டியிருக்கும் குதிரைகளை மற்றொருவர் அடித்தார்கள். வரவரக் கோபம் அதிகரித்து வீராவேசம்கொண்டு, பார்ப்போர் கண்டு நடுங்கி மயிர்க்கூச்சமடையும்படியான கோரயுத்தம் செய்தார்கள். மஹாபலவான்கள் அந்த கூர்மையான சரங்களை விடுத்துச் சளைக்காமல் போர்புரிகையில், ராவணன் தன் ரதத்தில் விளங்கும் த்வஜம் அறுந்து விழுந்தபடியால் ரகுபதியிடத்தில் அடங்காத கோபம் கொண்டான்.

ப்ரயுத்⁴யமானௌ ஸமரே மஹாப³லௌ
    ஶிதை: ஶரை: ராவண லக்ஷ்மணாக்³ரஜௌ |
த்⁴வஜாவபாதேந ஸ ராக்ஷஸாதி⁴போ
    ப்⁴ருஶம் ப்ரசுக்ரோத⁴ ததா³ ரகூ⁴த்தமே || (30)

---



## ஸர்க்கம் 110

## ராவணனுடைய தலைகளை அறுத்தது

---

தௌ ததா³ யுத்³த்⁴யமானௌ து ஸமரே ராம ராவணௌ |
த³த்³ருஶு: ஸர்வபூ⁴தானி விஸ்மிதேநாந்தராத்மநா || (1)

இப்படி அவர்கள் யுத்தம் செய்துகொண்டிருக்கும் ஆச்சரியத்தை ஸகல ப்ராணிகளும் பார்த்துத் திகைத்து நின்றன. அந்த ரதங்களும் ஒன்றையொன்று அதிவேகமாய்த் தாக்கின. ஸாரதிகளும் கடுங்கோபம்கொண்டு, ஒருவர் மேலொருவர் ரதத்தைச் செலுத்தி, ஒருவரையொருவர் கொல்ல நிச்சயித்து, முன்னோட்டம் பின்னோட்டம் மண்டலம் வலசாரி இடசாரியென்ற நடைகளையும் கதிகளையும் விசித்திரமாய்க் காட்டிக்கொண்டு சண்டைசெய்வது பார்க்கப் பயங்கரமாயிருந்தது. ராமன் ராவணனை அடித்துத் திரும்புவதும், ராவணன் ராமனை அடித்துத் திரும்புவதும், வாயுவேக மனோவேகத்தைக் காட்டிலும் அதிவேகமாயிருந்தபடியால், அவர்களுடைய போக்குவரவு ஒருவருக்கும் தெரியவில்லை. மழைக் காலத்தில் இரண்டு கருமேகங்களைப்போல் அந்த ரதங்களும் சரமாரி பொழிந்துகொண்டு யுத்தபூமியென்ற ஆகாசத்தில் ஸஞ்சரித்தன. இப்படிப் பலவிதமான நடைவரிசைகளைக் காட்டி, பிறகு ஒன்றையொன்று எதிர்த்து நின்றன. ஏர்க்காலுடன், ஏர்க்காலும் நுகத்தடியுடன் நுகத்தடியும் குதிரைகளுடைய முகங்களும் முட்டிக் கொண்டன.

ராமன் வில்லை வளைத்து நான்கு பாணங்களைப் பிரயோகித்து, ராவணனுடைய குதிரைகளை அடித்துத் திருப்பினார். ராவணன் கோபம் கொண்டு ராமனைத் தீக்ஷ்ணமான பாணங்களால் துளைத்தான். ராவணனால் பூர்ணபலத்துடன் அடித்துப் பிளக்கப்பட்டும் ராமனுக்குச் சிறிதும் உபத்திரவமில்லை; முகத்தில் விகாரமுமில்லை. பிறகு வஜ்ராயுதங்களைப்போன்ற பாணங்களைப் பிரயோகித்துத் தசானனன் இந்திரனுடைய ஸாரதியான மாதலியை அடித்தான். அவை மாதலியின் தேகத்தில் பாய்ந்தும் அவனுக்குக் கொஞ்சமாவது உபத்திரவமில்லை; அவன் சற்றும் மயங்கவுமில்லை. அது அதுவரையில் தன்னை உபத்திரவித்ததைப்பற்றி ராமனுக்குக் கொஞ்சம்கூட வருத்தமில்லை; தன் ஸாரதியை அடித்ததைக் கண்டு மிகவும் வெட்கமடைந்து, கோபத்தால் ஜ்வலித்துக்கொண்டு ராவணனைச் சரமாரியால் திரும்பியோடும்படி செய்தார். இருபது, முப்பது, அறுபது, நூறு, ஆயிரம் இப்படிக் கணக்கில்லாமல் ராவணனுடைய ரதத்தின்மேல் ராமன் சரங்களைப் பிரயோகித்தார். ராவணனும் பின்வாங்காமல் கதை உலக்கை முதலிய ஆயுதங்களை ஓயாமல் ராமன்மேல் வர்ஷித்தான்.

பிறகு நடந்த யுத்தம் அதிகோரமாயும் அதிபயங்கரமாயுமிருந்தது. கதைகள் உலக்கைகள் பரிகங்கள் முதலிய ஆயுதங்கள் வந்துவிழும் ஓசையாலும் சரமாரியாலும் ஸப்தஸமுத்திரங்களும் கலங்கின. அதனால் பாதாளலோகத்தில் வஸிக்கும் பன்னகர்கள் தானவர்கள் முதலிய கணங்களும் வருந்தினார்கள். பூமியெங்கும் அதிலுள்ள மலைகளும், வனங்களும், காடுகளும் நடு நடுங்கின. ஸூரியன் ஒளியற்றான்; காற்று அடிக்கவில்லை; அப்பொழுது தேவ, கந்தர்வ, ஸித்த, மஹர்ஷி, கின்னர, உரககணங்கள், "இதென்ன விபரீதம்? ஒருவருக்கொருவர் சளைக்கவில்லையே. ராமன் ராவணனை ஜயிப்பாரோ?" என்று கவலை கொண்டார்கள். "பசுக்களுக்கு க்ஷேமமுண்டாகட்டும்; ஸகல லோகங்களும் அழியாமலிருக்கட்டும்; ராமன் ராவணனை யுத்தத்தில் ஜயிக்கட்டும்" என்று தேவர்ஷிகணங்கள் ஜபித்துக்கொண்டு, யுத்தத்தைக் கவனித்துப் பார்த்திருந்தார்கள். கந்தர்வர்களும் அப்ஸரஸ்களும் கூட்டம் கூட்டமாய் வந்து நின்று அந்த அத்புதமான யுத்தத்தைப் பார்த்து, "ஆகாசத்திற்கு உபமானம் ஆகாசமே; ஸமுத்திரத்திற்கு உபமானம் ஸமுத்திரமே; அப்படி இந்த ராமராவண யுத்தத்திற்கு உபமானம் ராமராவண யுத்தமே'. என்று சொல்லிக் கொண்டார்கள்.

பிறகு ரகுகுலோத்தமன் க்ஷுரமென்ற உத்தமமான பாணத்தை எடுத்து வில்லில் பூட்டிக் கடும் கோபத்துடன் ராவணன்மேல் விடுத்து, அவனுடைய தலையை அதில் விளங்கும் கிரீட குண்டலங்களுடன் அறுத்துப் பூமியில் தள்ளினார். மூன்றுலோக வாஸிகளும் அதைப் பார்த்துக் கொண்டிருந்தார்கள்; உடனே அதைப்போன்ற வேறொரு தலை அவ்விடத்திலேயே தோன்றிற்று. அதையும் அதிவேகமாய் ராமன் தீக்ஷ்ணமான பாணங்களால் அறுத்தார்; உடனே அவ்விடத்தில் வேறொரு தலை தோன்றிற்று. ராவணனுடைய தலைகளை ராமன் வஜ்ரங்களைப்போன்ற பாணங்களால் அறுத்துத்தள்ள, இப்படி நூற்றொரு தலைகள் தோன்றி நாசமடைந்தன. ஒன்றிற்கொன்று ரூபத்திலாவது நிறத்திலாவது காந்தியிலாவது அலங்காரத்திலாவது பேதமில்லை; ஆனால், ராவணனுடைய பிராணன் அழியும் வழியும், அவனுடைய ஆயுளுக்கு முடிவும் காணப்படவில்லை. (இப்படி அடிக்கடி தலைகளை அறுப்பதின் உத்தேசமென்னவென்றால், ராமபாணங்கள் வெகுகாலமாய் ராவணனுடைய தலையை அறுத்து, அந்த ரத்தத்தைக் குடிக்க வேண்டுமென்று கொண்ட ஆவலைத் தீர்ப்பதற்கே தவிர வேறல்ல. இங்கே "ஒரு தலை" என்றதால் ராவணன் ஒரு தலையுடனும் இரண்டு புஜங்களுடனும் யுத்தம் செய்தானென்று தெரிகிறது.) ஸகல அஸ்திரங்களின் குணங்களையும் லக்ஷணங்களையும் அறிந்து, அவைகளைப் பிரயோகிப்பதிலும் நாசம் செய்வதிலும் மஹாநிபுணரான ரகுவீரன் "மாரீசனை அடித்த பாணங்கள் இவைகளே; கர



தூஷணர்களை அழித்த பாணங்களும் இவைகளே; தண்டகாவனத்தில் விராதனுடைய உயிரை வாங்கின பாணங்கள் இவைகளே; க்ரௌஞ்சவனத்தில் கபந்தனைச் சித்திரவதை செய்த பாணங்கள் இவைகளே; யுத்தத்தில் இவைகளை நம்பி நான் இதுவரையில் மோசம் போனதில்லையே; இப்பொழுது ராவணனிடத்தில் சற்றும் பிரயோஜனப்படவில்லை" என்று கவலையடைந்து, அதிஜாக்கிரதையுடன் ராமன் ராவணனுடைய மார்பில் அநேக பாணங்களை நாட்டினார். ராவணன் கதைகள் உலக்கைகள் முதலிய ஆயுதங்களால் ராமனை மிகவும் வருத்தினான்.

த்ரிகூடபர்வதத்தின் சிகரத்தில் யுத்தம் செய்து கொண்டிருக்கும் அவ்விருவரும் யுத்தாவேசத்தால் உக்ரம்கொண்டு, பூமியிலும் ஆகாசத்திலும் மறுபடியும் மலைச்சிகரத்திலும் மாறிமாறி யுத்தம் செய்ய ஆரம்பித்தார்கள். தேவ தானவ யக்ஷ பிசாச உரக ராக்ஷஸ கணங்கள் பார்த்துக் கொண்டிருக்கையில், அந்த ராத்திரி முழுவதும் அவ்விருவர்க்கும் பயங்கரமான யுத்தம் ஓயாமல் நடந்தது.

(இவ்விடத்தில் ஸப்தராத்ரம் 'ஏழு ராத்ரிப் பகல்களாய்; ஸர்வராத்ரம் அன்று ராத்ரி முழுவதும் என்று இரண்டு பாடங்களுண்டு. பங்குனி மாஸம் சதுர்தசியில் ஹனுமான் லங்கையை எரித்தார்; பௌர்ணமாவாஸ்யையில் ராமன் ஸமுத்திரக் கரைக்கு வந்தார்; பிரதமை த்விதீயை த்ரிதீயைகளில் தர்ப்பசயனம்; அஷ்டமியில் ஸுவேல மலையில் ஏறினது; நவமியில் யுத்தாரம்பம். ஆகையால் ராமராவண யுத்தம் ஏழு இரவு பகல் நடந்தது என்றும் அர்த்தஞ் செய்யலாம். இது கும்பகர்ணனுடைய நித்திரா காலத்தை நிர்ணயிக்குமிடத்திலேயே விஸ்தரிக்கப்பட்டிருக்கிறது.) பகலிலாவது ராத்திரியிலாவது ஒரு முகூர்த்தமாவது ஒரு க்ஷணமாவது ஓயாமல் இடைவிடாமல் ராமனும் ராவணனும் யுத்தம் செய்தார்கள். ராமனுக்கும் ராவணனுக்கும் நடக்கும் யுத்தத்தை விசேஷ கவனமாய்ப் பார்த்துக் கொண்டிருந்த மாதலி, ரகுவீரனுக்கு கொஞ்சமாவது ஜயம் ஏற்படவில்லையென்று கண்டு, மஹா புத்திமானாகையால் இதுதான் ஸமயமென்று ராகவனைப் பார்த்துப் பின்வருமாறு சொன்னான்.

தஶரத ஸுத ராக்ஷஸேந்த்ரயோ:
ஜயமநவேக்ஷ்ய ரணே ஸ ராகவஸ்ய ।
ஸுரவர ரத ஸாரதிர் மஹாந்
ரணகத மேநமுவாச வாக்யமாஶு ॥ (39)

## ஸர்க்கம் 111

## ராவண வதம்

அத² ஸம்ஸ்மாரயாமாஸ ராக⁴வம் மாதலிஸ் தத³ா |
அஜாநந்நிவ கிம் வீர த்வமேந மநுவர்தஸே ‖ (1)

**பி**றகு மாதலி ராகவனுக்கு வணக்கமாய் ஞாபகம் செய்தான். "தாங்கள் பிரஹ்மாஸ்திரத்தின் பிரபாவத்தை அறியாதவர்கள் போல் இந்த ராக்ஷஸன் பிரயோகிக்கும் அஸ்திரங்களுக்குப் பதில் அஸ்திரங்களைப் பிரயோகித்துக்கொண்டு மாத்திரமிருக்கிறீர்கள். மஹாவீர! இவன்மேல் பிரஹ்மாஸ்திரத்தைப் பிரயோகம் செய்து இவனை ஸம்ஹரியுங்கள். இவனுக்கு விநாசகாலமென்று தேவர்கள் சொல்லக் கேட்ட ஸமயம் இப்பொழுது வந்திருக்கிறது". என்றான். இப்படி, மாதலியால் ஞாபகம் செய்யப்பட்டு, ரகுநந்தனன் மஹாஸர்ப்பத்தைப்போல் பெருமூச்சுவிட்டுக்கொண்டும், தேஜஸால் ஸகல திக்குகளையும் பிரகாசிக்கச் செய்துகொண்டுமிருக்கும் அந்த அஸ்திரத்தை எடுத்தார். ராமன் தண்டகாரண்யத்தில் வஸிக்கையில் அதை அகஸ்தியமஹர்ஷி அவருக்குக் கொடுத்தார். அது ஆதியில் இந்திரனுக்காக பிரஹ்மாவால் நிர்மிக்கப்பட்டது. அவன் மூன்று லோகங்களையும் ஜயிக்க யத்தனம் செய்தபொழுது பிரஹ்மாவால் அவனுக்குக் கொடுக்கப்பட்டது; வீண் போகாதது; அதன் பக்கங்களில் வாயுவும், முனையில் அக்னியும் ஸூரியனும் அதிதேவதைகள்; ஆகாசமயமான சரீரத்தையுடையது; மேருமந்தர பர்வதங்களைப்போல் பளுவுள்ளது; தேஜஸால் ஜ்வலித்துக் கொண்டு, தங்கக் கட்டுகளையுடைய கணுக்களுடன், கொழுந்துவிட்டெரியும் காலாக்னி புகையால் சூழப்பட்டதுபோலும் கோபத்தால் ஜ்வலிக்கும் தீவ்ர விஷமுள்ள நாகத்தைப்போலும் பார்க்கப் பயங்கரமானது; சத்துருக்களின் ரதகஜதுரகபதாதி த்வார கோபுரப்ரகாரங்களையும், பரிகம் கதை முதலிய ஆயுதங்களையும், பர்வதங்களையும் பிளக்கக்கூடியது; ஸகலப் பிராணிகளின் ஸாரமே ரூபமெடுத்து வந்ததுபோன்றது; ஸூரியனைப்போன்ற காந்தியுள்ளது; சத்ருக்களின் ரத்தம், மாம்ஸம், கொழுப்பு முதலியவைகளால் பூசப்பட்டுக் கோரமானது; வஜ்ராயுதத்தைப்போல் உறுதியானது; பகைவர்கள் கேட்டு நடுங்கும்படியான சப்தத்தையுடையது; அநேக ஸைன்யங்களை நாசம் செய்தது; கபட யுத்தத்தை அழிக்கக்கூடியது; அதைக் கண்டு ஸகலப் பிராணிகளும் கதறும். கோபத்தால் சீறிக்கொண்டிருக்கும் கார்க்கோடகனைப் போன்றது; கழுகு, பருந்து, நரிகள் முதலிய ஜந்துக்களுக்குப் பூர்ணமான ஆகாரத்தைக் கொடுக்கக்கூடியது; யமனை ஒத்தது; வானரர்கள் அதைக்கண்டு ஆனந்தமடைந்தார்கள்; ராக்ஷஸர்கள் பயந்தார்கள்; கருடனுடைய இறகுகளாலும் அலங்கரிக்கப்பட்டது; ஸகல



ஸ ராவணாய ஸங்க்ருத்3தோ4 ப்4ருஶமாயம்ய கார்முகம் |
சிக்ஷேப பரமாயத்த: தம் ஶரம் மர்மகா4திநம் || —யு. 111 ஸ—16 ஸ.

ரகுவீரன் காலாக்னிருத்திரனைப் போல் கோப பரவசராய், பிரசண்ட கோதண்டத்தை வளைத்து, நாணைக் காதுவரையில் இழுத்து, சத்ருவின் உயிர்நிலைகளைப் பிளக்கும் அந்த அஸ்திரத்தை வெகு ஜாக்கிரதையாய் ராவணன் மீது பிரயோகித்தார். (பக்கம் 399 பார்க்க)

அஸ்திரங்களுக்கும் ராஜாவானது; இக்ஷ்வாகு குல ராஜாக்களுக்கும் பயத்தைப் போக்குவது; சத்துருக்களுடைய கீர்த்தியை அழிப்பது; அதைப் பெற்றவனுக்கு ஆனந்தத்தைக் கொடுக்கக்கூடியது. மஹா பலவானான ராமன் அதை வேதத்தில் சொல்லியிருக்கும் மந்திரங்களால் ஜபித்து வில்லில் தொடுத்தார். அப்பொழுது ஸகலப் பிராணிகளும் பயந்தன; பூமி நடுங்கிற்று. ரகுவீரன் காலாக்னி ருத்ரனைப்போல் கோப பரவசராய், பிரசண்ட கோதண்டத்தை வளைத்து நாணைக் காது வரையில் இழுத்து, சத்ருவின் உயிர்நிலைகளைப் பிளக்கும் அந்த அஸ்திரத்தை வெகு ஜாக்கிரதையாய்ப் பிரயோகித்தார்.

இந்திரனால் பிரயோகிக்கப்பட்ட வஜ்ராயுதத்தைப்போல் ஒருவராலும் தடுக்க முடியாததாய், ஸர்வஸம்ஹாரகனான அந்தகனைப்போல் ராவணனுடைய மார்பில் வந்து விழுந்தது. மஹா வேகத்துடன் விடப்பட்ட அந்தப் பாணம் துஷ்டனான ராவணனுடைய ஹிருதயத்தைப் பிளந்து சரீரத்தை நாசம்செய்தது. அதி வேகமாய் அவனுடைய பிராணன்களை அபகரித்துக்கொண்டு ரத்தத்தால் நனைந்து பூமியில் பிரவேசித்தது. இப்படி ராவணனைக் கொன்று, அவனுடைய ரத்தத்தால் பிரகாசித்துக்கொண்டு, தன் காரியத்தை நிறைவேற்றி, மிகுந்த வணக்கத்துடன் மறுபடியும் ராகவனுடைய அம்பறையில் வந்திருந்தது. தன்னைக் காப்பாற்றிக் கொள்ள முடியாமல் உயிரையிழந்த ராவணனுடைய கையிலிருந்து வில்லும் பாணங்களும் நழுவி விழுந்தன. வஜ்ராயுதத்தால் அடிக்கப்பட்ட விருத்ராஸுரனைப்போல், அபாரமான வேகத்தையும் காந்தியையுமுடைய அந்த ராக்ஷஸாதிபதி உயிரற்று ரதத்திலிருந்து பூமியில் விழுந்தான்.

இறந்தவர்கள் போக மிகுந்த ராக்ஷஸர்கள் அதைக் கண்டு நாயகனில்லாமல் பயம் மேலிட்டு மூலைக்கு மூலை ஓட ஆரம்பித்தார்கள். தசக்ரீவன் மடிந்ததையும் ராமன் ஜயித்ததையும் கண்டு வானரர்கள் வீர கோஷங்களால் ஆகாசத்தையும் பூமியையும் நடுங்கச் செய்து கொண்டு, மரங்களையும் மலைகளையும் எடுத்துக் கொண்டு ராக்ஷஸர்களைத் துரத்தியடித்தார்கள். அவர்களோ பயத்தால் ஒன்றும் தோன்றாமல், பற்றற்று, கண்ணீர் சொரிய, முகம் வாடி, லங்கையில் போய் ஒளிந்துகொண்டார்கள். பிறகு வானரர்கள் பரமானந்தத்தால் பரவசமடைந்து, ஜயத்தால் தேகம் பூரித்து, ரகுவீரன் ஜயித்ததையும் ராவணன் மாண்டதையும் சொல்லிச்சொல்லி ஆரவாரித்தார்கள். ஆகாசத்தில் தேவதுந்துபிகள் முழங்கின. திவ்யமான பரிமளத்துடன் காற்று ஸுகமாய் அடித்தது. ஆகாசத்திலிருந்து புஷ்பமாரி சொரிந்தது. அதி மனோகரமானதும் பிறருக்குக் கிடைக்காததுமான அந்தப் புஷ்ப வர்ஷத்தால் ராகவனும் அவருடைய ரதமும் மறைக்கப்பட்டன.

தேவகணங்கள் ஆகாச வீதியில் நின்றுகொண்டு, 'நல்லது, நல்லது' என்று ராமனைக் கொண்டாடினார்கள். மஹாக் குரூரனும் ஸகல லோகங்களையும் கதறச் செய்தவனுமான ராவணன் நாசமடைந்தவுடன் தேவகந்தர்வ ஸித்த சாரண கணங்கள் ஆனந்தத்தால் மெய்மறந்தார்கள். அந்த ராக்ஷஸபதியைக்கொன்று ராமன் ஸுக்ரீவனையும் அங்கதனையும் ஸந்தோஷப்படுத்தி, அவர்களுடைய மனோரதங்களைப் பூர்த்தி செய்தார். (அவ்விருவரும் ராமன் தங்களுக்குச் செய்த உபகாரத்திற்குப் பதில் செய்யக் காத்துக்கொண்டிருந்தார்கள்; தங்களுடைய பிரயத்தனங்கள் ஸபலமாய் முடிந்ததைப்பற்றி ஸந்தோஷப்பட்டார்கள்). பிறகு தேவகணங்கள் பயம் நீங்கி, ஸுகமடைந்தார்கள்; திக்குகள் பிரஸன்னமாயின; ஆகாசம் களங்கமற்றது; பூமி நடுங்கவில்லை; காற்று குரூரமாய் அடிக்காமல் மிருதுவாயும் ஸுகமாயும் வீசிற்று; பிறகு லக்ஷ்மணன், விபீஷணன் ஸுக்ரீவன், ஜாம்பவான் முதலிய மித்திரர்கள் ராகவனுடைய ஜயத்தால் அத்யந்த ஆனந்தமடைந்து, ரணபூமியில் ஜயலக்ஷ்மியுடன் விளங்கும் ரகுநாயகனை விதிப்படி பூஜித்தார்கள். ராமபத்ரன் தன் சத்துருவை ஸம்ஹரித்து பிரதிக்ஞையை நிறைவேற்றி, மித்திரர்களாலும் ஸைன்யங்களாலும் சூழப்பட்டு, தேவகணங்களால் உபசரிக்கப்பட்ட மஹேந்திரனைப்போல், மஹாதேஜஸுடன் வீற்றிருந்தார்.

ஸ து நிஹதரிபு: ஸ்தி²ர ப்ரதிஜ்ஞ:
ஸ்வஜந ப³லாபி⁴வ்ருதோ ரணே ரராஜ |
ரகு⁴குல ந்ருபநந்த³நோ மஹௌஜா:
த்ரித³ஶ க³ணை ரபி⁴ஸம்வ்ருதோ யதே²ந்த்³ர: ‖ (34)

---

## ஸர்க்கம் 112

## விபீஷணன் பிரலாபித்தது

---

ப்⁴ராதரம் நிஹதம் த்³ருஷ்ட்வா யாநம் ராமநிர்ஜிதம் |
ஶோகவேக³ பரீதாத்மா விலலாப விபீ⁴ஷண: ‖ (1)

தன் ஸஹோதரனான ராவணன் ராமனால் ஜயிக்கப்பட்டு, உயிரிழந்து பூமியில் கிடக்கக்கண்ட விபீஷணன் அடங்காத் துயரம் கொண்டு புலம்பினான். "ஒப்பில்லாத வீர! அளவற்ற பராக்கிரசாலியே! ஸகல லோகங்களிலும் வியாபிக்கும் கீர்த்திபெற்றவனே! ஸகல வித்யைகளிலும் கரைகண்டவனே! ராஜ நீதியை நன்றாய் அறிந்தவனே! காம்பு நீக்கிய ஸுகந்தமலர்கள் பரப்பப்பெற்ற ஹம்ஸதூளிகாசயனத்தில் படுத்துறங்கும் பரமஸுகியான நீ, இன்று பிராணனை இழந்து வெறுந்தரையில் படுக்கவும்நேர்ந்ததோ? தோள்வளைகளால் விசித்திரமாய் அலங்கரிக்கப்பட்டு யானைத் துதிக்கைகளைப்போன்ற நீண்ட புஜங்களை நீட்டிக்கொண்டு, கிரீடம் சிதற, தேஜோராசியான ஸூரியன் பூமியில்விழுந்ததுபோல், அசைவற்று அலங்கோலமாய்க் கிடக்கவும் உனக்கு விதியிருந்ததோ? நான் முன்பு உனக்குச் சொன்ன வார்த்தைகள் இப்பொழுது பலித்தனவே. காமத்தாலும் கர்வத்தாலும் புத்திமயங்கி என் வார்த்தையை அங்கீகரிக்காமலிருந்தாய். அளவற்ற கொழுப்பால் பிரஹஸ்தனும், இந்திரஜித்தும், கும்பகர்ணனும், அதிகாயனும், நராந்தகனும் மற்ற ராக்ஷஸர்களும் நீயும் அலக்ஷ்யம்செய்த காரியத்தின் பலன் இப்பொழுது பிரத்யக்ஷமாய் அனுபவத்திற்கு வந்துவிட்டதே. ஐயோ! ராஜநீதிக்கு எல்லையும், தர்மஸ்வரூபியும், பலத்திற்கு இருப்பிடமும், ஸகல ஸ்தோத்திரங்களுக்கும் பாத்திரமுமான நீ இன்று நாசமடைந்தாய். அந்தக் குணங்களும் ஆச்ரயிப்பதற்கு இடமில்லாமல் அலைகின்றன. இவன் அக்னி ஹோத்திரங்களைச் செய்தவன். ஸகல லோகங்களையும் பிரகாசிக்கச் செய்யும் ஆதித்யன். ஆகாச மண்டலத்திலிருந்து இன்று பூமியில் விழுந்துவிட்டான். சந்திரன் ஸகல கலைகளுமற்று இருட்டில் மறைந்தான். அக்னி தேஜஸ் இழந்தவன் ஆனான். உத்ஸாகமென்பது வேலை இல்லாமல் ஓய்ந்திருக்கிறது. யுத்த வீரர்களுக்குள் சிகாமணியான பிரதாபலங்கேசுவரன் பிராணனை இழந்து பூமியில் விழுந்தபிறகு மேற்சொன்னதெல்லாம் நிஜமாயிற்று. ராக்ஷஸசிரேஷ்டனான ராவணன் சத்ருவால் அடிபட்டுப் புழுதியில் கிடக்கிறான்; இனி லோகத்தில் சுத்தவீரர்களில்லை; எங்கும் ஒரே சூன்யமாய்த் தோன்றுகிறது.

"ராக்ஷஸாதிபதியென்ற மஹாவிருக்ஷம் ராமனென்ற சண்டமாருதத்தால் அடிபட்டு யுத்தபூமியில் கிடக்கிறது. சௌரியமே அதற்கு ஆழ்ந்த வேர்; தபஸே பலம்; கஷ்டத்தை ஸஹிக்கும் தன்மையே புஷ்பம்; தைரியமே தளிர். ராவணனென்ற மதயானை ராகவனென்ற ஸிம்ஹத்தால் அடிபட்டுக் கிடக்கிறது. பராக்கிரமமே தந்தங்கள்; உத்தம குலமே சரீரத்தின் பிற்பகுதி, பின்பாகம்; கோபமே அவயவங்கள்; அனுக்ரஹமே தும்பிக்கை. தசமுகனென்ற அக்னி ராமனென்ற மேகத்தால் அணைந்துவிட்டது. பராக்ரமமும் உத்ஸாஹமுமே ஜ்வாலைகள்; சுவாஸமே புகை; பலமே உஷ்ணம்; அபாரதேஜஸையுடைய தசானனனென்ற எருது ரகுவீரனென்ற புலியால் கொல்லப்பட்டுக் கிடக்கிறது. ராக்ஷஸர்களே அதற்கு வாலும் கொம்புகளும் முகப்பும்; (ராக்ஷஸர்களே அவனுடைய கர்வத்திற்குக் காரணம்);சத்ருக்களை அலக்ஷ்யமாய் ஜயிக்கக் கூடியது; வீரியத்தால் அந்த ஜாதியில் உத்தமமாய் விளங்குவது; விஷயஸுகங்களில் ஆசையே காதுகளும் நேத்திரங்களும்" என்று கூறினான்.

இப்படி விபீஷணன் சோகம் தாங்காமல் தகுந்த காரணங்களடங்கிய உத்தமமான வார்த்தைகளைச் சொல்லி பிரலாபிப்பதைக்

கேட்டு ரகுவீரன், "மித்திர! இவன் யுத்தத்தில் பயங்கரமான பராக்கிரமத்தையுடையவன்; எல்லையற்ற உத்ஸாஹத்தையுடையவன்; பராக்கிரமமற்று அல்பஜந்துவைப்போல் யுத்தத்தில் கொல்லப்பட்டானென்று எண்ணாதே. பிறர் எந்த விதத்திலும் புகழும்படியான வீரகிருத்யங்களைச் செய்து முடிவில் கொல்லப்பட்டானென்று நிச்சயமாய் நம்பு. க்ஷத்ரியதர்மத்தை அனுஷ்டித்து, உத்தமலோகங்களில் ஸுகமாய் வஸிக்க விரும்பி, யுத்தபூமியில் சத்துருவிற்குப் பின்வாங்காமல் மஹாதைரியமாய் யுத்தம்செய்து உயிரையிழக்கிறவர்களைப்பற்றித் துக்கிப்பதற்கிடமில்லை. அவர்கள் இறந்தும் என்றும் அழியாதவர்கள். இவன் மஹாபுத்திமான்; இந்திராதி தேவர்களையும் மூன்று லோகங்களையும் யுத்தத்தில்ஜயித்துக் கதறச்செய்திருக்கிறான். அளவற்ற கீர்த்தியையும் உத்தமமான வீரஸ்வர்க்கத்தையும் பெற்றிருக்கிறான். எல்லோருக்கும் ஸஹஜமான காலகதியை இவனும் அடைந்ததைப்பற்றித் துக்கப்படுவதற்கு இது ஸமயமல்ல. யுத்தத்தில் சென்றால் ஒருவனுக்கு எப்பொழுதும் ஜயமே கிடைத்துவந்ததென்று நாம் கேட்டதில்லை வீரன் சத்துருக்களால் கொல்லப்படுகிறான். அல்லது சத்ருக்களைக் கொல்லுகிறான்; இவ்விரண்டும் ஸஹஜதர்மங்களே. இந்த உத்தமகதி நமது முன்னோர்களால் கொண்டாடப்பட்டது; க்ஷத்ரியர்களால் ஒப்புக்கொள்ளப்பட்டது. ஆகையால் யுத்தத்தில் புறம் காட்டாமல் வீரகிருத்யங்களைச் செய்து மரணமடைந்த க்ஷத்ரியனைப்பற்றி ஒருபொழுதும் துக்கிக்கக்கூடாதென்பது என் நிச்சயமான அபிப்பிராயம். ஆகையால் இந்த நிச்சயத்தை நீயும் அறிந்து, பிறந்தவனுக்கு மரணம் என்றுமுள்ளதென்று தெளிந்து, சோகமற்று, மேல்நடக்க வேண்டிய காரியங்களை ஆலோசிக்கவேண்டியது" என்றார்.

மஹாதார்மிகர்களான இக்ஷ்வாகுசக்கரவர்த்திகளின்வம்சத்தில் அவதரித்து, தர்மமும் பராக்கிரமும் ரூபமெடுத்ததுபோன்ற ராகவன் சொன்ன வார்த்தைகளைக் கேட்டு, விபீஷணன் சோகந்திராமல், தன் தமயனுக்குச் செய்யவேண்டிய உத்தரகாரியங்களைத் தெரிவித்தான். "தேவர்களும் இந்திரனும் ஒன்று சேர்ந்தும் இவனை ஒருநாளும் யுத்தத்தில் ஜயித்ததில்லை. ஸமுத்திர ஜலம் கரைகளால் தடுக்கப்பட்டதுபோல், அப்படிப்பட்ட மஹாவீரன் தங்களை எதிர்த்து யுத்தத்தில் கொல்லப்பட்டான். இவன் கணக்கில்லாமல் தானங்களைச் செய்திருக்கிறான். குருக்களையும் தேவதைகளையும் ஸம்பூர்ணமாய்ப் பூஜித்திருக்கிறான். ஸமஸ்த போகங்களையும் அனுபவித்திருக்கிறான். பரிவாரங்களைக் குறைவில்லாமல் போஷித்திருக்கிறான். மித்திரர்களுக்கு அளவற்ற தனங்களையும் ஸுகங்களையும் கொடுத்திருக்கிறான். சத்துருக்களிடத்தில் வைத்த பகைகளைத் தீர்த்திருக்கிறான். இவன் இடைவிடாமல் அக்னிஹோத்திரங்களைச் செய்தவன்; மஹாதபஸ்வி; வேதசாஸ்திரங்களில் கரைகண்டவன்; ஸகல வைதிக லௌகிகக் கிரியைகளையும் பூர்ணமாய் விதிப்படி செய்தவன்; நிகரற்ற வீரனாகையாலும், தர்மசீலனாகையாலும், அக்னிஹோத்ரியாகையாலும், ஸகல தர்மங்களையும் குறைவின்றி நடத்தினவனாகையாலும் இவனுக்குப் பரலோகத்தில் உத்தமகதி கிடைக்கும்படியான காரியங்களை விதிப்படி நான் செய்வதற்குத் தங்களுடைய ஆக்ஞையை எதிர்பார்க்கிறேன். அவனுடன் பிறந்தவனும், அவனுடைய வயிற்றில் பிறந்தவர்களும் மடிந்தார்கள். பிரேதக்கிரியைகளைச் செய்வதற்கு நான் ஒருவனே அதிகாரியாய் மிகுந்திருக்கிறேன்" என்றான்.



இப்படி, கேட்பவருடைய மனம் உருகும்படி தீனமாய் விபீஷணன் அந்த ஸமயத்தில் தனக்கிருந்த அதிக துக்கத்தால் இப்படிச் சொல்ல, ரகுவீரன் ராக்ஷஸபதிக்கு நடக்கவேண்டிய உத்தரக் காரியங்களை ஆக்ஞாபித்தார். (விபீஷணன் கூறிய வார்த்தைகள் வாஸ்தவமல்ல. ராவணன் இறந்ததைக் கண்டவுடன் முன் ஞாபகமும் கூடப் பிறந்ததும் அவன் செய்த உபகாரங்களின் நினைவும் மேலிட சொன்னதேயொழிய வேறல்ல. விபீஷணனே உடனே அதற்குத் தான் கூறியதற்கு மாறாக "நான் இவனுக்கு பிரேதக் கிரியைகளைச் செய்ய மாட்டேன்" என்று கூறுவதையும் கவனிக்க. ஸர்க்கம் 114.) "விபீஷண! உனக்கும் இவனுக்குமுள்ள விரோதத்தை மனத்தில் வைத்துக்கொண்டு நாம் இவனுக்கு பிரேதக்கிருத்யங்களைச் செய்யாமலிருப்பது நியாயமல்ல. ஸகல விரோதங்களும் மரணத்தோடு முடியவேண்டியது. ஒருவன் இறந்த பிறகும் அவனிடத்தில் வைரம் பாராட்டுவது நியாயமல்ல. நாம் ஸீதையை மீட்பதற்காக இங்கு வந்தோம். அந்த பிரயோஜனம் கிடைத்தது. ஆசாரசீலனான இவனுக்கு எவ்விதமாய் பிரேதகிருத்யங்களைச் செய்யவேண்டுமோ அவைகளைக் குறைவில்லாமல் செய்யவேண்டியது. இவன் உனக்கு உடன் பிறந்தவன்; நீ எனக்குப் பரம மித்திரனாகையால் எனக்கும் உடன் பிறந்தவனாகிறான். இவனிடத்திலுள்ள தோஷங்களைக் காரணமாய்க் கொண்டு நீ இவனுக்கு பிரேதகிருத்யங்களைச் செய்யமாட்டேனென்றால், நானே செய்யத் தயாராயிருக்கிறேன். ஸஹோதரர்களில் எவர்க்கும் அந்த அதிகாரமுண்டு." என்றார்.

(இவ்விடத்தில் உரைகாரர் கோவிந்தராஜர் தமது ஆசார்யர்கள் கூறிய கருத்தை இவ்வாறு கூறுகின்றார். "இவன் உயிரோடிருக்கும் வரையில் ஜனஸ்தானத்திலுள்ள ரிஷிகளை உபத்திரவித்தான். ஸீதையை அபகரித்தான். உயிருக்கும் உயிரான ஜடாயுவைக் கொன்றான். உயிரிழந்த பிறகு என்னுடன் விரோதம் செய்யவாவது எனக்குக் கெடுதி செய்யவாவது சக்தியற்றவன். என் த்வேஷத்திற்குப் பாத்திரனல்ல. மேலும், 'ராவணனே வந்தாலும் அவனுக்கு அபயப் பிரதானம் கொடுக்கத் தயாராயிருக்கிறேன்'

என்றபடி இவனுக்கு ஏதாவது மங்களமான காரியத்தைச் செய்ய வேண்டுமென்று எண்ணியிருந்தேன். ஆனால், என்னை இரண்டாய்ப் பிளந்தாலும் ஒருவருக்கும் நான் தலை வணங்கமாட்டேன். இது என் ஸ்வபாவம்' என்று இவன் சொன்னபடி அந்த உபகாரத்தை நான் செய்ய முடியாமல் தடுத்து விட்டான். என் உத்தேசத்தை நிறைவேற்றுவதற்கு இப்பொழுது நல்ல ஸமயம் கிடைத்திருக்கிறது. இப்பொழுது நான் செய்யும் உபகாரத்தை வேண்டாமென்று தடுக்க இவனுக்குச் சக்தியில்லை. ஆகையால் இவனைக் கைவிடக்கூடாது. இவன் என் அபிப்பிராயத்திற்கு அனுகூலமாய்ப் பிறந்தவன். லோகத்திலுள்ள பாபத்தையும் அதர்மத்தையும் அழித்துத் தர்மத்தை நிலைநிறுத்த வேண்டுமென்பது என் அவதாரத்தின் உத்தேசம். இவன் லோகத்திலுள்ள ஸகல பாபத்தையும் அதர்மத்தையும் தன்னிடத்தில் ஒன்றாய்ச் சேர்த்துக்கொண்டு, என் உத்தேசத்தை வெகு ஸுலபமாய் நிறைவேற்றும்படி ஒத்தாசை செய்திருக்கிறான். ஆகையால் எனக்குப் பரமோபகாரி; பரம மித்திரன்; நீயும் என் மித்திரனாகையால் என்னைப்போல் நடக்கக் கடவாய். இவன் எனக்கு எப்படியோ அப்படியே உனக்குமல்லவா?" என்று ராமன் கருத்துள்ளதாக பெரியோர் கூறுவர் என்பதாம்.)

மரணாந்தானி வைராணி நிர்வ்ருத்தம் ந: ப்ரயோஜநம் |
க்ரியதாமஸ்ய ஸம்ஸ்கார: மமாப்யேஷ யத²ா தவ || (34)

---

## ஸர்க்கம் 113

# அந்தப்புர ஸ்த்ரீகள் பிரலாபித்தது

---

ராவணம் நிஹதம் ஶ்ருத்வா ராக⁴வேண மஹாத்மநா |
அந்த:புராத்³ விநிஷ்பேது: ராக்ஷஸ்ய; ஶோககர்ஶிதா: || (1)

ராவணன் ராமனால் கொல்லப்பட்டானென்று கேள்விப்பட்டவுடன் அந்தப்புர ஸ்த்ரீகள் எல்லோரும் துக்கத்தால் மெய்மறந்து தலைவிரிகோலமாய் ஓடிவந்தார்கள். எவர் தடுத்தும் நிற்காமல் தலைமயிர் அவிழ, ஆபரணங்கள் சிதற, ஆடைகள் நழுவ, தரையில் விழுந்து புரண்டுகொண்டு, கன்றையிழந்த பசுக்களைப் போல் கதறினார்கள். ராக்ஷஸர்களுடன் வடக்குக்கோட்டை வாசல் மூலம் வெளியில் வந்து, கோரமான யுத்த பூமியில் பிரவேசித்துத் தங்களுடைய நாதனைத் தேடினார்கள். "ஹா ராஜபுத்திர! ஹா நாத!" என்று கதறிக்கொண்டு, உயிரற்ற உடல்களால் நிறைந்து ரத்தச் சேறான அந்த யுத்த பூமியில் நான்கு புறங்களிலும் தேடினார்கள். கண்ணீர் தாரைதாரையாய்ப் பெருக, தங்களுடைய பர்த்தாவை இழந்து அநாதைகளாய், வனத்தில் ஆண் யானைகளைப் பறிகொடுத்த பெண் யானைகளைப்போல் பரிதாபமாய்க் கதறினார்கள். நெடுநேரம் கழித்து, அளவற்ற வீரியத்தையும், தேஜஸையும், காந்தியையுமுடைய ராவணன், மைமலையைப்போல் பருத்த சரீரத்துடன் பூமியில் கிடப்பதைக் கண்டார்கள். வெறும் தரையில் புழுதியில் கிடந்து புரளும் தங்கள் பிரிய நாயகனுடைய தேகத்தைக் கண்டு, வேரற்ற கொடிகளைப்போல் அவனுடைய தேகத்தின் மேல் விழுந்து மூர்ச்சையடைந்தார்கள். ஒருத்தி அவனிடத்தில் வைத்த கௌரவத்தாலும் பக்தியாலும் அவனை ஆலிங்கனம் செய்துகொண்டு கதறினாள்; ஒருத்தி அவனுடைய பாதங்களைத் தன் தலையில் வைத்துக்கொண்டு கதறினாள்; ஒருத்தி அவனுடைய கழுத்தைக் கட்டிக்கொண்டு அலறினாள்; ஒருத்தி அவனுடைய புஜங்களை எடுத்துத் தன்மேல் போட்டுக்கொண்டு புரண்டழுதாள்; அவனுடைய முகத்தைப் பார்த்து ஒருத்தி மூர்ச்சையடைந்து விழுந்தாள்; ஒருத்தி அவனுடைய தலையை மடியில் வைத்துக்கொண்டு அவனுடைய முகத்தை உற்றுப் பார்த்துக்கொண்டே பிரலாபித்தாள்; பனித்துளிகள் தாமரைப் புஷ்பத்தை நனைப்பதுபோல், அவளுடைய கண்ணீர் அவனுடைய முகத்தை நனைத்தது. இப்படித் தங்களுடைய நாயகனும் பர்த்தாவும் அரசனுமான ராக்ஷஸபதி உயிரிழந்து, பூமியில் கிடக்கக் கண்டு, அவர்கள் துக்கம் தாங்காமல் அடிக்கடி புலம்பினார்கள், கதறினார்கள், அலறினார்கள், பிரலாபித்தார்கள், புரண்டார்கள், தலையிலும் முகத்திலும் மார்பிலும் அடித்துக்கொண்டார்கள்.

"ஐயோ! இந்திரனை ஸ்வப்னத்திலும் நடுங்கும்படி அடித்தீர்கள். ஸகலப் பிராணிகளையும் ஸம்ஹரிக்கும் யமன் தங்களைக் கண்டு பயந்து ஒளிந்தான். பரமசிவனுக்கு பிரியமித்திரனான குபேரன் தங்களுடைய அண்ணனாயிருந்தும் தங்களால் ஜயிக்கப்பட்டு புஷ்பகவிமானத்தைப் பறிகொடுத்தான். கந்தர்வர்களும் ரிஷிகளும் தேவர்களும் தங்களுடைய பெயரைக் கேட்டால் திகிலடைந்தார்களே! அப்படிப்பட்ட தாங்கள் இன்று ரண பூமியில் இப்படிக் கதியற்றுக் கிடக்கும்படி ஆயிற்றே. அஸுரர்களிடத்திலிருந்தும் தானவர்களிடத்திலிருந்தும் தைத்யர்களிடத்திலிருந்தும் ஸகல தேவகணங்களிடத்திலிருந்தும் தங்களுக்குப் பயமில்லை. அல்ப மனுஷ்யர்களிடத்திலிருந்து மரணம் நேர்ந்ததே! அளவற்ற பல பராக்கிரமமுள்ள தேவ, தானவ, கந்தர்வ, யக்ஷ கணங்களும் கொல்ல முடியாத தாங்கள், ரதமும் இல்லாமல் பூமியில் நின்று யுத்தம் செய்யும் இந்த அல்பமனிதனுடைய கையால் மாண்டீர்களா? மூன்று லோகங்களில் வஸிக்கும் ஸகலப் பிராணிகளும் ஒன்று சேர்ந்தும் தங்களை உபத்திரவிக்க முடியவில்லையே! இன்று ஊரும் பேருமில்லாத இந்த மனிதனுக்கு வசப்பட்டீர்களோ?" என்று இப்படி ராவணனுடைய அந்தப்புர ஸ்த்ரீகள் பலவிதமாய் பிரலாபித்துக்கொண்டு வாய்விட்டு அழுதார்கள். அடிக்கடி புலம்பிப்

புலம்பி அவனுடைய குணங்களையும் பெருமையையும் வர்ணித்தார்கள்.

"ஐயோ! தங்களுடைய ஹிதத்தைக் கோரும் மித்திரர்கள் தடுத்துத்தடுத்துச் சொல்லியும், அவர்களுடைய வார்த்தைகளைக் கொஞ்சம்கூட லக்ஷ்யம்செய்யாமல், ஸீதையைக் கொண்டுவந்தீர்கள். தங்களுடைய மரணத்தை வலுவில் தேடி அழைத்துவந்தீர்கள். ராக்ஷஸ குலத்தை வேரறுத்தீர்கள், நாங்களும் தாங்களும் தங்களைச் சேர்ந்தவர்களும் ஒரே காலத்தில் அழிந்தோம். தங்களுடன் பிறந்த விபீஷணன் அடிக்கடி தங்களைத் தடுத்துத்தடுத்து ஸீதையை விட்டுவிடும்படி சொல்லவில்லையா? அவனுடைய வார்த்தையைத் தள்ளிவிட்டு, அவனைக் கடுமையாய்ப் பேசி, லங்கையை விட்டுத் துரத்தினீர்கள். தங்களுடைய நல்ல காலத்தை வீட்டை விட்டுத் துரத்தி, மிருத்யு தேவதையை வருவித்துக்கொண்டீர்களே யொழிய வேறென்ன? தாங்கள் அப்பொழுதே ஸீதையை ராமனிடத்தில் ஒப்புவித்திருந்தால் எங்களுக்கு இவ்வித கஷ்டங்கள் நேர்ந்திருக்குமா? ராக்ஷஸ வம்சம் இப்படி நாசமடையுமா? விபீஷணன் தங்களிடத்தில் பரம திருப்தியடைந்திருப்பான். அவனுக்கு மித்ரனான ராமன் தங்களுடைய குலத்திற்கே மித்திரனாயிருப்பான். நாங்கள் இப்படி விதவைகளாகமாட்டோம். தங்களுடைய சத்ருக்களான தேவகணங்கள் மகிழ்ந்து துள்ளமாட்டார்கள். மஹா குரூரமாய் ஸீதையைக் கண்ணும் கண்ணீருமாய்த் தாங்கள் இழுத்து வரும்பொழுதே ராக்ஷஸர்களும்நாங்களும்தாங்களும் மடிந்தோம். ராக்ஷஸசிரேஷ்ட! தங்களைச் சொல்லி என்ன? லோகத்தில் பிராணிகள்அவர்களிஷ்டப்படிநடக்கமுடிகிறதா?எல்லாவற்றிற்கும் விதி ஒன்றே காரணம். விதியால் முதலில் ஒருவன் கொல்லப்பட்டு, பிறகு சத்ருவின் கையால் வெளிப்படையாய் மரணமடைகிறான். எண்ணிறந்த வானரர்களும் ராக்ஷஸர்களும் தாங்களும் இந்த மஹா யுத்தத்தில் நாசமடையவேண்டுமென்று விதியால் முன்பே ஏற்பட்டிருந்ததல்லவா? ஐச்வரியமிருந்தாலென்ன? தன் இஷ்டப்படி ஸகலமும் நடந்து வந்தாலென்ன? பராக்ரமமிருந்தாலென்ன? நமது ஆக்ஞைக்கு எல்லோரும் கீழ்ப்படிந்து வந்தாலென்ன? இவை யாவும் விதியை வெல்லமுடியுமா?" என்று ராவணனுடைய அந்தப்புரஸ்த்ரீகள் தீனர்களாய்ப் பரிதாபமுண்டாகும்படி கண்ணீர் தாரை தாரையாய்ச் சொரிய, ஆணைப் பிரிந்த அன்றில் பக்ஷிகளைப்போல் கதறினார்கள்.

விலேபுரேவம் தீ$^{3}$நாஸ்தா ராக்ஷஸாதி$^{4}$ப யோஷித: |
குரர்ய இவ து$^{3}$க்$^{2}$கார்தா பா$^{3}$ஷ்ப பர்யாகுலேக்ஷணா: ‖ (26)

---



## ஸர்க்கம் 114

## மண்டோதரி பிரலாபம்

தாஸாம் விலபமானாநாம் தத$^{3}$ா ராக்ஷஸ யோஷிதாம் |
ஜ்யேஷ்டா$^{2}$ பத்நீ ப்ரியா தீ$^{3}$நா ப$^{4}$ர்தாரம் ஸமுதை$^{3}$க்ஷத ‖ (1)

இப்படி பிரலாபித்துக்கொண்டிருக்கும் ராவண பார்யைகளுக்குள் மூத்தவளாயும் அவனுக்கு அத்யந்தம் பிரியமுள்ளவளாயும் அந்தப்புரஸ்த்ரீகளுக்குத் தலைவியாயுமிருக்கும் மந்தோதரி என்பவள் தன் பர்த்தாவின் தேகத்தைக் கண்டாள்; மனம் நொந்தாள். 'சுத்த வீரர்களுக்கு யுத்தபூமியில் புறம்காட்டாமல் சண்டை செய்து உயிரைவிடுவது உத்தமகதியைக் கொடுக்கும் என்று வீர பத்தினியான மந்தோதரிக்கு நன்றாய்த் தெரியும். ஆனால் தனக்கு எவ்விதத்திலும் ஸமமில்லாத ஒரு மனுஷ்யனால் கீர்த்திசாலியான தன் நாதன் அபஜயப்பட்டு மடிந்ததைப்பற்றி வருத்தமும் வெட்கமும் உண்டாயின. எண்ணுதற்குரிய பராக்கிரமமுள்ள ரகுவீரனுடைய கையால் லங்கேச்வரன் கொல்லப்பட்டுக் கிடப்பதைக் கண்டு மந்தோதரி தைரியமிழந்து ஸ்வாதீனமற்று பரிதாபமாய்ப் பிரலாபித்தாள். "மஹாராஜரே! இதென்ன ஆச்சரியம்! தங்களுக்குக் குலதெய்வமான மஹாதேவனுக்குப் பரமமித்திரனான குபேரன் தங்களுடைய ஸகோதரன்; தாங்கள் கோபங்கொண்டால் பூமியும் அதில் வஸிக்கும் பிராணிகளும் புவர்லோக ஸுவர்லோகங்களும் அதில் வஸிக்கும் தேவ, தானவ, ஸித்த, கந்தர்வ கணங்களும், தேவேந்திரனும், திக்பாலர்களும், மஹர்ஷிகளும் பிராஹ்மணர்களும் தங்களுக்கெதிரில் நிற்கமுடியுமா? இது ஜகத் பிரஸித்தமல்லவா? தங்களைக் கண்டு பயந்தே சாரணர்கள் மூலைக்கு மூலை ஓடிவிட்டார்கள். அப்படிப்பட்ட தாங்கள், கேவலம் ஒரு அல்பமனுஷ்யன், தபஸ்வி, சிறுவன், வீடுவாசலில்லாமல் துரத்தப்பட்டுக் காட்டிற்கு வந்த இந்த ராமனால் யுத்தத்தில் அபஜயமடைந்தீர்களே. இது தங்களுக்கு அவமானமல்லவா? இப்படித் தாங்கள் நடக்கக் காரணமென்ன? ராக்ஷஸேச்வர! எனக்குச் சொல்லவேண்டும். காய் கிழங்குகளைத் தின்றுகொண்டு, ஜடை முடியையும் மரவுரியையும் மான்தோலையும் தரித்த இந்தத் தபஸ்வி, ஐச்வரியத்தாலும், வீரியத்தாலும், லக்ஷ்மியாலும் மூன்று லோகங்களையும் வியாபித்த தங்களை, எப்படி ஜயித்தான்? எப்படிக் கொன்றான்? தங்களுடைய பராக்கிரமத்தையும் தேஜஸ்ஸையும் எவராவது தாங்கமுடியுமா? தாங்களிருக்கும் லங்கையோ கோரமான ஸமுத்திரத்தால் சூழப்பட்டிருக்கிறது; ஒருவரும் நெருங்கமுடியாத த்ரிகூட பர்வதத்தின் சிகரத்தில் கட்டப்பட்டிருக்கிறது; கோரமான ராக்ஷஸர்களால் இரவும் பகலும் காக்கப்பட்டிருக்கிறது; இங்கே மனுஷ்யர்கள் வர நியாயமில்லை; தாங்களோ நினைத்த ரூபமெடுக்கக் கூடிய

வர்கள்; ஸகல விஷயங்களிலும் குறைவற்று ஸகல யுத்த ஸாமக்ரிகளும் பூர்ணமாய்ப் பொருந்தியிருக்கும் தங்களை ராமன் யுத்தத்தில் ஜயித்தானென்று இவர்கள் சொல்வதை நான் கொஞ்சம்கூட நம்பவில்லை.

"ஆனால் இது யாருடைய காரியமாயிருக்கலாம்? ஸாமான்ய மனுஷ்யன் செய்யக்கூடியதா? ஜனஸ்தானத்தில் தங்களுடைய ஸஹோதரனான கரனும், தூஷணனும், த்ரிசிரஸும் பதினாலாயிரம் ராக்ஷஸ வீரர்களுடன் ஒரு முஹூர்த்தத்தில் இந்த ராமன் ஒருவனாலேயே கொல்லப்பட்டார்களென்று கேட்டவுடன் இவன் மனுஷ்யனல்லவென்று நிச்சயித்தேன். தேவாஸுரர்களும் கண்ணெடுத்துப் பார்க்கத் துணியாத இந்த லங்கையில் ஓர் அல்பக் குரங்கு பிரவேசித்துக் காவல்களைக் கடந்து ராக்ஷஸவீரர்களை மடித்து நகரத்தை நாசம் செய்ததென்று கேட்டவுடன் எனக்கு அதைரியமுண்டாயிற்று. கோரமான வானரர்கள் ஸமுத்திரத்தில் அணைகட்டினார்களென்று கேட்டவுடன் ராமன் மனுஷ்யனல்லவென்று என் புத்தியில் பட்டது. அல்லது யமனே ராமரூபம் தரித்து, நிகரற்ற ரூபலாவண்யத்தையுடைய ஸீதையென்ற ஒரு மாயையை ஸிருஷ்டித்துத் தங்களைக்கொல்வதற்கு நேரே வந்தானோ? அல்லது, தங்களால் ஜயிக்கப்பட்டு அவமானப்படுத்தப்பட்ட தேவேந்திரனே இப்படி மோசம்செய்து தங்களைக் கொன்றானோ? அப்படியுமில்லை. தங்களுடைய பலமெங்கே? இந்திரனுடைய பலமெங்கே? அவன் யுத்தபூமியில் தங்களைக் கண்ணெடுத்துப் பார்க்கவும் முடியுமோ?

"லோகங்களைக் காப்பாற்றுவதைப்பற்றி எப்பொழுதும் கவலைகொண்டவரும், பரமாத்மாவும், நித்யரும், ஆதிமத்யாந்தமில்லாதவரும், அழிவற்றவரும், விகாரமற்றவரும், இந்த்ராதி தேவதைகளுக்கு மேலான பிரஹ்மாவிற்கும் மேலானவரும், பிரகிருதியால் செய்யப்பட்ட இந்த பிரபஞ்சத்திற்கு வெளியில் அப்ராகிருதமான சுத்தஸத்வத்தால் நிர்மிக்கப்பட்ட ஸ்ரீவைகுண்டத்தில் வீற்றிருக்கிறவரும், சங்க சக்ர கதாதரரும், ஸ்ரீவத்ஸமென்ற மருவால் அலங்கரிக்கப்பட்ட மார்பையுடையவரும், ஸகல ஜகத்தையும் போஷிக்கிறவரும் (அதற்காகவே மேற்சொன்ன ஆபரணங்களைத் தரிக்கிறவரும்) மஹாலக்ஷ்மியை விட்டு எப்பொழுதும் பிரியாதவரும், ஒருவராலும் ஜயிக்க முடியாதவருமான ஸ்ரீமந்நாராயணனே மனுஷ்ய ரூபத்துடன் ராமனென்று அவதாரம் செய்திருக்கிறார். வீணாகாத பராக்கிரமமுடையவரான மஹாவிஷ்ணுவே வானர ரூபத்தைத் தரித்த தேவகணங்களால் சூழப்பட்டு இப்படி அவதாரம் செய்திருக்கிறார். ஸர்வலோக நாதனும் அளவற்ற தேஜோராசியுமான அந்த பிரபுவே ஸகல லோகங்களுக்கும் பரம மங்களத்



தைச் செய்யவேண்டுமென்று தங்களையும் தங்களுடைய பரிவாரங்களையும் யுத்தத்தில் நாசம் செய்திருக்கிறார்.

(மேற்சொன்ன குணங்களால் விளங்கும் மஹாபுருஷனே ராமனென்றும் ஸ்ரீமந்நாராயணன் ஸகலதேவதைகளுக்கும் மேலானவரென்பதை வால்மீகி பகவான் ஸ்த்ரீயின் வார்த்தையாலும் வெளியிடுகிறார். "உத்பத்தி விருத்தி விநாசம் குறைவு விகாரம் முதலியவை இல்லாததால் அவர் பரவஸ்துவென்று காட்டப்படுகிறது. பிரஹ்மாதி தேவதைகளுக்கும் மேலானதால் பரமாத்மா. வைகுண்டவாஸி என்பதற்கு "அந்தகார ரூபமான பிரகிருதியின் எல்லையைத் தாண்டி கோடி ஸூரியப் பிரகாசமாய் நிற்பவர்" —ச்ருதி. ஸர்வ வியாபியான பகவான் வைகுண்டத்திலிருக்க நியாயமென்ன வென்றால், விக்ரஹ ரூபியாய் பக்தர்களை ரக்ஷிப்பதற்காகப் பஞ்சாயுததரராய் விளங்குகிறாரென்பது. "உமது பக்தர்கள் எப்பொழுது தன் ஸஹாயத்தை அபேக்ஷிப்பார்களோவென்று எப்பொழுதும் அவர்களுடைய சத்ருக்களை ஸம்ஹாரம் செய்ய ஸித்தமாயிருக்கிறேனென்று காட்ட எப்பொழுதும் ஆயுதபாணியாய் நிற்கிறீர்"—பெரியோர்கள். விசேஷ காந்தியையும் அழகையும் கொடுக்கும் சிவந்த மருவிற்கு ஸ்ரீவத்ஸமென்று பெயர். அது மஹாவிஷ்ணுவின் வலது மார்பில் விளங்குகிறது. அவர் ஸகல லோகங்களுக்கும் ஈச்வரனென்பதற்கு அதுவே அடையாளம். ஜகத்தை ரக்ஷிப்பதற்கு முக்ய காரணமாயும், ஸகல ஜீவகோடிகளுக்கும் புருஷகாரமாயுமிருக்கும் மஹாலக்ஷ்மியை விட்டு எப்பொழுதும் பிரியாதவரென்பதற்கு "ஸ்ரீதேவி எப்பொழுதும் இவரை விட்டுப் பிரியாதவள்" என்று கூறும் ச்ருதி)

'முன்பு தாங்கள் இந்திரியங்களை ஜயித்துத் தங்களுடைய வசத்தில் வைத்துக்கொண்டிருந்தீர்கள்; அப்பொழுது மூன்று லோகங்களும் தங்களுக்கு வசப்பட்டிருந்தன. அவை பழி தீர்த்துக்கொள்ள ஸமயம் பார்த்துக்கொண்டிருந்து தங்களை எப்படி கெடுத்துவிட்டனவோ! ராகவனுடன் விரோதிக்க வேண்டாமென்று நான் பல தடவை எச்சரித்ததை தாங்கள் செவி கொடுத்து கேட்கவில்லை. அதன் பலனைப் பார்த்தீர்களா? 'எல்லாம் தெரிந்த நீ எனக்கு அப்பொழுதே சொல்லக் கூடாதா? என்று தாங்கள் என்னைக் குற்றம் சாட்ட நான் இடம் வைத்துக்கொள்ளவில்லை. ராக்ஷஸபதே! ஸீதையிடத்தில் தாங்கள் இவ்வளவு மோஹிக்க என்ன காரணமோ தெரியவில்லையே! ஐச்வர்யம் குலைந்து, புத்திர மித்திர பந்து ஜனங்களும் மடிந்து, தாங்களும் இப்படி பிரேதமாய்க் கிடப்பதைத் தவிர வேறு பலனைக் கண்டீர்களோ? அருந்ததியைக் காட்டிலும் அவள் மஹா பதிவிரதை; ரோஹிணியைக் காட்டிலும் பர்த்தாவிடத்தில் விசேஷ பக்தி வைத்தவள்; தங்களுக்குத் தாயைப் போன்றவள்; தாங்கள்

துஷ்டபுத்தி பிடித்து அவளைப் பலாத்காரம் செய்தது தங்களுக்கு உசிதமான காரியமா? 'அவள் அப்படிப்பட்ட பதிவிரதையாயிருந்தால் என்னை ஏன் கொன்றிருக்கக்கூடாது என்றால், பொறுமையில் பூமிதேவிக்கும் பூமி; ஸர்வ ஸம்பத்திற்கும் உத்பத்திஸ்தானமான மஹாலக்ஷ்மிக்கும் லக்ஷ்மி; பர்த்தாவிடத்தில் எல்லையற்ற ப்ரீதி வைத்தவள்; மனுஷ்ய கர்ப்பத்தில் பிறக்காதவள்; குற்றமற்ற ரூபத்தையும் அழகையுமுடையவள்; மனுஷ்ய ஸஞ்சாரமற்றுத் துஷ்டமிருகங்கள் ஸஞ்சரிக்கும் தண்டகாரண்யத்தில் வஸித்துக் கொண்டிருந்தவள்; தன்னை ரக்ஷிக்க ஒருவரும் ஸமீபத்திலில்லாமல் தனியாக இருந்தவள்; பயத்தால் நடுங்கிக்கொண்டிருந்தவள்; ஸன்யாஸிவேஷத்தை எடுத்து அவளை வஞ்சித்து, மாரீசனால் அவளுடைய பர்த்தாவையும் லக்ஷ்மணனையும் ஆசிரமத்திலிருந்து வெகு தூரம் இழுத்துக்கொண்டுபோய், அவளுக்குத் தங்களிடத்தில் கொஞ்சமேனும் அபிப்பிராயமில்லாமலிருக்கையில், தலைமயிரில் கை போட்டுக் கதறக்கதறக் கண்ணும் கண்ணீருமாய் இழுத்துக் கொண்டு வந்தீர்களல்லவா? தங்களுக்கு ஸ்வாதீனமான என்னை மறந்தீர்கள். அதற்குக் காரணம் தங்களுடைய புத்திமயக்கமென்று சொல்லவேண்டுமேயொழிய, எனக்கு அழகு ஸௌந்தர்யம் புத்தி முதலிய பூர்வகுணங்கள் குறைந்தனவென்று சொல்ல முடியுமா? அந்த மஹாபதிவ்ரதையை தாங்கள் பலாத்காரம் செய்து அவளுடைய தபோமஹிமையால் நாசமடைந்தீர்கள். இவ்வளவும் எனது அதிருஷ்டக் குறைவால் நேர்ந்ததேயொழிய வேறென்ன? 'ஸீதையை அபகரித்தபொழுதே ஏன் அவளுடைய பதிவிரதாக்னி என்னைக் கொளுத்தவில்லை' என்றால், தங்களைக் கண்டு நடுங்கும் அக்னி தங்களைத் தொடுவானோ?

“பாபகர்மங்களைச் செய்தவன், அவை பலனைக் கொடுக்கும் காலத்தில் பரமதுக்கத்தையும் கஷ்டத்தையும் அனுபவிக்கிறான். இதில் ஸந்தேகமுமுண்டோ? சுபமான கர்மத்தைச் செய்தவன் ஸுகத்தை அனுபவிக்கிறான்; பாபத்தைச் செய்தவன் துக்கத்தை அனுபவிக்கிறான். விபீஷணன் தர்மாத்மா; எப்பொழுதும் ஸன்மார்க்கத்தையே அனுஸரித்து வந்தான்; தர்மஸ்வரூபியான ராகவனைச் சரணமடைந்தான். லங்காராஜ்யத்தையும் தீர்க்காயுஸையும் போக போக்யங்களையும் பரமஸுகத்தையும் அடைந்தான். தாங்கள் அதர்மத்தை ஆச்ரயித்தீர்கள்; தர்மத்தைத் துறந்தீர்கள்; பாபத்தைச் செய்தீர்கள்; தர்மஸ்வரூபியான ராமனை விரோதித்தீர்கள்; அவருக்கு பரம அபகாரத்தைச் செய்தீர்கள். இப்பொழுது லங்காராஜ்யத்தை இழந்து, மனுஷ்யனால் ஜயிக்கப்பட்டு, உயிரைப் பறிகொடுத்து, புத்ர மித்ர பந்து பரிவாரங்கள் அழிந்து, எங்களையும் அநாதைகளாய்ச் சோக ஸமுத்திரத்தில் தத்தளிக்க விட்டு, இந்த யுத்தகளத்தில் வெறுந்தரையில் புழுதி படிந்து, பிரேதமாய்க் கிடக்கிறீர்கள்; நாய்களும், நரிகளும், கழுகுகளும், காக்கைகளும் தங்களுடைய அவயவங்களைப் பிடுங்கித் தின்னும்.

“அவளைக்காட்டிலும் ரூபத்தாலும் ஸௌந்தரியத்தாலும் அதிகமான அநேக ஸ்த்ரீகள் தங்களுடைய தயவை எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறார்களே! தாங்கள் மன்மதபாசத்தால் கட்டுப்பட்டு, புத்தி மயங்கி அறியாமற் போனீர்களே! குலத்திலாவது ரூபத்திலாவது, வித்தையிலாவது, ஸாமர்த்தியத்திலாவது ஸீதை எனக்கு நிகரா? தாங்கள் புத்தி மயங்கி இதை அறியாமற்போனீர்களே! ஸகல பூதங்களுக்கும் மரணம் ஏதாவது காரணத்தால் நேரும். தாங்களோ இந்த ஸீதையென்ற ம்ருத்யுவை வெகு தூரத்திலிருந்து வெகுக் கஷ்டப்பட்டு வீட்டிற்கு அழைத்து வந்தீர்களே! பத்து மாஸமாய்க் கர்ப்பத்தில்வைத்துக் காப்பாற்றும் சிசுவைப்போல் ஜானகியைப் பத்து மாஸம் வெகுஜாக்ரதையாய்க் காப்பாற்றி, முடிவில் தங்கள் மரணமென்ற குழந்தையைப் பெற்றீர்கள். ஸீதை இதுவரையில் பர்த்தாவைவிட்டுப் பிரிந்து கஷ்டத்தை அடைந்தாள்; இனிமேல் கஷ்டம் தீர்ந்து, பர்த்தாவுடன் சேர்ந்து ஆனந்தமாய்க் காலத்தைக் கழிப்பாள். நான் இதுவரையில் தங்களுடன் சேர்ந்து, அபூர்வமான ஸகல போகபோக்யங்களையும் அனுபவித்து வந்தேன். இனி என் புண்யம் குறைந்து, பாபங்கள் பலித்து, சோக ஸாகரத்தில் முழுகித் தங்களையும் பறிகொடுத்து, என் புத்திரனையும் இழந்து, விதவையாய் அனாதையாய்க் காலம் கழிக்கப் போகிறேன்.

“நிகரற்ற ஐச்வரியத்துடனும் காந்தியுடனும் விசித்திரமான ஆபரணங்களையும் வஸ்திரங்களையும் கந்தங்களையும் தரித்துக் கொண்டு, கைலாஸம், மந்தரம், மேரு, சைத்ரரதம், நந்தனம் முதலிய போக பூமிகளில் தங்களுடன் யதேச்சையாய் க்ரீடித்து, புஷ்பக விமானத்தில் ஸகல தேசங்களையும் அதிலுள்ள ஆச்சரியங்களையும் பார்த்துக் கொண்டிருந்தேனே! தாங்கள் உயிரிழந்ததால் அந்த க்ரீடைகளும், அந்த ஸுகமும், அந்த போகங்களும், அந்த ஆனந்தமும் அழிந்தனவே! அவள் யாரோ, இப்பொழுது நான் யாரோவென்று எண்ணவேண்டியிருக்கிறது. ஐயோ! அரசர்களுடைய ஐச்வரியம் நிலையற்றதாயுள்ளதே! அதை நம்பலாமா?

மஹாராஜரே! தாங்கள் பானசாலையில் என்னுடன் க்ரீடிக்கும்பொழுது தங்களுடைய முகத்தின் அழகு இருந்த வகையை எப்படிச் சொல்வேன்? மன்மதனுடைய வில்லைப்போல் வளைந்த புருவங்களுடனும், சற்றுப் பருத்துயர்ந்த மூக்குடனும், காந்தியால் சந்திரனையும் ஸௌந்தரியத்தால் தாமரையையும் தேஜஸால் ஆதித்யனையும் பழித்துக்கொண்டு, பர்வத சிகரம்போன்ற கிரீடத்தால் விளங்கிக் கொண்டு, கோவைப் பழம்போல் சிவந்த உதடுகளுடன், நவரத்ன கசிதமான குண்டலங்களால் பிரகாசித்துக்கொண்டு, மதத்தால்

சுழன்றுகொண்டிருக்கும் நேத்திரங்களுடன், பலவகைப் புஷ்பங்களால் பரிமளிக்கும் ஹாரங்களையும் மாலைகளையும் சூடி, புன்னகையுடன் மதுரமாய்ப் பேசிக்கொண்டிருப்பதுபோல் இப்பொழுது என் கண்ணிற்கெதிரே நிற்கின்றதே! ஐயோ! அந்த முகமே இப்பொழுது களையற்று, ராமபாணங்களால் பிளக்கப்பட்டு, ரத்த தாரைகள் உலர்ந்து, கொழுப்பாலும் மாம்ஸத்தாலும் பூசப்பட்டு, ரதத்தால் கிளப்பப்பட்ட புழுதிபடிந்து, கரடுமுரடாய் முன்போல் பிரகாசிக்கவில்லையே! என் பிராணநாத! நான் என்ன செய்வேன்? அதிருஷ்டமற்ற நான் அறியாமற்போனேனே!

''இந்தத் தேகம் நீரின் மேற்குமிழியென்றும் மின்னற்கொடியென்றும் உனக்குத் தெரியாதோ' என்றால், ஐயோ! பலபராக்கிரமத்தில் நிகரற்ற தானவர்களுக்கு அரசனான மயனுக்குப் பெண்ணாய்ப் பிறந்திருக்கிறேன்; ஸகல ராக்ஷஸர்களுக்கும் பதியான ப்ரதாபலங்கேச்வரனை பிரியநாயகனாய் அடைந்திருக்கிறேன்; முப்பத்து முக்கோடி தேவதைகளுக்கும் அரசனான இந்திரனைக் கட்டியிழுத்துச் சிறையில் அடைத்த இந்திரஜித்தைப் புத்திரனாய்ப் பெற்றிருக்கிறேன். எனக்கென்ன குறைவு? எனக்கு நிகருண்டோ? கஷ்டமும் துக்கமும் எனக்கும் வருமோவென்று கர்வங்கொண்டு மோசம் போனேன். ஹா! நாத! இம்மூவர்களும் அடங்காத கர்வங்கொண்டவர்கள்; சத்ருக்களின் கொழுப்பை அடக்குகிறவர்கள்; சூரர்கள்; பலவான்களென்றும் பராக்கிரமசாலிகளென்றும் பிரஸித்தி பெற்றவர்கள்; ஒன்றிற்கும் அஞ்சாதவர்கள்; இவர்கள் எனக்குக் காவலாயிருக்கையில் பயமும், துன்பமும், சோகமும் எனக்குமுண்டோவென்றிருந்தேனே. இவ்விதமான பிரபாவமுள்ள நீங்களிருக்கையில் மனுஷ்யர்களிடத்திலிருந்து இந்தப் பயம் நேரக் காரணமென்ன?

ஆகாயத்தை அளாவும் இந்திரநீலபர்வதத்தைப்போல் காந்தியுடனும், வழவழப்பாயும், கேயூரம், தோள்வளை, முத்துமாலை, ரத்னமாலை முதலிய ஆபரணங்களால் அலங்கரிக்கப்பட்டு க்ரீடா ஸமயங்களில் அதிக மனோஹரமாயும், யுத்த பூமியில் அதிக பயங்கரமாயும் விளங்கும் உங்கள் தேஹம் மின்னற்கொடிகள் பாயும் நீருண்ட மேகத்தைப்போல், என் நேத்ரங்களுக்கு ஆனந்தத்தைக் கொடுக்குமே! அந்தச் சரீரம் இப்பொழுது கூர்மையான பாணங்களால் பிளக்கப்பட்டிருக்கிறதே. முள்ளம் பன்றியின் முள்ளுகளைப் போல் தேகமெங்கும் ஊசிநாட்ட இடமில்லாமல் ராமபாணங்கள் உயிர்நிலைகளில் பதிந்து, தசைகளையும் நரம்புகளையும் அறுத்து, பார்க்க விகாரமாய்ச் செய்தனவே! ஐயோ! தங்களுடன் பேசவும், தங்களுடைய வார்த்தைகளைக் கேட்கவும் புண்யம் செய்யாவிட்டாலும், தங்களுடைய தேகத்தையாவது ஆசை தீர ஆலிங்கனம் செய்துகொள்ளலாமென்று வந்தேனே! இந்தப் பாபியான ராம



பாணங்கள் எனக்குச் சத்துருவாய் வந்து மறுத்துத் தங்களைத் தொட முடியாமல் செய்துவிட்டனவே! வஜ்ராயுதத்தால் அடிபட்டுச் சிதறிக்கிடக்கும் பர்வதத்தைப்போல், தாங்கள் உயிரற்று பிரேதமாய் ரத்தத்தாலும் புழுதியாலும் விகாரமாய் இந்த யுத்த பூமியில் கிடப்பதைப் பார்க்க நான் என்ன கோரமான பாபத்தைச் செய்தேனோ? தங்களுக்கும் மரணமுண்டோ? மற்றப் பிராணிகளைப் போல் தாங்களும் மரணமடைவது வெறும் ஸ்வப்னமென்றிருந்தேனே! இப்பொழுது அந்த ஸ்வப்னமே நிஜமாயிற்றே! தாங்கள் ராமனால் எப்படிக் கொல்லப்பட்டீர்கள்? தாங்கள் காலனுக்குக் காலன்; காலகாலனான பரமசிவனுக்கு ப்ரியபக்தன்; காலனுடைய வசத்தில் எப்படி அகப்பட்டீர்கள்? மூன்று லோகங்களிலுள்ள ஐச்வரியங்களை அனுபவித்தவர்; மூன்று லோகங்களையும் கதறவடித்தவர்; லோகபாலர்களை ஜயித்தவர்; சங்கரனைக் கைலாஸ பர்வதத்துடன் பெயர்த்தசைத்தவர்; கொழுப்படைந்தவர்களை அடக்கினவர்; பராக்ரமத்தை அநேக சமயங்களில் காட்டி பிரஸித்தி பெற்றவர்; ஸகல ப்ராணிகளையும் கலக்கினவர்; ஸகல ஜந்துக்களும் கேட்டு அலறும்படியான த்வனியையுடையவர்; சத்ருவிற்கெதிரே கர்வமுள்ள வார்த்தைகளைக் கம்பீரமாய்ச் சொல்லுகிறவர்; தன் பந்துமித்ர பரிவாரஸைன்யங்களைக் குறைவில்லாமல் போஷிக்கிறவர்; பயங்கரமான பராக்ரமத்தையுடையவர்; யக்ஷர்களையும் தானவச்ரேஷ்டர்களையும் கணக்கில்லாமல் கொன்றவர்; நிவாதகவசர்களென்ற அஸுரச்ரேஷ்டர்களை ஜயித்தவர்; எண்ணிறந்த யக்ஞங்களைக் கெடுத்தவர்; தன்னைச் சேர்ந்தவர்களை ரக்ஷித்தவர்; ஆசாரத்தின் எல்லையை உடையவர்; யுத்தத்தில் விசித்திரமான மாயைகளை ஸிருஷ்டித்தவர்; தேவாஸுர மனுஷ்ய கன்யைகளைக் பலாத்காரமாய் எடுத்துவந்தவர்; சத்துருக்களின் ஸ்த்ரீகளைக் கண்ணும் கண்ணீருமாய் நிறுத்தினவர்; தன்னைச் சேர்ந்தவர்களுக்கு ஸகல சௌக்யங்களையும் அபரிமிதமாய்க் கொடுத்தவர்; இந்த லங்காபுரியை ஒருவரும் கண்ணெடுத்துப் பார்க்காமல் காப்பாற்றினவர்; பிறர் பார்த்து நடுங்கும்படியான கிருத்யங்களைச் செய்தவர்; (தன் தலைகளை அறுத்து ஆஹுதி செய்திருக்கிறான்;) எங்களெல்லோருக்கும் எல்லையற்ற காமபோகங்களைக் கொடுத்தவர்; யுத்த வீரர்களுக்குள் சிகாமணி. இப்படிப்பட்டவரைப் பர்த்தாவாயடைந்து, அவர் ராமனால் மரணமடைந்து கிடப்பதைக் கண்டு இன்னும் பிழைத்திருக்கிற நான் எவ்விதமான பிராணியென்று எனக்கே தெரியவில்லை. என் தேகம் கல்லோ? என் உயிர் வஜ்ரமோ? மனுஷ்யர்களைத் தவிர மற்றவர்களிடத்திலிருந்து தனக்கு மரணமில்லையென்று என் பர்த்தா வரம் பெற்றவர்; மனுஷ்யனால் மடிந்தார். நான் அப்படிக் கடுந்தவம் செய்யவில்லை; அவ்விதமான வரங்களையும் பெறவில்லை. அப்படியிருந்தும் என் பர்த்தாவைக் கொன்ற ராமனும் என்னைக் கொல்லமுடியவில்லை. ராமபாணங்

களின் அமோகமான சக்தி என்னிடத்தில் செல்லவில்லையா? பிறர் ஸ்வப்னத்திலும் பார்க்காத உத்தமசயனங்களில் படுத்து உறங்கின தாங்கள், இந்த ரண பூமியில் வெறுந்தரையில் புழுதியில் ரத்த வெள்ளம் பெருக, நான்கு புறத்திலும் துர்க்கந்தம் வீச, நாய்நரிகளும், காக்கைகளும் கழுகுகளும் பயங்கரமாய்க் கூச்சலிட, எப்படித்தான் விழித்துக்கொள்ளாமல் தூங்குகிறீர்களோ? என் அருமைக் குழந்தை இந்திரஜித்தின் தலையை அறுத்த லக்ஷ்மணனுடைய பாணம் என் ஹிருதயத்தைப் பிளந்தது; அப்படியும் பிழைத்திருந்தேன்; தாங்களாவது எனக்கிருக்கிறீர்களென்ற தைரியத்தாலல்லவா இன்று தங்களுயிரைக் கொள்ளை கொண்ட பாணம் என்னையும் மடித்தது. என் பந்துக்கள் இறந்தார்களென்ற குறை எனக்கில்லை; அதனால் வருத்தமுமில்லை; தாங்களிருக்கையில் எனக்கென்ன என்றிருந்தேன். இன்று தங்களைப் பறிகொடுத்து, ஸகல போகங்களையும் இழந்து வெகுகாலம் துக்கஸமுத்திரத்தில் மறைந்தேன்.

தாங்கள் பிறரால் அடையமுடியாத வீரஸ்வர்க்கத்தை அடைந்தீர்கள். இப்படிப் பரிதபிக்கும் என்னையும் தங்களுடன் சேர்த்துக் கொள்ளமாட்டீர்களா? தங்களை விட்டுப் பிரிந்தும் எனக்கு உயிர் தரிக்குமா? என்னைவிட்டுத் தாங்கள் பிரிந்திருக்க ஸகிக்கமாட்டீர்களே! இப்படிப் பரிதபிக்கும் என்னை இங்கே வஞ்சித்துப்போக மனம் வந்ததோ? நான் பரிதாபமாய் இப்படிக் கதறுவதை எவ்வளவு நேரம் பார்த்தும் ஒரு வார்த்தைகூடப் பதில் சொல்லாமலிருக்கிறீர்களே! அந்தப்புரத்தைவிட்டு, முகத்தில் மறைவில்லாமல் எல்லோரும் பார்க்கும்படி கோட்டை வாசல் வழியாய்க் கால்வழியால் இங்கே வந்தேனென்ற கோபமோ? தங்களுடைய பார்யைகளை ஸூர்யசந்த்ரர்களும் கண்ணெடுத்துப் பார்க்கமுடியுமா? அவர்கள்மேல் காற்றடிக்கவும் முடியுமோ? அவர்கள் வெட்கத்தை விட்டு,மறைவில்லாமல் எல்லோரும் பார்க்கும்படி இங்கே வந்திருப்பதைக் கண்டும் தங்களுக்கு ஏன் கோபமுண்டாகவில்லை? தங்களுடன் பலவிதமான க்ரீடைகளை அனுபவித்த இந்த அந்தப்புர ஸ்த்ரீகளெல்லோரும் இப்படிக் கதறுகிறார்களே! இவர்களுக்கு ஆறுதல் சொல்லக்கூடாதா? இவர்களை ஆதரிக்கக்கூடாதா? இவர்கள் உத்தம குலத்தில் பிறந்தவர்கள்; மஹாபதிவிரதைகள்; தர்மத்தை விட்டு விலகாதவர்கள்; பெரியோர்களுக்குச் சுச்ருஷை செய்வதில் ப்ரியமுள்ளவர்கள், இவர்களெல்லோரும் தங்களை இழந்து விதவைகளானார்கள்; சத்ருவசத்தில் அகப்பட்டார்கள்; சோக ஸமுத்திரத்தில் தத்தளிக்கிறார்கள். இவர்களைத் தாங்கள் பலாத்காரம் செய்து அபகரித்து, இவர்களுடைய பர்த்தாக்களையும் பந்துக்களையும் கொன்று அவமானப்படுத்தினபொழுது இவர்கள் கொடுத்த சாபம் இன்று பலித்ததே. பதிவிரதைகளின் கண்ணீர் பூமியில் விழுந்தால் வீண்போகாதென்ற லோகவார்த்தைக்குத் தங்களைவிட வேறு உதாரணமுண்டோ? தாங்கள் மூன்று லோகங்களையும் தேஜஸால் வியாபித்தீர்கள்; சுத்த வீரனென்ற பெயரெடுத்தீர்கள்; ஒரு ஸ்த்ரீயைத் திருடிக்கொண்டு வரவேண்டுமென்ற இந்த அல்பபுத்தி தங்களுக்கு எப்படி வந்தது? மாரீசனை மான் வேஷம் தரிக்கச் செய்து, ராமலக்ஷ்மணர்களை ஆசிரமத்திலிருந்து அப்புறப்படுத்தி ஸீதையை அபகரித்தபொழுதே, தாங்கள் தைரியமற்றவர்களென்று ஏற்பட்டதல்லவா? இதுவரையில் தாங்கள் யுத்தத்தில் அதைரியத்தையாவது பயத்தையாவது அடைந்து நானறியேன். தங்களுக்கு அதிருஷ்டம் குறைந்து விநாசகாலம் ஸமீபித்ததென்பதற்கு இதே நல்ல அடையாளம். 'மஹான்கள் அல்ப காரியங்களைச் செய்ய ஆரம்பித்தால் அவர்களுக்கு ஹானி நேருமென்ற லோகவார்த்தை தங்களிடத்தில் பலித்தது. தங்களுடைய தம்பி விபீஷணன் மூன்று காலங்களையும் நன்றாய் அறிந்தவர்; ஸத்தியம் தவறாதவர்; மஹாத்மா; ஸீதையைத் தாங்கள் எடுத்து வந்ததைப் பார்த்து, 'ஐயோ! நமது குலத்திற்கு நாசம் வந்துவிட்டதே' என்று பெருமூச்சுவிட்டுச் சொன்ன வார்த்தையைத் தாங்கள் காமக்ரோதங்களுக்கு இடம்கொடுத்து நிஜமாக்கினீர்கள். ராக்ஷஸசிரேஷ்டர்களையும் அழித்தீர்கள். தங்களால் ராக்ஷஸகுலம் நாசமடையவேண்டுமென்று விதிக்கப்பட்டிருந்ததோ? இப்பொழுது தங்களைச் சேர்ந்தவர்களையெல்லாம் அநாதைகளாய்ப் பரிதபிக்கவிட்டீர்களே! பலபராக்கிரமங்களால் பிரஸித்தி பெற்ற தங்களைப்பற்றி நான் எவ்விதத்திலும் துக்கிக்கவேண்டியதில்லை; ஸ்த்ரீ ஸ்வபாவத்தால் என் புத்திமயங்கி இப்படி ப்ரலாபிக்கும்படியாயிற்று. தாங்கள் செய்த பாபபுண்யங்களால் பின்தொடரப்பட்டு இந்த லோகத்தைவிட்டுச் சென்றீர்கள். தங்களைப் பிரிந்து தபிக்கும் என்னைப்பற்றியல்லவா நான் துக்கப்படவேண்டும்? மித்ரர்களும், பந்துக்களும், ஸஹோதரர்களும் தங்களுடைய ஹிதத்தையே நாடிப் பலவிதமாய்த் தங்களுக்குச் சொன்ன வார்த்தைகளைத் தாங்கள் அலக்ஷ்யம் செய்தீர்களே! தகுந்த காரணங்களுடன் சாஸ்திர ரீதியாய் பிரயோஜனங்களை எடுத்துக்காட்டி, தங்களுக்கு க்ஷேமத்தையும் கீர்த்தியையும் ஸம்பாதிக்கும் தர்ம வாக்யங்களை மிருதுவாயும், வணக்கமாயும், மதுரமாயும் விபீஷணன் பலதடவை சொல்லவில்லையா? தாங்கள் அப்படி நடந்தீர்களா? மாரீசனும் கும்பகர்ணனும் என் பிதாவான மயனும் செய்த ஹிதோபதேசத்தைத் தாங்கள் வீரியக்கொழுப்பால் அலக்ஷ்யம் செய்ததின் பிரயோஜனத்தை இன்று அனுபவிக்கிறீர்கள்.

நீருண்ட மேகத்தைப்போன்றவரே! மஞ்சள்பட்டு வஸ்திரமணிந்தவரே! அழகான தோள்வளைகளால் அலங்கரிக்கப்பட்டவரே! அவயவங்களை அலங்கோலமாய் பரப்பிக்கொண்டு, ரத்தத்தால் நனைந்து, அயர்ந்து தூங்குகிறவரைப்போல் வெறும் தரையில் படுத்துக்கொண்டிருக்கிறீர்களே! நான் சோகத்தால் தபித்து இப்படிப் புலம்பும்பொழுது, எனக்கு ஒரு வார்த்தையாவது பதில்

சொல்லக்கூடாதா? மஹாவீரர்களும் ஸாமர்த்தியசாலிகளும் யுத்தங்களில் பின்வாங்காதவர்களுமான மாலி, ஸுமாலி, மால்யவானென்ற ராக்ஷஸசிரேஷ்டர்களின் வம்சத்தில் பிறந்தவரே! என்னைக் கண்ணெடுத்துப் பார்க்கக்கூடாதா? எழுந்திருங்கள் ; நெடுநேரமாயிற்று; எழுந்திருங்கள். இதுவரையில் தங்களுக்கு இவ்விதமாக அவமானம் நேர்ந்ததில்லையே! இதைப் பொறுத்துக்கொண்டு இன்னும் படுத்திருக்கலாமா? இதுவரையில் தங்களைக்கண்டு நடுங்கின ஸூர்யனும் இன்று பயமில்லாமல் லங்கையில் பிரவேசித்து பிரகாசிக்கிறான். இந்திரனுடைய வஜ்ராயுதத்தைப்போல் விளங்கும் தங்களுடைய பரிகாயுதத்தால் இதுவரையில் எண்ணிறந்த சத்ருக்களை நாசம் செய்திருக்கிறீர்கள். அது ஸூரியனைப்போல் தேஜஸால் ஜ்வலித்துக்கொண்டிருந்தது. தங்கஹாரங்களால் அலங்கரிக்கப்பட்டது; தங்களால் எப்பொழுதும் பூஜிக்கப்பட்டது. இதோ ராமனுடைய பாணங்களால் ஆயிரம் தூள்தூளாய்ச் சிதறிக்கிடப்பதைப் பாருங்கள். இந்த ரணபூமி, தங்களுக்கு ப்ரியநாயகியா? எவ்வளவு சொல்லியும் அவளை விடாமல் ஆலிங்கனம் செய்துகொண்டு கிடக்கிறீர்களே! என்னிடத்தில் வெறுப்படைந்தவரைப்போல், திரும்பிப் பார்த்துப் பேசாமலிருக்கிறீர்களே! தங்களைப் பறிகொடுத்து, இவ்வளவு துக்கத்தையும் அனுபவித்து, இன்னும் என் ஹிருதயம் ஆயிரம் துண்டுகளாகப் பிளக்காமலிருக்கிறதல்லவா? அதைச் சுடவேண்டும்'' என்று கூறிப் புலம்பினாள்.

இப்படிக் கண்ணீர் தாரைதாரையாய்ப் பெருக, ராவணனிடத்தில் வைத்த ஸ்நேஹத்தால் அவனிடத்தில் நாடின மனத்துடன் மந்தோதரி புலம்பி மூர்ச்சையடைந்தாள். முகம் வாடி, தேகம் மெலிந்து, அவனுடைய மார்பில் பிரக்ஞையற்று கிடக்கும்பொழுது, ஸந்தியாகாலத்தில் சிவந்த நீருண்ட மேகத்தில் பாயும் மின்னற்கொடியைப்போல் விளங்கினாள். அப்பொழுது அவளுடைய சக்களத்திகள், சோகத்தால் வாய்விட்டலறிக்கொண்டு அவளை வாரியெடுத்து, "அம்மா! பால்யம், கௌமாரம், யௌவனம் என்ற நிலைகள் ப்ராணிகளுக்கு நித்தியமில்லை யென்றும், அரசர்களுடைய ஐச்வரியம் நிலையற்றதென்றும் தங்களுக்குத் தெரியாததல்லவே'' என்று தேற்றினார்கள். அதைக் கேட்டு மந்தோதரி பிரக்ஞை தெளிந்து, கோவென்றுக் கதறிக் கண்ணீரால் தேகத்தை நனைத்தாள்.

அப்பொழுது ராமன் விபீஷணனைப் பார்த்து, "உன் தமயனுக்குச் செய்யவேண்டிய உத்திரக்கிரியைகளைச் செய் இந்த ஸ்த்ரீகளை லங்கைக்குத் திரும்பிப் போகச்சொல்'' என்றார். அதைக் கேட்டு விபீஷணன் தான் முன்சொன்ன வார்த்தைகளை நன்றாய் ஆலோசித்து, "ராமன் உத்திரவு செய்தால் அப்படிச் செய்கிறேன். இல்லாவிட்டால் செய்யமாட்டேன்'' என்று நிச்சயம் செய்துகொண்டு, "ஸ்வாமி! இவன் தர்ம மார்க்கத்தைத் துறந்தவன்; குரூரன்; இரக்கமற்றவன்; ஸத்தியம் தவறியவன்; பரஸ்த்ரீகளை அபகரித்தவன்; இவனுக்கு உத்தரக்ரியைகளைச் செய்வதற்கு என் மனம் ஸம்மதிக்கவில்லை. இவன் ஸகல ப்ராணிகளுக்கும் கெடுதலையே செய்தவன்; லோகத்தார்க்கு என் தமயனென்ற பெயரேயொழிய இவன் எனக்குப் பரம சத்ரு; எனக்கு மூத்தவனென்றதால் மாத்திரம் பூஜிக்கத் தகுந்தவன்; ஸகல லோகங்களையும் கதறச் செய்தவனுக்கு நான் மரியாதை செய்வது தகாது. தமயனுக்கு பிரேதக்கிரியைகளைச் செய்யாவிட்டால், என்னை லோகத்தார்கள் இரக்கமற்றவனென்று சொல்லுவார்கள்; வேண்டியவரையில் சொல்லட்டும். அவர்களே இவனுடைய தோஷங்களை நன்றாய் ஆலோசித்து பார்த்தால், நான் செய்தது யுக்தமென்று ஒப்புக்கொள்வார்கள்'' என்றான்.

இப்படி மஹாபுத்திமானான விபீஷணன் தன் மனத்திலுள்ள நிஜமான அபிப்பிராயத்தைச் சொன்னதைப் பற்றித் தர்மாத்மாக்களில் சிரேஷ்டரான ராமன் ஸந்தோஷித்து, அவனுடைய வார்த்தைகளின் உட்கருத்தை அறிந்துகொண்டு, "உன்னால் எனக்கு இந்த ஜயம் கிடைத்தது; ஆகையால் உனக்குப் ப்ரியமான காரியத்தையே நான் செய்யவேண்டியது. உனக்கு ஹிதத்தை நான் சொல்லவேண்டியது. ராவணனுக்கு நீ ஸம்ஸ்காரம் செய்வது எனக்கும் இஷ்டம்; உனக்கும் ஹிதம். ராக்ஷஸேச்வர! இவன் ராக்ஷஸ ஜாதியில் பிறந்தவன்; அதர்மத்தையே நாடினவன்; ஸத்யம் தவறினவன். ஆனாலும், மஹாதேஜஸ்வி, பலவான், சூரன், யுத்தத்தில் பின்வாங்காதவன். தேவர்களும் இந்த்ரனும் இவனால் பல தடவைகளில் முறியடிக்கப்பட்டார்களென்று கேள்விப்பட்டிருக்கிறேன், மஹாத்மா; அளவற்ற ஆண்மையுடையவன். ஸகல லோகங்களையும் கதறச் செய்தவன்; 'இவ்வளவு குணங்களிருந்தும் எனக்குச் சத்ருவல்லவா? இவனுக்கு நான் உத்தரக்ரியைகளைச் செய்யலாமா'வென்றால், ஸகல த்வேஷமும் வைரமும் கோபமும் மரணத்தோடு முடியவேண்டும்' இவன் இறந்த பிறகும் இவனிடத்தில் அவைகளைக் காட்டலாமா? ஆகையால் இவனுக்கு ஸம்ஸ்கார கிரியைகளைச் செய். இவன் எப்படி உனக்குப் பந்துவோ, அப்படியே தர்ம ரஹஸ்யங்களை நீ அறியாதவனா? விதிப்படி இவனுக்கு பிரேதக்கிரியைகளைச் செய். மஹாபாபங்களைச் செய்த தன் பரம சத்ருவையும் விபீஷணன் ஆதரித்து த்வேஷ புத்தியில்லாமல் அவனுக்கு ஸம்ஸ்காரங்களைச் செய்தானென்ற ஒப்பற்ற கீர்த்தி உனக்கும் கிடைக்கும்'' என்றார்.

அதைக் கேட்டு விபீஷணன் ராகவனுடைய உத்தரவைப் பெற்று, ஸ்த்ரீகளை லங்கைக்கு அனுப்பி, யாக சீலர்களுக்குச் செய்யவேண்டிய விதிப்படி அதிசீக்கிரமாய் ராவணனுக்கு ப்ரேத

க்ரியைகளை நடத்தவாரம்பித்தான். ரித்விக்குகள் சந்தனக்கட்டைகளை அடுக்கி, அதன்மேல் பரிமள த்ரவ்யங்களைப் பரப்பி, வேத விதிப்படி ரங்குவென்ற மானுடைய தோலை அதன்மேல் விரித்தார்கள். பிறகு, பித்ருமேதஸம்ஸ்காரம் முதலிய சரமக்ரியைகள் யதோக்தமாய் நடத்தப்பட்டன. தென் கிழக்காய் ஆக்னேய மூலையில் அக்னி குண்டத்தை ஏற்படுத்தி, மேற்கில் கார்ஹபத்யாக்னியையும், கிழக்கில் ஆஹவனீயாக்னியையும், தெற்கில் தக்ஷிணாக்னியையும் விதிப்படி மூட்டி, தயிரும் நெய்யும் கலந்து வைத்த ஹோம பாத்ரங்களிலிருந்து அந்தச் சிதையில் எங்கும் ப்ரோக்ஷணஞ் செய்தார்கள். பாதங்களுக்கு ஸமீபத்தில் ஸோம ராஜாவைக் கொண்டுவருவதற்காக வண்டியையும், யக்ஞத்தில் உபயோகிக்கப்படும் உரலை துடைகளுக்கு நடுவிலும் ஸ்தாலி முதலிய மரப்பாத்ரங்களையும், மேல் அரணியையும், கீழ் அரணியையும், உலக்கையையும், அந்தந்த ஸ்தானங்களிலும் ரிஷிகளால் ஏற்படுத்தப்பட்ட விதிப்படி வைத்தார்கள். பிறகு அந்தச் சிதையின் ஸமீபத்தில் சுத்தமான ஆட்டைப் பலிகொடுத்து ஹோமம் செய்து, ஸமித்துக்களை நெய்யில் நனைத்து நான்கு பக்கங்களிலும் பரப்பினார்கள். உத்தம பரிமளத் திரவியங்களாலும் மாலைகளாலும் வஸ்திரங்களாலும் ஆபரணங்களாலும் அந்த பிரேதத்தை அலங்கரித்து, விபீஷணனும் இதர ராக்ஷஸர்களும் கண்ணீர் பெருக மனம் நொந்து பொரிகளை வாரியிறைத்தார்கள். விபீஷணன் வேதமந்திரங்களை உச்சரித்துக்கொண்டு, அந்தச் சிதையில் அக்னியை மூட்டினான். பிறகு ஸ்நானம் செய்து, ஈர வஸ்திரத்துடன் அறுகம்புல்லுகள் கலந்த எள்ளையும் ஜலத்தையும் பூமியில் விட்டு பிரேதத்தை ஆவாஹனம் செய்து, ஜலதர்ப்பணம் செய்தான். பிறகு தலைவணங்கி அங்கிருந்த ஸ்த்ரீகளுக்கு அடிக்கடி ஆறுதல் சொல்லி, லங்கைக்கு அழைத்துக்கொண்டு போனான். அவர்கள் அந்த நகரத்தில் பிரவேசித்தவுடன் விபீஷணன் ராமனிருக்குமிடத்திற்கு திரும்பி வந்து வணக்கமாய் நின்றான். முன்பு இந்திரன் விருத்ராஸுரனைக் கொன்றதுபோல், ராமனும் ஸுக்ரீவனும் லக்ஷ்மணனும் வானரஸேனைகளும் தங்களுடைய சத்ரு நாசமடைந்ததைப்பற்றி அளவற்ற ஆனந்தமடைந்தார்கள். (ராவணன் யுத்தத்தில் மரணமடைந்தபடியால் விபீஷணனுக்கு ஆசௌசமில்லை. ஆகையால் உடனே ராமனிடத்தில் வந்தான். மறுநாள் ராஜ்யாபிஷேகம் செய்து கொண்டதற்கும் அயோத்யைக்குப் பிரயாணம் செய்ததற்கும் இதுவே காரணம்.)

ராமோபி ஸஹ ஸைந்யேந ஸஸுக்³ரீவ: ஸலக்ஷ்மண: |
ஹர்ஷம் லேபே⁴ ரிபும் ஹத்வா யதா² வ்ருத்ரம் ஶதக்ரது: ‖ (127)

---



## ஸர்க்கம் 115

# விபீஷண பட்டாபிஷேகம்

தே ராவணவத⁴ம் த்³ருஷ்ட்வா
தே³வக³ந்த⁴ர்வ தா³நவா: |
ஜக்³மு: ஸ்வை:ஸ்வைர் விமாநைஸ்தே
கத²யந்த: ஶுபா⁴: கதா²: ‖ (1)

தங்களுக்குப் பரம உபத்திரவத்தைச் செய்து வந்த ராவணன் ராமனால் ஸம்ஹரிக்கப்பட்டதைப் பார்த்து, தேவ கந்தர்வ தானவர்கள் தங்களுடைய விமானங்களில் ஏறிக்கொண்டு, ராவணனுடைய கோரமான மரணத்தையும், ராகவனுடைய பராக்கிரமத்தையும், வானரர்கள் செய்த அத்புதமான யுத்தத்தையும், ஸுக்ரீவன் யுக்தியாய்ச் சொன்ன ஆலோசனைகளையும், ஸுமித்ரா புத்ரனை லக்ஷ்மணனுடைய வீரியத்தையும் ஸஹோதரவாத்ஸல்யத்தையும் ஒருவர்க்கொருவர் ஆனந்தமாய் வர்ணித்துக்கொண்டு தங்களிருப்பிடம் சென்றார்கள். ராமன் இந்திரனால் கொடுக்கப்பட்டு அக்னியைப்போல் ஜ்வலிக்கும் ரதத்தை உத்திரவு கொடுத்தனுப்பிவிட்டு, மாதலியை விசேஷமாய் உபசரித்தார். இந்திரனுடைய ஸாரதி ராமனிடத்தில் உத்திரவு பெற்றுக்கொண்டு ரதத்திலேறி ஸ்வர்க்கத்திற்குச் சென்றான். பிறகு ராகவன் விசேஷப் பிரீதியுடன் ஸுக்ரீவனை ஆலிங்கனம் செய்து, வானர சிரேஷ்டர்கள் உபசரிக்க, லக்ஷ்மணனால் ஞாபகம் செய்யப்பட்டு, ரகுவீரன் தன் ஸைன்யம் இறங்கியிருக்குமிடத்திற்கு வந்தார்.

அங்கே தேஜஸாலும் எல்லையற்ற பலத்தாலும் விளங்கிக் கொண்டு, தன் ஸமீபத்தில் நிற்கும் லக்ஷ்மணனைப் பார்த்து, "குழந்தாய்! நமது விபீஷணன் என்னிடத்தில் அளவற்ற பிரீதி வைத்தவன்; பக்தியுள்ளவன்; விசேஷ உபகாரம் செய்தவன்; இவனை லங்கைக்கு அழைத்துப்போய் ராவணனுடைய ஸிம்ஹாஸனத்தில் வைத்து, யதோக்தமாய் அபிஷேகம் செய். ராவணனுடைய தம்பியை லங்கையில் அபிஷேகஞ்செய்து பார்க்க வேண்டுமென்று எனக்குள் மிகவும் ஆசை வைத்திருந்தேன்" என்றார். ('என்னிடத்தில் அநுராகமுள்ளவ'னென்றதால் மித்திரனுடைய கடமையும், 'பக்திவைத்தவ'னென்றதால் தாஸனுடைய கடமையும், 'உபகாரம் செய்தான்' என்றதால் இவ்விரண்டிற்கும் ராவணவதமென்ற காரியமே முடிவென்றும், 'இது எனக்குப் பெரும் ஆசை' யென்றதால் பகவானுக்குத் தன்னைச் சரணமடைந்த விபீஷணனுடைய மனோரதத்தை நிறைவேற்றுவதே ராவணனை ஜயித்ததற்கு பிரதானமான பிரயோஜனமென்றும் தெரிகிறது.)

லக்ஷ்மணன் "உத்திரவுப்படி செய்கிறேன்" என்று, அடங்கா மகிழ்ச்சியுடன் ஸுவர்ண குடங்களை எடுத்து, மனோவேகமாய்ச்

செல்லும் வானரர்களிடத்தில் கொடுத்து, ஸமுத்திர ஜலத்தைக் கொண்டுவரும்படி கட்டளையிட்டார். சொல்லி முடித்தவுடன் அந்த வானர சிரேஷ்டர்கள் நான்கு ஸமுத்திரங்களிலிருந்தும் புண்ய தீர்த்தங்களைக் கொண்டுவந்தார்கள். பிறகு, விபீஷணனை ஓர் உத்தமமான ஆஸனத்தில் வீற்றிருக்கச் செய்து, லக்ஷ்மணன் ஒரு கடத்தின் ஜலத்தை அவனுடைய தலையில் அபிஷேகம் செய்தார். மற்ற வானராதிபதிகள் இதர கடங்களிலிருக்கும் புண்ய ஜலத்தால் முறையே அபிஷேகம் செய்தார்கள். இப்படி லங்கையில் ஸகல வானரர்களும் ராக்ஷஸர்களும் ஆனந்தத்துடன் பார்த்துக்கொண்டிருக்க, ராமனுடைய ஆக்ஞையால் லக்ஷ்மணன் சுத்தமான மனத்தையுடைய விபீஷணனை லங்காராஜ்யத்திற்கு அதிபதியாய் வேத விதிப்படி பட்டாபிஷேகம் செய்வித்தார். (ராமனுடைய உத்திரவானபின் விபீஷணன் முதலியவர்களுடன் லக்ஷ்மணன் லங்கைக்குள் பிரவேசித்தார். 'சுத்தமான மனத்தையுடைய' என்றதால், ராமனுடைய ஆக்ஞையைத் தட்டக்கூடாதென்று விபீஷணன் லங்காராஜ்யத்தை ஒப்புக்கொண்டானேயொழிய, எப்பொழுதும் அவருக்குக் கைங்கரியம் செய்து கொண்டிருப்பதையே தனக்குப் பரம பிரயோஜனமாய் எண்ணினவனென்று தெரிகிறது.) விபீஷணனுடைய மந்திரிகளும், அவனிடத்தில் பக்தி வைத்த மற்ற ராக்ஷஸர்களும் அவனுக்கு அபிஷேகமானபொழுது அளவற்ற ஆனந்தமடைந்தார்கள். இப்படி அந்த மஹாராஜ்யத்தை ராமனிடத்திலிருந்து பெற்று, பிரஜைகளை க்ஷேமம் விசாரித்து, யுத்தத்தில் அவர்களுடைய பந்துக்கள் இறந்ததைப்பற்றி அவர்களுக்கு ஆறுதல் சொல்லிவிட்டு, விபீஷணன் ராமனிருக்குமிடத்திற்கு வந்தான். அப்பொழுது அந்த நகரவாஸிகள் அக்ஷதைகளையும் மோதகங்களையும் பொரிகளையும் உத்தமமான புஷ்பங்களையும் விபீஷண மஹாராஜாவிற்குக் காணிக்கையாய் வைத்தார்கள். அவன் அவைகளைப் பெற்றுக்கொண்டு, அந்த மங்களத் திரவியங்களையெல்லாம் ராமலக்ஷ்மணர்களுக்கு ஸமர்ப்பித்தான். அவனுடைய கோரிக்கைகள் நிறைவேறி, மனம் ஸந்தோஷமடைந்ததைக் கண்டு, ராமன் அவனைத் திருப்தி செய்வதற்கு அவைகளைப் பெற்றுக் கொண்டார்.

பிறகு, பர்வதத்தைப்போல் தன் ஸமீபத்தில் கைகூப்பி வணக்கமாய் நின்றுகொண்டிருந்த ஆஞ்ஜநேயரைப் பார்த்து, "வாயுபுத்திர! விபீஷண மஹாராஜாவிடத்தில் உத்திரவு பெற்றுக் கொண்டு லங்கைக்குப் போ. அவனுடைய அனுமதியால் ராக்ஷஸ பதியின் அந்தப்புரத்தில் பிரவேசித்து, ஜானகியிருக்குமிடத்திற்குச் சென்று, நமது ஜயத்தை அவளுக்குச் சொல்லி ஸந்தோஷப்படுத்து. நானும் லக்ஷ்மணனும் ஸுக்ரீவனும் க்ஷேமமாயிருக்கிறோமென்றும் ராவணன் என்னால் கொல்லப்பட்டானென்றும் அவளுக்குச் சொல். இந்த ஸந்தோஷ ஸமாசாரத்தைக் கேட்ட பிறகு, அவள் சொல்லும் பதிலைக் கேட்டு இங்கே வா" என்றார்.

ப்ரியமேதது³தா³ஹ்ருத்ய மைதி²ல்யாஸ் த்வம் ஹரீஶ்வர |
ப்ரதிக்³ருஹ்ய ச ஸந்தே³ஶமுபாவர்திது மர்ஹஸி ‖ (26)

## ஸர்க்கம் 116

## ஹனுமானுக்கும் ஸீதைக்கும் ஸம்வாதம்

இதி ப்ரதிஸமாதி³ஷ்டோ ஹனுமாந் மாருதாத்மஜ: |
ப்ரவிவேஶ புரீம் லங்காம் பூஜ்யமானோ நிஶாசரை: ‖ (1)

ராமன் இப்படி உத்திரவு செய்தவுடன் ஆஞ்ஜனேயர், ஸகல ராக்ஷஸர்களும் வழிகாட்ட, லங்கையில் பிரவேசித்தார். ராவணனுடைய அந்தப்புரத்திற்குள் சென்று பார்க்கையில், தேகமெங்கும் புழுதி படிந்து ஸ்நானமில்லாமல் ஸந்தோஷமற்று, அசோக வனத்தில் விருக்ஷத்தினடியில், கோரராக்ஷஸிகளுக்கு நடுவில், ஏக்கம் பிடித்து, ரோஹிணி புதனால் பீடிக்கப்பட்டதுபோல், ஸீதை உட்கார்ந்திருக்கக் கண்டார். ஸமீபத்தில் போய், தன் பெயரைச் சொல்லி நமஸ்கரித்து, அவயவங்களை ஒடுக்கிக்கொண்டு, மனோவாக்குக்காயங்கள் அசைவற்று, ஹனுமான் பக்தியுடன் கைகூப்பி வாய்பொத்தி நின்றார். மஹாபலவானான அஞ்ஜனா புத்ரன் தனக்கெதிரில் நிற்பதைக் கண்டு, ஸீதை ஆச்சரியமடைந்து, ஒன்றும் தோன்றாமல் அசைவற்றிருந்தாள். பிறகு அவரை உற்றுப் பார்த்து, முகத்தில் விளங்கின காந்தியாலும் ஸந்தோஷத்தாலும் தானும் ஸந்தோஷமடைந்தாள். அவளுடைய முகம் ஆனந்தத்தாலும் தன்னைப் பார்த்ததாலும் மலர்ந்ததைக் கண்டு, அந்த வானர சிரேஷ்டன், ராமன் சொன்ன வார்த்தைகளை விஸ்தாரமாய்ச் சொல்ல ஆரம்பித்தார்.

"தேவி! ரகுவீரனும், லக்ஷ்மணனும் ஸுக்ரீவனும், விபீஷணனும் வானர ஸைன்யங்களும் க்ஷேமமாயிருக்கிறார்கள். பரம சத்ருவான ராவணன் மரணமடைந்தான். வந்த கார்யம் நிறைவேறிற்று. அவர்களுடைய க்ஷேமத்தை தங்களுக்கு தெரிவிக்கச் சொன்னார்கள். விபீஷணனுடைய ஸஹாயத்தாலும், வானரர்களுடைய பிரயத்னத்தாலும், லக்ஷ்மணனுடைய யுக்தியாலும் ராமன் ராவணனை யுத்தத்தில் ஜயித்துக் கொன்றார். தன் உத்தேசம் கைகூடி ஸந்தோஷமடைந்திருக்கிறார். தங்களுடைய க்ஷேமத்தை விசாரித்துப் பின்வருமாறு சொல்லச் சொன்னார். 'ஜானகி! உனக்குப் பிரியமான ஸமாசாரத்தைச் சொல்லுகிறேன். உன்னை ஹிம்ஸித்த ராவணன் மடிந்தான். உனக்கு விசேஷ பிரியமுள்ள காரியத்தைச் செய்யப்போகிறேன். இவ்வளவு கால

மாய் என்னைவிட்டுப் பிரிந்திருந்த உன்னை என்னுடன் சேர்த்துக் கொண்டு, அயோத்யைக்குத் திரும்பப் போகிறேன். பதிவிரதா தர்மத்தின் ரஹஸ்யத்தைப் பூர்ணமாயறிந்தவளே! நான் ராவணனை இவ்வளவு கஷ்டப்பட்டு ஜயித்ததும், நீ இதுவரையில் பிழைத்திராவிட்டால் வீணாகுமல்லவா? ஆகையால் இவ்வளவு மாதங்களாகச் சொல்ல முடியாத கஷ்டத்தையும் பயத்தையும் அனுபவித்துக் கொண்டு, நான் மறுபடியும் உன்னை மீட்க வருவேனென்ற நம்பிக்கையில்லாமல், ராவணன் பலவிதமாய் ப்ரார்த்தித்தும் வஞ்சித்தும் ஸ்தோத்ரம் செய்தும் என்னை இகழ்வாய்ப் பேசியும் உன்னைப் பயமுறுத்தியும் அவனுடைய இஷ்டத்திற்குட்படாமல், என்னிடத்தில் நம்பிக்கையையும் ப்ரீதியையும் வைத்து, ஒரே மனதாயிருந்து உயிரைக் காப்பாற்றினது, நான் செய்த பாக்யத்தின் ப்ரயோஜனந்தான். ஸகல கவலையும், துக்கமும், விசாரமும் ஒழிந்தன. நமக்குப் பூர்ண ஜயம் கிடைத்திருக்கிறது. ராவணன் இறந்தான்; நமக்குச் சத்ருவில்லை; இந்த லங்கை நமது வசத்திலிருக்கிறது. உன்னைச் சத்ருவிடத்திலிருந்து மீட்பேனென்று ப்ரதிக்ஞை செய்து, அதை நிறைவேற்ற வேண்டுமென்று கவலைகொண்டு, ஆகார நித்திரையில்லாமல், இன்று என் வார்த்தையை நிஜமாக்கினேன். மஹாஸமுத்திரத்தில் அணையைக் கட்டினேன். 'ராவணனுடைய க்ருஹத்தில் இன்னுமிருக்கிறோமே' என்று கவலைப்படாதே. லங்கையும் அதிலுள்ள ஸகல ஐச்வரியமும் இப்பொழுது விபீஷணனுடையவை. ஆகையால் விசாரப்படவேண்டாம். நீ உன் வீட்டிலிருப்பதாக எண்ணு. விபீஷணன் அதிசீக்கிரத்தில் உன்னைத் தரிசிக்க ஆவல்கொண்டு வருகிறான்' என்று தங்களிடத்தில் சொல்லச் சொன்னார்" என்று மாருதி தெரிவித்தார்.

அதைக் கேட்டு ஸீதை ஆனந்தத்தால் பூர்ண சந்திரனைப்போல் முகமண்டலம் விளங்கப் பரபரப்புடன் எழுந்திருந்து, ஒன்றும் தோன்றாமல் அசைவற்றுச் சும்மாவிருந்தாள். அதைக் கண்டு வாயுபுத்ரன், "தாயே! ஏன் என்னிடத்தில் பேசவில்லை? என்ன மனக்கவலை கொண்டிருக்கிறீர்கள்?" என்றார். பதிவிரதா தர்மத்தை அனுஷ்டிப்பவர்களுக்குள் உத்தமியான ஸீதை அளவற்ற ஸந்தோஷமடைந்து, ஆனந்தத்தால் குரல் தழதழத்து, "என் பர்த்தா ஜயமடைந்த ஸந்தோஷ ஸமாசாரத்தைக் கேட்டு, ஆனந்தம் மேலிட்டு, கொஞ்ச நேரம் வார்த்தை சொல்ல முடியாமல் மெய் மறந்தேன். என் புண்பட்ட ஹ்ருதயத்தில் அம்ருததாரை பொழிந்ததுபோல் இந்த ஸந்தோஷ ஸமாசாரத்தைச் சொன்ன உனக்கு, என்ன பதில் சொல்லுகிறதென்று நான் எவ்வளவு யோசித்துப் பார்த்தும் தெரியவில்லை. குழந்தாய்! உன்னால் நான் அடைந்த உபகாரத்திற்கும் ஆனந்தத்திற்கும் தகுந்த வெகுமானம் செய்வதற்கு இந்தப் பூமியில் யாதொரு வஸ்துவையும் காணேன்.



தங்கம் வெள்ளி பொன் பலவகை ரத்னங்கள் இந்த மூன்று லோகங்களிலுமுள்ள மற்ற வஸ்துக்கள் யாவும் அதற்குப் போதாது" என்றாள்.

அப்பொழுது ஹனுமான் தலைமேல் கைகூப்பி, வினயமாய் அவளுக்கெதிரில் நின்று, "பர்த்தாவின் க்ஷேமத்தையும் ஹிதத்தையும் ஜயத்தையும் ப்ரார்த்திக்கும் உத்தமியே! விசேஷப் ப்ரேமையுடன் கூடின இந்த வார்த்தையைத் தாங்கள் சொன்னதே எனக்குத் தகுந்த பதில் சொன்னதாயிற்று. என் யோக்யதைக்கு மிஞ்சின வெகுமானமாயிற்று. தங்களைத் தவிர இப்படி யார் சொல்லக்கூடும்? தாங்கள் சொன்ன வார்த்தை விசேஷ ஸாரமுள்ளது. 'நீ சொன்ன வார்த்தைக்குத் தகுந்த பதிலைக் காணேன்' என்ற வார்த்தை, தங்களுக்கு எல்லையற்ற ப்ரியமுண்டாயிற்றென்ற மஹா தாத்பரியத்தையுடையது. என்னிடத்தில் தங்களுக்குள்ள ப்ரீதியைத் தெரிவிக்கிறது. இதைக் கேட்டவுடனே ஸர்வோத்தமமான வஸ்துவை எனக்கு வெகுமானம் செய்ததாலுண்டாகும் ஆனந்தத்தை அடைந்தேன். பலவகை ரத்னங்களைக் குவியல்களாகக்கொடுத்தாலும், மூன்று லோகங்களின் அதிகாரத்தை எனக்குக் கொடுத்தாலும் இதற்கு ஈடாகுமா? தாங்கள் சொன்னதெல்லாம் எனக்கு இதுவரையிலுமே கிடைத்திருக்கின்றன. ரகுவீரன் ராவணனை ஸம்ஹரித்து, ஜயலக்ஷ்மியுடன் விளங்குவதை நான் பார்ப்பதாலுண்டான ஆனந்தத்திற்கு இவை ஸமமாகுமா?" என்றார்.

அதைக் கேட்டு ஜனகராஜபுத்திரி, மிகவும் சுபமான வார்த்தைகளைச் சொன்னாள். "ஆஞ்ஜநேய! வாக்யங்களுக்கேற்பட்ட தோஷங்கள் ஒன்றுமில்லாமல், ஸகல குணங்களும் பொருந்தினதாய், கேட்டவுடனே ஆனந்தத்தைக் கொடுப்பதாய், எட்டு அங்கங்களுடன் கூடின புத்தியை வெளிப்படுத்தக்கூடிய வார்த்தையை உன்னைத்தவிர வேறு எவன் பேசமுடியும்? (பிறர்சொன்ன அர்த்தத்தை மனத்தில் வாங்கிக்கொள்வது, அதை ஞாபகத்தில் வைத்துக்கொள்வது, வேண்டிய ஸமயத்தில் வருவித்துக்கொள்வது, யுக்தமான வார்த்தைகளால் பிறர்க்குச் சொல்வது, பிறருடைய அபிப்ராயத்தை ஊஹித்தறிவது, அதற்கு உடனே பதில் சொல்வது, வார்த்தைகளின் உட்கருத்தைஅறிவது, பதார்த்தங்களின் நிஜ ஸ்வரூபத்தை க்ரஹிப்பது, இந்தஎட்டும் உத்தமபுத்தியின் லக்ஷணங்கள்.) கேவலம் பேசுந்திறமையால் மாத்திரமல்ல, உத்தமகுணங்களாலும் நீ மேன்மையடைந்திருக்கிறாய். வாயுபகவானுக்குப் பிறந்த புத்திரனாயிருந்தும், ப்ராணிகளுக்கு உயிரைக்கொடுத்து ஆனந்தப்படுத்துவதில் அவரை மிஞ்சியிருக்கிறாய். எல்லோரிடத்திலும் அபாரகருணையை வைப்பதென்ற உத்தம தர்மத்திற்கு நீ இருப்பிடம். ப்ரயாஸங்களைப் பொறுப்பது, யுத்தத்தில் உத்ஸாஹம்,

சாஸ்த்ரஞானம், தேகவலிமை, பராக்ரமம், ஸாமர்த்யம், பிறரை ஜயிக்கும் சக்தி, அபராதங்களைப் பொறுப்பது, பிரபாவம், ஒன்றிலும் கலங்காத தைரியம், வினயம், இன்னும் அநேக உத்தம குணங்கள் உன்னை ஆசிரயித்து விசேஷமாய் விளங்குகின்றன. உன்னிடத்தில் இல்லாத குணங்களைக் கல்பித்து, ஸ்தோத்ரம் செய்வதாய் எண்ணக்கூடாது" என்றாள்.

அதைக் கேட்டு ஹனுமான் சற்றும் கர்வம் கொள்ளாமல், வெகு வணக்கமாய்த் தலைமேல் கைகூப்பி, ஸீதைக்கெதிரே நின்று 'தாயே! இதோ இருக்கும் ராக்ஷஸிகள் கோரரூபிகள்; குரூர ஸ்வபாவத்தையுடையவர்கள்; கடுமையான பார்வையையும் இரக்கமில்லாத நடத்தையையுமுடையவர்கள்; பிறர் கேட்டு நடுங்கும்படி பேசுகிறவர்கள். தாங்கள் பர்த்தாவையே தெய்வமாய்ப் பாவித்து, அவரை விட்டுப்பிரிந்து, அசோகவனத்தில் ராவணனால் காவலில் வைக்கப்பட்டுச் சொல்லமுடியாத கஷ்டங்களை அனுபவித்துக்கொண்டிருக்கும் பொழுது இவர்கள் தங்களை நிந்தித்தார்கள்; அதட்டினார்கள்; பயமுறுத்தினார்கள்; அவமானம் செய்தார்கள்; சொல்லத்தகாத வார்த்தைகளைச் சொன்னார்கள்; கொல்ல ஓடி வந்தார்கள்; நான் எல்லாவற்றையும் ப்ரத்யக்ஷமாய் பார்த்துக் கொண்டிருந்தேன். அப்படிப் பார்க்காத ராமலக்ஷ்மணர்களுக்காவது, ஸுக்ரீவன் மற்ற வானரர்களுக்காவது, விபீஷணனுக்காவது, என்னைப்போல் இவர்களிடத்தில் கோபம்கொள்வதற்கு நியாயமில்லை. ஆகையால் உங்களை மிரட்டிய இந்த ராக்ஷஸிகள் எல்லோரையும் கொல்ல வேண்டுமென்று அளவற்ற ஆசை கொண்டிருக்கிறேன். உத்திரவு கொடுங்கள். நான்கேட்கும் வரமும் தாங்கள் எனக்குச்செய்யக்கூடிய வெகுமானமும் இதுதான். இவர்களைக் கைகொண்டமட்டும் அறைகிறேன்; முழங்கால்களால் இடிக்கிறேன்; கடிக்கிறேன்; காதுகளையும் மூக்குகளையும் கிழிக்கின்றேன்; தலைமயிர்களைப் பற்றி இழுத்து விடுகிறேன்; நகங்களால் கிழிக்கிறேன்; கன்னத்தில் அடிக்கிறேன்; உயரக்கிளம்பி, அவர்களின்மேல் குதிக்கிறேன்; கைகளால் இடித்துப் பூமியில்தள்ளி, முஷ்டிகளால் குத்திக் கொல்லுகிறேன். இவர்கள் தங்களுக்குப் பரம அபகாரம் செய்த துஷ்டைகளல்லவா? இவர்களைப் பலவிதமாய் ஹிம்ஸித்துக் கொல்லுகிறேன்; இப்படிச் செய்வது மிகவும் அவசியம்; தங்களுக்கு இவர்கள் ஸஹிக்க முடியாத அபராதிகளல்லவா'' என்றார்.

பொறுமை கருணை முதலிய உத்தம குணங்களால் நிகரில்லாத கீர்த்தியடைந்த ஜகன்மாதாவான ஸீதை அதைக் கேட்டு, உத்தம தர்மத்திற்கு அனுகுணமான வார்த்தைகளைச் சொன்னாள். "வானர ஸ்ரேஷ்ட! இவர்கள் அரசனுடைய வேலைக்காரிகள்; ஆகையால் ஸ்வாதீனமற்றவர்கள்; அரசனால் ஏவப்பட்ட கார்யங்



இமாஸ்து க²லு ராக்ஷஸ்யோ யதி³ த்வமநுமந்யஸே ।
ஹந்துமிச்சாமி தா: ஸர்வா யாபி⁴ஸ்த்வம் தர்ஜிதா புரா ॥ —யு. 116 ஸ—36 ச.

"ஆகையால் உங்களை மிரட்டிய இந்த ராக்ஷஸிகள் எல்லோரையும் கொல்ல வேண்டுமென்று அளவற்ற ஆசை கொண்டிருக்கிறேன். உத்திரவு கொடுங்கள்." (பக்கம் 424 பார்க்க)

Notes : This Blank Page has also to be counted as a another page Number.

It is intentionally left blank after Picture Sketches.!

Released by Maran's Dog ,Toronto, Canada



களையே செய்கிறவர்கள்; அப்படிச் செய்யாவிட்டால் தண்டிக்கப் படக்கூடியவர்கள்; ராவணனுடைய வேலைக்காரிகளிடத்தில் எவனாவது கோபங்கொள்வானா? இவர்களைச் சொல்லி பிரயோஜனமென்ன? நான் பூர்வஜென்மங்களில் செய்த பாபங்களின் பலனாக, இந்த ஜன்மத்தில் இவ்விதமான கஷ்டங்களை அனுபவிக்கும்படி நேர்ந்தது. நான் செய்த கர்மங்களை நானே அனுபவிக்க வேண்டுமல்லாமல் பிறர் அனுபவிப்பார்களா? இப்படிக் கஷ்டதசையை நான் அடையவேண்டுமென்றும், அந்தக் கஷ்டங்களை இவர்களால் நான் அனுபவிக்கவேண்டுமென்றும் என் விதி. இப்படி இதற்கு முன்பே நான் நிச்சயித்து என் மனத்தை ஸமாதானப்படுத்திக் கொண்டிருக்கிறேன். இப்படிப்பட்ட ஆபத்தைத் தடுக்க எனக்கு அப்பொழுது சக்தியில்லை. பிறருடைய துக்கங்களைப் பார்த்து ஸஹிக்காத நான், இவர்கள் கஷ்டப்படுவதை பார்க்க முடியுமா? ஆகையால் இவர்களிடத்தில் எனக்குள்ள கிருபையே என்னை அப்பொழுதும் தடுத்தது; இப்பொழுதும் தடுக்கிறது. இவர்களை நாசம் செய்ய எனக்கு எண்ணமிருந்தால் அப்பொழுதே இவர்களை எரித்திருக்கமாட்டேனா? ராவணனால் ஏவப்பட்டு இந்த ராக்ஷஸிகள் என்னை ஹிம்ஸித்தார்கள்; அவன் இறந்த பிறகு அப்படிச் செய்யவில்லையே? ஒருவேளை இவர்கள் ஸ்வதந்திரமுடையவர்களாய் வேண்டுமென்றே இப்படி அபகாரம் செய்திருந்தாலும், நாம் அதைப் பொறுக்கவேண்டியதுதான்.

முன்னொரு காலத்தில் ஒரு வேடன் புலியால் துரத்தப்பட்டு ஒரு மரத்தில் ஏறிக்கொண்டான். அங்கே ஒரு கரடி உட்கார்ந்திருக்கக்கண்டு, அதைச் சரணமடைய, அது, "பயப்படாதே! உன்னை ரக்ஷிக்கிறேன்." என்று பிரதிக்ஞை செய்தது. சற்று நேரம் கழித்து வேடனுக்குத் தூக்கம் வர, கரடியின் மடியில் தலையை வைத்துக்கொண்டு தன்னை மறந்து நித்திரை செய்தான். அப்பொழுது, மரத்தடியிலிருக்கும் புலி, மரத்தின்மேலிருக்கும் கரடியைப் பார்த்து, "தோழா! நாமிருவரும் மிருகங்கள்; ஒரே ஜாதி; ஒரேயிடத்தில் வஸிப்பவர்கள்; கஷ்டஸுகங்களில் ஸம்பந்தப் பட்டவர்கள்; இவனோ மனுஷ்யன்; அதிலும் வேடன்; நமக்கு ஜன்மசத்ரு; நம்மைக் கொல்வதே இவனுக்கு ஜீவனம்; நமது ஜாதியானல்ல; நமது தேசத்தானல்ல; இவனை நீ இப்பொழுது காப்பாற்றினாலும், அதை மறந்து, நாளை உன்னைக் கொல்ல யத்தனிப்பான். ஆகையால் அவனை என்னிடத்தில் தள்ளிவிடு. நமக்கு ஒரு பெரிய ஆபத்து நீங்கும்" என்று பிரார்த்தித்தது. அதற்குக் கரடி, "இதென்ன அநியாயம்? நானிருக்குமிடத்தைத் தேடிவந்து, என்னைச் சரணமடைந்தவனை நான் கைவிட்டால், எனக்கு இந்த லோகத்தில் 'மித்ரத்ரோஹி' என்று ஜனங்களின் நிந்தையும், பரலோகத்தில் கோரமான நரகமும் கிடைக்கும். ஆகையால் நீ சொல்லும் வார்த்தைகள் என் செவியில் நுழையா"

என்றது. பிறகு வேடன் விழித்துக்கொண்டான். கரடிக்குத் தூக்கம் பிடித்து வேடனுடைய மடியில் தலையை வைத்துத் தூங்கிற்று. அப்பொழுது மரத்தடியிலிருந்த புலி, வேடனைப் பார்த்து, 'முட்டாளே! என்னிடத்திலிருந்து தப்புவதற்காகக் கரடியைச் சரணமடைந்தாயோ? அது உன் ஜாதியா? மித்ரனா? உன் சத்ரு. நான் இந்த மரத்தைவிட்டு எப்பொழுது போவேனென்று காத்துக் கொண்டிருக்கிறது. உடனே உன்னைக் கொன்றுவிடும். அது விழித்துக் கொள்ளுவதற்குமுன் அதை என்னிடத்தில் தள்ளிவிடு. நான் உனக்குப் பதிலாக அதைத் தின்றுவிட்டுப் போகிறேன். நம்மிருவருடைய காரியமும் நிறைவேறும்'' என்றது. வேடன் புலியின் வார்த்தையால் மயங்கி, கரடியிடத்தில் நம்பிக்கையில்லாமல் அதைக் கீழே தள்ளிவிட்டான். அது விழும்பொழுதே விழித்துக்கொண்டு. தன் ஜாதிஸ்வபாவத்தால் ஒரு கிளையைப் பிடித்துத் திரும்பவும் மரத்திலேறி உட்கார்ந்தது. அப்பொழுதே வேடன் தான் செய்த துரோகத்திற்காகத் தன்னைக் கரடி கொன்றுவிடுமென்று பயந்து நடுங்க, கரடி, "வேடா! பயப்படாதே. நீ செய்த அபகாரத்தை நான் நினைக்கவேமாட்டேன். நான் சொன்ன வார்த்தையையும் தவறமாட்டேன்'' என்றது.

அப்பொழுது புலி, "தோழா! என் பேச்சு நிஜமாயிற்றா? இவன், செய்த நன்றி மறந்த மித்ரத்துரோகியென்று இப்பொழுதாவது தெரிந்ததா? கொஞ்சம்கூட இரக்கம் வைக்காமல் இவனை என்னிடத்தில் தள்ளிவிடு'' என்றது. அதற்குக் கரடி, "துஷ்ட ஸ்வபாவமுள்ளவர்கள் பிறர்க்கு அபகாரம் செய்தால், விவேகி அவர்களிடத்தில் கோபிப்பானா? அவர்களுக்குப் பதில் அபகாரம் செய்ய நினைப்பானா? நான் செய்த பிரதிக்ஞையைக் காப்பாற்றுவது பெரிதேயல்லாமல் என் உயிர் பெரிதல்ல. பிராணிகளுக்கு ஸத்தியமல்லவா பூஷணம்'' என்று மறுமொழி சொல்லி, தன்னைப் புலி எவ்வளவு பிரார்த்தித்தும் அதற்குட்படாமல், அன்று ராத்ரி முழுவதும் வேடனைக் காப்பாற்றிற்று.

(ஸுக்ரீவனைப் பார்த்து ராமன் புறாவின் விருத்தாந்தத்தைச் சொன்னபடி, ஸீதையும் கரடியின் விருத்தாந்தத்தை உதாஹரணமாய்க் காட்டுகிறாள். ஸீதையின் அபயப்ரதான ச்லோகம் இதுவே.)

"உன் எண்ணப்படி இந்த ராக்ஷஸிகள் பாபிகளாயிருக்கட்டும்; என் எண்ணப்படி நல்லவர்களாயிருக்கட்டும். அதை நான் விசாரிக்கவேண்டியதென்ன?

ராக்ஷஸர்கள் நினைத்த ரூபங்களை எடுக்கக்கூடியவர்கள்; ஆயினும் நீ அவர்களிடம் இரக்கம் கொள்ள வேண்டும். குற்றம் செய்யாதவர் உலகில் யார்? க்ரூரமாயிருப்பதே அவர்களுடைய ஜாதி ஸ்வபாவம்; ப்ராணிகளை ஹிம்ஸிப்பதே அவர்களுக்கு ஆனந்தம்; அவர்கள் பாபங்களைச் செய்வது ஆச்சரியமல்ல. ஆனாலும் அவர்களுக்கு யாதொரு கெடுதியையும் செய்யக்கூடாது'' என்றாள்.



மஹாபுத்திமானான ஹனுமான் ஸீதையின் வார்த்தைகளால் அவளுடைய அபிப்பிராயத்தை அறிந்துகொண்டு, அபார கருணையால் நிகரற்ற கீர்த்தியைப் பெற்ற ஜகன்மாதாவும், பரம புருஷனுக்கேற்ற பத்தினியுமான ஸீதையைப் பார்த்து, "தாயே! ரகுநாதனுக்குத் தாங்களே தர்ம பத்னி; அவர் அனுஷ்டிக்கும் சரணாகத ரக்ஷண தர்மம் தங்களால் விசேஷமாய் பிரகாசிக்கிறது. அவருக்கு ஏற்பட்ட கீர்த்தியெல்லாம் தங்களாலல்வா? தாங்கள் அவருடனிருக்கத் தகுந்தவர்களேயல்லாது என்னைப்போன்ற மூர்க்கனுக்கு அந்த யோக்யதையில்லை. ஆகையால் எனக்கு உத்தரவு கொடுங்கள். ராகவனுக்குப் பதில் சொல்லி அனுப்புங்கள். நான் ரகுவீரனிருக்குமிடத்திற்குப் போகிறேன்'' என்றார். அதற்கு ஜானகி, வானரோத்தம! என் பர்த்தாவைத் தரிசிக்க விரும்புகிறேன்'' என்றாள். அந்த வார்த்தையைக் கேட்டவுடன் ஆஞ்ஜனேயருக்குத் தேஜஸும் காந்தியும் விருத்தியாய், "தாயே! பூர்ண சந்திரனைப்போல் பார்ப்பவர்களுடைய ஹிருதயத்தை அமிருத தாரைகளால் குளிரச் செய்யும் ராமனுடைய திருமுகமண்டலத்தை லக்ஷ்மண ஸமேதராய்ப் பார்க்கப் போகிறீர்கள். அவர் சத்ருக்களை ஜயித்து ஸுக்ரீவன் விபீஷணனென்ற மித்திர ரத்னங்களுடன் பிரகாசிக்கிறார். இந்திராணி இந்திரனைப் பார்த்ததுபோல், தாங்கள் ராமசந்திரனைத் தர்சிக்கலாம்' என்றார். உடனே ஸீதையினுடைய ரூபம் ஸாக்ஷாத் மஹாலக்ஷ்மியைப்போல் தேஜஸால் ஜ்வலித்தது; ஆஞ்ஜனேயரும் அதிவேகமாய் ராமனிருக்குமிடத்திற்குத் திரும்பி வந்தார்.

தாமேவமுக்த்வா ராஜந்தீம் ஸீதாம் ஸாக்ஷாதி$^{3}$வ ச்ரியம் |
ஆஜகா$^{3}$ம மஹாவேகே$^{3}$ா ஹநுமாந் யத்ர ராக‘வ: ‖ (56)

## ஸர்க்கம் 117

## ஸீதையை அழைத்து வந்தது

ஸ உவாச மஹாப்ராஜ்ஞ மபி‘க$^{3}$ம்ய ப்லவங்க$^{3}$ம: |
ராமம் வசநமர்த$^{2}$ஜ்ஞோ வரம் ஸர்வத‘நுஷ்மதாம் ‖ (1)

மஹாபுத்திமானும் யுத்த வீரர்களுக்குள் சிரேஷ்டருமான ஆஞ்ஜனேயர் ராமனிடத்திற்குச் சென்று, "பிரபோ! நாம் எதற்காக இந்தப் பிரயத்னத்தைச் செய்தோமோ, எதற்காக ஸமுத்திரத்தில் அணையைக் கட்டி, லங்கையை முற்றுகையிட்டு, ராக்ஷஸ ஸைன்யத்தை அழித்து, ராவணனைக் கொன்றோமோ, அந்த

பிரயோஜன ரூபமான ஸீதாதேவிக்குத் தாங்கள் தரிசனம் கொடுக்க வேண்டியது. அவள் சோகத்தால் மனம் வாடி, கண்களிலிருந்து நீர் தாரைதாரையாய்ப் பெருக, அசோகவனத்தில் உட்கார்ந்திருக்கையில், நான் சென்று, தாங்கள் ராவணனை ஸம்ஹரித்ததை விக்ஞாபனம் செய்தேன். அதைக் கேட்டுப் பரமானந்தமடைந்தாள். என்னிடத்தில் முன்பு வைத்த விச்வாஸத்தால், 'ஆஞ்ஜநேய! ஒருவராலும் வெல்லக்கூடாத ராக்ஷஸர்களை ஸம்ஹரித்து ஜயலக்ஷ்மியுடன் விளங்கும் என் நாதனையும் லக்ஷ்மணனையும் தரிசனம் செய்ய விரும்புகிறேன்' என்று விக்ஞாபனம் செய்தாள்'' என்றார்.

தர்மாத்மாக்களில் சிரேஷ்டரான ரகுநாதன் அதைக் கேட்டு கண்களில் நீர் ததும்ப யோசனையில் ஆழ்ந்தார். "ராவணனுடைய கிருஹத்தில் இவ்வளவு காலம் வஸித்த ஸீதையை நான் சேர்த்துக்கொண்டால், எல்லையற்ற லோகாபவாதத்திற்காளாவேன். தோஷமற்ற ஜானகியைத் தள்ளிவிட்டால் மஹாபாபத்திற்காளாவேன். இந்த ஸங்கடத்திற்கு என்ன செய்யலாம்? இதுவரையில் சொல்ல முடியாத கஷ்டங்களை அனுபவித்த ஸீதையின் மனத்தை மறுபடியும் புண்படுத்தவேண்டியிருக்கிறதே'' என்று உஷ்ணமாய்ப் பெருமூச்சுவிட்டுக்கொண்டு, பூமியைப் பார்த்த வண்ணமேயிருந்தார். பிறகு ஸீதையை அழைத்துவரத் துடிதுடித்துக்கொண்டிருந்த விபீஷணனைப் பார்த்து, "ஸீதைக்கு மங்கள ஸ்நானம் செய்வித்து உத்தமமான பரிமளத்திரவியங்களாலும் ஆபரணங்களாலும் அலங்கரித்துச் சீக்கிரம் அழைத்துவா'' என்றார்.

உடனே விபீஷணன் பரபரப்புடன் ஓடி, அந்தப்புரத்தில் பிரவேசித்து, தன் வேலைக்காரிகளின் மூலமாய், "அம்மணி! தாங்கள் மங்களஸ்நானம்செய்து உத்தமமான பரிமளத்திரவியங்களாலும் ஆபரணங்களாலும் அலங்கரிக்கப்பட்டு இந்த வாஹனத்தில் ஏறுங்கள். தங்களுடைய பர்த்தா தங்களைப் பார்க்கவேண்டுமென்று விரும்புகிறார்'' என்று தெரிவித்தான். ஸீதை, "குழந்தாய்! அப்படியல்ல. இப்பொழுது இருக்கிறபடியே என் பர்த்தாவைப் பார்ப்பது நலம்'' என, விபீஷணன், "தங்களுக்குப் பர்த்தாவும் அரசனுமான ரகுநந்தனனுடைய உத்திரவுப்படி நடப்பதே உசிதமென்று எனக்குத் தோன்றுகிறது'' என்றான். பர்த்தாவையே தெய்வமாய்ப் பாவித்து, அவரிடத்திலுள்ள பக்தியையே விரதமாய்க்கொண்டு, மஹா உத்தமியென்று புகழ்பெற்ற ஜானகி, "அப்படியே செய்கிறேன்'' என்றாள்.

பிறகு ஸீதைக்கு மங்களஸ்நானம் செய்வித்து, விலையுயர்ந்த ஆபரணங்களாலும் ஆடைகளாலும் ராக்ஷஸகன்யைகளால் அலங்கரித்து, விபீஷணன் ஸூரியனைப்போல் ஜ்வலிக்கும் பல்லக்கில் ஸீதையை ஏற்றுவித்து, அதற்கு வெளியில் நேர்த்தியாய்த் திரை



ஆரோப்ய ஶிபி3காம் தீ3ப்தாம் பரார்த்4யாம்ப3ர ஸம்வ்ருதாம் |
ரக்ஷோபி4ர் ப3ஹுபி4ர் கு3ப்தாம் ஆஜஹார விபீ4ஷண: ॥ —யு. 117 ஸ—15 சு.

விபீஷணன், ஸூரியனைப்போல் ஜ்வலிக்கும் பல்லக்கில் ஸீதையை ஏற்றுவித்து, அதற்கு வெளியில் நேர்த்தியான திரை போடுவித்து ராக்ஷஸ வீரர்கள் ஆயுதபாணிகளாய் நான்கு புறங்களிலும் காத்துவர, ராமன் இருக்குமிடத்திற்கு அழைத்து வந்தான். (பக்கம் 430 பார்க்க)

Notes : This Blank Page has also to be counted as a another page Number.

It is intentionally left blank after Picture Sketches.!

Released by Maran's Dog ,Toronto, Canada



போடுவித்து, ராக்ஷஸவீரர்கள் ஆயுதபாணிகளாய் நான்கு புறங்களிலும் காத்துவர, ராமன் இருக்குமிடத்திற்கு அழைத்து வந்தான். அவன் வந்ததை அறிந்தும், ஆழ்ந்த யோசனையிலிருக்கும் ராமனை ஸமீபித்து நமஸ்கரித்து, "பிரபோ! உத்திரவுப்படி தங்களுடைய தேவியை அழைத்து வந்திருக்கிறேன்" என்று தெரிவித்தான். அதைக் கேட்டு ரகுநந்தனனுக்கு, "இவ்வளவு சிரமப்பட்டு ராவணனைக் கொன்று ஸீதையை மறுபடியும் பார்த்தோமல்லவா" என்று ஆனந்தமுண்டாயிற்று; "ராவணனுடைய கிருஹத்தில் இவ்வளவு காலம் இருந்ததைப் பற்றி லோகத்தார்கள் என்ன சொல்லுவார்களோ" என்று முகம் வாடிற்று. இனி அவளிடத்தில் கடும் வார்த்தைகளைச் சொல்வதற்கு வேண்டிய ரோஷத்தையும் வருவித்துக்கொண்டார். பிறகு மேல் நடக்க வேண்டிய காரியத்தை யோசித்துக்கொண்டு, ஸந்தோஷமற்றவரைப்போல் அபிநயித்து, ஸமீபத்திலிருந்த விபீஷணனைப் பார்த்து, "ராக்ஷஸபதே! குழந்தாய்! நீ எப்பொழுதும் என் ஜயத்தையும் க்ஷேமத்தையும் கோருகிறவன்; வைதேஹி சீக்கிரமாய் என் ஸமீபத்தில் வரட்டும்" என்றார். உடனே விபீஷணன் அங்கிருந்த ஜனங்களை அப்புறம் விலகச்செய்தான். அந்தப்புர உத்யோகஸ்தர்கள் பிரம்புகளால் அங்கிருந்த ராக்ஷஸர்களையும், கரடிகளையும் வானரர்களையும் தூரத்தில் ஒதுக்கினார்கள். அப்பொழுது ஸமுத்திரத்தில் பெருங்காற்றுக் கிளம்புவதுபோல் பெருங்கூச்சலுண்டாயிற்று.

அதைக் கண்டு ராமன், வானரர்களிடத்திலுள்ள விசேஷ ஸ்நேஹத்தால் அதைப் பொறுக்காமல், அவர்களைத் தடுத்து, மஹா புத்திமானான விபீஷணனை நெருப்புப் பொறிபறக்கும் கண்களால் எரித்துவிடுகிறவரைப்போல் கோபத்துடன் பார்த்து, நான் இருப்பதைக் கொஞ்சம்கூட லக்ஷ்யம் செய்யாமல் இவர்களை இப்படி உபத்திரவிக்கத் துணிந்தாயல்லவா? போதும், நிறுத்து; இவர்களை யாரென்று நினைத்தாய்? என்னைச் சேர்ந்தவர்கள்; என் உயிருக்கு ஸமானர்கள். வீடுகளும், வஸ்திரங்களும், திரைகளும், பரிவாரங்களும் ஜனங்களை அப்புறம் துரத்துவதும் இன்னும் மற்ற ராஜோபசாரங்களும் ஸ்த்ரீகளுக்குக் காவல் என்று நினைத்தாயோ? அவர்களுடைய நல்ல நடத்தையே அவர்களுக்குக் காவல். மனம் காவலோ மதிள் காவலோ? விசேஷ கஷ்டங்கள் நேர்ந்தபொழுதும், இஷ்ட ஜனங்கள் இறந்தபொழுதும், ராஜ்யத்திற்கு அபாயங்கள் நேர்ந்தபொழுதும், யுத்த பூமியிலும், ஸ்வயம்வர காலத்திலும், யாகசாலையிலும், விவாஹ ஸமயத்திலும் ஸ்த்ரீகளை எல்லோரும் பார்க்கலாம்; அதனால் தோஷமில்லை. இவள் இப்பொழுது யுத்த பூமியில் வந்திருக்கிறாள்; ஸமீபத்தில் விசேஷ கஷ்டத்தை அனுபவிக்கப்போகிறாள்; மேலும் என் ஸமீபத்திலிருக்கிறாள்; இவளை எல்லோரும் பார்ப்பதால் தோஷமில்லை; சீக்கிரமாய் இங்கே அழைத்து வா. எனக்காக உயிரைக் கொடுத்த என் ஸ்நேஹிதர்

களுக்கு நடுவில் நானிருக்கும்பொழுதே ஸீதை என்னைப் பார்க்கட்டும். இவர்களெல்லோரும் இவ்வளவு கஷ்டப்பட்டதும், வீடு வாசல்களை விட்டு இங்கே வந்ததும், கோரமான ராக்ஷஸர்களால் அடிபட்டு மடிந்ததும் எதற்காக? இவளுடைய கஷ்டத்தை நிவர்த்தி செய்து இவளுக்குப் பிராண தானம் செய்வதற்கல்லவா? அப்படிப் பட்டவர்கள் இவளுக்குப் பிதாக்களல்லவா? தகப்பன் பெண்ணைப் பார்ப்பதில் தோஷமென்ன?" என்றார்.

விபீஷணன் அதைக் கேட்டுப் பயந்து நடுநடுங்கி, மிகவும் வணக்கமாய் ஸீதையை ராமனுடைய ஸமீபத்தில் அழைத்து வந்தான். லக்ஷ்மணனும் ஆஞ்ஜனேயரும் அவருடைய வார்த்தைகளைக் கேட்டு, "இதென்ன விபரீதம்! ரகுநாதன் ஸீதையைவிட்டுப் பிரிந்து சோகத்தால் தபித்துப் பிரலாபிப்பதைப் ப்ரத்யக்ஷமாய்ப் பார்த்தோம். அவளுக்காக ஸகல லோகங்களையும் ஸம்ஹரிக்க முயன்ற ரகுவீரன் இப்பொழுது பேசும் வார்த்தைகளைக் கேட்டால் ஸீதையிடத்தில் வெறுப்படைந்து அவள் தனக்கு வேண்டியதில்லையென்று நிச்சயம் செய்தவர் போலிருக்கிறதே" என்று மிகவும் வருத்தப்பட்டார்கள்.

அப்பொழுது ஸீதை வெட்கத்தால் எண்சாணுடம்பும் ஒடுங்கி, "ஐயோ! இவ்வளவு காலம் கழித்து, இவ்வளவு கஷ்டப்பட்டு, என் நாதனைப் பார்க்கக் கிடைத்ததே என்று ஸந்தோஷப்பட்டு, பார்த்ததும் பார்க்காததுமாயிருக்க, ஆரம்பத்திலேயே இடி விழுந்ததுபோல் இந்தக் கோபவார்த்தைகளைக் கேட்கலாயிற்றே" என்று வருந்தி, புருஷர்களுக்கெதிரில் வர வெட்கப்பட்டு, வஸ்திரத்தால் முகத்தை மறைத்துக்கொண்டு மெள்ளமெள்ள ராமனுடைய பக்கத்தில் வந்து, "ஆர்யபுத்ர!" என்றுகூறி, சோகத்தால் நெஞ்சடைத்து, பேசமுடியாமல் கண்களிலிருந்து நீர் தாரை தாரையாய்ப் பெருக அழுதாள். இப்படிப்பட்ட கோரயுத்தத்தில் மஹாப்ப்ரஸித்தி பெற்று, ஜயலக்ஷ்மி விளங்க, வீரலக்ஷ்மி ஜ்வலிக்க, தன் பர்த்தாவை அதுவரையிலும் பார்த்ததில்லை. ஆகையால் அளவற்ற ஆச்சரியத்துடன், "நமக்கு மானமும் பிராணனும் பர்த்தாவும் பந்துக்களும் கீர்த்தியும் போயினவென்று கை விட்டிருக்க, ஸகல ஆபத்துக்களும் அபாயங்களும், ஸூரியனைக்கண்ட பனிபோல் நீங்கினவல்லவா" என்று பரமானந்தத்துடனும், தன பதியையே தெய்வமென்று எண்ணினவளாகையால் அவரிடத்தில் வைத்த கரையில்லாத ஸ்நேஹத்துடனும், அவருடைய திவ்ய ஸௌந்தரியம் பொருந்தின முகத்தை நிமிர்ந்து பார்த்தாள். உதித்த பூர்ணசந்திரனைப்போல் அவருடைய முகமண்டலம் சிவந்திருந்தது. களங்கமற்ற சந்திரனைப் போல் அடுத்த க்ஷணத்தில் கோபத்தால் விகாரத்தை அடையும். வெகுகாலமாய் விட்டுப்பிரிந்த தன் பிராணநாயகனுடைய முகத்தை



ஏறிட்டுப்பார்த்து, ஸீதை ஸகல துக்கங்களையும் ஸகலக் கிலேசங்களையும் ஸகல சோகத்தையும் ஸகல தாபத்தையும் மறந்தாள்.

அத2 ஸமபநுத3ந் மந: க்லமம் ஸா
ஸுசிர மத்3ருஷ்ட முதீ3க்ஷ்ய வை ப்ரியஸ்ய |
வத3ந முதி3த பூர்ண சந்த்3ர காந்தம்
விமல ஶஶாங்க நிப4ாநநா தத3ாஸீத் || (37)

---

## ஸர்க்கம் 118

## ராமன் ஸீதையைக் கோபித்தது

---

தாம் து பார்ஶ்வஸ்தி2தாம் ப்ரஹ்வாம்
ராம: ஸம்ப்ரேக்ஷ்ய மைதி2லீம் |
ஹ்ருத3யாந்தர்க3த க்ரோதோ4
வ்யாஹர்து முபசக்ரமே || (1)

இப்படி வெட்கத்தால் தலைகுனிந்து, தன்னருகில் நிற்கும் ஸீதையைப் பார்த்து ராமனுக்குக் கோபம் பொங்கிற்று. "பெண்ணே! என் சத்துருக்களை ஜயித்தேன்; அவர்களுடைய ராஜதானியை எரித்தேன்; பழிதீர்த்தேன்; ஒரு க்ஷத்ரியவீரன் தனக்கு நேர்ந்த அவமானத்தைப் போக்க எதைச் செய்யவேண்டுமோ அதைச் செய்தேன். ஆனால் உன்னை மறுபடியும் அடைய இவ்வளவு சிரமப்பட்டேனென்று நீ எண்ணலாம். அது முற்றிலும் பிசகு. என் பிரயத்னங்கள் ஸபலமாயின; ராவணன் எனக்குச் செய்த அபராதத்திற்காக அவனைத் தண்டித்தேன். அவனுடைய வம்சமும் அவன் எனக்குச் செய்த அவமரியாதையும் இன்று ஒழிந்தன. என் வீரியத்தை ஸகல லோகங்களுக்கும் தெரிவித்தேன். நான் செய்த பிரதிக்ஞையை நிறைவேற்றினேன்; கவலையற்றேன். நானில்லாத வேளையில் சபல சித்தமுள்ள ராவணன் உன்னை அபகரித்தான். தெய்வ வசத்தால் நேர்ந்த அந்தக் கெடுதியை மனுஷ்யப் பிரயத்தனத்தால் விலக்கினேன். தனக்குச் செய்த அவமானத்தை தன் வீரியத்தால் நீக்காதவனுக்குப் புருஷார்த்தங்கள் கைகூடுமா? அவன் அல்ப சக்தியுள்ளவன். ஹனுமான் ஸமுத்ரத்தைத் தாண்டினதும் லங்கையை நாசம் செய்ததும் யுத்தத்தில் விசேஷ வீரிய கிருத்யங்களைச் செய்ததும் இன்று ஸபலமாயின. யுத்தத்தில் தன் பராக்கிரமத்தைக் காட்டி, எப்பொழுதும் எனக்கு ஹிதத்தையே ஆலோசிக்கும் ஸுக்ரீவனும் அவனுடைய ஸைன்யங்களும் எனக்காகப் பட்ட சிரமமெல்லாம் இன்று ஸபலமாயிற்று. நற்குணங்களற்ற தன் தமயனை விட்டுவந்து என்னை ஆச்ரயித்த விபீஷணனுடைய சிரமமும் இன்று பிரயோஜனமடைந்தது" என்று ரகுவீரன் சொல்லக் கேட்டு, காட்டில் புலி

களால் சூழப்பட்ட மான்குட்டியைப் போல் பயத்தால் மிரண்ட கண்களுடன், ஸீதை கலகலவென்று கண்ணீருதிர்த்தாள்.

ஜ்வலிக்கும் அக்னியில் ஏராளமான நெய்யை ஆஹுதி செய்தது போல், அதைக் கண்டு ராமனுக்குக் கோபம் அதிகரித்தது. புருவங்களை நெறித்து, ஸீதை தனக்கெதிரில் நிற்பதை விரும்பாமல் அவளைக் குறுக்காகப் பார்த்து, ஸகல வானரர்களும் ராக்ஷஸர்களும் கேட்டுக் கொண்டிருக்கையில் குரூரமான வார்த்தைகளால் அவளை நிந்தித்தார். "ஒருவன் தனக்குச் செய்த அவமானத்தைப் போக்குவதற்கு என்ன செய்ய வேண்டுமோ அதையெல்லாம் குறைவரச் செய்து முடித்தேன். பூர்வத்தில் இல்வலனென்ற அஸுரனால் பீடிக்கப்பட்டு ஜனங்கள் ஸஞ்சரிக்க முடியாத தெற்கு திசையை, ப்ரஹ்மக்ஞானியான அகஸ்தியமஹர்ஷி அவனைக் கொன்று அவனிடத்திலிருந்து மீட்டது போல், உன்னை அபகரித்த சத்ருவிடத்திலிருந்து உன்னை மீட்டேன். என் மித்ரர்களின் வீரியத்தால் யுத்தமென்ற ஸமுத்திரத்தைக் கடந்தேன். ஆனால் இவ்வளவும் உனக்காகச் செய்தேனென்று எண்ணாதே; நான் களங்கமற்ற இக்ஷ்வாகு வம்சத்தில் பிறந்தவன்; நிகரற்ற கீர்த்தி பெற்றவன்; என் க்ஷத்ரிய தர்மத்தை நிறைவேற்ற வேண்டியது; எனக்குச் செய்த அவமானத்தைப் போக்க வேண்டியது. துஷ்டனான ராவணனுடைய வீட்டில் வஸித்ததால் உன் நடத்தையைப் பற்றி ஸந்தேகம் ஏற்பட்டிருக்கிறது. கண் வலியால் வருந்துகிறவனுக்குத் தீபத்தின் வெளிச்சம் எப்படி விரோதமோ, ஸஹிக்க முடியாதோ, உபத்திரவிக்குமோ, அப்படி எனக்கெதிரில் நீ நிற்பது எனக்கு ஸஹிக்க முடியவில்லை; மிகுந்த உபத்திரவத்தை உண்டு பண்ணுகிறது. (நேத்திரத்தில் தோஷமேயொழிய தீபப்பிரகாசத்தில் தோஷமில்லை. அப்படியே ராமனுடைய மனத்தில் ஸந்தேகத்தால் தோஷம் ஏற்பட்டதேயொழிய ஸீதையிடத்தில் தோஷமில்லையென்று வால்மீகியின் கருத்து.) என் முன் நில்லாதே. உன்னால் எனக்கு ஆகவேண்டியது ஒன்றுமில்லை. இதோ பத்து திக்குகளிலும் தடையில்லாமல் ஸஞ்சரிக்கலாம். நான் உத்தரவு கொடுத்து விட்டேன். இஷ்டமான இடத்திற்குப் போகலாம். உத்தமமான வம்சத்தில் பிறந்து, நிகரற்ற தேஜஸும் வீரியமும் பொருந்தி, புருஷனென்று பெயர் வைத்துக் கொண்டிருக்கும் எவனாவது, துஷ்டனுடைய கிருஹத்தில் பத்து மாதங்கள் வரையில் அவனுடைய அதிகாரத்திற்கும் சக்திக்கும் கட்டுப்பட்டு வஸித்த தன் பார்யையை, மறுபடியும் சேர்த்துக் கொள்வானா? ராவணன் உன்னைத் தொட்டு மடியில் வைத்துக் கொண்டு போனான்; ஆசை பொழியும் நேத்திரங்களால் உன்னைப் பார்த்தான். களங்கமற்ற இக்ஷ்வாகு குலத்தில் பிறந்தவனென்று பெயர் வைத்துக் கொண்டு உன்னை இப்பொழுது சேர்த்துக் கொண்டால், ஒவ்வொரு பிராணியும் நிந்திக்காதா? என் குலதர்மத்தையும் கௌரவத்தையும் காப்பாற்ற உன்னைச் சத்ருவிடத்திலிருந்து மீட்டேன்; விசேஷ கீர்த்தியை ஸம்பாதித்தேன். உன்னிடத்தில் எள்ளளவும் எனக்கு ஆசையில்லை. இஷ்டமான இடத்திற்குப் போகலாம். நான் கோபத்தால் பதறிச் சொல்லவில்லை. 'இது சாந்தமாய் நெடுநேரம் ஆலோசித்துச் செய்த முடிவு. ஸ்த்ரீகள் ஒரு பொழுதும் ஸ்வதந்தரமாயிருக்கக் கூடாதென்ற சாஸ்திரப்படி, உன் புத்திரர்களுக்கு ஸமமான லக்ஷ்மணன், பரதன், சத்ருக்னன், ஸுக்ரீவன், விபீஷணன் முதலியவர்களுடைய கிருஹங்களில் எங்கே இஷ்டமோ அங்கே நீ வஸித்துக் கொண்டிருக்கலாம். நீ நிகரற்ற அழகுள்ளவள்; பார்ப்பவர்களுடைய மனத்தை அபகரிப்பவள்; ராவணன் உன் மேல் ஆசை வைத்து எடுத்துக் கொண்டு போனான், பத்து மாதங்கள் வரையில் அந்தப்புரத்தில் வைத்திருந்தான். ஸகல விதத்திலும் அவனுடைய வசத்திலிருந்தாய்; அவனுக்கு ஸ்வாதீனப்படாமலிருக்க முடியுமா?'' என்றார்.



தன் உயிரைக் காட்டிலும் தனக்குப் பிரியமான ராகவன், தன்னை விட்டுப் பிரிந்து நெடுநாளாகி, இனி அவரைப் பார்ப்போமா என்று முற்றிலும் ஆசைவிட்டுத் தவிக்கும் ஸமயத்தில், அவரை மறுபடியும் தெய்வ வசத்தால் பார்க்கும்படி கிடைத்தது. அவருடைய மதுரமான வார்த்தைகளால் அவருக்குத் தன்னிடத்தில் பிரியம் குறையவில்லை; எல்லையற்று அதிகரித்ததென்று அவர் சொல்லக் கேட்டுத் தன் தாபங்களை ஆற்றிக்கொள்வோமென்று ஆசையுடன் எதிர்பார்த்திருந்தாள். அப்படியிருக்கையில், கர்ணகடூரமான வார்த்தைகளை அவர் சொல்லவும் தான் கேட்கவும் நேர்ந்த விதியை நினைத்து, கண்ணீர் தாரை தாரையாப் பெருக, காட்டில் மதயானையால் அடித்து முறியடிக்கப்பட்ட இளம் மரத்தைப் போல் தவித்தாள்.

தத: ப்ரியார்ஹ ஶ்ரவணா தத3ப்ரியம்
ப்ரியாது3பஶ்ருத்ய சிரஸ்ய மைதி2லீ ||
முமோச பா3ஷ்பம் ஸுப4ருஶம் ப்ரவேபிதா
க3ஜேந்த்3ர ஹஸ்தாபி4ஹதேவ ஸல்லகீ || (26)

---

## ஸர்க்கம் 119

## ஸீதை அக்னிப்பிரவேசம் செய்தது

---

ஏவமுக்தா து வைதே3ஹீ பருஷம் ரோமஹர்ஷணம் |
ராக4வேண ஸரோஷேண ப்4ருஶம் ப்ரவ்யதி2தா ப4வத் || (1)

ரகுநந்தனன் வெகு ரோஷத்துடன் இப்படிக் கடுமையாய் மயிர்க் கூச்சமெடுக்கும்படி சொல்லக் கேட்டு, ஸீதை அளவற்ற துக்கமடைந்தாள். அப்படிச் சொன்னவர் தனக்குப் பிரியநாய

கன்; ஸகல விதத்திலும் தன்னை ரக்ஷிக்கக் கடமைப்பட்டவர்; அதுவரையில் தன் உயிரைப்போல் எல்லையற்று ப்ரீதியுடன் தன்னிடத்தில் நடந்து கொண்டவர்; அவர் தன்னைப் பார்த்தது முதல் புன்சிரிப்புடனும் ப்ரேமையுடனும் தன்னிடத்தில் பேசினதேயொழிய, கடுமையாகவாவது பிரியமில்லாமலாவது ஒரு வார்த்தை கூடப் பேசினதில்லை; தன் மாமனாரும் மாமியார்களும் மைத்துனன்களும் ராமனைவிட விசேஷப்ரீதியுடன் தன்னை வைத்து நடத்தி வந்தார்கள்; தனக்குப் பிதாவான மிதிலாதேசத்தரசன் வெகுநாள் ஸந்ததியில்லாமல் ஈச்வரகிருபையால் தனக்குக் கிடைத்த அருமைக் குழந்தையென்று எவ்வளவோ செல்வமாயும் விச்வாஸமாயும் வளர்த்து வந்தார். பரபுருஷர்களின் கண்ணில் பட்டு வழக்கமில்லாதவள்; கோடிகோடி வானரர்களும் ராக்ஷஸர்களும் கூடியிருக்கும் யுத்தகளத்தில் வந்து, அவர்களுக்குப் பிரபுவான தன் நாதன், அவர்களுக்கெதிரே, தன்னைக் க்ரூரமான வார்த்தைகளாலும் ஸந்தேகத்தாலும் அவமானப்படுத்தினதைப் பார்த்து ஸீதைக்கு வெட்கம் மேலிட்டு, எண்சாணுடம்பும் குறுகி, தலை குனிந்து, நாராசம் போன்ற அந்த வார்த்தைகளால் ஹிருதயம் பிளந்து, ஒன்றும் தோன்றாமல், கண்ணீருடன் சற்று நேரம் நின்றாள். பிறகு நேத்திரங்களைத் துடைத்துக் கொண்டு, சோகத்தால் நெஞ்சடைக்க, தழுதழுத்த குரலுடன், ராமனைப் பார்த்து, "நாத! இந்த வார்த்தைகளைத் தாங்கள் சொல்லத் தகுமா? நான் கேட்கத்தகுமா? மிகவும் கடுமையாயும், கேட்பதற்கு வெறுப்பாயுமிருக்கின்றன. தங்களுடைய குலத்தையும் கீர்த்தியையும் ஆசாரத்தையும் மறந்து, என் குலத்தையும் என் ஆசாரத்தையும் மறந்து, ஏதோ ஊரும் பேருமற்ற அல்பமனுஷ்யன் ஊரும் பேருமற்ற ஸாதாரண ஸத்ரீயைப் பார்த்து பேசுவது போல் பேசிவிட்டீர்களே! சுத்த வீரனென்று பெயர் வைத்துக் கொண்டிருக்கும் தங்களுக்கு இது அழகா? தாங்கள் நினைக்கிறபடி நான் அபராதியல்ல. மஹானுபாவ! நான் செய்த புண்ணியத்தின் மேல் ஆணையிட்டுச் சொல்லுகிறேன்; நம்புங்கள். ஸாதாரண ஸ்த்ரீயின் நடத்தையைப் பார்த்து ஸ்த்ரீஜாதி முழுவதும் அப்படியே இருப்பார்களென்று ஸந்தேகிக்கிறீர்கள். தாங்கள் என் ஸ்வபாவத்தை நன்றாய் அறிந்திருந்தால் இப்படிச் செய்யமாட்டீர்கள். உன்னை ராவணன் தொட்டெடுத்தானென்றீர்கள்; வாஸ்தவமே; நான் ஸ்த்ரீ; அநாதை; அவனோ ராக்ஷஸன்; அளவற்ற பலசாலி; க்ரூரன்; ஆயுதபாணி; ஸஹாயமுள்ளவன்; நான் என்ன செய்ய முடியும்? என்னால் கூடியவரையில் தடுத்தேன்; எனக்கு எள்ளளவாவது அவனுடன் போக வேண்டுமென்று ஆசையிருந்ததா? விதியைச் சொல்ல வேண்டியதேயொழிய என்னைக் குற்றம் சொல்லலாமா? என் தேகம் பிறர்க்கு வசப்பட்டது. ஸ்வதந்தரமற்ற நான் என்ன செய்ய முடியும்?



என் வசத்திலிருந்த என் ஹிருதயம் அப்பொழுதும் இப்பொழுதும் எப்பொழுதும் தங்களிடத்திலேயே நாடியிருக்கிறது. நாமிருவரும் பால்யம்முதல் சேர்ந்து வளர்ந்தோம்; எப்பொழுதும் பிரியாமலிருந்தோம்; இவ்விரண்டு காரணங்களால் என் ஸ்வபாவத்தைத் தாங்கள் பூர்ணமாய் அறிந்திருக்கவேண்டியது. அப்படியுமில்லாவிட்டால் நான் தங்களுக்கு எவ்வித நம்பிக்கை செய்து கொடுத்தும் ப்ரயோஜனமென்ன? எனக்கு வேறு கதியில்லை. கொஞ்சகாலத்திற்குமுன் நானிருக்குமிடத்தையும் என் ஸ்திதியையும் அறிந்து வரும்படி ஹனுமானை அனுப்பினீர்கள். நான் லங்கையில் ராவணனுடைய வீட்டிலிருப்பதாய்த் தெரிந்தவுடனே என்னை ஏன் தள்ளிவிடவில்லை? அப்படி ஹனுமான் எனக்குச் சொல்லியிருந்தால், அதைக் கேட்ட அடுத்த நிமிஷமே அவனுக்கெதிரில் என் உயிரை விட்டிருப்பேனே. நான் வீரபத்னியல்லவா? அப்படிச் செய்திருந்தால் தாங்களும் தங்களைச் சேர்ந்தவர்களும் இவ்வளவு சிரமப்பட வேண்டியதில்லை. யுத்தத்தில் ஜயமும் மரணமும் ஒருவருடைய பங்கல்ல. உயிருக்குத் துணிந்தாவது ராக்ஷஸர்களுடன் இப்படி யுத்தம் செய்யவேண்டியதில்லை. தாங்கள் புருஷசிரேஷ்டரல்லவா? கேவலம் கோபத்திற்கு இடம் கொடுத்து அல்பமனுஷ்யனைப்போல் என்னை ஸ்த்ரீயென்று மாத்திரம் எண்ணிப் பேசினீர்கள்; மற்ற விஷயங்களைக் கவனிக்கவில்லை. ஜனகருடைய புத்திரியென்று பெயரேயொழிய எனக்குக் கர்ப்பவாஸமுண்டோ? நான் பூமியிலிருந்து வெளிப்பட்டதைக்கேட்டதில்லையோ? மனுஷ்யர்களுடைய நடத்தையை ஸுலபமாயும் நுட்பமாயும் அறியக்கூடிய சக்தி தங்களுக்கு அபாரமாயிருக்க, என் நடத்தையையும் ஆசாரத்தையும் தாங்கள் ஏன் விசாரித்தறியவில்லை? தாங்கள் என்னைப் பாணிக்ரஹம் செய்தபொழுது பாலர்; நானும் சிறுபெண்; அப்பொழுது தங்களிடத்தில் நான் செய்த ப்ரதிக்ஞையையும் பொய்யாக்கினீர்கள். என் பக்தி சீலம் முதலிய ஸகல குணங்களையும் முற்றிலும் மறந்தீர்கள்" என்று கண்ணீருடன் குரல் தழுதழுக்க ரகுவீரனைப் ப்ரார்த்தித்தாள்.

பிறகு லக்ஷ்மணன் முகம்வாடிக் கவலைகொண்டு ஒன்றும் தோன்றாமல் திகைத்து நிற்கக்கண்டு, ஸீதை, "லக்ஷ்மண! உன் தாயான ஸுமித்திரையிடத்தில் உனக்கு எல்லையற்ற பக்தியுண்டு; நாம் வனத்திற்கு வரும்பொழுது, "ஸீதையை நானாகப் பாவித்து நடந்து கொள்" என்று அவள் சொன்ன வார்த்தை ஞாபகமிருக்கிறதா? 'ராமனைத் தசரதராகப் பாவித்து நடந்துகொள்' என்ற வார்த்தையை நிறைவேற்றினாய். இப்பொழுது உன் தாயின் உபதேசத்தில் மற்றொரு பாகத்தையும் பூர்ணமாய் நிறைவேற்ற வேண்டும். ஸுமித்திரையின் ஆக்ஞையை எப்படித் தவரமாட்டாயோ, அப்படி என் வார்த்தையையும் நிறைவேற்று. இப்பொழுது நான் அனுபவிக்கும் துக்கத்திற்கு வேறு மருந்தில்லை; கட்டையுடன்

தீரவேண்டும். ஆகையால் கட்டைகளை அடுக்கு; நெருப்பை மூட்டு. என் பர்த்தாவே என்னை அநியாயமாய் அபவாதத்திற்கு ஆளாக்கின பிறகு இந்தத் தேகத்தை ஒரு க்ஷணம்கூட வைத்துக் கொள்ளமாட்டேன். என் பதிவிரதாதர்மத்தில் அவருக்கு ஸந்தேகம் வந்துவிட்டது. இதுவரையிலும்போல் என் நற்குணங்களால் அவர் பிரீதியடையவில்லை. எண்ணிறந்த வானரர்களும் ராக்ஷஸர்களும் கூடியிருக்கையில் என்னைத் தள்ளிவிட்டார். அக்னியில் பிரவேசிப்பதைத் தவிர எனக்கு வேறு கதியில்லை'' என்றாள்.

அதைக் கேட்டு லக்ஷ்மணன் மனம் நொந்து ராமனுடைய முகத்தைப் பார்த்தார். ஸீதைக்கு எள்ளளவேனும் அபராதம் செய்தவர்களை வேரறுக்கும் ஸ்வபாவத்தையும் பராக்கிரமத்தையுமுடையவர்; ஆனால், தன் தமயனான ராமனே ஸீதையை வருத்தப்படுத்தும்பொழுது என்ன செய்வார்? யாரிடத்தில் கோபிப்பார்? தன் தாயைப்போன்ற ஸீதை உத்திரவு செய்த பிறகும், "தங்களுடைய அபிப்பிராயம் எப்படி'' என்று ராமனைக் கண்ஜாடையாய்க் கேட்டார். அவருடைய முகக்குறியாலும் இங்கிதங்களாலும் அதற்கு அனுமதி கொடுத்தாரென்றறிந்து, உடனே கட்டைகளைக் கொண்டுவந்து அடுக்கினார். பிறகு, ஜானகி, தலைகுனிந்து நிற்கும் ராமனை மெதுவாய் பிரதக்ஷிணம் செய்து, ஆகாசத்தையளாவி ஜ்வலிக்கும் அக்னிக்கு ஸமீபத்தில் வந்தாள். தேவதைகளையும் பிராம்மணர்களையும் மனத்தால் நமஸ்கரித்துக் கைகூப்பி, "அக்னி பகவானே! நீர் ஸகலப் பிராணிகளுடைய பாப புண்யங்களுக்கும் ஸாக்ஷி. என் மனம் எவ்விடத்திலும் எக்காலத்திலும் எந்த அவஸ்தையிலும் ராகவனிடத்திலிருந்து ஒரு நிமிஷமாவது தவறாமலிருப்பது வாஸ்தவமானால், என்னைத் தாங்கள் ஸகல விதத்தாலும் ரக்ஷிக்க வேண்டும். கொஞ்சமேனும் குற்றமற்ற என்னை ராகவன் தோஷமுள்ளவளென்று எண்ணுவது வாஸ்தவமானால், லோக ஸாக்ஷியான தாங்கள் என்னை ஸர்வவிதத்திலும் காப்பாற்ற வேண்டும்; ஸகல தர்மங்களையும் அறிந்த ராகவனையே மனத்தாலும், வாக்காலும், தேகத்தாலும் சரணமடைந்திருப்பது வாஸ்தவமானால் லோக ஸாக்ஷியான தாங்கள் என்னை ஸர்வ விதத்திலும் காப்பாற்ற வேண்டும். ஆதித்யன், வாயு, திக்குகள், சந்திரன், பகல், ராத்ரி, ஸந்த்யைகள், பூமி முதலிய ஸகல பதார்த்தங்களும் நான் உத்தமமான சீலமுள்ளவளென்று அறிந்திருப்பது வாஸ்தவமானால், ஸகலலோக ஸாக்ஷியான தாங்கள் எவ்விதத்திலும் என்னைக் காப்பாற்ற வேண்டும்'' என்று இவ்வாறு கூறி ஜானகி அக்னியைப் பிரதக்ஷிணம் செய்து சரீரத்தில் அபிமானத்தைவிட்டு, அக்னியில் பிரவேசித்தாள். அதைக் கண்டு அங்கிருந்த எல்லோரும் பயந்து நடுங்கி ஒன்றும் தோன்றாமல் பிரமித்து நின்றார்கள். ஜனகராஜ புத்திரி உருக்கியோடவிட்ட தங்கத்தைப்போன்ற தேக காந்தி



ஏவமுக்த்வா து வைதே³ஹீ பரிக்ரம்ய ஹுதாஶநம் |
விவேஶ ஜ்வலநம் தீ³ப்தம் நிஸ்ஸங்கே³நாந்தராத்மநா || —யு. 119 ஸ-29 சு.

இவ்வாறு கூறி, ஜானகி அக்னியைப் பிரதக்ஷிணம் செய்து சரீரத்தில் அபிமானத்தை விட்டு, அக்னியில் பிரவேசித்தாள். (பக்கம் 440 பார்க்க)

Notes : This Blank Page has also to be counted as a another page Number.

It is intentionally left blank after Picture Sketches.!

Released by Maran's Dog ,Toronto, Canada



யுடன், தங்க ஆபரணங்களால் அலங்கரிக்கப்பட்டு, எல்லோரும் பார்த்துக்கொண்டிருக்க, ஆகாசத்தை அளாவி ஜ்வலிக்கும் அந்த அக்னியில் குதித்தாள். பரிசுத்தமான நெய்யை ஹோமகுண்டத்தில் ஆஹுதி செய்வதைப்போல், அளவற்ற மஹிமையுள்ள ஸீதை அந்த அக்னியில் பிரவேசிப்பதை மூன்று லோகத்திலுமுள்ளவர்களும் கண்டார்கள். யாகத்தில் வஸோர்த்தாரை என்று ஓயாமல் நெய்யை ஆஹுதி செய்வதுபோல், ஸீதை அக்னியில் பிரவேசிப்பதைக் கண்டு அங்கிருந்த ஸ்த்ரீகள் கோவென்று அலறினார்கள். ஸ்வர்க்கத்தில் வஸிக்கும் தேவதை, சாபத்தால் நரகத்தில் தள்ளப்பட்டதுபோல், ஸீதை ஸகல போகங்களையும் அனுபவிக்கத் தகுந்தவளாயிருந்தும் இப்படி அக்னியில் பிரவேசித்து உயிரை விடுவதைப் பார்த்து, தேவ, கந்தர்வ, தானவ, ஸித்த, ஸாத்யர்கள் முதலிய மூன்று லோகவாஸிகளும் மனம் நொந்தார்கள். ராக்ஷஸர்களும் வானரர்களும் 'ஹாஹா'வென்று பெருங்கூச்சலிட்டார்கள்.

தஸ்யாமக்³நிம் விஶந்த்யாம் து ஹாஹேதி விபுல: ஸ்வந: |
ரக்ஷஸாம் வாநராணும் ச ஸம்ப³பூ⁴வாத்³பு⁴தோபம: || (35)

---

## ஸர்க்கம் 120

# தேவர்கள் ராமனை ஸ்தோத்ரம் செய்தது

தேதோ ஹி து³ர்மநா ராம: ஶ்ருத்வைவம் வத³தாம் கி³ர: |
த³த்⁴யௌ முஹூர்தம் த⁴ர்மாத்மா பா³ஷ்ப வ்யாகுல லோசந: || (1)

இப்படி ஸகல ஜனங்களும் சொல்வதைக் கேட்டு ராகவன் சற்று நேரம் துக்கம் மேலிட்டு, "ஐயோ! என்ன காரியம் செய்துவிட்டேன்" என்று கவலைகொண்டார். கேவலம் தர்மஸ்வரூபியாகையால் லோகத்தில் தர்மத்தை தான் அனுஷ்டித்து மற்றவர்களும் அனுஷ்டிக்கும்படி செய்யவேண்டியவர்; ஆகையால் ஸீதையை ஒப்புக்கொள்ள இஷ்டப்படவில்லை. ஆனால், அபார கருணாமூர்த்தி; யாதொரு காரணமில்லாமல் தனக்கு அதிகப் பிரியமான ஒரு ஸ்த்ரீயை இப்படி வருத்தப்படுத்த வேண்டியிருக்கிறதே" என்று நினைத்து, அவள் பட்ட கஷ்டங்களையும் தன் வார்த்தைகளால் அவளுடைய ஹ்ருதயம் பிளப்பதையும் கண்டு, கண்களில் நீர் முத்து முத்தாய்த் ததும்பியது.

பிறகு, குபேரன், யமன், மஹேந்திரன், வருணன், மஹாதேவன் லோககர்த்தாவான பிரஹ்மா முதலியவர்கள் ஸூரிய பிரகாசமுள்ள விமானங்களில் லங்கைக்கு வந்து ராமனிருக்குமிடத்திற்குச் சென்றார்கள். அவர்கள் திவ்யமான ஆபரணங்களால் பிரகாசிக்கும் கைகளை மேலே தூக்கிக்கொண்டு, அதிக வினயத்துடன் கைகூப்பி நிற்கும் ராகவனை நோக்கி,

"ஸ்வாமி! தாங்கள் ஸகல லோகங்களுக்கும் இந்த பிரஹ்மாவின் மூலமாய் கர்த்தா; கேவலம் ஞானஸ்வரூபி; எல்லாமறிந்தவர்; ஒன்றுமறியாத ஸாதாரண மனுஷ்யனைப்போல் ஸீதையை அலக்ஷ்யம் செய்யலாமா? அவளை அக்னியில் விழும்படி விடலாமா? பிரஹ்மாதி தேவகணங்களுக்கு சிரேஷ்டரான தாங்கள், தங்களுடைய நிஜஸ்வரூபத்தை ஏன் அறிந்துகொள்ளவில்லை? தாங்கள் பூர்வ கல்பத்தில் வஸுக்களில் ஸகலப் பிரஜைகளுக்கும் அதிபதியான ரிததாமா) என்பவர்; மூன்று லோகங்களுக்கும் தாங்கள் ஆதி கர்த்தா; பிரஹ்மாண்டத்தின் அதிபதிவரையிலுள்ள ஸிருஷ்டிகளை நேரே செய்கிறவர்;) எல்லோருக்கும் மேலானவர்; ருத்ரர்களில் எட்டாவது ருத்ரர்; ஸாத்யர்களில் ஐந்தாவது ஸாத்யர்; அச்வினீ தேவதைகள் தங்களுடைய காதுகள்; ஸூரியசந்திரர்கள் தங்களுடைய நேத்திரங்கள்; லோகங்களுடைய ஆதியிலும் பிரளயத்திலும் தாங்கள் ஒருவரே காணப்படுகிறீர்கள். இப்படி ஸர்வக்ஞனும், ஸர்வசக்திமானும், ஸர்வேச்வரனுமிருந்தும், பிரஹ்மவித்தான ஜனகருடைய குலத்தில், ஸ்த்ரீபுருஷ ஸம்பந்தமில்லாமல் பிறந்த ஸீதையை அலக்ஷ்யம் செய்கிறீர்கள்.

ஸகல லோகங்களுக்கும் நாதனும், ஸகலப் பிராணிகளையும் ஆனந்தப்படுத்துகிறவரும், அவர்களுடைய தர்மத்தை அனுஷ்டிக்கச் செய்கிறவருமான ரகுவீரன், லோகபாலர்கள் தன்னை ஸ்தோத்ரம் செய்வதைக் கேட்டு, "தேவதைகளே! நான் தசரத சக்ரவர்த்திக்குப் பிறந்தவன்; என் பெயர் ராமன்; நான் கேவலம் மனுஷ்யன் தான். நான் எவன்? எவனைச் சேர்ந்தவன்? எதற்காக இங்கு வந்தவன்? நீங்களே எனக்குத் தெரியப்படுத்துங்கள்" என்றார்.

பிரஹ்மஸ்வரூபத்தை அறிந்தவர்களுக்குள் சிரேஷ்டரான பிரஹ்மா அதைக் கேட்டு, "ஸ்வாமி! ராம! வீணாகாத பராக்கிரமத்தையுடையவரே! நான் ஸத்யமாய்ச் சொல்வதைக்கேளுங்கள். நாரம் என்ற பிரகிருதியிலும் ஜீவன்களிலும் இருப்பிடத்தை அடைந்து, அந்தர்யாமியாய் விளங்குவதால் நாராயணனென்று தங்களுக்குப் பெயர். எப்பொழுதும் லக்ஷ்மீ ஸமேதராய் விளங்குகிறவர்; சக்ரத்தை ஆயுதமாயுடையவர்; ஸர்வவ்யாபி; ஒற்றைக்கொம்புடைய ஆதி வராஹமூர்த்தி; பூர்வத்தில் மதுகைடபர் முதலிய சத்ருக்களையும், இனி வரும் சிசுபாலன் தந்தவக்ரன் முதலிய அஸுரர்களையும் ஜயித்தவர்; தாங்கள் அக்ஷரஸ்வரூபி; ப்ரஹ்மம்; இருத்தல் உண்டாதல் மாறுதல் வளர்தல் குறைதல் நாசமென்ற அறுவகை விகாரங்களுக்கு உட்படாதவராகையால் ஸத்யம். ஸகலப் பிரபஞ்சங்களுக்கும் ஆதியிலும், நடுவிலும் முடிவிலும் காணப்படுகிறவராகையால் நித்யர்; ஸகல லோகங்களுக்கும் பரமமங்களத்தைக் கொடுக்கக் கூடிய தர்மஸ்வரூபி; ஸகல திக்குகளிலும் ஸேனைகளையுடையவர்; ஸகலத்திற்கும் ஈச்வரனாகையால் விஷ்வக்ஸேனர். நான்கு புருஷார்த்தங்களையும் ஒரே காலத்தில் கொடுக்கக்கூடியவரென்



பதற்கு அடையாளமாய் எப்பொழுதும் நான்கு திருக்கைகளுடன் விளங்குகிறவர்; காலரூபமான சார்ங்கமென்ற தனுஸைக் கையில் பிடித்துப் பக்தர்களை ரக்ஷிப்பதற்கு எப்பொழுதும் ஸித்தமாயிருப்பவர். ஸகல இந்திரியங்களையும் மயக்கும்படியான திவ்யமங்கள விக்ரஹத்தையுடையவர்; ஹ்ருதயகுஹையில் சயனம் செய்பவராகையால் புருஷன். தன்னை ஆச்ரயித்தவர்களை ரக்ஷிப்பதில் ஒருவராலும் தடுக்கப்படாதவர்; வித்யாரூபமான நந்தகமென்ற கத்தியைத்தரித்தவர். ஸர்வவியாபியானதால் விஷ்ணு; தங்களுடைய கிருபைக்குப் பாத்திரமானவனை அப்பொழுதே அவ்விடத்திலேயே ரக்ஷிக்கிறீர்கள். பூமிக்கு ஹிதமளிப்பவர்; ஸகலப் பிரபஞ்சத்திற்கும் பரமஸுகத்தை அளிப்பவர்; ஸகலத்தையும் தாங்கும் சக்தியையுடைவர்; தேவஸைன்யங்களை நடத்துகிறவர்; ஸகல ப்ராணிகளுக்கும் அவரவர்களுடைய கர்மபலன்களைக் கொடுக்கிறவர்; இந்த பிரபஞ்சத்திற்கு உத்பத்திஸ்தானமும் லயமடையும் ஸ்தானமும் தாங்களே. இந்திரனுக்குத் தம்பியாய் அவதரித்தவர். வேதத்தை அபகரித்த மதுவென்ற அஸுரனை ஸம்ஹரித்தவர், அளவற்ற ஐச்வரியத்தையுடையவர். ஈச்வரர்களுக்கும் ஈச்வரன். பிரபஞ்சத்திற்குக் காரணமான தாமரை மலர் தங்களுடைய நாபியிலிருந்து உண்டாகிறது. யுத்தத்தில் சத்ருக்களை நாசம் செய்கிறவர். எல்லோரும் சரணமடையத்தகுந்த ஞானம், சக்தி, தயை முதலிய உத்தமகுணங்களையுடையவரென்றும் ரக்ஷிப்பதற்கு சிரேஷ்டமான உபாயமென்றும் தங்களை ஸ்தோத்ரம் செய்கிறார்கள். ஆயிரம் சாகைகளுள்ள ஸாமவேத ஸ்வரூபி; நித்ய நைமித்திக காம்யமென்ற ஸாமான்ய விசேஷ கர்மங்களைச் செய்யும்படி அநேக விதமாய் ஏவுகிறவர். ஸகல கர்மங்களுக்கும் ஸாக்ஷி. மூன்றுலோகங்களுக்கும் ஸிருஷ்டிகர்த்தா; எனக்கும் மற்ற தேவர்களுக்கும் தாங்களே கர்த்தா; பிறர்க்கு உட்படாதவர்; முக்தர்களுக்கும் நித்யஸூரிகளுக்கும் தங்களுக்கு ஸமமான ஆனந்தத்தை அனுக்ரஹிப்பவர். அவர்களை ரக்ஷிப்பதற்காக அவர்களுக்கு முன்னும் ஸிருஷ்டிக்கு முன்னும் விளங்குகிறவர். தாங்களே யக்ஞம், வஷட்காரம், ஓங்காரம்-

சிரேஷ்டமான தபஸால் ஆராதிக்கத் தகுந்தவர்; தங்களுடைய உத்பத்தியையாவது லயத்தையாவது தாங்கள் இன்னாரென்றாவது, வேதங்களுக்கும் அதை அனுஷ்டிப்பவர்களுக்கும் தெரியாது. (அளவற்ற மஹிமையுடையவர்); விசேஷமாய் பிராஹ்மணர்களிலும் பசுக்களிலும், ஸாமான்யமாய் ஸகல பூதங்களிலும் திக்குகளிலும் ஆகாசத்திலும்; பர்வதங்களிலும் வனங்களிலும் காணப்படுகிறீர் (ஸர்வவ்யாபி); அனந்தமான தலைகளையும் நேத்திரங்களையும் சரணங்களையுமுடையவர். மஹாபர்வதங்களுடன் பூமியையும் இதர மஹாபூதங்களையும் தரிக்கிறீர்கள். பிரஹ்மதினத்தின் முடிவில் இந்தப் பூமி அழிந்த பிறகு, மூன்று லோகங்களையும் அவைகளிலுள்ள ஸகல பூதங்களையும் தங்களுக்குள் அடக்கிக் கொண்டு,

க்ஷீரஸாகரத்தில் சேஷசயனத்தில் யோகநித்திரை செய்வதை மார்க்கண்டேயர் முதலிய மஹர்ஷிகள் கண்டு அனுபவித்திருக்கிறார்கள். நான் தங்களுடைய ஹ்ருதயம்; ஸரஸ்வதி தங்களுடைய நாக்கு. பரப்ரஹ்மத்தின் அங்கங்களில் மயிர்களைப்போல் தேவர்கள் ஸம்பந்தப்பட்டிருக்கிறார்கள். தாங்கள் நேத்ரத்தை மூடுவது ராத்ரி; திறப்பது பகல்; தங்களுடைய ச்வாஸமே வேதங்கள்; தாங்கள் அந்தர்யாமியாயிராத வஸ்து யாதொன்றுமில்லை. ஸகல ஜகத்தும் தங்களுடைய சரீரம்; தங்களுடைய ஆக்ஞையால் நிலைபெற்று ஸகல வ்யவஹாரங்களையும் நடத்துகிறது; அந்த சரீரத்தின் விசேஷணங்களும் தங்களுடைய விசேஷணங்களே. தங்களுடைய உறுதியென்ற குணமே பூமி; தங்களுடைய கோபமே அக்னி; கிருபையே சந்த்ரன்; ஸ்ரீவத்ஸமென்று விளங்கும் மருவும் அதுவே. பூர்வத்தில் பலியென்ற மஹாஸுரனைக் கட்டி, மஹேந்த்ரனை மூன்று லோகங்களுக்கும் அரசனாகச் செய்தீர்கள்; அப்பொழுது மூன்று லோகங்களையும் மூன்றடிகளால் அளந்தீர்கள். மஹாலக்ஷ்மியே ஸீதையாய் அவதாரம் செய்திருக்கிறாள்; தாங்கள் மஹாவிஷ்ணு; ஸகலப் பிராணிகளுக்கும் நாதனாகையாலும், அவைகளுக்கு நித்யமான க்ஷேமத்தைக் கொடுக்க வேண்டியவராகையாலும், லோககண்டகனான ராவணனை ஸம்ஹரிக்க மனுஷ்ய சரீரத்துடன் அவதரித்திருக்கிறீர்கள். அதர்மத்தை நாசம் செய்து தர்மத்தை நிலைநிறுத்துவதே ஸ்வபாவமாயும் ஸ்வரூபமாயுமுள்ள தாங்கள், எங்களுடைய, பிரார்த்தனையை அங்கீகரித்து, ராவணன் முதலிய ராக்ஷஸர்களை நாசம் செய்தீர்கள். அவதாரத்தின் பிரயோஜனம் முடிந்தபடியால் ஸந்தோஷத்துடன் தங்களடிச்சோதிக்கு எழுந்தருளவேண்டும். ஸ்வாமி! தங்களுடைய பலமும் வீரியமும் பராக்கிரமமும் தடையற்றவை, வீணாகாதவை; தங்களுடைய தரிசனம் வீண்போகாது; தங்களை ஸ்தோத்ரம் செய்வதும் வீண்போகாது; தங்களிடத்தில் அத்யந்தம் பக்திசெய்கிறவர்கள் அதிசீக்கிரத்தில் அபேக்ஷித்த பலன்களை அடைகிறார்கள். நித்யனும் தேவாதி தேவனும் புராணபுருஷனும் புருஷோத்தமனுமான தங்களிடத்தில் மனோவாக்குக்காயங்களால் இடைவிடாமல் பக்திசெய்பவர்கள் இந்த லோகத்தில் தேகமிருக்கும்வரையில் ஸகல போகங்களையும் அனுபவித்து பரலோகத்தில் ஸமஸ்த மனோரதங்களையும் அடைகிறார்கள். ஸகல விதமான தவம் முதலியவைகளைக் காட்டிலும் தங்களுடைய பக்தியே சிரேஷ்டமான தர்மம்; இப்படிப் பக்தி செய்யத் திறமையில்லாதவர்கள் மேற்சொன்ன ஸ்தோத்ரத்தைப் பக்தியுடன் உச்சரித்தால் அவர்களுக்குப் புனர்ஜன்மமில்லை. இந்த ஸ்தோத்ரம் வேதத்தில் ஏற்பட்டது; நித்யமானது; அனாதியாயுள்ளது; ஆகையால் அளவற்ற மஹிமையையுடையது" என்றார்.

இமமார்ஷம் ஸ்தவம் நித்ய மிதிஹாஸம் புராதநம் |
யே நரா: கீர்த்தயிஷ்யந்தி நாஸ்தி தேஷாம் பராப⁴வ: ‖ (32)



## ஸர்க்கம் 121

## ஸீதை அக்னியிலிருந்து எழுந்தது

ஏதத் ஶ்ருத்வா ஶுப⁴ம் வாக்யம் பிதாமஹ ஸமீரிதம் |
அங்கேநாதா³ய வைதே³ஹீ முத்பபாத விபா⁴வஸு: ‖ (1)

பிதாமஹர் இப்படிச் சுபமாய் அனுக்கிரஹித்த வாக்யங்களை அக்னிபகவான் கேட்டு, அடுக்கியிருந்த கட்டைகளைத் தள்ளிவிட்டு, மனுஷ்யரூபத்துடன் ஜானகியை மடியில் வைத்துக்கொண்டு கிளம்பினார். ஸீதை பாலஸூர்யனைப்போல் காந்தியால் ஜ்வலித்துக்கொண்டிருந்தாள்; உருக்கியோடவிட்ட தங்கத்தால் செய்த ஆபரணங்களாலும், கறுத்துச் சுருண்ட நீண்ட தலைமயிராலும், சிவந்த பட்டாலும் அலங்கரிக்கப்பட்டு, வாடாத புஷ்பஹாரங்களாலும் மாலைகளாலும் விளங்கிக்கொண்டு, அக்னியில் பிரவேசிக்கும்பொழுது தரித்த ரூபத்துடன், களங்கமற்ற பிரஸன்னமான மனத்துடன் வெளியில் வந்தாள். அவளை அக்னிபகவான் கைகளில் ஏந்திக்கொண்டு, ராமனிடத்தில் ஒப்புவித்து, ஸகலப் பிராணிகளுடைய கர்மங்களுக்கும் ஸாக்ஷியானதால், "ஸ்வாமி! முன்பு என்னிடத்தில் பிரவேசித்த ஸீதை இவளே. இவளிடத்தில் பாபலேசமென்பது கிடையாது. தங்களுக்கு அத்யந்தம் பிரியமான ஸீதை தோஷமற்றவளென்று தங்களுக்கு நன்றாய்த் தெரியும்; ஆயினும் தங்களுடைய ஆசாரத்திற்கு லேசமேனும் அபவாதம் வரக்கூடாதென்ற எண்ணத்தால் அவளை அக்னியில் பிரவேசிக்கச் செய்தீர்கள். ஆசாரத்தையும் நடத்தையையும் நிலைநிறுத்துவதில் நிகரற்றவரே! இவள் தங்களைத்தவிர வேறொரு புருஷனைப் பற்றிப் பேசினதில்லை, பார்த்ததுமில்லை, நினைத்ததுமில்லை, உத்தேசித்ததுமில்லை. உத்தமமான பதிவிரதாதர்மத்தை அனுஷ்டித்து வந்தவள்; ஆனால், அவளுடைய ஸம்மதமில்லாமல் ராவணன் இவளை எப்படி எடுத்துப் போனானென்றால், அவன் ராக்ஷஸன்; பலத்திலும் வீரியத்திலும் நிகரற்றவன்; அந்த ஸமயத்தில் தாங்களாவது லக்ஷ்மணனாவது ஸமீபத்திலில்லை. இருக்குமிடமோ மனுஷ்ய ஸஞ்சாரமில்லாத காடு; தங்களைவிட்டுப் பிரிந்து ஏங்கியிருக்கும் ஸமயம்; தன்னை காப்பாற்றிக்கொள்ளச் சக்தியற்றுப் பிறனுக்கு வசப்படும்படியாயிற்று. ராவணன் இவளைக் கொண்டு போய்த் தன் அந்தப்புரத்தில் வைத்தான். அங்கும் கோர ரூபமுள்ள ராக்ஷஸிகள் இவளை ஜாக்ரதையாய்க் காத்துவந்தார்கள்; தங்களைத்தவிர வேறு கதியுண்டென்று ஒரு நிமிஷமாவது நினைத்தவளல்ல; தங்களிடத்திலேயே நாடின சித்தத்தையுடையவள். மனமும் சித்தமும் புத்தியும் தங்களிடத்திலேயே லயித்தபடியால், ராவணனும் அவனைச் சேர்ந்தவர்களும் பலவிதமாய்ப் பயங்காட்டியும் ஆசைகாட்டியும் அவனை ஏறெடுத்துப் பார்க்கவுமில்லை; அந்த வார்த்தைகளை காதில் வாங்கிக்கொள்ளவு

மில்லை; அவனைப்பற்றி நினைக்கவுமில்லை. இவளுடைய ஹிருதயம் மஹாபரிசுத்தமானது. பாபலேசமென்பது இவளிடத்திலில்லை. இவளை என்னிடத்திலிருந்து பெற்றுக் கொள்ளுங்கள். என் வார்த்தையைத் தடுத்துப் பதில் சொல்லக்கூடாது. நான் ஆக்ஞாபிக்கிறேன்'' என்றார்.

அதைக்கேட்டு ராமனுடைய மனம் அளவற்ற ஆனந்தமடைந்தது. பேசும் திறமையுள்ளவர்களுக்குள் சிரேஷ்டரானதால், அக்னிபகவானுடைய வார்த்தைகளில் அடங்கிய விசேஷமான தாத்பர்யத்தை அறிந்தார். தர்மஸ்வரூபியானதால், "நான் ஸீதையை வேண்டாமென்று தள்ளினதும் வீண்போகவில்லை. அவளுடைய மஹிமை ஸகல ஜகத்திற்கும் வெளியாயிற்று'' என்று தனக்குள் நினைத்து, காரணமில்லாமல் அவளை விசேஷ கஷ்டத்திற்குட்படுத்தினதைப்பற்றி வருத்தப்பட்டுக் கண்ணீருதிர்த்தார். பிறகு எந்தக் கஷ்டத்திலும் தர்மத்தைக் கைவிடாதவரும், ஆசிரயித்தவர்களை ரக்ஷிப்பதில் பிறரால் நெருங்கமுடியாத பராக்ரமமுள்ளவரும், ஜானகியுடன் மறுபடியும் சேர்ந்ததால் அளவற்ற காந்திபொருந்தினவருமான ரகுவீரன் அக்னியைப் பார்த்து, "ஸீதைக்கும் பாபத்திற்கும் வெகுதூரமென்பது மூன்று லோகங்களிலும் பிரஸித்தமான விஷயமே. தோஷமற்றவளானாலும் லோகாபவாதத்திற்குப் பயப்படவேண்டியதல்லவா? இவள் ஸகல வஸ்துக்களையும் பரிசுத்தம் செய்யக்கூடியவளானாலும் ராவணனுடைய அந்தப்புரத்தில் வெகுகாலமிருந்தாள். 'ராமன் சிறுவன்; அவளிடத்தில் வைத்த ஆசைக்கு அடிமைப்பட்டு அவளைப் பரீக்ஷிக்காமல் மறுபடியும் சேர்த்துக் கொண்டான். இதில் ஆச்சரியமென்ன? கைகேயி என்ற துஷ்டஸ்த்ரீக்கு வசப்பட்டு ஸர்வோத்தமனை புத்திரனை வனத்திற்கனுப்பின தசரதனுடைய புத்திரனல்லவா' என்று லோகத்தார் சொல்வார்கள். இவள் மிதிலாபதியான ஜனகரென்ற பிரஹ்மவித்தின் புத்திரி; மனுஷ்ய ஸம்பந்தமில்லாமல் பிறந்தவள்; இவளுடைய ஆசாரத்தைப்பற்றிச் சொல்லவும் வேண்டுமோ? இவள் என்னிடத்தில் விசேஷ பக்தியுள்ளவள்; என் மனத்தின்படி நடப்பவள்; வேறொருவரிடத்தில் இவளுடைய ஹிருதயம் நாடாதென்று எனக்கு நன்றாய்த் தெரியும். மூன்று லோகத்திலுமுள்ளவர்களுக்கு நம்பிக்கையுண்டாகவும், இவளுடைய நிஜ ஸ்வரூபத்தை வெளியிடவும், பிறர் நடக்கவேண்டிய வழியைக் காட்டவும், இவள் அக்னிப்ரவேசம் செய்தபொழுது அலக்ஷ்யமாயிருந்தேன். ஸமுத்திரம் கரைபுரளுமா? பதிவிரதாக்னியாலும் தன் தேஜஸாலும் ரக்ஷிக்கப்பட்ட இவளை ராவணன் நெருங்கமுடியுமா? இவளுடைய விசாலமான நேத்திரங்கள் கருணைமழையையும் அகண்டமான ஐச்வரியத்தையும் பொழிவதற்கே ஏற்பட்டவை; ஆனாலும் கொஞ்சம் கோபங்கொண்டால் அதே நேத்திரங்கள் ஒரு க்ஷணத்தில் லோகத்தையும் சாம்பலாயெரிக்கும். இவளுடைய அத்புதமான



அழகைக் கண்டு ராவணன் ஆசைகொண்டு மயங்கினான். ஆனால், இவளைப் பிறர் கண்ணெடுத்துப் பார்க்கவும் முடியுமா? ஆகையால், இவளை அவன் மனத்தாலும் அடையச் சக்தியற்றவன். அவன் துஷ்டஸ்வபாவமுள்ளவனே; ஆனால், அக்னி கொழுந்துவிட்டெரிகையில் அதைக் கட்டியணைத்துக்கொள்பவருமுண்டோ? அவனுடைய பலமும் வீரியமும் துஷ்டஸ்வபாவமும் இவளிடத்தில் செல்லாது. அவனுடைய அகண்டமான ஐச்வரியத்தைக் கண்டு மயங்கக்கூடியவள் இவளல்ல. ஸூர்யனுடைய கிரணங்கள் அவரைவிட்டு எப்படி விலகாதோ, அப்படி என்னைவிட்டு ஒருக்காலும் பிரியாதவள். நித்தியமாயும் எல்லையற்றதாயும் மனோவாக்கிற்கு எட்டாததாயுமிருக்கும் என் அகண்ட விபூதியை அனுபவித்துக்கொண்டிருப்பவளல்லவா? ஸகல ஜீவகோடிகளுக்கும் பாக்யமென்பதும், மங்களமென்பதும், ஐச்வரியமென்பதும் ஸுகமென்பதும் இவளுடைய கிருபாகடாக்ஷத்தின் பலனல்லவா? மூன்று லோகங்களிலும் இவளுடைய மஹிமையும் சுத்தியும் பரவியிருக்கின்றன. உத்தமபுருஷன் கீர்த்தியை விடமுடியுமா? அப்படியே நானும் இவளை விட்டுப் பிரியமுடியாது. நீங்களெல்லோரும் எனக்குப்பரமமித்திரர்கள்; எல்லோராலும் கொண்டாடப்படுகிறவர்கள்; என் ஹிதத்தையே கோறுகிறவர்கள். நீங்கள் சொல்லும் விஷயமோ மிகவும் சுபமானது. ஆகையால் உங்களுடைய வார்த்தைப்படி நான் நடக்க வேண்டியது அவசியம்'' என்றார்.

அதைக் கேட்டு ஸகல தேவர்களும் ஸகல வானரர்களும் ஸகல ராக்ஷஸர்களும் ஆனந்தத்தால் ஆரவாரித்து அவரைக் கொண்டாடினார்கள். பிறகு ரகுநாதன் ஸீதையைத் தனக்கு ஸமீபத்தில் வருவித்துச் சேர்த்துக் கொண்டு அளவற்ற ஆனந்தமடைந்தார். பரமானந்த ஸ்வரூபி; துக்கலேசமும் பற்றாதவர்; எல்லையற்ற பலவானானாலும் தர்மத்திற்குக் கட்டுப்பட்டு, லோகத்தார்களுக்குத் தர்மத்தை அனுஷ்டித்துக் காட்ட இப்படிச் செய்தார்.

இதீத$^{3}$முக்த்வா விதி$^{3}$தம் மஹாப$^{3}$ல:
ப்ரஶஸ்யமாந: ஸ்வக்ருதேந கர்மணா |
ஸமேத்ய ராம: ப்ரியயா மஹாப$^{3}$ல:
ஸுக$^{2}$ம். ஸுகா$^{2}$ர்ஹோ நுப$^{3}$பு$^{4}$வ ராக$^{4}$வ: || (23)

## ஸர்க்கம் 122

## ராமன் தசரதரை ஸந்தித்தது

ஏதத் ஶ்ருத்வா ஶுப⁴ம் வாக்யம் ராக⁴வேண ஸுபா⁴ஷிதம் |
இத³ம் ஶுப⁴தரம் வாக்யம் வ்யாஜஹார மஹேஶ்வர: ‖ (1)

ராமன் இப்படிச் சொல்ல, மஹாதேவன், "தேவர்களின் கார்யம் முடிந்ததென்று ப்ரஹ்மா ராமனைத் தன் அடிச்சோதிக்கு எழுந்தருளும்படி ப்ரார்த்திக்கிறார். ஆனால், லோகத்தில் தலைகெட்டுத் தடுமாறும் தர்மத்தை நிலைநிறுத்தவேண்டுமென்ற ராமனுடைய கருத்தை நான் அறிவேன்" என்று, ரகுவீரனை நோக்கி, "புண்டரீகாக்ஷ! சங்கசக்ர கதாயுதங்களால் விளங்குபவரே! ஸ்ரீவத்ஸமென்ற மருவால் ப்ரகாசிக்கும் திருமார்பா! ஸங்கல்பத்தாலேயே ஸகல சத்ருக்களையும் நாசம் செய்யும் ப்ரபோ! க்ஷத்ரியதர்மத்தைக் குறைவற அனுஷ்டிக்கும் இக்ஷ்வாகுகுலதிலகனான நீ இப்படிச் செய்வது மிகவும் யுக்தம். ஸகல லோகங்களிலும் அதர்மமென்ற இருள் வரவர விருத்தியடைந்தது. ராவணனால் உண்டான பயம் எல்லோரையும் ஏக்கமடையச் செய்தது. இன்று அந்தத் தசகண்டனை யுத்தத்தில் கொன்று ஸகலப் ப்ராணிகளுக்கும் அபயம் கொடுத்து, அதர்மத்தை வேரறுத்துத் தர்மத்தை நிலைநாட்டினாய். பரதன் மனம் நொந்திருக்கிறான். உன்னைப் புத்திரனாய்ப் பெறும் பாக்யமடைந்த கௌஸல்யை வாடியிருக்கிறாள். விசேஷகீர்த்தியுள்ள கைகேயியும் ஸுமித்திரையும் உன்னை வழிபார்த்துக் கொண்டிருக்கிறார்கள். அவர்களைக் கண்டு, அவர்களுடைய துக்கத்தைப் போக்கு. அயோத்யா பதியாய் அபிஷேகம் பெற்று, பந்துக்களையும் மித்திரர்களையும் ப்ரஜைகளையும் வெகுகாலம் ஸந்தோஷப்படுத்தி, தர்மமாய் அரசாண்டு, இக்ஷ்வாகுகுலத்தை விருத்தி செய்யும் புத்திரர்களைப் பெற்று, அநேக அச்வமேதங்களைச் செய்து, ப்ராஹ்மணோத்தமர்களுக்கு அளவற்ற தானங்களைக் கொடுத்து, நித்தியமான கீர்த்தியடைந்து பிறகு உன் அடிச்சோதிக்கு எழுந்தருளுவாய். விசேஷ காந்தியுடன் ஜ்வலிக்கும் உன் பிதாவை நீயும் லக்ஷ்மணனும் நமஸ்காரம் செய்யுங்கள்" என்றார்.

அதைக் கேட்டு ராமலக்ஷ்மணர்கள் தெய்வவிமானத்தில் வீற்றிருந்த தசரதருக்கு நமஸ்கரித்தார்கள். அளவற்ற காந்தியால் ஜ்வலித்துக்கொண்டு, உத்தமமான ஆடையாபரணங்களால் அலங்கரிக்கப்பட்டு, தேவர்களுக்கு நடுவில் ப்ரகாசிக்கும் தங்களுடைய பிதாவைக் கண்டு வந்தனம் செய்தார்கள். தசரதரும் தன் உயிர்க்குயிரான புத்திரனைப் பார்த்து, அளவற்ற ஆனந்தமடைந்து, கட்டியணைத்து மடியில் உட்காரச் செய்து, உச்சிமுகர்ந்து, "குழந்தாய்!



ராம! ஸ்வர்க்கலோகமும் அதில் அனுபவிக்கும் ஸுகங்களும் எனக்குப் பெரிதல்ல. தேவர்ஷிகள் எனக்கு உபசாரம் செய்வதும் பெரிதல்ல. நீ இல்லாத குறை ஒருநாளும் தீராது. நான் சொல்வதை ஸத்தியமென்று நம்பு. உன்னைக் காட்டிற்குத் துரத்துவதற்காகக் கைகேயி சொன்ன வார்த்தைகள் இன்னும் என் ஹிருதயத்தைத் துளைக்கின்றன. காலமுள்ளவரையில் மறக்குமா? இன்று உன்னையும் லக்ஷ்மணனையும் பார்த்துக் கண்குளிர்ந்து நீங்கள் க்ஷேமமாயிருக்கிறீர்களென்று தெரிந்து அந்தத் துக்கத்தை ஒருவாறு போக்கிக்கொண்டேன். ஸூரியன் பனியைப் போக்குவது போல் உன் திருமுகமண்டலம் என் ஹிருதயத்திலுள்ள துக்கத்தையும் அக்ஞானத்தையும் போக்கிற்று. புத்திரனென்றால் நீயல்லவா புத்திரன்? முன்பு கஹோளரென்ற ரிஷி அஷ்டாவக்ரரால் கரை யேற்றப்பட்டதுபோல் மஹாத்மாவான நீ எனக்குப் புத்திரனாய்ப் பிறந்து என்னைக் கரையேற்றினாய். உனக்குப் பட்டாபிஷேகம் செய்வதற்கு நடந்த ஏற்பாடுகளைக் கைகேயியும் மந்தரையும் கெடுத்து, உன்னை வனத்திற்குத் துரத்தினதெல்லாம் தேவதைகள் செய்த உபாயமென்றும், ராவணனையும் ராக்ஷஸர்களையும் நாசம் செய்ய உன்னை ராஜ்யத்திலிருந்து வனத்திற்கு அழைத்து வந்து ஸீதையை அபகரிக்கும்படி செய்தார்களென்றும், பிறகு தெரிந்து கொண்டேன். ராம! நீ சத்ருக்களை நாசம் செய்து ஜயலக்ஷ்மியுடன் அயோத்யைக்குத் திரும்பி வந்து அந்தப்புரத்தில் ப்ரவேசிப்பதைப் பார்க்கக் கிடைத்த கௌஸல்யையே மஹா பாக்யசாலி. நீ அயோத்யாபுரியில் ராஜ ஸபையில் இக்ஷ்வாகு வம்சத்தரசர்களுடைய ஸிம்ஹாஸனத்தில் வீற்றிருந்து பட்டாபிஷேக மஹோத்ஸவம் கொள்வதைப் பார்க்கக் கிடைத்த அயோத்யாபுர வாஸிகளல்லவா புண்யவான்கள்? பரதன் உன்னிடத்தில் மஹாப்ரீதி வைத்தவன்; பலவான்; சுத்தமான நடத்தையுள்ளவன்; தர்ம மார்க்கத்தைவிட்டு விலகாதவன்; நீ அவனுக்குத் தரிசனம் கொடுக்க வேண்டியது. புருஷோத்தம! ராவணாதிகளை ஸம்ஹாரிப்பதற்காக மனுஷ்யாவதாரமெடுத்த மஹாவிஷ்ணுவே நீயென்று நன்றாக அறிவேன். நீயும் பரதனும் சேர்ந்திருப்பதைக் காண விரும்புகிறேன். ஸீதையுடனும் லக்ஷ்மணனுடனும் பதினான்கு வர்ஷங்கள் வனத்தில் வஸித்தாய். நீ செய்த ப்ரதிக்ஞைப்படி வனவாஸம் முடிந்தது. ராவணாதிகளை ஸம்ஹரித்துத் தேவர்களுடைய ப்ரார்த்தனையையும் நிறைவேற்றினாய். அவர்கள் அளவற்ற ஆனந்தமடைந்தார்கள். பிறரால் அஸாத்யமான காரியத்தைச் செய்தாய். நித்தியமான கீர்த்தியை ஸம்பாதித்தாய். பரத லக்ஷ்மண சத்ருக்னர்களுடன் தீர்க்காயுஷ்மானாய் பூமியை ஆண்டு வரக்கடவாய்" என்று ஆசீர்வதித்தார்.

அதைக் கேட்டு ரகுவீரன் கைகூப்பி வணங்கி, "ஸ்வாமி! கைகேயியிடத்திலும் பரதனிடத்திலும் தயவு செய்யவேண்டும்.

'உன்னையும் உன் புத்திரனையும் தள்ளிவிட்டேன்'' என்ற தங்களுடைய சாபம் அவர்களை உபத்திரவிக்கவேண்டாம்'' என்று வேண்டிக்கொண்டார். தசரதரும் அப்படியே ஆகட்டும்' என்று சொல்லி ஸமீபத்தில் கைகூப்பி நிற்கும் லக்ஷ்மணனைப் பிரியத்துடன் ஆலிங்கனம் செய்து, "குழந்தாய்! ராமனையும் ஸீதையையும் வெகு பக்தியுடன் நீ பூஜித்து வந்ததால் எனக்கு விசேஷ ப்ரீதியுண்டாயிற்று. உத்தமமான தர்மத்தின் பலனை அடைந்தாய். ராமன் உன்னிடத்தில் கிருபை செய்தால் தர்மமும் விசாலமான கீர்த்தியும் ஸ்வர்க்க ஸுகமும் மஹிமையும் உனக்குக் கிடைக்கும். ராமனுக்கு எப்பொழுதும் ஸகல கைங்கரியத்தையும் செய்துகொண்டிரு. அவன் ஸமஸ்த லோகங்களுக்கும் எப்பொழுதும் மங்களத்தை அனுக்கிரஹிப்பதிலேயே நோக்கமுள்ளவன். இதோ இருக்கும் ஸித்தர்களும் ரிஷிகளும் மூன்று லோகங்களிலுமுள்ள பிராணிகளும் இந்திராதி தேவர்களும் இவனைக் கொண்டாடி, இந்தப் புருஷோத்தமனைப் பூஜிக்கிறார்கள். இவன் ஸகல தேவதைகளுக்கும் அந்தர்யாமியென்றும், அக்னி முதலியவர்களின் ரூபங்களைத் தரித்து ஸமஸ்த யக்ஞங்களால் ஆராதிக்கப்படுகிறவனென்றும், கேவலம் உபநிஷத்துக்களாலேயே அறியப்படவேண்டியவனென்றும், பக்தியில்லாதவர்களால் அறிய முடியாதவனென்றும், ஸகல விகாரங்களுமற்றவனென்றும், பரப்பிரஹ்மமே ராமனென்று அவதரித்து விளங்குகிறதென்றும், பிரஹ்மா முதலானவர்கள் சொல்லக் கேட்டிருக்கிறேன். உத்தமமான தர்ம பலத்தையும் யுத்தத்தில் நிகரற்ற கீர்த்தியையும் நீ அடைந்தது ராமனையும் ஸீதையையும் பக்தியுடன் பூஜித்ததால் அல்லவா'' என்று கூறியபின், ஸீதையைப் பார்த்து, "ராமன் உன் மஹிமையையும் ஆசாரத்தையும் லோகத்தாருக்கு வெளிப்படுத்த உன்னைக் கடுமையாய்ப் பேசித் தள்ளிவிடுவது போல் நடந்துகொண்டான். நீ அதைப்பற்றிக் கொஞ்சம்கூட வருத்தப்படக்கூடாது. பர்த்தாவிற்குச் சுச்ரூஷை செய்யும் விஷயத்தில் உனக்கு நான் உபதேசிக்க வேண்டியது யாதொன்றுமில்லை. ஆனாலும், இவன் உனக்குப் பரதெய்வமென்று நான் சொல்லவேண்டியது அவசியம்'' என்று ஜானகிக்கும் புத்திரர்களுக்கும் உபதேசித்து, தேஜஸால் ஜ்வலித்துக்கொண்டு விமானத்திலேறி இந்திரலோகம் சென்றார்.

இதி ப்ரதி ஸமாதி³ஶ்ய புத்ரௌ ஸீதாம் ததா² ஸ்நுஷாம் |
இந்த்³ரலோகம் விமாநேந யயௌ த³ஶரதோ² ஜ்வலந் || (38)

---



## ஸர்க்கம் 123

# இந்திரன் ராமனுக்கு வரம் கொடுத்தது

ப்ரதியாதே து காகுத்ஸ்தே² மஹேந்த்³ர: பாகஶாஸந: |
அப்³ரவீத் பரமப்ரீதோ ராக⁴வம் ப்ராஞ்ஜலி: ஸ்தி²தம் || (1)

தசரதர் ஸ்வர்க்கத்திற்குப் போன பிறகு, இந்திரன், கைகூப்பி நிற்கும் ராகவனிடத்தில், பரமப்ரீதியடைந்து, "ராம! நாங்கள் தசரதருடைய புத்ரகாமேஷ்டி நடக்கும்பொழுது உன்னைப் பார்த்தது வீணாகவில்லை. ராவணனிடத்திலிருந்து எவ்வித பயமும் எங்களுக்கு நீங்கிற்று. அதற்கு ப்ரத்யுபகாரமாக நாங்கள் என்ன செய்யவேண்டும், சொல்'' என்றான். ராமனும் லக்ஷ்மணனும் ஸீதையும் கைகூப்பி அவரை நமஸ்கரித்தார்கள். ராமன், "என்னிடத்தில் தங்களுக்குப் ப்ரீதியுண்டானால், என் ப்ரார்த்தனையை அங்கீகரித்து, தாங்கள் இப்பொழுது சொன்ன வார்த்தையை நிஜமாக்கவேண்டும். எனக்காக இந்த யுத்தத்தில் உயிரைவிட்டு யமலோகம் சென்ற ஸர்வ ஸைன்யங்களும் உயிர்பெற்று எழுந்திருக்கட்டும். எனக்காகப் புத்திரர்களையும், பிதாக்களையும், பந்துக்களையும் இழந்தவர்களும் என் க்ஷேமத்தை உத்தேசித்து மரணத்தை லக்ஷியம் செய்யாதவர்களும் தங்களுடைய கிருபையால் மறுபடியும் யாதொரு குறைவில்லாமல் ஸகல ஸௌக்யங்களையும் அனுபவிக்கட்டும். இதுவே நான் கேட்கும் வரம். காயங்கள் ஆறி உபத்திரவம் நீங்கிப் பலமும் ஆண்மையும் கொஞ்சம்கூடக் குறையாமல், வானரர்களும், கொண்டை முஸுருகளும், கரடிகளும் ஆனந்தமாயிருப்பதைப் பார்க்க விரும்புகிறேன். இவர்களிருக்குமிடத்தில் எந்த ருதுவிலும் எந்தக் காலத்திலும் முக்கியமான பழங்களும் கிழங்குகளும் குறைவில்லாமல் கிடைக்க வேண்டும். நதிகள் தெளிந்த நீரால் நிறைந்திருக்க வேண்டும்'' என்றார்.

மஹேந்திரன், அவரிடத்தில் வைத்த ப்ரீதிக்கு அடையாளமாக, "ராகவ! நீ கேட்கும் வரம் ஸாதாரணமல்ல. பலவிடங்களில் சிதறிக் கிடக்கும் அவயவங்களை அவைகளுக்குரிய ஸ்தானங்களில் சேர்த்து வைக்க வேண்டும்; இதர லோகங்களுக்குச் சென்றவர்களை மறுபடியும் வருவிக்கவேண்டும். ஆனால், சொன்ன வார்த்தையை நான் ஒருபொழுதும் தவறினதில்லை. ஆகையால் நீ கேட்டுக்கொண்டபடியே நடக்கும். இந்த யுத்தத்தில் ராக்ஷஸர்களால் இறந்த வானரர்களும், கரடிகளும், கொண்டை முஸுருகளும் அவயவங்களை இழந்தவர்களும், காயமற்று, உபத்ரவமற்று, எப்பொழுதும்போல் பலவான்களாயும் பராக்ரமசாலிகளாயும், தூங்கிவிழித்தவர்களைப்போல் எழுந்திருப்பார்கள். மித்திரர்களோடும், பந்துக்களோடும், இனத்தாரோடும் முன்போல் கூடிக்குலாவு

வார்கள். இவர்கள் வஸிக்குமிடங்களில் நேர்த்தியான பழங்களும் கிழங்குகளும் புஷ்பங்களும் எக்காலத்திலும் எந்த ருதுவிலும் கிடைக்கும், நதிகளில் நிர்மலமான ஜலம் வற்றாமல் ஓடும்'' என்று அனுக்ரஹித்தார்.

உடனே காயம்பட்டிருந்தவர்கள் கொஞ்சம்கூடக் காயமில்லாமல் பிழைத்தெழுந்தார்கள். அவயவங்களற்று இறந்தவர்கள் அவயவங்களுடன் பிழைத்தெழுந்தார்கள். இப்படி வானரர்கள் கோடிகோடியாய் நித்திரை தெளிந்தவர்களைப்போல் எழுந்ததைக் கண்டு, 'இதென்ன ஆச்சரிய'மென்று மற்ற வானரர்களும் ராக்ஷஸர்களும் கண்கொட்டாமல் பார்த்துக் கொண்டிருந்தார்கள். ராமனுடைய கிருபையால் உயிர்பெற்ற வானரர்களெல்லோரும் அவரைப் பிரதக்ஷிணம் செய்து நமஸ்கரித்தார்கள்.

இப்படி ரகுவீரன் தன் உத்தேசத்தை நிறைவேற்றி ஸந்தோஷத்துடனிருக்கக்கண்டு, தேவர்கள் அவரையும் லக்ஷ்மணனையும் கொண்டாடி, "ராம! இங்கிருந்து புறப்பட்டு அயோத்யைக்குப் போ. வானரர்களை அனுப்பிவிடு. உன்னிடத்தில் பரமப்ரீதியை வைத்திருக்கும் இந்த மஹாபதிவ்ரதையான ஸீதையின் துக்கத்தைப் போக்கு. பரதனும் சத்ருக்னனும் உன் வரவை எதிர்பார்த்துக் கொண்டு ஸகல ஸுகங்களையும்விட்டு, நீ அனுஷ்டிக்கும் வ்ரதத்தை அனுஷ்டித்துக் கொண்டிருக்கிறார்கள். அவர்களையும், கௌஸல்யை, ஸுமித்ரை, கைகேயி, முதலியவர்களையும் பார்த்து ஆறுதல் சொல்லு. அயோத்யையில் பட்டாபிஷேகமஹோத்ஸவம் பெற்று பிரஜைகளை நெடுங்காலம் தர்மமாய்ப் பரிபாலனம் செய்'' என்று ஆசீர்வதித்து, ராமலக்ஷ்மணர்களிடத்தில் உத்திரவு பெற்று, ஸூரியனைப்போல் ஜ்வலிக்கும் விமானங்களில் தங்களிருப்பிடங்களுக்கு ஸந்தோஷமாய்ச் சென்றார்கள்.

ராமன் ஸகல தேவர்களுக்கும் நமஸ்காரம் செய்து, லக்ஷ்மணனுடன் வானரர்களுக்கு விடுதிகளை ஏற்படுத்தினார். இப்படி ராமலக்ஷ்மணர்களால் ரக்ஷிக்கப்பட்ட அந்த வானரஸேனை, ராக்ஷஸர்களை யுத்தத்தில் ஜயித்ததால் விசேஷகீர்த்தியடைந்து, ஸிம்ஹநாதங்களுடனும் அட்டஹாஸங்களுடனும் ஆரவாரங்களுடனும், பூர்ண சந்திரனல் பிரகாசிக்கும் ராத்திரியைப்போல், தேஜஸால் ஜ்வலித்துக்கொண்டு விளங்கிற்று.

ததஸ்து ஸா லக்ஷ்மணராம பாலிதா
மஹாசமூர் ஹ்ருஷ்டஜநா யஶஸ்விநீ |
ஶ்ரியா ஜ்வலந்தீ விரராஜ ஸர்வதோ
நிஶா ப்ரணீதேவ ஹி ஶீதரஶ்மிநா ‖ (25)

---



## ஸர்க்கம் 124

## விபீஷணன் ராமனை உபசரித்தது

தாம் ராத்ரிமுஷிதம் ராமம் ஸுகோத்தித மரிந்தமம் |
அப்ரவீத் ப்ராஞ்ஜலிர் வாக்யம் ஜயம் ப்ருஷ்ட்வா விபீஷண: ‖ (1)

அன்று ராத்ரி ராமன் ஸைன்யங்களுடன் அங்கே வஸித்தார். மறு நாட்காலையில் விபீஷணன் அவரைக் கைகூப்பி நமஸ்கரித்து, 'ஜய விஜயீபவ' என்று வாழ்த்தி, "பிரபோ! தாங்களும் லக்ஷ்மணனும் மற்றவர்களும் ஸ்நானம் செய்வதற்கு ஜலங்களும், குங்குமம் முதலிய வாஸனைத் திரவியங்களும் ஹாரங்களும் வஸ்திரங்களும் ஆபரணங்களும் சந்தனங்களும் ஸித்தமாயிருக்கின்றன. இந்த ரூபவதிகள் அலங்காரம் செய்வதில் வெகுஸமர்த்தர்கள்; தங்களுக்கு ஸ்நானம் முதலியவைகளைச் செய்விக்கக் காத்துக்கொண்டிருக்கிறார்கள். இந்த உபசாரங்களை ஏற்றுக்கொண்டு என்னை அனுக்ரஹிக்கவேண்டும்'' என்று பிரார்த்தித்தான்.

அதற்கு ரகுநாதன், "விபீஷண! ஸுக்ரீவன் முதலிய வானரசிரேஷ்டர்களுக்கு இந்த உபசாரங்களைச் செய். பரதன் எனக்காகக் காத்துக்கொண்டிருக்கிறான். அவன் தர்மாத்மா; ஸுகங்களை அனுபவிக்கத் தகுந்தவன்; செல்வமாய் வளர்க்கப்பட்டவன்; மஹாபராக்கிரமசாலி; ஸத்தியம் தவறாதவன்; 'பதினான்கு வர்ஷங்களான பிறகு தங்களைப் பார்க்காவிட்டால் அக்னிப்ரவேசம் செய்து பிராணனை விடுவேன்'' என்று பிரதிக்ஞை செய்திருக்கிறான். அதைத் தவற மாட்டான். என்னைப் பார்க்கும் பொருட்டு கடுமையான விரதத்தை அனுஷ்டித்துக் கொண்டிருக்கிறான். அந்தத் தர்மசீலன் ஸ்நானம் செய்யாமல் எனக்கு ஸ்நானமேன்? வஸ்திரங்களேன்? ஆபரணங்களேன்? கைகேயி அவனுக்குண்டாக்கின துக்கத்தை நானும் உண்டாக்க வேண்டுமா? நானும் தசரதசக்கரவர்த்தியும் இல்லாதபொழுது தர்மமாய் ராஜ்யபாலனம் செய்துவருகிறான். என்னை விட்டுப் பிரிந்து மறுபடியும் என்னைப் பார்க்க வேண்டுமென்று கடுமையான விரதங்களை அவன் அனுஷ்டித்துவருகையில், நான் மாத்திரம் அவன் விஷயத்தில் என் விரதத்தைப் பொய்யாக்கலாமா? நான் இந்த வழியாக அதிசீக்கிரத்தில் அயோத்யைக்குத் திரும்பிப் போக வேண்டும். இதோ பார்; இங்கிருந்து வெகுதூரமிருக்கிறது. இங்கே தாமதிக்கக்கூடாது'' என்றார்.

அதைக் கேட்டு விபீஷணன், "தாங்கள் இதைப்பற்றிக் கொஞ்சம்கூடக் கவலைப்பட வேண்டாம். ஒரு பகலில் தங்களை அங்கே கொண்டுபோய்ச் சேர்க்கிறேன். சக்கரவர்த்தித் திருமகனை தங்களுக்குத் தகுந்த உபசாரத்துடனும் கௌரவத்துடனும்

மரியாதையுடனும் பெருமையுடனும் தாங்கள் அயோத்யையில் பிரவேசிக்க வேண்டியதல்லவா? ராவணன் குபேரனுடன் யுத்தம் செய்து அவனிடத்திலிருந்த புஷ்பகவிமானத்தை அபகரித்தான். அதுஸூர்யதேஜஸுடன் நினைத்தவிடத்திற்குப் போகக்கூடியதாய், எவ்வளவு பிராணிகள் அதில் ஏறினாலும் எல்லோர்க்கும் இடம் கொடுக்கக்கூடிய மஹிமையுள்ளது. ராவணன் இறந்தவுடன் அதைக் குபேரனுக்கு நான் அனுப்பிவிடவேண்டியது. ஆனால், தாங்கள் அயோத்யைக்குச் சீக்கிரமாய்ப் போகவேண்டுமென்றே தேவதைகளுடன் குபேரன் இங்கே வந்தபொழுது அவனிடத்தில் கொடுக்கவில்லை. பெருங்காற்றால் அடிக்கப்பட்ட மேகத்தைப்போல், அதிவேகமாய்ச் செல்லக்கூடியது; ஆகையால் அயோத்யைக்குப் போவதைப்பற்றிக் கவலைப்படவேண்டாம். தாங்கள் ஸ்நானம் செய்யாவிட்டாலும் இவ்விடத்தில் இரண்டு மூன்று தினங்களாவது தங்கவேண்டியது. என்னை அனுக்ரஹிக்க வேண்டுமென்று தங்களுக்கிஷ்டமிருந்தால், நான் கொஞ்சமாவது குணங்களுள்ளவனென்று தங்களுக்கு ஞாபகமிருந்தால், என்னிடத்தில் தங்களுக்கு பிரீதியுண்டென்பது வாஸ்தவமானால், தாங்களும், லக்ஷ்மணனும், ஸீதையும் இங்கே சிறிது காலம் வஸிக்க வேண்டியது. தங்களையும் தங்களைச் சேர்ந்தவர்களையும் தங்களுடைய ஸைன்யத்தையும் என் இஷ்டப்படி உபசரிக்க ஆசை கொண்டிருக்கிறேன். அதற்கா இனி ஏற்பாடு செய்ய வேண்டியதில்லை. எல்லாம் ஸித்தமாயிருக்கிறது. என் கைங்கரியத்தை அங்கீகரித்து, என்னைக் கிருதார்த்தனாகச் செய்து, என் வேண்டுகோளை நிறைவேற்றி, பிறகு அயோத்யைக்குப் போகலாம். நான் தங்களை நிர்ப்பந்தம் செய்வதாக எண்ணக்கூடாது. என் வார்த்தையைக் கேட்பீர்களென்ற நம்பிக்கையாலும், என்னைத் தாங்கள் பிரியமாய் வைத்து நடத்துவதாலும், எனக்குத் தங்களிடத்திலுள்ள பக்தியாலும் இப்படிப் பிரார்த்திக்கத் துணிந்தேன். நான் தங்களுடைய ஸேவகனல்லவா?'' என்றான்.

ராமசந்திரன், ராக்ஷஸர்களும் வானரர்களும் கேட்டுக்கொண்டிருக்க, விபீஷணனைக் கிருபா கடாக்ஷத்தால் நோக்கி, "குழந்தாய்! நீ எனக்குச் செய்த ஸஹாயமும் யுத்தத்தில் காட்டின பராக்கிரமும் என்னிடத்தில் நீ வைத்திருக்கும் ஸ்நேஹமுமே எனக்குச் செய்த உத்தமமான பூஜையென்று எண்ணுகிறேன். உன் வார்த்தையை அங்கீகரிக்கக்கூடாதென்ற எண்ணம் எனக்குக் கொஞ்சமுமில்லை. ஆனால், என் அருமைத் தம்பியான பரதனைப் பார்க்க என் மனம் துடிதுடிக்கிறது. என் பிதாவால் தனக்குக் கொடுக்கப்பட்ட ராஜ்யத்தை வேண்டாமென்று விலக்கி, சித்திரகூடத்திலிருந்த என்னைத் தேடி வந்து, அந்த ராஜ்யத்தை ஆளும்படி என்னை தலைவணங்கி பிரார்த்தித்தான். அயோத்யைக்குத் திரும்பிவரும்படி தன்னால் கூடிய பிரயத்னங்களைச் செய்தான். ஆனால் அவனுடைய வார்த்தைக்கு நான் இணங்கவில்லை. அவனைப் பார்க்க வேண்டும். கௌஸல்யையையும் ஸுமித்திரையையும் கைகேயியையும் நமஸ்கரிக்க வேண்டும். பெரியோர்களையும் மித்திரர்களையும் நகரவாஸிகளையும் அவர்களுடைய மனைவிமக்களையும் பார்க்க வேண்டும். ஆகையால், சீக்கிரமாய் புஷ்பகவிமானத்தைக் கொண்டுவா. நான் வந்த காரியம் முடிந்தது. இனி இங்கேயிருக்க இஷ்டமில்லை. தாமதித்தால் பரதன் அக்னியில் விழுந்திறப்பான். நீ எனக்குச் செய்த உபசாரத்தாலும் புஷ்பக விமானத்தைக் கொடுத்ததாலும் நன்றாய் பூஜிக்கப்பட்டேன். நான் போய் வருகிறேன். உன் இஷ்டத்தைப் பூர்த்தி செய்யவில்லையென்று வருத்தப்படாதே'' என்றார்.



அதைக் கேட்டு விபீஷணன் சீக்கிரமே புஷ்பக விமானத்தைக் கொண்டுவந்து நிறுத்தினான். அது தங்கத்தால் விசித்திரமாய் அலங்கரிக்கப்பட்டிருந்தது; வைடூரியங்களிழைத்த மேடைகளாலும் மண்டபங்களாலும் நிறைந்திருந்தது. காந்தியால் ஜ்வலித்துக்கொண்டு வெண்மையான கொடிகளாலும் த்வஜங்களாலும் தங்கத்தாமரைகளாலும் உப்பரிகைகளாலும் விளங்கிற்று. நான்கு பக்கங்களிலும் சலங்கைகளும், மூலைகளில் மணிகளும், மதுரமாய்ச் சப்தித்தன. முத்துக்களாலும் ரத்னங்களாலும் அமைக்கப்பட்ட ஹாரங்கள் ஜன்னல்களில் மாட்டப்பட்டிருந்தன. மேரு சிகரத்தைப் போல் உன்னதாயும் விஸ்தாரமாயும், அநேக விடுதிகளுடனும் தங்கத்தாலும், வெள்ளியாலும், ஸ்படிகத்தாலும் இழைக்கப்பட்ட தரைகளுடனும், விலையுயர்ந்த கம்பளங்களாலும் விரிப்புகளாலும் மூடப்பட்ட ஆஸனங்களுடனும் விளங்கிற்று. மூன்று லோகங்களிலுள்ள ஸகல ஐச்வரியங்களையும் அதில் காணலாம். ஒருவராலும் எதிர்க்க முடியாதது; மனோவேகமுள்ளது; விபீஷணன் இவ்விதமான திவ்ய விமானத்தைக் கொண்டுவந்து நிறுத்தி ராமனுக்குத் தெரிவித்தான்.

உபஸ்தி2தமநாத்4ருஷ்யம் தத்3விமாநம் மநோஜவம் |
நிவேத3யித்வா ராமாய தஸ்தௌ தத்ர விபீ4ஷண: || (29)

---

## ஸர்க்கம் 125

# விபீஷணன் வானரஸேனைகளை உபசரித்தது

---

உபஸ்தி2தம் து தம் த்3ருஷ்ட்வா புஷ்பகம் புஷ்பபூ4ஷிதம் |
அவிதூ3ரஸ்தி2தோ ராமம் ப்ரத்யுவாச விபீ4ஷண: || (1)

ராமனுடைய உத்திரவுப்படி புஷ்பங்களால் அலங்கரிக்கப்பட்ட புஷ்பகவிமானத்தைக் கொண்டு வந்து அவருக்குத் தெரிவித்து, விபீஷணன் கைகூப்பி வணக்கமாய் ஸமீபத்தில் வந்து

நின்று, "பிரபோ! தங்களுடைய ஆக்ஞை என்ன?" என்று கேட்டான். அதற்கு ராகவன் லக்ஷ்மணனுடைய ஸம்மதத்தை அறிந்து தானும் நன்றாய் ஆலோசித்து, தன்னை ஆசிரயித்தவர்களிடத்தில் தனக்குள்ள பிரியத்தையும் ஆதரவையும் வெளியிடும் வார்த்தைகளைச் சொன்னார். "விபீஷண! இதோவிருக்கும் வானரர்கள் ஆச்சரியமான வீரகிருத்யங்களைச் செய்திருக்கிறார்கள். ஆகையால் அவர்களுக்கு வேண்டியவரையில் ரத்தினங்களையும், தனங்களையும் வஸ்திரங்களையும் பூஷணங்களையும் கொடு. இதுவரையில் ஒருவராலும் ஜயிக்கப்படாத லங்கையை நாம் இவர்களுடைய உதவியால் ஜயித்தோம். இவர்கள் வெகு உத்ஸாஹத்துடன், உயிரை லக்ஷ்யம் செய்யாமல், வெகு தைரியமாக, சத்ருக்களுக்குப் பின் வாங்காமல் யுத்தம் செய்திருக்கிறார்கள். இவர்கள் செய்யவேண்டிய காரியத்தை நன்றாய்ச் செய்தவர்கள். இவர்களை நன்றாய் உபசரிக்க வேண்டும். இவர்களுக்குத் தனங்களையும் ரத்னங்களையும் கொடுத்து இவர்கள் பட்ட சிரமத்தை ஸபலமாகச் செய். இவர்கள் உனக்குச் செய்த உபகாரத்திற்காக உன் நன்றியைக் காட்டவேண்டிய வழி இதே. இவர்களுக்கு வெகுமானம் செய்வதும் அவமானம் செய்வதும் உன் வசத்திலிருக்கிறது. நான் சொன்னபடி இவர்களை உபசரித்தால் மிகவும் ஸந்தோஷிப்பார்கள். உனக்கு இந்த லங்கா ராஜ்யம் கிடைத்ததும் இவர்களாலென்பதை நீ மறக்கக்கூடாது. அதிகமாய்த் தனம் சிலவாகிறதென்று வருத்தப்படாதே. நீ கேட்பவர்களுக்கு இல்லையென்று சொல்லாமல் மித்திரர்களை ஸம்பாதிப்பவனென்றும், அளவற்ற கருணையுள்ளவனென்றும், விசேஷகீர்த்திசாலி என்றும் லோகத்திலெல்லோரும் உன்னைக் கொண்டாடுவார்கள். உனக்கு ஹிதமென்று என் புத்தியில் பட்டதைச் சொன்னேனேயொழிய ஆக்ஞாபிக்கிறதாக எண்ணக்கூடாது. இந்த ஸைன்யங்களுக்கு ஸன்மானம் செய்யாவிட்டால் தோஷங்களும் ஏற்படும். அவர்களுடைய யஜமானனாயிருக்கட்டும்; யதேஷ்டமாய்க் கொடுப்பது, ஆதரிப்பது, முதலிய உத்தம குணங்களில்லாமல் தங்களை அதிகமாக ஹிம்ஸித்து எப்பொழுதும் கோபத்துடன் தங்களிடத்தில் பழகினால், யுத்தத்தில், நல்ல ஸமயம் பார்த்து அவனைக் கைவிடுவார்கள். உன் விஷயத்தில் சொல்லவேண்டுமா?" என்றார்.

விபீஷணன் ராமனுடைய ஆக்ஞையைத் தலையால் வஹித்து, வானரர்களை அவரவர்களுடைய ஸ்திதிக்கும் யோக்யதைக்கும் பராக்கிரமத்திற்கும் தகுந்தபடி ரத்தினங்களாலும், தனங்களாலும் ஆபரணங்களாலும் வஸ்திரங்களாலும் உபசரித்தான். பிறகு ராமன் லக்ஷ்மணனுடன் புஷ்பகவிமானத்திலேறி, ஸீதையை மடியில் வைத்துக் கொண்டு ஸகல வானரர்களையும் ராக்ஷஸர்களையும் பார்த்து, "விபீஷண! ஸுக்ரீவ! வானரசிரேஷ்டர்களே! மித்திரர்கள் செய்யவேண்டிய ஸகல உபகாரங்களையும் குறைவில்லாமல் எனக்குச் செய்தீர்கள். உங்களெல்லோருக்கும் உத்தரவு கொடுத்தேன். உங்களுக்கு இஷ்டமான இடங்களுக்குச் செல்லலாம். ஸுக்ரீவ! தோழனாயும் மித்திரனாயுமிருப்பவன் நல்ல ஹிருதயத்தோடும் அதர்மத்திற்குப் பயந்தும் எது செய்யவேண்டுமோ அதைப் பூர்ணமாய்ச் செய்தாய். உன் ஸைன்யங்களுடன் கிஷ்கிந்தைக்குத் திரும்பிப்போ. விபீஷண! நான் உனக்குக் கொடுத்த இந்த லங்கா ராஜ்யத்தில் ஜாக்கிரதையாய் ஆண்டுவா. ராவணனைப்போல் இதர ராஜ்யங்களை ஆக்கிரமித்து ஜனங்களை ஹிம்ஸை செய்யாதே. இந்திராதி தேவர்களும் அஸுரர்களும் உன்னைக் கண்ணெடுத்துப் பார்க்க முடியாது. நான் என் பிதாவின் ராஜதானியான அயோத்யைக்குப் போகிறேன். உங்களெல்லோருக்கும் உத்திரவு கொடுத்தேன். நானும் உங்களிடத்தில் சொல்லிக் கொண்டிருக்கிறேன்" என்றார்.



அதைக் கேட்டு வானரர்களும், ராக்ஷஸர்களும், விபீஷணனும் கைகூப்பி, "ராம! நாங்களெல்லோரும் தங்களுடன் அயோத்யைக்கு வர ஆசைகொண்டிருக்கிறோம். எங்களை அழைத்துப் போகவேண்டும். ஜனங்களை உபத்ரவம் செய்யாமல் தோட்டங்களையும், நகரங்களையும், வனங்களையும் நாசம் செய்யாமல் வெகு ஜாக்கிரதையாய் வஸிக்கிறோம். தங்களுடைய பட்டாபிஷேக மஹோத்ஸவத்தைப் பார்த்துக் களிக்கவேண்டும். இந்தப் புத்திர ரத்னத்தைப் பெறும்படியான மஹாபாக்யத்தைச் செய்த கௌஸல்யாதேவியை நமஸ்கரித்து எங்களுடைய ஜன்மங்களை ஸபலமாகச் செய்கிறோம். தங்களுடன் பிறந்த பரதனையும் சத்ருக்னனையும் தங்களால் ஆளப்படும் பிரஜைகளையும் பார்க்கவேண்டும். பிறகு எங்களிருப்பிடங்களுக்குப் போகிறோம்" என்று பிரார்த்தித்தார்கள். ராகவன் அதைக் கேட்டு, "என்னை உயிருக்குயிராய்ப் பாவித்து எனக்காக ஸகல கஷ்டங்களையும் அனுபவித்த உங்களுடன் நான் அயோத்யைக்குச் செல்வதைவிட எனக்குப் பிரியமான காரியம் வேறுண்டோ? எல்லோரும் ஒருவர் பாக்கியில்லாமல் புஷ்பகவிமானத்தில் ஏறுங்கள். விபீஷண! நீயும் உன் மந்திரிகளுடன் வா. ராவணனைக் கொன்று ஸீதையை அடைந்தது எனக்குப் பிரியமான விஷயம்; பரதனை ஸந்திப்பது அதைவிட பிரியமானது; உங்களுடன் அயோத்யையில் பிரவேசிப்பது அதைவிட பிரியமானது" என்றார். பிறகு ஸுக்ரீவன் ஸகலவானரர்களுடனும் விபீஷணன் தன் மந்திரிகளுடனும் சீக்கிரமாய்ப் புஷ்பகவிமானத்தில் ஏறினார்கள். உடனே ராகவன் உத்தரவுசெய்ய, அந்தவிமானம் ஆகாச மார்க்கமாய்ப் போயிற்று. ஹம்ஸபிரதிமைகளால் அலங்கரிக்கப்பட்ட அந்த விமானத்தில், ராமன் வானரர்களாலும் ராக்ஷஸர்களாலும் கொண்டாடப்பட்டு, பரமானந்தத்தை அனுபவித்துக் கொண்டு, லோகபாலனான குபேரனைப்போல் விளங்கினார். வானரர்களும் ராக்ஷஸர்களும் அந்த விமானத்தில் தங்களுடைய

ஸௌகரியப்படி ஒருவர்க்கொருவர் இடையூறில்லாமல் ஸஞ்சரித்துக்கொண்டு, ஸகல ஸுகங்களையும் அனுபவித்தார்கள்.

தே ஸர்வே வாநரா ஹ்ருஷ்டா ராக்ஷஸாஶ்ச மஹாப3லா: |
யதா2ஸுக2மஸம்பா3த4ம் தி3வ்யே தஸ்மிந் நுபாவிஶந் ‖ (27)

---

## ஸர்க்கம் 126

# ராமன் ஸீதைக்கு வழியிலுள்ள ஸ்தலங்களைக் காட்டினது

---

அநுஜ்ஞாதம் து ராமேண தத்3விமாந மநுத்தமம் |
உத்பபாத மஹாமேக4: ஶ்வஸநேநோத்3த4தோ யதா2 ‖ (1)

**ரா**மனால் ஆக்ஞாபிக்கப்பட்டு அந்த விமானம், சண்டமாருதத்தால் அடிக்கப்பட்ட மஹாமேகத்தைப்போல், அதிவேகமாய்ப் போயிற்று. அப்பொழுது ரகுநாதன் நான்கு புறங்களையும் கவனித்துப் பார்த்துத் தன் மடியிலிருந்த ஸீதைக்கு அந்தந்த பிரதேசங்களையும் ஸ்தலங்களையும் காட்டிக் கொண்டு போனார். ஜானகி தன் பிராணநாதனை மறுபடியும்அடைந்ததால் அளவற்ற ஆனந்தத்துடனும், பூர்ணசந்திரன் உதித்ததுபோல் விளங்கும் முகமண்டலத்துடனும், அவைகளைப்பார்த்து ஆச்சரியத்தையும் ஸந்தோஷத்தையுமடைந்தாள். "கைலாஸசிகரத்தைப்போன்ற த்ரிகூடபர்வதத்தின் சிகரத்தில் விளங்கும் லங்கையைப் பார். இது பூர்வத்தில் விச்வகர்மாவால் அமைக்கப்பட்டது. இதோ பார். ராக்ஷஸர்களும் நாங்களும் யுத்தம் செய்த ஸ்தலம்; ரத்தத்தாலும் மாம்ஸத்தாலும் நிறைந்திருக்கிறது. இவ்விடத்தில் எண்ணிறந்த ராக்ஷஸர்களும் வானரர்களும் மடிந்தார்கள். அதோ பார். ராவணன் எரிபட்டுச் சாம்பலாய்க் கிடக்கிறான். பிரஹ்மாவிடத்திலிருந்து அபூர்வமான வரங்களைப் பெற்றவன் ; ஸகலலோககண்டகன்; ராக்ஷஸாதிபதி. உனக்காக அவனைக் கொன்றேன். இங்கே கும்பகர்ணன் இறந்தான். இங்கே நீலன் பிரஹஸ்தனைக் கொன்றான். இங்கே ஹனுமான் தூம்ராக்ஷனை நாசம் செய்தான். இங்கே ஸுஷேணன் வித்யுன்மாலியை ஸம்ஹரித்தான். இங்கே லக்ஷ்மணன் இந்திரஜித்துடன் கோரயுத்தம் செய்து அவனைக் கொன்றான். இங்கே அங்கதன் விகடனை அழித்தான். இங்கே மற்ற வானரசிரேஷ்டர்கள் விரூபாக்ஷனையும் மஹாபார்ச்வனையும் மஹோதரனையும் அகம்பனனையும் மற்ற ராக்ஷஸர்களையும் கொன்றார்கள். இங்கே ராவணனுடைய பார்யையான மந்தோதரி அனேக ஆயிரம் ராக்ஷஸஸ்த்ரீகளுடன் கண்ணும் கண்ணீருமாய் அவனைக் குறித்து வாய்விட்டழுது பிரலாபித்தாள். இங்கே ஸமுத்திரத்தை தாண்டி, அன்று ராத்திரி தங்கினோம். இதோ நான் ஸமுத்திரத்தில்



கட்டுவித்த அணையைப் பார். இது நளனால் கட்டப்பட்டது. உனக்காகவே இவ்வளவு சிரமத்தையும் வஹித்தோம். அதற்குக்காரணம் உன் நேத்திரங்களின் அழகேயல்லவா? பிறரால் இப்படிச் செய்ய முடியுமா? வருணனுக்கு இருப்பிடமான ஸமுத்திரத்தைப் பார். நடுவில் தங்குவதற்கு த்வீபங்களில்லை. எப்பொழுதும் அலைகள் கர்ஜித்துக் கொண்டிருக்கின்றன; சங்குகளும் முத்துகளும், ரத்தினங்களும் செழித்து வளரும் ஸ்தலம்; ஒருவராலும் கலக்க முடியாதது. இதோ பார், மைநாகபர்வதம் தங்கமயமான கொடி மூடிகளுடன் விளங்குகிறது. இங்கே ஹனுமான் ஸாகரத்தைத் தாண்டும் பொழுது சற்று இளைப்பாறினான். ஸமுத்திரத்தின் நடுவில் அணையின்மேல் நாங்கள் தங்கிக் கூடாரமடித்த இடத்தைப் பார். இதோ அணையின் வடக்குக் கோடியைப் பார். இந்த ஸ்தலம் வெகு புண்யமானது; மூன்று லோகத்தாராலும் பூஜிக்கப்பட்டது; மிகவும் பரிசுத்தமானது; மஹாபாபங்களைப் போக்கக் கூடியது. இங்கே முன்பு ஸமுத்திரராஜன் எனக்கு அனுக்ரஹம் செய்தார். (இந்த ச்லோகம், "அத்ர பூர்வம் மஹாதேவ: ப்ரஸாதம் அகரோத் ப்ரபு:" பலவிதமாய் அர்த்தம் செய்யப்படுகிறது. ஆனால் மஹாதேவனென்றால் ஸமுத்ரராஜனென்று தாத்பர்யம். ஸகல ஜலங்களுக்கும்அதிபதியானதால் அவர் பிரபு. 'ஸமுத்திரத்தை வற்றச் செய்கிறேன். வானரர்கள் கால்நடையாய் ஸமுத்ரத்தின் வழியாய் லங்கைக்குச் செல்லட்டும்' என்று ராமன் கோபம் கொண்டபொழுது ஸமுத்திரராஜன் பிரஸன்னமாகி தன் மேல் அணைகட்டும்படி இடம் கொடுத்தார். இங்கே மஹாதேவனென்றால் ருத்ரனென்று அர்த்தம் செய்யக் கூடாது. அவர் ராமனுக்கு அனுக்ரஹம் செய்ததாக ஓரிடத்திலும் சொல்லப்படவில்லை. ராமன் முன்பு நடந்த விஷயங்களையே ஸீதைக்குச் சொல்லிக் கொண்டு வருகிறார்.—கோவிந்தராஜீயம்)

இவ்விடத்திற்குக் கொஞ்சம் வடக்கில் விபீஷணன் என்னை வந்தடைந்தான். இதோ பார்! விசித்திரமான வனங்களால் சூழப்பட்ட கிஷ்கிந்தை தெரிகிறது. ஸுக்ரீவனுடைய ராஜதானி இதே. இங்கே வாலி என்னால் அடிபட்டு மரணமடைந்தான்" என்றார்.

ஸீதை கிஷ்கிந்தையைப் பார்த்து ஸந்தோஷமடைந்து, ராமனிடத்தில் வைத்த பிரீதியால் பரபரப்புடன் "நாத! ஸுக்ரீவனுடைய பார்யை தாரை, மற்ற வானர சிரேஷ்டர்களுடைய பார்யைகளுடன் அயோத்யைக்குப் போகலாமென்று தோன்றுகிறது" என்று பிரார்த்தித்தாள். ராகவன், "அப்படியே ஆகட்டும்" என்று, கிஷ்கிந்தைக்கு நேரில் விமானத்தை நிறுத்தி, ஸுக்ரீவனை அழைத்து, "நீயும் உன் வானரவீரர்களும் உங்களுடைய பார்யைகளுடன் அயோத்யைக்கு வரவேண்டுமென்று ஸீதை விரும்புகிறாள். ஆகையால், சீக்கிரமாய் அவர்களை அழைத்து வா" என்றார்.

உடனே ஸுக்ரீவன் வானரவீரர்களுடன் கிஷ்கிந்தைக்கு சென்று, அந்தப்புரத்திலிருக்கும் தாரையை அழைத்து, ''நமது ஸ்த்ரீகளுடன் நீ அயோத்யைக்கு வரவேண்டுமென்று ஜானகி விரும்புகிருள். ராகவனும் அப்படியே உத்தரவு செய்திருக்கிருர். எல்லோரும் அயோர்த்யைக்கு சென்று அங்குள்ள அத்புதங்களையும் தசரதருடைய பார்யைகளையும் பார்த்து வருவோம். தாமதம் செய்யாதே'' என்ருன். தாரை வஸ்திராபரணங்களால் தன்னை அலங்கரித்துக்கொண்டு, ஸகல வானரர்களையும் தருவித்து, "நாமெல்லோரும் அயோத்யைக்குப் போகவேண்டுமென்று மஹாராஜா உத்திரவு செய்திருக்கிருர். மேலும், என்னை வேண்டி நீங்கள் இப்படிச் செய்யவேண்டியது. நாமெல்லோரும் அயோத்யா நகரத்தின் சிறப்பையும், ராமன் நகரத்தில் பிரவேசிப்பதையும் அவருடைய பட்டாபிஷேக மஹோத்ஸவத்தையும், தசரதருடைய பார்யைகளையும் பார்த்து வருவோம். சீக்கிரமாய்ப் புறப்படுங்கள்'' என்ருள். ஸகல வானர ஸ்த்ரீகளும் மங்களாலங்காரங்கள் செய்துகொண்டு பிரதக்ஷிணமாய்ப் புஷ்பகவிமானத்திலேறி ஸீதையை நமஸ்கரித்தார்கள்.

பிறகு புஷ்பகவிமானம் அங்கிருந்து கிளம்பி ஆகாசமார்க்கமாய்ப் போகையில், ராமன் ரிச்யமூகபர்வதத்தினருகில், "ஸீதே! அதோ பார்! மின்னற்கொடி பாயும் நீருண்ட மேகத்தைப்போல் அநேக தாதுக்களால் விளங்கும் ரிச்யமூகபர்வதத்தில் ஸுக்ரீவனை ஸந்தித்தேன். இங்கே வாலியைக் கொல்வேனென்று பிரதிக்ஞை செய்தேன். அதோ பார்! பம்பாநதி விசித்திரமான வனங்களால் சூழப்பட்டுத் தெரிகிறது. உன்னை விட்டுப் பிரிந்து இங்கே வெகு காலம் பிரலாபித்தேன். இதன் கரையில் சபரீ என்ற தாபஸியைக் கண்டு அவளால் உபசரிக்கப்பட்டேன். இதோ பார்! ஒரு யோஜனை நீளமுள்ள புஜங்களையுடைய கபந்தன் என்னுல் இங்கே கொல்லப்பட்டான். அதோ பார்! மஹாத்மாவான ஜடாயு வஸித்த ஆலமரம் தெரிகிறது. அங்கே உன்னை மீட்பதற்காக என் பிதாவின் மித்திரன் ராவணனுடன் கோரயுத்தம் செய்து குரூரமாய்க் கொல்லப்பட்டார். அதோ பார்! பஞ்சவடியில் நாமிருந்த ஆசிரமம் தெரிகிறது. அங்கே கரன், தூஷணன், த்ரிசிரஸென்ற ராக்ஷஸவீரர்கள் அவர்களுடைய பரிவாரங்களுடன் என்னுல் யுத்தம் செய்து கொல்லப்பட்டார்கள். அதோ பார்! நமது பர்ணசாலை காணப்படுகிறது. எவ்வளவு அழகாயிருக்கிறது! ராக்ஷஸாதிபதி உன்னைப் பலாத்காரம் செய்து இங்கிருந்து எடுத்துப் போனுன். அதோ கோதாவரிநதி ஸ்படிகத்தைப்போல் தெளிந்த புண்யஜலத்துடன் விளங்குகிறது. அதோ அகஸ்திய மஹரிஷியின் ஆசிரமம் தெரிகிறது. அதோ மஹாத்மாவான ஸுதீக்ஷ்ணருடைய ஆசிரமம் தேஜஸால் ப்ரகாசிப்பதைப் பார். சரபங்கமஹர்ஷியின்



புண்யாசிரமத்தைப் பார்த்தாயா? அங்கே இந்திரன் அந்த மஹர்ஷியைப் பார்க்கவந்த பொழுது நாமிருந்தோமல்லவா? மலைபோன்ற சரீரத்தையுடைய விராதன் கொல்லப்பட்ட இடத்தைப் பார். அதோ தபஸ்விகளின் ஆசிரமங்கள் காணப்படுகின்றன. ஸூர்யனை போலும் அக்னியைப்போலும் தேஜஸுள்ள அத்ரிபகவானுடைய ஆசிரமம் தெரிகிறது பார். பதிவிரதா தர்மமே ரூபமெடுத்து வந்ததைப் போன்ற அனஸூயாதேவி உனக்குஅனுக்ரஹம் செய்தவிடம் இதுதான். அதோ சித்திரகூடம் தெரிகிறது பார். அங்கே கைகேயி புத்திரனை பரதன் என்னை அயோத்யைக்குத் திரும்பி வரும்படி பிரார்த்தித்தான். அதோ ஸமீபத்தில் யமுனாநதியும் அதைச் சூழ்ந்த அழகான காடுகளுக்கு நடுவில் பரத்வாஜருடைய காந்திபொருந்தின ஆசிரமும் காணப்படுகிறது. அதோ விசித்திரமான காடுகளுக்கு நடுவில் கங்கை ஸகல ஜகத்தையும் பரிசுத்தம் செய்து கொண்டு ஓடுகிறது. நானாவர்ணமுள்ள பக்ஷிகள் அதன் ஜலத்தில் விளையாடுவதைப் பார். அதோ தெரிகிற சிருங்கிபேரபுரத்தில் குஹன் நம்மை விசேஷமாய் உபசரித்தான். அதோ பார்! ஸரயூ என்ற புண்யநதி காணப்படுகிறது. இக்ஷ்வாகு வம்சத்தரசர்கள் எண்ணிறந்த யாகங்களைச் செய்து, ஒவ்வொரு யாகத்தின் முடிவிலும் தங்களுடைய கீர்த்தியை நிலை நிறுத்துவதற்காக நாட்டின ஸ்தம்பங்கள் இரு கரைகளிலும் நிறைந்திருப்பதைப் பார். நானாவர்ணமுள்ள புஷ்பங்களால் அலங்கரிக்கப்பட்ட காடுகள் இரு கரைகளிலும் அடர்ந்து வெகு தூரம் பரவியிருப்பதைப் பார். அதோ ஸூரிய வம்சத்துச் சக்கரவர்த்திகளுடைய ராஜதானியான அயோத்யை தெரிகிறது பார். நாம் க்ஷேமமாய்த் திரும்பி வந்தோம். அந்தப் புண்ய நகரத்திற்கு நமஸ்காரம் செய்'' என்ருர்.

அதைக் கேட்டு, ஸகல வானரர்களும் ராக்ஷஸர்களும் விபீஷணனும் ரகுவீரன் அவதாரம் செய்யப்பெற்ற புண்யஸ்தலமான அயோத்யையை உயரக் கிளம்பிப் பார்த்து நமஸ்கரித்தார்கள். வெளுத்த மேகங்களைப்போல் விளங்கும் அரண்மனைகளாலும், விசாலமான கட்டுகளுள்ள கிருஹங்களாலும், உத்தமமான யானைகளாலும் குதிரைகளாலும் இந்திரனுடைய ராஜதானியான அமராவதியைப்போல் விளங்கும் அயோத்யையை வானரர்கள் கண்டு களித்து ஆச்சரியமடைந்தார்கள்.

ததஸ்து தாம் பாண்டு$^{3}$ர ஹர்ம்ய மாலினீம்
விஶாலகக்ஷ்யாம் க$^{3}$ஜவாஜி ஸங்குலாம் |
புரீமயோத்$^{4}$யாம் த$^{3}$த்$^{3}$ருஶு: ப்லவங்க$^{3}$மா:
புரீம் மஹேந்த்$^{3}$ரஸ்ய யத$^{2}$ாமராவதீம் || (59)

---

## ஸர்க்கம் 127

# ராமன் பரத்வாஜாசிரமத்தில் தங்கினது

*பூர்ணே சதுர்த³ஶே வர்ஷே பஞ்சம்யாம் லக்ஷ்மணாக்³ரஜ: |*
*ப⁴ரத்³வாஜாஶ்ரமம் ப்ராப்ய வவந்தே³ நியதோ முநிம் ||* (1)

**ப**தினான்கு வர்ஷங்கள் முடிந்து பதினைந்தாவது வர்ஷம் சித்திரை மாதம் பஞ்சமி திதியில் ராமலக்ஷ்மணர்கள் பரத்வாஜாசிரமத்திற்கு வந்து அந்த மஹர்ஷியை விதிப்படி நமஸ்கரித்துப் பூஜித்தார்கள்.

(சைத்ரசுத்தபஞ்சமியில் ராமலக்ஷ்மணர்களும் ஸீதையும் அயோத்யையிலிருந்து புறப்பட்டார்கள். அன்று ராத்ரி தமஸா நதிக்கரையிலும், ஷஷ்டியில் சிருங்கிபேரபுரத்திலும், ஸப்தமியில் ஆலமரத்தினடியிலும், அஷ்டமியில் பரத்வாஜாசிரமத்திலும், நவமியில் யமுனாதீரத்திலும் வஸித்தார்கள். தசமியில் ராமன் சித்திரகூடத்திற்குப் போவாரென்று குஹனுடைய தூதர்களால் ஸுமந்திரர் அறிந்து அன்று மாலை அயோத்யைக்குத் திரும்பி வந்தார். அன்று ராத்ரி தசரதர் உத்தமகதியடைந்தார். ஏகாதசியில் அவருடைய தேகத்தை எண்ணெய்க்கொப்பரையில் போட்டு வைத்தார்கள். த்வாதசியில் பரதனை அழைத்துவரத் தூதர்கள் புறப்பட்டார்கள். திரயோதசி சதுர்தசியில் அவர்கள் பிரயாணம் செய்து, பௌர்ணமாவாஸ்யை ராத்ரியில் கேகயராஜதானியில் பிரவேசித்தார்கள். பிரதமையில் பரதன் கேகய நகரத்திலிருந்து அயோத்யைக்குப் புறப்பட்டார். வழியில் ஏழு ராத்ரிகள் தங்கி, எட்டாவது தினத்தில் வெகு வேகமாய் ராத்ரிபகல் ஓயாமல் பிரயாணம் செய்து நவமியில் ஸூரியோதய காலத்தில் அயோத்யையில் பிரவேசித்தார். அன்று தசரதருக்கு ஸம்ஸ்காரம் நடந்தது. அன்று முதல் பதின்மூன்றாவது தினம் வைசாகசுத்தபஞ்சமியிலும் அதற்கு முதல் நாளிலும் பரதன் தசரதருக்கு சிராத்தம் செய்தார். அந்தத் தேசத்து ஆசாரப்படி ஷஷ்டியில் அஸ்தி ஸஞ்சயனம் நடந்தது. ஸப்தமியில் வேலைக்காரர்களை அழைத்து வனத்தில் மார்க்கங்களை ஏற்படுத்தும்படி உத்தரவு செய்தார். தசமிவரையில் அந்தக் காரியம் நடந்தது. ஏகாதசியில் பரதன் ராமனிடத்திற்குப் போனார். அன்று ராத்ரி கங்காதீரத்திலும் த்வாதசியில் பரத்வாஜருடைய ஆசிரமத்திலும் தங்கி திரயோதசியில் ராமனைத் தரிசித்தார். சதுர்தசி பௌர்ணமாவாஸ்யை பிரதமை இம்மூன்று தினங்களும் பரதன் ராமனுடன் வஸித்து, வைசாக பஹுள த்விதீயையில் அயோத்யைக்குப் புறப்பட்டு, சதுர்த்தியில் அந்த நகரத்தில் பிரவேசித்தார். பஞ்சமியில் ராமன் சித்ரகூடத்திலிருந்து புறப்பட்டு அத்ரியின் ஆசிரமம் முதலிய இடங்களில் வஸித்துக்கொண்டு, பிறகு பஞ்சவடியில் தங்கிப் பதின்மூன்று வர்ஷங்களைக் கழித்தார். பதினான்காவது வர்ஷம் சைத்ர மாஸத்தில் ராவணன் ஸீதையை அபகரித்தான். வைசாகத்தில் ராமன் ஸுக்ரீவனைக் கண்டார். ஆஷாட மாதத்தில் வாலிவதம். ஆச்வயுஜ மாஸத்தில் வானர ஸேனைகளைத் தருவித்தது. பால்குன மாஸத்தில் ராமன் ஸமுத்திரக் கரையில் பிராயோபவேசம் செய்தார். பால்குன சுத்த சதுர்தசியில் வானரர்கள் லங்கையைக் கொளுத்தினார்கள். அமாவாஸ்யையில் ராவணவதம். பதினைந்தாவது வர்ஷம் சைத்ரசுத்த பிரதமையில் ராவணனுக்கு ஸம்ஸ்காரம் நடந்தது. த்விதீயையில் விபீஷணபட்டாபிஷேகமும், ராமன் ஸீதையைச் சேர்த்துக்கொண்டதும், தேவதைகள் அனுக்ரஹித்ததும் நடந்தன. திருதீயையில் லங்கையைவிட்டுப் புறப்பட்டுச் சதுர்த்தியில் கிஷ்கிந்தையில் தங்கிப் பஞ்சமியில் பரத்வாஜாசிரமத்தில் வஸித்தார். ஷஷ்டியில் நந்திக்கிராமத்திற்குப் போய் ஜடையை நீக்கி அயோத்யையில் பிரவேசித்தார். ஸப்தமியில் புஷ்யநக்ஷத்திரத்தில் சுபமுகூர்த்தத்தில் ஸ்ரீராமசந்திரன் பட்டாபிஷேக மஹோத்ஸவம் பெற்றார்.)

பிறகு ராமன், "ஸ்வாமி! அயோத்யையிலும் கோஸலராஜ்யத்திலும் எல்லோரும் க்ஷேமமாயிருக்கிறார்களா? வியாதி பஞ்சம் வெள்ளம் முதலியவைகளில்லாமல் ஸகலப் பிராணிகளும் ஸுகமாக வஸிக்கின்றனவா? பரதன் பிரஜைகளைத் தர்மமாய்ப் பரிபாலித்து வருகிறானா? சக்கரவர்த்தியின் பார்யைகள் ஸுகமாய் ஜீவித்திருக்கிறார்களா?" என்று கேட்டார். அதற்குப் பரத்வாஜர் வெகு ஸந்தோஷமாய்ப் புன்சிரிப்புடன், "ராம! பரதன் தபஸ்விகளின் வ்ரதத்தை அனுஷ்டித்துக்கொண்டு ஜடைமுடியுடன் தேகமெங்கும் அழுக்கடைந்து உன் வரவை பிரதி க்ஷணமும் எதிர்பார்த்துக்கொண்டு, உன் பாதுகைகளை முன்னிட்டு ராஜ்யபாரம் செய்து வருகிறான். உன் வீட்டில் எல்லோரும் ஸௌக்யமாயிருக்கிறார்கள். முன்பு நீ இங்கே வந்தபொழுது மான்தோல் மரவுரியுடன் தண்டகாரண்யத்தில் பிரவேசிக்க ஸித்தமாயிருந்தாய். உனக்கு நியாயமாய்க் கிடைக்கவேண்டிய ராஜ்யத்தைக் கைவிட்டு, பிதிருவாக்யபரிபாலனமென்ற தர்மத்தையே கைபற்றி, ஐசுவரியங்களையும் வெறுத்து, லக்ஷ்மணனுடனும் ஸீதையுடனும் கால்நடையாய் இங்கே வந்தாய். பால்யம் முதல் சிரேஷ்டமான போகங்களையும் ஸுகங்களையும் அனுபவித்து வந்து, அவைகளை விட்டு, ஸ்வர்க்கவாஸிகள் புண்யம் குறைந்தவுடன் அங்கிருந்து பூலோகத்தில் விழுவதுபோல், இந்த நிர்மானுஷ்யமான வனத்தில் கைகேயியின் வார்த்தையால் வஸித்துக்கொண்டு, பழங்களையும் கிழங்குகளையும் புஜித்துக்கொண்டிருப்பதைப் பார்க்க என் மனம் வருத்தமடைந்தது. இப்பொழுது நீ உத்தேசித்த காரியம் நிறைவேறி, உன் சத்ருக்களை நாசம் செய்து, மித்ரர்களாலும் பரிவாரங்களாலும்

சூழப்பட்டு, ஜயசாலியாய் அயோத்யைக்குப் போவதைப் பார்க்க எனக்கு எல்லையற்ற ஆனந்தமுண்டாகிறது. உனக்கு நேர்ந்த ஸுகதுக்கங்கள் யாவும் எனக்குத் தெரியும். பிராம்மணர்களையும் தபஸ்விகளையும் ரக்ஷிப்பதாக பிரதிக்ஞை செய்து ஜனஸ்தானத்தில் கரன் முதலிய ராக்ஷஸர்களைக் கோரயுத்தத்தில் வதம் செய்ததும்; மாரீசன் மான்வேஷம் தரித்து உங்களை வஞ்சித்ததும்; ஸீதையை ராவணன் அபகரித்ததும்; நீங்கள் கபந்தனைக் கொன்றதும்; பம்பைக்கு சென்று ஸுக்ரீவனுடன் ஸ்நேஹம் செய்ததும்; வாலியை ஸம்ஹரித்ததும்; வானரர்கள் ஸீதையைத் தேடினதும்; மாருதியின் அத்புதமான காரியங்களும்; ஸீதையைக் கண்டுபிடித்ததும்; நளனால் ஸேதுவைக் கட்டுவித்ததும்; வானரர்கள் லங்கையைக் கொளுத்தினதும்; ஸகலப் பிராணிகளையும் உபத்திரவித்த ராவணன் புத்திரமித்திர பந்து பரிவாரங்களுடன் யுத்தத்தில் மடிந்ததும்; தேவதைகள் பிரஸன்னமாகி உனக்கு வரம் கொடுத்ததும் என் தபோமஹிமையால் இங்கிருந்தே பார்க்கப்பட்டன. நானும் உனக்கு வரம் கொடுக்கிறேன். இன்று இந்த ஆசிரமத்தில் தங்கி, என்னால் உபசரிக்கப்பட்டு, நாளை அயோத்யைக்குப் போகலாம்'' என்றார்.

ராமன் அவருடைய வார்த்தையைத் தலைவணங்கி அங்கீகரித்து, "இங்கிருந்தே ஆஞ்ஜநேயரை அனுப்பிப் பரதனுக்கு என் வரவைத் தெரிவிக்கலாம்'' என்று முடிவு செய்து ஸந்தோஷமடைந்து, ''மஹரிஷே! நானும் என் மித்திரர்களும் அயோத்யைக்குப் போகும் வழியில் விருக்ஷங்கள் புஷ்பங்களாலும் பழங்களாலும் செழிக்கவேண்டும். தேன் தாரைதாரையாய்ப் பொழியவேண்டும்'' என்று யாசித்தார். பரத்வாஜர் 'அப்படியே ஆகட்டும்' என்று சொல்ல, அயோத்யைக்குப் போகும் வழியில் இருபுறத்திலும் மூன்று யோஜனைவரையிலுள்ள விருக்ஷங்கள் ஸ்வர்க்கலோகத்து விருக்ஷங்களைப் போலாயின. பழமில்லாத மரங்கள் பழுத்துக் குலுங்கின; புஷ்பமில்லாத மரங்கள் புஷ்பத்தால் தலைவணங்கின; உலர்ந்து பட்டுப்போன மரங்கள் மறுபடியும் தளிர்த்தன. மரங்களிலிருந்து தேன் தாரை தாரையாக பெருகிற்று. அதைக் கண்டு ஸகல வானரர்களும் அளவற்ற ஆனந்தமடைந்தார்கள். அமிருதத்தைப்போல் ருசியுள்ள அந்தப் பழங்களை வேண்டியவரையில் தின்று, தேனைக் குடித்து ஸ்வர்க்கவாஸிகளைப்போல் ஸுகித்தார்கள்.

தத: ப்ரஹ்ருஷ்டா: ப்லவக³ர்ஷபா⁴ஸ்தே
ப³ஹூநி தி³வ்யாநி ப²லாநி சைவ |
காமாது³பாஸ்²நந்தி ஸஹஸ்ரஸ²ஸ்தே
முதா³ந்விதா: ஸ்வர்க³ஜிதோ யதை²வ ‖ (22)

---



## ஸர்க்கம் 128

# ஹனுமானைப் பரதனிடத்திற்கு அனுப்பினது

அயோத்⁴யாம் து ஸமாலோக்ய சிந்தயாமாஸ ராக⁴வ: |
ப்ரியகாம: ப்ரியம் ராம: ததஸ்த்வரித விக்ரம: ‖ (1)

பிறகு ராகவன் அயோத்யையைப்பற்றி நினைத்து மாருதியை அழைத்து, "நீ இங்கிருந்து அதிசீக்கிரமாக அயோத்யைக்குச் சென்று, கௌஸல்யை முதலிய ராஜஸ்த்ரீகள் ஸுகமாயிருக்கிறார்களா என்று தெரிந்துகொள். சிருங்கிபேரபுரத்திலிருக்கும் குஹனைக் கண்டு க்ஷேமம் விசாரித்தேனென்று சொல். நான் கவலையற்றுச் சத்ருக்களை ஜயித்து உத்தேசித்த காரியத்தை முடித்தேனென்று கேட்டு அவன் மிகவும் ஸந்தோஷிப்பான். என்னிடத்தில் வைத்த பக்தியாலும், எனக்கு அவனிடத்திலுள்ள பிரீதியாலும், அவனை இக்ஷ்வாகுவம்சத்தில் பிறந்த ராஜகுமாரனைப்போல் எனக்கு ஸமமாக எண்ணுகிறேன். அவன் அயோத்யைக்குப் போகும் மார்க்கத்தையும் பரதனுடைய க்ஷேம ஸமாசாரத்தையும் உனக்குத் தெரிவிப்பான். நானும் லக்ஷ்மணனும் ஸீதையும் க்ஷேமமாக வந்து சேர்ந்தோமென்று பரதனிடத்தில் தெரிவித்து, நான் அவனுடைய க்ஷேமத்தை விசாரித்ததாகச் சொல். பிதிருவாக்ய பரிபாலனம் செய்ததையும், ராவணன் ஸீதையை பலாத்காரமாய் அபகரித்ததையும், ஸுக்ரீவனுடன் ஸ்நேஹம் செய்ததையும், வாலியை யுத்தத்தில் கொன்றதையும், வானரர்கள் ஸீதையைத் தேடினதையும், நீ ஸமுத்திரத்தைத் தாண்டி லங்கையில் ஸீதையைக் கண்டதையும், ஸமுத்திரக்கரையில் நான் பிராயோபவேசம் செய்ததையும், நளனால் அணைகட்டுவித்ததையும், சாவணாதிகளை ஸம்ஹரித்ததையும், இந்திரன், பிரஹ்மா, வருணன் முதலியவர்கள் எனக்கு வரம் கொடுத்ததையும், (இறந்த வானரர்களைப் பிழைக்கச் செய்ததில் பிரஹ்மாவும் வருணனும் இந்திரனுக்கு அனுமதிகொடுத்து ஸஹாயம் செய்தார்களென்று தெரிகிறது) பரமசிவனுடைய அனுக்ரஹத்தால் நான் தசரதசக்ரவர்த்தியை ஸந்தித்ததையும், நான் அங்கே வந்திருப்பதையும் அவனுக்கு மெதுவாய்ச் சொல். நேற்றுச் சதுர்த்தியுடன் பதினான்கு வர்ஷங்கள் முடிந்துவிட்டபடியால் நான் வரவில்லையென்றெண்ணிக்கொண்டு, அக்னியில் பிரவேசிப்பான். நான் வந்த ஸமாசாரத்தைத் திடீரென்று சொன்னால் ஸந்தோஷம் தாங்காமல் அபாயம் நேரிடும். ராக்ஷஸர்களும், விபீஷணனும், வானரர்களும் ஸுக்ரீவனும் என்னுடன் வந்திருப்பதாகச் சொல். அப்பொழுது அவனுடைய முகத்தில் ஸந்தோஷம் வெளிப்படுகிறதா? துக்கம் வெளிப்படுகிறதா? இன்னும் என் விஷயத்தில் அவனுடைய அபிப்பிராயம் என்னவென்று ஜாக்கிரதையாய்த் தெரிந்துகொள். 'ராமன் ஸகல

சத்ருக்களையும் ஜயித்து, அளவற்ற கீர்த்தியடைந்து, தன் எண்ணங்கள் நிறைவேறி, மஹாபலவான்களான மித்ரர்களுடன் வந்திருக்கிறார் என்று சொல். அப்பொழுது அவன் மனத்திலுண்டாகும் எண்ணங்களை முகஜாடையாலும் இங்கிதங்களாலும் சேஷ்டைகளாலும் அறி. 'நீயே இந்த ராஜ்யத்தை ஆண்டுவா'' என்று நான் சொன்னால் பரதன் அதற்கு ஸம்மதிக்கிறானா இல்லையா என்று நான் பரீக்ஷித்துப் பார்க்கவேண்டும். அப்படியில்லாவிட்டால், "லோகத்தில் உடன்பிறந்தவர்களெல்லோரும் பரதனைப் போலாவார்களா'' என்ற என் ஸ்வபாவத்திற்கும், 'உத்தமமான ராஜலக்ஷணங்களால் அலங்கரிக்கப்பட்ட ராமனுடைய பாத கமலங்களை என் சிரஸில் பக்தியுடன் தரிக்கிறவரையில் எனக்கு ஆறுதலில்லை' என்ற அவனுடைய ஸ்வபாவத்திற்கும் பேதமுண்டாகும். இப்படி அவனை ஏன் பரீக்ஷிக்கவேண்டுமென்றால், குல பரம்பரையாய்த் தனக்குக் கிடைத்த இந்த ராஜ்யம் ஸகல போகபோக்யங்களாலும் சதுரங்க ஸைன்யங்களாலும் அலங்கரிக்கப்பட்டிருக்கையில், இதை ஆண்டனுபவிக்கவேண்டுமென்று யாருக்குத்தான் ஆசையுண்டாகாது? முன்பு தான் இந்த ராஜ்யத்தை ஒப்புக்கொள்ளவேமாட்டேனென்று ஆக்ஷேபித்தான். ஆனாலும், பதினான்கு வர்ஷங்கள்வரையில் என்னைப் பார்க்காமலிருந்து இப்பொழுது என்னைக் கண்ட ஆனந்தப்பெருக்கால் 'நீயே இந்த ராஜ்யத்தை ஆண்டுவா'என்று நான் சொன்னால் ஒப்புக்கொள்கிறானா? வேண்டாமென்கிறானா? ஒப்புக்கொண்டால் முன்பு என் வார்த்தைக்குக் கட்டுப்பட்டு இவ்வளவு காலம் ஆண்டுவந்த இந்த ராஜ்யத்தை அவனே இனிமேலும் ஆண்டுவருவதில் எனக்குப் பரம ஸம்மதம். எனக்கு அபிஷேகம் செய்து பார்த்தனுபவிக்காமல் என் பிதா பரலோகமடைந்தார். நானாவது பரதனுக்கு அபிஷேகம் செய்து பார்த்து ஸந்தோஷப்படுகிறேன். நான் அயோத்யையைவிட்டு வரும்போது பரதனுக்கு அபிஷேகம் செய்து பார்த்துவிட்டுப் போகலாமென்று மெள்ளத் தயங்கி நடந்தேன். நான் ராஜ்யத்தை விட்டுப் போவதற்கு வருத்தப்படுகிறேனென்று கைகேயி அர்த்தம் செய்துகொண்டாள். இவ்வளவு காலம்வரையில் இந்த ராஜ்யத்தை ஸ்வதந்திரமாய் ஆண்டு அனுபவித்து வந்த பரதனுக்கு இதில் பற்றிருக்கிறதாவென்று பரீக்ஷித்துப் பார்த்து, அவ்விதமான ஆசையிருந்தால் நாங்கள் இங்கிருந்து அயோத்யையை நோக்கி வெகு தூரம் செல்வதற்கு முன் நீ திரும்பி வந்து என்னிடத்தில் தெரிவிக்கவேண்டும். இல்லாவிட்டால் நீ அங்கேயே இரு'' என்றார். (ராமனுக்குப் பரதனுடைய அந்தரங்கம் நன்றாய்த் தெரியும். ஆனால் தனக்கு அத்யந்தம் பிரியமானவனையும் அடிக்கடி பரீக்ஷிக்கவேண்டுமென்ற ராஜநீதியை அனுஸரித்துப் பரதனிடத்தில் ஸந்தேகம் கொண்டவர்போல் பேசினார். தான் திடீரென்று பரதனுக்குத் தரிசனம் கொடுத்தால் அந்த ஆனந்தம் தலைக்கேறி அபாயம் நேருமென்று ஹனுமானை முதலில் அனுப்பித் தான் வருவதைத் தெரிவித்தார். ராமனுடைய கருத்தை அறிந்த மாருதியும் திரும்பி வந்து ராமனுக்குப் பதில் ஸமாசாரம் சொல்லாமல் பரதனுடன் வந்தார்.)



கருடன் ஸமுத்திரத்திலிருந்து மஹாஸர்ப்பங்களைக் கொத்திக்கொண்டு ஆகாச வீதியில் செல்வதுபோல், உடனே ஆஞ்ஜநேயர் மனுஷ்ய ரூபத்துடன் அதிவேகமாய் அங்கிருந்து கிளம்பிப் போய், அயோத்யையை நோக்கி, லங்கையும் யமுனையும் சேருமிடத்திலுள்ள பிரயாகையைத் தாண்டிச் சிருங்கிபேரபுரத்திற்கு வந்து குஹனைக் கண்டு, ஸந்தோஷத்துடன் சுபமான வார்த்தைகளால் "மித்திர! உன் பிரியமான தோழரும் இக்ஷ்வாகு குல திலகரும் வீணாகாத பராக்கிரமமுடையவருமான ராகவன் லக்ஷ்மணனோடும் ஸீதையோடும் உன் க்ஷேமத்தை விசாரித்தார். இன்று ராத்ரி பரத்வாஜ மஹர்ஷியின் ஆசிரமத்தில் தங்கி நாளைக் காலையில் அவரிடத்தில் உத்தரவு பெற்றுக்கொண்டு இந்த வழியாய் வருவார்'' என்றார். அங்கிருந்து கிளம்பி, அதிவேகமாய் ஆகாசமார்க்கத்தில் போய், வழியிலுள்ள காடு மலை வனம் முதலியவைகளின் ஸௌந்தரியத்தைக் கவனிக்காமல், பரசுராம தீர்த்தத்தையும் வாலுகினீ நதியையும், கோமதியையும் அதற்கடுத்த பயங்கரமான பனங்காட்டையும் எண்ணிறந்த ஜனங்கள் ஸந்தோஷமாய் வஸிக்கும் தேசங்களையும், கிராமங்களையும், நகரங்களையும் தாண்டி, வெகு தூரம் போய், நந்திக்கிராமத்திற்கு ஸமீபத்திலுள்ள காடுகளைக் கண்டார். இந்திரனுடைய நந்தவனமென்ற தோட்டத்தில் தேவர்கள் விளையாடுவதுபோல், ஸ்த்ரீகளும், பாலர்களும், வயதுசென்றவர்களும் அங்கே விளையாடிக் கொண்டிருந்தார்கள். அயோத்யைக்கு இரண்டு நாழிகை வழிக்கு அப்புறமுள்ள நந்திக்கிராமத்தில் பரதன் மரவுரி மான்தோல், ஜடைமுடிகளைத் தரித்துக்கொண்டு தேகம் இளைத்து, மனம்வாடி, அழுக்கடைந்து, தபஸ்விகளின் விரதத்தை ஆசரித்துக்கொண்டு, ராமன் எப்பொழுது வருவாரென்று வழி பார்த்துக் கொண்டிருந்தார். இந்திரியங்களையும் மனத்தையும் அடக்கி, மௌனமாய் ஆத்மஸ்வரூபத்தை தியானம் செய்துகொண்டு, பிரஹ்மர்ஷிகளின் தேஜஸையுடையவராய், ரகுவீரனுடைய திருவடிகளை முன்னிட்டு பிரஜைகளை தர்மமாய்ப் பரிபாலித்து வந்தார், ஸமர்த்தர்களான மந்திரிகளாலும் சுத்தர்களான புரோஹிதர்களாலும் சூழப்பட்டு, நான்கு வர்ணத்தாருக்கும் யாதொரு அபாயமுமில்லாமல் ஆண்டு வந்தார். அவருடைய மந்திரிகள் ஸேனைத்தலைவர்கள் மற்றுமுள்ளோர்கள் அவரைப்போல் தபஸ்வி வேஷம் தரித்திருந்தார்கள். "தசரத சக்கரவர்த்திக்குப் புத்திரனாய்ப் பிறந்து அளவற்ற ஐச்வரியத்தை அனுபவித்து வெகு செல்வமாய் வளர்க்கப்பட்டவர்; கேவலம் தர்மத்திற்குக் கட்டுப்பட்டு ஸகல ஸங்கங்களையும் விட்டுத் தபஸ்விகளின் கடுமையான

விரதத்தை அனுஷ்டிக்கையில், நாம் மாத்திரம் போகபோக்யங்களை அனுபவிப்பது நியாயமல்ல'' என்றிருந்தார்கள். ஸகல தர்மங்களின் ரஹஸ்யத்தை அறிந்தவர்; தர்மமே ரூபமெடுத்து வந்ததோ என்று சொல்லக்கூடியவர். மாருதி பரதனுடைய ஸமீபத்தில் போய் கைகூப்பி வணக்கமாய், "ஸ்வாமி! 'தசரத புத்திரனை ரகுநாதன் தண்டகாரண்யத்தில் தபஸ்வி வேஷத்துடன் சென்றாரே. பதினான்கு வர்ஷங்களான பின் தவறாமல் வருகிறேனென்றாரே. இன்னும் வரவில்லையே என்று தாங்கள் வருத்தப்பட்டுக் கொண்டிருக்கும் ராமமூர்த்தி, தன் க்ஷேமத்தைத் தங்களுக்குத் தெரிவித்து, தங்களுடைய க்ஷேமத்தை விசாரிக்கிறார். தங்களுக்கு அத்யந்தம் பிரியமான வார்த்தையைச் சொல்லுகிறேன். இதுவரையில் தங்களைப் பிடித்த துக்கத்தை விடுங்கள். அதிசீக்கிரத்தில் ராமனைப் பார்ப்பீர்கள். அவர் ராவணன் முதலிய ராக்ஷஸர்களை ஸம்ஹரித்து ஜானகியை மீட்டு, தான் உத்தேசித்த காரியங்களை முடித்து, மஹாபலவான்களான மித்திரர்களுடன் வருகிறார். இந்திராணியுடன் கூடின இந்திரனைப்போல், ஜானகீ ஸமேதராய் லக்ஷ்மணனுடன் தங்களுக்குத் தரிசனம் கொடுக்கப் போகிறார்'' என்றார்.

ஹனுமாருக்கும் பரதனுக்கும் பூர்வபரிசயமில்லாததால் மாருதி அவரை வந்தனம் செய்யவில்லை. அல்லது 'கைகூப்பி' என்ற பதத்தால் நமஸ்கரித்தாரென்றும் அர்த்தம் செய்யலாம். அல்லது பரதனிருக்கும் ஸ்திதியைப் பார்த்து, "ஒரு க்ஷணம் நான் தாமதித்தால் இவருடைய உயிருக்கு மோசம் வரும். சுவரை வைத்துக் கொண்டல்லவா சித்திரம் எழுத வேண்டும்? ராமன் வருகிறாரென்று சொல்லி இவருடைய உயிரைக் காப்பாற்றுவது முக்கியமேயொழிய நமஸ்காரம் முதலிய மரியாதைகளைப் பின்பு பார்த்துக்கொள்வோம் என்றிருக்கலாம். அல்லது பரதனுடைய துக்கத்தையும் ராமனிடத்தில் அவர் வைத்த பக்தியையும் அவருடைய உத்தமஸ்வபாவத்தையும் பார்த்து, மெய்மறந்து தடுமாறியிருக்கலாம்.

அந்த வார்த்தைகளைக் கேட்டவுடன், 'என் அண்ணன் எப்பொழுது வருவார்? அவருடைய முகமண்டலத்தை எப்பொழுது பார்ப்பேன்? அவருடைய பாதங்களை எப்பொழுது நமஸ்கரிப்பேன்' என்று எல்லையற்ற ஆவல் கொண்டிருந்த பரதன், ஸந்தோஷம் மேலிட்டு மெய்மறந்து பூமியில் விழுந்து மூர்ச்சையடைந்தார். சற்று நேரம் கழித்து பிரக்ஞை தெளிந்து எழுந்து, தனக்குப் பிரியமான வார்த்தையைச் சொன்ன ஆஞ்ஜநேயரை இறுகத் தழுவி, ஆனந்தக் கண்ணீரால் நனைத்தார். (ராமன் வருகிறாரென்ற ஸமாசாரத்தைக் கேட்டவுடனே இந்த ஸ்திதியை அடைந்த பரதனுக்கு ராமன் திடீரென்று வந்துவிட்டால் என்ன அபாயம் நேருமோ என்று ஸந்தேகித்தே ராமன் ஆஞ்ஜநேயரை அனுப்பினார்.) பிறகு "மனுஷ்ய ரூபத்தைத் தரித்திருந்தாலும் உமது அபார தேஜஸால் நீர் மனுஷ்யனா தேவதையா என்று எனக்குத் தெரியவில்லை. எப்படியிருந்தாலும் இருக்கட்டும். என்னிடத்தில் அபார கருணை வைத்து என் பிராணனை ரக்ஷிக்கும் ஸமாசாரத்தைச் சொன்னீர்கள். அதற்குத் தகுந்த வெகுமானத்தை நான் செய்யச் சக்தியற்றவனாயிருந்தாலும் என்னால் இயன்றதைச் செய்கிறேன். அதை ஸந்தோஷமாய்ப் பெற்றுக்கொண்டு என்னை அனுக்ரஹிக்க வேண்டும். லக்ஷம் பசுக்களையும் நூறு கிராமங்களையும் விசேஷ ரூபவதிகளான பதினாறு கன்யைகளையும் பெற்றுக் கொள்ளுங்கள். அவர்கள் உத்தம ஜாதியில் பிறந்தவர்கள்; நிகரற்ற அழகுள்ளவர்கள்; ஸமஸ்த ஆபரணங்களாலும் அலங்கரிக்கப்பட்டவர்கள்; சிரேஷ்டமான புத்தியும் நடத்தையுமுள்ளவர்கள்'' என்றார்.



பரதன் இப்படி ஆஞ்ஜநேயரிடத்திலிருந்து ராமனுடைய வரவைத் தெரிந்துகொண்டு அவரைப் பார்க்க வேண்டுமென்ற ஆசை வரவர விருத்தியாகி, மாருதியைப் பார்த்து வெகுப்ரீதியுடன் பின் வருமாறு சொன்னார்.

நிஶம்ய ராமாக$^3$மநம் ந்ருபாத்மஜ:
கபிப்ரவீரஸ்ய தத$^3$த்$^3$பு$^4$தோபமம் |
ப்ரஹர்ஷிதோ ராமதி$^3$த்$^3$ருக்ஷயாப$^4$வத்
புநஶ்ச ஹர்ஷாதி$^3$த$^3$மப்$^3$ரவீத்$^3$வச: || (45)

## ஸர்க்கம் 129

## மாருதி ராமனுடைய விருத்தாந்தத்தை பரதனுக்குச் சொன்னது

ப$^3$ஹூநி நாம வர்ஷாணி க$^3$தஸ்ய ஸுமஹத்$^3$வநம் |
ஶ்ருணோம்யஹம் ப்ரீதிகரம் மம நாத$^2$ஸ்ய கீர்த்தநம் || (1)

"மித்திர! என் பிரபு இவ்விடமிருந்து தண்டகாரண்யத்திற்குள் பிரவேசித்து அநேக வர்ஷங்களாயின. இப்பொழுதுதான் அவருடைய விருத்தாந்தம் எனக்குத் தெரிந்தது. ஒருவன் உயிருடன் மாத்திரமிருந்தால் ஸுகத்தை அனுபவிக்காமலிருக்கமாட்டானென்ற லோகவார்த்தை என் விஷயத்தில் மிகவும் பொருந்தியிருக்கிறதென்று தோன்றுகிறது. ஆனால், ராகவனுக்கும் வானரர்களுக்கும் எப்படி ஸம்பந்தம் ஏற்பட்டது? எவ்விடத்தில்? எந்த பிரயோஜனத்திற்காக? இதை எனக்கு விஸ்தாரமாய்ச் சொல்ல வேண்டும்'' என்றார். (இந்த வாக்யத்தால் வானரஸேனை கிஷ்கிந்தையில் கூடினதையும், அவைகளுடன் ராமன் தெற்கே சென்றதையும், பரதன் பொதுவாய்க் கேள்விப்பட்டிருக்கிறாரென்று தெரிகிறது. —கோவிந்தராஜீயம். 'நீர் தேவனா மனுஷ்யனா' என்று பரதன் ஸந்தே

கித்துக் கேட்டவுடன், மாருதி, 'நான் வானர ராஜாவான ஸுக்ரீவனுடைய மந்திரி; ராகவனுக்குத் தாஸன்' என்று தன் விருத்தாந்தத்தைத் தெரிவித்திருக்க வேண்டுமென்று தோன்றுகிறது.)

அதைக் கேட்டு ஆஞ்ஜனேயர் ராமனுடைய சரித்திரத்தைச் சொல்ல ஸமயம் வாய்த்ததைப்பற்றி ஆனந்தமடைந்து, "ஸ்வாமி! தங்களுடைய மாதாவிற்குச் சக்ரவர்த்தி வரம் கொடுத்ததும், அதன்படி ராமன் காட்டிற்கனுப்பப்பட்டதும், அவரைப் பிரிந்த துக்கத்தால் மஹாராஜா லோகாந்தரம் அடைந்ததும், தாங்கள் தூதர்களால் அயோத்யைக்கு அழைத்து வரப்பட்டதும், தங்களுக்கு ராஜ்யத்தைக் கொடுத்தபொழுது வேண்டாமென்று மறுத்ததும், தங்களுக்கு இந்தப் பூமியை ஆளத்திறமையிருந்தும் சித்திரகூடத்திற்குச் சென்று, ராமனைக் கண்டு, ஸாதுக்களின் ஆசாரப்படி அவருக்கு ராஜ்யத்தை ஸமர்ப்பித்து அயோத்யைக்குத் திரும்பிவரும்படி ப்ரார்த்தித்ததும், அவர் ஸம்மதிக்காமல் தன் மரவடிகளைக் கொடுத்தனுப்பினதும் தங்களுக்குத் தெரிந்த விஷயமே. (தான் சொல்லப்போகிற விஷயத்தில் நம்பிக்கை உண்டாவதற்காக முன் நடந்த விருத்தாந்தத்தைத் தெரிவிக்கிறார்.)

தாங்கள் அயோத்யைக்குத் திரும்பிவந்த பிறகு நடந்ததைச் சொல்லுகிறேன். அந்த வனத்தில் மிருகங்களும் பக்ஷிகளும் தபஸ்விகளும் ஸைன்யங்களுடைய நெருக்கத்தாலும் அப்படிப்பட்டவர்களை அதுவரையில் பார்க்காததாலும் மிகவும் கஷ்டப்பட்டபடியால், ராமலக்ஷ்மணர்கள் அங்கிருந்து தண்டகாரண்யத்தில் ப்ரவேசித்தார்கள், யானைகளாலும் ஸிம்ஹங்களாலும் புலிகளாலும் இதர க்ரூர மிருகங்களாலும் பயங்கரமாய், மனுஷ்யஸஞ்சாரமில்லாமல் கண்ணுக்கெட்டினவரையில் வியாபிக்கும் அந்த வனத்தில் செல்லுகையில், விராதனென்ற ஒரு ராக்ஷஸன் அவர்களை எதிர்த்தான். அவனைக் கொன்று ஒரு பெரிய குழியை வெட்டி அதில் புதைத்தார்கள். ராமன் அன்று ஸாயங்காலத்தில் சரபங்கருடைய ஆசிரமத்தில் தங்கி, அவர் உத்தமலோகத்தை அடைந்தவுடன் அங்கிருந்து புறப்பட்டு ஸகல ரிஷிகளையும் நமஸ்கரித்து ஜனஸ்தானத்திற்குப் போனார். அங்கே சூர்ப்பணகையென்ற ராக்ஷஸி தன்னைப் பாரியையாக அடையவேண்டுமென்று ராமனை நிர்ப்பந்திக்க அவளுடைய காதுகளையும் மூக்கையும் கத்தியால் அறுத்தார். அவள் தன் பந்துக்களான கரதூஷணர்களிடத்தில் போய்முறையிட, அவர்கள்பதினாலாயிரம் ராக்ஷஸஸைன்யத்துடன் ராமனை எதிர்த்தார்கள். அவர்கள் மஹாபலவான்கள்; மஹாவீரியசாலிகள்; யாகயக்ஞங்களையும் தபஸையும் கெடுப்பவர்கள். அவர்களை ரகுவீரன் ஒண்டியாய் ஒரு யாமத்தில் தீக்ஷ்ணமான பாணங்களால் ஒருவர் பாக்கியில்லாமல் யமலோகத்திற்கு அனுப்பினார். பிறகு சூர்ப்பணகை ராவணனிடத்தில் போய் முறையிட, ராக்ஷஸாதிபதி தண்டகாரண்யத்திற்கு வந்து, மாரீசனைப் பொன் மானாக்கி, ராமலக்ஷ்மணர்களுடைய ஆசிரமத்திற்குமுன் விளையாடச் செய்தான். ஸீதை, "நாத! இந்த மான் வெகு அழகாயிருக்கிறது; இதைப் பிடித்துத் தாருங்கள். ஆசிரமத்தில் கட்டியிருந்தால் விநோதமாயிருக்கும்" என்று ராமனைப் ப்ரார்த்தித்தாள். அப்பொழுது ராமன் ஆயுதபாணியாய் அந்த மானைத் துரத்திக்கொண்டு வெகுதூரம் சென்றார். மாரீசன் சாகும்தருணத்தில் ராமனைப்போல் "ஹா, லக்ஷ்மண! ஹா ஸீதே! என்று அலற, ஸீதை ராமனுக்கு ஆபத்து நேர்ந்ததென்றெண்ணி லக்ஷ்மணனை அனுப்பினாள். அந்த ஸமயம் பார்த்து தசக்ரீவன் ஆசிரமத்தில் நுழைந்து, ஸீதையை பலாத்காரமாய் அபகரித்து, ரோஹிணீ நக்ஷத்திரத்தைப் புதன் ஆக்ரமிப்பதுபோல், ஆகாசமார்க்கமாய்ச் செல்லும்பொழுது தசரதசக்கரவர்த்திக்குப் பரமமித்ரனான ஜடாயு அவனைத் தடுத்து கோரயுத்தம் செய்தார். அவரை ஜயித்துக் காயப்படுத்தி மறுபடியும் ஆகாசமார்க்கமாய் லங்கையை நோக்கிப் போகும்பொழுது, ரிச்யமூகபர்வதத்தில் உட்கார்ந்திருந்த நானும் ஸுக்ரீவனும் மற்ற வானரர்களும் ஒரு ராக்ஷஸன் விமானத்தில் திவ்யஸௌந்தரியமுள்ள ஒரு ஸ்த்ரீயை எடுத்துப்போவதையும் 'அவள், ராம! ராம! என்று கதறுவதையும் கண்டு ஆச்சரியமடைந்தோம். பிறகு ராவணன் லங்கைக்குச் சென்று ஸீதையைத் தன் அரண்மனையில் வைத்துப் பலவிதமாய் ஸமாதானம் செய்து தன் இஷ்டத்திற்கிணங்கும்படி ப்ரார்த்தித்தான். ஸீதை துரும்பாக அவனை நினைத்து லக்ஷ்யம் செய்யாமல் ராமனிடத்திலேயே நாடின மனமுடையவளாயிருந்தாள். ராவணன் அவளை அசோகவனத்தில் வைத்து ராக்ஷஸிகளைக் காவலாக ஏற்படுத்தினான்.

அதற்குள் ராமன் மாரீசனைக் கொன்றுவிட்டு ஆசிரமத்திற்குத் திரும்பிவந்து பார்க்கையில் ஸீதையைக் காணாமல் தேடிக்கொண்டு போனார். ஜடாயு காயம் பட்டு கிடப்பதைக் கண்டு வருத்தமடைந்து, அவரால் நடந்த விருத்தாந்தத்தைத் தெரிந்துகொண்டு அவருக்குத் தகன ஸம்ஸ்காரங்களைத் தானே செய்தார். பிறகு ஸீதையைத் தேடிக்கொண்டு ராமலக்ஷ்மணர்கள் கோதாவரிக்கரைகளிலும் வனங்களிலும் அலைந்து, ஒரு காட்டில் கபந்தனென்ற ராக்ஷஸனைக் கண்டார்கள. அவனைக் கொன்று அவனுடைய வார்த்தையால் ரிச்யமூகபர்வதத்திற்குப் போய் ஸுக்ரீவனைக் கண்டார்கள். ஒருவரையொருவர் பார்த்தவுடன் அபாரமான ப்ரீதியுண்டாயிற்று. ஸுக்ரீவன் தன் தமயனான வாலியால் ராஜ்யத்திலிருந்து துரத்தப்பட்டு ஸகல திக்குகளிலும் ஓடி, முடிவில் ரிச்யமூகபர்வதத்திற்கு வந்து மதங்கரிஷியின் ஆசிரமத்தில் ஒளிந்திருந்தான். ராமனும் ஸுக்ரீவனும் தங்களுடைய விருத்தாந்தத்தை தெரிவித்த பிறகு அவர்களுக்கு ஸ்நேஹம் விருத்தியாயிற்று. பிறகு ராமன் மஹாபலவானான வாலியைக் கொன்றுஸுக்ரீவனை வானராதிபதியாய்ச் செய்

தார். அவன் ராமனுடைய பார்யை யிருக்குமிடத்தைக் கண்டு பிடிப்பதாய் அவருக்குப் பிரதிக்ஞை செய்திருந்தான். அப்படியே பத்து கோடி வானரர்களை நான்கு திக்குகளிலும் அனுப்பினான். அதில் தெற்கே சென்ற நாங்கள் விந்திய மலைச்சாரல்களில் அலைந்துதிரிந்து வெகுகாலம் கழித்தோம். பிறகு லங்காத்வீபத்தில் ஸீதை ராவணனுடைய அந்தப்புரத்தில் வைக்கப்பட்டிருக்கிறாளென்று ஜடாயுவின் தமையனான ஸம்பாதி தெரிவித்தான்.

என்னுடனிருந்த வானரர்கள் அங்கே எப்படிப் போவதென்று மனம் தளர, நான் நூறுயோஜனையுள்ள ஸமுத்திரத்தைத் தாண்டி லங்கைக்குப்போய், அசோகவனத்தில் ஸீதை தனியாகத் தேகம் இளைத்து அழுக்குப்படிந்து மனம்வாடி ராக்ஷஸிகளுக்கு நடுவில் ஒற்றை வஸ்திரத்துடன் ஸந்தோஷமற்று ராமனையே தியானித்துக் கொண்டிருக்கக் கண்டேன். அவளிடத்தில் நடந்த விருத்தாந்தங்களைத் தெரிவித்து, ராமன் என்னிடத்தில் அடையாளமாய்க் கொடுத்த மோதிரத்தை ஸமர்ப்பித்து, அவ்விருவர்க்கும் ரஹஸ்யமாய் நடந்த சில விஷயங்களை அடையாளமாய்ச் சொல்லி என்னை நம்பச்செய்தேன். அவளுடைய பதிலைத் தெரிந்து கொண்டு, சூடாமணியை அடையாளமாகப் பெற்றுக்கொண்டு, மறுபடியும் ஸமுத்திரத்தைத் தாண்டி, வானரர்களை ஸந்தோஷப் படுத்தி, ராமனிடத்தில் அந்தச் சூடாமணியைக் கொடுத்து, ஸீதையின் பதிலைத் தெரிவித்தேன். மரணமடையப்போகிறவனுக்கு அமிருதபானம் கிடைத்ததுபோல் ஸீதை உயிரோடிருக்கிறாளென்று கேட்டு, ராமன் உயிர் பெற்றார்.

ராகவன் பிரளயகாலத்தில் ஸகல லோகங்களையும் நாசம் செய்யும் ஸூரியனைப்போல் சத்ருக்களை ஸம்ஹரிக்க நிச்சயித்து வானர ஸைன்யங்களைச் சேர்த்துக்கொண்டு ஸமுத்திரக்கரைக்கு வந்து நளனால் அணைகட்டுவித்தார். அதன் வழியாய் லங்கைக்குப் போய் அதை முற்றுகையிட்டு, நீலன் பிரஹஸ்தனையும், ராகவன் கும்பகர்ணனையும் ராவணனையும், லக்ஷ்மணன் இந்திரஜித்தையும் கொன்றார்கள். பிறகு இந்திரன், வருணன், யமன், பரமசிவன், தசரத சக்ரவர்த்தி, தேவர்ஷிகள் முதலியவர்களை ஸந்தித்து, அவர்களிடத்திலிருந்து வரங்களைப்பெற்று, இறந்த வானரர்களைப் பிழைப்பித்து, அவர்களுடன் புஷ்பகவிமானத்தில் அமர்ந்துகிஷ்கிந்தைக்கு வந்தார். கங்கைக்கரையில் பரத்வாஜாசிரமத்தில் இன்று வஸிக்கிறார். நாளைய தினம் புஷ்யயோகமானதால் அங்கிருந்து புறப்பட்டுத் தங்களை ஸந்திப்பார்" என்றார். இப்படி ஹனுமார்சொல்லக்கேட்டுப் பரதன் கைகூப்பி, ராமனை மனத்தால் வணங்கி, "ஆஞ்ஜநேய! வெகு நாளாய் நான் எண்ணியிருந்த கோரிக்கைகள் இன்று நிறைவேறின" என்று சொல்லி மாருதியின் மனத்தை ஸந்தோஷப் படுத்தினார்.



ததஸ்து ஸத்யம் ஹநுமத்$^{3}$வசோ மஹத்
நிஶம்ய ஹ்ருஷ்டோ ப$^{4}$ரத: க்ருதாஞ்ஜலி: |
உவாச வாணீம் மநஸ: ப்ரஹர்ஷிணீம்
சிரஸ்ய பூர்ண: க$^{2}$லு மே மநோரத$^{2}$: || (59)

## ஸர்க்கம் 130

## ராம லக்ஷ்மண பரத சத்ருக்னர்கள் ஸந்தித்தது

ஶ்ருத்வா து பரமாநந்த$^{3}$ம் ப$^{4}$ரத: ஸத்ய விக்ரம: |
ஹ்ருஷ்ட மாஜ்ஞாபயாமாஸ ஶத்ருக$^{4}$நம் பரவீரஹா || (1)

இப்படிப் பரமானந்தகரமான வாக்யங்களைக் கேட்டு பரதன், "சத்ருக்ன! வீரசிகாமணே! அயோத்யையில் நாற்சந்திகளிலுள்ள மண்டபங்களும், தேவாலயங்களும், மாலைகளாலும், ஹாரங்களாலும், தோரணங்களாலும், பரிமளத் திரவ்யங்களாலும் அலங்கரிக்கப்படட்டும். ஸூதர்களும் மாகதர்களும், வைதாளிகர்களும் வாத்யங்களில் நிபுணர்களும், பாடகர்களும், வேச்யைகளும், ராஜ மஹிஷிகளும், மந்திரிகளும், ஸேனைத்தலைவர்களும், ஸைன்யங்களும், அவர்களுடைய பத்தினிகளும், பிராஹ்மணர்களும், க்ஷத்ரியர்களும், ஜாதித்தலைவர்களும் ராமனுடைய முகமண்டலத்தைப் பார்த்துக் களிக்க இப்பொழுதே புறப்படட்டும்" என்றான். அப்படியே சத்ருக்னன் கூலியில்லாமல் வேலைசெய்பவர்களை அழைத்து, "இங்கிருந்து அயோத்யை வரையில் கொஞ்சம்கூட மேடுபள்ளமில்லாமல் ஒழுங்குபடுத்துங்கள். பனிக்கட்டியைப்போல் குளிர்ந்த ஜலத்தால் எங்கும் தெளிக்கவேண்டும். புஷ்பங்களையும் பொரிகளையும் நான்கு புறங்களிலும் வாரியிறைக்க வேண்டும். வீதிகளில் த்வஜங்களும் கொடிகளும் நாட்டப்பட வேண்டும். ஸூரியோதயம் முதல் ஒவ்வொரு கிருஹமும் விசித்திரமாய் அலங்கரிக்கப்பட வேண்டும். ராஜமார்க்கத்தில் மாலைகளும் தோரணங்களும் கட்டப்பட்டு, அநேக வர்ணமுள்ள வாஸனைப்பொடிகளால் அங்கங்கே விசித்திரமான கோலங்கள் போடப்பட வேண்டும்" என்றார்.

பிறகு ராஜமஹிஷிகளும், திருஷ்டி, ஜயந்தன், விஜயன், ஸித்தார்த்தன், அர்த்தஸாதகன், அசோகன், மந்த்ரபாலன், ஸுமந்திரன் முதலிய மந்திரிகளும் மதயானைகளில் ஏறி வந்தார்கள். அரசனுக்கு அந்தரங்கமான வேறு சிலர் பெண்யானைகளில் ஏறி வந்தார்கள். பிராஹ்மணர்களும் க்ஷத்ரியர்களும் ஜாதித்தலைவர்களும் ஸைன்யங்களின் ஸ்த்ரீகளும், அவரவர்களுக்குத் தகுந்த குதிரைகள் ரதங்கள் பல்லக்குகள் முதலிய வாகனங்களில் ஏறி வந்தார்

கள். எண்ணிறந்த யானை வீரர்களும் குதிரை வீரர்களும் ரத வீரர்களும் காலாட்களும் ஆயுதபாணிகளாய் புறப்பட்டார்கள். தசரதருடைய பார்யைகள் கௌஸல்யையையும் ஸுமித்திரையையும் முன்னிட்டுக்கொண்டு கைகேயியுடன் வாஹனங்களில் நந்திக்கிராமத்திற்கு வந்தார்கள். (பரதன் கைகேயியை அலக்ஷ்யம்செய்து அழைக்கவில்லை; ஆகையால், பிறகு புறப்பட்டு, மற்றவர்களுடன் நந்திக்கிராமத்திற்கு வந்து சேர்ந்தாளென்று தெரிகிறது.) அயோத்யாபுரியில் ஒருவர் பாக்கியில்லால் நந்திக்கிராமத்திற்கு வந்தார்கள். குதிரைகளின் குளம்புகளாலும் ரதங்களின் சக்ரங்களாலும் சங்கம் துந்துபி பேரிகை முதலிய வாத்யங்களாலும் பூமி நடுங்கிற்று. பிராஹ்மண சிரேஷ்டர்களும், க்ஷத்ரியத் தலைவர்களும், வைசிய முக்யர்களும் ஜாதிகளின் நாட்டாண்மைக்காரர்களும் பரதனைப் பின்தொடர, வஸிஷ்டர் முதலிய மந்திரிகள் மாலைகளையும் மோதகங்களையும் எடுத்துக்கொண்டு வர, சங்கம், பேரீ துந்துபி, வீணை, மிருதங்கம், புல்லாங்குழல் முதலியவாத்யங்கள் கோஷிக்க, ஸூதமாகத வந்திகள் ஸ்தோத்ரம் செய்து கட்டியம்கூற, பரதன் ராமனுடைய பாதுகைகளைச் சிரஸில் வைத்துக் கொண்டு அவைகளின்மேல் வெண்மையான மாலையால் அலங்கரிக்கப்பட்ட வெண்குடையைப் பிடித்து, இரு பக்கங்களிலும் தங்கப் பிடிகளுள்ள சாமரங்களை போடச் செய்து நந்திக்கிராமத்திலிருந்து ராகவனை எதிர்கொண்டழைக்கப் புறப்பட்டார். உபவாஸத்தால் தேகம் இளைத்து, பூமியில் படுப்பதால் அழுக்கடைந்து, மரவுரி, மான்தோல், ஜடைமுடியுடன் விளங்கும் பரதன், ராமன் வருகிறானென்று கேள்விப்பட்டவுடன் அடங்கா மகிழ்ச்சி கொண்டார். பிறகு நான்கு புறங்களிலும் பார்த்து, ராமனுடைய பரிவாரங்கள் வராததைக் கண்டு, ஸமீபத்திலிருந்த ஆஞ்ஜனேயரை நோக்கி, "இக்ஷ்வாகு குல திலகனான ரகுவீரனைக் காணவில்லையே! குரங்குகளுக்குள்ள சபலபுத்தியை அனுஷ்டித்து, இப்படிச் சொன்னாயா? ராமன் தூரத்தில் வந்தாலும் வானர ஸேனை வரவில்லையே! அவர்கள் காமரூபிகளானதால் வானர ரூபத்துடன் வராவிட்டாலும் வேறு ரூபங்களையாவது தரித்து வருவார்களல்லவா" என்றார். மாருதி தாமதப்பட்டதற்குக் காரணத்தைத் தெரிவித்தார். "வானர ஸேனை ஸஞ்சரிக்குமிடங்களிலுள்ள விருக்ஷங்கள் எப்பொழுதும் புஷ்பங்களோடும் பழங்களோடும் தேனோடும் விளங்கவேண்டியதென்று இந்திரனும் பரத்வாஜரும் வரம் கொடுத்திருக்கிறார்கள். ஆகையால் வானரர்கள் அவைகளை யதேஷ்டமாய்ப் புஜித்துக்கொண்டு, மெள்ள வருகிறார்கள். மேலும் அந்த ரிஷியின் ஆசிரமத்தில் ஸகல ஸைன்யங்களுக்கும் பரிவாரங்களுக்கும் அத்புதமான விருந்து நடந்தது. ஆகையால் கொஞ்சம் தாமதித்து வருகிறார்கள். அதோ வானரர்கள் உத்ஸாஹத்தால் கூச்சலிடும் பயங்கரமான சப்தம் கேட்கப்படுகிறது. இப்பொழுது கோமதீ நதியைத் தாண்டுகிறார்கள். அதோ ஆகாசத்தை மறைக்கும்படியாய்ப் புழுதி கிளம்புகிறது. வாலுகினீ நதிக்கரையில் வந்திருக்கிறார்கள். வழியிலுள்ள பனங்காட்டில் வானரர்கள் கொஞ்ச நேரம் தங்கிப் பழங்களைப் பறித்துத் தின்றார்களென்று எண்ணுகிறேன். அதோ புஷ்பகவிமானம் சந்திரனைப்போல் ஆகாசத்தில் தெரிகிறது. இது பிரஹ்மாவால் நிர்மிக்கப்பட்டுக் குபேரனுக்குக் கொடுக்கப்பட்டது; மனோவேகமுள்ளது; பாலஸூரியனைப்போன்ற காந்தியையுடையது; ராமன் ராவணனையும் ராக்ஷஸ வீரர்களையும் யுத்தத்தில் கொன்று இந்த விமானத்தை அடைந்தார்" என்றார்.



அதற்குள் ராமலக்ஷ்மணர்களும் ஸீதையும் ஸுக்ரீவனும் விபீஷணனும் விமானத்தில் விளங்கிக்கொண்டு, ஸமீபத்தில் வரக் கண்டு, ஸ்த்ரீகளும் சிறுவர்களும் வயது சென்றவர்களும், "அதோ நமது ராமன் வந்துவிட்டார்" என்று பரமானந்தமடைந்து, ஸகல திக்குகளும் நடுங்கும்படி ஆரவாரித்தார்கள். தங்களுடைய வாஹனங்களிலிருந்து இறங்கிப் பூமியில் நின்றுகொண்டு, ஆகாச வீதியில் பூர்ணசந்திரனைப்போல் புஷ்பக விமானத்தில் பிரகாசிக்கும் ராமமூர்த்தியைக் கண்டார்கள். பரதன் தலைமேல் கைகூப்பி, ஆனந்தபாஷ்பம் பெருகும் நேத்திரங்களால் ராகவனைப் பார்த்து, "பதினாலுவர்ஷங்கள் முடிந்தவுடன் அவசியம் திரும்பிவருகிறேன்" என்று செய்த பிரதிக்ஞையை நிறைவேற்றினதற்காக ராமனைக் கொண்டாடினார். பிரஹ்மா மனத்தால் ஸிருஷ்டித்த புஷ்பக விமானத்தில் புண்டரீகாக்ஷன் ராமன், வஜ்ராயுதத்தை தரித்த தேவேந்திரனைப்போல் விளங்கினார். ராமன் அந்த விமானத்தின் முன்பாகத்தில் வர, பரதன் மிகவும் வணக்கமாய் மேருபர்வதத்தில் ஜ்வலிக்கும் ஆதித்யனைப்போன்ற தன் தமயனுக்கு வந்தனம் செய்தார். பிறகு அந்த விமான்ம் ராமனுடைய உத்திரவால் பூமியில் தங்கிற்று. பரதன் அதில் ஏறி ராமனுக்கருகில் போய் மறுபடியும் நமஸ்கரித்தார். அநேக வர்ஷங்களாய்ப் பார்க்காமலிருந்த தன் அருமைத் தம்பியை வாரியெடுத்து, ராமன்மடியில் உட்காரவைத்து, ப்ரியமாய் ஆலிங்கனம் செய்தார். பிறகு லக்ஷ்மணன் தனக்கு நமஸ்கரிக்கப் பரதன் அவனை ஆலிங்கனம் செய்து ஸீதையை நமஸ்கரித்தார். (லக்ஷ்மணன் நமஸ்காரஞ்செய்ய வருவதைக் கண்டு ராமனிருக்கும் பொழுது அது தனக்குத்தகாதென்று பரதன் தடுத்ததாகச் சிலர் எண்ணுகிறார்கள். லக்ஷ்மணன் நமஸ்காரம் செய்த பிறகு பரதன் ஸீதையை நமஸ்கரித்தாகச் சொல்லியிருக்கிறபடியால் ஸீதை வானர ஸ்த்ரீகளுடன் கொஞ்ச தூரத்தில் உட்கார்ந்திருந்ததாகத் தெரிகிறது. பிறகு ஸுக்ரீவன், ஜாம்பவான், அங்கதன், மைந்தன், த்விவிதன், நீலன், ரிஷபன், ஸுஷேணன், நளன், கவாக்ஷன், கந்தமாதனன், சரபன், பனஸன் முதலிய வானர சிரேஷ்டர்களை ஆலிங்கனம் செய்தார். அவர்கள் மனுஷ்யரூபத்துடன் அவரை க்ஷேமம் விசாரித்தார்கள். பிறகு பரதன் ஸுக்ரீவனைப் பார்த்து,

"எங்கள் நால்வர்க்கும் நீ ஸஹோதரன்; மித்திரனுடைய லக்ஷணம் உபகாரம் செய்வது; சத்ருவின் லக்ஷணம் அபகாரம் செய்வது" என்று மெச்சினர். பிறகு விபீஷணனைப் பார்த்து அவனுடைய பந்துக்கள் இறந்ததைப்பற்றித் துக்கம்விசாரித்து ஆறுதல்சொல்லி, "மித்திர! உன் ஸஹாயத்தாலல்லவா ராமலக்ஷ்மணர்களும் வானரசிரேஷ்டர்களும் இந்த அஸாத்யமான காரியத்தைச் செய்து முடித்தார்கள்" என்ருர். சத்ருக்னர் ராமலக்ஷ்மணர்களையும் ஸீதையையும் பரமபக்தியுடன் நமஸ்கரித்தார். பிறகு ராமன் கௌஸல்யையிருக்குமிடத்துக்குப் போய், அவளை விநயத்துடன் ஸாஷ்டாங்கமாய் நமஸ்கரித்து, "அம்மா! நான் தங்களுடைய வார்த்தையை அங்கீகரிக்காமல் வனத்திற்குப் போனதைப்பற்றி என்னிடத்தில் கோபித்துக் கொள்ளக்கூடாது. இதுவரையில் என்னால் விசேஷ துக்கத்தை அனுபவித்தீர்கள். என் அபராதத்தை மன்னிக்க வேண்டும். இந்த க்ஷணத்தில் தங்களுக்கு ஸகல கிலேசமும் தீர்ந்தது" என்று ஸமாதானம் செய்தார். பிறகு ஸுமித்ரையையும் கீர்த்திசாலியான கைகேயியையும் இதர ராஜ பத்னிகளையும் நமஸ்கரித்து, தன் குலகுருவான வஸிஷ்டரிருக்குமிடத்திற்குச் சென்று, அவரைப் பிரதக்ஷிணம் செய்து நமஸ்கரித்தார்.

(கைகேயியின் வார்த்தைக்கிணங்கி ராமனை வனத்திற்கனுப்பிப் புத்திர சோகத்தால் உயிரை விட்டதைக் கொண்டு சக்கரவர்த்தி ராமனிடத்தில் வைத்திருந்த பிரீதி வெளிப்படுகிறது. ராமன் காட்டிற்குப் போய் அவரை ராஜ்யத்திற்குத் திரும்பிவரும்படி பரதன் பிரார்த்திக்காவிட்டால் பரதனுக்கு ராமனிடத்திலுள்ள பரமபக்தியும் பிரீதியும் எப்படித் தெரியும்? ராமன் வனத்திற்குப்போய் ஸீதையை ராவணன் அபகரிக்காவிட்டால், வாயுபுத்திரனை ஆஞ்ஜநேயருடைய மஹிமையும், வானராதிபதியான ஸுக்ரீவனுடைய ஸ்நேஹமும் எப்படி வெளியாகும்? ரகுவீரன் காட்டிற்குப் போகாமல் அயோத்யையிலிருந்தால் இளையபெருமாளுக்கு ராமனிடத்தில் சேஷத்வபுத்தியும் ஸகல கைங்கரியங்களையும் தானே செய்யவேண்டுமென்ற ஆசையும் உண்டென்று எப்படி அறிய முடியும்? ஸீதை ராமனுடன் வனத்திற்குப் போய் ராவணனால் அபகரிக்கப்படாவிட்டால் லோகமாதாவென்பதும் பதிவிரதா சிரோமணியென்பதும், எப்படி லோகத்தார்க்குத் தெரியும்? ஆயுதமெடுத்தவர்களுக்குள் நான் ராமனென்று சொல்லும்படியான கோதண்டபாணியின் புஜபலபராக்கிரமம் அவர் வனத்திற்குப் போய், ராவணாதிராக்ஷஸர்களை வதம் செய்யாவிட்டால் எப்படி வெளிப்படும்? கைகேயி, ராவணாதிராக்ஷஸர்களில்லாவிட்டால் ஸகல லோகங்களுக்கும் பரமானந்தத்தைக் கொடுக்கும் ராமமூர்த்திக்கும் சத்ருக்களுண்டென்ற ஆச்சரியகரமான விஷயம் எப்படித் தெரியும்? இதெல்லாம் கைகேயி ராமனை வனத்திற்கனுப்பினதால் எல்லோர்க்கும் பிரஸித்தமாயினவல்லவா? ஆகையால் கைகேயி ஸகல ஜீவ



கோடிகளுக்கும் பகவானுடைய கல்யாண குணங்களையும் பகவத் பக்தர்களுடைய மஹிமையையும் வெளியிட்டதால் அபாரகீர்த்திசாலியென்று சொல்லத்தகும்.)

அப்பொழுது நகரத்து ஜனங்களெல்லோரும் கைகூப்பி, "ராம! தங்களைப் பெற்ற மஹாபாக்யசாலியான கௌஸல்யைக்கு நித்தியானந்தத்தைக் கொடுக்கும் புருஷோத்தம! க்ஷேமமாய் வந்து சேர்ந்தீர்களா?" என்று விசாரித்தார்கள். அவர்களெல்லோரும் கைகூப்புவது, தாமரை ஓடையில் விளங்கும் மொட்டுக்களைப் போலிருந்தது. பிறகு, பரதன் ராமனுடைய பாதுகைகளையெடுத்து, அவருடைய திருவடிகளில் சேர்த்து கைகூப்பி வணக்கத்துடன், "தாங்கள் இந்த ராஜ்யத்தை என்னிடத்தில் ஒப்புவித்துப் போனீர்கள். ஏதோ எனக்குத் தெரிந்தவரையில் இதை ஆண்டு வந்தேன். இப்பொழுது தங்களிடத்தில் ஒப்புவிக்கிறேன். பெற்றுக்கொள்ள வேண்டும். அயோத்யாதிபதியான தாங்கள் தங்களுடைய ராஜ்யத்திற்குத் திரும்பிவந்ததைப் பார்க்கும்படியான பாக்யம் பெற்ற என் ஜன்மம் இன்று ஸபலமாயிற்று. என் ஸகல மனோரதங்களும் நிறைவேறின. பொக்கிஷத்தையும், தான்யசாலையையும், நகரத்தையும், ஸைன்யங்களையும், அரண்களையும், பரிசோதித்துப் பார்க்க வேண்டும். தங்களுடைய தேஜோவிசேஷத்தால் இவை பத்து மடங்கு விருத்தியாயின" என்ருர். இப்படி அந்த ஸஹோதரர்கள் ஒருவர்க்கொருவர் வைத்திருக்கும் பிரீதியையும் நம்பிக்கையையும் கண்டு, வானரர்களும் விபீஷணனும் ஆனந்தத்தால் கண்ணீர்விட்டு, "நமது குடும்பங்களில் இவ்விதமான ஒற்றுமையில்லாமல் போயிற்றல்லவா" என்று வருத்தப்பட்டார்கள். பிறகு ராமன் பரதனை மடியில் வைத்துக்கொண்டு புஷ்பகவிமானத்தில் நந்திக்கிராமத்திற்குச் சென்ருர். அங்கே தன் பரிவாரங்களுடன் அதிலிருந்திறங்கி, "உத்தமமான விமானமே! உனக்கு உத்திரவு கொடுத்தேன். இனி குபேரனுக்குக் கைங்கரியம் செய்து வா" என்ருர். அப்படியே அது வடக்கு திக்கிலுள்ள குபேரனுடைய நகரத்திற்குச் சென்றது. பிறகு ராகவன் வஸிஷ்டரை நமஸ்கரித்து, உத்தமமான ஆஸனத்தில் வீற்றிருக்கச் செய்து, தானும் அவருடன் உட்கார்ந்து அவர்கள் தேவேந்திரனையும் பிருஹஸ்பதியையும் போல் விளங்கினர்கள்.

புரோஹிதஸ்யாத்ம ஸமஸ்ய ராக4வோ
ப்3ருஹஸ்பதே: ஶக்ர இவாமராதி4ப: |
நிபீட்3ய பாதௌ3 ப்ருத2க்3ஆஸநே ஶுபே4
ஸஹைவ தேநோபவிவேஶ வீர்யவாந் || (60)

## ஸர்க்கம் 131

# ராமமூர்த்தியின் பட்டாபிஷேக மஹோத்ஸவம்

ஶிரஸ்யஞ்ஜலி மாதா4ய கைகேய்யாநந்த3 வர்த4ந: |
ப3பா4ஷே ப4ரதோ ஜ்யேஷ்ட2ம் ராமம் ஸத்யபராக்ரமம் ‖ (1)

### அவதாரிகை

இப்படிப் புஷ்பகவிமானத்தைக் குபேரனுக்கு அனுப்பி விட்டு, பரதனுடைய அனுமதியில்லாமல் அயோத்யையில் பிரவேசிக்கக்கூடாதென்று நினைத்து, நந்திக்கிராமத்தில் ராமன் தங்கியிருந்தார். அயோத்யாநகரத்து ஜனங்களும் அவரைவிட்டுப் பிரிய மனமில்லாமல் அங்கே இருந்தார்கள். கௌஸல்யை முதலிய ராஜஸ்த்ரீகளும் ராமனைச் சூழ்ந்திருந்தார்கள். பரதன் அவருடைய முகஜாடைகளாலும் இங்கிதங்களாலும் உட்கருத்தையறிந்து தன் அபிப்பிராயத்தை வெளியிடுகிறார்.

---

பரதன் தலைமேல் கைகூப்பி, மஹானுபாவரான தன் தமையனைப்பார்த்துப் பின்வருமாறு சொன்னார். கைகேயி அந்த வார்த்தைகளைக் கேட்டு முகம் மலர்ந்து பரமானந்தத்தையடைந்தாள். ('கைகூப்பி' என்றதால் வனவாஸ காலத்தில் சித்ரகூடத்தில் செய்த ப்ரபத்தியை ஞாபகப்படுத்துகிறார். தனக்கு வேறு கதியில்லையென்று தெரிவிப்பதற்காகக் கைகூப்பினார்.)

"ஸ்வாமி! தாங்கள் இந்த ராஜ்யத்தை வேண்டாமென்று ஒப்புக்கொள்ளாமல் வனவாஸம் செய்ததால், என் மாதாவின் மனத்தை ஸந்தோஷப்படுத்தினீர்கள். பிறகு சித்திரகூடத்தில் இதை என்னிடத்தில் ஒப்புவித்தீர்கள். ஆகையால் தாங்கள் என்னிடத்தில் அடைக்கலமாய் வைத்த கோஸல ராஜ்யத்தை இப்பொழுது தங்களிடத்தில் மறுபடியும் கொடுத்து விட்டேன். ஆனால், "நான் கேட்டபொழுது நீ கொடுக்கலாம்; அதுவரையில் வைத்துக் கொண்டிரு. நான் அயோத்யையில் ஸகல போகங்களையும் அனுபவித்துக்கொண்டு ஸுகமாய் வஸிக்கிறேன். நீயே ராஜ்யத்தை ஆண்டு வா" என்று சொல்வீர்கள். பூர்ண பலமுள்ள ஓர் எருது தனியாக ஸஹாயமில்லாமல் சுமந்து வந்த வாகனத்தைச் சிறு கன்றுக்குட்டி சுமக்குமா? அப்படியானால் இதுவரையில் எப்படி ஆண்டு வந்தாயென்று கேட்பீர்கள். ஆற்றில் ஜலத்தின் வேகத்தைத் தடுப்பதற்கு மரக்கிளைகள், வைக்கோல், மரம் முதலிய பதார்த்தங்களால் உறுதியாய் அணை கட்டாவிட்டால், அங்கங்கே சிறு த்வாரங்கள் ஏற்பட்டு அவைகளின் வழியாய் ஜலம் பிரவாஹித்து முடிவில் அணையை அடித்துக்கொண்டு போவதுபோல் இந்த ராஜ்யபாலனம் ஸுலபமல்ல. ஆளுகிறவனுக்கு உத்தம குணங்களென்ற பலமான அணையில்லாவிட்டால் ராஜ்ய ரஹஸ்யங்கள் சீக்கிரத்தில் வெளிப்படும். ஆனால், 'என்னைப்போல் நீயும் பிரஜைகளை உத்தமகுணங்களால் வசப்படுத்தக்கூடாதா?' என்பீர்கள். உத்தம அச்வத்தின் நடைக்கும் கழுதையின் நடைக்கும் உவமையுண்டோ? காக்கை ராஜஹம்ஸத்தைப் போலாகுமோ? தாங்கள் போகும் வழியில் வேறொருவர் அடிவைக்க முடியுமோ? ஆனால் 'நானும் உனக்கு ஸஹாயமாயிருக்கிறேன். நீயே ராஜ்யத்தை ஆண்டு வா' என்பீர்கள். ஒரு குடும்பி தன் வீட்டில் ஓர் உத்தமஜாதி விருக்ஷத்தை வைத்துப் பயிராக்கினான். அது காலக்கிரமத்தில் விசாலமான கிளைகளுடன் அழகான புஷ்பங்களால் நிறைந்து விளங்கிற்று. ஆனால் ஒரு பழமாவது கிடையாது. அப்படியிருந்தால் அதை வளர்த்தவனுக்கு என்ன பிரயோஜனம்? நமது பிதா அறுபதாயிரம் வர்ஷங்கள் வரையில் புத்திரனில்லாமல் அச்வமேதம் புத்திரகாமேஷ்டி முதலிய யாகங்களைச் செய்து தங்களைப் பெற்றார். தாங்கள் லோகோத்தமமான அனந்த கல்யாணகுணங்களுடன் வளர்ந்து வந்தீர்கள். இந்த ராஜ்யத்தைத் தங்களிடத்தில் ஒப்புவித்துத் தான் செய்த பிரயத்தனங்களின் பலனை அனுபவிக்கலாமென்று அவர் நினைத்தார். இப்பொழுது ஸகல பூமண்டலத்தையும் தர்மமாய்ப் பரிபாலனம் செய்யத் தகுந்த உத்தம குணங்கள் தங்களிடத்திலிருந்தும், வம்ச பரம்பரையாய் ஜ்யேஷ்ட புத்திரர்களால் ஆளப்பட்டு வந்த இந்த ராஜ்யத்தைத் தாங்கள் ஆளாவிட்டால் தங்களைப்பெற்று வளர்த்ததின் பிரயோஜனமென்ன? ஸூரியன் மத்யாஹ்னகாலத்தில் ஆகாசவீதியில் பூர்ணகிரணங்களுடன் ஸகல ஜகத்திற்கும் பிரகாசத்தையும் ஆயுளையும் கொடுத்துக்கொண்டு விளங்குவதுபோல், தாங்கள் பட்டாபிஷேக மஹோத்ஸவம் பெற்று ஸிம்ஹாஸனத்திலிருந்து எங்களெல்லோருக்கும் க்ஷேமத்தைக் கொடுப்பதை நாங்கள் பார்த்து மகிழ்கிறோம். விடியற்காலத்தில் மதுரமான கானங்களாலும், வாத்ய சப்தங்களாலும், தங்கச்சலங்கைகளால் அலங்கரிக்கப்பட்ட உத்தம ஸ்த்ரீகளின் நாட்யங்களாலும், தாங்கள் எழுப்பப்படுவதை நாங்கள் கண்டு மகிழ்கிறோம். ஸகல போகங்களையும் அனுபவிக்கத் தகுந்தவர்கள் தாங்களே. ஆனால், "நீங்களும் என்னுடன் பிறந்தவர்களல்லவா? உங்களுக்கும் ராஜ்யபாலனம் செய்ய வேண்டுமென்ற ஆசையில்லையோ?" என்று கேட்பீர்கள். ஸூரிய சந்திர கிரஹங்களும் நக்ஷத்திரங்களும் உள்ள வரையிலும், இந்தப் பூமியுள்ள வரையிலும் தாங்கள் எங்களைப் பரிபாலனம் செய்து வரவேண்டுமென்பதே எங்களுடைய பிரார்த்தனை" என்றார்.

ராமன் பரதனுடைய சரணாகதியை அங்கீகரித்து, உத்தமமான ஆஸனத்தில் உட்கார்ந்தார். பிறகு ஸுகமாயும் சீக்கிரமாயும் சாதுர்யமாயும் க்ஷவரம் செய்யக் கூடியவர்களை சத்ருக்னர் தருவிக்க, அவர்கள் ராமலக்ஷ்மண பரதசத்ருக்னர்களுடைய

ஜடைகளை நீக்கினார்கள். பரதன், லக்ஷ்மணன், ஸுக்ரீவன், விபீஷணன் முதலியவர்கள் ஸ்நானம் செய்த பிறகு விசித்திரமான மாலைகளாலும் பரிமளங்களாலும், வஸ்திரங்களாலும், ஆபரணங்களாலும் ராமலக்ஷ்மணர்களைச் சத்ருக்னன் அலங்காரம் செய்வித்தார். தசரதருடைய பத்தினிகள் ஸீதைக்கு ஸகல அலங்காரங்களையும் தாங்களே செய்தார்கள். தாரை முதலிய வானர ஸ்த்ரீகளுக்கு ஸகல அலங்காரங்களையும் ராமனிடத்தில் எல்லையற்ற வாத்ஸல்யத்தை வைத்த கௌஸல்யை செய்வித்தாள். பிறகு சத்ருக்னருடைய உத்தரவால் இக்ஷ்வாகு குல ஸாரதியான ஸுமந்திரர், உத்தம அச்வங்கள் பூட்டின ராஜ ரதத்தைக் கொண்டுவந்து நிறுத்தினார். ஸூரிய மண்டலத்தைப் போல் பிரகாசிக்கும் அந்த ரதத்தைப் பார்த்து ராமன் ஸந்தோஷமடைந்து, அதில் ஏறினார். ஸுக்ரீவனும் ஹனுமானும் மஹேந்திரனைப்போல் தேஜஸால் ஜ்வலித்துக்கொண்டு, நேர்த்தியான வஸ்திராபரணங்களால் அலங்கரிக்கப்பட்டு ராமனுடன் போனார்கள். ஸுக்ரீவனுடைய பார்யைகளும் ஸீதையும் திவ்யாலங்காரங்களுடன் அயோத்யையைப் பார்க்க ஆசை கொண்டு, அவர்களுடன் போனார்கள்.

பிறகு அயோத்யையில் தசரதருடைய மந்திரிகளும் வஸிஷ்டரும் ராமனுடைய பட்டாபிஷேகத்திற்கு வேண்டிய மங்களத் திரவியங்களை ஸம்பாதித்தார்கள். அசோகன், விஜயன், ஸுமந்திரன் முதலியவர்கள், ''ராமனுக்கு க்ஷேமமும் ஸுகமும் ஐச்வரியமும் விருத்தியாவதற்கும், இந்த நகரமும் ராஜ்யமும் எப்பொழுதும் மங்களத்தை அடைவதற்கும் வேண்டிய ஸகல சுபக்ரியைகளையும் குறைவில்லாமல் செய்ய வேண்டியது'' என்று வஸிஷ்டரைப் பிரார்த்தித்து, ராமனைப் பார்ப்பதற்காகத் திரும்பி வந்தார்கள். திவ்ய அச்வங்கள் பூட்டின ரதத்தில் மாதலி ஸாரத்யம் செய்ய, தேவகணங்கள் புடைசூழ இந்திரன் வருவதுபோல், திவ்யமான ரதத்தில் ஸுமந்திரர் ஸாரத்யம் செய்ய, ஸஹோதரர்களும், வானரர்களும், ராக்ஷஸர்களும், பிரஜைகளும் புடைசூழ ராமசந்திரன் விளங்குவதைக் கண்டார்கள். பரதன் கடிவாளங்களை பிடித்துக்கொண்டு ஸுமந்திரருக்குப் பக்கத்திலிருந்து ஸாரத்யம் செய்துவந்தார். சத்ருக்னன் இக்ஷ்வாகு சக்கரவர்த்திகளுடைய வெண்குடையைப் பிடித்தார். லக்ஷ்மணன் ராமனுக்கு முன் நின்று வெண்சாமரத்தை விசிறினார். ராக்ஷஸாதிபதியான விபீஷணன் மற்றொரு வெண்சாமரத்தை விசிறினான். அப்பொழுது ஆகாச வீதியில் தேவ, கந்தர்வ, யக்ஷ, கின்னர, வித்யாதர, உரக, கருட, பன்னக, ஸித்த, ஸாத்ய, நாக, மருத்கணங்கள், ராவணாதி ராக்ஷஸர்களை நாசம் செய்து தங்களுக்கு எல்லையற்ற ஸுகத்தையும் க்ஷேமத்தையும் கொடுத்ததைப்பற்றி, ராமனைக் கொண்டாடும் மதுரமான த்வனி கேட்கப்பட்டது. மஹாபர்வதத்தைப்போல், மதஜலத்தைப் பெருகவிட்டுக் கொண்டிருக்கும் சத்ருஜயனென்ற பட்டத்து யானையின் மேல் ஸுக்ரீவன் ஏறி, ஐராவதத்தின்மேல் விளங்கும் இந்திரனைப்போல் பிரகாசித்தான். இதர வானரர்கள் மனுஷ்ய ரூபத்துடன் ஸர்வாபரண பூஷிதர்களாய் ஒன்பதாயிரம் மதயானைகளின்மேல் ஏறிவந்தார்கள். இப்படிச் சங்கம், பேரீ, துந்துபி, வீணை, மிருதங்கம் முதலிய வாத்யகோஷங்களுடன் ரகுவீரன் அயோத்யையை நோக்கிப் போனார். மந்திரிகள் அவரை 'ஜய விஜயீபவ' என்று வாழ்த்தி, அவரால் உபசரிக்கப்பட்டு, அவரைப் பின் தொடர்ந்து வந்தார்கள். பிரஜைகளாலும், பிராம்மணர்களாலும் மந்திரிகளாலும் சூழப்பட்டு ராகவன், ஆகாசவீதியில் நக்ஷத்திரங்களால் சூழப்பட்ட சந்திரனைப்போல் பிரகாசித்தார். அவருக்கு முன் அநேகர் மங்களவாத்யங்களைக் கோஷித்துக்கொண்டு சென்றார்கள். ஸ்வஸ்திகம் முதலிய மதுரமான வாத்யங்களை அநேகர் வாசித்துக்கொண்டு போனார்கள். கன்யைகளும், பிராம்மணர்களும், மஞ்சள் கலந்த அக்ஷதைகளை எடுத்துக்கொண்டு முன்னே போனார்கள். அநேகர் மோதகங்களை எடுத்துக்கொண்டு போனார்கள். உத்தமலக்ஷணங்களுள்ள பசுக்கள் சென்றன. ராமனுக்கும் ஸுக்ரீவனுக்கும் நேர்ந்த ஸ்நேஹத்தையும், வாயுபுத்திரனுடைய பிரபாவத்தையும், வானரர்களுடைய பராக்கிரமத்தையும், ராக்ஷஸர்களுடைய பலத்தையும், விபீஷணனுடைய ஸஹாயத்தையும் ராமன் மந்திரிகளுக்கு விஸ்தாரமாய் எடுத்துச் சொன்னார். அதைக் கேட்டு நகரத்து ஜனங்கள் ஆர்சரியமடைந்தார்கள்.

இப்படிப் பேசிக்கொண்டே ஸகல ஸௌக்யங்களும் பொருந்தின ஜனங்களால் அலங்கரிக்கப்பட்ட அயோத்யையில் ராமன் பிரவேசித்தார். ஒவ்வொரு வீட்டிலும் மாலைகளாலும் ஹாரங்களாலும் தோரணங்களாலும், கொடிகளாலும், த்வஜங்களாலும் விசித்திரமாய் அலங்கரிக்கப்பட்டிருந்தது. ராமன் பிரஜைகளால் வாழ்த்தப்பட்டு இக்ஷ்வாகு வம்சத்தரசர்கள் வசிக்கும் அரண்மனையில் பிரவேசித்தார். கௌஸல்யை, ஸுமித்ரை, கைகேயி முதலிய ராஜபத்னிகளை நமஸ்கரித்து, பரதனை நோக்கி, 'அழகான அசோகத் தோட்டத்துடன் விளங்கும் என் உத்தமமான அரண்மனையில் ஸுக்ரீவன் தங்கட்டும்' என்றார். அவருடைய அபிப்ராயத்தை பரதன் அந்த வார்த்தைகளால் அறிந்துகொண்டு, ஸுக்ரீவனுடைய கையைப் பிடித்து, அந்த அரண்மனைக்கு அழைத்துக் கொண்டு போனார். பிறகு பரிசாரகர்கள் சத்ருக்னனுடைய உத்திரவால் திபங்களையும், ஆஸனங்களையும், விரிப்புகளையும், படுக்கைகளையும் அந்த அரண்மனையில் கொண்டுபோய் வைத்தார்கள். பிறகு சத்ருக்னன் ஸுக்ரீவனைப் பார்த்து, "பிரபோ! ராமனுடைய அபிஷேகத்திற்காக வானரர்களை அனுப்புங்கள்" என்றார். நான்கு வானர ச்ரேஷ்டர்களை அழைத்து, ரத்னங்க

ளிழைத்த நான்கு ஸ்வர்ண குடங்களைக் கொடுத்து, "வானரர்களே! பொழுது விடியுமுன் நான்கு திக்குகளிலுள்ள ஸாகரங்களிலிருந்தும், புண்யதீர்த்தங்களிலிருந்தும் பரிசுத்தமான ஜலத்தைக் கொண்டுவந்து ஸித்தமாயிருக்க வேண்டும்" என்று ஆக்ஞாபித்தான். உடனே மதயானைகளைப்போன்ற வானர வீரர்கள் ஆகாசத்தில் கிளம்பிக் கருடனைப்போல் அதிவேகமாய்ப் போனார்கள். ஜாம்பவான், ஹனுமான், வேகதர்சி, ரிஷபன் முதலியவர்கள் தங்கக் கலசங்களில் ஐந்நூறு நதிகளிலிருந்து புண்யதீர்த்தங்களைக் கொண்டுவந்தார்கள். ஸுஷேணன் கிழக்கு ஸமுத்திரத்திலிருந்தும், ரிஷபன் தெற்கு ஸமுத்திரத்திலிருந்தும், கவயன் மேற்கு ஸமுத்திரத்திலிருந்தும், நளன் வடக்கு ஸமுத்திரத்திலிருந்தும் ஜலத்தைக் கொண்டு வந்தார்கள். வானரர்கள் ராமனுடைய அபிஷேகத்திற்காகப் புண்யஜலங்களைக் கொண்டு வந்தார்களென்றறிந்து, சத்துருக்னனும் மந்திரிகளும் வஸிஷ்டருக்கும் இதர ஸ்நேஹிதர்களுக்கும் தெரிவித்தார்.

## ஸ்ரீ ராம பட்டாபிஷேக மஹோத்ஸவம்

தத: ஸ ப்ரயதோ வ்ருத்3தோ4 வஸிஷ்டே2 ப்3ராஹ்மணை: ஸஹ |
ராமம் ரத்நமயே பீடே2 ஸஹஸீதம் ந்யவேசயத் ||
வஸிஷ்டோ2 வாமதே3வஸ்ச ஜாபா3லிரத2 காஸ்யப: |
காத்யாயந: ஸுயஜ்ஞஸ்ச கௌ3தமோ விஜயஸ்தத2 ||
அப்4யஷிஞ்சந் நரவ்யாக்4ரம் ப்ரஸந்நேந ஸுக3ந்தி4நா |
ஸலிலேந ஸஹஸ்ராக்ஷம் வஸவோ வாஸவம் யதா2 ||
ரித்விக்3பி4: ப்3ராஹ்மணை: பூர்வம் கந்யாபி4ர் மந்த்ரிபி4ஸ் ததா2 |
யோதை4ஸ்சைவாப்4யஷிஞ்சம்ஸ்தே ஸம்ப்ரஹ்ருஷ்டா: ஸநைக3மை: ||

பிறகு, இக்ஷ்வாகு குல சக்கரவர்த்திகளுக்குக் குருவும், தீர்க்காயுஸுள்ளவருமான வஸிஷ்ட மஹர்ஷி, இந்திரியங்களையும் மனத்தையும் ஸமாதானம் செய்து ஸகல பிராம்மணர்களுடைய அனுமதியைப் பெற்றுக்கொண்டு, ஸ்ரீ ராமனை ஸீதாதேவியுடன் ரத்னமயமான ஸிம்ஹாஸனத்தில் உட்காரச் செய்தார். தேவேந்திரனை அஷ்டவஸுக்கள் அபிஷேகம் செய்வதுபோல், வஸிஷ்டர், வாமதேவர், ஜாபாலி, காச்யபர், காத்யாயனர், ஸுயக்ஞர், கௌதமர், விஜயரென்ற எட்டு மஹாத்மாக்களும், வேதோக்த மந்திரங்களை ஜபித்து, ராமசந்திரனைப் பரிமளத் திரவியங்கள் கலந்த புண்ய தீர்த்தத்தால் விதிப்படி பட்டாபிஷேகம் செய்தார்கள். பிறகு ஸகல ஔஷதிகளும் ரஸங்களும் கலந்த புண்ய ஜலத்தால் ரித்விக்குகளும், பிராஹ்மணர்களும், கன்யைகளும், மந்திரிகளும், யுத்த வீரர்களும் வர்த்தகத் தலைவர்களும் ரகுவீரனை அபிஷேகம் செய்தார்கள்.

Notes : This Blank Page has also to be counted as a another page Number.

It is intentionally left blank after Picture Sketches.!

Released by Maran's Dog ,Toronto, Canada



ஆகாசவீதியில் லோகபாலர்களும் தேவகணங்களும் நின்று ஆனந்தமாய்க் கொண்டாடினார்கள். சத்ருக்னன் வெண் குடை பிடித்தார். ஸுக்ரீவன் வெண்சாமரம் போட்டார். இந்திரனால் அனுப்பப்பட்ட வாயுபகவான் எண்ணிறந்த தங்கத் தாமரைப் புஷ்பங்களால் அமைக்கப்பட்ட ஒரு பிரகாசமான மாலையையும் நவரத்தினங்கள் கலந்த ஒரு முத்துஹாரத்தையும் கொண்டு வந்தார். தேவகந்தர்வர்கள் அந்த மஹோத்ஸவ ஸமயத்தில் மதுரமாய்ப்பாடினார்கள். அப்ஸரஸ்கணங்கள் சாதுரியமாய் நாட்டியம் செய்தார்கள். ஸமஸ்த பயிர்களால் பூமி செழித்தது. விருக்ஷங்கள் பழங்களால் நிறைந்தன. புஷ்பங்களிலிருந்து நேர்த்தியான பரிமளம் வீசிற்று. எண்ணிறந்த பசுக்களையும், கன்றுகளையும், காளைகளையும், குதிரைகளையும், முப்பது கோடி தங்க நாணயங்களையும், பலவித ஆபரணங்களையும் வஸ்திரங்களையும் ரகுநாதன் பிராஹ்மணர்களுக்கும் மற்ற ஜாதியார்களுக்கும் கொடுத்தார். நவரத்தினங்களிழைத்து. ஸூரியனைப்போல் பிரகாசிக்கும் ஒரு தங்க ஹாரத்தை ராகவன் ஸூரிய புத்திரனை ஸுக்ரீவனுக்குக் கொடுத்தார். வாலி புத்திரனை அங்கதனுக்கு நவரத்னங்களிழைத்த இரண்டு அங்கதங்களை, (அதாவது, தோள்வளைகளை) கொடுத்தார். சந்திர கிரணங்களைப்போல் ஒளி வீசும் ரத்தினங்கள் கலந்த ஒரு முத்துஹாரத்தை ஸீதைக்குக் கொடுத்தார். அவள் இரண்டு உத்தமமான வஸ்திரங்களையும் அநேக ஆபரணங்களையும் பர்த்தாவின் அனுமதியைக் கண்ஜாடையால் அறிந்து ஆஞ்ஜநேயருக்குக் கொடுத்தாள். பிறகு தன் கழுத்திலிருந்து அந்த ஹாரத்தைக் கழற்றி. ஸகல வானரர்களையும் தன் பர்த்தாவையும் ஸீதை அடிக்கடி பார்த்தாள். ராமன் அவளுடைய கருத்தை அறிந்து, "ஸீதே! எவனிடத்தில் உனக்கு விசேஷ திருப்தியிருக்கிறதோ. எவனிடத்தில் ஆண்மையும் பராக்கிரமும் புத்தியும் எல்லையற்று விளங்குகின்றனவோ அவனுக்கு இதை வெகுமானமாகக் கொடு" என்றார். உடனே ஸீதை அந்த ஹாரத்தை ஆஞ்ஜனேயருக்குக் கொடுத்தாள். அதனால் ஹனுமான் சந்திரகிரணங்கள் சூழ்ந்த வெண்மையான மேகங்களால் விளங்கும் பர்வதத்தைப் போல் பிரகாசித்தார். மைந்தன், த்விவிதன், நீலன் முதலிய ஸகல வானரர்களுக்கும் அவரவர்களுடைய உத்தம குணங்களுக்குத் தகுந்தபடி வஸ்திரங்களையும் பூஷணங்களையும் அபரிமிதமாய்க் கொடுத்தார், விபீஷணன், ஸுக்ரீவன், ஹனுமான், ஜாம்பவான் முதலிய வானரவீரர்கள் ரத்னங்களாலும் வஸ்திரங்களாலும், ஆபரணங்களாலும், பூஷணங்களாலும் வெகுமதி செய்யப்பட்டுத் தங்களிருப்பிடம் போனார்கள். வானரர்கள் அந்தப் பட்டாபிஷேக மஹோத்ஸவத்தைக் கண்டு களித்து, ராமனிடத்தில் உத்தரவு பெற்றுக்கொண்டு கிஷ்கிந்தைக்குச் சென்றார்கள். ராக்ஷஸாதிபதியான விபீஷணன் இக்ஷ்வாகு வம்சத்தரசர்களுக்குக் குலதன

மான ஸ்ரீரங்கவிமானத்தை ராமனிடத்திலிருந்து பெற்று லங்கைக்குப் போனான். விபீஷணன் ஸகல சத்ருக்களையும் ஜயித்து, மஹாகீர்த்திசாலியாய்த் தர்மராஜ்யம் செய்து வந்தான்.

ராமன் பிரஜைகளைத் தன் குழந்தைகளைப்போல் பாதுகாத்து, துஷ்டநிக்ரஹ சிஷ்டபரிபாலனம் செய்து வந்தார். பிறகு "லக்ஷ்மண! தர்ம ரஹஸ்யங்களை அறிந்த புத்திமானே! நமது முன்னோர்களால் ஆளப்பட்டு வந்த இந்த ராஜ்யத்தை என்னுடன் நீயும் பரிபாலனம் செய். உன்னை யுவராஜாவாக நியமிக்கிறேன்" என்றார். அவர் எவ்வளவு சொல்லியும் லக்ஷ்மணன் கொஞ்சமாவது ஸம்மதிக்கவில்லை. பகவானுக்குப் பரதந்திரனாயிருக்கும் தர்மத்தையே அனுஷ்டித்த பரதனுக்கு ராமன் யௌவராஜ்ய பட்டாபிஷேகம் செய்வித்தார். பௌண்டரீகம், அச்வமேதம், வாஜபேயம் முதலிய யாகங்களைக் கணக்கில்லாமல் செய்தார். பதினோராயிரம் வர்ஷங்கள் வரையில் ராஜ்யத்தை ஆண்டார். அபரிமிதமான தக்ஷிணைகளுடன் எண்ணிறந்த அச்வமேதயாகங்களைச் செய்தார். முழங்கால் வரையில் நீண்ட திருக்கைகளுடனும், மேருமலையைப்போன்ற திருமார்புடனும், மஹாப் பிரதாபசாலியாய், லக்ஷ்மணனால் எப்பொழுதும் உபசரிக்கப்பட்டு லோகத்தை ஆண்டார். பந்துக்களுடனும் மித்திரர்களுடனும் பலவகை யக்ஞங்களைச் செய்து முடித்தார். அவருடைய ராஜ்யத்தில் ஸ்த்ரீகள் புருஷனை இழந்து வருத்தப்படவில்லை. துஷ்ட மிருகங்களால் உபத்திரவமுமில்லை. வியாதியால் பீடிக்கப்பட்டவர்களில்லை. திருடர்களால் பயமில்லை. ஒருவனுக்கும் கஷ்டமென்பது நேரவில்லை. அகாலத்தில் ஒருவரும் மரணமடையவில்லை. எல்லோரும் ஸந்தோஷமாய்க் காலம் கழித்தார்கள். எல்லோரும் தர்மத்திலேயே நாடின மனமுடையவர்களாயிருந்தார்கள். தர்மஸ்வரூபியான ராமனுடைய ஆசாரத்தையே பிரஜைகளும் அனுஸரித்து ஒருவரையொருவர் உபத்திரவிக்கவில்லை. அநேக ஆயிர வர்ஷங்கள் ஜீவித்திருந்து, அநேக ஆயிர புத்திரர்களுடன், வியாதியில்லாமலும் சோகமில்லாமலும் வாழ்ந்தார்கள். ராமன் ராஜ்யத்தை ஆளும் பொழுது எங்கே பார்த்தாலும் ராமன் ராமனென்றே எல்லோரும் அவருடைய சரித்திரங்களை வர்ணித்து அவரையே கொண்டாடினார்கள். ஜகத் முழுவதும் ராமமயமாயிற்று. எந்த ருதுவிலும் விருக்ஷங்கள் விசாலமான கிளைகளுடனும் புஷ்பங்களுடனும் பழங்களுடனும் செழித்தன. மேகங்கள் அந்தந்தக் காலத்தில் மழை பெய்தன. காற்று ஸுகமாய் வீசிற்று. பிராஹ்மணர்களும், க்ஷத்ரியர்களும், வைச்யர்களும், நான்காம் வர்ணத்தவர்களும் பேராசையற்றவர்களாய், தங்களுடைய வர்ணாசிரம தர்மங்களைத் திருப்தியாயும் ஸந்தோஷமாயும் நடத்தி வந்தார்கள். ஸகலப் பிரஜைகளும் தர்மத்தில் பிரியமுள்ளவர்களாயும், தர்மத்தில் பொழுதும் நோக்கமுள்ளவர்களாயும், ஸத்யவான்களாயும்,



சுபலக்ஷணங்கள் பொருந்தியவர்களாயுமிருந்தார்கள். ஸ்ரீராமன் ஸஹோதரர்களால் உபசரிக்கப்பட்டு, பதினோராயிரம் வர்ஷங்கள் வரையில் நிகரற்ற காந்தியுடன், ராஜ்யபாலனம் செய்தார்.

வால்மீகிமஹர்ஷியால் ஆதியில் செய்யப்பட்ட இந்தக் காவியம் தனத்தையும், கீர்த்தியையும், ஆயுளையும், ஜயத்தையும் அரசர்களுக்குக் கொடுக்கும். இதைப் படித்தவனும், கேட்டவனும் பாபத்திலிருந்து விடுபடுகிறான். ராமனுடைய பட்டாபிஷேக மஹோத்ஸவ கதையைக் கேட்பவன் புத்திரர்களை விரும்பினால் புத்திரர்களை அடைகிறான்; தனத்தை விரும்பினால் தனத்தை அடைகிறான். அரசனாயிருந்தால் சத்துருக்களை ஜயித்து லோகத்தை ஆளுகிறான். ஸ்த்ரீகளாயிருந்தால் கௌஸல்யை ராமனை அடைந்ததுபோலும், ஸுமித்திரை லக்ஷ்மணனை அடைந்ததுபோலும், கைகேயி பரதனை அடைந்ததுபோலும், தீர்க்காயுளுள்ள உத்தம புத்திரர்களை அடைகிறார்கள். இந்த ராமாயணத்தையும் ராமனுடைய விஜயத்தையும் கேட்கிறவன் தீர்க்காயுளைப் பெறுகிறான். வேதார்த்தங்களை விளக்கும் பொருட்டு வால்மீகி மஹர்ஷியால் செய்யப்பட்ட இந்த உத்தம காவியத்தை, காமக்குரோதங்களை அடக்கி சிரத்தையுடன் கேட்கிறவன் ஸகல கஷ்டங்களையும், ஸகலக் கிலேசங்களையும் தாண்டுகிறான். தூரதேசத்திற்குப் போயிருந்தால் தன் புத்திரமித்திர பந்துக்களுடன் சேருகிறான். ரகுநாதனிடத்திலிருந்து வேண்டிய வரங்களைப் பெறுகிறான். இந்த ராமாயணத்தைக் கேட்பவனிடத்தில் ஸகல தேவதைகளும் பிரீதி வைக்கிறார்கள். அவனுடைய கிருஹத்திலிருக்கும் விநாயகர்களென்ற தேவதைகள் பிரஸன்னமாகின்றன. அரசனாயிருந்தால் இந்தப் பூமியை ஜயிப்பான். தேசாந்திரம் போனவனாயிருந்தால் க்ஷேமமாய் வந்து சேருவான். யௌவன ஸ்த்ரீகள் இதைக் கேட்டால் உத்தமமான புத்திரர்களைப் பெறுவார்கள். இந்தப் புராதனமான இதிஹாஸத்தை பிரதி தினமும் பூஜித்துப் படித்தால் ஸகல பாபங்களிலிருந்தும் விடுபட்டுத் தீர்க்காயுளை அடைவார்கள். க்ஷத்ரியர்கள் எப்பொழுதும் இந்தப் புண்ய சரித்திரத்தை நமஸ்கரித்து பிராஹ்மணர்களிடத்திலிருந்து கேட்க வேண்டியது. அவர்களுக்கு அளவற்ற ஐச்வரியமும் புத்திரலாபமும் கிடைக்கும். இந்த ராமாயணம் முழுவதையும் எப்பொழுதும் ஒருவன் கேட்டாலும் படித்தாலும் ஸ்ரீராமமூர்த்தி அவனிடத்தில் அழிவற்ற பிரீதியை வைக்கிறார். அவர் அநாதியான மஹாவிஷ்ணுவல்லவா? ஆதிதேவனும் மஹானுபாவரும் ஸர்வேச்வரனுமான ஆதிசேஷனே லக்ஷ்மணனும் அவதரித்தார்கள். இந்த மங்களகரமான காவியத்தைக் கேட்கிறவர்களுக்குக் குடும்ப விருத்தியும் தனதான்ய விருத்தியும் உத்தமமான ஸுகமும் கிடைக்கும். ஸகல புருஷார்த்தங்களும் கைகூடும். ஸகல மனோரதங்களும் நிறைவேறும். உத்தமமான ஸ்த்ரீகளை அடைவார்கள். தீர்க்காயுளும் தேஹாரோக்யமும்

கீர்த்தியும் ஸஹோதரர்களின் ஒற்றுமையும், தீக்ஷ்ணமான புத்தியும், அழிவற்ற ஸுகமும் கிடைக்கும். தேஜஸ், பலம், வீரியம் முதலியவைகளைக் கொடுக்கும். இந்த கிரந்தத்தை ஐச்வரியத்தை விரும்பும் ஒவ்வொருவரும் நியமத்துடன் கேட்க வேண்டியது.

வெகு காலத்திற்கு முன் நடந்த இந்தச் சரித்திரம் இவ்விதமாய்ச் சொல்லப்பட்டது. உங்களுக்கு ஸகல மங்களங்களும் உண்டாகட்டும். விஷ்ணுவினுடைய மனோவாக்கிற்கெட்டாத சக்தி, லோகங்களில் விருத்தியடையட்டுமென்று ஸந்தேஹமில்லாமல் வெட்கப்படாமல் நிச்சயமாய்ச் சொல்லுங்கள். ராமாயணத்தைப் படிப்பதாலும், கேட்பதாலும் ஸகல தேவர்களும் ஸந்தோஷமடைகிறார்கள். ராமாயணத்தைக் கேட்பதால் பித்ருக்களும் ஸந்தோஷமடைகிறார்கள். வேதஸம்ஹிதைக்கு ஸமமான இந்த வால்மீகி ராமாயணத்தைப் பக்தியுடன் எழுதுகிறவர்கள் எந்நாளும் ஸ்வர்க்கத்தில் வஸிப்பார்கள்.

ப4க்த்யா ராமஸ்ய யே சேமாம் ஸம்ஹிதாம் ரிஷிணா க்ருதாம் |
லேக2யந்தீஹ ச நரா: தேஷாம் வாஸஸ் த்ரிவிஷ்டபே || (124)

---

யுத்த காண்டம் முற்றிற்று.

---

ஸ்ரீ ஸீதா லக்ஷ்மண பரத சத்ருக்ந ஹநுமத் ஸமேத
ஸ்ரீராமசந்த்ர பரப்ரஹ்மணே நம:



ஸ்ரீ :

ஸ்ரீரஸ்து

ஸ்ரீ ராமசந்த்ர பரப்ரஹ்மணே நம :

# ஸ்ரீமத் வால்மீகி ராமாயணம்

(தமிழ் வசனம் - இரண்டு பாகங்களில்)

## பாகம் 2

ஸுந்தர காண்டம்
யுத்த காண்டம்



ஸங்கீதபீஷ்ம, ஸங்கீத விமர்சகாசார்ய,
அபிநவ த்யாகப்ரஹ்ம, கீர்த்தனாசார்ய

ஸ்ரீ உ. வே. C. R. ஸ்ரீநிவாஸய்யங்கார், B.A.

அவர்களால் ஸ்ரீமத் வால்மீகி ராமாயணத்திலிருந்து
மொழிபெயர்க்கப்பட்டது

---

பதிப்பகத்தார் :

தி லிட்டில் ப்ளவர் கம்பெனி

தியாகராயநகர்
சென்னை-600 017



நந்திகோயில் தெரு
திருச்சி-620 002

[ பாகங்கள் 1 & 2 சேர்ந்து
விலை ரூ. 250/-

# ஸுந்தர காண்டம்

---

# விஷய அட்டவணை

# யுத்த காண்டம்

## விஷய அட்டவணை